THE

# OLD TESTAMENT,

## IN TAMIL:

WITH REFERENCES, CONTENTS OF THE CHAPTERS AND CHRONOLOGY,
FROM THE ENGLISH.

மனிதர்கள் இரட்சிக்கப்படுவதற்காகச்

சருவலோக தயாபரரான கர்த்தர் அருளிச்செய்த

சத்தியவேதமென்கிற

# பழைய ஏற்பாடு.

இஃது

மூலவாக்கியம் பெபுரிசியசையரால்

எபிரேயுபாஷையிலிருந்து

தமிழிலேதிருப்பப்பட்டது.

கி. பி. ௲அசூ௰-ஞுலே

சென்னபட்டணத்தில் அமெரிக்கன் மிசியோன் அச்சுக்கூடத்திற் பதிப்பிக்கப்பட்டது.

MADRAS:

PRINTED AT THE AMERICAN MISSION PRESS,
FOR THE MADRAS AUXILIARY BIBLE SOCIETY,
And sold at their Depository, 155 Popham's Broadway.
1860.

GENESIS.

# மோசே எழுதின

## முதலாம் ஆகமம்.

### க. அதிகாரம்.

க. வானமும், பூமியும், ௩. வெளிச்சமும், ஆகாசவிரிவும், உண்டாக்கப்பட்ட விவரம். ௯. பூமி சலத்திலின்றும் பிரிக்கப்பட்டு, ௰௧. கனிகொடுக்கும்படி செய்வித்தது. ௰௪. சூரியனும், சந்திரனும், நட்சத்திரங்களும். ௨௰. ஜீவமும் ஜெந்துக்களும், பறவைகளும், உ௪. மிருகங்களும், ஊர்வனவும் உண்டாக்கப்பட்டு, உ௬. பராபரனுடைய சாயலாக மனுஷன் சிருஷ்டிக்கப்பட்டது. உ௯. சகல உயிர்களுக்கும் ஆகாரம் நியமிக்கப்பட்டது.

க ஆதியிலே பராபரன் [1]வானத்தையும், பூமியை
உ யும் சிருஷ்டித்தார்.—பூமியோவெனில், உருவ
மற்றதும் வெறுமையுமாயிருந்தது; ஆழத்தின்
மேல் இருளுமாயிருந்தது; [2]ஆனால் பராபரனு
டைய ஆவி தண்ணீர்களின்மேலே அசைவாடிக்
கொண்டிருந்தார்.
௩ [3]பராபரன் வெளிச்சம் உண்டாகக்கடவ
தென்றார்; அப்போது வெளிச்சம் உண்டா
௪ யிற்று.—பராபரன் வெளிச்சத்தை நல்லதென்று
கண்டார்; வெளிச்சத்தையும், இருளையும், பரா
௫ பரன் வெவ்வேறாகப் பிரித்தார்.—பராபரன்
வெளிச்சத்துக்குப் பகலென்று பேரிட்டார்;
இருளுக்கோ இரவென்று பேரிட்டார்; இப்படி
யே சாயங்காலமானதினாலும், விடியுங்காலமான
தினாலும் முதலாம் நாள் உண்டாயிற்று.
௬ பிற்பாடு பராபரன் தண்ணீர்களுக்கு நடுவாக
[4]ஆகாசவிரிவுண்டாகக்கடவதென்றும், அது தண்
ணீர்களுக்கும் தண்ணீர்களுக்கும் பிரிவுண்டாக்
௭ கக்கடவதென்றும் சொன்னார்.—அப்படியே
பராபரன் ஆகாசவிரிவை உண்டுபண்ணி, ஆகா
சவிரிவுக்குக் கீழாயிருக்கிற தண்ணீர்களுக்கும்,
[5]ஆகாசவிரிவுக்கு மேலாயிருக்கிற தண்ணீர்க
ளுக்கும், பிரிவுண்டாக்கினார்; அது அப்படியே
௮ ஆயிற்று—ஆகாசவிரிவுக்குப் பராபரன் வான
மென்று பேரிட்டார்; இப்படியே சாயங்காலமா
னதினாலும், விடியுங்காலமானதினாலும் இரண்
டாம் நாள் உண்டாயிற்று.
௯ பிற்பாடு பராபரன் வானத்தின்கீழிருக்கிற
தண்ணீர்கள் [6]ஒரு இடத்திலே சேரவும், வெட்
டாந்தரை காணப்படவும் கடவதென்றார்; அது
௰ அப்படியே ஆயிற்று.—பராபரன் வெட்டாந்த
ரைக்குப் பூமியென்றும், சேர்ந்த தண்ணீர்களுக்
குச் சமுத்திரங்களென்றும் பேரிட்டார்; பரா
பரன் அது நல்லதென்று கண்டார்.—அப்போது ௰௧
பராபரன் பூமியானது புல்லையும், விதையைப்
பிறப்பிக்கிற பூண்டுகளையும், பூமியின்மேலே
தங்களில் தங்கள் விதையையுடைய கனிகளைத்
தங்கள் தங்கள் சாதியின்படியே கொடுக்கும்
கனிவிருட்சங்களையும் முளைப்பிக்கக்கடவதெ
ன்றார்; அது அப்படியே ஆயிற்று.—பூமி தங்கள் ௰௨
தங்கள் சாதியின்படியே புல்லையும், விதையைப்
பிறப்பிக்கிற பூண்டுகளையும், தங்கள் தங்கள்
சாதியின்படியே தங்களில் தங்கள் விதையை
யுடைய கனிகளைக் கொடுக்கும் விருட்சங்க
ளையும் முளைப்பித்தது; பராபரன் அது நல்ல
தென்று கண்டார்.—அப்போது சாயங்கால ௰௩
மும், விடியுங்காலமுமானதினால் மூன்றாம் நாள்
உண்டாயிற்று.
பிற்பாடு பராபரன் பகலுக்கும், இரவுக்கும் ௰௪
வித்தியாசம்பண்ணத்தக்க [7]வெளிச்சங்கள் வா
னமென்ற ஆகாசவிரிவிலே உண்டாகக்கடவ
தென்றும், அவைகள் அடையாளங்களாகவும்
குறித்தகாலங்கள் நாள்கள் வருஷங்களை அறிகி
றதற்காகவும் இருந்தன.—பூமியின்மேலே பிரகா ௰௫
சிக்கும்படிக்கு, வானமென்ற ஆகாசவிரிவிலே
வெளிச்சங்களாயிருக்கக்கடவதென்றும் சொன்
னார்; அது அப்படியே ஆயிற்று.—பராபரன் ௰௬
பகலை ஆளப் பெரிதாயிருக்கிற வெளிச்சமும்,
இரவை ஆளச் சிறிதாயிருக்கிற வெளிச்சமுமா
கிய இரண்டு பெரிய வெளிச்சங்களையும், நட்சத்
திரங்களையும் உண்டாக்கினார்.—அவைகளைப் ௰௭
பராபரன் பூமியின்மேல் பிரகாசிக்கவும்,—பக ௰௮
லையும், இரவையும் ஆளவும், வெளிச்சத்துக்கும்,
இருளுக்கும் வித்தியாசமுண்டாக்கவும், வான
மென்ற ஆகாசவிரிவிலே வைத்தார்; பராபரன்
அது நல்லதென்றுகண்டார்.—அப்போது சாயங் ௰௯
காலமும், விடியுங்காலமுமானதினால் நாலாம்
நாள் உண்டாயிற்று.
பிற்பாடு பராபரன் தண்ணீர்கள், நீந்தும் உ௰
உயிர்ப்பிராணிகளையும், பூமியின்மேல் ஆகாச
விரிவிலே பறக்கும் பறவைகளையும், திரளாய்ச்

1 சங். ௱௨.௫: ௪௨.௨௰. எரேமி. ௧.௰௪. எபி. ௰௧. ௩. 2 சங். ௩௩. ௬. 3 ௨ கொரி. ௪. ௬.
4 சங். ௱௩௬. ௫.—5 சங். ௱௪௮. ௪. சங். ௩௩. ௭: ௱௪. ௬—௯. 6 யோபு. ௩௮. ௮, ௰, ௰௧. 7 சங். ௱௩௬. ௭—௯.

௨௧ செனிப்பிக்கக்கடவதென்றார். — அப்படியே
பராபரன் பெரிய திமிங்கிலங்களையும், தண்
ணீர்கள் சாதிசாதியாகத் திரளாய்ச் செனிப்
பித்த சகலவித நீச்சுப்பிராணிகளையும், சாதி
சாதியாயிருக்கிற செட்டைகளுள்ள சகலவித
பட்சிகளையும் சிருஷ்டித்தார்; பராபரன் அது
௨௨ நல்லதென்று கண்டார்.—பராபரன் அவைகளை
ஆசீர்வதித்து, [1]நீங்கள் பலுகிப் பெருகிக் கடல்க
ளிலுள்ள தண்ணீர்களை நிரப்புங்களென்றும், பற
வைகள் பூமியிற் பெருகக்கடவதென்றும் சொன்
௨௩ னார்.—அப்போது சாயங்காலமும், விடியுங்கா
லமுமானதினால் ஐந்தாம் நாள் உண்டாயிற்று.
௨௪ பிற்பாடு பராபரன் பூமியானது சாதிசாதி
யான சீவசெந்துக்களாயிருக்கிற மிருகங்களை
யும், ஊர்வனவற்றையும், பூமியின் காட்டுமிரு
கங்களையும், சாதிசாதியாக எழும்பப்பண்ணக்
கடவதென்றார்; அது அப்படியே ஆயிற்று.—
௨௫ பராபரன் சாதிசாதியான பூமியின் காட்டு மிரு
கங்களையும், சாதிசாதியான மிருகங்களையும், சா
திசாதியான சகல பூமியின் ஊர்வனவற்றையும்
உண்டாக்கினார்; பராபரன் அது நல்லதென்று
கண்டார்.

௨௬ பிற்பாடு பராபரன் [2]நம்முடைய சாயலாக,
நம்முடைய உருவத்தின்படியே மனிதனை
உண்டாக்குவோமாக; அவர்கள் சமுத்திரங்க
ளின் மச்சங்களையும், ஆகாசத்துப் பறவைகளை
யும், மிருகசீவன்களையும், பூமி அனைத்தையும்,
பூமியின்மேல் ஊருகிற சகல ஊர்வனவற்றை
௨௭ யும் ஆளக்கடவர்களென்றார்.—[3]அப்படியே பரா
பரன் மனிதனைத் தம்முடைய சாயலாகச் சிரு
ஷ்டித்தார்; அவனைப் பராபரனுடைய சாயலா
கச் சிருஷ்டித்தார்; ஆணும் பெண்ணுமாக அவர்
௨௮ களைச் சிருஷ்டித்தார்.—அப்போது பராபரன்
அவர்களை ஆசீர்வதித்து, [4]நீங்கள் பலுகிப் பெரு
கி, பூமியை நிரம்பப்பண்ணி, அதைக் கீழ்ப்ப
டுத்திச் சமுத்திரத்தின் மச்சங்களையும், ஆகாசத்
துப் பறவைகளையும், பூமியின்மேல் நடமாடுகிற
சகல மிருகசீவன்களையும், ஆண்டுகொள்ளுங்க
ளென்று பராபரன் அவர்களுக்குச் சொன்னார்.
௨௯ பின்னையும் பராபரன் சொன்னதாவது:[5]இதோ
பூமியின்மீதெங்குமிருக்கிற விதைதரும் சகல
விதப் பூண்டுகளையும், விதைதரும் கனிமரங்களா
கிய சகலவித விருட்சங்களையும் உங்களுக்குக்
கொடுத்தோம்; அவைகள் உங்களுக்கு ஆகார
௩௰ மாயிருக்கக்கடவது.—சீவப்பிராணனுள்ள பூமி
யினுடைய சகல மிருகங்களுக்கும், ஆகாசத்தி
னுடைய சகல பறவைகளுக்கும், பூமியின்மேல்
ஊர்வன எல்லாவற்றுக்கும் சகல பச்சைப்பூண்
டு பயிர்களையும் ஆகாரமாகக் கொடுத்தோமென்
௩௧ றார்; அது அப்படியே ஆயிற்று.—அப்போது
பராபரன் தாம் உண்டாக்கின எல்லாவற்றை
யும் பார்த்தார்; இதோ [6]மெத்தவும் நன்றாயிருந்
தன; அப்படியே சாயங்காலமும், விடியுங்கா
லமுமானதினால் ஆறாம் நாள் உண்டாயிற்று.

## ௨. அதிகாரம்.

௧. முதலாவது ஓய்வுநாள், ௪. சிருஷ்டிப்பின் விவரம். ௮. ஏதேனென்னும் தோட்டம் நாட்டப்பட்டது. ௰. அதிலிருந்த நதி. ௰௭. நன்மை தீமை அறியத்தக்க விருட்சத்தின் கனிமாத்திரம் விலக்கப்பட்டது. ௰௯. சகல உயிர்களுக்கும் பெயர் தரிக்கப்பட்டது. ௨௧. ஸ்திரி உண்டாக்கப்பட்டு, விவாகம் நியமிக்கப்பட்டது.

இந்தப்பிரகாரமாக வானமும், பூமியும், அவை ௧
களுடைய எல்லாச் சேனையும் உண்டாக்கப்பட்
டுத் தீர்ந்தது.—[7]பராபரன் உண்டாக்கின தம் ௨
முடைய கிரியையை ஏழாம் நாளிலே நிறை
வேற்றினபிற்பாடு, அவர் தாம் உண்டாக்கின
தம்முடைய கிரியையெல்லாம் முடித்தபின்,
ஏழாம் நாளிலே ஓய்ந்திருந்தார்.-பராபரன் ஏழாம் ௩
நாளை ஆசீர்வதித்து, அதைப் பரிசுத்தமாக்கினார்;
அதேனெனில், பராபரன் உண்டுபண்ணிச் சி
ருஷ்டித்த தம்முடைய கிரியையையெல்லாம்
முடித்தபின் அதிலே ஓய்ந்திருந்தார்.
பராபரனாகிய கர்த்தர் பூமியையும், வானத்தை ௪
யும் உண்டாக்குகிற நாளிலே, வானமும், பூமி
யும் சிருஷ்டிக்கப்பட்ட பூர்வோத்திரங்கள் இ
வைகள்தான்.—நிலத்தினுடைய சகலவிதச் செ ௫
டிகள் பூமியின்மேல் இன்னம் இருந்ததில்லை;
நிலத்தினுடைய சகலவிதப் பூண்டுகள் இன்னம்
முளைத்ததுமில்லை. ஏனென்றால், பராபரனாகிய
கர்த்தர் பூமியின்மேல் இன்னம் வருஷிக்கப்
பண்ணினதில்லை; நிலத்தைக் கையாள மனிதனு
மில்லை.—அப்போது மூடுபனி பூமியிலிருந்தெ ௬
ழும்பி, பூமியையெல்லாம் நனைத்தது.
பராபரனாகிய கர்த்தர் மனிதனைப் [8]பூமியின் ௭
மண்ணிலே உருவாக்கி, சீவனின் சுவாசத்தை
அவன் நாசியிலே ஊதினார்; அப்போது மனிதன்
[9]சீவாத்துமாவானான்.
பராபரனாகிய கர்த்தர் ஏதேனிலே கிழக்கே ௮
ஒரு தோட்டத்தை நாட்டி, தாம் உருவாக்கின
மனிதனை அதிலே வைத்தார். — பார்வைக்கு ௯
விருப்பமும், புசிப்புக்கு நலமுமான சகலவித
விருட்சங்களையும், தோட்டத்தின் நடுவிலே
[10]சீவவிருட்சத்தையும், நன்மைதீமை அறியத்
தக்க விருட்சத்தையும், பராபரனாகிய கர்த்தர்
பூமியிலிருந்து முளைக்கப்பண்ணினார். — ஏதே ௰
னிலேயிருந்து ஒரு நதி தோட்டத்துக்குப் பா
யப் புறப்பட்டு, அங்கேயிருந்து பிரிந்து நாலுத
லையான ஆறுகளாயிற்று.-முதலாவதற்குப் பேர் ௰௧
பீசோன்; இது பொன் உண்டாயிருக்கும் ஆவி
லாதேசத்தையெல்லாம் சுற்றி ஓடுகின்றது.-அந் ௰௨
தத் தேசத்தின் பொன் நல்லது; அவ்விடத்திலே
பேதோலாகும், கோமேதகக்கல்லும் உண்டு.—
இரண்டாம் ஆற்றுக்குப் பேர் கீகோன்; இது ௰௩
எத்தியோப்பியத் தேசத்தையெல்லாம் சுற்றி
ஓடுகின்றது. — மூன்றாம் ஆற்றினுடைய பேர் ௰௪
[11]இதெக்கேல்; இது அசூரியாவுக்குக் கிழக்காய்

1 ௧ மோ. ௮. ௧௭ —2 ௧ மோ. ௯. ௬: 3 மத். ௧௯. ௪.
௬. ௬. ௧ கொரி. ௬. ௭. எபே. ௪. 4 ௧ மோ. ௮. ௧௭: ௬. ௧.
௨௩. ௨௪. கொலோ. ௩. ௰. 5 ௧ மோ. ௬. ௬.—6 ௫ மோ. ௩௨. ௪.

7 ௨ மோ. ௨௰. ௰௧: ௩௧. ௰௭.
௫ மோ. ௫. ௧௪. எபி. ௪. ௪.
8 ௧ கொரி. ௰௫. ௪௭.
9 ௧ கொரி. ௰௫. ௪௫.
10 வெளி. ௨. ௭.
11 தானி. ௰. ௪.

ஓடுகின்றது; நாலாம் ஆறேவென்றால் ஐபி
ராத்து.
௰௫ பராபரனாகிய கர்த்தர் மனிதனை அழைத்துக்
கொண்டு, அவனை ஏதேன் தோட்டத்திலே
௰௬ அதைக் கையாளவும், காக்கவும் வைத்தார்.—பரா
பரனாகிய கர்த்தர் மனிதனுக்குக் கற்பித்துச் சொ
ன்னதாவது: நீதோட்டத்தினுடைய சகலவிருட்
சத்தின் கனியிலும் புசிக்கவே புசிக்கலாம்.—
௰௭ ஆனால் நன்மை தீமை அறியத்தக்க விருட்சத்
தின் கனியிலே புசியாயாக; ஏனெனில், அதிலே
நீ புசிக்கிறநாளிலே [1]சாவவே சாவாயென்றார்.
௰௮ பின்னையும் பராபரனாகிய கர்த்தர் மனிதன்
ஒண்டியாயிருக்கிறது நல்லதல்ல; அவனுக்கு
முன்பாக இருக்க, ஒரு துணையை அவனுக்கு
௰௯ உண்டாக்குவோமென்றார்.—ஏனெனில், பரா
பரனாகிய கர்த்தர் மண்ணினாலே வெளியின் சக
லவித மிருகங்களையும், ஆகாசத்தினுடைய சகல
பறவைகளையும் உருவாக்கியிருந்து, மனிதன்
அண்டைக்கு அவைகளுக்கு எப்படிப் பேரிடு
வானென்று பார்ப்பதற்கும், அந்தந்தச் சீவப்பிரா
ணிக்கு மனிதன் எந்தெந்தப் பேரிடுவானோ,
அதுவே அதற்குப் பேராயிருப்பதற்கும் கூட்
௨௰ டிவந்தார்.—அப்படியே மனிதன் சகலவித மிரு
கத்துக்கும், ஆகாசத்துப் பறவைகளுக்கும், வெ
ளியின் சகல சீவனுக்கும் பேரிட்டான்; ஆனால்
தனக்குமுன்பாக இருக்கும் துணையை மனிதன்
கண்டதில்லை.
௨௧ அப்போது பராபரனாகிய கர்த்தர் மனிதன்
மேல் அயர்ந்த நித்திரையை விழப்பண்ணினார்;
அவன் நித்திரைபோனான்; அப்போது அவர்
அவன் விலாவெலும்புகளில் ஒன்றை எடுத்து,
அந்த இடத்தைச் சதையினால் அடைத்தார்.—
௨௨ [2]தாம் மனிதனில் எடுத்த விலாவெலும்பைப் பரா
பரனாகிய கர்த்தர் ஸ்திரியாகஉண்டாக்கி,அவளை
௨௩ மனிதனண்டைக்குக் கொண்டுவந்தார்.— அப்
போது மனிதன் இவள் இப்போது [3]என் எலும்
பில் எலும்பும், என் மாம்சத்தில் மாம்சமும்
ஆனாள்; இவள் மனிதனில் எடுக்கப்பட்டபடி
யினாலே, இவள் மனுஷியென்று பேரிடப்படுவா
௨௪ ளென்றான். — [4]இதின்நிமித்தமாகப் புருஷன்
தன் தகப்பனையும், தன் தாயையும்விட்டு, தன்
பெண்சாதியுடனே இசைந்திருப்பான்; [5]இருவ
ரும் ஒரே மாம்சமாக இருப்பார்களென்றார்.—
௨௫ ஆதாமும் அவன் பெண்சாதியுமாகிய இருவ
ரும் [6]நிருவாணமாயிருந்தும், வெட்கப்படாதி
ருந்தார்கள்.

## ௩. அதிகாரம்.

௧ சர்ப்பம் ஏவாளை வஞ்சித்தது. ௬. ஆதாமும் ஏவாளுமாகிய ஆதிமனிதர்கள் பாவம்செய்தது. ௯. அவர்களைப் பராபரன் விசாரித்தது. ௰௪. சர்ப்பம் சபிக்கப்பட்டது. ௰௫. வாக்குத்தத்தம்பண்ணப்பட்டது. ௰௬. மனிதர்களுக்குத் தண்டனை கொடுக்கப்பட்டது. ௨௧. அவர்கள் முதல் முதல் தரித்துக்கொண்ட உடை. ௨௨. அவர்கள் பரதீசைவிட்டுத் துரத்தப்பட்டது.

௧ சர்ப்பமோவெனில், பராபரனாகிய கர்த்தர் உண்
டாக்கின வெளியினுடைய சகல சீவன்களைப்
பார்க்கிலும் தந்திரமுள்ளதாயிருந்து, ஸ்திரியு
டனே, நீங்கள் தோட்டத்தினுடைய எல்லாவி
ருட்சங்களின் கனியிலும் புசிக்கவேண்டா
மென்று பராபரன் சொன்னாரோ என்றது.—அப் ௨
போது ஸ்திரி சர்ப்பத்துடனே சொன்னதாவது:
தோட்டத்தினுடைய விருட்சங்களின் கனியில்
புசிக்கிறோம்.—ஆனால் தோட்டத்தின் நடுவிலே ௩
இருக்கிற விருட்சத்தின் கனியைக்குறித்து, பரா
பரன், நீங்கள் சாவாதபடிக்கு அதிலே புசிக்க
வும் அதைத்தொடவும்வேண்டாமென்றாரென்று
சொன்னாள்.—[7]அப்போது சர்ப்பம் ஸ்திரியுட ௪
னே, நீங்கள் சாவவே சாவதில்லை.—ஏனெனில், ௫
நீங்கள் அதிலே புசிக்கும்நாளிலே உங்கள் கண்
கள் திறக்கப்படுமென்றும், நீங்கள் நன்மையும்
தீமையும் அறிந்து, பராபரனைப்போல இருப்பீர்
களென்றும், பராபரன் அறிவாரென்றது.
[8]அப்போது ஸ்திரியானவள், அந்த விருட் ௬
சம் போசனத்துக்கு நல்லதென்றும், அது கண்
களுக்கு விருப்பமும், புத்தியைத் தருகிறதற்கான
இச்சிக்கப்படத்தக்க விருட்சமுமாயிருக்கின்ற
தென்றும் பார்த்து, அதின் கனியிலே அறுத்துப்
புசித்து, தன் புருஷனுக்குங்கூடக் கொடுத்தாள்;
அவனும் புசித்தான். —[9]அப்போது அவர்கள் ௭
இருவருடைய கண்களும் திறக்கப்பட்டன;
அவர்கள் தாங்கள் நிருவாணிகளென்று கண்ட
றிந்து, அத்தியிலைகளைத் தைத்துத் தங்களுக்குக்
கச்சைகளை உண்டுபண்ணினார்கள்.—பகல் கு ௮
ளிர்ச்சியான வேளையிலேயென்றால், தோட்டத்
தில் உலாவிக்கொண்டிருக்கிற பராபரனாகிய
கர்த்தருடைய சத்தத்தைக் கேட்டார்கள்; அப்
போது ஆதாமும், அவன் பெண்சாதியும் பரா
பரனாகிய கர்த்தரின் சன்னிதியைவிலக, தோட்
டத்து விருட்சங்களின் நடுவில் ஒளித்துக்
கொண்டார்கள்.—ஆனால் பராபரனாகிய கர்த் ௯
தர் ஆதாமைக் கூப்பிட்டு அவனை, நீ எங்கே
யென்றார். — அதற்கவன் நான் தேவரீருடைய ௰
சத்தத்தைத் தோட்டத்திலே கேட்டு, நான் நிருவா
ணியானபடியினாலே பயந்து ஒளித்துக்கொண்
டேனென்றான் —அப்போது அவர், நீ நிருவாணி ௰௧
யென்று உனக்கு அறிவித்தவன் யார்? [10]புசிக்க
வேண்டாமென்று நாம் உனக்குக் கற்பித்த வி
ருட்சத்தின் கனியைப் புசித்தாயோவென்றார்.—
அதற்கு ஆதாம், என்னுடனே இருக்கத் தேவ ௰௨
ரீர் கட்டளையிட்ட ஸ்திரியானவள் விருட்சத்
தின் கனியை எனக்குக் கொடுத்தாள்; நான்
புசித்தேனென்றான்.—அப்போது பராபரனாகிய ௰௩
கர்த்தர் ஸ்திரியைநோக்கி, நீ இதைச் செய்த
தென்னவென்றார்; ஸ்திரியானவள், சர்ப்பம்
என்னை மோசம்போக்கினதினாலே புசித்தே
னென்றாள்.
அப்போது பராபரனாகிய கர்த்தர் சர்ப்பத்து ௰௪
டனே சொன்னதாவது: நீ இதைச் செய்தபடியி

1 உரோ. ௬.௨௩.-2 ௧ கொரி. ௰௧.அ, ௯,௧௧.—4 மத். ௰௯. ௫. மாற். ௰.௭. ௭. ௧ தீமோ ௨.௰௩.-3 எபே.௫. 5 எபே.௫.௨௮,௨௯.-6 ௧ மோ.௩.௭.
7 யோவா.அ.௪௪. ௨ கொரி. ௰௧.௩. 9 ௧ மோ. ௨. ௨௫.
8 ௧ தீமோ. ௨. ௰௪. 10 ௧ மோ. ௨.௰௬.௰௭.

ஞலே எல்லா மிருகங்களிலும், வெளியினுடை
ய எல்லாச் சீவன்களிலும் நீ சபிக்கப்பட்டது;
நீ உன் வயிற்றினுலே நகர்ந்து, உயிரோடிருக்
௰௫ கிற நாளெல்லாம் மண்ணைத் தின்பாய்.—உனக்
கும் ஸ்திரிக்கும் உன்னுடைய வித்துக்கும் அவ
ளுடைய வித்துக்கும் பகையை உண்டாக்கு
வோம், [1]இவர் உன் தலையை நசுக்குவார்; நீ அவர்
குதிகாலை நசுக்குவாயென்ருர்.
௰௬ [2]ஸ்திரியோடே அவர் சொன்னதாவது: நீ கர்ப்
பவதியாய் இருக்கும் வருத்தத்தை மிகவும் பெ
ருகப்பண்ணுவோம்; வேதனையோடே பிள்ளை
களைப் பெறுவாயென்றும், உன்னுடைய இச்சை
உன் புருஷனுக்குக் கீழாயிருப்பதாக; அவன்
உன்னை ஆளக்கடவானென்றும் சொன்ஞர்.
௰௭ பிற்பாடு ஆதாமோடே அவர் சொன்னதாவது:
நீ உன் பெண்சாதியின் சத்தத்துக்குச் செவிகொ
டுத்து,புசியாயாகவென்று நாம் உனக்குக்கற்பித்த
விருட்சத்தின் கனியைப் புசித்தபடியினுலே,
பூமி உன்நிமித்தம் சபிக்கப்பட்டிருக்கும்; நீ உ
யிரோடிருக்கிற நாளெல்லாம் வருத்தத்தோடே
௰௮ அதின் பலனைப் புசிப்பாய்.—அது உனக்கு
முள்ளும், குருக்கும் முளைப்பிக்கும்; வெளி
௰௯ யின் பயிர்வகைகளைப் புசிப்பாய்.—நீ பூமிக்குள்
திரும்புமட்டும் [3]உன் முகத்தின் வேர்வையால்
அப்பம் புசிக்கக்கடவாய்; அதேனெனில், அ
தில் எடுக்கப்பட்டாய். ஏனென்ருல், [4]நீ மண்ணு
யிருக்கிருய்; மண்ணுக்குத் திரும்புவாயென்ருர்.
௨௰ ஆதாம் தன் பெண்சாதிக்கு ஏவாளென்று பே
ரிட்டான்; ஏனெனில், அவள் சீவனுள்ளோருக்
௨௧ கெல்லாம் தாயானவள்.—பராபரனுகிய கர்த்தர்
ஆதாமுக்கும், அவன் பெண்சாதிக்கும், தோல்
அங்கிகளை உண்டாக்கி, அவர்களுக்குத் தரிப்
பித்தார்.
௨௨ பிற்பாடு பராபரனுகிய கர்த்தர் இதோ மனி
தன் நன்மைதீமை அறியத்தக்கவனுய் நம்மில்
ஒருத்தனைப்போல இருந்தான்; இப்போதும் அ
வன் தன் கையை நீட்டிச் சீவவிருட்சத்தின்
கனியையும் அறுத்துப் புசித்து, என்றைக்கும்
உயிரோடிராதபடிக்குக் கட்டளைபண்ணவேணு
௨௩ மென்று சொல்லி,–பராபரனுகிய கர்த்தர் அவனை
அவன் எடுக்கப்பட்ட பூமியைப் பயிரிடும்படிக்
கு, ஏதேன் தோட்டத்திலிருந்து அனுப்பிவிட்
௨௪ டார்.—அவர் மனிதனைத் துரத்திவிட்டு, ஏதே
னென்ற தோட்டத்துக்குக் கிழக்கே கேருபின்க
ளையும், அசைவாடுகிற சுடர் ஒளியுள்ள பட்டை
யத்தையும், சீவவிருட்சத்துக்குப் போகிற வழி
யைக் காப்பதற்காக வைத்தார்.

## ௪. அதிகாரம்.

௧. காயீன் ஆபேல் என்பவர்களுடைய பிறப்பு, தொழில், மார்க்கம், முதலி யவற்றைச் சொல்லியது. ௮. ஆபேல் கொலைசெய்யப்பட்டது. ௰௧. காயீன் சபிக்கப்பட்டது. ௰௭. ஆனேக்கென்ற முதல் பட்டணம். ௰௯. லாமேக்கையும், அவன் இரண்டு பெண்சாதிகளையுங்குறித்தது. ௨௫. சேத் என்பவனும், ௨௬. ஏனோஸ் என்பவனும் பிறந்தது.

௧ பிற்பாடு ஆதாம் தன் பெண்சாதியாகிய ஏவாளை
அறிந்தான்; அவள் கர்ப்பம்தரித்துக் காயீனைப்
பெற்று, கர்த்தராகிய புருஷன் எனக்கிருக்கிரு
ரென்ருள்.—அப்புறம் அவன் சகோதரனுகிய ௨
ஆபேலைப் பெற்ருள்; ஆபேல் ஆட்டுமேய்ப்பனு
ஞன்; காயீனேவெனில், நிலத்தில் பயிரிடுகிறவ
ஞனன்.—சிலநாள் சென்றபிற்பாடு சம்பவித்த ௩
தேதென்ருல், காயீன் நிலத்தின் கனியிலே கர்த்
தருக்குக் காணிக்கையைக் கொண்டுவந்தான்.–
ஆபேலோவென்ருல், அவனும் தன் மந்தையின் ௪
தலையீற்றுகளிலும், அவைகளின் கொழுப்பிலும்
சிலவற்றைக் கொண்டுவந்தான், ஆனுல் [5]கர்த்தர்
ஆபேலையும், அவன் காணிக்கையையும் நோக்
கிப்பார்த்தார்.—காயீனையும், அவன் காணிக்கை ௫
யையும் நோக்கிப் பாராதேபோனுர்; அப்போது
காயீனுக்கு மிகவும் எரிச்சல் உண்டாய், அவ
னுடைய முகநாடி வேறுபட்டது.—அப்போது ௬
கர்த்தர் காயீனேடே சொன்னதாவது: உனக்கு
ஏன் எரிச்சலுண்டாயிற்று? உன் முகநாடி ஏன்
வேறுபட்டது?—நீ நன்மைசெய்தால், மேன்மை ௭
இல்லையோ? நீ நன்மைசெய்யாயேயாகில், பாவம்
வாசற்படியிலே படுத்துக்கொண்டிருக்கிறது; அ
தின் இச்சை உன்பேரில் வைக்கப்பட்டது;
[6]நீயோவெனில், அதை ஆண்டுகொள்ளுவாயாக
வென்ருர்.
அப்போது காயீன் தன் சகோதரனுகிய ஆபே ௮
லோடே பேசினுன்; அவர்கள் வெளியிலே
இருக்கிறபோதோவெனில் சம்பவித்ததேதென்
ருல், காயீன் தன் சகோதரனுகிய ஆபேலுக்கு
விரோதமாய் எழும்பி, [7]அவனைக் கொன்றுபோட்
டான்.—கர்த்தர் காயீனுடனே உன் சகோதரனு ௯
கிய ஆபேல் எங்கே என்ருர்? அதற்கவன் நான்
அறியேன்; நான் என் சகோதரனுக்குக் காவலா
ளியோ என்ருன்.—அப்போது அவர் சொன்ன ௰
தாவது: என்ன செய்தாய்? உன் சகோதரனு
டைய இரத்தத்தின் சத்தம் [8]பூமியிலிருந்து நம்
மைநோக்கிக் கூப்பிட்டுக்கொண்டிருக்கிறது.—
இப்போது உன் சகோதரனுடைய இரத்தத்தை ௰௧
உன் கையிலே வாங்கிக்கொள்ளத் தன் வாயைத்
திறந்த இந்தப் பூமியிலே நீ இராதபடிக்குச் சபிக்
கப்பட்டிருப்பாய். — நீ நிலத்தைப் பயிரிடும் ௰௨
போது, அது இனி தன் சாரத்தை உனக்குக் கொ
டாது; நீ பூமியில் நிலையற்றவனும், அலைகிறவ
னுமாயிருப்பாயென்ருர். — அப்போது காயீன் ௰௩
கர்த்தரோடே சொன்னதாவது: என் அக்கிரமம்
மன்னிக்கப்படக்கூடாதபடிக்குப்பெரிதாயிருக்
கிறது.—இதோ இன்று என்னை இந்தத் தேசத்தி ௰௪
லிருந்து துரத்திவிடுகிறீர்; நான் தேவரீருடைய
சமுகத்தை விலகி மறைந்து, [9]பூமியில் நிலையற்
றவனும், அலைகிறவனுமாய் இருப்பேன்; இப்
படி என்னைக் கண்டுபிடிக்கிறவனெல்லாம் என்
னைக் கொன்றுபோடுவானென்ருன்.–அப்போது ௰௫
கர்த்தர் அவனுடனே, ஆகையால் காயீனைக்கொல்
லுகிற எவன்மேலும் ஏழு பழி சுமருமென்று

1 ௧ யோ. ௩. ௮.—2 ௧ கொரி. ௰௧. ௩; ௰௪. ௩௪. எபே. ௫. ௨௨, ௨௩. 3 ௨ தெச. ௩. ௰.—4 ௧ மோ. ௰௮. ௨௭.—5 எபி. ௰௧. ௪.

6 உரோ. ௬. ௰௨.—7 மத். ௨௩. ௩௫. ௧ யோ. ௩. ௰௨. யூதா. ௰௧. 8 எபி. ௰௨. ௨௪.—9 யோபு. ௰௫. ௨௰, ௨௧.

சொல்லி, காயீனைக் கண்டுபிடிக்கிறவனெல்லாம்
அவனைக் கொன்றுபோடாதபடிக்குக் கர்த்தர்
அவனுக்கு ஒரு அடையாளம்போட்டார்.—
௰௬ அப்படியே காயீன் கர்த்தருடைய சமுகத்தை
விட்டுப் புறப்பட்டு, ஏதேனுக்குக் கிழக்கான
நோதென்ற தேசத்தில் குடியிருந்தான்.
௰௭ காயீன் தன் பெண்சாதியை அறிந்தான்;
அவள் கர்ப்பம் தரித்து, ஏனோக்கைப் பெற்றாள்;
ஒரு பட்டணத்தைக் கட்டி, அந்தப் பட்டணத்
துக்குத் தன் குமாரன் ஏனோக்குடைய பேரைத்
௰௮ தரித்தான்.—ஏனோக்குக்கு ஈராத் பிறந்தான்;
ஈராத் மெகூயவேலைப் பெற்றான்; மெகூயவேல்
மெத்தூசவேலைப் பெற்றான்; மெத்தூசவேல்
லாமேகைப் பெற்றான்.
௰௯ லாமேக் இரண்டு பெண்சாதிகளை விவாகம்
பண்ணினான்; முதலாம் பெண்சாதியின் பேர்,
ஆதாள், இரண்டாம் பெண்சாதியின் பேர், சில்
௨௰ லாள்.—ஆதாள் யாபாலைப் பெற்றாள்; அவன்
கூடாரங்களில் வாசம்பண்ணி, மந்தை வைக்கி
௨௧ றவர்களுக்குத் தகப்பனானான்.—அவன் சகோத
ரனுடைய பேர் யூபால், அவன் சகல சுரமண்ட
லக்காரருக்கும் கின்னரக்காரருக்கும் தகப்பனா
௨௨ னான்.—சில்லாளும் கர்ப்பம்தரித்துத் தூபாள்
காயீனைப் பெற்றாள்; அவன் சகல கன்னருக்கும்
கொல்லருக்கும் முதலாளி; தூபாள்காயீனுடைய
௨௩ சகோதரி நாமாள்.—லாமேக் தன் பெண்சாதிக
ளாகிய ஆதாளோடும், சில்லாளோடும் சொன்
னதாவது: லாமேகின் பெண்சாதிகளே, என் சத்
தத்தைக் கேட்டு, என் சொல்லுக்குக் கவனமா
யிருங்கள்; ஒரு மனிதனை எனக்குக் காயமுண்
டாகவும், ஒரு வாலிபனை எனக்குத் தழும்புண்
௨௪ டாகவும் கொன்றுபோட்டேன்.—காயீனுக்காக
ஏழு பழியும், லாமேகுக்காக எழுபத்தேழுபழி
யும் சுமருமென்றான்.
௨௫ ஆதாம் பின்னையும் தன் பெண்சாதியை அறிந்
தான்; அவள் ஒரு குமாரனைப் பெற்று, காயீன்
கொன்றுபோட்ட ஆபேலுக்குப்பதிலாக, பரா
பரன் எனக்கு வேறொரு வித்தைக் கொடுத்தா
ரென்று சொல்லி, அவனுக்குச் [1]சேத்தென்று பே
௨௬ ரிட்டாள்.—சேத்துக்கும் ஒரு குமாரன் பிறந்
தான்; அவனுக்கு [2]ஏனோஸ் என்று பேரிட்
டான். அப்போது கர்த்தருடைய நாமத்தைத்
தொழுதுகொள்ளத் துவக்கமாயிற்று.

## ௫. அதிகாரம்.

௧. ஆதாம்முதல் நோவாபரியந்தம் இருந்த பிதாக்களின் வம்ச அட்ட வணையையும், ஆயுளையும், மரணத்தையும், ௨௪. ஏனோக்குடைய தேவ பக்தியையும், அவன் பாக்கியசேர்ந்த வழியையும் குறித்தது.

௧ ஆதாமுடைய சந்ததிகளின் அட்டவணையா
வது: [3]பராபரன் மனிதனைச் சிருஷ்டிக்கிற நா
ளிலே [4]அவனைப் பராபரனுடைய சாயலாக
௨ உண்டாக்கினார்.—அவர்களை ஆணும் பெண்
ணுமாகச் சிருஷ்டித்து, அவர்களை ஆசீர்வதித்து,
அவர்கள் சிருஷ்டிக்கப்பட்ட நாளிலே அவர்
களுக்கு மனிதரென்று பேரிட்டார்.
ஆதாம் நூற்றுமுப்பது வருஷம் உயிரோடி ௩
ருந்தபோது, தன் சாயலாகத் தன்னுடைய ரூபத்
தின்படியே ஒரு குமாரனைப் பெற்று, [5]அவனுக்
குச் சேத்தென்று பேரிட்டான்.—ஆதாம் சேத் ௪
தைப் பெற்றபிற்பாடு, எண்ணூறு வருஷம் உயி
ரோடிருந்து, குமாரரையும், குமாரத்திகளையும்
பெற்றான்.—ஆகையால், ஆதாம் உயிரோடிருந்த ௫
நாளெல்லாம் தொளாயிரத்து முப்பது வருஷமா
யிருந்தது; பிற்பாடு மரித்தான்.
சேத் நூற்றைந்து வயதாயிருந்து, ஏனோசைப் ௬
பெற்றான்.—சேத் ஏனோசைப் பெற்றபிற்பாடு ௭
எண்ணூற்றேழு வருஷம் உயிரோடிருந்து, குமா
ரரையும், குமாரத்திகளையும் பெற்றான்.—ஆகை ௮
யால், சேத்துடைய நாளெல்லாம் தொளாயிரத்
துப் பன்னிரண்டு வருஷமாயிருந்தது; பிற்பாடு
மரித்தான்.
ஏனோஸ் தொண்ணூறு வயதாயிருந்து, கேனா ௯
னைப் பெற்றான்.—ஏனோஸ் கேனானைப் பெற்ற ௰
பிற்பாடு, எண்ணூற்றுப்பதினைந்து வருஷம் உயி
ரோடிருந்து, குமாரரையும், குமாரத்திகளையும்
பெற்றான்.—ஆகையால், ஏனோசுடைய நாளெல் ௰௧
லாம் தொளாயிரத்தைந்து வருஷமாயிருந்தது;
பிற்பாடு மரித்தான்.
கேனான் எழுபது வயதாயிருந்து, மகலாலே ௰௨
யேலைப் பெற்றான்.—கேனான் மகலாலேயேலைப் ௰௩
பெற்றபிற்பாடு, எண்ணூற்று நாற்பது வருஷம்
உயிரோடிருந்து, குமாரரையும், குமாரத்திகளை
யும் பெற்றான்.—ஆகையால், கேனானுடைய நா ௰௪
ளெல்லாம் தொளாயிரத்துப்பத்து வருஷமாயி
ருந்தது; பிற்பாடு மரித்தான்.
மகலாலேயேல் அறுபத்தைந்து வயதாயிருந்து, ௰௫
யாரேதைப் பெற்றான்.—மகலாலேயேல் யாரே ௰௬
தைப் பெற்றபிற்பாடு, எண்ணூற்று முப்பதுவரு
ஷம் உயிரோடிருந்து, குமாரரையும், குமாரத்திக
ளையும் பெற்றான்.—ஆகையால், மகலாலேயேலு ௰௭
டைய நாளெல்லாம் எண்ணூற்றுத் தொண்ணூற்
றைந்து வருஷமாயிருந்தது; பிற்பாடு மரித்தான்.
யாரேத் நூற்றறுபத்திரண்டு வயதாயிருந்து, ௰௮
ஏனோக்கைப் பெற்றான்.—யாரேத் ஏனோக்கைப் ௰௯
பெற்றபிற்பாடு, எண்ணூறு வருஷம் உயிரோடி
ருந்து, குமாரரையும், குமாரத்திகளையும் பெற்
றான்.—ஆகையால், யாரேத்துடைய நாளெல்லாம், ௨௰
தொளாயிரத்தறுபத்திரண்டு வருஷமாயிருந்தது;
பிற்பாடு மரித்தான்.
ஏனோக் அறுபத்தைந்து வயதாயிருந்து, மெத் ௨௧
தூசலாகைப் பெற்றான்.—ஏனோக் மெத்தூசலா ௨௨
கைப் பெற்றபிற்பாடு, முந்நூறு வருஷம் பரா
பரனோடே சஞ்சரித்துக்கொண்டிருந்து, குமா
ரரையும், குமாரத்திகளையும் பெற்றான்.—ஏனோக் ௨௩
குடைய நாளெல்லாம் முந்நூற்றறுபத்தைந்து
வருஷமாயிருந்தது.—[6]ஏனோக் பராபரனோடே ௨௪

1 ௧ பேது. ௫. ௯.—2 ௧ மோ. ௬. ௧.—3 ௧ காலா. ௧. ௩.

4 ௧ மோ. ௧. ௨௭.—5 ௧ மோ. ௪. ௨௫.—6 எபி. ௰௧. ௫. யூதா. ௰௪.

சஞ்சரித்துக்கொண்டிருக்கையில், இராதேபோ
ஞன்; ஏனெனில், பராபரன் அவனை [1]எடுத்துக்
கொண்டார்.
௨௫ மெத்தூசலாக் நூற்றெண்பத்தேழு வயதாயி
௨௬ ருந்து லாமேகைப் பெற்ருன்.—மெத்தூசலாக்
லாமேகைப் பெற்றபிற்பாடு, எழுநூற்றெண்பத்
திரண்டு வருஷம் உயிரோடிருந்து, குமாரரை
௨௭ யும், குமாரத்திகளையும் பெற்ருன்.—ஆகையால்,
மெத்தூசலாக்குடைய நாளெல்லாம் தொளாயிரத்
தறுபத்தொன்பது வருஷமாயிருந்தது; பிற்பாடு
மரித்தான்.
௨௮ லாமேக் நூற்றெண்பத்திரண்டு வயதாயிருந்து,
௨௯ ஒரு குமாரனைப் பெற்று, — கர்த்தர் சபித்த பூமி
யிலே உண்டான நம்முடைய வேலையிலும்,
நம்முடைய கைகளின் வருத்தத்திலும், இவன்
நம்மைத் தேற்றுவானென்று சொல்லி, அவனுக்
௩௰ கு நோவாவென்று பேரிட்டான்.—லாமேக் நோ
வாவைப் பெற்றபிற்பாடு, ஐந்நூற்றுத் தொண்
ணூற்றைந்து வருஷம் உயிரோடிருந்து, குமார
௩௧ ரையும் குமாரத்திகளையும் பெற்ருன். — ஆகை
யால், லாமேக்குடைய நாளெல்லாம் எழுநூற்றெ
ழுபத்தேழு வருஷமாயிருந்தது; பிற்பாடு மரித்
தான்.
௩௨ நோவா ஐந்நூறு வயதானபோது, நோவா [2]சே
மையும், காமையும், யாப்பேத்தையும் பெற்ருன்.

## ௬. அதிகாரம்.

*௧. பராபரனுடைய கோபத்தை எழுப்பிச் சலப்பிரளயத்தை உண்டுபண்ணுவித்த உலகத்தாருடைய அக்கிரமங்களைக் குறித்தது. ௮. நோவா கிருபைபெற்றது. ௰௪. பேழையின் அளவு முதலியவற்றைக் குறித்தது.*

௧ **ம**னிதர் பூமியின்மேல் பெருகத்துவக்கி, அவர்க
ளுக்குக் குமாரத்திகள் பிறந்தபோது சம்பவித்
௨ ததேதென்ருல்,—பராபரனுடைய குமாரர் மனி
தருடைய குமாரத்திகளை அவர்கள் சவுந்தரிய
முள்ளவர்களென்று பார்த்து, தாங்கள் தெரிந்து
கொண்ட அனைவரிலும் பெண்களைக் கொண்
௩ டார்கள். — அப்போது கர்த்தர், [3]நம்முடைய
ஆவி என்றென்றைக்கும் மனிதரோடே போரா
டுவதில்லை; ஏனெனில், அவர்கள்தானும் மாம்
சம், அவர்கள் இருக்கப்போகிற நாள்கள் நூற்
றிருபது வருஷமென்ருர்.
௪ அந்நாட்களில் இராட்சதர் பூமியிலே இருந்
தார்கள்; பிற்பாடு பராபரனுடைய குமாரர் மனி
தருடைய குமாரத்திகளோடே கூடுகிறதினால்,
இவர்கள் அவர்களுக்குப் பிள்ளைகளைப் பெற்ற
போது, இவர்களும் பூர்வத்தில் பேர்போன மனி
தராகிய பலவான்களானுர்கள்.
௫ ஆனல், மனிதருடைய அக்கிரமம் பூமியிலே
பெரியதென்றும், [4]அவன் இருதயத்தினுடைய
நினைவுகளின் தோற்றுதலெல்லாம் நித்தம் பொல்
௬ லாததேயென்றும், [5]கர்த்தர் கண்டபோது,—தாம்
பூமியிலே மனிதனை உண்டாக்கினதற்குக் கர்த்
தர் மனஸ்தாபப்பட்டார்; அது அவர் இருதயத்
௭ துக்கு நோவாயிருந்தது. — அப்போது கர்த்தர்
சொன்னதாவது: நாம் சிருஷ்டித்த மனிதனைப்
பூமியின்மேலே வைக்காமல், மனிதன்முதற்
கொண்டு மிருகங்கள் பரியந்தமும், ஊர்வன
பரியந்தமும், ஆகாசத்துப் பறவைகள் பரியந்த
மும், உண்டாயிருக்கிறவைகளை நிக்கிரகம்பண்
ணுவோம்; ஏனெனில், நாம் அவர்களை உண்
டாக்கினது நமக்கு மனஸ்தாபமாயிருக்கிறது
என்ருர்.
ஆனல், [6]நோவாவுக்குக் கர்த்தருடைய கண் ௮
களில் கிருபைகிடைத்தது.—நோவாவின் சந்ததி ௯
யாவது: நோவா தன் காலத்தில் இருக்கிறவர்க
ளுக்குள்ளே நீதியும் உத்தமமுமான மனிதனுயி
ருந்தான்; [7]நோவா பராபரனோடே சஞ்சரித்து
வந்தான்.—[8]நோவா சேம் காம் யாப்பேத்தென்ற ௰
மூன்று குமாரரைப் பெற்ருன். — பூமியோவெ ௰௧
னில், பராபரனுக்கு முன்பாகக் கெடுக்கப்பட்
டிருந்தது; கொடுமையினாலே பூமி நிறைந்தது.—
பராபரன் பூமியைப் பார்த்தார்; இதோ கெடுக்கப் ௰௨
பட்டதாயிருந்தது; ஏனெனில், மாம்சமெல்
லாம் பூமியின்மேல் தன் வழியைக் கெடுத்தது.
அப்போது பராபரன் நோவாவுக்குச் சொன் ௰௩
னதாவது: எல்லா மாம்சத்தின் முடிவும் நமக்கு
முன்பாக வந்தது; ஏனெனில், அவர்களால்
பூமி கொடுமையினாலே நிறைந்தது; இதோ நாம்
அவர்களைப் பூமியோடுங்கூட அழித்துப்போடு
வோம். — நீ கொப்பேர் மரங்களால் உனக்கு ௰௪
ஒரு பேழையை உண்டாக்கு, அந்தப் பேழையி
லே அறைகளை உண்டாக்கி, அதன் உள்ளும்
புறம்புமாகக் கிசில் பூசுவாயாக.-நீ அதைப் பண் ௰௫
ணவேண்டிய பிரகாரமாவது: பேழையின் நீளம்
முந்நூறு முழமும், அதின் அகலம் ஐம்பது முழ
மும், அதின் உயரம் முப்பது முழமுமாயிருப்ப
தாக.—நீ பேழைக்கு வெளிச்சம் வரும் திறப் ௰௬
பைப் பண்ணி, மேல் தட்டுக்கு ஒருமுழத் தாழ்த்
தியிலே அதைச் செய்துமுடித்து, பேழையின்
கதவை அதின் பக்கத்தில் வைத்து, கீழ் அறை
களையும், இரண்டாம் தட்டின் அறைகளையும்,
மூன்ரும் தட்டின் அறைகளையும் பண்ணுவா
யாக.—ஏனென்ருல், இதோ வானத்தின் கீழே ௰௭
சீவசுவாசமுள்ள எல்லா மாம்சத்தையும் அழிக்க
நாம் பூமியின்மேல் சலப்பிரளயத்தை வரப்பண்
ணுவோம்; பூமியிலுள்ளதெல்லாம் மாண்டு
போம். — ஆனல், உன்னோடே நம்முடைய ௰௮
உடம்படிக்கையை நிலைநிறுத்துவோம்; நீயும்,
உன்னோடேகூட உன்குமாரரும் உன் பெண்
சாதியும், உன் குமாரரின் பெண்சாதிகளும்,
பேழைக்குள் பிரவேசிக்கக்கடவீர்கள். — உன் ௰௯
னோடேகூட உயிரோடே காப்பதற்கு, நீ எல்
லாவித மாம்சமான சகல சீவன்களிலும் [9]வகை
ஒன்றுக்கு ஆணும் பெண்ணுமாயிருக்கிற ஒவ்
வொரு சோடு பேழைக்குள் சேர்த்துக்கொள்
வாயாக.—சாதிசாதியான பறவைகளிலும், சாதி ௨௰
சாதியான மிருகங்களிலும், சாதிசாதியான பூமி

1 உ இரா. உ. ௰௧. அப். எ. ௯௧.—4 க மோ. அ.
2 க மோ.க.௰.—3 சங்.௧௨.௭. ௨௧. மத். ௰௫. ௰௧.
5 சங். ௰௪. ௨.—6 எபி. ௰௧. எ. 8 க மோ. ௯. ௧௨.
7 க மோ. ௯. ௨௨. 9 க மோ. எ. ௯.

யின் எல்லா ஊர்வனவற்றிலும், வகை ஒன்
றுக்கு ஒவ்வொரு சோடு உயிரோடே காக்கப்ப
௨௧ டுவதற்கு உன்னண்டைக்கு வரக்கடவது.—ஆ
கையால், நீ தின்கிற சகலவித பண்டங்களையும்
எடுத்துக்கொண்டு, உனக்கும் அவைகளுக்கும் ஆ
காரமாயிருப்பதற்காக, உன்னண்டையிலே சேர்
௨௨ த்துக்கொள்ளக் கடவாயென்றார்.—[1]நோவா அப்
படிச்செய்தான்; பராபரன் தனக்குக் கற்பித்தப
டியெல்லாம் அவன் செய்தான்.

## ௭. அதிகாரம்.

௧. நோவா தன் சமுசாரத்தோடும், மற்றச் சீவசெந்துக்களோடும் பேழைக்குள் பிரவேசித்தது. ௰௭. சலப்பிரளயம் உண்டானது.

௧ பிற்பாடு கர்த்தர் நோவாவோடே சொன்னதாவ
து: [2]நீயும் உன் வீட்டார் அனைவரும் பேழைக்
குள் பிரவேசியுங்கள்; ஏனெனில், இந்தச் சந்த
தியில் உன்னை நமக்குமுன்பாக நீதிமானாகக்
௨ கண்டோம்.—பூமியின் மீதெங்கும் வித்தை உயி
ரோடே காக்கும்படிக்கு, நீ சுத்தமான சகல
மிருகங்களிலும், ஆணும் பெண்ணுமாயிருக்கிற
எவ்வேழு சோடும், சுத்தம் அல்லாத மிருகங்களி
லேயென்றால், ஆணும் பெண்ணுமாயிருக்கிற
௩ ஒவ்வொரு சோடும்,—ஆகாசத்துப் பறவைகளி
லும், சேவலும் பேடுமாயிருக்கிற எவ்வேழு
சோடும், உன்னண்டையில் சேர்த்துக்கொள்ளக்
௪ கடவாய்.—ஏனெனில், இன்னம் ஏழுநாள் சென்
றபிற்பாடு, நாம் பூமியின்மேல் இரவுபகல் நாற்
பது நாளாக மழையை வருஷிக்கப்பண்ணி, நாம்
உண்டாக்கின சீவசெந்து அனைத்தையும் பூமி
யின்மேல் இராதபடிக்கு நிக்கிரகம்பண்ணுவோ
௫ மென்றார்.—கர்த்தர் தனக்குக் கற்பித்தபடி எல்
லாம் நோவா செய்தான்.
௬ பூமியின்மேல் சலப்பிரளயத்தின் தண்ணீர்கள்
உண்டாகிறபோது, நோவா அறுநூறு வயதாயி
௭ ருந்தான்.—நோவாவும், அவனோடேகூட அவன்
குமாரரும், அவன் பெண்சாதியும், அவன் குமா
ரரின் பெண்சாதிகளும், சலப்பிரளயத்தின் தண்
ணீர்களுக்குத் தப்பப் [3]பேழைக்குள் பிரவேசித்
௮ தார்கள்.—பராபரன் நோவாவுக்குக் கற்பித்தப
டியே, சுத்தமான மிருகங்களிலும், சுத்தமல்லாத
மிருகங்களிலும், பூமியின்மேல் ஊருகிறதெல்
௯ லாவற்றிலும்,—[4]ஆணும் பெண்ணும் சோடுசோ
டாய் நோவாவண்டையிலே பேழைக்குள்பட்
௰ டது.—ஏழுநாள் சென்றபிற்பாடு சம்பவித்ததே
தென்றால், பூமியின்மேல் சலப்பிரளயத்தின்
தண்ணீர்கள் உண்டாயின.
௰௧ நோவா அறுநூறுவயதாகிற வருஷத்தில் இர
ண்டாம்மாதம் பதினேழாம் தேதியாகிய அந்
நாளிலே, மகா ஆழத்தின் ஊற்றுகளெல்லாம் பி
ளந்தன; வானத்தின் மதகுகளும் திறவுண்டன.—
௰௨ இரவும் பகலும் நாற்பது நாளாகப் பூமியின்மேல்
௰௩ பெருமழை உண்டாயிருந்தது.—அந்த நாளில்
தானே நோவாவும், நோவாவின் குமாரராகிய
சேமும், காமும், யாப்பேத்தும், அவர்களோடே
கூட நோவாவின் பெண்சாதியும், அவன் குமார
ரின் மூன்று பெண்சாதிகளும், பேழைக்குள்
பிரவேசித்தார்கள்.—இவர்கள்தவிரச் சாதிசாதி ௰௪
யான சகலவித சீவன்களும், சாதிசாதியான சக
லவித மிருகங்களும், பூமியின்மேல் ஊருகிற
சாதிசாதியான சகலவித ஊர்வனவும், சாதிசாதி
யான சகலவிதப் பறவைகளும், எப்படிக்கொத்த
சிறகுமுள்ள சகலவிதப் பட்சிகளும் உட்பட்
டன.—இப்படியே சீவசுவாசமுள்ள எல்லா ௰௫
மாம்சத்திலேயும் சோடு சோடானவைகள் நோ
வாவண்டையிலே பேழைக்குள் போயிற்று.—
உள்போனவைகள், பராபரன் அவனுக்குக் கற் ௰௬
பித்தபடியே, சகலவித மாம்சத்தில் ஆணும்
பெண்ணுமாய் உள்ளே போயிற்று; அப்போது
கர்த்தர் அவனுக்குப் பின்னாகக் கதவு அடைத்
தார்.
சலப்பிரளயம் நாற்பது நாள் பூமியின்மேல் ௰௭
உண்டாகிறபோது, தண்ணீர்கள் பெருகி, பே
ழையைக் கிளம்பப்பண்ணி, அது பூமியைவிட்டு
உயர வந்தது.—தண்ணீர்கள் மகா வெள்ளமாகி, ௰௮
பூமியின்மேல் மிகவும் பெருகிற்று; ஆனால், பே
ழை தண்ணீர்களின்மேல் மிதந்துகொண்டிருந்
தது.—தண்ணீர்கள் பூமியின்மேல் மிகவும் மிகு ௰௯
ந்த வெள்ளமானதினாலே, வானத்தின்கீழ் எங்
குமுள்ள உயர்ந்த பர்வதங்களெல்லாம் மூடப்
பட்டது.—மூடப்பட்ட பர்வதங்களுக்கு மே ௨௰
லாய்ப் பதினைந்துமுழ உயரத்திற்குத் தண்ணீர்
கள் பெருகிப்போயிற்று.
அப்போது பூமியின்மேல் அசைவாடுகிற எல் ௨௧
லா மாம்சமுமாகிய பறவைகளும், சாது மிருகங்
களும், துஷ்ட மிருகங்களும், பூமியின்மேல்
ஊருகிற சகல ஊர்வனவும், [5]எல்லா மனித சீவ
னும் மாண்டது.—வெட்டாந்தரையில் உண்டா ௨௨
னதெல்லாவற்றிலும் நாசியில் சீவசுவாசமான ஆ
வியை உடையதெல்லாம் செத்துப்போயிற்று.—
பூமியின்மேல் மனிதனைத்துவக்கி மிருகங்கள் ௨௩
பரியந்தமும், ஊர்வன பரியந்தமும், ஆகாசத்
துப் பறவைகள் பரியந்தமும், இருந்த உயிருள்ள
வஸ்து யாவும் நிக்கிரகமாயிற்று; அதுகள் பூமியில்
இராதபடிக்கு நிக்கிரகமாயிற்று; நோவாவும் அவ
னுடனே பேழையிலிருந்ததும்மாத்திரமே உயி
ரோடே வைக்கப்பட்ட மீதியாயிற்று.—தண் ௨௪
ணீர்கள் பூமியின்மேல் நூற்றைம்பதுநாள் மிக
வும் பெருத்திருந்தது.

## ௮. அதிகாரம்.

௧. சலப்பிரளயம் குறைந்தது. ௪. பேழை அராராத் மலையின்மேல் தங்கினது. ௭. காகமும், புறவும் பேழையைவிட்டுப் புறப்பட்டது. ௰௮. நோவா கற்பனைப்படி, ௰௯. பேழையைவிட்டுப் புறப்பட்டு, ௨௰. ஒரு பலிபீடத்தை உண்டுபண்ணிப் பலியிட்டது. ௨௧. பராபரன் அந்தப் பலியை அங்கிகரித்து, பூமியை இனிச் சபிக்கமாட்டேனென்று வாக்குத்தத்தம்பண்ணினது.

பராபரனென்றால் நோவாவையும், அவ ௧
னோடேகூடப் பேழையிலிருந்த எல்லாச் சீவன்

1 ௧ பே. ௩. ௨௰ எபி. ௰௧. ௭.—2 ௨ பே. ௨. ௫.—3 மத். ௨௪. ௩௮, ௩௯. லூக். ௰௭. ௨௬, ௨௭.—4 ௧ மோ. ௬. ௰௯.—5 லூக். ௰௭. ௨௭.

களையும், எல்லா மிருகங்களையும் நினைத்தார்;
ஆகையால், பராபரன் பூமியின்மேல் காற்றை
அடிக்கப்பண்ணினார்; அப்போது தண்ணீர்கள்
௨ அமர்ந்தது.—ஆழத்தின் ஊற்றுகளும், வானத்தின்
மதகுகளும் அடைபட்டு, வானத்திலிருந்து உண்
௩ டான மழை நிறுத்தப்பட்டுப்போயிற்று.—அப்
போது தண்ணீர்கள் போகப்போகப் பூமியை
விட்டுத் திரும்பிற்று; [1]நூற்றைம்பது நாளைக்குப்
பிற்பாடு, தண்ணீர்கள் குறைந்தது.
௪ ஏழாம்மாதம் பதினேழாம் தேதியிலே பேழை
[2]அராராத்தென்ற மலைகளின்மேல் தங்கிற்று.—
௫ பத்தாம்மாதம்மட்டும் தண்ணீர்கள் குறைந்து
வருகையில், பத்தாம்மாதம் முதல்தேதியிலே பர்
வதங்களின் சிகரங்கள் காணப்பட்டது.
௬ நாற்பது நாள் சென்றபிற்பாடு சம்பவித்ததே
தென்றால், நோவா தான் பேழையில் உண்டாக்
௭ கியிருந்த பலகணியைத் திறந்து,—ஒரு காகத்தை
வெளியே விட்டான்; அது புறப்பட்டுப் பூமி
யின்மேல் இருந்த தண்ணீர்கள் சுவறிப்போகும்
மட்டும் போகிறதும் வருகிறதுமாயிருந்தது.—
௮ பிற்பாடு பூமியின்மேல் தண்ணீர்கள் கொஞ்ச
மாயிற்றோவென்று பார்க்கிறதற்கு, ஒரு புறா
வைத் தன்னிடத்திலிருந்து வெளியிலே விட்
௯ டான்.—அந்தப் புறாவோவெனில், பூமியின்மீ
தெங்கும் தண்ணீர்கள் இன்னம் இருந்தபடியி
னாலே, தன் உள்ளங்காலுக்கு இளைப்பாறும் இ
டத்தைக் காணாமல், திரும்ப அவனண்டையில்
பேழைக்கு வந்தது; அப்போது அவன் தன் கை
யை நீட்டி அதைப் பிடித்து அதைத் தன்னிடமா
கப் பேழைக்குள் சேர்த்துக்கொண்டான்.—
௰ இன்னம் வேறே ஏழுநாள் பொறுத்து மறுபடி
யும் புறாவை பேழையிலிருந்து வெளியே விட்
௰௧ டான்.—அந்தப் புறா சாயங்காலத்திலே அவனண்
டைக்கு வந்து சேர்ந்தது; இதோ அது கொத்திக்
கொண்டுவந்த ஒரு ஒலீவமரத்தின் இலை அதின்
வாயிலே இருந்தது; அதினாலே நோவா பூமியின்
மேல் தண்ணீர்கள் கொஞ்சமாயிற்றென்று அறிந்
௰௨ தான்.—அவன் இன்னம் வேறே ஏழுநாள் பொ
றுத்து, புறாவை வெளியிலே விட்டான்; அது
மறுபடியும் அவனண்டைக்குத் திரும்பி வந்த
தில்லை.
௰௩ அவன் அறுநூற்றொருவயதாயிருந்த வருஷம்,
முதல்மாதம் முதல்தேதியிலே சம்பவித்ததே
தென்றால், பூமியின்மேலே இருந்த தண்ணீர்கள்
வற்றிப்போனபடியினாலே, நோவா பேழையின்
மேல்தட்டை வாங்கிப்போட்டுப் பார்த்தான்;
இதோ பூமியின்மேல் தண்ணீர் இல்லாதிருந்தது.-
௰௪ பிறகு இரண்டாம்மாதம் இருபத்தேழாம் தேதி
யிலே பூமி காய்ந்திருந்தது.
௰௫ அப்போது பராபரன் நோவாவோடே சொன்
௰௬ னதாவது:-நீயும், உன்னோடேகூட உன் பெண்
சாதியும், உன் குமாரரும், உன் குமாரரின்
பெண்சாதிகளும், பேழையிலிருந்து புறப்பட்டு
வாருங்கள்.—பறவைகளும், மிருகங்களும், பூமி ௰௭
யின்மேல் ஊருகிற சகல ஊர்வனவுமாகிய
எல்லாவித மாம்சத்திலும் உன்னண்டையிலே
இருக்கிற சீவனை எல்லாம் உன்னோடேகூட
வெளியே வரவிடு, [3]அவைகள் பூமியிலே திர
ளாய்வர்த்தித்து, பூமியின்மேல் பலுகிப் பெருகக்
கடவதென்றார்.—அப்போது நோவாவும், அவ ௰௮
னோடேகூட அவனுடைய குமாரரும், அவன்
பெண்சாதியும், அவன் குமாரருடைய பெண்
சாதிகளும் புறப்பட்டு வந்தார்கள்.—சகல மிருகங் ௰௯
களும், சகல ஊர்வனவும், சகல பறவைகளுமா
கிய பூமியின்மேல் நடமாடுகிற யாவும், சாதிசா
தியாகப் பேழையிலிருந்து புறப்பட்டு வந்தது.
அப்போது நோவா கர்த்தருக்குப் பலிபீடம் ௨௰
கட்டி, சுத்தமான சகல மிருகங்களிலும், சுத்த
மான சகல பறவைகளிலும் சிலவற்றை எடுத்து,
பீடத்தின்மேலே தகனபலிகளாகப் பலியிட்
டான்.—ஆற்றுகிற வாசனையைக் கர்த்தர் மோந் ௨௧
தார்; அப்போது கர்த்தர் தம்முடைய இருதயத்தி
லே சொன்னதாவது: நாம் இனிப் பூமியை மனி
தன்நிமித்தமாகத் திரும்பச் சபியோம்; ஏனெ
னில், [4]மனிதனுடைய இருதயத்தின் தோற்று
தல் அவன் சிறுவயதுதுவக்கிப் பொல்லாததா
யிருக்கின்றது; இனித் திரும்ப நாம் செய்தது
போல, எல்லாச் சீவாத்துமாவையும் சங்கரி
யோம்.—பூமி இருக்கும் சகல நாள்மட்டும் வி ௨௨
தைப்பும், அறுப்பும், குளிரும், அனலும், கோ
டைகாலமும், மாரிகாலமும், பகலும், இரா
வும், ஓய்ந்துபோகாதிருக்குமென்றார்.

## ௯. அதிகாரம்.

௧. பராபரன் நோவாவை ஆசீர்வதித்தது. ௪. இரத்தமும் கொலையும் விலக்கப்பட்டது. ௮. பராபரன் அவனோடே உடம்படிக்கைபண்ணினது. ௰௩. அதற்கடையாளமாக வானவில்லை வைத்தது. ௰௮. நோவாவின் சந்ததி. ௨௰. நோவா திராட்சத்தோட்டத்தை உண்டாக்கி, ௨௧. மதுமயக்கத்தில் இருக்கும்போது அவனுடைய குமாரர்களில் ஒருவனால் பழிக்கப்பட்டு, ௨௫. கானானைச் சபித்தது. ௨௬. சேமை ஆசீர்வதித்தது. ௨௭. யாப்பேத்துக்காக வேண்டிக்கொண்டு, ௨௯. மரணமடைந்தது.

பிற்பாடு பராபரன் நோவாவையும், அவன் குமா ௧
ரரையும் ஆசீர்வதித்து, அவர்களோடே சொன்
னதாவது: [5]நீங்கள் பலுகிப் பெருகிப் பூமியை
நிரப்புங்கள்.—பூமியினுடைய சகல மிருகங்க ௨
ளின்மேலும், ஆகாசத்தினுடைய சகல பறவை
களின்மேலும், உங்கள் பயமும் உங்கள் அதிர்
வும் உண்டாயிருப்பதாக; பூமியில் நடமாடுகிற
யாவும், சமுத்திரத்தின் மச்சங்கள் யாவும் உங்
கள் கையிலே கொடுக்கப்பட்டது.—நடமாடுகிற ௩
சீவசெந்து யாவும், உங்களுக்கு ஆகாரமாய் இ
ருப்பதாக; [6]பச்சைப் பூண்டுகளைப்போல, அதை
எல்லாம் உங்களுக்குக் கொடுத்தோம்.—ஆனால் ௪
மாம்சத்தை அதின் உயிராகிற [7]அதின் இரத்தத்
தோடே புசியாதிருப்பீர்களாக.—உங்கள் உயி ௫
ராயிருக்கிற உங்கள் இரத்தத்துக்கும் பழியை
வாங்குவோம்; சகல மிருகத்தின் கையிலும்
அதை வாங்குவோம்; மனிதன் கையிலும், அவ

1 ௧ மோ. ௭. ௨௪.—2 எசா. ௩௭. ௩௮.—3 ௧ மோ. ௧. ௨௨. 4 ௧ மோ. ௬. ௫. மத். ௰௫. ௰௯. 5 ௧ மோ. ௧. ௨௮: ௮. ௰௭.

6 ௧ மோ. ௧. ௨௯.
7 ௩ மோ. ௩. ௰௭: ௭. ௨௬: ௰௭. ௰௨—௰௪: ௰௯. ௨௬. ௫ மோ. ௰௨. ௨௩, ௨௪.

னவன் சகோதரன் கையிலும், மனிதனுடைய
௬ உயிருக்குப் பழியை வாங்குவோம்.—[1]எவன்
மனிதனுடைய இரத்தத்தைச் சிந்துகிறானோ,
அவன் இரத்தம் மனிதனால் சிந்தப்படக்கடவது;
ஏனெனில், பராபரனுடைய சாயலாக அவர்
௭ மனிதனை உண்டாக்கினார். — [2]நீங்கள் பலுகிப்
பெருகிப் பூமியிலே திரளாய் வர்த்தித்து, அதிலே
பெருகிப்போங்களென்றார்.

௮ பின்னையும் பராபரன் நோவாவோடும், அவன்
௯ குமாரரோடுங்கூடச் சொன்னதாவது:—இதோ,
நாம் உங்களோடும், உங்களுக்குப் பின்னாகவ
௰ ரும் உங்களுடைய வித்தோடும், — உங்களண்
டையில் இருக்கிற சகல சீவசெந்துக்களாகிய
பறவைகளோடும், மிருகங்களோடும், உங்களண்
டையில் இருக்கிற பூமியினுடைய எல்லாச்
சீவன்களோடும், நம்முடைய உடம்படிக்கை
யை ஏற்படுத்துகிறோம்; பேழையிலிருந்து புறப்
பட்டதெல்லாம் முதற்கொண்டு பூமியில் இருக்
கப்போகிற எல்லாச் சீவன்களோடுங்கூடத்தா
௰௧ னே. — [3]இனி மாம்சமெல்லாம் சலப்பிரளயத்
தின் தண்ணீர்களால் சங்கரிக்கப்படாதென்றும்,
பூமியை அழிக்க இனிச் சலப்பிரளயம் வரா
தென்றும், உங்களோடே நம்முடைய உடம்
௰௨ படிக்கையை ஏற்படுத்துகிறோமென்றார்.— பின்
னையும் பராபரன் சொன்னதாவது: நாம் நமக்
கும் உங்களுக்கும், உங்களண்டையில் இருக்கிற
எல்லாச் சீவசெந்துக்களுக்கும், என்றுமுள்ள
தலைமுறைகளுக்கென்று பண்ணுகிற உடம்ப
௰௩ டிக்கையின் அடையாளமாவது:—நம்முடைய
வில்லை மேகத்திலே வைத்தோம்; அது நமக்கும்
பூமிக்கும் உண்டான உடம்படிக்கைக்கு அடை
௰௪ யாளமாயிருக்கும். — ஆகையால் சம்பவிப்பதே
தெனில், நாம் பூமியின்மேல் மேகமந்தாரத்தை
வரப்பண்ணும்போது, மேகத்திலே அந்த வில்
௰௫ காணப்படும்.—அப்பொழுது சலப்பிரளயத்தின்
தண்ணீர்கள் இனி எல்லா மாம்சத்தையும் அழிக்
கவராதபடிக்கு, நமக்கும் உங்களுக்கும் எல்லா
வித மாம்சமாகிய சகல சீவசெந்துக்களுக்கும்
உண்டான நம்முடைய உடம்படிக்கையை
௰௬ நினைப்போம்.—அந்த வில் மேகத்தில் இருக்கும்
போது, பராபரனுக்கும் பூமியின்மேலுள்ள எல்
லாவித மாம்சமாகிய சகல சீவனுக்கும் உண்டா
ன நித்திய உடம்படிக்கையை நாம் நினைக்கும்
௰௭ படிக்கு அதை நோக்கிப்பார்ப்போம். — இது
நமக்கும், பூமியின்மேலுள்ள சகல மாம்சத்துக்
கும், நாம் ஏற்படுத்தின உடம்படிக்கையின் அ
டையாளமென்று பராபரன் நோவாவோடே
சொன்னார்.

௰௮ பேழையிலிருந்து புறப்பட்ட நோவாவின்
குமாரர், சேம் காம் யாப்பேத்தென்றவர்களே;
காமோவென்றால் கானானுடைய தகப்பன்.—
௰௯ இந்த மூன்றுபேர் நோவாவினுடைய குமாரர்;
இவர்களாலே பூமியெங்கும் சனம் பரம்பிற்று.

நோவா பயிரிடும் குடியாயிருக்கத்துவக்கி, ௨௰
திராட்சத்தோட்டத்தை நாட்டினான்.—அவன் ௨௧
திராட்சப்பழ இரசத்திலே குடித்து, வெறித்தி
ருந்து, தன் கூடாரத்துக்குள்ளே வஸ்திரம் வில
கிப் படுத்திருந்தான்.—அப்போது கானானின் ௨௨
தகப்பனாகிய காம் தன் தகப்பனுடைய நிருவா
ணத்தைக் கண்டு, வெளியிலே இருந்த தன்
இரண்டு சகோதரருக்கு அறிவித்தான். — அப் ௨௩
போது சேமும், யாப்பேத்தும் ஒரு வஸ்திரத்
தை எடுத்துத் தங்களிருவரின் தோள்மேலும்
போட்டுக்கொண்டு பின்னிட்டு வந்து, தங்கள்
தகப்பனுடைய நிருவாணத்தை மூடினார்கள்;
அவர்கள் முகங்கள் பின்புறமாயிருந்தபடியினா
லே, அவர்கள் தங்கள் தகப்பனுடைய நிருவா
ணத்தைக் கண்டதில்லை.—நோவா தன் திராட் ௨௪
சப்பழ இரசத்தின் வெறி தெளிந்து விழித்த
போது, தன் இளையகுமாரன் தனக்குச் செய்த
தை அறிந்து,—கானான் சபிக்கப்பட்டவனாகி, ௨௫
தன் சகோதரருக்கு அடியாரின் அடியானாய்
இருக்கக்கடவானென்றான்.-பின்னையும் அவன் ௨௬
சொன்னதாவது: சேமுடைய பராபரனாகிய
கர்த்தர் ஸ்தோத்திரிக்கப்பட்டவர்; கானானோ
வெனில், அவனுக்கூழியக்காரனாய் இருக்கக்
கடவான்.—யாப்பேத்தைப் பராபரன் பரிபால ௨௭
னம் பண்ணக்கடவார்; அவன் சேமுடைய
கூடாரங்களில் குடியிருப்பானாக; கானானோ
வெனில், அவனுக்கூழியக்காரனாயிருக்கக்கட
வானென்றான்.

சலப்பிரளயத்துக்குப்பிற்பாடு நோவா மூந் ௨௮
நூற்றைம்பது வருஷம் உயிரோடிருந்தான்.—
ஆகையால், நோவாவின் நாள்களெல்லாம் தொ ௨௯
ளாயிரத்தைம்பது வருஷமாயிருந்தது; பிற்பாடு
மரித்தான்

## ௰. அதிகாரம்.

க. நோவாவின் சந்ததி. ௨. யாப்பேத்தின் சந்ததி. ௬. காமின் சந்ததி. அ. நிமிரோது உலகத்தில் முதல்முதல் அரசனானது. ௨௧. சேமின் சந்ததி.

நோவாவுடைய குமாரராகிய [4]சேம், காம், ௧
யாப்பேத்தென்றவர்களின் சந்ததிகளாவது: அ
வர்களுக்குச் சலப்பிரளயத்துக்குப் பிற்பாடு பி
றந்த குமாரர் யாரென்றால்,-[5]யாப்பேத்துடைய ௨
குமாரர், கோமேர், மாகோக், மாதாய், யாவான்,
தூபால், மேசேக், தீராஸ். — கோமேருடைய ௩
குமாரர், அஸ்கேனாஸ், ரிப்பாத், தொகர்மா.—
யாவானுடைய குமாரர், எலீசா, தர்சீஸ், கித்தீம், ௪
தோதானீம்.-இவர்களால் சாதிகளுடைய தேசத் ௫
தீவுகள் அவனவன் பாஷையின்படியேயும், அ
வர்களுடைய சாதிகளிலுள்ள அவர்களுடைய
வம்சங்களின்படியேயும், அவரவர் தேசங்க
ளாய்ப் பிரிந்தது.

காமுடைய குமாரர், கூஸ், மிஸ்ராயீம், பூத், ௬
கானான்.—கூசுடைய குமாரர், சேபா, காவிலா, ௭
சப்தா, ராமா, சப்தேகர்; ராமாவினுடைய குமா
ரர், சேபா, தேதான்.

1 ௨ மோ. ௨௧.௧௨, மத் ௨௬.௫௨.—2 க. ௨௮.—3 க மோ. அ.௨௧, ௨௨. ஏசா. ௫௪.௯.—4 க மோ. ௫.௩௨.—5 க நாளா. க. ௫. ழ.

௮ கூஸ், நிமிரோத்தைப் பெற்றான்; இவன் பூமி
௯ யிலே பலவானாயிருக்கத்துவக்கினான்.—இவன்
கர்த்தருக்குமுன்பாகப் பலத்த வேட்டைக்கார
னாயிருந்தான்; ஆகையால், நிமிரோத்தைப்போ
லக் கர்த்தருக்குமுன்பாகப் பலத்த வேட்டைக்
காரனாய் இருக்கிறானென்று சொல்லப்படும்.—
௰ சிநேயார்தேசத்திலுள்ள பாபேலும், ஏரேகும், அக்
காதும், கலநேயும், அவனுடைய இராச்சியத்
௰௧ தின் துவக்கமாயிருந்தது.-இந்தத் தேசத்திலிருந்
து அசூர் புறப்பட்டுப்போய், நினிவேயையும்,
ரெகோபோத் பட்டணத்தையும், காலாகையும்,-
௰௨ நினிவேக்கும், காலாகுக்கும் நடுவாக ரேசேனை
யும் கட்டினான்; இது பெரிய பட்டணம்.
௰௩ மிஸ்ராயீம், லூதீமையும், அனாமீமையும், லே
௰௪ காபீமையும், நபத்தூகீமையும், — பத்ருசீமை
யும், பெலிஸ்தரின் சந்ததி உண்டான கஸ்லூகீ
மையும், கப்தோரீமையும் பெற்றான்.
௰௫ கானான், சீதோனென்ற தன் தலைச்சனையும்,
௰௬ கேத்தையும், — எபூசியையும், எமோரியையும்,
௰௭ கிர்காசியையும், — ஈவியையும், அற்கியையும்,
௰௮ சீனியையும்,-அர்வாதியையும், செமாரியையும்,
காமாத்தியையும் பெற்றான்; பிற்பாடு கானானி
௰௯ யரின் வம்சங்கள் சிதறிப்போயிற்று.—கானானி
யரின் எல்லை சீதோனிலிருந்து கேரார் வழி
யாய்க் காசாமட்டுக்கும் போய், சோதோம், கொ
மோரா, ஆத்மா, செபோயிம் வழியாய் லாசா
௨௰ மட்டுக்கும் போயிற்று.—இவர்களே தங்கள் தே
சங்களிலும், தங்கள் சாதிகளிலுமுள்ள தங்கள்
வம்சங்களின்படியேயும், தங்கள் பாஷைகளின்
படியேயும், காமுடைய பிள்ளைகளானவர்கள்.
௨௧ சேமுக்கும் பிள்ளைகள் பிறந்தார்கள்; அவன்
ஏபேருடைய புத்திரருக்கெல்லாம் தகப்பனும்,
யாப்பேத்தென்கிற மூத்தவனுக்குத் தம்பியுமா
௨௨ யிருந்தான்.—சேமுடைய குமாரர், ஏலாம், அ
௨௩ சூர், அற்பக்சாத், லூத், ஆராம்.—ஆராமுடைய
௨௪ குமாரர், ஊத்ஸ், கூல், கேத்தேர், மாஸ்.—[1]அற்
பக்சாத் சாலாகைப் பெற்றான்; சாலாக் ஏபே
௨௫ ரைப் பெற்றான்.—[2]ஏபேருக்கு இரண்டு குமாரர்
பிறந்தார்கள்; ஒருவன்பேர் பேலேக்; ஏனெ
னில், அவன் நாள்களில் பூமி பிரிவுண்டது;
அவனுடைய சகோதரன்பேர் யொக்கெத்தான்.-
௨௬ யொக்கெத்தான் அல்மோதாதையும், சாலேப்
பையும், ஆசர்மாவெத்தையும், யாராகையும்,—
௨௭ ஆதோராமையும், ஊசாலையும், திக்லாவையும்,—
௨௮ ஒபாலையும், அபிமாவேலையும், சேபாவையும்,—
௨௯ ஒப்பீரையும், காவிலாவையும், யோபாபையும்
பெற்றான்; இவர்கள் அனைவரும் யொக்கெத்தா
௩௰ னுடைய குமாரர். — அவர்களுடைய குடியி
ருப்பு மேசாதுவக்கி, கிழக்கு மலையாகிய சேப்
பாருக்குப் போகிற வழிமட்டும் இருந்தது.—
௩௧ இவர்களே தங்கள் தேசங்களிலும், தங்கள் சாதி
களிலுமுள்ள தங்கள் வம்சங்களின்படியேயும்,
தங்கள் பாஷைகளின்படியேயும் சேமுடைய
௩௨ குமாரரானவர்கள். — இவைகளே தங்கள் சாதி
களிலுள்ள தங்களுடைய சந்ததிகளின்படியே
நோவாவுடைய குமாரரின் வம்சங்கள்; சலப்பி
ரளயத்துக்குப் பிற்பாடு இவர்களால் பூமியிலே
சாதிகள் பிரிந்தன.

## ௰௧. அதிகாரம்.

௧. உலகத்தில் ஒரேபாஷை இருந்தது. ௪. பாபேல் கோபுரம் தொடங்கப்பட்டது. ௫. பாஷைகள் வேறுபட்டன. ௰. சேமின் சந்ததி. ௨௭. ஆபிராமின் தகப்பனுகிய தோரகின் சந்ததி. ௩௧. தோரக் ஊர் என்ற இடத்தைவிட்டுக் காரானுக்குப் போனது.

அக்காலத்திலே பூமியெங்கும் ஒரே பாஷை ௧
யும், ஒரேவித வார்த்தைகளும் இருந்தன.—அப் ௨
போது சம்பவித்ததேதென்றால், அவர்கள் கிழக்
கேயிருந்து பயணம்பண்ணுகையில், [3]சிநேயார்
தேசத்திலே பள்ளத்தாக்கைக் கண்டு, அங்கே
குடியிருந்து,
ஒருவரோடொருவர், நாம் செங்கல் அறுத்து, ௩
அவைகளை நற்கோடாய்ச் சுடுவோம் வாருங்க
ளென்றார்கள்; பிற்பாடு செங்கல் அவர்களுக்குக்
கல்லாகவும், பிசின் அவர்களுக்குச் சாந்தாகவு
மிருந்தன.—அவர்கள் நாம் பூமியின்மீதெங்கும் ௪
சிதறுண்டு போகாதபடிக்கு, நமக்கு நாம் ஒரு
பட்டணத்தையும், [4]வானத்தை எட்டுகிற சிகர
முள்ள ஒரு கோபுரத்தையும் கட்டி, நமக்குப்
பேர் உண்டாக்குவோம் வாருங்களென்று சொல்
லிக்கொண்டார்கள். — ஆனால், மனுப்புத்திரர் ௫
கட்டுகிற பட்டணத்தையும், கோபுரத்தையும்
பார்க்கிறதற்காக [5]கர்த்தர் இறங்கினார். — அப் ௬
பொழுது கர்த்தர் சொன்னதாவது: இதோ, சனம்
ஒரே கூட்டமானது; அவர்கள் அனைவருக்கும்
ஒரே பாஷையுமிருக்கிறது; இதை அவர்கள்
செய்யத்தொடங்கினார்கள்; இப்போதும் தாங்
கள் செய்ய நினைத்ததெல்லாம் தங்களுக்குத் தடுக்
கப்படுவதில்லை என்றிருக்கிறார்கள்.—நாம் இ ௭
றங்கி, ஒருவர் பாஷையை மற்றொருவர் அறி
யாதபடிக்கு, அங்கே அவர்கள் பாஷையைத்
தாறுமாறாக்குவோமாகவென்றார். — அப்படியே ௮
கர்த்தர் அவர்களை அவ்விடத்திலிருந்து பூமியின்
மீதெங்கும் சிதறிப்போகப்பண்ணினார்; அப்
போது பட்டணத்தைக் கட்டி ஓய்ந்தார்கள்.—
ஆனதுகொண்டு பூமி அனைத்தின் பாஷையைக் ௯
கர்த்தர் அங்கே தாறுமாறாக்கினபடியினாலும்,
கர்த்தர் அவர்களை அவ்விடத்திலிருந்து பூமியின்
மீதெங்கும் சிதறிப்போகப்பண்ணினபடியினா
லும், அதின்பேர் பாபேல் என்னப்பட்டது.
[6]சேமுடைய சந்ததியாவது: சேம் நூறுவயதா ௰
யிருந்து, அற்பக்சாத்தைச் சலப்பிரளயம் போன
இரண்டு வருஷத்திற்குப்பிற்பாடு பெற்றான்.—
சேம் அற்பக்சாத்தைப் பெற்றபிற்பாடு, ஐந்நூறு ௰௧
வருஷம் உயிரோடிருந்து, குமாரரையும், குமா
ரத்திகளையும் பெற்றான்.—அற்பக்சாத் முப்பத் ௰௨
தைந்து வயதாயிருந்து சாலாகைப் பெற்றான்.—
சாலாகைப் பெற்றபிற்பாடு, அற்பக்சாத் நானூற் ௰௩
றுமூன்று வருஷம் உயிரோடிருந்து, குமாரரை
யும், குமாரத்திகளையும் பெற்றான்.—சாலாக் முப் ௰௪

1 ௧ மோ. ௰௧. ௰௨.—2 ௧ மோ. ௰௧. ௰௬.—3 ௧ மோ. ௰. ௰.

4 ௫ மோ. ௧. ௨௮: ௯. ௧.—5 ௧ மோ. ௰௮. ௨௧.—6 ௧ மோ. ௰. ௨௨.

பது வயதாயிருந்து, ஏபேரைப் பெற்றான்.—
௰௫ ஏபேரைப் பெற்றபிற்பாடு சாலாக் நானூற்று
மூன்று வருஷம் உயிரோடிருந்து, குமாரரையும்,
௰௬ குமாரத்திகளையும் பெற்றான்.—ஏபேர் முப்பத்து
நாலு வயதாயிருந்து, பேலேகைப் பெற்றான்.—
௰௭ பேலேகைப் பெற்றபிற்பாடு, ஏபேர் நானூற்று
முப்பது வருஷம் உயிரோடிருந்து, குமாரரை
௰௮ யும், குமாரத்திகளையும் பெற்றான். — பேலேக்
முப்பது வயதாயிருந்து ரேகூவைப் பெற்றான்.–
௰௯ ரேகூவைப் பெற்றபிற்பாடு, பேலேக் இருநூற்
றொன்பது வருஷம் உயிரோடிருந்து, குமாரரை
௨௰ யும், குமாரத்திகளையும் பெற்றான்.—ரேகூ முப்
பத்திரண்டு வயதாயிருந்து, சேரூகைப் பெற்
௨௧ றான்.—சேரூகைப் பெற்றபிற்பாடு, ரேகூ இரு
நூற்றேழு வருஷம் உயிரோடிருந்து, குமாரரை
௨௨ யும், குமாரத்திகளையும் பெற்றான்.—சேரூக் முப்
பது வயதாயிருந்து, நாகோரைப் பெற்றான்.—
௨௩ நாகோரைப் பெற்றபிற்பாடு, சேரூக் இருநூறு
வருஷம் உயிரோடிருந்து, குமாரரையும், குமா
௨௪ ரத்திகளையும் பெற்றான். — நாகோர் இருபத்
தொன்பது வயதாயிருந்து, தேராகைப் பெற்
௨௫ றான். — தேராகைப் பெற்றபிற்பாடு, நாகோர்
நூற்றுப்பத்தொன்பது வருஷம் உயிரோடிருந்து,
குமாரரையும், குமாரத்திகளையும் பெற்றான்.—
௨௬ தேராக் எழுபது வயதாயிருந்து, ஆபிராமையும்,
நாகோரையும், ஆரானையும் பெற்றான்.
௨௭ தேராகுடைய சந்ததியாவது: தேராக் ஆபிரா
மையும், நாகோரையும், ஆரானையும் பெற்றான்;
௨௮ ஆரான் லோத்தைப் பெற்றான்.—ஆரானோவெ
னில், தன் ஜென்மபூமியாகிய ஊர் என்ற கல்
தேயர் தேசத்துப் பட்டணத்திலே தன் தகப்ப
௨௯ னாகிய தேராகுக்குமுன்னே மரித்தான். — ஆபி
ராமும் நாகோரும் தங்களுக்குப் பெண்கொண்
டார்கள்; ஆபிராமுடைய பெண்சாதியின்பேர்
சாறாய்; நாகோருடைய பெண்சாதியின்பேர்
மில்காள்; இவள் ஆரானின் குமாரத்தி; இவளு
டைய தகப்பன் மில்காளுக்கும், இஸ்காளுக்
௩௰ கும் தகப்பனானவன்.–ஆனால், சாறாய் புத்திரசந்
௩௧ தானமில்லாமல் மலடியாயிருந்தாள். — தேராக்
தன் குமாரனாகிய ஆபிராமையும், ஆரானின் கு
மாரன் தன் பேரனாகிய லோத்தையும், தன் குமா
ரன் ஆபிராமுடைய பெண்சாதியாகிய தன் மரு
மகள் சாறாயையும் அழைத்துக்கொண்டு, அவர்க
ளோடேகூட [1]ஊர் என்ற கல்தேயருடைய பட்
டணத்திலிருந்து கானான் தேசத்துக்குப் போ
கப் புறப்பட்டான்; ஆனால், அவர்கள் காரான்
மட்டுக்கும் வந்தபோது, அங்கே இருந்துவிட்
௩௨ டார்கள்.—தேராகுடைய நாள்கள் இருநூற்றைந்
துவருஷமாயிருந்தது; பிற்பாடு தேராக் காரானி
லே மரித்தான்.

## ௰௨. அதிகாரம்.

*க. பராபரன் ஆபிராமை அழைத்து ஆசீர்வதித்து, கிறிஸ்துவைக்குறித்து வாக்குத்தத்தம்பண்ணினது. ச. ஆபிராம் லோத்துடன் காரானை விட்டு, ரு, எ. தேவதரிசனையால் தனக்கு வாக்குத்தத்தம்பண்ணப்பட்ட கானான் தேசத்தை உருவகடந்தது. ௰. ஆபிராம் பஞ்சத்தின்நிமித்தம் எகிப்துக்குப் போய், ௰௧. அங்கே பயத்தினால் தன் மனைவியைத் தன் சகோதரியென்று சொன்னது. ௰ச. அவளை அவனிடத்தினின்று எடுத்துக்கொண்ட பார்வோன் வாதைகளினால் வாதிக்கப்பட்டபோது அவளை மறுபடியும் அவனுக்கு ஒப்புவித்தது.*

கர்த்தர் ஆபிராமோடே சொன்னதாவது: [2]நீ ௧
உன் தேசத்தையும், உன் இனத்தையும், உன்
தகப்பனுடைய வீட்டையும்விட்டுப் புறப்பட்
டு, நாம் உனக்குக் காண்பிக்கப்போகிற தேசத்
துக்குப் போ.–நாம் உன்னைத் திரட்சியான சாதி ௨
யாக்கி, உன்னை ஆசீர்வதித்து, உன்பேரை மேன்
மையாக்குவோம்; நீ ஆசீர்வாதமாக இருப்பாய்.–
உன்னை ஆசீர்வதிக்கிறவர்களை ஆசீர்வதிப்போம்; ௩
உன்னைச் சபிக்கிறவனைச் சபிப்போம்; [3]உன்
னில் பூமியின் வம்சங்களெல்லாம் ஆசீர்வதிக்கப்
படுமென்றார்.

அப்போது ஆபிராம் கர்த்தர் தனக்குச் சொன் ௪
னபடியே போனான்; லோத்தும் அவனோடே
கூடப்போனான்; ஆபிராம் ஆரானிலேயிருந்து
புறப்படுகிறபோது எழுபத்தைந்து வயதுள்ளவ
னாயிருந்தான்.—ஆபிராம் தன் பெண்சாதி சாறு ௫
வையும் தன் சகோதரன் குமாரனாகிய லோத்தை
யும், தாங்கள் சம்பாதித்திருந்த தங்கள் சம்பத்
தெல்லாவற்றையும், ஆரானிலே சௌதரித்துக்
கொண்ட ஆத்துமாக்களையும் கூட்டிக்கொண்ட
பிற்பாடு, கானான்தேசத்துக்குப்போகப் புறப்
பட்டுக் கானான்தேசத்துக்கு வந்தார்கள்.

ஆபிராம் சீகேமென்ற இடம்மட்டுக்கும், மோ ௬
ரேயென்ற சமனான பூமிமட்டுக்கும் தேசத்தைக்
கடந்துவந்தான்; கானானியன் அப்போது தேசத்
திலே இருந்தான்.—கர்த்தர் ஆபிராமுக்குத் தரிச ௭
னையாகி, [4]உன் வித்துக்கு இந்தத் தேசத்தைக்
கொடுப்போமென்றார்; அப்போது அவன் தனக்
குத் தரிசனையான கர்த்தருக்கு அங்கே ஒரு பலி
பீடத்தைக் கட்டினான்.

பிற்பாடு அவன் அவ்விடம்விட்டுப் பேர்ந்து, ௮
பேத்தேலுக்குக் கிழக்கே இருக்கும் மலைக்கு
வந்து, பேத்தேல் தனக்கு மேற்காகவும், ஆயீ
கிழக்காகவும் இருக்கக் கூடாரம்போட்டு, அங்
கே கர்த்தருக்கு ஒரு பலிபீடத்தைக் கட்டிக் கர்த்
தருடைய நாமத்தைத் தொழுதுகொண்டான்.—
அதின்பிறகு ஆபிராம் புறப்பட்டு, தெற்கே பய ௯
ணம்பண்ணிக்கொண்டே போனான்.

ஆனால் தேசத்திலே பஞ்சமுண்டாயிற்று; ஆ ௰
கையால், ஆபிராம் எகிப்துதேசத்துக்கு அங்கே
தங்கும்படிக்கு இறங்கிப்போனான்; ஏனெனில்,
தேசத்திலே பஞ்சம் கடினமாயிருந்தது.—அப் ௰௧
போது சம்பவித்ததேதென்றால், அவன் எகிப்துக்
குச் சமீபமாக வந்தபோது தன் பெண்சாதி சா
றாயோடே சொன்னதாவது: இதோ நீ பார்வைக்
கு அழகுள்ள ஸ்திரி என்றறிவேன் — ஆனது ௰௨
கொண்டு சம்பவிப்பதேதென்றால், எகிப்தியர்
உன்னைக் காணும்பொழுது, இவள் அவன்

1 க மோ. ௰௫. எ.—2 அப். எ. க. 3 க மோ. ௰௮. ௰௮: உ௨. ௰௮: ஸ்தி. ௰௧. அ. உக. ச: உ௮. ௰ச. அப். க. உ௫. கலா. க. அ—௰க. ௰எ. அ: உக. க. 4 க மோ. ௰௩. ௰௫: ௰௫. ௰௮:

பெண்சாதியென்று சொல்லி, என்னைக் கொன்
௰௩ று, உன்னை உயிரோடே வைப்பார்கள்.—ஆகை
யால், உன்நிமித்தம் எனக்கு நலமாகும்படிக்
கும், உன்னைத்தொட்டு என் ஆத்துமா உயிரோ
டிருக்கும்படிக்கும், [1]உன்னை என் சகோதரி
யென்று நீ சொல்லென்றான்.
௰௪ ஆபிராம் எகிப்திலே வந்தபோது சம்பவித்த
தேதென்றால், எகிப்தியர் அந்த ஸ்திரியை மகா
௰௫ அழகுள்ளவளென்று பார்த்தார்கள். — பார்வோ
னுடைய பிரபுக்களும் அவளைக் கண்டு, அவ
ளைப் பார்வோனுக்குமுன்பாகப் புகழ்ந்தார்கள்;
அப்போது அந்த ஸ்திரி பார்வோன் வீட்டிலே
௰௬ வைத்துக்கொள்ளப்பட்டாள். — அவன் அவள்
நிமித்தமாய் ஆபிராமுக்கு நன்மைசெய்தான்; இ
வனுக்கு ஆடுமாடுகளும், கழுதைகளும், வேலைக்
காரரும், வேலைக்காரிகளும், கோளிகைக் கழு
௰௭ தைகளும், ஒட்டகங்களுமுண்டாயிற்று. — ஆ
னால் [2]ஆபிராமுடைய பெண்சாதியாகிய சாரா
யின்நிமித்தம் கர்த்தர் பார்வோனையும், அவன்
வீட்டாரையும் மகா வாதைகளாலே வாதித்தார்.-
௰௮ அப்போது பார்வோன் ஆபிராமை அழைத்துச்
சொன்னதாவது: இதை எனக்கு ஏன் செய்தாய்?
இவள் உன் பெண்சாதியென்று நீ எனக்கு அறி
௰௯ விக்காதே போனதென்ன?—இவள் உன் சகோ
தரியென்று நீ சொல்லுவானேன்? அவளை நான்
எனக்குப் பெண்சாதியாகப் படைக்கவேணு
மென்றிருப்பேனே; இப்போதோவெனில், இ
தோ உன் பெண்சாதியிருக்கிறாள், அவளை அ
௨௰ ழைத்துக்கொண்டுபோ என்று சொல்லி,—பார்
வோன் அவனுக்காகச் சில மனிதரைக் கட்டளை
பண்ணினான்; அவர்கள் அவனையும், அவன்
பெண்சாதியையும், அவனுக்குண்டானதெல்லா
வற்றையும் வழிவிட்டனுப்பினார்கள்.

## ௰௩. அதிகாரம்.

௧. ஆபிராமும், லோத்தும் எகிப்தைவிட்டுத் திரும்பினது. ௭. வாக்குவாதத்தினால் அவர்கள் இருவரும் பிரிந்தது. ௰. லோத் அக்கிரமமுள்ள சோதோமுக்குப் போனது. ௰௪. பராபரன் ஆபிராமுக்கு மறுபடியும் காட்சிகொடுத்தது. ௰௮. அவன் எபிரோனுக்குப் போய் அங்கே ஒரு பலிபீடத்தைக் கட்டினது.

௧ அப்படியே ஆபிராமும், அவன் பெண்சாதி
யும், அவனுக்குண்டான யாவும், அவனோடே
கூட லோத்தும், எகிப்திலிருந்து தெற்குப்புறத்
௨ திலே ஏறிவந்தார்கள். — ஆபிராமோவெனில்,
மிருகசீவன்களும் வெள்ளியும் பொன்னுமான
௩ ஆஸ்தியிலே மகா கனவானாயிருந்தான்.—அவன்
தன் பயணங்களில் தெற்கேயிருந்து பேத்தேல்
மட்டாகவும், [3]பேத்தேலுக்கும், ஆயிக்கும் நடு
வாகத் தனக்கு முதல் கூடாரமிருந்ததும், தான்
முதல் ஒரு பீடத்தை உண்டாக்கினதுமான ஸ்த
௪ லமட்டாகவும் போனான்.—அங்கே ஆபிராம் கர்த்
தருடைய நாமத்தைத் தொழுதுகொண்டான்.
௫ ஆபிராமோடேகூடவந்த லோத்துக்கும், ஆடு
௬ மாடுகளும் கூடாரங்களுமிருந்தன. — அவர்கள்
ஒருமிக்கக் குடியிருக்க அந்தப் பூமி அவர்க
ளைத் தாங்கமாட்டாதேபோயிற்று; ஏனெனில்,
(ஒருமிக்க) அவர்களுடைய ஆஸ்தி மிகுதியாயி
ருந்தது. ஆகையால், அவர்கள் கூடக் குடியிருக்
கக்கூடாதிருந்தது. — ஆபிராமுடைய மந்தை ௭
யின் மேய்ப்பருக்கும் லோத்துடைய மந்தை
யின் மேய்ப்பருக்கும் வாக்குவாதம் உண்டாயி
ருந்தது; கானானியரும், பெரிசியரும் அப்போது
தேசத்திலே குடியிருந்தார்கள்.—ஆகையால், ஆபி ௮
ராம் லோத்தோடே சொன்னதாவது: எனக்கும்
உனக்கும், என்னுடைய மேய்ப்பருக்கும், உன்
னுடைய மேய்ப்பருக்கும் வாக்குவாதம் இருக்க
வேண்டாம்; ஏனெனில், நாம் சகோதரரானவர்
கள்.—இந்தச் சீமையெல்லாம் உனக்குமுன்பாக ௯
இருக்கின்றதல்லவோ? என்னை விட்டுப் பிரிந்து
போகலாம்; நீ இடதுபுறத்திலே சாய்ந்துபோ
னால்,நான் வலதுபுறத்திலே சாய்ந்துபோவேன்;
நீ வலதுபுறத்திலே சாய்ந்துபோனால், நான் இட
துபுறத்திலே சாய்ந்துபோவேனென்றான்.
அப்போது லோத் தன் கண்களை ஏறெடுத்து, ௰
யோர்தான் நதிக்கருகான சமனான பூமியையெல்
லாம் அது எங்கும் நீர்ப்பாய்ச்சலானதென்று
பார்த்தான்; ஏனெனில், கர்த்தர் சோதோமையும்,
கொமோராவையும் அழிக்காததற்கு முன்னே,
அது கர்த்தருடைய தோட்டத்தைப்போலவும்
சோவார்மட்டுக்கும் எகிப்துதேசத்தைப்போல
வுமிருந்தது. — அப்போது லோத் யோர்தானுக் ௰௧
கருகான சமனான பூமியையெல்லாம் தெரிந்து
கொண்டு, கிழக்கே பயணம்போனான்; இப்படிச்
சகோதரர் ஒருத்தரை ஒருத்தர் விட்டுப் பிரிந்தார்
கள். — ஆபிராம் கானான்தேசத்தில் குடியிருந் ௰௨
தான்; லோத்தோவெனில், அந்தச் சமனான பூமி
யின் பட்டணங்களிலே குடியிருந்து, சோதோம்
மட்டுக்கும்போய்க் கூடாரம்போட்டான்.—ஆ ௰௩
னால் [4]சோதோமின் மனிதர் கர்த்தருக்குமுன்
பாக மிகவும் பொல்லாதவர்களும் பாவிகளுமா
யிருந்தார்கள்
லோத் ஆபிராமைவிட்டுப் பிரிந்தபிற்பாடு ௰௪
கர்த்தர் ஆபிராமுடனே சொன்னதாவது: நீ உன்
கண்களை ஏறெடுத்து, நீ இருக்கிற இடத்திலிருந்
து வடக்கும், தெற்கும், கிழக்கும், மேற்கும்
நோக்கிப்பார்.—ஏனெனில், நீ பார்க்கிற பூமி ௰௫
யையெல்லாம் [5]நாம் உனக்கும் உன் வித்துக்கும்
என்றைக்கும் இருக்கும்படி கொடுத்து,— உன் ௰௬
வித்தைப் [6]பூமியின் தூளைப்போலாக்குவோம்;
ஒருவன் பூமியின் தூளை எண்ணக்கூடுமானால்
உன் வித்தும் எண்ணப்படும்.—நீ எழுந்து தேசத் ௰௭
தின் நீளத்திலும் அகலத்திலும் நடந்துதிரி; ஏனெ
னில், உனக்கு அதைக் கொடுப்போமென்றார்.
அப்போது ஆபிராம் கூடாரத்தைப் பேர்த்துப் ௰௮
போய், எபிரோனிலிருக்கும் [7]மம்ரேயினுடைய
சமனான பூமியில் வந்து குடியிருந்து, அங்கே
கர்த்தருக்குப் பலிபீடத்தைக் கட்டினான்.

1 ௧ மோ. ௨௰. ௨, ௰௨: ௨௬. ௭.
2 சங். ௱௫. ௰௪.
3 ௧ மோ. ௰௨. ௮.
4 ௧ மோ. ௰௮. ௨௰. எசே. ௰௬. ௪௯.
5 ௧ மோ. ௰௨. ௭: ௰௪. ௭: ௰௫. ௭.
6 ௧ மோ. ௰௫. ௫.
7 ௧ மோ. ௰௪. ௰௩: ௰௮. ௧.

## ௰ச. அதிகாரம்.

க. நாலு அரசர்கள் ஐந்தரசர்களோடே யுத்தம்பண்ணினது. ௰உ. லோத் சிறையாகக் கொண்டுபோகப்பட்டது. ௰ச. ஆபிராம் அவனை இரட்சித்தது. ௰அ. மெல்கிசேதேக் ஆபிராமை ஆசீர்வதித்தது. உ௰. ஆபிராம் அவருக்குப் பத்திலொருபாகங்கொடுத்தது. உஉ. தன் பங்காளிகள் எடுத்துக்கொண்டது; மற்றவர்கள் கொள்ளையில் அகப்பட்டபொருள்களைச் சோதோமின் இராசாவுக்கு மறுபடியும் செலுத்திவிட்டது.

க சிநேயாரின் இராசாவாகிய அம்ருப்பேலும்,
ஏலாசாரின் இராசாவாகிய ஆரியோகும், எலா
மின் இராசாவாகிய கேதொர்லகோமேரும், சா
திகளின் இராசாவாகிய திதேயாலும் இருந்த
நாள்களில் சம்பவித்ததேதென்றால்,—அவர்கள்
உ சோதோமின் இராசாவாகிய பேராவோடும்,
கொமோறாவின் இராசாவாகிய பிர்சாவோடும்,
ஆத்மாவின் இராசாவாகிய சிநேயாவோடும், சே
போயீமின் இராசாவாகிய செமேபரோடும், சோ
வார் என்னப்படுகிற பேலாவின் இராசாவோ
ங டும் யுத்தம்பண்ணினார்கள். — இவர்களெல்லா
ரும் இப்பொழுது உப்புக்கடல் இருக்கிற சித்தீ
ச மின் பள்ளத்தாக்கிலே கூடினார்கள். — பன்
னிரண்டுவருஷம் கேதொர்லகோமேரைச் சே
வித்து, பதின்மூன்றும் வருஷத்திலே கலகம்
ரு பண்ணினார்கள். — ஆனபடியால் பதினாலாம்
வருஷத்திலே கேதொர்லகோமேரும், அவனோ
டேகூட இருந்த இராசாக்களும் வந்து, அஸ்
தேரோத் கர்னாயீமிலே இருந்த ரெப்பாவரை
யும், காமிலே இருந்த சூசியரையும், சாவேகிரி
சு யத்தாயீமிலே இருந்த ஏமியரையும், — சேயீர்
மலைகளில் இருந்த ஓரியரையும், வனாந்தரத்துக்
கருகான பாரானின் சமனான பூமிமட்டும் முறிய
எ அடித்து, — திரும்பிக் காதேஸ் என்னப்பட்ட
ஏன்மிஸ்பாத்துக்கு வந்து, ஆமலேக்கியருடைய
நாடனைத்தையும், ஆத்சாத்சோன்தாமாரில் குடி
யிருந்த எமோரியரையுங்கூடப் பாழ்க்கடித்தார்
அ கள். — அப்போது சோதோமின் இராசாவும்,
கொமோறாவின் இராசாவும், ஆத்மாவின் இரா
சாவும், செபோயீமின் இராசாவும் சோவாரென்
னப்படுகிற பேலாவின் இராசாவும் புறப்பட்
கூ டுச் சித்தீமின் பள்ளத்தாக்கிலே, — ஏலாமின்
இராசாவாகிய கேதொர்லகோமேரோடும், சாதி
யாரின் இராசாவாகிய திதேயாலோடும், சிநே
யாரின் இராசாவாகிய அம்ருப்பேலோடும், ஏ
லாசாரின் இராசாவாகிய ஆரியோகோடும் யுத்
தம்பண்ணுகிறதற்கு ஆயத்தப்பட்டார்கள்; அந்த
ஐந்து இராசாக்களோடே இந்த நாலு இராசாக்
௰ கள் யுத்தம்பண்ணினார்கள்.—ஆனால், சித்தீமின்
பள்ளத்தாக்குப் பிசின் எடுக்கிற கேணிகேணி
களாயிருந்தது; சோதோமின் இராசாவும், கொ
மோறாவின் இராசாவும் முறிந்தோடி, அங்கே
விழுந்தார்கள்; மீந்தவர்கள் பர்வதங்களுக்கு
௰க ஓடிப்போனார்கள். — அப்பொழுது சோதோமி
லும் கொமோறாவிலுமுள்ள எல்லா ஆஸ்தியை
யும், அவர்களுடைய எல்லா வஸ்துக்களையும்
௰உ எடுத்துக்கொண்டுபோய்விட்டார்கள். — ஆபிரா
முடைய சகோதரன் குமாரனாகிய லோத்தை
யும், அவன் ஆஸ்தியையும் கொண்டுபோனார்
கள்; ஏனென்றால், அவன் சோதோமிலே குடி
யிருந்தான்.
ஆனால், தப்பிப்போன ஒருவன் வந்து, எபி ௰ங
ரேயனாகிய ஆபிராமுக்கு அதை அறிவித்தான்;
ஆபிராமோடே உடம்படிக்கையான மனிதரா
கிய, எஸ்கோலுக்கும் ஆநேருக்கும் சகோதரனா
கிய, [1]மம்ரேயென்ற எமோரியினுடைய சமனா
ன பூமியிலே அவன் அப்பொழுது குடியிருந்
தான்.—தன் சகோதரன் சிறையாகக் கொண்டு ௰ச
போகப்பட்டதை ஆபிராம் கேட்டபோது, அ
வன் தன்வீட்டிலே பிறந்த முந்நூற்றுப் பதினெ
ட்டுக் கைபடிந்த ஆள்களுக்கு ஆயுதம் தரிப்பித்
து, தாண் என்ற ஊர்மட்டாக அவர்களைத் தொ
டர்ந்து,—இராத்திரியிலே அவனும் அவன் வே ௰ரு
லைக்காரரும் பிரிந்து, பவிஞ்சுகளாய் அவர்கள்
மேல் விழுந்து, அவர்களை முறியஅடித்து, தமஸ்
குவுக்கு இடதுபுறமான ஓபாமட்டுக்கும் அவர்க
ளைத் துரத்தி,—எல்லா ஆஸ்தியையும் திருப்பிக் ௰சு
கொண்டுவந்தான்; தன் சகோதரனாகிய லோத்
தையும், அவனுடைய ஆஸ்தியையும், இதுவுமல்
லாமல் ஸ்திரிகளையும், சனத்தையுங்கூட திருப்
பிக்கொண்டுவந்தான்.
அவன் கேதொர்லகோமேரையும், அவனோ ௰எ
டேகூட இருந்த இராசாக்களையும் முறிய அடித்
துத் திரும்பிவந்தபிற்பாடு, சோதோமின் இராசா
புறப்பட்டு, இராசாவின் பள்ளத்தாக்கென்னப்
படுகிற சாவேபள்ளத்தாக்குமட்டும் அவனுக்கெ
திர்கொண்டு வந்தான். — ஆனால், சாலேமின் ௰அ
இராசாவாகிய [2]மெல்கிசேதேக்கு அப்பமும்,
திராட்சப்பழ இரசமும் வெளியே கொண்டுவந்
தான்; இவன் உன்னதமான பராபரனுடைய
ஆசாரியனாயிருந்து,—அவனை ஆசீர்வதித்து, வா ௰கூ
னத்துக்கும் பூமிக்கும் எசமானாகிய உன்னத
மான பராபரனாலே ஆபிராம் ஆசீர்வதிக்கப்பட்
டவனென்றும்,—உன் சத்துருக்களை உன் கை உ௰
யில் ஒப்புக்கொடுத்த உன்னதமான பராபரன்
ஸ்தோத்திரிக்கப்பட்டவரென்றும் சொன்னான்;
இவனுக்கு ஆபிராம் எல்லாவற்றிலும் பத்திலொ
ன்றைக் கொடுத்தான்.
சோதோமின் இராசா ஆபிராமுடனே, ஆத்து உக
மாக்களை எனக்குத் தா, ஆஸ்தியை நீ எடுத்துக்
கொள்ளென்றான்.—ஆனால், ஆபிராம் சோதோ உஉ
மின் இராசாவோடே சொன்னதாவது: நான்
ஆபிராமை ஐசுவரியவானாக்கினேனென்று நீர்
சொல்லாதபடிக்கு நான் ஒரு சரட்டையாகிலும்
பாதரட்சையின் வாரையாகிலும் உமக்கு உண்
டானதிலே எல்லாம் யாதொன்றையாகிலும் எடு
த்துக்கொள்ளேனென்று, – வானத்துக்கும் பூமிக் உங
கும் எசமானாகிய உன்னத பராபரனை கர்த்த
ருக்கு நேராக என் கையை ஏறெடுக்கிறேன் —
வாலிபர் சாப்பிட்டதும் என்னோடேகூட வந்த உச
ஆநேகர், எஸ்கோல், மம்ரேயென்ற புருஷரு

1 க மோ. ௩ க, ௰அ.

2 சங். ௱௰. ச.　எபி. எ. க. ௲.

டைய பங்குமாத்திரம் வரவேண்டும்; இவர்
கள் தங்கள் பங்கை எடுக்கட்டுமென்ருன்.

## ௰௫. அதிகாரம்.

*க. பாபரன் ஆபிராமுக்குக் காட்சியாகித் தயிரியம் சொன்னது. உ. ஆபிராம் புத்திரனில்லாததினிமித்தம் அங்கலாய்த்தது. ச. பாபரன் அவனுக்கொரு புத்திரனையும், ஒரு பெரிய சந்ததியையும் வாக்குத்தத்தம்பண்ணினது. ௬. ஆபிராம் விசுவாசத்தினல் நீதிமானுக எண்ணப்பட்டு, எ. கானான்தேசத்தைப் பெற்றுக்கொள்ளக் குறிப்புடன் வாக்குத்தத்தத்தையும், ௰உ. தேவதரிசனையையும் அடைந்தது.*

க இந்தக்காரியங்கள் நடந்தபிற்பாடு ஆபிராமுக்
குத் தரிசனத்திலே கர்த்தருடைய வார்த்தை உண்
டாகி அவர் சொன்னதாவது: ஆபிராமே, [1]பயப்
படாதே; நாம் உனக்குக் [2]கேடயமும், உன்னு
டைய மகா பெரிய பலனுமாயிருக்கிறோமென்
உ ருர்.—அப்பொழுது ஆபிராம், கர்த்தராகிய ஆண்
டவரே, அடியேனுக்கு என்ன தருவீர்? நான்
பிள்ளையில்லாதே போகிறேனே; தமஸ்கு ஊரா
னுகிய இந்த எலியேசேர் என் வீட்டு விசாரிப்
புக்குக் கர்த்தனய் இருப்பானே என்ருன்.—
௩ பின்னையும் ஆபிராம், இதோ தேவரீர் எனக்கு
வித்தைத் தந்ததில்லை; இதோ என் வீட்டிலே பி
றந்த பிள்ளை எனக்குச் சுதந்தரவாளியாய் இருப்
௪ பானென்ருன்.—அப்பொழுது இதோ கர்த்தரு
டைய வார்த்தை அவனுக்குண்டாகி, இவன்
உனக்குச் சுதந்தரவாளியாகாமல், உன் கர்ப்பப்
பிறப்பாயிருப்பவனே உனக்குச் சுதந்தரவாளி
௫ ஆவானென்று சொல்லி,— அவனை வெளியே
புறப்படப்பண்ணி, நீ வானத்தை அண்ணாந்து
பார்; [3]நட்சத்திரங்களை எண்ண உனக்குக் கூடு
மானல், அவைகளை எண்ணென்று சொல்லி,
பிற்பாடு அவனேடே உன் வித்து இவ்வண்ண
௬ மாய் இருக்குமென்ருர்.—[4]அவன் கர்த்தர்பேரி
லே விசுவாசித்தான்; இதை அவர் அவனுக்கு
நீதியாக எண்ணினர்.
௭ பின்னையும் அவனுடனே, இந்தத் தேசத்தைச்
சுதந்தரித்துக்கொள்வதற்கு உனக்குக் கொடுக்க,
உன்னை ஊர் என்ற கல்தேயருடைய பட்டணத்
திலிருந்து அழைத்துவந்த கர்த்தர் நாமே என்ருர்.-
௮ அப்பொழுது அவன், கர்த்தராகிய ஆண்டவரே,
நான் அதைச் சுதந்தரித்துக்கொள்ளுவேனென்
௯ கிறதை எதினலே அறிவேனென்ருன்.—அவர்
அவனுடனே, மூன்றுவயதுக் கிடாரியையும்,
மூன்றுவயது வெள்ளாட்டையும், மூன்றுவயது
ஆட்டுக்கடாவையும், ஒரு காட்டுப்புறுவையும்,
ஒரு புருக்குஞ்சையும், நமக்குக் கொண்டுவா
௰ வென்ருர்.—அவன் அவருக்கு இவைகளையெல்
லாம் கொண்டுவந்து, அவைகளை நடுவாகத் துண்
டித்து, துண்டங்களை ஒன்றுக்கொன்று எதிராக
வைத்தான்; பட்சிகளையோவெனில், அவன்
௰க துண்டித்ததில்லை.—அந்த உடல்களின்மேல் உ
ராஞ்சுகிற பட்சிகள் இறங்கிற்று; ஆனல், ஆபி
௰உ ராம் அவைகளைத் துரத்தினன்.—சூரியன் அஸ்த
மிக்கும்போதோவெனில், ஆபிராமின்மேல் கன
நித்திரை இறங்கிற்று; இதோ, திகிலும் மகா இரு
ளும் அவனைப் பிடித்தது.—அப்பொழுது அவர் ௰௩
ஆபிராமோடே சொன்னதாவது: உன் வித்தார்
தங்களுடையதல்லாத தேசத்திலே [5]நானூறுவரு
ஷம் பரதேசிகளாயிருந்து, அத்தேசத்தாரைச் சே
விப்பார்களென்றும், அவர்கள் இவர்களை உபத்
திரவப்படுத்துவார்களென்றும், நீ அறியவே அறி
யவேண்டும். — ஆனல், இவர்கள் சேவிக்கும் ௰௪
சாதியையும் நாம் நியாயந்தீர்ப்போம்; பிற்பாடு
[6]வெகு ஆஸ்தியுடனே புறப்பட்டுவருவார்கள்.—
நீயோவென்ருல், சமாதானத்தோடே [7]உன் பி ௰௫
தாக்களண்டையிலே சேருவாய்: நல்ல நரைவ
யதிலே அடக்கம்பண்ணப்படுவாய். — நாலாம் ௰௬
தலைமுறையாரோ இவ்விடத்துக்குத் திரும்பவரு
வார்கள்; ஏனெனில், எமோரியருடைய அக்கி
ரமம் இதுவரைக்கும் நிறைவேறினதில்லையென்
ருர்.—சூரியன் அஸ்தமித்துக் கனஇருளானபிற் ௰௭
பாடு, இதோ புகைகிற சூளையும், அந்தத் துண்
டங்களின் நடுவே கடந்துபோகிற அக்கினிச்
சுவாலையும் உண்டாயின.—அந்நாளிலே கர்த்தர் ௰௮
ஆபிராமோடே உடம்படிக்கைபண்ணிச்சொன்
னதாவது: எகிப்தின் நதிதுவக்கி ஐபிராத்தே
நதியென்ற பெரிய நதிமட்டுக்கும் இருக்கிற
தும்,—கேனியனும், கெனிசியனும், கத்மோனி ௰௯
யனும்,—ஏத்தியனும், பெரிசியனும், ரெப்பாவி ௨௰
யனும்,—எமோரியனும், கானனியனும், கிர்கா ௨௧
சியனும், எபூசியனுமென்றவர்கள் இருக்கிறது
மான இந்தத் தேசத்தை [8]உன் வித்துக்குக் கொ
டுத்தோமென்ருர்.

## ௰௬. அதிகாரம்.

*க. சாருய் தனக்குப் பிள்ளையில்லாததின்நிமித்தம் ஆகாரை ஆபிராமுக்கு மனைவியாகக் கொடுத்தது. ச. ஆகார் தன் நாச்சியாரை அற்பமாய் எண்ணினதற்காகத் தண்டிக்கப்பட்டோடிப்போனது. எ. தேவதூதன் அவளைச் சந்தித்துத் திரும்பிப்போய் வணங்கும்படி அவளுக்குப் புத்தி சொல்லி, ௰க. தான் பெறப்போகிற பிள்ளையைக்குறித்துச் சொன்னது, ௰௫. இஸ்மவேல் பிறந்தது.*

ஆபிராமுடைய பெண்சாதியாகிய சாருய் அவ க
னுக்குப் பிள்ளைபெருதிருந்தாள்; ஆனல், ஆகா
ரென்று பேர்கொண்ட எகிப்துதேசத்தாளாகிய
ஒரு அடிமைப்பெண் அவளுக்கிருந்தாள்.—சா உ
ருய் ஆபிராமுடனே, இதோ நான் பிள்ளைபெ
ருதபடிக்குக் கர்த்தர் என் கர்ப்பத்தை அடைத்
தார்; என் அடிமைப்பெண்ணேடே சேரும், ஒரு
வேளை அவளால். என்வீடு கட்டப்படுமென்
ருள்; ஆபிராம் சாருயின் சொல்கேட்டான்.—
ஆபிராம் கானன்தேசத்தில் பத்துவருஷம் குடி ௩
யிருந்தபின்பு, ஆபிராமின் பெண்சாதியாகிய சா
ருய் எகிப்துதேசத்தாளாயிருக்கிற தன் அடி
மைப்பெண்ணுகிய ஆகாரை அழைத்து, அவ
ளைத் தன் புருஷனுகிய ஆபிராமுக்குப் பெண்
சாதியாகக் கொடுத்தாள்.— அவன் ஆகாரோடே ௪
சேர்ந்தபோது, அவள் கர்ப்பம்தரித்தாள்; தான்
கர்ப்பம்தரித்ததை அவள் கண்டபோதோவெ
னில், அவள் நாச்சியார் அவள் பார்வைக்கு

1 ஏசா. சக.0.—2 சங். க. ச. எபி.௰௧.௰௧.—4 உரோ.ச.௩: ௬.
3 க மோ.௰௬.௰௬. உரோ.ச.௰௮. உஉ. கலா. ௩.௬. யாக். உ. உ௩.
5 உ மோ. ௰உ. ௪0. அப். எ. ௬. ௬: ௰உ.௩௫,௩௩.-7 க மோ. உ௫.
6 உ மோ. ௩. உ௧, உஉ: ௰௧. உ, எ.அ.-8 க மோ.௰உ.எ: ௰எ.எ.அ.

௫ அற்பமாய் எண்ணப்பட்டாள்.—அப்போது சா
றாய் ஆபிராமுடனே நான் அனுபவிக்கிற அநி
யாயம் உம்முடையமேல் சுமரும்; நான் என் அ
டிமைப்பெண்ணை உம்முடைய மடியிலே கொ
டுத்தேன்; தான் கர்ப்பம்தரித்ததை அவள் கண்ட
போதோவெனில், நான் அவள் பார்வைக்குக்
கொஞ்ச எண்ணிக்கையானேன்; கர்த்தர் எனக்
கும் உமக்கும் நடுவாக நியாயம்தீர்ப்பாராகவென்
௬ றாள்.—அப்போது ஆபிராம் சாறாயுடனே, இதோ
உன் அடிமைப்பெண் உன் கையில் அகப்பட்டி
ருக்கிறாள்; உன் பார்வைக்கு நலமானபடி அவ
ளுக்குச் செய்யென்றான்; அப்போது சாறாய்
அவளைத் தண்டிக்கையில், இவள் அவளை விட்
டோடிப்போனாள்.
௭ ஆனால், கர்த்தருடைய தூதர் அவளை வனாந்த
ரத்திலே சூருக்குப்போகிற வழி அருகே இருக்
கிற நீரூற்றாகிய கிணற்றண்டையிலே கண்டு
௮ பிடித்து,—சாறாயின் அடிமைப்பெண்ணாகிய ஆ
காரே, எங்கேயிருந்து வருகிறாய்? எங்கே போகி
றாயென்றார்; அவள் நான் என் நாச்சியாராகிய
சாறாயைவிட்டு ஓடிப்போகிறேனென்றாள்.—
௯ அப்பொழுது கர்த்தருடைய தூதர் அவளுடனே,
நீ உன் நாச்சியாரண்டைக்குத் திரும்பிப்போய்,
௰ அவள் கையின்கீழ் அடங்கியிருவென்றார்.—பின்
னையும் கர்த்தருடைய தூதர் அவளோடே, உன்
வித்தை மிகவும் பெருகப்பண்ணுவோம்; திரட்
சியினாலே அது எண்ணத்தொலையாததாயிருக்கு
௰௧ மென்றார்.—அப்புறம் கர்த்தருடைய தூதர் அவ
ளோடே சொன்னதாவது: இதோ கர்ப்பவதியா
யிருக்கிறாய், நீ ஒரு குமாரனைப் பெறுவாய்; கர்த்
தர் உன் அங்கலாய்ப்பைக் கேட்டபடியினாலே,
அவனுக்கு இஸ்மவேலென்று பேரிடுவாயாக.—
௰௨ இவன் துஷ்டமனிதனாயிருப்பான்; இவன் கை
எல்லாருக்கும் விரோதமாகவும் எல்லாருடைய
கை இவனுக்கு விரோதமாகவுமிருக்கும்; தன்
சகோதரரெல்லாருக்கும் எதிரே குடியிருப்பா
௰௩ னென்றார்.—அப்பொழுது அவள் தன்னோடே
பேசின கர்த்தரைத் தேவரீர் பார்க்கிற பராபர
னென்ற நாமமாக அழைத்தாள்; ஏனெனில், என்
னைப் பார்த்தவரைப் பிற்பாடு நான் அவரை இவ்
விடத்திலே கண்டுமிருக்கவில்லையோ என்றாள்.—
௰௪ ஆகையால், அந்தக் கிணறு என்னைப் பார்க்கிற
சீவனுள்ளவரின் கிணறென்னப்பட்டது; இதோ
காதேசுக்கும், பேரேதுக்கும் நடுவே அது இருக்
௰௫ கின்றது.—ஆகார் ஆபிராமுக்கு ஒரு குமாரனைப்
பெற்றாள்; அப்பொழுது ஆபிராம் ஆகார் பெற்ற
தன் குமாரனுக்கு இஸ்மவேலென்று பேரிட்
௰௬ டான்.—ஆகார் ஆபிராமுக்கு இஸ்மவேலைப் பெ
றுகிறபொழுது, ஆபிராம் எண்பத்தாறு வயதா
யிருந்தான்.

## ௰௭. அதிகாரம்.

*௧. பராபரன் உடம்படிக்கையைப் புதுப்பித்தது. ௫. ஆபிராம் என்ற பேர் அதிக ஆசீர்வாதத்துக்குக் குறிப்பாக, ஆபிரகாமென்று மாற்றப்பட்டது. ௰. சுன்னத்துக் கட்டளையிடப்பட்டது. ௰௫. சாறாய்க்குச் சாறாளென்ற பேர் இடப்பட்டு, அவள் ஆசீர்வதிக்கப்பட்டது. ௰௭. ஈசாக்கின் பிறப்பு வாக்குத்தத்தம்பண்ணப்பட்டது. ௨௩. ஆபிரகாமும், இஸ்மவேலும் சுன்னத்தடைந்தது.*

ஆபிராம் தொண்ணூற்றொன்பது வயதானபோ ௧
து கர்த்தர் ஆபிராமுக்குத் தரிசனையாகி, அவனோ
டே சொன்னதாவது: நாம் சர்வத்துக்கும் வல்ல
பராபரன்; [1]நீ நம்முடைய முகத்துக்குமுன்பாக
நடந்துகொண்டு உத்தமனாயிரு.—நாம் நமக்கும் ௨
உனக்கும் நடுவாக [2]நம்முடைய உடம்படிக்கை
யை ஏற்படுத்தி, உன்னை மிகுதியும் மிகுதியாய்ப்
பெருகப்பண்ணுவோமென்றார். — அப்போது ௩
ஆபிராம் முகம் குப்புறவிழுந்தான்; பராபரன்
அவனோடே பேசிச் சொன்னதாவது:—இதோ ௪
நாம் உன்னோடே பண்ணுகிற நம்முடைய உ
டம்படிக்கையாவது: [3]நீ திரள்சாதிகளுக்குத்
தகப்பனாவாய்.—இனி உன்பேர் ஆபிராமென்னப் ௫
படாததாக; நாம் உன்னைத் திரள்சாதிகளுக்குத்
தகப்பனாக வைத்தபடியினாலே, உன்பேர் ஆபிர
காமென்றிருக்கக்கடவது.—உன்னை மிகுதியும் ௬
மிகுதியாய்ப் பலுகப்பண்ணி, உன்னைச் சாதிக
ளாக்குவோம்; உன் சந்ததியில் இராசாக்கள் பிறப்
பார்கள்.—நாம் உனக்கும் உனக்குப் பிற்பாடு உன் ௭
வித்துக்கும் பராபரனாயிருக்கத்தக்கதாக நாம் நமக்
கும் உனக்கும் உனக்குப் பிற்பாடு தலைமுறை
தலைமுறையாக இருக்கப்போகிற உன் வித்துக்
கும் நடுவே நம்முடைய உடம்படிக்கையை நித்
திய உடம்படிக்கையாகத் திடப்படுத்துவோம்.—
உனக்கும் உனக்குப் பிற்பாடு உன் வித்துக் ௮
கும், நீ பரதேசியாய்த் தங்கிவருகிற கானான்தே
சத்தையெல்லாம் நித்திய உம்பிளிக்கையாகக்
கொடுத்து, அவர்களுக்குப் பராபரனாயிருப்போ
மென்றார்.
பின்னையும் பராபரன் ஆபிரகாமோடே சொன் ௯
னதாவது: இப்பொழுது நீயும், உனக்குப் பிற்
பாடு தலைமுறை தலைமுறையாக இருக்கப்போ
கிற உன் வித்தாரும், நம்முடைய உடம்படிக்
கையைக் கைக்கொள்வீர்களாக.— நமக்கும் உங் ௰
களுக்கும், உனக்குப்பிற்பாடு உன் வித்துக்கும்
நடுவே உண்டாகிறதும், நீங்கள் கைக்கொள்ள
வேண்டியதுமான நம்முடைய உடம்படிக்கை
யாவது: உங்களில் ஆணாய்ப் பிறந்ததெல்லாம்
சுன்னத்துப்பண்ணப்படவேண்டியது.—உங்கள் ௰௧
நுனித்தோலின் மாம்சத்தைச் சுன்னத்துப்பண்
ணக்கடவீர்கள்; அது நமக்கும் உங்களுக்குமி
ருக்கிற [4]உடம்படிக்கையின் அடையாளமாயி
ருக்கும்.—உங்களில் தலைமுறை தலைமுறையாக ௰௨
ஆணாய்ப் பிறக்கிறவைகளெல்லாம் எட்டுநாள்
பிள்ளையாய்ச் சுன்னத்துப்பண்ணப்படவேண்டி
யது; வீட்டுப்பிள்ளையும், உன்னுடைய வித்தல்
லாத எந்த அன்னியனிடத்திலும் பணத்தினாலே
கொள்ளப்பட்ட பிள்ளையும், அப்படித்தானே.—
உன் வீட்டுப்பிள்ளையும், உன் பணத்தினாலே ௰௩
கொள்ளப்பட்டவனும், அவசியமாய்ச் சுன்னத்
துப்பண்ணப்படவேண்டும்; இப்படி நம்மு

1 ௧ மோ. ௨௪. ௪௰.—2 ௧ மோ. ௰௫. ௰௮.

3 உரோ. ௪. ௰௭.—4 அப். ௭. ௰௧. உரோ. ௪. ௰௧.

டைய உடம்படிக்கை உங்கள் மாம்சத்திலேநித்தி
௰௪ ய உடம்படிக்கையாக இருக்கக்கடவது.-நுனித்
தோலின் மாம்சம் சுன்னத்துப்பண்ணப்படாதி
ருக்கிற நுனித்தோலுள்ள ஆண்பிள்ளையிருந்தால்,
அந்த ஆத்துமா நம்முடைய உடம்படிக்கையை
முறித்தபடியினுலே, தன் சனத்திலிராதபடிக்கு
அறுப்புண்டுபோவானென்ருர்.
௰௫ பின்னையும் பராபரன் ஆபிரகாமோடே சொன்
னதாவது: உன் பெண்சாதி சாருயினுடைய பே
ரைச் சாருயென்றழையாயாக; சாருளென்பது
௰௬ அவளுடைய பேராயிருக்கும். — நாம் அவளை
ஆசீர்வதித்து, அவளாலே உனக்கொரு குமாரனை
யும் தந்து, அவள் சாதிகளாய்ப் பலுகவும், அவ
ளாலே சாதிகளின் இராசாக்களுண்டாகவும்,
௰௭ அவளை ஆசீர்வதிப்போமென்ருர்.-அப்பொழுது
ஆபிரகாம் முகங்குப்புறவிழுந்து நகைத்து, நூறு
வயதானவனுக்குப் பிள்ளை பிறக்குமோ? தொண்
ணூறுவயதான சாருள் பெறுவாளோவென்று தன்
௰௮ இருதயத்திலே சொல்லிக்கொண்டு, — இஸ்ம
வேல் உமக்குமுன்பாகப் பிழைப்பானுகவென்
று ஆபிரகாம் பராபரனை விண்ணப்பம்பண்ணி
௰௯ ஞன் —அப்போது பராபரன் சொன்னதாவது:
[1]உன் பெண்சாதியாகிய சாருள் உனக்கொரு
குமாரனைப் பெறுவாள்; அவனுக்கு ஈசாக்கென்
று பேரிடுவாயாக; அவனோடே நாம் நம்முடை
ய உடம்படிக்கையை அவனுக்குப் பிற்பாடு
அவன் வித்துக்கு என்றென்றைக்கும் நிற்கிற
௨௰ உடம்படிக்கையாக ஏற்படுத்துவோம்.—இஸ்ம
வேலுக்காகவும், உன் விண்ணப்பத்தைக் கேட்
டோம்; இதோ நாம் அவனை ஆசீர்வதித்து, அவ
னை மிகுதியும் மிகுதியுமாகப் பலுகவும் பெருக
வும் பண்ணுவோம்; [2]பன்னிரண்டு பிரபுக்க
ளைப் பெறுவான்; அவனைப் பெரிய சாதியாக்கு
௨௧ வோம்.—ஆனுல், நம்முடைய உடம்படிக்கை
யை நாம் மறுவருஷத்தில் இக்காலத்திலே சா
ருள் உனக்குப் பெறப்போகிற ஈசாக்குடனே
ஏற்படுத்துவோமென்ருர்.
௨௨ பராபரன் அவனோடே பேசி முடித்தபிற்
௨௩ பாடு, அவர் ஆபிரகாமை விட்டேறினுர். —அப்
பொழுது ஆபிரகாம் தன் குமாரனுகிய இஸ்மவே
லையும், தன் வீட்டிலே பிறந்த யாவரையும், தான்
பணத்தினுலே கொண்ட யாவரையும், ஆபிரகா
மாகிய தன் வீட்டு மனிதரிலுள்ள ஆண்பிள்ளைக
ளையெல்லாம் சேர்த்து, பராபரன் தன்னோடே
சொன்னபடி, அவர்கள் நுனித்தோலின் மாம்
சத்தை அந்நாளிலேதானே சுன்னத்துப்பண்ணி
௨௪ ஞன்.—ஆபிரகாமுடைய நுனித்தோலின் மாம்
சம் சுன்னத்தடைகிறபொழுது, அவன் தொண்
௨௫ ணூற்றொன்பது வயதாயிருந்தான். — அவனு
டைய குமாரன் இஸ்மவேலோவெனில், அவனு
டைய நுனித்தோலின் மாம்சம் சுன்னத்துப்
பண்ணப்படுகிறபொழுது, பதின்மூன்று வயதா
௨௬ யிருந்தான். — அந்நாளிலேதானே ஆபிரகாமும்,
அவன் குமாரன் இஸ்மவேலும் சுன்னத்தடைந்
தார்கள்.—வீட்டில் பிறந்தவர்களும் அன்னியரி ௨௭
டத்தில் பணத்துக்குக் கொள்ளப்பட்டவர்களு
மாகிய அவன் வீட்டு மனிதரெல்லாம் அவனோ
டேகூடச் சுன்னத்தடைந்தார்கள்

## ௰௮. அதிகாரம்.

௧. ஆபிரகாம் மூன்று தேவதூதர்களுக்கு உபசாரம்செய்தது; சாருள் ஒரு குமாரனைப் பெறுவாளென்ற ஆச்சரியமான காரியத்தைக்குறித்துச் சந்தேகித்து நகைத்ததற்காகக் கடிந்துகொள்ளப்பட்டது. ௰௭. சோதோமின் அழிவு ஆபிரகாமுக்கு முன்னறிவிக்கப்பட்டது. ௨௩. ஆபிரகாம் அந்த ஊராருக்காக விண்ணப்பம்பண்ணினது.

பிற்பாடு கர்த்தர் அவனுக்குமம்ரேயின் சமனுன ௧
பூமியிலே தரிசனமானுர்; அவன் பகலின் உஷ்
ணவேளையில் கூடார வாசலிலே உளுக்காந்
திருந்து,—தன் கண்களை ஏறெடுத்துப் பார்க்கும் ௨
பொழுது, இதோ மூன்று புருஷர் அவனுக்கெ
திராக நின்ருர்கள்; அவர்களைக் காண்கையில்,
அவன் கூடாரவாசலிலிருந்து அவர்களுக்கெதிர்
கொண்டோடித் தரைமட்டும் குனிந்து,—ஆண் ௩
டவரே, உம்முடைய கண்களில் எனக்குக் கிரு
பை கிடைத்ததானுல், [3]நீர் உமதடியானை விட்டு
விலகிப்போகாதிருப்பீராக. — கொஞ்சம் தண் ௪
ணீர் கொண்டுவரட்டும், உங்கள் கால்களைக் கழு
வி மரத்தின்கீழே சாய்ந்துகொண்டிருங்கள்.—
நீங்கள் உங்களிருதயத்தைத் திடப்படுத்த ஒரு ௫
துணுக்கை அப்பம் கொண்டுவருவேன்; பிற்
பாடு அப்புறம் நடப்பீர்கள்; ஏனெனில் இதற்
காக உங்கள் அடியானண்டைக்குக் கடந்துவந்
தீர்களென்ருன்; அதற்கு நீ சொன்னபடியே
செய்யென்ருர்கள். — அப்பொழுது ஆபிரகாம் ௬
தீவிரமாய்க் கூடாரத்தில் சாருளண்டைக்குப்
போய், நீ சீக்கிரமாய் மூன்றுபடி மெல்லிய மா
வெடுத்துப் பிசைந்து, அப்பங்களைச் சுடுவென்
ருன்.—மாட்டுமந்தைக்கும் ஆபிரகாம் ஓடி, இள ௭
சாயிருக்கிற நல்ல கன்றுக்குட்டியைப் பிடித்
துப் பணிவிடைக்காரன் கையிலே கொடுத்து,
அதைச் சமைக்கத் தீவிரித்து,—வெண்ணெயை ௮
யும், பாலையும்தான் சமைப்பித்த கன்றுக்குட்டி
யையும் எடுத்துவந்து, அவர்கள்முன்பாக வைத்
தான்; அவனோவென்றால், அவர்களண்டை
மரத்தின் கீழே நின்றுகொண்டிருந்தான்; அவர்
கள் புசித்து,

அவனுடனே, உன் பெண்சாதி சாருள் எங் ௯
கே என்ருர்கள்; அதோ கூடாரத்திலிருக்கிரு
ளென்ருன்.—அப்பொழுது அவர் ஒரு பிராண ௰
உற்பத்திக்காலத்திட்டத்திலே உன்னண்டைக்
குத் திரும்ப வருவோம்; அப்பொழுது இதோ,
[4]உன் பெண்சாதியாகிய சாருளுக்கு ஒரு குமா
ரன் இருப்பானென்ருர்; சாருள் அவருக்குப்
பின்புறமான கூடாரவாசலிலிருந்து இதைக்
கேட்டாள்.-ஆபிரகாமும் சாருளுமோவெனில், ௰௧
முதிர்ந்தவர்களும் வயதுசென்றவர்களுமாயிருந்

1 ௧ மோ. ௰௮. ௰: ௨௧. ௧.—2 ௧ மோ. ௨௫. ௰௬.

3 எபி. ௰௩. ௨.—4 ௧ மோ. ௰௭. ௰௯—௨௧.

தார்கள்; ஸ்திரிகளுக்குள்ள வழிபாடு சாராளுக்கு
௰௨ நின்றுபோயிற்று. — ஆகையால், சாராள் [1]தன்
உள்ளத்திலே நகைத்து, நான் கிழவியும் [2]என்
எசமானன் முதிர்ந்த வயதுள்ளவருமானபின்பு,
எனக்கின்பம் உண்டாயிருக்குமோ என்றாள்.—
௰௩ அப்பொழுது கர்த்தர் ஆபிரகாமோடே சொன்
னதாவது: சாராள் நகைத்து, நான் கிழவியாயி
ருந்தும் பிள்ளைபெறுவது மெய்யோவென்பா
௰௪ னேன்?—[3]கர்த்தரால் ஆகாத அதிசயமுண்டோ?
ஒரு பிராண உற்பத்திக்காலத்திட்டத்திலே உன்
னண்டைக்குத் திரும்ப வருவோம்; அப்பொ
ழுது சாராளுக்கொரு குமாரன் இருப்பானென்
௰௫ றார்.—சாராளோவெனில், நான் நகைத்ததில்லை
என்று மறுதலித்தாள்; ஏனெனில், பயந்தாள்;
ஆனால் அவர், இல்லை, நீ நகைத்தாயென்றார்.
௰௬ பிற்பாடு அந்தப் புருஷர் எழுந்திருந்து அவ்
விடம்விட்டு, சோதோமை நோக்கிப்போனார்
கள்; ஆனால், ஆபிரகாம் அவர்களை வழிவிட்ட
௰௭ னுப்ப அவர்களோடே கூடப்போனான்.—அப்
பொழுது கர்த்தர் சொன்னதாவது: ஆபிரகாம்
பெரியவைகளான பெலத்த சாதியாய்ப் போக
வும், அவனில் [4]பூமியின் சாதிகளெல்லாம் ஆசீர்
௰௮ வதிக்கப்படுபவைகளாயிருக்கவும்,—நாம் செய்
யப்போகிறதை நாம் ஆபிரகாமுக்கு மறைப்போ
௰௯ மோ? — ஏனெனில், கர்த்தர் ஆபிரகாமுக்குச்
சொன்னதை அவன்மேல் வரப்பண்ணத்தக்க
தாக, அவன் தன் பிள்ளைகளுக்கும், தனக்குப்
பிற்பாடு இருக்கும் தன் வீட்டாருக்கும், நீங்கள்
நீதியும் நியாயமும் செய்யும்படிக்கு, கர்த்தருடை
ய வழியைக் காத்து நடவுங்களென்று கற்பிப்பவ
னென்று அவனை அறிவோமென்று சொல்லி,—
௨௰ கர்த்தர் அப்புறம் சொன்னதாவது: [5]சோதோம்
கொமோரா ஊர்களின் கூக்குரல் பெரிதானப
டியினாலும், அவைகளின் பாவம் மகா கனமான
௨௧ படியினாலும், — நாம் இப்பொழுது இறங்கிப்
போய், நம்மண்டைக்கு வந்தெட்டின அதினு
டைய கூப்பிடுதலின்படியே அவர்கள் செய்து
நிறைவேற்றினாரோ இல்லையோவென்று பார்த்து
௨௨ அறிவோமென்றார்.—அப்பொழுது அந்தப் புரு
ஷர் அவ்விடம்விட்டுச் சோதோமை நோக்கிப்
போனார்கள்; ஆனால், ஆபிரகாம் இன்னம் கர்த்
தருக்குமுன்பாக நின்றுகொண்டிருந்தான்.
௨௩ ஆபிரகாம் சேர்ந்துவந்து சொன்னதாவது: ஆ
௨௪ காதவனோடே நீதிமானையும் அழிப்பீரோ?-பட்
டணத்துக்குள்ளே ஐம்பது நீதிமான்களிருப்பார்
களாக்கும்; அதற்குள்ளிருக்கும் ஐம்பது நீதி
மான்களின் நிமித்தம் ஸ்தலத்திற்கு மன்னியா
௨௫ மல் அதை அழிப்பீரோ?—இப்படிக்கொத்த செ
யல் உமக்குத் தூரமாயிருப்பதாக; நீதிமானும்
பொல்லாதவனும் சரியாக, பொல்லாதவனோ
டே நீதிமானையும் கொல்வது உமக்குத் தூரமா
யிருப்பதாக; [6]பூமிக்கெல்லாம் நியாயாதிபதியா
௨௬ னவர் நீதிசெய்யாதிருப்பாரோ என்றான்.—அதற்
குக் கர்த்தர் சோதோம் பட்டணத்திற்குள் ஐம்
பது நீதிமான்களைக் கண்டோமாகில், அவர்க
ளின்நிமித்தம் ஸ்தலத்திற்கெல்லாம் மன்னிப்
போமென்றார்.—அப்பொழுது ஆபிரகாம் பிரதி ௨௭
யுத்தாரமாக, இதோ அடியேன் தூளும் சாம்பலு
மாயிருந்தும், ஆண்டவரோடே பேசத் துணிந்
தேன். — ஐம்பது நீதிமான்களுக்கு ஒருவேளை ௨௮
ஐந்துபேர் குறைந்தால், அந்த ஐந்துபேர்நிமித்
தம் பட்டணத்தையெல்லாம் அழிப்பீரோ என்
றான்; அதற்கவர் நாம் நாற்பத்தைந்து நீதிமான்
களை அங்கே கண்டால், அதை அழிப்பதில்லை
என்றார்.—அவன் இன்னம் அவரோடே பேசத் ௨௯
தொடர்ந்து, ஒருவேளை நாற்பது நீதிமான்கள்
அங்கே காணப்படுவார்களென்றான்; அதற்கவர்
நாற்பது நீதிமான்களின் நிமித்தம் அப்படிச்
செய்யாதிருப்போமென்றார்.—அப்பொழுது அ ௩௰
வன், நான் அப்புறம்பேச ஆண்டவருக்குக் கோ
பம்வராமல் வேண்டுகிறேன்; ஒருவேளை முப்ப
து நீதிமான்கள் அங்கே காணப்படுவார்களென்
றான்; அதற்கவர், நாம் முப்பது நீதிமான்களை
அங்கே கண்டால், அப்படிச் செய்யாதிருப்போ
மென்றார்.—அப்பொழுது அவன் இதோ, ஆண் ௩௧
டவரோடே பேசத் துணிந்தேன்; ஒருவேளை இ
ருபது நீதிமான்கள் அங்கே காணப்படுவார்க
ளென்றான்; அதற்கவர், நாம் இருபது நீதிமான்
களின்நிமித்தம் அதை அழிக்காதிருப்போமென்
றார்.—அப்பொழுது அவன், நான் இன்னம் இந்த ௩௨
ஒருவிசைமாத்திரம் பேச ஆண்டவருக்குக் கோ
பம்வராமல் வேண்டுகிறேன்; ஒருவேளை பத்து
நீதிமான்கள் அங்கே காணப்படுவார்களென்
றான்; அதற்கவர், பத்து நீதிமான்களின் நிமித்
தம் அதை அழிக்காதிருப்போமென்றார்.—கர்த் ௩௩
தர் ஆபிரகாமோடே பேசிமுடித்தபிற்பாடு புறப்
பட்டுப்போனார்; ஆபிரகாம் தன்னிடத்திற்குத்
திரும்பினான்.

## ௰௯. அதிகாரம்.

௧. லோத் இரண்டு தூதர்களுக்கு உபசாரம் செய்தது. ௪. சோதோம் தேசத்து அக்கிரமக்காரர் குபோதிகளானது. ௰௨. லோத் தப்பித்துக்கொள்ளப் பர்வதங்களுக்கு அனுப்பப்பட்டது. ௰௫. அவன் சோவாருக்குப் போக உத்தரவு பெற்றது. ௨௪. சோதோம்கொமோரா அழிக்கப்பட்டது. ௨௬. லோத்தின் பெண்சாதி உப்புத்தூணானது. ௩௰. லோத் ஒரு கெபியில் வாசம்பண்ணினது. ௩௩. அவன் குமாரத்திகள் செய்த முறைகேட்டினாலுண்டான மோவாபியர், அம்மோனியர் என்பவர்களுடைய உற்பத்தியைக் குறித்துச் சொல்லியது.

அந்த இரண்டு தூதர் சாயங்காலத்திலே சோ ௧
தோமுக்கு வந்தார்கள்; லோத் சோதோமின் வா
சலிலே உளுக்காந்திருந்தான்; அப்பொழுது
லோத் அவர்களைக் கண்டு, எதிர்கொண்டெழுந்
திருந்து தரைமட்டும் முகங்குனிந்து,—என் ஆண் ௨
டவர்களே, [7]இதோ, உங்கள் ஊழியக்காரரின்
வீட்டுமுகமாய் நீங்கள் திரும்பி, இராத்தங்கி, உங்
கள் கால்களைக் கழுவி, காலமே எழுந்திருந்து,
உங்கள் வழிப்பயணம் போங்களென்றான்;
அதற்கவர்கள், அல்ல வீதியிலே இராத்தங்குவோ

1 ௧ மோ. ௰௭. ௰௭. — 2 ௧ பே. ௩. ௬. — 3 மத். ௰௯. ௨௬. — 4 ௧ மோ. ௰௨. ௩.

5 ௧ மோ. ௰௯. ௰௩. — 6 அப். ௰௭. ௩௧. — 7 எபி. ௰௩. ௨.

௩ மென்றூர்கள்.-அவனேவெனில், அவர்களை மிக
வும் வருந்திக்கொண்டான்; அப்பொழுது அவ
னண்டைக்குத் திரும்பி, அவன் வீட்டுக்கு
வந்தார்கள்; அவன் அவர்களுக்கு விருந்துபண்
ணிப் புளிப்பில்லா அப்பங்களைச் சுட்டான்;
அவர்கள் புசித்தார்கள்.
௪ ஆனல், அவர்கள் சயனித்துக்கொள்ளுகிற
தற்குமுன், சோதோமிலே வாலிபர்முதல் கிழ
வர்மட்டுமுள்ள ஊர் மனிதராகிய சனங்களனை
வரும் கடைக்கோடிகளிலுமிருந்து வந்து, [1]வீட்
௫ டைச் சூழ்ந்துகொண்டு,—லோத்தைக் கூப்பிட்
டு, இந்த இராத்திரியிலே உன்னண்டைக்கு வந்த
மனிதரெங்கே? நாங்கள் அவர்களை அறியும்ப
டிக்கு அவர்களை எங்களண்டைக்கு வெளியே
கொண்டுவாவென்று அவனேடே சொன்னூர்
௬ கள்.—லோத்தோவெனில், அவர்களண்டைக்கு
வாசற்படியிலே புறப்பட்டுப்போய், தனக்குப்
௭ பின்னலே கதவைப் பூட்டி,—என் சகோதரரே,
௮ [2]பொல்லாப்புச் செய்யாதிருங்கள்.-இதோ, புரு
ஷரை அறியாத இரண்டு குமாரத்திகள் எனக்
குண்டே, அவர்களையாகிலும் உங்களண்டைக்
கு வெளியே கொண்டுவருவேன்; உங்கள் பார்
வைக்குச் சம்மதியானபடி அவர்களுக்குச் செய்
யுங்கள்; இந்தப் புருஷருக்குமாத்திரம் ஒன்றும்
செய்யாதிருங்கள்; ஏனெனில், இதற்காக என்
௯ இறப்பின் நிழலிலே வந்தார்களென்றூன்.—ஆ
னல், அவர்கள் அப்பாலே ஒத்திப்போவென்
றும், பரதேசியாய் வந்த இவனொருவன் நியா
யம் பேசுவானென்றும், இப்பொழுது அவர்க
ளைப்பார்க்கிலும் உனக்குப் பொல்லாப்புச்செய்
வோமென்றும் சொல்லி,லோத்தென்ற புருஷனை
மிகவும் நெருக்கிக் கதவை உடைக்கக் கிட்டி
௰ னூர்கள்.—அப்பொழுது அந்தப் புருஷர் தங்கள்
கைகளை வெளியே நீட்டி லோத்தைத் தங்களண்
டைக்கு வீட்டுக்குள் இழுத்துக்கொண்டு கத
௰௧ வைப் பூட்டி,— வாசலுக்குமுன்னிருந்த சிறி
யோரும், பெரியோருமாகிய மனிதருக்குக் கு
ருட்டாட்டம் பிடிக்கப்பண்ணினூர்கள்; அப்
பொழுது அவர்கள் வாசலைத் தேடி இளைத்துப்
போனூர்கள்.
௰௨ அப்பொழுது அந்தப் புருஷர் லோத்தோடே
சொன்னதாவது: இன்னம் இவ்விடத்தில் உனக்
கு யாரிருக்கிறூர்கள்? மருமகனவது, உன் குமார
ராவது, உன் குமாரத்திகளாவது, பட்டணத்தில்
உனக்கிருக்கிற எவர்களானலும்சரி, அவர்களை
இந்த ஸ்தலத்திலிருந்து வெளியே அழைத்துப்
௰௩ போ.—ஏனெனில், நாங்கள் இந்த ஸ்தலத்தை
அழிக்கப்போகிறேம்; [3]அதேனென்றல், அவர்
கள் கூக்குரல் கர்த்தருடைய முகத்திற்குமுன்
பாகப் பெரிதாயிருக்கின்றது; அதை அழிக்கக்
௰௪ கர்த்தர் எங்களை அனுப்பினூர் என்றூர்கள்.—அப்
பொழுது லோத் புறப்பட்டு, தன் குமாரத்திகளை
விவாகம்பண்ணப்போகிற தன்மருமக்களோடே
பேசி, நீங்கள் எழுந்து இந்த ஸ்தலத்தைவிட்டுப்
புறப்படுங்கள்; ஏனெனில், கர்த்தர் இந்தப் பட்
டணத்தை அழிப்பார் என்றூன்; ஆனல், அவனு
டைய மருமக்களின் பார்வைக்கு அவன் பரியா
சம்பண்ணுகிறதாகக் கண்டது.
கிழக்கு வெளுக்கும்பொழுது அந்தத் தூதர் ௰௫
லோத்தைத் தீவிரித்து, நீ பட்டணத்தின் அக்கி
ரமத்திலே அழியாதபடிக்கு எழுந்து, உன்
பெண்சாதியையும், இங்கே இருக்கிற உன் இ
ரண்டு குமாரத்திகளையும் அழைத்துப்போவென்
றூர்கள். — அவன் தாமதித்துக்கொண்டிருக்கிற ௰௬
பொழுது, அந்தப் புருஷர் கர்த்தர் அவன்மேல்
வைத்த இரக்கத்தினலே அவன் கையையும்,
அவன் பெண்சாதியின் கையையும், அவன்
இரண்டு குமாரத்திகளின் கையையும் பிடித்து,
அவனைப் பட்டணத்திற்கு வெளியே கொண்டு
போய் விட்டார்கள்.—அப்பொழுது சம்பவித் ௰௭
ததேதென்றல், இவர்கள் அவர்களை வெளியே
கொண்டுவந்தபிற்பாடு அவர் சொன்னதாவது:
உன் சீவன் தப்ப ஓடிப்போ: பின்னிட்டுப் பா
ராதே; இந்தச் சமனன பூமியெங்கும் நில்லாதே;
நீ அழியாதபடிக்குப் பர்வதத்திற்கு ஓடிப்போ
வென்றூர். — ஆனல், லோத் அவர்களோடே ௰௮
சொன்னதாவது: அப்படியல்ல ஆண்டவரே,—
இதோ உம்முடைய கண்களில் உமதடியானுக் ௰௯
குக் கிருபை கிடைத்ததே; என் பிராணனைக்
காக்கத் தேவரீர் எனக்குச் செய்த கிருபையைப்
பெரிதாயிருக்கப்பண்ணினீர்; ஆனல், நான் பர்
வதத்திற்கு ஓடிப்போகமாட்டேன்; தீங்கு என்
னைத் தொடர்ந்து பிடித்தால் மரிப்பேனே. —
அதோ அந்த ஊர் நான் அதற்கோடிப்போகக் ௨௰
கிட்டியிருக்கின்றதே; அது சின்னதுமாயிருக்
கின்றது; என் பிராணன் பிழைக்க நான் அங்கே
ஓடிப்போகட்டுமேன், அது சின்னதல்லவோ
என்றூன்.—அப்பொழுது அவர் அவனுடனே ௨௧
சொன்னதாவது: இதோ, நீ சொன்ன ஊரை
நாம் கவிழ்த்துப்போடாதபடிக்கு, இந்தக் காரி
யத்திலும் உன் முகத்தைப் பார்த்தோம்.—தீவிர ௨௨
மாய் அங்கே ஓடித் தப்பித்துக்கொள்; ஏனெ
னில், நீ அங்கே வந்து சேருமட்டும் நாம் ஒன்
றும் செய்யக்கூடாதென்றூர்; ஆகையால், அந்த
ஊர் சோவார் என்னப்பட்டது.—லோத் சோ ௨௩
வாருக்குள் வந்தபொழுது, பூமியின்மேல் சூரிய
னுதித்தது.
அப்பொழுது கர்த்தர் [4]சோதோமின்மேலும், ௨௪
கொமோராவின்மேலும், கர்த்தராலே வானத்தி
லிருந்து கெந்தகத்தையும், அக்கினியையும் வரு
ஷிக்கப்பண்ணி,—அந்தப் பட்டணங்களையும், ௨௫
அந்தச் சமனன பூமியனைத்தையும், அந்தப் பட்
டணங்களின் எல்லாக் குடிகளையும், பூமியின்
பயிரையும் கவிழ்த்துப்போட்டார்.—ஆனல், [5]அ ௨௬
வன் பெண்சாதி பின்னிட்டுப் பார்த்து, உப்புத்
தூணனள். — ஆபிரகாமோவெனில், காலமே ௨௭

1 நியா. ௰௯. ௨௨.—2 வாக். க. ௰௯—௨௧.
3 க மோ. ௰௮.௨௰.—4 இ. மோ. ௨௯. ௨௩. ஏசா. ௰௩. ௰௯. எரே. ௪௰. ௰௮. ஆமோ. ௪. ௧௧. ஆமோ.
௨. ௯. யூதா. ௭. லூக். ௰௭.௨௯. ௨ பே. ௨. ௬.
5 லூக். ௰௭. ௩௨.

எழுந்திருந்து தான் கர்த்தருக்குமுன்பாக நின்ற
௨௮ இடத்திற்குப் போய்,—சோதோம் கொமோரா
பட்டணங்களின் திக்கையும், சமனான பூமியி
னுடைய எல்லாத் திக்கையும் நோக்கிப்பார்த்
தான்; அப்பொழுது இதோ, நிலத்துப் புகை சூ
ளையின் புகையைப்போல எழும்பிற்று.

௨௯ அப்படியே பராபரன் அந்தச் சமனான பூமி
யின் பட்டணங்களை அழிக்கிறபொழுது, பரா
பரன் ஆபிரகாமை நினைத்து, லோத் குடியிருந்த
பட்டணங்களைத் தாம் கவிழ்த்துப்போடுகையில்,
லோத்தை அந்தக் கவிழ்த்தலின் நடுவிலிருந்து
௩௰ தப்பவிட்டனுப்பினார்.—பிற்பாடு லோத் சோ
வாரைவிட்டுப் போய் அவனும், அவனோடே
கூட அவனிரண்டு குமாரத்திகளும், பர்வதத்தி
லே குடியேறினார்கள்; ஏனெனில், சோவாரி
லே குடியிருக்கப் பயந்தான்; அங்கே அவனும்,
அவனிரண்டு குமாரத்திகளும், ஒரு கெபியிலே
குடியிருந்தார்கள்.

௩௧ அப்பொழுது மூத்தவள் இளையவளோடே
சொன்னதாவது: நம்முடைய தகப்பன் முதிர்
வயதானார்; பூமியெங்கும் நடக்கிற முறைமை
யின்படியே நம்மோடே சேரப் பூமியிலே ஒரு
௩௨ புருஷனுமில்லையே.—வா, நம்முடைய தகப்ப
னுக்கு வித்தைப் பிறப்பிக்கும்படிக்கு அவருக்
கு மதுவைப் பானம்பண்ணக் கொடுத்து, அவ
௩௩ ரோடே சயனிப்போமென்றாள்.— அப்படியே
அன்று இராத்திரியிலே, தங்கள் தகப்பனுக்கு
மதுவைப் பானம்பண்ணக் கொடுத்தார்கள்;
மூத்தவள் போய், தன் தகப்பனோடே சயனித்
தாள்; ஆனால், அவள் சயனித்துக்கொண்டதை
யும், எழுந்திருந்ததையும் உணராதிருந்தான்.—
௩௪ மறுநாளிலே சம்பவித்ததேதென்றால், மூத்தவள்
இளையவளோடே இதோ, நேற்று என் தகப்ப
னோடே சயனித்தேன்; நம்முடைய ததப்பனுக்
கு வித்தைப் பிறப்பிக்கும்படிக்கு அவருக்கு
இன்று இராத்திரிக்கும், மதுவைப் பானம்பண்
ணக்கொடுப்போம்; அப்பொழுது நீ போய் அவ
௩௫ ரோடே சயனியென்றாள்.—அப்படியே அன்று
இராத்திரியிலும் தங்கள் தகப்பனுக்கு மதுவைப்
பானம்பண்ணக் கொடுத்தார்கள்; அப்பொழுது
இளையவள் எழுந்துபோய் அவனோடே சயனித்
தாள்; ஆனால், அவள் சயனித்துக்கொண்டதை
யும், எழுந்திருந்ததையும் உணராதிருந்தான்.—
௩௬ இந்த அடைவாய், லோத்தின் குமாரத்திகள் இரு
வரும் தங்கள் தகப்பனாலே, கர்ப்பம் தரித்தார்
௩௭ கள்.—மூத்தவள் ஒரு குமாரனைப் பெற்று, அவ
னுக்கு மோவாப் என்று பேரிட்டாள்; அவனே
இந்நாள்வரைக்கும் இருக்கிற மோவாபியருக்குத்
௩௮ தகப்பன்.—இளையவளும் ஒரு குமாரனைப்பெற்று,
அவனுக்குப் பேன் அம்மியென்று பேரிட்
டாள்; அவன் இந்நாள்வரைக்கும் இருக்கிற
அம்மோன் புத்திரருக்குத் தகப்பன்.

1 ௧ மோ. ௰௨. ௰௩: ௨௬. ௭.

## ௨௰. அதிகாரம்.

௧. ஆபிரகாம் கேராரிலே சஞ்சரித்து, ௨. தன் மனைவியை மறுதலித்து இழந்தது. ௩. அவள்நிமித்தம் அபிமேலேக் சொப்பனத்திலே கடிந்து கொள்ளப்பட்டது. ௯. அவன் ஆபிரகாமைக் கடிந்துகொண்டு, ௰௪. சாராளை அவனுக்கு ஒப்புவித்து, ௰௬. அவளையும் கடிந்துகொண்டது. ௰௭. அவன் ஆபிரகாமுடைய செபத்தால் சீரடைந்தது.

ஆபிரகாம் அவ்விடத்தைவிட்டு, தென்தேசத் ௧
திற்குப் பயணம்பண்ணி, காதேசுக்கும் சூருக்
கும் நடுவாகக் குடியேறி கேராரிலே தங்கி,—
[1]தன் பெண்சாதியாகிய சாராளைத் தன் சகோதரி ௨
என்றான்; அப்பொழுது கேராரின் இராசாவா
கிய அபிமேலேக் ஆளனுப்பிச் சாராளை எடுத்
துக்கொண்டான்.
ஆனால், இராத்திரியில் சொப்பனத்திலே பரா ௩
பரன் அபிமேலேக் அண்டைக்கு வந்து அவனு
டனே, இதோ நீ எடுத்துக்கொண்ட ஸ்திரியின்
நிமித்தம் நீ சாவுக்குள்ளானவன்; ஏனெனில்,
அவள் புருஷன்கீழ்ப் பெண்சாதியாயிருக்கிறாள்
என்றார்.—அபிமேலேக்கோவெனில், அவளைச் ௪
சேராதிருந்தான்; ஆகையால், அவன் சொன்ன
தாவது: ஆண்டவரே, நீதியுள்ள சாதியையும்
கொல்லுவீரோ?—இவள் தன் சகோதரியென்று ௫
அவன் என்னோடே சொன்னதில்லையோ? இ
வன் தன் சகோதரனென்று அவள்தானும் சொன்
னாளே; என் இருதயத்தின் உத்தமத்தோடும், என்
கைகளின் குற்றமில்லாமையோடும் இதைச்செய்
தேனே என்றான்.— அப்பொழுது பராபரன் ௬
சொப்பனத்திலே அவனோடே சொன்னதாவது:
உன் இருதயத்தின் உத்தமத்தோடே நீ இதைச்
செய்தாயென்று நாம் அறிந்துமிருக்கிறோம்; நீ
நமக்கு விரோதமாகப் பாவம் செய்யாதபடிக்கு
நாம் உன்னைத் தடுத்தும் இருந்தோம்; ஆகை
யால், உன்னை அவளைத் தொடவொட்டாதிருந்தோ
ம்.—இப்பொழுதும் ஸ்திரியைப் புருஷனுக்குத் ௭
திரும்பக்கொடு; ஏனெனில், [2]அவன் தீர்க்கத
ரிசி; நீ பிழைக்கும்படிக்கு அவன் உனக்காக
வேண்டுதல்செய்வான், திரும்பக்கொடாயேயா
கில், நீயும் உனக்கிருக்கிற அனைவரும் சாவவே
சாவீர்களென்றறி என்றார்.
அபிமேலேக் அதிகாலமே எழுந்திருந்து, தன் ௮
ஊழியக்காரரை எல்லாம் அழைப்பித்து, இந்த
எல்லா வார்த்தைகளையும் அவர்கள் கேட்கச்சொ
ன்னான்; அந்த மனிதர் மிகவும் பயந்தார்கள்.—
அப்பொழுது அபிமேலேக் ஆபிரகாமை அழைப் ௯
பித்து, அவனுடனே, நீ எங்களுக்கு என்னசெய்
தாய்? நீ என்மேலும், என் இராச்சியத்தின்மே
லும் கனபாவத்தைச் சுமரப்பண்ணுகிறதற்கு உ
னக்கென்ன குற்றம் செய்தேன்? செய்யத்தகாத
காரியங்களை என்னிடத்திலே செய்தாயென்
றான்.—பின்னையும் அபிமேலேக் ஆபிரகாமோ ௰
டே, நீ இந்தக் காரியத்தைச் செய்வதற்காக என்
னகண்டாய் என்றான்.—ஆபிரகாம் சொன்ன ௰௧
தாவது: இவ்விடத்தில் தெய்வபயமே இல்லை

2 சங். ௱௫. ௰௪, ௰௫.

என்றும், என் பெண்சாதியின்நிமித்தம் என்
னைக் கொல்லுவார்களென்றும் நினைத்தேன்.—
௰௨ அவள் என் சகோதரி என்கிறதும் நிசம்தான்;
அவள் என் தகப்பனுக்குக் குமாரத்தி; ஆனால்,
என் தாயாருக்குக் குமாரத்தி அல்ல; அவள்
௰௩ எனக்குப் பெண்சாதியானாள்.—பராபரன் என்
னைத் தகப்பன் வீட்டிலிருந்து சிதறப்பண்ணின
பொழுது சம்பவித்ததேதென்றால், நாம் எந்த
ஸ்தலத்திலே வந்தாலும், இவன் என் சகோதர
னென்று சொல்வது நீ எனக்குச் செய்யவேண்
டிய தயையென்று அவளோடே சொல்லியிருக்
கிறேனென்றான்.

௰௪ அப்பொழுது அபிமேலேக் ஆடுமாடுகளையும்,
வேலைக்காரரையும், வேலைக்காரிகளையும் ஆபிர
காமுக்குக் கொடுத்து, அவன் பெண்சாதியாகிய
சாராளை அவனுக்குத் திரும்பக்கொடுத்து,—
௰௫ இதோ, என் தேசம் உனக்குமுன்பாக இருக்
கின்றது; உன் பார்வைக்குச் சம்மதியான இடத்
திலே குடியிருவென்று அபிமேலேக் சொல்லி,
௰௬ சாராளுடனே, உன் சகோதரனுக்கு ஆயிரம்
வெள்ளிக்காசைக் கொடுத்தேன்; இதோ, உன்
னோடிருக்கிற எல்லார்முன்பாகவும், மற்ற அனை
வர்முன்பாகவும், இது உனக்குக் கண்களின்
முக்காட்டுக்காவதாகவென்றான்; இப்படிப் புத்
௰௭ திசொல்லப்பட்டாள்.— ஆபிரகாம் பராபரனை
வேண்டிக்கொண்டான்; அப்பொழுது பரா
பரன் அபிமேலேக்கையும், அவன் பெண்சாதி
யையும், அவன் வேலைக்காரிகளையும், பிள்ளை
௰௮ பெறும்படியாகக் குணமாக்கினார்.—ஏனெனில்,
ஆபிரகாமுடைய பெண்சாதியாகிய சாராளின்
நிமித்தம் கர்த்தர் அபிமேலேக்குடைய வீட்டுக்
கர்ப்பங்களையெல்லாம் அடைக்கவே அடைத்
திருந்தார்.

## ௨௧. அதிகாரம்.

*௧. ஈசாக் பிறந்தது. ௪. அவன் சுன்னத்துப் பண்ணப்பட்டது. ௬. சாராள் சந்தோஷமடைந்தது. ௯. ஆகாரும் இஸ்மவேலும் அனுப்பிவிடப்பட்டது. ௰௫. வனாந்தரத்தில் ஆகாருக்கு வந்த துன்பத்தில், ௰௭. தூதன் அவளுக்கு ஆறுதல் அளித்தது. ௨௨. பேயேர்சேபாவிலே அபிமேலேக்கும் ஆபிரகாமும் உடம்படிக்கைபண்ணிக்கொண்டது.*

௧ கர்த்தரோவென்றால், [1]தாம் சொல்லியிருந்தபடி
யே சாராளை நோக்கிப்பார்த்தார்; கர்த்தர் தாம்
௨ உரைத்தபடியே சாராளுக்குச் செய்தார்.—[2]சா
ராள் கர்ப்பம்தரித்து, ஆபிரகாமுக்கு அவன் மு
திர்வயதிலே, பராபரன் அவனுக்குச் சொல்லியி
ருந்த காலத்திட்டத்திலே, ஒரு குமாரனைப் பெற்
௩ றாள்.—அப்பொழுது ஆபிரகாம் தனக்குப் பிறந்
தவனும் சாராள் தனக்குப் பெற்றவனுமான தன்
குமாரனுக்கு [3]ஈசாக்கென்று பேரிட்டான்.
௪ எட்டுநாள் குழந்தையான தன் குமாரன் ஈசாக்
கை ஆபிரகாம், பராபரன் தனக்குக் கற்பித்தி
௫ ருந்தபடியே சுன்னத்துப்பண்ணினான்.—ஆபிர
காமுக்கு அவன் குமாரனாகிய ஈசாக்குப் பிறந்
௬ தபொழுது அவன் நூறுவயதாயிருந்தான்.—சா
ராள் சொன்னதாவது: பராபரன் எனக்கொரு
நகைப்பை உண்டாக்கினார்; இதைக் கேட்கிற
யாவரும் என்னோடேகூட நகைப்பார்கள்.—சா ௭
ராள் பிள்ளைகளுக்கு முலைகொடுப்பாளென்று
ஆபிரகாமுக்கு எவன் சொல்லுவான்; ஏனென்
றால், அவர் முதிர்வயதிலே அவருக்கொரு
குமாரனைப் பெற்றேனே என்றாள்.

பிள்ளை வளர்ந்து முலைமறந்தது; ஈசாக் முலை ௮
மறந்த நாளிலே, ஆபிரகாம் பெரிய விருந்துபண்
ணினான். — பிற்பாடு சாராள் எகிப்துதேசத்தா ௯
ளாகிய ஆகார் ஆபிரகாமுக்குப் பெற்ற குமாரன்
ஆகடியம்பண்ணுகிறவனென்று கண்டு,—ஆபிர ௰
காமுடனே, [4]இந்த அடிமைப்பெண்ணையும்,
அவள் மகனையும் புறம்பே தள்ளும்; ஏனெனில்
இந்த அடிமைப்பெண்ணின் மகன் என் குமார
னாகிய ஈசாக்கோடே சுதந்தரவாளனாயிருப்பதி
ல்லை என்றாள்.—தன் குமாரனைக்குறித்துச் சொ ௰௧
ல்லப்பட்ட இந்த வார்த்தை ஆபிரகாமின் பார்
வைக்கு மிகவும் ஆகாததாயிருந்தது.—ஆனால், ௰௨
பராபரன் ஆபிரகாமோடே சொன்னதாவது:
அந்தப் பிள்ளையையும், உன் அடிமைப்பெண்
ணையுங்குறித்துச் சொல்லப்பட்டது உன் பார்
வைக்கு ஆகாததாயிருக்கவேண்டாம்; சாராள்
உன்னோடே சொன்னதெல்லாவற்றிலும் அவள்
சொல்லைக் கேள்; ஏனெனில், [5]ஈசாக்கினிடத்
தில் உன் வித்து விளங்கும்.— அடிமைப்பெண் ௰௩
ணின் குமாரனையும், அவன் உன் வித்தானபடி
யினாலே ஒரு சாதியாக்குவோமென்றார்.—ஆபி ௰௪
ரகாம் அதிகாலமே எழுந்திருந்து, அப்பத்தை
யும் ஒரு துருத்தித் தண்ணீரையுமெடுத்து, ஆகா
ருக்குத் தோளின்மேல் தூக்கிவிட்டு, பிள்ளை
யையும் கொடுத்து, அவளை அனுப்பிவிட்டான்;
அவள் புறப்பட்டுப் போய், பேயேர்சேபாவின்
வனாந்தரத்திலே வழிதப்பித் திரிந்தாள்.

துருத்தியிலிருந்த தண்ணீர் போனபிற்பாடு ௰௫
அவள் பிள்ளையை ஒரு செடியின்கீழே விட்டுப்
போய்,—எதிராக வில்லெய்யும் தூரத்திலே உ ௰௬
ளுக்காந்தாள்; ஏனெனில், பிள்ளை சாகிறதை
நான் பார்க்கமாட்டேனென்றாள்; அவள் எதி
ரே உளுக்காந்து தன் சத்தமெடுத்தழுதாள்.—
ஆனால், பராபரன் பிள்ளையின் சத்தத்தைக் கேட் ௰௭
டார்; பராபரனுடைய தூதனானவர் வானத்திலி
ருந்து ஆகாரைக் கூப்பிட்டு, அவளுடனே, ஆகா
ரே, உனக்கென்னவேண்டும்; பயப்படாதே;
பராபரன் பிள்ளையிருக்கிற இடத்திலே அவனு
டைய சத்தத்தைக் கேட்டார்.—நீ எழுந்திருந்து ௰௮
பிள்ளையை எடுத்து அவனை உன் கையினால் பி
டித்துக்கொண்டுபோ; ஏனெனில், அவனைப் பெ
ரியசாதியாக்குவோமென்றார்.—பராபரன் அவள் ௰௯
கண்களைத் திறந்தார்; அப்பொழுது அவள் ஒரு
தண்ணீர்த் துரவைக்கண்டு போய், துருத்தியைத்
தண்ணீரினால் நிரப்பி, பிள்ளைக்குக் குடிக்கக்
கொடுத்தாள். — பராபரன் பிள்ளையோடேகூட ௨௰

1 க மோ. ௰௭.௰௬: ௰௮.௰.—2 எபி.௰௧.௰௧,௰௨.—3 க மோ. ௰௭.௰௯.

4 கலா. ௪.௩௰.—5 க மோ. ௰௭.௨௧. உரோ. ௯.௭.

இருந்தார்; அவன் வளர்ந்து, வனாந்தரத்தில் குடி
யிருந்து, வில்வித்தையிலே வல்லவனாயிருந்
௨௧ தான்.—அவன் பாரானென்ற வனாந்தரத்திலே
குடியிருந்தான்; அவனுடைய தாய் எகிப்துதே
சத்தாளாகிய ஒரு பெண்ணை அவனுக்கு விவாகம்
பண்ணுவித்தாள்.

௨௨ அக்காலத்தில் சம்பவித்ததேதென்றால், அபி
மேலேக்கும் அவன் சேனாபதியாகிய பீகோலும்
ஆபிரகாமோடே சொன்னதாவது: நீ செய்கிற
எல்லாவற்றிலும் பராபரன் உன்னோடேகூட இ
௨௩ ருக்கிறார்.—இப்பொழுதும் நீ என்னையாகிலும்,
என் குமாரனையாகிலும், என் பேரனை என்கி
லும் கபடுசெய்யாமல், நான் உனக்குச் செய்த
தயவின்படியே நீ எனக்கும், நீ தங்கியிருக்கிற
இந்தத் தேசத்திற்கும், செய்வதென்று பராபரன்
பேரிலே எனக்கிங்கே ஆணையிடுவென்றான்.—
௨௪ அப்பொழுது ஆபிரகாம் நான் ஆணையிடுகிறே
௨௫ னென்றான்.—ஆனால் அபிமேலேக்குடைய வே
லைக்காரர் பறித்துக்கொண்ட தண்ணீர்த் துரவின்
நிமித்தம் ஆபிரகாம் அபிமேலேக்கைக் கடிந்து
௨௬ கொண்டான்.—அதற்கு அபிமேலேக், யார் இந்
தக்காரியத்தைச் செய்தானென்று அறியேன்; நீ
எனக்கறிவித்ததுமில்லை; இன்று நான் அதைக்
கேட்டதே ஒழிய இதற்குமுன் அதை நான்
௨௭ கேட்டதுமில்லை என்றான்.—அப்பொழுது ஆபி
ரகாம் ஆடுமாடுகளைக் கொண்டுவந்து அபிமே
லேக்குக்குக் கொடுத்தான்; அவர்களிருவரும்
௨௮ உடம்படிக்கை பண்ணிக்கொண்டார்கள்.—ஆபி
ரகாம் ஏழு பெண்ணாட்டுக்குட்டிகளைத் தனியே
௨௯ நிறுத்தினான்.—அப்பொழுது அபிமேலேக் ஆபி
ரகாமோடே, நீ தனியே நிறுத்தின இந்த ஏழு
௩௰ பெண்ணாட்டுக்குட்டிகள் எதற்கென்றான்.—அ
தற்கவன், நான் இந்தத் துரவை எடுத்ததற்கு
எனக்குச் சாட்சியாக நீர் இந்த ஏழு பெண்குட்
டிகளை என் கையில் வாங்கிக்கொள்ளவேண்டு
௩௧ மென்றான்.— அவர்களிருவரும் அவ்விடத்தில்
ஆணையிட்டுக்கொண்டபடியினாலே அந்த இடம்
௩௨ பேயெர்சேபாவென்னப்பட்டது. — அவர்கள்
பேயெர்சேபாவிலே உடம்படிக்கை பண்ணிக்
கொண்டபிற்பாடு, அபிமேலேக்கும், அவன் சே
னாபதியாகிய பீகோலும், எழுந்திருந்து பெலிஸ்
தியருடைய தேசத்திற்குத் திரும்பினார்கள்.

௩௩ ஆபிரகாம் பேயெர்சேபாவிலே ஒரு தோப்
பை நாட்டி, என்றுமுள்ள பராபரனாகிய கர்த்த
ருடைய நாமத்தை அவ்விடத்திலே தொழுது
௩௪ கொண்டான்.—ஆபிரகாம் அநேகநாள் பெலிஸ்
தியருடைய தேசத்தில் தங்கினான்.

## ௨௨. அதிகாரம்.

௧. ஆபிரகாம் ஈசாக்கைப் பலியிடப்போனதிலே சோதிக்கப்பட்டது. ௯. அவன் விசுவாசமும் கீழ்ப்படிதலுமுள்ளவனென்று விளங்கினது. ௰௧. ஈசாக்கைப் பலியிடாதபடிக்குக் கர்த்தருடைய தூதன் ஆபிரகாமை நிறுத்தினது. ௰௩. ஈசாக்குக்குப் பதிலாக ஒரு ஆடு பலியிடப்பட்டது. ௰௪. அந்த இடத்துக்கு யேகோவாயீரே என்று பெயரிடப்பட்டது. ௰௫. ஆபிரகாம் மறுபடியும் ஆசீர்வதிக்கப்பட்டது. ௨௰. நாகோருடைய சந்ததி.

இந்த நடபடிகளுக்குப்பிற்பாடு சம்பவித்ததே ௧
தெனில், பராபரன் ஆபிரகாமைச் சோதித்து
அவனுடனே, ஆபிரகாமே என்றார்; அதற்கவன்
இதோ அடியேன் என்றான். — அப்பொழுது ௨
அவர் சொன்னதாவது: [1]நீ சிநேகிக்கிறவனும்
உனக்கு ஒரேபேறானவனுமாகிய உன்னுடைய
குமாரன் ஈசாக்கை, நீ இப்பொழுது அழைத்துக்
கொண்டு மோரியதேசத்திற்குப் போய், அங்கே
அவனை நாம் உனக்குச் சொல்லப்போகிற மலை
களில் ஒன்றின்மேல் தகனபலியாகப் பலியிடு
வென்றார்.—அப்பொழுது ஆபிரகாம் அதிகால ௩
மே எழுந்திருந்து, தன் கழுதையின்மேல் விரி
கட்டி, தன் வேலைக்காரரில் இரண்டுபேரையும்
தன் குமாரன் ஈசாக்கையும் கூட்டிக்கொண்டு,
தகனபலிக்குக் கட்டைகளைப் பிளந்து புறப்பட்
டு, பராபரன் தனக்குச் சொன்ன ஸ்தலத்திற்கு
நடந்துபோனான். — மூன்றாம்நாளிலே ஆபிர ௪
காம் தன் கண்களை ஏறெடுத்து, தூரத்திலே அந்த
ஸ்தலத்தைக் கண்டான்.—அப்பொழுது ஆபிர ௫
காம் தன் வேலைக்காரரோடே, நீங்கள் இங்கே
கழுதையை நிறுத்தி உளுக்காந்திருங்கள்; நானும்
பிள்ளையாண்டானும் அவ்விடம்மட்டும்போய்,
பணிந்துகொண்டு, உங்களண்டைக்குத் திரும்பி
வருவோமென்றான். — ஆபிரகாம் தகனபலிக் ௬
கட்டைகளை எடுத்து, தன் குமாரனாகிய ஈசாக்
கின்மேல் வைத்து, தன் கையிலே நெருப்பையும்
கத்தியையும் எடுத்துக்கொண்டு, இருவரும் ஏக
மாய்ப் போனார்கள்.—அப்பொழுது ஈசாக் தன் ௭
தகப்பனாகிய ஆபிரகாமோடே, என் தகப்பனே
என்று சொன்னான்; அதற்கவன், என் மகனே,
இதோ நானென்றான்; அப்பொழுது அவன்
இதோ நெருப்பும் கட்டையுமிருக்கின்றது;
ஆனால், தகனபலிக்கு ஆட்டுக்குட்டி எங்கே
என்றான். — அப்பொழுது ஆபிரகாம், என் மக ௮
னே, பராபரன் தமக்குத் தகனபலிக்கான ஆட்டு
க்குட்டியைப் பார்த்துக்கொள்ளுவாரென்றான்;
அப்புறம் இருவரும் ஏகமாய்ப் போய்,

பராபரன் அவனுக்குச் சொல்லியிருந்த ஸ்த ௯
லத்திற்கு வந்தார்கள்; அப்பொழுது ஆபிரகாம்
அங்கே ஒரு பீடத்தைக் கட்டி, கட்டைகளை
அடுக்கி, தன் குமாரனாகிய ஈசாக்கைக் கட்டி,
அவனை அந்தப் பீடத்திலே கட்டைகளின்மீதில்
கிடத்தினான்.—பிற்பாடு ஆபிரகாம் தன் கையை ௰
நீட்டி, தன் குமாரனைக் குரல்வளை அறுக்கும்ப
டிக்கு, கத்தியை எடுத்துக்கொண்டான்.—அப் ௰௧
பொழுது கர்த்தருடைய தூதர் வானத்திலிருந்து
அவனைக் கூப்பிட்டு, ஆபிரகாமே ஆபிரகாமே,
என்றார்; அவன் இதோ அடியேன் என்றான்.—
அப்பொழுது அவர் பிள்ளையாண்டான்மேல் ௰௨
உன் கையைப் போடாதே; அவனுக்கொன்றும்

1 எபி. ௧௧. ௧௭.

செய்யாதே; ஏனெனில், நீ பராபரனுக்குப் பயந்
திருந்து, நமக்காக உனக்கொரேபேறான உன்னு
டைய குமாரனைப் பாராதே போனாயென்று
௰௩ இப்பொழுது அறிந்திருக்கிறேனென்றார்.—ஆபி
ரகாம் தன் கண்களை ஏறெடுத்துப் பார்க்கிறபொ
ழுது, இதோ பின்னாகப் புதரிலே தன் கொம்புக
ளால் சிக்கிக்கொண்டிருந்த ஒரு ஆட்டுக்கடா
வைக் கண்டான்; அப்பொழுது ஆபிரகாம்
போய், கடாவைப் பிடித்து, அதைத் தன் குமார
௰௪ னுக்குப் பதிலாகத் தகனபலியிட்டான்.—ஆபிர
காம் அந்த ஸ்தலத்திற்குக் கர்த்தர் பார்த்துக்கொள்
ளுவாரென்று பேரிட்டான்; அதினாலே இந்நாள்
வரைக்கும் கர்த்தருடைய பர்வதத்திலே பார்த்துக்
௰௫ கொள்ளப்படுமென்று சொல்லப்படும்.—கர்த்த
ருடைய தூதர் இரண்டாம்விசை வானத்திலி
ருந்து ஆபிரகாமைக் கூப்பிட்டுச் சொன்னதா
௰௬ வது:—நீ நம்முடைய சொல்லைக் கேட்டு இந்தக்
காரியத்தைச் செய்து, நமக்காக உனக்கொரே
பேறான உன்னுடைய குமாரனைப் பாராதே
௰௭ போனபடியினாலே,—நாம் உன்னை ஆசீர்வதிக்
கவே ஆசீர்வதித்து, [1]உன் வித்தை வானத்து
நட்சத்திரங்களைப்போலவும், கடற்கரையிலிருக்
கிற மணலைப்போலவும் பெருகவே பெருகப்
பண்ணுவோமென்றும், உன் வித்தார் தங்கள் சத்
துருக்களின் வாசல்களைச் சுதந்தரித்துக்கொள்
௰௮ ளுவார்களென்றும்,—[2]உன் வித்தினாலே பூமியி
னுடைய எல்லாச் சாதிகளும் ஆசீர்வதிக்கப்படு
மென்றும், [3]நம்முடையபேரிலே ஆணையிட்டோ
௰௯ மென்று கர்த்தர் சொல்லுகிறார் என்றார்.—ஆபிர
காம் தன் வேலைக்காரரண்டைக்குத் திரும்பிவந்
தான்; அப்பொழுது எழுந்து புறப்பட்டு, ஏக
மாய்ப் பேயெர்சேபாவுக்குப் போனார்கள்;
ஏனென்றால், ஆபிரகாம் பேயெர்சேபாவிலே
குடியிருந்தான்.
௨௰ இந்த நடபடிகளுக்குப் பிற்பாடு, ஆபிரகா
முக்கு அறிவிக்கப்பட்டதாவது: இதோ, மில்க்
காளும் உன் சகோதரனாகிய நாகோருக்குப் பிள்
௨௧ ளைகளைப் பெற்றாள்.—யாரையென்றால், அவனு
டைய முதற்பேறான ஊத்சையும், இவன் தம்பி
யாகிய பூசையும், ஆராமுக்குத் தகப்பனாகிய
௨௨ கேமுவேலையும், — கேசேதையும், ஆசோவை
யும், பில்தாசையும், இத்லாப்பையும், பேத்துவே
லையும் பெற்றாள்; பேத்துவேலோவெனில், ரெ
பேக்காளைப் பெற்றானென்று அவனுக்கு அறி
௨௩ விக்கப்பட்டது.—அந்த எட்டுப்பேரை மில்க்
காள் ஆபிரகாமுடைய சகோதரனாகிய நாகோ
௨௪ ருக்குப் பெற்றாள்.-ரேயுமாளென்று பேர்கொண்
ட அவனுடைய வைப்பாட்டியும், தேபாகை
யும், காகாமையும், தாகாசையும், மாகாவையும்
பெற்றாள்.

## ௨௩. அதிகாரம்.

க. சாராளுடைய ஆயுசையும், மரணத்தையுங்குறித்துச் சொல்லியது. ௨. மக்பேலா என்னுமிடம் வாங்கப்பட்டு, ௰௯. சாராள் அதிலே அடக்கம் பண்ணப்பட்டது.

சாராள் உயிரோடிருந்தகாலம் நூற்றிருபத்தேழு க
வருஷம், இதுவே சாராளுடைய வயது.—பிற் ௨
பாடு சாராள் கானான்தேசத்திலே இருக்கிற எபி
ரோன் ஊராகிய கீரியாத்அர்பாவிலே மரித்தாள்;
அப்பொழுது ஆபிரகாம் சாராளுக்காகப் புலம்ப
வும், அழவும் வந்தான்.
பிற்பாடு ஆபிரகாம் தன் சவத்தைவிட்டெ ௩
ழுந்து, ஏத்தின் புத்திரரோடே பேசி,—நான் உங் ௪
களிடத்தில் பரதேசியும் அந்நியனுமாயிருக்கி
றேன்; எனக்குமுன்பாகக் கிடக்கிற என் சவத்
தை நான் அடக்கம்பண்ணுவதற்கு, எனக்கு உங்
களிடத்தில் பிரேதம் அடக்கம்பண்ணும் நிலத்
தைச் சொந்தமாகத் தாருங்களென்றான்.
அப்பொழுது ஏத்தின் புத்திரர் ஆபிரகாமுக் ௫
குப் பிரதியுத்தாரமாகச் சொன்னதாவது:—எங் ௬
கள் ஆண்டவனே, நாங்கள் சொல்லுகிறதைக் கே
ளும்; எங்கள் நடுவிலே நீர் தெய்வப்பிரபுவாயி
ருக்கிறீர், எங்கள் கல்லறைகளில் தெரிந்துகொள்
ளப்பட்டதிலே உம்முடைய சவத்தை அடக்
கம்பண்ணும், நீர் உம்முடைய சவத்தை அடக்
கம்பண்ண எங்களில் ஒருவனும் தன் கல்லறை
யை உமக்குத் தடைசெய்வதில்லை என்றார்கள்.
அப்பொழுது ஆபிரகாம் எழுந்திருந்து ஏத் ௭
தின் புத்திரராகிய தேசத்தாரை வணங்கி,—அவர் ௮
களோடே சம்பாஷித்துச் சொன்னதாவது: எனக்
குமுன்பாகக் கிடக்கிற என் சவத்தை நான் அ
டக்கம்பண்ண உங்களுக்குச் சம்மதியானால்,
நீங்கள் என் வார்த்தையைக் கேட்டு, சோகாரு
டைய குமாரனாகிய எப்பெரோனுடனே,—அவர் ௯
தமது நிலத்தின் கடைசியிலே தமக்கிருக்கிற
மக்பேலா என்னப்பட்ட கெபியை எனக்குத்
தர எனக்காக மனுக்கேளுங்கள்; உங்களிடத்
தில் எனக்குப் பிரேதம் அடக்கம்பண்ணும்
சொந்த நிலம் இருக்கும்படிக்கு, அவர் அதை
அது பெறும்விலைக்குத் தருவாராகவென்றான்.
ஆனால், எப்பெரோன் ஏத்தின் புத்திரர் நடுவி ௰
லே உளுக்காந்திருந்தான்; அப்பொழுது ஏத்தி
யனாகிய எப்பெரோன் தன் ஊர்வாசலுக்குள்
பிரவேசிக்கிற ஏத்தின் புத்திரர் அனைவரும் கே
ட்க ஆபிரகாமுக்குப் பிரதியுத்தாரமாக,—அல்ல ௰௧
என் ஆண்டவனே, என் வார்த்தையைக்கேளும்;
நிலத்தை உமக்குத் தருகிறேன்; அதிலிருக்கும்
கெபியையும் உமக்குத் தருகிறேன்; என் சனப்
புத்திரருடைய கண்களுக்குமுன்பாக அதை
உமக்குத் தருகிறேன்; உம்முடைய சவத்தை
அடக்கம்பண்ணுமென்றான்.
அப்பொழுது ஆபிரகாம் தேசத்தாரை வணங் ௰௨
கி,—தேசத்துச் சனம் கேட்க எப்பெரோனுட ௰௩
னே சொன்னதாவது: கொடுக்க நீர் மனதானால்
என் வார்த்தையைக் கேளும்; நிலத்தின் விலைக்கி
ரயத்தைத் தருகிறேன்; என் கையில் அதை வாங்
கிக்கொள்ளும்; அப்பொழுது அவ்விடத்தில்
என் சவத்தை அடக்கம்பண்ணுவேனென்றான்.

1 க மோ. ௰௩. ௰௬: ௰௫. ௫.—2 க மோ. ௰௨. ௩: ௰௮. ௰௮.

3 எபி. ௬. ௰௩, ௰௪.

௰ச அப்பொழுது எப்பெரோன் ஆபிரகாமுக்குப்
௰ரு பிரதியுத்தாரமாக: — என் ஆண்டவனே, நான்
சொல்லுகிறதைக் கேளும்; இந்த நிலம் நானூறு
வெள்ளிக்காசு பெறும்; எனக்கும் உமக்கும்
அது எவ்வளவு காரியம்; நீர் உம்முடைய சவத்
தை அடக்கம்பண்ணுமென்றான்.
௰சு அப்பொழுது ஆபிரகாம் எப்பெரோனின்
சொல்லைக் கேட்டு, எப்பெரோன் ஏத்துடைய
புத்திரரின் காதுகளில் கேட்கச் சொன்னதா
கிய வர்த்தகரிடத்தில் செல்லும்படியான நானூறு
வெள்ளிக்காசை அவனுக்கு நிறுத்துக்கொடுத்
௰எ தான். — இந்தப்பிரகாரமாக [1]மம்ரேக்கெதிரே
மக்பேலாவிலிருந்த எப்பெரோனுடைய நில
மாகிய அந்தப் பூமியும், அதிலுள்ள கெபியும்
நிலத்தினுடைய எல்லைகளெல்லாம் சுற்றியிருந்த
௰அ எல்லா மரங்களும், — அவனுடைய ஊர் வா
சலுக்குள் பிரவேசிக்கிற ஏத்தின் புத்திரர் எல்
லாரும் அறிய, ஆபிரகாமுக்குச் சொந்தமாக
ஏற்பட்டது.
௰கூ அதற்குப்பிற்பாடு ஆபிரகாம் தன் பெண்சாதி
யாகிய சாராளைக் கானான்தேசத்தில் எப்பெ
ரோன் ஊர்ப்பூமியான மம்ரேக்கெதிரே கிடக்
கிற மக்பேலா என்ற நிலத்தின் கெபியிலே அ
உ௰ டக்கம்பண்ணினான்.—இப்படியே ஏத்தின் புத்
திரர் கையில் கொள்ளப்பட்ட அந்த நிலமும்,
அதிலுள்ள கெபியும், ஆபிரகாமுக்குப் பிரேதங்
களை அடக்கம்பண்ணும் சொந்த நிலமாக ஏற்
பட்டது.

## உச. அதிகாரம்.

க. ஆபிரகாம் தன் ஊழியக்காரனை ஆணையிடுவித்தது. ௰. அந்த ஊழியக்காரன் பயணம்பண்ணி, ௰உ. செபித்து, ௰ச. ஒரு குறிப்பைத் தன் மனதில் ஏற்படுத்திக்கொண்டது. ௰ரு. ரெபேக்காள் அவனைச் சந்தித்து, ௰அ. அதினால் அவன் குறிப்புகள் நிறைவேறினபோது, உஉ. அவனிடத்தில் உடைமைகளைப் பெற்றுக்கொண்டு, உங. தன்னை இன்னாரென்று அறிவித்து, உரு. அவனைத் தன் வீட்டிற்கழைத்துப்போனது. உசு. ஊழியக்காரன் பராபரனைத் தொழுதுகொண்டது. உஅ. லாபான் அவனுக்கு உபசாரம்செய்தது. ௩ச. ஊழியக்காரன் தான் வந்தகாரியத்தை எடுத்துச் சொன்னது. ரு௰. லாபானும் பேத்துவேலும் அதை அங்கிகாரம் பண்ணினது. ருஅ. ரெபேக்காள் போகச் சம்மதித்தது. சுஉ. ஈசாக்கு அவளை விவாகம்பண்ணினது.

க ஆபிரகாம் வயதுசென்ற கிழவனானான்; கர்த்
தர் ஆபிரகாமை எல்லாவற்றிலும் ஆசீர்வதித்துக்
உ கொண்டிருந்தார். — அப்பொழுது ஆபிரகாம்
தன் வீட்டிலே வயதில் மூத்தவனும், தனக்குண்
டானதையெல்லாம் ஆளுகிறவனுமாகிய தன்
ங ஊழியக்காரனோடே சொன்னதாவது:—[2]நான்
குடியிருக்கிற கானானியருடைய குமாரத்திக
ளில் நீ என் குமாரனுக்குப் பெண்ணைக்கொள்
ச ளாமல், — நீ என் சீமைக்கும் என் இனத்தண்
டைக்கும்போய், என்குமாரனாகிய ஈசாக்குக்குப்
பெண்ணைக் கொள்வதற்கு நான் உன்னை வானத்
திற்குப் பராபரனும், பூமிக்குப் பராபரனுமாகிய
கர்த்தர்பேரிலே ஆணையிடும்படிக்கு, [3]உன் கை
யை என்னிடுப்பின்கீழே போடென்றான்.
ரு அப்பொழுது அந்த ஊழியக்காரன் அவனுட
னே, ஒருவேளை அந்தப் பெண் என் பிறகே
இந்தத் தேசத்திற்கு வர மனதில்லாதிருப்பாள்;
அப்பொழுது உம்முடைய குமாரனை நீர் விட்
டுவந்த தேசத்திற்குத்தானே மறுபடியும் அழைத்
துப்போவேனோ என்றான்.
ஆனால், ஆபிரகாம் அவனோடே சொன்னதா சு
வது: நீ என் குமாரனை மறுபடியும் அங்கே அ
ழைத்துப்போகாதபடிக்கு எச்சரிக்கையாயிரு.—
[4]என்னை என் தகப்பனுடைய வீட்டிலும் என் எ
இனத்தாரிருக்கிற தேசத்திலுமிருந்து அழைத்து
வந்தவரும், [5]உன் வித்துக்கு இந்தத் தேசத்தைக்
கொடுப்பேனென்று எனக்குச் சொன்னவரும்,
எனக்கு ஆணையிட்டவருமான வானத்தினு
டைய பராபரனாகிய கர்த்தர், நீ அங்கேயிருந்து
என் குமாரனுக்கு ஒரு பெண்ணைக் கொண்டுவ
ரும்படிக்கு, தம்முடைய தூதனை உனக்குமுன்
பாக அனுப்புவார். — பெண் உன்னைப் பின் அ
செல்ல மனதில்லாதிருந்தாளேயாகில், அப்
பொழுது நீ இந்த என்னுடைய ஆணைக்கு நீங்க
லானவன்; அங்கேமாத்திரம் என் குமாரனை
மறுபடியும் அழைத்துப்போகாயாகவென்றான்.-
அப்பொழுது அந்த ஊழியக்காரன் தன் கை கூ
யைத் தன் எசமானனாகிய ஆபிரகாமுடைய இடுப்
பின்கீழே போட்டு, இந்தக் காரியத்திற்காக அவ
னுக்கு ஆணையிட்டான்.
பிற்பாடு ஊழியக்காரன் தன் எசமானனுடைய ௰
ஒட்டகங்களில் பத்து ஒட்டகங்களைக் கூட்டிக்
கொண்டுபோனான்; அவன் எசமானனுடைய சக
லவித உச்சிதங்களும் அவன் கையிலிருந்தன;
அவன் எழுந்து புறப்பட்டுப்போய், மேசோப்
பொத்தாமியாவிலே நாகோருடைய ஊருக்கு
வந்து,—ஊருக்குப் புறம்பே ஒரு தண்ணீர்த்துர ௰க
வண்டையில் தண்ணீர் மொள்ளுகிற ஸ்திரிகள்
புறப்படுகிற சாயங்காலவேளையிலே ஒட்டகங்
களை மடக்கிச் சொன்னதாவது:
என் எசமானனாகிய ஆபிரகாமுடைய பராபர ௰உ
னாயிருக்கிற கர்த்தாவே, தேவரீர் இன்றைக்கு
எனக்குக் காரியம் நேரிடப்பண்ணி, என் எசமா
னனாகிய ஆபிரகாமுக்குக் கிருபைசெய்யும். —
இதோ நான் தண்ணீர்த்துரவண்டையில் நிற்கி ௰ங
றேன்; ஊராரின் குமாரத்திகள் தண்ணீர் மொள்
ளப் புறப்பட்டு வருவார்களே.—நான் குடிக்க ௰ச
உன் பானையைச் சாயென்று நான் சொல்லும்
பொழுது, குடி உன் ஒட்டகங்களுக்கும் குடிக்க
வார்ப்பேனென்று சொல்லும் பெண்பிள்ளையே
நீர் உம்முடைய ஊழியக்காரனாகிய ஈசாக்குக்கு
நியமித்தவளாயிருக்கவும், என் எசமானனுக்குக்
கிருபை செய்தீரென்று நான் இதினாலே அறிய
வும் கடவதென்றான்.
அவன் இன்னம் பேசி முடியவில்லை; அப் ௰ரு
பொழுது சம்பவித்ததேதென்றால், இதோ, ஆபி
ரகாமுடைய சகோதரனாகிய நாகோரின் பெண்
சாதி மில்க்காளுடைய குமாரனாயிருக்கிற பேத்
துவேலுக்குப் பிறந்த [6]ரெபேக்காள் தன் பானை

1 க மோ. சகூ. உகூ, ௩௰: ரு௰. ௰௩.—2 க மோ. உஅ. க.—3 க மோ. சஎ. உகூ.
4 க மோ. ௰உ. க.—5 க மோ. ௰உ. எ: ௰௩. ௰ரு—௰அ.—6 க மோ. உஉ. உ௩.

யைத் தன் தோளின்மேல் வைத்துக்கொண்டு
௰௬ புறப்பட்டுவந்தாள்.-அந்தப் பெண்பிள்ளை மகா
ரூபவதியும், புருஷனை அறியாத கன்னியாஸ்தி
ரீயுமாயிருந்தாள்; அவள் துரவுக்கிறங்கிப்போய்,
தன் பானையை நிரப்பிக்கொண்டேறிவந்தாள்.-
௰௭ அப்பொழுது ஊழியக்காரன் அவளுக்கெதிர்
கொண்டோடி, உன் பானையிலே நான் கொஞ்
௰௮ சம் தண்ணீர் குடிக்கட்டுமென்றான். — அதற்க
வள், குடியும் என் ஆண்டவனே என்று தீவிர
மாய்த் தன் பானையைத் தன் கையிலிறக்கிக்
கொண்டு, அவனுக்குக் குடிக்கக்கொடுத்தாள்.-
௰௯ கொடுத்துத் தீர்ந்தபின்பு, உம்முடைய ஒட்ட
கங்களுக்கும் அவைகள் குடித்துத்தீருமட்டும்
௨௰ மொண்டுவார்ப்பேனென்று சொல்லி, — தீவிர
மாய்த் தன் பானைத்தண்ணீரைத் தொட்டியிலே
ஊற்றி, இன்னம் மொண்டுவரத் துரவண்டை
யில் ஓடி, அவனுடைய ஒட்டகங்களுக்கெல்
௨௧ லாம் மொண்டுவார்த்தாள். — அந்தப் புருஷன்
அவள்மேல் ஆச்சரியப்பட்டு, கர்த்தர் தன் பய
ணத்தை வாய்க்கப்பண்ணினாரோ, இல்லையோ
வென்றறிய மவுனமாயிருந்தான்.
௨௨ ஒட்டகங்கள் குடித்துத் தீர்ந்தபிற்பாடோ
வென்றால், அந்தப் புருஷன் அரைச்சேக்கல்
எடைப் பொன்னான நெற்றிப்பட்டத்தையும்,
அவள் கைகளுக்குப் பத்துச்சேக்கல் எடைப்
பொன்னான இரண்டு சரிகளையும் எடுத்துக்கொ
௨௩ டுத்து,-நீ யாருடைய குமாரத்தியென்று எனக்கு
அறிவி; உன் தகப்பன் வீட்டில் இராத்தங்க எங்
௨௪ களுக்கிடமுண்டோ என்றான்.—அவள் அவனு
டனே, நான் நாகோருக்கு மில்க்காள் பெற்ற
குமாரனாகிய பேத்துவேலின் மகளென்று சொ
௨௫ ல்லி,-அவனுடனே, எங்களிடத்தில் வைக்கோ
லும், தீனியும் நிரம்பவிருக்கிறது; இராத்தங்க
௨௬ இடமுமிருக்கின்றதென்றாள். — அப்பொழுது
அந்தப் புருஷன் தலைகுனிந்து கர்த்தரைப் பணி
௨௭ ந்துகொண்டு,—எசமானாகிய ஆபிரகாமின் பரா
பரனாயிருக்கிற கர்த்தர் ஸ்தோத்திரிக்கப்பட்ட
வர்; அவர் தம்முடைய கிருபையையும், தம்மு
டைய உண்மையையும், என் எசமானை விட்டு
விலகப்பண்ணினதில்லை; நான் வழிப்பயணம்
வருகையில், கர்த்தர் என்னை எசமானுடைய
சகோதரர் வீட்டுக்கு அழைத்துக்கொண்டுவந்தா
ரென்றான்.
௨௮ பெண்பிள்ளை ஓடி, தன் தாயின் வீட்டிலே
௨௯ இந்த நடபடியை அறிவித்தாள். — ரெபேக்கா
ளுக்கு ஒரு சகோதரனிருந்தான்; அவன் பெயர்
லாபான்; இந்த லாபான் வெளியே துரவருகே
இருக்கிறஅந்தப்புருஷனண்டைக்கோடினான்.-
௩௰ அதேனெனில், இவன் அந்த நெற்றிப்பட்டத்
தையும், தன் சகோதரியின் கைகளிலிருக்கிற
சரிகளையும் கண்டபடியினாலும், இன்ன இன்
னபடி அந்தப் புருஷன் என்னோடே சொன்னா
னென்று, தன் சகோதரி ரெபேக்காள் சொல்
லுகிற வார்த்தைகளைக் கேட்டபடியினாலும்,
அந்தப் புருஷனண்டைக்கு வந்தான்; இதோ,
அவன் துரவருகே ஒட்டகங்களண்டையிலே
நின்றிருந்தான்.—அப்பொழுது இவன், கர்த்த ௩௧
ரால் ஆசீர்வதிக்கப்பட்டவனே உள்ளே வா; நீ
வெளியே நிற்பானேன்? நான் வீட்டையும், ஒட்
டகங்களுக்கிடத்தையும், ஆயத்தம்பண்ணினே
னென்றான்.—அப்பொழுது அந்தப் புருஷன் ௩௨
வீட்டுக்கு வந்தான்; இவனோவென்றால், ஒட்ட
கங்களைக் கட்டவிழ்த்து, ஒட்டகங்களுக்கு வை
க்கோலும் தீனியும் போட்டு, அவன் கால்களை
யும், அவனோடேகூட இருந்த மனிதர் கால்க
ளையும் கழுவுகிறதற்குத் தண்ணீர் கொடுத்தான்.-
பிற்பாடு அவனுக்குமுன்பாகச் சாப்பாடு வைக் ௩௩
கப்பட்டது; ஆனால், அவன் நான் என் வார்த்
தைகளைச் சொல்லாததற்குமுன்னே சாப்பிடே
னென்றான்; அதற்கிவன் சொல்லென்றான்.
அப்பொழுது அவன் சொன்னதாவது: நான் ௩௪
ஆபிரகாமுடையஊழியக்காரன்.—கர்த்தர் என் ௩௫
எசமானை மிகவும் ஆசீர்வதித்தார்; இவர் பெரி
யவரானார்; அவர் இவருக்கு ஆடுமாடுகளையும்,
வெள்ளியையும், பொன்னையும், வேலைக்கார
ரையும், வேலைக்காரிகளையும், ஒட்டகங்களையும்,
கழுதைகளையும் கட்டளையிட்டார். — என் எச ௩௬
மானன் பெண்சாதியாகிய சாராள் முதிர்வயதான
பிற்பாடு என் எசமானனுக்கு ஒரு குமாரனைப்
பெற்றாள்; இவனுக்கவர் தமக்குண்டானதை
யெல்லாம் கொடுத்து,—நான் குடியிருக்கிற கா ௩௭
னான்தேசத்தாருடைய குமாரத்திகளில் நீ என்
குமாரனுக்குப் பெண்ணைக்கொள்ளாமல், — நீ ௩௮
என் தகப்பன்வீட்டுக்கும், என் இனத்தண்டைக்
கும் போய், என் குமாரனுக்குப் பெண்ணைக்
கொள்வாயாகவென்று என் எசமானன் என்னை
ஆணையிட்டார்.-அப்பொழுது நான் என் எசமா ௩௯
னனோடே, ஒருவேளை அந்தப்பெண் என் பிறகே
வராதேபோவாளென்றேன். — ஆனால், அவர் ௪௰
எனக்குச் சொன்னதாவது: நான் பயந்துநடக்
கிற கர்த்தரானவர் உன்னோடே தம்முடைய தூ
தனை அனுப்பி, நீ என் இனத்திலும், என் தகப்
பன் வீட்டிலும், என் குமாரனுக்குப் பெண்ணைக்
கொள்வதற்காக உன் பயணத்தை வாய்க்கப்ப
ண்ணுவார்.—நீ என் இனத்தண்டைக்குப் போ ௪௧
னால், அப்பொழுது என் ஆணைக்கு நீங்கலாயி
ருப்பாய்; அவர்கள் உனக்குக் கொடாதேபோ
னார்களாகில், என் ஆணைக்கு நீங்கலாயிருப்பா
யென்றார்.-அப்படியே இன்று நான் அந்தத் துர ௪௨
வண்டையிலே வந்து சொன்னதாவது: என் எச
மானனாகிய ஆபிரகாமின் பராபரனாகிய கர்த்தரே,
இப்பொழுது நான் பயணம்பண்ணுகிற என்
வழியைத் தேவரீர் வாய்க்கப்பண்ணினீரானால்,-
இதோ நான் தண்ணீர்த் துரவண்டையிலே ௪௩
நிற்கிறேன்; தண்ணீர் மொள்ளப் புறப்பட்டு
வரப்போகிறவளும், நான் அவளுடனே, உன்
பானையிலிருக்கிற தண்ணீரில் கொஞ்சம் எனக்
குக் குடிக்கத்தாவென்று சொல்ல,—அவள் என் ௪௪
னுடனே, நீயும் குடி, உன் ஒட்டகங்களுக்கும்
மொண்டுவார்ப்பேனென்று சொல்பவளுமான

கன்னியாஸ்திரியே, கர்த்தர் என் எசமானனுடைய
குமாரனுக்கு நியமித்த ஸ்திரியாகவேண்டுமென்
௪௫ றேன்.—இன்னம் இதை நான் என் இருதயத்தி
லே சொல்லி முடிக்கவில்லை; அப்பொழுது
இதோ, ரெபேக்காள் தன் பானையைத் தன் தோ
ளின்மேல் வைத்துக்கொண்டவளாய்ப்புறப்பட்
டுவந்து, துரவுக்கிறங்கிப் போய் மொண்டாள்;
அப்பொழுது அவளோடே, எனக்குக் குடிக்
௪௬ கத் தாவென்றேன். — அவள் தீவிரமாய்த் தன்
மேலிருந்த பானையை இறக்கி, குடியும் உம்மு
டைய ஒட்டகங்களுக்கும் வார்ப்பேனென்றாள்;
அப்படியே நான் குடித்தேன்; அவள் ஒட்ட
௪௭ கங்களுக்கும் வார்த்தாள்.—அப்பொழுது நீ யாரு
டைய குமாரத்தியென்று அவளைக் கேட்டேன்;
அதற்கவள், நான் மில்க்காள் நாகோருக்குப்
பெற்ற குமாரனான பேத்துவேலின் மகளென்
றாள்; அப்பொழுது நான் அவள் நெற்றியிலே
நெற்றிப் பட்டத்தையும் அவள் கைகளில் சரிகளை
௪௮ யும் அணிந்து,—தலைகுனிந்து, கர்த்தரைப் பணிந்
துகொண்டு, நான் என் எசமானனுடைய சகோத
ரன் குமாரத்தியை அவர் குமாரனுக்குக் கொள்ள
என்னை உண்மையான வழியிலே அழைத்துவந்த
என் எசமானனாகிய ஆபிரகாமின் பராபரனாயிருக்
௪௯ கிற கர்த்தரை ஸ்தோத்திரித்தேன்.—இப்பொழு
தும் நீங்கள் என் எசமானனுக்குத் தயையும் உண்
மையும் செய்கிறவர்களானால், எனக்கறிவியுங்
கள்; அல்லவென்றால், நான் வலதுபுறத்தையாகி
லும் இடதுபுறத்தையென்கிலும் நோக்கிப் போ
கும்படிக்கு அதையும் எனக்கறிவியுங்களென்
றான்.

௫௰ அப்பொழுது லாபானும் பேத்துவேலும் பிர
தியுத்தாரமாக, இந்தக் காரியம் கர்த்தராலே வந்
தது; உனக்கு நாங்கள் இளப்பமானாலும் நலமா
௫௧ னாலும் சொல்லக்கூடாது. — இதோ, ரெபேக்
காள் உன்முன்பாக இருக்கிறாள்; கர்த்தர் சொன்
னபடியே அவள் உன் எசமானனுடைய குமார
னுக்குப் பெண்சாதியாகும்படிக்கு, அவளை அ
௫௨ ழைத்துக்கொண்டு போவென்றார்கள். — அப்
பொழுது சம்பவித்ததேதென்றால், ஆபிரகாமின்
ஊழியக்காரன் அவர்கள் வார்த்தைகளைக் கேட்
டபொழுது, தரைமட்டும் குனிந்து கர்த்தரைப்
௫௩ பணிந்துகொண்டான்.—பிற்பாடு அந்த ஊழி
யக்காரன் வெள்ளியுடைமைகளையும் பொன்
னுடைமைகளையும் வஸ்திரங்களையும் எடுத்து,
ரெபேக்காளுக்குக் கொடுத்து, அவள் சகோதர
னுக்கும் தாய்க்கும் உச்சிதங்களைக் கொடுத்தான்.-
௫௪ பிற்பாடு அவனும் அவனோடிருந்த மனிதரும்
புசித்துக் குடித்து இராத்தங்கினார்கள்; காலமே
எழுந்திருந்தபின்பு அவன் என் எசமானனண்
௫௫ டைக்கு என்னை அனுப்புங்களென்றான்.—அப்
பொழுது அவள் சகோதரனும் அவளுடைய தா
யும், பெண் பத்துநாளாகிலும் எங்களோடே இ
௫௬ ருந்து, பிற்பாடு போகட்டுமென்றார்கள்.—அவ
னோவெனில் அவர்களோடே, கர்த்தர் என் பய
ணத்தை வாய்க்கப்பண்ணியிருக்க என்னைத் தடு
க்காதிருங்கள்; நான் என் எசமானனண்டைக்
குப் போக என்னை அனுப்புங்களென்றான்.—
அப்பொழுது அவர்கள் பெண்ணை அழைத்து ௫௭
அவள் வாய்ப்பிறப்பைக் கேட்போமென்று
சொல்லி,—ரெபேக்காளை அழைத்து, அவளுட ௫௮
னே, நீ இந்தப் புருஷனோடேகூடப் போவா
யோவென்றார்கள்; அவள் போவேனென்றாள்.—
அப்படியே அவர்கள் தங்கள் சகோதரியாகிய ௫௯
ரெபேக்காளையும், அவள் தாதியையும், ஆபிரகா
மின் ஊழியக்காரனையும், அவன் மனிதரையும்
அனுப்புவித்து, — ரெபேக்காளை ஆசீர்வதித்து ௬௰
அவளுடனே, எங்கள் சகோதரியே, நீ ஆயிரம்
பதினாயிரங்களாகவும் உன் வித்துத் தன் பகைஞ
ருடைய வாசல்களைச் சுதந்தரித்துக்கொள்ளவும்
கடவது என்றார்கள்.

அப்பொழுது ரெபேக்காளும் அவள் வேலைக் ௬௧
காரிகளும் எழுந்து ஒட்டகங்கள்மீதிலேறி, அந்த
மனிதனைப் பின்சென்றார்கள்; ஊழியக்காரன்
ரெபேக்காளை அழைத்துக்கொண்டுபோனான்.—
ஈசாக்கோவெனில், [1]என்னைப் பார்க்கிற ஜீவ ௬௨
னுள்ளவருடைய கிணறென்னப்பட்ட கிணற்
றின் வழியாய்ப் புறப்பட்டுவந்தான்; ஏனெ
னில் தென்தேசத்தில் குடியிருந்தான்.—ஈசாக்குச் ௬௩
சாயங்காலவேளையிலே செபத்தியானம்பண்ண
வெளியே போயிருந்து, தன் கண்களை ஏறெடுக்
கையில், இதோ ஒட்டகங்கள் நடந்துவரக்கண்
டான்.—ரெபேக்காள் தன் கண்களை ஏறெடுத்து ௬௪
ஈசாக்கைக் காண்கிறபொழுது, ஒட்டகத்தை
விட்டிறங்கி, — ஊழியக்காரனோடே, இங்கே ௬௫
வெளியிலே நமக்கெதிரே நடந்துவருகிற அந்
தப் புருஷன் யாரென்றாள்; அவர் என் எசமான
னென்று ஊழியக்காரன் சொன்னான்; அப்பொ
ழுது அவள் முக்காடிட்டுக்கொண்டாள்.—ஊழி ௬௬
யக்காரன் தான் செய்த சகல காரியங்களையும்
ஈசாக்குக்கு விவரித்தான்.—அப்பொழுது ஈசாக் ௬௭
கு இவளைத் தன் தாய் சாராளுடைய கூடாரத்
திலே அழைத்துப்போய், பிற்பாடு ரெபேக்காளை
விவாகம்பண்ணினான்; அவள் அவனுக்குப்
பெண்சாதியானாள்; அவன் அவளைச் சிநேகித்
தான்; இப்படி ஈசாக்குத் தன் தாய்க்குப்பிற்பாடு
ஆறுதல் அடைந்தான்.

## ௨௫. அதிகாரம்.

௧. கேத்தூராளென்பவளால் ஆபிரகாமுக்குப் பிறந்த குமாரர்கள். ௫. ஆபிரகாம் தன் ஆஸ்திகளைப் பங்கிட்டது. ௭. அவன் ஆயுசையும், மரணத்தையும், ௯. அடக்கம்பண்ணப்பட்டதையும்குறித்துச் சொல்லியது. ௰௨. இஸ்மவேலின் சந்ததி. ௰௭. அவனுடைய ஆயுசையும், மரணத்தையும் குறித்துச் சொல்லியது. ௨௧. மலடியாயிருந்த ரெபேக்காளுக்காக ஈசாக் வேண்டிக்கொண்டது. ௨௨. அவள் கர்ப்பத்தில் பிள்ளைகள் மோதிக்கொண்டது. ௨௪. ஏசாவும் யாக்கோபும் பிறந்தது. ௨௭. அவர்களுக்கிருந்த வேற்றுமை. ௨௯. ஏசா தன் முதல் சுதந்தரத்தை விற்றுப்போட்டது.

ஆபிரகாம் மறுபடியும் ஒரு பெண்சாதியை வி ௧
வாகம்பண்ணினான்; அவள் பேர் கேத்தூராள்.—

1 ௧ மோ. ௰௬. ௰௩, ௰௪.

உ இவள் அவனுக்குச் சிம்ரானையும், யக்கேஷானை
யும், மெதானையும், மீதேயானையும், இஸ்பாக்கை
௩ யும், சூவாகையும் பெற்றாள். — யக்கேஷானா
வெனில், சேபாவையும், தேதானையும் பெற்
றான்; தேதானுடைய குமாரர், அசூரிம், லெத்
௪ தூரி, மலெயூமி என்பவர்கள்.–மீதேயானுடைய
குமாரர் எப்பா, எப்பேர், ஆனோக், ஆபிதா, எல்
தா என்பவர்கள், இவர்களெல்லாரும் கேத்தூரா
ளின் பிள்ளைகள்.

௫ ஆபிரகாம் [1]தனக்குண்டானவை எல்லாவற்
௬ றையும் ஈசாக்குக்குக் கொடுத்தான். — ஆனால்
ஆபிரகாமுக்கிருந்த வைப்பாட்டிகளின் பிள்ளை
களுக்கு ஆபிரகாம் ஈவுகளைக் கொடுத்து, தான்
இன்னம் உயிரோடிருக்கையில் அவர்களைத் தன்
குமாரனாகிய ஈசாக்கைவிட்டு, கிழக்கே போகக்
கீழ்த்தேசத்திற்கு அனுப்பிவிட்டான்.

௭ ஆபிரகாம் உயிரோடிருந்த ஆயுசுநாள் நூற்
௮ றெழுபத்தைந்துவருஷம்.—பிற்பாடு ஆபிரகாம்
நல்ல நரைவயதிலும் முதிர்ந்த பூரண ஆயுசிலும்
சீவித்து மரித்து, தன் சனத்தாரோடே சேர்க்கப்
௯ பட்டான்.–அப்பொழுது அவனை அவன் குமா
ரராகிய ஈசாக்கும் இஸ்மவேலும் [2]மம்ரேக்கெ
திரே ஏத்தியனான சோகாரின் குமாரனாகிய எப்
பெரோனின் நிலத்திலுள்ள மக்பேலா என்னப்
பட்ட கெபியிலே அடக்கம்பண்ணினார்கள்.—
௰ அது ஆபிரகாம் ஏத்தின் புத்திரர் கையிலே கொ
ண்ட நிலம்தான்; அங்கே ஆபிரகாமும் அவன்
பெண்சாதியாகிய சாராளும் அடக்கம்பண்ணப்
பட்டார்கள்.

௰க ஆபிரகாம் மரித்தபிற்பாடு சம்பவித்ததேதென்
றால், பராபரன் அவன் குமாரனாகிய ஈசாக்கை
ஆசீர்வதித்தார்; என்னைப் பார்க்கிற சீவனுள்ள
வருடைய கிணறென்னப்பட்ட கிணற்றண்
டையிலே ஈசாக்குக் குடியிருந்தான்.

௰உ சாராளுடைய அடிமைப் பெண்ணாகிய எகிப்
துதேசத்தாளான ஆகார், ஆபிரகாமுக்குப் பெற்ற
குமாரனாகிய இஸ்மவேலின் சந்ததியும் பலபல
சந்ததிகளாய்ப்போன இஸ்மவேல் புத்திரர் அ
௰௩ ழைக்கப்பட்ட நாமங்களுமாவது:—இஸ்மவே
லுடைய முதல்பேறான குமாரன் நேபயோத், மற்
௰௪ றவர்கள் கேதார், அத்பேயேல், மிப்சாம்,—மிஷ்
௰௫ மா, தூமா, மாசா,—ஆதாத், தேமா, எத்தூர், நாப்
௰௬ பிஸ், கெத்மா.—தங்கள் கிராமங்களிலும் அரண்
மனைகளிலும் குடியிருந்து, தங்கள் சனத்தாருக்
குப் [3]பன்னிரண்டு பிரபுக்களான இஸ்மவே
லின் குமாரர் இவர்கள்தான்; அவர்களுடைய
௰௭ நாமங்களும் இவைகள்தானே.—இஸ்மவேலின்
வயது நூற்றுமுப்பத்தேழு வருஷமாயிருந்து,
பிற்பாடு சீவித்து மரித்து, தன் சனத்தாரோடே
௰௮ சேர்க்கப்பட்டான்.—ஆபிலாதுவக்கி எகிப்துக்
கெதிராக அசூருக்குப் போகிற வழியிலிருக்கும்
சூர்மட்டும் குடியிருந்தார்கள்; இது அவன் சகோ
தரரெல்லாருக்கும் எதிராய் அவன் பங்கிலே
விழுந்த பூமி.

ஆபிரகாமின் குமாரனாகிய ஈசாக்குடைய சந் ௰௯
ததியாவது: ஆபிரகாம் ஈசாக்கைப் பெற்றான்.—
ஈசாக்கு, பதான்அராம் என்ற சூரியாவின் தே உ௰
சத்தானாகிய பேத்துவேலுக்குக் குமாரத்தியும்
சூரிய தேசத்தானாகிய லாபானுக்குச் சகோதரியு
மான ரெபேக்காளை விவாகம்பண்ணுகிறபொ
ழுது நாற்பது வயதாயிருந்தான். — ஈசாக்கு மல உக
டியாயிருந்த தன் பெண்சாதிக்காகக் கர்த்தரை
வேண்டிக்கொண்டான்; கர்த்தர் அவன் வேண்
டுதலைக் கேட்டருளினார்; அவன் பெண்சாதி ரெ
பேக்காள் கர்ப்பம்தரித்தாள். — ஆனால் அவள் உஉ
கர்ப்பத்திலே பிள்ளைகள் ஒன்றுக்கொன்று மோ
திக்கொண்டிருந்தன; அப்பொழுது அவள் இப்
படியானால் இந்தக் கர்ப்பத்தோடே நான் இருப்
பானேனென்று சொல்லி, கர்த்தரைக் கேட்கப்
போனாள்.—அப்பொழுது கர்த்தர் அவளுடனே, உ௩
இரண்டு சாதிகள் உன் கர்ப்பத்தில் உண்டாய்,
இரண்டு சனசதளங்கள் உன் குடல்களிலிருந்து
பிரியும்; [4]அவைகளில் ஒரு சனசதளம் மற்றச்
சனசதளத்தைப்பார்க்கிலும் பலத்துப்போம், பெ
ரியவன் சிறியவனைச் சேவிப்பானென்றார்.—
பெற அவளுக்கு நாள்கள் நிறைவேறினபொ உ௪
ழுது, இதோ இரட்டைப்பிள்ளைகள் அவள் கர்ப்
பத்திலிருந்தன.-முந்தினவன் சிவந்தவனும் முழு உ௫
தும் ரோமமான உடையின் சாயலுமாயிருந்து
வெளிப்பட்டான்; அவனுக்கு ஏசாவென்று பெ
யரிட்டார்கள்.—அதற்குப் பிறகு அவன் சகோ உ௬
தரன் ஏசாவின் குதிகாலைத் தன் கையினாலே
பிடித்துக்கொண்டு வெளிப்பட்டான்; அவனுக்
கு யாக்கோபென்று பெயரிட்டார்கள்; அவள்
இவர்களைப் பெறுகிறபொழுது ஈசாக்கு அறுப
துவயதாயிருந்தான்.

இந்தப்பிள்ளைகள்பெரியவர்களானபொழுது, உ௭
ஏசா வேட்டையை அறிந்த வெளிச்சஞ்சார
மனிதனும், யாக்கோபோவெனில் கூடாரங்க
ளில் தங்கித்திரிகிற நற்குண மனிதனுமாயிருந்
தான்.—ஈசாக்கு ஏசாவின்மேல் பட்சமாயிருந் உ௮
தான்; ஏனெனில் வேட்டையாடினது அவன்
வாய்க்கு ருசிகரமாயிருந்தது; ஆனால் ரெபேக்
காள் யாக்கோபின்மேல் பட்சமாயிருந்தாள். —
ஏசா வெளியிலிருந்து வருகிற ஒருநாளிலே இ உ௯
ளைப்பாய் வருகிறபொழுது யாக்கோபு கூழைச்
சமைத்திருந்தான். — அப்பொழுது ஏசா யாக் ௩௰
கோபோடே, சிவப்பாயிருக்கிறதே, அந்தச்
சிவப்பானதிலே நான் ருசிபார்க்கட்டும், ஏனெ
னில் இளைப்பாயிருக்கிறேனென்றான்; இதைத்
தொட்டு அவன் பேர் ஏதோமென்னப்பட்
டது.—அப்பொழுது யாக்கோபு, உன்னுடைய ௩க
முதற்பிறப்புச் சுதந்தரத்தை இன்று எனக்கு
வில்லென்றான். — அதற்கு ஏசா, இதோ நான் ௩உ
சாகப்போகிறேனே, இந்த முதற்பிறப்புச் சுதந்
தரம் எனக்கேதுக்கென்றான். — அப்பொழுது ௩௩
யாக்கோபு, இன்று எனக்காணையிடுவென்றான்;
[5]அவன் இவனுக்காணையிட்டு, தன் முதற்பிறப்

1 க மோ. உ௪. கக.—2 க மோ. உக. உ௰.—3 க மோ. ௰௭. உ௰.

4 உரோ. ௯. ௰, ௰௩.—5 எபி. ௰உ. ௰௬.

௩௪ புச் சுதந்தரத்தை யாக்கோபுக்கு விற்றான்.—அப்
பொழுது யாக்கோபு ஏசாவுக்கு அப்பமும் பயற்
றங்கூழும் கொடுத்தான், அவன் புசித்துக் கு
டித்து எழுந்திருந்து போனான்; இப்படி ஏசா
முதற்பிறப்புச் சுதந்தரத்தை அசட்டைபண்ணி
னான்.

## ௨௬. அதிகாரம்.

௧. ஈசாக்குப் பஞ்சத்தினிமித்தம் கேராருக்குப் போனது. ௨. பராபரன் அவனைப் போதித்து ஆசீர்வதித்தது. ௭. அவன் தன் பெண்சாதியைக் குறித்துச் சொன்ன அபத்தத்தினிமித்தம் அபிமேலேக்கினால் கடிந்துகொள்ளப்பட்டது. ௰௨. அவன் ஐசுவரியவானானது. ௰௮. அவன் மூன்று கிணறுகளை வெட்டினது. ௨௬. பெயெர்செபில் அபிமேலேக் அவனோடே உடம்படிக்கைபண்ணினது. ௩௪. ஏசாவின் பெண்சாதிகளைக் குறித்தது.

௧ ஆபிரகாமின் நாள்களில் வந்த முந்தின பஞ்
சம்தவிரப் பின்னொரு பஞ்சம் தேசத்திலுண்டா
யிற்று; அப்பொழுது ஈசாக்குக் கேராருக்குப்
பெலிஸ்தியருடைய இராசாவாகிய அபிமேலேக்
அண்டைக்குப் போனான்.
௨ கர்த்தர் அவனுக்குத் தரிசனையாகிச் சொன்ன
தாவது: நீ எகிப்துக்கிறங்கிப்போகாமல் நாம்
உனக்குச் சொல்லுகிற சீமையிலே குடியிரு.—
௩ இந்தச்சீமையிலே தங்கியிரு; நான் உன்னோடே
கூட இருந்து, உன்னை ஆசீர்வதிப்போம்; ஏனெ
னில், நாம் உனக்கும் உன் வித்துக்கும், இந்தத்
தேசங்களை எல்லாம் கொடுத்து, [1]உன் தகப்பனா
கிய ஆபிரகாமுக்கு நாம் இட்ட ஆணையைத்
௪ திட்டப்படுத்துவோம்.—ஆபிரகாம் நம்முடைய
சத்தத்திற்குக் கீழ்ப்படிந்து, நம்முடைய திட்
டத்தையும், நம்முடைய கற்பனைகளையும், நம்
முடைய கட்டளைகளையும், நம்முடைய நியாயப்
பிரமாணங்களையும்கைக்கொண்டபடியினாலே,-
௫ நாம் உன் வித்தை வானத்தின் நட்சத்திரங்க
ளைப்போலப் பெருகப்பண்ணி, உன் வித்துக்கு
இந்தத் தேசங்களையெல்லாம் கொடுப்போம்;
உன் வித்தினாலே பூமியினுடைய சாதிகளெல்
லாம் ஆசீர்வதிக்கப்படுமென்றார்.
௬ அப்படியே ஈசாக்குக் கேராரிலே குடியிருந்
௭ தான்.—அவ்விடத்து மனிதர் அவன் பெண்சாதி
யின் செய்தியை விசாரிக்கும்பொழுது, அவன்
[2]இவள் என் சகோதரியென்பான்; ஏனெனில்
ரெபேக்காள் பார்வைக்கழகியானபடியால், அ
வ்விடத்து மனிதர் அவள்நிமித்தமாய்த் தன்னைக்
கொல்லுவார்களென்று, அவளைத் தன் பெண்சா
௮ தியென்று சொல்லப் பயந்தான்.—ஆனால் அவன்
அங்கே நெடுநாளிருக்கும்பொழுது சம்பவித்த
தேதெனில், பெலிஸ்தியரின் இராசாவாகிய
அபிமேலேக் பலகணிவழியாய்ப் பார்த்து, இ
தோ ஈசாக்குத் தன் பெண்சாதியாகிய ரெபேக்
காளோடே சரசம்பண்ணுகிறதைக் கண்டான்.—
௯ அப்பொழுது அபிமேலேக் ஈசாக்கை அழைத்
து, இதோ அவள் உன் பெண்சாதியாமே, பின்
னை ஏன் அவளை உன் சகோதரியென்று சொன்
னாய் என்றான்; அப்பொழுது ஈசாக்கு அவ
னுடனே, அவள்நிமித்தம் நான் சாவாதபடிக்கு,
இப்படிச் சொன்னேனென்றான்.—ஆனால் அபி ௰
மேலேக் இப்படி எங்களுக்கேன் செய்தாய்? ச
னத்திலொருவன் உன் பெண்சாதியோடே சய
னிக்கவும், இப்படியே நீ எங்கள்மேல் குற்றம்
வரப்பண்ணவும், அது மோசமாயிருந்ததே என்
றான்.—பிற்பாடு அபிமேலேக் எல்லாச் சனத் ௰௧
திற்கும், இந்தப் புருஷனையாகிலும் அவன்
பெண்சாதியை என்கிலும் தொடுகிறவன் கொ
லையுண்ணவே கொலையுண்பானென்று கட்ட
ளையிட்டான்.
ஈசாக்கு அந்தத் தேசத்திலே விதைவிதைத்து, ௰௨
அந்தவருஷத்திலே நூறத்தனை பலனடைந்தான்;
ஏனெனில் கர்த்தர் அவனை ஆசீர்வதித்தார்.—அப் ௰௩
படியே அந்தப் புருஷன் பெருகினான்; அவன்
மிகுதியும் பலத்தவனாகும் மட்டும் வரவரப் பெ
ருகினான்.—அவனுக்கு ஆட்டுமந்தையும், மாட்டு ௰௪
மந்தையும், வெகு பணிவிடைச் சனமுமிருந்த
ன; ஆகையால் பெலிஸ்தியர் அவன்பேரில் பொ
றாமையாகி,—அவன் தகப்பனுடைய வேலைக் ௰௫
காரர் அவன் தகப்பனாகிய ஆபிரகாமின் நாள்க
ளில் வெட்டின [3]துரவுகளையெல்லாம் தூற்று
மண்ணினால் நிரப்பிப்போட்டார்கள்.—அபிமே ௰௬
லேக் ஈசாக்குடனே, எங்களை விட்டுப்போ,
ஏனெனில் எங்களைப்பார்க்கிலும் மிகவும் பலத்
தவனானாயென்றான்.
அப்பொழுது ஈசாக்கு அவ்விடம்விட்டுப் ௰௭
புறப்பட்டு, கேராரின் பள்ளத்தாக்கிலே கூடா
ரம் போட்டு, அங்கே குடியிருந்து,—தன் தகப்ப ௰௮
னாகிய ஆபிரகாமின் நாள்களில் வெட்டினவை
களும் ஆபிரகாம் மரித்தபிற்பாடு பெலிஸ்தியர்
தூற்றுப்போட்டவைகளுமான துரவுகளை மறுப
டியுமெடுத்து, தன் தகப்பன் அவைகளுக்கு இட்
டிருந்த பெயர்களின்படியே அவைகளுக்குப்
பெயரிட்டான்.—ஈசாக்குடைய வேலைக்காரர் ௰௯
பள்ளத்தாக்கிலே வெட்டி, அங்கே சுரக்கிற நீ
ரூற்றைக் கண்டுபிடித்தார்கள்.—ஆனால் கேரா ௨௰
ரூர் மேய்ப்பர் இந்தத் தண்ணீர் தங்களுடைய
தென்று ஈசாக்குடைய மேய்ப்பருடனே சண்
டைபண்ணினார்கள்; அவர்கள் தன்னோடே ச
ண்டைபண்ணினபடியினாலே, அந்தத் துரவுக்கு
ஏசேக்கென்று பேரிட்டான். — வேறொரு துர ௨௧
வை வெட்டினார்கள்; அதைக்குறித்தும் சண்
டைபண்ணினார்கள்; ஆகையால் அதற்குச் சித்
னாவென்று பெயரிட்டான்.
அவ்விடத்தைவிட்டுப் பேர்ந்துபோய், வே ௨௨
றொரு துரவை வெட்டினான்; அதைக்குறித்து
அவர்கள் சண்டைபண்ணாதிருந்தார்கள்; அப்
பொழுது அவன் நாம் தேசத்தில் பலுகும்படிக்
கு; இப்பொழுது கர்த்தர் நமக்கிடமுண்டாக்கி
னாரென்று சொல்லி, அதற்கு ரேகோபோத்
தென்று பேரிட்டான்.
அங்கேயிருந்து பேர்செபாவுக்குப் போய் ஏறி ௨௩
னான்.—அன்று இராத்திரியிலே கர்த்தர் அவனுக் ௨௪

1 ௧ மோ. ௨௨. ௰௬, ௰௮.—2 ௧ மோ. ௰௨. ௰௩.

3 ௧ மோ. ௨௧. ௩௰.

குத் தரிசனையாகி, நாம் உன் தகப்பனாகிய ஆபி
ரகாமுடைய பராபரன், பயப்படாதே, ஏனெ
னில் நாம் உன்னோடேகூட இருந்து, நம்மு
டைய ஊழியக்காரனாகிய ஆபிரகாமின்நிமித்தம்
உன்னை ஆசீர்வதித்து, உன் வித்தைப் பெருகப்
௨௫ பண்ணுவோமென்றார். — அங்கே அவன் ஒரு
பலிபீடத்தைக் கட்டி, கர்த்தருடைய நாமத்தைத்
தொழுதுகொண்டு, அங்கே தன் கூடாரத்தைப்
போட்டான்; அங்கே ஈசாக்கின் வேலைக்காரர்
ஒரு துரவை வெட்டினார்கள்.
௨௬ ஆனால் [1]அபிமேலேக்கும் அவன் சிநேகிதனா
கிய அகூசாத்தும் அவன் சேனாபதி பீகோலும்,
கேராரிலிருந்து அவனண்டைக்கு வந்தார்கள்.—
௨௭ அப்பொழுது ஈசாக்கு அவர்களுடனே, ஏன்
என்னண்டைக்கு வருகிறீர்கள்; நீங்கள் என்
னைப் பகைத்து, என்னை உங்களிடத்தில் இராதப
௨௮ டிக்கு அனுப்பிவிட்டீர்களே என்றான்.—அதற்க
வர்கள் சொன்னதாவது: கர்த்தர் உம்மோடே
கூட இருக்கிறாரென்கிறதைக் காணவே கண்
டோம்; ஆகையால் எங்களுக்கும் உமக்கும் ஒரு
ஆணை ஏற்பாடு உண்டாகக்கடவதென்று சொல்
௨௯ லிக்கொண்டோம்.—இப்பொழுதும் நாங்கள் உம்
மைத் தொடாமல் நன்மையையே உமக்குச் செய்
து உம்மைச் சமாதானத்தோடே அனுப்புவித்தது
போல நீர் எங்களுக்கும் தீங்குசெய்யாதபடிக்கு
உம்மோடே உடம்படிக்கை பண்ணிக்கொள்ளு
வோம்; நீர் இப்பொழுது கர்த்தரால் ஆசீர்வதிக்
௩௰ கப்பட்டவராமே என்றார்கள். — அவர்களுக்கு
விருந்துபண்ணினான்; அவர்கள் புசித்துக் குடித்
௩௧ தார்கள்.—அதிகாலமே எழுந்திருந்து ஒருவருக்
கொருவர் ஆணையிட்டார்கள்; பிற்பாடு ஈசாக்கு
அவர்களை அனுப்புவித்தான்; அவர்கள் சமாதா
னத்தோடே அவனைவிட்டுப் போனார்கள்.—
௩௨ அந்நாளில்தானே ஈசாக்கின் வேலைக்காரர் வந்
து, தாங்கள் வெட்டின துரவின் செய்தியை
அவனுக்கறிவித்து, தண்ணீரைக் கண்டுபிடித்
௩௩ தோமென்றார்கள்.—அப்பொழுது அதற்குச் சே
பாவென்று பேரிட்டான்; ஆகையால் அந்த
ஊரின் பெயர் இந்நாள்வரைக்கும் பேர்சேபா
வென்னப்படும்.
௩௪ ஏசா நாற்பது வயதானபொழுது, ஏத்தியனான
பெயெரியின் குமாரத்தியாகிய யூதீத்தையும்,
ஏத்தியனான ஏலோனின் குமாரத்தியாகிய பஸ்
௩௫ மாத்தையும் விவாகம்பண்ணினான். — இவர்கள்
ஈசாக்குக்கும் ரெபேக்காளுக்கும் மனநோவா
யிருந்தார்கள்.

## ௨௭ அதிகாரம்.

௧. ஈசாக்கு ஏசாவை வேட்டைக்கனுப்பினது. ௬. அந்தச் சமயத்தில் யாக்கோபு ஆசீர்வாதத்தைப் பெற்றுக்கொள்ளும்படி ரெபேக்காள் அவனை ஏவினது. ௰௫. யாக்கோபு தன்னை ஏசாவென்று சொல்லி ஆசீர்வாதத்தைப் பெற்றுக்கொண்டது. ௩௰. ஏசா வேட்டையாடினதைச் சமைத்துக்கொண்டுவந்தது. ௩௩. ஈசாக்கு நடுங்கினது. ௩௪. ஏசா மிகுந்த துக்கமடைந்து கெஞ்சி ஆசீர்வாதத்தைப் பெற்றது. ௪௧. ஏசா யாக்கோபைப் பயமுறுத்தினது. ௪௨. ரெபேக்காள் ஏசாவின் எத்தனத்தைத் தடுத்தது

ஈசாக்கு முதிர்வயதாகிறதினால் அவன் கண்கள் ௧
இருளடைந்து பார்வையற்றுப்போனபொழுது
சம்பவித்ததேதென்றால், அவன் தன் மூத்தகுமார
னாகிய ஏசாவை அழைத்து, அவனோடே என்
மகனே என்றான்; இவன் அவனுடனே இதோ
இருக்கிறேனென்றான். — அப்பொழுது அவன் ௨
சொன்னதாவது: இதோ முதிர்வயதானேன், என்
மரணநாளை அறியேன்.—இப்பொழுது நீ உன் ௩
ஆயுதங்களாகிய உன் அம்பறாத்தூணியையும்
உன் வில்லையும் எடுத்துக்கொண்டு வெளியே
போய், எனக்காக வேட்டையாடிக்கொண்டுவந்
து,—எனக்குப் பிரியமாயிருக்கிற ருசியுள்ள ஒரு ௪
பதார்த்தத்தைப்பண்ணி, நான் புசிக்கவும் மரிக்
காததற்குமுன்னே என் ஆத்துமா உன்னை ஆசீர்
வதிக்கவும், என்னண்டைக்குக் கொண்டுவா
வென்றான்.—ஆனால் ஈசாக்குத் தன் குமாரனாகிய ௫
ஏசாவோடே பேசுகையில், ரெபேக்காள் கேட்
டுக்கொண்டிருந்தாள்; ஏசா வேட்டையாடிக்
கொண்டுவர வெளியே போனான்.
அப்பொழுது ரெபேக்காள் தன் குமாரனாகிய ௬
யாக்கோபோடே சொன்னதாவது: இதோ உன்
தகப்பன் உன் சகோதரனாகிய ஏசாவோடே,—
நான் புசித்து என் மரணத்திற்குமுன்னே உன் ௭
னைக் கர்த்தருக்குமுன்பாய் ஆசீர்வதிப்பதற்கு நீ
எனக்காக வேட்டையாடிக்கொண்டுவந்து, ருசி
யுள்ள ஒரு பதார்த்தத்தை எனக்குப் பண்ணென்
று சொல்லக்கேட்டேன்.—இப்பொழுதும் என் ௮
மகனே, நான் உனக்குக் கற்பிக்கிற பிரகாரமாக
என் சொல்கேட்டுச் செய்.—நீ ஆட்டுமந்தைக் ௯
குப்போய், இரண்டு நல்ல வெள்ளாட்டுக்குட்
டிகளை எனக்கு அங்கேயிருந்து கொண்டுவா;
நான் அவைகளை உன் தகப்பனுக்குப் பிரியமா
னபடி ருசியுள்ள பதார்த்தமாக்குவேன். — உன் ௰
தகப்பன் தம்முடைய மரணத்திற்குமுன்னே
உன்னை ஆசீர்வதிக்கும்படிக்கு, நீ அதை அவ
ரண்டைக்கு அவர் புசிக்கத்தக்கதாகக் கொண்டு
போவாயாகவென்றாள்.
ஆனால் யாக்கோபு தன் தாயாகிய ரெபேக்கா ௰௧
ளோடே சொன்னதாவது: இதோ என் சகோதர
னாகிய ஏசா [2]ரோமமுள்ள மனுஷன்; நானோ
வெனில் ரோமமில்லாதவன்.—ஒருவேளை என் ௰௨
தகப்பன் என்னைத் தடவிப்பார்ப்பார்; அப்பொ
ழுது நான் அவருக்கு எத்தனாய்க் காணப்பட்டு,
என்மேல் ஆசீர்வாதத்தை அல்ல, சாபத்தை வரப்
பண்ணிக்கொள்ளுவேனே என்றான். — ஆனால் ௰௩
அவன் தாய் அவனுடனே, என் மகனே உனக்கு
வரும் சாபம் என்மேல் இருக்கக்கடவது; என்
சொல்லைமாத்திரம் நீ கேட்டுப்போய் எனக்குக்
கொண்டுவாவென்றாள். — அவன் போய்ப் பி ௰௪
டித்து, தன் தாயண்டைக்குக் கொண்டுவந்தான்;
அப்பொழுது அவனுடைய தாய் அவன் தகப்ப
னுக்குப் பிரியமானபடி ருசியுள்ள ஒரு பதார்த்
தத்தைப்பண்ணினாள்.

1 ௧ மோ. ௨௧. ௨௨.

2 ௧ மோ. ௨௫. ௨௫.

௰௫ பிற்பாடு ரெபேக்காள் வீட்டிலே தன்னிடமா
யிருந்த தன் மூத்தகுமாரனாகிய ஏசாவின் நல்ல
வஸ்திரங்களை எடுத்து, தன் இளையகுமாரனாகிய
௰௬ யாக்கோபுக்கு உடுத்து,—வெள்ளாட்டுக்குட்டி
களின் தோல்களை அவன் கைகளின்மேலும்
ரோமமில்லாத அவன் கழுத்திலும் தரித்து,—
௰௭ தான் பண்ணின ருசியுள்ள பதார்த்தத்தையும்
அப்பத்தையும் தன் குமாரனாகிய யாக்கோபின்
கையிலே கொடுத்தாள்.

௰௮ அவன் தன் தகப்பனண்டையிலே வந்து, என்
தகப்பனே என்றான்; அதற்கவன், இதோ இருக்
௰௯ கிறேன் என் மகனே, நீ யாரென்றான்.— அப்
பொழுது யாக்கோபு தன் தகப்பனுடனே, நான்
உமக்கு முதல்பிறந்தவனாகிய ஏசா; நீர் என்னோ
டே சொன்னபடியே செய்தேன்; இப்பொழு
தும் உம்முடைய ஆத்துமா என்னை ஆசீர்வதிக்
கும்படிக்கு, நீர் எழுந்து உளுக்காந்து நான்
௨௰ வேட்டையாடினதிலே புசியுமென்றான்.—அப்
பொழுது ஈசாக்குத் தன் குமாரனுடனே, என்
மகனே: இது உனக்கித்தனைச் சீக்கிரமாய் அகப்
பட்டதெப்படியென்றான்; இவன் உம்முடைய
பராபரனாகிய கர்த்தர் எனக்கு நேரிடப்பண்ணி
௨௧ னாரென்றான்.—அப்பொழுது ஈசாக்கு யாக்கோ
புடனே, என் மகனே, நீ என் குமாரனாகிய
ஏசாதானோ. அல்லவோ என்று நான் உன்னைத்
௨௨ தடவிப்பார்க்கக் கிட்டிவாவென்றான். — யாக்
கோபு தன் தகப்பனாகிய ஈசாக்கண்டையிலே
கிட்டிப்போனான்; அவன் இவனைத் தடவிச்
சத்தம் யாக்கோபின் சத்தம், கைகளோ ஏசாவின்
௨௩ கைகளென்று சொல்லி,—இவன் கைகள் இவன்
சகோதரனாகிய ஏசாவின் கைகளைப்போல ரோ
மமானபடியினாலே, இவனை அறியாதேபோய்,
௨௪ இவனை ஆசீர்வதித்து,–நீ என் குமாரனாகிய ஏசா
தானோ என்றான்; இவன் நான்தானென்றான்.–
௨௫ அப்பொழுது அவன் என் குமாரனாகிய நீ வேட்
டையாடினதிலே நான் புசித்து என் ஆத்துமா
உன்னை ஆசீர்வதிக்கும்படிக்கு, என் கிட்டக்
கொண்டுவாவென்றான்; அவன் கிட்டக்கொண்
டுவந்தான்; அப்பொழுது அவன் புசித்தான்;
பிற்பாடு திராட்சப்பழ இரசம் அவனுக்குக்
௨௬ கொண்டுவந்தான், அவன் குடித்தான். — அப்
பொழுது இவன் தகப்பனாகிய ஈசாக்கு இவனோ
டே, என் மகனே, நீ கிட்டிவந்து என்னை முத்
௨௭ தம்செய்யென்றான்.-இவன் கிட்டிவந்து அவனை
முத்தம்செய்தான்; அப்பொழுது அவன் இவன்
வஸ்திரங்களின் வாசனையை முகர்ந்து, இவனை
ஆசீர்வதித்துச் சொன்னதாவது: இதோ என் கு
மாரனுடைய வாசனை கர்த்தர் ஆசீர்வதித்த வயல்
வெளியின் வாசனையைப்போலிருக்கின்றது.—
௨௮ [1]பராபரன் உனக்கு வானத்துப் பனியிலும் பூமி
யின் புஷ்டியிலும் கொடுத்துத் திரள்தானியத்
தையும் திராட்சப்பழ இரசத்தையும் கட்டளையி
௨௯ டுவாராக.—சனசதளங்கள் உன்னைச் சேவிக்க
வும் சாதிகள் உன்னை வணங்கவும் கடவது;
[2]உன் சகோதரருக்கு எசமானனாயிரு; உன் தாயின்
பிள்ளைகள் உன்னை வணங்கக்கடவர்கள்; உன்
னைச் [3]சபிக்கிறவர்கள் சபிக்கப்பட்டவர்களும்
உன்னை ஆசீர்வதிக்கிறவர்கள் ஆசீர்வதிக்கப்பட்
டவர்களுமாய் இருப்பார்களாக என்றான்.

ஈசாக்கு யாக்கோபை ஆசீர்வதித்துத் தீர்ந்த ௩௰
பொழுது சம்பவித்ததேதென்றால், யாக்கோபு
தன் தகப்பனாகிய ஈசாக்கின் முகத்தைவிட்டுப்
புறப்பட்டவுடனே, அவன் சகோதரனாகிய
ஏசா வேட்டையாடிக் கொண்டுவந்தான்.—இவ ௩௧
னும் ருசியுள்ள பதார்த்தத்தைப்பண்ணி, தன்
தகப்பனண்டைக்குக் கொண்டுவந்து, தன் தகப்
பனுடனே, உம்முடைய ஆத்துமா என்னை ஆ
சீர்வதிக்கும்படிக்கு, என் தகப்பனார் எழுந்தி
ருந்து, தம்முடைய குமாரன் வேட்டையாடி
னதிலே புசிப்பாராகவென்றான்.–அப்பொழுது ௩௨
அவன் தகப்பனாகிய ஈசாக்கு அவனுடனே, நீ
யார் என்றான்; அதற்கவன், நான் உமக்கு முதல்
பிறந்த குமாரனாகிய ஏசாவென்றான். — அப் ௩௩
பொழுது ஈசாக்கு மகா அதிர்வாய் அதிர்ந்து
சொன்னதாவது: வேட்டையாடி எனக்குக் கொ
ண்டுவந்தானே, அவன் யார்? நீ வாராததற்கு
முன்னே நான் அவை எல்லாவற்றிலும் புசித்து,
அவனை ஆசீர்வதித்தேனே, அவன் ஆசீர்வதிக்கப்
பட்டவனுமாய் இருப்பானென்றான். — ஏசா ௩௪
தன் தகப்பனுடைய வார்த்தைகளைக் கேட்ட
பொழுது, [4]மகா உரத்த கசப்பான சத்தமாய் அ
லறி, தன் தகப்பனோடே, என் தகப்பனே என்
னையும் ஆசீர்வதியுமென்றான். — அதற்கவன, ௩௫
உன் சகோதரன் தந்திரமாய் வந்து, உன்னு
டைய ஆசீர்வாதத்தை எடுத்துக்கொண்டானென்
றான்.–அப்பொழுது இவன், அவன் பெயர் யாக் ௩௬
கோபு என்னப்படுகிறது சரிஅல்லவோ? அதே
னென்றால் இத்தோடே இரண்டுமுறை என்
னைக் கீழ்ப்படுத்தினான்; என் [5]முதற்பிறப்புச்
சுதந்தரத்தை எடுத்துக்கொண்டான்; இதோ என்
ஆசீர்வாதத்தையும் இப்பொழுது எடுத்துக்கொண்
டானென்று சொல்லி, நீர் எனக்கு ஆசீர்வாதத்தை
வைத்துவைத்ததில்லையோ என்றான்.— ஈசாக்கு ௩௭
ஏசாவுக்குப் பிரதியுத்தாரமாக, இதோ நான்
அவனை உனக்கு எசமானனாக வைத்தேன்; அவன்
சகோதரனையெல்லாம் அவனுக்கூழியக்காரரா
கக் கொடுத்து, அவனைத் தானியத்தினாலும் திரா
ட்சப்பழ இரசத்தினாலும் ஆதரித்தேனே, இப்
பொழுதும் உனக்கு நான் என்ன செய்யலாம்
என் மகனே என்றான்.–ஏசா தன் தகப்பனோடே, ௩௮
என் தகப்பனே, இந்த ஒரே ஆசீர்வாதம்தான்
உமக்கிருக்கிறதோ? என்னையும் ஆசீர்வதியும்
என் தகப்பனே என்று ஏசா சொல்லி, தன் சத்
தத்தை உயர்த்தி அழுதான்.—அப்பொழுது அ ௩௯
வன் தகப்பனாகிய ஈசாக்கு அவனுக்குப் பிரதி
யுத்தாரமாகச் சொன்னதாவது: இதோ உன் குடி

1 எபி. ௰௧. ௨௰.—2 ௧ மோ. ௨௫. ௨௩.—3 ௧ மோ. ௰௨. ௩.

௪ மோ. ௨௪. ௯.—4 எபி. ௰௨. ௰௭.—5 ௧ மோ. ௨௫. ௩௩.

யிருப்புப் பூமியின் புஷ்டியோடும் உயர வானத்
௪௰ திலிருந்திறங்கும் பனியோடுமிருக்கும். — உன்
பட்டையத்தினாலே நீ பிழைத்து, உன் சகோதர
னைச் சேவிப்பாய்; [1]நீ மேல்கொள்ளும் காலம்
வரும்பொழுதோவெனில், நீ உன் கழுத்திலிருக்
கிற அவனுடைய நுகத்தடியை உதறிப்போடுவ
துண்டென்றான்.

௪௧ ஏசாவோவெனில் யாக்கோபைத் தன் தகப்
பன் அவனை ஆசீர்வதித்த ஆசீர்வாதத்தின் நிமித்
தம் பகைத்து, என் தகப்பனுக்காகத் துக்கிக்கும்
நாள்கள் சமீபிக்கும், அப்பொழுது என் சகோ
தரனாகிய யாக்கோபைக் கொன்றுபோடுவே
னென்று ஏசா தன் இருதயத்திலே சொல்லிக்
௪௨ கொண்டான்.—ஆனால் ரெபேக்காளுக்கு அவ
ளுடைய மூத்த குமாரனாகிய ஏசாவின் வார்த்தை
கள் அறிவிக்கப்பட்டன; அப்பொழுது அவள்
தன் இளைய குமாரனாகிய யாக்கோபை அழைத்
தனுப்பி, அவனோடே சொன்னதாவது: இதோ
உன் சகோதரனாகிய ஏசா உன்னைக் கொன்று
போட நினைக்கிறதினாலே தன்னைத் தேற்றிக்
௪௩ கொள்ளுகிறான்.—இப்பொழுதும் என் மகனே,
நீ என் சொற்படி கேட்டு, எழுந்து புறப்பட்டு,
ஆரானிலிருக்கிற என் சகோதரனாகிய லாபா
௪௪ னண்டைக்கோடிப்போய், — உன் சகோதரனு
டைய உக்கிரம் ஆறும்மட்டும் சிலநாள் அவனண்
௪௫ டையிலே, — உன் சகோதரனுடைய கோபம்
உன்னை விட்டு நீங்கும்மட்டாகவும், நீ தனக்குச்
செய்ததை அவன் மறக்கும்மட்டாகவும் இரு;
பிற்பாடு அவ்விடத்திலிருந்து உன்னை அழைத்
தனுப்புவேன்; நான் ஒரேநாளிலே உங்களி
ருவரையும் என் இழந்துபோகவேண்டும் என்
றாள்.

௪௬ பிற்பாடு ரெபேக்காள் ஈசாக்குடனே, [2]ஏத்
தின் குமாரத்திகளைத்தொட்டு, என் சீவன் எனக்
கு அரோசிக்கிறது; இந்தத் தேசத்துக் குமாரத்தி
களாகிய ஏத்தின் குமாரத்திகளில் யாக்கோபு
இவர்களுக்கொத்த பெண்ணைக்கொண்டால், எ
னக்குச் சீவன் ஏதுக்கென்றாள்.

## ௨௮. அதிகாரம்.

௧. ஈசாக்கு யாக்கோபை ஆசீர்வதித்துப் பதான்அராமுக்கு அனுப்பினது. ௯. ஏசா இஸ்மவேலின் குமாரத்தியாகிய மக்லாத் என்ற பெண்ணை விவாகம்பண்ணினது. ௰. யாக்கோபு சொப்பனத்தில் ஏணியைக் கண்டது. ௰௮. பேத்தேலில் ஒரு கல்லை நாட்டினது. ௨௰. யாக்கோபு பிரதிக்கினைபண்ணினது.

௧ அப்பொழுது ஈசாக்கு யாக்கோபை அழைத்து,
அவனை ஆசீர்வதித்து, அவனுக்குக் கற்பித்துச்
சொன்னதாவது: [3]நீ கானான் குமாரத்திகளில்
௨ பெண்ணைக்கொள்ளாமல்,-எழுந்து புறப்பட்டு,
பதான்அராமிலிருக்கிற உன் தாயின் தகப்பனா
கிய பேத்துவேலுடைய வீட்டுக்குப்போய், அவ்
விடத்தில் உன் தாயின் சகோதரனாகிய லாபா
னின் குமாரத்திகளிலே பெண்ணைக்கொள்.—
௩ ஆனால் சர்வத்துக்கும் வல்ல பராபரன் உன்னை
ஆசீர்வதித்து, நீ சனசதளங்களான கூட்டமா
கும்படிக்கு உன்னைப் பலுகவும், பெருகவும்
பண்ணி,—பராபரன் ஆபிரகாமுக்குக் கொடுத் ௪
ததும், நீ பரதேசியாய்த் தங்குகிறதுமான தேசத்
தை நீ சுதந்தரித்துக்கொள்ள, [4]ஆபிரகாமுடைய
ஆசீர்வாதத்தை உனக்கும் உன்னோடேகூட உன்
வித்துக்கும் கொடுக்கக்கடவரென்று சொல்லி,—
ஈசாக்கு யாக்கோபை அனுப்புவித்தான்; அப் ௫
பொழுது இவன் பதான்அராமிலிருக்கும் சூரி
யனாகிய பேத்துவேலுடைய குமாரனும் தனக்
கும் ஏசாவுக்கும் தாயாகிய ரெபேக்காளின் சகோ
தரனுமான லாபானண்டைக்குப்போகப் புறப்
பட்டான்.

ஈசாக்கு யாக்கோபை ஆசீர்வதித்து அவனைப் ௬
பதான்அராமுக்கு அங்கே ஒரு பெண்ணைக்
கொள்ள அனுப்பினதையும், அவனை ஆசீர்வதிக்
கையில் நீ கானான் குமாரத்திகளில் பெண்ணைக்
கொள்ளாயாகவென்று அவனுக்குக் கற்பித்ததை
யும்,—யாக்கோபு தன் தகப்பனுக்கும் தன் தாய்க் ௭
கும் கீழ்ப்படிந்து பதான்அராமுக்குப் புறப்பட்
டுப்போனதையும், ஏசா கண்டான். — கானான் ௮
குமாரத்திகள் தன் தகப்பனாகிய ஈசாக்கின் பார்
வைக்குப் பொல்லாதவர்களென்றதை ஏசா கண்
டபடியினாலே,—ஏசா இஸ்மவேல் அண்டைக் ௯
குப்போய், தனக்கிருக்கிற பெண்சாதிகள் தவிர,
ஆபிரகாமுடைய குமாரனாகிய இஸ்மவேலின்
குமாரத்தியும் நேபயோத்தின் சகோதரியுமாகிய
மக்லாத்தை விவாகம்பண்ணினான்.

யாக்கோபு பேர்சேபாவைவிட்டுப் புறப்பட்டு ௰
ஆரானுக்குப்போகப் பயணம்பண்ணி,-ஒரிடத் ௰௧
திலே வந்து, சூரியன் அஸ்தமித்தபடியினாலே
அங்கே இராத்தங்கி, அவ்விடத்துக் கற்களில்
ஒன்றை எடுத்துத் தன் தலைமாட்டிலேபோட்டு,
அவ்விடத்திலே படுத்துக்கொண்டு, — கண்ட ௰௨
சொப்பனமாவது: இதோ ஒரு ஏணி பூமியிலே
வைக்கப்பட்டிருந்தது; அதின் தலைப்புறம் வா
னத்தை எட்டியிருந்தது; இதோ அதிலே [5]பராபர
னுடைய தூதர் ஏறுகிறவர்களும் இறங்குகிறவர்
களுமாயிருந்தார்கள்.—இதோ அதின்மீதில் கர்த் ௰௩
தர் நின்றுகொண்டிருந்து சொன்னதாவது: நாம்
உன் தகப்பனாகிய ஆபிரகாமின் பராபரனும்
ஈசாக்கின் பராபரனுமாகிய கர்த்தர்; நீ படுத்திருக்
கிற பூமியை உனக்கும், உன் வித்துக்கும் தரு
வோம். — உன் வித்துப் [6]பூமியின் தூளைப்போ ௰௪
லிருக்கும்; நீ மேற்கேயும், கிழக்கேயும், வடக்
கேயும், தெற்கேயும், பரம்பிப்போவாய்; [7]உன்னி
லும் உன் வித்திலும் பூமியின் வம்சங்களெல்லாம்
ஆசீர்வதிக்கப்படும்.—இதோ நாம் உன்னோடே ௰௫
கூட இருந்து, நீ போகிற இடத்திலெல்லாம் உன்
னைக் காத்து, இந்தத் தேசத்திற்கு உன்னைத் திரும்
பி வரப்பண்ணுவோம்; ஏனெனில் நாம் உனக்
குச் சொன்னதை நாம் செய்யும் அளவும் உன்
னைக் கைவிடோமென்றார்.

[1] ௨ இரா.௮.௨௰.—[2] ௧ மோ.௨௬.௩௪,௩௫.—[3] ௧ மோ.௨௪.௩.—[4] ௧. மோ. ௰௨. ௩.—[5] யோவா. ௧. ௫௧.—[6] ௧ மோ. ௰௩. ௰௬.—[7] ௧ மோ. ௰௨. ௩.

௰௬ யாக்கோபு நித்திரைதெளிந்து விழித்தபொழு
து, மெய்யாகவே கர்த்தர் இந்த ஸ்தலத்தில் இருக்
கிறார், இதை நான் அறியாதிருந்தேனென்றான்.—
௰௭ அவன் பயந்து, இந்த ஸ்தலம் எத்தனை பயப்ப
டத்தக்கதாயிருக்கின்றது; இது பராபரனுடைய
வீடொழிய வேறொன்றல்ல; இது வானத்தின்
௰௮ வாசலென்று சொல்லி, — யாக்கோபு அதிகால
மே எழுந்திருந்து, தன் தலைமாட்டிலே போட்
டுக்கொண்டிருந்த கல்லை எடுத்துக்கொண்டு அ
தைத் தூணாக நிறுத்தி, அதின்மீதில் எண்ணெ
௰௯ யை வார்த்து,—அந்த ஸ்தலத்திற்குப் பேத்தே
லென்று பெயரிட்டான்; அவ்வூருக்கு முந்தின
௨௰ பெயரோவென்றால், லூஸ் என்பது.—யாக்கோபு
ஒரு பொருத்தனையைப்பண்ணிச் சொன்னதாவ
து: பராபரன் என்னோடேகூட இருந்து, நான்
நடக்கிற இந்த வழியிலே என்னைக் காப்பாற்றிப்
புசிக்க அப்பமும், உடுக்க வஸ்திரமும் எனக்
௨௧ குக் கொடுத்து, — என்னை என் தகப்பன் வீட்
டுக்குச் சமாதானத்தோடே திரும்பிவரப்பண்
ணி, இப்படியே கர்த்தர் எனக்குப் பராபரனா
௨௨ யிருந்தாராகில்,—நான் தூணாக நிறுத்தின இந்
தக் கல் பராபரனுடைய வீடாகும்; தேவரீர்
எனக்குக் கொடுப்பதெல்லாவற்றிலும் பத்தி
லொன்றை உமக்குச் செலுத்துவேனென்றான்.

## ௨௯. அதிகாரம்.

*௧. யாக்கோபு காரான் கிணற்றண்டையில் சேர்ந்தது. ௯. அவன் ராகேலைக் கண்டது. ௰௩. லாபான் அவனை ஏற்றுக்கொண்டது. ௰௮. யாக்கோபு ராகேலுக்காக உடம்படிக்கைபண்ணினது. ௨௩. வஞ்சகமாய் லேயாள் அவனுக்கு விவாகம்பண்ணப்பட்டது. ௨௮. பின்னும் ஏழுவருஷம் சேவகம்பண்ணி, ராகேலையும் விவாகம்பண்ணினது. ௩௨. லேயாள் ரூபேன், ௩௩. சிமெயோன், லேவி, யூதா என்பவர்களைப் பெற்றது.*

௧ பிற்பாடு யாக்கோபு கால் எட்டி நடந்து கிழக்
௨ குத்திசையாரின் தேசத்தில் வந்தான்.—அப்பொ
ழுது இதோ வயல்வெளியிலே ஒரு கிணற்றை
யும் அங்கே அதின் அருகே மடக்கியிருக்கிற
மூன்று ஆட்டுமந்தைகளையும் கண்டான்; ஏனெ
னில் அந்தக் கிணற்றிலே மந்தைகளுக்குத் தண்
ணீர் மொண்டு காட்டுவார்கள்; கிணற்றினுடைய
வாயின்மேலோவென்றால், ஒரு பெரியகல்
௩ வைக்கப்பட்டிருந்தது. — அவ்விடத்தில் மந்
தைகளெல்லாம் சேர்ந்ததற்குப் பிற்பாடு அவர்
கள் கிணற்று வாயின்மேலிருக்கும் கல்லைப் பு
ரட்டி, ஆடுகளுக்குத் தண்ணீர் காட்டி, மறுபடி
யும் கல்லை அந்தத் தானத்தில் கிணற்று வாயின்
௪ மேலே வைப்பார்கள்.—யாக்கோபு அவர்களுட
னே, என் சகோதரரே, நீங்கள் எவ்விடத்தா
ரென்றான்; அவர்கள் நாங்கள் ஆரானூர் மனிதர்
௫ களென்றார்கள். — அப்பொழுது அவர்களோ
டே; நாகோரின் குமாரனாகிய லாபானை அறி
வீர்களோ என்றான்; அறிவோமென்றார்கள்.—
௬ அப்பொழுது அவர்களை, அவன் சுகமாயிருக்கி
றானோ என்று கேட்டான்; அவர்கள், சுகமாயி
ருக்கிறானென்றும், அதோ அவன் குமாரத்தியா
கிய ராகேல் ஆடுகளை ஓட்டிவருகிறாளென்றும்
சொன்னார்கள்.—அப்பொழுது அவன், இதோ, ௭
இன்னம் வெகுபொழுதிருக்கின்றது; இது மந்
தைசேர்க்கிற வேளை அல்லவே, ஆடுகளுக்குத்
தண்ணீர் காட்டிப்போய் மேயுங்களென்றான்.—
அதற்கவர்கள் எல்லா மந்தைகளும் சேருமட் ௮
டும் எங்களுக்குக் கூடாது; கிணற்று வாயின்
மேலிருக்கும் கல்லைப் புரட்டுவார்கள்; அதற்
குப்பிறகு மந்தைக்குத் தண்ணீர் காட்டுகிறோ
மென்றார்கள்.

அவன் இவர்களோடே இன்னம் பேசிக் ௯
கொண்டிருக்கையில், ராகேல் தன் தகப்பனு
டைய ஆடுகளோடே வந்தாள்; ஏனெனில் அ
வைகளை மேய்க்கிறவளாயிருந்தாள்.—[1]சம்பவித்த ௰
தேதென்றால், யாக்கோபு தன் தாயின் சகோதர
னை லாபானுடைய குமாரத்தியாகிய ராகேலை
யும் தன் தாயின் சகோதரனாகிய லாபானின் ஆடு
களையும் கண்டபொழுது, யாக்கோபு சேர்ந்து
போய், கிணற்று வாயின்மேலிருந்த கல்லைப்
புரட்டி, தன் தாயின் சகோதரனாகிய லாபானின்
ஆடுகளுக்குத் தண்ணீர் காட்டினான்.—பிற்பாடு ௰௧
யாக்கோபு ராகேலை முத்தம்செய்து, சத்தமிட்ட
ழுது, — தான் அவள் தகப்பனுடைய மருமக ௰௨
னென்றும், தான் ரெபேக்காளின் குமாரனென்
றும், யாக்கோபு ராகேலுக்கறிவித்தான்; அப்
பொழுது அவளோடி, தன் தகப்பனுக்கறிவித்
தாள். — அப்பொழுது சம்பவித்ததேதென்றால், ௰௩
லாபான் தன் சகோதரியின் குமாரனாகிய யாக்
கோபுடைய செய்தியைக் கேட்டபொழுது, அ
வன் இவனுக்கெதிர்கொண்டோடி, இவனைக்
கட்டிக்கொண்டு முத்தம்செய்து, தன் வீட்டுக்
கழைத்துப்போனான்; அப்பொழுது இவன் லா
பானுக்கு இந்தக் காரியங்களை எல்லாம் விவரித்
தான்.—அப்பொழுது லாபான் இவனுடனே, நீ ௰௪
என்னெலும்பும் என் மாம்சமுமாமே என்றான்;
அவனண்டையிலே இவன் ஒருமாதகாலம் இ
ருந்தபிற்பாடு,

லாபான் யாக்கோபுடனே, நீ என் மருமகனா ௰௫
னதினாலே, இலவசமாய் எனக்கு வேலைசெய்ய
வேண்டுமோ? உனக்குக் கூலி என்னவென்று
எனக்குச் சொல்லென்றான். — லாபானுக்கோ ௰௬
வெனில், இரண்டு குமாரத்திகள் இருந்தார்கள்;
மூத்தவள்பேர் லேயாள்; இளையவள்பேர் ரா
கேல்.—ஆனால் லேயாளுடைய கண்கள் கூச் ௰௭
சப்பார்வையாயிருந்தன; ராகேலோவெனில்,
அந்தமுள்ள ரூபமும் அழகான பார்வையுமாயி
ருந்தாள்.—யாக்கோபு ராகேல்பேரில் பிரியப் ௰௮
பட்டு, உம்முடைய இளையகுமாரத்தியாகிய ரா
கேலுக்காக உமக்கு ஏழுவருஷம் வேலைசெய்
வேனென்றான்.—அதற்கு லாபான், நான் அவளை ௰௯
அந்நியபுருஷனுக்குக் கொடுக்கிறதைப்பார்க்கி
லும், அவளை உனக்குக் கொடுக்கிறது தாவிளை,
என்னோடே தரித்திருவென்றான்.—அப்படியே ௨௰

1 உ மோ. உ ளா.

யாக்கோபு ராகேலுக்காக ஏழுவருஷம் வேலைசெ
ய்தான்; அவைகள் அவனுக்கு இவள்பேரிலிருந்
த பிரியத்தினாலே கொஞ்சநாளாகக் கண்டது.
௨௧ பிற்பாடு யாக்கோபு லாபானோடே, என்
பெண்சாதியை எனக்குத் தாரும்; ஏனெனில்
நான் அவளிடத்தில் பிரவேசிக்க என் நாள்கள்
௨௨ நிறைவேறினவென்றான். — அப்பொழுது லா
பான் அந்தத் தலத்து மனிதரை எல்லாம் கூட்டி
௨௩ விருந்துபண்ணினான்.—ஆனால் இராத்திரியிலே
சம்பவித்ததேதெனில், இவன் தன் குமாரத்தியா
கிய லேயாளை அவனண்டைக்கு அழைத்துப்
போய்விட்டான்; இவளிடத்தில் அவன் உட்
௨௪ பிரவேசித்தான்.—தன் குமாரத்தியாகிய லேயா
ளுக்கு லாபான் தன் வேலைக்காரியாகிய சில்ப்
௨௫ பாளை வேலைக்காரியாகக் கொடுத்தான்.—சம்ப
வித்ததேதென்றால், காலமே இதோ அவள் லே
யாள்தானே; அப்பொழுது அவன் லாபானோ
டே, ஏன் இதை எனக்குச் செய்தீர்? ராகேலுக்
காக அல்லவோ உம்மிடத்திலே வேலைசெய்
தேன்; பின்னை ஏன் என்னை வஞ்சகம்பண்ணி
௨௬ னீர் என்றான்.—லாபான் சொன்னதாவது: இளை
யவளை மூத்தவளுக்கு முன்னே கொடுக்கிறது
௨௭ எங்கள் தலத்து நடபடி அல்ல.—இவளுடைய
வாரத்தை நிறைவேற்று; அப்பொழுது நீ இன்
னம் வேறு ஏழுவருஷம் என்னிடத்தில் செய்
யும் வேலைக்காக அவளையும் உனக்குக் கொடுப்
பேனென்றான்.

௨௮ யாக்கோபு இப்படிச் செய்து, இவளுடைய
வாரத்தை நிறைவேற்றினான்; அப்பொழுது, தன்
குமாரத்தியாகிய ராகேலையும் அவனுக்குப் பெ
௨௯ ண்சாதியாகக் கொடுத்தான்.—தன் குமாரத்தியா
கிய ராகேலுக்கு லாபான் தன் வேலைக்காரியா
கிய பில்காளை வேலைக்காரியாகக் கொடுத்
௩௰ தான்.—அவன் ராகேலிடத்திலும் பிரவேசித்து,
லேயாளைப்பார்க்கிலும் ராகேலைச் சிநேகித்து,
இன்னம் வேறே ஏழுவருஷம் அவனிடத்திலே
வேலைசெய்தான்.

௩௧ லேயாள் பகைக்கப்பட்டவளென்று கர்த்தர்
கண்டபொழுது, அவளுடைய கர்ப்பத்தைத்
திறந்தார்; ராகேலோவெனில் மலடியாயிருந்
௩௨ தாள். — லேயாள் கர்ப்பம்தரித்து ஒரு குமார
னைப் பெற்று, அவனுக்கு ரூபேனென்று பெயரி
ட்டாள்; ஏனெனில் கர்த்தர் என் சிறுமையைப்
பார்த்தார்; ஆகையால் இப்பொழுது என் புரு
௩௩ ஷன் என்னைச் சிநேகிப்பாரென்றாள்.—அப்பு
றம் அவள் கர்ப்பம்தரித்து ஒரு குமாரனைப் பெற்
று, நான் பகைக்கப்பட்டவளென்று, கர்த்தர்
கேட்டருளி, இவனையும் எனக்குக் கொடுத்தா
ரென்றுசொல்லி, அவனுக்குச் சிமேயோனென்
௩௪ று பெயரிட்டாள்.—அப்புறம் அவள் கர்ப்பம்த
ரித்து, ஒரு குமாரனைப் பெற்று, இப்பொழுது
இந்தமுறை என் புருஷன் என்னோடே சேர்
வார்; ஏனெனில் அவருக்கு மூன்று குமார
னைப் பெற்றேனென்று சொல்லி, அவனுக்கு
லேவி என்று பெயரிட்டாள்.—அப்புறம் அவள் ௩௫
கர்ப்பம்தரித்து ஒரு குமாரனைப் பெற்று, இப்
பொழுது கர்த்தரைத்துதிப்பேனென்றுசொல்லி,
அவனுக்கு யூதாவென்று பெயரிட்டாள்; பிற்
பாடு அவள் பெறுகிறது நின்றது.

## ௩௰. அதிகாரம்.

*௧. ராகேல் மலடியாயிருந்ததின் நிமித்தம் துக்கப்பட்டு, தன் வேலைக்காரியாகிய பில்காளை யாக்கோபுக்குப் பெண்டாகக் கொடுத்தது. ௬. அவள் தாண், நப்தலி என்றவர்களைப் பெற்றது. ௯. லேயாள் தன் வேலைக்காரி சில்பாளை யாக்கோபுக்குக் கொடுக்க அவள் வழியாய், காத், ஆசேர் என்பவர்கள் பிறந்தது. ௰௪. ரூபேன் கண்டுபிடித்த தூதாயீகளை ராகேல் இச்சித்ததினால், லேயாள் யாக்கோபை ஒரு இராத்திரிக்குத் தன் வசப்படுத்திக்கொண்டது. ௰௭. லேயாள் இசக்கார், செபுலோன், தீனாள் என்றவர்களைப் பெற்றது. ௨௨. ராகேல் யோசேப்பைப் பெற்றது. ௨௫. யாக்கோபு லாபானை விட்டுப்போக மனதாயிருந்தது. ௨௭. அவன் லாபானிடத்திலே பின்னும் சேவகம்பண்ண, புது உடம்படிக்கைபண்ணினது. ௪௩. யாக்கோபு தன் உபாயத்தினால் ஐசுவரியவானானது.*

ராகேல் தான் யாக்கோபுக்குப் பிள்ளைகளைப் ௧
பெறாததைக் கண்டாள்; ஆனதுகொண்டு ரா
கேல் தன் சகோதரியின்பேரிலே பொறாமை
யாகி, யாக்கோபுடனே, எனக்குப் பிள்ளைகளைக்
கொடும்; இல்லாவிட்டால் நான் மரித்தவளாவே
னே என்றாள். — அப்பொழுது யாக்கோபுக்கு ௨
ராகேலின்மேல் கோபமூண்டு, உனக்குக் கர்ப்
பக்கனியைக் கட்டளையிடாத பராபரனுக்கு
நான் நிகரோ என்றான்.—அப்பொழுது அவள், ௩
இதோ என் வேலைக்காரியாகிய பில்காளி
ருக்கிறாள்; அவள் என் மடிக்குப் பிள்ளைக
ளைப் பெறவும் [1]அவளாலாகிலும் என் வீடு கட்
டப்படவும் அவளிடத்தில் பிரவேசியுமென்று
சொல்லி,—அவனுக்குத் தன் வேலைக்காரியாகிய ௪
பில்காளைப் பெண்சாதியாகக் கொடுத்தாள்;
அப்படியே யாக்கோபு அவளிடத்தில் பிரவே
சித்தான்.
பில்காள் கர்ப்பம்தரித்து யாக்கோபுக்கு ஒரு ௫
குமாரனைப் பெற்றாள்—அப்பொழுது ராகேல், ௬
பராபரன் என் வழக்கைத் தீர்த்து என் சத்தத்
தையும் கேட்டு, எனக்கொரு குமாரனைக் கொ
டுத்தாரென்று சொல்லி, அவனுக்குத் தாணென்
று பெயரிட்டாள். — மறுபடியும் ராகேலின் ௭
வேலைக்காரியாகிய பில்காள் கர்ப்பம்தரித்து,
யாக்கோபுக்கு இரண்டாம் குமாரனைப் பெற்
றாள்.—அப்பொழுது ராகேல், நான் தேவபோ ௮
ராட்டமாய் என் சகோதரியோடே போராடி
மேற்கொண்டேனென்று சொல்லி, அவனுக்கு
நப்தலியென்று பெயரிட்டாள்.
லேயாள் தான் பெறுகிறது நின்றதென்று ௯
கண்டு, தன் வேலைக்காரியாகிய சில்பாளை அ
ழைத்து, அவளை யாக்கோபுக்குப் பெண்சாதி
யாகக்கொடுத்தாள்.—லேயாளின் வேலைக்காரியா ௰
கிய சில்பாள் யாக்கோபுக்கு ஒரு குமாரனைப்
பெற்றாள். — அப்பொழுது லேயாள் ஏராளமா ௰௧
கிறதென்று சொல்லி, அவனுக்குக் காத்தென்
று பெயரிட்டாள்.—பிற்பாடு லேயாளின் வே ௰௨

[1] ௧ மோ. ௰௬. ௨.

லைக்காரியாகிய சில்பாள் யாக்கோபுக்கு இர
௰௩ ண்டாம் குமாரனைப் பெற்றாள்.—அப்பொழுது
லேயாள், என் பாக்கியத்திற்காயிற்று; ஏனெ
னில் குமாரத்திகள் என்னைப் பாக்கியவதி என்
பார்களென்று சொல்லி, அவனுக்கு ஆசேர்
என்று பெயரிட்டாள்.

௰௪ கோதுமை அறுப்புநாள்களிலே ரூபேன் புறப்
பட்டு வெளியிலே தூதாயிகளைக் கண்டுபிடித்து,
அவைகளைத் தன் தாயாகிய லேயாளண்டைக்
குக் கொண்டுவந்தான்; அப்பொழுது ராகேல்
லேயாளுடனே உன் குமாரனுடைய தூதாயி
களில் எனக்குக் கொஞ்சம் தாவென்றாள்.—
௰௫ அப்பொழுது அவள் இவளுடனே, நீ என் புரு
ஷனை எடுத்துக்கொண்டது கொஞ்சக்காரிய
மோ, என் குமாரனுடைய தூதாயிகளையும் எடுத்
துக்கொள்வாயோ என்றாள்; அப்பொழுது ரா
கேல், உன் குமாரனுடைய தூதாயிகளுக்கீடாக
இன்று இரவிற்கு அவர் உன்னோடே சயனம்
௰௬ பண்ணட்டுமென்றாள்.—யாக்கோபு சாயங்காலத்
திலே வெளியிலிருந்து வருகையில் லேயாள்
புறப்பட்டு அவனுக்கெதிர்கொண்டுபோய், என்
னிடத்தில் வருவீராக; ஏனெனில் என் குமார
னுடைய தூதாயிகளாலே உம்மைச் சம்பாதித்
தேனென்றாள்; ஆகையால் அன்று இராத்திரி
யில் அவளோடே சயனித்தான்.

௰௭ பராபரன் லேயாளைக்கேட்டருளினார்; அவள்
கர்ப்பம்தரித்து யாக்கோபுக்கு ஐந்தாம் குமா
௰௮ ரனைப் பெற்றாள். — அப்பொழுது லேயாள்,
நான் என் வேலைக்காரியை என் புருஷனுக்குக்
கொடுத்த பலனைப் பராபரன் எனக்குத் தந்தா
ரென்று சொல்லி, அவனுக்கு ஈசக்காரென்று
௰௯ பெயரிட்டாள். — அப்புறம் லேயாள் கர்ப்பம்
தரித்து யாக்கோபுக்கு ஆறாம் குமாரனைப் பெற்
௨௰ றாள்.—அப்பொழுது லேயாள், பராபரன் எனக்கு
நல்ல ஈவைத்தந்தார்; இந்தமுறை என் புரு
ஷன் என்னுடனே வாசமாவார், ஏனெனில்
அவருக்கு ஆறு குமாரரைப் பெற்றேனென்று
சொல்லி, அவனுக்குச் செபுலோனென்று பெ
௨௧ யரிட்டாள். — பிற்பாடு அவள் ஒரு குமாரத்தி
யைப் பெற்று, அவளுக்குத் தீனாளென்று பெய
ரிட்டாள்.

௨௨ ஆனால் பராபரன் ராகேலை நினைத்தார்; அவ
ளைப் பராபரன் கேட்டருளி, அவள் கர்ப்பத்
௨௩ தைத் திறந்தார். — அவள் கர்ப்பம்தரித்து ஒரு
குமாரனைப் பெற்று, [1]பராபரன் என் நிந்தையை
௨௪ நீக்கிவிட்டாரென்றும்,—கர்த்தர் எனக்கு இன்
னம் ஒரு குமாரனைக் கொடுப்பாராகவென்றும்
சொல்லி, அவனுக்கு யோசேப்பென்று பெய
ரிட்டாள்.

௨௫ அப்பால் சம்பவித்ததேதெனில், ராகேல்
யோசேப்பைப் பெற்றபிற்பாடு, யாக்கோபு லா
பானோடே சொன்னதாவது: நான் என் தானத்
திற்கும் என் தேசத்திற்கும் போக என்னை
அனுப்புவியும்.—நான் உமக்கூழியம்செய்து சம் ௨௬
பாதித்த என் பெண்சாதிகளையும், என் பிள்ளைக
ளையும், எனக்குத் தாரும்; நான் போவேன்;
ஏனெனில் நான் உம்மிடத்தில் சேவித்த சேவ
கத்தை நீர் அறிந்திருக்கிறீரென்றான்.

அப்பொழுது லாபான் அவனோடே சொன் ௨௭
னதாவது: உன் கண்களில் எனக்குத் தயவுகி
டைத்ததேயானால் இரு; உன்நிமித்தம் கர்த்தர்
என்னை ஆசீர்வதித்தாரென்கிறது எனக்குத் தெ
ரியவந்தது. — உன் சம்பளம் இன்னதென்று எ ௨௮
னக்குக் குறித்துச்சொல், நான் தருவேனென்
றான்.

அப்பொழுது அவன் இவனோடே சொன்ன ௨௯
தாவது: நான் உம்மை எப்படிச் சேவித்தேனென்
றும், உம்முடைய மந்தை என் கிட்ட எப்படி
யிருந்ததென்றும் அறிந்திருக்கிறீர்.—ஏனெனில் ௩௰
எனக்குமுன் உமக்கிருந்தது கொஞ்சம், அது
திரளாயிற்று; கர்த்தர் உம்மை என் கால் வருத்தத்
தினால் ஆசீர்வதித்தார்; இப்பொழுதும் நான்
என் வீட்டுக்கும் சம்பாதித்துக்கொள்வது எப்
பொழுதென்றான்.

அப்பொழுது இவன், நான் உனக்கென்ன ௩௧
கொடுக்கவேண்டுமென்றான்; யாக்கோபு சொன்
னதாவது: நீர் எனக்கு ஒன்றும் கொடுக்கவேண்
டாம்; நான் சொல்வதை நீர் எனக்குச் செய்
தால், உம்முடைய மந்தையைத் திரும்ப மேய்த்
துக் காப்பேன். — நான் இன்றைக்கு உம்மு ௩௨
டைய மந்தையை எல்லாம் கடந்துவந்து, அதி
லே இருக்கிற ஆடுகளில் புள்ளியுள்ளதும் மறுப்
பற்றினதுமான யாவையும், கறுப்பான யாவை
யும், வெள்ளாடுகளில் மறுப்பற்றினதும் புள்ளி
யுள்ளதுமானவைகளையும் பிரித்துப்போடுவேன்;
அப்படிக்கொத்தவை இனி என்னுடைய சம்பள
மாயிருப்பது.—அப்படியே இனிமேல் என் சம் ௩௩
பளக்காரியம் உமக்குமுன்பாகத் தீரத்தக்கதாக
நீர் வரும்பொழுது, என்னுடைய நீதி எனக்குப்
பேசும்; வெள்ளாடுகளில் புள்ளியில்லாததும்,
மறுப்பற்றியிராததும், ஆடுகளில் கறுப்பில்லாத
துமானவை எவையாகிலும் என்னிடத்திலே
இருந்தால், அவை திருடினவைகளாயிருக்கு
மென்றான்.

அப்பொழுது லாபான், இதோ உன் வார்த் ௩௪
தையின்படியானால் வாசியென்று சொல்லி.—
அந்நாளிலே கலப்புநிறமுள்ளதும் மறுப்பற்றி ௩௫
னதுமான கடாக்களையும், புள்ளியுள்ளதும் மறுப்
பற்றினதுமான எல்லா வெள்ளாடுகளையும், ஆடு
களில் வெண்மைபற்றினவைகளெல்லாவற்றை
யும், கறுப்பானவைகளெல்லாவற்றையும், பிரித்
துக்கொண்டு, தன் குமாரர் கையில் ஒப்புவித்து,—
தனக்கும் யாக்கோபுக்கும் மூன்றுநாள் பயண ௩௬
தூரம் வைத்தான்; லாபானுடைய மற்ற ஆடுகளை
யாக்கோபு மேய்த்தான்.

1 லூக். ௧. ௨௫.

௩௭ அப்பொழுது யாக்கோபு பச்சையாயிருக்கிற
புன்னைமரமும், அலேலான் கொட்டைச்செடி
யும், கஸ்தானியக்கொட்டை மரமுமான கொப்
புகளை வாங்கிக்கொண்டு, கரணைகரணையாய்
௩௮ வெண்மைகாணப் பட்டையை உரித்து,—தான்
உரித்த கொப்புகளை ஆடுகள் குடிக்கவருகிற கால்
வாய்களிலும், தண்ணீர்த்தொட்டிகளிலும், ஆடு
களுக்கெதிராகப் போட்டுவைத்தான்; ஏனென்
றால், அவைகள் குடிக்கவருகையில் பொலியும்.-
௩௯ ஆடுகள் கொப்புகளுக்குமுன்பாகப் பொலிந்
தபடியினாலே, ஆடுகள் கலப்புநிறமுள்ளதும்
புள்ளியுள்ளதும் மறுப்பற்றினதுமான குட்டிக
௪௰ ளைப் போட்டன. — அந்த ஆட்டுக்குட்டிகளை
யாக்கோபு பிரித்து, ஆடுகளை லாபானுடைய
மந்தையிலிருக்கும் கலப்புநிறமானவைகளுக்
கும், கறுப்பானவைகளெல்லாவற்றிற்கும் எதி
ராக நிறுத்தி, தனக்குத் தனிப்புற மந்தைகளை
வைத்துக்கொண்டு, இவைகளை லாபானின் மந்
௪௧ தையோடே வைக்காதிருந்தான்.-சம்பவித்ததே
தென்றால், காலத்திலே பொலிகிற ஆடுகள் பொ
லியும்பொழுதெல்லாம், யாக்கோபு அந்தக்
கொப்புகளைக் கால்வாய்களில் ஆடுகளின் கண்
களுக்குமுன்பாக அவைகள் கொப்புகளுக்
கெதிரே பொலியும்படிக்குப் போட்டுவைப்
௪௨ பான்.—ஆடுகள் காலம் பிந்திப் பொலியும்பொ
ழுதோவெனில், அவைகளைப் போடாதேபோ
னான்; ஆகையால் காலம் பிந்திப் பிறந்தவை
கள் லாபானையும், காலத்திலே பிறந்தவைகளோ
௪௩ வெனில் யாக்கோபையும் சேர்ந்தன.—இந்தப்
பிரகாரமாக இந்தப் புருஷன் மிகுதியும் பெரு
கினான்; அவனுக்குத் திரளாடுகளும், வேலைக்கா
ரிகளும், வேலைக்காரரும், ஒட்டகங்களும், கழு
தைகளும் உண்டாயின.

## ௩௧. அதிகாரம்.

௧. யாக்கோபு வெறுப்படைந்து இரகசியமாய் லாபானைவிட்டோடிப் போனது. ௰௯. ராகேல் தன் தகப்பனுடைய விக்கிரகங்களைத் திருடிக் கொண்டது. ௨௨. லாபான் யாக்கோபைப் பின்தொடர்ந்து, ௨௬. அவன் செய்த குற்றத்தைக்குறித்து அவனிடத்தில் பேசினது. ௩௪. ராகேல் விக்கிரகங்களை மறைக்கச்செய்த உபாயத்தைச் சொல்லியது. ௩௬. யாக்கோபு லாபான் தனக்குச் செய்த தீங்குகளைக்குறித்துச் சொன்னது. ௪௪. கலெயேத்திலே லாபானும் யாக்கோபும் உடம்படிக்கைபண்ணினது.

௧ எங்கள் தகப்பனுக்குண்டானவைகளை எல்லாம்
யாக்கோபு எடுத்துக்கொண்டானென்றும், எங்
கள் தகப்பனுக்குண்டானதினாலே இந்த ஆஸ்
தியை எல்லாம் சம்பாதித்தானென்றும், லாபா
னின் குமாரர் சொன்ன வார்த்தைகளை அவன்
௨ கேட்டான்.—லாபானின் முகத்தை யாக்கோபு
பார்த்தபொழுது, இதோ அது நேற்றும் முந்து
நேற்றும் இருந்ததுபோலத் தனக்கிருந்ததில்லை
என்று கண்டான்.
௩ கர்த்தரோவென்றால் யாக்கோபுடனே, உன்
பிதாக்களின் தேசத்திற்கும் உன் இனத்தண்டை
க்கும் திரும்பிப்போ; [1]உன்னோடேகூட இருப்
௪ போம் என்றார்.—அப்பொழுது யாக்கோபு ரா
கேலையும்லேயாளையும் வெளியிலேதன் மந்தை
அண்டைக்கழைத்தனுப்பி, — இவர்களோடே ௫
சொன்னதாவது: உங்கள் தகப்பனுடைய முகம்
நேற்றும் முந்துநேற்றும் இருந்ததுபோல எனக்கி
ருக்கவில்லை என்று நான் காண்கிறேன்; ஆனால்,
என் தகப்பனுடைய பராபரன் என்னோடேகூட
இருந்தார்.—உங்கள் தகப்பனுக்கு என் முழுப்ப ௬
லத்தினாலும் ஊழியம்செய்தேனென்று நீங்கள்
அறிவீர்கள்.—உங்கள் தகப்பனோவெனில் என் ௭
னை எத்தி, என் சம்பளத்தைப் பத்துமுறை மாற்
றினான்; ஆனால் எனக்குத் தீங்குசெய்யப்
பராபரன் அவனுக்கு இடம் கொடுத்ததில்
லை.— புள்ளியுள்ளவைகள் உன் சம்பளமாயி ௮
ருக்குமென்று அவன் சொன்னபொழுது, மந்
தை எல்லாம் புள்ளியுள்ள குட்டிகளைப் போட்
டது; கலப்புநிறமானவைகள் உன் சம்பளமா
யிருக்குமென்று அவன் சொன்னபொழுதோ
வெனில், மந்தை எல்லாம் கலப்புநிறக் குட்டி
களைப் போட்டது. — இந்தப்பிரகாரமாகப் பரா ௯
பரன் உங்கள் தகப்பனுடைய மந்தையைப் பறி
த்து, எனக்குக் கொடுத்தார்.—ஆடுகள் பொலியும் ௰
காலத்திலே சம்பவித்ததேதென்றால், நான் சொ
ப்பனத்தில் என் கண்களை ஏறெடுக்கும்பொ
ழுது, இதோ ஆடுகளின்மேல் ஏறுகிற கடாக்கள்
கலப்புநிறமானவைகளும், புள்ளியுள்ளவைக
ளும், பொட்டுள்ளவைகளுமாயிருந்தனவென்று
கண்டேன். — பராபரனுடைய தூதனானவர் ௰௧
சொப்பனத்தில் என்னுடனே, யாக்கோபே எ
ன்றார்; இதோ இருக்கிறேனென்றேன். — அப் ௰௨
பொழுது அவர் சொன்னதாவது: உன் கண்களை
ஏறெடுத்துப்பார்; ஆடுகளின்மேல் ஏறுகிற கடாக்
களெல்லாம் கலப்புநிறமானவைகளும், புள்
ளியுள்ளவைகளும், பொட்டுள்ளவைகளுமாயி
ருக்கின்றன; ஏனெனில் லாபான் உனக்குச்
செய்கின்றவைகளையெல்லாம் கண்டோம்.—[2]நீ ௰௩
தூணை அபிஷேகம்பண்ணி, நமக்கு ஒரு பொ
ருத்தனையைப் பண்ணின பேத்தேலிலே உனக்
குத் தரிசனையான பராபரன் நாம்தானே; இப்
பொழுதும் நீ எழுந்து, இந்தத் தேசத்தைவிட்டுப்
புறப்பட்டு, உன் இனத்தின் தேசத்திற்குத் திரும்
பிப்போ என்று சொன்னாரென்றான்.

அப்பொழுது ராகேலும் லேயாளும் அவனுக் ௰௪
குப் பிரதியுத்தாரமாகச் சொன்னதாவது: எங்
கள் தகப்பன் வீட்டிலே எங்களுக்கு இனிப்
பங்கும் சுதந்தரமும் உண்டோ?—அவரால் நாங் ௰௫
கள் அந்நியராய் எண்ணப்பட்டதில்லையோ? ஏ
னெனில் அவர் எங்களை விற்று, எங்கள் பணத்
தைத் தின்னவே தின்றார்.—ஆகையால் பராபரன் ௰௬
எங்கள் தகப்பனிடத்தில் பறித்த ஐசுவரியமெல்
லாம் எங்களுடையதும் எங்கள் பிள்ளைகளுடை
யதும்தானே, இப்பொழுதும் பராபரன் உம்
மோடே சொன்னவை எல்லாவற்றையும் செய்
யும் என்றார்கள்.

1 ௧ மோ. ௨௮. ௨௫.

2 ௧ மோ. ௨௮. ௰௮. ௰௯.

௰௭ அப்பொழுது யாக்கோபு எழுந்து, தன் பிள்
ளைகளையும் தன் பெண்சாதிகளையும் ஒட்டகங்
௰௮ கள்மேல் ஏற்றிக்கொண்டு,-தன் மிருகஜீவன்கள்
அனைத்தையும் தான் பதான்அராமிலே தேடிச்
சம்பாதித்த தன்னுடைய மந்தை ஆஸ்தி எல்லா
வற்றையும் கூட்டிக்கொண்டு, கானான்தேசத்தி
லே தன் தகப்பனாகிய ஈசாக்கண்டைக்குப் போ
௰௯ கப் புறப்பட்டான்.—லாபானோவெனில், தன்
ஆடுகளை மயிர்கத்தரிக்கப் போயிருந்தான்; அந்
தச் சமயத்திலே ராகேல் தன் தகப்பனுடைய
௨௰ விக்கிரகங்களைத் திருடிக்கொண்டாள். — அப்
படியே யாக்கோபு, தான் ஓடிப்போகிறதைச்
சூரியனாகிய லாபானுக்கு அறிவியாததினால்,
௨௧ அவன் மனதைக் களவுசெய்து, — தனக்குண்
டானவைகளை எல்லாம் கூட்டிக்கொண்டு ஓடிப்
போனான்; அவன் எழுந்து ஆற்றைக் கடந்து,
கீலேயாத் பர்வதத்திற்கு நேராய்த் தன் முகத்
தைத் திருப்பிப்போனான்.
௨௨ ஆனால் யாக்கோபு ஓடிப்போனது மூன்றாம்
நாளிலே லாபானுக்கு அறிவிக்கப்பட்டது.—
௨௩ அப்பொழுது அவன் தன் சகோதரரைக் கூட்
டிக்கொண்டு, ஏழுநாள் பயணம் அவனைப் பின்
தொடர்ந்து, கீலேயாத் பர்வதத்திலே அவனைக்
௨௪ கிட்டிச் சேர்ந்தான்.—ஆனால் பராபரன் இராத்
திரியிலே சூரியனாகிய லாபான் அண்டைக்
குச் சொப்பனத்திலே வந்து, அவனோடே, நீ
யாக்கோபோடே நலம்தப்பித் தீங்காய்ப் பே
௨௫ சாதபடிக்கு எச்சரிக்கையாயிருவென்றார்.—லா
பான் யாக்கோபைக் கிட்டிச்சேர்ந்தான், யாக்
கோபு பர்வதத்திலே தன் கூடாரத்தைப் போட்
டிருந்தான்; லாபானும் தன் சகோதரரோடே
கூடக் கீலேயாத் பர்வதத்திலே கூடாரம்போட்
டான்.
௨௬ அப்பொழுது லாபான் யாக்கோபோடே சொ
ன்னதாவது: நீ என் மனதைக் களவுசெய்து,
என் குமாரத்திகளைப் பட்டையத்தினால் சிறை
பிடித்தவர்களைப்போலக் கொண்டுபோனது என்
௨௭ னசெய்கை?—நீ ஓடிப்போவதை மறைத்து, எனக்
கு அதை அறிவியாமல் திருட்டளவாய் என்னை
விட்டுப் போனதென்ன? நான் உன்னைச் சந்தோ
ஷத்தோடும், சங்கீதங்களோடும், மேளத்தோடும்,
௨௮ சுரமண்டலத்தோடும் அனுப்புவேனே. — என்
பிள்ளைகளையும், என் குமாரத்திகளையும், நான்
முத்தம்செய்ய நீ இடம்கொடாதேபோனதென்
ன? இப்பொழுதும் நீ இப்படிச் செய்ததை மதி
௨௯ யில்லாமல் செய்தாய். — உங்களுக்குப் பொல்
லாப்புச் செய்ய என் கையிலே வல்லமை இருக்
கும், ஆனால் நீ யாக்கோபோடே நலம்தப்பித்
தீங்காய்ப் பேசாதபடிக்கு எச்சரிக்கையாயிரு
வென்று உங்கள் தகப்பனுடைய பராபரன்
௩௰ இராத்திரி என்னோடே சொன்னார்.—இப்பொழு
தும் உன் தகப்பனுடைய வீட்டின்மேலுள்ள
வாஞ்சையினாலே நீ புறப்பட்டுப்போகிறபொ
ழுது, என் தேவர்களை ஏன் திருடிக்கொண்டாய்
என்றான்.

யாக்கோபு லாபானுக்குப் பிரதியுத்தாரமாகச் ௩௧
சொன்னதாவது: உம்முடைய குமாரத்திகளை
என்னிடத்திலிருந்து பறித்துக்கொள்வீரோ என்
று நான் பயப்பட்டதினாலே இப்படி வந்துவிட்
டேன்.—ஆனால் யாரிடத்தில் உம்முடைய தே ௩௨
வர்களைக் கண்டுபிடிப்பீரோ, அவன் உயிரோ
டிருக்கவேண்டாம்; என் வசத்திலே உம்முடை
யதாயிருக்கிறதேதென்று நீர் நம்முடைய சகோ
தரருக்குமுன்பாகப் பார்த்தறிந்து, அதை எடுத்
துக்கொள்ளுமென்றான்; ஏனெனில் ராகேல்
அவைகளைத் திருடினதை யாக்கோபு அறியாதி
ருந்தான். — அப்பொழுது லாபான் யாக்கோ ௩௩
பின் கூடாரத்திலும் லேயாளின் கூடாரத்தி
லும் இரண்டு வேலைக்காரிகளின் கூடாரத்திலும்
பிரவேசித்து, அவைகளைக் கண்டுபிடியாமல்,
லேயாளின் கூடாரத்திலிருந்து புறப்பட்டு, ரா
கேலின் கூடாரத்திலே வந்தான்.—ராகேலோ ௩௪
வெனில் சுரூபங்களை எடுத்து, ஒட்டகக் கல்
லணையில் போட்டு, அவைகள்மேல் உளுக்காந்
திருந்தாள்; லாபான் கூடாரமெங்கும் தடவிப்
பார்த்து, அவைகளைக் கண்டுபிடியாதேபோ
னான்.—அவள் தன் தகப்பனோடே, நான் உமக் ௩௫
குமுன்பாக எழுந்திருக்கக்கூடாதது, என் ஆண்
டவனுடைய கண்களுக்குத் தாங்கலாயிருக்க
வேண்டாம்; ஏனெனில் ஸ்திரிகளுக்குள்ள வழி
பாடு எனக்கு வந்திருக்கின்றது என்றாள்; அப்ப
டியே அவன் சோதித்தும் அந்தச் சுரூபங்களைக்
கண்டுபிடியாதேபோனான்.
அப்பொழுது யாக்கோபுக்குக் கோபமூண்டு, ௩௬
லாபானோடே வாக்குவாதம்பண்ணி, லாபானுக்
குப் பிரதியுத்தாரமாகச் சொன்னதாவது: நீர் என்
னை எரிபந்தமாய்ப் பின்தொடருகிறதற்கு என்
னுடைய மீறுதலென்ன? என் பாவமென்ன?—
என் தட்டுமுட்டுகளையெல்லாம் தடவிப்பார்த் ௩௭
தீரே; உம்முடைய வீட்டுத் தட்டுமுட்டுகளி
லெல்லாம் எதைக் கண்டுபிடித்தீர்; என் சகோதர
ருக்கும் உம்முடைய சகோதரருக்கும் முன்பாக
இங்கே வையும்; அவர்கள் எங்கள் இருவருக்கும்
நடுவறுக்கக்கடவர்கள்.—இந்த இருபது வருஷம் ௩௮
உம்மிடத்திலே நான் இருந்தேன்; உம்முடைய
ஆடுகளும் வெள்ளாடுகளும் சினை அழிந்ததில்லை;
உம்முடைய மந்தையின் கடாக்களை நான் தின்ற
தில்லை.—பீறுண்டதை நான் உம்மண்டைக்குக் ௩௯
கொண்டுவாராமல், அதற்கு நான் உத்தரவாதம்
பண்ணினேன்; பகலில் களவுபோனதையும்,
இரவில் களவுபோனதையும், என் கையில் கேட்
டீர்.—பகலிலே வெயிலும், இரவிலே குளிரும், ௪௰
என்னைப் பட்சித்தன; என் நித்திரை என் கண்
களைவிட்டு விலகிற்று; இப்படியிருந்தேன்.—
இந்த இருபது வருஷம் உம்முடைய வீட்டிலே ௪௧
இருந்தேன்; பதினாலு வருஷம் உம்முடைய இ
ரண்டு குமாரத்திகளுக்காகவும், ஆறு வருஷம்
உம்முடைய மந்தைக்காகவும், உம்மைச் சேவித்
தேன்; பத்துமுறை என் சம்பளத்தை மாற்றினீர்.—
என் பிதாவின் பராபரனாகிய ஆபிரகாமின் பரா ௪௨

பரனும் ஈசாக்கின் பயமும் எனக்கிராதேபோ
ஞல், நீர் இப்பொழுது வெறுமையே என்னை
அனுப்பிவிடுவீர்; பராபரனேவென்றால், என்
சிறுமையையும் என் கைகளின் வருத்தத்தையும்
பார்த்து, இராத்திரி உம்மைக் கடிந்துகொண்டா
ரென்றான்.
௪௩ அப்பொழுது லாபான் யாக்கோபுக்குப் பிர
தியுத்தாரமாகச் சொன்னதாவது: குமாரத்திகள்
என் குமாரத்திகளும், பிள்ளைகள் என் பிள்ளைக
ளும், மந்தை என் மந்தையும்தானே; நீ காண்கி
றவையெல்லாம் என்னுடையவைகள், இந்த
என்னுடைய குமாரத்திகளுக்கும் அல்லது அவர்
கள் பெற்ற பிள்ளைகளுக்கும் இன்று என்னசெய்
௪௪ குவேன்? — இப்பொழுதும் வா, நானும் நீயும்
ஒரு உடம்படிக்கையைப் பண்ணிக்கொள்ளு
வோம்; அது எனக்கும் உனக்கும் நடுவான சாட்
சியாயிருப்பதாக என்றான்.
௪௫ அப்பொழுது யாக்கோபு ஒரு கல்லை எடுத்து,
௪௬ அதை, தூணாக நிறுத்தினான். — பிற்பாடு யாக்
கோபு தன் சகோதரரோடே கற்களைச் சேருங்க
ளென்றான்; அப்பொழுது கற்களை எடுத்துக்கொ
ண்டுவந்து, ஒரு குவியலுண்டாக்கி, அந்தக் கு
௪௭ வியலின்மேல் அசனம்பண்ணினார்கள்.-அதற்கு
லாபான் எகார்சகதுத்தா என்று பெயரிட்டான்;
யாக்கோபோவெனில் அதற்குக் காலெயேத்
என்று பெயரிட்டான்.
௪௮ இந்தக் குவியல் இன்று எனக்கும் உனக்கும்
நடுவான சாட்சி என்று லாபான் சொன்னபடி
யினாலே, அதின் பெயர், காலெயேத் என்னப்
௪௯ பட்டது. — மிஸ்பாவென்றும் சொல்லப்பட்
டது; ஏனெனில். அவன் சொன்னதாவது: நாம்
ஒருவரை ஒருவர்விட்டு மறைந்தபிற்பாடு நீ என்
குமாரத்திகளை உபத்திரவப்படுத்தி, என் குமாரத்
திகளைத்தவிர வேறு ஸ்திரிகளை விவாகம்பண்ணி
னாயானால், கர்த்தர் எனக்கும் உனக்கும் நடுவ
௫௰ ராய்க் கண்காணிக்கக்கடவர்.—நம்முடனே ஒரு
வருமில்லை; பார், பராபரனே எனக்கும் உனக்
௫௧ கும் நடுவான சாட்சி என்றான்.-பின்னையும் லா
பான் யாக்கோபோடே சொன்னதாவது: இதோ
இந்தக் குவியல், இதோ எனக்கும் உனக்கும் நடு
௫௨ வாக நான் போட்ட தூண்.—தீங்குசெய்ய நான்
இந்தக் குவியலைக் கடந்து உன்னண்டைக்கு
வாராமலும், நீ இந்தக் குவியலையும் இந்தத் தூ
ணையும் கடந்து என்னண்டைக்கு வாராமலும்
இருக்கிறதற்கு, இந்தக் குவியலும் சாட்சி, இந்
௫௩ தத் தூணும் சாட்சி.—ஆபிரகாமின் பராபரனும்
நாகோரின் பராபரனும் அவர்கள் பிதாக்களின்
பராபரனுமானவர் நமக்குள்ளே நடுவராயிருக்
கக்கடவரென்றான்; அப்பொழுது யாக்கோபு
தன் தகப்பனாகிய ஈசாக்குடைய பயத்தின்மேல்
ஆணையிட்டான்.
௫௪ பிற்பாடு யாக்கோபு பர்வதத்தின்மேல் பலி
யிட்டு, தன் சகோதரரை அப்பம் புசிக்க அழைத்
தான்; அப்படியே அப்பம் புசித்து, பர்வதத்தி

1 சங். ௩௪. ௮.—2 ௨ இரா. ௬. ௰௬, ௰௭.

லே இராத்தங்கினார்கள்.—லாபான் அதிகாலமே ௫௫
எழுந்திருந்து, தன் பிள்ளைகளையும் தன் குமாரத்
திகளையும் முத்தம்செய்து, அவர்களை ஆசீர்வதித்
தான்; பிற்பாடு லாபான் புறப்பட்டுத் தன்னிடத்
திற்குத் திரும்பிப்போனான்.

## ௩௨. அதிகாரம்.

௧. யாக்கோபு மக்னாயீமிலே தரிசனை கண்டது. ௩. அவன் ஏசாவுக்குச் செய்தி அனுப்பினது. ௯. ஏசா வருகிறதைக் கேள்விப்பட்டுப் பயந்தது. ௯. இரட்சிக்கப்படும்படி கர்த்தரை வேண்டிக்கொண்டது. ௰௩. அவன் ஏசாவுக்கு வெகுமானம் அனுப்பினது. ௨௪. அவன் பெனியேலிலே தேவதூதனோடே போராடி இஸ்ரவேலென்ற பெயர்பெற்றது.

யாக்கோபு தன் வழியே போகப் புறப்பட் ௧
டான்; அப்பொழுது [1]பராபரனுடைய தூதர்
அவனைச் சந்தித்தார்கள். — [2]யாக்கோபு அவர்க ௨
ளைக் காண்கிறபொழுது, இது பராபரனுடைய
இராணுவமென்று சொல்லி, அந்தத் தலத்திற்கு
மக்னாயீமென்று பெயரிட்டான்.
பிற்பாடு யாக்கோபு தனக்கு முன்னாக ஏதோம் ௩
சீமையாகிய சேயீர் தேசத்திலிருக்கிற தன் சகோ
தரனாகிய ஏசாவண்டைக்குத் தூதரை அனுப்பி,-
அவர்களுக்குக் கற்பித்ததாவது: நீங்கள் என் ௪
ஆண்டவனாகிய ஏசாவோடே சொல்லவேண்டி
யதேதெனில், நான் லாபானிடத்திலே இற்றை
வரைக்கும் தங்கித்தரித்திருந்தேன். — எனக்கு ௫
எருதுகளும், கழுதைகளும், ஆடுகளும், வேலைக்
காரரும்,வேலைக்காரிகளும் உண்டு;உம்முடைய
கண்களில் எனக்குத் தயவுகிடைக்கத்தக்கதாக
என் ஆண்டவனுக்கு இதை அறிவிக்க மனிதரை
அனுப்பினேனென்று உம்முடைய ஊழியக்கார
னாகிய யாக்கோபு சொல்லச்சொன்னானென்பது
தான் என்றான்.
அந்தத் தூதர்கள் யாக்கோபண்டைக்குத் திரு ௬
ம்பவந்து, நாங்கள் உம்முடைய சகோதரனாகிய
ஏசாவண்டைக்குப் போய்வந்தோம்; அவனும்
நானூறுபேரோடே உமக்கெதிராக வருகிறான்
என்றார்கள்.
அப்பொழுது யாக்கோபு மிகவும் பயந்து, மன ௭
இடுக்கம் அடைந்து, தன்னண்டையிலிருந்த
சனத்தையும் ஆடுமாடுகளையும் ஒட்டகங்களையும்
இரண்டு பாளயமாகப் பிரித்து,—ஏசா ஒரு பா ௮
ளயத்தின்மேல் வந்து அதை முறிய அடித்தால்,
மறுபாளயம் தப்ப இடம் உண்டு என்றான்.
பிற்பாடு யாக்கோபு சொன்னதாவது: [3]என் ௯
தகப்பனாகிய ஆபிரகாமின் பராபரனும் என்
தகப்பனாகிய ஈசாக்கின் பராபரனுமானவரே,
உன் தேசத்திற்கும் உன் இனத்தண்டைக்கும்
திரும்பிப்போ; உனக்கு நன்மைசெய்வோம் எ
ன்று என்னோடே சொல்லியிருக்கிற கர்த்தா
வே,—[4]தேவரீர் உம்முடைய அடியானுக்குச் ௰
செய்துவந்த எல்லாக் கிருபைகளுக்கும் எல்லா
உண்மைக்கும் நான் எம்மாத்திரம்? ஏனெனில்
நான் என் கோலும் கையுமாய் இந்த யோர்தா
னைக் கடந்தபோனேன்; இப்பொழுதோவெ
னில், இரண்டு பாளயங்களுக்கு உடையவனா

3 ௧ மோ. ௩௧. ௩.—4 ௨ சாமு. ௭. ௰௮.

௰௧ னேன் —என் சகோதரனாகிய ஏசாவின் கைக்கு
என்னைத்தப்புவியும்; அதேனெனில் அவன் வந்
து என்னைத் தாயும் பிள்ளைகளுமாய் மடங்கடிப்
பானேவென்று அவனுக்கு நான் பயந்திருக்கி
௰௨ றேன்.—நீரோவெனில் [1]நாம் உனக்கு நன்மை
செய்யவேசெய்து, உன் வித்தை ஏராளத்தினாலே
எண்ணத்தொலையாத கடற்கரை மணலைப்போ
லாக்குவோமென்று சொன்னீரே என்றான்.

௰௩ அவன் அன்று இராத்திரி அங்கே தங்கி, தன்
கைக்கு உதவினவைகளிலே தன் சகோதரனாகிய
௰௪ ஏசாவுக்கு வெகுமானமாக,—இருநூறு வெள்
ளாடுகளையும் இருபது வெள்ளாட்டுக் கடாக்க
ளையும், இருநூறு ஆடுகளையும், இருபது ஆட்டுக்
௰௫ கடாக்களையும்,—பால்கொடுக்கிற முப்பது ஒட்
டகங்களையும், அவைகளின் குட்டிகளையும், நாற்
பது கிடாரிகளையும், பத்துக் காளை எருதுகளை
யும், இருபது கோளிகைக் கழுதைகளையும், பத்
துக் கழுதைக்குட்டிகளையும் பிரித்தெடுத்து,—
௰௬ வேலைக்காரர் கையில் ஒவ்வொரு மந்தைகளைத்
தனித்தனியாக ஒப்புவித்து, தன் வேலைக்கார
ரோடே, நீங்கள் எனக்கு முன்னாய்த் தாண்டிப்
போய், மந்தை மந்தைக்கும் இடம்விடுங்க
௰௭ ளென்று சொல்லி,—முந்தினவனுக்குக் கற்பித்
ததாவது: என் சகோதரனாகிய ஏசா உனக்கு
எதிர்ப்பட்டு, நீ யாருடைய மனிதன்? நீ எங்கே
போகிறாய்? உனக்குமுன்னாகப் போகிற இவை
கள் யாருடையவைகளென்று உன்னைக் கேட்
௰௮ டால்,-அப்பொழுது நீ, இது உம்முடைய ஊழி
யக்காரனாகிய யாக்கோபுடையது; இது என்
ஆண்டவனாகிய ஏசாவுக்கு அனுப்பப்படும் வெ
குமானம்; இதோ அவனும் எங்கள் பிறகாலே
௰௯ வருகிறானென்று சொல் என்றான்.-இரண்டாம்
மூன்றாம் வேலைக்காரனுக்கும் மந்தைகளின் பிற
காலே போகிற அனைவருக்கும் அவன் கற்பித்த
தாவது: நீங்கள் ஏசாவைக் காணும்பொழுது,
௨௰ இந்தப்பிரகாரமாக அவனோடே சொல்லி,—இ
தோ உன் ஊழியக்காரனாகிய யாக்கோபு எங்கள்
பிறகாலே வருகிறானென்கிறதையும் சொல்லுங்
களென்று கற்பித்தான்; ஏனெனில் எனக்குமுன்
னாகப் போகிற வெகுமானத்தினாலே அவன் மு
கத்தைக் குளிரப்பண்ணுவேன்; பிற்பாடு அவன்
முகத்தைப் பார்ப்பேன்; அப்பொழுது என்பே
ரில் தயவுவைப்பானாக்கும் என்றான்.

௨௧ அப்படியே வெகுமானம் அவனுக்குமுன்னா
கப் போயிற்று; அவனோவெனில் அன்று இராத்
௨௨ திரிப் பாளயத்திலே தங்கி,—இராத்திரியிலே
எழுந்திருந்து, தன் இரண்டு பெண்சாதிகளையும்
தன் இரண்டு வேலைக்காரிகளையும் தன்னுடைய
பதினொரு குமாரரையும் அழைத்துக்கொண்டு,
யாப்போக்கென்ற ஆற்றின் துறையைக் கடந்
௨௩ தான்.-அவர்களை அழைத்துக்கொண்டு,ஆற்றைக்
கடக்கப்பண்ணி, தனக்குண்டானவைகளையும்
அக்கரைப்படுத்தினான்.

ஆனால் யாக்கோபு பிந்தித் தனித்திருந்தான்; ௨௪
அப்பொழுது ஒரு புருஷன் பொழுது விடியும்
மட்டும் அவனோடே போராடி,—அவனை மேல் ௨௫
கொள்ளக்கூடாதென்று கண்டு, அவனுடைய
கீல் இடுப்புச்சந்து தொட்டார்; அதினால் யாக்
கோபின் தொடை அவரோடே போராடுகையில்
சுளுக்கிற்று.—அவர் நாம் போகட்டும், ஏனெ ௨௬
னில் பொழுது விடிகிறது என்றார்; ஆனால் இ
வன், [2]நீர் என்னை ஆசீர்வதித்தாலொழிய உம்
மைப் போகவொட்டேனென்றான்.—அவர் இவ ௨௭
னுடனே, உன் பேரென்னவென்றார்; யாக்கோ
பென்றான்.—அப்பொழுது அவர், [3]உன்பேர் இ ௨௮
னி யாக்கோபு என்னப்படாமல் இஸ்ரவேலென்
னப்படும்; ஏனெனில் பராபரனோடும் மனித
ரோடும் போராடி மேல்கொண்டாயென்றார்.—
அப்பொழுது யாக்கோபு, உம்முடைய நாமத் ௨௯
தை எனக்கறிவியுமென்று கேட்டான்; அதற்
கவர், நீ நம்முடைய நாமத்தைக் கேட்கிறதென்
னவென்று சொல்லி, அங்கே அவனை ஆசீர்வதித்
தார்.-அப்பொழுது யாக்கோபு, பராபரனை முக ௩௰
முகமாய்க் கண்டேன்; என் ஆத்துமாவும் தப்பு
விக்கப்பட்டதென்று சொல்லி, அந்த ஸ்தலத்
திற்குப் பெனீயேலென்று பேரிட்டான்.

அவன் பெனீயேலைக் கடந்துபோகையில், ௩௧
சூரியன் அவனுக்கு உதயமாயிற்று; அவனோவெ
னில் இடுப்புச் சுளுக்கினாலே நொண்டிநடந்
தான்.—அவர் யாக்கோபுடைய தொடைக்கீலின் ௩௨
ஒட்டுநரம்பைத் தொட்டபடியினாலே, இஸ்ர
வேல் புத்திரர் இந்நாள்வரைக்கும் தொடையின்
கீலிலிருக்கிற ஒட்டுநரம்பைப் புசியாதே போகி
றார்கள்.

## ௩௩. அதிகாரம்.

௧. யாக்கோபும் ஏசாவும் அன்போடே சந்தித்தது. ௰௭ யாக்கோபு சுக்கோத்துக்கு வந்தது. ௰௮. சாலேமில் ஒரு வயல்வெளியை வாங்கி அங்கே ஒரு பலிபீடத்தைக் கட்டினது.

பிற்பாடு யாக்கோபு தன் கண்களை ஏறெடுத்து, ௧
இதோ, [4]ஏசாவையும் அவனோடேகூட நானூறு
மனிதரையும் வரக்கண்டு, பிள்ளைகளை லேயா
ளண்டையிலும் ராகேலண்டையிலும் இரண்டு
வேலைக்காரிகளண்டையிலும் வெவ்வேறே பி
ரித்துவைத்து,—வேலைக்காரிகளையும் அவர்கள் ௨
பிள்ளைகளையும் முன்னாகவும், லேயாளையும் அ
வள் பிள்ளைகளையும் பிறகாலேயும், ராகேலையும்
யோசேப்பையும் பின்னாகவும் நிறுத்தி,—தான் ௩
அவர்களுக்குமுன்னாக நடந்துபோய், தன் சகோ
தரன் கிட்டச் சேரும்அளவும் ஏழுவிசை தரை
மட்டும் குனிந்து வணங்கினான்.—அப்பொழுது ௪
ஏசா அவனுக்கு எதிர்கொண்டோடி, அவனைக்
கட்டிக்கொண்டு, அவன் கழுத்திறுகப் பூண்டு,
அவனை முத்தம்செய்தான்; இருவரும் அழுதார்
கள்.—அவன் தன் கண்களை ஏறெடுத்து, பெண் ௫
சாதிகளையும் பிள்ளைகளையும் கண்டு, உன்னோ
டிருக்கிற இவர்கள் யார் என்றான்; அதற்கிவன்,

1 ௧ மோ. ௨௮. ௰௪, ௰௫.—2 ஓசே. ௰௨. ௪.
3 ௧ மோ. ௩௫. ௰.—4 ௧ மோ. ௩௨. ௬.

பராபரன் உம்முடைய ஊழியக்காரனுக்கு அரு
௬ ளின பிள்ளைகளென்றான்.—அப்பொழுது வே
லைக்காரிகளும் அவர்கள் பிள்ளைகளும் சேரவந்
௭ து வணங்கினார்கள்.—லேயாளும் அவள் பிள்ளை
களும் சேரவந்து வணங்கினார்கள்; பிற்பாடு
யோசேப்பும் ராகேலும் சேர்ந்துவந்து வணங்
௮ கினார்கள்.—அப்பொழுது அவன் நான் சந்தித்த
அந்த உன்னுடைய தண்டெல்லாம் எதுக்கென்
றான்; அதற்கிவன், என் ஆண்டவனுடைய கண்
களில் எனக்குத்தயவுகிடைக்கிறதற்குஎன்றான்.-
௯ ஆனால் ஏசா, எனக்கு நிரம்ப இருக்கின்றது
என் சகோதரனே, உன்னுடையது உனக்கிருக்
௰ கட்டும் என்றான்.-யாக்கோபோவெனில் சொன்
னதாவது: அப்படி அல்ல, உம்முடைய கண்க
ளில் எனக்குத் தயவு கிடைத்ததேயாகில், என்
காணிக்கையை என் கையிலே வாங்கிக்கொள்
ளும்; ஏனென்றால் நீர் என்னைப் பிரியமாய்ப்
பார்க்கையில், நான் உம்முடைய முகத்தைப்
பராபரனுடைய முகத்தைக் காணுகிறதுபோலக்
௰௧ கண்டேன்.—உமக்குக் கொண்டுபோகப்பட்ட
[1]என்னுடைய ஆசீர்வாதத்தை வாங்கிக்கொள்
ளும்; ஏனெனில் பராபரன் எனக்குத் தந்தருளி
னார்; வேண்டியவைகளெல்லாம் எனக்கிருக்கின்
றன என்று சொல்லி, அவனை வருந்திக்கொண்
டான்; அப்பொழுது அவன் அதை வாங்கிக்
௰௨ கொண்டு, — நாம் பயணம் புறப்பட்டுப்போ
வோம் வா, உனக்கு முன்னாக நடப்பேனென்
௰௩ றான்.-அப்பொழுது இவன் அவனோடே சொன்
னதாவது: பிள்ளைகள் இளம்பிள்ளைகளென்றும்,
பால்கொடுக்கிற ஆடுமாடுகள் என்னோடிருக்கிற
தென்றும், என் ஆண்டவன் அறிவார்; அவைகளை
ஒரேநாளில் துரிதமாய் ஓட்டினால், மந்தை எல்
௰௪ லாம் செத்துப்போம்.—என் ஆண்டவன் தன்
ஊழியக்காரனுக்குமுன்னாகப் போவாராக; நா
னோவெனில் சேயீரிலே என் ஆண்டவனண்
டைக்கு வரும்மட்டும், எனக்குமுன் நடக்கிற
மந்தைகளின் கால்நடைக்கும் பிள்ளைகளின்
கால்நடைக்கும்தக்க மெதுவாய் அவைகளை நடத்
௰௫ திக்கொண்டு வருவேனென்றான்.-அப்பொழுது
ஏசா என்னோடிருக்கிற சனத்தில் சிலரை நான்
உன்னிடத்தில் நிறுத்தட்டுமே என்றான்; அதற்
கிவன், அதேதுக்கு, என் ஆண்டவனுடைய
கண்களில் எனக்குத் தயவுமாத்திரம் கிடைக்
கட்டுமென்றான்.

௰௬ அப்படியே ஏசா அந்நாளிலே திரும்ப தன்
௰௭ வழியே சேயீருக்குப் போனான். — யாக்கோ
போவென்றால், சுக்கோத்திற்குப் பயணம்பண்
ணி, தனக்கு வீடுகட்டி, தன் மிருகசீவன்களுக்
குக் கொட்டாரங்களைப் போட்டான்; அதினா
லே அந்த ஸ்தலத்திற்குச் சுக்கோத்தென்று பேர்
தரித்தான்.

௰௮ யாக்கோபு பதான்அராமிலிருந்து வந்தபிற்
பாடு கானான்தேசத்திலிருக்கிற சீகேமின் ஊருக்
குச் சுகமாய்வந்து, ஊருக்கெதிரே பாளயம் இ
றங்கி,—தன் கூடாரத்தை நாட்டும் வயல்வெளி ௰௯
யின் நிலத்தைச் சீகேமின் தகப்பனாகிய ஏமோர்
புத்திரர்கையிலே நூறு வெள்ளிக்காசுக்குக் கொ
ண்டு, — அங்கே ஒரு பலிபீடத்தைக் கட்டி, ௨௰
பராபரன் இஸ்ரவேலின் பராபரனென்று அதற்
குப் பேரிட்டான்.

## ௩௪. அதிகாரம்.

*௧. தீனாள் சீகேமினால் கற்பழிக்கப்பட்டது. ௪. அவன் அவளை விவாகம் செய்யக் கோரினது. ௰௩. அதின்நிமித்தம் யாக்கோபின் புத்திரர் சீகேமூராரைச் சுன்னத்துப் பண்ணிக்கொள்ளவேண்டுமென்று தீர்மானித்தது. ௨௰. ஏமோரும் சீகேமும அதற்குச் சனங்களைச் சம்மதிக்கப்பண்ணினது. ௨௫. யாக்கோபின் புத்திரர் இந்தச் சமயம்பார்த்து அவர்களைச் சங்காரம்பண்ணி, ௨௭. அவர்கள் பட்டணத்தை அழித்தது. ௩௰. இப்படிச் செய்ததற்காக யாக்கோபு சிமேயோனையும் லேவியையும் கடிந்துகொண்டது.*

லேயாள் யாக்கோபுக்குப் பெற்ற அவளுடைய ௧
குமாரத்தியாகிய தீனாள் தேசத்துக் குமாரத்திகளை
ப்பார்க்கப் புறப்பட்டாள்.—அவளை ஏவியனான ௨
ஏமோரின் குமாரனும் தேசத்தின் பிரபுவுமாகிய
சீகேமென்றவன் கண்டு, அவளை அழைத்துப்
போய், அவளோடே சயனித்து, அவளைக் கற்ப
ழித்தான்.—அவன் ஆத்துமா யாக்கோபின் குமா ௩
ரத்தியாகிய தீனாள்மேலே பிடிப்பாயிருந்தது;
அவன் அந்தப் பெண்ணைச் சிநேகித்து, அந்தப்
பெண்ணின் மனதுக்கு நட்பாய்ப்பேசினான்.—
சீகேம் தன் தகப்பனாகிய ஏமோருடனே, இந்தப் ௪
பெண்ணை எனக்குக் கொள்ளுமென்று சொன்
னான்.-தன் குமாரத்தியாகிய தீனாளை அவன் தீட் ௫
டுப்படுத்தினதை யாக்கோபு கேட்டபொழுது,
அவன் குமாரர் அவனுடைய மந்தை அண்டை
யிலே வெளியிலே இருந்தார்கள்; அவர்கள்
வரும் மட்டும் யாக்கோபு மவுனமாயிருந்தான்.

ஆனால் சீகேமின் தகப்பனாகிய ஏமோர் யாக் ௬
கோபோடே பேச அவனண்டைக்குப் புறப்
பட்டு வந்தான்.—யாக்கோபின் குமாரர் செய் ௭
தியைக் கேட்டபொழுது, வெளியிலிருந்து வந்
தார்கள்; அவன் யாக்கோபின் குமாரத்தியோ
டே சயனித்ததென்கிற செய்யப்படாத மதி
கெட்ட காரியத்தை இஸ்ரவேலிலே செய்ததினா
லே, அந்த மனிதருக்கு மனம்நொந்து, அவர்க
ளுக்கு மிகவும் கோபம் மூண்டது.—ஏமோர் ௮
அவர்களோடே பேசிச் சொன்னதாவது: என் கு
மாரனாகிய சீகேமின் ஆத்துமா உங்கள் குமாரத்
தியின்மேல் வாஞ்சையாயிருக்கின்றது; அவளை
அவனுக்குப் பெண்சாதியாகக் கொடுங்கள்.—
நீங்கள் எங்களோடே சம்பந்தம் கலந்து, உங் ௯
கள் குமாரத்திகளை எங்களுக்குக் கொடுத்து,
எங்கள் குமாரத்திகளை உங்களுக்குக் கொண்டு,—
எங்களோடே குடியிருங்கள்; தேசம் உங்கள் ௰
முன்பாகக் கிடக்கிறது; அதிலே குடியிருந்து,
வியாபாரம்பண்ணி, ஆஸ்தி சம்பாதித்து, அதைக்
கையாண்டுகொண்டிருங்களென்றான்.—சீகேம் ௰௧
அவள் தகப்பனோடும் அவள் சகோதரரோடும்

1 ௧ சாமு. ௨௫. ௨௭: ௩௰. ௨௬.

சொன்னதாவது: உங்கள் கண்களில் எனக்
குத் தயவுகிடைக்கட்டும்; நீங்கள் எனக்குச்
௰௨ சொல்வதைத் தருவேன்.—என்மேல் பரியத்தை
யும் காணிக்கையையும் திரளாய்ச் சுமத்துங்கள்,
நீங்கள் எனக்குச் சொல்லும்படி தருவேன்;
அந்தப் பெண்ணைமாத்திரம் எனக்குப் பெண்சா
தியாகக் கொடுங்களென்றான்.

௰௩ அப்பொழுது யாக்கோபின் குமாரர், இவன்
தங்கள் சகோதரியாகிய தீனாளைத் தீட்டுப்படுத்
தினபடியால், சீகேமுக்கும் அவன் தகப்பனா
கிய ஏமோருக்கும் சர்ப்பனையாய் மறுமொழி
கொடுத்து, அவர்களோடே சொன்னதாவது:—
௰௪ எங்கள் சகோதரியைச் சுன்னத்தில்லாத புருஷ
னுக்குக் கொடுக்கும் காரியத்தை நாங்கள் செய்
யக்கூடாது; ஏனென்றால் அது எங்களுக்கு நிந்
௰௫ தையாயிருக்கும். — நீங்கள் உங்களிலிருக்கும்
ஆண் அனைத்தையும் சுன்னத்துப்பண்ணுகிறதி
னாலே எங்களைப்போலானீர்களேயாகில், நாங்
௰௬ கள் உங்களுக்குச் சம்மதித்து,—உங்களுக்கு எங்
கள் குமாரத்திகளைக் கொடுத்து, உங்கள் குமாரத்
திகளை எங்களுக்குக் கொண்டு, உங்களோடே
௰௭ குடியிருந்து, ஏகசனமாவோம். — சுன்னத்துப்
பண்ணிக்கொள்ள எங்கள் சொல்கேளாதே
போனீர்களேயானால், நாங்கள் எங்கள் குமாரத்
தியை அழைத்துக்கொண்டு போவோமென்றார்
கள்.

௰௮ அவர்கள் வார்த்தைகள் ஏமோருக்கும், ஏமோ
ரின் குமாரனாகிய சீகேமுக்கும், நன்றாய்க் கண்
௰௯ டன.—அப்படிச் செய்ய அந்த வாலிபன் தாம
தம்பண்ணினதில்லை; ஏனெனில் யாக்கோபு
டைய குமாரத்தியின்மேல் பிரியம் வைத்தான்;
அவன் தன் தகப்பன்வீட்டார் அனைவரிலும் கன
௨௰ மாய் எண்ணப்பட்டவனுமாயிருந்தான் —ஏமோ
ரும் அவன் குமாரன் சீகேமும் தங்கள் பட்ட
ணத்தின் ஒலிமுகவாசலில் வந்து, தங்கள் பட்
டண மனிதரோடே பேசிச் சொன்னதாவது:—
௨௧ இந்த மனிதர் நம்மோடே சமாதானமாயிருக்கி
றார்கள்; ஆகையால் அவர்கள் தேசத்திலே குடி
யிருந்து அதிலே வியாபாரம்பண்ணட்டும்; இ
தோ அவர்களுக்குமுன்பாகத் தேசம் இருபுற
மும் விஸ்தாரமாய்க் கிடக்கிறது; அவர்கள் குமா
ரத்திகளை நாம் நமக்குப் பெண்சாதிகளாகக்
கொண்டு, நம்முடைய குமாரத்திகளை அவர்க
௨௨ ளுக்குக் கொடுப்போமே —இந்த மனிதர் சுன்
னத்துப் பண்ணப்பட்டவர்களாயிருக்கிறதுபோ
ல, நாம் நம்மிலுள்ள ஆண் அனைத்தையும் சுன்
னத்துமாத்திரம் பண்ணினோமாகில், அவர்கள்
நம்மோடே ஏகசனமாகக் குடியிருப்பதற்குச்
௨௩ சம்மதிப்பார்கள்.—அவர்கள் மந்தைகளும் அவர்
கள் ஆஸ்தியும் அவர்கள் மிருகசீவன்களுமெல்
லாம் நம்மைச் சேர்வதில்லையோ? அவர்களுக்குச்
சம்மதியாகமாத்திரம் செய்தோமானால், நம்முட
௨௪ னே குடியிருப்பார்களென்றார்கள். — அப்பொ
ழுது ஏமோரின் பட்டணத்து வாசலால் புறப்படு
கிறவர்களாகிய அனைவரும் அவன் சொல்லையும்
அவன் குமாரனாகிய சீகேமின் சொல்லையும்
கேட்டு, அவன் பட்டணத்து வாசலால் புறப்ப
டுகிறவர்களாகிய ஆண்சாதியாரெல்லாரும் சுன்
னத்தடைந்தார்கள்.

மூன்றாம்நாளில் அவர்களுக்கு நோவெடுத் ௨௫
துக்கொண்டபொழுது சம்பவித்ததேதென்றால்.
யாக்கோபின குமாரரும் தீனாளின் சகோதரருமா
கிய [1]சீமேயோனும் லேவியுமென்ற இரண்டுபேர்
அவனவன் தன் தன் பட்டையத்தை எடுத்துக்
கொண்டு, பயமில்லாமல் பட்டணத்தின்மேல்
வந்து, ஆண் அனைத்தையும் கொன்று —ஏமோரை ௨௬
யும் அவன் குமாரன் சீகேமையும் பட்டையக்க
ருக்காலே கொன்றுபோட்டு, தீனாளைச் சீகே
மின் வீட்டிலிருந்து அழைத்துப் புறப்பட்டுப்
போனார்கள். — யாக்கோபின் குமாரர் வெட் ௨௭
டுண்டவர்கள்மேல் வந்து, அவர்கள் தங்கள்
சகோதரியைத் தீட்டுப்படுத்தினதற்காகப் பட்ட
ணத்தைக் கொள்ளையிட்டு, — அவர்களுடைய ௨௮
ஆடுமாடுகளையும் கழுதைகளையும் ஊரிலும் ஊர்
வெளியிலும் இருந்தவைகள் எல்லாவற்றையும்
எடுத்து,—அவர்களுடைய எல்லாத் தட்டுமுட் ௨௯
டுகளையும் அவர்களுடைய எல்லாக் குழந்தைக
ளையும் பெண்சாதிகளையும் வீட்டிலிருந்த எல்
லாவற்றையும் பிடித்துக்கொண்டு கொள்ளையா
டினார்கள்.— அப்பொழுது யாக்கோபு சிமேயோ ௩௰
னோடும் லேவியோடும் சொனனதாவது: நீங்கள்
தேசத்தில் குடியிருக்கிற கானானியரிடத்திலும்
பெரிசியரிடத்திலும் என் வாசனையைக் கெடுத்த
தினாலே என்னைக் கலங்கப்பண்ணினீர்கள்;
நான் கொஞ்சச் சனமாயிருக்கிறேன்; அவர்கள்
எனக்கு விரோதமாகக் கூட்டம்கூடி, நானும்
என் வீடும் அழிய என்னை வெட்டுவார்களே
என்றான். — அதற்கவர்கள். எங்கள் சகோதரி ௩௧
யை அவர்கள் ஒரு வேசியைப்போல நடத்தலா
மோ என்றார்கள்.

## ௩௫. அதிகாரம்.

௧. பராபரன் யாக்கோபைப் பேத்தேலுக்கு அனுப்பினது. ௨. அவன் தன் வீட்டிலிருந்த விக்கிரகங்களை விலக்கினது. ௬. பேத்தேலில் ஒரு பலிபீடத்தைக் கட்டினது. ௮. தெபோராள் மரித்தது. ௯. பராபரன் பேத்தேலில் யாக்கோபை ஆசீர்வதித்தது ௰௬. ராகேல் பென்யமீனுக்காகக் கர்ப்பவேதனைப்பட்டு ஏதேருக்குப் போகிற வழியிலே மரித்தது. ௨௨. ரூபேன் பில்காளோடே முறைகேடு செய்தது. ௨௩. யாக்கோபின் புத்திரரின்னாரென்பது. ௨௭. யாக்கோபு தன் தகப்பன் ஈசாக்கினிடத்தில் எபிரோனுக்கு வந்தது ௨௮. ஈசாக்குடைய ஆயுள், மரணம், அடக்கம் என்பவைகளைச் சொல்லியது.

பராபரனேவென்றால் யாக்கோபுடனே, நீ எ ௧
ழுந்து பேத்தேலுக்குப் போயேறி, அங்கே குடி
யிருந்து, நீ உன் சகோதரனாகிய ஏசாவின் முகத்
திற்கு விலகி ஓடிப்போகிறபொழுது. [2]உனக்
குத் தரிசனையான பராபரனுக்கு அங்கே ஒரு
பலிபீடத்தை உண்டாக்கு என்றார்.—அப்பொ ௨
ழுது யாக்கோபு தன் வீட்டாரோடும் தன்னோ

1 ௧ மோ. ௪௯. ௫, ௬.—2 ௧ மோ. ௨௮. ௰௩.—௰௯.

டேகூட இருந்த அனைவரோடும் சொன்னதா
வது: உங்கள் நடுவிலிருக்கிற அந்நியதேவர்
களை விலக்கிப்போட்டு, உங்களைச் சுத்தம்பண்
ணிக்கொண்டு, உங்கள் வஸ்திரங்களை மாற்றுங்
௩ கள். — நாம் எழுந்து பேத்தேலுக்குப் போயே
றுவோம்; என் அவதிநாளிலே எனக்கு உத்த
ரவு அருளிச்செய்து, நான் நடந்த வழியிலே என்
னோடேகூட இருந்த பராபரனுக்கு அங்கே ஒரு
பலிபீடத்தை உண்டாக்குவேனென்றான். —
௪ அப்பொழுது அவர்கள் தங்கள் கையிலிருந்த
எல்லா அந்நியதேவர்களையும், தங்கள் காதுகளி
லிருந்த கடுக்கன்களையும், யாக்கோபுக்குக் கொ
டுத்தார்கள்; யாக்கோபு அவைகளைச் சீகேம் ஊர்
அருகே இருந்த ஒரு கர்வாலியுமரத்தின்கீழே
௫ புதைத்தான்.—பிற்பாடு பயணம் புறப்பட்டார்
கள்; அவர்களைச் சுற்றிலும் இருந்த பட்டணங்
களின்மேலே பராபரனாலே பயங்கரம் உண்டா
கையால், யாக்கோபின் குமாரரைப் பின்தொடா
ராதிருந்தார்கள்.

௬ யாக்கோபும் அவனோடேகூட இருந்த எல்
லாச் சனமும் கானான்தேசத்திலிருக்கும் லூசுக்
௭ கு வந்தார்கள்; அதுவே பேத்தேல். — அங்கே
அவன் ஒரு பலிபீடத்தைக் கட்டி, தான் தன்
சகோதரனுடைய முகத்திற்கு விலகி ஓடிப்போ
கிறபொழுது, அங்கே பராபரன் தனக்கு வெளிப்
பட்டபடியினாலே, அந்த ஸ்தலத்திற்கு ஏல்
பேத்தேலென்று பேரிட்டான்.

௮ ரெபேக்காளின் தாதியாகிய தேப்போராள்
மரித்து, பேத்தேலின் பள்ளத்தாக்கில் வெளியி
லே ஒரு கர்வாலியு மரத்தின்கீழே அடக்கம்
பண்ணப்பட்டாள்; அது புலம்பலின் கர்வாலியு
மரமென்றழைக்கப்பட்டது.

௯ யாக்கோபு பதான்அராமிலிருந்து வந்தபிற்
பாடு பராபரன் அவனுக்குப் பின்னையும் தரிச
௰ னையாகி, அவனை ஆசீர்வதித்து,—அவனுடனே,
உன்பேர் யாக்கோபென்பது, இனி உன்பேர்
யாக்கோபு என்னப்படாமல், இஸ்ரவேலென்ற
பேர் உனக்கிருக்குமென்று சொல்லி, அவனுக்கு
௰௧ இஸ்ரவேலென்று பேரிட்டார். — பின்னையும்
பராபரன் அவனோடே சொன்னதாவது: நாம்
சர்வத்திற்கும் வல்ல பராபரனாயிருக்கிறோம்; நீ
பலுகிப் பெருகு; சாதியும் சாதிகளின் கூட்ட
மும் உன்னாலுண்டாகும்; இராசாக்களும் உன்
௰௨ இடுப்பின் பிறப்பாயிருப்பார்கள்.—நாம் ஆபிர
காமுக்கும் ஈசாக்குக்கும் கொடுத்த தேசத்தை
உனக்குத் தருவோம்; உனக்குப்பிற்பாடு உன்
வித்துக்கும் இந்தத் தேசத்தைத் தருவோமென்று
௰௩ சொல்லி,—பராபரன் அவனோடே பேசின ஸ்த
லத்திலிருந்து அவனைவிட்டேறிப்போனார்.—
௰௪ அப்பொழுது யாக்கோபு அவர் தன்னோடே பே
சின ஸ்தலத்திலே கல்தூணாகிய ஒரு தூணை நிறுத்
தி, அதின்மேல் ஊற்றுதலை யூற்றி, அதின்மேல்
௰௫ எண்ணெயை வார்த்தான்.—பராபரன் தன்னோ
டே பேசின அந்த ஸ்தலத்திற்கு யாக்கோபு பேத்
தேலென்ற பெயரைத்தான் தரித்தான்.

பேத்தேலிலிருந்து பயணம்புறப்பட்டார் ௰௬
கள், எப்பிராத்தாவுக்கு வர இன்னம் கொஞ்சம்
தூரமிருக்கிறபொழுது, ராகேல் பிள்ளைபெற்
றாள்; பெறுகையில் அவளுக்குக் கடுவருத்தமா
யிற்று.—அப்பொழுது சம்பவித்ததாவது: பெறு ௰௭
கிறதிலே அவளுக்குக் கடுவருத்தமாயிருக்கை
யில், மருத்துவச்சி அவளுடனே, பயப்படா
தே, ஏனென்றால் இந்தப் புத்திரனும் உனக்கிருப்
பானென்றாள். — சம்பவித்ததேதென்றால், மர ௰௮
ணம் அடைய அவள் ஆத்துமா புறப்படுகை
யில், அவள் அவனுக்குப் பெனோனி என்று
பேரிட்டாள்; அவன் தகப்பனோவெனில், அவ
னைப் பென்யமீனென்றழைத்தான். — ராகேல் ௰௯
மரித்து, பெத்லகேமென்னப்படுகிற எப்பிராத்தா
ஊர்வழியிலே அடக்கம்பண்ணப்பட்டாள்.—
அவள் கல்லறையின்மேல் யாக்கோபு ஒரு தூணை ௨௰
நிறுத்தினான்; அதுவே இந்நாள்வரைக்கும் இருக்
கிற ராகேலுடைய கல்லறையின் தூண்.

இஸ்ரவேல் பயணம்பண்ணி, ஏதேரென்ற ௨௧
கோபுரத்திற்கு அப்புறத்தே தன் கூடாரத்தைப்
போட்டான். — இஸ்ரவேல் அந்தச் சீமையில் ௨௨
குடியிருக்கிறபொழுது சம்பவித்ததேதென்றால்,
[1]ரூபேன் போய், தன் தகப்பனுடைய வைப்
பாட்டியாகிய பில்க்காளோடே சயனித்தான்;
அது இஸ்ரவேலுக்குக்கேள்வியாயிற்று; யாக்கோ
பின் குமாரரோவென்றால் பன்னிரண்டுபேரா
யிருந்தார்கள்.

யாக்கோபுக்கு முதல் புத்திரனான ரூபேனும், ௨௩
சிமேயோனும், லேவியும், யூதாவும், ஈசகஷாரும்,
சேபுலோனும், லேயாளின் குமாரரானவர்கள்.—
ராகேலின் குமாரர் யோசேப்பும், பென்யமீனு ௨௪
மென்றவர்கள். — ராகேலுடைய வேலைக்காரி ௨௫
யாகிய பில்க்காளின் குமாரர் தாணும், நப்தலியும்
என்றவர்கள்.—லேயாளின் வேலைக்காரியாகிய ௨௬
சில்ப்பாளின் குமாரர் காதும், ஆசேரும் என்ற
வர்கள்; இவர்கள் யாக்கோபுக்குப் பதான்அரா
மிலே பிறந்த குமாரர்.

யாக்கோபு அர்பாவின் ஊராகிய மம்ரேக்குத் ௨௭
தன் தகப்பனாகிய ஈசாக்கண்டையிலே வந்தான்;
அது ஆபிரகாமும் ஈசாக்கும் தங்கியிருந்த எபி
ரோனென்கிற ஊர்தானே.— ஈசாக்கின் நாள்கள் ௨௮
நூற்றெண்பது வருஷமாயிருந்தன. — பிற்பாடு ௨௯
ஈசாக்கு முதிர்ந்த பூரண ஆயுசிலே சீவித்து மரி
த்து, தன் சனத்தாரோடே சேர்க்கப்பட்டான்.
அவனை அவன் குமாரராகிய ஏசாவும் யாக்கோ
பும் அடக்கம்பண்ணினார்கள்.

## ௩௬. அதிகாரம்.

௧. ஏசாவின் மூன்று பெண்சாதிகளைக்குறித்தது. ௬. அவன் சேயீர்பர்வதத்துக்குக் குடிபோனது. ௯. அவன் புத்திரர்களைக்குறித்துச் சொல்லியது. ௰௫. அவன் புத்திரர்களில் உண்டான பிரபுக்கள் இன்னாரென்பது. ௨௰. சேயீரின் புத்திரரையும் பிரபுக்களையும் குறித்துச் சொல்லியது. ௨௪. ஆனா, கோவேறுகழுதைகள் பிறக்கும் விதம்

1 ௧ மோ. ௪௯. ௪.

*அறிந்தது. ௩௧. ஏதோமின் இராசாக்கள் இன்னாரென்பது. ௪௰. ஏசா வின சந்ததியில் உண்டான பிரபுக்களைக்குறித்தது.*

௧ இது ஏதோமியரின் தகப்பனாகிய ஏசாவின்
௨ சந்ததி.—ஏசா கானான் குமாரத்திகளில் ஏத்திய
னான ஏலோனின் குமாரத்தியாகிய ஆதாளையும்,
ஏவியனாகிய சிபெயோனின் பேத்தியும் ஆனா
கின் குமாரத்தியுமாகிய அகோலிபாமாளையும்,—
௩ இஸ்மவேலின் குமாரத்தியும் நேபயோத்தின் ச
கோதரியுமாகிய பஸ்மாத்தையும், விவாகம்பண்
௪ ணினான். — ஆதாள் ஏசாவுக்கு ஏலிப்பாசைப்
பெற்றாள்; பஸ்மாத் ரேகுவேலைப் பெற்றாள்.—
௫ அகோலிபாமாள் எயூஷையும் யாலாமையும் கோ
ராகையும் பெற்றாள்; இவர்கள் ஏசாவுக்குக் கா
னான்தேசத்திலே பிறந்த குமாரர்.

௬ ஏசா தன் பெண்சாதிகளையும் தன் குமாரரை
யும் தன் குமாரத்திகளையும் தன் வீட்டிலுள்ள
எல்லா ஆத்துமாக்களையும் தன் ஆடுமாடுகளையும்
தன்னுடைய எல்லா மிருகசீவன்களையும் தான்
கானான்தேசத்திலே சம்பாதித்த தன்னுடைய
எல்லா ஆஸ்தியையும் சேர்த்துக்கொண்டு, தன்
சகோதரனாகிய யாக்கோபைவிட்டு வேறே தே
௭ சத்திற்குப் போனான். — ஏனெனில் அவர்கள்
ஒருமிக்கக் குடியிருக்கக் கூடாதபடிக்கு, அவர்
களுடைய சம்பத்து மிச்சமாயிருந்தது; அவர்
கள் தங்கியிருந்த பூமி அவர்களுடைய மந்தைக
ளின் முகாந்தரத்தினாலே அவர்களைத் தாங்க
௮ மாட்டாதே போயிற்று. — ஆகையால் ஏசா சே
யீர்பர்வதத்திலே குடியேறினான்; ஏசாவே ஏதோ
மென்றவன்.

௯ சேயீர் பர்வதத்திலிருக்கிற ஏதோமியருடை
௰ ய தகப்பனாகிய ஏசாவின் சந்ததிகளும்,— ஏசா
வின் குமாரருடைய நாமங்களுமாவன: ஏசா
வின் பெண்சாதியாகிய ஆதாளுடைய குமாரன்
பேர் ஏலிப்பாஸ். ஏசாவின் பெண்சாதியாகிய
பஸ்மாத்துடைய குமாரன்பேர் ரேகுவேல்.—
௰௧ ஏலிப்பாசுடைய குமாரர், தேமான், ஓமார், சேப்
௰௨ போ, காத்தாம், கேனாஸ்.—திம்னாள் ஏசாவின்
குமாரனாகிய ஏலிப்பாசுக்கு வைப்பாட்டியாயி
ருந்து, ஏலிப்பாசுக்கு ஆம்லேக்கைப் பெற்றாள்;
இவர்களே ஏசாவின் பெண்சாதியாகிய ஆதாளு
௰௩ டைய குமாரர்.—ரேகுவேலுடைய குமாரர், நா
காத், சேராக், சம்மா, மீசா, இவர்களே ஏசா
வின் பெண்சாதியாகிய பஸ்மாத்துடைய குமா
௰௪ ரர்.— சிபெயோனின் பேத்தியும் ஆனாகின் குமா
ரத்தியுமான அகோலிபாமாளென்ற ஏசாவுடைய
பெண்சாதியின் குமாரர் யாரென்றால், அவள்
ஏசாவுக்கு எயூஷையும் யாலாமையும் கோராகை
யும் பெற்றாள்.

௰௫ ஏசாவின் குமாரரிலிருந்த பிரபுக்கள்; ஏசா
வுக்கு முதல்குமாரனாகிய ஏலிப்பாசுடைய குமா
ரரில் தேமான் பிரபுவும், ஓமார் பிரபுவும், சேப்
௰௬ போ பிரபுவும், கேனாஸ் பிரபுவும்,—கோராக் பி
ரபுவும், காத்தான் பிரபுவும், ஆம்லேக் பிரபுவும்
இருந்தார்கள்; இவர்கள் ஏதோம் தேசத்தில்
ஏலிப்பாசின் சந்ததியும் ஆதாளின் குமாரருமாயி
ருந்த பிரபுக்கள்.

ஏசாவின் குமாரனாகிய ரேகுவேலின் குமார ௰௭
ரோவெனில்; நாகாத் பிரபு, சேராக் பிரபு, சம்
மா பிரபு, மீசா பிரபு, இவர்கள் ஏதோம் தேசத்
தில் ரேகுவேலின் சந்ததியும் ஏசாவின் பெண்
சாதியாகிய பஸ்மாத்தின் குமாரருமாயிருந்த பிர
புக்கள்.

ஏசாவின் பெண்சாதியாகிய அகோலிபாமா ௰௮
ளின் குமாரரோவென்றால், எயூஷ் பிரபு. யா
லாம் பிரபு, கோராக் பிரபு; இவர்கள் ஆனா
கின் குமாரத்தியும் ஏசாவுடைய பெண்சாதியு
மாகிய அகோலிபாமாளின் சந்ததியாயிருந்த
பிரபுக்கள். — இவர்களே ஏதோமென்ற ஏசா ௰௯
வின் குமாரர்; இவர்களே அவர்களிலிருந்த பிர
புக்கள்.

அந்தத் தேசத்தில் குடிகளாகிய ஓரியனான ௨௰
சேயீரின் குமாரர், லோத்தான், சோபால், சிபெ
யோன், ஆனாக்,—தீஷோன், எத்சேர், தீஷான்; ௨௧
இவர்கள் ஏதோம் தேசத்தில் சேயீரின் புத்திரரா
கிய ஓரியருடைய சந்ததியாயிருந்த பிரபுக்கள்.—
லோத்தானுடைய குமாரர், ஓரி, ஏமாம்; லோத் ௨௨
தானின் சகோதரி திம்னாள்.—சோபாலுடைய ௨௩
குமாரர், அல்வான், மனாகாத், ஏபால், சேப்போ,
ஓனா என்றவர்கள்.—சிபெயோனுடைய குமாரர், ௨௪
ஆயா, ஆனா என்றவர்கள்; வனாந்தரத்திலே தன்
தகப்பனாகிய சிபெயோனின் கழுதைகளை மேய்க்
கையில், கோவேறுகழுதைகள் பிறக்கும் விதத்
தைக் கண்டுபிடித்த ஆனா இவன்தான்.—ஆனா ௨௫
வின் பிள்ளைகள் தீஷோனும் அகோலிபாமாளும்
என்றவர்கள்; இவள் ஆனாவின் குமாரத்தி.—தீ ௨௬
ஷோனுடைய குமாரர், எம்தான், எஸ்பான், ஈத்
தரான், கோரான் என்றவர்கள்.— எத்சேருடைய ௨௭
குமாரர், பில்க்கான், சாவான், ஆக்கான் என்ற
வர்கள்.—தீஷானுடைய குமாரர், ஊத்ஸ் ஆரான் ௨௮
என்றவர்கள். — ஓரியரின் சந்ததிப் பிரபுக்கள், ௨௯
லோத்தான் பிரபு, சோபால் பிரபு, சிபெயோன்
பிரபு, ஆனா பிரபு,—தீஷோன் பிரபு, எத்சேர் ௩௰
பிரபு, தீஷான் பிரபு; இவர்களே சேயீர்தேசத்
திலே தங்கள் தங்கள் இடங்களில் இருந்த ஓரி
யர் சந்ததியான பிரபுக்கள்.

இஸ்ரவேல் புத்திரரை ஒரு இராசா ஆளாததற் ௩௧
கு முன்னே, ஏதோம் தேசத்திலே ஆண்ட இரா
சாக்கள்.—ஏதோமிலே பேயோருடைய குமார ௩௨
னாகிய பேலா இராசாவாயிருந்தான்; அவனு
டைய பட்டணத்தின்பேர் தின்காபா.—பேலா ௩௩
மரித்தபொழுது, போத்ஸரா பட்டணத்தானாகிய
சேராகுடைய குமாரனான யோவாப் அவன்
பட்டத்திற்கு வந்தான்.—யோவாப் மரித்தபொ ௩௪
ழுது, தேமானிய தேசத்தானாகிய ஊஷாம் அவன்
பட்டத்திற்கு வந்தான். — ஊஷாம் மரித்தபொ ௩௫
ழுது, அவன் பட்டத்திற்கு மோவாபின் நாட்டி
லே மீதியானியரை முறியடித்த பேதாதின் குமா
ரனாகிய ஆதாத் வந்தான்; அவனுடைய பட்ட
ணத்தின்பேர் ஆவீத்.—ஆதாத் மரித்தபொழுது, ௩௬

மஸ்ரேக்கா ஊரானாகிய சம்லா அவன் பட்டத்
௩௭ திற்கு வந்தான்.—சம்லா மரித்தபொழுது, நதிக்கு
அருகான ரேகோபோத் ஊரானாகிய சவுல்
௩௮ அவன் பட்டத்திற்கு வந்தான்.—சவுல் மரித்த
பொழுது, அக்போருடைய குமாரனாகிய பா
கால் ஆனான் அவன் பட்டத்திற்கு வந்தான்.—
௩௯ அக்போருடைய குமாரனாகிய பாகால் ஆனான்
மரித்தபொழுது, அவன் பட்டத்திற்கு ஆதார்
வந்தான்; அவனுடைய பட்டணத்தின் பேர்
பாகு; அவன் பெண்சாதியின் பேர் மெகேதா
பெயேல்; அவள் மத்ரேதுடைய குமாரத்தியும்
மேசகாவின் பேத்தியுமாயிருந்தாள்.
௪௰ பலபல வம்சத்தாரும் தலத்தாரும் நாமத்தாரு
மாகிய ஏசாவின் சந்ததிப் பிரபுக்களுடைய நா
மங்களாவன: திம்னா பிரபு, அல்வா பிரபு, எத்
௪௧ தேத் பிரபு,—அகோலிபாமா பிரபு, ஏலா பிரபு,
௪௨ பீனோன் பிரபு,—கேனாஸ் பிரபு, தேமான் பிர
௪௩ பு, மிப்சார் பிரபு.—மக்தியேல் பிரபு, ஈராம் பி
ரபு; இவர்களே தங்கள் கைவசமான தேசத்திலே
பலபல இடங்களிலே குடியிருந்த ஏதோம்
சந்ததிப் பிரபுக்கள்; இந்த ஏதோமியருடைய
தகப்பன் ஏசாதானே.

## ௩௭. அதிகாரம்.

௧. யோசேப்புத் தன் சகோதரரால் பகைக்கப்பட்டது. ௫. அவன் கண்ட இரண்டு சொப்பனங்களைச் சொல்லியது. ௰௩. யாக்கோபு அவனைத் தன் சகோதரரண்டைக்கு அனுப்பினது. ௰௮. அவன் சகோதரர் அவனைக் கொலைசெய்ய யோசித்தது. ௨௧. ரூபேன் அவனை இரட்சித்தது. ௨௮. அவனை அவர்கள் இஸ்மவேலர் கையில் விற்றுப்போட்டது. ௩௧. அவன் தகப்பன் இரத்தத்தில் தோய்த்த அங்கியினால் வஞ்சிக்கப்பட்டு யோசேப்புக்காகப் புலம்பினது. ௩௬. அவன் எகிப்தில் போத்திபாருக்கு விற்கப்பட்டது.

௧ யாக்கோபு தன் தகப்பன் தங்கின கானான
தேசமான சீமையிலே குடியிருந்தான்.
௨ யாக்கோபுடைய சந்ததியின் நடபடியாவது:
யோசேப்புப் பதினேழுவயதிலே தன் சகோதர
ரோடே ஆடுகளை மேய்த்துக்கொண்டிருந்தான்;
அந்த இளைஞன் பில்க்காள் சில்பாளென்ற
தன் தகப்பனுடைய பெண்சாதிகளின் குமார
ரோடே இருந்து, இவர்கள் துர்க்கீர்த்தியை
அவர்கள் தகப்பனண்டைக்கு வந்து சொல்லு
௩ வான்.—யோசேப்புத் தனக்கு முதிர்வயதிலே
பிறந்தபடியினாலே இஸ்ரவேல் தன்னுடைய எல்
லாக் குமாரரைப்பார்க்கிலும் அவனைச் சிநேகித்
து, பலவருணமான அங்கியை அவனுக்குச்
௪ செய்வித்தான்.—தங்கள் தகப்பன் அவனை அவ
னுடைய எல்லாச்சகோதரரைப்பார்க்கிலும் சிநே
கிக்கிறதை அவன் சகோதரர் கண்டபொழு
தோவெனில், அவர்கள் அவனோடே பட்ச
மாய்ப் பேசமாட்டாதபடியாய், அவனைப் பகைத்
தார்கள்.
௫ இதுவும் அல்லாமல் யோசேப்பு ஒரு சொப்
பனத்தைக் கண்டு, தன் சகோதரருக்கு அறிவித்
தான்; அதின்நிமித்தம் அவனை இன்னம் அதிக
௬ மாய்ப் பகைத்தார்கள்.—அவன் இவர்களோடே
சொன்னதேதெனில், நான் கண்ட சொப்பனத்
௭ தைக் கேளுங்கள்.—இதோ நாம் நடு வயல்வெ
ளியிலே அறுத்த அரிகளைக் கட்டிக்கொண்டிருந்
தோம்; அப்பொழுது இதோ என்னுடைய அரிக்
கட்டு நிமிர்ந்தும் நின்றும் இருந்தது; ஆனால்
இதோ உங்கள் அரிக்கட்டுகள் அதைச் சுற்றி
என்னுடைய அரிக்கட்டை வணங்கிக்கொண்
டனவென்றான்.—அப்பொழுது அவன் சகோ ௮
தரர் அவனோடே, நீ எங்கள்மேல் துரைத்தனம்
பண்ணவே பண்ணுவாயோ, நீ எங்களை ஆளவே
ஆளுவாயோ என்று சொல்லி, அவனை அவன்
சொப்பனங்களின்நிமித்தமும் அவன் வார்த்தை
களின்நிமித்தமும், இன்னம் அதிகமாய்ப் பகைத்
தார்கள்.
அவன் வேறொரு சொப்பனத்தைக் கண்டு, ௯
அதைத் தன் சகோதரருக்கு விவரித்துச் சொன்
னதாவது: இதோ இன்னம் ஒரு சொப்பனத்
தைக் கண்டேன்; இதோ சூரியனும் சந்திரனும்
பதினொரு நட்சத்திரங்களும் என்னை வணங்கிக்
கொண்டனவென்றான்.—இதை அவன் தன் ௰
தகப்பனுக்கும் தன் சகோதரருக்கும் விவரித்த
பொழுது, அவன் தகப்பன் அவனை அதட்டி,
அவனோடே, நீ கண்ட இந்தச் சொப்பனமேது,
நானும் உன் தாயாரும் உன் சகோதரரும் வரவே வரு
வோமோ என்றான்.—அவன் சகோதரர் அவன் ௰௧
மேல் பொறாமை ஆனார்கள்; அவன் தகப்பனோ
வெனில், இந்த வார்த்தமானத்தை மனதிலே வைத்
துக்கொண்டான்.
அவன் சகோதரர் சீகேமிலே தங்கள் தகப்ப ௰௨
னுடைய ஆடுகளை மேய்க்கப்போனார்கள்.—
இஸ்ரவேல் யோசேப்போடே, உன் சகோதரர் ௰௩
சீகேமிலே ஆடுகளை மேய்க்கிறார்கள் அல்லவோ?
அங்கே போ; உன்னை அவர்களண்டைக்கு
அனுப்புவேன், வா என்றான்; இவன் இதோ
நான் போகிறேனென்றான்.—அப்பொழுது ௰௪
அவன், நீ போய், உன் சகோதரர் எப்படி இருக்
கிறார்களென்றும் ஆடுகள் எப்படி இருக்கின்ற
னவென்றும் பார்த்து, எனக்கு மறுசெய்தி
கொண்டுவாவென்று அவனுக்குச் சொல்லி, எபி
ரோன் பள்ளத்தாக்கிலே இருந்து அவனை அனுப்
பினான்; அப்படியே சீகேமுக்குப் போனான்.—
அப்பொழுது இதோ ஒரு மனிதன் அவனை வெ ௰௫
ளியிலே வழிதப்பி நடக்கக்கண்டு, என்ன தேடு
கிறாயென்று அவனைக் கேட்டான்.—அதற்கு ௰௬
அவன், என் சகோதரரைத் தேடுகிறேன், அவர்
கள் எங்கே ஆடு மேய்க்கிறார்களென்று எனக்கு
அறிவியுமென்றான்.—அந்த மனிதன், அவர்கள் ௰௭
இங்கேயிருந்து புறப்பட்டுப் போனார்கள்; ஏனெ
ன்றால் தோத்தானுக்குப் போவோமென்று
அவர்கள் சொல்லக் கேட்டேனென்றான்; அப்
பொழுது யோசேப்புத் தன் சகோதரரைப் பின்
தொடர்ந்துபோய், அவர்களைத் தோத்தானிலே
கண்டுபிடித்தான்.
அவர்கள் அவனைத் தூரத்திலே கண்டபொ ௰௮
ழுது, அவன் தங்கள் அருகில் சேராததற்கு
முன்னே அவனுக்கு விரோதமாய் அவனைக்

௰௯ கொலைசெய்யச் சதியோசனைபண்ணி, — ஒரு
வரோடொருவர், இதோ சொப்பனக்காரன்
௨௰ அங்கே வருகிறான்,—இப்பொழுதும் நாம் அவ
னைக்கொன்று, குழிகளில் ஒன்றிலே அவனைப்
போட்டு, ஒரு துஷ்டமிருகம் அவனைப் பட்சித்
ததென்று சொல்லி, அவன் சொப்பனங்கள் என்
னவாமென்று பார்ப்போம் வாருங்களென்றார்
௨௧ கள்.—ஆனால் ரூபேன் இதைக் கேட்டு, அவன்
சீவனைக் கொல்லாதிருப்போமாகவென்று சொ
ல்லி, அவனை அவர்கள் கைக்குத் தப்புவித்து,—
௨௨ நீங்கள் இரத்தம் சிந்தவேண்டாம்; நீங்கள் அவன்
மேல் கைபோடாமல், அவனை வனாந்தரத்தில்
இருக்கிற அந்தக் குழியிலே போடுங்களென்று,
ரூபேன் அவனை அவர்கள் கைக்குத் தப்புவிக்
கும்படிக்கும் அவனை அவன் தகப்பனண்டைக்
குத் திரும்பக் கொண்டுபோகும்படிக்கும் அவர்
களோடே சொன்னான்.
௨௩ சம்பவித்ததேதென்றால் யோசேப்புத் தன் ச
கோதரரண்டைக்கு வந்தபொழுது, அவர்கள்
யோசேப்பு உடுத்துக்கொண்டிருந்த பலவருண
௨௪ அங்கியாகிய அவன் அங்கியைக்கழற்றி,—அவ
னை எடுத்து அந்தக் குழியிலே போட்டார்கள்;
அது தண்ணீரில்லாத வெறுங்குழியாய் இருந்
௨௫ தது.—பிற்பாடு அவர்கள் அப்பம் சாப்பிட
உளுக்காந்தார்கள்; அவர்கள் தங்கள் கண்களை
ஏறெடுக்கும்பொழுதோவெனில், இதோ கீலே
யாத்திலிருந்து வருகிற இஸ்மவேலருடைய
கூட்டத்தை வரக்கண்டார்கள்; அவர்களுடைய
ஒட்டகங்கள் சம்பாரங்களையும் பிசின் தயிலத்
தையும் வெள்ளைப்போளத்தையும் எகிப்திற்குக்
௨௬ கொண்டுபோகச் சுமந்து நடந்தன.—அப்பொ
ழுது யூதா தன் சகோதரரோடே சொன்னதா
வது: நாம் நம்முடைய சகோதரனைக் கொன்று,
அவன் இரத்தத்தை மறைப்பதினாலே ஆதாயம்
௨௭ என்ன?—அவனை இஸ்மவேலருக்கு விற்போம்
வாருங்கள்; நமது கை அவன்மேல் இராதிருப்ப
தாக; ஏனெனில் அவன் நம்முடைய சகோதர
னும் நம்முடைய மாம்சமுமாய் இருக்கிறானென்
றான்; அவன் சகோதரர் அவன் சொல்லைக்
௨௮ கேட்டார்கள்.—ஆனால் வர்த்தகரான மீதியானி
யர் கடந்துபோகிறபொழுது,அவர்கள் யோசேப்
பை அந்தக் குழியிலிருந்துதூக்கி எடுத்து, யோ
சேப்பை இஸ்மவேலர் கையில் இருபது வெள்
ளிக்காசுக்கு விற்றார்கள்;இவர்கள் யோசேப்பை
௨௯ எகிப்திற்குக் கொண்டுபோனார்கள். — ரூபேன்
திரும்ப அந்தக் குழிஅண்டைக்கு வந்து, இதோ
யோசேப்பு குழியில் இல்லையென்று கண்டு, தன்
௩௰ வஸ்திரங்களைக் கிழித்து,— தன் சகோதரரண்
டைக்குத் திரும்பிவந்து, இளைஞன் இல்லையே,
நான் எங்கே போகப்போகிறேன் என்றான்.
௩௧ அவர்கள் யோசேப்பின் அங்கியை எடுத்துக்
கொண்டு, ஒரு வெள்ளாட்டுக்கடாவை அடித்து,
அந்த அங்கியை இரத்தத்தினாலே கறைப்படுத்தி,-
௩௨ பலவர்ணமான அந்த அங்கியைத் தங்கள் தகப்
பன் அண்டைக்குக் கொண்டுபோகச்சொல்லி,
இதை நாங்கள் கண்டுபிடித்தோம், இது உம்மு
டைய குமாரன் அங்கியோ அல்லவோ என்று
பாரும் என்று சொல்லி அனுப்பினார்கள்.—
அவன் அதை அறிந்து, இது என் குமாரனுடைய ௩௩
அங்கி, ஒருதுஷ்டமிருகம் அவனைப் பட்சித்தது;
யோசேப்புப் பீறுண்ணவே பீறுண்டானென்
றான்.—யாக்கோபு தன் வஸ்திரங்களைக் கிழித் ௩௪
துக்கொண்டு, தன் அரையில் இரட்டுக் கட்டிக்
கொண்டு, அநேகநாள் தன் குமாரனுக்காகத் துக்
கித்துக்கொண்டிருந்தான். — அவனுடைய எல் ௩௫
லாக் குமாரரும் அவனுடைய எல்லாக் குமாரத்
திகளும் அவனுக்கு ஆறுதல் சொல்ல வந்து
நின்றார்கள்; ஆனால் அவன் ஆறுதலுக்கு இடம்
கொடாமல், நான் துக்கத்தோடே என் குமார
னண்டையில் குழியில் இறங்குவேனென்று
சொல்லி, அவனுடைய தகப்பன் அவனுக்காக
அழுதுகொண்டிருந்தான்.—மீதியானியரோவெ ௩௬
ன்றால், அவனை எகிப்திலே பார்வோனின் பிர
தானியாகிய போத்திபாரென்ற தலையாரிகளின்
அதிபதிக்கு விற்றார்கள்.

## ௩௮. அதிகாரம்.

௧. யூதா, ஏர் ஓனான் சேலே என்றவர்களைப் பெற்றது. ௮. ஓனான் பொல்லாங்குசெய்தது. ௰௧. தாமார் சேலாவுக்காகக் காத்திருந்து, ௰௩. யூதாவை வஞ்சித்தது. ௨௭. அவள் பேரேஸ், சேரா என்ற இரட்டைப் பிள்ளை பெற்றது.

அக்காலத்திலே சம்பவித்ததேதென்றால் யூதா ௧
தன் சகோதரரைவிட்டு இறங்கிப்போய், அதொல்
லாம் ஊரானாகிய ஒரு மனிதனைச் சேர்ந்தான்;
அவன்பேர் ஈரா.—அங்கே யூதா, சூவாவென்று ௨
பேருள்ள ஒரு கானானிய மனிதன் குமாரத்தி
யைக் கண்டு, அவளை விவாகம்பண்ணி, அவ
ளிடத்தில் பிரவேசித்தான். — அவள் கர்ப்பம் ௩
தரித்து ஒரு குமாரனைப் பெற்றாள், அவனுக்கு
ஏரென்று பேரிட்டான். — அவள் மறுபடியும் ௪
கர்ப்பம்தரித்து ஒரு குமாரனைப் பெற்று, அவ
னுக்கு ஓனானென்று பேரிட்டாள். — அவள் தி ௫
ரும்பக் கர்ப்பம்தரித்து ஒரு குமாரனைப் பெற்று,
அவனுக்குச் சேலாவென்று பேரிட்டாள்; அவள்
இவனைப் பெறுகிறபொழுது அவன் கேசிபிலே
இருந்தான்.

யூதா தனக்கு முதல் பிறந்தவனாகிய, ஏருக்கு, ௬
தாமாரென்று பேருள்ள ஒரு பெண்ணைக் கொண்
டான்.—ஆனால் யூதாவுக்கு முதல் பிறந்த ஏரென் ௭
றவன் கர்த்தரின் கண்களுக்குமுன்பாகப் பொல்
லாதவனானதினாலே, கர்த்தர் அவனைக் கொன்
றுபோட்டார்.—அப்பொழுது யூதா ஓனானுட ௮
னே, நீ உன் தமையன் பெண்சாதியினிடத்தில்
பிரவேசித்து, அவளை மைத்துனச் சுதந்தரமாய்ப்
படைத்து, உன் தமையனுக்கு வித்தை உண்டாக்
கென்றான்.—ஆனால் அந்த வித்துத் தன்னுடைய ௯
தாய் இராதென்று ஓனான் அறிந்தபடியினாலே,
அவன் தன் தமையன் பெண்சாதியினிடத்தில்
பிரவேசிக்கும்பொழுது, தன் தமையனுக்கு வித்
தைக் கொடாதபடிக்கு அதைத் தரையிலே விழ

௰ விட்டுக் கெடுத்தான்.—அவன் செய்தது கர்த்த
ரின் கண்களுக்குமுன்பாகப் பொல்லாததானதி
னாலே, அவனையும் அவர் கொன்றுபோட்டார்.—
௰௧ அப்பொழுது யூதா தன் மருமகளாகிய தாமாருட
னே, என் குமாரனாகிய சேலா பெரியவனாகும்
மட்டும் உன் தகப்பன் வீட்டிலே கைம்பெண்
சாதியாய்த் தங்கியிரு என்றான்; ஏனெனில் இவ
னும் தன் சகோதரரைப்போலச் சாவானோ
என்று அஞ்சிக்கையாயிருந்தான்; அப்படியே
தாமார் போய்த் தன் தகப்பன் வீட்டிலே தங்கி
யிருந்தாள்.
௰௨ அநேகநாள் சென்றபிற்பாடு சூவாவின் குமா
ரத்தியாகிய யூதாவின் பெண்சாதி மரித்தாள்;
யூதா துக்கம் ஆறினபிற்பாடு, திம்னாவுக்குத் தன்
ஆடுகளை மயிர்கத்தரிக்கிறவர்களண்டையில்
போயேறினான்; அவனும் அதொல்லாம் ஊரா
னாகிய ஈரா என்ற அவன் சிநேகிதனும் கூடத்
௰௩ தானே.—அப்பொழுது தாமாருக்கு, இதோ உன்
மாமனார் தம்முடைய ஆடுகளை மயிர்கத்தரிக்க,
திம்னாவுக்குப்போயேறுகிறாரென்று அறிவிக்கப்
௰௪ பட்டது.—அப்பொழுது அவள், சேலா பெரிய
வனாயிருந்தும் தான் அவனுக்குப் பெண்சாதியா
கக் கொடுக்கப்பட்டதில்லையென்று கண்டபடி
யினாலே, தன் கைம்பெண் இருப்பின் வஸ்திரங்
களைத் தன்னைவிட்டு விலக்கி, முக்காடுபோட்டு
மூடிக்கொண்டு, திம்னாவுக்குப் போகிறவழியி
லிருக்கிற நீரூற்றுகளுக்கு முன்பாக உளுக்காந்
௰௫ தாள்.—யூதா அவளைக் கண்டு, அவள் ஒரு வேசி
யென்று நினைத்தான்; ஏனெனில் தன் முகத்தை
௰௬ மூடியிருந்தாள்.—அவன் வழியிலே அவளிட
மாய்த் திரும்பி, அவள் தன் மருமகள் என்றறியா
மல், நான் உன்னிடத்தில் பிரவேசிக்கட்டும்
என்றான்; அப்பொழுது அவள், நீர் என்னிடத்
தில் பிரவேசிக்கும்படிக்கு எனக்கென்ன தருவீ
௰௭ ரென்றாள்.—அதற்கவன் நான் மந்தையிலிருந்து
ஒரு வெள்ளாட்டுக்குட்டியை அனுப்புவேன்
என்றான்; இதற்கவள், நீர் அதை அனுப்பும்
மட்டும் ஒரு அடைமானம் கொடுத்தால் ஆமென்
௰௮ றாள்.—அப்பொழுது அவன், நான் உனக்குக்
கொடுக்கவேண்டிய அடைமானம் என்னவென்
று கேட்டான்; அப்பொழுது அவள், உம்மு
டைய மோதிரமும் உம்முடைய கைச்சீலையும்
உம்முடைய கையிலிருக்கிற உம்முடைய கோ
லுமே என்றாள்; அவன் இவைகளை அவளுக்குக்
கொடுத்து, அவளிடத்தில் பிரவேசித்தான்; அ
௰௯ வள் அவனால் கர்ப்பம் தரித்து,—பிற்பாடு எழுந்
திருந்துபோய், தன் முக்காட்டைத் தன்னைவிட்
டுவிலக்கி, தன் கைம்பெண் இருப்பின் வஸ்தி
௨௰ ரங்களை உடுத்துக்கொண்டாள்.—அந்த அடை
மானத்தை ஸ்திரியின் கையிலே வாங்கிவர, யூ
தா அதொல்லாம் ஊரானாகிய தன் சிநேகிதன்
கையிலே வெள்ளாட்டுக்குட்டியை அனுப்பி
௨௧ னான்; இவன் அவளைக் காணாமல்,—அவ்விடத்து
மனிதரை வழியண்டை நீரூற்றுகளருகே இருந்த
சோரஸ்திரி எங்கே என்று கேட்டான்; அதற்க
வர்கள் இங்கே சோரஸ்திரி இருந்ததில்லை என்
றார்கள்.—அவன் யூதாவண்டைக்குத் திரும்பி ௨௨
வந்து, அவளைக் காணேன், அங்கே சோரஸ்திரி
இருந்ததில்லை என்று அவ்விடத்து மனிதரும்
சொல்லுகிறார்கள் என்றான்.—அப்பொழுது யூ ௨௩
தா, நாங்கள் அவகீர்த்திப்படாதபடிக்கு அவள்
அதைக் கொண்டுபோகட்டும், இதோ இந்த ஆட்
டுக்குட்டியை அனுப்பினேனே, நீயோவென்
றால் அவளைக் காணாதேபோனாயென்றான்.— ஏ ௨௪
றக்குறைய மூன்றுமாதம் சென்றபின்பு சம்பவித்
ததேதெனில், உன் மருமகளாகிய தாமார் வே
சித்தனம்பண்ணினாள்; இதோ வேசித்தனத்தில்
கர்ப்பணியுமானாள் என்று யூதாவுக்கு அறிவிக்
கப்பட்டது; அப்பொழுது யூதா அவள் சுட்டெ
ரிக்கப்பட அவளை வெளியே கொண்டுவாருங்
கள் என்றான்.—அவள் வெளியே கொண்டுவரப் ௨௫
பட்டபொழுது, அவள் தன் மாமனாரண்டைக்கு
ஆள் அனுப்பி, இவைகள் எவருடையவைக
ளோ அவராலே நான் கர்ப்பணியாய் இருக்கி
றேன்; இந்த மோதிரமும் இந்தக் கைச்சீலையும்
இந்தக் கோலும் யாருடையவைகளென்று பாரு
மென்று சொல்லி அனுப்பினாள்.—அப்பொழுது ௨௬
யூதா அவைகளை அறிந்து, என்னிலும் நீதியுள்ள
வளாய் இருக்கிறாள்; ஏனென்றால் அவளை என்
குமாரனாகிய சேலாவுக்குக் கொடாதேபோ
னேன் என்றான்; அப்புறம் அவன் அவளை அ
றிந்ததில்லை.
அவளுக்குப் பேறுகாலம் வந்தபொழுது, இ ௨௭
தோ இரட்டைப்பிள்ளைகள் அவள் கர்ப்பத்திலி
ருந்தன.—அவள் பெறுகிறபொழுது ஒன்று கை ௨௮
யை நீட்டிற்று; அப்பொழுது மருத்துவச்சி அ
தின் கையைப்பிடித்து, அதில் சிவப்புநூலைக்
கட்டி, இது முந்த வெளிப்படுகிறதென்றாள்.—
ஆனால் அது தன் கையைத் திரும்ப வாங்கிக் ௨௯
கொண்டபொழுது, இதோ அதின் சகோதரன்
வெளிப்பட்டான்; அப்பொழுது அவள் நீ பீறிப்
புறப்பட்டதென்ன? உன்மேல் இந்தப் பீறு
தல் இருக்கிறதென்றாள்; அதினாலே அவனுக்
குப் [1]பேரேஸ் என்று பேரிடப்பட்டது.—பிற் ௩௰
பாடு கையில் சிவப்புநூல் கட்டியிருந்து, அவன்
தம்பி வெளிப்பட்டான்; அவனுக்குச் சேரா
வென்று பேரிடப்பட்டது.

## ௩௯. அதிகாரம்.

௧. யோசேப்புப் போத்திபாருடைய வீட்டிலே மேன்மைப்பட்டது. ௭. போத்திபாருடைய மனைவியோடே விபசாரம்செய்யாதபடிக்கு மறுத்தது. ௰௩ அவள் அவன்மேல் பொய்யான குற்றம்சாற்றினது. ௨௰. அவன் காவலில் வைக்கப்பட்டது. ௨௧. பாரபரன் அங்கே அவனோடேகூட இருந்தது.

யோசேப்பு [2]எகிப்திலே கொண்டுபோகப் ௧
பட்டான்; பார்வோனின் பிரதானியும் தலையா
ரிகளின் அதிபதியுமாகிய போத்திபாரென்ற

1 மத். ௧. ௩.—2 ௧ மோ. ௩௭. ௩௬.

எகிப்திய மனிதன் அவனை அவ்விடத்திற்குக்
கொண்டுவந்த இஸ்மவேலரின் கையிலே கொ
௨ ண்டான்.—ஆனல், கர்த்தர் யோசேப்போடே
கூட இருந்தார்; அவன் காரியசமர்த்தனன மனி
தனய், எகிப்தியனகிய தன் எசமாநனுடைய
௩ வீட்டிலே இருந்தான்.—கர்த்தர் அவனோடே
இருக்கிருரென்றும், அவன் செய்கிறவைகளை
எல்லாம் கர்த்தர் வாய்க்கப்பண்ணுகிருரென்றும்,
௪ அவன் எசமாநன் கண்டான்.—ஆகையால் யோ
சேப்புக்கு அவன் கண்களில் தயவுகிடைத்தது;
அவனுக்கு இவன் ஊழியக்காரனனன்; அவன்
இவனைத் தன் வீட்டுக்கு விசாரிப்புக்காரனக்கி,
தனக்கு உண்டானவை எல்லாவற்றையும் அ
௫ வன் கையில் ஒப்புவித்தான்.—சம்பவித்ததேதெ
னில், அவன் இவனைத் தன் வீட்டுக்கும் தனக்
குண்டானவைகள் எல்லாவற்றிற்கும் விசாரிப்
புக்காரனக்கினது முதல்கொண்டு, கர்த்தர் யோ
சேப்பின்நிமித்தம் எகிப்தியன் வீட்டை ஆசீர்
வதித்தார்; வீட்டிலும் வெளியிலும் அவனுக்
குண்டானவைகளிலெல்லாம், கர்த்தருடைய
௬ ஆசீர்வாதம் இருந்தது.—ஆகையால் அவன் த
னக்குண்டானவைகளை எல்லாம் யோசேப்பின்
கையிலே ஒப்புவித்துவிட்டு, தான் புசிக்கிற
போசனம்தவிர இவனிடத்திலிருந்த மற்றென்
றுக்கும் கவலைப்படாதிருந்தான்; யோசேப்போ
வெனில், அழகான ரூபமும் பார்வைக்குச்
சவுந்தரியமுமாய் இருந்தான்.

௭ இந்த வர்த்தமானங்களுக்குப் பிற்பாடு சம்ப
வித்ததேதெனில், அவனுடைய எசமாநனின்
பெண்சாதி யோசேப்பின்மேலே கண்ணோட்ட
௮ மாகி, என்னோடே சயனி என்றாள்.—ஆனல்
அவன், அவள் சொல்லைக்கேளாமல், தன் எச
மாநனின் பெண்சாதியோடே சொன்னதாவது:
இதோ வீட்டிலே என்னோடிருக்கிறவைகளில்
ஒன்றுக்காகிலும் என் ஆண்டவன் கவலைப்ப
டாமல், தமக்குண்டானவைகளை எல்லாம் என்
௯ கையில் ஒப்புவித்தார்.-இந்த வீட்டிலே என்னி
லும் பெரியவன் இல்லை; உன்னைத்தவிர வே
றொன்றையும் அவர் எனக்கு விலக்கிவைத்த
தில்லை; ஏனெனில் நீ அவருடைய பெண்சாதி;
இப்பொழுதும் நான் இத்தனைபெரிய இந்தப்
பொல்லாப்பைப்பண்ணி, பராபரனுக்கு விரோ
தமாய்ப் பாவம்செய்வது எப்படி என்றான்.—
௰ அவள் நித்தம் நித்தம் யோசேப்போடே அப்ப
டிக்கொத்த பேச்சைச் சொல்லுவாள்; ஆனல்,
அவன் அவளுக்குச் சமீபமாய்ப் படுத்துக்கொள்
ளவும் அவளோடிருக்கவும் அவளுக்குச் செவி
௰௧ கொடாதே போகிறபொழுது,—ஒருநாள் சம்
பவித்ததேதெனில், அவன் தன் வேலையைச்
செய்கிறதற்கு வீட்டுக்குள் வந்தான்; வீட்டுமனி
தரில் ஒருவரும் அப்பொழுது அங்கே வீட்டி
௰௨ லே இல்லை.—அப்பொழுது அவள் அவனை அ
வன் வஸ்திரத்தைப்பற்றிப் பிடித்து, என்னோ
டே சயனி என்றாள்; அவனோவென்றால் தன்
வஸ்திரத்தை அவள் கையிலே விட்டோடி, வெ
ளியே புறப்பட்டுப்போனான்.-அவன் தன் வஸ் ௰௩
திரத்தைத் தன் கையிலே விட்டு வெளியே
ஓடிப்போனதை அவள் கண்டபொழுது,—அ ௰௪
வள் தன் வீட்டு மனிதரைக் கூப்பிட்டு அவர்க
ளுக்குச் சொன்னதாவது: பாருங்கள், எபிரேய
மனிதனை நம்மைச் சரசம்பண்ணும்படிக்கு நமக்
குக் கொண்டுவந்தார், அவன் என்னோடே சய
னிக்கிறதற்காக என்னண்டைவந்தான்; ஆனல்
மகா சத்தமாய்க் கூப்பிட்டேன்.—நான் என் சத் ௰௫
தத்தை உயர்த்திக் கூப்பிடுகிறதை அவன் கேட்
டபொழுது, அவன் தன் வஸ்திரத்தை என்ன
ண்டையில் விட்டோடி வெளியே புறப்பட்டுப்
போனன் என்று சொல்லி,—அவனுடைய எச ௰௬
மாநன் வீட்டிற்கு வரும்மட்டும் அவன் வஸ்தி
ரத்தைத் தன் கிட்டவைத்து,-அவனோடே அந்த ௰௭
வார்த்தைகளுக்குச் சரியாகப் பேசி, நீர் எங்க
ளுக்குக் கொண்டுவந்த அந்த எபிரேய வேலைக்
காரன் என்னைச் சரசம்பண்ண என்னண்டை
வந்தான்.—அப்பொழுது சம்பவித்ததேதெனில், ௰௮
நான் என் சத்தத்தை உயர்த்திக் கூப்பிடுகிறபொ
ழுது அவன் தன் வஸ்திரத்தை என்னண்டை
விட்டு வெளியே ஓடிப்போனன் என்றாள்.—
உம்முடைய வேலைக்காரன் எனக்கு இப்படிச் ௰௯
செய்தானென்று தன் பெண்சாதி தன்னோடே
சொன்ன வார்த்தைகளை அவனுடைய எசமாநன்
கேட்டபொழுதோவெனில், அவனுக்குக் கோ
பம் மூண்டது.—அப்பொழுது யோசேப்பின் ௨௰
எசமாநன் அவனைப் பிடித்து, இராசாவின் கட்ட
ளையால் கட்டுண்டவர்கள் கிடக்கிற காவல்வீட்
டிலே அவனை ஒப்புவித்தான்; அங்கே அந்தக்
காவல்வீட்டில் அவன் இருந்தான்.—ஆனல் ௨௧
கர்த்தர் யோசேப்போடேகூட இருந்து, அவன்
மேலே கிருபைவைத்து, அவனுக்குக் காவல்
வீட்டுத் தலைவன் கண்களில் தயவுகிடைக்கப்
பண்ணினர்.—காவல்வீட்டுத் தலைவன் காவல் ௨௨
வீட்டிலே கட்டுண்டிருந்த யாவரையும் யோசே
ப்பின் கையிலே ஒப்புவித்தான்; அங்கே செய்
யவேண்டியவைகளை எல்லாம் அவன் செய்
தான்.—அவன் கையில் இருந்த ஒன்றையும் கா ௨௩
வல்வீட்டுத் தலைவன் கண்ணோக்கினதில்லை; ஏ
னெனில் கர்த்தர் அவனோடேகூட இருந்தார்;
அவன் எதைச் செய்தானே அதைக் கர்த்தர்
வாய்க்கப்பண்ணினர்.

## ௪௰. அதிகாரம்.

௧ பார்வோனுக்குப் பானம்கொடுக்கிறவனும் அப்பம்சுடுகிறவனும் காவலில் வைக்கப்பட்டது. ௪. அங்கே யோசேப்பு அவர்களை விசாரிணை செய்தது. ௯. அவன் அவர்கள் இருவருடைய சொப்பனங்களுக்கும் பயன் சொன்னது. ௨௰. அவைகள் அவன் சொன்னபடி சம்பவித்தது. ௨௧. பானம்கொடுக்கிறவன் நன்றிஅறியாமல், யோசேப்பை மறந்தது.

இந்த நடபடிகளுக்குப் பிற்பாடு சம்பவித்த ௧
தேதெனில், எகிப்தின் இராசாவுக்குப் பானம்
கொடுக்கிறவனும் அப்பம்சுடுகிறவனும் எகிப்
தின் இராசாவாகிய தங்கள் ஆண்டவனுக்குக்
குற்றம்செய்தார்கள்.-அப்பொழுது பார்வோன் ௨

தன்னுடைய இரண்டு பிரதானிகளாகிற பானம் கொடுக்கிறவர்களின் தலைவன்மேலும் அப்பம் சுடுகிறவர்களின் தலைவன்மேலும், கடுங்கோப
௩ மாகி,—அவர்களை யோசேப்புக் கட்டுண்டிருந்த காவல்வீடாகிய தலையாரிகளின் தலைவன்வீட்டிலே காவல்பண்ணுவித்தான்.
௪ அப்பொழுது தலையாரிகளின் தலைவன் அவர்களை விசாரிக்கும் வேலைக்கு யோசேப்பை வைத்தான்; இவன் அவர்களுக்கு ஊழியம் செய்தான்; அவர்கள் அநேகநாள் காவலில் இருந்தார்கள்.
௫ ஆனால், எகிப்தின் இராசாவுக்குப் பானம் கொடுத்தவனும் அப்பம்சுட்டவனுமாகிய காவல்வீட்டில் கட்டுண்டிருந்த அவ்விரண்டுபேரும் ஒரே இராத்திரியில் அவனும் இவனும் தங்களுக்கு வெவ்வேறே அர்த்தமுள்ள சொப்பனங்
௬ களைக் கண்டார்கள்.—காலமே யோசேப்பு அவர்களண்டைவந்து அவர்களைப் பார்க்கும்பொழுது
௭ இதோ, கலங்கி இருந்தார்கள்.—அப்பொழுது தன் எசமானனின் வீட்டில் தன்னோடே காவல்பண்ணப்பட்டிருந்த பார்வோனின் பிரதானிகளை அவன், உங்கள் முகங்கள் இன்று துக்கமாயிருக்
௮ கிறது ஏதென்று கேட்டான்.—அவர்கள் அவனுடனே, சொப்பனம்கண்டோம், அதை வியார்த்திபண்ணுகிறவன் இல்லை என்றார்கள்; அப்பொழுது யோசேப்பு அவர்களுடனே, வியார்த்திபண்ணுதல் பராபரனுடையதல்லவோ? எனக்கதை விவரியுங்கள் என்றான்.
௯ அப்பொழுது பானம் கொடுக்கிறவர்களின் தலைவன் யோசேப்புக்குத் தன் சொப்பனத்தை விவரித்து அவனுக்குச் சொன்னதாவது: என் சொப்பனத்தில், இதோ ஒரு திராட்சச்செடி
௰ எனக்குமுன்பாக இருந்தது.—அந்தத் திராட்சச்செடியிலே மூன்று கொடிகள் இருந்தது; அது துளிர்க்கிறதாயிருந்தது; அதின் பூக்கள் புறப்பட்டன; அதின் குலைகள் பழங்களாகப் பழுத்
௰௧ தது. — பார்வோனின் பாத்திரம் என் கையில் இருந்தது; நான் அந்தப் பழங்களை வாங்கி, அவைகளைப் பார்வோனின் பாத்திரத்தில் பிழிந்து, அந்தப் பாத்திரத்தைப் பார்வோனின் கையிலே
௰௨ கொடுத்தேனென்றான். — அப்பொழுது யோசேப்பு அவனுக்குச் சொன்னதாவது: அதின் அர்த்தமென்னவெனில், அந்த மூன்று கொடி
௰௩ கள் மூன்றுநாளாய் இருக்கின்றன. — இன்னம் மூன்றுநாளுக்குள்ளே பார்வோன் உம்முடைய தலையை உயர்த்தி, உம்மைத்திரும்ப உமது நிலையிலே நிறுத்துவார்; அப்பொழுது நீர் அவருக்குப் பானம்கொடுத்த முந்தின வழக்கத்தின்படியே, பார்வோனின் பாத்திரத்தை அவர் கை
௰௪ யிலே கொடுப்பீர். — ஆனால் நீர் சுகவாழ்வாய் இருக்கிறபொழுது, என்னை நினைத்து, என்மேலே தயவுவைத்து, பார்வோனுக்கு என் செய்தியை நினைப்பூட்டி, என்னை இந்த வீட்டிலிருந்து
௰௫ வெளிப்படப்பண்ணும். — ஏனெனில் எபிரேயதேசத்திலிருந்து திருட்டளவாய் விலைப்பட்டுவந்தேன்; என்னை இந்தக் கிடங்கிலே வைக்கிறதற்கு இவ்விடத்திலே நான் ஒன்றும்செய்ததுமில்லை என்றான்.
நன்றாய் அர்த்தம்சொன்னானென்று அப்பம் ௰௬
சுடுகிறவர்களின் தலைவன் கண்டு, யோசேப்போடே சொன்னதாவது: நானும் என் சொப்பனத்தில் கண்டதேதென்றால், இதோ வெண்மையான மூன்றுகூடை என் தலையின்மேல் இ
ருந்தன.—மேல் கூடையிலே அப்பம்சுடுகிறவ ௰௭
னுடைய வேலையான பார்வோனுடைய சகலவித போசனத்திலும் சில இருந்தன; அவைகளைப் பறவைகள் வந்து என் தலையின்மேல் இருந்த கூடையிலெடுத்துப் பட்சித்தன என்றான்.—
அப்பொழுது யோசேப்புப் பிரதியுத்தாரமாகச் ௰௮
சொன்னதாவது: அதின் அர்த்தம் ஏதெனில், அந்த மூன்றுகூடைகள் மூன்று நாளாய் இருக்கி
ன்றன. — இன்னம் மூன்றுநாளுக்குள்ளே பார் ௰௯
வோன் உம்முடையமேலிருக்கிற உம்முடைய தலையை உயர்த்தி, உம்மை மரத்திலே தூக்கிப்போடுவிப்பார்; அப்பொழுது பறவைகள் உம்முடைய மாம்சத்தைத் தின்னுமென்றான்.
பார்வோன் சன்மநாளாகிய மூன்றாம்நாளில் ௨௰
சம்பவித்ததேதெனில், அவன் தன் ஊழியக்காரருக்கு எல்லாம் ஒரு விருந்துபண்ணி, பானம் கொடுக்கிறவர்களுடைய தலைவன் தலையையும் அப்பம்சுடுகிறவர்களுடைய தலைவன் தலையையும் தம்முடைய ஊழியக்காரரின் நடுவே உயர்
த்தி,—பானம்கொடுக்கிறவர்களின் தலைவனைப் ௨௧
பானம்கொடுக்கிற தன் உத்தியோகத்திற்குத் திரும்பிவரப்பண்ணினான்; அப்படியே அவன் பார்வோன் கையிலே பாத்திரத்தைக் கொடுத்
தான்.—அப்பம்சுடுகிறவர்களின் தலைவனையோ ௨௨
வென்றால், தூக்கிப்போடுவித்தான்; யோசேப்பு அவர்களுக்கு அர்த்தம் சொன்னதற்குச் சரியா
கத்தானே.—ஆனால் பானம்கொடுக்கிறவர்களின் ௨௩
தலைவன் யோசேப்பை நினையாமல் அவனை மறந்தான்.

## ௪௧. அதிகாரம்.

௧. பார்வோனின் இரண்டு சொப்பனங்கள். ௨௫. யோசேப்பு அவைகளை வியார்த்திபண்ணியது. ௩௩. அவன் பார்வோனுக்குப் புத்திசொல்லியது. ௩௮. யோசேப்பு முன்னுக்கு வந்தது. ௫௰. அவனுக்கு மனாசே என்றும் எப்பிராயீம் என்றும் குமாரர்கள் பிறந்தது. ௫௪. பஞ்சம் தொடங்கியது.

இரண்டுவருஷம் சென்றபிற்பாடு சம்பவித்த ௧
தேதென்றால், பார்வோன் ஒரு சொப்பனத்தைக் கண்டான்; அதேதெனில் இதோ, நதியண்டையிலே நின்றான்.—அப்பொழுது இதோ ௨
நேர்த்தியான ரூபமும் மாம்சக்கொழுப்புமான ஏழு பசுக்கள் நதியிலிருந்து ஏறிப் புல் மேய்ந்
தன.—ஆனால் இதோ, அவைகளின் பிறகே அவ ௩
லட்சண ரூபமும் மாம்சச் சீவலுமான வேறே ஏழு பசுக்கள் நதியிலிருந்து ஏறி, நதி ஓரத்திலே அந்தப் பசுக்களண்டையிலே நின்றன.—
அவலட்சண ரூபமும் மாம்சச் சீவலுமான இந் ௪
தப் பசுக்கள், நேர்த்தியான ரூபமும் கொழுப்பு

மான அந்த ஏழு பசுக்களைப் பட்சித்தன; அப்
பொழுது பார்வோனுக்கு நித்திரை தெளிந்தது.—
௫ பிறகு அவன் நித்திரைபோய் இரண்டாம்விசை
கண்ட சொப்பனமாவது: இதோ, கனமான ஏழு
நல்ல கதிர்கள் ஒரே முதலிலிருந்து ஓங்கி வளர்ந்
௬ தன.—ஆனால் இதோ, அவைகளுக்குப் பிற்பாடு
சாவியானவைகளும் கொண்டல் காற்றினால்
தீய்ந்தவைகளுமான ஏழு கதிர்கள் முளைத்தன.—
௭ சாவியான இந்தக் கதிர்கள் கனமும் நிறைபல
னுமான அந்த ஏழு கதிர்களை விழுங்கின; அப்
பொழுது பார்வோன் விழித்துக்கொண்டான்;
இதோ அது சொப்பனமாயிருந்தது.
௮ சம்பவித்ததேதெனில், காலமே அவனுடைய
ஆவி கலங்கியிருந்தது; அப்பொழுது அவன்
எகிப்தினுடைய சகல சாஸ்திரிகளையும் சகல
ஞானிகளையும் அழைத்தனுப்பி, அவர்களுக்குத்
தன் சொப்பனங்களைப் பார்வோன் விவரித்தான்;
ஆனால் பார்வோனுக்கு அவைகளின் அர்த்தத்
தைச் சொல்லத்தக்கவன் ஒருவனும் இல்லை.—
௯ அப்பொழுது பானம்கொடுக்கிறவர்களின் தலை
வன் பார்வோனுடனே பேசிச் சொன்னதாவது:
இன்று நான் என் பாவங்களை நினைக்கிறேன்.—
௰ பார்வோன் தம்முடைய ஊழியக்காரர்மேல் கடு
ங்கோபம் அடைந்து, என்னையும் அப்பம்சுடுகி
றவர்களின் தலைவனையும் தலையாரிகளின் தலை
௰௧ வன் வீட்டிலே காவலிலே வைத்தாரே.—அப்
பொழுது நானும் அவனும் ஒரே இராத்திரியிலே
எங்களுக்கு வெவ்வேறே அர்த்தமாகிய சொப்ப
௰௨ னங்களைக் கண்டோம்.—அப்பொழுது தலையா
ரிகளின் தலைவனுக்கு வேலைக்காரனாகிய எபி
ரேய பிள்ளையாண்டான் ஒருவன் அங்கே எங்க
ளோடே இருந்தான்; அவனுக்கு அவைகளை வி
வரித்தோம்; அப்பொழுது எங்கள் சொப்பனங்
களுக்கிருந்த வெவ்வேறே அர்த்தங்களின்படி
யே, எங்களுக்கு அவன் எங்கள் சொப்பனங்க
௰௩ ளின் வியார்த்தியைச் சொன்னான்.—அவன் எங்
களுக்கு எப்படி வியார்த்திசொன்னானோ, அப்
படியே வந்து சம்பவித்தது; என்னைத் திரும்ப
என் நிலையிலே நிறுத்தி, அவனைத் தூக்கிப்போ
டுவித்தாரென்றான்.
௰௪ அப்பொழுது பார்வோன் யோசேப்பை அ
ழைத்தனுப்பினான்; அவனைத் தீவிரமாய்க் கிடங்
கிலிருந்து புறப்படப்பண்ணினார்கள்; அவன்
சவரம்பண்ணிக்கொண்டு, தன் வஸ்திரங்களை
௰௫ மாற்றிப் பார்வோனண்டைக்கு வந்தான்.—அப்
பொழுது பார்வோன் யோசேப்போடே சொன்
னதாவது: ஒரு சொப்பனத்தைக் கண்டேன்;
அதின் அர்த்தத்தைச் சொல்லுகிற ஒருவரும் இல்
லை; நீயோவென்றால் ஒரு சொப்பனத்தைக்
கேட்டால், அதின் அர்த்தத்தைச் சொல்லலா
மென்று நான் உன்னைக்குறித்துக் கேள்விப்பட்
டேன் என்றான்.
௰௬ அப்பொழுது யோசேப்புப் பார்வோனுக்குப்
பிரதியுத்தாரமாக, [1]நான் அல்ல, பராபரன் தா
னே பார்வோனுக்குச் சமாதானமுள்ள உத்தரவு
அருளிச்செய்வாரென்றான்.
பார்வோன் யோசேப்போடே சொன்னதாவ ௰௭
து: என் சொப்பனத்திலே இதோ நான் நதி
ஓரத்திலே நின்றேன்.—அப்பொழுது இதோ, ௰௮
மாம்சக்கொழுப்பும் நேர்த்தியான ரூபமுமான
ஏழு பசுக்கள் நதியிலிருந்தேறிப் புல் மேய்ந்
தன.—ஆனால் இதோ அவைகளின் பிறகாலே ௰௯
நரம்பனும் மகா அவலட்சண ரூபமும் மாம்சச்
சீவலுமான வேறே ஏழு பசுக்கள் ஏறிவந்தன;
இவைகளைப்போல அவலட்சணமான பசுக்களை
எகிப்துதேசமெங்கும் நான் கண்டதில்லை.—
சீவலும் அவலட்சணமுமான இந்தப் பசுக்கள் ௨௰
கொழுப்பான அந்த முந்தின ஏழு பசுக்களைப்
பட்சித்துப்போட்டன.— அவைகள் இவைக ௨௰௧
ளின் வயிற்றிற்குள் போகியும் இவைகளின்
வயிற்றிற்குள் போயிற்றென்று தெரியப்பட
வில்லை; முன்னிருந்ததுபோல இவைகளின் ரூ
பம் அவலட்சணமாயிருந்தது; அப்பொழுது
எனக்கு நித்திரை தெளிந்தது.— பின்னையும் ௨௰௨
என் சொப்பனத்திலே நான் கண்டதாவது:
இதோ, நிறைந்திருக்கிற ஏழு நல்ல கதிர்கள்
ஒரே முதலிலிருந்து ஓங்கிவளர்ந்தன.—ஆனால் ௨௰௩
அவைகளுக்குப் பிற்பாடு, இதோ, சாவியான
வைகளும் கொண்டல்காற்றினால் தீய்ந்து பதரா
னவைகளுமான ஏழு கதிர்கள் முளைத்தன.—
சாவியான இந்தக் கதிர்கள் நல்லவைகளான ௨௰௪
அந்த ஏழு கதிர்களை விழுங்கின என்பதுதானே;
இதைச் சாஸ்திரிகளுக்குச் சொன்னேன்;ஆனால்
இதின் அர்த்தத்தை எனக்கு விடுவிக்கிறவன்
இல்லை என்றான்.
அப்பொழுது யோசேப்புப் பார்வோனோடே ௨௰௫
சொன்னதாவது: பார்வோனின் சொப்பனம்
ஒன்றுதான்; தாம் செய்யப்போகிறதைப் பரா
பரன் பார்வோனுக்கு அறிவித்தார்.—அந்த ஏழு ௨௰௬
நல்ல பசுக்கள் ஏழு வருஷமாய் இருக்கின்றன;
அந்த ஏழு நல்ல கதிர்களும் ஏழு வருஷம்தான்;
இவை ஒரே சொப்பனமாய் இருக்கின்றன.—
அவைகளின் பிறகாலே ஏறிவந்த சீவலும் அவ ௨௰௭
லட்சணமுமான ஏழு பசுக்கள் ஏழுவருஷமாயி
ருக்கின்றன; கொண்டல்காற்றினால் தீய்ந்து சா
வியான ஏழுகதிர்களும் அப்படித்தான்; இவை
கள் பஞ்சமுள்ள ஏழு வருஷங்களாயிருக்கும்.—
பராபரன் செய்யப்போகிறதைப் பார்வோனுக் ௨௰௮
குக் காண்பித்தாரென்று பார்வோனுக்குச்சொன்
னேனே, அது இந்த வர்த்தமானந்தான்.—இதோ ௨௰௯
எகிப்துதேசமெங்கும் மகா பரிபூரணம் உண்டா
யிருக்கிற ஏழு வருஷங்கள் வருகின்றன.—ஆ ௩௰
னால் அவைகளுக்குப் பிற்பாடு பஞ்சமுள்ள ஏழு
வருஷங்கள் எழும்பும்; அப்பொழுது எகிப்து
தேசத்தில் அந்தப் பரிபூரணமெல்லாம் மறக்கப்
பட்டிருக்கும்; அந்தப் பஞ்சம் தேசத்தை மானப்

1 க மோ. ௪௰. அ. தானி. ௨. ௨௮

௩௧ பண்ணும். — தேசத்திலிருந்த பரிபூரணம் பிற்
பாடு வருகிற அந்தப் பஞ்சத்தினாலே தெரியப்
படாதிருக்கும்; ஏனெனில் மகா கனமானதா
௩௨ யிருக்கும்.—பார்வோனுக்கு இந்தச் சொப்பனம்
இரட்டித்து வந்ததற்கு அர்த்தம் என்னவென்
றால், இந்தக் காரியம் பராபரனால் நிச்சயமாய்
நிருணிக்கப்பட்டது; அதைச் செய்யப் பரா
௩௩ பரன் தீவிரிக்கிறாரென்பதுதானே.—இப்பொழு
தும் பார்வோன் உணர்வும் ஞானமுமுள்ள ஒரு
மனிதனைப் பார்த்து, அவனை எகிப்துதேசத்தின்
௩௪ மேல் அதிகாரியாக வைக்கக்கடவர்.—இப்படிப்
பார்வோன் செய்து, தேசத்தின்மேல் மணியக்கா
ரரை வைத்து, பரிபூரணமுள்ள ஏழு வருஷங்
களில் எகிப்துதேசத்தின் பலனிலே ஐந்தில்
௩௫ ஒருபங்கை வாங்குவாராக.—அவர்கள் வருகிற
இந்த நல்ல வருஷங்களின் ஆகாரத்தை எல்
லாம் சேர்த்து, பட்டணங்களில் ஆகாரம் உண்
டாயிருக்கும்படிக்கு, பார்வோனுடைய கை
யின்கீழ்த் தானிய அம்பாரங்களை வைத்துவைப்
௩௬ பார்களாக. — தேசம் பஞ்சத்தினால் சங்காரமா
காதபடிக்கு, அந்த ஆகாரம் எகிப்துதேசத்தில்
வரும் பஞ்சமுள்ள ஏழு வருஷங்களுக்காகத்
தேசத்திற்கு ஒரு வைப்பாயிருக்கக்கடவதென்
றான்.

௩௭ இந்த வார்த்தை பார்வோன் கண்களுக்கும்
அவனுடைய எல்லா ஊழியக்காரரின் கண்க
௩௮ ளுக்கும் நன்றாயிருந்தது.—அப்பொழுது பார்
வோன் தன் ஊழியக்காரரோடே, பராபரனு
டைய ஆவியுள்ள இந்த மனிதனைப்போல ஒரு
௩௯ வன் அகப்படுவானோ என்றான்.—பிற்பாடு பார்
வோன் யோசேப்போடே சொன்னதாவது:
பராபரன் இவை எல்லாம் உனக்கு அறிவித்தி
ருக்கிறபடியால், உன்னைப்போல உணர்வும் ஞா
௪௰ னமுமுள்ளவன் இல்லை.—நீ என் வீட்டு விசா
ரிப்புக்காரனாய் இருப்பாய்; உன் வாக்கின்படி
யே என் சனமெல்லாம் வணங்கிச் செய்யக்
கடவது; இராசாசனத்திற்குமாத்திரம் உன்னி
௪௧ லும் பெரியவனாய் இருப்பேனென்றான்.—பின்
னையும் பார்வோன் யோசேப்புடனே, பார், உன்
னை எகிப்துதேசத்தின்மேலெல்லாம் அதிகாரி
௪௨ யாக்கினேன் என்று சொல்லி, — பார்வோன்
தன் கையில் போட்டிருந்த தன்னுடைய மோதி
ரத்தைக் கழற்றி, அதை யோசேப்பின் கையி
லே போட்டு, மெல்லிய புடவையான வஸ்திரங்
களை அவனுக்குத் தரிப்பித்து, பொன்சரப்பளி
௪௩ யை அவன் கழுத்திலே போட்டு, — தனக்கி
ருந்த இரண்டாம் இரதத்தின்மேல் அவனை ஏறப்
பண்ணி, முழங்கால்படியிடுங்களென்று அவ
னுக்குமுன்பாகக் கூறுவித்து, அவனை எகிப்து
தேசத்தின்மேலெல்லாம் அதிகாரியாக்கினான்.—
௪௪ பார்வோன் யோசேப்புடனே, நான் பார்வோன்;
ஆனால் உன்னை அல்லாமல் எகிப்துதேசமெங்
கும் ஒருவரும் தன் கையையும் தன் காலையும்
௪௫ எடுப்பதில்லை என்றான்.—பார்வோன் யோசேப்
புக்கு, இரகசியங்களை வெளிப்படுத்துகிறவ
னென்ற பெயரைத் தரித்து, அவனுக்கு ஒன்
பட்டணத்து ஆசாரியனாகிய போத்திபேராவின்
குமாரத்தியாகிய அஸ்நாத்தைப் பெண்சாதியா
கக் கொடுத்தான்; யோசேப்பு எகிப்துதேசத்
தைச் சுற்றிவரப் புறப்பட்டான்.

யோசேப்பு எகிப்தின் இராசாவாகிய பார் ௪௬
வோனுக்குமுன்பாக நிற்கிறபொழுது, முப்பது
வயதாயிருந்தான்; யோசேப்புப் பார்வோனை
விட்டுப் புறப்பட்டு, எகிப்துதேசத்தை எல்லாம்
கடந்தான்.—பரிபூரணமுள்ள ஏழு வருஷங்க ௪௭
ளில் தேசம் மிகுதியாய்ப் பலன் தந்தது.—எகிப் ௪௮
துதேசத்தில் வந்த அந்த ஏழு வருஷங்களின்
ஆகாரத்தை எல்லாம் அவன் சேர்த்து, அந்த
ஆகாரத்தைப் பட்டணங்களில் கட்டிவைத்
தான்; ஒவ்வொரு பட்டணத்திற்குள்ளே அதின
தின் சுற்றுப்புறத்து ஆகாரத்தையே கட்டிவைத்
தான்.—அப்படியே யோசேப்புத் தானியத்தைக் ௪௯
கடல்கரை மணலைப்போல மிகவும் திரட்சி
யாக எண்ணி ஓயும்மட்டும் குவித்துவைத்தான்;
ஏனெனில் எண்ணிக்கைக்கு அடங்காததாயி
ருந்தது.

பஞ்சமுள்ள வருஷங்கள் வராததற்குமுன் ௫௰
னே யோசேப்புக்கு இரண்டு குமாரர்கள் பிறந்
தார்கள்; அவர்களை ஒன் பட்டணத்து ஆசாரிய
னாகிய போத்திபேராவின் குமாரத்தியாகிய அஸ்
நாத் அவனுக்குப் பெற்றாள்.—யோசேப்பு முந் ௫௧
திப் பிறந்தவனுக்கு மனாசே என்று பேரிட்
டான்; ஏனெனில் என்னுடைய எல்லா வருத்
தத்தையும் என் தகப்பனுடைய வீட்டனைத்தை
யும் பராபரன் என்னை மறக்கப்பண்ணினாரென்
றான்.—இரண்டாம் குமாரனுக்கு எப்பிராயீம் ௫௨
என்று பேரிட்டான்; ஏனெனில் நான் சிறு
மைப்பட்டிருந்த தேசத்திலே பராபரன் என்
னைப் பலுகப்பண்ணினாரென்றான்.

எகிப்துதேசத்தில் வந்த பரிபூரணமுள்ள ஏழு ௫௩
வருஷங்களும் முடிந்தபொழுது,—பஞ்சமுள்ள ௫௪
ஏழு வருஷங்கள் யோசேப்புச் சொன்னபடியே
வரத்துவக்கின; அப்பொழுது எல்லாத் தேசங்
களிலும் பஞ்சமுண்டாயிற்று; ஆனால் எகிப்து
தேசமெங்கும் ஆகாரமிருந்தது. — எகிப்துதேச ௫௫
மெங்கும் பஞ்சம் உண்டாகும்போது, சனம்
அப்பத்திற்காகப் பார்வோனை நோக்கிக் கூப்
பிட்டது; அப்பொழுது பார்வோன் எல்லா
எகிப்தியருக்கும், நீங்கள் யோசேப்பண்டைக்
குப்போய், அவன் உங்களுக்குச் சொல்லும்ப
டியே செய்யுங்களென்றான். — பஞ்சம் தேச ௫௬
மெங்கும் உண்டாகும்போது, யோசேப்புக்
களஞ்சியங்களை எல்லாம் திறந்து, எகிப்திய
ருக்கு விற்றான்; ஏனெனில் பஞ்சம் எகிப்துதே
சத்தில் கனமானதாயிற்று.—சகல தேசங்களின் ௫௭
மனிதரும் யோசேப்பினிடத்திலே கொள்ள
எகிப்திற்கு வந்தார்கள்; ஏனெனில் பூமியெங்
கும் பஞ்சம் மிகுதியாயிருந்தது.

## ௪௨. அதிகாரம்.

௧. யாக்கோபு தன் பத்துக்குமாரர்களை எகிப்திலே தானியங்கொள்ள அனுப்பியது. ௰௭. யோசேப்பு இவர்களை வேவுகாரரென்று காவலிலே வைத்தது. ௰௮. பென்யமீனைக் கொண்டுவருகிறோமென்கிற உடம்படிக்கையினால், அவர்களை விட்டுவிட்டது. ௨௧. யோசேப்புக்குச் செய்த குற்றத்துக்காகத் துக்கித்தது. ௨௪. சிமேயோனை ஈடாகவைத்தது. ௨௫. அவர்கள் தானியத்தோடும் பணத்தோடும் திரும்பியது. ௨௯. யாக்கோபுக்கு அவர்கள் தங்களுக்குச் சம்பவித்ததை அறிவித்தது. ௩௮. யாக்கோபு பென்யமீனை அனுப்பத் தடுத்தது.

௧ எகிப்திலே தானியம் உண்டென்று யாக்கோபு
அறிந்தபொழுது, யாக்கோபு தன் குமாரருக்கு,
நீங்கள் ஒருவரை ஒருவர் பார்க்கிறதென்ன?—
௨ இதோ எகிப்திலே தானியம் உண்டென்று கேட்
டேன்; நாம் சாகாமல் உயிரோடிருக்கும்படிக்கு
அங்கே இறங்கிப்போய், நமக்காகத் தானியம்
௩ கொள்ளுங்களென்றான். — அப்பொழுது யோ
சேப்பின் சகோதரரில் பத்துப்பேர் எகிப்திலே
௪ தானியம்கொள்ள இறங்கிப்போனார்கள். — ஆ
னால் யோசேப்பின் தம்பியாகிய பென்யமீனை
யாக்கோபு அவன் சகோதரரோடேகூட அனுப்
பாதே இருந்தான்; ஏனென்றால் அவனுக்கு ஒரு
வேளை ஒரு சேதம் வருமோவென்று சொன்
௫ னான்.—அப்படியே கொள்ளுகிறதற்காக வருகி
றவர்களோடேகூட இஸ்ரவேலின் குமாரரும்
வந்தார்கள்; ஏனெனில் கானான்தேசத்திலே பஞ்
௬ சம் உண்டாயிருந்தது. — யோசேப்போவென்
றால், தேசத்தின்மேல் அதிகாரியாயிருந்து, அவ
னே தேசத்தின் சனத்திற்கெல்லாம் விற்றான்;
யோசேப்பின் சகோதரர் வந்து, முகம் குப்புறத்
தரையிலே விழுந்து அவனை வணங்கினார்கள்.—
௭ யோசேப்புத் தன் சகோதரரைப் பார்க்கிறபொ
ழுது அவர்களை அறிந்தான்; ஆனால் அறியாதவன்
போல அவர்களுக்குக் காண்பித்து, அவர்களோ
டே கடினமாய்ப் பேசி, அவர்களுடனே, எங்கே
யிருந்து வந்தீர்களென்றான்; அப்பொழுது அவர்
கள், ஆகாரம்கொள்ள கானான்தேசத்திலிருந்து
௮ வந்தோமென்றார்கள்.—யோசேப்புத் தன் சகோ
தரரை அறிந்தான்; அவர்களோவெனில் அவனை
௯ அறியாதிருந்தார்கள்.—யோசேப்பு அவர்களைக்
குறித்துத் தான் கண்டிருந்த [1]சொப்பனங்களை
நினைத்து அவர்களோடே, நீங்கள் வேவுகாரர்,
தேசம் எங்கே திறந்துகிடக்கிறதென்று பார்க்க
௰ வந்தீர்களென்றான்.—அவர்களோவென்றால் அவ
னோடே சொன்னதாவது: அல்ல எங்கள் ஆண்ட
வனே, ஆகாரம்கொள்ள உம்முடைய அடியார்
௰௧ வந்தார்கள்.—நாங்கள் எல்லாரும் ஒருவருடைய
பிள்ளைகள்; நாங்கள் உண்மையுள்ளவர்கள்; உம்
முடைய அடியார் வேவுகாரரல்ல என்றார்கள்.—
௰௨ அவனோவெனில் அவர்களோடே, இப்படி அல்
ல, தேசம் எங்கே திறந்துகிடக்கிறதென்று பார்க்
௰௩ கவே வந்தீர்களென்றான்.—அப்பொழுது அவர்
கள் சொன்னதாவது: உம்முடைய அடியார் கா
னான்தேசத்திலிருக்கிற ஒருவருக்குக் குமாரரா
கிய பன்னிரண்டு சகோதரர்; ஆனால் இதோ,
இளையவன் இந்நாளில் எங்கள் தகப்பனண்டை
யிலிருக்கிறான்; ஒருவனோவென்றால் காணமல்
போனான் என்றார்கள்.—யோசேப்பு அவர்களோ ௰௪
டே சொன்னதாவது: நீங்கள் வேவுகாரரென்று
நான் உங்களோடே சொன்னபடியே இருக்
கும்.—உங்கள் இளையசகோதரன் இங்கே வந் ௰௫
தாலொழிய நீங்கள் இங்கேயிருந்து புறப்படுவ
தில்லை என்று பார்வோனின் சீவனைக்கொண்டு
சொல்லுகிறேன்; இதினால் சோதிக்கப்படுவீர்
கள்.—உங்கள் சகோதரனை அழைத்துவர உங்க ௰௬
ளில் ஒருவனை அனுப்புங்கள்; நீங்களோவென்
றால் கட்டுண்டிருப்பீர்கள்; உங்களில் நிசமுண்
டோவென்று உங்கள் வார்த்தைகள் சோதிக்கப்
படும்; இல்லாவிட்டால் நீங்கள் வேவுகாரரென்று
பார்வோனின் சீவனைக்கொண்டு சொல்லுகிறே
னென்று சொல்லி,—அவர்களை ஏகமாய் மூன்று ௰௭
நாள் காவலிலே போடுவித்தான்.—மூன்றாம்நா ௰௮
ளிலே யோசேப்பு அவர்களோடே சொன்ன
தாவது: நீங்கள் உயிரோடே இருக்கும்படிக்கு
ஒன்று செய்யுங்கள்; நான் பராபரனுக்குப் பயப்
படுகிறவன்.—நீங்கள் நிசமுள்ள மனிதரானால், ௰௯
உங்கள் சகோதரனாகிய ஒருவன் நீங்கள் காவல்
பண்ணப்பட்ட வீட்டில் கட்டுண்டிருக்கட்டும்;
நீங்களோவென்றால் புறப்பட்டு, உங்கள் வீட்
டாரின் பசிக்காகத் தானியம் கொண்டுபோய்,—
உங்கள் இளையசகோதரனை என்னண்டைக்கு ௨௰
அழைத்துவாருங்கள்; அப்பொழுது நீங்கள் சா
வாதபடிக்கு, உங்கள் வார்த்தைகள் மெய்ப்பட்
டிருக்குமென்றான்; அவர்கள் அப்படிச் செய்
யப்போய்,—ஒருவரோடொருவர் சொன்னதா ௨௧
வது: நாம் நம்முடைய சகோதரனுக்குச் செய்த
குற்றமே நம்முடையமேல் சுமருகிறது; அவன்
நம்மை இரக்கம்கேட்கும்போது, அவன் ஆத்து
மத்திற்கு இருந்த இடுக்கத்தை நாம் கண்டும்,
அவனுக்குச் செவிகொடாதேபோனோமே; ஆ
கையால் இந்த இடுக்கம் நம்முடையமேல் வரு
கிறதென்றார்கள்.—அப்பொழுது ரூபேன் அவர் ௨௨
களுக்குப் பிரதியுத்தரமாக, [2]இளைஞனுக்கு வி
ரோதமாகப் பாவம்செய்யாதிருங்களென்று நான்
உங்களோடே சொன்னதில்லையோ? நீங்களோ
கேளாதேபோனீர்கள்; இப்பொழுது இதோ அ
வன் இரத்தப்பழி கேட்கப்படுகிறதென்றான்.—
ஆனால் யோசேப்பு இதைக் கேட்டானென்று ௨௩
அவர்கள் அறியாதேபோனார்கள்; ஏனெனில்
துபாசித்தனம்பண்ணுகிறவன் அவர்களுக்குள்
ளே இருந்தான்.—அவன் அவர்களைவிட்டு அப் ௨௪
பாலே போய் அழுது, திரும்ப அவர்களண்டை
வந்து, அவர்களோடே பேசி, அவர்களுக்குள்
ளே சிமேயோனைப் பிடித்து, அவனை அவர்கள்
கண்களுக்குமுன்பாகக் கட்டுவித்தான்.

பிறகு அவர்களுடைய சாக்குகளைத் தானியத் ௨௫
தால் நிரப்பவும், அவர்களுடைய பணத்தைத்
திரும்ப அவனவன் சாக்கிலே போடவும், அவர்

[1] ௧ மோ. ௩௭. ௫—௯.

[2] ௧ மோ. ௩௭. ௨௧, ௨௨.

களுக்கு வழிக்கு ஆகாரம்கொடுக்கவும் யோசேப்
புக் கற்பித்தான்; அப்படியே அவர்களுக்குச்
௨௬ செய்யப்பட்டது.—அவர்கள் தங்கள் தானியத்
தைத் தங்கள் கழுதைகள்மேல் ஏற்றிக்கொண்டு,
அவ்விடம்விட்டுப் புறப்பட்டுப் போனார்கள்.—
௨௭ தங்குகிற இடத்திலே அவர்களில் ஒருவன் தன்
கழுதைக்குக் கவளம் கொடுக்கத் தன் சாக்கைத்
திறக்கிறபொழுது, இதோ தன் சாக்கின்வாயி
லே தன் பணம் இருக்கிறதை அவன் கண்டு,—
௨௮ தன் சகோதரரோடே, என் பணம் எனக்குத் தி
ரும்பவந்தது; இதோ என் சாக்கிலே இருக்கிற
தென்றான்; அப்பொழுது அவர்கள் திடனற்றுப்
போய், ஒருவரை ஒருவர் கலக்கமாய்ப் பார்த்து,
பராபரன் நமக்கு இதைச் செய்தது ஏதென்றார்
கள்.
௨௯ அவர்கள் கானான்தேசத்திலே தங்கள் தகப்ப
னாகிய யாக்கோபண்டையிலே வந்து சேர்ந்த
பொழுது, தங்களுக்குச் சம்பவித்தவைகளை எல்
லாம் அவனுக்கு அறிவித்துச் சொன்னதாவது:-
௩௦ தேசத்தின் அதிகாரியாயிருக்கிறவன் எங்களோ
டே கடினமாய்ப் பேசி, எங்களைத் தேசத்தை
௩௧ வேவுபார்க்கிறவர்களாக எண்ணினான்.—நாங்க
ளோவெனில் அவனோடே சொன்னதாவது:
நாங்கள் வேவுகாரராயிராமல், நிசமுள்ள மனித
௩௨ ராயிருக்கிறோம்.—எங்கள் தகப்பனுக்குப் பிறந்த
நாங்கள் பன்னிரண்டு சகோதரர்; ஒருவன் கா
ணமல்போனான்; இளையவனோவென்றால், இந்
நாளில் கானான்தேசத்தில் எங்கள் தகப்பனண்
௩௩ டையிலே இருக்கிறான் என்றோம்.—அப்பொ
ழுது தேசத்தின் அதிகாரியாயிருக்கிறவன் எங்க
ளோடே சொன்னதாவது: நீங்கள் நிசமுள்ளவர்
களாயிருக்கிறதை எதினாலே அறிவேனென்றால்
உங்கள் சகோதரனாகிய ஒருவனை நீங்கள் என்னி
டத்திலே வைத்து, உங்கள் வீட்டாரின் பசிக்கா
௩௪ கத் தானியம் வாங்கிக்கொண்டுபோய்,— உங்
கள் இளையசகோதரனை என்னண்டைக்கு அழை
த்துவாருங்கள்; அதினாலே நான், நீங்கள் வேவுகா
ரராயிராமல் நிசமுள்ளவர்கள்தான் என்று அறிந்
துகொண்டு, உங்கள் சகோதரனை உங்களுக்குக்
கொடுத்துவிடுவேன்; நீங்கள் தேசத்திலே தொழி
லும் பண்ணலாமென்றான் என்று சொன்னார்
௩௫ கள்.—சம்பவித்ததேதென்றால், அவர்கள் தங்கள்
சாக்குகளில் இருக்கிறதைக் கொட்டுகையில்,
இதோ, அவனவன் சாக்கிலே அவனவன் பண
முடிப்பு இருந்தது; தங்கள் பணங்களின் முடிப்
புகளை அவர்களும் அவர்கள் தகப்பனும்
௩௬ கண்டு பயந்தார்கள்.— அவர்கள் தகப்பனாகிய
யாக்கோபு அவர்களுடனே, என்னைப் பிள்ளை
கள் அற்றவனாக்குகிறீர்கள்; யோசேப்பு இல்லா
தேபோனான்; சிமேயோனும் இல்லாதே போ
னான்; பென்யமீனையும் அழைத்துக்கொண்டு
போகிறீர்கள்; என்மேலே இவை எல்லாம் வரு
௩௭ கிறதென்றான்.— அப்பொழுது ரூபேன் தன்
தகப்பனோடே, அவனை நான் உம்மண்டைக்கு
அழைத்துவாராதேபோனால், என் இரண்டு குமா
ரரைக் கொன்றுபோடுவீராக; என் கையிலே அ
வனை ஒப்புவியும், நான் அவனை உம்மண்டைக்
குத் திரும்ப அழைத்து வருவேன் என்றான்.—
அவனோவென்றால் என் மகன் உங்களோடே ௩௮
கூட இறங்கிப்போவதில்லை; ஏனெனில் அவன்
தமையன் மரணமடைந்தான்; இவன் ஒரு
வன் மீதியானவன்; நீங்கள் போகும் வழியிலே
இவனுக்கு ஒரு சேதம் வந்தால், நீங்கள் என்
நரையைச் சஞ்சலத்தோடே குழியில் இறங்கப்
பண்ணுவீர்கள் என்றான்.

## ௪௩. அதிகாரம்.

௧. யாக்கோபு பென்யமீனை அனுப்ப மிகுதியாய்ப் போதிக்கப்பட்டது. ௧௬. யோசேப்புத் தன் சகோதரரை ஏற்றுக்கொண்டது. ௩௧. அவன் அவர்களுக்கு ஒரு விருந்துசெய்தது.

பஞ்சமோவென்றால் தேசத்திலே மிகுதியாயி ௧
ருந்தது.—ஆகையால் அவர்கள் எகிப்திலிருந்து ௨
கொண்டுவந்த தானியம் சாப்பிட்டுத் தீர்ந்தபொ
ழுது, அவர்கள் தகப்பன் அவர்களுடனே, நீங்கள்
திரும்பப் போய், கொஞ்சம் ஆகாரம் நமக்குக்
கொள்ளுங்கள் என்றான்.—அப்பொழுது யூதா ௩
அவனோடே சொன்னதாவது: உங்கள் சகோத
ரன் உங்களோடேகூட வராவிட்டால், நீங்கள்
என் முகத்தைப் பார்ப்பதில்லை என்கிறதை அந்த
மனிதன் எங்களுக்குத் திடச்சாட்சியாய்ச் சொல்
லிக் கற்பித்தான்.—நீர் எங்கள் சகோதரனை எங் ௪
களோடேகூட அனுப்புகிறதுண்டானால், நாங்
கள் இறங்கிப்போய், உமக்கு ஆகாரம்கொள்ளு
வோம்.—அனுப்பாமல் போனீரேயானால், நாங் ௫
கள் இறங்கிப்போவதில்லை; ஏனெனில் உங்கள்
சகோதரன் உங்களோடேகூட வராவிட்டால்,
நீங்கள் என் முகத்தைப் பார்ப்பதில்லையென்று
அந்த மனிதன் எங்களோடே சொன்னானே என்
றான்.—அப்பொழுது இஸ்ரவேல், உங்களுக்கு ௬
இன்னம் ஒரு சகோதரன் இருக்கிறதை நீங்கள்
அந்த மனிதனுக்கு அறிவித்ததினாலே எனக்கேன்
பொல்லாப்பு உண்டுபண்ணினீர்கள் என்றான்.—
அதற்கவர்கள் சொன்னதாவது: உங்கள் தகப்பன் ௭
இன்னம் உயிரோடிருக்கிறானோ என்றும், உங்க
ளுக்கு இன்னம் ஒரு சகோதரன் உண்டோ என்
றும், அந்த மனிதன் எங்கள் செய்தியையும் எங்
கள் வம்சத்தின் செய்தியையும் கேட்கவே கேட்
டான்; அந்தக் கேள்விகளுக்குத்தக்கதாக அவ
னுக்கு அறிவித்தோம்; உங்கள் சகோதரனை உங்
களோடேகூட இங்கே அழைத்துவாருங்கள்
என்று அவன் சொல்லுவான் என்கிறதை அறிந்
தோமோ என்றார்கள்.— பின்னையும் யூதா தன் ௮
தகப்பனாகிய இஸ்ரவேலோடே சொன்னதா
வது: நாங்களும் நீரும் எங்கள் குழந்தைகளும்
சாவாமல் உயிரோடிருக்கும்படிக்கு, நாங்கள்
எழுந்திருந்து போகத்தக்கவிதமாகப் பிள்ளை
யாண்டானை என்னோடேகூட அனுப்பும்.—
அவனுக்காக நான் பிணையாயிருப்பேன்; என் ௯
கையில் அவனைக் கேட்பீராக; நான் அவனை
உம்மண்டைக்குக் கொண்டுவந்து அவனை உமக்

குமுன்பாக நிறுத்தாதேபோனால், சகல நா
௰ ளும் உமக்கு நேரஸ்தனாயிருப்பேன். — ஏனெ
னில் நாங்கள் தாமதிக்காதிருந்தோமானால், இப்
பொழுது இரண்டுவிசை திரும்பிவந்திருப்போ
௰௧ மே என்றான்.—அப்பொழுது அவர்கள் தகப்ப
னாகிய இஸ்ரவேல் அவர்களோடே சொன்னதா
வது: இப்படி வேண்டியதேயானால், ஒன்று
செய்யுங்கள்; இந்தத் தேசத்தின் உச்சிதங்களா
கிய கொஞ்சம் பிசின்தயிலத்தையும் கொஞ்சம்
தேனையும் சம்பாரங்களையும் வெள்ளைப்போளத்
தையும் தெரேபிந்து கொட்டைகளையும் வாது
மைக்கொட்டைகளையும் உங்கள் சாக்குகளில்
போட்டு, அந்த மனிதனுக்குக் காணிக்கையா
௰௨ கக் கொண்டுபோங்கள். — இரட்டிப்பாய்ப் ப
ணத்தை உங்கள் கைகளிலும் வைத்து, உங்கள்
சாக்குகளின் வாயிலே திரும்பிவந்த பணத்தை
மறுபடியும் உங்கள் கைகளிலே கொண்டுபோங்
௰௩ கள்; அது பிசகாயிருந்ததாக்கும்.—உங்கள் சகோ
தரனையும் கூட்டிக்கொண்டு, எழுந்து, அந்த
மனிதனண்டைக்குத் திரும்பிப்போங்கள். —
௰௪ ஆனால் அந்த மனிதன் உங்களுடைய மற்றச்
சகோதரனையும் பென்யமீனையும், உங்களோ
டேகூட அனுப்பிவிடும்படிக்கு, சர்வத்திற்கும்
வல்ல பராபரன் அவன்முன்பாக உங்களுக்கு
இரக்கம் கிடைக்கப்பண்ணுவாராக; நானோவெ
னில் பிள்ளை அற்றுப்போனவனைப்போல இருப்
பேன் என்றான்.

௰௫ அப்பொழுது அவர்கள் அந்தக் காணிக்கை
யையும் தங்கள் கைகளில் இரட்டிப்பான
பணத்தையும் எடுத்து, பென்யமீனைக் கூட்டிக்
கொண்டு, பயணம்புறப்பட்டு எகிப்திற்கு இறங்
கிப் போய், யோசேப்புக்குமுன்பாக வந்து
௰௬ நின்றார்கள்.—அப்பொழுது பென்யமீன் அவர்
களோடேகூட இருக்கிறதை யோசேப்புக்
கண்டு, தன் வீட்டு விசாரிப்புக்காரனோடே, நீ
இந்த மனிதரை வீட்டிற்கு அழைத்துப்போய்,
சாப்பாட்டுக்குவேண்டியவைகளை அடித்து ஆயத்
தம்பண்ணு; ஏனெனில் மத்தியானத்திலே
இந்த மனிதர் என்னோடே சாப்பிடுவார்கள்
௰௭ என்றான். — அவன் யோசேப்புத் தனக்குச்
சொன்னபடியே செய்து, அந்த மனிதரை யோ
சேப்பின் வீட்டிற்கு அழைத்துப்போனான்.—
௰௮ அப்பொழுது அவர்கள், தாங்கள் யோசேப்பின்
வீட்டிற்கு அழைத்துப்போகப்படுகிறதைக் கண்
டு பயந்து, முந்தினமுறை நம்முடைய சாக்கு
களில் திரும்பிவந்த பணத்தின்நிமித்தம் நம்
முடையபேரில் குற்றம்சாற்றி, நம்முடைய
மேல் விழுந்து, நம்மைச் சிறைகளாக்கி, நம்
முடைய கழுதைகளை எடுத்துக்கொள்வதற்காக
நாம் கொண்டுபோகப்படுகிறோம் என்று சொல்
௰௯ லி,—யோசேப்பின் வீட்டு விசாரிப்புக்காரனண்
டையிலே சேர்ந்து, வீட்டுவாசற்படியிலே
௨௰ அவனோடே பேசிச் சொன்னதாவது:—எங்கள்
ஆண்டவனே, ஆகாரம்கொள்ள முந்த இறங்கி
வந்திருந்து போனோமே.—அப்பொழுது சம்ப ௨௰௧
வித்ததேதெனில், நாங்கள் தங்கும் இடத்தில்
வந்து எங்கள் சாக்குகளைத் திறந்தபொழுது,
இதோ, நாங்கள் எங்கள் பணத்தை நிறுத்துக்
கொடுத்த நிறையாய் அவனவன் பணம் அவன
வன் சாக்கின் வாயில் இருந்தது; அதை எங்
கள் கையிலே திரும்பக் கொண்டுவந்தோம். —
ஆகாரம்கொள்ள வேறே பணத்தையும் எங்கள் ௨௰௨
கையிலே எடுத்துக்கொண்டுவந்தோம்; எங்கள்
பணத்தை யார் எங்கள் சாக்குகளில் வைத்
தான் என்கிறதை அறியோம் என்றார்கள். —
அவனோவென்றால் உங்களுக்குச் சமாதானம், ௨௰௩
நீங்கள் பயப்படவேண்டாம், உங்கள் பராபர
னும் உங்கள் தகப்பனுடைய பராபரனுமான
வர் உங்கள் சாக்குகளில் உங்களுக்குப் பொக்
கிஷங்களைக் கட்டளையிட்டார்; உங்கள் பணம்
எனக்கு வந்துசேர்ந்ததென்று சொல்லி, சீமே
யோனை வெளியே அவர்களண்டையில் அழைத்
துவந்துவிட்டு,

அவர்களை யோசேப்பின் வீட்டிற்குள் அ ௨௰௪
ழைத்துக்கொண்டுபோய், தங்கள் கால்களைக்
கழுவ அவர்களுக்குத்தண்ணீர்கொடுத்து, அவர்
கள் கழுதைகளுக்கு இரைபோட்டான்.—மத்தி ௨௰௫
யானத்திலே யோசேப்பு வருமளவும், அவர்கள்
காணிக்கையை ஆயத்தமாய் வைத்தார்கள்; ஏனெ
னில் தாங்கள் அங்கே அப்பம்சாப்பிடப்போ
கிறதைக் கேட்டிருந்தார்கள்.—யோசேப்பு வீட் ௨௰௬
டிற்கு வந்தபொழுது, அவர்கள் தங்கள் கையி
லிருந்த காணிக்கையை அவனுக்கு வீட்டிற்குள்
கொண்டுபோய், [1]தரைமட்டும் குனிந்து, அவனை
வணங்கினார்கள். — அப்பொழுது அவன், சுக ௨௰௭
மாயிருக்கிறீர்களோ என்று கேட்டு, நீங்கள்
சொன்ன முதிர்வயதான உங்கள் தகப்பன் சுக
மாயிருக்கிறானோ? அவன் இன்னம் உயிரோடி
ருக்கிறானோ? என்று விசாரித்தான்.—அவர்கள், ௨௰௮
எங்கள் தகப்பனாகிய உம்முடைய ஊழியக்
காரன் சுகமாயிருக்கிறான், இன்னம் உயிரோடி
ருக்கிறானென்று சொல்லி, குனிந்து வணங்கி
னார்கள். — அவன் தன் கண்களை ஏறெடுத்து, ௨௰௯
தன் தாயின் குமாரனாகிய தன்னோடேகூடப்
பிறந்த பென்யமீனைக் கண்டு, இவன் நீங்கள்
என்னோடே சொன்ன உங்கள் இளையசகோதர
னோ என்று கேட்டு, என் மகனே, பராபரன்
உன்மேலே கிருபைவைக்கக்கடவரென்றான்.-
ஆனால் தன் சகோதரனுக்காக யோசேப்பின் ௩௰
உள்ளம் பொங்கினபடியினாலே, அவன் அழு
கிறதற்கு இடம்தேடித் தீவிரித்து, அறையிலே
போய், அங்கே அழுதான்.—பிறகு அவன் தன் ௩௰௧
முகத்தைக் கழுவிப் புறப்பட்டு, தன்னை அடக்
கிக்கொண்டு, போசனம்வையுங்கள் என்றான்.-
அப்பொழுது அவனுக்குத் தனிப்படவும், அவர் ௩௰௨
களுக்குத் தனிப்படவும், அவனோடே சாப்பிடு

1 ௧ மோ. ௩௭. ௭.

கிற எகிப்தியருக்குத் தனிப்படவும் வைத்தார்
கள்; ஏனெனில் எகிப்தியர் எபிரேயரோடே
அப்பம் சாப்பிடமாட்டார்கள்; அதேனென்றால்
அது எகிப்தியருக்கு அருவருப்பாயிருக்கும்.—
௩௩ அவர்கள் அவனுக்குமுன்பாக மூத்தவன் தன்
மூத்தவயதின்படியேயும், இளையவன் தன் இளை
யவயதின்படியேயும் உளுக்காரவைக்கப்பட்
டார்கள்; அதற்காக அவர்கள், ஒருவருக்கொரு
௩௪ வர் ஆச்சரியப்பட்டார்கள்.—அவன் தன் முன்
னே இருக்கிறதில் அவர்களுக்குப் பங்கிட்டு
அனுப்பினான்; ஆனால் அவர்கள் எல்லாருடை
ய பங்குகளைப்பார்க்கிலும், பென்யமீனுடைய
பங்கு ஐந்தத்தனை அதிகமாயிற்று; அவர்கள்
குடித்து, அவனோடே சந்தோஷமாயிருந்தார்கள்.

## ௪௪. அதிகாரம்.

௧. யோசேப்புத் தன் சகோதரர்களை நிறுத்த உபாயம்பண்ணியது. ௰௮. யூதா யோசேப்புக்கு வணக்கமாக மன்றாடியது.

௧ பிற்பாடு அவன் தன் வீட்டு விசாரிப்புக்கார
னுக்குக் கற்பித்ததாவது: நீ இந்த மனிதருடைய
சாக்குகளை, அவர்கள் ஏற்றிக்கொண்டு போகத்
தக்க பாரமாய் ஆகாரத்தினாலே நிரப்பி, அவன
வன் பணத்தை அவனவனுடைய சாக்கின் வாயி
௨ லேபோட்டு,—இளையவனுடைய சாக்கின் வா
யிலே வெள்ளிப்பாத்திரமாகிய என்னுடைய
பாத்திரத்தையும் அவனுடைய தானியத்தின்
பணத்தையும்போடு என்று கற்பித்தான்; அவன்
யோசேப்புச் சொன்ன வார்த்தையின்படியே
செய்தான்.
௩ காலமே வெளிச்சமாகிறபொழுது அந்த மனி
தர் தங்கள் கழுதைகளோடும்கூட அனுப்பி
௪ விடப்பட்டார்கள். — அவர்கள் பட்டணத்தை
விட்டுப் புறப்பட்டுத் தூரமாய்ப் போகாததற்கு
முன்னே, யோசேப்புத் தன் வீட்டுவிசாரிப்புக்
காரனோடே சொன்னதாவது: நீ எழுந்து அந்த
மனிதரைப் பின்தொடர்ந்து, அவர்களைக் கிட்
டிப் பிடிக்கும்பொழுது அவர்களோடே சொல்
லவேண்டியது ஏதெனில், நீங்கள் நன்மைக்குத்
௫ தீமையைச் சரிக்கட்டினதென்ன? — அது என்
எசமானன் குடிக்கிற பாத்திரம் அல்லவோ? அது
போனவகை அவருக்கு ஞானதிருஷ்டியால் தெ
ரியாதோ? நீங்கள் செய்தது பொல்லாத காரிய
௬ மாயிருக்கிறதென்று சொல்லென்றான்.—அவன்
அவர்களைத் தொடர்ந்துபிடித்து, இந்த வார்த்
௭ தைகளை அவர்களோடே சொன்னான். — அப்
பொழுது அவர்கள் அவனோடே சொன்னதா
வது: எங்கள் ஆண்டவன் இப்படிக்கொத்த வா
ர்த்தைகளைச் சொல்லுவானேன்? இப்படிக்கொ
த்த காரியத்தை உம்முடைய அடியார் ஒருக்கா
௮ லும் செய்வதில்லை. — இதோ, எங்கள் சாக்கு
களின் வாயிலே நாங்கள் கண்ட பணத்தைக்
கானான்தேசத்திலிருந்து திரும்ப உம்மண்டைக்
குக் கொண்டுவந்தோமே? நாங்கள் உம்முடைய
எசமானனின் வீட்டிலிருந்து வெள்ளியையாகி
லும் பொன்னையாகிலும் திருடிக்கொண்டுபோ
வது எப்படி?—உம்முடைய அடியாரில் எவனி ௯
டத்திலே அது கண்டுபிடிக்கப்படுமோ, அவன்
சாவக்கடவன்; நாங்களும் எங்கள் ஆண்டவ
னுக்கு அடிமைகளாவோம் என்றார்கள்.-அதற்கு ௰
அவன், இப்பொழுதும் நீங்கள் சொன்ன வார்த்
தைகளின்படியே ஆகக்கடவது; எவனிடத்தில்
அது கண்டுபிடிக்கப்படுமோ, அவன் எனக்கு
அடிமையாவான்; நீங்களோவென்றால் குற்றமற்
றிருப்பீர்கள் என்றான்.—அவர்கள் தீவிரித்து அ ௰௧
வனவன் தன் தன் சாக்கைத் தரையிலே இறக்கிப்
போட்டு, ஒவ்வொருவராய்த் தங்கள் சாக்குகளைத்
திறந்துவைத்தார்கள். — அவன் மூத்தவனைத் ௰௨
துவக்கி இளையவன்மட்டும் சோதிக்கிறபொழுது,
பாத்திரம் பென்யமீனுடைய சாக்கிலே கண்டு
பிடிக்கப்பட்டது.
அப்பொழுது அவர்கள் தங்கள் வஸ்திரங்க ௰௩
ளைக் கிழித்துக்கொண்டு, அவனவன் தன் தன்
கழுதையின்மேலே சுமையை ஏற்றி, பட்டணத்
திற்குத் திரும்பினார்கள்.-யூதாவும் அவன் சகோ ௰௪
தரரும் யோசேப்பின் வீட்டிலே வந்தார்கள்;
ஏனெனில் அவன் அதுவரையில் அங்கே இருந்
தான்; அவனுக்குமுன்பாகத் தரையிலே விழுந்
தார்கள்.—யோசேப்பு அவர்களுடனே, நீங்கள் ௰௫
செய்த இந்தக் கிரியை ஏது? என்னைப்போ
லொத்த மனிதனுக்குக் காரியம் ஞானதிருஷ்டி
யினால் தெரியுமென்று, அறியாதே போனீர்க
ளோ என்றான். — அப்பொழுது யூதா, என் ௰௬
ஆண்டவனுக்கு நாங்கள் என்ன சொல்லப்போ
கிறோம்? என்ன பேசுவோம்? எதினால் எங்களை
நீதிமான்களாக்குவோம்? பராபரன் உம்முடைய
அடியாரின் அக்கிரமத்தைக் கண்டுபிடித்தார்;
இதோ நாங்கள் என் ஆண்டவனுக்கு அடிமை
கள்; நாங்களும் பாத்திரம் கண்டுபிடிக்கப்பட்ட
அவனும்தானே என்றான்.—அவனோவென்றால் ௰௭
இப்படிக்கொத்த செய்கை எனக்குத் தூரமாயி
ருப்பதாக; எவன் வசத்தில் பாத்திரம் கண்டுபி
டிக்கப்பட்டதோ, அவனே எனக்கு அடிமை
யாய் இருப்பான்; நீங்களோவெனில் சமாதா
னத்தோடே உங்கள் தகப்பனண்டைக்குப் போ
யேறுங்கள் என்றான்.
அப்பொழுது யூதா அவனண்டையிலே சேர்ந் ௰௮
து சொன்னதாவது: ஆ, என் ஆண்டவனே, உம்
முடைய அடியான் என் ஆண்டவனுடைய
செவிகளுக்குமுன்பாக ஒரு வார்த்தை பேசட்
டும்; உம்முடைய கோபம் எரியாதிருப்பதாக;
ஏனெனில் நீர் பார்வோனைப்போல இருக்கிறீர்.-
[1]உங்களுக்குத் தகப்பனானும் சகோதரனா ௰௯
னும் உண்டோ என்று என் ஆண்டவன் உம்மு
டைய அடியாரைக் கேட்டீர்.—அப்பொழுது ௨௰
என் ஆண்டவனுடனே, எங்களுக்கு முதிர்வய
துள்ள தகப்பனும் அவருக்கு முதிர்வயதிலே

1 ௧ மோ. ௪௨. ௭.

பிறந்த இளையசகோதரனும் உண்டு; இவனு
டைய தமையன் செத்துப்போனான்; இவன்
ஒருவன் தன் தாயாருக்கு மீதியானவன்; இவனு
டைய தகப்பன் இவன்மேலே பட்சமாயிருக்கி
௨௧ றாரென்றோம்.—அப்பொழுது நீர் உம்முடைய
அடியாரோடே அவனை என்னண்டைக்கு அ
ழைத்துவாருங்கள்; என் கண்ணை அவன்மேலே
௨௨ வைப்பேன் என்றீர்.-நாங்களோவென்றால் என்
ஆண்டவனோடே, அந்த இளைஞன் தன் தகப்
பனை விடக்கூடாது; தன் தகப்பனை விட்டால்
௨௩ அவர் செத்துப்போவாரென்றோம். — நீரோவெ
னில் உம்முடைய அடியாருடனே, உங்கள் இ
ளையசகோதரன் உங்களோடேகூட இறங்கிவா
ராதேபோனால், நீங்கள் என் முகத்தை இனிப்
௨௪ பார்ப்பதில்லை என்று சொன்னீர்.—நாங்கள் உம்
முடைய அடியானாகிய என்தகப்பனண்டைக்கு
வந்தேறினபொழுது சம்பவித்ததேதென்றால்,
என் ஆண்டவனுடைய வார்த்தைகளை அவருக்கு
௨௫ அறிவித்தோம்.-நீங்கள் திரும்பப்போய், கொஞ்
சம் ஆகாரம் நமக்குக் கொள்ளுங்களென்று எங்
௨௬ கள் தகப்பனார் சொன்னார்.—அதற்கு நாங்கள்
சொன்னதேதெனில், நாங்கள் இறங்கிப் போ
கக்கூடாது; எங்கள் இளையசகோதரன் எங்க
ளோடு இருந்தானேயானால் இறங்கிப்போவோ
ம்; ஏனென்றால் எங்கள் இளையசகோதரன் எங்
களோடே இராவிட்டால், நாங்கள் அந்தப் புரு
ஷனுடைய முகத்தைப் பார்க்கக்கூடாதென்
௨௭ றோம்.—அப்பொழுது உம்முடைய அடியானா
கிய என் தகப்பன் எங்களோடே சொன்னதா
வது: என் பெண்சாதி எனக்கு இரண்டு பிள்ளை
௨௮ களைப் பெற்றாள் என்கிறதையும், — அவர்க
ளில் ஒருவன் என்னிடத்திலிருந்து புறப்பட்டுப்
போனான், அவன் பீறுண்ணவே பீறுண்டா
னென்று முன்சொல்லி, இதுவரைக்கும் அவ
னைக் காணாதிருக்கிறேன் என்கிறதையும் நீங்கள்
௨௯ அறிவீர்கள்.—நீங்கள் இவனையும் என் முன்பாக
இராதபடிக்கு அழைத்துப்போகும்போது, ஒரு
சேதம் அவனுக்கு வந்தால், என் நரையை நிர்ப்
பந்தத்தோடே குழியில் இறங்கப்பண்ணுவீர்கள்
௩௰ என்றான்.—இப்பொழுதும் இளைஞன் எங்களோ
டிராமல், நான் என் தகப்பனாகிய உம்முடைய
அடியானண்டையிலே போனால், அப்பொழுது
அவருடைய ஆத்துமா இவன் ஆத்துமாவோடே
ஒட்டிக்கொண்டிருக்கிறபடியினாலே சம்பவிப்
௩௧ பது ஏதெனில்,—அவர் இளைஞன் இல்லை என்று
காணும்பொழுது, செத்துப்போவார்; அப்படி
யே உம்முடைய அடியாரும் உம்முடைய ஊழி
யக்காரனாகிய எங்கள் தகப்பனுடைய நரையைச்
சஞ்சலத்தோடே குழியில் இறங்கப்பண்ணு
௩௨ வோமே.—ஏனெனில் [1]நான் அவனை உம்மண்
டைக்கு அழைத்துவாராதேபோனால், நான் சகல
நாளும் என் தகப்பனுக்கு நேரஸ்தனாய் இருப்
பேனென்று உம்முடைய அடியானாகிய நான்
என் தகப்பனிடத்திலே இந்த இளைஞனுக்காகப்
பிணைப்பட்டேன்.—இப்பொழுதும் இளைஞன் ௩௩
தன் சகோதரரோடேகூடப் போய்ஏறும்படிக்கு,
உம்முடைய அடியானாகிய நான் இளைஞனுக்
குப் பதிலாக இங்கே என் ஆண்டவனுக்கு அடி
மையாய் இருக்கட்டும்.—ஏனெனில் இளைஞன் ௩௪
என்னோடு இல்லாவிட்டால் எப்படி என் தகப்
பனண்டைக்குப் போய் ஏறுவேன்; என் தகப்ப
னைப் பிடிக்கும் தீங்கை அப்பொழுது காண்
பேனே என்றான்.

## ௪௫. அதிகாரம்.

*௧. யோசேப்புத் தன் சகோதரருக்குத் தன்னை அறியப்படுத்தினது. ௫. அவன் அவர்களுக்குப் பராபரனுடைய செயலால் தேறுதல் சொல்லியது. ௯. அவன் தன் தகப்பனை அழைப்பித்தது. ௰௬. பார்வோன் அதை உறுதிபண்ணியது. ௨௧. யோசேப்பு அவர்களுடைய பிரயாணத்துக்கு வேண்டியவைகளைச் சவதரித்துக்கொடுத்து, அவர்கள் ஒருமித்திருக்கும்படி புத்திசொல்லியது. ௨௬. யாக்கோபு சமாசாரத்தைப்பற்றித் திடன்கொண்டது.*

அப்பொழுது யோசேப்புத் தன் அண்டையில் ௧
நிற்கிற எல்லார் முன்பாகவும் தன்னை அடக்கிக்
கொண்டிருக்கக் கூடாமல், யாவரையும் என்னை
விட்டு வெளியே போகப்பண்ணுங்களென்று
கூப்பிட்டான்; யோசேப்புத் தன் சகோதரருக்
குத் தன்னை அறியப்படுத்துகையில் ஒருவரும்
அவனண்டையிலே நின்றதில்லை.—அவன் சத்த ௨
மிட்டு அழுதான்; அதை எகிப்தியர் கேட்டார்
கள்; பார்வோனின் வீட்டாரும் கேட்டார்
கள்.—யோசேப்புத் தன் சகோதரரோடே நான் ௩
யோசேப்பு; என் தகப்பன் இன்னம் உயிரோடி
ருக்கிறாரோ என்றான்; ஆனால் அவன் சகோதரர்
அவனுக்குமுன்பாகக் கலங்கினதினாலே, அவ
னுக்குப் பிரதியுத்தாரம்சொல்ல அவர்களுக்குக்
கூடாதேபோயிற்று. — அப்பொழுது யோசேப் ௪
புத் தன் சகோதரரோடே, என் அண்டையிலே
கிட்டிவாருங்கள் என்றான்; அவர்கள் கிட்டிப்
போனார்கள்; அப்பொழுது அவன் சொன்னதா
வது: நீங்கள் எகிப்திற்குப் போகிறவர்களுக்கு
விற்ற உங்கள் சகோதரனாகிய யோசேப்பு
நானே. — இப்பொழுதும் நீங்கள் என்னை இவ் ௫
விடத்திற்கு விற்றுப்போட்டதினாலே, நீங்கள்
சஞ்சலப்படவும் அது உங்கள் பார்வைக்குப்
பொல்லாப்பாயிருக்கவும் வேண்டாம்; ஏனெ
னில் உங்கள் சீவனுக்காகப் பராபரன் என்னை
உங்களுக்குமுன்னாக அனுப்பினார். — ஏனென் ௬
றால் இந்த இரண்டுவருஷம் தேசத்திற்குள்ளே
பஞ்சம் உண்டாயிருந்தது; உழவும் அறுப்பும்
இல்லாத ஐந்துவருஷங்களும் இன்னம் வரும்.—
ஆனால், உங்களைத் தேசத்தில் மீதியாக வைப்ப ௭
தற்கும் உங்களைப் பெரிய இரட்சிப்பினாலே உயி
ரோடே காப்பதற்குமாக, பராபரன் என்னை உங்
களுக்குமுன்னாக அனுப்பினார். — இப்பொழு ௮
தும் நீங்களல்ல, பராபரன் என்னை இங்கே
அனுப்பி, என்னைப் பார்வோனுக்குத் தகப்பனா

[1] ௧ Cor. ௪௩. ௯.

கவும், அவர் வீட்டிற்கெல்லாம் துரையாகவும்,
எகிப்துதேசத்தை எல்லாம் ஆளுகிறவனாகவும்
௯ வைத்தார்.—நீங்கள் தீவிரத்தோடே என் தகப்ப
னண்டைக்குப் போயேறி, அவரோடே சொல்
லவேண்டியது ஏதெனில், உம்முடைய குமார
னாகிய யோசேப்புச் சொல்லி அனுப்புகிறதா
வது: பராபரன் என்னை எகிப்திற்கெல்லாம்துரை
யாக வைத்தார்; என் அண்டைக்கு இறங்கிவா
௰ ரும், தாமதிக்கவேண்டாம். — நீர் கோசேன்தே
சத்திலே வாசம்பண்ணி, எனக்குச் சமீபத்திலே
இருப்பீர்; நீரும் உம்முடைய பிள்ளைகளும் உம்
முடைய பிள்ளைகளின் பிள்ளைகளும் உம்மு
டைய ஆடுகளும் உம்முடைய மாடுகளும் உமக்
௰௧ குண்டான யாவும் கூடத்தானே.—நீரும் உம்மு
டைய வீட்டாரும் உமக்கிருக்கிற யாவும் தாழ்வு
படாதபடிக்கு, அங்கே உம்மைப் பராமரிப்
பேன்; ஏனெனில் பஞ்சம் இன்னம் ஐந்துவரு
ஷம்மட்டும் இருக்குமென்கிறான் என்று சொல்
௰௨ லுங்கள். — இதோ என்னுடைய வாய் உங்க
ளோடே பேசுகிறது என்கிறதை உங்கள் கண்க
ளும் என் தம்பியாகிய பென்யமீனின் கண்க
௰௩ ளும் காண்கிறதே.—எகிப்திலே எனக்கு இருக்
கிற என்னுடைய எல்லா மகிமையையும் நீங்
கள் கண்டவை எல்லாவற்றையும் என் தகப்ப
னுக்கு அறிவித்து, தீவிரமாய் என் தகப்பனை
இவ்விடத்திற்கு இறங்கிவரப்பண்ணுங்கள் என்
௰௪ று சொல்லி, — தன் தம்பியாகிய பென்யமீனு
டைய கழுத்திறுகக் கட்டிக்கொண்டு அழுதான்;
பென்யமீனும் அவன் கழுத்தைக் கட்டிக்கொண்
௰௫ டு அழுதான்.—தன்னுடைய எல்லாச் சகோதர
ரையும் முத்தம்செய்து அவர்கள்முன்பாக அழு
தான்; அதற்குப் பிற்பாடு அவன் சகோதரர் அவ
னோடே பேசினார்கள்.

௰௬ யோசேப்பின் சகோதரர் வந்தார்களென்று
பார்வோன் வீட்டிலே செய்தி கேட்கப்பட்ட
பொழுது, அது பார்வோன் பார்வைக்கும் அவன்
ஊழியக்காரரின் பார்வைக்கும் நன்றாய் இருந்
௰௭ தது.—அப்பொழுது பார்வோன் யோசேப்போ
டே சொன்னது: நீ உன் சகோதரரோடே சொல்
லவேண்டியதாவது: நீங்கள் செய்யவேண்டியது
ஏதெனில், உங்கள் மிருகசீவன்களின்மேல்
பொதிஏற்றிப் புறப்பட்டு, கானான்தேசத்திற்
௰௮ குப் போய், — உங்கள் தகப்பனையும் உங்கள்
வீட்டாரையும் கூட்டிக்கொண்டு, என் அண்
டைக்கு வாருங்கள், நான் உங்களுக்கு எகிப்து
தேசத்தின் நன்மையைக் கொடுப்பேன்; தேசத்
௰௯ தின் கொழுப்பைச் சாப்பிடுவீர்கள். — நீங்கள்
செய்யவேண்டியது ஏதெனில், நீங்கள் உங்கள்
குழந்தைகளுக்காகவும் உங்கள் பெண்சாதிக
ளுக்காகவும் வண்டில்களை எகிப்துதேசத்திலி
ருந்து கொண்டுபோய், உங்கள் தகப்பனை
௨௰ யும் ஏற்றிவாருங்கள். — உங்கள் கண் உங்களு
டைய தட்டுமுட்டுகளைப் பார்க்கவேண்டாம்;
ஏனெனில் எகிப்துதேசமெங்கும் நன்மையாயி
ருக்கிறது உங்களுடையதாய் இருக்குமென்று
அவர்களோடே சொல்ல நீ கட்டளைபெற்றாய்
என்றான்.

இப்படியே இஸ்ரவேலின் குமாரர் செய்தார் ௨௧
கள்; யோசேப்பு அவர்களுக்குப் பார்வோனு
டைய கட்டளையின்படியே வண்டில்களைக்கொ
டுத்து, வழிக்கு ஆகாரத்தையும் அவர்களுக்குக்
கொடுத்தான்.—அவர்களில் ஒவ்வொருவனுக்கு ௨௨
அவன் மாற்று வஸ்திரங்களையும் கொடுத்து,
பென்யமீனுக்கோ முந்நூறு வெள்ளிக்காசையும்
ஐந்து மாற்று வஸ்திரங்களையும் கொடுத்து, —
அப்படியே தன் தகப்பனுக்கு எகிப்தின் உச்சி ௨௩
தங்களைச் சுமந்துபோகிற பத்துக் கழுதைகளை
யும், தன் தகப்பனுக்காக வழிக்குத் தானியமும்
அப்பமும் தின்பண்டங்களும் சுமந்துபோகிற
பத்துக் கோளிகைக் கழுதைகளையும் அனுப்பி
னான்.—அப்படியே அவன் தன் சகோதரரை ௨௪
அனுப்பிவிட்டு, இவர்கள் போகிறபொழுது,
வழியிலே சண்டைபண்ணீர்களாக என்று அவர்
களோடே சொன்னான்.

அவர்கள் எகிப்திலிருந்து போயேறி, கானான் ௨௫
தேசத்திலே தங்கள் தகப்பனாகிய யாக்கோபண்
டைக்கு வந்து,—யோசேப்பு இன்னம் உயிரோ ௨௬
டிருக்கிறான் என்றும், அவன் எகிப்துதேசத்தை
எல்லாம் ஆளுகிறான் என்றும் அவனுக்கு அறி
வித்தார்கள்; ஆனால் அவன் இருதயம் தளம்பிற்
று; ஏனெனில் அவர்களை நம்பாதிருந்தான்.—
அவர்களோவென்றால் யோசேப்புத் தங்களுட ௨௭
னே பேசின எல்லா வார்த்தைகளையும் அவனுக்
குச் சொல்லுகிறபொழுதும், தன்னை ஏற்றிக்
கொண்டுபோக யோசேப்பு அனுப்பின வண்
டில்களை அவன் காண்கிறபொழுதும், அவர்க
ளுடைய தகப்பனாகிய யாக்கோபின் ஆவி திடப்
பட்டது.—அப்பொழுது இஸ்ரவேல், என் கு ௨௮
மாரனாகிய யோசேப்பு இன்னம் உயிரோடிருக்
கிறபொழுதும், நான் மரணம் அடையாததற்கு
முன்னேபோய் அவனைப் பார்ப்பேன் என்றான்.

## ௪௬. அதிகாரம்.

௧. யாக்கோபு பேர்சேபாவிலே பராபரனால் தேறுதல் அடையப்பட்டது. ௫. அங்கே இருந்து அவன் கூட்டத்தாரோடே எகிப்திற்குப் போனது. ௮. எகிப்திற்குப் போன அவன் குடும்பத்தின் தொகை. ௨௮. யோசேப்பு யாக்கோபைச் சந்தித்தது. ௩௧. பார்வோனுக்குப் பதில் உத்தரவு கொடுக்க அவன் தன் சகோதரருக்குக் கற்பித்தது.

இஸ்ரவேல் தனக்குண்டானவைகளை எல்லாம் ௧
கூட்டிக்கொண்டு பயணம்புறப்பட்டுப் பேர்சே
பாவுக்கு வந்து, தன் தகப்பனாகிய ஈசாக்குடைய
பராபரனுக்குப் பலிகளை இட்டான்.—இராத்தரி ௨
சனைகளில் பராபரன் இஸ்ரவேலோடே பேசி,
யாக்கோபே யாக்கோபே, என்றார்; அவன் இ
தோ அடியேனென்றான் —அப்பொழுது அவர் ௩
சொன்னதாவது: நாம் உன் தகப்பனுடைய தே
வனாகிய பராபரன்; எகிப்திற்கு இறங்கிப்போ
கப் பயப்படாயாக; ஏனெனில் அங்கே உன்
னைப் பெரியசாதி ஆக்குவோம்.—நாம் உன்னோ ௪
டேகூட எகிப்திற்கு இறங்கிப்போவோம்; நாம்
உன்னைத் திரும்பிவந்து ஏறவும்பண்ணுவோ

மென்றும், யோசேப்புத் தன் கையால் உன்
௫ கண்களை மூடுவானென்றும் சொன்னார்.—அதற்
குப் பிற்பாடு யாக்கோபு பேர்சேபாவிலிருந்து
பயணம்புறப்பட்டுப் போனான்; இஸ்ரவேலின்
குமாரர் தங்கள் தகப்பனாகிய யாக்கோபையும்
தங்கள் குழந்தைகளையும் தங்கள் பெண்சாதிக
ளையும், பார்வோன் அவனை ஏற்றிவர அனுப்
பின வண்டில்களின்மேல் ஏற்றிக்கொண்டு போ
௬ னார்கள். — அவர்கள், தங்கள் ஆடுமாடுகளையும்,
தாங்கள் கானான்தேசத்தில் சம்பாதித்த தங்
கள் ஆஸ்தியையும் கூட்டிக்கொண்டு, எகிப்
திற்கு வந்தார்கள், யாக்கோபும் அவன் வித்தார்
௭ அனைவரும் அவனோடு கூடத்தானே. — தன்
குமாரரையும் தன் குமாரரின் குமாரரையும் தன்
குமாரத்திகளையும் தன் குமாரரின் குமாரத்திக
ளையும் தன் வித்தார் அனைவரையும் அவன் தன்
னோடேகூட எகிப்திற்கு அழைத்துக்கொண்டு
வந்தான்.

௮ எகிப்திலே வந்த இஸ்ரவேல் புத்திரரின் நா
மங்கள்: யாக்கோபும் அவன் குமாரரும்; யாக்
கோபுடைய முதல்பேறானவன் ரூபேன். —
௯ ரூபேனுடைய குமாரர், ஆனோக், பல்லூ, எத்ஸ
௰ ரோன், கற்மீ என்றவர்கள்.—சிமேயோனுடைய
குமாரர், எமுவேல், யாமின், ஓகாத், யாகீன்,
சோகார், கானான் தேசத்தாளின் குமாரனாகிய
௰௧ சவுல் என்றவன்.—லேவியின் குமாரர், கேர்
௰௨ சோன், கேகாத், மெராரி என்றவர்கள்.—யூதா
வின் குமாரர், ஏர், ஓனான், சேலா, பேரேஸ்,
சேரா என்றவர்கள்; ஏரும் ஓனானுமோவென்
றால், கானான்தேசத்திலே செத்துப்போனார்கள்;
பேரேசுடைய குமாரர், எத்ஸரோன், அமூல்
௰௩ என்றவர்கள்.—இசக்காருடைய குமாரர், தோலா,
௰௪ பூவா, யோப், சிம்ரோன் என்றவர்கள். — சேபு
லோனுடைய குமாரர், சேரேத், ஏலோன், யா
௰௫ லேயேல் என்றவர்கள். — இவர்கள் லேயாளின்
குமாரர்; இவர்களையும் யாக்கோபுடைய குமா
ரத்தியாகிய தீனாளையும் அவள் அவனுக்குப்
பதான் அராமிலே பெற்றாள்; அவன் குமாரரும்
அவன் குமாரத்திகளுமாகிய எல்லா ஆத்துமாக்
௰௬ களும் முப்பத்துமூன்று.—காத்துடைய குமாரர்,
சிப்பியோன், அகி, சூனி, எத்ஸ்போன், ஏரி,
௰௭ அரோதி, அரேலி என்றவர்கள்.—ஆசேருடைய
குமாரர், இம்னா, இஸ்வா, இஸ்வி, பேரியா என்
றவர்கள்; இவர்களுடைய சகோதரி சேராக்கு
என்றவள்; பேரியாவின் குமாரர், ஏபேர், மல்க்
௰௮ கியேல் என்றவர்கள்.—இவர்கள் லாபான் தன்
குமாரத்தியாகிய லேயாளுக்குக் கொடுத்த சில்ப்
பாளுடைய பிள்ளைகள்; அவள் யாக்கோபுக்கு
இந்தப் பதினாறு ஆத்துமாக்களைப் பெற்றாள்.—
௰௯ யாக்கோபின் பெண்சாதியாகிய ராகேலுடைய
குமாரர், யோசேப்பும் பென்யமீனும்தானே.—
௨௰ யோசேப்புக்கு எகிப்துதேசத்திலே மனாசேயும்
எப்பிராயீமும் பிறந்தார்கள்; அவர்களை ஓன்பட்
டணத்து ஆசாரியனாகிய போத்திப்பேராவின்
குமாரத்தியாகிய அஸ்நாத் அவனுக்குப் பெற்
றாள்.—பென்யமீனுடைய குமாரர், பேலா, பே ௨௧
கேர், அஸ்பெல், கேரா, நாமான், ஏகி, ரோஸ்,
மூப்பிம், உப்பிம், ஆர்து என்பவர்கள்.—ராகேல் ௨௨
யாக்கோபுக்குப் பெற்ற குமாரராகிய இவர்கள்
எல்லாரும் பதினாலு ஆத்துமாவே.-தாணுடைய ௨௩
குமாரன், ஊசிம் என்றவன்.—நப்தலியின் குமா ௨௪
ரர், யாத்சேயெல், கூனி, எத்சேர், சில்லேம்
என்றவர்கள்.—இவர்கள் லாபான் தன் குமாரத் ௨௫
தியாகிய ராகேலுக்குக் கொடுத்த பில்க்காள் யாக்
கோபுக்குப் பெற்றவர்கள்; இவர்கள் எல்லாரும்
ஏழு ஆத்துமாக்கள்.

யாக்கோபுடைய குமாரரின் பெண்சாதிகளைத் ௨௬
தவிர, அவனுடைய கர்ப்பப்பிறப்பாய் இருந்து
அவனோடேகூட எகிப்திலே வந்த ஆத்துமாக்
கள் எல்லாம் அறுபத்தாறு ஆத்துமாக்கள்.—யோ ௨௭
சேப்புக்கு எகிப்திலே பிறந்த குமாரர் இரண்டு
ஆத்துமாக்கள்; எகிப்திலே வந்த யாக்கோபின்
வீட்டராகிய ஆத்துமாக்கள் எல்லாம் எழுபது.

கோசேனுக்குப் போகிறவழியைத் தனக்குக் ௨௮
காட்டுவிக்க, அவன் தனக்குமுன்னாக யோசேப்
பண்டைக்கு யூதாவை அனுப்பினான்; அப்படி
யே கோசேன் தேசத்திலே வந்தார்கள்.—யோ ௨௯
சேப்புத் தன் இரதத்தை ஆயத்தம்பண்ணி ஏறி,
கோசேனுக்குத் தன் தகப்பனாகிய இஸ்ரவேலுக்
கு எதிர்கொண்டுபோய், அவனுக்குத் தன்னைக்
காண்பித்து, அவனுடைய கழுத்திறுகக் கட்டிக்
கொண்டு, அதிக நேரமாய் அவன் கழுத்தை
விடாமல் அழுதான்.-அப்பொழுது இஸ்ரவேல் ௩௰
யோசேப்புடனே, நீ இன்னம் உயிரோடிருக்கி
றாய் என்று நான் உன் முகத்தைக் கண்டபடியி
னாலே இனி மரணம் எனக்கு எப்போதாகிலும்
வரட்டும் என்றான்.-பிற்பாடு யோசேப்புத் தன் ௩௧
சகோதரரோடும் தன் தகப்பனுடைய வீட்டா
ரோடும் சொன்னதாவது: நான் போயேறி, கா
னான்தேசத்திலிருந்த என்னுடைய சகோதரரும்
என் தகப்பன் வீட்டாரும், என்னண்டைக்கு
வந்தார்களென்று பார்வோனுக்கு அறிவித்து,—
இந்த மனிதர் ஆடுகளை மேய்க்கிறவர்கள்; ஏனெ ௩௨
னில், மிருகசீவன்களை உடையவர்களாய் இருக்
கிறார்கள்; அவர்கள் தங்கள் ஆடுகளையும், தங்
கள் மாடுகளையும், தங்களுக்குண்டானவை எல்
லாவற்றையும் கொண்டுவந்தார்களென்று அவ
ரோடே சொல்லுவேன்.-ஆகையால் பார்வோன் ௩௩
உங்களை அழைத்து, உங்கள் தொழில் என்ன
வென்று கேட்கிறதுண்டானால்,—அப்பொழுது ௩௪
நீங்கள் கோசேன் தேசத்திலே குடியிருக்கும்ப
டிக்குச் சொல்லவேண்டியதாவது: எங்கள் பிதா
க்களைப்போல, உம்முடைய அடியாராகிய நாங்
களும் எங்கள் சிறுவயதுதுவக்கி இதுவரைக்
கும் மிருகசீவன்களை உடையவர்களாய் இருந்
தோமென்று சொல்லுங்கள்; ஏனெனில் [1]மந்தை

1 ௧ மோ. ௪௩. ௩௨.

மேய்க்கிறவர்கள் எல்லாரும் எகிப்தியருக்கு அருவருப்பாய் இருக்கிறார்கள் என்றான்.

## ௪௭. அதிகாரம்.

௧. யோசேப்புத் தன் சகோதரரில் ஐந்துபேரையும், ௭. தன் தகப்பனையும் பார்வோனுக்கு முன்பாகக் கொண்டுவந்தது. ௰௧. அவன் அவர்களுக்கு வாசஸ்தலத்தையும் ஆகாரத்தையும் கொடுத்தது. ௰௪. அவன் எல்லா எகிப்தியருடைய பணத்தையும், ௰௬. அவர்களுடைய மிருகஜீவன்களையும், ௰௮. அவர்களுடைய நிலங்களையும் பார்வோனுக்குச் சம்பாதித்துக்கொடுத்தது. ௨௨. ஆசாரியருடைய நிலம் கொள்ளப்படாதிருந்தது. ௨௪. அவன் அவர்களுக்கு நிலத்தை ஐந்தில் ஒருபங்கு விட்டுவிட்டது. ௨௮. யாக்கோபினுடைய ஆயுசு. ௨௯. அவன் தன் பிதாக்களுடனே தன்னையும் புதைக்க யோசேப்பை ஆணையிடச்செய்தது.

௧ யோசேப்பு வந்து பார்வோனுக்கு அறிவித்து, என் தகப்பனும் என் சகோதரரும் தங்கள் ஆடுகளோடும், தங்கள் மாடுகளோடும், தங்களுக்கு உண்டானவை எல்லாவற்றோடுங்கூடக் கானான் தேசத்திலிருந்து வந்தார்கள்; இதோ கோசேன் தேசத்திலே இருக்கிறார்கள் என்று சொல்லி,—
௨ தன் சகோதரரில் ஒருபங்காகிய ஐந்துபேரை அழைத்துக்கொண்டு, அவர்களைப் பார்வோனுக்
௩ குமுன்பாக நிறுத்தினான்.—அப்பொழுது பார்வோன் அவன் சகோதரரோடே உங்கள் தொழில் என்னவென்றான்; அவர்கள் பார்வோனோடே, உம்முடைய அடியாராகிய நாங்களும் எங்கள் பிதாக்களும், மந்தைமேய்க்கிறவர்கள்
௪ என்று சொல்லி,—பின்னையும் பார்வோனோடே, தேசத்திலே தங்கவந்தோம்; ஏனெனில் உம்முடைய அடியாருக்கு இருக்கிற மந்தைக்கு மேய்ச்சலில்லை, அதேனென்றால் பஞ்சம் கானான் தேசத்திலே கடினமாய் இருக்கிறது; இப்பொழுதும் உம்முடைய அடியார் கோசேன் தேசத்
௫ திலே குடியிருக்கட்டும் என்றார்கள்.—அப்பொழுது பார்வோன் யோசேப்போடே சொன்னதாவது: உன் தகப்பனும் உன் சகோதரரும்
௬ உன்னண்டைக்கு வந்தார்கள்.—எகிப்துதேசம் உனக்குமுன்பாகக் கிடக்கிறது; தேசத்தில் நலமான இடத்திலே உன் தகப்பனையும், உன் சகோதரரையும் குடியேற்று; அவர்கள் கோசேன் தேசத்திலே குடியிருக்கட்டும்; அவர்களுக்குள்ளே திறமையான மனிதருண்டென்று அறிந்திருந்தாயானால் அவர்களை எனக்கிருக்கிற ஆடுமாடுகளை விசாரிக்கிற தலைவராக வையென்றான்.

௭ யோசேப்புத் தன் தகப்பனாகிய யாக்கோபையும் அழைத்துக்கொண்டு வந்து, அவனைப் பார்வோனுக்குமுன்பாக நிறுத்தினான்; யாக்கோபு
௮ பார்வோனை ஆசீர்வதித்தான்.—பார்வோன் யாக்கோபோடே, உன்னுடைய ஆயுசின் நாள்கள்
௯ எத்தனை என்றான்.—யாக்கோபு பார்வோனோடே, நான் பரதேசம்பண்ணின நாள்கள் நூற்றுமுப்பது வருஷங்கள்; என் ஆயுசின் நாள்கள் பரதேசிகளான என் பிதாக்களுடைய ஆயுசின்நாள்களுக்கு வாராமல் கொஞ்சமும் பொல்லாப்புமாய்
௰ இருந்தன என்றான்.—பிற்பாடு யாக்கோபு பார்வோனை ஆசீர்வதித்து, பார்வோனிடத்திலிருந்து
௰௧ புறப்பட்டான்.—யோசேப்புத் தன் தகப்பனையும், தன் சகோதரரையும் குடியேற்றி, பார்வோன் கட்டளையிட்டபடி, அவர்களுக்கு எகிப்துதேசத்தின் நாட்டிலே நல்ல நாடாகிய ராமேசேஸ் சீமையிலே காணி கொடுத்தான்.

யோசேப்புத் தன் தகப்பனையும், தன் சகோ ௰௨
தரரையும், தன் தகப்பனுடைய வீட்டார் அனைவரையும் பிள்ளைகளின் இலக்கத்திற்குத்தக்கதாய் ஆகாரம் கொடுத்து பராமரித்துவந்தான்.—தேச ௰௩
மெங்கும் அப்பம் இல்லாதேபோயிற்று; ஏனெனில் பஞ்சம் மிகவும் கடினமாய் இருந்தது; பஞ்சத்தினாலே, எகிப்துதேசமும் கானான்தேசமும் இளைத்துப்போயின.—அப்பொழுது அவர்கள் ௰௪
கொள்ளும் தானியத்திற்கு ஈடாக யோசேப்பு எகிப்துதேசத்திலும் கானான்தேசத்திலும் உண்டான திரவியத்தை எல்லாம் சேர்த்தான்; அந்தத் திரவியத்தை யோசேப்புப் பார்வோன் வீட்டிலே கொண்டுவந்து வைத்தான்.—எகிப்துதேசத்தி ௰௫
லும் கானான்தேசத்திலும் திரவியம் செலவழிந்துபோனபொழுதோவெனில், எகிப்தியர் எல்லாரும் யோசேப்பண்டைக்கு வந்து, எங்களுக்கு அப்பம் தாரும்; திரவியம் இல்லாதேபோனதினாலே, நாங்கள் உமக்குமுன்பாகச் சாவானேன் என்றார்கள்.—அப்பொழுது யோசேப்பு திரவி ௰௬
யம் இல்லாதேபோயிற்றானால், உங்கள் மிருகஜீவன்களைக்கொடுங்கள்; உங்கள் மிருகஜீவன்களுக்கு ஈடாக உங்களுக்குத் தருகிறேன் என்றான்.—அப்பொழுது தங்கள் மிருகஜீவன் ௰௭
களை யோசேப்பண்டைக்குக் கொண்டுவந்தார்கள்; யோசேப்புக் குதிரைகளையும் ஆடுகளையும் மாடுகளையும் கழுதைகளையும் வாங்கிக்கொண்டு, அவர்களுக்கு அப்பம்கொடுத்து, அந்த வருஷத்திலே அவர்களுடைய எல்லா மிருகஜீவன்களுக்கும் ஈடாக அவர்கள் பிழைப்பை நடப்பித்துக் கொண்டுவந்தான்.

அந்த வருஷம் முடிந்தபொழுது, அவர்கள் ௰௮
மறுவருஷத்திலே அவனண்டைக்கு வந்து அவனோடே சொன்னதாவது: திரவியமும் செலவழிந்துபோயிற்று; மிருகஜீவன்களின் ஆஸ்தியும் எங்கள் ஆண்டவனைச் சேர்ந்தது; எங்கள் சரீரமும் எங்கள் நிலமுமே ஒழிய, எங்கள் ஆண்டவனுக்கு முன்பாக ஒன்றும் மீதியானதில்லை என்கிறதை எங்கள் ஆண்டவனுக்கு மறைக்கமாட்டோம்.—நாங்களும் எங்கள் நிலமும் உம்மு ௰௯
டைய கண்களுக்குமுன்பாக மடிவானேன்? நீர் எங்களையும் எங்கள் நிலத்தையும் கொண்டு, அப்பம்தாரும்; நாங்கள் எங்கள் நிலத்தோடுங்கூடப் பார்வோனுக்கு அடிமைப்பட்டிருப்போம்; நாங்கள் சாவாமல் உயிரோடிருக்கும்படிக்கும் நிலம் பாழாய்ப்போகாதபடிக்கும் விதையைத் தாரும் என்றார்கள்.—அப்படியே யோசேப்பு எகிப் ௨௰
தின் நிலத்தை எல்லாம் பார்வோனுக்குக் கொண்டான்; ஏனெனில் எகிப்தியர் அவரவர், பஞ்சம் தங்கள்மேல் பலத்துக்கொண்டபடியினாலே, தங்கள் வயல்களை விற்றார்கள்; ஆனதுகொண்டு

௨௧ நிலம் பார்வோனைச் சேர்ந்தது. — ஆனால் சனத்
தை அவன் எகிப்தினுடைய எல்லையின் இந்
த முனைதுவக்கி அந்த முனைமட்டும் இருந்த
பட்டணங்களில் குடிமாறிப்போகப் பண்ணி
௨௨ னான். — ஆசாரியர் நிலத்தைமாத்திரம் கொள்
ளாதேபோனான்; ஏனெனில் அது பார்வோனா
லே ஆசாரியருக்குப் படித்திட்டமாகக் கட்டளை
பண்ணப்பட்டது; பார்வோன் தங்களுக்குக்
கட்டளைபண்ணின தங்கள் படியைச் சாப்பிட்
டார்கள்; ஆகையால் அவர்கள் தங்கள் நிலத்
௨௩ தை விற்றதில்லை. — யோசேப்பு சனத்தோடே
சொன்னதாவது: இதோ, இன்று உங்களையும்
உங்கள் நிலத்தையும் பார்வோனுக்குக் கொண்
டேன்; இதோ உங்களுக்குத் தரப்படுகிற விதை,
௨௪ அதினால் நிலத்தை விதையுங்கள். — பலனான
பொழுது நடப்பதேதென்றால், பார்வோனுக்கு
ஐந்தில் ஒரு பங்கைக் கொடுப்பீர்கள்; நாலுபங்
கோவென்றால், வயலுக்கு விதையும் உங்களுக்
கும் உங்கள் வீட்டாருக்கும் உங்கள் குழந்தை
களுக்கும் ஆகாரம் உண்டாக உங்களுடைய
௨௫ வைகளாய் இருக்கும் என்றான்.—அப்பொழுது
அவர்கள், எங்களை உயிரோடே காத்தீர்; எங்கள்
ஆண்டவனுடைய கண்களில் எங்களுக்குத் தய
வே கிடைக்கட்டும், நாங்கள் பார்வோனுக்கு
௨௬ அடிமையாயிருப்போம் என்றார்கள். — அப்படி
யே ஐந்தில் ஒன்று பார்வோனுக்குச் சேரும்
வாரமென்பதை, யோசேப்பு எகிப்து நிலத்தின்
மேலே இந்நாள்மட்டும் செல்லும் கட்டளையாக்
கினான்; ஆசாரியரின் நிலம்மாத்திரம் பார்வோ
னைச் சேராமல் நீங்கலாயிற்று.

௨௭ இஸ்ரவேல் எகிப்துதேசத்திலிருக்கும் கோ
சேன் சீமையிலே குடியிருந்தான்; அதில் காணி
யாட்சிக்காரராகி, மிகவும் பலுகிப் பெருகினார்
௨௮ கள்.—யாக்கோபு எகிப்துதேசத்திலே பதினேழு
வருஷம் உயிரோடிருந்தான்; ஆகையால் யாக்
கோபுடைய ஆயுசின் நாள்கள் நூற்றுநாற்பத்தே
௨௯ ழுவருஷங்களாயின.—மரணமடைய இஸ்ரவே
லின் காலம் சமீபித்தபொழுது, அவன் தன் குமா
ரனாகிய யோசேப்பை வரவழைத்து, அவனுக்
குச் சொன்னதாவது: உன் கண்களில் எனக்குத்
தயவுகிடைத்ததானால், என்னை எகிப்திலே அ
டக்கம்பண்ணாயாக என்ற தயவையும் உண்
மையையும் நீ எனக்குச் செய்வதற்காக உன்
௩௰ கையை என் இடுப்பின்கீழே போடு. — நான்
என் பிதாக்களோடே படுத்துக்கொள்ளுவேன்;
ஆகையால் நீ என்னை எகிப்திலிருந்து எடுத்துக்
கொண்டுபோய், அவர்கள் அடக்கம்பண்ணப்
பட்ட நிலத்திலே என்னை அடக்கம்பண்ணுவா
யாக என்றான்; அதற்கு அவன், உம்முடைய
௩௧ சொற்படி நான் செய்வேன் என்றான்.—அப்பொ
ழுது அவன், எனக்கு ஆணையிடு என்றான்; அவ
னுக்கு ஆணையிட்டான்; அப்பொழுது இஸ்ர
வேல் கட்டிலின் தலைமாட்டிலே சாய்ந்து பணிந்
துகொண்டான்.

## ௪௮. அதிகாரம்.

௧. யோசேப்புத் தன் குமாரர்களோடு வியாதியாய் இருந்த தன் தகப்பனைப் பார்க்கப்போனது. ௨. யாக்கோபு அவர்களை ஆசீர்வதிக்கத் தன்னைத் தான் திடப்படுத்திக்கொண்டது. ௩. அவன் வாக்குத்தத்தத்தை அறியப் படுத்தியது. ௬. அவன் எப்பிராயீமையும் மனாசேயையும் தன்னுடையவர்களாக எடுத்துக்கொண்டது. ௭. அவன் யோசேப்புக்கு அவன் தாயாரின் கல்லறையைச் சொல்லியது. ௯. அவன் எப்பிராயீமையும் மனாசேயையும் ஆசீர்வதித்தது. ௰௭. அவன் மூத்தவனைப்பார்க்கிலும் இளையவனைச் சிலாக்கியப்படுத்தினது. ௨௧. அவன் அவர்கள் கானான்தேசத்திற்குத் திரும்பிவருதலை முன் அறிவித்தது.

இதற்குப்பிற்பாடு சம்பவித்தது ஏதென்றால், ௧
இதோ, உம்முடைய தகப்பனார் வியாதியாயி
ருக்கிறார் என்று யோசேப்புக்குச் சொல்லப்
பட்டது; அப்பொழுது அவன் தன் இரண்டு
குமாரராகிய மனாசேயையும் எப்பிராயீமையும்
தன்னோடேகூட அழைத்துக்கொண்டு போ
னான்.—இதோ, உம்முடைய குமாரனாகிய யோ ௨
சேப்பு உம்மண்டைக்கு வருகிறானென்று யாக்
கோபுக்கு அறிவிக்கப்பட்டது; அப்பொழுது
இஸ்ரவேல் தன்னைத் திடனாக்கி, கட்டிலின்
மேல் உளுக்கார்ந்தான்.—யாக்கோபு யோசேப் ௩
போடே சொன்னதாவது: சர்வத்திற்கும் வல்ல
பராபரன் கானான்தேசத்திலிருக்கிற லூசிலே
எனக்குத் தரிசனையாகி, என்னை ஆசீர்வதித்து,—
[1]இதோ நாம் உன்னைப் பலுகவும் உன்னைப் ௪
பெருகவும்பண்ணி, உன்னைச் சனசதளங்களான
கூட்டமாக்கி, உனக்குப்பிற்பாடு இருக்கும்
உன் வித்திற்கு இந்தத் தேசத்தை நித்திய காணி
யாட்சியாகக் கொடுப்போமென்று என்னோடே
சொன்னார். — இப்பொழுதும் நான் உன்னண் ௫
டைக்கு எகிப்திலே வராததற்குமுன்னே உனக்
கு எகிப்துதேசத்தில் பிறந்த உன் இரண்டு குமா
ரர் என்னுடையவர்கள்; ரூபேன் சிமேயோன்
என்றவர்களைப்போல, எப்பிராயீமும் மனாசேயும்
என்னுடையவர்களாய் இருப்பார்கள். — இவர் ௬
களுக்குப்பிறகு நீ பெறுகிற சந்தானமோவெ
னில், உன்னுடையதாயிருக்கும்; இவர்கள் தங்
கள் சகோதரருடைய சுதந்தரத்தில் அவர்களுக்
கொத்த பேராய் அழைக்கப்படுவார்கள்.—நான் ௭
பத்தானிலிருந்து வருகையில், ராகேல் கானான்
தேசத்தின் வழியிலே எப்பிராத்தாவுக்கு வர இன்
னம் கொஞ்சம் தூரமிருக்கிறபொழுது, எனக்கு
முன்பாக மரணம் அடைந்தாள்; அவளை அங்கே
பெத்லகேம் என்னப்படுகிற எப்பிராத்தா ஊரின்
வழியிலே அடக்கம்பண்ணினேன் என்றான்.
பிற்பாடு இஸ்ரவேல் யோசேப்பின் குமார ௮
ரைக் கண்டு, இவர்கள் யாரென்றான்.—யோசேப் ௯
புத் தன் தகப்பனோடே, இவர்களே பராபரன்
இவ்விடத்தில் எனக்குக் கொடுத்த என்னுடைய
குமாரர் என்றான்; அப்பொழுது இவன் நான்
அவர்களை ஆசீர்வதிக்கும்படிக்கு அவர்களை என்
கிட்டக்கொண்டுவா என்றான்.—இஸ்ரவேலின் ௰

1 ௧ மோ. ௩௫. ௰௧, ௰௨.

கண்களோவென்றால் பெரியவயதினால் இருண்
டுபோயிற்று; பார்க்கக்கூடாதிருந்தான்; அவர்
களை அவனண்டையிலே சேரப்பண்ணினான்;
அப்பொழுது அவன் அவர்களை முத்தம்செய்து
௰க அணைத்துக்கொண்டான். — பிறகு இஸ்ரவேல்
யோசேப்போடே, உன் முகத்தைப் பார்ப்பேன்
என்று நினையாதேபோனேன்; ஆனால் இதோ,
பராபரன் என்னை உன் வித்தையும் காணப்பண்
௰உ ணினார் என்றான். — அப்பொழுது யோசேப்பு
அவன் முழங்கால்களுக்குள்ளிருக்கிற அவர்க
ளைப் பின்னிடப்பண்ணி, அவன் முகத்திற்கு
முன்பாகத் தரைமட்டும் குனிந்து வணங்கி
௰ங னான்.-பிற்பாடு யோசேப்பு இருவரையும் கொண்
டுவந்து, எப்பிராயீமைத் தன் வலதுகையினாலே
இஸ்ரவேலின் இடதுகைக்கு நேராகவும் மனா
சேயைத் தன் இடதுகையினாலே இஸ்ரவேலின்
வலதுகைக்கு நேராகவும் அவனண்டையிலே
௰ச சேரப்பண்ணினான்.—ஆனால் இஸ்ரவேல் தன்
வலதுகையை நீட்டி, இளையவனாகிய எப்பிரா
யீமுடைய தலையின்மேலும் மனாசே மூத்தவனா
யிருந்தாலும், தன் இடதுகையை மனாசேயினு
டைய தலையின்மேலும் வைத்தான்; அவன் அ
றிந்து அப்படித் தன் கைகளை வைத்து,
௰ரு யோசேப்பை ஆசீர்வதித்துச் சொன்னதாவது:
பராபரனுக்கு முன்பாக என் பிதாக்களாகிய
ஆபிரகாமும் ஈசாக்கும் நடந்துகொண்டார்க
ளே, நான் உண்டான நாள்துவக்கி இந்நாள்வ
ரைக்கும் என்னை ஆதரித்துவந்த அந்தப் பராபர
௰சு னும்,—என்னை எல்லாத் தீமைக்கும் நீங்கலாக்கி
மீட்ட தூதனுமானவர் இந்த இளைஞரை ஆசீர்
வதிக்கக்கடவர்; என் பேரும் ஆபிரகாம் ஈசாக்
கென்ற என் பிதாக்களின் பேரும் அவர்களுக்
குத் தரிக்கப்படக்கடவது; தேசத்தின் நடுவிலே
ஏராளமான திரட்சியாய்ப் பலுகக்கடவர்களெ
௰எ ன்றான்.—தன் தகப்பன் தன் வலதுகையை எப்
பிராயீமுடைய தலையின்மேல் வைத்ததை யோ
சேப்புக் காண்கிறபொழுதோவெனில், அவ
னுக்கு ஆகாததாய்க் கண்டது; ஆகையால் எப்பி
ராயீமுடைய தலையின்மேல் இருந்த தன் தகப்
பனுடைய கையை யோசேப்பு மனாசேயினு
டைய தலையின்மேல் வைக்கும்படிக்கு எடுத்து,-
௰அ தன் தகப்பனோடே அப்படியல்ல, என் தகப்ப
னே, ஏனெனில் இவன் மூத்தவன்; இவன் தலை
யின்மேல் உம்முடைய வலதுகையை வையு
௰கூ மென்றான்.—அவன் தகப்பனோவெனில், தட்டு
தல்பண்ணி, அறிவேன், என் மகனே, அறி
வேன்; இவனும் சனசதளமாவான், இவனும்
பெருகிப்போவான்; ஆகிலும் இவனுடைய தம்பி
இவனைப்பார்க்கிலும் பெருகிப்போவான்; அ
வன் வித்துச் சனசதளங்களால் நிறைந்த திரட்சி
உ௰ யாமென்றான்.-அப்படியே அவன் அந்நாளிலே
அவர்களை ஆசீர்வதித்து, பராபரன் உன்னை எப்
பிராயீமைப்போலவும் மனாசேயைப்போலவும்
இருக்கப்பண்ணுவாராகவென்று இஸ்ரவேலர் உன்
னைத்தொட்டு வாழ்த்துவார்கள் என்று சொல்லி,
எப்பிராயீமை மனாசேக்குமுன்னே வைத்தான்.
பிற்பாடு இஸ்ரவேல் யோசேப்போடே சொ உக
ன்னதாவது: இதோ நான் மரணம் அடைகிறேன்;
ஆனால் பராபரன் உங்களோடிருந்து, உங்கள்
பிதாக்களின் தேசத்திற்கு உங்களைத் திரும்பி
வரப்பண்ணுவார் என்றும்,—நான் என் பட்டை உஉ
யத்தாலும் என் வில்லினாலும், எமோரியர்கையி
லே வாங்கின [1]ஒரு நிலத்தை உன் சகோதரரைப்
பார்க்க உனக்கு அதிகமான பங்காகக் கொடுத்
தேன் என்றும் சொன்னான்.

## சகூ. அதிகாரம்.

க யாக்கோபு தன்னுடைய குமாரர்களை ஆசீர்வதிக்க அழைத்தது. ங. அவர்கள் தனித்தனியே பெற்ற ஆசீர்வாதம். உகூ. அவன் அவர்களுக்குத் தன்னைப் புதைப்பதைக்குறித்துக் கற்பித்தது. ஙங. அவன் மரணம் அடைந்தது.

பிற்பாடு யாக்கோபு தன் குமாரரை அழைப்பித் க
துச் சொன்னதாவது: கூடிவாருங்கள், முடிவு
நாள்களில் உங்களுக்கு வந்து சம்பவிப்பதை
உங்களுக்கு அறிவிப்பேன்.
யாக்கோபின் குமாரரே, கூடிவந்து கேளுங் உ
கள்; உங்கள் தகப்பனாகிய இஸ்ரவேலைக் கே
ளுங்கள்.
ரூபேனே, நீ என்னுடைய தலைச்சனும் என் ங
சத்துவமும் என் முந்தின பலமுமானவன்; நீ
மேன்மையில் பிரதானமும் வல்லமையில் பிர
தானமுமானவன்.—தண்ணீரைப்போலப்பாய்ந் ச
தவனே, நீ பிரதானமாய் இருப்பதில்லை; ஏனெ
னில் [2]உன் தகப்பனுடைய மஞ்சத்தின்மேலே
ஏறினாய்; அதை அப்பொழுது தீட்டுப்படுத்தி
னாய்; என் படுக்கையின்மேல் அவன் ஏறினான்.
சிமேயோனும் லேவியும் ஏகசகோதரராயிருக் ரு
கிறார்கள்; அவர்களுடைய பட்டையங்கள் கொ
டுமையின் ஆயுதங்கள்.—என் ஆத்துமா அவர்கள் சு
இரகசிய ஆலோசனையில் வராதிருப்பதாக; என்
மகிமை அவர்கள் கூட்டத்தோடே ஒன்றிப்போ
காதிருப்பதாக; ஏனெனில் அவர்கள் தங்கள்
கோபத்திலே [3]ஒரு புருஷனைக் கொன்றுபோ
ட்டு, தங்கள் ஆங்காரத்திலே பலவான்களை அ
தம்பண்ணினார்கள்.—வலிதான அவர்களுடைய எ
கோபமும் கடினமான அவர்களுடைய மூர்க்க
மும் சபிக்கப்படக்கடவது; அவர்களை யாக்
கோபிலே [4]பிரியவும் இஸ்ரவேலிலே சிதறவும்
பண்ணுவேன்.
யூதாவே, நீயே பிரதானமானவன்; உன்னை அ
உன் சகோதரர் புகழுவார்கள்; உன்னுடைய கை
உன் சத்துருக்களுடைய பிடரியின்மேல் இருக்
கும்; உனக்குமுன்பாக உன் தகப்பனுடைய
புத்திரர் வணங்குவார்கள்.—யூதா சிங்கக்குட்டி கூ
யானவன்; என் மகனே, நீ இரை எடுத்து உயர்ந்
தாய்; சிங்கத்தைப்போலவும் கிழச்சிங்கத்தைப்
போலவும் மடங்கிப் படுத்துக்கொள்ளுகிறான்;

1 யோவா. ச. ரு.—2 க மோ. கரு. உஉ.

3 க மோ. கச. உசு.—4 யோசு. ௰கூ. க.

௰ அவனை எழுப்பப்போகிறவன் யார்?–[1]சமாதான
கர்த்தர் வரும்மட்டும் செங்கோல் யூதாவிலிருந்
தும், நியாயம் சற்பிக்கிறவன் அவன் பாதங்களி
லிருந்தும், அற்றுப்போவதில்லை; அவரைச் சன
௰௧ சதளங்கள் சேரும்.—தம்முடைய கழுதை மறி
யைத் திராட்சச்செடியோடும் தம்முடைய கோ
ளிகைக்கழுதையின் குட்டியை நற்குல திராட்
சச்செடியோடும் கட்டிப்போடுவார்; தம்மு
டைய உடுப்பைத் திராட்சப்பழ இரசத்திலும்
தமது சால்வையைத் திராட்சப்பழங்களின் இர
௰௨ சத்திலும் வெளுப்பார்.—அவருடைய கண்கள்
திராட்சப்பழ இரசத்திலும் சிவப்பும், அவரு
டைய பல்லுகள் பாலிலும் வெண்மையுமாய்
இருக்கும்.
௰௩ சேபுலோன் [2]கடல்துறை அருகே குடியிருப்
பான்; அவன் கப்பல்துறை அருகே இருப்
பான்; அவன் எல்லை சீதோனுக்கு எதிராக
இருக்கும்.
௰௪ ஈசகார் பொதியின் நடுவே படுத்துக்கொண்
௰௫ டிருக்கிற பலத்த எலும்புள்ள கழுதை.—அவன்
இளைப்பாறுதலை நல்லதென்றும் சீமையை வசதி
யானதென்றும் கண்டு, சுமக்கிறதற்குத் தன் தோ
ளைச் சாய்த்து, பகுதிகட்டுகிறவனானான்.
௰௬ தாண் இஸ்ரவேல் கோத்திரங்களில் ஒன்றைப்
போல தன் சனத்தை நியாயம்விசாரிப்பான்.—
௰௭ தாண் குதிரையின் குதிகால்களை, அதில் ஏறி
இருக்கிறவன் மல்லாக்கவிழக் கடிக்கிற வழி
அருகான சர்ப்பமும், பாதைஅருகான விரியனு
மாய் இருப்பான்.
௰௮ கர்த்தாவே, [3]உம்முடைய இரட்சிப்புக்குக்
காத்துக்கொண்டிருக்கிறேன்.
௰௯ காத்தென்றவன்மேல் இராணுவக்கூட்டம்
பாய்ந்து விழும்; அவனோவென்றால் கடைசியி
லே அதின்மேல் பாய்ந்துவிழுவான்.
௨௰ ஆசேருடைய அப்பம் புஷ்டியாய் இருக்கும்;
இராசாக்களுக்கான ருசிவர்க்கங்களை இடுவான்.
௨௧ நப்தலி நீங்கலாய் விடப்பட்ட பெண்மான்;
வடிப்பமான வசனங்களைத் தருகிறான்.
௨௨ யோசேப்புக் கனி தருகிற செடி; அவன் நீர்
ஊற்றண்டையிலே கனி தருகிற செடி; அதின்
௨௩ கொடிகள் சுவரின்மேல் படரும்.—அம்பை எய்
கிறவர்கள் அவனை மனமடிவாக்கி எய்து, அவனை
௨௪ விரோதித்தார்கள்.—ஆனால் அவனுடைய வில்
கெட்டியாய் நின்றது; அவன் கைகளின் புயங்
கள் யாக்கோபுடைய வல்லவரின் கரங்களாலே
பலத்தன; இதைத்தொட்டு மேய்ப்பனும் இஸ்ர
௨௫ வேலின் அஸ்திபாரக்கல்லும்ஆனான்.–உன் தகப்
பனுடைய பராபரனாலே அப்படி ஆயிற்று; அவர்
உனக்குத் துணையாய் இருப்பார்; சர்வத்திற்கும்
வல்லவராலே அப்படி ஆயிற்று; அவர் உயர
வானத்திலிருந்து உண்டாகிய ஆசீர்வாதங்களா
லும், கீழே கிடக்கிற பாதாளத்தின் ஆசீர்வா
தங்களாலும், முலைகளுக்கும் கர்ப்பங்களுக்கும்
உண்டாகிற ஆசீர்வாதங்களாலும், உன்னை
ஆசீர்வதிப்பார். — உன் தகப்பனுடைய ஆசீர் ௨௬
வாதங்கள் என் பிதாக்களுடைய ஆசீர்வாதங்க
ளுக்கு மேல்வட்டமாய் இருந்து, நித்திய மேடு
களின் முடிவுமட்டும் போகின்றன; அவைகள்
யோசேப்புடைய சிரசின்மேலும், தன் சகோத
ரரில் விசேஷித்தவனுடைய உச்சந்தலையின்
மேலும் வருவதாக.
பென்யமீன் பீறிப்போடுகிற ஓனாய், காலமே ௨௭
எடுத்து அதைப் பட்சிப்பான்; சாயங்காலத்தி
லே கொள்ளையிட்டதைப் பங்கிடுவான்.
இஸ்ரவேலின் கோத்திரங்களாகிய இவைகள் ௨௮
எல்லாம் பன்னிரண்டு; அவர்கள் தகப்பன்
அவர்களை ஆசீர்வதிக்கையில், அவர்களுக்குச்
சொன்னது இதுதான்; அவர்களில் அவனவனை
அவனவனுக்கு அடுத்த ஆசீர்வாதத்தினாலே ஆ
சீர்வதித்தான்.—பிற்பாடு அவன் அவர்களுக்குக் ௨௯
கற்பித்துச் சொன்னதாவது: நான் என் சனத்
தோடே சேர்க்கப்படுகிறேன்; ஏத்தியனான எப்
பேரோனின் நிலத்திலுள்ள கெபியிலே என்னை
என் பிதாக்களண்டையிலே அடக்கம்பண்ணுங்
கள்.—கானான்தேசத்திலே மம்ரேக்கெதிராக இ ௩௰
ருக்கிறதும், ஆபிரகாம் நிலத்தோடேகூட ஏத்
தியனாகிய எப்பேரோனின் கையிலே பிரேதங்
களை அடக்கம்பண்ணும் சொந்த நிலமாகக்
கொண்டதுமான மக்பேலா என்னப்பட்ட நிலத்
தின் கெபியிலேதானே.—அங்கே ஆபிரகாமை ௩௧
யும் அவர் பெண்சாதியாகிய சாராளையும் அடக்
கம்பண்ணினார்கள்; அங்கே ஈசாக்கையும் அவர்
பெண்சாதியாகிய ரெபேக்காளையும் அடக்கம்
பண்ணினார்கள்; அங்கே லேயாளையும் அடக்
கம்பண்ணினேன்.—அந்த நிலமும் அதில் இ ௩௨
ருக்கிற கெபியும் ஏத்புத்திரரின்கையிலே கொள்
ளப்பட்டது என்றான்.—யாக்கோபு தன் குமார ௩௩
ருக்குக் கற்பனைதந்து முடித்தபிற்பாடு, அவன்
தன் கால்களைக் கட்டிலின்மேல் சேர்த்துக்கொ
ண்டு, சீவித்துப்போய்த் தன் சனத்தாரோடே
சேர்க்கப்பட்டான்.

## ௫௰. அதிகாரம்.

௧. யாக்கோபுக்காகத் துக்கம்கொண்டாடியது. ௪. யோசேப்பு அவனை அடக்கம்பண்ண பார்வோனிடத்திலிருந்து உத்தரம் பெற்றது. ௭. மரணச்சடங்கு. ௰௫. மன்னிப்புக் கேட்டுக்கொண்ட தன் சகோதரர்களை யோசேப்புச் சலிப்பாற்றியது. ௨௨. அவனுடைய ஆயுசு. ௨௩. அவன் தன் குமாரர்களில் மூன்றாம் தலைமுறையைக் கண்டது. ௨௪. அவன் தன் சகோதரரின் திரும்புதலை முன் அறிவித்தது. ௨௫. அவன் தன் எலும்புகளுக்காக அவர்களிடத்தில் ஆணை இடுவித்துக்கொண்டது. ௨௬. அவன் மரித்ததும் பெட்டியிலே வைத்ததும்.

அப்பொழுது [4]யோசேப்புத் தன் தகப்பனு ௧
டைய முகத்தின்மேல் விழுந்து அவன்மேல்
அழுது, அவனை முத்தம்செய்தான். — பிற்பாடு ௨
தன் தகப்பனுக்குக் கந்தவர்க்கங்களை இட யோ
சேப்பு வயித்தியராகிய தன்னுடைய ஊழியக்
காரருக்குக் கற்பித்தான்; அப்படியே வயித்தியர்
இஸ்ரவேலுக்குக் கந்தவர்க்கங்களை இட்டார்

1 சங். ௭௨. ௭ எசா. ௯. ௬, ௭. எபே. ௨, ௰௪.—2 யோசு. ௰௯. ௰, ௰௧.

3 சங். ௱௰௯. ௱௬௬.—4 ௧ மோ. ௪௬. ௪.

௩ கள்.—அது ஆகிற நாற்பதுநாளும் நிறைவேறிற்று;
ஏனெனில் கந்தவர்க்கங்களை இடும் வேளை இத்
தனைநாளில் நிறைவேறும்; எகிப்தியர் அவனுக்கு
௪ எழுபதுநாள் துக்கம்கொண்டாடினார்கள்.—அ
வனுக்குத் துக்கம்கொண்டாடின நாள் முடிந்
தபொழுது, யோசேப்புப் பார்வோனின் வீட்
டாரோடே பேசிச் சொன்னதாவது: உங்கள்
கண்களில் எனக்குத் தயவுகிடைத்ததானால், நீங்
கள் பார்வோனுடைய காதுகளுக்குமுன்பாகப்
௫ பேசி,—இதோ நான் சாகிறேன்; நான் கானான்
தேசத்திலே எனக்கு வெட்டிஇருக்கிற என்
பிரேதக்குழியிலேதானே என்னை அடக்கம்பண்
ணுவாயாக என்று [1]என் தகப்பன் என்னை ஆணை
இடுவித்துக்கொண்டார்; இப்பொழுதும் நான்
போயேறி என் தகப்பனை அடக்கம்பண்ணி
வரவேண்டும் என்று வேண்டிக்கொள்ளுகிறேன்
என்று சொல்லுங்கள் என்றான்.

௬ அதற்குப் பார்வோன் உன் தகப்பன் உன்னை
ஆணை இடுவித்ததின்படியே, நீ போயேறி அவ
௭ னை அடக்கம்பண்ணென்றான். — அப்படியே
யோசேப்புத் தன் தகப்பனை அடக்கம்பண்ணப்
போயேறினான்;பார்வோனுடைய வீட்டின் மூப்
பராகிய அவனுடைய சகல ஊழியக்காரரும்
௮ எகிப்துதேசத்தினுடைய சகல மூப்பரும்,—யோ
சேப்புடைய எல்லா வீட்டாரும் அவன் சகோ
தரரும் அவன் தகப்பன் வீட்டாரும் அவனோ
டேகூடப் போயேறினார்கள்; தங்கள் குழந்தை
களையும் தங்கள் ஆடுமாடுகளையும்மாத்திரம் கோ
௯ சேன் தேசத்திலே விட்டுப்போனார்கள்.—அவ
னோடே இரதங்களும் குதிரைக்காரரும் போயே
றினார்கள்; மிகவும் பலத்த தண்டாய் இருந்தது.—
௰ அவர்கள் யோர்தானுக்கு அக்கரையில் இருக்கிற
முள்காட்டின் சமனானவெளியிலே வந்தபொழு
து, அவ்விடத்திலே மகா பலத்த பெரிய புலம்ப
லாய்ப் புலம்பினார்கள்; அங்கே தன் தகப்பனுக்
௰௧ கு ஏழுநாள் துக்கம்கொண்டாடினான்.—தேசத்
தின் குடிகளாகிய கானானியர் முள்காட்டின் சம
னான வெளியிலே கொண்டாடப்படுகிற துக்கத்
தைக் காண்கையில், இது எகிப்தியரின் கன துக்
கிப்பென்றார்கள்; ஆனதுகொண்டு யோர்தானுக்
கு அப்பால் இருக்கிற அந்த ஸ்தலத்திற்கு எகிப்
தியரின்துக்கிப்பென்று பேர் உண்டாயிற்று.—
௰௨ அவன் குமாரர் அவன் தங்களுக்குக் கற்பித்திருந்
௰௩ தபடியே அவனுக்குச் செய்து, — அவனைக் கா
னான்தேசத்திலே கொண்டுபோய், மம்ரேக்கெதி
ராயிருக்கிறதும், [2]ஆபிரகாம் நிலத்தோடேகூட
ஏத்தியனாகிய எப்பேரோன் கையிலே பிரேதங்க
ளை அடக்கம்பண்ணும் சொந்த நிலமாகக்கொண்
டதுமான மக்பேலா என்னப்பட்ட நிலத்தின்
கெபியிலே அவனை அடக்கம்பண்ணினார்கள்.

௰௪ யோசேப்புத் தன் தகப்பனை அடக்கம்பண்
ணினபிற்பாடு, அவனும் அவன் சகோதரரும்,
அவனுடைய தகப்பனை அடக்கம்பண்ணுவதற்
கு அவனோடேகூட ஏறிவந்தவர்கள் எல்லாரும்
எகிப்திற்குத் திரும்பினார்கள். — ஆனால் தங்கள் ௰௫
தகப்பன் மரணமடைந்ததை யோசேப்பின் ச
கோதரர் கண்டு, ஒருவேளை யோசேப்பு நம்மைப்
பகைத்து, நாம் தனக்குச் செய்த எல்லாப் பொல்
லாப்பையும் நமக்குச் சரிக்குச்சரிக்கட்டுவான்
என்று சொல்லி,—உம்முடைய தகப்பனார் மர ௰௬
ணம் அடையாததற்குமுன்னே, ஆ, உன் சகோ
தரரின் துரோகத்தையும் அவர்கள் உனக்குப்
பொல்லாப்புச் செய்த அவர்கள் பாவத்தையும்
மன்னி என்றதாய் யோசேப்புக்குச் சொல்லுங்
களென்று கற்பித்தார் என்றும்,—இப்பொழுதும் ௰௭
உம்முடைய தகப்பனாருடைய பராபரனின்
ஊழியக்காரர் செய்த துரோகத்தை மன்னியு
மென்றும் யோசேப்புக்குச் சொல்லி அனுப்பி
னார்கள்; இப்படி அவர்கள் யோசேப்புக்குச்
சொல்லி அனுப்புகிறபொழுது, அவன் அழு
தான்.—பிற்பாடு அவன் சகோதரரும் போய், ௰௮
அவனுக்குமுன்பாகத் தாழவிழுந்து, இதோ உ
மக்கு நாங்கள் அடிமைகள் என்றார்கள்.—அப் ௰௯
பொழுது யோசேப்பு அவர்களோடே சொன்
னதாவது: பயப்படாதிருங்கள்; ஏனெனில் நான்
பராபரனுடைய ஸ்தலத்தில் இருக்கிறவனோ?—
[3]நீங்களோ எனக்கு விரோதமாகப் பொல்லாத ௨௰
நினைவாய் இருந்தீர்கள்; பராபரனோவென்றால்,
திரளான சனத்தை உயிரோடே காக்க இந்நாள்
வரைக்கும் இருக்கிறபடி செய்யும்படிக்கு, அ
தை நன்மையாக நினைத்தார். — இப்பொழுதும் ௨௧
பயப்படாதிருங்கள்; நான் உங்களையும் உங்கள்
குழந்தைகளையும் பராமரிப்பேன் என்று சொல்
லி, அவர்களைச் சலிப்பாற்றி, அவர்களோடே
பட்சமாய்ப் பேசினான்.

அப்படியே யோசேப்பும் அவன் தகப்பன் வீட் ௨௨
டாரும் எகிப்திலே குடியிருந்தார்கள்; யோசேப்
பு நூற்றுப்பத்துவருஷம் உயிரோடிருந்தான். —
யோசேப்பு எப்பிராயீமுக்குப் பிறந்த மூன்றாம் ௨௩
தலைமுறைப் பிள்ளைகளைக் கண்டான்; மனாசே
யின் குமாரனாகிய மாகீரின் பிள்ளைகளும் யோ
சேப்புடைய மடியின்மேல் இருக்கப்பிறந்தது.

யோசேப்பு தன் சகோதரரோடே நான் சாகி ௨௪
றேன்; ஆனால் [4]பராபரன் உங்களை விசாரிக்க
வே விசாரித்து, உங்களை இந்தத் தேசத்திலி
ருந்து தாம் ஆபிரகாமுக்கும் ஈசாக்குக்கும் யாக்
கோபுக்கும் ஆணைஇட்ட தேசத்திலே போய்
ஏறப்பண்ணுவார் என்றான். — பராபரன் உங் ௨௫
களை விசாரிக்கவே விசாரிக்கும்பொழுது, [5]என்
எலும்புகளை இவ்விடத்திலிருந்து கொண்டுபோ
வீர்களாக என்று யோசேப்பு இஸ்ரவேல் புத்திர
ரை ஆணைஇடுவித்துக்கொண்டான். — பிற்பாடு ௨௬
யோசேப்பு நூற்றுப்பத்து வயதுள்ளவனாய் மரித்
தான்; அப்பொழுது அவனுக்குக் கந்தவர்க்கங்
களை இட்டு, அவனை எகிப்துதேசத்தில் ஒரு
பெட்டியிலே வைத்துவைத்தார்கள்.

1 க மோ. ௪௭. ௨௯.—2 க மோ. ௨௩. ௰௬.

3 க மோ. ௪௫. ௫.—4 எபி. ௰௧. ௨௨.—5 உ மோ. ௰௩. ௰௯. யோசு. ௨௪. ௩௨.

EXODUS.

# மோசே எழுதின

## இரண்டாம் ஆகமம்.

### ௧. அதிகாரம்.

*௧. இஸ்ரவேல் புத்திரர்கள் யோசேப்பு இறந்தபின்பு அதிகரித்தது. ௮. புதிய அரசனால் அவர்கள் மிகவும் வருத்தப்படுத்தப்பட்டதும், அதிகமாய்ப் பெருகியதும், ௰௫. மருத்துவச்சிகள் ஆண்பிள்ளைகளை உயிரோடே காப்பாற்றுதலின் தெய்வபத்தி. ௨௨. பார்வோன் ஆண்பிள்ளைகளை ஆற்றில்போட உத்தரவுசெய்தது.*

௧ எகிப்திலே வந்த இஸ்ரவேலுடைய குமாரரின்
நாமங்கள்; யாக்கோபுடனே அவரவர் தங்கள்
௨ வீட்டாரோடும்கூட வந்தார்கள்.—ரூபேன், சிமே
௩ யோன், லேவி, யூதா,—இசக்கார், செபுலோன்,
௪ பென்யமீன்,—தாண், நப்தலி, காத், ஆசேர் என்
௫ பவர்கள். —[1]யாக்கோபின் கர்ப்பப்பிறப்பாகிய
எல்லா ஆத்துமாக்களும், எழுபது ஆத்துமாக்கள்;
யோசேப்போவென்றால், எகிப்தில் இருந்தான்.—
௬ யோசேப்பும் அவனுடைய எல்லாச் சகோதரரும்
அந்த எல்லாத் தலைமுறையாரும் மரித்தபிற்பா
௭ டோவெனில்,—இஸ்ரவேல் புத்திரர் மிகுதியும்
பலுகி ஏராளமாகிப் பெருகிப் பலத்துப்போனார்
கள்; தேசம் அவர்களால் நிறைந்தது.
௮ யோசேப்பை அறியாத புதிய இராசாவும்
௯ எகிப்திலே எழும்பினன்.—அவன் தன் சனத்தோ
டே சொன்னதாவது: இதோ, இஸ்ரவேல் புத்தி
ரராகிய சனம் நம்மிலும் பெரியதும் பலத்தது
௰ மாய் இருக்கின்றது.—அது பெருகாதபடிக்கும்,
ஒரு யுத்தம் உண்டானால் அதுவும் நம்முடைய
பகைஞரோடேகூட நமக்கு விரோதமாய் யுத்தம்
பண்ணித் தேசத்தைவிட்டுப் புறப்பட்டுப் போ
காதபடிக்கும், நாம் அவர்கள்நிமித்தம் புத்தியுள்
௰௧ ளவர்களாய்இருப்போமாக என்றான்.— அப்படி
யே அவர்களைத் தங்கள் சுமைகளால் ஒடுக்கும்ப
டிக்கு அவர்கள்மேல் பகுதிக்காரரான தலைவரை
வைத்தார்கள்; ஏனெனில் படைமுஸ்திப்புகளை
வைக்கும் பட்டணங்களாகிய பீத்தோமும், ராம
௰௨ சேசும், பார்வோனுக்குக் கட்டப்பட்டது.—ஆ
னால் எத்தனைக்குச் சனத்தை ஒடுக்கினார்களோ,
அத்தனைக்கும் அது பெருகிப் பரம்பிற்று; ஆகை
யினாலே இஸ்ரவேல் புத்திரரைப்பார்த்து விதனப்
௰௩ பட்டார்கள். — எகிப்தியர் இஸ்ரவேல் புத்திர
ரைக் கொடூரமாய் வேலைகொண்டு,—களிமண் ௰௪
ணிலும் செங்கல்லிலும் செய்யும் கடினமான
வேலையினாலும், வயலில் செய்யும் எல்லாவித
வேலையினாலும், அவர்களைக் கொடூரமாய்ப் பணி
செய்விக்கப்பண்ணும் தங்களுடைய மற்ற எல்
லா வேலையினாலும், அவர்களுக்குச் சீவனைக்
கசப்பாக்கினார்கள்.
இதுவுமல்லாமல், எகிப்தின் இராசா எபிரேய ௰௫
மருத்துவச்சிகளோடே பேசினான்; அவர்களில்
ஒருத்தியின்பேர் சிப்பிராள்; மற்றவள்பேர் பூ
வாள்.—அவர்களோடே அவன் சொன்னதாவது: ௰௬
பெற ஆசனங்களில் உளுக்காந்த எபிரேய
பெண்சாதிகளுக்கு நீங்கள் மருத்துவம் பார்க்கை
யில், அது ஆண்பிள்ளையானால் அதைக் கொல்
லுங்கள்; அது பெண்பிள்ளையானால் உயிரோடு
இருக்கட்டும் என்றான்.—ஆனால் மருத்துவச்சிகள் ௰௭
பராபரனுக்குப் பயந்து, எகிப்தின் இராசா தங்க
ளுக்குச் சொன்னபடி செய்யாமல், பிள்ளைகளை
உயிரோடே காப்பாற்றினார்கள்.—ஆகையால் எ ௰௮
கிப்தின் இராசா மருத்துவச்சிகளை அழைப்பித்
து, அவர்களோடே, நீங்கள் பிள்ளைகளை உயிரோ
டே காப்பாற்றுகிற இந்தக் காரியத்தை என் செய்
கிறீர்கள் என்றான்.—அப்பொழுது மருத்துவச்சி ௰௯
கள் பார்வோனோடே, எபிரேய பெண்சாதிகள்
எகிப்திய பெண்சாதிகளைப்போல இருக்கிறதில்
லை; அவர்கள் நல்ல பலமுள்ளவர்கள்; மருத்து
வச்சி அவர்களண்டைக்கு வாராததற்குமுன்
னே அவர்கள் பெற்றுத் தீர்ந்தது என்றார்கள்.—
இதினிமித்தம் பராபரன் மருத்துவச்சிகளுக்கு ௨௰
நன்மைசெய்தார்; சனம்பெருகி மிகுதியும் பலத்
துப்போயிற்று.—சம்பவித்தது ஏதென்றால், மருத் ௨௧
துவச்சிகள் பராபரனுக்குப் பயந்தபடியினாலே,
அவர் இவர்களுக்கு வீடுகளை உண்டாக்கினார்.—
அப்பொழுது பார்வோன் பிறக்கிற ஆண்பிள்ளை ௨௨
யை எல்லாம் ஆற்றிலே போட்டுவிட்டு, பெண்
பிள்ளையையெல்லாம் உயிரோடே வையுங்கள்
என்று தன்னுடைய எல்லாச் சனத்திற்கும் கற்
பித்தான்.

---

1 ௧ மோ. ௪௬. ௨௭.

## உ. அதிகாரம்.

௧. மோசே பிறந்தது. ௩. நாணல்பெட்டியில் போடப்பட்டது. ௫. அவன் கண்டெடுக்கப்பட்டுப் பார்வோன் குமாரத்தியால் வளர்க்கப்பட்டது. ௰௧. எகிப்தியனைக் கொன்றது. ௰௩. எபிரேயசாதியானை அவன் கண்டித்தது. ௰௫. மீதியான் தேசத்திற்கு அவன் ஓடிப்போனது. ௨௧. சிப்போராளை அவன் விவாகம்பண்ணினது. ௨௨. கேர்சோன் பிறந்தது. ௨௩. பராபரன் இஸ்ரவேலருடைய கூக்குரலை ஏற்றுக்கொண்டது.

௧ ஆனால் [1]இலேவி வீட்டாரில் ஒரு மனிதன்
போய் இலேவியின் குமாரத்தி ஒருத்தியை விவா
௨ கம்பண்ணினான்.—அந்தப் பெண்சாதி கர்ப்பம்
தரித்து, ஒரு ஆண்பிள்ளையைப் பெற்று, அது
அழகுள்ளதென்று கண்டு, [2]அதை மூன்றுமாதம்
௩ ஒளித்தாள்.—அதை அவள் அப்புறம் ஒளிக்கக்
கூடாதபொழுதோவெனில், அவள் நாணல்
பெட்டியை வாங்கிக்கொண்டு, அதைப் பிசினி
லும் கீலாலும் பூசி, அதிலே பிள்ளையை வளர்த்தி,
௪ ஆற்றோரமாய் நாணலிலே வைத்தாள்.—அதற்கு
என்ன சம்பவிக்குமென்று அறிய அதின் தமக்
கை தூரத்திலே நின்றுகொண்டிருந்தாள்.

௫ அப்பொழுது பார்வோனின் குமாரத்தி ஆற்
றிலே குளிக்க இறங்கிவந்தாள்; அவளுடைய
பணிவிடைக்காரிகள் ஆற்றங்கரையிலே நடந்
தார்கள்; அவள் நாணல் நடுவிலே இருக்கிற
பெட்டியைக் கண்டு அதைக்கொண்டுவரத் தன்
௬ வேலைக்காரியை அனுப்பினாள்.–அதைத் திறந்து
அந்தப் பிள்ளையைக் கண்டாள்; இதோ, பிள்ளை
அழுதது; அப்பொழுது அவள் அதின்மேல் இ
ரக்கமாகி, இது எபிரேயரின் பிள்ளைகளில் ஒன்று
௭ என்றாள்.—அப்பொழுது அதின் தமக்கை பார்
வோனின் குமாரத்தியோடே, உமக்கு இந்தப்
பிள்ளையை வளர்க்கும்படிக்கு எபிரேய பெண்
சாதிகளில் முலைகொடுக்கிற ஒருத்தியை உமக்கு
அழைத்துவர நான் போகட்டுமோ என்றாள்.—
௮ அப்பொழுது பார்வோனின் குமாரத்தி அவ
ளோடே போவென்றாள்; அந்தப் பெண்பிள்ளை
போய்ப் பிள்ளையின் தாயை அழைத்துவந்தாள்.–
௯ அவளோடே பார்வோனின் குமாரத்தி, நீ இந்தப்
பிள்ளையை எடுத்துக்கொண்டுபோய், அதை எ
னக்கு வளர்த்திடு, நான் உனக்குக் கூலியைக்
கொடுப்பேன் என்றாள்; அப்படியே அந்தப்
பெண்சாதி பிள்ளையை எடுத்துக்கொண்டுபோய்,
௰ அதை வளர்த்தாள்.—பிள்ளை பெரியதானபொ
ழுது, அவள் அதைப் பார்வோனின் குமாரத்தி
யண்டையில் கொண்டுபோனாள்; அவளுக்கு
அது குமாரனாயிற்று; அவள் அதற்கு மோசே
என்று பேரிட்டாள்; ஏனென்றால் அதைத் தண்
ணீரினின்று தூக்கினேன் என்றாள்.

௰௧ [3]மோசே பெரியவனாய்ப்போன அந்நாள்க
ளில் சம்பவித்தது ஏதென்றால், அவன் தன் சகோ
தரரண்டையிலே புறப்பட்டுப்போய், அவர்கள்
பாரமான வேலைகளைப்பார்த்து, தன் சகோதரரில்
எபிரேயமனிதனாகிய ஒருவனை அடித்துக்கொண்
டிருக்கிற எகிப்திய மனிதனைக் கண்டு,–இந்தப் ௰௨
பக்கமும் அந்தப்பக்கமும் திரும்பிப்பார்த்து, ஒ
ருவரும் இல்லையென்று கண்டபொழுது, எகிப்
தியனை வெட்டி, அவனை மணலிலே அடக்கிப்
போட்டான். — மறுநாளிலும் வெளியே போ ௰௩
னான்; இதோ எபிரேய மனிதர் இரண்டுபேர் சண்
டைபண்ணினார்கள்; அப்பொழுது அநியாயம்
செய்கிறவனோடே, நீ உனக்கடுத்தவனை அடிக்கி
றது என்னவென்றான்.–அதற்கவன் உன்னை எங் ௰௪
கள்மேல் துரைத்தனக்காரனும் நியாயாதிபதியு
மாக வைத்தவர் யார்? நீ எகிப்தியனைக்கொன்று
போட்டதுபோல, என்னையும் கொன்றுபோட
இதைச் சொல்லுகிறாயோ என்றான்; அப்பொ
ழுது மோசே பயந்து, அந்தக் காரியம் வெளியா
னது நிச்சயம் என்றான்.—பார்வோன் அந்தக் கா ௰௫
ரியத்தைக் கேட்டு, மோசேயைக் கொலைசெய்
யத் தேடினான்; ஆனால் மோசே பார்வோனுக்கு
விலகி ஓடிப்போய், மீதியான்தேசத்திலே தங்கி,
ஒரு துரவண்டையிலே உளுக்காந்தான்.

மீதியானில் இருக்கிற ஆசாரியனுக்கு ஏழு ௰௬
குமாரத்திகள் இருந்தார்கள்; அவர்கள் தங்கள்
தகப்பனுடைய ஆடுகளுக்குத் தண்ணீர் காட்
டும்படிக்கு அங்கே வந்து மொண்டு, தொட்டி
களை நிரப்பினார்கள்.—ஆனால் மேய்ப்பர் வந்து, ௰௭
அவர்களைத் துரத்தினார்கள்; அப்பொழுது மோ
சே எழுந்திருந்து அவர்களைக் காப்பாற்றி, [4]அவர்
களுடைய ஆடுகளுக்குத் தண்ணீர் காட்டினான்.-
அவர்கள் தங்கள் தகப்பனாகிய ரேகுவேலண்டை ௰௮
யிலே வந்தபொழுது, அவன், நீங்கள் இன்று
இத்தனை சீக்கிரமாய் வந்ததென்ன என்றான்.—
அதற்கு அவர்கள், எகிப்திய மனிதன் ஒருவன் ௰௯
மேய்ப்பரின் கைகளுக்கு எங்களைத் தப்புவித்து,
எங்களுக்கு மொண்டும்கொடுத்து, ஆடுகளுக்
குத் தண்ணீரும் காட்டினான் என்றார்கள்.—
அப்பொழுது அவன் தன் குமாரத்திகளோடே, ௨௰
அவன் எங்கே இருக்கிறான்? அந்த மனிதனை
நீங்கள் விட்டுவந்ததென்ன? அவன் அப்பம்
சாப்பிடுகிறதற்கு அவனை அழைத்துவாருங்க
ளென்றான்.—மோசே அந்த மனிதனிடத்திலே ௨௧
தங்கித்தரிக்கச் சம்மதப்பட்டான்; அவன் மோ
சேக்குத் தன் குமாரத்தியாகிய சிப்போராளைக்
கொடுத்தான்.—இவள் ஒரு குமாரனைப் பெற் ௨௨
றாள்; அவனுக்குக் கேர்சோனென்று பேரிட்
டான்; ஏனெனில் அந்நியதேசத்திலே பரதே
யாய் இருக்கிறேன் என்றான்.

சம்பவித்ததேதெனில், அநேகநாள் வட்டத் ௨௩
திலே எகிப்தின் இராசா செத்துப்போனான்;
இஸ்ரவேல் புத்திரரோவென்றால் அடிமைத்
தனத்திலிருந்து தவித்துக் கூப்பிட்டுக்கொண்
டிருந்தார்கள்; அவர்கள் அடிமைத்தனத்திலி
ருந்து கூப்பிடுகிற சத்தம் பராபரனண்டைக்கு
ஏறிற்று.–பராபரன் அவர்கள் தவிப்பைக்கேட்டு ௨௪

1 உ மோ. ௬. ௨௰.—2 எபி. ௰௧. ௨௩.

3 எபி ௰௧. ௨௪, ௨௫.—4 ௧ மோ. ௨௯. ௰.

தாம் ஆபிரகாமோடும் ஈசாக்கோடும் யாக்கோ
போடும்பண்ணின உடம்படிக்கையைப் பரா
௨௫ பரன் நினைவுகூர்ந்தார்.—பராபரன் இஸ்ரவேல்
புத்திரரை நோக்கிப்பார்த்தார், பராபரன் அவர்
களை அறிந்தார்.

## ௩. அதிகாரம்.

௧. மோசே எத்திரோவின் மந்தையை வைத்துக்கொண்டது. ௨. பராபரன் எரிகிற முள்செடி அண்டையில் அவனுக்குக் காணப்பட்டது. ௩. இஸ்ரவேலரை இரட்சிக்கும்படி அவர் அவனை அனுப்பினது. ௰௪. பராபரனுடைய பேர். ௰௫. அவன இஸ்ரவேலரண்டைக்கு அனுப்பப் பட்டது.

௧ மோசேயோவென்றால், மீதியானில் ஆசாரிய
னாயிருக்கிற தன் மாமனாகிய எத்திரோவின் ஆடு
களை மேய்த்துக்கொண்டிருந்தான்; அவன் ஆடு
களை வனாந்தரத்தின் பின்புறத்திலே ஓட்டி, பரா
பரனுடைய பர்வதமாகிய ஓரேப்மட்டும் வந்
௨ தான்.—அங்கே கர்த்தருடைய தூதனானவர் ஒரு
முள்செடியின் நடுவிலிருந்து உண்டாகிற அக்
கினிச்சுவாலையிலே அவனுக்குத் தரிசனையா
னார்; இதோ முள்செடி அக்கினியாய் எரிந்தா
லும் முள்செடி வெந்துபோகாதிருக்கிறதென்று
௩ கண்டான்.—அப்பொழுது மோசே, நான் சே
ரப்போய், அந்த முள்செடி வெந்துபோகாதிருக்
கிறதேதென்கிற அந்தப் பெரிய தரிசனையைப்
௪ பார்ப்பேனாகவென்றான்.—ஆனால் பார்க்கிறதற்
காக அவன் சேரவருகிறதைக் கர்த்தர் கண்டு,
பராபரன் முள்செடியின் நடுவிலிருந்து அவ
னுக்கு நேராகக் கூப்பிட்டு, மோசேயே, மோ
சேயே, என்றார்; அவன் இதோ, அடியேன்
௫ என்றான்.-அப்பொழுது அவர், இங்கே கிட்டிச்
சேராயாக; உன் கால்களிலிருக்கிற உன் பாத
ரட்சைகளைக் கழற்று; ஏனெனில் நீ நிற்கிற ஸ்த
லம் பரிசுத்த பூமியாயிருக்கிறதென்று சொல்லி,-
௬ பின்னையும் [1]நாம் ஆபிரகாமுடைய பராபரனும்
ஈசாக்குடைய பராபரனும் யாக்கோபுடைய
பராபரனுமாகிய உன் பிதாக்களுடைய பராபர
னென்றார்; அப்பொழுது மோசே தன் முகத்தை
மூடிக்கொண்டான்; ஏனென்றால் பராபரனை
நோக்கிப்பார்க்கப் பயந்தான்.
௭ கர்த்தர் சொன்னதாவது: நாம் எகிப்திலிருக்
கிற நமது சனத்தின் உபத்திரவத்தைப் பார்க்
கவே பார்த்து, தங்கள் ஆளோட்டிகளின்நிமித்
தம் அவர்கள் கூப்பிடுகிற கூப்பிடுதலைக் கேட்
டோம்; ஏனென்றால் அவர்கள் வேதனைகளை
௮ அறிந்தோம்.—ஆகையால் அவர்களை எகிப்திய
ரின் கைக்கு நீங்கலாக்கிவிடவும், அவர்களை
அந்தத் தேசத்திலிருந்து கானானியரும் ஏத்திய
ரும் எமோரியரும் பெரிசியரும் ஏவியரும் எபூ
சியரும் இருக்கிற இடமாகிய பாலும் தேனும்
ஓடுகிற நலமும் விசாலமுமான தேசத்திற்கு
௯ ஏறிவரப்பண்ணவும் இறங்கினோம்.—இப்பொ
ழுதும் இதோ இஸ்ரவேல் புத்திரரின் கூப்பிடு
தல் நம்மண்டைக்கு வந்தது; எகிப்தியர் அவர்
களை ஒடுக்குகிற ஒடுக்குதலையும் பார்த்தோம்.—
இப்பொழுதும் நீ இஸ்ரவேல் புத்திரராகிய நமது ௰
சனத்தை எகிப்திலிருந்து வெளியே அழைத்து
வரும்படிக்கு உன்னைப் பார்வோனண்டைக்கு
அனுப்புவோம் வாவென்றார்.
அப்பொழுது மோசே பராபரனோடே, பார் ௰௧
வோனண்டைக்குப் போகிறதற்கும், இஸ்ர
வேல் புத்திரரை எகிப்திலிருந்து வெளியே
அழைத்துவருகிறதற்கும், நான் எம்மாத்திரமென்
றான். — அதற்கவர் நாம் உன்னுடனே இருப் ௰௨
போம்; நீ சனத்தை எகிப்திலிருந்து வெளியே
அழைத்துவந்தபொழுது இந்தப் பர்வதத்திலே
பராபரனுக்கு ஆராதனைசெய்வீர்களென்பது,நாம்
உன்னை அனுப்பினதற்கு அடையாளமாய் இ
ருக்குமென்றார்.
அப்பொழுது மோசே பராபரனோடே சொன் ௰௩
னதாவது: இதோ நான் இஸ்ரவேல் புத்திரரண்
டைக்கு வந்து, உங்கள் பிதாக்களுடைய பரா
பரன் என்னை உங்களண்டைக்கு அனுப்பினா
ரென்று அவர்களுக்குச் சொல்லும்பொழுது,
அவர்கள், அவருடைய நாமம் என்னவென்று
என்னைக் கேட்டால், அவர்களோடே என்ன
சொல்லுவேன் என்றான்.
அப்பொழுது பராபரன், இருக்கிறவராக ௰௪
இருப்போமென்று மோசேயுடனே சொல்லி,
இருப்போம் என்பவர் என்னை உங்களண்டைக்
கு அனுப்பினார் என்று இஸ்ரவேல் புத்திரரோ
டே சொல்வாயாக என்றார். — அப்புறம் பரா ௰௫
பரன் மோசேயோடே சொன்னதாவது: நீ இஸ்
ரவேல் புத்திரருடனே, ஆபிரகாமுடைய பரா
பரனும் ஈசாக்குடைய பராபரனும் யாக்கோபு
டைய பராபரனுமாயிருக்கிற உங்கள் பிதாக்
களுடைய பராபரனாகிய கர்த்தர் என்னை உங்க
ளண்டைக்கு அனுப்பினார் என்பாயாக, இது
என்றைக்கும் நம்முடைய நாமமும் இது தலை
முறைதலைமுறையாக நம்முடையபேர்ப் பிரஸ்
தாபமுமாயிருக்கும்.—நீ போய் இஸ்ரவேலின் ௰௬
மூப்பரைக் கூட்டி அவர்களோடே சொல்ல
வேண்டியதாவது: ஆபிரகாம் ஈசாக்கு யாக்கோபு
என்றவர்களுடைய பராபரனாயிருக்கிற உங்கள்
பிதாக்களுடைய பராபரனாகிய கர்த்தர் எனக்
குத் தரிசனையாகி, உங்களையும் எகிப்திலே உங்
களுக்குச் செய்யப்பட்டதையும் விசாரிக்கவே
விசாரித்தோமென்றும்,-நாம் உங்களை எகிப்தின் ௰௭
சிறுமையிலிருந்து ஏறிவரப்பண்ணி, பாலும்
தேனும் ஓடுகிற தேசமாகிய கானானியர், ஏத்தி
யர், எமோரியர், பெரிசியர், ஏவியர், எபூசியரு
டைய தேசத்திற்குக் கொண்டுபோவோமென்
றும் சொன்னோமென்றார் என்று சொல்லு. —
அவர்கள் உன் சத்தத்திற்குக் கேள்விகொடுப் ௰௮
பார்கள்; அப்பொழுது நீயும் இஸ்ரவேலின்
மூப்பரும் எகிப்தின் இராசாவண்டைக்குப்
போய், அவனோடே, எபிரேயருடைய பராபர
னாகிய கர்த்தர் எங்களைச் சந்தித்தார்; இப்பொ

[1] மாற். ௰௨. ௨௬, ௨௭.

ழுதும் நாங்கள் மூன்று நாள்பயணம் வனாந்த
ரத்திலே போய், எங்கள் பராபரனாகிய கர்த்த
௰௯ ருக்குப் பலியிடட்டும் என்பீர்களாக.—ஆனால்
எகிப்தின் இராசா வல்லமையான கையைக்
கண்டாலும், உங்களைப் போகவிடானென்று
௨௰ நாம் அறிவோம்.—ஆகையால் நாம் நம்முடைய
கையை நீட்டி, எகிப்தின் நடுவிலே நாம் செய்
யும் நம்முடைய சகலவித அதிசயங்களாலும்
அதை அடிப்போம்; அதற்குப் பிறகு உங்களை
௨௧ அனுப்பிவிடுவான்.—அப்பொழுது நாம் இந்தச்
சனத்திற்குள் எகிப்தியரின் கண்களுக்குமுன்
பாகத் தயவுகிடைக்கப்பண்ணுவதினால் சம்ப
விப்பதேதெனில், நீங்கள் போகிறபொழுது
௨௨ வெறுமையாய்ப் போகப்போகிறதில்லை. — ஒவ்
வொரு ஸ்திரி, தன் தன் அயலகத்தாள் கையி
லும் தன்தன் வீட்டுக்காரிகள் கையிலும் வெள்
ளி உடைமைகளையும் பொன் உடைமைகளை
யும் வஸ்திரங்களையும் கேட்டு வாங்குவாள்; அ
வைகளை உங்கள் குமாரர்மேலும் உங்கள் குமா
ரத்திகள்மேலும் வைத்து, [1]எகிப்தியரைக் கொள்
ளையிட்டுப் போவீர்களென்றார்.

## ௪. அதிகாரம்.

௧. மோசேயின் கோல் சர்ப்பமாக்கப்பட்டது. ௬. அவன் கை குஷ்டம் பற்றியது. ௰. அவன் அனுப்பப்படுவதற்கு இஷ்டமில்லாதவனாயிருந்தது. ௰௪. ஆரோன் அவனுக்கு உதவிசெய்ய நியமிக்கப்பட்டது. ௰௮. மோசே எத்திரோவினிடத்திலிருந்து புறப்பட்டது. ௨௧. பராபரன் பார்வோனுக்குச் செய்த எச்சரிக்கை. ௨௪. சிப்போராள் தன் குமாரனைச் சன்னத்துப்பண்ணினது. ௨௭. ஆரோன், மோசேயைக் காணும்படி அனுப்பப்பட்டது. ௩௧. சனங்கள் அவர்களை நம்பினது.

௧ அப்பொழுது மோசே பிரதியுத்தாரமாக, ஆ
னால் இதோ அவர்கள் என்னை நம்பாமலும் என்
சத்தத்திற்குக் கேள்விகொடாமலும் போவார்
கள்; ஏனெனில் கர்த்தர் உனக்குத் தரிசனையான
தில்லையென்று சொல்லுவார்கள் என்றான். —
௨ அப்பொழுது கர்த்தர் அவனுடனே உன் கையி
லிருக்கிறது என்னவென்றார்; ஒரு கோலென்
௩ றான்.—அதைத் தரையிலே போடென்றார்; அ
வன் அதைத் தரையிலே போட்டபொழுது,
அது சர்ப்பமாயிற்று; அதற்கு மோசே விலகி
௪ ஓடினான். — அப்பொழுது கர்த்தர் மோசேயோ
டே, உன் கையை நீட்டி அதின் வாலைப் பிடி
என்றார்; அவன் தன் கையை நீட்டி அதைப்
பிடிக்கிறபொழுது, அது அவன் கையிலே கோ
௫ லாயிற்று.—இது ஆபிரகாமுடைய பராபரனும்
ஈசாக்குடைய பராபரனும் யாக்கோபுடைய பரா
பரனுமாயிருக்கிற தங்கள் பிதாக்களுடைய பரா
பரனாகிய கர்த்தர், உனக்குத் தரிசனையானதை
அவர்கள் நம்புகிறதற்கான அடையாளமென்
றார்.
௬ பின்னையும் கர்த்தர் அவனுக்கு உன் கையை
உன் மடியிலே போடென்றார்; அவன் தன் கை
யைத் தன் மடியிலே போட்டு, அதை வெளியே
வாங்குகிறபொழுது, இதோ அவன் கை உறைந்த
மழையைப்போல வெண்குஷ்டம் பிடித்திருந்
௭ தது.—பிறகு அவர் உன் கையைத் திரும்ப உன்
மடியிலே போடென்றார், அவன் தன் கையைத்
திரும்பத் தன் மடியிலே போட்டு, தன் மடியி
லிருந்து அதை வெளியே வாங்குகிறபொழுது,
இதோ அது திரும்ப அவனுடைய மற்றச் சதை
யைப்போல ஆயிற்று. — அப்பொழுது அவர் ௮
சொன்னதாவது: அவர்கள் முந்தின அடையா
ளத்தைக் கண்டு, உன்னை விசுவாசியாமலும்
உனக்குக் கேள்விகொடாமலும்போனால், பிந்
தின அடையாளத்தைக் கண்டு விசுவாசிப்பார்
கள்.—அவர்கள் இவ்விரண்டு அடையாளங்களை ௯
யும் விசுவாசியாமலும் உன் சத்தத்திற்குக் கேள்
விகொடாமலும் போனார்களேயாகில், அப்பொ
ழுது நீ நதியின் தண்ணீரை மொண்டு பூமியில்
ஊற்றுவாயாக; அப்பொழுது நீ நதியிலே மொண்
ட தண்ணீர் பூமியிலே இரத்தமாமென்றார்.
மோசேயோவென்றால் கர்த்தரோடே சொன் ௰
னதாவது: ஆ, ஆண்டவரே, முன்னும் எப்பொ
ழுதும், தேவரீர் உம்முடைய அடியானோடே
பேசினது முதற்கொண்டும் நான் பேச்சுக்காரன்
அல்ல, ஏனெனில் நான் திக்குவாயனும் திக்கு
நாவுக்காரனுமானவன் என்றான்.
அப்பொழுது கர்த்தர் அவனோடே சொன்னதா ௰௧
வது: மனிதனுக்கு வாயைக் கொடுத்தவர் யார்?
அல்லவென்று ஊமையனையும் அல்லது செவி
டனையும் அல்லது பார்வையுள்ளவனையும் அல்
லது குருடனையும் உண்டாக்கினவர் யார்? கர்த்த
ராகிய நாமல்லவோ?—இப்பொழுதும் நீ போ; ௰௨
நாம் உன் வாயோடே இருந்து, [2]நீ பேசவேண்
டியதை உனக்குப் போதிப்போமென்றார்.
அவனோவென்றால் ஆ, ஆண்டவரே, நீர் ௰௩
அனுப்பச் சித்தமாயிருக்கிற யாரையாகிலும்
அனுப்புமென்றான்.
அப்பொழுது கர்த்தர் மோசேயின்மேல் கோ ௰௪
பம் மூண்டவராகிச் சொன்னதாவது: லேவிய
னாகிய ஆரோன் உன் சகோதரன் அல்லவோ?
அவன் நன்றாய்ப் பேசுகிறவனென்று அறி
வோம்; இதோ அவன் உன்னைச் சந்திக்கப் புறப்
பட்டு வந்து உன்னைக் கண்டு, தன் இருதயத்தி
லே மகிழ்ச்சியாயிருப்பான்.—[3]நீ அவனோடே ௰௫
பேசி, வார்த்தைகளை அவன் வாயில் போடுவா
யாக; நாமோவென்றால் உன் வாயோடும் அவன்
வாயோடுமிருந்து, நீங்கள் செய்யவேண்டியதை
உங்களுக்குப் போதிப்போம். — அவன் உனக் ௰௬
குப் பதிலாகச் சனத்தோடே பேசுவான்; இப்
படியே அவன் உனக்கு வாயாக இருப்பான்;
நீ அவனுக்குத் தேவனாக இருப்பாய்.—நீ அடை ௰௭
யாளங்களைச் செய்யும் இந்தக் கோலை உன் கை
யில் பிடித்துக்கொண்டு போ என்றார்.
மோசே போய்த் திரும்பத் தன் மாமனாகிய ௰௮
எத்திரோ அண்டைக்கு வந்து, நான் புறப்பட்டு
எகிப்திலிருக்கிற என் சகோதரரண்டைக்குத்
திரும்பிப் போய், அவர்கள் இன்னம் உயிரோ
டே இருக்கிறார்களோ என்று பார்க்கட்டுமே

1 ௨ மோ. ௰௧. ௨; ௰௨. ௩௫, ௩௬.

2 மத். ௰. ௰௯, ௨௰.—3 ௨ மோ. ௭. ௨.

என்று அவனோடே சொன்னான்; அப்பொழுது
எத்திரோ மோசேக்குச் சமாதானமாய்ப் போ
௧௯ என்றான்.—பின்னையும் கர்த்தர் மீதியானிலே
மோசேயோடே எகிப்திற்குத் திரும்பிப்போ;
ஏனெனில் உன் பிராணனை வாங்கத் தேடின
மனிதர் எல்லாரும் செத்துப்போனார்கள் என்
௨௰ றார்.—அப்பொழுது மோசே தன் பெண்சாதி
யையும் தன் பிள்ளைகளையும் கூட்டிக்கொண்டு,
அவர்களைக் கழுதையின்மேல் ஏற்றி, எகிப்து
தேசத்திற்குத் திரும்பினான்; மோசே பராபரனு
டைய கோலைத் தன் கையிலே பிடித்துக்
௨௧ கொண்டு போனான்.—கர்த்தர் மோசேயோடே
சொன்னதாவது: நீ எகிப்திலே திரும்பிவந்து
சேர்ந்தபொழுது, நாம் உன் கையிலே கொடுத்த
எல்லா அற்புதங்களையும் பார்வோனுக்குமுன்
பாகச் செய்யப் பார்; நாமோவெனில் அவன்
இருதயத்தைச் சனத்தை விடாதபடிக்குக் கெட்
௨௨ டிப்படுத்துவோம்.—அப்பொழுது நீ பார்வோ
னோடே சொல்லவேண்டியதாவது: கர்த்தர் உ
ரைக்கிறதேதெனில் இஸ்ரவேல் நம்முடைய
௨௩ முதல்பேறான குமாரன்.—நம்முடைய குமா
ரனை நமக்கு ஆராதனைசெய்யும்படிக்கு விடு
வென்று நாம் உன்னோடே சொல்லியும், நீ அ
வனை விடமாட்டோம் என்றாய்; இதோ நாம்
உன் முதல்பேறான உன் குமாரனைக் கொன்று
போடுகிறோமென்று உரைத்தாரென்று சொல்லு
வாயாக என்றார்.
௨௪ வழியில் தங்குமிடத்திலே சம்பவித்ததேதென்
றால் கர்த்தர் அவனுக்கு எதிர்ப்பட்டு அவனைக்
௨௫ கொல்லவேண்டுமென்று இருந்தார்.—அப்பொ
ழுது சிப்போராள், [1]கருக்கான கல்லை எடுத்து,
தன் பிள்ளையின் நுனித்தோலை அறுத்து, அதை
அவன் கால்களுக்குமுன்பாகப் போட்டு, நீர்
எனக்கு இரத்தப்பழிக்கான மாப்பிள்ளையாமே
௨௬ என்றாள்.—அப்பொழுது அவனைவிட்டு விலகி
னார்; அவள் சுன்னத்துகளின்நிமித்தம் அப்பொ
ழுது அவனை இரத்தப்பழிக்கான மாப்பிள்ளை
என்றாள்.
௨௭ கர்த்தர் ஆரோனுடனே, நீ வனாந்தரத்திலே
மோசேக்கு எதிர்கொண்டு போவென்றார்; அ
வன் போய்ப் பராபரனுடைய பர்வதத்திலே அ
வனைச் சந்தித்து அவனை முத்தம்செய்தான்.—
௨௮ அப்பொழுது மோசே தன்னை அனுப்பின கர்த்த
ருடைய எல்லா வார்த்தைகளையும் அவர் தனக்
குக் கற்பித்த எல்லா அடையாளங்களையும் ஆரோ
னுக்கு அறிவித்தான்.
௨௯ மோசேயும் ஆரோனும் போய், இஸ்ரவேல்
புத்திரரின் மூப்பரை எல்லாம் கூட்டினார்கள்.—
௩௰ ஆரோனோவென்றால் கர்த்தர் மோசேயோடே
பேசின எல்லா வார்த்தைகளையும் சொல்லி,
சனத்தின் கண்களுக்குமுன்பாக அந்த அடை
௩௧ யாளங்களைச் செய்தான்.—சனம் விசுவாசித்தது;
கர்த்தர் இஸ்ரவேல் புத்திரரை விசாரித்தாரென்
றும் தங்கள் சிறுமையைப் பார்த்தார் என்றும்
அவர்கள் கேட்டபொழுது, குனிந்து பணிந்து
கொண்டார்கள்.

## ௫. அதிகாரம்.

௧. பார்வோன் மோசேயையும் ஆரோனையும் அவர்கள் அறிவித்தலுக்காகக் கடிந்துகொண்டது. ௬. அவன் இஸ்ரவேலரின் வேலையை அதிகரிக்கச்செய்தது. ௰௫. அவன் அவர்களுடைய விண்ணப்பங்களைத் தடுத்தது. ௨௰. அவர்கள் மோசே ஆரோன் என்பவர்களிடத்தில் முறையிட்டுக்கொண்டது. ௨௨. மோசே பராபரனிடத்தில் விண்ணப்பம் செய்தது.

பிற்பாடு மோசேயும் ஆரோனும் உள்பிரவேசித் ௧
துப் பார்வோனோடே, நமக்கு வனாந்தரத்திலே
பண்டிகை ஆசரிக்கும்படிக்கு, நம்முடைய
சனத்தைப் போகவிடுமென்று இஸ்ரவேலின்
பராபரனாகிய கர்த்தர் சொல்லுகிறாரென்றார்
கள்.—பார்வோனோவென்றால் நான் இஸ்ரவே ௨
லைப் போகவிடக் கர்த்தரின் சத்தத்தைக் கேட்
கிறதற்கு அவர் யார்? நான் கர்த்தரை அறியேன்;
நான் இஸ்ரவேலை விடுவதுமில்லை என்றான்.—
அப்பொழுது அவர்கள் எபிரேயருடைய பரா ௩
பரன் எங்களைச் சந்தித்தார்; அவர் பெருவாரிக்
காய்ச்சலோடும் அல்லவென்று பட்டயத்தோ
டும் எங்களுக்கு நேரிடாதபடிக்கு நாங்கள் மூன்
றுநாள் பயணம் வனாந்தரத்திலே போய், எங்கள்
பராபரனாகிய கர்த்தருக்குப் பலியிடட்டுமே என்
றார்கள்.—ஆனால் எகிப்தின் இராசா அவர்களு ௪
டனே, மோசே ஆரோனென்றவர்களே, நீங்கள்
சனத்தைத் தங்கள் வேலைகளைவிட்டுக் கலையப்
பண்ணுகிறதென்ன? உங்கள் சுமைகளைச் சுமக்
கப்போங்களென்றான்.—பின்னையும் பார்வோன் ௫
இதோ, தேசத்தின் சனம் அப்போதே திரட்சி
யாயிருக்க, அவர்களை நீங்கள் தங்கள் சுமைகளை
விட்டு ஓயப்பண்ணுவீர்களோ என்று சொல்லி,
அந்நாளிலே பார்வோன் சனத்தின் விசாரிப் ௬
புக்காரருக்கும் அதின் தலைவருக்கும் கற்பித்துச்
சொன்னதாவது:—நீங்கள் இனிச் சனத்திற்கு ௭
நேற்றைப்போலவும், முந்துநேற்றைப்போல
வும், செங்கல் வேலைக்கு வைக்கோல் கொடுக்க
வேண்டாம்; அவர்கள்தாமே போய்த் தங்களுக்கு
வைக்கோல் சேர்க்கக்கடவர்கள்.—ஆனால் அவர் ௮
கள் நேற்றும் முந்துநேற்றும் செய்த செங்கல்க
ளுடைய இலக்கத்தின் திட்டத்தைத்தானே அ
வர்கள்மேலே சுமத்துவீர்களாக; அதிலே நீங்
கள் ஒன்றும் குறைக்கவேண்டாம்; ஏனெனில்
அவர்கள் சும்மா இருக்கிறார்கள். ஆகையால
போவோம், எங்கள் பராபரனுக்குப் பலியிடு
வோம் என்று கூப்பிடுகிறார்கள்.—அந்த மனி ௯
தர்கள் பொய் வார்த்தைகளைக் கவனிக்காமல்
தங்கள் பணிவிடைவேலைகளில் முயற்சியாயி
ருக்கும்படிக்கு, அது அவர்கள்மேல் அதிகரிக்
கப்படக்கடவதென்றான்.
அப்பொழுது சனத்தின் ஆளோட்டிகளும் ௰
அதின் தலைவரும் புறப்பட்டுச் சனத்தோடே
சொன்னதாவது: நாம் உங்களுக்கு வைக்கோல்
கொடுப்பதில்லை என்றும்,—நீங்களே போய் உங் ௧௧

1 யோசு. ௫. ௨.

களுக்கு அகப்படுகிற இடங்களில் வைக்கோ
லைச் சம்பாதியுங்கள்; உங்கள் பணிவிடை வே
லையிலோவென்றால், ஒன்றும் குறைக்கப்படுவ
தில்லை என்றும் பார்வோன் சொன்னார் என்றார்
௰௨ கள்.—அப்பொழுது வைக்கோலுக்குப் பதிலாகத்
தாளடிகளைச் சேர்க்கும்படிக்குச் சனம் எகிப்து
௰௩ தேசமெங்கும் சிதறிப்போயிற்று.— ஆளோட்டி
களோவென்றால் துரிதம்பண்ணி, வைக்கோ
லிருந்த நாளில் செய்ததற்குச் சரியாக உங்கள்
பங்கிடுவேலைகளை ஒவ்வொருநாளிலே முடித்
௰௪ துத் தீருங்கள் என்றார்கள். — பிற்பாடு நீங்கள்
முந்தியதுபோல, செங்கல்லில் உங்கள் திட்டத்
தை நேற்றும் இன்றும் முடிக்காதே போன
தென்ன என்று பார்வோனுடைய ஆளோட்டி
கள் இஸ்ரவேல் புத்திரர்மேலே வைத்த இவர்க
ளுடைய தலைவர்களைக் கேட்டு அடித்தார்கள்.
௰௫ ஆகையால் இஸ்ரவேல் புத்திரரின் தலைவர்
உள்பிரவேசித்துப் பார்வோனை நோக்கிக் கூப்
பிட்டு, உமதடியாருக்கு நீர் இப்படிச் செய்வா
௰௬ னேன்?—உமதடியாருக்கு வைக்கோல் கொடுக்
கப்படாவிட்டாலும், செங்கல்லை அறுத்துத்
தீருங்களென்று எங்களுக்குச் சொல்லுகிறார்கள்;
இதோ உம்முடைய சனத்தின்மேலே குற்றம்
இருக்கும்போது, உமதடியார் அடிக்கப்படுகிறார்
௰௭ கள் என்றார்கள்.—அதற்கவன் சொன்னதாவது:
நீங்கள் சும்மாஇருக்கிறீர்கள்; சும்மாதான் இருக்
கிறீர்கள்; ஆகையினாலே போவோம், கர்த்தருக்
௰௮ குப் பலியிடுவோம் என்கிறீர்கள்.—இப்பொழு
தும் போங்கள், பணிவிடைசெய்யுங்கள்; உங்
களுக்கு வைக்கோல் கொடுக்கப்படுவதில்லை;
செங்கல்லுகளுடைய இலக்கத்தின் திட்டத்தை
யோவெனில் நீங்கள் ஒப்புவிக்கவேண்டுமென்
௰௯ றான்.— நீங்கள் ஒவ்வொருநாளிலே அறுத்துத்
தீரவேண்டியசெங்கல்லுகளிலே ஒன்றும்குறைக்
காதிருங்கள் என்னப்பட்டதினாலே, தங்களுக்கு
வந்த இக்கட்டை இஸ்ரவேல் புத்திரரின் தலை
வர் கண்டு,
௨௰ பார்வோனைவிட்டுப் புறப்படுகையில், தங்க
ளுக்கு எதிரே நிற்கிற மோசேக்கும் ஆரோனுக்
௨௧ கும் எதிர்ப்பட்டு, — அவர்களுடனே, நீங்கள்
பார்வோனின் கண்களுக்குமுன்பாகவும் அவ
ருடைய ஊழியக்காரரின் கண்களுக்குமுன்பா
கவும் எங்கள் வாசனையை நாறப்பண்ணி, எங்
களைக் கொல்ல அவர்கள் கையிலே பட்டையத்
தைக் கொடுத்ததின் நிமித்தம் கர்த்தர் உங்களை
நோக்கிப்பார்த்து, நியாயந்தீர்க்கக்கடவர் என்
றார்கள்.
௨௨ அப்பொழுது மோசே கர்த்தரண்டைக்குத்
திரும்பி, ஆண்டவரே, இந்தச் சனத்திற்கு என்
தீங்குவரப்பண்ணினீர்? நீர் என்னை அனுப்பின
௨௩ தேது? — நான் உம்முடைய நாமத்திலே பேசப்
பார்வோனண்டையில் உட்பிரவேசித்ததுமுதல்
கொண்டுதானே இந்தச் சனத்தை உபத்திரவப்ப
டுத்தினான்; நீரோவெனில் உம்முடைய சனத்தை
விடுவித்ததே இல்லை என்றான்.

## ௬. அதிகாரம்.

௧. பராபரன் இயேகோவா என்கிற தம்முடைய பெயரினால் தம்முடைய வாக்குத்தத்தத்தைப் புதிதாக்கியது. ௰௪. ரூபேன் வம்ச அட்டவணை. ௰௫. சிமேயோனைக்குறித்துச் சொல்லியது. ௰௬. மோசேயையும் ஆரோனையும் பெற்ற இலேவியைக்குறித்துச் சொல்லியது.

அப்பொழுது கர்த்தர் மோசேயுடனே, நாம் ௧
பார்வோனுக்குச் செய்வதை இப்பொழுது காண்
பாய், அதேதென்றால் பலத்த கையைக் கண்டு
அவர்களைப் போகவிட்டு, பலத்த கையைக் கண்டு
அவர்களைத் தன் தேசத்திலிருந்து துரத்திவிடுவா
னென்றார்.
பின்னையும் பராபரன் மோசேயுடனே பேசி ௨
அவனோடே சொன்னதாவது: நாம் கர்த்தர்.—
நாம் சர்வத்திற்கும் வல்ல பராபரனாய் ஆபிரகா ௩
முக்கும் ஈசாக்குக்கும் யாக்கோபுக்கும் தரிசனை
யானோம்; ஆனால் கர்த்தரென்ற நம்முடைய
நாமத்தினாலே நாம் அவர்களுக்கு அறியப்பட்ட
தில்லை.— அவர்கள் பரதேசிகளாய்த் தங்கின ௪
தேசமாகிற கானான்தேசத்தை அவர்களுக்குக்
கொடுக்க, நாம் அவர்களோடே நம்முடைய
உடம்படிக்கையையும் ஏற்படுத்தி,—எகிப்தியர் ௫
அடிமைகொள்ளுகிற இஸ்ரவேல் புத்திரரின்
தவிப்பையும் நாம் கேட்டு நமது உடம்படிக்கை
யை நினைத்தோம்.—ஆகையால் இஸ்ரவேல் புத் ௬
திரருக்கு நீ சொல்லவேண்டியதேதெனில் நாம்
கர்த்தர், நாம் உங்களை எகிப்தியருடைய சுமை
களின் கீழிருந்து புறப்படப்பண்ணி, உங்களை
அவர்கள் அடிமைத்தனத்திற்கு நீங்கலாக்கி விடு
வித்து, உங்களை நீட்டப்பட்ட புயத்தினாலும்
மகா நியாயத்தீர்ப்புகளினாலும் மீட்டு.—உங்களை ௭
நமக்குச் சனமாகச் சேர்த்துக்கொண்டு, உங்க
ளுக்குப் பராபரனாயிருப்போம்; நாம் உங்களை
எகிப்தியருடைய சுமைகளின்கீழிருந்து புறப்
படப்பண்ணுகிற உங்கள் பராபரனாகிய கர்த்த
ரென்று அறிவீர்கள். — நாம் ஆபிரகாமுக்கும் ௮
ஈசாக்குக்கும் யாக்கோபுக்கும் கொடுப்போ
மென்று நம்முடைய கரத்தை எடுத்த தேசத்
திலே உங்களைக் கொண்டுபோய், அதை உங்க
ளுக்குச் சுதந்தரமாகக் கொடுப்போம்; நாம் கர்த்த
ரென்று அவர்களுக்குச் சொல்லென்றார்.—இந் ௯
தப்பிரகாரமாக மோசே இஸ்ரவேல் புத்திரரோ
டே பேசினான்; ஆனால் அவர்கள் ஆவியின்
இடுக்கணினாலும் கடினவேலையினாலும் மோசே
யைக் கேளாதேபோனார்கள்.
பிற்பாடு கர்த்தர் மோசேயுடனே பேசி,— ௰
நீ உள்பிரவேசித்து, எகிப்தின் இராசாவாகிய ௰௧
பார்வோன் இஸ்ரவேல் புத்திரரைத் தன் தேசத்தி
லிருந்து போகவிட அவனோடே பேசு என்றார்.—
ஆனால் மோசே கர்த்தருக்குமுன்பாகப் பேசி, ௰௨
இதோ இஸ்ரவேல் புத்திரர் என்னைக் கேட்க
வில்லை; பார்வோன் என்னை எப்படிக் கேட்
பான்? நான் சுன்னத்தில்லாத உதடுகளுமுள்ள
வன் என்றான். — கர்த்தரோவென்றால் மோசே ௰௩
யோடும் ஆரோனோடும் பேசி, இஸ்ரவேல் புத்திர
ரை எகிப்துதேசத்திலிருந்து அழைத்துக்கொண்டு

போகும்படிக்கு, அவர்களை இஸ்ரவேல் புத்தி
ரரண்டைக்கும் எகிப்தின் இராசாவாகிய பார்
வோனண்டைக்கும் அனுப்பிக் கட்டளைகளைக்
கொடுத்துவந்தார்.
௰௪ அவர்களுடைய பிதாக்களின் வீட்டாரில்
தலைவராவது: இஸ்ரவேலுக்கு முதல் பிறந்தவ
னை ரூபேனின் குமாரர், அனோக், பல்லூ, எத்
ஸரோன், கற்மீ; இவர்கள் ரூபேனுடைய வம்
௰௫ சங்களின் தலைவர். — சிமேயோனின் குமாரர்,
எமுவேல், யாமீன், ஓகாத், யாகின், சோகார்,
கானானித்தியின் குமாரனாகிய சவுல்; இவர்கள்
௰௬ சிமேயோனுடைய வம்சங்களின் தலைவர்.—தங்
கள் சந்ததிகளாய்ப் பிரிந்த இலேவியினுடைய
குமாரரின் நாமங்கள், கெர்சோன், கோகாத், மே
ராரி என்றவைகள்; இலேவி உயிரோடிருந்த
வருஷங்களோவென்றால், நூற்று முப்பத்தேழு
௰௭ வருஷங்கள்.—தங்கள் வம்சங்களாய்ப் பிரிந்த
கெர்சோனின் குமாரர், லிப்னீயும் சிமேயீயும்
௰௮ தானே.—கோகாத்தின் குமாரர், அம்ராம், இத்
சேயார், எப்ரோன், ஊசியேல் என்றவர்கள்;
கோகாத் உயிரோடே இருந்த வருஷங்களோ
வென்றால், நூற்று முப்பத்துமூன்று வருஷங்
௰௯ கள். — மேராரின் குமாரர், மகேலியும், மூசியும்
தானே; இவர்கள் தங்கள் சந்ததிகளாய்ப் பிரிந்த
இலேவியினுடைய வம்சங்களின் தலைவர்.—
௨௰ அம்ராம் தன்னுடைய அத்தையாகிய யோகே
பேத்தை விவாகம்பண்ணினான்; இவள் அவ
னுக்கு ஆரோனையும் மோசேயையும் பெற்றாள்;
அம்ராம் உயிரோடிருந்த வருஷங்களோவென்
௨௧ றால், நூற்று முப்பத்தேழு வருஷங்கள்.—இத்
சேயாரின் குமாரர், கோராக், நெப்பேக், சித்ரி
௨௨ என்றவர்கள்.—ஊசியேலின் குமாரர், மீசவேல்,
௨௩ எல்சாபான், சித்ரி என்றவர்கள். — ஆரோன்
அம்மினதாபின் குமாரத்தியும் நகேசோனின்
சகோதரியுமாகிய எலிசபாளை விவாகம்பண்ணி
னான்; இவள் அவனுக்கு நாதாபையும், அபியூ
வையும், எலேயாசாரையும், இத்தாமாரையும்பெற்
௨௪ றாள்.—கோராகின் குமாரர், ஆசீர், எல்க்கானா, அபி
யாசாப் என்றவர்கள்; இவர்கள் கோராகியரின்
௨௫ வம்சங்களின் தலைவர்.— ஆரோனின் குமாரனா
கிய எலேயாசர் பூத்தியேலுடைய குமாரத்திக
ளில் ஒருத்தியை விவாகம்பண்ணினான்; இவள்
அவனுக்குப் பீனேகாசைப் பெற்றாள்; இவர்கள்
தங்கள் வம்சங்களாய்ப்பிரிந்த இலேவியருடை
௨௬ ய பிதாக்களாகிய தலைவர்.—நீங்கள் இஸ்ரவேல்
புத்திரரை அவர்கள் சேனைகளின்படியே எகிப்
துதேசத்திலிருந்து அழைத்துக்கொண்டுபோங்க
ளென்று கர்த்தர் சொன்ன ஆரோனும் மோசேயும்
௨௭ இவர்கள்தான்.—இஸ்ரவேல் புத்திரரை எகிப்தி
லிருந்து அழைத்துக்கொண்டு போகும்படிக்கு,
எகிப்தின் இராசாவாகிய பார்வோனோடே பே
சின மோசேயும் ஆரோனும் இவர்கள்தானே.
௨௮ கர்த்தர் எகிப்துதேசத்திலே மோசேயோடே
பேசின நாளிலே சம்பவித்ததேதென்றால், —
கர்த்தர் மோசேயுடனே, நாம் கர்த்தர்; நாம் உன் ௨௯
னோடே சொல்லுகிறவைகளையெல்லாம் நீ எகிப்
தின் இராசாவாகிய பார்வோனோடே சொல்
லென்று சொன்னபொழுது, — மோசே கர்த்த ௩௰
ருக்குமுன்பாக, இதோ, நான் சுன்னத்தில்லாத
உதடுகளுள்ளவன்; பார்வோன் என்னை எப்ப
டிக் கேட்பானென்றான்.

## ௭. அதிகாரம்.

௧. மோசே பார்வோனிடத்தில் போகும்படி தயிரியம்கொண்டது. ௭. அவனுடைய ஆயுசின்காலம். ௮. அவனுடைய கோல் சர்ப்பமாக மாறினது. ௰௧. சூனியக்காரர்கள் அந்தப்பிரகாரம் செய்திருக்கென்பது. ௰௩. பார்வோனுடைய இருதயம் கடினப்பட்டது. ௰௪. பராபரன் பார்வோனுக்குச் செய்த அறிக்கை. ௰௯. நதியானது இரத்தமாக மாறினது.

பராபரன் மோசேயோடே சொன்னதாவது: ௧
பார், உன்னை நாம் பார்வோனுக்குத் தேவனாக்கி
னோம்; உன் சகோதரனாகிய ஆரோனோவென்
றால், உன் தீர்க்கதரிசியாயிருப்பான். — நாம் ௨
உனக்குக் கற்பிப்பதை எல்லாம் நீ சொல்லும்
போது, [1]உன் சகோதரனாகிய ஆரோன் பார்
வோனோடே இஸ்ரவேல் புத்திரரைத் தன் தே
சத்திலிருந்து போகவிடும்படிக்குப் பேசக்கட
வன்.—நானோவெனில் பார்வோனின் இருதயத் ௩
தைக் கடினப்படுத்தி, எகிப்துதேசத்தில் நம்
முடைய அடையாளங்களையும் நம்முடைய
அற்புதங்களையும் மிகுதியாய் நடக்கப்பண்ணு
வோம்.—பார்வோன் உங்களைக் கேளாதே போ ௪
வான், ஆகையால் நாம் நம்முடைய கையை
எகிப்திற்கு விரோதமாக நீட்டி, இஸ்ரவேல்
புத்திரரென்ற நமது சனமாகிய நம்முடைய சே
னைகளைப் பெரிய நியாயத்தீர்ப்புகளால் எகிப்து
தேசத்திலிருந்து அழைத்துக்கொண்டு போ
வோம்.—அப்படியே நாம் நம்முடைய கையை ௫
எகிப்தின்மேல் நீட்டி, இஸ்ரவேல் புத்திரரை
அவர்கள் நடுவிலிருந்து அழைத்துக்கொண்டு
போகையில், நாம் கர்த்தரென்றதை எகிப்தியர்
அறிவார்கள் என்றார்.—மோசேயும் ஆரோனும் ௬
கர்த்தர் தங்களுக்குக் கற்பித்தபடியே செய்தார்
கள். — அவர்கள் பார்வோனோடே பேசுகிற ௭
பொழுது, மோசேக்கு எண்பதுவயதும் ஆரோ
னுக்கு எண்பத்துமூன்று வயதும் இருந்தது.
கர்த்தர் மோசேயோடும் ஆரோனோடும் சொன் ௮
னதாவது:—உங்களுக்காக ஒரு அற்புதம் காட் ௯
டுங்களென்று பார்வோன் உங்களோடே சொன்
னால், அப்பொழுது நீ ஆரோனுடனே, உன்
கோலை எடுத்து அதைப் பார்வோனுக்கு முன்
பாகப் போடென்பாயாக, அப்பொழுது அது
சர்ப்பமாகுமென்றார்.— மோசேயும் ஆரோனும் ௰
பார்வோனண்டையில் பிரவேசித்து, கர்த்தர் தங்
களுக்குக் கற்பித்தபடியேசெய்தார்கள்; ஆரோன்
தன் கோலைப் பார்வோனுக்கும், அவன் ஊழி
யக்காரருக்கும்முன்பாகப் போட்டான்; அப்
பொழுது அது சர்ப்பமாயிற்று.—அப்பொழுது ௰௧
பார்வோனும் ஞானிகளையும் சூனியக்காரரை
யும் அழைப்பித்தான், [2]எகிப்தின் சாஸ்திரிகளா

1 ௨ மோ. ௪. ௰௬.—2 ௨ மோ. ௮. ௭, ௰௮, ௰௯. ௨ தீமோ. ௩. ௮, ௯.

கிய இவர்களும் தங்கள் சூனியங்களினால் அப்
௰௨ படிச் செய்து,—அவனவன் தன்தன் கோலைப்
போட்டார்கள், அப்பொழுது அவைகள் சர்ப்
பங்களாயின; ஆரோனுடைய கோலோவென்
றால், இவர்களுடைய கோல்களை விழுங்கிவிட்
௰௩ டது.—ஆனால் கர்த்தர் சொல்லியிருந்தபடி பார்
வோனின் இருதயம் உரம்கொண்டது, அவர்க
ளைக் கேளாதேபோனான்.

௰௪ அப்பொழுது கர்த்தர் மோசேயோடே சொன்
னதாவது: பார்வோனின் இருதயம் அழுத்தமா
யிருக்கிறது; சனத்தை விடமாட்டோமென்கி
௰௫ றான்.—காலமே பார்வோனண்டைக்குப் போ;
இதோ தண்ணீரண்டையிலே புறப்பட்டு வரு
வான்; நீ அவனுக்கு எதிராக நதியின்கரையிலே
நின்று, சர்ப்பமாய் மாறியிருந்த கோலை உன்
௰௬ கையிலே பிடித்துக்கொண்டு, — அவனோடே
சொல்லவேண்டியது: எபிரேயருடைய பராபர
னாகிய கர்த்தர் என்னை உம்மண்டைக்கு அனுப்
பி, நமது சனத்தை வனாந்தரத்திலே நமக்கு ஆரா
தனைசெய்யும்படிக்குப் போகவிடு என்று சொல்
லச்சொல்லியும், இதோ இதுவரைக்கும் கேளா
௰௭ தேபோனீர்.—இதோ என் கையிலிருக்கிற கோ
லினாலே நான் நதியிலிருக்கிற தண்ணீரின்மேல்
அடிப்பேன்; அப்பொழுது அது இரத்தமாய் மா
௰௮ றி,—நதியிலிருக்கிற மீன்கள் செத்து, நதி நாறிப்
போம்; அப்பொழுது நதியிலிருக்கிற தண்ணீ
ரைக் குடிக்க எகிப்தியருக்குக் குமட்டல் எடுக்
கும்; நாம் கர்த்தர் என்பதை அதினால் அறிவா
யென்று கர்த்தர் சொல்லுகிறாரென்று சொல்
லென்றார்.

௰௯ பிறகு கர்த்தர் மோசேயோடே சொன்னதா
வது: நீ ஆரோனோடே சொல்லவேண்டியதே
தெனில், உன் கோலை எடுத்துக்கொண்டு, உன்
கையை எகிப்தியரின் தண்ணீர்களாகிய அவர்
கள் நதிகளின்மேலும் அவர்கள் ஆறுகளின்மே
லும் அவர்கள் குளங்களின்மேலும் தண்ணீர்
சேர்ந்துநிற்கிற அவர்களுடைய எல்லா இடங்
களின்மேலும் அவைகள் இரத்தமாகும்படிக்கு
நீட்டு; அப்பொழுது எகிப்துதேசமெங்கும் மரப்
பாத்திரங்களிலும் கல்பாத்திரங்களிலும் இரத்த
முண்டாயிருக்குமென்று சொல்லென்றார். —
௨௰ மோசேயும் ஆரோனும் கர்த்தர் கற்பித்தபடி செய்
தார்கள்; இவன் பார்வோனுடைய கண்களுக்
கும் அவன் ஊழியக்காரரின் கண்களுக்கும்
முன்பாகக் கோலை ஓங்கி, நதியில் இருக்கிற
தண்ணீரை அடித்தான்; அப்பொழுது நதியில்
இருக்கிற தண்ணீரெல்லாம் இரத்தமாய் மாறிப்
௨௧ போயிற்று.—நதியில் இருந்த மீன்கள் செத்து,
நதி நாறிப்போயிற்று; நதியிலிருக்கிற தண்ணீ
ரைக் குடிக்க எகிப்தியருக்குக் கூடாதே போ
யிற்று; எகிப்துதேசமெங்கும் இரத்தம் இருந்
௨௨ தது.—எகிப்தின் சாஸ்திரிகளும் தங்கள் சூனி
யங்களினால் அப்படிச் செய்தார்கள்; ஆனது
கொண்டு கர்த்தர் சொல்லியிருந்தபடி பார்வோ
னின் இருதயம் உரம்கொண்டது; அவர்களைக்
கேளாதேபோனான். — பார்வோன் திரும்பிக் ௨௩
கொண்டு தன் வீட்டிற்குள் பிரவேசித்து, தன்
மனதை அதின்மேலும் வைக்காதேபோனான்.—
தண்ணீர் குடிக்க எகிப்தியரெல்லாரும் நதியைச் ௨௪
சுற்றி ஊற்று வெட்டினார்கள்; ஏனெனில் நதி
யின் தண்ணீரைக் குடிக்க அவர்களுக்குக் கூடா
திருந்தது.—கர்த்தர் நதியை அடித்து ஏழுநாள் ௨௫
நிறைவேறிற்று.

# ௮. அதிகாரம்.

௧. தவளைகள் அனுப்பப்பட்டது. ௮. பார்வோன் மோசேயிடத்தில் முறை
யிட்டுக்கொண்டது. ௰௨. மோசே அவைகளைச் செபத்தினால் நீக்கச்
செய்தது. ௰௬. ஸ்தம்பனவித்தைக்காரர்கள் செய்யக்கூடாத மண்ணைப்
பேனாக மாற்றினது. ௨௰. விஸ்தாரமான வண்டுகளை அனுப்பினது. ௨௫.
பார்வோன் சனங்கள் போய்விடும்படியாக உத்தரம் கொடுத்தது. ௩௨.
ஆயினும் இன்னம் கடின இருதயமுள்ளவனாயிருந்தது.

கர்த்தர் மோசேயோடே சொன்னதாவது: நீ பார் ௧
வோனண்டையிலே உள்பிரவேசித்து அவனோ
டே சொல்லவேண்டியது: கர்த்தர் உரைக்கிற
தேதெனில் நமது சனத்தை நமக்கு ஆராதனை
செய்யும்படிக்கு விடு.-நீ அதை விடமாட்டேன் ௨
என்றாயாகில், இதோ நாம் உன் எல்லையை எல்
லாம் தவளைகளாலே வாதிப்போம்.—நதி தவளை ௩
களைத் திரளாய்ப் பிறப்பிக்கும்; அவைகள் ஏறி,
உன் வீட்டிலும் உன் படுக்கை அறையிலும்
உன் மஞ்சத்தின்மேலும் உன் ஊழியக்காரர்
வீடுகளிலும் உன் சனத்திற்குள்ளும் அப்பம் சுடு
கிற உன் அடுப்புகளிலும் மாப்பிசைகிற உன்
தொட்டிகளிலும் வரும்.—அந்தத் தவளைகள் உன் ௪
மேலும் உன் சனத்தின்மேலும் உன்னுடைய
எல்லா ஊழியக்காரர்மேலும் ஏறுமென்கிறார்
என்று சொல்லென்றார்.

பிற்பாடு கர்த்தர் மோசேயோடே சொன்ன ௫
தாவது: நீ ஆரோனோடே சொல்லவேண்டிய
தேதெனில், நீ உன் கோலோடே உன்னுடைய
கையை நதிகளின்மேலும் ஆறுகளின்மேலும்
குளங்களின்மேலும் நீட்டி, எகிப்துதேசத்தின்
மேலே தவளைகளை ஏறிவரப்பண்ணென்று சொ
ல்லென்றார்.—அப்படியே ஆரோன் தன் கையை ௬
எகிப்தினுடைய தண்ணீர்களின்மேல் நீட்டி
னான்; அப்பொழுது தவளைகள் ஏறிவந்து, எகிப்
துதேசத்தை மூடின. — சாஸ்திரிகளும் தங்கள் ௭
சூனியங்களினால் அப்படிச் செய்து, எகிப்து
தேசத்தின்மேலே தவளைகளை ஏறிவரப்பண்ணி
னார்கள்.

ஆனால் பார்வோன் மோசேயையும் ஆரோனை ௮
யும் அழைப்பித்து, கர்த்தர் அந்தத் தவளைகளை
எனையும் என் சனத்தையும் விட்டகற்ற அவ
ரை வேண்டிக்கொள்ளுங்கள், கர்த்தருக்குப்
பலியிடும்படிக்குச் சனத்தை விடுவேனென்
றான். — அப்பொழுது மோசே பார்வோனுக் ௯
குத் தவளைகள் நதியிலேமாத்திரம் இருப்பதற்கு,
அவைகளை உம்மிடத்திலும் உம்முடைய வீட்
டிலும் இராதபடிக்கு அழிக்க, நான் உமக்காக
வும் உம்முடைய ஊழியக்காரருக்காகவும் உம்

முடைய சனத்திற்காகவும் எப்பொழுது விண்
ணப்பம்பண்ணவேண்டும் என்பதை எனக்குக்
குறிக்கும் மேன்மை உமக்கே இருக்கட்டும் என்
௰ றான்.—அவன் நாளை என்றான்; அப்பொழுது
இவன் சொன்னதாவது: எங்கள் பராபரனா
கிய கர்த்தருக்கு ஒப்பானவர் இல்லை என்பதை
நீர் அறியும்படிக்கு உம்முடைய வார்த்தையின்
௰௧ படி ஆகக்கடவது.—தவளைகள் உம்மையும் உம்
முடைய வீட்டையும் உம்முடைய ஊழியக்கா
ரரையும் உம்முடைய சனத்தையும் விட்டகன்று
௰௨ நதியிலேமாத்திரம் இருக்குமென்றான்.—மோசே
யும் ஆரோனும் பார்வோனைவிட்டுப் புறப்பட்
டார்கள்; பிற்பாடு மோசே பார்வோனுக்கு வரப்
பண்ணின தவளைகள்நிமித்தம் கர்த்தரை நோக்
௰௩ கிக் கூப்பிட்டான்.—கர்த்தர் மோசேயின் சொல்
படி செய்தார்; வீடுகளிலும் முற்றங்களிலும்
வயல்களிலும் இருந்த தவளைகள் செத்துப்போ
௰௪ யின.—அவைகளைக் குவியல் குவியலாகச்
சேர்த்துப்போட்டார்கள்; அதினால் பூமி நாற்
௰௫ றம் எடுத்தது.—இலகுவுண்டாயிற்றென்று பார்
வோன் கண்டபொழுதோவெனில், அவன் கர்த்
தர் சொல்லியிருந்தபடி தன் இருதயத்தைக் கடி
னப்படுத்தி, அவர்களைக் கேளாதேபோனான்.

௰௬ அப்பொழுது கர்த்தர் மோசேயோடே சொன்
னதாவது: நீ ஆரோனுடனே உன் கோலை நீட்டி,
பூமியின் தூளை அடி; அப்பொழுது அது எகிப்து
தேசமெங்கும் பேன்களாய்ப்போமென்று சொல்
௰௭ லென்றார்.—இப்படிச் செய்தார்கள்; ஆரோன்
தன் கோலோடே தன் கையை நீட்டி, பூமியின்
தூளை அடித்தான், அப்பொழுது ஏராளமான
பேன்கள்மனிதரிலும் மிருகசீவன்களிலும் உண்
டாயின; எகிப்துதேசமெங்கும் பூமியின் தூளெல்
௰௮ லாம் பேன்களாய்ப்போயின.—சாஸ்திரிகளும்
தங்கள் சூனியங்களாலே பேன்களைப் பிறப்பிக்
கும்படிக்கு அப்படிச்செய்தார்கள்;[1] ஆனால் அவர்
களுக்குக் கூடாதேபோயிற்று; ஏராளமான பேன்
கள் மனிதரிலும் மிருகசீவன்களிலும் இருந்
௰௯ தன.—அப்பொழுது சாஸ்திரிகள் பார்வோ
னோடே, இது பராபரனுடைய விரல் என்றார்
கள்; ஆனால் கர்த்தர் சொல்லியிருந்தபடி பார்
வோனுடைய இருதயம் உரம்கொண்டது; அவர்
களைக் கேளாதேபோனான்.

௨௰ அப்பொழுது கர்த்தர் மோசேயோடே சொன்
னதாவது: நீ நாளை அதிகாலமே எழுந்திருந்து
போய், பார்வோனுக்குமுன்பாக நில், இதோ
தண்ணீரண்டையிலே புறப்பட்டு வருவான்;
அவனோடே நீ சொல்லவேண்டியதாவது: கர்த்
தர் உரைக்கிறதேதெனில், நம்முடைய சனத்தை
௨௧ நமக்கு ஆராதனைசெய்யும்படிக்கு விடு.—நீ
நம்முடைய சனத்தை விடாயேயாகில் இ
தோ நாம் உன்மேலும் உன் ஊழியக்காரர்மேலும்
உன் சனத்தின்மேலும் உன் வீடுகளின்மேலும்
பலவித வண்டுகளை அனுப்புவோம்; எகிப்தியர்

வீடுகளும் அவர்கள் இருக்கிற தேசமும் அந்த வ
ண்டுகளாலே நிரம்பிப்போம்.—பூமியின் நடுவில் ௨௨
நாமே கர்த்தர் என்பதை நீ அறியத்தக்கதாக, நாம்
நம்முடைய சனமிருக்கிற கோசேன் சீமையை
அந்நாளிலே அங்கே வண்டுச்சாதிகள் வாராத
படிக்கு விசேஷித்ததாக்கி,—நம்முடைய சனத் ௨௩
திற்கும் உன் சனத்திற்கும் வித்தியாசம்பண்ணும்
இரட்சிப்பைக் காண்பிப்போம்; நாளை இந்த
அடையாளம் சம்பவிக்கும் என்றாரென்று சொல்
லென்றார்.—அப்படியே கர்த்தர் செய்தார்; மகா ௨௪
திரளான வண்டுச்சாதிகள் பார்வோன் வீட்டி
லும் அவன் ஊழியக்காரர் வீடுகளிலும் எகிப்து
தேசம் அனைத்திலும் வந்தன; வண்டுகளாலே
தேசம் கெட்டுப்போயிற்று.

அப்பொழுது பார்வோன் மோசேயையும் ௨௫
ஆரோனையும் அழைப்பித்து, நீங்கள் போய் உங்
கள் பராபரனுக்குத் தேசத்திலேதானே பலியி
டுங்கள் என்றான்.—அதற்கு மோசே சொன்ன ௨௬
தாவது: இப்படிச் செய்யத்தகாது; ஏனெனில்
எகிப்தியர் அருவருக்கிற பிரகாரமாய் எங்கள்
பராபரனாகிய கர்த்தருக்குப் பலியிடுகிறோமே;
இதோ எகிப்தியர் அருவருக்கிற பிரகாரமாக,
நாங்கள் அவர்கள் கண்களுக்குமுன்பாகப் பலி
யிட்டால் எங்களைக் கல் எறியார்களோ?—[2] எங் ௨௭
கள் பராபரனாகிய கர்த்தர் எங்களுக்குச் சொன்
னபடி, நாங்கள் மூன்றுநாள் பயணம் வனாந்தரத்
திலே போய், அவருக்குப் பலியிடுவோம் என்
றான்.—அப்பொழுது பார்வோன், நீங்கள் உங் ௨௮
கள் பராபரனாகிய கர்த்தருக்கு வனாந்தரத்
திலே பலியிடும்படிக்கு, நான் உங்களை விடு
வேன்; நீங்கள் அதிதூரமாய்மாத்திரம் போகாமல்,
எனக்காக வேண்டுதல்செய்யுங்கள் என்றான்.—
மோசே சொன்னதாவது: இதோ நான் உம்மை ௨௯
விட்டுப் புறப்பட்டபின், கர்த்தர் நாளை வண்டுச்
சாதிகளைப் பார்வோனையும் அவர் ஊழியக்கார
ரையும் அவர் சனத்தையும் விட்டகற்ற, நான்
அவரை வேண்டிக்கொள்ளுவேன்; ஆனால் சனத்
தைக் கர்த்தருக்குப் பலியிட விடாததினாலே,
பார்வோன் இனி வஞ்சனைமாத்திரம் பண்ணிக்
கொண்டிராராக என்றான்.

மோசே பார்வோனைவிட்டுப் புறப்பட்டுக் ௩௰
கர்த்தரை வேண்டிக்கொண்டான்.—அப்பொ ௩௧
ழுது கர்த்தர் மோசேயின் சொல்படி செய்து,
வண்டுச்சாதிகளைப் பார்வோனையும் அவன் ஊ
ழியக்காரரையும் அவன் சனத்தையும் விட்டகற்
றினார்; ஒன்றாகிலும் மீந்திருந்ததில்லை.—பார்வோ ௩௨
னோவென்றால் அந்த முறையும் தன் இருதயத்
தைக் கடினப்படுத்தி, சனத்தை விடாதே போ
னான்.

## ௯. அதிகாரம்.

௧. மிருகங்களின்பேரில் அனுப்பப்பட்ட வாதை. ௮. கொள்ளை உபத்திரவத்தின் வாதை. ௰௩. கல்மழையைக்குறித்த அவருடைய அறிக்கை. ௨௭. பார்வோன் மோசேயை வேண்டிக்கொண்டது. ௩௫. முன்போலவே அவன் இருதயம் கடினப்பட்டது.

[1] ௨ மோ. ௭. ௰௧, ௰௨, ௨௨: ௮. ௭, ௯, ௰௧.

[2] ௨ மோ. ௩. ௰௮.

௧ பிற்பாடு கர்த்தர் மோசேயோடே சொன்னதா
வது: நீ பார்வோனண்டையில் பிரவேசித்து அவ
னோடே சொல்லவேண்டியது: எபிரேயருடைய
பராபரனாகிய கர்த்தர் உரைக்கிறதேதெனில், நம்
முடைய சனத்தை நமக்கு ஆராதனைசெய்யும்ப
௨ டிக்கு விடு.—ஏனெனில் நீ அவர்களை விடமாட்
டேனென்று இன்னம் அவர்களை நிறுத்திவைத்
௩ தால்,—இதோ கர்த்தருடைய கை வெளியிலிருக்
கிற உன் மந்தையாகிய குதிரைகளின்மேலும்
கழுதைகளின்மேலும் ஒட்டகங்களின்மேலும்
ஆடுமாடுகளின்மேலும் மகா கனமான பெருவா
௪ ரிக்காய்ச்சல் உண்டாக வந்திருக்கும்.—கர்த்தர்
இஸ்ரவேலரின் மந்தைக்கும் எகிப்தியரின் மந்
தைக்கும் விசேஷித்த வித்தியாசமும்பண்ணு
வார்; இஸ்ரவேல் புத்திரரின் சகல மந்தையிலும்
௫ ஒன்றும் சாவதில்லை என்றார்.—நாளைக்குக் கர்த்
தர் இந்தக் காரியத்தைத் தேசத்திலே செய்வா
ரென்றும் கர்த்தர் காலத்தைக் குறித்தாரென்றும்
௬ சொல்லென்றார்.—மறுநாளிலே கர்த்தர் இந்தக்
காரியத்தைச் செய்தார்; எகிப்தியருடைய எல்
லாவிதமுமான மந்தை செத்துப்போயிற்று; ஆ
னால் இஸ்ரவேல் புத்திரரின் மந்தையில் ஒன்றா
௭ கிலும் செத்ததில்லை.—பார்வோன் விசாரித்தனுப்
பினான்; இதோ இஸ்ரவேலரின் மந்தையில் ஒன்
றாகிலும் சாவஇல்லை; பார்வோனுடைய இருதய
மோவென்றால் கடினப்பட்டது; அவன் சனத்
தை விட்டதில்லை.

௮ அப்பொழுது கர்த்தர் மோசேயோடும் ஆரோ
னோடும் சொன்னதாவது: உங்கள் கைப்பிடிகள்
நிறைய அடுப்பின் நீறு அள்ளிக்கொள்ளுங்கள்;
அதை மோசே பார்வோனுடைய கண்களுக்கு
முன்பாக வானத்திற்கு நேராக இறைக்கக்கட
௯ வன்.—அப்பொழுது அது எகிப்து தேசம் மீதெங்
கும் தூசியாகி, எகிப்துதேசமெங்கும் மனிதரி
லும் மிருகசீவன்களிலும் கொப்புளங்களை எழும்
பப்பண்ணுகிற எரிபந்தமாய்ப்போம் என்றார்.—
௰ அப்படியே அவர்கள் அடுப்பின் நீறு அள்ளிக்
கொண்டு, பார்வோனுக்குமுன்பாக வந்து நின்
றார்கள்; மோசே அதை வானத்திற்கு நேராக
இறைத்தான்; அப்பொழுது மனிதரிலும் மிருக
சீவன்களிலும் கொப்புளங்களை எழும்பப்பண்
௰௧ ணுகிற எரிபந்தம் உண்டாயிற்று.—அந்த எரி
பந்தத்தினிமித்தம் சாஸ்திரிகளும் மோசேக்கு
முன்பாக நிற்கக்கூடாதிருந்தது; ஏனெனில்
அந்த எரிபந்தம் சாஸ்திரிகளிலும் எல்லா எகிப்
௰௨ தியரிலும் உண்டாயிருந்தது.—ஆனால் கர்த்தர்
மோசேயோடே சொல்லியிருந்தபடியே, கர்த்தர்
பார்வோனின் இருதயத்தை உரம்கொள்ளப்பண்
ணினார்; அவர்களைக் கேளாதேபோனான்.

௰௩ அப்பொழுது காத்தர் மோசேயோடே சொன்
னதாவது: நீ அதிகாலமே எழுந்திருந்து போய்,
பார்வோனுக்குமுன்பாக நின்று, அவனோடே
சொல்லவேண்டியது, எபிரேயருடைய பராபர
னாகிய கர்த்தர் உரைக்கிறதேதெனில், நம்மு
டைய சனத்தை நமக்கு ஆராதனைசெய்யும்படி
க்கு விடு.—ஏனென்றால் பூமி எங்கும் நம்மைப் ௰௪
போல வேறொருவரும் இல்லையென்பதை நீ
அறியும்படிக்கு, இந்தமுறை நாம் நம்முடைய
வாதைகளை எல்லாம் உன் இருதயத்திலும் உன்
ஊழியக்காரரிலும் உன் சனத்திலும் போகவிடு
வோம்.—ஏனெனில் அப்பொழுதே நாம் நம்மு ௰௫
டைய கையை நீட்டி, நீ பூமியில் இராமல் அற்
றுப்போகும்படிக்கு, உன்னையும் உன் சனத்தை
யும் பெருவாரிக்காய்ச்சலால் வாதிப்போம்.—ஆ ௰௬
னால் [1]நம்முடைய வல்லமையை உனக்குக் காண்
பிக்கிறதற்கும் நம்முடைய நாமம் பூமி எங்கும்
பிரஸ்தாபமாகிறதற்குமே உன்னை நிறுத்தினோம்.—
இன்னம் நீ நமது சனத்தை விடாதபடிக்கு ௰௭
அதற்கு விரோதமாய் உன்னை உயர்த்துகிறாயோ?—
இதோ எகிப்து அஸ்திவாரப்பட்ட நாள் முதல் ௰௮
கொண்டு இற்றைவரைக்கும் அதிலே வாராதி
ருக்கிற மகா கனமான கல்மழையை நாம் நாளை
இந்நேரத்திலே வருஷிக்கப்பண்ணுவோம். —
இப்பொழுதும் ஆள் அனுப்பி, உன் மந்தையை ௰௯
யும் வெளியில் உனக்கிருக்கிற யாவையும் சேர்த்
துக்கொள்; வீட்டிலே சேர்த்துக்கொள்ளப்படா
மல் வெளியிலே அகப்படப்போகிற எல்லா
மனிதசீவனும் மிருகசீவனும் அந்தக் கல்மழை
அவைகள்மேல் இறங்குவதினாலே செத்துப்
போம் என்றாரென்று சொல்லென்றார். — பார் ௨௰
வோனுடைய ஊழியக்காரரில் எவன் கர்த்தரு
டைய வார்த்தைக்கு பயப்பட்டானோ, அவன்
தன் வேலைக்காரரையும் தன் மந்தையையும் வீடு
களுக்கு ஓடிவரப்பண்ணினான்.—ஆனால் எவன் ௨௧
கர்த்தருடைய வார்த்தையைத் தன் மனதிலே
வைக்காதேபோனானோ, அவன் தன் வேலைக்கார
ரையும் தன் மந்தையையும் வெளியிலே வைத்து
விட்டான்.

அப்பொழுது கர்த்தர் மோசேயுடனே, எகிப்து ௨௨
தேசமெங்கும் மனிதர்மேலும் மிருகசீவன்கள்
மேலும் எகிப்துதேசத்திலிருக்கிற சகலமான
பயிர்வகைகள்மேலும் கல்மழைவர, உன் கையை
வானத்திற்கு நேராக நீட்டு என்றார்.—அப்படியே ௨௩
மோசே தன் கோலை வானத்திற்கு நேராகநீட்டி
னான்; அப்பொழுது நெருப்பு தரையில் இறங்கி
ஓடத்தக்கதாகக் கர்த்தர் இடிமுழக்கங்களையும்
கல்மழையையும் கட்டளையிட்டு, எகிப்துதேசத்
தின்மேல் கல்மழையை வருஷிக்கப்பண்ணி
னார். — கல்மழையும் கல்மழையின் நடுவிலே ௨௪
கலந்த நெருப்பும் மிகக்கொடியதாயிருந்தது;
எகிப்துதேசம் குடிவறினதுமுதல்கொண்டு அதி
லெங்கும் அப்படிக்கொத்தது உண்டானதில்
லை.—எகிப்துதேசமெங்கும் மனிதரைத் துவக்கி ௨௫
மிருகசீவன்கள்மட்டும், எவை எவை வெளியி
லே இருந்தவைகளோ அவைகளை எல்லாம்
அந்தக் கல்மழை அடித்துவிட்டது; அது
வெளியின் பயிர்வகைகளை எல்லாம் அடித்து,
வெளியின் செடிகளை எல்லாம் முறித்துவிட்

1 ரோ. ௯. ௰௭.

௨௬ டது.—இஸ்ரவேல் புத்திரர் இருந்த கோசேன்
சீமையிலேமாத்திரம் கல்மழை இல்லாதிருந்தது.
௨௭ அப்பொழுது பார்வோன் மோசேயையும்
ஆரோனையும் அழைத்தனுப்பி, அவர்களோடே
சொன்னதாவது: [1]இந்தமுறை பாவம்செய்தேன்;
கர்த்தர் நீதியுள்ளவர், நானும் என் சனமுமோ
௨௮ வென்றால் துன்மார்க்கராயிருக்கிறோம். — பரா
பரனுடைய இடிமுழக்கங்களும் கல்மழையும்
இராதபடிக்கு, கர்த்தரை விண்ணப்பம்பண்ணுங்
கள்; இனிப் போதும், நீங்கள் இனி இங்கே
தரித்திராதபடிக்கு உங்களை விடுவேனென்றான்.-
௨௯ மோசே அவனோடே சொன்னதாவது: நான்
பட்டணத்திலிருந்து புறப்பட்டபிற்பாடு, நான்
என் உள்ளங்கைகளைக் கர்த்தருக்கு நேராக
விரிப்பேன்; அப்பொழுது பூமி கர்த்தருடைய
தென்பதை நீர் அறியும்படிக்கு, இடிமுழக்கங்
௩௰ கள் ஓய்ந்து கல்மழை இனி இராது.—ஆனால்
நீரும் உம்முடைய ஊழியக்காரரும் இன்னம்
பராபரனாகிய கர்த்தருக்குமுன்பாகப் பயப்படுவ
தில்லை என்கிறதை அறிவேனென்றான்.
௩௧ அப்படியே சணலும் வால்கோதுமைப் பயி
ரும் அழிக்கப்பட்டுப்போயின; ஏனெனில்
வால்கோதுமை கதிர்ப்பயிரும் சணல் தாள்பயி
௩௨ ருமாயிருந்தன.—ஆனால் கோதுமையும் கம்பும்
அழிக்கப்படவில்லை; ஏனென்றால் அவைகள்
இன்னம் வளராதிருந்தன.
௩௩ மோசே பார்வோனைவிட்டுப் பட்டணத்திலி
ருந்து புறப்பட்டு, தன்னுள்ளங்கைகளைக் கர்த்த
ருக்கு நேராக விரித்தான்; அப்பொழுது இடி
முழக்கங்களும் கல்மழையும் ஓய்ந்து, மழை
௩௪ தரையில் இறங்காதேபோயிற்று.—மழையும் கல்
மழையும் இடிமுழக்கங்களும் ஓய்ந்துபோயின
வென்று பார்வோன் கண்டபொழுதோவெனில்,
அவன் பாவம்செய்யத்தொடர்ந்து, தன் இருதயத்
தைக் கடினப்படுத்தினான்; அவனும் அவன்
௩௫ ஊழியக்காரரும்தானே.—கர்த்தர் மோசேயைக்
கொண்டு சொல்லியிருந்தபடியே பார்வோனின்
இருதயம் உரம்கொண்டது; அவன் இஸ்ரவேல்
புத்திரரை விடாதேபோனான்.

## ௰. அதிகாரம்.

௧. பராபரன் வெட்டுக்கிளிகளை அனுப்புவோமென்று பயமுறுத்தினது. ௭. பார்வோன் தன்னுடைய வேலைக்காரர்களால் பிரயத்தனம்செய்யப்பட்டு, இஸ்ரவேல் சனங்கள் போய்விடும்படிக்கு நினைவுகொண்டது. ௰௨. வெட்டுக்கிளிகளின் வாதை ௰௬. பார்வோன் மோசேயிடத்தில் முறையிட்டுக்கொண்டது. ௨௧. இருளின் வாதை. ௨௪. பார்வோன் மோசேயிடத்தில் மறுபடியும் முறையிட்டுக்கொண்டது. ௨௭. அவன் இன்னமும் கடின இருதயமுள்ளவனாயிருந்தது.

௧ பிற்பாடு கர்த்தர் மோசேயோடே சொன்னதா
வது: நீ பார்வோனண்டையில் பிரவேசி; ஏனெ
னில் அவர்கள் நடுவே நாம் இந்த நம்முடைய
௨ அடையாளங்களைச் செய்யும்படிக்கும், — நாம்
எகிப்திலே நடப்பித்ததையும் நாம் அவர்களுக்
குள் செய்த நம்முடைய அடையாளங்களையும்
நீ உன் பிள்ளைகளின் செவிகளுக்குமுன்பாக
வும் உன் பிள்ளைகளுடைய பிள்ளைகளின் செ
விகளுக்குமுன்பாகவும் விவரிக்கும்படிக்கும்,
நாமே கர்த்தரென்பதை நீங்கள் அறியும்படிக்கும்,
நாம் அவன் இருதயத்தையும் அவன் ஊழியக்
காரரின் இருதயத்தையும் கடினப்படுத்தினோ
மென்றார்.
அப்படியே மோசேயும் ஆரோனும் பார்வோ ௩
னண்டையில் பிரவேசித்து, அவனோடே சொன்
னதாவது: எபிரேயருடைய பராபரனாகிய கர்த்
தர் உரைக்கிறதேதெனில், நமக்குமுன்பாக நீ
உன்னைத் தாழ்த்த எந்தமட்டும் மனதில்லாதே
போகிறாய்? நமது சனத்தை நமக்கு ஆராதனை
செய்யும்படிக்கு விடு.—நீ நமது சனத்தை விட ௪
மாட்டேன் என்றாயேயாகில், இதோ நாம் நாளை
உன் எல்லையிலே வெட்டுக்கிளிகளை வரப்பண்
ணுவோம்.—அவைகள் பூமியின் முகத்தைத் தரை ௫
யைக் காணக்கூடாதபடிக்கு மூடி, கல்மழைக்
குத் தப்பி உங்களுக்கு மீதியாக வைக்கப்பட்ட
தைப் பட்சித்து, வெளியிலே உங்களுக்குத்
துளிர்க்கிற செடிகளை எல்லாம் தின்றுவிடும்.—
அவைகளால் உன் வீடுகளும் உன்னுடைய எல் ௬
லா ஊழியக்காரரின் வீடுகளும் எல்லா எகிப்திய
ரின் வீடுகளும் நிரம்பும்; உன் பிதாக்களும் உன்
பிதாக்களின் பிதாக்களும் தாங்கள் தேசத்திலி
ருந்த நாள்துவக்கி இந்நாள்வரைக்கும் அப்படிக்
கண்டதில்லை என்றாரென்று சொல்லி, திரும்பிக்
கொண்டு பார்வோனைவிட்டுப் புறப்பட்டான்.
அப்பொழுது பார்வோனுடைய ஊழியக்கா ௭
ரர் அவனோடே சொன்னது: எந்தமட்டும் இவன்
நமக்குக்கண்ணியாயிருக்கவேண்டும்? அந்தமனி
தரைத் தங்கள் பராபரனாகிய கர்த்தருக்கு ஆரா
தனைசெய்யும்படிக்கு விடும்; எகிப்து அழிந்து
போயிற்றென்று இன்னம் அறியீரோ என்றார்
கள்.—அப்பொழுது மோசேயும் ஆரோனும் பார் ௮
வோனண்டைக்குத் திரும்ப அழைக்கப்பட்
டார்கள்; அவன் அவர்களுடனே, நீங்கள் போ
ய், உங்கள் பராபரனாகிய கர்த்தருக்கு ஆராதனை
செய்யுங்களென்று சொல்லி, போகிறவர்கள்
யார், எவர்கள், என்று கேட்டான். — மோசே ௯
சொன்னதாவது: எங்கள் இளைஞரோடும் எங்கள்
முதிர்வயதுள்ளவர்களோடும் எங்கள் குமாரரோ
டும் எங்கள் குமாரத்திகளோடும் எங்கள் ஆடுக
ளோடும் எங்கள் மாடுகளோடும்கூடப் போவோ
ம்; ஏனெனில் எங்களுக்குக் கர்த்தரின் பண்டி
கை உண்டாயிருக்குமென்றான்.—அப்பொழுது ௰
அவன் அவர்களோடே சொன்னதாவது: நான்
உங்களையும் உங்கள் குழந்தைகளையும் எப்படி
விடுவேனோ, அப்படிக் கர்த்தர் உங்களோடிருப்
பாராக; உங்கள் முகத்திற்குமுன்பாகப் பொல்
லாப்பு இருக்கிறதென்று பாருங்கள்.—அப்படி ௰௧
அல்ல, புருஷராகிய நீங்கள் போய், கர்த்தருக்கு
ஆராதனை செய்யுங்கள்; ஏனெனில் நீங்கள் தே
டினது இதுதானென்று அவன் சொன்னபிற்பாடு
அவர்கள் பார்வோன் முகத்தைவிட்டுத் துரத்தப்
பட்டார்கள்.

1 ௨ மோ. ௰. ௰௬, ௰௭.

௰௨ அப்பொழுது கர்த்தர் மோசேயுடனே, வெட்
டுக்கிளிகள் எகிப்துதேசத்தின்மேல் ஏறி, கல்
மழை பின்வைத்த பூமியின் சகல பயிர்வகை
களை எல்லாம் தின்னும்படிக்கு அவைகளுக்காக,
உன் கையை எகிப்துதேசத்தின்மேல் நீட்டென்
௰௩ றார்.—அப்படியே மோசே தன் கோலை எகிப்து
தேசத்தின்மேல் நீட்டினான்; அப்பொழுது கர்த்
தர் அன்று பகல் முழுவதும் அன்று இராமுழு
வதும் கீழ்க்காற்றைத் தேசத்தின்மேல் வரப்பண்
ணினார்; விடியற்காலமாகிறபொழுது, கீழ்க்
காற்று வெட்டுக்கிளிகளைக் கொண்டுவந்தது.—
௰௪ வெட்டுக்கிளிகள் எகிப்துதேசமெங்கும் ஏறி,
எகிப்தின் எல்லையிலெல்லாம் மகா ஏராளமாய்
இறங்கின; அதற்குமுன் அப்படிக்கொத்த வெட்
டுக்கிளிகள் இருந்ததுமில்லை; அதற்குப்பிறகு
௰௫ இருப்பதுமில்லை.—அவைகள் பூமியின் முகத்
தையெல்லாம் மூடின; தேசம் அவைகளால் அந்
தகாரப்பட்டது; அவைகள் கல்மழை பின்வைத்த
நிலத்தின் எல்லாப் பயிர்வகைகளையும் மரங்க
ளின் எல்லாப்பலனையும் தின்றுவிட்டன; எகிப்
துதேசமெங்கும் மரங்களிலாகிலும் நிலத்தின்
பயிர்வகைகளிலென்கிலும் ஒரு பச்சிலையும் மீதி
யானதில்லை.

௰௬ [1]அப்பொழுது பார்வோன் மோசேயையும்
ஆரோனையும் அழைப்பிக்கத் தீவிரித்து, உங்கள்
பராபரனாகிய கர்த்தருக்கும் உங்களுக்கும் வி
௰௭ ரோதமாகப் பாவம்செய்தேன்.—இப்பொழுதும்
இந்த முறைமாத்திரம் நீ என் பாவத்தை மன்னி;
உங்கள் பராபரனாகிய கர்த்தர் இந்தச் சாவைமாத்
திரம் என்னை விட்டகற்ற அவரை விண்ணப்பம்
௰௮ பண்ணுங்களென்றான். — அவன் பார்வோனை
விட்டுப் புறப்பட்டு, கர்த்தரை விண்ணப்பம்ப
௰௯ ண்ணினான்.—அப்பொழுது கர்த்தர் மகா பலத்த
மேல்காற்றைத் திரும்பவரவிட்டார்; அது வெட்
டுக்கிளிகளை எடுத்து நாணல் சமுத்திரத்திலே
போட்டது; எகிப்தின் எல்லையிலெல்லாம் அ
வைகளில் ஒரு வெட்டுக்கிளியாகிலும் மீதியா
௨௰ யிருந்ததில்லை.—கர்த்தரோவென்றால் பார்வோ
னின் இருதயத்தைக் கடினப்படுத்தினார்; அவன்
இஸ்ரவேல் புத்திரரை விட்டதில்லை.

௨௧ அப்பொழுது கர்த்தர் மோசேயுடனே, தட
விக்கொண்டிருக்கத்தக்கதான இருள் எகிப்து
தேசத்தின்மேல் உண்டாகும்படிக்கு, உன் கை
௨௨ யை வானத்திற்கு நேராக நீட்டென்றார்.—மோ
சே தன் கையை வானத்திற்கு நேராக நீட்டி
னான்; அப்பொழுது எகிப்துதேசமெங்கும் மூன்
றுநாள்மட்டும் காரிருள் உண்டாயிருந்தது.—
௨௩ மூன்றுநாள்மட்டும் ஒருவரை ஒருவர் கண்டது
மில்லை; ஒருவரும் தம்மிடத்தைவிட்டு எழுந்த
துமில்லை; எல்லா இஸ்ரவேல் புத்திரருக்குமோ
வெனில், அவர்கள் வாசஸ்தலங்களிலே வெளிச்
சம் இருந்தது.

௨௪ அப்பொழுதுபார்வோன் மோசேயை அழைப்
பித்து, நீங்கள் போய்க் கர்த்தருக்கு ஆராதனை
செய்யுங்கள்; உங்கள் ஆடுகளும் உங்கள் மாடு
களும்மாத்திரம் நிறுத்தப்படவேண்டும்; உங்கள்
குழந்தைகளும் உங்களோடேகூடப் போகலாம்
என்றான்.—மோசே சொன்னதாவது: நாங்கள் ௨௫
எங்கள் பராபரனாகிய கர்த்தருக்குப் படைக்கும்
பலிகளையும் தகனபலிகளையும் நீர் எங்கள் கை
யிலே கொடுக்கவேண்டும்.—எங்கள் மந்தையும் ௨௬
எங்களோடேகூடப் போகவேண்டும்; ஒரு கு
ளம்பும் பின்வைக்கப்படுவதில்லை; ஏனெனில்
எங்கள் பராபரனாகிய கர்த்தருக்கு ஆராதனை
செய்கிறதற்கு அதிலே எடுப்போம்; இன்னதி
னாலே கர்த்தருக்கு ஆராதனைசெய்வோம் என்கி
றதை நாங்கள் அங்கே வருமட்டும் அறியோம்
என்றான்.

ஆனால் கர்த்தர் பார்வோனுடைய இருதயத் ௨௭
தைக் கடினப்படுத்தினார்; அவர்களைவிட மன
தில்லாதேபோனான்.—பார்வோன் அவனுக்கு, ௨௮
என்னைவிட்டு அப்பாலே போ; நீ இனி என்
முகத்தைக் காணாதபடிக்கு எச்சரிக்கையாயிரு;
ஏனென்றால் நீ என் முகத்தைக் காணும் நாளி
லே சாவாயென்றான்.—அப்பொழுது மோசே, ௨௯
நீர் சொன்னபடி இனி உம்முடைய முகத்தை
நான் காண்பதில்லை என்றான்.

## ௰௧. அதிகாரம்.

௧. இஸ்ரவேலர் அயலாரிடத்தில் நகை இரவல்வாங்கப் பாரபரன் செய்த ஆக்கினை. ௪. முதல்பேறுகள் இறக்குமென்று மோசே பார்வோனைப் பயமுறுத்தினது.

அப்பொழுது கர்த்தர் மோசேயோடே சொன் ௧
னதாவது: இன்னம் ஒரு வாதையைப் பார்வோன்
மேலும் எகிப்தின்மேலும் வரப்பண்ணுவோம்;
அதற்குப்பிறகு உங்களை இவ்விடத்திலிருந்து
போகவிடுவான்; சமூலமாய்ப் போகவிடுவது
மல்லாமல், உங்களை இவ்விடத்திலிருந்து துரத்
தவே துரத்துவான்.—[2]இப்பொழுதும் ஒவ்வொ ௨
ருவன் தன் அயலான் கையிலும் ஒவ்வொருத்தி
தன் அயலாள் கையிலும் வெள்ளி உடைமைக
ளையும் பொன் உடைமைகளையும் கேட்கவேண்
டுமென்று சனத்தின் செவிகளுக்குமுன்பாகச்
சொல்லென்றார்.—அதற்காகக் கர்த்தர் சனத்திற் ௩
கு எகிப்தியருடைய கண்களுக்குமுன்பாகத்
தயவு கிடைக்கப்பண்ணினார்; மோசே என்ற
புருஷனும் எகிப்து தேசத்திலே பார்வோனு
டைய ஊழியக்காரரின் பார்வைக்கும் சனத்தின்
பார்வைக்கும் மிகப்பெரியவனாயிருந்தான்

அப்படியே மோசே சொன்னதாவது: கர்த்தர் ௪
உரைக்கிறதேதெனில் பாதி இராத்திரியிலே நாம்
எகிப்தின் நடுவாகப் புறப்பட்டுப் போவோம்.—
அப்பொழுது பார்வோனுடைய இராசாசனத் ௫
தின்மேல் உளுக்காரும் அவருடைய தலைச்சன்
குமாரனைத் துவக்கி, எந்திரத்தின் பிறகாலே
இருக்கிற அடிமைப்பெண்ணுடைய தலைச்சன்
பிள்ளைமட்டும், எகிப்துதேசத்திலிருக்கிற முதல்
பேறனைத்தும் மிருகசீவன்களுக்குள்ளேயும் தலை
யீற்றனைத்தும் சாகும்.— அதினால் எகிப்துதேச ௬

1 ௨ மோ. ௮. ௮, ௨௫: ௯. ௨௭.

2 ௨ மோ. ௩. ௨௧, ௨௨.

மெங்கும் முன் ஒருக்காலும் உண்டாகாததும்
இனி உண்டாகப்போகாததுமான பெரியகூக்கு
௭ ரல் இருக்கும். — ஆனால் கர்த்தர் எகிப்தியருக்
கும் இஸ்ரவேலருக்கும் பண்ணுகிற வித்தியாசத்
தை நீங்கள் அறியும்படிக்கு, இஸ்ரவேல் புத்திரர்
அனைவருக்குள்ளும் மனிதனைத்துவக்கி மிருகசீ
வன்கள்மட்டும் ஒரு நாயாகிலும் தன் நாவை
௮ அசைப்பதில்லை. — அப்பொழுது இந்த உம்
முடைய ஊழியக்காரர் எல்லாரும் என்னண்
டைக்கு இறங்கிவந்து, நீயும் உன் கீழிருக்கிற
எல்லாச் சனமுமாய்ப் புறப்படு என்று என்னை
வணங்குவார்கள்; அதின்பிறகு புறப்படுவே
னென்று சொல்லி உக்கிரமான கோபத்தோடே
பார்வோனைவிட்டுப் புறப்பட்டான்.
௯ கர்த்தர் மோசேயுடனே, எகிப்துதேசத்தில்
நம்முடைய அற்புதங்கள் அநேகமாகும்படிக்
கு, பார்வோன் உங்களைக் கேளாதே போவானெ
௰ ன்று சொல்லிஇருந்தபடியே, — மோசேயும் ஆ
ரோனும் இந்த அற்புதங்களை எல்லாம் பார்வோ
னுக்குமுன்பாகச் செய்தாலும், கர்த்தர் பார்
வோனின் இருதயத்தை உரம்கொள்ளப்பண்
ணினார்; அவன் இஸ்ரவேல் புத்திரனைத் தன் தே
சத்திலிருந்து போகவிட்டதில்லை.

## ௰௨. அதிகாரம்.

௧. வருஷத்தின் ஆரம்பம் மாறப்பட்டது. ௩. பஸ்கா என்னும் பண்டிகை ஸ்தாபிக்கப்பட்டது. ௰௧. பஸ்காபண்டிகையின் சடங்கு. ௰௫. புளியாத அப்பம். ௨௯. முதல்பேறுகள் கொல்லப்பட்டது. ௩௩. இஸ்ரவேல் ஜனங்கள் தேசத்தைவிட்டுத் துரத்தப்பட்டது. ௩௭. அவர்கள் சக்கோத்திற்கு வந்தது. ௪௩. பஸ்காபண்டிகையின் முறைமை.

௧ கர்த்தர் மோசேயோடும் ஆரோனோடும் எகிப்து
௨ தேசத்தில் சொன்னதாவது:—இந்த மாதம் உங்
களுக்குத் தலையான மாதம்; இது உங்களுக்கு
வருஷத்திலே முதலாம் மாதமாவது.
௩ நீங்கள் இஸ்ரவேல் சபையோடெல்லாம் பே
சிச் சொல்லவேண்டியதேதெனில், இந்த மாதம்
பத்தாம்தேதியிலே பிதாக்களாகிய வீட்டுக்காரர்
அவரவர் ஒவ்வொரு ஆட்டுக்குட்டியை, ஒவ்
வொரு வீட்டிற்கு ஒவ்வொரு ஆட்டுக்குட்டி இ
௪ ருக்கும்படிக்கு, பிடிக்கக்கடவர்கள்.—வீட்டிலே
இருக்கிறவர்கள் ஆட்டுக்குட்டியைப் புசிக்கப்
போதாத கொஞ்சப்பேர்களாய் இருந்தார்களே
யாகில், அப்பொழுது ஆத்துமாக்களின் இலக்
கத்திற்குத்தக்கதாக ஒருவன் தானும் சமீபமான
தன்னுடைய அயல்வீட்டுக்காரனுமாய் ஒன்
றைப் பிடிக்கக்கடவன்; அவனவன் புசிப்பதற்
குத்தக்கதாக ஆட்டுக்குட்டியின்மேலே இலக்
௫ கம்பார்க்கக்கடவீர்கள்.—பழுதற்றதும் ஆணும்
ஒருவயதுள்ளதுமாகிய ஆட்டுக்குட்டி உங்க
ளுக்கு இருக்கவேண்டும்; ஆடுகளிலாகிலும்
வெள்ளாடுகளிலாகிலும் அதை எடுப்பீர்களாக.
௬ அதை இந்த மாதம் பதினான்காம்தேதிமட்
டும் வைத்துக்கொண்டிருந்து, இஸ்ரவேல் சபை
யின் ஒவ்வொரு கூட்டத்தாரும் அந்திநேரமான
வேளையிலே அதின் குரல்வளையை அறுத்து,
௭ அதின் இரத்தத்தில் கொஞ்சம் எடுத்து, தாங்
கள் அதைப் புசிக்கும் வீடுகளிலே வாசல் இர
ண்டு நிலைகளிலும் வாசல்கூட்டின் மேல்சட்
டத்திலும் பூசி,—நெருப்பினாலே பொரித்ததாக ௮
அந்த மாம்சத்தையும் புளிப்பில்லாத அப்பங்க
ளையும் அன்று இராத்திரியிலே புசிக்கக்கடவர்
கள்; கசப்பான கீரைகளோடே அதைப் புசிக்கக்
கடவர்கள்.—பச்சையானதாய் அல்லது தண்ணீ ௯
ரிலே வேவித்ததாய் அல்ல, நெருப்பினாலே அ
தின் தலையும் அதின் தொடைகளும் அதற்குள்
இருக்கிறதும் ஏகமாய்ப் பொரிக்கப்பட்டதாய்
அதிலே புசிப்பீர்களாக. — அதிலே விடியற்கா ௰
லம்மட்டும் ஒன்றும் மீதியாக வைக்காமல், விடி
யற்காலம்மட்டும் அதிலே மீதியாய் இருக்கிற
தை அக்கினியாலே சுட்டெரிப்பீர்களாக.—நீங் ௰௧
கள் உங்கள் அரைகள் கட்டப்பட்டவைகளாக
வும் உங்கள் பாதரட்சைகள் உங்கள் கால்களி
லும் உங்கள் தடிகள் உங்கள் கைகளிலும் இ
ருக்கிறவைகளாகவும், அதைப் புசித்து, தீவிரத்
துடனே அதைப் புசிக்கக்கடவீர்கள்; அது கர்த்
தருடைய பஸ்கா.
அந்த இராத்திரியிலே நாம் எகிப்துதேசத்தி ௰௨
லே கடந்துபோய், எகிப்துதேசத்திலே மனித
னைத்துவக்கி மிருகசீவன்கள்மட்டும், முதற்பே
றுயிருக்கிறவைகளை எல்லாம் அடித்து எகிப்
தின் தேவர்களில் நியாயத்தீர்ப்புகளைச் செய்
வோம்; நாம் கர்த்தர்.—நீங்கள் இருக்கும் வீடு ௰௩
களில் அந்த இரத்தம் உங்களுக்கான அடையாள
மாயிருக்கும்; அந்த இரத்தத்தைக் கண்டு, உங்க
ளை விலகிக் கடந்துபோவோம்; அப்படியே நாம்
எகிப்துதேசத்தை அழிக்கும்பொழுது, அழிக்கி
றவாதை உங்களுக்குள்ளே வாராதிருக்கும்.
அந்த நாள் உங்களுக்கு நினைவுகூருதலுக்காக ௰௪
இருக்கக்கடவது; அதைக் கர்த்தருக்குப் பண்
டிகையாக ஆசரிப்பீர்களாக; அதை உங்கள் தலை
முறைகளில் நித்தியகட்டளையாய் ஆசரிப்பீர்
களாக.
ஏழுநாள் புளிப்பில்லாத அப்பங்களைப் புசிக் ௰௫
கக்கடவீர்கள்; ஆனால் முதல்நாளிலேதானே
புளித்தமாவை உங்கள் வீடுகளில் அற்றுப்போ
கப்பண்ணக்கடவீர்கள்; ஏனெனில் முதல்நாள்
துவக்கி ஏழாம் நாள்மட்டும் எவனாகிலும் புளி
த்த அப்பம் புசித்தால் அந்த ஆத்துமா இஸ்ரவே
லில் இராமல் அறுப்புண்டுபோவான். — முத ௰௬
லாம் நாளிலே பரிசுத்தமான சபை கூடுதலும்
ஏழாம் நாளிலே பரிசுத்தமான சபை கூடுதலும்
உங்களுக்கு இருக்கக்கடவது; அவைகளில்
ஒரு வேலையும் செய்யப்படவேண்டாம்; ஒவ்
வொரு ஆத்துமாவுக்குச் சாப்பிடுகிறதற்குத் தே
வையானதுமாத்திரமே உங்களுக்காகச் செய்
யப்படலாம். — புளிப்பில்லாத அப்பங்களின் ௰௭
புசிக்குதலைக் கைக்கொள்ளுவீர்களாக; ஏனெ
னில் அந்த நாளிலேதானே உங்கள் சேனை
களை எகிப்துதேசத்திலிருந்து புறப்படப்பண்
ணினேம்; ஆகையால் அந்த நாளை உங்கள் தலை
முறைகளில் நித்தியகட்டளையாக ஆசரிப்பீர்க

௰௮ ளாக.—முதலாம்மாதம் பதினான்காம்தேதி சா
யங்காலம்துவக்கி மாதத்தின் இருபத்தோராம்
தேதி சாயங்காலம்மட்டும் புளிப்பில்லாத அப்
௰௯ பங்களைப் புசிக்கக்கடவீர்கள். — ஏழுநாள்மட்
டும் உங்கள் வீடுகளிலே புளித்தமா காணப்ப
டாதிருப்பதாக; ஏனெனில் எவனாகிலும் புளித்
த அப்பத்தைப் புசித்தால், அந்த ஆத்துமா பர
தேசியானாலும் சரி, தேசத்திலே பிறந்தவனா
லும் சரி, இஸ்ரவேல் சபையிலிராமல் அறுப்புண்
௨௰ டுபோவான்.—நீங்கள் புளித்த அப்பமான யா
தொன்றையும் புசிக்கவேண்டாம்; உங்களுடை
ய எல்லா வாசஸ்தலங்களிலும் புளிப்பில்லாத
அப்பங்களைப் புசிக்கக்கடவீர்களென்று சொல்
லென்றார்.
௨௧ அப்பொழுது மோசே இஸ்ரவேலின் மூப்ப
ரை எல்லாம் அழைப்பித்து அவர்களோடே
சொன்னதாவது: நீங்கள் உங்களுக்கு உங்கள்
வம்சத்திற்குத்தக்கவைகளாக ஆட்டுக்குட்டிக
ளைத் தெரிந்தெடுத்துக்கொண்டு, [1]பஸ்காவை
௨௨ அடித்து, — ஈசோப்புக் கிளைகளின் கட்டை
வாங்கி, கிண்ணியிலே இருக்கும் இரத்தத்தி
லே தோய்த்து, கிண்ணியிலே இருக்கும் அந்த
இரத்தத்தினால் வாசல்கூட்டின் மேல்சட்டத்தி
லும் வாசலின் இரண்டு நிலைகளிலும் பூசுங்கள்;
உங்களிலோவென்றால் விடியற்காலம்மட்டும்
ஒருவரும் தன் வீட்டு வாசலிலிருந்து புறப்பட
௨௩ வேண்டாம்.—ஏனெனில் கர்த்தர் எகிப்தியரை
வாதிப்பதற்குக் கடந்துவருவார்; ஆனால் வாசற்
கூட்டின் மேல்சட்டத்திலும் வாசலின் இரண்டு
நிலைகளிலும் அந்த இரத்தத்தைக் காணும்பொ
ழுது, கர்த்தர் அழிக்கிறவனை உங்கள் வீடுகளில்
வாதிக்கிறதற்கு வரவொட்டாமல், வாசல்படி
௨௪ யை விலகிக் கடந்துபோவார்.—இந்தக் காரியத்
தை என்றைக்கும் உங்களுக்கும் உங்கள் பிள்ளை
களுக்கும் கட்டளையாகக் கைக்கொள்ளக்கடவீர்
௨௫ கள்.—கர்த்தர் உங்களுக்குத் தாம் சொன்னபடி
கொடுக்கப்போகிற தேசத்திலே நீங்கள் வந்திருக்
கும்பொழுது, அந்த ஆராதனையைக் கைக்கொள்
௨௬ ளக்கடவீர்கள்.—[2]அப்பொழுது உங்கள் பிள்ளை
கள் உங்களுக்கிருக்கிற இந்த ஆராதனை என்ன
வென்று உங்களைக் கேட்கும்பொழுது, — நீங்
௨௭ கள் சொல்வதாவது: எகிப்தியரை வாதிக்கையில்
எகிப்திலிருந்த இஸ்ரவேல் புத்திரருடைய வீடுக
ளை விலகிக்கடந்து, எங்கள் வீடுகளைத் தப்பப்
பண்ணின கர்த்தருக்கு இது பஸ்கா என்னப்
பட்டபலி என்பீர்களாக என்றான்; அப்பொழு
௨௮ து சனம் குனிந்து பணிந்துகொண்டது.—இஸ்ர
வேல் புத்திரர் போய் அப்படிச் செய்தார்கள்;
கர்த்தர் மோசேக்கும் ஆரோனுக்கும் கற்பித்த
படியே செய்தார்கள்.
௨௯ அப்பொழுது சம்பவித்ததேதெனில், பாதி இ
ராத்திரியிலே கர்த்தர் பார்வோனுடனே ஆசனத்
தின்மேல் உளுக்காரும் அவனுடைய தலைச்சன்
குமாரனைத்துவக்கி, காவல்வீட்டிலிருந்த சிறை
யின் தலைச்சன் பிள்ளைமட்டும், எகிப்துதேசத்தி
லிருந்த முதல்பேறனைத்தையும் மிருகசீவன்க
ளின் தலையீற்றனைத்தையும் அழித்தார்.—அப் ௩௰
பொழுது பார்வோனும் அவனுடைய எல்லா
ஊழியக்காரரும் எல்லா எகிப்தியரும் இராத்திரி
யிலே எழுந்திருந்தார்கள்; மகா கூக்குரல் எகிப்
தில் உண்டாயிற்று; ஏனெனில் செத்தவனில்
லாத ஒரு வீடும் இருந்ததில்லை.
அவன் மோசேயையும் ஆரோனையும் இராத் ௩௧
திரியிலே அழைப்பித்துச் சொன்னதாவது: நீங்
களும் இஸ்ரவேல் புத்திரருமாய் எழுந்து, என்
சனத்தின் நடுவிலிருந்து புறப்பட்டுப் போய்,
நீங்கள் சொன்னபடி கர்த்தருக்கு ஆராதனை
செய்யுங்கள்.—உங்கள் ஆடுமாடுகளையும் நீங்கள் ௩௨
சொன்னபடிக்கு ஓட்டிக்கொண்டு போய், என்
னையும் ஆசீர்வதியுங்களென்றான்.
எகிப்தியர் தீவிரமாய்ச் சனத்தைத் தேசத்தி ௩௩
லிருந்து அனுப்பிவிட அவர்களை வெகு துரிதம்
பண்ணினார்கள்; ஏனெனில் நாங்கள் எல்லா
ரும் சாகிறோமென்றார்கள்.—ஆகையால் சனம் ௩௪
இன்னம் உப்பாத தங்களுடைய பிசைந்தமாவி
ருந்த தங்கள் தொட்டிகளைத் தங்கள் சீலைகளில்
கட்டி, தங்கள் தோள்களின்மேல் எடுத்துப்
போனார்கள். — இஸ்ரவேல் புத்திரர் மோசேயி ௩௫
னுடைய வார்த்தையின்படி செய்து, [3]எகிப்திய
ரை வெள்ளியுடைமைகளையும் பொன்னுடை
மைகளையும் வஸ்திரங்களையும் கேட்டிருந்தார்
கள்.—அதற்காகக் கர்த்தர் சனத்திற்கு எகிப்திய ௩௬
ரின் கண்களிலே தயவுகிடைக்கப்பண்ணி
இருந்தார்; கேட்டதை அவர்களுக்குக் கொடுத்
தார்கள்; அப்படியே எகிப்தியரைக் கொள்ளை
யிட்டார்கள்.
இஸ்ரவேல் புத்திரர் குழந்தைகள்தவிர அறு ௩௭
நூறாயிரம் புருஷர் கால்நடையாய் ராமேசேசை
விட்டுப் பயணம்பண்ணி, சுக்கோத்திற்கு வந்
தார்கள்.—அவர்களோடும்கூடப் பலசாதியான ௩௮
திரள் சனமும் ஆடுமாடுகள் முதலான ஏராளமா
கிய மிருகசீவன்களும் ஏறிவந்தன. — அவர்கள் ௩௯
எகிப்திலிருந்து கொண்டுவந்த பிசைந்தமாவைப்
புளிப்பில்லாத அப்பங்களாகச் சுட்டார்கள்;
ஏனெனில் அவர்கள் தரித்து நிற்கக்கூடாமல்,
எகிப்திலிருந்து துரத்தப்பட்டபடியினாலே அது
உப்பாதிருந்தது; அவர்கள் தங்களுக்கு வழிக்கு
ஒன்றும் சேகரம்பண்ணினதுமில்லை.
இஸ்ரவேல் புத்திரர் எகிப்திலே குடியிருந்த ௪௰
குடியிருப்பு [4]நானூற்றுமுப்பது வருஷமானது.—
நானூற்றுமுப்பது வருஷங்களின் முடிவிலே ௪௧
சம்பவித்ததேதெனில், அந்நாளிலேதானே கர்த்
தருடைய சேனைகளெல்லாம் எகிப்துதேசத்தி
லிருந்து புறப்பட்டன.
கர்த்தர் அவர்களை எகிப்துதேசத்திலிருந்து ௪௨
புறப்படப்பண்ணினதினாலே, இது அவருக்
குக் கவனமாய் ஆசரிக்கப்படவேண்டிய இராத்
திரி; இதுதானே இஸ்ரவேல் புத்திரரெல்லாரும்

1 எபி. ௰௧. ௨௮.—2 ௨ மோ. ௰௩. ௰௪.

3 ௨ மோ. ௩. ௨௧; ௰௧. ௨.—4 கலா. ௩. ௰௭.

தங்கள் தலைமுறைகளிலே கர்த்தருக்குக் கவன
மாய் ஆசரிக்கவேண்டிய இராத்திரி.
௪௩ கர்த்தர் மோசேயோடும் ஆரோனோடும் சொன்
னதாவது: பஸ்காவின் கட்டளையேதெனில், அ
ந்நியபுத்திரன் ஒருவனும் அதிலே புசிக்க வேண்
௪௪ டாம்.—ஆனால் பணத்தினாலே கொள்ளப்பட்ட
அடிமையெல்லாம் நீ அவனைச் சுன்னத்துப் பண்
௪௫ ணின பிற்பாடு அதிலே புசிப்பானாக.—அந்நிய
னும் கூலியாளும் அதிலே புசிக்கவேண்டாம்.—
௪௬ ஒவ்வொரு வீட்டில் ஒவ்வொன்று புசிக்கப்படக்
கடவது; நீ அந்த மாம்சத்தில் ஒன்றும் வீட்டி
லிருந்து வெளியே கொண்டுபோகவேண்டாம்;
[1]அதிலே நீங்கள் ஒரு எலும்பை முறிக்கவும்
௪௭ வேண்டாம்.—இஸ்ரவேல் சபையெல்லாம் அ
௪௮ தை ஆசரிக்கக்கடவது.—அந்நியன் ஒருவன் உன்
னிடத்திலே தங்கி, கர்த்தருக்குப் பஸ்காவை
ஆசரிக்கவேண்டுமென்று இருந்தானேயாகில்,
அவனிடத்திலிருக்கிற ஆணெல்லாம் சுன்னத்த
டையவேண்டும்; பிற்பாடு அவன் அதை ஆசரிக்
கிறதற்குச் சேர்ந்து, தேசத்திலே பிறந்தவனைப்
போல இருப்பானாக; ஆனால் சுன்னத்தில்லாத
௪௯ ஒருவனும் அதிலே புசிக்கவேண்டாம்.—[2]தேசத்
திலே பிறந்தவனுக்கும் உங்கள் நடுவிலே தங்கு
கிற பரதேசிக்கும் ஒரே நியாயப்பிரமாணம் இ
௫௰ ருக்கக்கடவதென்றார்.— இஸ்ரவேல் புத்திரர்
எல்லாரும் இப்படிச் செய்தார்கள்; கர்த்தர்
மோசேக்கும் ஆரோனுக்கும் கற்பித்தபடியே
செய்தார்கள்.
௫௧ இந்தப்பிரகாரமாக அந்நாளிலேதானே கர்த்
தர் இஸ்ரவேல் புத்திரரை அவர்களுடைய சே
னைகளின்படியே எகிப்துதேசத்திலிருந்து புறப்
படப்பண்ணினார்.

## ௰௩. அதிகாரம்.

௧. முதல்பேறுகள் பராபரனுக்குப் பரிசுத்தமாக்கப்பட்டது. ௫. பஸ்காப் பண்டிகை நினைவுகூரக் கட்டளையிடப்பட்டது. ௰௧. மிருகத்தின் தலையீற்றுகள் கர்த்தருக்காக வைக்கப்பட்டது. ௰௭. இஸ்ரவேல் சனங்கள் யோசேப்பின் எலும்புகளை எடுத்துக்கொண்டு எகிப்தைவிட்டுப் போனது. ௨௰. அவர்கள் எத்தாமுக்கு வந்தது. ௨௧. பராபரன் அவர்களுக்கு மேகத்தூணாகவும் நெருப்புத்தூணாகவும் வழிகாட்டினது.

௧ கர்த்தர் மோசேயோடே பேசிச் சொன்னதா
௨ வது:—[3]இஸ்ரவேல் புத்திரரில் எங்கும் மனிதரி
லும் மிருகசீவன்களிலும் கர்ப்பம்திறந்து பிறக்
கிற முதல்பேற்றை எல்லாம் நமக்குப் பரிசுத்த
மாக்கு, அது நம்முடையதென்றார்.
௩ அப்பொழுது மோசே சனத்தோடே சொன்
னதாவது: நீங்கள் அடிமைத்தனவீடாகிய எகிப்
திலிருந்து புறப்பட்ட இந்த நாளை நீங்கள் நினை
யுங்கள்; ஏனெனில் கர்த்தர் பலத்தகையினாலே
உங்களை அவ்விடத்திலிருந்து புறப்படப்பண்
ணினார்; ஆனதுகொண்டு புளித்த அப்பம் புசிக்க
௪ ப்படவேண்டாம்.—[4]ஆபிப் மாதத்தினுடைய இந்
௫ த நாளிலே நீங்கள் புறப்பட்டீர்கள்.-ஆகையால்
கர்த்தர் உனக்குக் கொடுப்போமென்று உன்
பிதாக்களுக்கு ஆணையிட்டதும் பாலும்தேனும்
ஓடுகிறதுமான தேசமாகிய கானானியர், ஏத்தியர்
ஏமோரியர்;ஏவியர், எபூசியர் என்றவர்களுடை
ய தேசத்திலே, உன்னை வரப்பண்ணினபொழு
து,நீ இந்தமாதத்திலே இந்த ஆராதனையைச் செய்
வாயாக.-ஏழுநாள் புளிப்பில்லாத அப்பங்களைப் ௬
புசிக்கக்கடவாய்; ஏழாம் நாளிலோவெனில்,
கர்த்தருக்குப் பண்டிகை ஆசரிக்கப்படுவதாக.—
அந்த ஏழுநாளும் புளிப்பில்லாத அப்பங்கள் ௭
புசிக்கப்படக்கடவது; உன்னிடத்திலே புளித்த
அப்பமும் காணப்படவேண்டாம்; உன் எல்லை
களிலெல்லாம் உன்னிடத்திலே புளித்தமாவும்
காணப்படவேண்டாம்.—அந்நாளிலே உன் கு ௮
மாரனுக்கு, நான் எகிப்திலிருந்து புறப்படுகை
யில், கர்த்தர் எனக்குச் செய்ததற்காக இப்படிச்
செய்கிறேனென்று அறிவிப்பாயாக.–கர்த்தரின் ௯
நியாயப்பிரமாணம் உன் வாயிலிருக்கும்படிக்
கு, [5]இது உனக்கு உன் கையில் அடையாளமா
கவும் உன் கண்களின் நடுவே நினைப்பூட்டுத
லாகவும் இருக்கக்கடவது; ஏனெனில் பலத்த
கையினாலே கர்த்தர் உன்னை எகிப்திலிருந்து
புறப்படப்பண்ணினார்.—ஆகையால் வருஷத் ௰
திற்கு வருஷம் இந்தக் கட்டளையைக் குறித்த
காலத்திலே, கைக்கொண்டு வருவாயாக.

பின்னையும் செய்யப்படவேண்டியதேதெ ௰௧
னில், கர்த்தர் உனக்கும் உன் பிதாக்களுக்கும் ஆ
ணையிட்டபடியே, உன்னைக் கானானியரின் தே
சத்திலே வரப்பண்ணி, அதை உனக்குக் கொடுத்
தபொழுது,—கர்ப்பம்திறந்து பிறக்கிறவை அ ௰௨
னைத்தையும் உனக்கிருக்கும் மிருகசீவன்களின்
தலையீற்றனைத்தையும் கர்த்தருக்கு ஒப்புக்கொ
டுப்பாயாக; அவைகளிலிருக்கிற ஆண்கள் கர்த்த
ருடையவைகள்.—ஆனால் கழுதையின் தலையீற் ௰௩
றையெல்லாம் ஒரு ஆட்டுக்குட்டியினால் மீட்
டுக்கொள்வாயாக; மீட்காயேயாகில், அதின்
தலையை வெட்டிப்போடு; உன் பிள்ளைகளில்
முதல் பேறான சகல நரசீவனையோவென்றால்
மீட்டுக்கொள்வாயாக.

இதென்னவென்று நாளை உன் குமாரன் உன் ௰௪
னைக் கேட்கிறதுண்டானால், நீ அவனோடே
சொல்லவேண்டியதாவது: கர்த்தர் எங்களைப்
பலத்த கையினாலே அடிமைவீடாகிய எகிப்தி
லிருந்து புறப்படப்பண்ணினார்.-அதேதெனில் ௰௫
எங்களை விடாதபடிக்கு, பார்வோன் கடினம
னதாயிருக்கிறபொழுது, கர்த்தர் எகிப்துதேசத்
தில், மனிதரின் தலைச்சன் பிள்ளைகள் துவக்கி,
மிருகசீவன்களின் தலையீற்றுகள்மட்டும், உண்
டாயிருந்த முதல்பேறுகளை எல்லாம் கொன்று
போட்டார்; ஆனபடியினாலே கர்ப்பம்திறந்து
பிறக்கிற ஆணையெல்லாம் நான் கர்த்தருக்குப்
பலியிட்டு, என் பிள்ளைகளில் முதல்பேறானவர்
களை எல்லாம் மீட்டுக்கொள்ளுகிறேன்.—ஆகை ௰௬
யால் கர்த்தர் எங்களைப் பலத்த கையினாலே
எகிப்திலிருந்து புறப்படப்பண்ணினதற்கு, இது
உன் கையில் அடையாளமாகவும் உன் கண்க

1 ௪ மோ. ௯.௧௨. யோவா. ௰௯.௩௬.— 2 ௪ மோ. ௧௫. ௧௫.— 3 ௨ மோ. ௨௨. ௨௯, ௩௦: ௩௪.௰௯.— 4 ௨ மோ. ௨௩.௰௫.— 5 ௫ மோ. ௬. ௮.

ளின் நடுவே நினைப்பூட்டுதலாகவும் இருக்கக்
கடவதென்று சொல்லுவாயாக என்றார்.
௰எ பார்வோன் சனத்தை விட்டபிற்பாடு சம்ப
வித்ததேதெனில், சமீபமான பெலிஸ்தியரின் தே
சவழியாய்ப் பராபரன் அவர்களை அழைத்துக்
கொண்டுபோகவில்லை; ஏனென்றால் சனம் யுத்
தத்தைக் காணும்பொழுது, மனஸ்தாபப்பட்டு,
௰௮ எகிப்திற்குத் திரும்புமென்றார்.—ஆகையால் பரா
பரன் நாணல்சமுத்திரத்தின் வனாந்தர வழி
யாய்ச் சனத்தைச் சுற்றிப்போகப்பண்ணினார்;
இஸ்ரவேல் புத்திரரோவெனில் எகிப்துதேசத்
திலிருந்து அணியணியாய் வந்து எறினார்கள்.—
௰௯ மோசே தன்னோடேகூட யோசேப்பின் எலும்
புகளை எடுத்துக்கொண்டு வந்தான்; [1]ஏனெனில்
பராபரன் உங்களை விசாரிக்கவே விசாரிப்பார்;
அப்பொழுது உங்களோடேகூட என் எலும்பு
களை இவ்விடத்திலிருந்து போய் எறப்பண்ணுங்
களென்று அவன் இஸ்ரவேல் புத்திரரைக் கெட்
டியாய் ஆணையிடுவித்துக்கொண்டிருந்தான்.
௨௰ அவர்கள் சுக்கோத்திலிருந்து பயணம் புறப்
பட்டு, வனாந்தரத்தின் எல்லையான எத்தாமிலே
௨௧ பாளயம் இறங்கினார்கள். — கர்த்தரோவெனில்
அவர்களை வழிநடத்தும்படிக்கும் பகலிலே
மேகத்தூணிலும், அவர்களுக்கு வெளிச்சம்
காட்டும்படிக்கும் அவர்கள் இரவும் பகலும்
போகக்கூடும்படிக்கும் இராத்திரியிலே அக்கி
னித்தூணிலும், அவர்களுக்குமுன்பாக நடந்
௨௨ தார்.—பகலிலே மேகத்தூணும் இரவிலே அக்
கினித்தூணும் சனத்திற்குமுன்பாக இருந்து
விலகிப்போனதில்லை.

## ௰௪. அதிகாரம்.

௧. பராபரன் இஸ்ரவேல் சனங்களின் யாத்திரையைக்குறித்துக் கற்பித்தது. ௫. பார்வோன் அவர்களைப் பின்சென்றது. ௰ இஸ்ரவேல் சனங்கள் முறுமுறுத்தது. ௰௩. மோசே அவர்களுக்கு ஆறுதல்சொன்னது. ௰௫. பராபரன் மோசேக்குக் கற்பித்தது. ௰௯. மேகமானது பாளயத்தின் பின்புறத்தில் வந்தது. ௨௧. இஸ்ரவேல் சனங்கள் நாணல்கடலின் மார்க்கமாய்ப்போனது. ௨௩. அது எகிப்துதேசத்தாரை முழுகடித்தது.

௧ கர்த்தர் மோசேயுடனே பேசிச் சொன்னதாவ
௨ து:—திரும்பிக்கொண்டு மிக்தோலுக்கும் சமுத்
திரத்துக்கும் நடுவே பாகால்சேப்போனுக்கு
முன்பாக இருக்கிற ஈரோத் பள்ளத்தாக்கின்
முன்னடியிலே பாளயம் இறங்கவேண்டுமென்
று இஸ்ரவேல் புத்திரரோடே சொல்லு; அதற்
கெதிராகச் சமுத்திரக்கரையிலே பாளயம் இறங்
௩ குவீர்களாக.— அப்பொழுது அவர்கள், தேசத்
திலே திகைத்துத் திரிகிறார்கள், வனாந்தரம் அவர்
களை அடைத்துப்போட்டதென்று பார்வோன்
இஸ்ரவேல் புத்திரரைக்குறித்துச் சொல்லுவா
௪ ன். — ஆகையால பார்வோன் அவர்களைப் பின்
தொடரும்படிக்கு, நாம் அவனிருதயத்தை உரம்
கொள்ளப்பண்ணி, நாம் கர்த்தர் என்பதை எகிப்
தியர் அறிகிறதற்காக, பார்வோனாலும் அவனு
டைய எல்லா இராணுவத்தாலும் மகிமைப்படு
வோமென்றார்; அவர்கள் அப்படிச்செய்தார்கள்.
சனம் ஓடிப்போயிற்றென்று எகிப்தின் இரா ௫
சாவுக்கு அறிவிக்கப்பட்டபொழுது, சனத்திற்
கு விரோதமாகப் பார்வோனும் அவன் ஊழியக்
காரரும் வேறுமனதாகி, நாம் இஸ்ரவேலரை நமக்
கு வேலைசெய்யாதபடிக்கு இப்படி விட்டது
என்ன செய்கையாய் இருக்கிறதென்றார்கள்.—
அவன் தன் இரதங்களைப் பூட்டி, தன் சனத் ௬
தைக்கூட்டிக்கொண்டு, — தெரிந்துகொள்ளப் ௭
பட்ட அறுநூறு இரதங்களையும் எகிப்திலுடைய
எல்லா இரதங்களையும் அவைகள் எல்லாவற்
றின்மேலும் அதிகாரிகளான ஆதிக்கக்காரரை
யும் கூட்டிக்கொண்டுபோனான்.—கர்த்தர் எகிப் ௮
தின் இராசாவாகிய பார்வோனின் இருதயத்தை
உரமாக்கினபடியினாலே, அவன் இஸ்ரவேல்
புத்திரரைப் பின்தொடர்ந்தான்; இஸ்ரவேல் புத்
திரரோவெனில் உயர்ந்த கையினாலே புறப்பட்
டிருந்தார்கள்.—எகிப்தியர் அவர்களைப் பின்தொ ௯
டர்ந்து, பார்வோனின் எல்லாக் குதிரைகளும்
இரதங்களும் அவனுடைய குதிரைக்காரரும் அ
வனுடைய இராணுவமுமாய், சமுத்திரத்தண்
டையிலே பாகால்சேப்போனுக்கு முன்பாக
இருக்கிற ஈரோத் பள்ளத்தாக்கின் முன்னடியி
லே பாளயம் இறங்கியிருக்கிற அவர்களைக் கிட்
டினார்கள்.
பார்வோன் சமீபித்து வருகிறபொழுது, இஸ் ௰
ரவேல் புத்திரர் தங்கள் கண்களை ஏறெடுத்தார்
கள்; இதோ, எகிப்தியர் தங்கள் பிறகாலே வரு
கிறதை அவர்கள் கண்டு மிகவும் பயந்தார்கள்;
அப்பொழுது இஸ்ரவேல் புத்திரர் கர்த்தரை
நோக்கிக் கூப்பிட்டு,—மோசேயுடனே, எகிப் ௰௧
திலே பிரேதக்குழிகள் இல்லாததினாலேயோ
எங்களை வனாந்தரத்திலே சாகும்படிக்கு அழைத்
துவந்தீர்; நீர் எங்களை எகிப்திலிருந்து புறப்ப
டப்பண்ணினதினாலே, எங்களுக்கு இப்படிச்
செய்ததென்னவென்றும்,—நாங்கள் எகிப்திலே ௰௨
இருக்கும்போது, எங்களை எகிப்தியருக்குவேலை
செய்யவிட்டுவிடும், ஏனெனில் நாங்கள் வனாந்த
ரத்திலே சாகிறதைப்பார்க்கிலும் எகிப்தியருக்கு
வேலைசெய்கிறது, எங்களுக்குத்தாவிளையென்று
உம்மோடே சொன்ன வார்த்தை, இதுதானல்ல
வோவென்றும் சொன்னார்கள்.
ஆனால் மோசே சனத்தோடே சொன்னதா ௰௩
வது: பயப்படாதிருங்கள்; நீங்கள் நின்று
கொண்டு கர்த்தர் இன்று உங்களுக்குச் செய்
யும் அவருடைய இரட்சிப்பைப் பாருங்கள்.
ஏனெனில் நீங்கள் இன்றுகாண்கிற எகிப்தியரை
இனி என்றென்றைக்கும் திரும்பக் காண்பதில்
லை.—கர்த்தர் உங்களுக்காக யுத்தம்பண்ணுவார்; ௰௪
நீங்கள் சும்மாயிருப்பீர்களென்றான்.
அப்பொழுது கர்த்தர் மோசேயோடே சொன் ௰௫
னதாவது: நீ நம்மைநோக்கிக் கூப்பிடுகிறதென்
ன? பயணம் புறப்பட வேண்டுமென்று இஸ்ர
வேல் புத்திரரோடே சொல்லு.

1 ௧ மோ. ௫௰. ௨௫. யோசு. ௨௪. ௩௨.

௰௬ நீயோவென்றால் உன் கோலை ஓங்கி, உன் கை
யைச் சமுத்திரத்தின்மேல் நீட்டி, அதைப் பிளந்
துபோடு; அப்பொழுது இஸ்ரவேல் புத்திரர்
சமுத்திரத்தின் நடுவாக வெட்டாந்தரையிலே
௰௭ நடந்துபோவார்கள். — நானோவெனில் இதோ,
எகிப்தியர் உங்கள் பிறகாலே வரும்படிக்கு
அவர்களிருதயத்தை உரமாக்கி, பார்வோனாலும்
அவனுடைய எல்லா இராணுவத்தாலும் அவன்
இரதங்களாலும் அவன் குதிரைக்காரராலும் மகி
௰௮ மைப்படுவோம்.—இப்படி நாம் பார்வோனாலும்
அவன் இரதங்களாலும் அவன் குதிரைக்காரரா
லும் மகிமைப்படுகிறபொழுது, நாம் கர்த்தர் என்
பதை எகிப்தியர் அறிவார்களென்றார்.
௰௯ அப்பொழுது இஸ்ரவேலரின் சேனைக்கு முன்
னாக நடக்கிற பராபரனுடைய தூதனானவர்
தாண்டிவந்து, அவர்கள் பிறகாலே நடந்தார்;
அவர்களுக்கு முன்பாக இருந்த மேகத்தூண்
தாண்டிவந்து, அவர்கள் பிறகாலே நின்று,—
௨௰ எகிப்தியரின் சேனைக்கும் இஸ்ரவேலரின் சே
னைக்கும் நடுவாக வந்து, இராமுழுவதும் அது
இவைச் சேராதபடியாய் அதற்கு மேகமும் அந்த
காரமுமாய் இருந்து, இதற்கோவென்றால் இர
வை வெளிச்சமாக்கிற்று.
௨௧ மோசே தன் கையைச் சமுத்திரத்தின்மேலே
நீட்டினான்; அப்பொழுது கர்த்தர் சமுத்திரத்தை
இராமுழுவதும் பலத்த கீழ்க்காற்றினாலே விலக்
கி, அதை வறண்டுபோகப்பண்ணினார்; அப்ப
டியே தண்ணீர்கள் பிளந்து பிரிந்துபோயின.—
௨௨ இஸ்ரவேல் புத்திரர் சமுத்திரத்தின் நடுவாக
வெட்டாந்தரையிலே பிரவேசித்துப்போனார்
கள்; அவர்களுடைய வலதுபுறமாகவும் அவர்க
ளுடைய இடதுபுறமாகவும் தண்ணீர்கள் அவர்
களுக்கு மதிலாக இருந்தன.
௨௩ அப்பொழுது எகிப்தியர் பின்தொடர்ந்து,
பார்வோனுடைய எல்லாக் குதிரைகளும் அவ
னுடைய இரதங்களும் அவனுடைய குதிரைக்
காரரும் அவர்கள் பிறகாலே சமுத்திரத்தின் நடு
௨௪ வே பிரவேசித்தார்கள்.—கிழக்கு வெளுத்துவ
ரும் சாமத்திலே சம்பவித்ததேதென்றால், கர்த்தர்
அக்கினியும் மேகமுமான தூணிலிருந்து எகிப்
தியரின் சேனையை நோக்கிப்பார்த்து, அவர்கள்
௨௫ சேனையைக் கலங்கடித்து, — உருளைகள் அவர்
கள் இரதங்களிலிருந்து கழலவும், அவர்கள்
வருத்தமாய் நடக்கவும்பண்ணினார்; அப்பொ
ழுது எகிப்தியர், இஸ்ரவேலரைவிட்டு ஓடிப்
போவோமாக; ஏனெனில் கர்த்தர் அவர்களுக்
காக எகிப்தியருக்கு விரோதமாய் யுத்தம்பண்ணு
௨௬ கிறாரென்றார்கள்.—கர்த்தரோவெனில் மோசே
யுடனே, தண்ணீர்கள் எகிப்தியர்மேலும் அவர்
களுடைய இரதங்களின்மேலும் அவர்களுடைய
குதிரைக்காரர்மேலும் திரும்பும்படிக்கு, உன்
கையைச் சமுத்திரத்தின்மேலே நீட்டென்றார்.—
௨௭ அப்படியே மோசே தன் கையைச் சமுத்திரத்
தின்மேலே நீட்டினான்; அப்பொழுது விடியற்
காலத்திற்குமுன்னே சமுத்திரம் தன் பலத்தோ
டே திரும்பி வந்தது; எகிப்தியர் அதற்கெதிராக
ஓடும்போது, கர்த்தர் அவர்களைக் கடலின் நடு
விலே விழத்தள்ளினார்.—தண்ணீர்கள் திரும்பி ௨௮
வந்து, இரதங்களையும் குதிரைக்காரரையும் அவர்
கள் பிறகாலே சமுத்திரத்திற்குள் பிரவேசித்தி
ருந்த பார்வோனின் இராணுவமனைத்தையும்
மூடிப்போட்டன; அவர்களில் ஒருவனாகிலும்
மீதியானதில்லை.—இஸ்ரவேல் புத்திரரோவென் ௨௯
றால், சமுத்திரத்தின் நடுவாக வெட்டாந்தரை
யிலே நடந்துபோனார்கள்; தண்ணீர்கள் அவர்
களுக்கு அவர்கள் வலதுபுறத்திலும் அவர்கள்
இடதுபுறத்திலும் மதிலாக இருந்தன.
இப்படிக் கர்த்தர் அந்நாளிலே இஸ்ரவேலரை ௩௰
எகிப்தியரின் கைக்குத் தப்புவித்து இரட்சித்
தார்; இஸ்ரவேலர் எகிப்தியரைக்கடல்கரையிலே
செத்துக்கிடக்கக் கண்டார்கள்.—கர்த்தர் எகிப் ௩௧
தியரில் செய்த அவருடைய பெரிய கைக்கிரி
யையை இஸ்ரவேல் கண்டது; ஆகையால்
சனம் கர்த்தருக்குப் பயந்து, கர்த்தர்பேரிலும்
அவருடைய ஊழியக்காரனாகிய மோசேயின்
பேரிலும் விசுவாசித்தது.

## ௰௫. அதிகாரம்.

௧. மோசே பாடியபாட்டு. ௨௨. அந்தச் சனங்கள் தண்ணீரில்லாதிருந்தது. ௨௩. மாராவின் தண்ணீர் கசப்பாயிருந்தது. ௨௫. அவர்களுக்கு ஒரு மரத்தினால் அது தித்திப்பானது. ௨௭. ஏலிமில் பன்னிரண்டு கிணறுகளும் எழுபது பேரீச்சமரங்களும் இருந்தன.

அப்பொழுது மோசேயும் இஸ்ரவேல் புத்திர ௧
ரும் கர்த்தரைப்பாடினபாட்டாவது: கர்த்தரைப்
பாடுவேன்; ஏனென்றால் உயரவே உயர்ந்தார்;
குதிரையையும் அதில் ஏறினவனையும் கடலிலே
தள்ளினார்.
[1]என் பலமும் என் கீதமும் கர்த்தர்; அவர் ௨
எனக்கு இரட்சிப்பானவர்; அவரே என் பரா
பரன்; ஆகையால், அவருக்கு வாசஸ்தலத்தை
ஆயத்தம்பண்ணுவேன்; அவரே என் தகப்பனு
டைய பராபரன்; ஆகையால் அவரை உயர்த்து
வேன்.—கர்த்தரே யுத்தம்பண்ணவல்லவர்; கர்த்த ௩
ரென்பது அவருடைய நாமம்.—பார்வோனின் ௪
இரதங்களையும் அவன் இராணுவத்தையும் சமுத்
திரத்திலே தள்ளிவிட்டார்; தெரிந்துகொள்ளப்
பட்ட அவன் அதிகக்காரர் நாணல் சமுத்திரத்
தில் அமிழ்ந்துபோனார்கள்.—ஆழங்கள் அவர்களை ௫
மூடின; கல்லைப்போலப் பள்ளங்களில் இறங்
கினார்கள்.—கர்த்தாவே, உம்முடைய வலதுகரம் ௬
பலத்தினால் மகிமையாயிருக்கின்றது; கர்த்தாவே,
உம்முடைய வலதுகரம் பகைஞனை நொ
றுக்கிவிட்டது.—உமக்கு விரோதமாய் எழும் ௭
பினவர்களை உமது முக்கியத்தின் மகத்துவத்தி
னாலே நிர்மூலமாக்கினீர்; உம்முடைய உக்கிரத்
தை அனுப்பினீர்; அது அவர்களைத் தாளடியைப்
போலப் பட்சித்தது.—உமது நாசியின் சுவாசத் ௮
தினாலே தண்ணீர்கள் குவிந்தன; நீரோட்டங்
கள் குவியலாக நின்றன; ஆழங்கள் நடுக்கட

[1] சங். ௱௰௮. ௰௪.

௯ விலே கெட்டியாயின.— பின்தொடருவேன்,
பிடிப்பேன், கொள்ளையாடிப் பங்கிடுவேன், என்
ஆத்துமா அவர்களால் நிரப்பப்படும், என் பட்
டையத்தை உருவுவேன்; என் கை அவர்களைச்
௰ சிதறடிக்குமென்று பகைஞன் சொன்னான்.—உம்
முடையகாற்றினாலே ஊதினீர், கடல் அவர்களை
மூடிற்று; ஈயத்தைப்போல மிகுந்த தண்ணீர்க
௰௧ ளில் அமிழ்ந்துபோனார்கள்.—கர்த்தாவே, தேவர்
களில் உமக்கொப்பானவனார்? பரிசுத்தத்தில்
மகத்துவமுள்ளவரும் துதிகளில் பயப்படத்தக்க
வரும் அற்புதங்களைச் செய்கிறவருமாகிய உமக்
௰௨ கொப்பானவனார்?—உம்முடைய வலதுகையை
நீர் நீட்டினீர், பூமி அவர்களை விழுங்கிவிட்
௰௩ டது.—நீர் மீட்டுக்கொண்ட இந்தச் சனத்தை
உம்முடைய கிருபையினாலே அழைத்துவந்தீர்;
உம்முடைய பரிசுத்த வாசஸ்தலத்திற்கு நேராக
அதை உம்முடைய பலத்தினாலே வழிநடத்தி
௰௪ னீர்.—சனசதளங்கள் அதைக் கேட்டுத் தத்தளிக்
கும்; பெலிஸ்தேயாவின் குடிகளை வேதனைபிடிக்
௰௫ கும்.—அப்பொழுது ஏதோமின் பிரபுக்கள் கலங்
குவார்கள்; மோவாபில் வல்லமையுள்ளவர்களை
நடுக்கம்பிடிக்கும்; கானானின் குடிகளெல்லாம்
௰௬ கரைந்துபோவார்கள்.— பயங்கரமும் திகிலும்
அவர்கள்மேலிறங்கும்; கர்த்தாவே, உமது சனம்
கடக்கும்மட்டும், நீர் மீட்ட இந்தச் சனமே கட
ந்துபோகும்மட்டும், அவர்கள் உம்முடைய புயத்
தின் மகத்துவத்தினாலே கல்லைப்போல மவுனமா
௰௭ யிருப்பார்கள்.—நீர் அவர்களை உட்பிரவேசிக்
கப்பண்ணி, அவர்களைக் கர்த்தராகிய தேவரீர்
வாசம்பண்ணுகிறதற்குப் படைத்த தானமாகிய
உம்முடைய சுதந்தரத்தின் பர்வதத்திலும், ஆண்
டவராகிய தேவரீருடைய கரம் ஸ்தாபித்த பரி
௰௮ சுத்தஸ்தலத்திலும் நாட்டுவீர்.—[1]கர்த்தர் சதாகா
லங்களாகிய என்றென்றைக்கும் இராசரிகம்பண்
ணுவார்.

௰௯ ஏனென்றால் பார்வோனின் குதிரை அவன்
இரதங்களோடும் அவன் குதிரைக்காரரோடும்
சமுத்திரத்துக்குள் பிரவேசித்தது; அப்பொழுது
கர்த்தர் சமுத்திரத்தின் தண்ணீர்களை அவர்கள்
மேலே திரும்பப்பண்ணினார்; இஸ்ரவேல் புத்
திரரோவென்றால் சமுத்திரத்தின் நடுவே வெட்
டாந்தரையிலே நடந்துவந்தார்களென்று பாடி
னார்கள்.

௨௰ ஆரோனின் சகோதரியாகிய மீரியாமென்ற
தீர்க்கதரிசியும் தன் கையிலே உடுக்கை எடுத்
துக்கொண்டாள்; சகல ஸ்திரிகளும் உடுக்கை
களையும் கீதவாத்தியங்களையும் எடுத்து, அவள்
பிறகாலே புறப்பட்டார்கள்.

௨௧ மீரியாம் அவர்களுக்கு மறுமொழியாக, கர்த்
தரைப் பாடுங்கள்; ஏனென்றால் உயரவே உயர்ந்
தார்; குதிரையையும் அதிலேறினவனையும் கட
லிலே தள்ளினாரென்பது முதலானவைகளைப்
பாடினாள்.

பிற்பாடு மோசே இஸ்ரவேலை நாணல்சமுத் ௨௨
திரத்தைவிட்டுப் பயணம்புறப்படப்பண்ணி
னான்; அவர்கள் சூர்வனாந்தரத்திற்குப் புறப்பட்
டுப்போய், மூன்றுநாள் வனாந்தரத்திலே தண்
ணீர்கிடையாமல் நடந்து,—மாராவிலே வந்தார் ௨௩
கள்; ஆனால் மாராவின் தண்ணீரைக் குடிக்க
அவர்களுக்குக் கூடாதிருந்தது; ஏனெனில் அது
கசப்பாயிருந்தது; ஆனதுகொண்டு அவ்விடத்
திற்கு மாராவென்று பேரிடப்பட்டது.—அப் ௨௪
பொழுது சனம் மோசேக்கு விரோதமாய் முறு
முறுத்து, எதைக் குடிப்போமென்றார்கள்.—
மோசே கர்த்தரை நோக்கிக் கூப்பிட்டான்; அப் ௨௫
பொழுது கர்த்தர் மோசேக்கு ஒரு மரத்தைக்
காண்பித்தார்; அதை அவன் தண்ணீரிலே போட்
டபொழுது, தண்ணீர் தித்திப்பாயிற்று; அவர்
அங்கே அவர்களுக்குப் பிரமாணமும் நியாய
மும் கட்டளையிட்டு, அங்கே அவர்களைச் சோ
தித்துச் சொன்னதாவது:—நீ உன் பராபரனாகிய ௨௬
கர்த்தரின் சத்தத்தைக் கேட்கவே கேட்டு, அவர்
கண்களுக்குச் செம்மையானதைச் செய்து, அவர்
கற்பனைகளுக்குச் செவிகொடுத்து, அவருடைய
எல்லாக் கட்டளைகளையும் கைக்கொண்டால்,
நாம் எகிப்தியரின்மேல் இறங்கப்பண்ணின
வியாதிகளில் ஒன்றையும் உன்மேலே இறங்கப்
பண்ணோம்; ஏனெனில் நாம் உன் பரிகாரியா
கிய கர்த்தரென்றார்.

பிற்பாடு ஏலிமுக்கு வந்தார்கள்; அங்கே பன் ௨௭
னிரண்டு நீரூற்றுகளும் எழுபது பேரீச்சமரங்க
ளும் இருந்தன; அங்கே தண்ணீர்களண்டை
யிலே பாளயமிறங்கினார்கள்.

## ௰௬. அதிகாரம்.

௧. இஸ்ரவேல் சனங்கள் சீன்வனத்திற்கு வந்தது. ௨. அவர்கள் அப்பம் இல்லாமையால் முறுமுறுத்தது. ௪. பராபரன் வானத்திலிருந்து அப்பம் தருவிக்கிறேனென்றது. ௰௩. காடைகளையும். ௰௪. மன்னாவையும் அனுப்பினது. ௰௬. மன்னாவைக்குறித்த கட்டளை. ௨௭. ஓய்வுநாளிலே அது காணப்படாதது. ௩௨. அதை ஒருகாமியில் பதனப்படுத்தினது.

இஸ்ரவேல் புத்திரர் ஏலிமைவிட்டுப் பயணம் ௧
புறப்பட்டார்கள்; அவர்கள் எகிப்துதேசத்திலி
ருந்துபுறப்பட்ட இரண்டாம்மாதம்பதினைந்தாம்
தேதியிலே, அவர்களுடைய சபையெல்லாம்
ஏலிமுக்கும் சீனாய்க்கும் நடுவே இருக்கிற சீன்
வனாந்தரத்திலே வந்தது.—அங்கே வனாந்தரத்தி ௨
லே இஸ்ரவேல் புத்திரரின் சபையெல்லாம்
மோசேக்கும் ஆரோனுக்கும் விரோதமாக முறு
முறுத்தது.—அவர்களோடே சொன்னதாவது: ௩
[2]நாங்கள் இறைச்சிப் பானைகளண்டையிலே
உளுக்காந்து அப்பத்தைத் திருப்தியாகச் சாப்பிட்
ட எகிப்துதேசத்திலே, கர்த்தரின் கையினாலே
செத்துப்போனோமானால் தாவிளை; ஏனெனில்
இந்தக் கூட்டத்தை எல்லாம் பட்டினியினாலே
கொன்றுபோட எங்களைப் புறப்படப்பண்ணி,
இந்த வனாந்தரத்திலே அழைத்துவந்தீர்களென்
றார்கள்.

அப்பொழுது கர்த்தர் மோசேயோடே சொன் ௪

1 சங். ௧௧. ௧.

2 ௪ மோ. ௰௧. ௪.

னதாவது: இதோ, நாம் உங்களுக்கு வானத்திலி
ருந்துஅப்பம் வருஷிக்கப்பண்ணுவோம், சனம்
நமது நியாயப்பிரமாணத்திலே நடக்குமோ இல்
லையோ என்று நாம் சோதிக்கும்படிக்கு, அது
புறப்பட்டு அன்றன்றுள்ள படியை ஒவ்வொரு
௫ நாளிலே சேர்க்கக்கடவது.-ஆறாம்நாளிலோவெ
ன்றால், அவர்கள் கொண்டுவருகிறதைச் சேகரம்
பண்ணக்கடவார்கள்; அவர்கள் தினம்தினம்
சேர்க்கிறதைப்பார்க்கிலும் அப்பொழுது இரண்
டத்தனை உண்டாயிருக்குமென்றார்.
௬ அப்பொழுது மோசேயும் ஆரோனும் இஸ்ர
வேல் புத்திரரெல்லாரோடும் சொன்னதாவது:
கர்த்தர் உங்களை எகிப்துதேசத்திலிருந்து புறப்
படப் பண்ணினவரென்பதைச் சாயங்காலத்தி
௭ லே அறிவீர்கள்.—விடியற்காலத்திலே கர்த்தரு
டைய மகிமையையும் காண்பீர்கள்; ஏனெனில்
கர்த்தருக்கு விரோதமான உங்கள் முறுமுறுப்
புகளை அவர் கேட்டார்; நீங்கள் எங்களுக்கு
விரோதமாய் முறுமுறுக்கிறதற்கு நாங்கள் எம்
௮ மாத்திரம் என்றார்கள். — பின்னையும் மோசே
சொன்னதாவது: கர்த்தர் உங்களுக்குச் சாயங்
காலத்திலே நீங்கள் புசிக்கிறதற்கு இறைச்சி
யையும், விடியற்காலத்திலே நீங்கள் திர்ப்தி அ
டையும்படிக்கு அப்பத்தையும் கொடுக்கையில்
அதைக் காண்பீர்கள்; ஏனெனில் கர்த்தருக்கு
விரோதமாக நீங்கள் முறுமுறுத்த உங்கள் முறு
முறுப்புகளை அவர் கேட்டார்; நாங்கள் எம்மாத்
திரம்? உங்கள் முறுமுறுப்புகள் எங்களுக்கல்ல;
கர்த்தருக்கே விரோதமாயிருக்கிறதென்றான்.—
௯ பிற்பாடு மோசே ஆரோனுடனே, கர்த்தருக்கு
முன்பாகச் சேருங்கள்; ஏனெனில் உங்கள்
முறுமுறுப்புகளைக் கேட்டாரென்று இஸ்ரவேல்
புத்திரரின் சபைக்கெல்லாம் சொல்லென்றான்.
௰ ஆரோன் இஸ்ரவேல் புத்திரரின் சபைக்கெல்
லாம் இதைச் சொல்லுகிறபொழுது, அவர்கள்
வனாந்தர திசையாகத் திரும்பிப்பார்த்தார்கள்;
அப்பொழுது இதோ, கர்த்தருடைய மகிமை
௰௧ மேகத்திலே காணப்பட்டது.—கர்த்தர் மோசே
௰௨ யோடே பேசிச் சொன்னதாவது:—இஸ்ரவேல்
புத்திரரின் முறுமுறுப்புகளைக் கேட்டோம்;
நீ அவர்களுடனே பேசி, நீங்கள் சாயங்காலத்
திலே இறைச்சியைப் புசித்து, விடியற்காலத்தி
லே அப்பத்தால் திர்ப்தியாகி, நாம் உங்கள் பரா
பரனாகிய கர்த்தரென்பதை அறிவீர்களென்று
சொல்லென்றார்.
௰௩ சாயங்காலத்தில் சம்பவித்ததேதென்றால், [1]கா
டைகள் வந்தேறிப் பாளயத்தை மூடின; விடி
யற்காலத்திலோவென்றால், பாளயத்தைச் சுற்
௰௪ றிப் பனிவிழுந்திருந்தது.—விழுந்திருந்த பனி
எடுபட்டபிற்பாடு, இதோ, வனாந்தரத்தின்மீ
தெங்கும் உருட்சியான பொடித் துணிக்கைகள்
இருந்தன; அவைகள் தரையின்மேல் உறைந்த
௰௫ பனியத்தனை பொடியாய்க் கிடந்தன.—இஸ்ர
வேல் புத்திரர் அதைக் கண்டு, ஒருவருக்கொரு
வர் அது மன்னாவென்றார்கள்; ஏனெனில் அது
இன்னதென்று அறியாதிருந்தார்கள்; அப்பொ
ழுது மோசே அவர்களோடே சொன்னதாவது:
இது கர்த்தர் உங்களுக்குப் புசிக்கக்கொடுத்த
அப்பம்.—கர்த்தர் கற்பித்த காரியம் ஏதென்றால் ௰௬
அவனவன் புசிக்கத்தகும்மட்டும் அதிலெடுத்துச்
சேர்க்கக்கடவீர்கள்; உங்கள் ஆத்துமாக்களு
டைய இலக்கத்தின்படியே, அவனவன் தன்
தன் கூடாரத்தில் இருக்கிறவர்களுக்காக ஒவ்
வொரு தலைக்கு ஒவ்வொரு நாழிவிழுக்காடு
எடுத்துக்கொள்ளக் கடவீர்களென்றான்.—இஸ்ர ௰௭
வேல் புத்திரர் அப்படிச்செய்து, சிலர் அநேக
மும் சிலர் கொஞ்சமுமாய்ச் சேர்த்தார்கள். —
பிறகு நாழியினால் அளந்தார்கள்; [2]அநேகமாய்ச் ௰௮
சேர்த்தவனுக்கு அதிகமானதுமில்லை; கொஞ்ச
மாய்ச்சேர்த்தவனுக்குக் குறைச்சலானதுமில்லை;
அவரவர் தாங்கள் புசிக்கத்தகும்மட்டும் எடுத்துக்
கொண்டார்கள்.-மோசே அவர்களுடனே, ஒரு ௰௯
வனும் அதில், விடியற்காலம்மட்டும் ஒன்றும்
வைக்கவேண்டாமென்றான்.—ஆனால் மோசே ௨௰
யின் சொல்கேளாமல் சிலர் அதில் விடியற்காலம்
மட்டும் கொஞ்சம் மீதியாய் வைத்தார்கள்; அது
பூச்சிபிடித்து நாற்றம் எடுத்தது; அவர்கள்பே
ரிலே மோசே கடுங்கோபம் அடைந்தான்.—
அதைக் காலமே அவனவன் புசிக்கத்தகும்மட் ௨௧
டும் சேர்த்தார்கள்; ஏனெனில் வெயில் ஏறுகிற
பொழுது உருகிப்போம்.
ஆறாம்நாளிலே சம்பவித்ததேதென்றால்,அவர் ௨௨
கள் இரண்டத்தனைஅப்பம் ஒவ்வொருவனுக்கு
இரண்டு இரண்டு நாழியாகச் சேர்த்தார்கள்;
அப்பொழுது சபையின் தலைவரெல்லாரும் வந்
து, அதை மோசேக்கு அறிவித்தார்கள்.—அவன் ௨௩
இவர்களோடே சொன்னதாவது: கர்த்தர் சொன்
னது இதுதானே; நாளைக் கர்த்தருடைய பரிசுத்த
ஓய்வுநாளாகிய ஓய்ந்திருக்குதல்; நீங்கள் சுடப்
போகிறதைச் சுட்டு, சமைக்கப்போகிறதைச்
சமைத்து, மீதியாயிருக்கிறதையெல்லாம் நாளை
மட்டும் உங்களுக்காக வைத்துவையுங்களென்
றான்.—மோசே கற்பித்தபடியே அதை மறுநாள் ௨௪
மட்டும் வைத்தார்கள்; அப்பொழுது அது நாறி
னதுமில்லை; அதிலே பூச்சி பிடித்திருந்ததுமில்
லை.—அப்பொழுது மோசே சொன்னதாவது: ௨௫
அதை இன்றைக்குப் புசியுங்கள்; ஏனெனில்
இன்று கர்த்தரின் ஓய்வுநாள்; இன்று நீங்கள்
அதை வெளியிலே கண்டுபிடிப்பதில்லை.—ஆறு ௨௬
நாளும் அதைச் சேர்ப்பீர்களாக; ஏழாம்நாள் ஓய்
வுநாளாயிருக்கின்றது; அதிலே அது உண்டா
யிராதென்றான். — ஏழாம்நாளிலே சம்பவித்த ௨௭
தேதெனில், சனத்திலே சிலர் அதைச் சேர்க்கப்
புறப்பட்டார்கள்; ஆனால் கண்டுபிடியாதேபோ
னார்கள்.-அப்பொழுது கர்த்தர் மோசேயோடே ௨௮
சொன்னதாவது: நம்முடைய கற்பனைகளையும்
நம்முடைய நியாயப்பிரமாணங்களையும் கைக்
கொள்ள எந்தமட்டும் மனதில்லாதே போகிறீர்

1 ௪ மோ. ௰௧. ௩௧.

2 ௨ கொரி. ௮. ௰௫.

உகூ கள்.—பாருங்கள், கர்த்தர் உங்களுக்கு ஓய்வு
நாளைக் கொடுத்தபடியினுலே, அவர் உங்களுக்கு
ஆறும் நாளிலே இரண்டுநாளுடைய அப்பத்
தைக் கொடுக்கிறுரே; ஏழாம் நாளில் ஒருவனும்
தன் தானத்திலிருந்து புறப்படாமல், நீங்கள் அவ
னவன் தன் தன் தானத்தில் இருங்களென்றுர்.—
ஙய அப்படியே சனம் ஏழாம் நாளிலே ஓய்ந்திருந்
ஙக தது. — இஸ்ரவேல் வீட்டார் அதற்கு மன்னு
வென்று பெயரிட்டார்கள்; [1]அது கொத்துமல்
லி அம்மாத்திரமும் வெண்மையுமாயிருந்தது;
அதின் ருசி தேனிட்ட கச்சாயத்திற்கொப்பா
யிருந்தது.

ஙஉ மோசே சொன்னதாவது: கர்த்தர் கற்பித்தகா
ரியமேதெனில், நாம் உங்களை எகிப்துதேசத்தி
லிருந்து புறப்படப்பண்ணினபொழுது, உங்க
ளுக்கு வனாந்தரத்திலே புசிக்கக்கொடுத்த அப்ப
த்தை உங்கள் தலைமுறைகள் பார்க்கும்படிக்கு,
அவர்களுக்காகக் காத்துவைப்பதற்கு அதிலே
ஒருநாழி நிரம்ப எடுத்துவை என்பதுதான் என்
ஙங றுன். — பின்னையும் மோசே ஆரோனுடனே,
[2]நீ ஒரு பாத்திரத்தை வாங்கி, அதிலே ஒருநாழி
மன்னுவைப் போட்டு, அதை உங்கள் தலைமு
றைகளுக்காகக் காப்பதற்குக் கர்த்தருக்குமுன்
ஙச பாக வை என்றுன்.—கர்த்தர் மோசேக்குக் கற்
பித்தபடியே அது காக்கப்படும்படிக்கு, ஆரோன்
ஙடு அதைச் சாட்சிக்குமுன்பாக வைத்தான்.—[3]இஸ்
ரவேல் புத்திரர் குடியிருப்பான தேசத்திற்கு
வரும்மட்டும் நாற்பது வருஷம் மன்னுவைப் பு
சித்தார்கள்; அவர்கள் கானுன்தேசத்தின் எல்லை
யில் வரும்மட்டாகத்தானே மன்னுவைப் புசித்
ஙகூ தார்கள். — ஒருநாழியோவென்றுல், மரக்காலி
லே பத்தில் ஒரு பங்காயிருக்கின்றது.

## யஎ. அதிகாரம்.

க. இரவீதிமிலே சனங்கள் தண்ணீரில்லாமல் முறுமுறுக்கிறது. டு பராபரன் மோசேயை ஓரேபிலே கல்மலையில் தண்ணீர் ஊறும்படிசெய்ய அனுப்பினது. அ. மோசே தன் கைகளை ஏறெடுத்ததால், ஆமலேக் தோற்றுப்போனது. யடு. மோசே பலிபீடத்தைக் கட்டிக் கர்த்தர் என்னுடைய கொடியென்று பெயர்கொடுத்தது.

க பிற்பாடு இஸ்ரவேல் புத்திரரின் சபையெல்லாம்
சீன்வனாந்தரத்திலிருந்து பயணம் புறப்பட்டு,
கர்த்தருடைய கட்டளையின்படியே பண்ணும்
தங்கள் பயணங்களில் இரவீதிமிலே வந்து பாள
யமிறங்கினுர்கள்; அங்கே சனம் குடிக்கத் தண்
உ ணீர் இல்லாதிருந்தது.—அப்பொழுது சனம் மோ
சேயோடே வாதுபண்ணி, நாங்கள் குடிக்கிற
தற்கு எங்களுக்குத் தண்ணீர் தாருங்களென்றுர்
கள்; மோசேயோவென்றுல் அவர்களுடனே,
என்னேடே ஏன் வாதுபண்ணுகிறீர்கள்? கர்த்த
ங ரை ஏன் பரிட்சைபார்க்கிறீர்களென்றுன். —
ஆனுல் சனம் அவ்விடத்திலே தண்ணீர்த் தவன
மாயிருந்தபடியினுலே, சனம் மோசேக்கு விரோ
தமாக முறுமுறுத்து, நீர் எங்களையும் எங்கள் பிள்
ளைகளையும் எங்கள் ஆடுமாடுகளையும் தண்ணீர்த்
தவனத்தினுலே கொன்றுபோட எங்களை எகிப்தி
லிருந்து வந்து ஏறப்பண்ணினதேதென்றுர்கள்.
மோசே கர்த்தரை நோக்கிக் கூப்பிட்டு, இந்தச் ச
சனத்திற்கென்னசெய்வேன்? [4]அவர்கள் என்
னைக் கல்லெறியச்சற்றுத் தப்புமென்றுன் —அப் டு
பொழுது கர்த்தர் மோசேயோடே சொன்னதா
வது: நீ சனத்திற்குமுன்பாக நடந்து, இஸ்ரவேல்
மூப்பரில் சிலரை உன்னேடேகூட்டி, நீ ஆற்
றை அடித்த உன் கோலை உன் கையிலே பிடித்
துக்கொண்டு போ.—இதோ, நாம் அங்கே ஓரேபி கூ
லே உனக்குமுன்பாகக் கல்மலையின்மேல் நிற்
போம்; அங்கே கல்மலையை அடிப்பாயாக; அப்
பொழுது சனம் குடிக்க, அதிலிருந்து தண்ணீர்
புறப்படுமென்றுர்; இப்படியே மோசே இஸ்ர
வேலருடைய மூப்பரின் கண்களுக்குமுன்பா
கச் செய்தான்.—இஸ்ரவேல் புத்திரருடைய வா எ
தின்நிமித்தமும், கர்த்தர் எங்கள் நடுவில் இருக்கி
றுரோ இல்லையோ என்று, அவர்கள் கர்த்தரைப்
பரிட்சை பார்த்ததின்நிமித்தமும், அவன் அந்த
ஸ்தலத்திற்கு [5]மாசா என்றும் மெரிபாவென்றும்
பெயரிட்டான்.
ஆமலேக்கியர் வந்து இரவீதிமிலே இஸ்ரவே அ
லரோடே யுத்தம்பண்ணினுர்கள். — அப்பொ கூ
ழுது மோசே யோசுவாவுடனே, நீ நமக்கு மனி
தரைத் தெரிந்துகொண்டு புறப்பட்டு, ஆமலேக்கு
க்கு விரோதமாக யுத்தம்பண்ணு; நாளைக்கு நான்
மேட்டினுடைய சிகரத்தின்மேலே பராபரனு
டைய கோலை என் கையில் பிடித்துக்கொண்டு
நிற்பேன் என்றுன்.—மோசே தனக்குச் சொன் ய
னபடியே யோசுவா ஆமலேக்குக்கு விரோதமாக
யுத்தம்பண்ணும்படிக்குச் செய்தான்; ஆனுல்
மோசேயும் ஆரோனும் ஊரும் மேட்டினுடைய
சிகரத்தின்மேல் ஏறினுர்கள்.—அப்பொழுது சம் யக
பவித்ததேதென்றுல், மோசே தன் கையை ஏறெ
டுத்திருக்கையில் இஸ்ரவேல் மேல்கொண்டது;
ஆனுல் அவன் தன் கையைத் தாழவிடுகையில்,
ஆமலேக் மேல்கொண்டது.—மோசேயின் கைக யஉ
ளோவென்றுல் பாரமாயின; ஆகையால் ஒரு
கல்லைக் கொண்டுவந்து அவன் கீழே வைத்தார்
கள்; அதின்மேல் உளுக்காந்தான்; ஆரோனும்
ஊருமோவெனில் ஒருவன் இந்தப்பக்கமும்
ஒருவன் அந்தப்பக்கமுமாயிருந்து, அவன் கை
களைத் தாங்கினுர்கள்; இந்த அடைவாய் அவன்
கைகள் சூரியன் அஸ்தமிக்கும்மட்டும் ஒரு நேரா
யிருந்தன.—அப்படியே யோசுவா ஆமலேக்கை யங
யும் அவன் சனத்தையும் பட்டையத்தின் கருக்
கினுலே முறிய அடித்தான்.—[6]பிற்பாடு கர்த்தர் யச
மோசேயுடனே, நீ இதை நினைவுகூருதலுக்காக
ஒரு புத்தகத்தில் எழுதி, யோசுவாவின் செவிக
ளுக்கு ஒப்புவி; ஏனெனில் ஆமலேக்கை வானத்
தின்கீழிராதபடிக்கு நாசம்பண்ணவே பண்ணு
வோமென்றுர்.—மோசே ஒரு பீடத்தைக் கட்டி, யடு
அதற்கு, கர்த்தர் என்னுடைய கொடியென்று

1 ச மோ. யக. எ.—2 எபி கூ. ச.—3 யோசு. டு. யஉ.—4 ச மோ. யச ய.
5 சங். கூடு. அ, கூ.—6 டு மோ. உடு. யஎ, யகூ. க சமு. யடு. உக.

௰௬ பேரிட்டு,—ஆமலேக்கின் கை கர்த்தருடைய
ஆசனத்திற்கு விரோதமானபடியினாலே, கர்த்த
ரின் யுத்தம் தலைமுறை தலைமுறையாக அவனுக்
கு விரோதமாக இருக்குமென்றான்.

## ௰௮. அதிகாரம்.

௧. மோசேயின் மனைவியையும் இரண்டு குமாரரையும் எத்திரோ கூட்டிக்கொண்டுவந்தது. ௭. மோசே அவனுக்கு உபசாரம்செய்தது. ௰௩. எத்திரோவின் ஆலோசனை அங்கிகரிக்கப்பட்டது. ௨௭. எத்திரோ போய்விட்டது.

௧ பராபரன் மோசேக்கும் தமது சனமாகிய இஸ்ர
வேலுக்கும் செய்ததெல்லாவற்றையும் கர்த்தர்
இஸ்ரவேலை எகிப்திலிருந்து புறப்படப்பண்
ணினதையும் [1]மீதியானில் ஆசாரியனாயிருக்கிற
மோசேயின் மாமனாகிய எத்திரோ கேட்டபொ
௨ ழுது,— அவன் [2]மோசே திரும்பத் தன்னண்
டைக்கனுப்பி இருந்த அவன் பெண்சாதியாகிய
௩ சிப்போராளையும்,—அவளுடைய இரண்டு குமா
ரரையும் கூட்டிக்கொண்டு பயணப்பட்டான்;
[3]ஒருவன் பேர் கேர்சோன்; ஏனென்றால் அந்நிய
௪ தேசத்திலே பரதேசியானேனென்றான். — மற்
றவன் பேர் எலியேசர்; ஏனென்றால் என் பிதா
வின் பராபரன் என் துணையாயிருந்து, என்னைப்
பார்வோனின் பட்டையத்திற்குத் தப்புவித்தா
௫ ரென்றான்.—மோசேயின் மாமனாகிய எத்திரோ
அவன் குமாரரோடும் அவன் பெண்சாதியோ
டும்கூட மோசே பாளயம்போட்டிருந்த பராபர
னுடைய பர்வதம் இருக்கும் வனாந்தரத்திலே
௬ அவனண்டையில் வந்து,-எத்திரோ என்ற உன்
மாமனாகிய நானும் உன் பெண்சாதியும் அவ
ளோடேகூட அவளுடைய இரண்டு குமாரரும்
உன்னண்டைக்கு வந்தோமென்று மோசேக்குச்
௭ சொல்லி அனுப்பினான்.—அப்பொழுது மோ
சே தன் மாமனுக்கு எதிர்கொண்டுபோய், அவ
னை வணங்கி முத்தம்செய்தான்; ஒருவரை ஒரு
வர் சுகமுண்டோவென்று கேட்டு, கூடாரத்தி
௮ லே வந்தார்கள்.—பிற்பாடு மோசே தன் மாம
னுக்குக் கர்த்தர் இஸ்ரவேலுக்காகப் பார்வோ
னுக்கும் எகிப்தியருக்கும் செய்தவை எல்லா
வற்றையும் வழியிலே தங்களுக்கு நேரிட்ட
எல்லா வருத்தத்தையும் கர்த்தர் தங்களை நீங்கலாக்
௯ கி விடுவித்ததையும் விவரித்தான்.—கர்த்தர் இஸ்
ரவேலை எகிப்தியரின் கைக்குத் தப்புவித்து, அ
தற்குச் செய்த எல்லா நன்மையின் நிமித்தமும்
எத்திரோ சந்தோஷப்பட்டுச் சொன்னதாவது:-
௰ உங்களை எகிப்தியரின் கைக்கும் பார்வோனின்
கைக்கும் தப்புவித்து, எகிப்தியருடைய கையின்
கீழிருந்த சனத்தை விடுவித்த கர்த்தர் ஸ்தோத்தி
௰௧ ரிக்கப்பட்டவர்.—கர்த்தர் எல்லாத் தேவர்களை
யும் பார்க்கப் பெரியவரென்பதை இப்பொழுது
அறிவேன்; ஏனெனில் அவர்கள் இடும்புசெய்த
காரியத்திலே அவர்களை மேல்கொண்டாரென்று
௰௨ சொல்லி,—மோசேயின் மாமனாகிய எத்திரோ
சர்வாங்கதகனத்தையும் பலிகளையும் பராபரனுக்
குக் கொண்டுபோய்ச் செலுத்தினான்; பிற்பாடு
ஆரோனும் இஸ்ரவேல் மூப்பர் அனைவரும் மோ
சேயின் மாமனோடேகூடப் பராபரனுக்குமுன்
பாக அப்பம்புசிக்கவந்தார்கள்.

மறுநாளிலே சம்பவித்ததேதெனில், மோசே ௰௩
சனத்தை நியாயம்விசாரிக்க உளுக்காந்தான்;
சனம் காலமே துவக்கிச் சாயங்காலம்மட்டும்
மோசேக்குமுன்பாக நின்றது.—அவன் சனத்திற் ௰௪
காகச் செய்ததையெல்லாம் மோசேயின் மாமன்
கண்டு, நீ சனத்திற்காகச் செய்கிற இந்தக் காரிய
மென்ன? நீ ஒருவனே உளுக்காந்திருக்கச் சன
மெல்லாம் காலமேதுவக்கிச் சாயங்காலம்மட்
டும் உனக்குமுன்பாக நிற்பானேனென்றான்.—
அப்பொழுது மோசே தன் மாமனுக்குச் சொன் ௰௫
னது: பராபரனைக் கேட்கச் சனம் என்னண்டை
க்கு வரும்.—ஏனெனில் அவர்களுக்கு ஒருகாரி ௰௬
யம் இருந்தால், என்னண்டைக்கு வருகிறார்கள்;
அப்பொழுது நான் அவனவனுக்கும் அவனவ
னுக்கடுத்தவனுக்கும் நியாயம்தீர்த்து, பராபரனு
டைய கட்டளைகளையும் அவருடைய நியாயப்
பிரமாணங்களையும் அறிவிக்கிறேனென்றான்.—
அப்பொழுது மோசேயின் மாமன் அவனோடே ௰௭
சொன்னதாவது: நீ செய்கிற காரியம் நல்ல
தல்ல.—நீயும் தொய்யவே தொய்ந்துபோகிறாய்; ௰௮
உன்னோடிருக்கிற இந்தச் சனமும் அப்படித்
தான்; ஏனென்றால் அது உனக்கு மிஞ்சின பா
ரமானகாரியம்; நீ ஒருவனாய் அதைச் செய்யக்
கூடாது. — இப்பொழுதும் என் சொல்லைக் ௰௯
கேள்; உனக்கு ஒரு ஆலோசனை சொல்லுவேன்;
அப்பொழுது பராபரன் உன்னோடுகூட இருப்
பார்; சனத்திற்காக நீ பராபரனுக்குமுன்பாக
இரு; நீ விசேஷங்களைப் பராபரனண்டைக்குக்
கொண்டுபோய், — கட்டளைகளையும் நியாயப் ௨௰
பிரமாணங்களையும் அவர்களுக்கு வெளிப்படுத்
தி, அவர்கள் நடக்கவேண்டிய வழியையும் அ
வர்கள் செய்யவேண்டிய கிரியையையும் அவர்க
ளுக்குத் தெரியப்பண்ணுவாயாக.-ஆனால் நீ எல் ௨௧
லாச்சனத்திலும் பராபரனுக்குப் பயந்தவர்களும்
உண்மையுள்ளவர்களும் பொருளாசையைப்
பகைக்கிறவர்களுமான திறமையுள்ள மனித
ரைப் பார்த்து, அவர்களை அவர்கள்மேல் ஆயிரம்
பேருக்கு அதிபதிகளாகவும் நூறுபேருக்கு அதி
பதிகளாகவும் ஐம்பதுபேருக்கு அதிபதிகளாக
வும் பத்துப்பேருக்கு அதிபதிகளாகவும் வை.—
அவர்கள் சகல காலத்திலும் சனத்தை நியாயம் ௨௨
விசாரித்து, சகல பெரியகாரியத்தையும் உன்
னண்டைக்குக் கொண்டுவந்து, சகல சிறிய கா
ரியத்தையும் தாங்கள்தானே தீர்க்கக்கடவர்கள்;
இப்படி உன்மேல் இருக்கிற பாரத்தை லகுவாக்
கு, அவர்கள் உன்னோடேகூடச் சுமப்பார்க
ளாக.—இந்தப்பிரகாரமாக நீ செய்வதும் இப் ௨௩
படிப் பராபரன் உனக்குக் கட்டளையிடுவதும்
உண்டானால், நீ தரித்திருக்கக்கூடும்; இந்த எல்
லாச் சனமும் சுகமாய்த் தங்களிடத்திற்கு வந்து
சேரலாமென்றான்.

1 ௨ மோ. ௪. ௧.—2 ௨ மோ. ௪. ௨௰.—3 ௨ மோ. ௨. ௨௨.

௨௪ மோசே தன் மாமன் சொல்கேட்டு, அவன்
௨௫ சொன்னபடி எல்லாம் செய்தான்.-மோசே இஸ்
ரவேலரிலெல்லாம் திறமையுள்ள மனிதரைத்
தெரிந்துகொண்டு, அவர்களை ஆயிரம்பேருக்கு
அதிபதிகளாகவும் நூறுபேருக்கு அதிபதிகளாக
வும் ஐம்பதுபேருக்கு அதிபதிகளாகவும் பத்துப்
பேருக்கு அதிபதிகளாகவும் சனத்தின் மேலே
௨௬ தலைவராக்கினான்.—அவர்கள் சகல காலத்திலும்
சனத்தை நியாயம்விசாரிப்பார்கள்; பலத்த காரி
யத்தை மோசே அண்டைக்குக் கொண்டுவந்து,
சிறிய காரியத்தை எல்லாம் தாங்கள்தானே தீர்ப்
௨௭ பார்கள்.—பிற்பாடு மோசே தன் மாமனை அனுப்
பிவிட்டான்; இவன் திரும்பத் தன் தேசத்திற்
குப் போய்விட்டான்.

## ௰௯. அதிகாரம்.

௧. இஸ்ரவேல் சனங்கள் சீனாய்பர்வதத்திற்கு வந்தது. ௩. அவர்களுக்குப் பர்வதத்திலிருந்து மோசேயைக்கொண்டு பராபரன் அனுப்பிய தூது. ௮. அவர்கள் மறுமொழி அனுப்பினது. ௰. மூன்றும் நாளுக்கு அவர்கள் ஆயத்தமாய் இருந்தது. ௰௨. அம்மலை தொடப்படாதிருக்கவேண்டுமென்பது. ௰௬. பராபரனுடைய பயங்கரமான தோற்றம் மலையின் மேலிருந்தது.

௧ இஸ்ரவேல் புத்திரர் எகிப்துதேசத்திலிருந்து
புறப்பட்ட மூன்றாம்மாதமாகிற அன்றுதானே
௨ சீனாய்வனாந்தரத்திலே வந்தார்கள். — அவர்கள்
இரவீதிமிலிருந்து பயணம்புறப்பட்டு, சீனாய்வ
னாந்தரத்திலே வந்து, வனாந்தரத்திலே பாளயமிற
ங்கினார்கள்; அங்கே பர்வதத்திற்கெதிராக இஸ்ர
௩ வேல் பாளயம் இறங்கினபொழுது, — மோசே
பராபரனண்டைக்கேறினான்; கர்த்தர் பர்வதத்
திலிருந்து அவனைக் கூப்பிட்டுச் சொன்னதா
வது: நீ யாக்கோபு வீட்டாருக்குச் சொல்லவும்
இஸ்ரவேல் புத்திரருக்கு அறிவிக்கவும் வேண்
௪ டியதேதெனில், — நாம் எகிப்தியருக்குச் செய்
ததையும் [1]நாம் உங்களைக் கழுகுகளுடைய செட்
டைகளின்மேலே சுமந்து, உங்களை நம்மண்டை
௫ யில் சேர்த்ததையும் நீங்கள் கண்டீர்கள். — இப்
பொழுதும் நீங்கள் நமது சத்தத்தைக் கேட்கவே
கேட்டு, நமது உடம்படிக்கையைக் கைக்கொண்
டால், சகல சனசதளங்களிலும் [2]நீங்கள் நமக்
குச் சொந்த சம்பத்தாயிருப்பீர்கள்; ஏனெனில்
௬ பூமியெல்லாம் நம்முடையது.—நீங்கள் நமக்கு
[3]ஆசாரிய இராசாங்கமும் பரிசுத்த சாதியுமாய்
இருப்பீர்களென்பது, நீ இஸ்ரவேல் புத்திரரோ
டே சொல்லவேண்டிய வார்த்தைகளென்றார்.
௭ மோசே வந்து சனத்தின் மூப்பரை அழைப்
பித்து, கர்த்தர் தனக்குக் கற்பித்த இந்த வார்த்தை
களை எல்லாம் அவர்களுக்குமுன்பாகச் சொன்
௮ னான்.—அப்பொழுது சனமெல்லாம் ஏகமாய்ப்
பிரதியுத்தாரம்கொடுத்து, [4]கர்த்தர் சொன்னவை
களை எல்லாம் செய்வோமென்றார்கள்; மோசே
சனத்தின் வார்த்தைகளைக் கர்த்தரண்டைக்குத்
திரும்பக் கொண்டுபோனான்.
௯ அப்பொழுது கர்த்தர் மோசேயுடனே, இதோ,
நாம் உன்னோடே சொல்லும் வார்த்தைகளைச்
சனம் கேட்டு, உன்னையும் என்றைக்கும் விசு
வாசிக்கும்படிக்கு, நாம் மேகத்தின் இருட்டி
லே உன்னண்டைக்கு வருவோமென்றார்; ஏ
னெனில் சனத்தின் வார்த்தைகளை மோசே கர்த்
தருக்கு அறிவித்திருந்தான்.—பின்னையும் கர்த்தர் ௰
மோசேயோடே சொன்னதாவது: நீ சனத்தண்
டைக்குப் போய், இன்றைக்கும் நாளைக்கும் அ
வர்களைப் பரிசுத்தமாக்கு; அவர்கள் தங்கள் வஸ்
திரங்களை வெளுத்து,-மூன்றாம் நாளைக்கு ஆயத் ௰௧
தப்பட்டிருக்கக்கடவர்கள்; ஏனென்றால் மூன்
றாம்நாளிலே கர்த்தர் எல்லாச் சனத்தின் கண்க
ளுக்குமுன்பாகச் சீனாய்பர்வதத்தின்மேல் இறங்
குவார். — நீ சனத்திற்குச் சுற்றிலும் எல்லை ௰௨
குறித்து, [5]பர்வதத்தில் ஏறாதபடிக்கும், அதின்
அடிவாரத்தைத் தொடாதபடிக்கும், எச்சரிக்கை
யாய் இருங்களென்று சொல்லுவாயாக; ஏனெ
னில் பர்வதத்தைத் தொடுகிறவனெல்லாம் கொ
லையுண்ணவே கொலையுண்பான்.—ஒரு கையா ௰௩
லும் அதைத் தொடவேண்டாம்; மிருகமானா
லும் மனிதனானாலும் சரி, அதைத் தொட்டால்
உயிரோடே வைக்கப்படாமல் கல்லெறியுண்
ணவே எறியுண்டு, அல்லது எய்யவே எய்யுண்டு
சாவவேண்டும்; எக்காளம் நெடுந்தொனியாகத்
தொனிக்கையிலே அவர்கள் பர்வதத்திலே ஏறக்
கடவர்களென்றார்.
அப்படியே மோசே பர்வதத்திலிருந்து சனத் ௰௪
தண்டைக்கு இறங்கி, சனத்தைப் பரிசுத்தமாக்
கினான்; அவர்கள் தங்கள் வஸ்திரங்களை வெ
ளுத்தார்கள். — அவன் சனத்துடனே, மூன்றாம் ௰௫
நாளைக்கு ஆயத்தப்பட்டிருங்கள், பெண்சாதி
யைச் சேராதிருங்களென்றான்.
மூன்றாம் நாளிலே விடியற்காலமாகிறபொ ௰௬
ழுது சம்பவித்ததேதெனில், இடிமுழக்கங்களும்
மின்னல்களும் பர்வதத்தின்மேல் கனமேக
மும் மகா பலத்த எக்காளசத்தமும் உண்டாயின;
பாளயத்திலிருந்த சனமெல்லாம் நடுங்கின. —
அப்பொழுது மோசே சனத்தைப் பராபரனுக்கு ௰௭
எதிர்கொண்டு போக, பாளயத்திலிருந்து புறப்
படப்பண்ணினான்; [6]அவர்கள் பர்வதத்தின்
அடியிலே தாழத் தரித்து நின்றார்கள். — கர்த்தர் ௰௮
சீனாய்பர்வதத்தின்மேல் அக்கினியில் இறங்கின
படியினாலே, அவை எல்லாம் புகைக்காடாய் இ
ருந்தன; அதின் புகை சூளையின் புகையைப்போ
ல எழும்பிற்று; பர்வதமெல்லாம் மிகவும் அதிர்ந்
தது. — எக்காளசத்தம் வரவர மிகவும் பலமா ௰௯
யிற்று; மோசே பேசினான், பராபரன் அவனுக்
குச் சத்தமாய் மறுமொழி கொடுத்தார்.—கர்த்தர் ௨௰
சீனாய்பர்வதத்தின்மீதில் இருக்கிற கொடுமுடி
யிலே இறங்கினபொழுது, கர்த்தர் மோசேயைப்
பர்வதத்தின் கொடுமுடியிலே வரவழைத்தார்;
மோசே ஏறினான்.—அப்பொழுது கர்த்தர் மோ ௨௧
சேயோடே சொன்னதாவது: சனம் கர்த்தரண்
டைக்கு ஏறிப்பார்க்கிறதற்கு, எல்லையைக் கட
வாதபடிக்கும், அவர்களில் அநேகர் விழுந்து
போகாதபடிக்கும், நீ இறங்கி அவர்களைத் திடச்

1 இ. மோ. ௧௨. ௰௧.—2 ௫ மோ. ௭. ௯.—3 ௧ பே. ௨. ௯.
4 ௨ மோ. ௨௪. ௩.—5 எபி. ௰௨. ௰௮.—6 இ. மோ. ௪. ௰௧.

உஉ சாட்சியாக எச்சரி.—கர்த்தரண்டையிலே சேரு
கிற ஆசாரியர்களும், கர்த்தர் தங்களுக்குள்ளே
அழிக்குதல் செய்யாதபடிக்கு, தங்களைப் பரி
உங சுத்தமாக்கக்கடவர்களென்றார்.— அப்பொழுது
மோசே கர்த்தருடனே, சனம் சீனாய்பர்வதத்தில்
ஏறமாட்டாது; ஏனெனில் பர்வதத்தை எல்லை
பிரித்து, அதைப் பரிசுத்தமாக்கென்று தேவரீர்
எங்களைத் திடச்சாட்சியாய் எச்சரித்தீர் என்
உச றான். — ஆனால் கர்த்தர் மோசேயுடனே, இறங்
கிப்போ; நீயும் உன்னோடேகூட ஆரோனுமாய்
ஏறிவரக்கடவீர்கள்; ஆசாரியர்களும் சனமுமோ
வென்றால், கர்த்தர் தங்களுக்குள்ளே அழிக்கு
தல் செய்யாதபடிக்கு, அவரண்டைக்கு ஏற எல்
உரு லையைக் கடவாதிருப்பார்களாக என்றார்.—அப்
படியே மோசே சனத்தண்டைக்கு இறங்கி,
அதை அவர்களுக்குச் சொன்னான்.

## உ௰. அதிகாரம்.

க. பத்துக்கற்பனைகள். யஅ. அந்தச் சனங்கள் பயப்பட்டது. உ௰. மோசே அவர்களுக்கு ஆறுதல்பேசினது. உஉ. விக்கிரகஆராதனை விலக்கப்பட்டது. உச. இவ்விதமாகப் பலிபீடம் இருக்கவேண்டுமென்பது.

க அப்பொழுது பராபரன் பேசிச் சொன்ன
எல்லா வார்த்தைகளுமாவது:
உ [1]உன்னை அடிமைவீடாகிய எகிப்துதேசத்தி
லிருந்து புறப்படப்பண்ணின உன் பராபரனா
ங கிய கர்த்தர் நாமே.—நமக்குமுன்பாக உனக்கு
வேறு தேவர்கள் உண்டாயிருக்கவேண்டாம்.
ச உயர வானத்திலும் கீழே பூமியிலும் பூமியின்
கீழ்த் தண்ணீரிலும் உண்டானவைகளுக்கு ஒத்
திருக்கிற [2]ஒரு சுரூபத்தையாகிலும் யாதொரு
விக்கிரகத்தை என்கிலும் நீ உனக்கு உண்டாக்க
ரு வேண்டாம்.— நீ அவைகளை நமஸ்கரிக்கவும் அ
வைகளைச் சேவிக்கவும் வேண்டாம்; ஏனென்
றால் உன் பராபரனாகிய கர்த்தராயிருக்கிற நாம்
எரிச்சலுள்ள தேவனாயிருந்து, நம்மைப் பகைக்
கிறவர்களுக்கோவென்றால் பிதாக்களுடைய அ
நியாயத்தைப் பிள்ளைகளிடத்திலே மூன்றும்
நான்காம் தலைமுறைமட்டும் விசாரிக்கிறவரா
சா யிருக்கிறோம்.—ஆனால் நம்மைச் சிநேகித்து, நம்
முடைய கற்பனைகளைக் கைக்கொள்ளுகிறவர்க
ளுக்கு, ஆயிரம் தலைமுறைமட்டும் தயவுசெய்
கிறவராயிருக்கிறோம்.
எ உன் பராபரனாகிய கர்த்தருடைய நாமத்தை
வீணிலே வழங்காயாக; ஏனென்றால் கர்த்தர் தம்
முடைய நாமத்தை வீணிலே வழங்குகிறவனைத்
தண்டியாமல் விடார்.
அ ஓய்வுநாளைப் பரிசுத்தமாக்க நினைப்பாயாக.—
கூ ஆறுநாள் நீ வேலைசெய்து, உன் கிரியையை எல்
ய லாம் நடப்பிப்பாயாக.—ஆனால் ஏழாம்நாள் உன்
பராபரனாகிய கர்த்தருடைய ஓய்வுநாள்; அதிலே
நீயானாலும் உன் குமாரனானாலும் உன் குமாரத்
தியானாலும் உன் வேலைக்காரனானாலும் உன்
வேலைக்காரியானாலும் உன் மிருகஜீவனானாலும்
உன் வாசல்களிலிருக்கிற உன் பரதேசியானா
லும் யாதொரு வேலையைச் செய்யவேண்டாம்.—

ஏனென்றால் கர்த்தர் ஆறுநாளுக்குள்ளே வானத் யக
தையும் பூமியையும் சமுத்திரத்தையும் அவைக
ளிலுள்ள எல்லாவற்றையும் உண்டாக்கி, [3]ஏ
ழாம் நாளிலே ஓய்ந்திருந்தார்; ஆகையால் கர்த்தர்
ஓய்வுநாளை ஆசீர்வதித்து அதைப் பரிசுத்தமாக்
கினார்.
உன் பராபரனாகிய கர்த்தர் உனக்குக் கொடுக் யஉ
கிற தேசத்திலே உன் நாள்கள் நீடித்திருக்கிற
தற்கு, உன் தகப்பனையும் உன் தாயையும் கனம்
பண்ணுவாயாக.
கொலைசெய்யாயாக. யங
விபசாரம்பண்ணாயாக. யச
களவுசெய்யாயாக. யரு
உனக்கடுத்தவனுக்கு விரோதமாகப் பொய்ச் யசா
சாட்சி சொல்லாயாக.
உனக்கடுத்தவன் வீட்டை இச்சியாயாக; உ யஎ
னக்கடுத்தவனுடைய பெண்சாதியையும் அவனு
டைய வேலைக்காரனையும் அவனுடைய வேலைக்
காரியையும் அவனுடைய எருதையும் அவனு
டைய கழுதையையும் பின்னையும் உனக்கடுத்த
வனுக்குள்ள யாதொன்றையும் இச்சிக்காயாக
என்றார்.
சனமெல்லாம் இடிமுழக்கங்களையும் மின் யஅ
னல்களையும் எக்காள சத்தத்தையும் பர்வதம் புகை
கிறதையும் கண்டார்கள்; அதைக் காண்கையில்,
சனம் பின்வாங்கி, தூரத்திலே நின்று,—மோசே யகூ
யுடனே, நீர் எங்களோடே பேசும், நாங்கள்
கேட்போம்; நாங்கள் சாவாதபடிக்குப் பரா
பரன் எங்களோடே பேசாதிருப்பாராக என்றார்
கள்.—மோசே சனத்துடனே, பயப்படாதிருங் உ௰
கள்; ஏனெனில் உங்களைச் சோதிப்பதற்காகவும்,
நீங்கள் பாவம்செய்யாதபடிக்கு அவர் பயம் உங்
கள் முகத்திற்குமுன்பாக இருப்பதற்காகவும்,
பராபரன் வந்தாரென்றான்.
சனம் தூரத்திலே நின்றது; மோசேயோ உக
வென்றால் பராபரன் இருந்த இருளுக்குள்ளே
சேர்ந்துபோனான்.
அப்பொழுது கர்த்தர் மோசேயோடே சொன் உஉ
னதாவது: நீ இஸ்ரவேல் புத்திரரோடே சொல்ல
வேண்டியதேதெனில், நாம் வானத்திலிருந்து
உங்களோடே பேசினதை நீங்கள் கண்டீர்கள்.—
நீங்கள் நமக்கு முன்பாக வெள்ளித் தேவர்களை உங
யாகிலும் பொன்தேவர்களையாகிலும் உங்களுக்கு
உண்டாக்கவே உண்டாக்கவேண்டாம். — நீ உச
மண்ணான பலிபீடத்தை நமக்குண்டாக்கி, அ
தின்மேல் உன் தகனபலிகளையும் உன் சமாதான
பலிகளையும் உன் ஆடுகளையும் உன் மாடுகளை
யும் பலியிடுவாயாக; நாம் எவ்விடத்திலாகிலும்
நம்முடைய நாமத்தைப் பிரஸ்தாபம்பண்ணி
னால், அவ்விடத்தில் உன்னண்டைக்கு வந்து,
உன்னை ஆசீர்வதிப்போம்.—கல்லான பலிபீடத் உரு
தை நமக்கு உண்டாக்கப் போனாயேயாகில்,
அதை வெட்டின கல்லுகளாலே கட்டாயாக;

1 உபா. ௫. ௬. சங். அக. ௰ — 2 ௩ மோ. உ௬. ௧. சங். ௯௭. ௭.

3 ௧ மோ. உ. உ௧.

ஏனென்றால் நீ உன் உளியை அதின்மேல் நட
மாடப்பண்ணுகிறதினால், அதைப் பரிசுத்தக் கு
௨௬ லைச்சல் ஆக்குவாய்.—நமது பலிபீடத்திற்கு முன்
பாக உன் நிருவாணம் காணப்படாதபடிக்கு நீ
அதற்குப் படிகளால் ஏறவும் வேண்டாம்.

## ௨௧. அதிகாரம்.

௧. ஆண்வேலைக்காரனைக்குறித்தும், ௬. காது நொள்ளைபட்ட வேலைக்காரனைக்குறித்தும், பெண்வேலைக்காரிகளைக்குறித்தும், ௰௨. மனிதர் கொலையைக்குறித்தும், ௰௬. மனிதர்களைத் திருடுகிறவர்களைக்குறித்தும், ௰௭. தாய தந்தையரைச் சபிக்கிறவர்களைக்குறித்தும், ௰௮. அடிக்கிறவர்களைக்குறித்தும், ௨௨. தற்செயலாய் சேருகிற காயத்தைக்குறித்தும், ௨௮. ஒரு மாடு முட்டினதைக்குறித்தும், ௩௩. ஒருவனுக்குச் சேதம்வரப்பண்ணினவனைக்குறித்தும் தரப்பட்ட கட்டளை.

௧ பின்னையும் நீ அவர்களுக்கு அறியப்பண்ண
௨ வேண்டிய நியாயங்களாவது:—எபிரேய சாதி
யான அடிமையைக் கொண்டாயானால், அவன்
ஆறுவருஷம் சேவித்து, ஏழாம் வருஷத்திலே
இலவசமாகத் தன்னிச்சைக்காரனாய்ப் புறப்பட்
௩ டுப்போவானாக.—ஒண்டிக்காரனாய் வந்திருந்
தானானால், ஒண்டிக்காரனாய்ப் புறப்படுவானாக;
பெண்சாதிக்குப் புருஷனாயிருந்தானானால், அ
வன் பெண்சாதி அவனோடேகூடப் புறப்படு
௪ வாளாக.—அவன் எசமானன் அவனுக்குப் பெண்
சாதியைக் கொடுத்ததும், இவள் அவனுக்கு
ஆண்பிள்ளைகளையாகிலும் பெண்பிள்ளைகளையா
கிலும் பெற்றதும் உண்டானால், பெண்சாதி
யும் அவள் பிள்ளைகளும் அவள் எசமானனைச்
சேர்வார்களாக; அவனோ ஒருவனாய்ப் புறப்படு
௫ வானாக.—அந்த வேலைக்காரனோவென்றால், என்
எசமானனையும் என் பெண்சாதியையும் என்
பிள்ளைகளையும் சிநேகிக்கிறேன்; நான் தன்னிச்
சைக்காரனாய்ப் புறப்படுவதில்லை என்று சொல்
௬ லவே சொன்னால்,—அவன் எசமானன் அவனைத்
தேவர்களண்டைக்கு அழைத்துப்போய், அவ
னைக் கதவின்கிட்ட, அல்லது கதவின் நிலையின்
கிட்டச்சேரப்பண்ணக்கடவன்; அங்கே அவன்
எசமானன் அவன் காதைக் கம்பியினாலே குத்து
வானாக; அதற்குப்பின் என்றைக்கும் அவனுக்கு
வேலைசெய்யக்கடவன்.

௭ ஒருவன் தன் மகளை வேலைக்காரியாக விற்றுப்
போட்டானானால், அவள் வேலைக்காரர் புறப்படு
௮ கிறதுபோலப் புறப்பட ஒண்ணாது.—அவளைத்
தனக்கு நியமித்தது எசமானனின் பார்வைக்கு
ஆகாதேபோனால், அவள் மீட்கப்படட்டும்; அ
வன் அவளைத் துரோகம்பண்ணி, அவளை அந்நி
யசாதியார் கையிலே விற்றுப்போட அவனுக்கு
௯ அதிகாரமில்லை.—அவன் தன் குமாரனுக்கு அ
வளை நியமித்தானானால், குமாரத்திகளின் நியா
யத்திற்குத்தக்கதாய் அவளுக்குச் செய்யக்கட
௰ வன்.—அவனுக்கு வேறொருத்தியைக் கொண்
டானேயாகில், அவளுடைய பிழைப்பையும்
உடுப்பையும் குடிஇருப்பையும் குறைக்காமலி
௰௧ ருப்பானாக.—அவன் இந்த மூன்றும் அவளுக்குச்
செய்யாதேபோனால், அவள் கிரயமில்லாமல்
இலவசமாய்ப் புறப்படவேண்டும்.

[1]ஒருவனைச் சாக அடித்தவன் கொலையுண் ௰௨
ணவே கொலையுண்ணக்கடவன்—[2]இவன் அவ ௰௩
னுக்குச் சதிபண்ணாமல் பராபரன் அவனை
இவன் கைக்கு நேரிடப்பண்ணினாரேயாகில்,
இவன் ஓடிப்போயிருக்கும் அடைக்கலத்தை
உனக்குக் கட்டளையிடுவோம்.—ஒருவன் தனக் ௰௪
கடுத்தவனுக்கு விரோதமாக அவனைச் சர்ப்பனை
யாய்க் கொன்றுபோடும் அகங்காரத்தைப் பண்
ணினானேயானால், அவன் சாவும்படிக்கு அவனை
நம்முடைய பீடத்தண்டையிலும் இருந்து பிடித்
துக்கொண்டுபோவாயாக.—தன் தகப்பனையா ௰௫
கிலும் தன் தாயையாகிலும் அடிக்கிறவன், கொ
லையுண்ணவே கொலையுண்ணக்கடவன்.

எவனாகிலும் ஒருவன் ஒரு மனிதனைத் திருடி ௰௬
அவனை விற்றுப்போட்டால், அல்லது இவன்
அவன் கையிலே கண்டுபிடிக்கப்பட்டானானால்
அவன் கொலையுண்ணவே கொலையுண்ணக்கட
வன்.

[3]தன் தகப்பனையாகிலும் தன் தாயையாகிலும் ௰௭
சபிக்கிறவன் கொலையுண்ணவே கொலையுண்
ணக்கடவன்.—மனிதர் சண்டைபண்ணி, ஒரு ௰௮
வன் தனக்கடுத்தவனைக் கல்லினால் எறிந்து அல்
லது கையினாலே அடித்ததினாலே, இவன் சாவா
மல் கட்டில் கிடையாய் விழுந்து,—திரும்ப ௰௯
எழுந்திருந்து, வெளியிலே தன் ஊன்றுகோலைப்
பிடித்து நடமாடினால், அடித்தவன் ஆக்கினைக்கு
நீங்கலாயிருப்பான்; ஆனால் அவனுக்கு வேலை
மினக்கெட்ட நஷ்டத்தைக் கொடுத்து, அவனை
நன்றாகக் குணமாக்குவிக்கக்கடவன்.

ஒருவன் தன் அடிமையை, அல்லது தன் அடி ௨௰
மைப்பெண்ணைக் கோலினால் அடிக்கிறதினாலே,
இவர் அவன் கையின்கீழ்ச் செத்துப்போனால்,
பழிக்குப்பழி வாங்கப்படவேண்டும்.—ஒரு ௨௧
நாள் அல்லது இரண்டுநாள் இருந்தானேயாகில்,
பழிவாங்கப்படவேண்டாம்; ஏனெனில் இவன்
அவனுடைய உடைமையாய் இருந்தவன்.

மனிதர் சண்டைபண்ணி, கர்ப்பவதியான ௨௨
ஒரு ஸ்திரியை அடிக்கிறதினாலே, அவளுக்கு
வேறே சேதமில்லாமல் கர்ப்பம்விழுந்துபோ
னால், அப்பொழுது அடித்தவன் ஸ்திரியின் புரு
ஷன் தன்மேலே சுமத்துகிறதற்குத்தக்கதாய்,
தருமத்தாருடைய தீர்ப்பின்படியே தண்டம்
கொடுக்கவே கொடுக்கவேண்டும்.—வேறே சேத ௨௩
முண்டாயிற்றேயானால், நீ சீவனுக்குச் சீவன்,—
கண்ணுக்குக் கண், பல்லுக்குப் பல், கைக்குக் ௨௪
கை, காலுக்குக் கால்,—சூட்டுக்குச் சூடு, காயத் ௨௫
துக்குக் காயம், தழும்புக்குத் தழும்பு பழிகொ
டுக்கக்கடவாய்.

ஒருவன் தன் அடிமையின் கண்ணிலே, அல் ௨௬
லது தன் அடிமைப்பெண்ணின் கண்ணிலே
அடிக்கிறதினாலே அதைக் கெடுத்தால், அவன்
இவன் கண்ணுக்குப்பதிலாக இவனைத் தன்
இச்சைக்காரனாக அனுப்பிவிடவேண்டும்.—அ ௨௭
வன் தன் அடிமையின் பல்லை, அல்லது தன் அடி

1 ௩ மோ. ௬. ௧.—2 ௫ மோ. ௧௯. ௧.—3 ௩ மோ. ௨௰. ௯.

மைப்பெண்ணின் பல்லை விழப்பண்ணினால்,
அவன் இவன் பல்லுக்குப்பதிலாக இவனைத்
தன் இச்சைக்காரனாக அனுப்பிவிடவேண்டும்.
௨௮ ஒரு மாடு ஒரு ஆண்சாதியை, அல்லது ஒரு
பெண்சாதியை முட்டிப்போட்டதினாலே சா
வுண்டானால், அந்த மாடு கல்லெறியவே கல்லெ
றியப்படவும் அதின் மாம்சம் புசிக்கப்படாதே
போகவும்கடவது, அப்பொழுது மாட்டின் எச
௨௯ மானன் ஆக்கினைக்கு நீங்கலானவன். — ஆனால்
மாடு முதலே முட்டுகிறதாயிருந்து, அது அதின்
எசமானனுக்கு அறிவிக்கப்பட்டும், அவன் அ
தைப் பத்திரம்பண்ணாததினாலே, அது ஒரு ஆண்
சாதியை அல்லது ஒரு பெண்சாதியைக் கொன்
றுபோட்டால், மாடும் கல்லெறியப்படவேண்
டும், அதின் எசமானனும் கொலைசெய்யப்பட
௩௰ வேண்டும்.—மீட்புக்கு அபராதம் அவன்மேலே
சுமத்தப்பட்டதேயானால், அவன் தன் சீவனை
மீட்கும்பொருளாக, தன்மேலே சுமத்தப்பட்
௩௧ டபடி எல்லாம் செலுத்தக்கடவன்.—அது ஒரு
வன் மகனை முட்டிப்போட்டாலும் சரி, ஒரு
வன் மகளை முட்டிப்போட்டாலும் சரி, இந்த
நியாயத்தின்படியே அவனுக்குச் செய்யப்படக்
௩௨ கடவது.—மாடு ஒரு அடிமையை, அல்லது
அடிமைப்பெண்ணை முட்டிப்போட்டிருந்தால்,
அவன் இவர்களுடைய எசமானனுக்கு முப்பது
சேக்கலிடை வெள்ளியைக் கொடுக்கவும் மாடு
கல்லெறியப்படவும் வேண்டும்.
௩௩ ஒருவன் ஒரு குழியைத் திறந்துவைத்ததினா
லே, அல்லது ஒரு குழியை வெட்டி அதை மூ
டாதேபோனதினாலே, அதிலே ஒரு மாடாவது
௩௪ ஒரு கழுதையாவது விழுந்தால்,—குழிக்குடைய
வன் அதின் விலையைக் கொடுத்து, பணமாய்
அதின் எசமானனுக்குச் செலுத்தவும்கடவன்,
செத்ததோ அவனுடையதாகவேண்டியது.
௩௫ ஒருவனுடைய மாடு அவனுக்கு அடுத்தவனு
டைய மாட்டை முட்டிப்போட்டதினாலே இது
செத்தால், அவர்கள் உயிரோடிருக்கிற மாட்டை
விற்று, அதின் கிரயத்தைப் பங்கிட்டு, செத்ததை
௩௬ யும் பங்கிட்டுக்கொள்ளக்கடவர்கள்.—அல்லவெ
ன்று, அந்த மாடு முதலே முட்டுகிற மாடென்று
அறியப்பட்டிருந்தும், அதின் எசமானன் அதைப்
பத்திரம்பண்ணாதிருந்தானானால், அவன் மாட்
டுக்கு மாட்டைக் கொடுக்கவேகடவன்; செத்த
தோ அவனுடையதாகவேண்டியது.

## ௨௨. அதிகாரம்.

௧. களவைக்குறித்தது. ௯. சஷ்டத்தைக்குறித்தது. ௭. நியாயவிரோதத்தைக்குறித்தது. ௰௪. கடன்வாங்குகிறதைக்குறித்தது. ௰௬. புணர்ச்சியைக்குறித்தது. ௰௮. சூனியத்தைக்குறித்தது. ௰௯. மிருகத்தோடே புணருகிறவனைக்குறித்தது. ௨௰. விக்கிரகஆராதனையைக்குறித்தது. ௨௧. அந்நியர்களையும் கைம்பெண்சாதிகளையும் தகப்பனில்லாதவர்களையும் குறித்தது. ௨௫. அநியாயவட்டியைக்குறித்தது. ௨௬. கொதுவைகளைக் குறித்தது. ௨௮. நியாயாதிபதிக்குச் செய்யும் மரியாதையைக்குறித்தது. ௨௯. முதல்விளைச்சலைக்குறித்தது.

௧ எவனொருவன் ஒரு மாட்டை அல்லது ஒரு
ஆட்டைத் திருடி அதை அடித்தால், அல்ல
வென்று அதை விற்றுப்போட்டால், அவன் மாட்
டுக்கு ஐந்து மாடுகளையும் ஆட்டுக்கு நான்கு ஆடு
களையும் திரும்பக் கொடுக்கக்கடவன்.
திருடன் கன்னமிடுகையில் கண்டுபிடிக்கப் ௨
பட்டு அடிக்கப்பட்டுச் செத்தால், அவனுக்காக
இரத்தப்பழி சுமராது.—சூரியன் அவன்மீதில் ௩
உதித்திருந்ததேயானால், அவனுக்காக இரத்தப்
பழி சுமரும்; திருடனேவென்றால், திரும்பச்
செலுத்தவே செலுத்தக்கடவன்; அவனுக்கு இல்
லாதிருந்தால், தன் களவுக்காக விலைப்படக்கட
வன்.—அவன் திருடின மாடாகிலும், கழுதை ௪
யாகிலும், ஆடாகிலும் உயிருடனே அவன் கை
யிலே கண்டுபிடிக்கப்பட்டால், இரட்டிப்பா
கத் திரும்பச் செலுத்தக்கடவன்.
வயலையாகிலும் திராட்சத்தோட்டத்தையாகி ௫
லும் பட்டிமேய, ஒருவன் தன் மிருகசீவன்களை
வேறொருவன் நிலத்திலே விட்டால், அவன்
தன் வயலிலே நலமானதிலும் தன் திராட்சத்
தோட்டத்திலே நலமானதிலும் எடுத்து, உத்தர
வாதம்பண்ணக்கடவன். — அக்கினி எழும்பி, ௬
முள்ளுக்களிலே பற்றிக்கொண்டு, கதிர்ப்போ
ரையாகிலும்முதிர்ப்பயிரையாகிலும் நிலத்திலுள்
ளதையாகிலும் சுட்டுப்போட்டால், அக்கினி
யைக் கொளுத்தினவன் அக்கினிச் சேதத்திற்கு
உத்தரவாதம் பண்ணவேண்டும்.
ஒருவன் தனக்கடுத்தவன் வசத்திலே திரவி ௭
யத்தையாகிலும் உடைமைகளையாகிலும் அடை
க்கலமாக வைத்திருக்கும்போது அது அவன்
வீட்டிலிருந்து திருடப்பட்டுப்போனால், அப்
பொழுது திருடன் அகப்பட்டானேயாகில், அ
வன் இரட்டிப்பாகத் திரும்பச் செலுத்தவேண்
டும்.—திருடன் அகப்படாதே போனால், அப் ௮
பொழுது அந்த வீட்டுக்காரன் தனக்கடுத்தவனு
டைய பொருளின்மேலே தன் கையைப் போட்
டதில்லையோ என்பதற்காக, [1]தேவர்களண்டை
க்குக் கொண்டுபோகப்படக்கடவன். — ஒரு ௯
மாட்டுக்காகிலும் கழுதைக்காகிலும் ஆட்டுக்கா
கிலும் வஸ்திரத்திற்காகிலும் ஒருவன் தன்னு
டையதென்று சொல்லுகிற காணாமல்போன யா
தொரு பொருளுக்காகிலும் அடுத்த அநியாயத்
தினுடைய யாதொரு விசேஷமிருந்தால், இரு
திறத்தாருடைய நியாயம் தேவர்களண்டைக்கு
வரக்கடவது; தேவர்கள் எவனைக் குற்றவாளிக
ளென்று தீர்க்கிறார்களோ, அவன் தனக்கடுத்த
வனுக்கு இரட்டிப்பாகத் திரும்பச் செலுத்தக்
கடவன்.
ஒருவன் தனக்கடுத்தவன் வசத்தில் ஒரு கழு ௰
தை, மாடு, ஆடு, முதலான மிருகசீவனை அடைக்
கலமாக விட்டிருக்கும்போது அது செத்தால்,
அல்லது சேதப்பட்டால், அல்லது ஒருவரும்
காணாமல் ஓட்டிக்கொண்டுபோகப்பட்டால்,—
அப்பொழுது அவன் தன் கையைத் தனக்கடுத்த ௰௧
வனுடைய பொருளின்மேலே போட்டதில்லை

1 ௨ Cor. ௨௧. ௬.

யோ என்பதற்காக, கர்த்தருடைய ஆணை இரு
வருக்குள்ளும் நடுவறுக்கக்கடவது; ஆகில் அ
தின் எசமானன் அதை ஏற்றுக்கொள்ளவேண்டும்;
௰௨ மற்றவன் கொடுக்கத் தேவையில்லை. — அது
அவன் வசத்திலிருந்து திருடப்பட்டுப் போயிற்
றேயானால், அவன் அதின் எசமானனுக்கு அதற்
௰௩ காக உத்தரவாதம்பண்ணக்கடவன்.—அது பீ
றப்பட்டதேயானால், அதற்குச் சாட்சியை
ஒப்புவிப்பானாக, பீறுண்டதற்காக அவன் உத்
தரவாதம் பண்ணத்தேவையில்லை.
௰௪ ஒருவன் தனக்கடுத்தவன் கையில் இரவலாக
வாங்கினது அதின் எசமானனண்டையில் இரா
திருக்கும்போது சேதப்பட்டால், அல்லது செத்
துப்போனால், அவன் உத்தரவாதம்பண்ணக்க
௰௫ டவன்.—அதின் எசமானன் அண்டையில் இருந்
தானேயாகில், இவன் உத்தரவாதம்பண்ணுவ
தில்லை; அது கொடைக்கூலிக்கு வாங்கப்பட்
டிருந்ததானால், அது அவன் கொடைக்கூலிக்கு
வந்த சேதம்
௰௬ நியமிக்கப்படாத ஒரு கன்னியாஸ்திரியை
ஒருவன் மோசம்போக்கி அவளோடே சயனித்
தால், அவன் அவளுக்காகப் பரியம்கொடுக்க
வே கொடுத்து, அவளை விவாகம்பண்ணவேண்
௰௭ டும்.—அவள் தகப்பன் அவளை இவனுக்குக்
கொடுக்கமாட்டோம் என்றானேயாகில், இவன்
கன்னியாஸ்திரிகளுக்காகக் கொடுக்கப்படுகிற
பரியமுறைமையின்படியே திரவியம் நிறுத்துக்
கொடுக்கவேண்டும்.
௰௮ சூனியக்காரியை நீ உயிரோடே வைக்கவே
ண்டாம்.
௰௯ [1]மிருகத்தோடே புணர்ச்சிபண்ணுகிறவனெ
ல்லாம் கொலையுண்ணவே கொலையுண்ணக்கட
வன்.
௨௰ கர்த்தர் ஒருவருக்கே ஒழிய வேறே தேவர்க
ளுக்குப் பலியிடுகிறவன் சங்கரிக்கப்படக்கட
வன்.
௨௧ [2]பரதேசியைச் சிறுமைப்படுத்தாமலும் ஒடுக்
காமலும் இருப்பாயாக; ஏனெனில் நீங்கள் எகிப்
௨௨ துதேசத்திலே பரதேசிகளாயிருந்தீர்கள். — ஒரு
கைம்பெண்சாதியையும் தாய்தகப்பனில்லாத
௨௩ பிள்ளையையும் ஒடுக்காமலிருப்பீர்களாக.—அவர்
களை நீ ஒடுக்கவே ஒடுக்கும்போது, அவர்கள் நம்
மை நோக்கிக் கூப்பிடவே கூப்பிட்டால், அ
வர்கள் கூப்பிடுதலை நாம் கேட்கவே கேட்டு,—
௨௪ நாம் கோபமூண்டவராகி, உங்கள் பெண்சாதி
கள் கைம்பெண்சாதிகளும் உங்கள் பிள்ளைகள்
தாய்தகப்பனில்லாத பிள்ளைகளுமாய்ப் போக,
உங்களைப் பட்டையத்தாலே கொன்றுபோடு
வோம்.
௨௫ [3]உன்னிடத்திலே சிறுமைப்பட்டிருக்கிற நம்
முடைய சனத்தில் ஒருவனுக்கு நீ திரவியம் கட
னாகக் கொடுத்தால், அவனுக்கு வட்டி சுமத்து
௨௬ கிறவன்போல இராயாக.—[4]உனக்கு அடுத்தவ
னுடைய வஸ்திரத்தை நீ அடகாக வாங்கினால்,
பொழுது புகாததற்குமுன்னே அதை அவனுக்
குத் திரும்பக் கொடுப்பாயாக. — ஏனெனில் ௨௭
அவன் மூடிக்கொள்ளுகிறது அதுமாத்திரம்தா
னே; அதுவே அவன் தன் தோலை மூடிக்கொள்
ளுகிற அவனுடைய வஸ்திரம்; வேறு எதினாலே
மூடிக்கொண்டு படுத்துக்கொள்ளுவான். ஆகை
யால் சம்பவிப்பதேதெனில், அவன் நம்மைநோ
க்கிக் கூப்பிடும்பொழுது, நாம் கேட்போம்;
ஏனெனில் நாம் இரக்கமுள்ளவர்.
தேவர்களைத் தூஷணியாமலும் உன் சனத்தில் ௨௮
அதிபதியானவனைச் சபிக்காமலும் இருப்பா
யாக.
உன் போர்க்களத்தின் காணிக்கையையும் ௨௯
உன் ஆலையின் காணிக்கையையும் செலுத்தத்
தாமதிக்கவேண்டாம்; உன் குமாரரில் முதல்பே
றானவனை நமக்குக் கொடுப்பாயாக.—உன் மாடு ௩௰
களிலும் உன் ஆடுகளிலும் அப்படித்தான் செய்
வாயாக; குட்டி ஏழுநாள் தன் தாயோடே இருக்
கட்டும், எட்டாம் நாளிலே அதை நமக்குச் செ
லுத்துவாயாக.
நீங்கள் நமக்குப் பரிசுத்த மனிதராயிருக்கக் ௩௧
கடவீர்கள்; ஆகையால், வெளியிலே பீறுண்டு
போன மாம்சத்தைப் புசியாமல், அதை நாய்க
ளுக்குப் போடுவீர்களாக.

## ௨௩. அதிகாரம்.

௧. தூஷணையையும் பொய்ச்சாட்சிகளையும் குறித்தது. ௩. நியாயத்தைக் குறித்தது. ௪. தருமத்தைக்குறித்தது. ௰. ஓய்ந்திருக்கும் வருஷத்தைக் குறித்தது. ௰௨. ஓய்வுநாளைக்குறித்தது. ௰௩. விக்கிரகஆராதனையைக் குறித்தது. ௰௪. மூன்று பண்டிகைகளையும் குறித்தது. ௰௮. பலிபீடங்களின் இரத்தத்தையும் கொழுப்பையும் குறித்தது. ௨௰. ஒரு தேவதூதனுடைய வருகையையும் அவனுக்குக் கீழ்ப்படிதலினாலேவரும் ஆசீர்வாதத்தையும் குறித்தது.

அபாண்டமான விசேஷத்தை ஏற்றுக்கொள் ௧
ளாயாக; கொடுமையுள்ள சாட்சியாயிருக்க ஆ
காதவனோடே கலவாயாக. — பொல்லாப்புச் ௨
செய்யப்போகிற திரளினைப் பின்செல்லாம
லும், நியாயத்தைப் புரட்டப்போகிற திரளினர்
களின் பிறகாலே சாய்கிறதற்கான உத்தரவை
வழக்கிலே சொல்லாமலும் இருப்பாயாக.—தரித் ௩
திரனுடைய முகத்தையும் அவன் வியாச்சியத்
திலே பாராயாக.
சிதறிப்போனதாகிய [5]உன் சத்துருவின் மாட் ௪
டையாகிலும்அவனுடைய கழுதையையாகிலும்
சந்தித்தாயானால், அதை அவனண்டையிலே
திருப்பவே திருப்பிக்கொண்டு போவாயாக.—
உன்னைப் பகைக்கிறவனுடைய கழுதையைத் ௫
தன் சுமையின்கீழ்க் கிடக்கக்கண்டாயானால்,
அதற்கு உதவாதிருப்பாயோ? அவனோடேகூட
அதற்கு உதவவே உதவுவாயாக.
உன்னிடத்திலிருக்கிற எளியவனுடைய வி ௬
யாச்சியத்திலே அவனுடைய நியாயத்தைப் புர
ட்டாயாக.—கள்ளக்காரியத்துக்குத் தூரமாயிருப் ௭
பாயாக; குற்றமில்லாதவனையும் நீதிமானையும்
கொலைப்படுத்தாயாக; ஏனெனில் ஆகாதவனை
நீதிமானாகத் தீரோம்.

1 ௩ மோ. ௨௰. ௰௫. — 2 ௩ மோ. ௰௯. ௩௩, ௩௪. — 3 ௩ மோ. ௨௫. ௩௫, ௩௬.

4 ௫ மோ. ௨௪. ௰௨, ௰௩. — 5 லூக். ௬. ௨௭.

௮ [1]பரிதானம் வாங்காயாக; ஏனெனில் பரிதா
னம் பார்வையுள்ளவர்களைக் குருடாக்கி, நீதிமா
ன்களின் நியாயங்களைத் தாறுமாருக்குகின்றது.
௯ [2]பரதேசியை ஒடுக்காயாக; ஏனெனில் எகிப்
துதேசத்திலே பரதேசிகளாயிருந்த நீங்கள் பர
தேசியின் இருதயத்தை அறிவீர்கள்.
௰ நீ ஆறுவருஷம் உன் தேசத்தை விதைத்துப்
௰௧ பயிரிட்டு அதின் பலனைச் சேர்த்து,-ஏழாம் வரு
ஷத்திலோவென்ருல் அதை உன் சனத்தில்
எளியவர்கள் புசிக்கும்படிக்கும், மீதியானதை
வெளியின் சீவன்கள் தின்னும்படிக்கும், சும்
மா வைத்துவிடுவாயாக; உன் திராட்சத்தோட்
டத்திற்கும் உன் ஒலீவத் தோப்புக்கும் அப்ப
டியே செய்வாயாக.
௰௨ நீ ஆறுநாள் உன் வேலையைச் செய்து, ஏழாம்
நாளிலோவெனில் உன் மாடும் உன் கழுதையும்
இளைப்பாறவும், உன் அடிமைப்பெண்ணின்
பிள்ளையும் பரதேசியும் மூசிப்பாறவும், ஓய்ந்தி
௰௩ ருப்பாயாக. — நாம் உங்களுக்குச் சொன்னதி
லெல்லாம் சாவதானமாய் இருங்கள்; வேறே
தேவர்களின் பேரை நினையீர்களாக; அது உன்
வாயினாலே கேட்கப்படாதிருப்பதாக.
௰௪ வருஷத்தில் மூன்றுதரம் நமக்குப் பண்டிகை
௰௫ ஆசரிப்பாயாக. — நீ புளிப்பில்லாத அப்பங்க
ளின் பண்டிகையைக் கைக்கொண்டு, நாம்
உனக்குக் கற்பித்தபடி ஆபிப்மாதத்தினுடைய
திட்டமான காலத்திலே ஏழுநாள் புளிப்பில்
லாத அப்பங்களைப் புசிப்பாயாக; ஏனெனில்
அதிலே எகிப்திலிருந்து புறப்பட்டாய்; ஆனால்
வெறுங்கையாய் நமக்குமுன்பாகக் காணப்ப
௰௬ டீர்களாக.—நீ வயலில் விதைத்த உன் பயிர் வே
லைகளின் முதல்பலனைச் செலுத்துகிற அறுப்பு
நாளின் பண்டிகையையும், வருஷமுடிவிலே
நீ வயலில் உன் வேலைகளின் பலனைச்சேர்த்
துத் தீர்ந்தபொழுது, சேர்ப்பின் பண்டிகையை
௰௭ யும் ஆசரிப்பாயாக.—[3]வருஷத்தில் மூன்றுதரம்
உன் ஆண்சாதியெல்லாம் கர்த்தராகிய ஆண்ட
வருடைய சந்நிதிக்குமுன்பாகக் காணப்படக்
கடவது.
௰௮ புளித்தமா இருக்கும்போது நமது பலியின்
இரத்தத்தைப் பலியிடாயாக; நம்முடைய பண்
டிகையின் கொழுப்பு விடியற்காலம்மட்டும்
௰௯ இராத்தங்கவும் வேண்டாம். — உன் நிலமையின்
முதல்விளைச்சல்களில் முந்தின கனியை உன்
பராபரனாகிய கர்த்தருடைய வீட்டிற்குக் கொ
ண்டுவருவாயாக; [4]வெள்ளாட்டுக்குட்டியை அ
தினுடைய தாயின் பாலோடேகூடச் சமைக்
காயாக.
௨௰ இதோ, உன்னை வழியிலே காக்கிறதற்கும்,
நாம் ஆயத்தம்பண்ணின தானத்திற்கு உன்னைக்
கொண்டுபோகிறதற்கும், நாம் ஒரு தூதனை உன
௨௧ க்குமுன்பாக அனுப்புகிறோம்.—நீ அவர் முகத்
திற்குமுன்பாகச் சாவதானமாயிருந்து, அவர்
சத்தத்தைக் கேள்; அவரைக் கோபப்படுத்தா
தே; ஏனெனில் உங்கள் துரோகங்களை அவர்
பொறுப்பதில்லை, அதேனென்ருல் நமது நா
மம் அவருள்ளத்தில் இருக்கின்றது. — நீ அவர் ௨௨
சத்தத்தைக் கேட்கவே கேட்டு, நாம் சொல்லு
வதை எல்லாம் செய்தாயேயாகில், நாம் உன்
னைப் பகைக்கிறவர்களைப் பகைத்து, உன்னை
இறுகப்பிடிக்கிறவர்களை இறுகப்பிடிப்போம்.-
ஏனெனில் நம்முடைய தூதர் உனக்குமுன் ௨௩
பாக நடந்து, உன்னை எமோரியரும், ஏத்திய
ரும், பேரிசியரும், கானானியரும், ஏவியரும், எபூ
சியரும் இருக்கிற இடத்திலே கொண்டுபோ
வார்; அவர்களை நாம் அதம்பண்ணுவோம். —
நீ அவர்கள் தேவர்களைப் பணிந்துகொள்ளாம ௨௪
லும் அவர்களைச் சேவிக்காமலும் அவர்கள்
செய்கைகளின்படி செய்யாமலும் அவர்களை
நிர்மூலம்பண்ணவேபண்ணி, அவர்கள் சிலை
களை உடைக்கவே உடைத்துப்போடுவாயாக.—
உங்கள் பராபரனாகிய கர்த்தரையே சேவிப்பீர் ௨௫
களாக; அப்பொழுது அவர் உன் அப்பத்தை
யும் உன் தண்ணீரையும் ஆசீர்வதிப்பார்; அப்
பொழுது வியாதியை உன் நடுவிலிருந்து
விலக்குவோம்.—கர்ப்பம் விழுகிறவளும் மலடி ௨௬
யும் உன் தேசத்திலே உண்டாயிருப்பதில்லை;
உன் நாள்களின் இலக்கத்தை நிறைவேற்று
வோம்.—நாம் நம்முடைய பயங்கரத்தை உனக் ௨௭
குமுன்பாக அனுப்பி, நீ வந்து சேரும் எல்லாச்
சனத்தையும் கலங்கடித்து, உன் சத்துருக்களை
எல்லாம் உனக்கு முதுகைக் காட்டப்பண்ணி,-
உன் முகத்திற்குமுன்பாக ஏவியனையும் கானா ௨௮
னியனையும் ஏத்தியனையும் துரத்திவிட, வண்டு
களை உனக்குமுன்பாக அனுப்புவோம்.-தேசம் ௨௯
பாழாகாமலும் வெளியின் மிருகங்கள் உனக்கு
விரோதமாய் வர்த்திக்காமலும் இருக்கும்படிக்கு,
நாம் அவர்களை ஒரே வருஷத்திற்குள்ளே உனக்
குமுன்பாகத் துரத்திவிடாமல்,-நீ பலுகி, தேசத் ௩௰
தைச் சுதந்தரித்துக்கொள்ளும்மட்டும், அவர்க
ளைக் கொஞ்சம்கொஞ்சமாய் உனக்கு முன்பா
கத் துரத்திவிட்டு,
உன் எல்லையை நாணல்சமுத்திரம்துவக்கி, ௩௧
பெலிஸ்தியரின் சமுத்திரம்மட்டாகவும், வனாந்
தரம்துவக்கி நதிமட்டாகவும் வைப்போம்;
ஏனெனில் நாம் தேசத்தின் குடிகளை, நீ அவர்
களை உனக்குமுன்பாகத் துரத்திவிடும்படிக்கு,
உங்கள் கைகளில் ஒப்புக்கொடுப்போம். —
அவர்களோடும் அவர்கள் தேவர்களோடும் நீ ௩௨
உடம்படிக்கைபண்ணாயாக. — அவர்கள் உன் ௩௩
னை நமக்கு விரோதமாகப் பாவம்செய்யப்பண்
ணாதபடிக்கு உன் தேசத்திலே குடியிரார்களாக;
ஏனெனில் நீ அவர்கள் தேவர்களைச் சேவித்
தால், உனக்குக் கண்ணியாகவே இருக்கு
மென்ருர்.

## ௨௪. அதிகாரம்.

௧. மோசே மலையின்மேலாக அழைக்கப்பட்டது. ௩. சனங்கள் இப்படி வோம் என்று வாக்குத்தத்தம்செய்தது. ௪. மோசே ஒரு பலிபீடத்தை

1 ௫ மோ. ௰௬. ௰௯.—2 ௨ மோ. ௨௨. ௨௧.—3 ௨ மோ. ௩௪. ௨௩.—4 ௫ மோ. ௨௨. ௨௮.

யும், ௰௨. கல்தூண்களையும் கட்டினது. ௬. அவர் உடம்படிக்கையின் இரத்தத்தைத் தெளித்தது. ௯. பராபரனுடைய மகிமை காணப்பட்டது. ௰௪. ஆரோனுக்கும் ஊருக்கும் சனங்களை விசாரித்துக்கொள்ளச் சொல்லப்பட்டது. ௰௮. மோசே மலையின்மேலாகப்போய், நாற்பதுநாள் இரவும்பகலும் இருந்தது.

௧ பிற்பாடு அவர் மோசேயோடே சொன்னதாவ
து: நீயும், ஆரோனும், நாதாபும், அபீகூவும், இஸ்
ரவேலின் மூப்பரில் எழுபதுபேருமாய்க் கர்த்த
ரண்டைக்கு ஏறிவந்து, தூரத்திலிருந்து பணியுங்
௨ கள்.—இவர்கள் கர்த்தரண்டைக்குச் சேராமல்,
மோசே ஒருவனாய்ச் சேரக்கடவன்; சனம் இவ
னோடேகூட ஏறி வரவேண்டாமென்றார்.
௩ மோசே வந்து, கர்த்தருடைய எல்லா வார்த்
தைகளையும் எல்லா நியாயங்களையும் சனத்திற்கு
விவரித்தான்; அப்பொழுது சனம் எல்லாம் ஒரு
சத்தமாய், கர்த்தர் பேசின எல்லா வார்த்தைக
ளின்படியேயும் செய்வோமென்று பிரதியுத்தா
௪ ரம் சொன்னார்கள்.—அப்பொழுது மோசே கர்த்த
ருடைய வார்த்தைகளை எல்லாம் எழுதிவைத்து,
அதிகாலமே எழுந்திருந்து, பர்வதத்திற்கு அடியி
லே ஒரு பலிபீடத்தையும் இஸ்ரவேலுடைய பன்
னிரண்டு கோத்திரங்களுடைய இலக்கத்தின்
படியே பன்னிரண்டு தூண்களையும் கட்டி,—
௫ இஸ்ரவேல் புத்திரரில் வாலிபரை அனுப்பி
னான்; அவர்கள் தகனபலிகளைச் செலுத்தி, கர்த்
தருக்குச் சமாதான பலிகளாகக் காளை எருதுக
௬ ளைப் பலியிட்டார்கள்.—அப்பொழுது மோசே
பாதி இரத்தத்தை வாங்கி, பாத்திரங்களில்
வார்த்து, பாதி இரத்தத்தைப் பலிபீடத்தின்மே
௭ லே தெளித்து,—உடம்படிக்கையின் புஸ்தகத்
தை எடுத்துக்கொண்டு, சனத்தின் காதுகள்
கேட்க வாசித்தான்; அப்பொழுது அவர்கள்
கர்த்தர் சொன்னதை எல்லாம் செய்து, கீழ்ப்படி
௮ வோமென்றார்கள். — அப்பொழுது மோசே இ
ரத்தத்தை வாங்கி, [1]சனத்தின்மேலே தெளித்து,
இதோ, இந்த எல்லா வார்த்தைகளின்மேலும் கர்த்
தர் உங்களோடே பண்ணின உடம்படிக்கை
யின் இரத்தமென்றான்.
௯ பிற்பாடு மோசேயும், ஆரோனும், நாதாபும்,
அபீகூவும், இஸ்ரவேலருடைய மூப்பரில் எழு
௰ பதுபேரும் ஏறிப்போய்,—[2]இஸ்ரவேலின் பரா
பரனைக் கண்டார்கள்; அவருடைய பாதத்தின்
கீழே நீலக்கல்லின் வேலைக்கொப்பாகவும், வா
னத்தின் காந்தியான பிரபைக்கு ஒப்பாகவும்
௰௧ இருந்தது.—அவர் இஸ்ரவேல் புத்திரருடைய
தலைவர்பேரிலே தம்முடைய கையைப் போக
விடாதிருந்தார்; அவர்கள் பராபரனைத் தரிசித்த
பிற்பாடு புசித்துக்குடித்தார்கள்.
௰௨ பிற்பாடு கர்த்தர் மோசேயோடே சொன்னதா
வது: நீ நம்மண்டைக்குப் பர்வதத்தின்மேல் ஏறி
வந்து, அங்கே இரு; நாம் உனக்குக் கல்பலகை
களையும், அவர்களை உபதேசிப்பதற்கு நாம் எழு
தின நியாயப்பிரமாணத்தையும், கற்பனைகளை
௰௩ யும் கொடுப்போம் என்றார். — அப்பொழுது
மோசே தன் வேலைக்காரனாகிய யோசுவாவோ
டுங்கூட எழுந்துபோனான்; மோசே பராபரனு
டைய பர்வதத்தில் ஏறினான். — அவன் மூப்ப ௰௪
ரோடே சொன்னதாவது: நாங்கள் உங்களண்
டைக்குத் திரும்பி வருமட்டும், இங்கே எங்
களுக்காகக் காத்திருங்கள்; இதோ, ஆரோனும்
ஊரும் உங்களிடத்தில் இருக்கிறார்கள்; எவ
னுக்குக் கவைகாரியங்கள் உண்டோ, அவன்
அவர்களண்டையிலே சேரக்கடவனென்றான்.
மோசே பர்வதத்தில் ஏறினபொழுது, ஒரு ௰௫
மேகம் பர்வதத்தை மூடிற்று. — கர்த்தருடைய ௰௬
மகிமை சீனாய்பர்வதத்தின்மேலே தங்கியிருந்
தது; மேகம் ஆறுநாள் அதை மூடியிருந்தபிற்
பாடு, அவர் ஏழாம்நாளிலே மேகத்தின் நடுவி
லிருந்து மோசேயைக் கூப்பிட்டார்.—பர்வதத் ௰௭
தின் கொடுமுடியிலே கர்த்தருடைய மகிமை
யின் உருவு, இஸ்ரவேல் புத்திரருடைய கண்
களுக்குப் பட்சிக்கிற அக்கினியைப்போலி
ருந்தது.—மோசே மேகத்தின் நடுவிலே பிரவே ௰௮
சித்து, பர்வதத்தில் ஏறி, இரவும்பகலும் நாற்ப
துநாள் பர்வதத்திலிருந்தான்.

## ௨௫. அதிகாரம்.

௧. இஸ்ரவேல் சனங்கள் கூடாரத்தைச் செய்வதற்கு இன்ன இன்ன கொடுக்கச் சொல்லப்பட்டது. ௰. பெட்டியின் உருவும், ௰௭. கிருபையின் ஆசனமும், கேருபீன்களும், ௨௩. மேசையும், அதினுடைய சாமானும், ௩௧. விளக்குத்தண்டும், அதினுடைய ஆயுதமும்.

கர்த்தர் மோசேயோடே பேசிச் சொன்னதா ௧
வது:—நமக்குக் காணிக்கையை எடுத்துச் செ ௨
லுத்தும்படிக்கு, இஸ்ரவேல் புத்திரரோடே
பேசு; நமக்குச் செலுத்தும் காணிக்கையை
[3]மனப்பூர்வமான எல்லாருடையகையிலும் வாங்
குவீர்களாக.—நீங்கள் அவர்கள் கையில் வாங் ௩
கவேண்டிய காணிக்கையாவது: பொன்னும்
வெள்ளியும் வெண்கலமும், — இளநீலநூலும், ௪
இரத்தாம்பரநூலும், சிவப்புநூலும், மெல்லிய
பஞ்சுநூலும், வெள்ளாட்டுமயிரும், — சிவப் ௫
புத்தீர்ந்த ஆட்டுக்கடாத் தோல்களும், தகசுக
ளின் தோல்களும், சீத்திம் மரங்களும்,—விளக் ௬
குக்கு எண்ணெயும் அபிஷேக எண்ணெய்க்
குப் பரிமளவர்க்கங்களும், தூபம்காட்டுதலுக்
குச் சுகந்தவர்க்கங்களும்,—ஆசாரிய சால்வைக் ௭
கும் மார்ப்பதக்கத்திற்கும் கோமேதகக்கல்லுக
ளும், பதித்துவைக்கும் இரத்தினங்களுந்தா
னே.—நாம் தங்கள் நடுவிலே வாசம்பண்ண, ௮
நமக்கொரு பரிசுத்த ஸ்தலத்தை உண்டாக்குவார்
களாக.—வாசஸ்தலத்தின் மாதிரியையும், அதி ௯
னுடைய எல்லாப் பண்டம்பாடிகளின் மாதிரி
யையும், நாம் உனக்குக் காண்பிக்கும்படி எல்
லாம் அதைச் செய்வீர்களாக.
சீத்திம் மரங்களால் ஒரு பெட்டியைப் பண் ௰
ணக்கடவார்கள்; அதின் நீளம் இரண்டரை
முழமும், அதின் அகலம் ஒன்றரை முழமும், அ
தின் உயரம் ஒன்றரை முழமுமாயிருப்பதாக.—
அதை எங்கும் சுத்தமான பொன்தகட்டால் ௰௧
மூடுவாயாக; நீ அதின் உட்புறத்தையும் வெளிப்

1 எபி. ௯. ௨௰.—2 எசே. ௧. ௨௬.

3 ௨ மோ. ௩௫. ௫. ௨ கொரி. ௯. ௭.

புறத்தையும் அதனால் மூடி, அதின்மேல் சுற்றி
௰௨ லும் பொன்னான திரணையை உண்டாக்கி,—அ
தற்கு நான்கு பொன் வளையங்களை வார்ப்பித்து,
அவைகளை அதின் நான்கு கோடிகளிலே, இந்
தப்பக்கம் இரண்டு வளையங்களும், அந்தப்பக்
கம் இரண்டு வளையங்களும் இருக்கும்படிக்குத்
௰௩ தைத்து,–சீத்திம்மரங்களான வாளைகளைச் செப்ப
னிட்டு, அவைகளைப் பொன்தகட்டால் மூடி,—
௰௪ அந்த வாளைகளால் பெட்டியைச் சுமக்கும்படிக்
கு, அவைகளைப் பெட்டியின் பக்கங்களிலிருக்
௰௫ கும் வளையங்களிலே பாய்ச்சக்கடவாய்.—அந்த
வாளைகள் பெட்டியிலிருந்து கழற்றப்படாமல்,
௰௬ அதின் வளையங்களிலே இருக்கக்கடவது. — நீ
அந்தப் பெட்டியிலே நாம் உனக்குக் கொடுக்கப்
போகிற சாட்சியை வைத்து,
௰௭ சுத்தமான பொன்னினாலே கிருபாசனமான
மூடியைப் பண்ணுவாயாக; அது இரண்டரை
முழ நீளமும் ஒன்றரை முழ அகலமுமாய் இருக்
௰௮ கக்கடவது.—பொன்னான இரண்டு கேருபீன்
களையும் அடிக்கப்பட்ட பொன்னினாலே உண்
டாக்கி, கிருபாசனமான மூடியின் இரண்டு
௰௯ ஓரங்களில் இருக்கப்பண்ணக்கடவாய். — ஒரு
கேருபீன் இந்தப்புறத்து ஓரத்திலும் மற்றக் கேரு
பீன் அந்தப்புறத்து ஓரத்திலும் இருக்கத்தானே;
அந்தக் கேருபீன்களைக் கிருபாசனமான மூடி
யின் இரண்டு ஓரங்களிலே அதனோடே ஏகவே
லையாயிருக்கும்படிக்கு, அவைகளைப் பண்ணக்
௨௰ கடவீர்கள்.–அந்தக் கேருபீன்கள் தங்கள் செட்
டைகளை உயர விரித்து, தங்கள் செட்டைகளா
லே கிருபாசனமான மூடியை மூடுகிறவைகளும்
ஒன்றுக்கொன்று எதிர்முகங்களுமாயிருக்கக்கட
வது; கேருபீன்களின் முகங்கள் கிருபாசனமா
ன மூடியை நோக்குகிறவைகளாயிருப்பதாக.–
௨௧ நீ கிருபாசனமான மூடியைப் பெட்டியின்மீதில்
வைத்து, பெட்டியிலோவென்றால், நாம் உனக்
குக் கொடுக்கப்போகிற சாட்சியை வைப்பா
௨௨ யாக.–[1]அங்கே உன்னைச் சந்திப்போம்; கிருபாச
னமானமூடியின்மீதிலும் சாட்சியினுடைய பெ
ட்டியின்மேல் நிற்கும் இரண்டு கேருபீன்களின்
நடுவிலுமிருந்து நாம் இஸ்ரவேல் புத்திரருக்காக
உனக்குக் கற்பிக்கப்போகிறவைகளை எல்லாம்
உன்னோடே சொல்லுவோம்.
௨௩ சீத்திம் மரங்களால் ஒரு மேசையையும் பண்
ணுவாயாக; அது இரண்டுமுழ நீளமும் ஒருமுழ
அகலமும் ஒன்றரைமுழ உயரமுமாயிருக்கக்கட
௨௪ வது.—அதை நீ சுத்தமான பொன்தகட்டால்
மூடி, சுற்றிலும் அதற்குப் பொன்னான திரணை
௨௫ யை உண்டாக்கி,—சுற்றிலும் அதற்கு நான்கு
விரல்கடையான சட்டத்தையும் அதின் சட்டத்
திற்குச் சுற்றிலும் பொன்னான திரணையையும்
௨௬ உண்டாக்கி,—அதற்கு நான்கு பொன் வளையங்
களைப் பண்ணி, அவைகளை அதின் நான்கு கால்
களுக்கு இருக்கும் நான்கு கோடிகளில் தைக்
௨௭ கக்கடவாய். — அந்த வளையங்கள் மேசையைச்

1 ௪ மோ. ௭. ௮௯.

சுமக்கும் வாளைகளுக்கு இடங்களாயிருக்கும்ப
டிக்கு, சட்டத்திற்கு எதிரே இருக்கவேண்டும்.–
அந்த வாளைகளைச் சீத்திம் மரங்களாலே பண்ணி, ௨௮
அவைகளைப் பொன்தகட்டால் மூடக்கடவாய்;
அவைகளால் மேசை சுமக்கப்படுவது.—அதின் ௨௯
கலங்களையும் தூபக்கிண்ணிகளையும், தட்டுகளை
யும்,அதற்கு அடுத்தவைகளாகிய வார்க்கிற கரகங்
களையும் பண்ணக்கடவாய்; சுத்தமான பொன்
னினாலே உண்டாக்கக்கடவாய்.— மேசையின் ௩௰
மேலே எப்பொழுதும் நமக்குமுன்பாகச் சமு
கத்து அப்பங்களை வைக்கக்கடவாய்.
சுத்தமான பொன்னினாலே ஒரு குத்துவிளக் ௩௧
கையும் உண்டாக்குவாயாக; அது அடிக்கப்
பட்ட பொன்னினாலே பண்ணப்படவேண்டும்;
அதின் தண்டும் அதின் கிளைகளும் அதின் மொக்
குகளும் அதின் மாதளம்பழங்களும் அதின் பூக்க
ளும் அதனோடொன்றாயிருப்பதாக.—ஆறு கிளை ௩௨
கள் அதின் பக்கங்களிலிருந்து புறப்படுவது;குத்
துவிளக்கின் மூன்று கிளைகள் அதின் ஒரு பக்கத்
திலும், குத்துவிளக்கின் மூன்று கிளைகள் அதின்
மறுபக்கத்திலுமிருந்து புறப்படுவது.–ஒவ்வொரு ௩௩
கிளையிலே வாதுமைக்கொட்டைகளின் சாய
லான மூன்று மொக்குகளும், ஒரு மாதளம்பழ
மும், ஒரு பூவும் இருப்பதாக; குத்துவிளக்கிலி
ருந்து புறப்படுகிற ஆறு கிளைகளிலும் அப்படி
இருக்கவேண்டும்.—விளக்குத்தண்டிலோவென் ௩௪
றால், வாதுமைக்கொட்டைகளின் சாயலான
நான்கு மொக்குகளும், அதின் மாதளம்பழங்க
ளும், அதின் பூக்களும் இருப்பதாக. — அதிலி ௩௫
ருந்து புறப்படுகிற இரண்டு கிளைகளின்கீழ் ஒரு
மாதளம்பழமும், வேறு இரண்டு கிளைகளின்கீழ்
ஒரு மாதளம்பழமும், மற்ற இரண்டு கிளைகளின்
கீழ் ஒரு மாதளம்பழமும் இருப்பதாக; விளக்குத்
தண்டிலிருந்து புறப்படுகிற ஆறு கிளைகளுக்கும்
அப்படி இருக்கவேண்டும்.—அவைகளின் மாத ௩௬
ளம்பழமும் அவைகளின் கிளைகளும் அதிலி
ருந்து உண்டானவைகளாயிருப்பதகாக; இவை
யெல்லாம் அடிக்கப்பட்ட சுத்தமான பொன்னா
கிய ஒரே துண்டாயிருக்கவேண்டும். — அதின் ௩௭
மேல் ஏழு விளக்குகளையும் உண்டாக்குவாயாக;
அதற்கு நேரெதிராய் எரியும்படிக்கு ஏற்றப்படக்
கடவது.—அதின் கத்திரிகளும் விளக்கணைக்கிற ௩௮
கருவிகளும் சுத்தப் பொன்னாயிருப்பதாக.—அ ௩௯
தை இந்த எல்லா முஸ்தீதுகளோடுங்கூட ஒரு
தாலந்து சுத்தமான பொன்னினாலே உண்டுபண்
ணுவார்களாக.—[2]பர்வதத்திலே உனக்குக் காண் ௪௰
பிக்கப்பட்ட அவைகளுடைய மாதிரியின்படி
யே அவைகளைச் செய்யப் பார்ப்பாயாக.

## ௨௬. அதிகாரம்.

௧. கூடாரத்தின் திரைச்சீலைகளும், ௭. பதினொரு வெள்ளாட்டுமயிர்த் திரைச்சீலைகளும், ௰௪. ஆட்டுக்கடாவின் தோல்களினால் செய்த மூடியும், ௰௫. ஆசரிப்புக்கூடாரத்தின் நிமிர்ந்துநிற்கிற பலகைகளும், அவைகளின் கல்வு கால்களும், தாழ்ப்பாள்களும், ௩௧. பெட்டகத்துக்கு மூடியும், ௩௬. வாசற்படிக்குத் திரையும்.

2 ௨ மோ. ௨௫. ௯. எபி. ௮. ௫.

க [1]வாசஸ்தலத்தையோவென்ருல், திரித்த மெல்
லிய பஞ்சுநூலும், இளநீலநூலும், இரத்தாம்பர
நூலும், சிவப்புநூலுமான பத்துச் சமுக்காளங்க
ளால் உண்டுபண்ணுவாயாக; அவைகளில் வி
நோத வேலையான கேரூபீன்கள் இருக்கும்படி
உ யாக அவைகளைப் பண்ணக்கடவாய். — ஒவ்
வொரு சமுக்காளம் இருபத்தெட்டுமுழ நீளமும்
நான்குமுழ அகலமுமாயிருப்பதாக;சமுக்காளங்
களுக்கெல்லாம் ஒரே அளவு இருக்கக்கடவது.-
ங ஐந்து சமுக்காளங்கள் ஒன்ருேடொன்று இணைக்
கப்பட்டிருக்கவும், மற்ற ஐந்து சமுக்காளங்க
ளும் ஒன்ருேடொன்று இணைக்கப்பட்டிருக்க
ச வும் வேண்டும். — இணைக்கப்பட்ட ஒரு சமுக்
காளத்தின் கடைஓரத்தில் இளநீலநூல் காதுகளை
உண்டுபண்ணி, இணைக்கப்பட்ட மற்றச் சமுக்
காளத்தின் கடைஓரத்திலும் அப்படியே உண்டு
ரு பண்ணுவாயாக.—ஒரு சமுக்காளத்தில் ஐம்பது
காதுகளையும், இணைக்கப்பட்ட மற்றச் சமுக்கா
ளத்தின் ஓரத்தில் ஐம்பது காதுகளையும் காதுகள்
ஒன்றுக்கொன்று எதிராய்ச் சேர்ந்திருக்கும்படிக்
சு கு உண்டுபண்ணுவாயாக.-ஏக வாசஸ்தலமாய்ப்
போகும்படிக்கு ஐம்பது பொன் துறடுகளையும்
பண்ணி, சமுக்காளங்களை ஒன்றுக்கொன்று துற
டுகளாலே இணைத்துப்போடுவாயாக.
எ வாசஸ்தலத்தின்மேல் கூடாரமாகப் போடும்
ஆட்டுமயிர்ச் சமுக்காளங்களாகிய பதினொரு
அ சமுக்காளங்களையும் பண்ணக்கடவாய். — ஒவ்
வொரு சமுக்காளம் முப்பதுமுழ நீளமும் நான்
குமுழ அகலமுமாயிருப்பதாக; பதினொரு சமுக்
காளங்களுக்கும் ஒரே அளவு இருக்கக்கடவது.-
கூ ஐந்து சமுக்காளங்களை ஒன்ருகவும் ஆறு சமுக்
காளங்களை ஒன்ருகவும் இணைத்து, ஆறும் சமுக்
காளத்தைக் கூடாரத்தின் முகப்பிற்குமுன்னே
ய இரட்டையாய்ப் போடுவாயாக. — இணைக்கப்
பட்ட ஒரு சமுக்காளத்தின் கடைஓரத்தில் ஐம்
பது காதுகளையும் இணைக்கப்பட்ட மற்றச் சமுக்
காளத்தின் ஓரத்தில் ஐம்பது காதுகளையும் உண்
யக டுபண்ணி,—ஐம்பது வெண்கலத் துறடுகளைப்
பண்ணி, துறடுகளைக் காதுகளில் பூட்டி, கூடா
ரத்தை அது ஒன்ருகும்படிக்கு இணைத்துவிடுவா
யஉ யாக.—கூடாரத்தின் சமுக்காளங்களில் மிச்ச
மான அரைச்சமுக்காளத்தின் மீதியோவென்
ருல், வாசஸ்தலத்தின் பின்புறத்திலே மிஞ்சித்
யங தொங்குவதாக.—கூடாரத்தினுடைய சமுக்கா
ளங்களின் நீளத்திலும் மீதியானதிலே இந்தப்பு
றத்தில் ஒரு முழமும் அந்தப்புறத்தில் ஒரு முழ
மும் வாசஸ்தலத்தை மூடும்படிக்கு அதின் பக்
கங்களிலே மிஞ்சித் தொங்குவதாக.
யச சிவப்புத்தீர்ந்த ஆட்டுக்கடாக்களின் தோல்க
ளாலே கூடாரத்திற்கு ஒரு மூடியையும் அதின்
மேலே தகசுகளின் தோல்களால் ஒரு மூடியை
யும் உண்டுபண்ணுவாயாக.
யரு நிமிர்ந்துநிற்கிற பலகைகளையும் வாசஸ்தலத்
திற்குச் சீத்திம் மரங்களால் செப்பனிடுவாயாக.—
ஒவ்வொரு பலகை பத்துமுழ நீளமும் ஒன்றரை யசு
முழ அகலமுமாயிருக்கக்கடவது. — ஒன்றுக் யஎ
கொன்று எதிரே இசைவான ஒழுங்காயிருக்கிற
இரண்டு முளைகள் ஒவ்வொரு பலகைக்கு இருக்
கவேண்டும்; இப்படியே வாசஸ்தலத்தின் பல
கைகளுக்கெல்லாம் செய்வாயாக.
நீ வாசஸ்தலத்திற்காகச் செப்பனிடுகிற பல யஅ
கைகளில் இருபது பலகை தெற்கே தென்திசைக்
கு எதிராக நிற்கக்கடவது.—அந்த இருபது பல யகூ
கைகளின்கீழே வைக்கும் நாற்பது வெள்ளிக்
கால்களை ஒவ்வொரு பலகையின்கீழ் அதின் அ
தின் இரண்டிரண்டு முளைகளுக்கான இரண்டி
ரண்டு கால்களாகத்தானே பண்ணக்கடவாய்.
வாசஸ்தலத்தின் வடக்கான மறுபக்கத்திலும் உய
இருபது பலகையும், — அவைகளின்கீழ் நாற் உக
பது வெள்ளிக்கால்களும், ஒவ்வொரு பலகை
யின்கீழே இரண்டிரண்டு கால்களாக நிற்கக்
கடவது.
வாசஸ்தலத்தின் மேல்ப்புறத்திற்கு ஆறுபல உஉ
கைகளையும்,—வாசஸ்தலத்தின் இரண்டு பக்கக் உங
கோடிகளுக்கு இரண்டு பலகைகளையும் செப்ப
னிடுவாயாக.-இவைகள் தாழத்துவக்கி இரண்டு உச
பக்கங்களை ஏகமாய்ப் பிடித்து, உயரத்தை ஒரு
அள்ளிலே இசைத்திருக்கவேண்டும்; இரண்டு
கோடிகளுக்கு அப்படியிருக்க இரண்டும் அப்ப
டிச் செய்யப்படுவதாக.—அப்படியே எட்டுப்ப உரு
லகைகள் இருக்கவேண்டியது; அவைகளினு
டைய வெள்ளிக்கால்கள் ஒவ்வொரு பலகை
யின்கீழ் இரண்டிரண்டு கால்களாகப் பதினறு
கால்கள் இருக்கவேண்டும்.
சீத்திம் மரங்களால் வாசஸ்தலத்தின் ஒரு பக் உசு
கத்துப் பலகைகளுக்கு ஐந்து தாழ்ப்பாள்களை
யும்,—வாசஸ்தலத்தின் மறுபக்கத்துப் பலகைக உஎ
ளுக்கு ஐந்து தாழ்ப்பாள்களையும் வாசஸ்தலத்
தின் மேற்புறம்பான பின்பக்கத்துப் பலகைக
ளுக்கு ஐந்து தாழ்ப்பாள்களையும் பண்ணுவா
யாக.—நடுத்தாழ்ப்பாள் ஒரு முளைதுவக்கி மறு உஅ
முளைமட்டும் பலகைகளின் மையத்தை உரு
விப் பாய்ச்சப்படுவதாக.-பலகைகளைப் பொன் உகூ
தகட்டால் மூடி, தாழ்ப்பாள்களின் இடங்களா
கிய அவைகளின் வளையங்களைப் பொன்னினு
லே பண்ணி, தாழ்ப்பாள்களைப் பொன்தகட்
டால் மூடக்கடவாய்.
அப்படியே வாசஸ்தலத்தைப் பர்வதத்தில் உ ஙய
னக்குக் காண்பிக்கப்பட்ட அதினுடைய நியா
யத்தின்படியே எடுப்பிப்பாயாக
[2]இளநீலநூலும் இரத்தாம்பரநூலும் சிவப்புநூ ஙக
லும் திரித்த மெல்லிய பஞ்சுநூலுமான ஒரு திரை
யையும் உண்டுபண்ணக்கடவாய்; அதிலே வி
நோத வேலையான கேரூபீன்கள் இருக்கும்படி
யாக அது பண்ணப்படுவதாக. — பொன்தகடு ஙஉ
மூடியதும் பொன்னின வளைவாணிகளுள்ளதும்
நான்கு வெள்ளிக்கால்கள்மேல் நிற்கிறதுமான
நான்கு சீத்திம் மரத்தூண்களிலே அதைத்

1 உ மோ. ங௬. அ.

2 உ மோ. ங௬. ௩௫.

௩௩ தூக்கிவைப்பாயாக.—துறடுகளின்கீழே அந்தத்
திரையைத் தூக்கிவைத்து, சாட்சியின் பெட்டி
யை அங்கே திரைக்குள்ளாக வைப்பாயாக; அந்
தத் திரை உங்களுக்குப் பரிசுத்த ஸ்தலத்திற்கும்
பரிசுத்தத்திற்குப் பரிசுத்தமான ஸ்தலத்திற்கும்
௩௪ நடுவே இருப்பதாக.—பரிசுத்தத்திற்குப் பரிசுத்
தமான ஸ்தலத்திலே சாட்சியினுடைய பெட்டி
யின்மீதில் கிருபாசனமான மூடியை வைத்து,—
௩௫ திரைக்குப் புறம்பாக மேசையையும் மேசைக்
கெதிரே வாசஸ்தலத்தின் தென்புறமாகக் குத்து
விளக்கையும் வைத்து, மேசையையோ வடபுற
மாக வைப்பாயாக.

௩௬ இளநீலநூலும் இரத்தாம்பரநூலும் சிவப்புநூ
லும் திரித்த மெல்லிய பஞ்சுநூலும் சித்திரத்தை
யல்வேலையுமான ஒரு மறைவையும் கூடாரத்
௩௭ தின் வாசலுக்கு உண்டாக்கி,—அந்த மறைவுக்
குச் சீத்திம் மரமான ஐந்து தூண்களைச் செப்ப
னிட்டு, அவைகளைப் பொன்தகட்டால் மூடி,
அவைகளுக்குப் பொன் வளைவாணிகளை உண்
டாக்கி, அவைகளுக்கு ஐந்து வெண்கலக் கால்
களை வார்ப்பிக்கக்கடவாய்.

## உஎ. அதிகாரம்.

௧. தகனபலியிடும்படியான பலிபீடமும் அதினுடைய பாத்திரமும், ௯. ஆசரிப்புக்கூடாரத்தின் பிரகாரம் திரைச்சீலைகளினாலும் தூண்களினாலும் சூழப்பட்டது. ௰௮. பிரகாரத்தின் அளவும், ௨௰. விளக்குக்காக எண்ணெயும்.

௧ ஐந்துமுழநீளமும் ஐந்துமுழஅகலமுமான பலி
பீடத்தையும் சீத்திம் மரங்களால் உண்டுபண்
ணக்கடவாய்; அது நாற்சதுரமும் மூன்றுமுழ
௨ உயரமுமாயிருப்பதாக.—அதின் நான்கு கோடி
களின்மேல், அதனோடே ஏகமாயிருக்கும்அதின்
கொம்புகளை உண்டாக்கி அதை வெண்கலத்தக
௩ ட்டால் மூடி,—அதின் சாம்பலை எடுக்கும் அதின்
செப்புச் சட்டிகளையும், அதின் கரண்டிகளையும்,
அதின் கலங்களையும், அதின் முள்துறடுகளை
யும், அதின் கலசங்களையும் உண்டாக்கி, அதின்
முட்டுகளையெல்லாம் வெண்கலத்தால் பண்
௪ ணி,—வலைபோலிருக்கிற ஒரு வெண்கலச் சல்ல
டையை அதற்குண்டாக்கி, அந்த வலையின் நான்
கு முனைகளின்மேல் நான்கு வெண்கல வளை
௫ யங்களை உண்டாக்கி,—அந்த வலை பலிபீடத்தின்
பாதிமட்டும் வரும்படிக்கு, அதைத் தாழப் பலி
பீடத்தின் சுற்றிற்குக் கீழ்ப்புறமாக வைக்கக்
௬ கடவாய்.—பலிபீடத்திற்குச் சீத்திம் மரவாரை
களையும் பண்ணி, அவைகளை வெண்கலத்தகட்
௭ டால் மூடி,—பலிபீடம் எடுத்துப் போகப்படுகை
யில், அந்த வாரைகள் அதின் இரண்டு பக்கங்
களில் இருக்கும்படிக்கு, அவைகள் வளையங்க
௮ ளிலே பாய்ச்சப்படுவதாக. — அது குழாயாயி
ருக்கும்படிக்கு அதைப் பலகைகளினாலே பண்
ணுவாயாக; உனக்குப் பர்வதத்தில் காண்பிக்
கப்பட்டபடியே அதைப் பண்ணக்கடவார்கள்.
௯ [1]வாசஸ்தலத்தின் பிரகாரத்தையும் உண்டு
பண்ணுவாயாக; தெற்கே தென்திசைக்கு எதி
ரான பக்கத்திற்குத் திரித்த மெல்லிய பஞ்சுநூ
லும் நூறுமுழ நீளமுமான வெளிஆடைகளும்,—
அவைகளின் இருபது தூண்களும் இருப்பதாக; ௰
இவைகளின் இருபது கால்கள் வெண்கலமும்,
தூண்களின் வளைவாணிகளும் அவைகளின்
வளையங்களும் வெள்ளியுமாயிருப்பதாக.—அப் ௰௧
படியே வடபக்கத்தின் நீளத்திற்கு நூறுமுழநீள
மான வெளிஆடைகளும், அவைகளின் இரு
பது தூண்களுமிருப்பதாக; இவைகளின் இரு
பது கால்கள் வெண்கலமும் தூண்களின் வளை
வாணிகள் வெள்ளியுமாயிருப்பதாக.—பிரகாரத் ௰௨
தினுடைய மேல்ப்பக்கமான அகலத்திற்கு ஐம்
பதுமுழ நீளமான வெளிஆடைகளும், அவைக
ளுக்குப் பத்துத்தூண்களும், இவைகளுக்குப் பத்
துக் கால்களுமிருப்பதாக.—சூரியன் உதிக்கிற ௰௩
திசையாகிய பிரகாரத்தின் கீழ்ப்பக்கமான அக
லமும் ஐம்பது முழமாயிருப்பதாக. — அங்கே ௰௪
ஒரு புறத்திற்குப் பதினைந்துமுழ நீளமான வெ
ளிஆடைகளும், அவைகளுக்கு மூன்று தூண்க
ளும், இவைகளுக்கு மூன்று கால்களுமிருப்ப
தாக.—மறுபுறத்திற்குப் பதினைந்துமுழ நீளமான ௰௫
வெளிஆடைகளும், அவைகளுக்கு மூன்று
தூண்களும், இவைகளுக்கு மூன்று கால்களுமி
ருப்பதாக.—பிரகாரத்தின் வாசலுக்கோவென் ௰௬
றால் இளநீலநூலும் இரத்தாம்பரநூலும் சிவப்பு
நூலும் திரித்த மெல்லிய பஞ்சுநூலும் சித்திரத்
தையல்வேலையும் இருபதுமுழ நீளமுமான ஒரு
மறைவும் அதற்கு நான்கு தூண்களும் இவைக
ளுக்கு நான்கு கால்களும் இருப்பதாக.—சுற்றி ௰௭
லும் இருக்கும் பிரகாரத்தின் தூண்களெல்லாம்
வெள்ளி வளையங்கள் போடப்பட்டிருப்பதாக;
அவைகளின் வளைவாணிகள் வெள்ளியும் அவை
களின் கால்கள் வெண்கலமுமாயிருப்பதாக.—
பிரகாரத்தின் நீளம் நூறுமுழமும் இருபுறத்தக ௰௮
லம் ஐம்பது முழமும் உயரம் ஐந்து முழமுமா
யிருப்பதாக; அது திரித்த மெல்லிய பஞ்சுநூலும்
அவைகளின் கால்கள் வெண்கலமுமாய் இருப்
பதாக. — வாசஸ்தலத்தின் சகலவேலையிலும் ௰௯
அதற்குத் தேவையான எல்லாப் பணிமுட்டுக
ளும் அதினுடைய எல்லா முளைக்கூச்சுகளும்
பிரகாரத்தினுடைய எல்லா முளைக்கூச்சுகளும்
வெண்கலமாயிருப்பதாக.

குத்துவிளக்கை எப்பொழுதும் எரியப்பண் ௨௰
ணும்படிக்கு, இஸ்ரவேல் புத்திரர் இடித்து வடிக்
கப்பட்ட தெளிவான ஒலீவ எண்ணெயை
உன்னண்டைக்குக் கொண்டுவர நீ அவர்களுக்
குக் கற்பிப்பாயாக.—ஆசரிப்பின் கூடாரத்தில் ௨௧
சாட்சிக்கு முன்னிருக்கும் திரைக்கு வெளிப்பு
றமாக ஆரோனும் அவன் குமாரரும் அதைச் சா
யங்காலம்துவக்கி, விடியற்காலம்மட்டும் கர்த்த
ருக்குமுன்பாக எரியவைக்கக்கடவர்கள்; இது
அவர்களுக்குத் தலைமுறை தலைமுறையாக இஸ்
ரவேல் புத்திரராலே நடக்கும் நித்திய கட்டளை
யாயிருக்கக்கடவது.

1 உ மோ. ௩௮. ௯.

## ௨௮. அதிகாரம்.

௧. ஆரோனும் அவனுடைய குமாரரும் குருப்பட்டத்திற்கு நியமிக்கப்பட்டது. ௨. பரிசுத்தமான வஸ்திரம் கட்டளையிடப்பட்டது. ௬. ஆசாரியர் சால்வையும், ௰௫. விலைபெறப்பெற்ற பன்னிரண்டு இரத்தினங்களினாலே பதக்கமும், ௩௰. ஊரிமும், தம்மீமும், ௩௧. மாதளம் செடிகளினும் மணிகளினும் ஆசாரிய சால்வையுடனே அங்கியும், ௩௬. ஆசாரியன் முடியின் பட்டமும், ௩௯. சரிகைவேலைசெய்த சட்டையும், ௪௰. ஆரோனுடைய குமாரருக்கு வஸ்திரமும்.

௧ நீ உன் சகோதரனாகிய ஆரோனையும் அவனோ
டேகூட அவன் குமாரரையும் நமக்கு ஆசாரிய
ஊழியம்செய்யும்படிக்கு இஸ்ரவேல்புத்திரரின்
நடுவிலிருந்து பிரித்து உன்னண்டையில் சேர்த்
துக்கொள்; ஆரோனையும், நாதாப், அபீகூ, எலே
யாசார், இத்தமார் என்ற ஆரோனின் குமாரரை
௨ யும்தானே.—உன் சகோதரனாகிய ஆரோனுக்கு
மகிமைக்கும் அலங்காரத்திற்குமான பரிசுத்த
௩ வஸ்திரங்களை உண்டுபண்ணுவாயாக.—ஆரோ
னைப் பரிசுத்தம்பண்ணுகிறதற்கும் அவன் நமக்
கு ஆசாரிய ஊழியம்செய்கிறதற்கும் அவனு
டைய வஸ்திரங்களை உண்டாக்கும்படிக்கு,நாம்
ஞானத்தின் ஆவியால் நிரப்பின ஞானமான இ
௪ ருதயமுள்ள யாவரோடும் நீ பேசுவாயாக.—அவர்
கள் உண்டாக்கவேண்டிய வஸ்திரங்களாவது:
மார்ப்பதக்கமும் ஆசாரிய சால்வையும் அங்கி
யும் முத்துவருணமான உள்சட்டையும் பாகை
யும் நடுக்கட்டும்தானே; அந்த அடைவாய் உன்
சகோதரனாகிய ஆரோன் நமக்கு ஆசாரிய ஊழி
யம்செய்யும்படிக்கு, அவனுக்கும் அவன் குமா
ரருக்கும் பரிசுத்தவஸ்திரங்களை உண்டுபண்
௫ ணக்கடவர்கள்.—அவர்கள் பொன்னும், இளநீ
லநூலும், இரத்தாம்பரநூலும், சிவப்புநூலும்,
மெல்லிய பஞ்சுநூலும் எடுத்து,
௬ ஆசாரிய சால்வையைப் பொன்னினாலும், இ
ளநீலநூலாலும், இரத்தாம்பரநூலாலும், சிவப்பு
நூலாலும், திரித்த மெல்லிய பஞ்சுநூலாலும்,
விநோத வேலையாய்ப் பண்ணக்கடவர்கள்.—
௭ இரண்டு தோளின்மேலும் அதின் இரண்டு முனை
கள் சேர்க்கப்பட்டு, அப்படி அது இணைக்கப்ப
௮ டவேண்டும்.—அந்த ஆசாரிய சால்வையின்மே
லிருக்கவேண்டிய விநோதமான கச்சை அந்த
வேலையாகத்தானே, பொன்னினாலும் இளநீல
நூலாலும் இரத்தாம்பரநூலாலும் சிவப்புநூலா
லும் திரித்த மெல்லிய பஞ்சுநூலாலும் பண்ணப்
பட்டு, அதனோடே ஏகதுண்டாயிருப்பதாக.—
௯ பின்னையும் நீ இரண்டு கோமேதகக் கல்லை வாங்
கி, அவைகளில் இஸ்ரவேல் புத்திரரின் நாமங்
௰ களை வெட்டுவாயாக.—அவர்கள் பிறந்த வரிசை
யின்படியே, அவர்கள் நாமங்களில் ஆறுநாமங்
கள் ஒரு கல்லிலும், மற்ற ஆறு நாமங்கள் மறு
௰௧ கல்லிலும் இருக்கத்தானே.— இரத்தினங்களில்
முத்திரை வெட்டுகிறவர்கள் செய்கிறதுபோல,
அந்த இரண்டு கற்களில் இஸ்ரவேல் புத்திரரின்
நாமங்களை வெட்டி, அவைகளுக்குச் சுற்றிலும்
௰௨ தங்கம் இழைத்து,—ஆரோன் கர்த்தருக்குமுன்
பாகத் தன் இரண்டு தோள்களின்மேலும் இஸ்ர
வேல் புத்திரரின் நாமங்களை நினைப்புக்காகச்
சுமந்துவர, அந்த இரண்டு கற்களை ஆசாரிய சால்
வையினுடைய தோள்களின்மேலே, அவர்கள்
நினைப்புக்கான கற்களாக வைக்கக்கடவாய்.—
ஆகையால் பொன் வளையங்களையும் பண்ணி,— ௰௩
சரியான அளவுகளும் முடிச்சுக்குத்திவேலையு ௰௪
மான இரண்டு சரப்பளிகளையும் சுத்தப்பொன்
னினாலே உண்டாக்கி, முடிச்சுக்குத்திகளான
சரப்பளிகளை அந்த வளையங்களில் சேர்க்கக்
கடவாய்.
விநோத வேலையாய் நியாயத்தின் மார்ப்பதக் ௰௫
கத்தையும் பண்ணுவாயாக; அதை ஆசாரிய சால்
வையின் வேலைக்கொத்ததாய்ப் பண்ணக்கட
வாய்; பொன்னினாலும் இளநீலநூலாலும் இரத்
தாம்பரநூலாலும் சிவப்புநூலாலும் திரித்த மெல்
லிய பஞ்சுநூலாலும் அதைச்செய்வாயாக.—அது ௰௬
நாற் சதுரமும் இரட்டையும் ஒரு சாண் நீளமும்
ஒரு சாண் அகலமுமாய் இருக்கக்கடவது.—அதி ௰௭
லே நான்கு பத்தி இரத்தினக்கற்களை நிறையப்
பதிப்பாயாக; முதலாம்பத்தி கெம்பும் புஷ்பரா
கமும் மரகதமும்,—இரண்டாம் பத்தி சிவப்புக் ௰௮
கல்லும் நீலக்கல்லும் வச்சிரமும், — மூன்றாம் ௰௯
பத்தி பத்மராகமும் வயிடூரியமும் அமேத்தீஸ்
தும்,—நான்காம் பத்தி தர்சீஸ் இரத்தினமும் கோ ௨௰
மேதகமும் யஸ்பியுமாய் இருப்பதாக; அவைகள்
தங்களிடங்களில் பொன்னினாலே பதித்திருக்
கக்கடவது.—இந்தக் கற்கள் இஸ்ரவேல் புத்திர ௨௧
ருடைய நாமங்களின்படியே பன்னிரண்டும், அ
வர்களுடைய நாமங்கள் உள்ளவைகளுமாய்
இருக்கவேண்டும்; பன்னிரண்டு கோத்திரங்க
ளில் ஒவ்வொன்றினுடைய நாமம் ஒவ்வொன்
றிலே முத்திரை வெட்டாய் வெட்டியிருக்கக்
கடவது.—அந்த மார்ப்பதக்கத்திற்கென்று நீ சரி ௨௨
அளவுகளும் முடிச்சுக்குத்திகள் வேலையுமான
சுத்தப்பொன் சரப்பளிகளையும் பண்ணி,—இர ௨௩
ண்டு பொன்மோதிரங்களையும் மார்ப்பதக்கத்
திற்குப் பண்ணி, இந்த இரண்டு மோதிரங்களை
மார்ப்பதக்கத்தின் இரண்டு முனைகளிலே வைத்
து,—பொன்னான அந்த இரண்டு முடிச்சுக்குத்தி ௨௪
களை மார்ப்பதக்கத்தின் முனைகளில் இருக்கிற
இரண்டு மோதிரங்களில் மாட்டி,—இரண்டு மு ௨௫
டிச்சுக்குத்திகளின் இரண்டு நுனிகளை ஆசாரிய
சால்வையினுடைய தோள்களின்மேல் அதின்
முன்புறத்திலிருக்கிற இரண்டு வளையங்களில்
மாட்டிப்போடுவாயாக.—நீ பின்னையும் இரண்டு ௨௬
பொன்மோதிரங்களைப் பண்ணி, அவைகளை ஆ
சாரிய சால்வையின் கீழ்ப்புறத்திற்கு எதிரான
மார்ப்பதக்கத்தினுடைய மற்ற இரண்டு முனைக
ளில் அதினுடைய ஓரத்திற்குள்ளாக வைத்து,—
வேறே இரண்டு பொன்மோதிரங்களையும் பண் ௨௭
ணி, அவைகளை ஆசாரிய சால்வையினுடைய
முன்புறத்தின் இரண்டு கீழ்ப்பக்கங்களில் அ
தின் இணைப்புக்கு எதிராகவும் ஆசாரிய சால்
வையின் விநோதமான கச்சைக்கு மேலாகவும்
வைத்து,—மார்ப்பதக்கம் ஆசாரிய சால்வையின் ௨௮
விநோதமான கச்சைக்கு மேலாக இருக்கும்ப

டிக்கும், அது ஆசாரிய சால்வையிலிருந்து விட்
டுப்போகாதபடிக்கும், அதை அதின் மோதிரங்
களால் ஆசாரிய சால்வையின் மோதிரங்களோ
டே இளநீலமான கயிற்றினாலே கட்டுவார்க
௨௯ ளாக.-அப்படியே ஆரோன் பரிசுத்த ஸ்தலத்திற்
குள் பிரவேசிக்கையில், தன் இருதயத்தின்மேல்
நியாயத்தின் மார்ப்பதக்கத்திலே இஸ்ரவேல் புத்
திரரின் நாமங்களை எப்பொழுதும் கர்த்தருக்கு
முன்பாக நினைப்புண்டாகும்படிக்குச் சுமந்து
வரக்கடவன்.
௩௰ நியாயத்தின் மார்ப்பதக்கத்திலே வெளிச்சங்
களையும் உத்தமங்களையும் ஆரோன் கர்த்தரின் சந்
நிதிக்குள் பிரவேசிக்கையில், அவைகள் அவன்
இருதயத்தின்மேல் இருக்கும்படிக்கு வைப்பா
யாக; அப்படியே ஆரோன் தன் இருதயத்தின்
மேலே இஸ்ரவேல் புத்திரருடைய நியாயத்தை
எப்பொழுதும் கர்த்தருக்குமுன்பாகச் சுமந்து
வரக்கடவன்.
௩௧ ஆசாரிய சால்வையின்கீழிருக்கும் அங்கியை
முழுவதும் இளநீலநூலால் உண்டாக்கக்கட
௩௨ வாய். — தலை நுழைகிற அதின் வாய் அதின்
நடுவில் இருக்கவும் அதின் வாய்க்கு நெய்த
வேலையான ஒரு நாடா சுற்றிலும் இருக்கவும்
வேண்டும்; அது கிழியாதபடிக்கு மார்க்கவ
சத்தின்வாய்க்கொத்தது அதற்கு இருப்பதாக.—
௩௩ அதின் கீழோரங்களிலோவென்றால், இளநீல
நூல் இரத்தாம்பரநூல் சிவப்புநூல் வேலையான
மாதளம்பழங்களையும், அவைகளின் நடுவே
சுற்றிலும் பொன்மணிகளையும், அதின் ஓரங்களி
லே சுற்றிலும் தொங்கப்பண்ணிவைப்பாயாக.-
௩௪ அங்கியின் ஓரங்களிலே சுற்றிலும் ஒரு பொன்
மணியும், ஒரு மாதளம்பழமும், ஒரு பொன்
மணியும், ஒரு மாதளம்பழமுமாய்த் தொங்குவ
௩௫ தாக.—ஆரோன் ஆராதனைசெய்யக் கர்த்தருக்கு
முன்பாகப் பரிசுத்த ஸ்தலத்திற்குள் பிரவேசிக்
கும்பொழுதும், வெளியே வரும்பொழுதும் அ
வன் சாவாதபடிக்கு அது அவனில் அவன் சத்
தம்கேட்கப்படத் தரிக்கப்பட்டிருக்கவேண்டும்.
௩௬ நீ சுத்தப் பொன்பட்டத்தையும் பண்ணி, அ
திலே கர்த்தருக்குப் பரிசுத்தம் என்பதை முத்
௩௭ திரை வெட்டாக வெட்டி,—அது பாகையிலி
ருக்கும்படியாக, அதை இளநீலமான கயிற்றி
லே பாகையின் முகப்பிலே கோத்துக் கட்டி
௩௮ வைப்பாயாக.—இஸ்ரவேல் புத்திரர் தங்கள்
காணிக்கைகளில் எல்லாம் பரிசுத்தம்பண்ணிச்
செலுத்தும் பரிசுத்த வஸ்துக்களுடைய அக்
கிரமத்தை ஆரோன் சுமந்துவரும்படிக்கு, அது
ஆரோனுடைய நெற்றியின்மேல் இருப்பதாக;
கர்த்தருக்குமுன்பாக அவர்கள்மேல் பிரியம்
உண்டாகும்படிக்கு, அது எப்பொழுதும் அவன்
நெற்றியின்மேல் இருப்பதாக.
௩௯ மெல்லிய பஞ்சுநூலால் முத்துவருணமான
உள்சட்டையையும் மெல்லிய பஞ்சுநூலால் பா
கையையும் உண்டாக்கி, நடுக்கட்டையோவெ
ன்றால் சித்திரத்தையல் வேலையாகப் பண்ணு
வாயாக.—நீ ஆரோனுடைய குமாரருக்கும் சட் ௪௰
டைகளையும், நடுக்கட்டுகளையும், மகிமைக்கும்
அலங்காரத்திற்குமான குல்லாக்களையும் உண்டு
பண்ணுவாயாக.— உன் சகோதரனாகிய ஆரோ ௪௧
னும் அவனோடேகூட அவன் குமாரரும் நமக்
கு ஆசாரிய ஊழியம்செய்யும்படிக்கு, நீ அந்த
வஸ்திரங்களை அவர்களுக்கு உடுத்து, அவர்களை
அபிஷேகம்பண்ணி, அவர்கள் கைகளை நிரப்பி,
அவர்களைப் பரிசுத்தம்பண்ணுவாயாக.—அவர் ௪௨
களுக்கு இடுப்புத்துவக்கி முழங்கால்கள்மட்டும்
வருகிற சணல்நூல் சல்லடங்களையும், நிருவா
ணத்தின் சதையை மூடும்படிக்கு உண்டுபண்
ணக்கடவாய். — ஆரோனும் அவன் குமார ௪௩
ரும் பரிசுத்த ஸ்தலத்திலே ஆராதனைசெய்ய
ஆசரிப்பின் கூடாரத்திற்குள் பிரவேசிக்கும்
பொழுதும், அல்லது பலிபீடத்தண்டைக்குச்
சேரும்பொழுதும், அவர்கள் அக்கிரமம் சுமந்து
சாவாதபடிக்கு, அவைகள் அவர்களில் தரித்
திருக்கவேண்டும்; அவனுக்கும் அவனுக்குப்
பிற்பாடு அவன் வித்தாருக்கும் அது நித்திய
கட்டளை.

## ௨௯. அதிகாரம்.

௧. குருக்கள் அபிஷேகத்துக்குச் செய்யும் பலியையும் சடங்குகளையும், ௩௮. நாள்தோறும் செலுத்தும் தகனபலியையுங்குறித்தது. ௪௫. பாரபரன் இஸ்ரவேல் சனங்களுக்குள் இருப்பேனென்று சொல்லப் பட்டது.

நமக்கு ஆசாரிய ஊழியம்செய்ய அவர்களைப் ௧
பரிசுத்தம்பண்ணும்படிக்கு நீ அவர்களுக்குச்
செய்யவேண்டியதாவது: நீ ஒரு காளை எருதை
யும் பழுதற்ற இரண்டு ஆட்டுக்கடாக்களையும்,—
கோதுமையின் மெல்லிய மாவினாலே சுட்ட ௨
புளிப்பில்லாத அப்பத்தையும், எண்ணெயிலே
பிசைந்த புளிப்பில்லாத அதிரசங்களையும், எண்
ணெய் பூசப்பட்ட புளிப்பில்லாத அடைகளை
யும் வாங்கு.— நீ இவைகளை ஒரே கூடையிலே ௩
வைத்து, கூடையோடே இவைகளையும் காளை
எருதையும் இரண்டு ஆட்டுக்கடாக்களையும்
கொண்டுவந்து,—ஆரோனையும் அவன் குமார ௪
ரையும் ஆசரிப்புக்கூடாரத்தின் வாசல்முன்பா
கச் சேரப்பண்ணி, அவர்களைத் தண்ணீரினா
லே கழுவி,—வஸ்திரங்களை எடுத்துக்கொண்டு, ௫
ஆரோனுக்கு உள்சட்டையையும் ஆசாரிய சால்
வையின் அங்கியையும் ஆசாரிய சால்வையை
யும் மார்ப்பதக்கத்தையும் தரித்து, அவனுக்கு ஆ
சாரிய சால்வையின் விநோதமான கச்சையைக்
கட்டி,—அவன் தலையிலே பாகையைப் போட் ௬
டு, பரிசுத்த கிரீடத்தைப் பாகையிலே தரித்து,-
அபிஷேகத்தெண்ணெயை வாங்கி, அவன் தலை ௭
யின்மேலே வார்த்து, அவனை அபிஷேகம்
பண்ணி,
பிற்பாடு அவன் குமாரரைச் சேரப்பண்ணி, ௮
ஆசாரிய ஊழியம் அவர்களுக்கு நித்தியகட்ட
ளையாக இருக்கும்படிக்கு அவர்களுக்குச் சட்
டைகளை உடுத்து,—ஆரோனையும் அவன் குமார ௯

னையும் நடுக்கட்டுகளால் அரைக்கட்டி, இவர்
களுக்குக் குல்லாக்களைப் போட்டுக் கட்டி,
ஆரோனுடைய கையையும் அவன் குமாரரின்
கையையும் நிரப்பி,
௰ காளை எருதை ஆசரிப்பின் கூடாரத்திற்கு
முன்பாகக் கொண்டுவருவாயாக; அப்பொழுது
ஆரோனும் அவன் குமாரரும் தங்கள் கைகளைக்
காளை எருதினுடைய தலையின்மேலே வைக்கக்
௰௧ கடவர்கள்.—பிற்பாடு நீ அந்தக் காளை எருதை
ஆசரிப்புக் கூடாரத்தின் வாசலண்டையிலே
கர்த்தருக்குமுன்பாகக் குரல்வளை அறுத்து,—
௰௨ அதின் இரத்தத்திலே கொஞ்சம் வாங்கி, உன்
விரலினால் பலிபீடத்தில் கொம்புகள்மேல் இட்
டு, மற்ற இரத்தத்தை எல்லாம் பலிபீடத்து அடி
௰௩ யிலே ஊற்றி,—குடல்களை மூடிய எல்லாக்
கொழுப்பையும் கல்லீரலின்மேலிருக்கிற சவ்
வையும் இரண்டு குண்டிக்காய்களையும் அவை
களின்மேலிருக்கிற கொழுப்பையும் எடுத்து,
பலிபீடத்தின்மேலே கொளுத்திப்போட்டு, —
௰௪ காளை எருதின் மாம்சத்தையும் அதின் தோலை
யும் அதின் சாணியையும் பாளயத்திற்குப் புறம்
பே அக்கினியால் சுட்டெரிக்கக்கடவாய்; அது
பாவம்போக்கும் பலி.
௰௫ அதற்குப்பிறகு அந்த ஆட்டுக்கடாக்களில்
ஒன்றைக் கொண்டுவந்து நிறுத்துவாயாக; அதி
னுடைய தலையின்மேல் ஆரோனும் அவன் குமா
ரரும் தங்கள் கைகளை வைக்கக்கடவர்கள்.—
௰௬ பிற்பாடு நீ அதைக் குரல்வளை அறுத்து, அதின்
இரத்தத்தைப் பிடித்து, பலிபீடத்தின்மேலே
௰௭ சுற்றிலும் தெளித்து,—ஆட்டுக்கடாவை அதின்
சந்துசந்தாய்த் துண்டித்து, அதின் குடல்களை
யும் அதின் தொடைகளையும் கழுவி, அவைகளை
அந்தத் துண்டங்களின்மேலும் அதின் தலையின்
௰௮ மேலும் வைத்து,—ஆட்டுக்கடாவை முழுவதும்
பலிபீடத்தின்மேல் கொளுத்திப்போடுவாயாக;
அது கர்த்தருக்கான சர்வாங்க தகனபலி; அது
ஆற்றுகிற வாசனையும் கர்த்தருக்கான தகனமு
மாயிருக்கும்.
௰௯ அதற்குப்பிறகு நீ மற்ற ஆட்டுக்கடாவைக்
கொண்டுவந்து நிறுத்துவாயாக; அதினுடைய
தலையின்மேல் ஆரோனும் அவன் குமாரரும் தங்
௨௰ கள் கைகளை வைக்கக்கடவர்கள். — பிற்பாடு நீ
அதைக் குரல்வளை அறுத்து, அதின் இரத்தத்தில்
கொஞ்சம் வாங்கி, ஆரோனின் வலதுகாது மட
லிலும் அவன் குமாரரின் வலதுகாது மடலிலும்
அவர்கள் வலதுகையினுடைய பெருவிரலின்
மேலும் அவர்கள் வலதுகாலினுடைய பெரு
விரலின்மேலும் இட்டு, மற்ற இரத்தத்தைப் பலி
௨௧ பீடத்தின்மேல் சுற்றிலும் தெளித்து,-பலிபீடத்
தின்மேலிருக்கும் இரத்தத்திலும் அபிஷேக
எண்ணெயிலும் கொஞ்சம் எடுத்து, ஆரோனும்
அவன் வஸ்திரங்களும் அவனோடும்கூட அவன்
குமாரரும் அவர்கள் வஸ்திரங்களும் பரிசுத்த
மாக்கப்படும்படிக்கு, அவன்மேலும் அவன் வஸ்
திரங்கள்மேலும் அவன் குமாரர்மேலும் அவர்

கள் வஸ்திரங்கள்மேலும் தெளித்து,-அந்த ஆட் ௨௨
டுக்கடாக்கள் நிரப்புதலின் ஆட்டுக்கடாவான
படியினாலே, அதிலிருக்கும் கொழுப்பையும்,
வாலையும், குடல்களை மூடிய கொழுப்பையும்,
கல்லீரலின்மேலிருக்கிற சவ்வையும், இரண்டு
குண்டிக்காய்களையும், அவைகளின்மேலிருக்
கிற கொழுப்பையும், வலது முன்னம்தொடை
யையும்,—கர்த்தருக்குமுன்பாக வைத்திருக்கிற ௨௩
புளிப்பில்லாத அப்பங்களின் கூடையில் ஒரு
அப்பத்தையும், எண்ணெய் அப்பமாகிய ஒரு
அதிரசத்தையும், ஒரு அடையையும், எடுத்து,—
அவைகளை எல்லாம் ஆரோனின் உள்ளங்கைகள் ௨௪
மேலும் அவன் குமாரரின் உள்ளங்கைகள்மே
லும் வைத்து, அவைகளைக் கர்த்தருக்குமுன்பாக
அசைவாட்டப்படுகிற காணிக்கையாக அசை
வாட்டி,—பிற்பாடு அவைகளை அவர்கள் கைக ௨௫
ளிலெடுத்து, பலிபீடத்தின்மேலே சர்வாங்க தக
னபலியின்மீதில் வைத்து, கர்த்தருக்குமுன்பாக
ஆற்றுகிற வாசனையாகக் கொளுத்திப்போடக்க
டவாய்; அது கர்த்தருக்கான தகனம்.—ஆரோ ௨௬
னின் கைகளை நிரப்புதலின் ஆட்டுக்கடாவிலே
நீ மார்க்கண்டத்தை எடுத்து, அதைக் கர்த்தருக்கு
முன்பாக அசைவாட்டப்படும் காணிக்கையாக
அசைவாட்டக்கடவாய்; அது உன் பங்காயிருக்
கும்.-ஆரோனின் கைகளையும் அவன் குமாரரின் ௨௭
கைகளையும் நிரப்புதலின் ஆட்டுக்கடாவிலே அ
சைவாட்டப்படுகிற மார்க்கண்டத்தையும் ஏறெ
டுத்து, படைக்கப்படுகிற முன்னம்தொடையை
யும் பரிசுத்தமாக்குவாயாக. — இஸ்ரவேல் புத் ௨௮
திரர் பலியிடுகிறதிலே அப்படிக்கொத்தவைகள்
நித்தியகட்டளையாக ஆரோனையும் அவன் குமார
ரையும் சேர்வதாக; ஏனெனில் அது ஏறெடுக்கிற
படைப்பு; இஸ்ரவேல் புத்திரருடைய சமாதான
பலிகளிலே ஏறெடுக்கப்படும் அவர்களுடைய
படைப்புக் கர்த்தருடையது.
ஆரோனுக்கிருக்கிற பரிசுத்த வஸ்திரங்களை ௨௯
அவனுக்குப் பிற்பாடு அவன் குமாரர் உடுத்து,
அபிஷேகம்பண்ணப்படவும், அவர்கள் கைகள்
நிரப்பப்படவும், அவைகள் இவர்களைச் சேர்வ
தாக. — பரிசுத்த ஸ்தலத்தில் ஆராதனைசெய்ய ௩௰
ஆசரிப்பின் கூடாரத்திற்குள் பிரவேசிக்கத்தக்க
தாக, அவன் குமாரரில் அவன் பட்டத்திற்கு
வருகிற ஆசாரியன் அவைகளை ஏழுநாள்மட்டும்
உடுத்துக்கொள்ளக்கடவன்.—கைகளை நிரப்புத ௩௧
லின் ஆட்டுக்கடாவை நீ எடுத்து, அதின் மாம்சத்
தைப் பரிசுத்த இடத்தில் வேவிப்பாயாக.-அந்த ௩௨
ஆட்டுக்கடாவின் மாம்சத்தையும், கூடையிலி
ருக்கிற அப்பத்தையும், ஆரோனும் அவன் குமா
ரரும் ஆசரிப்புக்கூடாரத்தின் வாசலிலே புசிக்
கக்கடவர்கள்.-ஏனெனில் அவர்களுடைய கை ௩௩
களை நிரப்பவும், அவர்களைப் பரிசுத்தம்பண்ண
வும், அதினாலே பாவநிவிர்த்தி செய்யப்பட்
டது; அந்நியனோவெனில் அவைகளிலே புசிக்க
வேண்டாம்; ஏனெனில் அவைகள் பரிசுத்தம்.-
கைகளை நிரப்புதலின் மாம்சத்திலும் அப்பத்தி ௩௪

லும் ஏதாகிலும் விடியற்காலம்மட்டும் மீந்திருந்த
தேயானால், அதை அக்கினியாலே சுட்டெரிப்
பாயாக; அது புசிக்கப்படவேண்டாம்; ஏனெ
னில் அது பரிசுத்தம்.

௩௫ இந்தப்பிரகாரமாக நீ ஆரோனுக்கும் அவன்
குமாரருக்கும் நாம் உனக்குக் கற்பித்தபடி எல்
லாம் செய்வாயாக; நீ ஏழுநாள்மட்டும் அவர்கள்
௩௬ கைகளை நிரப்பி,—பாவநிவிர்த்திக்காக ஒவ்வொ
ருநாளில் ஒவ்வொரு காளை எருதைப் பாவம்
போக்கும் பலியாக்கி, பலிபீடத்தையும் பாவ
நிவிர்த்தியை அதற்காகச் செய்கிறதினாலே பாவ
மற்றதாக்கி, அதைப் பரிசுத்தமாக்கும்படிக்கு
௩௭ அதை அபிஷேகம்பண்ணுவாயாக. — ஏழுநாள்
மட்டும் பலிபீடத்திற்காகப் பாவநிவிர்த்தியைப்
பண்ணி, அதைப் பரிசுத்தமாக்கக்கடவாய்; பலி
பீடம் பரிசுத்தத்திற்குப் பரிசுத்தமாய் இருப்
பது; பலிபீடத்தைத் தொடுகிறதெல்லாம் பரிசுத்
தமாயிருப்பதாக.

௩௮ பலிபீடத்தின்மேல் நீ பலியிடவேண்டியதே
தெனில், எப்பொழுதும் ஒவ்வொரு நாளிலே
ஒருவயதான இரண்டிரண்டு ஆட்டுக்குட்டிகள்
௩௯ தானே.—ஒரு ஆட்டுக்குட்டியைக் காலையிலும்
மற்ற ஆட்டுக்குட்டியை அந்திநேரமான வேளை
௪௰ யிலும் பலியிடுவாயாக.—ஒரு மரக்காலிலே பத்
திலொரு பங்கானதும், இடித்து வடிக்கப்பட்ட
கால்படி எண்ணெயிலே பிசைந்ததுமாகிய மெல்
லியமாவையும், திராட்சப்பழ இரசத்திலே கால்
படியாகிய ஒரு ஊற்றுதலையும், ஒரு ஆட்டுக்
௪௧ குட்டிக்காகப் படைத்து, — மற்ற ஆட்டுக்குட்
டியை அந்திநேரமாகிறவேளையிலே பலியிடுகிற
பொழுது, காலையில் படைத்த காணிக்கைக்கும்
அதின் ஊற்றுதலுக்கும் ஒத்தபிரகாரமாக அதை
ஆற்றுகிற வாசனைக்காகச் செய்யக்கடவாய்;
௪௨ அது கர்த்தருக்கான தகனம். — நாம் உன்னு
டனே பேச உங்களைச் சந்திக்கப்போகிற தான
மாகிய ஆசரிப்புக் கூடாரத்தினுடைய வாச
லென்ற கர்த்தரின் சந்நிதியிலே, இவைகள் உங்
கள் தலைமுறை தலைமுறையாக எப்பொழுதும்
செலுத்தப்படவேண்டிய சர்வாங்க தகனபலி
௪௩ கள்.—[1]அங்கே இஸ்ரவேல் புத்திரரைச் சந்திப்
போம்; அந்த ஸ்தலம் நம்முடைய மகிமையி
௪௪ னாலே பரிசுத்தமாக்கப்படும்.—நாம் ஆசரிப்பின்
கூடாரத்தையும்பலிபீடத்தையும் பரிசுத்தமாக்கி,
ஆரோனையும் அவன் குமாரரையும் நமக்கு ஆசா
ரிய ஊழியம்செய்யும்படிக்குப் பரிசுத்தமாக்கி,-
௪௫ இஸ்ரவேல் புத்திரரின் நடுவே வாசம்பண்ணி,
௪௬ அவர்களுக்குப் பராபரனாய் இருப்போம்.—தங்
கள் நடுவே நாம் வாசம்பண்ணும்படிக்கு, தங்
களை எகிப்துதேசத்திலிருந்து புறப்படப்பண்
ணின நாம் தங்கள் பராபரனாகிய கர்த்தரென்று
அறிவார்களாக; நாம் அவர்கள் பராபரனாகிய
கர்த்தர்.

1 ௨ மோ. ௨௰. ௨௪.

## ௩௰. அதிகாரம்.

௧. தூபதீபத்தின் பீடமும், ௰௧. ஆத்துமாக்களின் மீட்பும், ௰௭. பித்தளைத் தொட்டியும், ௨௨. அபிஷேகத்தின் எண்ணெயும், ௩௪. பரிமளக்கலப்பும் குறிக்கப்பட்டது.

தூபம்காட்டுகிறதற்கு [2]ஒரு தூபபீடத்தையும் ௧
சீத்திம் மரங்களினாலே உண்டாக்குவாயாக. —
அது ஒருமுழ நீளமும் ஒருமுழ அகலமுமான ௨
சதுரமும், இரண்டுமுழ உயர்ச்சியும் அதின்
கொம்புகள் அதனோடே ஏகமாயிருப்பதாக.—நீ ௩
அதையெல்லாம் அதின்மேலே பலகையையும்
சுற்றிலுமிருக்கும் அதின் பக்கங்களையும் அதின்
கொம்புகளையும் சுத்தப் பொன்தகட்டால் மூடி,
சுற்றிலும் அதற்குப் பொன்திரணையை உண்டு
பண்ணி,—அதினுடைய திரணையின்கீழ் அதின் ௪
இரண்டு பக்கங்களிலும் அதைச் சுமக்கும்
வாரைகளின் இடங்களாகிற இவ்விரண்டு
பொன் வளையங்களை அதற்குப் பக்கத்தின் இ
ரண்டு கோடிகள் அருகே உண்டாக்கி,—அதின் ௫
வாரைகளையும் சீத்திம் மரங்களாலே பண்ணி,
பொன்தகட்டால் மூடக்கடவாய். — சாட்சியி ௬
னுடைய பெட்டியின் முன்னேயும் சாட்சியின்
மேல் இருக்கிறதும் நாம் உன்னைச் சந்திப்பது
மான கிருபாசன மூடியின் முன்னேயும் இருக்
கும் திரைக்குமுன்பாக அதை வைக்கக்கட
வாய்.—ஆரோன் காலைமாறு விளக்குகளைச் சீர்ப் ௭
படுத்துகிறபொழுதும், அதின்மீதில் சுகந்தவர்க்
கங்களினாலே தூபம்காட்டுவானாக; அந்திநேர
மாகிறவேளையிலே விளக்குகளை ஏற்றுகிறபொ
ழுதும், அதின்மீதில் கந்தவர்க்கங்களினாலே
தூபம்காட்டக்கடவன். — அது எப்பொழுதும் ௮
உங்கள் தலைமுறை தலைமுறையாகக் கர்த்தருக்கு
முன்பாகக் காட்டப்படும் தூபம்.–அதின் மீதில் ௯
அந்நிய தூபவர்க்கத்தையாகிலும், ஒரு தகனபலி
யையாகிலும், காணிக்கையையாகிலும், ஏறப்
பண்ணீர்களாக;அதின்மேல் ஒரு ஊற்றுதலையும்
ஊற்றீர்களாக.–வருஷத்தில் ஒருமுறை ஆரோன் ௰
அதின் கொம்புகளின்மேலே பாவங்களை நிவிர்த்
திபண்ணும் பலியின் இரத்தத்தாலே பாவநிவிர்த்
திபண்ணுவானாக; அப்படி அவன் உங்கள் தலை
முறை தலைமுறையாக வருஷத்தில் ஒருமுறை
பாவநிவிர்த்திபண்ணுவானாக;அது கர்த்தருக்குப்
பரிசுத்தத்திற்குப் பரிசுத்தமாயிருக்குமென்றார்.
பின்னையும் கர்த்தர் மோசேயோடே பேசிச் ௰௧
சொன்னதாவது:–நீ இஸ்ரவேல் புத்திரரை அவர் ௰௨
கள் இலக்கத்தின்படியே கணக்குப் பார்க்கிற
பொழுது, அவர்களை எண்ணுகையில் அவர்க
ளுக்குள்ளே ஒரு வாதை உண்டாகாதபடிக்கு,
அவர்களில் ஒவ்வொருவர் தம்தம் ஆத்துமாவிற்
காகக் கர்த்தருக்கு மீட்கும்பொருளைக் கொடுக்
கக்கடவர்கள்.-எண்ணப்படுகிறவர்களின் கணக் ௰௩
கிலே வருகிறவன் எல்லாம் பரிசுத்த ஸ்தலத்துச்
சேக்கல் கணக்கின்படி அரைச்சேக்கலைக் கொ
டுக்கவேண்டும்; சேக்கலானது இருபது கேரா;

2 ௨ மோ. ௩௭. ௨௫.

அரைச்சேக்கலே கர்த்தருக்குச் செலுத்தப்படு
௰௪ வது.—எண்ணப்படுகிறவர்களின் கணக்கிலே
வருகிற இருபது வயதுமுதல்கொண்டு மேல்பட்
டவனெல்லாம் அதைக் கர்த்தருக்குச் செலுத்த
௰௫ வேண்டும்.—உங்கள் ஆத்துமாக்களுக்காகப் பாவ
நிவிர்த்திபண்ணும் கட்டளையை நீங்கள் கர்த்த
ருக்குச் செலுத்துகையில், அரைச் சேக்கலுக்கு
ஐசுவரியவான் ஏறக்கொடுக்கவும் வேண்டாம்;
தரித்திரன் குறையக்கொடுக்கவும் வேண்டாம்.—
௰௬ பாவநிவிர்த்தியின் அந்தத் திரவியத்தை நீ இஸ்
ரவேல் புத்திரர்கையில் வாங்கி, அதை ஆசரிப்
புக் கூடாரத்தின் வேலைக்குக் கொடுப்பாயாக;
அப்படியே உங்கள் ஆத்துமாக்களுக்காகப் பாவ
நிவிர்த்தியாகும்படிக்கு, அது கர்த்தருக்குமுன்
பாக இஸ்ரவேல் புத்திரரின் நினைப்புக்காக இ
ருக்குமென்றார்.
௰௭ பின்னையும் கர்த்தர் மோசேயோடே பேசிச்
௰௮ சொன்னதாவது:—[1]கழுவுகிறதற்கு நீ வெண்க
லத்தால் ஒரு தொட்டியையும் வெண்கலத்தால்
அதின் புரிமணையையும் உண்டாக்கி, அதை ஆச
ரிப்பின் கூடாரத்திற்கும் பலிபீடத்திற்கும் நடு
வே வைத்து, அதிலே தண்ணீர் வார்ப்பாயாக.—
௰௯ அதினிடத்தில் ஆரோனும் அவன் குமாரரும்
தங்கள் கைகளையும் தங்கள் கால்களையும் கழு
௨௰ வக்கடவர்கள்.—அவர்கள் ஆசரிப்புக் கூடாரத்தி
ற்குள் பிரவேசிக்கும்பொழுதும், அல்லவென்று
கர்த்தருக்குத் தகனத்தைக் கொளுத்தவும் பலிபீ
டத்தண்டைக்கு ஆராதனைசெய்யவும் சேரும்
பொழுதும், அவர்கள் சாவாதபடிக்குத் தண்ணீரி
௨௧ னாலே தங்களைக் கழுவக்கடவர்கள்.—அவர்கள்
சாவாதபடிக்குத் தங்கள் கைகளையும் தங்கள்
கால்களையும் தாமே கழுவக்கடவர்கள்; அது அவ
னுக்கும், தலைமுறை தலைமுறையாக இருக்கும்
அவன் வித்தாருக்கும், நித்தியகட்டளை என்றார்.
௨௨ பின்னையும் கர்த்தர் மோசேயோடே பேசிச்
௨௩ சொன்னதாவது:—நீ மேன்மைத்தரமான சுகந்த
வர்க்கங்களாகிற தானாய் வடிந்த வெள்ளைப்போ
ளத்திலே, பரிசுத்த ஸ்தலத்தின் சேக்கலாலே
ஐந்நூறு சேக்கலிடையையும், சுகந்த கறுவாப்
பட்டையிலே பாதி அம்மாத்திரமான இருநூற்
றைம்பது சேக்கலிடையையும், சுகந்தவசம்பில்
௨௪ இருநூற்றைம்பது சேக்கலிடையையும்,—காசி
யாவில் ஐந்நூறு சேக்கலிடையையும், ஒலிவ
எண்ணெயில் ஒரு படியையும், வாங்கிக்கொ
௨௫ ண்டு,—அதனால் தயிலக்காரன் வேலையாகக் கூட்
டப்பட்ட பரிமளதயிலமான [2]பரிசுத்த அபி
ஷேக எண்ணெயை உண்டுபண்ணுவாயாக;
அது பரிசுத்த அபிஷேக எண்ணெயாயிருக்கக்
௨௬ கடவது.—அதினாலே நீ ஆசரிப்பின் கூடாரத்
௨௭ தையும், சாட்சியின் பெட்டியையும்,—மேசை
யையும், அதினுடைய எல்லா முட்டுகளையும்,
குத்துவிளக்கையும், அதின் முட்டுகளையும், தூ
௨௮ பம்காட்டும் பீடத்தையும்,—தகனபலிபீடத்தை
யும், அதினுடைய எல்லா முட்டுகளையும்,
தொட்டியையும், அதின் புரிமணையையும், அபி
ஷேகம்பண்ணி,—அவைகள் பரிசுத்தத்திற்குப் ௨௯
பரிசுத்தமாயிருக்கும்படிக்கு, அவைகளைப் பரி
சுத்தமாக்குவாயாக; அவைகளைத் தொடுகிறதெல்
லாம் பரிசுத்தமாயிருப்பது.—நீ ஆரோனையும், ௩௰
அவன் குமாரரையும் நமக்கு ஆசாரிய ஊழியம்
செய்யும்படிக்கு அபிஷேகம்பண்ணி, அவர்
களைப் பரிசுத்தமாக்குவாயாக.—இஸ்ரவேல் புத் ௩௧
திரரோடே நீ பேசிச் சொல்லவேண்டியதாவது:
இது உங்கள் தலைமுறை தலைமுறையாக நமக்
குப் பரிசுத்த அபிஷேக எண்ணெயாயிருப்
பது.—அது மனிதனுடைய மாம்சத்தின்மேல் ௩௨
வார்க்கப்படவேண்டாம்; அவர்கள் அது செய்
யப்பட்ட திட்டத்திற்கொத்தவிதமாகச் செய்ய
வும்வேண்டாம்; அது பரிசுத்தமானது; அது
உங்களுக்குப் பரிசுத்தமாயிருப்பதாக.—அதைப் ௩௩
போலொத்த தயிலத்தைக் கூட்டுகிறவனும், அதி
லெடுத்து அந்நிய வஸ்துவின்மேல் வார்க்கிறவ
னும், தன் சனத்திலிராதபடிக்கு அறுப்புண்டு
போகக்கடவனென்று சொல்லென்றார்.
பின்னையும் கர்த்தர் மோசேயோடே சொன் ௩௪
னதாவது: நீ கந்தவர்க்கங்களாகிய வடிந்தவெள்
ளைப்போளமும் குங்கிலியமும் அல்பான் பிசி
னுமென்ற கந்தவர்க்கங்களையும் சுத்தமான குங்
கிலியத்தையும் ஒன்றுக்கொன்று சரியிடையாக
வாங்கிக்கொண்டு,—அதைத் தயிலக்காரன் வே ௩௫
லையாகப் பரிமளமேற்றி, துப்புரவும் பரிசுத்தமு
மான [3]தூபவர்க்கமாக்கி,—அதிலே சிலவற்றை ௩௬
இடித்துப் பொடியாக்கி, நாம் உன்னைச் சந்திக்
கப்போகிற ஆசரிப்பின் கூடாரத்திலிருக்கும்
சாட்சிக்குமுன்பாக வைப்பாயாக; உங்களுக்கு
அது பரிசுத்தத்திற்குப் பரிசுத்தமாயிருக்கக்கட
வது.—இந்தத் தூபவர்க்கத்தை நீ செய்கிறதிட் ௩௭
டத்திற்கு ஒத்தவிதமாக நீங்கள் உங்களுக்குச்
செய்யவேண்டாம்; அது உனக்குக் கர்த்தருக்
கென்று பரிசுத்தமாயிருப்பதாக.—அதைப்போ ௩௮
லொத்ததை மோப்பதற்காகச் செய்கிறவன் தன்
சனத்தில் இராதபடிக்கு அறுப்புண்டுபோகக்க
டவன் என்றார்.

## ௩௧. அதிகாரம்.

௧. பெத்சாலேயேல் என்பவனும், அகோலியாப் என்பவனும் கூடாரத்தின் வேலைக்காக அழைப்பிக்கப்பட்டதும், ஏத்தனிக்கப்பட்டதும், ௰௨. ஓய்வுநாளை அனுசரிக்க மறுபடியும் கட்டளையிட்டது. ௰௮. மோசே சாட்சியின் இரண்டு கற்பலகைகளைப் பெற்றுக்கொண்டது.

கர்த்தர் மோசேயோடே பேசிச் சொன்னதா ௧
வது:—இதோ நாம் யூதாவின் கோத்திரத்திலே ௨
ஊருடைய மகனான ஊரியின் குமாரன் பெத்சா
லேயேலைப் பேர்சொல்லி அழைத்து,—அவன் ௩
விநோதமான வேலைகளை யோசித்துப் பண்ணு
கிறதற்கும், பொன்னிலும் வெள்ளியிலும் வெண்
கலத்திலும் வேலை செய்கிறதற்கும்,— இரத்தின ௪
ங்களை முத்திரைவெட்டாக வெட்டிப் பதித்து
வைக்கிறதற்கும், மரத்தில் நேர்த்தியான வேலை
செய்கிறதற்கும், சகலவித வேலையைப் பண்ணு

1 ௨ மோ ௩௮. ௮: ௪௰. ௩௰.—2 ௨ மோ. ௩௭. ௨௯.

3 ௨ மோ. ௩௭. ௨௯.

௫ கிறதற்கும்,—ஞானமும் உணர்வும் அறிவும் சகல
வித வேலைக்கான வித்தையும் அவனுக்குண்
டாக, அவனைப் பராபரனுடைய ஆவியினாலே
௬ நிரப்பினேன்.—இதோ நாம் தாண்கோத்திரத்தி
லே அகிசாமாகின் குமாரனாகிய அகோலியப்
பை அவனோடே கூட்டி, ஞானமான இருதய
முள்ள யாவருடைய இருதயத்திலும் ஞானத்
தைக் கொடுத்தோம்; நாம் உனக்குக் கற்பித்த
௭ தை எல்லாம் அவர்கள் செய்வார்கள்.—ஆசரிப்
பின் கூடாரத்தையும் சாட்சியின் பெட்டியை
யும் அதின்மேல் இருக்கும் கிருபாசன மூடியை
யும் கூடாரத்தினுடைய எல்லா முட்டுகளையும்,—
௮ மேசையையும் அதின் முட்டுகளையும் சுத்தமான
குத்துவிளக்கையும் அதினுடைய எல்லா முட்டு
௯ களையும் தூபபீடத்தையும்,—தகனபலிபீடத்தை
யும் அதினுடைய எல்லா முட்டுகளையும் தொட்
௰ டியையும் அதின் புரிமணையையும்,—ஆராதனை
யின் சீலைகளையும் ஆசாரிய ஊழியம் செய்கிற
தற்கான ஆசாரியனாகிய ஆரோனின் பரிசுத்த
வஸ்திரங்களையும் அவன் குமாரரின் வஸ்திரங்க
௰௧ ளையும்,—அபிஷேகத்தெண்ணெயையும் பரிசுத்
தஸ்தலத்திற்கான சுகந்தவர்க்கங்களாகிய தூப
வர்க்கத்தையும் அவர்கள் நாம் உனக்குக் கற்பித்
தபடி எல்லாம் செய்வார்களென்றார்.
௰௨ கர்த்தர் மோசேயோடே சொன்னதாவது:—
௰௩ நீ இஸ்ரவேல் புத்திரரோடே பேசிச் சொல்ல
வேண்டியதேதெனில், நம்முடைய ஓய்வுநாள்க
ளையே கைக்கொள்ளக்கடவீர்கள்; ஏனெனில்
நாம் உங்களைப் பரிசுத்தமாக்குகிற கர்த்தரென்று
நீங்கள் அறிவதற்கு அது உங்கள் தலைமுறைதலை
முறையாக நமக்கும் உங்களுக்கும் நடுவான
௰௪ அடையாளம்.—ஆகையால் ஓய்வுநாளைக் கைக்
கொள்ளுவீர்களாக; ஏனெனில் அது உங்களுக்
குப் பரிசுத்தமானது; அதைப் பரிசுத்தக்குலைச்
சலாக்குகிறவன் கொலையுண்ணவே கொலையுண்
ணக்கடவன்; அதிலே வேலைசெய்கிற எந்த ஆத்
துமாவும் தன் சனத்தின் நடுவிலிராதபடிக்கு அ
௰௫ றுப்புண்பதாக.—ஆறுநாள் வேலைசெய்யப்படு
வதாக; ஏழாம்நாளோவெனில் வேலை ஒழிந்தி
ருக்கும் ஓய்வுநாள்; அது கர்த்தருக்குப் பரிசுத்
தம்; ஓய்வுநாளிலே வேலைசெய்கிறவன் எவனும்
கொலையுண்ணவே கொலையுண்ணக்கடவன்.—
௰௬ ஆகையால் இஸ்ரவேல் புத்திரர் தங்கள் தலைமு
றைகளில் ஓய்வுநாளை நித்திய உடம்படிக்கை
யாக ஆசரிக்கும்படிக்கு, அதைக் கைக்கொள்
௰௭ ளக்கடவர்கள்.—அது என்றைக்கும் நமக்கும்
இஸ்ரவேல் புத்திரருக்கும் நடுவான அடையா
ளம்; ஏனெனில் ஆறுநாளைக்குள்ளே கர்த்தர்
வானத்தையும் பூமியையும் உண்டாக்கி, ஏழாம்
நாளிலே ஓய்ந்திருந்து பூரித்தார் என்றார்.
௰௮ அவர் சீனாய்பர்வதத்திலே மோசேயோடே
பேசித்தீர்ந்தபிற்பாடு, அவர் அவனுக்குப் பராபர
னுடைய விரலினாலே எழுதப்பட்ட கல்பல
கைகளாகிய சாட்சியின் இரண்டு பலகைகளைக்
கொடுத்தார்.

## ௩௨. அதிகாரம்.

௧. மோசே இல்லாத வேளையில் சனங்கள் ஆரோனைப் பொன் கன்றுக்குட்டியைச் செய்யவேண்டுமென்றது ௭. அதினால் பராபரன் கோபம் கொண்டது ௰௧. மோசேயின் மன்றாட்டினால் பராபரன் கோபம் தணிந்தது ௰௫. மோசே சாட்சியின் கல்பலகைகளைக்கொண்டு இறங்கியது. ௰௯. அவைகளை உடைத்துவிட்டது. ௨௰. அவர் பொன் கன்றுக்குட்டியை அழித்தது. ௨௨. ஆரோன் சனங்கள்மேல் குற்றம் சாற்றியது ௨௫ மோசே விக்கிரக ஆராதனைக்காரரைக் கொல்லக் கட்டளையிட்டது. ௩௰. சனங்களுக்காக அவர் செபம்பண்ணினது.

மோசே பர்வதத்திலிருந்து இறங்கிவரத் தாம ௧
திக்கிறதைச் சனம் கண்டபொழுதோவெனில்,
சனம் ஆரோனண்டையிலே கூட்டமாகக் கூடி,
அவனுடனே, நீர் எழுந்து, எங்கள் முன்நடந்து
போகிற தேவர்களை [1]எங்களுக்கு உண்டுபண்
ணும்; ஏனென்றால் எங்களை எகிப்துதேசத்திலி
ருந்து ஏறிவரப்பண்ணின அந்த மோசே என்கி
றவருக்கு என்ன சம்பவித்ததென்று அறியோம்
என்றார்கள்.—அப்பொழுது ஆரோன் அவர்களு ௨
டனே, உங்கள் பெண்சாதிகள் குமாரர் குமாரத்
திகளுடைய காதுகளிலிருக்கிற பொன்கடுக்கன்
களைக் கழற்றி, என்னண்டைக்குக் கொண்டுவா
ருங்கள் என்றான்.— அப்பொழுது சனமெல் ௩
லாம் தங்கள் காதுகளிலிருந்த பொன்கடுக்கன்க
ளைக் கழற்றி, ஆரோனண்டைக்குக் கொண்டு
வந்தார்கள்.—அவன் அவர்கள் கையிலே அதை ௪
வாங்கி, ஒரு எழுத்தாணியினாலே குறிபோட்டு,
வார்ப்பிக்கப்பட்ட ஒரு கன்றுக்குட்டியை அதி
னால் உண்டுபண்ணினான்; அப்பொழுது அவர்
கள், இஸ்ரவேலே இவைகள் உன்னை எகிப்து
தேசத்திலிருந்து ஏறிவரப்பண்ணின உன்னு
டைய தேவர்கள் என்றார்கள்.— ஆரோன் அ ௫
தைக் கண்டு, அதற்குமுன்பாக ஒரு பலிபீடத்
தைக் கட்டி, நாளைக் கர்த்தருக்குப் பண்டிகை
என்று கூறினான்.—மறுநாள் அவர்கள் அதிகால ௬
மே எழுந்திருந்து, சர்வாங்க தகனபலிகளைப்
பலியிட்டு, சமாதானபலிகளைச் செலுத்தினார்கள்;
பிற்பாடு சனம் புசிக்கிறதற்கும் குடிக்கிறதற்கும்
உளுக்கார்ந்து, விளையாடுகிறதற்கும் எழுந்திருந்
தார்கள்.
அப்பொழுது கர்த்தர் மோசேயோடே சொன் ௭
னதாவது: இறங்கிப்போ; ஏனெனில் நீ எகிப்து
தேசத்திலிருந்து ஏறிவரப்பண்ணின உன்னு
டைய சனம் தன்னைக் கெடுத்துவிட்டது.—நாம் ௮
தங்களுக்குக் கற்பித்த வழியைச் சீக்கிரமாய்
விட்டு விலகினார்கள்; அவர்கள் வார்ப்பிக்கப்
பட்ட ஒரு கன்றுக்குட்டியைத் தங்களுக்குண்
டாக்கி, அதைப் பணிந்துகொண்டு, அதற்குப்
பலியிட்டு, இஸ்ரவேலே இவைகள் உன்னை
எகிப்து தேசத்திலிருந்து ஏறிவரப்பண்ணின
உன்னுடைய தேவர்கள் என்றார்களென்று சொ
ல்லி,— பின்னையும் கர்த்தர் மோசேயோடே ௯
சொன்னதேதெனில், இந்தச் சனத்தைப் பார்த்
தோம்; இதோ, அது கடினக்கழுத்துள்ள சனம்.—

1 ௧ கொ. ௰. ௭.

௰ இப்பொழுதும் நாம் அவர்களை அழிக்கும்படிக்
கு, நமது கோபம் அவர்களுக்கு விரோதமாக
எரிய, நம்மை விட்டுவிடு; அப்பொழுது [1]உன்
னைப் பெரிய சாதியாக்குவோம் என்றார்.
௰௧ [2]ஆனால் மோசே தன் பராபரனாகிய கர்த்தரு
டைய முகத்தை நோக்கிக் கெஞ்சிச் சொன்ன
தாவது: கர்த்தாவே, தேவரீர் மகா பலத்தினாலும்
வல்லமையான கையினாலும் எகிப்துதேசத்திலி
ருந்து புறப்படப்பண்ணின உம்முடைய சனத்
திற்கு விரோதமாக உம்முடைய கோபம் எரிவா
௰௨ னேன்?—அவர்களை மலைகளிலே கொன்றுபோ
டவும், அவர்களைப் பூமியின்மேல் இராதபடி
க்கு நிர்மூலம்பண்ணவும், அவர்களைத் தீமைக்
கென்றே புறப்படப்பண்ணினாரென்று எகிப்தி
யர் சொல்லுவானேன்? உம்முடைய கோபத்
தின் உக்கிரத்தை விட்டுத் திரும்பி, உமது சனத்
திற்குத் தீங்குசெய்யாதபடிக்கு, பரிதாபமாய்
௰௩ இரும்.—உம்முடைய ஊழியக்காரராகிய ஆபிர
காமையும் ஈசாக்கையும் இஸ்ரவேலையும் நினைத்
தருளும்; உங்கள் வித்தை வானத்தின் நட்சத்தி
ரங்கள் அத்தனையாகப் பெருகப்பண்ணி, நாம்
சொன்ன இந்தத் தேசத்தை எல்லாம் உங்கள் வித்
திற்கு,அதை என்றைக்கும் சுதந்தரிக்கும்படிக்கு,
கொடுப்போமென்று உம்மைக்கொண்டு அவர்க
ளுக்கு ஆணையிட்டு, அவர்களோடே சொன்னீ
௰௪ ரே என்றான்.—அப்பொழுது கர்த்தர் தமது சனத்
திற்குச் செய்வோமென்று சொன்ன தீங்கைச்
செய்யாதபடிக்குப் பரிதாபப்பட்டார்.
௰௫ அப்பொழுது மோசே திரும்பிக்கொண்டு
பர்வதத்திலிருந்து இறங்கிப்போனான்; சாட்சி
யின் இரண்டுபலகைகள் அவன் கையிலிருந்தன;
அவைகள் இருபுறங்களிலும் இந்தப்பக்கமும்
அந்தப்பக்கமும் எழுதப்பட்ட பலகைகளாயி
௰௬ ருந்தன.—[3]அந்தப் பலகைகள் பராபரனுடைய
செய்கையும், அவைகளிலே பதிந்த எழுத்து பரா
௰௭ பரனுடைய எழுத்துமாயிருந்தன.—சனம் கெம்
பீரத்திலே கூப்பிடுகிற சத்தத்தை [4]யோசுவா
கேட்டு மோசேயோடே, யுத்தத்தின் இரைச்சல்
பாளயத்தில் உண்டாயிருக்கின்றதென்றான்.—
௰௮ அவனோவென்றால் அது செயித்துக் கூப்பிடுகி
றவர்களின் சத்தமும் அல்ல, முறிந்து கூப்பிடு
கிறவர்களின் சத்தமும் அல்ல, பாடுகிறவர்க
ளின் சத்தத்தை நான் கேட்கிறேனென்றான்.—
௰௯ அவன் பாளயத்திற்குச் சமீபித்து, கன்றுக்குட்
டியையும், கூத்துகளையும் காண்கிறபொழுது,
சம்பவித்ததேதெனில், மோசே கோபம்மூண்ட
வனாகி, தன் கையில் இருக்கிற பலகைகளைப்
பர்வதத்தடியிலே எறிந்து உடைத்துப்போட்டு,—
௨௰ அவர்கள் உண்டுபண்ணின கன்றுக்குட்டியை
எடுத்து, அக்கினியில் எரித்துப்போட்டு, அதைப்
பொடியாகும்மட்டும் அரைத்து, [5]தண்ணீரின்
மேல் தூவி, இஸ்ரவேல் புத்திரருக்குக் குடிக்கக்
கொடுத்தான்.

மோசே ஆரோனோடே, நீ இந்தச் சனத்தின் ௨௧
மேலே பெரும் பாவத்தைச் சுமக்கப்பண்ண,
அது உனக்கு என்ன செய்ததென்றான்.—அப் ௨௨
பொழுது ஆரோன் சொன்னதாவது: என் ஆண்
டவனுக்குக் கோபம் மூளாதிருப்பதாக; இந்தச்
சனத்தை நீர் அது பொல்லாததென்று அறிவீர்.—
அவர்கள் என்னோடே, எங்கள் முன் நடந்து ௨௩
போகிற தேவர்களை எங்களுக்கு உண்டுபண்
ணும்; ஏனெனில், எங்களை எகிப்துதேசத்திலி
ருந்து ஏறிவரப்பண்ணின அந்த மோசே என்கி
றவருக்கு என்ன சம்பவித்ததென்று அறியோம்
என்றார்கள்.—அப்பொழுது நான் அவர்களோ ௨௪
டே, எவர்களுக்குப் பொன் உடைமை உண்
டோ, அவர்கள் அதைக் கழற்றி, எனக்குத் தரக்
கடவர்கள் என்றேன்; அதை அக்கினியிலே
போட்டேன்; அதனால் இந்தக் கன்றுக்குட்டி
உண்டாயிற்றென்றான்.
சனம் நிருவாணமானதென்றும், அதற்கு வி ௨௫
ரோதமாய் எழும்புகிறவர்களுக்குமுன்பாக அ
தற்கு ஈங்கிஷை வர ஆரோன் அதை நிருவா
ணப்படுத்தினான் என்றும், மோசே பார்த்து,—
அவன் பாளயத்தின் வாசலிலே நின்றுகொண்டு, ௨௬
எவர்கள் கர்த்தருடையவர்களோ அவர்கள் என்
னைச் சேரக்கடவர்கள் என்றான்; அப்பொழுது
இலேவியின் புத்திரரெல்லாரும் அவனண்டை
யிலே வந்து கூடினார்கள். — அவர்களோடே ௨௭
அவன் சொன்னதாவது: நீங்கள் அவனவன் தன்
பட்டையத்தைத்தன் அரையிலேகட்டிக்கொண்
டு, பாளயத்தில் வாசலுக்குவாசல் கடந்துதிரிந்
து, அவனவன் தன் சகோதரனையும் அவனவன்
தன் சிநேகிதனையும் தனக்கடுத்தவனையும் கொன்
றுபோடுங்களென்று இஸ்ரவேலின் பராபரனா
கிய கர்த்தர் சொல்லுகிறார் என்றான்.—இலேவி ௨௮
யின் புத்திரர் மோசே சொன்னபடி செய்தார்கள்;
சனத்தில் அந்நாளிலே ஏறக்குறைய மூவாயிரம்
பேர் விழுந்தார்கள்.-ஏனென்றால், கர்த்தர் இன்று ௨௯
உங்கள்மேல் ஆசீர்வாதத்தைக் கட்டளையிடும்ப
டிக்கு, நீங்கள் இந்நாளிலே அவனவன் தன் மக
னுக்கும் தன் சகோதரனுக்கும் விரோதமாகிறதி
னாலே, கர்த்தருக்கு உங்கள் கைகளை நிரப்புங்க
ளென்று மோசே சொல்லியிருந்தான்.
மறுநாளிலே சம்பவித்ததேதெனில், மோசே ௩௰
சனத்துடனே, நீங்கள் கன பாதகமான பாவம்
செய்தீர்கள்; இப்பொழுதும் நாம் உங்களுக்கா
கப் பாவநிவிர்த்தி அடையலாமோவென்று கர்த்
தரண்டைக்குப் போய் ஏறுவேன் என்றான்.—
அப்படியே மோசே கர்த்தரண்டைக்குத் திரும் ௩௧
பிச் சொன்னதாவது: ஆ, இந்தச் சனம் கன பாத
கமான பாவம்செய்து, தங்களுக்குப் பொன்தே
வர்களை உண்டாக்கினார்கள். — இப்பொழுதும் ௩௨
அவர்கள் பாவத்தை மன்னித்தருளும்; இல்லா
விட்டால் என்னை நீர் எழுதின உம்முடைய
புஸ்தகத்திலே கிறுக்கிப்போடுமென்றான்.—அப் ௩௩

1 ௪ மோ. ௰௪. ௰௨.—2 ௪ மோ. ௰௪. ௰௩.—3 உ மோ. ௩௧. ௰௮.

4 உ மோ. ௨௪. ௰௩. ௰௪.—5 ௫ மோ. ௯. ௨௧.

பொழுது கர்த்தர் மோசேயோடே சொன்னதா
வது: யார் நமக்கு விரோதமாய்ப் பாவம்செய்கி
றானே அவனை நமது புஸ்தகத்திலே கிறுக்கிப்
௩௪ போடுவோம். — இப்பொழுதும் நீ போய், நாம்
உனக்குச் சொன்ன இடத்திற்குச் சனத்தை
அழைத்துப்போ; இதோ நம்முடைய தூதன்
உனக்குமுன்பாக நடப்பான்; ஆனால் நாம் விசா
ரிக்கும் நாளிலே அவர்களுடைய பாவத்தை
அவர்களிடத்திலே விசாரிப்போம் என்றார். —
௩௫ அப்படியே சனம் உண்டுபண்ணினதாகிய
ஆரோனுடைய செய்கையான கன்றுக்குட்டி
யின் நிமித்தம் கர்த்தர் அவர்களை வாதித்தார்.

## ௩௩. அதிகாரம்.

*௧. பராபரன் சனங்களோடேகூட நடந்தேறேனென்று மறுத்தது. ௪. சனங்கள் அதைக்குறித்து முறுமுறுத்தது. ௭. கூடாரம் பாளயத்தைவிட்டு நீக்கப்பட்டது. ௯. பராபரன் மோசேயுடனே பட்சத்தோடு பேசினது. ௰௨. மோசே பராபரனுடைய மகிமையைப் பார்க்க விரும்பினது.*

௧ கர்த்தர் மோசேயோடே சொன்னதாவது: நீயும்
எகிப்துதேசத்திலிருந்து நீ ஏறிவரப்பண்ணின
சனமுமாய் இவ்விடத்தைவிட்டு, உன் வித்திற்
குக் கொடுப்போமென்று நாம் ஆபிரகாமுக்கும்
ஈசாக்குக்கும் யாக்கோபுக்கும் ஆணையிட்ட பா
லும் தேனும் ஓடுகிற தேசத்திற்குப் போயேறுங்
௨ கள். — நாம் ஒரு தூதனை உனக்குமுன்பாக அ
னுப்பி, கானானியனையும் எமோரியனையும் ஏத்
தியனையும் பெரிசியனையும் ஏவியனையும் எபூசி
௩ யனையும் துரத்திவிடுவோம்.—ஆனால் வழியிலே
நாம் உன்னை நிர்மூலம்பண்ணாதபடிக்கு, நாம்
உன் நடுவே நடந்தேறோம்; ஏனெனில் நீங்கள்
கடினக்கழுத்துள்ள சனமென்றார்.
௪ தீங்கான இந்த வார்த்தையைச் சனம் கேட்ட
பொழுது, ஒருவரும் தங்கள் ஆபரணங்களைப்
போட்டுக்கொள்ளாமல் துக்கித்துக்கொண்டிருந்
௫ தார்கள். — ஏனென்றால், நீங்கள் கடினக்கழுத்
துள்ள சனம்; நாம் ஒரு நிமிஷத்திலே உன் நடு
விலே எழும்பினால் உன்னை நிர்மூலம்பண்ணு
வோம்; இப்பொழுதும் நாம் உனக்கு என்ன
செய்யவேண்டுமென்று அறியும்படிக்கு, நீ போ
ட்டிருக்கிற உன் ஆபரணங்களைக் கழற்றிப்போ
டென்று இஸ்ரவேல் புத்திரருக்குச் சொல்லென்
பதை, கர்த்தர் மோசேயோடே சொல்லி இருந்
௬ தார்.—ஆகையால் இஸ்ரவேல் புத்திரர் ஓரேப்
பர்வதத்திற்குமுன்பாகத் தங்கள் ஆபரணங்க
ளைக் கழற்றிப்போட்டார்கள்.
௭ மோசே கூடாரத்தைப் பேர்த்து, அதைப்
புறம்பே பாளயத்திற்குத் தூரமாகப் போட்டுக்
கொண்டு, அதை ஆசரிப்பின் கூடாரமென்
றான்; ஆனதுகொண்டு கர்த்தனைக் கேட்பவ
னெல்லாம் பாளயத்திற்குப் புறம்பான ஆசரிப்
பின்கூடாரத்திற்குப் புறப்பட்டுப்போவான்.—
௮ மோசே கூடாரத்திற்குப் புறப்பட்டுப் போகும்
பொழுது, சனமெல்லாம் எழுந்திருந்து, அவர
வர் தம்தம் கூடாரத்தின் வாசல்படியில் நின்று,
அவன் கூடாரத்திற்கு உட்படும்மட்டும், அவன்
பிறகே பார்த்துக்கொண்டிருப்பார்கள்.
மோசே கூடாரத்திற்குள் பிரவேசிக்கையில் ௯
மேகத்தூண் இறங்கி, கூடாரத்தின் வாசல்படி
யிலே நின்றது; அங்கே மோசேயோடே பேசி
னார். — சனமெல்லாம் மேகத்தூணைக் கூடாரத் ௰
தின் வாசல்படியிலே நிற்கக் காணும்பொழுது,
எழுந்திருந்து அவரவர் தங்கள் கூடாரத்தின்
வாசல்படியிலே பணிந்துகொள்ளுவார்கள். —
[1]கர்த்தர் மோசேயோடே முகமுகமாய் ஒருவன் ௰௧
தன் சிநேகிதனோடே பேசுகிறதுபோலப் பேசு
வார்; பிற்பாடு இவன் பாளயத்திற்குத் திரும்பிவ
ருவான்; ஆனால் நானின் குமாரனாகிய யோசுவா
வென்ற அவன் வேலைக்காரனாகிய வாலிபன்ஆச
ரிப்பின் கூடாரத்தைவிட்டுப் பிரியாதிருப்பான்.
மோசே கர்த்தரோடே சொன்னதாவது: இ ௰௨
தோ தேவரீர் என்னோடே இந்தச் சனத்தைப்
போய் ஏறப்பண்ணென்று சொன்னீர்; ஆனால்
உன்னைப் பேர்சொல்லி அறிந்திருக்கிறோமென்
றும், நம்முடைய கண்களில் உனக்குக் கிருபை
கிடைத்ததென்றும், தேவரீர் சொல்லியிருந்தும்,
யாரை என்னோடேகூட அனுப்புவீரென்பதை
எனக்கு அறிவிக்காதிருக்கிறீர்.—இப்பொழுதும் ௰௩
உம்முடைய கண்களில் எனக்குக் கிருபைகி
டைத்ததேயானால், உம்முடைய வழியை எனக்
கு அறிவியும்; உம்முடைய கண்களில் எனக்
குக் கிருபை கிடைக்கும்படியாக உம்மை நான்
அறியட்டும்; இந்தச் சாதி உம்முடைய சனமென்
று பாருமென்றான். — அதற்கவர் நாம் உன்னை ௰௪
இளைப்பாறப்பண்ணும்படிக்கு, [2]நம்முடைய
முகம் உனக்குமுன்பாக நடந்துபோம் என்
றார்.—அப்பொழுது அவன் அவரோடே சொன் ௰௫
னதாவது: உம்முடைய முகம் நடந்துபோகாதி
ருந்தால் எங்களை இங்கேயிருந்து புறப்படப்ப
ண்ணீராக.—ஏனெனில் எனக்கும் உமது சனத் ௰௬
திற்கும் உம்முடைய கண்களிலே கிருபைகி
டைத்ததென்பது எதினால் அறியப்படலாம்; நீர்
எங்களோடே நடந்துபோகிறதினாலே அல்ல
வோ? அப்படியே பூமியின்மீதுள்ள எல்லாச்
சனத்திலும் நானும் உம்முடைய சனமும் விசே
ஷித்தவர்களென்று விளங்குமென்றான்.
அப்பொழுது கர்த்தர் மோசேயோடே, நீ ௰௭
சொன்ன இந்த வார்த்தையின்படியேயும் செய்
வோம்; ஏனெனில் நம்முடைய கண்களில்
உனக்குக் கிருபை கிடைத்தது; உன்னைப் பேர்
சொல்லி அறிந்திருக்கிறோம் என்றார். — அப் ௰௮
பொழுது அவன் உம்முடைய மகிமையை
எனக்குக் காண்பியுமென்றான்.—அதற்கு அவர், ௰௯
நாம் நம்முடைய தயை எல்லாம் உனக்குமுன்
பாகக் கடக்கப்பண்ணி, கர்த்தருடைய நாமத்
தை உனக்குமுன்பாகக் கூறி, நாம் கிருபை
வைத்தவன்மேல் கிருபையாயிருந்து, நாம் இரக்
கம்வைத்தவன்மேல் இரக்கமாயிருப்போமென்

1 ௪ மோ. ௰௨. அ.—2 யோவா. ௰௪. ௯. கொலோ. ௧. ௰௫. எபி. ௧. ௩.

௨௰ று சொல்லி,—பின்னையும் நம்முடைய முகத்
தைப் பார்க்கமாட்டாய்; ஏனெனில் ஒரு மனி
தனும் நம்மைப் பார்த்து, உயிரோடிருக்கக்கூடா
௨௧ தென்றார்.-பின்னையும் கர்த்தர் சொன்னதாவது:
இதோ, நம்மண்டையில் ஒரு இடம் இருக்கின்
௨௨ றது, அங்கே நீ கல்மலையில் நிற்பாயாக.-அப்பொ
ழுது சம்பவிப்பதேதெனில், நம்முடைய மகி
மை கடக்கும்போது, நாம் உன்னை அந்தக் கல்
மலையின் வெடிப்பிலே வைத்து, நாம் கடந்து
போகும்மட்டும் நம்முடைய கரத்தினால் உன்னை
௨௩ மூடுவோம்.-பிற்பாடு நம்முடைய கரத்தை வாங்
குவோம்; அப்பொழுது நமக்குப் பின்னாகப்
பார்ப்பாய்; நம்முடைய முகமோவென்றால்,
பார்க்கப்படக்கூடாதென்றார்.

## ௩௪. அதிகாரம்.

*௧. சாட்சியின் கல்ப்பலகைகள் மறுபடியும் செய்யப்பட்டது. ௫. பராபரனுடைய நாமம் பிரசித்தமானது. ௮. மோசே சனங்களோடே போகும்படி மன்றாடினது. ௰. பராபரன் முதல்பலகையின் கட்டளையைக்குறித்துச் சனங்களுடன் உடம்படிக்கை செய்தது. ௨௮. மோசே நாற்பதுநாள் மலையின்மேலிருந்து சாட்சியின் கல்ப்பலகைகளைக் கொண்டுவந்தது. ௨௯. அவனுடைய முகம் பிரகாசமானதும், அதை அவன் ஒரு முக்காட்டினாலே மூடினதும்.*

௧ கர்த்தர் மோசேயோடே சொன்னதாவது: முந்
தினவைகளுக்கொத்த இரண்டு கல்ப்பலகைகளை
இழைத்துக்கொள், நீ உடைத்துப்போட்ட முந்
தின பலகைகளிலிருந்த வார்த்தைகளை அவைக
௨ ளில் எழுதுவோம்.—நீ விடியற்காலத்திற்கு ஆயத்
தமாயிருந்து, காலமே சீனாய்பர்வதத்தில் ஏறி,
அங்கே பர்வதத்தின் கொடுமுடியிலே நமக்குக்
௩ காத்துநில். — உன்னோடேகூட ஒருவரும் ஏற
வும், பர்வதமெங்கும் ஒருவரும் காணப்படவும்
வேண்டாம்; இந்தப் பர்வதத்திற்கு எதிராக ஆடு
மாடு மேயவும் வேண்டாமென்றார்.
௪ அப்பொழுது மோசே முந்தினவைகளுக்
கொத்த இரண்டு கல்ப்பலகைகளை இழைத்து,
அதிகாலமே எழுந்திருந்து, கர்த்தர் தனக்குக் கற்
பித்தபடியே இரண்டு கல்ப்பலகைகளைத் தன்
கையிலே பிடித்துக்கொண்டு, சீனாய்பர்வதத்
௫ தில் ஏறினான்.—அப்பொழுது கர்த்தர் ஒரு மே
கத்திலே இறங்கி, அங்கே அவனண்டையிலே
நின்றுகொண்டு, கர்த்தருடைய நாமத்தைக் கூறி
௬ னார். — கர்த்தர் அவனுக்குமுன்பாகக் கடந்து
போகிறபொழுது, அவர் கூறினதாவது: அவர்
கர்த்தர், அவர் கர்த்தர், [1]அவர் மனஉருக்கமும் இ
ரக்கமும் நீடிய சாந்தமும் மகா கிருபையும் உண்
௭ மையுமுள்ள பராபரன்.—[2]அவர் ஆயிரம் தலைமு
றைகளுக்குக் கிருபையைக் காக்கிறவர்; அவர்
அக்கிரமத்தையும் மீறுதலையும் பாவத்தையும் மன்
னிக்கிறவர்; அவர் குற்றமுள்ளவனைக் குற்ற
மற்று நீங்கவொட்டாமல், பிதாக்களுடைய அக்
கிரமத்தைப் பிள்ளைகளிடத்திலும் பிள்ளைகளு
டைய பிள்ளைகளிடத்திலும் மூன்றாம் நான்காம்
தலைமுறைமட்டும் விசாரிக்கிறவரென்று கூறி
௮ னார்.—மோசே தீவிரமாகத் தரைமட்டும் குனிந்து
௯ பணிந்துகொண்டு,—ஆண்டவரே, உம்முடைய
கண்களில் எனக்குக் கிருபைகிடைத்ததேயா
கில், ஆண்டவர் எங்கள் நடுவிலே நடந்துபோ
வாராக; ஏனெனில் அது கடினக்கழுத்துள்ள
சனம்; நீரோவெனில் எங்கள் அக்கிரமத்தையும்
எங்கள் பாவத்தையும் மன்னித்து, எங்களைச் சுதந்
தரித்துக்கொள்வீராக என்றான்.
அப்பொழுது அவர் சொன்னதாவது: இதோ, ௰
நாம் உடம்படிக்கைபண்ணுகிறோம்; பூமி எங்
கும் எந்தச்சாதிகளிடத்திலும் சிருஷ்டிக்கப்படா
திருக்கிற அதிசயங்களை உன்னுடைய எல்லாச்
சனத்திற்கும்முன்பாகச் செய்வோம்; நீ தங்கியி
ருக்கிற சனமெல்லாம் கர்த்தருடைய செய்கை
யைப் பார்க்கப்போம்; ஏனெனில் நாம் உன்
னோடே இருந்து செய்யப்போகிறது பயங்கரமா
யிருக்கும்.-இன்று நாம் உனக்குக் கற்பிக்கிறதை ௰௧
யே கைக்கொள்; இதோ, எமோரியனையும், கா
னானியனையும், ஏத்தியனையும், பெரிசியனையும்,
ஏவியனையும், எபூசியனையும் உனக்குமுன்பா
கத் துரத்திவிடுகிறோம்.—நீ போய்ச் சேருகிற ௰௨
தேசத்தின் குடி உன் நடுவே கண்ணி ஆகாதப
டிக்கு நீ அவனோடே உடம்படிக்கைபண்ணாத
படிக்கு எச்சரிக்கையாய் இரு.—அவர்களுடைய ௰௩
பலிபீடங்களை இடித்து, அவர்கள் சிலைகளைத்
தகர்த்து, அவர்கள் தோப்புகளை வெட்டிப்போ
டக்கடவீர்கள்.—ஏனெனில் அந்நிய தேவனை நீ ௰௪
பணிந்துகொள்ளலாகாது; அதேனென்றால் கர்த்
தருடைய நாமம் எரிச்சலுள்ளவரென்பது; அ
வர் எரிச்சலுள்ள பராபரன்.—அந்தத் தேசத்தின் ௰௫
குடிகளோடே உடம்படிக்கை பண்ணாயாக;
மற்றப்படி அவர்களுடைய தேவர்களின் பிறகா
லே சோரம்போய் அவர்கள் தேவர்களுக்குப்
பலியிடுவார்கள்; அவர்கள் உன்னை அழைக்கை
யில், நீபோய், அவர்கள் பலியிட்டதிலே புசித்து,-
அவர்கள் குமாரத்திகளில் உன் குமாரருக்குப் ௰௬
பெண்களைக் கொள்ளுவாய்; அப்படியே அவர்
கள் குமாரத்திகள் தங்கள் தேவர்களின் பிறகா
லே சோரம் போகையில் உன் குமாரரையும் தங்
கள் தேவர்களின் பிறகாலே சோரம்போகப்
பண்ணுவார்கள். — வார்ப்பிக்கப்பட்ட தேவர் ௰௭
களை உனக்குண்டாக்காயாக.
நீ புளிப்பில்லாத அப்பங்களின் பண்டிகை ௰௮
யைக் கைக்கொண்டு, நாம் உனக்குக் கற்பித்த
படி ஆபீப் மாதத்தின் திட்டமான காலத்திலே
ஏழுநாள் புளிப்பில்லாத அப்பங்களைப் புசிப்பா
யாக; ஏனெனில் ஆபீப் மாதத்திலே எகிப்திலிருந்
து புறப்பட்டாய்.—கர்ப்பம்திறந்து பிறக்கிற யா ௰௯
வும் உன் ஆடுமாடுகளின் மந்தையிலே தலையீற்
றான ஆண் யாவும் நம்முடையவைகள்.—ஆனால் ௨௰
கழுதையின் தலையீற்றை ஒரு ஆட்டுக்குட்டியால்
மீட்டுக்கொள்வாயாக; மீட்காயேயானால் அதின்
தலையை வெட்டிப்போடக்கடவாய்; உன் பிள்
ளைகளில் முதல்பேறானவைகளை எல்லாம் மீட்
டுக்கொள்வாயாக; வெறுங்கையாய் நமக்கு முன்
பாகக் காணப்படார்களாக.

1 ௪ மோ. ௰௪.௰௮, ௰௮. சங். ௮௬. ௰௫: ௱௩. ௭, ௮: ௱௪௫. ௮.
யோவே. ௨. ௰௩.—2 சங். ௱௩. ௩. மீகா. ௭. ௰௮, ௰௯.

௨௧ ஆறுநாள் வேலைசெய்து, ஏழாம் நாளில் ஓய்ந்
திருப்பாயாக; உழுகிற காலமானாலும் அறுக்
கிற காலமானாலும் ஓய்ந்திருப்பாயாக.
௨௨ கோதுமை அறுப்பின் முதல்பலனைச் செலுத்
தும் ஏழு வாரங்களின் பண்டிகையையும் வரு
ஷமுடிவிலே சேர்ப்பின் பண்டிகையையும் ஆ
சரிப்பாயாக.
௨௩ வருஷத்தில் மூன்றுதரம் உன் ஆண்சாதி எல்
லாம் இஸ்ரவேலின் பராபரனாயிருக்கிற கர்த்த
ராகிய ஆண்டவரின் சந்நிதிக்குமுன்பாகக் கா
௨௪ ணப்படக்கடவது.—ஏனெனில் நாம் புறச்சாதி
களை உனக்குமுன்பாகத் துரத்திவிட்டு, உன் எல்
லைகளை விஸ்தாரமாக்குவோம்; நீ வருஷத்தில்
மூன்றுதரம் உன் பராபரனாகிய கர்த்தரின் சந்நி
திக்கு முன்பாகக் காணப்படப் போயேறுகை
யில், ஒருவரும் உன் தேசத்தை இச்சிப்பதில்லை.
௨௫ புளித்தமா இருக்கும்போது, நமது பலியின்
இரத்தத்தைப் பலியிடாயாக; பஸ்காப்பண்டி
கையின் பலி விடியற்காலம்மட்டும் இராத்தங்க
௨௬ வும் வேண்டாம்.—உன் சீர்மையின் முதல் விளைச்
சலில் முந்தின கனியை உன் பராபரனாகிய
கர்த்தரின் வீட்டிற்குக் கொண்டுவருவாயாக;
வெள்ளாட்டுக்குட்டியை அதின் தாயின் பாலோ
டேகூடச் சமைக்காயாக என்றார்.
௨௭ பின்னையும் கர்த்தர் மோசேயுடனே, இந்த
வார்த்தைகளை எழுதிக்கொள்; ஏனெனில் இந்த
வார்த்தைகளின்படியே உன்னோடும் இஸ்ரவே
லோடும் உடம்படிக்கைபண்ணினோமென்றார்.—
௨௮ அவன் அங்கே கர்த்தரோடே இரவும் பகலும்
நாற்பதுநாள் அப்பம் புசியாமலும் தண்ணீர் குடி
யாமலும் இருந்தான்; அவர் பத்து வசனங்களா
கிய உடம்படிக்கையின் வார்த்தைகளைப் பலகை
களில் எழுதினார்.
௨௯ மோசே சாட்சியின் இரண்டு பலகைகளைத்
தன் கையிலே பிடித்து, சீனாய்பர்வதத்திலிருந்
து இறங்குகிறபொழுது, அவர் தன்னோடே பே
சினதினாலே தன் முகத்தின் தோல் பிரகாசிக்
கின்றதென்கிறதை அவன் அறியாதிருந்தான்.—
௩௰ ஆரோனும் இஸ்ரவேலின் எல்லாப் புத்திரரும்
மோசேயைப் பார்க்கும்பொழுது, இதோ, அவன்
முகத்தின் தோல் பிரகாசித்தது; ஆகையால் அவ
௩௧ னண்டைக்குச் சேரப்பயந்தார்கள்.—ஆனால் மோ
சே அவர்களைக் கூப்பிட்டான்; அப்பொழுது
ஆரோனும் சபையிலுள்ள எல்லாப் பிரபுக்களும்
அவனண்டைக்குத் திரும்பினார்கள்; மோசே
௩௨ அவர்களோடே பேசினான். — அதற்குப் பிறகு
இஸ்ரவேல் புத்திரர் எல்லாரும் அவனண்டை
யில் சேர்ந்தார்கள்; அப்பொழுது அவன் சீனாய்
பர்வதத்திலே கர்த்தர் தன்னோடே பேசினவை
௩௩ களை எல்லாம் அவர்களுக்குக் கற்பித்தான்.—மோ
சே அவர்களோடே பேசி [1]முடியும்மட்டும், தன்
முகத்தின்மேல் முக்காடு போட்டிருந்தான்.—
௩௪ ஆனால் மோசே கர்த்தரின் சந்நிதியிலே அவரோ
டே பேசும்படிக்கு உட்பிரவேசிக்கையில், முக்
காட்டை வாங்கிப் புறப்படும்மட்டும் போடாதி
ருந்தான்; அவன் புறப்பட்டு வந்து, தனக்குக்
கற்பிக்கப்பட்டதை இஸ்ரவேல் புத்திரரோடே
சொல்லும்பொழுதோவெனில், — இஸ்ரவேல் ௩௫
புத்திரர் அவன் முகத்தை அதின் தோல் பிரகா
சிக்கிறதென்று பார்த்தார்கள், ஆகையால் மோசே
அவரோடே பேசும்படிக்கு உள்பிரவேசிக்கும்
மட்டும், முக்காட்டைத் திரும்பத் தன் முகத்தின்
மேலே போடுவான்.

## ௩௫. அதிகாரம்.

௧. ஓய்வுநாள். ௪. கூடாரத்துக்காகக் கொடுத்த காணிக்கை. ௨௰. அதைச் செலுத்துவதற்குச் சனங்கள் பிரியப்பட்டது. ௩௰. பெத்சலேயேலும் அகோலியாவும் அவ்வேலைக்கு அழைக்கப்பட்டது.

மோசே இஸ்ரவேல் புத்திரரின் சபையை எல் ௧
லாம் கூட்டி, அவர்களோடே சொன்னதாவது:
கர்த்தர் செய்யக் கற்பித்ததேதெனில்,—ஆறுநா ௨
ளுக்குள்ளே உன் வேலையைச் செய்வாயாக;
ஏழாம்நாளோவென்றால் உங்களுக்குப் பரிசுத்த
மாயிருப்பதாக; அது கர்த்தருக்கென்று ஓய்ந்தி
ருக்கும் ஓய்வுநாள்; அதிலே வேலைசெய்கிறவ
னெல்லாம் கொலைஉண்ணக்கடவன். — ஓய்வு ௩
நாளில் உங்கள் வாசஸ்தலங்களிலெல்லாம் நெ
ருப்பு மூட்டாதிருப்பீர்களாகவென்று கற்பித்
தாரென்றான்.
பின்னையும் மோசே இஸ்ரவேல் புத்திரரின் ௪
சபையோடெல்லாம் சொன்னதாவது: கர்த்தர்
கற்பித்ததேதெனில், — [2]உங்களுக்குண்டானதி ௫
லே கர்த்தருக்கு ஒரு காணிக்கையை எடுத்துச்
செலுத்துங்கள்; மனப்பூர்வகமுள்ளவனெல்லாம்
அதைக் கொண்டுவரக்கடவன்; கர்த்தருக்குச்
செலுத்தும் காணிக்கை என்னவெனில், பொன்
னும் வெள்ளியும் வெண்கலமும்,—இளநீலநூ ௬
லும் இரத்தாம்பரநூலும் சிவப்புநூலும் மெல்லிய
பஞ்சுநூலும் வெள்ளாட்டுமயிரும், — சிவப்புத் ௭
தீர்ந்த ஆட்டுக்கடாத்தோல்களும் தகசுகளின்
தோல்களும் சீத்திம் மரங்களும்,—விளக்குக்கு ௮
எண்ணெயும் அபிஷேகத்தெண்ணெய்க்குப் பரி
மளவர்க்கங்களும் தூபம்காட்டுதலுக்குச் சுகந்
தவர்க்கங்களும், — ஆசாரிய சால்வைக்கும் ௯
மார்ப்பதக்கத்திற்கும் கோமேதகக் கற்களும் பதி
த்துவைக்கும் இரத்தினங்களும்தானே.—உங்க ௰
ளில் ஞானமான இருதயமுள்ள அனைவரும் வந்
து கர்த்தர் கற்பித்தவைகளை எல்லாம் செய்வார்க
ளாக.—வாசஸ்தலத்தையும், அதின் கூடாரத்தை ௰௧
யும், அதின் மூடியையும், அதின் துறடுகளையும்,
அதின் பலகைகளையும், அதின் தாழ்ப்பாள்களை
யும், அதின் தூண்களையும், அதின் கால்களையும்,—
பெட்டியையும், அதின் வாரைகளையும், கிருபா ௰௨
சனமான மூடியையும், மறைவின் திரையை
யும்,—மேசையையும், அதின் வாரைகளையும், அதி ௰௩
னுடைய எல்லா முட்டுகளையும், சமுகத்து அப்
பங்களையும்.—வெளிச்சம்காட்டும் குத்துவிளக் ௰௪
கையும், அதின் முட்டுகளையும், அதின் விளக்கு
களையும், வெளிச்சத்திற்கு எண்ணெயையும்,—

[1] ௨ கொரி. ௩. ௭.

[2] ௨ மோ. ௨௫. ௨.

௰௫ தூபபீடத்தையும், அதின் வாரைகளையும், அபி
ஷேகத்தெண்ணெயையும், சுகந்தங்களின் தூப
வர்க்கத்தையும்,வாசஸ்தலத்தின் வாசலுக்குமறை
௰௬ வையும், — தகனபலிபீடத்தையும் அதின் வெ
ண்கலச் சல்லடையையும், அதின் வாரைகளை
யும், அதினுடைய எல்லா முட்டுகளையும்,தொட்
௰௭ டியையும், அதின் புரிமணையையும்,—பிரகாரத்
தின் வெளியாடைகளையும், அதின் தூண்களை
யும், அதின் கால்களையும், பிரகாரத்து வாசலின்
௰௮ மறைவையும்,—வாசஸ்தலத்தின் முளைக்கூச்சு
களையும், பிரகாரத்தின் முளைக்கூச்சுகளையும், அ
௰௯ வைகளின் கயிறுகளையும், — பரிசுத்தஸ்தலத்தி
லே செய்கிற ஆராதனையின் சீலைகளையும், ஆசா
ரிய ஊழியம்செய்கிற ஆரோனின் பரிசுத்தவஸ்
திரங்களையும், அவன் குமாரரின் வஸ்திரங்களை
யும், அவர்கள் செய்வார்களாக என்றாரென்று
சொன்னான்.
௨௰ அப்பொழுது இஸ்ரவேல் புத்திரரின் சபை
எல்லாம் மோசேயைவிட்டுப் புறப்பட்டது.—
௨௧ எவர்களை அவர்கள் இருதயம் எழுப்பி, அவர்
கள் ஆவி பூர்வமாக்கிற்றோ, அவர்களெல்லாரும்
வந்து, ஆசரிப்புக்கூடாரத்தின் வேலைக்கும் அ
தின் சகல ஊழியத்திற்கும் பரிசுத்த வஸ்திரங்க
ளுக்கும் கர்த்தருக்குக் காணிக்கையைக் கொண்
௨௨ டுவந்தார்கள்.—கர்த்தருக்குப் பொன்னை அசை
வாட்டும் காணிக்கையாகச் செலுத்துகிற புருஷ
ரும் பெண்சாதிகளுமான மனப்பூர்வமுள்ள அ
னைவரும் வந்து, சரடுகள், கடுக்கன்கள், மோதி
ரங்கள், காப்புகள் முதலான சகலவித பொன்
௨௩ பணிகளையும் கொண்டுவந்தார்கள். — தங்களி
டத்தில் இளநீலநூலையும் இரத்தாம்பரநூலையும்
சிவப்புநூலையும் மெல்லியபஞ்சுநூலையும் வெள்
ளாட்டுமயிரையும் சிவப்புத்தீர்ந்த ஆட்டுக்கடாத்
தோல்களையும் தகசுகளின் தோல்களையும் கண்
௨௪ டுபிடித்த யாவரும் கொண்டுவந்தார்கள்.—வெள்
ளியையும் வெண்கலத்தையும் கொடுக்கத்தக்க
யாவரும் அவைகளைக் கர்த்தருக்குக் காணிக்கை
யாகக் கொண்டுவந்தார்கள்; வேலையிலே சகல
வித கிரியைக்குமான சீத்திம் மரங்களைத் தங்க
ளிடத்தில் கண்டுபிடித்த யாவரும் கொண்டுவந்
௨௫ தார்கள்.-ஞானமான இருதயமுள்ளஸ்திரிகளெல்
லாரும் தங்கள் கைகளினாலே நூற்று, தாங்கள்
நூற்ற இளநீலநூலையும் இரத்தாம்பரநூலையும்
சிவப்புநூலையும் மெல்லிய பஞ்சுநூலையும் கொ
௨௬ ண்டுவந்தார்கள். — எந்த ஸ்திரிகளை அவர்கள்
இருதயம் ஞானமாகச்செய்ய எழுப்பிற்றோ, அ
௨௭ வர்கள் வெள்ளாட்டுமயிரை நூற்றார்கள்.—பிர
புக்கள் ஆசாரிய சால்வைக்கும் மார்ப்பதக்கத்
திற்கும் என்று கோமேதகக்கல்லுகளையும், பதித்
௨௮ துவைக்கும் இரத்தினங்களையும்,—பரிமளவர்க்
கங்களையும், விளக்கெண்ணெயையும், அபிஷே
கத்தெண்ணெய்க்கும் சுகந்தவர்க்கங்களின் தூ
பம்காட்டுதலுக்கும் வேண்டியவைகளையும் கொ
௨௯ ண்டுவந்தார்கள்.—செய்கிறதற்குக் கர்த்தர் மோ
சேயைக்கொண்டு கற்பித்ததெல்லா வேலைக்கும்
கொண்டுவர, இஸ்ரவேல் புத்திரரில் தங்கள்
இருதயத்தால் மனப்பூர்வமாக்கப்பட்ட எல்லாப்
புருஷரும் ஸ்திரிகளும் கர்த்தருக்குக் காணிக்
கையைக் கொண்டுவந்தார்கள்.
மோசே இஸ்ரவேல் புத்திரரோடே சொன்ன ௩௰
தாவது: பாருங்கள், கர்த்தர் [1]யூதாவின் கோத்தி
ரத்தில் ஊருடைய மகனான ஊரியின் குமாரன்
பெத்சாலேயேலைப் பேர்சொல்லி அழைத்து,—
அவன் விநோதமான வேலைகளை யோசித்துச் ௩௧
செய்யவும்,பொன்னிலும் வெள்ளியிலும் வெண்
கலத்திலும் வேலைசெய்யவும்,—இரத்தினங்களை ௩௨
முத்திரை வெட்டாக வெட்டிப் பதித்துவைக்
கவும், மரத்திலே தச்சுவேலைசெய்து சகல வி
நோதமான வேலையைப் பண்ணவும், — அவனு ௩௩
க்கு ஞானமும் உணர்வும் அறிவும் சகலவித
வேலையின் வித்தையும் உண்டாக அவனைப் பரா
பரன் தம்முடைய ஆவியினாலே நிரப்பினார்.—
அவன் இருதயத்திலும், தாண்கோத்திர அகிச ௩௪
மாகின் குமாரனாகிய அகோலியாவின் இருதயத்
திலும், போதிக்கிறதற்கான வரத்தையும் கொடுத்
தார். — சகலவித தொழிலின் சூட்சுமவேலை ௩௫
யையும், இளநீலநூலாலும் இரத்தாம்பரநூலா
லும் சிவப்புநூலாலும் மெல்லிய பஞ்சுநூலா
லும் பண்ணுகிற சித்திரத்தையல் வேலையையும்,
நெய்கிற எல்லா வேலையையும்செய்ய, அவர்
களை இருதயத்தின் ஞானத்தினாலே நிரப்பினார்;
அவர்கள் சகலவித வேலையைச் செய்த விநோ
தமான வேலைகளை யோசித்துப்பண்ணுவார்கள்
என்றார்.

## ௩௬. அதிகாரம்.

*௧. கூடாரத்துக்காகக் கொடுத்த சாமான் வேலைக்காரர்களுக்கு ஒப்புவிக்கப்பட்டது. ௫. சனங்களுடைய உதாரத்துவம் தடைசெய்யப்பட்டது. ௮. கேருபீன்களின் திரைகளையும், ௰௪. ஆட்டுமயிர்களின் திரைகளையும், ௰௯. ஆட்டுத்தோலின் மூடியையும், ௨௰. பலகைகளையும், கல்வு கால்களையும், ௩௧. தாழ்ப்பாள்களையும், ௩௫. முக்காடுகளையும், ௩௭. வாசலின் திரையையும் குறித்தது.*

அப்பொழுது பெத்சாலேயேலும், அகோலியா ௧
வும், பரிசுத்தவேலையின் எல்லாக் கிரியையும்
கர்த்தர் கற்பித்தபடி எல்லாம் செய்ய அறியும்
படிக்கு, கர்த்தர் ஞானமும் உணர்வும் கொடுத்த
ஞானமான இருதயமுள்ள அனைவரும், வேலைக்
குட்பட்டார்கள்.—ஏனென்றால் மோசே பெத் ௨
சாலேயேலையும், அகோலியாவையும், கர்த்தர்
ஞானம் கொடுத்ததினாலே அந்த வேலையைச்
செய்யச் சேருகிறதற்கு, தங்கள் இருதயத்தால்
எழுப்பப்பட்ட ஞானமுள்ள இருதயத்தாராகிய
எல்லாரையும் வரவழைத்தான்.—அவர்கள் இஸ் ௩
ரவேல் புத்திரர் பரிசுத்தவேலையின் கிரியைக்
குக் கொண்டுவந்ததாகிய மோசேக்குமுன்பாக
இருந்த காணிக்கையை எல்லாம் அதைச் செய்
யும்படிக்கு ஒப்புவித்துக்கொண்டார்கள்; இவர்
களோவென்றால் இன்னம் காலையில் மனப்
பூர்வமான காணிக்கைகளை அவனண்டைக்குக்
கொண்டுவந்தார்கள்.

[1] உ மோ. ௩௧. ௨.

௪ அப்பொழுது பரிசுத்த வேலையையெல்லாம்
செய்கிற சகல ஞானிகளும் அவரவர் தாங்கள்
௫ செய்கிற வேலையின் காரியமாய் வந்து,—மோ
சேயுடனே, கர்த்தர் செய்யக் கற்பித்த கிரியை
யின் வேலைக்கு வேண்டியதைப்பார்க்கிலும்
சனம் மிச்சமாய்க் கொண்டுவருகின்றதென்றார்
௬ கள்.—அப்பொழுது மோசே, இனிப் புருஷ
ரும் ஸ்திரிகளும் பரிசுத்த காணிக்கைக்கென்று
வேலை செய்யார்களாகவென்று பாளயத்திலே
கூறக் கட்டளையிட்டான்; அப்படியே சனம்
௭ கொண்டுவருகிறது நிறுத்தப்பட்டது.—ஏனெ
னில் செய்யப்போகிற எல்லா வேலைக்கும்
போந்த தளவாடம் அதிகமாயிருந்தது.
௮ வேலையைச் செய்கிறவர்களில் ஞானமான இ
ருதயமுள்ள அனைவரும் [1]வாசஸ்தலத்தை உண்
டாக்கினார்கள்; அதற்குத் திரித்த மெல்லிய பஞ்
சுநூலும் இளநீலநூலும் இரத்தாம்பரநூலும் சிவப்
புநூலும் நெய்தலான விநோத வேலையாகிய கே
ரூபீன்களுமுள்ள பத்துச் சமுக்காளங்களைப்
௯ பண்ணுவித்தான்.—ஒவ்வொரு சமுக்காளம் இ
ருபத்தெட்டுமுழ நீளமும், நான்குமுழ அகல
மும், சமுக்காளங்களெல்லாம் ஒரே அளவுமாயி
௰ ருந்தன.-ஐந்து சமுக்காளங்களை ஒன்றோடொன்
றாக இணைத்து, மற்ற ஐந்து சமுக்காளங்களை
௰௧ யும் ஒன்றோடொன்றாக இணைத்தான்.—இணைக்
கப்பட்ட ஒரு சமுக்காளத்தின் கடைஓரத்திலே
இளநீலநூலால் ஐம்பது காதுகளை உண்டுபண்
ணி, அப்படியே இணைக்கப்பட்ட மற்றச் சமுக்
காளத்தின் கடைஓரத்திலும் உண்டுபண்ணி
௰௨ னான்.—காதுகள் ஒன்றுக்கொன்று எதிராகச்
௰௩ சேர்ந்தவைகளாயிருந்தன.—ஐம்பது பொன்து
றடுகளையும் பண்ணி, அவைகளால் சமுக்காளங்
களை ஏக வாசஸ்தலமாகப் போகும்படிக்கு, ஒன்
றுக்கொன்று இணைத்துப்போட்டான்.
௰௪ வாசஸ்தலத்தின்மேல் கூடாரமாக ஆட்டு மயி
ரினால் நெய்த பதினொரு சமுக்காளங்களையும்
௰௫ பண்ணினான்.—ஒவ்வொரு சமுக்காளம் முப்ப
துமுழ நீளமும், நான்குமுழ அகலமும், பதி
னொரு சமுக்காளங்களும் ஒரே அளவுமாயிருந்
௰௬ தன.—ஐந்து சமுக்காளங்களை ஒன்றாகவும் ஆறு
சமுக்காளங்களை ஒன்றாகவும் இணைத்து,—
௰௭ இணைக்கப்பட்ட ஒரு சமுக்காளத்தின் கடை
ஓரத்தில் ஐம்பது காதுகளையும், இணைக்கப்
பட்ட மற்றச் சமுக்காளத்தின் ஓரத்தில் ஐம்பது
௰௮ காதுகளையும், உண்டாக்கி,—கூடாரத்தை ஒன்
றாய் இணைத்துவிட ஐம்பது வெண்கலத் துறடு
களை உண்டாக்கினான்.
௰௯ சிவப்புத்தீர்ந்த ஆட்டுக்கடாத் தோல்களினா
லே கூடாரத்திற்கு ஒரு மூடியையும் அதின்மே
லே தகசுத்தோல்களினாலே ஒரு மூடியையும்
உண்டுபண்ணினான்.
௨௰ நிமிர்ந்து நிற்கிற பலகைகளையும் வாசஸ்தலத்
திற்குச் சீத்திம் மரங்களாலே செப்பனிட்டான்.-
ஒவ்வொரு பலகை பத்துமுழ நீளமும் ஒன்றரை ௨௧
முழ அகலமுமாயிருந்தது.—ஒன்றுக்கொன்று ௨௨
எதிரே இசைவான ஒழுங்காயிருக்கிற இரண்டு
முளைகள் ஒவ்வொரு பலகைக்கிருந்தன; இப்படி
வாசஸ்தலத்தின் பலகைகளுக்கெல்லாம் செய்
தான்.-வாசஸ்தலத்திற்காகச் செப்பனிட்ட பல ௨௩
கைகளில் இருபதைத் தெற்கே தென்திசைக்கு
எதிராக நிறுத்தி,—அந்த இருபது பலகைகளின் ௨௪
கீழே நாற்பது வெள்ளிக்கால்களை, ஒவ்வொரு
பலகையின்கீழ் அதின் இரண்டு முளைகளுக்கான
இரண்டு கால்களாக, உண்டுபண்ணிவைத்து,—
வாசஸ்தலத்தின் வடக்கான மறுபக்கத்திலும்இரு ௨௫
பது பலகைகளை நிறுத்தி,-அவைகளின் நாற்பது ௨௬
வெள்ளிக்கால்களையும் ஒவ்வொரு பலகையின்
கீழ் இரண்டு கால்களாகப் பண்ணுவித்தான்.—
வாசஸ்தலத்தின்மேல்ப்புறமாக ஆறுபலகைகளை ௨௭
நிறுத்தி,—வாசஸ்தலத்தின் இரண்டு பக்கக் கோ ௨௮
டிகளுக்கு இரண்டு பலகைகளையும் செப்பனிட்
டான்.—இவைகள் தாழத்துவக்கி இரண்டு பக் ௨௯
கங்களை ஏகமாய்ப் பிடித்து, உயர ஒரே சட்ட
மாய் இசைத்திருந்தன; இரண்டு கோடிகளிலு
மிருக்கும் இரண்டையும் அப்படிச் செய்தான்.-
அப்படியேபலகைகள் எட்டும் அவைகளுடைய ௩௰
வெள்ளிக்கால்கள் ஒவ்வொரு பலகையின்கீழ்
இரண்டிரண்டு காலாகப் பதினாறுமாயிருந்தன.
சீத்திம் மரங்களால் வாசஸ்தலத்தின் ஒரு பக் ௩௧
கத்துப் பலகைகளுக்கு ஐந்து தாழ்ப்பாள்களை
யும்,—வாசஸ்தலத்தின் மறுபக்கத்துப் பலகைக ௩௨
ளுக்கு ஐந்து தாழ்ப்பாள்களையும், வாசஸ்தலத்
தின் மேல்ப்புறமான பின்பக்கத்துப் பலகைக
ளுக்கு ஐந்து தாழ்ப்பாள்களையும், பண்ணி,—
நடுத்தாழ்ப்பாளைப் பலகைகளின் மையத்திலே ௩௩
ஒருமுனைதுவக்கி மறுமுனைமட்டும் பாய்ச்சப்ப
டுகிறதாக்கினான்.—பலகைகளைப் பொன்தகட் ௩௪
டால் மூடி, தாழ்ப்பாள்களின் இடங்களாகிய அ
வைகளின் வளையங்களைப் பொன்னினாலே
பண்ணி, தாழ்ப்பாள்களைப் பொன்தகட்டால்
மூடினான்
இளநீலநூலும் இரத்தாம்பரநூலும் சிவப்புநூ ௩௫
லும் திரித்த மெல்லிய பஞ்சுநூலும் நெய்தலின்
விநோத வேலையாகிய கேரூபீன்களுமுள்ள தி
ரையை உண்டுபண்ணி,—அதற்குச் சீத்திம் மர ௩௬
மான நான்கு தூண்களைச் செப்பனிட்டு, அவை
களைப் பொன்தகட்டால் மூடி, அவைகளின்
வளைவாணிகளைப் பொன்னினாலே பண்ணி,
அவைகளுக்கு நான்கு வெள்ளிக்கால்களை வார்
ப்பித்தான்.
கூடாரத்தின் வாசலுக்கு இளநீலநூலும் இரத் ௩௭
தாம்பரநூலும் சிவப்புநூலும் திரித்த மெல்லிய
பஞ்சுநூலும் சித்திரத்தையல்வேலையுமான ஒரு
மறைவையும்,—அதின் ஐந்து தூண்களையும், அ ௩௮
வைகளின் வளைவாணிகளையும் உண்டாக்கி, அ
வைகளின் குமிழ்களையும், அதின் வளையங்களை

[1] ௨ மோ. ௨௬. ௧.

யும், பொன்தகட்டால் மூடினான்; அவைகளுக்கு
வார்ப்பித்த ஐந்து கால்களோவெனில் வெண்
கலம்.

## ௩௭. அதிகாரம்.

*௧. நியாயப்பிரமாணப்பெட்டகம். ௬. கேரூபீன்களுடனே செய்யப்பட்ட கிருபாசனம். ௰. மேசையும் அதின் பாத்திரங்களும், ௰௭. விளக்குத் தண்டும், விளக்குகளும், அதின் ஆயுதங்களும், ௨௫. தூபபீடத்தின் பலிபீடம். ௨௯. அபிஷேக எண்ணெயும் சுகந்தங்களின் தூபவர்க்கமும்.*

௧ பெத்சாலேயேல் சீத்திம் மரங்களால் [1]பெட்டி
யை உண்டுபண்ணினான்; அதின் நீளம் இரண்
டரைமுழமும், அதின் அகலம் ஒன்றரைமுழ
மும், அதின் உயரம் ஒன்றரைமுழமுமானது.—
௨ அதை உள்ளும்புறம்பும் சுத்தப் பொன்தகட்
டால் மூடி, சுற்றிலும் அதற்குப் பொன்திரணை
௩ யை உண்டாக்கி,— அதற்கு நான்கு பொன்வ
ளையங்களை வார்ப்பித்து, அவைகளை அதின்
நான்கு கோடிகளிலே, ஒரு பக்கத்தில் இரண்டு
வளையங்களும் மறுபக்கத்தில் இரண்டு வளையங்
௪ களும் இருக்கும்படிக்குத் தைத்து,–சீத்திம் மரங்
களான வாரைகளைச் செப்பனிட்டு, அவைக
௫ ளைப் பொன்தகட்டால் மூடி,—அந்த வாரைக
ளால் பெட்டியைச் சுமக்கும்படிக்கு, அவைக
ளைப் பெட்டியின் பக்கங்களிலுள்ள வளையங்க
ளில் பாய்ச்சினான்.

௬ சுத்தப்பொன்னினாலே [2]கிருபாசனமான மூ
டியையும் பண்ணினான்; அது இரண்டரை முழ
௭ நீளமும் ஒன்றரைமுழ அகலமுமானது.–பொன்
னான இரண்டு கேரூபீன்களையும் அடிக்கப்பட்ட
பொன்னினாலே உண்டாக்கி, கிருபாசனமான
௮ மூடியின் இரண்டோரங்களிலே,—ஒரே கேரூ
பீன் இந்தப்புறத்தினோரத்திலும், மற்றக் கேரூ
பீன் அந்தப்புறத்தினோரத்திலும் இருக்கும்படி
பண்ணினான்; அந்தக் கேரூபீன்களைக் கிருபாச
னமான மூடியின் இரண்டோரங்களில் அதிலி
ருந்து உண்டானவைகளாக இருக்கப்பண்ணி
௯ னான்.—அந்தக் கேரூபீன்கள் தங்கள் செட்டை
களை உயர விரித்து, தங்கள் செட்டைகளாலே
கிருபாசனமான மூடியைமூடுகிறவைகளும் ஒன்
றுக்கொன்று எதிர்முகங்களுமாயிருந்தன; கேரூ
பீன்களின் முகங்கள் கிருபாசனமான மூடியை
நோக்கிக்கொண்டிருந்தன.

௰ சீத்திம் மரங்களாலே [3]மேசையையும் பண்ணி
னான்; அது இரண்டுமுழ நீளமும் ஒருமுழ அக
௰௧ லமும் ஒன்றரைமுழ உயரமுமானது.—அதைச்
சுத்தப்பொன்தகட்டால் மூடி, சுற்றிலும் அதற்
௰௨ குப் பொன்திரணையை உண்டாக்கி,–சுற்றிலும்
அதற்கு நான்கு விரல்கடையான சட்டத்தையும்
சுற்றிலும் அதின் சட்டத்திற்குப் பொன் திரணை
௰௩ யையும் உண்டுபண்ணி,–அதற்கு நான்கு பொன்
வளையங்களை வார்ப்பித்து, அவைகளை அதின்
நான்கு கால்களுக்கிருக்கும் நான்கு கோடிகளி
௰௪ லே தைத்தான்.–அந்த வளையங்கள் மேசையைச்
சுமக்கும் வாரைகளின் இடங்களாயிருக்கும்ப
டிக்குச் சட்டத்துக்கெதிரே இருக்கப்பண்ணி
னான்.—மேசையைச் சுமக்கும் அந்த வாரைக ௰௫
ளைச் சீத்திம் மரங்களாலே பண்ணி, அவைகளைப்
பொன்தகட்டால் மூடி,—மேசையின்மேலிருக் ௰௬
கும் மூட்டுகளாகிய அதின் கலங்களையும், அ
தின் தூபக்கிண்ணிகளையும், அதின் கரகங்களை
யும் மூடுகிறதற்கான அதின் தட்டுகளையும், சுத்
தப் பொன்னினாலே உண்டாக்கினான்.

[4]அடிக்கப்பட்ட சுத்தப்பொன்னினாலே குத் ௰௭
துவிளக்கையும் உண்டாக்கினான்; அதின் தண்
டும் அதின் கிளைகளும் அதின் மொக்குகளும் அ
தின் மாதளம்பழங்களும் அதின் பூக்களும் அதி
லிருந்து புறப்படுகிறவைகளாயிருந்தன. — குத் ௰௮
துவிளக்கின் பக்கங்களிலிருந்து ஆறு கிளைகள்,
மூன்று அதின் ஒரு பக்கத்திலும் மூன்று அதின்
மறு பக்கத்திலுமிருந்து புறப்பட்டன.–ஒவ்வொ ௰௯
ரு கிளையிலே வாதுமைக்கொட்டைகளின் சாய
லான மூன்று மொக்குகளும் ஒரு மாதளம்பழமும்
ஒரு பூவும் இருந்தன; குத்துவிளக்கிலிருந்து பு
றப்படுகிற ஆறு கிளைகளிலும் அப்படியிருந்தன.-
விளக்குத்தண்டிலோவென்றால், வாதுமைக்கொ ௨௰
ட்டைகளின் சாயலான நான்கு மொக்குகளும்
அதின் மாதளம்பழங்களும் அதின் பூக்களுமி
ருந்தன.—அதிலிருந்து புறப்படுகிற இரண்டு கி ௨௰௧
ளைகளின்கீழ் ஒரு மாதளம்பழமும்வேறே இரண்
டு கிளைகளின்கீழ் ஒரு மாதளம்பழமும் குறை இ
ரண்டுகிளைகளின்கீழ் ஒரு மாதளம்பழமும் இ
ருந்தன; விளக்குத்தண்டிலிருந்து புறப்படுகிற
ஆறு கிளைகளுக்கும் அப்படி இருந்தன.–அவை ௨௰௨
களின் மாதளம்பழங்களும் அவைகளின் கிளைக
ளும் அதிலிருந்து உண்டானவைகளாக இருந்
தன; எல்லாம் அடிக்கப்பட்ட சுத்தப்பொன்னா
கிய ஒரு துண்டாயிருந்தது.—அதின் ஏழு விளக் ௨௰௩
குகளையும் அதின் கத்தரிகளையும் விளக்கணைக்கி
ற எத்தனங்களையும் சுத்தப் பொன்னினாலே உண்
டாக்கினான்.–அதை அதினுடைய எல்லா முஸ் ௨௰௪
தீதுகளோடும்கூட ஒரு தாலந்து சுத்தப்பொன்
னினாலே உண்டுபண்ணினான்.

சீத்திம் மரங்களினாலே [5]தூபபீடத்தையும் உண் ௨௰௫
டாக்கினான்; அது ஒருமுழ நீளமும் ஒருமுழ
அகலமுமாகிய சதுரமும், இரண்டுமுழ உயர
மும், அதின் கொம்புகள் அதனோடு ஒரு துண்
டுமாய் இருந்தன.—அதை எல்லாம் அதின்மேல் ௨௰௬
பலகையையும், அதின் சுற்றுப் பக்கங்களையும்
அதின் கொம்புகளையும், சுத்தப்பொன்தகட்டால்
மூடி, சுற்றிலும் அதற்குப் பொன்திரணையை
உண்டுபண்ணி,—அதின் திரணையின்கீழ் அதின் ௨௰௭
இரண்டு பக்கங்களிலிருக்கும் இரண்டு கோடிக
ளில் இவ்விரண்டு பொன்வளையங்களை அதைச்
சுமக்கும் வாரைகளினிடங்களாகத் தைத்து,—
சீத்திம் மரங்களால் அந்த வாரைகளைச் செய்து, ௨௰௮
அவைகளைப் பொன்தகட்டால் மூடினான்.–பரி ௨௰௯
சுத்த அபிஷேகத்தெண்ணெயையும் சுத்தமான
சுகந்தங்களின் தூபவர்க்கத்தையும் தயிலக்காரன்
வேலையாக உண்டுபண்ணினான்.

1 ௨ மோ. ௨௫. ௰.—2 ௨ மோ. ௨௫ ௰௭.—3 ௨ மோ. ௨௫. ௨௩.

4 ௨ மோ. ௨௫. ௩௧.—5 ௨ மோ. ௩௰. ௧.

## ௩௮. அதிகாரம்.

க. தகனபலியின் பலிபீடம். அ. பித்தளைத் தாம்பாளம். கூ. பிரகாரம். உக. சனங்கள் கொடுத்தவைகளின் தொகை.

க சீத்திம் மரங்களால் [1]தகன பலிபீடத்தையும்
உண்டாக்கினான்; அது ஐந்துமுழ நீளமும் ஐந்
துமுழ அகலமுமான சதுரமும் மூன்றுமுழ
உ உயரமுமானது. — அதின் நான்கு கோடிகள்
மேல் அதனோடு ஏகமாயிருக்கிற அதின் நான்கு
கொம்புகளையும் உண்டாக்கி, அதை வெண்கலத்
௩ தகட்டால் மூடி, — அந்தப் பீடத்தின் சகல
முட்டுகளாகிய செப்புச்சட்டிகளையும் சாம்ப
லெடுக்கும் கரண்டிகளையும் கலங்களையும் முள்
துறடுகளையும் கலசங்களையும் உண்டாக்கினான்;
அதின் முட்டுகளை எல்லாம் வெண்கலத்தினா
ச லே பண்ணினான். — வலைபோலிருக்கிற ஒரு
வெண்கலச் சல்லடையையும் பலிபீடத்திற்கு
உண்டாக்கி, அதைத் தாழ அதின் சுற்றிற்குக்
கீழ்ப்புறமாக அதின் பாதிமட்டும் வரவைத்து,—
ரு வானைகளின் இடங்களாகிய நான்கு வளையங்
களை வார்ப்பித்து, வெண்கலச் சல்லடையின்
சு நான்கு மூலைகளில் வைத்து, — சீத்திம் மரங்க
ளால் வானைகளைப் பண்ணி, அவைகளை வெண்
எ கலத்தகட்டால் மூடி,—அவைகளைப் பலிபீடத்
தின் பக்கங்களிலிருக்கிற வளையங்களிலே, அ
தை அவைகளாலே சுமக்கும்படிக்கு பாய்ச்சி
னான்; அதைப் பலகைகளினாலே குழாயாக்கி
னான்.

அ [2]ஆசரிப்புக் கூடாரத்தின் வாசலில் கும்புகும்
பாய் வந்து காணிக்கை செலுத்துகிற ஸ்திரிக
ளின் கண்ணாடிகளாலே, வெண்கலத்தொட்டி
யையும் அதின் வெண்கலப் புரிமணையையும்
உண்டாக்கினான்; [3]பிரகாரத்தையும் உண்டுபண்
ணினான்.

கூ தெற்கே தென்பக்கத்திற்கு எதிராயிருக்கிற
திரித்த மெல்லிய பஞ்சுநூலால் நெய்த பிரகாரத்
௰ தின் வெளியாடைகள் நூறுமுழம். — அவைக
ளின் தூண்கள் இருபது; அவைகளின் இருபது
கால்கள் வெண்கலமும், தூண்களின் வளைவா
ணிகளும் அவைகளின் வளையங்களும் வெள்
௰க ளியுமானது.—வடபக்கத்திற்கு எதிரானவைக
ளும் நூறு முழம்; அவைகளின் தூண்கள் இரு
பது; இவைகளின் இருபது கால்கள் வெண்கல
மும், தூண்களின் வளைவாணிகளும் வளையங்க
௰உ ளும் வெள்ளியுமானது.—மேல்பக்கத்திற்கு எ
திரான வெளியாடைகள் ஐம்பது முழமானது;
அவைகளின் தூண்கள் பத்து; இவைகளின் கால்
களும் பத்து; தூண்களின் வளைவாணிகளும்
௰௩ வளையங்களும் வெள்ளி. — சூரியன் உதிக்கிற
கீழ்ப்பக்கத்திற்கு எதிரானவைகளும் ஐம்பது மு
௰ச ழம்.—அங்கே ஒருபுறத்து வெளியாடைகள் பதி
னைந்து முழமானது; அவைகளின் தூண்கள்
மூன்றும் இவைகளின் கால்கள் மூன்றும்தா
௰ரு னே. — பிரகாரவாசலின் இந்தப்பக்கத்துக்குச்
சரியாக அந்தப்பக்கத்திலும் மறுபுறத்து வெளி
யாடைகள் பதினைந்து முழமானது; அவைக
ளின் தூண்கள் மூன்றும் இவைகளின் கால்கள்
மூன்றும்தானே.—சுற்றிலும் பிரகாரத்தின் வெ ௰சு
ளியாடைகளெல்லாம் மெல்லிய பஞ்சுநூலால்
நெய்தது. — தூண்களின் கால்கள் வெண்கல ௰எ
மும், தூண்களின் வளைவாணிகளும் வளையங்
களும் வெள்ளியுமானது; அவைகளின் குமிழ்
கள் வெள்ளித்தகட்டால் மூடப்பட்டதும், பிர
காரத்தின் தூண்களெல்லாம் வெள்ளி வளையங்
கள் போடப்பட்டவைகளுமாயிருந்தன.—[4]பிர ௰அ
காரவாசலின் மறைவோவென்றால், இளநீலநூ
லும் இரத்தாம்பரநூலும் சிவப்புநூலும் திரித்த
மெல்லிய பஞ்சுநூலுமாகிய சித்திரத்தையல்
வேலையாயிருந்தது; அதின் நீளம் இருபதுமுழ
மும், அகலமாகிய அதின் உயர்வு பிரகாரத்தின்
வெளியாடைகளுக்குச் சரிசமானமாய் ஐந்து
முழமுமானது.—அவைகளின் தூண்கள் நான் ௰கூ
கு; அவைகளின் நான்கு கால்கள் வெண்கல
மும், அவைகளின் வளைவாணிகள் வெள்ளியும்,
அவைகளின் குமிழ்கள் மூடப்பட்ட தகடும், அ
வைகளின் வளையங்களும் வெள்ளியுமாயிருந்
தன.—வாசஸ்தலத்திற்கும் பிரகாரத்திற்கும் சுற் உ௰
றிலுமிருந்த எல்லா முளைக்கூச்சுகளும் வெண்
கலம்.

சாட்சியின் வாசஸ்தலத்திற்குச் சென்றவை உக
களின் கணக்கோவென்றால், அவைகள் மோசே
யின் சொல்படி ஆசாரியனாகிய ஆரோனின்
குமாரனான இத்தமாரின் கையிலே லேவியரின்
ஊழியத்திற்கென்று எண்ணப்பட்டது.—யூதா உஉ
கோத்திரத்து ஊரின் மகனாகிய ஊரியின் குமா
ரன் பெத்சாலேயேல் கர்த்தர் மோசேக்குக் கற்
பித்ததை எல்லாம் பண்ணினான்.—அவனோடே உ௩
கூடத் தாண்கோத்திரத்து அகிசாமாகின் குமார
னாகிய அகோலியாப் சூட்சவேலைசெய்கிற தொ
ழிலாளியும், இளநீலநூலாலும் இரத்தாம்பர
நூலாலும் சிவப்புநூலாலும் மெல்லிய பஞ்சு
நூலாலும் சித்திரத்தையல்வேலைசெய்கிறவனுமா
யிருந்தான்.

பரிசுத்தஸ்தலத்தின் வேலைக்கெல்லாம் அசை உச
வாட்டும் காணிக்கையாகக் கொடுக்கப்பட்டு,
செலவான பொன்னெல்லாம் பரிசுத்தஸ்தலத்
தின் சேக்கலாலே இருபத்தொன்பது தாலந்
தும் எழுநூற்றுமுப்பது சேக்கல் நிறையுமாயி
ருந்தன.

சபையில் எண்ணப்பட்டவர்களின் வெள்ளி உரு
பரிசுத்தஸ்தலத்தின் சேக்கலால் நூறுதாலந்தும்,
ஆயிரத்தெழுநூற்றெழுபத்தைந்து சேக்கலுமா
யிருந்தது.—அதேதெனில் எண்ணப்படுகிறவர் உசு
களின் கணக்கிலே வந்த இருபது வயது முதல்
கொண்டு மேல்தரமான அறுநூற்று மூவாயிரத்
தைந்நூற்றைம்பதுபேர்களில் ஒவ்வொரு தலைக்
காகப் பரிசுத்தஸ்தலத்தின் சேக்கலாலே அரைச்

1 உ மோ. உஎ. க.—2 உ மோ. ௩௰. ௰அ.

3 உ மோ. உஎ. கூ.—4 உ மோ. உஎ. ௰ச.

௨௭ சேக்கல் விழுக்காடு சேர்ந்தது. — வெள்ளியில்
நூறுதாலந்து பரிசுத்தஸ்தலத்தின் கால்களையும்
திரையின் கால்களையும் வார்ப்பிக்கிறதற்குச்
செலவாயிற்று; காலுக்கு ஒரு தாலந்து விழுக்
காடு நூறு கால்களுக்கு நூறு தாலந்துதானே.—
௨௮ ஆனால் அந்த ஆயிரத்தெழுநூற்றெழுபத்தைந்து
சேக்கலாலே தூண்களுக்கு வளைவாணிகளைப்
பண்ணி, அவைகளின் குமிழ்களைத் தகடுகளால்
மூடி, அவைகளுக்கு வளையங்களை உண்டாக்
கினான்.
௨௯ அசைவாட்டும் காணிக்கையாகச் செலுத்தப்
பட்ட வெண்கலமோவெனில், எழுபது தாலந்
தும் இரண்டாயிரத்து நானூறு சேக்கல் நிறையு
௩௰ மாயிருந்தது.—அதினாலே ஆசரிப்புக்கூடார
வாசல் மறைவின் கால்களையும் வெண்கலப்
பலிபீடத்தையும் அதற்கிருக்கிற வெண்கலச்
சல்லடையையும் பலிபீடத்தின் சகல முட்டுக
௩௧ ளையும்,—சுற்றிலும் இருக்கிற பிரகாரத்தின் கால்
களையும் பிரகாரவாசல் மறைவின் கால்களையும்
வாசஸ்தலத்தின் சகல முளைக்கூச்சுகளையும் சுற்
றிலுமிருக்கிற பிரகாரத்தின் சகல முளைக்கூச்சு
களையும் உண்டுபண்ணினான்.

## ௩௯. அதிகாரம்.

௧. பணிவிடைச் சீலைகளும் பரிசுத்த வஸ்திரங்களும், ௨. ஆசாரிய சால்வை, ௮ பதக்கம், ௨௨. ஆசாரிய சால்வையின் அங்கி, ௨௭. சட்டைகளும், குல்லாவும், மெல்லிய நூலால் செய்த நடுக்கட்டும், ௩௰. பரிசுத்த கிரீடத்தின் தகடு, ௩௨. மோசே வேலையை எல்லாம் பார்வையிட்டு ஒத்துக்கொண்டது.

௧ [1]இளநீலநூலாலும் இரத்தாம்பரநூலாலும்
சிவப்புநூலாலும் அவர்கள் பரிசுத்தஸ்தலத்தின்
ஆராதனைசெய்கிறதற்கு வேண்டிய சீலைகளை
யும் ஆரோனுக்குப் பரிசுத்த வஸ்திரங்களையும்
கர்த்தர் மோசேக்குக் கற்பித்தபடியே பண்ணி
னார்கள்.
௨ ஆசாரிய சால்வையைப் பொன்னினாலும்,
இளநீலநூலாலும், இரத்தாம்பரநூலாலும் சிவப்
புநூலாலும், திரித்த மெல்லிய பஞ்சுநூலாலும்
௩ பண்ணினான். — பொன்னை இளநீலநூலுக்கும்,
இரத்தாம்பரநூலுக்கும், சிவப்புநூலுக்கும், மெல்
லிய பஞ்சுநூலுக்கும் நடுவே விநோதமாய் நெய்
யும்படிக்கு, அதின் தகடுகளை வளர்த்தினார்கள்,
௪ அவைகளை நூல்களாக அறுத்தான். — இரண்டு
தோளின்மேலும் அதை அதின் இரண்டு முனை
களாலே சேர்த்தார்கள்; அங்கே இணைக்கப்பட்
௫ டிருந்தது. — அதின்மேல் அதனோடே ஏகதுண்
டாயிருக்கிற விநோதமான கச்சை, அந்த வேலை
யாகப் பொன்னினாலும் இளநீலநூலாலும் இரத்
தாம்பரநூலாலும் சிவப்புநூலாலும் திரித்த மெல்
லிய பஞ்சுநூலாலும் கர்த்தர் மோசேக்குக் கற்
பித்தபடி பண்ணப்பட்டது.
௬ முத்திரைகள் வெட்டப்படுகிற வேலையாக
இஸ்ரவேல் புத்திரரின் நாமங்களைக் கோமேதகக்
கல்லுகளில் வெட்டி, சுற்றிலுமிருக்கிற பொன்
னில் இவைகளைப் பதிந்தவைகள் ஆக்கினார்
கள்.—கர்த்தர் மோசேக்குக் கற்பித்தபடியே அ ௭
வைகளை இஸ்ரவேல் புத்திரருக்கான நினைப்புக்
கற்களாக ஆசாரிய சால்வையினுடைய தோள்
களின்மேலே வைத்தான்.
ஆசாரிய சால்வையின் வேலைக்கொத்த வி ௮
நோதவேலையாக மார்ப்பதக்கத்தையும் பொன்
னினாலும் இளநீலநூலாலும் இரத்தாம்பரநூலா
லும் சிவப்புநூலாலும் திரித்த மெல்லிய பஞ்சு
நூலாலும் பண்ணினான்.—அந்த மார்ப்பதக்கத் ௯
தைச் சதுரமும் இரட்டையும் ஒருசாண் நீள
மும் ஒருசாண் அகலமுமாக்கி,—அதிலே இரத் ௰
தினக் கற்களை நான்கு பத்தி நிறையப் பதித்தார்
கள்; முதலாம் பத்தி கெம்பும் புஷ்பராகமும் மர
கதமும், — இரண்டாம் பத்தி சிவப்புக் கல்லும் ௰௧
நீலக்கல்லும் வயிரமும், — மூன்றாம் பத்தி பத் ௰௨
மராகமும் வயிடூரியமும் அமெதீஸ்தும்,—நான் ௰௩
காம்பத்தி தார்சீஸ் இரத்தினமும் கோமேதக
மும் யஸ்பியுமானது; அவைகள் தங்களிடங்க
ளிலே சுற்றும் பொன்னில் பதிக்கப்பட்டிருந்த
ன.—இந்தக் கற்கள் இஸ்ரவேல் புத்திரர் நாமங் ௰௪
களின்படியே பன்னிரண்டும் அவர்களுடைய
நாமங்களுள்ளவைகளுமாயிருந்தன; பன்னிரண்
டு கோத்திரங்களில் ஒவ்வொன்றின் நாமம் ஒவ்
வொன்றில் முத்திரை வெட்டாய் வெட்டி
யிருந்தது.—மார்ப்பதக்கத்திற்கென்று சரியளவு ௰௫
களும் முடிச்சுக்குத்திகள் வேலையுமான சரப்ப
ளிகளையும் சுத்தப்பொன்னினாலே பண்ணி,—இ ௰௬
ரண்டு பொன் வளையங்களையும் இரண்டு பொன்
மோதிரங்களையும் பண்ணி, இந்த இரண்டு
மோதிரங்களை மார்ப்பதக்கத்தின் இரண்டு முனை
களில் வைத்து,—பொன்னான அந்த இரண்டு மு ௰௭
டிச்சுக்குத்திகளை மார்ப்பதக்கத்தின் முனைகளி
லிருக்கிற இரண்டு மோதிரங்களில் மாட்டி,—
இரண்டு முடிச்சுக்குத்திகளின் இரண்டு நுனி ௰௮
களை ஆசாரிய சால்வையினுடைய தோள்களின்
மேல்அதின் முன்புறத்திலிருக்கிற அந்த இரண்டு
வளையங்களில் மாட்டிவிட்டார்கள்.—பின்னை ௰௯
யும் இரண்டு பொன்மோதிரங்களைப் பண்ணி,
அவைகளை ஆசாரிய சால்வையின் கீழ்ப்புறத்திற்
கு எதிரான மார்ப்பதக்கத்தின் மற்ற இரண்டு மு
னைகளில் அதின் ஓரத்திற்குள்ளாக வைத்து,—
வேறே இரண்டு பொன்வளையங்களையும் பண் ௨௰
ணி, அவைகளை ஆசாரிய சால்வையினுடைய
முன்புறத்தின் இரண்டுகீழ்ப்பக்கங்களில்அதின்
இணைப்புக்கு எதிராகவும், ஆசாரிய சால்வை
யின் விநோதமான கச்சைக்கு மேலாகவும்
வைத்து,—மார்ப்பதக்கம் ஆசாரிய சால்வையின் ௨௰௧
விநோதமான கச்சைக்கு மேலாக இருக்கும்
படிக்கும், ஆசாரிய சால்வையிலிருந்து விட்டுப்
போகாதபடிக்கும்,அதை அதின் மோதிரங்களால்
ஆசாரிய சால்வையின் மோதிரங்களோடே இள
நீலமான கயிற்றினாலே, பராபரன் மோசேக்குக்
கற்பித்தபடியே கட்டினார்கள்.-ஆசாரியசால்வை ௨௰௨
யின்கீழிருக்கும் அங்கியையோவென்றால்,முழு

[1] ௨ மோ. ௨௮. ௧.

௨௩ வதும் இளநீலநூலால் நெய்தான். — அங்கியின்
நடுவில் மார்க்கவசத்தின் வாய்க்கொப்பான அ
தின் வாயும் அது கிழியாதபடிக்குச் சுற்றிலும்
௨௪ அதற்கான ஓரமுமிருந்தன. — அங்கியின் கீழ்
ஓரங்களிலே தொங்கத்திரித்த இளநீலநூலும்
இரத்தாம்பரநூலும் சிவப்புநூலுமான வேலையாக
௨௫ மாதளம்பழங்களைப் பண்ணி,—சுத்தப் பொன்
னிஞலே மணிகளையும் பண்ணி, அந்த மணி
களை அங்கியின் ஓரங்களில் சுற்றிலும் மாதளம்
௨௬ பழங்களின் நடுவே தொங்கவைத்தார்கள்.—ஆ
ராதனைசெய்ய அங்கியின் ஓரங்களிலே சுற்றி
லும் ஒரு மணியும் ஒரு மாதளம்பழமுமாகக்
கர்த்தர் மோசேக்குக் கற்பித்தபடியே தொங்கி
யிருக்கத்தானே.
௨௭ ஆரோனுக்கும் அவன் குமாரருக்கும் மெல்
லிய பஞ்சுநூல் நெய்தலாக உள்சட்டைகளை
௨௮ யும்,— பாகையையும், அலங்காரமான குல்
லாக்களையும், திரித்த மெல்லியநூல் நெய்தலா
௨௯ கச் சணல்நூல் சல்லடங்களையும்,—திரித்த மெல்
லிய பஞ்சுநூலாலும் இளநீலநூலாலும் இரத்தாம்
பரநூலாலும் சிவப்புநூலாலும் சித்திரத்தையல்
வேலையாக நடுக்கட்டையும், கர்த்தர் மோசேக்
குக் கற்பித்தபடியே பண்ணிஞர்கள்.
௩௰ [1]சுத்தப் பொன்னிஞலே பரிசுத்த கிரீட
மென்ற பட்டத்தையும் பண்ணி, அதிலே கர்த்த
ருக்கும் பரிசுத்தம் என்பதை முத்திரை வெட்
௩௧ டாக வெட்டி,—அதைப் பாகையில் உயரக்கட்
டும்படிக்கு, இளநீலமான கயிற்றிஞலே கர்த்தர்
மோசேக்குக் கற்பித்தபடியே கோத்தார்கள்.—
௩௨ இப்படியே ஆசரிப்பின் கூடாரமென்ற வாசஸ்
தலத்தின் வேலையெல்லாம் முடிந்தது; கர்த்தர்
மோசேக்குக் கற்பித்தபடியெல்லாம் இஸ்ரவேல்
புத்திரர் செய்திருந்தார்கள்.
௩௩ பிற்பாடு வாசஸ்தலத்தை மோசேயண்டைக்
குக் கொண்டுவந்தார்கள்; கூடாரத்தையும், அதி
னுடைய எல்லா முட்டுகளையும், அதின் துறடு
களையும், அதின் பலகைகளையும், அதின் தாழ்ப்
பாள்களையும், அதின் தூண்களையும், அதின் கால்
௩௪ களையும்,—சிவப்புத்தீர்ந்த ஆட்டுக்கடாத்தோல்
களின் மூடியையும், தகசுத்தோல்களின் மூடி
௩௫ யையும், மறைவின் திரையையும்,—சாட்சியின்
பெட்டியையும், அதின் வாரைகளையும்,கிருபா
௩௬ சனமான மூடியையும்,—மேசையையும், அதின்
எல்லா முட்டுகளையும், சமுகத்தப்பங்களையும்,—
௩௭ சுத்தமான குத்துவிளக்கையும், வரிசையாய் ஆ
யத்தப்பட்ட அதின் விளக்குகளையும், அதின்
எல்லா முட்டுகளையும், வெளிச்சத்திற்கு எண்
௩௮ ணெயையும், — பொன்பீடத்தையும், அபிஷே
கத்தெண்ணெயையும், சுகந்தங்களின் தூபவர்க்
கத்தையும், வாசஸ்தலத்தின் வாசல் மறைவை
௩௯ யும்,—வெண்கலப் பலிபீடத்தையும்,அதற்கிருக்
கிற வெண்கலச் சல்லடையையும், அதின் வா
ரைகளையும்,அதின் எல்லா முட்டுகளையும்,தொட்
௪௰ டியையும், அதின் புரிமணையையும்,—பிரகாரத்
தின் வெளியாடைகளையும், அதின் தூண்களை
யும், அதின் கால்களையும், பிரகாரத்து வாசல்
மறைவையும், அதின் கயிறுகளையும், அதின்
முளைக்கூச்சுகளையும், ஆசரிப்புக் கூடாரமான
வாசஸ்தலத்தின் வேலைக்கடுத்த எல்லா முட்டுக
ளையும்,—பரிசுத்த ஸ்தலத்திலே செய்யும் ஆரா ௪௧
தனைக்கடுத்த சீலைகளையும், ஆசாரிய ஊழியம்
செய்கிற ஆரோனின் பரிசுத்த வஸ்திரங்களையும்,
அவன் குமாரரின் வஸ்திரங்களையும், தானே.—
கர்த்தர் மோசேக்குக் கற்பித்தபடி எல்லாம் இஸ் ௪௨
ரவேல் புத்திரர் சகல வேலையையும் செய்திருந்
தார்கள்.—மோசே எல்லாக் கிரியையையும் பார்த் ௪௩
தான்; இதோ கர்த்தர் கற்பித்தபடியே அதைச்
செய்திருந்தார்கள்; ஆகையால் மோசே அவர்களை
ஆசீர்வதித்தான்.

## ௪௰. அதிகாரம்.

௧. கூடாரத்தை நாட்டக் கட்டளையிட்டது. ௯. அதை அபிஷேகம் பண்ணினது. ௰௩. ஆரோனையும் அவனுடைய பிள்ளைகளையும் அபிஷேகம்பண்ணினது. ௰௬. மோசே எல்லாக் காரியங்களையும் நிறைவேற்றினது. ௩௪. மேகமானது கூடாரத்தை மூடினது.

கர்த்தர் மோசேயோடே பேசிச் சொன்னதா ௧
வது:—நீ முதலாம்மாதம் முதல்தேதியிலே ஆச ௨
ரிப்புக் கூடாரத்தின் வாசஸ்தலத்தை எடுப்பித்
து,—அதிலே சாட்சியின் பெட்டியை வைத்து, ௩
பெட்டியைத் திரையிஞல் மறைத்து,—மேசை ௪
யைக் கொண்டுவந்து, அதின் முஸ்தீதை அடுக்கி
வைத்து, குத்துவிளக்கைக் கொண்டுவந்து, அ
தின் விளக்குகளை ஏற்றி,—பொன் தூபபீடத் ௫
தைச் சாட்சியின் பெட்டிக்குமுன்பாக வைத்து,
வாசஸ்தலத்தின் வாசல் மறைவைத் தூக்கிவைக்
கக்கடவாய்.— பிற்பாடு நீ தகனபலிபீடத்தை ௬
ஆசரிப்புக் கூடாரமான வாசஸ்தலத்தின் வாச
லுக்குமுன்பாக வைத்து,—தொட்டியை ஆசரிப் ௭
புக் கூடாரத்திற்கும் பலிபீடத்திற்கும் நடுவே
வைத்து, அதிலே தண்ணீர் வார்த்து,—சுற்றிலும் ௮
பிரகாரத்தை நிறுத்தி, பிரகாரவாசல் மறைவைத்
தூக்கிவைத்து, — அபிஷேகத்தெண்ணெயை எ ௯
டுத்து, வாசஸ்தலத்தையும் அதிலுள்ள யாவையும்
அபிஷேகம்பண்ணி,அதை அதின் முட்டுகளோ
டெல்லாம் பரிசுத்தமாக்கக்கடவாய்; அப்பொ
ழுது பரிசுத்தமாய் இருக்கும்.—தகனபலிபீடத் ௰
தையும் அதின் எல்லா முட்டுகளையும் அபிஷே
கம்பண்ணி, அதைப் பரிசுத்தமாக்கக்கடவாய்;
அப்பொழுது பரிசுத்தத்திற்குப் பரிசுத்தமான
பலிபீடமாய் இருக்கும்.-தொட்டியையும் அதின் ௰௧
புரிமணையையும் அபிஷேகம்பண்ணி, பரிசுத்த
மாக்கக்கடவாய்.—பிற்பாடு நீ ஆரோனையும் அ ௰௨
வன் குமாரரையும் ஆசரிப்புக்கூடாரத்தின் வாச
லுக்குச் சேரப்பண்ணி, அவர்களைத் தண்ணீரி
ஞல் கழுவி,—ஆரோனுக்குப் பரிசுத்த வஸ்திரங் ௰௩
களை உடுத்து, நமக்கு ஆசாரிய ஊழியம் செய்
யும்படிக்கு அவனை அபிஷேகம்பண்ணி, பரி
சுத்தமாக்கி,—அவன் குமாரரையும் சேரப்பண் ௰௪
ணி, அவர்களுக்குச் சட்டைகளை உடுத்து,—

[1] ௨ மோ. ௨௮. ௩௬, ௩௮.

௰௫ அவர்கள் நமக்கு ஆசாரிய ஊழியம்செய்யும்ப
டிக்கு அவர்களை, அவர்கள் தகப்பனை அபி
ஷேகம்பண்ணினபடி, அபிஷேகம்பண்ணக்க
டவாய்; அவர்களுடைய அபிஷேகம் அவர்க
ளுக்கு அவர்களுடைய தலைமுறைகளில் நித்
திய ஆசாரிய பட்டத்திற்கென்று உண்டாயிருப்
பதாக என்றார்.

௰௬ கர்த்தர் தனக்குக் கற்பித்தபடி எல்லாம் மோ
௰௭ சே செய்தான்.—சம்பவித்ததேதென்றால், இரண்
டாம் வருஷம் முதலாம் மாதம் முதல்தேதியிலே
௰௮ வாசஸ்தலம் எடுப்பிக்கப்பட்டது.—அதேதென்
றால் மோசே கூடாரத்தை எடுப்பித்தான்; அவன்
அதின் கால்களை வைத்து, அதின் பலகைகளை
நிறுத்தி, அதின் தாழ்ப்பாள்களைப் பாய்ச்சி, அ
௰௯ தின் தூண்களை நிறுத்தி,—கூடாரத்தை வாசஸ்த
லத்தின்மேல் விரித்து, கூடாரத்தின் மூடியை
உயர அதின்மீதில் கர்த்தர் தனக்குக் கற்பித்தபடி
போட்டான்.

௨௰ அவன் சாட்சியை எடுத்து, அதைப் பெட்டி
யிலே வைத்து, வாரைகளைப் பெட்டியிலே பா
ய்ச்சி, கிருபாசனமான மூடியை உயரப் பெட்
௨௧ டியின்மீதில் வைத்து,—பெட்டியை வாசஸ்த
லத்திலே கொண்டுவந்து, மறைவின் திரையைத்
தூக்கிவைத்து, சாட்சியின் பெட்டியைக் கர்த்தர்
தனக்குக் கற்பித்தபடி மறைத்தான்.

௨௨ பிற்பாடு அவன் மேசையை ஆசரிப்பின் கூ
டாரத்திலே வாசஸ்தலத்தின் வடபுறமாய்த் தி
௨௩ ரைக்குப் புறம்பாக வைத்து,—கர்த்தர் தனக்குக்
கற்பித்தபடியே அதின்மேல் கர்த்தருக்குமுன்
பாக அப்பத்தை வரிசையாக அடுக்கிவைத்தான்.

௨௪ பிற்பாடு அவன் குத்துவிளக்கை ஆசரிப்பின்
கூடாரத்தில் மேசைக்கு எதிராக வாசஸ்தலத்
௨௫ தின் தென்புறத்திலே வைத்து,—கர்த்தர் தனக்
குக் கற்பித்தபடியே விளக்குகளைக் கர்த்தருக்கு
முன்பாக ஏற்றினான்.

௨௬ பிற்பாடு அவன் பொன்பீடத்தை ஆசரிப்
பின் கூடாரத்தில் திரைக்கு முன்பாக வைத்து,—
கர்த்தர் தனக்குக் கற்பித்தபடியே அதின்மேல் ௨௭
சுகந்தவர்க்கத்தினாலே தூபம் காட்டினான்.

பிற்பாடு அவன் வாசஸ்தலத்தின் வாசல் மறை ௨௮
வைத் தூக்கிவைத்து,—தகனபலிபீடத்தை ஆச ௨௯
ரிப்புக்கூடாரமான வாசஸ்தலத்தின் வாசலுக்கு
முன்பாக வைத்து, அதின்மேலே சர்வாங்கதகன
பலியையும், காணிக்கையையும் கர்த்தர் தனக்குக்
கற்பித்தபடியே செலுத்தினான்.

அவன் தொட்டியை ஆசரிப்புக் கூடாரத்திற் ௩௰
கும் பலிபீடத்திற்கும் நடுவே வைத்து, கழுவுகி
றதற்கு அதிலே தண்ணீர் வார்த்தான்.—அவ்வி ௩௧
டத்திலே மோசேயும் ஆரோனும் அவன் குமார
ரும் தங்கள் கைகளையும் தங்கள் கால்களையும்
கழுவினார்கள்.—அவர்கள் ஆசரிப்பின் கூடாரத் ௩௨
திற்கு உள்பிரவேசிக்கிறபொழுதும், பலிபீடத்
தண்டையில் சேருகிறபொழுதும், அவர்கள் கர்த்
தர் மோசேக்குக் கற்பித்தபடியே கழுவிக்கொள்
ளவேண்டியது.

பிற்பாடு அவன் வாசஸ்தலத்தையும் பலிபீடத் ௩௩
தையும் சுற்றிலும் பிரகாரத்தை நிறுத்தி, பிரகாரத்
தின் வாசல் மறைவைத் தூக்கிவைத்தான்; இப்
படியே மோசே கிரியையை முடித்தான்.

அப்பொழுது [1]ஒரு மேகம் ஆசரிப்பின் கூடா ௩௪
ரத்தை மூடி, கர்த்தருடைய மகிமை வாசஸ்தலத்
தை நிரப்பிற்று.—ஆசரிப்பின் கூடாரத்திற்குள் ௩௫
பிரவேசிக்க மோசேக்குக் கூடாதிருந்தது; ஏனெ
னில் மேகம் அதின்மேலே தங்கி, கர்த்தருடைய
மகிமை வாசஸ்தலத்தை நிரப்பிற்று.—மேகம் ௩௬
வாசஸ்தலத்திலிருந்து எழும்புகிறபொழுதுதா
னே, இஸ்ரவேல் புத்திரர் தங்கள் பயணங்களுக்
கெல்லாம் புறப்படுவார்கள்.—மேகம் எழும்பா ௩௭
திருந்ததேயாகில், அவர்கள் அது எழும்பும் நாள்
மட்டும் பயணம்பண்ணாதிருப்பார்கள்.—அதே ௩௮
தெனில் இஸ்ரவேல் வீட்டாருடைய எல்லாப்
பயணங்களிலும் அவர்கள் எல்லாருடைய கண்
களுக்குமுன்பாகப் பகலில் வாசஸ்தலத்தின்
மேலே கர்த்தருடைய மேகம் இருந்தது, இரவி
லோவென்றால், அக்கினி அதில் இருந்தது.

1 ௪ மோ. ௯. ௰௫. ௧ இரா. ௮. ௰.

# LEVITICUS.

# மோசே எழுதின

## மூன்றாம் ஆகமம்.

### க. அதிகாரம்.

க. தகனபலிகளைக்குறித்தது. ங. மாட்டுமந்தையிலாவது, ௰. ஆட்டுமந்தையிலாவது, ௰ச. பறவைகளிலாவது எடுக்கப்படுவது.

க கர்த்தர் ஆசரிப்பின் கூடாரத்திலிருந்து மோசே
யைக் கூப்பிட்டு அவனோடே பேசிச் சொன்ன
உ தாவது:—நீ இஸ்ரவேல் புத்திரரோடே பேசி,
அவர்களுக்குச் சொல்லவேண்டியதேதென்றால்,
உங்களில் ஒரு மனிதன் கர்த்தருக்குப் பலி
யைச் செலுத்தப்போனால், மாட்டுமந்தையிலும்
ஆட்டுமந்தையிலுமுள்ள மிருகங்களில் எடுத்து,
உங்கள் காணிக்கைகளைச் செலுத்துவீர்களாக.
ங அவன் செலுத்துவது மாட்டுமந்தையில் எடுக்
கிற சர்வாங்கதகனபலியானால், அவன் பழுதற்
ற காளையைச் செலுத்துவானாக; கர்த்தரின் சந்
நிதியிலே தன்மேலே பிரியம் வர, அவன் அதை
[1]ஆசரிப்புக் கூடாரத்தின் வாசலுக்குக் கொண்டு
ச வந்து,–அது தன் பாவநிவிர்த்திக்கென்று அங்கிக
ரிக்கப்படும்படிக்குத் தன் கையை அதினுடைய
ரு தலையின்மேல் வைத்து,–கர்த்தருக்குமுன்பாகக்
காளையின் குரல்வளையை அறுக்கக்கடவன்; அப்
பொழுது ஆரோனின் குமாரராகிய ஆசாரியர்
கள் அதின் இரத்தத்தைக் கொண்டுவந்து, அதை
ஆசரிப்புக் கூடாரத்தின் வாசலிலிருக்கிற பலி
பீடத்தின்மேலே சுற்றிலும் தெளிக்கக்கடவர்
சு கள்.—பிற்பாடு அவன் தகனபலியைத் தோலு
ரித்து, அதை அதின் சந்துசந்தாகத் துண்டித்துப்
எ போடுவானாக.—அப்பொழுது ஆசாரியனாகிய
ஆரோனின் குமாரர் பலிபீடத்தின்மேலே அக்
கினியைப் போட்டு, அக்கினியின்மேலே கட்
அ டைகளை அடுக்கி,—பிற்பாடு அவன் குமாரரா
கிய அந்த ஆசாரியர்கள் துண்டங்களையும் தலை
யையும் கொழுப்பையும் பலிபீடத்தின்மேல்
அக்கினியின்மேலிருக்கிற கட்டைகளின்மீதில்
கூ அடுக்கிவைக்கக்கடவர்கள்.—அதின் குடல்க
ளையும் அதின் தொடைகளையும் அவன் தண்ணீ
ரினால் கழுவுவானாக; அவைகளை எல்லாம் ஆசா
ரியன் பலிபீடத்தின்மேலே சர்வாங்க தகனபலி
யாகக் கொளுத்திவிடக்கடவன்; அது கர்த்தருக்
கு ஆற்றுகிற வாசனையாகும் தகனம்.
௰ அவன் ஆட்டுமந்தையிலுள்ள ஆடுகளிலாகி
லும் வெள்ளாடுகளிலாகிலும் எடுத்து, சர்வாங்
கதகனபலியைச் .செலுத்தப்போனானேயாகில்,
அவன் பழுதற்ற கடாவைக் கொண்டுவந்து,—
கர்த்தருக்குமுன்பாகப் பலிபீடத்தின் வடபுறத் ௰க
திலே அதின் குரல்வளையை அறுக்கக்கடவன்;
அப்பொழுது ஆரோனின் குமாரராகிய ஆசாரி
யர்கள் அதின் இரத்தத்தைப் பலிபீடத்தின்மே
லே சுற்றிலும் தெளிக்கக்கடவர்கள்.—பிற்பாடு ௰உ
அவன் அதை அதின் சந்துசந்தாகத் துண்டித்து,
அதின் தலையையும் அதின் கொழுப்பையும்
கூட வைப்பானாக; அவைகளை ஆசாரியன் பலி
பீடத்தின்மேலே அக்கினியின்மேல் இருக்கிற
கட்டைகளின்மீதில் அடுக்கிவைக்கக்கடவன்.—
குடல்களையும் தொடைகளையும் அவன் தண்ணீ ௰ங
ரினாலே கழுவுவானாக; அவைகளை எல்லாம்
ஆசாரியன் கொண்டுவந்து, பலிபீடத்தின்மேலே
கொளுத்திவிடக்கடவன், அது சர்வாங்கதகன
பலி; அது கர்த்தருக்கு ஆற்றுகிற வாசனையா
கும் தகனம்.
அவன் பறவைகளில் எடுத்து, கர்த்தருக்குச் ௰ச
சர்வாங்கதகனபலியைச் செலுத்தப்போனானே
யாகில், காட்டுப்புறாக்களிலாகிலும் புறாக்குஞ்
சுகளிலாகிலும் எடுத்துச் செலுத்தக்கடவன்.–அ ௰ரு
தை ஆசாரியன் பலிபீடத்தண்டையில் கொண்
டுவந்து, அதின் தலையைக் கிள்ளிப் பிடுங்கி, பலி
பீடத்திலே கொளுத்திவிட்டு, அதின் இரத்தத்
தைப் பலிபீடத்தின் சுவரிலே விழவிட்டு,—
அதின் இரைப்பையை அதின் இறகுகளோடும் ௰சு
கூட வாங்கி, அதைப் பலிபீடத்தண்டையிலே
கிழக்கே சாம்பலிருக்கிற இடத்திலே போட்டு,–
பிற்பாடு அதை அதின் செட்டைகளுக்குள் ௰எ
ளே இரண்டாக்காமல் பிளப்பானாக; பிற்பாடு
ஆசாரியன் அதைப் பலிபீடத்தின்மேலே அக்கி
னியின்மேலிருக்கிற கட்டைகளின்மீதில் கொ
ளுத்திப் போடக்கடவன்; அது சர்வாங்கதகன
பலி; அது கர்த்தருக்கு ஆற்றுகிற வாசனையாகும்
தகனம்.

### உ. அதிகாரம்.

க. மெல்லிய மா, எண்ணெய், குங்குலியத்தோடும் கூடிய காணிக்கை. ச. அது அடுப்பில், ரு. தட்டில், எ. சட்டியில் சுட்டது. ௰உ. கதிர்க

[1] இ மோ. ௰உ. ௰க, ௰ச

வின் முதல் விளைச்சல் காணிக்கை. ௰௩. காணிக்கைக்கு உப்புப்போடக் கட்டளையிட்டது.

௧ ஒரு ஆத்துமா கர்த்தருக்குக் காணிக்கையான
படைப்பைச் செலுத்துவதுண்டானால், அவன்
படைப்பு மெல்லியமாவாயிருப்பதாக; அவன்
அதின்மேல் எண்ணெய் வார்த்து, அதின்மீதில்
௨ குங்குலிகம்போட்டு,—அதை ஆரோனின் குமா
ரரான ஆசாரியர்களண்டைக்குக் கொண்டுவரு
வானாக; அப்பொழுது ஆசாரியன் அந்த மாவி
லும் எண்ணெயிலும் ஒரு கைப்பிடி நிறைய எல்
லாக் குங்குலிகத்தோடுங்கூட எடுத்து, நினைப்
புக்கான அதைப் பலிபீடத்தின்மேலே கொ
ளுத்தக்கடவன்; அது கர்த்தருக்கு ஆற்றுகிற
௩ வாசனையாகும் தகனம்.— காணிக்கையில் மீதி
யானதோவென்றால், ஆரோனையும் அவன் குமா
ரரையும் சேரக்கடவது; கர்த்தருடைய தகனங்
களில் அது பரிசுத்தத்திற்குப் பரிசுத்தம்.

௪ அடுப்பிலே சுட்ட காணிக்கையான படைப்
பைச் செலுத்தப்போனானேயாகில், அது எண்
ணெயிலே பிசைந்த மெல்லியமாவின் புளிப்
பில்லாத அதிரசங்களும் எண்ணெய் பூசப்பட்ட
புளிப்பில்லாத அடைகளுமாய் இருப்பதாக.

௫ நீ படைப்பது தட்டின்மேல் சுட்ட காணிக்
கையேயானால், அது எண்ணெயிலே பிசைந்த
புளிப்பில்லாத மெல்லியமாவினுடையதாய் இ
௬ ருப்பதாக.—அதைத் துண்டுகளாகப் பிட்டு, அ
தின்மேல் எண்ணெய் வார்ப்பாயாக; அது ஒரு
காணிக்கை.

௭ நீ படைப்பது சட்டியிலே செய்யப்படுகிற
காணிக்கையேயானால், அது எண்ணெயிலே
௮ மெல்லியமாவினாலே செய்யப்படுவதாக.—இப்
படிச் செய்யப்பட்ட காணிக்கையைக் கர்த்த
ருக்குச் செலுத்துவாயாக; அது ஆசாரியனண்
டையில் சேர்ந்தபொழுது, அவன் அதைப் பலி
௯ பீடத்திற்குக் கொண்டுபோய்,—நினைப்புக்கான
பங்கைக் காணிக்கையிலிருந்து எறெடுத்து, பலி
பீடத்தின்மேலே கொளுத்தக்கடவன்; அது கர்த்
தருக்கு ஆற்றுகிற வாசனையாகும் தகனம்.—
௰ காணிக்கையில் மீதியானதோவென்றால், ஆரோ
னையும் அவன் குமாரரையும் சேரக்கடவது; கர்த்
தருடைய தகனங்களில் அது பரிசுத்தத்திற்குப்
பரிசுத்தம்.

௰௧ கர்த்தருக்குச் செலுத்தும் ஒரு காணிக்கையும்
உப்பினதாகச் செய்யப்படாதிருப்பதாக; ஏனெ
னில் புளித்தமாவுள்ளதொன்றையும் தேனுள்ள
தொன்றையும் கர்த்தருக்குத் தகனமாகக் கொளுத்
௰௨ தீர்களாக.—முதல் கனிகளின் படைப்பாக, அ
வைகளை நீங்கள் கர்த்தருக்குச் செலுத்தலாம்;
ஆனால் பலிபீடத்தின்மேல் அவைகள் ஆற்றுகிற
வாசனையாக ஏற்றப்படவேண்டாம்.

௰௩ உன் காணிக்கையாகிற எந்தப் படைப்பும்,
[1]உப்பினால் சாரம் ஏற்றப்படுவதாக; உன் கா
ணிக்கையிலே உன் பராபரனுடைய உடம்படிக்
கையின் உப்பைக் குறையவொட்டாமல், நீ படைப்
பதிலே எல்லாம் உப்பைச் செலுத்தக்கடவாய்.-
நீ முதல் பலன்களின் காணிக்கையைக் கர்த்த ௰௪
ருக்குச் செலுத்துகிறதுண்டானால், பச்சையான
நிறைந்த கதிர்களை நெருப்பிலே சுட்டு உதிர்த்து,
இப்படியே உன் முந்தினபலன்களின் காணிக்
கையைக் கொண்டுவந்து,—அதின்மேல் எண் ௰௫
ணெய் வார்த்து, அதின்மீதில் குங்குலிகம் போ
டுவாயாக; அது ஒரு காணிக்கை.—பிற்பாடு ஆ ௰௬
சாரியன் உதிர்க்கப்பட்டதிலும் எண்ணெயிலும்
நினைப்புக்கான பங்கை, அதினுடைய எல்லாக்
குங்குலிகத்தோடுங் கூட, எடுத்துக் கொளுத்தக்
கடவன்; அது கர்த்தருக்கான தகனம்.

## ௩. அதிகாரம்.

௧. மாட்டுமந்தைகளின் சமாதானபலி. ௬. ஆட்டுமந்தையில், ௭. ஆட்டுக் குட்டியையாவது, ௰௨. ஒரு வெள்ளாட்டையாவது, செலுத்தவேண்டியது.

அவன் செலுத்துவது சமாதானபலியானால், ௧
அப்பொழுது அதை மாட்டுமந்தையில் எடுத்துச்
செலுத்தப்போனானேயாகில், அவன் அது ஆண்
ஆனாலும் சரி, பெண்ஆனாலும் சரி, பழுதற்றி
ருக்கிறதைக் கர்த்தருக்குமுன்பாகக் கொண்டு
வந்து,—அதினுடைய தலையின்மேலே தன் கை ௨
யை வைத்து, ஆசரிப்புக் கூடாரத்தின் வாசலுக்
குமுன்பாக அதின் குரல்வளையை அறுப்பா
னாக; அப்பொழுது ஆரோனின் குமாரராகிய ஆ
சாரியர் அதின் இரத்தத்தைப் பலிபீடத்தின்மே
லே சுற்றிலும் தெளிக்கக்கடவர்கள்.—பிற்பாடு ௩
சமாதான பலியிலே குடல்களை மூடிய கொழுப்
பையும்,—குடல்களின்மேல் இருக்கிற எல்லாக் ௪
கொழுப்பையும், இரண்டு குண்டிக்காய்களையும்,
அவைகளின்மேலே சிறு குடல்களினிடத்தில்
இருக்கும் கொழுப்பையும், குண்டிக்காய்களோ
டேகூடக் கல்லீரலின்மேல் இருக்கிற சவ்வை
யும் பிடுங்கி, கர்த்தருக்குத் தகனமாகச் செலுத்து
வானாக.— அதை ஆரோனின் குமாரர் பலிபீ ௫
டத்திலே, அக்கினியின்மேலுள்ள கட்டைக
ளின்மேலே போட்டிருக்கும் சர்வாங்க தகன
பலியின்மீதில் போட்டு, கொளுத்தக்கடவர்
கள்; அது கர்த்தருக்கு ஆற்றுகிற வாசனையாகும்
தகனம்.

அவன் ஆட்டுமந்தையில் எடுத்து, கர்த்தருக் ௬
குச் சமாதானபலியைச் செலுத்தப்போனானே
யாகில், அப்பொழுதுஅது ஆண்ஆனாலும் பெண்
ஆனாலும் சரி, பழுதற்றிருக்கிறதைச் செலுத்து
வானாக.— ஆட்டைச் செலுத்தவேண்டுமென் ௭
றால், அவன் அதைக் கர்த்தருக்குமுன்பாகக்
கொண்டுவந்து,—அதினுடைய தலையின்மேலே ௮
தன் கையை வைத்து, ஆசரிப்பின் கூடாரத்திற்
கு முன்பாக அதின் குரல்வளையை அறுப்பா
னாக; அப்பொழுது ஆரோனின் குமாரர் அதின்
இரத்தத்தைப் பலிபீடத்தின்மேலே சுற்றிலும் தெ
ளிக்கக்கடவர்கள். — பிற்பாடு அவன் சமாதான ௯

1 மாற். ௯. ௪௯. கொலோ. ௪. ௬.

பலியிலே அதின் கொழுப்பையும், நடு எலும்பி
லே பிடுங்கின முழுவாலையும், குடல்களைமூடிய
கொழுப்பையும், அவைகளின்மேல் இருக்கிற
௰ எல்லாக் கொழுப்பையும்,—இரண்டு குண்டிக்
காய்களையும், அவைகளின்மேலே சிறு குடல்க
ளினிடத்தில் இருக்கிற கொழுப்பையும், குண்
டிக்காய்களோடேகூடக் கல்லீரலின்மேல் இ
ருக்கிற சவ்வையும் பிடுங்கி, கர்த்தருக்குத் தக
௰௧ னமாகச் செலுத்துவானாக.—அதை ஆசாரியன்
பலிபீடத்தின்மேலே கொளுத்தக்கடவன்; அது
கர்த்தருக்கான தகனஆகாரம்.
௰௨ அவன் செலுத்துவது வெள்ளாடாயிருந்ததே
யானால், அவன் அதைக் கர்த்தருக்குமுன்பாகக்
௰௩ கொண்டுவந்து,— அதினுடைய தலையின்மேல்
தன் கையை வைத்து, ஆசரிப்பின்கூடாரத்திற்கு
முன்பாக அதின் குரல்வளையை அறுப்பானாக;
அப்பொழுது ஆரோனின் குமாரர் அதின் இரத்
தத்தைப் பலிபீடத்தின்மேலே சுற்றிலும் தெ
௰௪ ளிக்கக்கடவர்கள். — அதிலே அவன் குடல்க
ளை மூடிய கொழுப்பையும், அவைகள்மேலிருக்
௰௫ கிற எல்லாக் கொழுப்பையும்,—இரண்டு குண்
டிக்காய்களையும், அவைகளின்மேலே சிறு கு
டல்களினிடத்தில் இருக்கிற கொழுப்பையும்,
குண்டிக்காய்களோடேகூடக் கல்லீரலின்மேல்
இருக்கிற சவ்வையும் பிடுங்கி, கர்த்தருக்குத்
௰௬ தகனமாகச் செலுத்துவானாக.—அவைகளை ஆ
சாரியன் பலிபீடத்தின்மேலே கொளுத்தக்கட
வன்; அது ஆற்றுகிற வாசனையாகும் தகன ஆகா
ரம்; எல்லாக் கொழுப்பும் கர்த்தருடையது. —
௰௭ [1]கொழுப்பும் இரத்தமும் என்னப்பட்டதொன்
றையும் நீங்கள் புசிக்கவேண்டாமென்பது, உங்
கள் வாசஸ்தலங்கள் எங்குமுள்ள உங்கள் தலை
முறைகளுக்கு நித்திய கட்டளையாயிருப்பதென்
று சொல்லென்றார்.

## ௪. அதிகாரம்.

௧ அறியாமையால் செய்த பாவநிவிர்த்தியின் பலி. ௩. அது குருவுக்காக. ௰௩. சபைக்காக. ௨௨. இராஜனுக்காக. ௨௭. வேறொரு மனிதனுக்காகச் செலுத்துவது.

௧ பின்னையும் கர்த்தர் மோசேயோடே பேசிச்
௨ சொன்னதாவது: — நீ இஸ்ரவேல் புத்திரரோ
டே பேசிச் சொல்லவேண்டியதேதெனில், ஒரு
ஆத்துமா கர்த்தருடைய சகல கற்பனைகளிலும்
யாதொன்றைத் தப்பிதத்தினாலே மீறி, செய்யத்
தகாததைச் செய்து, பாவம்பண்ணினால், அறி
௩ யவேண்டியதாவது: — அபிஷேகம்பண்ணப்
பட்ட ஆசாரியன் சனத்தைக் குற்றத்திற்குள்
ளாக்கிப் பாவம்செய்தால், அவன் செய்த பாவத்
தின்நிமித்தம், கர்த்தருக்குப் பாவம்போக்கும்
பலியாக மாடுகளிலே பழுதற்ற ஒரு காளை எரு
௪ தைச் செலுத்தி, — அதை ஆசரிப்புக்கூடாரத்
தின் வாசலிலே கர்த்தருக்குமுன்பாகக் கொண்
டுவந்து, அதினுடைய தலையின்மேலே தன் கை
யை வைத்து, கர்த்தருக்குமுன்பாக அதின் குரல்
௫ வளையை அறுப்பானாக. — அப்பொழுது அபி
ஷேகம்பண்ணப்பட்ட ஆசாரியன் காளை எரு
தின் இரத்தத்திலே கொஞ்சம் எடுத்து, அதை
ஆசரிப்பின் கூடாரத்திலே கொண்டுவந்து, —
தன் விரலை இரத்தத்திலே தோய்த்து, எழுதரம் ௬
கர்த்தருக்குமுன்பாகப் பரிசுத்த ஸ்தலத்தின்
திரைக்கு எதிரே தெளிக்கக்கடவன்.— பிற்பாடு ௭
ஆசாரியன் அந்த இரத்தத்திலே கொஞ்சம் ஆச
ரிப்பின் கூடாரத்திலே கர்த்தருக்குமுன்பாக
இருக்கிற சுகந்தவர்க்கங்களினுடைய தூபபீ
டத்துக் கொம்புகளின்மேலே பூசி, காளை எரு
தினுடைய இரத்தத்தை எல்லாம் ஆசரிப்புக்
கூடார வாசலுக்குமுன்பாக இருக்கிற தகனப
லிபீடத்தின் அடியிலே ஊற்றிவிட்டு,— பாவம் ௮
போக்கும் பலியான காளை எருதின் சகல கொ
ழுப்பாகிய குடல்களை மூடிய கொழுப்பையும்,
அவைகள்மேலிருக்கிற எல்லாக் கொழுப்பை
யும்,— இரண்டு குண்டிக்காய்களையும், அவைக ௯
ளின்மேலே சிறு குடல்களினிடத்தில் இருக்கிற
கொழுப்பையும், குண்டிக்காய்களோடேகூடக்
கல்லீரலின்மேலிருக்கிற சவ்வையும் பிடுங்கி.—
சமாதானபலியான மாட்டிலிருந்து எடுக்கிறது ௰
போல, அதிலிருந்து எடுத்தவைகளைத் தகனபலி
பீடத்தின்மேலே கொளுத்தக்கடவன்.—ஆனால் ௰௧
காளை எருதின் தோலையும், அதின் எல்லா மாம்
சத்தையும், அதனோடேகூட அதின் தலையை
யும், தொடைகளையும் அதின் குடல்களையும்.
அதின் சாணியையும்,— காளை எருது முழுவதை ௰௨
யும், அவன் பாளயத்திற்குப் புறம்பே சாம்ப
லைக் கொட்டுகிற சுத்தமான இடத்திலே கொண்
டுபோய், கட்டைகளின்மேலே போட்டு, அக்
கினியாலே சுட்டெரிக்கக்கடவன்; கொட்டி
இருக்கிற சாம்பலின்மேலேதானே அதைச் சுட்
டெரிக்கக்கடவன்.
ஆனால் இஸ்ரவேலின் சபை எல்லாம் தப்பி ௰௩
நடந்து, காரியம் தங்கள் கண்களுக்கு மறைவா
யிருக்கிறதினாலே, கர்த்தருடைய சகல கற்பனை
களிலும் யாதொன்றை மீறி, செய்யத்தகாததைச்
செய்து குற்றவாளிகளாகப்போனால், — அப் ௰௪
பொழுது அவர்கள் செய்த பாவம் அறியப்பட்
டதாகில், சபை மாடுகளில் ஒரு காளை எருதைப்
பாவம்போக்கும் பலியாகச் செலுத்தி, அதை
ஆசரிப்புக்கூடாரத்திற்குமுன்பாகக் கொண்டு
வந்து,—சபையின் மூப்பர் கர்த்தருக்குமுன்பா ௰௫
கத் தங்கள் கைகளை அதினுடைய தலையின்மே
லே வைப்பார்களாக; பிற்பாடு கர்த்தருக்குமுன்
பாகக் காளை எருதின் குரல்வளை அறுக்கப்படு
வதாக. — அப்பொழுது அபிஷேகம்பண்ணப் ௰௬
பட்ட ஆசாரியன் அதின் இரத்தத்திலே கொஞ்
சம் ஆசரிப்பின் கூடாரத்திலே கொண்டுவந்து,-
தன் விரலை இரத்தத்திலே தோய்த்து, எழுதரம் ௰௭
கர்த்தருக்குமுன்பாகத் திரைக்கு எதிரே தெளித்
து, — ஆசரிப்பின் கூடாரத்திலே கர்த்தருக்கு ௰௮
முன்பாக இருக்கிற பீடத்தினுடைய கொம்புக
ளின்மேலே அதிலே கொஞ்சம் பூசி, இரத்தத்

1 ௩ மோ. ௭. ௨௩, ௨௭; ௧௭. ௰, ௰௪.

தை எல்லாம் ஆசரிப்புக்கூடார வாசலின் முன்
இருக்கிற தகனபலிபீடத்தின் அடியிலே ஊற்றி
௰௯ விட்டு,—அதின் கொழுப்பை எல்லாம் அதிலி
ருந்து எடுத்து, பலிபீடத்தின்மேலே கொளுத்தி,-
௨௰ பாவம்போக்கும் அந்தக் காளை எருதை எப்படிச்
செய்தானோ, அப்படி இதையும் செய்து, இந்த
அடைவாய் அவர்கள் பாவத்தை நிவிர்த்தி ஆக்
கக்கடவன்; அப்பொழுது அவர்களுக்கு மன்
௨௧ னிக்கப்படும்.—பிற்பாடு காளை எருதைப் பாள
யத்திற்குப் புறம்பே கொண்டுபோய், முந்தின
காளை எருதைச் சுட்டெரித்ததுபோலச் சுட்டெ
ரிக்கக்கடவன்; இது சபையின் பாவம்போக்
கும் பலி.

௨௨ ஒரு பிரபு தன் பராபரனாகிய கர்த்தருடைய
சகல கற்பனைகளிலும் யாதொன்றை மீறி, தப்
பிதத்தினாலே செய்யத்தகாததைச் செய்து, பா
௨௩ வம்பண்ணி, குற்றவாளியாகப்போனால்,—அல்
லவென்று அவன் செய்த பாவம் அவனுக்
குத் தெரிவிக்கப்பட்டதானால், அவன் வெள்
ளாடுகளிலே பழுதற்ற ஒரு கடாவைத் தன்னு
௨௪ டைய பலியாகக் கொண்டுவந்து,— தன் கை
யை அதினுடைய தலையின்மேலே வைத்து,
சர்வாங்கதகனபலி குரல்வளை அறுக்கப்படுகிற
இடத்திலே கர்த்தருக்குமுன்பாக அதின் கு
ரல்வளையை அறுப்பானாக; அது பாவம்போக்
௨௫ கும்பலி. — அப்பொழுது ஆசாரியன் அதின்
இரத்தத்திலே கொஞ்சம் தன் விரலினால் எடுத்
து. தகனபலிபீடத்துக் கொம்புகளின்மேலே
பூசி, அதின் இரத்தத்தைத் தகனபலிபீடத்தின்
௨௬ அடியிலே ஊற்றிவிட்டு, — அதின் கொழுப்
பை எல்லாம் சமாதானபலியின் கொழுப்பைப்
போலப் பலிபீடத்தின்மேலே கொளுத்தி, இந்த
அடைவாய் அவன் பாவத்தை நிவிர்த்தி ஆக்
கக்கடவன்; அப்பொழுது அவனுக்கு மன்னிக்
கப்படும்.

௨௭ தேசத்துச் சனத்தில் ஒரு ஆத்துமா தப்பிதத்தி
னாலே கர்த்தரின் கற்பனைகளில் யாதொன்றை
மீறி, செய்யத்தகாததைச் செய்து, பாவம்பண்
௨௮ ணி, குற்றவாளியானால்,-அல்லவென்று அவன்
செய்த பாவம் அவனுக்குத் தெரிவிக்கப்பட்ட
தானால், அவன் செய்த பாவத்தின்நிமித்தம்
வெள்ளாடுகளிலே பழுதற்ற பெண்ணாட்டைத்
௨௯ தன்னுடைய பலியாகக் கொண்டுவந்து,—பா
வம்போக்கும் பலியினுடைய தலையின்மேலே
தன் கையை வைத்து, சர்வாங்கதகனம் செய்
யப்படுகிற ஸ்தலத்திலே அதின் குரல்வளையை
௩௰ அறுப்பானாக. — அப்பொழுது ஆசாரியன் அ
தின் இரத்தத்திலே கொஞ்சம் தன் விரலினால்
எடுத்து, தகனபலிபீடத்துக் கொம்புகளின்மே
லே பூசி, மற்ற இரத்தத்தை எல்லாம் பலிபீடத்
௩௧ தடியில் ஊற்றிவிட்டு,—கொழுப்புச் சமாதான
பலியிலிருந்து பிடுங்கப்படுவதுபோல, அதின்
கொழுப்பை எல்லாம் பிடுங்கி, பலிபீடத்தின்
மேலே கர்த்தருக்கு ஆற்றுகிற வாசனையாகக்
கொளுத்தி, இந்த அடைவாக அவன் பாவத்தை
நிவிர்த்தியாக்கக்கடவன்; அப்பொழுது அவ
னுக்கு மன்னிக்கப்படும்.

பாவம்போக்கும் பலியாக ஒரு ஆட்டுக்குட் ௩௨
டியைக் கொண்டுவர மனதாயிருந்தானேயாகில்,
அவன் பழுதற்ற பெண்குட்டியைக் கொண்டு
வந்து,—பாவம்போக்கும் பலியினுடைய தலை ௩௩
யின்மேலே தன் கையை வைத்து, சர்வாங்கதக
னபலி குரல்வளை அறுக்கப்படும் தலத்திலே
அதின் குரல்வளையைப் பாவம்போக்கும் பலி
யாகும்படிக்கு அறுப்பானாக. — அப்பொழுது ௩௪
ஆசாரியன் இரத்தத்திலே கொஞ்சம் தன் விரலி
னால் எடுத்து, தகனபலிபீடத்துக் கொம்புகளின்
மேலே பூசி, இரத்தத்தை எல்லாம் பலிபீடத்தடி
யில் ஊற்றிவிட்டு, — சமாதானபலியான ஆட் ௩௫
டுக்குட்டியின் கொழுப்புப் பிடுங்கப்படுவது
போல, அதின் கொழுப்பை எல்லாம் பிடுங்கி,
பலிபீடத்தின்மேலே கர்த்தருடைய தகனபலி
களின்மீதில் போட்டுக் கொளுத்தி, இந்த
அடைவாக அவன் செய்த பாவத்தை நிவிர்த்
தியாக்கக்கடவன்; அப்பொழுது அவனுக்கு
மன்னிக்கப்படும்.

## ௫. அதிகாரம்.

௧. குற்றத்தை அறிவியாததினாலும், ௨. தீட்டான வஸ்துக்களைத் தொடுவதினாலும், ௪. சத்தியம் செய்வதினாலும், பாவத்தை அடைந்தவன். ௬. ஆட்டுமந்தையிலாவது, ௭. புறவையிலாவது, ௰௧. மாவிலாவது செலுத்தும் பலி. ௰௪. அறியாமையால் செய்த தேவத்துரோகத்திற்கும், ௰௭. அறியாமையால் செய்த மற்றப் பாவத்திற்கும் காணிக்கை.

ஒரு ஆத்துமா கண்ட, அல்லது அறிந்த சாட் ௧
சியாய் இருந்து, ஆணையிடப்பட்ட சத்தத்தைக்
கேட்டும் காரியத்தை அறிவிக்காதேபோகிற
பாவத்தைச் செய்தால், அவன் தன் அக்கிரமத்
தைச் சுமப்பான்.—அல்லது தீட்டான காட்டுச் ௨
சீவனின் உடலாகிலும் சரி, தீட்டான மிருகத்
தின் உடலாகிலும் சரி, தீட்டான ஊர்பவைக
ளின் உடலாகிலும் சரி, அப்படிக்கொத்த தீட்
டான யாதொரு வஸ்துவை ஒரு ஆத்துமா அறி
யாமையினாலாகிலும் தொட்டால், அவன் தீட்
டும் குற்றமுமுள்ளவன். — அல்லது எந்தத் தீட் ௩
டினாலாகிலும் தீட்டுப்பட்ட ஒரு மனிதனை அ
வன் அறியாமல் தொட்டுப் பிற்பாடு அறிந்தால்,
அவன் குற்றமுள்ளவன்.—மனிதர் பதறி ஆணை ௪
யிடும் எந்தக்காரியத்திலும் சரி, ஒரு ஆத்துமாத்
தீமைசெய்கிறதற்காகிலும் நன்மைசெய்கிறதற்
காகிலும் தன் உதடுகளினாலே பதறி ஆணையிட்
டு, அதை அறியாமல் செய்து, பிற்பாடு அறி
வடைந்தால், அதிலே குற்றமுள்ளவனாயிருப்
பான். — இப்படிக்கொத்தவைகளில் ஒன்றிலே ௫
ஒருவன் குற்றமுள்ளவனானபொழுது, அவன்
தான் செய்த பாவத்தை அறிக்கையிட்டு, —
அதின் நிமித்தம் கர்த்தருக்குத் தன் பாவக்குற் ௬
றத்தைப் போக்கும்பலியாக, ஆடுகளிலாகிலும்
வெள்ளாடுகளிலென்கிலும் ஒரு பெண்குட்டி
யைப் பிடித்துக்கொண்டு வருவானாக; அதினா
லே ஆசாரியன் அவனுக்காக அவன் பாவத்தை
நிவிர்த்தியாக்கக்கடவன்.

௭ ஆட்டுக்குட்டியைக் கொண்டுவர அவன்
கைக்கு இல்லாதிருந்ததேயானால், அவன் தான்
செய்த பாவத்தின் குற்றத்தைப் போக்கும்பலி
யாக, இரண்டு காட்டுப்புறாக்களையாகிலும் இர
ண்டு புறாக்குஞ்சுகளையாகிலும் ஒன்றைப் பா
வம்போக்கும்பலியாகவும் மற்றதைச் சர்வாங்க
௮ தகனபலியாகவும் கர்த்தருக்குச் செலுத்தி,—அ
வைகளை ஆசாரியனண்டையிலே கொண்டுவரு
வானாக; இவன் பாவம்போக்கும்பலியாகிறதை
முதல் சேரப்பண்ணி, அதின் தலையை அதின்
பிடரியின் கிட்டக் கிள்ளி, இரண்டாக்காமல்
௯ வைத்து,—அதின் இரத்தத்திலே கொஞ்சம் பலி
பீடத்தின் சுவரிலே தெளித்து, மீதியான இ
ரத்தத்தைப் பலிபீடத்தடியிலே விழவிடுவானாக;
௰ அது பாவம்போக்கும்பலி. — மற்றதை அவன்
நியாய முறைமையின்படியே சர்வாங்கதகன
பலியாக்கி, இப்படி ஆசாரியன் அவனுக்காக அ
வன் செய்த பாவத்தை நிவிர்த்தி ஆக்கக்கடவன்,
அப்பொழுது அவனுக்கு மன்னிக்கப்படும்.
௰௧ இரண்டு காட்டுப்புறாக்களையாகிலும் இரண்டு
புறாக்குஞ்சுகளையென்கிலும் கொண்டுவர, அ
வன் கைக்கு இல்லாதிருந்ததேயாகில் பாவம்
செய்தவன் பாவம்போக்குதலுக்காக ஒரு மரக்
கால் மெல்லியமாவிலே பத்தில் ஒரு பங்கைத்
தன் காணிக்கையாகக் கொண்டுவந்து, அது பா
வம்போக்குதலானபடியினாலே, அதின்மேல்
எண்ணெய் வாராமலும் குங்குலிகம்போடாமலு
௰௨ மிருந்து,—அதை ஆசாரியனண்டையில் கொண்
டுவருவானாக; அதிலே ஆசாரியன் நினைப்புக்
கான பங்காகத் தன் கைப்பிடி நிறையப் பிடித்
தெடுத்து, பலிபீடத்தின்மேலே கர்த்தருடைய
தகனபலிகளின்மீதில் போட்டுக் கொளுத்தக்க
௰௩ டவன்; அது பாவம்போக்குதல். — இப்படி ஆ
சாரியன் அந்தப் பாவங்களில் ஒன்றைச் செய்த
வனுக்காகப் பாவநிவிர்த்தியை உண்டாக்கக்க
டவன்; அப்பொழுது அவனுக்கு மன்னிக்கப்
படும், மீதியானது காணிக்கையைப்போல ஆசா
ரியனைச் சேருமென்றார்.
௰௪ பின்னையும் கர்த்தர் மோசேயோடே பேசிச்
௰௫ சொன்னதாவது:—ஒரு ஆத்துமா கர்த்தருடைய
பரிசுத்தமானவைகளிலே தப்பிதத்தினாலே அநி
யாயம்பண்ணிப் பாவம்செய்தால், அவன் தன்
குற்றத்தைப்போக்க, நீ பரிசுத்தஸ்தலத்துச் சேக்
கல் கணக்காய் அவன்மேலே சுமத்தும் அப
ராதப்படி, அத்தனை வெள்ளிச் சேக்கல் பெறும்
பழுதற்ற ஒரு ஆட்டுக்கடாவைக் குற்றம்போக்
கும்பலியாகக் கர்த்தருக்குக் கொண்டுவந்து,—
௰௬ பரிசுத்தமானதிலே தான் பாவம்செய்தெடுத்த
தைச் செலுத்தி, அதிலே ஐந்தில் ஒரு பங்கை
அதிகமாகக் கூட்டி, ஆசாரியனுக்குக் கொடுப்பா
னாக; அப்பொழுது ஆசாரியன் குற்றம்போக்
கும் ஆட்டுக்கடாவினாலே அவன் பாவத்தை
நிவிர்த்தியாக்கக்கடவன்; அப்பொழுது அவ
னுக்கு மன்னிக்கப்படும்.

ஒரு ஆத்துமா கர்த்தருடைய சகல கற்பனைக ௰௭
ளிலும் யாதொன்றை மீறி, செய்யத்தகாததை
அறியாமையினாலாகிலும் செய்து பாவம்பண்
ணினால், அவன் குற்றமுள்ளவனாயிருந்து, தன்
அக்கிரமத்தைச் சுமப்பான்.—ஆகையால் அவன் ௰௮
குற்றம்போக்கும்பலியாக, உன் மதிப்புக்குச்
சரியான, பழுதற்ற ஒரு ஆட்டுக்கடாவை ஆசா
ரியனண்டைக்குக் கொண்டுவருவானாக; அப்
பொழுது ஆசாரியன் அவன் அறியாமல் செய்த
தப்பிதத்தை அவனுக்காக நிவிர்த்தியாக்கக்கட
வன்; அப்பொழுது அவனுக்கு மன்னிக்கப்ப
டும்.—அது குற்றம்போக்கும்பலி; ஏனெனில் கர்த் ௰௯
தருக்கு நேரஸ்தன் ஆனான் என்றார்.

## ௬. அதிகாரம்.

௧. தெரிந்துசெய்த பாவத்தின் பலி. ௮. சர்வாங்கதகனபலியையும், ௰௪. மாம்சபலியையுங்குறித்தது. ௰௯. ஒரு குருவின் பிரதிஷ்டையில் இடும்பலி. ௨௪. பாவப்பலிகளின் முறைமை.

பின்னையும் கர்த்தர் மோசேயோடே பேசிச் ௧
சொன்னதாவது:—ஒரு ஆத்துமா கர்த்தருக்கு ௨
விரோதமாக அநியாயம்செய்து, தன் அடைக்க
லத்திலே கொடுக்கப்பட்டதிலும் அல்லது தன்
கையிலே வைக்கப்பட்டதிலும் தனக்கடுத்தவ
னுக்கு மாறாட்டம்பண்ணி, அல்லவென்று எதை
யாகிலும் பறித்துக்கொண்டு, அல்லது தனக்
கடுத்தவனுக்கு இடுக்கண்செய்து,—அல்லது கா ௩
ணாமல்போனதைக் கண்டுபிடித்தும் அதை மறு
தலித்துப் பொய்யாணை இட்டும், மனிதன் பா
வத்தைக் கட்டிக்கொண்டு செய்யும் இவை முத
லான சகல காரியங்களிலும் ஒன்றிலே பாவம்
செய்திருந்தால்,— அவன் செய்த பாவத்தினா ௪
லே குற்றவாளியானபடியினாலே, தான் பறித்
துக்கொண்டதையும், அல்லது இடுக்கண் செய்
து வாங்கினதையும், அல்லது தன் அடைக்கலத்
திலே வைக்கப்பட்டதையும், அல்லது தான்
கண்டுபிடித்த காணாமல்போயிருந்த வஸ்து
வையும்,—அல்லது தான் பொய்யாணை இட்ட ௫
சகலத்தையும், [1]திரும்பக் கொடுத்து, அந்த
முதலைச் செலுத்துகிறதும் அல்லாமல், அதில்
ஐந்தில் ஒரு பங்கை அதிகமாகக் கூட்டி, அ
தைத்தன் குற்றம்போக்குதலின் நாளிலே அதின்
எசமானனுக்குக் கொடுத்துவிட்டு,—தன் குற்றத் ௬
தைப்போக்கும்பலியாக, உன் மதிப்புக்குச் சரி
யான, பழுதற்ற ஆட்டுக்கடாவைக் கர்த்தருக்
குச் செலுத்தி, அதை ஆசாரியனண்டைக்குக்
கொண்டுவருவானாக. — அப்பொழுது ஆசாரி ௭
யன் கர்த்தருக்குமுன்பாக அவன் பாவத்தை
நிவிர்த்தியாக்கக்கடவன்; அப்பொழுது அவன்
குற்றவாளியாகிச் செய்த அப்படிப்பட்ட எந்
தக் காரியமும் அவனுக்கு மன்னிக்கப்படும் என்
றார்.
பின்னையும் கர்த்தர் மோசேயோடே பேசிச் ௮
சொன்னதாவது: — நீ ஆரோனுக்கும் அவன் ௯
குமாரருக்கும் கற்பிக்கவேண்டியதாவது: சர்
வாங்கதகனபலியின் நியாயப்பிரமாணம் ஏதெ

1 எசே. ௩௩. ௰௫.

னில், அது இராமுழுவதும் விடியற்காலம்மட்
டும், பலிபீடத்தின்மேலே வேகவும் பலிபீடத்
தின் அக்கினியே அதில் எரியவும்கடவது.—
௰ ஆசாரியன் சணல்நூலான தன் அங்கியை உடுத்
து, சணல்நூலான தன் சல்லடத்தைச் சதையின்
மேலே தரித்துக்கொண்டு, அக்கினியானது பலி
பீடத்தின்மேலே சர்வாங்கதகனபலியை எரித்
துவிட்டபிற்பாடு, சாம்பலை எடுத்து, அதைப்
௰௧ பலிபீடத்தருகே கொட்டி,—பிற்பாடு தன் வஸ்
திரங்களைக் கழற்றிப்போட்டு, வேறே வஸ்திரங்
களை உடுத்துக்கொண்டு, அந்தச் சாம்பலைப் பா
ளயத்திற்குப் புறம்பே சுத்தமான ஒரு இடத்தி
௰௨ லே கொண்டுபோய்க் கொட்டக்கடவன்.-பலி
பீடத்தின்மேலிருக்கிற அக்கினியோவெனில்,
அதில் அவியாமல் எரிவதாக; ஆசாரியன் காலை
யிலெல்லாம் அதின்மேலே கட்டைகளை எரி
யப்போட்டு, அதின்மேல் சர்வாங்கதகனபலி
யை வரிசையாக வைத்து, அதின்மீதில் சமாதா
னபலிகளின் கொழுப்புகளைப் போட்டு, கொ
௰௩ ளுத்தக்கடவன்.-பலிபீடத்தின்மேலே அக்கினி
அவியாமல் எப்பொழுதும் எரிவதாக.

௰௪ காணிக்கையின் நியாயப்பிரமாணமாவது: ஆ
ரோனின் குமாரரில் ஒருவன் அதைக் கர்த்தருக்
குமுன்பாகப் பலிபீடத்தின்முன் கொண்டுவந்
௰௫ து,—காணிக்கையின் மெல்லிய மாவிலும் அ
தின் எண்ணெயிலும் தன் கைப்பிடிநிறைய,
காணிக்கையின்மேலுள்ள எல்லாக் குங்குலிகத்
தோடுங்கூட அள்ளி எடுத்து, நினைப்புக்கான
அதைப் பலிபீடத்தின்மேலே கர்த்தருக்கு ஆற்
௰௬ றுகிற வாசனையாகக் கொளுத்தக்கடவன்.—அ
தில் மீதியானதை ஆரோனும் அவன் குமாரரும்
புசிப்பார்களாக; அது புளிப்பில்லாததாகப் பரி
சுத்தஸ்தலத்திலே புசிக்கப்படக்கடவது; ஆச
ரிப்புக்கூடாரத்தின்பிரகாரத்திலே அதைப்புசிப்
௰௭ பார்களாக.—அது புளித்தமாவுள்ளதாகச் சுடப்
படவேண்டாம்; அது நம்முடைய தகனங்க
ளில் நாம் அவர்களுக்குக் கொடுத்த அவர்களு
டைய பங்கு; பாவம்போக்கும் பலியைப்போ
லவும் குற்றம்போக்கும் பலியைப்போலவும் அ
௰௮ து பரிசுத்தத்திற்குப் பரிசுத்தம். — ஆரோனின்
பிள்ளைகளில் ஆண்சாதியான யாவரும் அதைப்
புசிக்கக்கடவர்கள்; கர்த்தருடைய தகனங்க
ளில் அது உங்கள் தலைமுறைகளுக்கு நித்திய
கட்டளையாய் இருக்கவும், அவைகளைத் தொடுகி
றவனெல்லாம் பரிசுத்தமாய் இருப்பானாகவெ
ன்று சொல்லென்றார்.

௰௯ பின்னையும் கர்த்தர் மோசேயோடே பேசிச்
௨௰ சொன்னதாவது:—ஆரோன் அபிஷேகம் பண்
ணப்படுகிற நாளிலே, அவனும் அவன் குமார
ரும் கர்த்தருக்குச் செலுத்தவேண்டிய படைப்பு
என்னவெனில், ஒரு மரக்கால் மெல்லியமாவி
லே பத்தில் ஒரு பங்கை, காலையிலே பாதியும்
அந்திநேரத்திலே பாதியும், நித்தியகாணிக்கை
௨௧ யாகச் செலுத்துவார்களாக.-தட்டின்மேல் எண்
ணெயிலே அது செய்யப்படக்கடவது; அதை
நீ சுடப்பட்டதாகக் கொண்டுவந்து, காணிக்
கையின் சுட்ட துண்டுகளைக் கர்த்தருக்கு ஆற்று
கிற வாசனையாகச் செலுத்தக்கடவாய்.—அவன் ௨௨
குமாரரில் அவன் ஸ்தலத்திலே அபிஷேகம்ப
ண்ணப்படுகிற ஆசாரியனும் அப்படிச்செய்யக்
கடவன்; அது நித்தியகட்டளை; கர்த்தருக்கென்
று அது முழுவதும் கொளுத்தப்படக்கடவது.—
ஆசாரியனுடைய எந்தக் காணிக்கையும் புசிக் ௨௩
கப்படாமல், முழுவதும் சுட்டெரிக்கப்படவே
ண்டுமென்றார்.

பின்னையும் கர்த்தர் மோசேயோடே பேசிச் ௨௪
சொன்னதாவது:-நீ ஆரோனோடும் அவன் குமா ௨௫
ரரோடும் சொல்லவேண்டியது: பாவம்போக்
கும்பலியின் நியாயப்பிரமாணம் என்னவெ
னில், சர்வாங்கதகனபலி குரல்வளை அறுக்கப்
படும் இடத்திலே, பாவம்போக்கும்பலியும் கர்த்
தருக்குமுன்பாகக் குரல்வளை அறுக்கப்படக்
கடவது; அது பரிசுத்தத்திற்குப் பரிசுத்தம் —பா ௨௬
வம்போக்க அதைப் பலியிடுகிற ஆசாரியன் அ
தைப் புசிக்கக்கடவன்; ஆசரிப்புக் கூடாரத்
தின் பிரகாரமென்ற பரிசுத்தஸ்தலத்திலே அது
புசிக்கப்படுவதாக.—அதின் மாம்சத்தைத் தொ ௨௭
டுகிறவன் எல்லாம் பரிசுத்தமாயிருப்பானாக;
அதின் இரத்தத்திலே கொஞ்சம் ஒரு வஸ்தி
ரத்திலே தெறித்ததானால், அதைப் பரிசுத்தஸ்
தலத்திலே வெளுப்பாயாக.—அது வேவிக்கப் ௨௮
பட்ட மண்பாண்டம் உடைக்கப்படக்கடவ
து; செப்புப்பானையில் வேவிக்கப்பட்டதேயா
னால், அது விளக்கப்பட்டுத் தண்ணீரில் அல
சிப்போடக்கடவது. — ஆசாரியரில் ஆண்சாதி ௨௯
யானவன் எல்லாம் அதைப் புசிப்பானாக; அது
பரிசுத்தத்திற்குப் பரிசுத்தம். — ஆனால் பாவம் ௩௰
போக்கும் எந்தப் பலியின் இரத்தத்திலே கொஞ்
சம் பரிசுத்தஸ்தலத்திலே பாவத்தை நிவிர்த்தி
யாக்கும்படிக்கு, ஆசரிப்பின் கூடாரத்திற்குள்
ளே கொண்டுவரப்பட்டதோ, அந்தப் பலி பு
சிக்கப்படாமல் அக்கினியினாலே சுட்டெரிக்
கப்படக்கடவது.

## ௭. அதிகாரம்.

௧. குற்றம்போக்குவதற்கும், ௰௧. சமாதானத்திற்கும், ௰௨. ஸ்தோத்திரத்துக்கென்றாலும், ௰௬. பொருத்தனைக்கென்றாலும், பொருத்தனை இல்லாமைக்கென்றாலும், செலுத்தும் பலி. ௨௨. கொழுப்பும், ௨௬. இரத்தமும் விலக்கப்பட்டது. ௨௮. சமாதானபலியில் குருக்களுடைய பங்கு.

குற்றம்போக்கும்பலியின் பிரமாணம் என்ன ௧
வெனில், அது பரிசுத்தத்திற்குப் பரிசுத்தம்.-சர் ௨
வாங்கதகனபலியைக் குரல்வளை அறுக்கும் இ
டத்திலே, குற்றம்போக்கும்பலியையும் குரல்
வளை அறுப்பார்களாக; அதின் இரத்தத்தைப் பலி
பீடத்தின்மேலே சுற்றிலும் தெளித்து,—அதினு ௩
டைய எல்லாக் கொழுப்பையும், அதின் வாலை
யும்,குடல்களை மூடிய கொழுப்பையும்,-இரண் ௪
டு குண்டிக்காய்களையும், அவைகளின்மேலே
சிறு குடல்களினிடத்தில் இருக்கிற கொழுப்
பையும், குண்டிக்காய்களோடேகூடக் கல்லீர
லின்மேலிருக்கிற சவ்வையும் பிடுங்கி, செலுத்

௫ துவானாக.— இவைகளை ஆசாரியன் பலிபீடத்
தின்மேலே, கர்த்தருக்குத் தகனமாகக் கொளுத்
௬ தக்கடவன்; அது குற்றம்போக்கும் பலி.— ஆசா
ரியரில் ஆண்சாதியானவர்களெல்லாம் அதைப்
புசிப்பார்களாக; பரிசுத்தஸ்தலத்தில் அது புசிக்
கப்படக்கடவது; அது பரிசுத்தத்திற்குப் பரி
சுத்தம்.
௭ பாவம்போக்கும்பலிக்குக் குற்றம்போக்கும்
பலி சரிசமானம்; இரண்டிற்கும் ஒரே நியாயப்
பிரமாணம் இருக்கும்; அதினாலே பாவத்தை நி
விர்த்தியாக்கின ஆசாரியனை அது சேர்வதாக.—
௮ ஒருவனுடைய சர்வாங்கதகனபலியை ஆசாரி
யன் செலுத்தினால், அதின் தோல் அதைச்
செலுத்தின ஆசாரியனுடையதாய் இருக்கும்.—
௯ அடுப்பிலே சுடப்பட்டதும் சட்டியிலும் தட்
டின்மேலும் செய்யப்பட்டதுமான காணிக்கை
யாவும் அதைச் செலுத்துகிற ஆசாரியனுடைய
௰ வைகளாயிருக்கும்.— எண்ணெயிலே பிசைந்த
தும் எண்ணெய் இல்லாததுமான சகல காணிக்
கையும் ஆரோனுடைய எல்லாக் குமாரரையும்
அவனவனுக்குச் சரியானபடி சேரும்.
௰௧ கர்த்தருக்குச் செலுத்துகிற சமாதானபலியின்
௰௨ நியாயப்பிரமாணம் என்னவெனில்,— அதை
ஸ்தோத்திரத்திற்காகச் செலுத்தினானால், அ
வன் ஸ்தோத்திரப்பலியோடுங்கூட எண்ணெ
யிலே பிசைந்த புளிப்பில்லாத அதிரசங்களையும்,
எண்ணெய் பூசப்பட்ட புளிப்பில்லாத அடைக
ளையும், எண்ணெயிலே பிசைந்து வறுக்கப்பட்
௰௩ ட மெல்லிய மா அதிரசங்களையும்,— அவைக
ளுந்தவிரப் புளித்த மா அப்பத்தையும், தன்னு
டைய சமாதானபலியாகிய ஸ்தோத்திரப்பலி
யோடுங்கூடத் தன் படைப்பாகக் கொண்டுவந்
௰௪ து,— அந்த எல்லாப் படைப்பிலும் ஒன்றைக்
கர்த்தருக்கு ஏறெடுத்துச் செலுத்துவானாக; அது
சமாதானபலியின் இரத்தத்தைத் தெளித்த ஆசா
௰௫ ரியனுடையதாயிருக்கும்.— அவனுடைய சமா
தானபலியாகிய ஸ்தோத்திரப்பலியின் மாம்ச
மோவென்றால், அவன் அதைச் செலுத்தின அன்
றே புசிக்கப்படக்கடவது, அதிலொன்றும் விடி
யற்காலம்மட்டும் வைக்கப்படவேண்டாம்.—
௰௬ அவன் செலுத்துகிற பலி ஒரு பொருத்தனையும்,
அல்லது உற்சாகப் பலியுமாயிருந்ததேயானால்,
அது செலுத்தப்பட்ட அந்நாளிலும் அதில் மீதி
௰௭ யானது மறுநாளிலும் புசிக்கப்படுவதாக.- ஆனால்
பலியின் மாம்சத்தில் மூன்றாம்நாளில் மீதியாய்
இருக்கிறது அக்கினியாலே சுட்டெரிக்கப்படக்
௰௮ கடவது.— அவனுடைய சாமாதானபலியின்
மாம்சத்தில் மூன்றாம்நாளிலே புகிக்கவே புசிக்
கப்பட்டால், அதைச் செலுத்தினவன் பிரியமா
யிருப்பதில்லை, அது அவனுக்குப் பலியாமல்
அருவருப்பாயிருக்கும்; அதிலே புசித்த ஆத்துமா
௰௯ தன் அக்கிரமத்தைச் சுமப்பான்.— தீட்டான
எந்த வஸ்துவும் தொட்ட அந்த மாம்சம் புசிக்
கப்படாமல், அக்கினியாலே சுட்டெரிக்கப்ப
டக்கடவது; புசிக்கப்படும் மாம்சத்திலோவென்
றால், சுத்தமாயிருக்கிறவனெல்லாம் புசிக்கலாம்.-
ஒரு ஆத்துமா தன் தீட்டுத் தன்மேலிருந்தும் கர்த் ௨௰
தருடைய சமாதானபலியின் மாம்சத்தைப் புசித்
தானேயாகில், அந்த ஆத்துமா தன் சனத்தாரில்
இராதபடிக்கு அறுப்புண்பான்.
மனிதனுடைய தீட்டாவது, தீட்டான மிருக ௨௰௧
மாவது, தீட்டான எந்த அருவருப்புமாவது, ஒரு
ஆத்துமா தீட்டான அப்படிக்கொத்த யாதொன்
றைத் தொட்டிருந்தும், கர்த்தருடைய சமாதான
பலியின் மாம்சத்திலே புசித்தால், அந்த ஆத்து
மா தன் சனசதளங்களில் இராதபடிக்கு அறுப்
புண்பானென்றார்.
பின்னையும் கர்த்தர் மோசேயோடே பேசிச் ௨௰௨
சொன்னதாவது:— நீ இஸ்ரவேல் புத்திரரோடே ௨௰௩
பேசிச் சொல்லவேண்டியதேதெனில், மாடு ஆடு
வெள்ளாடு என்றவைகளின் கொழுப்பில் ஒன்
றையும் புசியீர்களாக.— தானாய்ச் செத்ததின் ௨௰௪
கொழுப்பும் பீறுண்டதின் கொழுப்பும் பலவித
வேலைக்கு வழங்கப்படலாம்; ஆனால் நீங்கள்
அவைகளைப் புசிக்கவே புசிக்கவேண்டாம்.—
ஏனெனில் கர்த்தருக்குத் தகனமாகச் செலுத் ௨௰௫
தப்படும் மிருகத்தின் கொழுப்பைப் புசிக்கிற .
எந்த ஆத்துமாவும் தன் சனசதளங்களில் இராத
படிக்கு அறுப்புண்பான்.— [1]உங்கள் வாசஸ்த ௨௰௬
லங்களிலெல்லாம ஒரு பறவையின் இரத்தத்
தையானாலும் ஒரு மிருகத்தின் இரத்தத்தையானா
லும் புசியீர்களாக.— யாதொரு இரத்தத்தைப் ௨௰௭
புசிக்கிற எந்த ஆத்துமாவும் தன் சனசதளங்க
ளில் இராதபடிக்கு, அறுப்புண்பான் என்று
சொல்லென்றார்.
பின்னையும் கர்த்தர் மோசேயோடே பேசிச் ௨௰௮
சொன்னதாவது:— நீ இஸ்ரவேல் புத்திரரோடே ௨௰௯
பேசிச் சொல்லவேண்டியதேதெனில், கர்த்தருக்
குத் தன்னுடைய சமாதானபலியைச் செலுத்து
கிறவன் அதிலே செலுத்துகிறதைக் கர்த்தருக்
குக்கொண்டுவருவானாக.— அவனுடைய கைகள் ௩௰
கர்த்தருடைய தகனங்களாகிய மார்க்கண்டத்
தையும் அதனோடுங்கூட அதின்மேலே வைத்த
கொழுப்பையும் கர்த்தருக்குமுன்பாகக் காணிக்
கையாக அசைவாட்டும்படிக்குக் கொண்டுவரக்
கடவது.— அப்பொழுது ஆசாரியன் அந்தக் ௩௰௧
கொழுப்பைப் பலிபீடத்தின்மேலே கொளுத்தக்
கடவன்; மார்க்கண்டமோவெனில் ஆரோனை
யும் அவன் குமாரரையும் சேரும்.— உங்கள் சமா ௩௰௨
தானபலிகளில் வலது முன்னந்தொடையையும்
ஏறெடுக்கும்படிக்கு ஆசாரியனுக்குக் கொடுப்
பீர்களாக.— ஆரோனுடைய குமாரரில் சமாதான ௩௰௩
பலியின் இரத்தத்தையும் கொழுப்பையும் செ
லுத்துகிறவனுக்கு வலது முன்னந்தொடை பங்
காகச் சேரும்.— ஏனெனில் இஸ்ரவேல் புத்திர ௩௰௪
ரின் சமாதானபலிகளில் அசைவாட்டின மார்க்
கண்டத்தையும் ஏறெடுத்த முன்னந்தொடை
யையும் நாம் அவர்கள் கையில் வாங்கி, அவை

1 ௩ மோ. ௩. ௰௭.

களை ஆசாரியனாகிய ஆரோனுக்கும் அவன் குமா
ரருக்கும் இஸ்ரவேல் புத்திரரால் நடக்கும் நித்
திய கட்டளையாகக் கொடுத்தோமென்று சொல்
௩௰௫ லென்றார்.—கர்த்தருக்கு ஆசாரிய ஊழியஞ்செய்ய
அவர் ஆரோனையும் அவன் குமாரரையும் சேர்த்த
நாளிலே.இது அபிஷேகம்பண்ணப்பட்ட அவர்
களுக்குக் கர்த்தருடைய தகனங்களிலே செல்
௩௰௬ லும் கட்டளை ஆயிற்று.—இப்படி அவர்களுக்கு
இஸ்ரவேல் புத்திரராலே அவர்கள் தலைமுறைக
ளுக்கு நித்தியகட்டளையாகக் கொடுக்கப்பட,
கர்த்தர் அவர்களை அபிஷேகம்பண்ணின நாளி
லே கற்பித்தார்.
௩௰௭ சர்வாங்கதகனத்திற்கும் காணிக்கைக்கும் பா
வம்போக்கும் பலிக்கும் குற்றம்போக்கும் பலிக்
கும் கைகளை நிரப்பும்பலிகளுக்கும் சமாதான
பலிகளுக்கும் அடுத்த நியாயப்பிரமாணம் இது
௩௰௮ தானே. — கர்த்தருக்குத் தங்கள் செலுத்துதல்க
ளைச் செலுத்த அவர் இஸ்ரவேல் புத்திரருக்குச்
சீனாயின் வனாந்தரத்திலே கற்பிக்கும் நாளிலே
இவைகளை மோசேக்குச் சீனாய்பர்வதத்திலே
கட்டளை இட்டார்.

## ௮. அதிகாரம்.

*௧. மோசே ஆரோனையும் அவனுடைய குமாரரையும் அபிஷேகம்பண்ணி னது. ௰௪. அவர்கள் செலுத்தின பாவப்பலி. ௰௮. அவர்களுடைய சர்வாங்கதகனபலி. ௨௨. பிரதிஷ்டைக்குக் கொண்டுவந்த ஆட்டுக் கடா. ௩௩. அவர்களுடைய பிரதிஷ்டைககு இடமும் காலமும்.*

௧ கர்த்தர் மோசேயோடே பேசிச் சொன்னதாவ
௨ து:—நீ ஆரோனையும் அவனோடேகூட அவன்
குமாரரையும் அழைத்து, வஸ்திரங்களையும் அபி
ஷேகத்தெண்ணெயையும் பாவம்போக்குதலுக்
கு ஒரு காளை எருதையும் இரண்டு ஆட்டுக்கடாக்
களையும் புளிப்பில்லாத அப்பங்களுள்ள ஒரு
௩ கூடையையும் கொண்டுவந்து,—சபையை எல்
லாம் ஆசரிப்புக்கூடாரத்தின் வாசலுக்குமுன்
௪ பாகக் கூட்டென்றார்.— கர்த்தர் தனக்குக் கற்
பித்தபடியே மோசே செய்தான்; சபை ஆசரிப்
புக் கூடாரத்தின் வாசலுக்குமுன்பாகக் கூடின
பொழுது,
௫ மோசே சபையுடனே, இது கர்த்தர் செய்யக்
௬ கற்பித்த காரியம் என்றான்.— பிற்பாடு மோசே
ஆரோனையும் அவன் குமாரரையும் சேர அழைத்
து, கர்த்தர் தனக்குக் கற்பித்தபடியே, அவர்க
௭ ளைத் தண்ணீரினாலே கழுவி,—[1]அவனுக்கு உள்
சட்டையைப் போட்டு, நடுக்கட்டுக் கட்டி, அங்
கியை உடுத்து, ஆசாரிய சால்வையைப் போர்த்
து, அதின்மேல் ஆசாரிய சால்வையின் விநோத
௮ மான கச்சையை அவனுக்குக் கட்டி,— அவ
னுக்கு மார்ப்பதக்கத்தைத் தரித்து, மார்ப்பதக்
கத்திலே [2]வெளிச்சங்களையும் உத்தமங்களையும்
௯ வைத்து,-அவன் தலையிலே பாகையைப் போட்
டு, பாகையின்மேல் அவன் முகத்திற்கு நேரா
கப் பரிசுத்த கிரீடமென்ற பொன்பட்டத்தைக்
கட்டினான்.
௰ பிற்பாடு மோசே அபிஷேகத்தெண்ணெயை

1 ௨ மோ. ௨௮. ௪.—2 ௨ மோ. ௨௮. ௩௰.

எடுத்துக்கொண்டு. வாசஸ்தலத்தையும் அதிலுள்
ள யாவையும் அபிஷேகம்பண்ணி, பரிசுத்த
மாக்கி, — அதில் எடுத்து, பலிபீடத்தின்மேல் ௰௧
ஏழுதரம் தெளித்து, பலிபீடத்தையும் அதின்
எல்லா முட்டுகளையும் தொட்டியையும் அதின்
புரிமணையையும் பரிசுத்தமாக்கும்படிக்கு அ
பிஷேகம்பண்ணி, — அபிஷேகத்தெண்ணெயி ௰௨
லே கொஞ்சம் [3]ஆரோனுடைய சிரசின்மேல்
வார்த்து, அவனைப் பரிசுத்தமாக்கும்படிக்கு அபி
ஷேகம்பண்ணினான். —பிற்பாடு மோசே ஆரோ ௰௩
னின் குமாரரைச்சேர அழைத்து. கர்த்தர் தனக்
குக் கற்பித்தபடியே அவர்களுக்குச் சட்டை
களை உடுத்து, நடுக்கட்டுகளைக் கட்டி, குல்லாக்க
ளைப் போட்டுக் கட்டி,
பாவம்போக்குதலின் காளை எருதைக் கிட்டக் ௰௪
கொண்டுவந்தான்; அதினுடைய தலையின்மேல்
ஆரோனும் அவன் குமாரரும் தங்கள் கைகளை
வைத்தார்கள்.— அப்பொழுது அதின் குரல்வளை ௰௫
அறுக்கப்பட்டது; மோசே அதின் மற்ற இரத்
தத்தைப் பிடித்து, தன் விரலினாலே பலிபீடத்
தின் கொம்புகளின்மேலே சுற்றிலும் பூசி, பலி
பீடத்திற்காகப் பாவம்போக்குதலைச் செய்து,
இரத்தத்தைப் பலிபீடத்தடியில் ஊற்றிப்போட்
டு, அதின்மேலே பாவநிவிர்த்தி உண்டாகும்ப
டிக்கு அதைப் பரிசுத்தமாக்கினான்.—பிற்பாடு ௰௬
மோசே கர்த்தர் தனக்குக் கற்பித்தபடியே, கு
டல்கள்மேலிருந்த எல்லாக் கொழுப்பையும்
கல்லீரலின்மேல் இருந்த சவ்வையும் இரண்டு
குண்டிக்காய்களையும் அவைகளின் கொழுப்
பையும் எடுத்துக்கொண்டு, பலிபீடத்தின்மே
லே கொளுத்தி,—காளை எருதையும் அதின் தோ ௰௭
லையும் மாம்சத்தையும் சாணியையும் பாளயத்திற்
குப்புறம்பே அக்கினியாலே சுட்டெரித்தான்.
பிற்பாடு சர்வாங்கதகனமாகும் ஆட்டுக்கடா ௰௮
வைக் கிட்டக் கொண்டுவந்தான்; அதினுடைய
தலையின்மேல் ஆரோனும் அவன் குமாரரும் தங்
கள் கைகளை வைத்தார்கள்.-அப்பொழுது அதின் ௰௯
குரல்வளை அறுக்கப்பட்டது; மோசே அதின்
இரத்தத்தைப் பலிபீடத்தின்மேலே சுற்றிலும்
தெளித்தான்.—ஆட்டுக்கடா சந்துசந்தாகத் துண் ௨௰
டித்துப்போடப்பட்டபின் மோசே கர்த்தர் தனக்
குக் கற்பித்தபடியே, தலையையும் துண்டங்களை
யும் கொழுப்பையும் கொளுத்தி,— குடல்களை ௨௰௧
யும் தொடைகளையும் தண்ணீரினாலேகழுவி,ஆட்
டுக்கடாவை முழுவதும் பலிபீடத்தின்மேலே
கர்த்தருக்கு ஆற்றுகிற வாசனைக்கான சர்வாங்க
தகனமாகக் கொளுத்தினான்.
பிற்பாடு கைகளை நிரப்புதலின் இரண்டாம் ௨௰௨
ஆட்டுக்கடாவைக் கிட்டக்கொண்டுவந்தான்;
அதினுடைய தலையின்மேல் ஆரோனும் அவன்
குமாரரும் தங்கள் கைகளைவைத்தார்கள்.—பிற் ௨௰௩
பாடு அதின் குரல்வளை அறுக்கப்பட்டது; மோ
சே அதின் இரத்தத்திலே கொஞ்சம் பிடித்து,

3 சங். ௱௩௩. ௨.

ஆரோனுடைய வலதுகாதின் மடலிலும் வல
துகையின் பெருவிரல்மேலும் வலதுகாலின் பெ
௨௪ ருவிரல்மேலும் பூசினான்.—பிற்பாடு ஆரோனு
டைய குமாரரையும் அழைத்து, அந்த இரத்தத்
திலே கொஞ்சம் அவர்களுடைய வலதுகாதின்
மடலிலும் வலதுகையின் பெருவிரல்மேலும் வ
லதுகாலின் பெருவிரல்மேலும் பூசி, இரத்தத்
தைப் பலிபீடத்தின்மேலே சுற்றிலும் தெளித்
௨௫ து,—கொழுப்பையும், வாலையும், குடல்கள்மே
லிருந்த எல்லாக் கொழுப்பையும், கல்லீரலின்
மேல் இருந்த சவ்வையும், இரண்டு குண்டிக்
காய்களையும், அவைகளின் கொழுப்பையும்,
௨௬ வலது முன்னந்தொடையையும் எடுத்து,—கர்த்த
ருக்குமுன்பாகவைத்திருந்த புளிப்பில்லாத அப்
பங்களின் கூடையிலே புளிப்பில்லாத ஒரு அதி
ரசத்தையும் எண்ணெய் அப்பமாகிய ஒரு அதி
ரசத்தையும் ஒரு அடையையும் எடுத்து, அந்தக்
கொழுப்பின்மேலும் முன்னந்தொடையின்மே
௨௭ லும் வைத்து, — அவைகளை எல்லாம் ஆரோனு
டைய உள்ளங்கைகளிலும் அவன் குமாரரு
டைய உள்ளங்கைகளிலும் வைத்து, அசைவாட்
டும் காணிக்கையாகக் கர்த்தருக்குமுன்பாக அ
௨௮ சைவாட்டி. — பிற்பாடு அவைகளை அவர்கள்
உள்ளங்கைகளில் எடுத்து, பலிபீடத்தின்மேலே
சர்வாங்கதகனபலியின்மீதில் கொளுத்தினான்;
அது ஆற்றுகிற வாசனைக்கான கைநிரப்புதலின்
பலியும் கர்த்தருக்குத் தகனமும் ஆயிற்று. —
௨௯ பிற்பாடு மோசே மார்க்கண்டத்தை எடுத்து, அ
தைக் கர்த்தருக்குமுன்பாகக் காணிக்கையாக
அசைவாட்டினான்; கர்த்தர் மோசேக்குக் கற்பித்
தபடியே அவைகள் கைகளை நிரப்புதலின் ஆட்
டுக்கடாவிலே மோசேயின் பங்காயின.

௩௰ மோசே அபிஷேகத்தெண்ணெயிலும் பலிபீ
டத்தின்மேலிருந்த இரத்தத்திலும் கொஞ்சம் எ
டுத்து, ஆரோனின்மேலும் அவன் வஸ்திரங்க
ளின்மேலும் அவன் குமாரரின்மேலும் அவர்கள்
வஸ்திரங்களின்மேலும் தெளித்தான்; ஆரோனை
யும் அவன் வஸ்திரங்களையும் அவன் குமாரரை
யும் அவன் குமாரரின் வஸ்திரங்களையும் பரிசுத்
தம்பண்ணினான்.

௩௧ கடைசியிலே மோசே ஆரோனோடும் அவன்
குமாரரோடும் சொன்னதாவது: நீங்கள் அந்த
மாம்சத்தை ஆசரிப்புக்கூடாரவாசலிலே வேவித்
து, ஆரோனும் அவன் குமாரரும் அதைப் புசிப்
பார்களாக என்று கற்பித்திருக்கிறபடியே, அங்
கே அதையும் உங்கள் கைகளை நிரப்புதலின் கூ
௩௨ டையிலிருக்கிற அப்பத்தையும் புசித்து,—மாம்
சத்திலும் அப்பத்திலும் மீதியானதை அக்கினி
௩௩ யாலே சுட்டெரித்து, — கைகளை நிரப்புகிற
நாள்கள் நிறைவேறும்மட்டும், ஏழுநாள் ஆசரிப்
புக்கூடார வாசலைவிட்டுப் புறப்படாதிருப்பீர்க
ளாக; ஏனெனில் ஏழுநாள்மட்டும் உங்கள் கை
௩௪ கள் நிரப்பப்படும்.—இந்நாளிலே செய்யப்பட்ட
துபோல, உங்கள் பாவநிவிர்த்திக்காக, இனிமே
லும் செய்யப்படவேண்டுமென்று கர்த்தர் கற்பித்
தார்.—நீங்கள் சாவாதபடிக்கு ஏழுநாள் இரவும் ௩௫
பகலும் ஆசரிப்புக்கூடாரவாசலிலிருந்து, கர்த்த
ருடைய காவலைக் காக்கக்கடவீர்கள்; ஏனென்
றால் இப்படிக் கற்பிக்கப்பட்டேனென்றான்.-
கர்த்தர் மோசேயைக்கொண்டு கற்பித்த எல்லாக் ௩௬
காரியங்களையும் ஆரோனும் அவன் குமாரரும்
செய்தார்கள்.

## ௯. அதிகாரம்.

௧. ஆரோன் என்பவன் தனக்காகவும் சனங்களுக்காகவும் செலுத்திய முதல்பலி. ௮. பாவத்தின்பலி. ௰௨. தனக்காகக் கொடுத்த தகனபலி. ௰௫. சனங்களுக்காகக் கொடுத்த பலி. ௨௩. மோசேயும ஆரோனும் அவர்களை ஆசீர்வதித்தது. ௨௪. அக்கினி பராபரனிடத்திலிருந்து புறப்பட்டு, பலிபீடத்தின்மேல் வந்தது.

சம்பவித்ததேதென்றால் எட்டாம்நாளிலே, மோ ௧
சே ஆரோனையும் அவன் குமாரரையும் இஸ்ரவே
லின் மூப்பரையும் அழைத்து,—ஆரோனோடே ௨
சொன்னதாவது: நீ பாவம்போக்கும்பலியாக
மாடுகளிலே பழுதற்ற ஒரு கன்றுக்குட்டியை
யும் சர்வாங்கதகனபலியாகப் பழுதற்ற ஒரு ஆட்
டுக்கடாவையும் பிடித்து, கர்த்தருக்கு முன்பா
கக் கொண்டுவா.—ஆனால் இஸ்ரவேல் புத்திர ௩
ரோடே நீ பேசிச் சொல்லவேண்டியதேதெ
னில், கர்த்தருக்குமுன்பாகப் பலியிடும்படிக்கு,
நீங்கள் பாவம்போக்கும்பலியாகப் பழுதற்ற
ஒரு வெள்ளாட்டுக்கடாவையும் சர்வாங்கதகன
பலியாக ஒரு வயதான பழுதற்ற ஒரு கன்றுக்
குட்டியையும், ஒரு ஆட்டுக்குட்டியையும்,—
சமாதானபலியாக ஒரு எருதையும், ஒரு ஆட்டுக் ௪
கடாவையும், எண்ணெயிலே பிசைந்த காணிக்
கையையும், கொண்டுவாருங்கள்; ஏனெனில்
இன்று கர்த்தர் உங்களுக்குத்தரிசனையாவார் என்
று சொல்லென்றான். — மோசே கற்பித்தவைக ௫
ளை ஆசரிப்புக்கூடாரத்திற்குமுன்பாகக் கொண்
டுவந்தார்கள்; சபை எல்லாம் சேர்ந்து, கர்த்த
ருக்குமுன்பாக நின்றது.—அப்பொழுது மோ ௬
சே, கர்த்தர் கற்பித்த இந்தக் காரியத்தைச் செய்
யுங்கள், அப்பொழுது கர்த்தருடைய மகிமை
உங்களுக்குக் காணப்படும் என்றான்.

பிற்பாடு மோசே ஆரோனுடனே, நீ பலிபீ ௭
டத்தண்டையில் சேர்ந்து, கர்த்தர் கற்பித்தபடி
யே பாவம்போக்கும் உன் பலியையும் சர்வாங்
கதகனமான உன் பலியையும் செலுத்தி, உனக்
காகவும் சனத்திற்காகவும் பாவநிவிர்த்தி உண்
டாக்கி, சனத்தின்பலியையும் செலுத்தி, அவர்க
ளுக்காகப் பாவநிவிர்த்தி உண்டாக்கென்றான்.

அப்பொழுது ஆரோன் பலிபீடத்தண்டை ௮
யில் சேர்ந்து, தன் பாவம்போக்குதலின் கன்
றுக்குட்டியைக் குரல்வளை அறுத்தான்.—ஆரோ ௯
னின் குமாரர் அதின் இரத்தத்தை அவன்கிட்
டக் கொண்டுவந்தார்கள்; அவன் தன் விரலை
இரத்தத்திலே தோய்த்து, பலிபீடத்தின் கொம்பு
களின்மேலே பூசி, இரத்தத்தைப் பலிபீடத்தடி
யில் ஊற்றி,-பாவம்போக்கும்பலியின் கொழுப் ௰
பையும், குண்டிக்காய்களையும், கல்லீரலை விட்
டுவாங்கின சவ்வையும், பலிபீடத்தின்மேலே

கர்த்தர் மோசேக்குக் கற்பித்தபடியே கொளுத்
௰௧ தப்பட வைத்தான். — ஆனால் மாம்சத்தையும்
தோலையும் பாளயத்திற்குப் புறம்பே அக்கினி
யாலே சுட்டெரித்தான்.
௰௨ பிற்பாடு சர்வாங்கதகனபலியின் குரல்வளை
யை அறுத்தான்; ஆரோனின் குமாரர் அதின் இ
ரத்தத்தை அவன் கிட்டக் கொண்டுவந்தார்கள்;
அதைப் பலிபீடத்தின்மேலே சுற்றிலும் தெளித்
௰௩ தான்.—துண்டங்கள் ஆக்கப்பட்ட சர்வாங்கதக
னபலியையும் தலையையும் அவன் கிட்டக் கொ
ண்டுவந்தார்கள்; அவன் அவைகளைப் பலிபீடத்
௰௪ தின்மேலே கொளுத்தப்படவைத்து,—குடல்க
ளையும் தொடைகளையும் கழுவி, பலிபீடத்தின்
மேலே சர்வாங்கதகனத்தின் மீதில் கொளுத்தப்
படவைத்தான்.
௰௫ பிற்பாடு அவன் சனத்தின் பலியைக் கிட்டக்
கொண்டுவந்து, சனத்திற்காகிய பாவம்போக்கு
தலின் வெள்ளாட்டுக்கடாவைப் பிடித்து, அதின்
குரல்வளையை அறுத்து, முந்தினவைக்குச் சரி
௰௬ யாக அதைப் பாவம்போக்கும் பலியாக்கி,—சர்
வாங்கதகனபலியைக் கிட்டக் கொண்டுவந்து,
௰௭ நியாயமுறைமையின்படியே செலுத்தி,-காணிக்
கையையும் கிட்டக் கொண்டுவந்து, தன் உள்
ளங்கையை அதினால் நிரப்பி, அதைக் காலையில்
செலுத்தும் சர்வாங்கதகனமும் அல்லாமல், பலி
௰௮ பீடத்தின்மேல் கொளுத்தப்படவைத்தான்.-பிற்
பாடு சனத்தின் சமாதானபலியாகிய எருதை
யும் ஆட்டுக்கடாவையும் குரல்வளை அறுத்தான்;
அதின் இரத்தத்தை ஆரோனின் குமாரர் அவன்
கிட்டக் கொண்டுவந்தார்கள்; அதைப் பலிபீடத்
௰௯ தின்மேலே சுற்றிலும் தெளித்தான்.— எருதிலும்
ஆட்டுக்கடாவிலும் எடுத்த கொழுப்புகளையும்
வாலையும், குடல்களை மூடியதையும், குண்டிக்
காய்களையும், கல்லீரலின்மேலிருந்த சவ்வையும்
௨௰ கெண்டுவந்து,—கொழுப்புகளை மார்க்கண்டங்
களின்மேலே வைத்தார்கள்; அந்தக் கொழுப்
புகளைப் பலிபீடத்தின்மேலே கொளுத்தப்பட
வைத்தான்.
௨௧ ஆனால் மார்க்கண்டங்களையும் வலது முன்
னந்தொடையையும், ஆரோன் மோசேக்குக் கற்
பித்தபடியே, கர்த்தருக்குமுன்பாக அசைவாட்
௨௨ டும் காணிக்கையாக அசைவாட்டினான்.—பிற்
பாடு ஆரோன் தன் கைகளைச் சனத்திற்கு நேராக
ஏறெடுத்து, அவர்களை ஆசீர்வதித்து, தான் பாவம்
போக்கும்பலியையும், சர்வாங்கதகனபலியையு
ம், சமாதானபலியையும், செலுத்தின இடத்தி
௨௩ லிருந்து இறங்கினான்.—மோசேயும் ஆரோனும்
ஆசரிப்புக்கூடாரத்திற்குள் பிரவேசித்து, வெ
ளியே வந்து, சனத்தை ஆசீர்வதித்தார்கள்; அப்
பொழுது கர்த்தருடைய மகிமை எல்லாச் சனத்
திற்கும் காணப்பட்டது.
௨௪ [1]அக்கினி கர்த்தருடைய சந்நிதியிலிருந்து பு
றப்பட்டு, பலிபீடத்தின்மேலிருந்த சர்வாங்கதக
னபலியையும் கொழுப்புகளையும் எரித்துவிட்ட
து; சனமெல்லாம் அதைக் கண்டபொழுது கெம்
பீரமாய் முகங்குப்புறவிழுந்தார்கள்.

## ௰. அதிகாரம்.

க. நாதாபும் அபியூவும் அந்நிய அக்கினியைக் கொண்டுவந்ததினால், அவர்கள் தண்டிக்கப்பட்டது. ௬. ஆரோனும் அவனுடைய குமாரரும் அவர்களுக்காகப் புலம்புதல் தடுக்கப்பட்டது. ௮. குருக்கள் கூடாரத்துள் பிரவேசிக்கும்போது, பழஇரசம் குடிக்கவேண்டாமென்று விலக்கப்பட்டது. ௰௨. பரிசுத்தமானவைகளைப் புசிக்கும் முறைமை. ௰௬. ஆரோன் அந்த முறைமையை மீறினதற்காக அவன் சொன்ன நியாயம்.

நாதாப் அபியூ என்ற ஆரோனின் குமாரரோவெ க
னில், ஒவ்வொருவன் தன் தன் தூபகலசத்தை
எடுத்து, அவைகளில் நெருப்பையும் அதின்மே
லே தூபவர்க்கத்தையும் போட்டு, கர்த்தர் தங்க
ளுக்குக் கற்பிக்காதிருந்த அந்நிய அக்கினியை
அவருக்குமுன்பாகக் கொண்டுவந்தார்கள்.-அப் ௨
பொழுது அக்கினி கர்த்தரின் சந்நிதியிலிருந்து
புறப்பட்டு, அவர்களைப் பட்சித்தது; அங்கே
கர்த்தருக்குமுன்பாகச் செத்தார்கள்.—அப்பொ ௩
ழுது மோசே ஆரோனோடே, நம்மண்டையில்
சேருகிறவர்களால் நாம் பரிசுத்தம் விளங்கி, எல்
லாச் சனத்திற்கும் முன்பாக மகிமைப்படுவோ
மென்று கர்த்தர் பேசிச் சொன்னது இதுதான்
என்றான்; ஆரோன் பேசாதிருந்தான்.—பிற்பாடு ௪
மோசே ஆரோனின் சிறியதகப்பனான ஊசியே
லின் குமாரராகிய மீசவேலையும் எலிசாப்பானை
யும் அழைத்து, அவர்களோடே, நீங்கள் சேர்ந்து,
உங்கள் சகோதரரைப் பரிசுத்தஸ்தலத்திற்குமுன்
பாக இருந்தெடுத்து, பாளயத்திற்குப் புறம்பே
கொண்டுபோங்கள் என்றான்.— இவர்கள் மோ ௫
சே சொன்னபடி சேர்ந்து, அவர்களை அவர்கள்
சட்டைகளோடெடுத்து, பாளயத்திற்குப் புறம்
பே கொண்டுபோனார்கள்.
மோசே ஆரோனோடும், எலேயாசார், இத்தாமா ௬
ரென்ற அவன் குமாரரோடும் சொன்னதாவது:
நீங்கள் சாவாதபடிக்கும், சபையின்மேலெல்
லாம் கடுங்கோபம் வாராதபடிக்கும் நீங்கள் உங்
கள் தலைகளைத் திறவாமலும் உங்கள் வஸ்திரங்க
ளைக் கிழிக்காமலும் இருப்பீர்களாக; உங்கள்
சகோதரராகிய இஸ்ரவேல் வீட்டார் எல்லாரும்
கர்த்தர் சுட்ட இந்தச் சூட்டிற்காக அழுவார்கள்.-
நீங்கள் சாவாதபடிக்கு ஆசரிப்புக் கூடாரவாசலி ௭
லிருந்து புறப்படீர்களாக; ஏனெனில் கர்த்தரு
டைய அபிஷேகத்தெண்ணெய் உங்கள்மேல்
இருக்கிறதென்றான்; மோசேயினுடைய வார்த்
தையின்படியே செய்தார்கள்.
கர்த்தர் ஆரோனோடே பேசிச் சொன்னதாவ ௮
து:—நீயும் உன்னோடேகூட உன் குமாரரும் சா ௯
வாதபடிக்கு, ஆசரிப்புக்கூடாரத்திற்குள் பிரவே
சிக்கிறபொழுது, திராட்சப்பழ இரசத்தையும்
லாகிரியுள்ளதையும் குடியீர்களாக.-பரிசுத்தமான ௰
தற்கும் பரிசுத்தம் அல்லாததற்கும், தீட்டான
தற்கும் சுத்தமானதற்கும், வித்தியாசம்பண்ணுவ
தற்கும்,—கர்த்தர் மோசேயைக்கொண்டு இஸ்ர ௰௧

1 க இரா. ௰அ. ௩௮. ௨ நாளா. ௭. ௧.

வேல் புத்திரருக்குச் சொன்ன சகல பிரமாணங்
களையும் அவர்களுக்குப் போதிப்பதற்கும், இது
உங்கள் தலைமுறைகளுக்கு நித்தியகட்டளையாய்
இருக்குமென்றார்.
௰௨ மோசே ஆரோனோடும் மீதியான அவன் குமா
ரராகிய எலேயாசாரோடும் இத்தாமாரோடும்
சொன்னதாவது: நீங்கள் கர்த்தருடைய தகனங்க
ளில் மீதியான காணிக்கையை எடுத்துக்கொண்
டு, பலிபீடத்தண்டையிலே புளிப்பில்லாததாகப்
புசியுங்கள்; ஏனெனில் அது பரிசுத்தத்திற்குப்
௰௩ பரிசுத்தம்.—அதைப் பரிசுத்தஸ்தலத்திலே புசிப்
பீர்களாக;ஏனெனில் அது கர்த்தருடைய தகனங்
களில் உன் கட்டளையும் உன் குமாரரின் கட்
டளையுமானது; அதேனென்றால் இப்படிக் கற்
௰௪ பிக்கப்பட்டேன்.—அசைவாட்டின மார்க்கண்
டத்தையும்,ஏறெடுத்த முன்னந்தொடையையும்,
நீயும் உன்னோடேகூட உன் குமாரரும் குமாரத்
திகளும் சுத்தஸ்தலத்திலே புசிப்பீர்களாக;ஏனெ
னில் இஸ்ரவேல் புத்திரருடைய சமாதானபலி
களில் அவைகள் உன்னுடைய கட்டளையாக
வும், உன் பிள்ளைகளுடைய கட்டளையாகவும்,
௰௫ கொடுக்கப்பட்டிருக்கின்றன.-கொழுப்புகளின்
தகனபலிகளோடேகூட அவர்கள் கர்த்தருக்கு
முன்பாக அசைவாட்டும் காணிக்கையாக ஏறெ
டுக்கும் முன்னந்தொடையையும், அசைவாட்
டும் மார்க்கண்டத்தையும் கொண்டுவருவார்கள்;
அது கர்த்தர் கற்பித்தபடியே உன்னையும் உன்
னோடேகூட உன் பிள்ளைகளையும் நித்தியகட்
டளையாகச் சேருமென்றான்.
௰௬ பாவம்போக்கும்பலியான வெள்ளாட்டுக்க
டாவை மோசே தேடவே தேடினான்; ஆனால்
இதோ, சுட்டெரிக்கப்பட்டிருந்தது; ஆகையால்
எலேயாசார் இத்தாமார் என்ற ஆரோனின் மீதி
யான குமாரர்மேலே அவன் கடுங்கோபமாகி,—
௰௭ பாவம்போக்கும்பலியை நீங்கள் பரிசுத்தஸ்த
லத்திலே புசியாதேபோனதென்ன? அது பரிசுத்
தத்திற்குப் பரிசுத்தமாயிருக்கின்றதே; சபையின்
அக்கிரமத்தைச் சுமக்கவும், அவர்களுக்காகப் பா
வநிவிர்த்தியைக் கர்த்தருக்குமுன்பாக உண்டாக்
கவும், அதை உங்களுக்குக் கொடுத்தாரே.—
௰௮ இதோ, அதின் இரத்தம் பரிசுத்தஸ்தலத்திற்குள்
கொண்டுபோகப்பட்டதில்லையே; ஆகையால்
நீங்கள் அதை நான் கற்பித்தபடி பரிசுத்தஸ்தலத்
திலே புசிக்கவே புசிக்கவேண்டியதாய் இருந்
௰௯ தது என்றான்.—அப்பொழுது ஆரோன் மோசே
யோடே சொன்னதாவது: இதோ, அவர்கள் பா
வம்போக்கும் தங்கள் பலியையும், தங்கள் சர்
வாங்கதகனபலியையும், கர்த்தருக்குமுன்பாகச்
செலுத்தின இன்றுதானே எனக்கு இப்படி நடந்
ததே; பாவம்போக்கும்பலியை இன்று புசிப்
பேனானால், அது கர்த்தரின் பார்வைக்கு நன்றாய்
௨௰ இருக்குமோ என்றான்.—மோசே இதைக் கேட்
கிறபொழுது அது அவன் பார்வைக்கு நன்றாய்
இருந்தது.

## ௰௧. அதிகாரம்.

௧. புசிக்கத்தக்கவைகளும் புசிக்கத்தகாதவைகளுமாகிய மிருகங்களையும், ௯. மீன்களையும், ௰௩. பறவைகளையும், ௨௯. ஊர்வனவற்றில் அசுத்தமானவைகளையும் குறித்தது.

கர்த்தர் மோசேயோடும் ஆரோனோடும் பேசி, ௧
அவர்களோடே சொன்னதாவது:—நீங்கள் இஸ் ௨
ரவேல் புத்திரரோடே சொல்லவேண்டியது:
[1]பூமியிலிருக்கிற சகல மிருகங்களிலும் நீங்கள்
புசிக்கத்தக்க சீவன்கள் ஏதெனில்,—மிருகங்க ௩
ளில் விரிதல் குளம்புள்ளதாய் இருந்து, குளம்பு
கள் இரண்டாகப் பிரிந்திருக்கிறதும் அசைபோ
டுகிறதுமானவைகளை எல்லாம் நீங்கள் புசிக்க
லாம்.—ஆனால் அசைபோடுகிறவைகளிலும், ௪
அல்லவென்று விரிதல் குளம்புள்ளவைகளிலும்,
நீங்கள் புசிக்கத்தகாதது ஏதென்றால், ஒட்டகம்;
ஏனெனில் அது அசைபோட்டும் அதற்கு விரி
தல் குளம்பில்லை; அது உங்களுக்குத் தீட்டா
யிருக்கும்.—குழி முசலும், ஏனெனில் அது ௫
அசைபோட்டும் அதற்கு விரிதல் குளம்பில்லை;
அது உங்களுக்குத் தீட்டாயிருக்கும்.-முசலும், ௬
ஏனெனில் அது அசைபோட்டும் அதற்கு விரி
தல் குளம்பில்லை; அது உங்களுக்குத் தீட்டா
யிருக்கும்.—பன்றியும், ஏனெனில் அதின் குளம் ௭
பு விரிதல்குளம்பும் இரண்டாகப் பிரிந்ததுமாய்
இருந்தும் அசைபோடாதிருக்கும், அது உங்க
ளுக்குத் தீட்டாயிருக்கும்.—இவைகளின் மாம் ௮
சத்திலே புசியாமலும் இவைகளின் உடல்களைத்
தொடாமலும் இருப்பீர்களாக; இவைகள் உங்க
ளுக்குத் தீட்டாயிருக்கக்கடவது.
தண்ணீர்களிலிருக்கிற யாவிலும் நீங்கள் புசிக் ௯
கத்தக்கது ஏதென்றால், கடல்களும் ஆறுகளுமா
கிய தண்ணீர்களிலே சிறகும் செதிளும் உள்ள
வைகளை எல்லாம் நீங்கள் புசிக்கலாம்.—ஆனால் ௰
கடல்களும் ஆறுகளுமாகிய தண்ணீர்களில் நீந்
துகிறதும் இருக்கிறதுமான உயிர்ப்பிராணிகளில்
எல்லாம் சிறகும் செதிளும் இல்லாத யாவும் உங்க
ளுக்கு அருவருப்பாயிருப்பதாக.—அவைகள் ௰௧
உங்களுக்கு அருவருப்பாய் இருக்கக்கடவது;
அவைகளினுடைய மாம்சத்திலே புசியாதிருந்து,
அவைகளின் உடல்களை அருவருப்பீர்களாக.—
தண்ணீர்களிலே சிறகும் செதிளும் இல்லாத யா ௰௨
வும் உங்களுக்கு அருவருப்பாய் இருக்கக்கட
வது.
பறவைகளில் நீங்கள் புசியாமல் அருவருக்க ௰௩
வேண்டியவைகள் எவையென்றால், கழுகும்,
கருடனும், கடல்உராஞ்சியும்,—பருந்தும், சாதி ௰௪
சாதியான வல்லூறும்,—சகலவித சாதியான கா ௰௫
கங்களும்,—தீவுக்குருவியும், கருவாட்டுவாலியும், ௰௬
செம்புகமும், சாதிசாதியான ஆள்காட்டியும்,—
ஆந்தையும், சகோரப்பட்சியும், கோட்டானும்,— ௰௭
வெளவாலும், நாரையும், கோட்டுவானும்,— ௰௮
கொக்கும், சாதிசாதியான இராசாளியும் கொண் ௰௯
டலாத்தியும், தரிஞ்சிலும் என்றவைகள்.
பறக்கிறவைகளில் நான்கு காலால் நடமாடு ௨௰

1 ௫ மோ. ௰௪. ௩. அப். ௰. ௰௪, ௰௫.

கிற ஊர்வன யாவும் உங்களுக்கு அருவருப்பாய்
௨௧ இருப்பதாக.—ஆகிலும் பறக்கிறவைகளில் நான்
கு காலால் நடமாடுகிற யாவிலும், நீங்கள் எதைப்
புசிக்கலாமென்றால், தரையிலே குதிக்கிறதற்
குக் கால்களின்மேலே தொடைகள் உண்டாயி
௨௨ ருக்கிறவைகளிலே, — வெட்டுக்கிளிச் சாதியா
யிருக்கிறதையும், சோலையாம் என்ற கிளிச்சாதி
யாய் இருக்கிறதையும், அரகொலென்ற கிளிச்
சாதியாய் இருக்கிறதையும், ஆகாபென்ற கிளிச்
சாதியாய் இருக்கிறதையும், நீங்கள் புசிக்கலாம்.—
௨௩ பறக்கிறவைகளில் நான்கு காலுண்டாய் நட
மாடுகிற மற்ற யாவும் உங்களுக்கு அருவருப்பா
௨௪ யிருப்பதாக.—அவைகளாலே தீட்டடைவீர்கள்;
அவைகளின் உடலைத் தொடுகிறவனெல்லாம்
சாயங்காலம்மட்டும் தீட்டுப்பட்டிருப்பான்.—
௨௫ அவைகளின் உடலைச் சுமந்தவனெல்லாம் தன்
வஸ்திரங்களை வெளுக்கக்கடவன்; அவன் சாயங்
காலம்மட்டும் தீட்டுப்பட்டிருப்பான்.
௨௬ விரிதல் நகங்களுள்ளவைகளாய் இருந்தும்,
அவைகளை இரண்டாகப் பிரியப்பண்ணாமலும்,
அசைபோடாமலும் இருக்கிற சகல மிருகங்க
ளும் உங்களுக்குத் தீட்டாயிருப்பதாக; அவைக
ளைத் தொடுகிறவனெல்லாம் தீட்டடைவான்.—
௨௭ நான்கு காலால் நடக்கிற சகல சீவன்களிலும்
தங்கள் உள்ளங்கால்களை ஊன்றி நடக்கிற யா
வும் உங்களுக்குத் தீட்டாயிருப்பதாக; அவை
களின் உடலைத் தொடுகிறவனெல்லாம் சாயங்
௨௮ காலம்மட்டும் தீட்டுப்பட்டிருப்பான்.—அவை
களின் உடலைச் சுமந்தவன் தன் வஸ்திரங்களை
வெளுக்கக்கடவன்; அவன் சாயங்காலம்மட்டும்
தீட்டுப்பட்டிருப்பான்; அவைகள் உங்களுக்
குத் தீட்டுள்ளவைகள்.
௨௯ தரையோடே ஊருகிற ஊர்வனவைகளில்
உங்களுக்குத் தீட்டாயிருப்பவைகள், பெருச்
சாளியும், எலியும், சாதிசாதியான ஆமையும்,—
௩௰ உடும்பும், அளுங்கும், ஓணானும், பல்லியும், பச்
௩௧ சோந்தியும் என்றவைகள். — சகல ஊர்வனவற்
றிலும் இவைகள் உங்களுக்குத் தீட்டாயிருப்ப
தாக; செத்த அவைகளைத் தொடுகிறவனெல்லாம்
சாயங்காலம்மட்டும் தீட்டுப்பட்டிருப்பான்.—
௩௨ செத்த அவைகளில் யாதொன்று எதின்மேல்
விழுகிறதோ, அதுவெல்லாம் தீட்டுப்பட்டிருக்
கும்; அது எந்த மரமுட்டானாலும், வஸ்திரமா
னாலும், தோலானாலும், பையானாலும் வேலை
செய்கிற எந்த ஆயுதமானாலும் சரி, தண்ணீரிலே
போடப்பட்டு, சாயங்காலம்மட்டும் தீட்டாயி
௩௩ ருப்பதாக; அப்பொழுது சுத்தமாம்.-அவைகளில்
யாதொன்று எந்த மண்பாண்டத்திற்குள்ளும் வி
ழுந்தால், அதற்குள் இருக்கின்றவை எல்லாம்
தீட்டுப்பட்டிருக்கும்; அதையோவென்றால் உ
௩௪ டைப்பீர்களாக. — புசிக்கிற சகல போசனத்தி
லும் எதிலே தண்ணீர் வந்திருக்கின்றதோ, அது
தீட்டாகும்; குடிக்கிற சகலமும் எந்தப்பாத்தி
௩௫ ரத்தில் இருந்தாலும் சரி, தீட்டாம்.—அவைக
ளின் உடலில் யாதொன்று எதின்மேல் விழுகி
றதோ, அது எல்லாம் தீட்டாம்; அடுப்பும் மண்
தொட்டியுமானாலும் சரி, தகர்க்கப்படுவதாக, அ
வைகள் தீட்டுப்பட்டிருக்கும்; ஆகையால் உங்க
ளுக்கு அவைகள் தீட்டாயிருக்கும்.—நீரூற்றும் ௩௬
தண்ணீர் உண்டாகிய கிணறுமோவென்றால்,
சுத்தமாயிருக்கும்; ஆனால் அவைகளின் உடலைத்
தொடுகிறவன் தீட்டுப்படுகிறான்.—அவைகளின் ௩௭
உடலில் யாதொன்று விதைக்கிற எந்தத் தானி
யத்தின்மேல் விழுந்தாலும், அது சுத்தமாயிருக்
கும்.—தண்ணீர் வார்க்கப்பட்டிருக்கிற விதை ௩௮
யின்மேல் விழுந்ததேயாகில், உங்களுக்குத் தீட்
டாயிருப்பதாக.

உங்களுக்கு ஆகாரத்திற்கான ஒரு மிருகம் ௩௯
செத்தாலும் அதின் உடலைத் தொடுகிறவன் சா
யங்காலம்மட்டும் தீட்டுப்பட்டிருப்பான். — அ ௪௰
தின் உடலிலே புசித்தவன் தன் வஸ்திரங்களை
வெளுக்கக்கடவன்; அவன் சாயங்காலம்மட்
டும் தீட்டுப்பட்டிருப்பான்; அதின் உடலை எடுத்
துப்போனவனும் தன் வஸ்திரங்களை வெளுக்கக்
கடவன்; அவனும் சாயங்காலம்மட்டும் தீட்டுப்
பட்டிருப்பான்.

தரையோடே நகருகிற ஊர்வனவெல்லாம் ௪௧
அருவருப்பாயிருக்கக்கடவது; அவை புசிக்கப்
படலாகாது.—தரையோடே ஊருகிற சகல ஊர் ௪௨
வனவற்றிலும் வயிற்றாலே நகருகிற யாதொன்
றையும், நான்கு காலால் நடக்கிற யாதொன்
றையும் அல்லது அநேகம் கால்களுள்ள யா
தொன்றையும் புசியீர்களாக; ஏனெனில் அவை
கள் அருவருப்பாய் இருக்கின்றவைகள்.—ஊரு ௪௩
கிற எந்த ஊர்வனவற்றாலும் உங்கள் ஆத்துமாக்
களை அருவருப்பாக்காமலும், அவைகளால் தீட்
டுப்படாமலும் இருப்பீர்களாக; ஏனெனில் அ
வைகளாலே தீட்டுப்படுவீர்கள்.—அதேனென் ௪௪
றால் நாம் உங்கள் பராபரனாகிய கர்த்தர்; ஆகை
யால் உங்களைப் பரிசுத்தமாக்கிக்கொண்டு, பரி
சுத்தராய் இருப்பீர்களாக; ஏனெனில் நாம் பரி
சுத்தர்; ஆனபடியினாலே தரையோடே ஊருகிற
எந்த ஊர்வனவற்றாலும் உங்கள் ஆத்துமாக்களைத்
தீட்டுப்படுத்தாதிருங்கள்.—உங்கள் பராபரனாயி ௪௫
ருக்கும்படிக்கு நாம் உங்களை எகிப்துதேசத்தி
லிருந்து ஏறிவரப்பண்ணின கர்த்தர்; ஆகையால்
பரிசுத்தராயிருப்பீர்களாக; ஏனெனில் நாம் பரி
சுத்தர்.

தீட்டானதற்கும், சுத்தமானதற்கும், புசிக்கப் ௪௬
படும் சீவனுக்கும் புசிக்கப்படாத சீவனுக்கும்,
வித்தியாசம்பண்ணுவதற்காக, — இது மிருகத் ௪௭
திற்கும் பறவைக்கும் தண்ணீர்களில் நீந்துகிற
சகல சீவசெந்திற்கும் பூமியின்மேலே ஊருகிற
சகல சீவனுக்கும் அடுத்த நியாயப்பிரமாணம்
என்று சொல்லுங்களென்றார்.

## ௰௨. அதிகாரம்.

௧. பிள்ளை பெற்றவளைப் பரிசுத்தமாக்குதல். ௬. அவள் பரிசுத்தமாவதற்கு இடும்பலி.

பின்னையும் கர்த்தர் மோசேயோடே பேசிச் ௧
சொன்னதாவது: — நீ இஸ்ரவேல் புத்திரரோ ௨

டே பேசிச் சொல்லவேண்டியதேதெனில், ஒரு
ஸ்திரி கர்ப்பம்தரித்து, ஆண்பிள்ளையைப் பெற்
ருல், அவள் தூரஸ்திரியாய் விலக்கமாயிருக்கிற
நாள்களுக்குச் சரியாக எழுநாள் தீட்டாயிருப்
௩ பாள்.—எட்டாம்நாளிலே அதினுடைய நுனித்
தோலின் மாம்சம் சுன்னத்துப் பண்ணப்படக்க
௪ வது.—பிற்பாடு அவள் முப்பத்து மூன்று நாள்
தன் உதிரச் சுத்திகரிப்பிலிருந்து, தன் சுத்திக
ரிப்பின் நாள்கள் நிறைவேறும்மட்டும், பரிசுத்த
மான யாதொரு வஸ்துவைத் தொடவும் பரிசுத்த
௫ ஸ்தலத்திற்கு வரவும்வேண்டாம்.— பெண்பிள்
ளையைப் பெற்ருளேயாகில், அவள் இரண்டு
வாரம் தூரஸ்திரியாயிருக்கிறதுபோல, தீட்டாயி
ருந்து, பிற்பாடு அறுபத்தாறுநாள் தன் உதிரச்
சுத்திகரிப்பிலிருக்கக்கடவள்.
௬ ஆண்பிள்ளையை, அல்லது பெண்பிள்ளை
யைப் பெற்றதற்காக அவள் சுத்திகரிப்பின்
நாள்கள் நிறைவேறினபின்பு, அவள் ஒரு வய
தான ஆட்டுக்குட்டியைச் சர்வாங்கதகனபலி
யாகவும், ஒரு புருக்குஞ்சையாகிலும் காட்டுப்
புருவை என்கிலும் பாவம்போக்கும்பலியாக
வும், ஆசரிப்புக்கூடாரவாசலுக்கு ஆசாரியன
௭ ண்டையிலே கொண்டுவரக்கடவள்.— அதை
அவன் கர்த்தருக்குமுன்பாகச் செலுத்தி, அவ
ளுக்காகப் பாவநிவிர்த்தியை உண்டாக்குவா
னாக; அப்பொழுது தன் உதிர ஊறலில் தீட்டிற்
குச் சுத்தமாவாள்; இது ஆண்பிள்ளையை அல்
லது பெண்பிள்ளையைப் பெற்றவளின் நியாயப்
௮ பிரமாணம்.— ஆட்டுக்குட்டியைக் கொண்டு
வர அவள் கைக்கில்லாதிருந்ததேயாகில், அவள்
இரண்டு காட்டுப்புருக்களை, அல்லது இரண்டு
புருக்குஞ்சுகளை ஒன்றைச் சர்வாங்கதகனபலி
யாகவும், மற்றதைப் பாவம்போக்கும்பலியாக
வும் கொண்டுவருவாளாக; அதினால் ஆசாரியன்
அவளுக்காகப் பாவநிவிர்த்தியை உண்டாக்கக்
கடவன்; அப்பொழுது சுத்தமாயிருப்பாளென்று
சொல்லென்ருர்.

## ௰௩. அதிகாரம்.

குருவானவர் குஷ்டரோகத்தை அறிவதற்கான திருஷ்டாந்தத்தையும் அடையாளத்தையும் குறித்தது.

௧ பின்னையும் கர்த்தர் மோசேயோடும் ஆரோனோ
௨ டும் பேசிச் சொன்னதாவது:— ஒரு மனிதனு
டைய மாம்சத்தின் தோலிலே குஷ்டவாதை
யைப்போலிருக்கிற ஒரு வீக்கமாகிலும் சிரங்
காகிலும் வெள்ளை மறு என்கிலும் உண்டானால்,
அவன் ஆசாரியனாகிய ஆரோனண்டைக்கு, அல்
லது ஆசாரியராகிய அவன் குமாரரில் ஒருவ
னண்டைக்குக் கொண்டுவரப்படக்கடவன்.—
௩ அப்பொழுது ஆசாரியன் மாம்சத்தின் தோலிலி
ருக்கிற வாதையின் இடத்தைப் பார்க்கக்கட
வன்; அதிலே மயிர் வெண்மையாக மாறினதும்
வாதையினிடம் அவன் மாம்சத்தின் தோலைப்
பார்க்கிலும் பள்ளமுமாயிருந்தால், அது குஷ்
டத்தின் வாதை; ஆசாரியன் அவனைப் பார்த்த
பொழுது, அவனைத் தீட்டுள்ளவனாகத் தீர்க்கக்க
டவன்.—அவன் மாம்சத்தோலிலே வெள்ளை மறு ௪
இருந்தாலும், அவ்விடம் அவன் மாம்சத்தோலைப்
பார்க்கிலும் பள்ளமாயிராமலும் அதின் மயிர்
வெண்மையாக மாருமலும் இருந்ததாகில், ஆசா
ரியன் அவனை எழுநாள் அடைத்துவைத்து,—
எழாம்நாளிலே அவனைப் பார்க்கக்கடவன்; ௫
இதோ, வாதையினிடம் தோலிலே அதிகப்படா
மல், வாதை அவன் பார்வைக்கு நின்றிருந்தால்,
ஆசாரியன் இரண்டாம்தரம் அவனை எழுநாள்
அடைத்துவைத்து, — இரண்டாம்தரம் அவனை ௬
எழாம்நாளிலே பார்க்கக்கடவன்; இதோ வா
தை தோலிலே அதிகப்படாமல் சுருங்கி இருந்
தால், ஆசாரியன் அவனைச் சுத்தமுள்ளவனென்
று தீர்க்கக்கடவன்; அது சிரங்குதான்; அவன்
தன் வஸ்திரங்களை வெளுத்துச் சுத்தமாயிருப்
பானாக.—தன்னைச் சுத்தமுள்ளவனென்று தீர்க் ௭
கிறதற்கு அவன் ஆசாரியனுக்குத் தன்னைக்
காண்பித்தபின்பு, சிரங்கு தோலிலே இடம்
கொள்ளவே கொண்டதேயானால், அவன் மறுப
டியும் ஆசாரியனுக்குத் தன்னைக் காண்பிக்கக்க
டவன். — இதோ சிரங்கு தோலிலே இடம் ௮
கொண்டதென்று ஆசாரியன் கண்டால், ஆசா
ரியன் அவனைத் தீட்டுள்ளவனென்று தீர்க்கக்க
டவன்; அது குஷ்டம்தானே.
குஷ்டவாதை ஒரு மனிதனிலிருந்தால், ஆ ௯
சாரியனண்டைக்குக் கொண்டுவரப்படக்கட
வன்.—இதோ, தோலிலே வெண்மையான வீக்க ௰
மிருந்து அது மயிரை வெண்மையாக மாறப்
பண்ணிற்றென்றும், வீக்கத்திலே பச்சைச் சதை
யின் குணம் உண்டென்றும், ஆசாரியன் கண்
டால்.—அப்பொழுது அது அவன் மாம்சத்தின் ௰௧
தோலிலே நாள்பட்ட குஷ்டம்; ஆசாரியன்
அவனை அடைத்துவைக்காமல், தீட்டுள்ளவ
னென்று தீர்க்கக்கடவன்; ஏனெனில் அவன்
தீட்டுள்ளவன்தானே.—குஷ்டம் தோலிலே து ௰௨
ளிர்க்கவே துளிர்த்து, வாதையுள்ளவனுடைய
தலைதுவக்கி அவன் கால்கள்மட்டும் ஆசாரியனு
டைய கண்களுக்குத் தெரிகிற எவ்விடமும்
தோலை எல்லாம் மூடிக்கொண்டிருந்ததேயா
னால்,—அப்பொழுது ஆசாரியன் பார்த்து, இதோ, ௰௩
குஷ்டம் அவன் மாம்சத்தை எல்லாம் மூடியிருந்
தால், அவனைச் சுத்தமுள்ளவன் என்று தீர்க்கக்
கடவன்; எல்லாம் வெண்மையாக மாறிற்று; அ
வன் சுத்தமானவன்.— ஆனால் பச்சைச் சதை ௰௪
அவனில் காணப்படும்நாளிலே அவன் தீட்
டுள்ளவன்.—ஆகையால் ஆசாரியன் பச்சைச் ௰௫
சதையைக் காணும்பொழுது, அவனைத் தீட்
டுள்ளவனென்று தீர்ப்பானாக; பச்சைச்சதை
தீட்டுள்ளது, அது குஷ்டம். — அல்லவென்று ௰௬
பச்சைச்சதை மாறி வெண்மையாகப்போனால்,
அவன் ஆசாரியனண்டையில் வருவானாக.—ஆ ௰௭
சாரியன் அவனைப் பார்க்கக்கடவன்; இதோ,
வாதையின் இடம் வெண்மையாக மாறிற்றானால்,
ஆசாரியன் அவனைச் சுத்தமுள்ளவன் என்று
தீர்க்கக்கடவன்; அவன் சுத்தமுள்ளவன்.

௰௮ மாம்சத்தின் தோலிலே எரிச்சல் உண்டாயி
௰௯ ருந்து ஆறிப்போய், — பிற்பாடு அவ்விடத்தில்
ஒரு வெள்ளை வீக்கம், அல்லது சிவப்புக்கலந்த
ஒரு வெள்ளை மறு உண்டானால், ஆசாரியனுக்
௨௰ குக் காண்பிக்கப்படவேண்டும். — ஆசாரியன்
அதைப் பார்க்கக்கடவன்; இதோ, அவ்வி
டம் மற்றத் தோலைப்பார்க்கிலும் தாழ்ந்ததும்
அதின் மயிர் வெண்மையாக மாறினதுமாயிருந்
தால், ஆசாரியன் அவனைத் தீட்டுள்ளவனென்
று தீர்ப்பானாக; அது எரிச்சலிலே எழும்பின
௨௧ குஷ்டம். — ஆசாரியன் அதைப் பார்க்கும்பொ
ழுது, இதோ அதில் வெள்ளைமயிர் இல்லை
என்றும், அது மற்றத் தோலைப்பார்க்கிலும் தாழ்ந்
திராமல், சுருங்கி இருக்கிறதென்றும், கண்
டானேயாகில், அவனை ஏழுநாள் அடைத்து
௨௨ வைத்து, — அது தோலில் இடம் கொள்ளவே
கொண்டால், அவனைத் தீட்டுள்ளவனென்று
தீர்க்கக்கடவன்; அது அந்த வாதைதான். —
௨௩ அந்த வெள்ளை மறு அதிகப்படாமல், தன்
னிடத்திலே நின்றதேயாகில், அது எரிபந்தத்
தினுடைய வடுவாயிருக்கும்; ஆகையால் ஆசா
ரியன் அவனைச் சுத்தமுள்ளவனென்று தீர்க்கக்
கடவன்.

௨௪ அல்லது ஒருவனுடைய மாம்சத்தின் தோலி
லே நெருப்புப்பட்டதினாலே சூடுண்டாய்,
சூடாறிப்போன இடத்திலே சிவப்பாகிய அல்
லது வெண்மையாகிய மறு உண்டானால், —
௨௫ ஆசாரியன் அதைப் பார்க்கக்கடவன்; இதோ,
அந்த மறுவிலே மயிர் வெண்மையாக மாறி, அவ்
விடம் மற்றத் தோலைப்பார்க்கிலும் பள்ளமாயி
ருந்தால், அது சூட்டினால் எழும்பின குஷ்டம்;
ஆகையால் ஆசாரியன் அவனைத் தீட்டுள்ளவ
னென்று தீர்க்கக்கடவன்; அது குஷ்டத்தின்
௨௬ வாதைதான். — ஆசாரியன் அதைப் பார்க்கிற
பொழுது, இதோ மறுவிலே வெள்ளைமயிர் இல்
லையென்றும், அது மற்றத் தோலைப்பார்க்கிலும்
தாழ்ந்திராமல் சுருங்கி இருக்கிறதென்றும், கண்
டானேயாகில், அவனை ஏழுநாள் அடைத்து
௨௭ வைத்து, — ஏழாம்நாளில் அவனைப் பார்க்கக்க
டவன்; அது தோலில் இடம்கொள்ளவே
கொண்டிருந்தால், ஆசாரியன் அவனைத் தீட்
டுள்ளவனென்று தீர்க்கக்கடவன்; அது குஷ்
௨௮ டத்தின் வாதை.—மறுவானது தோலில் இடம்
கொள்ளாமல், தன்னிடத்திலே நின்று சுருங்கியி
ருந்ததேயாகில், அது சூட்டினால் உண்டான
வடு; ஆசாரியன் அவனைச் சுத்தமுள்ளவனென்
று தீர்க்கக்கடவன்; ஏனெனில் அது சூட்டினு
டைய சிரங்கு.

௨௯ ஒரு புருஷனுக்காகிலும் ஸ்திரீக்காகிலும் தலை
யிலே அல்லது தாடியிலே ஒரு வாதை உண்
௩௰ டானால், — ஆசாரியன் அதைப் பார்க்கக்கட
வன்; இதோ, அவ்விடம் மற்றத் தோலைப்பார்க்
கிலும் பள்ளமும் அதிலே மயிர் பொன்னிறமும்
கொஞ்சமுமாயிருந்தால், ஆசாரியன் அவனைத்
தீட்டுள்ளவனாகத் தீர்க்கக்கடவன்; அது தலையி
லே அல்லது தாடியிலே குஷ்டமான சொறியா
யிருக்கும்.—ஆசாரியன் அதைப் பார்க்கிறபொ ௩௧
ழுது, இதோ அவ்விடம் மற்றத் தோலைப்பார்க்
கிலும் பள்ளமாயிராவிட்டாலும் அதிலே கறுப்
பான மயிர் இல்லையென்று கண்டால், ஆசாரி
யன் அவனை ஏழுநாள் அடைத்துவைத்து, —
ஏழாம்நாளிலே அதைப் பார்க்கக்கடவன்; இதோ ௩௨
அந்தச் சொறி இடம்கொள்ளாமலும், அதிலே
பொன்னிற மயிர் இல்லாமலும், அவ்விடம் மற்றத்
தோலைப்பார்க்கிலும் பள்ளமல்லாமலும் இருந்
தால்,—அவன் சிரைத்துக்கொண்டு, சொறியை ௩௩
யோ சிரைத்துக்கொள்ளாதிருக்கக்கடவன்; பிற்
பாடு ஆசாரியன் இரண்டாம் முறை அவனை
ஏழுநாள் அடைத்துவைத்து, — ஏழாம்நாளிலே ௩௪
அதைப் பார்க்கக்கடவன்; இதோ, சொறி தோ
லில் இடம்கொள்ளாமலும் அவ்விடம் மற்றத்
தோலைப்பார்க்கிலும்பள்ளமல்லாமலுமிருந்தால்,
ஆசாரியன் அவனைச் சுத்தமுள்ளவனென்று தீர்க்
கக்கடவன்; அவன் தன் வஸ்திரங்களை வெளுத்
தபின் சுத்தமாயிருப்பான்.—அவன் சுத்தமுள்ள ௩௫
வனென்று தீர்க்கப்பட்ட பிறகு அந்தச் சொறி
தோலில் இடம்கொள்ளவே கொண்டதானால்,—
ஆசாரியன் அவனைப் பார்க்கக்கடவன்; இதோ, ௩௬
சொறி தோலில் இடம்கொண்டிருந்தால், அப்
பொழுது மயிருக்காக அது பொன்னிறமோ என்
று ஆசாரியன் விசாரிக்கக் கவை இல்லை; அவன்
தீட்டுள்ளவன்தானே. — தன் பார்வைக்கு அந் ௩௭
தச் சொறி நின்று, அதிலே கறுப்புமயிர் முளைத்த
தேயாகில், சொறி தாவிளையாயிற்று; அவன் சுத்
தமாயிருக்கிறான்; ஆசாரியன் அவனைச் சுத்த
முள்ளவனென்று தீர்க்கக்கடவன்.

ஒரு புருஷனுக்காகிலும் ஸ்திரீக்காகிலும் அ ௩௮
வர்கள் மாம்சத்தின் தோலிலே வெள்ளைமாசுக
ளாகிய மாசுகளுண்டானால்,—ஆசாரியன் பார்க் ௩௯
கக்கடவன்; இதோ, அவர்கள் மாம்சத்தோலிலே
சுருங்கினதான வெள்ளைமாசுகளிருந்தால் அது
தோலில் எழும்புகிற வெள்ளைத் தேமல்; அவன்
சுத்தமுள்ளவன்.

ஒருவனுடைய தலைமயிர் உதிர்ந்து, அவன் ௪௰
மொட்டையனானால், அவன் சுத்தமாயிருக்கி
றான்.—அவனுடைய முன்னந்தலைமயிர் உதிர்ந் ௪௧
தால், அவன் அரைமொட்டையன்; அவன் சுத்
தமாயிருக்கிறான். — மொட்டைத்தலையில் அல் ௪௨
லது அரைமொட்டைத்தலையில் சிவப்புக்கலந்த
வெண்மையானநிறம் உண்டாயிற்றேயானால்,
அது அதிலே எழும்புகிற குஷ்டம். — ஆசாரி ௪௩
யன் அவனைப் பார்க்கக்கடவன்; இதோ, அவ
னுடைய மொட்டைத்தலையிலே அல்லது அ
ரைமொட்டைத்தலையிலே மாம்சத்தினுடைய
தோலின் குஷ்டத்தைப்போலக் காணப்படுகிற
சிவப்புக்கலந்த வெண்மையான வீக்கமிருந்
தால்,—அவன் குஷ்டரோகி, அவன் தீட்டுள்ள ௪௪
வன்; ஆசாரியன் அவனைத் தீட்டுள்ளவனென்று
தீர்க்கவே தீர்க்கக்கடவன்; அவன் வாதை
அவன் தலையிலே இருக்கின்றது.

௪௫ வாதை உண்டாயிருக்கிற குஷ்டரோகியின்
வஸ்திரங்கள் கிழிந்தவைகளும் அவன் தலை
திறந்ததுவுமாய் இருக்கவும், அவன் தன் தாடி
யை மூடிக்கொண்டிருந்து, தீட்டுள்ளவன், தீட்
டுள்ளவனென்று கூப்பிடவும்வேண்டியது. —
௪௬ அந்த வாதை அவனில் இருக்கும் நாளெல்லாம்
தீட்டாக எண்ணப்படுவானாக; அவன் தீட்
டானவன், தனியே குடி இருப்பானாக; அவன்
குடியிருப்பு பாளயத்திற்குப் புறம்பே இருக்
கக்கடவது.
௪௭ ஆட்டுமயிர் அல்லது பஞ்சுநூல் நெசவான
௪௮ ஒரு வஸ்திரத்திலாகிலும்,-பஞ்சுநூலும் அல்லது
ஆட்டுமயிருமான பாவிலாகிலும், உண்டைநூலி
லாகிலும், ஒரு தோலிலாகிலும், தோலான எந்த
வித வேலையிலென்கிலும், குஷ்டத்தின் உரு
௪௯ உண்டாகி, — வஸ்திரத்திலாகிலும், தோலிலாகி
லும், பாவிலாகிலும், உண்டைநூலிலாகிலும்,
தோலான எந்தவித வேலையில் என்கிலும், அது
கொஞ்சம் பச்சை அல்லது சிவப்பாயிருந்தால்,
குஷ்டமாயிருக்கும்; அது ஆசாரியனுக்குக் காண்
௫௰ பிக்கப்படக்கடவது.—ஆசாரியன் அதைப்பார்த்
௫௧ து ஏழுநாள் அடைத்துவைத்து,—ஏழாம்நாளிலே
அதைப் பார்க்கக்கடவன்; வஸ்திரத்திலேயாவ
து, பாவிலேயாவது, உண்டைநூலிலேயாவது,
தோலிலேயாவது, தோலால் எந்தவிதமுமாகச்
செய்யப்பட்ட வேலையிலேயாவது, அது அதி
கப்பட்டிருந்தால், அது அரிக்கிற குஷ்டமா
௫௨ யிருக்கும், தீட்டாயிருக்கின்றது. — அந்த உரு
விருக்கிற ஆட்டுமயிரும் அல்லது பஞ்சுநூலுமா
ன வஸ்திரத்தையும், அல்லது பாவையும், அல்
லது உண்டைநூலையும், அல்லது தோலான எந்
தவிதமுமான பணிமுட்டையும், சுட்டெரிக்கக்
கடவன்.
௫௩ ஏனெனில் அது அரிக்கிற குஷ்டம்; அக்கினி
யாலே சுட்டெரிக்கப்படுவதாக. ஆனால் வஸ்தி
ரத்திலாகிலும் பாவிலாகிலும் உண்டைநூலிலா
கிலும் தோலான எந்தவிதமுமான பணிமுட்டி
லென்கிலும் இதோ அந்த உருவத்திலே அதிகப்
௫௪ பட்டதில்லை என்று ஆசாரியன் கண்டால்,-அப்
பொழுது ஆசாரியன் அதைக் கழுவச்சொல்லி,
இரண்டாம்முறை ஏழுநாள் அடைத்துவைத்து,-
௫௫ அது கழுவப்பட்டபின்பு, அதைப் பார்க்கக்கட
வன்; இதோ, அந்த உரு அதிகப்படாதிருந்தா
லும் மாறாததாயிருந்தால் தீட்டாயிருக்கும்; அக்
கினியால் அதைச் சுட்டெரிக்கவேண்டும்; அது
அதின் உள்புறத்திலானாலும் வெளிப்புறத்திலா
௫௬ னாலும் உருவ அரிக்கிறதாயிருக்கின்றது.—கழு
வப்பட்ட பின்பு, இதோ, அது குறுகிற்றென்று
ஆசாரியன் கண்டானேயாகில், அதை வஸ்திரத்
திலே, அல்லது தோலிலே, அல்லது பாவிலே,
அல்லது உண்டைநூலிலே, இராதபடிக்குக் கி
௫௭ ழித்துப்போடவேண்டும்.-அது இன்னம் வஸ்தி
ரத்திலாகிலும் பாவிலாகிலும் உண்டைநூலிலாகி
லும் தேவையான எந்த விதமுமான பணிமுட்
டிலென்கிலும் காணப்பட்டதேயானால், அது
துளிர்க்கிறதாயிருக்கும்; ஆகையினால் அதை அக்
கினியாலே சுட்டெரிக்கவேண்டும். — வஸ்திர ௫௮
மும் அல்லது பாவும் அல்லது உண்டைநூலும்
அல்லது எந்தவிதத் தோல்பணிமுட்டும் கழுவப்
பட்டபின்பு, அந்த உருவு அதைவிட்டுப் போ
யிற்றேயானால், அது இரண்டாம்முறை கழுவப்
படட்டும், அப்பொழுது சுத்தமாயிருக்கும்.
ஆட்டுமயிர் அல்லது பஞ்சுநூல் நெசவான ௫௯
வஸ்திரத்தையாகிலும், பாவையாகிலும், உண்
டைநூலையாகிலும், எந்தவிதத்தோல் பணிமுட்
டை என்கிலும் சுத்தமாக அல்லது தீட்டாகத்
தீர்க்கிறதற்கு, இது அதினுடைய குஷ்டவாதைக்
கடுத்த நியாயப்பிரமாணமென்றார்.

## ௰௪. அதிகாரம்.

௧. குஷ்டத்தின் சுத்திகரிப்புக்கு அடுத்த சடங்குகளும் காணிக்கையும், ௩௩. ஒரு வீட்டிலுள்ள குஷ்டத்தை அறியும் அடையாளம். ௪௮. அந்த வீட்டைச் சுத்திகரித்தல்.

பின்னையும் கர்த்தர் மோசேயோடே பேசிச் ௧
சொன்னதாவது:—குஷ்டரோகியினுடைய சுத் ௨
திகரிப்பின் நாளிலே அவனுக்கடுத்த நியாயப்பிர
மாணம் என்னவெனில், [1]அவன் ஆசாரியனண்
டைக்குக் கொண்டுவரப்பட, ஆசாரியன் பாள
யத்திற்குப்புறம்பே போகவேண்டும். — இதோ, ௩
குஷ்டரோகியின் குஷ்டவாதை குணமாயிற்
றென்று ஆசாரியன் கண்டால்,—அவன் சுத்திக ௪
ரிக்கப்படப் போகிறவனுக்காக, சுத்தமாயிருக்
கிற உயிருள்ள இரண்டு குருவிகளையும் ஒரு கே
துருக்கட்டையையும் சிவப்புநூலையும் ஈசோப்
பையும் வாங்கிவரக் கற்பிப்பானாக.—பிற்பாடு ௫
ஆசாரியன அந்தக் குருவிகளில் ஒன்றை ஒரு
மண்பாண்டத்திலுள்ள சுரப்புத் தண்ணீர்மேல்
கழுத்தை அறுக்கச்சொல்லி,—உயிருள்ள குரு ௬
வியையும், கேதுருக்கட்டையையும், சிவப்பு
நூலையும், ஈசோப்பையும், எடுத்துக்கொண்டு இ
வைகளையும் உயிருள்ள குருவியையும் சுரப்புத்
தண்ணீரின்மேல் கழுத்தறுக்கப்பட்ட குருவி
யின் இரத்தத்திலே தோய்த்து,—குஷ்டமறச் சுத் ௭
திகரிக்கப்படப்போகிறவன்மேல் ஏழுதரம் தெ
ளித்து, அவனைச் சுத்தம்பண்ணி, உயிருள்ள குரு
வியை வெளியின் விசாலத்திலே விட்டுவிடக்
கடவன்.
சுத்திகரிக்கப்படுகிறவன் தன் வஸ்திரங்களை ௮
வெளுத்து, தன் மயிரையெல்லாம் சிரைத்து, தான்
சுத்தமாகும்படிக்கு, தண்ணீரிலே முழுகி, பிற்
பாடு பாளயத்திற்குள் பிரவேசித்து, தன் கூடா
ரத்திற்குப் புறம்பே ஏழுநாள் தங்கி,—ஏழாம்நா ௯
ளிலே தன் தலையையும் தாடியையும் புருவங்க
ளையும் தன்னுடைய எல்லா மயிரையும் சிரைத்
து, தன் வஸ்திரங்களை வெளுத்து, தன் மாம்சத்
தைத் தண்ணீரிலே கழுவிச் சுத்தமாயிருப்பா
னாக. — எட்டாம்நாளிலே அவன் பழுதற்ற இ ௰
ரண்டு ஆட்டுக்குட்டிகளையும், ஒரு வயதான பழு
தற்ற ஒரு பெண்குட்டியையும் ஒரு மரக்கால்

[1] மத். அ. ௮.

மெல்லிய மாவிலே பத்தில் மூன்று பங்கான
எண்ணெயிலே பிசைந்த காணிக்கையையும்,
ஒரு ஆழாக்கெண்ணெயையும், கொண்டுவரக்க
௰௧ டவன்.—சுத்திகரிக்கிற ஆசாரியன் சுத்திகரிக்
கப்படுகிற மனிதனையும் அவைகளையும் கர்த்தருக்
குமுன்பாக ஆசரிப்புக்கூடாரவாசலிலே நிறுத்
௰௨ தக்கடவன்.—பிற்பாடு ஆசாரியன் ஒரு ஆட்டுக்
குட்டியைப் பிடித்து, அதையும் அந்த ஆழாக்
கெண்ணெயையும் குற்றம்போக்குகிறதற்காகக்
கொண்டுவந்து, கர்த்தருக்குமுன்பாக அசைவாட்
௰௩ டும் காணிக்கையாக அசைவாட்டி,— பாவம்
போக்கும்பலியும் சர்வாங்கதகனபலியும் குரல்
வளை அறுக்கப்படுகிற பரிசுத்தஸ்தலத்திலே அந்த
ஆட்டுக்குட்டியைக் குரல்வளை அறுப்பானாக;
ஏனெனில் குற்றம்போக்கும் பலி, பாவம்போக்
கும் பலியைப்போல ஆசாரியனுடையது; அது
௰௪ பரிசுத்தத்திற்குப் பரிசுத்தம்.—குற்றம்போக்கும்
அந்தப் பலியின் இரத்தத்திலே ஆசாரியன் கொஞ்
சம் பிடித்து, சுத்திகரிக்கப்படுகிறவன் வலதுகா
தின் மடலிலும் அவன் வலதுகையின் பெருவி
ரல்மேலும் வலதுகாதின் பெருவிரல்மேலும் பூ
௰௫ சக்கடவன்.—பிற்பாடு ஆசாரியன் அந்த ஆழாக்
கெண்ணெயிலே கொஞ்சம் தன் இடது கை
௰௬ யில் வார்த்து,— அதிலே தன் வலது விரலைத்
தோய்த்து, தன் விரலினால் ஏழுதரம் அந்த எண்
ணெயில் எடுத்து, கர்த்தருக்குமுன்பாகத் தெளி
௰௭ த்து,—தன் உள்ளங்கையிலிருக்கிற குறை எண்
ணெயிலே கொஞ்சம் சுத்திகரிக்கப்படுகிறவன்
வலதுகாதின் மடலிலும் அவன் வலதுகையின்
பெருவிரல்மேலும் வலதுகாதின் பெருவிரல்மே
லும் முந்தப் பூசியிருக்கிற குற்றம்போக்கும்பலி
௰௮ யினுடைய இரத்தத்தின்மீதில் பூசி,-தன் உள்ளங்
கையில் இருக்கிற குறை எண்ணெயைச் சுத்திக
ரிக்கப்படுகிறவன் தலையிலே தடவி, கர்த்தருக்கு
முன்பாக அவனுக்காகப் பாவநிவிர்த்தியை உண்
௰௯ டாக்கி,-பாவம்போக்கும்பலியையும் செலுத்தி,
சுத்திகரிக்கப்படுகிறவனுக்காக அவன் தீட்டறப்
பாவநிவிர்த்தியை உண்டாக்கிப் பிற்பாடு சர்வா
௨௰ ங்கதகனபலியைக் குரல்வளை அறுத்து,—அதை
யும் காணிக்கையையும் பலிபீடத்தின்மேல் ஏற்
றி, அவனுக்காகப் பாவநிவிர்த்தியை உண்டாக்
கக்கடவன்; அப்பொழுது சுத்தமாயிருப்பான்.
௨௧ அவன் தரித்திரனும் அம்மாத்திரம் அவகாசம்
அற்றவனுமேயானால் அவன் தன் பாவநிவிர்த்
திக்கென்று குற்றம்போக்கும்பலியாகவும் அசை
வாட்டும் காணிக்கையாகவும் ஒரு ஆட்டுக்குட்
டியையும் ஒருமரக்கால் மெல்லியமாவிலே பத்
தில் ஒரு பங்கான, எண்ணெயிலே பிசைந்த
காணிக்கையையும் ஒரு ஆழாக்கெண்ணெயை
௨௨ யும்,—தன் அவகாசத்திற்குத்தக்கவைகளாக இர
ண்டு காட்டுப்புறாக்களையாகிலும் இரண்டு புறாக்
குஞ்சுகளை என்கிலும் ஒன்று பாவம்போக்கும்
பலியும் மற்றது சர்வாங்கதகனபலியுமாகும்ப
௨௩ டிக்கு வாங்கி, — தன் சுத்திகரிப்பின் எட்டாம்
நாளிலே ஆசரிப்புக்கூடாரவாசலிலே கர்த்தருக்
குமுன்பாக ஆசாரியனண்டையிலே கொண்டு
வருவானாக.—அப்பொழுது ஆசாரியன் குற்றம் ௨௪
போக்கும் ஆட்டுக்குட்டியையும் அந்த ஆழாக்
கெண்ணெயையும் வாங்கி, கர்த்தருக்குமுன்பாக
அசைவாட்டும் காணிக்கையாக அசைவாட்டி,-
குற்றம்போக்கும் ஆட்டுக்குட்டியின் குரல்வளை ௨௫
யை அறுத்து, அதின் இரத்தத்திலே கொஞ்சம்
பிடித்து, சுத்திகரிக்கப்படுகிறவன் வலதுகாதின்
மடலிலும் அவன் வலதுகையின் பெருவிரல்மே
லும் வலதுகாலின் பெருவிரலின்மேலும் பூசி,-
அந்த எண்ணெயிலே கொஞ்சம் தன் இடதுகை ௨௬
யில் வார்த்து,—இதிலிருக்கும் எண்ணெயிலே ௨௭
தன் வலது விரலால் எடுத்து, கர்த்தருக்குமுன்
பாக ஏழுதரம் தெளித்து,—தன் உள்ளங்கையிலி ௨௮
ருக்கிற எண்ணெயிலே கொஞ்சம் சுத்திகரிக்கப்
படுகிறவன் வலதுகாதின் மடலிலும் அவன் வல
துகையின் பெருவிரல்மேலும் வலதுகாலின் பெ
ருவிரல்மேலும் குற்றம்போக்கும்பலியின் இரத்
தம் பூசி இருக்கிற இடத்தின்மீதில் பூசி,—தன் ௨௯
உள்ளங்கையிலிருக்கிற குறை எண்ணெயைச்
சுத்திகரிக்கப்படுகிறவன் தலையின்மேல் அவன்
நிமித்தம் கர்த்தருக்குமுன்பாகப் பாவநிவிர்த்தி
யை உண்டாக்கும்படிக்குத் தடவி,—பிற்பாடு ௩௰
அவன் தன் அவகாசத்திற்குத் தக்கவைகளாகக்
கொண்டுவந்தவைகள், காட்டுப்புறாக்களானா
லும் சரி, புறாக்குஞ்சுகளானாலும் சரி,—அவை ௩௧
களில் ஒன்றைப் பாவம்போக்கும்பலியும், மற்ற
தைச் சர்வாங்கதகனபலியுமாக்கி, காணிக்கை
யோடேகூடச் செலுத்தி, இப்படியே ஆசாரி
யன் சுத்திகரிக்கப்படுகிறவன் நிமித்தம் கர்த்த
ருக்குமுன்பாகப் பாவநிவிர்த்தியை உண்டாக்
கக்கடவன்.

இது தன் சுத்திகரிப்புக்கு அவகாசம் போதா ௩௨
திருக்கிற குஷ்டவாதையுள்ளவனுடைய நியா
யப்பிரமாணம் என்றார்.

பின்னையும் கர்த்தர் மோசேயோடும் ஆரோ ௩௩
னோடும் பேசிச் சொன்னதாவது:—நாம் உங்க ௩௪
ளுக்குக் காணியாட்சியாகக் கொடுக்கும் கானான்
தேசத்திலே நீங்கள் வந்தபின்பு, நாம் உங்கள்
காணியாட்சியான தேசத்தில் ஒரு வீட்டிலே
குஷ்டவாதையை வரப்பண்ணினால்,-அப்பொ ௩௫
ழுது அந்த வீட்டிற்கு உடையவன் வந்து, வீட்
டிலே வாதையைப்போலிருக்கிறதாக எனக்குக்
காண்கிறதென்று ஆசாரியனுக்கு அறிவிக்கக்க
டவன்.—அப்பொழுது வீட்டிலிருக்கிற யாவும் ௩௬
தீட்டாகாதபடிக்கு, ஆசாரியன் அந்த வாதை
யைப்பார்க்க வரும்முன்னே, வீட்டை ஒழித்து
வைக்கச்சொல்லி, பிற்பாடு வீட்டைப் பார்க்
கவந்து, — அந்த வாதையிருக்கிற இடத்தைப் ௩௭
பார்க்கக்கடவன்; இதோ, வீட்டுச் சுவர்களிலே
கொஞ்சம் பச்சையும் கொஞ்சம் சிவப்புமான
குழிகளிருந்து, அவைகளின் உருவு சுவரைப்
பார்க்கிலும் பள்ளமாயிருந்தால், — ஆசாரியன் ௩௮
வீட்டிலிருந்து வாசல்படியிலே புறப்பட்டு, வீட்
டை ஏழுநாள் அடைத்துவைத்து,—ஏழாம்நாளி ௩௯

லே திரும்பவந்து, இதோ வாதை வீட்டுச் சுவர்
௪௰ களில் இடம்கொண்டதென்று கண்டால்,—அ
வன் அவ்விடத்திலிருக்கிற கல்லுகளைப் பேர்க்
கவும், பட்டணத்திற்குப்புறம்பே தீட்டான ஒரு
௪௧ ஸ்தலத்திலே போடவும் கற்பித்து,— வீட்டை
உள்ளே சுற்றிலும் சீவச்சொல்லி,சீவிப்போட்ட
மண்ணைப் பட்டணத்திற்குப்புறம்பே தீட்டான
௪௨ ஒரு ஸ்தலத்திலே கொட்டவும்,—வேறே கல்லு
களை எடுத்துவந்து, அந்தக் கல்லுகளுக்குப் பதி
லாகக் கட்டி,வேறே மண்ணை எடுத்து வீட்டைப்
௪௩ பூசவும் சொல்லுவானாக.-கல்லுகளைப் பேர்த்து,
வீட்டைச் சீவி, நவமாய்ப் பூசினபிற்பாடு,அந்த
வாதை திரும்ப வீட்டில் எழும்பிற்றேயானால்,—
௪௪ ஆசாரியன் வந்து பார்க்கக்கடவன்; இதோ, வா
தை வீட்டில் இடம்கொண்டதாகில், அது வீட்
டிலே அரிக்கிற குஷ்டமானது; தீட்டாயிருக்
௪௫ கின்றது.—ஆகையால் வீட்டை எல்லாம் அதின்
கல்லுகளையும், மரங்களையும்,அதின் மண்ணையும்
இடித்து, பட்டணத்திற்குப்புறம்பே தீட்டான
௪௬ ஸ்தலத்திலே கொண்டுபோகவேண்டும். — வீடு
அடைக்கப்பட்ட நாளெல்லாம் அதற்குள் பிர
வேசிக்கிறவன் சாயங்காலம்மட்டும் தீட்டுப்பட்
௪௭ டிருப்பான்.—வீட்டிலே படுத்துக்கொண்டவன்
தன் வஸ்திரங்களை வெளுக்கக்கடவன்; வீட்டி
லே சாப்பிட்டவனும் தன் வஸ்திரங்களை வெ
ளுக்கக்கடவன்.
௪௮ ஆசாரியன் திரும்பவந்து, இதோ, வீடு பூசப்
பட்டபிறகு வீட்டிலே அந்த வாதை இடம்
கொண்டதில்லையென்று கண்டானேயாகில், அ
வன் அந்த வீட்டைச் சுத்தமென்று தீர்க்கக்கட
வன்; ஏனெனில் வாதை நிவிர்த்தி ஆயிற்று.—
௪௯ அப்பொழுது வீட்டின் பாவத்தைப்போக்க, இ
ரண்டு குருவிகளையும் கேதுருக்கட்டையையும்
சிவப்பு நூலையும் ஈசோப்பையும் வாங்கி,—
௫௰ ஒரு குருவியை ஒரு மண்பாண்டத்திலுள்ள சுரப்
௫௧ புத் தண்ணீரின்மேலே கழுத்தறுத்து, — கேது
ருக்கட்டையையும், ஈசோப்பையும், சிவப்புநூ
லையும், உயிருள்ள குருவியையும் எடுத்துக்
கொண்டு,இவைகளைக் கழுத்தறுக்கப்பட்ட குரு
வியின் இரத்தத்திலும், சுரப்புத் தண்ணீரிலும்
தோய்த்து, வீட்டின்மேல் ஏழுதரம் தெளித்து,—
௫௨ குருவியின் இரத்தத்தினாலும், சுரப்புத் தண்ணீ
ரினாலும், உயிருள்ள குருவியினாலும், கேது
ருக்கட்டையினாலும், ஈசோப்பினாலும், சிவப்
புநூலினாலும், வீட்டின் பாவத்தைப்போக்கி,—
௫௩ உயிருள்ள குருவியைப் பட்டணத்திற்குப்புறம்
பே வெளியின் விசாலத்திலே விட்டுவிட்டு,
இப்படியே வீட்டிற்காகப் பாவநிவிர்த்தியை
உண்டாக்கக்கடவன்; அப்பொழுது சுத்தமாயி
ருக்கும்.
௫௪ இது சகலவித குஷ்டவாதைக்கும், சொறிக்
௫௫ கும்,—வஸ்திரத்தின் குஷ்டத்திற்கும், வீட்டின்
௫௬ குஷ்டத்திற்கும்,—வீக்கத்திற்கும், சிரங்குக்கும்,
வெள்ளை மறுவுக்கும், அடுத்த நியாயப்பிரமா
௫௭ ணம்.—எப்பொழுது தீட்டானதென்றும், எப்
பொழுது சுத்தமானதென்றும், போதிக்கிறதற்கு
இது குஷ்டத்திற்கு அடுத்த நியாயப்பிரமாண
மென்றார்.

## ௰௫. அதிகாரம்.

௧. மனிதர்களின் பிரமியாசசி. ௰௩. அவர்களைச் சுத்திகரித்தல். ௰௬. ஸ்திரீகளின் பிரமியாசசி. ௨௮. அவர்களைச் சுத்திகரித்தல்.

பின்னையும் கர்த்தர் மோசேயோடும் ஆரோனோ ௧
டும் பேசிச் சொன்னதாவது:-நீங்கள் இஸ்ரவேல் ௨
புத்திரரோடே பேசிச் சொல்லவேண்டியதேதெ
னில்,எவனொருவன் மாம்சத்திலே பிரமியமுண்
டானால், அவன் தன் பிரமியத்தினாலே தீட்டா
னவன்.—அவனுடைய மாம்சத்திலே பிரமியம் ௩
ஊற்றினாலும், அவன் மாம்சப்பிரமியம் அடை
பட்டிருந்தாலும், அது அவனிலே தீட்டாயிருக்
கும்.—பிரமியக்காரன் படுக்கிற படுக்கையெல் ௪
லாம் தீட்டாம்; அவன் எதின்மேல் உளுக்காரு
கிறானோ,அதுவெல்லாம் தீட்டாம்.-அவன் படுக் ௫
கையைத் தொடுகிறவன் தன் வஸ்திரங்களை வெ
ளுத்து, தண்ணீரிலே முழுகக்கடவன்; சாயங்
காலம்மட்டும் தீட்டுப்பட்டிருப்பானாக. — பிர ௬
மியக்காரன் உளுக்காந்ததின்மேல் உளுக்காரு
கிறவன் தன் வஸ்திரங்களை வெளுத்து, தண்ணீ
ரில் முழுகி, சாயங்காலம்மட்டும் தீட்டுப்பட்டி
ருப்பானாக. — அவன் மாம்சத்தைத் தொடுகிற ௭
வன் தன் வஸ்திரங்களை வெளுத்து, தண்ணீரிலே
முழுகி, சாயங்காலம்மட்டும் தீட்டுப்பட்டிருப்
பானாக.-அவன் சுத்தமாயிருக்கிற ஒருவன்மேல் ௮
துப்பினால்,இவன் தன் வஸ்திரங்களை வெளுத்து,
தண்ணீரிலே முழுகி, சாயங்காலம்மட்டும் தீட்
டுப்பட்டிருப்பானாக. — அவன் எதின்மேல் ஏ ௯
றிப்போகிறானோ, அது எல்லாம் தீட்டாம்.—
அவன்கீழிருந்த எதையாகிலும் தொடுகிறவ ௰
னெல்லாம் சாயங்காலம்மட்டும் தீட்டுப்பட்டி
ருப்பான்; அதை எடுத்துச் சுமக்கிறவன் தன்
வஸ்திரங்களை வெளுத்து, தண்ணீரில் முழுகி,
சாயங்காலம்மட்டும் தீட்டுப்பட்டிருப்பானாக.—
அவன் தன் கைகளைத் தண்ணீரினாலே கழுவாதி ௰௧
ருக்கும்போது, எவனையாகிலும் தொட்டால்,
அவன் தன் வஸ்திரங்களை வெளுத்து, தண்ணீ
ரில் முழுகி, சாயங்காலம்மட்டும் தீட்டுப்பட்டி
ருப்பானாக.—அவன் தொட்டிருக்கிற மண்பாண் ௰௨
டம் உடைக்கப்படவும் மரப்பாண்டமெல்லாம்
தண்ணீரில் அலசப்படவும்கடவது. — அவன் ௰௩
தன் பிரமியம் அறச் சுத்தமானால், அவன் தன்
சுத்திகரிப்புக்கென்று ஏழுநாள் எண்ணிக்கொண்
டு, தன் வஸ்திரங்களை வெளுத்து, தன் மாம்சத்
தைச் சுரப்புத்தண்ணீரிலே கழுவக்கடவன்; அப்
பொழுது சுத்தமாயிருக்கிறான் —எட்டாம்நாளி ௰௪
லேயெனில், அவன் இரண்டு காட்டுப்புறாக்க
ளையாகிலும், இரண்டு புறாக்குஞ்சுகளையாகிலும்,
ஆசரிப்புக்கூடார வாசலிலே கர்த்தருக்குமுன்
பாகக் கொண்டுவந்து, ஆசாரியனுக்குக் கொடுக்
கக்கடவன்.—ஆசாரியன் அவைகளில் ஒன்றைப் ௰௫
பாவம்போக்கும்பலியும் மற்றதைச் சர்வாங்க

தகனபலியுமாக்கி, அவனுக்காகக் கர்த்தரின் சந்
நிதியிலே, அவன் பிரமியத்தின்நிமித்தம் பாவநி
விர்த்தியை உண்டாக்கக்கடவன்.
௰௬ இந்திரியம் ஒருவனிலிருந்து கழிந்ததுண்டா
னால், அவன் தன் மாம்சத்தை எல்லாம் தண்ணீ
ரிலே கழுவி, சாயங்காலம்மட்டும் தீட்டாயிருப்
௰௭ பானாக.—கழிந்த இந்திரியம்பட்ட சகல வஸ்திர
மும் சகல தோலும் தண்ணீரினாலே கழுவப்பட்
டு, சாயங்காலம்மட்டும் தீட்டாயிருப்பதாக.—
௰௮ இந்திரியம் கழிந்தவனோடே பெண்சாதி படுத்
துக்கொண்டிருந்தால், இருவரும் தண்ணீரிலே
முழுகி, சாயங்காலம்மட்டும் தீட்டாயிருப்பார்
களாக.
௰௯ தன் மாம்சத்திலே உதிரம் ஓடுகிற ஸ்திரி ஏழு
நாள் தன் விலக்கத்தில் இருக்கக்கடவள்; அவ
ளைத் தொடுகிறவனெல்லாம் சாயங்காலம்மட்டும்
௨௰ தீட்டுப்பட்டிருப்பான். — அவள் விலகி இருக்
கையில், எதின்மேல் படுத்துக்கொள்ளுகிறாளோ,
எதின்மேல் உளுக்காருகிறாளோ, அதெல்லாம்
௨௧ தீட்டாம். — அவள் படுக்கையைத் தொடுகிறவ
னெல்லாம் தன் வஸ்திரங்களை வெளுத்து, தண்
ணீரில் முழுகி, சாயங்காலம்மட்டும் தீட்டுப்பட்
௨௨ டிருப்பானாக. — அவள் உளுக்காந்த யாதொரு
மணையைத்தொடுகிறவனெல்லாம் தன் வஸ்திரங்
களை வெளுத்து, தண்ணீரில் முழுகி, சாயங்கா
௨௩ லம்மட்டும் தீட்டுப்பட்டிருப்பானாக. — அவள்
படுக்கையின்மேலும், அல்லது அவள் உளுக்
காந்த மணையின்மேலும் இருந்த எதையாகிலும்
தொட்டவன், சாயங்காலம்மட்டும் தீட்டுப்பட்
௨௪ டிருப்பான்.—ஒருவன் அவளோடே படுக்கவே
படுத்துக்கொண்டதும் அவள் தீட்டு அவன்
மேலே பட்டதும் உண்டானால், அவன் ஏழு
நாள் தீட்டாயிருப்பான்; அவன் படுக்கிற படுக்
கையுமெல்லாம் தீட்டுப்படும்.
௨௫ ஒரு ஸ்திரி விலகியிருக்குங்காலம் அல்லாமல்
அவளுடைய உதிரம் அநேகம் நாள் ஓடவேஓடி,
அல்லது அந்தக்காலத்திற்கு மிஞ்சி ஓடினால், அ
வள் அது ஓடுகிற நாளெல்லாம் தன் விலக்கத்
தின் நாள்களைப்போலத் தீட்டாயிருப்பாள். —
௨௬ அந்தச் சகல நாளும் அவள் படுக்கிற படுக்கை
எல்லாம், அவளுக்கு அவள் விலக்கத்தின் படுக்
கைக்குச் சரியாய் இருப்பதாக; அவள் எதின்
மேல் உளுக்காருகிறாளோ, அது அவளுடைய
விலக்கத்தின் தீட்டைப்போலத் தீட்டாயிருக்
௨௭ கும். — அப்படிக்கொத்தவைகளைத் தொடுகிறவ
னெல்லாம் தன் வஸ்திரங்களை வெளுத்து, தண்
ணீரில் முழுகி, சாயங்காலம்மட்டும் தீட்டுப்பட்
௨௮ டிருப்பானாக.—அவள் தன் உதிரம் அறச் சுத்த
மானால், அவள் ஏழுநாள் எண்ணிக்கொள்வா
௨௯ ளாக; பிற்பாடு சுத்தமாயிருப்பாள்.—எட்டாம்
நாளிலேயெனில், இரண்டு காட்டுப்புறாக்க
ளையாகிலும், இரண்டு புறாக்குஞ்சுகளை என்கி
லும் ஆசரிப்புக்கூடாரவாசலில் ஆசாரியனண்
௩௰ டைக்குக் கொண்டுவரக்கடவள்.—ஆசாரியன்
அவைகளில் ஒன்றைப் பாவம்போக்கும்பலி
யும் மற்றதைச் சர்வாங்கதகனபலியுமாக்கி, அவ
ளுக்காகக் கர்த்தரின் சந்நிதியில் அவளுடைய
உதிர ஓடலின் நிமித்தம் பாவநிவிர்த்தியை உண்
டாக்கக்கடவன்.
இஸ்ரவேல் புத்திரர் தங்கள் நடுவே இருக்கிற ௩௧
நம்முடைய வாசஸ்தலத்தைத் தீட்டுப்படுத்தி,
தங்கள் தீட்டுகளால் சாவாதபடிக்கு, இப்படி
நீங்கள் அவர்கள் தீட்டுகளுக்கு அவர்களை விலக்
கிவைக்கவேண்டும்.
இது பிரமியக்காரனுக்கும், இந்திரிய நஷ்ட ௩௨
மானதினாலே தீட்டானவனுக்கும்,—தன் விலக் ௩௩
கத்திலே பலவீனப்பட்டவளுக்கும், மாம்சம் உ
ருகியிருக்கிற ஆண்சாதிக்கும் பெண்சாதிக்கும்,
தீட்டாயிருக்கிறவளோடே படுத்துக்கொண்ட
வனுக்கும், செல்லும் நியாயப்பிரமாணமென்று
சொல்லுங்களென்றார்.

## ௰௬. அதிகாரம்.

௧. பிரதான ஆசாரியன் பராபரனுடைய சந்நிதியில் பிரவேசிக்கவேண்டிய முறைமை. ௰௧. தனக்காகக் கொடுத்த பாவத்தின்பலி, சனங்களுக்காகக் கொடுத்த பாவத்தின்பலி. ௨௰. பாவத்தைச் சுமக்கும் வெள்ளாட்டுக்கடா. ௨௯. வருஷந்தோறும் பாவநிவிர்த்திக்காகக் கொண்டாடும் பண்டிகை.

ஆரோனின் இரண்டு குமாரர் [1]கர்த்தரின் சந்நி ௧
தியிலே சேருகையில் செத்துப்போன பிற்பாடு,
கர்த்தர் மோசேயோடே பேசிச் சொன்னதாவ
து:—உன் சகோதரனாகிய ஆரோன் சாவாதபடிக் ௨
கு, பரிசுத்தஸ்தலத்திலே திரைக்குட்புறத்திலி
ருக்கிற பெட்டியின்மீதிலுள்ள கிருபாசனமான
மூடிக்குமுன்பாக, சகலவேளையிலும் வரவேண்
டாமென்று அவனுக்குச் சொல்; ஏனெனில்
கிருபாசனமான மூடியின்மீதில் மேகத்திலே கா
ணப்படுவோம். — ஆரோன் பரிசுத்தஸ்தலத்துக் ௩
குள் பிரவேசிக்கப்போனால், ஒரு காளை எரு
தைப் பாவம்போக்கும்பலியாகவும், ஒரு ஆட்
டுக்கடாவைச் சர்வாங்கதகனபலியாகவும், செ
லுத்திப் பிரவேசிக்கவேண்டும். — அவன் பரி ௪
சுத்தமான பஞ்சுநூல் சட்டையை உடுத்து, தன்
மாம்சத்தின்மேலே பஞ்சுநூல் சல்லடத்தைப்
போட்டு, பஞ்சுநூல் நடுக்கட்டைக் கட்டி, பஞ்
சுநூல் பாகையைப் போட்டுக்கொண்டிருக்க
வேண்டும்; இவைகள் பரிசுத்தமான வஸ்திரங்
கள்; அவன் தன் மாம்சத்தைத் தண்ணீரிலே
கழுவி, அவைகளை உடுத்துக்கொண்டு, — இஸ் ௫
ரவேல் புத்திரருடைய சபையின் கையிலே,
பாவம்போக்கும்பலியாக இரண்டு வெள்ளாட்
டுக்கடாக்களையும், சர்வாங்கதகனபலியாக ஒரு
ஆட்டுக்கடாவையும் வாங்கி,
பிற்பாடு தனக்காகவும் தன் வீட்டாருக்காக ௬
வும் பாவநிவிர்த்தியை உண்டாக்கும்படிக்கு,
தன்னுடைய பாவம்போக்குதலின் காளை எரு
தைச் சேரப்பண்ணி, — அந்த இரண்டு வெள் ௭
ளாட்டுக்கடாக்களையும் கொண்டுவந்து, ஆச
ரிப்புக்கூடாரவாசலிலே கர்த்தருக்குமுன்பாக

1 ௩ மோ. ௰. ௧, ௨.

௮ நிறுத்தி,—அந்த இரண்டு வெள்ளாட்டுக்கடாக்
களின்மேலே ஒரு சீட்டைக் கர்த்தருக்கென்
றும், பின்னொரு சீட்டைப் போகவிடப்படும்
வெள்ளாட்டுக்கடாவுக்கென்றும் போட்டு, —
௯ கர்த்தருக்கென்று சீட்டு விழுந்த வெள்ளாட்
டுக்கடாவைப் பாவம்போக்கும்பலியாக்குகிற
௰ தற்குச் சேரப்பண்ணி,-போகவிடப்படச் சீட்
டு விழுந்த வெள்ளாட்டுக்கடாவையோவென்
றால், அதின்மேலே பாவநிவிர்த்தியை உண்
டாக்கி, அதை வனாந்தரத்திலே போகவிடுகிற
தற்குக் கர்த்தருக்குமுன்பாக உயிரோடே நி
றுத்தி,
௰௧ பிற்பாடு தனக்காகவும் தன் வீட்டாருக்கா
கவும் பாவநிவிர்த்தியை உண்டாக்குகிறதற்கு,
தன்னுடைய பாவம்போக்குதலின் காளை எரு
தைச் சேரப்பண்ணி,அதின் குரல்வளையை அறு
௰௨ த்து,—கர்த்தருக்குமுன்பாகப் பலிபீடத்தின்மே
லிருக்கிற தணலினால் கலசத்தை நிரப்பி, பொ
டியாக்கப்பட்ட சுகந்த தூபவர்க்கங்களிலே
தன் கைப்பிடிகள் நிறைய எடுத்து, திரைக்குள்ப்
௰௩ புறமாகக் கொண்டுவந்து, — தூபத்தின் மேகம்
சாட்சியின்மேலிருக்கிற கிருபாசனமான மூடி
யைத் தான் சாவாதபடிக்கு மூடத்தக்கதாக, தூப
வர்க்கத்தைக் கர்த்தருக்குமுன்பாக அக்கினி
௰௪ யின்மேலே போட்டு, — பிற்பாடு காளை எரு
தின் இரத்தத்திலே கொஞ்சம் எடுத்து, கீழ்ப்புற
மாக நின்று, தன் விரலினாலே கிருபாசனமான
மூடியின்மேலே தெளித்து, ஏழுமுறை தன் விர
லினால், அந்த இரத்தத்தில் எடுத்து, கிருபாசன
மான மூடிக்குமுன்பாகவும் தெளிப்பானாக.
௰௫ பிற்பாடு அவன் சனத்தினுடைய பாவம்
போக்குதலின் வெள்ளாட்டுக்கடாவைக் குரல்
வளை அறுத்து,அதின் இரத்தத்தைத் திரைக்குள்ப்
புறமாகக் கொண்டுவந்து, தான் காளை எருதின்
இரத்தத்தாலே செய்ததுபோல, அதின் இரத்தத்
தாலும் செய்து, அதைக் கிருபாசனமான மூடி
யின்மேலும் அதற்குமுன்பாகவும் தெளித்து,—
௰௬ இஸ்ரவேல் புத்திரருடைய தீட்டுகள்நிமித்த
மும், அவர்களுடைய எல்லாப் பாவங்களிலும்
உண்டான மீறுதல்களின்நிமித்தமும் பரிசுத்த
ஸ்தலத்திற்காக, பாவநிவிர்த்தியை உண்டாக்கி,
இந்தவிதமாக அவர்களிடத்தில் அவர்கள் தீட்டு
களின் நடுவே தங்கியிருக்கிற ஆசரிப்பின்கூ
௰௭ டாரத்திற்காகச் செய்யக்கடவன்.—அவன் பா
வநிவிர்த்தியை உண்டாக்கப் பரிசுத்தஸ்தலத்
திற்குள் பிரவேசிக்கிறது முதல்கொண்டு, அவன்
புறப்படும்மட்டும், ஒரு மனிதனும் ஆசரிப்பின்
கூடாரத்தில் இருக்கவேண்டாம்; அவன் தனக்
காகவும் தன் வீட்டாருக்காகவும் இஸ்ரவேலின்
முழுச்சபைக்காகவும் பாவநிவிர்த்தியை உண்
௰௮ டாக்கி, — புறப்பட்டு, கர்த்தருக்குமுன்பாக
இருக்கிற பீடத்தண்டை வந்து, அதற்காகப்
பாவநிவிர்த்தியை உண்டாக்கி, காளை எருதின்
இரத்தத்திலும் வெள்ளாட்டுக்கடாவின் இரத்தத்
திலும் கொஞ்சம் பிடித்து, கொம்புகளின்மேலே
சுற்றிலும் பூசி,—தன் விரலினால் அந்த இரத்தத் ௰௯
தில் எடுத்து, ஏழுதரம் அதின்மேலே தெளித்து,
அதை இஸ்ரவேல் புத்திரரின் தீட்டுகள் அறச்
சுத்திகரிக்கவும் பரிசுத்தமாக்கவும் கடவன்.
அவன் பரிசுத்தஸ்தலத்திற்கும் ஆசரிப்புக்கூ ௨௰
டாரத்திற்கும் பீடத்திற்குமாக, பாவநிவிர்த்தி
யை இப்படி உண்டாக்கித் தீர்ந்தபிற்பாடு, உயி
ரோடே இருக்கிற வெள்ளாட்டுக்கடாவைச் சே
ரப்பண்ணி, — அதினுடைய தலையின்மேல் ஆ ௨௧
ரோன் தன் இரண்டு கைகளையும் வைத்து,அதின்
மேல் இஸ்ரவேல் புத்திரருடைய எல்லா அக்கிர
மங்களையும் அவர்களுடைய எல்லாப் பாவங்க
ளால் உண்டாகிய அவர்களுடைய சகல மீறுதல்
களையும் அறிக்கையிட்டு,அவைகளை வெள்ளாட்
டுக்கடாவினுடைய தலையின்மேலே சுமத்தி, அ
தை அதற்கான ஆள் கையிலே வனாந்தரத்திற்கு
அனுப்பிவிடக்கடவன்.—அந்த வெள்ளாட்டுக் ௨௨
கடா தன்மேலே அவர்களுடைய அக்கிரமங்களை
எல்லாம் வெட்டிப்போடப்படுதலின் தலத்திற்
குச் சுமந்துகொண்டுபோவதாக; பிறகு அந்த
வெள்ளாட்டுக்கடாவை வனாந்தரத்திலே போக
விடக்கடவன்.
ஆரோனோவெனில் ஆசரிப்புக்கூடாரத்திற் ௨௩
குள் வந்து, தான் பரிசுத்தஸ்தலத்திற்குள் பிர
வேசிக்கிறபொழுது உடுத்திருந்த பஞ்சுநூல்
வஸ்திரங்களைக் களைந்து, அங்கே வைத்து
விட்டு,-தன் மாம்சத்தைப் பரிசுத்த இடத்திலே ௨௪
தண்ணீரினாலே கழுவி, தன்னுடைய வஸ்திரங்
களை உடுத்துக்கொண்டு புறப்பட்டு, தன்னுடை
ய சர்வாங்கதகனத்தையும் சனத்தின் சர்வாங்க
தகனத்தையும் படைத்து,தனக்காகவும் சனத்திற்
காகவும் பாவநிவிர்த்தியை உண்டாக்கி,—பா ௨௫
வம்போக்கும்பலியின் கொழுப்பைப் பலிபீ
டத்தின்மேலே கொளுத்தக்கடவன்.—போகவி ௨௬
டப்படும் வெள்ளாட்டுக்கடாவைக் கொண்டு
போய்விட்டவன்,தன் வஸ்திரங்களை வெளுத்து,
தன் மாம்சத்தைத் தண்ணீரினாலே கழுவிப் பிற்
பாடு பாளயத்தில் வருவானாக. — குரல்வளை ௨௭
அறுக்கப்பட்டு, இரத்தம் பாவநிவிர்த்திக்கென்று
பரிசுத்தஸ்தலத்திற்குள் கொண்டுபோகப்பட்ட
பாவம்போக்குதலின் காளை எருதையும், பாவம்
போக்குதலின் வெள்ளாட்டுக்கடாவையும், பா
ளயத்திற்குப் புறம்பே கொண்டுபோய், அவை
களின் தோல்களையும் மாம்சத்தையும் சாணியை
யும் அக்கினியாலே சுட்டெரிக்கக்கடவர்கள்.-
அவைகளைச் சுட்டெரித்தவன் தன் வஸ்திரங் ௨௮
களை வெளுத்து, தன் மாம்சத்தைத் தண்ணீரினா
லே கழுவி, பிற்பாடு பாளயத்தில் வருவானாக.
ஏழாம்மாதம் பத்தாம் தேதியிலே நீங்கள் உங் ௨௯
கள் ஆத்துமாக்களைத் தாழ்மைப்படுத்துவதும்,
தேசத்திலே பிறந்தவனானாலும் சரி, உங்கள் நடு
வே தங்குகிற பரதேசியானாலும் சரி,ஒரு வேலை
யையும் செய்யாதிருப்பதும், உங்களுக்கு நித்தி
யகட்டளையாய் இருக்கக்கடவது.—ஏனெனில் ௩௰
உங்களைச் சுத்திகரிக்கும்படிக்கு, அந்நாளில் உங்

களுக்காகப் பாவநிவிர்த்தி உண்டாக்கப்படும்;
கர்த்தருக்குமுன்பாக உங்களுடைய எல்லாப்
பாவங்களும் அறச் சுத்திகரிக்கப்படுவீர்கள். —
௩௧ உங்களுக்கு அது ஓய்ந்திருக்கும் ஓய்வுநாள்;
அதிலே உங்கள் ஆத்துமாக்களைத் தாழ்மைப்
படுத்தக்கடவீர்கள்; இது நித்தியகட்டளை. —
௩௨ அபிஷேகம்பண்ணப்பட்டவனும், தன் தகப்
பன் பட்டத்திற்கு வந்து ஆசாரிய ஊழியம்
செய்யக் கைநிரப்பப்பட்டவனுமாகிய ஆசாரி
யனே, பாவநிவிர்த்தியை உண்டாக்கக்கடவன்;
அவன் பரிசுத்த வஸ்திரங்களாகிய பஞ்சுநூல்
௩௩ வஸ்திரங்களை உடுத்துக்கொண்டு,—பரிசுத்தமா
கிய பரிசுத்தஸ்தலத்திற்கும் ஆசரிப்புக் கூடாரத்
திற்கும் பீடத்திற்குமாக, பாவநிவிர்த்தியை
உண்டாக்கி, ஆசாரியருக்காகவும் சபையின்
எல்லாச் சனத்திற்காகவும் பாவநிவிர்த்தியை
௩௪ உண்டாக்கக்கடவன். — இப்படி வருஷத்தில்
ஒருமுறை இஸ்ரவேல் புத்திரருக்காக, அவர்
களுடைய எல்லாப் பாவங்களுக்கும் நிவிர்த்தி
யை உண்டாக்குவது, உங்களுக்கு நித்தியகட்
டளையாய் இருக்கக்கடவதென்று சொல்லென்
ருர்; கர்த்தர் மோசேக்குக் கற்பித்தபடியே
ஆரோன் செய்தான்.

## ௰௭. அதிகாரம்.

௧. மிருகத்தின் இரத்தம் வாசல்படியில் கர்த்தருக்கு ஒப்புக்கொடுக்கப்படுவது. ௭. பசாசுகளுக்குச் செலுத்தக்கூடாது. ௰. இரத்தத்தையும், ௰௫. தானே இறந்துபோனதையும், பீறுண்டதையும், உண்பது விலக்கியது.

௧ பின்னையும் கர்த்தர் மோசேயோடே பேசிச்
௨ சொன்னதாவது:—நீ ஆரோனோடும் அவன் கு
மாரரோடும் இஸ்ரவேல் புத்திரர் அனைவரோடும்
பேசி, அவர்களுக்குச் சொல்லவேண்டியது:
கர்த்தர் கற்பித்த வார்த்தை என்னவெனில், —
௩ இஸ்ரவேல் வீட்டாரில் எவனாகிலும் மாட்டை
யாகிலும் ஆட்டையாகிலும் வெள்ளாட்டை
என்கிலும் ஆசரிப்புக்கூடாரவாசலென்கிற கர்த்
தரின் வாசஸ்தலத்திற்குமுன்பாக, கர்த்தருக்குச்
௪ செலுத்தும்படிக்குக் கொண்டுவராமல்,-அதைப்
பாளயத்திலாகிலும் பாளயத்திற்குப் புறம்பேயா
கிலும் குரல்வளை அறுத்தால், அது அந்த மனி
தனுக்குப் பழியாக எண்ணப்படும்; அவன் இ
ரத்தம் சிந்திப்போட்டான், அந்த மனிதன் தன்
௫ சனத்திற்குள் இராமல், அறுப்புண்பான். — ஆ
கையால் இஸ்ரவேல் புத்திரர் வெளியின் விசால
த்திலே பலியிடுகிற தங்கள் பலிகளை, ஆசரிப்புக்
கூடாரவாசலில் ஆசாரியனண்டையிலே கர்த்
தருக்குக் கொண்டுவந்து, அங்கே அவருக்குச்
சமாதான பலிகளாகச் செலுத்தக்கடவர்கள். —
௬ அங்கே ஆசாரியன் இரத்தத்தை ஆசரிப்புக்கூ
டாரவாசலிலிருக்கிற கர்த்தருடைய பலிபீடத்
தின்மேலே தெளித்து, கொழுப்பைக் கர்த்தருக்
கு ஆற்றுகிற வாசனையாகக் கொளுத்தக்கட
௭ வன்.-தாங்கள் சோரமார்க்கமாய்ப் பின்பற்றுகிற
பேய்களுக்கு, தங்கள் பலிகளை இனிச் செலுத்
தார்களாக; இது அவர்கள் தலைமுறைகளில்
அவர்களுக்கு நித்தியகட்டளையாயிருக்கவும்.
ஆகையால் நீ அவர்களோடே சொல்லவே ௮
ண்டியதேதெனில் இஸ்ரவேல் வீட்டாரிலும்
உங்கள் நடுவே தங்குகிற பரதேசிகளிலும் ஒரு
வனாகிலும் சர்வாங்க தகன முதலான பலியைப்
பலியிட்டு, — அதை ஆசரிப்புக்கூடாரவாசலி ௯
லே கர்த்தருக்குச் செலுத்தும்படிக்குக் கொண்
டுவாராவிட்டால், அவன் தன் சனத்தாருக்குள்
இராமல் அறுப்புண்பான்.
இஸ்ரவேல் வீட்டாரிலும் உங்கள் நடுவே ௰
தங்குகிற பரதேசிகளிலும் எவனாகிலும் [1]இரத்த
மென்னப்பட்டதைப் புசித்தால், இரத்தத்தைப்
புசித்த அந்த ஆத்துமாவுக்கு விரோதமாக நாம் நம
து முகத்தைத் திருப்பி, அவனை அவன் சனத்
திற்குள் இராதபடிக்கு அறுப்போம். — ஏனெ ௰௧
னில் [2]மாம்சத்தின் உயிர் இரத்தத்திலுள்ளது; நாம்
அதை உங்களுக்குப் பலிபீடத்தின்மேல் உங்
கள் ஆத்துமாக்களுக்காக, பாவநிவிர்த்தியை
உண்டாக்கும்படிக்குக் கட்டளையிட்டோம்; ஏ
னெனில் அது ஆத்துமாவிற்காகப் பாவநிவிர்த்
தியை உண்டாக்குகிற இரத்தம்.—அதின்நிமித் ௰௨
தம் உங்களில் ஒருவனும் இரத்தம் புசிக்கவேண்
டாம்; உங்கள் நடுவே தங்குகிற பரதேசியும்
இரத்தம் புசிக்கவேண்டாமென்று இஸ்ரவேல்
புத்திரருக்குச் சொன்னோம்.
இஸ்ரவேல் புத்திரரிலும் உங்கள் நடுவே தங் ௰௩
குகிற பரதேசிகளிலும் எவனாகிலும் புசிக்கத்
தக்க ஒரு மிருகத்தை அல்லது ஒரு பட்சியை
வேட்டையாடிப் பிடித்தால், அவன் அதின்
இரத்தத்தைச் சிந்தப்பண்ணி, மண்ணினால் மூ
டக்கடவன். — ஏனெனில் சகல மாம்சத்திற் ௰௪
கும் அது சீவனாயிருக்கிறது; அதின் இரத்தம்
சீவனுக்குச்சரி; ஆகையால் இஸ்ரவேல் புத்தி
ரருக்கு எந்த மாம்சத்தின் இரத்தத்தையும் புசி
யீர்களாக, ஏனெனில் சகல மாம்சத்தின் உயி
ரும் அதின் இரத்தம்தானே, அதைப் புசிக்கிற
எவனும் அறுப்புண்பானென்றோம்.
தேசத்திலே பிறந்தவர்களிலும் பரதேசிகளி ௰௫
லும் செத்த உடலை, அல்லது பீறுண்டதைப் பு
சித்திருக்கிறவன் எல்லாம், தன் வஸ்திரங்களை
வெளுத்து, தண்ணீரில் முழுகி, சாயங்காலம்
மட்டும் தீட்டாயிருப்பானாக; பிற்பாடு சுத்தமா
யிருப்பான்.—அவன் தன் வஸ்திரங்களை வெ ௰௬
ளுக்காமலும் தன் மாம்சத்தைக் கழுவாமலும்
போனால், தன் அக்கிரமத்தைச் சுமப்பானென்று
சொல்லென்றார்.

## ௰௮. அதிகாரம்.

௧. முறைமை இல்லாத விவாகம். ௰௯. முறைமை இல்லாத இச்சைகள்.

பின்னையும் கர்த்தர் மோசேயோடே பேசிச் ௧
சொன்னதாவது: — இஸ்ரவேல் புத்திரரோடே ௨
பேசி அவர்களுக்குச் சொல்லவேண்டியதேதெ

1 ௩ மோ. ௩. ௰௭.

2 ௧ மோ. ௯. ௪.

௩ னில், நாம் உங்கள் பராபரனாகிய கர்த்தர்.—நீங்
கள் குடியிருந்த எகிப்துதேசத்தினுடைய செய்
கையின்படி செய்யாமலும், நாம் உங்களை
அழைத்துப்போகிற கானான் தேசத்தினுடைய
செய்கையின்படி செய்யாமலும், அவர்களு
௪ டைய முறைமைகளில் நடவாமலும், — நம்மு
டைய நியாயங்களின்படியே செய்து, நம்மு
டைய கட்டளைகளையே அவைகளில் நடக்கும்
படிக்குக் கைக்கொள்ளக்கடவீர்கள்; நாம் உங்
௫ கள் பராபரனாகிய கர்த்தர்.—ஆகையால் நம்மு
டைய கட்டளைகளையும் நம்முடைய நியாயங்க
ளையும் கைக்கொள்ளக்கடவீர்கள்; அவைகளின்
படி செய்கிற மனிதன் [1]அவைகளாலே பிழைப்
பான்; நாம் கர்த்தர்.
௬ ஒருவனும் தனக்குக் கிட்டின சதையாகிய
ஒருத்தியோடும் அவளுடைய நிருவாணத்தைத்
திறக்கிறதற்குச் சேரவேண்டாம்; நாம் கர்த்தர்.-
௭ உன் தகப்பனுடைய நிருவாணத்தையும் உன்
தாயின் நிருவாணத்தையும் திறவாயாக; அவள்
உன் தாயானவள்; அவள் நிருவாணத்தைத் திற
௮ வாயாக.—உன் தகப்பனுடைய பெண்சாதியின்
நிருவாணத்தைத் திறவாயாக; அது உன் தகப்ப
௯ னுடைய நிருவாணம்.—உன் தகப்பனுக்கு, அல்
லது உன் தாய்க்குக் குமாரத்தியாகிய உன் சகோ
தரி, வீட்டிலே பிறந்திருந்தாலும் புறத்திலே பி
றந்திருந்தாலும் சரி, அவளுடைய நிருவாணத்
௰ தைத் திறவாயாக.—உன் குமாரனுடைய மக
ளின் நிருவாணத்தையாகிலும் உன் குமாரத்தியி
னுடைய மகளின் நிருவாணத்தையென்கிலும்
திறவாயாக; ஏனெனில் அது உன்னுடைய நிரு
௰௧ வாணம்.—உன் தகப்பனுக்கு அவன் பெண்சா
தியினிடத்திலே பிறந்த குமாரத்தியின் நிருவா
ணத்தைத் திறவாயாக; அவள் உனக்குச் சகோ
௰௨ தரி.—உன் தகப்பனுடைய சகோதரியின் நிரு
வாணத்தைத் திறவாயாக; அவள் உன் தகப்பனு
௰௩ டைய சதையானவள்.-உன் தாயினுடைய சகோ
தரியின் நிருவாணத்தைத் திறவாயாக; ஏனெ
௰௪ னில் அவள் உன் தாயின் சதையானவள்.-உன்
தகப்பனுடைய சகோதரன் நிருவாணத்தைத்
திறவாயாக; அவன் பெண்சாதியோடே சேரா
௰௫ யாக; அவள் உனக்குச் சிறியதாய். — உன் மரு
மகளின் நிருவாணத்தைத் திறவாயாக; அவள்
உன் குமாரனுக்குப் பெண்சாதி, அவளுடைய
௰௬ நிருவாணத்தைத் திறவாயாக. — உன் சகோதர
னுடைய பெண்சாதியின் நிருவாணத்தைத் திற
வாயாக; அது உன் சகோதரனுடைய நிருவா
௰௭ ணம். — ஒரு பெண்சாதியோடே கூட அவள்
மகளின் நிருவாணத்தையும் திறவாயாக; அவ
ளுடைய குமாரரின் மகளையும் அல்லது அவள்
குமாரத்தியின் மகளையும் இவளுடைய நிருவா
ணத்தைத் திறக்கும்படிக்கு விவாகம்பண்ணு
யாக; இப்படிக்கொத்தவர்கள் அவளுடைய சதை
௰௮ யானவர்கள்; அது தோஷம்.—பெண்சாதியண்
டையிலே உயிரோடே இருக்கையில், அவளுக்கு
உபத்திரவமாக, அவள் சகோதரியின் நிருவாணத்
தையும் திறக்கிறதற்கு இவளைக் கூட விவாகம்
பண்ணுயாக.
பெண்சாதி தன் விலக்கத்தில் இருக்கையில், ௰௯
அவளுடைய நிருவாணத்தைத் திறக்கும்படிக்கு
அவளோடே சேராயாக.—நீ உனக்கடுத்தவனு ௨௰
டைய பெண்சாதிக்கு உன் அநுபோகத்தைக்
கொடுக்கவும் அவளால் உன்னைத் தீட்டாக்கவும்
வேண்டாம்.—நீ உன் வித்தில் எதையாகிலும் ௨௧
தீயைக்கடக்கிறதற்கு மோளேகுக்குக் கொடுக்கி
றதினால், உன் பராபரனுடைய நாமத்தைப் பரி
சுத்தக்குலைச்சலாக்காயாக; நாம் கர்த்தர். —ஸ்தி ௨௨
ரியின் அநுபோகமாய் ஆணோடே சயனிக்கா
யாக; அது அருவருப்பானது.-யாதொரு மிருகத் ௨௩
தினிடத்தில் நீ உன் அநுபோகத்தைக் கொடுக்க
வும் அதினால் உன்னைத் தீட்டாக்கவும் வேண்
டாம்; ஸ்திரி மிருகத்தின் முன்னின்று, அதைத்
தன்மேல் ஏறப்பண்ணவும் வேண்டாம்; அது
அருவருப்பான தாறுமாறு.
இவைகளில் ஒன்றினாலும் உங்களைத் தீட்டாக் ௨௪
காதிருப்பீர்களாக; ஏனென்றால் நாம் உங்களுக்
குமுன்பாகத் துரத்துகிற சாதிகள் இவைகளால்
எல்லாம் தங்களைத் தீட்டாக்கினதினாலே தேசம்
தீட்டாயிற்று. — ஆனதுகொண்டு தேசம் தன் ௨௫
குடிகளைக் கக்கிப்போடத்தக்கதாக, அதிலுள்ள
அக்கிரமத்தை விசாரிக்கிறோம். — ஏனெனில் ௨௬
இந்த அருவருப்புகளை எல்லாம் உங்களுக்கு
முன்னிருந்த அந்தத் தேசத்தின் மனிதர் செய்த
தினாலே தேசம் தீட்டாயிற்று.—இப்பொழுதும் ௨௭
உங்களுக்குமுன்னிருந்த சாதிகளைத் தேசம் கக்
கிப்போட்டதுபோல, அது உங்களையும் நீங்கள்
அதைத் தீட்டாக்கும்பொழுது கக்கிப்போடாத
படிக்கு,—நீங்கள் நம்முடைய கட்டளைகளையும் ௨௮
நம்முடைய நியாயங்களையும் கைக்கொண்டு,
தேசத்திலே பிறந்தவனானாலும் சரி, உங்கள் நடு
வே தங்குகிற பரதேசியானாலும் சரி, இந்த அரு
வருப்புகளில் ஒன்றையும் செய்யாதிருப்பீர்க
ளாக.—ஏனென்றால் எவர்களாகிலும் இந்த எல் ௨௯
லா அருவருப்புகளிலும் யாதொன்றைச் செய்
தால், செய்த அந்த ஆத்துமாக்கள் தங்கள் சனத்
தில் இராதபடிக்கு அறுப்புண்பார்கள்.—ஆகை ௩௰
யால் உங்களுக்கு முன்நடந்த அருவருப்பான
முறைமைகளில் யாதொன்றின்படியே நீங்கள்
செய்து, அவைகளால் தீட்டாகாதபடிக்கு, நம்
முடைய கட்டளையைக் கைக்கொள்வீர்களாக;
நாம் உங்கள் பராபரனாகிய கர்த்தரென்று சொல்
லென்றார்.

## ௰௯. அதிகாரம்.

பலபல தேவ கட்டளைகள் மறுபடியும் சொல்லப்பட்டது.

பின்னையும் கர்த்தர் மோசேயோடே பேசிச் ௧
சொன்னதாவது: — நீ இஸ்ரவேல் புத்திரரின் ௨
சபை அனைத்தோடும் பேசிச் சொல்லவேண்டி
யதேதெனில், [2]பரிசுத்தவான்களாய் இருக்கக்

[1] எசே. ௨௰. ௰௧.

[2] ௧ பே. ௧. ௰௬.

கடவீர்கள்; ஏனெனில் உங்கள் பராபரனான
கர்த்தராகிய நாம் பரிசுத்தர்.
௩ நீங்கள் அவனவன் தன் தன் தாய்க்கும் தன்
தன் தகப்பனுக்கும் பயந்திருக்கவும் நம்முடைய
ஓய்வுநாள்களைக் கைக்கொள்ளவும் கடவீர்கள்;
நாம் உங்கள் பராபரனாகிய கர்த்தர்.
௪ விக்கிரகங்களை நோக்காமலும் வார்ப்பிக்கப்
பட்ட தேவர்களை உங்களுக்கு உண்டாக்காம
லும் இருப்பீர்களாக; நாம் உங்கள் பராபரனாகிய
கர்த்தர்.
௫ நீங்கள் சமாதானபலியைக் கர்த்தருக்குச் செ
லுத்தினால், அதை உங்கள் மனப்பூர்வத்தினாலே
௬ செலுத்துவீர்களாக.—நீங்கள் அதைச் செலுத்து
கிற அந்நாளிலும் மறுநாளிலும் அது புசிக்கப்ப
டவும் மூன்றாம் நாள்மட்டும் மீதியானது அக்
கினியாலே சுட்டெரிக்கப்படவும்கடவது. —
௭ மூன்றாம்நாளில் அதில் ஏதாகிலும் புசிக்கப்பட்
டால், ஒக்காளிப்பாயிருக்கும்; பிரியமாயிராது.-
௮ அப்படிப் புசிக்கிறவன் தன் அக்கிரமத்தைச்
சுமப்பான்; ஏனெனில் கர்த்தருக்குப் பரிசுத்த
மானதைப் பரிசுத்தக்குலைச்சலாக்கினான்; அந்த
ஆத்துமா தன் சனத்தாரில் இராதபடிக்கு அறுப்
புண்பான்.
௯ உங்கள் தேசத்தின் வெள்ளாண்மையை நீங்
கள் அறுக்கையில், உன் வயலின் ஓரத்திலிருக்
கிறதைத் தீர அறுக்காமலும், சிந்திக்கிடக்கிற
௰ கதிர்களைப் பொறுக்காமலும்,—உன் திராட்சத்
தோட்டத்திலே பின் அறுப்பை அறுக்காமலும்,
அதிலே சிந்திக்கிடக்கிற பழங்களைப் பொறுக்
காமலும், அவைகளை எளியவனுக்கும் பரதேசிக்
கும் விட்டுவிடுவாயாக, நாம் உங்கள் பராபரனா
கிய கர்த்தர்.
௰௧ களவுசெய்யாமலும் பொய்சொல்லாமலும் ஒ
௰௨ ருவர்க்கொருவர் கபடுபண்ணாமலும்,—நமது நா
மத்தைக்கொண்டு பொய்யாணை இடுகிறதினால்,
உங்கள் பராபரனுடைய நாமத்தைப் பரிசுத்தக்
குலைச்சலாக்காமலும் இருப்பீர்களாக; நாம் கர்த்
௰௩ தர்.—உனக்கடுத்தவனை ஒடுக்காமலும் கொள்ளை
யிடாமலுமிருப்பாயாக; கூலிக்காரனுடைய கூ
லி உன்னிடத்தில் விடியற்காலம்மட்டும் இராத்
தங்கவேண்டாம்.
௰௪ செவிடனைச் சபிக்காமலும், குருடன்முன்
பாகத் தடுக்கலை வைக்காமலும், உன் பராபரனுக்
குப் பயப்படுவாயாக; நாம் கர்த்தர்.
௰௫ நியாயத்திலே நியாயக்கேடு செய்யீர்களாக;
சிறியவனுடைய முகத்தைப் பாராமலும், பெரி
யவனுடைய முகத்தை எண்ணாமலும், உனக்க
டுத்தவனுக்கு நீதியாக நியாயம்தீர்ப்பாயாக.
௰௬ உன் சனத்தாருக்குள்ளே பின்புறணிக்கார
னாய்த் திரியாயாக; உனக்கடுத்தவனுடைய இரத்
தத்திற்கு விரோதமாய் நிற்காயாக; நாம் கர்த்தர்.
௰௭ உன் சகோதரனை உன் இருதயத்திலே பகை
யாயாக; உனக்கடுத்தவன்மேலே பாவத்தை இ
ருக்கவொட்டாமல், அவனைக் கடிந்துகொள்ளவே
௰௮ கொள்வாயாக. — சரிக்குச்சரிக்கட்டாமலும்,
உன் சனப்புத்திரர்மேலே கோபம்வைக்காமலும்,
உனக்கடுத்தவனை உன்னைப்போலச் சிநேகிப்பா
யாக; நாம் கர்த்தர்.
நம்முடைய கட்டளைகளைக் கைக்கொள்வீர்க ௰௯
ளாக; உன் மிருகசீவன்களை வேற்றுச்சாதியோ
டே கூட்டிவிடாயாக; உன் வயலில் வெவ்வே
றுவகை விதையை விதையாயாக; இருவகை
நூலுள்ள வஸ்திரம் உன்மேல் ஏறுதிருப்பதாக.
ஒருவனுக்கு அடிமையாயிருந்து, அவனால் இ ௨௰
கழ்ச்சியாக்கப்பட்டும், மீட்கப்படாமலும் தன்
இச்சையாய் விடப்படாமலும் போன பெண்
ணோடே ஒருவன் அநுபோகமாய்ச் சயனித்
தால், அவர்கள் சாவாமல் அடிக்கப்படவேண்
டும்; ஏனெனில் அவள் தன்னிச்சையானவ
ளல்ல.—அவன் தன் குற்றத்தைப்போக்கும்பலி ௨௧
யாக, கர்த்தருக்கு ஒரு ஆட்டுக்கடாவை ஆசரிப்
புக் கூடாரவாசலிலே கொண்டுவரக்கடவன்.—
அதினாலே ஆசாரியன் அவன் செய்த பாவத்தின் ௨௨
நிமித்தம் அவனுக்குக் கர்த்தருக்குமுன்பாகப் பா
வநிவிர்த்தியை உண்டாக்கக்கடவன்; அப்பொ
ழுது அவன் செய்த பாவம் அவனுக்கு மன்னிக்
கப்படும்.
நீங்கள் தேசத்திலே வந்து, புசிக்கும் கனிக ௨௩
ளைத் தருகிற பலவிதமரங்களை வைத்தால், அவை
களின் கனியைச் சுன்னத்துப்பண்ணிப்போடக்
கடவீர்கள்; மூன்று வருஷம் அது புசிக்கப்படா
மல், உங்களுக்குச் சுன்னத்தில்லாததாய் எண்
ணப்படுவதாக. — பிறகு நான்காம் வருஷத்தி ௨௪
லே அவைகளின் கனி எல்லாம் கர்த்தருக்குத்
துதிசெலுத்தப் பரிசுத்தமாயிருப்பதாக.—ஐந்தாம் ௨௫
வருஷத்திலோவென்றால், அவைகளின் கனி
யைப் புசிக்க, அவைகள் உங்களுக்குத் தங்கள்
பலனைக் கொடுத்துவரக்கடவது; நாம் உங்கள்
பராபரனாகிய கர்த்தர்.
இரத்தத்தோடிருக்கிறதைப் புசியீர்களாக; நி ௨௬
மித்தம்பாராமலும் நாள்களைப்பாராமலும் இருப்
பீர்களாக.—உங்கள் தலைமயிரைச் சுற்றிலும் ஒ ௨௭
துக்காமலும் தாடியின் ஓரங்களைக் கெடுக்காம
லும்,—செத்தவனுக்காக உங்கள் மாம்சத்தைக் ௨௮
கீறிக்கொள்ளாமலும் அடையாளமான எழுத்தை
உங்களிலே போடாமலும் இருப்பீர்களாக, நாம்
கர்த்தர்.
தேசம் வேசித்தனம்பண்ணித் தோஷத்தால் ௨௯
நிறையப்படாதபடிக்கு, உன் குமாரத்தியை வே
சித்தனம்பண்ண விடுகிறதினாலே பரிசுத்தக்கு
லைச்சலாக்காயாக.
நம்முடைய ஓய்வுநாள்களைக் கைக்கொண்டு, ௩௰
நம்முடைய பரிசுத்தஸ்தலத்திற்குப் பயப்படு
வீர்களாக; நாம் கர்த்தர்.—அஞ்சனம்பார்க்கிற ௩௧
வர்களையும் குறிகாரரையும் நோக்காதிருப்பீர்க
ளாக; அவர்களைத் தேடி, அவர்களாலே தீட்டுப்
படீர்களாக; நாம் உங்கள் பராபரனாகிய கர்த்தர்.
நரைத்தவனுக்குமுன்பாக எழுந்து, முதிர்வய ௩௨
துள்ளவன் முகத்தைக் கனம்பண்ணி, உன்
பராபரனுக்குப் பயப்படுவாயாக; நாம் கர்த்தர்.

௩௩ பரதேசி உங்கள் தேசத்தில் உன்னோடே தங்
கினால், அவனைச் சிறுமைப்படுத்தீர்களாக. —
௩௪ உங்களிடத்திலே தங்குகிற பரதேசி உங்களுக்
குத் தேசத்திலே பிறந்தவனைப்போல இருப்
பானாக; அவனை உன்னைப்போல சிநேகிப்
பாயாக; ஏனெனில் எகிப்துதேசத்திலே பர
தேசிகளாயிருந்தீர்கள்; நாம் உங்கள் பராபரனு
கிய கர்த்தர்.
௩௫ நியாயவிசாரணையிலும் அளவிலும் நிறுக்கிற
நிறையிலும் படியிலும் நியாயக்கேடுசெய்யீர்க
௩௬ ளாக. — சுமுத்திரையான தராசும், சுமுத்திரை
யான படிக்கட்டும், சுமுத்திரையான மரக்கா
லும், சுமுத்திரையான படியும் உங்களுக்கு இ
ருக்கக்கடவது; நாம் உங்களை எகிப்துதேசத்தி
லிருந்து புறப்படப்பண்ணின உங்கள் பராபர
௩௭ னாகிய கர்த்தர்.—ஆகையால் நம்முடைய எல்
லாக் கட்டளைகளையும் நம்முடைய எல்லா நியா
யங்களையும் கைக்கொண்டு, அவைகளின்படி
செய்யக்கடவீர்கள்; நாம் கர்த்தரென்று சொல்
லென்றார்.

## ௨௰. அதிகாரம்.

௧. மோளேகுக்குத் தன் வித்தைக் கொடுக்கிறவனையும், ௪. அவனுக்கு உதவிசெய்கிறவனையும், ௬. அஞ்சனக்காரர்களிடத்தில் போவதையும், ௭. பரிசுத்தமாகுதலையும், ௯. தாய்தந்தையைச் சபித்தவனையும், ௰. விபசாரத்தையும், ௰௧. ௰௪. ௰௭. ௰௯. முறைகெட்ட புணர்ச்சியையும், ௰௩. ஆண்புணர்ச்சியையும், ௰௫. மிருகத்தோடு புணர்தலையும், ௰௮. அசுத்தத்தையும் குறித்தது. ௨௨. பரிசுத்தத்தோடு நற்கிரியைகளைச் செய்யவேண்டியது. ௨௭. அஞ்சனக்காரர்கள் கொல்லப்படவேண்டியது.

௧ கர்த்தர் மோசேயோடே பேசிச் சொன்னதாவ
௨ து:—பின்னையும் நீ இஸ்ரவேல் புத்திரரோடே
சொல்லவேண்டியது என்னெனில், இஸ்ரவேல்
புத்திரரிலும் இஸ்ரவேலிலே தங்குகிற பரதேசி
களிலும் எவனாகிலும் தன் வித்திலே யாதொன்
றை மோளேகுக்குக் கொடுத்தால், கொலையுண்
ணவே கொலையுண்ணக்கடவன்; தேசத்தின்
௩ சனம் அவனைக் கல்லெறிவதாக. — நாம் அப்ப
டிக்கொத்தவனுக்கு விரோதமாக நமது முகத்
தைத் திருப்பி, அவன் நமது பரிசுத்தஸ்தலத்
தைத் தீட்டுப்படுத்தி, நமது பரிசுத்த நாமத்தைப்
பரிசுத்தக்குலைச்சலாக்கும்படிக்கு, தன் வித்தை
மோளேகுக்குக் கொடுத்தபடியினாலே, அவ
னைத் தன் சனத்தாரில் இராதபடிக்குச் சங்காரம்
௪ பண்ணுவோம். — அப்படிக்கொத்தவன் தன்
வித்திலே யாதொன்றை மோளேகுக்குக் கொடுக்
கும்போது, தேசத்தின் சனம் அவனைக் கொலை
செய்யாதபடிக்கு, தங்கள் கண்களை அவனை
௫ விட்டு மறைக்கவே மறைத்தால், — நாம் அந்த
மனிதனுக்கும் அவன் வம்சத்திற்கும் விரோதமா
க நம்முடைய முகத்தைத் திருப்பி, அவனையும்,
அவன் பிறகாலே மோளேகோடே விபசாரம்
பண்ண அவனைப் பின்தொடர்ந்து சோரம்
போன யாவனையும், தங்கள் சனத்திலிராதபடிக்
௬ குச் சங்காரம்பண்ணுவோம்.—[1]அஞ்சனம்பார்க்
கிறவர்களையும் குறிகாரரையும் பின்தொடர்ந்து
சோரம்போக, எந்த ஆத்துமா அவர்களைநோக்கி
இருக்கிறானோ, அந்த ஆத்துமாவுக்கு விரோத
மாகவும் நமது முகத்தைத் திருப்பி, அவனைத்
தன் சனத்திலிராதபடிக்குச் சங்காரம்பண்ணு
வோம்.—ஆனபடியினாலே உங்களைப் பரிசுத்த ௭
மாக்கிக்கொண்டு, பரிசுத்தவான்களாயிருங்கள்;
ஏனெனில் நாம் உங்கள் பராபரனாகிய கர்த்தர்.—
நம்முடைய கட்டளைகளைக் கைக்கொண்டு, அ ௮
வைகளின்படி செய்யுங்கள்; நாம் உங்களைப்
பரிசுத்தமாக்குகிற கர்த்தர்.
எவனாகிலும் தன் தகப்பனையும் தன் தாயை ௯
யும் சபித்தால், கொலையுண்ணவே கொலையுண்
ணக்கடவன்; தன் தகப்பனையும் தன் தாயை
யும் சபித்தான், அவன் இரத்தப்பழி அவன்மேல்
இருப்பதாக.
ஒருவனுடைய பெண்சாதியோடே எவனொ ௰
ருவனாகிலும் விபசாரம்பண்ணினால், அப்பொ
ழுது தனக்கடுத்தவன் பெண்சாதியோடே விப
சாரம்பண்ணின அந்த விபசாரனும் அந்த விப
சாரியும் கொலையுண்ணவே கொலையுண்ணக்
கடவர்கள்.
தன் தகப்பன் பெண்சாதியோடே சயனிக் ௰௧
கிறவன் தன் தகப்பன் நிருவாணத்தைத் திறந்
தான், இருவரும் கொலையுண்ணவே கொலையு
ண்ணக்கடவர்கள்; அவர்கள் இரத்தப்பழி அவர்
கள்மேல் இருப்பதாக.
ஒருவன் தன் மருமகளோடே சயனித்தால், ௰௨
இருவரும் கொலையுண்ணவே கொலையுண்ணக்
கடவர்கள்; தாறுமாறுபண்ணினார்கள்; அவர்கள்
இரத்தப்பழி அவர்கள்மேல் இருப்பதாக.
ஒருவன் ஸ்திரியின் அநுபோகமாக ஆணோ ௰௩
டே சயனித்தால், அருவருப்பான காரியம்செய்த
இருவரும் கொலையுண்ணவே கொலையுண்ணக்
கடவர்கள்; அவர்கள் இரத்தப்பழி அவர்கள்
மேல் இருப்பதாக.
ஒருவன் ஒரு பெண்சாதியையும் அவள் தா ௰௪
யையும் படைத்தால், அது தோஷம்; உங்கள்
நடுவே தோஷமிராதபடிக்கு, அவனையும் இவர்
களையும் அக்கினியாலே சுட்டெரிப்பார்களாக.—
ஒருவன் மிருகத்தினிடத்திலே தன் அநுபோ ௰௫
கத்தை விட்டால், கொலையுண்ணவே கொலை
யுண்ணக்கடவன்; அந்த மிருகத்தையும் கொல்
லக்கடவீர்கள். — ஒரு ஸ்திரி யாதொரு மிரு ௰௬
கத்தோடே அதைத் தன்மேல் ஏறப்பண்ணிச்
சேர்ந்தால், அந்த ஸ்திரியையும் அந்த மிருகத்
தையும் கொல்லக்கடவாய்; இருசீவனும் கொ
லையுண்ணவே கொலையுண்ணக்கடவது; அவை
களின் இரத்தப்பழி அவைகளின்மேல் இருப்
பதாக.
ஒருவன் தன் தகப்பனுக்கு அல்லது தன் ௰௭
தாய்க்குக் குமாரத்தியாகிய தன் சகோதரியைச்
சேர்த்துக்கொண்டு, அவன் இவள் நிருவாணத்
தையும் இவள் அவன் நிருவாணத்தையும் பார்த்
தால், அது பாதகம்; அவர்கள் தங்கள் சனப்புத்
திரரின் கண்களுக்குமுன்பாக அறுப்புண்ணக்

1 ௫ மோ. ௰௮. ௧௧.

கடவர்கள்; தன் சகோதரியின் நிருவாணத்தைத்
திறந்த அவன் தன் அக்கிரமத்தைச் சுமப்பான்.—
௰௮ ஒருவன் தூரஸ்திரியோடே சயனித்து, அவளு
டைய நிருவாணத்தையும் ஊற்றையும் திறந்து,
அவளும் தன் உதிரத்தின் ஊற்றைத் திறந்து
வைத்தால், இருவரும் தங்கள் சனத்தாரின் நடு
விலிராதபடிக்கு அறுப்புண்ணக்கடவர்கள்.
௰௯ உன் தாயினுடைய சகோதரியின் நிருவாணத்
தையும் உன் தகப்பனுடைய சகோதரியின் நிரு
வாணத்தையும் திறவாயாக, அப்படிக்கொத்த
வன் தன் சதையை அவமானமாக்கினான்; தங்
௨௰ கள் அக்கிரமத்தைச் சுமப்பார்கள்.-ஒருவன் தன்
சிற்றப்பன் பெண்சாதியோடே சயனித்தால்,
அவன் தன் சிற்றப்பன் நிருவாணத்தைத் திறந்
தான்; தங்கள் பாவத்தைச் சுமப்பார்கள், சந்தா
௨௧ னமில்லாமல் சாவார்களாக. — ஒருவன் தன்
சகோதரன் பெண்சாதியைப் படைத்தால், அது
அசுத்தம்; தன் சகோதரன் நிருவாணத்தைத் திறந்
தான், சந்தானம் அற்றிருப்பார்கள்.
௨௨ ஆகையால் நீங்கள் குடிஇருப்பதற்காக நாம்
உங்களைக் கொண்டுபோகிற தேசம் உங்களைக்
கக்கிப்போடாதபடிக்கு, நீங்கள் நம்முடைய
சகல கட்டளைகளையும் சகல நியாயங்களையும்
கைக்கொண்டு, அவைகளின்படி செய்யுங்
௨௩ கள்.— நாம் உங்களுக்குமுன்பாகத் துரத்திவிடு
கிற சாதியினுடைய வழிபாடுகளில் நடவா
திருங்கள்; ஏனெனில் அப்படிக்கொத்த காரி
யங்களையெல்லாம் செய்தார்கள்; ஆகையால்
௨௪ நாம் அவர்களை அரோசித்து,—நீங்கள் அவர்கள்
தேசத்தைச் சுதந்தரிப்பீர்களென்று உங்களோ
டே சொன்னோம்; பாலும் தேனும் ஓடிய அந்
தத் தேசத்தை உங்களுக்குச் சுதந்தரமாகவும்
கொடுப்போம்; நாம் உங்களைச் சனசதளங்களை
விட்டுப் பிரித்தெடுத்த உங்கள் பராபரனாகிய
கர்த்தர்.
௨௫ ஆகையால் சுத்தமான மிருகங்களுக்கும் தீட்
டான மிருகங்களுக்கும், தீட்டான பறவைகளு
க்கும் சுத்தமான பறவைகளுக்கும், நீங்கள் வித்
தியாசம்பண்ணி, நாம் உங்களுக்குத் தீட்டாக
எண்ணச்சொல்லி விலக்கின மிருகங்களாலும்
பறவைகளாலும் தரையோடே ஊருகிற யா
தொன்றாலும் உங்கள் ஆத்துமாக்களை அருவ
௨௬ ருப்பாக்காதிருப்பீர்களாக.— நமக்குப் பரிசுத்
தவான்களாய் இருப்பீர்களாக, ஏனெனில் கர்த்
தராகிய நாம் பரிசுத்தராயிருந்து, நீங்கள் நம்மு
டையவர்களாயிருக்கும்படிக்கு, உங்களைச் சன
சதளங்களைவிட்டுப் பிரித்தெடுத்தோம்.
௨௭ [1]அஞ்சனம் பார்க்கிற ஆவியுள்ள, அல்லது
குறிசொல்லுகிற மனிதனாகிலும் ஸ்திரியாகிலும்
கொலையுண்ணவே கொலையுண்ணக்கடவர்கள்;
அவர்களைக் கல்லெறிவார்களாக; அவர்கள் இ
ரத்தப்பழி அவர்கள்மேல் இருக்கக்கடவதென்
று சொல்லென்றார்.

## ௨௧. அதிகாரம்.

*௧. ஆசாரியர்கள் இழவுக்குத் தயாடைவதையும், ௬. அவர்கள் பரிசுத்தமாயிருப்பதையும், ௮. அவர்களின் கனத்தையும், ௰௩. அவர்களின் விவாகங்களையும் குறித்தது. ௰௭. அங்கவீனர் தேவசந்நிதானத்திலே ஊழியம் செய்வதை விலக்கியது.*

பிற்பாடு கர்த்தர் மோசேயோடே சொன்னதா ௧
வது: ஆரோனின் குமாரராகிய ஆசாரியர்களில்
ஒருவனும் தன் சனத்தாரில் செத்துப்போன
ஒருவராலே தன்னைத் தீட்டுப்படுத்தவேண்
டாமென்று அவர்களோடே சொல். — தன்னு ௨
டைய கிட்டின சதையாகிய தன் தாயினா
லும், தன் தகப்பனாலும், தன் குமாரனாலும்,
தன் குமாரத்தியாலும், தன் சகோதரனாலும்,—
புருஷனுக்கு வாழ்க்கைப்படாமல் தன் கிட்ட ௩
இருந்த கன்னியாஸ்திரியான தன் சகோதரியா
லுமே ஒழிய,—வேறொருவராலும் தன் சனத் ௪
தாரிலே பெரியவனாகிய அவன் தன்னைப்
பரிசுத்தக் குலைச்சலாக்கி, தீட்டுப்படுத்தவேண்
டாம்.—அவர்கள் தங்கள் தலையை மொட்டை ௫
யிடாமலும் தங்கள் தாடியின் ஓரங்களைச் சிரைத்
துப்போடாமலும் தங்கள் மாம்சத்தைக் கீறிக்
கொள்ளாமலும் இருப்பார்களாக.—தங்கள் பரா ௬
பரனுடைய நாமத்தைப் பரிசுத்தக்குலைச்சல்
ஆக்காமல், அவருக்குப் பரிசுத்தராயிருப்பார்
களாக; ஏனெனில் கர்த்தரின் தகனங்களெ
ன்ற தங்கள் பராபரனுடைய அப்பத்தை அவர்
கள் செலுத்தி, பரிசுத்தமாயிருக்கிறார்கள். —
சோரஸ்திரியையும் பரிசுத்தம் குலைந்தவளையும் ௭
விவாகம்பண்ணார்களாக; தன் புருஷனாலே தள்
ளப்பட்ட பெண்சாதியையும், விவாகம்பண்
ணார்களாக; ஏனெனில் அவன் தன் பராபர
னுக்குப் பரிசுத்தமானவன்.—அவனைப் பரிசுத் ௮
தனென்று எண்ணுவாயாக; ஏனெனில், உன்
பராபரனுடைய அப்பத்தைச் செலுத்துகிறான்;
உனக்குப் பரிசுத்தனாயிருப்பானாக; ஏனெனில்
உங்களைப் பரிசுத்தமாக்குகிற கர்த்தராகிய நாம்
பரிசுத்தர்.—ஆசாரியனுடைய குமாரத்தி வே ௯
சித்தனம்பண்ணத்துவக்கினால், அவள் தன் தகப்
பனைப் பரிசுத்தக்குலைதலாக்குகிறாள்; அக்கினி
யாலே சுட்டெரிக்கப்படக்கடவள்.
சிரசில் அபிஷேகத்தெண்ணெய் வார்க்கப் ௰
பட்டவனும் வஸ்திரங்களைத் தரிக்கக் கைநிரப்ப
ப்பட்டவனுமாகிய தன் சகோதரரிலிருக்கிற பிர
தான ஆசாரியனேயெனில், தன் தலையைத் திற
வாமலும், தன் வஸ்திரங்களைக் கிழித்துக்கொள்
ளாமலும்,—செத்த எந்தச் சவத்தண்டையிலும் ௰௧
வராமலும்,தன் தகப்பனாலும் தன் தாயாலும் தன்
னைத் தீட்டுப்படுத்தாமலும்,—பரிசுத்தஸ்தலத்தி ௰௨
லிருந்து புறப்படாமலும், தன் பராபரனுடைய
பரிசுத்தஸ்தலத்தைப் பரிசுத்தக்குலைச்சலாக்கா
மலும் இருப்பானாக, ஏனெனில் அவனுடைய
பராபரனின் அபிஷேகத்தெண்ணெய் என்ற
கிரீடம்அவன்மேல் இருக்கிறது; நாம் கர்த்தர்.—
கன்னியாஸ்திரியாகிய பெண்ணை அவன் விவா ௰௩

[1] ௨ மோ. ௨௨. ௰௮.

௰௪ கம்பண்ணுவானாக.— அவன் கைம்பெண்சாதி
யையானாலும் தள்ளப்பட்டவளையானாலும் பரி
சுத்தம் குலைந்தவளையானாலும் வேசியையானா
லும் விவாகம்பண்ணாமல், தன் சனத்தாரிலுள்ள
ஒரு கன்னியாஸ்திரியை விவாகம்பண்ணி,—
௰௫ தன்னுடைய வித்தைத் தன் சனத்தாருக்குள்ளே
பரிசுத்தக்குலைச்சலாக்காதிருப்பானாக; ஏனெ
னில் நாம் அவனைப் பரிசுத்தமாக்குகிற கர்த்த
ரென்று சொல்லென்றார்.
௰௬ பின்னையும் கர்த்தர் மோசேயோடே பேசிச்
௰௭ சொன்னது:—நீ ஆரோனோடே பேசவேண்டிய
தேதெனில் உன் வித்தாராகிய உன் தலைமுறை
யாரில் அங்கவீனமுள்ளவன் தன் பராபரனு
டைய அப்பத்தைச் செலுத்தச் சேரலாகாது.—
௰௮ அங்கவீனமுள்ள ஒருவனும் சேரவேண்டாம்;
குருடனானாலும், சப்பாணியானாலும், குறைந்த
௰௯ அல்லது நீண்ட அவயவமுள்ளவனானாலும்,—கா
லொடிந்தவனானாலும், கை ஒடிந்தவனானாலும்,—
௨௰ கூனனானாலும், நேர்ந்த உடம்பினனானாலும், பூப்
பட்ட கண்ணனானாலும், சொறியனானாலும், படு
வனுள்ளவனானாலும், விதை நசுங்கினவனானா
௨௧ லும்சரி,—ஆசாரியனாகிய ஆரோனின் வித்தாரில்
அங்கவீனமுள்ள ஒருவனும் கர்த்தரின் தகனங்க
ளைச் செலுத்தச் சேரவேண்டாம்; அங்கவீனம் அ
வனிலிருக்கையால், அவன் தன் பராபரனுடைய
௨௨ அப்பத்தைச் செலுத்தச் சேரலாகாது.— தன்
பராபரனுடைய அப்பமாகிய பரிசுத்தத்திற்குப்
பரிசுத்தமானவைகளிலும் பரிசுத்தமானவைகளி
௨௩ லும் அவன் புசிக்கலாம்.— ஆனால் திரையண்
டைவாராமலும் பீடத்தண்டையில் சேராமலும்
இருப்பானாக; ஏனெனில் அங்கவீனம் அவனி
லிருக்கின்றது; நம்முடைய பரிசுத்தஸ்தலத்தை
அவன் பரிசுத்தக் குலைச்சலாக்கவேண்டாம்;
ஏனெனில் நாம் அவர்களைப் பரிசுத்தம்பண்ணு
கிற கர்த்தரென்று சொல்லென்றார்.
௨௪ மோசே இவைகளை ஆரோனோடும் அவன் கு
மாரரோடும் இஸ்ரவேல் புத்திரர் அனைவரோடும்
சொன்னான்.

## ௨௨. அதிகாரம்.

௧. ஆசாரியர் அசுத்தப்பட்டிருக்கையில், பரிசுத்தவஸ்துக்களைத் தொடுவதை விலக்கவேண்டியது. ௧. அவர்களின் சுத்திகரிப்பைக் குறித்தது. ௰. ஆசாரியர்கள் பரிசுத்த பதார்த்தங்களை யார் புசிக்கத்தக்கவர்கள். ௰௭. பலிகள் பழுதற்றவைகளாய் இருக்கவேண்டியது. ௨௧. பலிகளின் வயது. ௨௯. ஸ்தோத்திரப்பலியைப் புசித்தலின் கட்டளை.

௧ பின்னையும் கர்த்தர் மோசேயோடே பேசிச்
௨ சொன்னதாவது:—இஸ்ரவேல் புத்திரர் நமக்கு
நியமித்துச் செலுத்துகிற பரிசுத்தவஸ்துக்களால்
ஆரோனும் அவன் குமாரரும் நம்முடைய பரி
சுத்த நாமத்தைப் பரிசுத்தக்குலைச்சலாக்காதப
டிக்கு, எச்சரிக்கையோடே இருக்கவேண்டும்
௩ என்று அவர்களோடே சொல்; நாம் கர்த்தர்.—நீ
அவர்களோடே சொல்லவேண்டியதேதெனில்,
உங்கள் தலைமுறைகளிலுள்ள உங்கள் எல்லா
வித்தாரிலும் எவனாகிலும் தன்மேலே தீட்டிருக்
கும்போது, இஸ்ரவேல் புத்திரர் கர்த்தருக்கு நிய
மித்துச் செலுத்துகிற பரிசுத்தவஸ்துக்களண்டை
யில் சேர்ந்தால், அந்த ஆத்துமா நமக்குமுன்பாக
இராதபடிக்கு அறுப்புண்பான்; நாம் கர்த்தர்.—
ஆரோனின் வித்தாரில் எவன் குஷ்டரோகியோ, ௪
எவன் பிரமியக்காரனோ, அவன் சுத்தமாகும்மட்
டும் பரிசுத்தவஸ்துக்களிலே புசிக்கவேண்டாம்;
செத்த உடலாலே தீட்டானதெதையாகிலும்
தொட்டவனும், அல்லது இந்திரியம் கழிந்தவ
னும், — அல்லது தீட்டுப்படுத்துகிற யாதொரு ௫
ஊர்வதையாகிலும் எந்தத் தீட்டுமுள்ள மனித
னையாகிலும் தொட்டவனும், அப்படித்தானே.—
அப்படித் தொட்டவன் சாயங்காலம்மட்டும் தீட் ௬
டுப்பட்டிருப்பான்; அவன் பரிசுத்தவஸ்துக்க
ளிலே புசியாமல், தன் மாம்சத்தைத் தண்ணீரி
னால் கழுவக்கடவன். — சூரியன் அஸ்தமித்த ௭
பிற்பாடு சுத்தமாயிருப்பான்; பிறகு அவன் பரி
சுத்தவஸ்துக்களிலே புசிக்கலாம்; ஏனெனில்
அது அவனுடைய அப்பம்.—தானாய்ச் செத்ததை ௮
யும் பீறுண்டதையும் அவன் புசிக்கிறதினாலே
தீட்டுப்படவேண்டாம்; நாம் கர்த்தர்.—ஆகையால் ௯
பரிசுத்தமானதை அவர்கள் பரிசுத்தக்குலைச்ச
லாக்குகிறதினாலே, தங்கள்மேலே பாவம் சுமத்
திச் சாவாதபடிக்கு, நம்முடைய காவலைக் காக்
கக்கடவர்கள்; நாம் அவர்களைப் பரிசுத்தமாக்கு
கிற கர்த்தர்.
அந்நியன் ஒருவனும் பரிசுத்தவஸ்துக்களிலே ௰
புசிக்கவேண்டாம்; ஆசாரியன் வீட்டில் விடுதியா
யிருக்கிறவனும் கூலிவேலைசெய்கிறவனும் பரி
சுத்தவஸ்துவிலே புசிக்கவேண்டாம். — ஆசாரி ௰௧
யன் தன் பணத்தினாலே கொண்டவனும் அவன்
வீட்டிலே பிறந்தவனுமோவெனில், அவனுடை
ய அப்பமாகிய அதிலே புசிப்பார்களாக.—ஆசா ௰௨
ரியனுடைய குமாரத்தி பிறனுக்கு வாழ்க்கைப்
பட்டால், பரிசுத்தவஸ்துக்களின் படைப்பிலே
புசிக்கவேண்டாம். — கைம்பெண்சாதியாய்ப் ௰௩
போன, அல்லது தள்ளப்பட்டவளான ஆசாரிய
னுடைய குமாரத்தி வித்தில்லாதிருந்து, தன் தகப்
பன் வீட்டிலே தன்னுடைய இளவயதிலிருந்தது
போல, திரும்பிவந்து இருந்தாளேயாகில், தன்
தகப்பன் அப்பத்திலே புசிப்பாளாக; ஆனால் அந்
நியனாகிய ஒருவனும் அதிலே புசிக்கவேண்
டாம்.—ஒருவன் அறியாமல் பரிசுத்தவஸ்துவிலே ௰௪
புசித்ததுண்டானால், அவன் அதிலே ஐந்தில் ஒரு
பங்கை அதிகமாகக் கூட்டி, பரிசுத்தவஸ்துவோ
டும்கூட ஆசாரியனுக்குக் கொடுக்கக்கடவன்.—
அவர்கள் கர்த்தருக்கு ஏறெடுக்கிற இஸ்ரவேல் ௰௫
புத்திரரின் பரிசுத்தவஸ்துக்களைப் பரிசுத்தக்கு
லைச்சலாக்காமலும், — அவைகளைப் புசிக்கிறதி ௰௬
லே அவர்கள்மேலே குற்றமான அக்கிரமத்தைச்
சுமரப்பண்ணாமலும் இருப்பார்களாக; ஏனெ
னில் நாம் அவர்களைப் பரிசுத்தமாக்குகிற கர்த்த
ரென்று சொல்லென்றார்.
பின்னையும் கர்த்தர் மோசேயோடே பேசிச் ௰௭
சொன்னதாவது:—நீ ஆரோனோடும் அவன் குமார ௰௮
ரோடும் இஸ்ரவேல் புத்திரர் அனைவரோடும் பே
சிச் சொல்லவேண்டியதேதெனில், இஸ்ரவேல்

வீட்டாரிலும் இஸ்ரவேலிலே தங்குகிற பரதே
சிகளிலும் எவர்கள் தங்களுடைய சகல பொருத்
தனைகளின்படியாகிலும் உற்சாகத்தின்படியாகி
லும் சர்வாங்கதகனமாகக் கர்த்தருக்குத் தங்கள்
காணிக்கையைச் செலுத்தப்போகிறார்களோ.—
௰௯ அவர்கள் தங்கள் மனதின்படியே மாடுகளிலாகி
லும் ஆடுகளிலாகிலும் வெள்ளாடுகளிலாகிலும்
பழுதற்ற ஒரு ஆண்சீவனைப் பிடித்துவந்து செ
௨௰ லுத்துவார்களாக.—பழுதுள்ள ஒன்றையும் செ
லுத்தீர்களாக; ஏனெனில் அது உங்களுக்காகக்
௨௧ கர்த்தருக்குப் பிரியமாய் இருப்பதில்லை. — ஒரு
வன் விசேஷித்த பொருத்தனைக்காக, அல்லது
உற்சாக மனதாக, கர்த்தருக்கு மாடுகளிலாகிலும்
ஆடுகளிலாகிலும் சமாதானபலியைச் செலுத்தப்
போனால், அது பிரியமாய் இருக்கும்படிக்கு ஒரு
௨௨ பழுதுமில்லாத உத்தமமாயிருக்கவேண்டும்.—கு
ருடு, நெரிசல், ஊனம், கழிச்சல், சொறி, புண்
ணுள்ளது முதலானவைகளை நீங்கள் கர்த்தருக்
குச் செலுத்தாமலும், அவைகளாலே கர்த்தருக்
குப் பலிபீடத்தின்மேலே தகனபலியை ஏற்றாம
௨௩ லும் இருப்பீர்களாக.—நீண்ட, அல்லது குறைந்த
அவயவமுள்ள மாட்டையும் ஆட்டையும் நீ உற்
சாகபலியாக்கலாம்; ஆனால் பொருத்தனைக்காக
௨௪ அது பிரியமாயிருப்பதில்லை.—நசுங்கினதையும்
நொறுங்கினதையும் காயம்பட்டதையும் விதை
அறுக்கப்பட்டதையும் நீங்கள் கர்த்தருக்குச் செ
லுத்தாமலும் உங்கள் தேசத்திலே பலியிடாமலும்
௨௫ இருப்பீர்களாக.—அந்நிய புத்திரன் கையிலும்
இப்படிக்கொத்ததை வாங்கி, உங்கள் பராபரனு
டைய அப்பமாகச் செலுத்தீர்களாக; ஏனெனில்
அவைகளின் கேடும் பழுதும் அவைகளில் இருக்
கின்றன; அவைகள் உங்களுக்காகப் பிரியமா
யிருப்பதில்லை என்று சொல்லென்றார்.
௨௬ பின்னையும் கர்த்தர் மோசேயோடே பேசிச்
௨௭ சொன்னதாவது:—ஒரு கன்று, அல்லது ஆட்டுக்
குட்டி, அல்லது வெள்ளாட்டுக்குட்டி பிறந்தால்
அது ஏழுநாள் தன் தாயின்கீழ் இருக்கக்கடவது;
எட்டாம்நாள் முதல்கொண்டு, அது கர்த்தருக்
குத் தகனகாணிக்கையாகச் செலுத்தப்படப் பிரி
௨௮ யமாயிருக்கும்.— மாட்டையும் அதின் கன்றை
யும், அல்லது ஆட்டையும் அதின் குட்டியையும்,
ஒரே நாளிலே குரல்வளை அறுக்கீர்களாக.
௨௯ ஸ்தோத்திரப்பலியைக் கர்த்தருக்குச் செலுத்
தினீர்களானால், உங்கள் மனப்பூர்வத்தால் அதைச்
௩௰ செலுத்துவீர்களாக. — அந்நாளிலேதானே அது
புசிக்கப்படுவதாக; விடியற்காலம்மட்டும் நீங்கள்
அதில் ஒன்றும் மீதியாக வைக்கவேண்டாம்;
நாம் கர்த்தர்.
௩௧ நம்முடைய கற்பனைகளைக் கைக்கொண்டு,
அவைகளின்படி செய்யக்கடவீர்கள்; நாம் கர்த்
௩௨ தர்.—நாம் இஸ்ரவேல் புத்திரர் நடுவே பரிசுத்த
மாக்கப்பட, நம்முடைய பரிசுத்தநாமத்தைப்
பரிசுத்தக்குலைச்சலாக்காதிருப்பீர்களாக; நாம்
௩௩ உங்களைப் பரிசுத்தமாக்குகிற கர்த்தர்.—நாம் உங்
களுக்குப் பராபரனாயிருப்பதற்காக, உங்களை
எகிப்துதேசத்திலிருந்து புறப்படப்பண்ணின
வர்; நாம் கர்த்தரென்று சொல்லென்றார்.

## உ௩. அதிகாரம்.

௧. கர்த்தரின் பண்டிகைகள். ௩. ஓய்வுநாள். ௪. பஸ்காப்பண்டிகை. ௯. முதல் விளைச்சலின் கதிர்க்கட்டு. ௰௫. ஐம்பதாம் நாளின் பண்டிகை. ௨௨. சிந்திய கதிர்களை ஏழைகளுக்கு விடுகை. ௨௩. எக்காளத்தின் பண்டிகை. ௨௬. பாவநிவிர்த்தியின் நாள். ௩௰. கூடாரத்தின் பண்டிகை.

பின்னையும் கர்த்தர் மோசேயோடே பேசிச் ௧
சொன்னதாவது: — இஸ்ரவேல் புத்திரரோடே ௨
பேசிச் சொல்லவேண்டியதேதெனில், சபை
கூடிவந்து, பரிசுத்தநாள்களாக ஆசரிக்கும்படிக்
கு, நீங்கள் கூறவேண்டிய கர்த்தருடைய பண்
டிகை நாள்களாவது.—ஆறுநாள் வேலைசெய்யப் ௩
படுவதாக; ஏழாம்நாளோவெனில், சபைகூடும்
பரிசுத்த ஓய்வுநாள், அதில் ஒரு வேலையையும்
செய்யீர்களாக; அது உங்கள் வாசஸ்தலங்களில்
எல்லாம் கர்த்தருக்கென்று ஓய்ந்திருக்கும் நாளா
யிருப்பதாக.
சபைகூடிவந்து, பரிசுத்தமாய் ஆசரிக்கும் ௪
படிக்கு, நீங்கள் திட்டமான காலத்திலே கூற
வேண்டிய கர்த்தரின் பண்டிகைகள் எவைக
ளெனில், — [1]முதலாம்மாதம் பதினான்காம்தேதி
தி அந்திநேரமாகிறவேளையிலே கர்த்தருக்குப்
பஸ்காவும், — அந்த மாதம் பதினைந்தாம்தேதியி ௬
லே, கர்த்தருக்குப் புளிப்பில்லாத அப்பங்க
ளின் பண்டிகையுமாயிருக்கும்; ஏழுநாள் புளிப்
பில்லாத அப்பங்களைப் புசிப்பீர்களாக. — முத ௭
லாம் நாள் உங்களுக்குச் சபைகூடும் பரிசுத்த
நாள்; அதிலே யாதொரு பணிவிடை வேலை
யைச் செய்யீர்களாக. — ஏழுநாளும் கர்த்தருக் ௮
குத் தகனம்செலுத்தக்கடவீர்கள்; ஏழாம்நாள்
சபைகூடும் பரிசுத்தநாள்; அதில் யாதொரு
பணிவிடை வேலையையும் செய்யீர்களாக என்
று சொல்லென்றார்.
பின்னையும் கர்த்தர் மோசேயோடே பேசிச் ௯
சொன்னதாவது:—நீ இஸ்ரவேல் புத்திரரோடே ௰
பேசிச் சொல்லவேண்டியதேதெனில், நாம் உங்
களுக்குக் கொடுக்கும் தேசத்தில் நீங்கள் வந்து,
அதின் வெள்ளாண்மையை அறுக்கும்பொழுது,
உங்கள் அறுப்பின் முதல்பலனாகிய ஒரு கதிர்க்
கட்டை ஆசாரியன் அண்டையில் கொண்டுவரக்
கடவீர்கள் —உங்கள்மேலே பிரியம் உண்டாக, ௰௧
ஆசாரியன் அந்தக் கதிர்க்கட்டை ஓய்வுநாளுக்
குப் பின்னான மறுநாளிலே கர்த்தருக்குமுன்
பாக அசைவாட்டுவானாக.—நீங்கள் அதை அசை ௰௨
வாட்டுகிற அந்நாளிலே, கர்த்தருக்குச் சர்வாங்க
தகனபலியாக, ஒருவயதான பழுதற்ற ஒரு ஆட்
டுக்குட்டியையும்,—கர்த்தருக்கு ஆற்றுகிற வாசு ௰௩
னையான தகனமாக, ஒரு மரக்காலிலே பத்தில்
இரண்டு பங்கானதும், எண்ணெயிலே பிசைந்
ததுமான மெல்லிய மாவாகிய அதின் காணிக்
கையையும், திராட்சப்பழ இரசத்திலே கால்ப
டியாகிய அதின் ஊற்றுதலையும், செலுத்தக்கட

[1] உ மோ. ௧௨. ௰௮.

௰௪ வீர்கள்.—உங்கள் பராபரனுடைய காணிக்கை
யை நீங்கள் கொண்டுவரும் அந்நாள்மட்டும்,
அப்பமும் சுட்டகதிரும் பச்சைக்கதிரும் புசியீர்
களாக, இது உங்கள் வாசஸ்தலங்களிலெல்லாம்
உங்கள் தலைமுறைகளுக்குச் செல்லும் நித்திய
கட்டளை.

௰௫ நீங்கள் அசைவாட்டும் கதிர்க்கட்டைக் கொ
ண்டுவந்த ஓய்வுநாளுக்குப் பின்னான அந்த மறு
நாள்முதல்கொண்டு எண்ணத்துவக்கி, ஏழுவா
௰௬ ரங்களைச் சரியாகப் போகவிட்டு,-ஏழாம் ஓய்வு
நாளுக்குப் பின்னான மறுநாளாகிய ஐம்பதாம்
நாள்மட்டும் எண்ணி, கர்த்தருக்குப் புதுக்கா
௰௭ ணிக்கையைச் செலுத்தக்கடவீர்கள். — நீங்கள்
ஒரு மரக்காலிலே பத்தில் இரண்டுபங்காகிய
மெல்லியமாவிலே புளிப்பாகச் சுட்ட அசை
வாட்டும் காணிக்கையாயிருக்கிற இரண்டு அப்
பங்களை உங்கள் வாசஸ்தலங்களிலிருந்து கர்த்த
௰௮ ருக்கு முதல்பலனாகக் கொண்டுவந்து, — அப்
பத்தோடேகூடக் கர்த்தருக்குச் சர்வாங்கதகன
பலியாக, ஒரு வயதான பழுதற்ற ஏழு ஆட்டுக்
குட்டிகளையும், ஒரு காளை எருதையும், இரண்டு
ஆட்டுக்கடாக்களையும், கர்த்தருக்கு ஆற்றுகிற வா
சனையான தகனமாக அவைகளுக்கு அடுத்த கா
ணிக்கையையும் ஊற்றுதல்களையும் செலுத்தி,—
௰௯ வெள்ளாடுகளில் ஒரு கடாவைப் பாவம்போக்
கும்பலியும், ஒரு வயதான இரண்டு ஆட்டுக்குட்
டிகளைச் சமாதானபலியுமாக்கக்கடவீர்கள். —
௨௰ அவைகளை ஆசாரியன் முதல்பலனாகிய அப்பத்
தோடும் இரண்டு ஆட்டுக்குட்டிகளோடுங்கூட,
கர்த்தருக்குமுன்பாக அசைவாட்டக்கடவன்;
கர்த்தருக்குப் பரிசுத்தமாகிய அவைகள் ஆசாரிய
௨௧ னுடையவைகளாம்.—அந்த நாள்தானே உங்க
ளுக்குச் சபைகூடும் பரிசுத்தநாளென்று கூறக்
கடவீர்கள்; யாதொரு பணிவிடை வேலையை
அதிலே செய்யீர்களாக; இது உங்கள் வாசஸ்த
லங்களிலெல்லாம் உங்கள் தலைமுறைகளுக்குச்
செல்லும் நித்தியகட்டளை.

௨௨ [1]உங்கள் தேசத்தின் வெள்ளாண்மையை நீங்
கள் அறுக்கையில், உன் வயலின் ஓரத்தில் இ
ருக்கிறதைத் தீரஅறுக்காமலும், சிந்திக்கிடக்கிற
கதிர்களைப் பொறுக்காமலும், எளியவனுக்கும்
பரதேசிக்கும் அவைகளை விட்டுவிடுவாயாக;
நாம் உங்கள் பராபரனாகிய கர்த்தரென்று சொல்
லென்றார்.

௨௩ பின்னையும் கர்த்தர் மோசேயோடே பேசிச்
௨௪ சொன்னதாவது:—நீ இஸ்ரவேல் புத்திரரோடே
பேசிச் சொல்லவேண்டியதேதெனில், உங்க
ளுக்கு ஏழாம்மாதம் முதலாம்தேதி கெம்பீரப் பிர
ஸ்தாபத்தின் பண்டிகை என்ற சபைகூடும் பரி
௨௫ சுத்த ஓய்வுநாளாய் இருப்பதாக.—அதிலே யா
தொரு பணிவிடைவேலையைச் செய்யாமல்,
கர்த்தருக்குத் தகனம் செலுத்துவீர்களாக என்று
சொல்லென்றார்.

பின்னையும் கர்த்தர் மோசேயோடே பேசிச் ௨௬
சொன்னதாவது:-அந்த ஏழாம்மாதம் பத்தாம் தே ௨௭
தியோவென்றால், உங்களுக்குப் பாவநிவிர்த்தி
ஆகுதலின் நாளும் சபைகூடும் பரிசுத்தநாளு
மாயிருக்கும்; அப்பொழுது நீங்கள் உங்கள்
ஆத்துமாக்களைத் தாழ்மைப்படுத்தி, கர்த்தருக்
குத் தகனஞ்செலுத்தக்கடவீர்கள். — ஆகையால் ௨௮
அந்நாளிலே யாதொரு வேலையையும் செய்
யீர்களாக; ஏனெனில் அது உங்கள் பராபரனா
கிய கர்த்தரின் சந்நிதியில் உங்களுக்காகப் பாவ
நிவிர்த்திசெய்யப்படும் நாளாயிருக்கின்றது. —
அந்நாளிலே தன்னைத் தாழ்மைப்படுத்தாத எந்த ௨௯
ஆத்துமாவும் தன் சனத்தாரிலிராதபடிக்கு அறுப்
புண்பான். — அந்நாளிலே யாதொரு ஆத்துமா ௩௰
யாதொரு வேலையைச் செய்தால், அந்த ஆத்து
மாவை அவன் சனத்தின் நடுவிலே வைக்காமல்
அழிப்போம்.—நீங்கள் எந்த வேலையும் செய் ௩௧
யாதிருப்பது, உங்கள் வாசஸ்தலங்களிலெல்
லாம் உங்கள் தலைமுறைகளுக்குச் செல்லும் நித்
தியகட்டளை. — அது உங்களுக்கு ஓய்வுக்கு ௩௨
ஓய்வுநாள்; அதிலே உங்கள் ஆத்துமாக்களைத்
தாழ்மைப்படுத்தக்கடவீர்கள்; அந்த மாதத்தின்
ஒன்பதாம்தேதி சாயங்காலம் துவக்கி, மறுசாயங்
காலம்மட்டும், உங்கள் ஓய்வை ஆசரிக்கக்கட
வீர்கள் என்றார்.

பின்னையும் கர்த்தர் மோசேயோடே பேசிச் ௩௩
சொன்னதாவது:-நீ இஸ்ரவேல் புத்திரரோடே ௩௪
பேசிச் சொல்லவேண்டியதேதெனில், அந்த
ஏழாம்மாதம் பதினைந்தாம்தேதி கர்த்தருக்கு ஏழு
நாளாக ஆசரிக்கும் கூடாரப்பண்டிகை.—முத ௩௫
லாம்நாள் சபைகூடும் பரிசுத்தநாள்; யாதொரு
பணிவிடைவேலையும் செய்யீர்களாக. — ஏழு ௩௬
நாளும் கர்த்தருக்குத் தகனஞ்செலுத்தக்கடவீர்
கள்; எட்டாம் நாளும் உங்களுக்குச் சபைகூ
டும் பரிசுத்தநாள்; அதிலே கர்த்தருக்குத் தக
னம் செலுத்தக்கடவீர்கள்; அது ஆசரிக்கப்ப
டும்நாள்; அதிலே யாதொரு பணிவிடைவேலை
யைச் செய்யாதிருப்பீர்களாக. — நீங்கள் கர்த் ௩௭
தருடைய ஓய்வுநாள்களிலே செலுத்துவதல்லா
மலும், நீங்கள் கர்த்தருக்குப் படைக்கிற உங்
கள் எல்லாக் காணிக்கைகளும் பொருத்தனைக
ளும் உற்சாகப்பலிகளும் அல்லாமலும்,—நீங் ௩௮
கள் அந்தந்த நாளுக்குத்தக்கபடி, கர்த்தருக்குச்
சர்வாங்கதகனம், காணிக்கை, பலி, ஊற்றுதல்,
முதலான தகனங்களைச் செலுத்தும்படிக்குச்
சபைகூடிவந்து, பரிசுத்தமாய் ஆசரிப்பதற்காக,
நீங்கள் கூறவேண்டிய கர்த்தருடைய பண்டிகை
கள் இவைகள்தானே. — நிலத்தின் பலனை நீங் ௩௯
கள் சேர்த்திருக்கும் ஏழாம்மாதம் பதினைந்தாம்
தேதியிலோவென்றால், கர்த்தருடைய பண்டி
கையை ஏழுநாளாக ஆசரிக்கக்கடவீர்கள்; முத
லாம்நாளிலும் ஓய்வு; எட்டாம் நாளிலும் ஓய்
வு.—முதலாம்நாளிலே, அலங்கார விருட்சங் ௪௰
களின் கனிகளையும் பேரீச்சமட்டை ஓலைகளை

1 ௯ மோ. ௰௯. ௯.

யும் தழைந்திருக்கிற விருட்சங்களின் கிளைகளை
யும் ஆற்றலரிகளையும் கொண்டுவந்து, உங்கள்
பராபரனாகிய கர்த்தருக்குமுன்பாக ஏழுநாள்
௪௧ மகிழ்ச்சியாயிருந்து,-வருஷம்தோறும் ஏழுநாள்
கர்த்தருக்கு இந்தப் பண்டிகையை ஆசரிக்கக்க
டவீர்கள்; இது உங்கள் தலைமுறைகளுக்குச்
செல்லும் நித்தியகட்டளை; ஏழாம்மாதத்தில் அ
௪௨ தை ஆசரிக்கக்கடவீர்கள். — நாம் இஸ்ரவேல்
புத்திரரை எகிப்துதேசத்திலிருந்து புறப்படப்
பண்ணினபொழுது, அவர்களைக் கூடாரங்களி
லே குடியிருக்கப்பண்ணினதை உங்கள் தலை
௪௩ முறைதலைமுறையாக அறியும்படிக்கு, — ஏழு
நாள் கூடாரங்களிலே குடியிருக்கக்கடவீர்கள்;
இஸ்ரவேலிலே பிறந்தவர்கள் எல்லாரும் கூடா
ரங்களிலே குடியிருப்பார்களாக; நாம் உங்கள்
பராபரனாகிய கர்த்தரென்று சொல்லென்றார்.
௪௪ அப்படியே மோசே கர்த்தருடைய பண்டி
கைகளின் வர்த்தமானத்தை இஸ்ரவேல் புத்திர
ருக்குச் சொன்னான்.

## ௨௪. அதிகாரம்.

௧. விளக்குகளுக்கு எண்ணெய், ௫. தேவசமுகத்தப்பம். ௰. சேலோமீத்தின் மகன் தூஷணித்தது. ௰௩. தேவதூஷணையையும், ௰௭. கொலையையும், ௰௮. கஷ்டத்தையும்குறித்த கட்டளை. ௨௩. தேவதூஷணை செய்தவன் கல்லெறியப்பட்டது

௧ பின்னையும் கர்த்தர் மோசேயோடே பேசிச்
௨ சொன்னதாவது:—[1]குத்துவிளக்கில் எப்பொழு
தும் வெளிச்சம் ஏற்றும்படிக்கு, இஸ்ரவேல் புத்
திரர் இடித்துப் பிழியப்பட்ட தெளிவான ஒலிவ
எண்ணெயை உன்னண்டைக்குக் கொண்டுவர
௩ அவர்களுக்குக் கற்பி.–ஆசரிப்புக்கூடாரத்திலே
சாட்சியின் திரைக்கு வெளிப்புறமாக ஆரோன்
அதை எப்பொழுதும், சாயங்காலம்துவக்கி,விடி
யற்காலம்மட்டும், கர்த்தருக்குமுன்பாக எரிய
வைக்கக்கடவன்; இது உங்கள் தலைமுறைகளுக்
௪ குச் செல்லும் நித்தியகட்டளை.–அவன் எப்பொ
ழுதும் கர்த்தருக்குமுன்பாகச் சுத்தமான குத்து
விளக்கின்மேலிருக்கிற விளக்குகளை எரியவைக்
கக்கடவன்.
௫ மெல்லியமாவை வாங்கி, அதைப் பன்னிரண்
டு அப்பங்களாகச் சுடுவாயாக; ஒவ்வொரு அப்
பம் மரக்காலிலே பத்தில் இரண்டுபங்கு மாவினா
௬ லே செய்யப்படுவதாக.—அவைகளை நீ கர்த்த
ருக்குமுன்பாக, சுத்தமான மேசையின்மேல் இ
ரண்டு அடுக்காக, ஒவ்வொரு அடுக்கில் அவ்வாறு
௭ இருக்கும்படிக்கு வைத்து,–ஒவ்வொரு அடுக்கி
னிடத்திலே சுத்தமான குங்குலிகம் போடக்கட
வாய்; அது அப்பத்தோடிருந்து நினைப்புக்கென்
௮ று கர்த்தருக்குத் தகனமாயிருக்கும்.—அதை நித்
திய உடம்படிக்கையாக இஸ்ரவேல் புத்திரர்கை
யிலே வாங்கி, ஓய்வுநாள்தோறும் கர்த்தருக்கு
௯ முன்பாக அடுக்கிவைக்கக்கடவன். — அது ஆ
ரோனையும் அவன் குமாரரையும் சேரும்; அதைப்
பரிசுத்தவிடத்திலே புசிக்கக்கடவர்கள்; ஏனெ
னில் அது பரிசுத்தத்திற்குப் பரிசுத்தம்; கர்த்தரு
டைய தகனங்களில் அது அவனுக்கு நித்தியகட்
டளை என்றார்.
இஸ்ரவேல் சாதியான ஸ்திரிக்கும் எகிப்திய ௰
புருஷனுக்கும் மகனாகிய ஒருவன், இஸ்ரவேல்
புத்திரரோடே கூடப் புறப்பட்டுவந்திருந்தான்;
இவனும் இஸ்ரவேலனாகிய ஒரு மனிதனும் பாள
யத்திலே சண்டைபண்ணினார்கள். — அப்பொ ௰௧
ழுது இஸ்ரவேல் சாதியான அந்த ஸ்திரியின்
மகன் நாமநிந்தைசொல்லித் தூஷணித்தான்;
ஆகையால் அவனை மோசேயண்டைக்குக் கொ
ண்டுவந்தார்கள்; அவன் தாயின்பேர் சேலோ
மீத், அவள் தாண் கோத்திரத்தானாகிய திப்ரி
யின் குமாரத்தி.—கர்த்தரின் வாக்கினாலே தங் ௰௨
களுக்கு உத்தரவு வரும்மட்டும், அவனைக் கா
வல்படுத்தினார்கள்.—அப்பொழுது கர்த்தர் மோ ௰௩
சேயோடே பேசிச் சொன்னதாவது: — தூஷ ௰௪
ணித்தவனைப் பாளயத்திற்குப் புறம்பே கொண்
டுபோ; கேட்டவர்கள் எல்லாரும் தங்கள் கை
களை அவன் தலையின்மேல் வைப்பார்களாக; பிற்
பாடு சபையெல்லாம் அவனைக் கல்லெறியக்கட
வது. — ஆனால் இஸ்ரவேல் புத்திரரோடே நீ ௰௫
சொல்லவேண்டியதேதெனில், எவனாகிலும்
தன் பராபரனைத் தூஷணித்தால், அவன் தன்
பாவத்தைச் சுமப்பான்.—கர்த்தரின் நாமத்தை ௰௬
நிந்தையாகச் சொல்லுகிறவன் கொலையுண்ண
வே கொலையுண்ணக்கடவன்; சபையெல்லாம்
அவனைக் கல்எறியவே எறியக்கடவது; பரதேசி
யாகிலும் சரி, தேசத்திலே பிறந்தவனாகிலும்சரி,
நாமத்தைத் தூஷணித்தானானால் கொலையுண்
ணக்கடவன். — யாதொரு மனிதசீவனை ஒரு ௰௭
வன் கொன்றால்,கொலையுண்ணவே கொலையுண்
ணக்கடவன். — மிருகசீவனைக் கொன்றவன் ௰௮
சீவனுக்குச் சீவனைச் செலுத்தக்கடவன்.—ஒரு ௰௯
வன் தனக்கு அடுத்தவனில் ஊனம் உண்டாக்கி
னால், அவன் செய்தபடி அவனுக்குச் செய்யப்ப
டக்கடவது. — நொறுக்குதலுக்கு நொறுக்குத ௨௰
லும், கண்ணுக்குக் கண்ணும், பல்லுக்குப் பல்
லும்தானே; அவன் மனிதனில் ஊனம் உண்
டாக்கினபடியே அவனிலும் உண்டாக்கப்படக்
கடவது.—மிருகத்தைக் கொன்றவன் பதில்கொ ௨௧
டுக்கக்கடவன்;மனிதனைக் கொன்றவனோ, கொ
லையுண்ணக்கடவன். — உங்களிலே பரதேசிக் ௨௨
கும் தேசத்திலே பிறந்தவனுக்கும் ஏகமான நியா
யம் இருக்கக்கடவது; ஏனெனில் நாம் உங்கள்
பராபரனாகிய கர்த்தரென்று சொல்லென்றார்.—
அப்படியே தூஷணித்தவனைப் பாளயத்திற்குப் ௨௩
புறம்பே கொண்டுபோய், அவனைக் கல்எறிவதற்
காக மோசே இஸ்ரவேல் புத்திரரோடே சொன்
னான்; கர்த்தர் மோசேக்குக் கற்பித்தபடியே
இவர்கள் செய்தார்கள்.

## ௨௫. அதிகாரம்.

௧. ஓய்ந்திருக்கும் ஏழாம் வருஷம். ௮. ஐம்பதாம் வருஷத்தின் யூபிலீ பண்டிகை. ௰௪. ஒடுக்குதலைக்குறித்தது. ௰௮. கீழ்ப்படிதலுக்கு ஆசீர்வாதம்.

1 ௨ மோ. ௨௭. ௨௰.

௨௩. நிலத்தையும், ௨௯. வீட்டையும் மீட்குதல். ௩௫. எளியவர்களுக்கு இரங்கல். ௩௯. அடிமைகளைக் கையாளுதல். ௪௭. சிறைப்பட்டவர்களை மீட்குதல்.

௧ கர்த்தர் சீனாய்பர்வதத்தில் மோசேயோடே
௨ பேசிச் சொன்னதாவது:—நீ இஸ்ரவேல் புத்திர
ரோடே பேசிச் சொல்லவேண்டியதேதெனில்,
நாம் உங்களுக்குக் கொடுக்கும் தேசத்திலே நீங்
கள் வந்திருக்கும்பொழுது, தேசம் கர்த்தருக்
கென்று ஓய்வுகளைக் கொண்டாடவேண்டும்.—
௩ [1]ஆறு வருஷம் உன் வயலை விதைத்து, உன்
திராட்சத்தோட்டத்தைக் கிளை நறுக்கி, அதின்
௪ பலனைச் சேர்ப்பாயாக.—ஏழாம் வருஷத்திலோ
வென்றால், கர்த்தருக்கென்று ஓய்ந்திருக்கும்
ஓய்வு தேசத்திற்கு இருக்கவேண்டும்;உன் வயலை
விதைக்காமலும், உன் திராட்சத்தோட்டத்தைக்
௫ கிளைநறுக்காமலும்,—சுயமாய் உனக்கு விளைந்து
பயிரானதை அறுத்துக்கொள்ளாமலும், நீ கிளை
நறுக்காதே விட்ட திராட்சச்செடியின் பழங்க
ளைச் சேர்க்காமலும் இருப்பாயாக; தேசத்திற்கு
அது ஓய்ந்திருக்கும் வருஷமாய் இருக்கக்கட
௬ வது.—தேசத்தின் ஓய்விலே பயிராகிறது உங்
களுக்கு ஆகாரமாய் இருப்பதாக;உனக்கும்,உன்
வேலைக்காரனுக்கும், உன் வேலைக்காரிக்கும்,
உன் கூலியாளுக்கும், உன்னிடத்திலே தங்கு
௭ கிற உன்னுடைய பரதேசிக்கும்,—உன் மிருக
ஜீவனுக்கும், உன் தேசத்திலிருக்கிற காட்டுச்ஜீ
வனுக்கும், அதின் பலனெல்லாம் ஆகாரமாய்
இருப்பதாக.

௮ பின்னேயும் ஏழு ஓய்வு வருஷங்களுள்ள ஏ
ழேழு வருஷங்களை எண்ணுவாயாக; அந்த ஏழு
ஓய்வு வருஷங்களுள்ள நாள்கள் உனக்கு நாற்
௯ பத்தொன்பது வருஷம் ஆகும்.—அப்பொழுது
ஏழாம்மாதம் பத்தாம்தேதியிலே தொனிக்கிற
எக்காளத்தைச் சுற்றித்திரியப்பண்ணுவாயாக;
பாவநிவிர்த்தியாகுதலின் நாளிலே அதை உங்
௰ கள் தேசமெங்கும் திரியப்பண்ணி,—ஐம்பதாம்
வருஷத்தைப் பரிசுத்தமாக்கி, தேசமெங்கும் அ
தின் குடிகளுக்கெல்லாம் விடுதலையைக் கூறக்
கடவீர்கள்; அது உங்களுக்குச் சீர்திருந்தும் வ
ருஷம்; அதிலே நீங்கள் அவரவர் தங்கள் காணி
யாட்சிக்கும் அவரவர் தங்கள் வம்சத்திற்கும்
௰௧ திரும்புவீர்கள்.—அந்த ஐம்பதாம் வருஷம் உங்
களுக்குச் சீர்திருந்தும் வருஷமாயிருப்பதாக;
அதிலே விதைக்காமலும், சுயமாய் விளைந்து ப
யிரானதை அறுத்துக்கொள்ளாமலும் கிளை நறுக்
காதே விடப்பட்ட திராட்சச்செடியின் பழங்
௰௨ களைச் சேர்க்காமலும் இருப்பீர்களாக.—ஏனெ
னில் அது சீர்திருந்தும் வருஷம்; அது உங்களுக்
குப் பரிசுத்தமாயிருக்கவேண்டும்;அதின் பலனை
வயலில் எடுத்து, புசித்துக்கொண்டு இருப்பீர்க
௰௩ ளாக.-சீர்திருந்தும்அந்தவருஷத்தில் நீங்கள் அவ
ரவர் தங்கள் காணியாட்சிக்குத் திரும்புவீர்கள்.—
௰௪ ஆகையால் எதாகிலும் உங்களுக்கடுத்தவனுக்கு
விற்று, அல்லவென்று அவன் கையிலே கொண்
டீர்களானால், ஒருவரை ஒருவர் இடுக்கண் செய்
யீர்களாக.—சீர்திருந்தும் வருஷத்திற்குப்பிறகு ௰௫
சென்ற வருஷங்களின் இலக்கத்திற்குத்தக்கதாக
உனக்கடுத்தவன் கையிலே கொள்ளுவாயாக;
பலனுள்ள வருஷங்களின் இலக்கத்திற்குத்தக்க
தாக அவன் உனக்கு விற்பானாக. — வருஷங் ௰௬
கள் அநேகமானால் அதின் விலையை உயர்த்தி,
கொஞ்சமானால் அதைத் தாழ்த்துவாயாக; ஏனெ
னில் பலனுள்ள வருஷங்களின் இலக்கத்தைப்
பார்த்து,அவன் உனக்கு விற்கிறான்.—உங்களில் ௰௭
ஒருவனும் தனக்கடுத்தவனை இடுக்கண் செய்ய
வேண்டாம்; உன் பராபரனுக்குப் பயப்படுவா
யாக; ஏனெனில் நாம் உங்கள் பராபரனாகிய
கர்த்தர்.

நம்முடைய கட்டளைகளின்படி செய்து, நம் ௰௮
முடைய நியாயங்களைக் கைக்கொண்டு, அவை
களின்படி செய்யக்கடவீர்கள்; அப்பொழுது
தேசத்திலே சுகமாய்க் குடியிருந்து,—பூமி தன் ௰௯
கனியைத் தருகிறதினாலே திர்ப்தியாகச் சாப்
பிட்டு, அதிலே சுகமாய்க் குடியிருப்பீர்கள்.—
ஏழாம் வருஷத்தில் எதைப் புசிப்போம்? இதோ ௨௰
நாங்கள் விதைக்காமலும், எங்கள் பலனைச்
சேர்க்காமலும் இருக்கவேண்டுமே என்றீர்களே
யானால்,—ஆறும் வருஷம் மூன்று வருஷங்க ௨௰௧
ளின் பலனைத் தர, நமது ஆசீர்வாதத்தை உங்க
ளுக்காகக் கட்டளையிடுவோம். — ஆனதினாலே ௨௰௨
நீங்கள் எட்டாம் வருஷத்திலே விதைத்து,
பழைய பலனிலே ஒன்பதாம் வருஷம்மட்டும்
சாப்பிடுவீர்கள்; இதின் பலன் வரும்மட்டுக்
கும் பழைய பலனைச் சாப்பிடுவீர்கள்.

நீங்கள் நிலங்களை அறுதியாய் விற்கவேண் ௨௰௩
டாம்; அதேனென்றால் தேசம் நம்முடையது;
நீங்கள் நமக்குமுன்பாகப் பரதேசிகளும் தங்கி
யிருக்கிறவர்களும்தானே —ஆகையால் உங்கள் ௨௰௪
காணியாட்சியான தேசமெங்கும், நிலங்களின்
மீட்புக்கு இடம்கொடுக்கக்கடவீர்கள். — உங் ௨௰௫
கள் சகோதரன் தரித்திரப்பட்டு, தன் காணி
யாட்சியிலே சிலதை விற்றால், அவனைச் சேர்ந்த
மீட்பன் வந்து, தன் சகோதரன் விற்றதை
மீட்கக்கடவன்.—மீட்பன் இல்லாதவனுக்கோ ௨௰௬
வெனில், தன் மீட்புக்குத் தேவையான அவகா
சம் அகப்பட்டால்,—அவன் தன்னுடைய கா ௨௰௭
ணியாட்சிக்குத் திரும்பி வரும்படிக்கு, அதை
விற்றபிறகு சென்ற வருஷங்களின் கணக்கைத்
தள்ளி, மீதியானதை அதைக் கொண்டவனுக்
குத் திரும்பக் கொடுப்பானாக. — இவனுக்குத் ௨௰௮
திரும்பக் கொடுப்பதற்கான அவகாசம் அவ
னுக்கு அகப்படாமல் போயிற்றேயாகில்,அவன்
விற்றது கொண்டவன் கையிலே சீர்திருந்தும்
வருஷம்மட்டும் இருந்து, சீர்திருந்தும் வருஷத்
திலோவென்றால், அவன் தன் காணியாட்சிக்
குத் திரும்பி வரும்படிக்கு அது நீங்கலாகக்
கடவது.

1 ௨ மோ. ௨௩. ௰, ௰௧.

௨௯ ஒருவன் மதிலுள்ள பட்டணத்தில் வாசஸ்த
லமாகிய வீட்டை விற்ருல், அதை விற்றபிறகு
ஒரு வருஷம்மட்டும் அதின் மீட்புச் செல்லும்;
அதின்மீட்புக்கு ஒரு முழு வருஷம் தவணையாய்
௩௰ இருப்பதாக.—ஒரு முழு வருஷகாலம் நிறை
வேறும்மட்டும் அது மீட்கப்படாதிருந்ததேயா
ஞல், அப்பொழுது மதிலுள்ள பட்டணத்திலி
ருக்கும் அந்த வீட்டைக் கொண்டவனுக்கு அது
தலைமுறை தலைமுறையாக நிலைத்திருக்கக்கடவ
து; சீர்திருந்தும் வருஷத்தில் அது நீங்கலாவதும்
௩௧ இல்லை.—சுற்றிலும் மதிலில்லாத கிராமங்களின்
வீடுகளோவெனில், தேசத்தின் வயல்வெளிக்குச்
சரியாக எண்ணப்படுவதாக; அவைகளுக்கு மீட்
பிருக்கும்; சீர்திருந்தும் வருஷத்தில் நீங்கலுமா
௩௨ கும்.— இலேவியரின் காணியாட்சியாகிய பட்
டணங்களின் வீடுகளுக்கோவென்ருல், இலே
வியருக்கு என்றைக்கும் மீட்புக்கு இடமுண்டு.-
௩௩ விற்றவனுடைய காணியாட்சிப் பட்டணமான
ஊரின் வீடு இலேவியரில் பின்னொருவரால் மீட்
கப்பட்டிருந்தாலும், சீர்திருந்தும் வருஷத்தில்
நீங்கலாகவேண்டும்; ஏனெனில் இலேவியரு
டைய பட்டணங்களின் வீடுகள் இஸ்ரவேல் புத்
திரரின் நடுவிலே அவர்களுக்கு இருக்கிற காணி
௩௪ யாட்சி.-ஆனல் அவர்கள் பட்டணங்களுடைய
பேட்டைகளின் வயல்வெளி விற்கப்படாதி
ருப்பதாக; ஏனெனில் அது அவர்களுக்கு நித்தி
யகாணியாட்சியாய் இருக்கின்றது.
௩௫ உன் சகோதரன் உன்னிடத்திலே தரித்திரப்
பட்டு, கை இளைத்தவனனல், அவனைத் திடப்
படுத்துவாயாக; பரதேசியையும் தங்கவந்தவனை
யும்போல, அவன் உன்னோடே பிழைப்பானாக.-
௩௬ நீ அவன் கையில் வட்டியையும் சொச்சத்தை
யும் வாங்காமல், உன் சகோதரன் உன்னோடே
பிழைக்கும்படிக்கு, உன் பராபரனுக்குப் பயப்
௩௭ படக்கடவாய்.-அவனுக்கு உன் பணத்தை வட்
டிக்கும் உன் போசனத்தைச் சொச்சத்திற்கும்
௩௮ கொடாயாக.—நாம் உங்களுக்குக் கானன் தே
சத்தைக் கொடுத்து, உங்களுக்குப் பராபரனாயி
ருக்கும்படிக்கு, உங்களை எகிப்துதேசத்திலிருந்
து புறப்படப்பண்ணின உங்கள் பராபரனாகிய
கர்த்தர்.
௩௯ உன் சகோதரன் உன்னிடத்திலே தரித்திரனா
கி உனக்கு விலைப்பட்டுப்போனல், அவனை அ
௪௰ டிமைவேலைகொள்ளாயாக.—அவன் கூலிக்கார
னைப்போலவும் தங்கவந்தவனைப்போலவும் உன்
னோடே இருந்து, சீர்திருந்தும் வருஷம்மட்டும்
௪௧ உன்னிடத்திலே சேவித்து,—அப்பொழுது தன்
பிள்ளைகளோடும்கூட உன்னைவிட்டு நீங்கலாகி,
தன் வம்சத்தண்டைக்கும் தன் பிதாக்களின் கா
௪௨ ணியாட்சிக்கும் திரும்பிவருவானாக. — ஏனெ
னில் அவர்கள் நாம் எகிப்துதேசத்திலிருந்து புற
ப்படப்பண்ணின நம்முடைய வேலைக்காரர்;
அடிமை விற்கப்படுவதுபோல, அவர்கள் விற்

கப்படவேண்டாம்.—[1]நீ அவனைக் கொடூரமாய் ௪௩
ஆளாமல், உன் பராபரனுக்குப் பயப்படுவா
யாக.—உனக்கிருக்கும் அடிமையும் அடிமைப் ௪௪
பெண்ணும் உங்களைச் சுற்றிலுமிருக்கிற புறச்
சாதிகளின் மனிதராயிருக்கவேண்டும்; அவைக
ளில் நீ அடிமையையும், அடிமைப்பெண்ணை
யும் கொள்ளலாம். — உங்களிடத்தில் பரதேசிக ௪௫
ளாய்த் தங்குகிற அந்நியரின் புத்திரரிலும், உங்
கள் தேசத்தில் உங்களிடத்திலே பிறந்திருக்கிற
அவர்களுடைய வம்சத்தாரிலும்கூட, நீங்கள்
உங்களுக்கு அடிமைகளைக் கொண்டு, — அவர் ௪௬
களை உங்களுக்கும் உங்களுக்குப்பிற்பாடு உங்
கள் பிள்ளைகளுக்கும் சொந்தச் சுதந்தரமாக்கி,
என்றைக்கும் ஆண்டுகொண்டிருக்கலாம்; ஆ
னல் இஸ்ரவேல் புத்திரராகிய உங்கள் சகோ
தரரில் ஒருவரை ஒருவர் கொடூரமாக ஆளவே
ண்டாம்.
உன்னிடத்திலிருக்கிற பரதேசியும் அந்நிய ௪௭
னும் அவகாசம்பெற்றிருக்கும்போது, அவனி
டத்திலிருக்கிற உன் சகோதரன் தரித்திரப்பட்டு,
அவனுக்கும் அல்லது அவன் வம்ச சந்ததிக்கும்
விலைப்பட்டுப் போனல், — விலைப்பட்டுப்போ ௪௮
னபிற்பாடு அவனுக்கு மீட்புண்டாவதாக; அ
வன் சகோதரரில் ஒருவன் அவனை மீட்கக்கட
வன். — அவனுடைய பெரிய சிறிய தகப்பன ௪௯
னும், பெரிய சிறிய தகப்பன்குமாரனனும்
அவன் வம்சத்தில் அவனைச்சேர்ந்த சபையா
ரில் ஒருவனனும், அவனை மீட்பானாக; அல்
லவென்று அவனுக்கு அவகாசம் கிடைத்தால்,
தன்னைத்தான் மீட்கலாம். — அவன் தன்னைக் ௫௰
கொண்டவன் கையிலே விலைப்பட்டுப்போன
வருஷத்திற்கும் சீர்திருந்தும் வருஷத்திற்கும்
இருக்கும் காலத்தை அவனோடே கணக்குப்
பார்ப்பானாக; அவனோடே ஒரு கூலிக்காரனாய்
இத்தனை நாள் இருந்ததுபோல, அவனுடைய
விலைக்கிரயம் வருஷங்களின் இலக்கத்திற்கொத்
துப்பார்க்கப்படக்கடவது.—இன்னம் அநேகம் ௫௧
வருஷங்கள் இருந்தால், அவன் தன் விலைக்கிர
யத்திலே அவைகளுக்குத்தக்கதை, தன்னை மீட்
கும்பொருளாக, திரும்பக் கொடுக்கக்கடவன்.—
சீர்திருந்தும் வருஷம்மட்டும் மீதியாயிருக்கிற ௫௨
வருஷங்கள் கொஞ்சமேயானல், அவனோடே
கணக்குப்பார்த்து, தன் வருஷங்களுக்குத்தக்க
தை, தன்னை மீட்கும்பொருளாக, திரும்பக் கொ
டுக்கக்கடவன். — ஒரு கூலிக்காரனைப்போல, ௫௩
அவனோடே வருஷத்திற்கு வருஷம் இருப்பா
னாக; அவன் இவனை உன் பார்வைக்குக் கொடூ
ரமாக ஆளவேண்டாம். — இவ்விதங்களாய் அ ௫௪
வன் மீட்டுக்கொள்ளப்படாதே போனல், அவ
னும் அவன் பிள்ளைகளும்கூடச் சீர்திருந்தும்
வருஷத்திலே நீங்கலாவார்கள். — ஏனெனில் ௫௫
இஸ்ரவேல் புத்திரர் நமக்கு வேலைக்காரர், அவர்
கள் நாம் எகிப்து தேசத்திலிருந்து புறப்படப்

1 எபே. ௬. ௯.

பண்ணின நம்முடைய வேலைக்காரராயிருக்கி
றீர்கள்; நாம் உங்கள் பராபரனாகிய கர்த்தர்.

## ௨௬. அதிகாரம்.

௧. விக்கிரக ஆராதனையையும், ௨. மார்க்க வழிபாட்டையும் குறித்தது. ௩. கட்டளையைக் கைக்கொள்வோர்க்கு ஆசீர்வாதம். ௧௪. அவைகளை மீறுகிறவர்களுக்குச் சாபம். ௪௰. மனந்திரும்புவோரைத் தேவன் மறவாத வாக்குத்தத்தம்.

௧ நீங்கள் உங்களுக்கு [1]விக்கிரகங்களையும் சுரூ
பங்களையும் உண்டாக்காமலும், உங்களுக்குச்
சிலையை நாட்டாமலும், சித்திரந்தீர்ந்த கல்லை
அதற்குமுன்பாகப் பணிய உங்கள் தேசத்தில்
வைக்காமலும் இருப்பீர்களாக; ஏனெனில் நாம்
௨ உங்கள் பராபரனாகிய கர்த்தர். — நம்முடைய
ஓய்வுநாள்களைக் கைக்கொண்டு, நம்முடைய
பரிசுத்தஸ்தலத்திற்கு அஞ்சி இருப்பீர்களாக;
நாம் கர்த்தர்.
௩ [2]நீங்கள் நம்முடைய கட்டளைகளில் நடந்து,
நம்முடைய கற்பனைகளைக் கைக்கொண்டு, அ
௪ வைகளின்படி செய்தால், — நாம் ஏற்றகாலத்
தில் உங்கள் மழைகளைத் தருவோம்; பூமி தன்
பலனையும் நிலத்தின் மரங்கள் தங்கள் கனியை
௫ யும் கொடுக்கும். — போரடிப்பு உங்களுக்குத்
திராட்சப்பழ அறுப்புமட்டும் வரும்; திராட்சப்
பழ அறுப்பு விதைப்புக்காலம்மட்டும் வரும்;
நீங்கள் உங்கள் அப்பத்தைத் திருப்தியாகச் சாப்
பிட்டு, உங்கள் தேசத்திலே சுகமாய்க் குடியிருப்
௬ பீர்கள்.—தேசத்திலே சமாதானம் கட்டளையிடு
வோம்;தத்தளிக்கப்பண்ணுவார் இல்லாமல் படுத்
துக்கொண்டிருப்பீர்கள்; துஷ்டமிருகங்களைத்
தேசத்தில் இராதபடிக்கு ஒழியப்பண்ணுவோம்;
பட்டையம் உங்கள் தேசத்தில் உலாவுவதில்லை.-
௭ உங்கள் சத்துருக்களைத் துரத்துவீர்கள்; அவர்கள்
உங்கள் முன்பாகப் பட்டையத்தால் விழுவார்
௮ கள்.—உங்களில் ஐந்துபேர் நூறுபேரைத் துரத்
துவார்கள்; உங்களில் நூறுபேர் பதினாயிரம்பே
ரைத் துரத்துவார்கள்; உங்கள் சத்துருக்கள் உங்க
ளுக்குமுன்பாகப் பட்டையத்தால் விழுவார்
௯ கள். — நாம் உங்கள்மேலே நோக்கமாயிருந்து,
உங்களைப் பலுகவும் பெருகவும்பண்ணி, உங்க
ளோடிருக்கும் நம்முடைய உடம்படிக்கையைத்
௰ திடப்படுத்துவோம். — போன வருஷத்தின்
பழைய தானியத்தைச் சாப்பிட்டு, புதியது வந்த
௰௧ தினாலே பழையதை விலக்குவீர்கள். — நம்மு
டைய வாசஸ்தலத்தை உங்கள் நடுவிலே வைப்
போம்; நம்முடைய ஆத்துமா உங்களை அரோ
௰௨ சிப்பதில்லை.—நாம் உங்கள் நடுவிலே உலாவி,
உங்களுக்குப் பராபரனாயிருப்போம்; நீங்கள்
௰௩ நமக்குச் சனமாயிருப்பீர்கள்.—நீங்கள் எகிப்தி
யருக்கு அடிமைகளாயிராதபடிக்கு, நாம் உங்
களை அவர்கள் தேசத்திலிருந்து புறப்படப்
பண்ணி, உங்கள் நுகத்தடிகளை உடைத்து, உங்
களை நிமிர்ந்து நடக்கப்பண்ணின உங்கள் பரா
பரனாகிய கர்த்தர்.
௰௪ நீங்கள் நம்முடைய சொல்கேளாமலும், இந்
தக் கற்பனைகளின்படி எல்லாம் செய்யாமலும்,-
நம்முடைய கட்டளைகளை வெறுக்கிறதும், உங் ௰௫
கள் ஆத்துமா நம்முடைய நியாயங்களை அரோ
சிக்கிறதும், நீங்கள் நம்முடைய கற்பனைகளின்
படி எல்லாம் செய்யாதபடிக்கு, நம்முடைய உ
டம்படிக்கையை முறித்துப்போடுகிறதும் உண்
டேயாகில்,—நாம் உங்களுக்குச் செய்வதேதென் ௰௬
றால், கண்களைப் பூத்துப்போகப்பண்ணுகிறதும்
ஆத்துமாவைக் கஸ்திப்படுத்துகிறதுமான திகிலை
யும் ஈளையையும் காய்ச்சலையும் உங்கள்மேலே
வரப்பண்ணுவோம்; உங்கள் விதையை விருதா
வாக விதைப்பீர்கள்; உங்கள் சத்துருக்கள் அதை
த்தின்னுவார்கள்.—நமது முகத்தை உங்களுக்கு ௰௭
விரோதமாகத் திருப்புவோம்; உங்கள் சத்துருக்
களுக்கு முன்பாக முறியடிக்கப்படுவீர்கள்; உங்
கள் பகைஞர் உங்களை ஆண்டுகொள்வார்கள்;
உங்களைத் துரத்துவார் இல்லாமல் ஓடுவீர்கள்.—
நீங்கள் இதனோடே இன்னம் நம்முடைய சொல் ௰௮
கேளாதேபோனால், நாம் உங்கள் பாவங்களின்
நிமித்தம் பின்னையும் ஏழத்தனையாக உங்களைத்
தண்டித்து, —உங்கள் வல்லமையின் பெருமை ௰௯
யை முறித்து, உங்கள் வானத்தை இரும்பைப்
போலவும், உங்கள் பூமியை வெண்கலத்தைப்
போலவும் இருக்கப்பண்ணுவோம். — உங்கள் ௨௰
பலம் விருதாவிலே செலவழியும்; உங்கள் தே
சம் தன் பலனையும், தேசத்தின் மரங்கள் தங்கள்
கனியையும் கொடாதேபோம்.—நீங்கள் நமது ௨௧
சொல்கேட்க மனதில்லாமல் நமக்கெதிர்த்து
நடந்தீர்களேயானால், நாம் உங்கள் பாவங்களுக்
குத்தக்கதாக இன்னம் ஏழத்தனை வாதையை உங்
கள்மேலே வரப்பண்ணி, — உங்களுக்குள்ளே ௨௨
வெளியின் துஷ்டமிருகங்களை வரவிடுவோம்;
அவைகள் உங்களைப் பிள்ளைகள் அற்றவர்க
ளாக்கி, உங்கள் மிருகஜீவன்களை அழித்து, உங்
களைக் குறைந்துபோகப்பண்ணும்; உங்கள் வழி
கள் பாழ்த்துக்கிடக்கும். — நீங்கள் இந்தமட் ௨௩
டில் நமது தண்டனையாலே குணப்படாமல், ந
மக்கெதிர்த்து நடந்தால்,—நாம் உங்களுக்கெதிர்த் ௨௪
து நடந்து, நாம் உங்களை உங்கள் பாவங்களின்
நிமித்தம் ஏழத்தனையாக வாதித்து, — உடம்ப ௨௫
டிக்கையின் நீதியை விசாரிக்கிறதாகிய சரிக்
குச்சரிக்கட்டும் பட்டையத்தை உங்கள்மேலே
வரப்பண்ணி, நீங்கள் உங்கள் பட்டணங்களில்
வந்தடைந்தபிறகு, பெருவாரிக்காய்ச்சலை உங்
கள் நடுவில் அனுப்புவோம்; சத்துருவின் கை
யில் ஒப்புக்கொடுக்கப்படுவீர்கள்.—நாம் அப்ப ௨௬
மென்ற ஆதரவுகோலை உங்களுக்கு ஒடித்திருக்
கும்பொழுது, பத்து ஸ்திரிகள் ஒரே அடுப்பில்
உங்கள் அப்பத்தைச் சுட்டு,அதைத் திரும்ப உங்
களுக்கு நிறுத்துக்கொடுப்பார்கள்; திருப்தி அ
டையாமல் சாப்பிடுவீர்கள்.
இதனுடனே நீங்கள் நம்முடைய சொல்கே ௨௭
ளாமல், நமக்கு எதிர்த்து நடந்தால்,—நாமும் உக் ௨௮
கிரத்தோடே உங்களுக்கு எதிர்த்து நடந்து, நாம்

1 ௨ மோ. ௨௦. ௪.

2 ௫ மோ. ௨௮. ௧.

நாமே உங்களை உங்கள் பாவங்களின் நிமித்தம்
௨௯ ஏழத்தனையாகத் தண்டிப்போம்.—உங்கள் குமா
ரரின் மாம்சத்தையும் உங்கள் குமாரத்திகளின்
௩௰ மாம்சத்தையும் புசிப்பீர்கள்.—நாம் உங்கள் மே
டைகளை அழித்து, உங்கள் விக்கிரகச் சிலைகளை
நிர்த்தூளியாக்கி, உங்கள் உடல்களை உங்கள் நர
கலான தேவர்களுடைய உடல்களின்மேலே
போடுவிப்போம்; நம்முடைய ஆத்துமா உங்களை
௩௰௧ அரோசிக்கும். — நாம் உங்கள் பட்டணங்களை
வனாந்தரமும், உங்கள் பரிசுத்தஸ்தலங்களைப் பா
ழுமாக்கி, உங்களுடைய ஆற்றுகிற வாசனையை
௩௰௨ முகராதிருப்போம்.-நாம் தேசத்தை அதிலே குடி
யிருக்கப்போகிற உங்கள் சத்துருக்கள் பிரமிக்
௩௰௩ கத்தக்கதாகப் பாழாக்கி,—உங்களைச் சாதிகளுக்
குள்ளே சிதறடித்து, உங்கள் பிறகாலே பட்டை
யத்தை உருவுவோம்; உங்கள் தேசம் பாழும்,
௩௰௪ உங்கள் பட்டணங்கள் வனாந்தரமுமாம். — நீங்
கள் உங்கள் சத்துருக்களின் தேசத்திலிருக்கும்
அப்பொழுது, தேசமானது பாழாய்க்கிடக்கிற
நாளெல்லாம் தன்னுடைய ஓய்வுகளை இரம்மிய
மாய் அநுபவிக்கும்; அப்பொழுது ஓய்வடைந்து,
தன் ஓய்வுகளை இரம்மியமாய் அநுபவிக்கும்.—
௩௰௫ நீங்கள் அதிலே குடியிருக்கும்பொழுது, அது உங்
கள் ஓய்வு வருஷங்களில் ஓய்வடையாதபடியி
னாலே, அது பாழாய்க்கிடக்கும் நாளெல்லாம் ஓய்
௩௰௬ வடைந்திருக்கும்.-உங்களில் மீதியாயிருப்பவர்
களின் இருதயங்களில் நாம் அவர்கள் சத்துருக்க
ளின் தேசங்களிலே மனத்தளர்ச்சியை வரப்பண்
ணுவோம்; காற்றடிக்கும் இலையின் இரைச்சல்
அவர்களை ஓட்டும்; அவர்கள் பட்டையத்திற்
குத் தப்பி ஓடுகிறதுபோல ஓடி, துரத்துவாரில்
௩௰௭ லாமல் விழுவார்கள்.—துரத்துவாரில்லாமல் ஒரு
வர்மேல் ஒருவர், பட்டையம் பிறகாலே வருகி
றதுபோல இடறிவிழுவார்கள்; உங்கள் சத்து
ருக்களுக்குமுன்பாக உங்களுக்குத் தரிக்கக்கூ
௩௰௮ டாததாயிருக்கும்.-புறச்சாதிகளுக்குள் அழிவீர்
கள்; உங்கள் சத்துருக்களின் தேசம் உங்களைப்
பட்சிக்கும்.

௩௰௯ உங்களில் மீதியாய் இருப்பவர்கள் உங்கள்
சத்துருக்களின் தேசங்களிலே தங்கள் அக்கிர
மங்களினாலும் தங்கள் பிதாக்களின் அக்கிரமங்
௪௰ களினாலும்கூட வாடிப்போய்,-தாங்கள் நமக்கு
விரோதமாகத் துரோகம்பண்ணி நடப்பித்த தங்
கள் அக்கிரமத்தையும், தங்கள் பிதாக்களின் அக்
௪௰௧ கிரமத்தையும்,—தாங்கள் நமக்கு எதிர்த்துநடந்
தபடியினாலே, நாமும் தங்களுக்கெதிர்த்துநடந்
து, தங்களைத் தங்கள் சத்துருக்களின் தேசத்தி
லே கொண்டுபோய் விட்டதையும், அறிக்கை
இடுவார்கள்; அப்பொழுது சுன்னத்தில்லாத அ
வர்கள் இருதயம் தாழ்ந்துபோய், அவர்கள் தங்
கள் அக்கிரமத்தின் ஆக்கினையை நல்லதென்று
௪௰௨ ஒத்துக்கொண்டால், — நாம் யாக்கோபோடே
பண்ணின நம்முடைய உடம்படிக்கையையும்,
ஈசாக்கோடே பண்ணின நம்முடைய உடம்ப
டிக்கையையும், ஆபிரகாமோடே பண்ணின நம்
முடைய உடம்படிக்கையையும் நினைப்போம்;
தேசத்தையும் நினைப்போம்.

அவர்கள் நிமித்தம் வெறுமையே விடப்பட்ட ௪௰௩
தும், பாழாய்க்கிடக்கிறதினாலே தன் ஓய்வுகளை
இரம்மியமாக அநுபவிக்கிறதுமான தேசத்தைத்
தானே; அவர்களும் நம்முடைய நியாயங்களை
வெறுத்தபடியினாலும், அவர்களுடைய ஆத்துமா
நம்முடைய கட்டளைகளை அரோசித்தபடியினா
லும், அடைந்த தங்களுடைய அக்கிரமத்தின்
தண்டனையை நல்லதென்று ஒத்துக்கொள்ளு
வார்கள்.—ஆனதுகொண்டு அவர்கள் தங்கள் சத் ௪௰௪
துருக்களின் தேசத்திலிருந்தாலும், நாம் அவர்க
ளை நிர்மூலமாக்கத்தக்கவிதமாகவும், அவர்களோ
டிருக்கிற நம்முடைய உடம்படிக்கையை அவத்
தமாக்கத்தக்கவிதமாகவும், அவர்களைப் புறக்க
ணிப்பதும் இல்லை, அரோசிப்பதும் இல்லை;
ஏனெனில் நாம் அவர்கள் பராபரனாகிய கர்த்
தர்.—அவர்களுடைய பராபரனாயிருக்கும்படிக் ௪௰௫
கு, நாம் புறச்சாதிகளின் கண்களுக்குமுன்பாக
எகிப்துதேசத்திலிருந்து புறப்படப்பண்ணின
அவர்களுடைய முன்னோர்களோடே நாம் பண்
ணின உடம்படிக்கையை அவர்களுக்காக நினை
வுகூருவோம்; நாம் கர்த்தர் என்று சொல்
லென்றார்.

தமக்கும் இஸ்ரவேல் புத்திரருக்கும் நடுவே ௪௰௬
இருக்கும்படிக்கு, கர்த்தர் சீனாய்பர்வதத்திலே
மோசேயைக்கொண்டு கொடுத்த கட்டளைகளும்
நியாயங்களும் நியாயப்பிரமாணங்களும் இவை
கள் தாமே.

## ௨௭. அதிகாரம்.

௧. அரிய பொருத்தனை செய்பவன் தேவனுடையவன். ௩. அவனை மதிக்குதல். ௯. பிரார்த்தனையால் கொடுத்த மிருகத்தையும், ௰௪. வீட்டையும், ௰௬. ஒரு புலத்தையும், அதின் மீட்சியையும் குறித்தது. ௨௮ பிரார்த்தனையாக விட்டதையும், ௩௨. தசபாகத்தையும் மாற்றப்படாதென்பது.

பின்னையும் கர்த்தர் மோசேயோடே பேசிச் ௧
சொன்னதாவது:—நீ இஸ்ரவேல் புத்திரரோடே ௨
பேசிச் சொல்லவேண்டியதேதெனில், ஒருவன்
ஒரு விசேஷித்த பொருத்தனையைப் பண்ணியி
ருந்தால், ஆத்துமாக்கள் உன் மதிப்பின்படிக்குக்
கர்த்தருடையவர்கள். — இருபது வயதுமுதல் ௩
கொண்டு, அறுபது வயதுக்குள்ளிருக்கிற ஆண்
பிள்ளையை நீ பரிசுத்தஸ்தலத்தின் சேக்கலாகிய
ஐம்பது வெள்ளிச்சேக்கலாகவும்,—பெண்சாதி ௪
யை முப்பது சேக்கலாகவும், மதிப்பாயாக.—
ஐந்து வயதுமுதல்கொண்டு இருபது வயதிற்குள் ௫
ளிருக்கிற ஆண்பிள்ளையை இருபது சேக்கலாக
வும், பெண்பிள்ளையைப் பத்துச்சேக்கலாகவும்,-
ஒருமாதம் முதல்கொண்டு ஐந்து வயதிற்குள்ளி ௬
ருக்கிற ஆண்பிள்ளையை ஐந்து வெள்ளிச்சேக்க
லாகவும், பெண்பிள்ளையை மூன்று வெள்ளிச்
சேக்கலாகவும்,-அறுபது வயதும் அதிகமுமான ௭
ஆண்பிள்ளையைப் பதினைந்து சேக்கலாகவும்,
பெண்சாதியைப் பத்துச்சேக்கலாகவும், மதிக்கக்
கடவாய். — உன் மதிப்பைச் செலுத்தக்கூடாத ௮

தரித்திரனாயிருந்தானேயாகில், அவன் ஆசாரிய
னுக்குமுன்பாகத்தன்னை மதிக்கும்படிக்குவந்து
நிற்கக்கடவன்; பொருத்தனை பண்ணினவனு
டைய கைக்கு உதவுகிறதற்குத்தக்கவிதமாகஆசா
ரியன் அவனை மதிப்பானாக.
௯ கர்த்தருக்குப் பலியிடப்படத்தக்க மிருகஜீவ
னேயானால், அவன் கர்த்தருக்குக் கொடுக்கிற
அப்படிக்கொத்ததெல்லாம் பரிசுத்தமாயிருப்ப
௧௦ தாக.—அதை மாற்றாமலிருப்பானாக; இளப்ப
மானதற்குப்பதிலாக நல்லதையும், நல்லதற்குப்
பதிலாக இளப்பமானதையும், கொடாமலிருப்
பானாக; அவன் மிருகத்திற்குப்பதிலாக மிரு
கத்தைக் கொடுத்தானேயாகில், அப்பொழுது
அதுவும் அதற்குப் பதிலானதும் பரிசுத்தமாய்
௧௧ இருப்பதாக. — அது கர்த்தருக்குப் பலியிடப்
படத்தகாத தீட்டான யாதொரு மிருகமேயா
னால், அதை ஆசாரியனுக்குமுன்பாக நிறுத்தக்
௧௨ கடவன்.—ஆசாரியன் அதை அதின் நன்மைக்
கும் இளப்பத்திற்கும்தக்கதாக மதிப்பானாக;
அவன் அதை மதிக்கிறபடியே இருக்கக்கட
௧௩ வது.—அதை மீட்க மனதாயிருந்தானேயாகில்,
உன் மதிப்போடே ஐந்தில் ஒரு பங்கைக் கூட்
டக்கடவன்.
௧௪ ஒருவன் தன் வீட்டைக் கர்த்தருக்கென்று பரி
சுத்தம்பண்ணினால், ஆசாரியன் அதை அதின்
நன்மைக்கும் இளப்பத்திற்கும்தக்கதாக மதிப்
பானாக, அவன் அதை மதிக்கிறபடி இருக்கக்க
௧௫ டவது.-பரிசுத்தம்பண்ணினவன் தன் வீட்டை
மீட்க மனதாயிருந்தானேயாகில், உன் மதிப்
பான திரவியத்தோடே ஐந்தில் ஒரு பங்கைக்
கூட்டக்கடவன்; அப்பொழுது அவனுடைய
தாயிருக்கும்.
௧௬ ஒருவன் தன் காணியாட்சி வயல்வெளியிலே
ஏதாகிலும் கர்த்தருக்கென்று பரிசுத்தம்பண்ணி
னால், உன் மதிப்பு அதின் விதைப்புக்குத்தக்க
தாய் இருக்கவேண்டும்; ஒரு கலம் வால்கோது
மை விதைக்கிற வயல் ஐம்பது வெள்ளிச்சேக்
௧௭ கலாக மதிக்கப்படக்கடவது. — சீர்திருந்தும்
வருஷம் முதல்கொண்டே அவன் தன் வய
லைப் பரிசுத்தம்பண்ணினால், உன் மதிப்பின்
௧௮ படி இருக்கக்கடவது.—சீர்திருந்தும் வருஷத்
திற்குப்பிற்பாடு அதைப் பரிசுத்தம்பண்ணினா
னேயாகில், அப்பொழுது சீர்திருந்தும் வருஷம்
மட்டும் இருக்கும்; குறை வருஷங்களின்படி
யே திரவியம் ஆசாரியனாலே கணக்குப் பார்க்
கப்பட்டு, அதற்குத்தக்கது உன் மதிப்பிலே தள்
௧௯ ளப்படக்கடவது.—வயலைப் பரிசுத்தம்பண்ணி
னவன் அதை மீட்க மனதாயிருந்தானேயாகில்,
உன் மதிப்பான திரவியத்தோடே ஐந்தில் ஒரு
பங்கைக் கூட்டக்கடவன்; அப்பொழுது அவ
௨௦ னுடையதாயிருக்கும்.-அவன் வயலை மீட்காதே
போய், அதை வேறொருவனுக்கு விற்றானேயா
௨௧ னால், இனி மீட்கப்படக்கூடாமல்,—அது சீர்தி
ருந்தும் வருஷத்தில் நீங்கலாகும்பொழுது, சா
பத்தீடான வயலாகக் கர்த்தருக்குப் பரிசுத்தமா
யிருக்கக்கடவது; அதின் காணியாட்சி ஆசாரிய
னைச் சேரும்.—ஒருவன் தன் காணியாட்சிவயல் ௨௨
அல்லாததாகிய தான் கொண்ட ஒரு வயலைக்
கர்த்தருக்கென்று பரிசுத்தம்பண்ணினானேயா
கில்,—அது சீர்திருந்தும் வருஷம்மட்டும், உன் ௨௩
மதிப்பின்படி பெறும் விலையை ஆசாரியன்
அவனோடே கணக்குப் பார்ப்பானாக, அந்த
உன் மதிப்பை அவன் அந்நாளிலே கர்த்தருக்
குப்பரிசுத்தமாயிருக்கும்படிக்கு, கொடுக்கக்கட
வன்.—யார் கையிலே அந்த வயலைக் கொண் ௨௪
டானோ, அந்தக் காணியாட்சிக்காரன் வசமாய்,
அது சீர்திருந்தும் வருஷத்திலே திரும்பும். —
உன் மதிப்பெல்லாம் பரிசுத்தஸ்தலச்சேக்கல் ௨௫
கணக்காயிருக்கக்கடவது; சேக்கலானது இரு
பது கேரா.
தலையீற்றுகளோவென்றால், கர்த்தருடையதா ௨௬
னபடியினாலே தலையீற்றாகிய மிருகஜீவனை ஒரு
வரும் பரிசுத்தம்பண்ண ஒண்ணாது; அது மாடா
னாலும், ஆடானாலும், கர்த்தருடையதாயிருக்கிற
தே.—தீட்டான மிருகத்தினுடையதேயானால், ௨௭
அவன் உன் மதிப்பின்படி அதை மீட்டு, அதனு
டனே ஐந்தில் ஒருபங்கைக் கூட்டக்கடவன்;
மீட்கப்படாமல்போயிற்றேயாகில், உன் மதிப்
பின்படி விற்கப்படக்கடவது.
ஒருவன் தனக்குண்டான நரஜீவன், மிருகஜீ ௨௮
வன், காணியாட்சி, நிலம், முதலானவைகளில்
எதையாகிலும் சாபத்தீடானதாகக் கர்த்தருக்குக்
கொடுத்தானேயாகில், அது விற்கப்படவும் மீட்
கப்படவும் வேண்டாம்; சாபத்தீடானவைகளா
கக் கொடுக்கப்பட்டவைகளெல்லாம், கர்த்தருக்
குப் பரிசுத்தத்திற்குப் பரிசுத்தம்.—நரஜீவனில் ௨௯
சாபத்தீடாக நியமிக்கப்பட்டவைகளெல்லாம்
மீட்கப்படாமல் கொலையுண்ணவே கொலை
யுண்ணக்கடவது.
தேசத்திலே நிலத்தின் விதைகளிலும், மரங்க ௩௦
ளின் கனியிலும், பத்தில் ஒருபங்காகிறதெல்
லாம் கர்த்தருடையது; அது கர்த்தருக்குப் பரி
சுத்தம்.—ஒருவன் பத்தில் ஒருபங்காகிய அதிலே ௩௧
சிலவற்றை மீட்க மனதாயிருந்தானேயானால்,
அதனுடனே ஐந்தில் ஒருபங்கைக் கூட்டக்கட
வன்.—கோலின்கீழ்ப்போகிற ஆடுமாடுகளிலே ௩௨
பத்தில் ஒரு பங்காகிறதெல்லாம் கர்த்தருக்குப்
பரிசுத்தம்.—அது நல்லதோ இளப்பமானதோ, ௩௩
என்று அவன் பார்க்கவேண்டாம்; அதற்குப்
பதில்கொடுக்கவும் வேண்டாம்; பதில்கொடுத்
தானேயாகில், அதுவும் அதற்குப் பதிலானதும்
பரிசுத்தமாயிருக்கும்; அது மீட்கப்படக்கூடா
தென்று அவர்களோடே சொல்லென்றார்.
இஸ்ரவேல் புத்திரருக்குச் சொல்லும்படிக் ௩௪
குக் கர்த்தர் மோசேக்குச் சீனாய்பர்வதத்திலே
கற்பித்த கற்பனைகள் இவைகள்தானே.

# NUMBERS.

# மோசே எழுதின

## நான்காம் ஆகமம்.

### ௧. அதிகாரம்.

௧. சனங்களைக் கணக்கிடப் பராபரன் மோசேக்குக் கற்பித்தது. ௫. வம்சப்பிரபுக்கள். ௰௭. ஒவ்வொரு வம்சச்சனக் கணக்கு. ௪௭. இலேவியர் தேவஊழியத்தினிமித்தம் கணக்கிடப்படாதது.

௧ அவர்கள் எகிப்துதேசத்திலிருந்து புறப்பட்ட
இரண்டாம் வருஷம் இரண்டாம்மாதம் முதல்
தேதியிலே, கர்த்தர் சீனாய் வனாந்தரத்திலிருக்கிற
ஆசரிப்புக்கூடாரத்திலே மோசேயோடே பே
௨ சிச் சொன்னதாவது:—நீங்கள் இஸ்ரவேல் புத்
திரரின் முழுச்சபையாயிருக்கிற அவர்கள் பி
தாக்களுடைய வீட்டு வம்சங்களிலுள்ள ஆண்
பிள்ளைகளாகிய சகல தலைகளையும் பேர்பேராக
௩ எண்ணித் தொகைஏற்றுங்கள்.—இஸ்ரவேலிலே
இருபது வயதுமுதல்கொண்டு யுத்தத்திற்குப்
புறப்படத்தக்கவர்களை எல்லாம் நீயும் ஆரோனு
மாய் அவர்கள் சேனைகளின்படியே இலக்கம்
௪ பார்ப்பீர்களாக.—ஒவ்வொரு கோத்திரத்திற்கு அ
வர்களுடைய பிதாக்களின் வீட்டுத்தலைவனாகிய
ஒவ்வொரு மனிதன் உங்களோடிருப்பானாக.
௫ உங்களோடே நிற்கும் மனிதரின் நாமங்களா
வன: ரூபேன் கோத்திரத்திலே சேதேயூரின்
௬ குமாரன் எலித்சூர்.—சிமேயோன் கோத்திரத்தி
லே சூரிஷதாயின் குமாரன் செலூமியேல்.—
௭ யூதா கோத்திரத்தில் அம்மீனதாபின் குமாரன்
௮ நாகசோன்.—ஈசக்காரர் கோத்திரத்திலே சூகாரின்
௯ குமாரன் நெத்தானேயேல்.—செபுலோன் கோத்
௰ திரத்தில் ஏலோனின் குமாரன் எலியாப்.—யோ
சேப்பின் குமாரராகிய எப்பிராயீம் கோத்திரத்
தில் அம்மியூதின் குமாரன் எலிஷம்மா, மனாசே
கோத்திரத்திலே பெதாத்சூரின் குமாரன் கமாலி
௰௧ யேல்.—பென்யமீன் கோத்திரத்திலே கீதெயோ
௰௨ னின் குமாரன் அபீதான்.—தாண் கோத்திரத்தில்
௰௩ அம்மிஷதாயின் குமாரன் அகியேசேர்.—ஆசேர்
கோத்திரத்தில் ஒகிரானின் குமாரன் பாகியேல்.—
௰௪ காத்கோத்திரத்திலே தேகுவேலின் குமாரன் எ
௰௫ லியாசாப்.—நவுதலி கோத்திரத்தில் ஏனானின்
௰௬ குமாரன் அகீரா.—சபையில் அழைக்கப்பட்டு,
தங்கள் பிதாக்களுடைய கோத்திரங்களின் பிர
புக்களும் இஸ்ரவேலில் ஆயிரங்களுக்குத் தலை
வருமாயிருப்பவர்களில் இவர்கள்தான் என்றார்.

அப்படியே மோசேயும் ஆரோனும் பேர்பே ௰௭
ராகக் குறிக்கப்பட்ட இந்த மனிதரைக் கூட்
டிக்கொண்டு,—இரண்டாம்மாதம் முதல்தேதி ௰௮
யிலே சபையையெல்லாம் கூட்டம்கூட்டினார்
கள்; அவர்கள் தங்கள் பிதாக்களுடைய வீட்டு
வம்சப்பிறப்புகளின்படியே பார்க்கப்பட்டு, இ
ருபது வயதுமுதல்கொண்டிருந்தபேர்கள் தலை
தலையாக எண்ணப்பட்டார்கள்.—கர்த்தர் மோ ௰௯
சேக்குக் கற்பித்தபடியே, இவன் அவர்களைச்
சீனாயின் வனாந்தரத்தில் இலக்கம்பார்த்தான்.

இஸ்ரவேலின் மூத்தவனாகிய ரூபேனின் புத் ௨௰
திரருடைய பிதாக்களின் வீட்டு வம்சப்பிறப்
புகளில், இருபது வயதுமுதல்கொண்டு யுத்தத்
திற்குப் புறப்படத்தக்க ஆண்பிள்ளைகளெல்
லாம் தலைதலையாக எண்ணப்பட்டபொழுது,—
ரூபேன் கோத்திரத்தில் இலக்கம்பார்க்கப்பட் ௨௧
டவர்கள், நாற்பத்தாறாயிரத்து ஐந்நூறுபேர்.

சிமேயோன் புத்திரருடைய பிதாக்களின் ௨௨
வீட்டு வம்சப்பிறப்புகளில் இருபது வயதுமு
தல்கொண்டு யுத்தத்திற்குப் புறப்படத்தக்க ஆண்
பிள்ளைகளெல்லாம் தலைதலையாக எண்ணி இலக்
கம்பார்க்கப்பட்டபொழுது,—சிமேயோன் கோத் ௨௩
திரத்தில் இலக்கம்பார்க்கப்பட்டவர்கள், ஐம்
பத்தொன்பதினாயிரத்து முந்நூறுபேர்.

காத் புத்திரருடைய பிதாக்களின் வீட்டு வம் ௨௪
சப்பிறப்புகளில் இருபது வயதுமுதல்கொண்டு
யுத்தத்திற்குப் புறப்படத்தக்க ஆண்பிள்ளைகளெ
ல்லாம் எண்ணப்பட்டபொழுது,—காத்கோத் ௨௫
திரத்தில் இலக்கம்பார்க்கப்பட்டவர்கள், நாற்பத்
தையாயிரத்து அறுநூற்று ஐம்பதுபேர்.

யூதா புத்திரருடைய பிதாக்களின் வீட்டு வம் ௨௬
சப்பிறப்புகளில் இருபது வயதுமுதல்கொண்டு
யுத்தத்திற்குப் புறப்படத்தக்க ஆண்பிள்ளைக
ளெல்லாம் எண்ணப்பட்டபொழுது,— யூதா ௨௭
கோத்திரத்தில் இலக்கம்பார்க்கப்பட்டவர்கள்,
எழுபத்து நாலாயிரத்து அறுநூறுபேர்.

ஈசக்காரர் புத்திரருடைய பிதாக்களின் வீட்டு ௨௮
வம்சப்பிறப்புகளில் இருபது வயதுமுதல்கொ
ண்டு யுத்தத்திற்குப் புறப்படத்தக்க ஆண்பிள்
ளைகளெல்லாம் எண்ணப்பட்டபொழுது,—

௨௯ ஈசஷார் கோத்திரத்தில் இலக்கம்பார்க்கப்பட்ட
வர்கள், ஐம்பத்துநாலாயிரத்து நானூறுபேர்.
௩௰ சேபுலோன் புத்திரருடைய பிதாக்களின்
வீட்டு வம்சப்பிறப்புகளில் இருபது வயது
முதல்கொண்டு யுத்தத்திற்குப் புறப்படத்தக்க
ஆண்பிள்ளைகளெல்லாம் எண்ணப்பட்டபொ
௩௧ ழுது, — சேபுலோன் கோத்திரத்தில் இலக்கம்
பார்க்கப்பட்டவர்கள், ஐம்பத்தேழாயிரத்து நா
னூறுபேர்.
௩௨ யோசேப்பின் குமாரரில் எப்பிராயீம் புத்திர
ருடைய பிதாக்களின் வீட்டு வம்சப்பிறப்புக
ளில் இருபது வயதுமுதல்கொண்டு யுத்தத்திற்
குப் புறப்படத்தக்க ஆண்பிள்ளைகளெல்லாம்
௩௩ எண்ணப்பட்டபொழுது, — எப்பிராயீம் கோத்
திரத்தில் இலக்கம்பார்க்கப்பட்டவர்கள், நாற்ப
தினாயிரத்து ஐந்நூறுபேர்.
௩௪ மனாசே புத்திரருடைய பிதாக்களின் வீட்டு
வம்சப்பிறப்புகளில் இருபது வயதுமுதல்கொ
ண்டு யுத்தத்திற்குப் புறப்படத்தக்க ஆண்பிள்
௩௫ ளைகளெல்லாம் எண்ணப்பட்டபொழுது,–மனா
சே கோத்திரத்தில் இலக்கம்பார்க்கப்பட்டவர்
கள், முப்பத்திரண்டாயிரத்து இருநூறுபேர்.
௩௬ பென்யமீன் புத்திரருடைய பிதாக்களின்
வீட்டு வம்சப்பிறப்புகளில் இருபது வயதுமு
தல்கொண்டு யுத்தத்திற்குப் புறப்படத்தக்க ஆ
ண்பிள்ளைகளெல்லாம் எண்ணப்பட்டபொழு
௩௭ து,—பென்யமீன் கோத்திரத்தில் இலக்கம்பார்க்
கப்பட்டவர்கள், முப்பத்தையாயிரத்து நானூ
றுபேர்.
௩௮ தாண் புத்திரருடைய பிதாக்களின் வீட்டு
வம்சப்பிறப்புகளில் இருபது வயதுமுதல்கொ
ண்டு யுத்தத்திற்குப் புறப்படத்தக்க ஆண்பிள்ளை
௩௯ களெல்லாம் எண்ணப்பட்டபொழுது,—தாண்
கோத்திரத்தில் இலக்கம்பார்க்கப்பட்டவர்கள்,
அறுபத்திரண்டாயிரத்து எழுநூறுபேர்.
௪௰ ஆசேர் புத்திரருடைய பிதாக்களின் வீட்டு
வம்சப்பிறப்புகளில் இருபது வயதுமுதல்கொ
ண்டு யுத்தத்திற்குப் புறப்படத்தக்க ஆண்பிள்
௪௧ ளைகளெல்லாம் எண்ணப்பட்டபொழுது, — ஆ
சேர் கோத்திரத்தில் இலக்கம்பார்க்கப்பட்டவர்
கள், நாற்பத்தோராயிரத்து ஐந்நூறுபேர்.
௪௨ நவ்தலி புத்திரருடைய பிதாக்களின் வீட்டு
வம்சப்பிறப்புகளில் இருபது வயதுமுதல்கொ
ண்டு யுத்தத்திற்குப் புறப்படத்தக்க ஆண்பிள்
௪௩ ளைகளெல்லாம் எண்ணப்பட்டபொழுது,—நவ்
தலி கோத்திரத்தில் இலக்கம்பார்க்கப்பட்டவர்
கள், ஐம்பத்து மூவாயிரத்து நானூறுபேராயிருந்
தார்கள்.
௪௪ மோசேயும் ஆரோனும் இஸ்ரவேலுடைய
பிதாக்களின் வீடுகளில் ஒவ்வொன்றுக்கு ஒவ்
வொரு பிரபுக்களான பன்னிரண்டுபேரும்
௪௫ இலக்கம்பார்த்தவர்கள் இவர்கள்தான். — இஸ்ர
வேல் புத்திரருடைய பிதாக்களின் வீட்டாரில்
இருபது வயதுமுதல்கொண்டு, இஸ்ரவேலில்
யுத்தத்திற்குப் புறப்படத்தக்கவர்களாகிய இலக்
கம்பார்க்கப்பட்டபேர்களெல்லாம்,— அறுநூற் ௪௬
று மூவாயிரத்து ஐந்நூற்று ஐம்பதுபேராயிருந்
தார்கள்.
ஆனால் இலேவியர் தங்கள் பிதாக்களுடைய ௪௭
கோத்திரத்தின்படியே, அவர்களுக்குள்ளே இ
லக்கம்பார்க்கப்பட்டதில்லை.—ஏனெனில் கர்த் ௪௮
தர் மோசேயோடே பேசிச் சொன்னதாவது:—
இலேவி கோத்திரத்தாரைமாத்திரம் நீ இஸ்ரவேல் ௪௯
புத்திரருக்குள்ளே இலக்கம்பாராமலும் அவர்
கள் தொகையை ஏற்றாமலும்,— இலேவியரை நீ ௫௰
சாட்சியின் வாசஸ்தலத்திற்கும், அதினுடைய
எல்லாப் பணிமுட்டுகளுக்கும், அதிலுள்ள எல்
லாவற்றிற்கும், விசாரிப்புக்காரராகவை; அவர்
கள் வாசஸ்தலத்தையும் அதின் எல்லாப் பணி
முட்டுகளையும் சுமந்து, அதினிடத்தில் ஊழியம்
செய்து, வாசஸ்தலத்தைச் சுற்றிலும் பாளயம் இ
றங்கக்கடவர்கள்.–வாசஸ்தலம் பயணப்படுகை ௫௧
யில், இலேவியர் அதை இறக்கிவைத்து, அது பா
ளயம் இறங்குகையில்,இலேவியர் அதை எடுத்து
நிறுத்தக்கடவர்கள்; சேருகிற அந்நியன் கொலை
யுண்பானாக.–இஸ்ரவேல் புத்திரர் அவரவர் தங் ௫௨
கள் பாளயத்தோடும் அவரவர் தங்கள் சேனையின்
கொடியோடும் கூடாரம் போடக்கடவர்கள்.—
இஸ்ரவேல் புத்திரருடைய சபையின்மேலே ௫௩
கடுங்கோபம்வராதபடிக்கு, இலேவியர் வாசஸ்
தலத்தின் சுற்றிலும் பாளயம் இறங்கி, இலேவி
யர் சாட்சியினுடைய வாசஸ்தலத்தின் காவலைக்
காப்பார்களாக என்றார்.—கர்த்தர் மோசேக்குக் ௫௪
கற்பித்தபடி எல்லாம் இஸ்ரவேல் புத்திரர் செய்
தார்கள்.

## ௨. அதிகாரம்.

௧ கோத்திரங்கள் கூடாரம்போட்டிருக்கவேண்டிய ஒழுங்கு.

கர்த்தர் மோசேயோடும் ஆரோனோடும் பேசிச் ௧
சொன்னதாவது:— இஸ்ரவேல் புத்திரர் அவர ௨
வர் தங்கள் பிதாக்களுடைய வீட்டின் அடை
யாளமாகிய தங்களுடைய கொடியண்டையி
லே தங்கள் கூடாரங்களைப் போட்டு, ஆசரிப்
புக்கூடாரத்திற்கு எதிராகச் சுற்றிலும் பாளயம்
இறங்கக்கடவர்கள்.
யூதாவுடைய பாளயத்துக் கொடியின்கீழிருக் ௩
கிற சேனைகள் சூரியன் உதிக்கும் கீழ்ப்புறத்தி
லே பாளயம் இறங்குவது; யூதாபுத்திரரின் பிரபு,
அம்மீனதாபின் குமாரன் நாகசோன்.—இலக் ௪
கம்பார்க்கப்பட்ட அவனுடைய சேனை எழு
பத்துநாலாயிரத்து அறுநூறுபேர்.—அவன் கிட் ௫
டப் பாளயம் இறங்குபவர்கள் ஈசஷார் கோத்
திரத்தார்; ஈசஷார் புத்திரரின் பிரபு, சூவாரின்
குமாரன் நெத்தானெயேல்.—இலக்கம்பார்க்கப் ௬
பட்ட அவனுடைய சேனை ஐம்பத்துநாலாயி
ரத்து நானூறுபேர்.–பிற்பாடு சேபுலோன் கோத் ௭
திரத்தாரும்தானே; சேபுலோன் புத்திரரின் பிரபு
ஏலோனின் குமாரன் எலியாப். — இலக்கம் ௮
பார்க்கப்பட்ட அவனுடைய சேனை ஐம்பத்
தேழாயிரத்து நானூறுபேர்.—இலக்கம்பார்க்கப் ௯

பட்ட யூதாவின் பாளயத்தார் எல்லாரும் தங்கள்
சேனைகளின்படியே நூற்றெண்பத்து ஆறாயிரத்
து நானூறுபேர்; இவர்கள் பயணத்திலே முதல்
பாளயமாய்ப் போகக்கடவர்கள்.
௰ ரூபேனுடைய பாளயத்துக் கொடியின்கீழி
ருக்கிற சேனைகள் தென்புறத்தில் இறங்குவது;
ரூபேன் புத்திரரின் பிரபு, சேதேயூரின் குமா
௰௧ ரன் எலிச்சூர்.—இலக்கம்பார்க்கப்பட்ட அவ
னுடைய சேனை நாற்பத்தாறாயிரத்து ஐந்நூறு
௰௨ பேர்.— அவன் கிட்டப் பாளயம் இறங்குபவர்
கள் சிமேயோன்கோத்திரத்தார்; சிமேயோன் புத்
திரரின் பிரபு, சூரிஷதாயின் குமாரன் செலூமி
௰௩ யேல்.—இலக்கம்பார்க்கப்பட்ட அவனுடைய
சேனை ஐம்பத்தொன்பதினாயிரத்து முந்நூறு
௰௪ பேர். — பிற்பாடு காத் கோத்திரத்தாரும்தானே;
காத் புத்திரரின் பிரபு, ரேகுவேலின் குமாரன்
௰௫ எலியாசாப். — இலக்கம்பார்க்கப்பட்ட அவனு
டைய சேனை நாற்பத்தையாயிரத்து அறுநூற்
௰௬ றைம்பதுபேர்.—இலக்கம்பார்க்கப்பட்ட ரூபே
னின் பாளயத்தார் எல்லாரும் தங்கள் சேனைக
ளின்படியே நூற்றைம்பத்து ஒராயிரத்து நானூற்
றைம்பதுபேர்; இவர்கள் பயணத்தில் இரண்
டாம் பாளயமாய்ப் போகுபவர்கள்.
௰௭ பிற்பாடு ஆசரிப்புக்கூடாரம் இலேவியரின்
சேனையோடே பாளயங்களின் நடுவே பயணப்
பட்டுப்போம்; எப்படிப் பாளயம் இறங்குகிறார்
களோ, அப்படி அவரவர் தங்கள் வரிசையிலே
தங்கள் கொடிகளின்படியே பயணப்படுவார்
களாக.
௰௮ எப்பிராயீமுடைய பாளயத்துக் கொடியின்
சேனைகள் மேல்புறத்தில் இறங்குவது; எப்பி
ராயீமின் புத்திரரின் பிரபு, அம்மியூதின் குமா
௰௯ ரன் எலிஷம்மா.—இலக்கம்பார்க்கப்பட்ட அவ
னுடைய சேனை நாற்பதினாயிரத்து ஐந்நூறு
௨௰ பேர்.—அவன் கிட்டப் பாளயம் இறங்குபவர்
கள் மனாசே கோத்திரத்தார்; மனாசே கோத்திரத்
தாரின் பிரபு, பெதாத்சூரின் குமாரன் கமாலி
௨௧ யேல்.—இலக்கம்பார்க்கப்பட்ட அவனுடைய
௨௨ சேனை முப்பத்திரண்டாயிரத்து இருநூறுபேர்.—பிற்
பாடு பென்யமீன் கோத்திரத்தாரும்தானே; பெ
ன்யமீன் புத்திரரின் பிரபு, கிதேயோனியின்
௨௩ குமாரன் அபீதான். — இலக்கம்பார்க்கப்பட்ட
அவனுடைய சேனை முப்பத்தையாயிரத்து நா
௨௪ னூறுபேர். — இலக்கம்பார்க்கப்பட்ட எப்பிரா
யீமின் பாளயத்தார் எல்லாரும் தங்கள் சேனைக
ளின்படியே நூற்றெண்ணாயிரத்து ஒருநூறுபேர்;
இவர்கள் பயணத்தில் மூன்றாம் பாளயமாய்ப்
போகுபவர்கள்.
௨௫ தாணுடைய பாளயத்துக் கொடியின் சேனை
கள் வடக்கே இறங்குவது; தாண் புத்திரரின்
பிரபு, அம்மிஷதாயின் குமாரன் அகியேசேர்.-
௨௬ இலக்கம்பார்க்கப்பட்ட அவனுடைய சேனை
௨௭ அறுபத்திரண்டாயிரத்து எழுநூறுபேர்.—அவன் கிட்
டப் பாளயம் இறங்குபவர்கள் ஆசேர் கோத்தி
ரத்தார்; ஆசேர் கோத்திரத்தாரின் பிரபு, ஒகிரா
னின் குமாரன் பாகியேல்.—இலக்கம்பார்க்கப் ௨௮
பட்ட அவனுடைய சேனை நாற்பத்தோராயி
ரத்து ஐந்நூறுபேர்.—பிற்பாடு நவுதலி கோத்தி ௨௯
ரத்தாரும்தானே; நவுதலி புத்திரரின் பிரபு, ஏனா
னின் குமாரன் அகீரா.-இலக்கம்பார்க்கப்பட்ட ௩௰
அவனுடைய சேனை ஐம்பத்துமூவாயிரத்து நா
னூறுபேர். — இலக்கம்பார்க்கப்பட்ட தாணின் ௩௧
பாளயத்தார் எல்லாரும் நூற்றைம்பத்தேழாயி
ரத்து அறுநூறுபேர்; இவர்கள் தங்கள் கொடி
களின்படியே பின்பாளயமாய்ப் போகுபவர்க
ளென்றார்.
இவர்கள் இஸ்ரவேல் புத்திரருடைய பிதாக்க ௩௨
ளின் வீட்டாரில் இலக்கம்பார்க்கப்பட்டவர்
கள்; பாளயங்களிலே தங்கள் தங்கள் சேனை
களின்படியே இலக்கம்பார்க்கப்பட்டவர்கள்
எல்லாரும் அறுநூற்று மூவாயிரத்து ஐந்நூற்
றைம்பதுபேராயிருந்தார்கள். — இலேவியரோ ௩௩
வெனில் கர்த்தர் மோசேக்குக் கற்பித்தபடி, இ
ஸ்ரவேல் புத்திரருக்குள்ளே இலக்கம்பார்க்கப்
பட்டதில்லை.—கர்த்தர் மோசேக்குக் கற்பித்த ௩௪
படி எல்லாம் இஸ்ரவேல் புத்திரர் செய்து, அப்
படியே தங்கள் கொடிகளின்கீழ்ப் பாளயம்
இறங்கி, அப்படி அவரவர் தங்கள் பிதாக்களு
டைய வீட்டு வம்சங்களின்படியே பயணப்
பட்டுப்போனார்கள்.

## ௩. அதிகாரம்.

௧. ஆரோனின் புத்திரரையும், ௯. முதல்பேற்றுக்குப் பதில் கூடாரத்தின் வேலைக்காக ஆசாரியருக்கு இலேவியர் கொடுக்கப்பட்டதையும், ௰௪. இலேவி வம்சத்தார் குடும்பங்களாகக் கணக்கிடப்பட்டதையும், ௨௧. கெர்சோனருடைய குடும்பத்தையும், தொகையையும், தொழிலையும், ௨௭. கோகாத்தியரையும், ௩௩. மெராரியரையும், ௩௮. மோசே ஆரோன் என்பவர்களுடைய இடத்தையும், தொழிலையும், ௪௰. இலேவியர்நிமித்தம் விடப்பட்ட முதல்பேறுகளையும், ௪௪. மீதியானவர்களின் மீட்பையும் குறித்தது.

சீனாய்பர்வதத்திலே கர்த்தர் மோசேயோடே ௧
பேசின நாளிலே, ஆரோன் மோசே என்றவர்
களுடைய சந்ததிகளின் நடபடியாவது:-ஆரோ ௨
னுடைய குமாரர் யாரென்றால், முதல்பிறந்தவ
னாகிய நாதாபும், அபியூவும், எலெயாசாரும்,
இத்தாமாரும் என்னப்பட்டவர்கள்.—ஆசாரிய ௩
ஊழியம்செய்கிறதற்கு, கைகள் நிரப்பப்பட்டு
அபிஷேகம்பெற்ற ஆசாரியரான ஆரோனுடைய
குமாரரின் நாமங்கள் இவைகள்தான்.—ஆனால் ௪
நாதாப்பும், அபியூவும், சீனாயின் வனாந்தரத்தில்
அந்நிய அக்கினியைக் கர்த்தருக்குமுன்பாகக்
கொண்டுவருகையில், கர்த்தருக்குமுன்பாகச்
செத்தார்கள்;அவர்களுக்குப் பிள்ளைகள் இல்லை;
எலெயாசாரும் இத்தாமாருமோவெனில், தங்கள்
தகப்பனாகிய ஆரோனுக்குமுன்பாக ஆசாரிய
ஊழியம்செய்தார்கள்.
கர்த்தர் மோசேயோடே பேசிச் சொன்னதா ௫
வது:—நீ இலேவி கோத்திரத்தாரைச் சேர்த்து, ௬
ஆசாரியனாகிய ஆரோனுக்கு முன்பாக அவனுக்
குப் பணிவிடைசெய்யும்படிக்கு நிறுத்து.-அவர் ௭
கள் வாசஸ்தலத்தின் பணிவிடைவேலை செய்
யும்படிக்கு, ஆசரிப்புக்கூடாரத்திற்கு முன்பாக

அவனுடைய காவலையும் எல்லாச் சபையின்
௮ காவலையும் காத்து, — வாசஸ்தலத்தின் பணிவி
டைவேலையைச் செய்யும்படிக்கு, ஆசரிப்புக்
கூடாரத்தின் எல்லாத் தட்டுமுட்டுகளையும், இஸ்
ரவேல் புத்திரரின் காவலையும் காக்கக்கடவர்
௯ கள்.—ஆகையால் இலேவியரை ஆரோனுக்கும்
அவன் குமாரருக்கும் கொடுப்பாயாக; இஸ்ர
வேல் புத்திரரில் இவர்கள் அவனுக்குக் கொடுக்
௰ கவே கொடுக்கப்பட்டவர்கள்.—ஆரோனையும்
அவன் குமாரரையுமோவெனில், தங்கள் ஆசா
ரிய ஊழியத்தை விசாரிப்பதற்காக வைக்கக்கட
வாய்; சேருகிற அந்நியன் கொலையுண்ணக்கட
வனென்றார்.
௰௧ பின்னையும் கர்த்தர் மோசேயோடே பேசிச்
௰௨ சொன்னதாவது:-இதோ, இஸ்ரவேல் புத்திரரில்
கர்ப்பந்திறந்து பிறக்கிற முதல்பேறான யாவுக்
கும் பதிலாக, நாம் இலேவியரை இஸ்ரவேல்
புத்திரரின் நடுவில் அவர்கள் நம்முடையவர்க
௰௩ ளாயிருக்க எடுத்துக்கொண்டோம்.—ஏனெனில்
முதல்பேறானவையெல்லாம் நம்முடையவை;
நாம் எகிப்துதேசத்தில் முதல்பேறான யாவையும்
சங்கரித்த நாளிலே, இஸ்ரவேலிலே மனிதன்
முதல்கொண்டு மிருகம்மட்டுமுள்ள முதல்பேறு
களை எல்லாம் நமக்குப் பரிசுத்தமாக்கினதினா
லே, அவைகள் நம்முடையவைகளாயிருக்கும்;
நாம் கர்த்தரென்றார்.
௰௪ பின்னையும் கர்த்தர் சீனாயின் வனாந்தரத்தில்
௰௫ மோசேயோடே பேசிச் சொன்னதாவது:—இ
லேவி புத்திரரை அவர்கள் பிதாக்களின் வீட்டு
வம்சங்களின்படியே இலக்கம்பார்; அவர்களில்
ஒருமாதம் முதல்கொண்டு மேல்பட்ட வயதுள்ள
ஆண்பிள்ளைகளையெல்லாம் இலக்கம் பார்ப்பா
௰௬ யாக என்றார். — அப்பொழுது கர்த்தருடைய
வாக்கின்படி, மோசே அவர்களைத் தனக்குக் கற்
பிக்கப்பட்ட பிரகாரமாக இலக்கம்பார்த்தான்.—
௰௭ இலேவியின் குமாரர் தங்கள் நாமங்களின்படி
யே, கெர்சோன், கோகாத், மெராரி என்னப்
௰௮ பட்டவர்கள். — தங்கள் வம்சத்தார்களாய்ப் பி
ரிந்த கெர்சோனுடைய குமாரரின் நாமங்கள்,
௰௯ லிப்னீயும் சீமேயியும்தானே.—தங்கள் வம்சங்
களாய்ப் பிரிந்த கோகாத்துடைய குமாரர், அம்
௨௰ ராம், இத்சேயார், எபிரோன், ஊசியேல்.—தங்
கள் வம்சங்களாய்ப் பிரிந்த மெராரியினுடைய
குமாரர், மகெலியும் மூசியும்தானே; இவர்களே
இலேவியருடைய பிதாக்களின் வீட்டு வம்சத்
தார்கள்.
௨௧ கெர்சோனால் லிப்னீயரின் வம்சமும் சீமேயி
யர் வம்சமும் இருந்தன; இவைகளே கெர்சோ
௨௨ னியரின் வம்சங்கள்.—அவர்களில் ஒரு மாதம்
முதல்கொண்டு மேல்பட்ட வயதுள்ள ஆண்பிள்
ளைகளெல்லாம் எண்ணப்பட்டபொழுது, இலக்
கம்பார்க்கப்பட்டவர்கள் ஏழாயிரத்து ஐந்நூறு
௨௩ பேராயிருந்தார்கள். — கெர்சோனியரின் வம்
சங்கள் வாசஸ்தலத்தின் பிறகாலே மேற்கே பா
௨௪ ளயம் இறங்குவது.-கெர்சோனியருடைய தகப்
பன் வீட்டுப் பிரபு, லாயேலின் குமாரனாகிய எ
லியாசாப்.-ஆசரிப்புக்கூடாரத்திலே கெர்சோன் ௨௫
புத்திரரின் காவலாவது: வாசஸ்தலமும், கூடா
ரமும், அதின் மூடியும், ஆசரிப்புக்கூடாரவா
சல்மறைவும்,—வாசஸ்தலத்தண்டையிலும் பலி ௨௬
பீடத்தண்டையிலும் சுற்றிலுமிருக்கிற பிரகாரத்
தின் வெளியாடைகளும், பிரகாரவாசல்மறை
வும், அவைகளின் வேலைக்கெல்லாம் அடுத்த
அவைகளின் கயிறுகளும்தானே.
கோகாத்தினால் அம்ராமியரின் வம்சமும், இத் ௨௭
சேயாரின் வம்சமும், எபிரோனியரின் வம்ச
மும், ஊசியேலரின் வம்சமும் இருந்தன; இவை
களே கோகாத்தியரின் வம்சங்கள்.—ஒரு மாதம் ௨௮
முதல்கொண்டு மேல்பட்ட வயதுள்ள ஆண்பிள்
ளைகளெல்லாம் எண்ணப்பட்டபொழுது, பரிசுத்
தஸ்தலத்தின் காவலைக் காப்பவர்கள், எண்ணா
யிரத்து அறுநூறுபேராயிருந்தார்கள்.—கோகாத் ௨௯
புத்திரரின் வம்சங்கள் வாசஸ்தலத்தின் தென்புற
மான பக்கத்திலே பாளயம் இறங்குவது.—அவர் ௩௰
களின் பிரபு, ஊசியேலின் குமாரனாகிய எலித்
சாப்பான்.
அவர்களுடைய காவலாவது: பெட்டியும், ௩௧
மேசையும், குத்துவிளக்கும், பீடங்களும், ஆரா
தனைசெய்யும் பரிசுத்தஸ்தலத்தின் முட்டுகளும்,
மறைவும் அதினுடைய எல்லா வேலையும்தா
னே. — இலேவியருடைய பிரபுக்களின் பிரபு, ௩௨
ஆசாரியனாகிய ஆரோனின் குமாரன் எலெயா
சார்தானே; அவன் பரிசுத்தஸ்தலத்தின் காவ
லைக்காக்கிறவர்களின் விசாரிப்புக்காரனாயிருப்
பவன்.
மெராரியினால் மகெலியரின் வம்சமும் மூசி ௩௩
யரின் வம்சமும் இருந்தன; இவைகளே மெரா
ரியின் வம்சங்கள்.—அவர்களில் ஒரு மாதம் மு ௩௪
தல்கொண்டு மேற்பட்ட வயதுள்ள ஆண்பிள்ளை
களெல்லாம் எண்ணப்பட்டபொழுது, இலக்கம்
பார்க்கப்பட்டவர்கள், ஆறாயிரத்து இருநூறுபே
ராயிருந்தார்கள். — அவர்கள் பிரபு, அபியாயே ௩௫
லின் குமாரனாகிய சூரியெல்; இவர்கள் வாசஸ்
தலத்தின் வடபுறமான பக்கத்திலே பாளயம் இ
றங்குவது.-அவர்களுடைய காவல் விசாரிப்பா ௩௬
வது: வாசஸ்தலத்தின் பலகைகளும், தாழ்ப்பாள்
களும், தூண்களும், கால்களும், அதினுடைய
எல்லா முட்டுகளும், அதினுடைய எல்லா வேலை
யும்,—சுற்றுப்பிரகாரத்தின் தூண்களும், அவை ௩௭
களின் கால்களும், கூச்சுகளும், கயிறுகளும்
தானே.
ஆசரிப்புக்கூடாரமாகிய வாசஸ்தலத்திற்கு ௩௮
முன்பாக, சூரியன் உதிக்கும் கீழ்ப்புறத்திலே
மோசேயும் ஆரோனும் அவன் குமாரரும் கூடா
ரங்களைப் போட்டிறங்கி, இஸ்ரவேல் புத்திர
ரின் காவலுக்குப் பதிலாகப் பரிசுத்தஸ்தலத்
தின் காவலைக் காப்பவர்கள்; சேருகிற அந்நி
யன் கொலையுண்பானாக. — மோசேயும் ஆரோ ௩௯
னும் கர்த்தருடைய வாக்கின்படியே, இலேவி
யரில் அவர்களுடைய வம்சங்களின்படியே

இலக்சம்பார்த்த ஒருமாதம் முதல்கொண்டிருந்த ஆண்பிள்ளைகளெல்லாம் இருபத்தீராயிரம்பேரா யிருந்தார்கள்.

௪௰ அதின்பிறகு கர்த்தர் மோசேயோடே சொன்
னதாவது: நீ இஸ்ரவேல் புத்திரரில் ஒரு மாதம்
முதல்கொண்டு மேல்பட்ட வயதுள்ள முதல்
பேருன ஆண்பிள்ளைகளையெல்லாம் இலக்கம்
பார்த்து, அவர்கள் நாமங்களின் தொகையை
௪௧ ஏற்றி,—இலேவியரை இஸ்ரவேல் புத்திரரிலுள்ள
முதல்பேருன யாவுக்கும் பதிலாகவும், இலேவி
யரின் மிருகஜீவன்களை இஸ்ரவேல் புத்திரரின்
மிருகஜீவன்களிலுள்ள தலையீற்றுன யாவுக்கும்
பதிலாகவும், நமக்கு எடுத்துக்கொள்; நாம் கர்த்
௪௨ தரென்றுர்.—அப்பொழுது மோசே கர்த்தர் தனக்
குக் கற்பித்தபடியே, இஸ்ரவேல் புத்திரரிலுள்ள
முதல்பேருன யாவரையும் இலக்கம்பார்த்தான்.—
௪௩ ஒரு மாதம்முதல்கொண்டு மேல்பட்ட வயதாயி
ருந்து. பேர்பேராக எண்ணப்பட்ட முதல்பே
ருன ஆண்பிள்ளைகளெல்லாம் இருபத்தீராயிரத்து
இருநூற்றெழுபத்து மூன்றுபேராயிருந்தார்கள்.
௪௪ அப்பொழுது கர்த்தர்மோசேயோடே பேசிச்
௪௫ சொன்னதாவது:—நீ இலேவியரை இஸ்ரவேல்
புத்திரரிலுள்ள எல்லா முதல்பேற்றுக்குப் பதிலா
கவும், இலேவியரின் மிருகஜீவன்களை அவர்க
ளுடைய மிருகஜீவன்களுக்குப் பதிலாகவும் எ
டுத்துக்கொள்; இலேவியர் நம்முடையவர்களா
௪௬ யிருப்பார்கள்; நாம் கர்த்தர். — இஸ்ரவேல் புத்
திரருடைய முதல்பேறுகளில் இலேவியரின் இ
லக்கத்திற்கு அதிகமாயிருந்து,மீட்கப்படவேண்
டிய இருநூற்றெழுபத்துமூன்றுபேருக்கோவெ
௪௭ ளில்,—நீ ஒவ்வொரு தலைக்கீடாக அவ்வைந்து
சேக்கலைப் பரிசுத்தசேக்கல் கணக்காக வாங்கு
௪௮ வாயாக; அந்தச் சேக்கல் இருபதுகேரா.—அவர்
களுடைய இலக்கத்திற்கு அதிகமாயிருந்து, மீட்
கப்பட்டவர்களுடைய அந்தத் திரவியத்தை ஆ
ரோனுக்கும் அவன் குமாரருக்கும் கொடுப்பா
௪௯ யாகவென்றுர். — அப்படியே இலேவியராலே
மீட்கப்பட்டவர்களின் இலக்கத்திற்கு அதிகமா
யிருந்து, இன்னம் மீட்கப்படவேண்டியவர்க
ளுக்கு ஈடாக மோசே இஸ்ரவேல் புத்திரரு
டைய முதல்பேருனவர்களின் கையிலே, —
௫௰ ஆயிரத்து முந்நூற்று அறுபத்தைந்து சேக்கலா
கிய திரவியத்தை, பரிசுத்தஸ்தலத்துச்சேக்கல்
௫௧ கணக்காக வாங்கி, — அதைக் கர்த்தருடைய
வாக்கின்படியே ஆரோனுக்கும் அவன் குமார
ருக்கும் கர்த்தர் தனக்குக் கற்பித்தபிரகாரமாகக்
கொடுத்தான்.

## ௪. அதிகாரம்.

௧. இலேவியரின் வயதையும், ௫. ஆசாரியர் கூடாரத்தைப் பேர்க்கும் போது, கோகாத்தியர் சுமக்குதலையும், ௰௬. எலேயாசாரின் தொழிலை யும், ௰௭. ஆசாரியரின் ஊழியத்தையும், ௨௧. கெர்சோனர் சுமக்குதலை யும், ௨௯. மெராரியர் சுமக்குதலையும், ௩௪. கோகாத்தியரின் இலக்கத் தையும், ௩௮. கெர்சோனரையும், ௪௨. மெராரியரையும் குறித்தது.

௧ கர்த்தர் மோசேயோடும் ஆரோனேடும் பேசிச்
௨ சொன்னதாவது:—இலேவியின் புத்திரருக்குள்
இருக்கிற கோகாத் புத்திரருடைய பிதாக்களின்
வீட்டு வம்சங்களில், — முப்பதாம்வயது முதல் ௩
கொண்டு ஐம்பதாம்வயதுமட்டும் இருந்து, ஆச
ரிப்புக்கூடாரத்திலே வேலைசெய்யும் சேனைக்
குட்படத்தக்க எல்லாரையும் எண்ணி, தொகை
ஏற்று.
ஆசரிப்புக்கூடாரத்திலே கோகாத் புத்திரரின் ௪
பணிவிடை பரிசுத்தத்திற்குப் பரிசுத்தமான
தற்கு அடுத்தது.—பாளயம் பயணப்படுகையில், ௫
ஆரோனும் அவன் குமாரரும் வந்து,மறைவான தி
ரையை இறக்கி, சாட்சியின் பெட்டியை அதினு
ல் மூடி,—அதின்மேலே தகசுத்தோல் மூடியைப் ௬
போட்டு, அதின்மீதில் சுத்த நீலமான துப்பட்
டியை விரித்து, அதின் வாரைகளைப் பாய்ச்சி,—
சமுகத்தப்பங்களுடையமேசையின்மேலே இள ௭
நீலத்துப்பட்டியை விரித்து, கலங்களையும் தூபக்
கிண்ணிகளையும் கரகங்களையும் மூடுகிற தட்டுக
ளையும் அதின்மேலே வைப்பார்களாக; எப்பொ
ழுதும் வைக்கும் அப்பமும் அதின்மேல் இருக்
கக்கடவது. — அவர்கள் அவைகளின்மேலே ௮
சிவப்புத்துப்பட்டியை விரித்து, அதைத் தகசுத்
தோல் மூடியினுல் மூடி, அதின் வாரைகளைப்
பாய்ச்சி,—இளநீலத்துப்பட்டியை வாங்கி, வெ ௯
ளிச்சத்தின் விளக்குத்தண்டையும் அதின் விளக்
குகளையும் அதின் கத்திரிகளையும் விளக்கணைக்
கிற எத்தனங்களையும் அதற்கு எண்ணெய் வார்க்
கிற சகல பாத்திரங்களையும் மூடி,—அதையும் அ ௰
தினுடைய எல்லா முட்டுகளையும் தகசுத்தோல்
மூடியிலே போட்டு, அதை வாரைகளின்மேலே
வைத்து, — பொன்பீடத்தின்மேலே இளநீலத் ௰௧
துப்பட்டியை விரித்து, அதைத் தகசுத்தோல்
மூடியினுல் மூடி, அதின் வாரைகளைப்பாய்ச்சி,—
தாங்கள் பரிசுத்தஸ்தலத்தில் ஆராதனைசெய்யும் ௰௨
எல்லாப் பணிமுட்டுகளையும் எடுத்து, இளநீலத்
துப்பட்டியிலே போட்டு, தகசுத்தோல் மூடியி
னுல் மூடி, வாரைகளின்மேலே வைத்து,—பலி ௰௩
பீடத்தைச் சாம்பல் அறவிளக்கி அதின்மேல்
இரத்தாம்பரத் துப்பட்டியை விரித்து,—தாங்கள் ௰௪
அதின்மேலே ஆராதனைசெய்யும் அதினுடைய
சகல பணிமுட்டுகளாகிய கலசங்களையும், முள்
துறடுகளையும், சாம்பல் எடுக்கும் கரண்டிகளை
யும், கலங்களையும், பலிபீடத்தின் எல்லா முட்
டுகளையும், அதின்மேலே வைத்து, அதின்மேலே
தகசுத்தோல் மூடியை விரித்து, அதின் வாரை
களைப் பாய்ச்சக்கடவர்கள்.—பாளயம் பயணப் ௰௫
படுகையில், ஆரோனும் அவன் குமாரரும் பரி
சுத்தஸ்தலத்தையும் அதினுடைய எல்லா முட்டு
களையும் மூடித் தீர்ந்ததற்குப்பிற்பாடு, கோகாத்
புத்திரர் எடுத்துப்போகிறதற்கு வரக்கடவர்கள்;
அவர்கள் சாவாதபடிக்குப் பரிசுத்தமானதைத்
தொடவேண்டாம்; ஆசரிப்புக் கூடாரத்திலே
கோகாத் புத்திரரின் சுமை இதுதான்.
ஆசாரியனுகிய ஆரோனின் குமாரன் எலே ௰௬
யாசார் விசாரிப்பதேதென்றுல், விளக்கின் எண்
ணெயும், சுகந்தங்களின் தூபவர்க்கமும், அன்

ரூடகக் காணிக்கையும், அபிஷேகத்தெண்ணெ
யும், வாசஸ்தலம் அனைத்தும், அதிலே பரிசுத்தஸ்
தலத்திலும் அதின் பண்டம்பாடிகளிலும் இருக்
கிற அனைத்தும், அவன் விசாரிப்பாய் இருப்ப
தாக என்றார்.
௰௭ கர்த்தர் மோசேயோடும் ஆரோனோடும் பேசிச்
௰௮ சொன்னதாவது:—கோகாத் வம்சத்தாரின் கோத்
திரத்தை இலேவியருக்குள்ளே சங்காரமாகப்
௰௯ பண்ணீர்களாக. — அவர்கள் பரிசுத்தத்திற்குப்
பரிசுத்தமானதைக் கிட்டுகையில், சாவாமல் உயி
ரோடிருக்கும்படிக்கு, நீங்கள் அவர்களுக்காகச்
௨௰ செய்யவேண்டியதேதெனில், — பரிசுத்தமான
தை மூடும்போது, அவர்கள் பார்க்கிறதற்கு உள்
பிரவேசித்துச் சாவாதபடிக்கு, ஆரோனும் அ
வன் குமாரரும் வந்து, அவர்களில் அவனவனை
அவன் வேலைக்கும் அவன் சுமைக்கும் வைக்கக்
கடவர்களென்றார்.
௨௧ பின்னையும் கர்த்தர் மோசேயோடே பேசிச்
௨௨ சொன்னதாவது: — கெர்சோன் புத்திரருடைய
பிதாக்களின் வீட்டுவம்சங்களிலும் முப்பதாம்
வயதுமுதல்கொண்டு ஐம்பதாம் வயதுமட்டும்
௨௩ இருந்து,–ஆசரிப்புக்கூடாரத்திலே பணிவிடை
வேலைசெய்யும் இராணுவச்சேனைகளுக்கு உள்ப்
படத்தக்க எல்லாரையும் இலக்கம்பார்த்து, தொ
௨௪ கை எற்றுவாயாக.—பணிவிடைசெய்கிறதிலும்
சுமக்கிறதிலும் கெர்சோன் வம்சத்தாரின், வேலை
௨௫ ஏதெனில்,—அவர்கள் வாசஸ்தலத்திற்கும் ஆச
ரிப்புக்கூடாரத்திற்கும் இருக்கிற சமுக்காளங்க
ளையும், அவைகளின் மூடியையும், உயர அவை
களின்மீதில் இருக்கிற தகசுத்தோல் மூடியை
யும், ஆசரிப்புச்கூடாரவாசல் மறைவையும்,—
௨௬ பிரகாரத்தின் வெளி ஆடைகளையும், வாசஸ்த
லத்தண்டையிலும் பலிபீடத்தண்டையிலும் சுற்
றிலுமிருக்கிற பிரகாரத்தினுடைய வாசல்ம
றைவையும், அவைகளின் கயிறுகளையும், அவை
களின் வேலைக்கடுத்த எல்லாப் பணிமுட்டுகளை
யும் சுமந்து, அவைகளுக்காகச் செய்யப்படும்
எல்லா வேலையையும் செய்யக்கடவர்கள். —
௨௭ கெர்சோன் புத்திரருடைய எல்லாச் சுமைக்கும்
அவர்களுடைய எல்லாப் பணிவிடைக்கும்
அடுத்த அவர்கள் வேலையெல்லாம் ஆரோனும்
அவன் குமாரரும் சொல்லுகிறபடியே நடக்க
வேண்டும்; அவர்களுடைய சுமையின் காவலை
யெல்லாம் அவர்களுக்கு ஒப்புவிக்கக்கடவீர்
௨௮ கள். — கெர்சோன் புத்திரரின் வம்சத்தார் ஆச
ரிப்புக்கூடாரத்திலே செய்யும் பணிவிடை இ
துதான்; அவர்களுடைய காவல் ஆசாரியனாகிய
ஆரோனின் குமாரன் இத்தாமாருடைய கையின்
கிழாயிருப்பதாக.
௨௯ மெராரி புத்திரருடைய பிதாக்களின் வீட்டு
வம்சங்களிலும் முப்பதாம்வயதுமுதல்கொண்டு
௩௰ ஐம்பதாம்வயதுமட்டும் இருந்து, — ஆசரிப்புக்
கூடாரத்திலே பணிவிடைவேலைசெய்யும் சே
னைக்குள்ப்படத்தக்கவர்களை எல்லாம் இலக்கம்
௩௧ பார்க்கக்கடவாய். — ஆசரிப்புக்கூடாரத்தில் அ
வர்களுடைய எல்லாப் பணிவிடைக்கும் அடுத்த
சுமையின் காவலேதெனில், வாசஸ்தலத்தின்
பலகைகளும், அவைகளின் தாழ்ப்பாள்களும்,
தூண்களும், கால்களும், — சுற்றிலுமிருக்கிற ௩௨
பிரகாரத்தின் தூண்களும், அவைகளின் கால்க
ளும், முளைக்கூச்சுகளும், கயிறுகளும், அவைக
ளின் எல்லா முட்டுகளும், எல்லாவேலையும் கூ
டத்தானே; அவர்கள் சுமந்து காவல்காக்கும்
முட்டுகளைப் பேர்பேராக எண்ணக்கடவீர்கள்.–
ஆசாரியனாகிய ஆரோனுடைய குமாரனாகிய ௩௩
இத்தாமாருடைய கையின்கீழ் மெராரி புத்திர
ரின் வம்சத்தார் ஆசரிப்புக்கூடாரத்திலே செய்
யும் பணிவிடைக்கு அடுத்த எல்லா வேலையும்
இதுதான் என்றார்.
அப்படியே மோசேயும் ஆரோனும் சபையின் ௩௪
பிரபுக்களும் கோகாத் புத்திரருடைய பிதாக்
களின் வீட்டுவம்சங்களில் முப்பதாம்வயது
துவக்கி ஐம்பதாம்வயதுமட்டும் இருந்த,—ஆச ௩௫
ரிப்புக்கூடாரத்திலே பணிவிடைசெய்யும் சே
னைக்கு உள்ப்படத்தக்க யாவரையும் இலக்கம்
பார்த்தார்கள்.–அவர்கள் வம்சங்களில் இலக்கம் ௩௬
பார்க்கப்பட்டவர்கள் இரண்டாயிரத்து எழு
நூற்று ஐம்பதுபேர்.—கர்த்தர் மோசேக்குக் கற் ௩௭
பித்தபடியே, மோசேயும் ஆரோனும் கோகாத்
வம்சத்தாரில் எல்லாரும் ஆசரிப்புக்கூடாரத்தில்
வேலைசெய்கிறதற்காக இலக்கம்பார்த்தவர்கள்
இவர்கள்தான்.
கெர்சோன் புத்திரருடைய பிதாக்களின் வீட் ௩௮
டுவம்சங்களிலும் முப்பதாம்வயதுதுவக்கி ஐம்ப
தாம்வயதுமட்டும் இருந்த,—ஆசரிப்புக்கூடாரத் ௩௯
திலே பணிவிடைசெய்யும் சேனைக்கு உள்ப்
படத்தக்க யாவரும் இலக்கம்பார்க்கப்பட்டார்
கள். — அவர்களில் இலக்கம்பார்க்கப்பட்டவர் ௪௰
கள் அவரவர் குலத்தின்படிக்கும், பிதாக்களு
டைய வம்சத்தின்படிக்கும் இரண்டாயிரத்து அ
றுநூற்றுமுப்பதுபேர்.—மோசேயும் ஆரோனும் ௪௧
கர்த்தர் கற்பித்தபடியே கெர்சோன் புத்திரரின்
வம்சத்தாரில் ஆசரிப்புக்கூடாரத்தில் வேலை
செய்ய இலக்கம்பார்த்தவர்கள் இவர்கள்தான்.
மெராரி புத்திரருடைய பிதாக்களின் வீட்டு ௪௨
வம்சங்களிலும் முப்பதாம்வயதுதுவக்கி ஐம்ப
தாம்வயதுமட்டும் இருந்த, — ஆசரிப்புக்கூடா ௪௩
ரத்திலே பணிவிடைசெய்யும் சேனைக்கு உள்ப்
படத்தக்க யாவரும் இலக்கம்பார்க்கப்பட்டார்
கள்.—அவர்களில் இலக்கம்பார்க்கப்பட்டவர் ௪௪
கள் தங்கள் வம்சங்களின்படியே மூவாயிரத்து
இருநூறுபேர். — கர்த்தர் மோசேக்குக் கற்பித்த ௪௫
படியே, மோசேயும் ஆரோனும் மெராரி புத்திர
ரின் வம்சத்தாரில் இலக்கம்பார்த்தவர்கள் இவர்
கள்தான்.
இலேவியருடைய பிதாக்களின் வீட்டுவம் ௪௬
சங்களில் முப்பதாம்வயதுமுதல்கொண்டு ஐம்
பதாம்வயதுமட்டும் இருந்த ஆசரிப்புக்கூடாரத்
திலே செய்யும் பணிவிடைவேலைக்கும் சுமையி
ன்வேலைக்கும் உள்ப்படத்தக்கவர்களும்,—மோ ௪௭

சேயும் ஆரோனும் இஸ்ரவேலின் பிரபுக்களும்
௪௮ இலக்கம்பார்த்தவர்களுமெல்லாம், — எண்ணாயி
ரத்து ஐந்நூற்றெண்பதுபேராயிருந்தார்கள். —
௪௯ கர்த்தர் மோசேக்குக் கற்பித்த வாக்கின்படியே,
அவர்கள் தங்கள் தங்கள் பணிவிடைக்கென்றும்
தங்கள் தங்கள் சுமைக்கென்றும் இலக்கம்பார்க்
கப்பட்டார்கள்.

## ௫. அதிகாரம்.

*௧. அசுத்தம் பாளயத்தைவிட்டு நீக்கப்படுவதையும், ௫. அபகரிப்புக்கு ஈடு செய்வதையும், ௰௧. எரிச்சலின் சோதனையையும் குறித்தது.*

௧ கர்த்தர் மோசேயோடே பேசிச் சொன்னதா
௨ வது:—எல்லாக் குஷ்டரோகிகளையும் எல்லாப்
பிரமியக்காரரையும் சவத்தினாலே தீட்டுப்பட்ட
யாவரையும் பாளயத்திலிருந்து விலக்கிவிட,
௩ இஸ்ரவேல் புத்திரருக்குக் கற்பி. — ஆண்பிள்
ளைகளும் பெண்பிள்ளைகளுமான அப்படிக்கொ
த்தவர்களை நீங்கள் விலக்கி, நாம் தங்கள் நடு
வே வாசம்பண்ணுகிற தங்கள் பாளயங்களை அ
வர்கள் தீட்டாக்காதபடிக்கு, அவர்களைப் பா
ளயத்திற்குப் புறம்பாக்கிவிடக்கடவர்கள் என்
௪ றார். — கர்த்தர் மோசேயோடே சொன்னபடி
யே, இஸ்ரவேல் புத்திரர் இந்தப்படியே செய்
து, அவர்களைப் பாளயத்திற்குப் புறம்பாக்கிவிட்
டார்கள்.
௫ கர்த்தர் மோசேயோடே பேசிச் சொன்னதா
௬ வது:—நீ இஸ்ரவேல் புத்திரரோடே சொல்ல
வேண்டியதேதெனில், ஒரு ஆண்பிள்ளையானா
லும் பெண்பிள்ளையானாலும் மனிதன் செய்யும்
சகலவித பாவங்களில் ஒன்றைச் செய்து, கர்த்
தருக்கு எற்காத அநியாயம்பண்ணினால், அந்த
௭ ஆத்துமாவின்மேலே குற்றம் சுமந்தது.—அவர்
கள் செய்த தங்கள் பாவத்தை அறிக்கையிடக்
கடவர்கள்; அப்படிக்கொத்தவன் குற்றம்செய்த
முதலைத் திரும்பக் கொடுத்து, அதனோடே ஐந்
தில் ஒருபங்கை அதிகமாய்க் கூட்டி, தான் நே
ரஸ்தனாகப் போனவனுக்குச் செலுத்தக்கட
௮ வன். — அதைக் கேட்டு வாங்குகிறதற்கு ஒரு
வரும் இல்லாதிருந்ததேயானால், அப்பொழுது
அவனுக்காகப் பாவநிவிர்த்தி உண்டாக்கப்படும்;
ஆட்டுக்கடா செலுத்தப்படுவதுமல்லாமல், கர்த்
தருக்கு அந்த முதல்செலுத்தப்பட்டு, ஆசாரிய
னைச் சேரவேண்டும்.
௯ இஸ்ரவேல் புத்திரர் பரிசுத்தம்பண்ணுகிற சக
லத்திலும் எறெடுத்து, ஆசாரியனண்டைக்குக்
கொண்டுவருகிற எல்லாப் படைப்பும் அவ
௰ னுடையவைகளாயிருக்கும். — அவனவன் பரி
சுத்தம்பண்ணுகின்றவைகள் அவனுடையவை
களாயிருக்கும்; அவனவன் ஆசாரியனுக்குக்
கொடுக்கிறவைகளும் அவனுடையவைகளாய்
இருக்குமென்று சொல்லென்றார்.
௰௧ கர்த்தர் மோசேயோடே பேசிச் சொன்னதா
௰௨ வது:-நீ இஸ்ரவேல் புத்திரரோடே பேசி, அவர்
களுக்குச் சொல்லவேண்டியதேதெனில், எவன்
ஒருவன் பெண்சாதி பிறமுகம்பார்த்து, அவனுக்
௰௩ குத் துரோகம்பண்ணி,—ஒருவன் அவளோடே
அநுபோகமாகச் சயனித்திருந்தாலும், அவளு
டைய புருஷன் கண்களுக்கு அது ஒளிப்பிட
மானதினால் அவள் அதை மறைக்கின்றபொழு
தும், அவள் தீட்டாக்கப்பட்டிருந்தும், சாட்சி
இல்லாமலும் அவள் கையும் களவுமாகப் பிடி
படாமலும் இருக்கிறபொழுதும், — எரிச்சலின் ௰௪
ஆவி அவன்மேல் வந்து, அவன் தீட்டாக்கப்
பட்ட தன் பெண்சாதியின்மேல் வயிராக்கிய
மானால், அல்லவென்று எரிச்சலின் ஆவி அ
வன்மேல் வந்து தீட்டாக்கப்படாத தன் பெண்
சாதியின்மேல் வயிராக்கியமானால், — அப்பொ ௰௫
ழுது அந்தப் புருஷன் தன் பெண்சாதியை ஆசா
ரியனண்டைக்கு அழைத்துவந்து, அவள் நிமித்
தம் படைப்பாக ஒரு மரக்கால் வால்கோதுமை
மாவிலே பத்தில் ஒருபங்கைக் கொண்டுவந்து,
அது எரிச்சலின் காணிக்கையும் அக்கிரமத்தை
நினைக்கப்பண்ணுகிற காணிக்கையுமானபடியி
னாலே, அதின்மேல் எண்ணெய் வாராமலும் குங்
குலிகம் போடாமலும் இருப்பானாக.
ஆசாரியன் அவளைச் சேரப்பண்ணி, கர்த்த ௰௬
ருக்குமுன்பாக நிறுத்தி,—ஒரு மண்பாண்டத் ௰௭
திலே பரிசுத்தத் தண்ணீரை வார்த்து, வாசஸ்த
லத்தின் தரையிலிருக்கும் தூளிலே கொஞ்சம்
எடுத்து, அந்தத் தண்ணீரிலே போட்டு,—பெண் ௰௮
சாதியைக் கர்த்தருக்குமுன்பாக நிறுத்தி, அவள்
தலையைத் திறந்துவைத்து, எரிச்சலின் காணிக்
கையாகிய நினைப்பூட்டுதலின் காணிக்கையை
அவள் உள்ளங்கையிலே வைப்பானாக; ஆசாரி
யன் கையிலோவென்றால், சாபம்கொடுக்கிற
அந்தக் கசப்பான தண்ணீர் இருக்கக்கடவது.—
அப்பொழுது ஆசாரியன் அவளை ஆணை இடு ௰௯
வித்துக்கொண்டு, ஒருவனும் உன்னோடே சய
னிக்காமலும், உன் புருஷன்கீழிருக்கிற நீ தீட்
டுப்படப் பிறமுகம்பாராமலும் இருந்தால், சா
பம்கொடுக்கிற இந்தக் கசப்பான தண்ணீரின்
தோஷத்திற்கு நீங்கலாயிரு.—உன் புருஷன்கீழி ௨௰
ருக்கிற நீ பிறமுகம்பார்த்து, தீட்டாக உன் புரு
ஷனல்லாத ஒருவன் உன்னோடே அநுபோக
மாய்ச் சயனித்ததுண்டேயானால்,—கர்த்தர் உன் ௨௧
இடுப்பைச் சூம்பவும், உன் வயிற்றை வீங்கவும்
பண்ணுவதினால், உன்னை உன் சனத்தின் நடு
வே சாபமாகவும் ஆணையிடுதலாகவும் வைப்பா
ராக.—உன் வயிற்றை வீங்கவும் இடுப்பைச் சூம் ௨௨
பவும்பண்ண, இந்தக் கசப்பான தண்ணீர் உன்
குடல்களுக்குப் போகவும்கடவதென்கிற சாப
வார்த்தையாலே பெண்சாதியை ஆணை இடுவித்
துக்கொள்வானாக; அதற்குப் பெண்சாதி, ஆ
மன், ஆமன், என்று சொல்லக்கடவள். — பிற் ௨௩
பாடு ஆசாரியன் இந்தச் சாபவார்த்தைகளை ஒரு
சீட்டிலே எழுதி, கசப்பான தண்ணீரினாலே
கழுவிப்போட்டு, — கசப்பாகும் அந்தச் சாபத் ௨௪
தண்ணீர் அவளுக்குள் போகும்படிக்கு, அதை
அவளுக்குக் குடிக்கக் கொடுக்கக்கடவன்.
எப்படியெனில் முந்தி ஆசாரியன் எரிச்ச ௨௫
லின் காணிக்கையைப் பெண்சாதியின் கையில்

வாங்கி, அதைக் கர்த்தருக்குமுன்பாக அசை
௨௬ வாட்டி, பீடத்தின்மேலே செலுத்தி,—நினைப்புக்
கென்று அதிலே ஒரு கைப்பிடி நிறைய எடுத்து,
பீடத்தின்மேலே கொளுத்தி, பிற்பாடு பெண்
சாதிக்கு அந்தத் தண்ணீரைக் குடிக்கக் கொ
டுக்கக்கடவன்.
௨௭ குடிக்கக் கொடுத்தபிற்பாடு சம்பவிப்பதே
தெனில், அவள் தீட்டாகி, தன் புருஷனுக்குத்
துரோகம்பண்ணியிருந்தால், அந்தச் சாபத்தண்
ணீர் கசப்புண்டாக அவளுக்குள் போனதினா
லே, அவள் வயிறு வீங்கி, அவள் இடுப்புச் சூம்
பும்; அப்படியே அந்தப் பெண்சாதி தன் சனத்
௨௮ திற்குள்ளே சாபமாக இருப்பாள்.—பெண்சாதி
தீட்டாக்கப்படாமல் சுத்தமாயிருந்தாளேயாகில்,
அவள் கர்ப்பம்தரிக்கத்தக்கவளாய் அதற்கு நீங்க
லாயிருப்பாள்.
௨௯ புருஷன்கீழிருக்கிற பெண்சாதி பிறமுகம்
பார்த்துத்தீட்டானதினால் உண்டான எரிச்சலுக்
௩௰ கும்,—அல்லது புருஷன்மேல் எரிச்சலின் ஆவி
வருகிறதினாலே, அவன் தன் பெண்சாதியின்மே
லே அடைந்த எரிச்சலுக்கும், அடுத்த நியாயப்
பிரமாணம் இதுதானே; அவன் கர்த்தருக்குமுன்
பாகப் பெண்சாதியை நிறுத்துவானாக; அப்பொ
ழுது ஆசாரியன் இந்த நியாயப்பிரமாணத்தின்
படியெல்லாம் அவளுக்குச் செய்யக்கடவன்.—
௩௧ புருஷன் அக்கிரமத்திற்கு நீங்கலாயிருப்பான்;
அப்படிக்கொத்த பெண்சாதியோவென்றால்,
தன் அக்கிரமத்தைச் சுமப்பாளென்று சொல்லெ
ன்றார்.

## ௬. அதிகாரம்.

௧. நசரேயனைக்குறித்த கட்டளை. ௨௨. சனங்களை ஆசீர்வதிக்கும் விதம்.

௧ கர்த்தர் மோசேயோடே பேசிச் சொன்னதாவ
௨ து:—நீ இஸ்ரவேல் புத்திரரோடே பேசிச்சொல்
லவேண்டியதேதெனில், ஒரு ஆண்சாதியாகி
லும் பெண்சாதியாகிலும் கர்த்தருக்கென்று வர்ச்
சித்தவர்களாயிருக்கும்படிக்கு நசரேயர் பொருத்
தனையாகிய ஒரு விசேஷித்த பொருத்தனையைப்
௩ பண்ணினால், — அப்படிக்கொத்தவன் [1]திராட்
சப்பழ இரசத்தையும், லாகிரியுள்ள பானத்தை
யும், வர்ச்சித்திருக்கக்கடவன்; அவன் திராட்
சப்பழ இரசத்தின் காடியையும், லாகிரியுள்ள
பானத்தின் காடியையும், திராட்சப்பழங்களு
டைய எந்தவிதமான சாற்றையும் குடிக்காம
லும் திராட்சப்பச்சைப்பழங்களையாகிலும் வற்
றலான பழங்களையாகிலும் புசிக்காமலும், —
௪ தான் நசரேயனாகிய நாளெல்லாம் திராட்சக்க
னியின் விதையினாலாகிலும் தோலினாலாகிலும்
செய்யப்பட்ட யாதொன்றைப் புசிக்காமலும்
௫ இருக்கக்கடவன்.-நசரேய பொருத்தனை அவன்
மேலிருக்கும் நாளெல்லாம் [2]சவரகன் கத்தி அ
வன் தலையின்மேல் வரவேண்டாம்; அவன்
கர்த்தருக்கென்று வர்ச்சித்திருக்கும் நாள் நிறை
வேறும்மட்டும் பரிசுத்தமாயிருந்து, தன் தலையின்
மயிர்களை வளர்க்கக்கடவன்.—அவன் கர்த்தருக் ௬
கென்று வர்ச்சித்திருக்கும் நாளெல்லாம் செத்த
சவத்தண்டையிலே வரவேண்டாம். — [3]மரண ௭
மடைந்த தன் தகப்பனாலாகிலும், தாயினாலாகி
லும், சகோதரனாலாகிலும், சகோதரியினாலாகி
லும், அவன் தீட்டுப்படானாக; ஏனெனில் அ
வனுடைய பராபரனின் நசரேய பொருத்தனை
அவன் தலையின்மேல் இருக்கின்றது.-அவன் நச ௮
ரேயனாகிய நாளெல்லாம் கர்த்தருக்குப் பரிசுத்
தன்.—அவனண்டையிலே எவன் ஒருவன் அ ௯
சுப்பான சடுதியிலே செத்ததினாலே, நசரேய
பொருத்தனையுள்ள அவனுடைய தலை தீட்டுப்
பட்டதேயாகில், அவன் தன் சுத்திகரிப்பின் நா
ளாகிய ஏழாம்நாளிலே தன் தலையைச் சிரைத்துக்
கொண்டு, — எட்டாம்நாளிலே இரண்டு காட் ௰
டுப்புறாக்களை, அல்லது இரண்டு புறாக்குஞ்சுக
ளை ஆசரிப்புக்கூடாரவாசலில் ஆசாரியனண்
டைக்குக் கொண்டுவரக்கடவன். — அப்பொ ௰௧
ழுது ஆசாரியன் ஒன்றைப் பாவம்போக்கும்பலி
யும், மற்றதைச் சர்வாங்கதகனபலியுமாக்கி, சவ
த்தினாலே பட்ட தீட்டின் நிவிர்த்தியை அவனுக்
காக உண்டாக்கி, அவன் தலையை அந்நாளிலே
பரிசுத்தமாக்குவானாக.—அதின்பிறகு இவன் தன் ௰௨
பொருத்தனையின் நாள்களிலே, கர்த்தருக்கென்
று வர்ச்சித்தவனாயிருந்து, ஒருவயது ஆட்டுக்குட்
டியைக் குற்றம்போக்கும்பலியாகக் கொண்டுவ
ரக்கடவன்; முந்தின நாள்களோவெனில், அவ
னுடைய நசரேய பொருத்தனை, தீட்டுப்பட்ட
தினால் வீணாயிற்று.
நசரேயனுடைய நியாயப்பிரமாணமாவது: ௰௩
அவனுடைய பொருத்தனையின் நாள்கள் நிறை
வேறின அன்றே அவன் ஆசரிப்புக்கூடாரவாச
லிலே வந்து,—சர்வாங்கதகனபலியாக ஒருவய ௰௪
துள்ள பழுதற்ற ஒரு ஆட்டுக்குட்டியையும், பா
வம்போக்கும்பலியாக ஒருவயதுள்ள பழுதற்ற
ஒரு பெண் ஆட்டுக்குட்டியையும், சமாதானப
லியாகப் பழுதற்ற ஒரு ஆட்டுக்கடாவையும்,—
ஒரு கூடையில் எண்ணெயிலே பிசைந்த புளிப் ௰௫
பில்லாத மெல்லியமாவின் அதிரசங்களையும்,
எண்ணெய் தடவப்பட்ட புளிப்பில்லாத அ
டைகளையும், அவைகளுக்கு அடுத்த காணிக்கை
யையும், ஊற்றுதல்களையும், கர்த்தருக்குத் தன்
காணிக்கையாகச் செலுத்தக்கடவன். — அதை ௰௬
ஆசாரியன் கர்த்தருக்குமுன்பாகக் கொண்டு
வந்து, பாவம்போக்கும் அவனுடைய பலியை
யும் அவனுடைய சர்வாங்கதகனபலியையும்
செலுத்தி.—ஆட்டுக்கடாவைக் கூடையிலிருக் ௰௭
கும் புளிப்பில்லாத அப்பங்களோடும்கூடக்
கர்த்தருக்குச் சமாதானபலியாகச் செலுத்தி,
அவனுடைய காணிக்கையையும் ஊற்றுதலையும்
படைப்பானாக.—அப்பொழுது நசரேயன் ஆச ௰௮
ரிப்புக் கூடாரவாசலிலே, தன் பொருத்தனை
யுள்ள தலையைச் சிரைத்து, தன் பொருத்தனை

1 ௩ மோ. ௰. ௯.—2 நியா. ௰௩. ௫.

3 ௩ மோ. ௨௧. ௰௧.

யுள்ள தலைமயிரை எடுத்துக்கொண்டு, சமா
தானபலியின்கீழெரிகிற அக்கினியின்மேலே
௰௯ போடக்கடவன்.— நசரேயன் தன் பொருத்த
னையுள்ள தலையைச் சிரைத்துக்கொண்டபிற்
பாடு, ஆசாரியன் ஆட்டுக்கடாவினுடைய வே
விக்கப்பட்ட ஒரு முன்னங்கால் தொடையை
யும் கூடையில் இருக்கிறவைகளிலே புளிப்பி
ல்லாத ஒரு அதிரசத்தையும் புளிப்பில்லாத ஒரு
அடையையும் எடுத்துக்கொண்டு, அவனுடைய
௨௰ உள்ளங்கைகளில் வைத்து,—அவைகளைக் கர்த்
தருக்குமுன்பாக அசைவாட்டக்கடவன்; அது
அசைவாட்டப்பட்ட மார்க்கண்டத்தோடும், ஏ
றெடுத்துப் படைக்கப்பட்ட முன்னந்தொ
டையோடும், ஆசாரியனைச் சேரும் பரிசுத்தமா
னது; பிற்பாடு நசரேயன் திராட்சப்பழ இர
௨௧ சம் குடிக்கலாம்.—இது பொருத்தனைபண்ணின
நசரேயனுக்கும், அவன் தன் கைக்கு உதவுகிற
தை அல்லாமல், தன் நசரேய பொருத்தனை
யின்நிமித்தம் கர்த்தருக்குச் செலுத்தும் காணிக்
கைக்கும் அடுத்த நியாயப்பிரமாணம்; அவன்
பொருத்தனைபண்ணினதற்குச் சரியாக, தன்
பொருத்தனையினுடைய நியாயப்பிரமாணத்தின்
படியே செய்து தீரவேண்டுமென்று சொல்லெ
ன்றார்.
௨௨ கர்த்தர் மோசேயோடே பேசிச் சொன்னதா
௨௩ வது:— நீ ஆரோனோடும் அவன் குமாரரோடும்
பேசிச் சொல்லவேண்டியதேதெனில், நீங்கள்
இஸ்ரவேல் புத்திரரை ஆசீர்வதிக்க, அவர்களுக்
குச் சொல்லவேண்டியதாவது:
௨௪ கர்த்தர் உன்னை ஆசீர்வதித்து, உன்னைக் காக்
கக்கடவர்.
௨௫ கர்த்தர் தம்முடைய முகத்தை உன்மேலே பிர
காசிக்கப்பண்ணி, உன்மேலே கிருபையாய் இ
ருக்கக்கடவர்.
௨௬ கர்த்தர் தம்முடைய முகத்தை உன்மேல் ஏறெ
டுத்து, உனக்குச் சமாதானம் கட்டளையிடக்கட
வரென்பதுதானே.
௨௭ இப்படி நம்முடைய நாமத்தை இஸ்ரவேல்
புத்திரர்மேல் வைப்பார்களாக; நாம் அவர்களை
ஆசீர்வதிப்போமென்று சொல்லென்றார்.

## ௭. அதிகாரம்.

௧. பிரபுக்கள் கூடாரப்பிரதிஷ்டையிலும், ௰. பீடப்பிரதிஷ்டையிலும் செலுத்தும் காணிக்கை. ௮௯. பராபரன் கிருபாசனத்தில் இருந்து மோசேயுடன் பேசினது.

௧ மோசே வாசஸ்தலத்தை எடுப்பித்து, அதையும்
அதின் எல்லா முட்டுகளையும் பலிபீடத்தையும்
அதின் எல்லா முட்டுகளையும் அபிஷேகம்பண்
ணி, பரிசுத்தமாக்கித் தீர்ந்தநாளிலே சம்பவித்
௨ ததேதெனில், — தங்கள் பிதாக்களுடைய வீட்
டாரின் தலைவரும், இலக்கம்பார்க்கப்பட்டவர்
களின் விசாரிப்புக்கு வைக்கப்பட்ட கோத்
திரப் பிரபுக்களுமாகிய இஸ்ரவேலின் பிரபுக்
௩ கள் காணிக்கைகளைச் செலுத்தினார்கள்.—தங்
கள் காணிக்கையாக, ஆறு குலால்வண்டில்களை
யும், பன்னிரண்டு மாடுகளையும், இரண்டிரண்டு
பிரபுக்களுக்கு ஒவ்வொரு வண்டிலும், ஒவ்
வொரு பிரபுக்கு ஒவ்வொரு மாடுமாக, கர்த்தருக்
குச் செலுத்த வாசஸ்தலத்திற்குமுன்பாகக் கொ
ண்டுவந்தார்கள். — அப்பொழுது கர்த்தர் மோ ௪
சேயோடே சொன்னதாவது:—நீ அவர்கள் கை ௫
யில் அவைகளை ஆசரிப்புக்கூடாரத்தின் ஊழி
யத்திற்காக வாங்கி, இலேவியருக்கு அவரவர்
வேலைக்குத்தக்கவைகளாக, பங்கிட்டுக் கொடு
வென்றார்.—அப்பொழுது மோசே அந்த வண் ௬
டில்களையும் மாடுகளையும் வாங்கி, இலேவியருக்
குக் கொடுத்தான்.—இரண்டு வண்டில்களையும் ௭
நான்கு மாடுகளையும் கெர்சோன் புத்திரருக்கு,
அவர்கள் வேலைக்குத்தக்க பங்காகக் கொடுத்து,-
நான்கு வண்டில்களையும் எட்டு மாடுகளையும் ௮
மெராரியின் புத்திரருக்கு, ஆசாரியனாகிய ஆரோ
னின் குமாரன் இத்தாமாருடைய கையின்கீழி
ருக்கிற அவர்களுடைய வேலைக்குத்தக்க பங்
காகக் கொடுத்தான்.—கோகாத்தின் புத்திரருக் ௯
கோவெனில், ஒன்றும் கொடுத்ததில்லை; ஏனெ
னில் தோளின்மேலே சுமக்கும் பரிசுத்தஸ்தலத்
தின்வேலை அவர்கள்மேலே சுமந்திருந்தது.
பலிபீடம் அபிஷேகம்பண்ணப்பட்ட நா ௰
ளிலே, பிரபுக்கள் அதின் பிரதிஷ்டைக்காகவும்
காணிக்கைகளைச் செலுத்தி, பலிபீடத்திற்கு
முன்பாகத் தங்கள் காணிக்கையைக் கொண்டு
வந்தார்கள்.—அப்பொழுது கர்த்தர் மோசேயுட ௰௧
னே, ஒவ்வொருநாளிலே ஒவ்வொரு பிரபு பலி
பீடத்தின் பிரதிஷ்டைக்காகத் தங்கள் காணிக்
கையைச் செலுத்துவார்களாக என்றார்.
அப்படியே முதலாம்நாளிலே தன் காணிக் ௰௨
கையைச் செலுத்தினவன் யூதாகோத்திரத்தானா
கிய அமீனதாபின் குமாரன் நாகேசோன்.—
அவன் காணிக்கை ஏதெனில் பரிசுத்தஸ்தலத் ௰௩
தின் சேக்கல் கணக்காக நூற்றுமுப்பது சேக்
கல் நிறையான ஒரு வெள்ளித்தாலமும், எழு
பது சேக்கல் நிறையான ஒரு வெள்ளிக்கலமும்,
இவ்விரண்டும் படைக்கும் காணிக்கையாக எண்
ணெயிலே பிசைந்த மெல்லியமாவினால் நிறைந்
திருந்தன. — தூபவர்க்கத்தால்நிறைந்த பத்துச் ௰௪
சேக்கல் நிறையுள்ளபொன்னான ஒரு தூபக்கிண்
ணியும், — சர்வாங்கதகனபலியாக ஒரு காளை ௰௫
எருதும், ஒரு ஆட்டுக்கடாவும், ஒருவயதான
ஒரு ஆட்டுக்குட்டியும், — பாவம்போக்கும்பலி ௰௬
யாக ஒரு வெள்ளாட்டுக்கடாவும்,—சமாதானப ௰௭
லியாக இரண்டு மாடுகளும், ஐந்து ஆட்டுக்க
டாக்களும், ஐந்து வெள்ளாட்டுக்கடாக்களும்,
ஒருவயதான ஐந்து ஆட்டுக்குட்டிகளும்தானே;
இது அமீனதாபின் குமாரனாகிய நாகேசோனின்
காணிக்கை.
இரண்டாம் நாளிலே ஈசக்காரின் பிரபுவாகிய ௰௮
சூவாரின் குமாரன் நெத்தானியேல் செலுத்து
தல்செய்தான்.—அவன் தன் காணிக்கையாகச் ௰௯
செலுத்தினதாவது: பரிசுத்தஸ்தலத்தின் சேக்கல்
கணக்காக நூற்றுமுப்பது சேக்கல் நிறையான
ஒரு வெள்ளித்தாலமும், எழுபது சேக்கல் நிறை

யான ஒரு வெள்ளிக்கலமும், இவ்விரண்டும்
படைக்கும் காணிக்கையாக எண்ணெயிலே
பிசைந்த மெல்லியமாவினால் நிறைந்திருந்தன.—
௨௰ தூபவர்க்கத்தால் நிறைந்த பத்துச்சேக்கல் நிறை
யுள்ள பொன்னான ஒரு தூபக்கிண்ணியும்,—
௨௧ சர்வாங்கதகனபலியாக ஒரு காளை எருதும், ஒரு
ஆட்டுக்கடாவும், ஒருவயதான ஒரு ஆட்டுக்குட்
௨௨ டியும், — பாவம்போக்கும்பலியாக ஒரு வெள்
௨௩ ளாட்டுக்கடாவும்,—சமாதானபலியாக இரண்டு
மாடுகளும், ஐந்து ஆட்டுக்கடாக்களும், ஐந்து
வெள்ளாட்டுக்கடாக்களும், ஒரு வயதான ஐந்து
ஆட்டுக்குட்டிகளும்தானே; இது சூவாரின் குமா
ரனாகிய நெத்தானியேலின் காணிக்கை.
௨௪ மூன்றாம்நாளிலே ஏலோனின் குமாரனாகிய
எலியாப்பென்றசேபுலோனின் புத்திரரின் பிரபு
௨௫ செலுத்துதல்செய்தான். — அவன் காணிக்கை
ஏதெனில், பரிசுத்தஸ்தலத்தின் சேக்கல் கணக்
காக நூற்றுமுப்பது சேக்கல் நிறையான ஒரு
வெள்ளித்தாலமும், எழுபது சேக்கல் நிறையான
ஒரு வெள்ளிக்கலமும், இவ்விரண்டும் படைக்
கும் காணிக்கையாக எண்ணெயிலே பிசைந்த
௨௬ மெல்லியமாவினால் நிறைந்திருந்தன.—தூபவர்க்
கத்தால் நிறைந்த பத்துச்சேக்கல் நிறையுள்ள
௨௭ பொன்னான ஒரு தூபக்கிண்ணியும்,—சர்வாங்க
தகனபலியாக ஒரு காளை எருதும், ஒரு ஆட்டுக்
கடாவும், ஒருவயதான ஒரு ஆட்டுக்குட்டியும்,—
௨௮ பாவம்போக்கும்பலியாக ஒரு வெள்ளாட்டுக்
௨௯ கடாவும், — சமாதானபலியாக இரண்டு மாடுக
ளும், ஐந்து ஆட்டுக்கடாக்களும், ஐந்து வெள்
ளாட்டுக்கடாக்களும், ஒருவயதான ஐந்து ஆட்
டுக்குட்டிகளும்தானே; இது ஏலோனின் குமார
னாகிய எலியாப்பின் காணிக்கை.
௩௰ நான்காம் நாளிலே சேதேயூரின் குமாரனாகிய
எலிசூரென்ற ரூபேன் புத்திரரின் பிரபு செலுத்
௩௧ துதல்செய்தான்.—அவன் காணிக்கை ஏதெனில்,
பரிசுத்தஸ்தலத்தின் சேக்கல் கணக்காக நூற்று
முப்பது சேக்கல் நிறையான ஒரு வெள்ளித்தா
லமும், எழுபது சேக்கல் நிறையான ஒரு வெள்
ளிக்கலமும், இவ்விரண்டும் படைக்கும் காணிக்
கையாக எண்ணெயிலே பிசைந்த மெல்லியமா
௩௨ வினால் நிறைந்திருந்தன. — தூபவர்க்கத்தால் நி
றைந்த பத்துச்சேக்கல் நிறையுள்ள பொன்னான
௩௩ ஒரு தூபக்கிண்ணியும், — சர்வாங்கதகனபலி
யாக ஒரு காளை எருதும், ஒரு ஆட்டுக்கடாவும்,
௩௪ ஒருவயதான ஒரு ஆட்டுக்குட்டியும், — பாவம்
போக்கும்பலியாக ஒரு வெள்ளாட்டுக்கடாவும்,—
௩௫ சமாதானபலியாக இரண்டு மாடுகளும், ஐந்து
ஆட்டுக்கடாக்களும், ஐந்து வெள்ளாட்டுக்கடாக்
களும், ஒருவயதான ஐந்து ஆட்டுக்குட்டிகளும்
தானே; இது சேதேயூரின் குமாரனாகிய எலிசூ
ரின் காணிக்கை.
௩௬ ஐந்தாம்நாளிலே சூரிஷதாயின் குமாரனாகிய
செலூமியேலென்ற சிமேயோன் புத்திரரின் பிர
௩௭ பு செலுத்துதல்செய்தான்.—அவன் காணிக்கை
ஏதெனில், பரிசுத்தஸ்தலத்தின் சேக்கல் கணக்
காக நூற்றுமுப்பது சேக்கல் நிறையான ஒரு
வெள்ளித்தாலமும், எழுபது சேக்கல் நிறையான
ஒரு வெள்ளிக்கலமும், இவ்விரண்டும் படைக்
கும் காணிக்கையாக எண்ணெயிலே பிசைந்த
மெல்லியமாவினால் நிறைந்திருந்தன.—தூபவர்க் ௩௮
கத்தால் நிறைந்த பத்துச்சேக்கல் நிறையுள்ள
பொன்னான ஒரு தூபக்கிண்ணியும், — சர்வாங் ௩௯
கதகனபலியாக ஒரு காளை எருதும், ஒரு ஆட்
டுக்கடாவும், ஒருவயதான ஒரு ஆட்டுக்குட்டி
யும்,—பாவம்போக்கும்பலியாக ஒருவெள்ளாட் ௪௰
டுக்கடாவும்,—சமாதானபலியாக இரண்டு மாடு ௪௧
களும், ஐந்து ஆட்டுக்கடாக்களும், ஐந்து வெள்
ளாட்டுக்கடாக்களும், ஒரு வயதான ஐந்து ஆட்
டுக்குட்டிகளும்தானே; இது சூரிஷதாயின் குமா
ரனாகிய செலூமியேலின் காணிக்கை.
ஆறாம் நாளிலே தேகுவேலின் குமாரனாகிய ௪௨
எலியாசாபென்ற காத் புத்திரரின் பிரபு செலுத்
துதல்செய்தான்.—அவன் காணிக்கை ஏதெனில் ௪௩
பரிசுத்தஸ்தலத்தின் சேக்கல் கணக்காக நூற்று
முப்பது சேக்கல் நிறையான ஒரு வெள்ளித்தா
லமும், எழுபது சேக்கல் நிறையான ஒரு வெள்
ளிக்கலமும், இவ்விரண்டும் படைக்கும் காணிக்
கையாக எண்ணெயிலே பிசைந்த மெல்லியமா
வினால் நிறைந்திருந்தன. — தூபவர்க்கத்தால் நி ௪௪
றைந்த பத்துச்சேக்கல் நிறையுள்ள பொன்னான
ஒரு தூபக்கிண்ணியும்,—சர்வாங்கதகனபலியாக ௪௫
ஒரு காளை எருதும், ஒரு ஆட்டுக்கடாவும், ஒரு
வயதான ஒரு ஆட்டுக்குட்டியும்,—பாவம்போக் ௪௬
கும்பலியாக ஒருவெள்ளாட்டுக்கடாவும்,—சமா ௪௭
தானபலியாக இரண்டு மாடுகளும், ஐந்து ஆட்
டுக்கடாக்களும், ஐந்து வெள்ளாட்டுக்கடாக்க
ளும், ஒருவயதான ஐந்து ஆட்டுக்குட்டிகளும்
தானே; இது தேகுவேலின் குமாரனாகிய எலி
யாசாபின் காணிக்கை.
ஏழாம்நாளிலே அம்மியூதின் குமாரனாகிய எ ௪௮
லிஷம்மா என்ற எப்பிராயீம் புத்திரரின் பிரபு
செலுத்துதல்செய்தான்.—அவன் காணிக்கை ஏ ௪௯
தெனில் பரிசுத்தஸ்தலத்தின் சேக்கல் கணக்காக
நூற்றுமுப்பது சேக்கல் நிறையான ஒரு வெள்
ளித்தாலமும், எழுபது சேக்கல் நிறையான ஒரு
வெள்ளிக்கலமும் இவ்விரண்டும் படைக்கும்
காணிக்கையாக எண்ணெயிலே பிசைந்த மெல்
லியமாவினால் நிறைந்திருந்தன. — தூபவர்க்கத் ௫௰
தால் நிறைந்த பத்துச்சேக்கல் நிறையுள்ளபொன்
னான ஒரு தூபக்கிண்ணியும், — சர்வாங்கதகன ௫௧
பலியாக ஒரு காளை எருதும், ஒரு ஆட்டுக்கடா
வும், ஒரு வயதான ஒரு ஆட்டுக்குட்டியும்,—
பாவம்போக்கும்பலியாக ஒரு வெள்ளாட்டுக்க ௫௨
டாவும்,—சமாதானபலியாக இரண்டு மாடுகளும், ௫௩
ஐந்து ஆட்டுக்கடாக்களும், ஐந்து வெள்ளாட்டுக்
கடாக்களும், ஒரு வயதான ஐந்து ஆட்டுக்குட்
டிகளும்தானே; இது அம்மியூதின் குமாரனாகிய
எலிஷம்மாவின் காணிக்கை.
எட்டாம்நாளிலே பெதாத்சூரின் குமாரனாகிய ௫௪
காமாலியேல் என்ற மனாசே புத்திரரின் பிரபு

௫௫ செலுத்துதல்செய்தான்.-அவன்காணிக்கை ஏதெ
னில், பரிசுத்தஸ்தலத்தின் சேக்கல் கணக்காக
நூற்றுமுப்பது சேக்கல் நிறையான ஒரு வெள்
ளித்தாலமும், எழுபது சேக்கல் நிறையான ஒரு
வெள்ளிக்கலமும், இவ்விரண்டும் படைக்கும்
காணிக்கையாக எண்ணெயிலே பிசைந்த மெல்
௫௬ லியமாவினால் நிறைந்திருந்தன. — தூபவர்க்கத்
தால் நிறைந்த பத்துச்சேக்கல் நிறையுள்ள பொன்
௫௭ ஞன ஒரு தூபக்கிண்ணியும், — சர்வாங்கதகன
பலியாக ஒரு காளை எருதும், ஒரு ஆட்டுக்கடா
௫௮ வும், ஒருவயதான ஒரு ஆட்டுக்குட்டியும்,—பா
வம்போக்கும்பலியாக ஒரு வெள்ளாட்டுக்கடா
௫௯ வும்,—சமாதானபலியாக இரண்டு மாடுகளும்,
ஐந்து ஆட்டுக்கடாக்களும், ஐந்து வெள்ளாட்டுக்
கடாக்களும், ஒருவயதான ஐந்து ஆட்டுக்குட்டி
களும்தானே; இது பெதாத்சூரின் குமாரனுகிய
காமாலியேலின் காணிக்கை.

௬௰ ஒன்பதாம்நாளிலே கீதேயோனின் குமாரனு
கிய அபிதான் என்ற பென்யமீன் புத்திரரின்
௬௧ பிரபு செலுத்துதல்செய்தான்.—அவன் காணிக்
கை ஏதெனில், பரிசுத்தஸ்தலத்தின் சேக்கல்
கணக்காக நூற்றுமுப்பது சேக்கல் நிறையான
ஒரு வெள்ளித்தாலமும், எழுபது சேக்கல் நிறை
யான ஒரு வெள்ளிக்கலமும், இவ்விரண்டும்
படைக்கும் காணிக்கையாக எண்ணெயிலே பி
௬௨ சைந்த மெல்லியமாவினால் நிறைந்திருந்தன.-தூ
பவர்க்கத்தால் நிறைந்த பத்துச்சேக்கல் நிறையுள்
௬௩ ளபொன்னுன ஒரு தூபக்கிண்ணியும்,-சர்வாங்க
தகனபலியாக ஒரு காளை எருதும், ஒரு ஆட்டுக்க
டாவும். ஒருவயதான ஒரு ஆட்டுக்குட்டியும்,—
௬௪ பாவம்போக்கும்பலியாக ஒரு வெள்ளாட்டுக்க
௬௫ டாவும்,-சமாதானபலியாக இரண்டு மாடுகளும்,
ஐந்து ஆட்டுக்கடாக்களும், ஐந்து வெள்ளாட்டுக்
கடாக்களும், ஒருவயதான ஐந்து ஆட்டுக்குட்டி
களும்தானே; இது கீதேயோனின் குமாரனுகிய
அபிதானின் காணிக்கை.

௬௬ பத்தாம்நாளிலே அம்மிஷதாயின் குமாரனு
கிய அகியேசேர் என்ற தாண் புத்திரரின் பிரபு
௬௭ செலுத்துதல்செய்தான்.—அவன் காணிக்கை ஏ
தெனில், பரிசுத்தஸ்தலத்தின் சேக்கல் கணக்காக
நூற்றுமுப்பது சேக்கல் நிறையான ஒரு வெள்
ளித்தாலமும், எழுபது சேக்கல் நிறையான ஒரு
வெள்ளிக்கலமும், இவ்விரண்டும் படைக்கும்
காணிக்கையாக எண்ணெயிலே பிசைந்த மெல்
௬௮ லியமாவினால் நிறைந்திருந்தன. — தூபவர்க்கத்
தால் நிறைந்த பத்துச்சேக்கல் நிறையுள்ள பொன்
௬௯ ஞன ஒரு தூபக்கிண்ணியும், — சர்வாங்கதகன
பலியாக ஒரு காளை எருதும், ஒரு ஆட்டுக்கடா
௭௰ வும் ஒரு வயதான ஒரு ஆட்டுக்குட்டியும்,—பா
வம்போக்கும்பலியாக ஒரு வெள்ளாட்டுக்கடா
௭௧ வும், — சமாதானபலியாக இரண்டு மாடுகளும்,
ஐந்து ஆட்டுக்கடாக்களும், ஐந்து வெள்ளாட்டுக்
கடாக்களும், ஒரு வயதான ஐந்து ஆட்டுக்குட்டி
களும்தானே; இது அம்மிஷதாயின் குமாரனுகிய
அகியேசேரின் காணிக்கை.

பதினோராம்நாளிலே ஒகிரானின் குமாரனு ௭௨
கிய பாகியேல் என்ற ஆசேர் புத்திரரின் பிரபு
செலுத்துதல்செய்தான்.—அவன் காணிக்கை ஏ ௭௩
தெனில், பரிசுத்தஸ்தலத்தின் சேக்கல் கணக்காக
நூற்றுமுப்பது சேக்கல் நிறையான ஒரு வெள்
ளித்தாலமும், எழுபது சேக்கல் நிறையான ஒரு
வெள்ளிக்கலமும், இவ்விரண்டும் படைக்கும்
காணிக்கையாக எண்ணெயிலே பிசைந்த மெல்
லியமாவினால் நிறைந்திருந்தன. — தூபவர்க்கத் ௭௪
தால் நிறைந்த பத்துச்சேக்கல் நிறையுள்ள பொன்
ஞன ஒரு தூபக்கிண்ணியும், — சர்வாங்கதகன ௭௫
பலியாக ஒரு காளை எருதும், ஒரு ஆட்டுக்கடா
வும், ஒரு வயதான ஒரு ஆட்டுக்குட்டியும்,—பா ௭௬
வம் போக்கும்பலியாக ஒரு வெள்ளாட்டுக்கடா
வும், — சமாதானபலியாக இரண்டு மாடுகளும், ௭௭
ஐந்து ஆட்டுக்கடாக்களும், ஐந்து வெள்ளாட்டுக்
கடாக்களும், ஒருவயதான ஐந்து ஆட்டுக்குட்டி
களும்தானே; இது ஒகிரானின் குமாரனுகிய பா
கியேலின் காணிக்கை.

பன்னிரண்டாம்நாளிலே ஏனானின் குமார ௭௮
னுகிய அகிரா என்ற நவுதலி புத்திரரின் பிரபு
செலுத்துதல்செய்தான். — அவன் காணிக்கை ௭௯
ஏதெனில், பரிசுத்தஸ்தலத்தின் சேக்கல் கணக்
காக நூற்றுமுப்பது சேக்கல் நிறையான ஒரு
வெள்ளித்தாலமும், எழுபது சேக்கல் நிறையான
ஒரு வெள்ளிக்கலமும், இவ்விரண்டும் படைக்
கும் காணிக்கையாக எண்ணெயிலே பிசைந்த
மெல்லியமாவினால் நிறைந்திருந்தன.-தூபவர்க் ௮௰
கத்தால் நிறைந்த பத்துச்சேக்கல் நிறையுள்ள
பொன்னுன ஒரு தூபக்கிண்ணியும்,—சர்வாங்க ௮௧
தகனபலியாக ஒரு காளை எருதும், ஒரு ஆட்டுக்
கடாவும், ஒரு வயதான ஒரு ஆட்டுக்குட்டியும்,-
பாவம்போக்கும்பலியாக ஒரு வெள்ளாட்டுக்க ௮௨
டாவும்,-சமாதானபலியாக இரண்டு மாடுகளும், ௮௩
ஐந்து ஆட்டுக்கடாக்களும், ஐந்து வெள்ளாட்டுக்
கடாக்களும், ஒரு வயதான ஐந்து ஆட்டுக்குட்டி
களும்தானே; இது ஏனானின் குமாரனுகிய அகி
ராவின் காணிக்கை.

அப்படியே பலிபீடம் அபிஷேகம்பண்ணப் ௮௪
பட்டபொழுது, இஸ்ரவேலின் பிரபுக்களாலே
செய்யப்பட்ட அதினுடைய பிரதிஷ்டையா
வது, வெள்ளித்தாலங்கள் பன்னிரண்டு, வெள்
ளிக்கலங்கள் பன்னிரண்டு, பொன்னுன தூபக்
கிண்ணிகள் பன்னிரண்டு.—ஒவ்வொரு வெள் ௮௫
ளித்தாலம் நூற்றுமுப்பது சேக்கல் நிறையும்,
ஒவ்வொரு கலம் எழுபது சேக்கல் நிறையுமாக,
இந்தப் பாத்திரங்களின் வெள்ளியெல்லாம் பரி
சுத்தஸ்தலத்தின் சேக்கல் கணக்காய் இரண்டா
யிரத்து நானூறு சேக்கல் நிறையாயிருந்தது.—
தூபவர்க்கத்தால் நிறைந்த பொன்னுன பன்னி ௮௬
ரண்டு தூபக்கிண்ணிகளில், ஒவ்வொன்று பரி
சுத்தஸ்தலத்தின் சேக்கல் கணக்காய்ப் பத்துச்
சேக்கல் நிறையாக, தூபக்கிண்ணிகளின் பொன்
னெல்லாம் நூற்றிருபது சேக்கல் நிறையாயிருந்
தன.—சர்வாங்கதகனபலியாகச் செலுத்தப்பட்ட ௮௭

காளை எருதுகளெல்லாம் பன்னிரண்டு, ஆட்டுக்கடாக்கள் பன்னிரண்டு, ஒருவயதான ஆட்டுக்குட்டிகள் பன்னிரண்டு, அவைகளுக்கடுத்த படைப்புக்காணிக்கைகளும்கூட இருந்தன; பாவம்போக்கும்பலியாகச் செலுத்தப்பட்ட வெள்
௮௮ ளாட்டுக்கடாக்கள் பன்னிரண்டு.—சமாதானபலியாகச் செலுத்தப்பட்ட காளை எருதுகளெல்லாம் இருபத்துநான்கு; ஆட்டுக்கடாக்கள் அறுபது, வெள்ளாட்டுக்கடாக்கள் அறுபது, ஒருவயது ஆட்டுக்குட்டிகள் அறுபது; பலிபீடம் அபிஷேகம்பண்ணப்பட்டபிற்பாடு செய்யப்பட்ட அதின் பிரதிஷ்டை இதுதானே.
௮௯ மோசே அவரோடே பேசுகிறதற்காக ஆசரிப்புக்கூடாரத்திற்குள் பிரவேசிக்கும்பொழுது, தன்னோடே பேசுகிற சத்தத்தைச் [1]சாட்சியினுடைய பெட்டியின்மேலுள்ள கிருபாசனமான மூடியின்மீதில் இரண்டு கேருபீன்களின் நடுவே இருந்துண்டாகக் கேட்பான்; அங்கே இருந்து அவனோடே பேசுவார்.

## ௮. அதிகாரம்.

௧. விளக்குக் கொளுத்திவைக்கும் முறைமை. ௫. இலேவியரின் அபிஷேகம் ௨௩. அவர்கள் ஊழியஞ்செய்யத்தகுந்த வயதும் காலமும்.

௧ கர்த்தர் மோசேயோடே பேசிச் சொன்னதா
௨ வது:—நீ ஆரோனோடே பேசிச் சொல்லவேண்டியதேதெனில், [2]நீ விளக்குகளை ஏற்றுகையில் ஏழு விளக்குகளும் விளக்குத்தண்டிற்கு நேர் ஒழுங்காய் எரியவேண்டுமென்று சொல்லென்
௩ றார்.—கர்த்தர் மோசேக்குக் கற்பித்தபிரகாரமாக ஆரோன் செய்து, விளக்குத்தண்டிற்கு நேர் ஒழுங்காக அதின் விளக்குகளை ஏற்றுவான்.—
௪ இந்தக் குத்துவிளக்கின் வேலை, அதின் பாதம்துவக்கி அதின் பூக்கள்மட்டும், அடிக்கப்பட்ட பொன்னாயிருந்தது; கர்த்தர் மோசேக்குக் காண்பித்த மாதிரியின்படியே அவன் குத்துவிளக்கைப் பண்ணினான்.
௫ கர்த்தர் மோசேயோடே பேசிச் சொன்னதா
௬ வது:—நீ இலேவியரை இஸ்ரவேல் புத்திருடைய நடுவில் எடுத்து, அவர்களைச் சுத்திகரிப்
௭ பாயாக.—அவர்களைச் சுத்திகரிக்க நீ அவர்களுக்குச் செய்யவேண்டியதேதெனில், அவர்கள்மேலே பாவம்போக்கும் தண்ணீரைத் தெளி; பிற்பாடு அவர்கள் தங்களைச் சுத்திகரிக்க, தங்கள் மாம்சத்தின்மேலெல்லாம் சவரகன் கத்தியைப் போகப்பண்ணி, தங்கள் வஸ்திரங்களை
௮ வெளுத்து,—ஒரு காளை எருதையும் எண்ணெயிலே பிசைந்த மெல்லியமாவாகிய அதற்கு அடுத்த காணிக்கையையும் கொண்டுவரக்கடவர்கள்; பாவம்போக்கும்பலியாக வேறொரு
௯ காளை எருதையும் நீ வாங்கி,—இலேவியரை ஆசரிப்புக்கூடாரத்திற்குமுன்பாகச் சேரப்பண்ணி, இஸ்ரவேல் புத்திரரின் சபையையெல்லாம்
௰ கூட்டுவாயாக.—நீ இலேவியரைக் கர்த்தருக்கு முன்பாகச் சேரப்பண்ணினபொழுது, இஸ்ரவேல் புத்திரர் தங்கள் கைகளை இலேவியர்மேல்
வைக்கக்கடவர்கள்.—பிறகு இலேவியர் கர்த்த ௰௧
ரின் பணிவிடைவேலை செய்கிறவர்களாகும்படிக்கு, ஆரோன் இஸ்ரவேல் புத்திரரில் எடுக்கப்பட்ட அவர்களைக் கர்த்தருக்குமுன்பாக அசைவாட்டப்படும் காணிக்கையாக நிறுத்தக்கட
வன்.—பிற்பாடு இலேவியர் தங்கள் கைகளைக் ௰௨
காளை எருதுகள் தலையின்மேல் வைப்பார்களாக; அதின்பிறகு நீ இலேவியருக்காகப் பாவநிவிர்த்தியை உண்டாக்குவதற்கு, கர்த்தருக்கு அவைகளில் ஒன்றைப் பாவம்போக்கும்பலியும், மற்றதைச் சர்வாங்கதகனபலியுமாக்கி,
இலேவியரை ஆரோனுக்கும் அவன் குமார ௰௩
னுக்கும்முன்பாக நிறுத்தி, அவர்களைக் கர்த்தருக்கு அசைவாட்டப்படும் காணிக்கையாக்கி,—
இப்படி இலேவியர் நம்முடையவர்களாயிருக் ௰௪
கும்படிக்கு, அவர்களை இஸ்ரவேல் புத்திரர் நடு
விலிருந்து பிரித்தெடுக்கக்கடவாய்.—அதற்குப் ௰௫
பிறகு இலேவியர் ஆசரிப்புக்கூடாரத்தில் வேலைசெய்யப் பிரவேசிக்கக்கடவர்கள்; இப்படி அவர்களைச் சுத்திகரித்து, அவர்களை அசைவாட்
டும் காணிக்கையாக்கக்கடவாய்.—ஏனெனில் ௰௬
அவர்கள் இஸ்ரவேல் புத்திரர் நடுவிலிருந்து நமக்குக் கொடுக்கவே கொடுக்கப்பட்டார்கள்; இஸ்ரவேல் புத்திரரில் எல்லாம் கர்ப்பம்திறந்து பிறக்கிற சகல முதல்பேற்றுக்கும் பதிலாக அவர்களை
நமக்கு எடுத்துக்கொண்டோம்.—ஏனென்றால் ௰௭
இஸ்ரவேல் புத்திரரிலே, மனிதரிலும் மிருகசீவன்களிலும் [3]முதல்பேறானதெல்லாம் நம்முடையது; நாம் எகிப்துதேசத்திலே முதல்பேறு சகலத்தையும் சங்கரித்தநாளிலே அவைகளை
நமக்குப் பரிசுத்தமாக்கி,—பிற்பாடு [4]இலேவி ௰௮
யரை இஸ்ரவேல் புத்திரரிலுள்ள முதல்பேறு சக
லத்திற்கும் பதிலாக எடுத்துக்கொண்டு,—இலே ௰௯
வியர் இஸ்ரவேல் புத்திரருடைய பணிவிடைவேலையை ஆசரிப்புக்கூடாரத்திலே செய்யும்படிக்கும், இஸ்ரவேல் புத்திரருக்காகப் பாவநிவிர்த்தியை உண்டாக்கும்படிக்கும் இஸ்ரவேல் புத்திரர்தானே பரிசுத்தஸ்தலத்திற்குச் சேருகிறதினால் இஸ்ரவேல் புத்திரரில் வாதை உண்டாகாதபடிக்கும், இலேவியரை அவர்கள் நடுவில் எடுத்து, ஆரோனுக்கும் அவன் குமாரருக்கும் கொடுக்கவே கொடுத்தோமென்றார்.
அப்பொழுது மோசேயும் ஆரோனும் இஸ்ர ௨௰
வேல் புத்திரரின் சபை அனைத்தும் கர்த்தர் இலேவியரைக்குறித்து மோசேக்குக் கற்பித்தபடி
எல்லாம் இலேவியருக்குச் செய்தார்கள்.—இலே ௨௧
வியர் பாவம்போக்குதலைப் பண்ணிக்கொண்டு, தங்கள் வஸ்திரங்களை வெளுத்தார்கள்; பிற்பாடு ஆரோன் அவர்களைக் கர்த்தருக்குமுன்பாக அசைவாட்டும் காணிக்கையாக நிறுத்தி, அவர்களைச் சுத்திகரிக்க அவர்களுக்காகப் பாவநிவிர்த்

1 ௨ மோ. ௨௫. ௨௨. சங். ௮௰ ௨.—2 ௨ மோ. ௨௫. ௩௭.

3 ௨ மோ. ௰௩. ௨.—4 ௪ மோ. ௩. ௰௨.

௨௨ தியை உண்டாக்கினான்.—அதற்குப்பிறகு இ
லேவியர் ஆரோனுக்கும் அவன் குமாரருக்கும்
முன்பாக ஆசரிப்புக்கூடாரத்திலே தங்கள் பணி
விடைவேலையைச் செய்யப் பிரவேசித்தார்கள்;
கர்த்தர் இலேவியரைக்குறித்து மோசேக்குக் கற்
பித்தபடியே அவர்களுக்குச் செய்தார்கள்.
௨௩ கர்த்தர் மோசேயோடே பேசிச் சொன்னதா
௨௪ வது:—இலேவியருக்கான கட்டளை ஏதெனில்,
இருபத்தைந்து வயதுமுதல்கொண்டு அதற்கு
மேல்த்தரமுமான அனைவரும் ஆசரிப்புக்கூடா
ரத்தின் வேலையைச் செய்யும் இராணுவத்திலே
௨௫ சேவிக்க வரவேண்டும்.—ஆனால் ஐம்பதாம்வ
யதுமுதல்கொண்டு அவர்கள் இனி வேலைசெய்
யாதபடிக்கு வேலைசெய்யும் இராணுவத்தை
௨௬ விட்டு,—பணிவிடைவேலையைச் செய்யாமல்,
ஆசரிப்புக்கூடாரத்தின் காவலைக் காக்கிறதற்கே
தங்கள் சகோதரரோடேகூடச் சேவிக்கக்கட
வர்கள்; இப்படி இலேவியருக்கு அவர்களு
டைய காவல்களின் வேலைக்காகத் திட்டம்
பண்ணக்கடவாயென்றார்.

## ௯. அதிகாரம்.

௧. பஸ்காப்பண்டிகை மறுபடியும் கட்டளை இடப்பட்டது. ௬. அசுத்த மாயும் சமயத்தில் வரக்கூடாமலும் இருக்கிறவர்களுக்காகச் செய்யும் இரண்டாம் பஸ்கா. ௰௫. இஸ்ரவேலர் பிரயாணப்படவும் தரிக்கவும் மேகத்தூண் வழிகாட்டியது.

௧ அவர்கள் எகிப்துதேசத்திலிருந்து புறப்பட்ட
இரண்டாம் வருஷம் முதல்மாதத்திலே கர்த்தர்
சீனாய் வனாந்தரத்திலே மோசேயோடே பேசிச்
௨ சொன்னதாவது:—இஸ்ரவேல் புத்திரர் [1]பஸ்கா
வை அதின் திட்டமான காலத்திலே ஆசரிக்கக்
௩ கடவர்கள்.—இந்த மாதம் பதினான்காம்தேதி
அந்திநேரமானவேளை என்றதின் திட்டமான
காலத்திலே அதை ஆசரிக்கக்கடவீர்கள்; அதி
னுடைய எல்லாக் கட்டளையின்படியேயும் நியா
யத்தின்படியேயும் அதை ஆசரிக்கக்கடவீர்களெ
௪ ன்றார்.—ஆகையால் பஸ்காவை ஆசரிக்கிறதற்
காக மோசே இஸ்ரவேல் புத்திரரோடே பேசி
௫ னான்.—அப்படியே முதலாம்மாதம் பதினான்
காம்தேதி அந்திநேரமானவேளையிலே, சீனாய்
வனாந்தரத்திலே பஸ்காவை ஆசரித்தார்கள்; கர்த்
தர் மோசேக்குக் கற்பித்தபடி எல்லாம் இஸ்ர
வேல் புத்திரர் செய்தார்கள்.
௬ ஆனால் சவத்தினாலே தீட்டுப்பட்டபடியினா
லே, அந்நாளில் பஸ்காவை ஆசரிக்கக்கூடாத
மனிதர் இருந்தார்கள்; அவர்கள் அந்நாளிலே
மோசேக்கும் ஆரோனுக்கும்முன்பாக சேர்ந்து
௭ வந்து,—அவர்களோடே, நாங்கள் சவத்தினா
லே தீட்டுப்பட்டவர்கள்; இஸ்ரவேல் புத்திர
ருக்குள்ளே திட்டமானகாலத்திலே கர்த்தருக்
குக் காணிக்கையைச் செலுத்தாதபடிக்கு, நாங்
கள் விலக்கப்பட்டிருப்பானேனென்றார்கள்.—
௮ மோசே அவர்களுடனே, பொறுங்கள்; கர்த்தர்
உங்களுக்காகக் கற்பிப்பது ஏதென்று கேட்பே
னென்றான்.

[1] ௨ மோ. ௰௨. ௬.

கர்த்தர் மோசேயோடே பேசிச் சொன்ன ௯
தாவது:—நீ இஸ்ரவேல் புத்திரரோடே பேசிச் ௰
சொல்லவேண்டியதேதெனில்,உங்களிலாகிலும்
உங்கள் சந்ததியாரிலாகிலும் எவர் ஒருவர் சவத்
தினாலே தீட்டுப்பட்டு அல்லவென்று தூரப்பய
ணத்தில் இருந்தாலும், கர்த்தருக்குப் பஸ்காவை
ஆசரிக்கவேண்டும்.—அவர்கள் அதை இரண் ௰௧
டாம்மாதம் பதினான்காம்தேதி அந்திநேரமான
வேளையில் ஆசரித்து, அதைப் புளிப்பில்லாத
அப்பங்களோடும் கசப்பான கீரைகளோடும்
புசித்து,—விடியற்காலம்மட்டும் அதில் ஒன்றும் ௰௨
மீதியாக வைக்காமலும், அதில் ஒரு எலும்பை
முறிக்காமலும், பஸ்காவினுடைய கட்டளையின்
படி எல்லாம் அதை ஆசரிக்கக்கடவர்கள்.—
ஆனால் ஒருவன் சுத்தமும் பயணத்தில் இராதவ ௰௩
னுமாயிருந்தும், பஸ்காவை ஆசரிக்காதேபோ
னால், அந்த ஆத்துமா திட்டமான காலத்திலே
கர்த்தரின் காணிக்கையைச் செலுத்தாதபடியினா
லே தன் சனத்தாரில் இராமல், [2]அறுப்புண்டு
போவான்;அந்த மனிதன் தன் பாவத்தைச் சுமப்
பான்.—ஒரு பரதேசி உங்களிடத்திலே தங்கி, ௰௪
கர்த்தருக்குப் பஸ்காவை ஆசரிக்கப்போனால்,
அவன் அதைப் பஸ்காவின் கட்டளையின்ப
டியும் அதின் நியாயத்தின்படியும் ஆசரிக்கக்கட
வன்; பரதேசிக்காகவும் தேசத்திலே பிறந்தவ
னுக்காகவும் ஏககட்டளை உங்களுக்கு இருப்
பதாகவென்று சொல்லென்றார்.
வாசஸ்தலம் எடுப்பிக்கப்பட்ட நாளிலே, [3]மே ௰௫
கம் சாட்சியின்கூடாரம் இருக்கிற வாசஸ்தலத்
தை மூடிற்று; சாயங்காலமானபொழுதோவெ
னில், வாசஸ்தலத்தின்மேல் விடியற்காலம்மட்
டும் அக்கினியின் உருவிருந்தது.—இப்படி எப் ௰௬
பொழுதும் இருந்தது; மேகமும் இராவில் அக்
கினி உருவும் அதை மூடியிருந்தன.—மேகம் ௰௭
கூடாரத்திலிருந்து எழும்புகிறதைப் பார்த்து, இ
ஸ்ரவேல் புத்திரர் அதின்பிறகு பயணப்படுவார்
கள்; மேகம் எந்த ஸ்தலத்திலே தங்கித்தரிக்கு
மோ, அங்கே இஸ்ரவேல் புத்திரர் பாளயம் இறங்
குவார்கள்.—கர்த்தருடைய கட்டளையின்படி ௰௮
யே இஸ்ரவேல் புத்திரர் பயணப்படுவார்கள்;
கர்த்தருடைய கட்டளையின்படியேயும் பாளயம்
இறங்குவார்கள்; மேகம் வாசஸ்தலத்தின்மேலே
தங்கியிருக்கும் நாளெல்லாம் பாளயத்தில் இறங்
கி இருப்பார்கள்.—மேகம் வெகுநாள் வாசஸ்த ௰௯
லத்தின்மேலே தரித்திருக்கையில், இஸ்ரவேல்
புத்திரர் பயணப்படாமல், கர்த்தரின் காவலைக்
காத்திருப்பார்கள்.—மேகம் கொஞ்சநாள் வாச ௨௰
ஸ்தலத்தின்மேலிருக்கும்பொழுது, கர்த்தருடை
ய கட்டளையின்படியே பாளயம் இறங்கியிருந்
து, கர்த்தருடைய கற்பனையின்படியே பயணப்
படுவார்கள்.—மேகம் சாயங்காலம்துவக்கி விடி ௨௧
யற்காலம்மட்டும் இருந்து, விடியற்காலத்தில் எ
ழும்பும்பொழுது, அந்நேரம் பயணப்படுவார்

[2] ௧ மோ. ௰௭. ௰௪.—[3] ௨ மோ. ௪௰. ௩௪.

கள்; பகலிலாகிலும் இரவிலாகிலும் மேகம் எ
௨௨ ழும்பும்பொழுது, பயணப்படுவார்கள்.—அல்ல
வென்று மேகம் இரண்டொருநாள், அல்லது ஒரு
மாதம், அல்லது அதிகநாள், வாசஸ்தலத்தின்மே
லே தங்கியிருக்கும்பொழுது, இஸ்ரவேல் புத்தி
ரர் பயணப்படாமல், பாளயம் இறங்கி இருப்
பார்கள்; அது எழும்பும்பொழுதோவெனில், பய
௨௩ ணப்படுவார்கள்.—கர்த்தருடைய கட்டளையின்
படியே பாளயம் இறங்குவார்கள்; கர்த்தருடைய
கட்டளையின்படியே பயணப்படுவார்கள்; கர்த்
தர் மோசேயைக்கொண்டு கட்டளை இடும்படி
யே கர்த்தருடைய காவலைக் காப்பார்கள்.

## ௰. அதிகாரம்.

௧. வெள்ளி எக்காளத்தின் உபயோகம். ௰௧. இஸ்ரவேலர் சீனாய்வனாந்தரத்தைவிட்டுப் பாரானுக்குப் போனது. ௰௪. அவர்கள் நடைகொண்ட ஒழுங்கு. ௨௯. ஒபாப் தங்களைவிட்டு நீங்காதபடி மோசே வேண்டிக்கொண்டது. ௩௫. இருபாசனப்பெட்டி எடுக்கையிலும் தரிக்கையிலும் மோசே சொன்ன ஆசீர்வாதம்.

௧ கர்த்தர் மோசேயோடே பேசிச் சொன்னதா
௨ வது:—உனக்கு இரண்டு வெள்ளிப் பூரிகை
களை அடிக்கப்பட்ட வெள்ளியினாலே உண்டு
பண்ணு; அவைகள் உனக்குச் சபையை வரவ
ழைப்பிக்கிறதற்கும் பாளயங்களைப் பயணப்ப
௩ டுத்துகிறதற்கும் உதவுவதாக.—அவைகளை ஊதும்
பொழுது சபை எல்லாம் ஆசரிப்பின் கூடாரத்
தின் வாசலில் உன்னண்டைக்குக் கூடக்கட
௪ வது.—ஒன்றை ஊதும்பொழுதோவெனில், இஸ்
ரவேலில் ஆயிரங்களுக்குத் தலைவராகிய பிரபுக்
கள் உன்னண்டைக்குக் கூடக்கடவர்கள்.—
௫ நீங்கள் அவைகளைக் கெம்பீரமாக ஊதும்பொ
ழுதோவெனில், கிழக்கே இறங்கியிருக்கிற பா
௬ ளயங்கள் பயணப்படக்கடவது.—அவைகளை
நீங்கள் இரண்டாம்முறை கெம்பீரமாக ஊதும்
பொழுது, தெற்கே இறங்கியிருக்கிற பாளயங்
கள் பயணப்படக்கடவது; அவர்களைப் பயணப்
படுத்துகிறதற்குக் கெம்பீரமாய் ஊதக்கடவர்
௭ கள்.—ஆனால் சபையைக் கூட்டுகிறதற்குக் கெம்
௮ பீரமில்லாத ஊதுதலாக ஊதக்கடவீர்கள்.—ஆ
ரோனின் குமாரராகிய ஆசாரியர் பூரிகைகளை
ஊதக்கடவர்கள்; அவைகள் உங்கள் தலைமுறை
களில் உங்களுக்கு நித்தியகட்டளையாக இருக்
௯ கக்கடவது.—நீங்கள் உங்கள் தேசத்தில் உங்களை
நெருக்கப்படுத்துகிற சத்துருவுக்கு எதிராக யுத்
தத்திற்குள் பிரவேசிக்கும்பொழுது, [1]பூரிகைக
ளைக் கெம்பீரமாக ஊதக்கடவீர்கள்; அப்பொ
ழுது நீங்கள் உங்கள் பராபரனாகிய கர்த்தரின்
சமுகத்திலே நினைக்கப்பட்டு, உங்கள் பகைஞ
௰ ருக்கு நீங்கலாய் இரட்சிக்கப்படுவீர்கள்.—உங்
கள் மகிழ்ச்சியின் நாளிலும், உங்கள் பண்டிகை
களிலும், மாதப்பிறப்புகளிலும், உங்கள் சர்வாங்
கதகனங்களும் சமாதானபலிகளும் செலுத்தப்ப
டுகையில், பூரிகைகளை ஊதுவீர்களாக; அப்பொ
ழுது அவைகள் உங்கள் பராபரன் சமுகத்திலே
உங்களை நினைக்கப்பண்ணும்; நாம் உங்கள் பரா
பரனாகிய கர்த்தரென்றார்.

இரண்டாம்வருஷம் இரண்டாம்மாதம் இருப ௰௧
தாம்தேதியிலே மேகம் சாட்சியினுடைய வாசஸ்
தலத்தின்மீதிலிருந்து எழும்பிற்று.—அப்பொ ௰௨
ழுது இஸ்ரவேல் புத்திரர் சீனாய்வனாந்தரத்திலி
ருந்து தங்கள் பயணவரிசைகளாய்ப் புறப்பட்
டார்கள்; மேகம் பாரான்வனாந்தரத்திலே தங்
கித்தரித்தது.—இப்படியே கர்த்தர் மோசேயைக் ௰௩
கொண்டு கட்டளைஇட்டபடியே முதல்பயணம்
பண்ணினார்கள்.

முதல் யூதாபுத்திரருடைய பாளயக்கொடி ௰௪
யின்கீழிருக்கிறவர்கள் தங்கள் சேனைகளின்ப
டியே புறப்பட்டார்கள்; அவனுடைய சேனைக்
கு அமீனதாபின் குமாரன் நாகேசோன் தலைவ
னாய் இருந்தான்.—இசக்கார் புத்திரருடைய ௰௫
கோத்திரத்தின் சேனைக்குச் சூவாரின் குமாரன்
நெத்தானியேல் தலைவனாய் இருந்தான்.—செபு ௰௬
லோன் புத்திரருடைய கோத்திரத்தின் சேனைக்
கு எலோனின் குமாரன் எலியாப் தலைவனாயிருந்
தான்.—அப்பொழுது வாசஸ்தலம் இறக்கி ௰௭
வைக்கப்பட்டது; அதைக் கெர்சோன் புத்திர
ரும் மெராரி புத்திரரும் சுமந்துகொண்டு புறப்
பட்டார்கள்.

பிற்பாடு ரூபேன் புத்திரருடைய பாளயக்கொ ௰௮
டியின்கீழிருக்கிறவர்கள் தங்கள் சேனைகளின்ப
டியே புறப்பட்டார்கள்; அவன் சேனைக்குச் சே
தேயூரின் குமாரன் எலீசூர் தலைவனாய் இருந்
தான்.—சிமியோன் புத்திரருடைய கோத்தி ௰௯
ரத்தின் சேனைக்குச் சூரிஷதாயின் குமாரன் செ
லூமியேல் தலைவனாயிருந்தான்.—காத் புத்திரரு ௨௰
டைய கோத்திரத்தின் சேனைக்குத் தேகுவேலின்
குமாரன் எலியாசாப் தலைவனாயிருந்தான்.—அப் ௨௧
பொழுது கோகாத்தியர் பரிசுத்தமானதைச் சுமந்
துகொண்டு புறப்பட்டார்கள்; இவர்கள் வரும்
மட்டும் அவர்கள் வாசஸ்தலத்தை எடுத்து நிறுத்
தினார்கள்.—பிற்பாடு எப்பிராயீம் புத்திரருடை ௨௨
ய பாளயக்கொடியின்கீழிருக்கிறவர்கள் தங்கள்
சேனைகளின்படியே புறப்பட்டார்கள்; அவனு
டைய சேனைக்கு அம்மியூதின் குமாரன் எலி
ஷம்மா தலைவனாயிருந்தான்.—மனாசே புத்திர ௨௩
ருடைய கோத்திரத்தின் சேனைக்குப் பெதாத்
சூரின் குமாரன் காமாலியேல் தலைவனாயிருந்
தான்.—பென்யமீன் புத்திரருடைய கோத்திரத் ௨௪
தின் சேனைக்குக் கீதேயோனியின் குமாரன்
அபிதான் தலைவனாயிருந்தான்.

பிற்பாடு தாண் புத்திரருடைய பாளயக்கொடி ௨௫
யின்கீழிருக்கிறவர்கள் சகல பாளயங்களுக்கும்
கடைப்பாளயமாகத் தங்கள் சேனைகளின்படி
யே புறப்பட்டார்கள்; அவனுடைய சேனைக்கு
அம்மிஷதாயின் குமாரன் அகியேசேர் தலைவனா
யிருந்தான்.—ஆசேர் புத்திரருடைய கோத்திரத் ௨௬
தின் சேனைக்கு ஒகிரானின் குமாரன் பாகியேல்
தலைவனாயிருந்தான்.—நப்தலி புத்திரருடைய ௨௭
கோத்திரத்தின் சேனைக்கு ஏனானின் குமாரன்
அகிரா தலைவனாயிருந்தான்.—இந்த வரிசையாய் ௨௮

1 ௪ மோ. ௩௧. ௬.

இஸ்ரவேல் புத்திரர் தங்கள் சேனைகளின்படி
யே பயணம்போனார்கள்.
௨௯ மோசே தன் மாமனாகிய ரேகுவேலென்ற மீதி
யானனுடைய குமாரனான ஓபாபுடனே, உங்க
ளுக்குக் கொடுக்கிறோமென்று கர்த்தர் சொன்
ன ஸ்தலத்திற்கு நாங்கள் பயணம்போகிறோம்;
எங்களோடேகூட வா, உனக்கு நன்மை செய்
வோம்; ஏனெனில் கர்த்தர் இஸ்ரவேலுக்கு நல்ல
௩௰ வாக்குத்தத்தம் பண்ணினாரென்றான். — ஆனால்
இவன் அவனோடே, நான் வராமல், என் தேசத்
திற்கும் என் இனத்தண்டைக்கும்போவேனென்
௩௧ றான்.—அப்பொழுது அவன் சொன்னதாவது:
நீ எங்களை விடாயாக; ஏனெனில் வனாந்தரத்தி
லே நாங்கள் பாளயம் இறங்கும் தானங்களை நீர்
அறிந்திருக்கிறபடியினாலே, எங்களுக்குக் கண்
௩௨ களைப்போல இருப்பாய். — நீ எங்களோடே
கூடவந்தால் அப்பொழுது கர்த்தர் எங்களுக்குச்
செய்தருளும் அந்த நன்மையின்படியே உனக்
கும் நன்மைசெய்வோமென்றான்.
௩௩ அவர்கள் கர்த்தருடைய பர்வதத்தைவிட்டு,
மூன்றுநாள் பயணம்போனார்கள்; மூன்றுநாள்
பயணத்திலும் கர்த்தருடைய உடம்படிக்கை
யின் பெட்டி அவர்களுக்கு இளைப்பாறும் தலத்
தை விசாரித்துக் காட்டும்படிக்கு அவர்கள்முன்
௩௪ பாகப் போயிற்று.—அவர்கள் பாளயத்திலிருந்
து பயணம்போகிறபொழுது, கர்த்தருடைய மே
கம் பகலில் அவர்கள்மேல் இருந்தது.
௩௫ பெட்டி புறப்படும்பொழுது மோசே என்ற
வன், [1]கர்த்தாவே, உம்முடைய சத்துருக்கள் சித
றடிக்கப்படவும், உம்மைப் பகைக்கிறவர்கள்
உமக்குமுன்பாக ஓடிப்போகவும் எழுந்தருளும்
௩௬ என்பான். — அது தங்குகிறபொழுது அவன்,
கர்த்தாவே, அநேகம் ஆயிரங்களாகிய இஸ்ரவே
லரண்டைக்குத் திரும்புமென்பான்.

## ௰௧. அதிகாரம்.

௧. தபேராவில் மூண்ட அக்கினி மோசேயின் மன்றாட்டத்தினாலே அணைந்தது. ௪. சனங்கள் இறைச்சியை விரும்பி, மன்னாவை வெறுத்தது. ௰. மோசே சனவிசாரணையைக்குறித்து முறையிட்டது. ௰௬ பராபரன் அந்த விசாரணையின் பாரத்தை எழுபது மூப்பருக்குப் பங்கிட்டது. ௩௧. கிபிரோத்தக்கத்தாவாவில் உக்கிரத்தோடு காடைகள் கொடுக்கப்பட்டது.

௧ ஆனால் சனம் முறையிட்டுக்கொண்டிருந்தது;
அது கர்த்தருடைய செவிகளிலே பொல்லாப்பா
யிருந்தது; ஏனெனில் கர்த்தர் அதைக் கேட்ட
பொழுது, அவருடைய கோபம் மூண்டது; அப்
பொழுது கர்த்தருடைய அக்கினி அவர்களுக்
குள்ளே பற்றி எரிந்து, கடைசிப் பாளயத்தில்
௨ இருந்த சிலரைப் பட்சித்தது.-சனம் மோசேயை
நோக்கிக் கூப்பிட்டது; மோசே கர்த்தரைநோ
க்கி விண்ணப்பம்பண்ணினான்; அப்பொழுது
௩ அக்கினி அவிந்துபோயிற்று. — கர்த்தருடைய
அக்கினி அவர்களுக்குள்ளே பற்றி எரிந்ததினா
லே அவ்விடத்திற்குத் தபேராவென்று பேரிட்
டான்.
௪ அவர்களுக்குள் இருந்த [2]பலசாதியான சனம்
மகா இச்சையுள்ளதாயிற்று; அப்பொழுது இஸ்ர
வேல் புத்திரரும் திரும்ப அழுது, நமக்கு இ
றைச்சியைப் புசிக்கக்கொடுப்பவர் யார் என்
றும், — நாம் எகிப்திலே கிரயமில்லாமல் சாப் ௫
பிட்ட மச்சங்களையும், வெள்ளரிக்காய்களையும்,
கொம்மட்டிக்காய்களையும், சிறுவெண்காயங் க
ளையும், வெண்காயங்களையும், வெள்ளை வெண்
காயங்களையும் நினைக்கிறோம். — இப்பொழு ௬
தோவெனில் நம்முடைய ஆத்துமா வாடிப்போ
யிற்று; இந்த மன்னாவைத்தவிர நம்முடைய கண்
களுக்குமுன்பாகப் பின் ஒன்றுமில்லை என்றும்
சொன்னார்கள்.—மன்னாவோவென்றால் கொத் ௭
துமல்லி விதை அம்மாத்திரமும், அதின் நிறம்
பெதோளாகின் நிறம்போலவும் இருந்தது. —
சனம் திரிந்து அதைப் பொறுக்கிக் கொண்டு ௮
வந்து, எந்திரங்களில் அரைத்து, அல்லது உரல்
களில் இடித்து, பானைகளிலே சமைப்பார்கள்;
அதை அப்பங்களும் ஆக்குவார்கள்; அதின் ருசி
புது ஒலிவ எண்ணெயின் ருசியாயிருந்தது. —
இராவில் பனி பாளயத்தின்மேல் இறங்குகை ௯
யில், மன்னா அதின்மேல் இறங்கிற்று.
சனம் வம்சம்வம்சமாகத் தங்கள்தங்கள் கூ ௰
டாரவாசலில் அழுகிறதை மோசே கேட்டான்;
கர்த்தருக்குக் கோபம் மிகவும் மூண்டது; மோ
சேயின் பார்வைக்கும் பொல்லாப்பாயிருந்த
து.-அப்பொழுது மோசே கர்த்தரோடே சொன் ௰௧
னதாவது: நீர் இந்த எல்லாச் சனத்தின் பாரத்தை
யும் என்மேலே சுமத்தினதினாலே, உம்முடைய
அடியானுக்கு உபத்திரவம் வரப்பண்ணின
தென்ன? உம்முடைய கண்களில் எனக்குக் கி
ருபை கிடையாதே போனதென்ன?-நாம் அவர் ௰௨
கள் பிதாக்களுக்கு ஆணையிட்ட தேசத்திற்கு,
நீ அவர்களை ஒரு தகப்பன் முலையுண்கிற பால
கனைச் சுமக்கிறதுபோல, உன் மடியிலே சுமந்து
கொண்டு போவென்று நீர் என்னோடே சொல்
லும்படிக்கு, நான் இந்தச் சனத்தையெல்லாம்
கர்ப்பம்தரித்தேனோ? நான் இதைப் பெற்றே
னோ? — இந்தச் சனத்திற்கெல்லாம் கொடுக்கிற ௰௩
தற்கு எனக்கு இறைச்சி எங்கேயிருந்து வரும்?
ஏனெனில் எங்களுக்கு இறைச்சியைச் சாப்பி
டக் கொடுவென்று என்னைப்பார்த்து அழுகிறார்
கள்.-நான் ஒருவன் இந்தச் சனத்தையெல்லாம் ௰௪
சுமக்கக்கூடாது; ஏனென்றால் எனக்கு மிஞ்சின
பாரமாயிருக்கின்றது. — எனக்கு உம்முடைய ௰௫
கண்களிலே கிருபைகிடைத்ததானால், தேவரீர்
இப்படி எனக்குச் செய்கிறதைப்பார்க்கிலும்,
என் உபத்திரவத்தை நான் காணாதபடிக்கு என்
னைக் கொல்லவே கொல்லும் என்றான்.
அப்பொழுது கர்த்தர் மோசேயோடே சொன் ௰௬
னதாவது: நீ இஸ்ரவேலின் மூப்பரில் சனத்
திற்கு மூப்பரும் தலைவருமாயிருக்கத்தக்கவர்கள்
என்று அறிந்திருக்கிற எழுபதுபேரை நமக்குக்
கூட்டி, அவர்களை ஆசரிப்புக்கூடாரத்தண்டை

1 சங். ௬௮. ௨.—2 ௨ மோ. ௰௨. ௩௮. ௨ மோ. ௰௬ ௩. ௧ கொரி. ௰. ௬.

யிலே, அங்கே உன்னோடேகூட நிற்கும்படிக்
௰௭ குச் சேர்த்துக்கொள்.—அப்பொழுது நாம் இறங்
கி, அங்கே உன்னோடே பேசி, நீ ஒருவன் சனத்
தின் பாரத்தைச் சுமக்காமல், அவர்கள் உன்னோ
டேகூட அதைச் சுமப்பதற்காக உன்மேலிருக்
கிற ஆவியில் எடுத்து, அவர்கள்மேலே வைப்
௰௮ போம்.—ஆனால் சனத்தோடே நீ சொல்லவேண்
டியதேதெனில், இறைச்சி சாப்பிட நாளைக்கு
உங்களைப் பரிசுத்தம்பண்ணுங்கள்; ஏனெனில்
எங்களுக்கு இறைச்சி சாப்பிடக் கொடுப்பவர்
யார்? எகிப்திலே எங்களுக்கு நன்றாயிருந்ததென்
று கர்த்தருடைய செவிகளின் முன்பாக அழுதீர்
கள்; ஆகையால் கர்த்தர் உங்களுக்கு இறைச்சி
௰௯ சாப்பிடக்கொடுப்பார்.—நீங்கள் ஒருநாள் அல்ல,
இரண்டு நாளும் அல்ல, ஐந்து நாளும் அல்ல, பத்
௨௰ து நாளும் அல்ல, இருபது நாளும் அல்ல,—ஒரு
மாதம் முழுவதும் அது உங்கள் நாசிகளிலிருந்து
புறப்பட்டு, உங்களுக்குத் தெவிட்டிப்போகும்
மட்டும் சாப்பிடுவீர்கள்; ஏனென்றால் உங்கள்
நடுவே இருக்கிற கர்த்தனை அசட்டைபண்ணி,
நாங்கள் ஏன் எகிப்திலிருந்து புறப்பட்டோ
மென்று அவருக்குமுன்பாக அழுதீர்களென்று
சொல்லென்றார்.

௨௧ அப்பொழுது மோசே சொன்னதாவது: நான்
இருக்கிற சனம் அறுநூறாயிரம் காலாள்கள்;
தேவரீரோவெனில் ஒரு முழுமாதம்மட்டும் சாப்
பிட அவர்களுக்கு இறைச்சி கொடுப்போம் என்
௨௨ றீர்.—[1]அவர்களுக்குப் போந்தது கிடைக்க ஆடு
மாடுகள் அவர்களுக்காக அடிக்கப்படுமோ? அ
வர்களுக்குப் போந்தது கிடைக்கச் சமுத்திரத்து
மச்சங்களெல்லாம் அவர்களுக்காகச் சேர்க்கப்
௨௩ படுமோவென்றான்.—ஆனால் கர்த்தர் மோசேயு
டனே, [2]கர்த்தருடைய கை குறுகி இருக்கிறதோ?
நம்முடைய வார்த்தையின்படி உனக்கு வந்து
நடக்குமோ, நடவாதோவென்று இப்பொழுது
பார்ப்பாய் என்றார்.

௨௪ மோசே புறப்பட்டு, கர்த்தருடைய வார்த்தை
களைச் சனத்திற்குச் சொல்லி, சனத்தின் மூப்ப
ரில் எழுபதுபேரைக் கூட்டி, அவர்களைக் கூடா
௨௫ ரத்தைச் சுற்றிலும் நிறுத்தினான்.—அப்பொழுது
கர்த்தர் மேகத்தில் இறங்கி, அவனோடே பேசி,
அவன்மேலிருந்த ஆவியில் எடுத்து, மூப்பராகிய
அந்த எழுபதுபேர்மேலே வைத்தார்; சம்பவித்த
தேதெனில் ஆவி அவர்கள்மேலே வந்து தங்கு
கையில், தீர்க்கதரிசனம் சொன்னார்கள்; சொல்
௨௬ லிப் பிறகு ஓய்ந்தார்கள்.—ஆனால் இரண்டுபேர்
பாளயத்தில் இருந்துவிட்டார்கள்; ஒருவன்பேர்
எல்தாத் மற்றவன்பேர் மேதாத்; அவர்கள் கூடப்
பேர் எழுதப்பட்டிருந்தும், கூடாரத்திற்குப் போ
கப் புறப்படாதிருந்தார்கள்; அவர்கள்மேல் ஆவி
வந்து தங்கினதினாலே, பாளயத்திலே தீர்க்கதரி
௨௭ சனம் சொன்னார்கள்.—ஒரு பிள்ளையாண்டான்
ஓடிவந்து, எல்தாதும் மேதாதும் பாளயத்திலே
தீர்க்கதரிசனம்சொல்லுகிறார்களென்று மோசேக்

1 யோவா. ௬. ௭.—2 ஏசா. ௫௰ ௨; ௫௯. ௧.—3 லூக். ௯. ௪௯.

கு அறிவித்தான்.—அப்பொழுது மோசேயால் தெ ௨௮
ரிந்துகொள்ளப்பட்டவர்களில் அவன் வேலைக்
காரனாகிய நூனின் குமாரன் யோசுவா பிரதியுத்
தாரமாக, என் ஆண்டவனாகிய மோசேயே,
[3]அவர்களுக்குத் தடைபண்ணுமென்றான்.—மோ ௨௯
சேயோவென்றால் அவனுக்கு, நீ எனக்காகப் பத்
திவைராக்கியங் காண்பிக்கிறாயோ? ஆ, கர்த்தரு
டைய சனமெல்லாம் தீர்க்கதரிசனம் சொல்லத்
தக்கதாய், கர்த்தர் தம்முடைய ஆவியை அவர்
கள்மேல் இறங்கப்பண்ணினால் தாவிளையென்
றான்.—பிற்பாடு மோசேயும் இஸ்ரவேல் மூப்ப ௩௰
ரும் பாளயத்திலே வந்து சேர்ந்தார்கள்.

அப்பொழுது கர்த்தரிடத்திலிருந்து [4]காற்றுப் ௩௧
புறப்பட்டு, சமுத்திரத்திலிருந்து காடைகளை அ
டித்துக்கொண்டுவந்து, பாளயத்தின்மேலே, பா
ளயத்தைச் சுற்றிலும் இந்தப்பக்கம் ஒரு நாள்
பயணமும் அந்தப்பக்கம் ஒரு நாள் பயணமும்,
தரையின்மேல் இரண்டுமுழ உயர்த்தியுமாய் வி
ழுந்துகிடக்கத் தெளித்தது.—அப்பொழுது ச ௩௨
னம் எழும்பி, அன்றுபகல்முழுவதும், இராமுழு
வதும், மறுநாள் முழுவதும், காடைகளைச் சேர்த்
தார்கள்; கொஞ்சமாய்ச் சேர்த்தவன் பதின்கலம்
அம்மாத்திரம் சேர்த்தான்; அவைகளைப் பாளயத்
தைச் சுற்றிலும் தங்களுக்காகப் பரப்பிப்போட்
டார்கள்.—[5]ஆனால் இறைச்சி இன்னம் அவர்கள் ௩௩
பல்லுகள் நடுவே இருக்கையில், கர்த்தருடைய
கோபம் அவர்கள் அதைச் சாப்பிட்டுத் தீராததற்
குமுன்னே, சனத்திற்குள்ளே மூண்டுகொள்ளு
கையால், கர்த்தர் சனத்தை மகா பெரியவாதை
யால் அடித்தார்.— இச்சையுள்ள சனத்தை அங் ௩௪
கே அடக்கம்பண்ணினதினாலே, அந்த ஸ்தலத்
திற்கு இச்சையின் பிரேதக்குழிகளென்று பே
ரிட்டான்.

சனம் இச்சையின் பிரேதக்குழிகளைவிட்டு, ௩௫
ஆத்சரோத்திற்குப் பயணம் வந்து ஆத்சரோத்
திலே தரித்திருந்தது.

## ௰௨. அதிகாரம்.

௧. பராபரன் மிரியாமையும் ஆரோனையும் கலகத்துக்காகத் தண்டித்தது. ௰. மிரியாமின் குஷ்டரோகம் மோசேயின் வேண்டுதலினால் குணமானது. ௰௪. பராபரன் அவளைப் பாளயத்திற்குப் புறம்பே வைக்கக் கற்பித்தது.

மோசே கூஸ் சாதியான [6]பெண்சாதியை விவா ௧
கம்பண்ணினபடியினாலே, மிரியாமும் ஆரோ
னும் அவன் விவாகம்பண்ணின கூஸ்சாதியான
பெண்சாதியின் நிமித்தம் அவனுக்கு விரோதமா
கப் பேசி,—கர்த்தர் மோசேயைக்கொண்டுமாத் ௨
திரம் பேசினாரோ, எங்களைக்கொண்டும் அவர்
பேசினதில்லையோ என்றார்கள்; அதைக் கர்த்தர்
கேட்டார்.—ஆனால் மோசேயென்கிறவன் பூமி ௩
யிலிருக்கிற சகல மனிதரைப்பார்க்கிலும் மகா
சாதுத்துவமுள்ளவனாயிருந்தான்.— அசுப்பிலே ௪
கர்த்தர் மோசேயோடும், ஆரோனோடும், மிரியாம்
என்றவளோடும், நீங்கள் மூன்றுபேரும் ஆசரிப்
புக் கூடாரத்திற்குப் புறப்பட்டுப் போங்களென்

4 சங். ௭௰௮. ௨௰௬.—5 சங். ௭௰௮. ௩௰, ௩௧.—6 ௨ மோ. ௨. ௨௧.

௫ றார்; மூன்றுபேரும் போனார்கள்.—கர்த்தர் மேகத்
தூணில் இறங்கி, கூடாரத்தின் வாசலில் நின்று,
ஆரோனையும் மிரியாமையும் கூப்பிட்டார்; அவர்
௬ கள் இருவரும் போனார்கள்.—அப்பொழுது அ
வர் சொன்னதாவது: நம்முடைய வார்த்தைக
ளைக் கேளுங்கள்; உங்களுக்குள்ளே தீர்க்கதரிசி
இருந்தால், கர்த்தராகிய நாம் அவனுக்குத் தரிச
னையில் நம்மை வெளிப்படுத்துவோம்; சொப்ப
௭ னத்தில் அவனோடே பேசுவோம்.—நம்முடைய
தாசனாகிய மோசே அப்படி அல்ல, [1]நம்முடைய
வீடனைத்திலும் அவன் உண்மையுள்ளவன்.—
௮ மறைபொருளாக அல்ல, [2]முகமுகமாகவும் திரு
ட்டாந்தமாகவும் அவனோடே பேசுகிறோம்;
அவன் கர்த்தரின் சாயலைக் காண்கிறான்; இப்
பொழுதும் நீங்கள் நம்முடைய தாசனாகிய மோ
சேக்கு விரோதமாகப் பேசப் பயப்படாதே போ
௯ னதென்ன என்றார். — கர்த்தருடைய கோபம்
அவர்கள்மேல் மூண்டது; அவர் போய்விட்
௰ டார்.-மேகம் கூடாரத்தைவிட்டு அகன்றுபோயி
ற்று; இதோ மிரியாம் உறைந்த மழையின் வெண்
மையாய்க் குஷ்டம்பிடித்திருந்தாள்; ஆரோன்
மிரியாமைப் பார்த்தான்; இதோ அவள் குஷ்டம்
௰௧ பிடித்தவள். — அப்பொழுது ஆரோன் மோசே
யோடே சொன்னதாவது: ஆ, என் ஆண்டவனே,
நாங்கள் பயித்தியம்கொண்டு செய்த இந்தப் பா
௰௨ வத்தை எங்கள்மேலே சுமத்தாதிரும். — தன்
தாயின் கர்ப்பத்திலிருந்து புறப்படுகையில், பா
தி மாம்சம் அழுகி இருக்கிற சாவுபிள்ளையைப்
௰௩ போல, அவள் இராதிருப்பாளாக என்றான்.-அப்
பொழுது மோசே, ஆ, பராபரனே, அவளைக் குண
மாக்குமென்று கர்த்தரை நோக்கிக் கூப்பிட்
௰௪ டான்.—அப்பொழுது கர்த்தர் மோசேயுடனே,
அவள் தகப்பன் அவள் முகத்திலே காறித் துப்
பினதுண்டானால், அவள் ஏழுநாள் வெட்கப்ப
டவேண்டாமோ? அவள் [3]ஏழுநாள் பாளயத்திற்
குப்புறம்பே அடைக்கப்பட்டிருந்து, பிற்பாடு
௰௫ சேர்க்கப்படக்கடவளென்றார். — அப்படியே
மிரியாம் ஏழுநாள் பாளயத்திற்குப்புறம்பே அ
டைக்கப்பட்டிருந்தாள்; மிரியாம் சேர்க்கப்ப
டும்மட்டும் சனம் பயணம்போகாதிருந்தது.

௰௬ பிற்பாடு சனம் ஆத்சரோத்திலிருந்து புறப்
பட்டு, பாரான் வனாந்தரத்திலே பாளயம் இறங்
கிற்று.

## ௰௩. அதிகாரம்.

௧. தேசத்தைப் பார்வையிட அனுப்பப்பட்ட வேவுகாரரின் பெயர்கள். ௰௭. அவர்களுக்குச் சொல்லிய கட்டளைகள். ௨௧. அங்கே அவர்கள் செய்தவைகள். ௨௬. அவர்கள் அறிவித்த செய்திகள்.

௧ கர்த்தர் மோசேயோடே பேசிச் சொன்னதா
௨ வது:—நாம் இஸ்ரவேல் புத்திரருக்குக் கொடுக்
கும் கானான் தேசத்தைச் சோதித்துப்பார்க்கிற
தற்கு மனிதரை அனுப்பு; அவர்களுடைய பிதாக்
களின் ஒவ்வொரு கோத்திரத்திலே ஒவ்வொரு
பிரபுக்களாகிய மனிதரையே அனுப்பக்கடவீர்க
ளென்றார்.—அப்படியே மோசே கர்த்தருடைய ௩
வாக்கின்படியே அவர்களைப் பாரான் வனாந்தரத்
திலிருந்து அனுப்பினான்; அந்த மனிதர் எல்லா
ரும் இஸ்ரவேல் புத்திரரில் தலைவரானவர்கள்.—
அவர்கள் நாமங்களாவன: ரூபேன் கோத்திரத் ௪
திலே சக்கூரின் குமாரன் சம்முவா. — சீமே ௫
யோன் கோத்திரத்திலே ஒறியின் குமாரன் சாப்
பாத்.—யூதா கோத்திரத்திலே எப்புன்னேயின் ௬
குமாரன் காலேப்.—ஈசஷார் கோத்திரத்திலே ௭
யோசேப்பின் குமாரன் ஈகேயால்.—எப்பிராயீம் ௮
கோத்திரத்திலே நூனின் குமாரன் ஓசேயா.—
பென்யமீன் கோத்திரத்திலே ரப்பூவின் குமாரன் ௯
பல்த்தி.—சேபுலோன் கோத்திரத்திலே சோதி ௰
யின் குமாரன் காதியேல்.—யோசேப்பின் கோத் ௰௧
திரத்திற்கடுத்த மனாசே கோத்திரத்திலே சூசின்
குமாரன் காதி.—தாண் கோத்திரத்திலே கெமல் ௰௨
லியின் குமாரன் அம்மியேல். — ஆசேர் கோத் ௰௩
திரத்திலே மிகவேலின் குமாரன் சேத்தூர். —
நவுதலி கோத்திரத்திலே ஒப்பேசியின் குமாரன் ௰௪
நாகெபி.—காத் கோத்திரத்திலே மாகியின் குமா ௰௫
ரன் கூவேல்.—இவைகள் தேசத்தைச் சோதித் ௰௬
துப்பார்க்க, மோசே அனுப்பின மனிதரின் நா
மங்கள்; நூனின் குமாரனாகிய ஓசேயாவுக்கோ
வென்றால், மோசே யோசுவாவென்று பேரிட்
டான்.

அவர்களை மோசே கானான் தேசத்தைச் சோ ௰௭
தித்தறிய அனுப்பி, அவர்களோடே சொன்னதா
வது: நீங்கள் இப்படித் தெற்காகப்போய், மலைத்
தேசத்தில் ஏறி,—தேசம் எப்படிக்கொத்தது? அ ௰௮
திலே குடியிருக்கிற சனம் பலத்ததோ? பலமற்ற
தோ? கொஞ்சமோ? அநேகமோ?—அது குடியி ௰௯
ருக்கிற தேசம் எப்படி இருக்கும்? அது நல்லதோ?
ஆகாததோ? அது குடியிருக்கிற ஊர்கள் எப்படி
யிருக்கும்? அவைகள் பாளயங்களோ? கோட்
டைகளோ? — நிலம் என்னவாயிருக்கும்? அது ௨௰
புஷ்டியோ? இளப்பமோ? அதில் விருட்சங்கள்
உண்டோ? இல்லையோ என்று பார்த்து, மனத்தி
டனாயிருந்து, தேசத்தின் கனிகளிலே சிலவற்றை
அறுத்துக்கொண்டு வாருங்களென்றான்; அந்நாள்
களோவென்றால், திராட்சங்களுடைய முதல்
கனிகளின் நாள்களாயிருந்தன.—அவர்கள் போ ௨௧
யேறி, சீனாய்வனாந்தரம்துவக்கி, ஆமாத்திற்குப்
போகிற வழியாகிய ரேகொப்மட்டும், தேசத்
தைச் சோதித்துப்பார்த்து,—தெற்கேயும்போய், ௨௨
எபிரோன்மட்டும் வந்தார்கள், அங்கே ஏனாக்கின்
குமாரனாகிய அகீமானும் சேசாயும் தல்மாயும் இ
ருந்தார்கள்; எபிரோனோவெனில், எகிப்தின் பட்
டணமாகிய சோவான் கட்டப்பட்ட ஏழு வரு
ஷத்திற்குமுன்னே கட்டப்பட்டது.

பிற்பாடு எஸ்கோல் பள்ளத்தாக்குமட்டும் வந் ௨௩
து அங்கே ஒரே திராட்சக்குலையுள்ள ஒரு கொ
டியை அறுத்தார்கள்; அதை இரண்டுபேர் ஒரு
தடியிலே தூக்கிக்கொண்டு போனார்கள்; மாத

1 எபி. ௩. ௨.—2 ௨ மோ. ௩௩. ௰௧. ௫ மோ. ௩௪. ௰.—3 ௩ மோ. ௰. ௩.

ளம்பழங்களிலும் அத்திப்பழங்களிலும் சிலவற்
௨௪ றை அறுத்துக்கொண்டு போனார்கள். — இஸ்ர
வேல் புத்திரர் அங்கே அறுத்த திராட்சக்குலை
யைத்தொட்டு, அவ்விடம் எஸ்கோல் பள்ளத்
௨௫ தாக்கு என்னப்பட்டது.—அவர்கள் தேசத்தைச்
சோதித்துப்பார்த்து, நாற்பதாம்நாள் முடிவிலே
திரும்பி,
௨௬ பாரான்வனாந்தரத்தில் இருக்கிற காதேசுக்கு
வந்து, மோசே ஆரோன் இஸ்ரவேல் புத்திரரின்
எல்லாச் சபையினண்டையிலும் சேர்ந்து, அவர்
களுக்கும் சபை அனைத்திற்கும் மறு செய்தியை
அறிவித்து, அவர்களுக்குத் தேசத்தின் கனிக
௨௭ ளைக் காண்பித்து,—அவனுக்கு விவரித்துச் சொ
ன்னதாவது: நீர் எங்களை அனுப்பின தேசத்திற்கு
நாங்கள் போய்வந்தோம்; [1]அது பாலும் தேனும்
ஓடுகிற தேசம்தான்; இது அதினுடைய கனி.—
௨௮ ஆனால் தேசத்திலே குடியிருக்கிற சனம் பலத்த
தும், பட்டணங்கள் அரணிப்பானவைகளும்
மிகவும் பெரியவைகளுமாயிருக்கின்றன; அங்
௨௯ கே ஏனாக்கின் குமாரரையும் கண்டோம்.—ஆம
லேக்கியர் தென்புறமான தேசத்திலே குடியிருக்
கிறார்கள்; ஏத்தியரும் எபூசியரும் எமோரியரும்
மலைச்சீமையிலே குடியிருக்கிறார்கள்; கானானி
யரோவென்றால் கடலண்டையிலும் யோர்தா
னண்டையிலும் குடியிருக்கிறார்கள் என்றார்
௩௰ கள்.—அப்பொழுது காலேப் மோசேக்குமுன்
பாகச் சனத்தை அமர்த்தி, ஏறவே ஏறிப்போய்,
அதைச் சுதந்தரிக்கக்கடவோம்; ஏனெனில்
அதை நாம் கட்டிக்கொண்டு செயிக்கவே செ
௩௧ யிப்போமென்றான். — அவனோடேகூட ஏறிப்
போய் வந்த மனிதரோவென்றால், நாம் அந்தச் ச
னத்திற்கு எதிராக ஏறிப்போகக்கூடாது; ஏனெ
னில் அது நம்மைப்பார்க்கிலும் பலத்திருக்கின்
௩௨ றதென்று சொல்லி, — தாங்கள் சோதித்துப்
பார்த்த தேசத்திற்கு இஸ்ரவேல் புத்திரருக்குள்
ளே அபகீர்த்தியைப் பிறக்கப்பண்ணி, நாங்கள்
சோதித்தறியும்படிக்குக் கடந்துவந்த அந்தத்
தேசம் தன் குடிகளைப் பட்சிக்கிற தேசமா
னது; நாங்கள் அதிலே கண்ட சனமெல்லாம்
௩௩ உயர்ந்த மனிதர். — அங்கே இராட்சதர் சந்ததி
யான ஏனாக்கின் குமாரராகிய இராட்சதரையும்
கண்டோம்; நாங்கள் எங்கள் பார்வைக்குக் கிளி
களைப்போல இருந்தோம்; அப்படியே அவர்கள்
பார்வைக்கும் இருந்தோம் என்றார்கள்.

## ௰௪. அதிகாரம்.

*௧. செய்தியைக்கேட்டு, சனம் முறுமுறுத்தது. ௬. யோசுவாவும் காலேபும் அதை நீக்கப் பிரயாசப்பட்டது. ௰௧. பராபரன் அவர்களைப் பயமுறுத்தினது. ௰௩. மோசே பராபரனைச் சார்ந்து மன்னிப்பை அடைந்தது. ௨௧. முறுமுறுத்தவர்கள் தேசத்தில் போகாமல் தடுக்கப்பட்டது. ௩௬. அந்தேசத்தின் பொய்யான செய்தி சொன்னவர்கள் வாதையினால் இறந்தது. ௪௰. பராபரனுடைய சித்தத்திற்கு விரோதமாய்த் தேசத்தில் பிரவேசிக்கத் தொடங்கினவர்கள் முறியடிக்கப்பட்டது.*

௧ அப்பொழுது சபையெல்லாம் எழும்பிக் கூப்
பிட்டு, சனம் அன்று இராத்திரி அழுதுகொண்
௨ டிருந்தது.—இஸ்ரவேல் புத்திரர் எல்லாரும் மோ
சேக்கும் ஆரோனுக்கும் விரோதமாய் முறுமு
றுத்தார்கள்; சபையெல்லாம் அவர்களோடே
சொன்னதாவது: எகிப்துதேசத்திலே செத்துப்
போனோமானால் தாவிளை; அல்லது இந்த வனாந்
தரத்திலே நாங்கள் செத்தால் தாவிளை. — நாங் ௩
கள் பட்டையத்தால் மடியும்படிக்கும், எங்கள்
பெண்சாதிகளும் குழந்தைகளும் கொள்ளையா
கும்படிக்கும், கர்த்தர் எங்களை அந்தத் தேசத்
திற்குக் கொண்டுபோகிறதென்ன? எகிப்திற்குத்
திரும்புகிறது எங்களுக்கு வாசி அல்லவோ என்
று,-ஒருவரோடொருவர், ஒரு தலைவனை வைத் ௪
து, எகிப்திற்குத் திரும்புவோம் வாருங்களென்று
சொல்லிக்கொண்டார்கள்.

அப்பொழுது மோசேயும் ஆரோனும் இஸ்ர ௫
வேல் புத்திரருடைய சபைக்கூட்டம் எல்லா
வற்றிற்குமுன்பாகவும் முகம்குப்புற விழுந்தார்
கள்.—தேசத்தைச் சோதித்துப் பார்த்தவர்களில் ௬
நூனின் குமாரனாகிய யோசுவாவும், எப்புன்னே
யின் குமாரனாகிய காலேபும், தங்கள் வஸ்திரங்
களைக் கிழித்துக்கொண்டு, — இஸ்ரவேல் புத் ௭
திரரின் சபையோடெல்லாம் சொன்னதாவது:
நாங்கள் சோதித்துப்பார்க்கக் கடந்துவந்த தேசம்
மகா நல்லதேசம்.—கர்த்தர் நம்மேலே பிரியமா ௮
யிருந்தால், அவர் நம்மைப் பாலும் தேனும் ஓடும்
தேசமாகிய அந்தத் தேசத்திலே கொண்டுபோய்
அதை நமக்குக் கொடுப்பார்.—கர்த்தருக்கு வி ௯
ரோதமாகமாத்திரம் கலகம்பண்ணீர்களாக; [2]நீங்
கள் அந்தத் தேசத்தின் சனத்திற்கும் பயப்படீர்
களாக; ஏனெனில் நமக்கு அவர்கள் அப்பத்திற்
குச் சரி; அவர்களுடைய நிழல் அவர்கள்மேலி
ருந்து விலகிற்று; நம்மோடோவென்றால் கர்த்தர்
இருக்கிறார்; அவர்களுக்குப் பயப்படீர்களாக
என்றார்கள்.

அப்பொழுது சபையெல்லாம் அவர்களைக் ௰
கல்லெறியவேண்டுமென்றது; ஆனால், [3]கர்த்தரு
டைய மகிமை ஆசரிப்புக்கூடாரத்தில் இஸ்ர
வேல் புத்திரர் எல்லாருக்கும்முன்பாகக் காணப்
பட்டது.

கர்த்தர் மோசேயோடே சொன்னதாவது: எந் ௰௧
தமட்டும் இந்தச்சனம் நமக்குக் கோபம் உண்
டாக்கும்? எந்தமட்டும் அது நாம் அதன் நடுவி
லே செய்த சகல அடையாளங்களைக் கண்டும்,
நம்மை விசுவாசியாதேபோம்? — நாம் அதைப் ௰௨
பெருவாரிக்காய்ச்சலால் அடித்து, சுதந்தரத்திற்
குப் புறம்பாக்கிப்போட்டு, [4]உன்னை அதைப்
பார்க்கிலும் பருத்ததும் பலத்ததுமான சாதியாக்
குவோமென்றார்.-மோசே கர்த்தரோடே சொன் ௰௩
னதாவது: [5]அப்பொழுது எகிப்தர் அதைக் கேட்
பார்கள்; ஏனெனில் உம்முடைய வல்லமையி
னாலே இந்தச் சனத்தை அவர்கள் நடுவிலிருந்து
ஏறிவரப்பண்ணினீர்.—ஆகையால் கர்த்தராகிய ௰௪
தேவரீர் இந்தச் சனத்தின் நடுவே இருக்கிறதை
யும், கர்த்தராகிய தேவரீர் முகமுகமாய்த் தரிசனை

1 ௨ மோ. ௩. ௮.—2 ௫ மோ. ௨௰. ௩.

3 ௨ மோ. ௰௬. ௰.—4 ௨ மோ. ௩௨. ௰.—5 ௨ மோ. ௩௨. ௰.

ஆகிறதையும்,உம்முடைய மேகம் இவர்கள்மேல் நிற்கிறதையும், தேவரீர் பகலில் மேகத்தூணி லும் இரவில் அக்கினித்தூணிலும் இவர்கள்முன் நடக்கிறதையும், கேட்டிருக்கிற இந்தத் தேசத் தின் குடிகளோடே அவர்கள் என்ன சொல்லு வார்கள்?
௰௫ இந்தச் சனத்தை ஒரே மனிதனைப்போலக்
கொன்றீரானல்,அப்பொழுது உம்முடைய கீர்த்
௰௬ தியைக் கேட்டிருக்கிற புறச்சாதியார்,—கர்த்தர்
அந்தச் சனத்திற்கு ஆணையிட்டிருந்த தேசத்
திலே அதைக் கொண்டுபோய் விடக்கூடாதே
போனபடியினலே, அவர்களை வனந்தரத்திலே
௰௭ கொலைசெய்தார் என்பார்கள்.—இப்பொழுதும்
[1]கர்த்தர் நீடியசாந்தமும் மகா கிருபையுமுள்ளவ
ரென்றும், அவர் அக்கிரமத்தையும் மீறுதலையும்
மன்னிக்கிறவர், அவர் குற்றமுள்ளவனைக் குற்
றம் அற்று நீங்கவொட்டாமல், பிதாக்களுடைய
அக்கிரமத்தைப் பிள்ளைகளிடத்திலே மூன்றும்
நான்காம் தலைமுறைமட்டும் விசாரிக்கிறரென்
௰௮ றும், நீர் சொன்னபடியே,—ஆண்டவருடைய
௰௯ பலம் பெரிதாய் இருக்கட்டுமே.—உம்முடைய
கிருபையினுடைய மகத்துவத்தின்படியேயும்,
நீர் எகிப்துதுவக்கி இவ்விடம்மட்டும் இந்தச்
சனத்திற்கு மன்னித்து வந்ததின்படியேயும், இந்
தச் சனத்தின் அக்கிரமத்தை மன்னியுமே என்
ருன்.
௨௰ அப்பொழுது கர்த்தர் சொன்னதாவது: உன்
௨௰௧ வார்த்தையின்படியே மன்னித்தோம்.—ஆனல்
பூமியெல்லாம் கர்த்தருடைய மகிமையினலே
நிறையப்படுமென்று நம்முடைய சீவனைக்கொ
௨௰௨ ண்டு சொல்லுகிறோம்.—அதேதெனில் நமது
மகிமையையும் நாம் எகிப்திலும் வனந்தரத்தி
லும் செய்த நம்முடைய அடையாளங்களையும்
கண்டிருந்தும், நம்முடைய சத்தத்திற்குக் கீழ்ப்
படியாமல், இதனேடே பத்துமுறை நம்மைப்
௨௰௩ பரிட்சைபார்த்த மனிதரில் ஒருவரும்,—[2]நாம்
தங்கள் பிதாக்களுக்கு ஆணையிட்ட தேசத்தைக்
காண்பதில்லை; நமக்குக் கோபம் உண்டாக்கின
வர்களில் ஒருவரும் அதைக் காண்பதில்லை.—
௨௰௪ நம்முடைய தாசனகிய காலேபிடத்திலோ
வென்றால், வேறே ஆவி இருக்கிறபடியினலும்,
அவன் நம்மை உத்தமமாய்ப் பின்பற்றிவந்தபடி
யினலும், நாம் அவனை அவன் போய்வந்த தே
சத்திலே வந்துசேரப்பண்ணுவோம்;அவன் வித்
தார் அதைச் சுதந்தரித்துக்கொண்டிருப்பார்
௨௰௫ கள்.—ஆமலேக்கியரும் கானனியரும் பள்ளத்
தாக்கிலே குடியிருக்கிறபடியினலே, நீங்கள்
நாளைத் திரும்பிக்கொண்டு, நாணல் கடலுக்குப்
போகிறவழியாகிய வனந்தரத்திற்குப் பயணம்
பண்ணுங்களென்ருர்.
௨௰௬ பின்னையும் கர்த்தர் மோசேயோடும் ஆரோ
௨௰௭ னேடும்பேசிச் சொன்னதாவது:—நமக்கு விரோ
தமாய் முறுமுறுக்கிற இந்தப் பொல்லாத சபை
யோடே எந்தமட்டும் இருப்போம்? இஸ்ரவேல்
புத்திரர் நமக்கு விரோதமாய் முறுமுறுக்கிற முறு
முறுப்புகளைக் கேட்டோம்.—நீ அவர்களோ ௨௰௮
டே சொல்லவேண்டியதேதெனில், நீங்கள் நம்
முடைய செவிகள் கேட்கச் சொன்னபிரகார
மாக உங்களுக்குச் செய்வோம் என்கிறதை நம்
முடைய சீவனைக்கொண்டு சொல்லுகிறோ
மென்று கர்த்தர் உரைக்கிருர்.—இந்த வனந்தரத் ௨௰௯
தில் உங்கள் பிரேதங்கள் விழும்; உங்களில் இரு
பது வயதுமுதல்கொண்டு மேல்த்தரமாயிருந்து,
உங்களுடைய எல்லாத் தொகைக்குள்ளும் எண்
ணப்பட்டு, நமக்கு விரோதமாய் முறுமுறுத்தி
ருக்கிற அனைவரின் பிரேதங்களும்தானே.—
எப்புன்னேயின் குமாரன் காலேபையும் நூனின் ௩௰
குமாரன் யோசுவாவையும்தவிர, மற்றவர்களா
கிய நீங்கள் நாம் உங்களைக் குடிஏற்றுவோமென்
று நம்முடைய கரத்தை ஏறெடுத்த தேசத்திலே
வராதிருப்பீர்கள்.—கொள்ளையாவார்களென்று ௩௰௧
நீங்கள் சொன்ன உங்கள் குழந்தைகளையோ
வென்றால், நாம் அதிலே வரப்பண்ணுவோம்;
அவர்கள் நீங்கள் அசட்டைபண்ணின தேசத்தை
அறிந்துகொள்ளுவார்கள்.—உங்கள் பிரேதங்க ௩௰௨
ளோவெனில், இந்த வனந்தரத்திலே விழும்.—
அவைகள் வனந்தரத்திலே விழுந்து தீருமட் ௩௰௩
டும், உங்கள் பிள்ளைகள் நாற்பது வருஷம் வனந்
தரத்திலே மேய்ப்பராயிருந்து, நீங்கள் சோரம்
போனதைச் சுமப்பார்கள்.—நீங்கள் தேசத்தைச் ௩௰௪
சோதித்துப்பார்த்த நாற்பதுநாளுடைய இலக்
கத்தின்படியே நீங்கள் நாற்பது வருஷம் உங்கள்
அக்கிரமங்களைச் சுமந்து, நம்முடைய உடம்
படிக்கைக்கு வந்த மாறுதலை உணருவீர்கள்; ஒவ்
வொருநாள் ஒவ்வொரு வருஷமாகத்தானே.—
கர்த்தராகிய நாம் இதைச் சொன்னேம்; நமக்கு ௩௰௫
விரோதமாய்க் கூட்டம்கூடின இந்தப் பொல்
லாத சபைக்கெல்லாம் இப்படியே செய்வோம்;
இந்த வனந்தரத்திலே சரியாவார்கள், இங்கே
சாவார்களென்று சொல்லென்ருர்.—தேசத்தைச் ௩௰௬
சோதித்துப்பார்க்க மோசேயால் அனுப்பப்பட்
டு, திரும்பி வந்து, தேசத்திற்குத் துர்க்கீர்த்தியை
உண்டாக்கி,—சபையையெல்லாம் அவனுக்கு ௩௰௭
விரோதமாய் முறுமுறுக்கப்பண்ணின அந்த
மனிதர் கர்த்தருக்குமுன்பாக வாதையினலே
செத்தார்கள்.—தேசத்தைச் சோதித்துப்பார்க் ௩௰௮
கப்போன அந்த மனிதரில் நூனின் குமாரன்
யோசுவாவும் எப்புன்னேயின் குமாரன் காலே
புமோவெனில், உயிரோடிருந்தார்கள்.
மோசே இந்த வார்த்தைகளை இஸ்ரவேல் புத் ௩௰௯
திரர் அனைவரோடும் சொன்னபிற்பாடு சனம்
மிகவும் துக்கித்து,—அதிகாலமே எழுந்திருந்து, ௪௰
இதோ நாங்கள் கர்த்தர் சொன்ன இடத்திற்கு
ஏறிப்போவோம்; ஏனென்ருல் பாவம் செய்தோ
மென்று சொல்லி, பர்வதத்தின் கொடுமுடியில்
ஏறினர்கள்.—மோசேயோவெனில் சொன்ன ௪௰௧
தாவது: நீங்கள் இப்படிக் கர்த்தருடைய வார்த்
தையை மீறுவானேன்? அது உங்களுக்கு வாய்க்

1 ௨ மோ. ௩௪. ௬, ௭.—2 ௫ மோ. ௨௧. ௩௫. சங். ௯௫. ௰௧.

௪௨ காது.—நீங்கள் உங்கள் சத்துருக்களுக்குமுன்
பாக முறிய அடிக்கப்படாதபடிக்கு ஏறாதிருப்
பீர்களாக; ஏனெனில் கர்த்தர் உங்கள் நடுவில்
௪௩ இரார்.—ஏனென்றால் ஆமலேக்கியரும் கானானி
யரும் அங்கே உங்களுக்குமுன்னே இருக்கிறார்
கள்; பட்டையத்தினால் விழுவீர்கள், ஏனெனில்
நீங்கள் கர்த்தரைவிட்டுப் பின்வாங்கினபடியினா
லே, கர்த்தர் உங்களோடிருப்பதில்லை என்றான்.-
௪௪ அவர்களோவென்றால் பர்வதத்தின் கொடுமுடி
யில் ஏறத் துணிவாய் ஏகினார்கள்; ஆனால் கர்த்த
ருடைய உடம்படிக்கையின் பெட்டியும் மோ
சேயும் பாளயத்தைவிட்டு அசைந்ததில்லை.
௪௫ அப்பொழுது அந்த மலைத்தேசத்திலே குடியி
ருக்கிற ஆமலேக்கியரும் கானானியரும் இறங்கி
வந்து, அவர்களை முறியடித்து, அவர்களை ஓர்மா
மட்டும் துரத்தி நறுக்கினார்கள்.

## ௰௫. அதிகாரம்.

௧. போசனபான காணிக்கையைக்குறித்த கட்டளை. ௰௪. அது பரதேசிக்கும் சொல்லப்பட்டது. ௰௭. ஏறெடுக்கும் காணிக்கையாக முதல் பிசைந்த மாவைக் கொடுத்தது. ௨௨. அறிவீனத்தப்பிதத்துக்காக இடும் பலி. ௩௰. பயமற்ற துணிகரச்செய்கைக்கு ஆக்கினை. ௩௨. ஓய்வுநாளை அநாசரித்தவன் கல்லெறியுண்டது. ௩௭. அங்கியின் தொங்கல்களைக்குறித்த கட்டளை.

௧ கர்த்தர் மோசேயோடே பேசிச் சொன்னதாவ
௨ து:—நீ இஸ்ரவேல் புத்திரரோடே பேசி அவர்
களோடே சொல்லவேண்டியதேதெனில், நாம்
உங்களுக்குக் கொடுக்கும் உங்கள் குடியிருப்பா
௩ கிற தேசத்திலே நீங்கள் வந்து,—விசேஷித்த
பொருத்தனைக்காகிலும், உச்சாக மனதினாலாகி
லும், உங்கள் பண்டிகைகளிலே செலுத்துவதற்
காகிலும், கர்த்தருக்கு மாடுகளிலாவது ஆடுகளி
லாவது சர்வாங்கதகனபலியை, அல்லவென்று
வேறொரு பலியைக் கர்த்தருக்கு ஆற்றிய வாச
னையாகும் தகனமாகப் பலியிடும்பொழுது,—
௪ தன் காணிக்கையைக் கர்த்தருக்குச் செலுத்து
கிறவன், சர்வதகனமும் அல்லது வேறே பலி
யுமாகிய ஒரு ஆட்டுக்குட்டிக்காக, மரக்காலி
லே பத்தில் ஒருபங்கானதும் கால்படி எண்ணெ
யில் பிசைந்ததுமான மெல்லியமாவின் காணிக்
௫ கையைச் செலுத்தக்கடவன்.—ஊற்றுதலாகக்
கால்படி திராட்சப்பழ இரசத்தையும் படைப்
௬ பாயாக.—ஆட்டுக்கடாவாயிருந்ததேயாகில், நீ
பத்தில் இரண்டுபங்கானதும் படியில் மூன்றத்
தொருபங்காகிய எண்ணெயிலே பிசைந்தது
மான மெல்லியமாவின் காணிக்கையையும்,—
௭ ஊற்றுதலாகப் படியில் மூன்றத்தொருபங்காகிய
திராட்சப்பழ இரசத்தையும் கர்த்தருக்கு ஆற்றிய
௮ வாசனையாகச் செலுத்துவாயாக.—நீ விசேஷி
த்த பொருத்தனைக்காகிலும், சமாதானபலிக்காகி
லும். ஒரு காளை எருதைக் கர்த்தருக்குச் சர்வாங்க
தகனமாக, அல்லது வேறே பலியாகச் செலுத்தி
௯ னாயேயானால்,—நீ அதனோடே பத்தில் மூன்று
பங்கானதும் அரைப்படி எண்ணெயிலே பிசைந்
ததுமான மெல்லியமாவின் காணிக்கையையும்,-
ஊற்றுதலாக அரைப்படி திராட்சப்பழ இரசத் ௰
தையும், கர்த்தருக்காற்றிய வாசனையாகும் தகன
மாகப் படைக்கக்கடவாய்.—இந்தத் திட்டமாக ௰௧
ஒவ்வொரு மாட்டிற்காகவும், அல்லது ஆட்டுக்
கடாவுக்காகவும், அல்லது ஆட்டுக்குட்டி, வெள்
ளாட்டுக்குட்டிக்காகவும் படைப்பாயாக.—இப் ௰௨
படி நீங்கள் பலியிடுகிறவைகளின் இலக்கத்திற்
குத்தக்கதாய் ஒவ்வொன்றிற்காகச் செய்யக்கட
வீர்கள்.—தேசத்திலே பிறந்தவனெல்லாம் கர்த்த ௰௩
ருக்காற்றிய வாசனையாகும் தகனத்தைச் செலுத்
துகையில் இப்படிச் செய்யவேண்டும்.—ஒரு பர ௰௪
தேசி உங்களிடத்திலே தங்கி, அல்லது உங்கள்
நடுவே உங்கள் தலைமுறைகளுக்குள்ளே குடி
யிருந்து, கர்த்தருக்காற்றிய வாசனையாகும் தக
னத்தைச் செலுத்தப்போனால், நீங்கள் செய்கிற
படியே அவனும் செய்யவேண்டும்.—[1]சபையா ௰௫
கிய உங்களுக்கும் உங்களில் தங்குகிற பரதே
சிக்கும் ஒரே பிரமாணம் இருக்கவேண்டுமென்
பது உங்கள் தலைமுறைகளில் நித்தியகட்டளை
யாயிருக்கக்கடவது; கர்த்தருக்குமுன்பாகப் பர
தேசி உங்களைப்போல இருக்கவேண்டும்.—உங் ௰௬
களுக்கும் உங்களிடத்தில் தங்குகிற பரதேசிக்
கும் ஒரே பிரமாணமும் ஒரே நியாயமும் இருக்
கக்கடவதென்று சொல்லென்றார்.
பின்னையும் கர்த்தர் மோசேயோடே பேசிச் ௰௭
சொன்னதாவது:—நீ இஸ்ரவேல் புத்திரரோடே ௰௮
பேசிச் சொல்லவேண்டியதேதெனில், நாம் உங்
களை அழைத்துப்போகிற தேசத்திலே நீங்கள் வந்
து,-தேசத்தின் அப்பத்திலே புசிக்கையில், கர்த்த ௰௯
ருக்கு ஏறெடுக்கும் காணிக்கையைப் படைக்கக்
கடவீர்கள்.-உங்கள் பிசைந்தமாவிலே முதல்பல ௨௰
னாகிய ஒரு அதிரசத்தை ஏறெடுத்துப் படைப்பீர்
களாக; போரடிக்கிற களத்திலே படைப்பை ஏ
றெடுக்கிறதுபோல அதை ஏறெடுப்பீர்களாக.—
இப்படி உங்கள் தலைமுறைகளிலே கர்த்தருக்கு ௨௧
உங்கள் பிசைந்தமாவின் முதல்பலனிலே படை
ப்பை ஏறெடுத்துக் கொடுக்கக்கடவீர்கள்.
கர்த்தர் மோசேயோடே சொன்ன இந்த ௨௨
எல்லாக் கற்பனைகளின்படியேயும்,— கர்த்தர் ௨௩
மோசேயைக்கொண்டு கற்பனைதந்த நாள்முதல்
கொண்டு அவர் உங்களுக்கும் உங்கள் தலைமு
றைகளுக்கும் கற்பித்த எல்லாவற்றின்படியேயும்
நீங்கள் செய்யாமல், ஒரு தப்பிதம்பண்ணினீர்க
ளானால்,-அப்பொழுது சபையின் கண்களுக்கு ௨௪
மறைவாக யாதொன்றைத் தப்பிதமாகச் செய்
யப்பட்டதுண்டாகில், சபையெல்லாம் கர்த்த
ருக்கு ஆற்றியவாசனைக்கென்று சர்வாங்கதக
னமாக மாடுகளில் ஒரு காளை எருதையும், முறை
மை நியாயத்தின்படி இருக்கிற அதின் காணிக்
கையையும், அதின் ஊற்றுதலையும், பாவம்போக்
கும்பலியாக ஒரு வெள்ளாட்டுக்கடாவையும் செ
லுத்துவதாக.—அதினால் ஆசாரியன் இஸ்ரவேல் ௨௫
புத்திரரின் சபை அனைத்திற்காகவும் பாவநிவிர்த்

[1] உ. மோ. ௰௨. ௪௯.

தியை உண்டாக்கக்கடவன்; அப்பொழுது அ
வர்களுக்கு மன்னிக்கப்படும்; ஏனெனில் அது
ஒரு தப்பிதமாயிருந்தது; அவர்கள் அதின்நிமித்
தம் கர்த்தருக்குத்தகனமான தங்கள் படைப்பை
யும் பாவம்போக்கும் தங்கள் பலியையும் கர்த்த
௨௬ ருக்குமுன்பாகக் கொண்டுவந்தார்களே.—ஆகை
யால் அது இஸ்ரவேலின் புத்திரரின் சபையனைத்
திற்கும் அவர்களுக்குள்ளே தங்குகிற பரதேசிக்
கும் மன்னிக்கப்படும்; ஏனெனில் சனத்திற்கெல்
லாம் அது தப்பிதத்தினாலே வந்தது.
௨௭ ஒரே ஆத்துமா தப்பிதத்தினாலே பாவஞ்செய்
தானேயாகில், ஒருவயதான வெள்ளாட்டைப்
பாவம்போக்கும்பலியாகச் செலுத்துவானாக.—
௨௮ அப்பொழுது கர்த்தருக்குமுன்பாக அவன் பா
வத்தை நீக்கும்படிக்கு, ஆசாரியன் தப்பிதத்தினா
லே பாவஞ்செய்த அந்த ஆத்துமாவுக்காகப் பாவ
நிவிர்த்தியை உண்டாக்கக்கடவன்; அப்பொ
௨௯ ழுது அவனுக்கு மன்னிக்கப்படும். — தப்பிதம்
செய்தவனுக்காக இஸ்ரவேல் புத்திரராகிய உங்க
ளில் பிறந்தவனுக்கும் உங்களுக்குள்ளே தங்கு
கிற பரதேசிக்கும் ஏக நியாயப்பிரமாணம் இருப்
பதாக.
௩௰ ஆனால் தேசத்திலே பிறந்தவர்களிலாகிலும்
பரதேசிகளிலாகிலும் சரி, எந்த ஆத்துமா ஒங்
கின கையால் யாதொன்று செய்தானோ, அவன்
கர்த்தரைத் தூஷணித்தான்; அந்த ஆத்துமா தன்
சனத்தில் இராதபடிக்கு அறுப்புண்டு போக
௩௧ வேண்டும்.—ஏனெனில் கர்த்தரின் வார்த்தையை
அசட்டைபண்ணி, அவர் கற்பனையை முறித்து
விட்டான்; அப்படிப்பட்ட ஆத்துமா அறுப்புண்
ணவே அறுப்புண்டு போகவேண்டும்; அவன்
அக்கிரமம் அவன்மேல் இருக்குமென்று சொல்
லென்றார்.
௩௨ இஸ்ரவேலின் புத்திரர் வனாந்தரத்தில் இருக்
கையில், ஓய்வுநாளில் விறகுகளைப் பொறுக்கு
௩௩ கிற ஒரு மனிதனைக் கண்டுபிடித்தார்கள்.—அவனை
விறகுகளைப் பொறுக்குகிறவனாகக் கண்டுபிடித்
தவர்கள், அவனை மோசே ஆரோன் என்றவர்க
ளண்டைக்கும் சபையனைத்தண்டைக்கும் கொ
௩௪ ண்டுவந்தார்கள்.—[1]அவனுக்குச் செய்யவேண்
டியது இன்னதென்று தீர்க்கமான உத்தரவு இல்
லாதபடியினாலே, அவனைக் காவலிலே வைத்தார்
௩௫ கள்.—கர்த்தர் மோசேயுடனே, அந்த மனிதன்
கொலையுண்ணவே கொலையுண்ணக்கடவன்;
சபையெல்லாம் அவனைப் பாளயத்திற்குப்புறம்
௩௬ பே கல் எறிவதாக என்றார்.—அப்பொழுது சபை
யெல்லாம் கர்த்தர் மோசேக்குக் கற்பித்தபடியே,
அவனைப் பாளயத்திற்குப் புறம்பே கொண்டு
போய், கல்எறிந்தார்கள்; அவன் செத்தான்.
௩௭ பின்னையும் கர்த்தர் மோசேயோடே சொன்ன
௩௮ தாவது:—நீ இஸ்ரவேல் புத்திரரோடே பேசி, அ
வர்கள் தங்கள் தலைமுறைகளிலே தங்களுக்குத்
[2]தங்கள் வஸ்திரங்களின் ஓரங்களிலே தொங்கலை
உண்டாக்கி, ஓரத்தின் தொங்கலிலே இளநீல
மான கயிற்றைப் போடவேண்டுமென்று அவர்க
ளோடே சொல்.—நீங்கள் பின்பற்றிச் சோரம் ௩௯
போகிற உங்கள் இருதயமும் உங்கள் கண்களும்
போகும்போக்கை நோக்கிப் போகாமல், அந்தக்
கயிற்றைப்பார்த்து, கர்த்தரின் கற்பனைகளை எல்
லாம் நினைத்து, அவைகளின்படியே செய்யும்ப
டிக்கு. அது அந்தத் தொங்கலில் உங்களுக்கு இ
ருக்கவேண்டும்.—நீங்கள் நம்முடைய கற்பனை ௪௰
களையெல்லாம் நினைத்து, அவைகளின்படியே
செய்து, உங்கள் பராபரனுக்குப் பரிசுத்தராயிருக்
கிறதற்காகத்தானே.—நாம் உங்களுக்குப் பராபர ௪௧
னாயிருக்கும்படிக்கு, உங்களை எகிப்துதேசத்திலி
ருந்து புறப்படப்பண்ணின உங்கள் பராபரனா
கிய கர்த்தர்; நாம் உங்கள் பராபரனாகிய கர்த்த
ரென்று சொல்லென்றார்.

## ௰௬. அதிகாரம்.

௧. கோரு, தாத்தான், அபிராம் என்றவர்களின் கலகம். ௨௩. மோசே சனங்களை அக்கலகக்காரருடைய கூடாரத்தைவிட்டு நீக்கியது. ௩௧. கோருவைப் பூமி விழுங்கியதும், மற்றவர்களை அக்கினி பட்சித்ததும். ௩௬. பரிசுத்த ஊழியத்திற்குத் தூபகலசங்கள் வைக்கப்பட்டது. ௪௧. மோசேக்கும் ஆரோனுக்கும் விரோதமாய் முறுமுறுத்த ௰௪௲௭௱-பேர் வாதையால் கொல்லப்பட்டது. ௪௬. ஆரோன் தூபத்தினாலே அவ்வாதையை நீக்கியது.

இலேவிக்குப் பிறந்த கோகாத்திற்குக் குமார ௧
னான இத்செயாரின் மகன் [3]கோருகோவென்
றால், எலியாபின் குமாரராகிய தாத்தானையும் அ
பீராமையும் ரூபேன் புத்திரரில் பேலேத்தின்
குமாரனாகிய ஓனையும் கூட்டிக்கொண்டு,—இஸ் ௨
ரவேல் புத்திரரில் சபைக்குத் தலைவரும் சபை
யிலே அழைக்கப்பட்டவர்களும் பேர்பெற்ற
மனிதருமாகிய இருநூற்றைம்பதுபேரோடும்
கூட மோசேக்குமுன்பாக எழும்பி,—மோசேக் ௩
கும் ஆரோனுக்கும் விரோதமாகக் கூட்டம்கூடி,
அவர்களுடனே, நீங்கள் மிஞ்சிச் செய்கிறீர்கள்,
ஏனென்றால் சபையார் எல்லாரும் ஏகமாய்ப்
பரிசுத்தமானவர்கள்; கர்த்தர் அவர்கள் நடுவில்
இருக்கிறாரே, பின்னை ஏன் உங்களைக் கர்த்தரு
டைய சபையின்மேல் உயர்த்துகிறீர்கள் என்
றார்கள்.
மோசே இதைக் கேட்டபொழுது, [4]முகங்குப் ௪
புற விழுந்தான்.—பிற்பாடு அவன் கோருகோடும் ௫
அவனுடைய எல்லாக் கூட்டத்தோடும் பேசிச்
சொன்னதாவது: நாளைக்குக் கர்த்தர் தம்முடைய
வன் யாரென்றும், தம்மண்டையிலே சேரத் தாம்
கட்டளையிட்ட பரிசுத்தவான் யாரென்றும், அறி
யப்பண்ணுவார்; அப்பொழுது எவனைத் தெரிந்
துகொள்ளுவாரோ, அவனைத் தம்மண்டையில்
சேரக் கட்டளையிடுவார்.—ஒன்று செய்யுங்கள்; ௬
கோருகே, அவனுடைய எல்லாக் கூட்டமுமா
னவர்களே, நீங்கள் தூபகலசங்களை எடுத்துக்
கொண்டு,—நாளைக்கு அவைகளில் அக்கினி ௭
போட்டு, அவைகளில் கர்த்தருக்குமுன்பாகத்
தூபவர்க்கம் போடுங்கள்; அப்பொழுது கர்த்தர்

1 ௩ மோ. ௨௪. ௰௨.—2 ௫ மோ. ௬. ௮; ௨௨. ௰௨. மத். ௨௩. ௫.

3 ௪ மோ. ௨௬. ௯. யூதா. ௰௧.—4 ௪ மோ. ௰௪. ௫.

எவனைத் தெரிந்துகொள்ளுவாரோ, அவன் பரி
சுத்தவானாயிருப்பான்; இலேவியின் புத்திரராகிய
௮ நீங்களே மிஞ்சிப்போகிறீர்கள் என்றான்.—பின்
னையும் மோசே கோராகோடே சொன்னதாவது:
௯ இலேவியின் புத்திரரே, கேளுங்கள்.—கர்த்தரு
டைய வாசஸ்தலத்தின் பணிவிடைவேலையைச்
செய்யவும், சபையாரின்முன்னே அவர்களுக்
காகச் சேவிக்கவும், உங்களைத் தம்மண்டையிலே
சேரப்பண்ணும்படிக்கு, இஸ்ரவேலின் பரா
பரன் இஸ்ரவேல் சபையில் உங்களைப் பிரித்து
௰ எடுத்ததும்,—இப்படியே அவர் உன்னையும் உன்
னோடேகூட இலேவியின் புத்திரராகிய உன்னு
டைய எல்லாச் சகோதரரையும் சேரப்பண்ணி
னதும், உங்களுக்குக் கொஞ்சமான காரியமோ?
இப்பொழுது ஆசாரியபட்டத்தையும் தேடுகிறீர்
௰௧ களோ?—[1]ஆகையால் நீயும் உன் கூட்டத்தார்
அனைவரும் கர்த்தருக்கு விரோதமாகக் கூட்டம்
கூடினீர்கள்; ஆரோனுக்கு விரோதமாக நீங்கள்
முறுமுறுக்கிறதற்கு அவன் எம்மாத்திரமென்
றான்.
௰௨ பிற்பாடு மோசே எலியாபின் குமாரராகிய
தாத்தானையும் அபீராமையும் அழைத்தனுப்பி
னான்; ஆனால் அவர்கள் சொன்னதாவது: நாங்கள்
௰௩ வருகிறதில்லை.—நீ எங்களை இந்த வனாந்தரத்திலே
கொன்றுபோட, எங்களைப் பாலும்தேனும் ஓடு
கிற தேசத்திலிருந்து ஏறிவரப்பண்ணினது
கொஞ்சமான காரியமென்று சொல்லி, எங்கள்
மேலே துரைத்தனமும்பண்ணவே பண்ணுவா
௰௪ யோ?—நீ எப்படி எங்களைப் பாலும் தேனும் ஓடு
கிற ஒரு தேசத்திற்குக் கொண்டுவந்து, எங்க
ளுக்கு நிலங்களையும் திராட்சத்தோட்டங்களை
யும் சுதந்தரமாகக் கொடுத்தாய்? இந்த மனிதரு
டைய கண்களைப் பிடுங்குவாயோ? நாங்கள் வரு
௰௫ கிறதில்லை என்றார்கள்.—அப்பொழுது மோசே
மிகுதியும் கோபம்மூண்டவனாகி, கர்த்தருட
னே, அவர்கள் காணிக்கையைப் பாராதிருப்பீ
ராக; நான் அவர்களுடையதில் ஒரு கழுதையை
யாகிலும் எடுத்துக்கொண்டதும் இல்லை; அவர்
களில் ஒருவனுக்குப் பொல்லாப்புச்செய்ததும்
௰௬ இல்லை என்றான்.—பிற்பாடு மோசே கோராகோ
டே சொன்னதாவது: நீயும் உன்னுடைய எல்
லாக் கூட்டத்தாருமாய் நாளைக்குக் கர்த்தருக்கு
முன்பாக வந்திருங்கள், நீயும் அவர்களும் ஆரோ
௰௭ னுமாய்த்தானே.—நீங்கள் அவரவர் தங்கள் தூபக
லசத்தை எடுத்து, அவைகள் மேலே தூபவர்க்கத்
தைப்போட்டு, அவரவர் தங்கள் தூபகலசங்களை
இருநூற்று ஐம்பது தூபகலசங்களாகக் கர்த்த
ருக்குமுன்பாகக் கொண்டுவாருங்கள்; நீயும் ஆ
ரோனும் ஒவ்வொருவன் தன்தன் தூபகலசத்
தைக் கொண்டுவாருங்கள் என்றான்.
௰௮ அப்படியே அவரவர் தங்கள் தூபகலசங்களை
எடுத்து, அவைகளில் அக்கினியையும் தூபவர்க்
கத்தையும்போட்டு, ஆசரிப்புக்கூடாரத்தின் வா
சலுக்குமுன்பாக வந்து நின்றார்கள்; மோசேயும்
ஆரோனும் அங்கே நின்றார்கள்.—கோராகோ ௰௯
வெனில் இவர்களுக்கு விரோதமாகச் சபையை
யெல்லாம் ஆசரிப்புக்கூடார வாசலுக்கு முன்
பாகக் கூடிவரப்பண்ணினான்; [2]ஆனால் கர்த்தரு
டைய மகிமைசபைக்கெல்லாம்காணப்பட்டது.
கர்த்தர் மோசேயோடும் ஆரோனோடும் பேசி,— ௨௰
இந்தச் சபையின் நடுவிலிருந்து பிரிந்துபோங் ௨௧
கள்; க்ஷணப்பிலே அவர்களை அதமாக்குவே
மென்றார்.—அப்பொழுது அவர்கள் முகம் குப் ௨௨
புறவிழுந்து, சகல மாம்சத்தினுடைய ஆவிகளுக்
கும் தேவனாகிய பராபரனே, ஒரு மனிதன் பா
வம்செய்யும் அளவில் சபையின்மேல் எல்லாம்
நடுங்கோபம் அடைவீரோ என்றார்கள்.—அப் ௨௩
பொழுது கர்த்தர் மோசேயுடனே, — கோரா, ௨௪
தாத்தான், அபீராம் குடியிருக்கிற ஸ்தலத்தைச்
சுற்றிலுமிருந்து விலகிப்போங்களென்று சபை
யோடே சொல்லென்றார்.
அப்பொழுது மோசே எழுந்திருந்து, தாத்தான், ௨௫
அபீராம் என்றவர்களிடத்திலே போனான்; இஸ்ர
வேலின் மூப்பர் அவர்களுக்குப் பின்சென்றார்
கள்.—அவன் சபையுடனே, இந்த ஆகாத மனித ௨௬
ருடைய எல்லாப் பாவங்களிலும் நீங்கள் வாரிக்
கொள்ளப்படாதபடிக்கு, அவர்கள் கூடாரங்க
ளைவிட்டு விலகி, அவர்களுக்குண்டானது ஒன்
றையும் தொடாதேபோங்கள் என்றான்.—அப்ப ௨௭
டியே அவர்கள் கோரா, தாத்தான், அபீராம் குடி
யிருந்த ஸ்தலத்தைச் சுற்றிலுமிருந்து விலகிப்
போனார்கள்; தாத்தானும் அபீராமுமோவென்
றால், வெளியே வந்து, தங்கள் பெண்சாதி பிள்
ளைகள் குழந்தைகளோடும் தங்கள் கூடாரங்க
ளின் வாசல்படியிலே நின்றுகொண்டார்கள்.—
அப்பொழுது மோசே சொன்னதாவது: இந்தக் ௨௮
கிரியைகளையெல்லாம் செய்ய, கர்த்தர் என்னை
அனுப்பினாரென்றும், அவைகளை நான் என் மன
தின்படியே செய்யவில்லையென்றும், நீங்கள்
எதினாலே அறிவீர்களென்றால்,—இவர்கள் சகல ௨௯
மனிதரும் சாகிறபடி செத்து, சகல மனிதரும்
விசாரிக்கப்படுகிறபடி விசாரிக்கப்பட்டால்,
கர்த்தர் என்னை அனுப்பினதில்லை.—கர்த்தர் புதி ௩௰
யகாரியத்தைச் சிருஷ்டிப்பதினாலே, பூமி தன்
வாயைத் திறந்து, அவர்கள் உயிரோடே பாதா
ளத்தில் இறங்க, அவர்களையும் அவர்களுக்குண்
டான யாவையும் விழுங்கிப் போட்டதேயா
னால், இந்த மனிதர் கர்த்தரைத் தூஷணித்தார்கள்
என்கிறதை அறிவீர்கள் என்றான்.
அவன் இந்த வார்த்தைகளையெல்லாம் சொல் ௩௧
லித் தீர்ந்தபொழுது சம்பவித்ததேதெனில், [3]அ
வர்கள் கீழிருந்த பூமி பிளந்து,—பூமி தன் வா ௩௨
யைத் திறந்து, அவர்களையும் அவர்கள் வீடுகளை
யும் கோராகுக்கிருந்த எல்லா மனிதரையும் எல்
லா ஆஸ்தியையும் விழுங்கிவிட்டது.—அவர்கள் ௩௩
தங்களுக்குண்டானவை எல்லாவற்றோடும்கூட

1 ௨ மோ. ௰௬. ௭.

2 ௪ மோ. ௰௪. ௰.—3 ௫ மோ. ௰௧. ௬.

உயிரோடே பாதாளத்தில் இறங்கினார்கள்; பூமி
அவர்கள்மேலே மூடிக்கொண்டது; இப்படிச்
௩௪ சபையின் நடுவிலிருந்து அழிந்தார்கள்.—அவர்
களைச் சுற்றிலும் இருந்த இஸ்ரவேலர் எல்லாரும்
அவர்கள் கூக்குரலைக் கேட்டு, பூமி நம்மையும்
௩௫ விழுங்குமோ என்று ஓடிப்போனார்கள்.—அக்கி
னியும் கர்த்தரிடத்திலிருந்து புறப்பட்டு, தூபம்
காட்டின இருநூற்று ஐம்பதுபேரையும் பட்
சித்தது.
௩௬ கர்த்தர் மோசேயோடே பேசிச் சொன்னதா
௩௭ வது:—அக்கினிக்குள் அகப்பட்ட தூபகலசங்
களை எடுத்து, அவைகளிலிருக்கிற அக்கினியை
அப்பாலே கொட்டிப்போட, ஆசாரியனான
ஆரோனின் குமாரனாகிய எலெயாசாருக்குச்
சொல்; ஏனெனில் அவைகள் பரிசுத்தமாயின.—
௩௮ தங்கள் ஆத்துமாக்களுக்கு விரோதம்பண்ணின
அந்தப் பாவிகளின் தூபகலசங்களைப் பலிபீடத்
தை மூடத்தக்க தட்டையான தகடுகளாக அடிக்
கக்கடவர்கள்; ஏனெனில் அவர்கள் கர்த்தருக்
குமுன்பாக, அவைகளைக் கொண்டுவந்ததினாலே
அவைகள் பரிசுத்தமாயின; அவைகள் இஸ்ர
வேல் புத்திரருக்கு அடையாளமாவதாக என்
௩௯ றார்.—அப்படியே ஆசாரியனாகிய எலெயாசார்
வெந்துபோனவர்கள்கொண்டுவந்திருந்த வெண்
௪௰ கலத் தூபகலசங்களை எடுத்து,—[1]ஆரோனின்
வித்தல்லாத ஒரு அந்நியன் கர்த்தருக்குமுன்பா
கத் தூபம்காட்டுகிறதற்குச் சேராதபடிக்கும், கோ
ராகைப்போலும் அவன் கூட்டத்தாரைப்போ
லும் இராதபடிக்கும், இஸ்ரவேல் புத்திரருக்கு
நினைப்புண்டாக, அவைகளைக் கர்த்தர் மோசே
யைக்கொண்டு தனக்குச் சொன்னபடியே பலி
பீடத்தைமூடும் தகடுகளாக அடிப்பித்தான்.
௪௧ மறுநாளிலே இஸ்ரவேல் புத்திரரின் சபை
யெல்லாம் மோசேக்கும் ஆரோனுக்கும் விரோத
மாக முறுமுறுத்து, கர்த்தரின் சனத்தைக் கொன்
௪௨ றுபோட்டீர்கள் என்றார்கள்.—சபை மோசேக்
கும் ஆரோனுக்கும் விரோதமாகக் கூடுகையில்
சம்பவித்ததேதென்றால், அவர்கள் ஆசரிப்புக்கூ
டாரத்திற்கு நேராக முகத்தைத் திருப்புகிறபொ
ழுது, இதோ மேகம் அதை மூடி, கர்த்தரின் மகி
௪௩ மை காணப்பட்டது.—மோசேயும் ஆரோனும்
ஆசரிப்புக்கூடாரத்திற்குமுன்பாக வந்தார்கள்.—
௪௪ அப்பொழுது கர்த்தர் மோசேயுடனே பேசி,—
௪௫ [2]இந்தச் சபையின் நடுவிலிருந்து விலகுங்கள்;
அசுப்பிலே அவர்களை அதமாக்குவோம் என்
றார்; அப்பொழுது முகம்குப்புற விழுந்தார்கள்.
௪௬ மோசே ஆரோனுடனே, நீ தூபகலசத்தை எ
டுத்து, பலிபீடத்திலிருக்கிற அக்கினியை அதில்
வைத்து, அதின்மேலே தூபவர்க்கம்போட்டு, சீக்
கிரமாய்ச் சபையண்டையிலே போய், அவர்க
ளுக்காகப் பாவநிவிர்த்தியை உண்டாக்கு; ஏனெ
னில் கர்த்தரின் சந்நிதியிலிருந்து கடுங்கோபம்
புறப்பட்டது; வாதை துவக்கிற்றென்றான்.—
௪௭ மோசே சொன்னபடி ஆரோன் அதை எடுத்துக்
கொண்டு சபையின் நடுவில் ஓடினான்; இதோ
சனத்தில் வாதை துவக்கியும் இருந்தது; அவன்
தூபவர்க்கம்போட்டு, சனத்திற்காகப் பாவநி
விர்த்தியை உண்டாக்கி,—செத்தவர்களுக்கும் ௪௮
உயிரோடிருக்கிறவர்களுக்கும் நடுவே நின்றான்;
அப்பொழுது வாதை நிறுத்தப்பட்டது.—கோரா ௪௯
குடைய வர்த்தமானத்தின்நிமித்தம் செத்தவர்க
ளைத்தவிர, அந்த வாதையினாலே செத்தவர்கள் பதி
னாலாயிரத்து எழுநூறுபேர்.—ஆரோன் ஆசரிப்புக் ௫௰
கூடாரவாசலுக்கு மோசேயண்டையில் திரும்பி
வந்தான்; ஏனெனில் வாதை நிறுத்தப்பட்டுப்
போயிற்று.

## ௰௭. அதிகாரம்.

௮. கோத்திரத்தலைவர்களுடைய கோல்களுக்குள் ஆரோனுடைய கோல் துளிர்த்தது. ௰. அது கலகக்காரருக்கு விரோதமான அடையாளமாக வைக்கப்பட்டது.

கர்த்தர் மோசேயோடே பேசிச் சொன்னதா ௧
வது:—நீ இஸ்ரவேல் புத்திரரோடே பேசி, அவர் ௨
களில் அவர்கள் பிதாக்களின் வீடுகளாகிய ஒவ்
வொரு வீட்டினுடைய பிரபுவின் கையில், ஒவ்
வொரு கோலாகப் பன்னிரண்டு கோலை வாங்கி,
அவனவன் கோலின்மேலே அவனவன் பெயரை
எழுதி,—இலேவியினுடைய கோலின்மேலோ ௩
வென்றால், ஆரோனின் பெயரை எழுதக்கட
வாய்; ஏனெனில் அவர்களுடைய பிதாக்களின்
ஒவ்வொரு வீட்டுத்தலைவனுக்காக ஒவ்வொரு
கோல் இருக்கவேண்டும்.—அவைகளை ஆசரிப் ௪
புக்கூடாரத்திலே நாம் உங்களைச் சந்திக்கும் தல
மாகிய சாட்சிக்குமுன்பாக வைக்கக்கடவாய்.—
அப்பொழுது சம்பவிப்பதேதெனில், நாம் தெ ௫
ரிந்துகொள்பவனுடைய கோல் துளிர்க்கும்; அப்
படியே இஸ்ரவேல் புத்திரர் உங்களுக்கு விரோ
தமாக முறுமுறுக்கிற அவர்கள் முறுமுறுப்புகளை
நம்மைவிட்டோயப்பண்ணுவோமென்றார்.
இதை மோசே இஸ்ரவேல் புத்திரரோடே ௬
சொன்னான்; அப்பொழுது அவர்களுடைய பிர
புக்களெல்லாரும் அவர்கள் பிதாக்களின் ஒவ்
வொரு வீட்டிற்கு ஒவ்வொரு பிரபு அவனுக்கு
ஒவ்வொரு கோலைப் பன்னிரண்டு கோலாகக்
கொடுத்தார்கள்; ஆரோனின் கோல் அவர்கள்
கோல்களுக்குள்ளே இருந்தது.—அந்தக் கோல் ௭
களை மோசே சாட்சியின் கூடாரத்திலே கர்த்த
ருக்குமுன்பாக வைத்தான்.—சம்பவித்ததேதெ ௮
னில் மறுநாளிலே மோசே சாட்சியின் கூடாரத்
திற்குள் பிரவேசித்தபொழுது, இதோ இலேவி
யின் வீட்டிற்காக இருக்கிற ஆரோனின் கோல்
துளிர்த்திருந்தது; அது துளிர்விட்டு, பூப்பூத்து,
வாதுமைப்பழங்களைக் கொடுத்தது.—அப்பொழு ௯
து மோசே கர்த்தருக்குமுன்பாக இருந்த எல்லாக்
கோல்களையும் வெளியே எல்லா இஸ்ரவேல் புத்
திரரண்டைக்கும் கொண்டுவந்தான்; அவர்கள்
கண்டு அவரவர் தங்கள் கோலை வாங்கிக்கொண்
டார்கள்.
அப்பொழுது கர்த்தர் மோசேயுடனே, [3]ஆரோ ௰
னின் கோல் கலகக்காரரான புத்திரருக்கு அடை

1 ௪ மோ. ௩. ௰.—2 ௪ மோ. ௨௧. ௨௨: ௰௪. ௰௨.

3 எபி. ௯. ௪.

யாளமாக காக்கப்பட, நீ அதைத் திரும்பச் சாட்
சிக்குமுன்பாகக் கொண்டுபோய் வைத்து இப்ப
டியே அவர்கள் சாவாதபடிக்கு, அவர்கள் முறு
முறுப்புகளை நம்மைவிட்டு மூடியப்பண்ணென்
௰௧ ரூர்.—கர்த்தர் தனக்குக் கற்பித்த அந்தப்படியே
மோசே செய்தான்.
௰௨ அப்பொழுது இஸ்ரவேல் புத்திரர் மோசேயு
டனே, இதோ மாண்டு அழிந்துபோகிறோம்;
௰௩ நாங்கள் எல்லாரும் அழிந்துபோகிறோம்.—கர்த்
தரின் வாசஸ்தலத்திற்குச் சேரவே சேருகிறவ
னெல்லாம் சாகிறான்; நாங்கள் மாண்டுபோகிற
தினாலே சரியாகவேண்டுமோவென்றார்கள்.

## ௰௮. அதிகாரம்.

௧. ஆசாரியருக்கும் இலேவியருக்கும் நியமிக்கப்பட்ட வேலை. ௮. ஆசாரியருடைய பாகம். ௨௧. இலேவியருடைய பாகம். ௨௬. ஆசாரியருக்காக ஏறெடுக்கும் காணிக்கை இலேவியரின் பாகத்தில் எடுக்கப்பட்டது.

௧ பிற்பாடு கர்த்தர் ஆரோனோடே சொன்னதாவ
து: நீயும் உன்னோடேகூட உன் குமாரரும் உன்
தகப்பன் வீட்டாரும் பரிசுத்தஸ்தலத்தில் நடக்
கும் அக்கிரமத்தைச் சுமப்பீர்கள்; நீயும் உன்
னோடேகூட உன் குமாரரும் உங்கள் ஆசாரிய
ஊழியத்தில், நடக்கும் அக்கிரமத்தைச் சுமப்பீர்
௨ கள்.—உன் தகப்பனாகிய இலேவியின் கோத்திரத்
தாரான உன் சகோதரரையும் உன்னோடேகூடி
யிருக்கவும் உன்னிடத்திலே சேவிக்கவும் உன்
னுடனே சேர்த்துக்கொள்; ஆனால் நீயும் உன்
குமாரனும்கூடச் சாட்சியின் கூடாரத்திற்கு
௩ முன்பாக இருக்கக்கடவீர்கள்.—அவர்கள் உன்
காவலையும் கூடாரம் அனைத்தின் காவலையும்
காப்பார்களாக; ஆனால் அவர்களும் நீங்களும்
கூடச் சாவாதபடிக்கு, அவர்கள் பரிசுத்தஸ்த
லத்தின் தளவாடங்களண்டைக்கும் பீடத்தண்
௪ டைக்கும் சேராமல்,—உன்னோடே கூடிக்கொ
ண்டு, கூடாரத்திற்கு அடுத்த எல்லாப் பணிவி
டையையும் செய்ய, ஆசரிப்புக்கூடாரத்தின் கா
வலைக் காக்கக்கடவர்கள்; அந்நியன் உங்களண்
௫ டையில் சேரவேண்டாம்.—இஸ்ரவேல் புத்தி
ரர்மேல் இனிக் கடுங்கோபம் வாராதபடிக்கு,
நீங்கள் பரிசுத்தஸ்தலத்தின் காவலையும் பலிபீ
௬ டத்தின் காவலையும் காக்கக்கடவீர்கள்.—ஏனெ
னில் இதோ ஆசரிப்புக்கூடாரத்தின் பணிவி
டை வேலையைச்செய்ய, [1]கர்த்தருக்குக் கொடுக்
கப்பட்ட உங்கள் சகோதரராகிய இலேவியரை
நாம் இஸ்ரவேல் புத்திரரின் நடுவில் எடுத்து, உங்
களுக்குக் காணிக்கையாகக் கொடுத்தோம். —
௭ ஆனால் நீயும் உன்னோடேகூட உன் குமாரரும்
கூடப் பலிபீடத்திற்கும் திரைக்குள்புறத்திற்
கும் அடுத்த எல்லாவற்றையும் செய்ய, உங்கள்
ஆசாரியவேலையைக் காத்துச் சேவிக்கக்கடவீர்
கள்; உங்கள் ஆசாரியவேலையை உங்களுக்குக்
காணிக்கையாகக் கொடுத்தோம்; சேருகிற அந்
நியன் கொலைஉண்ணக்கடவனென்றார்.
௮ பின்னையும் கர்த்தர் ஆரோனோடே சொன்ன

[1] ௪ மோ. ௩. ௪௯.

தாவது: இதோ இஸ்ரவேல் புத்திரர் பரிசுத்தம்
பண்ணுகிறவைகளிலெல்லாம் ஏறெடுக்கப்படு
கிற நம்முடைய படைப்புகளைக் காவல்காக்கி
றீர்களே, அவைகளை உனக்குக் கொடுத்தோம்;
அபிஷேகத்தின்நிமித்தம் அவைகளை உனக்கும்
உன் குமாரருக்கும் நித்தியகட்டளையாகக் கொ
டுத்தோம். — பரிசுத்தத்திற்குப் பரிசுத்தமானதி ௯
லே, அக்கினிக்குள்படாமல் உன்னுடையதாய்
இருப்பதேதெனில், அவர்கள் தங்களுடைய எல்
லாப் படைப்பிலும், தங்களுடைய எல்லாக் கா
ணிக்கையிலும் பாவம்போக்கும் தங்களுடைய
எல்லாப் பலியிலும், குற்றம்போக்க நமக்குச்
செலுத்துகிற தங்களுடைய எல்லாப் பலியிலும்,
படைக்கிறதெல்லாம்தானே; இது உனக்கும்
உன் குமாரருக்கும் பரிசுத்தத்திற்குப் பரிசுத்தமா
யிருப்பது.-பரிசுத்தத்திற்குப் பரிசுத்தமான ஸ்த ௰
லத்திலே அதைப் புசிப்பாயாக; ஆண்சாதியான
வனெல்லாம் அதைப் புசிப்பானாக; அது உனக்
குப் பரிசுத்தமாயிருக்கக்கடவது.—இஸ்ரவேல் ௰௧
புத்திரர் ஏறெடுக்கிறதும் அசைவாட்டுகிறது
மான அவர்களுடைய எல்லாக் காணிக்கைக
ளின் படைப்பும் உன்னுடையவைகளாயிருக்
கும்; அவைகளை உனக்கும் உன் குமாரருக்கும்
உன் குமாரத்திகளுக்கும்கூட நித்தியகட்டளை
யாகக் கொடுத்தோம்; உன் வீட்டிலே சுத்தமான
வர்களெல்லாரும் அவைகளைப் புசிப்பார்க
ளாக.—அவர்கள் கர்த்தருக்குக் கொடுக்கும் அவர் ௰௨
களுடைய முதல்பலன்களாகிய மேல்த்தரமான
எல்லா எண்ணெயையும் மேல்த்தரமான திராட்
சப்பழ இரசத்தையும் தானியத்தையும் உனக்
குக் கொடுத்தோம். — தங்கள் தேசத்திலிருக்கிற ௰௩
யாவிலும் அவர்கள் கர்த்தருக்குக் கொண்டுவரும்
முதல்பலன்கள் உன்னுடையதாயிருக்கும்; உன்
வீட்டிலே சுத்தமானவர்களெல்லாரும் அவைக
ளைப் புசிப்பார்களாக.—இஸ்ரவேலிலே [2]சாபத் ௰௪
தீடானவைகளெல்லாம் உன்னுடையவைகளா
யிருக்கும்.-மனிதரும்மிருகஜீவன்களுமான சகல ௰௫
மாம்சத்திலும் கர்ப்பம்திறந்து, கர்த்தருக்குச் செ
லுத்தப்படுகிற யாவும் உன்னுடையவைகளாயி
ருக்கும்; ஆனால் மனிதனில் பிறந்த முதல்பேற்
றை நீ மீட்கவே மீட்கச் சொல்லவேண்டும்; தீட்
டான மிருகஜீவனின் முதலீற்றையும் மீட்கச்
சொல்லக்கடவாய்.—மீட்கப்படுபவைகள் ஒரு ௰௬
மாதத்திற்கு அதிகமாயிருந்தால், உன் மதிப்பான
ஐந்து சேக்கலாலே அவைகளை மீட்கச்சொல்லு
வாயாக; பரிசுத்தஸ்தலத்தின்சேக்கல் கணக்கா
கத்தானே, அது இருபது கேரா.—ஆனால் மாட் ௰௭
டின்தலையீற்றும், ஆட்டின்தலையீற்றும், வெள்
ளாட்டின்தலையீற்றும், மீட்கப்படவேண்டாம்;
அவைகள் பரிசுத்தம்; நீ அவைகளின் இரத்தத்
தைப் பீடத்தின்மேலே தெளித்து, அவைகளின்
கொழுப்பைக் கர்த்தருக்காற்றிய வாசனையான
தகனமாகக் கொளுத்தக்கடவாய். — அவைக ௰௮
ளின் மாம்சம் அசைவாட்டும் மார்க்கண்டத்தைப்

[2] ௩ மோ. ௨௭. ௨௮.

போலும் வலது முன்னந்தொடையைப்போலும்
௰௯ உன்னுடையதாயிருக்கும்.–இஸ்ரவேல் புத்திரர்
கர்த்தருக்கு ஏறெடுத்துப் படைக்கிற பரிசுத்தப்
படைப்புகளையெல்லாம் உனக்கும் உன் குமார
ருக்கும் உன் குமாரத்திகளுக்குங்கூட நித்திய
கட்டளையாகக் கொடுத்தோம்; கர்த்தருக்குமுன்
பாக இது உனக்கும் உன் வித்திற்குங்கூட என்
றைக்கும் செல்லும் மாறாத உடம்படிக்கை
என்றார்.
௨௰ பின்னையும் கர்த்தர் ஆரோனோடே சொன்ன
தாவது: [1]அவர்களுடைய தேசத்தில் நீ ஒன்றை
யும் சுதந்தரித்துக்கொள்ளவேண்டாம், அவர்கள்
நடுவே உனக்குப் பங்குண்டாயிருக்கவும்வேண்
டாம்; இஸ்ரவேல் புத்திரரின் நடுவே நாமே உன்
௨௧ பங்கும் உன் சுதந்தரமுமானவர்.—பின்னையும்
இதோ இலேவியின் புத்திரர் ஆசரிப்புக்கூடா
ரத்தின் பணிவிடைவேலையைச் செய்கிற அவர்
களுடைய வேலைக்காக, நாம் அவர்களுக்கு
இஸ்ரவேலிலே பத்தில் ஒரு பங்கானவைகளை
௨௨ யெல்லாம் சுதந்தரமாகக் கொடுத்தோம்.—இஸ்ர
வேல் புத்திரர் குற்றஞ்சுமந்து சாவாதபடிக்கு,
இனி ஆசரிப்புக்கூடாரத்திற்குச் சேராதிருக்கக்
௨௩ கடவர்கள்.–இலேவியர் ஆசரிப்புக்கூடாரத்தின்
பணிவிடைவேலையைச் செய்து, தங்கள் அக்
கிரமத்தைச் சுமக்கக்கடவர்கள்; அது அவர்களு
டைய தலைமுறைகளுக்கு நித்திய கட்டளையா
யிருக்கும்; அவர்கள் இஸ்ரவேல் புத்திரர் நடுவே
சுதந்தரத்தைச் சுதந்தரித்துக்கொள்ளவேண்
௨௪ டாம்.–ஏனெனில் இஸ்ரவேல் புத்திரர் கர்த்தருக்
குப் படைப்பாகப் பத்தில் ஏறெடுக்கும் ஒன்றை
இலேவியருக்குச் சுதந்தரமாகக் கொடுத்தோம்,
ஆகையால் இஸ்ரவேல் புத்திரரின் நடுவே சுதந்
தரம் சுதந்தரிக்கவேண்டாமென்று அவர்களுக்
குச் சொன்னோமென்றார்.
௨௫ பின்னையும் கர்த்தர் மோசேயோடே பேசிச்
௨௬ சொன்னதாவது:–நீ இலேவியரோடே பேசி அ
வர்களோடே சொல்லவேண்டியதேதெனில், இ
ஸ்ரவேல் புத்திரர் கையில் வாங்குகிறதற்கு நாம்
உங்களுக்கு உங்கள் சுதந்தரமாகக் கொடுத்த பத்
தில் ஒன்றை நீங்கள் அவர்கள் கையில் வாங்கி
னபொழுது, பத்தில் ஒன்றாகிய அதிலே பத்தாம்
பங்கை ஏறெடுத்து, கர்த்தருக்குப் படைப்பாகச்
௨௭ செலுத்துவீர்களாக.–அது நீங்கள் களத்திலே தா
னியத்தையும் ஆலையில் இரசத்தையும் படைப்
பாக ஏறெடுக்குமாப்போல, உங்களுக்கு எண்
௨௮ ணப்படும்.—இப்படியே நீங்கள் இஸ்ரவேல் புத்
திரர் கையில் வாங்கும் பத்தில்ஒன்றாகிய உங்கள்
பங்குகளிலெல்லாம் நீங்களும் கர்த்தருக்கென்று
ஒரு படைப்பை ஏறெடுத்து, ஏறெடுத்த அந்தப்
படைப்பை ஆசாரியனாகிய ஆரோனுக்குச் செ
௨௯ லுத்தக்கடவீர்கள். — உங்களுக்குக் கொடுக்கப்
படுகிற ஒவ்வொரு காணிக்கைகளிலும் கர்த்த
ருக்கு ஒவ்வொரு படைப்பை ஏறெடுத்து, அ
வைகளில் மேல்த்தரமானதிலெல்லாம் அதினு
டைய பரிசுத்தப்பங்கைச் செலுத்துவீர்களாக
என்று சொல்லி,—பின்னையும் நீ அவர்களோடே ௩௰
சொல்லவேண்டியதேதெனில், நீங்கள் அதில்
மேல்த்தரமானதை ஏறெடுத்துச் செலுத்துகிற
பொழுது, அது இலேவியர் போர்க்களத்தின் வர
த்திலும் ஆலையின் வரத்திலும் எடுத்துச் செலுத்து
மாப்போல எண்ணப்படும்.—அதை நீங்களும் ௩௧
உங்கள் வீட்டாரும் சகல இடத்திலும் புசிக்க
லாம்; ஏனெனில் அது நீங்கள் ஆசரிப்புக்கூ
டாரத்திலே செய்கிற பணிவிடைக்கீடான உங்
கள் சம்பளம்.—இப்படி அதில் மேல்த்தரமான ௩௨
தை ஏறெடுத்துச் செலுத்தினீர்களானால், நீங்கள்
அதற்காகப் பாவம் சுமக்காமலும் இஸ்ரவேல்
புத்திரர் பரிசுத்தமாக்கினவைகளைப் பரிசுத்தக்
குலைச்சலாக்காமலும் சாவாமலும் இருப்பீர்கள்
என்று சொல்லென்றார்.

## ௰௯. அதிகாரம்.

௧. செங்கிடாரிச் சாம்பல் கலந்த தீட்டை நீக்கும் தண்ணீர் செய்யப்படு வது. ௰௧. அதனாலே அழுக்கானவர்களுடைய அசுத்தத்தை நீக்கும் முறைமை.

கர்த்தர் மோசேயோடும் ஆரோனோடும் பேசிச் ௧
சொன்னதாவது:—கர்த்தர் கற்பித்த நியாயப்பிர ௨
மாணமான கட்டளை ஏதெனில், இஸ்ரவேல்
புத்திரர் பழுதற்றதும் ஊனமில்லாததும் நுகத்
தடி ஏறாததுமான சிவப்பான கிடாரியை உன்
னண்டையில் கொண்டுவர அவர்களோடே
சொல். — அதை எலெயாசாரென்ற ஆசாரிய ௩
னுக்கு ஒப்புக்கொடுப்பீர்களாக, அவன் அதைப்
பாளயத்திற்கு வெளியே கொண்டுபோகக்கட
வன்; அங்கே அது அவனுக்குமுன்பாகக் குரல்
வளை அறுக்கப்படுவதாக.-அப்பொழுது ஆசாரி ௪
யனாகிய எலெயாசார் தன் விரலினாலே அதின்
இரத்தத்திலே கொஞ்சம் எடுத்து, ஆசரிப்புக்கூ
டாரத்திற்கு எதிராக [2]ஏழுமுறை தெளிக்கக்
கடவன்.-பிற்பாடு கிடாரியை ஒருவன் அவன் ௫
கண்களுக்குமுன்பாகச் சுட்டெரிப்பானாக;
[3]அதின் தோலும் அதின் மாம்சமும் அதின்
இரத்தமும் அதின் சாணமுங்கூடச் சுட்டெ
ரிக்கப்படக்கடவது. — [4]அப்பொழுது ஆசா ௬
ரியன் கேதுருக்கட்டையையும் ஈசோப்பை
யும் சிவப்புநூலையும் எடுத்து, கிடாரி எரிக்கப்
படுகிற நெருப்பின் நடுவிலே போடக்கட
வன்.—பிற்பாடு ஆசாரியன் தன் வஸ்திரங்களை ௭
வெளுத்து, தன் மாம்சத்தைத் தண்ணீரிலே
கழுவி, அதின்பிறகு பாளயத்தில் வருவானாக;
ஆசாரியன் சாயங்காலம்மட்டும் தீட்டுப்பட்டி
ருப்பான். — அதைச் சுட்டெரித்தவனும் தன் ௮
வஸ்திரங்களைத் தண்ணீரில் வெளுத்து, தன்
மாம்சத்தைத் தண்ணீரிலே கழுவி, சாயங்காலம்
மட்டும் தீட்டுப்பட்டிருப்பான்.—ஆனால் சுத்த ௯
மான ஒருவன் கிடாரியின் சாம்பலை வாரிக்
கொண்டு, பாளயத்திற்குப்புறம்பே சுத்தமான
ஒரு தலத்திலே கொட்டிவைக்கக்கடவன்; [5]அது
தீட்டை நீக்கும் தண்ணீருக்கென்று இஸ்ரவேல்

1 ௫ மோ. ௰௮. ௧, ௨. யோசு. ௰௩. ௧௪.—2 ௩ மோ. ௪. ௬, ௰௭.

3 ௨ மோ. ௨௯. ௰௪.—4 ௩ மோ. ௰௪. ௬.—5 எபி. ௯. ௰௩.

புத்திரரின் சபைக்காகக் காத்துவைக்கப்படக்
௰ கடவது; அது பாவம்போக்குகின்றது.—கிடா
ரியின் சாம்பலை வாரினவன் தன் வஸ்திரங்களை
வெளுத்து, சாயங்காலம்மட்டும் தீட்டுப்பட்டி
ருப்பான்; இது இஸ்ரவேல் புத்திரருக்கும் அவர்
கள் நடுவிலே தங்குகிற பரதேசிக்கும் நித்திய
கட்டளையாயிருப்பதாக.
௰௧ செத்துப்போன யாதொரு மனிதபிரேதத்தைத்
தொட்டவன் ஏழுநாள் தீட்டுப்பட்டிருப்பான்.-
௰௨ அவன் மூன்றாம்நாளிலும் ஏழாம்நாளிலும் அதி
ஞலே பாவம்போக்கக்கடவன்; அப்பொழுது
சுத்தமாயிருப்பான்; மூன்றாம்நாளிலும் ஏழாம்
நாளிலும் பாவம்போக்கானேயாகில் சுத்தமா
௰௩ கான்.—செத்த மனிதபிரேதத்தைத் தொட்டும்,
பாவம்போக்காதவனெல்லாம், கர்த்தரின் வாசஸ்
தலத்தைத் தீட்டுப்படுத்துகிறான்; அந்த ஆத்துமா
இஸ்ரவேலிலிராமல் அறுப்புண்பான்; ஏனெ
னில் தீட்டை நீக்கும் தண்ணீர் அவன்மேலே
தெளிக்கப்பட்டதில்லை; அவன் தீட்டுப்பட்டி
ருப்பான்; அவன் தீட்டு இன்னம் அவன்மேலி
௰௪ ருக்கும். — கூடாரத்தில் ஒரு மனிதன் செத்
தால், அதற்கான நியாயப்பிரமாணமாவது: கூ
டாரத்திற்குள் பிரவேசிக்கிறவனுக்கும் கூடாரத்
திலிருக்கிறவனுக்கும் எல்லாம் ஏழுநாள் தீட்
௰௫ டுண்டாயிருக்கும்.-மூடிக் கட்டப்பட்டிராமல்,
திறந்திருக்கிற பண்டமெல்லாம் தீட்டுப்பட்டி
௰௬ ருக்கும்.—வெளியிலே பட்டையத்தால் வெட்
டுண்டவனையாவது, செத்தவனையாவது, மனித
எலும்பையாவது, பிரேதக்குழியையாவது, தொ
ட்டவனெல்லாம், ஏழுநாள் தீட்டுப்பட்டிருப்
பான்.
௰௭ ஆகையால் தீட்டுப்பட்டவனுக்காக, பாவம்
போக்கும் கிடாரியின் சாம்பலிலே கொஞ்சம்
எடுத்து, ஒரு பாத்திரத்திலே போட்டு, அதின்
௰௮ மேலே சுரப்புத்தண்ணீர் வார்க்கவேண்டும்.-பிற்
பாடு சுத்தமான ஒருவன் ஒரு ஈசோப்பை எடுத்
துக்கொண்டு, அந்தத் தண்ணீரிலே தோய்த்து,
கூடாரத்தின்மேலும் சகல பண்டம்பாடிகள்
மேலும் அங்கே இருக்கிற ஆத்துமாக்கள்மேலும்,
அல்லவென்று எலும்பையாகிலும் வெட்டுண்ட
வனையாகிலும் செத்தவனையாகிலும் பிரேதக்
குழியையாகிலும் தொட்டவன்மேலும் தெளிக்
௰௯ கக்கடவன்.-சுத்தமாயிருக்கிற ஒருவன் தீட்டுப்
பட்டவன்மேலே மூன்றாம்நாளிலும் ஏழாம்நா
ளிலும் தெளித்து, இப்படி ஏழாம்நாளிலே அவ
னுடைய பாவத்தைப் போக்கக்கடவன்; இவன்
தன் வஸ்திரங்களை வெளுத்து, தண்ணீரில் முழு
௨௰ கி, சாயங்காலத்திலே சுத்தமாயிருப்பான்.—தீட்
டுப்பட்டிருந்தும் பாவம்போக்காதேபோகிற ஆ
த்துமாவோவெனில், சபையில் இராதபடிக்கு
அறுப்புண்பான்; ஏனெனில், கர்த்தரின் பரிசுத்
தஸ்தலத்தைத் தீட்டுப்படுத்தினான்; தீட்டை நீக்
கும் தண்ணீர் அவன்மேலே தெளிக்கப்பட்ட
௨௧ தில்லை; அவன் தீட்டுப்பட்டிருக்கிறான்.—இது
அவர்களுக்கு நித்தியகட்டளையாயிருக்கக்கட
வது; தீட்டை நீக்கும் தண்ணீரைத் தெளித்தவ
னும் தன் வஸ்திரங்களை வெளுக்கக்கடவன்;
தீட்டை நீக்கும்தண்ணீரைத் தொட்டவனும் சா
யங்காலம்மட்டும் தீட்டுப்பட்டிருப்பான்.—தீட் ௨௨
டுப்பட்டிருக்கிறவன் தொடுகிறவைகளெல்லாம்
தீட்டுப்படும், அவைகளைத் தொடுகிற ஆத்துமா
வும் சாயங்காலம்மட்டும் தீட்டுப்பட்டிருப்பான்
என்றார்.

## ௨௰. அதிகாரம்.

௧. இஸ்ரவேலர் சீன்வனாந்தரத்தில் வந்தபின் மிரியாம் மரணமடைந்தது. ௨. அவர்கள் தண்ணீர் இல்லாமல் முறுமுறுத்தது. ௭. மோசே மேரிபாவிலே கன்மலையில் அடித்துத் தண்ணீர் புறப்படச்செய்தது. ௰௪. அவன் காதேசிலிருந்து ஏதோமின் மார்க்கமாகப் போக விரும்பித் தடைபட்டது. ௨௨. ஆரோன் தன் உத்தியோகத்தை எலேயாசாருக்கு ஒப்புவித்து, ஓரென்ற பர்வதத்தின்மேல் மரித்தது.

இஸ்ரவேல் புத்திரரின் சபை எல்லாம் முதல ௧
லாம்மாதத்திலே சீன்வனாந்தரத்திலே வந்தது;
அங்கே சனம் காதேசிலே தங்கித்தரித்தது; அங்
கே மிரியாம் மரணம் அடைந்து, அங்கே அடக்
கம்பண்ணப்பட்டாள்.
சனத்திற்குத் தண்ணீர் இல்லாதிருந்தது; அப் ௨
பொழுது [1]மோசேக்கும் ஆரோனுக்கும் விரோத
மாகக் கூட்டம்கூடினார்கள். — சனம் மோசே ௩
யோடே வாக்குவாதம்பண்ணிச் சொன்னதா
வது: எங்கள் சகோதரர் கர்த்தருக்குமுன்பாக
மாண்டபொழுது, நாங்கள் மாண்டோமானால்
தாவிளை. — நாங்களும் எங்கள் மிருகங்களும் ௪
இங்கே சாக, நீங்கள் கர்த்தரின் சபையை இந்த
வனாந்தரத்திலே கொண்டுவந்ததென்ன?-விதைப் ௫
பும் அத்திமரமும் திராட்சச்செடியும் மாதளம்
செடியும் குடிக்கத்தண்ணீரும் இல்லாத இந்த
ஆகாத இடத்திற்கு எங்களைக் கொண்டுவரும்ப
டிக்கு, நீங்கள் எங்களை எகிப்திலிருந்து ஏறிவரப்
பண்ணினதென்ன என்றார்கள்.
ஆனால் மோசேயும் ஆரோனும் சபைக்குமுன் ௬
பாக இருந்து, ஆசரிப்புக்கூடாரத்தின் வாசலுக்
குப் போய், முகம்குப்புற விழுந்தார்கள்; [2]அப்
பொழுது கர்த்தருடைய மகிமை அவர்களுக்குக்
காணப்பட்டது.—கர்த்தர் மோசேயோடே பே ௭
சிச் சொன்னதாவது: — நீ கோலை எடுத்துக் ௮
கொண்டு, நீயும் உன் சகோதரனாகிய ஆரோ
னும் சபையைக் கூட்டி, அவர்கள் கண்களுக்கு
முன்பாகக் கல்மலையோடே பேசுங்கள்; அப்
பொழுது அது தன் தண்ணீரைக் கொடுக்கும்;
இப்படி நீ அவர்களுக்குக் கல்மலையிலிருந்து
தண்ணீர் புறப்படப்பண்ணி, சபைக்கும் அவர்
கள் மிருகங்களுக்கும் குடிக்கக் கொடுப்பாயாக
என்றார்.
அப்பொழுது மோசே கர்த்தருடைய சமுகத் ௯
திலிருக்கிற கோலை, அவர் தனக்குக் கற்பித்தபடி
யே எடுத்துக்கொண்டான்.—மோசேயும் ஆரோ ௰
னும் சபையைக் கல்மலைக்குமுன்பாகக் கூட்டி
னார்கள்; அப்பொழுது மோசே அவர்களுடனே,

1 ௨ மோ. ௰௭. ௨.

2 ௪ மோ. ௰௪. ௰.

கலகக்காரரே, கேளுங்கள்; உங்களுக்கு இந்தக்
கல்மலையிலிருந்து தண்ணீர் புறப்படப்பண்ணு
௰௧ வோமோ என்று சொல்லி,-தன் கையை ஓங்கி,
கல்மலையைத் தன் கோலினால் இரண்டுமுறை
அடித்தான்; அப்பொழுது பரிபூரணமான தண்
ணீர்கள் புறப்பட்டதினாலே, சபையும் அவர்
கள் மிருகங்களும் குடித்தன.
௰௨ கர்த்தரோவெனில்மோசேயோடும்ஆரோனோ
டும் சொன்னதாவது: [1]நம்மை இஸ்ரவேல் புத்தி
ரரின் கண்களுக்குமுன்பாகப் பரிசுத்தம்பண்
ணும்படிக்கு, நீங்கள் நம்மை விசுவாசியாதே
போனபடியினாலே, நீங்கள் இந்தச் சபையை
நாம் அவர்களுக்குக் கொடுக்கிற தேசத்திற்குள்
௰௩ கொண்டுபோவதில்லை என்றார். — இவைகள்
இஸ்ரவேல் புத்திரர் கர்த்தரோடே வாக்குவாதம்
பண்ணினதும் அவர் இவர்களுக்குள் பரிசுத்தம்
விளங்கினதுமான மேரிபாவின் தண்ணீர்கள்.
௰௪ பிற்பாடு மோசே காதேசிலிருந்து ஏதோமின்
இராசாவண்டைக்குத் தானாபதிகளை அனுப்பிச்
௰௫ சொல்லச்சொன்னதாவது:—எங்கள் பிதாக்கள்
எகிப்திலே போய் இறங்கினதும், நாங்கள் எகிப்
திலே நீடியநாள் குடியிருந்ததும், எகிப்தர் எங்க
ளையும் எங்கள் பிதாக்களையும் உபத்திரவப்படுத்
தினதுமான எங்களுக்கு வந்த பிரயாசத்தையெ
௰௬ ல்லாம் நீ அறிந்திருக்கிறாய். — கர்த்தரைநோக்கி
நாங்கள் கூப்பிட்டோம்; அப்பொழுது அவர்
எங்கள் சத்தத்தைக் கேட்டு, ஒரு தூதனை அ
னுப்பி, எங்களை எகிப்திலிருந்து புறப்படப்
பண்ணினார்; இப்பொழுதும் இதோ நாங்கள்
உன் கடைசி எல்லைக்குச் சமீபமான காதேஸ்
௰௭ ஊரில் இருக்கிறோம்.—நாங்கள் உன் தேசத்து
வழியாகக் கடந்துபோகட்டுமே; நாங்கள் வயல்
வெளிகள் வழியாக, அல்லது திராட்சத்தோட்
டங்கள் வழியாகப் போகாமலும், துரவுகளின்
தண்ணீரைக் குடியாமலும், இராசபாதையாகப்
போய், உன் எல்லையைக் கடந்து தீரும்மட்டும்,
வலது இடதுபுறமாகச் சாயாதிருப்போமென்று
உன் சகோதரனாகிய இஸ்ரவேல் சொல்லி அ
னுப்புகிறானென்று சொல்லச்சொன்னான். —
௰௮ ஏதோமோவெனில், நீ என் வழியாகக் கடந்
துபோகவேண்டாம்; மற்றப்படி பட்டையத்
தோடே உனக்கு எதிராகப் புறப்படுவேனென்று
௰௯ அவனுக்குச் சொல்லச்சொன்னான்.—அப்பொ
ழுது இஸ்ரவேல் புத்திரர் அவனோடே, நடப்
பான வழியிலே ஏறிப்போவோம்; நாங்களும்
எங்கள் மிருகஜீவன்களும் உன் தண்ணீரிலே
குடித்தால், அதின் விலைக்கிரயத்தைக் கொடுப்
போம், கால்நடையாகமாத்திரம் கடந்துபோ
வோம், பின் ஒன்றும் வேண்டாமென்றார்கள்.-
௨௰ ஏதோமோவென்றால், நீ கடந்துபோகவேண்டா
மென்று சொல்லி, வெகு சனத்தோடும் பலத்த
கையோடும் அவர்களுக்கு எதிராகப் புறப்ப
௨௧ ட்டு, — தன் எல்லைவழியாகக் கடந்துபோக,
இஸ்ரவேலுக்கு உத்தாரம் கொடாதேபோனான்;
ஆகையால் இஸ்ரவேல் அவனைவிட்டு விலகிற்று.
இஸ்ரவேல் புத்திரரான சபையெல்லாம் கா ௨௨
தேசைவிட்டுப் பயணம்பண்ணி, ஓரென்ற பர்
வதத்திற்கு வந்தது.
ஏதோம்தேசத்தின் எல்லைக்கு அருகான ஓ ௨௩
ரென்ற பர்வதத்திலே கர்த்தர் மோசேயோடும் ஆ
ரோனோடும் சொன்னதாவது: — ஆரோன் தன் ௨௪
சனத்தாரோடே சேர்த்துக்கொள்ளப்படுவான்;
ஏனெனில் மேரிபாவின் தண்ணீர்கள் காரியத்தி
லே நீங்கள் நம்முடைய வாக்குக்குக் கீழ்ப்படி
யாமல்போனபடியினாலே, அவன் நாம் இஸ்ர
வேல் புத்திரருக்குக் கொடுக்கிற தேசத்தில் வரு
வதில்லை.—நீ ஆரோனையும் அவன் குமாரனாகிய ௨௫
எலேயாசாரையும் கூட்டிக்கொண்டு அவர்களை
ஓரென்ற பர்வதத்தில் ஏறப்பண்ணி,—ஆரோன் ௨௬
உடுத்திருக்கிற அவன் வஸ்திரங்களைக் கழற்றி,
அவைகளை அவன் குமாரனாகிய எலேயாசா
ருக்கு உடுத்துவாயாக; ஏனெனில் ஆரோன் சேர்
த்துக்கொள்ளப்பட்டு, அங்கே மரிப்பானென்
றார்.-கர்த்தர் கற்பித்தபடியே மோசே செய்தான்; ௨௭
சபையெல்லாம் பார்க்க, அவர்கள் ஓரென்ற பர்
வதத்தில் ஏறினார்கள்.-அங்கே மோசே, ஆரோன் ௨௮
உடுத்திருந்த வஸ்திரங்களைக் கழற்றி, அவைகளை
அவன் குமாரனாகிய எலேயாசாருக்கு உடுத்தி
னான்; அப்பொழுது ஆரோன் அங்கே பர்வதத்
தின் கொடுமுடியிலே மரித்தான்; பிற்பாடு மோ
சேயும் எலேயாசாரும் பர்வதத்திலிருந்து இறங்
கிவந்தார்கள்.-ஆரோன் சீவித்துப்போனானென் ௨௯
றதைச் சபையெல்லாம் கண்டபொழுது, இஸ்
ரவேல் வீட்டாரெல்லாரும் ஆரோனுக்காக முப்
பதுநாள் அழுதுகொண்டிருந்தார்கள்.

## ௨௧ அதிகாரம்.

௧. இஸ்ரவேலர் சிலர், கஷ்டப்பட்டு, ஓர்மாவிலுள்ள கானானியரை அழித்தது. ௪. சனங்கள் முறுமுறுத்துக் கொள்ளிவாய்ச் சர்ப்பங்களினாலே வாதைப்பட்டது. ௭. அவர்கள் மனஸ்தாபப்பட்டு, வெண்கலச் சர்ப்பத்தைப் பார்த்ததினால் சொஸ்தமடைந்தது ௰. இஸ்ரவேலரின் பல பிரயாணம். ௨௧. சீகோனும், ௩௩. ஓகும் செயிக்கப்பட்டது.

வேவுகாரர் காண்பித்த வழியாக இஸ்ரவேல் ௧
வருகிறதைத் தெற்கே வாசம்பண்ணுகிற ஆரா
தின் இராசாவாகிய கானானியன் கேட்டபொ
ழுது, அவன் இஸ்ரவேலருக்கு விரோதமாக யுத்
தம்பண்ணி, அவர்களில் சிலரைச் சிறைபிடித்
துக்கொண்டுபோனான். — அப்பொழுது இஸ்ர ௨
வேல், தேவரீர் அந்தச் சனத்தை என் கையில் ஒப்
புக்கொடுக்கவே ஒப்புக்கொடுத்தால், அவர்களு
டைய பட்டணங்களைச். சங்காரம்பண்ணுவே
னென்று இஸ்ரவேல் கர்த்தருக்குப் பொருத்தனை
பண்ணினான். — கர்த்தர் இஸ்ரவேலின் சத்தத் ௩
தைக் கேட்டு, கானானியனை ஒப்புக்கொடுத்தார்;
அப்பொழுது அவர்களையும் அவர்கள் பட்ட
ணங்களையும் சங்காரம்பண்ணி, அவ்விடத்திற்கு
ஓர்மாவென்று பேரிட்டார்கள்.

[1] ௫ மோ. ௧. ௩௭.

௪ அவர்கள் ஏதோம்தேசத்தைச் சுற்றிப்போகும்
படிக்கு, ஓரென்ற பர்வதத்தைவிட்டு, நாணல்
சமுத்திரத்தின் வழியாகப் பயணம்பண்ணினார்
கள்; ஆனால் வழியிலே சனத்தின் ஆத்துமா விச
௫ னமடைந்தது.—சனம் பராபரனுக்கும்மோசேக்
கும் விரோதமாகப் பேசி, நாங்கள் வனாந்தரத்தி
லே சாகும்படிக்கு, நீங்கள் எங்களை எகிப்து
தேசத்திலிருந்து ஏறிவரப்பண்ணினதென்ன?
ஏனென்றால் இங்கே அப்பமுமில்லை, தண்ணீரு
மில்லை; [1]அற்பமான இந்த அப்பம் எங்கள் ஆத்
துமாவிற்கு வெறுப்பாய் இருக்கின்றதென்றார்
௬ கள்.—அப்பொழுது கர்த்தர் [2]கொள்ளிவாய்ச்
சர்ப்பங்களைச் சனத்திற்குள் அனுப்பினார்; அ
வைகள் சனத்தைக் கடித்ததினாலே இஸ்ரவே
௭ லில் வெகுசனம் செத்தது.–அப்பொழுது சனம்
மோசேயண்டைக்கு வந்து, நாங்கள் கர்த்தருக்
கும் உமக்கும் விரோதமாகப் பேசினதினாலே பா
வம்செய்தோம்; சர்ப்பங்களை எங்களைவிட்டு அ
கற்ற, கர்த்தரை விண்ணப்பம்பண்ணும் என்றார்
கள்; மோசே சனத்திற்காக விண்ணப்பம்பண்
௮ ணினான்.-அப்பொழுது கர்த்தர் மோசேயுடனே,
[3]நீ ஒரு கொள்ளிவாய்ச்சர்ப்பத்தின் உருவத்தை
உனக்குண்டாக்கி, அதை ஒரு கம்பத்தின்மேலே
தூக்கிவை;அப்பொழுது சம்பவிப்பதேதெனில்,
கடிக்கப்பட்டு, அதை நோக்கிப்பார்க்கிறவ
௯ னெல்லாம் பிழைப்பான் என்றார். — அப்பொ
ழுது மோசே ஒரு வெண்கலச்சர்ப்பத்தை உண்
டாக்கி,அதை ஒரு கம்பத்தின்மேலே தூக்கிவைத்
தான்; சம்பவித்ததேதெனில், ஒருவனை ஒரு சர்ப்
பம் கடித்தபொழுது, அவன் அந்த வெண்கலச்
சர்ப்பத்தை நோக்கிப்பார்த்துப் பிழைப்பான்.
௰ இஸ்ரவேல் புத்திரர் பயணப்பட்டுப் போய்,
௰௧ ஓபோத்தில் பாளயம் இறங்கினார்கள். — அவர்
கள் ஓபோத்திலிருந்து பயணப்பட்டுப் போய்,
சூரியோதயத்திற்கு நேராக மோவாபுக்கு எதி
ரான வனாந்தரத்தில் இருக்கிற ஆபரீமின் மேடுக
ளிலே பாளயம் இறங்கினார்கள்.
௰௨ அங்கேயிருந்து பயணப்பட்டுப்போய்,சாரேத்
பள்ளத்தாக்கிலே பாளயம் இறங்கினார்கள். —
௰௩ அங்கேயிருந்து பயணப்பட்டுப் போய் எமோரி
யரின் எல்லையிலிருந்து வருகிறதும் வனாந்தரத்
தில் ஓடுகிறதுமான அர்னோன் ஆற்றுக்கு இப்
புறம் பாளயம் இறங்கினார்கள்; ஏனெனில் அர்
னோன் மோவாபுக்கும் எமோரியருக்கும் நடுவே
௰௪ இருக்கிற மோவாபின் எல்லை.—ஆகையால் சூப்
பாவில் இருக்கிற வாகேபும், அர்னோனின் ஆற்
௰௫ றுக்கால்களும், — ஆரென்ற வாசஸ்தலத்திற்குத்
திரும்பி ஓடுகிற ஆற்றுக்கால்களின் ஓடையும்,
மோவாபின் எல்லையோடே இருக்கிறதென்று
கர்த்தருடைய யுத்தங்களின் புஸ்தகத்தில் எழுதி
யிருக்கின்றது.
௰௬ அங்கேயிருந்து பேயேருக்கு வந்தார்கள்;சனத்
தைக் கூட்டு, அவர்களுக்குத் தண்ணீர் கொடுப்
போமென்று கர்த்தர் மோசேக்குச் சொன்ன
ஊற்றிருக்கிற ஸ்தலம் அதுதான்.—அப்பொழுது ௰௭
இஸ்ரவேல் பாடின பாட்டாவது: ஊற்றுத்தண்
ணீரே, பொங்கிவா; அதின்நிமித்தம் பாடுவோம்
வாருங்கள்.–நியாயம்கற்பிக்கிறவனோடும் கூடப் ௰௮
பிரபுக்கள் தங்கள் ஊன்றுகோல்களைப் பிடித்
துக்கொண்டிருந்து, இந்தத் துரவை வெட்டுவித்
தார்கள்; சனத்தில் மேன்மையானவர்கள் அதைத்
தோண்டினார்களென்று பாடினார்கள்; அந்தவனாந்
தரத்திலிருந்து மாத்தனாவுக்கும்,
மாத்தனாவிலிருந்து நகாலியேலுக்கும், நகாலி ௰௯
யேலிலிருந்து பாமோத்திற்கும்,—பாமோத்திலி ௨௰
ருந்து மோவாபின் வெளியில் இருக்கிறதும்
வனாந்தரத்திற்கு எதிராக இருக்கிற பிஸ்காவின்
கொடுமுடிக்கு அடுத்ததுமான பள்ளத்தாக்குக்கும்
வந்தார்கள்.
அப்பொழுது இஸ்ரவேல் எமோரியரின் இரா ௨௧
சாவாகிய சீகோனண்டைக்குத் தானாபதிகளை
அனுப்பி,—உன் தேசத்துவழியாக நான் கடந்து ௨௨
போகட்டும்; நாங்கள் வயல்களிலும், திராட்சத்
தோட்டங்களிலும் சாயாமலும், துரவுகளின்
தண்ணீரைக் குடியாமலும், உன் எல்லையைக்
கடந்து தீருமட்டும் இராசபாதையாய் நடந்து
போவோமென்று சொல்லச்சொன்னார்கள். —
சீகோனோவென்றால் தன் எல்லைவழியாகக் கடந் ௨௩
துபோக இஸ்ரவேலுக்கு உத்தாரம் கொடாமல்,
தன் சனத்தையெல்லாம்கூட்டி, இஸ்ரவேலுக்கு
எதிராக வனாந்தரத்திலே புறப்பட்டு, யாகத்சா
வுக்கு வந்து, இஸ்ரவேலுக்கு விரோதமாக யுத்
தம்பண்ணினான்.–[4]ஆனால் இஸ்ரவேல் அவனைப் ௨௪
பட்டையக்கருக்கினால் வெட்டி, அர்னோனைத்து
வக்கி யாபோக்மட்டும் அம்மோன் புத்திரரின்
தேசம்மட்டும் இருக்கிற அவன் தேசத்தைக் கட்
டிக்கொண்டார்கள்; ஏனெனில் அம்மோன் புத்
திரரின் எல்லை அரணிப்பாயிருந்தது. — இஸ்ர ௨௫
வேல் அந்தப் பட்டணங்களையெல்லாம் பிடித்து,
எமோரியருடைய எல்லாப் பட்டணங்களுமா
கிய எஸ்போனிலும் அதினுடைய எல்லா ஊர்க்
கிராமங்களிலும் குடியிருந்தார்கள்.–ஏனெனில் ௨௬
எஸ்போன் எமோரியரின் இராசாவாகிய சீகோ
னின் பட்டணமாயிருந்தது; அதேனென்றால்
இவன் மோவாபியரின் முந்தின இராசாவுக்கு
விரோதமாக யுத்தம்பண்ணி, அர்னோன்மட்டுக்
குமிருந்த அவன் தேசத்தையெல்லாம் அவன்
கையிலே பறித்துக்கொண்டிருந்தான். — ஆகை ௨௭
யால் பழமொழிக்காரர் சொன்னது: எஸ்போ
னுக்கு வாருங்கள்; சீகோனின் பட்டணம் கெட்
டியாகக் கட்டப்படுவதாக.
ஏனெனில் எஸ்போனிலிருந்து அக்கினியும் ௨௮
சீகோனின் பட்டணத்திலிருந்து சுவாலையும்
புறப்பட்டு,மோவாபியரின் ஆரென்ற ஊரையும்,
அர்னோனுடைய மேடுகளின் எசமான்களையும்
பட்சித்தது.—மோவாபே, உனக்கு ஐயோ, கா ௨௯

1 ௪ மோ. ௰௧. ௬.—2 ௧ கொரி. ௰. ௯.

3 யோவா. ௩. ௰௪.—4 சங். ௱௩௫. ௰, ௰௧.

மோஸ் தேவனின் சனமே, நீ கெட்டாய்; அது
தப்பி ஓடின தன் குமாரரையும் தன் குமாரத்தி
களையும் எமோரியரின் இராசாவாகிய சீகோ
௩௰ னுக்குச் சிறைகளாக ஒப்புக்கொடுத்தது.—அவர்
களை எய்துவிட்டோம்; எஸ்போன் பட்டணம்
தீபோன் ஊர்மட்டும் கெட்டுப்போயிற்று; மே
தேபாமட்டும் ஆண்டிருந்த நோப்பாப்பட்டண
பரியந்தம் அவர்களைப் பாழாக அடித்தோம் என்
பார்கள்.
௩௧ அப்படியே இஸ்ரவேல் எமோரியரின் தேசத்
௩௨ திலே குடியிருந்தது.—பிற்பாடு மோசே யாசே
சேர் பட்டணத்தை வேவுபார்க்கிறவர்களை அ
னுப்பினான்; அதின் ஊர்களைக் கட்டிக்கொண்
டு, அங்கே இருந்த எமோரியரைத் துரத்திவிட்
டார்கள்.
௩௩ பிறகு பாசானுக்குப் போகிறவழிக்குத் திரும்
பிக்கொண்டு எறிப்போனார்கள்; அப்பொழுது
பாசான் இராசாவாகிய ஓகும் அவனுடைய எல்
லாச் சனமும்கூட அவர்களுக்கு எதிராக யுத்தம்
பண்ணும்படிக்கு, எதிரேயுக்குப் புறப்பட்டு
௩௪ வந்தார்கள்.—கர்த்தர் மோசேயுடனே, அவனுக்
குப் பயப்படாயாக; ஏனெனில் அவனையும்
அவனுடைய எல்லாச் சனத்தையும், அவன் தே
சத்தையும் உன் கையில் ஒப்புக்கொடுத்தோம்;
எஸ்போனிலே குடியிருந்த எமோரியரின் இரா
சாவாகிய சீகோனுக்கு நீ செய்தபடியே அவ
௩௫ னுக்குச் செய்யக்கடவாயென்றார்.— அப்படி
யே அவனையும், அவன் குமாரரையும், அவனு
டைய எல்லாச் சனத்தையும், ஒருவரும் அவ
னுக்கு மீந்திராத வகையாக வெட்டிப்போட்டு,
அவன் தேசத்தைக் கட்டிக்கொண்டார்கள்.

## ௨௨. அதிகாரம்.

௧. பாலாக் அனுப்பின முதல்தூதுக்குப் பீலேயாம் தடைசொன்னது. ௰௫. அவன் இரண்டாம் தூதுக்குப் போனது. ௨௨. அவனைக் கழுதை காப்பாற்றுதிருக்கில் அவன் தூதனால் மடிவது. ௩௬. பாலாக் அவனைப் போஷித்தது.

௧ பிற்பாடு இஸ்ரவேல் புத்திரர் பயணம்பண்ணி,
எரிகோவின் கிட்டஇருக்கும் யோர்தானுக்கு
இப்பாலே மோவாபின் சமனான வெளிகளிலே
பாளயம் இறங்கினார்கள்.
௨ ஆனால் இஸ்ரவேல் எமோரியருக்குச் செய்த
தையெல்லாம் சிப்போரின் குமாரனாகிய பாலாக்
௩ கண்டான்.—அப்பொழுது மோவாபியர் அந்தச்
சனம் ஏராளமென்று அதற்குமுன்பாக வெகு
பயம் அடைந்து, இஸ்ரவேல் புத்திரரின்மேல்
௪ மனமடிவாகி,—மீதியானியரின் மூப்பரோடே,
மாடு வெளியின் புல்லை மேய்கிறதுபோல, இப்
பொழுது இந்தக்கூட்டம் நம்மைச் சுற்றிலும்
இருக்கிறதையெல்லாம் மேயுமென்றார்கள்; சிப்
போரின் குமாரனாகிய பாலாகோவெனில், அக்
காலத்திலே மோவாபின் இராசாவாயிருந்தான்.–
௫ அவன் பேயோரின் குமாரனாகிய பீலேயாமை
அழைப்பிக்க, அவனுடைய சனபுத்திரரின் தே
சத்தில் நதியண்டையிலிருக்கிற பெத்தோருக்
குத் தானாபதிகளை அனுப்பி, இதோ ஒரு சனச
தளம் எகிப்திலிருந்து புறப்பட்டு வந்தது; இதோ
பூமியின் விசாலத்தை அது மூடி, எனக்கு எதி
ரே இறங்கியிருக்கின்றது.— இப்பொழுதும் நீ ௬
வந்து, எனக்காக அந்தச் சனத்தைச் சபி; ஏனெ
னில் அது என்னிலும் பலத்தது; அப்பொழுது
ஒருவேளை நான் அதை முறிய அடித்து, அதைத்
தேசத்திலிருந்து துரத்தலாம்; ஏனென்றால் நீ ஆ
சீர்வதிக்கிறவன், ஆசீர்வதிக்கப்பட்டவன்; நீ ச
பிக்கிறவன் சபிக்கப்பட்டவன் என்றறிவே
னென்று சொல்லி அனுப்பினான்.—அப்படியே ௭
மோவாபின் மூப்பரும் மீதியானின் மூப்பரும்
[1]குறிசொல்லுதலின் கூலியைத் தங்கள் கையில்
எடுத்துக்கொண்டுபோய், பீலேயாமண்டைக்கு
வந்து, பாலாகின் வார்த்தைகளை அவனுக்குச்
சொன்னார்கள்.—அவன் அவர்களோடே இராத் ௮
திரிக்கு இங்கே தங்கிஇருங்கள்; கர்த்தர் என்
னோடே சொல்லும்படியே உங்களுக்கு மறு
மொழி கொண்டுவருவேன் என்றான்; அப்ப
டியே மோவாபின் பிரபுக்கள் பீலேயாமிடத்தி
லே தங்கியிருந்தார்கள்.–பராபரன் பீலேயாமண் ௯
டைக்கு வந்து, உன்னிடத்திலிருக்கிற இந்த
மனிதர் யாரென்றார்.
பீலேயாம் பராபரனோடே சொன்னதாவது: ௰
சிப்போரின் குமாரனாகிய பாலாக்கென்ற மோ
வாபின் இராசா அவர்களை என்னண்டைக்கு
அனுப்பி,— இதோ எகிப்திலிருந்து வந்திருக் ௰௧
கிற ஒரு சனசதளம் பூமியின் விசாலத்தை மூடு
கிறது; இப்பொழுது நீ வந்து எனக்காக அதைச்
சபி; அப்பொழுது ஒருவேளை நான் அதனோடே
யுத்தம்பண்ணி, அதைத் துரத்திவிடலாமென்று
சொல்லச்சொன்னானென்றான்.—அப்பொழுது ௰௨
பராபரன் பீலேயாமோடே, நீ அவர்களோடே
போகவேண்டாம்; அந்தச் சனத்தைச் சபிக்கவும்
வேண்டாம்; ஏனெனில் அது ஆசீர்வதிக்கப்பட்
டதென்றார்.
ஆகையால் பீலேயாம் காலமே எழுந்திருந்து ௰௩
பாலாக்கின் பிரபுக்களுடனே, உங்கள் தேசத்
திற்குப் போய்விடுங்கள், ஏனெனில் உங்களோ
டேகூடப் போகிறதற்கு, கர்த்தர் எனக்கு உத்த
ரவு கொடுக்கமாட்டோம் என்றாரென்று சொன்
னான்.—அப்படியே மோவாபியருடைய பிரபுக் ௰௪
கள் எழுந்துபோய்; பாலாக்கண்டைக்கு வந்து,
பீலேயாம் எங்களோடே வரமாட்டேன் என்றா
னென்று சொன்னார்கள்.
மறுபடியும் பாலாக் அவர்களிலும் கனமுள்ள ௰௫
அதிகமான பிரபுக்களை அனுப்பினான்.—அவர் ௰௬
கள் பீலேயாமண்டைக்கு வந்து, அவனோடே
சொன்னதாவது: நீ என்னண்டைக்கு வரமாட்
டேனென்று சொல்லாயாகவென்றும்,—உன்னை ௰௭
மிகவும் கனம்பண்ணவே பண்ணுவேன்; நீ என்
னோடே சொல்வதையெல்லாம் செய்வேன்; நீ

[1] ௨ பே. ௨. ௰௫.

வந்து, எனக்காக அந்தச் சனத்தைச் சபியேன்
என்றும், சிப்போரின் குமாரனாகிய பாலாக்
௰௮ சொல்லச்சொன்னார் என்றார்கள். — பீலேயாம்
பாலாக்கின் ஊழியக்காரருக்குப் பிரதியுத்தரமா
கச் சொன்னதாவது: பாலாக் எனக்குத் தன்
வீடுநிறைய வெள்ளியும் பொன்னும் கொடுத்தா
லும், நான் சிறியகாரியமானாலும் பெரியகாரிய
மானாலும் செய்கிறதினாலே, என் பராபரனாகிய
௰௯ கர்த்தரின் கட்டளையை மீறக்கூடாது. — இப்
பொழுதும் கர்த்தர் அப்புறம் என்னோடே என்ன
சொல்லுவார் என்கிறதை நான் அறியும்படிக்கு,
நீங்களும் இந்த இராத்திரியிலே இங்கே இருங்க
ளென்றான்.

௨௰ இரவிலே பராபரன் பீலேயாமண்டைக்கு
வந்து, அவனுடனே, அந்த மனிதர் உன்னை
அழைக்கவந்தார்களானால், நீ எழுந்து அவர்க
ளோடே கூடப்போ; ஆனால் நாம் உன்னோடே
சொல்லும் வார்த்தையின்படிமாத்திரம் நீ செய்
யக்கடவாயென்றார்.

௨௧ பீலேயாம் காலமே எழுந்திருந்து, தன் கழு
தையின்மேலே சேணம்போட்டு, மோவாபின்
௨௨ பிரபுக்களோடே கூடப்போனான்.—ஆனால் அ
வன் போகிறதினாலே பராபரனுக்குக் கோபம்
மூண்டது; கர்த்தரின் தூதனானவர் வழியிலே அ
வனுக்கு எதிராளியாக நின்றுகொண்டார்; அவ
னோவெனில் தன் கழுதையின்மேல் ஏறிப்போ
னான்;அவன் வேலைக்காரர் இரண்டுபேரும் அவ
௨௩ னோடிருந்தார்கள்.—உருவின தமது பட்டையத்
தைத் தம்முடைய கையிலே பிடித்து, வழியிலே
நிற்கிற கர்த்தருடைய தூதனைக் கழுதை கண்டு,
வழியைவிட்டு, வயலிலே விலகிப்போயிற்று;
அதை வழிக்குத் திருப்பப் பீலேயாம் அதை
௨௪ அடித்தான்.—ஆனால் கர்த்தருடைய தூதனானவர்
இருபுறத்திலும் சுவர் இருந்த திராட்சத்தோட்
௨௫ டங்களின் பாதையிலே போய் நின்றார்.—கழு
தை கர்த்தருடைய தூதனைக் கண்டு, மதிள் ஓரமே
ஒதுங்கி, பீலேயாமின் காலை மதிளோடே நெருக்
கிற்று; அப்பொழுது திரும்ப அதை அடித்தான்.—
௨௬ கர்த்தருடைய தூதன் அப்புறம்போய் வலதுபுறத்
திற்கும், இடதுபுறத்திற்கும், விலக வழியில்லாத
இடுக்கமான ஸ்தலத்திலே நின்றுகொண்டார்.—
௨௭ அப்பொழுது கழுதை கர்த்தருடைய தூதனைக்
கண்டு, பீலேயாமின்கீழ்ப் படுத்துக்கொண்டது;
பீலேயாமோவெனில் கோபம் மூண்டவனாகி,
௨௮ கழுதையைத் தடியினால் அடித்தான்.—அப்பொ
ழுது கர்த்தர் [1]கழுதையின் வாயைத் திறந்தார்;
அது பீலேயாமுடனே, நீர் என்னை இதனோடே
மூன்றுதரம் அடித்ததற்கு நான் உமக்கு என்ன
௨௯ செய்தேனென்றது.— அப்பொழுது பீலேயாம்
கழுதையைப் பார்த்து, நீ என்னைப் பரியாசம்
பண்ணிவருகிறாய்; என் கையில் ஒரு பட்டை
யம் இருந்தால் தாவினை; இப்பொழுதுதானே
௩௰ உன்னைக் கொன்றுபோடுவேனென்றான்.—கழு
தையோவென்றால் பீலேயாமுடனே, நீர் என்
னைக் கையாண்ட காலமெல்லாம் இந்நாள்வரைக்
கும் நீர் ஏறின கழுதை நான் அல்லவோ, உமக்கு
அப்படிச்செய்ய எப்போதாகிலும், எனக்குப்
பழக்கமாயிருந்ததோ என்றது; அதற்கு அவன்
இல்லையென்றான்.—அப்பொழுது கர்த்தர் பீலே ௩௧
யாமின் கண்களைத் திறந்தார்; வழியிலே நின்று
உருவின தமது பட்டையத்தைத் தம்முடைய
கையிலே பிடித்திருக்கிற கர்த்தருடைய தூதனை
அவன் கண்டு, குனிந்து, முகங்குப்புறப்பணிந்
தான்.—கர்த்தருடைய தூதனானவர் அவனோடே ௩௨
சொன்னதாவது: நீ உன் கழுதையை இதனோடே
மூன்றுதரம் அடித்ததென்ன? இதோ நாம் எதிரி
யாகப் புறப்பட்டுவந்தோம்; ஏனெனில் இந்த
வழிநமக்குமுன்பாக மாறுபாடாயிருக்கின்றது.—
கழுதையோவெனில் நம்மைக் கண்டு,இந்த மூன் ௩௩
றுதரம் நமது முகத்தைவிட்டு விலகிற்று; நமது
முகத்தை விட்டு விலகாதிருந்ததானால், இப்பொ
ழுது நாம் உன்னைத்தானும் கொன்றுபோட்டு,
கழுதையை உயிரோடே வைப்போமே என்
றார்.—அப்பொழுது பீலேயாம் கர்த்தருடைய தூத ௩௪
னுடனே, நான் பாவம்செய்தேன்; ஏனெனில்
தேவரீர் வழியிலே எனக்கு எதிராக நிற்கிறதை
அறியாதிருந்தேன்; இப்பொழுதும் உமது பார்
வைக்கு இது பொல்லாப்பாயிருந்தால் திரும்பிக்
கொள்ளுவேன் என்றான்.—கர்த்தருடைய தூத ௩௫
னானவர் பீலேயாமுடனே, அந்த மனிதரோடே
கூடப்போ; ஆனால் நாம் உன்னோடே சொல்
லும் வசனத்தை மாத்திரமே நீ சொல்லக்கடவா
யென்றார்; அப்படியே பீலேயாம் பாலாக்கின்
பிரபுக்களோடே கூடப்போனான்.

பீலேயாம் வருகிறதைப் பாலாக் கேட்டபொ ௩௬
ழுது, கடைசி எல்லையான அர்னோன் நதியின்
ஓரத்திலிருக்கிற மோவாபின் பட்டணம்மட்டும்
அவனுக்கு எதிர்கொண்டுபோய்,—பீலேயாமு ௩௭
டனே, உன்னை அழைப்பிக்க நான் உன்னண்
டைக்கு ஆள் அனுப்பவே அனுப்பவில்லையோ?
என்னண்டைக்கு ஏன் வாராதேபோனாய்? உன்
னை ஏற்றபிரகாரமாக நான் கனம்பண்ணமாட்
டேனோ என்றான்.—அப்பொழுது பீலேயாம் ௩௮
பாலாக்குடனே, இதோ உம்மண்டைக்கு வந்
தேன்; இப்பொழுதும் ஏதாகிலும் சொல்ல என்
னாலே ஆகவே ஆகுமோ? பராபரன் என் வா
யிலே கொடுக்கும் வசனத்தையே சொல்லுவே
னென்று சொல்லி,

பாலாக்குடனே கூடப்போனான்; அவர்கள் ௩௯
கீரியாத் ஊத்சோத்திற்கு வந்தார்கள்.—அங்கே ௪௰
பாலாக் ஆடுமாடுகளை அடித்து, பீலேயாமுக்கும்
அவனோடிருந்த பிரபுக்களுக்கும் அனுப்பினான்.

மறுநாள் காலமேயோவென்றால் பாலாக் பீ ௪௧
லேயாமைக் கூட்டிக்கொண்டு, அவனைப் பாகா
லுடைய மேடுகளில் ஏறப்பண்ணினான்; அவ்வி
டத்திலிருந்து சனத்தின் கடைசிப் பாளயத்தைப்
பார்த்தான்.

1 ௨ பே. ௨. ௰௬. யூதா. ௰௧.

## ௨௩. அதிகாரம்.

௧. பாலாக்கின் பலி. ௭. பீலேயாமின் உவமை.

௧ பீலேயாம் பாலாக்குடனே, நீர் எனக்கு இங்கே
ஏழு பலிபீடங்களைக் கட்டி, ஏழு காளை எருதுக
ளையும் ஏழு ஆட்டுக்கடாவையும் இங்கே எனக்கு
௨ ஆயத்தமாக நிறுத்துமென்றான். — பீலேயாம்
சொன்னபடியே பாலாக் செய்தான்; பாலாக்கும்
பீலேயாமும் ஒவ்வொரு பீடத்தில் ஒவ்வொரு
காளை எருதையும் ஒவ்வொரு ஆட்டுக்கடாவை
௩ யும் பலியிட்டார்கள். — அப்பொழுது பீலேயாம்
பாலாக்குடனே, உம்முடைய சர்வாங்கதகனத்
தண்டையிலே நின்றிரும்; நான் போகிறேன்;
ஒருவேளை கர்த்தர் வந்து என்னைச் சந்திப்பார்;
அவர் எனக்குக் காண்பிக்கிறதை உமக்கு அறி
விப்பேனென்று சொல்லி, ஒரு மேட்டின்மேலே
௪ போனான். — பராபரன் பீலேயாமைச் சந்தித்தார்;
அப்பொழுது அவருடனே, நான் ஏழு பலிபீ
டங்களை ஆயத்தம்பண்ணி, ஒவ்வொரு பலிபீ
டத்தில் ஒவ்வொரு காளை எருதையும் ஒவ்வொரு
ஆட்டுக்கடாவையும் பலியிட்டேன் என்றான். —
௫ அப்பொழுது கர்த்தர் பீலேயாமின் வாயிலே வச
னத்தைக் கொடுத்து, நீ பாலாக்கண்டையிலே
திரும்பிப்போய், இன்னபடி சொல்லக்கடவா
௬ யென்றார். — அவனண்டைக்குத் திரும்பிப்போ
னான்; இதோ பாலாக் மோவாபுடைய சகல பிர
புக்களோடுங்கூடத் தன் சர்வதகனத்தண்டை
யில் நின்றிருந்தான்.
௭ அப்பொழுது அவன் தன் வாக்கியத்தை எடுத்
துச் சொன்னதாவது: நீ வந்து எனக்காக யாக்
கோபைச் சபி; நீ வந்து இஸ்ரவேலை வெறுத்து
விடு என்று மோவாபின் இராசாவாகிய பாலாக்
என்னைக் கிழக்குப் பர்வதங்களிலிருக்கிற சூரி
யாவிலிருந்து அழைத்துவரப்பண்ணினான். —
௮ பராபரன் சபிக்காதவனை நான் சபிப்பதெப்படி?
கர்த்தர் வெறுக்காதவனை நான் வெறுப்பதெப்ப
௯ டி? — ஏனெனில் நான் கல்மலைகளின் கொடுமு
டியில் இருந்து அவனைக்கண்டு, மேடுகளிலிருந்து
அவனைப் பார்த்துக்கொண்டிருக்கிறேன்; இதோ
அந்தச் சனம் சாதிகளோடே கலவாமல் தனி
௰ யே வாசமாயிருக்கும். — யாக்கோபின் [1]தூளை
யும் இஸ்ரவேலுடைய கால்பங்கின் இலக்கத்
தையும் எண்ணுபவன் யார்? என் ஆத்துமா நீதி
மான்களின் மரணமாய் மரித்து, என் முடிவு
அவர்கள் முடிவைப்போல இருக்கக்கடவதென்
றான்.
௰௧ அப்பொழுது பாலாக் பீலேயாமுடனே, நீ
எனக்கு என்னசெய்துவருகிறாய்? என் சத்துருக்
களைச் சபிக்க உன்னை அழைப்பித்தேன்; ஆனால்
இதோ அவர்களை ஆசீர்வதிக்கவே ஆசீர்வதித்தா
௰௨ யென்றான். — அவன் பிரதியுத்தாரமாக, கர்த்தர்
என் வாயிலே கொடுத்ததையே சொல்ல, நான்
கவனமாயிருக்கவேண்டாமோ என்றான்.
௰௩ அப்பொழுது பாலாக் அவனுடனே, நீ அவர்
களைக் காணத்தக்க வேறொரு இடத்திற்கு என்
னோடேகூட நடந்துவா; அங்கே அவர்களை
யெல்லாம் காணாமல் அவர்கள் கடைசிப் பாள
யத்தைமாத்திரம் காண்பாய்; அங்கேயிருந்து எ
னக்காக அவர்களைச் சபி என்று சொல்லி, — அவ ௰௪
னைப் பிஸ்காவின் கொடுமுடியில் இருக்கிற
சோப்பீம் வெளியிலே அழைத்துக்கொண்டு
போய், ஏழு பலிபீடங்களைக் கட்டினான்; ஒவ்
வொரு பீடத்தில் ஒவ்வொரு காளை எருதையும்
ஒவ்வொரு ஆட்டுக்கடாவையும் பலியிட்டான். —
அவன் பாலாக்குடனே, இங்கே உம்முடைய ௰௫
சர்வாங்கதகனத்தண்டையிலே நின்றிரும்; நான்
அங்கே அவரைச் சந்தித்துக்கொள்ளப் போவே
னென்றான். — கர்த்தர் பீலேயாமைச் சந்தித்து, ௰௬
வசனத்தை அவன் வாயிலே கொடுத்து, நீ பா
லாக்கண்டையிலே திரும்பிப்போய், இன்னபடி
சொல்லக்கடவாயென்றார். — அவனண்டை அ ௰௭
வன் வருகிறபொழுது, இதோ அவன் மோவா
பின் பிரபுக்களோடுங்கூடத் தன்னுடைய சர்
வாங்கதகனத்தண்டையிலே நின்றிருந்தான்; பா
லாக் அவனுடனே, கர்த்தர் சொன்னதென்ன
வென்றான்.
அப்பொழுது அவன் தன் வாக்கியத்தை எடுத் ௰௮
துச் சொன்னதாவது: பாலாகே, எழுந்து கே
ளும்; சிப்போரின் குமாரனே, எனக்குச் செவி
கொடும். — [2]பராபரன் பொய்சொல்ல, ஒரு மனி ௰௯
தன் அல்ல; சொன்னது தமக்கு மனஸ்தாபமாயி
ருக்க, அவர் ஒரு மனுப்புத்திரன் அல்ல; அவர்
சொல்லியும் செய்யாதிருப்பாரோ? அவர் வசனி
த்தும் அதை நிறைவேற்றாதிருப்பாரோ? — இதோ ௨௰
ஆசீர்வதிக்கக் கட்டளைபெற்றேன்; அவர் ஆசீர்
வதிக்கிறார்; அதை நான் திருப்பக்கூடாது. —
யாக்கோபிலே வருத்தம் தெரிகிறதுமில்லை; இஸ்ர ௨௰௧
வேலிலே பிரயாசம் காணப்படுகிறதும் இல்லை;
அவர்களுடைய பராபரனாகிய கர்த்தர் அவர்க
ளோடிருக்கிறார், இராசாவின் கெம்பீரம் அவர்
களிடத்தில் இருக்கின்றது. — பராபரன் அவர் ௨௰௨
களை எகிப்திலிருந்து புறப்படப்பண்ணினார்;
காண்டாமிருகத்துக்கொத்த சத்துவம் அவர்க
ளுக்குஇருக்கின்றது. — ஏனெனில் யாக்கோபுக்கு ௨௰௩
விரோதமாகத்தக்க நிமித்தம் பார்க்குதலுமில்லை;
இஸ்ரவேலுக்கு விரோதமாகத்தக்க குறி சொல்
லுதலுமில்லை; பராபரன் செய்தது ஏதென்று
கொஞ்சக்காலத்திலே யாக்கோபையும் இஸ்ரவே
லையுங்குறித்துச்சொல்லப்படும். — இதோ சனம் ௨௰௪
துஷ்டசிங்கத்தைப்போல எழும்பி, இளஞ்சிங்
கத்தைப்போல உயரும்; அது எடுத்த இரையைப்
பட்சித்து, வெட்டுண்டவர்களின் இரத்தத்தைக்
குடியாதிருக்கும்மட்டும் படுத்துக்கொள்ளாதென்
றான்.
அப்பொழுது பாலாக் பீலேயாமுடனே, நீ அ ௨௰௫
தைச் சபிக்கவே சபிக்கவும்வேண்டாம்; ஆசீர்வ
திக்கவே ஆசீர்வதிக்கவும்வேண்டாமென்றான். —

1 ௧ மோ. ௨௮. ௰௪.

2 ௧ சாமு. ௰௫. ௨௯.

௨௬ பிலேயாம் பாலாக்குக்குப் பிரதியுத்தாரமாக, கர்த்
தர் சொல்லும்படியெல்லாம் செய்வேனென்று
உம்மோடே நான் சொல்லவில்லையோஎன்றான்.
௨௭ அப்பொழுது பாலாக் பிலேயாமுடனே, வா,
வேறொரு இடத்திற்கு உன்னை அழைத்துக்
கொண்டுபோவேன்; நீ அங்கேயிருந்து எனக்
காக அதைச் சபிக்க, ஒருவேளை பராபரனு
டைய பார்வைக்குச் செவ்வையாயிருக்கும் என்
௨௮ றுசொல்லி, — அவனை வனாந்தரத்திற்கு எதிரா
யிருக்கிற பேயோரின் கொடுமுடிக்கு அழைத்
௨௯ துக்கொண்டுபோனான். — அப்பொழுது பிலே
யாம் பாலாக்குடனே, இங்கே எனக்கு ஏழு பலி
பீடங்களைக் கட்டி, இங்கே எனக்கு ஏழு காளை
எருதையும் ஏழு ஆட்டுக்கடாவையும் ஆயத்த
௩௰ மாக நிறுத்தும் என்றான். — பிலேயாம் சொன்ன
படி பாலாக் செய்தான்; அப்பொழுது ஒவ்
வொரு பீடத்தில் ஒவ்வொரு காளை எருதையும்
ஒவ்வொரு ஆட்டுக்கடாவையும் பலியிட்டான்.

## ௨௪. அதிகாரம்.

௧. பிலேயாம் சகுனத்தைவிட்டு இஸ்ரவேலருக்கு ஆசீர்வாதமான தீர்க்கதரிசனம் சொன்னது. ௰. பாலாக் கோபம்கொண்டு, அவனைத் தள்ளிவிட்டது. ௰௫. யாக்கோபின் நட்சத்திரத்தையும் சில சனக்கூட்டத்தின் அழிவையும் தீர்க்கதரிசனமாக அவன் சொன்னது.

௧ இஸ்ரவேலை ஆசீர்வதிக்கிறது கர்த்தரின் பார்
வைக்கு ஏற்றிருக்கும் என்றதைப்பிலேயாம் கண்
டபொழுதேயெனில், அவன் முந்திச் செய்து
வந்ததுபோல, நிமித்தங்களைச் சந்தித்துக்கொள்
ளப்போகாமல், தன் முகத்தை வனாந்தரத்திற்கு
௨ நேராகத் திருப்பி, — தன் கண்களை ஏறெடுத்து,
இஸ்ரவேல் தன் கோத்திரங்களின்படியே தங்கி
இருக்கிறதைப் பார்த்தான்; அப்பொழுது பரா
பரனுடைய ஆவி அவன்மேல் வந்ததினால், —
௩ அவன் தன் வாக்கியத்தை எடுத்துச் சொன்னது:
பேயோரின் குமாரனாகிய பிலேயாம் சொல்லு
கிறதென்ன? கண்தெளிவிக்கப்பட்ட புருஷன்
௪ சொல்லுகிறதென்ன? — பராபரனுடைய வார்த்
தைகளைக் கேட்டு, சர்வத்திற்கும் வல்லவரின்
தரிசனத்தைக் கண்டு, தாழவிழும்பொழுது, கண்
கள் திறக்கப்படுகிறவனே சொல்லுகிறதென்
௫ னவெனில், — யாக்கோபே, உன் கூடாரங்க
ளும், இஸ்ரவேலே, உன் வாசஸ்தலங்களும்,
௬ எத்தனை வடிப்பமாயிருக்கின்றன? — பரவிப்
போகிற ஆறுகளைப்போலவும், நதி அருகான
தோட்டங்களைப்போலவும், கர்த்தர் நாட்டின
சந்தனமரங்களைப்போலவும், தண்ணீர்கள் ஓரத்
தில் இருக்கிற கேதுருக்களைப்போலவும் இருப்
௭ பார்கள். — அவர்களுடைய தொட்டிகளிலிருந்
து தண்ணீர் பாயும், அவர்கள் வித்துத் திரள்
நீர்ப்பாய்ச்சலாயிருக்கும்; அவர்களுடைய இரா
சா ஆகாகைப்பார்க்கிலும் உயருவான்; அவர்
௮ கள் இராச்சியம் மேன்மையாயிருக்கும். — பரா
பரன் அவர்களை எகிப்திலிருந்து புறப்படப்ப
ண்ணினார்; காண்டாமிருகத்துக்கொத்த சத்து
வங்கள் அவர்களுக்கு இருக்கின்றது; அவர்கள்
தங்கள் சத்துருக்களாகிய சாதிகளைப் பட்சித்து,
அவர்கள் எலும்புகளை நொறுக்கி, அவர்களைத்
தங்கள் அம்புகளாலே எய்வார்கள். — சிங்கத்திற் ௯
கும் துஷ்டசிங்கத்திற்குமே ஒப்பாய் மடங்கிப்
படுத்துக்கொண்டார்கள், அவர்களை எழுப்புப
வன் யார்? உங்களை ஆசீர்வதிக்கிறவன் ஆசீர்வ
திக்கப்பட்டவன்; உங்களைச் சபிக்கிறவன் சபிக்
கப்பட்டவனென்றான்.
அப்பொழுது பாலாக் பிலேயாமின்மேல் கோ ௰
பம்மூண்டவனாகிக் கையோடே கை தட்டி, பி
லேயாமோடே சொன்னதாவது: என் சத்துருக்
களைச் சபிக்க உன்னை அழைத்தனுப்பினேன்;
நீயோவெனில் இதோ இந்த மூன்றுமுறையும்
அவர்களை ஆசீர்வதிக்கவே ஆசீர்வதித்தாய். - இப் ௰௧
பொழுதும் உன்னிடத்திற்கு ஓடிப்போ; உன்
னைக் கனம்பண்ணவே பண்ணுவேனென்றேன்;
ஆனால் இதோ கர்த்தர் உனக்குக் கனம்வராத
படிக்குப் பண்ணினாரென்றான். - அப்பொழுது ௰௨
பிலேயாம் பாலாக்கோடே சொன்னதாவது:
பாலாக் எனக்குத் தன் வீடுநிறைய வெள்ளியும்
பொன்னும் கொடுத்தாலும் நான் என் மனதாய்
நன்மையாகிலும் தீமையாகிலும் செய்கிறதற்
குக் கர்த்தரின் கட்டளையை மீறக்கூடாது; கர்த்
தர் சொல்வதையே சொல்லுவேனென்று, — நீர் ௰௩
என்னண்டைக்கு அனுப்பின உம்முடைய தா
னாபதிகளோடும் நான் சொல்லவில்லையோ? —
இப்பொழுதும் இதோ நான் என் சனத்தண்டை ௰௪
க்குப் போய்விடுகிறேன்; பிற்காலத்தில் இந்தச்
சனம் உம்முடைய சனத்திற்குச் செய்வது இன்
னதென்று உமக்கு யோசனையாய்ச் சொல்லு
வேன் வாருமென்றான்:
அவன் தன் வாக்கியத்தை எடுத்துச் சொன்ன ௰௫
து: பேயோரின் குமாரன் பிலேயாம் சொல்லுகி
றதென்ன? கண்தெளிவிக்கப்பட்ட புருஷன்
சொல்லுகிறதென்ன? — பராபரனுடைய வார்த் ௰௬
தைகளைக் கேட்டு, உன்னதமானவர் அளித்த
அறிவை அறிந்து, சர்வத்திற்கும் வல்லவரின் தரி
சனத்தைக் கண்டு, தாழவிழுகையில், கண்கள்
திறக்கப்படுகிறவனே சொல்லுகிறதென்னவெ
னில், — அவரைக் காண்பேன்; ஆனால் இப்பொ ௰௭
ழுது அல்ல; அவரைப் பார்ப்பேன்; ஆனால் சமீ
பத்திலல்ல, ஒரு நட்சத்திரம் யாக்கோபிலிருந்து
உதித்து, ஒரு செங்கோல் இஸ்ரவேலிலிருந்து
எழும்பி, மோவாபியரின் எல்லைகளை நொறுக்கி,
சேத் புத்திரரையெல்லாம் நிர்மூலமாக்கும். —
ஏதோம் அவனுக்குச் சுதந்தரமாகி, சேயீர் தன் ௰௮
சத்துருக்களுக்குச் சுதந்தரமாய்ப்போம்; இஸ்ர
வேல் பலம்செய்யும். — [1]ஆளுகிறவர் யாக்கோ ௰௯
பிலிருந்து வந்து, பட்டணங்களில் மீதியானதை
அழிப்பாரென்றான்.
அவன் ஆமலேக்கைப் பார்த்து, தன் வாக்கியத் ௨௰
தை எடுத்து, ஆமலேக், சாதிகளில் முந்தி எழும்

1 மீகா. ௫. ௧.

பினவன், ஆனால் அவன் பின்சந்ததி முழுவதும்
அழியுமென்றான்.
௨௧ அவன் கேனியனைப் பார்த்து, தன் வாக்கியத்
தை எடுத்து, உன் வாசஸ்தலம் அரணிப்பானது;
கல்மலையில் உன் கூட்டைக் கட்டிப்போட்
௨௨ டாய்.—ஆகிலும் கேனியன் அழிந்துபோவான்;
அசூர் உன்னைச் சிறைபிடித்துக்கொண்டு போக,
௨௩ எத்தனைநாள் செல்லுமென்றான். — பின்னையும்
அவன் தன் வாக்கியத்தை எடுத்து, ஆ, இதைப்
பராபரன் செய்யும்பொழுது, உயிரோடிருப்ப
௨௪ வன் யார்?-சித்தீமின் கரைதுறையிலிருந்து கப்
பல்கள் வந்து, அசூரைச் சிறுமைப்படுத்தி, ஏபே
ரையும் சிறுமைப்படுத்தும்; ஆனால் அவனும்
அழிந்துபோவான் என்றான்.
௨௫ பிற்பாடு பீலேயாம் எழுந்து புறப்பட்டு, தன்
னிடத்திற்குத் திரும்பினான்; பாலாக்கும் தன்
வழியேபோனான்.

## ௨௫. அதிகாரம்.

௧. இஸ்ரவேல் சித்தீமிலே செய்த வேசித்தனமும் விக்கிரக ஆராதனையும், ௬. பினேகாஸ் சிம்றியையும் கஸ்பியையும் கொன்றது. ௰. அதினால் பராபரன் அவனுக்கு நிரந்தரமான ஆசாரியத்தொழிலை நியமித்தது. ௰௬. மீதியானியர் கலக்கப்படவேண்டுமென்பது.

௧ இஸ்ரவேல் சித்தீமிலே தங்கியிருந்தது; அங்கே
சனம் மோவாப் குமாரத்திகளோடே வேசித்த
௨ னம்பண்ணத் துவக்கிற்று. — [1]இவர்கள் சனத்
தைத் தங்கள் தேவர்களுடைய பலிகளின் விருந்
துகளுக்கு அழைத்தார்கள்; சனம் போய்ப் புசித்
து, அவர்கள் தேவர்களைப் பணிந்துகொண்டது.-
௩ இஸ்ரவேல் பேயோர் மலை பாகாலுக்கு உடந்
தையாயிற்று; ஆகையால் இஸ்ரவேலின்மேலே
௪ கர்த்தருடைய கோபம் மூண்டது.—கர்த்தர் மோ
சேயுடனே, நீ சனத்தின் தலைவரையெல்லாம்
கூட்டிக்கொண்டு, கர்த்தருடைய கோபத்தின்
உக்கிரம் திரும்ப இஸ்ரவேலைவிட்டு நீங்கும்ப
டிக்கு, அப்படிக்கொத்தவர்களைக் கர்த்தருக்கா
கச் சூரியனுக்கு எதிரே தூக்கிவிடு என்றார்.—
௫ அப்படியே மோசே இஸ்ரவேலின் நியாயாதி
பதிகளோடே, நீங்கள் அவரவர் பேயோர் மலை
பாகாலுக்கு உடந்தையான உங்கள் மனிதரைக்
௬ கொன்றுவிடுங்கள் என்றான். — அப்பொழுது
இதோ மோசேயின் கண்களுக்கும் இஸ்ரவேல்
புத்திரருடைய எல்லாச் சபையின் கண்களுக்
கும் முன்பாகவும், இவர்கள் ஆசரிப்புக்கூடா
ரத்தின் வாசலுக்குமுன்பாக அழும்போதும்,
இஸ்ரவேல் புத்திரரில் ஒருவன் ஒரு மீதியா
னிச்சியைத் தன் சகோதரரிடத்திலே அழைத்
௭ துக்கொண்டுவந்தான். — அதை ஆசாரியனாகிய
ஆரோனின் குமாரனான எலெயாசாரின் மகன்
பினேகாஸ் கண்டபொழுது, அவன் நடுச்சபை
யிலிருந்து எழுந்து, ஒரு ஈட்டியைத் தன் கையி
௮ லே பிடித்து,—இஸ்ரவேல் மனிதன் வேசித்தனம்
பண்ணும் மூலையிலே அவன் பின்னாலே போய்,
இஸ்ரவேல் மனிதனும் அந்த ஸ்திரியுமாகிய இரு
வரையும் ஈட்டி அவள் வயிற்றில் உருவிப்போக
அதினாலே குத்திப்போட்டான்; அப்பொழுது
இஸ்ரவேல் புத்திரரிலுண்டான வாதை நின்று
போயிற்று. — அந்த வாதையால் செத்தவர்கள் ௯
இருபத்துநாலாயிரம்பேராயிருந்தார்கள்.
கர்த்தர் மோசேயோடே சொன்னதாவது:— ௰
நாம் நம்முடைய எரிச்சலில் இஸ்ரவேல் புத்திர ௰௧
ரை நிர்மூலம் ஆக்காதபடிக்கு, ஆசாரியனாகிய
ஆரோனின் குமாரனான எலெயாசாரின் மகன்
பினேகாஸ், அவர்கள் நடுவில் நமக்காகப் பத்தி
வயிராக்கியம் காண்பித்ததினாலே, இஸ்ரவேல்
புத்திரர்மேல் உண்டான நம்முடைய உக்கிரத்
தைத் திருப்பினான். — ஆகையால் இதோ நாம் ௰௨
அவனுக்கு நம்முடைய சமாதானத்தின் உடம்
படிக்கையைக் கட்டளையிடுகிறோம். — அவன் ௰௩
தன் பராபரனுக்காகப் பத்திவயிராக்கியம் காண்
பித்து, இஸ்ரவேல் புத்திரருக்காகப் பாவநிவிர்த்தி
உண்டாக்கினபடியினாலே, அவனுக்கும் அவ
னுக்குப்பிற்பாடு அவன் வித்திற்கும் நித்திய
ஆசாரிய பட்டத்தின் உடம்படிக்கை உண்டா
யிருக்குமென்று சொல்லென்றார்.—மீதியானிச் ௰௪
சியோடேகூடக் குத்துண்டுசெத்த இஸ்ரவேல்
மனிதனுடைய பேர் சலூவின் குமாரன் சிம்றி,
அவன் சிமேயோனியரின் தகப்பன் வீட்டில்
ஒரு பிரபுவாயிருந்தவன்.-குத்துண்ட மீதியான் ௰௫
சாதியான ஸ்திரியின் பேரோவெனில், சூரின்
குமாரத்தி கஸ்பி; இவன் மீதியானியரின் தகப்
பன் வீட்டாரான சனசதளங்களின் தலைவனா
யிருந்தான்.
கர்த்தர் மோசேயோடே பேசிச் சொன்னதா ௰௬
வது:— மீதியானியரை இறுகப்பிடித்து, அவர் ௰௭
களை வெட்டிப்போடுங்கள்.—ஏனென்றால் பே ௰௮
யோரின் சம்மதியிலும் பேயோர் காரியத்தின்
நிமித்தம் உண்டான வாதையின் நாளிலே, குத்
துண்ட அவர்கள் சகோதரியாகிய கஸ்பி என்ற
மீதியான் பிரபுவினுடைய குமாரத்தியின் சம்ம
தியிலும், அவர்கள் உங்களுக்குச் செய்த தங்கள்
சர்ப்பனைகளினாலே, உங்களை மோசம்போக்கி
இறுகப்பிடித்தார்களென்றார்.

## ௨௬. அதிகாரம்.

௧. இஸ்ரவேலர் சகலரும் மோவாபின் வெளியிலே கணக்கிடப்பட்டது. ௫௨. அவர்களுக்குள் சுதந்தரமாக நிலம் பிரிப்பதற்கான முறைமை. ௫௭. இலேவியரின் குடும்பங்களும் எண்களும், ௬௩. சீனாய்வனாந்தரத்தில் இலக்கம்பார்க்கப்பட்டவர்களில் காலேபும் யோசுவாவுந்தவிர ஒருவரும் மீந்ததில்லை என்பது.

அந்த வாதைக்குப் பிற்பாடு சம்பவித்ததேதென் ௧
றால், கர்த்தர் மோசேயோடும் ஆசாரியனாகிய ஆ
ரோனின் குமாரன் எலெயாசாரோடும் சொன்
னதாவது:—இஸ்ரவேல் புத்திரரின் சகல சபை ௨
யான அவர்கள் பிதாக்களுடைய வீட்டிலே, இரு
பதுவயதுமுதல்கொண்டிருந்து இஸ்ரவேலிலே
யுத்தத்திற்குப் புறப்படத்தக்கவர்களையெல்லாம்
தொகை ஏற்றுங்களென்றார்.-அப்பொழுது மோ ௩
சேயும் ஆசாரியனாகிய எலெயாசாரும் எரிகோ
வின் கிட்ட இருக்கும் யோர்தானுக்கு இப்பா

[1] ௪ மோ. ௩௧. ௰௬.

லே மோவாபின் சமனான வெளிகளிலே அவர்
௪ களோடே பேசி,—கர்த்தர் மோசேக்கும் எகிப்
துதேசத்திலிருந்து புறப்பட்ட இஸ்ரவேல் புத்தி
ரருக்கும் கற்பித்திருக்கிறபடியே, இருபது வய
துமுதல்கொண்டிருக்கிறவர்களை எண்ணுங்கள்
என்றார்கள்.
௫ ரூபேன் இஸ்ரவேலின் முதல்பேறானவன்;
அவனுடைய குமாரர், ஆனோக்கியரின் வம்சத்
தகப்பன் ஆனோக்கும், பலூவியரின் வம்சத்தகப்
௬ பன் பலூவும்,—எத்சிரோனியரின் வம்சத்தகப்
பன் எத்சிரோனும், கற்மியரின் வம்சத்தகப்பன்
௭ கற்மியும்தானே. — இவைகளே ரூபேனியரின்
வம்சங்கள்; அவர்களில் இலக்கம்பார்க்கப்பட்
டவர்கள், நாற்பத்துமூவாயிரத்து எழுநூற்றுமுப்
௮ பதுபேர். — பலூவின் பிள்ளைகளில் ஒருவன்
௯ எலியாப் என்றவன். — எலியாபின் குமாரர் நே
முவேல், தாத்தான், அபீராம் என்றவர்கள்; கர்த்
தருக்கு விரோதமாகச் சண்டைபண்ணுகிற கோ
ராகின் கூட்டாளிகளாகி, மோசேக்கும் ஆரோ
னுக்கும் விரோதமாக, சண்டைபண்ணின தாத்
தானும் அபீராமும் என்ற சபையில் அழைக்கப்
௰ பட்டவர்கள் இவர்கள்தான்.–பூமி தன் வாயைத்
திறந்து, அவர்களையும் கோராகையும் விழுங்கின
தினாலும், அக்கினி இருநூற்று ஐம்பதுபேரைப்
பட்சித்ததினாலும், அந்தக் கூட்டம் செத்து ஒரு
௰௧ அடையாளமாயிற்று. — கோராகின் குமாரரோ
வெனில் சாவாதிருந்தார்கள்.
௰௨ சிமேயோனுடைய குமாரரின் வம்சங்களா
வது: நேமுவேலின் சந்ததியான நேமுவேல
ரின் வம்சமும், யாமீனின் சந்ததியான யாமீனி
யரின் வம்சமும், யாகீனின் சந்ததியான யாகீனி
௰௩ யரின் வம்சமும்,—சேராகின் சந்ததியான சேரா
கியரின் வம்சமும், சவுலின் சந்ததியான சவுலி
௰௪ யரின் வம்சமும்தானே. — இவைகளே சிமே
யோனியரின் வம்சங்கள், அவர்கள் இருபத்திரா
யிரத்து இருநூறுபேர்.
௰௫ காத்துடைய குமாரரின் வம்சங்களாவது:செப்
போனின் சந்ததியான செப்போனியரின் வம்ச
மும், ஆகியின் சந்ததியான ஆகியரின் வம்சமும்,
சூனியின் சந்ததியான சூனியரின் வம்சமும்,—
௰௬ ஒஸ்னியின் சந்ததியான ஒஸ்னியரின் வம்சமும்,
௰௭ எரியின் சந்ததியான எரியின் வம்சமும்,–ஆரோ
தின் சந்ததியான ஆரோதியரின் வம்சமும்.அரெ
லியின் சந்ததியான அரெலியரின் வம்சமும்
௰௮ தானே. — இவைகளே காத் புத்திரரின் வம்சங்
கள்; அவைகளில் இலக்கம்பார்க்கப்பட்டவர்
கள், நாற்பதினாயிரத்து ஐந்நூறுபேர்.
௰௯ யூதாவின் குமாரரான ஏரும் ஓனானும் கானான்
௨௰ தேசத்திலே செத்தார்கள்.—யூதாவுடைய மற்றக்
குமாரரின் வம்சங்களாவது: சேலாவின் சந்ததி
யான சேலாவியரின் வம்சமும், பேரேசின் சந்
ததியான பேரேசியரின் வம்சமும்,சேராகின் சந்
௨௧ ததியான சேராகியரின் வம்சமும்தானே. — பே
ரேசுடைய குமாரரின் வம்சங்களோவெனில்,
எஸ்ரோனின் சந்ததியான எஸ்ரோனியரின் வம்
சமும், ஆமூலின் சந்ததியான ஆமூலியரின் வம்
சமும்தானே. — இவைகளே யூதாவின் வம்சங் ௨௨
கள்; அவைகளில் இலக்கம்பார்க்கப்பட்டவர்
கள், எழுபத்தாறாயிரத்து ஐந்நூறுபேர்.
இசக்காருடைய குமாரரின் வம்சங்களாவது: ௨௩
தோலாவின் சந்ததியான தோலாவியரின் வம்ச
மும், பூவாவின் சந்ததியான பூவாவியரின் வம்
சமும், — யாசூபின் சந்ததியான யாசூபியரின் ௨௪
வம்சமும், சிம்ரோனின் சந்ததியான சிம்ரோனி
யரின் வம்சமும்தானே. — இவைகளே இசக்கா ௨௫
ரின் வம்சங்கள்; அவைகளில் இலக்கம்பார்க்
கப்பட்டவர்கள், அறுபத்துநாலாயிரத்து முந்
நூறுபேர்.
செபுலோனுடைய குமாரரின் வம்சங்களா ௨௬
வது: சேரேதின் சந்ததியான சேரேதியரின் வம்
சமும், எலோனின் சந்ததியான எலோனியரின்
வம்சமும், யாலேயேலின் சந்ததியான யாலே
யேலியரின் வம்சமும்தானே.–இவைகளே செபு ௨௭
லோனியரின் வம்சங்கள்; அவைகளில் இலக்
கம்பார்க்கப்பட்டவர்கள் அறுபதினாயிரத்து ஐந்
நூறுபேர்.
யோசேப்புடைய குமாரரான மனாசே எப்பி ௨௮
ராயீம் என்றவர்களின் வம்சங்களாவது:—மனா ௨௯
சேயினுடைய குமாரரின் வம்சங்கள் ஏதெனில்,
மாகீரின் சந்ததியான மாகீரியரின் வம்சமும்,
மாகீர் பெற்ற கிலேயாதின் சந்ததியான கிலே
யாதியரின் வம்சமும்,—கிலேயாத் பெற்ற ஈயே ௩௰
சேரின் சந்ததியான ஈயேசேரியரின் வம்சமும்,
எலேக்கின் சந்ததியான எலேக்கியரின் வம்ச
மும்,—அஸ்ரியேலின் சந்ததியான அஸ்ரியேல ௩௧
ரின் வம்சமும்,சேகேமின் சந்ததியான சேகேமி
யரின் வம்சமும், — செமீதாவின் சந்ததியான ௩௨
செமீதாவியரின் வம்சமும், எப்பேரின் சந்ததி
யான எப்பேரியரின் வம்சமும்தானே.—எப்பே ௩௩
ரின் குமாரனான சேலாப்பெயாத்திற்கோவெ
னில், குமாரர் இல்லாமல்,குமாரத்திகள்மாத்திரம்
இருந்தார்கள்; இவர்கள் நாமங்கள், மக்லாள்,
நோகாள், ஒக்லாள், மில்க்காள், திற்சாள் என்
பன. — இவைகளே மனாசேயின் வம்சங்கள்; ௩௪
அவைகளில் இலக்கம்பார்க்கப்பட்டவர்கள் ஐம்
பத்திராயிரத்து எழுநூறுபேர்.
எப்பிராயீமுடைய குமாரரின் வம்சங்களா ௩௫
வது: சூத்தெலாகின் சந்ததியான சூத்தெலாகிய
ரின் வம்சமும், பெகேரின் சந்ததியான பெகேரி
யரின் வம்சமும், தாகானின் சந்ததியான தாகா
னியரின் வம்சமும்,—சூத்தெலாக் பெற்ற ஏரா ௩௬
னின் சந்ததியான ஏரானியரின் வம்சமும்தா
னே.—இவைகளே எப்பிராயீம் புத்திரரின் வம் ௩௭
சங்கள்; அவைகளில் இலக்கம்பார்க்கப்பட்ட
வர்கள் முப்பத்திராயிரத்து ஐந்நூறுபேர்; இவை
களே யோசேப் புத்திரரின் வம்சங்கள்.
பென்யமீனுடைய குமாரரின் வம்சங்களா ௩௮
வது: பேலாவின் சந்ததியான பேலாவியரின்
வம்சமும், அஸ்பேலின் சந்ததியான அஸ்பேலி
யரின் வம்சமும், அகிராமின் சந்ததியான அகி

௩௯ ராமியரின் வம்சமும்,—சூப்பாமின் சந்ததியான
சூப்பாமியரின் வம்சமும், ஊப்பாமின் சந்த
௪௰ தியான ஊப்பாமியரின் வம்சமும், — பேலாப்
பெற்ற ஆரேதின் சந்ததியான ஆரேதியரின் வம்
சமும், நாமானின் சந்ததியான நாமானியரின்
௪௧ வம்சமும்தானே. — இவைகளே பென்யமீன்
புத்திரரின் வம்சங்கள்; அவைகளில் இலக்கம்
பார்க்கப்பட்டவர்கள் நாற்பத்தையாயிரத்து அறு
நூறுபேர்.
௪௨ தாணுடைய குமாரரின் வம்சங்கள்;சூகாமின்
சந்ததியான சூகாமியரின் வம்சம்தானே; இவை
௪௩ கள் தாணின் வம்சங்கள்.—சூகாமியரின் வம்ச
ங்களில் இலக்கம்பார்க்கப்பட்டவர்கள் எல்லா
ரும் அறுபத்துநாலாயிரத்து நானூறுபேர்.
௪௪ ஆசேருடைய குமாரரின் வம்சங்களாவது:
இம்னாவின் சந்ததியான இம்னாவியரின் வம்ச
மும், ஈஸ்வியின் சந்ததியான ஈஸ்வியரின் வம்ச
மும், பெரீயாவின் சந்ததியான பெரீயாவியரின்
௪௫ வம்சமும், — பெரீயா பெற்ற ஏபேரின் சந்ததி
யான ஏபேரியரின் வம்சமும், மல்க்கியேலின்
சந்ததியான மல்க்கியேலியரின் வம்சமும்தா
௪௬ னே. — ஆசேருடைய குமாரத்தியின் பேர் சா
௪௭ ராள்.—இவைகளே ஆசேர் புத்திரரின் வம்சங்
கள்; அவைகளில் இலக்கம்பார்க்கப்பட்டவர்
கள், ஐம்பத்துமூவாயிரத்து நானூறுபேர்.
௪௮ நவுதலியினுடைய குமாரரின் வம்சங்களா
வது: யாத்சேயேலின் சந்ததியான யாத்சேயேலி
யரின் வம்சமும், கூனியின் சந்ததியான கூனி
௪௯ யாரின் வம்சமும்,—எத்சேரின் சந்ததியான எத்
சேரியரின் வம்சமும், சில்லேமின் சந்ததியான
௫௰ சில்லேமியரின் வம்சமும்தானே.—இவைகளே
நவுதலியின் வம்சங்கள்; அவைகளில் இலக்கம்
பார்க்கப்பட்டவர்கள், நாற்பத்து ஐயாயிரத்து
நானூறுபேர்.
௫௧ இஸ்ரவேல்புத்திரரில்இலக்கம்பார்க்கப்பட்ட
இவர்கள் அறுநூற்றோராயிரத்து எழுநூற்று முப்
பதுபேராயிருந்தார்கள்.
௫௨ கர்த்தர் மோசேயோடே பேசிச் சொன்னதா
௫௩ வது:—இவர்களுக்குத் தேசம் பேர்களின் இலக்
கத்திற்குத்தக்கதாய்ச் சுதந்தரமாகப் பங்கிடப்
௫௪ படக்கடவது.—அநேகருக்கு அநேகமும் கொஞ்
சமானவர்களுக்குக் கொஞ்சமுமாய், சுதந்தரமா
கக் கொடுப்பாயாக; அவர்களில் எண்ணப்பட்
டவர்களின் இலக்கத்திற்குத்தக்கதாக அவரவர்
களுக்கு அவரவர்கள் சுதந்தரம் கொடுக்கப்படக்
௫௫ கடவது. — ஆகிலும் சீட்டுகளைப் போட்டு, தே
சம் பங்கிடப்படக்கடவது; தங்கள் பிதாக்களு
டைய கோத்திரங்களுக்கு இருக்கும் நாமங்க
௫௬ ளின்படியே சுதந்தரிக்கக்கடவர்கள். — அநேக
மானவர்களுக்கும், கொஞ்சமானவர்களுக்கும்
அவர்களுடைய சுதந்தரங்கள் சீட்டுகள் விழுகி
றபடியே பங்கிடப்படுவதாகவென்றார்.
௫௭ இலக்கம்பார்க்கப்பட்ட இலேவியரின் வம்
சங்களாவது: கெர்சோனின் சந்ததியான கெர்
சோனியரின் வம்சமும், கோகாத்தின் சந்ததி
யான கோகாத்தியரின் வம்சமும், மெராரியின்
சந்ததியான மெராரியரின் வம்சமும், — இலே ௫௮
வியின் மற்ற வம்சங்களாகிய லீப்னீயரின் வம்
சமும், எபிரோனியரின் வம்சமும், மகேலிய
ரின் வம்சமும், மூசியரின் வம்சமும், கொராகி
யரின் வம்சமும்தானே; கோகாத் அம்ராமைப்
பெற்றான். — அம்ராமுடைய பெண்சாதியின் ௫௯
பேர் யோகெபேத்; அவள் இலேவிக்கு எகிப்தி
லே பிறந்த குமாரத்தி; அவள் அம்ராமுக்கு ஆ
ரோனையும், மோசேயையும் அவர்கள் சகோதரி
யான மிரியாமையும் பெற்றாள்.—ஆரோனுக்கு ௬௰
நாதாபும், அபீயூவும், எலெயாசாரும், இத்தாமா
ரும் பிறந்தார்கள்.—ஆனால் நாதாபும் அபீயூவும் ௬௧
அந்நிய அக்கினியைக் கர்த்தருக்குமுன்பாகக்
கொண்டுவருகிறபொழுது, செத்துப்போனார்
கள். — அவர்களில் ஒருமாதம் முதல்கொண்டி ௬௨
ருந்து இலக்கம்பார்க்கப்பட்ட ஆண்சாதியான
வர்கள் எல்லாரும் இருபத்துமூவாயிரம்பேர்;
ஏனென்றால் இஸ்ரவேல் புத்திரரின் நடுவே
அவர்களுக்குச் சுதந்தரம் கொடுக்கப்படாதபடி
யினாலே, அவர்கள் இஸ்ரவேல் புத்திரரின் இலக்
கத்திற்குள்பட்டதில்லை.
மோசேயும் ஆசாரியனாகிய எலெயாசாரும் ௬௩
எரிகோவின் கிட்டஇருக்கும் யோர்தானுக்கு
இப்பாலே மோவாபின் சமனான வெளிகளில்
இஸ்ரவேல் புத்திரரை இலக்கம்பார்க்கிறபொ
ழுது, இருந்தவர்கள் இவர்கள்தான். — முதல் ௬௪
மோசேயும் ஆசாரியனாகிய ஆரோனும் சீனாயின்
வனாந்தரத்திலே இஸ்ரவேல் புத்திரரை இலக்
கம்பார்க்கும்பொழுது, இருந்தவர்களிலே இவர்
கள் ஒருவருமில்லை.—ஏனென்றால் வனாந்தரத் ௬௫
திலே சாவவே சாவார்களென்று கர்த்தர் அவர்க
ளுக்குச் சொல்லியிருந்தார்; எப்பூனேயின் குமா
ரனாகிய காலேபையும் நூனின் குமாரனாகிய
யோசுவாவையும் ஒழிய, வேறொருவரும் அவர்
களில் மீதியாயிருந்ததில்லை.

## ௨௭. அதிகாரம்.

௧. செலொப்பெயாத்தின் குமாரத்திகள் சுதந்தரத்தைத் தரும்படி கேட்டது. ௬. காணியாட்சிக்கு அடுத்த பிரமாணம். ௧௨. மோசே தன் மரணத்தைக்குறித்து அறிவிக்கப்பட்டு, தன்னிடத்திற்கு ஒருவனைக் கேட்டுக்கொண்டது. ௧௮. அவனுக்குப்பின் அவன் தொழிலில் யோசுவா நியமிக்கப்பட்டது.

யோசேப்பின் குமாரனாகிய மனாசேயின் வம் ௧
சங்களிலே, மனாசேயின் குமாரனாகிய மாகீரின்
மகனான கீலேயாத்திற்குப்பிறந்த ஏபேருக்குக்
குமாரனாயிருந்த [1]செலொப்பெயாத்தின் குமாரத்
திகளாகிய மக்லாள், நோகாள், ஒக்லாள், மில்க்
காள், திர்சாள் என்னப்பட்டவர்கள் சேர்ந்து
வந்து, — ஆசரிப்புக்கூடாரவாசலிலே மோ ௨
சேக்கும், ஆசாரியனாகிய எலெயாசாருக்கும்,
பிரபுக்களுக்கும், சபை அனைத்திற்கும்முன்பாக

1 ௪ மோ. ௨௬. ௩௩.

௩ நின்றுகொண்டு சொன்னதாவது:—எங்கள் தகப்
பன் வனாந்தரத்தில் மரணமடைந்தார்; ஆனால்
அவர் கர்த்தருக்கு விரோதமாகக் கூடின கோரா
கின் கூட்டத்தாரில் ஒருவராயிராமல், தம்மு
டைய பாவத்தினாலே மரித்தார்; அவருக்குக் கு
௪ மாரரில்லை.—எங்கள் தகப்பனுக்குக் குமாரன்
இல்லாததினாலே, அவர் பேர் அவருடைய வம்
சத்தில் அற்றுப்போவானேன்? எங்கள் தகப்ப
னுடைய சகோதரருக்குள்ளே எங்களுக்குக் கா
ணியாட்சியைத் தாருமென்றார்கள்.
௫ மோசே அவர்கள் நியாயத்தைக் கர்த்தருக்கு
௬ முன்பாகக் கொண்டுபோனான்.—அப்பொழுது
௭ கர்த்தர் மோசேயோடே சொன்னதாவது:—செ
லாப்பெயாத்தின் குமாரத்திகள் சொல்லுகிறது
நிதானம்; அவர்கள் தகப்பனுடைய சகோதரருக்
குள்ளே அவர்களுக்குச் சுதந்தரம் கொடுக்கவே
கொடுக்கப்படக்கடவது; அவர்கள் தகப்பன்
பின்வைத்த சுதந்தரத்தை அவர்களுக்கு வரப்
௮ பண்ணுவாயாக.—இஸ்ரவேல் புத்திரருக்கும் நீ
சொல்லவேண்டியதேதெனில், ஒருவன் குமார
னில்லாமல் மரித்தால், அவன் பின்வைத்த சுதந்
தரத்தை அவன் குமாரத்திக்கு வரப்பண்ணக்கட
௯ வீர்கள். — அவனுக்குக் குமாரத்தி இல்லாதிருந்
தால், அதை அவன் சகோதரருக்குக்கொடுக்கக்
௰ கடவீர்கள். — அவனுக்குச் சகோதரர் இல்லா
திருந்தால், அதை அவன் தகப்பனுடைய சகோ
௰௧ தரருக்குக் கொடுக்கக்கடவீர்கள்.—அவன் தகப்
பனுக்குச் சகோதரர் இல்லாதிருந்தால், அதை
அவன் வம்சத்திலே அவனுக்குக் கிட்டின உற
வின்முறையானுக்குச் சுதந்தரமாகக் கொடுக்கக்
கடவீர்கள்; இது, கர்த்தர் மோசேக்குக் கற்
பித்தபடியே, இஸ்ரவேல் புத்திரருக்கு நியாயப்
பிரமாணமாயிருக்கக்கடவதென்று சொல்லென்
றார்.
௰௨ பிற்பாடு கர்த்தர் மோசேயோடே சொன்ன
தாவது: [1]நீ இந்த ஆபரிம்பர்வதத்தில் ஏறி, நாம்
இஸ்ரவேல் புத்திரருக்குக் கொடுத்த தேசத்தைப்
௰௩ பார்.—நீ அதைப் பார்த்தபிறகு, நீயும் உன் சகோ
தரனாகிய ஆரோன் சேர்க்கப்பட்டதுபோல,உன்
௰௪ சனத்தாரிடத்திலே சேர்க்கப்படுவாய். — ஏனெ
னில் சபை வாக்குவாதம்பண்ணின சீனாய்வனாந்
தரத்தில் நம்மைத் தண்ணீரின் சங்கதியிலே
அவர்கள் கண்களுக்குமுன்பாகப் பரிசுத்தம்
பண்ணவேண்டிய நீங்கள் [2]நம்முடைய கட்ட
ளைக்கு இரண்டகம்பண்ணினீர்களென்றார்; அது
சீனாய்வனாந்தரத்திலே காதேஸ் ஊர்க்கிட்ட
உண்டான மேரிபாவின் தண்ணீர்தானே.
௰௫ அப்பொழுது மோசே கர்த்தரோடே சொன்ன
௰௬ தாவது:-கர்த்தருடைய சபை மேய்ப்பனில்லாத
௰௭ மந்தையைப்போல இராதபடிக்கு,—அவர்களுக்
குமுன்பாகப் போக்கும் வரத்துமாயிருக்கிறதற்
கும் அவர்களைப் போகவும் வரவும்பண்ணுகிற
தற்குமான ஒரு புருஷனை, சகல மாம்சத்தினு
டைய ஆவிகளின் பராபரனாகிய கர்த்தர் அவர்
கள்மேல் அதிகாரியாக வைப்பாராக என்றான்.
அப்பொழுது கர்த்தர் மோசேயோடே சொன் ௰௮
னதாவது: ஆவி வாசமாயிருக்கிற புருஷனாகிய
யோசுவாவென்ற நூனின் குமாரனை நீ சேர்த்துக்
கொண்டு, அவன்மேலே உன் கையை வைத்து,—
அவனை ஆசாரியனாகிய எலேயாசாருக்கும் சபை ௰௯
அனைத்திற்கும்முன்பாக நிறுத்தி, அவர்கள் கண்
களுக்குமுன்பாக அவனுக்குக் கற்பனைகொடுத்
து,—இஸ்ரவேல் புத்திரரின் சபையெல்லாம் அ ௨௰
வனுக்குக் கீழ்ப்படியும்படிக்கு,உன் மகிமையில்
சிலவற்றை அவன்மேலே வை —அவன் ஆசாரி ௨௧
யனாகிய எலேயாசாருக்குமுன்பாக நிற்பானாக;
இவன் அவனுக்காகக் கர்த்தருக்குமுன்பாக வந்
து வெளிச்சங்களின் நியாயத்தினாலே ஆலோ
சனை கேட்கக்கடவன்; அவருடைய கட்டளை
யின்படியே, அவனும் அவனோடேகூட இஸ்ர
வேலின் எல்லாப் புத்திரரும் சபை அனைத்தும்
போகவும் அவருடைய கட்டளையின்படியே வர
வும்வேண்டியதென்றார்.
கர்த்தர் தனக்குக் கற்பித்தபடியே, மோசே ௨௨
செய்து, யோசுவாவைச் சேர்த்துக்கொண்டு, அ
வனை ஆசாரியனாகிய எலேயாசாருக்கும் சபை
அனைத்திற்கும்முன்பாக நிறுத்தி,—அவன்மேலே ௨௩
தன் கைகளை வைத்து, கர்த்தர் தனக்குச் சொன்ன
படியே அவனுக்குக் கற்பனைகொடுத்தான்.

## ௨௮. அதிகாரம்.

௧. காணிக்கைகள் செலுத்தப்படவேண்டியது. ௩. நித்திய சர்வாங்க தகனபலி, ௯. ஓய்வுநாளிலும், ௰௧. அமாவாசையிலும், ௰௬. பஸ்காவிலும், ௨௬. முதல்விளைவு பெறும்நாளிலும், செலுத்தும் காணிக்கை.

கர்த்தர் மோசேயோடே பேசிச் சொன்னதாக
வது:-நமக்கு ஆற்றிய வாசனைக்கான நம்முடைய ௨
தகனபலிகளுக்கு அடுத்த நம்முடைய காணிக்
கையையும் நம்முடைய அப்பத்தையும், அவை
களின் திட்டமான காலத்திலே நமக்குச் செலுத்
தும்படிக்கு, கவனமாயிருக்கக் கடவீர்களென்று
நீ இஸ்ரவேல் புத்திரருக்குக் கற்பித்து,
அவர்களுக்குச் சொல்லவேண்டியதாவது: ௩
நீங்கள் கர்த்தருக்குச் செலுத்தவேண்டிய தகன
பலி என்னவென்றால், நாள் ஒன்றிற்கு நித்தம்
சர்வாங்கதகனபலியாக ஒருவயதுள்ள பழுதற்ற
இரண்டு ஆட்டுக்குட்டிகள்தானே.—விடியற்கா ௪
லத்தில் ஒரு ஆட்டுக்குட்டியையும், அந்திநேர
மானவேளையில் மற்ற ஆட்டுக்குட்டியையும்
செலுத்தி, — காணிக்கையாக ஒரு மரக்காலிலே ௫
பத்தில் ஒரு பங்கானதும் இடித்து வடிகட்டப்
பட்ட கால்படி எண்ணெயிலே பிசைந்ததுமா
கிய மெல்லியமாவையும் செலுத்தக்கடவாய்.—
இது சீனாய்பர்வதத்திலே கட்டளையிடப்பட்ட ௬
நித்திய சர்வாங்கதகனபலி; இது கர்த்தருக்கு ஆற்
றிய வாசனைக்கானதகனம்.—திராட்சப்பழ இர ௭
சத்திலே கால்படியானது ஒரு ஆட்டுக்குட்டிக்கு
அடுத்த ஊற்றுதல் பரிசுத்தஸ்தலத்திலே கர்த்த

1 ௫ மோ. ௩௨. ௪௯, ௫௰.

2 ௪ மோ. ௨௰. ௰௨.

ருக்கு அந்த இரசம் ஊற்றுதலாக ஊற்றப்படக்
௮ கடவது.— விடியற்காலத்துக் காணிக்கைக்கும்
அதின் ஊற்றுதலுக்கும் சரியாக அந்திநேரமான
வேளையிலே, இரண்டாம் ஆட்டுக்குட்டியையும்
கர்த்தருக்கு ஆற்றிய வாசனையான தகனமாகச்
செலுத்துவாயாக.
௯ ஓய்வுநாளிலோவென்றால் ஒரு வயதுள்ள பழு
தற்ற இரண்டிரண்டு ஆட்டுக்குட்டிகளையும், பத்
தில் இரண்டுபங்கானதும் எண்ணெயில் பிசைந்
ததுமான மெல்லியமாவென்ற காணிக்கையை
யும், அதின் ஊற்றுதலையும் செலுத்தக்கடவாய்.–
௰ அன்றன்றுள்ள சர்வாங்கதகனபலியையும் அதின்
ஊற்றுதலையும்தவிர, இது ஒவ்வொரு ஓய்வுநாளி
லே செலுத்தப்படவேண்டிய சர்வாங்கதகனம்.
௰௧ உங்கள் மாதப்பிறப்புகளில் நீங்கள் கர்த்த
ருக்குச் சர்வாங்கதகனமாக மாடுகளில் இரண்டு
காளை எருதுகளையும், ஒரு ஆட்டுக்கடாவையும்,
ஒருவயதுள்ள பழுதற்ற எழு ஆட்டுக்குட்டிகளை
௰௨ யும்,—ஒவ்வொரு காளை எருதிற்காகப் பத்திலே
மூன்று பங்கானதும் எண்ணெயிலே பிசைந்தது
மான மெல்லியமாவின் காணிக்கையையும், அந்த
ஒரு ஆட்டுக்கடாவுக்காகப் பத்தில் இரண்டு பங்
கானதும் எண்ணெயிலே பிசைந்ததுமான மா
௰௩ வின் காணிக்கையையும்,-ஒவ்வொரு ஆட்டுக்கு
ட்டிக்காகப் பத்தில் ஒருபங்கானதும் எண்ணெ
யிலே பிசைந்ததுமான மாவின் காணிக்கையை
யும், செலுத்துவீர்களாக; அது கர்த்தருக்கு ஆற்
௰௪ றிய வாசனையான சர்வாங்கதகனம்.—அவைக
ளின் ஊற்றுதல்கள், காளை எருதிற்கு அரைப்ப
டியும் ஆட்டுக்கடாவுக்குப் படியில் மூன்றத்தொ
ருபங்கும், ஆட்டுக்குட்டிக்குக் கால்படியுமான
திராட்சப்பழ இரசமாயிருப்பதாக; அது வரு
ஷத்திலே ஒவ்வொருமாதம் செலுத்தப்படவே
௰௫ ண்டிய சர்வாங்கதகனம்.—அன்றன்றுள்ள சர்
வாங்கதகனபலியையும் அதின் ஊற்றுதலையும்
தவிர, பாவம்போக்கும்பலியாகக் கர்த்தருக்கு
ஒரு வெள்ளாட்டுக்கடாவும் செலுத்தப்படக்க
டவது.
௰௬ முதலாம்மாதம் பதினான்காம்தேதியிலே கர்த்
௰௭ தருக்குப் பஸ்காவாயிருக்கின்றது.—அந்த மாதம்
பதினைந்தாம்தேதி பண்டிகைநாள்; ஏழுநாள்மட்
டும் புளிப்பில்லாத அப்பங்கள் புசிக்கப்பட
௰௮ வேண்டும். — முதலாம்நாளிலே பரிசுத்தசபை
கூடுதல், யாதொரு பணிவிடைவேலையைச் செய்
௰௯ யீர்களாக.—அப்பொழுது நீங்கள் கர்த்தருக்குச்
சர்வாங்கதகனபலியாக, மாடுகளில் இரண்டு கா
ளை எருதுகளையும், ஒரு ஆட்டுக்கடாவையும், உங்
களுக்கு இருக்கவேண்டிய ஒருவயதுள்ள பழு
௨௰ தற்ற எழு ஆட்டுக்குட்டிகளையும்,-அவைகளின்
காணிக்கையாக எண்ணெயிலே பிசைந்த மெல்
லியமாவிலே காளை எருதிற்காகப் பத்திலே மூன்
றுபங்கையும், ஆட்டுக்கடாவுக்காகப் பத்தில் இர
௨௧ ண்டு பங்கையும்,—எழு ஆட்டுக்குட்டிகளிலும்
ஒவ்வொன்றிற்காகப் பத்திலொருபங்கையும்,—
௨௨ உங்கள் பாவநிவிர்த்திக்கென்று பாவம்போக்கும்

பலியாக ஒரு வெள்ளாட்டுக்கடாவையும் செலு
த்தி,-விடியற்காலத்திலே செலுத்தும் அன்றன் ௨௩
றுள்ள சர்வாங்கதகனபலியையும்தவிர இவைக
ளைச் செலுத்தக்கடவீர்கள்.—இந்தப் பிரகாரமாக ௨௪
எழுநாளிலும் ஒவ்வொரு நாளிலே கர்த்தருக்கு
ஆற்றிய வாசனையாகிய தகனச் செலுத்துதலைச்
செய்யக்கடவீர்கள்; அன்றன்றுள்ள சர்வாங்கதக
னபலியையும் அதின் ஊற்றுதலையும்தவிர, அது
செலுத்தப்படக்கடவது.-எழாம்நாளிலும் பரிசு ௨௫
த்தசபை கூடுதல் உங்களுக்கு இருக்கக்கடவது;
யாதொரு பணிவிடை வேலையைச் செய்யீர்க
ளாக.
நீங்கள் கர்த்தருக்குப் புதுக்காணிக்கையாகிய ௨௬
முதல் கனிகளைச் செலுத்தும் உங்கள் வாரங்க
ளின் பண்டிகை நாளிலும் பரிசுத்தசபை கூடுதல்
உங்களுக்கு இருக்கக்கடவது; யாதொரு பணி
விடை வேலையைச் செய்யீர்களாக.—அப்பொ ௨௭
ழுது நீங்கள் கர்த்தருக்கு ஆற்றிய வாசனைக்கான
சர்வாங்கதகனபலியாக மாடுகளில் இரண்டு கா
ளை எருதுகளையும், ஒரு ஆட்டுக்கடாவையும், ஒரு
வயதுள்ள எழு ஆட்டுக்குட்டிகளையும்,—அவை ௨௮
களின் காணிக்கையாக எண்ணெயிலே பிசைந்த
மெல்லியமாவில் ஒரு காளை எருதிற்காகப் பத்
திலே மூன்றுபங்கையும், அந்த ஒரு ஆட்டுக்க
டாவுக்காகப் பத்தில் இரண்டுபங்கையும்,-எழு ௨௯
ஆட்டுக்குட்டிகளிலும் ஒவ்வொன்றிற்காகப் பத்
தில் ஒரு பங்கையும், — உங்களுக்காகப் பாவ ௩௰
நிவிர்த்தியை உண்டாக்கும்படிக்கு ஒரு வெள்
ளாட்டுக்கடாவையும் செலுத்தி,-அன்றன்றுள்ள ௩௧
சர்வாங்கதகனபலியையும் அதின் காணிக்கை
யையும் அதின் ஊற்றுதல்களையும்தவிர, இவை
களைச் செலுத்தக்கடவீர்கள்; உங்களுக்கு அவை
கள் பழுதற்றவைகளாயிருக்கவேண்டும்.

## ௨௯. அதிகாரம்.

௧. எக்காளநாதின் பண்டிகையிலும், ௭. அவர்களுடைய ஆத்துமா கஸ்திப்படும் நாளிலும், ௰௨. ஆசரிப்புப்பண்டிகையின் எட்டாம்நாளிலும் செலுத்தும் காணிக்கை.

ஏழாம்மாதம் முதல்தேதி உங்களுக்குப் பரிசுத்த ௧
சபை கூடப்படும் நாளாயிருக்கக்கடவது; யா
தொரு பணிவிடைவேலையும் செய்யாதிருப்பீர்க
ளாக; அது உங்களுக்குக் கெம்பீரநாளாயிருக்க
வேண்டும்.—அப்பொழுது கர்த்தருக்கு ஆற்றிய ௨
வாசனைக்கான சர்வாங்கதகனபலியாக மாடுக
ளில் ஒரு காளை எருதையும், ஒரு ஆட்டுக்கடா
வையும், ஒருவயதுள்ள பழுதற்ற எழு ஆட்டுக்
குட்டிகளையும்,—அவைகளுக்கு அடுத்த காணிக் ௩
கையாக எண்ணெயிலே பிசைந்த மெல்லியமா
விலே காளை எருதிற்காகப் பத்திலே மூன்றுபங்
கையும், ஆட்டுக்கடாவுக்காக இரண்டுபங்கை
யும்,—எழு ஆட்டுக்குட்டிகளில் ஒவ்வொன்றிற் ௪
காக ஒருபங்கையும்,—உங்கள் பாவநிவிர்த்திக் ௫
கான பலியாக ஒரு வெள்ளாட்டுக்கடாவையும்
செலுத்தி,-மாதப்பிறப்பின் சர்வாங்கதகனத்தை ௬
யும் அதின் காணிக்கையையும் அன்றன்றுள்ள
சர்வாங்கதகனபலியையும் அதின் காணிக்கை

யையும் அவைகளின் முறைமைக்கு ஏற்ற ஊற்
றுதல்களையும்தவிர, இவைகளைக் கர்த்தருக்கு ஆற்
றிய வாசனையான தகனமாகச் செலுத்தக்கடவீர்
கள்.
௭ இந்த ஏழாம்மாதம் பத்தாம்தேதி உங்களுக்
குப் பரிசுத்தசபை கூடப்படும் நாளாயிருக்கக்
கடவது; அதிலே நீங்கள் யாதொரு பணிவிடை
வேலையையும் செய்யாமல், உங்கள் ஆத்துமங்க
௮ ளை ஒடுங்கப்பண்ணி,—கர்த்தருக்கு ஆற்றிய வாச
னையான சர்வாங்கதகனபலியாக மாடுகளில் ஒரு
காளை எருதையும், ஒரு ஆட்டுக்கடாவையும்,
உங்களுக்கு இருக்கவேண்டிய ஒரு வயதுள்ள
௯ பழுதற்ற ஏழு ஆட்டுக்குட்டிகளையும்,-அவைக
ளின் காணிக்கையாக எண்ணெயிலே பிசைந்த
மெல்லியமாவிலே காளை எருதிற்காகப் பத்தி
லே மூன்றுபங்கையும், அந்த ஒரு ஆட்டுக்கடா
௰ வுக்காக இரண்டுபங்கையும்,—ஏழு ஆட்டுக்குட்
டிகளில் ஒவ்வொன்றிற்காக ஒரு பங்கையும்,—
௰௧ பாவம்போக்கும்பலியாக ஒரு வெள்ளாட்டுக்க
டாவையும் செலுத்தி, பாவங்களின்நிவிர்த்தியை
உண்டாக்கும்பலியையும் அன்றன்றுள்ள சர்வா
ங்கதகனபலியையும் அதின் காணிக்கையையும்
அவைகளின் ஊற்றுதல்களையும் தவிர, இவைக
ளைச் செலுத்தக்கடவீர்கள்.
௰௨ ஏழாம்மாதம் பதினைந்தாம்தேதி உங்களுக்
குப் பரிசுத்தசபை கூடப்படும் நாளாயிருக்கக்
கடவது; யாதொரு பணிவிடைவேலையை அதி
லே செய்யீர்களாக; ஏழுநாள் கர்த்தருக்குப் பண்
௰௩ டிகை ஆசரிக்கக்கடவீர்கள்.-நீங்கள் கர்த்தருக்கு
ஆற்றிய வாசனையின் தகனமான சர்வாங்கதகன
பலியாக, மாடுகளிலே பதின்மூன்று காளை எரு
துகளையும், இரண்டு ஆட்டுக்கடாக்களையும், ஒரு
வயதுள்ள பழுதற்றிருக்கிற பதினாலு ஆட்டுக்
௰௪ குட்டிகளையும்,—அவைகளின் காணிக்கையாக
எண்ணெயிலே பிசைந்த மெல்லியமாவிலே
அந்தப் பதின்மூன்று காளை எருதுகளில் ஒவ்
வொன்றிற்காகப் பத்திலே மூன்றுபங்கையும்,
அந்த இரண்டு ஆட்டுக்கடாக்களில் ஒவ்வொன்
௰௫ றிற்காக இரண்டுபங்கையும்,—பதினாலு ஆட்
டுக்குட்டிகளில் ஒவ்வொன்றிற்காக ஒருபங்கை
௰௬ யும்,—அன்றன்றுள்ள சர்வாங்கதகனபலியையும்,
அதின் காணிக்கையையும், அதின் ஊற்றுதலை
யும்தவிரப் பாவம்போக்கும்பலியாக ஒரு வெள்
ளாட்டுக்கடாவையும்,
௰௭ இரண்டாம்நாளிலே மாடுகளிலே பன்னிரண்
டு காளை எருதுகளையும், இரண்டு ஆட்டுக்கடாக்
களையும்,ஒருவயதுள்ள பழுதற்ற பதினாலு ஆட்
௰௮ டுக்குட்டிகளையும்,-காளை எருதுகளும் ஆட்டுக்க
டாக்களும் ஆட்டுக்குட்டிகளும் இருக்கிற இலக்
கத்திற்குத்தக்க நியாயமாக,அவைகளின் காணிக்
கையையும், அவைகளின் ஊற்றுதல்களையும்,—
௰௯ அன்றன்றுள்ள சர்வாங்கதகனபலியையும், அ
தின் காணிக்கையையும்,அவைகளின் ஊற்றுதல்
களையும்தவிர, பாவம்போக்கும் பலியாக ஒரு
வெள்ளாட்டுக்கடாவையும்,

மூன்றாம்நாளிலே பதினொரு காளை எருது ௨௰
களையும், இரண்டு ஆட்டுக்கடாக்களையும், ஒரு
வயதுள்ள பழுதற்ற பதினாலு ஆட்டுக்குட்டிக
ளையும்,— காளை எருதுகளும் ஆட்டுக்கடாக்க ௨௧
ளும் ஆட்டுக்குட்டிகளும் இருக்கிற இலக்கத்
திற்குத்தக்க நியாயமாக அவைகளின் காணிக்
கையையும், அவைகளின் ஊற்றுதல்களையும்,—
அன்றன்றுள்ள சர்வாங்கதகனபலியையும், அ ௨௨
தின் காணிக்கையையும், அதின் ஊற்றுதலையும்
தவிர, பாவம்போக்கும்பலியாக ஒரு வெள்ளாட்
டுக்கடாவையும்,
நான்காம்நாளிலே பத்துக் காளை எருதுகளை ௨௩
யும், இரண்டு ஆட்டுக்கடாக்களையும், ஒரு வய
துள்ள பழுதற்ற பதினாலு ஆட்டுக்குட்டிகளை
யும்,—காளை எருதுகளும் ஆட்டுக்கடாக்களும் ௨௪
ஆட்டுக்குட்டிகளும் இருக்கிற இலக்கத்திற்குத்
தக்க நியாயமாக அவைகளின் காணிக்கையை
யும், அவைகளின் ஊற்றுதல்களையும், — அன் ௨௫
றன்றுள்ள சர்வாங்கதனபலியையும், அதின்
காணிக்கையையும், அதின் ஊற்றுதலையும்தவிர,
பாவம்போக்கும்பலியாக ஒரு வெள்ளாட்டுக்க
டாவையும்,
ஐந்தாம்நாளில் ஒன்பது காளை எருதுகளை ௨௬
யும், இரண்டு ஆட்டுக்கடாக்களையும் ஒருவய
துள்ள பழுதற்ற பதினாலு ஆட்டுக்குட்டிகளை
யும்,—காளை எருதுகளும், ஆட்டுக்கடாக்களும் ௨௭
ஆட்டுக்குட்டிகளும் இருக்கிற இலக்கத்திற்குத்
தக்க நியாயமாய் அவைகளின் காணிக்கையை
யும், அவைகளின் ஊற்றுதல்களையும்,-அன்றன் ௨௮
றுள்ள சர்வாங்கதகனபலியையும், அதின் கா
ணிக்கையையும், அதின் ஊற்றுதலையும்தவிர,
பாவம்போக்கும்பலியாக ஒரு வெள்ளாட்டுக்க
டாவையும்,
ஆறாம்நாளில் எட்டுக் காளை எருதுகளையும், ௨௯
இரண்டு ஆட்டுக்கடாக்களையும், ஒரு வயதுள்ள
பழுதற்ற பதினாலு ஆட்டுக்குட்டிகளையும்,—
காளை எருதுகளும் ஆட்டுக்கடாக்களும் ஆட்டுக் ௩௰
குட்டிகளும் இருக்கிற இலக்கத்திற்குத்தக்க நியா
யமாக அவைகளின் காணிக்கையையும், அவை
களின் ஊற்றுதல்களையும்,—அன்றன்றுள்ள சர் ௩௧
வாங்கதகனபலியையும்,அதின் காணிக்கையையு
ம், அதின் ஊற்றுதல்களையும்தவிரப் பாவம்போக்
கும்பலியாக ஒரு வெள்ளாட்டுக்கடாவையும்,
ஏழாம்நாளில் ஏழு காளை எருதுகளையும், இ ௩௨
ரண்டு ஆட்டுக்கடாக்களையும், ஒருவயதுள்ள பழு
தற்ற பதினாலு ஆட்டுக்குட்டிகளையும்,—காளை ௩௩
எருதுகளும் ஆட்டுக்கடாக்களும் ஆட்டுக்குட்டி
களும் இருக்கிற இலக்கத்திற்குத்தக்க நியாயமாய்
அவைகளின் காணிக்கையையும், அவைகளின்
ஊற்றுதல்களையும்,—அன்றன்றுள்ள சர்வாங்கத ௩௪
கனபலியையும், அதின் காணிக்கையையும்,அ
தின் ஊற்றுதலையும்தவிரப் பாவம்போக்கும்பலி
யாக ஒரு வெள்ளாட்டுக்கடாவையும் செலுத்தக்
கடவீர்கள்.
எட்டாம்நாள் உங்களுக்கு ஆசரிப்புநாளாயி ௩௫

ருக்கக்கடவது; யாதொரு பணிவிடைவேலை
௩௬ யைச் செய்யீர்களாக.—அப்பொழுது நீங்கள்
கர்த்தருக்கு ஆற்றிய வாசனைத் தகனமான சர்வா
ங்கதகனபலியாக, ஒரு காளை எருதையும் ஒரு
ஆட்டுக்கடாவையும், ஒருவயதுள்ள பழுதற்ற
௩௭ ஏழு ஆட்டுக்குட்டிகளையும்,— காளை எருதும்
ஆட்டுக்கடாவும் ஆட்டுக்குட்டிகளும் இருக்கிற
இலக்கத்திற்குத்தக்க நியாயமாய், அவைகளின்
காணிக்கையையும், அவைகளின் ஊற்றுதல்க
௩௮ ளையும்,— அன்றன்றுள்ள சர்வாங்கதகனபலி
யையும், அதின் காணிக்கையையும், அதின்
ஊற்றுதலையும் தவிரப் பாவம்போக்கும்பலியாக
ஒரு வெள்ளாட்டுக்கடாவையும் செலுத்தக்கட
வீர்கள்.
௩௯ உங்கள் பொருத்தனைகளையும் உங்கள் உச்
சாகபலிகளையும் உங்கள் சர்வாங்கதகனபலிக
ளையும் உங்கள் காணிக்கைகளையும் உங்கள் ஊற்
றுதல்களையும் உங்கள் சமாதானபலிகளையும்த
விர, நீங்கள் உங்கள் பண்டிகைகளிலே கர்த்த
ருக்குச் செலுத்தவேண்டியவைகள் இவைகள்
௪௰ தானென்று சொல்லென்றார்.—கர்த்தர் மோசேக்
குக் கற்பித்தபடியெல்லாம் மோசே இஸ்ரவேல்
புத்திரரோடே சொன்னான்.

## ௩௰. அதிகாரம்.

௧. பொருத்தனை தவிர்க்கக்கூடாதென்பது. ௩. கன்னிகையும், ௬. கலியாணப்பெண்ணும், ௯. கைம்பெண்ணும், புருஷனால் தள்ளப்பட்டவளும் அது தவிர்க்கலாமென்பது.

௧ மோசே இஸ்ரவேல் புத்திரருடைய கோத்தி
ரங்களின் தலைவரோடே பேசிச் சொன்னதா
வது: கர்த்தர் கற்பித்தகாரியம் என்னவெனில்,-
௨ ஒருவன் கர்த்தருக்குப் பொருத்தனைபண்ணி,
அல்லது ஆணையிடுகிறதினாலே தன் ஆத்துமா
வின்மேலே கடனைச் சுமத்தவே சுமத்தினால்,
அவன் தன் வார்த்தையைப் பரிசுத்தக்குலைச்ச
லாக்காமல், தன் வாயிலிருந்து புறப்பட்டதின்
படி எல்லாம் செய்யக்கடவன்.
௩ தன் தகப்பன் வீட்டிலிருக்கிற ஒரு பெண்
பிள்ளை தன் சிறுவயதிலே கர்த்தருக்குப் பொருத்
தனைபண்ணி, கடனைச் சுமத்திக்கொண்டால்,—
௪ அப்பொழுது அவள் தகப்பன் அவளுடைய
பொருத்தனையையும் அவள் தன் ஆத்துமாவின்
மேலே கடனைச் சுமத்திக்கொண்டதையும் கேட்
டும், அவளுக்கு ஒன்றும் சொல்லாதிருந்தால், அ
வளுடைய எல்லாப் பொருத்தனைகளும் அவள்
தன் ஆத்துமாவின்மேலே சுமத்திக்கொண்ட எல்
௫ லாக் கடனும் நிற்கும்.—அவளுடைய தகப்பன்
அவளுடைய எல்லாப் பொருத்தனைகளையும்
அவள் தன் ஆத்துமாவின்மேலே கடன்சுமத்திக்
கொண்டதையும் கேட்கிற நாளில், அவளுக்கு
வேண்டாமென்றானேயாகில், அது நிற்காது;
அவள் தகப்பன் அவளுக்கு வேண்டாமென்ற
படியினாலே, கர்த்தர் அதை அவளுக்கு மன்னிப்
பார்.
௬ அவள் பொருத்தனைபண்ணும்பொழுதும்,
அல்லது தன் உதடுகளைத் திறந்து, தன் ஆத்துமா
வின்மேலே கடனைச் சுமத்திக்கொள்ளும்பொ
ழுதும், அவளுக்குப் புருஷன் இருந்தால்,—அப் ௭
பொழுது அவள் புருஷன் அதைக் கேட்டும்,
கேட்கிற நாளில் அவளுக்கு ஒன்றும் சொல்லா
திருந்தால், அவளுடைய பொருத்தனைகளும் அ
வள் தன் ஆத்துமாவின்மேலே சுமத்திக்கொண்
ட அவளுடைய கடன்களும் நிற்கும்.—அவள் ௮
புருஷன் அதைக்கேட்கிற நாளிலே, அவளுக்கு
வேண்டாமென்று சொல்லி, அவள்மேலிருக்
கிற அவள் பொருத்தனையையும் அவள் தன் உத
டுகளைத் திறந்து, தன் ஆத்துமாவின்மேலே சுமத்
திக்கொண்ட கடனையும் செல்லாதேபண்ணி
னானேயாகில், அப்பொழுது கர்த்தர் அதை அவ
ளுக்கு மன்னிப்பார்.
ஒரு கைம்பெண்சாதியும் தள்ளப்பட்டவளு ௯
மானென்றால், எந்தக் கடனைத் தன் ஆத்துமா
வின்மேலே சுமத்திக்கொள்ளுகிறாளோ, அதெல்
லாம் அவள்மேல் நிற்கும்.
அவள் தன் புருஷனுடைய வீட்டிலே பொ ௰
ருத்தனைபண்ணி, அல்லது ஆணையினாலே தன்
ஆத்துமாவின்மேலே கடனைச் சுமத்தினாளேயா
னால்,—அப்பொழுது அவள் புருஷன் அதைக் ௰௧
கேட்டும் அவளுக்கு அது வேண்டாமென்று
சொல்லாமல் மவுனமாயிருந்தால், அவளுடைய
எல்லாப் பொருத்தனைகளும் அவள் தன் ஆத்து
மாவின்மேலே சுமத்திக்கொண்ட எல்லாக் கட
னும் நிற்கும்.—அவள் புருஷன் அவைகளைக் ௰௨
கேட்கிற நாளிலே, செல்லாதே பண்ணினானே
யாகில், அப்பொழுது அவளுடைய பொருத்த
னைகளுக்கானாலும் அவளுடைய ஆத்துமாவின்
கடனுக்கானாலும் அவள் உதடுகளிலிருந்து புறப்
பட்டதொன்றும் நிற்காது; அவள் புருஷன் அ
வைகளைச் செல்லாதே பண்ணினபடியினாலே,
கர்த்தர் அதை அவளுக்கு மன்னிப்பார்.-ஆத்துமா ௰௩
வை ஒடுங்கப்பண்ணுவதற்குப் பண்ணப்பட்ட
எல்லாப் பொருத்தனையையும் எல்லா ஆணையை
யும் அவள் புருஷன் நிற்கப்பண்ணவும்கூடும்,
செல்லாதே போகப்பண்ணவும்கூடும்.—அவள் ௰௪
புருஷன் நாளுக்குநாள் அவளுக்கு ஒன்றும்
சொல்லானாகில், அவன் அவளுடைய எல்லாப்
பொருத்தனைகளையும், அல்லது அவள்மேலிருக்
கிற அவளுடைய எல்லாக் கடன்களையும் நிற்
கப்பண்ணினான்; அவன் அதைக் கேட்டநா
ளில், அவளுக்கு ஒன்றும் சொல்லாதேபோன
தினாலே, அவைகளை நிற்கப்பண்ணினான்.—அ ௰௫
வன் அதைக் கேட்டபிற்பாடு, அவைகளைச்
செல்லாதே போகப்பண்ணினானேயாகில், அவ
ளுடைய அக்கிரமத்தை அவன் சுமப்பானென்
றான்.
புருஷனுக்கும், பெண்சாதிக்கும், தகப்பனுக் ௰௬
கும்,தகப்பன் வீட்டிலே சிறுவயதிலே இருக்கிற
அவன் குமாரத்திக்கும் அடுத்ததும், கர்த்தர் மோ
சேக்குக் கற்பித்ததுமாகிய கட்டளைகள் இவை
கள்தானே.

## ௩௧. அதிகாரம்.

*௧. மீதியானியர் அழிக்கப்பட்டதும் பிலேயாம் கொல்லப்பட்டதும், ௰௩. சேனைத்தலைவர் முதலானவர்கள் ஸ்திரிகளை உயிரோடே வைத்ததற்காக மோசே கோபம் அடைந்தது. ௰௯. இராணுவத்தலைவர்களும் அவர்களால் சிறைபிடிக்கப்பட்டவர்களும் எவ்விதமாய்ச் சுத்திகரிக்கப்படவேண்டுமென்பது. ௨௫. கொள்ளையிட்ட பொருள்களைப் பங்கிட்டுக் கொள்ளும் திட்டம். ௪௮. கர்த்தரின் பொக்கிஷத்திற்குச் சனங்கள் சுவாதீனமாகக் கொடுக்கப்பட்ட காணிக்கை.*

௧ கர்த்தர் மோசேயோடே பேசிச் சொன்னதாவ
௨ து:-இஸ்ரவேல் புத்திரருக்காக[1]மீதியானியருக்கு
நீதியைச் சரிக்கட்டு; பிற்பாடு உன் சனத்தாரண்
டையிலே சேர்த்துக்கொள்ளப்படுவாயென்றார்.
௩ அப்பொழுது மோசே சனத்தோடே பேசிச்
சொன்னதாவது: கர்த்தருக்காக மீதியானியருக்
கு நீதியைச் சரிக்கட்டும்படிக்கு, உங்களில் அ
வர்கள்மேல் யுத்தத்திற்குப் போகத்தக்க மனித
ரைப் பிரித்தெடுங்கள்.
௪ இஸ்ரவேலுடைய எல்லாக் கோத்திரங்களி
லும் ஒவ்வொரு கோத்திரத்தில் ஆயிரம்பேரை
யுத்தத்திற்கு அனுப்பக்கடவீர்களென்றான்.—
௫ அப்படியே ஒவ்வொரு கோத்திரத்தில் ஆயிரம்
ஆயிரம்பேராக இஸ்ரவேலரான அநேகம் ஆயி
ரங்களிலே, பன்னீராயிரம்பேர் யுத்தத்திற்கு ஆய
௬ த்தமாக நிறுத்தப்பட்டார்கள். — அவர்களையும்
ஆசாரியனான எலேயாசாரின் குமாரனாகிய
[2]பினேகாசையும் மோசே யுத்தத்திற்கனுப்பி,
அவன் கையிலே பரிசுத்தமுட்டுகளையும், [3]கெம்
பீரிக்கிற பூரிகைகளையும் கொடுத்துவிட்டான்.-
௭ கர்த்தர் மோசேக்குக் கற்பித்தபடியே அவர்கள்
மீதியானியர்மேல் யுத்தம்பண்ணி, ஆண்சாதிக
௮ ளையெல்லாம் கொன்றுபோட்டார்கள்.— அவர்க
ளை வெட்டிப்போட்டதும்தவிர,மீதியானியரின்
ஐந்து இராசாக்களாகிய ஏவியையும், ரேக்கேமை
யும், சூரையும், ஊரையும், ரேபாவையும் கொன்
றுபோட்டார்கள்; பேயோரின் குமாரனாகிய
[4]பிலேயாமையும் பட்டயத்தினாலே கொன்று
௯ போட்டார்கள். — இஸ்ரவேல் புத்திரர் மீதியா
னியரின் ஸ்திரிகளையும் குழந்தைகளையும் சிறை
பிடித்து, அவர்களுடைய எல்லா மிருகசீவன்க
ளையும் எல்லா மந்தைகளையும் எல்லா ஆஸ்தியை
௰ யும் கொள்ளையிட்டு, — அவர்கள் குடியிருந்த
எல்லா ஊர்களையும் எல்லாக் கோட்டைகளையும்
௰௧ அக்கினியால் சுட்டெரித்து,—தாங்கள் கொள்ளை
யிட்டவை எல்லாவற்றையும் தாங்கள் பிடித்த
நரசீவன் மிருகசீவன் அனைத்தையும் சேர்த்து,–
௰௨ சிறைகளையும் தாங்கள் பிடித்ததையும் கொள்ளை
யிட்டதையும் எரிகோவின் கிட்ட யோர்தானுக்
கு இப்பாலே மோவாபின் சமனான வெளிகளில்
இருந்த பாளயத்திற்கு மோசேயண்டைக்கும்
ஆசாரியனாகிய எலேயாசாரண்டைக்கும் இஸ்ர
வேல் புத்திரரின் சபையண்டைக்கும் கொண்டு
வந்தார்கள்.
௰௩ அப்பொழுது மோசேயும் ஆசாரியனாகிய எலே
யாசாரும் சபையின் எல்லாப் பிரபுக்களும் பா
ளயத்திற்கு வெளியே அவர்களைச் சந்திக்கப்
புறப்பட்டார்கள்.—மோசேயோவென்றால், யுத் ௰௪
தத்திலிருந்துவந்த ஆயிரத்துச் சேர்வைக்காரரும்
நூற்றிற்குச் சேர்வைக்காரருமாகிய இராணுவத்
தலைவர்மேல் கடுங்கோபம் அடைந்து,— அவர்க ௰௫
ளோடே சொன்னதாவது: எல்லாப்பெண்சாதிக
ளையும் உயிரோடே வைத்தீர்களோ? — இதோ ௰௬
பேயோர் விக்கிரகத்தின் காரியத்திலே கர்த்த
ருக்கு விரோதமாய்த் துரோகம்பண்ண, இவர்
கள்தாமே பிலேயாமின் யோசனையினாலே, இஸ்
ரவேல் புத்திரருக்குக் காரணமாயிருந்தார்கள்;
அதினாலே கர்த்தரின் சபையிலே உபாதியும்
வந்ததே.-இப்பொழுதும் குழந்தைகளில் எல்லா ௰௭
ஆண்பிள்ளைகளையும் கொன்று, புருஷரின் அநு
போகத்தை அறிந்த எல்லாப் பெண்சாதிகளையும்
கொன்றுபோடுங்கள். — ஆனால் ஸ்திரிகளிலே ௰௮
புருஷனை அறியாத எல்லாப் பெண்பிள்ளைகளை
யும் உங்களுக்காக உயிரோடே வையுங்கள்.—
நீங்களோவென்றால் ஏழுநாள் பாளயத்திற்குப் ௰௯
புறம்பே தங்குங்கள்; சீவனைக்கொன்றவர்களும்
வெட்டுண்டவர்களைத் தொட்டவர்களுமாகிய
நீங்கள் அனைவரும் [5]மூன்றாம்நாளிலும் ஏழாம்
நாளிலும் உங்களையும் உங்கள் சிறைகளையும்
பாவம்போக்கிச் சுத்திகரித்து,—அந்தப்படியே ௨௰
எல்லா வஸ்திரத்தையும் தோல்மூட்டையையும்
வெள்ளாட்டுமயிரினால் நெய்தவைகளையும் மரத்
தட்டுமுட்டுகளையும் பாவம்போக்கிச் சுத்திகரிக்
கக்கடவீர்களென்றான்.
யுத்தத்திற்குப் போய்வந்த இராணுவமனித ௨௧
ரோடே ஆசாரியனாகிய எலேயாசாரும் சொன்
னதாவது: கர்த்தர் மோசேக்குக் கற்பித்த நியாயப்
பிரமாணத்தின் கட்டளை இதுதானே.— ஆனால் ௨௨
பொன்னும், வெள்ளியும், வெண்கலமும், இரும்
பும், வெள்ளீயமும், காரீயமுமாகிய அக்கினிக்
குக் காட்டத்தக்கதெல்லாம் சுத்தமாகும்படி
க்கு,—அதை அக்கினியைக் கடக்கப்பண்ணக் ௨௩
கடவீர்கள்; தீட்டை நீக்கும் தண்ணீராலும் அது
பாவம்போக்கப்படவேண்டும்; ஆனால் அக்கி
னிக்குக் காட்டத்தகாததை எல்லாம் தண்ணீரி
லே சுத்தம்பண்ணக்கடவீர்கள். — ஏழாம்நாளி ௨௪
லே உங்கள் வஸ்திரங்களை வெளுக்கக்கடவீர்
கள்; அப்பொழுது சுத்தமாயிருப்பீர்கள்; பிற்
பாடு நீங்கள் பாளயத்தில் வரலாமென்றான்.
கர்த்தர் மோசேயோடே சொன்னதாவது:— ௨௫
பிடித்துக்கொண்டுவரப்பட்ட மனிதரையும் மி ௨௬
ருகங்களையும் நீயும் ஆசாரியனாகிய எலேயாசா
ரும் சபையினுடைய பிதாக்களின் தலைவருமா
ய்த் தொகைபார்த்து,— பிடிக்கப்பட்டதை யுத் ௨௭
தத்திற்குப் புறப்பட்டுவந்த இராணுவமனிதருக்
குள்ளும் சபை அனைத்திற்குள்ளும் பாதிபாதி
யாகப் பங்கிடுங்கள்.—சேவகத்திற்குப் போன ௨௮
யுத்தமனிதர் கையிலோவென்றால் கர்த்தருக்
குப் பகுதியாக மனிதரிலும் மாடுகளிலும் கழு
தைகளிலும் ஆடுகளிலும் ஐந்நூற்றில் ஒரு சீவ
னை ஏறெடுப்பாயாக.—கர்த்தருக்கு ஏறெடுக்கும் ௨௯

1 ௪ மோ. ௨௫. ௰௭, ௰௮.—2 ௪ மோ. ௨௫. ௭.—3 ௪ மோ. ௰. ௯.

4 ௪ மோ. ௨௨. ௫.—5 ௪ மோ. ௰௯. ௰௮, ௰௯.

படைப்பாகிய அதை அவர்களுடைய பாதியில்
எடுத்துக்கொண்டு, ஆசாரியனாகிய எலேயாசா
௩௰ ருக்குக் கொடுக்கக்கடவாய்.—இஸ்ரவேல் புத்
திரரின் பாதியிலோவென்றால், நீ மனிதரிலும்,
மாடுகளும் கழுதைகளும் ஆடுகளுமாகிய சகல
வித மிருகங்களிலும் ஐம்பதில் ஒன்றைப் பிடித்
தெடுத்து, அவைகளைக் கர்த்தருடைய வாசஸ்
தலத்தின் காவலைக்காக்கிற இலேவியருக்குக்
௩௧ கொடுக்கக்கடவாயென்றார்.—கர்த்தர் மோசேக்
குக் கற்பித்தபடியே, மோசேயும் ஆசாரியனா
கிய எலேயாசாரும் செய்தார்கள்.
௩௨ இராணுவசனம் கொள்ளையிட்டுப் பிடித்த
தில், மீதியாயிருந்தது அறுநூற்றெழுபத்தையா
௩௩ யிரம்ஆடுகளும்,-எழுபத்திராயிரம் மாடுகளும்,—
௩௪, ௩௫ அறுபத்தோராயிரம் கழுதைகளும்,—ஸ்திரி
களிலே புருஷனை அறியாத மனிதசீவனெல்
லாம் முப்பத்திராயிரம் சீவனுமாயிருந்தன.
௩௬ யுத்தத்திற்குப்புறப்பட்டவர்களின் பங்காகிய
பாதியின் இலக்கமானது ஆடுகள் முந்நூற்றுமுப்
௩௭ பத்தேழாயிரத்து ஐந்நூறு.-இந்த ஆடுகளிலே கர்த்
தருக்குப் பகுதியானது, அறுநூற்று எழுபத்தைந்
௩௮ து. — மாடுகள் முப்பத்தாறாயிரம்; அவைகளில்
கர்த்தருக்குப் பகுதியானது எழுபத்திரண்டு.—
௩௯ கழுதைகள் முப்பதினாயிரத்து ஐந்நூறு; அவை
களிலே கர்த்தருக்கு உண்டான பகுதி அறுபத்
௪௰ தொன்று.—மனிதசீவன் பதினாயிரம்; அவைக
ளிலே கர்த்தருக்கு உண்டான பகுதி முப்பத்தி
௪௧ ரண்டுசீவன்.-கர்த்தருக்கு ஏறெடுத்த அந்தப்பகு
தியை மோசே கர்த்தர் தனக்குக் கற்பித்தபடியே
ஆசாரியனாகிய எலேயாசாருக்குக் கொடுத்தான்.
௪௨ யுத்தம்பண்ணின மனிதருக்குள்ளும் இஸ்ர
வேல் புத்திரருக்குள்ளும் மோசே பாதிபாதியா
கப் பங்கிட்டதின்படியே சபையின் பாதிப்
௪௩ பங்கானது என்னவெனில்,—ஆடுகளில் முந்நூ
௪௪ ற்று முப்பத்தேழாயிரத்து ஐந்நூறு.—மாடுகளில்
௪௫ முப்பத்தாறாயிரம்.-கழுதைகளில் முப்பதினாயி
௪௬ ரத்து ஐந்நூறு.—மனிதசீவனிலே பதினாறாயிரம்
௪௭ தானே. — இஸ்ரவேல் புத்திரரின் பாதிப்பங்கா
கிய இந்த மனிதரிலும் மிருகசீவன்களிலும் மோ
சே ஐம்பதில் ஒன்றைப் பிடித்தெடுத்து, அவைக
ளைக் கர்த்தர் தனக்குக் கற்பித்தபடியே, கர்த்த
ருடைய வாசஸ்தலத்தின் காவலைக் காக்கிற
இலேவியருக்குக் கொடுத்தான்.
௪௮ பிற்பாடு இராணுவசேனைகளின் தலைவனாகி
ய ஆயிரத்துச்சேர்வைக்காரரும் நூற்றிற்குச்சேர்
வைக்காரரும் மோசேயண்டையில் சேர்ந்துவந்
௪௯ து,-அவனோடே சொன்னதாவது: உம்முடைய
ஊழியக்காரராகிய நாங்கள் எங்கள்கீழிருக்கிற
யுத்தமனிதரைத் தொகைபார்த்தோம்; எங்களில்
௫௰ ஒருவனும் குறையவில்லை.—ஆகையால் கர்த்த
ரின் சந்நிதியில் எங்கள் ஆத்துமாக்களுக்காகப்
பாவநிவிர்த்தியை உண்டாக்கும்படிக்கு, நாங்
கள் அவரவர் கண்டுபிடித்தபடியே, பொன்பண
திகளாகிய கடையங்களையும், சரிகளையும், மோ
திரங்களையும், கடுக்கன்களையும், காப்புகளையும்
கர்த்தருக்குக் காணிக்கையாகக் கொண்டுவந்
தோம் என்றார்கள்.—அப்பொழுது மோசேயும் ௫௧
ஆசாரியனாகிய எலேயாசாரும் சகலவித வேலை
யுள்ள பணதிகளான அந்தப் பொன்னை அவர்
கள் கையிலே வாங்கினார்கள்.—இப்படி ஆயிரத் ௫௨
துச்சேர்வைக்காரராலும் நூற்றிற்குச் சேர்வைக்
காரராலும் கர்த்தருக்கு ஏறெடுக்கும் காணிக்கை
யாக, செலுத்தப்பட்ட பொன்னெல்லாம் பதினா
யிரத்து எழுநூற்று ஐம்பது சேக்கல் நிறையாயி
ருந்தன.—சேவகத்திற்குப் போன மனிதர் அவரவ ௫௩
வர் தங்களுக்காகக் கொள்ளையிட்டிருந்தார்கள்.—
அந்தப் பொன்னை மோசேயும் ஆசாரியனாகிய ௫௪
எலேயாசாரும் ஆயிரத்துச்சேர்வைக்காரர் கையி
லும் நூற்றிற்குச்சேர்வைக்காரர் கையிலும் வாங்
கி, இஸ்ரவேல் புத்திரரின் நினைப்புக்காக ஆசரி
ப்புக்கூடாரத்திலே கர்த்தருக்குமுன்பாகக் கொ
ண்டுவந்து வைத்தார்கள்.

## ௩௨. அதிகாரம்.

௧. ரூபேன் புத்திரரும், காத் புத்திரரும், தாம் இருந்த யோர்தான் நதியின் பக்கத்தில் தங்கள் காணியாட்சியைத் தரும்படி கேட்டது. ௬. மோசே அவர்களைக் கடிந்துகொண்டது. ௰௬. அவர்கள் அவனைச் சமாதானப்படுத்தினது. ௩௩. அவன் அந்த நிலத்தை அவர்களுக்கு நியமித்தது. ௩௯. அதை அவர்கள் செயித்தது.

ரூபேன் புத்திரருக்கும் காத் புத்திரருக்கும் ஆடு ௧
மாடுகள் மகா திரட்சியாயிருந்தன; அவர்கள் யா
சேர் தேசத்தையும் கிலேயாத்தேசத்தையும் பார்க்
கிறபொழுது, அது ஆடுமாடுகளுக்கான இட
மென்று கண்டார்கள். — ஆகையால் அவர்கள் ௨
வந்து, மோசேயோடும் ஆசாரியனாகிய எலேயா
சாரோடும் சபையின் பிரபுக்களோடும் சொன்
னதாவது: — கர்த்தர் இஸ்ரவேல் சபைக்குமுன் ௩
பாக முறியடித்த ஆத்ரோத்தும், தீபோனும், யா
சேரும், நிம்ருவும், எஸ்ரபோனும், எலேயாலெ
யும்,செபாமும்,நெபோவும், பெயோனும் என்ற
பட்டணங்களிருக்கிற தேசம், ஆடுமாடுகளுக்
கான தேசம். — உம்முடைய ஊழியக்காரருக் ௪
கோவென்றால், ஆடுமாடுகள் இருக்கின்றன. —
உம்முடைய கண்களுக்குமுன்பாக எங்களுக் ௫
குத் தயை கிடைத்ததானால், இந்தத் தேசம் உம்
முடைய ஊழியக்காரருக்குக் காணியாட்சியா
கக் கொடுக்கப்படட்டும்; எங்களை யோர்தான்
நதிக்கு அப்பாலே கடந்துபோகப்பண்ணீராக
வென்றார்கள்.
அப்பொழுது மோசே அவர்களுக்குச் சொன் ௬
னதாவது: உங்கள் சகோதரர் யுத்தத்திற்குப் போ
கையில், நீங்கள் இங்கே இருப்பீர்களோ,—கர்த் ௭
தர் இஸ்ரவேல் புத்திரருக்குக் கொடுத்த தேசத்
திற்கு அவர்கள் ஏகிப்போகாதபடிக்கு, நீங்கள்
அவர்கள் இருதயத்தைத் திடனற்றுப்போகப்ப
ண்ணுகிறதென்ன?-இப்படித்தான் உங்கள் பிதா ௮
க்கள் நான் அவர்களைத் தேசத்தைப் பார்க்கிறதற்
குக் காதேஸ்பர்னேயாவிலிருந்து அனுப்பின
பொழுது பண்ணினார்கள்.-அவர்கள் எஸ்கோல் ௯
பள்ளத்தாக்குமட்டும் போய், தேசத்தைப் பார்த்
துவந்து, இஸ்ரவேல் புத்திரருக்குக் கர்த்தர் கொ

டுத்த தேசத்திற்கு அவர்கள் போகாதபடிக்கு,
[1]அவர்கள் இருதயத்தைத் திடனற்றுப்போகப்ப
௰ ண்ணினார்கள்.—ஆகையால் கர்த்தர் அந்நாளிலே
௰௧ கோபம்மூண்டவராகி,—[2]நம்மை உத்தமமாய்ப்
பின்பற்றின கேனேசியனான எப்புன்னேயின்
குமாரன் காலேப்பையும் நூனின் குமாரன் யோ
௰௨ சுவாவையுந்தவிர,—எகிப்திலிருந்து வந்தேறின
இருபதுவயதுமுதலான மனிதர், நாம் ஆபிரகா
முக்கும் ஈசாக்குக்கும் யாக்கோபுக்கும் ஆணை
யிட்ட தேசத்தைக் காண்பதில்லை; ஏனெனில்
நம்மை உத்தமமாய்ப் பின்பற்றாதேபோனார்க
௰௩ ளென்று ஆணையிட்டார்.—அப்படியே கர்த்தர்
இஸ்ரவேலின்மேல் கோபமூண்டவராகிக் கர்த்த
ரின் பார்வைக்குப் பொல்லாப்பானதைச்செய்த
அந்தச் சந்ததியெல்லாம் நிர்மூலமாகும்மட்டும்
அவர்களை வனாந்தரத்தில் நாற்பதுவருஷம் அலை
௰௪ யப்பண்ணினார்.—இப்பொழுதும் இதோ இஸ்ர
வேலின்மேலிருக்கிற கர்த்தருடைய கோபத்தின்
உக்கிரத்தை இன்னம் அதிகரிக்கப்பண்ண, நீங்
கள் உங்கள் பிதாக்களின் ஸ்தலத்திலே பாவம
னிதரான பெருங்கூட்டமாய் எழும்பினீர்கள்.—
௰௫ நீங்கள் அவரைவிட்டுப் பின்வாங்கினால், அவர்
இன்னம் அதை வனாந்தரத்தில் இருக்கப்பண்ணு
வார்; இப்படி நீங்கள் இந்தச் சனத்தையெல்லாம்
அழியப்பண்ணுவீர்களென்றான்.
௰௬ அப்பொழுது அவர்கள் அவனண்டையில்
சேர்ந்து சொன்னதாவது: எங்கள் ஆடுமாடுகளுக்
காகத் தொழுவங்களையும் எங்கள் பிள்ளைகளுக்
காகப் பட்டணங்களையும் இங்கே கட்டுவோம்.—
௰௭ நாங்களோவென்றால் இஸ்ரவேல் புத்திரரை அ
வர்கள் தானத்திலே கொண்டுபோய்ச் சேர்க்கும்
அளவும், யுத்தத்திற்கு ஆயத்தப்பட்ட தீவிரத்தோ
டே அவர்களுக்கு முன்னாக நடப்போம்; இதற்
குள் எங்கள் பிள்ளைகள் தேசத்துக் குடிகளின்
நிமித்தம் அரணான பட்டணங்களிலே குடியிருக்
௰௮ கும்.—இஸ்ரவேல் புத்திரர் அவரவர் தங்கள்சுதந்
தரத்தைச் சுதந்தரித்துக்கொள்ளும்மட்டும், நாங்
கள் எங்கள் வீடுகளுக்குத் திரும்புவதில்லை.—
௰௯ ஏனென்றால் யோர்தானுக்கு இப்பாலே கிழக்கே
எங்கள் சுதந்தரம் எங்களுக்குண்டானபடியினா
லே, நாங்கள் அவர்களோடேகூட யோர்தானுக்
கு அக்கரையிலும், அதற்கப்பாலேயும் சுதந்தரம்
வாங்குவதில்லை என்றார்கள்.
௨௰ அப்பொழுதுமோசே அவர்களோடே சொன்
னதாவது: நீங்கள் இந்த வார்த்தையின்படியே
செய்து, கர்த்தருக்குமுன்பாக யுத்தத்திற்கு ஆயத்
௨௧ தப்பட்டு,—கர்த்தர் தம்முடைய சத்துருக்களைத்
தம்முடைய முகத்திற்குமுன்பாகத் துரத்திவிட்
டுத் தீரும்மட்டும், நீங்கள் அவரவர் அவருக்கு
முன்பாக ஆயுதப்பாடானவர்களாய் யோர்தா
௨௨ னைக் கடந்துபோயிருந்தீர்களானால்,—அப்பொ
ழுது தேசம் கர்த்தருக்குமுன்பாகக் கீழ்ப்பட்ட
பிற்பாடு, நீங்கள் கர்த்தருக்கும் இஸ்ரவேலுக்கும்
முன்பாகக் குற்றம் சுமவாதவர்களாய்த் திரும்ப
லாம்; அப்பொழுது இந்தத் தேசம் கர்த்தருக்கு
முன்பாக உங்களுக்குக் காணியாட்சியாயிருக்
கும்.—இப்படிச் செய்யாதேபோனீர்களேயாகில், ௨௩
அப்பொழுது இதோ கர்த்தருக்கு விரோதமாகப்
பாவம்செய்தீர்கள் என்பதை உங்கள் பாவம் உங்
களைக் கண்டுபிடிக்கும்பொழுது உணருவீர்கள்.—
உங்கள் பிள்ளைகளுக்காகப் பட்டணங்களையும் ௨௪
உங்கள் மந்தைக்காகத் தொழுவங்களையும் உங்க
ளுக்குக் கட்டி, உங்கள் வாயிலிருந்து புறப்பட்
டதின்படியே செய்யுங்களென்றான்.

அப்பொழுது காத் புத்திரரும் ரூபேன் புத்திர ௨௫
ரும் மோசேயோடே சொன்னதாவது: எங்கள்
ஆண்டவன் கற்பித்தபடியே உம்முடைய ஊழி
யக்காரர் செய்வார்கள்.—எங்கள் பிள்ளைகளும், ௨௬
எங்கள் பெண்சாதிகளும், எங்கள் ஆடுமாடுக
ளும், எங்களுடைய எல்லா மிருகஜீவன்களும்,
இங்கே கீலேயாத்தின் பட்டணங்களில் இருக்
கும்.—உம்முடைய ஊழியக்காரரோவெனில், ௨௭
எங்கள் ஆண்டவன் சொன்னபடியே, எல்லா
ரும் சேவகத்திற்கு ஆயத்தப்பட்டவர்களாய், கர்த்
தருக்குமுன்பாக யுத்தத்திற்குப்போவார்கள் என்
றார்கள்.—அப்பொழுது மோசே அவர்களுக்காக ௨௮
ஆசாரியனாகிய எலெயாசாருக்கும் நூனின் குமா
ரனாகிய யோசுவாவுக்கும் இஸ்ரவேல் புத்திரரு
டைய கோத்திரங்களின் பிதாக்களிலே தலைவ
ரானவர்களுக்கும் கற்பனைதந்து,—அவர்களோ ௨௯
டே சொன்னதாவது: காத் புத்திரரும் ரூபேன்
புத்திரரும் அவரவர் கர்த்தருக்குமுன்பாக யுத்தத்
திற்கு ஆயத்தப்பட்டவர்களாய், உங்களோடே
கூட யோர்தானைக் கடந்துபோனால், அப்பொ
ழுது தேசம் உங்களுக்குமுன்பாகக் கீழ்ப்பட்ட
பிற்பாடு, அவர்களுக்குக் கீலேயாத் தேசத்தைக்
காணியாட்சியாகக்கொடுக்கக்கடவீர்கள்.—உங் ௩௰
களோடேகூட யுத்தத்திற்கு ஆயத்தப்பட்டவர்க
ளாய்க் கடந்துபோகாதிருந்தார்களேயாகில், அ
வர்கள் உங்கள் நடுவே கானான்தேசத்திலே காணி
யாட்சி அடையக்கடவர்கள் என்றான்.—காத் புத் ௩௧
திரரும் ரூபேன் புத்திரரும் பிரதியுத்தாரமாகச்
சொன்னதாவது: கர்த்தர் உம்முடைய ஊழியக்
காரருக்குச் சொன்னதின்படியே செய்வோம்.—
நாங்கள் கர்த்தருக்குமுன்பாக யுத்தத்திற்கு ஆயத் ௩௨
தப்பட்டவர்களாய், கானான்தேசத்திற்கு ஏகிப்
போவோம்; அப்படியே யோர்தானுக்கு இப்பா
லே எங்கள் சுதந்தரத்தின் காணியாட்சி எங்க
ளுக்கு இருக்குமென்றார்கள்.

அப்பொழுது மோசே காத் புத்திரருக்கும், ௩௩
ரூபேன் புத்திரருக்கும், யோசேப்பின் குமாரனா
கிய மனாசேயின் பாதிக் கோத்திரத்திற்கும், அ
மோரியரின் இராசாவாகிய சீகோனின் இராச்
சியமும் பாசானின் இராசாவாகிய ஓகின் இராச்
சியமுமான தேசத்தையும், அதின் எல்லைகளிலே

1 ௪ மோ. ௰௩. ௩௨.

2 ௪ மோ. ௰௪. ௨௩—௨௪.

சுற்றிலுமிருக்கிற அதின் பட்டணங்களையும்
கொடுத்தான்.
௩௪ காத் புத்திரர் தீபோனும் ஆத்ரோத்தும் ஆரோ
௩௫ வேரும்,—ஆத்ரோத்தும், சோப்பானும், யாசே
௩௬ ரும், யொப்பேகாவும்,—பெத்நிம்ருவும் பெத்தார
னும் என்ற அரணான பட்டணங்களையும் ஆட்
டுத் தொழுவங்களையும் கட்டினார்கள்.
௩௭ ரூபேன் புத்திரர் எஸ்போனையும் எலெயாலே
௩௮ யையும் கிரியத்தாயீமையும்,—நாமங்கள் மாற்றப்
பட்ட நேபோவையும் பாகால்மேயோனையும்
சீப்மாவையும் கட்டி, தாங்கள் கட்டின பட்ட
ணங்களுக்கு வேறே நாமங்களைத் தரித்தார்கள்.
௩௯ மனாசேயின் குமாரனாகிய மாகீரின் புத்திரர்
கீலேயாத்திற்குப் போய், அதைக் கட்டிக்
கொண்டு, அதிலிருந்த அமோரியரைத் துரத்தி
௪௰ விட்டார்கள்.—அப்பொழுது மோசே கீலேயாத்
தை மனாசேயின் குமாரனாகிய மாகீரின் புத்திர
ருக்குக் கொடுத்தான்; அவர்கள் அதிலே குடியே
௪௧ றினார்கள்.—மனாசேயின் குமாரனாகிய யாவீர்
போய், அவர்களுடைய கிராமங்களைக் கட்டிக்
கொண்டு, அவைகளுக்கு யாவீரின் கிராமங்க
௪௨ ளென்று பேரிட்டான்.—நோபாக் போய், கே
னாத்தையும் அதின் கிராமங்களையும் கட்டிக்
கொண்டு, அதற்குத் தன் நாமத்தின்படியே நோ
பாக்கென்று பெயரைத் தரித்தான்.

## ௩௩. அதிகாரம்.

௧. இஸ்ரவேல் சனங்கள் செய்த நாற்பத்திரண்டு பிரயாணம். ௫௰. கானான்தேசத்தார் அழிவுக்கு நியமிக்கப்பட்டது.

௧ மோசே ஆரோன் என்றவர்களுடைய கையின்
கீழ்த் தங்கள் சேனைகளின்படியே எகிப்துதேசத்
திலிருந்து புறப்பட்ட இஸ்ரவேல் புத்திரரு
௨ டைய பயணங்களாவது:—எனெனில் அவர்கள்
தங்கள் பயணங்களிலே புறப்பட்டுவிட்ட இ
டங்களை மோசே கர்த்தருடைய கட்டளையின்
படியே எழுதினான்; அவர்கள் ஒவ்வொரு இடங்
களிலிருந்து புறப்படப்பண்ணின பயணங்க
ளாவது:
௩ அவர்கள் முதலாம்மாதத்தின் பதினைந்தாம்தே
தியிலே ராமேசேசிலிருந்து பயணம் போனார்
கள்; பஸ்காவின் இரண்டாம் நாளிலே இஸ்ர
வேல் புத்திரர், எல்லா எகிப்தரும் பார்க்க,
௪ உயர்ந்த கையினாலே புறப்பட்டார்கள். — அப்
பொழுது எகிப்தர் கர்த்தர் தங்களுக்குள்ளே சங்
கரித்த தலைச்சன் பிள்ளைகளையெல்லாம் அடக்
கம்பண்ணினார்கள்; அவர்கள் தேவர்களிலும்
கர்த்தர் நியாயத்தீர்ப்புகளைச் செய்திருந்தார்.—
௫ இஸ்ரவேல் புத்திரர் ராமேசேசிலிருந்து பய
ணம்போய், சுக்கோத்திலே பாளயமிறங்கினார்
௬ கள்.—சுக்கோத்திலிருந்து பயணம்போய், வனா
ந்தரத்தின் கடைசியான ஏத்தாமிலே பாளய
௭ மிறங்கினார்கள். — ஏத்தாமிலிருந்து பயணம்
போய், பாகால்சேபோனுக்கு எதிராக இருக்கிற
ஈரோத் பள்ளத்தாக்கின் முன்னடிக்குத் திரும்
பி, மிக்தோலுக்குமுன்பாகப் பாளயமிறங்கி
௮ னார்கள்.—ஈரோத்தைவிட்டுப் பயணம்பண்ணி,
சமுத்திரத்தை நடுவாகக் கடந்து, வனாந்தரத்திற்
குப் போய்,ஏத்தாம் வனாந்தரத்திலே மூன்றுநாள்
நடந்து, மாராவிலே பாளயமிறங்கினார்கள்.—
மாராவிலிருந்து பயணம்போய், ஏலீமுக்கு வந் ௯
தார்கள்; ஏலீமிலே பன்னிரண்டு நீரூற்றுகளும்
எழுபது பேரீச்சுமரங்களும் இருந்தன; அங்கே
பாளயமிறங்கினார்கள்.—ஏலீமிலிருந்துபயணம் ௰
போய், நாணல் சமுத்திரத்தண்டையிலே பாளய
மிறங்கினார்கள்.—நாணல்சமுத்திரத்தைவிட்டுப் ௰௧
பயணம்போய், சீன்வனாந்தரத்திலே பாளயமி
றங்கினார்கள். — சீன்வனாந்தரத்திலிருந்து பய ௰௨
ணம்போய், தொப்பக்காவிலே பாளயமிறங்கி
னார்கள்.—தொப்பக்காவிலிருந்து பயணம்போய், ௰௩
ஆலூசிலே பாளயமிறங்கினார்கள். — ஆலூசிலி ௰௪
ருந்து பயணம்போய், ரவீதீமிலே பாளயமிறங்கி
னார்கள்; அங்கே சனத்திற்குக் குடிக்கத் தண்
ணீரில்லாதிருந்தது. — ரவீதீமிலிருந்து பயணம் ௰௫
போய், சீனாயின்வனாந்தரத்திலே பாளயமிறங்கி
னார்கள்.—சீனாயின்வனாந்தரத்திலிருந்து பயணம் ௰௬
போய், இச்சையின் பிரேதக்குழிகளுக்கு வந்து,
பாளயமிறங்கினார்கள்.— இச்சையின் பிரேதக் ௰௭
குழிகளைவிட்டுப் பயணம்போய், ஆத்சேரோத்
திலே பாளயமிறங்கினார்கள்.—ஆத்சேரோத்திலி ௰௮
ருந்து பயணம்போய், ரித்மாவிலே பாளயமிறங்
கினார்கள்.—ரித்மாவிலிருந்து பயணம்போய், ரிம் ௰௯
மோன் பேரேத்சிலே பாளயமிறங்கினார்கள்.—
ரிம்மோன் பேரேத்சிலிருந்து பயணம்போய், ௨௰
லிப்னாவிலே பாளயமிறங்கினார்கள்.—லிப்னாவி ௨௧
லிருந்து பயணம்போய், ரீசாவிலே பாளயமிறங்
கினார்கள்.—ரீசாவிலிருந்து பயணம்போய், கே ௨௨
லத்தாவிலே பாளயமிறங்கினார்கள்.—கேலத்தா ௨௩
விலிருந்து பயணம்போய், சாப்பேர் மலையிலே
பாளயமிறங்கினார்கள்.—சாப்பேர் மலையிலிருந் ௨௪
து பயணம்போய், ஆர்தாவிலே பாளயமிறங்கி
னார்கள்.—ஆர்தாவிலிருந்து பயணம்போய், மக் ௨௫
கெலோத்திலே பாளயமிறங்கினார்கள்.—மக்கெ ௨௬
லோத்திலிருந்து பயணம்போய், தாகாத்திலே
பாளயமிறங்கினார்கள். — தாகாத்திலிருந்து பய ௨௭
ணம்போய், தாருகிலே பாளயமிறங்கினார்கள்.—
தாருகிலிருந்து பயணம்போய் மித்காவிலே பா ௨௮
ளயமிறங்கினார்கள்.—மித்காவிலிருந்து பயணம் ௨௯
போய், அஸ்மோனாவிலே பாளயமிறங்கினார்
கள்.—அஸ்மோனாவிலிருந்து பயணம்போய்,மொ ௩௰
செரோத்திலே பாளயமிறங்கினார்கள்.—மொசெ ௩௧
ரோத்திலிருந்து பயணம்போய், பெனெயாக்கா
னிலே பாளயமிறங்கினார்கள்.—பெனெயாக்கா ௩௨
னிலிருந்து பயணம்போய், கித்காத் மலையிலே
பாளயமிறங்கினார்கள்.—கித்காத் மலையிலிருந்து ௩௩
பயணம்போய், யோத்பாத்தாவிலே பாளயமி
றங்கினார்கள்.—யோத்பாத்தாவிலிருந்து பயணம் ௩௪
போய், ஆப்பெரோனாவிலே பாளயமிறங்கினார்
கள்.—ஆப்பெரோனாவிலிருந்து பயணம்போய், ஏத் ௩௫
செயோன்கேபேரிலே பாளயமிறங்கினார்கள்.—
ஏத்செயோன்கேபேரிலிருந்து பயணம்போய்,கா ௩௬
தேசாகிய சீனாய்வனாந்தரத்திலே பாளயமிறங்கி

௩௭ னார்கள். — காதேசிலிருந்து பயணம்போய், ஏ
தோம் தேசத்தின் எல்லையிலிருக்கிற ஓர் பர்வ
தத்தண்டையிலே பாளயமிறங்கினார்கள்
௩௮ அப்பொழுது ஆசாரியனாகிய ஆரோன் கர்த்த
ருடைய கட்டளையின்படியே ஓர் பர்வதத்தின்
மேலேறி, அங்கே இஸ்ரவேல் புத்திரர் எகிப்து
தேசத்திலிருந்து புறப்பட்ட நாற்பதாம் வருஷம்
ஐந்தாம்மாதம் முதல்தேதியிலே மரணம் அடைந்
௩௯ தான்.—ஆரோன் ஓர் பர்வதத்தில் மரணமடை
கிறபொழுது, நூற்றிருபத்துமூன்று வயதாயிருந்
தான்.
௪௰ அந்நாள்களிலே கானான்தேசத்தில் தெற்கே
குடியிருந்த ஆராத்தென்னும் இராசாவாகிய கா
னானியன் இஸ்ரவேல் புத்திரர் வருகிறதைக்
௪௧ கேட்டான்.—ஓர் பர்வதத்தைவிட்டுப் பயணம்
போய், சல்மோனாவிலே பாளயமிறங்கினார்
௪௨ கள். — சல்மோனாவிலிருந்து பயணம்போய்,
௪௩ பூனோனிலே பாளயமிறங்கினார்கள்.—பூனோனி
லிருந்து பயணம்போய், ஓபோத்திலே பாளய
௪௪ மிறங்கினார்கள். — ஓபோத்திலிருந்து பயணம்
போய், மோவாபின் எல்லையிலுள்ள ஆபரீமின்
௪௫ மேடுகளிலே பாளயமிறங்கினார்கள்.—அந்த மே
டுகளைவிட்டுப் பயணம்போய், தீபோன்காத்தி
௪௬ லே பாளயமிறங்கினார்கள். — தீபோன்காத்திலி
ருந்து பயணம்போய், அல்மோன்திபலத்தாயிமி
௪௭ லே பாளயமிறங்கினார்கள். — அல்மோன்திப
லத்தாயிமிலிருந்து பயணம்போய், நேபோவுக்கு
எதிரான ஆபரீமின் மலைகளிலே பாளயமிறங்கி
௪௮ னார்கள்.—ஆபரீமின் மலைகளிலிருந்து பயணம்
போய், எரிகோவின்கிட்ட யோர்தானண்டை
யில் இருக்கிற மோவாபின் சமனான வெளிகளி
௪௯ லே பாளயமிறங்கினார்கள்.—யோர்தானண்டை
யில் இருக்கிற மோவாபின் சமனான அந்த வெ
ளிகளில் அவர்கள் பெத்யெசிமோத்தைத்துவக்கி
ஆபேல்சித்தீம்மட்டும் பாளயமிறங்கி இருந்
தார்கள்.
௫௰ கர்த்தர் எரிகோவின்கிட்ட யோர்தானண்டை
யில் இருக்கிற மோவாபின் சமனான வெளிகளி
லே மோசேயோடே பேசிச் சொன்னதாவது:—
௫௧ நீ இஸ்ரவேல் புத்திரரோடே பேசிச் சொல்ல
வேண்டியதேதெனில், நீங்கள் யோர்தானைக்
கடந்து, கானான்தேசத்திலே வரும்பொழுது,—
௫௨ தேசத்துக் குடிகளையெல்லாம் உங்களுக்குமுன்
பாகத் துரத்திவிட்டு, அவர்களுடைய எல்லாச்
சிலைகளையும் வார்ப்பிக்கப்பட்ட அவர்களுடை
ய எல்லாச் சுரூபங்களையும் அழித்து, அவர்கள்
மேடைகளையெல்லாம் நிர்மூலமாக்கிப்போட்
௫௩ டு. — தேசத்தைச் சுதந்தரித்துக்கொண்டு, அதி
லே குடியிருக்கக்கடவீர்கள்; ஏனெனில் உங்க
ளுக்கு அந்தத் தேசத்தைச் சுதந்தரித்துக்கொள்
௫௪ ளும்படிக்குக் கொடுத்தோம். — சீட்டுகளைப்
போட்டு, தேசத்தை உங்கள் வம்சங்களுக்குச்
சுதந்தரங்களாகப் பங்கிட்டு, அநேகருக்கு அநே
கமும் கொஞ்சமானவர்களுக்குக் கொஞ்சமும்
சுதந்தரமாகக் கொடுக்கக்கடவீர்கள்; அவரவர்க்
குச் சீட்டு எவ்விடத்திற்கு விழுகிறதோ, அவ்வி
டம் அவனுக்கிருக்கும், உங்கள் பிதாக்களுடைய
கோத்திரங்களின் பேருக்குச் சுதந்தரித்துக்கொ
ள்ளக்கடவீர்கள்.—நீங்கள் தேசத்தின் குடிகளை ௫௫
உங்களுக்குமுன்பாகத் துரத்திவிடாமல் போ
னீர்களேயானால், அப்பொழுது அவர்களில் நீங்
கள் மீதியாக வைக்கிறவர்கள், உங்கள் கண்க
ளில் முள்ளுக்களும் உங்கள் விலாக்களிலே கூர்
களுமாகி, உங்களை நீங்கள் குடியிருக்கிற தேசத்
திலே நெருக்கிப்போடுவார்கள். — அப்படியே ௫௬
சம்பவிப்பதேதெனில், நாம் அவர்களுக்குச்
செய்ய நினைத்ததை உங்களுக்குச் செய்வோ
மென்று சொல்லென்றார்.

## ௩௪. அதிகாரம்.

௧. அத்தேசத்தின் எல்லைகள், ௰௬. அத்தேசத்தைப் பகிர்ந்துகொடுப்பவர்களின் பெயர்.

கர்த்தர் மோசேயோடே பேசிச் சொன்னதா ௧
வது:—நீ இஸ்ரவேல் புத்திரருக்குக் கற்பித்துச் ௨
சொல்லவேண்டியதேதெனில், நீங்கள் கானான்
தேசத்திலே வருகிறபொழுது, உங்களுக்குச் சுத
ந்தரமாகக் கொடுக்கப்படும் தேசம் தன் எல்லை
களோடிருக்கிற கானான்தேசம்தானே.
உங்களுக்குத் தென்மூலை, சீன்வனாந்தரம் ௩
துவக்கி ஏதோம் தேசத்தின் ஓரமாய்ப் போவது;
தெற்கின் எல்லை கிழக்கே இருக்கிற உப்புக்கட
லின் முனைதுவக்கி, — அங்கேயிருந்து அக்கே ௪
ராபீமின் மேடுகளைச் சுற்றி, சீன்மட்டும் போய்,
தெற்கிலே காதேஸ்பற்னேயாவுக்கும் அங்கேயி
ருந்து ஆத்சார் அதாருக்கும் அங்கேயிருந்து அஸ்
மோனாவுக்கும் போய்,—அஸ்மோனாவிலிருந்து ௫
எகிப்தின் ஆறுமட்டும் சுற்றிப்போய், கடலிலே
முடிவதாக.
மேற்கே பெரிய சமுத்திரமே உங்களுக்கு எல் ௬
லை; அதுவே உங்களுக்கு மேற்குப்புறமான எல்
லையாயிருப்பது.
உங்களுக்கு வடக்கு எல்லையாவதேதெனில், ௭
பெரிய சமுத்திரம்துவக்கி ஓரென்ற பர்வதத்தை
நீங்கள் உங்களுக்குக் குறிப்பாக வைத்து,—ஓர் ௮
பர்வதம்துவக்கி ஆமாத்திற்குப் போகிற வழி
யைக்குறிப்பாக வைப்பீர்களாக; அங்கேயிருந்து
எல்லை சேதாத்திற்குப் போய்,—அங்கேயிருந்து ௯
அது சிப்ரோனுக்குப் போய், ஆத்சார் ஏனானி
லே முடிந்துபோவதாக; அதுவே உங்களுக்கு
வடபுறமான எல்லையாயிருக்கும்.
உங்களுக்குக் கிழக்கு எல்லையாக ஆத்சார் ௰
ஏனானிலிருந்து சேப்பாமைக் குறிப்பாக வைப்
பீர்களாக. — சேப்பாமிலிருந்து எல்லையானது ௰௧
ஆயினுக்குக் கிழக்கான ரிப்லாவுக்கு இறங்கி,
அங்கேயிருந்து அது கின்னரேத் கடலுக்கு
இறங்கி, அதின் கீழ்க்கரையோடே போய்,—
அங்கேயிருந்து அது யோர்தானுக்கு இறங்கி, ௰௨
உப்புக்கடலில் முடிந்துபோவதாக; அதுவே
உங்களுக்குத் தன்னுடைய சுற்றெல்லைகளின்
படியே உண்டாயிருக்கும் தேசமென்று சொல்
லென்றார்.

௰௩ அப்பொழுது மோசே இஸ்ரவேல் புத்திரருக்
குக் கற்பித்துச் சொன்னதாவது: நீங்கள் சீட்டு
களைப்போட்டுச் சுதந்தரித்துக்கொள்வதும் ஒன்
பதரைக் கோத்திரங்களுக்குக் கொடுக்கக் கர்த்தர்
௰௪ கற்பித்ததுமான தேசம் அதுதானே.—ஏனெனில்
ரூபேன் புத்திரருடைய பிதாக்களின் வீட்டின்
கோத்திரத்தாரும் காத் புத்திரருடைய பிதாக்க
ளின் வீட்டின் கோத்திரத்தாரும், மனாசேயின்
பாதிக்கோத்திரத்தாரும், தங்கள் சுதந்தரத்தை
௰௫ அடைந்தார்கள். — இந்த இரண்டரைக்கோத்
திரங்கள் சூரியோதய திசையாகிய கிழக்கே எரி
கோவின்கிட்ட இருக்கிற யோர்தானுக்கு இப்
பாலே தங்கள் சுதந்தரத்தை வாங்கித் தீர்ந்த
தென்றான்.
௰௬ கர்த்தர் மோசேயோடே பேசிச் சொன்னதா
௰௭ வது: — உங்களுக்குத் தேசத்தைப் பங்கிட்டுக்
கொடுக்கும் மனிதரின் நாமங்களாவது: ஆசாரிய
னாகிய எலேயாசாரும் நூனின் குமாரனாகிய
௰௮ யோசுவாவும்தானே.—ஒவ்வொரு கோத்திரத்தில்
ஒவ்வொரு தலைவனையும் தேசத்தைப் பங்கிடும்
௰௯ படிக்குக் கூடவைக்கக்கடவீர்கள்.—இந்த மனி
தரின் நாமங்களாவது: யூதா கோத்திரத்திற்கு எப்
௨௰ புன்னெயின் குமாரனாகிய காலேப்பும்,—சிமே
யோன் புத்திரரின் கோத்திரத்திற்கு அம்மியூ
௨௧ தின் குமாரனாகிய சாமுவேலும்,—பென்யமீன்
கோத்திரத்திற்குக் கிஸ்லோனின் குமாரனாகிய
௨௨ எலிதாதும்,—தாண் புத்திரரின் கோத்திரத்திற்கு
யொகெலியின் குமாரனாகிய புக்கி என்ற பிர
௨௩ பும், — யோசேப்பின் குமாரனாகிய மனாசேயி
னுடைய புத்திரரின் கோத்திரத்திற்கு எப்போ
தின் குமாரனாகிய அன்னியேலென்ற பிரபும்,—
௨௪ எப்பிராயீம் புத்திரரின் கோத்திரத்திற்குச் சிப்தா
னின் குமாரனாகிய கேமுவேலென்ற பிரபும்,—
௨௫ சேபுலோன் புத்திரரின் கோத்திரத்திற்குப் பர்னா
கின் குமாரனாகிய எலிச்சாப்பான் என்ற பிரபும்,—
௨௬ ஈசஷார் புத்திரரின் கோத்திரத்திற்கு ஆசானின்
௨௭ குமாரனாகிய பல்த்தியேலென்ற பிரபும்,—ஆசேர்
புத்திரரின் கோத்திரத்திற்குச் செலோமியின்
௨௮ குமாரனாகிய அகீயூத்தென்ற பிரபும், — நவுதலி
புத்திரரின் கோத்திரத்திற்கு அம்மியூதின் குமார
னாகிய பெதாகெலென்ற பிரபும்தானே என்றார்.
௨௯ காணான்தேசத்திலே இஸ்ரவேல் புத்திரருக்
குச் சுதந்தரங்களைப் பங்கிட்டுக் கொடுக்கிறதற்
குக் கர்த்தர் கற்பித்தவர்கள் இவர்கள்தான்.

## ௩௫. அதிகாரம்.

க. இலேவியருக்குக் கொடுத்த ௪௮-பட்டணங்களும், அவைகளை அடுத்த கிராமங்களும், அவைகளின் அளவும். ௬. அவைகளில் ஆறு அடைக்கலமான பட்டணங்கள். ௯. கொலைபாதகத்தைக்குறித்த நியாயப்பிரமாணம். ௧௧. கொலைபாதகனுக்கு மன்னிப்பு இல்லையென்பது.

௧ எரிகோவின்கிட்ட யோர்தானண்டையில் இ
ருக்கிற மோவாபின் சமனான வெளிகளிலே கர்த்
தர் மோசேயோடே பேசிச் சொன்னதாவது:—
௨ இஸ்ரவேல் புத்திரர் தங்கள் காணியாட்சியாகும்
சுதந்தரத்திலே இலேவியருக்குக் குடியிருக்கிற
தற்கான பட்டணங்களைக் கொடுக்கவேண்டு
மென்று அவர்களுக்குக் கற்பி; அந்தப் பட்ட
ணங்களைச் சுற்றிலும் இருக்கிற அவைகளின்
பேட்டைகளையும் இலேவியருக்குக் கொடுக்கக்
கடவீர்கள்.—அந்தப் பட்டணங்கள் அவர்கள் ௩
குடியிருப்புக்கும், அவைகளின் பேட்டைகள்
அவர்கள் ஆடுமாடுகளுக்கும், அவர்கள் ஆஸ்திக்
கும், அவர்களுடைய எல்லாச் சீவன்களுக்கும்,
குறிக்கப்படக்கடவது.—நீங்கள் இலேவியருக் ௪
குக் கொடுக்கும் பட்டணங்களின் பேட்டை
கள், பட்டணமதிலுக்கு வெளியிலே சுற்றிலும்
ஆயிரமுழத்தூரமாயிருப்பதாக.—ஆனால் நீங்கள் ௫
பட்டணத்தின் வெளிப்புறத்தைத் துவக்கி, கிழ
க்கே இரண்டாயிரமுழமும் தெற்கே இரண்டா
யிரமுழமும் மேற்கே இரண்டாயிரமுழமும் வ
டக்கே இரண்டாயிரமுழமும், பட்டணம் நடு
மையத்தில் இருக்கும்படியாக, அளக்கக்கடவீர்
கள்; அது அவர்களுக்குப் பட்டணங்களின்
பேட்டைகளாயிருப்பது.—நீங்கள் இலேவியருக் ௬
குக் கொடுக்கும் பட்டணங்களில் அடைக்கல
மான ஆறு பட்டணங்கள் இருக்கவேண்டும்;
கொலைசெய்தவன் அங்கே ஓடிப்போகிறதற்கு
அவைகளைக் குறிக்கக்கடவீர்கள்; அவைகளை அ
ல்லாமல், நாற்பத்திரண்டு பட்டணங்களை அவர்
களுக்குக்கொடுக்கக்கடவீர்கள்.—நீங்கள் இலே ௭
வியருக்குக் கொடுக்கவேண்டிய பட்டணங்க
ளெல்லாம் நாற்பத்தெட்டுப்பட்டணங்களும்
அவைகளின் பேட்டைகளும்தானே.—நீங்கள் ௮
இஸ்ரவேல் புத்திரரின் காணியாட்சியிலே அந்
தப் பட்டணங்களை எடுத்துக்கொடுக்கையில்,
அநேகமுள்ளவர்களில் அநேகமாகவும் கொஞ்
சமுள்ளவர்களில் கொஞ்சமாகவும் எடுக்கக்கட
வீர்கள்; அவரவர் சுதந்தரித்துக்கொண்ட சுதந்
தரத்திற்குத்தக்கதாகத் தங்கள் பட்டணங்களில்
எடுத்து, இலேவியருக்குக் கொடுப்பார்களாக
என்றார்.
பின்னையும் கர்த்தர் மோசேயோடே பேசிச் ௯
சொன்னதாவது:—நீ இஸ்ரவேல் புத்திரரோடே ௰
பேசி அவர்களோடே சொல்லவேண்டியதே
தெனில், நீங்கள் யோர்தானைக் கடந்து காணான்
தேசத்தில் வந்தபொழுது,—கைப்பிசகாய் ஒரு ௧௧
வனைக் கொன்றுபோட்டவன் ஓடிப்போயி
ருக்கத்தக்க, அடைக்கலப்பட்டணங்களை உங்
களுக்குக் குறிக்கக்கடவீர்கள். — கொலைசெய்த ௧௨
வன் நியாயசபைக்கு முன்பாக நிற்காததற்கு
முன்னே சாவாமல், பழிவாங்குகிறவன் கைக்
குத் தப்புவித்துக்கொள்ளும்படிக்கு, அவைகள்
உங்களுக்கு அடைக்கலப்பட்டணங்களாயிருக்
கக்கடவது.—நீங்கள் உங்களுக்காகக் கொடுக்க ௧௩
வேண்டிய அந்த அடைக்கலப்பட்டணங்கள்
ஆறு. — அடைக்கலப்பட்டணங்களாகப் போ ௧௪
கிற மூன்றுபட்டணங்களை யோர்தானுக்கு இப்
பாலும் மூன்று பட்டணங்களைக் காணான்தேசத்
திலும் கொடுக்கக்கடவீர்கள். — கைப்பிசகாய் ௧௫
ஒருவனைக் கொன்றவன் எவனும் அங்கே ஓடிப்
போகும்படிக்கு, இஸ்ரவேல் புத்திரருக்கும்

உங்கள் நடுவே இருக்கும் பரதேசிக்கும் அந்நி
யனுக்குமாக அந்த ஆறு பட்டணங்கள் அடைக்
கலப்பட்டணங்கள் குறித்திருப்பதாக.
௰௬ ஒருவன் இரும்பு ஆயுதத்தினால் ஒருவனை
வெட்டினதினாலே இவன் செத்தானேயாகில்,
அவன் கொலைபாதகனாயிருக்கிறான்; கொலைபா
தகன் கொலையுண்ணவே கொலையுண்ணக்கட
௰௭ வன்.— அல்லது ஒருவனைக் கொன்றுபோடத்
தக்க கல்லை ஒருவன் எடுத்து, ஒருவன்மேல் எறி
கிறதினாலே இவன் செத்தால், அவன் கொலைபா
தகனாயிருக்கிறான்; கொலைபாதகன் கொலையுண்
௰௮ ணவே கொலையுண்ணக்கடவன்.-அல்லவென்று
ஒருவனைக் கொன்றுபோடத்தக்க மர ஆயுதத்தை
ஒருவன் எடுத்து, ஒருவனை அடிக்கிறதினாலே
இவன் செத்தால், அவன் கொலைபாதகனாயிருக்
கிறான்; கொலைபாதகன் கொலையுண்ணவே கொ
௰௯ லையுண்ணக்கடவன்.—இரத்தப்பழி வாங்குகிற
வன்தானே கொலைபாதகனைக் கொன்றுபோட
லாம்; அவனைச் சந்திக்கிறபொழுது அவனைக்
௨௰ கொன்றுபோடலாம்.-ஒருவன் குரோதத்தினாலே
ஒருவனை விழத்தள்ளினதினாலே, அல்லது சதி
யாய் அவன்மேல் ஏதாகிலும் எய்ததினாலே,—
௨௧ அல்லவென்று பகையினால் அவனைத் தன் கை
யினால் அடித்ததினாலே அவன் செத்தால், அடித்
தவன் கொலையுண்ணவே கொலையுண்ணக்கட
வன்; அவன் கொலைபாதகன்; இரத்தப்பழிவாங்
குகிறவன் கொலைபாதகனைச் சந்திக்கிறபொழுது
கொன்றுபோடலாம்.
௨௨ ஆனால் ஒருவன் பகையில்லாமல் சடுதியில்
ஒருவனை விழப்பண்ணினதினாலே, அல்லது சதி
யில்லாமல் யாதொரு ஆயுதத்தை அவன்மேலே ப
௨௩ டப்பண்ணினதினால்,—அல்லவென்று அவனுக்
குப் பகைஞனாயிராமலும் அவனுக்குப் பொல்
லாப்பைத் தேடாமலும் இருக்கையில், ஒருவனைக்
கொன்றுபோடத்தக்க யாதொரு கல்லை அவனைக்
காணாமல் எறிந்ததினாலும் அது அவன்மேலே
௨௪ பட்டதினாலும் அவன் செத்தால்,-அப்பொழுது
சபையார் கொலைசெய்தவனுக்கும் இரத்தப்பழி
வாங்குகிறவனுக்கும் இந்த நியாயங்களின்படி
௨௫ யே நியாயம்தீர்த்து,—கொலைசெய்தவனை இரத்
தப்பழி வாங்குகிறவன் கைக்குத் தப்புவித்து, அ
வன் ஓடிப்போயிருந்த அடைக்கலப்பட்டணத்
திற்கு அவனைத் திரும்பப் போகப்பண்ணக்கட
வர்கள்; பரிசுத்த எண்ணெயினால் அபிஷேகம்
பண்ணப்பட்ட பிரதான ஆசாரியன் மரணம்
அடையும்மட்டும் அங்கே அவன் அதிலே இருக்
கக்கடவன்.
௨௬ ஆனால் தான் ஓடிப்போயிருக்கிற தன் அடைக்
கலப்பட்டணத்தின் எல்லையை, கொலைசெய்த
வன் விட்டுப் புறப்படவே புறப்படுகிறதும்,—
௨௭ இரத்தப்பழி வாங்குகிறவன் கொலைசெய்த அவ
னை அவனுடைய அடைக்கலப்பட்டணத்திற்கு
வெளியே கண்டுபிடித்துக் கொன்றுபோடுகிற
தும் உண்டானால், இவன்மேலே பழியில்லை.—
௨௮ ஏனெனில் பிரதான ஆசாரியன் மரணம் அடை
யும்மட்டும் கொலைசெய்தவன் தன் அடைக்கலப்
பட்டணத்திலிருந்து, பிரதான ஆசாரியன் மரண
மடைந்தபிற்பாடுதானே தன் காணியாட்சியான
சீமைக்குத் திரும்பப் போகவேண்டியதாயிருந்
தது.—இவைகள் உங்கள் எல்லா வாசஸ்தலங்க ௨௯
ளிலும் இருக்கும் உங்கள் தலைமுறைகளில் உங்
களுக்கு நியாயக்கட்டளையாயிருக்கக்கடவது.
எவனாகிலும் ஒரு மனிதனைக் கொன்றுபோட் ௩௰
டால், அப்பொழுது சாட்சிகளுடைய வாக்கின்
படியே அந்தக் கொலைபாதகனைக் கொன்றுபோ
டக்கடவர்கள்; ஆனால் மனிதன்மேலே சாவுக்
கென்று ஒரே ஒருசாட்சி உத்தரவு சொல்லவேண்
டாம்.—சாகிறதற்குக் குற்றம்சுமந்த கொலைபாத ௩௧
கனுடைய சீவனுக்காக நீங்கள் மீட்கும்பொரு
ளை வாங்கவேண்டாம்; அவன் கொலையுண்ண
வே கொலையுண்ணவேண்டும்.—தன் அடைக்க ௩௨
லப்பட்டணத்திற்கு ஓடிப்போனவன் ஆசாரி
யன் மரணமடையாததற்குமுன்னே தன் சீமைக்
குத் திரும்பிவர, நீங்கள் அவனுக்காக மீட்கும்
பொருளை வாங்கவும்வேண்டாம்.
நீங்கள் இருக்கும் தேசத்தைப் பரிசுத்தகுலைச் ௩௩
சல் ஆக்கீர்களாக; ஏனென்றால் அப்படிப்பட்ட
இரத்தம் தேசத்தைப் பரிசுத்தகுலைச்சலாக்கும்;
தேசத்திலே சிந்துண்ட இரத்தத்திற்காக இரத்தம்
சிந்திப்போட்டவனுடைய இரத்தத்தினாலே ஒ
ழிய, வேறொன்றாலும் தேசத்தின்பாவம் நிவிர்த்தி
யாகாது.—நாம் வாசம்பண்ணும் உங்கள் குடி ௩௪
யிருப்பான தேசத்தைத் தீட்டுப்படுத்தீர்களாக;
ஏனென்றால் கர்த்தராகிய நாம் இஸ்ரவேல் புத்தி
ரரின் நடுவே வாசம்பண்ணுகிறோமென்று சொல்
லென்றார்.

## ௩௬. அதிகாரம்.

௧. குமாரத்திகள் சுதந்தரத்தை அடைவதால் வரும் விக்கினம். ௫. சுதந்தரம் குடும்பத்தைவிட்டு நீங்காதபடி தங்கள் கோத்திரத்தில் விவாகம் செய்வதற்குக் கட்டளை. ௰. செலாப்பெயாத்தின் குமாரத்திகள் தங்கள் தகப்பன் சகோதரர்களின் குமாரரை விவாகம்பண்ணிக்கொண்டது.

யோசேப்புடைய குமாரரின் வம்சத்தாரில் மனா ௧
சேயின் குமாரனாகிய மாகீருக்குப் பிறந்த கிலே
யாத்தின் வம்ச பிதாக்களான தலைவர் சேர்ந்து
வந்து, மோசேக்கும் இஸ்ரவேல் புத்திரருடைய
பிதாக்களில் தலைவராகிய பிரபுக்களுக்கும்முன்
பாகப் பேசிச் சொன்னதாவது: — சீட்டுகளைப் ௨
போட்டு, தேசத்தை இஸ்ரவேல் புத்திரருக்குச்
சுதந்தரமாகக் கொடுக்கக் கர்த்தர் எங்கள் ஆண்
டவனுக்குக் கற்பித்தாரே; எங்கள் சகோதரனா
கிய செலாப்பெயாத்தின் சுதந்தரத்தை அவன்
குமாரத்திகளுக்குக் கொடுக்கவேண்டுமென்றும்
எங்கள் ஆண்டவனுக்குக் கர்த்தராலே கற்பிக்கப்
பட்டதே.-இப்பொழுதும் இவர்கள் இஸ்ரவேல் ௩
புத்திரருடைய வேறொரு கோத்திரங்களின் புத்
திரருக்குப் பெண்சாதிகளானால், அவர்கள் சுதந்
தரம் எங்கள் பிதாக்களுடைய சுதந்தரத்திலே
குறைந்துபோய், அவர்கள் உள்படுகிற கோத்தி
ரத்தின் சுதந்தரத்தோடே சேர்ந்து, எங்கள் சுதந்
தரத்திற்குச் சீட்டினால் விழுந்த பங்கில் அற்றுப்

௪ போம். — அப்பொழுது இஸ்ரவேல் புத்திரருக்
குச் சீர்திருந்தும் வருஷம் வந்தாலும், அவர்களு
டைய சுதந்தரம் அவர்கள் உள்பட்டுப்போன
கோத்திரத்தின் சுதந்தரத்தோடே சேர்ந்திருந்து,
எங்கள் பிதாக்களுடைய கோத்திரத்தின் சுதந்
தரத்திலே குறைந்துபோம் என்றார்கள்.
௫ அப்பொழுது மோசே கர்த்தருடைய கட்டளை
யின்படியே இஸ்ரவேல் புத்திரருக்குக் கற்பித்துச்
சொன்னதாவது: யோசேப்பு புத்திரரின் கோத்தி
௬ ரத்தார் சொல்லுகிறது நியாயம்.—கர்த்தர் செலாப்
பெயாத்தின் குமாரத்திகளுக்காகக் கற்பிக்கிற
வார்த்தையாவது: அவர்கள் தங்கள் பார்வைக்குச்
சம்மதியானவர்களுக்குப்பெண்சாதிகளாகலாம்;
ஆனால் தங்கள் பிதாவின் கோத்திர வம்சத்தாருக்
குமாத்திரம் அவர்கள் பெண்சாதிகளாகவேண்
௭ டும்.—அப்படியே இஸ்ரவேல் புத்திரரின் சுதந்த
ரம் ஒரு கோத்திரத்தைவிட்டு மறுகோத்திரத்தண்
டைக்குத் தாண்டாதிருக்கும்; ஏனெனில் இஸ்ர
வேல் புத்திரரில் அவரவர் தங்கள் பிதாக்களுடை
ய கோத்திரத்தின் சுதந்தரத்திலே நிலைகொண்டி
௮ ருக்கவேண்டும்.—இஸ்ரவேல் புத்திரரில் அவர
வர் தங்கள் பிதாக்களின் சுதந்தரத்தை அநுபவிக்
கும்படிக்கு, இஸ்ரவேல் புத்திரருடைய யாதொ
ரு கோத்திரத்திலே சுதந்தரம் அடைந்திருக்கிற
எந்தக் குமாரத்தியும் தன் பிதாவின் கோத்திரவம்
சத்தாரில் ஒருவனுக்குப் பெண்சாதியாகவேண்
டும்.—அப்படியே சுதந்தரம் ஒரு கோத்திரத்தைவி ௯
ட்டு வேறே கோத்திரத்தண்டைக்குத் தாண்டா
து; ஏனெனில் இஸ்ரவேல் புத்திரரின் ஒவ்வொ
ரு கோத்திரம் தன்தன் சுதந்தரத்திலே நிலைகொ
ண்டிருக்கவேண்டுமென்று கற்பித்தாரென்றான்.
கர்த்தர் மோசேக்குக் கற்பித்தபடியே, செ ௰
லாப்பெயாத்தின் குமாரத்திகள் செய்து, — மக் ௰௧
லாள், திற்சாள், ஒக்லாள், மில்க்காள், நோகாள்
என்ற செலாப்பெயாத்தின் குமாரத்திகள் தங்கள்
தாய் தகப்பனோடேகூடப்பிறந்தவர்களின் குமா
ரரென்ற யோசேப்பின் குமாரனாகிய மனாசே
புத்திரரின் வம்சத்தாரை விவாகம்பண்ணினார்
கள். — இப்படியே அவர்களுடைய சுதந்தரம் ௰௨
அவர்கள் பிதாவின் வம்சமான கோத்திரத்தோ
டே இருந்துவிட்டது.
எரிகோவின்கிட்ட யோர்தானுக்கு இப்பாலே ௰௩
இருக்கிற மோவாபின் சமனான வெளிகளிலே
கர்த்தர் மோசேயைக்கொண்டு இஸ்ரவேல் புத்
திரருக்குக் கற்பித்த கற்பனைகளும் நியாயங்க
ளும் இவைகள்தானே.

DEUTERONOMY.

# மோசே எழுதின

## ஐந்தாம் ஆகமம்.

### ௧. அதிகாரம்.

௧. மோசே நாற்பதாம் வருஷமுடிவில் சுருக்கமாய், ௯. பாரபரனுடைய வாக்குத்தத்தத்தையும், ௰௩. தலைவர்கள் வைக்கப்பட்டதையும், ௰௯. நிலங்களை வேவுபார்க்க வேவுகாரரை அனுப்பினதையும், ௨௪. சனங்களுடைய அவநம்பிக்கைக்குப் பாரபரன் கோபங்கொண்டதையும், ௪௧. அவர்கள் கீழ்ப்படியாததையும்குறித்துச் சொன்னது.

௧ சேயீர் பர்வதவழியாய்ப் போனால், ஓரேபுக்
குப் பதினொருநாள் பயணதூரமான காதேஸ்
௨ பர்னேயாவிலிருந்து,— சுப்புக்கு எதிராகவும்,
பாரானுக்கும் தோப்பேலுக்கும் லாபானுக்கும்
ஆத்சரோத்திற்கும் திசாகாபுக்கும் நடுவாகவும்,
இருக்கிற யோர்தானுக்கு இக்கரையான வனாந்
தரத்தின் சமனான வெளியிலே வந்தபொழுது,
மோசே இஸ்ரவேலோடெல்லாம் சொன்ன வச
௩ னங்கள்.—நாற்பதாம் வருஷம் பதினோராம்மா
தம் முதல்தேதியிலேதானே, மோசே இஸ்ரவேல்
புத்திரரோடே கர்த்தர் அவர்களுக்குச் சொல்லத்
தனக்குக் கற்பித்ததின்படியெல்லாம் பேசி
௪ னான். — எஸ்போனில் குடியிருந்த எமோரிய
ரின் இராசாவாகிய சீகோனையும், அஸ்தரோத்
திலே குடியிருந்த பாசாவின் இராசாவாகிய
ஓகென்கிறவனையும், எதிரேயில் அவன் முறிய
டித்ததற்குப் பிற்பாடு,

௫ யோர்தானுக்கு இப்பாலிருக்கிற மோவாபின்
தேசத்திலே மோசே இந்த நியாயப்பிரமாணத்
தை விவரித்துக் காண்பிக்கத்துவக்கிச் சொன்ன
௬ தாவது:—ஓரேபிலே நம்முடைய பராபரனாகிய
கர்த்தர் நம்மோடே சொன்னதேதெனில், நீங்
கள் இந்தப் பர்வதத்தண்டையில் தரித்திருந்தது
௭ போதும்.—நீங்கள் திரும்பிப் பயணம்பண்ணி,
எமோரியரின் மலைகளுக்கும், அவைகளுடைய
எல்லா அசல்புறங்களுமாகிய சமனான வெளிக
ளிலும் மலைகளிலும் பள்ளத்தாக்குகளிலும் தெற்
கிலும் கடலோரத்திலும் இருக்கிற கானானிய
ரின் தேசத்திற்கும், லீபனோனுக்கும், ஐப்பிராத்
நதி என்ற பெரிய நதிமட்டுக்கும் வாருங்கள்.—
௮ இதோ அந்தத் தேசத்தை உங்களுக்குமுன்பாக
வைத்தோம்; நீங்கள் வந்து, கர்த்தர் உங்கள்
பிதாக்களாகிய ஆபிரகாமுக்கும் ஈசாக்குக்கும்
யாக்கோபுக்கும் அவர்களுக்குப் பிற்பாடிருக்
கும் அவர்கள் வித்திற்கும் கொடுப்போமென்று
ஆணையிட்ட அந்தத் தேசத்தைச் சுதந்தரித்துக்
கொள்ளுங்கள் என்றார்.

அக்காலத்திலே நான் உங்களோடே சொன் ௯
னது: நான் ஒருவனாக உங்களைச் சுமக்கக்கூடா
து.—உங்கள் பராபரனாகிய கர்த்தர் உங்களைப் ௰
பெருகப்பண்ணினார்; இதோ இந்நாளில் நீங்கள்
வானத்தின் நட்சத்திரங்களைப்போல ஏராளமாயி
ருக்கிறீர்கள்.—உங்கள் பிதாக்களின் பராபரனா ௰௧
கிய கர்த்தர் உங்களை இப்பொழுதிருக்கிறதைப்
பார்க்கிலும் இன்னம் ஆயிரமத்தனையாக்கி, தாம்
உங்களுக்குச் சொன்னபடியே உங்களை ஆசீர்
வதிப்பாராக. — நான் ஒருவனாக உங்களால் ௰௨
உண்டாம் வருத்தத்தையும் பிரயாசத்தையும் உங்
கள் வழக்குகளையும் சுமப்பது எப்படி?—நான் ௰௩
உங்கள்மேல் தலைவராக வைக்கும்படிக்கு, உங்
கள் கோத்திரங்களிலே ஞானமும் உணர்வும்
அறிவுமுள்ள மனிதரைச் சம்பாதியுங்கள் என்
றேன்.—அப்பொழுது நீங்கள் எனக்குப் பிரதி ௰௪
யுத்தரமாக, நீர் செய்யச்சொன்ன காரியம் நல்
லதென்றீர்கள். — ஆகையால் நான் ஞானமும் ௰௫
அறிவுமுள்ள மனிதராகிய உங்கள் கோத்திரங்
களின் தலைவரைச் சேர்த்துக்கொண்டு, அவர்
களை உங்கள்மேல் தலைவராயிருக்க, ஆயிரம்
பேருக்கு அதிபதிகளாகவும், நூறு, ஐம்பது, பத்
துப்பேருக்கு அதிபதிகளாகவும், உங்கள் கோத்
திரங்களில் மணியகாரராகவும், வைத்தேன்.—
உங்களுடைய நியாயாதிபதிகளுக்கு அக்காலத் ௰௬
திலே நான் கற்பித்ததாவது: நீங்கள் உங்கள்
சகோதரருக்குள்ளே வியாச்சியங்களைக் கேட்டு,
மனிதனுக்கும் அவன் சகோதரனுக்கும் அவர்
களோடிருக்கிற பரதேசிக்கும் நீதியாய் நியாயங்
களைத் தீருங்கள்.—நியாயத்திலே முகமாட்டம் ௰௭
பாராமல் சிறியவனைப் பெரியவனுக்குச் சரியா
கக் கேட்கக்கடவீர்கள்; ஒருவர் முகத்திற்கும்
பயப்படீர்களாக; ஏனெனில் நியாயத்தீர்ப்புப்
பராபரனுடையது; ஆனால் உங்களுக்கு மிஞ்
சின அரிதாகிய காரியத்தை என்னண்டையில்
கொண்டுவாருங்கள்; நான் அதைக் கேட்பே
னென்று சொல்லி,—நீங்கள் செய்யவேண்டிய ௰௮
காரியங்களையெல்லாம் அக்காலத்திலே உங்க
ளுக்குக் கற்பித்தேன்.

௰௯ பிற்பாடு நம்முடைய பராபரனாகிய கர்த்தர்
நமக்குக் கற்பித்தபடியே, நாம் ஓரேபைவிட்டுப்
பயணம்பண்ணி, நீங்கள் கண்ட அந்தப் பயங்க
ரமான பெரிய வனாந்தரவழியாயெல்லாம் எமோ
ரியரின் மலைகளுக்கு நேராக நடந்துவந்து,
௨௰ காதேஸ்பர்னேயாவிலே சேர்ந்தோம். — அப்
பொழுது நான் உங்களோடே சொன்னதாவது:
நம்முடைய பராபரனாகிய கர்த்தர் நமக்குக் கொ
டுக்கிற எமோரியரின் மலைகள்மட்டும் வந்தீர்
௨௧ கள்.–இதோ உன் பராபரனாகிய கர்த்தர் உனக்கு
முன்பாக அந்தத் தேசத்தை வைத்தார்; உன் பி
தாக்களுடைய பராபரனாகிய கர்த்தர் உனக்குச்
சொன்னபடியே, நீ போயேறி, அதைச் சுதந்
தரித்துக்கொள்; பயப்படாமலும் கலங்காமலும்
௨௨ இருவென்றேன்.—அப்பொழுது நீங்களெல்லா
ரும் என் அண்டையில் சேர்ந்துவந்து, நமக்காக
அந்தத் தேசத்தைச் சோதித்துப்பார்க்கிறதற்கும்,
நாம் எந்தவழியாக அதிலே போய்ஏறலாம், எந்
தப்பட்டணங்களுக்குப் போகலாமென்று நமக்
கு மறுசெய்தி கொண்டுவருகிறதற்கும், நமக்கு
முன்னாக மனிதரை அனுப்புவோமாக என்றீர்
௨௩ கள்.—அது எனக்கு நன்றாய்க்கண்டது; அப்
படியே ஒவ்வொரு கோத்திரத்தில் ஒவ்வொருவ
னாக உங்களிலே பன்னிரண்டு மனிதரை எடுத்து
௨௪ அனுப்பினேன்.—அவர்கள் போய், மலைகளில்
ஏறி, எஸ்கோல் பள்ளத்தாக்குமட்டும் சேர்ந்து,
௨௫ அதை வேவுபார்த்து,—அந்தத் தேசத்துக் கனிக
ளிலே சிலவற்றைத் தங்கள் கைகளில் எடுத்துக்
கொண்டு, நம்மண்டைக்கு இறங்கிவந்து, நம்மு
டைய பராபரனாகிய கர்த்தர் நமக்குக் கொடுக்கிற
அந்தத் தேசம் நன்றாயிருக்கிறதென்று நமக்கு
மறுசெய்தி கொண்டுவந்தார்கள்.

௨௬ ஆனால் நீங்கள், போய் ஏறமாட்டோமென்று
உங்கள் பராபரனாகிய கர்த்தருடைய வாக்குக்
௨௭ குக் கீழ்ப்படியாதே போய்,—உங்கள் கூடாரங்
களில் முறுமுறுத்து, கர்த்தர் நம்மைப் பகைத்து,
நம்மை அழிக்கிறதற்கென்று நம்மை எமோரிய
ரின் கையில் ஒப்புக்கொடுக்கும்படிக்கு, நம்மை
எகிப்துதேசத்திலிருந்து புறப்படப்பண்ணி
௨௮ னார். — எங்கே நாம் போய் ஏறலாம்; சனம்
பெரியதும் நம்மைப்பார்க்கிலும் உயர்ந்ததும்
பட்டணங்கள் பெரியவைகளும் ஆகாசம்மட்
டும் அரணிப்பாக்கப்பட்டவைகளுமாயிருக்கிற
தென்றும், ஏனாக் புத்திரரையும் அங்கே கண்
டோமென்றும்,நம்முடைய சகோதரர் சொல்லி,
நம்முடைய இருதயத்தைக் கரையப்பண்ணி
௨௯ னார்களென்கிறீர்கள்.—அப்பொழுது நான் உங்க
ளோடே சொன்னது: நீங்கள் கலங்காமலும் அ
வர்களுக்குப் பயப்படாமலும் இருப்பீர்களாக.–
௩௰ உங்களுக்குமுன்னாக நடக்கிற உங்கள் பராபர
னாகிய கர்த்தர் தாமே எகிப்திலே உங்களோடி
ருந்து, உங்கள் கண்களுக்குமுன்பாகச் செய்த
எல்லாவற்றிற்கும் வனாந்தரத்திலே செய்துவந்
ததற்கும் ஒத்தபடி உங்களுக்காக யுத்தம்பண்ணு
௩௧ வார்.—ஒரு மனிதன் தன் பிள்ளையைச் சுமக்கி
றதுபோல, நீங்கள் இவ்விடத்திலே சேருமட்
டும், நடந்துவந்த எல்லா வழியிலும் உன் பரா
பரனாகிய கர்த்தர் உன்னைச் சுமந்துவந்தாரென்று
கண்டாயே என்றேன். — இப்படிச் சொன்னா ௩௨
லும் நீங்கள் உங்களுக்குப் பாளயம் இறங்கத்
தக்க இடங்களை விசாரிக்கவும், நீங்கள் போக
வேண்டிய வழியை உங்களுக்குக் காட்டவும்,–
இரவிலே அக்கினியிலும் பகலிலே மேகத்திலும் ௩௩
உங்களுக்குமுன்னாக வழியிலே நடந்த உங்கள்
பராபரனாகிய கர்த்தரை விசுவாசியாதே போ
னீர்கள்.

ஆகையால் கர்த்தர் உங்கள் வார்த்தைகளின் ௩௪
சத்தத்தைக் கேட்டு, கடுங்கோபம் அடைந்து,—
கொடுப்போமென்று நாம் உங்கள் பிதாக்களுக் ௩௫
கு ஆணையிட்ட அந்த நல்லதேசத்தை இந்தப்
பொல்லாத சந்ததியான இந்த மனிதரில் ஒருவ
னும் காண்பதில்லை என்றும்,—எப்புன்னேயின் ௩௬
குமாரனாகிய காலேப்மாத்திரம் அதைக் காண்
பான்; அவன் கர்த்தரை உத்தமமாய்ப் பின்பற்
றினபடியினாலே, நாம் அவன் மிதித்துவந்த தே
சத்தை அவனுக்கும் அவன் பிள்ளைகளுக்கும்
கொடுப்போமென்றும் ஆணையிட்டார்.—கர்த்தர் ௩௭
உங்கள் நிமித்தமாக என்பேரிலும் கோபமாகிச்
சொன்னதாவது: நீயும் அதற்குள் பிரவேசிப்ப
தில்லை. — உனக்குமுன்பாக நிற்கிற நூனின் ௩௮
குமாரனாகிய யோசுவா அதற்குள் பிரவேசிப்
பான்; அவனைத் திடப்படுத்து; ஏனென்றால்
அவனே அதை இஸ்ரவேலுக்குச் சுதந்தரமாகப்
பங்கிடுவான். — கொள்ளையாமென்று நீங்கள் ௩௯
சொன்ன உங்கள் குழந்தைகளும் இந்நாளில்
நன்மை தீமை அறியாத உங்கள் பிள்ளைகளும்
அதற்குள் பிரவேசிப்பார்கள்; அவர்களுக்கு அ
தைக் கொடுப்போம்; அவர்கள் அதைச் சுதந்த
ரிப்பார்கள். — நீங்களோவென்றால் திரும்பிக் ௪௰
கொண்டு, நாணல்சமுத்திரத்திற்குப் போகிற
வழியே வனாந்தரத்திற்குப் பயணம்பண்ணுங்க
ளென்றார்.

அப்பொழுது நீங்கள் எனக்குப் பிரதியுத்தார ௪௧
மாகக் கர்த்தருக்கு விரோதமாகப் பாவம்செய்
தோம்; நாங்கள் போயேறி, நம்முடைய பராபர
னாகிய கர்த்தர் எங்களுக்குக் கற்பித்தபடியெல்
லாம் யுத்தம்பண்ணுவோமென்று சொல்லி, அவ
ரவர் உங்கள் யுத்த ஆயுதங்களைத் தரித்துக்கொண்
டு, மலைகளின்மேலேற ஆயத்தமாயிருந்தீர்கள்.—
அப்பொழுது கர்த்தர் என்னுடனே, நீங்கள் உங் ௪௨
கள் சத்துருக்களுக்குமுன்பாக முறிந்துபோகா
தபடிக்கு, ஏறாமலும் யுத்தம்பண்ணாமலும் இருப்
பீர்களாக;ஏனெனில் நாம் உங்கள் நடுவே இரா
மென்று அவர்களுக்குச் சொல்லென்றார்.—அப் ௪௩
படியே உங்களோடே சொன்னேன்; நீங்களோ
வெனில் கேள்விகொடுக்கவில்லை; நீங்கள் கர்த்
தருடைய வாக்குக்குக் கீழ்ப்படியாதே போய்,
இடும்புசெய்து, மலைகளின்மேல் ஏறினீர்கள்.—
அப்பொழுது அந்த மலைகளிலே குடியிருக்கிற ௪௪

எமோரியர் உங்களுக்கு எதிராகப் புறப்பட்டு
வந்து தேன்பூச்சிகள் செய்கிறதுபோல, உங்க
ளைத் துரத்தி, உங்களைச் சேயீர்துவக்கி ஒற்மா
௪௫ மட்டுக்கும் முறியடித்தார்கள். — அப்பொழுது
திரும்பிவந்து, கர்த்தருக்குமுன்பாக அழுதீர்கள்;
ஆனால் கர்த்தர் உங்கள் சத்தத்தைக் கேட்கவில்
லை; உங்களுக்குச் செவிகொடுக்கவுமில்லை. —
௪௬ இப்படியே காதேசிலே அநேகநாள் தங்கியிருந்
தீர்கள்.

## உ. அதிகாரம்.

௧. இஸ்ரவேல் சனங்கள் எதோமியரோடும், ௯. மோவாபியரோடும், ௰௭. அம்மோனியரோடும் போர்செய்யாமல், ௨௪. எமோரியனாகிய சீகோனோடே போர்செய்து, அவனைச் செயித்ததின் விவரம்.

௧ கர்த்தர் என்னோடே சொன்னபடியே நாம்
திரும்பி, நாணல்கடலுக்குப் போகிறவழியே
வனாந்தரத்திற்குப் பயணம்பண்ணி, அநேக நா
௨ ளாய்ச் சேயீர்மலைகளைச் சுற்றினோம்.—பிற்பாடு
௩ கர்த்தர் என்னோடே சொன்னதாவது:—நீங்கள்
இந்த மலைகளைச் சுற்றினது போதும்; வடக்கே
௪ திரும்புங்கள்.-சனத்திற்கு நீ கற்பிக்கவேண்டிய
தேதென்றால்,சேயீரிலே குடியிருக்கிற ஏசாவின்
புத்திரரான உங்கள் சகோதரரின் எல்லையைக்
கடக்கப்போகிறீர்கள்; அவர்கள் உங்களுக்குப்
பயப்படுவார்கள்; நீங்களோவென்றால் வெகு
௫ எச்சரிக்கையாயிருங்கள்.-அவர்களோடே போர்
கலவாதிருங்கள்; ஏனென்றால் அவர்கள் தேசத்
திலே ஒரு அடி அம்மாத்திரம் உங்களுக்குக் கொ
டோம்; ஏனெனில் சேயீர்மலைகளை ஏசாவின்
புத்திரருக்குச் சுதந்தரமாகக் கொடுத்தோம்.—
௬ போசனத்தை அவர்கள் கையிலே பணத்திற்கு
வாங்கிப் புசித்து, தண்ணீரையும் அவர்கள் கை
யிலே பணத்திற்கு வாங்கிக் குடிப்பீர்களாக.—
௭ ஏனெனில் உன் பராபரனாகிய கர்த்தர் உன்னை
உன் கைகளின் கிரியைகளிலெல்லாம் ஆசீர்வ
தித்துவருகிறார்; இந்தப் பெரிய வனாந்தரவழி
யாய் நீ நடக்கிறதை அறிவார்; இந்த நாற்பது
வருஷம் உன் பராபரனாகிய கர்த்தர் உன்னோ
டே இருந்தார்; உனக்கு ஒன்றும் குறைபட்ட
தில்லை என்று சொல்லென்றார்.
௮ அப்படியே நாம் சேயீரிலே குடியிருக்கிறஏசா
புத்திரரான நம்முடைய சகோதரரைவிட்டுக்
கடந்து, அந்தர வெளிவழியாய் ஏலாத்மேலும்,
எத்சேபோன்கேபேர்மேலும் போய், திரும்பிக்
கொண்டு, மோவாப் வனாந்தரவழியாகக் கடந்
௯ துவந்தோம்.-அப்பொழுது கர்த்தர் என்னோடே
சொன்னதாவது: நீ மோவாபை நெருக்கப்படுத்
தாமலும், அவர்களோடே யுத்தம்கலவாமலுமி
ருப்பாயாக; ஏனெனில் அவர்கள் தேசத்தில்
உனக்கொன்றும் சுதந்தரமாகக் கொடோம்;
அதேனென்றால் ஆர் என்ற பட்டணத்தின் சீமை
யை லோத் புத்திரருக்குச் சுதந்தரமாகக் கொடுத்
௰ தோம்.—திரட்சியானதும் ஏனாக்கியரைப்போல
உயர்ந்ததுமான பெரிய சனசதளமாகிய ஏமியர்
௰௧ முதல் அதிலே குடியிருந்தார்கள்.—இவர்களும்
ஏனாக்கியரை ஒத்த இராட்சதரென்று எண்ணப்
பட்டார்கள்; மோவாபியர் அவர்களை ஏமியர்
என்றார்கள். — அப்படியே சேயீரிலும் முதல் ௰௨
ஓரியர் குடியிருந்தார்கள்; ஆனால் ஏசா புத்திரர்
அவர்களைத் துரத்தி, அவர்களைத் தங்கள் முகத்
திற்குமுன்பாக அழித்து, அவர்கள் தலத்திலே
குடியேறினார்கள்; இஸ்ரவேல் தங்களுக்குச் சுத
ந்தரமாகக் கர்த்தர் கொடுத்த தேசத்திற்குச் செய்த
துபோலத்தானே. — இப்பொழுதும் எழுந்து, ௰௩
சேரேத் ஆற்றைக் கடவுங்களென்றார்; அப்படி
யே சேரேத் ஆற்றைக் கடந்தோம்.
நாம் காதேஸ்பர்னேயாவைவிட்டுப் புறப்பட் ௰௪
டதுமுதல்கொண்டு சேரேத் ஆற்றைக் கடக்கும்
மட்டுக்கும், யுத்தமனிதரின் சந்ததியெல்லாம்
கர்த்தர் தங்களுக்கு ஆணையிட்டபடியே பாள
யத்தின் நடுவிலிருந்து மாண்டுதீருமட்டுக்கும்,
சென்றநாள்கள் முப்பத்தெட்டு வருஷங்களாயி
ருக்கின்றன.—அவர்கள் பாளயத்தின் நடுவிலி ௰௫
ருந்து மாண்டு தீருமட்டும் கர்த்தரின் கையும்
அவர்களை நிர்மூலமாக்கும்படிக்கு அவர்களுக்கு
விரோதமாயிருந்தது.
யுத்தமனிதர் எல்லாரும் சனத்தின் நடுவிலி ௰௬
ருந்து செத்துத்தீர்ந்ததற்குப் பிற்பாடோவென்
றால், — கர்த்தர் என்னோடு சொன்னதாவது:— ௰௭
நீ ஆர்பட்டணமிருக்கிற மோவாபின் எல்லையை ௰௮
இன்றைக்குக் கடந்து,-அம்மோன் புத்திரருக்கு ௰௯
எதிராகச் சேரப்போகிறாய்; அவர்களை நீ நெருக்
கப்படுத்தவும் அவர்களோடே போர்கலக்கவும்
வேண்டாம்; ஏனெனில் அம்மோன் புத்திரரின்
தேசத்தில் ஒன்றும் உனக்குச் சுதந்தரமாகக் கொ
டோம்; அதேனென்றால் அதை லோத்புத்திரருக்
குச் சுதந்தரமாகக் கொடுத்தோம்.-அதுவும்இராட் ௨௰
சதரின் தேசமாக எண்ணப்பட்டது; இராட்ச
தர் முதல் அதிலே குடியிருந்தார்கள்; அம்மோனி
யர் அவர்களைச் சம்சூமியரென்றார்கள்.— அவர் ௨௧
கள் திரட்சியானதும் ஏனாக்கியரைப்போல உ
யர்ந்ததுமான பெரிய சனசதளமாயிருந்தார்கள்;
கர்த்தரோவென்றால் அவர்களை இவர்களுக்கு
முன்பாக அழியப்பண்ணினார்; இவர்கள் அவர்
களைத் துரத்திவிட்டு, அவர்கள் ஸ்தலத்திலே குடி
யேறினார்கள்.—அவர் சேயீரிலே குடியிருக்கிற ௨௨
ஏசா புத்திரருக்காகச் செய்து, ஓரியரை அவர்
களுக்குமுன்பாக அழியப்பண்ணினதுபோல
வும், அவர்கள் இவர்களைத் துரத்திவிட்டு, இவர்
கள் ஸ்தலத்தில் இந்நாள்வரைக்கும் குடியிருந்த
துபோலவும்தானே. — கப்தோரிலிருந்து புறப் ௨௩
பட்ட கப்தோரியர் ஆத்சேரீம்துவக்கிக் காத்சா
மட்டும் குடியிருந்த ஆவியரைஅழித்து.அவர்கள்
ஸ்தலத்திலே குடியேறினதுபோலவும்தானே.—
நீங்கள் எழும்பி, பயணம்பண்ணி, அர்னோன் ௨௪
ஆற்றைக் கடவுங்கள்;இதோ எஸ்போனின் இரா
சாவாகிய சீகோனென்ற எமோரியனையும் அ
வன் தேசத்தையும் உன் கையில் ஒப்புக்கொடுத்
தோம்; அதைச் சுதந்தரித்துக்கொள்ளத் துவக்கி,
அவனோடே யுத்தம் கலந்துகொள்.—உன்னாலு ௨௫
ண்டாகும் திகிலையும் உன் பயங்கரத்தையும் வா

னத்தின்கீழ் எங்கும் இருக்கிற சனசதளங்களின்
மேலே வரப்பண்ண இந்நாளிலே துவக்கு
வோம்; உன் கீர்த்தியைக் கேட்பவர்கள் உனக்கு
முன்பாகத் தத்தளித்து, மனஇடுக்கண் அடை
வார்களென்றார்.

௨௬ அப்பொழுது நான் கேதேமோத்வனாந்தரத்தி
லிருந்து எஸ்போனின் இராசாவாகிய சீகோன
ண்டைக்குச் சமாதானவார்த்தைகளைச் சொல்
௨௭ லும் தானாபதிகளை அனுப்பி,-நான் உம்முடைய
தேசத்தைக் கடந்துபோகட்டும்; வலது இடதுபக்
கமாய்ச் சாயாமல்,வழியிலேதானே நடப்பேன்.-
௨௮ சேயீரிலே குடியிருக்கிற ஏசாவின் புத்திரரும்
ஆர்பட்டணத்திலே குடியிருக்கிற மோவாபிய
ரும் எனக்குச் செய்ததுபோல, நீர் எனக்கு நான்
யோர்தானைக்கடந்து, எங்கள் பராபரனாகிய கர்த்
தர் எங்களுக்குக் கொடுக்கிற தேசத்திலே வரும்
௨௯ மட்டும்,—நான் புசிக்கும் போசனத்தை விலைக்
கிரயமாக விற்று, நான் குடிக்கும் தண்ணீரை வி
லைக்கிரயமாகத் தருவீராக; நான் என் கால்நடை
யாய்க் கடக்கமாத்திரம் இடம்கொடுமென்று
௩௰ சொல்லி அனுப்பினேன்.—ஆனால் தன் தேசத்
தைக் கடக்க, எஸ்போனின் இராசாவாகிய சீ
கோன் நமக்கு இடம்கொடுக்க மனதாயிருந்த
தில்லை;ஏனென்றால் உன் பராபரனாகிய கர்த்தர்
அவனை இந்நாளிலிருக்கிறதுபோல உன் கை
யில் ஒப்புக்கொடுக்கும்படிக்கு, அவன் ஆவி
யைக் கடினப்படுத்தி, அவன் இருதயத்தை உரம்
கொள்ளப்பண்ணியிருந்தார்.

௩௧ அப்பொழுது கர்த்தர் என்னுடனே, இதோ
சீகோனையும் அவன் தேசத்தையும் உனக்குமுன்
பாக ஒப்புக்கொடுக்கத் துவக்கினோம்; அவன்
தேசத்தைக் கட்டிக்கொண்டு சுதந்தரிக்கத் துவக்
௩௨ கென்றார்.—சீகோனும் அவனுடைய எல்லாச்
சனமும் நமக்கெதிராக யுத்தம்பண்ணப் புறப்
௩௩ பட்டு, யாகத்சாவிலே வந்தான்.—அவனை நம்
முடைய பராபரனாகிய கர்த்தர் நமக்குமுன்
பாக ஒப்புக்கொடுத்தார்; நாம்அவனையும் அவன்
குமாரரையும் அவனுடைய எல்லாச் சனத்தை
௩௪ யும் முறியடித்து,—அவன் பட்டணங்களையெல்
லாம் அக்காலத்திலே பிடித்து, எல்லாப்பட்ட
ணங்களிலும் இருந்த மனிதரையும் பெண்சாதி
களையும் பிள்ளைகளையும், ஒருவரையும் மீதியாக
௩௫ வைக்காமல் சங்காரம்பண்ணினோம். — மிருக
சீவன்களையும் நாம் பிடித்த பட்டணங்களின்
ஆஸ்தியையும்மாத்திரம் நமக்கென்று கொள்ளை
௩௬ யிட்டோம்.—அர்னோன் ஆற்றங்கரையில் இருக்
கிற ஆரோவேரையும் ஆற்றண்டையில் இருக்
கிற பட்டணத்தையும்துவக்கி, கிலேயாத்மட்
டுக்கும், நமக்கு மிஞ்சின அரணிப்பான பட்ட
ணம் இருந்ததில்லை; எல்லாவற்றையும் நம்மு
டைய பராபரனாகிய கர்த்தர் நமக்குமுன்பாக
௩௭ ஒப்புக்கொடுத்தார்.— ஆனால் அம்மோன் புத்திர
ரின் தேசத்தையும் யாபோக் ஆற்றங்கரையான
யாவையும் மலைகளின் பட்டணங்களையும் நம்
முடைய பராபரனாகிய கர்த்தர் விலக நமக்குக்
கற்பித்த யாவையும் சேராதேவிட்டாய்.

## ௩. அதிகாரம்.

௧. பாசானின் இராசாவாகிய ஓகென்பவன் செயிக்கப்பட்ட செய்தி. ௰௧. அவன் கட்டிலின் அளவு. ௰௨. இரண்டரைக் கோத்திரங்களுக்குக் கொடுக்கப்பட்ட தேசம். ௨௩. மோசே கானான்தேசத்திலே தான் பிரவேசிக்கப் பராபரனை மன்றாடியது ௨௭. அதைப்பார்க்க அவனுக்கு உத்தரவு கொடுக்கப்பட்டது.

பிற்பாடு நாம் திரும்பிக்கொண்டு, பாசானுக்குப் ௧
போகிறவழியாய் ஏறிப்போனோம்; அப்பொ
ழுது பாசானின் இராசாவாகிய ஓகும் அவனு
டைய எல்லாச் சனமும் நமக்கு எதிராக யுத்தம்
பண்ணப் புறப்பட்டு, எதிரேயிலே வந்தார்கள்.-
அப்பொழுது கர்த்தர் என்னுடனே, அவனுக் ௨
குப் பயப்படாயாக; ஏனெனில் அவனையும்
அவனுடைய எல்லாச் சனத்தையும் அவன் தே
சத்தையும் உன் கையில் ஒப்புக்கொடுத்தோம்;
எஸ்போனிலே குடியிருந்த எமோரியரின் இரா
சாவாகிய சீகோனுக்கு நீ செய்ததுபோல, அவ
னுக்குச் செய்யக்கடவாயென்றார்.— அப்படியே ௩
நம்முடைய பராபரனாகிய கர்த்தர் பாசானின்
இராசாவாகிய ஓகையும் அவனுடைய எல்லாச்
சனத்தையும் நம்முடைய கையில் ஒப்புக்கொ
டுத்தார்; அவனுக்கு ஒருவரும் மீதியாயிராதே
போகும்மட்டும், அவனை முறியடித்தோம்.—அக் ௪
காலத்திலே அவன் பட்டணங்களையெல்லாம்
பிடித்தோம்; நாம் அவர்கள் கையிலே பிடிக்காத
பட்டணமில்லை; பாசானிலிருந்த ஓகின் இராச்
சியமான அறுபது பட்டணங்களுள்ள அர்கோப்
சீமையையெல்லாம் பிடித்தோம்.—மதிலில்லாத ௫
மகா திரள் ஊர்களையும்தவிர, அந்தப் பட்டணங்
களெல்லாம் உயர்ந்த மதில்களாலும் வாசல்களா
லும் தாழ்ப்பாள்களாலும் அரணாக்கப்பட்டிருந்
தன. — அவைகளைச் சங்காரம்பண்ணினோம்; ௬
நாம் எஸ்போனிலிருந்த சீகோனுக்குச் செய்தது
போல, அந்த எல்லாப் பட்டணங்களின் மனித
ரையும் பெண்சாதிகளையும் பிள்ளைகளையும் சங்
காரம்பண்ணி, — எல்லா மிருகசீவன்களையும் ௭
பட்டணங்களின் ஆஸ்தியையும் நமக்கென்று
கொள்ளையிட்டோம். — அப்படியே யோர்தா ௮
னுக்கு இப்பாலே அர்னோன் ஆறுதுவக்கி எர்
மோன் பர்வதம்மட்டும் இருக்கிற தேசத்தை நாம்
அக்காலத்தில் எமோரியருடைய இரண்டு இரா
சாக்களின் கையிலும் பிடித்தோம்.—சீதோனி ௯
யர் எர்மோனைச் சீரியோன் என்கிறார்கள்; எமோ
ரியரோவெனில் அதைச் சேனீரென்கிறார்கள்.—
சமனான நாட்டின் எல்லாப்பட்டணங்களையும், ௰
கிலேயாத் அனைத்தையும், சல்காயி எதிரேயி
என்ற பாசானிலிருந்த ஓகுடைய இராச்சியத்
தின் பட்டணங்கள்மட்டும் இருக்கிற பாசான்
அனைத்தையும் பிடித்தோம்.—ஏனெனில் பாசா ௰௧
னின் இராசாவாகிய ஓகென்றவன்மாத்திரம்
இராட்சதரில் மீதியானவர்களில் இன்னம்
இருந்தான்; இதோ மனிதருடைய முழத்தின்ப
டியே, ஒன்பதுமுழ நீளமும் நான்குமுழ அகலமு

மான இருப்புக்கட்டிலாகிய அவன் கட்டில்
அம்மோன் புத்திரருடைய ராபாபட்டணத்தில்
இருக்கவில்லையோ?
௰௨ அந்தத் தேசத்தை அக்காலத்திலே சுதந்தரித்
துக்கொண்டோம்; அர்னோன் ஆற்றண்டையி
லிருக்கிற ஆரோவேரைத்துவக்கி, கீலேயாத்
மலைகளின் பாதியையும் அதிலிருக்கிற பட்ட
ணங்களையும் ரூபேனியருக்கும் காதியருக்கும்
௰௩ கொடுத்தேன்.—குறை கீலேயாத்தையும் ஓகின்
இராச்சியமாயிருந்த பாசான் அனைத்தையும் மனா
சேயின் பாதிக்கோத்திரத்திற்குக் கொடுத்தேன்;
இராட்சதரின் தேசமென்னப்பட்டிருந்த முழுப்
பாசானுமாகிய அர்கோப் சீமையையெல்லாம்
௰௪ தானே.—மனாசேயின் குமாரனாகிய யாவீர் அர்
கோப் சீமையெல்லாம் கேசூரியர் மாகாத்தியர்
என்றவர்களின் எல்லைமட்டும் கட்டிக்கொண்டு,
அதற்குத் தன் நாமத்தின்படியே யாவீரின் ஊர்
களான பாசானென்று இந்நாள்வரைக்கும் சொல்
௰௫ லப்படுகிற பெயரைத் தரித்தான்.—மாகீருக்குக்
௰௬ கீலேயாத்தைக் கொடுத்தேன்.-ஆனால் கீலேயாத்
தைத் துவக்கி அர்னோன் ஆறு ஓடுகிற நடுமைய
மும் கடையாந்தரமும்மட்டுக்கும் அம்மோன்
புத்திரரின் எல்லையான யாபோக்கு ஆறுமட்டும்
௰௭ இருக்கிறதையும்.-கின்னரேத்தைத் துவக்கி அஸ்
தோத்பிஸ்காவுக்குத் தாழ்வாய்க் கிழக்கேயிருக்
கிற உப்புக்கடலான சமனானவெளியின் கடல்
மட்டும் யோர்தானின் எல்லைக்குள்ளாயிருக்கிற
சமனானவெளியையும், நான் ரூபேனியருக்
௰௮ கும் காதியருக்கும் கொடுத்தேன்.-இப்படி வாங்
கின உங்களுக்கு நான் அந்நாளிலே கற்பித்ததா
வது: உங்கள் பராபரனாகிய கர்த்தர் உங்களுக்கு
இந்தத் தேசத்தைச் சுதந்தரமாகக் கொடுத்தார்;சே
வகமனிதராகிய நீங்கள் அனைவரும் இஸ்ரவேல்
புத்திரரான உங்கள் சகோதரருக்கு முன்னே ஆயு
௰௯ தப்பாடானவர்களாக நடந்துபோங்கள்.—உங்
கள் பெண்சாதிகளும் உங்கள் பிள்ளைகளும் உங்
கள் ஆடுமாடுகளும்மாத்திரம் நாம் உங்களுக்குக்
கொடுத்த உங்கள் பட்டணங்களில் இருக்கட்
டும்; ஏனெனில் ஆடுமாடுகள் உங்களுக்குத்
௨௰ திரட்சியாயிருக்கிறதென்று அறிவேன்.—கர்த்தர்
உங்களைப்போல உங்கள் சகோதரரையும் இளைப்
பாறப்பண்ணி, இவர்களும் யோர்தானுக்கு
அப்பாலே உங்கள் பராபரனாகிய கர்த்தர் தங்
களுக்குக் கொடுக்கிற தேசத்தைச் சுதந்தரித்துக்
கொள்ளும்மட்டும் நீங்களிருந்து, பிற்பாடு அவர
வர் நான் உங்களுக்குக் கொடுத்த உங்கள் சுதந்
தரத்திற்குத் திரும்புவீர்களாக என்றேன்.
௨௧ அக்காலத்திலே நான் யோசுவாவுக்குக் கற்பித்
ததாவது: உங்கள் பராபரனாகிய கர்த்தர் அந்த இ
ரண்டு இராசாக்களுக்குச் செய்தவைகளை எல்
லாம் உன் கண்கள் கண்டன; இப்படியே கர்த்தர்
நீ போய்ச்சேரும் எல்லா இராச்சியங்களுக்கும்
௨௨ செய்வார். — அவர்களுக்குப் பயப்படீர்களாக;
ஏனெனில் உங்கள் பராபரனாகிய கர்த்தர் தாமே
உங்களுக்காக யுத்தம்பண்ணுகிறவரென்றேன்.

அக்காலத்திலே நான் கர்த்தரை விண்ணப்பம் ௨௩
பண்ணிச் சொன்னதாவது:—கர்த்தராகிய ஆண் ௨௪
டவரே, தேவரீர் உம்முடைய அடியானுக்கு
உம்முடைய மகத்துவத்தையும் உம்முடைய பல
முள்ள கையையும் காண்பிக்கத் துவக்கினீர்;
ஏனெனில் வானத்திலும் பூமியிலும் உம்மு
டைய கிரியைகளுக்கும் உம்முடைய வல்லமை
களுக்கும் ஒத்ததாகச் செய்யத்தக்க தேவன் யார்?-
நான் கடந்துபோய் யோர்தானுக்கு அப்பால் ௨௫
இருக்கிற அந்த நல்ல தேசத்தையும் அந்த நல்ல
பர்வதத்தையும் லீபனோனையும் பார்க்கட்டுமே
என்றேன்.— ஆனால் கர்த்தர் உங்கள்நிமித்தமாக ௨௬
என்மேலே கோபமாயிருந்து, என்னைக் கேளா
மல்போய், என்னோடே சொன்னதாவது: உனக்
குப் போதும், இந்தக் காரியத்தைக்குறித்து இனி
நம்மோடே சொல்லிக்கொள்ளாயாக.— நீ பிஸ் ௨௭
காவின் கொடுமுடியில் ஏறி, உன் கண்களை
மேற்கிலும் வடக்கிலும் தெற்கிலும் கிழக்கிலும்
ஏறெடுத்து, உன் கண்களினாலே பார்த்துக்கொ
ண்டிரு; ஏனெனில் இந்த யோர்தானை நீ கடப்
பதில்லை.—ஆகையால் நீ யோசுவாவுக்குக் கட் ௨௮
டளைகொடுத்து, அவனைத் திடத்திப் பலப்ப
டுத்து; ஏனென்றால் அவன் இந்தச் சனத்திற்கு
முன்பாகக் கடந்துபோய், அவனே நீ காணும்
தேசத்தை அவர்களுக்குப் பங்கிட்டுக்கொடுப்
பானென்றார்.—இப்படியே பெத்பெயோருக்கு ௨௯
எதிரான இந்தப் பள்ளத்தாக்கில் இருந்துவிட்
டோம்.

## ௪. அதிகாரம்.

௧. கீழ்ப்படிதலுக்கு ஏற்ற புத்திவார்த்தைகள். ௪௧. மோசே யோர்தான் நதிக்கப்பால் மூன்று அடைக்கலப்பட்டணங்களை நியமித்தது.

இப்பொழுதும் இஸ்ரவேலே, நீங்கள் பிழைக் ௧
கும்படிக்கும், நீங்கள் பிரவேசித்து உங்கள் பி
தாக்களின் பராபரனாகிய கர்த்தர் உங்களுக்குக்
கொடுக்கிற தேசத்தைச் சுதந்தரித்துக்கொள்ளும்
படிக்கும், நீங்கள் செய்யவேண்டியதேதென்று
நான் உங்களுக்குப் போதிக்கிறகட்டளைகளையும்
நியாயங்களையும் கேளுங்கள்.—நான் உங்களுக் ௨
குக் கற்பிக்கிற உங்கள் பராபரனாகிய கர்த்தரின்
கற்பனைகளை நீங்கள் கைக்கொள்ளும்படிக்கு,
நான் உங்களுக்குக் கற்பிக்கிற வசனத்தோடே
நீங்கள் ஒன்றும் கூட்டவும் அதில் ஒன்றும்
குறைக்கவும்வேண்டாம்.—பாகால்பேயோரின் ௩
நிமித்தம் கர்த்தர் செய்ததை உங்கள் கண்கள்
கண்டது; ஏதெனில் பாகால்பேயோரைப் பின்
பற்றின மனிதரையெல்லாம் உன் பராபரனாகிய
கர்த்தர் உன் நடுவிலிராதபடிக்கு அழித்தார். —
ஆனால் உங்கள் பராபரனாகிய கர்த்தரைப் பற்றிக் ௪
கொண்ட நீங்கள் அனைவரும் இந்நாளில் உயி
ரோடிருக்கிறீர்கள். — இதோ நீங்கள் சுதந்தரிக் ௫
கிறதற்கு உட்பிரவேசிக்கும் தேசத்திலே, என்
பராபரனாகிய கர்த்தர் எனக்குக் கற்பித்தபடியே,
செய்யும்படிக்கு நான் உங்களுக்குக் கட்டளைக
ளையும் நியாயங்களையும் போதித்தேன். — ஆகை ௬
யால் அவைகளைக் கைக்கொண்டு, அவைகளின்

படி செய்யுங்கள்; ஏனெனில் சனசதளங்களின்
கண்களுக்குமுன்பாகவும் அதுவே உங்கள் ஞா
னமும் உங்கள் உணர்வுமாயிருக்கும்; அவர்கள்
இந்தக் கட்டளைகளையெல்லாம் கேட்டு, இந்தப்
பெரிய சாதியே ஞானமும் உணர்வுமான சன
௭ மென்பார்கள். — ஏனெனில் நம்முடைய பரா
பரனாகிய கர்த்தரை நாம் தொழுதுகொள்ளுகிற
பொழுதெல்லாம், அவர் நமக்குச் சமீபமாயிருக்
கிறதுபோல, பராபரன் இத்தனை சமீபமாயிருக்
௮ கப்பட்ட வேறே பெரியசாதி எது? — இந்நா
ளில் உங்களுக்குமுன்பாக நான் நிறுத்துகிற
இந்த எல்லா நியாயப்பிரமாணத்திற்கும் ஒத்த
இத்தனை நீதியுள்ள கட்டளைகளையும் நியாயங்க
ளையும் பெற்றிருக்கிற வேறே பெரியசாதியும்
௯ எது?—உன் கண்கள் கண்ட காரியங்களை நீ மற
வாதபடிக்கும், உன் சீவனுள்ள நாளெல்லாம் அ
வைகள் உன் இருதயத்தை விட்டகன்றுபோகா
தபடிக்கும்மாத்திரம் நீ எச்சரிக்கையாயிருந்து,
உன் ஆத்துமாவை மிகவும் காவல்பண்; உன்
பிள்ளைகளுக்கும் உன் பிள்ளைகளின் பிள்ளைக
௰ ளுக்கும் அவைகளை அறிவிக்கக்கடவாய்.-விசே
ஷமாய் நீ ஒரேபில் உன் பராபரனாகிய கர்த்தருக்
குமுன்பாக நின்ற நாளில் செய்தியைத்தான்;
அப்பொழுது கர்த்தர் என்னுடனே, சனத்தை
நமக்குக் கூட்டு, நம்முடைய வார்த்தைகளை அ
வர்களுக்குக் கேட்கப்பண்ணுவோம்; அவர்கள்
பூமியில் உயிரோடிருக்கும் நாளெல்லாம் நமக்
குப் பயந்திருக்கும்படிக்கு, அவைகளைக் கற்றுக்
கொண்டு, தங்கள் பிள்ளைகளுக்கும் போதிக்கக்
௰௧ கடவர்களென்றாரே. — அப்பொழுது நீங்கள்
சேர்ந்து, பர்வதத்தின் அடியிலே நின்றீர்கள்;
பர்வதமோவென்றால் நடுவானமட்டும் அக்கினி
யாய் எரிந்தது; இருளும் மேகமும் அந்தகார
௰௨ மும் உண்டாயிருந்தன.—கர்த்தர் அக்கினியின்
நடுவிலிருந்து உங்களோடே பேசினார்; வார்த்
தைகளின் சத்தத்தை நீங்கள் கேட்டீர்கள்; ஆனால்
நீங்கள் சத்தத்தைக் கேட்டதே அல்லாமல் ஓர்
௰௩ உருவைக் கண்டதில்லை.—நீங்கள் செய்ய அவர்
உங்களுக்குக் கற்பித்த பத்துவார்த்தைகளாகிய
தம்முடைய உடம்படிக்கையை அவர் உங்க
ளுக்கு அறிவித்து, அவைகளை இரண்டு கல்ப்
பலகைகளில் எழுதினார்.
௰௪ நீங்கள் சுதந்தரிக்கிறதற்குப் போயிருக்கும் தே
சத்திலே கைக்கொள்ளவேண்டிய கட்டளைகளை
யும் நியாயங்களையும் உங்களுக்குப் போதிக்கவே
ண்டுமென்றும் அக்காலத்திலே கர்த்தர் எனக்குக்
௰௫ கற்பித்தார்.-கர்த்தர் ஒரேபிலே அக்கினியின் நடு
வேயிருந்து உங்களோடே பேசுகிற நாளிலே,
௰௬ நீங்கள் ஓர் உருவையும் கண்டதில்லை.—ஆகை
யால் நீங்கள் உங்களைக் கெடுத்து, ஆண் உருவும்,
௰௭ அல்லது பெண் உருவும்,—அல்லது பூமியிலிருக்
கிற யாதொரு மிருகத்தின் உருவும் அல்லது ஆ
காயத்திலே பறக்கிற செட்டையுள்ள யாதொரு
௰௮ பட்சியின் உருவும்,—அல்லது பூமியிலுள்ள யா
தொரு ஊர்வனவற்றின் உருவும், அல்லது பூமி
யின்கீழ்த் தண்ணீரிலுள்ள யாதொரு மச்சத்தின்
உருவுமாயிருக்கிற யாதொரு விக்கிரகச் சாய
லான உருவத்தை உங்களுக்கு உண்டாக்காதப
டிக்கும்,— நீ உன் கண்களை வானத்திற்கு ஏறெ ௰௯
டுத்து, உன் பராபரனாகிய கர்த்தர் வானத்தின்
கீழெங்குமிருக்கிற எல்லாச் சனசதளங்களுக்
கும் பங்கிட்ட வானத்தின் சகல சேனையாகிய
சூரியனையும் சந்திரனையும் நட்சத்திரங்களையும்
நோக்கி, அவைகளைப் பணிந்து சேவிக்க இணக்
கப்படாதபடிக்கும், உங்கள் ஆத்துமாக்களுக்
காக மிகவும் எச்சரிக்கையாயிருங்கள்.—ஏனெ ௨௰
னில் இந்நாளில் இருக்கிறதுபோல, நீங்கள் தமக்
குச் சுதந்தரமான சனமாயிருக்கும்படிக்கு, கர்த்
தர் உங்களைச் சேர்த்துக்கொண்டு, உங்களை எகிப்
து என்ற இருப்புக்காளவாயிலிருந்து புறப்படப்
பண்ணினார்.
கர்த்தர் உங்கள்நிமித்தம் என்மேலே கோப ௨௧
மாகி, நான் யோர்தானைக் கடப்பதில்லையென்
றும், உன் பராபரனாகிய கர்த்தர் உனக்குச் சுதந்
தரமாகக் கொடுக்கிற அந்த நல்லதேசத்தில் நான்
பிரவேசிப்பதில்லையென்றும் ஆணையிட்டார்.—
ஆனதுகொண்டு நான் யோர்தானைக் கடவாமல் ௨௨
இந்தத் தேசத்திலே சாகிறேன்; நீங்களோவென்
றால் கடந்து, அந்த நல்லதேசத்தைச் சுதந்தரித்
துக்கொள்ளுவீர்கள். — நீங்கள் உங்கள் பராபர ௨௩
னாகிய கர்த்தர் உங்களோடே பண்ணின உடம்
படிக்கையை மறந்து, உன் பராபரனாகிய கர்த்தர்
உனக்கு வேண்டாமென்று விலக்கின எந்த
விதச் சாயலான சுரூபத்தையாகிலும் உங்களு
க்கு உண்டாக்காதபடிக்கு எச்சரிக்கையாயிருங்
கள்.—ஏனென்றால் உன் பராபரனாகிய கர்த்தர் ௨௪
பட்சிக்கிற அக்கினியாகிய எரிச்சலுள்ள தேவ
னானவர்.
உனக்குப் பிள்ளைகளும் பிள்ளைகளின் பிள் ௨௫
ளைகளும் பிறந்து, நீங்கள் தேசத்தில் வெகுநாள்
இருந்தபிற்பாடு, நீங்கள் உங்களைக் கெடுத்து,
பலவிதச் சாயலான சுரூபங்களைப் பண்ணி,
உன் பராபரனாகிய கர்த்தருக்குக் கோபம் உண்
டாக்க அவர் பார்வைக்குப் பொல்லாப்பான
தைச் செய்தால்,—நீங்கள் சுதந்தரித்துக்கொள்ள ௨௬
யோர்தானைக் கடந்துபோகிற தேசத்தில் இரா
மல், சீக்கிரம் அழியவே அழிவீர்களென்று, இந்
நாளில் வானத்தையும் பூமியையும் உங்களுக்கு
விரோதமாகச் சாட்சியாய் அழைக்கிறேன்; நீங்
கள் அதிலே நீடித்தநாளாயிராமல், அழிக்கவே
அழிக்கப்படுவீர்கள். — கர்த்தர் உங்களைச் சன ௨௭
சதளங்களுக்குள்ளே சிதறடிப்பார்; கர்த்தர் உங்
களைக் கொண்டுபோய் விடப்போகிற சாதிக
ளிடத்திலே கொஞ்சச்சனங்களாய் மீந்திருப்
பீர்கள்.—அங்கே காணாமலும் கேளாமலும் சாப் ௨௮
பிடாமலும் முகராமலும் இருக்கிற மரமும் கல்
லுமான மனிதர் கைகளின் வேலையாகிய தேவர்
களைச் சேவிப்பீர்கள்.—அப்பொழுது அங்கே ௨௯
யிருந்து உன் பராபரனாகிய கர்த்தரைத் தேடு
வாய்; அவரை உன் முழு இருதயத்தினாலும் உன்

முழு ஆத்துமாவினாலும் தேடிக்கொண்டிருந்தா
கய யேயானால், கண்டுபிடிப்பாய்.—உனக்கு மன
இடுக்கண் உண்டாகி, இந்தக் காரியங்களெல்
லாம் உன்னைப் பிடிக்கும் முடிவுநாள்களில், நீ
உன் பராபரனாகிய கர்த்தரண்டைக்குத் திரும்பி
கக அவர்சத்தத்திற்குக் கீழ்ப்படிவாய்.—ஏனெனில்
உன் பராபரனாகிய கர்த்தர் மனஉருக்கமுள்ள
தேவனானவர்; அவர் உன்னைக் கைவிடாமலும்,
உன்னை அழிக்காமலும், தாம் ஆணையிட்டு உன்
பிதாக்களோடே பண்ணின உடம்படிக்கையை
மறவாமலுமிருப்பார்.
கஉ ஏனெனில் பராபரன் மனிதனைப் பூமியிலே
சிருஷ்டித்த நாள்முதல்கொண்டு, உனக்கு முன்
இருந்த பூர்வநாள்களில், வானத்தின் ஒரு முனை
துவக்கி அதின் மறுமுனைமட்டும் இருக்கிற எவ்
விடத்திலாகிலும் இப்படிக்கொத்த பெரியகாரி
யம் நடந்ததோ? அல்லவென்று இப்படிக்கொத்
கங தது கேட்கப்பட்டதோவென்று நீ விசாரி.—நீ
கேட்டதுபோல, யாதொரு சனம் அக்கினியின்
நடுவிலிருந்து பேசுகிற பராபரனுடைய சத்தத்
தைக் கேட்டதும் உயிரோடே இருந்ததுமுண்
கச டோ?—அல்லது உங்கள் பராபரனாகிய கர்த்தர்
எகிப்திலே உன் கண்களுக்குமுன்பாக உங்க
ளுக்குச் செய்தபடியெல்லாம், பராபரன் போய்,
சோதனைகளினாலும், அடையாளங்களினாலும்,
அற்புதங்களினாலும், யுத்தத்தினாலும், பலத்த கை
யினாலும், நீட்டின புயத்தினாலும், மகா பயங்
கரச்செயல்களினாலும், யாதொரு சாதியை ஒரு
சாதியின் நடுவிலிருந்து தமக்குச் சேர்த்துக்கொ
கடு ண்டுபோக, இனம்பண்ணினதுண்டோ?—கர்த்
தரே பராபரன், அவரை அல்லாமல் வேறொருவ
ரில்லை என்பதை நீ அறியும்படிக்கு, உனக்கு
கசு அப்படித் தெரியக் காட்டப்பட்டது.—உன்னை
உபதேசிக்கும்படிக்கு, அவர் வானத்திலிருந்து
தமது சத்தத்தை உனக்குக் கேட்கப்பண்ணி,
பூமியிலே தமது பெரிய அக்கினியை உனக்குக்
காண்பித்தார்; அக்கினியின் நடுவிலிருந்துண்
டான அவருடைய வார்த்தைகளைக் கேட்
கஎ டாய்.—அவர் உன் பிதாக்களைச் சிநேகித்து,
அவர்களுக்குப் பின்னான அவர்களுடைய வித்
கஅ தைத் தெரிந்துகொண்டபடியினாலே,—அவர்
உன்னிலும் பலத்த பெரியசாதிகளை உனக்கு
முன்பாகத் துரத்தவும், உன்னை அழைத்துப்போய்
அவர்கள் தேசத்தை இந்நாளில் ஆகிறதுபோல
உனக்குச் சுதந்தரமாகக் கொடுக்கவும், உன்னைத்
தம்முடைய முகத்தினாலும் தம்முடைய மகா
வல்லமையினாலும் எகிப்திலிருந்து புறப்படப்
பண்ணினார்.
ககூ ஆனதுகொண்டு, உயர வானத்திலும் கீழே
பூமியிலும் கர்த்தரே பராபரன், அவரைத்தவிர ஒ
ருவருமில்லை என்பதை நீ இந்நாளிலே அறிந்து,
சய உன் மனதிலே சிந்தித்து,—உனக்கும் உனக்குப்
பிற்பாடு உன் பிள்ளைகளுக்கும் நன்றாயிருக்கிற
தற்கும், உன்பராபரனாகிய கர்த்தர் உனக்கு என்
றைக்குமென்று கொடுக்கிற சீமையிலே நீ நீடித்த
நாளாயிருக்கிறதற்கும், நான் இன்று உனக்குக்கற்
பிக்கிற அவருடைய கட்டளைகளையும் அவரு
டைய கற்பனைகளையும் கைக்கொள்ளக்கடவா
யென்றான்.
அப்பொழுது மோசே யோர்தானுக்கு இப்பா சக
லே சூரியோதயமுனையாயிருக்கிற மூன்றுபட்
டணங்களாகிய,—ரூபேனரைச்சேர்ந்த சமனான சஉ
பூமியென்ற வனாந்தரத்திலுள்ள பேத்சேரையும்,
காதியரைச்சேர்ந்த கிலேயாத்திலுள்ள ராமோத்
தையும், மனாசேயரைச்சேர்ந்த பாசானிலுள்ள
கோலானையும்,—அறியாமலும் பகையை முன் சங
நாளில் வைத்திராமலும், தனக்கடுத்தவனைக் கொ
ன்றுபோட்டவன், அந்த மூன்று பட்டணங்க
ளில் ஒன்றிலே ஓடிப்போய் உயிரோடிருக்கும்
படிக்கு, பிரித்துவைத்தான்.
இது மோசே இஸ்ரவேல் புத்திரரின்முன் சச
நிறுத்தின நியாயப்பிரமாணம்.—இவைகள், இஸ் சடு
ரவேல் புத்திரர் எகிப்திலிருந்து புறப்பட்டபிற்
பாடு, மோசே யோர்தானுக்கு இப்பாலே எஸ்போ
னிலே குடியிருந்த எமோரியரின் இராசாவாகிய
சீகோனின்தேசத்திலிருக்கிறபெத்பேயோருக்கு
எதிரான பள்ளத்தாக்கிலே, அவர்களுக்குச் சொ
ன்ன சாட்சிகளும் கட்டளைகளும் நியாயங்களு
மாயிருக்கின்றன.—அவனை மோசேயும் இஸ்ர சசு
வேல் புத்திரரும் எகிப்திலிருந்து புறப்பட்ட
பிற்பாடு முறியடித்து,—யோர்தானுக்கு இப்பா சஎ
லே சூரியோதயமுனையில் அர்னோன் ஆற்றின்
ஓரமான ஆரோவேரைத்துவக்கி எர்மோனென்ற
சீயோன் மலைமட்டும் இருக்கிற சீமையும்,—யோர் சஅ
தானுக்கு இப்பாலே சூரியோதயமுனையில் அஸ்
தோத்பிஸ்காவுக்கும் தாழ்வான சமனானவெளி
யின் கடல்மட்டும் இருக்கிற சமனானவெளிய
னைத்துமாகிய,—எமோரியருடைய இரண்டு இ சகூ
ராசாக்களின் தேசங்களான சீகோனுடைய தே
சத்தையும், பாசானின் இராசாவாகிய ஓகின் தே
சத்தையும், கட்டிக்கொண்டிருந்தார்கள்.

## ரு. அதிகாரம்.

க. ஓரேப்பிலே செய்த உடம்படிக்கை. சு. பத்துக்கற்பனைகள். உஉ. சனங்கள் வேண்டுதல்செய்தபடி, மோசே பராபரனிடத்தில் நியாயப் பிரமாணத்தைப்பெற்றது.

மோசே இஸ்ரவேலையெல்லாம் அழைப்பித்து, க
அவர்களுக்குச் சொன்னதாவது: இஸ்ரவேலே,
நான் இன்று உங்கள் காதுகள் கேட்கச் சொல்லு
கிற கட்டளைகளையும் நியாயங்களையும் கேள்; நீங்
கள் அவைகளின்படியே செய்யும்படிக்கு அவை
களைக் கற்றுக் கைக்கொள்ளக்கடவீர்கள்.—நம் உ
முடைய பராபரனாகிய கர்த்தர் ஓரேப்பிலே நம்
மோடே உடம்படிக்கைபண்ணினார்.—இந்த உ ங
டம்படிக்கையைக் கர்த்தர் நம்முடைய பிதாக்க
ளோடல்ல, இன்று இங்கே உயிரோடிருக்கிற நம்
மோடெல்லாம் பண்ணினார்.—முகமுகமாய்க் கர் ச
த்தர் பர்வதத்திலே அக்கினியின் நடுவிலிருந்து உ
ங்களோடே பேசினார்.—கர்த்தருடைய வார்த்தை டு
யை உங்களுக்கு அறிவிக்கும்படிக்கு, அக்காலத்

திலே நான் கர்த்தருக்கும் உங்களுக்கும் நடு
வாக நின்றேன்; ஏனெனில் பர்வதத்தில் ஏரு
மல் அக்கினிக்குப் பயந்தீர்கள்; அவர் சொன்
னதாவது:

௬ உன்னை அடிமையின் வீடாகிய எகிப்துதே
சத்திலிருந்து புறப்படப்பண்ணின உன் பரா
௭ பரனாகிய கர்த்தர் நாமே. — நமக்குமுன்பாக
உனக்கு வேறு தேவர்கள் உண்டாயிருக்கவேண்
டாம்.

௮ உயர வானத்திலும் கீழே பூமியிலும் பூமியின்
கீழ்த் தண்ணீரிலும் உண்டானவைகளுக்கு ஒத்
திருக்கிற ஒரு சுரூபத்தையாகிலும் யாதொரு விக்
கிரகத்தையென்கிலும் நீ உனக்கு உண்டாக்க
௯ வேண்டாம்.—நீ அவைகளை நமஸ்கரிக்கவும் அ
வைகளைச் சேவிக்கவும் வேண்டாம்; ஏனென்
றால் உன் பராபரனாகிய கர்த்தராயிருக்கிற நாம்
எரிச்சலுள்ள தேவனாயிருந்து, நம்மைப் பகைக்
கிறவர்களுக்கோவென்றால், பிதாக்களுடைய அ
நியாயத்தைப் பிள்ளைகளிடத்திலே மூன்றாம்
நான்காம் தலைமுறைமட்டும் விசாரிக்கிறவராயி
௰ ருக்கிறோம்.—ஆனால் நம்மைச் சிநேகித்து, நம்
முடைய கற்பனைகளைக் கைக்கொள்ளுகிறவர்
களுக்கு ஆயிரம் தலைமுறைமட்டும் தயவுசெய்கி
றவராயிருக்கிறோம்.

௰௧ உன் பராபரனாகிய கர்த்தருடைய நாமத்தை
வீணிலே வழங்காயாக; ஏனென்றால் கர்த்தர் தம்
முடைய நாமத்தை வீணிலே வழங்கினவனைத்
தண்டியாமல் விடார்.

௰௨ ஓய்வுநாளை உன் பராபரனாகிய கர்த்தர் உனக்
குக் கற்பித்தபடியே பரிசுத்தமாக்கும்படிக்குக்
௰௩ கைக்கொள்.—ஆறுநாள் நீ வேலைசெய்து, உன்
௰௪ கிரியையையெல்லாம் நடப்பிப்பாயாக.—ஆனால்
ஏழாம்நாள் உன் பராபரனாகிய கர்த்தருடைய
ஓய்வுநாள்; அதிலே நீயானாலும், உன் குமாரனா
னாலும், உன் குமாரத்தியானாலும், உன் வேலைக்
காரனானாலும், உன் வேலைக்காரியானாலும், உன்
எருதானாலும், உன் கழுதையானாலும், உனக்கி
ருக்கிற யாதொரு மிருகசீவனானாலும், உன் வா
சல்களில் இருக்கிற உன் பரதேசியானாலும், யா
தொரு வேலையைச்செய்யவேண்டாம்; உன் வே
லைக்காரனும் உன் வேலைக்காரியும் உன்னைப்
௰௫ போல இளைப்பாறும்படிக்குத்தானே. — ஏனெ
னில் எகிப்துதேசத்தில் அடிமையாயிருந்தாயெ
ன்றும், உன் பராபரனாகிய கர்த்தர் உன்னை அங்
கேயிருந்து பலத்த கையினாலும் நீட்டப்பட்ட
புயத்தினாலும் புறப்படப்பண்ணினாரென்றும்,
நினைப்பாயாக; ஆனபடியினாலே ஓய்வுநாளை ஆச
ரிக்க உன் பராபரனாகிய கர்த்தர் உனக்குக் கற்
பித்தார்.

௰௬ உன் நாள்கள் நீடித்திருக்கிறதற்கும், உன் பரா
பரனாகிய கர்த்தர் உனக்குக் கொடுக்கிற சீமையி
லே நீ நன்றாயிருக்கிறதற்கும், உன் தகப்பனையும்
உன் தாயையும் உன் பராபரனாகிய கர்த்தர் உனக்
குக் கற்பித்தபடி கனம்பண்.

கொலைசெய்யாயாக. ௰௭
விபசாரம்பண்ணாயாக. ௰௮
களவுசெய்யாயாக. ௰௯
உனக்கடுத்தவனுக்கு விரோதமாகப் பொய்ச் ௨௰
சாட்சி சொல்லாயாக.

உனக்கடுத்தவனுடைய பெண்சாதியை இச் ௨௧
சிக்காயாக; உனக்கடுத்தவனுடைய வீட்டையும்
அவன் நிலத்தையும், அவன் வேலைக்காரனையும்,
அவன் வேலைக்காரியையும், அவன் எருதையும்,
அவன் கழுதையையும், பின்னை உனக்கடுத்தவ
னுக்குள்ள யாதொன்றையும், இச்சிக்காயாக
வென்றார்.

இந்த வார்த்தைகளைக் கர்த்தர் பர்வதத்திலே ௨௨
அக்கினியிலும் மேகத்திலும் அந்தகாரத்திலுமி
ருந்து, உங்கள் சபையோடெல்லாம் மகா சத்தத்
தோடே சொல்லி, அவைகளோடு ஒன்றும் கூட்
டாதிருந்து, அவைகளை இரண்டு கல்ப்பலகைக
ளில் எழுதி, எனக்குக் கொடுத்தார். — பர்வதம் ௨௩
அக்கினியாய் எரியும்போது, அந்தகாரத்தின் நடு
விலிருந்து உண்டாகிற சத்தத்தை நீங்கள் கேட்
டபொழுதோவெனில், கோத்திரங்களின் தலைவ
ரும் மூப்பருமாகிய நீங்களெல்லாரும் என்னண்
டையில்சேர்ந்து சொன்னதாவது:—இதோ எங் ௨௪
கள் பராபரனாகிய கர்த்தர் எங்களுக்குத் தம்மு
டைய மகிமையையும் தம்முடைய மகத்துவத்
தையும் காண்பித்தார்; அக்கினியின் நடுவிலிருந்
துண்டான அவருடைய சத்தத்தையும் கேட்
டோம்; பராபரன் மனிதனோடேபேசியும் இவன்
உயிரோடிருக்கிறதை இந்நாளிலே கண்டோம் —
இப்பொழுதும் நாங்கள் சாவானேன்; இந்தப் பெ ௨௫
ரிய அக்கினி எங்களைப் பட்சிக்குமே; நாங்கள்
அப்புறம் எங்கள் பராபரனாகிய கர்த்தரின் சத்தத்
தைக் கேட்டுக்கொண்டேயிருந்தால் சாவோம்.—
ஏனெனில் நாங்கள் கேட்டதுபோல, அக்கினி ௨௬
யின் நடுவிலிருந்து பேசுகிற சீவனுள்ள பராபர
னுடைய சத்தத்தைக் கேட்கிறதற்கும் உயிரோ
டிருக்கிறதற்கும், மாம்சமெல்லாம் எம்மாத்திரம்?—
நீர் கிட்டிப்போய், எங்கள் பராபரனாகிய கர்த்தர் ௨௭
உனக்குச் சொல்வதையெல்லாம் கேட்டு, நீரே
எங்கள் பராபரனாகிய கர்த்தர் சொல்வதையெல்
லாம் எங்களோடே சொல்லும்; நாங்கள் கேட்டு,
அதின்படியே செய்வோமென்றீர்கள்.

இதை நீங்கள் என்னோடே சொல்லுகையில், ௨௮
கர்த்தர் உங்கள் வார்த்தைகளின் சத்தத்தைக்
கேட்டு, என்னோடே சொன்னதாவது: இந்தச் ச
னம் உன்னோடே சொன்ன வார்த்தைகளின் சத்
தத்தைக் கேட்டோம்; அவர்கள் சொன்னதெல்
லாம் நல்லது.—அவர்களும் அவர்கள் பிள்ளைக ௨௯
ளும் என்றென்றைக்கும் நன்றாயிருக்கும்படிக்கு,
அவர்கள் சகலநாளும் நமக்குப் பயப்படுகிறதற்
கும், நம்முடைய கற்பனைகளையெல்லாம் கைக்
கொள்ளுகிறதற்குமான இப்படிக்கொத்த இரு
தயம் அவர்களுக்கு இருந்தால் தாவிளை. —
நீ போய் உங்கள் கூடாரங்களுக்குத் திரும் ௩௰
பிப்போங்களென்று அவர்களுக்குச் சொல். —

௩௧ நீயோவென்றால் இங்கே நம்மோடே தரித்திரு;
நீ அவர்களுக்குப் போதிக்கவும் நாம் அவர்களுக்
குச் சுதந்தரமாகக் கொடுக்கிற தேசத்தில் அவர்
கள் செய்யவும்வேண்டிய சகல கற்பனைகளை
யும் கட்டளைகளையும் நியாயங்களையும் உனக்
௩௨ குச் சொல்லுவோமென்றார்.—ஆகையால் உங்
கள் பராபரனாகிய கர்த்தர் உங்களுக்குக் கற்பித்த
தின்படியே செய்யச் சாவதானமாயிருங்கள்;வல
௩௩ து இடதுபுறமாக விலகீர்களாக.—நீங்கள் சுதந்த
ரிக்கும் தேசத்திலே பிழைத்துச் சுகித்து நீடித்தி
ருக்கும்படிக்கு, உங்கள் பராபரனாகிய கர்த்தர்
உங்களுக்குக் கற்பித்த எல்லா வழியிலும் நடக்
சக்கடவீர்கள்.

## ௬. அதிகாரம்.

௧. நியாயப்பிரமாணம் கீழ்ப்படிதலுக்கென்பது. ௩. கீழ்ப்படிதலுக்கு ஏற்ற புத்திமதிகள்.

௧ நீ உன் பராபரனாகிய கர்த்தருக்குப் பயந்து,உயி
ரோடிருக்கும் நாளெல்லாம், நீயும் உன் குமார
னும் உன் குமாரத்தியும் நான் உனக்குக் கற்பிக்
கிற அவருடைய எல்லாக் கட்டளைகளையும் கற்
பனைகளையும் கைக்கொள்ளுகிறதினாலே நீடித்தி
௨ ருக்கும்படிக்கு, — நீங்கள் சுதந்தரிக்கத்தக்கதா
கக் கடந்துபோயிருக்கும் தேசத்திலே, நீங்கள்
செய்யவேண்டுமென்று உங்கள் பராபரனாகிய
கர்த்தர் உங்களுக்குப் போதிக்கக் கற்பித்த கற்ப
னைகளும் கட்டளைகளும் நியாயங்களும் இவை
௩ கள்தானே.—ஆகையால் இஸ்ரவேலே, நீ நன்றா
யிருக்கிறதற்கும், உன் பிதாக்களின் பராபரனா
கிய கர்த்தர் உனக்குச் சொன்னபடி, பாலும் தே
னும் ஓடும்தேசத்திலே நீ மிகவும் பெருகிப்போ
கிறதற்கும், நீ கேள்விகொடுத்து, அவைகளின்
படிசெய்யச் சாவதானமாயிரு.

௪ இஸ்ரவேலே, கேள்; நம்முடைய பராபரனா
௫ கிய கர்த்தர் ஒரே கர்த்தரானவர்.—நீ உன் பரா
பரனாகிய கர்த்தனை உன் முழு இருதயத்தினாலும்
உன் முழு ஆத்துமாவினாலும் உன் முழுப்பலத்
௬ தினாலும் சிநேகிப்பாயாக.—இன்று நான் உனக்
குக் கற்பிக்கிற இந்த வார்த்தைகள் உன் இருத
௭ யத்தில் இருக்கக்கடவது.—நீ அவைகளை உன்
பிள்ளைகளுக்குக் கருத்தாய்ப் போதித்து, நீ உன்
வீட்டில் உளுக்காந்திருக்கிறபொழுதும், வழியி
லே நடக்கிறபொழுதும், படுத்துக்கொள்ளுகிற
பொழுதும், எழுந்திருக்கிறபொழுதும், அவைக
௮ ளைக்குறித்துப் பேசி,—அவைகளை உன் கையின்
மேல் அடையாளமாகக் கட்டுவாயாக; அவை
கள் உன் கண்களின் நடுவே நினைப்பூட்டுதலாக
௯ இருக்கக்கடவது.—அவைகளை உன் வீட்டுவா
சல் நிலைகளின்மேலும், உன் வாசல்களிலேயும்
எழுதுவாயாக.

௰ உன் பராபரனாகிய கர்த்தர் உனக்குக் கொ
டுப்போமென்று ஆபிரகாம் ஈசாக் யாக்கோப்
என்ற உன் பிதாக்களுக்கு ஆணையிட்ட தேசத்
தில் உன்னைப் பிரவேசிக்கப்பண்ணும்பொழு
தும், நீ கட்டாதிருக்கிற வசதியான பெரிய பட்
டணங்களையும், — நீ நிரப்பாதிருக்கிற சகல ௰௧
நல்ல வஸ்துக்களால் நிரம்பிய வீடுகளையும், நீ
வெட்டாமல் வெட்டப்பட்டிருக்கிற துரவுகளை
யும், நீ நாட்டாத திராட்சத்தோட்டங்களையும்,
ஒலீவத்தோப்புகளையும், அவர் உனக்குக் கொ
டுப்பதினால், நீ சாப்பிட்டுத் திர்ப்தியாகிறபொ
ழுதும், — உன்னை அடிமைவீடாகிய எகிப்து ௰௨
தேசத்திலிருந்து புறப்படப்பண்ணின கர்த்தனை
மறவாதபடிக்கு எச்சரிக்கையாயிரு. — நீ உன் ௰௩
பராபரனாகிய கர்த்தருக்குப் பயந்து, அவருக்கு
ஆராதனைசெய்து, அவர் நாமத்தைக்கொண்டு
ஆணையிடுவாயாக.—உன் பராபரனாகிய கர்த்தரு ௰௪
டைய கோபம் உனக்கு விரோதமாக மூண்டு,
உன்னைப் பூமியில் வைக்காமல், அழித்துப்போ
டாதபடிக்கு, உங்களைச் சுற்றிலும் இருக்கிற சன
சதளங்களின் தேவர்களாகிய ஒரு அந்நிய தே
வர்களைப் பின்பற்றாதிருப்பீர்களாக. — ஏனெ ௰௫
னில் உன் பராபரனாகிய கர்த்தர் உன் நடுவிலே
எரிச்சலுள்ள தேவனாயிருக்கிறார்.

நீங்கள் மாசாவிலே செய்ததுபோல, உங்கள் ௰௬
பராபரனாகிய கர்த்தனைப் பரிட்சைபாராதிருப்
பீர்களாக.—உங்கள் பராபரனாகிய கர்த்தர் உங் ௰௭
களுக்குக் கற்பித்த அவருடைய கற்பனைகளை
யும் அவருடைய சாட்சிகளையும் அவருடைய
கட்டளைகளையுமே கைக்கொள்வீர்களாக. — நீ ௰௮
நன்றாயிருக்கும்படிக்கும் கர்த்தர் உன் பிதாக்க
ளுக்கு ஆணையிட்ட நல்ல தேசத்தில் நீ பிரவே
சித்து, அதைச் சுதந்தரிக்கும்படிக்கும்,—கர்த்தர் ௰௯
உன் சத்துருக்களையெல்லாம் தாம் சொன்னபடி
உன் முகத்திற்கு முன்பாகத் துரத்திவிடும்படிக்
கும், நீ கர்த்தருடைய பார்வைக்குச் செம்மையும்
நன்மையுமாயிருக்கிறதைச் செய்வாயாக.

நம்முடைய பராபரனாகிய கர்த்தர் உங்களுக் ௨௰
குக் கற்பித்த இந்தச் சாட்சிகளும் கட்டளைக
ளும் நியாயங்களும் என்னவென்று உன் குமா
ரன் நாளைக்கு உன்னைக் கேட்டால்,—நீ உன் ௨௰௧
குமாரனோடே சொல்லவேண்டியது, நாங்கள்
எகிப்திலே பார்வோனுக்கு அடிமைகளாயிருந்
தோம்; கர்த்தரோவெனில் பலத்தகையினாலே,
எங்களை எகிப்திலிருந்து புறப்படப்பண்ணி
னார்.—அதேதெனில் கர்த்தர் எங்கள் கண்களுக் ௨௰௨
கு முன்பாக எகிப்திலே பார்வோன்மேலும்
அவனுடைய வீட்டைத்தின்மேலும் அடையா
ளங்களையும் கொடிதான பெரிய அற்புதங்களை
யும் கட்டளையிட்டு,—தாம் நம்முடைய பிதாக்க ௨௰௩
ளுக்கு ஆணையிட்ட தேசத்திற்கு எங்களைக் கூட்
டிக்கொண்டுபோய், அதை நமக்குக் கொடுக்கும்
படிக்கு எங்களை அவ்விடத்திலிருந்து புறப்ப
டப்பண்ணினார். — இப்பொழுதும் நாம் நம் ௨௰௪
முடைய பராபரனாகிய கர்த்தருக்குப் பயப்படு
கிறதற்கும், சகலநாளும் நாம் நன்றாயிருக்கிற
தற்கும், இந்நாளில் இருக்கிறதுபோல, நம்மை
அவர் உயிரோடே காக்கிறதற்குமாக இந்த எல்
லாக் கட்டளைகளின்படியேயும் செய்யக் கர்த்
தர் நமக்குக் கற்பித்தார்.—நம்முடைய பராபர ௨௰௫

ளுகிய கர்த்தர் நமக்குக் கற்பித்தபடியே நாம் அ
வருக்குமுன்பாக இந்த எல்லாக் கற்பனைகளின்
படியும்செய்யச் சாவதானமாயிருந்தால், நமக்கு
நீதியாயிருக்கும் என்பாயாக.

## எ. அதிகாரம்.

க. சனங்கள் விக்கிரகஆராதனையை விலகிநிற்பதையும், ௬. அவர்கள் பரி
சுத்தமாயிருப்பதையும், ௯. பராபரனுடைய சுபாவத்திலேதானே நீதி
யும் இரக்கமும் காணப்படுகிறதையும், ௰எ. அவர் சனங்களுக்கு வெற்
றியைத் தருவதையும் குறித்தது.

க உன் பராபரனுகிய கர்த்தர் நீ சுதந்தரிக்கப்போ
கிற தேசத்தில் உன்னைப் பிரவேசிக்கப்பண்ணி,
உன்னைப்பார்க்கிலும் சனம்பெருத்த சாதிகளா
கிய எத்தியர், கிர்காசியர், எமோரியர், கானானி
யர், பேரீசியர், எவியர், எபூசியரென்ற எழு
பலத்த சாதிகளை உனக்குமுன்பாகத் துரத்தி,—
உ நீ அவர்களை முறியடிக்கும்படிக்கு,உன் பராபர
ளுகிய கர்த்தர் அவர்களை உனக்குமுன்பாக ஒப்
புக்கொடுக்கும்பொழுது, அவர்களைச் சங்கரிக்க
வே சங்கரிக்கக்கடவாய்; நீ அவர்களோடே உட
ம்படிக்கைபண்ணவும் அவர்களுக்கு இரங்கவும்
௩ வேண்டாம்.—அவர்களோடே சம்பந்தம் கலவா
யாக; உன் குமாரத்திகளை அவர்கள் குமாரருக்குக்
கொடாமலும் அவர்கள் குமாரத்திகளை உன் குமா
௪ ரருக்குக் கொள்ளாமலும் இருப்பாயாக.–ஏனெ
னில் நம்மைப் பின்பற்ருமல், அந்நியதேவர்க
ளைச் சேவிக்கும்படிக்கு, அவர்கள் உன் குமார
ளை விலகப்பண்ணுவார்கள்;அப்பொழுது கர்த்த
ருடைய கோபம் உங்களுக்கு விரோதமாக
மூண்டு, உங்களைச் சீக்கிரத்திலே அழிக்கும்.—
௫ நீங்கள் அவர்களுக்குச் செய்யவேண்டியதேதெ
னில், அவர்கள் பலிபீடங்களை இடித்து, அவர்
கள் சிலைகளைத் தகர்த்து, அவர்கள் தோப்புகளை
வெட்டி, அவர்கள் சுரூபங்களை அக்கினியால்
௬ எரித்துவிடவேண்டும். — ஏனெனில் நீ உன்
பராபரனுகிய கர்த்தருக்குப் பரிசுத்தசனம், பூச்
சக்கரத்தில் இருக்கிற எல்லாச் சனசதளங்களி
லும் நீ தமக்குச் சொந்தச்சனமாயிருக்கிறதற்காக
உன் பராபரனுகிய கர்த்தர் உன்னைத் தெரிந்து
எ கொண்டார்.—சகல சனசதளங்களிலும் நீங்கள்
திரட்சியான சனமென்பதினுலே, கர்த்தர் உங்
களைப் பிரியமாய்ப் பார்த்தும் தெரிந்துகொண்
டதுமில்லை; ஏனெனில் நீங்கள் சகல சனசத
அ ளங்களிலும் கொஞ்சமான சனம்.—ஆனல் கர்த்
தர் உங்களைச் சிநேகித்ததினுலும், உங்கள் பிதாக்
களுக்கு இட்ட ஆணையைக் கைக்கொள்ளுகிற
தினுலும், கர்த்தர் உங்களைப் பலத்தகையினுலே
புறப்படப்பண்ணி, உன்னை அடிமைவீடாகிய
எகிப்தினுடைய இராசாவான பார்வோனின்
௯ கைக்கு நீங்கலாக்கி மீட்டார்.—இப்பொழுதும்
தம்மைச் சிநேகித்து, தமது கற்பனைகளைக் கைக்
கொள்ளுகிறவர்களுக்கு உன் பராபரனுகிய கர்த்
தர் ஆயிரந்தலைமுறைமட்டும்உடம்படிக்கையை
யும் தயவையும் காக்கிற உண்மையுள்ள தேவனு
௰ ன பராபரனுயிருக்கிறவரென்றும், — அவர் தம்
மைப் பகைக்கிறவர்களுக்கு வெளியரங்கமாகச்
சரிக்குச்சரிக்கட்டி அவர்களை அழிப்பாரென்
றும், அவர் தாமதியாமல் தம்மைப் பகைக்கிறவ
னுக்கு வெளியரங்கமாகச் சரிக்குச் சரிக்கட்டு
வாரென்றும், நீ அறியக்கடவாய்.

ஆகையால் நீ செய்யும்படிக்கு நான் இன்று ௰க
உனக்குக் கற்பிக்கிற கற்பனைகளையும் கட்டளை
களையும் நியாயங்களையும் கைக்கொள்வாயாக.–
இந்த நியாயங்களை நீங்கள் கேட்டு, கைக்கொண் ௰உ
டு, அவைகளின்படி செய்தீர்களானல், அப்பொ
ழுது உன் பராபரனுகிய கர்த்தர் உன் பிதாக்க
ளுக்கு ஆணையிட்ட உடம்படிக்கையையும் கிரு
பையையும் உனக்காகக் காத்து, — உன்னைச் சி ௰௩
நேகித்து, உன்னை ஆசீர்வதித்து, உனக்குக் கொ
டுப்போமென்று உன் பிதாக்களுக்கு ஆணையிட்
ட சீமையில் உன்னைப் பெருகப்பண்ணி, உன்
கர்ப்பக்கனியையும், உன் நிலத்தின் கனியாகிய
உன் தானியத்தையும்,உன் திராட்சப்பழ இரசத்
தையும் உன் எண்ணெயையும், உன் மாடுகளின்
பலனையும், உன் ஆடுகளின் மந்தைகளையும். ஆ
சீர்வதிப்பார்.—சகல சனசதளங்களைப்பார்க்கி ௰௪
லும், ஆசீர்வதிக்கப்பட்டிருப்பாய்; உன்னிடத்
திலே மலடனும் மலடியும் இருப்பதில்லை; உன்
மிருகசீவன்களில் மலடானதும் இருப்பதில்
லை.—கர்த்தர் சகல நோயையும் உன்னைவிட்டு ௰௫
விலக்குவார், நீ அறிந்திருக்கிற எகிப்தரின் பொ
ல்லாத ரோகங்களில் ஒன்றையும் உன்மேல்
வரப்பண்ணுமல் உன்னைப் பகைக்கிற யாவர்
மேலும் அவைகளை வரப்பண்ணுவார்.

உன் பராபரனுகிய கர்த்தர் உனக்கு ஒப்புக் ௰௬
கொடுக்கும் சகல சனசதளங்களையும் அழிப்பா
யாக; உன் கண் அவர்களுக்கு இரங்காதிருப்ப
தாக; அவர்கள் தேவர்களை நீ சேவிக்காமல் இ
ருப்பாயாக; ஏனெனில் அது உனக்குக் கண்
ணியாயிருக்கும்.—அந்தச் சாதிகள் என்னிலும் ௰எ
சனம்பெருத்தவைகள்; அவைகளை நான் துரத்தி
விடக்கூடுவதெப்படியென்று உன் இருதயத்
திலே சொல்லிக்கொண்டாயானல்,—அவைக ௰அ
ளுக்குப் பயப்படாதேபோ; உன் பராபரனுகிய
கர்த்தர் பார்வோனுக்கும் எல்லா எகிப்தருக்கும்
செய்ததையும், — உன் கண்கள் கண்ட பெரிய ௰௯
சோதனைகளையும், அடையாளங்களையும் அற்பு
தங்களையும் உன் பராபரனுகிய கர்த்தர் உன்னைப்
புறப்படப்பண்ணி, காண்பித்த பலத்தகையை
யும் நீட்டின புயத்தையும் நினைக்கவே நினைப்
பாயாக; அப்படியே உன் பராபரனுகிய கர்த்தர்
நீ பார்த்துப் பயப்படுகிற எல்லாச் சனசதளங்க
ளுக்கும் செய்வார். — மீதியாயிருந்து, உனக்கு உ௰
முன்பாக ஒளித்துக்கொள்ளுகிறவர்கள்,அழியும்
மட்டும் உன் பராபரனுகிய கர்த்தர் வண்டுகளை
யும் அவர்களுக்குள் அனுப்புவார்.–அவர்களைப் உக
பார்த்துத் திடுக்கிடாயாக; ஏனெனில் பயங்கர
மாயிருக்கிற மகாதேவனுன உன் பராபரனுகிய
கர்த்தர் உன் நடுவே இருக்கிறார்.—அந்தச் சாதிக உஉ
ளை உன் பராபரனுகிய கர்த்தர் கொஞ்சம்கொஞ்
சமாய் உன்னைவிட்டுத் துரத்துவார்; காட்டுச்

லேவன்கள் உனக்கு விரோதமாய்ப் பெருகாதப
டிக்கு, நீ அவைகளைச் சீக்கிரத்திலே நிர்மூலமாக்
௨௩ கக்கூடாது.—அவர்கள் அழியும்மட்டும் உன் பரா
பரனாகிய கர்த்தர் அவர்களை உனக்குமுன்பாக
ஒப்புக்கொடுத்து, அவர்களை மிகவும் கலங்கடிப்
௨௪ பார்.—அவர்களுடைய இராசாக்களை உன் கை
யில் ஒப்புக்கொடுப்பார்; அவர்கள் பேர் வானத்
தின்கீழிராதபடிக்கு அழியப்பண்ணக்கடவாய்;
நீ அவர்களை அழித்துத் தீரும்மட்டும் ஒருவரும்
௨௫ உனக்குமுன்பாக நிற்கக்கூடாதிருக்கும்.—அவர்
கள் தேவர்களின் சுரூபங்களை அக்கினியினா
லே சுட்டெரிக்கக்கடவாய்; நீ அவைகளால் சிக்
கிக்கொள்ளாதபடிக்கு, அவைகளில் இருக்கிற
வெள்ளியையும் பொன்னையும் இச்சிக்காமலும்
அதை எடுத்துக்கொள்ளாமலும் இருப்பாயாக;
ஏனெனில் அவைகள் உன் பராபரனாகிய கர்த்த
௨௬ ருக்கு அருவருப்பாயிருக்கின்றன.—ஆகையால்
அவைகளைப்போல நீ சாபமாகாதபடிக்கு, அரு
வருப்பானதை உன் வீட்டிலே கொண்டுபோகா
யாக; அதைச் சீயென்று சொல்லி, அதை அரு
வருக்கவே அருவருக்கக்கடவாய்; ஏனெனில்
அது சாபத்திற்குள்ளானது.

## ௮. அதிகாரம்.

௧. பராபரன் செய்த நன்மையினிமித்தமாகவும் கீழ்ப்படிதலைக் கற்பிக்கின்றது.

௧ நீங்கள் பிழைத்துப் பெருகி, கர்த்தர் உங்கள் பி
தாக்களுக்கு ஆணையிட்ட தேசத்திலே பிரவே
சித்து, அதைச் சுதந்தரிக்கும்படிக்கு,நான் இன்று
உங்களுக்குக் கற்பிக்கிற எல்லாக் கற்பனைகளின்
படியும்செய்யச் சாவதானமாயிருப்பீர்களாக.—
௨ உன் பராபரனாகிய கர்த்தர் உன்னைச் சிறுமைப்
படுத்தும்படிக்கும் தம்முடைய கற்பனைகளைக்
கைக்கொள்ளுவாயோகைக்கொள்ளாயோவென்
று அவர் உன்னைச் சோதித்து, உன் இருதயத்தில்
இருக்கிறதை நீ அறியும்படிக்கும், உன்னை இந்த
நாற்பதுவருஷம் வனாந்தரத்திலே நடத்தின எல்
௩ லா வழியையும் நினைப்பாயாக.—அவர் உன்
னைத் தாழ்மைப்படுத்தி, உன்னைப் பசியாயிருக்
கப்பண்ணி, மனிதன் அப்பத்தினால்மாத்திரம் பி
ழைக்காமல் கர்த்தருடைய வாய்ப்பிறப்பினாலெ
ல்லாம் பிழைக்கிறானென்பதை உனக்கு அறியப்
படுத்தும்படிக்கு, நீயும் உன் பிதாக்களும் அறியா
திருந்த மன்னாவினால் உன்னைப் போஷித்தார்.—
௪ இந்த நாற்பது வருஷம் உன்மேலிருந்த வஸ்திரம்
பழையதாய்ப்போனதுமில்லை; உன் கால் வீங்
௫ கிப்போனதுமில்லை.—ஆகையால் ஒருவன் தன்
குமாரனைத் தண்டிக்கிற பிரகாரமாக உன் பராபர
னாகிய கர்த்தர் உன்னைத் தண்டிக்கிறாரென்பதை
௬ நீ உன் இருதயத்திலே அறிந்து,—உன் பராபர
னாகிய கர்த்தருடைய வழிகளில் நடந்து, அவருக்
குப் பயப்படும்படிக்கு, அவருடைய கற்பனைக
ளைக் கைக்கொள்ளக்கடவாய்.
௭ ஏனெனில் உன் பராபரனாகிய கர்த்தர் உன்னை
நல்ல தேசத்திலே பிரவேசிக்கப்பண்ணுகிறார்;
அது பள்ளத்தாக்குகளிலும் மலைகளிலுமிருந்து
புறப்படுகிற ஆறுகளும் ஊற்றுக்களும் மடுக்களு
முள்ளதேசம்.—கோதுமையும் வாற்கோதுமை ௮
யும் திராட்சச்செடிகளும் அத்திமரங்களும் மாத
ளம்செடிகளுமுள்ள தேசமும், ஒலிவமரங்களும்
எண்ணெயும் தேனுமுள்ள தேசமும்,—நீ தாட் ௯
சியில்லாமல் அப்பம்புசிக்கத்தக்கதும் ஒன்றும்
உனக்குக் குறைபடாததுமான தேசமும், கல்லு
கள் இரும்புமாயிருக்கின்றதும் நீ மலைகளில்
வெண்கலம் வெட்டி எடுக்கத்தக்கதுமான தேச
முமாயிருக்கின்றது.
ஆகையால் நீ சாப்பிட்டுத் திர்ப்தி அடைந்த ௰
பொழுது, உன் பராபரனாகிய கர்த்தனை, அவர்
உனக்குக் கொடுத்த நல்ல தேசத்திற்காக, தோத்தி
ரிக்கக்கடவாய்.—உன் பராபரனாகிய கர்த்தனை ௰௧
மறவாதபடிக்கும், நான் இன்று உனக்குக் கற்பிக்
கிற அவருடைய கற்பனைகளையும் நியாயங்களை
யும் கட்டளைகளையும் கைக்கொள்ளாமல் போகா
தபடிக்கும், எச்சரிக்கையாயிரு.—நீ சாப்பிட்டுத் ௰௨
திர்ப்தியாகி, நல்ல வீடுகளைக் கட்டி, அவைகளில்
குடியிருக்கும்பொழுதும்,—உன் ஆடுமாடுகள் ௰௩
திரட்சியாகி, உனக்கு வெள்ளியும் பொன்னும்
பெருகி, உனக்குண்டானவையெல்லாம் வர்த்
திக்கும்பொழுதும்,—உன் இருதயம் மேட்டிமை ௰௪
அடையாமலும், உன்னை அடிமைவீடாகிய எ
கிப்திலிருந்து புறப்படப்பண்ணினவரும்,—உன் ௰௫
னைச் சிறுமைப்படுத்தி, உன்னைச் சோதித்து,உன்
னுடைய பின் நாள்களில் உனக்கு நன்மைசெய்
வதற்காக, கொள்ளிவாய்ச்சர்ப்பங்களும் தேள்க
ளும் தண்ணீரில்லா வறட்சியுமுள்ள பயங்கர
மான பெரிய வனாந்தரவழியாய் உன்னை அழைத்
துவந்தவரும், உனக்காகத் தண்ணீரைக் கல்பா
றையான கல்மலையிலிருந்து புறப்படப்பண்ணி
னவரும்,—உன்னை வனாந்தரத்திலே உன் பிதாக் ௰௬
கள் அறியாத மன்னாவினாலே போஷித்துவந்தவ
ருமான உன் பராபரனாகிய கர்த்தனை நீ மறக்கா
மலும்,—என் சாமார்த்தியமும் என் கைகளின் ௰௭
பலனும் இந்த ஆஸ்தியை எனக்குச் சம்பாதித்த
தென்று நீ உன் இருதயத்திலே சொல்லிக்கொள்
ளாமலும், இருக்க எச்சரிக்கையாயிருந்து,—உன் ௰௮
பராபரனாகிய கர்த்தனை நினைப்பாயாக; ஏனெ
னில் தாம் உன் பிதாக்களுக்கு ஆணையிட்ட தம்
முடைய உடம்படிக்கையை உறுதிப்படுத்த, அ
வரே இந்நாளிலே ஆகிறதுபோல, உனக்கு ஆஸ்
தியைச் சம்பாதிக்கிறதற்கான பெலனைக் கொ
டுக்கிறவர்.
நீ உன் பராபரனாகிய கர்த்தனை மறக்கவே ௰௯
மறந்து, வேறே தேவர்களைப் பின்பற்றிப்போய்,
அவைகளைச் சேவித்து, அவைகளைப் பணிந்து
கொண்டாயேயானால், அழியவே அழிவீர்க
ளென்று இன்று உங்களுக்குத் திடச்சாட்சியாய்
அறிவிக்கிறேன்.—உங்கள் பராபரனாகிய கர்த்த ௨௰
ருடைய சத்தத்திற்கு நீங்கள் கீழ்ப்படியாதேபோ
னதினிமித்தம் நீங்கள் அப்பொழுது கர்த்தர்
உங்களுக்குமுன்பாக அழித்த சாதிகளைப்போல
அழிவீர்கள்.

## ௯. அதிகாரம்.

*௧. மோசே சனங்களின் கலகங்களைச் சொல்லி, அவர்கள் தாங்கள் நீதியுள்ளவர்களென்றெண்ணிய எண்ணத்தை நீக்குகிறது.*

௧ இஸ்ரவேலே, கேள்; நீ இந்நாளிலே யோர்தானைக்
கடந்து, உன்னைப்பார்க்கிலும் சனம் பெருத்த
தும் பலத்ததுமான சாதிகளைத் துரத்தி, ஆகாசம்
மட்டும் அரணிப்பான பெரியபட்டணங்களைப்
௨ பிடித்து,—ஏனாக்கின் புத்திரராகிய பெரியதும்
உயர்ந்ததுமான சனத்தைத் துரத்தப்போகப்போ
கிறாய்; இவர்கள் செய்தியை நீ அறிந்து, ஏனாக்
புத்திரருக்குமுன்பாக நிற்பவன் யாரென்று நீ
௩ கேட்டாயே.—ஆகையால் பட்சிக்கிற அக்கினி
யாகிய உன் பராபரனென்ற கர்த்தர் தாமே உனக்
குமுன்பாகக் கடந்துபோகிறவர் என்பதை இன்
று அறியக்கடவாய்; இவர் அவர்களை அழிப்பார்;
இவர் அவர்களை உனக்குமுன்பாக விழப்பண்
ணுவார்; அப்படியே கர்த்தர் உனக்குச் சொன்ன
படியே நீ அவர்களைச் சீக்கிரமாய்த் துர்த்தி, அ
௪ வர்களை அழிப்பாய்.—உன் பராபரனாகிய கர்த்
தர் அவர்களை உனக்குமுன்பாகத் துரத்துகையில்,
நீ உன் இருதயத்திலே, கர்த்தர் என்னை என் நீதி
யின்நிமித்தமாக இந்தத் தேசத்தைச் சுதந்தரிக்கிற
தற்கு அழைத்துவந்தாரென்று சொல்லாயாக;
அந்தச் சாதிகளுடைய ஆகாமியத்தின்நிமித்த
மாக, கர்த்தர் அவர்களை உனக்குமுன்பாகத் துரத்
௫ திவிடுகிறார். — உன் நீதியின்நிமித்தமும் உன்
இருதயத்தினுடைய செம்மையான குணத்தின்
நிமித்தமும் நீ அவர்கள் தேசத்தைச் சுதந்த
ரிக்கப் பிரவேசிக்கிறதில்லை; அந்தச் சாதிகளு
டைய ஆகாமியத்தின்நிமித்தமாகவும், கர்த்தர்
ஆபிரகாம் ஈசாக் யாக்கோபென்ற உன் பிதாக்
களுக்கு ஆணையிட்டுச் சொன்ன வார்த்தையை
நிருவாகம்பண்ணுகிறதற்காகவும், உன் பராபர
னாகிய கர்த்தர் அவர்களை உனக்குமுன்பாகத்
துரத்திவிடுகிறார்.

௬ உன் நீதியின்நிமித்தம் உன் பராபரனாகிய கர்த்
தர் உனக்கு அந்த நல்ல தேசத்தைச் சுதந்தரிக்கி
றதற்குக் கொடார் என்பதை அறியக்கடவாய்;
௭ ஏனெனில் நீ முரட்டுக்கழுத்துள்ள சனம். — நீ
வனாந்தரத்தில் உன் பராபரனாகிய கர்த்தருக்குக்
கடுங்கோபம் உண்டாக்கினதை நினை; அதை மற
வாயாக; நீங்கள் எகிப்துதேசத்திலிருந்து புறப்
பட்ட நாள்துவக்கி, இவ்விடத்தில் வந்து சேரும்
மட்டும், கர்த்தருக்கு விரோதமாகக் கலகம்பண்
௮ ணினவர்கள். — ஒரேப்பிலே நீங்கள் கர்த்தருக்
குக் கடுங்கோபம் உண்டாக்கினதினாலே, கர்த்
தர் உங்கள்மேல் உங்களை அழிக்கத்தக்கதான
சினம் அடைந்தார்.

௯ கர்த்தர் உங்களோடே பண்ணின உடம்படிக்
கையின் பலகைகளாகிய கல்ப்பலகைகளை வாங்
குகிறதற்கு, நான் பர்வதத்தில் ஏறி இரவும்பகலும்
நாற்பது நாள் பர்வதத்தில் அப்பம்புசியாமலும்
தண்ணீர்குடியாமலும் இருந்தபொழுதுதானே.—
௰ அப்பொழுது பராபரனுடைய விரலினால் எழுதி
யிருந்த இரண்டு கல்ப்பலகைகளைக் கர்த்தர் எனக்
குக்கொடுத்தார்; சபைகூடியிருந்த நாளிலே, கர்த்
தர் பர்வதத்திலே அக்கினியின் நடுவிலிருந்து
உங்களோடே பேசின வார்த்தைகளின்படியெல்
லாம் அவைகளில் எழுதியிருந்தது.—இரவுபகல் ௰௧
நாற்பதுநாளும் முடிந்து, கர்த்தர் எனக்கு அந்த
உடம்படிக்கையின் இரண்டு கல்ப்பலகைகளைக்
கொடுக்கிறபொழுதோவெனில், — கர்த்தர் என் ௰௨
னோடே, நீ எழுந்து, சீக்கிரம் இங்கேயிருந்து
இறங்கிப்போ; ஏனெனில் நீ எகிப்திலிருந்து அ
ழைத்துவந்த உன்னுடைய சனம் தன்னைக் கெ
டுத்தது; நாம் அவர்களுக்குக் கற்பித்தவழியை அ
வர்கள் சீக்கிரமாக விட்டு விலகி, வார்க்கப்பட்ட
சுரூபத்தைத் தங்களுக்கு உண்டாக்கினார்களென்
றார்.—பின்னையும் கர்த்தர் என்னோடே சொன் ௰௩
னதாவது: இந்தச் சனத்தைப் பார்த்தோம்; இதோ
அது முரட்டுக்கழுத்துள்ள சனம்.—நாம் அவர் ௰௪
களை அழித்து, அவர்கள் பெயரை வானத்தின்
கீழ் அற்றுப்போகப்பண்ண, நம்மை விடு; உன்
னை அவர்களைப்பார்க்கிலும் பலத்ததும் சனம்
பெருத்ததுமான சாதியாக்குவோமென்றார்.—அப் ௰௫
பொழுது நான் திரும்பிக்கொண்டு பர்வதத்திலி
ருந்து இறங்கினேன்; பர்வதமோ அக்கினியாய்
வேகிறதாயிருந்தது; உடம்படிக்கையின் இரண்டு
பலகைகள் என் இரண்டு கைகளில் இருந்தன.—
இதோ நீங்கள் உங்கள் பராபரனாகிய கர்த்தருக்கு ௰௬
விரோதமாகப் பாவம்செய்து, வார்க்கப்பட்ட
கன்றுக்குட்டியை உங்களுக்குண்டாக்கி, கர்த்
தர் உங்களுக்குக் கற்பித்த வழியைச் சீக்கிரமாக
விட்டு விலகினதைக் கண்டேன். — அப்பொ ௰௭
ழுது, நான் அந்த இரண்டு பலகைகளை ஓங்கி, அ
வைகளை என் இரண்டு கைகளிலிருந்து எறிந்து,
அவைகளை உங்கள் கண்களுக்குமுன்பாக உ
டைத்துப்போட்டேன்.—நீங்கள் கர்த்தரை மன ௰௮
மடிவாக்குகிறதற்கு அவர் பார்வைக்குப் பொல்
லாப்பானதைச்செய்து நடப்பித்த உங்களுடைய
எல்லாப் பாவங்கள்நிமித்தமும், நான் கர்த்தருக்
குமுன்பாக முன்போல இரவும்பகலும் நாற்பது
நாள் விழுந்துகிடந்தேன்; நான் அப்பம்புசித்தது
மில்லை, தண்ணீர் குடித்ததுமில்லை.—ஏனெனில் ௰௯
கர்த்தர் உங்களை அழிப்போமென்று உங்கள்மேல்
சினத்திருந்த கோபத்திற்கும் உக்கிரத்திற்கும் ப
யப்பட்டிருந்தேன்; கர்த்தர் அந்த முறையும் என்
மன்றாட்டைக் கேட்டார்.—ஆரோன்மேலும் கர்த் ௨௰
தர் மிகவும் கோபமாகி, அவனை அழிப்போமென்
றார்; ஆனால் ஆரோனுக்காகவும் அக்காலத்திலே
விண்ணப்பம்பண்ணினேன். — உங்கள் பாவக் ௨௰௧
கிரியையாகிய கன்றுக்குட்டியையோவெனில்,
நான் வாங்கி, அதை அக்கினியால் எரித்து,
அதை நருக்கி, தூளாய்ப்போகும்மட்டும் நன்
றாய் அரைத்துப்போட்டு, அதின் தூளைப் பர்வ
தத்திலிருந்து ஓடுகிற ஆற்றிலே போட்டுவிட்
டேன்.

தபேராவிலும் மாசாவிலும் இச்சையின் பிரே ௨௰௨
தக்குழிகளான இடத்திலும் கர்த்தருக்குக் கடுங்

கோபம் உண்டாக்குகிறவர்களுமாயிருந்தீர்கள்.-
௨௩ நீங்கள் போயேறி, நாம் உங்களுக்குக் கொடுத்த
தேசத்தைச் சுதந்தரித்துக்கொள்ளுங்களென்று
கர்த்தர் உங்களைக் காதேஸ்பர்னேயாவிலிருந்து
அனுப்புகையிலும் நீங்கள் உங்கள் பராபரனா
கிய கர்த்தரை விசுவாசியாமலும், அவர் சத்தத்
திற்குக் கேள்விகொடாமலும், அவர் வாக்குக்கு
௨௪ விரோதமாய்க் கலகம்பண்ணினீர்கள். — நான்
உங்களை அறிந்திருக்கிற நாள்முதல்கொண்டு,
கர்த்தருக்கு விரோதமாகக் கலகம்பண்ணுகிறவர்
களாயிருந்தீர்கள்.
௨௫ உங்களை அழிப்போமென்று கர்த்தர் சொன்
னபடியினாலே, நான் கர்த்தருக்குமுன்பாக இர
வும்பகலும் நாற்பதுநாள் விழுந்துகிடந்தேனே;
அப்படியே நான் விழுந்துகிடந்து கர்த்தரை
நோக்கிப் பண்ணின விண்ணப்பமாவது: —
௨௬ கர்த்தராகிய ஆண்டவரே, தேவரீர் உம்முடைய
மகத்துவத்தினாலே மீட்டுக்கொண்டு, பலத்த
கையினாலே எகிப்திலிருந்து புறப்படப்பண்
ணின உமது சனத்தையும், உமது சுதந்தரத்தை
௨௭ யும், அழிக்காதிருப்பீராக.—கர்த்தர் அவர்களுக்
குச் சொல்லியிருந்த தேசத்திலே அவர்களைப்
பிரவேசிக்கப் பண்ணக்கூடாதேபோனபடியி
னாலும், அவர்களைப் பகைத்தபடியினாலும், அவர்
களை வனாந்தரத்திலே கொன்றுபோடும்படிக்
குப் புறப்படப்பண்ணினாரென்று எங்களை நீர்
புறப்படப்பண்ணின தேசத்தின் மனிதர் சொல்
௨௮ லாதபடிக்கு,—தேவரீர் இந்தச் சனத்தின் முரட்
டாட்டத்தையும், அதின் ஆகாமியத்தையும்,
அதின் பாவத்தையும் நோக்காமல், ஆபிரகாம்
ஈசாக் யாக்கோபென்ற உம்முடைய ஊழியக்
௨௯ காரரை நினையும்.— நீர் உம்முடைய பெரிய பலத்
தினாலும், நீட்டப்பட்ட உம்முடைய புயத்தினா
லும், புறப்படப்பண்ணின உமது சனமும்
உமது சுதந்தரமும் அவர்கள்தானென்றேன்.

## ௰. அதிகாரம்.

௧. பராபரன் நியாயப்பிரமாணத்தின் இரண்டு கல்ப்பலகைகளைக் கொடுத்ததும். ௬. குருப்பட்டத்தைத் தரித்ததும். ௮. இலேவியின் கோத்திரத்தைத் தெரிந்துகொண்டதும், ௰. மோசே சனங்களுக்காகக் கேட்டுக்கொண்டதைக் கேட்டதும், அவருடைய இரக்கத்தைக் காட்டியது. ௰௨. கீழ்ப்படிதலுக்கு அடுத்த புத்தி.

௧ அக்காலத்திலே கர்த்தர் என்னோடே சொன்
னதாவது: நீ முந்தினவைகளுக்கொத்த இரண்டு
கல்ப்பலகைகளை உனக்கு வெட்டி, நம்மண்டை
க்குப் பர்வதத்தில் ஏறிவா; ஒரு மரப்பெட்டியை
௨ யும் உனக்குச் செப்பனிடுவாயாக.—நீ உடைத்
துப்போட்ட முந்தின பலகைகளிலிருந்த வார்த்
தைகளை நாம் அந்தப் பலகைகளில் எழுதுவோம்;
பிற்பாடு அவைகளைப் பெட்டியிலே வைப்பா
௩ யாகவென்றார்.—அப்படியே நான் சீத்திம்மரத்
தினாலே பெட்டியை உண்டாக்கி, முந்தினவை
களுக்கொத்த இரண்டு கல்ப்பலகைகளை வெட்
டி, அவைகளை என் கையிலே பிடித்து, பர்வதத்
௪ தில் ஏறினேன்.—சபை கூட்டப்பட்டிருந்தநாளி
லே கர்த்தர் பர்வதத்தில் அக்கினியின் நடுவிலி
ருந்து உங்களோடே சொல்லியிருந்த பத்து
வார்த்தைகளை, அப்பொழுது அவர் முந்தின
எழுத்திற்குச் சரியாக அந்தப் பலகைகளில் எழு
தி, அவைகளை எனக்குக் கொடுத்தார். — அப் ௫
பொழுது நான் திரும்பிக்கொண்டு, பர்வதத்தி
லிருந்து இறங்கி, அந்தப் பலகைகளை நான் பண்
ணியிருந்த பெட்டியிலே வைத்தேன்; கர்த்தர்
எனக்குக் கற்பித்தபடி அதிலே வைத்திருக்கின்
றது.
பிற்பாடு இஸ்ரவேல் புத்திரர் பெனெயாக்கா ௬
னுக்கடுத்த பேரோத்திலேயிருந்து மோசேராவுக்
குப் பயணம்பண்ணினார்கள்; அங்கே ஆரோன்
மரித்து அடக்கம்பண்ணப்பட்டான்; அவன் ஸ்
தலத்திலே அவன் குமாரனாகிய எலேயாசார்
ஆசாரியனானான்.—அங்கேயிருந்து குத்கோத்திற் ௭
கும், குத்கோத்திலிருந்து ஆறுகளுள்ள தேசமா
கிய யோத்பாத்திற்கும் பயணம்பண்ணினார்கள்.
அக்காலத்திலே கர்த்தர் இலேவியின் கோத் ௮
திரத்தைக் கர்த்தருடைய உடம்படிக்கையின்
பெட்டியைச் சுமக்கிறதற்கும், கர்த்தருக்குமுன்
பாக நின்று, இந்நாள்மட்டும் நடக்கிறதுபோல,
அவருக்கு ஆராதனைசெய்கிறதற்கும், அவர் நாமத்
திலே ஆசீர்வதிக்கிறதற்கும், பிரித்தெடுத்தார்.—
ஆகையால் இலேவிக்கு அவன் சகோதரரோடே ௯
பங்கும் சுதந்தரமுமில்லை; உன் பராபரனாகிய
கர்த்தர் தாமே அவனுக்குச் சொன்னபடி, கர்த்
தர் அவன் சுதந்தரமானவர்.
நான் முந்தின நாள்களுக்குச் சரியாய் இர ௰
வும்பகலும் நாற்பதுநாள் பர்வதத்தில் நின்றே
னே, அந்தமுறையும் கர்த்தர் என்னைக் கேட்ட
ருளினார்; உன்னை அழிக்க, கர்த்தருக்குச் சித்த
மில்லாதே போயிற்று.—ஆகையால் கர்த்தர் என் ௰௧
னுடனே, அவர்கள் போய், அவர்களுக்குக் கொ
டுப்போமென்று நாம் அவர்கள் பிதாக்களுக்கு
ஆணையிட்ட தேசத்தைச் சுதந்தரித்துக்கொள்
ளும்படிக்கு, நீ எழுந்து, சனத்திற்குமுன்பாகப்
பயணப்பட்டுப் போவென்றார்.
இப்பொழுதும் இஸ்ரவேலே, நீ உன் பராபர ௰௨
னாகிய கர்த்தருக்குப் பயந்து, அவர் வழிகளிலெ
ல்லாம் நடந்து, அவரைச் சிநேகித்து, உன் பரா
பரனாகிய கர்த்தருக்கு உன் முழு இருதயத்தாலும்
உன் முழு ஆத்துமத்தாலும் ஊழியம்செய்து,—
நான் இன்று உனக்குக் கற்பிக்கிற கர்த்தருடைய ௰௩
கற்பனைகளையும் அவருடைய கட்டளைகளையும்
நீ உனக்கு நன்மையாகக் கைக்கொள்ளவேண்டு
மென்பதையே அல்லாமல், வேறே எதை உன்
பராபரனாகிய கர்த்தர் உன்னைக் கேட்கிறார். —
இதோ வானங்களும், வானங்களின் வானங்க ௰௪
ளும், பூமியும், அதிலுள்ள யாவும், உன் பராபர
னாகிய கர்த்தருடையவைகள். — ஆனால் உன் ௰௫
பிதாக்களின்மேலேமாத்திரம் கர்த்தர் அவர்களைச்
சிநேகிக்கிறதற்குப் பிரியம்வைத்து, சகல சாதி
களிலும் அவர்களுக்குப்பின் அவர்களுடைய
வித்தாகிய உங்களை, இந்நாளில் இருக்கிறது
போல, தெரிந்துகொண்டார். — ஆகையால் நீங் ௰௬

கள் இனி உங்கள் பிடரியைக் கடினப்படுத்தா
மல், உங்கள் இருதயத்தின் நுனித்தோலைச் சுன்
௰௭ னத்துப்பண்ணுங்கள்.—ஏனெனில் உங்கள் பரா
பரனாகிய கர்த்தர் தேவாதிதேவரும், கர்த்தாதி
கர்த்தரும், மகத்துவமும் வல்லமையும் பயங்கர
முமான பராபரனுமானவர்; அவர் முகமாட்டம்
பார்க்கிறவருமல்ல; பரிதானம் வாங்குகிறவரு
௰௮ மல்ல.—அவர் திக்கற்றவனுக்கும் கைம்பெண்
சாதிக்கும் நியாயஞ்செய்கிறவரும், பரதேசிக்கு
அப்பமும் வஸ்திரமும் கொடுக்கிறதற்கு அவ
௰௯ னைச் சிநேகிக்கிறவருமாயிருக்கிறார். — ஆகை
யால் பரதேசியைச் சிநேகிப்பீர்களாக; ஏனெ
னில் எகிப்துதேசத்திலே பரதேசிகளாயிருந்தீர்
௨௰ கள்.—உன் பராபரனாகிய கர்த்தருக்குப் பயந்து,
அவருக்கு ஊழியஞ்செய்து, அவரை ஒட்டிக்
கொண்டிருந்து, அவர் நாமத்தைக்கொண்டு ஆ
௨௧ ணையிடுவாயாக. — அவரே உன் புகழ்ச்சி; அவ
ரே உன் கண்கள் கண்ட அந்தப் பெரிய பயங்கர
மான காரியங்களை உன்னிடத்திலே செய்த உன்
௨௨ னுடைய பராபரன்.—உன் பிதாக்கள் எழுபது
ஆத்துமாக்களாய் எகிப்திலே போய் இறங்கி
னார்கள்; இப்பொழுதோவெனில் உன் பராபர
னாகிய கர்த்தர் உன்னைத் திரட்சியினாலே வானத்
தின் நட்சத்திரங்களைப்போல ஆக்கினார்.

## ௰௧. அதிகாரம்.

க. பராபரனுடைய மகத்துவமுள்ள கிரியைகளைக் கண்டதினாலும், அ. விசேஷித்த ஆசீர்வாதங்களுக்கு ஏற்ற அவருடைய வாக்குத்தத்தத்தினாலும், ௰௧. பயமுறுத்தலினாலும், சனங்களுக்குக் கீழ்ப்படிதலைக் கற்பித்தது. ௰அ. பராபரனுடைய வசனங்களை நன்றாய்ப் படிக்கவேண்டியது. உ௧. ஆசீர்வாதமும் சாவும் சனங்களுக்குத் தெரிவிக்கப்பட்டது.

க ஆகையால் நீ உன் பராபரனாகிய கர்த்தரைச்
சிநேகித்து, சகல நாளும் அவருடைய பிரமா
ணத்தையும் அவருடைய கட்டளைகளையும் அவ
ருடைய நியாயங்களையும் அவருடைய கற்பனை
களையும் கைக்கொள்வாயாக.

௨ உங்கள் பராபரனாகிய கர்த்தருடைய கடிந்து
கொள்ளுதலையும், அவருடைய மகத்துவத்தை
யும், அவருடைய பலத்த கையையும், நீட்டப்
௩ பட்ட அவருடைய புயத்தையும்,—அவர் எகிப்
தின் நடுவிலே எகிப்தின் இராசாவாகிய பார்
வோனுக்கும் அவன் தேசம் அனைத்திற்கும்
செய்த அவருடைய அடையாளங்களையும், அவ
௪ ருடைய கிரியைகளையும்,—எகிப்தின் இராணு
வமும் அவர்கள் குதிரைகளும் இரதங்களும் உங்
களைப் பின்தொடருகையில், கர்த்தர் நாணல்கட
லின் தண்ணீர்களை அவர்கள்மேலே புரளப்பண்
ணி, இந்நாள்வரைக்கும் இருக்கிறதுபோல, அவர்
களை அழித்த அவருடைய செய்கையையும், —
௫ நீங்கள் இவ்விடத்திற்கு வரும்மட்டும் அவர் உங்
௬ களுக்கு வனாந்தரத்திலே செய்ததையும், — பூமி
தன் வாயைத் திறந்து, எலியாப் என்கிற ரூபேன்
குமாரனுடைய மக்களான தாத்தானையும், அபி
ராமையும், அவர்கள் வீடுகளையும், அவர்கள் கூ
டாரங்களையும், எல்லா இஸ்ரவேலருக்குள்ளும்
அவர்களுக்கு இருந்த அவர்களுடைய எல்லா
ஆஸ்தியையும், விழுங்கினதினாலே, அவர் இவர்
களுக்குச் செய்ததையும், அறியாமலும் காணாம
லும் இருக்கிறவர்களாகிய உங்கள் பிள்ளைகளோ
டே நான் பேசுகிறதில்லை என்கிறதை இன்று
அறியக்கடவீர்கள்.—ஏனெனில் கர்த்தர் செய்த ௭
அந்தப் பெரிய கிரியையையெல்லாம் உங்களு
டைய கண்களல்லவோ கண்டன.—ஆகையால் ௮
நீங்கள் பலப்படும்படிக்கும், — நீங்கள் சுதந்தரிக்கப்போகிற தேசத்திற்குள் பிரவேசித்து, அ
தைச் சுதந்தரிக்கும்படிக்கும், கர்த்தர் உங்கள்
பிதாக்களுக்கும் அவர்கள் வித்திற்கும் கொ
டுப்போமென்று அவர்களுக்கு ஆணையிட்ட பா
லும்தேனும் ஓடிய தேசத்திலே, நீங்கள் நீடித்
திருக்கும்படிக்கும், இன்று நான் உங்களுக்குக்
கற்பிக்கிற கற்பனைகளையெல்லாம் கைக்கொள்
வீர்களாக.

ஏனென்றால் நீ சுதந்தரித்துக்கொள்ளப் பிர ௰
வேசிக்கும் தேசம் நீங்கள் விட்டுவந்த எகிப்து
தேசத்தைப்போல இராது; அங்கே நீ உன் வி
தையை விதைத்து, கீரைத்தோட்டத்திற்குச்
செய்கிறதுபோல, அதற்கு நீயே வேலைசெய்து,
தண்ணீர்ப் பாய்ச்சினாய்.—நீங்கள் சுதந்தரிக்கப் ௰௧
போகிற அந்தத் தேசமோவென்றால், மலைகளும்
பள்ளத்தாக்குகளுமுள்ள தேசம்; அது வானத்
தின் மழைத்தண்ணீரைக் குடிக்கிற தேசந்தான்.-
அது உன் பராபரனாகிய கர்த்தர் விசாரிக்கிற தே ௰௨
சம்; வருஷத்தின் துவக்கம்முதல்கொண்டு வரு
ஷத்தின் முடிவுமட்டும் எப்பொழுதும் உன்
பராபரனாகிய கர்த்தரின் கண்கள் அதின்மேலே
வைக்கப்பட்டிருக்கும்.

நீங்கள் உங்கள் பராபரனாகிய கர்த்தரை உங் ௰௩
கள் முழு இருதயத்தாலும் உங்கள் முழு ஆத்து
மத்தாலும் சிநேகிக்கிறதற்கும், அவருக்கு ஊழி
யஞ்செய்கிறதற்கும், நான் இன்று உங்களுக்
குக் கற்பிக்கிற நம்முடைய கற்பனைகளுக்குக்
கீழ்ப்படியவே கீழ்ப்படிந்தால், — சம்பவிப்ப ௰௪
தேதெனில், நீ உன் தானியத்தையும் உன் திராட்
சப்பழ இரசத்தையும் உன் எண்ணெயையும்
சேர்க்கும்படிக்கு, நாம் ஏற்றகாலத்திலே உங்
கள் தேசத்தின் மழையாகிய முன்மாரியையும்
பின்மாரியையும் தந்து,—உன் நிலத்திலே உன் ௰௫
மிருகசீவன்களுக்குப் புல்லைக் கட்டளையிடு
வோம், நீ சாப்பிட்டுத் திர்ப்தி அடைவாயென்
கிறார்.

ஆனால் உங்கள் இருதயம் மோசம்போய், ௰௬
நீங்கள் விலகி, அந்நியதேவர்களைச் சேவித்துப்
பணிகிறதினாலே,—கர்த்தருடைய கோபம் உங் ௰௭
கள்மேல் மூண்டு, அவர் மழைபெய்யாதே
போகவும், சீமை தன் பலனைக் கொடாதே
போகவும், வானத்தை அடைத்துப்போடாத
படிக்கும், கர்த்தர் உங்களுக்குக் கொடுத்த நல்ல
தேசத்திலிருந்து நீங்கள் சீக்கிரத்திலே அழிந்து
போகாதபடிக்கும், எச்சரிக்கையாயிருங்கள்.

ஆகையால் கர்த்தர் உங்கள் பிதாக்களுக்குக் ௰௮

கொடுப்போமென்று அவர்களுக்கு ஆணையிட்ட
தேசத்தில் உங்கள் நாள்களும், உங்கள் பிள்ளை
களின் நாள்களும் பூமியின்மேலிருக்கிற வா
னத்தின் நாள்களைப்போல அநேகமாயிருக்கும்
௰௮ படிக்கு,—நீங்கள் இந்த என்னுடைய வார்த்தை
களை உங்கள் இருதயத்திலும் உங்கள் ஆத்துமத்
திலும் வைத்து, அவைகளை உங்கள் கையின்
மேல் அடையாளமாகக் கட்டி, உங்கள் கண்க
ளின் நடுவே நினைப்பூட்டுதலாக இருக்கப்பண்
௧௯ ணி,—அவைகளை உங்கள் பிள்ளைகளுக்கு உப
தேசித்து, நீ உன் வீட்டில் உளுக்காந்திருக்கும்
பொழுதும், வழியிலே நடக்கும்பொழுதும்,
படுத்துக்கொள்ளும்பொழுதும், எழுந்திருக்கும்
பொழுதும், அவைகளைக்குறித்துப் பேசுங்கள்.—
௨௰ அவைகளை உன் வீட்டுவாசல் நிலைகளின்மேலும்
உன் வாசல்களிலேயும் எழுதிப்போடு.
௨௨ ஏனெனில் நீங்கள் உங்கள் பராபரனுகிய கர்த்
தரைச் சிநேகித்து, அவர் வழிகளிலெல்லாம் நட
ந்து, அவரை ஒட்டிக்கொண்டிருக்கும்படிக்கு,
நான் உங்களுக்குச் செய்யக் கற்பிக்கிற இந்தக்
கற்பனைகளையெல்லாம் கைக்கொள்ளவே கைக்
௨௩ கொண்டால், — கர்த்தர் அந்தச் சாதிகளையெல்
லாம் உங்களுக்குமுன்பாகத் துரத்திவிடுவார்;
உங்களைப்பார்க்கிலும் சனம் பெருத்த பலத்த
௨௪ சாதிகளைத் துரத்துவீர்கள். — உங்கள் உள்ளங்
கால் மிதிக்கும் இடமெல்லாம் உங்களுடையதா
யிருக்கும்; வனாந்தரத்தையும் லீபனோனையும்
துவக்கி, ஐபிராத்தென்ற நதியையும் துவக்கி,
கடைசிச் சமுத்திரமட்டுமிருக்கிறது உங்கள் எல்
௨௫ லையாயிருக்கும்.—உங்கள்முன் ஒருவரும் நிலை
நிற்பதில்லை; உங்கள் பராபரனுகிய கர்த்தர் உங்
களுக்குச் சொன்னபடி உங்கள் கெடியையும்
உங்களால் உண்டாகும் பயத்தையும் நீங்கள்
மிதிக்கும் பூமியின்மேலெல்லாம் வரப்பண்ணு
வார்.
௨௬ இதோ இன்று நான் ஆசீர்வாதத்தையும் சாபத்
தையும் உங்களுக்குமுன்பாக வைக்கிறேன்.—
௨௭ இன்று நான் உங்களுக்குக் கற்பிக்கிற உங்கள்
பராபரனுகிய கர்த்தரின் கற்பனைகளுக்குக் கீழ்ப்
௨௮ படிந்தீர்களானுல் ஆசீர்வாதத்தையும், — நீங்கள்
உங்கள் பராபரனுகிய கர்த்தரின் கற்பனைகளுக்
குக் கீழ்ப்படியாமல், இன்று நான் உங்களுக்
குக் கற்பிக்கிற வழியைவிட்டு விலகி, நீங்கள்
அறியாத வேறே தேவர்களைப் பின்பற்றினுல்
சாபத்தையும்தானே.
௨௯ உன் பராபரனுகிய கர்த்தர் உன்னை நீ சுதந்த
ரிக்கப்போகிற தேசத்திலே பிரவேசிக்கப் பண்
ணினபொழுது, கேரிசிம் மலையின்மேல் ஆசீர்
வாதத்தையும் ஏபால் மலையின்மேலே சாபத்தை
௩௰ யும் கூறக்கடவாய்.—அவைகள் யோர்தானுக்கு
அப்பாலே சூரியன் அஸ்தமிக்கிற மேற்குவழி
யாய்க் கானானியர் குடியிருக்கிற நாட்டுவெளி
யிலே கில்காலுக்கு எதிரான மோரேயென்ற
சமனான பூமியின்கிட்டவல்லவோ இருக்கின்
௩௧ றன.—ஏனெனில் உங்கள் பராபரனுகிய கர்த்தர்
உங்களுக்குக் கொடுக்கிற தேசத்தைச் சுதந்தரிக்
கிறதற்கு, நீங்கள் யோர்தானைக் கடந்துபோய்,
அதைச் சுதந்தரித்துக்கொண்டு, அதிலே குடியி
ருப்பீர்கள்.—ஆகையால் உங்களுக்குமுன்பாக ௩௨
இன்று நான் நிறுத்துகிற சகல கட்டளைகளையும்,
நியாயங்களையும், அவைகளின்படி செய்யும்ப
டிக்குக் கைக்கொள்ளக்கடவீர்கள்.

## ௰௨. அதிகாரம்.

௧. விக்கிரகஆராதனையின் அடையாளச் சின்னங்களை அழிக்கவேண்டியது. ௫. பராபரனுக்கு ஆராதனைசெலுத்தும் இடங்களை விசேஷிக்கவேண்டியது. ௰௫. ௨௧. இரத்தம் உண்ணப்படாதென்று விலக்கப்பட்டது. ௰௭. ௨௰. ௨௬. பரிசுத்தஸ்தலங்களிலே பரிசுத்தமானவைகளைப் புசிக்கவேண்டியது. ௰௯. இலேவியனைக் கைவிடப்படாதென்பது. ௨௯. விக்கிரகஆராதனையை விசாரிக்கவும் வேண்டாமென்பது.

உன் பிதாக்களுடைய பராபரனுகிய கர்த்தர் ௧
உனக்குச் சுதந்தரிக்கக் கொடுக்கிற தேசத்திலே,
நீங்கள் உயிரோடிருக்கும் நாளெல்லாம் செய்
யும்படிக்கு, கைக்கொள்ளவேண்டிய கட்டளை
களும் நியாயங்களுமாவது:
நீங்கள் துரத்தும் சாதிகள் உயர்ந்த பர்வதங்க ௨
ளின்மேலும், மேடுகளின்மேலும், பச்சையான
சகல மரங்களின்கீழும், தங்கள் தேவர்களைச் சே
வித்த இடங்களை எல்லாம் அழிக்கவே அழித்து,-
அவர்கள் பலிபீடங்களை நிர்மூலமாக்கி, அவர் ௩
கள் சிலைகளைத் தகர்த்து, அவர்கள் தோப்புகளை
அக்கினியாலே சுட்டெரித்து, அவர்கள் தேவர்
களின் சுரூபங்களை வெட்டிப்போட்டு, அவை
களின்பேரை அவ்விடத்தில் அழியப்பண்ணக்
கடவீர்கள்.
நீங்கள் உங்கள் பராபரனுகிய கர்த்தருக்கு ௪
அப்படிச் செய்யாமல்,—உங்கள் பராபரனுகிய ௫
கர்த்தர் தம்முடைய நாமத்தைத் தங்கப்பண்ணு
வதற்கு, உங்கள் சகல கோத்திரங்களிலும் தெ
ரிந்துகொள்ளும் தானமாகிய அவருடைய வாச
ஸ்தலத்தையே தேடி, அங்கே வந்து,— அங்கே ௬
உங்களுடைய சர்வாங்கதகனங்களையும்,உங்கள்
பலிகளையும், நீங்கள் பத்தில் ஒன்றுகச் செலுத்
துகிறவைகளையும், உங்கள் கைசெலுத்தும் ப
டைப்புகளையும், உங்கள் பொருத்தனைகளையும்,
உங்கள் உச்சாகப்பலிகளையும், உங்கள் ஆடுமா
டுகளின் தலையீற்றுகளையும் கொண்டுவந்து,—
அங்கே உங்கள் பராபரனுகிய கர்த்தருக்குமுன் ௭
பாகப் புசித்து, நீங்கள் கையிட்டுச் செய்ததும்
உங்கள் பராபரனுகிய கர்த்தர் உங்களை ஆசீர்வ
தித்ததுமான யாவுக்காகவும் நீங்களும் உங்கள்
வீட்டாரும் சந்தோஷப்படுவீர்களாக.
இங்கே நாம் இந்நாளிலே அவரவர்கள் தங் ௮
கள் பார்வைக்குச் சரிப்போகிறபடியெல்லாம்
செய்கிறதுபோலச் செய்யாதிருப்பீர்களாக.—
ஏனெனில் உன் பராபரனுகிய கர்த்தர் உனக் ௯
குக் கொடுக்கிற இளைப்பாறுதலுக்கும் சுதந்தரத்
திற்கும் நீங்கள் இதுவரைக்கும் இன்னம் உள்
பிரவேசித்ததில்லை. — நீங்கள் யோர்தானைக் ௰
கடந்து, உங்கள் பராபரனுகிய கர்த்தர் உங்களுக்
குச் சுதந்தரிக்கக் கொடுக்கிற தேசத்திலே குடி
யேறினபொழுதும், சுற்றிலுமிருக்கிற உங்கள்

சத்துருக்களையெல்லாம் அவர் விலக்கி, உங்களை
இளைப்பாறப்பண்ணுகிறதினாலே, நீங்கள் சுக
மாய்க் குடியிருக்கிறபொழுதுமோவெனில், —
௰௧ உங்கள் பராபரனாகிய கர்த்தர் தமது நாமத்தை
வாசமாயிருக்கப்பண்ணத் தெரிந்துகொள்ளும்
ஓர் இடமுண்டாயிருக்கும்; அங்கே நீங்கள்
நாம் உங்களுக்குக் கற்பிக்கிற யாவையும், உங்
கள் சர்வாங்கதகனங்களையும், உங்கள் பலிகளை
யும், நீங்கள் பத்தில் ஒன்றாகச் செலுத்துகிறவை
களையும், உங்கள் கைசெலுத்தும் படைப்புக
ளையும், நீங்கள் கர்த்தருக்குச் சுயமனதாய் நேர்ந்
துகொள்ளும் உங்களுடைய எல்லாப் பொருத்
௰௨ தனைகளையும் கொண்டுவந்து, — உங்கள் பரா
பரனாகிய கர்த்தருக்குமுன்பாக நீங்களும், உங்
கள் குமாரரும், உங்கள் குமாரத்திகளும், உங்
கள் வேலைக்காரரும், உங்கள் வேலைக்காரிக
ளும், உங்கள் வாசல்களில் இருக்கிற இலே
வியனும், சந்தோஷப்படுவீர்களாக; ஏனெனில்
இவனுக்கு உங்களோடேகூடப் பங்கும் சுதந்
தரமுமில்லை.
௰௩ நீ கண்ட இடமெல்லாம் உன் சர்வாங்கதக
னங்களைப் பலியிடாதபடிக்கு எச்சரிக்கையா
௰௪ யிரு. — கர்த்தர் உன் கோத்திரங்களில் ஒன்றிலே
தெரிந்துகொள்ளுமிடத்திலேதானே, நீ உன் சர்
வாங்கதகனங்களைப் பலியிட்டு, அங்கேதானே
நாம் உனக்குக் கற்பிக்கிறதையெல்லாம் படைப்
பாயாக.
௰௫ ஆனால் உன் பராபரனாகிய கர்த்தர் உனக்குக்
கட்டளையிடும் ஆசீர்வாதத்திற்குத்தக்கதாய், நீ
உன்னுடைய எல்லா வாசல்களிலும் உன் மன
விருப்பத்தின்படியே எல்லா மிருகஜீவன்களை
யும் அடித்துப் புசிக்கலாம்; தீட்டுப்பட்டவனும்
சுத்தமானவனும் அவைகளை வெளிமானையும்
கலைமானையும் புசிக்கிறதுபோலப் புசிக்கலாம். —
௰௬ இரத்தத்தைமாத்திரம் சாப்பிடாமல், அதைத்
தண்ணீரைப்போலத் தரையில் ஊற்றிவிடுவீர்க
ளாக.
௰௭ உன் தானியத்திலும் உன் திராட்சப்பழஇர
சத்திலும் உன் எண்ணெயிலும் நீ பத்தில்ஒன்றா
கச் செலுத்துவதையும், உன் ஆடுமாடுகளின் தலை
யீற்றுகளையும், நீ நேர்ந்துகொள்ளும் உன்னு
டைய சகல பொருத்தனைகளையும், உன் உச்சா
கக் காணிக்கைகளையும், உன் கை செலுத்தும்
படைப்புகளையுமோவெனில், நீ உன் வாசல்க
௰௮ ளிலே புசிக்கக்கூடாது. — உன் பராபரனாகிய
கர்த்தர் தெரிந்துகொள்ளும் இடத்திலே, நீயும்
உன் குமாரனும், உன் குமாரத்தியும், உன் வே
லைக்காரனும், உன் வேலைக்காரியும் உன் வாசல்
களிலிருக்கிற இலேவியனும், அதை உன் பரா
பரனாகிய கர்த்தருக்குமுன்பாகப் புசித்து, நீ கை
யிட்டுச் செய்ததிலெல்லாம் உன் பராபரனாகிய
கர்த்தருக்குமுன்பாகச் சந்தோஷப்படுவாயாக. —
௰௯ நீ உன் தேசத்திலிருக்கும் நாளெல்லாம் இலே
வியனைக் கைவிடாதபடிக்கு எச்சரிக்கையா
யிரு.

உன் பராபரனாகிய கர்த்தர் உனக்குச் சொன் ௨௰
னபடி உன் எல்லையை விஸ்தாரமாக்கினபொ
ழுது, உன் மனது இறைச்சி புசிக்க ஆசையா
யிருந்து, இறைச்சி புசிப்பேனென்றாயானால், நீ
உன் மனவிருப்பத்தின்படியெல்லாம் இறைச்சி
புசிக்கலாம். — உன் பராபரனாகிய கர்த்தர் தம் ௨௧
முடைய நாமத்தைத் தங்கப்பண்ணத் தெரிந்து
கொண்ட இடம் உனக்குத் தூரமானால், கர்த்தர்
உனக்குக் கட்டளையிட்ட உன் ஆடுமாடுகளில்
எதுவாகிலும் நான் உனக்குக் கற்பித்தபடி நீ
அடித்து, உன் வாசல்களிலே உன் மனவிருப்
பத்தின்படியெல்லாம் புசிக்கலாம். — ஒரு வெளி ௨௨
மானும் கலைமானும் புசிக்கப்படுகிறதுபோல,
நீ அதைப் புசிக்கலாம்; தீட்டுப்பட்டவனும் சுத்
தமானவனும் ஏகமாய் அதைப் புசிக்கலாம். —
இரத்தத்தைமாத்திரம் சாப்பிடாதபடிக்கு, மனத் ௨௩
திடனாயிரு; ஏனெனில் இரத்தமானது உயிர்தா
னே; மாம்சத்தோடேகூட உயிரைச் சாப்பிடா
யாக. — அதை நீ சாப்பிடாமல் தண்ணீரைப் ௨௪
போலத் தரையிலே ஊற்றிப்போடக்கடவாய். —
நீ கர்த்தரின் பார்வைக்குச் செம்மையானதைச் ௨௫
செய்கிறதினால், நீயும் உனக்குப்பிறகு உன்
பிள்ளைகளும் நன்றாயிருக்கும்படிக்கு, அதை நீ
சாப்பிடாதிருப்பாயாக.
உனக்கிருக்கும் உன்னுடைய பரிசுத்தவஸ் ௨௬
துக்களையும் உன் பொருத்தனைகளையுமோவெ
னில், கர்த்தர் தெரிந்துகொள்ளும் தானத்திற்கு
நீ கொண்டுவந்து, — உன் பராபரனாகிய கர்த்த ௨௭
ருடைய பலிபீடத்தின்மேலே, உன்னுடைய
சர்வாங்கதகனங்களைப் பலியிடக்கடவாய்; மாம்
சத்தையும் இரத்தத்தையும்கூடத்தானே; உன்னு
டைய மற்றப் பலிகளின் இரத்தமும் உன் பரா
பரனாகிய கர்த்தருடைய பலிபீடத்தின்மேலே
ஊற்றப்படக்கடவது; மாம்சத்தையோ நீ புசிப்
பாயாக.
நீ உன் பராபரனாகிய கர்த்தரின் பார்வைக்கு ௨௮
நன்மையும் செம்மையுமானதைச் செய்கிறதினா
லே, நீயும் உனக்குப்பிற்பாடு உன் பிள்ளைக
ளும்என்றைக்கும் நன்றாயிருக்கும்படிக்கு, நான்
உனக்குக் கற்பிக்கிற இந்த எல்லா வார்த்தைகளை
யும் நீ கவனித்துக் கேள்.
நீ சுதந்தரிக்கப்போகிற தேசத்தின் சாதிகளை ௨௯
உன் பராபரனாகிய கர்த்தர் உனக்குமுன்பாகச்
சங்கரிக்கும்பொழுதும், நீ அவைகளின் தேசத்
தைச் சுதந்தரித்து அதிலே குடியிருக்கும்பொழு
தும், — அவைகள் உனக்குமுன்பாக அழிக்கப் ௩௰
பட்டபிற்பாடு நீ அவைகளைப் பின்பற்றிச் சிக்
கிக்கொள்ளாதபடிக்கும், அந்தச் சாதிகள் தங்
கள் தேவர்களைச் சேவித்தபடி நானும் செய்வே
னென்று அவைகளுடைய தேவர்களுக்காகக்
கேட்டு விசாரிக்காதபடிக்கும், எச்சரிக்கையா
யிரு. — உன் பராபரனாகிய கர்த்தருக்கு அப்ப ௩௧
டிச் செய்யாயாக; ஏனெனில் கர்த்தர் பகைத்து
அருவருக்கிறதையெல்லாம் அவர்கள் தங்கள்
தேவர்களுக்குச் செய்து, தங்கள் குமாரரையும்

தங்கள் குமாரத்திகளையுந்தானே தங்கள் தேவர்
களுக்கு அக்கினியாலே சுட்டெரித்தார்கள்.—
௩௨ நான் உங்களுக்குக் கற்பிக்கிறதையெல்லாம்
செய்யும்படிக்குக் கைக்கொள்வீர்களாக; நீ அத
னோடு ஒன்றும் கூட்டவும் அதில் ஒன்றும்
குறைக்கவும்வேண்டாம்.

## ௰௩. அதிகாரம்.

௧. விக்கிரகஆராதனையைச் செய்ய ஒருவனை ஏவுகிறவர்கள். ௬. இனத்தாராயிருந்தாலும், ௯. கல்லெறியப்படவேண்டியது. ௰௨. விக்கிரகஆராதனைக்காரர்களின் பட்டணங்களை அழிக்கவேண்டியது.

௧ உன் நடுவே ஒரு தீர்க்கதரிசி, அல்லது சொப்
௨ பனம் காண்கிறவன் எழும்பி,—நீ அறியாதிருக்
கிற வேறே தேவர்களை, நாம் பின்பற்றிப்போய்,
அவைகளைச் சேவிப்போம் வாருங்களென்று
சொல்லி, உனக்கு ஒரு அடையாளத்தையும் அற்
புதத்தையும் காண்பித்தாலும், அவன் உன்னோ
டே சொன்ன அடையாளமும் அற்புதமும் வந்
௩ தாலும்,—அந்தத் தீர்க்கதரிசி, அல்லது அந்தச்
சொப்பனக்காரன் சொல்லுகிறவைகளைக் கே
ளாயாக; ஏனெனில் உங்கள் பராபரனாகிய கர்த்
தனை நீங்கள் உங்கள் முழு இருதயத்தாலும் உங்
கள் முழு ஆத்துமாவினாலும் சிநேகிக்கிறவர்க
ளோவென்று அறிய உங்கள் பராபரனாகிய கர்த்
௪ தர் உங்களைச் சோதிக்கிறார்.—நீங்கள் உங்கள்
பராபரனாகிய கர்த்தனையே பின்பற்றி, அவருக்
குப்பயந்து, அவர் கற்பனைகளைக் கைக்கொண்டு,
அவர் சத்தத்தைக் கேட்டு, அவரைச் சேவித்து,
௫ அவரை ஒட்டிக்கொள்வீர்களாக.—அந்தத் தீர்க்
கதரிசி, அல்லது அந்தச் சொப்பனக்காரனோ
வெனில், கொலையுண்ணக்கடவன்; ஏனென்
றால் நீ நடக்கும்படிக்கு, உன் பராபரனாகிய
கர்த்தர் உனக்குக் கற்பித்த வழியைவிட்டு, உன்
னை விலக்குகிறதற்காக அவன் உங்களை எகிப்து
தேசத்திலிருந்து புறப்படப்பண்ணினவரும்,
உன்னை அடிமைவீட்டிலிருந்து நீங்கலாக்கி மீட்
டுக்கொண்டவருமாகிய உங்கள் பராபரனாகிய
கர்த்தருக்கு விரோதமான இரண்டகப் பேச்
சைப் பேசினான்; இப்படிப்பட்ட பொல்லாப்
பை உன் நடுவிலிருந்து விலக்குவாயாக.
௬ உங்களைச் சுற்றிலும் உனக்குச் சமீபத்திலாகி
லும் உனக்குத் தூரத்திலாகிலும் தேசத்தின் ஒரு
முனைதுவக்கி மறுமுனைமட்டுமுள்ள எவ்விடத்
திலாகிலும் இருக்கிற சனசதளங்களுடைய தே
வர்களிலே, நீயும் உன் பிதாக்களும் அறியாத
யாதொரு அந்நியதேவர்களைப் போய்ச் சேவிப்
௭ போம் வாருங்களென்று, — உன் தாய்க்குப்
பிறந்த உன் சகோதரனாகிலும், உன் குமாரனாகி
லும், உன் குமாரத்தியாகிலும், உன் மடியிலிருக்
கிற உன் பெண்சாதியாகிலும், உன் பிராண
னைப்போலிருக்கிற உன் சிநேகிதனாகிலும் இர
கசியமாய்ச் சொல்லி, உன்னைக் கிண்டிவிட்
௮ டால்,—நீ அவனுக்குச் சம்மதிக்காமலும், அவ
னுக்குக் கேள்விகொடாமலும், அவனைத் தப்ப
விடவும் அல்லது அவனை ஒளிக்கவும் உன்
௯ கண் அவனைப் பாராமலும்,—அவனைக் கொல்
லவே கொல்லக்கடவாய்; அவனைக் கொலை
செய்கிறதற்கு, முந்தி உன் கையும் பிற்பாடு
எல்லாச் சனத்தின் கையும் அவன்மேல் இருக்கக்
கடவது. — அடிமைவீடாகிய எகிப்துதேசத்தி ௰
லிருந்து உன்னைப் புறப்படப்பண்ணின உன்
பராபரனாகிய கர்த்தனைவிட்டு விலகுகிறதற்கு
அவன் உன்னை ஏவப்பார்த்தபடியினாலே, அவன்
சாகும்படிக்கு அவனைக் கல்லெறியக்கடவாய்.—
இஸ்ரவேலெல்லாம் கேட்டுப் பயந்து, இனி உன் ௰௧
நடுவே ஒருவரும் இப்படிப்பட்ட பொல்லாத
காரியத்தைச் செய்யாதிருக்கிறதற்காகத் தானே.
நீங்கள் அறியாதிருக்கிற வேறே தேவர்களைச் ௰௨
சேவிக்கப்போவோம் வாருங்களென்று பேலி
யாளின் பிள்ளைகளாகிய மனிதர் உன் நடுவிலி
ருந்து புறப்பட்டு, தங்கள் பட்டணத்தின் குடி
களை ஏவினார்கள் என்கிற செய்தியை, — உன் ௰௩
பராபரனாகிய கர்த்தர் உனக்குக் குடியிருக்கிற
தற்குக் கொடுத்த பட்டணங்களில் ஒன்றைக்
குறித்துக் கேள்விப்பட்டாயானால்,—நீ நன்றாய் ௰௪
விசாரித்து ஆராய்ந்து கேட்டு, அப்படிப்பட்ட
அருவருப்பான காரியம் உன் நடுவே நடந்தது
மெய்யும் நிசமுமென்று கண்டாயானால்,—அந் ௰௫
தப் பட்டணத்தின் குடிகளைப் பட்டையக்கூர்
மையினால் வெட்டவே வெட்டி, அதையும் அதி
லுள்ள எல்லாவற்றையும் அதின் மிருகசீவன்
களையும் பட்டையக்கூர்மையினாலே சங்காரம்
பண்ணி,—அதின் கொள்ளையையெல்லாம் அ ௰௬
தின் நடுவீதியிலே கூட்டி, பட்டணத்தையும்
அதினுடைய எல்லாக் கொள்ளையையும் சமூல
மாய் உன் பராபரனாகிய கர்த்தருக்கென்று அக்
கினியால் சுட்டெரிக்கக்கடவாய்; அது இனி
கட்டப்படாமல், நித்திய மண்மேடாயிருக்கக்
கடவது. — கர்த்தர் தமது கோபத்தின் உக்கிரத் ௰௭
தைவிட்டுத் திரும்பி, உன்மேல் மன உருக்கம்
வைத்து, உனக்கு இரங்குகிறதற்காகவும்,—நான் ௰௮
இன்று உனக்குக் கற்பிக்கிற உன் பராபரனாகிய
கர்த்தரின் கற்பனைகளையெல்லாம் நீ கைக்கொ
ண்டு, உன் பராபரனாகிய கர்த்தருடைய பார்
வைக்குச் செம்மையானதைச் செய்ய, அவர் சத்
தத்திற்குக் கீழ்ப்படிகிறதினால், அவர் உன் பிதாக்
களுக்கு ஆணையிட்டபடி உன்னைப் பெருகப்
பண்ணுகிறதற்காகவும், — சங்காரத்திற்கு நிய ௰௯
மிக்கப்பட்ட அதிலே ஏதாகிலும் உன் கையில்
ஒட்டிக்கொள்ளாதிருப்பதாக.

## ௰௪. அதிகாரம்.

௧. பராபரனுடைய சனங்கள் செத்தவர்களுக்காகத் தங்களை ஊனப்படுத்தாதிருக்கவேண்டியது. ௪. மிருகங்களிலும், ௯. மீன்களிலும், ௰௧. பறவைகளிலும் புசிக்கத்தக்கவைகளையும், தகாதவைகளையும் சொல்லியது. ௨௧. தானே மரித்தது புசிக்கப்படாதென்பது. ௨௨. தேவ ஆராதனைக்காகப் பத்தில் ஒன்றைச் செலுத்தவேண்டியது. ௨௩. அதிலும் மந்தையில் தலையீற்றிலும் கர்த்தர் சமுகத்தில் புசிக்கவேண்டியது. ௨௮. மூன்றாம் வருஷத்தின் முடிவிலே பிச்சைக்காகவும், தானத்திற்காகவும், பத்தில் ஒரு பங்கைக் கொடுக்கவேண்டியது.

நீங்கள் உங்கள் பராபரனாகிய கர்த்தரின் பிள் ௧
ளைகள்; செத்தவனுக்காகக் கீறிக்கொள்ளாமலும்
உங்கள் கண்களின் நடுவே மொட்டையிடாம

௨ லும் இருப்பீர்களாக.—ஏனெனில் நீ உன் பரா
பரனாகிய கர்த்தருக்குப் பரிசுத்தமான சனம்;
பூமியின்மீதெங்குமுள்ள எல்லாச் சனசதளங்
களிலும் உன்னையே கர்த்தர் தமக்குச் சொந்த
சனமாயிருக்கத் தெரிந்துகொண்டார்.
௩ அருவருப்பான யாதொன்றைப் புசியாயாக.—
௪ நீங்கள் புசிக்கத்தகும் மிருகங்களாவது: மாடும்,
௫ ஆடும், வெள்ளாடும், — மானும், வெளிமானும்,
கலைமானும், மலையாடும், புள்ளிமானும், சருகு
௬ மானும், காட்டாடும், — மிருகங்களில் விரிதல்
குளம்புள்ளதாயிருந்து, குளம்புகள் இரண்டா
கப் பிரிந்திருக்கிறதும் அசைபோடுகிறதுமான
சகல மிருகத்தையும் நீங்கள் புசிக்கலாம். —
௭ ஆனால் அசைபோடுகிறவைகளிலும், அல்லது
விரிதல் குளம்புள்ளவைகளிலும், நீங்கள் புசிக்
கத்தகாதவைகள் எவைகளென்றால், ஒட்டக
மும், முயலும், குழிமுயலும்; ஏனெனில் அவை
கள் அசைபோட்டும் விரிதல் குளம்பில்லாதி
ருக்கின்றன; அவைகள் உங்களுக்குத் தீட்டா
௮ யிருப்பதாக.—பன்றியும் அப்படித்தான்; ஏனெ
னில் அது விரிதல் குளம்புள்ளதாயிருந்தும்,
அசைபோடாதிருக்கின்றது; அது உங்களுக்
குத் தீட்டாயிருப்பதாக; இவைகளின் மாம்சத்
தைப் புசியாமலும் இவைகளின் உடல்களைத்
தொடாமலும் இருப்பீர்களாக.
௯ தண்ணீரிலிருக்கிறதெல்லாவற்றிலும் சிறகும்
செதிளுமுள்ளதையெல்லாம் நீங்கள் புசிக்கலாம்.-
௰ ஆனால் சிறகும் செதிளும் இல்லாததையெல்
லாம் புசியாதிருப்பீர்களாக; அது உங்களுக்குத்
தீட்டாயிருப்பதாக.
௰௧ சுத்தமான எந்தக் குருவியையும் நீங்கள் புசிக்
௰௨ கலாம்.—நீங்கள் புசிக்கத்தகாதவைகளோவென்
றால், கழுகும், கெருடனும், ஆனைவிச்சுளியும்,—
௰௩ கட்டுக்காடையும், வல்லூறும், சாதி சாதியான
௰௪ பருந்தும்,—சகலவித சாதியான காகங்களும்,—
௰௫ தீக்குருவியும், கருவாட்டுவாலியும், செண்பக
௰௬ மும், சாதி சாதியான ஆள்காட்டியும்,—ஆந்தை
௰௭ யும், கோட்டானும், வௌவாலும்,—நாரையும்,
௰௮ தோட்டுவானும், சகோரபட்சியும்,—கொக்கும்,
சாதி சாதியான இராசாளியும், கொண்டலாத்தி
௰௯ யும், துரிஞ்சிலும்தானே.—பறக்கிற ஊர்வன யா
வும் உங்களுக்குத் தீட்டாயிருப்பதாக; அவை
கள் புசிக்கப்படத்தகாதவைகள்.
௨௰ சுத்தமான எந்தக் குருவியையும் நீங்கள் புசிக்
கலாம்.
௨௧ செத்த எந்த உடலையும் புசியீர்களாக;உன் வா
சல்களிலிருக்கிற பரதேசிக்கு நீ அதைப் புசிக்
கக் கொடுக்கலாம்; அல்லவென்று அந்நியனுக்கு
அதை விற்றுப்போடு; ஏனெனில் நீ உன் பரா
பரனாகிய கர்த்தருக்குப் பரிசுத்த சனம்; வெள்
ளாட்டுக்குட்டியை அதினுடைய தாயின் பா
லோடேகூடச் சமைக்காயாக.
௨௨ நீ சகலநாளும் உன் பராபரனாகிய கர்த்தருக்
குப் பயப்படப் பழகும்படிக்கு,வயல் வருஷாந்
தரம் நீ விதைக்கிற விதைப்பினாலே கொடுக்கும்
எல்லாப் பலனிலும் நீ பத்தில் ஒரு பங்கைப்
பிரித்து,-உன் பராபரனாகிய கர்த்தர் தமது நாமத் ௨௩
தை வாசமாயிருக்கப்பண்ணத் தெரிந்துகொள்
ளும் தானத்திலே, அவருக்குமுன்பாக உன் தா
னியத்திலும் உன் திராட்சப்பழ இரசத்திலும்
உன் எண்ணெயிலும் பத்தில் ஒருபங்கையும்
உன் ஆடுமாடுகளின் தலையீற்றுகளையும் புசிப்
பாயாக.
உன் பராபரனாகிய கர்த்தர் உன்னை ஆசீர்வ ௨௪
தித்திருக்கும்போது, உன் பராபரனாகிய கர்த்தர்
தமது நாமத்தைத் தங்கப்பண்ணத் தெரிந்து
கொண்ட தானம் உனக்கு வெகுதூரமாயிருக்கி
றதினாலே, நீ வழிப்பயணத்தின் வெகு தொ
லையினிமித்தம் அதைக் கொண்டுபோகக்கூடா
திருந்ததேயானால்,—அதைப் பணமாக்கி, பண ௨௫
முடிப்பை உன் கையிலே பிடித்து, உன் பராபர
னாகிய கர்த்தர் தெரிந்துகொண்ட தலத்திற்குப்
போய்,—ஆடுமாடு திராட்சப்பழ இரசம் மதுபா ௨௬
னம் முதலான உன் மனதாசைப்பட்டுக் கேட்
கிற சகலத்தையும் பணம்கொடுத்து வாங்கி, அங்
கே உன் பராபரனாகிய கர்த்தருக்குமுன்பாக
நீயும் உன் வீட்டாரும் உன் வாசல்களிலிருக்
கிற இலேவியனும் புசித்துச் சந்தோஷப்படுவீர்
களாக.—இவனைக் கைவிடாயாக; ஏனெனில் ௨௭
உன்னோடே அவனுக்குப் பங்கும் சுதந்தரமு
மில்லை.
மூன்று வருஷங்களின் முடிவிலே நீ அவ்வரு ௨௮
ஷத்தில் உனக்கு வந்த பலனியெல்லாம் பத்தில்
ஒரு பங்கைப் பிரித்து, உன் வாசல்களில் வைக்
கக்கடவாய். — அப்பொழுது இலேவியனுக்கு ௨௯
உன்னோடே பங்கும் சுதந்தரமும் இல்லாதபடி
யினாலே, அவனும் உன் வாசல்களிலிருக்கிற
பரதேசியும் திக்கற்றவனும் கைம்பெண்சாதியும்
வந்து, நீ செய்யும் உன் கையின்வேலையிலெல்
லாம் உன் பராபரனாகிய கர்த்தர் உன்னை ஆசீர்
வதிக்கும்படிக்குப் புசித்துத் திர்ப்தி அடைவார்
களாக.

## ௰௫. அதிகாரம்.

௧. ஏழாம்வருஷம் எளியவர்களுக்கு விடுதலை. ௭. அதினால் கடன்கொடுப்பது தவிர்க்கக்கூடாது. ௰௨. எபிரேய வேலைக்காரன். ௰௬. எசமானுடனே கூடியிருக்க மனமில்லாதிருந்தால், வேண்டியதைப் பெற்றுக்கொண்டு, தாராளமாய்ப் போகவேண்டியது. ௰௯. ஆடுமாடுகளில் தலையீற்றாகிய ஆணையெல்லாம் கர்த்தருக்கென்று பரிசுத்தம்பண்ண வேண்டியது.

ஏழு வருஷங்களின் முடிவிலே விடுதலைபண் ௧
ணுவாயாக.—விடுதலையின் வர்த்தமானமாவது: ௨
தனக்கடுத்தவனுக்குக் கடன்கொடுத்தவனெல்
லாம் கர்த்தரின் விடுதலை கூறப்பட்டபடியினா
லே அதைத் தனக்கடுத்தவன் கையிலும் தன்
சகோதரன் கையிலும் தண்டாமல் விட்டுவிடக்
கடவன்.-அந்நியசாதியான் கையிலே நீ கடனைத் ௩
தண்டலாம்; ஆனால் உன் சகோதரனிடத்திலே
உனக்கு வரவேண்டியதை உன் கை விட்டுவிட
க்கடவது.—எளியவன் உனக்குள் இல்லாதிருக் ௪
கும்படியாகத்தானே; ஏனெனில் இன்று நான்
உனக்குக் கற்பிக்கிற இந்த எல்லாக் கற்பனைக

ளின்படியும் நீ செய்யக் கருத்தாயிருக்கிறதற்கு,
உன் பராபரனாகிய கர்த்தரின் சத்தத்தைமாத்தி
ரம் கேட்கவே கேட்டாயானால்,—உன் பராபர
னாகிய கர்த்தர் உனக்குச் சுதந்தரித்துக்கொள்ளக்
கொடுக்கும் தேசத்திலே, கர்த்தர் உன்னை ஆசீர்வ
௬ திக்கவே ஆசீர்வதிப்பார்.—உன் பராபரனாகிய
கர்த்தர் உனக்குச் சொன்னபடி உன்னை ஆசீர்
வதிப்பதினாலே, அநேகம் சாதிகளுக்குக் கடன்
கொடுப்பாய்; நீயோவெனில் கடன் வாங்குவ
தில்லை; அநேகம் சாதிகளை ஆளுவாய்; உன்னை
யோவெனில் அவைகள் ஆளுவதில்லை.
௭ உன் பராபரனாகிய கர்த்தர் உனக்குக் கொடுக்
கும் உன் தேசத்து வாசல்களில் ஒன்றில் உன்
சகோதரரில் எளியவனான ஒருவன் உனக்குள்
இருந்தால், நீ உன் எளிய சகோதரனுக்குமுன்
பாக உன் இருதயத்தை அழுத்தமாக்காமலும்,
௮ உன் கையை மூடாமலும்,—உன் கையை அவ
னுக்குத் திறக்கவே திறந்து, அவன் அவசரத்தின்
நிமித்தம் அவனுக்குத்தேவையானமட்டும் கடன்
௯ கொடுக்கவே கொடுப்பாயாக. — விடுதலையின்
வருஷமாகிய ஏழாம் வருஷம் கிட்டியிருக்கிற
தென்று சொல்லி, உன் இருதயத்திலே பேலியா
ளின் நினைவுண்டாய், உன் ஏழைச் சகோதரனுக்
குக் கொடாதேபோக, அவன்மேல் உன் கண்
விதனமாகாதபடிக்கும், அவன் உன்மேலே கர்த்
தரை நோக்கிக் கூப்பிடாதபடிக்கும், எச்சரிக்
கையாயிரு; மற்றப்படி அது உன்மேலே பாவ
௰ மாயிருக்கும்.— அவனுக்குக் கொடுக்கவே கொ
டுப்பாயாக; அவனுக்குக் கொடுக்கையில், உன்
இருதயம் விதனப்படாதிருப்பதாக; ஏனெனில்
அதுநிமித்தமாக உன் பராபரனாகிய கர்த்தர் உன்
னை உன்னுடைய எல்லாக் கிரியையிலும் நீ கை
யிட்டுச் செய்பவை எல்லாவற்றிலும் ஆசீர்வதிப்
௰௧ பார்.—ஏனெனில் தேசத்திற்குள்ளே எளியவர்
கள் இல்லாதிருப்பதில்லை; ஆகையால் உன் தே
சத்திலே சிறுமைப்பட்டவனும் எளியவனுமா
கிய உன் சகோதரனுக்கு உன் கையைத் திறக்க
வே திறப்பாயாகவென்று நான் உனக்குக் கற்
பிக்கிறேன்.
௰௨ உன் சகோதரனாகிய எபிரேயனாகிலும் எபிரே
ய ஸ்திரியாகிலும் உனக்குத் தன்னை விற்றால்,
ஆறுவருஷம் உன்னைச் சேவிப்பானாக; ஏழாம்
வருஷத்தில் அவனைத் தன் இச்சைக்காரனாக
௰௩ உன்னைவிட்டு அனுப்பக்கடவாய்.—அவனை நீ
தன் இச்சைக்காரனாக அனுப்பிவிடுகிறபொழு
௰௪ தும் அவனை வெறுமையே அனுப்பாமல்,—உன்
பராபரனாகிய கர்த்தர் உன்னை ஆசீர்வதித்த உன்
ஆட்டுமந்தையிலும் உன் களத்திலும் உன் ஆலை
யிலும் எடுத்து அவனுக்கு ஈவுகளைக் கொடுக்க
௰௫ வே கொடுக்கக்கடவாய்.— நீ எகிப்துதேசத்தில்
அடிமையாயிருந்ததையும், உன் பராபரனாகிய
கர்த்தர் உன்னை மீட்டுவிட்டதையும், நினைவு
கூரக்கடவாய்; ஆகையால் நான் இன்று இதை
உனக்குக் கற்பிக்கிறேன்.
௰௬ நான் உன்னைவிட்டுப் புறப்பட்டுப் போகிற
தில்லை, ஏனெனில் உன்னையும் உன் வீட்டை
யும் சிநேகிக்கிறேன்; அதேனென்றால் உன்னி
டத்தில் நான் நன்றாயிருக்கிறேனென்று அவன்
உன்னுடனே சொன்னானேயாகில்,—நீ ஒரு கம் ௰௭
பியை எடுத்து, அவன் காதைக் கதவிலேபடக்
குத்துவாயாக; பிற்பாடு அவன் என்றைக்கும்
உனக்கு அடிமையாயிருக்கக்கடவான்; உன்
அடிமைப்பெண்ணுக்கும் அப்படியே செய்யக்
கடவாய். — அவனைத் தன் இச்சைக்காரனாக ௰௮
உன்னைவிட்டு அனுப்புவது உனக்கு விதன
மாய்க் காணவேண்டாம்; ஏனெனில் இரட்டிப்
பான கூலிக்கு ஈடாக ஆறுவருஷம் உன்னைச்
சேவித்தான்; அப்படியே உன் பராபரனாகிய
கர்த்தர் நீ செய்கிற யாவிலும் உன்னை ஆசீர்வதிப்
பார்.
உன் ஆடுமாடுகளிலே தலையீற்றாகிய ஆணை ௰௯
யெல்லாம் உன் பராபரனாகிய கர்த்தருக்குப் பரி
சுத்தம்பண்ணுவாயாக; உன் மாட்டின் தலையீற்
றாலே வேலைசெய்யாமலும் உன் ஆட்டின் தலை
யீற்றை மயிர்கத்திரிக்காமலும் இருப்பாயாக.—
கர்த்தர் தெரிந்துகொள்ளும் தலத்திலே நீயும் உன் ௨௰
வீட்டாருமாய் வருஷாந்தரம் அப்படிப்பட்ட
வைகளை உன் பராபரனாகிய கர்த்தருக்குமுன்
பாகப் புசிக்கக்கடவீர்கள்.
சப்பாணி அல்லது குருடாயிருக்கிறது முத ௨௰௧
லான யாதொரு ஆகாத ஊனம் அதில் இருந்ததே
யானால், நீ உன் பராபரனாகிய கர்த்தருக்கு அ
தைப் பலியிடவேண்டாம்.—அப்படிப்பட்டதை ௨௰௨
நீ உன் வாசல்களிலே மானைப்போலும் வெளி
மானைப்போலும் புசிக்கலாம்; தீட்டுப்பட்டவ
னும் சுத்தமானவனுங்கூடத்தானே.—அதின் இர ௨௰௩
த்தத்தைமாத்திரம் சாப்பிடாமல், அதைத் தரையி
லே தண்ணீரைப்போல ஊற்றிவிடக்கடவாய்.

## ௰௬. அதிகாரம்.

௧. பஸ்காவின் பண்டிகையையும், ௯. வாரங்களின் பண்டிகையையும், ௰௩. கூடாரங்களின் பண்டிகையையும் குறித்தது. ௰௬. இம்மூன்று பண்டிகையிலும் புருஷரெல்லாரும் அவரவர்களுக்குத்தக்க காணிக்கையைச் செலுத்தவேண்டியது. ௰௮. நியாயாதிபதிகளையும் நீதியையும் குறித்தது. ௨௧. பலிபீடத்தண்டையிலுள்ள தோப்புகளையும் விக்கிரகங்களையும் நீக்கியது.

ஆபிப்மாதத்தைக் கவனித்துக்கொண்டு, அதி ௧
லே உன் பராபரனாகிய கர்த்தருக்குப் பஸ்காவை
ஆசரிக்கக்கடவாய்; ஏனெனில் ஆபிப்மாதத்தில்
உன் பராபரனாகிய கர்த்தர் இராக்காலத்தில் உன்
னை எகிப்திலிருந்து புறப்படப்பண்ணினார்.—
கர்த்தர் தமது நாமத்தை வாசமாயிருக்கப்பண் ௨
ணத் தெரிந்துகொண்டிருக்கும் தானத்திலே,
உன் பராபரனாகிய கர்த்தருக்குப் பஸ்காவையும்
ஆடுமாடுகளையும் பலியிடுவாயாக.—நீ எகிப்துதே ௩
சத்திலிருந்து புறப்பட்ட நாளை உயிரோடிருக்
கும் நாளெல்லாம் நினைக்கும்படிக்கு, அதனோ
டே புளித்த அப்பம் புசியாமல், சிறுமையின்
அப்பமாகிய புளிப்பில்லாத அப்பங்களை அத
னோடே ஏழுநாள்மட்டும் புசிக்கக்கடவாய்;
ஏனெனில் தீவிரத்தோடே எகிப்துதேசத்திலி
ருந்து புறப்பட்டாய். — ஏழுநாள்மட்டும் உன் ௪

எல்லைகளிலெல்லாம் புளிப்பானது உன்னிடத்
திலே காணப்படவும் வேண்டாம்; நீ முதல்
நாள் சாயங்காலத்தில் அடித்ததின் மாம்சத்தில்
ஏதாகிலும் விடியற்காலம்மட்டும் இருக்கவும்
௫ வேண்டாம்.—உன் பராபரனாகிய கர்த்தர் உனக்
குக் கொடுக்கும் உன்னுடைய வாசல்களில் யா
தொன்றிலே நீ பஸ்காவை அடிக்கப்படாது.—
௬ உன் பராபரனாகிய கர்த்தர் தமது நாமத்தை வாச
மாயிருக்கப்பண்ணத் தெரிந்துகொள்ளும் தானத்
திலே, நீ எகிப்திலிருந்து புறப்படப்போகிற நே
ரமாகிய சாயங்காலத்திலே சூரியன் அஸ்தமிக்
௭ கிறபொழுது, பஸ்காவை அடித்து,—உன் பரா
பரனாகிய கர்த்தர் தெரிந்துகொண்ட தானத்தி
லே, அதைப் பொரித்துப் புசித்து, விடியற்கா
லத்திலே திரும்பிக்கொண்டு, உங்கள் கூடாரங்
௮ களுக்குப் போவீர்களாக.—நீ ஆறுநாள் புளிப்
பில்லாத அப்பங்களைப் புசித்தபிறகு, ஏழாம்நாள்
உன் பராபரனாகிய கர்த்தருக்கு ஆசரிக்கப்படும்
நாளாயிருக்கும் அதிலே யாதொரு வேலையும்
செய்யாயாக.

௯ ஏழு வாரங்களை எண்ணி விடுவாயாக; வெள்
ளாண்மையை அறுக்கத்துவக்குகிறதுமுதல்கொ
ண்டு, நீ அந்த ஏழுவாரங்களை எண்ணத்துவக்கி,-
௰ அவைகள் சென்றபொழுது வாரங்களின் பண்
டிகையை உன் பராபரனாகிய கர்த்தருக்கு ஆச
ரித்து, உன் பராபரனாகிய கர்த்தர் உன்னை ஆசீர்
வதித்ததற்குத்தக்கதாக உன் கையின் மனப்பூர்வ
௰௧ மான பகுதியைக் கொடுத்து,—உன் பராபரனா
கிய கர்த்தர் தமது நாமத்தை வாசமாயிருக்கப்பண்
ணத் தெரிந்துகொள்ளும் தானத்திலே, நீயும், உன்
குமாரனும், உன் குமாரத்தியும், உன் வேலைக்கா
ரனும், உன் வேலைக்காரியும், உன் வாசல்களி
லிருக்கிற இலேவியனும், உன்னிடத்திலிருக்கிற
பரதேசியும், திக்கற்றவனும், கைம்பெண்சாதி
யும், உன் பராபரனாகிய கர்த்தருக்குமுன்பாகச்
௰௨ சந்தோஷப்பட்டு, — நீ எகிப்திலே அடிமை
யாயிருந்ததை நினைத்து, இந்தக் கட்டளைகளைக்
கைக்கொண்டு, அவைகளின்படி செய்யக்கட
வாய்.

௰௩ நீ உன் களத்தின் பலனையும் உன் ஆலையின்
பலனையும் சேர்த்தபிற்பாடு, கூடாரப்பண்டி
௰௪ கையை ஏழுநாள் ஆசரித்து,—உன் பண்டிகை
யிலே நீயும், உன் குமாரனும், உன் குமாரத்தி
யும், உன் வேலைக்காரனும் உன் வேலைக்காரி
யும், உன் வாசல்களிலிருக்கிற இலேவியனும்,
பரதேசியும், திக்கற்றவனும், கைம்பெண்சாதி
௰௫ யும், சந்தோஷப்பட்டு,-கர்த்தர் தெரிந்துகொள்
ளும் ஸ்தலத்தில் உன் பராபரனாகிய கர்த்தருக்கு
ஏழுநாளாய்ப் பண்டிகையை ஆசரித்து, உன்
னுடைய எல்லா வரத்திலும் உன் கைகளுடைய
எல்லாக் கிரியையிலும் உன் பராபரனாகிய கர்த்
தர் உன்னை ஆசீர்வதித்தபடியினாலே, சந்தோ
ஷித்திருப்பாயாக.

௰௬ வருஷத்தில் மூன்றுமுறையாகிய புளிப்பில்
லாத அப்பங்களின் பண்டிகையிலும், வாரங்
களின் பண்டிகையிலும், கூடாரப்பண்டிகையி
லும், உன் ஆண்சாதிகளெல்லாம் உன் பராபர
னாகிய கர்த்தர் தெரிந்துகொள்ளும் தானத்திலே,
அவர் சந்நிதிக்குமுன்பாக வந்து, காணப்படக்
கடவர்கள்.—ஆனால் கர்த்தருக்குமுன்பாக வெ ௰௭
றுங்கையோடே அல்ல, உன் பராபரனாகிய கர்த்
தர் உனக்குக் கட்டளையிட்ட அவருடைய ஆசீர்
வாதத்திற்குத்தக்கதாக அவரவர் தம்தம் காணிக்
கையோடே காணப்படுவார்களாக.

உன் பராபரனாகிய கர்த்தர் உனக்குக் கொடுக் ௰௮
கும் உன்னுடைய எல்லா வாசல்களிலும் உன்
கோத்திரங்களுக்கு நியாயாதிபதிகளையும் தலைவ
ரையும் வைத்துக்கொள்வாயாக; அவர்கள் சனத்
திற்கு நீதியாய் நியாயம்தீர்க்கக்கடவர்கள்.-நியா ௰௯
யத்தைப் புரட்டாயாக; முகமாட்டம்பாராமலும்
பரிதானம் வாங்காமலும் இருப்பாயாக; ஏனெ
னில் பரிதானம் ஞானிகளின் கண்களைக் குரு
டாக்கி, நீதிமான்களின் நியாயங்களைத் தாறுமா
றாக்குகின்றது.-நீ பிழைத்து, உன் பராபரனாகிய ௨௰
கர்த்தர் உனக்குக் கொடுக்கும் தேசத்தைச் சுதந்
தரித்திருக்கும்படிக்கு, நீதியையே பின்தொடரு
வாயாக.

நீ உனக்காக் கட்டும் உன் பராபரனாகிய கர்த் ௨௧
தருடைய பலிபீடத்தண்டையிலே எந்தத் தோப்
பையும் உனக்கு உண்டாக்காமலும்,—உன் பரா ௨௨
பரனாகிய கர்த்தர் பகைக்கிற யாதொரு சிலையை
உனக்கு நிறுத்தாமலும் இருப்பாயாக.

## ௰௭. அதிகாரம்.

௧. பலிகள் பழுதற்றிருக்கவேண்டியது. ௨. விக்கிரகஆராதனைக்காரர்கள் கொல்லப்படவேண்டியது. ௮. கடினமான வாதுகளை ஆசாரியர்களும் நியாயாதிபதிகளும் தீர்க்கவேண்டியது ௰௨. அவர்களுடைய தீர்ப்பை அசட்டைசெய்கிறவன் சாவவேண்டியது. ௰௪. இராசாவை நியமித்ததையும், ௰௮. அவன் செய்யும்கடமையையும் குறித்தது.

ஒரு பழுது, அல்லது யாதொரு அவலட்சண ௧
முள்ள மாட்டையாகிலும் ஆட்டையாகிலும்
உன் பராபரனாகிய கர்த்தருக்குப் பலியிடாயாக;
ஏனெனில் அவை உன் பராபரனாகிய கர்த்தருக்
கு அருவருப்பாயிருக்கும்.

உன் பராபரனாகிய கர்த்தரின் கண்களுக்கு ௨
முன்பாகப் பொல்லாப்புச்செய்து, அவருடைய
உடம்படிக்கையை மீறிப்போய்,—நான் கற்பிக் ௩
காதிருக்கிற வேறே தேவர்களை, அல்லவென்று
சந்திரசூரியன் முதலான வானத்தின் சகலவித
சேனையைச் சேவித்து, அவைகளைப் பணிந்து
கொள்ளுகிற ஆண்சாதியாவது, பெண்சாதியா
வது, உன் நடுவில் உன் பராபரனாகிய கர்த்தர்
உனக்குக் கொடுக்கிற வாசல்களில் ஒன்றிலே
காணப்பட்டு,-அது உன் செவிகேட்க, உனக்கு ௪
அறிவிக்கப்பட்டால், நீ நன்றாய் விசாரிக்கக்
கடவாய்; அது மெய்யென்றும், அப்படிப்பட்ட
அருவருப்பு இஸ்ரவேலிலே நடந்தது நிசகாரிய
மென்றும் கண்டாயானால்,—அப்பொழுது அந் ௫
தப் பொல்லாத காரியத்தைச் செய்த அந்த ஆண்
சாதியை, அல்லது அந்தப் பெண்சாதியை, உன்
வாசல்களுக்கு வெளியே கொண்டுபோய் அப்

படிப்பட்டவர்கள் சாகும்படிக்குக் கல்எறியக்
கடவாய்.
௬ சாவுக்கு ஏதுவானவன் இரண்டுமூன்று சாட்
சிகளுடைய வாக்கின்படியே கொலையுண்ணக்
கடவன்; ஒரே சாட்சியினுடைய வாக்கின்படி
யே அவன் கொலைசெய்யப்படவேண்டாம். —
௭ அவனைக்கொன்றுபோடுகிறதற்கு, முந்திச் சாட்
சிகளின் கையும் பிற்பாடு எல்லாச் சனத்தின்
கையும் அவன்மேல் இருப்பதாக; இப்படிப்
பொல்லாப்பை உன் நடுவில் இராதபடிக்கு வி
லக்கக்கடவாய்.
௮ உன் வாசல்களில் இரத்தப்பழிகளுக்கும் அல்
லது வியாச்சியங்களுக்கும் அல்லது காயம்பட்ட
தேசத்திற்கும் அடுத்த வழக்குக் காரியங்களிலே,
யாதொரு காரியத்தை நியாயம் தீர்க்கிறதற்கு உன
க்கு அரிதாயிருந்தால், நீ எழுந்து, உன் பராபரனா
கிய கர்த்தர் தெரிந்துகொண்ட தானத்திற்குப்
௯ போயேறி,—இலேவியரான ஆசாரியரண்டைக்
கும் அந்நாள்களில் இருக்கும் நியாயாதிபதியண்
டைக்கும் வந்து கேட்பாயாக; அவர்கள் நியா
யம் இன்னதென்று உனக்கு அறிவிப்பார்கள்.—
௰ அவர்கள் கர்த்தர் தெரிந்துகொண்ட அந்த இடத்
திலிருந்து உனக்கு அறிவிக்கும் வார்த்தையின்
படியே நீ செய்து, அவர்கள் உனக்கு உபதேசிக்
கும்படி எல்லாம் செய்யக் கவனமாயிருப்பா
௰௧ யாக.—அவர்கள் உனக்கு அறிவிக்கும் வார்த்தை
யை நீ விட்டு, வலது இடதுபுறமாக விலகாமல்,
அவர்கள் உனக்கு உபதேசிக்கும் பிரமாணத்தின்
ப்படியேயும், உனக்குச் சொல்லும் நியாயத்தின்
௰௨ படியேயும் செய்யக்கடவாய். — அங்கே உன்
பராபரனாகிய கர்த்தருக்கு ஆராதனைசெய்கிற
தற்கு நிற்கிற ஆசாரியன் சொல்லையும் அல்லது
நியாயாதிபதியின் சொல்லையும் கேளாதபடிக்கு,
ஒருவன் இடும்புசெய்தால், அவன் சாகக்கட
௰௩ வன்.—இப்படியே சனமெல்லாம் அதைக்கேட்
டு, பயந்து, இனி இடும்புசெய்யாதிருக்கும்படி
க்கு, பொல்லாப்பை இஸ்ரவேலிலிருந்து விலக்
கக்கடவாய்.
௰௪ உன் பராபரனாகிய கர்த்தர் உனக்குக் கொடுக்
கிற தேசத்திலே நீ வந்து, அதைச் சுதந்தரித்துக்
கொண்டு, அதில் குடியேறினபிற்பாடு, நீ என்
னைச் சுற்றிலும் இருக்கிற சகல சாதிகளைப்போ
ல, நான் ஒரு இராசாவை என்மேல் வைப்பே
௰௫ னென்றாயானால்,—உன் பராபரனாகிய கர்த்தர்
தெரிந்துகொள்ளும் இராசாவையே உன்மேல்
வைக்கக்கடவாய்; உன் சகோதரரின் நடுவே இ
ருக்கிற ஒருவனை உன்மேலே இராசாவாக வைக்
கக்கடவாய்; உன் சகோதரனல்லாத அந்நியனை
௰௬ நீ உன்மேல் வைக்கக்கூடாது.—அவனோவென்
றால் அநேகம் குதிரைகளைச் சம்பாதிக்காமலும்,
அநேகம் குதிரைகளைத் தனக்குச் சம்பாதிக்கச்
சனத்தைத் திரும்ப எகிப்திற்குப் போகப்பண்
ணாமலும் இருக்கக்கடவன்; ஏனெனில் இனி
அந்த வழியாய் நீங்கள் திரும்பிப்போகவேண்
டாமென்று கர்த்தர் உங்களுக்குச் சொன்னார்.—

அவன் இருதயம் பின்வாங்கிப்போகாதபடிக்கு, ௰௭
அவன் அநேகம் பெண்சாதிகளைப் படைக்க
வேண்டாம்; அவன் வெள்ளியும் பொன்னும்
தனக்கு மிகுதியாய்ப் பெருகப்பண்ணவும் வே
ண்டாம். — அவன் தன் இராச்சியத்தினுடைய ௰௮
ஆசனத்தின்மேல் உளுக்காந்திருக்கிறபொழுது,
அவனுடைய இருதயம் அவன் சகோதரருக்கு
மிஞ்சி உயராமலும், கற்பனையை அவன் விட்டு
வலது இடதுபுறமாய் விலகாமலும், — இந்த ௰௯
நியாயப்பிரமாணத்தினுடைய எல்லா வார்த்தை
களையும் இந்தக் கட்டளைகளையும் கைக்கொண்
டு, அவைகளின்படி செய்வதற்காக, தன் பரா
பரனாகிய கர்த்தருக்குப் பயந்திருக்குதலைக் கற்
றுக்கொள்ளும்படிக்கும், இப்படியே அவனும்
அவன் குமாரரும் இஸ்ரவேலின் நடுவே தங்கள்
இராச்சியத்திலே தங்கள் நாள்களை நீடிக்கப்பண்
ணும்படிக்கும்,—அவன் இலேவியராகிய ஆசாரி ௨௰
யருக்குமுன்பாக இருக்கும் இந்த நியாயப்பிரமா
ணத்தின் மேல்பாடத்தைப் பார்த்து, ஒரு பிரதி
யைத் தனக்கு ஒரு புஸ்தகத்தில் எழுதித் தன்னி
டத்திலே வைத்திருந்து, தன் சீவனுள்ள நாளெல்
லாம் அதை வாசிக்கக்கடவன்.

## ௰௮. அதிகாரம்.

௧. இலேவியின் கோத்திரத்தாருக்கும் ஆசாரியர்களுக்கும் பராபரனே சுதந்தரம். ௩. ஆசாரியரின் வருமானம். ௬. இலேவியின் கோத்திரத்தாருடைய வருமானம். ௯. புறச்சாதியாரின் அருவருப்புகளுக்கு விலக வேண்டியது. ௰௫. தீர்க்கதரிசியாகிய கிறிஸ்து சொல்வதைக் கேட்க வேண்டியது. ௨௰. தெய்வபயமில்லாத தீர்க்கதரிசி சாவவேண்டியது.

இலேவியராகிய ஆசாரியருக்கும் இலேவி கோ ௧
த்திரம் அனைத்திற்கும் இஸ்ரவேல் புத்திரரோடே
பங்கும் சுதந்தரமும் இல்லாதிருப்பதாக; கர்த்த
ருடைய தகனபலிகளையும் அவருடைய சுதந்த
ரத்தையும் சாப்பிடுவார்களாக.—ஆனால் அவர் ௨
கள் சகோதரருக்குள்ளே அவர்களுக்குச் சுதந்
தரமில்லை; கர்த்தர், தாம் அவர்களுக்குச் சொன்
னபடியே அவர்களுடைய சுதந்தரமானவர்.
சனத்தினிடத்திலே ஆசாரியரின் வரத்தாவது: ௩
பலியிடுகிறவர்களின் பலிமாடானாலும் சரி, ஆ
டானாலும் சரி; ஆசாரியனுக்கு முன்னந்தொ
டையையும் தாடைகளையும் இரைப்பையையும்
கொடுக்கவேண்டும். — உன்னுடைய தானியம் ௪
திராட்சப்பழஇரசம் எண்ணெய் என்றவைக
ளின் முந்தின பலனையும், உன் ஆடுகளை நீ
மயிர்கத்திரிக்கிறதின் முந்தின பலனையும், அவ
னுக்குக் கொடுக்கக்கடவாய். — ஏனென்றால் ௫
சகல நாளும் அவனும் அவன் குமாரரும் கர்த்த
ரின் நாமத்திலே ஊழியம்செய்ய நிற்கும்படிக்கு,
உன் பராபரனாகிய கர்த்தர் உன்னுடைய எல்
லாக் கோத்திரங்களிலும் அவனையே தெரிந்து
கொண்டார்.
இஸ்ரவேலில் எவ்விடத்திலாகிலுமிருக்கிற ௬
உன் வாசல்களில் யாதொன்றிலே பரதேசியாய்த்
தங்கின ஒரு இலேவியன் அவ்விடத்திலிருந்து
கர்த்தர் தெரிந்துகொண்ட தானத்திற்குத் தன்
இருதயத்தின் முழுவாஞ்சையாலே வந்து,—அங் ௭

கே கர்த்தருக்குமுன்பாக நிற்கிற இலேவிய
ராகிய தன்னுடைய எல்லாச் சகோதரரைப்போ
லும் தன் பராபரனுகிய கர்த்தரின் நாமத்தில் ஊ
௮ ழியம்செய்தால், — அப்படிப்பட்டவர்கள் தங்
கள் பிதாக்களுடைய ஆஸ்தியின் விலைக்கிரயத்
தை அநுபவிக்கிறதுமல்லாமல், சரிசமானமான
பங்கைச் சாப்பிடுவார்களாக.
௯ உன் பராபரனுகிய கர்த்தர் உனக்குக் கொ
டுக்கிற தேசத்திலே நீ வந்தபொழுது, அந்தச் சா
திகளுடைய அருவருப்புகளின்படி செய்யக்
௰ கற்றுக்கொள்ளாயாக. — தன் மகனை, அல்லது
தன் மகளை அக்கினியை மிதிக்கப்பண்ணுகிற
வனும், ஜோசியனும், நாள்பார்க்கிறவனும், அஞ்
௰௧ சனம்பார்க்கிறவனும், சூனியக்காரனும், — மந்
திரவாதியும், சன்னதக்காரனும், குறிசொல்லுகி
றவனும், செத்தவர்களைக் கேட்கிறவனும், உன்
௰௨ னிடத்திலே காணப்படாதிருப்பதாக. — ஏனெ
னில் இப்படிப்பட்டவைகளைச் செய்கிறவன்
எல்லாம் கர்த்தருக்கு அருவருப்பானவன்; இப்
படிப்பட்ட அருவருப்புகளின்நிமித்தம் உன்
பராபரனுகிய கர்த்தர் அவர்களை உனக்குமுன்
௰௩ பாகத் துரத்திவிடுகிறார்.—உன் பராபரனுகிய கர்த்
தருக்குமுன்பாக உத்தமமாயிருக்கக்கடவாய்.—
௰௪ ஏனெனில் நீ துரத்திவிடப்போகிற அந்தச் சாதி
கள், நாள்பார்க்கிறவர்களையும் குறிசொல்லுகிற
வர்களையும் கேட்கிறார்கள்; உனக்கோவென்
றால் உன் பராபரனுகிய கர்த்தர் அப்படிச்செய்ய
உத்தாரம்கொடார்.
௰௫ என்னைப்போல ஒரு தீர்க்கதரிசியை உன்
பராபரனுகிய கர்த்தர் உனக்கு உன் நடுவே உன்
சகோதரரிலிருந்து எழும்பப்பண்ணுவார்; அவ
௰௬ ரைக் கேட்பீர்களாக. — நான் சாவாதபடிக்கு
இனி என் பராபரனுகிய கர்த்தரின் சத்தத்தைக்
கேளாமலும், இனி இந்தப் பெரிய அக்கினி
யைக் காணமலும் இருப்பேனுகவென்று நீ ஓரே
பிலே சபை கூட்டப்பட்ட நாளில், உன் பரா
பரனுகிய கர்த்தரை வேண்டிக்கொண்டதின்ப
௰௭ டியெல்லாம் ஆகும்படிக்குத்தானே.—அப்பொ
ழுது கர்த்தர் என்னுடனே சொன்னதாவது: அவர்
௰௮ கள் சொன்னது நல்லது.—நாம் உன்னைப்போல
ஒரு தீர்க்கதரிசியை அவர்களுக்கு அவர்கள் ச
கோதரரின் நடுவிலேயிருந்து எழும்பப்பண்ணி,
நம்முடைய வார்த்தைகளை அவர் வாயிலே கொ
டுப்போம்; நாம் அவருக்குக் கற்பிப்பதையெல்
௰௯ லாம் அவர்களோடே சொல்லுவார்.—அப்பொ
ழுது சம்பவிப்பதேதெனில் அவர் நமது நாமத்
திலே சொல்லும் நமது வார்த்தைகளைக் கேளா
தவனை நாம் விசாரிப்போம்.
௨௰ ஆனுல் எந்தத் தீர்க்கதரிசி நாம் சொல்லத் த
னக்குக் கற்பிக்காதிருக்கிற விசேஷத்தை நமது
நாமத்திலே சொல்லத்துணிந்து, வேறே தேவர்
களின் நாமத்திலே பேசுவானே, அந்தத் தீர்க்க
௨௧ தரிசி சாவக்கடவன்.—ஆனுல் நீ உன் இருதயத்
தில், கர்த்தர் சொல்லாதிருக்கிற வார்த்தையை
௨௨ எப்படி அறிவேன் என்றாயேயாகில்,—தீர்க்கத
ரிசி கர்த்தரின் நாமத்திலே சொன்ன காரியம்
உண்டாகாமலும் வாராமலும்போனுல், அது
கர்த்தர் சொல்லாதிருக்கிற வார்த்தை; தீர்க்கத
ரிசி அதைத் துணிகரத்தினுலே சொன்னுன்;
அவனுக்குப் பயப்படாயாக.

## ௰௯. அதிகாரம்.

௧. அடைக்கலப்பட்டணங்கள். ௪. அவைகளில் கொலைபாதகனுக்கு உண்டாகும் உதவி. ௰௪. எல்லைக்குறிகளை ஒற்றிப்போடலாகாது. ௰௫. இரண்டு சாட்சி முதலாய்வேண்டியது. ௰௬. பொய்ச்சாட்சிக்காரனுக்கு விதித்த தண்டனை.

உன் பராபரனுகிய கர்த்தர் உனக்குக் கொடுக் ௧
கும் தேசத்தின சாதிகளை உன் பராபரனுகிய
கர்த்தர் வேரற்றுப்போகப்பண்ணுகையால், நீ
அவர்கள் தேசத்தைச் சுதந்தரித்து, அவர்கள் பட்
டணங்களிலும் அவர்கள் வீடுகளிலும் குடியே
றினபொழுது,—நீ உன் பராபரனுகிய கர்த்தர் ௨
உனக்குச் சுதந்தரிக்கக் கொடுக்கிற உன் தேசத்
தின் நடுவிலே, மூன்று பட்டணங்களை உனக்
குப் பிரித்துவைக்கக்கடவாய். — கொலைசெய் ௩
தவனெல்லாம் அங்கே ஓடிப்போகும்படியாக,
நீ உனக்கு வழியை ஆயத்தப்படுத்தி, உன் பரா
பரனுகிய கர்த்தர் உன்னைச் சுதந்தரிக்கப்பண்
ணப்போகிற உன் தேசத்தின் எல்லையை மூன்று
பங்காகப் பகுக்கக்கடவாய்.
கொலைசெய்து, அங்கே ஓடிப்போய், உயி ௪
ரோடிருக்கத்தக்கவன் யாரென்றால், தான் முன்
நாள்களில் பகைத்திராத தனக்கடுத்தவனை மன
தறியாமல் கொன்றவன்தானே.—விறகு வெட்ட ௫
ஒருவன் தனக்கடுத்தவனோடே காட்டிலே
போய், விறகை வெட்டத் தன் கையைக் கோ
டரியோடே ஓங்கும்பொழுது, இரும்பு காம்
பைவிட்டுத் தெறித்து, அவனுக்கடுத்தவனுக்கு
அவன் சாகும்படியாய்ப் பட்டால்,—அப்படிப் ௬
பட்டது முதலானபிரகாரமாகக் கொலைசெய்த
வனை, இரத்தப்பழிகாரன் தன் மனது எரிகை
யில் பின்தொடர்ந்து, வழி தூரமாயிருக்கிறதினு
லே, அவனைக் கிட்டி, அவன் சீவனை அதம்பண்
ணுதபடிக்கு, அவன் அந்தப் பட்டணங்களில்
ஒன்றில் ஓடிப்போய், உயிரோடிருப்பானுக;
ஏனென்றால் இவன் அவனை முன்நாள்களில்
பகைக்காதபடியினுலே, இவன்மேலே சாவுக்
கான குற்றம் சுமந்ததில்லை. — இதின்நிமித்தம் ௭
மூன்று பட்டணங்களை உனக்குப் பிரித்துவைக்
கக்கடவாயென்று நான் உனக்குக் கற்பிக்கி
றேன்.
நீ உன் பராபரனுகிய கர்த்தரைச் சிநேகித்து, ௮
சகல நாளும் அவர் வழிகளில் நடப்பதற்காக,
நான் இன்று உனக்குக் கற்பிக்கிற இந்த எல்
லாக் கற்பனையையும் அதின்படி செய்யும்படிக்
குக் கைக்கொண்டு,—இப்படியே உன் பராபர ௯
னுகிய கர்த்தர் உன் பிதாக்களுக்கு ஆணையிட்ட
படியே உன் எல்லையை விஸ்தாரமாக்கி, உன்
பிதாக்களுக்குக் கொடுப்போமென்று சொன்ன
தேசத்தையெல்லாம் உனக்குக் கொடுத்தால்,—
அப்பொழுது குற்றமில்லாத இரத்தம் உன் பரா ௰

பராகிய கர்த்தர் உனக்குச் சுதந்தரமாகக் கொடுக்கிற உன் தேசத்தின் நடுவிலே சிந்தப்படுகிறதினால், உன்மேல், இரத்தப்பழி சுமக்காதபடிக்கு, இந்த மூன்று பட்டணங்களோடே, உனக்கு இன்னம் மூன்று கூட்டக்கடவாய்.
௰௧ ஒருவன் தனக்கடுத்தவனைப் பகைத்து, அவனுக்குப் பதிவிருந்து, அவனுக்கு விரோதமாய் எழும்பி, அவன் சாகும்படிக்கு அவன் சீவனை அதம்பண்ணி, இந்தப்பட்டணங்களில் ஒன்றில்
௰௨ ஓடிப்போனானேயாகில்,—அவன் பட்டணத்தின் மூப்பர் ஆள் அனுப்பி, அவனை அங்கேயிருந்து கொண்டுவரச்சொல்லி, அவன் சாகும்படிக்கு அவனை இரத்தப்பழிகாரன் கையில் ஒப்புக்கொ
௰௩ டுக்கக்கடவர்கள்.—உன் கண் அவனுக்கு இரங்கவேண்டாம்; நீ நன்றாயிருக்கும்படிக்கு, நீ குற்றமில்லாத இரத்தத்தின் பழியை இஸ்ரவேலை விட்டு விலக்கக்கடவாய்.
௰௪ உன் பராபரனாகிய கர்த்தர் உனக்குச் சுதந்தரிக்கக் கொடுக்கிற தேசத்தில் உன் கைவசமாயிருக்கும் காணியாட்சியிலே முந்தினவர்கள் குறித்திருக்கிற உனக்கடுத்தவனுடைய எல்லையை ஒற்றிப்போகாயாக.
௰௫ எவன் ஒருவன் எந்த அக்கிரமத்தையும் எந்தப் பாவத்தையும் செய்தானென்று சொல்லப்பட்டாலும், ஒரே சாட்சி அவன்மேலே சாட்சியிட்டு, தீர்க்கவேண்டாம்; இரண்டு மூன்று சாட்சிகளுடைய வாக்கினாலே காரியம் நிலைவரப்படுவ
௰௬ தாக.—ஒருவன்மேல் ஒரு துரோகத்தின் குற்றத்தைச் சாற்ற, ஒரு கொடுமையான சாட்சி அவன்
௰௭ மேல் எழும்பினால்,—வழக்காடுகிற இருவரும் கர்த்தருக்குமுன்பாகவும் அந்நாளில் இருக்கும் ஆசாரியர்களுக்கும் நியாயாதிபதிக்கும் முன்பா
௰௮ கவும் வந்து நிற்பார்களாக.—அப்பொழுது நியாயாதிபதிகள் நன்றாய்க் கேட்டு விசாரிக்கக்கடவர்கள்; சாட்சி கள்ளச்சாட்சியென்றும் தன் சகோதரன்மேலே பொய்யாய்க் குற்றம்சாற்றினா
௰௯ னென்றும் கண்டால்,—அப்பொழுது அவன் தன் சகோதரனுக்குச் செய்ய நினைத்தபடியே அ
௨௰ வனுக்குச் செய்யக்கடவீர்கள்.—இப்படியே மற்றவர்களும் கேட்டுப் பயந்து, இனி உன் நடுவிலே அந்தத் தீவினைக்கொத்த காரியத்தைச் செய்யாதிருப்பதற்காக, பொல்லாப்பை உன் நடுவி
௨௧ லிருந்து விலக்குவாயாக.—உன் கண் இரங்கவேண்டாம்; சீவனுக்குச் சீவன், கண்ணுக்குக் கண், பல்லுக்குப் பல், கைக்குக் கை, காலுக்குக் கால்.

## ௨௰. அதிகாரம்.

௧. யுத்தத்திற்குச் சனங்கள் எழும்பும்படி ஆசாரியர் சொல்லும் புத்தி. ௫. யுத்தத்திற்குப் போகாதபடி சேனைத்தலைவரால் சிலருக்குக் கொடுக்கப்படும் உத்தரவு. ௰. சமாதான அறிவிப்பை ஏற்றுக்கொள்ளுகிற அல்லது தடுக்கிற பட்டணங்களை நடத்தவேண்டிய விதம். ௰௬. அழிக்கப்படவேண்டிய பட்டணங்கள். ௰௯. முற்றிக்கைபோடும்போது புசிக்கத்தக்க கனிமரங்களை அழிப்பதைத் தடுத்தல்.

௧ நீ உன் சத்துருக்களுக்கு எதிராக யுத்தத்திற்குப் புறப்பட்டு, குதிரைகளையும் இரதங்களையும் உன்னைப்பார்க்கிலும் திரட்சியான சனத்தையும் கண்டால், அவர்களுக்குப் பயப்படாயாக; ஏனெனில் உன்னை எகிப்துதேசத்திலிருந்து ஏறிவரப் பண்ணின உன் பராபரனாகிய கர்த்தர் உன்னோடே இருக்கிறார்.—நீங்கள் யுத்தத்திற்குக் கிட்டு ௨
கிறபொழுது, ஆசாரியன் சேர்ந்து வந்து, சனத்தோடே பேசி, அவர்களோடே சொல்லவேண்டியதாவது: இஸ்ரவேலே, கேள்.—இன்று உங் ௩
கள் சத்துருக்களோடே யுத்தம் கலக்கப்போகிறீர்கள்; உங்கள் இருதயம் துவளவேண்டாம்; நீங்கள் அவர்களைப் பார்த்துப் பயப்படவும் கலங்கவும், தத்தளிக்கவும் வேண்டாம்.—ஏனெனில் ௪
உங்கள் பராபரனாகிய கர்த்தர் உங்களுக்காக உங்கள் சத்துருக்களோடே யுத்தம்பண்ணவும் உங்களை இரட்சிக்கவும் உங்களோடேகூடப் போகிறார் என்பானாக.
பிற்பாடு சேர்வைக்காரர் சனத்தோடே சொல் ௫
லவேண்டியதாவது: எவன் புதுவீட்டைக்கட்டி, அதைப் பிரதிஷ்டைபண்ணாதிருக்கிறானோ, அவன் யுத்தத்திலே செத்து, வேறொருவன் அதைப் பிரதிஷ்டைபண்ணாதபடிக்கு, தன் வீட்டிற்குத் திரும்பிப் போகக்கடவன்.—எவன் திராட்சத் ௬
தோட்டத்தை நாட்டி, அதை அநுபவியாதிருக்கிறானோ, அவன் யுத்தத்திலே செத்து, வேறொருவன் அதை அநுபவியாதபடிக்கு, தன் வீட்டிற்குத் திரும்பிப்போகக்கடவன்.—எவன் ஒரு ௭
பெண்ணைத் தனக்கு நியமித்துக்கொண்டு, அவளை விவாகம்பண்ணாதிருக்கிறானோ, அவன் யுத்தத்திலே செத்து, வேறொருவன் அவளை விவாகம் பண்ணாதபடிக்கு, தன் வீட்டிற்குத் திரும்பிப் போகக்கடவன் என்பார்களாக.—இன்னம் சேர் ௮
வைக்காரர் சனத்துடனே பேசி, எவன் பயங்காளியும் திடனற்றவனுமாயிருக்கிறானோ, அவன் தன் சகோதரரின் இருதயத்தைத் தன் இருதயத்தைப்போலக் கரையப்பண்ணாதபடிக்கு, தன் வீட்டிற்குத் திரும்பிப் போகக்கடவன் என்பார்களாக.—சேர்வைக்காரர் சனத்தோடே பேசி ௯
முடிந்தபிற்பாடு, சேனைகளின் தலைவர் சனத்தை இலக்கம்பார்க்கக்கடவர்கள்.
நீ ஒரு பட்டணத்தின்மேல் யுத்தம்பண்ணக் ௰
கிட்டும்பொழுது, சமாதானத்திற்காக விசேஷத்தை அதற்குக் கூறக்கடவாய்.—அது சமாதான ௰௧
மான உத்தரவு உனக்குக் கொடுத்து, உனக்குத் திறந்தால், அதில் அகப்பட்டிருக்கிற சனமெல்லாம் உனக்குப் பகுதிகட்டுகிறவர்களாகி, உன்னைச் சேவிக்கக்கடவர்கள்.—அது உன்னோடே ௰௨
சமாதானம்பண்ணாமல் உன்னோடே யுத்தம்பண்ணிற்றேயானால், நீ அதை முற்றிக்கைபோட்டு,—
உன் பராபரனாகிய கர்த்தர் அதை உன் கையில் ௰௩
ஒப்புக்கொடுத்தால், அதிலுள்ள ஆண்சாதியையெல்லாம் பட்டையக் கருக்கினாலே வெட்டி,—
ஸ்திரிகளையும் குழந்தைகளையும் மிருகசீவன்களை ௰௪
யும்மாத்திரம் உயிரோடே வைத்து, பட்டணத்திலுள்ள எல்லாவற்றையும் அதினுடைய எல்லா உடைமைகளையும் கொள்ளையிட்டுக்கொண்டு, உன் பராபரனாகிய கர்த்தர் உனக்கு ஒப்புக்கொ

டுத்த உன் சத்துருக்களின் கொள்ளையைச் சாப்
௰௫ பிடுவாயாக.—இந்தச் சாதிகளின் பட்டணங்க
ளாயிராமல், உனக்கு வெகு தூரமாயிருக்கிற
சகல பட்டணங்களுக்கும் அப்படிச் செய்வா
௰௬ யாக. — உன் பராபரனாகிய கர்த்தர் உனக்குச்
சுதந்தரமாகக் கொடுக்கிற இந்த ஏத்தியர், எமோ
ரியர், கானானியர், பேரிசியர், ஏவியர், எபூசியர்
என்ற சனசதளங்களின் பட்டணங்களிலேமாத்
திரம் சுவாசமுள்ளதொன்றையும் உயிரோடே
௰௭ வைக்காமல், — அவர்களை உன் பராபரனாகிய
கர்த்தர் உனக்குக் கற்பித்தபடியே சங்கரிக்கவே
௰௮ சங்கரிக்கக்கடவாய்.—அவர்கள் தங்கள் தேவர்
களுக்குச் செய்கிற தங்களுடைய சகல அருவ
ருப்புகளின்படியே செய்ய, உங்களுக்குக் கற்
றுக்கொடாமலும், நீங்கள் உங்கள் பராபரனாகிய
கர்த்தருக்கு விரோதமாய்ப் பாவம்செய்யாமலும்
இருக்கத்தானே.
௰௯ நீ ஒரு பட்டணத்தின்மேல் யுத்தம்பண்ணி,
அதைப் பிடிக்க, அநேகநாள் அதை முற்றிக்கை
போட்டுக்கொண்டிருந்தால், நீ கோடரியை ஓங்
கி, அதின் மரங்களைச் சேதம்பண்ணுயாக; ஏனெ
னில் அவைகளின் கனியை நீ புசிக்கலாம்;ஆகை
யால் உனக்குக் கொத்தளத்திற்காமென்று அவை
களை வெட்டாயாக; ஏனென்றால் வெளியின்
௨௰ விருட்சங்கள் மனிதனுக்கானவைகள். — புசிக்
கக் கனிதராதென்று நீ அறிந்திருக்கிற மரங்களை
மாத்திரம் நீ அழித்து, வெட்டிப்போட்டு, உன்
னோடு யுத்தம்பண்ணுகிற பட்டணம் பிடிபடும்
மட்டும் அதற்கு எதிராகக் கொத்தளம்போட்டுக்
கொண்டிரு.

## ௨௧. அதிகாரம்.

க. அறியப்படாத கொலைக்கு நிவிர்த்தி. ௰. மனைவியாக வைக்கப்பட்டிருக்கிற சிறைக்கடுத்த கடமை. ௰௫. முதல்பேறுனவனைப் பிரியமில்லாமையால் சுதந்தரத்திலிருந்து நீக்கப்படாது. ௰௮. அடங்காத மகனைக் கொல்லக் கல்லெறியவேண்டியது. ௨௨. குற்றவாளி இராமுழுவதும் ஒரு மரத்தின்மீது தூக்கப்படலாகாது.

க உன் பராபரனாகிய கர்த்தர் உனக்குச் சுதந்தரிக்
கக் கொடுக்கிற சீமையில், கொலைசெய்யப்பட்
டுக் கிடக்கிறஒருவன் வெளியிலே காணப்பட்டு,
அவனைக் கொன்றவன் யாரென்று தெரியாதே
௨ போனால்,—உன் மூப்பரும் உன் நியாயாதிபதி
களும் வெளியே போய், கொலைசெய்யப்பட்ட
வனைச் சுற்றிலும் இருக்கும் பட்டணங்கள்மட்
௩ டும் அளப்பார்களாக.—அப்பொழுது அவனுக்
குச் சமீபமென்று காணப்பட்ட பட்டணத்தின்
மூப்பர், வேலையில் பண்படாததும் நுகத்தடி
பிணைக்கப்படாததுமான ஒரு கிடாரியைப் பி
௪ டித்து,—உழாததும் விதையாததுமாகிய தரிசான
பள்ளத்தாக்கிலே அதைக் கொண்டுபோய், அந்
தப் பள்ளத்தாக்கிலே அதின் தலையை வெட்டிப்
போடக்கடவர்கள்.
௫ அப்பொழுது இலேவியின் குமாரராகிய ஆசா
ரியர்கள் சேரக்கடவர்கள்; ஏனெனில் அவர்களை
உன் பராபரனாகிய கர்த்தர் தமக்கு ஆராதனைசெய்
யவும் கர்த்தருடைய நாமத்திலே ஆசீர்வதிக்கவும்
தெரிந்துகொண்டார்; அவர்கள் வாக்கின்படியே
சகல வழக்கும் சகல காயச்சேதமும் தீர்வது.—
கொலைசெய்யப்பட்டவனுக்குச் சமீபமான பட் ௬
டணத்தின் மூப்பரெல்லாம் பள்ளத்தாக்கிலே
தலைவெட்டப்பட்ட கிடாரியின்மேலே தங்கள்
கைகளைக் கழுவி,—எங்கள் கைகள் அந்த இரத் ௭
தத்தைச் சிந்தினதுமில்லை, எங்கள் கண்கள் அ
தைக் கண்டதுமில்லை என்று உத்தரவு கொ
டுத்து, — கர்த்தாவே, தேவரீர் மீட்டுக்கொண்ட ௮
உமது சனமாகிய இஸ்ரவேலின்மேல் குற்றமில்
லாத இரத்தத்தின் பழியைச் சுமத்தாமல், உமது
சனமாகிய இஸ்ரவேலின்மேல் கிருபையுள்ளவ
ராய் இருமென்பார்களாக;அப்பொழுது இரத்தப்
பழி அவர்களுக்கு நிவிர்த்தியாம். — இப்படிக் ௯
குற்றமில்லாத இரத்தத்தின் பழியை உன் நடுவி
லிருந்து விலக்கக்கடவாய்;ஏனெனில் கர்த்தரின்
பார்வைக்குச் செம்மையானதை நீ செய்ய
வேண்டும்.
நீ உன் சத்துருக்களுக்கு எதிராக யுத்தத்திற்குப் ௰
புறப்பட்டு, உன் பராபரனாகிய கர்த்தர் அவர்களை
உன் கையில் ஒப்புக்கொடுக்கிறதினாலே அவர்க
ளைச் சிறைபிடித்து வந்து, — சிறைகளில் அழ ௰௧
குள்ள உருவான ஒரு ஸ்திரியைக்கண்டு, அவளை
விவாகம்பண்ணத்தக்கதாய் அவள்மேல் ஆசை
வைத்து,—அவளை உன் வீட்டிற்குள் அழைத்துப் ௰௨
போனாயானால், அவள் தன் தலையைச் சிரைத்துக்
கொண்டு, தன் நகங்களை அறுத்து,—தன் சிறை ௰௩
யிருப்பின் வஸ்திரத்தை வாங்கிப்போட்டு, உன்
வீட்டில் உளுக்காந்து, ஒரு மாதம்மட்டும் தன்
தகப்பனையும் தாயையும் நினைத்து அழட்டும்;
அதற்குப்பிறகு அவள் உன் பெண்சாதியாய் இ
ருக்கும்படிக்கு நீ அவளிடத்தில் பிரவேசித்து,
அவளைப் படைக்கலாம்.—அவள் உனக்குச் சம் ௰௪
மதிப்படாதே போனாளேயாகில், நீ அவளைப்
பணத்திற்கு விற்காமல், அவளைத் தன் இச்சை
யாய்ப் போகவிடுவாயாக; நீ அவளைத் தாழ்மைப்
படுத்தினபடியினாலே, அவளாலே ஆதாயம் தே
டாதிருப்பாயாக.
ஒருவனுக்கு இரண்டு பெண்சாதிகளாகிய ௰௫
சிநேகிக்கப்பட்ட ஒருத்தியும் பகைக்கப்பட்ட
ஒருத்தியுமிருந்து, இருவரும் அவனுக்குப் பின்
ளைகளைப் பெற்று, முதல்பேறானவன் பகைக்கப்
பட்டவளில் பிறந்திருந்தால்,—அவன் தனக்குண் ௰௬
டானதைத் தன் பிள்ளைகளுக்குச் சுதந்தரமா
கப் பங்கிடும் நாளிலே, பகைக்கப்பட்டவளில்
பிறந்த முதல்பேறானவனுக்குமுன்பாக, சிநே
கிக்கப்பட்டவளில் பிறந்தவனுக்கு முதல்பேற்
றின் சுதந்தரத்தைக் கொடுக்கப்படாது.—பகைக் ௰௭
கப்பட்டவளில் பிறந்தவனை அவன் முதல்பே
றானவனாக அறிந்து, தனக்குண்டானதிலெல்
லாம் இரண்டு பங்கை அவனுக்குக் கொடுக்க
வேண்டும்; ஏனெனில் இவன் அவனுடைய முந்
தின பலன், அவனுக்கு முதல்பேற்றின் சுதந்
தரம்செல்லும்.
தன் தகப்பன் சொல்லையும் தன் தாயின் சொல் ௰௮
லையும் கேளாமலும், அவர்களால்தண்டிக்கப்பட்

டும், அவர்களுக்குக் கீழ்ப்படியாமலும் போகிற
அடங்காத முண்டுத்தனக்காரனுகிய மகன் ஒரு
௰௯ வனுக்கு இருந்தால்,—அவன் தகப்பனும் அவன்
தாயும் அவனைப் பிடித்து, அவனை அவன் பட்ட
ணத்தின் மூப்பரண்டைக்கும் அவ்விடத்து வாச
௨௰ லுக்கும் கொண்டுபோய்,—இந்த எங்கள் மகன்
அடங்காத முரட்டாட்டக்காரன்;எங்கள் சொல்
லைக் கேளான்; பெருந்தீனிக்காரனும் குடியனு
மாயிருக்கிறனென்று அவன் பட்டணத்தின்
௨௧ மூப்பரோடே சொல்லுவார்களாக.— அப்பொ
ழுது அவன் பட்டணத்து மனிதரெல்லாரும் அ
வன் சாக அவனைக் கல்லெறியக்கடவர்கள்;
இப்படியே இஸ்ரவேலெல்லாம் கேட்டுப் பயப்
பட, பொல்லாப்பை உன் நடுவிலிருந்து விலக்
கக்கடவாய்.
௨௨ கொலைசெய்யப்பட ஒருவன்மேல் சாவுக்
குப் பாத்திரமான பாவம் உண்டாயிருக்க, அவ
௨௩ னை மரத்திலே தூக்கிப்போட்டாயானால்,— அ
வன் பிரேதம் மரத்திலே இராத்தங்கவேண்டாம்;
அதை அந்நாளிலேதானே அடக்கம்பண்ணவே
பண்ணுவாயாக; ஏனெனில் தூக்கிப்போடப்
பட்டவன் பராபரனாலே சபிக்கப்பட்டவன்;
ஆகையால் உன் பராபரனுகிய கர்த்தர் உனக்
குச் சுதந்தரமாகக் கொடுக்கிற உன்னுடைய
சீமையைத் தீட்டுப்படுத்தாயாக.

## ௨௨. அதிகாரம்.

௧. பிறர்களுக்கடுத்த இரக்கத்தைக் குறித்தது. ௫. உடுமானங்களால் ஆண் பெண்களைக் குறிப்பாய் அறியவேண்டுமென்பது. ௬. தாய்ப் பறவையை அதின் குஞ்சுகளோடு பிடிக்கப்படாதென்பது. ௮. வீடுகளின் மெத்தைகளுக்குக் கைப்பிடிச்சுவர்கள் கட்டவேண்டுமென்பது. ௯. விதைகளைக் கலந்து விதைக்கலாகாதென்பது. ௰௨. சட்டையின்மீது தொங்கல். ௰௩. மனைவிக்குத் தூர்க்கீர்த்தியாகப் புறங்கூறுகின்றவனுக்குத் தண்டனை. ௨௰. ௨௨. விபசாரத்தையும், ௨௩. கற்பழித்தலையும், ௨௮. புணர்ச்சியையும், ௩௰. முறைகேட்டையும் குறித்தது.

௧ உன் சகோதரனுடைய மாடாகிலும் ஆடாகிலும்
வழிதப்பிப்போகிறதைக் கண்டாயானால், அ
வைகளைக் காணாதவன்போல இராமல் அவை
களை உன் சகோதரனண்டைக்குத் திருப்பவே
௨ திருப்பக்கடவாய்.—உன் சகோதரன் உனக்குச்
சமீபமாயிராமலும் உனக்கு அறிமுகமாயிராம
லும் இருந்தானேயாகில், நீ அதை உன் வீட்டிற்
குள் சேர்த்துக்கொண்டு, அதை உன் சகோதரன்
தேடும்மட்டும் உன்னிடத்திலே வைத்து, அவ
௩ னுக்குத் திரும்பக் கொடுக்கக்கடவாய். — அப்
படியே அவன் கழுதைக்கும் செய்யக்கடவாய்;
அப்படியே அவன் வஸ்திரத்துக்கும் செய்யக்க
டவாய்; அப்படியே உன் சகோதரனுக்குக் கா
ணாதேபோன சகலத்திற்கும் அவைகளைக் கண்
டுபிடித்தாயானால் செய்யக்கடவாய்; அவைகளை
நீ காணாதவன்போல விட்டுப்போகப்படாது.—
௪ உன் சகோதரனுடைய கழுதையாகிலும் அவன்
மாடாகிலும் வழியிலே விழுந்திருக்கிறதைக்
கண்டாயானால் அவைகளைக் காணாதவன்போல
விட்டுப்போகாமல் அவனோடேகூட அவை
களை எடுக்கவே எடுத்துவிடுவாயாக.
௫ ஆண்பிள்ளையின் உடைகளைப் பெண்பிள்ளை
தரித்திருக்கவேண்டாம்; பெண்பிள்ளையின் வஸ்
திரத்தை ஆண்பிள்ளை உடுத்திக்கொள்ளவும் வே
ண்டாம்; ஏனெனில் அப்படிச் செய்கிறவர்க
ளெல்லாரும் உன் பராபரனுகிய கர்த்தருக்கு
அருவருப்பானவர்கள்.
யாதொரு மரத்திலே அல்லது தரையிலே ௬
குஞ்சுகளும் அல்லது முட்டைகளும் இருக்கிற
ஒரு குருவிக்கூடு உனக்கு வழியிலே தென்பட்
டு, தாய் குஞ்சுகளின்மேல் அல்லது முட்டை
களின்மேல் அடைகாத்துக்கொண்டிருந்தால்,
நீ குஞ்சுகளோடே தாயையும் பிடிக்காமல்,—
நன்றாயிருக்கவும் உன் நாள்கள் நீடித்திருக்கவும் ௭
தாயைப் போகவே போகவிட்டு, குஞ்சுகளை
எடுத்துக்கொள்வாயாக.
நீ புது வீட்டைக் கட்டினால், அப்பொழுது ௮
ஒருவன் உன் மெத்தைவீட்டிலிருந்து விழுகிறதி
னாலே, நீ இரத்தப்பழியை உன் வீட்டின்மேல்
சுமக்கப்பண்ணாதபடிக்கு அதற்குக் கிராதியை
உண்டுபண்ணக்கடவாய்.
உன் திராட்சத்தோட்டத்திலே வெவ்வேறே ௯
சாதி விதையை விதையாயாக; மற்றப்படி நீ வி
தைத்தவைகளின் பயிரையும் திராட்சத்தோட்
டத்தின் பலனையும் தீட்டுப்படுத்துவாய்.—மாட் ௰
டையும் கழுதையையும்கூடப் பிணைத்து உழா
யாக.—ஆட்டுமயிரும் பஞ்சுநூலும் கலந்த வஸ் ௰௧
திரத்தை உடுத்திக்கொள்ளாயாக.
நீ போட்டுக்கொள்ளுகிற உன் மேல்சட்டை ௰௨
யின் நாலு ஓரங்களில் உனக்குத் தொங்கல்களை
உண்டுபண்ணுவாயாக.
ஒரு ஸ்திரியை விவாகம்பண்ணின ஒருவன் ௰௩
அவளிடத்தில் பிரவேசித்தபிற்பாடு அவளைப்
பகைத்து, — இந்தப் பெண்சாதியை விவாகம் ௰௪
பண்ணினேன்; நான் அவளண்டையில் சேர்ந்த
பொழுதோவெனில், அவளிடத்தில் கன்னிக்கற்
பைக் கண்டுபிடித்ததில்லையென்று அவள்மேல்
ஆவலாதியான விசேஷங்களைச் சாற்றி, அவளுக்
குத் தூர்க்கீர்த்தியைப் பிறக்கப்பண்ணினால்,—
பெண்பிள்ளையின் தகப்பனும் அவள் தாயும் ௰௫
அவளைச் சேர்த்து, அவளுடைய கன்னிக்கற்பின்
ருசுவைப் பட்டணத்தின் மூப்பரண்டையிலே
பட்டணத்து வாசலில் கொண்டுவரக்கடவர்
கள்.—அங்கே பெண்பிள்ளையின் தகப்பன், என் ௰௬
மகளை இந்த மனிதனுக்குப் பெண்சாதியாகக்
கொடுத்தேன், ஆனால் இவன் இவளைப் பகைத்
து,—நான் உன் மகளிடத்தில் கன்னிமுத்திரை ௰௭
யைக் கண்டுபிடித்ததில்லையென்று இதோ ஆவ
லாதியான விசேஷங்களை அவள்மேல் சாற்று
கிறான்; ஆனால் என் மகளுடைய கன்னிமுத்தி
ரையின் ரூபகம் இங்கே இருக்கிறதென்று மூப்
பரோடே சொன்னபிற்பாடு, பட்டணத்தின்
மூப்பருக்குமுன்பாக வஸ்திரத்தை விரித்துப்
போடுவார்களாக.—அப்பொழுது அந்தப் பட்ட ௰௮
ணத்தின் மூப்பர் அந்த மனிதனைப் பிடித்து,
அவனைத் தண்டித்து,—அவன் இஸ்ரவேலில் ஒரு ௰௯
கன்னியாஸ்திரியை அவதூறுபண்ணினபடியி

னாலே, அவன் கையில் நூறு வெள்ளிக்காசை
அபராதமாக வாங்கி, பெண்பிள்ளையின் தகப்ப
னுக்குக் கொடுக்கக்கடவர்கள்; அவளோவெ
னில் அவனுக்குப் பெண்சாதியாயிருப்பாள்; அ
வன் தன் நாள்களிலெல்லாம் அவளைத் தள்ளிவி
உ௰ டக்கூடாதிருக்கும்.-பெண்பிள்ளையினிடத்தில்
கன்னிமுத்திரை கண்டுபிடிக்கப்படவில்லை
யென்று விசேஷம் மெய்ப்பட்டதேயானால்,—
உ௧ பெண்பிள்ளையை அவள் தகப்பனுடைய வீட்
டின் வாசலுக்குமுன்பாகக் கொண்டுபோய், அ
வள் இஸ்ரவேலில் மதிகெட்ட காரியத்தைச்
செய்து, தன் தகப்பன் வீட்டிலே வேசித்தனம்
பண்ணினபடியினாலே, அவளுடைய பட்டண
த்தின் மனிதர் அவளைச் சாகும்படிக்குக் கல்லெறி
வார்களாக; இப்படிப் பொல்லாப்பை உன் நடு
வில் இராதபடிக்கு விலக்கக்கடவாய்.
உ௨ புருஷன்கீழான பெண்சாதியோடே சயனிக்
கிற ஒருவன் கண்டுபிடிக்கப்பட்டால், பெண்
சாதியோடே சயனித்த மனிதனும் பெண்சாதி
யும் இருவரும் சாவக்கடவர்கள்; இப்படிப்
பொல்லாப்பை இஸ்ரவேலைவிட்டு விலக்கக்
கடவாய்.
உ௩ கன்னியாஸ்திரியான ஒரு பெண் ஒருவனுக்கு
நியமிக்கப்பட்டிருக்கையில், ஒருவன் அவளை
ஊரிலே கண்டுபிடித்து, அவளோடே சயனித்
உ௪ தால்,—அப்பொழுது அந்தப் பெண் ஊரிலிருந்
தும் கூப்பிடாதேபோனபடியினாலும், அந்த
மனிதன் தனக்கடுத்தவன் பெண்சாதியைக் கற்
பழித்தபடியினாலும், இருவரையும் அந்தப் பட்
டணத்தின் வாசலுக்குக் கொண்டுபோய், அவர்
கள் சாகும்படிக்கு அவர்களைக் கல்லெறியக்கட
வீர்கள்; இப்படிப் பொல்லாப்பை உன் நடுவில்
இராதபடிக்கு விலக்கக்கடவாய்.
உ௫ நியமிக்கப்பட்ட பெண்ணை ஒருவன் வெளி
யிலே கண்டு, அவளைப் பலவந்தமாய்ப் பிடித்து,
அவளோடே சயனித்தானேயாகில், அவளோ
டே சயனித்த மனிதன்மாத்திரம் சாவக்கடவன்.-
உ௬ ஆனால் பெண்ணுக்கு ஒன்றும் செய்யாயாக;
பெண்ணின்மேல் சாவுக்கான குற்றமில்லை;
ஏனெனில் அது ஒருவன் தனக்கடுத்தவன்மே
லெழும்பி, அவன் சீவனை வாங்கினதுபோல
உ௭ இருக்கின்றது.—ஏனெனில் வெளியிலே அவ
ளைக் கண்டுபிடித்தான்; நியமிக்கப்பட்ட பெண்
அப்பொழுது கூப்பிட்டும் அவளைக் காப்பாற்று
வாரில்லை.
உ௮ நியமிக்கப்படாத கன்னியாஸ்திரியாகிய ஒரு
பெண்ணை ஒருவன் கண்டு, கைப்பிடித்து, அவ
ளோடே சயனித்து, அவர்கள் கண்டுபிடிக்கப்
உ௯ பட்டால், — அவளோடே சயனித்த மனிதன்
பெண்ணின் தகப்பனுக்கு ஐம்பது வெள்ளிக்
காசைக் கொடுக்கக்கடவன்; அவன் அவளைக்
கற்பழித்தபடியினாலே, அவள் அவனுக்குப்
பெண்சாதியுமாயிருப்பாளாக; அவன் தன் நாள்
களிலெல்லாம் அவளைத் தள்ளிவிடக்கூடாதி
ருக்கும்.

ஒருவனும் தன் தகப்பன் பெண்சாதியை வி ௩௰
வாகம்பண்ணி, தன் தகப்பன் உடைமானத்தைத்
திறக்கவேண்டாம்.

## உ௩. அதிகாரம்.

*௧. சபையில் சேர்க்கூடியவர்களும், சேர்க்கூடாதவர்களும், ௯. சேனைக்குள்ளானவர்கள் அசுத்தமாயிருக்கப்படாது. ௰௫. தெறிபட்டுப்போன ஊழியக்காரனையும், ௰௭. அசுத்தங்களையும், ௰௮. அருவருப்பான காணிக்கைகளையும், ௰௯. அநியாயவட்டியையும், ௨௧. பிரதிக்கினைகளையும், ௨௪. பிறர்பொருளை அபகரித்தலையும் குறித்தது.*

விதையடிக்கப்பட்டவன், அல்லது கோசமறு ௧
பட்டவன் கர்த்தருடைய சபைக்குள்படவே
ண்டாம்.-வேசிப்பிள்ளை கர்த்தருடைய சபைக் ௨
குள்ப்படவேண்டாம்; அவனுக்குப் பத்தாம் த
லைமுறையானவனும் கர்த்ருடைய சபைக்குள்ப்
படவேண்டாம். — அம்மோனியனும் மோவா ௩
பியனும் கர்த்தருடைய சபைக்குள்ப்படவேண்
டாம்; பத்தாம் தலைமுறையிலும் என்றைக்கும்
அவர்கள் கர்த்தருடைய சபைக்குள்ப்படவேண்
டாம்.—நீங்கள் எகிப்திலிருந்து புறப்பட்டு வரு ௪
கிறவழியிலே, அவர்கள் உங்களுக்கு அப்பமும்
தண்ணீரும் கொடுக்க நேரிடாமல் போனதின்
நிமித்தமும், உன்னைச் சபிக்க அவன் மெசொப்
பொத்தாமியாவின் ஊராகிய பேத்தோரிலிருந்த
பேயோரின் குமாரன் பிலேயாமை உனக்கு
விரோதமாகக் கூலிபேசி அழைப்பித்ததின்நி
மித்தமுந்தானே. — உன் பராபரனாகிய கர்த்த ௫
ரோவென்றால், பிலேயாமைக் கேட்கச் சித்த
மாயிராமல், உன் பராபரனாகிய கர்த்தர் உன்
னைச் சிநேகித்தபடியினாலே, உன் பராபரனாகிய
கர்த்தர் சாபத்தை உனக்கு ஆசீர்வாதமாக மாறப்
பண்ணினார்.—நீ உன் நாள்களிலெல்லாம் என் ௬
றைக்கும் அவர்களுக்குச் சமாதானத்தையும் நன்
மையையும் பாராமரியாயாக. — ஏதோமியனை ௭
அருவருக்காயாக; ஏனெனில் அவன் உன் சகோ
தரன்; எகிப்தியனை அருவருக்காயாக; ஏனெ
னில் அவன் தேசத்திலே பரதேசியாயிருந்
தாய்.—மூன்றாம் தலைமுறையில் அவர்களுக்குப் ௮
பிறந்தபிள்ளைகள் கர்த்தருடைய சபைக்குள்ப்ப
டலாம்.

உன் சத்துருக்களுக்கு எதிராகத் தண்டெடுத் ௯
துப் புறப்படுகிறபொழுது, சகல பொல்லாத
காரியத்திற்கும் எச்சரிக்கையாயிருப்பாயாக.

இராக்காலத்திலே சம்பவித்ததினாலே, சுத்த ௰
மற்றிருக்கிற ஒருவன் உன்னிலிருந்தால், அவன்
பாளயத்திற்கு வெளியே போய், பாளயத்திற்
குள் வராதிருந்து, — அந்திநேரத்திலே தண்ணீ ௰௧
ரிலே குளித்து, பொழுதுபோகப் பாளயத்திற்
குள் வரக்கடவன்.—நீ வெளிக்குப் போயிருக் ௰௨
கத்தக்க இடம் பாளயத்திற்குப் புறம்பே உனக்கு
இருப்பதாக.—உன் ஆயுதமல்லாமல் ஒரு கூச் ௰௩
சும் உன் கிட்ட இருக்கக்கடவது; நீ மலசலா
திக்குப் போகிறபொழுது, அதனால் தோண்டி
மலசலாதிக்கிருந்து, உன்னிலிருந்து போனதை
மூடிப்போடக்கடவாய்.-ஏனெனில் உன் பரா ௰௪
பரனாகிய கர்த்தர் உன்னைத் தப்புவிக்கவும், உன்

சத்துருக்களை உனக்குமுன்பாக ஒப்புக்கொடுக்க
வும் உன் பாளயத்தின் நடுவில் உலாவிக்கொண்
டிருக்கிறார்; ஆகையால் அவர் உன்னில் இழி
வான காரியத்தைக் கண்டு, உன்னை விட்டுப்போ
காதபடிக்கு, உன் பாளயம் பரிசுத்தமாயிருக்கக்
கடவது.
௰௫ தன் எசமானைவிட்டுத் தப்பித்துக்கொள்ளும்
படிக்கு, உன்னண்டை வந்த வேலைக்காரனை
அவன் எசமான் கையில் ஒப்புக்கொடாயாக.—
௰௬ அவன் உன் நடுவே இருக்கிற உன் வாசல்களில்
ஒன்றிலேதான் தெரிந்துகொண்டு தனக்குச் சம்
மதியான இடத்தில் உன்னுடனே இருப்பானாக;
அவனை ஒடுக்காயாக.
௰௭ இஸ்ரவேலின் குமாரத்திகளில் வேசி இருக்க
வேண்டாம்; இஸ்ரவேலின் குமாரரில் வேசிக்
௰௮ கள்ளனும் இருக்கவேண்டாம்.—வேசிப்பணத்
தையும் நாயின் விலைக்கிரயத்தையும் எந்தப்பொ
ருத்தனையினாலாகிலும் உன் பராபரனாகிய கர்த்த
ரின் வீட்டிலே கொண்டுவராயாக; ஏனெனில்
அவைகள் இரண்டும் உன் பராபரனாகிய கர்த்த
ருக்கு அருவருப்பானவை.
௰௯ கடனாகக் கொடுக்கிற பணத்திற்கும் ஆகாரத்
திற்கும் கடனாகக் கொடுக்கிற வேறே எந்தப்
பொருளுக்கும் உன் சகோதரன் கையில் வட்டி
௨௰ வாங்காயாக.—அந்நியன் கையில் நீ வட்டிவாங்
கலாம்; ஆனால் நீ சுதந்தரிக்கப்போகிற தேசத்
தில், உன் பராபரனாகிய கர்த்தர் உன்னை நீ கை
யிடும் வேலையிலெல்லாம் ஆசீர்வதிக்கும்படிக்கு,
உன் சகோதரன் கையிலே வட்டிவாங்காதிருப்
பாயாக.
௨௧ நீ உன் பராபரனாகிய கர்த்தருக்குப் பொருத்
தனையைப் பண்ணியிருந்தால், அதைச் செலுத்தத்
தாமதியாயாக; ஏனெனில் உன் பராபரனாகிய
கர்த்தர் அதை உன் கையில் தேடவே தேடுவார்;
௨௨ அது உன்மேலே பாவமாயிருக்கும். — நீ பொ
ருத்தனையைப் பண்ணாதிருந்தால், உன்மேலே
௨௩ பாவமில்லை.—உன் உதடுகளிலிருந்து புறப்பட்
டதை நீ கைக்கொண்டு, உன் வாயினால் நீ உன்
பராபரனாகிய கர்த்தருக்குப் பொருத்தனைபண்
ணிச் சொன்ன மனப்பூர்வமான பலியைச் செ
லுத்தித் தீர்ப்பாயாக.
௨௪ நீ உனக்கடுத்தவனின் திராட்சத்தோட்டத்திற்
குள் பிரவேசித்தால், உனக்கு ஆசையாயிருக்கிற
படியே திராட்சப்பழங்களைத்திர்ப்தியாகப் புசிக்
கலாம்; ஆனால் நீ ஒன்றும் உன் கூடைக்குள்ளே
வைத்து, எடுத்துக்கொண்டு போகவேண்டாம்.—
௨௫ நீ உனக்கடுத்தவனின் விளைச்சலுக்குள் பிரவே
சித்தால், உன் கையினாலே கதிர்களைக் கிள்ள
லாம்; ஆனால் அரிவாளை அவன் விளைச்சலில்
விடாயாக.

## உ௪. அதிகாரம்.

௧. விவாகப்பிரிவைக் குறித்தது. ௫. புதிய விவாகம்செய்தவன் போருக்குப் போகலாகாதென்பது. ௬. ௰. கொறளைகளையும், ௭. நரசீவனைத் திருடுகிறவனையும், ௮. குஷ்டரோகத்தையும் குறித்தது. ௰௪. கூலியைக் கொடுக்கவேண்டியது. ௰௭. நீதியையும், ௰௯. தருமத்தையும் குறித்தது.

ஒருவன் ஒரு பெண்ணைக்கொண்டு, அவளை ௧
விவாகம்பண்ணின பின்பு, அவளில் இலச்சை
யான காரியத்தைக் கண்டதினால், அவளுக்கு
அவன் கண்களில் தயை கிடையாதேபோய்,
அவன் அவளுக்குத்தள்ளுதலின் சீட்டை எழுதி,
அவள் கையில் கொடுத்து, அவளைத் தன் வீட்டி
லிருந்து அனுப்பிவிடும்போது;—அவள் அவன் ௨
வீட்டிலிருந்து புறப்பட்டுப்போய், வேறொரு
வனுக்குப் பெண்சாதியாகி,—அந்த இரண்டாம் ௩
புருஷனும் அவளைப் பகைத்து, அவளுக்குத்
தள்ளுதலின் சீட்டை எழுதி, அவள் கையில்
கொடுத்து, அவளைத் தன் வீட்டிலிருந்து அனுப்
பிவிட்டால், அல்லவென்று அவளை விவாகம்
பண்ணின அந்த இரண்டாம் புருஷன் சென்று
போனால், — அப்பொழுது அவளைத் தள்ளி ௪
விட்ட அவளுடைய முந்தின புருஷன் அவள்
தீட்டான பிறகு, அவளைத் திரும்ப விவாகம்
பண்ணக்கூடாது; ஏனெனில் அது கர்த்தருக்கு
முன்பாக அருவருப்பானது; உன் பராபரனாகிய
கர்த்தர் உனக்குச் சுதந்தரமாகக் கொடுக்கிற
தேசத்தின்மேல் அதினால் பாவம் வரப்பண்ணா
யாக.
ஒருவன் ஒரு பெண்ணை விவாகம்பண்ணிக் ௫
கொஞ்சம்நாளாயிருந்தால், அவன் யுத்தத்திற்குப்
புறப்படவேண்டாம்; அவன்மேல் ஒன்றும் சுமத்
தப்படவும் வேண்டாம்; அவன் ஒரு வருஷம்
மட்டும் தன் வீட்டில் தன் நீங்கலாயிருந்து, தான்
விவாகம்பண்ணின பெண்சாதியைச் சந்தோ
ஷிப்பிப்பானாக.
எந்திரத்தையாகிலும் அதின்மேல் கல்லையாகி ௬
லும் ஒருவரும் அடகாக வாங்கவேண்டாம்;
ஏனெனில் சீவனை அவன் அடகு வாங்கு
வானே.
தன் சகோதரனாகிய இஸ்ரவேல் புத்திரரி ௭
லுள்ள ஒரு நரசீவனைத் திருடி, அதினால் ஆதாயம்
தேடி, அதை விற்றுப்போட்ட ஒருவன் அகப்
பட்டால், அந்தத் திருடன் சாகவேண்டும்; இப்
படிப் பொல்லாப்பை உன் நடுவிலிருந்து விலக்
கக்கடவாய்.
நீ குஷ்டவாதைக்காக மகா எச்சரிக்கையாயி ௮
ருக்கவும், இலேவியராகிய ஆசாரியர் உங்களுக்
குப் போதிக்கும்படி எல்லாம் செய்யவும், கவன
மாயிருப்பாயாக; நான் அவர்களுக்குக் கற்பித்த
படியே செய்ய, கவனமாயிருப்பீர்களாக.—நீங் ௯
கள் எகிப்திலிருந்து புறப்பட்டுவருகிற வழியில்,
உன் பராபரனாகிய கர்த்தர் மீரியாமுக்குச் செய்
ததை நினைத்துக்கொள்.
நீ உனக்கடுத்தவனுக்கு ஏதாகிலும் கடனாகக் ௰
கொடுத்தால், நீ அவன் கொடுக்கும் அடகை
வாங்க, நீ அவன் வீட்டிற்குள் பிரவேசியாமல்,—
வெளியே நிற்பாயாக; நீ கடன் கொடுத்தவன் ௰௧
அடகை வெளியே உன்னண்டையில் கொண்டு
வருவானாக. — அவன் தரித்திரனேயானால், நீ ௰௨
அவன் அடகைவைத்து, படுத்துக்கொள்ளப்போ
காமல்,— அவன் தன் வஸ்திரத்தைப் போட்டுப் ௰௩

படுத்துக்கொண்டு, உன்னை ஆசீர்வதிக்கும்ப
டிக்கு பொழுதுபோக அடகை அவனுக்குத்
திரும்பக் கொடுக்கவே கொடுப்பாயாக; அது உன்
பராபரனாகிய கர்த்தருக்குமுன்பாக உனக்கு நீதி
யாயிருக்கும்.
௰௪ உன் சகோதரரிலும், அல்லது உன் தேசத்தி
லுள்ள வாசல்களிலே இருக்கிற பரதேசிகளிலும்
ஏழையும் எளிமையுமான கூலிக்காரனை ஒடுக்கா
௰௫ யாக.—அவன் வேலைசெய்த நாளிலே, அவன்
கூலியை அவனுக்குக் கொடுப்பாயாக; சூரியன்
அதின்மேல் அஸ்தமிக்கவேண்டாம்; ஏனெனில்
அவன் ஏழையும் அதின்மேல் மனவாஞ்சையுமா
யிருக்கிறான்; மற்றப்படி அவன் உன்மேல் கர்த்
தரைநோக்கிக் கூப்பிடுவான்; அப்பொழுது
உனக்குப் பாவமாயிருக்கும்.
௰௬ பிள்ளைகளுக்காகப் பிதாக்களும் பிதாக்களுக்
காகப் பிள்ளைகளும் கொலைசெய்யப்படவேண்
டாம்; அவனவன் தன் தன் பாவத்தின்நிமித்தம்
கொலைசெய்யப்படவேண்டும்.
௰௭ நீ பரதேசிக்கும் திக்கற்றவனுக்கும் இருக்கிற
நியாயத்தைப் புரட்டாமலும், கைம்பெண்சாதி
யின் வஸ்திரத்தை அடகு வாங்காமலும்இருந்து,-
௰௮ நீ எகிப்திலே அடிமையாயிருந்ததையும், உன்
பராபரனாகிய கர்த்தர் உன்னை அங்கேயிருந்து
மீட்டுக்கொண்டு வந்ததையும் நினைப்பாயாக; ஆ
கையால் நான் உனக்கு இப்படிச் செய்யக் கற்
பிக்கிறேன்.
௰௯ நீ உன் வெள்ளாண்மையை அறுத்த உன் வய
லிலே ஒரு கட்டை மறந்துவைத்து வந்தாயா
னால் அதை எடுத்துவரத் திரும்பிப்போகாயாக;
உன் பராபரனாகிய கர்த்தர் உன் கைக்கிரியையி
லெல்லாம் உன்னை ஆசீர்வதிக்கும்படிக்கு, அது
பரதேசிக்கும் திக்கற்றவனுக்கும் கைம்பெண்
௨௰ சாதிக்கும் இருக்கட்டும். — நீ உன் ஒலிவமரத்
தைக் குலுக்கிப்போட்ட பிறகு, தப்பி இருக்கி
றதை அறுக்கத் திரும்பிப்போகாயாக; அது பர
தேசிக்கும் திக்கற்றவனுக்கும் கைம்பெண்சா
௨௰௧ திக்கும் இருக்கட்டும்.—நீ உன் திராட்சப்பழங்
களை அறுத்த பிறகு, பின் அறுப்பறுக்கத் திரும்
பிப்போகாயாக; அது பரதேசிக்கும் திக்கற்றவ
னுக்கும் கைம்பெண்சாதிக்கும் இருக்கட்டும்.—
௨௰௨ நீ எகிப்திலே அடிமையாயிருந்ததை நினைப்பா
யாக; ஆகையால் இப்படிச் செய்ய நான் உனக்
குக் கற்பிக்கிறேன்.

## ௨ரு. அதிகாரம்.

௧. நாற்பதடிக்குமேல் அதிகமாக அடிக்கக்கூடாதென்பது. ௪. மாட்டை வாய்கட்டக்கூடாதென்பது. ௫. ஒருவன் தன் சகோதரனுடைய சந்ததியை விர்த்திசெய்யவேண்டுமென்பது. ௰௧. நாணமில்லாத ஸ்திரியைக் குறித்தது. ௰௩. பெரிதும் சிறிதுமான நிறைகல்லுகள் இருக்கத்தகாதென்பது. ௰௭. ஆமலேக்கை அழிக்கவேண்டுமென்பது.

௧ மனிதருக்குள்ளே வழக்குண்டாய் அவர்கள்
நியாயம் விசாரிக்கப்பட நியாயஸ்தலத்திலே
சேர்ந்தால், நீதிமானை நீதிமானென்றும் ஆகாத
வனை ஆகாதவனென்றும் தீர்க்கக்கடவர்கள்.—
௨ ஆகாதவன் அடிகளுக்குப் பாத்திரவானானால், நி
யாயாதிபதி அவனைத் தாழவிழப்பண்ணி, அவன்
குற்றத்திற்குத்தக்கதாய் அவனைத் தனக்குமுன்
பாக கணக்கின்படியே அடிப்பிப்பானாக.—அ ௩
வனை நாற்பதடி அடிப்பித்தபிற்பாடு, அவனை அ
வைகளிலும் அதிக அடி அடிப்பிக்கிறதினாலே
உன் சகோதரன் உன் கண்களுக்குமுன்பாக
இலச்சை ஆகாதபடிக்கு, அவனை அதிகமாய்
அடிக்காமல் இருப்பார்களாக.
மாடு போரடிக்கிறபொழுது, அதின் வாயைக் ௪
கட்டாயாக.
சகோதரர் கூடிக் குடியிருக்கும்பொழுது, ௫
அவர்களில் ஒருவன் புத்திரசந்தானமில்லாமல் ம
ரித்தால், மரித்தவனுடைய பெண்சாதி புறத்திலி
ருக்கிற அந்நியனுக்குப் பெண்சாதியாகவேண்
டாம்; அவளுடைய புருஷனுக்குச் சகோதரன்
அவளிடத்தில் சேர்ந்து, அவளைத் தன் புருஷ
னுடைய சகோதர சுதந்தரமாய் விவாகம்பண்
ணுவானாக.—மரித்தவனுடைய சகோதரன்பேர் ௬
இஸ்ரவேலில் அற்றுப்போகாதபடிக்கு, அவன்
பெயரை அவள் பெறும் தலைச்சன் குமாரன்
தரித்து எழும்பவேண்டும். — தன் சகோதரனு ௭
டைய பெண்சாதியை விவாகம்பண்ண அவனுக்
குச் சம்மதம் இல்லாதிருந்ததேயானால், அவன்
சகோதரன் பெண்சாதி, வாசலில் கூடின மூப்
பரண்டைக்குப் போயேறி, என் புருஷனுடைய
சகோதரன் தன் சகோதரனுடைய பெயரை இஸ்
ரவேலிலே நிலைக்கப்பண்ணமாட்டேனென்கி
றான்; என்னை என் புருஷனுடைய சகோதர
சுதந்தரமாய் விவாகம்பண்ண, அவனுக்கு மன
தில்லை என்பாளாக.—அப்பொழுது அவன் பட் ௮
டணத்து மூப்பர் அவனை அழைப்பித்து அவ
னோடே பேசியும், அவன் அவளை விவாகம்
பண்ண, எனக்குச் சம்மதமில்லையென்று நிலை
யாய் நின்று சொன்னால், — அவன் சகோத ௯
ரன் பெண்சாதி மூப்பரின் கண்களுக்குமுன்
பாக அவனண்டையிலே சேர்ந்து, அவன் காலி
லிருக்கிற அவன் பாதரட்சையைக் கழற்றிப்
போட்டு, அவன் முகத்திலே துப்பி, தன் சகோ
தரன் வீட்டைக் கட்டாதவனுக்கு இப்படிச்
செய்யவேண்டுமென்று பிரதியுத்தாரமாகச் சொ
ல்லுவாளாக.—இஸ்ரவேலில் அப்படிக்கொத்த ௰
வன் வீடு, பாதரட்சையைக் கழற்றிப்போடப்
பட்டவன் வீடென்னப்படுவதாக.
புருஷர் ஒருவருக்கொருவர் சண்டைபண் ௰௧
ணிக்கொண்டிருக்கையில், ஒருவனுடைய பெ
ண்சாதி தன் புருஷனை அடிக்கிறவன் கைக்குத்
தப்புவிக்கச் சேர்ந்துவந்து, தன் கையை நீட்டி,
இவன் மானத்தைப் பிடித்ததுண்டானால், —
அவள் கையைத் தறிக்கக்கடவாய்; உன் கண் ௰௨
அவளுக்கு இரங்காதிருப்பதாக.
உன் பையிலே பெரிதும் சிறிதுமான வெவ் ௰௩
வேறே நிறைகல்லுகள் உனக்கு இராதிருப்ப
தாக.—உன் வீட்டில் பெரிதும் சிறிதுமான வெவ் ௰௪
வேறே மரக்கால்கள் உனக்கு இராதிருப்பதாக.—
உன் பராபரனாகிய கர்த்தர் உனக்குக் கொடுக் ௰௫
கிற தேசத்தில் உன் நாள்கள் நீடித்திருக்கும்ப

டிக்கு, குறையற்ற சுமுத்திரையான நிறைகல்
லும் குறையற்ற சுமுத்திரையான மரக்காலும்
௰௬ உனக்கு இருக்கக்கடவது.—ஏனெனில் இப்ப
டிப்பட்டவை முதலான அநியாயத்தைச் செய்
கிறவனெல்லாம் உன் பராபரனாகிய கர்த்தருக்கு
அருவருப்பானவன்.
௰௭ நீங்கள் எகிப்திலிருந்து புறப்பட்டு வருகிற
வழியிலே, ஆமலேக் பராபரனுக்குப் பயப்படா
௰௮ மல் உனக்கு எதிராக வந்து,—நீ இளைத்து வி
டாய்த்திருக்கையில், உன் பின் தண்டில் உனக்
குப் பிறகாலே வருகிற பலவீனரையெல்லாம்
வெட்டினானென்ற அவன் உனக்குச் செய்த
௰௯ செய்கையை நினை.—உன் பராபரனாகிய கர்த்தர்
உனக்குச் சுதந்தரித்துக்கொள்ளக் கொடுக்கிற
தேசத்தினுடைய சுற்றுப்புறத்தாராகிய உன்னு
டைய சத்துருக்களை எல்லாம் உன் பராபர
னாகிய கர்த்தர் விலக்கி, உன்னை இளைப்பாறப்
பண்ணினபொழுது, நீ ஆமலேக்கின் பெயரை
வானத்தின்கீழிராதபடிக்கு, அழியப்பண்ணக்
கடவாய்; இதை மறவாயாக.

## ௨௬. அதிகாரம்.

௧. முதல்பலனில் ஒரு கூடையைச் செலுத்துகிறவனுடைய அறிக்கை. ௰௨. மூன்றும் வருஷத்தில் பத்தில் ஒன்றைச் செலுத்துகிறவனுடைய மன்றாட்டு. ௰௬. பராபரனுக்கும் சனங்களுக்கும் நடந்த உடம்படிக்கை.

௧ உன் பராபரனாகிய கர்த்தர் உனக்குச் சுதந்தர
மாகக் கொடுக்கிற தேசத்திலே நீ வந்து, அதைக்
கட்டிக்கொண்டு, அதிலே குடியிருக்கிறபொ
௨ ழுது,— உன் பராபரனாகிய கர்த்தர் உனக்குக்
கொடுத்த உன் தேசத்தில் நீ பயிரிட்ட நிலத்தின்
கனிகளிலெல்லாம் நீ முந்தின பலனை எடுத்து,
ஒரு கூடையிலே வைத்து, உன் பராபரனாகிய
கர்த்தர் தமது நாமத்தைத் தங்கப்பண்ணத் தெ
ரிந்துகொண்டிருக்கும் தானத்திற்குப் போய்,—
௩ அந்நாள்களில் இருக்கும் ஆசாரியரண்டைக்கு
வந்து, அவனுடனே எங்களுக்குக் கொடுக்கக்
கர்த்தர் நம்முடைய பிதாக்களுக்கு ஆணையிட்ட
தேசத்திலே வந்தேனென்பதை இன்று உம்மு
டைய பராபரனாகிய கர்த்தருக்கு அறிக்கையிடு
௪ கிறேன் என்பாயாக. — அப்பொழுது ஆசாரி
யன் அந்தக் கூடையை உன் கையில் வாங்கி,
அதை உன் பராபரனாகிய கர்த்தரின் பலிபீடத்
௫ திற்குமுன்பாக வைக்கக்கடவன். — அப்பொ
ழுது நீ உன் பராபரனாகிய கர்த்தருக்குமுன்பாக
வசனித்துச் சொல்வதாவது: என் தகப்பன்
அழிவுக்கு நேரான சூரியமனிதனாயிருந்தான்;
அவன் எகிப்திற்கு இறங்கிப்போய் அங்கே
கொஞ்சம் சனங்களோடே பரதேசியாயிருந்து,
அங்கே சனம் பெருத்த, பலத்த, திரட்சியான
௬ சாதியானான். — ஆனால் எகிப்தியர் எங்களை
உபத்திரவம்பண்ணி, எங்களைச் சிறுமைப்படுத்
தி, எங்கள்மேலே கடினவேலையைச் சுமத்தின
௭ பொழுது,—எங்கள் பிதாக்களின் பராபரனாகிய
கர்த்தரைநோக்கிக் கூப்பிட்டோம்; அப்பொ
ழுது கர்த்தர் எங்கள் சத்தத்தைக் கேட்டு, எங்கள்
சிறுமையையும் எங்கள் வருத்தத்தையும் எங்கள்
ஒடுங்குதலையும் பார்த்து,—எங்களைப் பலத்த கை ௮
யினாலும், நீட்டின புயத்தினாலும், மகா பயங்
கரத்தினாலும் அடையாளங்கள் அற்புதங்களினா
லும், எகிப்திலிருந்து புறப்படப்பண்ணி, —
எங்களை இவ்விடத்திற்கு அழைத்துவந்து, பா ௯
லும் தேனும் ஓடுகிற தேசமாகிற இந்தத் தேசத்
தை எங்களுக்குக் கொடுத்தாரே.—இப்பொழு ௰
தும் இதோ கர்த்தாவே, தேவரீர் எனக்குக் கொ
டுத்த நிலத்தினுடைய கனிகளின் முந்தின பல
னைக் கொண்டுவந்தேனென்று சொல்லி, அதை
உன் பராபரனாகிய கர்த்தருக்குமுன்பாக வை
த்து, உன் பராபரனாகிய கர்த்தருக்குமுன்பாகப்
பணிந்து,— நீயும் இலேவியனும் உன் நடுவி ௰௧
லிருக்கிற பரதேசியுமாய் உன் பராபரனாகிய
கர்த்தர் உனக்கும் உன் வீட்டிற்கும் கட்டளை
யிட்ட எல்லா நன்மையினாலும் சந்தோஷமா
யிருப்பீர்களாக.
பத்தில் ஒன்றைச் செலுத்தும் வருஷமாகிய ௰௨
மூன்றும் வருஷத்திலே நீ உன் வரத்திலெல்
லாம் பத்தில் ஒன்றை எடுத்து, இலேவியனும்
பரதேசியும் திக்கற்றவனும் கைம்பெண்சாதியும்
உன் வாசல்களில் புசித்துத் திர்ப்தியாகும்ப
டிக்கு, நீ அவர்களுக்குக் கொடுத்துத் தீர்ந்தபிற்
பாடு,—நீ உன் பராபரனாகிய கர்த்தருக்குமுன்பா ௰௩
கச் சொல்வதாவது: தேவரீர் எனக்குக் கொடுத்த
எல்லாக் கற்பனைகளின்படியே, நான் பரிசுத்
தமானதை என் வீட்டிலிருந்து எடுத்து, இலே
வியனுக்கும் பரதேசிக்கும் திக்கற்றவனுக்கும்
கைம்பெண்சாதிக்கும் கொடுத்தேன்; உம்முடை
ய கற்பனைகளில் யாதொன்றை நான் மீறினது
மில்லை மறந்ததுமில்லை. — நான் துக்கப்பட்டு, ௰௪
அதில் புசித்ததுமில்லை, தீட்டான காரியத்திற்கு
அதில் ஒன்றும் எடுத்ததுமில்லை; இழவுகாரியத்
திற்கு அதில் ஒன்றும் போட்டதுமில்லை; நான்
என் பராபரனாகிய கர்த்தரின் சத்தத்திற்குக் கீழ்ப்
படிந்து, தேவரீர் எனக்குக் கற்பித்தபடி எல்
லாம் செய்தேன்.—நீர் உமது பரிசுத்தவாசஸ்த ௰௫
லமாகிய பரமண்டலங்களிலிருந்து நோக்கிப்
பார்த்து, உமது சனமாகிய இஸ்ரவேலையும்,
நீர் எங்கள் பிதாக்களுக்கு ஆணையிட்டபடியே,
எங்களுக்குக் கொடுத்த பாலும் தேனும் ஓடுகிற
தேசத்தையும், ஆசீர்வதியும் என்பாயாக.
இந்தக் கட்டளைகளின்படியேயும் நியாயங் ௰௬
களின்படியேயும் செய்ய, இன்று உன் பராபர
னாகிய கர்த்தர் உனக்குக் கற்பிக்கிறார்; ஆகை
யால் அவைகளின்படியே உன் முழு இருதயத்
தாலும் உன் முழு ஆத்துமத்தாலும் செய்யக் கவ
னமாயிருப்பாயாக.—கர்த்தர் எனக்குப் பராபர ௰௭
னாயிருப்பாரென்றும், நான் அவர் வழிகளில்
நடந்து, அவர் கட்டளைகளையும் அவர் கற்பனை
களையும் அவர் நியாயங்களையும் கைக்கொண்டு,
அவர் சத்தத்திற்குக் கீழ்ப்படிவேனென்றும், நீ
இன்று அவருக்கு வார்த்தை கொடுப்பித்தாய்.—
கர்த்தர் உனக்குச் சொல்லி இருக்கிறபடி நீ தமக் ௰௮
குச் சொந்தச் சனமாயிருப்பாயென்றும், நீ தம்

முடைய கற்பனைகளையெல்லாம் கைக்கொண்
௰௯ டால்,—தாம் உண்டுபண்ணின எல்லாச் சாதிக
ளின்மேலும் உன்னை உன்னதமாகவும் புகழ்ச்சி,
கீர்த்தி, மகிமையாகவும் வைப்போமென்றும்,
தாம் சொன்னபடி நீ உன் பராபரனாகிய கர்த்த
ரான தமக்குப் பரிசுத்த சனமாயிருப்பாயென்
றும், அவர் இன்று உனக்கும் வார்த்தைகொடுப்
பித்தாரென்றான்.

## ௨௭. அதிகாரம்.

௧. நியாயப்பிரமாணங்களைக் கல்லின்மேல் எழுதவும், ௫. உளிபடாத கல்லுகளாலே ஒரு பலிபீடத்தைக் கட்டவும் சனங்களுக்குக் கட்டளை கொடுத்தது. ௰௧. கெரிசீம் பர்வதத்திலும் ஏபால் பர்வதத்திலும் நிற்கக் கோத்திரங்கள் பிரிக்கப்பட்டது. ௰௪. ஏபால் பர்வதத்தில் நின்று கொடுத்த சாபம்.

௧ பிற்பாடு மோசே இஸ்ரவேலின் மூப்பர் கூட
இருக்கச் சனத்திற்குக் கற்பித்ததாவது: நான்
இன்று உங்களுக்குக் கற்பிக்கிற கற்பனைகளை
௨ யெல்லாம் கைக்கொள்ளுங்கள்.— உன் கர்த்தர்
உனக்குக் கொடுக்கிற தேசத்திற்கு நீங்கள் போக
யோர்தானைக் கடந்த நாளிலே, நீ உனக்குப் பெ
ரிய கல்லுகளை நாட்டி, அவைகளைச் சாந்துபூசி,—
௩ உன் பிதாக்களின் பராபரனாகிய கர்த்தர் உனக்
குச் சொன்னபடி உனக்குக் கொடுக்கிற பாலும்
தேனும் ஓடுகிற தேசத்திற்குள் பிரவேசிக்க நீ
கடந்துபோனபின், இந்த நியாயப்பிரமாணத்
தின் வார்த்தைகளையெல்லாம் அவைகளில் எழு
௪ தக்கடவாய்.—நான் இன்று உங்களுக்குக் கற்பித்
துச் சொல்லுகிற இந்தக் கல்லுகளை யோர்தானைக்
கடந்தபொழுது, ஏபால் பர்வதத்திலே நாட்டி,
௫ அவைகளைச் சாந்துபூசி,—இரும்புபடாத கல்லு
களாலே அங்கே உன் பராபரனாகிய கர்த்தருக்கு
௬ ஒரு பலிபீடத்தைக் கட்டக்கடவாய்.—நீ உன்
பராபரனாகிய கர்த்தரின் பலிபீடத்தை முழுக்
கல்லுகளாலே கட்டி, அதின்மேல் உன் பராபர
னாகிய கர்த்தருக்குச் சர்வாங்கதகனபலிகளைப்
௭ பலியிட்டு, —சமாதானபலிகளையும் பலியிட்டு,
அங்கே உன் பராபரனாகிய கர்த்தருக்குமுன்பா
௮ கப் புசித்து, சந்தோஷமாயிருந்து, — அந்தக்
கல்லுகளில் இந்த நியாயப்பிரமாணத்தின் வா
ர்த்தைகளையெல்லாம் திட்டமாயெழுதக்கடவா
யென்றான்.
௯ பின்னையும் மோசே, இலேவியராகிய ஆசாரி
யர்கள் கூடஇருக்க, இஸ்ரவேலோடெல்லாம்
பேசி, இஸ்ரவேலே கவனித்துக் கேள்; இந்நா
ளிலே உன் பராபரனாகிய கர்த்தருக்குச் சனமா
௰ னாய்.—ஆகையால் நீ உன் பராபரனாகிய கர்த்த
ரின் சத்தத்திற்குக் கீழ்ப்படிந்து, நான் இன்று
உனக்குக் கற்பிக்கிற அவருடைய கற்பனைக
ளின்படியும் அவருடைய கட்டளைகளின்படி
யும் செய்வாயாகவென்றான்.
௰௧ அந்நாளிலே மோசே சனத்திற்குக் கற்பித்த
௰௨ தாவது:-நீங்கள் யோர்தானைக் கடந்தபொழுது,
சனத்தை ஆசீர்வதிக்க கெரிசீம் பர்வதத்திலே
நிற்பவர்கள் சீமேயோன், இலேவி, யூதா, ஈச
ஷார், யோசேப், பென்யமீனென்ற கோத்திரங்
௰௩ கள்.—சாபத்தைக்கூற ஏபால் பர்வதத்திலே நிற்
பவர்கள் ரூபேன், காத், ஆசேர், சேபுலோன்,
தாண், நவுதலி என்ற கோத்திரங்கள்.—அப்பொ ௰௪
ழுது இலேவியர் இஸ்ரவேல் மனிதரையெல்லாம்
பார்த்து, உரத்த சத்தமிட்டுச் சொல்வதாவது:
தொழிலாளிகளுடைய கையின் செய்கை ௰௫
யால் வெட்டப்படுகிற அல்லது வார்ப்பிக்கப்
படுகிற கர்த்தருக்கு அருவருப்பான யாதொரு
சுரூபத்தை உண்டுபண்ணி, ஒளிப்பிடத்திலே
வைக்கிறவன் சபிக்கப்பட்டவன் என்பார்க
ளாக; சனமெல்லாம் பிரதியுத்தாரமாக ஆமன்
என்பதாக. — தன் தகப்பனை அல்லது தன் தா ௰௬
யைத் தூஷணிக்கிறவன் சபிக்கப்பட்டவன்
என்பார்களாக; சனமெல்லாம் ஆமன் என்ப
தாக.-தனக்கடுத்தவனின் எல்லையை ஒத்திக் கட் ௰௭
டுகிறவன் சபிக்கப்பட்டவன் என்பார்களாக;
சனமெல்லாம் ஆமன் என்பதாக.-குருடனை வழி ௰௮
தப்பவிடுகிறவன் சபிக்கப்பட்டவன் என்பார்
களாக; சனமெல்லாம் ஆமன் என்பதாக.—பர ௰௯
தேசி, திக்கற்றவன், கைம்பெண்சாதி என்றவர்க
ளின் நியாயத்தைப் புரட்டுகிறவன் சபிக்கப்பட்
டவன் என்பார்களாக; சனமெல்லாம் ஆமன்
என்பதாக.—தன் தகப்பன் பெண்சாதியோடே ௨௰
சயனிக்கிறவன், தன் தகப்பனுடைய மறைவி
டத்தைத் திறந்தபடியினாலே, சபிக்கப்பட்டவன்
என்பார்களாக; சனமெல்லாம் ஆமன் என்ப
தாக.-யாதொரு மிருகத்தோடே புணர்ச்சிபண் ௨௧
ணுகிறவன் சபிக்கப்பட்டவன் என்பார்களாக;
சனமெல்லாம் ஆமன் என்பதாக.—தன் தகப்ப ௨௨
னுக்கும் அல்லது தாய்க்கும் குமாரத்தியாகிய தன்
சகோதரியோடே சயனிக்கிறவன் சபிக்கப்பட்
டவன் என்பார்களாக; சனமெல்லாம் ஆமன்
என்பதாக.—தன் மாமியோடே சயனிக்கிறவன் ௨௩
சபிக்கப்பட்டவன் என்பார்களாக; சனமெல்
லாம் ஆமன் என்பதாக.-ஒளிப்பிடத்திலே தனக் ௨௪
கடுத்தவனைக் கொலைசெய்கிறவன் சபிக்கப்பட்
டவன் என்பார்களாக; சனமெல்லாம் ஆமன்
என்பதாக.—குற்றமில்லாத ஆத்துமாவைக் கொ ௨௫
லைப்படுத்தும்படிக்கு, பரிதானம் வாங்குகிறவன்
சபிக்கப்பட்டவன் என்பார்களாக; சனமெல்
லாம் ஆமன் என்பதாக.—இந்த நியாயப்பிரமா ௨௬
ணத்தின் வார்த்தைகளை அவைகளின்படி செய்
யும்படிக்குக் கைக்கொள்ளாதவன் சபிக்கப்பட்
டவன் என்பார்களாக; சனமெல்லால் ஆமன்
என்பதாக.

## ௨௮. அதிகாரம்.

௧. கீழ்ப்படிந்தவர்களுக்கு ஆசீர்வாதமும், ௰௫. கீழ்ப்படியாதவர்களுக்குச் சாபமும்.

நான் இன்று உனக்குக் கற்பிக்கிற உன் பராபர ௧
னாகிய கர்த்தருடைய கற்பனைகளின்படியெல்
லாம் செய்ய நீ கவனமாயிருக்கும்படிக்கு, அவர்
சத்தத்திற்குச் செவிகொடுக்கவே கொடுக்கிற
துண்டானால், உன் பராபரனாகிய கர்த்தர் உன்
னைப் பூமியின் சாதிகள்மேலெல்லாம் உன்னத
மாக வைப்பார்.—நீ உன் பராபரனாகிய கர்த்த ௨
ரின் சத்தத்திற்குச் செவிகொடுக்கும்பொழுது,

இப்பொழுது சொல்லப்படும் ஆசீர்வாதங்க
ளெல்லாம் உன்மேல் வந்து, உனக்குப் பலிக்
௩ கும்.—நீ பட்டணத்திலும் ஆசீர்வதிக்கப்பட்டி
ருப்பாய்; நீ வெளியிலும் ஆசீர்வதிக்கப்பட்டி
௪ ருப்பாய்.–உன் கர்ப்பத்தின் கனியும், உன் நிலத்
தின் கனியும், உன் மிருகசீவன்களின் பலனும்,
உன் மாடுகளின் பெருக்கமும், உன் ஆடுகளின்
௫ மந்தைகளும், ஆசீர்வதிக்கப்பட்டிருக்கும்.–உன்
கூடையும், மாப்பிசைகிற உன் தொட்டியும்
௬ ஆசீர்வதிக்கப்பட்டிருக்கும்.—நீ வருகையிலும்
ஆசீர்வதிக்கப்பட்டிருப்பாய்; நீ புறப்பட்டுப்
போகையிலும் ஆசீர்வதிக்கப்பட்டிருப்பாய்.—
௭ உனக்கு விரோதமாயெழும்பும் உன் சத்துருக்க
ளைக் கர்த்தர் உனக்குமுன்பாக முறியடிக்கப்படு
கிறதற்கு ஒப்புக்கொடுப்பார்; ஒரு வழியிலே உ
னக்கு எதிராகப் புறப்பட்டு வருவார்கள்; ஏழுவ
ழிகளில் உனக்குமுன்பாக ஓடிப்போவார்கள்.–
௮ உன் பராபரனாகிய கர்த்தர் உனக்குக் கொடுக்கும்
தேசத்திலே உன்னை ஆசீர்வதிக்கும்படிக்கும்,
அவர் உன் களஞ்சியங்களிலும் நீ கையிடும் எல்
லாவேலையிலும் ஆசீர்வாதத்திற்கு உன்னோடிருக்
௯ கும்படிக்குக் கற்பிப்பார்.–நீ உன் பராபரனாகிய
கர்த்தரின் கற்பனைகளைக் கைக்கொண்டு, அவர்
வழிகளில் நடக்கும்பொழுது, கர்த்தர் உனக்கு
ஆணையிட்டபடியே உன்னைத் தமக்குப் பரிசுத்த
௰ சனமாக நிறுத்துவார். — அப்பொழுது கர்த்தரு
டைய நாமம் உனக்குத் தரிக்கப்பட்டதென்று
பூமியின் சனசதளங்களெல்லாம் கண்டு, உனக்
௰௧ குப் பயப்படும்.-உனக்குக் கொடுப்போமென்று
கர்த்தர் உன் பிதாக்களுக்கு ஆணையிட்ட தேசத்
திலே, கர்த்தர் உன் கர்ப்பத்தின் கனியிலும் உன்
மிருகசீவன்களின் பலனிலும் உன் நிலத்தின்
கனியிலும் உனக்கு நன்மையாகப் பரிபூரணம்
௰௨ கட்டளையிடுவார்.–ஏற்றகாலத்தில் உன் தேசத்தி
ற்கு மழையைக் கொடுக்கவும், உன் கையின் வே
லையையெல்லாம் ஆசீர்வதிக்கவும், கர்த்தர் உனக்
குத் தமது நல்ல பொக்கிஷசாலையாகிய வானத்
தைத் திறப்பார்; அநேகம் சாதிகளுக்குக் கடன்
கொடுப்பாய்; நீயோவெனில் கடன் வாங்காதி
௰௩ ருப்பாய்.–நான் இன்று உங்களுக்குக் கற்பிக்கிற
வார்த்தைகளையெல்லாம் நீ வேறே தேவர்களைச்
சேவிக்கப் பின்பற்றும்படிக்கு, வலதுபுறம் இட
துபுறமாகத் திரும்புகிறதினாலே, விட்டுவிலகா
௰௪ மல்,—நான் இன்று உனக்குக் கற்பிக்கிற உன்
பராபரனாகிய கர்த்தரின் கற்பனைகளைக் கைக்
கொள்ளவும் அவைகளின்படி செய்யவும் அவை
களுக்குச் செவிகொடுத்துவந்தால், கர்த்தர் உன்
னை வாலாக்காமல் தலையாக்குவார்; நீ கீழாகாமல்
மேல்கொண்டே இருப்பாய்.

௰௫ நான் இன்று உனக்குக் கற்பிக்கிற உன் பரா
பரனாகிய கர்த்தருடைய எல்லாக் கற்பனைகளின்
படியேயும் கட்டளைகளின்படியேயும் செய்யக்
கவனமாயிருக்கிறதற்கு, அவர் சத்தத்திற்குச் செ
விகொடாதேபோனாயேயாகில், இப்பொழுது
சொல்லப்படும் சாபங்களெல்லாம் உன்மேல்
வந்து, உனக்குப் பலிக்கும்.–நீ பட்டணத்திலும் ௰௬
சபிக்கப்பட்டிருப்பாய்; நீ வெளியிலேயும் சபிக்
கப்பட்டிருப்பாய்.–உன் கூடையும் மாப்பிசை ௰௭
கிற உன் தொட்டியும், சபிக்கப்பட்டிருக்கும்.–
உன் கர்ப்பத்தின் கனியும், உன் நிலத்தின் கனி ௰௮
யும், உன் மாடுகளின் பெருக்கமும், உன் ஆடுக
ளின் மந்தைகளும், சபிக்கப்பட்டிருக்கும். —
நீ வருகையிலும் சபிக்கப்பட்டிருப்பாய், நீ புறப் ௰௯
பட்டுப்போகையிலும் சபிக்கப்பட்டிருப்பாய்.–
நீ நம்மைவிட்டுச் செய்துவருகிற உன் துர்க்கிரி ௨௰
யைகளின் நிமித்தம் சீக்கிரத்திற்குள்ளே கெட்
டுப்போய் அழியும்மட்டும், நீ கையிட்டுச் செய்கி
றதெல்லாவற்றிலும் கர்த்தர் உனக்குச் சாபத்தை
யும் கலகத்தையும் கேட்டையும் வரப்பண்ணு
வார்.–நீ சுதந்தரிக்கப்போகிற சீமையில் உன்னை ௨௧
நிர்மூலமாக்கும்மட்டும், கர்த்தர் பெருவாரிக்காய்
ச்சலை உன்னை ஒட்டிக்கொள்ளப்பண்ணுவார்.–
கர்த்தர் உன்னை ஈளையினாலும், காய்ச்சலினாலும், ௨௨
உஷ்ணத்தினாலும், மழையில்லாமையினாலும்,
வரட்சியினாலும், கருக்காயினாலும், விஷப்பனி
யினாலும் வாதிப்பார்; நீ அழியும்மட்டும் இவை
கள் உன்னைப் பின்தொடரும்.—உன் தலையின் ௨௩
மேலிருக்கும் உன் வானம் வெண்கலமும் உன்
கீழிருக்கும் பூமி இரும்புமாயிருக்கும். — உன் ௨௪
தேசத்திற்கும் மழையாகக் கர்த்தர் தூசியையும்
தூளையும் கட்டளையிடுவார்; நீ அழியும்மட்டும்
அப்படி வானத்திலிருந்து உன்மேல் இறங்கும்.–
கர்த்தர் உன்னை உன் சத்துருக்களுக்குமுன்பாக ௨௫
முறியடிபடுதலுக்கு ஒப்புக்கொடுப்பார்; ஒரு
வழியால் அவர்களுக்கு எதிராகப் புறப்படுவாய்;
ஏழு வழியால் அவர்களுக்குமுன்பாக ஓடிப்போ
வாய்; நீ பூமியினுடைய எல்லா இராச்சியங்க
ளிலும் அலையப்பண்ணப்படுவாய்.–உன் பிணம் ௨௬
ஆகாயத்தினுடைய எல்லாப் பறவைகளுக்கும்
பூமியின் மிருகத்திற்கும் இரையாம்; அவைகளை
மிரட்டுவாரில்லாமல்போம். — கர்த்தர் உன்னை ௨௭
நீ குணமாகாதபடிக்கு, எகிப்தின் எரிபந்தமான
பருக்களினாலும், மூலவியாதியினாலும், சொறி
யினாலும், சிரங்கினாலும் வாதிப்பார். — கர்த்தர் ௨௮
உன்னைப் புத்திமயக்கத்தினாலும், குருட்டாட்
டத்தினாலும், இருதயத்தின் திகைப்பினாலும்
வாதிப்பார்.—குருடன் அந்தகாரத்தினாலே தட ௨௯
விக்கொண்டு திரிகிறதுபோல, நீ பட்டப்பகலி
லே தடவிக்கொண்டு திரிவாய்; உன் வழிகளில்
ஒன்றும் உனக்கு வாய்க்காதேபோம்; நீ சகல
நாளும் இரட்சிப்பாரில்லாமல் ஒடுக்கப்பட்டவ
னும் பறிகொடுக்கிறவனுமாயிருப்பாய். — பெ ௩௰
ண்ணை உனக்கு நியமிப்பாய், ஆனால் வேறொ
ருவன் அவளை அவமானம்பண்ணுவான்; வீட்
டைக் கட்டுவாய், ஆனால் அதில் நீ குடியிருப்ப
தில்லை; திராட்சத்தோட்டத்தை நாட்டுவாய்;
ஆனால் அதை அநுபவியாதிருப்பாய். — உன் ௩௧
மாடு உன் கண்களுக்குமுன்பாக அடிக்கப்படும்,
ஆனால் நீ அதில் ஒன்றும் புசிப்பதில்லை; உன்
கழுதை உனக்குமுன்பாகக் கொள்ளையிட்டுக்

கொண்டுபோகப்பட்டு, உனக்குத் திரும்ப அகப்படாதேபோம்; உன் மாடுகள் உன் சத்துருக்களுக்கு ஒப்புக்கொடுக்கப்படும், ஆனால் இரட்சிப்பார், உனக்கு ஒருவரும் இல்லாதிருப்பார்கள்.—
௩௨ உன் குமாரரும் உன் குமாரத்திகளும் அந்நிய
சனத்திற்கு ஒப்புக்கொடுக்கப்படுவார்கள்; அதை
உன் கண்களால் கண்டு, அவர்கள்நிமித்தம் சகல
நாளும் தொய்ந்து தவித்தாலும், உன் கையிலே
௩௩ பலமில்லாதிருக்கும்.—உன் நிலத்தின் கனியை
யும் உன்னுடைய எல்லாப் பிரயாசத்தையும் நீ
அறியாத சனம் தின்னும், நீ சகலநாளும் ஒடுக்கப்
௩௪ பட்டும் நொறுங்குண்டும் இருப்பாய். — உன்
கண்கள் காணும் காரியங்களினாலே மதிமயக்க
௩௫ மாயிருப்பாய்.—உன் உள்ளங்கால்துவக்கி உன்
உச்சந்தலைமட்டும் உனக்கு ஆரோக்கியம் வரக்
கூடாதபடிக்கு, கர்த்தர் உன்னை முழங்கால்களி
லும் தொடைகளிலும் கொடிய எரிபந்தப் பருக்
௩௬ களினாலே வாதிப்பார்.—கர்த்தர் உன்னையும், நீ
உன்மேல் வைத்த உன் இராசாவையும், நீயும்
உன் பிதாக்களும் அறியாத சாதியண்டைக்குப்
போகப்பண்ணுவார்; அங்கே நீ மரமும் கல்லு
௩௭ மான வேறே தேவர்களைச் சேவித்து, — கர்த்தர்
உன்னைக் கொண்டுபோய்விட்ட எல்லாச் சன
சதளங்களிலும் பாழாகவும் பழமொழியாகவும்
௩௮ பரியாசச் சொல்லாகவும் போவாய்.—அநேகம்
விதையை வயல்வெளிக்குக் கொண்டுபோவாய்,
ஆனால் கொஞ்சம் அறுப்பாய்; ஏனெனில் வெட்
௩௯ டுக்கிளி அதைப் பட்சிக்கும்.—திராட்சத்தோட்
டங்களை நாட்டிப் பயிரிடுவாய், ஆனால் நீ திராட்
சப்பழஇரசம் குடிப்பதுமில்லை, பழங்களைச்
சேர்ப்பதுமில்லை, ஏனெனில் பூச்சி அதைத்
௪௰ தின்னும்.—ஒலிவமரங்கள் உனக்கு உன் எல்
லைகளிலெல்லாம் இருக்கும்; ஆனால் நீ எண்
ணெய் பூசிக்கொள்வதில்லை; ஏனெனில் உன்
ஒலிவமரத்தின் பிஞ்சுகள் உதிர்ந்துபோம். —
௪௧ நீ குமாரனையும் குமாரத்திகளையும் பெற்றும் உ
னக்கு இரார்கள்; ஏனெனில் சிறையிருப்பிலே
௪௨ போவார்கள்.—உன் மரங்களையும் உன் நிலத்
தின் கனியையுமெல்லாம் கிளிகள் சுதந்தரிக்
௪௩ கும்.—உன் நடுவிலிருக்கிற பரதேசி உன்மேல்
ஏறி மிகவும் பெருகுவான்; நீ தாழ்ந்து மிகவும்
௪௪ சிறுகுவாய்.—நீ அவனுக்குக் கடன்கொடாமல்
அவன் உனக்குக் கடன்கொடுப்பான்; அவன்
தலையாயிருப்பான், நீ வாலாயிருப்பாய்.
௪௫ உன் பராபரனாகிய கர்த்தர் உனக்குக் கற்பித்த
அவருடைய கற்பனைகளையும் கட்டளைகளையும்
கைக்கொள்ளும்படிக்கு, நீ அவர் சத்தத்திற்குச்
செவிகொடாதபடியினாலே, இந்தச் சாபங்களெ
ல்லாம் உன்மேல் வந்து, நீ அழியும்மட்டும் உன்
௪௬ னைத் தொடர்ந்து, உன்னைப் பிடித்து, — உன்
னிலும் உன் வித்திலும் என்றைக்கும் அடையா
௪௭ ளமாகவும் அற்புதமாகவும் இருக்கும்.—பரிபூர
ணமெல்லாம் உண்டாயிருக்கையில், உன் பரா
பரனாகிய கர்த்தரை நீ மகிழ்ச்சியோடும் நல்மன
தோடும் சேவிக்காதேபோனதின்நிமித்தமாக,—
கர்த்தர் உனக்கு விரோதமாய் வரப்பண்ணும் ௪௮
உன் சத்துருக்களைப் பட்டினியோடும் தாகத்
தோடும் அம்மணத்தோடும் சகல தாழ்ச்சியோடும்
சேவிப்பாய்; அவர்கள் உன்னை அழித்துத் தீரும்
மட்டும், இருப்பு நுகத்தடியை உன் கழுத்தின்
மேலே போடுவார்கள்.—கிழவனுடைய முகம் ௪௯
பாராமலும் வாலிபனுக்கு இரங்காமலுமிருக்கும்
கொடிய முகமும்,—நீ அறியாத பாஷையுமுள்ள ௫௰
சாதியைக் கர்த்தர் உன்மேலே பூமியின் கடை
யாந்தரமான தூரத்திலிருந்து கழுகு பறக்கும்
வேகமாய் வரப்பண்ணுவார்.—நீ அழியும்மட்டும் ௫௧
அது உன் மிருகசீவன்களின் கனியையும் உன்
நிலத்தின் கனியையும் தின்னும்; அது உன்னை
அழித்துத் தீரும்மட்டும் உன்னுடைய தானியத்தி
லாகிலும், திராட்சப்பழ இரசத்திலாகிலும், எண்
ணெயிலாகிலும், உன்னுடைய ஆடுமாடுகளின்
மந்தைகளிலென்கிலும், உனக்கு ஒன்றும் மீதி
யாக வைக்காது.—உன் தேசமெங்கும் நீ நம்பி ௫௨
யிருக்கும் உயர்ச்சியும் அரணிப்புமான உன்
அலங்கங்கள் விழும்மட்டும், அது உன் வாசல்
களிலெல்லாம் உன்னை இறுகப்பிடிக்கும்; உன்
பராபரனாகிய கர்த்தர் உனக்குக் கொடுத்த உன்
னுடைய தேசமெங்குமுள்ள உன்னுடைய எல்
லா வாசல்களிலும் அது உன்னை இறுகவேபி
டிக்கும்.—உன் சத்துரு உன்னை நெருக்கப்படுத் ௫௩
தும் முற்றிக்கையிலும், இடுக்கணிலும், நீ உன்
பராபரனாகிய கர்த்தர் உனக்குக் கொடுத்த உன்
கர்ப்பக்கனியான உன் ஆண்பிள்ளைகள் பெண்
பிள்ளைகளின் மாம்சத்தைத் தின்னுவாய்.—உன் ௫௪
சத்துரு உன் வாசல்களிலெல்லாம் உன்னை இறு
கப்பிடிக்கும் முற்றிக்கையிலும், இடுக்கணிலும்,
உன்னிடத்தில் செருக்குக்காரனும் மகா சுகச்
செல்வனுமாயிருந்த மனிதன் தனக்கு ஒன்றும்
மீந்திராததினாலே தின்னும் தன் பிள்ளைகளின்
மாம்சத்திலே,—தன் சகோதரனுக்காகிலும் தன் ௫௫
மடியிலிருக்கிற பெண்சாதிக்காகிலும் தனக்கு
இன்னமிருக்கிற தன்னுடைய குறைமக்களில்
ஒருவனுக்காகிலும் கொஞ்சம் கொடுக்காதபடிக்
கு, அவர்கள்மேலே வன்கண்ணனாயிருப்பான்.—
உன்னிடத்தில் சுகச்செல்வத்தினாலும் செருக்கி ௫௬
னாலும் தன் உள்ளங்காலைத் தரையின்மேல்
வைக்காதபடிக்கு, நாணயம்பண்ணின செருக்
குக்காரியும் சுகச்செல்வியுமான பெண்சாதி,
தன் கால்களின் நடுவே புறப்பட்ட தன் நஞ்சுக்
கொடியின்நிமித்தமும் தான் பெற்ற பிள்ளைக
ளின்நிமித்தமும் தன் மடியிலிருக்கிற புருஷன்
மேலும் தன் குமாரன்மேலும் தன் குமாரத்தி
யின்மேலும் வன்கண்ணியாயிருப்பாள். — ஏ ௫௭
னென்றால் உன் சத்துரு உன்னை உன் வாசல்
களில் இறுகப்பிடிக்கும் முற்றிக்கையிலும் இடுக்
கணிலும் சகலமும் குறைகிறபடியினாலே, அ
வைகளை இரகசியமாய்த் தின்னுவாள்.
உன் பராபரனாகிய கர்த்தரென்ற மகிமையும் ௫௮
பயங்கரமுமான நாமத்திற்குப் பயப்படும்படிக்
கு, நீ இப்புஸ்தகத்தில் எழுதியிருக்கிற இந்த

நியாயப்பிரமாண வார்த்தைகளின்படி எல்லாம்
௫௯ செய்யக் கவனமாயிராவிட்டால்,—கர்த்தர் நிச்
சயமான பெரிய வாதைகளாலும் நிச்சயமான
பொல்லாத ரோகங்களாலும் உன்னையும் உன்
௬௰ வித்தையும் அதிசயமாய் வாதித்து,—நீ கண்டு
பயந்த எகிப்தரின் வியாதிகளெல்லாம் உன்னைப்
பிடித்துக்கொண்டிருக்க, அவைகளை உன்மேலே
௬௧ திருப்புவார். — இந்த நியாயப்பிரமாண புஸ்த
கத்தில் எழுதியிராத எல்லாப் பிணியையும் வா
தையையுங்கூடக் கர்த்தர் உன்மேல் நீ அழியும்
௬௨ மட்டும் வரப்பண்ணுவார். — நீங்கள் திரட்சி
யினாலே வானத்தின் நட்சத்திரங்களைப்போல
இருந்ததற்குப் பதிலாக, நீங்கள் உங்கள் பரா
பரனாகிய கர்த்தரின் சத்தத்திற்குச் செவிகொ
டாதேபோனபடியினாலே, கொஞ்சம் சனமாய்
௬௩ விடப்பட்டிருப்பீர்கள். — கர்த்தர் உங்களுக்கு
நன்மைசெய்யவும் உங்களைப் பெருகப்பண்ண
வும் எப்படி உங்கள்மேல் இரம்மியமாயிருந்தா
ரோ, அப்படிக் கர்த்தர் உங்களை அழிக்கவும்
உங்களை அதம்பண்ணவும் உங்கள்மேல் இரம்
மியமாயிருப்பார்; நீ சுதந்தரிக்கப்போகிற சீமை
௬௪ யிலிருந்து பிடுங்கிப்போடப்படுவீர்கள். — கர்த்
தர் உன்னைப் பூமியின் ஒருமுனை துவக்கிப்
பூமியின் மற்றமுனைமட்டும் இருக்கிற எல்லாச்
சனசதளங்களுக்குள்ளும் சிதறடிப்பார்; அங்கே
நீயும் உன் பிதாக்களும் அறியாத மரமும் கல்லு
௬௫ மான அந்நியதேவர்களைச் சேவிப்பாய். — அந்
தச் சாதிகளுக்குள்ளே உனக்கு இளைப்பாறுத
லும் உன் உள்ளங்காலுக்குத் தங்குதரிப்பும் உ
ண்டாயிருப்பதில்லை; அங்கே கர்த்தர் உனக்குத்
தத்தளிக்கிற இருதயத்தையும் கண்களின் தொய்
தலையும் ஆத்தும சஞ்சலத்தையும் கொடுப்பார்.—
௬௬ உன் சீவன் உனக்கு எதிராகத்தொங்கும்; உன்
சீவனை நம்பாமல் இரவும்பகலும் திகிலோடிருப்
௬௭ பாய். — நீ பயப்படும் உன் இருதயத்தின் திகி
லினாலும், உன் கண்களினாலே பார்க்கும் காரி
யத்தினாலும், விடியற்காலத்திலே சாயங்காலம்
வந்தால் தாவிளையென்றும், சாயங்காலத்திலே
விடியற்காலம்வந்தால் தாவிளையென்றும் சொல்
௬௮ லுவாய்.—இனிக் காணதிருப்பாயென்று நான்
உனக்குச் சொன்னவழியாய், கர்த்தர் உன்னைக்
கப்பல்களிலே எகிப்திற்குத் திரும்பக் கொண்டு
போகப்பண்ணுவார்; அங்கே உங்கள் சத்துருக்
களுக்கு வேலைக்காரராகவும் வேலைக்காரிகளா
கவும் விற்கப்படுவீர்கள்; கொள்ளுவாரும் இல்
லாதிருப்பார்களென்றான்.

## ௨௯. அதிகாரம்.

௧. அவர்கள் கண்ட அற்புதங்களை நினைத்துக் கீழ்ப்படிய, அவர்களுக்கு மோசே கற்பித்தது. ௰. கர்த்தருடனே உடன்படிவதற்கு யாவரும் அவருக்குமுன்பாகச் சேர்ந்தது. ௰௮. தன் துன்மார்க்கத்தைக்குறித்துச் சந்தோஷப்படுகிறவன்மேல் தேவகோபம் மூளுதல். ௨௯. மறைவானவைகள் பராபரனுக்கே அடுத்தது.

௧ ஓரேப்பிலே இஸ்ரவேல் புத்திரரோடே பண்
ணிக்கொண்ட உடம்படிக்கையை அல்லாமல்,
மோவாபின் தேசத்திலே கர்த்தர் மோசேக்கு
அவர்களோடே பண்ணக் கற்பித்த உடம்படிக்
கையின் வார்த்தைகள் இவைகள்தானே.
மோசே இஸ்ரவேலரையெல்லாம் வரவழைத் ௨
து, அவர்களோடே சொன்னதாவது: கர்த்தர் எ
கிப்துதேசத்தில் உங்கள் கண்களுக்குமுன்பாகப்
பார்வோனுக்கும் அவனுடைய எல்லா ஊழியக்
காரருக்கும் அவனுடைய முழுத்தேசத்திற்கும்
செய்ததையெல்லாம் நீங்கள் கண்டு,— அந்தப் ௩
பெரிய சோதனைகளையும், அந்தப் பெரிய அடை
யாளங்களையும், அற்புதங்களையுமெல்லாம் கண்
ணாரப் பார்த்தீர்களே.—ஆகிலும் இந்நாள்வரைக் ௪
கும் கர்த்தர் உங்களுக்கு உணரத்தக்க இருதயத்
தையும் காணத்தக்க கண்களையும் கேட்கத்தக்க
காதுகளையும் கொடுத்ததில்லை.—நாம் நாற்பது ௫
வருஷம் உங்களை வனாந்தரத்தில் நடக்கப்பண்
ணினோம்; நாம் உங்கள் பராபரனாகிய கர்த்தரென்
பதை நீங்கள் அறிந்துகொள்ளும்படிக்கு, உங்க
ளில் உங்கள் வஸ்திரம் பழையதானதுமில்லை,
உன் காலில் உன் பாதரட்சை பழையதானது
மில்லை.—நீங்கள் அப்பம் சாப்பிட்டதுமில்லை, ௬
திராட்சப்பழ இரசமும் மதுவும் குடித்ததுமில்லை
என்கிறார்.-நீங்கள் இவ்விடத்திற்கு வந்தபொழு ௭
து, எஸ்போனின் இராசாவாகிய சீகோனும் பா
சானின் இராசாவாகிய ஓகும் நமக்கு எதிராக யுத்
தத்திற்குப் புறப்பட்டார்கள்; நாமோவென்றால்
அவர்களை முறியடித்து,—அவர்கள் தேசத்தைப் ௮
பிடித்து, அதை ரூபெனியருக்கும் காதியருக்கும்
மனாசேயின் பாதிக்கோத்திரத்திற்கும் சுதந்தரமா
கக் கொடுத்தோம்.-இப்பொழுதும் நீங்கள் செய் ௯
வதெல்லாம் உங்களுக்கு வாய்க்கும்படிக்கு, இந்த
உடம்படிக்கையின் வார்த்தைகளைக் கைக்கொ
ண்டு, அவைகளின்படி செய்வீர்களாக.
உன் பராபரனாகிய கர்த்தர் உனக்குச் சொன் ௰
னபடியேயும், உன் பிதாக்களாகிய ஆபிரகாமுக்
கும் ஈசாக்குக்கும் யாக்கோபுக்கும் ஆணையிட்ட
படியேயும், இன்று உன்னைத் தமக்குச் சனமாக
நிறுத்திக்கொள்ளவும், தாம் உனக்குப் பராபரனா
யிருக்கவும், — நீ உன் பராபரனாகிய கர்த்தரு ௰௧
டைய உடம்படிக்கைக்கும் இன்று அவர் உன்
னோடே பண்ணுகிற அவருடைய ஆணையுறுதிக்
கும் உள்படும்படிக்கு,—இன்று உங்கள் கோத் ௰௨
திரங்களின் தலைவரும் உங்கள் மூப்பரும் உங்
கள் அதிக்கக்காரரும் இஸ்ரவேலின் சகல மனி
தரும்,—உங்கள் பிள்ளைகளும், உங்கள் பெண் ௰௩
சாதிகளும், உன் பாளயத்திற்குள்ளிருக்கிற உன்
விறகுக்காரனும், உன் தண்ணீர்க்காரனுமான
உன் பரதேசியுமாகிய நீங்களெல்லாரும், உங்
கள் பராபரனாகிய கர்த்தருக்குமுன்பாக நிற்கி
றீர்கள். — ஆனால் நான் உங்களோடேமாத்திர ௰௪
மல்ல,—இன்று இங்கே நம்மோடே கூட நம்மு ௰௫
டைய பராபரனாகிய கர்த்தருக்குமுன்பாக நின்
றிருக்கிறவர்களோடேயும், இன்று இங்கே நம்
மோடே இராதவர்களோடேயுங்கூட இந்த உ
டம்படிக்கையையும் இந்த ஆணையுறுதியையும்
பண்ணிக்கொள்ளுகிறேன்.

௰௬ ஏனெனில் நாம் எகிப்துதேசத்தில் எப்படிக்
குடியிருந்தோமென்றும், நீங்கள் கடந்துவந்த
இடங்களிலிருந்த சாதிகளின் நடுவழியாய் எப்
படி நடந்துவந்தோமென்றும், நீங்கள் அறிவீர்
௰௭ கள்.— அவர்களுடைய அருவருப்புகளையும் அ
வர்களிடத்திலிருக்கிற மரமும் கல்லும் வெள்ளி
யும் பொன்னுமான அவர்களுடைய நரகலான
௰௮ தேவர்களையும் கண்டீர்கள்.—ஆகையால், அந்தச்
சாதிகளின் தேவர்களைச் சேவிக்கப்போக இன்று
நம்முடைய பராபரனாகிய கர்த்தரைவிட்டு அக
லுகிற இருதயமுள்ள யாதொரு ஆணாகிலும்
பெண்ணாகிலும் வம்சமாகிலும் கோத்திரமாகி
லும் உங்களில் இராதபடிக்கும், நஞ்சையும் எட்
டியையும் முளைப்பிக்கிற யாதொரு வேர் உங்க
௰௯ ளில் இராதபடிக்கும் பாருங்கள்.—அப்படிப்பட்
டவன் இந்த ஆணையுறுதியின் வார்த்தைகளைக்
கேட்டும், என் மனதுக்குப் பிடித்தபடி நான்
நடந்தாலும், எனக்குச் சுகம் இருக்குமென்று
வெறிக்கக் குடித்திருக்கிறவர்களைத் தாகமாயிருக்
கிறவர்களுக்குச் சரிசமானமாக்கும்படிக்கு, தன்
௨௰ இருதயத்திலே தன்னை ஆசீர்வதித்தால்,—கர்த்தர்
அவனுக்கு மன்னிக்கச் சித்தமாயிருப்பதில்லை;
கர்த்தரின் கோபமும் எரிச்சலும் அப்பொழுது
அந்த மனிதன்மேலே புகையும்; இந்தப் புஸ்த
கத்தில் எழுதியிருக்கிற சாபமெல்லாம் அவன்
மேல் இறங்கும்; கர்த்தர் அவன் பெயரை வானத்
௨௧ தின் கீழிராதபடிக்குக் குலைப்பார்.—இந்த நியா
யப்பிரமாண புஸ்தகத்தில் எழுதியிருக்கிற உடம்
படிக்கையினுடைய சாபங்களின்படியெல்லாம்
கர்த்தர் அவனைத் தீங்குக்கென்று இஸ்ரவேல்
கோத்திரங்களுக்கெல்லாம் புறம்பாக்கிப்போடு
௨௨ வார்.— அப்பொழுது உங்களுக்குப் பிற்பாடு
எழும்பும் வேறே தலைமுறையான உங்கள் பிள்
ளைகளும், தூரதேசத்திலிருந்துவரும் அந்நியரும்,
சகலசாதிகளின் மனிதரும், இந்தத் தேசத்தின்
வாதைகளையும், கர்த்தர் அதற்குப் பிடிக்கப்பண்
௨௩ ணின அதின் நோய்களையும்,— கர்த்தர் தமது
கோபத்திலும் தமது உக்கிரத்திலும் சோதோமை
யும் கொமோராவையும் ஆத்மாவையும் சேபோ
யிமையும் கவிழ்த்துப்போட்ட கவிழ்த்தலுக்கு
ஒப்பாக, அதின் நிலமெல்லாம் விதைப்பும்
விளைவும் எந்தப்பூண்டின் முளைப்பும் இல்லாதப
டிக்கு, கந்தகத்தாலும் உப்பாலும் எரிக்கப்பட்
௨௪ டதையும் காணும்பொழுது,— அந்தச் சாதிக
ளெல்லாம் எதுநிமித்தமாய்க் கர்த்தர் இந்தத் தே
சத்திற்கு இப்படிச் செய்தார்; எதினாலே இத்தனை
௨௫ மிகுதியான கோபம் எரிந்ததென்பார்கள்.—அப்
பொழுது சொல்லப்படுவதாவது: அவர்களு
டைய பிதாக்களின் பராபரனாகிய கர்த்தர் அவர்
களை எகிப்துதேசத்திலிருந்து புறப்படப்பண்ணி
னபொழுது, அவர்களோடே பண்ணின உடம்
௨௬ படிக்கையை அவர்கள் விட்டுப்போய்,—தாங்
கள் அறியாமலும் தங்களுக்கு ஒன்றும் கொடா
மலும் இருக்கிற தேவர்களாகிய வேறே தேவர்க
ளைச் சேவித்து, அவைகளைப் பணிந்துகொண்ட
படியினாலே,—கர்த்தர் இந்தப் புஸ்தகத்தில் எழு ௨௭
தியிருக்கிற சாபத்தையெல்லாம் இந்தத் தேசத்
தின்மேல் வரப்பண்ண, அதின்மேலே கோபம்
மூண்டவராகி,—அவர்களைக் கோபத்தினாலும், ௨௮
உக்கிரத்தினாலும், மகா கடுமையினாலும், அவர்
கள் தேசத்திலிருந்து பிடுங்கிப்போட்டு, இந்நா
ளில் இருக்கிறதுபோல, அவர்களை வேறே தே
சத்திலே தள்ளிவிட்டாரென்று சொல்லப்படும்.-
மறைவானவைகள் நம்முடைய பராபரனாகிய ௨௯
கர்த்தருக்கு அடுத்தது; வெளியானவைகளோவெ
னில் நமக்கும், நம்முடைய பிள்ளைகளுக்கும்,
இந்த நியாயப்பிரமாணத்தினுடைய வார்த்தைக
ளின்படியெல்லாம் செய்யும்படிக்கு, என்றென்
றைக்கும் அடுத்திருக்கும்.

## ௩௰. அதிகாரம்.

௧. குணப்பட்டவர்களுக்குத் தேவகிருபையின் வாக்குத்தத்தம். ௰௧. கற்ப
னையைத் தெளிவாய்க் காட்டியது. ௰௫. ஜீவனையும் மரணத்தையும் சனங்
களுக்குமுன்னே வைத்தது.

நான் உனக்குமுன்பாக வைத்த ஆசீர்வாதமும் ௧
சாபமுமான இந்தக் காரியங்களெல்லாம் உன்
மேல் வந்தபொழுதோவெனில் சம்பவிப்பதே
தென்றால், உன் பராபரனாகிய கர்த்தர் உன்னைத்
துரத்திவிட்ட எல்லாச் சாதிகளிடத்திலும் நீ
இருக்கும்பொழுது, நீ உன் இருதயத்திற்குள்ளே
சிந்தனை அடைந்து,—உன் பராபரனாகிய கர்த்த ௨
ரண்டைக்கே திரும்பி, நீயும் உன் பிள்ளைகளும்
உங்கள் முழு இருதயத்தாலும் உங்கள் முழு ஆத்து
மத்தாலும் நான் இன்று உனக்குக் கற்பிக்கிறதின்
படியெல்லாம் அவருடைய சத்தத்திற்குச் செவி
கொடுத்தால்,—உன் பராபரனாகிய கர்த்தர் உன் ௩
சிறையிருப்பைத் திருப்பி, உனக்கிரங்கி, உன்
பராபரனாகிய கர்த்தர் உன்னைச் சிதறடித்த எல்
லாச் சனசதளங்களிடத்திலும் இருக்கிற உன்
னைத் திரும்பச் சேர்த்துக்கொள்ளுவார்.—உன்னு ௪
டையவர்கள் வானத்தின் கடையாந்தரம்மட்டும்
துரத்துண்டிருந்தாலும், உன் பராபரனாகிய கர்த்
தர் அங்கே இருக்கிற உன்னைக் கூட்டி, அங்கே
இருக்கிற உன்னைச் சேர்த்துக்கொண்டு,—உன் ௫
பிதாக்கள் சுதந்தரித்திருந்ததேசத்தை நீ சுதந்தரிக்
கும்படிக்கு, உன் பராபரனாகிய கர்த்தர் அதில் உ
ன்னை வரப்பண்ணி, உனக்கு நன்மைசெய்து,
உன் பிதாக்களைப்பார்க்கிலும் உன்னைப் பெரு
கப்பண்ணுவார்.—நீ உன் பராபரனாகிய கர்த்த ௬
ரை உன் முழு இருதயத்தாலும் உன் முழு ஆத்து
மத்தாலும் சிநேகித்துப் பிழைக்கும்படிக்கு, உன்
பராபரனாகிய கர்த்தர் உன் இருதயத்தையும் உன்
வித்தாரின் இருதயத்தையும் சுன்னத்துப்பண்
ணி,—இந்தச் சாபங்களையெல்லாம் உன் சத்துருக் ௭
கள்மேலும் உன்னைத் துன்பப்படுத்தின உன் ப
கைஞர்மேலும் சுமக்கப்பண்ணுவார்.-நீயோவெ ௮
னில் மனந்திரும்பி, கர்த்தரின் சத்தத்திற்குச் செ
விகொடுத்து, நான் இன்று உனக்குக் கற்பிக்கிற
அவருடைய எல்லாக் கற்பனைகளின்படியும் செ
ய்வாய்.-அப்பொழுது உன் பராபரனாகிய கர்த்தர் ௯
உன் கைகளின் எல்லா வேலையிலும் உன் கர்ப்பத்

தின் கனியிலும் உன் மிருகசீவனின் பலனிலும்
உன் நிலத்தின்கனியிலும் உனக்கு நன்மை உண்
௰ டாகப் பரிபூரணங் கட்டளையிடுவார்.—ஏனெ
னில் இந்த நியாயப்பிரமாண புஸ்தகத்தில் எழுதி
யிருக்கிற உன் பராபரனாகிய கர்த்தருடைய கற்
பனைகளையும் அவருடைய கட்டளைகளையும் கை
க்கொள்ளும்படிக்கு, நீ அவர் சத்தத்திற்குச் செ
விகொடுக்கும்பொழுதும் நீ உன் பராபரனாகிய
கர்த்தரண்டைக்கு உன் முழு இருதயத்தாலும்
உன்முழு ஆத்துமத்தாலும் திரும்பும்பொழுதும்,
கர்த்தர் உன் பிதாக்களின்மேலே சந்தோஷமா
யிருந்ததுபோல, உன்மேலே திரும்ப நன்மை
உண்டாகச் சந்தோஷமாயிருப்பார்.
௰க ஏனெனில் நான் இன்று உனக்குக் கற்பிக்கிற
இந்தக் கற்பனை உனக்கு அறியப்படாத புதை
பொருளுமல்ல, அது உனக்குத் தூரமுமல்ல.—
௰உ நாங்கள் அதைக் கேட்டு அதின்படி செய்யும்ப
டிக்கு, எங்களுக்காகப் பரமண்டலங்களுக்கு
ஏறி, அதை எங்களுக்குக் கொண்டுவருபவன்
யாரென்று நீ சொல்லத்தக்கதாக, அது பரமண்ட
௰ங லங்களிலுள்ளதல்ல.—நாங்கள் அதைக் கேட்டு
அதின்படி செய்யும்படிக்கு, எங்களுக்காகச்
சமுத்திரத்தைக் கடந்து, அதைக் கொண்டுவருப
வன் யாரென்று நீ சொல்லத்தக்கதாக, அது
சமுத்திரத்திற்கு அப்புறத்திலுள்ளதுமல்ல.—
௰ச இந்த வசனத்தின்படியே செய்யும்படிக்கு, அது
உனக்கு மெத்தவும் சமீபமாய், உன் வாயிலும்
உன் இருதயத்திலும் இருக்கின்றது.
௰ரு இதோ சீவனையும் நன்மையையும், மரணத்தை
யும் தீமையையும் இன்று உன்முன்னே வைத்
௰சு தேன்.—அதேனெனில் நீ பிழைத்துப் பெருகும்
படிக்கும், நீ சுதந்தரிக்கப்போகிற தேசத்தில்
உன் பராபரனாகிய கர்த்தர் உன்னை ஆசீர்வதிக்
கும்படிக்கும், நீ உன் பராபரனாகிய கர்த்தனைச்
சிநேகிக்கவும், அவர் வழிகளில் நடக்கவும்,
அவர் கற்பனைகளையும் கட்டளைகளையும் நியா
யங்களையும் கைக்கொள்ளவும், நான் இன்று
௰எ உனக்குக் கற்பிக்கிறேன்.—நீ கேளாதபடிக்கு,
மனம்பேதித்து, இழுப்புண்டுபோய், வேறே தே
வர்களைப் பணிந்துகொண்டு, அவர்களைச் சே
௰அ வித்தாயேயானால்,—நீங்கள் சுதந்தரிக்கிறதற்கு
யோர்தானைக் கடந்துபோகிற சீமையிலே நீடித்
தநாள் இராமல், அழியவே அழிவீர்களென்பதை
௰கூ இன்று உங்களுக்கு அறிவிக்கிறேன்.—நான் சீவ
னையும் மரணத்தையும், ஆசீர்வாதத்தையும் சாபத்
தையும், உன்முன்னே வைத்தேனென்று உங்க
ள்மேல் வானத்தையும் பூமியையும் இன்றுசாட்சி
வைக்கிறேன்; ஆகையால் நீயும் உன் வித்தும்
பிழைக்கும்படிக்கு நீ சீவனைத் தெரிந்துகொ
உ௰ ண்டு,—கர்த்தர் உன் பிதாக்களாகிய ஆபிரகாமுக்
கும் ஈசாக்குக்கும் யாக்கோபுக்கும் கொடுப்போ
மென்று அவர்களுக்கு ஆணையிட்ட சீமையிலே
குடியிருக்கும்படிக்கு, உன் பராபரனாகிய கர்த்
தனைச் சிநேகித்து, அவர் சத்தத்திற்குச் செவி
கொடுத்து, அவனை ஒட்டிக்கொண்டிருப்பாயாக;
ஏனெனில் அவரே உன் சீவனும் உன்னுடைய
நாள் நீடிப்புமானவரென்றான்.

## ஙக. அதிகாரம்.

க. மோசே சனங்களையும், எ. யோசுவாவையும், தைரியப்படுத்தினது. கூ. அவர் நியாயப்பிரமாணத்தைச் சனங்களுக்கு ஏழாம் வருஷத்தில் படிக்க ஆசாரியர்களிடத்தில் கொடுத்தது. ௰ச. பராபரன் யோசுவாவுக்குக் கட்டளையையும், ௰கூ. சனங்களுக்கு விரோதமான சாட்சியாகப் பாட்டையும் கொடுத்தது. உச. மோசே நியாயப்பிரமாணத்தின் புஸ்தகத்தை வைக்கும்படி இலேவிய சாதியாருக்குக் கொடுத்தது. உஅ. அவர் மூப்பர்களுக்குச் செய்த எச்சரிப்பு.

பின்னையும் மோசே போய் இஸ்ரவேலோடெல் க
லாம் சொன்ன வார்த்தைகளாவது:—நான் இன்று உ
நூற்றிருபது வயதுள்ளவன்; இனி நான் போக்
கும் வரத்துமாயிருக்கமாட்டேன்; ஏனென்றால்
இந்த யோர்தானை நீ கடப்பதில்லையென்று கர்த்
தர் என்னோடே சொல்லியிருக்கிறார். — உன் ங
பராபரனாகிய கர்த்தர் தாமே உனக்குமுன்பாகக்
கடந்துபோவார்; நீ இந்தச் சாதிகளின் தேசத்
தைக் கட்டிக்கொள்ள, அவர் அவைகளை உனக்
குமுன்பாக அழிப்பார்; கர்த்தர் சொன்னபடி
யே யோசுவா உனக்குமுன்பாகக் கடந்துபோ
வான்.—கர்த்தர் அழித்த எமோரியரின் இராசாக் ச
களாகிய சீகோனுக்கும், ஓகுக்கும், அவர்கள்
தேசத்திற்கும் செய்ததுபோல, அவைகளுக்கும்
செய்வார்.—கர்த்தர் அவர்களை உங்களுக்குமுன் ரு
பாக ஒப்புக்கொடுக்கும்பொழுது, நீங்கள் அவர்
களுக்கு நான் உங்களுக்குக் கற்பித்த கற்பனை
யின்படியெல்லாம் செய்யக்கடவீர்கள்.—நீங்கள் சு
அவர்களைப் பார்த்துப் பயப்படாமலும் திகைக்
காமலும் பலத்துத் திடமனதாயிருங்கள்; ஏனெ
னில் உன் பராபரனாகிய கர்த்தர் தாமே உன்
னோடேகூட நடந்துவருகிறார்; உன்னைத் தளர
விடாமலும் உன்னைக் கைவிடாமலும் இருப்பா
ரென்று அவர்களோடே சொன்னான்.
பிற்பாடு மோசே யோசுவாவை அழைத்து, எ
இஸ்ரவேலெல்லாம் பார்க்க அவனோடே சொன்
னதாவது: பலத்துத் திடமனதாயிரு; ஏனெனில்
நீ இந்தச் சனத்தைக் கர்த்தர் அவர்களுக்குக் கொ
டுப்போமென்று அவர்கள் பிதாக்களுக்கு ஆணை
யிட்ட தேசத்திற்குள் அழைத்துப்போய், நீ
அதை அவர்களுக்குப் பங்கிடுவாய். — கர்த்தர் அ
உனக்குமுன்பாக நடக்கிறவர், அவர் உன்னோ
டே இருப்பார்; அவர் உன்னைத் தளரவிடுவது
மில்லை; உன்னைக் கைவிடுவதுமில்லை, நீ பயப்
படாமலும் கலங்காமலும் இருப்பாயாகவென்
றான்.
மோசே இந்த நியாயப்பிரமாணத்தை எழுதி, கூ
அதைக் கர்த்தருடைய உடம்படிக்கையின் பெட்
டியைச் சுமக்கிற இலேவி புத்திரரான ஆசாரிய
ருக்கும் இஸ்ரவேலுடைய எல்லா மூப்பருக்கும்
ஒப்புவித்து, — அவர்களுக்குக் கற்பித்ததாவது: ௰
விடுதலையின் வருஷமாகிய ஒவ்வொரு ஏழாம்
வருஷத்தின் முடிவிலே கூடாரங்களின் பண்டி
கையிலே,—இஸ்ரவேலெல்லாம் உன் பராபர ௰க
னாகிய கர்த்தருக்குமுன்பாக அவர் தெரிந்து
கொண்டிருக்கும் தானத்திலே, காணப்பட வர்

திருக்கும்பொழுது, இந்த நியாயப்பிரமாணத்
தை எல்லா இஸ்ரவேலருக்குமுன்பாகவும் அவர்
௰௨ கள் காதுகள் கேட்க வாசிக்கக்கடவாய்.—புருஷ
ரும் பெண்சாதிகளும் பிள்ளைகளும் உன் வாசல்
களில் இருக்கும் உன்னுடைய பரதேசிகளும்
கேட்டு, கற்றுக்கொண்டு, உங்கள் பராபரனாகிய
கர்த்தருக்குப் பயந்து, இந்த நியாயப்பிரமாண
வார்த்தைகளின்படியெல்லாம் செய்யக் கவன
௰௩ மாயிருக்கும்படிக்கும்,—அறியாத அவர்கள் பிள்
ளைகளும் கேட்டு, நீங்கள் சுதந்தரிக்க யோர்தா
னைக் கடந்துபோகிற சீமையிலே உயிரோடி
ருக்கும் நாளெல்லாம், உங்கள் பராபரனாகிய
கர்த்தருக்குப் பயப்படக் கற்றுக்கொள்ளும்ப
டிக்கு, சனத்தைக் கூட்டி அதை வாசியென்
றான்.
௰௪ கர்த்தர் மோசேயுடனே, இதோ நீ மரிக்கும்
காலம் சமீபித்தது; நீ யோசுவாவை அழை; நாம்
அவனுக்குக் கட்டளைகொடுக்கும்படிக்கு, ஆசரி
ப்பின்கூடாரத்திலே வந்து நில்லுங்களென்றார்;
அப்படியே மோசேயும் யோசுவாவும் போய்,
௰௫ ஆசரிப்பின்கூடாரத்திலே நின்றார்கள். — அப்
பொழுது கர்த்தர் கூடாரத்தில் மேகத்தூணிலே
தரிசனையானார்; மேகத்தூண் கூடாரத்தின் வா
௰௬ சல்மேல் நின்றது. — கர்த்தர் மோசேயோடே
சொன்னதாவது: இதோ நீ உன் பிதாக்களோ
டே படுத்துக்கொள்ளப்போகிறாய்; இந்தச் சன
மோவென்றால், எழும்பி, அது போயிருக்கும்
தேசத்திற்குள்ளே அதில் இருக்கிற அந்நியதே
வர்கள்பிறகாலே சோரம்போய், நம்மைவிட்டு,
நாம் தன்னோடே பண்ணிக்கொண்ட நம்மு
டைய உடம்படிக்கையை முறித்துப்போடும்.—
௰௭ ஆகையால் அந்நாளிலே நாம் அதின்மேல் கோ
பம்மூண்டவராகி, அவர்களைக் கைவிட்டு, அவர்
கள் பட்சிக்கப்படும்படிக்கு, நமது முகத்தை
அவர்களுக்கு மறைப்பதினால், அநேகம் தீங்கு
களும் இக்கட்டுகளும் அவர்களைப் பிடிக்கும்;
அந்நாளிலே அவர்கள் என் பராபரன் என் நடு
வே இராததினாலே அல்லவோ, இந்தத் தீங்குகள்
௰௮ என்னைப் பிடித்தன என்பார்கள்.—நாமோவென்
றால் அவர்கள் வேறே தேவர்களண்டைக்கு மு
கம்திருப்பிச் செய்த எல்லாப் பொல்லாப்பின்
நிமித்தமும் அந்நாளிலே நமது முகத்தை மறைக்
௰௯ கவே மறைப்போம். — இப்பொழுதும் நீங்கள்
இந்தப் பாட்டை எழுதிக்கொண்டு, அதை இஸ்ர
வேல் புத்திரருக்குப் படித்துக்கொடுத்து, இந்
தப் பாட்டு இஸ்ரவேல் புத்திரருக்குள்ளே நமக்
குச் சாட்சியாயிருக்கும்படிக்கு, அதை அவர்
௨௰ கள் வாயில் வழங்கப்பண்ணுங்கள்.—ஏனெனில்
நாம் அவர்கள் பிதாக்களுக்கு ஆணையிட்ட பா
லும் தேனும் ஓடுகிற சீமையில், அவர்களை வரப்
பண்ணியிருக்கும்பொழுதும், அவர்கள் புசித்
துத் திர்ப்தியாகிக் கொழுத்துப்போனபொழு
தும், அவர்கள் வேறே தேவர்களண்டைக்கு
முகம்திருப்பி, அவர்களைச் சேவித்து, நமக்குக்
கோபம்மூட்டி, நமது உடம்படிக்கையை முறித்
துப்போடுவார்கள். — ஆகையால் அநேக தீங் ௨௧
குகளும் இக்கட்டுகளும் அவர்களைப் பிடிக்கும்
பொழுது, அவர்கள் வித்தாரின் வாயில் மறதி
யாய்ப் பேசாதிருக்கும் இந்தப் பாட்டு அவர்க
ளுக்கு எதிராகச்சாட்சியாய் உத்தரவுசொல்லும்;
ஏனெனில் நாம் அவர்களை நாம் ஆணையிட்டதே
சத்தில் இன்னம் வரப்பண்ணாதிருக்கிற இன்று
தானும் அவர்கள் தோற்றலான நினைவுகளை அறி
வோமென்றார்.—அந்நாளிலே மோசே அந்தப் ௨௨
பாட்டை எழுதி, அதை இஸ்ரவேல் புத்திரருக்
குப் படித்துக்கொடுத்தான்.—நூனின் குமாரனா ௨௩
கிய யோசுவாவுக்கு அவர், நீ பலத்துத் திடமன
தாயிரு; ஏனெனில் நீ இஸ்ரவேல் புத்திரரை நாம்
அவர்களுக்கு ஆணையிட்ட தேசத்திலே, அழைத்
துக்கொண்டுபோவாய்; நாம் உன்னோடிருப்போ
மென்று கட்டளையிட்டார்.
மோசே இந்த நியாயப்பிரமாணத்தின் வார்த் ௨௪
தைகளை ஒரு புஸ்தகத்திலே முடிய எழுதித் தீர்ந்
தபொழுது,—அவன் கர்த்தருடைய உடம்படிக் ௨௫
கையின் பெட்டியைச் சுமக்கிற இலேவியருக்
குக் கற்பித்ததாவது:—நீங்கள் இந்த நியாயப்பிர ௨௬
மாண புஸ்தகத்தை வாங்கி, அதை உங்கள் பரா
பரனாகிய கர்த்தருடைய உடம்படிக்கைப் பெட்
டியின் பக்கத்திலே வையுங்கள்; அங்கே அது
உனக்கு எதிரான சாட்சியாயிருக்கும்.—ஏனெ ௨௭
னில் நான் உன் கலகக்குணத்தையும் உன்
கடினக் கழுத்தையும் அறிவேன்; இதோ நான்
இன்று இன்னம் உங்களுடனே உயிரோடிருக்
கையிலே, கர்த்தருக்கு விரோதமாகக் கலகம்
பண்ணினீர்களே, என் மரணத்திற்குப் பிற்பாடு
எத்தனை அதிகம்? — உங்கள் கோத்திரங்களின் ௨௮
மூப்பனையும் உங்கள் ஆதிக்கக்காரரையும் எல்
லாம் என்னண்டையிலே, நான் அவர்கள் காது
கள் கேட்க இந்த வார்த்தைகளைச் சொல்லவும்,
அவர்களுக்கு எதிராக வானத்தையும் பூமியை
யும் சாட்சிவைக்கவும் கூட்டுங்கள்.—ஏனெனில் ௨௯
என் மரணத்திற்குப்பிற்பாடு நீங்கள் உங்களைக்
கெடுக்கவே கெடுத்து, நான் உங்களுக்குக் கற்
பித்த வழியைவிட்டு விலகுவீர்கள்; ஆகையால்
முடிவு நாள்களிலே தீங்கு உங்களுக்கு நேரிடும்;
ஏனெனில் கர்த்தரை உங்கள் கைகளின் செய்
கையினாலே மனமடிவாக்கும்படிக்கு, அவர்
பார்வைக்குப் பொல்லாப்பானதைச் செய்வீர்க
ளென்பதை அறிவேனென்று சொல்லி,
மோசே இஸ்ரவேல் சபையெல்லாம் கேட்க ௩௰
அந்தப் பாட்டின் வார்த்தைகளை முடியச் சொன்
னான்.

## ௩௨. அதிகாரம்.

௧. பராபரனுடைய கிருபையையும், கோபத்தையும் அறிவிக்கத்தக்க மோசேயின் பாட்டு. ௪௬. அதில் தங்கள் இருதயத்தை வைக்கச் சனங்களை அவர் எச்சரித்தது. ௪௮. பராபரன் மோசேயைத் தேசத்தைப் பார்க்கவும், மரணம் அடையவும் நேபோ பர்வதத்தின்மேல் அனுப்பினது.

வானங்களே செவிகொடுங்கள், நான் பேசு ௧
வேன்; பூமி என் வாயின் வசனங்களைக் கேட்

௨ பதாக.—மழையின் தூறல் முளையின்மேல் விழு
வதுபோல, என் உபதேசம் விழவும், பனியின்
துளிகள் பூண்டுகள்மேல் பெய்வதுபோல, என்
௩ வசனம் பெய்யவும்கடவது.—ஏனெனில் கர்த்த
ருடைய நாமத்தைப் பிரசித்தம்பண்ணுவேன்;
நம்முடைய பராபரனுக்கு மகத்துவத்தைச் செ
௪ லுத்துங்கள். — அவர் கல்மலை; அவர் கிரியை
குறையற்றஉத்தமமானது; ஏனெனில் அவர் வழி
களெல்லாம் நியாயம்; அவர் நியாயக்கேடில்லாத
உண்மையுள்ள பராபரன்; அவர் நீதியும் செம்
௫ மையுமானவர்.—அவர் அதற்குக் கேடுண்டாக்கி
னாரோ, இல்லை; கறை அவருடைய பிள்ளைகளு
டையது; அவர்கள் மாறுபாடும் மகா புரட்டுமான
௬ சந்ததியார்.—ஞானமற்ற பயித்தியசனமே, இப்
படிக் கர்த்தருக்குப் பதில் அளிக்கிறீர்களோ?
அவர் உன்னைத் தம்முடைய கைவசமாக்கின
உன் எசமானாகிய உன்னுடைய பிதாவல்ல
வோ? அவர் உன்னை உண்டாக்கினவரும் உன்
னைத் திடப்படுத்தினவருமல்லவோ?
௭ ஆதி நாள்களை நினை; தலைமுறை தலைமுறை
யாய்ச் சென்ற வருஷங்களைத் தியானியுங்கள்;
உன் தகப்பனைக் கேள், அவன் உனக்கு அறி
விப்பான்; உன் மூப்பரைக் கேள், அவர்கள்
௮ உனக்குச் சொல்லுவார்கள்.—உன்னதமானவர்
சாதிகளுக்குச் சுதந்தரங்களைப் பங்கிட்டு, மனு
புத்திரரைப் பிரிந்துபோகப்பண்ணுகிறபொழு
து, இஸ்ரவேல் புத்திரரின் இலக்கத்திற்குத்தக்க
இடமுண்டாயிருக்கத்தக்கதாய்ச் சனசதளங்க
௯ ளின் எல்லைகளைத் திட்டம்பண்ணினார்.—ஏனெ
னில் கர்த்தருடைய சனம் அவருடைய பங்கு;
௰ யாக்கோபு அவருடைய சுதந்தரவீதம். — அவர்
அதை வனாந்தரதேசத்திலும், ஊளையிடுதலுள்ள
வெறுமையான அவாந்தரவெளியிலும் கண்டுபி
டித்தார்; அதைச் சூழ்ந்துகொண்டார்; அதற்கு
உணர்வுண்டாக்கினார்; அதைத் தமது கண்ணின்
௰௧ கறுப்புவிழியைப்போலத் தற்காத்தார்.—கழுகு
தன் கூட்டின் குஞ்சுகளை எழும்பப்பண்ணி,
அவைகளின்மேல் அசைவாடிக்கொண்டிருந்து,
தன் செட்டைகளை விரித்து, அவைகளை எடுத்து,
அவைகளைத்தன் செட்டைகளின்மேலே சுமந்து
௰௨ வருகிறதுபோல,—கர்த்தர் ஒருவரே அதை வழி
நடத்தினார்; அந்நியதேவன் அவரோடேகூட
௰௩ இருந்ததில்லை.—அவர் அதைப் பூமியின் உயர
மான தலங்களின்மேல் ஏறிவரப்பண்ணினார்;
அது நிலத்தின் பலன்களைப் புசித்தது; அதைக்
கல்மலையிலுள்ள தேனையும் கல்மலையின் கல்ப்
பாறையிலிருந்து வந்த எண்ணெயையும் உறிஞ்
௰௪ சப்பண்ணினார். — மாடுகளின் வெண்ணெயை
யும், ஆடுகளின் பாலையும், பாசானில் மேயும்
ஆட்டுக்குட்டிகள் ஆட்டுக்கடாக்கள் வெள்ளாட்
டுக்கடாக்களுடைய கொழுப்பையும், குண்டிக்
காய்களின் கொழுப்புக்கொத்த கோதுமையை
யும், திராட்சப்பழங்களின் இரத்தம்போலிருக்
கிற சுத்தமான இரசத்தையும் சாப்பிட்டாய்.—
௰௫ செம்மைமார்க்கத்தானாயிருந்தவன் கொழுப்பா
னபொழுதோவெனில், உதைத்தான்; கொழுத்து,
தூலித்து, நிணம் தூற்றுப்போனபொழுது, தன்
னை உண்டாக்கின பராபரனைவிட்டு, தன் இரட்
சிப்பின் கல்மலையை அசட்டைபண்ணினான்.—
அந்நியதேவர்களால் அவருக்கு எரிச்சலை மூட் ௰௬
டினார்கள்; அருவருப்புகளினால் அவரை மனம
டிவாக்கினார்கள். — தாங்கள் அறியாமலும் தங் ௰௭
கள் பிதாக்கள் எண்ணாமலும்போன நடுப்பாதி
யிலே புதியதாயுண்டான தேவர்களல்லாத பேய்
களென்ற தேவர்களுக்குப் பலியிட்டார்கள்.—
உன்னைச் செனிப்பித்த கல்மலையை நீ நினையா ௰௮
தேபோய், உன்னைப் பெற்ற பராபரனை மறந்
தாய்.—அதைக் கர்த்தர் கண்டு, தம்முடைய குமா ௰௯
ரர்மேலும் தம்முடைய குமாரத்திகள்மேலும் மன
மடிவாகி, அவர்களைப் புறக்கணித்துச் சொன்ன
தாவது:—நமது முகத்தை அவர்களுக்கு மறைப் ௨௰
போம்; அவர்களுடைய முடிவு எப்படியிருக்கு
மென்று பார்ப்போம்; ஏனெனில் அவர்கள் மகா
மாறுபாடான சந்ததி; அவர்கள் உண்மையில்
லாத பிள்ளைகள்.—அவர்கள் தெய்வமல்லாததி ௨௧
னாலே நமக்கு எரிச்சலை மூட்டி, தங்கள் மாயை
களினாலே நம்மை மனமடிவாக்கினார்கள்; ஆகை
யால் சனமல்லாததினாலே நாம் அவர்களுக்கு
எரிச்சலை மூட்டி, மதிகெட்ட சாதியினாலே
அவர்களை மனமடிவாக்குவோம். — ஏனெனில் ௨௨
நமது கோபத்தினாலே அக்கினி பற்றிக்கொண்
டது; அது பாதாளமான நரகம்மட்டும் எரியும்;
அது பூமியையும் அதின் பலனையும் பட்சித்து,
பர்வதங்களின் அஸ்திபாரங்களை வேகப்பண்
ணும்.—தீங்குகளை அவர்கள்மேலே குவியப்பண் ௨௩
ணுவோம்; நம்முடைய அம்புகளையெல்லாம் அ
வர்கள்மேல் பட எய்வோம்.—பசியினால் வாடி, ௨௪
எரிபந்தக் காங்கையினாலும் கசப்பான பெருவா
ரிக்காய்ச்சலாலும் மாளுவார்கள்; மிருகங்களின்
பல்களையும் தரையில் ஊரும் பாம்புகளின்
விஷத்தையும்கூட அவர்களுக்குள் அனுப்பு
வோம்.—வெளியிலே பட்டயமும், அறைக் ௨௫
குள்ளே பயங்கரமும், வாலிபனையும் கன்னி
யாஸ்திரியையும் பாலகனையும் நரை மனிதனை
யும் சங்கரிக்கும்.—எங்கள் கை உயர்ந்ததென் ௨௬
றும், கர்த்தர் இதையெல்லாம் நடப்பித்ததில்லை
யென்றும் அவர்களுடைய சத்துருக்கள் தப்புநி
னைவாய்ச் சொல்லுவார்களென்ற பகைஞனின்
குரோதத்திற்கு நாம் பயமாயிராதிருந்தால்,—
நாம் அவர்களை மூலைக்குமூலை சிதறடித்து, மனி ௨௭
தரில் அவர்கள் பெயரை அற்றுப்போகப்பண்
ணுவோமென்போம்.—ஏனெனில் அது யோச ௨௮
னைகெட்ட சாதி, அவர்களில் உணர்வில்லை.—
அவர்கள் ஞானம்அடைந்து, இதைப் புத்தியாய் ௨௯
நினைத்து, தங்கள்பின் காரியத்தைச் சிந்தித்துக்
கொண்டால் தாவிளை என்கிறார். — அவர்களு ௩௰
டைய கல்மலை அவர்களை விற்காமலும் கர்த்தர்
அவர்களை ஒப்புக்கொடாமலும் இருந்தாரானால்,
ஒருவன் ஆயிரம்பேரைத் துரத்தி, இரண்டுபேர்
பதினாயிரம்பேரை ஒட்டுவதெப்படி? — ஏனெ ௩௧

ணில் தங்கள் கல்மலை நம்முடைய கல்மலையைப்
போல அல்லவென்று நம்முடைய சத்துருக்கள்
௩௨ தானும் தீர்மானிக்கிறார்கள்.—ஏனெனில் அவர்
களுடைய திராட்சச்செடி, சோதோமிலும் கொ
மோறா நிலங்களிலும் பயிரான திராட்சசாதி;
அவைகளின் பழங்கள் பிச்சும் அவைகளுக்குண்
௩௩ டான குலைகள் கசப்புமாயிருக்கின்றன.—அவர்
களுடைய திராட்சப்பழஇரசம், வலு சர்ப்பங்க
ளின் விஷமும் விரியன் பாம்புகளின் கொடிய
௩௪ விஷமுமானது.— நம்மிடத்தில் இது வைத்து
வைக்கப்பட்டு, நமது பொக்கிஷங்களில் இது
௩௫ முத்திரைபோட்டிருக்கிறதில்லையோ?-நீதியைச்
சரிக்கட்டுதலும் பதிலுக்குப்பதில் அளிக்குதலும்
நம்முடையது; ஏற்றகாலத்திலே அவர்கள் கால்
தள்ளாடும்; ஏனெனில் அவர்கள் ஆபத்தின் நாள்
சமீபமாயிருக்கின்றது; அவர்களுக்கு ஆயத்தமா
௩௬ னவைகள் தீவிரிக்குமென்கிறார்.—ஏனென்றால்
கர்த்தர் தம்முடைய சனத்தை நியாயம்தீர்த்து,
தம்முடைய ஊழியக்காரர்மேல் இரங்குவார்;
அதேனெனில் பலனற்றதென்றும், அடைக்கப்
பட்டதும் போயிற்று, விடப்பட்டதும் போ
௩௭ யிற்றென்றும் காண்பார்.—அப்பொழுது அவர்
சொல்வதாவது: அவர்கள் பலியிட்ட பலிகளின்
கொழுப்பைத் தின்று, ஊற்றுதல்களின் திராட்
சப்பழஇரசத்தைக் குடித்தார்களே; அந்த அவர்க
ளுடைய தேவர்களும் அவர்கள் நம்பின கல்மலை
௩௮ யும் எங்கே?—அவைகள் எழுந்திருந்தும் உங்க
ளுக்குச் சகாயம்பண்ணி, உங்களுக்கு மறைவி
௩௯ டமாயிருக்கட்டும்.—நாம் நாமே அவர், நம்மோ
டே வேறே தேவனில்லை என்கிறதை இப்பொ
ழுது பாருங்கள்; நாம் கொன்றுபோடுகிறோம்,
நாம் பிழைப்பூட்டுகிறோம்;நாம் வெட்டுகிறோம்,
நாம் குணமாக்குகிறோம்; நமது கைக்குத் தப்பு
௪௰ விப்பாரில்லை.— ஏனெனில் நாம் நம்முடைய
கரத்தை வானத்திற்கு நேராக ஏறெடுத்து, நாம்
என்றென்றைக்கும் பிழைக்கிறவர் என்போம் —
௪௧ நாம் நம்முடைய பட்டையத்தின் மின்னலைக்
கருக்காக்கி, நம்முடைய கையானது நியாயத்
தைப் பிடித்தால், நாம் நம்முடைய சத்துருக்க
ளுக்குச் சரிக்குச் சரிக்கட்டி, நம்மைப் பகைக்
௪௨ கிறவர்களுக்குப் பதில் அளிப்போம். — நம்மு
டைய அம்புகளை வெட்டுண்டவர்களின் இரத்
தத்தாலும், பிடிபடுவாரின் இரத்தத்தாலும், வெ
றிக்கப்பண்ணுவோம்; நமது பட்டையம் மாம்
சத்தைப் பட்சிக்கும்; தலைவரை முதல்கொண்
டிருக்கும் மற்றச் சத்துருக்கள்மேலே நீதி சரிக்
௪௩ கட்டுதல் உண்டாயிருக்குமென்கிறார்.—சாதிக
ளே, அவருடைய சனத்தோடேகூடக் கெம்பீ
ரியுங்கள்; ஏனெனில் அவர் தமது ஊழியக்கார
ரின் இரத்தப்பழியை வாங்கி, தம்முடைய சத்
துருக்களுக்குச் சரிக்குச்சரிக்கட்டி, தமது சீமை
யின்மேலும் சனத்தின்மேலும் கிருபையுள்ளவ
ராவார் என்பதுதானே.
௪௪ மோசேயும் நூனின் குமாரனாகிய யோசுவா
வும் வந்து, இந்தப் பாட்டின் வார்த்தைகளையெல்
லாம் சனத்தின் காதுகள் கேட்கச்சொன்னார்
கள்.—மோசே இந்தச் சகல வார்த்தைகளையும் ௪௫
இஸ்ரவேலோடெல்லாம் சொல்லி முடிந்தபொ
ழுது,—அவர்களோடே சொன்னதாவது: இந்த ௪௬
நியாயப்பிரமாணவார்த்தைகளின்படியெல்லாம்,
செய்யக் கவனமாயிருக்க, நீங்கள் உங்கள் பிள்
ளைகளுக்குக் கற்பிக்கும்படிக்கு, நான் இன்று
உங்களுக்குச் சாட்சியாய் ஒப்புவிக்கிற வார்த்
தைகளையெல்லாம் உங்கள் மனதிலே வையுங்
கள். — ஏனெனில் இது உங்களுக்கு வீண் ௪௭
வார்த்தையாயிராமல், இது உங்கள் சீவனாயிருக்
கிறது; நீங்கள் சுதந்தரிக்க யோர்தானைக் கடந்து
போயிருக்கும் சீமையில் இந்த வார்த்தையினா
லே உங்கள் நாள்களை நீடிக்கப்பண்ணுவீர்க
ளென்றான்.
அந்நாளிலேதானே கர்த்தர் மோசேயோடே ௪௮
பேசிச் சொன்னதாவது:-நீ எரிகோவுக்கு எதிரா ௪௯
ன மோவாப் தேசத்திலுள்ள இந்த அபரீமென்ற
மலைகளிலிருக்கிற நேபோ பர்வதத்தில் ஏறி,நாம்
இஸ்ரவேல் புத்திரருக்குக் காணியாட்சியாகக்
கொடுக்கும் கானான்தேசத்தைப் பார்த்து,—உன் ௫௰
சகோதரனாகிய ஆரோன் ஓர் என்ற பர்வதத்தில்
மரித்து, தன் சனத்தாரிடத்தில் சேர்க்கப்பட்
டாற்போல, நீ ஏறி இருக்கப்போகிற அந்தப்
பர்வதத்திலே மரித்து, உன் சனத்தாரிடத்திலே
சேர்க்கப்படு. — நீங்கள் சீன்வனாந்தரத்திலுள்ள ௫௧
காதேசிலே மேரிபாவின் தண்ணீரின் சமீபத்தில்
இஸ்ரவேல் புத்திரரின் நடுவே நம்மைப் பரிசுத்
தம்பண்ணாமல், அவர்கள் நடுவே நமக்கு இரண்
டகம்பண்ணினபடியினாலேதானே.—ஆகையால் ௫௨
நாம் இஸ்ரவேல் புத்திரருக்குக் கொடுக்கும் எதி
ரே இருக்கிற தேசத்தை நீ பார்ப்பாய்; ஆனால்
நீ அதற்குள் பிரவேசிப்பதில்லையென்றார்.

## ௩௩. அதிகாரம்.

௧. பராபரனுடைய மகத்துவம். ௬. பன்னிரண்டு கோத்திரங்களுக்கு வரும் ஆசீர்வாதம். ௨௬. இஸ்ரவேலரின் மேட்டிமை.

பராபரனுடைய மனிதனாகிய மோசே தன் மர ௧
ணத்திற்குமுன்னே இஸ்ரவேல் புத்திரரை ஆசீர்
வதித்த ஆசீர்வாதம்.
அவன் சொன்னதாவது: கர்த்தர் சீனாயிலிருந் ௨
து பிரசன்னமாகி, அவர்களுக்குச் சேயீரிலிருந்
து உதித்தார்; பராபரன் பர்வதத்திலிருந்து பிரகா
சித்தார்; அநேகம் ஆயிரங்களான பரிசுத்தவான்க
ளோடே வந்தார்; அவர்களுக்காக அக்கினியான
நியாயப்பிரமாணம் அவர் வலதுபாரிசத்தில் இ
ருந்தது.—மெய்யாகவே சனசதளங்களைச் சிநே ௩
கிக்கிறார்; அவருடைய பரிசுத்தவான்களெல்லா
ரும் உம்முடைய கையிலிருக்கிறார்கள்; அவர்
கள் உமது பாதத்திலே பணிந்து, உம்முடைய
வார்த்தைகளிலே கல்விகற்றுக்கொள்வார்களெ
ன்றான். — யாக்கோபுடைய சபையின் சுதந்தர ௪
மான நியாயப்பிரமாணத்தை மோசே எங்களுக்
குக் கற்பித்தான்.—சனத்தின் தலைவரும் இஸ்ர ௫
வேலின் கோத்திரங்களும் கூட்டம்கூடுகையில்

அவன் செம்மைமார்க்கத்தாரில், இராசாவாயிருந்
தான்.
௬ ரூபேன் சாவாமல் பிழைக்கக்கடவன்; அவன்
மனிதரின் இலக்கம் மட்டாயிருக்குமென்றான்.
௭ யூதாவுக்காக அவன் சொன்னது: கர்த்தாவே,
யூதாவின் சத்தத்தைக் கேட்டு, அவனை அவன்
சனத்தோடே கூட்டிக்கொண்டுவாரும்; அவன்
கைகள் அவனில் பலக்கக்கடவது; அவனை
அவன் சத்துருக்களுக்கு நீங்கலாக்கி விடுவிக்கிற
சகாயராயிருப்பீராகவென்றான்.

௮ இலேவிக்கு அவன் சொன்னதாவது: உன் உத்
தமங்களும் உன் வெளிச்சங்களும், நீ மாசாவி
லே பரிட்சைபார்த்து, மேரிபாவின் தண்ணீரி
டத்தில் வாக்குவாதம்பண்ணின உன்னுடைய
௯ பரிசுத்தபுருஷன் வசமாயிருப்பதாக.—தன் தகப்
பனுக்கும் தன் தாய்க்கும் நான் உங்களைப் பா
ரேனென்று சொல்லி, தன் சகோதரனை அறியா
மல், தன் பிள்ளைகளையும் அறியாமலிருக்கிறவன்
வசமாகத்தானே; ஏனெனில் அவர்கள் உம்மு
டைய வார்த்தைகளைக் கைக்கொண்டு, உம்மு
டைய உடம்படிக்கையைக் காக்கிறவர்கள். —
௰ அவர்கள் யாக்கோபுக்கு உம்முடைய நியாயங்க
ளையும் இஸ்ரவேலுக்கு உம்முடைய நியாயப்
பிரமாணத்தையும் போதித்து, உமக்குமுன்பா
கத் தூபவர்க்கத்தையும் உமது பலிபீடத்தின்மே
லே சர்வாங்கதகனபலிகளையும் போடுவார்கள்.—
௰௧ கர்த்தாவே, அவன் சத்துவத்தை ஆசீர்வதித்து,
அவன் கைகளுடைய கிரியையின்மேலே பிரிய
மாயிரும்; அவனுக்கு விரோதமாயெழும்பி, அவ
னைப் பகைக்கிறவர்களின் இடுப்புகளை, அவர்
கள் எழுந்திருக்கமாட்டாதபடிக்கு, நொறுக்கு
மென்றான்.

௰௨ பென்யமீனுக்கு அவன் சொன்னது: கர்த்தருக்
குப் பிரியமானவர் அவனோடே சுகமாகத் தங்கி,
அவனைச் சகலநாளும் காப்பாற்றி, அவன் தோள்
களின் நடுவே வாசமாயிருப்பாரென்பதே.

௰௩ யோசேப்புக்கு அவன் சொன்னது: அவன்
தேசம், கர்த்தரால் வானத்தின் அருமையான பனி
௰௪ யினாலும், தாழவிருக்கிற ஆழத்தினாலும்,—சூரி
யனின் அருமையான பலன்களினாலும், மாதங்க
௰௫ ளின் அருமையான பலபாகங்களினாலும்,—ஆதி
பர்வதங்களின் மேல்தரமான வரவினாலும், நித்தி
யமேடுகளின் அருமையான நன்மையினாலும்,—
௰௬ நாடும் அதின் நிறைவும் கொடுக்கிற அருமை
யான கனிகளினாலும், ஆசீர்வதிக்கப்படுவதாக;
முள்செடியில் வாசமானவரின் தயை, யோசேப்
புடைய சிரசின்மேலும், தன் சகோதரரைப்பார்க்
கிலும் விசேஷித்தவனுடைய உச்சந்தலையின்
௰௭ மேலும் வருவதாக.—அவன் அலங்காரம் அவன்
தலையீற்றுக் காளையினுடையதைப்போலவும்,
அவன் கொம்புகள் காண்டாமிருகத்தின் கொம்
புகள்போலவுமிருக்கும்; அவைகளாலே சனச
தளங்களை ஏகமாய்த் தேசத்தின் கடையாந்தரங்
கள்மட்டும் முட்டித் துரத்துவான்; அவைகள்
எப்பிராயீமின் பதினாயிரங்களும் மனாசேயின்
ஆயிரங்களுமான சேனைகளென்றான்.

சேபுலோனுக்கு அவன் சொன்னதாவது: சே ௰௮
புலோனே, நீ உன் புறப்படுதலினாலும், ஈசஷா
ரே, நீ உன் கூடாரங்களினாலும், சந்தோஷமா
யிரு.—சனசதளங்களைப் பர்வதத்திற்கு வரவழைத் ௰௯
துப்போய், அங்கே நீதியின்பலிகளை இடுவார்
கள்; ஏனெனில் கடல்களின் பரிபூரணத்தையும்
மணலில் மூடி ஒளித்திருக்கிறவைகளையும் சூப்பு
வார்களென்றான்.

காத்துக்கு அவன் சொன்னதாவது: காத்துக்கு ௨௰
விஸ்தார இடமுண்டாக்குகிறவர் ஸ்தோத்திரிக்
கப்பட்டவர்; அவன் சிங்கத்தைப்போலத் தங்கி
யிருந்து புயத்தையும் உச்சந்தலையையும், கூடப்
பீறிப்போடுகிறான்.— முந்த அவன் தனக்காக ௨௧
இடம்பார்த்துக்கொண்டான்; ஏனெனில் நியா
யப்பிரமாணிக்கன் அங்கே கொடுத்த பங்கு பத்
திரமாயிருக்கின்றது; ஆனால் அவன் சனத்தின்
முன்னணியாய் வந்து, இஸ்ரவேலுடனே கூடக்
கர்த்தரின் நீதியையும் அவருடைய நியாயங்களை
யும் நடப்பிப்பானென்றான்.

தாணுக்கு அவன், தாண் பாசானிலிருந்து ௨௨
பாய்கிற சிங்கக்குட்டியைப்போல இருப்பா
னென்றான்.

நவுதலிக்கு அவன், நவுதலி இரம்மியமாய்த் ௨௩
திர்ப்தி அடைந்து, கர்த்தரின் ஆசீர்வாதத்தினால்
நிரம்பி இருப்பான், மேல்புறத்தையும் தென்பு
றத்தையும் சுதந்தரித்துக்கொள்ளென்றான்.

ஆசேருக்கு அவன் சொன்னதாவது: ஆசேர் ௨௪
பிள்ளைகளால் ஆசீர்வதிக்கப்பட்டு, தன் சகோ
தரருக்குப் பிரியமாயிருந்து, தன் காலை எண்
ணெயிலே தோய்ப்பானாக.—இரும்பும் வெண் ௨௫
கலமும் உன் பாதரட்சையின்கீழிருக்கும்; உன்
நாளிருக்கும்மட்டும் உன் பெலனும் இருக்குமெ
ன்றான்.

செம்மைமார்க்கத்தாருடைய பராபரனைப் ௨௬
போல ஒருவருமில்லை; அவர் உனக்குச் சகாய
மாய் வானங்களின்மேலும் தமது முக்கியத்திலே
ஆகாயமண்டலங்களின்மேலும் ஏறிவருகிறார்.—
அநாதி பராபரனும் தாழவிருக்கிற அவருடைய ௨௭
நித்திய புயங்களும் உனக்கடைக்கலம்; அவர்
உனக்குமுன்பாகச் சத்துருவைத் துரத்தி அழி
என்பார். — இஸ்ரவேல் சுகமும் தனிவாசமு ௨௮
மாய்க் குடியிருக்கும்; யாக்கோபின் ஊற்றுத்
தானியமும் திராட்சப்பழஇரசமுமுள்ள தேசத்
திலிருக்கும்; அவருடைய வானமும் பனியைப்
பெய்யப்பண்ணும்.—இஸ்ரவேலே, உன் சகா ௨௯
யத்தின் கேடயமும் உன் முக்கியத்தின் பட்
டையமுமாகிய கர்த்தரால் இரட்சிக்கப்பட்ட
சனமே, நீ பாக்கியமான சனம்; உன்னைப்போ
லிருக்கிறவர்கள் யார்? உன் சத்துருக்கள் உனக்
கிச்சகம்பேசி அடங்குவார்கள்; நீயோவெ
னில் அவர்கள் மேடுகளின்மேல் மிதிப்பாயென்
றான்.

## ௩௪. அதிகாரம்.

*௧. மோசே நேபோ பர்வதத்திலிருந்து தேசத்தைப் பார்த்ததும், ௫. அவ்விடத்தில் அவன் மரித்ததும், ௬. அவன் அடக்கம்பண்ணப்பட்டதும், ௭. அவனுடைய வயதும், ௮. அவனைக்குறித்து முப்பதுநாள் துக்கப்பட்டதும், ௯. யோசுவா அவனுக்குப் பதிலாக ஏற்பட்டதும், ௰. மோசேயைக் குறித்த புகழ்ச்சியும்.*

௧ பிற்பாடு மோசே மோவாபின் சமனானவெளி
களிலிருந்து எரிகோவுக்கெதிரான நேபோ பர்
வதத்திலிருக்கும் பிஸ்கா என்ற கொடுமுடியில்
ஏறினான்; அப்பொழுது கர்த்தர் அவனுக்கு, தா
ண்மட்டும் போகிற கிலேயாத் தேசமனைத்தை
௨ யும்,—நப்தலி தேசமனைத்தையும், எப்பிராயீம்
மனாசேயென்றவர்கள் தேசத்தையும், கடைசிச்
சமுத்திரம்மட்டும் போகிற யூதா தேசமனைத்தை
௩ யும்,-மேற்குப்புறத்தையும், பேரீச்சுகளின் ஊர்
முதல்கொண்டு சோவார்மட்டும் போகிற எரி
கோ பள்ளத்தாக்கென்ற சமனான பூமியையும் கா
௪ ண்பித்து,—அவனுடனே, நாம் ஆபிரகாமுக்கும்
ஈசாக்குக்கும் யாக்கோபுக்கும் உங்கள் வித்திற்
குக் கொடுப்போமென்று ஆணையிட்ட தேசம்
இதுதான்; உன் கண்களுக்கு அதைக் காண்பித்
தோம்; ஆனால் நீ அவ்விடத்திற்குக் கடந்துபோ
வதில்லை என்றார்.
௫ அப்படியே மோவாப்தேசமான அவ்விடத்
திலே கர்த்தரின் ஊழியக்காரனாகிய மோசே கர்த்
௬ தருடைய வார்த்தையின்படியே மரித்தான்.—அ
வர் அவனை மோவாப்தேசத்திலே பெத்பேயோ
ருக்கு எதிரான பள்ளத்தாக்கிலே அடக்கம்பண்
ணினார்; இந்நாள்வரைக்கும் ஒருத்தனும் அவன்
பிரேதக்குழியை அறியான்.—மோசே மரிக்கிற ௭
பொழுது, நூற்றிருபது வயதாயிருந்தான்; அ
வன் கண் இருளடையாமலும், அவன் பெலன்
வாங்காமலும் இருந்தன.—இஸ்ரவேல் புத்திரர் ௮
மோவாபின் சமனானவெளிகளில் மோசேக்காக
முப்பதுநாள் அழுதுகொண்டிருந்தார்கள்; மோ
சேக்காகப் புலம்புகிற அழுகையின் நாள்கள்
முடிந்தன.
ஆனால் மோசே தன் கைகளை நூனின் குமார ௯
னாகிய யோசுவாவின்மேல் வைத்ததினாலே அ
வன் ஞானத்தின் ஆவியினாலே நிறையப்பட்
டான்; இஸ்ரவேல் புத்திரர் அவனுக்குக் கீழ்ப்
படிந்து, கர்த்தர் மோசேக்குக் கற்பித்தபடியே
செய்தார்கள்.
கர்த்தர் முகமுகமாய் மோசே அறிந்ததையும், ௰
கர்த்தர் அவனை எகிப்துதேசத்திலே பார்வோ
னுக்கும், அவனுடைய எல்லா ஊழியக்காரருக்
கும், அவனுடைய தேசம் அனைத்திற்கும் செய்ய
அனுப்பின சகல அடையாளங்களையும், அற்
புதங்களையும்,-அவன் இஸ்ரவேலெல்லாம் பார்க் ௰௧
கச் செய்த எல்லா வல்லமையான கிரியையை
யும், சகல பெரிய பயங்கரத்தையும் பார்த்தால்,—
மோசேயைப்போலொத்த தீர்க்கதரிசி இஸ்ரவே ௰௨
லிலே அப்புறம் எழும்பினதில்லை.

# JOSHUA.

# யோசுவாவின் புஸ்தகம்.

## ௧. அதிகாரம்.

*௧. கர்த்தர் மோசேக்குப்பதிலாக யோசுவாவை வைத்தது. ௩. கொடுக்கப்பட்ட தேசத்தின் எல்லைகள். ௫. ௯. பராபரன் யோசுவாவுக்கு உதவியின் வாக்குத்தத்தம்செய்ததும். ௮. அவர் அவனுக்குக் கற்பித்ததும், ௰. அவன் சனங்களை யோர்தான் நதியைக் கடக்க ஆயத்தப்படுத்தினதும், ௰௨. இரண்டரைக்கோத்திரத்தார் மோசேக்குச் செய்த வாக்குத்தத்தத்தை நினைப்பூட்டியதும், ௰௬. யோசுவாவுக்கு அவர்கள் கீழ்ப்படிதலின் வாக்குத்தத்தம்செய்ததும்.*

௧ கர்த்தரின் ஊழியக்காரனாகிய மோசே மரித்த
பிற்பாடு சம்பவித்ததேதெனில், கர்த்தர் மோசே
யின் வேலைக்காரனான நூனின் குமாரன் யோசு
௨ வாவோடே சொன்னதாவது:-நம்முடைய ஊழி
யக்காரனாகிய மோசே மரித்தான்; இப்பொழு
தும் நீயும் இந்த எல்லாச் சனமுமாய் எழும்பி,
இந்த யோர்தானைக் கடந்து, இஸ்ரவேல் புத்திர
ருக்கு நாம் கொடுக்கும் தேசத்துக்குப் போங்
௩ கள்.—உங்கள் காலடி மிதிக்கும் எவ்விடத்தை
யும் நாம் மோசேக்குச் சொன்னபடி உங்களுக்
௪ குக் கொடுத்தோம்.—வனாந்தரமும் அந்த லீப
னோனும் முதல்கொண்டு ஐப்பிராத்தே நதியான
பெரியநதிமட்டுமுள்ள எத்தியரின் தேசமனைத்
தும், சூரியன் அஸ்தமிக்கிற திசையான பெரிய
சமுத்திரம்மட்டும் இருக்கிறதும், உங்கள் எல்லை
௫ யாயிருக்கும். — நீ உயிரோடிருக்கும் நாளெல்
லாம் ஒருவனும் உனக்குமுன்பாக நிற்பதில்லை;
நாம் மோசேயோடிருந்ததுபோல, உன்னோடும்
இருப்போம்;நாம் உன்னைத் தளரவிடுவதுமில்லை;
௬ உன்னைக் கைவிடுவதுமில்லை.—பலத்துத் திடம
னதாயிரு; ஏனெனில் இந்தச் சனத்திற்கு நாம்
அவர்கள் பிதாக்களுக்குக் கொடுப்போமென்று
௭ ஆணையிட்ட தேசத்தை நீ பங்கிடுவாய்.—நம்மு
டைய ஊழியக்காரனாகிய மோசே உனக்குக் கற்
பித்த நியாயப்பிரமாணத்தின்படி எல்லாம் செய்
யக் கவனமாயிருக்கமாத்திரம் மிகவும் பலத்துத்
திடமனதாயிரு; நீ போகிற இடத்திலெல்லாம்
புத்திமானாய் நடந்துகொள்ளும்படிக்கு, அதை
விட்டு வலது இடதுபுறத்திற்கு விலகாதிருப்பா
௮ யாக. — இந்த நியாயப்பிரமாணத்தின் புஸ்தகம்
உன் வாயை விட்டுப் பிரியாதிருப்பதாக; இதில்
எழுதியிருக்கின்றவைகளின்படியெல்லாம் நீ
செய்யக் கவனமாயிருக்கும்படிக்கு, இரவும்பக
லும் அதை யோசித்துக்கொண்டிருப்பாயாக;
ஏனெனில் அப்போது நீ உன் வழியை உனக்கு
வாய்க்கப்பண்ணி, அப்போது புத்திமானாய்
௯ நடந்துகொள்ளுவாய்.—பலத்துத் திடமனதாயி
ருவென்று நாம் உனக்குக் கற்பித்ததில்லையோ?
திகையாமலும் கலங்காமலும் இரு; ஏனெனில்
நீ போகிற இடத்திலெல்லாம் உன் பராபரனாகிய
கர்த்தர் உன்னோடிருக்கிறாரென்றார்.

அப்பொழுது யோசுவா சனத்தின் ஆதிக்கக் ௰
காரருக்குக் கற்பித்துச் சொன்னதாவது:—நீங் ௰௧
கள் பாளயத்தில் நடுவே நடந்துபோய், சனத்துக்
குக் கற்பிக்கவேண்டியதேதெனில், தவசத்தை
உங்களுக்கு ஆயத்தம்பண்ணுங்கள்; ஏனெனில்
உங்கள் பராபரனாகிய கர்த்தர் உங்களுக்குச் சுதந்
தரிக்கக் கொடுக்கும் தேசத்தை நீங்கள் சுதந்தரிக்
கப் போகும்படிக்கு, இன்னம் மூன்றுநாளைக்
குள்ளே இந்த யோர்தானைக் கடப்பீர்களென்று
சொல்லி, — ரூபேனியருக்கும் காதியருக்கும் ௰௨
மனாசேயின் பாதிக் கோத்திரத்தாருக்கும் சொன்
னதாவது:

கர்த்தரின் ஊழியக்காரனாகிய மோசே உங்க ௰௩
ளுக்குக் கற்பித்த வார்த்தையை நினைத்துக்கொள்
ளுங்கள்; உங்கள் பராபரனாகிய கர்த்தர் உங்களை
இளைப்பாறப்பண்ணி, உங்களுக்கு இந்தத் தே
சத்தைக் கொடுத்தார். — உங்கள் பெண்சாதிக ௰௪
ளும் பிள்ளைகளும் மிருகஜீவன்களும் மோசே
உங்களுக்கு யோர்தானுக்கு இப்பாலே கொடுத்த
தேசத்தில் இருக்கட்டும், உங்களிலோவெனில்
பராக்கிரமசாலிகளெல்லாம் உங்கள் சகோதர
ருக்குமுன்பாக அணியணியாய் நடந்துபோய்,-
கர்த்தர் உங்களைப்போல உங்கள் சகோதரரையும் ௰௫
இளைப்பாறப்பண்ணி, அவர்களும் உங்கள் பரா
பரனாகிய கர்த்தர் தங்களுக்குக் கொடுக்கும் தே
சத்தைச் சுதந்தரித்துக்கொள்ளுமட்டும், அவர்க
ளுக்குச் சகாயம்பண்ணக்கடவீர்கள்; பிற்பாடு
நீங்கள் கர்த்தரின் ஊழியக்காரனாகிய மோசே
உங்களுக்கு யோர்தானுக்கு இப்பாலே சூரியன்
உதிக்கும் திசைக்கு நேராகக் கொடுத்த உங்கள்
சுதந்தரமான தேசத்துக்குத் திரும்பி, அதைச்
சுதந்தரித்துக்கொண்டிருப்பீர்களாகவென்றார்.

அப்பொழுது அவர்கள் யோசுவாவுக்குப் பிர ௰௬
தியுத்தாரமாகச் சொன்னதாவது:நீர் எங்களுக்குக்
கற்பித்ததையெல்லாம் செய்து, நீர் எங்களை அ
னுப்பும் இடமெல்லாம் போவோம்.—நாங்கள் ௰௭
மோசேக்குக் கீழ்ப்படிந்தபடியெல்லாம் உமக்
கும்கீழ்ப்படிந்திருப்போம்;உம்முடைய பராபர
னாகிய கர்த்தர்மாத்திரம் மோசேயோடிருந்தது
போல,உம்மோடும் இருப்பாராக.—நீர் எங்களுக் ௰௮
குக் கற்பிக்கும் சகல காரியத்திலும் உம்முடைய
சொல் கேளாமல், உம்முடைய வாக்குக்கு முரட்
டாட்டம்பண்ணுபவனெல்லாம் கொலைசெய்

யப்படக்கடவான்; பலத்துத் திடமனதாய்மாத்
திரம் இருமென்றார்கள்.

## ௨. அதிகாரம்.

௧. சித்தீமிலிருந்துவந்த இரண்டு வேவுகாரரை இராகாப் மறைத்தது. ௮. அவளுக்கும், அவர்களுக்கும் உடம்படிக்கை, ௨௧. அவர்கள் திரும்பி வந்ததும், சொன்ன சங்கதியும்.

௧ நூனின் குமாரனாகிய யோசுவா சித்தீமிலிருந்து
வேவாள்களாகிய இரண்டு மனுஷரை இரகசிய
மாய் அனுப்பி, நீங்கள் போய்த் தேசத்தையும் எ
ரிகோவையும் பார்த்து வாருங்களென்றான், அ
வர்கள் போய், இராகாப்பென்று பேர்கொண்ட
வேசியாயிருந்த ஓர் ஸ்திரீயின் வீட்டுக்குள் பிர
வேசித்து, அங்கே தங்கினார்கள்.
௨ ஆனால் எரிகோவின் இராசாவுக்கு, இதோ
இஸ்ரவேல் புத்திரரில் சில மனுஷர் தேசத்தை
உளவுபார்க்க, இந்த இராத்திரிவேளையிலே இங்
௩ கே வந்தார்களென்று சொல்லப்பட்டது.—அப்
போது எரிகோவின் இராசா இராகாப்பண்டைக்
கு மனுஷரை அனுப்பி, உன்னண்டைக்குவந்
து, உன் வீட்டுக்குள் பிரவேசித்த மனுஷரை
வெளியே வரவிடு; ஏனெனில் தேசத்தையெல்
லாம் உளவுபார்க்க வந்தார்களென்று சொல்லச்
சொன்னான்.
௪ அந்த ஸ்திரீயோவெனில் அவ்விரண்டு மனு
ஷரையும் சேர்த்து, அவர்களை ஒளித்துவைத்துச்
சொன்னதாவது: மெய்தான் என்னண்டையில்
மனுஷர் வந்திருந்தார்கள்; ஆனால் அவர்கள் எவ்
௫ விடத்தாரென்று அறியாதிருந்தேன்.—வாசலைச்
சாத்தும் இருட்டானவேளையிலேயென்றால்,
அந்த மனுஷர் புறப்பட்டுப்போனார்கள்; அவர்
கள் எங்கே போனார்களென்று அறியேன்; அவர்
களைச் சீக்கிரமாய்ப் பின்தொடருங்கள்; ஏனென்
றால் நீங்கள் அவர்களைச் சேர்ந்துபிடிக்கலா
௬ மென்றாள்.—அவளோவென்றால் இவர்களை வீட்
டின்மேல் ஏறப்பண்ணி, வீட்டின்மேலே பரப்
பப்பட்ட சணல் கழிகளால் மறைத்துவைத்
௭ தாள்.—அந்த மனுஷர் யோர்தானுக்குப் போகிற
வழியில் ஆற்றுத்துறைகள் மட்டும் இவர்களைப்
பின்தொடர்ந்துபோனார்கள்; இவர்களைப் பின்
தொடருகிறவர்கள் புறப்பட்ட பிற்பாடு வாசல்
பூட்டிவிடப்பட்டது.
௮ ஆனால் இந்த மனுஷர் படுத்துக்கொள்ளாததற்
குமுன்னே அவள் வீட்டின்மேல் இவர்களண்
௯ டைக்கு ஏறிப்போய்,—இவர்களோடே சொன்
னதாவது: கர்த்தர் உங்களுக்குத் தேசத்தை ஒப்
புக்கொடுத்தாரென்றும், உங்கள் பயம் எங்கள்
மேல் இறங்கிற்றென்றும், உங்களுக்குமுன்பா
கத் தேசத்தின் குடிகளெல்லாம் மூனையற்றுப்
௰ போனார்களென்றும் அறிவேன்.—ஏனெனில் நீங்
கள் எகிப்திலிருந்து புறப்படுகையில், கர்த்தர் உங்
களுக்குமுன்பாகநாணல்சமுத்திரத்தின் தண்ணீ
ரை வற்றிப்போகப்பண்ணினதையும், நீங்கள்
சங்காரம்பண்ணின யோர்தானுக்கப்பாலிருந்த
எமோரியரின் இரண்டு இராசாக்களாகிய சீகோ
னுக்கும் ஓகுக்கும் செய்ததையும் கேட்டோம்.—
கேட்டபோது எங்கள் இருதயம் கரைந்துபோ ௰௧
யிற்று; உங்களுக்குமுன்பாக ஒருவருக்குள்ளும்
இனி மூனையில்லை; ஏனெனில் உங்கள் பராபர
னாகிய கர்த்தரே உயர வானத்திலும் கீழே பூமியி
லும் பராபரனானவர்.—இப்போதும் நான் உங்க ௰௨
ளுக்குத் தயவுசெய்தபடியினாலே, நீங்களும் என்
தகப்பன் வீட்டுக்குத் தயவுசெய்வோமென்று
கர்த்தர்பேரிலே எனக்கு ஆணை சத்தியம்பண்
ணி,—நீங்கள் என் தகப்பனையும் என் தாயை ௰௩
யும் என் சகோதரரையும் என் சகோதரிகளையும்
அவர்களுக்கு இருக்கிற எல்லாவற்றையும் உயி
ரோடேவைத்து, எங்கள் சீவனைச் சாவுக்குத்
தப்புவிப்பதற்கு, எனக்கு நிச்சயமான அடை
யாளத்தைக் கொடுங்களென்றாள்.
அப்போது அந்த மனுஷர் அவளுடனே, நீங் ௰௪
கள் இந்த எங்கள் காரியத்தை வெளிப்படுத்தாதி
ருந்தால், அப்போது கர்த்தர் எங்களுக்குத் தேசத்
தைக் கொடுக்கையில், உனக்குத் தயையையும்
உண்மையையும் செய்வோமென்பதற்கு, எங்
கள் சீவனை உங்களுக்காக ஈடுவைக்கிறோமென்
றார்கள்.—அப்போது அவர்களைக் கயிற்றினாலே ௰௫
பலகணிவழியாய் இறக்கிவிட்டாள்; ஏனெ
னில் அவள் வீடு அலங்கத்தின் மதிளிலிருந்தது;
அலங்கத்திலே அவள் குடியிருந்தாள்.—அவள் ௰௬
அவர்களுடனே, பின்தொடருகிறவர்கள் உங்க
ளுக்கு நேரிடாதபடிக்கு, நீங்கள் பர்வதத்திலே
போய், அவர்கள் திரும்பி வரும்மட்டும் அங்கே
மூன்றுநாள் ஒளித்திருந்து, பிற்பாடு உங்கள்
வழியே போங்களென்றாள்.
அப்போது அந்த மனுஷர் அவளோடே சொ ௰௭
ன்னதாவது: இதோ நாங்கள் தேசத்துக்குள் பிர
வேசிக்கையில், நீ இந்தச் சிவப்புநூல் கயிற்றை
நீ எங்களை இறக்கிவிட்ட பலகணியிலேகட்டி,
உன் தகப்பனையும்உன் தாயையும் உன்சகோதரர்
களையும் உன் தகப்பன் வீட்டாரனைவரையும்
உன்னண்டை வீட்டிலே சேர்த்துக்கொண்டி
ருக்கக்கடவாய். — இல்லாவிட்டால் நீ எங்கள் ௰௮
கையில் வாங்கிக்கொண்ட இந்த உன்னுடைய
ஆணைக்கு நீங்கலாயிருப்போம்.—எவனாகிலும் ௰௯
உன் வீட்டுவாசல்களிலிருந்து வெளியே புறப்
பட்டால், அவனுடைய இரத்தப்பழி அவன்
தலையின்மேல் இருப்பதாக; நாங்களோவெனில்
குற்றமற்றவர்கள்; உன்னோடே வீட்டிலிருக்
கிற எவன்மேலாகிலும் கைபோடப்பட்டதேயா
கில், அவனுடைய இரத்தப்பழி எங்கள் தலையின்
மேல் இருப்பதாக.— நீ இந்த எங்கள் காரியத்தை ௨௰
வெளிப்படுத்தினாயேயானால், நீ எங்கள்கையில்
வாங்கிக்கொண்ட உன்னுடைய ஆணைக்கு நீங்
கலாயிருப்போமென்றார்கள். — அதற்கு அவள் ௨௧
உங்கள் வார்த்தைகளின்படியே ஆகக்கடவதெ
ன்று சொல்லி, அவர்களை அனுப்பிவிட்டாள்;
அவர்கள் போய்விட்டார்கள்; பிற்பாடு அவள்
அந்தச் சிவப்புக் கயிற்றைப் பலகணியிலே கட்
டிவைத்தாள்.—அவர்கள் போய், பர்வதத்திலே ௨௨
சேர்ந்து, பின்தொடர்ந்தவர்கள் திரும்பிவரும்

மட்டும், மூன்றுநாள் அங்கே தரித்தார்கள்; பின்
தொடருகிறவர்கள் வழியிலெல்லாம் அவர்க
ளைத் தேடியும் காணாதேபோனார்கள்.
௨௩ அந்த இரண்டு மனுஷர் திரும்பி, பர்வதத்திலி
ருந்து இறங்கி, ஆற்றைக் கடந்து, நூனின் குமா
ரனாகிய யோசுவாவண்டைக்கு வந்து, தங்க
ளுக்குச் சம்பவித்த யாவையும் அவனுக்கு விவ
௨௪ ரித்து, — கர்த்தர் தேசத்தையெல்லாம் எங்கள்
கையில் ஒப்புக்கொடுத்தார்; தேசத்தின் குடிக
ளெல்லாம் எங்களுக்குமுன்பாக முனையற்றுப்
போனார்களென்று அவனோடே சொன்னார்கள்.

## ௩. அதிகாரம்.

௧. யோசுவா யோர்தான் நதியினிடத்துக்கு வந்தது. ௨. அதிகாரஸ்தர்கள் சனங்களுக்கு நதியைக் கடப்பதைக்குறித்துக் கற்பித்தது. ௭. கர்த்தர் யோசுவாவைத் தைரியப்படுத்தினது. ௯. யோசுவா சனங்களைத் தைரியப்படுத்தினது. ௰௪. யோர்தான் நதியின் தண்ணீர் பிரிந்தது.

௧ யோசுவா அதிகாலமே எழுந்திருந்தபின்பு, அ
வனும் இஸ்ரவேல் புத்திரர் அனைவரும் சித்தீமி
லிருந்து பயணம்பண்ணி யோர்தான்மட்டும் வந்
து, அதைக் கடவாததற்குமுன் அங்கே இராத்தங்
௨ கினார்கள்.—மூன்றுநாள் சென்றபோது, ஆதிக்கக்
௩ காரர் பாளயத்தில் நடுவே நடந்துபோய்,—சனத்
துக்குக் கற்பித்ததாவது: நீங்கள் உங்கள் பராபர
னாகிய கர்த்தருடைய உடம்படிக்கையின் பெட்
டியையும் அதைச் சுமக்கிற லேவியராகிய ஆசாரி
யர்களையும் காண்கையில், நீங்களும் உங்களிடத்
தைவிட்டுப் பயணப்பட்டு, அதைப் பின்செல்
௪ லுங்கள்.— ஆனால் உங்களுக்கும் அதற்கும் இரண்
டாயிரம் முழத்தூரமான இடம் விட்டிருக்கக்கட
வது; நீங்கள் நடக்கப்போகிற வழியை அறியும்
படிக்கு, அதினண்டையில் கிட்டாதிருப்பீர்க
ளாக; ஏனென்றால் நீங்கள் முதல் ஒருக்காலும் அ
ந்த வழியாய்க் கடந்துபோனதில்லை என்றார்கள்.
௫ யோசுவா சனத்துடனே, உங்களைப் பரி
சுத்தம்பண்ணிக்கொள்ளுங்கள்; ஏனெனில் நா
ளைக் கர்த்தர் உங்கள் நடுவிலே அற்புதங்களைச்
௬ செய்வாரென்றார்.—ஆசாரியர்களோடே யோசு
வா, நீங்கள் உடம்படிக்கையின் பெட்டியை
எடுத்துக்கொண்டு, சனத்தின்முன்னே புறப்பட்
டுப் போங்களென்றான்; அப்படியே உடம்
படிக்கையின் பெட்டியை எடுத்துக்கொண்டு,
சனத்தின்முன்னே போனார்கள்.
௭ கர்த்தர் யோசுவாவோடே சொன்னதாவது:
நாம் மோசேயோடிருந்ததுபோல, உன்னோடி
ருக்கிறதை இஸ்ரவேலரெல்லாம் அறியும்படிக்
கு, இன்று உன்னை அவர்கள் கண்களுக்குமுன்
௮ பாகப் பெரியவனாக்கத் துவக்குவோம்.—உடம்
படிக்கையின் பெட்டியைச் சுமக்கிற ஆசாரி
யர்களுக்கு, நீங்கள் யோர்தானுடைய தண்ணீ
ரின் ஓரம்மட்டும் வந்திருக்கையில், யோர்தா
னில் நிற்கக்கடவீர்களென்று நீ கற்பிப்பாயாக
வென்றார்.
௯ யோசுவா இஸ்ரவேல் புத்திரருடனே, நீங்
கள் இங்கே சேர்ந்து, உங்கள் பராபரனாகிய கர்த்
தருடைய வார்த்தைகளைக் கேளுங்களென்று
சொல்லி,—பிறகு சொன்னதாவது: சீவனுள்ள ௰
பராபரன் உங்கள் நடுவே இருக்கிறதையும், அ
வர் கானானியரையும், ஏத்தியரையும், ஏவியரை
யும், பேரிசியரையும், கிர்காசியரையும், எமோரிய
ரையும், எபூசியரையும் உங்களுக்குமுன்பாகத்
துரத்தவே துரத்துவதையும், நீங்கள் அறியும் அ
டையாளமாவது: — இதோ சர்வபூமிக்கும் ஆண் ௰௧
டவருடைய உடம்படிக்கையின் பெட்டி உங்க
ளுக்குமுன்னே யோர்தானுக்குள்போகின்றது.—
இப்பொழுதும் இஸ்ரவேல் கோத்திரங்களிலே ௰௨
பன்னிரண்டுபேரை ஒவ்வொரு கோத்திரத்
துக்கு ஒவ்வொருவராகப் பிரித்தெடுங்கள்.—
சம்பவிப்பதேதென்றால், சர்வ பூமிக்கும் ஆண் ௰௩
டவராகிய கர்த்தரின் பெட்டியைச் சுமக்கிற
ஆசாரியர்களின் உள்ளங்கால்கள் யோர்தானின்
தண்ணீரிலே தரிகொள்ளுகையில், மேலேயி
ருந்து ஓடிவருகிற யோர்தானின் தண்ணீர் ஓடா
மல் ஒரு குவியலாக நிற்குமென்றான்.
சனம் யோர்தானைக் கடக்கத் தங்கள் கூடா ௰௪
ரங்களிலிருந்து புறப்பட்டார்கள்; ஆசாரியர்கள்
உடம்படிக்கையின் பெட்டியைச் சனத்துக்கு
முன்னே சுமந்துபோய், — யோர்தான்மட்டும் ௰௫
வந்தார்கள்; யோர்தானோவெனில் அறுப்புநாள்
களிலெல்லாம் தன் கரைகளின்மேலெங்கும்
புரண்டிருந்தது; அப்போது சம்பவித்ததேதென்
றால், பெட்டியைச் சுமக்கிற ஆசாரியர்களின்
கால்கள் தண்ணீரின் ஓரத்தில் வைக்கப்படுகை
யில்,—மேலேயிருந்து ஓடிவருகிற தண்ணீர் ௰௬
நின்றும் சற்தானுக்கடுத்த ஆதாம் ஊர் அத்தனைதூ
ரம்மட்டும் ஒரு குவியலாகக் குவிந்தது; உப்புக்
கடலென்ற சமனான வெளியின் கடலுக்கு ஓடி
வருகிற தண்ணீரோவென்றால், பிரிந்து ஓடிப்
போயிற்று; அப்பொழுது சனம் எரிகோவுக்கு
எதிரே கடந்தது.—கர்த்தருடைய உடம்படிக் ௰௭
கையின் பெட்டியைச் சுமக்கிற ஆசாரியர்கள்
யோர்தானின் நடுவிலே தண்ணீரில்லாத தரை
யில் உறுதியாய் நின்றார்கள்; அப்படியே சகல
சனமும் யோர்தானைக் கடந்து தீரும்மட்டும், இஸ்
ரவேலரெல்லாம் தண்ணீரற்ற தரைவழியாய்க்
கடந்து போனார்கள்.

## ௪. அதிகாரம்.

௧. யோர்தான் நதியிலிருந்து ஞாபகத்துக்காகப் பன்னிரண்டு கல்லுகளை எடுத்துக்கொள்ளப் பன்னிரண்டுபேரை நியமித்தது. ௯. வேறே பன்னிரண்டு கல்லுகள் யோர்தான் நதியின் மத்தியில் நாட்டப்பட்டது. ௰. ௰௯. சனங்கள் நதியைக் கடந்தது. ௰௪. பராபரன் யோசுவாவைக் கனப்படுத்தினது. ௨௰. பன்னிரண்டு கல்லுகளையும் கில்காலிலே நாட்டினது.

சனமெல்லாம் யோர்தானைக்கடந்து தீருகையில், ௧
கர்த்தர் யோசுவாவோடே சொன்னதாவது: —
நீங்கள் சனத்தில் பன்னிரண்டுபேரை ஒவ்வொரு ௨
கோத்திரத்திற்கு ஒவ்வொருவராக எடுத்து,—இங் ௩
கே யோர்தானின் நடுவிலே ஆசாரியர்களின்
கால்கள் நிலையாய் நிற்கிற இடத்திலே பன்னி
ரண்டு கல்லுகளை எடுத்துக்கொண்டு, அவைகளை
உங்களோடே கூட அக்கரைப்படுத்தி, நீங்கள்
இன்றிராவில் தங்கும் தானத்திலே அவைகளை

வையுங்களென்று அவர்களுக்குக் கற்பியுங்களெ
௪ ன்றார்.—அப்போது யோசுவா இஸரவேல் புத்தி
ரரில் ஒவ்வொரு கோத்திரத்திற்கு ஒவ்வொருவ
ராக ஆயத்தமாய் வைத்திருந்த பன்னிரண்டுபே
௫ ரை அழைத்து,— அவர்களோடே சொன்னதா
வது: நீங்கள் யோர்தானின் நடுமையத்தில் உங்
கள் பராபரனாகிய கர்த்தரின் பெட்டிக்குமுன்
பாகப் போய், இஸ்ரவேல் புத்திரருடைய கோத்
திரங்களின் இலக்கத்திற்குச் சரியாக உங்களில்
ஒவ்வொருவன் ஒவ்வொரு கல்லைத் தன் தோ
ளின்மேல் எடுத்துக்கொண்டு போங்கள், அது
உங்களுக்குள்ளே ஒரு அடையாளமாயிருக்கும்
௬ படிக்குத்தானே.—இந்தக் கல்லுகள் உங்களுக்
கேதென்று நாளை உங்கள் பிள்ளைகள் உங்களைக்
௭ கேட்கும்போது,— நீங்கள் அவர்களுடனே,
யோர்தானின் தண்ணீர் கர்த்தருடைய உடம்ப
டிக்கையின் பெட்டிக்குமுன்பாகப் பிரிந்துபோ
னதினாலே அவைகளிருக்கின்றன; அது யோர்
தானைக் கடக்கையில், யோர்தானின் தண்ணீர்
பிரிந்துபோயிற்று; ஆகையால் இந்தக் கல்லுகள்
இஸ்ரவேல் புத்திரருக்கு என்றைக்கும் நினைக்
கும் அடையாளம் என்பீர்களாக என்றான்.
௮ யோசுவா கற்பித்தபடி இஸ்ரவேல் புத்திரர்
செய்து, கர்த்தர் யோசுவாவோடே சொன்னப
டியே, இஸ்ரவேல் புத்திரருடைய கோத்திரங்க
ளின் இலக்கத்திற்குச் சரியாகப் பன்னிரண்டு
கல்லுகளை யோர்தானின் நடுவில் எடுத்து, அவை
களைத் தங்களோடேகூட அக்கரைக்குக் கொண்
௯ டுபோய், தங்குமிடத்திலே வைத்தார்கள்.-யோர்
தானின் நடுவிலும் உடம்படிக்கையின் பெட்டி
யைச் சுமந்த ஆசாரியன் கால்கள் நின்ற இடத்
திலே யோசுவா பன்னிரண்டு கல்லுகளை நாட்
டினான்; அவைகள் இந்நாள்மட்டும் அங்கே
இருக்கும்.
௰ மோசே யோசுவாவுக்குக் கற்பித்திருந்த எல்லா
வற்றின்படியும் சனத்துக்குச் சொல்ல, கர்த்தர்
யோசுவாவுக்குக் கட்டளையிட்டவையெல்லாம்
செய்தாகும்மட்டும், பெட்டியைச் சுமக்கிற ஆசா
ரியர் யோர்தானின் நடுவே நின்றார்கள்; சனம்
௰௧ தீவிரித்துக் கடந்துபோயிற்று. — சனமெல்லாம்
கடந்து தீர்ந்தபிற்பாடு, கர்த்தருடைய பெட்டி
யும் கடந்தது; ஆசாரியர் சனத்துக்குமுன்னே
௰௨ நடந்தார்கள்.—ரூபேன் புத்திரரும் காத் புத்திர
ரும் மனாசேயின் பாதிக்கோத்திரத்தாரும் மோசே
தங்களோடே சொன்னபடி அணியணியாய் இஸ்
ரவேல் புத்திரருக்குமுன்பாக நடந்தார்கள்.—
௰௩ ஏறக்குறைய நாற்பதினாயிரம்பேர் ஆயுதப்பாடா
னவர்களாய், கர்த்தருடைய முகத்துக்குமுன்
பாக யுத்தம்பண்ண, எரிகோவின் சமனானவெ
ளிகளுக்கு நடந்துபோனார்கள்.
௰௪ அந்நாளிலே கர்த்தர் யோசுவாவை இஸ்ர
வேல் அனைத்தின் கண்களுக்குமுன்பாகப் பெ
ரியவனாக்கினார்; அவர்கள் மோசேக்குப் பயந்
ததுபோல, அவனுக்கு அவன் உயிரோடிருந்த
நாள் எல்லாம் பயந்திருந்தார்கள்.

கர்த்தர் யோசுவாவுடனே,-யோர்தானிலி ௰௫, ௰௬
ருந்து கரையேறச்சாட்சியின் பெட்டியைச் சுமக்
கிற ஆசாரியருக்குக் கற்பியென்று சொன்ன
போது,—யோசுவா அவர்களுக்கு, யோர்தானி ௰௭
லிருந்து கரையேறி வாருங்களென்று கற்பித்
தான்.—அப்போது சம்பவித்ததேதெனில், கர்த் ௰௮
தருடைய உடம்படிக்கையின் பெட்டியைச்
சுமக்கிற ஆசாரியர் யோர்தான் நடுவிலிருந்து
ஏறி, அவர்கள் உள்ளங்கால்கள் கரையில் ஊன்
றிக்கொள்ளுகையில், யோர்தானின் தண்ணீர்
கள் தங்களிடத்துக்குத் திரும்பி, முன்போல, தங்
கள் எல்லாக்கரைகளிலும் புரண்டது.
இந்தப் பிரகாரமாகச் சனம் முதல்மாதம் பத் ௰௯
தாம்தேதியிலே, யோர்தானிலிருந்து கரையேறி,
எரிகோவுக்குக் கீழெல்லையான கில்காலிலே
பாளயமிறங்கினார்கள்.—அவர்கள் யோர்தானில் ௨௰
எடுத்துக்கொண்டுவந்த அந்தப் பன்னிரண்டு கல்
லுகளை யோசுவா கில்காலிலே நாட்டி,— இஸ்ர ௨௰௧
வேல் புத்திரரோடே சொன்னதாவது: இந்தக்
கல்லுகள் ஏதென்று நாளை உங்கள் பிள்ளைகள்
தங்கள் பிதாக்களாகிய உங்களைக் கேட்கும்போ
து,—நீங்கள் உங்கள் பிள்ளைகளுக்கு அறிவிக்க ௨௰௨
வேண்டியதேதெனில், இஸ்ரவேலர் கால் நனை
யாமல் இந்த யோர்தானைக் கடந்துவந்தது. —
ஏனென்றால் பூமியின் சனசதளங்களெல்லாம் ௨௰௩
கர்த்தருடைய கரத்தை அது பலத்ததென்று அறி
யும்படிக்கும், நீங்கள் சகலநாளும் உங்கள் பரா
பரனாகிய கர்த்தருக்குப் பயப்படும்படிக்கும்,—
உங்கள் பராபரனாகிய கர்த்தர் நாணல்சமுத்திரத் ௨௰௪
தின் தண்ணீரை எங்களுக்குமுன்பாக நாங்கள்
கடந்து தீருமட்டும் அற்றுப்போகப்பண்ணின
துபோல, உங்கள் பராபரனாகிய கர்த்தர் யோர்
தானின் தண்ணீருக்கும் செய்து, அதை உங்க
ளுக்குமுன்பாக நீங்கள் கடந்துவந்து தீருமட்
டும், அற்றுப்போகப்பண்ணினாரென்று அறிவிக்
கக்கடவீர்களென்றான்.

## ௫. அதிகாரம்.

௧. கானானியர் பயப்பட்டது. ௨. யோசுவா மறுபடியும் விருத்தசேதனத்தைக் கற்பித்தது ௰. கில்காலில் பஸ்காவை ஆசரித்தது. ௰௨. மன்னாவென்கிற அப்பம் நின்றது ௰௩. யோசுவாவுக்குத் தேவதூதன் தரிசனையானது.

சம்பவித்ததேதென்றால் கர்த்தர் யோர்தானின் ௧
தண்ணீரை இஸ்ரவேல் புத்திரருக்குமுன்பாக
அவர்கள் கடந்துதீருமட்டும், அற்றுப்போகப்
பண்ணினதை, யோர்தானுக்கு இக்கரையின்
மேற்கே குடியிருந்த எமோரியரின் சகல இரா
சாக்களும் சமுத்திரத்தருகே குடியிருந்த கானா
னியரின் சகல இராசாக்களும் கேட்டதுமுதல்
கொண்டு, அவர்கள் இருதயம் கரைந்து, அவர்க
ளுக்கு இஸ்ரவேல் புத்திரருக்குமுன்பாக மனை
யில்லாதேபோயிற்று.
அக்காலத்திலே கர்த்தர் யோசுவாவோடே, நீ ௨
உனக்குக் கருக்கான கத்திகளை உண்டாக்கி,
திரும்ப இரண்டாம்விசை இஸ்ரவேல் புத்திர
ரைச் சுன்னத்துப்பண்ணென்றார்.—அப்போது ௩
யோசுவா தனக்குக் கருக்கான கத்திகளை உண்

டாக்கி, இஸ்ரவேல் புத்திரரை ஆர்லோத் மேட்
௪ டிலே சுன்னத்துப்பண்ணினான். — யோசுவா
இப்படிச் சுன்னத்துப்பண்ணின முகாந்தரம்
என்னவெனில், எகிப்திலிருந்து புறப்பட்ட
சகல ஆண்சாதியாராகிய யுத்தமனுஷரெல்லாம்
எகிப்திலிருந்து புறப்பட்டபிற்பாடு வனாந்தரத்
௫ தின் வழியிலே சென்றுபோனார்கள்.—எகிப்திலி
ருந்து புறப்பட்ட எல்லாச் சனமுமோ, சுன்னத்
துப்பண்ணப்பட்டிருந்தன; ஆனால் அவர்கள்
எகிப்திலிருந்து புறப்பட்டபிற்பாடு, வனாந்தரத்
தின் வழியிலே பிறந்த சகல சனமுமோவென்
றால், சுன்னத்துப்பண்ணப்படாதிருந்தன. —
௬ ஏனெனில் கர்த்தருடைய சத்தத்திற்குக் கீழ்ப்ப
டியாதேபோன எகிப்திலிருந்து புறப்பட்ட யுத்த
மனுஷரான சாதியெல்லாம் மாளும்மட்டும்,
இஸ்ரவேல் புத்திரர் நாற்பதுவருஷம் வனாந்த
ரத்தில் நடந்து திரிந்தார்கள்; அதேதென்றால்
எங்களுக்குக் கொடுக்கக் கர்த்தர் அவர்கள் பிதாக்
களுக்கு ஆணையிட்ட பாலும் தேனும் ஓடிய தே
சத்தை அவர்கள் காண்பதில்லை என்று கர்த்தர்
௭ அவர்களுக்கு ஆணையிட்டிருந்தார். — அவர்கள்
தலத்தில் அவர்கள் பிள்ளைகளை எழும்பப்பண்
ணினார்; இவர்களையே யோசுவா சுன்னத்துப்
பண்ணினான்; ஏனெனில் சுன்னத்தில்லாதிருந்
தார்கள்; வழியிலே அவர்களைச் சுன்னத்துப்
௮ பண்ணாதேபோனார்கள். — சாதியெல்லாம் சுன்
னத்துப்பண்ணப்பட்டுத் தீர்ந்தபிற்பாடு, அவர்
கள் குணமாகும்மட்டும் தங்கள் இடத்தில் பாள
௯ யத்திலே தரித்திருந்தார்கள்.—கர்த்தர் யோசுவா
வுடனே, இன்று எகிப்தினுடைய நிந்தையை
உங்கள்மேல் இராதபடிக்குப் புரட்டிவிட்டோ
மென்றார்; அதைத்தொட்டு அந்த ஸ்தலம் இந்
நாள்வரைக்கும் கில்காலென்னப்படுகின்றது.

௰ இஸ்ரவேல் புத்திரர் கில்காலில் பாளயமிறங்கி
யிருந்து, பதினாலாந்தேதி அந்திநேரத்திலே எரி
கோவின் சமனான வெளிகளிலே பஸ்காவை ஆச
௰௧ ரித்தார்கள்.—பஸ்காவின் இரண்டாம் நாளாகிய
அன்றைத்தினம் அவர்கள் தேசத்தினுடைய தா
னியத்தின் புளிப்பில்லாத அப்பங்களையும் சுட்
௰௨ ட கதிர்களையும் புசித்தார்கள்.—அவர்கள் தேசத்
தின் தானியத்திலே புசிக்கிற மறுநாளிலே மன்
னா பெய்து ஓய்ந்தது; அதுமுதல் இஸ்ரவேல்
புத்திரருக்கு மன்னா இல்லாமல்போய், அவர்கள்
கானான்தேசத்துப் பலனிலே அந்த வருஷத்தி
லேதானே புசித்தார்கள்.

௰௩ சம்பவித்ததேதென்றால், யோசுவா எரிகோ
வின் வெளியிலிருந்து தன் கண்களை ஏறெடுத்
துப்பார்க்கும்போது, இதோ ஒருவர் அவனுக்கு
எதிரே நின்றார்; உருவின அவருடைய பட்டை
யம் அவர் கையிலுமிருந்தது; யோசுவா அவரண்
டைக்குப்போய், அவருடனே, நீர் எங்களுக்க
டுத்தவரோ, எங்கள் சத்துருக்களுக்கடுத்தவரோ
௰௪ என்றான்.—அதற்கு அவர், அல்ல, நாம் கர்த்தரு
டைய சேனையின் அதிபதி; இப்போது வந்தோ
மென்றார்; அப்போது யோசுவா முகங்குப்புறத்
தரையிலே விழுந்து பணிந்துகொண்டு, அவரு
டனே, என் ஆண்டவர் தம்முடைய அடியா
னுக்குச் சொல்லுகிறதென்னவென்றான்.—அப் ௰௫
போது கர்த்தருடைய சேனையின் அதிபதி யோ
சுவாவோடே, உன் கால்களிலிருக்கிற உன் பா
தரட்சைகளைக் கழற்றிப்போடு; ஏனெனில் நீ
நிற்கிற இடம் பரிசுத்தமானதென்றார்; அப்படி
யே யோசுவா செய்தான்.

## ௬. அதிகாரம்.

௧. எரிகோவென்னும் பட்டணம் அடைக்கப்பட்டது. ௨. பராபரன் யோசுவாவுக்கு அதை முற்றிக்கைபோடும் விதத்தைக் கற்பித்தது. ௰௧. அந்தப் பட்டணம் முற்றிக்கை போடப்பட்டது. ௰௭. அது சாபத்துக்குடன்பட்டது. ௨௰. அதின் அலங்கம் இடிந்துவிழுந்தது. ௨௨. இராகாப் இரட்சிக்கப்பட்டது. ௨௧. எரிகோவென்ற பட்டணத்தைக் கட்டுபவன் சபிக்கப்படுவது.

எரிகோவோவெனில் இஸ்ரவேல் புத்திரருக்கு ௧
முன்பாக அடைக்கப்பட்டது; ஒருவரும் வெ
ளியே வாராதபடிக்கும், உள்ளே போகாதபடிக்
கும், அது அடைக்கப்பட்டுக் கிடந்தது. — கர்த் ௨
தர் யோசுவாவோடே சொன்னதாவது: இதோ
எரிகோவையும் அதின் இராசாவையும் இரா
ணுவ மனுஷரையும் உன் கையில் ஒப்புக்கொ
டுத்தோம்.—யுத்த மனுஷராகிய நீங்கள் அனைவ ௩
ரும் பட்டணத்தைச் சுற்றிலும் ஒரு சுற்றுவந்து,
இப்படி ஆறுநாள் செய்யக்கடவீர்கள். — ஏழு ௪
ஆசாரியர் பெட்டிக்குமுன்பாகக் கொம்பான
ஏழு எக்காளங்களைப் பிடித்துக்கொண்டுபோ
வார்களாக; ஏழாம்நாளிலோ பட்டணத்தை ஏழு
விசை சுற்றிவரக்கடவார்கள்; ஆசாரியரோ எக்
காளங்களை ஊதுவார்களாக.—அவர்கள் கொம் ௫
புகளின் தொனிப்பை நெடுந்தொனிப்பாக்கும்
போதும், நீங்கள் எக்காளசத்தத்தைக் கேட்கும்
போதும், சனமெல்லாம் மகா ஆர்ப்பரிப்பாக
ஆர்ப்பரிக்கக்கடவது; அப்போது பட்டணத்
தின் அலங்கம் இடிந்துவிழும்; அப்போது சனம்
அவரவர் தங்களுக்கு நேர்வழியாக ஏறக்கட
வார்களென்றார்.

அப்போது நூனின் குமாரனாகிய யேசுவா ௬
ஆசாரியரை அழைத்து அவர்களுடனே, உடம்ப
டிக்கையின் பெட்டியை எடுத்துப்போங்கள்;
தொனிக்கும் ஏழு எக்காளங்களையும் ஏழு ஆசா
ரியர்கள் கர்த்தருடைய பெட்டிக்குமுன்பாகப்
பிடித்துக்கொண்டு போகக்கடவார்களென்று
சொல்லி,—சனத்துடனே, பட்டணத்தைச் சுற்றி ௭
நடந்துபோங்கள்; ஆயுதம் அணிந்தவர்கள் கர்த்த
ரின் பெட்டிக்குமுன் நடக்கக்கடவார்களென்
றான்.

யோசுவா சனத்தோடே சொன்னபடி செய் ௮
யப்பட்டது; தொனிக்கும் ஏழு எக்காளங்களைப்
பிடிக்கிற ஏழு ஆசாரியர் கர்த்தருக்குமுன்பாக
நடந்து, எக்காளங்களை ஊதினார்கள்; கர்த்தரு
டைய உடம்படிக்கையின் பெட்டி அவர்களைப்
பின்சென்றது.—ஆயுதம் அணிந்தவர்கள் எக்கா ௯
ளங்களை ஊதுகிற ஆசாரியருக்குமுன் நடந்தார்
கள்; பின்தண்டோவெனில், எக்காளங்கள் ஊ
தப்படக்கொள்ளப்போகிற பெட்டியைப் பின்

௰ சென்றது.—யோசுவா சனத்துக்கு நான் சொல்
லும் நாள்மட்டும், நீங்கள் ஆர்ப்பரியாமலும்
உங்கள் சத்தத்தைக் கேட்கப்பண்ணாமலும் இ
ருப்பீர்களாக; உங்கள் வாயிலிருந்து ஒரு பேச்
சுப் புறப்படவும் வேண்டாம்; ஆர்ப்பரியுங்க
ளென்று உங்களோடே நான் சொல்லும் நாளி
லோவென்றால், ஆர்ப்பரிப்பீர்களாகவென்று
௰௧ கற்பித்தான்.—அப்படியே கர்த்தரின் பெட்டி
யைப் பட்டணத்தைச் சுற்றிலும் ஒரு சுற்று வரப்
பண்ணினான்; திரும்பப் பாளயத்திலே வந்து,
பாளயத்தில் இராத்தங்கினார்கள்.
௰௨ யோசுவா அதிகாலமே எழுந்திருந்தான்; ஆ
சாரியர்கள் கர்த்தரின் பெட்டியைச் சுமந்துபோ
௰௩ னார்கள்.—தொனிக்கும் ஏழு எக்காளங்களைப்
பிடிக்கிற ஏழு ஆசாரியர்கள் கர்த்தரின் பெட்
டிக்குமுன்பாக நடந்துவந்து, எக்காளங்களை
ஊதினார்கள்; ஆயுதம் அணிந்தவர்கள் அவர்க
ளுக்குமுன்னாலே நடந்தார்கள்; பின்தண்டோ
வெனில் எக்காளங்கள் ஊதப்படுகையில், போ
கிற கர்த்தரின் பெட்டியைப் பின்சென்றது.—
௰௪ அப்படியே இரண்டாம் நாளிலும் பட்டணத்
தை ஒரு சுற்றாய்ச் சுற்றிவந்து, பாளயத்துக்குத்
திரும்பினார்கள்; அந்தப்படி ஆறுநாள் செய்தார்
கள்.
௰௫ ஏழாம்நாளிலோவென்றால், அதிகாலமே கி
ழக்கு வெளுக்கும்பொழுது எழுந்திருந்து, பட்
டணத்தை அந்தப்பிரகாரமாக ஏழுவிசை சுற்றி
வந்தார்கள்; அன்றைத்தினத்திலேமாத்திரம் அ
௰௬ தை ஏழுவிசை சுற்றிவந்தார்கள்—ஏழாம்விசை
சம்பவித்ததேதென்றால், ஆசாரியர் எக்காளங்க
ளை ஊதுகையில், யோசுவா சனத்தோடே சொன்
னதாவது: ஆர்ப்பரியுங்கள்; ஏனெனில் கர்த்
தர் உங்களுக்குப் பட்டணத்தை ஒப்புக்கொடுத்
௰௭ தார்.—ஆனால் இந்தப் பட்டணமும் இதிலுள்ள
யாவும் கர்த்தருக்குச் சாபத்தீடாயிருப்பது; ரா
கப்பென்ற வேசியும் அவளோடே வீட்டுக்குள்
ளிருக்கிற அனைவருமமாத்திரம் உயிரோடிருக்
கக்கடவர்கள்; ஏனெனில் நாம் அனுப்பின
௰௮ ஆள்களை மறைத்தாள்.—சாபத்தீடானதில் ஏதா
கிலும் எடுத்துக்கொள்ளுகிறதினாலே, நீங்கள்
சாபத்தீடாகாதபடிக்கும் இஸ்ரவேல் பாளயத்
தைச் சாபத்தீடாக்கி அதைக் கலங்கப்பண்ணாத
படிக்கும், நீங்கள் சாபத்தீடானதற்குமாத்திரம்
௰௯ எச்சரிக்கையாயிருங்கள். — சகல வெள்ளியும்
பொன்னும் வெண்கலமும் இரும்புமான தட்டு
முட்டும் கர்த்தருக்குப் பரிசுத்தம்; கர்த்தரின்
பொக்கிஷத்துக்குச் சேருமென்றான்.
௨௰ எக்காளங்களை ஊதுகையில், சனம் ஆர்ப்ப
ரித்தது; எக்காளசத்தத்தைச் சனம் கேட்டு, மகா
ஆர்ப்பரிப்பாக ஆர்ப்பரிக்கையில், அலங்கம் இ
டிந்துவிழுந்தது; அப்போது சனம் அவரவர் தங்
களுக்கு நேர்வழியாகப் பட்டணத்திலேறி, பட்
௨௧ டணத்தைப் பிடித்து,-பட்டணத்திலிருந்த புரு
ஷரையும் ஸ்திரிகளையும் வாலிபரையும் கிழவரை
யும் ஆடுமாடுகளையும் கழுதைகளையும் சகலத்தை
யும் பட்டயக் கருக்கினாலே, சங்காரம்பண்
ணினார்கள்.
ஆனால் தேசத்தை வேவுபார்த்த இரண்டு மனு ௨௨
ஷருக்கு யோசுவா, நீங்கள் அந்த வேசி ஸ்திரி
யின் வீட்டிலே போய், அந்த ஸ்திரியையும் அவ
ளுக்குண்டான யாவையும் நீங்கள் அவளுக்கு
ஆணையிட்டபடி அங்கேயிருந்து வெளியே அ
ழைத்துவாருங்களென்றான். — அப்போது வே ௨௩
வுகாரரான வாலிபர் உள்ளே போய், ராகாப்பை
யும்அவள் தகப்பனையும் அவள் தாயையும் சகோ
தரர்களையும் அவளுக்குள்ள யாவையும் அவள்
வம்சத்தார் அனைவரையும் வெளியே அழைத்
துக்கொண்டுவந்து, இஸ்ரவேல் பாளயத்துக்குப்
புறம்பே அவர்களை இருக்கப்பண்ணினார்கள்.
பட்டணத்தையும் அதிலுள்ள யாவையும் அக் ௨௪
கினியால் சுட்டெரித்தார்கள்; வெள்ளியையும்,
பொன்னையும், வெண்கலமும் இரும்புமான முட்
டுகளையும்மாத்திரம் கர்த்தரின் வீட்டுப் பொக்கி
ஷத்துக்குக் கொடுத்தார்கள்.
அப்படியே ராகாப்பென்ற வேசியையும் அ ௨௫
வள் தகப்பன் வீட்டாரையும் அவளுக்கிருந்த
யாவையும் யோசுவா உயிரோடே வைத்தான்;
எரிகோவை வேவுபார்க்க, யோசுவா அனுப்பின
ஆள்களை அவள் மறைத்தபடியினாலே, இந்நாள்
வரைக்கும் இஸ்ரவேலின் நடுவிலே குடியிருக்
கிறாள்.
அக்காலத்திலே யோசுவா, இந்த எரிகோபட் ௨௬
டணத்தை எடுப்பித்துக் கட்டுகிற மனுஷன்,
கர்த்தருக்குமுன்பாகச் சபிக்கப்பட்டிருக்கக்கட
வன்; அவன் அதின் அஸ்திபாரத்தைப் போடுகிற
போது தன் மூத்தகுமாரனையும் அதின் வாசல்
களை வைக்கிறபோது தன் இளையகுமாரனையும்,
சாகக்கொடுப்பானாகவென்று சபித்தான்.
அப்படி கர்த்தர் யோசுவாவோடேகூட இரு ௨௭
ந்தார்; அவன் கீர்த்தி தேசமெங்கும் பரம்பிற்று.

## ௭. அதிகாரம்.

௧. ஆயிபட்டணத்தில் இஸ்ரவேல் சனங்கள் தோற்படைந்தது. ௬. அதற்கு யோசுவா முறையிட்டது. ௰. பராபரன் அவன் செய்யவேண்டியதைக் கற்பித்தது. ௰௬. ஆகானென்பவன் சீட்டினால் பிடிக்கப்பட்டது. ௰௯. அவன் அறிக்கையிடுதல். ௨௨. அவனும், அவனுடையவைகள் யாவும் ஆகோர் பள்ளத்தாக்கில் அழிக்கப்பட்டது.

ஆனால் இஸ்ரவேல் புத்திரர் சாபத்தீடானதிலே ௧
துரோகம்பண்ணினார்கள்; அதேனெனில் யூதா
கோத்திரத்துச் சேராகுடைய குமாரனாகிய சப்
தியின் மகன் கற்மிக்குப் பிறந்த ஆகான், சாபத்
தீடானதிலே சிலதை எடுத்துக்கொண்டான்;
ஆகையால் கர்த்தருக்கு இஸ்ரவேல் புத்திரரின்
மேலே கோபம் மூண்டது.
யோசுவா எரிகோவிலிருந்து மனுஷரைப் ௨
பேத்தேலுக்குக் கிழக்கான பெத்தாவென்கிட்ட
இருக்கிற ஆயிபட்டணத்துக்கு அனுப்பி, அவர்
களோடே, நீங்கள் ஏறிப்போய், அந்தத் தேசத்
தை வேவுபாருங்களென்றான்; அந்த மனுஷர்
ஏறிப்போய், ஆயியை வேவுபார்த்து,-யோசுவா ௩
வண்டைக்குத் திரும்பிவந்து, அவனுடனே, சன

மெல்லாம் ஏறிப்போகத் தேவையில்லை; ஏறக்
குறைய இரண்டாயிரம் மூவாயிரம்பேர் ஏறிப்
போய், ஆயியை முறிய அடிக்கலாம்; எல்லாச்ச
னத்தையும் அங்கே பிரயாசப்படுத்திராக; ஏனெ
னில் அவ்விடத்தார் கொஞ்சம்தான் என்றார்
௪ கள்.—அப்படியே சனத்தில் ஏறக்குறைய மூவா
யிரம்பேர் அவ்விடத்திற்கு ஏறிப்போனார்கள்;
ஆனால் அவர்கள் ஆயியின் மனுஷருக்குமுன்
௫ பாக முறிந்தார்கள்.—ஆயியின் மனுஷர் அவர்
களில் ஏறக்குறைய முப்பத்தாறுபேரை வெட்
டிப்போட்டார்கள்; ஏனெனில் பட்டணவாச
லின் வெளிதுவக்கிச் சேபாரீம்மட்டுக்கும் அவர்
களைத் துரத்தி, மலையிறங்கலிலே அவர்களை வெ
ட்டினார்கள்; அப்போது சனத்தின் இருதயம்
கரைந்து, தண்ணீராய்ப்போயிற்று.
௬ அப்போது யோசுவா தன் வஸ்திரங்களைக் கி
ழித்துக்கொண்டு, அவனும் இஸ்ரவேலின் மூப்
பரும் சாயங்காலம்மட்டும் கர்த்தரின் பெட்டிக்
குமுன்பாக முகம்குப்புறத் தரையிலே விழுந்து,
தங்கள் தலைகளின்மேல் புழுதியைப் போட்டுக்
௭ கொண்டு கிடந்தார்கள்.—யோசுவா சொன்ன
தாவது: ஆ, கர்த்தராகிய ஆண்டவரே, எங்களை
அழிக்கும்படிக்கு எங்களை எமோரியர் கைக
ளில் ஒப்புக்கொடுப்பதற்காகத் தேவரீர் இந்
தச் சனத்தை யோர்தானைக் கடக்கப்பண்ணின
தென்ன? நாங்கள் மனத்திர்ப்தியாக யோர்தானுக்
௮ கப்பாலே இருந்துவிட்டால் தாவிளை. — ஆ.
ஆண்டவரே, இஸ்ரவேல் தன் சத்துருக்களுக்கு
முதுகைக் காட்டியிருக்கிற இப்போது என்ன
௯ சொல்லுவேன்?—கானானியரும் தேசத்துக் குடி
கள் அனைவரும் இதைக் கேட்டு, எங்களை வ
ளைந்துகொண்டு, எங்கள்பேரைப் பூமியிலிராதப
டிக்கு வேரற்றுப்போகப் பண்ணுவார்களே; அப்
போது உமது மகத்துவமான நாமத்துக்கு என்ன
செய்வீரென்றான்.
௰ அப்போது கர்த்தர் யோசுவாவுக்குச் சொன்
னதாவது: எழுந்திரு, நீ இப்படி முகம்குப்புறக்
௰௧ கிடக்கிறதென்ன? — இஸ்ரவேல் பாவம்செய்த
து; நாம் தங்களுக்குக் கற்பித்த நமது உடம்ப
டிக்கையை அவர்கள் மீறினதும், சாபத்தீடான
தில் எடுத்துக்கொண்டதும் களவுசெய்ததும்,
ஒளித்ததும், தங்கள் பண்டம்பாடிகளுக்குள்
௰௨ வைத்ததுமுண்டு.—இஸ்ரவேல் புத்திரர் தங்கள்
சத்துருக்களுக்குமுன்பாக நிற்கக்கூடாது; தங்
கள் சத்துருக்களுக்கு முதுகைக் காட்டுவார்கள்;
ஏனெனில் சாபத்தீடானார்கள்; நீங்கள் சாபத்
தீடானதை உங்கள் நடுவிலிருந்து அற்றுப்போ
கப்பண்ணாவிட்டால், இனி உங்களோடு இ
௰௩ ரோம். — எழுந்திரு, நீ சனத்தைப் பரிசுத்தம்
பண்ணிச் சொல்லவேண்டியதேதெனில், நா
ளைக்கென்று உங்களைப் பரிசுத்தம்பண்ணிக்
கொள்ளுங்கள்; ஏனென்றால் இஸ்ரவேலே, சா
பத்தீடானது உன் நடுவே இருக்கின்றது; நீங்கள்
சாபத்தீடானதை உங்கள் நடுவிலிருந்து விலக்கா
திருக்கும்மட்டும், நீ உன் சத்துருக்களுக்குமுன்
பாக நிற்கக்கூடாதென்று இஸ்ரவேலின் பராபர
னாகிய கர்த்தர் சொல்லுகிறார்.—நாளைத்தினம் உங் ௰௪
கள் கோத்திரங்களின்படியே சேரவரக்கடவீர்
கள்; அப்போது கர்த்தர் பிடிக்கிற கோத்திரம்
வம்சம் வம்சமாகச் சேரவும், கர்த்தர் பிடிக்கும்
வம்சம் வீடுவீடாகச் சேரவும், கர்த்தர் பிடிக்கும்
வீட்டார் பேர்பேராகச் சேரவும் கடவதென்று
சொல். — அப்போது சாபத்தீடானதை எடுத்த ௰௫
வனாய்ப் பிடிக்கப்படுபவன், கர்த்தரின் உடம்
படிக்கையை மீறி, இஸ்ரவேலிலே மதிகேடான
காரியத்தைச் செய்தபடியினாலே, அவனும் அவ
னுக்குள்ள யாவும் அக்கினியால் சுட்டெரிக்கப்
படக்கடவதென்றார்.
யோசுவா அதிகாலமே எழுந்திருந்து, இஸ்ர ௰௬
வேலைக் கோத்திரம் கோத்திரமாகச் சேரப்பண்
ணினபொழுது, யூதாவின் கோத்திரம் பிடிக்கப்
பட்டது.—அவன் யூதாவின் வம்சங்களைச் சே ௰௭
ரப்பண்ணினபோது, சேராகியரின் வம்சம் பி
டிக்கப்பட்டது; அவன் சேராகியரின் வம்சத்
தைப் பேர்பேராகச் சேரப்பண்ணினபோது,
சப்தி பிடிக்கப்பட்டான்.—இவன் வீட்டாரை ௰௮
அவன் பேர்பேராகச் சேரப்பண்ணினபோது,
யூதா கோத்திரத்துச் சேராகின் குமாரனாகிய சப்
திக்குப் பிறந்த கர்மியின் மகன் ஆகான் பிடிக்
கப்பட்டான்.
அப்போது யோசுவா ஆகானுடனே, என் மக ௰௯
னே, நீ இப்போது இஸ்ரவேலின் பராபரனாகிய
கர்த்தருக்கு மகிமையைச் செலுத்தி, அவருக்
குமுன்பாக அறிக்கைபண்ணி, என்ன செய்தா
யென்று எனக்கு அறிவி; எனக்கு அதை ஒளிக்
காயாகவென்றான்.—அப்போது ஆகான் யோசு ௨௰
வாவுக்குப் பிரதியுத்தாரமாகச் சொன்னதாவது:
மெய்யாகவே நான் இஸ்ரவேலின் பராபரனாகிய
கர்த்தருக்கு விரோதமாகப் பாவம்செய்தேன்;
இன்னின்ன பிரகாரமாகச் செய்தேன்.—நான் ௨௧
கொள்ளையிலே நேத்தியான ஒரு பாபிலோனின்
சால்வையையும் இருநூறு வெள்ளிச்சேக்கலை
யும் ஐம்பது சேக்கல் நிறையான ஒரு பொன்
நாக்கையும் கண்டு, அவைகளை இச்சித்து, எடுத்
துக்கொண்டேன்; இதோ இதுகள் என் கூடா
ரத்தின் நடுத்தரையிலும், வெள்ளி அதின்கீழும்,
புதைத்திருக்கின்றன என்றான். — அப்போது ௨௨
யோசுவா ஆள்களை அனுப்பினான்; அவர்கள் கூ
டாரத்துக்கு ஓடினார்கள்; இதோ அவன் கூடா
ரத்தில் அதுவும் அதின்கீழே வெள்ளியும் புதைத்
திருந்தன. — அவைகளைக் கூடாரத்தின் நடுவி ௨௩
லே எடுத்து, யோசுவாவண்டைக்கும் எல்லா
இஸ்ரவேல் புத்திரரண்டைக்கும் கொண்டுவந்
து, கர்த்தருக்குமுன்பாகக் கொட்டினார்கள்.
அப்போது யோசுவாவும் இஸ்ரவேலரெல்லா ௨௪
ரும்கூட சேராகின் புத்திரனாகிய ஆகானையும்
அந்த வெள்ளியையும் சால்வையையும் பொன்
நாக்கையும் அவன் குமாரரையும் குமாரத்திகளை
யும் அவன் மாடுகளையும் கழுதைகளையும் ஆடுக
ளையும் அவன் கூடாரத்தையும் அவனுக்குள்ள

யாவையும் பிடித்து, ஆகோர் பள்ளத்தாக்கிலே
௨௫ கொண்டுபோனார்கள்.—அப்போது யோசுவா,
நீ எங்களைக் கலங்கப்பண்ணினபடியினாலே,
இன்று கர்த்தர் உன்னைக் கலங்கப்பண்ணுவா
ரென்றான்; அப்போது இஸ்ரவேலெல்லாம்
அவனைக் கல்லெறிந்து, அவைகளை அக்கினி
௨௬ யால் சுட்டெரித்து கல்லுகளினால் மூடி,—அ
வன்மேல் இந்நாள்வரைக்கும் இருக்கிற பெரிய
கல்குவியலைக் குவித்தார்கள்; இப்படியே கர்த்
தர் தமது கோபத்தின் உக்கிரத்தைவிட்டுத் திரும்
பினார்; ஆகையால் அவ்விடம் இந்நாள்வரைக்
கும் ஆகோர் பள்ளத்தாக்கென்னப்படும்.

## ௮. அதிகாரம்.

*௧. பராபரன் யோசுவாவைத் தைரியப்படுத்தினது. ௩. ஆயிபட்டணம் பிடிபட்ட உபாயம். ௨௧. அதின் அரசன் தூக்கப்பட்டது. ௩௰ யோசுவா ஒரு பலிபீடத்தைக் கட்டினது. ௩௨. கல்களின்மீது நியாயப்பிரமாணத்தை எழுதினது. ௩௪. ஆசீர்வாதங்களையும், சாபங்களையும் சொ ன்னது.*

௧ அப்போது கர்த்தர் யோசுவாவோடே சொன்
னதாவது: பயப்படாமலும் கலங்காமலும் இருப்
பாயாக; நீ யுத்தசனம் அனைத்தையும் கூட்டிக்
கொண்டு எழுந்து, ஆயியின்மேலே போ, இதோ
ஆயியின் இராசாவையும் அவன் சனத்தையும்
பட்டணத்தையும் சீமையையும் உன் கையில்
௨ ஒப்புக்கொடுத்தோம்.—நீ எரிகோவுக்கும் அதின்
இராசாவுக்கும் செய்ததுபோல, ஆயிக்கும் அ
தின் இராசாவுக்கும் செய்யக்கடவாய்; அதின்
கொள்ளையையும் மிருகசீவன்களையுமோவென்
றால், உங்களுக்கென்று எடுத்துக்கொள்ளுவீர்க
ளாக; பட்டணத்துக்குப் பின்னாலே உனக்குப்
பதிவிடையை வை என்றார்.
௩ அப்போது ஆயியின்மேலே போக, யோசுவா
வும் எல்லா யுத்தசனமும் எழுந்து புறப்பட்
டார்கள்; ஆனால் யோசுவா பராக்கிரமசாலிக
ளான முப்பதினாயிரம்பேரைத் தெரிந்தெடுத்து,
௪ இராத்திரியிலே அவர்களை அனுப்பி, — அவர்க
ளுக்குக் கற்பித்ததாவது: இதோ நீங்கள் பட்ட
ணத்தின் பின்னாலே அதற்குப் பதிவிடையாயி
ருப்பவர்கள்; நீங்கள் பட்டணத்துக்கு வெகு
தூரமாய்ப்போயிராமல், எல்லாரும் ஆயத்தப்பட்
௫ டிருங்கள். — நானும் என்னோடிருக்கிற சனமு
மோவென்றால், பட்டணத்தண்டையில் கிட்
டிச் சேர்ந்து, அவர்கள் முன்போல எங்களுக்கு
எதிராகப் புறப்பட்டு வரும்போது, அவர்களுக்
௬ கு முன்னாக ஓடிப்போவோம். — அப்போது
முன்போல நமக்குமுன்னாக முறிந்துபோகி
றார்களென்று சொல்லி, எங்களைத் துரத்தப் புறப்
படுவார்கள்; நாங்களோவென்றால் அவர்களைப்
பட்டணத்தைவிட்டு இப்பாலே வரப்பண்ணும்
மட்டும், அவர்களுக்கு முன்னாக ஓடிப்போ
௭ வோம். — அப்போது நீங்கள் பதிவிலிருந்து
எழும்பிவந்து, பட்டணத்தைப் பிடிக்கக்கடவீர்
கள்; ஏனெனில் உங்கள் பராபரனாகிய கர்த்தர்
அதை உங்கள் கைகளில் ஒப்புக்கொடுப்பார்.—
௮ நீங்கள் பட்டணத்தைப் பிடிக்கும்போது, அதை
நெருப்பிட்டுக் கொளுத்தக்கடவீர்கள், கர்த்தரு
டைய சொல்படி செய்வீர்களாக; இதோ அதை
உங்களுக்குக் கற்பித்தோமென்று சொல்லி,—
அவர்களை அனுப்பினான்; அவர்கள் போய், ௯
பேத்தேலுக்கும் ஆயிக்கும் நடுவே, ஆயிக்கு
மேற்காகப் பதிவிருந்தார்கள்; யோசுவாவோவெ
னில் அன்று இராத்திரி சனத்துக்குள் தங்கி,
அதிகாலமே எழுந்திருந்து, சனத்தை இலக்கம் ௰
பார்த்து, இஸ்ரவேலின் மூப்பரோடுங்கூடச் ச
னத்துக்கு முன்னாலே நடந்து, ஆயியின்மேலே
போனான்.—அவனோடிருந்த யுத்தசனமெல்லாம் ௰௧
நடந்து, பட்டணத்துக்கு எதிரே வந்துசேர்ந்து,
ஆயிக்கு வடக்கே பாளயம் இறங்கிற்று; அதுக்
கும் ஆயிக்கும் நடுவே ஒரு பள்ளத்தாக்கு இருந்
தது. — பின்னையும் ஏறக்குறைய ஐயாயிரம்பே ௰௨
ரைப் பிரித்தெடுத்து, அவர்களைப் பேத்தேலுக்
கும் ஆயிக்கும் நடுவே பட்டணத்திற்கு மேலண்
டையில் பதிவிடையாக வைத்தான்.— பட்ட ௰௩
ணத்திற்கு வடக்கே இருக்கும் சகல பாளயத்
தின் சனத்தையும் அதற்கு மேற்கே அதற்குப்
பதிவிருக்கிறவர்களையும் திட்டம்பண்ணினபிற்
பாடு, யோசுவா அன்று இராத்திரி பள்ளத்தாக்
குக்குள்ளே போனான். — ஆயியின் இராசா ௰௪
அதைக் கண்டபோது, அவனும் பட்டணத்தின்
மனுஷராகிய அவனுடைய எல்லாச் சனமும்
தீவிரித்து, அதிகாலமே திட்டமான குறிக்கப்
பட்ட வேளையில் இஸ்ரவேலுக்கு எதிரே யுத்
தம்பண்ணச் சமனானவெளிக்கு நேராகப் புறப்
பட்டார்கள்; ஆனால் தனக்குப் பதிவிடை பட்
டணத்துக்குப் பின்னாலே இருக்கிறதை அறியா
திருந்தான்.—அவர்களுக்கு முன்னாக யோசுவா ௰௫
வும் இஸ்ரவேலனைத்தும் முறிந்து, வனாந்தரத்துக்
குப் போகிறவழியில் ஓடிப்போனார்கள்.—அப் ௰௬
போது பட்டணத்துக்குள் இருக்கிற சனமெல்
லாம் அவர்களைத் துரத்த, பின்தொடரவேண்டு
மென்று கூப்பிட்டு, யோசுவாவைத் துரத்தி, பட்
டணத்தைவிட்டு அப்புறப்பட்டார்கள். — ஆயி ௰௭
யிலும் பேத்தேலிலும் இஸ்ரவேலரைப் பின்தொ
டராத மனுஷன் இருந்ததில்லை; பட்டணத்தைத்
திறந்து வைத்துப்போய், இஸ்ரவேலரைத் துரத்
திக்கொண்டிருந்தார்கள்.
அப்போது கர்த்தர் யோசுவாவோடே, உன் ௰௮
கையிலிருக்கிற ஈட்டியை ஆயிக்கு நேராக நீட்
டு; ஏனெனில் அதை உன் கையில் ஒப்புக்கொ
டுப்போமென்றார்; அப்படியே யோசுவா தன்
கையிலிருக்கிற ஈட்டியைப் பட்டணத்துக்கு
நேராக நீட்டினான்.—அப்போது பதிவிடை தீவி ௰௯
ரமாய்த் தன் தலத்திலிருந்து எழும்பி, அவன் தன்
கையை நீட்டினபோது, பட்டணத்துக்கு ஓடி
வந்து, அதைப் பிடித்து, தீவிரத்தோடே அதை
நெருப்பிட்டுக் கொளுத்தினார்கள். — ஆயியின் ௨௰
மனுஷர் பின்னிட்டுப்பார்க்கிறபோது, இதோ
பட்டணத்தின் புகைக்காடு ஆகாசத்துக்கு எழும்
புகிறதைக் கண்டார்கள்; அப்போது இப்படி
யானாலும் அப்படியானாலும் ஓடிப்போகிறதற்கு
அவர்களுக்கு இடமற்றுப்போயிற்று; ஏனெனில்

வனாந்தரத்துக்கு ஓடிப்போகிற சனம் தங்க
ளைத் துரத்துகிறவர்கள் முகமாய்த் திரும்பிக்கொ
௨௧ ண்டது. — அதேனெனில் பதிவிடைப் பட்ட
ணத்தைப் பிடித்ததையும், பட்டணத்தின் புகை
க்காடு எழும்புகிறதையும், யோசுவாவும் இஸ்ர
வேலரும் பார்க்கிறபோது, திரும்பிக்கொண்டு,
ஆயியின் மனுஷரை முறிய அடித்தார்கள். —
௨௨ அவர்களும் பட்டணத்திலிருந்து இவர்களுக்கு
எதிர்ப்பட்டதினால், இவர்களில் இந்தண்டை
யும் அந்தண்டையும் இருக்கிற இஸ்ரவேலின்
நடுவே அகப்பட்டார்கள்; ஆகையால் அவர்க
ளில் ஒருவரும் தப்பி, மீந்திராதபடிக்கு, அவர்
௨௩ களை வெட்டிப்போட்டு, — ஆயியின் இராசா
வை உயிரோடே பிடித்து, யோசுவாவண்டைக்
குக் கொண்டுவந்தார்கள்.
௨௪ இஸ்ரவேலர் வனாந்தரவெளியிலே தங்களைத்
துரத்தின ஆயியின் குடிகளையெல்லாம் வெட்டித்
தீர்ந்தபோதும், இவர்கள் அனைவரும் சரியாகும்
மட்டும் பட்டையக் கருக்கினாலே விழுந்து தீர்ந்த
போதும், இஸ்ரவேலெல்லாம் ஆயிக்குத் திரும்பி,
அதைப் பட்டையக் கருக்கினால் அடித்தார்கள்.-
௨௫ அந்நாளிலே விழுந்த ஆண்சாதியும் பெண்சாதி
யுமான ஆயியின் மனுஷரெல்லாம் பன்னீராயி
௨௬ ரம்பேர்.—ஆயியின் குடிகளையெல்லாம் சங்கரித்
துத் தீரும்மட்டும், யோசுவா ஈட்டியை நீட்டிக்
கொண்டிருக்கிற தன் கையை வாங்கினதில்லை.-
௨௭ மிருகஜீவனையும் அந்தப் பட்டணத்தின் கொள்
ளையையும்மாத்திரம் இஸ்ரவேலர், கர்த்தர் யோசு
வாவுக்குக் கட்டளையிட்ட வார்த்தையின்படி
௨௮ எடுத்துக்கொண்டார்கள்.—யோசுவா ஆயியைச்
சுட்டெரித்து, அதை இந்நாள்வரைக்கும் இருக்
கிறபடி என்றைக்கும் பாழாய்க்கிடக்கும் மண்
௨௯ மேடாக்கி, — ஆயியின் இராசாவை ஒரு மரத்தி
லே தூக்கிப்போடுவித்து, சாயங்காலம்மட்டும்
அதிலே தொங்கவிட்டான்; சூரியன் அஸ்தமிக்
கிறபோதோவெனில், யோசுவா அவன் உடலை
மரத்தைவிட்டிறக்கச்சொன்னான்; அதைப் பட்
டணத்தின் ஒலிமுகவாசலில் போட்டு, இந்நாள்
வரைக்கும் இருக்கிற பெரிய கல்குவியலை
அதின்மேலே குவித்தார்கள்.
௩௰ அப்போது யோசுவா கர்த்தரின் ஊழியக்கா
ரனை மோசே இஸ்ரவேல் புத்திரருக்குக் கற்
பித்தபடியேயும், மோசேயின் நியாயப்பிரமாண
ஆகமத்தில் எழுதியிருக்கிறபடியேயும், ஏபால்
பர்வதத்தில் இஸ்ரவேலின் பராபரனாகிய கர்த்த
ருக்கு; இரும்புபடாத முழுக்கல்லுகளால் ஒரு
௩௧ பலிபீடத்தைக் கட்டினான்.—அதின்மேலே கர்த்த
ருக்குச் சர்வாங்கதகனங்களையும் சமாதான பலி
௩௨ களையும் பலியிட்டார்கள்.—அங்கே அவன் மோ
சே இஸ்ரவேல் புத்திரருக்குமுன்பாக எழுதியி
ருந்த நியாயப்பிரமாணத்தைக் கல்லுகளில் பேர்த்
௩௩ தெழுதினான்.—முழு இஸ்ரவேலும் அதின் மூப்ப
ரும் தலைவரும் அதின் நியாயாதிபதிகளும் பர
தேசிகளும் இஸ்ரவேலில் பிறந்தவர்களும் கர்த்த
ருடைய உடம்படிக்கையின் பெட்டியைச் சுமக்
கிற லேவியரான ஆசாரியருக்கு எதிரே பெட்
டிக்கு இந்தண்டையும் அந்தண்டையும், பாதி
கெரிசீம் பர்வதப்புறமாகவும், பாதி ஏபால்
பர்வதப்புறமாகவும், இஸ்ரவேல் சனத்தை ஆசீர்
வதிக்கும்படிக்கு, கர்த்தரின் ஊழியக்காரனாகிய
மோசே முதல் கற்பித்தபடி நின்றார்கள்.—அதற் ௩௪
குப்பிறகு ஆசீர்வாதமும் சாபமுமென்ற நியா
யப்பிரமாணத்தின் சகல வார்த்தைகளையும் நியா
யப்பிரமாண ஆகமத்தில் எழுதியிருக்கிறபடியெ
ல்லாம் கூறினான்.—மோசே கற்பித்ததிலெல்லாம் ௩௫
யோசுவா இஸ்ரவேலின் முழுச் சபைக்கும் ஸ்தி
ரீகளுக்கும் பிள்ளைகளுக்கும் அவர்களுக்குள்
நடமாடின பரதேசிகளுக்கும்முன்பாகக் கூறா
தேபோன வார்த்தையில்லை.

## ௯. அதிகாரம்.

௧. இராசாக்கள் இஸ்ரவேல் சனங்கள்மேல் கூடிப்போனது. ௩. கிபே யோனின் குடிகள் தந்திரத்தினால் அவர்கள் மாறாத அடிமைத்தனத்துக் குள்ளாகத் தீர்க்கப்பட்டது.

யோர்தானுக்கு இப்பாலே மலைகளிலும் பள் ௧
ளத்தாக்குகளிலும் லீபனோனுக்கு எதிரான பெ
ரிய சமுத்திரத்தினுடைய சகல கரையோரத்தி
லும் இருந்த சகல இராசாக்களும் ஏத்தியரும்
எமோரியரும், கானானியரும், பெரிசியரும்,
ஏவியரும், எபூசியரும் அதைக் கேட்டபோது,
சம்பவித்ததேதென்றால், — அவர்கள் ஏகமாய் ௨
யோசுவாவோடும் இஸ்ரவேலோடும் யுத்தம்
பண்ண ஒருமனப்பட்டுக் கூடினார்கள்.
கிபேயோனின் குடிகளோவெனில், யோசு ௩
வா எரிகோவுக்கும் ஆயிக்கும் செய்ததைக் கேட்
டபோது, — ஒரு தந்திரமான யோசனையைப் ௪
பண்ணி, தானாபதிகளைப்போலக் காண்பித்து,
பழைய இரட்டுப் பைகளையும், பீறலும் பொத்த
லுமான பழைய தீவிதிராட்சப்பழ இரசத்துருத்
திகளையும் தங்கள் கழுதைகள்மேலே வைத்து,—
அழுக்கான பழைய பாதரட்சைகளைத் தங்கள் ௫
கால்களில் போட்டு, பழைய வஸ்திரங்களை உ
டுத்திக்கொண்டார்கள்; அவர்கள் வழிக்கு எடுத்
துக்கொண்ட அப்பமெல்லாம் அழுத்தமும் பூஞ்
சணம்பூத்ததுமாயிருந்தது.—அவர்கள் கில்காலில் ௬
இருக்கிற பாளயத்துக்கு யோசுவாவண்டைக்
குப் போய், அவனோடும் இஸ்ரவேல் மனுஷரோ
டும், தூரதேசத்திலிருந்து வந்தோம், இப்போதும்
எங்களுக்கு உடம்படிக்கையைக் கட்டளைபண்
ணுங்கள் என்றார்கள்.—அப்போது இஸ்ரவேல் ௭
மனுஷர் அந்த ஏவியரோடே, நீங்கள் எங்கள்
நடுவிலே குடியிருக்கிறவர்களாக்கும்; எப்படி.
உங்களுக்கு உடம்படிக்கையைக் கட்டளைபண்
ணலாமென்றார்கள். — அவர்கள் யோசுவாவுட ௮
னே, நாங்கள் உம்முடைய அடியாரென்றார்கள்;
யோசுவா அவர்களை நீங்கள் யார், எங்கேயிருந்து
வந்தீர்கள் என்று கேட்டான்.—அவர்கள் அவ ௯
னோடே சொன்னதாவது: உம்முடைய பராபர
னாகிய கர்த்தரின் நாமப்பிரஸ்தாபத்தினாலே, உ
மது அடியார் மகா தூரதேசத்திலிருந்து வந்தோம்;
ஏனெனில் அவருடைய கீர்த்தியையும், அவர்

௰ எகிப்திலேசெய்த எல்லாவற்றையும், — அவர்
எஸ்போனின் இராசாவாகிய சீகோனும் அஸ்த
ரோத்திலிருந்த பாசானின் இராசாவாகிய ஓகும்
என்ற யோர்தானுக்கு அப்பாலிருந்த எமோரிய
ரின் இரண்டு இராசாக்களுக்குச் செய்த எல்லா
௰௧ வற்றையும் கேட்டோம்.—ஆகையால், உங்கள்
கைகளில் வழிக்கு ஆகாரம் வாங்கிக்கொண்டு,
அவர்களுக்கு எதிர்கொண்டு போய், அவர்களு
டனே, நாங்கள் உங்கள் அடியார், இப்போ
தும் எங்களுக்கு உடம்படிக்கையைக் கட்ட
ளைபண்ணுங்கள் என்பீர்களாகவென்று எங்கள்
மூப்பரும் எங்கள் தேசக்குடிகளுமெல்லாம் எங்
௰௨ களோடே சொன்னார்கள்.—உங்களண்டையில்
வர நாங்கள் புறப்படுகிற அன்றே, எங்கள் வழிப்
பயணத்துக்கு இந்த எங்கள் அப்பத்தைச் சுடுகிற
தாக எங்கள் வீட்டிலிருந்து எடுத்துக்கொண்
டோம்; இப்போது இதோ அழுத்தமும் பூரணம்
௰௩ பூத்ததுமாயிற்று.—நாங்கள் இந்தத் திவிதிராட்சப்
பழஇரசத்துருத்திகளை நிரப்புகையில், புதிதாயி
ருந்தது; ஆனால் இதோ பொத்தலாயிற்று; இந்த
எங்கள் வஸ்திரங்களும் பாதரட்சைகளும் மகா
விஸ்தாரமான வழிப்பயணத்தினாலே பழசாய்ப்
௰௪ போயிற்றென்றார்கள். — அப்போது அந்த மனு
ஷர் கர்த்தருடைய வாக்கைக் கேளாமல் அவர்க
ளுடைய வழிப்போசனத்திலே சிலதை வாங்கிக்
௰௫ கொண்டார்கள். — யோசுவா அவர்களோடே
சமாதானம்பண்ணி, அவர்களை உயிரோடே காப்
பாற்றும் உடம்படிக்கையை அவர்களுக்குக் கட்
டளைபண்ணினான்; அதற்காகச் சபையின் பிர
புக்கள் அவர்களுக்கு ஆணையிட்டார்கள்.

௰௬ அவர்களுக்கு உடம்படிக்கையைக் கட்டளை
யிட்டு, மூன்றுநாள் சென்றபோதோவெனில்,
அவர்கள் தங்கள் சமீபத்தில் இருக்கிறவர்களென்
றும் தங்கள் நடுவே குடியிருக்கிறவர்களென்றும்
௰௭ கேட்டார்கள்.—ஏனெனில் இஸ்ரவேல் புத்திரர்
பிரயாணம்போகையில், மூன்றாம்நாளிலே அ
வர்கள் பட்டணங்களுக்கு வந்தார்கள்; அவை
கள் கிபேயோன், கெபிரா, பெயெரோத், கீரி
௰௮ யாத், யெயாரீம் என்றவைகள்.—சபையின் பிர
புக்கள் அவர்களுக்கு இஸ்ரவேலின் பராபரனா
கிய கர்த்தரின்பேரில் ஆணையிட்டிருந்தபடியி
னாலே, இஸ்ரவேல் புத்திரர் அவர்களைச் சேதம்
பண்ணாதேபோனார்கள்; ஆனால் சபையெல்லாம்
பிரபுக்கள்மேல் முறுமுறுத்தது.

௰௯ அப்போது சகல பிரபுக்களும் சபையோடெல்
லாம் சொன்னதாவது: நாங்கள் இஸ்ரவேலின்
பராபரனாகிய கர்த்தரின்பேரிலே, அவர்களுக்கு
ஆணையிட்டோம்; ஆனதுகொண்டு அவர்களை
௨௰ நாம் தொடக்கூடாது.—நாங்கள் அவர்களுக்கு
இட்ட ஆணையின்நிமித்தம் கடுங்கோபம் நம்மு
டையமேல் வராதபடிக்கு, நாம் அவர்களை உயி
ரோடே வைத்து, அவர்களுக்கு ஒன்று செய்
௨௧ வோம். — பிரபுக்களாகிய நாங்கள் அவர்களுக்
குச் சொன்னபடி அவர்கள் உயிரோடிருந்து,
சபைக்கெல்லாம் விறகு வெட்டுகிறவர்களும்,
தண்ணீர் சுமக்கிறவர்களுமாய் இருக்கக்கடவர்
களென்று பிரபுக்கள் அவர்களோடே சொன்
னார்கள்.

பிற்பாடு யோசுவா அவர்களை அழைப்பித்து, ௨௨
அவர்களோடே சொன்னதாவது: எங்கள் நடுவே
குடியிருக்கிற நீங்கள் எங்களைத்தந்திரம்பண்ணி,
நாங்கள் உங்களுக்கு வெகுதூரமாயிருக்கிறவர்க
ளென்று சொன்னதென்ன? — இப்போதும் நீங் ௨௩
கள் சபிக்கப்பட்டவர்கள்; என் பராபரனுடைய
வீட்டுக்கு விறகுவெட்டி, தண்ணீர் சுமக்கிற
பணிவிடைக்காரர் உங்களில் இருக்கிறது அற்
றுப்போகாதிருப்பதாகவென்றான். — அவர்கள் ௨௪
யோசுவாவுக்குப் பிரதியுத்தாரமாகச் சொன்ன
தாவது: உங்களுக்குத் தேசத்தையெல்லாம் ஒப்
புக்கொடுத்து, தேசத்தின் குடிகளையெல்லாம்
உங்களுக்குமுன்பாக அழிப்போமென்று உம்மு
டைய பராபரனாகிய கர்த்தர் தமது தாசனாகிய
மோசேக்குக் கட்டளையிட்டது உமதடியாருக்கு
அறிவிக்கவே அறிவிக்கப்பட்டதினால், நாங்கள்
எங்கள் சீவனுக்காக உங்களுக்கு மிகவும் பயந்து,
இந்தக் காரியத்தைச் செய்தோம்.—இப்போதும் ௨௫
இதோ உமது கையிலிருக்கிறோம், உம்முடைய
பார்வைக்கு நன்றும் நிதானமுமானபடி எங்க
ளுக்குச் செய்யுமென்றார்கள்.—அந்தப்படி யோ ௨௬
சுவா அவர்களுக்குச் செய்து, இஸ்ரவேல் புத்தி
ரர் அவர்களைக் கொன்றுபோடாதபடிக்கு, அவர்
களை இவர்கள் கைக்குத் தப்புவித்து,—இந்நாள் ௨௭
மட்டும் இருக்கிறபடியே அவர்களை அந்நாளி
லே, சபைக்கும், கர்த்தர் தெரிந்துகொள்ளுமி
டத்திலிருக்கும் அவருடைய பலிபீடத்துக்கும்,
விறகுவெட்டுகிறவர்களும் தண்ணீர்சுமக்கிறவர்
களுமாக்கினான்.

## ௰. அதிகாரம்.

௧. கிபேயோன் பட்டணத்துக்கு விரோதமாக ஐந்தரசர்கள் போர்செய்தது. ௬. யோசுவா அதைத் தப்புவித்தது. ௰௧. பராபரன் அதன் சத்துருக்கள்மேல் கல்மழை பெய்வித்தது. ௰௨. யோசுவாவின் வார்த்தையால் சூரியனும், சந்திரனும் நின்றது. ௰௬. ஐந்தரசர்கள் கெபியிலே ஒளித்ததும், ௨௨. அவர்கள் வெளியில் கொண்டுவரப்பட்டதும், ௨௪ இகழப்பட்டதும், ௨௬. தூக்கப்பட்டதும். ௨௮ மற்றும் ஏழரசர்கள் ஜெயிக்கப்பட்டது. ௪௩. யோசுவா கில்காலிலே மறுபடியும் வந்தது.

யோசுவா ஆயியைப்பிடித்து, சங்காரம்பண்ணி, ௧
எரிகோவுக்கும் அதின் இராசாவுக்கும் செய்த
படி, ஆயிக்கும் அதின் இராசாவுக்கும் செய்த
தையும், கிபேயோனின் குடிகள் இஸ்ரவேலோ
டே சமாதானம்பண்ணி, அவர்களுக்குள்ளான
தையும், எருசலேமின் இராசாவாகிய அதோனி
சேதேக் கேட்டபோது,—மிகவும் பயந்தார்கள்; ௨
ஏனென்றால் கிபேயோன் இராசதானி பட்ட
ணங்களில் ஒன்றைப்போல பெரிய பட்டண
மும் ஆயியைப்பார்க்கிலும் பெரிதுமாயிருந்தது;
அதின் மனுஷரெல்லாம் பலசாலிகளுமாயிருந்
தார்கள்.—ஆகையால், யோசுவாவோடும் இஸ்ர ௩
வேல் புத்திரரோடும் சமாதானம்பண்ணின கிபே
யோனை நாம் சங்கரிக்க, என்னண்டைக்கு ஏறி
வந்து, எனக்குச் சகாயம்பண்ணுங்களென்று,—
எருசலேமின் இராசாவாகிய அதோனிசேதேக் ௪

எபிரோனின் இராசாவாகிய ஓகாமுக்கும், யர்
மூத்தின் இராசாவாகிய பீரூமுக்கும், லாகீசின்
இராசாவாகிய யப்பீயாவுக்கும், எக்லோனின்
இராசாவாகிய தேபீருக்கும் சொல்லி அனுப்பி
௫ னான்.—அப்படியே எருசலேமின் இராசா, எபி
ரோனின் இராசா, யர்மூத்தின் இராசா, லாகீ
சின் இராசா, எக்லோனின் இராசா என்ற எமோ
ரியரின் ஐந்து இராசாக்கள் கூடிக்கொண்டு,
அவர்களும் அவர்களுடைய எல்லாச் சேனை
களும் ஏறிப்போய், கிபேயோனுக்குமுன்பாகப்
பாளயமிறங்கி, அதின்மேலே யுத்தம்பண்ணி
னார்கள்.
௬ அப்போது கிபேயோனின் மனுஷர் கில்காலி
லிருக்கிற பாளயத்துக்கு யோசுவாவண்டையி
லே ஆளனுப்பி, உமது அடியாரைக் கைவிடா
மல், சீக்கிரமாய் எங்களண்டைக்கு ஏறிவந்து,
எங்களை இரட்சித்து, எங்களுக்குச் சகாயம்பண்
ணும்; ஏனெனில் பர்வதங்களிலே குடியிருக்கிற
எமோரியரின் இராசாக்களெல்லாரும் எங்களுக்
கு விரோதமாய்க் கூடினார்களென்று சொல்லச்
௭ சொன்னார்கள்.—அப்போது யோசுவாவும் அவ
னோடேகூடச் சகல இராணுவ மனுஷரும் எல்
லாப் பராக்கிரமசாலிகளும் கில்காலிலிருந்து
௮ ஏறிப்போனார்கள்.—கர்த்தர் யோசுவாவோடே,
அவர்களுக்குப் பயப்படாயாக; ஏனெனில் உன்
கைகளில் அவர்களை ஒப்புக்கொடுத்தோம்; அ
வர்களில் ஒருவரும் உனக்குமுன்பாக நிற்பதில்
௯ லையென்றார்.—யோசுவா கில்காலிலிருந்து இரா
முழுதும் அசுப்பிலே அவர்கள்மேல் ஏறி நடந்
௰ துவந்தான்.—கர்த்தரோவெனில் அவர்களை இஸ்
ரவேலுக்குமுன்பாகக் கலங்கப்பண்ணினார்; ஆ
கையால் அவர்களைக் கிபேயோனிலே மகா சங்
காரமாக மடங்கடித்து, பெத்தொரோனுக்குப்
போகிற வழியிலே துரத்தி, அசெக்காமட்டுக்கும்
மக்கெதாமட்டுக்கும் முறிய அடித்தார்கள்.—
௧௧ அவர்கள் பெத்தொரோனிலிருந்து இறங்குகிற
வழியிலே இஸ்ரவேலுக்குமுன்பாக ஓடிப்போ
கையில், அசெக்காமட்டும் ஓடுகிற அவர்கள்மே
லே கர்த்தர் வானத்திலிருந்து அவர்களைக் கொல்
லுகிற பெரிய கல்லுகளை விழப்பண்ணினார்; இ
ஸ்ரவேல் புத்திரர் பட்டையத்தால் கொன்றவர்க
ளைப்பார்க்கிலும் கல்மழையினாலே செத்தவர்கள்
அதிகமாயிருந்தார்கள்.
௧௨ கர்த்தர் எமோரியரை இஸ்ரவேல் புத்திரருக்கு
முன்பாக ஒப்புக்கொடுக்கிற அந்நாளிலே யோ
சுவா கர்த்தரைநோக்கிப் பேசி, இஸ்ரவேலின்
கண்களுக்குமுன்பாக, சூரியனே, நீ கிபே
யோன்மேலும், சந்திரனே, நீ ஆயலோன் பள்
ளத்தாக்கின்மேலும் தரித்து நில்லென்றான்.—
௧௩ அப்போது சனம் தன் சத்துருக்களுக்கு நீதியைச்
சரிக்கட்டும்மட்டும் சூரியன் தரித்தது; சந்தி
ரனும் நின்றது; இது நிறைமானுடைய புஸ்தகத்
தில் எழுதியிருக்கவில்லையோ; அப்படியே சூரி
யன் அஸ்தமிக்கத் தீவிரிக்காமல், ஏறக்குறைய
ஒரு பகல்முழுதும் நடுவானத்திலே நின்றது.—
இப்படிக் கர்த்தர் ஒரு மனிதனுடைய சொல் ௧௪
கேட்ட அந்நாளைப்போலொத்த நாள் அதற்கு
முன்னுமில்லை, அதற்குப் பின்னுமில்லை; ஏ
னென்றால் கர்த்தர் இஸ்ரவேலுக்காக யுத்தம்பண்
ணினார்.
பிற்பாடு யோசுவா இஸ்ரவேல் அனைத்தோ ௧௫
டும்கூடக் கில்காலிலிருக்கிற பாளயத்துக்குத்
திரும்பினான்.—அந்த ஐந்து இராசாக்களோவென் ௧௬
றால் ஓடிப்போய், மக்கெதாவிலிருக்கிற ஒரு
கெபியில் ஒளித்துக்கொண்டிருந்தார்கள்.—ஐந்து ௧௭
இராசாக்களும் மக்கெதாவிலிருக்கிற ஒரு கெ
பியில் ஒளித்திருந்து அகப்பட்டார்களென்று
யோசுவாவுக்கு அறிவிக்கப்பட்டது.—அப்போது ௧௮
யோசுவா சொன்னதாவது: பெரிய கல்லுக
ளைக் கெபியின் வாயிலே புரட்டிப்போட்டு, அவ்
விடத்தில் அவர்களைக் காவல்காக்கிற மனுஷ
ரை வையுங்கள்.—நீங்களோவென்றால் நில்லா ௧௯
மல், உங்கள் சத்துருக்களை அவர்களுடைய பின்
படைகளை வெட்டிக்கொண்டே துரத்துங்கள்;
அவர்களைத் தங்கள் பட்டணங்களிலே பிரவே
சிக்க ஒட்டாதிருங்கள்; ஏனெனில் உங்கள் பரா
பரனாகிய கர்த்தர் அவர்களை உங்கள் கையில் ஒப்
புக்கொடுத்தாரென்றான். — யோசுவாவும் இஸ்ர ௨௰
வேல் புத்திரரும் அவர்களை மகா பெரிய சங்க
ரிப்பாக அவர்கள் அழியுமளவும் சங்கரித்துத்
தீர்ந்து, அவர்களில் மீதியானவர்கள் அரணா
ன பட்டணங்களுக்குள் புகுந்தபிற்பாடோவென்
றால்,—சனமெல்லாம் சுகமாய் மக்கெதாவிலிருக் ௨௧
கிற பாளயத்திலே, யோசுவாவண்டைக்குத்
திரும்பிவந்தது; இஸ்ரவேல் புத்திரருக்கு விரோ
தமாக ஒருவனும் தன் நாவை அசைக்கக்கூடா
திருந்தது.
அப்போது யோசுவா, கெபியின் வாயைத் தி ௨௨
றந்து, அந்த ஐந்து இராசாக்களை அந்தக் கெபியி
லிருந்து என்னண்டைக்கு வெளியே கொண்டு
வாருங்களென்றான்.—அவர்கள் அப்படிச் செய் ௨௩
து, எருசலேமின் இராசாவும் எபிரோனின் இரா
சாவும் யர்மூத்தின் இராசாவும் லாகீசின் இரா
சாவும் எக்லோனின் இராசாவுமென்ற அந்த ஐந்
து இராசாக்களை அந்தக் கெபியிலிருந்து அவ
னண்டைக்கு வெளியே கொண்டுவந்தார்கள்.—
அவர்களை யோசுவாவண்டைக்குக் கொண்டுவந் ௨௪
தபோது, யோசுவா இஸ்ரவேல் மனுஷரையெல்
லாம் அழைப்பித்து, தன்னோடேகூட வந்த
யுத்தமனுஷரின் சேர்வைக்காரருடனே, நீங்கள்
கிட்டவந்து, உங்கள் கால்களை இந்த இராசாக்
களுடைய கழுத்துகளின்மேலே வையுங்க
ளென்றான்; அவர்கள் கிட்டவந்து, தங்கள் கால்
களை அவர்கள் கழுத்துகளின்மேலே வைத்தார்
கள். — அப்போது யோசுவா அவர்களோடே, ௨௫
நீங்கள் பயப்படாமலும் கலங்காமலும் பலத்துத்
திடமனதாயிருங்கள்; ஏனெனில் நீங்கள் யுத்தம்
பண்ணும் உங்கள் சத்துருக்களுக்கெல்லாம் கர்த்
தர் அப்படிச் செய்வாரென்றான்.—அதற்குப்பிற் ௨௬
பாடு யோசுவா அவர்களை அடித்துக்கொன்று, ஐந்

துமரங்களிலே தூக்கிப்போடுவித்தான்; சாயங்
காலம்மட்டும் மரங்களில் தொங்கியிருந்தார்கள்.-
௨௭ சூரியன் அஸ்தமிக்கிற வேளையிலோவென்றால்,
யோசுவா அவர்களை மரங்களிலிருந்து இறக்கக்
கற்பித்தான்; அவர்கள் ஒளித்துக்கொண்டிருந்த
கெபியிலே அவர்களைப் போட்டு, இந்நாள்வ
ரைக்கும் இருக்கிறபடி பெரிய கல்லுகளை கெபி
யின் வாயில் மூடினார்கள்.
௨௮ அந்நாளிலே யோசுவா மக்கெதாவைப் பிடித்
து, அதைப் பட்டையக் கருக்கினாலே அழித்து,
அதின் இராசாவையும் மனுஷரையும் அதிலுள்ள
சகல ஆத்துமாக்களையும் ஒருவரையும் மீதியாக
வைக்காமல், சங்காரம்பண்ணி, எரிகோவின்
இராசாவுக்குச் செய்ததுபோல, மக்கெதாவின்
இராசாவுக்கும் செய்தான்.
௨௯ மக்கெதாவிலிருந்து யோசுவா இஸ்ரவேல் அ
னைத்தோடுங்கூட லிப்னாவுக்குப் புறப்பட்டு,
௩௰ லிப்னாவின்மேல் யுத்தம்பண்ணினான். — அதை
யும் அதின் இராசாவையும் கர்த்தர் இஸ்ரவேலின்
கையில் ஒப்புக்கொடுத்தார்; அதையும் அதிலுள்ள
சகல ஆத்துமாக்களையும் ஒருவரையும் அதிலே
மீதியாக வைக்காமல், பட்டையக் கருக்கினாலே
அழித்து, எரிகோவின் இராசாவுக்குச் செய்தது
போல, அதின் இராசாவுக்கும் செய்தான்.
௩௧ லிப்னாவிலிருந்து யோசுவா இஸ்ரவேல் அ
னைத்தோடுங்கூட லாகீசுக்குப் புறப்பட்டு, அ
துக்கெதிரே பாளயமிறங்கி, அதின்மேல் யுத்
௩௨ தம்பண்ணினான். — கர்த்தர் லாகீசை இஸ்ரவே
லின்கையில் ஒப்புக்கொடுத்தார்; அதை இரண்
டாம்நாளிலே பிடித்து, லிப்னாவுக்குச் செய்தற்
குச் சரியாக, அதையும் அதிலுள்ள எல்லா ஆத்
துமாக்களையும் பட்டையக் கருக்கினால் அழித்
தான்.
௩௩ அப்போது கேசேரின் இராசாவாகிய ஓராம்
லாகீசுக்கு ஒத்தாசைசெய்ய ஏறிவந்தான்; ஆனால்
யோசுவா அவனையும் அவன் சனத்தையும் ஒருவ
னும் மீதியாகாதேபோகும்மட்டும் வெட்டிப்
போட்டான்.
௩௪ லாகீசிலிருந்து யோசுவாவும் இஸ்ரவேலனைத்
துமாய் எக்லோனுக்குப் புறப்பட்டு, அதற்கு எதி
ரே பாளயமிறங்கி, அதின்மேல் யுத்தம்பண்ணி,-
௩௫ அதை அந்நாளிலே பிடித்து, அதைப் பட்டை
யக் கருக்கினால் அழித்தார்கள்; லாகீசுக்குச் செய்
ததற்குச் சரியாக, அதிலுள்ள நரசீவன்களையெல்
லாம் அந்நாளிலேதானே சங்காரம்பண்ணினான்.
௩௬ பிறகு எக்லோனிலிருந்து யோசுவாவும் இஸ்ர
வேல் அனைத்துமாய் எபிரோனுக்குப் புறப்பட்
௩௭ டு, அதின்மேல் யுத்தம்பண்ணி,—அதைப் பிடித்
து, எக்லோனுக்குச் செய்ததற்குச் சரியாக, அ
தையும் அதின் இராசாவையும் அதற்கு அடுத்த
எல்லாப் பட்டணங்களையும் அதிலுள்ள சகல
நரசீவன்களையும் ஒருவரையும் மீதியாக வைக்கா
மல், பட்டையக் கருக்கினால் அழித்தார்கள்;
அதையும் அதிலுள்ள நரசீவன்களையும் எல்லாம்
சங்காரம்பண்ணினான்.

பிற்பாடு யோசுவா இஸ்ரவேலனைத்தோடும் ௩௮
கூடத் தேபீருக்குத் திரும்பிப்போய், அதின்
மேல் யுத்தம்பண்ணி,—அதையும் அதின் இரா ௩௯
சாவையும் அதைச்சேர்ந்த எல்லாப் பட்டணங்
களையும் பிடித்தான்; அவைகளைப் பட்டையக்
கருக்கினாலே அழித்து, அதிலுள்ள நரசீவன்க
ளையெல்லாம் ஒருவரையும் மீதியாக வைக்கா
மல், சங்காரம்பண்ணினார்கள்; எபிரோனுக்கும்
லிப்னாவுக்கும் அவைகளின் இராசாவுக்கும்
செய்ததுபோல தேபீருக்கும் அதின் இராசா
வுக்கும் செய்தான்.
இப்படியே யோசுவா மலைத்தேசமனைத்தை ௪௰
யும் தெற்குச்சீமையையும் சமனான பூமியையும்
தண்ணீர்பாய்கிற தலங்களையும் அவைகளின்
எல்லா இராசாக்களையும் ஒருவரையும் மீதியாக
வைக்காமல் அழித்து, இஸ்ரவேலின் பராபரனா
கிய கர்த்தர் கற்பித்தபடியே, சுவாசமுள்ள எல்
லாவற்றையும் சங்காரம்பண்ணி,—காதேஸ்பற் ௪௧
னெயாதுவக்கிக் காத்சாமட்டும் இருக்கிறதையும்
கிபேயோன்மட்டுமிருக்கிற கோசென் சீமைய
னைத்தையும் அழித்தான்.—அந்த எல்லா இரா ௪௨
சாக்களையும் அவர்கள் தேசத்தையும் யோசுவா
ஒருமிக்கப் பிடித்தான்; ஏனெனில் இஸ்ரவே
லின் பராபரனாகிய கர்த்தர் இஸ்ரவேலுக்காக யுத்
தம்பண்ணினார்.—பிற்பாடு யோசுவா இஸ்ரவே ௪௩
லனைத்தோடுங்கூடக் கில்காலிலிருக்கிற பாள
யத்துக்குத் திரும்பினான்.

## ௰௧. அதிகாரம்.

௧. பல இராசாக்கள் மேரோம் நதியண்டையில் முறியடிக்கப்பட்டது. ௰. ஆத்சோர் பிடிபட்டுக் கொளுத்தப்பட்டது. ௰௧. அத்தேசமெல்லாம் யோசுவாவினால் பிடிக்கப்பட்டது. ௨௧. ஏனாக்கியரை நிக்கிரகம்பண்ணினது.

ஆத்சோரின் இராசாவாகிய யாபீன் அதைக் ௧
கேட்டபோதோவெனில், அவன் மாதோனின்
இராசாவாகிய யோபாப் அண்டைக்கும், சிம்
ரோனின் இராசாவண்டைக்கும், அக்சாபின்
இராசாவண்டைக்கும்,—வடக்கேயிருக்கிற மலை ௨
களிலும் கின்னரோத்துக்குத் தெற்கேயிருக்கிற
நாட்டுப்புறத்திலும் சமனான பூமியிலும் மேற்கே
இருக்கிற நாப்போத்தோரிலுமிருக்கிற இராசாக்
களண்டைக்கும்,—கிழக்கேயும் மேற்கேயுமிரு ௩
க்கிற கானானியரண்டைக்கும், மலைகளிலிருக்
கிற எமோரியர், ஏத்தியர், பேரீசியர், எபூசியரண்
டைக்கும், எர்மோன் மலையின் அடியிலே மிஸ்
பா சீமையிலிருக்கிற ஏவியரண்டைக்கும், ஆள
னுப்பினான். — அவர்கள் திரட்சிக்குக் கடற்க ௪
ரை மணலைப்போலொத்த ஏராள சனமாகிய தங்
களுடைய எல்லாச் சேனைகளோடும் மகா ஏரா
ளமான குதிரைகளோடும் இரதங்களோடுங்கூ
டப் புறப்பட்டார்கள்.—இந்த இராசாக்களெல் ௫
லாரும் கூடி, இஸ்ரவேலோடே யுத்தம்பண்ண
வந்து, ஏகமாய் மேரோம் என்ற தண்ணீரண்டை
யிலே பாளயமிறங்கினார்கள்,
அப்போது கர்த்தர் யோசுவாவோடே சொ ௬
ன்னதாவது: அவர்களுக்குப் பயப்படாயாக;

ஏனெனில் நாளை இந்நேரத்திலே நாம் அவர்களை
யெல்லாம் இஸ்ரவேலுக்குமுன்பாக வெட்டுண்
டவர்களாக ஒப்புக்கொடுப்போம்; நீ அவர்கள்
குதிரைகளின் குதிகால் நரம்புகளை அறவெட்
டி, அவர்கள் இரதங்களை அக்கினியால் சுட்டெ
௭ ரிக்கக்கடவாயென்றார்.— யோசுவாவும், அவ
னோடேகூட யுத்தசனம் அனைத்தும், அசுப்பிலே
மேரோம் தண்ணீரண்டையிலிருக்கிற அவர்களி
டத்தில் வந்து, அவர்கள்மேல் விழுந்தார்கள்.—
௮ கர்த்தர் அவர்களை இஸ்ரவேலின்கையில் ஒப்புக்
கொடுத்தார், அவர்களை முறியடித்து, பெரிய சீ
தோன்மட்டுக்கும் உப்பளங்கள்மட்டுக்கும் கிழக்
கே இருக்கிற மிஸ்பே பள்ளத்தாக்குமட்டுக்கும்
துரத்தி, அவர்களில் ஒருவரும் மீதியாகாதேபோ
கும் அளவும் அவர்களை வெட்டிப்போட்டார்
௯ கள்.—யோசுவா கர்த்தர் தனக்குச் சொன்னபடி,
அவர்களுக்குச் செய்து, அவர்கள் குதிரைகளின்
குதிகால் நரம்புகளை அறவெட்டி, அவர்கள் இர
தங்களை அக்கினியால் சுட்டுப்போட்டான்.
௰ அக்காலத்திலே யோசுவா திரும்பிக்கொண்டு,
ஆத்சோரைப் பிடித்து, அதின் இராசாவைப்
பட்டயத்தினாலே வெட்டிப்போட்டான்; ஏ
னென்றால் ஆத்சோர்முதல் அந்த இராச்சியங்க
ளுக்கெல்லாம் தலையான பட்டணமாயிருந்தது.–
௰௧ அதிலிருந்த ஆத்துமாக்களையெல்லாம் பட்டை
யக் கருக்கினால் வெட்டி, சங்காரம்பண்ணினார்
கள்; சுவாசமுள்ளது ஒன்றும் மீதியானதில்லை;
ஆத்சோரையோ அக்கினியாலே சுட்டுப்போட்
௰௨ டான்.–அந்த இராசாக்களுடைய எல்லாப் பட்
டணங்களையும் அவைகளுடைய எல்லா இரா
சாக்களையும் யோசுவா பிடித்து, பட்டையக்
கருக்கினால் அழித்து, கர்த்தருடைய ஊழியக்கா
ரனாகிய மோசே கற்பித்தபடி, அவர்களைச் சங்கா
௰௩ ரம்பண்ணினான்.—ஆனால் தங்கள் அரணிப்போ
டே இருந்த பட்டணங்களையெல்லாம் இஸ்ர
வேல் சுட்டெரித்துப்போடாமல் வைத்தார்கள்;
ஆத்சோரைமாத்திரம் யோசுவா சுட்டெரித்துப்
௰௪ போட்டான்.—அந்தப் பட்டணங்களின் ஆஸ்
தியையும் மிருக சீவன்களையுமெல்லாம் இஸ்ர
வேல் புத்திரர் கொள்ளையிட்டுக்கொண்டார்
கள்; ஆனால் எல்லா மனுஷரையும் பட்டையக்
கருக்கினால் அழித்துத் தீருமட்டும், வெட்டிப்
போட்டார்கள்; சுவாசமுள்ளது ஒன்றையும்
அவர்கள் மீதியாக வைத்ததில்லை.
௰௫ கர்த்தர் தமது ஊழியக்காரனாகிய மோசேக்கு
எப்படிக் கற்பித்திருந்தாரோ, அப்படி மோசே
யோசுவாவுக்குக் கற்பித்திருந்தான்; அப்படியே
யோசுவா செய்தான்; கர்த்தர் மோசேக்குக் கற்
பித்ததில் ஒன்றையும் அவன் தாழ்ச்சியாகவிட்ட
தில்லை.
௰௬ இந்தப்பிரகாரமாக யோசுவா சேயீருக்கேறிப்
போகிற மொட்டைப் பர்வதம்துவக்கி லீபனோ
னின் பள்ளத்தாக்கில் எர்மோன் பர்வதத்தடியில்
இருக்கிற பாகால் காத்மட்டுமுள்ள அந்த முழுத்
தேசமாகிய மலைகளையும் தெற்குச்சீமை யாவை
யும் கோசேன்சீமையாவையும் சமனான பூமியை
யும் நாட்டுப்புறத்தையும் இஸ்ரவேலின் பர்வதங்
களையும் அதின் சமனான பூமியையும் பிடித்து,–
அவைகளின் இராசாக்களையெல்லாம் பிடித்து, ௰௭
அவர்களை வெட்டிக் கொன்றுபோட்டான்.—
அநேகநாளாய் யோசுவா அந்த இராசாக்களோ ௰௮
டெல்லாம் யுத்தம்பண்ணினான்.
கிபேயோனின் குடிகளாகிய ஏவியரைத்தவிர, ௰௯
ஒரு பட்டணமும் இஸ்ரவேல் புத்திரரோடே
சமாதானம்பண்ணினதில்லை; எல்லாப் பட்ட
ணங்களையும் யுத்தம்பண்ணிப் பிடித்தார்கள்.—
ஏனெனில் யுத்தம்பண்ண, இஸ்ரவேலுக்கெதி ௨௰
ராக வரும்படிக்கு, அவர்கள் தங்கள் இருதயத்
தை அழுத்தமாக்கினதும், இப்படியே அவர்கள்
பேரில் இரக்கம் உண்டாகாமல், கர்த்தர் மோ
சேக்குக் கற்பித்தபடி, அவர்களை அழித்துச் சங்
காரம்பண்ணினதும் கர்த்தரால் வந்த காரியமா
யிருந்தது.
அக்காலத்திலே யோசுவா வந்து, மலைத்தேச ௨௧
மாகிய எபிரோனிலும், தெபீரிலும், ஆனாபிலும்,
யூதாவின் சகல பர்வதங்களிலும் இஸ்ரவேலின்
சகல பர்வதங்களிலுமிருந்த ஏனாக்கியரை நிக்கி
ரகம்பண்ணி, அவர்களை அவர்கள் பட்டணங்க
ளோடுங்கூடச் சங்கரித்தான்.—இஸ்ரவேல் புத் ௨௨
திரரின் தேசத்தில் ஏனாக்கியர் மீதியாக வைக்கப்
பட்டதில்லை,காத்சாவிலும் காத்திலும் அஸ்தோத்
திலும்மாத்திரம் சிலர் மீதியானார்கள்.
அப்படியே யோசுவா தேசமனைத்தையும் கர்த் ௨௩
தர் மோசேயோடே சொன்னபடியெல்லாம்
பிடித்து, அதை இஸ்ரவேலருக்கு அவர்கள்
கோத்திரங்களுடைய பங்குகளின்படியே சுதந்
தரமாகக் கொடுத்தான்; யுத்தம்பண்ணி ஓய்ந்ததி
னாலே தேசம் அமைதலாயிற்று.

## ௰௨. அதிகாரம்.

௧. மோசே பிடித்துத் தந்த இரண்டிராசாக்களின் தேசங்களையும், ௭. யோர்தான்நதியின் அப்புறத்தில் யோசுவா முறியடித்த முப்பத்தொரு இராசாக்களையும் குறித்தது.

யோர்தானுக்கப்பாலே சூரியன் உதிக்கிற திசை ௧
யிலே இஸ்ரவேல் புத்திரர் முறிய அடித்த தேசத்
தின் இராசாக்களும், அர்னோன் நதிதுவக்கி எர்
மோன் பர்வதம்மட்டுக்கும் கிழக்கே சமனான
பூமி எல்லைமட்டுக்கும் சுதந்தரித்துக்கொண்ட
அவர்களுடைய தேசமுமாவன: — எஸ்போ ௨
னில் குடியிருந்த எமோரியரின் இராசாவாகிய
சீகோன், அவன் அர்னோன் நதியோரத்திலிருக்
கிற ஆரோவேரும் நதியின் நடுமையமும் பாதிகி
லேயாத்தும் துவக்கி, அம்மோன் புத்திரரின் எல்
லையான யாபொக்காறுமட்டுக்கும்,–சமனானவெ ௩
ளிதுவக்கிக் கிழக்கே இருக்கிற கின்னேரோத்
கடல்மட்டுக்கும் பெத்எசிமோத் வழியாய்க் கிழ
க்கே இருக்கிற சமனானவெளியின் கடலாகிய
உப்புக்கடல்மட்டும் இருக்கிறதையும் தெற்கே
அஸ்தோத் பிஸ்காவுக்குத் தாழ்வாயிருக்கிறதை
யும் ஆண்டிருந்தான்.—இராட்சதரில் மீதியான ௪
பாசானின் இராசாவாகிய ஓகின் எல்லையை

யும் சுதந்தரித்துக்கொண்டார்கள்; அவன் அஸ்த
௫ ரோத்திலும் எதிரேயிலும் வாசம்பண்ணி,—ஏர்
மோன் பர்வதத்தையும் சல்காவையும் கெசூரியர்
மாகாத்தியர் எல்லைமட்டுக்கும் எஸ்போனின்
இராசாவாகிய சீகோனின் எல்லையாயிருந்த பா
தி கீலேயாத்மட்டுக்கும் இருக்கும் பாசான்
௬ அனைத்தையும் ஆண்டிருந்தான். — அவர்களைக்
கர்த்தரின் ஊழியக்காரனாகிய மோசேயும் இஸ்ர
வேல் புத்திரரும் முறிய அடித்தார்கள்; அத்தேசத்
தைக் கர்த்தரின் ஊழியக்காரனாகிய மோசே
ரூபேனியருக்கும் காதியருக்கும் மனாசேயின்
பாதிக்கோத்திரத்துக்கும் சுதந்தரமாகக் கொடுத்
தான்.
௭ ஆனால் யோர்தானுக்கு இப்பாலே மேற்கே
லீபனோனின் பள்ளத்தாக்கிலிருக்கிற பாகால்
காத்முதல்கொண்டு சேயீருக்கேறிப்போகிற
மொட்டைமலைமட்டும் மலைகளிலும் பள்ளத்
தாக்குகளிலும் சமனான பூமியிலும் மலைகளுக்
கடுத்த புறங்களிலும் வனாந்தரத்திலும் தெற்குச்
௮ சீமையிலும் இருக்கிறதும், — யோசுவா இஸ்ர
வேல் கோத்திரங்களுக்குச் சுதந்தரமாகப் பங்
கிட்டதுமான ஏத்தியர், எமோரியர், கானானியர்,
பேரீசியர், ஏவியர், எபூசியருடைய தேசத்தில்
இருந்தவர்களும் யோசுவாவும் இஸ்ரவேல் புத்தி
ரரும் முறிய அடித்தவர்களுமான இராசாக்களா
னவர்கள்:
௯ எரிகோவின் இராசாவும், பேத்தேல் கிட்ட
௰ இருக்கிற ஆயியின் இராசாவும்,—எருசலேமின்
௰௧ இராசாவும், எபிரோனின் இராசாவும்,—யர்மூத்
௰௨ தின் இராசாவும், லாகீசின் இராசாவும்,—எக்லோ
௰௩ னின் இராசாவும், கேசேரின் இராசாவும்,—தே
௰௪ பீரின் இராசாவும், கெதெரின் இராசாவும்,—ஒற்
௰௫ மாவின் இராசாவும், ஆருதின் இராசாவும்,—லிப்
னாவின் இராசாவும், அதுல்லாமின் இராசாவும்,—
௰௬ மக்கெதாவின் இராசாவும், பேத்தெலின் இராசா
௰௭ வும்,—தப்பூகாவின் இராசாவும், எப்பேரின் இ
௰௮ ராசாவும், — அப்பெக்கின் இராசாவும், லசரோ
௰௯ னின் இராசாவும், — மாதோனின் இராசாவும்,
௨௰ ஆத்சோரின் இராசாவும், — சிம்ரோன்மேரோ
ரின் இராசாவும், அக்சாப்பின் இராசாவும்,—
௨௧ தானாகின் இராசாவும், மெகிதோவின் இராசா
௨௨ வும்,—கெதெசின் இராசாவும், கர்மேலுக்கடுத்த
௨௩ யக்கினேயாமின் இராசாவும்,—நாப்பொத்தோ
ருக்கடுத்த தோரின் இராசாவும், கில்காலுக்கடுத்த
௨௪ சாதிகளின் இராசாவும், — திற்சாவின் இராசா
வும்தானே; இவர்களெல்லாரும் முப்பத்தொரு
இராசாக்கள்.

## ௰௩. அதிகாரம்.

௧. செயிக்கப்படாத தேசத்தின் எல்லை. ௮ இரண்டரைக்கோத்திரத்தின் சுதந்தரம். ௰௪. ௩௩. கர்த்தரும் அவருக்கிடும் பலிகளும் லேவியர்களுக்குச் சுதந்தரம். ௰௫. ரூபேனின் சுதந்தரத்தின் எல்லைகள். ௨௨. பாலாமைக் கொன்றது. ௨௪. காத் புத்திரர்களுக்கும், ௨௯. மனாசே அரைக் கோத்திரத்திற்குமுரிய தேசத்தின் எல்லைகள்.

௧ யோசுவா முதிர்ந்தவனும் வயதுசென்றவனு
மாகையில், கர்த்தர் அவனோடே சொன்னதா
வது: நீ முதிர்ந்தவனும் வயதுசென்றவனும்
ஆனாய், சுதந்தரித்துக்கொள்ளவேண்டிய மற்றச்
சீமையோவெனில், மகா விஸ்தாரமானது.—அது ௨
ஏதெனில், எகிப்துக்கெதிரான சீகோர் நதிதுவக்
கிக் கானானியரைச் சேர்ந்ததாய் எண்ணப்படுகிற
வடக்கே இருக்கும் எக்கிரோனின் எல்லைமட்டு
மிருக்கிற பெலிஸ்தரின் எல்லா எல்லைகளும்
கேசூரி அனைத்தும்,—காத்சா, அஸ்தோத், அஸ்க் ௩
லோன், காத், எக்கிரோனென்ற பட்டணங்களி
லிருக்கிற பெலிஸ்தருடைய ஐந்து அதிபதிக
ளின் சீமையும், ஆவியரின் சீமையும்,—தெற்கே ௪
துவக்கி ஆப்பெக்மட்டுக்கும் எமோரியர் எல்லை
மட்டுக்கும் இருக்கிற கானானியரின் சகல தேச
மும், சீதோனியருக்கடுத்த மெயாராவும்,—கிப் ௫
லியரின் சீமையும் சூரியோதயப்புறத்தில் எர்
மோன் மலையின் அடியிலிருக்கிற பாகால் காத்
முதல்கொண்டு எமாத்துக்குள் பிரவேசிக்கும்
மட்டுமுள்ள லீபனோன் அனைத்தும்,—லீபனோன் ௬
துவக்கி உப்பளங்கள்மட்டும் மலைகளில் குடியி
ருக்கிற யாவருடைய சீமையும் எல்லாச் சீதோ
னியருடைய சீமையும்தானே; நாம் அவர்களை
இஸ்ரவேல் புத்திரருக்குமுன்பாகத் துரத்து
வோம்; நாம் உனக்குக் கற்பித்தபடியே, நீ இஸ்ர
வேலுக்குச் சுதந்தர எல்லைகளின் சீட்டுகளை
மாத்திரம் போட்டு,
இப்போது இந்தத் தேசத்தை ஒன்பது கோத்தி ௭
ரங்களுக்கும் மனாசேயின் பாதிக்கோத்திரத்துக்
கும் சுதந்தரமாகப் பங்கிடு என்றார்.—ஏனென் ௮
றால் அதின் மற்றப் பாதிக்கோத்திரத்தாரும் ரூபே
னியரும் காதியரும் தங்கள் சுதந்தரத்தை அடை
ந்து தீர்ந்தது; அதைக் கர்த்தரின் ஊழியக்காரனா
கிய மோசே யோர்தானுக்கு அப்பாலே சூரி
யோதயதிசையிலே அவர்களுக்குக் கொடுத்தான்.
என்னவெனில் அற்னோன் நதிஓரத்திலிருக் ௯
கிற ஆரோவேரும், நதியின் நடுமையத்திலிருக்
கிற பட்டணமும் துவக்கித் தீபோன்மட்டுமிருக்
கிற மெதெபாவின் சமனான சகல பூமியையும்,—
எஸ்போனில் ஆண்ட எமோரியரின் இராசாவா ௰
கிய சீகோனுக்கு, அம்மோன் புத்திரரின் எல்லை
மட்டும் இருந்த சகல பட்டணங்களையும், —
கீலேயாத்தையும், கேசூரியர் மாகாத்தியருடைய ௰௧
எல்லையையும், எர்மோன் பர்வதம் எல்லாவற்றை
யும், — அஸ்தரோத்திலும் எதிரேயிலும் ஆண்டு, ௰௨
மோசே முறியடித்துத் துரத்தின இராட்சதரில்
மீதியாயிருந்த பாசானின் இராசாவாகிய ஓகுக்
குச் சல்காமட்டுமிருந்த முழு பாசானையும், அ
வர்களுக்குக் கொடுத்தான்.—இஸ்ரவேல் புத்திர ௰௩
ரோவெனில் கேசூரியரையும் மாகாத்தியரையும்
துரத்திவிடாதேபோனார்கள்; அவர்கள் இந்நாள்
வரைக்கும் இஸ்ரவேலின் நடுவே குடியிருக்கி
றார்கள்.—லேவியரின் கோத்திரத்துக்குமாத்திரம் ௰௪
அவன் சுதந்தரம் கொடுத்ததில்லை; இஸ்ரவேலின்
பராபரனாகிய கர்த்தருடைய தகனபலிக்கடுத்த
வைகளே அவர்களுக்கு அவர் சொன்னபடி
அவர்களுடைய சுதந்தரம்.

௰௫ அப்படியே மோசே ரூபேன் புத்திரரின்
கோத்திரத்துக்கு அவர்களுடைய வம்சங்களுக்
௰௬ குத்தக்கதாகச் சுதந்தரம்கொடுத்தான்-அற்னோன்
நதிஓரத்திலிருக்கிற ஆரோவேரும், நதியின் நடு
மையத்திலிருக்கிற பட்டணமும் துவக்கியிருக்
கிற மெதெபாவின் சமனான சகல பூமியும்,—
௰௭ சமனான பூமியிலிருக்கிற எஸ்போனும், அதின்
எல்லாப் பட்டணங்களுமாகிய தீபோன், பா
௰௮ மொத்பாகால், பெத்பாகால்மேயோன்,-யாத்சா,
௰௯ கேதேமொத்,மேப்பாத்,—கீரியத்தாயீம், சிப்மா,
பள்ளத்தாக்கின் மலையிலுள்ள செரேத்சகார்,—
௨௰ பெத்பேயோர், அஸ்தோத்பிஸ்கா, பெத்யேசி
௨௧ மோத்முதலான,-சமனான பூமியிலுள்ள எல்லாப்
பட்டணங்களும், எஸ்போனில் ஆண்டிருந்த
சீகோனென்ற எமோரியருடைய இராசாவின்
இராச்சியமனைத்தும், அவர்கள் எல்லைக்குள்ளா
யின; எனெனில் இவனையும், தேசத்திலே குடி
யிருந்து சீகோனின் சுபையதாராயிருந்த எவி,
ரெக்கேம், சூர், உர், ரேபா என்ற மீதியாவின்
பிரபுக்களையும், மோசே வெட்டிப்போட்டான்.
௨௨ இஸ்ரவேல் புத்திரர் வெட்டின மற்றவர்களோ
டேகூட, பேயோரின் குமாரனாகிய பாலா
மென்ற குறிகாரனையும் பட்டையத்தினாலே
௨௩ கொன்றுபோட்டார்கள்.—அப்படியே யோர்தா
னும் அதற்கடுத்ததும் ரூபேன் புத்திரரின் எல்லை
யாயிற்று; இந்தப்பட்டணங்களும் இவைகளின்
கிராமங்களும் ரூபேன் புத்திரருக்கு அவர்கள்
வம்சங்களின்படி வந்த சுதந்தரம்.
௨௪ காத் புத்திரரின் கோத்திரத்துக்கு மோசே
அவர்கள் வம்சங்களுக்குத் தக்கதாகக் கொடுத்த
௨௫ தென்னவெனில், — யாசேரும் கீலேயாத்தின்
எல்லாப் பட்டணங்களும், ரபாவுக்கெதிரே இ
ருக்கிற ஆரோவேர்மட்டுமுள்ள அம்மோன் புத்
௨௬ திரரின் பாதித்தேசமும்,—எஸ்போன் துவக்கி
ராமாத்மிஸ்பெமட்டும், பெத்தொனிம்மட்டும் இ
ருக்கிறதும், மகனாயீம்துவக்கித் தெபீரின் எல்லை
௨௭ மட்டும் இருக்கிறதும்,-எஸ்போனின் இராசாவா
கிய சீகோனுடைய இராச்சியத்தின் மற்றப் பங்
காகிய பள்ளத்தாக்கிலிருக்கிற பெத்தாராமும்,
பெத்நிம்ருவும், சுக்கோத்தும், சாப்போனும்,
யோர்தான்மட்டும் இருக்கிறதும், கிழக்கே யோர்
தானின் கரையோரமாய்க் கின்னரேத் கடலின்
கடையாந்தரம்மட்டும் இருக்கிறதும், அவர்கள்
௨௮ எல்லைக்குள்ளாயிற்று.-இந்தப் பட்டணங்களும்
இவைகளின் கிராமங்களும் காத் புத்திரருக்கு
அவர்களுடைய வம்சங்களின்படி வந்த சுதந்
தரம்.
௨௯ மனாசே புத்திரரின் பாதிக்கோத்திரத்துக்கும்
மோசே அவர்கள் வம்சத்துக்குத்தக்கதாகக் கொ
௩௰ டுத்தான்.—மகனாயீம்துவக்கி, பாசானின் இரா
சாவாகிய ஓகின் முழு இராச்சியமாயிருக்கிற
பாசான் அனைத்தும், பாசானிலுள்ள யாவீரின்
சகல ஊர்களுமான அறுபது பட்டணங்கள் அ
௩௧ வர்கள் எல்லைக்குள்ளாயிற்று.-பாதிக் கீலேயாத்
தையும் பாசானிலே அஸ்தரொத் எதிரேயி என்ற
ஓக் இராச்சியத்தின் பட்டணங்களையும் மனாசே
யின் குமாரனாகிய மாகீரின் பாதிப் புத்திர
ருக்கு அவர்களுடைய வம்சங்களின்படி கொ
டுத்தான்.— மோசே சூரியோதயதிசையில், எரி ௩௨
கோவின்கிட்ட யோர்தானுக்கு அக்கரையிலிருக்
கிற மோவாபின் சமனானவெளிகளில் சுதந்தர
மாகக் கொடுத்தவைகள் அவைதானே.—ஆனால் ௩௩
லேவிகோத்திரத்திற்கு மோசே சுதந்தரம் கொ
டுத்ததில்லை, இஸ்ரவேலின் பராபரனாகிய கர்த்தர்
அவர்களுக்குச் சொல்லியிருக்கிறபடி அவரே
அவர்களுடைய சுதந்தரம்.

## ௰௪. அதிகாரம்.

௧. ஒன்பதரைக்கோத்திரத்தார் சீட்டின்படி சுதந்தரத்தை அடையவேண்டுமென்பது. ௬. காலேப் எபிரோனைச் சுதந்தரமாகப் பெற்றது.

கானான்தேசத்திலே இஸ்ரவேல் புத்திரர் சுதந் ௧
தரித்துக்கொண்டதையோவெனில், ஆசாரியனா
கிய எலேயாசாரும், நூனின் குமாரனாகிய யோ
சுவாவும், இஸ்ரவேல் புத்திரருடைய கோத்திரப்
பிதாக்களின் தலைவரும், கர்த்தர் மோசேயைக்
கொண்டு கற்பித்தபடி சீட்டுப்போட்டு, அவர்க
ளுக்குச் சுதந்தரமாகப் பங்கிட்டார்கள்.—யா ௨
ருக்கென்றால் ஒன்பதரைக்கோத்திரங்களுக்குத்
தானே.—எனெனில் இரண்டரைக்கோத்திரங்க ௩
ளுக்கு மோசே யோர்தானுக்கப்பாலே சுதந்தரம்
கொடுத்தான்; லேவியருக்கோவெனில் அவன்
அவர்கள் நடுவே சுதந்தரம் கொடுக்கவில்லை.—
எனெனில் மனாசே எப்பிராயீமென்ற யோசேப் ௪
பின் புத்திரர் இரண்டு கோத்திரங்களானது;
ஆனால் அவர்கள் லேவியருக்குத் தேசத்திலே
பங்குகொடாமல், குடியிருக்கும் பட்டணங்க
ளையும் அவர்களுடைய ஆடுமாடுகளுக்கும் ஆஸ்
திக்குமாக அவைகளின் பேட்டைகளையும்மாத்
திரம் அவர்களுக்குக் கொடுத்தார்கள்.—கர்த்தர் ௫
மோசேக்குக் கற்பித்தபடி இஸ்ரவேல் புத்திரர்
செய்து, தேசத்தைப் பங்கிட்டார்கள்.

அப்போது யூதாவின் புத்திரர் கில்காலிலே ௬
யோசுவாவண்டைக்குச் சேர்ந்தார்கள்; அவனோ
டே கேனேசியனான எப்புன்னேயின் குமாரனா
கிய காலேப் சொன்னதாவது: காதேஸ்பற்னே
யாவிலே கர்த்தர் எனக்காகவும் உமக்காகவும்
பராபரனுடைய மனுஷனாகிய மோசேயோடே
சொன்ன வார்த்தையை நீர் அறிவீர்.-தேசத்தைப் ௭
பார்த்தறியக் கர்த்தரின் தாசனாகிய மோசே என்
னைக் காதேஸ்பற்னெயாவிலிருந்து அனுப்புகிற
போது, எனக்கு நாற்பதுவயதாயிருந்தது; என்
இருதயத்தில் இருந்தபடியே அவருக்கு மறு
செய்தி கொண்டுவந்தேன்.-ஆனால் என்னோடே ௮
கூட ஏறிப்போய் வந்த என்னுடைய சகோதரர்
சனத்தின் இருதயத்தைக் கரையப்பண்ணினார்
கள்; நானோவெனில் என் பராபரனாகிய கர்த்த
ரை உத்தமமாய்ப் பின்பற்றினேன்.—அந்நாளி ௯
லே மோசே, நீ என் பராபரனாகிய கர்த்தரை உத்
தமமாய்ப் பின்பற்றினபடியினாலே, உன் கால்
மிதித்த சீமை உனக்கும் உன் பிள்ளைகளுக்கும்

என்றைக்கும் சுதந்தரமாயிருக்கக்கடவதென்று
௰ திடமாக ஆணையிட்டார்.—இப்போதும் இதோ
கர்த்தர் சொன்னபடி என்னை உயிரோடே வைத்
தார்; இஸ்ரவேல் வனாந்தரத்தில் நடமாடுகை
யில், கர்த்தர் அந்த வார்த்தையை மோசேயோடே
சொல்லி, இப்போது நாற்பத்தைந்துவருஷமா
யிற்று; இப்போதும் இதோ இந்நாளில் நான் எண்
௰௧ பத்தைந்து வயதுள்ளவன். — மோசே என்னை
அனுப்புகிற நாளில், எனக்கிருந்த அந்தப்பலன்
இன்னம் இந்நாளில் எனக்கிருக்கிறது; யுத்தத்
திற்கும், போக்கும் வரத்துமாயிருக்கிறதற்கும்,
அப்போது எனக்கிருந்த புஷ்டி இப்போது
௰௨ எனக்கிருக்கின்றது.—இப்போதும் கர்த்தர் அந்
நாளிலே சொன்ன இந்த மலைச்சீமையை எனக்
குத் தாரும்; ஏனெனில் அங்கே ஏனாக்கியரும்,
அரணிப்பான பெரிய பட்டணங்களும் உண்
டென்று நீர் அந்நாளிலே கேட்டீர்; கர்த்தர்
சொன்னபடி அவர்களைத் துரத்திவிட, கர்த்தர்
என்னோடிருப்பாராக்குமென்றான்.
௰௩ அப்போது யோசுவா அவனை ஆசீர்வதித்து,
அப்படியே எப்புன்னேயின் குமாரனாகியகாலே
புக்கு எபிரோனைச் சுதந்தரமாகக் கொடுத்தான்.—
௰௪ இப்படியே கேநேசியனான எப்புன்னேயின்
குமாரனாகிய காலேப் இஸ்ரவேலின் பராபரனா
கிய கர்த்தரை உத்தமமாய்ப் பின்பற்றினபடியி
னாலே, எபிரோன் இந்நாள்மட்டும் இருக்கிறபடி
௰௫ அவனுக்குச் சுதந்தரமாயிற்று.—முதல் எபிரோ
னுக்கு ஏனாக்கியரில் பெரிய மனுஷனாயிருந்த
அர்பாவின் பட்டணமென்று பேரிருந்தது; தே
சம் யுத்தமில்லாமல் அமர்ந்தது.

## ௰௫. அதிகாரம்.

க. விதிதப்படிக்குண்டான யூதா கோத்திரத்தின் காணியாட்சியின் எல்லைகள். ௰௩. காலேப்பினுடைய பங்கும் செயமும். ௰௬. ஒத்னியேல் தன் பராக்கிரமத்திற்காகக் காலேப் குமாரத்தியாகிய அக்சாளை மனைவியாகப் பெற்றது. ௰௮. அவள் பிதாவினுடைய ஆசீர்வாதம் பெற்றது. ௨௧. யூதா புத்திரரின் பட்டணங்கள். ௬௩. எபூசியரைச் செயிக்கக்கூடாதது.

க யூதா புத்திரரின் கோத்திரத்திற்கு அவர்களு
டைய வம்சங்களின்படி உண்டான விகிதம்:
கடையாந்தரமான தென்புறத்திலே ஏதோமின்
எல்லை அருகான சீன்வனாந்தரம்.
௨ தென்புறமான அவர்களுடைய எல்லை உப்
புக்கடலின் கடைசியில் தெற்குமுகமாயிருக்
௩ கிற முனைதுவக்கி, — தென்புறத்தில் இருக்கிற
அக்கோராபீமின் மேடுகளுக்கும், அங்கேயி
ருந்து சீனுக்கும் போய், தெற்கே இருக்கிற கா
தேஸ்பர்னெயாவுக்கேறி, எஸ்ரோனைக் கடந்து,
ஆதாருக்கேறி, கர்க்காவைச் சுற்றிப்போய்,—
௪ அஸ்மோனுக்கும், அங்கேயிருந்து எகிப்தின்
ஆற்றுக்குப் புறப்பட்டு, கடல்மட்டுக்கும்போய்
முடியும்; இது உங்களுக்குத் தென்புறமான எல்
லையாயிருக்குமென்றான்.
௫ கீழ்ப்புறமான எல்லை, யோர்தானுடையமுகத்
துவாரம்மட்டும் இருக்கிற உப்புக்கடல்; வடபுற
மான எல்லை, யோர்தானின் முகத்துவாரமிருக்
௬ கிற கடலின் முனைதுவக்கி, — பெத்எக்லாவுக்
கேறி, வடக்கே இருக்கிற பெத் அருபாவைக்
கடந்து, ரூபேனின் குமாரனாகிய போகனின்
கல்லுக்கேறிப்போய்,—அப்புறம் ஆகோர் பள்ள
ளத்தாக்கைவிட்டுத் தெபீருக்கேறி, வடக்கே
ஆற்றின் தென்புறமான அதும்மீமின் மேட்டுக்
கும்முன்பாக இருக்கிற கில்காலுக்கு நேராக
வும், அங்கேயிருந்து என்சேமெசின் தண்ணீ
ருக்கும் போய், ரோகேலென்ற கிணற்றுக்குப்
புறப்பட்டு,—அப்புறம் எபூசியர் குடியிருக்கிற ௮
எருசலேமுக்குத் தென்பக்கமாய் இன்னோமு
டைய குமாரனின் பள்ளத்தாக்கைக் கடந்து,
வடக்கே இருக்கிற ரெப்பாயீமருடைய பள்ளத்
தாக்கின் கடைசியில் மேற்காக இன்னோம் பள்
ளத்தாக்கின் முன்னிருக்கிற மலையின் சிகரம்மட்
டும் ஏறிப்போய், — அந்த மலையின் சிகரத்திலி ௯
ருந்து நெப்தோவாவுடைய நீரூற்றுக்குப்
போய், எப்பிரோன் மலையின் பட்டணங்களுக்
குப்புறப்பட்டு, கீரியாத் எயாரிமாகிய பாலாவுக்
குப்போய், — பாலாவிலிருந்து மேற்கே சேயீர் ௰
மலைக்குத் திரும்பி, வடக்கே இருக்கிற கெசலோ
னாகிய எயாரிம் மலைக்குப் பக்கமாகப்போய்,
பெத்சேமேசுக்கு இறங்கி, திம்னாவுக்குப்போய்,-
அப்புறம் வடக்கே இருக்கிற எக்கிரோனுக்குப் ௰௧
பக்கமாகப் புறப்பட்டு, சிக்ரோனுக்கு ஓடி, பா
லாமலையைக் கடந்து, யாப்நெயெலுக்குப் புறப்
பட்டு, கடலிலே முடியும்.
மேல்புறமான எல்லை, பெரிய சமுத்திரம்; ௰௨
இது யூதா புத்திரருக்கு அவர்களுடைய வம்சங்
களின்படி சுற்றிலுமிருக்கும் எல்லை.
எப்புன்னேயின் குமாரனாகிய காலேபுக்கோ ௰௩
வென்றால், யோசுவா கர்த்தர் தனக்குக் கட்டளை
யிட்டபடி, ஏனாக்கின் தகப்பனாகிய அர்பாவின்
பட்டணமான எபிரோனை யூதாபுத்திரரின் நடு
வே பங்காகக் கொடுத்தான். — ஏனாக்குக்குப் ௰௪
பிறந்து அங்கேயிருந்த சேசாய், அகிமான், தல்
மாயென்ற ஏனாக்கின் மூன்று குமாரரைக் கா
லேப் துரத்திவிட்டு,—அங்கேயிருந்து தெபீரின் ௰௫
குடிகளண்டைக்குப் போயேறினான்; முன்கா
லத்திலே தெபீரின் பேர் கீரியாத்சேப்பேர். —
கீரியாத்சேப்பேரை மடங்கடித்துப் பிடிக்கிறவ ௰௬
னுக்கு, என் குமாரத்தியாகிய அக்சாளை விவா
கம்பண்ணிக் கொடுப்பேனென்று காலேப் சொ
ன்னான். — அப்போது காலேப்பின் சகோதர ௰௭
னான கேனாசின் மகன் ஒத்னியேல் அதைப்
பிடித்தான்; ஆகையால் தன் குமாரத்தி அக்சாளை
அவனுக்கு விவாகம்பண்ணிக்கொடுத்தான். —
அவள் பிரவேசம்பண்ணுகையில், என் தகப்பனை ௰௮
ஒரு வயல்வெளியைக் கேட்பேனென்று அவ
னைச் சம்மதம்பண்ணிக்கொண்டு, கழுதையின்
மேலிருந்து இறங்கினாள்; காலேப் அவளோடே
உனக்கென்ன வேண்டுமென்றான்.—அப்போது ௰௯
அவள் ஒரு ஆசீர்வாதத்தை எனக்குக் கட்டளை
பண்ணும்; ஏனென்றால் வரட்சியான நிலத்தை
எனக்குத் தந்தீர்; நீரூற்றுகளையும் எனக்குத் தாரு
மென்றாள்; அப்போது அவளுக்கு மேல்புறத்தி

லும் கீழ்ப்புறத்திலும் நீரூற்றுகளுள்ள நிலங்க
ளைக் கொடுத்தான்.
௨௰ யூதா புத்திரருக்கு அவர்களுடைய வம்சங்க
ளின்படி உண்டான சுதந்தரம் என்னவெனில்,
௨௧ கடையாந்தரத் தென்புறமான ஏதோமின் எல்
லைக்கு நேராய், யூதாபுத்திரரின் கோத்திரத்திற்
கிருக்கும் பட்டணங்களாவன: கப்செயேல்,
௨௨ ஏதேர், யாகூர், — கீனா, திமொனா, அதாதா, —
௨௩, ௨௪ கேதெஸ், ஆத்சோர், இத்னான், — சீப், தே
௨௫ லெம், பெய்யலோத்,—ஆத்சோர், அதாத்தா, கீரி
௨௬ யோத், எஸ்ரோனென்ற ஆத்சோர்,–ஆமாம், சே
௨௭ மா, மொலாதா,–ஆத்சார்காதா, எஸ்மோன், பெத்
௨௮ பாலேத்,—ஆத்சார்சுவால், பெயேர்செபா, பிஸ்
௨௯, ௩௰ யோதியா,—பாலா, ஈயிம், ஆத்சேம்,—எல்
௩௧ தோலாத், கெசீல், ஒற்மா,—சிக்லாக், மத்மன்னா,
௩௨ சன்சன்னா, — லெபவோத், சிலகீம், ஆயின்,
ரிமோன் என்றவைகள்; எல்லாப்பட்டணங்க
ளும் அவைகளுடைய கிராமங்களைத்தவிர இரு
பத்தொன்பது.
௩௩ பள்ளத்தாக்கு நாட்டில் எஸ்தவோல், சோரா,
௩௪ அஸ்னா, — சனோகா, என்கன்னீம், தப்பூவா,
௩௫ ஏனாம்,—யர்மூத், அதுல்லாம், சோகோ, அசெக்
௩௬ கா,—சாராயீம், அதித்தாயீம், கெதெரா, கெதெ
ரொத்தாயீம்; இந்தப் பட்டணங்கள் அவைகளு
௩௭ டைய கிராமங்களைத்தவிர பதினான்கு. — சே
௩௮ னான், அதாசா, மிக்தால்காத், — தீலான், மிஸ்
௩௯ பே, யோக்தெயெல்,—லாகீஸ், பொஸ்காத், எக்
௪௰, ௪௧ லோன்,–காபோன், லத்மாஸ், கித்லீஸ்,–கெ
தெரொத், பெத்தாகொன், நாமா, மக்கெதா; இந்
தப் பட்டணங்கள் அவைகளுடைய கிராமங்க
௪௨ ளைத்தவிர பதினாறு. — லிப்னா, எத்தேர், ஆ
௪௩, ௪௪ சான்,–இப்தா, அஸ்னா, நெத்சீப்,–கேகிலா,
அக்சீப், மரெசா; இந்தப் பட்டணங்கள் அவை
௪௫ களுடைய கிராமங்களைத்தவிர ஒன்பது.—எக்கி
ரோனும் அதின் பேட்டைகளும் கிராமங்க
௪௬ ளும்,—எக்கிரோன்துவக்கிச் சமுத்திரம்மட்டும்,
அஸ்தோத்தின் புறத்திலிருக்கிற சகல ஊர்களும்,
௪௭ அவைகளின் கிராமங்களும், — அஸ்தோத்தும்,
அதின் பேட்டைகளும், கிராமங்களும், காத்சா
வும் எகிப்தின் நதிமட்டுமிருக்கிற அதின் பேட்
டைகளும் கிராமங்களும்தானே; பெரிய சமுத்
திரமே எல்லை.
௪௮ மலைகளில், சாமீர், யத்தீர், சொக்கோ, —
௪௯ தன்னா, தேபிராயிருக்கிற கீரியாத்சன்னா, —
௫௰, ௫௧ ஆனாப், எஸ்தெமொ, ஆனீம்,—கோசேன்,
ஓலோன், கிலொ; இந்தப் பட்டணங்கள் அவை
களுடைய கிராமங்களைத்தவிர பதினொன்று. —
௫௨, ௫௩ ஆராப், தூமா, எசான்,—யானூம், பெத்தப்
௫௪ பூவா, அப்பெக்கா,—உம்தா, எபிரோனாகிய கீரி
யாத் அர்பா, சீயோர்; இந்தப் பட்டணங்கள் அ
௫௫ வைகளுடைய கிராமங்களைத்தவிர ஒன்பது.–மா
௫௬ கோன், கர்மெல், சீப், யுத்தா, — இஸ்ரேயெல்,
௫௭ யொக்தெயாம், சனோவா, — காயின், கிபேயா,
திம்னா; இந்தப் பட்டணங்கள் அவைகளுடைய
௫௮ கிராமங்களைத்தவிர பத்து. — கல், கூல், பெத்
சூர், கெதொர், — மாருத், பெத், ஆனோத், எல் ௫௯
தெக்கொன்; இந்தப் பட்டணங்கள் அவைகளு
டைய கிராமங்களைத்தவிர ஆறு.—கீரியாத் ஏயா ௬௰
ரீமாகிய கீரியாத்பாகால், ரபா; இந்தப் பட்ட
ணங்கள் அவைகளுடைய கிராமங்களைத்தவிர
இரண்டு.

வனாந்தரத்தில், பெத், ஆர்பா, மீதின், செக் ௬௧
காக்க, — நிட்சான், உப்புப்பட்டணம், ஏன் ௬௨
கேதி; இந்தப் பட்டணங்கள் அவைகளுடைய
கிராமங்களைத்தவிர ஆறு.

எருசலேமிலே குடியிருந்த எபூசியரை யூதா ௬௩
புத்திரர் துரத்திவிடக் கூடாதேபோயிற்று; ஆகை
யால் இந்நாள்மட்டும் எபூசியர் யூதாபுத்திரரோ
டேகூட எருசலேமிலே குடியிருக்கிறார்கள்.

## ௰௬. அதிகாரம்.

௧. யோசேப் புத்திரர்களுடைய நாட்டின் சாதாரணமான எல்லைகள். ௫. எப்பிராயீமின் காணியாட்சியான எல்லைகள். ௰. கானான்தேசத்தார்கள் செயிக்கப்படாதது.

யோசேப் புத்திரருக்கு விழுந்த சீட்டினால் ௧
அகப்பட்ட விகிதம்; எரிகோவின்கிட்ட இருக்
கிற யோர்தானிலிருந்து, யோர்தானுக்குக் கிழக்
கான தண்ணீருக்குப் போய், எரிகோதுவக்கிப்
பெத்தேலின் மலைகள்மட்டுமுள்ள வனாந்தர
வழியாகவும் போய்,—பெத்தேலிலிருந்து லூசுக் ௨
குப் புறப்பட்டு, ஆராகினுடைய எல்லையாகிய
ஆத்தரோத்தைக்கடந்து,—மேற்கே யப்லெத்திய ௩
ரின் எல்லைக்கும் தாழ்வான பெத்தொரோனின்
எல்லைமட்டுக்கும் காசேர்மட்டுக்கும் இறங்கி,
சமுத்திரம்மட்டும்போய் முடியும்.

இதை யோசேப்பின் புத்திரராகிய மனாசேயும் ௪
எப்பிராயீமும் சுதந்தரித்தார்கள். — எப்பிராயீம் ௫
புத்திரருக்கு அவர்களுடைய வம்சங்களின்படி
உண்டான சுதந்தரத்தினுடைய கிழக்கெல்லை,
ஆத்தரோத் அதார் துவக்கி, மேலான பெத்தொ
ரோன்மட்டும் போகின்றது.–மேற்கு எல்லை மிக் ௬
மேத்தாத்திற்கு வடக்காகப் புறப்பட்டு, கிழக்கே
தானாத்சீலோவுக்குத் திரும்பி, அதை யனோகாவு
க்குக் கிழக்காகக் கடந்து,—யனோகாவிலிருந்து ௭
ஆத்தரோத்திற்கும் நகராத்திற்கும் இறங்கி, எரி
கோகிட்டவந்து, யோர்தானுக்குப் புறப்படும்.–
தப்புவாவிலிருந்து மேற்கு எல்லை, கானான் நதிக் ௮
குப்போய், சமுத்திரத்திலே முடியும்; இது எப்
பிராயீம்புத்திரரின் கோத்திரத்திற்கு அவர்கள்
வம்சங்களின்படி உண்டான சுதந்தரம்.—பின் ௯
னையும் எப்பிராயீம் புத்திரருக்குக் கொடுக்கப்
பட்ட பட்டணங்களும் அவைகளின் கிராமங்
களுமெல்லாம் மனாசே புத்திரருடைய சுதந்தரத்
தின் நடுவே இருக்கின்றது.—காசேரிலே குடி ௰
யிருந்த கானானியரைத் துரத்திவிடாதேபோனார்
கள்; ஆகையால் கானானியர் இந்நாள்மட்டும்
இருக்கிறபடி, எப்பிராயீமருக்குள்ளே குடியி
ருந்து, பகுதிகட்டுகிறவர்களாயிருந்து சேவிக்கி
றார்கள்.

## ௰௭. அதிகாரம்.

*௧. மனாசே கோத்திரத்தின் விகிதம். ௭. அதின் எல்லை. ௰௨. கானானியர் துரத்தப்படாதது. ௰௪. யோசேப்பின் குமாரர்கள் மற்றும் ஒரு விகிதத்தைப் பெற்றது.*

௧ மனாசே கோத்திரத்திற்கும் விகிதமுண்டாயிற்
று; ஏனெனில் அவன் யோசேப்புக்கு முதல்பே
றானவனாயிருந்தான்; மனாசேயின் மூத்தகுமார
னும் கிலேயாத்தின் தகப்பனுமான மாகீர் யுத்த
மனுஷனானபடியினாலே, கிலேயாத்தும் பாசா
௨ னும் அவனுக்குண்டாயிற்று.— அபியேசேரின்
புத்திரரும், ஏலேக்கின் புத்திரரும், அஸ்றியே
லின் புத்திரரும், சேகேமின் புத்திரரும், எப்பெ
ரின் புத்திரரும், சேமிதாவின் புத்திரருமான மனா
சேயினுடைய மற்றக் குமாரரின் புத்திரராகிய
அபியேசேரின் வம்சங்களுக்குத்தக்க சுதந்தரம்
கொடுக்கப்பட்டது; தங்கள் வம்சங்களுக்குள்
ளே அவர்கள்தானே யோசேப்புடைய குமாரனா
கிய மனாசேயின் ஆண்பிள்ளைகளாயிருந்தார்கள்.
௩ மனாசேயின் குமாரனாகிய மாகீருக்குப் பிறந்த
கிலேயாத்தினுடைய குமாரனான எப்பெரின்
மகன் செலாப்பெயாத்துக்கோவெனில், குமா
ரத்திகளைத்தவிர, குமாரர்கள் இல்லாதிருந்தார்
கள்; அவன் குமாரத்திகளின் நாமங்கள், மக்
லாள், நோகாள், ஒக்லாள், மில்காள், திற்சாள்
௪ என்பவைகள்.—அவர்கள் ஆசாரியனாகிய எலே
யாசாருக்கும் நூனின் குமாரனாகிய யோசுவா
வுக்கும் பிரபுக்களுக்கும்முன்பாகச் சேர்ந்துவந்
து, எங்களுக்கு எங்கள் சகோதரர் நடுவே சுதந்த
ரம் கொடுக்க, கர்த்தர் மோசேக்குக் கற்பித்தா
ரென்றார்கள்; ஆகையால் அவர்கள் தகப்பனு
டைய சகோதரரின் நடுவே அவர்களுக்குக் கர்த்
தருடைய வாக்கின்படி சுதந்தரம்கொடுத்தான்.-
௫ யோர்தானுக்கப்பாலே இருக்கிற கிலேயாத் பா
சானென்ற தேசத்தைத்தவிர, மனாசேக்குச் சீட்
௬ டிலே விழுந்தது பத்துப்பங்குகளாயிற்று.-ஏனெ
னில் மனாசேயின் குமாரத்திகள் அவன் குமார
ருக்குள்ளே சுதந்தரம் பெற்றார்கள்; மனாசேயின்
மற்றப் புத்திரருக்கோவென்றால், கிலேயாத் தே
சமுண்டாயிற்று.
௭ மனாசேயின் எல்லை, ஆசேர் துவக்கிச் சீகே
மின் முன்னிருக்கிற மிக்மேத்தாவுக்கும், அங்கே
யிருந்து வலதுபுறமாய் என்தப்புவாகின் குடிக
௮ ளண்டைக்கும் போகிறது.—தப்புவாகின் நிலம்
மனாசேயின் வசமும், மனாசேயின் எல்லையோடி
ருக்கிற தப்புவாகோவெனில், எப்பிராயீம் புத்தி
௯ ரரின் வசமுமாயிற்று.-அப்புறம் அந்த எல்லை கா
னாவென்ற ஆற்றுக்குப் போய், ஆற்றுக்குத் தெற்
காக இறங்குகின்றது; மனாசேயினுடைய பட்ட
ணங்களின் நடுவே இருக்கிற அவ்விடத்துப் பட்
டணங்கள், எப்பிராயீமுடையவைகள்; மனாசே
யின் எல்லை ஆற்றுக்கு வடக்கேயிருந்து சமுத்தி
௰ ரத்திற்குப் புறப்பட்டு முடியும்.—தெற்குச்சீமை
எப்பிராயீமுடையது; வடக்குச்சீமை மனாசேயி
னுடையது; சமுத்திரம் அதின் எல்லையாயிருக்
கும்; வடக்கே ஆசேரையும் கிழக்கே இசக்கா
ரையும் தொடுகின்றது.—இசக்காரிலும் ஆசேரிலு ௰௧
மிருக்கிற மூன்று சீமைகளாகிய பெத்செயானும்
அதின் ஊர்களும், இப்லெயாமும் அதின் ஊர்க
ளும், தோரின் குடிகளும் அதினுடைய ஊர்க
ளும், என்தோரின் குடிகளும் அதினுடைய ஊர்
களும், தானாகின் குடிகளும் அதினுடைய ஊர்க
ளும், மெகிதோவின் குடிகளும் அதினுடைய
ஊர்களும், மனாசேயினுடையவைகள்.-மனாசே ௰௨
யின் புத்திரர் அந்தப் பட்டணங்களின் குடிக
ளைத் துரத்திவிடக்கூடாதேபோயிற்று; ஏனெ
னில் கானானியர் அந்தச் சீமையிலேதானே குடி
யிருக்கவேண்டுமென்று இருந்தார்கள். — இஸ்ர ௰௩
வேல் புத்திரர் பலத்தபோதும், கானானியரைத்
துரத்தவே துரத்தாமல், அவர்களைப் பகுதிகட்டு
கிறவர்களாக்கிக்கொண்டார்கள்.
யோசேப்பின் புத்திரர் யோசுவாவோடே பே ௰௪
சி, கர்த்தர் என்னை இதுவரைக்கும் ஆசீர்வதித்து
வந்ததினாலே, நான் சனம்பெருத்தவனாயிருந்
தாலும், நீர் எனக்குச் சுதந்தரமாக ஒரே விகிதத்
தையும் ஒரே பங்கையும் கொடுத்தது என்னவெ
ன்றார்கள்.—யோசுவா அவர்களுடனே, நீ பெ ௰௫
ருத்தசனமானால், காட்டிலேபோயேறி, எப்பிரா
யீமின் மலைகள் உனக்கு நெருக்கமாயிருக்கிறப
டியினாலே, அங்கே பெரிசியர் ரெப்பாயிமரு
டைய தேசத்திலே உனக்கு இடம் உண்டாக்கிக்
கொள்ளென்றான்.—அதற்கு யோசேப் புத்திரர் ௰௬
மலைகள் எங்களுக்குக் கிடையாது; பள்ளத்தாக்
குச் சீமையிலிருக்கிற பெத்செயானிலும், அ
தின் ஊர்களிலும், இஸ்ரவேல் பள்ளத்தாக்கி
லும் குடியிருக்கிற எல்லாக் கானானியரிடத்தில்
இருப்புரதங்கள் உண்டு என்றார்கள்.—ஆனால் ௰௭
யோசுவா யோசேப்பு வீட்டாராகிய எப்பிராயீ
முக்கும் மனாசேக்கும் சொன்னதாவது: நீ சனம்
பெருத்திருக்கிறாய், உனக்குப் பெரிய பெல
னுண்டு, ஒரு விகிதம்மாத்திரம் உனக்கு இருக்க
வேண்டாம். — மலைகள் உன்னுடையவைகளா ௰௮
யிருப்பவைகள்; அவைகள் காடானபடியினா
லே, அதை வெட்டு, அப்போது அவைகளின்
கடையாந்தரங்கள்மட்டும், அது உன்னுடைய
தாயிருக்கும்; ஏனெனில் கானானியருக்கு இருப்
புரதங்கள் இருந்தாலும், அவர்கள் பலத்தவர்
களாயிருந்தாலும், நீ அவர்களைத் துரத்திவிடுவா
யென்றான்.

## ௰௮. அதிகாரம்.

*௧. சீலோவில் கூடாரத்தை நிறுத்தினது. ௨. மீதியாயிருந்த தேசத்தைக்குறித்து ஏழுபங்காகப் பகிர்ந்து, ௰. யோசுவா சீட்டின்படி கொடுத்தது. ௰௧. பென்யமீன் கோத்திரத்தார் விகிதத்தின் எல்லை. ௨௧. அவர்களுடைய பட்டணங்கள்.*

இஸ்ரவேல் புத்திரரின் சபையெல்லாம் சீலோ ௧
விலேகூடி, அங்கே ஆசரிப்புக்கூடாரத்தை நிறுத்
தினார்கள்; ஏனென்றால் தேசம் அவர்களுக்கு
முன்பாகக் கீழ்ப்பட்டிருந்தது.
ஆனால் இஸ்ரவேல் புத்திரரில் தங்கள் சுதந்த ௨
ரத்தை இன்னம் பங்கிட்டுக்கொள்ளாத ஏழு
கோத்திரங்கள் இருந்தன.—ஆகையால் யோசுவா ௩

இஸ்ரவேல் புத்திரரோடே சொன்னதாவது: உங்
கள் பிதாக்களுடைய பராபரனாகிய கர்த்தர் உங்
களுக்குக் கொடுத்த தேசத்தைச் சுதந்தரித்துக்
கொள்ள வருகிறதற்கு, நீங்கள் எந்தமட்டும் அச
௪ தியாயிருப்பீர்கள்.–கோத்திரத்திற்கு மும்மூன்று
மனுஷரைத் தெரிந்தெடுங்கள்; அவர்கள் எழுந்து
புறப்பட்டு, தேசத்திலே சுற்றித்திரிந்து அதைத்
தங்கள் சுதந்தரத்திற்குத்தக்கதாக எழுதி, என்
னண்டையில் கொண்டுவரும்படிக்கு அவர்களை
௫ அனுப்புவேன்.—அதை ஏழு பங்காகப் பகிரக்
கடவர்கள்; யூதா தெற்கேயிருக்கிற தன் எல்லை
யிலும், யோசேப்பின் வீட்டார் அதற்கு வடக்
கேயிருக்கிற தங்கள் எல்லையிலும், நிலைநிற்கட்
௬ டும்.—நீங்கள் தேசத்தை ஏழு பங்காக எழுதி,
இங்கே என்னண்டைக்குக் கொண்டுவாருங்
கள், அப்போது இவ்விடத்திலே நம்முடைய
பராபரனாகிய கர்த்தருக்குமுன்பாக உங்களுக்
௭ குச் சீட்டுகளைப் போடுவேன். — ஏனெனில்
லேவியருக்கு உங்கள் நடுவே பங்கில்லை; அதே
னென்றால் கர்த்தருடைய ஆசாரியபட்டம் அவர்
கள் சுதந்தரமானது; காதும் ரூபேனும் மனாசே
யின் பாதிக்கோத்திரமுமோவெனில், யோர்தா
னுக்கப்பாலே கிழக்கே கர்த்தரின் ஊழியக்கார
னாகிய மோசே தங்களுக்குக் கொடுத்த தங்கள்
சுதந்தரத்தை வாங்கித்தீர்ந்தது என்றான்.
௮ அப்போது அந்த மனுஷர் எழுந்து புறப்பட்
டுப்போனார்கள்; நீங்கள் போய், தேசத்திலே சுற்
றித்திரிந்து, அதின் வயணத்தை எழுதி, என்னண்
டையில் திரும்பி வாருங்கள், அப்போது இங்கே
சீலோவிலே கர்த்தருக்குமுன்பாக உங்களுக்குச்
சீட்டுகளைப் போடுவேனென்று யோசுவா தேசத்
தை எழுதப்போகிறவர்களுக்குக் கற்பித்தான்.—
௯ அந்த மனுஷர் போய், தேசத்தைக் கடந்து,
அதைப் பட்டணங்களின்படி ஏழு பங்காக ஒரு
புஸ்தகத்தில் எழுதி, சீலோவிலிருக்கிற பாளயத்
௰ திலே யோசுவாவண்டைக்கு வந்தார்கள்.—அப்
போது யோசுவா அவர்களுக்குச் சீலோவிலே
கர்த்தருக்குமுன்பாகச் சீட்டுகளைப் போட்டு,
அங்கே இஸ்ரவேல் புத்திரருக்குத் தேசத்தை அ
வர்கள் பங்குகளாகப் பங்கிட்டான்.
௰௧ பென்யமீன் புத்திரருக்கு அவர்களுடைய வம்
சங்களின்படி அவர்களுடைய கோத்திரச் சீட்டு
விழுந்தது; அவர்கள் விகிதத்தின் எல்லை, யூதா
புத்திரருக்கும் யோசேப்புப் புத்திரருக்கும் நடு
வே புறப்படுகின்றது.
௰௨ அவர்களுடைய எல்லை,வடமூலையிலே யோர்
தானிலிருந்து வந்து, எரிகோவுக்கு வடபக்கமா
யேறி, அப்புறம் மேற்கே மலையில் ஏறி, பெத்தா
௰௩ வேன் வனாந்தரத்தில் போய் முடியும்.—அங்கே
யிருந்து எல்லை, பேத்தேலாகிய லூசுக்கு வந்து,
லூசுக்குத் தென்பக்கமாய்ப் போய், ஆத்தேரோத்
ஆதாருக்கு தாழ்வான பெத்தோரோனுக்குத் தெற்
கேயிருக்கிற மலைஅண்டைக்கும் இறங்கும்.
௰௪ பிற்பாடு அந்த எல்லை மேற்கு மூலைக்குப்
பெத்தோரோனுக்கு எதிரே தெற்காக இருக்கிற
மலைக்குத் தென்புறமாய்ப் போய்த் திரும்பி, கீரி
யாத்பாகால் என்னப்பட்ட யூதா புத்திரரின் பட்
டணமாகிய கீரியாத்யெகாரீம் அருகே போய்
முடியும்; இது மேற்கு மூலை.
தென்மூலை கீரியாத்யெகாரீமின் முடிவிலிருக் ௰௫
கின்றது; அங்கேயிருந்து எல்லை மேற்கே போய்,
நெப்தோவாகின் நீரூற்றிற்குப் புறப்பட்டு,—
அங்கேயிருந்து ரேப்பயீமரின் பள்ளத்தாக்கில் ௰௬
வடக்கேயிருக்கிற இன்னோமுடைய குமாரரின்
பள்ளத்தாக்குக்கு எதிரான மலை அடிவாரத்திற்கு
இறங்கி, அப்புறம் தெற்கே எபூசியருக்குப் பக்க
மான இன்னோமின் பள்ளத்தாக்குக்கும், அங்கே
யிருந்து ரொக்கெலென்ற கிணற்றிற்கும், இறங்கி
வந்து, — வடக்கே போய், என்சேமேசுக்கும், ௰௭
அங்கேயிருந்து அதும்மீம்மேட்டுக்கு எதிரான
கெலிலோத்திற்கும், அங்கேயிருந்து ரூபேன்
குமாரன் போகானின் கல்லுக்கும் இறங்கி
வந்து,—அர்பாவுக்கு எதிரான வடபக்கமாய்ப் ௰௮
போய், அர்பாவுக்கு இறங்கிவருகின்றது.–அப் ௰௯
புறம் அந்த எல்லை, பெத்ஒக்லாவுக்கு வடபக்க
மாய்ப் போய், யோர்தானின் முகத்துவாரத்திற்
குத் தெற்கான உப்புக்கடலின் வடமுனையிலே
முடிந்துபோம்; அது தென்புறத்தெல்லை.
கிழக்குப் புறத்திலே யோர்தானே அதின் ௨௰
எல்லை; இது பென்யமீன் புத்திரருக்கு அவர்க
ளுடைய வம்சங்களின்படி சுற்றிலுமிருக்கிற
எல்லைகளுக்குள்ளான சுதந்தரம்.
பென்யமீன் புத்திரரின் கோத்திரத்திற்கு அ ௨௧
வர்களுடைய வம்சங்களின்படி இருக்கிற பட்
டணங்கள், எரிகோ, பெத், ஒக்லா, ஏமேக்
கேத்சீஸ்,–பெத்தார்பா, செம்றாயிம், பேத்தேல்,– ௨௨
ஆவீம், பாரா, ஒப்பிறா,—கேப்பார், அமோ ௨௩, ௨௪
னாய், ஒப்பிம், காபாவென்ற பன்னிரண்டு பட்ட
ணங்களும் அவைகளின் கிராமங்களும்.—கிபே ௨௫
யோன், ராமா, பேரோத்,—மிஸ்பே, கெப்பிரா, ௨௬
மோத்சா,–ரேக்கேம், இற்பெயேல், தரியாலா,— ௨௭
சேலா, ஏலேப், எருசலேமாகிய எபூசி, கிபெ ௨௮
யாத், கீரேயாத்தென்ற பதினான்கு பட்டணங்
களும் அவைகளின் கிராமங்களும் பென்யமீன்
புத்திரருக்கு அவர்கள் வம்சங்களின்படி இருக்
கிற சுதந்தரம் இவைகளே.

## ௰௯. அதிகாரம்.

௧. சிமேயோன், ௰. செபுலோன், ௰௭. இசக்கார், ௨௪. ஆசேர், ௩௨. நப்தலி, ௪௰. தாண் பெயரால் விழுந்த தேசத்தின் சீட்டு. ௪௯. இஸ்ரவேல் புத்திரர் யோசுவாவுக்குச் சுதந்தரத்தைக் கொடுத்தது.

விழுந்த இரண்டாம்சீட்டு சிமேயோனுடையது. ௧
சிமேயோன் புத்திரரின் கோத்திரத்துக்கு அவர்
கள் வம்சங்களின்படி உண்டான சுதந்தரம்,
யூதா புத்திரருடைய சுதந்தரத்தின் நடுவே இருக்
கின்றது. — அவர்களுக்கு அவர்கள் சுதந்தரத் ௨
திலே சேர்ந்தவைகளென்னவெனில், பேயெர்
சேபா, சேபா, மொலாதா,—ஆத்சார், சூகால், ௩
பாலா, ஆத்செம், — எல்தொலாத், பேத்தூல், ௪
ஓற்மா,—சிக்லாச், பெத்தமாற்கபோத், ஆத்சார், ௫

௬ ரூசா,–பெத்லெபாவோத், சருகேனென்ற பதின்
மூன்று பட்டணங்களும் அவைகளின் கிராமங்
௭ களும். — ஆயின், ரிம்மோன், எத்தேர், ஆசா
னென்ற நாலு பட்டணங்களும் அவைகளின்
௮ கிராமங்களும்.—இந்தப் பட்டணங்களைச் சுற்றி
லும் பாலாத்பெயேர்மட்டுக்கும் தெற்கே இருக்
கிற ராமாத்மட்டுக்கும் இருக்கிற எல்லாக் கிரா
மங்களும் இவை சிமேயோன் புத்திரருடைய
கோத்திரத்திற்கு அவர்கள் வம்சங்களின்படி
௯ உண்டான சுதந்தரம். — சிமேயோன் புத்திரரு
டைய சுதந்தரம் யூதாபுத்திரரின் விகிதத்திற்குள்
இருக்கிறது; ஏனெனில் யூதாபுத்திரரின் பங்கு
அவர்களுக்கு மிச்சமாயிருந்தது; ஆனதுகொண்டு
சிமேயோன் புத்திரர் அவர்கள் சுதந்தரத்தின் நடு
விலே சுதந்தரம் பெற்றார்கள்.

௰ விழுந்த மூன்றாம்சீட்டுச் சேபுலோன் புத்திர
ருடையது; அவர்களுக்கு அவர்கள் வம்சங்க
ளின்படி உண்டான சுதந்தர விகிதம் சாரீத்மட்
௰௧ டும்போகின்றது.–அவர்களுடைய எல்லை மேற்
கே மாராலாவுக்கு ஏறி, தாபேசெத்துக்கு வந்து,
யொக்கினேயாமுக்கு எதிரான ஆற்றுக்கும் வரு
௰௨ கின்றது. — சாரீதிலிருந்து அது கிழக்கே சூரி
யன் உதிக்கும் முனையாய்க் கிஸ்லோத்தாபோ
ரின் எல்லையண்டைக்குத் திரும்பி, தாபராத்துக்
௰௩ குப் புறப்பட்டு, யப்பியாவுக்கு ஏறி,–அங்கேயி
ருந்து கிழக்குப்புறத்திலே காத்தேபெரையும் எத்
காத்சீனையும் கடந்து, ரிம்மோன்மெத்தோவாருக்
௰௪ கும்நேயாவுக்கும் புறப்படுகின்றது.—அப்புறம்
அந்த எல்லை வடக்கே அன்னத்தோனுக்குத் தி
ரும்பி, இப்தாவேலின் பள்ளத்தாக்கிலே முடிந்
துபோகின்றது.

௰௫ காத்தாத்தும் நகலாலும் சிம்ரோனும் இதாலா
கும் பெத்லகேமும் முதலான பன்னிரண்டு பட்
௰௬ டணங்களும் அவைகளின் கிராமங்களும்,—சே
புலோன் புத்திரருக்கு அவர்கள் வம்சங்களின்
படி உண்டான சுதந்தரம்.

௰௭ விழுந்த நாலாம்சீட்டு ஈசகாருடையது. —
௰௮ ஈசகார் புத்திரருக்கு அவர்கள் வம்சங்களின்
படி உண்டான எல்லை, இஸ்றேலாவும், கெசுல்
௰௯ லோத்தும், சூனேமும்,—அப்பிராயீமும், சீகோ
௨௰ னும், அனகராத்தும், — ராப்பித்தும், கிசியோ
௨௧ னும், ஏபெத்சும்,—ரெமேதும், ஏங்கன்னீமும்,
௨௨ எங்காதாவும், பேத்பாத்செசுமானது.—அப்புறம்
அந்த எல்லை தாபோருக்கும், சக்சீமாவுக்கும்,
பெத்செமெசுக்கும் வந்து, யோர்தானிலே முடி
கின்றது; அதற்குள் பதினாறு பட்டணங்களும்
௨௩ அவைகளுடைய கிராமங்களுமுண்டு.—இந்தப்
பட்டணங்களும் இவைகளுடைய கிராமங்க
ளும் ஈசகார் புத்திரரின் கோத்திரத்திற்கு அவர்
களுடைய வம்சங்களின்படி உண்டான சுதந்
தரம்.

௨௪ விழுந்த ஐந்தாம்சீட்டு ஆசேர் புத்திரருடைய
௨௫ கோத்திரத்தினுடையது. — அவர்கள் வம்சங்க
ளின்படி அவர்களுக்குண்டான எல்லை, எல்காத்
தும், ஆலியும், பேத்தேனும், அக்சாப்பும்,—
அல்ம்மேலெகும், ஆமாதும், மீசாலுமானது; பிற் ௨௬
பாடு அது மேற்கே கற்மேலுக்கும் சீகோர் லிப்
னாத்திற்கும் வந்து,–சூரியோதயமுகமாய்ப் பெத் ௨௭
தாகோனுக்குத் திரும்பி, சேபுலோனுக்கும்
வடக்கே இருக்கிற இப்தாவேலின் பள்ளத்தாக்
குக்கும் பெத்தேமேக்குக்கும் நேகியெலுக்கும்
வந்து இடதுபுறமான காபூலுக்கும், — எபிரோ ௨௮
னுக்கும் ரெகொபுக்கும், அம்மோனுக்கும், கானா
வுக்கும், பெரிய சீதோன்மட்டுக்கும் புறப்படு
கின்றது.—அப்புறம் அந்த எல்லை ராமாவுக்கும் ௨௯
தீருவென்ற அரணிப்பான பட்டணம்மட்டுக்
கும் திரும்புகின்றது; பிற்பாடு அந்த எல்லை ஓசா
வுக்குத் திரும்பி, சமுத்திரத்திலே அக்சிபாவின்
எல்லை ஓரத்திலே முடிகின்றது.

உம்மாவும், ஆப்பெக்கும், ரெகெபும், அதற் ௩௰
கடுத்திருக்கின்றன; இவைகள் இருபத்திரண்டு
பட்டணங்களும் இவைகளின் கிராமங்களுமா
யிருந்து,— இந்தப் பட்டணங்களும் இவைக ௩௧
ளின் கிராமங்களும் ஆசேர் புத்திரரின் கோத்தி
ரத்துக்கு அவர்கள் வம்சங்களின்படி உண்டான
சுதந்தரம்.

விழுந்த ஆறாம்சீட்டு நவுதலி புத்திரருடை ௩௨
யது.—நவுதலி புத்திரருக்கு அவர்கள் வம்சங்க ௩௩
ளின்படி உண்டான எல்லை ஏலேப்பிலும் சானா
னிமிலுள்ள அல்லோனிலுமிருந்து வந்து, ஆதமி,
நெக்கேபின்மேலும், யாப்நெலின்மேலும், லக்
கூம்மட்டும் போய், யோர்தானுக்குப் புறப்பட்
டுப் போகின்றது.—அப்புறம் அந்த எல்லை மேற் ௩௪
கே அஸ்னோத்தாபோருக்குத் திரும்பி, அங்கேயி
ருந்து உக்கோகுக்குப் புறப்பட்டு, தெற்கே சேபு
லோனையும் மேற்கே ஆசேரையும் சூரியோதயப்
புறத்திலே யோர்தானிலே யூதாவையும் சேர்ந்து
வருகின்றது.

அரணிப்பான பட்டணங்களாவன: சித்தீம், ௩௫
சேர், அம்மாத், ரக்காத், கின்னெரேத்,—ஆதம்மா, ௩௬
ராமா, ஆத்சோர், — கேதேஸ், எத்ரேயி, என், ௩௭
ஆத்சோ, — ஈரோன்மிக்தாலேல், ஓரேம், பேத் ௩௮
தானாத், பெத்செமெஸ் முதலான பத்தொன்
பது பட்டணங்களும் அவைகளின் கிராமங்க
ளும்.—இந்தப் பட்டணங்களும் இவைகளின் ௩௯
கிராமங்களும் நவுதலி புத்திரருடைய கோத்தி
ரத்துக்கு அவர்கள் வம்சங்களின்படி உண்டான
சுதந்தரம்.

விழுந்த ஏழாம்சீட்டு தாண் புத்திரருடைய ௪௰
கோத்திரத்தினுடையது. — அவர்களுக்கு அவர் ௪௧
கள் வம்சங்களின்படி உண்டான சுதந்தரத்தின்
எல்லையாவது: சோரா, எஸ்தாவோல், இர்சே
மேஸ், — சாலாபீன், ஆயலோன், இத்லா, — ௪௨
ஏலோன், திம்னாதா, எக்கிரோன்,–எல்தெக் ௪௩, ௪௪
கே, கிபெத்தோன், பாலாத்,—எகூத், பெனபெ ௪௫
ராக், காத்ரிம்மோன்,—மேயாற்கோன், ராக்கோ ௪௬
னென்ற பட்டணங்களும், யாப்போவுக்கெதி
ரான எல்லையும்,—தாண் புத்திரரின் எல்லை அவர் ௪௭
களுக்குச் சிறியதானபடியினாலே, அவர்கள் புறப்
பட்டுப் போய், லேசேமின்மேல் யுத்தம்பண்ணி,

அதைப் பிடித்து, பட்டையக் கருக்கினால் மடங்
கடித்து, அதைச் சுதந்தரித்துக்கொண்டு, அதிலே
குடியிருந்து, லேசேமுக்குத் தங்கள் தகப்பனா
கிய தாணுடைய நாமத்தின்படியே தாணென்று
சஅ பேர்தரித்தார்கள். — இந்தப் பட்டணங்களும்
இவைகளின் கிராமங்களும் தாண் புத்திரரின்
கோத்திரத்திற்கு அவர்கள் வம்சங்களின்படி
உண்டான சுதந்தரம்.
சகூ தேசத்தை அதின் எல்லைகளின்படி சுதந்தர
மாகப் பங்கிட்டுத் தீர்ந்தபோது, இஸ்ரவேல் புத்
திரர் நூனின் குமாரனாகிய யோசுவாவுக்குத் தங்
கள் நடுவிலே ஒரு சுதந்தரத்தைக் கொடுத்தார்
ருய கள். — எப்பிராயீமின் மலைத்தேசத்திலிருக்கிற
திம்னாத் சேராவென்ற அவன் கேட்ட பட்ட
ணத்தை அவனுக்குக் கர்த்தருடைய வாக்கின்ப
டியே கொடுத்தார்கள்; அந்தப் பட்டணத்தை
அவன் கட்டி, அதிலே குடியிருந்தான்.
ருக ஆசாரியனாகிய எலேயாசாரும் நூனின் குமா
ரனாகிய யோசுவாவும் பிதாக்களுடைய வம்சத்த
லைவரும் சீலோவிலே ஆசரிப்புக்கூடாரத்தின்
வாசலிலே கர்த்தருக்குமுன்பாக இஸ்ரவேல் புத்
திரரின் கோத்திரங்களுக்குச் சீட்டுப்போட்டுக்
கொடுத்த சுதந்தரங்கள் இவைகளே; இப்படியே
அவர்கள் தேசத்தைப் பங்கிட்டுத் தீர்ந்தது.

## உய. அதிகாரம்.

க. பாபான் கட்டளையிட்டதும், எ. இஸ்ரவேல் புத்திரர்கள் ஏற்படுத்தின தமாகிய ஆறு அடைக்கலப்பட்டணங்கள்.

க கர்த்தர் யோசுவாவோடே சொன்னதாவது:—
உ நீ இஸ்ரவேல் புத்திரரோடே சொல்லவேண்டிய
தேதெனில், அறியாமல் கைப்பிசகாய் ஒரு ஆத்து
மாவைக் கொன்றவன் ஓடிப்போயிருக்கும்படி,
நாம் மோசேயைக்கொண்டு, உங்களுக்குச் சொ
ன்ன அடைக்கலப்பட்டணங்களை உங்களுக்
ங குக் குறித்துவையுங்கள். - அவைகள் உங்களுக்கு
இரத்தப்பழி வாங்குகிறவனுடைய கைக்குத் தப்
பிப்போயிருக்கும் அடைக்கல ஸ்தலங்களாயிரு
ச ப்பவைகளாக.—அந்தப் பட்டணங்களில் ஒன்
றிற்கு ஓடிவருகிறவன், பட்டணத்தின் ஒலிமுக
வாசலில் நின்றுகொண்டு, அந்தப் பட்டணத்தி
னுடைய மூப்பரின் செவிகள் கேட்க, தன் நியா
யங்களைச் சொல்வானாகில்; அப்போது அவர்கள்
அவனைத் தங்களிடத்தில் பட்டணத்துக்குள்ளே
சேர்த்துக்கொண்டு, தங்களோடே குடியிருக்க
ரு அவனுக்கு இடம்கொடுத்து,—இரத்தப்பழிவாங்
குகிறவன் அவனைத் துரத்திவந்தால், அவனை இவ
ன்கையில் ஒப்புக்கொடாதிருக்கக்கடவார்கள்;
ஏனெனில் அவன் தனக்கடுத்தவனுக்கு அதற்கு
முந்தின நாள்களிலே பகைஞனாயிருக்கவில்லை,
சு அவனை அறியாமல் கொன்றான். — நியாயம்
விசாரிக்கும் சபைக்குமுன்பாக அவன் நிற்கும்
மட்டாகவும், அந்நாள்களிலிருக்கிற பிரதான
ஆசாரியன் மரணமடையும்மட்டாகவும், அவன்
அந்தப் பட்டணத்திலே குடியிருக்கக்கடவன்;
பிற்பாடு கொலைசெய்தவன் தான் விட்டோடிப்
போன தன் பட்டணத்திற்கும் தன் வீட்டிற்கும்
திரும்பி வரலாமென்று சொல்லென்றார்.
அப்படியே அவர்கள் நவுதலியின் மலைத்தேச எ
மான கலிலேயாவிலுள்ள கேதேசையும், எப்
பிராயீமின் மலைத்தேசத்திலுள்ள சீகேமையும்,
யூதாவின் மலைத்தேசத்திலுள்ள எப்பிரோனாகிய
கீரியாத் அர்பாவையும் பரிசுத்தம்பண்ணி,
எரிகோவிலிருக்கும் யோர்தானுக்கு அக்கரை அ
யான சூரியோதயப்புறத்திலே ரூபேன் கோத்தி
ரத்திற்கிருக்கும் சமனான பூமியின் வனாந்தரத்தி
லுள்ள பெத்சேரையும், காத் கோத்திரத்திற்கிருக்
கும் கிலேயாத்திலுள்ள ராமோத்தையும், மனாசே
கோத்திரத்திற்கிருக்கும் பாசானிலுள்ள கோலா
னையும் குறித்துவைத்தார்கள்.
கைப்பிசகாய் ஒரு ஆத்துமாவைக் கொன்றவ கூ
னெல்லாம் சபைக்குமுன்பாக நிற்கும்மட்டும்,
இரத்தப்பழிவாங்குகிறவன் கையிலே சாகாதப
டிக்கு, ஓடிப்போய் ஒதுங்கும்படி, இஸ்ரவேல்
புத்திரர் அனைவருக்கும் அவர்கள் நடுவே தங்கு
கிற பரதேசிக்கும் குறிக்கப்பட்ட பட்டணங்
கள் இவைகளே.

## உக. அதிகாரம்.

க. முற்றக் கோத்திரத்தாரால் லேவியர்களுக்கு நாற்பத்தெட்டுப் பட்டணங்கள் கொடுக்கப்பட்டது. சங. பாபான் வாக்குத்தத்தத்தின்படி இஸ்ரவேல் சனங்களுக்குத் தேசத்தைக் கொடுத்து, இளைப்பாறப்பண்ணினது.

அப்போது லேவியரின் வம்சப் பிதாக்களின் க
தலைவர், கானான்தேசத்திலிருக்கிற சீலோவிலே
ஆசாரியனாகிய எலேயாசாரண்டைக்கும், நூனி
ன்குமாரனாகிய யோசுவாவண்டைக்கும், இஸ்ர
வேல் புத்திரருடைய கோத்திரங்களின் பிதாக்க
ளிலுள்ள தலைவரண்டைக்கும் சேர்ந்துவந்து,—
அவர்களோடே பேசி, நாங்கள் குடியிருக்கும் உ
பட்டணங்களையும், எங்கள் மிருகஜீவனுக்காக
அவைகளின் பேட்டைகளையும், எங்களுக்குக்
கொடுக்க, கர்த்தர் மோசேயைக்கொண்டு கற்பித்
தாரே என்றார்கள். — அப்படியே இஸ்ரவேல் ங
புத்திரர் தங்கள் சுதந்தரத்திலே லேவியருக்குக்
கர்த்தருடைய வாக்கின்படியே, பட்டணங்களை
யும் அவைகளின் பேட்டைகளையும் கொடுத்த
விபரமாவது:
கோகாத்தியரின் வம்சங்களுக்குச் சீட்டுவி ச
ழுந்தது; அப்போது லேவியரில் ஆசாரியனாகிய
ஆரோனின் குமாரருக்கு யூதாவின் கோத்திரத்தி
லும் சிமேயோனின் கோத்திரத்திலும் பென்ய
மீன் கோத்திரத்திலும் பதின்மூன்று பட்டணங்
கள் சீட்டினால் உண்டாயின.
கோகாத்தின் மற்றப் புத்திரருக்கு, எப்பிரா ரு
யீம் கோத்திரத்தின் வம்சங்களுக்குள்ளும், தாண்
கோத்திரத்திலும், மனாசேயின் பாதிக்கோத்திரத்
திலும், சீட்டினால் உண்டான பட்டணங்கள்
பத்து.
கேர்சோன் புத்திரருக்கு, ஈசக்கார் கோத்திரத் சு
தின் வம்சங்களுக்குள்ளும், ஆசேர் கோத்திரத்தி
லும், நவுதலி கோத்திரத்திலும், பாசானிலிருக்கிற

மனாசேயின் பாதிக்கோத்திரத்திலும், சீட்டினால்
உண்டான பட்டணங்கள் பதின்மூன்று.
௭ மேராரி புத்திரருக்கு அவர்கள் வம்சங்களின்
படியே, ரூபேன் கோத்திரத்திலும், காத் கோத்தி
ரத்திலும், சேபுலோன் கோத்திரத்திலும், உண்
டான பட்டணங்கள் பன்னிரண்டு.
௮ இந்தப் பட்டணங்களையும் அவைகளின்
பேட்டைகளையும் இஸ்ரவேல் புத்திரர், கர்த்தர்
மோசேயைக்கொண்டு கற்பித்தபடியே, லேவி
யருக்குச் சீட்டுப்போட்டுக் கொடுத்தார்கள்.
௯ லேவியின் குமாரரில் முதலாம் சீட்டுக்குடைய
கோகாத்தியரின் வம்சங்களிலே இருக்கிற ஆரோ
௰ னின் குமாரருக்கு, — யூதாபுத்திரரின் கோத்தி
ரத்திலும், சிமேயோன் புத்திரரின் கோத்திரத்தி
லும், அவர்கள் கொடுத்தவைகளும் பேர்பேரா
கச் சொல்லப்பட்டவைகளுமான பட்டணங்க
௰௧ ளாவன:—யூதாவின் மலைத்தேசத்தில் ஏனாக்கின்
தகப்பனாகிய அர்பாவின் பட்டணமாகிய எபி
ரோனையும் அதின் சுற்றுப் பேட்டைகளையும்
௰௨ அவர்களுக்குக் கொடுத்தார்கள்.—ஆனால் பட்ட
ணத்தின் வெளி நிலத்தையும் அதின் கிராமங்க
ளையும் எப்புன்னேயின் குமாரனாகிய காலேபுக்
குக் காணியாட்சியாகக் கொடுத்தார்கள்.
௰௩ இப்படியே ஆசாரியனாகிய ஆரோனின் குமா
ரருக்குக் கொலைசெய்தவனுக்கு அடைக்கலப்
பட்டணமான எபிரோனையும் அதின் பேட்டை
களையும், லீப்னாவையும் அதின் பேட்டைகளை
௰௪ யும்,—யாத்தீரையும் அதின் பேட்டைகளையும்,
எஸ்தெமோவாவையும் அதின் பேட்டைகளை
௰௫ யும்,—ஒலோனையும் அதின் பேட்டைகளையும்,
௰௬ தேபீரையும் அதின் பேட்டைகளையும், — ஆயி
னையும் அதின் பேட்டைகளையும், யுத்தாவையும்
அதின் பேட்டைகளையும், பெத்செமேசையும்
அதின் பேட்டைகளையும் கொடுத்தார்கள்; அந்த
இரண்டு கோத்திரங்களிலிருக்கிற இந்தப் பட்ட
௰௭ ணங்கள் ஒன்பது.— பென்யமீன் கோத்திரத்தி
லோவென்றால், அவர்களுக்குக் கிபேயோனை
யும் அதின் பேட்டைகளையும், கேபாவையும் அ
௰௮ தின் பேட்டைகளையும், — ஆனத்தோத்தையும்
அதின் பேட்டைகளையும், அல்மோனையும் அ
தின் பேட்டைகளையும் கொடுத்தார்கள்; இந்தப்
௰௯ பட்டணங்கள் நாலு.—ஆசாரியரான ஆரோனு
டைய குமாரரின் பட்டணங்களெல்லாம் அ
வைகளின் பேட்டைகள்தவிர பதின்மூன்று.
௨௰ லேவியரான கோகாத்தின் புத்திரரில் மீதி
யான அவர்களுடைய மற்ற வம்சங்களுக்கோ
வென்றால், அவர்களுக்கு விகிதமாக எப்பிரா
யீம் கோத்திரத்திலே அவர்கள் கொடுத்த பட்ட
௨௧ ணங்களாவன:-கொலைசெய்தவனுக்கு அடைக்
கலப்பட்டணமான எப்பிராயீமின் மலைத்தே
சத்திலிருக்கிற சீகேமையும் அதின் பேட்டைக
ளையும், கேசேரையும் அதின் பேட்டைகளை
௨௨ யும்,-கிப்சாயிமையும் அதின் பேட்டைகளையும்,
பெத்தோரோனையும் அதின் பேட்டைகளையும்,
அவர்களுக்குக் கொடுத்தார்கள்; இந்தப் பட்ட
ணங்கள் நாலு.—தாண்கோத்திரத்திலே எல்தேக் ௨௩
கையையும் அதின் பேட்டைகளையும், கிபத்தோ
னையும் அதின் பேட்டைகளையும்,-ஆயலோனை ௨௪
யும் அதின் பேட்டைகளையும், காத்ரிம்மோனை
யும் அதின் பேட்டைகளையும் அவர்களுக்குக்
கொடுத்தார்கள்; இந்தப் பட்டணங்கள் நாலு.—
மனாசேயின் பாதிக்கோத்திரத்திலே தானாகையும் ௨௫
அதின் பேட்டைகளையும், காத்ரிம்மோனையும்
அதின் பேட்டைகளையும் அவர்களுக்குக் கொ
டுத்தார்கள்; இந்தப் பட்டணங்கள் இரண்டு.—
கோகாத் புத்திரரின் மீதியான வம்சங்களுக்கு ௨௬
ண்டான பட்டணங்களெல்லாம், அதுகளின்
பேட்டைகள்தவிர பத்து.
லேவியரின் வம்சங்களிலே கேர்சோன் புத் ௨௭
திரருக்கு அவர்கள் மனாசேயின் பாதிக்கோத்தி
ரத்தில் இரண்டு பட்டணங்களாகிய கொலை
செய்தவனுக்கு அடைக்கலப்பட்டணமான பா
சானிலுள்ள கோலானையும் அதின் பேட்டைக
ளையும், பேயேஸ்திராவையும் அதின் பேட்டை
களையும், — ஈசஷாரின் கோத்திரத்திலே நாலு ௨௮
பட்டணங்களாகிய கிசோனையும் அதின் பேட்
டைகளையும், தாபராத்தையும் அதின் பேட்டை
களையும்,—யர்மூத்தையும் அதின் பேட்டைகளை ௨௯
யும், ஏங்கன்னீமையும் அதின் பேட்டைகளை
யும், — ஆசேரின் கோத்திரத்திலே நாலுபட்ட ௩௰
ணங்களாகிய மிசாலையும் அதின் பேட்டைகளை
யும்,அப்தோனையும் அதின் பேட்டைகளையும்,-
எல்காத்தையும் அதின் பேட்டைகளையும், ரே ௩௧
கோபையும் அதின் பேட்டைகளையும், — நவுத ௩௨
லிக் கோத்திரத்திலே மூன்று பட்டணங்களாகிய
கொலைசெய்தவனுக்கு அடைக்கலப்பட்டண
மான கலிலேயாவிலுள்ள கேதேசையும் அதின்
பேட்டைகளையும், அம்மோத்தோரையும் அதின்
பேட்டைகளையும், கற்தானையும் அதின் பேட்
டைகளையும் கொடுத்தார்கள். — கெர்சோனிய ௩௩
ருக்கு அவர்கள் வம்சங்களின்படி உண்டான
பட்டணங்களெல்லாம்,அவைகளின் பேட்டை
கள்தவிர பதின்மூன்று.
மற்ற லேவியராகிய மேராரி புத்திரரின் வம் ௩௪
சங்களுக்கோவென்றால், அவர்கள் சேபுலோன்
கோத்திரத்திலே நாலு பட்டணங்களாகிய யொக்
கினெயாமையும் அதின் பேட்டைகளையும், கற்
தாவையும் அதின் பேட்டைகளையும், — திம்னா ௩௫
வையும் அதின் பேட்டைகளையும், நகலாலையும்
அதின் பேட்டைகளையும்,-ரூபேன் கோத்திரத் ௩௬
திலே நாலு பட்டணங்களாகிய பேசேரையும்
அதின் பேட்டைகளையும்,யாத்சாவையும் அதின்
பேட்டைகளையும்,-கெதேமொத்தையும் அதின் ௩௭
பேட்டைகளையும், மெப்பாத்தையும் அதின்
பேட்டைகளையும்,—காத் கோத்திரத்திலே நாலு ௩௮
பட்டணங்களாகிய கொலைசெய்தவனுக்கு அ
டைக்கலப்பட்டணமான கிலேயாத்திலுள்ள
இராமோத்தையும் அதின் பேட்டைகளையும்,
மக்னாயீமையும் அதின் பேட்டைகளையும், —
எஸ்போனையும்அதின் பேட்டைகளையும்,யாசே ௩௯

ையும் அதின் பேட்டைகளையும் கொடுத்தார்
௪௰ கள். — இவைகளெல்லாம் லேவியரின் மற்ற
வம்சங்களாகிய மெராரி புத்திரருக்கு அவர்கள்
வம்சங்களின்படி உண்டான பட்டணங்கள்;
அவர்களுடைய விகிதம் பன்னிரண்டு பட்ட
ணங்கள்.
௪௧ இஸ்ரவேல் புத்திரருடைய காணியாட்சியின்
நடுவிலே இருக்கிற லேவியரின் பட்டணங்க
ளெல்லாம், அவைகளின் பேட்டைகள்தவிர
௪௨ நாற்பத்தெட்டு.—இந்தப் பட்டணங்களில் ஒவ்
வொன்றிற்கு அதினதின் சுற்றுப்பேட்டைகள்
இருந்தன; இந்த எல்லாப் பட்டணங்களுக்கும்
அப்படியிருந்தன.
௪௩ இந்தப் பிரகாரமாகக் கர்த்தர் இஸ்ரவேலுக்குக்
கொடுப்போமென்று அவர்களுடைய பிதாக்க
ளுக்கு ஆணையிட்ட தேசத்தையெல்லாம் கொ
டுத்தார்; அவர்கள் அவைகளைச் சுதந்தரித்துக்
கொண்டு, அவைகளிலே குடியிருந்தார்கள். —
௪௪ கர்த்தர் அவர்களுடைய பிதாக்களுக்கு ஆணை
யிட்டபடியெல்லாம் அவர்களை, சுற்றிலும் யுத்
தமில்லாதபடிக்கு, இளைப்பாறப்பண்ணினார்;
அவர்களுடைய எல்லாச் சத்துருக்களிலும் ஒரு
வரும் அவர்களுக்குமுன்பாக நின்றதில்லை; அ
வர்கள் சத்துருக்களையெல்லாம் கர்த்தர் அவர்கள்
௪௫ கையில் ஒப்புக்கொடுத்தார். — கர்த்தர் இஸ்ர
வேல் வீட்டாருக்குச் சொல்லியிருந்த நல்வார்த்
தைகளிலெல்லாம் ஒரு வார்த்தையும் விழுந்து
போனதில்லை, எல்லாம் சம்பவித்தன.

## ௨௨. அதிகாரம்.

*௧. இரண்டரைக் கோத்திரத்தார் ஆசீர்வாதத்தோடே தங்கள் தேசத்திற்கு அனுப்பப்பட்டது. ௰. அவர்கள் தங்கள் யாத்திரையில் அடையாளமாகப் பலிபீடத்தைக் கட்டினது. ௰௧. அதினால் இஸ்ரவேல் சனங்கள் விதனப்பட்டது. ௨௧. அவர்களுக்கு இரண்டரைக் கோத்திரத்தார் நல்ல நியாயசமாதானத்தைக் கொடுத்தது.*

௧ அப்போது யோசுவா ரூபேனியரையும் காதிய
ரையும் மனாசேயின் பாதிக்கோத்திரத்தையும் அ
௨ ழைத்து, — அவர்களோடே சொன்னதாவது:
கர்த்தருடைய ஊழியக்காரனாகிய மோசே உங்
களுக்குக் கற்பித்தவைகளையெல்லாம் நீங்கள்
கைக்கொண்டு, நான் உங்களுக்குக் கற்பித்த யா
௩ விலும் என் சொல்லையும் கேட்டீர்கள்.—நீங்கள்
இந்நாள்மட்டும் இந்த அநேகநாள்வரையிலே,
உங்கள் சகோதரரைக் கைவிடாமல், உங்கள்
பராபரனாகிய கர்த்தருடைய கற்பனையைக் காத்
௪ துக்கொண்டு நடந்தீர்கள்.-இப்போதும் உங்கள்
பராபரனாகிய கர்த்தர் உங்கள் சகோதரரை, அ
வர்களுக்குச் சொல்லியிருந்தபடியே, இளைப்பா
றப்பண்ணினார்; ஆகையால் கர்த்தரின் ஊழி
யக்காரனாகிய மோசே யோர்தானுக்கப்பாலே
உங்களுக்குக் கொடுத்த உங்கள் காணியாட்சி
யான தேசத்திலிருக்கிற உங்கள் கூடாரங்களுக்
௫ கு இனித் திரும்பிப்போயிருங்கள். — ஆனால்
நீங்கள் உங்கள் பராபரனாகிய கர்த்தரைச் சிநே
கித்து, அவருடைய வழிகளிலெல்லாம் நடந்து,
அவர் கற்பனைகளைக் கைக்கொண்டு, அவரைப்
பற்றிக்கொண்டிருந்து, அவரை உங்கள் முழு
இருதயத்தாலும் உங்கள் முழு ஆத்துமாவினாலும்
சேவிக்கிறதற்காக, கர்த்தரின் ஊழியக்காரனா
கிய மோசே உங்களுக்குக் கற்பித்த கற்பனை
யின்படியேயும் நியாயப்பிரமாணத்தின்படியே
யும் செய்யும்படிக்குமாத்திரம், வெகு சாவதான
மாய் இருங்களென்று யோசுவா சொல்லி,—அ ௬
வர்களை ஆசீர்வதித்து, அவர்கள் தங்கள் கூடா
ரங்களுக்குப் போகும்படிக்கு அனுப்பிவிட்
டான்.—ஏனெனில் மனாசேயின் பாதிக்கோத்தி ௭
ரத்துக்கு மோசே பாசானிலே சுதந்தரங்கொடுத்
தான்; அதின் மற்றப்பாதிக்கோவென்றால், யோ
சுவா யோர்தானுக்கு இப்பாலே மேற்கே அவர்
கள் சகோதரரோடேகூடச் சுதந்தரங்கொடுத்
தான்; யோசுவா அவர்களை அவர்கள் கூடாரங்க
ளுக்கு அனுப்பிவிடுகிறபோது, அவர்களை ஆசீர்
வதித்து,-அவர்களுடனே,நீங்கள் வெகு ஐசுவரி ௮
யத்தோடும், மகா ஏராளமான ஆடுமாடுகளோடும்,
வெள்ளி, பொன், வெண்கலம், இரும்போடும்,
மகா திரட்சியான வஸ்திரங்களோடும், உங்கள்
கூடாரங்களுக்குத் திரும்பி, உங்கள் சத்துருக்க
ளிடத்திலே கொள்ளையிட்டதை உங்கள் சகோ
தரரோடே பங்கிட்டுக்கொள்ளுங்களென்றான்.
அப்போது ரூபேன் புத்திரரும் காத்புத்திரரும் ௯
மனாசேயின் பாதிக்கோத்திரத்தாரும் கர்த்தர்
மோசேயைக்கொண்டு கட்டளையிட்டபடி, தாங்
கள் கைவசம்பண்ணிக்கொண்ட தங்கள் காணி
யாட்சித் தேசமான கீலேயாத் தேசத்துக்குப்
போகும்படிக்கு, கானான்தேசத்திலுள்ள சீலோ
விலிருந்த இஸ்ரவேல் புத்திரரைவிட்டுத் திரும்
பிப் போனார்கள்.
கானான்தேசத்தில்இருக்கிற யோர்தானின் எல் ௰
லைகளுக்கு வந்தபோது, ரூபேன் புத்திரரும்,காத்
புத்திரரும், மனாசேயின் பாதிக்கோத்திரத்தாரும்,
அங்கே யோர்தானின் ஓரத்திலே பார்வைக்குப்
பெரிதான ஒரு பீடத்தைக் கட்டினார்கள்.
இதோ ரூபேன் புத்திரரும், காத்புத்திரரும், ௰௧
மனாசேயின் பாதிக்கோத்திரத்தாரும், கானான்தே
சத்துக்கு எதிரே இஸ்ரவேல் புத்திரருக்கடுத்த
யோர்தானின் எல்லைகளில் ஒரு பீடத்தைக் கட்
டினார்கள் என்கிறதை இஸ்ரவேல் புத்திரர் கேட்
டார்கள். — அவர்கள் அதைக் கேட்டபோது, ௰௨
இஸ்ரவேல் புத்திரரின் சபையெல்லாம் தளமெ
டுத்து, அவர்கள்மேலே போகும்படிக்கு, சீலோ
விலே கூடி, — கீலேயாத் தேசத்தில் இருக்கிற ௰௩
ரூபேன் புத்திரரண்டைக்கும், காத் புத்திரரண்
டைக்கும், மனாசேயின் பாதிக்கோத்திரத்தாரண்
டைக்கும், ஆசாரியனாகிய எலேயாசாருடைய
குமாரனாகிய பீனேகாசையும், — அவனோடே ௰௪
கூட இஸ்ரவேலுடைய எல்லாக் கோத்திரங்க
ளிலும் ஒவ்வொரு பிதா வீட்டுக்கு ஒவ்வொரு
பிரபுவாகப் பத்துப் பிரபுக்களையும் அனுப்பி
னார்கள்; இஸ்ரவேலின் சேனைகளிலே அவர்க
ளில் ஒவ்வொருவன் தன் தன் பிதா வீட்டுக்குத்
தலைவனாயிருந்தான்.

௰௫ அவர்கள் கீலேயாத் தேசத்திலே ரூபேன் புத்
திரர் காத் புத்திரர் மனாசேயின் பாதிக்கோத்திரத்
தாரண்டைக்கு வந்து, அவர்களோடே பேசிச்
௰௬ சொன்னதாவது: — நீங்கள் இந்நாளிலே கர்த்த
ரைப் பின்பற்றாதபடிக்குப் புரண்டு, இந்நாளி
லே கர்த்தருக்கு விரோதமான கலகம்பண்ணும்
படியாக உங்களுக்கு ஒரு பீடத்தைக் கட்டி,
இஸ்ரவேலின் பராபரனுக்கு விரோதமாகப்பண்
௰௭ ணின இந்தத் துரோகமென்ன?—இந்நாள்வரைக்
கும் நாம் சுத்தமாகாமல்போனதும் கர்த்தருடைய
சபையிலே வாதையை வருவித்ததுமான பே
யோரின் அக்கிரமம் நமக்குக் கொஞ்சக் காரிய
௰௮ மோ?—நீங்கள் இன்று கர்த்தரைப் பின்பற்றாதப
டிக்குப் புரண்டு, இன்று கர்த்தருக்கு விரோதமா
கக் கலகம்பண்ணுகிறதினாலே, அவர் நாளை இஸ்
ரவேல் சபையின்மேலெல்லாம் கடுங்கோபம்
௰௯ அடைவாரே.—உங்கள் காணியாட்சியான தே
சம் தீட்டாயிருந்ததானால், நீங்கள் நம்முடைய
பராபரனாகிய கர்த்தரின் பீடத்தைத்தவிர உங்க
ளுக்கு ஒரு பீடத்தைக் கட்டுகிறதினாலே, கர்த்த
ருக்கும் எங்களுக்கும் விரோதமான இரண்டகம்
பண்ணாமல், கர்த்தருடைய வாசஸ்தலம் தங்குகிற
கர்த்தருடைய காணியாட்சியான அக்கரைத்
தேசத்திற்கு வந்து, எங்கள் நடுவே காணியாட்சி
௨௰ பிடியுங்கள். — சாபத்தீடானதிலே சேராகின்
குமாரனாகிய ஆகான் துரோகம்பண்ணினதினா
லே, அவன் ஒருவன்மாத்திரம் தன் அக்கிரமத்
தினாலே மடிந்துபோகாமல், இஸ்ரவேல் சபை
யின்மேலெல்லாம் கடுங்கோபம் வந்ததில்லையோ
வென்று கர்த்தருடைய சபையெல்லாம் சொல்
லச்சொல்லுகின்றதென்றார்கள்.

௨௧ அப்போது ரூபேன் புத்திரரும், காத் புத்திர
ரும், மனாசேயின் பாதிக்கோத்திரத்தாரும், இஸ்
ரவேல் சேனைகளின் தலைவருக்குப் பிரதியுத்தார
௨௨ மாகச் சொன்னது:—தேவனும் பராபரனும் கர்த்
தருமானவர் காரியத்தை அறிவார்; தேவனும்
பராபரனும் கர்த்தருமானவரே அதை அறிவார்;
இஸ்ரவேல் தானும் அறியப்போகின்றது; அது
இரண்டகத்தினாலே, அல்லவென்று கர்த்தராகிய
தேவரீருக்கு விரோதமான துரோகத்தினாலே,
செய்யப்பட்டதானால், எங்களைத் தேவரீர் இந்நா
௨௩ ளிலே காப்பாற்றவேண்டாம்.—ஒரு ஐயத்தின்
நிமித்தம் நாங்கள் எங்களுக்கு அந்தப் பீடத்தைக்
கட்டினதே அல்லாமல், கர்த்தரைவிட்டுப் பின்
பற்றாதபடிக்குப் புரளுகிறதற்காகிலும், அதின்
மேலே சர்வாங்கதகனத்தையும் காணிக்கையை
யும் ஏற்றுகிறதற்காகிலும், அல்லவென்று அதின்
மேலே சமாதானபலிகளைச் செலுத்துகிறதற்கா
கிலும், அதைச் செய்ததுண்டானால், கர்த்தர் அ
௨௪ தை விசாரிப்பாராக. — நாளை உங்கள் பிள்ளை
கள் எங்கள் பிள்ளைகளோடே, இஸ்ரவேலின்
பராபரனாகிய கர்த்தரோடே உங்களுக்கு என்ன
௨௫ வென்றும்,—ரூபேன் புத்திரரே, காத் புத்திரரே,
கர்த்தர் யோர்தானை எங்களுக்கும் உங்களுக்கும்
நடுவே எல்லையாக வைத்தார், கர்த்தரிடத்தில்
உங்களுக்குப் பங்கில்லையென்றும்சொல்லி, எங்
கள் பிள்ளைகளைக் கர்த்தருக்குப் பயப்படாதிருக்
கப்பண்ணுவார்களென்கிற ஐயத்தினாலே, நாங்
கள் சொல்லிக்கொண்டது என்னவெனில்,—
சர்வாங்கதகனத்திற்கல்ல, பலிக்குமல்ல, எங் ௨௬
கள் சர்வாங்கதகனங்களாலும் பலிகளாலும் சமா
தானபலிகளாலும் நாங்கள் கர்த்தருக்குமுன்
பாக அவருடைய ஆராதனையைச் செய்யத்தக்க
வர்களென்று எங்களுக்கும், உங்களுக்கும், நமக்
குப் பிற்பாடிருக்கும் நம்முடைய சந்ததியாருக்
கும், நடுவான சாட்சி உண்டாயிருக்கிறதற்கும்,—
கர்த்தரிடத்தில் உங்களுக்குப் பங்கில்லையென்று ௨௭
உங்கள் பிள்ளைகள் நாளை எங்கள் பிள்ளைக
ளோடே சொல்லாதபடிக்குமே, ஒரு பீடத்தை
நமக்குக் கட்டி உண்டுபண்ணுவோமே என்
றோம்.—நாளை எங்களோடும் அல்லது எங்கள் சந் ௨௮
ததியாரோடும் அப்படிச் சொல்வதுண்டானால்,
அப்போது சர்வாங்கதகனத்திற்கல்ல, பலிக்கு
மல்ல, எங்களுக்கும் உங்களுக்கும் நடுவான
சாட்சிக்காக எங்கள் பிதாக்கள் உண்டுபண்
ணின கர்த்தருடைய பலிபீடத்தின் சாயலான
பீடத்தைப் பாருங்களென்று சொல்லுவோமென்
றோம்.—நம்முடைய பராபரனாகிய கர்த்தரின் ௨௯
வாசஸ்தலத்திற்கு முன்பாக இருக்கிற அவரு
டைய பலிபீடத்தைத்தவிர, நாங்கள் சர்வாங்க
தகனத்திற்கும், காணிக்கைக்கும், பலிக்கும், வே
றொரு பீடத்தைக் கட்டுகிறதினாலே, கர்த்தருக்கு
விரோதமாய்க் கலகம்பண்ணுவதும் இன்று கர்த்
தரைப் பின்பற்றாதபடிக்குப் புரளுவதும் எங்க
ளுக்கு மகா தூரமாவதாக என்றார்கள்.

ரூபேன் புத்திரரும் காத் புத்திரரும் மனாசே ௩௰
யின் புத்திரரும் சொல்லுகிற வார்த்தைகளை ஆசா
ரியனாகிய பினேகாசும் அவனோடே இருந்த
சபையின் பிரபுக்களும் இஸ்ரவேலுடைய சே
னைகளின் தலைவரும் கேட்டபோது, அவர்கள்
பார்வைக்கு நன்றாயிருந்தன.—அப்போது ஆசாரி ௩௧
யனாகிய எலேயாசாரின் குமாரனான பினேகாஸ்
ரூபேன் புத்திரரோடும் காத் புத்திரரோடும் மனா
சேயின் புத்திரரோடும் சொன்னதாவது: நீங்கள்
கர்த்தருக்கு விரோதமாய்அப்படிக்கொத்த துரோ
கத்தைப் பண்ணாதிருக்கிறதினாலே, கர்த்தர் நம்
முடைய நடுவே இருக்கிறாரென்கிறதை இன்று
அறிந்திருக்கிறோம்; இப்போது இஸ்ரவேல் புத்
திரரைக் கர்த்தரின் கைக்குத் தப்புவித்தீர்க
ளென்று சொல்லி,—ஆசாரியனாகிய எலேயாசா ௩௨
ரின் குமாரனான பினேகாசும், பிரபுக்களும்,
கீலேயாத் தேசத்தில் இருக்கிற ரூபேன் புத்திர
ரையும் காத்புத்திரரையும் விட்டு, கானான்தேசத்
திலே இஸ்ரவேல் புத்திரரண்டைக்குத் திரும்பி
வந்து, அவர்களுக்கு மறுசெய்தி சொன்னார்கள்.—
அந்தச் செய்தி இஸ்ரவேல் புத்திரரின் பார்வைக் ௩௩
கு நன்றாயிருந்தது; ஆகையால் அவர்கள் ரூபேன்
புத்திரரும் காத்புத்திரரும் குடியிருக்கிற தேசத்
தைக் கெடுத்துவிட, அவர்கள்மேல் யுத்தத்திற்
குப் புறப்படுவோமென்ற பேச்சைவிட்டு, இஸ்

ரவேல் புத்திரர் பராபரனை ஸ்தோத்திரித்தார்கள்.
ஙச கர்த்தரே பராபரன் என்பதற்கு அந்தப் பீடம் நமக்குள்ளே சாட்சியென்றதாக ரூபேன் புத்திரரும், காத் புத்திரரும் அதற்குப் பேரிட்டார்கள்.

## உங. அதிகாரம்.

க. யோசுவா வயதுசென்றபின்பு, ங. சனங்களுக்குக் கிடைத்த நன்மையினாலும், கூ. வாக்குத்தத்தத்தினாலும், மக. பயமுறுத்தலினாலும் செய்த எச்சரிப்பு.

க இஸ்ரவேலைக் கர்த்தர் சுற்றிலுமிருந்த அவர்களுடைய எல்லாச் சத்துருக்களால் யுத்தமில்லாதபடிக்கு இளைப்பாறப்பண்ணி, அநேகநாள் சென்று, யோசுவா முதிர்ந்தவனும் வயதுசென்றவனு
உ மானபிற்பாடு,—யோசுவா இஸ்ரவேலையெல்லாம் அதின் மூப்பனையும், தலைவனையும், நியாயாதிபதிகளையும், ஆதிக்கக்காரனையும் அழைப்பித்து, அவர்களோடே சொன்னதாவது: நான் முதிர்ந்த வயதுசென்றவனாய்ப் போனேன்.—
ங நீங்களோவென்றால் உங்கள் பராபரனாகிய கர்த்தர் உங்களுக்குமுன்பாக இந்தச் சகல சாதிகளுக்கும் செய்த யாவையும் கண்டீர்கள்; ஏனெனில் உங்கள் பராபரனாகிய கர்த்தர் தாமே உங்களுக்
ச காக யுத்தம்பண்ணினார்.—பாருங்கள், யோர்தான் முதல்கொண்டு, நான் நிர்மூலமாக்கினவைகளும் சூரியன் அஸ்தமிக்கும்திசையாகிய பெரியசமுத்திரம்மட்டும் இன்னம் மீந்திருக்கிறவைகளுமான சகல சாதிகளின் தேசத்தையும் சீட்டுப்போட்டு, உங்களுக்கு உங்கள் கோத்திரங்களுக்குத்தக்கதாய்ச் சுதந்தரமாகப் பங்கிட்டேன்.
ரு உங்கள் பராபரனாகிய கர்த்தர் உங்களுக்குச் சொன்னபடியே, நீங்கள் அவர்களுடைய தேசத்தைக் கட்டிக்கொள்ளும்படிக்கு, உங்கள் பராபரனாகிய கர்த்தர் தாமே அவர்களை உங்களுக்கு முன்பாகத் துரத்தி, உங்களுக்குமுன்பாக இரா
சு தேபோகப்பண்ணுவார்.—இப்போதும் மோசேயின் நியாயப்பிரமாண புஸ்தகத்தில் எழுதியிருக்கிறதை விட்டு, வலதுபுறமாகிலும், இடதுபுறமாகிலும், விலகிப்போகாமல், அதின்படியெல்லாம் செய்யச் சாவதானமாயிருக்கும்படிக்கு, நீங்கள்
எ மிகவும் பலத்து,—உங்களோடே மீதியாயிருக்கிற இந்தச் சாதிகளுக்குள்ளாகாமலும், அவர்களுடைய தேவர்களின் பேரை நினையாமலும், அவைகளைக்கொண்டு ஆணையிட்டுக்கொள்ளாமலும், அவைகளைச் சேவிக்காமலும், பணிந்துகொள்ளாமலும் இருக்கும்படிக்கு, எச்சரிக்கை
அ யாயிருந்து,—இந்நாள்மட்டும் செய்ததுபோல, உங்கள் பராபரனாகிய கர்த்தரோடு ஒட்டிக்
கூ கொண்டிருங்கள்.—ஏனெனில் கர்த்தர் உங்களுக்குமுன்பாகப் பெரியவைகளும் பலத்தவைகளுமான சாதிகளைத் துரத்தியிருக்கிறார்; இந்நாள்மட்டும் ஒருவரும் உங்களுக்குமுன்பாக
ம நின்றதில்லை.—உங்களில் ஒருவன் ஆயிரம்பேரைத் துரத்துவான்; ஏனெனில் உங்கள் பராபரனாகிய கர்த்தர் உங்களுக்குச் சொன்னபடி, அவர்தாமே உங்களுக்காக யுத்தம்பண்ணுகிறார்.
ஆகையால் உங்கள் பராபரனாகிய கர்த்தரைச் மக
சிநேகிக்கிறதற்காக, உங்கள் ஆத்துமாக்களை மிகவும் காத்துக்கொண்டிருங்கள்.—ஏனெனில் நீங் மஉ
கள் புரளவே புரண்டு, உங்களோடே மீதியாயிருக்கிற இந்தச் சாதிகளோடு ஒட்டிக்கொண்டு, அவர்களோடே சம்பந்தம்கலந்து, நீங்கள் அவர்களுக்கும் அவர்கள் உங்களுக்கும் உள்ளானால்,—
உங்கள் பராபரனாகிய கர்த்தர் இனி இந்தச் சாதி மங
களை உங்களுக்குமுன்பாகத் துரத்திவிடாதே போவாரென்பதையும், நீங்கள் உங்கள் பராபரனாகிய கர்த்தர் உங்களுக்குக் கொடுத்த இந்த நல்ல சீமையிலிருந்து அழிந்துபோகும்மட்டுக்கும், அவர்கள் உங்களுக்குக் கண்ணியாகவும், வலையாகவும், உங்கள் விலாவுகளுக்குச் சவுக்காகவும், உங்கள் கண்களுக்கு முள்ளுக்களாகவும், இருப்பார்களென்பதையும் அறியவே அறியுங்கள்.—
இதோ இன்று நான் பூலோகத்தாரெல்லாம் போ மச
கிறவழியாய்ப் போகிறேன்; உங்கள் பராபரனாகிய கர்த்தர் உங்களுக்காகச் சொன்ன நல்ல வார்த்தைகளிலெல்லாம் ஒரு வார்த்தையும் விழுந்துபோனதில்லை என்கிறதை உங்கள் முழு இருதயத்தாலும் உங்கள் முழு ஆத்துமாவினாலும் அறிவீர்கள்; அவைகளெல்லாம் உங்களுக்கு வந்தன; அவைகளில் ஒரு வார்த்தையும் விழுந்து
போனதில்லை.—இப்போதும் உங்கள் பராபரனா மரு
கிய கர்த்தர் உங்களோடே சொன்ன நல்ல காரியமெல்லாம் உங்கள்மேலே எப்படிவந்ததோ, அப்படியே உங்கள் பராபரனாகிய கர்த்தர் உங்களுக்குக் கற்பித்த அவருடைய உடம்படிக்கையை நீங்கள் மீறிப்போய், வேறே தேவர்களைச் சேவித்து, அவைகளைப் பணிந்துகொண்டால்,—
உங்கள் பராபரனாகிய கர்த்தர் உங்களுக்குக் கொ மசு
டுத்த இந்த நல்ல சீமையில் உங்களை வைக்காமல் அழிக்கும்மட்டும், கர்த்தர் உங்கள்மேலே சகல பொல்லாத காரியத்தையும் வரப்பண்ணுவார்; அப்போது கர்த்தருடைய கோபம் உங்கள் மேலே பற்றியெரிவதினாலே, நீங்கள் சீக்கிரமாய் அவர் உங்களுக்குக் கொடுத்த நல்ல தேசத்திலிருந்து அழிந்துபோவீர்களென்றான்.

## உச. அதிகாரம்.

க. யோசுவா சீகேமில் கோத்திரங்களைக் கூட்டியது. உ. நிராவைத்தொடங்கிப் பராபரன் செய்த நன்மைகள் சுருக்கமாகச் சொல்லப்பட்டது. மச. அவருக்கும் சனங்களுக்கும் உடம்படிக்கை மறுபடியும் உண்டாக்கப்பட்டது. உக. அந்த உடம்படிக்கைக்கு அடையாளமாக ஒரு கல் நாட்டப்பட்டது. உகூ. யோசுவாவின் வயதும், மரணமும், அவன் அடக்கம்பண்ணப்பட்டதும். கூஉ. யோசேப்பின் எலும்புகள் அடக்கம்பண்ணப்பட்டது. கூகூ. எலேயாசார் மரணம் அடைந்தது.

பிற்பாடு யோசுவா இஸ்ரவேலின் கோத்திரங்க க
ளையெல்லாம் சீகேமிலே கூடிவரப்பண்ணி, இஸ்ரவேலின் மூப்பனையும், தலைவனையும், நியாயாதிபதிகளையும், ஆதிக்கக்காரனையும் வரவழைத்தான்; அவர்கள் பராபரனுடைய சந்நிதிக்கு முன்பாக வந்து நின்றார்கள்.
அப்போது யோசுவா எல்லாச் சனத்தோடும் உ
சொன்னதாவது: இஸ்ரவேலின் பராபரனாகிய கர்த்தர் சொல்லுகிறதேதெனில், பூர்வத்திலே

உங்கள் பிதாக்களாகிய ஆபிரகாமுக்கும் நாகோ
ருக்கும் தகப்பனுன தேராக்கென்பவன், நதிக்கு
அப்புறத்திலே குடியிருக்கிறபோது அவர்கள்
௩ வேறே தேவர்களைச் சேவித்தார்கள். — நாமோ
வெனில், நதிக்கப்புறத்தில் இருந்த உங்கள் தகப்
பனுகிய ஆபிரகாமைச் சேர்த்துக்கொண்டுவந்து
அவனைக் கானுன்தேசமெங்கும் நடமாடப்
பண்ணி, அவன் வித்தைத் திரட்சியாக்கினோம்;
௪ அவனுக்கு ஈசாக்கையும், — ஈசாக்குக்கு யாக்
கோபையும் ஏசாவையும், கட்டளையிட்டு, ஏசா
வுக்குச் சேயீர்மலைத்தேசத்தைச் சுதந்தரிக்கும்ப
டிக்குக் கொடுத்தோம்; யாக்கோபும் அவன் பிள்
ளைகளுமோவென்றால், எகிப்திற்கு இறங்கிப்
௫ போனார்கள்.—ஆனால் நாம் மோசேயையும் ஆரோ
னையும் அனுப்பி, எகிப்தியரை வாதித்தோம்;
அப்படி அவர்கள் நடுவிலே நாம் செய்தபிற்பாடு
௬ உங்களைப் புறப்படப்பண்ணினோம். — நாம்
உங்கள் பிதாக்களை எகிப்திலிருந்து புறப்படப்
பண்ணினபோது, சமுத்திரக் கரைக்கு வந்தீர்
கள்; ஆனால் எகிப்தியர் இரதங்களோடும் குதி
ரைக்காரரோடும் உங்கள் பிதாக்களை நாணல்
௭ சமுத்திரம்மட்டும் பின்தொடர்ந்தார்கள்.—அப்
போது கர்த்தரைநோக்கிக் கூப்பிட்டார்கள்; அப்
போது அவர் உங்களுக்கும் எகிப்தியருக்கும்
நடுவே அந்தகாரத்தைக் கட்டளையிட்டு, சமுத்
திரத்தை அவர்கள்மேலே புரளப்பண்ணி, அவர்
களை மூடினார்; நாம் எகிப்திலே செய்ததை உங்
கள் கண்கள் கண்டன; பிற்பாடு வனாந்தரத்தில்
௮ அநேகநாள் குடியிருந்தீர்கள்.—அதற்குப்பிறகு
உங்களை யோர்தானுக்கு அப்புறத்திலே குடியி
ருந்த எமோரியரின் தேசத்திற்குக் கொண்டுவந்
தோம்; அவர்கள் உங்களோடு யுத்தம்பண்ணுகிற
போது, அவர்களை உங்கள் கையில் ஒப்புக்கொ
டுத்தோம்; அவர்கள் தேசத்தைக் கட்டிக்கொண்
டீர்கள்; ஏனெனில் அவர்கள் உங்கள் முகத்திற்
௯ குமுன்னே அழித்துவிட்டோம். — அப்போது
சிப்போரின் குமாரன் பாலாக்கென்ற மோவாபி
யரின் இராசா எழும்பி, இஸ்ரவேலோடு யுத்தம்
பண்ணி, உங்களைச் சபிக்கும்படிக்கு, பேயோ
ரின் குமாரனுகிய பிலெயாமை அழைத்தனுப்பி
௰ னான். — நாமோவெனில் பிலெயாமைக் கேட்
கச் சித்தமில்லாததினாலே, அவன் உங்களை ஆசீர்
வதிக்கவே ஆசீர்வதித்தான்; இப்படி அவன்
௰௧ கைக்கு உங்களைத் தப்புவித்தோம். — பிற்பாடு
யோர்தானைக் கடந்து, எரிகோவுக்கு வந்தீர்கள்;
எரிகோவின் குடிகளும் எமோரியரும், பேரீசிய
ரும், கானானியரும், ஏத்தியரும், கிர்காசியரும்,
எவியரும், எபூசியரும், உங்களுக்கு விரோதமாக
யுத்தம்பண்ணினார்கள்; ஆனால் நாம் அவர்களை
௰௨ உங்கள் கையில் ஒப்புக்கொடுத்தோம். — உங்க
ளுக்குமுன்பாக வண்டுகளை அனுப்பினோம்;
அவைகள் அவர்களை உங்களுக்குமுன்பாகத்
துரத்திவிட்டன; எமோரியரின் இரண்டு இராசா
க்களை அப்படித்தான் நீ உன் பட்டையத்தாலும்
உன் வில்லாலும் அவர்களை வென்றதில்லை.—
அப்படியே நீங்கள் பிரயாசப்படாதிருக்கிற தேச ௰௩
த்தையும், நீங்கள் கட்டாதிருக்கிற பட்டணங்க
ளையும், உங்களுக்குக் கொடுத்தோம், அவை
களில் குடியிருக்கிறீர்கள்; நீங்கள் பயிரிடாதி
ருக்கிற திராட்சத்தோட்டங்களின் பலனையும்
ஒலீவத் தோப்புகளின் பலனையும் புசிக்கிறீர்க
ளென்றார்.

இப்போதும் நீங்கள் கர்த்தருக்குப் பயந்து, ௰௪
அவரை உத்தமமும் உண்மையுமாய்ச் சேவித்து,
உங்கள் பிதாக்கள் நதிக்கு அப்பாலேயும் எகிப்
திலும் சேவித்த தேவர்களை விலக்கிவிட்டு, கர்த்
தரைச் சேவியுங்கள்.—கர்த்தரைச் சேவிக்கிறது ௰௫
உங்கள் பார்வைக்கு ஆகாததாயிருந்ததேயாகில்,
ஆரைச்சேவிப்பீர்கள், நதிக்கு அப்பாலிருந்த உங்
கள் பிதாக்கள் சேவித்த தேவர்களையோ, அல்ல
வென்று நீங்கள் குடியிருக்கிற தேசத்து மனுஷ
ராகிய எமோரியரின் தேவர்களையோ என்று,
இன்று தெரிந்துகொள்ளுங்கள்; நானும் என் வீட்
டாருமோவென்றால், கர்த்தரைச் சேவிப்போ
மென்றான்.

அப்போது சனம் பிரதியுத்தாரமாகச் சொன் ௰௬
னதாவது: வேறே தேவர்களைச் சேவிக்கிறதற்
காக, கர்த்தரை விட்டுவிடுகிற காரியம் எங்களுக்
குத் தூரமாயிருப்பதாக.—ஏனெனில் நம்மையும் ௰௭
நம்முடைய பிதாக்களையும் அடிமைத்தனத்தின்
வீடாகிய எகிப்துதேசத்திலிருந்து ஏறிவரப்பண்
ணி, நம்முடைய கண்களுக்குமுன்பாக அந்தப்
பெரிய அடையாளங்களைச் செய்து, நாம் நடந்த
எல்லா வழியிலும் நாம் நடுவாகக் கடந்துவந்த
எல்லாச் சனசதளங்களுக்குள்ளும், நம்மைக்
காப்பாற்றினவர் நம்முடைய பராபரனுகிய கர்த்
தர்தாமே. — சகல சனசதளங்களையும் தேசத்தி ௰௮
லே குடியிருந்த எமோரியனையும் கர்த்தர் நமக்கு
முன்பாகத் துரத்தினாரே; நாங்களும் கர்த்தரைச்
சேவிப்போம்; ஏனெனில் அவரே நம்முடைய
பராபரனென்றார்கள்.—யோசுவா சனத்தோடே ௰௯
சொன்னதாவது: நீங்கள் கர்த்தரைச் சேவிக்க
மாட்டீர்கள்; ஏனெனில் அவர் பரிசுத்தமுள்ள
பராபரன், அவர் எரிச்சலுள்ள தேவனானவர்;
உங்கள் மீறுதலையும் உங்கள் பாவங்களையும் மன்
னியாதிருப்பார்.—நீங்கள் கர்த்தரைவிட்டு, அந் ௨௰
நியதேவர்களைச் சேவிக்கும்போது அவர் உங்க
ளுக்கு நன்மை செய்ததற்குப் பிற்பாடு, திரும்
பிக்கொண்டு, உங்களுக்குத் தீமைசெய்து, உங்
களை நிர்மூலமாக்குவாரென்றான்.

ஆனால் சனம் யோசுவாவோடே, நாங்கள் ௨௧
அப்படிச்செய்யாமல், கர்த்தரைச் சேவிப்போ
மென்றார்கள்.

அப்போது யோசுவா சனத்தோடே, கர்த்த ௨௨
ரைச் சேவிக்கிறதற்காக அவரை நீங்கள் தெரிந்து
கொண்டதற்கு உங்களுக்கு நீங்களே சாட்சிக
ளென்றான்; அதற்கு அவர்கள், நாங்கள் சாட்சி
தான் என்றார்கள்.

அப்போது அவன், இப்போதும் உங்கள் நடு ௨௩
வே இருக்கிற அந்நியதேவர்களை விலக்கிவிட்டு,

உங்கள் இருதயத்தை இஸ்ரவேலின் பராபரனு
கிய கர்த்தருக்கு நேராகத் திருப்புங்களென்றான்.
௨௪ அப்போது சனம் யோசுவாவுடனே, நம்மு
டைய பராபரனுகிய கர்த்தரையே சேவித்து,
அவர் சத்தத்திற்குக் கீழ்ப்படிவோமென்றார்கள்.
௨௫ அப்படியே யோசுவா அந்நாளிலே சீகேமி
லே சனத்தோடே உடம்படிக்கைபண்ணி, அ
வர்களுக்கு அதைப் பிரமாணமும் நியாயக்கட்
௨௬ டளையுமாக வைத்தான்.—இந்த வார்த்தைகளை
யோசுவா பராபரனுடைய நியாயப்பிரமாண
புஸ்தகத்தில் எழுதி, ஒரு பெரிய கல்லை எடுத்து,
அதை அங்கே கர்த்தருடைய பரிசுத்தஸ்தலத்தரு
கில் இருந்த கர்வாலியுமரத்தின்கீழ் நாட்டி,—
௨௭ எல்லாச் சனத்தோடும் சொன்னதாவது: இதோ
இந்தக் கல் நமக்குள்ளே சாட்சியாயிருக்கக்கட
வது; ஏனெனில் கர்த்தர் நம்மோடே சொன்ன
எல்லா வசனங்களையும் அது கேட்டது; நீங்கள்
உங்கள் பராபரனுக்கு விரோதமாகப் பொய்
சொல்லாதபடிக்கு, அது உங்களுக்கு எதிரான
சாட்சியாயிருக்கக்கடவதென்று சொல்லி,—
௨௮ யோசுவா சனத்தை அவரவர்கள் சுதந்தரத்திற்கு
அனுப்பிவிட்டான்.
௨௯ இந்த வர்த்தமானங்களுக்குப்பிற்பாடு, நூனின்
குமாரனுகிய யோசுவாவென்ற கர்த்தருடைய
ஊழியக்காரன் நூற்றுப்பத்து வயதுள்ளவனாய்
மரணம் அடைந்தான்.—அவனை எப்பிராயீமின் ௩௰
மலைத்தேசத்திலே காயாஸ் பர்வதத்திற்கு வடக்
கே இருக்கிற திம்னாத்சேராகென்ற அவனுடைய
சுதந்தரத்தின் எல்லையிலே அடக்கம்பண்ணினார்
கள்.
யோசுவாவினுடைய எல்லா நாள்களிலும், ௩௧
யோசுவாவுக்குப் பிற்பாடு வெகுநாள் உயிரோ
டிருந்து கர்த்தர் இஸ்ரவேலுக்குச் செய்த அவரு
டைய எல்லாக் கிரியையையும் அறிந்திருந்த
மூப்பருடைய எல்லா நாள்களிலும், இஸ்ரவேல்
கர்த்தரைச் சேவித்தது.
இஸ்ரவேல் புத்திரர் எகிப்திலே இருந்து ௩௨
கொண்டுவந்த யோசேப்பின் எலும்புகளை அவர்
கள் சீகேமிலே யாக்கோப் சீகேமின் தகப்பனு
கிய ஏமோருடைய புத்திரரின் கையில் நூறு
வெள்ளிக்காசுக்குக் கொண்டதும் யோசேப்
பின் புத்திரருக்குச் சுதந்தரமாய்ப் போனதுமான
நிலத்தின் பங்கிலே அடக்கம்பண்ணினார்கள்.
ஆரோனின் குமாரனுகிய எலேயாசாரும் மர ௩௩
ணம் அடைந்தான்; அவனை அவன் குமாரனுகிய
பினேகாசுக்கு எப்பிராயீமின் மலைத்தேசத்திலே
கொடுக்கப்பட்ட மேட்டிலே அடக்கம்பண்ணி
னார்கள்.

# JUDGES.

# நியாயாதிபதிகளின்

## புஸ்தகம்.

### ௧. அதிகாரம்.

*௧. யூதா, சிமேயோனுடைய நடபடிகள். ௪. அதோனிபேசேக் நீதி சரிக்கட்டப்பட்டது. ௮. எருசலேம் பிடிக்கப்பட்டது. ௰. எபிரோன் பிடிக்கப்பட்டது. ௰௩. ஒத்னியேல் தேபீர் பட்டணத்தைப் பிடித்ததினால், அக்சாளை மனைவியாகப் பெற்றது. ௰௬. கேனியர்கள் யூதாவிலே குடியிருந்தது. ௰௭. ஓர்மாவும், காத்சாவும், அஸ்கலோனும், எக்ரோனும் பிடிக்கப்பட்டது. ௨௧. பென்யமீனும், ௨௨. பேத்தேலைப் பிடித்த யோசுவாவின் வீட்டாரும், ௩௰. சேபுலோனும், ௩௧. ஆசேரும், ௩௩. நப்தலியும், ௩௪. தாணும் நடந்த நடக்கை.*

௧ யோசுவா மரித்தபின் சம்பவித்ததேதெனில்,
எங்களில் கானானியரண்டைக்கு முதல் ஏறிப்
போய், அவர்களோடு யுத்தம்பண்ணவேண்டிய
வன் யாரென்று இஸ்ரவேல் புத்திரர் கர்த்தரைக்
௨ கேட்டார்கள். — அதற்குக் கர்த்தர், யூதா ஏறிப்
போகக்கடவான்; இதோ அந்தத் தேசத்தை
அவன் கையில் ஒப்புக்கொடுத்தோமென்றார்.—
௩ அப்போது யூதா தன் சகோதரனாகிய சிமேயோ
னோடே, நாம் கானானியரோடு யுத்தம்பண்ண,
என் சுதந்தரவீதத்தில் என்னோடேகூட ஏறி
வா; நான் உன் சுதந்தரவீதத்தில் உன்னோடும்
கூட வருவேனென்றான்; அப்படியே சிமே
௪ யோன் அவனோடே கூடப்போனான். — யூதா
ஏறிப்போகிறபோது, கர்த்தர் கானானியரையும்
பேரீசியரையும் அவர்கள் கையில் ஒப்புக்கொடுத்
தார்; அவர்கள் பேசேக்கிலே அவர்களில் பதினா
௫ யிரம்பேரை வெட்டினார்கள். — பேசேக்கிலே
அதோனிபேசேக் இருக்கிறானென்று அவர்கள்
கண்டு, அவனோடு யுத்தம்பண்ணி, கானானியரை
௬ யும் பேரீசியரையும் வெட்டி, — அதோனிபே
சேக் ஓடிப்போகையில், அவனைப் பின்தொ
டர்ந்து பிடித்து, அவன் கைகள் கால்களுடைய
௭ பெருவிரல்களைத் தறித்துவிட்டார்கள். — அப்
போது அதோனிபேசேக் கைகள் கால்களு
டைய பெருவிரல்கள் தறிக்கப்பட்ட எழுபது
இராசாக்கள் என் மேசையின் கீழ்விழுந்ததைப்
பொறுக்கினார்கள், நான் எப்படிச்செய்தேனோ,
அப்படிப் பராபரன் எனக்குச் சரிக்கட்டினா
ரென்றான்; அவனை எருசலேமுக்குக் கொண்டு
போனார்கள்; அங்கே செத்துபோனான்.

௮ யூதாவின் புத்திரர் எருசலேமின்மேல் யுத்தம்
பண்ணி, அதைப் பிடித்து, அதிலுள்ளவர்களைப்
பட்டையக் கருக்கால் வெட்டி, பட்டணத்தை
௯ அக்கினிக்கு இரையாக்கிவிட்டார்கள். — பிற்
பாடு யூதாவின் புத்திரர் மலைத்தேசத்திலேயும்,
தெற்கேயும் பள்ளத்தாக்குகளிலேயும், குடியிருக்
கிற கானானியரோடு யுத்தம்பண்ண, இறங்கிப்
போனார்கள். — அப்படியே முன்னாளிலே கீரி ௰
யாத் அர்பாவென்று பேர்கொண்ட எபிரோனி
லே குடியிருக்கிற கானானியரண்டைக்கு யூதா
கோத்திரத்தார் போய், சேசாயியையும், அகிமா
னையும், தல்மாயியையும், வெட்டிப்போட்டு,—
அங்கேயிருந்து தேபீரின் குடிகள்மேலே போ ௰௧
னார்கள்; தேபீருக்கோவெனில், முன்னாளிலே
கீரியாத்சேப்பேரென்று பேரிருந்தது. — அப் ௰௨
போது காலேப், கீரியாத்சேப்பேரை மடங்
கடித்துப் பிடிக்கிறவனுக்கு என் குமாரத்தியா
கிய அக்சாளை விவாகம்பண்ணிக் கொடுப்பே
னென்றான். — அப்போது காலேபுடைய தம்பி ௰௩
யாகிய கேனாசின் குமாரன் ஒத்னியேல் அதைப்
பிடித்தான்; ஆகையால் தன் குமாரத்தியாகிய அக்
சாளை அவனுக்கு விவாகம்பண்ணிக்கொடுத்
தான்.—அவள் பிரவேசம்பண்ணுகையில், என் ௰௪
தகப்பனை ஒரு வயல்வெளியைக் கேட்பே
னென்று அவனைச் சம்மதம்பண்ணிக்கொண்டு,
கழுதையை விட்டிறங்கினாள், காலேப் அவளோ
டே, உனக்கு என்னவேண்டுமென்றான்.—அப் ௰௫
போது அவள் அவனோடே, ஒரு ஆசீர்வாதத்தை
எனக்குக் கட்டளைபண்ணும்; என்னென்றால்
வரட்சியான நிலத்தை எனக்குத் தந்தீர்; நீரூற்று
களையும் எனக்குத் தாருமென்றாள்; அப்போது
காலேப் மேல்ப்புறத்திலும் கீழ்ப்புறத்திலும் அவ
ளுக்கு நீரூற்றுகளுள்ள நிலங்களைக் கொடுத்தான்.
மோசேயின் மாமனாகிய கேனியனின் புத்திர ௰௬
ரும் யூதாவின் புத்திரரோடேகூடப் பேரீச்சுக
ளின் பட்டணத்திலிருந்து ஆராத்திற்குத் தெற்
கே இருக்கிற யூதாவின் வனாந்தரத்திற்கு வந்து,
சனத்தோடேகூடக் குடியேறி இருந்தார்கள்.
யூதா தன் சகோதரனாகிய சிமேயோனோடும் ௰௭
கூடப்போனான்; அவர்கள் சேப்பாத்தில் குடி
யிருக்கிற கானானியரை முறியடித்து, அதைச்
சங்காரம்பண்ணி, அந்தப் பட்டணத்திற்கு ஒற்
மா என்று பேரிட்டார்கள். — யூதாகோத்திரம் ௰௮
காத்சாவையும், அதின் எல்லையையும், அஸ்கலோ
னையும், அதின் எல்லையையும், எக்கிரோனையும்,
அதின் எல்லையையும் பிடித்தது. — கர்த்தர் யூதா ௰௯
வோடேகூட இருந்ததினாலே, மலைத்தேசத்தா
ரைத் துரத்திவிட்டார்கள்; ஆனால் பள்ளத்தாக்

கின் குடிகளுக்கு இருப்பு இரதங்கள் இருந்தப
டியினால், அவர்களைத் துரத்தாதேபோனார்கள்.—
௨௰ மோசே சொன்னபடியே, எபிரோனைக் காலேப்
புக்குக் கொடுத்தார்கள்; அவன் அதிலிருந்த ஏனா
க்கின் மூன்று குமாரரைத் துரத்திவிட்டான்.
௨௧ பென்யமீன் புத்திரர் எருசலேமிலே குடியி
ருந்தஎபூசியரையும்துரத்திவிடாதேபோனார்கள்;
ஆகையால் எபூசியர் இந்நாள்மட்டும் பென்யமீன்
புத்திரரோடேகூட எருசலேமிலே குடியிருக்கி
றார்கள்.
௨௨ யோசேப்பு வீட்டாரும் பேத்தேலுக்கு ஏறிப்
போனார்கள்; கர்த்தர் அவர்களோடேகூட இருந்
௨௩ தார். — யோசேப்பு புத்திரர் பேத்தேலை வேவு
பார்க்கிறவர்களை வைத்தார்கள்; அந்தப் பட்ட
ணத்திற்கு முதல் லூஸ் என்ற பேரிருந்தது.—
௨௪ அந்த வேவுகாரர் பட்டணத்திலிருந்து புறப்
பட்ட ஒரு மனுஷனைக் கண்டு, அவனுடனே,
பட்டணத்திற்குள் பிரவேசிக்கும் இடத்தை எங்
களுக்குக் காண்பி, உன்னைத் தயவாய் நடப்பிப்
௨௫ போமென்றார்கள்.—அப்படியே பட்டணத்திற்
குள் பிரவேசிக்கும் இடத்தை அவர்களுக்குக்
காண்பித்தான்; அப்போது வந்து, பட்டணத்தி
லுள்ளவர்களைப் பட்டையக் கருக்கால் வெட்டி,
அந்த மனுஷனையும் அவன் வம்சமனைத்தையும்
௨௬ போகவிட்டார்கள். — அப்போது அந்த மனு
ஷன் ஏத்தியரின் தேசத்திற்குப் போய், ஒரு
பட்டணத்தைக் கட்டி, அதற்கு லூஸ் என்று
பேரிட்டான்; இந்நாள்மட்டும் அதுதானே அ
தின்பேர்.
௨௭ மனாசே கோத்திரத்தார் பெத்செயான் பட்ட
ணத்தாரையும், அதற்கடுத்த ஊர்களின் மனுஷ
ரையும், தானாக் பட்டணத்தாரையும், அதற்க
டுத்த ஊர்களின் மனுஷரையும், தோரின் குடிக
ளையும், அதற்கடுத்த ஊர்களின் மனுஷரையும்,
இப்லெயாம் பட்டணத்தாரையும், அதற்கடுத்த
ஊர்களின் மனுஷரையும், மெகிதோவின் குடிக
ளையும். அதற்கடுத்த ஊர்களின் மனுஷரையும்.
துரத்திவிடாதேபோனார்கள்; கானானியர் அந்தத்
தேசத்திலேதானே குடியிருக்கவேண்டுமென்றி
௨௮ ருந்தார்கள்.—இஸ்ரவேல் பலத்தபோது, அவர்க
ளைத் துரத்தவே துரத்தாமல் பகுதிகட்டப்பண்
ணினார்கள்.
௨௯ எப்பிராயீம் கோத்திரத்தார் கேசேரிலே குடி
யிருந்த கானானியரையும் துரத்திவிடாதேபோ
னார்கள்; ஆகையால் கானானியர் கேசேரில் அவர்
௩௰ கள் நடுவே குடியிருந்தார்கள். — செபுலோன்
கோத்திரத்தார் கித்ரோனின் குடிகளையும், நாக
லோனின் குடிகளையும், துரத்திவிடாதேபோனார்
கள்; ஆகையால் கானானியர் அவர்கள் நடுவே
குடியிருந்து, பகுதிகட்டுகிறவர்களானார்கள்.—
௩௧ ஆசேர் கோத்திரத்தார் அக்கோவின் குடிகளையும்,
சீதோனின் குடிகளையும், அக்லாப், அக்சீப், எல்
பா, ஆப்பீக்கு, ரேகொப் பட்டணங்களின் குடி
௩௨ களையும், துரத்திவிடாதேபோனார்கள்.—ஆசேரி
யர் தேசத்தின் குடிகளாகிய கானானியரின் நடு
வே குடியிருந்தார்கள்; ஏனெனில் அவர்களைத்
துரத்தாதேபோனார்கள்.—நப்தலி கோத்திரத்தார் ௩௩
பெத்சேமேசின் குடிகளையும் பெத்தானாத்தின்
குடிகளையும் துரத்திவிடாதேபோய், தேசத்தின்
குடிகளாகிய கானானியரின் நடுவே குடியிருந்
தார்கள்; பெத்சேமேஸ் பெத்தானாத் பட்டணங்
களின் குடிகள் அவர்களுக்குப் பகுதிகட்டுகிற
வர்களானார்கள்.—எமோரியர் தாண் புத்திரரை ௩௪
மலைத்தேசத்தில் இருக்கும்படி நெருக்கினார்கள்;
ஏனெனில் அவர்களைப் பள்ளத்தாக்கில் இறங்க
வொட்டாதிருந்தார்கள். — எமோரியர் ஏரேஸ் ௩௫
மலைகளிலும் ஆயலோனிலும் சால்பீமிலும் குடி
யிருக்கவேண்டுமென்று இருந்தார்கள்; ஆனால்
யோசேப்பு வீட்டாரின் கை பலத்தபடியினாலே
அவர்கள் பகுதிகட்டுகிறவர்களாய்ப் போனார்
கள்.—எமோரியரின் எல்லை அக்கிராபீமுக்குப் ௩௬
போகிற மேடும் கல்மலையும் முதல்கொண்டு
அப்புறம் உயரப்போயிற்று.

## ௨. அதிகாரம்.

௧. போகீமிலே தேவதூதன் சனங்களை அதட்டினது. ௧. யோசுவாவுக்குப் பின்பு புதிய சந்ததிகளின் துன்மார்க்கம். ௰௪. அவர்கள்மீதில் பராபரனுடைய கோபமும், இரக்கமும். ௨௰. கானான்தேசத்தார் இஸ்ரவேலரைச் சோதிக்கும்படி விடப்பட்டது.

கர்த்தருடைய தூதனானவர் கில்காலிலிருந்து ௧
போகீமுக்கு ஏறிவந்து சொன்னதாவது: நாம்
உங்களை எகிப்திலிருந்து ஏறப்பண்ணி, நாம்
உங்கள் பிதாக்களுக்கு ஆணையிட்ட தேசத்தில்
உங்களைக் கொண்டுவந்து விட்டு, உங்களோடே
பண்ணின நம்முடைய உடம்படிக்கையை
ஒருக்காலும் நாம் முறித்துப்போடுவதில்லையென்
றும்,—நீங்கள் இந்தத் தேசத்தின் குடிகளோடே ௨
உடம்படிக்கைபண்ணாமல், அவர்கள் பலிபீடங்
களை இடித்துவிடக்கடவீர்களென்றும் சொன்
னோம்; ஆனால் நமது சொல்கேளாதேபோனீர்
கள்; இப்படி நீங்கள் செய்ததென்ன?—ஆகை ௩
யால் நாம் அவர்களை உங்கள் முகத்திற்குமுன்
பாகத் துரத்துவதில்லையென்றோம்; அவர்கள்
உங்களை நெருக்குவார்கள்; அவர்களுடைய தே
வர்கள் உங்களுக்குக் கண்ணியாவார்களென்
றார்.—கர்த்தருடைய தூதனானவர் இந்த வார்த் ௪
தைகளை இஸ்ரவேல் புத்திரரோடெல்லாம் சொல்
லுகையில், சனம் தங்கள் சத்தத்தை உயர்த்தி அ
ழுது, — அவ்விடத்திற்குப் போகீமென்று பேரு
ரிட்டு, அங்கே கர்த்தருக்குப் பலியிட்டார்கள்.
ஏனெனில் யோசுவா சனத்தை அனுப்பி ௬
விட்டு, இஸ்ரவேல் புத்திரர் தேசத்தைச் சுதந்த
ரித்துக்கொள்ள அவரவர் தங்கள் சுதந்தர விகிதத்
திற்குப் போனபிற்பாடு,—யோசுவாவின் சகல ௭
நாளிலும் கர்த்தர் இஸ்ரவேலுக்காகச் செய்த அவ
ருடைய பெரிய கிரியையெல்லாம் கண்டவர்க
ளும் யோசுவாவுக்குப்பிற்பாடு நாள் நீடித்திருந்
தவர்களுமான மூப்பரின் சகல நாளிலும் சனம்
கர்த்தரைச் சேவித்தது.—ஆனால் நூனின் குமா ௮
ரனாகிய யோசுவாவென்ற கர்த்தரின் ஊழியக்
காரன் நூற்றுப்பத்து வயதுள்ளவனாய் மரணம்

௯ அடைந்தான்.—அவனை எப்பிராயீமின் மலைத்
தேசத்திலே காயாஸ் மலைக்கு வடக்கே இருக்கிற
அவனுடைய சுதந்தரத்தின் எல்லையாகிய திம்
னாத் தேரேசிலே அடக்கம்பண்ணினார்கள்.—
௰ அதற்குப்பிற்பாடும், அந்தச் சந்ததியார் எல்லா
ரும் தங்கள் பிதாக்களண்டையிலே சேர்த்துக்
கொள்ளப்பட்டதற்குப்பிற்பாடும், கர்த்தரையும்,
அவர் இஸ்ரவேலுக்காகச் செய்த கிரியையை
யும், அறியாத வேறொரு சந்ததி அவர்களுக்குப்
பிறகு எழும்பிற்று.
௰௧ அப்போது இஸ்ரவேல் புத்திரர் கர்த்தரின்
பார்வைக்குப் பொல்லாப்பானதைச் செய்து,
௰௨ பாகால்களைச் சேவித்து,— தங்கள் பிதாக்களை
எகிப்துதேசத்திலேயிருந்து புறப்படப்பண்
ணின அவர்களுடைய பராபரனாகிய கர்த்தரை
விட்டு, தங்களைச் சுற்றிலும் இருக்கிற சனசதளங்
களுடைய அந்நியதேவர்களில் சில தேவர்களைப்
பின்பற்றிப்போய், அவர்களைப் பணிந்துகொண்
டு, கர்த்தருக்குக் கோபம் உண்டாக்கினார்கள்.—
௰௩ அவர்கள் கர்த்தரைவிட்டு, பாகாலையும் அஸ்த
௰௪ ரோத்தையும் சேவித்தார்கள்.—அப்போது கர்த்தர்
இஸ்ரவேலின்மேல் கோபம்மூண்டவராகி, அ
வர்களைக் கொள்ளையிடுகிற கொள்ளைக்காரர்
கையில் அவர்களை ஒப்புக்கொடுத்து, அவர்கள்
அப்புறம் தங்கள் சத்துருக்களுக்குமுன்பாக
நிற்கக்கூடாதபடியாய் அவர்களைச் சுற்றிலும் இ
ருக்கிற அவர்கள் பகைஞரின் கையிலே விற்றுப்
௰௫ போட்டார்.—கர்த்தர் சொல்லி, கர்த்தர் அவர்க
ளுக்கு ஆணையிட்டிருந்தபடியே, கர்த்தருடைய
கை அவர்கள் புறப்பட்டுப்போகிற இடமெல்
லாம் தீமைக்கென்று அவர்களுக்கு விரோதமா
யிருந்தது; மிகவும் நெருக்கப்பட்டார்கள்.
௰௬ அவர்களைக் கொள்ளையிடுகிறவர்களின் கைக்
கு அவர்களை நீங்கலாக்கிவிடுகிற நியாயாதிபதிக
௰௭ ளைக் கர்த்தர் எழும்பப்பண்ணியும், — அவர்கள்
தங்கள் நியாயாதிபதிகளின் சொல்லும் கேளா
மல், அந்நியதேவர்கள் பின்னாலே சோரம்
போய், அவைகளைப் பணிந்துகொண்டார்கள்;
தங்கள் பிதாக்கள் கர்த்தரின் கற்பனைகளுக்குக்
கீழ்ப்படிந்து நடந்த வழியை அவர்கள் சீக்கிர
மாய் விட்டு விலகி, அவர்கள் செய்தபடி செய்
௰௮ யாதேபோனார்கள்.—கர்த்தர் அவர்களுக்கு நியா
யாதிபதிகளை எழுப்புகிறபோது, கர்த்தர் நியா
யாதிபதியோடேகூட இருந்து, அந்த நியாயாதி
பதிகளின் நாளெல்லாம் அவர்களை அவர்கள் சத்
துருக்களின் கைக்கு நீங்கலாக்கி இரட்சித்து
வருவார்; ஏனென்றால் அவர்கள் தங்களை இறு
கப்பிடித்து ஒடுக்குகிறவர்களின்நிமித்தம் தவிக்
கிறதினாலே, கர்த்தர் மனஸ்தாபப்படுவார்.—
௰௯ அந்த நியாயாதிபதி மரணம் அடையும்போதோ
வெனில், அவர்கள் திரும்பி, அந்நியதேவர்களைப்
பின்பற்றவும், சேவிக்கவும், பணிந்துகொள்ள
வும், தங்கள் பிதாக்களைப்பார்க்கிலும் கேடாய்
நடந்து, தங்கள் கிரியைகளையும் தங்கள் கெட்
டியான வழியையும் விடாதிருப்பார்கள்.

ஆகையால் கர்த்தர் இஸ்ரவேலின்மேல் கோ ௨௰
பம்மூண்டவராகிச் சொன்னதாவது: இந்தச்
சாதி நாம் தங்கள் பிதாக்களுக்குக் கற்பித்த நம்
முடைய உடம்படிக்கையை மீறி நம்முடைய
சொல் கேளாதேபோனபடியினாலே,— நாமும் ௨௧
யோசுவா மரித்துப் பின்வைத்துப்போன சாதிக
ளில் ஒருவரையும், இனி அவர்களுக்குமுன்பா
கத் துரத்திவிடாதிருப்போம்.—அவர்கள் பிதாக் ௨௨
கள் கர்த்தரின் வழியைக் கவனித்ததுபோல,
அவர்கள் அதிலே நடக்கும்படிக்கு, அதைக்
கவனிப்பார்களோ இல்லையோவென்று, இஸ்ர
வேலை அவர்களைக்கொண்டு சோதிப்பதற்காகத்
தானே என்றார். — அதற்காகக் கர்த்தர் அந்தச் ௨௩
சாதிகளை யோசுவாவின் கையில் ஒப்புக்கொடா
மல், அவைகளைச் சீக்கிரமாய்த் துரத்திவிடாத
படிக்கு விட்டுவைத்தார்.

## ௩. அதிகாரம்.

௧. இஸ்ரவேலரைச் சோதிக்கவிட்ட சாதிகள். ௫. அந்தச் சாதிகளோடே அவர்கள் உடன்பட்டதால், விக்கிரகாராதனையைச் செய்தது. ௮. ஒத்னியேல் கூசான்ரிசத்தாயிமினிடத்திலிருந்து அவர்களை விடுதலையாக்கியது. ௰௫. ஏகூத்தென்பவன் எக்லோனிடத்திலிருந்தும், ௩௧. சம்கார் பெலிஸ்தியரிடத்திலிருந்தும் அவர்களை விடுதலையாக்கியது.

கானானியரின் சகல யுத்தங்களையும் அறியாதி ௧
ருந்த இஸ்ரவேலராகிய அனைவரையும் சோதிப்
பதற்காகவும்,— இஸ்ரவேலின் புத்திரரின் தலை ௨
முறை தலைமுறையாரும் முதல் அவைகளை அறி
யாதிருந்தவர்களுமே அவைகளை அறிவதற்காக
வும், அவர்களை யுத்தம்பண்ணப் பழக்குவிப்ப
தற்காகவும், கர்த்தர் விட்டுவைத்த சாதிகள் யா
ரென்றால், — பெலிஸ்தரின் ஐந்து அதிபதிக ௩
ளும், சகல கானானியரும், சீதோனியரும், பா
கால் எர்மோன் துவக்கி ஆமாத்திற்குள் பிரவே
சிக்கும்மட்டும், லீபனோனின் மலைகளிலே குடி
யிருக்கிற ஏவியருந்தானே. — கர்த்தர் மோசே ௪
யைக்கொண்டு தங்கள் பிதாக்களுக்குக் கற்
பித்த கற்பனைகளுக்கு இஸ்ரவேலர் கீழ்ப்படி
வார்களோவென்று அறிந்து, இஸ்ரவேலரை அ
வர்களாலே சோதிப்பதற்காக அவர்கள் இருந்
துவிட்டார்கள்.
இப்படி இஸ்ரவேல் புத்திரர், கானானியர், ௫
ஏத்தியர், எமோரியர், பெரிசியர், ஏவியர், எபூசி
யருடைய நடுவே குடியிருக்கிறதினாலே,—அவர் ௬
களுடைய குமாரத்திகளை விவாகம்பண்ணி, தங்
களுடைய குமாரத்திகளை அவர்கள் குமாரருக்
குக்கொடுத்து, அவர்கள் தேவர்களைச் சேவித்
தார்கள். — இப்படி இஸ்ரவேல் புத்திரர் கர்த்த ௭
ரின் பார்வைக்குப் பொல்லாப்பானதைச் செய்
து, தங்கள் பராபரனாகிய கர்த்தரை மறந்து, பா
கால்களையும் தோப்புகளையும் சேவிக்கிறபோ
து,—கர்த்தர் இஸ்ரவேலின்மேல் கோபம்மூண்ட ௮
வராகி, அவர்களை மேசொப்பொத்தாமியாவின்
இராசாவாகிய கூசான்ரிசத்தாயீமின் கையிலே
விற்றுப்போட்டார்; அப்படியே இஸ்ரவேல் புத்
திரர் கூசான்ரிசத்தாயீமை எட்டுவருஷம் சேவித்
தார்கள்.

௯ இஸ்ரவேல் புத்திரர் கர்த்தரைநோக்கிக் கூப்
பிடுகிறபோதோவெனில், கர்த்தர் இஸ்ரவேல்
புத்திரரை இரட்சிக்கிற ஒரு இரட்சகனாகிய கா
லேப்பின் தம்பியான கேனாசுடைய குமாரனா
யிருக்கிற ஒத்னியேலை அவர்களுக்கு எழுப்பி
௰ னார். — அவன்மேல் கர்த்தருடைய ஆவி வந்தி
ருக்கையால், அவன் இஸ்ரவேலை நியாயம் விசா
ரித்து, யுத்தம்பண்ணப் புறப்பட்டான்; அவன்
கையிலே கர்த்தர் மேசொப்பொத்தாமியாவின்
இராசாவாகிய கூசான்ரிசத்தாயீமை ஒப்புக்கொ
டுத்தார்; ஆகையால் அவனுடைய கை இவன்
௰௧ மேலே பலத்தது. — தேசம் நாற்பதுவருஷம் அ
மர்ந்திருந்தது; கேனாசின் குமாரனாகிய ஒத்னி
யேல் மரணம் அடைந்தபோதோவெனில்,
௰௨ இஸ்ரவேல் புத்திரர் அப்புறம் கர்த்தரின் பார்
வைக்குப் பொல்லாப்பானதைச் செய்தார்கள்;
அவர்கள் கர்த்தரின் பார்வைக்குப் பொல்லாப்
பானதைச் செய்கிறபடியினாலே, கர்த்தர் எக்
லோனென்ற மோவாபின் இராசாவை இஸ்ரவே
லுக்கு விரோதமாகப் பலக்கப்பண்ணினார். —
௰௩ அவன் அம்மோன் புத்திரரையும் ஆம்லேக்கியரை
யும் கூட்டிக்கொண்டு வந்து, இஸ்ரவேலை முறி
யடித்தான்; பேரீச்சுகளின் பட்டணத்தையும்
௰௪ பிடித்தார்கள். — அப்படியே இஸ்ரவேல் புத்தி
ரர் எக்லோனென்ற மோவாபின் இராசாவைப்
பதினெட்டுவருஷம் சேவித்தார்கள்.
௰௫ ஆனால் இஸ்ரவேல் புத்திரர் கர்த்தரைநோக்
கிக் கூப்பிடுகிறபோது, கர்த்தர் அவர்களுக்கு எமி
னியின் குமாரனாகிய கேராவின் மகன் ஏகூத்
தென்ற இரட்சகனை எழுப்பினார்; அவன் இடது
கை வழக்கமானவனாயிருந்தான்; அவன் கையி
லே இஸ்ரவேல் புத்திரர் மோவாபின் இராசாவா
கிய எக்லோனுக்குக் காணிக்கை அனுப்பினார்
௰௬ கள். — ஏகூத்தோவெனில், இருபுறமும் கருக்
கும் ஒருமுழ நீளமுமான ஒரு பட்டையத்தைத்
தனக்குண்டாக்கி, அதைத் தன் வஸ்திரங்களுக்
குள்புறமாகத் தன் வலதுபுறத்து இடுப்பிலே கட்
௰௭ டிக்கொண்டு, — காணிக்கையை மோவாபின் இரா
சாவாகிய எக்லோனுக்குச் செலுத்தினான்; எக்
லோனோவெனில் மெத்தவும் தூலித்த மனுஷனா
யிருந்தான்.
௰௮ அவன் காணிக்கையைச் செலுத்தித் தீர்ந்தபிற்
பாடோவெனில், காணிக்கையைச் சுமந்துவந்த
௰௯ சனத்தை அனுப்பிவிட்டான். — அவனோவெ
னில் கில்காலிலுள்ள சுரூபங்கள் இருக்குமி
டத்திலிருந்து திரும்பிப்போய், இராசாவே, உம்
மோடே சொல்லவேண்டிய இரகசியமான வார்த்
தை எனக்கு இருக்கின்றதென்றான்; அதற்கு
அவன் பொறுவென்றான்; அப்போது அவனண்
டை நின்ற யாவரும் அவனைவிட்டு வெளியே
௨௰ போய்விட்டார்கள். — ஏகூத் அவனண்டைக்
குள் பிரவேசித்தான்; அவனோவெனில் தனக்
குத் தனிப்பெற இருந்த குளிர்ச்சியான அறை
வீட்டில் உளுக்காந்திருந்தான்; அப்போது ஏகூத்
உம்மோடே சொல்லவேண்டிய பராபரனு
டைய வார்த்தை எனக்கு இருக்கின்றதென்ற
தற்கு அவன் ஆசனத்திலிருந்து எழுந்திருந்தான். —
ஏகூத்தோவென்றால் தன் இடதுகையை நீட்டி, ௨௧
தன் வலதுபுறத்து இடுப்பிலே கட்டியிருந்த பட்
டையத்தை உருவிக்கொண்டு, அதை அவன்
வயிற்றிற்குள் பாய்ச்சினான். — பிடிஞ்சு அலகோ ௨௨
டேகூட உள்புகுந்தது; அவனுடைய வயிற்றிற்
குள்போன பட்டையத்தை இவன் வாங்கிப்போ
டாததினாலே, நிணம் அலகைச் சுற்றிக்கொண்
டடைத்தது; அது அந்தப்பக்கத்திலே புறப்பட்
டது. — ஏகூத் கொலுக்கூடத்திலே புறப்பட்டு, அ ௨௩
றைவீட்டின் கதவைத் தனக்குப் பின்னாகச் சாத்
திப் பூட்டிப்போட்டுப் புறப்பட்டுப்போனான்.
பிற்பாடு அவன் ஊழியக்காரர் வந்து பார்த்தார் ௨௪
கள்; இதோ அறைவீட்டின் கதவு பூட்டியிருந்
தது; ஆகையால் அவர் நிச்சயமாய் அந்தக் குளிர்ச்
சியான அறையிலே மலசலாதிக்கிருக்கிறாரென்
றார்கள். — அவர்கள் வெட்கமடையுமட்டும் ௨௫
காத்திருந்தார்கள்; ஆனால் இதோ அவன் அறை
வீட்டின் கதவைத் திறந்ததில்லை; ஆகையால் திற
வுகோலை எடுத்துத் திறந்தார்கள்; அப்போது
இதோ அவர்கள் ஆண்டவன் தரையிலே செத்துக்
கிடந்தான்.
ஆனால் அவர்கள் தாமசம்பண்ணி இருந்த தறு ௨௬
வாயிலே ஏகூத் தப்பிப்போனான்; அவன் சுரூ
பங்களைக் கடந்துபோய், சேயிராத்தைச்சேர்ந்து
தப்பினான். — அங்கே வந்தபோதோவெனில் எப் ௨௭
பிராயீம் மலைகளில் எக்காளம் ஊதினான்; அப்
போது இஸ்ரவேல் புத்திரர் அவனோடேகூட
மலைகளிலிருந்து இறங்கினார்கள்; அவன் இவர்க
ளுக்குமுன்பாக நடந்து, — அவர்களுடனே, என் ௨௮
னைப் பின்தொடர்ந்து வாருங்கள்; ஏனெனில்
கர்த்தர் மோவாபியரான உங்கள் பகைஞரை
உங்கள் கைகளில் ஒப்புக்கொடுத்தாரென்றான்;
அவர்கள் அவனைப் பின்தொடர்ந்து வந்து, மோ
வாபியர் யோர்தானைக் கடக்கத்தக்க துறைக
ளைப் பிடித்து, ஒருவனையும் கடக்கவொட்டா
மல், — அக்காலத்திலே மோவாபியரில் ஏறக்குறை ௨௯
யப் பதினாயிரம்பேரை வெட்டினார்கள்; அவர்க
ளெல்லாரும் புஷ்டியுள்ளவர்களும் எல்லாரும்
பராக்கிரமசாலிகளுமாயிருந்தார்கள்; அவர்களில்
ஒருவனும் தப்பினதில்லை. — அப்படியே அந்நா ௩௰
ளிலே மோவாப், இஸ்ரவேலுடைய கையின்
கீழ்த் தாழ்த்தப்பட்டது; அதனாலே தேசம் எண்
பதுவருஷம் அமர்ந்திருந்தது.
அவனுக்குப்பிற்பாடு அனாத்தின் குமாரன் ௩௧
சம்கார் இருந்தான்; அவன் பெலிஸ்தரில் அறு
நூறுபேரை ஒரு தாற்றுக்கோலாலே முறியடித்
தான்; அவனும் இஸ்ரவேலை இரட்சித்தான்.

## ௪. அதிகாரம்.

௪. தேபோராளும் பாராக்கும் இஸ்ரவேலரை யாபீனிடத்திலிருந்தும், சிசோராவினிடத்திலிருந்தும் இரட்சித்தது. ௰௮. யாகேல் சிசோராவைக் கொன்றது.

ஆனால் ஏகூத் மரணமடைந்தபிறகு இஸ்ர ௧
வேல் புத்திரர் திரும்பக் கர்த்தரின் பார்வைக்

குப் பொல்லாப்பானதைச் செய்துவந்தார்கள்.—
௨ ஆகையால் கர்த்தர் அவர்களை ஆத்சோரில் ஆளு
கிற யாபீனென்ற கானானியருடைய இராசா
வின் கையிலே விற்றுப்போட்டார்; அவனு
டைய சேனாபதி சிசேராவென்றவன்; இவன்
புறச்சாதிகளுடைய பட்டணமாகிய அரோ
௩ சேத்திலே குடியிருந்தான்.—அப்போது இஸ்ர
வேல் புத்திரர் கர்த்தரைநோக்கிக் கூப்பிட்டார்
கள்; ஏனெனில் அவனுக்குத் தொளாயிரம் இ
ருப்பு இரதங்கள் இருந்தன; அவன் இஸ்ரவேல்
புத்திரரை இருபதுவருஷம் பலவந்தமாய் ஒடுக்
கினான்.
௪ அக்காலத்திலே லபிதோத்தின் பெண்சாதியா
கிய தேபோராளென்ற தீர்க்கதரிசியானவள் இஸ்
௫ ரவேலை நியாயம் விசாரித்தாள்.—அவள் எப்பி
ராயீம் மலைத்தேசமான ராமாவுக்கும் பேத்தே
லுக்கும் நடுவாயிருக்கிற தேபோராளின் பேரீச்சு
மரத்தின்கீழே குடியிருந்தாள்; அங்கே இஸ்ர
வேல் புத்திரர் அவளண்டைக்கு நியாயத்திற்
௬ கென்று போய் ஏறுவார்கள்.—அவள் நவுதலி கே
தேசிலிருக்கிற அபினோகாமின் குமாரன் பாரு
கை அழைத்தனுப்பி, அவனோடே சொன்னதா
வது; நீ நவுதலி புத்திரரிலும், செபுலோன் புத்தி
ரரிலும், பதினாயிரம்பேரைக் கூட்டிக்கொண்டு,
தாபோர் மலைக்குப் போகக்கடவாயென்றும்,—
௭ நாம் யாபீனின் சேனாபதியாகிய சிசேராவையும்,
அவன் இரதங்களையும், அவன் சேனையையும்,
கீசோன் பள்ளத்தாக்கிலே உன்னண்டைக்கு
வரவிழுத்து, அவனை உன் கையில் ஒப்புக்கொ
டுப்போமென்றும், இஸ்ரவேலின் பராபரனாகிய
கர்த்தர் உனக்குக் கற்பித்ததில்லையோவென்
௮ றாள்.— பாருக் அவளுடனே, நீ என்னோடே
கூடவந்தால் போவேன்; என்னோடேகூட வரா
௯ யேயாகில், நான் போவதில்லை என்றான்.—அத
ற்கு அவள், உன்னோடேகூட வரவே வருவேன்;
ஆனால் நீ போகிறவழியில் உண்டாகிற மேன்மை
உன்னுடையதாயிராது; ஏனெனில் ஒரு பெண்
சாதியின் கையில் கர்த்தர் சிசேராவை ஒப்புக்
கொடுத்துவிடுவார் என்று சொல்லி, தேபோராள்
எழும்பி, பாருக்கோடேகூடக் கேதேசுக்குப்
௰ போனாள். — அப்போது பாருக் செபுலோன்
மனுஷரையும் நவுதலி மனுஷரையும் கேதேசுக்கு
வரவழைப்பித்து, தன்னைப் பின்செல்லும் பதி
னாயிரம்பேரோடே போயேறினான்; தேபோரா
ளும் அவனோடேகூடப் போயேறினாள்.
௰௧ கேனியனான ஏபெரோவென்றால் மோசே
யின் மாமனாகிய ஒபாபின் புத்திரராயிருக்கிற கே
னியரைவிட்டுப் பிரிந்துக்கொண்டு, தன் கூடா
ரத்தைக் கேதேசின்கிட்ட இருக்கிற சானாயி
மென்ற கர்வாலியு மரங்கள் அருகே போட்டி
ருந்தான்.
௰௨ அபினோகாமின் குமாரன் பாருக் தாபோர்
மலையில் ஏறினானென்று சிசேராவுக்கு அறிவிக்
௰௩ கப்பட்டபோதோவெனில்,—சிசேரா தொளா
யிரம் இருப்பு இரதங்களாகிய தன்னுடைய எல்
லா இரதங்களையும், தன்னோடிருக்கும் எல்லாச்
சனத்தையும், புறச்சாதிகளின் பட்டணமாகிய
அரோசேத்திலிருந்து கீசோன் பள்ளத்தாக்கிலே
வரவழைப்பித்தான்.
அப்போது தேபோராள் பாருக்குடனே, எழு ௰௪
ம்பிப்போ; ஏனெனில் கர்த்தர் சிசேராவை உன்
கையில் ஒப்புக்கொடுக்கும் நாள் இதுதானே;
கர்த்தர் உனக்குமுன்பாகப் புறப்பட்டதில்லை
யோ என்றாள்; அப்போது பாருக்கும், அவன்
பின்னாலே பதினாயிரம்பேரும், தாபோர் மலை
யிலிருந்து இறங்கினார்கள்.—கர்த்தர் சிசேராவை ௰௫
யும் அந்த எல்லா இரதங்களையும் சேனையனைத்
தையும் பாருக்குக்குமுன்பாகப் பட்டையக்
கருக்கினாலே கலங்கடித்தார்; சிசேரா இரதத்தை
விட்டிறங்கி கால்நடையாய் ஓடிப்போனான்.—
பாருக்கோவெனில் இரதங்களையும் சேனையை ௰௬
யும் புறச்சாதிகளுடைய அரோசேத்மட்டும் துரத்
தினான், சிசேராவின் சேனையெல்லாம் பட்டை
யக் கருக்கினாலே விழுந்தன; ஒருவராகிலும்
மீதியானதில்லை. — சிசேரா கால்நடையாய்க் ௰௭
கேனியனான ஏபெரின் பெண்சாதி யாகேலு
டைய கூடாரத்திற்கு ஓடிவந்தான்; ஏனெனில்
யாபீனென்ற ஆத்சோரின் இராசாவுக்கும், கே
னியனான ஏபெரின் வீட்டுக்கும் சமாதான
முண்டாயிருந்தது.
யாகேல் வெளியே சிசேராவுக்கு எதிர்கொண் ௰௮
டுபோய், ஒதுங்கிவாரும், என் ஆண்டவனே,
என்னண்டை ஒதுங்கிவாரும், பயப்படீராக
வென்று அவனோடே சொன்னாள்; அப்படியே
கூடாரத்திலிருக்கிற அவளண்டை ஒதுங்கிவந்
தான்; அவனை ஒரு சமுக்காளத்தினாலே மூடி
னாள்.—சிசேரா அவளுடனே, எனக்குக் கொஞ் ௰௯
சம் தண்ணீர் குடிக்கத் தா; ஏனெனில் தாக
மாயிருக்கிறேனென்றான்; அவள் பால் துருத்தி
யைத் திறந்து, அவனுக்குக் குடிக்கக் கொடுத்துத்
திரும்ப அவனை மூடினாள்.—அப்போது அவன் ௨௰
அவளுடனே, நீ வாசல்படியிலே நின்று, எவன்
ஒருவன் வந்து, இங்கே யாராகிலும் இருக்கிறார்
களோவென்று உன்னைக் கேட்டால், இல்லை
யென்று சொல்லென்றான்.—பிற்பாடு ஏபெரின் ௨௧
பெண்சாதியாகிய யாகேல் ஒரு கூடாரத்து ஆணி
யை எடுத்து, தன் கையிலே சுத்தியைப் பிடித்
துக்கொண்டு, மெள்ள அவனண்டையில் வந்து,
அவன் நெற்றியிலே அந்த ஆணியை அடித்துப்
போட்டாள்; அது உருவிப்போய், தரையிலே
புதைந்தது; அப்போது ஆயாசமாய்த் தூங்கின
அவன் செத்துப்போனான். — பிற்பாடு இதோ ௨௨
சிசேராவைத் துரத்துகிற பாருக் வந்தான்; அப்
போது யாகேல் வெளியே அவனுக்கு எதிர்
கொண்டுபோய் வாரும், நீர் தேடுகிற மனுஷனை
உமக்குக் காண்பிப்பேனென்று அவனுக்குச்
சொன்னாள்; அவன் அவளண்டைக்கு வந்த
போது, இதோ சிசேரா செத்துக்கிடந்தான்;
ஆணி அவன் நெற்றியிலும் அடிந்திருந்தது.
இப்படிப் பராபரன் அந்நாளிலே கானானிய ௨௩

ரின் இராசாவாகிய யாபீனை இஸ்ரவேல் புத்திரரு
௨௪ க்குமுன்பாகத் தாழ்த்தினார் — இஸ்ரவேல் புத்
திரரின் கை கானானியரின் இராசாவாகிய யா
பீனை நிர்மூலமாக்கும்மட்டும் அவன்மேல் பலத்
துக்கொண்டேயிருந்தது.

## ௫. அதிகாரம்.

தேபோராளும் பாராக்கும் பாடிய பாட்டு.

௧ அந்நாளிலே தேபோராளும் அபினோகாமின்
குமாரன் பாராக்கும் பாடினதாவது:
௨ கர்த்தர் இஸ்ரவேலுக்காக நீதியைச் சரிக்கட்
டினதின் நிமித்தமும், சனம் மனப்பூர்வமாய்ச்
சேர்ந்ததின் நிமித்தமும், அவரை ஸ்தோத்திரியுங்
௩ கள்.—இராசாக்களே, கேளுங்கள்; அதிபதிகளே
செவிகொடுங்கள், நான்தானே கர்த்தரைப்பாடி,
இஸ்ரவேலின் பராபரனாகிய கர்த்தரைக் கீர்த்த
௪ னம்பண்ணுவேன்.—கர்த்தாவே, தேவரீர் சேயீ
ரிலிருந்து புறப்பட்டு, ஏதோமின் வெளியிலி
ருந்து நடந்துவருகையில், [1]பூமி அதிர்ந்தது,
வானமும் சொரிந்தது, மேகங்களும் தண்ணீ
௫ ராய்ச் சொரிந்தன.—கர்த்தருக்குமுன்பாகப் பர்
வதங்கள் கரைந்தன; இஸ்ரவேலின் பராபரனா
கிய கர்த்தருக்குமுன்பாக அந்தச் சீனாய் தானே
கரைந்தது.
௬ ஆனாத்தின் குமாரனாகிய சம்காரின் நாள்களி
லும், யாகேலின் நாள்களிலும், வழிநடப்புகள்
ஓய்ந்தன; பாதைகளில் நடப்பவர் கோணலான
௭ வழிகளில் நடந்தார்கள்.—தேபோராளாகிய நான்
எழும்பி, இஸ்ரவேலிலே நான் தாயாக எழும்பும்
மட்டும், இஸ்ரவேலிலே கிராமங்கள் பாழாகவே
௮ பாழாய்ப்போயின.—புதிய தேவர்கள் தெரிந்து
கொள்ளப்பட்டபோது, யுத்தம் வாசல்களுக்கு
முன்பாக வந்தது; இஸ்ரவேலிலே நாற்பதினா
யிரம்பேருக்குள்ளே கேடயமும் ஈட்டியும் கா
ணப்பட்டதோ?
௯ சனத்தில் மனப்பூர்வமாயிருந்த இஸ்ரவேலின்
நியாயக்காரருக்கு என் இருதயம், கர்த்தரை ஸ்
௰ தோத்திரியுங்கள் என்கின்றது.—வெண்கழுதை
களின்மேல் ஏறுபவர்களே, நியாயஸ்தலத்தில்
உளுக்காந்திருப்பவர்களே, வழியிலும் நடக்கிற
௰௧ வர்களே, இதைத் தியானியுங்கள்.—தண்ணீர்த்
தொட்டிகளின் நடுவே ஆடுகளைப் பிரிக்கிறவர்க
ளின் சத்தம் திரும்பக் கேட்கப்படுகையால்,
அங்கே கர்த்தரின் நீதிகளைக்குறித்துப் பேசிக்
கொள்ளுவார்களாக; அவர் தமது இஸ்ரவேலிலே
கிராமங்களுக்காகச் செய்த நீதியைக்குறித்துத்
தானே; அதுமுதல் கர்த்தரின் சனம் ஒலிமுகவா
௰௨ சல்களிலே போயிறங்கும். — விழி, விழி, தே
போராளே, விழி, விழி, பாட்டுப்பாடு; பாராக்
கே, எழும்பு; அபினோகாமின் குமாரனே, நீ
சிறைபிடித்தவர்களைக் கொண்டுபோ.
௰௩ மீதியானவர்கள் இனிச் சனத்தில் பிரஸ்தாப
மாயிருந்தவர்களின்மேலே ஆளுவார்கள்; எனக்
காகக் கர்த்தர் பராக்கிரமசாலிகளின்மேலே ஆளு
வார். — ஆம்லேக்குக்கு விரோதமாக இவர்களு ௰௪
டைய வேர் எப்பிராயீமிலிருந்து துளிர்த்தது;
உன் சனங்களுக்குள்ளே பென்யமீன் மனுஷர்
உன்னைப் பின்சென்றார்கள்; மாகீரிலிருந்து நியா
யப்பிரமாணிக்கக்காரரும், சேபுலோனிலிருந்து
சனத்தை நிருபங்களால் வரவழைப்பிக்கிறவர்க
ளும் இறங்கிவந்தார்கள்.—ஈசகாரிலும் பிரதா ௰௫
னமானவர்கள் தேபோராளோடே இருந்தார்கள்;
பாராக்கைப்போல, அவன் பின்னாலே போன
ஈசகார் மனுஷரும் பள்ளத்தாக்கில் அனுப்பப்
பட்டுப்போனார்கள்; ரூபேனின் பிரத்தியமான
தேசப்பங்குகளிலோவென்றால், மனதின் அழுத்
த நினைவுகள் பெரியவைகளாயிருந்தன.—மந்தை ௰௬
களின் கூக்குரல்களைக் கேட்க, நீ தொழுவங்க
ளின் நடுவே இருந்துவிட்டதென்ன? ரூபே
னின் பிரத்தியமான தேசப்பங்குகளிலே மன
தில் ஆய்ந்தோய்ந்து பார்க்குதல் மகா பெரியதா
யிருந்தது.—கீலேயாத் மனுஷர் யோர்தானுக்கு ௰௭
அக்கரையிலே இருந்துவிட்டார்கள்; தாண்மனு
ஷர் கப்பல்கள்மேல் தங்கித்தரித்ததென்ன? ஆ
சேர் மனுஷர் கடல் குடாவுகளிலே தாபரித்து,
உடைப்புண்டு, தங்கள் தலங்களில் இருந்து
விட்டார்கள். — சேபுலோனும் நவுதலியும் வெ ௰௮
ளியின் உயர்ந்த தலங்களிலே தங்கள் சீவனை
மரணயோக்கியத்திற்குள்ளாக்கின சனம்.
இராசாக்கள் வந்து யுத்தம்பண்ணினார்கள்; ௰௯
அப்போது கானானியரின் இராசாக்கள் மெகி
தோவின் தண்ணீர் அருகான தானாக்கிலே யுத்
தம்பண்ணினார்கள்; வெள்ளி ஆதாயம் அவர்
களுக்குக் கிடைக்கவில்லை. — நட்சத்திரங்கள் ௨௰
வானத்திலிருந்து யுத்தம்பண்ணின; அவைகள்
தங்கள் ஓட்டகங்களிலிருந்து சிசேராவோடே
யுத்தம் பண்ணின. — கீசோன் ஆறு பூர்வத்து ௨௧
ஆறாகிய கீசோன் ஆறுதானே, அவர்களை அடித்
துக்கொண்டுபோயிற்று; என் ஆத்துமாவே பல
வான்களை மிதி.—அப்போது தரையைத் தட்டித் ௨௨
தட்டி ஓடுகிற குதிரைகளின் குளம்புகள் தங்கள்
வல்லமையானவர்களை நசுக்கிப்போட்டன.
மேரோசைச் சபியுங்கள்; அதின் குடிகளைச் ௨௩
சபிக்கவே சபியுங்களென்று கர்த்தருடைய தூத
னானவர் சொல்லுகிறார்; ஏனென்றால் அவர்கள்
கர்த்தருக்குச் சகாயமாக வரவில்லை; கர்த்தருக்
குச் சகாயமாகப் பராக்கிரமசாலிகளோடே வரா
தேபோனார்கள்.
பெண்சாதிகளைப்பார்க்கிலும் கேனியனான ௨௪
ஏபெரின் பெண்சாதி யாகேல் ஆசீர்வதிக்கப்
படுவாளாக; கூடாரத்தில் வாசமான அவள்,
பெண்சாதிகளைப்பார்க்கிலும் ஆசீர்வதிக்கப்படு
வாளாக. — தண்ணீரைக் கேட்டான், பாலைக் ௨௫
கொடுத்தாள்; துரைகளின் கிண்ணியிலே வெண்
ணெய் கொண்டுவந்தாள்.—தன் கையால் ஆணி ௨௬
யையும், தன் வலதுகையால் வேலையாள்களின்

1 சங். ௬௮. ௮.

சுத்தியையும் பிடித்துக்கொண்டு, சிசேரா தலை
யில் அதை அடித்து நசுக்கி, அவனை அவன் நெ
௨௭ ற்றியை உருவக் குத்திவிட்டாள்.—அவன் அவள்
கால்களின் நடுவே மடங்கி விழுந்து கிடந்தான்;
அவள் கால்களின் நடுவே எங்கே முடங்கினா
னோ, அங்கே மடிந்துகிடந்தான்.
௨௮ சிசேராவின் தாய் பலகணியாலே கிராதிகள்
வழியாய்ப் பார்த்துக்கொண்டிருந்து, அவனு
டைய இரதம்வரத் தாமதிக்கிறதென்ன? அவனு
டைய இரதங்களின் நடை பிந்தியிருக்கிறது
௨௯ என்னவென்று புலம்பினாள்.—அதற்கு அவளு
டைய நாயகிகளில் ஞானமுள்ளவர்களும், அவ
ளுடைய வார்த்தைகளுக்கு அவள் தானும்
௩௰ சொன்ன மறுமொழியாவது:—அவர்கள் கொள்
ளையைக் கண்டுபிடித்துப் பங்கிட்டு, ஆளுக்கு
இரண்டொரு சிறுபெண்களையும், சிசேராவுக்
குப் பலவருணமான ஆடைகளின் கொள்ளையை
யும், பலவருணமான சித்திரத்தையலாடைகளின்
கொள்ளையையும், கொள்ளையிட்டவர்களின்
கழுத்துகளுக்கு இருபுறமும் சித்திரத்தையலுள்ள
பலவருணமான ஒவ்வொரு ஆடையையும் கொ
௩௧ டுக்கவேண்டாமோவென்றார்கள்.—கர்த்தாவே,
உம்மைப் பகைக்கிற யாவரும் இப்படி அழியக்
கடவர்கள்; அவரைச் சிநேகிக்கிறவர்களோ
வென்றால், தன் வல்லமையோடே உதிக்கிற சூரி
யனைப்போல இருக்கவும் கடவதென்பதுதானே;
பிற்பாடு தேசம் நாற்பதுவருஷம் அமரிக்கையா
யிருந்தது.

## ௬. அதிகாரம்.

௧. இஸ்ரவேல் புத்திரர்கள் தங்களுடைய பாவத்துக்காக மீதியானியரால் வருத்தப்பட்டது. ௮. ஒரு தீர்க்கதரிசி அவர்களை அதட்டியது. ௰௧. கர்த்தருடைய தூதன் கிதெயோனை அவர்களை இரட்சிக்க அனுப்பியது. ௰௭. கிதெயோனுடைய காணிக்கை அக்கினியினால் பட்சிக்கப்பட்டது. ௨௫. கிதெயோன் பாகாலின் பலிபீடத்தை அழித்து, கர்த்தர் சமாதானம் அளிப்பவரென்ற பலிபீடத்தின்மீது பலிகளைச் செலுத்தியது. ௨௮. யோவாஸ் தன் குமாரனுக்காகப் பரிந்துபேசி, அவனுக்கு எருப்பாகாலென்று பேரிட்டது. ௩௩. கிதெயோனின் சேனை. ௩௬. அவனுக்குக் கிடைத்த அடையாளம்.

௧ ஆனால் இஸ்ரவேல் புத்திரர் கர்த்தரின் பார்
வைக்குப் பொல்லாப்பானதைச் செய்தார்கள்;
அப்போது கர்த்தர் அவர்களை ஏழுவருஷமாக
மீதியானியரின் கையில் ஒப்புக்கொடுத்தார்.—
௨ மீதியானியரின் கை இஸ்ரவேலின்மேலே பலத்
துக்கொண்டபடியால், இஸ்ரவேல் புத்திரர் அவர்
கள்நிமித்தம் தங்களுக்குப் பர்வதங்களிலுள்ள
கெபிகளையும் குகைகளையும் அரணான தலங்களை
௩ யும் அடைக்கலங்களாக்கினார்கள்.— ஏனென்
றால் இஸ்ரவேலர் விதைவிதைத்திருக்கும்போது,
மீதியானியரும், அம்லேக்கியரும், கிழக்கத்திப்
௪ புத்திரரும், அவர்கள்மேல் எறிவந்து,— அவர்க
ளுக்கு விரோதமாய்ப் பாளயம் இறங்கி, காத்சா
வின் எல்லைமட்டும் நிலத்தின் பலனைக் கெடுத்து
விட்டு, இஸ்ரவேலிலே ஆகாரத்தையாகிலும்,
ஆடுமாடுகள் கழுதைகளையென்கிலும் வைக்கா
௫ தேபோவார்கள்.—ஏனெனில் அவர்கள் தங்கள்
மிருகஜீவன்களோடும், தங்கள் கூடாரங்களோ
டும், வெட்டுக்கிளிகளத்தனைத்திரளாய் எறிவரு
வார்கள்; அவர்களும் அவர்கள் ஒட்டகங்களும்
எண்ணிமுடியாத திரட்சியாயிருக்கும்; இந்தப்
பிரகாரமாகத் தேசத்தைக் கெடுத்துவிட அதிலே
வருவார்கள்.—மீதியானியராலே இஸ்ரவேல் மிக ௬
வும் சிறுத்துப்போயிற்று; அப்போது இஸ்ரவேல்
புத்திரர் கர்த்தரைநோக்கிக் கூப்பிட்டார்கள்.
இஸ்ரவேல் புத்திரர் மீதியானியர்நிமித்தம் ௭
கர்த்தரைநோக்கிக் கூப்பிட்டுக்கொண்டிருக்கிற
போதோவெனில்,—கர்த்தர் ஒரு தீர்க்கதரிசியை ௮
அவர்களண்டைக்கு அனுப்பினார்; அவன் அவர்
களுக்குச் சொன்னதாவது: இஸ்ரவேலின் பரா
பரனாகிய கர்த்தர் உரைக்கிறதேதெனில், நாம்
உங்களை எகிப்திலிருந்து எறிவரவும் அடிமை
வீட்டிலிருந்து புறப்படவும்பண்ணி,— எகிப் ௯
தியர் கைக்கும், உங்களை ஒடுக்கின யாவர் கைக்
கும், உங்களை நீங்கலாக்கிவிட்டு, இவர்களை
உங்களுக்குமுன்பாகத் துரத்தி, இவர்கள் தேசத்
தை உங்களுக்குக் கொடுத்து,—நாம் உங்கள் பரா ௰
பரனாகிய கர்த்தரென்றும், நீங்கள் குடியிருக்கும்
அவர்கள் தேசத்திலுள்ள எமோரியருடைய தே
வர்களுக்கு அஞ்சி நடக்காதிருங்களென்றும்,
உங்களுக்குச் சொன்னோம்; நீங்களோ நம்மு
டைய சத்தத்தைக் கேளாதேபோனீர்கள் என்
கிறாரென்று சொன்னான்.
அதற்குப்பிறகு கர்த்தருடைய தூதனானவர் ௰௧
வந்து, அபியேஸ்றியனான யோவாசின் ஊராகிய
ஒப்பிராவிலிருக்கும் ஒரு கர்வாலியுமரத்தின் கீழ்
உளுக்காந்தார்; அப்போது அவனுடைய குமா
ரன் கிதெயோன் கோதுமையை மீதியானியரின்
கைக்குத் தப்புவிக்கிறதற்காக, ஆலையினிடத்தில்
அதைப் போரடித்தான்.—கர்த்தருடைய தூதனா ௰௨
னவர் அவனுக்குத் தரிசனையாகி, அவனுடனே,
கர்த்தர் உன்னோடிருக்கிறார், பலத்த பராக்கிரம
னே என்றார்.- அப்போது கிதெயோன் அவருட ௰௩
னே, ஆ என் ஆண்டவனே, கர்த்தர் எங்களோடி
ருந்தால், இவையெல்லாம் எங்களுக்கு நேரிட்ட
தென்ன? கர்த்தர் எங்களை எகிப்திலிருந்து எறிவ
ரப்பண்ணினதில்லையோவென்று எங்கள் பிதாக்
கள் எங்களுக்கு விவரித்துச் சொன்ன அவரு
டைய அற்புதங்களெல்லாம் எங்கே? இப்போது
கர்த்தர் எங்களைக் கைவிட்டு மீதியானியர் கை
யில் எங்களை ஒப்புக்கொடுத்தாரே என்றான்.—
அப்போது கர்த்தர் அவனைநோக்கிப்பார்த்து, ௰௪
இந்த உன்னுடைய பலத்தோடேபோ; நீ இஸ்ர
வேலை மீதியானியரின் கைக்கு நீங்கலாக்கி
இரட்சிப்பாய்; நாம் உன்னை அனுப்பினதில்லை
யாவென்றார்.—அவனோவெனில் அவருடனே, ௰௫
ஆ என் ஆண்டவரே, எதினாலே நான் இஸ்ரவே
லை இரட்சிப்பேன்; இதோ மனாசேயில் என் சந்
ததி நொய்மையானது; என் தகப்பன் வீட்டில்
நான் எல்லாரிலும் சிறியவனென்றான்.—ஆனால் ௰௬
கர்த்தர் அவனுடனே, நாம் உன்னோடேகூட
இருக்கப்போகிறபடியினாலே, நீ மீதியானியரை
ஒரே மனுஷனைப்போல முறியடிப்பாயென்

௧௭ றூர்.—அப்போது அவன் சொன்னதாவது: இப்
போதும் உம்முடைய கண்களில் எனக்குத் தயை
கிடைத்ததானால் என்னோடே பேசுகிறவர் தே
வரீர்தானேயென்று எனக்கு ஒரு அடையாளத்
௧௮ தைக் கட்டளையிடும்.—நான் உம்மண்டைக்கு
என் காணிக்கையை வெளியே கொண்டுவந்து,
உமக்குமுன்பாக வைக்குமளவும், இவ்விடம்வி
ட்டகன்றுபோகாதிருமென்றான்; அதற்கவர், நீ
திரும்பி வருமட்டும் நாம் இருப்போமென்றார்.
௧௯ அப்போது கிதெயோன் உள்ளே போய், ஒரு
வெள்ளாட்டுக்குட்டியையும் ஒரு மரக்கால் மா
விலே புளிப்பில்லா அப்பங்களையும் சேகர
மாக்கி, இறைச்சியை ஒரு கூடையில் வைத்து,
ஆணத்தை ஒரு கிண்ணியில் வார்த்து, அதை
வெளியே கர்வாலியு மரத்தின் கீழிருக்கிற அவ
௨௰ ரண்டைக்குக் கொண்டுவந்துவைத்தான்.—அப்
போது பராபரனுடைய தூதனானவர் அவனுட
னே, நீ இறைச்சியையும், புளிப்பில்லா அப்பங்
களையும் எடுத்து, இந்தக் கல்மலையின்மேலே
வைத்து, ஆணத்தை ஊற்றென்றார்; அவன் அப்
படியே செய்தான்.
௨௧ அப்போது கர்த்தருடைய தூதன் தமது கையி
லிருந்த கோலின் நுனியை நீட்டி, இறைச்சியை
யும் புளிப்பில்லா அப்பங்களையும் தொட்டார்;
அப்போது அக்கினி கல்மலையிலிருந்து எழும்பி,
இறைச்சியையும் புளிப்பில்லா அப்பங்களையும்
பட்சித்தது; கர்த்தரின் தூதனோவென்றால், அ
வன் கண்களுக்கு மறைந்துபோனார்.
௨௨ அப்போது கிதெயோன், அவர் கர்த்தருடைய
தூதனென்று கண்டு, ஆ கர்த்தரான ஆண்டவரே,
நான் கர்த்தருடைய தூதனை முகமுகமாய்க் கண்
டதினால், எனக்கு என்னவருமோவென்றான்.—
௨௩ கர்த்தரோவென்றால் உனக்குச் சமாதானம்,
பயப்படாதே, நீ சாவதில்லையென்று அவனுக்
குச் சொன்னார்.
௨௪ அங்கே கிதெயோன் கர்த்தருக்கு ஒரு பீடத்
தைக் கட்டி, கர்த்தர் சமாதானம் அளிப்பவ
ரென்று அதற்குப் பேரிட்டான்; அது இன்னம்
இந்நாள்வரைக்கும் அபியேஸ்றியரின் ஊராகிய
௨௫ ஒப்பிருவில் இருக்கின்றது.—அன்று இராத்திரி
யிலே கர்த்தர் அவனுக்குச் சொன்னதாவது: நீ
உன் தகப்பனுக்கு இருக்கிற எருதுகளில் ஏழு
வயதான இரண்டாம் எருதைக் கொண்டுபோய்,
உன் தகப்பனுக்கு இருக்கிற பாகாலின் பலி
பீடத்தைத் தகர்த்து, அதின் அருகேயிருக்கிற
௨௬ தோப்பை வெட்டிப்போட்டு,—இந்த அரணின்
கொடுமுடியிலே பாங்கான ஒரு இடத்தில் உன்
பராபரனாகிய கர்த்தருக்கு ஒரு பலிபீடத்தைக்
கட்டி, அந்த இரண்டாம் எருதைக் கொண்டு
வந்து, அதை நீ வெட்டிப்போட்ட தோப்பினு
டைய கட்டை விறகுகளின்மேலே சர்வாங்க
௨௭ தகனமாகப் பலியிடக்கடவாயென்றார்.— அப்
போது கிதெயோன் தன் வேலையாள்களில் பத்
துப்பேரைச் சேர்த்து, கர்த்தர் தன்னோடேசொன்
னபடியே செய்தான்; ஆனால் அதைப் பகலிலே
செய்ய, அவன் தன் தகப்பன் வீட்டாருக்கும்
அந்த ஊர் மனுஷருக்கும் பயப்பட்டபடியினா
லே, அதை இரவிலே செய்தான்.
அந்த ஊர் மனுஷர் காலமே எழுந்திருக்கிற ௨௮
போது, இதோ பாகாலின் பலிபீடம் தகர்க்கப்
பட்டதும், அதின் அருகேயிருந்த தோப்பு வெட்
டிப்போடப்பட்டதும், கட்டப்பட்டிருந்த பலி
பீடத்தின்மேல் அந்த இரண்டாம் எருது பலியி
டப்பட்டதுமாயிருக்கிறதை அவர்கள் கண்டு,—
ஒருவரோடொருவர் இந்தக் காரியத்தைச் செய்த ௨௯
வன் யாரென்றார்கள்; கேட்டு விசாரிக்கிறபோது,
யோகாசின் மகன் கிதெயோன் இதைச் செய்தா
னென்றார்கள்.—அப்போது ஊரார் யோகாசோ ௩௰
டே, உன் மகன் சாகும்படிக்கு அவனை வெளி
யே கொண்டுவா; ஏனெனில் அவன் பாகாலின்
பலிபீடத்தைத் தகர்த்து, அதின் அருகேயிருந்த
தோப்பை வெட்டிப்போட்டானென்றார்கள்.—
ஆனால் யோகாஸ் தனக்கு விரோதமாக நிற்கிற ௩௧
அனைவருக்கும், நீங்கள் பாகாலுக்காக வழக்காடு
வீர்களோ? நீங்கள் அதை இரட்சிப்பீர்களோ?
அதற்காக வழக்காடுகிறவன் இந்த அதிகாலநேரத்
திலேதானே சாகக்கடவான்; அது தேவனானால்
அதுதானே, அவன் தன் பலிபீடத்தைத் தகர்த்த
தின் நிமித்தம், அதுதானே தனக்காக வழக்கா
டட்டுமென்றான்.—தன் பலிபீடத்தைத் தகர்த்தா ௩௨
னென்று பாகால் அவனோடே வழக்காடட்டு
மென்று சொல்லி, அந்நாளிலே அவனுக்கு எருப்
பாகாலென்று பேரிட்டான்.
மீதியானியரும், ஆம்லேக்கியரும், கிழக்கத் ௩௩
திப் புத்திரருமெல்லாம் ஏகமாய்க்கூடி, ஆற்றைக்
கடந்துவந்து, இஸ்ரவேல் பள்ளத்தாக்கிலே பா
ளயமிறங்கினபோதோவெனில்,— கர்த்தருடைய ௩௪
ஆவியானவர் கிதெயோனுக்குப் பலன்கொடுத்
தார்; அவன் எக்காளம் ஊதி, அபியேஸ்றியரைக்
கூப்பிட்டு, தன்னைப் பின்செல்லப்பண்ணி,—
மனாசே சீமையெங்கும் தானாபதிகளை அனுப்பி, ௩௫
அவர்களையும் கூப்பிட்டு, தன்னைப் பின்செல்
லப்பண்ணி, ஆசேர், சேபுலோன், நவுதலி சீமை
களிலும் தானாபதிகளை அனுப்பினான்; அவர்க
ளும் அவனுக்கு எதிர்கொண்டு ஏறிவந்தார்கள்.
அப்போது கிதெயோன் பராபரனோடே ௩௬
சொன்னதாவது: தேவரீர் சொன்னபடி என் கை
யினாலே இஸ்ரவேலை இரட்சிக்கப்போனால்,—
இதோ நான் மயிருள்ள ஒரு தோலைப் போர்க்க ௩௭
ளத்திலே போடுவேன்; பனி தோலின்மேல்மாத்
திரம் பெய்து, பூமியெல்லாம் காய்ந்திருந்தால்,
அப்போது தேவரீர் சொன்னபடி இஸ்ரவேலை
என் கையினாலே இரட்சிப்பீரென்பதை அதினா
லே அறிவேனென்றான்.—அப்படியே ஆயிற்று; ௩௮
அவன் மறுநாள் காலமே எழுந்திருந்து, தோலைக்
கசக்கி, அதிலிருந்த பனித்தண்ணீரை ஒரு கிண்
ணிநிறையப் பிழிந்தான்.— அப்போது கிதெ ௩௯
யோன் பராபரனுடனே, நான் இன்னம் ஒரு
விசைமாத்திரம் பேசுவதினால், உமது கோபம்
என்மேல் பற்றி எரியவேண்டாம்; தோலினாலே

நான் இன்னம் ஒரேவிசை சோதனைபண்ணட்டும்; தோல்மாத்திரம் காய்ந்திருக்கவும் பூமியெங்கும் பனிபெய்திருக்கவும் கட்டளையிடுமென்
௪௰ ரூன்.—அப்படியே பராபரன் அன்று இராத்திரி செய்தார்; தோல்மாத்திரம் காய்ந்து, பூமியெங்கும் பனிபெய்திருந்தது.

## ௭. அதிகாரம்.

*௧. கிதெயோனின் சேனை முப்பத்திரண்டாயிரம்பேர் முந்நூறுபேரானது. ௯. அவன் வால்கோதுமை அப்பத்தைக்குறித்துக் கண்ட சொப்பனத்தினாலும் அதின் பயனாலும் தைரியங்கொண்டது. ௰௬. எக்காளத்தினாலும் பானைக்குள் வைக்கும் தீவட்டியினாலும் அவன் செய்த உபாயம். ௨௪. எப்பிராயீமர் ஓரேபையும் சேபையும் பிடித்துக்கொண்டது.*

௧ அப்போது கிதெயோனாகிய எருப்பாகாலும் அவனோடிருந்த சனமனைத்தும் காலமே எழுந்து புறப்பட்டு, ஆரோத்தென்ற நீரூற்றின் கிட்டப் பாளயம் இறங்கினார்கள்; மீதியானியரின் பாளயம் அவனுக்கு வடக்கே மோரே மேட்டிற்குப்
௨ பின்னான பள்ளத்தாக்கிலே இருந்தது. — அப்போது கர்த்தர் கிதெயோனோடே சொன்னதாவது: நாம் மீதியானியரைச் சனத்தின் கையில் ஒப்புக்கொடுக்கிறதற்கு,உன்னோடிருக்கிற சனம் மிச்சமாயிருக்கின்றது; என் கை என்னை இரட்சித்ததென்று இஸ்ரவேல் நமக்கு விரோதமாக
௩ வீம்பு பேசுகிறதற்கு இடமாகும். — ஆகையால் யாருக்குப் பயமும் தத்தளிப்பும் உண்டோ, அவன் திரும்பி, கிலேயாத் மலைகளிலிருந்து பறந்துபோகக்கடவனென்று, நீ சனத்தின் செவிகளிலே படக்கூறுவி என்றார்; அப்போது சனத்தில் இருபத்தீராயிரம்பேர் திரும்பி, பதினாயிரம்
௪ பேர் மீதியாயிருந்தார்கள். — கர்த்தர் கிதெயோனோடே, சனம் இன்னம் மிச்சமாயிருக்கின்றது; அவர்களைத் தண்ணீரண்டைக்கு இறங்கிப்போகப்பண்ணு, அங்கே அவர்களை உனக்குப் பரிட்சைகாட்டுவோம்; உன்னோடேகூடவர அங்கே எவனைக்குறித்து உன்னோடே சொல்லுவோமோ, அவன் உன்னோடேகூட வருவானாக; ஆனால் உன்னோடேகூட வரவேண்டாமென்று நாம் உன்னோடே சொல்லப்போகிற அனைவரும் உன்னோடேகூட வராதிருப்பார்களாகவென்
௫ ரூர். — அப்படியே சனத்தைத் தண்ணீரண்டைக்கு இறங்கிப்போகப்பண்ணினான்; அப்போது கர்த்தர் கிதெயோனுடனே, தண்ணீரை அள்ளி ஒரு நாய் நக்கும்பிரகாரமாக அதைத் தன் நாவினாலே நக்கிக்கொள்ளுகிறவனையெல்லாம் தனியேயும் குடிக்கிறதற்கு முழங்கால்கள் ஊன்றிக் குனிகிறவனையெல்லாம் தனியேயும் நிறுத்
௬ துவாயாகவென்ரூர். — அப்போது தங்கள் கையால் அள்ளி, தங்கள் வாய்க்கெடுத்து, நக்கிக்கொண்டவர்களின் இலக்கம் முந்நூறுபேராயிருந்தது; மற்றச் சனமெல்லாம் தண்ணீர் குடிக்கிறதற்கு முழங்கால்கள் ஊன்றிக் குனிந்தது.—
௭ அப்போது கர்த்தர் கிதெயோனுடனே, நக்கிக் குடித்த அந்த முந்நூறுபேராலே நாம் உங்களை இரட்சித்து, மீதியானியரை உன் கையில் ஒப்புக்கொடுப்போம்; மற்றச் சனமெல்லாம் தங்கள்
தங்கள் இடத்திற்குப் போகக்கடவதென்ரூர்.—
அப்போது சனம் தவசத்தையும் எக்காளங்களை ௮
யும் தங்கள் கையில் எடுத்துக்கொண்டார்கள்; மற்ற இஸ்ரவேலரையெல்லாம் தங்கள் தங்கள் கூடாரங்களுக்கு அனுப்பி, அந்த முந்நூறுபேரை வைத்துக்கொண்டான்; மீதியானியரின் பாளயமோவெனில், அவனுக்குத் தாழ்விடமான பள்ளத்தாக்கில் இருந்தது.
அன்று இராத்திரி சம்பவித்ததேதெனில், கர்த் ௯
தர் அவனோடே சொன்னதாவது: நீ எழுந்து, பாளயத்திற்கு இறங்கிப்போ; ஏனெனில் அதை உன் கையில் ஒப்புக்கொடுத்தோம்.—இறங்கிப் ௰
போகப் பயமாயிருந்தாயேயாகில், முதல் நீயும் உன் வேலைக்காரனாகிய பூருவுமாய்ப பாளயத்திற்கு இறங்கிப்போய்,—அங்கே என்ன பேசு ௰௧
கிரூர்களென்று கேள்; பிற்பாடு பாளயத்திற்கு இறங்கிப்போக, உன் கைகள் திடப்படுமென்ரூர்; அப்படியே அவனும் அவன் வேலைக்காரனாகிய பூருவும் பாளயத்தின் முனையிலே சாமம்காக்கிறவர்களின் இடம்மட்டும் இறங்கிப்போனார்
கள்.—மீதியானியரும், ஆம்லேக்கியரும், சகல ௰௨
கிழக்கத்திப் புத்திரருமோவென்ரூல், வெட்டுக்கிளிகள் அத்தனை திரட்சியாய்ப் பள்ளத்தாக்கிலே கிடந்தார்கள்; அவர்களுடைய ஒட்டகங்களுக்கும் இலக்கமில்லை; கடல்கரை மணலத்தனை திரட்சியாயிருந்தன. — கிதெயோன் வந்த ௰௩
போது ,இதோ ஒருவன் ஒருவனுக்கு ஒரு சொப்பனத்தை விவரித்துச் சொன்னதாவது: இதோ ஒரு சொப்பனத்தைக் கண்டேன்; இதோ சுட்டிருந்த ஒரு வால்கோதுமை அப்பம் மீதியானியரின் பாளயத்திற்கு உருண்டு வந்து, கூடாரம் மட்டும் வந்தபோது, அதை விழத்தள்ளிக் கீழது மேலதாக்கிப்போட்டது; அப்படியே கூடாரம்
விழுந்து கிடந்ததென்ரூன்.—அப்போது மற்ற ௰௪
வன் பிரதியுத்தாரமாக, இது யோவாசின் குமாரனாகிய கிதெயோனென்ற இஸ்ரவேலனுடைய பட்டையமேயொழிய மற்றப்படியல்ல; பராபரன் மீதியானியரையும், இந்தப் பாளயம் அனைத்தையும்,அவன் கையில் ஒப்புக்கொடுத்தாரென்ரூன்.
கிதெயோன் அந்தச் சொப்பனத்தின் விவரத் ௰௫
தையும் அதின் வியார்த்திபண்ணுதலையும் கேட்டபோது, அவன் பணிந்துகொண்டு, இஸ்ரவேலின் பாளயத்திற்குத் திரும்பிவந்து, எழுந்திருங்கள், ஏனெனில் கர்த்தர் மீதியானியரின் பாளயத்தை உங்கள் கைகளில் ஒப்புக்கொடுத்
தாரென்று சொல்லி, — அந்த முந்நூறுபேரை ௰௬
மூன்று பவிஞ்சாக வகுத்து, அவர்கள் எல்லார் கையிலும் எக்காளங்களையும், வெறும்பானைகளையும், அவைகளுக்குள்வைக்கும் தீவட்டிகளையும்
கொடுத்து,—அவர்களோடே சொன்னதாவது: ௰௭
நான் செய்வதைப்பார்த்து, அப்படியே செய்வீர்களாக; இதோ நான் பாளயத்தின் முனையில் வந்திருக்கும்போது, எப்படிச் செய்வேனோ அப்ப
டிச் செய்வீர்களாக.—நானும் என்னோடிருக்கும் ௰௮
சகலமானபேரும் எக்காளம் ஊதும்போது, நீங்க

ளும் பாளயத்தையெல்லாம் சுற்றி, எக்காளங்
களை ஊதி, கர்த்தருடையதும், கிதெயோனுடை
யதும் என்பீர்களாகவென்று சொன்னான்.
௰௯ நடுச்சாமம் துவக்கிச் சாமக்காரர் நிலைநிறுத்
தப்பட்டவுடனே, கிதெயோனும் அவனோடி
ருந்த நூறுபேரும் அந்தச் சாமத்தின் துவக்கத்தி
லே பாளயத்தின் முகனையில் வந்து, எக்காளங்
களை ஊதி, தங்கள் கையிலிருந்த பானைகளை
௨௰ உடைத்தார்கள்.—மூன்று பவிஞ்சுகளின் மனு
ஷரும் எக்காளங்களை ஊதி, பானைகளை உடைத்
துவிட்டு, தீவட்டிகளைத் தங்கள் இடதுகைகளி
லும், ஊதும் எக்காளங்களைத் தங்கள் வலதுகை
களிலும் பிடித்து, கர்த்தருடையதும் கிதெயோ
னுடையதுமான பட்டையமென்று கூப்பிட்டு,-
௨௧ பாளயத்தைச் சுற்றிலும் அவரவர் தங்கள் நிலை
யிலே நின்றார்கள்; அப்போது பாளயத்தில் இ
ருந்தவர்களெல்லாரும் ஓடித்திரிந்து, கூக்குர
௨௨ லிட்டு, ஓடிப்போனார்கள்.—மூந்நூறுபேரும் எக்
காளங்களை ஊதுகையில், கர்த்தர் பாளயமெங்
கும் ஒருவர் பட்டையத்தை ஒருவருக்கு விரோ
தமாய்ப் போகப்பண்ணினார்; பாளயத்தின் சே
னையானது பெத்சித்தாசேரேராத்மட்டுக்கும், தா
பாத்கிட்ட இருக்கிற ஆபேல்மேகொலாவின்
எல்லைமட்டுக்கும் ஓடிப்போயிற்று.
௨௩ ஆனால் நவ்தலி மனுஷரும், ஆசேர் மனுஷரும்,
மனாசேயின் சகல மனுஷருமாகிய இஸ்ரவேலர்
அழைப்பிக்கப்பட்டு வந்து, மீதியானியரைப்
௨௪ பின்தொடர்ந்து போனார்கள்.—கிதெயோன் எப்
பிராயீம் மலைகளெங்கும் தூதரையும் அனுப்பி,
நீங்கள் மீதியானியருக்கு எதிராக இறங்கி, பெத்
தாபராயிருக்கும் யோர்தான்மட்டும் வந்து, தண்
ணீரை அவர்களுக்கு முந்திக் கட்டிக்கொள்ளுங்
களென்று சொல்லச்சொன்னான்; அப்படியே
எப்பிராயீமின் மனுஷரெல்லாரும் அழைப்பிக்
கப்பட்டு, பெத்தாபராயிருக்கும் யோர்தான்மட்
டும் வந்து, தண்ணீரைக் கட்டிக்கொண்டு,—
௨௫ மீதியானியரின் இரண்டு அதிபதிகளாகிய ஓரே
பையும், சேபையும் பிடித்து, ஓரேபை ஓரேப்
என்னப்பட்ட கல்மலையிலும், சேபை சேப் என்
னப்பட்ட ஆலையிலும் கொன்றுபோட்டு, மீதியா
னியரைத் துரத்தி, ஓரேப் சேப் என்றவர்களின்
தலைகளை யோர்தானுக்கு இக்கரையிலிருந்த கிதெ
யோனண்டைக்குக் கொண்டுவந்தார்கள்.

## ௮. அதிகாரம்.

*௧. கிதெயோன் எப்பிராயீமைச் சமாதானப்படுத்தியது. ௪. சுக்கோத்தும், பெனூவேலும், கிதெயோன் சேனைக்கு உதவிசெய்யாதது. ௰. சேபாகும், சல்முனாவும், பிடிக்கப்பட்டது. ௰௬. சுக்கோத்தும், பெனூவேலும் அழிக்கப்பட்டது. ௰௮. கிதெயோன் தன் சகோதரரைக்கொன்ற சேபாக், சல்முனாவைக் கொன்றது. ௨௨. அவன் அரசாளுகையை மறுத்தது. ௨௪. அவன் உண்டாக்கிய பொன்சால்வை விக்கிரகாராதனைக்குக் காரணமாயிருந்தது. ௨௮. மீதியான் ஜெயிக்கப்பட்டது. ௨௯. கிதெயோனின் பிள்ளைகளும், அவனுடைய மரணமும், ௩௩. இஸ்ரவேலர்களின் விக்கிரகாராதனைகளும், அவநன்றியும்.*

௧ அப்போது எப்பிராயீம் மனுஷர் அவனுடனே,
நீ மீதியானியர்மேல் யுத்தம்பண்ணப்போகிற
போது, எங்களை அழைப்பிக்காதேபோன இந்தக்
காரியத்தை நீ எங்களுக்குச் செய்தது என்ன
வென்று, அவனோடே மகா வாக்குவாதம்பண்
ணினார்கள்.—அவனோவென்றால் அவர்களோடே ௨
சொன்னதாவது: நீங்கள் செய்ததற்கொத்த எந்
தக் காரியத்தை நான் இப்போது செய்தேன்? அபி
யேஸ்றியரின் திராட்சப்பழ அறுப்பைப் பார்க்
கிலும், எப்பிராயீமரின் பின்னறுப்புத் தாவிலை
யல்லவோ?—உங்கள் கையிலே பராபரன், மீதி ௩
யானியரின் அதிபதிகளாகிய ஓரேபையும், சே
பையும் ஒப்புக்கொடுத்தாரே, நீங்கள் செய்ததற்
கொத்த எந்தக் காரியத்தைச் செய்ய எனக்குக்
கூடிற்றென்றான்; இந்த வார்த்தையை அவன்
சொன்னபோது, அவன்மேலிருந்த அவர்களு
டைய கோபம் ஆறிற்று.
கிதெயோன் யோர்தானுக்கு வந்தபோது, அவ ௪
னும் அவனோடிருந்த மூந்நூறுபேரும் அதைக்
கடந்துபோய், விடாய்த்திருந்தும் சத்துருவைப்
பின்தொடர்ந்துகொண்டிருந்தார்கள். — அவன் ௫
சுக்கோத்தின் மனுஷருக்கு, என் கீழிருக்கிற
சனத்திற்குச் சில அப்பங்களைக் கொடுங்கள்;
அதேனெனில் விடாய்த்திருக்கிறார்கள்; நான்
மீதியானியரின் இராசாக்களாகிய சேபாகையும்
சல்முனாவையும் பின்தொடருகிறவனென்றான்.
சுக்கோத்தின் பிரபுக்களோவென்றால், உன் ௬
இராணுவத்திற்கு நாங்கள் அப்பம்கொடுக்கிற
தற்குச் சேபாக், சல்முனா என்றவர்களின் உள்
ளங்கை அப்போதே உன் கைவசமாகித் தீர்ந்த
தோவென்றார்கள். — அப்போது கிதெயோன் ௭
அவர்களுடனே, கர்த்தர் சேபாகையும், சல்மு
னாவையும், என் கையில் ஒப்புக்கொடுத்த
போது, உங்கள் மாம்சத்தை வனாந்தரத்தின் முள்
ளுக்களாலும், நெரிஞ்சில்களாலும் கிழித்துவிடு
வேனென்று சொல்லி,—அவ்விடம்விட்டு, பே ௮
னூவேலுக்குப் போயேறி, அவ்வூராரோடே அந்
தப்படிச் சொன்னான்; ஆனால் சுக்கோத்தின்
மனுஷர் பிரதியுத்தாரமாகச் சொன்னபடியே
பெனூவேலின் மனுஷரும் அவனுக்குச் சொன்
னார்கள்.—அப்போது அவன் பெனூவேலின் ௯
மனுஷரோடே, நான் சமாதானத்தோடே திரும்பி
வரும்போது, இந்தக் கோபுரத்தை இடித்துவிடு
வேனென்றான்.
சேபாகும் சல்முனாவும் அவர்களோடேகூட ௰
ஏறக்குறையப் பதினையாயிரம்பேராகிய அவர்க
ளுடைய சேனைகளுமோவென்றால், கற்கோரி
லிருந்தார்கள்; கிழக்கத்தியாரின் சகல இராணு
வத்திலும் மீதியானவர்களெல்லாம் அவர்கள்
தான்; ஏனெனில் பட்டையம் உருவத்தக்க நூற்
றிருபதினாயிரம்பேர் விழுந்தார்கள்.—கிதெயோன் ௧௧
கூடாரங்களிலே குடியிருக்கிறவர்கள் வழியாய்
நோபாகுக்கும், யொகிபெயாவுக்கும் கிழக்கே
போயேறி, அந்த இராணுவத்தை முறியடித்தான்;
ஏனெனில் அந்த இராணுவம் நிர்விசாரமாயிருந்
தது. — சேபாகும் சல்முனாவும் ஓடிப்போனார் ௧௨
கள்; அவனோவென்றால் அவர்களைத் துரத்தி, சே
பாக், சல்முனா என்ற மீதியானியரின் இரண்டு

இராசாக்களைப் பிடித்து, இராணுவத்தையெல்
லாம் கலங்கடித்தான்.
௰௩ யோவாசின் குமாரனாகிய கிதெயோன் யுத்தம்
பண்ணி, சூரியன் உதிக்காததற்கு முன்னே திரும்
௰௪ பிவந்தபோது,—சுக்கோத்தின் மனுஷரில் ஒரு
வாலிபனைப் பிடித்து, அவனைக் கேட்டான்;
இவன் சுக்கோத்தின் பிரபுக்களும் அதின் மூப்
பருமாகிய எழுபத்தேழுபேரை அவனுக்கு எழு
௰௫ திக்கொடுத்தான்.—அவன் சுக்கோத்தின் ஊரா
ரண்டைக்கு வந்து, இதோ விடாய்த்திருக்கிற
உன் மனுஷருக்கு நாங்கள் அப்பங்கொடுக்கிற
தற்குச் சேபாக், சல்முனா என்றவர்களின் உள்ள
ங்கை அப்போதே உன் கையில் இருக்கின்றதோ
வென்று நீங்கள் என்னை நிந்தித்துச் சொன்ன
சேபாகும் சல்முனாவும் இங்கே இருக்கிறார்க
௰௬ ளென்று சொல்லி,—பட்டணத்தின் மூப்பரைப்
பிடித்து, வனாந்தரத்தின் முள்ளுக்களையும் நெ
ரிஞ்சில்களையும் எடுத்துக்கொண்டு, அவைக
ளால் சுக்கோத்தின் மனுஷருக்குச் சொறணைவர
௰௭ ப்பண்ணி,—பேனூவேலின் கோபுரத்தையும் இடி
த்து, அவ்வூர் மனுஷரைக் கொன்றுபோட்டான்.
௰௮ பிற்பாடு அவன் சேபாகோடும், சல்முனாவோ
டும், நீங்கள் தாபோரிலே கொன்றுபோட்ட
அந்த மனுஷர் எந்த ரூபமாயிருந்தார்களென்
றான்; அதற்கு அவர்கள், அவர்கள் உம்மைப்போ
லும், அவரவர் பார்வைக்கு இராசகுமாரரைப்
௰௯ போலும், இருந்தார்களென்றார்கள்.—அப்போது
அவன், அவர்கள் என் தாயாரின் பிள்ளைகளா
கிய என்னுடைய சகோதரராயிருந்தார்கள்; அ
வர்களை உயிரோடே வைத்திருந்தீர்களானால்,
உங்களைக் கொல்லாதிருப்பேனென்று கர்த்தரின்
சீவனைக்கொண்டு சொல்லுகிறேனென்று சொல்
௨௰ லி,—தன் மூத்தகுமாரனாகிய எத்தெருக்கு, நீ
எழுந்து, அவர்களைக் கொன்றுபோடென்றான்;
ஆனால் அந்தப் பிள்ளையாண்டான் பயப்படுகிற
தினாலே, தன் பட்டையத்தை உருவாதேபோ
னான்; ஏனெனில் இன்னம் வாலவயதாயிருந்
௨௧ தான்.—அப்போது சேபாகும், சல்முனாவும், நீர்
தான் எழுந்து எங்கள்மேல் விழும்; ஏனெனில்
மனுஷன் எப்படியோ, அப்படி அவன் பெல
னும் இருக்குமென்றார்கள்; அப்படியே கிதெ
யோன் எழுந்து, சேபாகையும் சல்முனாவையும்
கொன்றுபோட்டு, அவர்கள் ஒட்டகங்களின்
கழுத்துகளில் இருந்த சாந்துக்காரைகளை எடுத்
துக்கொண்டான்.
௨௨ அப்போது இஸ்ரவேல் மனுஷர் கிதெயோனு
டனே, நீர் எங்களை மீதியானியர் கைக்கு நீங்க
லாக்கிவிட்டபடியினாலே நீரும் உம்முடைய
குமாரனும், உம்முடைய குமாரரின் குமாரனும்,
௨௩ எங்களை ஆளக்கடவீர்களென்றார்கள்.— கிதெ
யோனோவென்றால் அவர்களுடனே, நான் உங்
களை ஆளுவதுமில்லை; என் குமாரன் உங்களை
ஆளுவதுமில்லை; கர்த்தர் உங்களை ஆளுவாராக
௨௪ வென்றான்.— பிற்பாடு கிதெயோன் அவர்களுட
னே, உங்களை ஒரு காரியத்தைக் கேட்கிறேன்;
நீங்கள் அவரவர் கொள்ளையிட்ட கடுக்கனை என
க்குத் தாருங்களென்றான்; ஏனெனில் அவர்கள்
இஸ்மவேலராயிருந்தபடியினாலே அவர்களுக்
குப் பொன் கடுக்கன்களிருந்தன.—கொடுக்கவே ௨௫
கொடுப்போமென்று அவர்கள் சொல்லி, ஒரு
வஸ்திரத்தை விரித்து, அங்கே அவரவர் கொள்ளை
யிட்ட கடுக்கனைப் போட்டார்கள்.—பிறைச்சிந் ௨௬
தாக்குகளையும், ஆரங்களையும், மீதியானியரின்
இராசாக்கள் போர்த்துக்கொண்டிருந்த இரத்தாம்
பரங்களையும், அவர்களுடைய ஒட்டகங்களின்
கழுத்துகளிலிருந்த சரப்பளிகளையும்தவிர, அ
வன் கேட்டுவாங்கின பொன்கடுக்கன்களின்
நிறை ஆயிரத்து எழுநூறு பொன்சேக்கலின்
நிறையாயிருந்தது.—அதினாலே கிதெயோன் ஒரு ௨௭
ஆசாரியசால்வையை உண்டாக்கி, அதைத் தன்
ஊரான ஒப்பிராவிலே வைத்தான்; ஆனால் இஸ்ர
வேலரெல்லாம் அங்கே அதின் பின்னாலே
சோரம்போனார்கள்; அது கிதெயோனுக்கும் அ
வன் வீட்டாருக்கும் கண்ணியாய்ப் போயிற்று.
இந்தப்பிரகாரமாக மீதியானியர் தங்கள் தலை ௨௮
யைத் திரும்ப எடுக்கக்கூடாதபடிக்கு, இஸ்ர
வேல் புத்திரருக்கு முன்பாகத் தாழ்த்தப்பட்டார்
கள்; தேசமானது கிதெயோனின் நாள்களில் நாற்
பதுவருஷம் அமர்ந்திருந்தது.
யோவாசின் குமாரனாகிய எருப்பாகால் ௨௯
போய், தன் வீட்டிலே குடியிருந்தான்.—கிதெ ௩௰
யோனுக்கு அவனுடைய கெர்ப்பப் பிறப்பான
எழுபது குமாரர் இருந்தார்கள்; ஏனெனில் அவ
னுக்கு அநேகம் பெண்சாதிகளிருந்தார்கள்.—
சீகேமிலிருந்த அவனுடைய வைப்பாட்டியும், ௩௧
அவனுக்கு ஒரு குமாரனைப் பெற்றாள்; அவ
னுக்கு அபிமெலேக்கென்று பேரிட்டான்.—
பிற்பாடு யோவாசின் குமாரனாகிய கிதெயோன் ௩௨
நல்ல விருத்தாப்பியத்திலே மரித்து, ஒப்பிராவி
லே தன் தகப்பனாகிய யோவாசென்ற அபியேஸ்
றியனுடைய கல்லறையில் அடக்கம்பண்ணப்
பட்டான்.
கிதெயோன் மரித்தபின் சம்பவித்ததேதென் ௩௩
றால், இஸ்ரவேல் புத்திரர் திரும்பிப் பாகால்க
ளின் பின்னாலே சோரம்போய், பாகால் பேரீத்
தைத் தங்களுக்குத் தேவனாக வைத்தார்கள்.—
சுற்றிலுமிருந்த தங்கள் எல்லாச் சத்துருக்களின் ௩௪
கைக்கும் தங்களைத் தப்புவித்த தங்கள் பராபர
னாகிய கர்த்தரை நினையாமலும்,— கிதெயோ ௩௫
னென்ற எருப்பாகால் இஸ்ரவேலுக்குச் செய்த
சகல நன்மைக்குத்தக்க தயவை அவன் வீட்டா
ருக்கு நடப்பியாமலும் போனார்கள்.

## ௯. அதிகாரம்.

௧. அபிமெலேக் சீகேமியரில் சில கலகம் உண்டாக்கி, தன் சகோதரர்களைக் கொன்று, இராசாவானது. ௭. யோத்தாம் அவர்களை ஓர் உவமையால் அதட்டி, வரும்சேட்டை முன்னறிவித்தது. ௨௬. காகால் அபிமெலேக்கின்மேல் விரோதமாய்ச் சீகேமியருடன் கூடினது. ௩௰. சேபூல் அதை வெளிப்படுத்தினது. ௪௫. அபிமெலேக் அவர்களைச் செயித்து, அவர்கள் பட்டணத்தில் உப்பைத் தெளித்தது. ௪௯. அவன் பேரீத் தேவனுடைய ஆலயத்தைச் சுட்டெரித்தது. ௫௩. அவன் தேபேத்சில் ஒரு எந்திரக்கல்லின் துண்டினால் கொல்லப்பட்டது. ௫௭. யோத்தாமின் சாபம் பலித்தது.

௧ எருப்பாகாலின் குமாரன் அபிமேலேக் சீகேமி
லிருக்கிற தன் தாயின் சகோதரரண்டைக்குப்
போய், அவர்களோடும் தன் தாயினுடைய தகப்
பன்வீட்டு வம்சமான அனைவரோடும் பேசி,—
௨ எழுபதுபேராகிய எருப்பாகாலின் குமாரரெல்
லாம் உங்களை ஆளுவது உங்களுக்கு நல்லதோ,
ஒருவன் உங்களை ஆளுவது உங்களுக்கு நல்ல
தோவென்று நீங்கள் சீகேமிலிருக்கிற எல்லாப்
பெரிய மனுஷரின் காதுகளுக்குமுன்பாகப்
பேசி, நான் உங்கள் எலும்பும் உங்கள் மாம்சமு
மானவன் என்கிறதை நினையுங்களென்றான்.—
௩ அப்படியே அவனுடைய தாயின் சகோதரர்
சீகேமிலிருக்கிற எல்லாப் பெரிய மனுஷரின்
காதுகளுக்குமுன்பாக இந்த வார்த்தைகளையெல்
லாம் அவனுக்காகப் பேசினார்கள்; அப்போது
அவன் நம்முடைய சகோதரனென்று அவர்கள்
சொன்னதினாலே, அவர்கள் இருதயம் அபிமே
லேக்குக்குப் பின்னாகச் சாய்ந்துபோயிற்று.—
௪ அவர்கள் பாகால் பேரீத்தின் வீட்டில் எழு
பது வெள்ளிக்காசை எடுத்து அவனுக்குக் கொ
டுத்தார்கள்; அவைகளால் அபிமேலேக் வீண
ரும் சண்டாளருமான மனுஷரை வேலைகொண்
டான்; அவர்கள் அவனுக்குப் பின்சென்றார்
௫ கள். — அவன் ஒப்பிராவிலிருக்கிற தன் தகப்
பன்வீட்டிற்கு வந்து, எருப்பாகாலின் குமாரரா
கிய தன் சகோதரர் எழுபதுபேரையும் ஒரே கல்
லின்மேலே கொன்றான்; ஆனால் எருப்பாகா
லின் இளையகுமாரனாகிய யோத்தாம் ஒளித்தி
ருந்தபடியினாலே மீதியானான்.
௬ பிற்பாடு சீகேமிலிருக்கிற எல்லாப் பெரிய
மனுஷரும், மில்லோவின் வீட்டாரனைவரும்,
கூடிக்கொண்டுபோய், சீகேமிலிருக்கிற உயர்ந்
தகர்வாலியு மரத்தண்டையிலே அபிமேலேக்கை
இராசாவாக்கினார்கள்.
௭ இது யோத்தாமுக்கு அறிவிக்கப்பட்டபோது
அவன் போய், கெரீசீம் மலையின் கொடுமுடியில்
ஏறிநின்று, தன் சத்தத்தை உயர்த்திக் கூப்பிட்டு,
அவர்களுக்குச் சொன்னதாவது: சீகேமின் பெ
ரிய மனுஷரே, பராபரன் உங்களையும் கேட்ப
தற்காக என்னைக் கேளுங்கள்.
௮ விருட்சங்கள் தங்கள்மேல் ஒரு இராசாவை
வைக்க அபிஷேகம்பண்ணப் போய், ஒலீவ
மரத்தோடே, எங்கள்மேல் இராசாவாயிருவென்
௯ றன.—ஆனால் ஒலீவமரம் அவைகளோடே, தே
வர்களும் மனுஷரும் புகழுகிற என்னிலுள்ள
என்னுடைய புஷ்டியை நான்விட்டு, மரங்களி
௰ ன்மேல் அசையப்போவேனோ என்றது.—அப்
போது மரங்களானவை அத்திமரத்தோடே, நீ
வந்து,எங்கள்மேல் இராசாவாயிருவென்றன.—
௰௧ ஆனால்அத்திமரம்அவைகளோடே,என்னுடைய
மதுரத்தையும் என்னுடைய நற்கனியையும்நான்
விட்டு, மரங்களின்மேல் அசையப்போவேனோ
௰௨ என்றது.—அப்போது மரங்கள் திராட்சச்செடி
யோடே, நீ வந்து, எங்கள்மேல் இராசாவாயிரு
௰௩ என்றன.—ஆனால் திராட்சச்செடி அவைகளோ
டே, தேவர்களையும் மனுஷரையும் மகிழ்ச்சியாக்
குகிற என்னுடைய இரசத்தை நான்விட்டு மரங்
களின்மேல் அசையப்போவேனோ என்றது. —
அப்போது சகல மரங்களும் முள்செடியோ ௰௪
டே, நீ வந்து, எங்கள்மேல் இராசாவாயிருவென்
றன.—முள்செடியானது மரங்களுடனே, நீங் ௰௫
கள் என்னை உங்கள்மேல் இராசாவாக அபிஷே
கம்பண்ணுகிறது மெய்யானால், என் நிழலிலே
வந்தடையுங்கள்; இல்லாவிட்டால் முள்செடி
யிலிருந்து அக்கினி புறப்பட்டு, லீபனோனின்
கேதுரு மரங்களைப் பட்சிக்கக் கடவதென்றது.
என் தகப்பன் உங்களுக்காக யுத்தம்பண்ணி, ௰௬
தன் சீவனை எண்ணாமல்போய், உங்களை மீதியா
னியரின் கைக்கு நீங்கலாக்கிவிட்டார். — நீங் ௰௭
களோவென்றால் இன்று என் தகப்பனுடைய
வீட்டுக்கு விரோதமாயெழும்பி, அவர் குமார
ரான எழுபதுபேரை ஒரே கல்லின்மேலே கொ
ன்றுபோட்டு, அவன் வேலைக்காரியின் மகனான
அபிமேலேக் உங்கள் சகோதரனானபடியினாலே
அவனைச் சீகேம் பட்டணத்தார்மேலே இராசா
வாக்கினீர்கள். — இப்போதும் நீங்கள் அவனை ௰௮
இராசாவாக்கின செய்கை உண்மையோடும் உத்
தமத்தோடும்கூடிய செய்கையாயிருக்கிறதும்,—
நீங்கள் எருப்பாகாலையும் அவர் வீட்டாரையும் ௰௯
நலமாக நடத்தி, அவர் கைகளின் செய்கைக்
குத்தக்கதை அவருக்குச் சரிக்கட்டி,இப்படியே
இந்நாளிலே அவரையும் அவர் வீட்டாரையும்
நடத்தினது உண்மையும் உத்தமமுமாயிருக்கிற
தும் உண்டானால், அபிமேலேக்கினாலே நீங்க
ளும் சந்தோஷமாயிருங்கள்; உங்களாலே அவ
னும் சந்தோஷமாயிருப்பானாக. — இல்லாவிட் ௨௰
டால் அபிமேலேக்கிலிருந்து அக்கினி புறப்பட்
டு, சீகேம் பட்டணத்தாரையும், மில்லோவின்
வீட்டாரையும் பட்சிக்கவும், சீகேம் பட்டணத்
தாரிலும் மில்லோவின் வீட்டாரிலுமிருந்து அக்
கினி புறப்பட்டு, அபிமேலேக்கைப் பட்சிக்க
வும் கடவதென்று யோத்தாம் சொல்லி,—ஓடித் ௨௧
தப்புவித்துக்கொண்டு, பேயேருக்குப் போய்,
அங்கே தன் சகோதரனாகிய அபிமேலேக்குக்கு
இடைதலாய்க் குடியிருந்தான்.
அபிமேலேக் இஸ்ரவேலை மூன்றுவருஷம் ௨௨
ஆண்டுகொண்டபோதோவெனில், — அபிமே ௨௩
லேக்குக்கும் சீகேமின் பெரிய மனுஷருக்கும்
ஆகாதேபோகும் ஆவியைப் பராபரன் அவர்க
ளுக்குள்ளே வரப்பண்ணினார். — எருப்பாகா ௨௪
லின் எழுபது குமாரருக்குச் செய்யப்பட்டகொ
டுமை வந்து பலித்து, அவர்களுடைய இரத்தப்
பழி,அவர்களைக் கொன்ற அவர்களுடையசகோ
தரனாகிய அபிமேலேக்கின்மேலும், தன் சகோ
தரரைக்கொல்ல அவன் கைகளை திடப்படுத்தின
சீகேம் மனுஷர்மேலும், சுமரும்படியாகச் சீகே
மின் பெரிய மனுஷர் அபிமேலேக்குக்கு இரண்
டகம்பண்ணினார்கள்.—மலைகளுடைய சிகரங் ௨௫
களின்மேல் அவனுக்குப் பதிவிருக்கிறவர்களை
வைத்தார்கள்; இவர்கள் தங்கள் அருகே வழியி

லே கடந்துபோகிற யாவரையும் கொள்ளையிட்
டார்கள்; அது அபிமேலேக்குக்கு அறிவிக்கப்
௨௬ பட்டது. — எபேதின் குமாரனாகிய காகாலும்
அவன் சகோதரரும் வந்து, சீகேமுக்குள்போனார்
கள்; சீகேமின் பெரியமனுஷர் அவர்களை நம்
௨௭ பி,—வெளியே புறப்பட்டு, தங்கள் திராட்சத்
தோட்டங்களின் பழங்களை அறுத்து, ஆலையாடி,
புகழ்ச்சியான பாட்டுகளைப் பாடி, தங்கள் தேவ
னின் வீட்டிற்குள்போய், புசித்துக் குடித்து, அபி
௨௮ மேலேக்கைச் சபித்தார்கள்.-எபேதின் குமாரனா
கிய காகால் சொன்னதாவது: அபிமேலேக்கை
நாம் சேவிக்க அவன் யார்? அவனைச் சேவிக்கச்
சீகேமென்பவன் யார்? அவன் எருப்பாகாலின்
மகனும், சேபூல் என்பவன் அவன் காரியக்கார
னுமல்லவோ? சீகேமின் தகப்பனான எமோ
ரின் மனுஷரையே சேவியுங்கள்; அவனை நாங்
௨௯ கள் சேவிப்பதென்ன?—அபிமேலேக்கை நான்
விலக்கிவிட இந்தச் சனம் என் கையின்கீழிருந்
தால் தாவிளையென்றான்; ஆனால் அபிமேலேக்
குக்கு உன் இராணுவத்தைப் பெருகப்பண்ணி,
புறப்பட்டு வாவென்று சொல்லப்பட்டது.
௩௰ அதேதெனில் பட்டணத்தின் அதிக்கக்காரனா
கிய சேபூல் எபேதின் குமாரனாகிய காகாலின்
வார்த்தைகளைக் கேட்டபோது, கோபம்மூண்ட
௩௧ வனாகி,—இரகசியமாய் அபிமேலேக்கண்டைக்
குத் தானாபதிகளை அனுப்பி, இதோ எபேதின் கு
மாரனாகிய காகாலும் அவன் சகோதரரும் சீகே
முக்கு வந்திருக்கிறார்கள்; இதோ பட்டணத்தை
௩௨ உமக்கு விரோதமாக்குகிறார்கள்.-இப்போது நீர்
உம்மோடிருக்கும் சனத்தோடேகூட இரவில் எ
௩௩ ழுந்துவந்து, வெளியிலே பதிவிருந்து,-காலமே
சூரியன் உதிக்கையில் எழும்பி, பட்டணத்தின்
மேல் விழுந்து, இதோ அவனும் அவனோடிருக்
கிற சனமும் உமக்கு எதிரே புறப்படும்போது,
உம்முடைய கைக்கு நேரிடுகிறபடி அவனுக்
குச் செய்யுமென்று சொல்லி அனுப்பினான்.
௩௪ அப்படியே அபிமேலேக்கும், அவனோடிருந்த
எல்லாச் சனமும், இரவில் எழுந்து வந்து, சீகே
முக்கு விரோதமாக நாலுபவிஞ்சாய்ப் பதிவிருந்
௩௫ தார்கள். — எபேதின் குமாரன் காகால் புறப்
பட்டு, பட்டணத்தின் ஒலிமுகவாசலில் நின்று
கொண்டான்; பதிவிருந்த அபிமேலேக்கோ
வென்றால் தன்னோடிருக்கிற சனத்தோடும்கூட
எழும்பிவந்தான். — காகால் அந்தச் சனத்தைக்
கண்டு, இதோ மலைகளின் சிகரங்களிலிருந்து
௩௬ சனம் இறங்கிவருகின்றதென்று சேபூலோடே
சொன்னான்; ஆனால் சேபூல் அவனோடே, நீ ம
லைகளின் நிழலைக்கண்டு, மனுஷரென்று நினைக்
௩௭ கிறாயென்றான். — காகாலோவென்றால் திரும்
பப் பேசி, இதோ சனம் தேசத்தின் நடுவிலிருந்து
இறங்கிவந்து, ஒரு பவிஞ்சு மெயொனேனீமின்
கர்வாலியுமரவழியாய் வருகின்றதென்றான்.—
௩௮ அப்போது சேபூல் அவனோடே, அபிமேலேக்
கை நாம் சேவிக்கிறதற்கு அவன் யாரென்று நீ
சொன்ன உன் வாய் இப்போது எங்கே? அது நீ
அசட்டைபண்ணின சனமல்லவோ? இப்போ
து நீ புறப்பட்டு, அதனோடே யுத்தம்பண்ணென்
றான்.—காகால் சீகேமின் மனுஷருக்குமுன்பா ௩௯
கப் புறப்பட்டு, அபிமேலேக்கோடே யுத்தம்பண்
ணினான்.—ஆனால் அபிமேலேக் அவனைத் துரத் ௪௰
தினான்; அவனுக்குமுன்பாக அவன் ஓடினான்;
பட்டணவாசல்மட்டும் அநேகர் வெட்டுண்டு
விழுந்தார்கள்.-ஆனால் அபிமேலேக் அறுமாவில் ௪௧
இருந்துவிட்டான்; சேபூலோவெனில் காகாலை
யும் அவன் சகோதரரையும் சீகேமிலேயிராதப
டிக்குத் துரத்திவிட்டான்.-மறுநாளிலோவென் ௪௨
றால் சனம் வெளியிலே புறப்பட்டது; அது அபி
மேலேக்குக்கு அறிவிக்கப்பட்டபோது, — அ ௪௩
வன் சனத்தைக் கூட்டிக்கொண்டு, அதை மூன்
று பவிஞ்சாக வகுத்து, வெளியிலே பதிவிருந்து,
சனம் பட்டணத்திலிருந்து புறப்பட்டுவருகிற
தைக் கண்டபோது, அவர்கள்மேல் எழும்பி,
அவர்களை வெட்டினான்.-அபிமேலேக்கும் அவ ௪௪
னோடிருந்த பவிஞ்சு மனுஷரும் பாய்ந்துவந்து,
பட்டணத்தின் ஒலிமுகவாசலில் நின்றுகொண்
டார்கள்; மற்ற இரண்டு பவிஞ்சு மனிதர்க
ளோவெனில், வெளியிலிருக்கிற யாவர்மேலும்
விழுந்து, அவர்களை வெட்டினார்கள்.—அபிமே ௪௫
லேக் அந்நாள்முழுதும் பட்டணத்தின்மேல்
யுத்தம்பண்ணி, பட்டணத்தைப் பிடித்து, அதி
லிருந்த சனத்தைக் கொன்று, பட்டணத்தை
இடித்துவிட்டு, அதில் உப்பு விதைத்தான்.
அதைச் சீகேம் துருக்கத்து மனுஷரெல்லா ௪௬
ரும் கேட்டபோது, அவர்கள் பேரீத் தேவ
னுடைய வீட்டின் அரணுக்குள் பிரவேசித்தார்
கள்.—சீகேம் துருக்கத்து மனுஷரெல்லாம் அங் ௪௭
கே கூடினது அபிமேலேக்குக்கு அறிவிக்கப்
பட்டபோது,-அபிமேலேக் தன்னோடிருந்த எல் ௪௮
லாச் சனத்தோடும்கூடச் சல்மோன் மலையில்
ஏறி, தன் கையிலே கோடாலியைப் பிடித்து,
ஒரு மரத்தின் கொம்பை வெட்டி, அதை எடுத்து,
தன் தோளின்மேல் போட்டுக்கொண்டு, தன்
னோடிருந்த சனத்தோடே, நான் என்ன செய்கி
றேனென்று காண்கிறீர்களோ, அதைத் தீவிரமாய்
என்னைப்போலச் செய்யுங்களென்றான்.—அப் ௪௯
போது சகல சனமும் அவரவர் ஒவ்வொரு
கொம்பை வெட்டி, அபிமேலேக்குக்குப் பின்
சென்று, அவைகளை அந்த அரண் அருகேபோட்
டு, புருஷரும் பெண்சாதிகளும் ஏறக்குறைய
ஆயிரம்பேராகிய சீகேம் துருக்கத்து மனுஷரெல்
லாரும் சாகும்படியாய், அவர்களிருந்த அந்த
அரணை அக்கினியாலே சுட்டுப்போட்டார்கள்.
பிற்பாடு அபிமேலேக் தேபேத்சுக்குப் போய், ௫௰
அதற்கு விரோதமாய்ப் பாளயமிறங்கி, அதைப்
பிடித்தான். — ஆனால் பட்டணத்தின் நடுவே ௫௧
பலத்த துருக்கமிருந்தது; அங்கே சகல புருஷ
ரும் பெண்சாதிகளும் பட்டணத்து மனுஷர்
அனைவரும் ஓடி அடைந்து, தங்கள் பின்னாலே
கதவைப் பூட்டிப்போட்டு, துருக்கத்தின்மே
லே ஏறினார்கள்.—அபிமேலேக்கோவென்றால் ௫௨

அந்தத் துருக்கம்மட்டும் வந்து, அதின்மேல் யுத்
தம்பண்ணி, துருக்கத்தின் கதவைச் சுட்டுப்போ
டும்படிக்கு, அதினண்டையில் சேர்ந்தான்.—
௫௩ ஆனால் ஒரு பெண்சாதி ஒரு எந்திரக்கல்லின்
துண்டை அபிமெலேக்குடைய தலையின்மேலே
போட்டாள்; அது அவன் கபாலத்தை நொறுக்
௫௪ கிற்று.—அப்போது அவன் சீக்கிரமாய்த் தன் ஆயு
தங்களைச் சுமக்கிற வேலைக்காரனைக் கூப்பிட்டு,
என்னை ஒரு பெண்சாதி கொன்றாளென்று என்
மேலே சொல்லாதபடிக்கு, நீ உன் பட்டயத்
தை உருவி, என்னைக் கொல்லென்று அவனோ
டே சொன்னான்; அப்படியே அவன் வேலைக்
காரன் அவனைக் குத்திப்போட்டான்; அவன்
௫௫ செத்தான்.— அபிமெலேக் செத்துப்போனதை
இஸ்ரவேல் மனுஷர் கண்டபோது, அவரவர்
தங்கள் இடங்களுக்குப் போய்விட்டார்கள்.
௫௬ இப்படி அபிமெலேக் தன்னுடைய எழுபது
சகோதரரைக் கொல்லுகிறதினாலே, தன் தகப்
பனுக்குச் செய்த பொல்லாப்பைப் பராபரன்
௫௭ அவன்மேலே திருப்பி,— சீகேம் மனுஷரும்
செய்த எல்லாப் பொல்லாப்பையும் பராபரன்
அவர்கள் தலையின்மேலே திருப்பிவிட்டார்;
எருப்பாகாலின் குமாரன் யோத்தாமின் சாபம்
அவர்கள்மேல் வந்தது.

## ௰. அதிகாரம்.

௧. தோலா, சாமீரில் இஸ்ரவேலரை நியாயம் விசாரித்தது. ௩. முப்பது பட்டணங்களையுடைய முப்பது குமாரர்களுக்குத் தகப்பனாகிய யாவீர் சனங்களை ஆண்டது. ௬. பெலிஸ்தரும், அம்மோனியரும் இஸ்ரவேலரை வருத்தப்படுத்தியது. ௰. வருத்தமான காலத்தில் அவர்களைப் பராபரன் அந்நியதேவர்களிடத்தில் போகச்சொன்னது. ௰௫. அவர்கள் மனஸ்தாபப்பட்டபோது அவர்களுக்கு இரங்கியது.

௧ அபிமெலேக்குக்குப் பிற்பாடு, தோதோவின்
மகனான பூவாவின் குமாரன் தோலாவென்ற ஈச
ஷார் கோத்திரத்தான் இஸ்ரவேலை இரட்சிக்க
எழும்பினான்; அவன் எப்பிராயீம் மலைத்தேசத்து
௨ ஊரான சாமீரிலே குடியிருந்து,—இஸ்ரவேலை
இருபத்துமூன்றுவருஷம் நியாயம்விசாரித்து,
பிற்பாடு மரித்து, சாமீரிலே அடக்கம்பண்ணப்
பட்டான்.
௩ அவனுக்குப் பிற்பாடு, கிலேயாத்தியனான யா
வீர் எழும்பி, இஸ்ரவேலை இருபத்திரண்டுவரு
௪ ஷம் நியாயம்விசாரித்தான்.—முப்பது கழுதைக்
குட்டிகளின்மேல் ஏறும் முப்பது குமாரர் அவ
னுக்கு இருந்தார்கள்; இவர்களுக்கு முப்பது ஊர்
களும் இருந்தன; கிலேயாத் தேசத்திலிருக்கிற
அவைகளுக்கு இந்நாள்வரைக்கும் யாவீரின் கிரா
௫ மங்களென்றபேர் இருக்கின்றது.—யாவீர் மரித்து,
காமோனிலே அடக்கம்பண்ணப்பட்டான்.
௬ இஸ்ரவேல் புத்திரரோவெனில், அப்புறம்
கர்த்தருக்குமுன்பாகப் பொல்லாப்புச் செய்து,
கர்த்தரைவிட்டு, அவரைச் சேவிக்காமல்போய்,
பாகால்களையும், அஸ்தரோத்தையும், சூரியாவின்
தேவர்களையும், சீதோனின் தேவர்களையும், மோ
வாபின் தேவர்களையும், அம்மோன் புத்திரரின்
தேவர்களையும், பெலிஸ்தரின் தேவர்களையும்,
சேவித்தார்கள்.— அப்போது கர்த்தர் இஸ்ரவே ௭
லின்மேல் கோபம்மூண்டவராகி, அவர்களைப்
பெலிஸ்தர் கையிலும், அம்மோன் புத்திரர் கை
யிலும் விற்றுப்போட்டார்.— அவர்கள் அந்த ௮
வருஷம்முதல்கொண்டு பதினெட்டு வருஷமாய்
யோர்தானுக்கு அப்பாலே கிலேயாத்திலுள்ள
எமோரியரின் தேசத்தில் இருக்கிற இஸ்ரவேல்
புத்திரரையெல்லாம் நொறுக்கி முறித்தார்கள்.—
அம்மோன் புத்திரர் யூதாவின்மேலும், பென்ய ௯
மீன்மேலும், எப்பிராயீம் வீட்டார்மேலும், யுத்தம்
பண்ண, யோர்தானையும் கடந்துவந்தார்கள்;
இஸ்ரவேலுக்கு மிகுதியும் நெருக்கமாயிற்று.
அப்போது இஸ்ரவேல் புத்திரர் கர்த்தரை ௰
நோக்கிக் கூப்பிட்டு, உமக்கு விரோதமாகப் பா
வம் செய்தோம்; ஏனெனில் எங்கள் பராபரனை
விட்டு, பாகால்களைச் சேவித்தோமென்றார்கள்.—
ஆனால் கர்த்தர் இஸ்ரவேல் புத்திரரோடே சொன் ௰௧
னதாவது: எகிப்தியரும், எமோரியரும், அம்
மோன் புத்திரரும், பெலிஸ்தியரும்,—சீதோனி ௰௨
யரும், அமலேக்கியரும், மாகோனியரும், உங்
களை இறுகப்பிடிக்கும் சமயங்களில், நீங்கள்
நம்மைநோக்கிக் கூப்பிட்டபோது, நாம் உங்
களை அவர்கள் கைக்கு நீங்கலாக்கி இரட்சித்த
தில்லையோ?—நீங்களோவென்றால் நம்மைவிட்டு, ௰௩
அந்நியதேவர்களைச் சேவித்துவந்தீர்கள்; ஆகை
யால் இனி உங்களை இரட்சியோம்.— நீங்கள் ௰௪
போய், உங்களுக்கு நீங்கள் தெரிந்துகொண்டி
ருக்கிற தேவர்களைநோக்கிக் கூப்பிடுங்கள்; அ
வைகள் உங்கள் நெருக்கத்தின் காலத்திலே, உங்
களை இரட்சிக்கட்டுமென்றார்.— ஆனால் இஸ்ர ௰௫
வேல் புத்திரர் கர்த்தருடனே, பாவம்செய்தோம்;
தேவரீர் உம்முடைய பார்வைக்கு நன்றாயிருக்
கிறபடியெல்லாம் எங்களுக்குச் செய்யும்; ஆ
னால் இந்நாளில் எங்களைத் தப்புவியுமென்று
சொல்லி,—அந்நியதேவர்களைத் தங்கள் நடுவிலி ௰௬
ருந்து விலக்கிவிட்டு, கர்த்தருக்கு ஆராதனைசெய்
தார்கள்; அப்போது அவர் இஸ்ரவேலின் வருத்
தத்தைப்பார்த்து மனதுருகினார்.
அம்மோன் புத்திரர் கூடிவரவழைப்பிக்கப் ௰௭
பட்டு, கிலேயாத்திலே பாளயமிறங்கினார்கள்;
இஸ்ரவேல் புத்திரரோவென்றால் கூடிக்கொண்
டு, மிஸ்பாவிலே பாளயமிறங்கினார்கள்.— அப் ௰௮
போது சனமும், கிலேயாத்தின் பிரபுக்களும்,
ஒருவரோடொருவர், அம்மோன் புத்திரர்மேல்
யுத்தம்பண்ணத்துவக்கப்போகிற மனுஷன் யார்?
அவன் கிலேயாத்தின் குடிகளுக்கெல்லாம் தலை
வனாயிருப்பானென்றார்கள்.

## ௰௧. அதிகாரம்.

௧. யெப்தாவைக் கிலேயாத்தியர் தங்களுக்குத் தலைவனாக ஏற்றுக்கொள்வதற்குச் செய்த உடம்படிக்கை. ௰௨. அவனுக்கும், அம்மோனருக்கும் நடந்த சமாதான உடம்படிக்கை வீணானது. ௨௯. யெப்தாவின் பொருத்தனை. ௩௨. அவன் அம்மோனரை வென்றது. ௩௪. அவன் பொருத்தனையைத் தன் குமாரத்தியின்மேல் செலுத்தியது.

கிலேயாத்தியனான யெப்தா பலத்த பராக்கிரமனா ௧
யிருந்தான்; ஆனால் அவன் பரஸ்திரியின் குமா

௨ ரன்; கிலேயாத் அவனைப் பெற்றவன்.—ஆனால்
கிலேயாத்தின் பெண்சாதியும் அவனுக்குக் குமா
ரர்களைப் பெற்று, இந்த அவன் பெண்சாதியின்
குமாரர் பெரியவர்களான பிற்பாடு, அவர்கள்
ஈப்தாவைத் துரத்தி, நீ எங்கள் தகப்பன் வீட்டி
லே சுதந்தரவாளியாயிருப்பதில்லை; ஏனெனில்
நீ வேறே ஸ்திரியின் மகனென்று அவனுக்குச்
௩ சொன்னார்கள்.—அப்போது ஈப்தா தன் சகோதர
ரைவிட்டு ஓடிப்போய், தோப்தேசத்திலே குடி
யிருந்தான்; நிலையற்ற மனுஷர் ஈப்தாவோடே
கூடிக்கொண்டு, அவனோடேகூட யுத்தத்திற்
௪ குப் போவார்கள். — சிலநாளுக்குப்பிற்பாடோ
வெனில், அம்மோன் புத்திரர் இஸ்ரவேலின்
௫ மேல் யுத்தம்பண்ணினார்கள். — அவர்கள் இஸ்ர
வேலின்மேல் யுத்தம்பண்ணும்போதோவென்
றால், கிலேயாத்தின் மூப்பர் ஈப்தாவைத் தோப்
௬ தேசத்திலிருந்து அழைத்துவரப்போய்,—ஈப்தா
வுடனே, நீ வந்து, நாங்கள் அம்மோன் புத்திர
ரோடு யுத்தம்பண்ண எங்கள் சேனாபதியாயிருப்
௭ பாயாகவென்றார்கள்.—அப்போது ஈப்தா கிலே
யாத்தின் மூப்பருடனே, நீங்களல்லவோ என்
னைப் பகைத்து, என் தகப்பன் வீட்டிலிருந்து
என்னைத் துரத்தினவர்கள்? இப்போது உங்க
ளுக்கு நெருக்கிடையானதினாலே, என்னண்
௮ டைக்கு ஏன் வருகிறீர்களென்றான். — ஆனால்
கிலேயாத்தின் மூப்பர் ஈப்தாவுடனே, நீ எங்க
ளுடனேகூட வந்து, அம்மோன் புத்திரரோடு
யுத்தம்பண்ணி, கிலேயாத்தின் குடிகளாகிய எங்
களனைவர்மேலும் நீ தலைவனாயிருப்பதற்காகத்
தானே இப்போது உன்னண்டைக்குத் திரும்பி
௯ வந்தோமென்றார்கள்.—அப்போது ஈப்தா, அம்
மோன் புத்திரரோடே யுத்தம்பண்ண, நீங்கள்
என்னைத் திரும்ப அழைத்துப்போன பிற்பாடு,
கர்த்தர் அவர்களை எனக்குமுன்பாக ஒப்புக்கொ
டுத்தால், நான் உங்களுக்குத் தலைவனாயிருப்பே
னோவென்று கிலேயாத்தின் மூப்பரைக் கேட்
௰ டான்.—கிலேயாத்தின் மூப்பர் ஈப்தாவுடனே,
நாங்கள் இந்த உன் வார்த்தையின்படியே செய்
யாவிட்டால், கர்த்தர் நமக்கு நடுவாக நியாயம்
௰௧ கேட்பாராகவென்றார்கள்.—அப்படியே ஈப்தா
கிலேயாத்தின் மூப்பரோடே கூடப்போனான்;
சனம் அவனைத் தங்கள்மேலே தலைவனும் சேனா
பதியுமாக வைத்தது; ஈப்தா தன் வார்த்தைகளை
யெல்லாம் மிஸ்பாவிலே கர்த்தருக்குமுன்பாகப்
பேசிக்கொண்டான்.

௰௨ பிற்பாடு ஈப்தா அம்மோன் புத்திரரின் இராசா
வண்டைக்குத் தானாபதிகளை அனுப்பி, நீ என்
தேசத்திற்கு விரோதமாக யுத்தம்பண்ண என்
னண்டையில் வருகிறதற்கு, எனக்கும் உனக்
கும் என்ன வழக்கிருக்கிறதென்று சொல்லச்
௰௩ சொன்னான். — அம்மோன் புத்திரரின் இராசா
ஈப்தாவின் தானாபதிகளோடே சொன்னதாவது:
இஸ்ரவேலர் எகிப்திலிருந்து ஏறிவருகிறபோது,
அர்னோன்துவக்கி யாபோக்மட்டுக்கும், யோர்
தான்மட்டுக்கும் இருக்கிற என்னுடைய தேசத்
தைக் கட்டிக்கொண்டார்களே, இப்போதும்
அதை எனக்குச் சமாதானமாய்த் திரும்பக்கொடு
வென்று சொல்லுங்களென்றான்.

ஆனால் ஈப்தா மறுபடியும் அம்மோன் புத்திர ௰௪
ரின் இராசாவண்டைக்குத் தானாபதிகளை அனுப்
பி, அவனுக்குச் சொல்லச்சொன்னதாவது: —
ஈப்தா சொல்லுகிறதேதெனில், இஸ்ரவேல் மோ ௰௫
வாபியரின் தேசத்தையாகிலும், அம்மோன் புத்
திரரின் தேசத்தையாகிலும் கட்டிக்கொண்ட
தில்லையே.—ஏனெனில் இஸ்ரவேல் எகிப்திலி ௰௬
ருந்து ஏறிவருகிறபோது, இஸ்ரவேல் வனாந்தரத்
திலே நாணல்சமுத்திரம்மட்டும் நடந்து, பிறகு
காதேசுக்கு வந்தது. — அப்போது இஸ்ரவேல் ௰௭
ஏதோமின் இராசாவண்டைக்குத் தானாபதிகளை
அனுப்பி, நான் உன் தேசத்துவழியாய்க் கடந்து
போகட்டுமே என்று சொல்லச்சொன்னார்கள்;
ஆனால் ஏதோமின் இராசா கேள்விகொடுக்க
வில்லை; மோவாபின் இராசாவண்டைக்கும் அ
னுப்பினார்கள்; அவனும் வேண்டாமென்றான்;
அப்படியே இஸ்ரவேல் காதேசிலே தரித்தி
ருந்து,-பிற்பாடு வனாந்தரத்திலே நடந்து ஏதோம் ௰௮
தேசத்தையும் மோவாப் தேசத்தையும் சுற்றிப்
போய், மோவாபின் தேசத்திற்குக் கிழக்கே
வந்து, மோவாபின் எல்லைக்குள் பிரவேசியாமல்,
மோவாபின் எல்லையான அர்னோன்நதிக்கு அப்
பாலே பாளயமிறங்கினார்கள்.-அப்போது இஸ் ௰௯
ரவேல் எஸ்போனில் ஆளுகிற சீகோனென்ற
எமோரியரின் இராசாவண்டைக்குத் தானாபதி
களை அனுப்பி, நான் உன் தேசத்துவழியாய்
என்னுடைய தானத்திற்குக் கடந்துபோகட்டு
மேயென்று சொல்லச்சொன்னார்கள். — ஆனால் ௨௰
தன் எல்லையைக் கடக்கிறதற்குச் சீகோன் இஸ்ர
வேலை நம்பாமல், தன் சனத்தையெல்லாம் கூட்
டி, யாகத்சாவிலே பாளயமிறங்கி, இஸ்ரவேலோ
டே யுத்தம்பண்ணினான். — அப்போது இஸ்ர ௨௧
வேலின் பராபரனாகிய கர்த்தர் சீகோனையும்
அவனுடைய எல்லாச் சனத்தையும் இஸ்ரவே
லின் கையிலே அவர்களை முறியடிக்க ஒப்புக்
கொடுத்தார்; அப்படியே இஸ்ரவேல் அந்தத் தே
சத்திலே குடியிருந்த எமோரியரின் சீமையை
யெல்லாம் பிடித்து, அர்னோன்துவக்கி,-யாபோக் ௨௨
மட்டாகவும், வனாந்தரம்துவக்கி யோர்தான்மட்
டாகவும், இருக்கிற எமோரியரின் எல்லையை
யெல்லாம் சுதந்தரமாய்க் கட்டிக்கொண்டார்
கள். — இப்போதும் இஸ்ரவேலின் பராபரனா ௨௩
கிய கர்த்தர் எமோரியரைத் தம்முடைய சனமா
கிய இஸ்ரவேலுக்குமுன்பாகத் துரத்தியிருக்கை
யில், நீ அந்தத் தேசத்தைக் கட்டிக்கொள்ளுவா
யோ? — உன் தேவனாகிய காமோஸ் உனக்கு ௨௪
முன்பாகத் துரத்துகிறவர்களின் தேசத்தை நீ கட்
டிக்கொள்ளுவாயல்லவோ? அப்படியே எங்கள்
பராபரனாகிய கர்த்தர் எங்களுக்குமுன்பாகத்
துரத்துகிறவர்களின் தேசத்தையெல்லாம் நாங்க
ளும் கட்டிக்கொள்ளுகிறோம். — இப்போதும் ௨௫
சிப்போரின் குமாரனாகிய பாலாக்கென்ற மோ

வாபின் இராசாவைப்பார்க்கிலும் உனக்கு அதிக
நியாயமுண்டோ? அவன் இஸ்ரவேலோடே எப்
போதாகிலும் வழக்காடினானோ? எப்போதாகி
லும் அவர்களுக்கு விரோதமாக யுத்தம்பண்ணி
௨௬ னானோ?—இஸ்ரவேல் எஸ்போனிலும், அதின்
கிராமங்களிலும், ஆரோவேரிலும், அதின் கிரா
மங்களிலும்,அர்னோன் நதியருகான எல்லா ஊர்
களிலும், முந்நூறுவருஷம் குடியிருக்கையில்,
இத்தனைகாலத்திலே நீங்கள் அதைத் திரும்ப விடு
௨௭ விக்காதேபோனதென்ன?-நான் உனக்கு விரோ
தமாகப் பாவம்செய்யாதிருந்தும், நீ என்மேல்
யுத்தம்பண்ணும் பொல்லாப்பை எனக்குச் செய்
கிறாய்; நியாயாதிபதியாகிய கர்த்தர் இன்று இஸ்ர
வேல் புத்திரருக்கும் அம்மோன் புத்திரருக்கும்
நடுவாக நியாயம்தீர்க்கக்கடவரென்று சொல்லி
அனுப்பினான்.
௨௮ ஆனால் அம்மோன் புத்திரரின் இராசா ஈப்தா
தனக்குச் சொல்லி அனுப்பின வார்த்தைகளுக்
௨௯ குச் செவிகொடாதேபோனான். — அப்போது
கர்த்தருடைய ஆவி ஈப்தாவின்மேலே வந்திருக்
கையால்,அவன் கிலேயாத்தையும் மனாசேசீமை
யையும் கடந்துபோய், கிலேயாத்திலிருக்கிற
மிஸ்பாவுக்கு வந்து, அங்கேயிருந்து அம்மோன்
௩௰ புத்திரருக்கு எதிராகப்போனான்.—ஈப்தா கர்த்த
ருக்கு ஒரு பொருத்தனையைப்பண்ணிச் சொன்
னதாவது:தேவரீர் அம்மோன் புத்திரரை என்கை
யில் ஒப்புக்கொடுக்கவே ஒப்புக்கொடுத்தால்,—
௩௧ அவர்களிடத்திலிருந்து சமாதானத்தோடே திரு
ம்பவருகிற எனக்கு, என் வீட்டுவாசற்படியிலி
ருந்து எதிர்கொண்டு வருகிறது கர்த்தருடைய
தாயிருக்கும்; அதைச் சர்வாங்கதகனபலியாகச்
செலுத்துவேனென்றான்.
௩௨ இப்படியே ஈப்தா அம்மோன் புத்திரரின்மேல்
யுத்தம்பண்ண,அவர்களுக்கு எதிராகப் புறப்பட்
டுப்போனான்; கர்த்தர் அவர்களை அவன் கையில்
௩௩ ஒப்புக்கொடுத்தார்.—அவன் அவர்களை ஆரோ
வேர்துவக்கி மின்னித்திற்குப் போகும்மட்டுக்
கும், அபேல்கேரமீம்மட்டுக்கும், மகா பெரிய
முறியடிப்பாக முறியடித்து, இருபது பட்ட
ணங்களைப் பிடித்தான்; இப்படி அம்மோன் புத்
திரர் இஸ்ரவேல் புத்திரருக்குமுன்பாகத் தாழ்த்
தப்பட்டார்கள்.
௩௪ ஈப்தா மிஸ்பாவிலிருக்கிற தன் வீட்டுக்கு வரு
கிறபோதோவெனில், இதோ அவன் குமாரத்தி
உடுக்கைகளோடும் சங்கீதவாத்தியங்களோடும்
அவனுக்கு எதிர்கொண்டு புறப்பட்டாள்; அவள்
அவனுக்கு ஒரே பிள்ளையானவள்; அவளைத்த
விர அவனுக்குக் குமாரனுமில்லை, குமாரத்தியு
௩௫ மில்லை.—அவன் அவளைக் காண்கிறபோது தன்
வஸ்திரங்களைக் கிழித்துக்கொண்டு, ஐயோ என்
குமாரத்தியே, என்னை மெத்தவும் மனமடியவும்
கலங்கவும்பண்ணுகிறாய்; ஏனென்றால் கர்த்த
ரைநோக்கி என் வாயைத் திறந்து பேசினேன்;
அதைநான் திருப்பக்கூடாதென்றான்.-அப்போ ௩௬
து அவள் அவனோடே, என் தகப்பனே, நீர் கர்த்
தரைநோக்கி உம்முடைய வாயைத்திறந்து பே
சினீரல்லவோ? அம்மோன் புத்திரராகிய உம்மு
டைய சத்துருக்களுக்கு நீதியைச் சரிக்கட்டும்
செயத்தைக் கர்த்தர் உமக்குக் கட்டளையிட்ட
படியினாலே, உம்முடைய வாயிலிருந்து புறப்
பட்டபடி எனக்குச் செய்யுமென்றாள்.—பின் ௩௭
னையும் அவள் தன் தகப்பனுடனே, நான் மலை
களின்மேலே போய்த் திரிந்து, நானும் என் தோ
ழிகளுமாய்என்னுடைய கன்னிமையிருப்புக்கா
கத் துக்கம்கொண்டாட,எனக்கு இரண்டுமாதம்
தவணைகொடும்; இந்தக்காரியம் எனக்குச் செய்
யப்படுவதாகவென்றாள். — அப்போது அவன், ௩௮
போய்வாவென்று அவளை இரண்டுமாதத்திற்கு
அனுப்பிவிட்டான்; அவள் தன் தோழிகளோ
டும்கூடப் போய், தன் கன்னிமையிருப்புக்காக
மலைகளின்மேலே துக்கம்கொண்டாடி,-இரண் ௩௯
டுமாதம் முடிந்தபோது, தன் தகப்பனண்டைக்
குத் திரும்பிவந்தாள்; அப்போது அவன் பண்
ணியிருந்த தன் பொருத்தனையின்படி அவளுக்
குச் செய்தான்; ஆகையால் அவள் புருஷனை
அறியாதிருந்தாள். — இதின்நிமித்தம் வருஷம் ௪௰
தோறும் நாலுநாள் இஸ்ரவேலின் குமாரத்திகள்
போய்,கிலேயாத்தியனான ஈப்தாவின் குமாரத்தி
யோடே பேசிக்கொள்ள இஸ்ரவேலிலே பழக்க
மாயிற்று.

## ௰௨. அதிகாரம்.

௧. எப்பிராயீமர் ஈப்தாவுடன் யுத்தம்செய்து ஷிபோலேத்தென்ற சொல்லால் அறியப்பட்டு, கிலேயாத்தியராலே கொல்லப்பட்டது. ௭. ஈப்தா மரித்தது. ௮. முப்பது குமாரர்களையும் முப்பது குமாரத்திகளையுமுடைய எப்சானும், ௰௧. ஏலோனும், ௰௩. நாற்பது குமாரர்களையும் முப்பது அண்ணன் குமாரர்களையுமுடைய அப்தோனும், இஸ்ரவேலரை நியாயம் விசாரித்தது.

எப்பிராயீம் மனுஷர் கூடிவரவழைக்கப்பட்டு, ௧
வடக்கே புறப்பட்டு வந்து, ஈப்தாவுடனே, [1]நீ
எங்களை உன்னோடேகூட வரவழைப்பிக்காமல்
அம்மோன் புத்திரர்மேல் யுத்தம்பண்ணப் போ
னதென்ன? உன் வீட்டை உன்னோடும்கூட
அக்கினியால் சுட்டுப்போடுவோமென்றார்கள்.-
அப்போது ஈப்தா அவர்களோடே சொன்னதா ௨
வது: எனக்கும் என் சனத்திற்கும் அம்மோன்
புத்திரரோடே பெரிய வழக்கு இருக்கிறபோது,
உங்களைக் கூப்பிட்டேன்; ஆனால் நீங்கள் என்
னை அவர்கள் கைக்கு நீங்கலாக்கி இரட்சித்த
தில்லை.-நீங்கள் என்னை இரட்சிக்கிறதில்லையெ ௩
ன்று நான் கண்டபோது, நான் என் சீவனை என்
கையிலே பிடித்துக்கொண்டு,அம்மோன் புத்திர
ருக்கு எதிராகப்போனேன்; கர்த்தர் அவர்களை
என் கையில் ஒப்புக்கொடுத்தார்; இப்போதும்
என்மேல் யுத்தம்பண்ண, நீங்கள் இன்று என்ன
ண்டைக்கு ஏறிவந்ததென்னவென்று சொல்லி,
ஈப்தா கிலேயாத் மனுஷரையெல்லாம் கூட் ௪
டி, எப்பிராயீமோடு யுத்தம்பண்ணினான்; எப்பி

1 நியா. ௮. ௧.

ராயீமுக்கும் மனாசேக்கும் நடுவே குடியிருக்கிற
கிலேயாத்தியரான நீங்கள் எப்பிராயீமைவிட்டு
ஓடிப்போனவர்களென்று எப்பிராயீமர் சொன்
னபடியினாலே, கிலேயாத் மனுஷர் அவர்களை
௫ முறியடித்தார்கள்.–எப்படியென்றால் கிலேயாத்
தியர் எப்பிராயீமருக்கு முந்திக்கொண்டு, யோர்
தானின் துறைகளைப் பிடித்தார்கள்; அப்போது
சம்பவித்ததேதென்றால், எப்பிராயீமரில் தப்பின
வர்களில் ஒருவன் வந்து, நான் அக்கரைக்குப்
போகட்டுமென்று சொல்லும்போது, கிலேயாத்
மனுஷர், நீ எப்பிராயீமனோ, என்று அவனைக்
௬ கேட்பார்கள்; அவனல்லவென்றால், — அவனு
டனே, ஷிபோலேத்தென்று சொல்லென்பார்
கள்; அப்போது அவன் அப்படிச் சொல்லக்
கூடாமல், சிபோலேத்தென்பான்; அப்போது
அவனைப் பிடித்து,யோர்தான் துறையிலே வெட்
டிப்போடுவார்கள்; அக்காலத்திலே எப்பிராயீ
மில் நாற்பத்தீராயிரம்பேர் விழுந்தார்கள்.
௭ ஈப்தா இஸ்ரவேலை ஆறுவருஷம் நியாயம்
விசாரித்தான்; பிற்பாடு கிலேயாத்தியனான ஈப்
தா மரித்து, கிலேயாத் பட்டணங்களில் அடக்
கம்பண்ணப்பட்டான்.
௮ அவனுக்குப்பிறகு பெத்லேகேம் ஊரானாகிய
௯ எப்சான்,இஸ்ரவேலை நியாயம்விசாரித்தான்.–அ
வனுக்கு முப்பது குமாரரும் முப்பது குமாரத்திக
ளும் இருந்தார்கள்;முப்பது குமாரத்திகளைப் புறத்
திலே விவாகம்பண்ணிக்கொடுத்து, தன் குமார
ருக்கு முப்பது பெண்களைப் புறத்திலே கொண்
டான்; அவன் இஸ்ரவேலை ஏழுவருஷம் நியா
௰ யம் விசாரித்தான்.—பிற்பாடு எப்சான் மரித்து,
பெத்லேகேமிலே அடக்கம்பண்ணப்பட்டான்.
௰௧ அவனுக்குப்பிறகு செபுலோனனான ஏலோன்
இஸ்ரவேலை நியாயம்விசாரித்தான்; பத்துவரு
௰௨ ஷம் இஸ்ரவேலை நியாயம்விசாரித்தான். — பிற்
பாடு செபுலோனனான ஏலோன் மரித்து, செபு
லோன் தேசமான ஆயலோனூரில் அடக்கம்ப
ண்ணப்பட்டான்.
௰௩ அவனுக்குப்பிறகு இல்லேலின் குமாரனாகிய
அப்தோனென்ற பிரத்தோனியன் இஸ்ரவேலை
௰௪ நியாயம்விசாரித்தான்.–அவனுக்கு எழுபது கழு
தைக்குட்டிகளின்மேலேறும் நாற்பது குமாரரும்
முப்பது பேரப்பிள்ளைகளும் இருந்தார்கள்;
அவன் இஸ்ரவேலை எட்டுவருஷம் நியாயம்
௰௫ விசாரித்தான்.—பிற்பாடு இல்லேலின் குமாரனா
கிய அப்தோன் மரித்து, எப்பிராயீம் தேசத்தில்
அமலேக்கியர் மலையிலிருக்கிற பிரத்தோனிலே
அடக்கம்பண்ணப்பட்டான்.

## ௰௩. அதிகாரம்.

௧. பெலிஸ்தியர் கையில் இஸ்ரவேலரை ஒப்புக்கொடுத்தது. ௨. தேவதூதன் மனோவாவின் பெண்சாதிக்கும், ௮. மனோவாவுக்கும் தரிசனையானது. ௰௯. மனோவாவின்பலி எரிந்ததினால், அவன் தேவதூதனை அறிந்தது. ௨௪. சிம்சோன் பிறந்தது.

௧ இஸ்ரவேல் புத்திரர் அப்புறம் கர்த்தரின் பார்
வைக்குப் பொல்லாப்பானதைச் செய்தபடியி
னாலே, கர்த்தர் அவர்களை நாற்பதுவருஷம்மட்
டும் பெலிஸ்தியர்கையில் ஒப்புக்கொடுத்தார்.
ஆனால் தானியரின் வம்சத்தானாகிய சோரா ௨
ஊரானான ஒரு மனுஷன் இருந்தான்; அவன்
பேர் மனோவா; அவன் பெண்சாதி பிள்ளை பெ
றாத மலடியாயிருந்தாள்.—கர்த்தருடைய தூதர் ௩
அந்த ஸ்திரிக்குத் தரிசனையாகி, அவளோடே
சொன்னதாவது: இதோ பிள்ளைபெறாத மலடி
யான நீ கெர்ப்பம்தரித்து, ஒரு குமாரனைப்பெறு
வாய்.–இப்போதும் நீ திராட்சப்பழ இரசமும் லா ௪
கிரியுள்ள பானமும் குடியாதபடிக்கும், தீட்டா
னது ஒன்றும் புசியாதபடிக்கும், எச்சரிக்கை
யாயிருப்பாயாக.—ஏனெனில் இதோ நீ கெர்ப் ௫
பம்தரித்து, ஒரு குமாரனைப் பெறுவாய்; [1]அவன்
தலையின்மேல் சவரகன் கத்திபடுவதில்லை; ஏனெ
ன்றால் பிறந்ததுமுதல்கொண்டு அந்தப் பிள்ளை
பராபரனுடைய நசரேயனாயிருப்பான்; அவன்
இஸ்ரவேலைப் பெலிஸ்தியரின் கைக்கு நீங்கலா
க்கி இரட்சிக்கத் துவக்குவானென்றார்.
அப்போது அந்தப் பெண்சாதி வந்து தன் புரு ௬
ஷனுக்குச் சொன்னதாவது: பராபரனுடைய
மனுஷன் என்னண்டைக்கு வந்தார்; அவரு
டைய உருவம் பராபரனுடைய தூதரின் உரு
வைப்போல மகா பயங்கரமாயிருந்தது; அவர்
எவ்விடத்தாரென்று நான் அவரைக் கேட்டதில்
லை;அவர் தம்முடைய நாமத்தை எனக்குஅறிவித்
ததுமில்லை.—அவர் எனக்குச் சொன்னதாவது: ௭
இதோ நீ கெர்ப்பம்தரித்து ஒரு குமாரனைப் பெ
றுவாய்; இப்போதும் நீ திராட்சப்பழஇரசமும்
லாகிரியுள்ள பானமும் குடியாமலும், தீட்டான
து ஒன்றும் புசியாமலுமிருப்பாயாக; ஏனெனில்
அந்தப் பிள்ளை பிறந்ததுமுதல்கொண்டு தன் மர
ணநாள்மட்டும் பராபரனுடைய நசரேயனாயி
ருப்பானென்றாரென்று சொன்னாள்.
அப்பொழுது மனோவா கர்த்தரை விண்ணப் ௮
பம்பண்ணி, ஆ என் ஆண்டவரே, பராபரனாகிய
தேவரீர் அனுப்பின பராபரனுடைய மனுஷன்
இன்னம் ஒருவிசை எங்களண்டைக்கு வந்து,
பிறக்கும் அந்தப் பிள்ளைக்காக நாங்கள் செய்ய
வேண்டியதை எங்களுக்குப் போதிப்பாராக
வென்று வேண்டிக்கொண்டான். — பராபரன் ௯
மனோவாவின் சத்தத்தைக் கேட்டார்;அந்தஸ்திரி
வெளியிலே உளுக்காந்திருக்கிறபோது பராபர
னுடைய தூதர் திரும்ப அவளண்டைக்கு வந்
தார்; அப்போது அவள் புருஷனாகிய மனோவா
அவளண்டையில் இருந்ததில்லை. — ஆகையால் ௰
அவள் சீக்கிரமாய் ஓடித் தன் புருஷனுக்கு அறி
வித்து, அவனுடனே, இதோ அன்று என்னண்
டைவந்தவர் எனக்குத்தரிசனையானாரென்றாள்.–
அப்போது மனோவா எழுந்திருந்து, தன் பெண் ௰௧
சாதியின் பின்னாலே போய், அவரண்டைக்கு
வந்து, நீர் இந்த ஸ்திரியோடே பேசினவரோ
என்று அவரைக் கேட்டான்; அவர் நான்தானெ

1 ௪ மோ. ௬. ௫.

௰௨ ன்றார்—அப்போது மனோவா, நீர் சொன்னகா
ரியம் வரும்போது, அந்தப் பிள்ளையின் வண்மை
யும், அதின் செய்கையும், என்னவென்று கேட்
௰௩ டான்.—கர்த்தருடைய தூதர் மனோவாவோடே
சொன்னதாவது: நான் ஸ்திரியோடே சொன்ன
யாவுக்கும், அவள் எச்சரிக்கையாயிருந்து,—
௰௪ திராட்சச்செடியிலே, பிறக்கிறதொன்றும் சாப்
பிடாமலும், திராட்சப்பழஇரசமும் லாகிரியுள்ள
பானமும் குடியாமலும், தீட்டானதொன்றும்
புசியாமலும், நான் அவளுக்குக் கற்பித்ததை
யெல்லாம் கைக்கொள்ளக்கடவளென்றார்.
௰௫ அப்போது மனோவா கர்த்தருடைய தூதரோ
டே, நாங்கள் ஒருவெள்ளாட்டுக்குட்டியை உமக்
குச் சமைத்துக்கொண்டுவருமட்டும் தரித்திரு
௰௬ மென்றான்.—கர்த்தருடைய தூதர் மனோவா
வுடனே, நீ என்னை இருக்கச்சொன்னாலும் நான்
உன் உணவைப் புசியேன்; நீ சர்வாங்கதகனபலி
இட்டாயேயானால், அதை நீ கர்த்தருக்குப் பலி
யாய்ச் செலுத்துவாயாகவென்றார்; ஏனென்றால்
அவர் கர்த்தருடைய தூதனானவர் என்கிறதை
௰௭ மனோவா அறியாதிருந்தான்.—அப்போது மனோ
வா நீர் சொன்னகாரியம் வரும்போது, நாங்கள்
உம்மைக் கனம்பண்ண, உம்முடைய நாமம் என்
னவென்று கர்த்தருடைய தூதனைக் கேட்டான்.-
௰௮ கர்த்தருடைய தூதனோவென்றால் அவனுடனே,
என்னுடைய நாமம் என்னவென்று நீ இப்ப
டிக் கேட்பானேன்? அது அதிசயமானவரென்ப
௰௯ தென்று சொன்னார்.—மனோவா போய், வெள்
ளாட்டுக்குட்டியையும் காணிக்கையையும் கொ
ண்டுவந்து, அதைக் கல்மலையின்மேலே கர்த்த
ருக்குச் செலுத்தினான்; அப்போது மனோவாவும்
அவன் பெண்சாதியும் பார்க்கையில், அதிசய
௨௰ மான நடத்தையைக் காண்பித்தார்.—சம்பவித்த
தேதென்றால் அக்கினிச்சுவாலை பலிபீடத்திலி
ருந்து வானத்திற்கு நேராக எழும்புகையில், கர்த்
தருடைய தூதர் பலிபீடத்தின் சுவாலையிலே
ஏறிப்போனார்; அதை மனோவாவும் அவன்
பெண்சாதியும் கண்டு, முகம்குப்புறத் தரையிலே
௨௧ விழுந்தார்கள்—அப்புறம் கர்த்தருடைய தூதர்
மனோவாவுக்கும் அவன்பெண்சாதிக்கும் காணப்
பட்டதில்லை; அப்போது அவர் கர்த்தருடைய
தூதரென்பதை மனோவா அறிந்துகொண்டு,—
௨௨ தன் பெண்சாதியோடே, நாம் பராபரனைக் கண்
௨௩ டதினாலே சாவவே சாவோமென்றான்.-ஆனால்
அவன் பெண்சாதி அவனுடனே, கர்த்தர் நம்
மைக் கொன்றுபோடச் சித்தமாயிருந்தாரானால்,
அவர் நம்முடைய கையிலே சர்வாங்கதகனபலி
யையும் காணிக்கையையும் வாங்குவதுமில்லை;
இவைகளையெல்லாம் நமக்குக் காண்பிப்பதுமி
ல்லை; இப்போது அவர் செய்தபடி இவைகளை
நமக்குக் கேட்கப்பண்ணுவதுமில்லையென்றாள்.
௨௪ பிற்பாடு அந்தப் பெண்சாதி ஒரு குமாரனைப்
பெற்று, அவனுக்குச் சிம்சோனென்று பேரிட்
டாள்; அந்தப் பிள்ளை வளர்ந்தது; கர்த்தர் அவனை
௨௫ ஆசீர்வதித்துக்கொண்டிருந்தார்.—சோருவுக்கும்
எஸ்தவோலுக்கும் நடுவேயிருந்த தாணின் பாள
யத்திலிருக்கிற அவனைக் கர்த்தருடைய ஆவியா
னவர் ஏவத்துவக்கினார்.

## ௰௪. அதிகாரம்.

௧. பெலிஸ்தியரில் ஒரு பெண்ணை விவாகம்செய்யச் சிம்சோன் இச்சித்தது. ௫. அவன் பிரயாணத்தில் ஒரு சிங்கத்தைக் கொன்றது. ௮. அதின் சவத்தில் தேனை அவன் இரண்டாம் பிரயாணத்தில் கண்டது. ௰. சிம்சோனின் விவாகவிருந்து: ௰௨. அவனுடைய விடுகதை அவன் பெண்சாதியினால் வெளிப்பட்டது. ௰௯. அவன் பெலிஸ்தியரில் முப்பதுபேரைக் கொன்றது. ௨௰. அவனுடைய பெண்சாதி அவன் தோழனுக்குக் கொடுக்கப்பட்டது.

சிம்சோன் திம்னாத்திற்கு இறங்கிப்போய், திம் ௧
னாத்திலே பெலிஸ்தியரின் குமாரத்திகளில் ஒரு
பெண்ணைக் கண்டு,—திரும்ப வந்தேறி, தகப்ப ௨
னுக்கும் தன் தாய்க்கும் அறிவித்து, திம்னாத்திலே
பெலிஸ்தியரின் குமாரத்திகளில் ஒரு பெண்
ணைக் கண்டேன்; இப்போதும் அவளை எனக்குக்
கொள்ளுங்களென்றான்.—அப்போது அவன் ௩
தகப்பனும் அவன் தாயும் அவனுடனே, நீபோய்,
சுன்னத்தில்லாத பெலிஸ்தியரில் ஒரு பெண்
ணைக் கொள்ளுகிறதற்கு, உன் சகோதரரின் குமா
ரத்திகளிலும், எங்கள் சனமனைத்திலும், பெண்
ணில்லையோவென்றார்கள்; ஆனால் சிம்சோன்
தன் தகப்பனோடே, அவளை எனக்குக் கொள்
ளும்; ஏனெனில் அவள் என் கண்களுக்கு ஏற்
றவளென்றான்.—இது கர்த்தரின் செயலென்கி ௪
றதை அவன் தகப்பனும் அவன் தாயும் அறியா
திருந்தார்கள்; ஏனெனில், அவன் பெலிஸ்திய
ரைக் குற்றம்பிடிக்கும் முகாந்தரத்தைத் தேடி
னான்; அதேனென்றால் அக்காலத்திலே பெலிஸ்
தியர் இஸ்ரவேலை ஆண்டார்கள்.—அப்படியே ௫
சிம்சோனும் அவன் தகப்பனும் தாயும் திம்னாத்
திற்கு இறங்கிப்போகப்போனார்கள்; அவர்கள்
திம்னாத்தூர் திராட்சத்தோட்டங்கள்மட்டும் வந்
தபோது, இதோ கெர்ச்சிக்கிற வாலசிங்கம் அவ
னுக்கு எதிராக வந்தது.—அப்போது கர்த்தரு ௬
டைய ஆவி அவன்மேல் இறங்கினதினாலே, அ
வன் தன் கையில் ஒன்றும் இல்லாதிருக்கையில்
அதை ஒரு ஆட்டுக்குட்டியைக் கிழித்துப்போடு
கிறதுபோலக் கிழித்துப்போட்டான்; ஆனால்
தான் செய்ததை அவன் தன் தகப்பன் தாய்க்கு
அறிவிக்காதிருந்து,—இறங்கிப்போய், பெண் ௭
ணோடே பேசினான்; அவள் சிம்சோனின் கண்
களுக்கு ஏற்றிருந்தாள்.

சில நாளைக்குப்பிற்பாடு, அவன் அவளை விவா ௮
கம்பண்ணத் திரும்பிவந்து, சிங்கத்தின் உடலைப்
பார்க்கிறதற்கு வழிக்கப்புறம் போனான்; இதோ
சிங்கத்தின் உடலுக்குள்ளே தேன் பூச்சியின்
ஏராளமும் தேனும் இருந்தது.—அவன் இதைத் ௯
தன் கைகளில் எடுத்துக்கொண்டு, நடந்துவந்து,
சாப்பிட்டு, தன் தாய்தகப்பனண்டைக்குப்
போய், அவர்களுக்கும் கொடுத்தான்; அவர்களும்
சாப்பிட்டார்கள்; ஆனால் சிங்கத்தின் உடலிலே
அந்தத் தேனைத் தான் எடுத்ததை அவர்களுக்கு
அறிவிக்காதிருந்தான்.

௰ அவன் தகப்பன் அந்தப் பெண் இருக்கிற இ
டத்தில் இறங்கிவந்தபோது, சிம்சோன் அங்கே
விருந்துகொடுத்தான்; ஏனெனில் வாலிபர் அந்
௰௧ தப்பிரகாரமாய்ச் செய்வார்கள்.—சம்பவித்ததே
தெனில் அவர்கள் அவனைக் கண்டபோது, அவ
னோடேகூட இருக்க முப்பது தோழரை அவ
௰௨ னுக்குக் கொடுத்தார்கள்.—அவர்களோடே சிம்
சோன் சொன்னது: ஒரு விடுகதையை உங்களுக்
குச் சொல்லுவேன்; அதை நீங்கள் விருந்துண்
கிற ஏழு நாளிலே கண்டுபிடித்து எனக்கு விடு
வித்தால், நான் உங்களுக்கு முப்பது மெல்லிய
புடவைகளையும் முப்பது மாற்றுவஸ்திரங்களை
௰௩ யும் கொடுப்பேன்.—அதை எனக்கு விடுவிக்க
மாட்டாதேபோனீர்களானால், நீங்கள் எனக்கு
முப்பது மெல்லியபுடவைகளையும் முப்பது
மாற்றுவஸ்திரங்களையும் கொடுக்கவேண்டுமென்
றான்; அவர்கள் அவனுடனே, உன் விடுகதை
யை நீ சொல்; நாங்கள் அதைக் கேட்கட்டு
௰௪ மென்றார்கள்.—அப்போது அவன் இவர்களோ
டே, பட்சித்துப்போடுகிறதிலிருந்து போசன
மும், பலத்திருக்கிறதிலிருந்து தித்திப்பும் வந்தது
என்றான்; அந்த விடுகதையை அவர்கள் மூன்று
௰௫ நாள்மட்டும் விடுவிக்கக்கூடாதேபோயிற்று.-ஏ
ழாம் நாளிலோவெனில் அவர்கள் சிம்சோனின்
பெண்சாதியோடே, நாங்கள் உன்னையும் உன்
தகப்பன் வீட்டையும் அக்கினியால் சுட்டெரிக்
காதபடிக்கு, நீ உன் புருஷனை அந்த விடுகதை
யை எங்களுக்கு விடுவிக்கும்படிக்கு, நயம்ப
ண்ணு; எங்களுடையதைத் தக்குவித்துக்கொள்ள
௰௬ அல்லவோ அழைத்தீர்களென்றார்கள். — அப்
போது சிம்சோனின் பெண்சாதி அவனுக்குமுன்
பாக அழுது, நீ என்னைச் சிநேகிக்காமல் என்
னைப் பகைக்கிறாயே, என் சனப்புத்திரருக்கு
ஒரு விடுகதையைச் சொல்லி, அதை எனக்குத்
தானே விடுவிக்காதே போனாயென்றாள்; அதற்கு
அவன் அவளுடனே, இதோ என் தாய் தகப்ப
னுக்கு அதை நான் விடுவித்ததில்லை; உனக்கு
௰௭ அதை விடுவிப்பேனோவென்றான். — அவர்கள்
விருந்துண்கிற ஏழுநாளும் அவன் முன்பாக
அழுதுகொண்டிருந்தாள்; ஏழாம்நாளிலோவென்
றால் அவள் அவனை அலட்டிக்கொண்டிருக்
கிறதினாலே, அவளுக்கு விடுவித்தான்; அப்
போது அவள் தன் சனப்புத்திரருக்கு அந்த விடு
௰௮ கதையை விடுவித்தாள்.—ஆகையால் ஏழாம்நா
ளிலே பொழுது புகுதாததற்குமுன்னே, அந்த
ஊர் மனுஷர் அவனுடனே, தேனைப்பார்க்கிலும்
தித்திப்பானதென்ன, சிங்கத்தைப்பார்க்கிலும்
பலமானதும் என்னவென்றார்கள்; அவன் அவர்
களோடே, நீங்கள் என் கிடாரியால் உழாதிருந்
தீர்களானால், என்னுடைய விடுகதையைக் கண்
௰௯ டுபிடிப்பதில்லையென்றான்.-கர்த்தருடைய ஆவி
அவன்மேல் இறங்கினதினாலே, அவன் அஸ்க
லோனுக்கு இறங்கிப்போய், அவ்வூராரில் முப்
பதுபேரைக் கொன்று, உரிந்துகொண்டுவந்து,
விடுகதையை விடுவித்தவர்களுக்கு அந்த மாற்று
வஸ்திரங்களைக் கொடுத்து, கோபம்மூண்டவ
னாய்ப் புறப்பட்டு, தன் தகப்பன் வீட்டுக்குப்
போயேறினான்.-சிம்சோனின் பெண்சாதியோ ௨௰
வென்றால், அவனோடேகூட இருந்த அவன்
தோழனுக்குக் கொடுக்கப்பட்டாள்.

## ௰௫. அதிகாரம்.

௧. சிம்சோன் பெண்சாதியைக் கைக்கொள்ளத் தடைபட்டது. ௩. அவன் பெலிஸ்தியருடைய தானியத்தை நரிவாலின் பந்தத்தால் சுட்டெரித்தது. ௬. அவனுடைய பெண்சாதியும், அவளுடைய தகப்பனும், பெலிஸ்தியரினால் சுட்டெரிக்கப்பட்டது ௭. பெலிஸ்தியர் இறக்கும்படி இடுப்பையும், தொடையையும், சிம்சோன் முறியடித்தது. ௯. அவனைப் பிடித்து, யூதா மனிதர் பெலிஸ்தியருக்கு ஒப்புவித்தது. ௰௪. அவர்களைத் தாடை எலும்பினால் சிம்சோன் கொன்றது. ௰௮. பராபரன் லேகியிலிருந்த கூப்பிட்டவனின் ஊற்றென்ற பள்ளத்தைப் பிளக்கப்பண்ணினது.

சிலநாள் சென்றபிற்பாடு சம்பவித்ததேதென் ௧
றால், சிம்சோன் கோதுமை அறுக்கிற நாள்களி
லே, தன் பெண்சாதியைக் கண்டு சந்திக்க, ஒரு
வெள்ளாட்டுக்குட்டியைக் கொண்டுவந்து, நான்
என் பெண்சாதியண்டைக்கு அறைவீட்டிற்குள்
பிரவேசிக்கட்டுமென்றான்; அவள் தகப்பனோ
வென்றால், அவனை உள்பிரவேசிக்க ஒட்டா
மல்,—நீ அவளைப் பகைக்கவே பகைத்துவிட் ௨
டாயென்று, நான் அவளை உன் தோழனுக்குக்
கொடுத்தேன்; அவள் தங்கை அவளைப்பார்க்கி
லும் அழகானவளல்லவோ, இவள் அவளுக்குப்
பதிலாக உனக்கு இருக்கட்டுமென்றும் சொன்
னான்.
அப்போது சிம்சோன், நான் பெலிஸ்தியருக் ௩
குப் பொல்லாப்புச் செய்தால், இனி என்மேலே
குற்றமில்லையென்று அவர்களுக்குச் சொல்லி,—
புறப்பட்டுப்போய், முந்நூறு நுழைநரிகளைப் ௪
பிடித்து, பந்தங்களை எடுத்து, வாலோடே வால்
சேர்த்துப் பிடித்து, இரண்டு வால்கள் நடுவே
ஒவ்வொரு பந்தத்தைவைத்துக் கட்டி,—பந்தங் ௫
களை அக்கினியால் கொளுத்தி, பெலிஸ்தியரின்
வெள்ளாண்மையிலே அவைகளை ஓடவிட்டு,
போர்களையும் வெள்ளாண்மையையும் திராட்சத்
தோட்டங்களையும்ஒலீவத்தோப்புகளையும்கூடச்
சுட்டெரித்துவிட்டான். — அதைச் செய்தவன் ௬
யாரென்று பெலிஸ்தியர் கேட்கிறபோது, திம்
னாத்தானுடைய மருமகனாகிய சிம்சோன்தானே,
ஏனெனில் அவன் இவன் பெண்சாதியை எடுத்
து, அவளை இவனுடைய தோழனுக்குக் கொடுத்
தானென்றார்கள்; ஆகையால் பெலிஸ்தியர் போ
யேறி, அவளையும் அவள் தகப்பனையும் அக்கினி
யாலே சுட்டுப்போட்டார்கள்.
அப்போது சிம்சோன் அவர்களுக்கு, நீங்கள் ௭
இப்படிச் செய்யலாமோ? நான் உங்கள் கையி
லே பழிவாங்கினாலொழிய இளைப்பாறேனென்
றுசொல்லி,—அவர்களை மிகவும் முறியடிக்குத ௮
லாக, தொடைகளையும் இடுப்புகளையும் முறித்து,
மடங்கடித்து, பிற்பாடு போய், ஏத்தாம் ஊர்க்
கல்மலைச் சந்திலே குடியிறங்கினான்.
அப்போது பெலிஸ்தியர் வந்தேறி, யூதாவிலே ௯
பாளயம்போட்டு, லேகியென்ற வெளியிலே

௰ இறங்கினார்கள்.—நீங்கள் எங்கள்மேல் வந்தேறின
தென்னவென்று யூதா மனுஷர் கேட்டதற்கு,
அவர்கள் சிம்சோன் எங்களுக்குச் செய்தது
போல, நாங்கள் அவனுக்குச் செய்யும்படிக்கு
அவனைக் கட்டுகிறதற்காக வந்தேறினோமென்றா
௰௧ ர்கள்.—அப்போது யூதாவிலே மூவாயிரம்பேர்
ஏத்தாமூர்க் கல்மலைச் சந்திற்குப் போயிறங்கி,
பெலிஸ்தியர் நம்மை ஆளுகிறார்களென்கிறதை
அறியாயோ? பின்னை ஏன் எங்களுக்கு இப்ப
டிப்பண்ணினாயென்று சிம்சோனுக்குச் சொன்
னார்கள்; அதற்கு அவன், அவர்கள் எனக்குச்
செய்தபடியே அவர்களுக்குச் சரிக்கட்டினே
௰௨ னென்றான்.—அப்போது அவர்கள் உன்னைக்கட்
டி, பெலிஸ்தியர் கையில் ஒப்புக்கொடுக்க வந்தி
றங்கினோமென்று அவனுக்குச் சொன்னார்கள்;
அப்போது சிம்சோன் அவர்களுடனே, என்மே
ல் நீங்கள் தானே விழுகிறதில்லையென்று எனக்
௰௩ கு ஆணையிடுங்களென்றான்.—அவர்கள் அவனு
டனே, நாங்கள் உன்னைக் கட்டவே கட்டி, அ
வர்கள் கையில் ஒப்புக்கொடுப்போமே அல்லா
மல், உன்னைக் கொன்றுபோடுவதில்லையென்று
சொல்லி, இரண்டு புதுக்கயிறுகளாலே அவனைக்
கட்டி, கல்மலையிலிருந்து கொண்டுபோனார்கள்.
௰௪ அவன் லேகிமட்டுக்கும் வந்துசேருகையில்,
பெலிஸ்தியர் அவனுக்கு எதிராக ஆர்ப்பரித்தார்
கள்; ஆனால் கர்த்தருடைய ஆவி அவன்மேல் இற
ங்கினதினாலே, அவன் கைப்பட்டைகளில் கட்
டியிருந்த கயிறுகள் நெருப்புப்பட்ட நூல்களைப்
போலாகி, அவன் கட்டுகள் அவன் கைகளை
௰௫ விட்டு உருவிப்போயின.—அவன் ஒரு கழுதை
யின் பச்சையான தாடை எலும்பைக்கண்டு, தன்
கையை நீட்டி அதைப் பிடித்து அதினாலே ஆயி
௰௬ ரம்பேரைக் கொன்றுபோட்டான்.—அப்போது
சிம்சோன், கழுதையின் தாடை எலும்பினாலே,
குவியல் குவியலாகப் பட்டுக்கிடக்கிறார்கள்;
கழுதையின் தாடைஎலும்பினால், ஆயிரம்பேரை
௰௭ மடங்கடித்தேனென்றான். — அப்படிச் சொல்
லித் தீர்ந்தபோது, தன் கையில் இருந்த தாடை
எலும்பை எறிந்துவிட்டு, அவ்விடத்திற்கு ராமாத்
லேகியென்று பேரிட்டான்.
௰௮ அவன் மெத்தவும் தாகத்தவனமாகி, கர்த்தரை
நோக்கிக் கூப்பிட்டு, தேவரீர் உம்முடைய அடி
யான் கையினால் இந்தப் பெரிய இரட்சிப்பைக்
கட்டளையிட்டிருக்கையில், இப்போது நான் தா
கத்தாலே செத்து, சுன்னத்தில்லாதவர்கள் கையி
௰௯ லே விழுவேனோவென்றான்.—அப்போது பரா
பரன் லேகியிலிருக்கிற பள்ளத்தைப் பிளக்கப்
பண்ணினார்; அதிலிருந்து தண்ணீர் ஓடிவந்தது;
அவன் குடிக்கிறபோது அவன் ஆவி திரும்ப
வந்து உயிர்ப்பிக்கப்பட்டான்; ஆனபடியினாலே
இந்நாள்வரைக்கும், லேகியிலிருக்கிற நீரூற்
றிற்கு, அவன் கூப்பிட்டவனின் ஊற்றென்று
பேரிட்டான்.
௨௰ அவன் பெலிஸ்தியரின் நாள்களில் இஸ்ர
வேலை இருபதுவருஷம் நியாயம்விசாரித்தான்.

## ௰௬. அதிகாரம்.

௧. சிம்சோன் காத்சாவில் அடைக்கப்பட்டு, வாசல் கதவுகளைப் பேர்த்துக் கொண்டு தப்பிப்போனது. ௪. தெலீலாள் என்பவள் பெலிஸ்தியர்கள் கையில் பணம் வாங்கிக்கொண்டு சிம்சோனை எத்தினது. ௬. அவன் அவளை மூன்றுதரம் மோசம்போக்கினது. ௰௯. அப்பால் அவனை அவள் மேற்கொண்டது. ௨௧. பெலிஸ்தியர் அவனைப் பிடித்து அவன் கண்ணைப் பிடுங்கினது. ௨௨. மறுபடியும் அவன் பலம் அடைந்து பெலிஸ்தியர் கூடியிருந்த வீட்டை விழச்செய்து தானும் செத்தது.

சிம்சோன் காத்சாவுக்குப் போய், அங்கே ஒரு ௧
சோரஸ்திரியைக் கண்டு, அவளிடத்திலே பிர
வேசித்தான்.—அப்போது சிம்சோன் இங்கே வந் ௨
தானென்று காத்சா ஊராருக்குச் சொல்லப்பட்
டது; அவர்கள் சுற்றிப்பார்த்து, இராவெல்லாம்
பட்டணவாசலில் அவனுக்குப் பதிவிருந்து
இராத்திரியெல்லாம் அமர்ந்திருந்து, நாம் விடி
யற்காலம்மட்டும் காத்திருந்து, அப்போது அவ
னைக் கொன்றுபோடுவோமென்றார்கள்.—ஆனால் ௩
சிம்சோன் பாதி இராத்திரிமட்டும் படுத்திருந்து,
பாதி இராத்திரியில் எழுந்திருந்து, பட்டண
வாசலின் கதவுகளையும் அதின் இரண்டு நிலைகளை
யும் பிடித்து, தாழ்ப்பாளோடேகூடப் பேர்த்து,
தன் தோள்களின்மேலே வைத்து, எப்பிரோனுக்
கு எதிரேயிருக்கிற மலையினுடைய கொடுமுடி
யின்மேலே சுமந்துகொண்டுபோனான்.
இதற்குப்பிற்பாடு சம்பவித்ததேதென்றால், ௪
அவன் சோரேக் ஆற்றண்டையில் இருக்கிற தெ
லீலாளென்று பேருள்ள ஒரு ஸ்திரியைச் சிநே
கித்துக்கொண்டிருந்தான்.—அவளண்டைக்குப் ௫
பெலிஸ்தியரின் அதிபதிகள் ஏறிவந்து, அவளு
டனே, நீ அவனை நயம்பண்ணி, அவனுடைய
பெரிய பெலன் எதினாலே உண்டாயிருக்கிறதெ
ன்றும், நாங்கள் அவனைக் கட்டிச் சிறுமைப்படுத்
துகிறதற்கு எதினாலே அவனை மேற்கொள்ளலா
மென்றும் பார்த்துக்கொள்; அப்போது நாங்கள்
அவரவர் ஆயிரத்தொருநூறு வெள்ளிக்காசை
உனக்குக் கொடுப்போமென்றார்கள்.
அப்படியே தெலீலாள் சிம்சோனுடனே, உன் ௬
னுடைய பெரிய பெலன் எதினாலே உண்டென்
றும், உன்னைச் சிறுமைப்படுத்த நீ எதினாலே கட்
டப்படலாமென்றும், நீ எனக்கு அறிவியென்
றாள்.—சிம்சோன் அவளுடனே, உலராமலிருக் ௭
கிற பச்சையான ஏழு நார்க்கயிறுகளாலே என்
னைக் கட்டினால், நான் பலட்சயமாகி, மற்றொரு
மனுஷனைப்போல இருப்பேனென்றான்.—அப் ௮
போது பெலிஸ்தியரின் அதிபதிகள் உலராதிருக்
கிற பச்சையான ஏழு அகணிக்கயிறுகளை அவ
ளிடத்திற்குக் கொண்டுவந்தார்கள்; அவைக
ளால் அவள் அவனைக் கட்டி,-பதிவிருக்கிறவர் ௯
களை அறைவீட்டிலே வைத்திருந்து, அவனுட
னே, சிம்சோனே பெலிஸ்தியர் உன்மேல் வருகி
றார்களென்றாள்; அப்போது ஒரு சணல்நூல்
புரிநெருப்பை முகருகையில் இற்றுப்போகிறது
போல, அவன் அந்த அகணிக்கயிறுகளை அறுத்
துவிட்டான்; அவன் பெலன் எதினாலே உண்
டென்று அறியப்படவில்லை.
அப்போது தெலீலாள் சிம்சோனுடனே, ௰

இதோ என்னைப் பரியாசம்பண்ணி, எனக்குப்
பொய்களைச் சொன்னாய்; இப்போதும் நீ எதினா
லே கட்டப்படலாமென்று எனக்கு அறிவியெ
௰௧ ன்றாள்.—அவன் அவளுடனே, ஒரு வேலையும்
செய்யப்படாதிருக்கிற புதுக்கயிறுகளால் என்
னைக் கட்டவே கட்டினால், நான் பலட்சயமாகி,
மற்றொரு மனுஷனைப்போல இருப்பேனென்
௰௨ றான்.—அப்போது தெலீலாள், புதுக்கயிறுகளை
வாங்கி, அவைகளால் அவனைக் கட்டி, அவனு
டனே, சிம்சோனே, பெலிஸ்தியர் உன்மேல்
வருகிறார்களென்றாள்; பதிவிருக்கிறவர்களும் அ
றைவீட்டிலிருந்தார்கள்; ஆனால் அவன் தன்
புயங்களில் இருக்கிற அவைகளை ஒரு நூலைப்
போல அறுத்துவிட்டான்.
௰௩ அப்போது தெலீலாள் சிம்சோனுடனே, இது
வரைக்கும் என்னைப் பரியாசம்பண்ணி, எனக்
குப் பொய்களைச் சொன்னாய்; நீ எதினாலே கட்
டப்படலாமென்று எனக்கு அறிவியென்றாள்;
அவன் அவளுடனே, நீ என் தலைமயிரின் ஏழு
கூந்தல்களை நெசவுநூல் பாவோடே பிணைத்து
௰௪ விட்டால் ஆகுமென்றான்.—அப்போது அவள்
அப்படிச் செய்து, அவைகளை ஆணியடித்துப்
போட்டு, அவனுடனே, சிம்சோனே பெலிஸ்தி
யர் உன்மேல் வருகிறார்களென்றாள்; அவன் தன்
நித்திரையை விட்டெழும்பி, நெசவிலே அடித்த
ஆணியையும் நூல்பாவையுங்கூடப் பிடுங்கி
விட்டுப்போனான்.
௰௫ அப்போது அவள் அவனுடனே, உன் இருத
யம் என்னோடே இராதிருக்கையில், உன்னைச்
சிநேகிக்கிறேனென்று எப்படிச் சொல்லுகிறாய்?
நீ இந்த மூன்றுவிசையும் என்னைப் பரியாசம்
பண்ணி, உன்னுடைய பெரிய பெலன் எதினா
லே உண்டென்கிறதை எனக்கு அறிவிக்காதே
௰௬ போனாயென்று சொல்லி,—இப்படி அவனைத்
தினந்தினம் தன் வார்த்தைகளினாலே நெருக்கி,
அலட்டிக்கொண்டிருக்கிறதினாலே, அவன் ஆத்
௰௭ துமா சாகத்தக்கதாய் விசனப்பட்டு,—தன் இருத
யத்தையெல்லாம் அவளுக்கு வெளிப்படுத்தி, ச
வரகன்கத்தி என் தலையின்மேலே பட்டதில்லை;
ஏனென்றால் நான் என் தாயின் கெர்ப்பத்தில்
பிறந்ததுமுதல் பராபரனுடைய நசரேயனா
வன்; என் தலை சிரைக்கப்பட்டால், என் பெலன்
என்னைவிட்டுப் போம்; அதினாலே நான் பலட்
சயமாகி, மற்ற எல்லா மனுஷரைப்போலும்
இருப்பேனென்று அவளுக்குச் சொன்னான்.
௰௮ அவன் தன் இருதயத்தையெல்லாம் தனக்கு
வெளிப்படுத்தினதைத் தெலீலாள் கண்டபோ
து, அவள் பெலிஸ்தியரின் அதிபதிகளை அழைத்
தனுப்பி, இந்தவிசை ஏறிவாருங்கள்; ஏனெனில்,
தன் இருதயத்தையெல்லாம் எனக்கு வெளிப்
படுத்தினானென்று சொல்லச்சொன்னாள்; அப்
போது பெலிஸ்தியரின் அதிபதிகள் அவளண்
டைக்கு ஏறிவந்து, வெள்ளிக்காசுகளைத் தங்கள்
௰௯ கையிலே கொண்டுவந்தார்கள்.—அவள் அவனைத்
தன் முழங்கால்களின்மேல் நித்திரைபோகப்
பண்ணி, ஒருவனை அழைத்து, அவன் தலைமயி
ரின் ஏழுகூந்தல்களையும் சிரைப்பித்து, அவனைச்
சிறுமைப்படுத்தத் துவக்கினாள்; அவன் பெலன்
அவனை விலகிப்போயிருந்தது.—அப்போது உ௰
அவள், சிம்சோனே, பெலிஸ்தியர் உன்மேல்
வருகிறார்களென்றதற்கு, அவன் தன் நித்திரை
விட்டு விழித்து, கர்த்தர் தன்னைவிட்டு விலகின
தை அறியாமல், எப்போதும்போல என்னை நீங்
கலாக்கிக்கொண்டு, பிறபாடு போவேனென்
றான்.—ஆனால் பெலிஸ்தியர் அவனைப் பிடித்து, உ௧
அவன் கண்களைப் பிடுங்கி, அவனைக் காத்சாவுக்
குக் கொண்டுபோய், அவனை இரண்டு வெண்
கல விலங்குபோட்டுக் கட்டினார்கள்; சிறைச்
சாலையிலே மாவரைத்துக்கொண்டிருந்தான்.
ஆனால் அவன் தலையின் மயிர் சிரைக்கப்பட்ட உ௨
பிறபாடு, திரும்ப முளைக்கத் துவக்கிற்று.—பெ உ௩
லிஸ்தியரின் அதிபதிகளோவென்றால், தங்கள்
தேவனாகிய தாகோனுக்கு ஒரு பெரிய பலிசெலு
த்தவும், சந்தோஷப்படவும் கூடிவந்து, நம்மு
டைய பகைஞனாகிய சிம்சோனை நம்முடைய
தேவன் நம்முடைய கையில் ஒப்புக்கொடுத்தா
னென்று சொல்லிக்கொண்டார்கள்.—சனம் அவ உ௪
னைக் காணும்போதும், தங்கள் தேவனைப் புகழ்ந்
தது; ஏனென்றால் நம்முடைய தேசத்தைப் பா
ழாக்கி, நம்மில் அநேகரைக் கொன்றுபோட்ட
நம்முடைய பகைஞனை நம்முடைய தேவன் நம
துகையில் ஒப்புக்கொடுத்தானென்று சொல்லிக்
கொண்டது.—இப்படி அவர்கள் மனமகிழ்ச்சியா உ௫
யிருக்கிறபோது, நமக்குமுன்பாக விளையாடும்ப
டிக்கு, சிம்சோனை அழைத்துக்கொண்டு வாருங்
களென்றார்கள்; அப்போது சிம்சோனைச் சிறைச்
சாலையிலிருந்து கொண்டுவந்தார்கள்; அவர்க
ளுக்குமுன்பாக விளையாடினான்; அவனைத் தூ
ண்களுக்கு நடுவே நிறுத்தினார்கள்.—சிம்சோ உ௬
னோவென்றால் தனக்குக் கைலாகு கொடுக்கிற
பிள்ளையாண்டானோடே, வீட்டைத் தாங்கியிரு
க்கிற தூண்களிலே நான் சாய்ந்துகொண்டிருக்
கும்படி அவைகளை நான் தடவட்டுமென்றான்.—
வீடோவென்றால் புருஷராலும் ஸ்திரிகளாலும் உ௭
நிறைந்திருந்தது; அங்கே பெலிஸ்தியரின் சகல
அதிபதிகளும், வீட்டின்மேல் ஏறக்குறைய
மூவாயிரம்பேராய்ச் சிம்சோன் விளையாடுகிற
தைப் பார்த்துக்கொண்டிருக்கிற புருஷரும் ஸ்தி
ரிகளும் இருந்தார்கள்.—அப்போது சிம்சோன் உ௮
கர்த்தரைநோக்கிக் கூப்பிட்டு, கர்த்தராகிய ஆண்
டவரே, நான் என் இரண்டு கண்களுக்காக இன்
னம் பெலிஸ்தியர் கையிலே பழிவாங்கும்படிக்
கு, இந்த ஒருவிசைமாத்திரம் என்னை நினைத்து,
பலப்படுத்தும் பராபரனே என்று சொல்லி,—
சிம்சோன் அந்த வீடுநிற்கிறதும், அதைத் தாங்கு உ௯
கிறதுமான இரண்டு நடுத்தூண்களில், ஒன்றைத்
தன் வலதுகையினாலும் மற்றதைத் தன் இடது
கையினாலும் பிடித்துக்கொண்டு,—என் சீவன் ௩௰
பெலிஸ்தியரோடேகூட மடியக்கடவதென்று
சொல்லி, உதைந்தசைத்தான்; அப்போது அந்த

வீடு அதில் இருந்த அதிபதிகளின்மேலும் எல்
லாச் சனத்தின்மேலும் விழுந்ததினாலே, அவன்
சாகும்போது கொன்றபேர்கள் அவன் உயிரோ
டிருக்கையில் கொன்றவர்களைப்பார்க்கிலும் அதி
கமாயிருந்தார்கள்.
௩௧ பிற்பாடு அவன் சகோதரரும், அவன் தகப்
பன் வீட்டாரனைவரும், இறங்கிப்போய், அவனை
எடுத்துக்கொண்டுவந்து, சோராவுக்கும் எஸ்தா
வோலுக்கும் நடுவே அவன் தகப்பனாகிய மனோ
வாவின் கல்லறையிலே அடக்கம்பண்ணினார்
கள்; அவன் இஸ்ரவேலை இருபதுவருஷம் நியா
யம் விசாரித்தான்.

## ௰௭. அதிகாரம்.

௧. மீகா என்பவன் திருடினதும் பின்பு கொடுத்துவிட்டதுமாகிய பணத்தை அவன் தாயார் விக்கிரகங்களாக வார்ப்பித்தது. ௫. அவைகளுக்கு அவன் உடுப்புகளைச் செய்தது ௯. அவன் லேவியனைத் தனக்கு ஆசாரியனாக வைத்துக்கொண்டது.

௧ எப்பிராயீமின் மலைத்தேசத்தானாகிய மிகா என்று
௨ பேருள்ள ஒரு மனுஷனிருந்தான்.—அவன் தன்
தாயுடனே, உனக்குக் களவுபோனதும் என்
காதுகள் கேட்க நீ சாபமிட்டுப் பேசிக்கொண்
டதுமான அந்த ஆயிரத்தொருநூறு வெள்ளிக்காசு
இதோ என்னிடமாயிருக்கின்றது; அதை எடுத்த
வன் நானென்றான்; அதற்கு அவன் தாய், என்
மகனே, நீ கர்த்தரால் ஆசீர்வதிக்கப்படுவாயாக
௩ என்றாள்.—அவன் அந்த ஆயிரத்தொருநூறு
வெள்ளிக்காசைத் தன் தாய்க்குத் திரும்பக் கொ
டுத்தபோது, அவள் வார்ப்பிக்கப்பட்ட ஒரு சுரூ
பத்தை உண்டுபண்ண, நான் என் கையிலிருந்த
இந்த வெள்ளியை என் மகனுக்காகக் கர்த்தருக்
கென்று நியமிக்கவே நியமித்தேன்; இப்போதும்
இதை உனக்குத் திரும்பக் கொடுக்கிறேனென்
௪ றாள்.—அவனோவென்றால் அந்த வெள்ளியைத்
தன் தாய்க்குத் திரும்பக் கொடுத்தான்; அப்
போது அவன் தாய் இருநூறு வெள்ளிக்காசை
எடுத்து, தட்டான் கையிலே கொடுத்தாள்; அவன்
அதினாலே வார்ப்பிக்கப்பட்ட ஒரு சுரூபத்தைப்
பண்ணினான்; அது அப்படியே மிகாவின் வீட்
௫ டிலிருந்தது.—சுவாமிக்கு நியமித்த அறை
வீடு மிகாவுக்கு உண்டானபடியினாலே, அவன்
ஒரு ஆசாரியசால்வையையும் விக்கிரகங்களையும்
உண்டுபண்ணி, தன் குமாரரில் ஒருவனுடைய
கையை நிரப்பினான்; இவன் அவனுக்கு ஆசாரி
௬ யனானான்.—அந்நாள்களில் இஸ்ரவேலிலே இரா
சாவில்லை, அவனவன் தன் தன் பார்வைக்குச்
சரிப்போனபடி செய்வான்.
௭ ஆனால் யூதாகோத்திரத்துப் பெத்லேகேம் ஊரா
னான லேவியனாகிய ஒரு பிள்ளையாண்டானிருந்
தான்; அவன் அங்கே பரதேசியாயிருந்தான்.—
௮ அந்த மனுஷன் எங்கேயாகிலும் பரதேசியாய்ப்
போய்த் தங்கும்படிக்கு, யூதாவிலுள்ள பெத்லே
கேம் ஊரைவிட்டுப் புறப்பட்டு, எப்பிராயீமின்
மலைத்தேசத்திலிருக்கிற மிகாவின் வீடுமட்டும்,
௯ அப்புறம் பயணம்போக வந்தான்.—எங்கே
இருந்து வந்தாயென்று மிகா அவனைக் கேட்ட
தற்கு, இவன் அவனுடனே, நான் யூதாவிலுள்ள
பெத்லேகேம் ஊரானாகிய லேவியன், எங்கே
யாகிலும் போய்த் தங்கப்போகிறேனென்றான்.—
அப்போது மிகா, நீ என்னிடத்திலிரு, நீ எனக் ௰
குத் தகப்பனும் ஆசாரியனுமாயிருப்பாய்; நான்
உனக்கு வருஷத்திலே பத்துவெள்ளிக்காசை
யும், உடுபுடவைகளையும், உன்னுடைய ஆகாரத்
தையும் கொடுப்பேனென்று அவனுக்குச் சொன்
னான்; அப்படியே லேவியன் உள்ளேபோய்,—
அவனிடத்தில் இருக்கச் சம்மதித்தான்; அந்தப் ௰௧
பிள்ளையாண்டான் அவனுக்கு அவன் குமார
ரில் ஒருவனைப்போலிருந்தான்.—அந்தப் பிள்ளை ௰௨
யாண்டானாகிய லேவியன் தனக்கு ஆசாரியனா
யிருக்கும்படிக்கு மிகா அவன் கையை நிரப்பி
னான்; அப்படியே மிகாவின் வீட்டிலிருந்தான்.—
அப்போது மிகா, எனக்கு ஒரு லேவியன் ஆசாரி ௰௩
யனானபடியினாலே, கர்த்தர் எனக்கு நன்மைசெய்
வாரென்கிறதை இப்போது அறிவேனென்று
சொன்னான்.

## ௰௮. அதிகாரம்.

௧. தாண் புத்திரர்கள் ஐந்துபேர்களைத் தங்களுக்காகத் தேசத்தைத் தேடும்படி அனுப்பினது. ௩. மிகாவின் வீட்டில் அவர்கள் லேவியனோடே பேசி, தங்கள் வழியிலே நடப்பட்டது. ௭. அவர்கள் லாயிசில் தேடி அனுகூலமான செய்தியைக் கொண்டுவந்தது. ௰௧. அத்தேசத்தைச் சண்டையில் பிடிக்க, ௬௱-பேர் அனுப்பப்பட்டது. ௰௪. அவர்கள் போகும் வழியில் மிகாவின் வீட்டுக்குள் பிரவேசித்தது. அவனுடைய ஆசாரியனையும், விக்கிரகங்களையும் கொண்டுவந்தது. ௨௭. லாயிச பட்டணத்தைப் பிடித்து. அதற்குத் தாண் என்று பெயரிட்டது. ௩௦. விக்கிர ஆராதனைக்குள்ப்பட்டுப் போனத்தானை ஆசாரியனாக ஏற்படுத்தினது.

இஸ்ரவேலிலே இராசாவில்லாத அந்நாள்களி ௧
லே தாண் கோத்திர மனுஷர் குடியிருக்கிறதற்கு,
தங்களுக்குச் சுதந்தரம் தேடினார்கள்; ஏனெனில்
அந்நாள்வரைக்கும் அவர்களுக்கு இஸ்ரவேல்
கோத்திரங்கள் நடுவே போந்த சுதந்தரம் கிடைத்
ததில்லை.—ஆகையால் ஒரு சீமையை உளவு ௨
பார்த்து ஆராய்கிறதற்காக, தாண் புத்திரர் தங்கள்
கோத்திரத்திலே பலத்த மனுஷராகிய ஐந்துபே
ரைத் தங்கள் எல்லைகளில் இருக்கிற சோராவி
லும் எஸ்தாவோலிலுமிருந்து அனுப்பி, நீங்கள்
போய், சீமையை ஆராயுங்களென்று அவர்களோ
டே சொன்னார்கள்; இவர்கள் எப்பிராயீம் மலைத்
தேசத்தில் இருக்கிற மிகாவின் வீடுமட்டும் வந்
து, அங்கே இராத்தங்கினார்கள்.—அவர்கள் மிகா ௩
வின் வீட்டண்டையில் இருக்கையில், லேவிய
னான பிள்ளையாண்டானின் சத்தத்தை அறிந்து,
அங்கே அவனண்டையில் தனித்துப்போய்,
உன்னை இங்கே அழைத்துவந்தவன் யார்? இவ்
விடத்தில் என்ன செய்கிறாய்? உனக்கு இங்கே
இருக்கிறதென்னவென்று அவனைக் கேட்டார்
கள்.—அவர்களோடே அவன், இன்ன இன்ன ௪
படி மிகா எனக்குச் செய்தான்; எனக்குச் சம்ப
ளம் பொருந்தினான்; அவனுக்கு ஆசாரியனா
னேன் என்றான்.—அப்போது அவர்கள் அவ ௫
னுக்கு, நாங்கள் போகிற எங்களுடைய வழி
செயமாமோ என்பதை அறிய, பராபரனைக் கே
ளென்றார்கள்.—அவர்களுக்கு அந்த ஆசாரியன், ௬

சமாதானத்தோடே போங்கள்; நீங்கள் போகிற
உங்கள் வழி கர்த்தருக்கு நேரானதென்றான்.
௭ அப்போது அந்த ஐந்துமனுஷர் போய், லாயி
சுக்கு வந்து, அதில் குடியிருக்கிற சனம் சீதோ
னியருடைய வாடிக்கையின்படியே, பயமில்
லாத அமரிக்கையும் சுகமுமாய் இருக்கிறதையும்,
தேசத்திலே துரைத்தன சுதந்தரமாய் ஆண்டு, யா
தொரு காறுபாறும் செய்கிறவர்கள் இல்லை என்
பதையும், அவர்கள் சீதோனியருக்குத் தூரமான
வர்கள் என்பதையும், அவர்களுக்கு ஒருவரோ
டும் கவைகாரியம் இல்லையென்பதையும்கண்டு,-
௮ சோராவிலும் எஸ்தாவோலிலும் இருக்கிற தங்
கள் சகோதரரண்டைக்கு வந்தார்கள்; நீங்கள்
கொண்டுவருகிற செய்தி என்னவென்று அவர்
௯ கள் சகோதரர் அவர்களைக் கேட்டதற்கு,—அவர்
கள் சொன்னதாவது: எழும்பி, அவர்கள்மேலே
போயேறுவோம் வாருங்கள்; ஏனெனில் அந்தத்
தேசத்தைப் பார்த்தோம்; இதோ மெத்தவும் நன்
றாயிருக்கிறது; நீங்கள் சும்மாயிருப்பீர்களோ?
அந்தத் தேசத்தைச் சுதந்தரித்துக்கொள்ளுகிறதற்
குப் புறப்பட்டுப்போக அசதியாயிராதேயுங்
௰ கள்.—நீங்கள் அங்கே வருகிறபோது, சுகமாய்க்
குடியிருக்கிற சனத்தண்டைக்கு வருவீர்கள்;
அந்தத் தேசம் விஸ்தாரமுமாயிருக்கின்றது; பரா
பரன் அதை உங்கள் கையில் ஒப்புக்கொடுத்
தார்; அது பூமியிலுள்ள சகலமும் தாழ்ச்சியில்
லாமலுமிருக்கிற ஸ்தலமென்றார்கள்.
௰௧ அப்போது சோராவிலும் எஸ்தாவோலிலு
மிருக்கிற தாண் கோத்திரத்தாரில் அறுநூறுபேர்
ஆயுதப்பாடானவர்களாய் அங்கேயிருந்து புறப்
௰௨ பட்டுப்போய்,—யூதாவிலிருக்கிற கீரியாத்யாரீ
மிலே பாளயமிறங்கினார்கள்; ஆனபடியால் இ
தோ கீரியாத்யாரீமின் பின்னாலே இருக்கிற அவ்
விடம் இந்நாள்வரைக்கும் தாணியரின் பாளய
௰௩ மென்னப்படும் — அங்கேயிருந்து எப்பிராயீம்
மலைகளுக்குப் போய், மிகாவின் வீடமட்டும் வந்
௰௪ தார்கள்.—அப்போது லாயிசின் சீமையை உள
வுபார்க்கப் போய்வந்த ஐந்து மனுஷர் தங்கள்
சகோதரருடனே, இந்த வீடுகளில் ஆசாரியச்
சால்வையும் விக்கிரகங்களும் வெட்டப்பட்ட
சுரூபமும் வார்ப்பிக்கப்பட்ட சுரூபமும் இருக்
கின்றதென்று அறியீர்களோ; இப்போதும் நீங்
கள் செய்யத்தக்கதேதென்று பார்த்துக்கொள்ளுங்
௰௫ களென்றார்கள்.—அப்போது அவ்விடத்திற்குத்
திரும்பி, மிகாவின் வீட்டிலிருக்கிற லேவியனான
பிள்ளையாண்டானின் வீட்டிலே வந்து, அவ
௰௬ னைச் சுகசெய்தி கேட்டார்கள்.-ஆயுதப்பாடான
தாண் புத்திரராகிய அறுநூறுபேரோவெனில்,
௰௭ வாசல்படியிலே நின்றார்கள்.—தேசத்தை உளவு
பார்க்கப் போய்வந்த அந்த ஐந்து மனுஷர் உள்
பிரவேசித்து, ஆசாரியனும் யுத்த ஆயுதப்பாடான
அறுநூறுபேரும் வாசல்படியிலே நிற்கையில்,
வெட்டப்பட்ட சுரூபத்தையும், ஆசாரிய சால்
வையையும், விக்கிரகங்களையும், வார்ப்பிக்கப்
பட்ட சுரூபத்தையும், எடுத்துக்கொண்டு வந்தார்
கள்.—அவர்கள் மிகாவின் வீட்டிற்குள் பிரவே ௰௮
சித்து, வெட்டப்பட்ட சுரூபத்தையும், ஆசாரிய
சால்வையையும், வார்ப்பிக்கப்பட்ட விக்கிரகங்
களையும் சுரூபத்தையும் எடுத்துக்கொண்டு வரு
கிறபோது, நீங்கள் செய்கிறதென்னவென்று
ஆசாரியன் அவர்களைக் கேட்டான்.—அவர்கள் ௰௯
அவனுடனே, நீ பேசாமல், உன் வாயைமூடி,
எங்களோடேகூடவந்து எங்களுக்குத் தகப்ப
னும் ஆசாரியனுமாயிரு; நீ ஒரே ஒருவன் வீட்
டுக்கு ஆசாரியனாயிருக்கின்றது நல்லதோ? இஸ்ர
வேலில் ஒரு கோத்திரத்திற்கும் வம்சத்திற்கும்
ஆசாரியனாயிருக்கின்றது நல்லதோ, என்றார்
கள்.—அப்போது ஆசாரியன் மனது இதமியப் ௨௰
பட்டு, அவன் ஆசாரியச்சால்வையையும் விக்கி
ரகங்களையும் சுரூபத்தையும் எடுத்துக்கொண்டு,
சனத்தின் நடுவே வந்தான்.—அவர்கள் திரும்பிக் ௨௰௧
கொண்டு போய், பிள்ளைகளையும், ஆடுமாடுகளை
யும், தட்டுமுட்டுகளையும், தங்களுக்குமுன்னே
போகப்பண்ணினார்கள்.
அவர்கள் புறப்பட்டு, மிகாவின் வீட்டிற்குத் ௨௰௨
தூரமாய்ப் போனபோது, மிகாவின் வீட்டிற்கு
அண்டைவீட்டார் கூடிவரவழைக்கப்பட்டு,
தாண் புத்திரரைத் தொடர்ந்துவந்து, — அவர்க ௨௰௩
ளைப்பார்த்துக் கூப்பிட்டார்கள்; அவர்கள் திரும்
பிப்பார்த்து, மிகாவுடனே, நீ இப்படிச் சனக்
கூட்டத்துடன் வருகிற காரியம் என்னவென்
றார்கள்.—அப்போது அவன், நான் உண்டுபண் ௨௰௪
ணின என்னுடைய தேவர்களையும் அந்த ஆசாரி
யனையும்கூட நீங்கள் கொண்டுபோகிறீர்கள்;
இனி எனக்கு என்ன இருக்கின்றது? நீ கூப்பிடு
கிற காரியம் என்னவென்று நீங்கள் என்னை எப்
படிக் கேட்கிறீர்களென்றான்.— ஆனால் தாண் ௨௰௫
புத்திரர் அவனைப் பார்த்து, உன் கூக்குரலை எங்
களுக்குக் கேட்கப்பண்ணாதே; மற்றப்படி உன்
சீவனும் உன் வீட்டாரின் சீவனும் போகத்தக்க
விதமாய்க் கோபமுள்ள மனுஷர் உங்கள்மேல்
விழுவார்களென்று சொல்லி,—தங்கள் வழியே ௨௰௬
நடந்துபோனார்கள்; அவர்கள் தன்னைப்பார்க்கி
லும் பலத்தவர்களென்று மிகா கண்டு, அவன்
தன் வீட்டிற்குத் திரும்பிப்போனான்.
அவர்களோ மிகா உண்டுபண்ணினதையும், ௨௰௭
அவனுக்கு இருந்த ஆசாரியனையும், அவர்கள்
கூட்டிக்கொண்டுபோய், பயமில்லாமல் சுகமா
யிருக்கிற லாயிஸ் ஊர் சனத்தின்மேல் வந்து, அ
வர்களைப் பட்டையக் கூர்மையினாலே வெட்டி,
பட்டணத்தை அக்கினியால் சுட்டுப்போட்டார்
கள்.-அவர்களைத் தப்புவிப்பார் யாருமில்லாமல் ௨௰௮
இருந்தது; ஏனெனில் அது சீதோனுக்குத் தூர
மானது; வேறே மனுஷரோடே அவர்களுக்குக்
கவைகாரியம் இல்லாமலும் இருந்தது; அந்தப்
பட்டணம் பெத்ரேகோவுக்குச் சமீபமான பள்
ளத்தாக்கிலிருந்தது; அவர்கள் அதைத் திரும்பக்
கட்டி, அதிலே குடியிருந்து,
பூர்வத்திலே லாயிஸ் என்று பேரிருந்த அந்தப் ௨௰௯
பட்டணத்திற்கு இஸ்ரவேலுக்குப் பிறந்த தங்

கள் தகப்பனாகிய தாணுடைய நாமத்தின்படியே
௩௰ தாண் என்று பேரிட்டார்கள்.—அப்போது தாண்
புத்திரர் அந்தச் சுரூபத்தைத் தங்களுக்கு ஸ்தாபித்
துக்கொண்டார்கள்; மனாசேயின் குமாரனாகிய
கேர்சோனின் மகன் யோனத்தானும், அவன்
குமாரரும், அந்தத் தேசத்தார் சிறைகளாகக்
கொண்டுபோகப்பட்ட நாள்மட்டும், தாண்
கோத்திரத்தாருக்கு ஆசாரியராயிருந்தார்கள். —
௩௧ பராபரனுடைய வீடு சீலோவிலிருந்த சகலநாளி
லும் அவர்கள் மீகா உண்டுபண்ணின சுரூபத்
தை வைத்துக்கொண்டிருந்தார்கள்.

## ௰௯. அதிகாரம்.

௧. ஒரு லேவியன் தன் மனைவியை அழைத்துவரும்படி பெத்லேகேம் பட்டணத்திற்குப் போனது. ௰௬. கிபேயாவில் ஒரு கிழவன் தன் வீட்டில் அவனை ஆதரித்தது. ௨௨. கிபேயாப்பட்டணத்தார் அவனுடைய வைப்பாட்டியைச் சாகும்படி அவமானப்படுத்தியது. ௨௯. அவன் உடலைப் பன்னிரண்டு துண்டங்களாக்கி, பன்னிரண்டு கோத்திரத்துக்கு அனுப்பினது.

௧ இஸ்ரவேலிலே இராசாவில்லாத அந்நாள்களி
லே நடந்ததேதெனில், எப்பிராயீம் மலைகள்
அருகே பரதேசியாய்த் தங்கின ஒரு லேவி மனு
ஷன் இருந்தான்; அவன் யூதாதேசத்துப் பெத்
லேகேம் ஊராளாகிய வைப்பாட்டியான ஒரு
ஸ்திரியைப் படைத்துக்கொண்டிருந்தான். —
௨ அவள் அவனுக்குத் துரோகமாய் விபசாரம்
பண்ணி, அவனைவிட்டு, யூதாதேசத்துப் பெத்
லேகேம் ஊரிலிருக்கிற தன் தகப்பன் வீட்டுக்
குப் போய், அங்கே ஒரு வருஷமும் நாலுமாத
மும் இருந்தாள்.
௩ அவள் புருஷன் அவளோடே நலமாய்ப்
பேசவும், அவளைத் திரும்ப அழைத்துவரவும்,
தன் வேலைக்காரனையும் இரண்டு கழுதைகளை
யும் கூட்டிக்கொண்டு புறப்பட்டு, அவளண்
டைக்குப் போனான்; அப்போது அவள் அவ
னைத் தன் தகப்பன் வீட்டுக்கு அழைத்துப்போ
னாள்; பெண்பிள்ளையின் தகப்பன் அவனைக்
கண்டபோது சந்தோஷப்பட்டு, அவனை எதிர்
௪ கொண்டுபோய் அழைத்தான். — பெண்பிள்ளை
யின் தகப்பனாகிய அவனுடைய மாமன் அவனை
இருத்திக்கொண்டதினால், மூன்றுநாள் அவனோ
டிருந்தான்; அங்கே புசித்துக் குடித்து இராத்தங்
கினார்கள்.
௫ நாலாம்நாளிலோவென்றால் காலமே எழுந்தி
ருந்தபோது, அவன் பயணப்படுகையில், பெண்
பிள்ளையின் தகப்பன் தன் மருமகனோடே,
கொஞ்சம் அப்பம் புசித்து, உன் மனதைத் தேற்
றிக்கொள்; பிற்பாடு நீங்கள் போகலாமென்
௬ றான்.—அவர்கள் உளுக்காந்து, இருவரும்கூடப்
புசித்துக் குடித்தார்கள்; பெண்பிள்ளையின் தகப்
பன் அந்த மனுஷனோடே, நீ தயவுபண்ணி,
உன் இருதயம் மகிழ்ச்சிஅடைய இராத்திரிக்கும்
௭ இருவென்றான். — அப்படியே போகிறதற்கு
அந்த மனுஷன் எழுந்திருக்கிறபோது, அவனு
டைய மாமன் அவனை வருந்திக்கொண்டதி
னால், அவன் அன்று இராத்திரியும் அங்கிருந்
தான். — ஐந்தாம்நாளிலே அவன் போகிறதற்கு ௮
அதிகாலமே எழுந்திருந்தபோது, பெண்ணின்
தகப்பன், உன் இருதயத்தைத் தேற்றிக்கொள்
ளென்றான்; அப்படியே அந்திநேரம் ஆகும்மட்
டும் தாமதித்திருந்து, இருவரும் அசனம்பண்ணி
னார்கள்.—பிற்பாடு போகிறதற்கு அவனும், அ ௯
வன் வைப்பாட்டியும், அவன் வேலைக்காரனும்,
எழுந்திருக்கிறபோது, பெண்ணின் தகப்பனா
கிய அவனுடைய மாமன் அவனுடனே, இதோ
பகல் அஸ்தமிக்கப் பொழுது சாய்ந்துபோகின்
றது; இங்கே இராத்திரிக்கு இருங்கள், இதோ
சாயங்காலமாகின்றது; இங்கே இராத்தங்கி, உன்
இருதயம் சந்தோஷமாயிருக்கட்டும்; நாளை இரு
ட்டோடு எழுந்திருந்து, உன் கூடாரத்திற்குப்
போக வழிநடவுங்களென்றான். — அந்த மனு ௰
ஷனோவெனில் இராத்திரிக்கு இருக்க மனதாயி
ராமல், எழுந்து முஸ்திப்புப்பண்ணப்பட்ட
இரண்டு கழுதைகளோடும் தன் வைப்பாட்டி
யோடும் புறப்பட்டுப் போய், எருசலேமாகிய
எபூசுக்கு நேராக வந்தான்.
அவர்கள் எபூசுக்குக் கிட்டவருகையில், பொ ௰௧
ழுது மெத்தவும் சாய்ந்திருந்தது; அப்போது வே
லைக்காரன் தன் எசமானனுடனே, இந்த எபூசிய
ரின் பட்டணத்திற்குத் திரும்பி, அங்கே இராத்த
ங்கப்போவோமே என்றான்.—ஆனால் அவன் எச ௰௨
மானன் அவனோடே, இஸ்ரவேல் புத்திரரில்லாத
மறுசாதியாரின் ஊருக்குத் திரும்பாமல், அப்பா
லே கிபேயாமட்டும் போவோம் என்று சொல்
லி,—நாம் கிபேயாவிலாகிலும் ராமாவிலென்கி ௰௩
கிலும் இராத்தங்கும்படிக்கு, அவைகளில் ஒரு
இடத்திற்குப்போய்ச் சேரும்படி நடந்துபோ
வோமென்று தன் வேலைக்காரனுக்குச் சொன்
னான்.—அப்படியே அப்பாலே நடந்துபோனார் ௰௪
கள்; பென்யமீன் சீமையான கிபேயாவின்
கிட்ட அவர்கள் வருகையில், சூரியன் அவர்
களுக்கு அஸ்தமித்துப்போயிற்று.—ஆகையால் ௰௫
கிபேயாவிலே வந்து இராத்தங்கும்படிக்கு, அவ்
விடத்திற்குத் திரும்பினார்கள்; அவன் உள்பிர
வேசித்து, பட்டணவீதியில் உளுக்காந்தான்;
இராத்தங்குகிறதற்கு அவர்களை வீட்டிலே சேர்த்
துக்கொள்வார் இல்லாதிருந்தார்கள்.
ஆனால் இதோ ஒரு கிழவன் வயல்வெளியிலே ௰௬
தன் வேலையைச் செய்திருந்து, பொழுதுபுகுத
வந்தான்; அந்த மனுஷன் எப்பிராயீம் மலைத்
தேசத்தானும் கிபேயாவிலே பரதேசியுமாயிருந்
தான்; அவ்விடத்து மனுஷரோவெனில், எமினி
புத்திரராயிருந்தார்கள். —அந்தக் கிழவன் தன் ௰௭
கண்களை ஏறெடுத்துப் பட்டணத்தின் வீதியில்
அந்தப் பிரயாணக்காரனைக் கண்டு, எந்தமட்டும்
போகிறாய், எங்கேயிருந்து வந்தாயென்றான்.—
அவன் இவனோடே சொன்னதாவது: நாங்கள் ௰௮
யூதாவின் ஊராகிய பெத்லேகேமிலிருந்து வந்து,
நான் குடியிருக்கிற எப்பிராயீம் மலைத்தேசத்
தின் புறங்கள்மட்டும் போகிறோம்; நான் யூதா
வூரான்; பெத்லேகேம்மட்டும் போய்வந்தேன்,

நான் கர்த்தருடைய வீட்டிற்குப் போகிறேன்;
ஆனால் என்னை வீட்டிலே சேர்த்துக்கொள்வா
௰௯ ரில்லை.—எங்கள் கழுதைகளுக்கு வைக்கோலும்
மேய்ச்சலும் இருக்கின்றன; எனக்கும் உம்மு
டைய ஊழியக்காரிக்கும் உம்முடைய ஊழியக்
காரனோடே இருக்கிற வேலைக்காரனுக்கும் அப்
பமும் திராட்சப்பழ இரசமும் இருக்கின்றது;
ஒரு காரியத்திலும் குறைச்சலில்லையென்றான்.—
௨௰ அப்போது அந்தக் கிழவன் உனக்குச் சமாதா
னம்; உன் குறைச்சலெல்லாம் என்மேல் இருக்
கட்டும்; வீதியிலேமாத்திரம் இராத்தங்காதே
௨௧ யென்று சொல்லி, — அவனைத் தன் வளவுக்கு
அழைத்துக்கொண்டுபோய், கழுதைகளுக்குத்
தீனிபோட்டான்; அவர்கள் தங்கள் கால்களைக்
கழுவிப் புசித்துக் குடித்தார்கள்.
௨௨ அவர்கள் தங்கள் இருதயத்தைத் தேற்றிக்
கொண்டிருக்கிறபோதோவெனில், இதோ பேலி
யாளின் பிள்ளைகளாகிய அந்த ஊர் மனுஷர் அந்த
வீட்டைச் சுற்றிக்கொண்டு, கதவைத் தட்டி,
உன் வீட்டிலே வந்த அந்த மனுஷனை நாங்கள்
அறியும்படிக்கு, வெளியே கொண்டுவாவென்று
வீட்டுக்காரனாகிய அந்தக் கிழவனோடே சொன்
௨௩ னார்கள் —அப்போது வீட்டுக்காரனாகிய அந்த
மனுஷன் அவர்களண்டைக்குப் புறப்பட்டு, அ
வர்களோடே சொன்னதாவது: அப்படி வேண்
டாம்; என் சகோதரரே, அப்படிக்கொத்த பொ
ல்லாப்பைச் செய்யாதிருங்கள்; அந்த மனுஷன்
என் வீட்டிற்குப் பிரவேசித்திருக்கையில், அப்
படிக்கொத்த மதிகேட்டைச் செய்யீர்களாக.—
௨௪ இதோ கன்னியாஸ்திரியாகிய என் மகளையும்,
அவனுடைய வைப்பாட்டியையும், உங்களுக்கு
வெளியே கொண்டுவருவேன்; அவர்களை அவ
மானப்படுத்தி, உங்கள் பார்வைக்குச் சரிப்போ
னபிரகாரமாய் அவர்களுக்குச் செய்யுங்கள்; ஆ
னால் இந்த மனுஷனுக்கு அப்படிக்கொத்த மதி
கேடான காரியத்தைச் செய்யீர்களாகவென்
௨௫ றான்.—ஆனால் அந்த மனுஷர் அவன் சொல்
கேட்கமாட்டோமென்றார்கள்; அப்போது அந்த
மனுஷன் தன் வைப்பாட்டியைப் பிடித்து,
அவர்களண்டைக்கு வெளியே கொண்டுவந்து
விட்டான்; அவர்கள் அவளை அறிந்துகொண்டு,
இராமுழுதும் விடியுங்காலம்மட்டும் அவளை
இலச்சையாய் நடத்தி, கிழக்கு வெளுக்கிற
போது அவளைப் போகவிட்டார்கள்.
௨௬ அப்போது அந்த ஸ்திரி விடியுங்காலத்திற்கு
முன்னே வந்து, வெளிச்சமாகும்மட்டும் அங்
கே தன் எசமானனிருந்த வீட்டுவாசல்படியிலே
௨௭ விழுந்துகிடந்தாள்.—அவள் எசமானன் காலமே
எழுந்திருந்து வீட்டின் கதவைத் திறந்து, தன்
வழியேபோகப் புறப்படுகிறபோது, இதோ அ
வன் வைப்பாட்டியாகிய ஸ்திரி வீட்டுவாசலு
க்கு முன்பாகத் தன் கைகளை வாசல்படியின்
௨௮ மேல் வைத்தவளாய்க் கிடந்தாள். — எழுந்திரு
போவோமென்று அவன் அவளோடே சொன்
னதற்குப் பிரதியுத்தாரம் பிறக்கவில்லை; அப்
போது அந்த மனுஷன் அவளைக் கழுதையின்
மேலே போட்டு, பிரயாணப்பட்டு, தன் தானத்
திற்குப்போய்,
தன் வீட்டுக்கு வந்தபோது, ஒரு கத்தியை ௨௯
எடுத்து, தன் வைப்பாட்டியைப் பிடித்து, அவளை
அவளுடைய எலும்புகளோடும்கூடப் பன்னி
ரண்டு துண்டமாக்கி, இஸ்ரவேலின் எல்லை
களுக்கெல்லாம் அனுப்பினான். — அப்போது ௩௰
அதைக் காண்கிறவனெல்லாம், இஸ்ரவேல் புத்
திரர் எகிப்திலிருந்து வந்தேறின நாள்முதல்கொ
ண்டு இந்நாள்வரைக்கும் இதைப்போலொத்த
காரியம் செய்யப்பட்டதுமில்லை, காணப்பட்
டதுமில்லை என்று, இதின்மேல் சிந்தனையாகி,
ஆலோசனைபண்ணி, செய்யவேண்டியதென்ன
வென்று சொல்லுங்களென்பார்கள்.

## ௨௰. அதிகாரம்.

௧. லேவியன் தனக்கு வந்த அவமானத்தைச் சபையில் அறிவித்தது. ௮. அந்தச் சபையாரின் தீர்ப்பு. ௰௨. பென்யமீன் புத்திரர்கள் சபையாரால் கடிந்துகொள்ளப்பட்டு அவர்கள்மேல் யுத்தத்திருக்கு வந்தது. ௰௮ இஸ்ரவேலர்கள் இரண்டுமுறை போர்செய்து சத்துருசனங்களை இழந்தது. ௨௯. அவர்கள் பென்யமீன் புத்திரர்களை சகல—பேர்தவிர ஒரு உபாயத்தினாலே கொன்றது.

அப்போது தாண் பட்டணம்துவக்கிப் பெர்
சேபாமட்டும் கிலேயாத் தேசத்திலும் இருக்கிற
இஸ்ரவேல் புத்திரர் அனைவரும் மிஸ்பாவுக்குக்
கர்த்தருக்குமுன்பாக ஏக சபையான கூட்ட
மாய் வரவழைக்கப்பட்டு,—இஸ்ரவேலுடைய ௨
எல்லாக் கோத்திரங்களுக்கும் அடுத்த சகல எல்
லைகளிலுமிருந்து வந்து, பட்டையம் உருவுகிற
நாலுலட்சம் காலாளான பராபரனுடைய
சனக்கூட்டமாய்க் கூடினார்கள். — இஸ்ரவேல் ௩
புத்திரர் மிஸ்பாவுக்கு வந்தேறின செய்தியைப்
பென்யமீன் புத்திரர் கேட்டார்கள்; அந்தப்
பொல்லாப்பு நடந்த விபரம் என்னவென்று
சொல்லுங்களென்று இஸ்ரவேல் புத்திரர் கேட்
டார்கள்.
அப்போது கொன்றுபோடப்பட்ட ஸ்திரீ ௪
யின் புருஷனாகிய லேவிமனுஷன் மறுவுத்தரவு
கொடுத்துச் சொன்னதாவது: நானும் என் வைப்
பாட்டியும் பென்யமீன் ஊரான கிபேயாவுக்கு
இராத்தங்குகிறதற்காக வந்தோம். — அப்போது ௫
கிபேயாப்பட்டணத்தார் எனக்கு விரோதமாய்
எழும்பி, நானிருந்த வீட்டை இராத்திரியிலே
சுற்றிக்கொண்டு, என்னைக் கொன்றுபோட
நினைத்து, என் வைப்பாட்டியை அவமானப்
படுத்தினார்கள்; அதினாலே அவள் செத்துபோ
னாள். — ஆகையால் இஸ்ரவேலிலே அவர்கள் ௬
இப்படிக்கொத்த அக்கிரமத்தையும் மதிகேட்
டையும் செய்தபடியினாலே, நான் என் வைப்
பாட்டியைப் பிடித்துத் துண்டித்து, இஸ்ரவே
லின் சுதந்தரமான எல்லா நாட்டுப்புறத்திற்கும்
அனுப்பினேன்.—இதோ நீங்கள் எல்லாரும் இஸ் ௭
ரவேல் புத்திரராமே; நீங்கள் உங்களுக்காகச்
செய்யத்தக்கதென்னவென்று இங்கே யோசனை
பண்ணுங்களென்றான்.

௮ அப்போது எல்லாச் சனமும் ஏகமாயெழும்
பிச் சொன்னதாவது: நம்மில் ஒருவனும் தன்
கூடாரத்திற்குப் போகவும், ஒருவனும் தன் வீட்
௯ டிற்குத் திரும்பவும் வேண்டாம். — இப்போது
கிபேயாவுக்குச் செய்யவேண்டியதேதெனில்,
௰ அதற்கு விரோதமாகத் தாயம்போட்டு,-பென்ய
மீன் கோத்திரமான கிபேயா பட்டணத்தார் இஸ்
ரவேலிலே செய்த எல்லா மதிகேட்டுக்கும்தக்
கதாகச் சனம் வந்து செய்யும்படிக்கு, நாம் தானி
யதவசங்களைச் சம்பாதிக்கிறதற்கு, இஸ்ரவேல்
கோத்திரங்களிலெல்லாம் நூறுபேரில் பத்துப்
பேரையும், ஆயிரம்பேரில் நூறுபேரையும், பதி
னாயிரம்பேரில் ஆயிரம்பேரையும், எடுப்போ
மென்று சொல்லி,
௰௧ இஸ்ரவேலரெல்லாம் ஏகவொப்பந்தமாய் அந்
தப் பட்டணத்திற்குமுன்பாகக் கூட்டங்கூடி,-
௰௨ அங்கே இருந்த இஸ்ரவேலின் கோத்திரங்கள்
பென்யமீன் கோத்திரமெங்கும் மனுஷரை அனு
ப்பி,உங்களில் நடந்த இந்தப் பொல்லாப்பென்
௰௩ ன?-இப்போதும் கிபேயாவில் இருக்கிற பேலி
யாளின் பிள்ளைகளாகிய அந்த மனுஷரை நாங்
கள் கொலைசெய்து,பொல்லாப்பை இஸ்ரவேலை
விட்டு விலக்கும்படிக்கு, அவர்களை ஒப்புக்கொ
டுங்களென்று சொல்லச்சொன்னார்கள்; ஆனால்
பென்யமீன் புத்திரர் இஸ்ரவேல் புத்திரராகிய
தங்கள் சகோதரரின் சொல்கேட்க மனதாயிரா
௰௪ மல்,—இஸ்ரவேல் புத்திரரோடு யுத்தம்பண்ணப்
புறப்படும்படிக்கு,பட்டணங்களிலிருந்து கிபே
௰௫ யாவுக்குவந்து கூடினார்கள்.-கிபேயாவின் குடி
களிலே தெரிந்துகொள்ளப்பட்ட எழுநூறுபே
ரின் இலக்கத்தைத்தவிர,பட்டணங்களிலிருந்து
வந்து கூடின பட்டையம் உருவுகிற மனுஷரின்
இலக்கம் அந்நாளில் இருபத்தாறாயிரம்பேர்
௰௬ என்று காணப்பட்டது.—அந்தச் சனத்திலெல்
லாம் தெரிந்துகொள்ளப்பட்ட இடதுகை வா
கான எழுநூறுபேர் இருந்தார்கள்; அவர்கள்
அனைவரும் ஒரு மயிரிழையும் தப்பாதபடிக்குக்
௰௭ கவண்கல் எறிவார்கள்.—பென்யமீன் கோத்தி
ரத்தைத்தவிர, இஸ்ரவேலிலே பட்டையம் உரு
வுகிற மனுஷர் நானூறாயிரம்பேரென்று இலக்
கம்பார்க்கப்பட்டார்கள்; இவர்களெல்லாரும்
யுத்தமனுஷராயிருந்தார்கள்.
௰௮ இஸ்ரவேல் புத்திரரான அவர்கள் எழும்பி,
பராபரனுடைய வீட்டிற்குப் போயேறி, எங்க
ளில் ஏறிப்போய், பென்யமீன் புத்திரரோடு யுத்
தம்பண்ணத் துவக்கம்பண்ணுபவர்கள் யாரென்
று பராபரனைக் கேட்டார்கள்; அதற்குக் கர்த்தர்
௰௯ யூதா துவக்கவேண்டுமென்றார். — அப்போது
இஸ்ரவேல் புத்திரர் காலமே எழுந்து புறப்
பட்டு, கிபேயாவுக்கு எதிராகப் பாளயமிறங்கி
௨௰ னார்கள்.—பிற்பாடு இஸ்ரவேல் மனுஷர் பென்
யமீனோடு யுத்தம்பண்ணப் புறப்பட்டு, கிபேயா
வண்டையிலே அவர்களுக்கு எதிராகப் போர்
௨௧ செய்ய ஆயத்தம்பண்ணினார்கள்.-ஆனால் பென்
யமீன் புத்திரர் கிபேயாவிலிருந்து புறப்பட்டு,
இஸ்ரவேலில் இருபத்திரண்டாயிரம்பேரை அந்நாளி
லே தரையிலே விழ மடித்தார்கள்.
இஸ்ரவேல் சனமாகிய மனுஷரோவென்றால், ௨௨
தம்மைத் திடப்படுத்திக்கொண்டு, முந்தின நா
ளில் ஆயத்தம்பண்ணின ஸ்தலத்திலே, மறுபடி
யும் போர்செய்ய ஆயத்தம்பண்ணினார்கள். —
அவர்கள் ஏறிப்போய், கர்த்தருக்குமுன்பாகச் ௨௩
சாயங்காலம்மட்டும் அழுது, என் சகோதரனா
கிய பென்யமீன் புத்திரரோடே அப்புறம் யுத்
தம் கலக்கப் போவேனோவென்று கர்த்தரைக்
கேட்டார்கள்; அப்போது கர்த்தர், அவர்களண்
டைக்குப் போய் ஏறுங்களென்றார்.—மறுநாளி ௨௪
லே இஸ்ரவேல் புத்திரர் பென்யமீன் புத்திரர்
கிட்டச் சேருகிறபோதோவெனில், — பென்ய ௨௫
மீன் கோத்திரத்தாரும் அந்நாளிலே கிபேயாவி
லிருந்து அவர்களுக்கு எதிராகப் புறப்பட்டுவந்
து, இன்னும் இஸ்ரவேல் புத்திரரில் பட்டையம்
உருவுகிற சேவகராகிய பதினெண்ணாயிரம்பே
ரைத் தரையிலே விழ மடித்தார்கள்.
அப்போது இஸ்ரவேல் புத்திரர் அனைவரும், ௨௬
சகல சனமும், ஏறிப்போய், பராபரனுடைய
வீட்டிற்கு வந்து, அங்கே கர்த்தருக்குமுன்பாக
அழுது தரித்திருந்து, அன்று சாயங்காலம்மட்
டும் உபவாசித்து, கர்த்தருக்குமுன்பாகச் சர்வா
ங்கதகனங்களையும் சமாதானபலிகளையும் பலி
யிட்டு,-கர்த்தரைக் கேட்டார்கள்; ஏனென்றால் ௨௭
பராபரனுடைய உடம்படிக்கையின் பெட்டி
அந்நாள்களில் அங்கேயிருந்தது.—ஆரோனின் ௨௮
குமாரனாகிய எலேயாசாரின் மகன் பினேகாஸ்
அந்நாள்களில் அவருக்குமுன்பாக நின்றான்;
என் சகோதரனாகிய பென்யமீன் புத்திரரோடே
இன்னும் யுத்தம்பண்ணப் புறப்படுவேனோ புறப்
படாதிருப்பேனோவென்று அவர்கள் கேட்டார்
கள்; அப்போது கர்த்தர், போயேறுங்கள்; ஏனெ
னில் நாளை அவர்களை உங்கள் கையில் ஒப்புக்
கொடுப்போமென்றார்.
அப்போது இஸ்ரவேல் புத்திரர் கிபேயாவைச் ௨௯
சுற்றிலும் பதிவிடையாள்களை வைத்து,—மூன் ௩௰
றாம் நாளிலே பென்யமீன் புத்திரருக்கு எதிரா
கப் போயேறி, முதல் இரண்டுதரம் செய்தது
போலக் கிபேயாவுக்குச் சமீபமாய்ப் போருக்கு
ஆயத்தம்பண்ணினார்கள். — அப்போது பென்ய ௩௧
மீன் புத்திரர் சனத்திற்கு எதிராகப் புறப்பட்டுப்
பட்டணத்தைவிட்டு,இப்பாலே வந்து,வெளியி
லே பெத்தேலுக்கும் கிபேயாவுக்கும் போகிற இ
ரண்டு வழிகளில் இஸ்ரவேல் சனத்தில் ஏறக்கு
றைய முப்பதுபேரை முதல் இரண்டுதரம் செய்
ததுபோல, வெட்டிப்போடவும் குத்திப்போட
வும் துவக்கி,-அவர்கள் முன்போல நமக்குமுன் ௩௨
பாக முறியடிக்கப்படுகிறார்களென்றார்கள்; இஸ்
ரவேல் புத்திரரோவெனில் நாம் அவர்களைப் பட்
டணத்தைவிட்டு இப்பாலேயிருக்கிற வழிகளி
லே வரப்பண்ணும்படிக்கு, ஓடுவோமென்று
சொல்லியிருந்தார்கள்.—அப்போது இஸ்ரவேல் ௩௩
மனுஷரெல்லாரும் தங்கள் தானத்திலிருந்து

எழும்பி, பாகால்தாமாரிலே யுத்தத்திற்கு ஆயத்த
ம்பண்ணினார்கள்; இஸ்ரவேலுடைய பதிவிடை
யும் காபாவின் பள்ளத்தாக்காகிய தங்கள் தானத்
௩௪ திலிருந்து புறப்பட்டு,—அவர்களில் எல்லா இஸ்
ரவேலிலும் தெரிந்துகொள்ளப்பட்ட பதினாயி
ரம்பேர் கிபேயாவுக்கு எதிரே வந்தார்கள்; யுத்த
மோவென்றால் பலத்தது; ஆனால் விக்கினம் தங்
கள்மேல் நேரிடுமென்று அவர்கள் அறியாதிருந்
௩௫ தார்கள். — கர்த்தர் இஸ்ரவேலுக்குமுன்பாகப்
பென்யமீனை முறியடித்தார்; அந்நாளிலே இஸ்ர
வேல் புத்திரர் பென்யமீனிலே பட்டையம் உரு
வுகிற சேவகராகிய இருபத்தையாயிரத்தொரு
நூறுபேரை மடித்தார்கள்.

௩௬ அதேனென்றால், முறியடிக்கப்படுகிறார்களெ
ன்று பென்யமீன் புத்திரர் காணும்போது, இஸ்
ரவேலர் கிபேயாவுக்கு அப்பாலே வைத்த பதிவி
டையை நம்பியிருந்தபடியினாலே, பென்யமீன
௩௭ ருக்கு இடம்கொடுத்திருந்தார்கள்.—அப்போது
பதிவிடையிருந்தவர்கள் தீவிரமாய்க் கிபேயா
வின்மேல் வந்து விழுந்து, பட்டணத்தில் இருக்
கிறவர்களையெல்லாம் பட்டையக் கூர்மையால்
௩௮ வெட்டினார்கள்.—பட்டணத்திலிருந்து மகா பெ
ரிய புகையை எழும்பப்பண்ணும் வேளையே
இஸ்ரவேலருக்கும் பதிவிடைக்கும் அடையாள
௩௯ மாகக் குறித்த வேளையாயிருந்தது.—ஆகையால்
இஸ்ரவேலர் யுத்தத்திலே பின்வாங்கினதினா
லே, பென்யமீனர் இஸ்ரவேலரில் ஏறக்குறைய
முப்பதுபேரை வெட்டவும் குத்தவும் துவக்கி,
முந்தி யுத்தத்திலானதுபோல, அவர்கள் நமக்கு
முன்பாக முறியடிக்கப்படுகிறார்களேயென்று
௪௰ சொல்லுகிறபோது, — பட்டணத்திலிருந்து
புகைத் தூண் உயர எழும்பத் துவக்கிற்று; பென்
யமீன் மனுஷர் பின்னாகப் பார்க்கிறபோது,
இதோ பட்டணமெங்கும் பட்ட நெருப்பு வான
௪௧ பரியந்தம் ஏறிற்று. — அப்போது இஸ்ரவேலர்
திரும்பிக்கொண்டார்கள்; பென்யமீன் மனுஷ
ரோவென்றால், விக்கினம் தங்கள்மேல் நேரிடுகி
௪௨ றதைக் கண்டு திகைத்து,—இஸ்ரவேல் புத்திரரை
விட்டு, வனாந்தரத்தின் வழிக்குத் திரும்பி ஓடிப்
போனார்கள்; ஆனால் யுத்தம் அவர்களைத் தொ
டர்ந்தது; பட்டணங்களின் மனுஷரும் நடுவே
௪௩ அகப்பட்ட அவர்களை மடித்தார்கள்.—இப்படி
யே பென்யமீனரை வளைந்துகொண்டு துரத்திக்
கிபேயாவுக்குக் கிழக்குப்புறமாக வரும்மட்டும்,
அவர்களை வருத்தமில்லாமல் மிதித்துவிட்டார்
௪௪ கள்.—அதினால் பென்யமீனரிலே பதினெண்
ணாயிரம்பேர் விழுந்தார்கள்; அவர்களெல்லாரும்
௪௫ வல்லாளராயிருந்தவர்கள்.—மற்றவர்கள் விலகி,
வனாந்தரத்திலிருக்கிற ரிம்மோன் கல்மலைக்கு
ஓடிப்போனார்கள்; அவர்களில் இன்னும் ஐயா
யிரம்பேரை வழிகளிலே கொன்று, மற்றவர்க
ளைக் கீதேயோம்மட்டும் பின்தொடர்ந்து, அவர்
களில் இரண்டாயிரம்பேரை வெட்டிப்போட்
௪௬ டார்கள். — அப்படி பென்யமீனரில் அந்நா
ளில் விழுந்தவர்களெல்லாரும் இருபத்தையாயி
ரம்பேர்; அவர்களெல்லாரும் பட்டையம் உரு
வுகிற பலவான்களாயிருந்தார்கள். — திரும்பிக் ௪௭
கொண்டு ஓடி, வனாந்தரத்திலிருக்கிற ரிம்மோன்
கல்மலைக்கு வந்தவர்கள் அறுநூறுபேர்; இவர்
கள் ரிம்மோன் கல்மலையிலே நாலுமாதம் இருந்
தார்கள்.

இஸ்ரவேலரோவென்றால் பென்யமீன் புத்தி ௪௮
ரர்மேலே திரும்பி, பட்டணத்தில் மனுஷரைத்
துவக்கி மிருகங்கள்மட்டும் கண்டவைகள் எல்
லாவற்றையும் பட்டையக் கூர்மையால் வெட்
டி, கண்ட எல்லாப் பட்டணங்களையும் அக்கி
னியால் கொளுத்திவிட்டார்கள்.

## ௨௧. அதிகாரம்.

௧. சனங்கள் பென்யமீனருடைய நாசத்தைக்குறித்துத் துக்கப்பட்டது. ௮. கீலேயாத்தில் இருக்கிற யாபேசின் மனுஷரைக் கொன்று, பென்யமீனருக்கு ௪௱-மனைவிகளைச் சம்பாதித்தது. ௰௬. சீலோவில் நடனம்செய்த கன்னியாஸ்திரிகளைக் கொள்ளும்படி, இஸ்ரவேலர் பென்யமீனருக்குக் கற்பித்தது.

நம்மில் ஒருவனும் தன் குமாரத்தியைப் பென் ௧
யமீன் மனுஷனுக்கு விவாகப்படுத்திக் கொடுப்
பதில்லையென்று இஸ்ரவேலர் மிஸ்பாவிலே ஆ
ணையிட்டிருந்தார்கள்.—ஆகையால் சனம் பரா ௨
பரனுடைய வீட்டுக்கு வந்து, அங்கே பராபர
னுக்குமுன்பாகச் சாயங்காலம்மட்டும் இருந்து,
சத்தமிட்டு, மிகுதியும் அழுதுகொண்டு,—இஸ்ர ௩
வேலின் பராபரனாகிய கர்த்தாவே, இன்று இஸ்
ரவேலில் ஒரு கோத்திரம் குறைந்துபோன இந்
தக்காரியம் இஸ்ரவேலில் நடந்ததென்னவென்
றார்கள்.—மறுநாளிலே சனம் காலமே எழுந்தி ௪
ருந்து, அங்கே ஒரு பலிபீடத்தைக் கட்டி, சர்
வாங்கதகனங்களையும், சமாதானபலிகளையும் செ
லுத்தினார்கள்.

பிற்பாடு இஸ்ரவேல் புத்திரர் கர்த்தருக்குமுன் ௫
பாகச் சபைகூடினபோது, இஸ்ரவேலுடைய
எல்லாக் கோத்திரங்களிலும் ஏறிவராதேபோன
வர்கள் யாரென்று கேட்டார்கள்; ஏனெனில்
கர்த்தருக்குமுன்பாக மிஸ்பாவுக்கு ஏறிவராத
வன் கொலையுண்ணவே கொலையுண்ணக்கடவ
னென்று பெரிய ஆணையிடப்பட்டிருந்தது.—
இப்போதும் இஸ்ரவேல் புத்திரர் தங்கள் சகோ ௬
தரனாகிய பென்யமீனை நினைத்து, மனஸ்தாபப்
பட்டுச் சொன்னதாவது: இன்று இஸ்ரவேலில்
ஒரு கோத்திரம் அறுப்புண்டுபோயிற்று.—மீதியா ௭
னவர்களுக்குப் பெண்சாதிகள் கிடைக்க நாம்
அவர்களுக்காகச் செய்வதென்ன? ஏனென்றால்
நம்முடைய குமாரத்திகளில் ஒருத்தியையும் அ
வர்களுக்குக் கொடாதபடிக்கு நாம் கர்த்தர்மேல்
ஆணையிட்டுக்கொண்டோமே.

இஸ்ரவேலின் கோத்திரங்களில் மிஸ்பாவி ௮
லே கர்த்தருக்குமுன்பாக ஏறிவராதேபோனயா
தொருத்தர் உண்டோவென்றார்கள்; அப்போது
இதோ கீலேயாத்திலிருக்கிற யாபேசின் மனு
ஷர் ஒருவரும் சபையண்டைக்குப் பாளயத்தில்
வந்ததில்லை.—ஏனெனில் சனம் இலக்கம்பார்க் ௯
கப்பட்டது; இதோ கீலேயாத்திலிருக்கிற யா

பேசின் குடிகளில் அங்கே ஒருவரும் இருந்த
௰ தில்லை. — அப்போது சபையானது பலவான்
களில் பன்னீராயிரம்பேரை அங்கே அனுப்பி,
அவர்களுக்குக் கற்பித்ததாவது: நீங்கள் போய்,
கீலேயாத்திலிருக்கிற யாபேசின் குடிகளையும்
பெண்சாதிகளையும் பிள்ளைகளையும் பட்டையக்
௰௧ கூர்மையாலே வெட்டி,—செய்யவேண்டியதே
தெனில், சகல ஆண்பிள்ளைகளையும், புருஷனை
அறிந்த சகல பெண்பிள்ளைகளையும், சங்கரிக்கக்
௰௨ கடவீர்களென்று கற்பித்தார்கள்.-இவர்கள் கீலே
யாத்திலிருக்கிற யாபேசின் குடிகளிடத்திலே
புருஷனை அறியாத கன்னிகைகளாகிய நானூறு
பெண்பிள்ளைகளைக் கண்டுபிடித்து, அவர்களைக்
கானான்தேசமான சீலோவிலிருக்கிற பாளயத்தி
லே கொண்டுவந்தார்கள்.
௰௩ அப்போது ரிம்மோன் கன்மலையிலிருக்கிற
பென்யமீன் புத்திரரோடே பேசவும், அவர்க
ளுக்குச் சமாதானத்தைக் கூறவும், சபையாரெல்
௰௪ லாரும் மனுஷரை அனுப்பினார்கள். — அப்படி
யே அக்காலத்தில் பென்யமீனர் திரும்பவந்தார்
கள்; கீலேயாத்திலிருக்கிற யாபேசின் ஸ்திரிக
ளில் உயிரோடே வைத்த பெண்பிள்ளைகளை அ
வர்களுக்குக் கொடுத்தார்கள்; ஆனால் இன்னும்
அவர்களுக்கு வேண்டியவர்களை இந்தப்பிரகார
௰௫ மாகக் கண்டுபிடிக்கக்கூடாதிருந்தது. — இஸ்ர
வேல் கோத்திரங்களிலே கர்த்தர் ஒரு கிழிவை
உண்டாக்கினாரென்று சனம் பென்யமீனருக்
காக மனஸ்தாபப்பட்டது.
௰௬ பென்யமீன் கோத்திர ஸ்திரிகள் அழிந்தபடியி
னாலே,மற்றப்பேருக்கும் பெண்சாதிகள் கிடைக்
கிறதற்காக என்னசெய்வோமென்று சபையின்
௰௭ மூப்பரானவர்கள் கேட்டு,—இஸ்ரவேலில் ஒரு
கோத்திரம் நிர்மூலமாகாதபடிக்கு, தப்பினவர்க
ளுடைய சுதந்தரம் பென்யமீனுக்குத்தானே இ
௰௮ ருக்கவேண்டுமேயென்றும்,—நாமோவென்றால்
நம்முடைய குமாரத்திகளில் அவர்களுக்குப்
பெண்கொடுக்கக்கூடாது; ஏனெனில் பென்யமீ
னருக்குப் பெண்கொடுக்கிறவன் சபிக்கப்பட்
டவனென்றும், இஸ்ரவேல் புத்திரர் ஆணையிட்
டார்களென்றும், சொல்லிக்கொண்டார்கள்.
அப்போது, இதோ சீலோவிலே வருஷந்தோ ௰௯
றும் கர்த்தரின் பண்டிகையாயிருக்கின்றது; அது
பேத்தேலுக்கு வடக்கே பேத்தேலிலிருந்து சீகே
முக்கு ஏறிப்போகிற பாதைக்குச் சூரியோதய
முனையாகவும், லெபோனாவுக்குத் தெற்காகவும்,
ஆசரிக்கப்படுமென்று சொல்லி,-அவர்கள் பென் ௨௰
யமீன் புத்திரருக்குக் கற்பித்ததாவது: நீங்கள்
போய், திராட்சத்தோட்டங்களிலே பதிவிருந்
து,—இதோ சீலோவின் குமாரத்திகள் கீதவாத் ௨௧
தியத்தோடே நடனம்பண்ணுகிறவர்களாய்ப்
புறப்பட்டு வருகிறதை நீங்கள் காணும்போது,
திராட்சத்தோட்டங்களிலிருந்து புறப்பட்டு,
உங்களில் அவரவர் சீலோவின் குமாரத்திகளி
லே, ஒவ்வொரு பெண்ணைப் பிடித்துப் பென்ய
மீன் தேசத்திற்குப் போங்கள்.-அவர்களுடைய ௨௨
தகப்பன்மாராகிலும் அவர்கள் சகோதரராகிலும்
எங்களோடே வழக்காட வருகிறதுண்டானால்,
நாங்கள் அவர்களுடனே, எங்களுக்காக அவர்
கள்மேல் இரக்கமாயிருங்கள்; ஏனெனில் நாங்
கள் யுத்தம்பண்ணி, அவனவனுக்குப் பெண்சா
தியை வாங்கிக்கொடுக்கவில்லை; உங்கள்மேல்
இப்போது குற்றமுண்டாக நீங்கள் அவர்களை
இவர்களுக்குக் கொடுக்கவுமில்லை என்போ
மென்று சொன்னார்கள்.—பென்யமீன் புத்திரர் ௨௩
அப்படிச்செய்து,கீதவாத்தியம் வாசிக்கிற பெண்
பிள்ளைகளிலே தங்கள் இலக்கத்திற்குச் சரியான
வர்களைப் பறித்துக்கொண்டு, தங்கள் சுதந்தரத்
திற்குத் திரும்பப் போய், பட்டணங்களைக் கட்
டி, அவைகளில் குடியிருந்தார்கள்.-இஸ்ரவேல் ௨௪
புத்திரரும் அக்காலத்திலே அவ்விடம்விட்டு அ
வரவர் தங்கள் கோத்திரத்துக்கும் தங்கள் வம்சத்
திற்கும் போனார்கள்; இப்படியே அவரவர் தங்
கள் சுதந்தரத்திற்குப் புறப்பட்டுப் போய்விட்
டார்கள்.—அந்நாள்களில் இஸ்ரவேலில் இராசா ௨௫
வில்லை; அவரவர் தங்கள் பார்வைக்குச் சரியா
னதைச் செய்தார்கள்.

RUTH.

# ரூத்தென்பவளின்

## சரித்திரம்.

### ௧. அதிகாரம்.

*௧. பஞ்சம் உண்டானபடியால் எலிமேலேக் மோவாப் தேசத்துக்குப் போய் அதில் மரித்தது. ௪. மக்லோன் கிலியோனென்றவர்கள் மோவாப் தேசத்துப் பெண்சாதிகளை விவாகம் செய்ததும், மரித்ததும். ௬. நகாமி தன் வீட்டுக்குப் புறப்பட்டு, தன் இரண்டு மருமக்கள்மாரைத் தன்னோடேகூட வராதபடி புத்திசொன்னது. ௰௪. ஓர்ப்பாள் அவளை விட்டுப்போனதும், ரூத் விடாமல் அவளோடேகூடப் போனதும், ௰௯. அவர்கள் இருவரும் பெத்லேகேம் பட்டணத்துக்கு வந்து, அவ்வூரரால் சந்தோஷத்தோடு அழைக்கப்பட்டது.*

௧ நியாயாதிபதிகள் நியாயம்விசாரிக்கும் நாள்க
ளில் தேசத்திலே பஞ்சம் உண்டாகையால் சம்
பவித்ததேதெனில், யூதா கோத்திரமான பெத்லே
கேம் ஊராகிய ஒரு மனுஷன் தன் பெண்சாதி
யோடும் இரண்டு குமாரரோடும்கூட மோவாப்
தேசத்திலே பரதேசமாயிருக்கப் போனான்.—
௨ அந்த மனுஷனுடைய பேர் எலிமேலேக், அவன்
பெண்சாதியின்பேர் நகாமி, அவனுடைய இர
ண்டு குமாரரில் ஒருவன்பேர் மக்லோன், மற்
றொருவன் பேர் கிலியோன்; யூதாகோத்திரத்துப்
பெத்லேகேம் ஊராகிய எப்பிராத்தியரான அவர்
கள் மோவாப் தேசத்து நாட்டுப்புறங்களில்
வந்து, அங்கே இருந்தார்கள்.
௩ நகாமியின் புருஷனாகிய எலிமேலேக்கோ
வென்றால் சென்றுபோனான்; அவளும் அவளு
டைய இரண்டு குமாரரும் மீதியாயிருந்தார்கள்.–
௪ இவர்கள் மோவாப் சாதியான பெண்சாதிகளை
விவாகம்பண்ணினார்கள்; ஒருத்தியின்பேர் ஓர்ப்
பாள்; மற்றவள்பேர் ரூத்; அங்கே ஏறக்குறை
௫ யப் பத்துவருஷம் இருந்தபிற்பாடு.–மக்லோன்
கிலியோனென்ற அவர்கள் இருவரும் சென்று
போனார்கள்; அப்படியே அந்தப் பெண்சாதி
தன் இரண்டு குமாரருக்கும் தன் புருஷனுக்கும்
பிறகு மீந்திருந்தாள்.
௬ ஆனால் கர்த்தர் தம்முடைய சனத்திற்கு அப்
பம் கொடுக்கும்படிக்கு, அவர்களைச் சந்தித்தா
ரென்று அவள் மோவாபின் நாட்டுப்புறத்திலே
கேட்டபடியினாலே, அவள் தன் மருமக்களோ
டேகூட மோவாபின் நாட்டுப்புறங்களிலிருந்து
௭ திரும்பிப்போகும்படிக்கு எழுந்து,-தன் இரண்டு
மருமக்களோடும்கூடத் தானிருந்த ஸ்தலத்தை
விட்டுப் புறப்பட்டாள்; யூதாவின் தேசத்திற்குத்
திரும்பிப்போக, அவர்கள் வழியிலே நடக்கை
௮ யில், — நகாமி தன் இரண்டு மருமக்களோடே
சொன்னதாவது: நீங்கள் ஒவ்வொருத்தி தன் தன்
தாய் வீட்டுக்குத் திரும்பிப் போய்விடுங்கள்;
நீங்கள் மரித்தவர்களுக்கும் எனக்கும் செய்தது
போல,கர்த்தர் உங்களுக்குத் தயவுசெய்வாராக.–
கர்த்தர் உங்களில் ஒவ்வொருத்திக்கு இருக்கப் ௯
போகிற புருஷனுடைய வீட்டிலே இளைப்பாறு
தல் கிடைக்கப்பண்ணுவாராக என்று சொல்லி,
அவர்களை முத்தமிட்டுக்கொண்டாள்; அப்போ
து அவர்கள் சத்தமிட்டழுது, அவளுடனே,— ௰
உம்முடைய சனத்தண்டைக்குத்தானே உம்மும
டன்கூட வருவோமென்றார்கள்.
ஆனால் நகாமி சொன்னதாவது: நீங்கள் திரும் ௰௧
புங்கள், என் குமாரத்திகளே, என்னோடே ஏன்
வருகிறீர்கள், உங்களுக்குப் புருஷராகும்படிக்
கு, இன்னும் என் கெர்ப்பத்திலே எனக்குப் பிள்
ளைகளுண்டாகுமோ? — என் குமாரத்திகளே, ௰௨
திரும்பிப்போங்கள்; ஏனென்றால் நான் ஒரு புரு
ஷனுக்கு ஸ்திரியாகிறதற்கு வயதுசென்றவள்;
அப்படிக்கொத்த நம்பிக்கை எனக்குண்டென்று
சொல்லி, நான் இன்று இராத்திரிக்கு ஒரு புருஷ
னுக்கு வாழ்க்கைப்பட்டாலும், நான் பிள்ளைக
ளைப் பெற்றாலும்,–இவர்கள் பெரியவர்களாகும் ௰௩
மட்டும் புருஷருக்கு வாழ்க்கைப்படாதபடிக்
குப் பொறுத்திருப்பீர்களோ? அது கூடாது;
ஏனெனில் என் குமாரத்திகளே, கர்த்தருடைய
கை என்மேல் இறங்கினதினால், உங்களைப்பார்க்
கிலும் எனக்கு மகா கஸ்தியாயிருக்கின்றதென்
றாள். — அப்போது அவர்கள் சத்தமிட்டு அதிக ௰௪
மாயழுதார்கள்; ஓர்ப்பாள் தன் மாமியை முத்த
மிட்டுப்போனாள்; ரூத்தோவென்றால் அவளை
விடாதிருந்தாள்.
அப்போது அவள், இதோ உன்னுடைய ஓர ௰௫
கத்தி தன் சனத்தண்டைக்கும் தன்னுடைய தே
வர்களண்டைக்கும் திரும்பிப்போனாளே; நீயும்
உன் ஓரகத்தியின் பின்னாலே திரும்பிப்போ
வென்றாள்.—ஆனால் ரூத் சொன்னதாவது: நான் ௰௬
உம்மைவிட்டுத் திரும்பிப்போகவேண்டுமென்ப
தைக்குறித்து, என்னோடே பேசாதிரும்; ஏனென்
றால் நீர் போகிற இடத்திற்கு வருகிறேன்; நீர்
இராத்தங்குகிற இடத்திலே தங்குகிறேன்; உம்
முடைய சனம் என்னுடைய சனம்; உம்மு
டைய பராபரன் என்னுடைய பராபரன்.—நீர் ௰௭
எங்கே மரணம் அடைகிறீரோ அங்கே நா
னும் மரணம் அடைந்து, அடக்கம்பண்ணப்படு
வேன்; மரணமே அல்லாமல் வேறொன்றும் உம்
மையும் என்னையும் பிரித்தால், கர்த்தர் எனக்கு
இப்படியும் அப்படியும் செய்யக்கடவரென்
றாள்.—ஆகையால் தன்னோடேகூடவர அவள் ௰௮
உறுதியாயிருக்கிறதைக் கண்டு, அப்புறம் அவ
ளோடே பேசாதிருந்தாள்.

௰௯ அப்படியே இருவரும் பெத்லேகேம்மட்டும்
நடந்துபோனார்கள்; அவர்கள் பெத்லேகேமுக்
குள் பிரவேசிக்கிறபோது, ஊரெல்லாம் அவர்க
ளுக்காக அமளிபட்டு, இவள் நகாமியோ என்று
௨௰ பேசிக்கொண்டார்கள்.—ஆனால் அவள் இவர்க
ளோடே சொன்னதாவது: நீங்கள் என்னை நகா
மியென்று சொல்லாமல், என்னை மாராளென்று
சொல்லுங்கள்; ஏனெனில் சர்வத்திற்கும் வல்ல
வர் எனக்கு மிகவும் கசப்பைக் கட்டளையிட்
௨௧ டார்.—நான் நிறைவுள்ளவளாய்ப் போனேன்;
கர்த்தர் என்னை வெறுமையுள்ளவளாய்த் திரும்பி
வரப்பண்ணினார்; கர்த்தர் என்னைச் சிறுமைப்ப
டுத்தி, சர்வத்திற்கும் வல்லவர் எனக்குத் தீங்கு
கட்டளையிட்டிருக்கையில், நீங்கள் என்னை நகா
மியென்பானேனென்றாள்.
௨௨ இந்தப்பிரகாரமாக நகாமி மோவாப் சாதியான
தன் மருமகளாகிய ரூத்தோடுங்கூட மோவாப்
பின் நாட்டுப்புறங்களிலிருந்து திரும்பிவந்தாள்;
வால்கோதுமையை அறுக்கிற நாள் துவக்குகிற
போது, அவர்கள் பெத்லேகேமுக்கு வந்தார்கள்.

## ௨. அதிகாரம்.

௧. ரூத்தென்பவள் போவாசினுடைய வயல்நிலத்தில் தானியம் பொறுக்கினது. ௪. போவாசு என்பவன் அவளைக்குறித்து விசாரித்தது. ௮. விசாரித்துத் தயவுசெய்தது. ௰௮. அவள் தான பொறுக்கி எடுத்ததையெல்லாம் நகாமியண்டைக்குக் கொண்டுவந்தது.

௧ நகாமிக்கோவென்றால் அவளுடைய புருஷனாகிய எலிமேலேக்கின் உறவின்முறையில் போவாசென்று பேருள்ள பலத்த ஆஸ்திக்காரனாகிய
௨ உறவின்முறையான் ஒருவனிருந்தான்.—மோ
வாப் சாதியான ரூத்தென்றவள் நகாமியுடனே,
நான் வயல்வெளிக்குப் போய், யாருடைய கண்
களில் எனக்குத் தயைகிடைக்குமோ, அவர் பிற
கே கதிர்களைப் பொறுக்கிக்கொண்டு வருவே
னென்றாள்; இவள் அவளோடே, என் மகளே,
௩ போவென்றாள்.—அவள் போய்ச் சேர்ந்து, வயல்
வெளியில் அறுக்கிறவர்கள் பிறகாலே பொறுக்
கினாள்; தற்செயலாய் அவளுக்கு நேரிட்ட அந்த
வயல்நிலம் எலிமேலேக்கின் வம்சத்தானாகிய
போவாசுடையதாயிருந்தது.
௪ இதோ போவாசு பெத்லேகேமிலிருந்து வந்து,
அறுக்கிறவர்களோடே, கர்த்தர் உங்களோடே
கூட இருப்பாராகவென்றான்; இவர்கள் அவனு
டனே, கர்த்தர் உம்மை ஆசீர்வதிப்பாராகவென்
௫ றார்கள்.—பிற்பாடு போவாசு அறுக்கிறவர்கள்
மேலே கண்காணியாக வைக்கப்பட்ட தன் வே
லைக்காரனை, இந்தப் பெண்பிள்ளை யாருக்கடுத்த
௬ வளென்று கேட்டான்.—அறுக்கிறவர்கள்மேலே
கண்காணியாக வைக்கப்பட்ட அந்த வேலைக்கா
ரன் பிரதியுத்தாரமாகச் சொன்னதாவது: இவள்
மோவாப் நாட்டுப்புறங்களிலிருந்து நகாமியோ
டேகூட வந்த மோவாப் சாதியான பெண்பிள்
௭ ளை.—அறுக்கிறவர்கள் பிறகாலே அரிக்கட்டுக
ளிலே சிந்தினதைத்தானே பொறுக்கிச் சேர்த்துக்
கொள்ளட்டுமேயென்று அவள் சொல்லிவந்து,
காலமே துவக்கி இந்தமட்டும் இங்கே நின்றாள்;
அவள் வீட்டிலே நிற்கிறது கொஞ்சநேரந்தா
னென்றான்.—அப்போது போவாசு ரூத்தோடே ௮
சொன்னதாவது: என் மகளே, கேள்; பொறுக்
கிக்கொள்ள வேறே வயலில் போகாமலும் இவ்
விடத்தைவிட்டுப் புறப்படாமலும் இங்கே என்
ஊழியக்காரப் பெண்களோடே கூடிக்கொண்
டிரு.—அவர்கள் அறுப்பறுக்கும் வயலின்மேல் நீ ௯
கண்ணோக்கமாயிருந்து, அவர்கள் பிறகாலேபோ
வாயாக; ஒருவரும் உன்னைத் தொடாதபடிக்கு,
வேலைக்காரருக்குக் கற்பித்தேன்; உனக்குத் தா
கம் உண்டானால், நீ பானைகளண்டைக்குப்
போய், வேலைக்காரர் மொள்ளுகிறதிலே குடி
யென்றான்.—அப்போது அவள் முகங்குப்புறவி ௰
ழுந்து வணங்கி, அவனுடனே, நான் மறுதேசத்
தாளாயிருக்கையில், நீர் என்னை விசாரிக்க, என
க்கு எதினாலே உம்முடைய கண்களிலே தயைகி
டைத்ததென்றாள்.—போவாசு அவளுக்குப் பிரதி ௰௧
யுத்தாரமாகச் சொன்னதாவது: உன் புருஷன் ம
ரணம் அடைந்தபிற்பாடு, நீ உன் மாமியாருக்கா
கச் செய்ததும், நீ உன் தகப்பனையும் உன் தாயை
யும் நீ பிறந்த தேசத்தையும்விட்டு, முன்னே நீ
அறியாதிருக்கிற சனத்தண்டைக்கு வந்ததுமெல்
லாம் எனக்கு நன்றாயறிவிக்கப்பட்டன.—நீ ௰௨
செய்ததற்குத்தக்க பலனைக் கர்த்தர் உனக்குக்
கட்டளையிடுவாராக; இஸ்ரவேலுடைய பராபர
னாகிய கர்த்தரின் செட்டைகளுக்குக் கீழாக அ
டைக்கலமாய் வந்த உனக்கு அவராலே வருகிற
உன்னுடைய பலன் நிறைவாயிருக்கக்கடவ
தென்றான்.—அதற்கவள், என் ஆண்டவனே, ௰௩
உம்முடைய கண்களில் எனக்குத் தயை கிடைக்
கட்டும், ஏனெனில் நான் உம்முடைய வேலைக்
காரிகளில் ஒருத்திக்கு ஒத்தவளாயிராவிட்டா
லும், நீர் எனக்கு ஆறுதல் சொல்லி உம்முடைய
அடியாளோடே பட்சமாய்ப் பேசினீரென்
றாள்.—பின்னையும் போவாசு சாப்பாட்டுவேளை ௰௪
யில் அவளுடனே, நீ இங்கே சேர்ந்துவந்து,
இந்த அப்பத்திலே புசித்து, உன் துணிக்கையைக்
காடியிலே தோய்த்துக்கொள்ளென்றான்; அப்ப
டியே அறுப்பறுக்கிறவர்கள் அருகே உளுக்காந்
தாள்; அவளுக்கு வறுத்த கோதுமையைக் கொ
டுத்தான்; அவள் சாப்பிட்டு, திருத்தியடைந்து,
இன்னம் மீதியாகவைத்தாள்.—அவள் பொறுக் ௰௫
கிக்கொள்ள எழுந்திருக்கிறபோது, போவாசு தன்
வேலைக்காரருக்குக் கற்பித்துச் சொன்னதாவது:
அவள் அரிக்கட்டுகள் நடுவிலும் பொறுக்கட்
டும்; அவளை ஈனம்பண்ணீர்களாக.—அவளுக் ௰௬
காக அரிகளிலே சிலவற்றைச் சிந்தவிட்டு, அ
வள் பொறுக்கும்படிக்கு வைத்துப்போய், அவ
ளை அதட்டாதிருங்களென்றான்.—அப்படியே ௰௭
அவள் சாயங்காலம்மட்டும் வயலிலே கதிர்பொ
றுக்கினாள்; பொறுக்கினதை அவள் தட்டி அடித்
துத் தீர்ந்தபோது, அது ஏறக்குறைய ஒரு மரக்
கால் வால்கோதுமையாயிருந்தது.
அவள் அதை எடுத்துக்கொண்டு, பட்டணத் ௰௮
திற்கு வந்தாள்; அவள் பொறுக்கினதை அவளு

டைய மாமி பார்த்தாள்; தான் திருத்தியாய்ச்
சாப்பிட்டு, மீதியாக வைத்ததையும் எடுத்து அவ
௰௯ ளுக்குக் கொடுத்தாள்.—அப்போது அவளுடைய
மாமி, இன்று எங்கே கதிர்பொறுக்கினாய்? எவ்வி
டத்திலே சம்பாதித்தாயென்று அவளைக் கேட்டு,
உன்னை விசாரித்தவன் ஆசீர்வதிக்கப்பட்டவ
னென்றாள்; அப்போது அவள் யாரிடத்திலே
தான் அதைச் சம்பாதித்தாளென்று தன் மாமிக்கு
அறிவித்து, நான் இன்று இதைச் சம்பாதித்த வயல்
௨௰ காரன் பேர் போவாசென்றாள். — அப்போது
நகாமி தன் மருமகளோடே, உயிரோடிருக்கிற
வர்களுக்காகவும் மரித்தவர்களுக்காகவும் தம்மு
டைய கிருபையை விடாதிருக்கிற கர்த்தராலே
அவன் ஆசீர்வதிக்கப்பட்டவனென்றாள்; பின்
னையும் நகாமி அவளுடனே, அந்த மனுஷன்
நம்மைச்சேர்ந்த உறவின்முறையானும் நம்மை
ஆதரிக்கிற சுதந்தரவாளிகளில் ஒருவனுமாயிருக்
௨௧ கிறானென்றாள்.—பின்னையும் மோவாப் சாதி
யான ரூத், என்னுடைய அறுப்பெல்லாம் அறுத்
துத் தீருமட்டும், நீ என் வேலைக்காரிகளோடே
கூடிக்கொண்டிரு என்கிறதையும் அவர் என்
௨௨ னோடே சொன்னாரென்றாள்.—அப்போது நகாமி
தன் மருமகளாகிய ரூத்துடனே, என் மகளே,
வேறொரு வயலிலே மனுஷர் உன்னை உதம்புகி
றதைப்பார்க்கிலும் நீ அவன் வேலைக்காரிகளோ
டே புறப்பட்டுப்போகிறது நல்லதென்றாள்.—
௨௩ அப்படியே வால்கோதுமை அறுப்பும் கோதுமை
அறுப்பும் தீருமட்டும் அவள் கதிர்பொறுக்கும்
படிக்கு, போவாசுடைய வேலைக்காரிகளோ
டே கூடிக்கொண்டு, தன் மாமியினிடத்தில்
இருந்தாள்.

## ௩. அதிகாரம்.

௧. நகாமியின் கற்பனையினால், இ. ரூத்தென்பவள் போவாசுடைய பாதத் தண்டையில் படுத்திருந்தது. அ. போவாசு உறவுக்குரிய கடமையைச் செய்ய உடன்பட்டது. ௰௫. அவன் ஆறுபடி வால்கோதுமையைக் கொடுத்து, அவளை அனுப்பினது.

௧ பிற்பாடு அவள் மாமியாகிய நகாமி அவளுக்குச்
சொன்னதாவது: என் மகளே, நீ நன்றாயிருக்கிற
தற்கான இளைப்பாறுதலை உனக்குத் தேடாதிருப்
௨ பேனோ?—இப்போதும் நீ கூடிக்கொண்டிருக்
கிற வேலைக்காரிகளின் எசமானாகிய போவாசு
நம்முடைய உறவின்முறையான் அல்லவோ?
இதோ அவன் இராத்திரிக்குக் களத்திலே வால்
௩ கோதுமை தூற்றுவான்.—நீ குளித்து, எண்ணெய்
பூசி, உன் வஸ்திரங்களை உடுத்துக்கொண்டு, அந்
தக் களத்திற்கு இறங்கிப்போ; ஆனால் அந்த
மனுஷன் புசித்துக் குடித்துத் தீருமட்டும் அவ
௪ னுக்கு உன்னை அறியப்படுத்தாதே.—அவன் படுத்
துக்கொண்டபோதோவெனில், அவன் படுத்தி
ருக்கும் இடத்தை நீ பார்த்துக்கொண்டிருந்து,
போய், அவன் கால்களின்மேல் மூடியிருக்கிற
தைக் கிளப்பிப் படுத்துக்கொள்; அப்போது நீ
செய்யவேண்டியதேதென்று அவன் உனக்கு அ
௫ றிவிப்பானென்றாள். — அப்போது இவள் அவ
ளுடனே, நீர் எனக்குச் சொன்னபடியெல்லாம்
செய்வேனென்று சொல்லி,

அந்தக் களத்திற்கு இறங்கிப்போய், தன்னு ௬
டைய மாமி தனக்குக் கற்பித்தபடியெல்லாம்
செய்தாள்.—போவாசு புசித்துக் குடித்து, மனம ௭
கிழ்ச்சியாயிருந்து, ஒரு அம்பாரத்தடியிலே வந்து
படுத்துக்கொண்டான்; அப்போது அவள் மெள்
ள வந்து, அவன் கால்களின்மேல் மூடியிருக்கி
றதைக் கிளப்பிப் படுத்துக்கொண்டாள்.—பாதி ௮
இராத்திரியிலோவென்றால், அந்த மனுஷன் அ
ருண்டு, காலைமுடக்கி, இதோ ஒரு பெண்சாதி
தன் பாதத்தண்டையிலே படுத்திருக்கிறதைக்
கண்டு,—நீ யாரென்று கேட்டான்; அப்போது ௯
அவள், நான் உம்முடைய அடியாளாகிய ரூத்;
நீர் உம்முடைய அடியாள்மேலே உம்முடைய
செட்டையை விரியும்; ஏனெனில் நீர் சுதந்தர
வாளியென்றாள்.—அதற்கு அவன் சொன்னதா ௰
வது: என் மகளே, நீ கர்த்தரால் ஆசீர்வதிக்கப்ப
டுவாயாக; நீ தரித்திரவான்களும், அல்லது ஐசு
வரியவான்களுமான வாலிபர்களின் பிறகாலே
போகாதேபோனதினாலே, உன்னுடைய முந்
தின நற்குணத்தைப்பார்க்கிலும், உன்னுடைய
பிந்தின நற்குணம் உத்தமமாயிருக்கின்றது.—
இப்போதும் என் மகளே, நீ பயப்படாயாக; நீ ௰௧
சொன்னபடியெல்லாம் உனக்குச் செய்வேன்;
ஏனெனில் நீ புண்ணியவதி என்கிறதை என்னு
டைய சனமாகிய ஊராரெல்லாரும் அறிவார்
கள்.—இப்போதும் நான் சுதந்தரவாளியென்கி ௰௨
றது மெய்தானே; ஆனால் என்னிலும் கிட்டின
சுதந்தரவாளி ஒருவனிருக்கிறான்.—இராத்திரிக் ௰௩
குத் தங்கியிரு; நாளைக்கு அவன் உன்னைச்
சுதந்தர நியாயமாய் விவாகம்பண்ணச் சம்மதித்
தால் நல்லது, விவாகம்பண்ணட்டும்; அவன்
உன்னை விவாகம்பண்ண மனதில்லாதிருந்தா
னேயாகில், நான் உன்னைச் சுதந்தரநியாயமாய்
விவாகம்பண்ணுவேனென்று கர்த்தருடைய சீவ
னைக்கொண்டு சொல்லுகிறேன்; விடியற்காலம்
மட்டும் படுத்துக்கொண்டிருவென்றான்.

அவள் விடியற்காலம்மட்டும் அவன் பாதத் ௰௪
தண்டையில் படுத்திருந்து, ஒருவரை ஒருவர்
அறியக்கூடாததற்குமுன்னே எழுந்திருந்தாள்;
ஏனெனில் ஒரு பெண்சாதி களத்திலே வந்த
செய்தி அறியப்படாதிருக்கவேண்டுமென்று அ
வன் சொன்னான்.—பிற்பாடு அவன், நீ போர்த் ௰௫
துக்கொண்டிருக்கிற போர்வையை விரித்துப்
பிடியென்றான்; அவள் அதைப் பிடிக்கிறபோது,
அவன் அதிலே ஆறுபடி வால்கோதுமையை அ
ளந்துபோட்டு, அவளுக்குக் கொடுத்துவிட்டு,
பட்டணத்திற்குப் புறப்பட்டுவந்தான்.

அவள் தன் மாமியண்டைக்கு வந்தபோது ௰௬
இவள், நீயார் என் மகளே, உன்னுடைய செய்தி
என்னவென்று கேட்டாள்; அப்போது அவள்
அந்த மனுஷன் தனக்குச் செய்ததையெல்லாம்
அவளுக்கு அறிவித்து,—நீ உன் மாமியாரண்டை ௰௭
க்கு வெறுமையாய்ப் போகவொண்ணாதென்று

அவர் இந்த ஆறுபடி வால்கோதுமையை எனக்
௰௮ குக் கொடுத்தாரென்றாள். — அப்போது இவள்
என் மகளே, இந்தக் காரியம் என்னமாய்ப் போ
குமென்று நீ அறியும்மட்டும் அமர்ந்திரு; ஏனெ
னில் அந்த மனுஷன் இன்றைக்கு இந்தக் காரி
யத்தை முடிக்கும்முன் இளைப்பாறுவதில்லை
யென்றாள்.

## ௪. அதிகாரம்.

௧. போவாசு நெருங்கிய உறவினனை நியாயத்தீர்ப்புக்கு அழைத்தது. ௬. அவன் இஸ்ரவேல் சனங்களின் வழக்கத்தின்படி வரும் மீட்குதலைத் தவிர்ந்தது. ௯. போவாசு சுதந்தரத்தை வாங்கினது. ௰௩. ரூத்தென்பவளை விவாகம்செய்தது. ௰௭. தாவீதினுடைய பாட்டனாகிய ஓபெத்தென்றவனை அவள் பெற்றது. ௰௮. பேரேச்சினுடைய சந்ததி.

௧ போவாசு பட்டண வாசலில் ஏறிப்போய்,
உளுக்காந்துகொண்டிருந்தான்; அப்போது இ
தோ போவாசு சொல்லியிருந்த அந்தச் சுதந்தர
வாளி கடந்துபோகையில், அவன், ஓய் ஓய்,
சற்று இப்பாலே வந்து, உளுக்காருமென்றான்;
௨ அவன் வந்து உளுக்காந்தான். — அப்போது அ
வன் பட்டணத்து மூப்பரானபேர்களில் பத்துப்
பேரை அழைத்து, இங்கே உளுக்காருங்களென்
௩ றான்; அவர்கள் உளுக்காந்தார்கள்.—அப்போது
அவன் அந்தச் சுதந்தரவாளிக்குச் சொன்னதா
வது: எலிமேலேக்கென்ற நம்முடைய சகோதர
னுக்கு இருந்த வயல்வெளியின் பங்கை மோ
வாப் நாட்டுப்புறங்களிலிருந்து திரும்பிவந்த
௪ நகாமி விற்றுப்போடுகிறாள். — ஆகையால் நீர்
அதை மீட்க மனதானால், நீர் அதைக் குடிகளுக்
குமுன்பாகவும்,என் சனத்தின் மூப்பருக்குமுன்
பாகவும் மீட்டு வாங்கும்படி இதை உம்முடைய
செவிகளில் அறிவிக்கவேண்டுமென்றிருந்தேன்;
அதை நீர் மீட்க மனதில்லாதிருந்தீரேயானால்,
நான் அதை அறியும்படிக்கு எனக்கு அறிவியும்;
ஏனென்றால் உம்மையும் உமக்குப்பிறகு என்னை
யும் தவிர, அதை மீட்கத்தக்கவன் வேறொருவ
னும் இல்லையென்றான்; அதற்கு இவன் நான்
௫ அதை மீட்பேனென்றான்.—அப்போது போவா
சென்பவன் நீர் நகாமியின் கையிலே அந்த
வயல்வெளியை வாங்குகிற நாளிலே நீர் மரித்த
வனுடைய சுதந்தரத்தில் அவன் பேரை நிலைநிற்
கப்பண்ணும்படிக்கு, அதை மரித்தவன் பெண்
சாதியாகிய மோவாப் சாதியான ரூத் கையிலும்
வாங்கவேண்டியதென்றான்.

௬ அப்போது அந்தச் சுதந்தரவாளி நான் என்னு
டைய சுதந்தரத்தைக் கெடுக்காதபடிக்கு, நான்
அதை மீட்டுக்கொள்ளமாட்டேன்; நான் மீட்கத்
தக்கதை நீர் மீட்டுக்கொள்ளும்; ஏனென்றால் அ
௭ தை மீட்டுக்கொள்ளமாட்டேனென்றான்.—மீட்
கிறதிலும் மாற்றுகிறதிலும் சகல காரியத்தையும்
உறுதியாக்கும்படிக்கு, இஸ்ரவேலிலே முன்கா
லம் முதல்கொண்டு பழக்கம் என்னவென்றால்,
ஒருவன் தன்னுடைய செருப்பைக் கழற்றி, மற்
றவனுக்குக் கொடுப்பான், இது இஸ்ரவேலிலே
௮ சாட்சிக்கானது. — அப்படியே அந்தச் சுதந்தர
வாளி போவாசுக்கு, நீர் அதைக் கொள்ளுமென்
று தன் செருப்பைக் கழற்றிப்போட்டான்.

அப்போது போவாசு மூப்பருக்கும் எல்லாச் ௯
சனத்திற்கும் சொன்னதாவது: எலிமேலேக்குக்
கு இருந்ததெல்லாவற்றையும் கிலியோனுக்கும்
மக்லோனுக்கும் இருந்ததெல்லாவற்றையும் நகா
மியின் கையிலே கொண்டேனென்கிறதற்கு
இன்றைத்தினம் நீங்கள் சாட்சி. — இதுவுமல் ௰
லாமல், மரித்தவனுடைய சகோதரருக்குள்ளும்,
ஊராருக்குள்ளும், அவனுடைய பேர் வேரற்றுப்
போகாமல், மரித்தவனுடைய சுதந்தரத்திலே அ
வன் பேரை நிலைநிற்கப்பண்ண, நான் மக்லோ
னின் பெண்சாதியாயிருந்த மோவாப் சாதியான
ரூத்தை எனக்குப் பெண்சாதியாகப் படைத்துக்
கொள்ளுகிறேன்; அதற்கும் இன்றைத்தினம் நீங்
கள் சாட்சியென்றான்.—அப்போது ஒலிமுகவா ௰௧
சலில் இருக்கிற எல்லாச் சனமும் மூப்பரானவர்
களும் சொன்னதாவது: நாங்கள் சாட்சி; உன்
வளவிலே வருகிற பெண்சாதியைக் கர்த்தர் இஸ்
ரவேல் வீட்டைக் கட்டுவித்த இரண்டுபேராகிய
இராகேலைப்போலவும் லேயாளைப்போலவும்,
இருக்கப்பண்ணுவாராக; நீ எப்பிருத்தாவிலே
பலத்துப்போய், பெத்லேகேமிலே பேர்பெற்ற
வனாகக்கடவாய். — இந்தப் பெண்ணிடத்திலே ௰௨
கர்த்தர் உனக்குக் கட்டளையிடப்போகிற வித்தி
னாலே, உன்னுடைய வீடு தாமார் யூதாவுக்குப்
பெற்ற பேரேச்சின் வீட்டைப்போல ஆகக்கட
வதென்றார்கள்.

அப்படியே போவாசு ரூத்தை விவாகம்பண் ௰௩
ணினான்; அவள் அவனுக்குப் பெண்சாதியா
னாள்; அவன் அவளிடத்தில் உள்பிரவேசித்த
போது, அவள் கர்ப்பந்தரித்து, ஒரு ஆண்பிள்
ளையைப் பெறக் கர்த்தர் கட்டளையிட்டார். —
அப்போது ஸ்திரிகள் நகாமியோடே சொன்ன ௰௪
தாவது: இன்று உனக்குச் சுதந்தரவாளியைக்
குறைந்துபோகப்பண்ணாத கர்த்தர் ஸ்தோத்திரிக்
கப்பட்டவர்; அவன் பேர் இஸ்ரவேலிலே பிரப
லமாகக்கடவது. — அவன் உன் ஆத்துமாவிற்கு ௰௫
ஆறுதலாகி, உன் முதிர்ந்தவயதிலே உன்னைப்
பராமரிப்பான்; ஏனெனில் உன்னைச் சிநேகித்து,
ஏழு குமாரரைப்பார்க்கிலும் உனக்கு நலமாயி
ருக்கிற உன்னுடைய மருமகள் அவனைப் பெற்
றாளேயென்றார்கள். — நகாமி அந்தப் பிள்ளை ௰௬
யை எடுத்து, தன் மடியிலே வைத்துக்கொண்டு,
அதை வளர்க்கிற தாதியானாள். — அசல்வீட்டுக் ௰௭
காரிகள் நகாமிக்கு ஒரு ஆண்பிள்ளை பிறந்த
தென்று சொல்லி, அதற்குப் பேரிட்டு, அதின்
பேரை ஓபெத்தென்றார்கள்; இவன் தாவீதின்
தகப்பனாகிய ஈசாயின் தகப்பனானவன்.

பேரேச்சுடைய சந்ததியின் வரிசையாவது: ௰௮
பேரேச் எசுரோனைப் பெற்றான். — எசுரோன் ௰௯
ராமைப் பெற்றான்; ராம் அமீனதாபைப் பெற்
றான். — அமீனதாப் நகாசோனைப் பெற்றான்; ௨௰
நகாசோன் சல்மாவைப் பெற்றான். — சல்மா ௨௰௧
போவாசைப் பெற்றான்; போவாசு ஓபெத்தைப்
பெற்றான். — ஓபெத் ஈசாயியைப் பெற்றான்; ௨௰௨
ஈசாயி தாவீதைப் பெற்றான்.

# I. SAMUEL.

# சாமுவேலின்

## முதலாம் புஸ்தகம்.

### ௧. அதிகாரம்.

*௧. எல்க்கானாவென்னும் லேவியன் இரண்டு பெண்சாதிகளையுடையவனா யிருந்து சீலோவிலே வருஷந்தோறும் தேவாராதனைசெய்தது. ௪. மலடியாயிருந்தவளும் பெனின்னாளாலே மனமடிவாக்கப்பட்டவளுமாகிய அன்னாளை எல்க்கானா சிநேகித்தது. ௮. அன்னாளென்பவள் புத்திரன் இல்லாமையால், துக்கத்தில் மன்றாடியது. ௰௨. ஏலி முதலில் அவளைக் கண்டித்து, பின்பு ஆசீர்வதித்தது. ௰௯. அன்னாள் சாமுவேலைப் பெற்று, முலைமறக்கிறவரையில், வீட்டில் வைத்திருந்தது. ௨௪. அவள் பொருத்தனையின்படி பராபரனுக்கு அவனைக் கொடுத்தது.*

௧ எப்பிராயீமின் மலைத்தேசத்திலிருக்கிற சோப்பீ
மென்னப்பட்ட ராமதாயீம் ஊராகிய ஒரு மனு
ஷன் இருந்தான்; அவனுக்கு எல்க்கானாவென்று
பேரிருந்தது; அவன் எப்பிராயீமியனாகிய சூப்
புக்குப் பிறந்த தோகுவின் குமாரனாகிய எலிகூ
௨ வின் மகனான ஏரோகாமின் குமாரன்.—அவ
னுக்கு இரண்டு பெண்சாதிகளிருந்தார்கள்; ஒருத்
தி பேர் அன்னாள் மற்றவள் பேர் பெனின்னாள்;
பெனின்னாளுக்குப் பிள்ளைகள் இருந்தன; அன்
னாளுக்கோவென்றால் பிள்ளைகளில்லை.
௩ அந்த மனுஷன் சீலோவிலே சேனைகளுடைய
கர்த்தரைப் பணிந்துகொள்ளவும் அவருக்குப்
பலியிடவும் வருஷந்தோறும் தன் பட்டணத்தி
லிருந்து போயேறுவான்; அங்கே கர்த்தரின் ஆசா
ரியர்களாகிய ஒப்னியும் பினேகாசும் என்கிற
௪ ஏலியின் இரண்டு குமாரர் இருந்தார்கள்.—அங்
கே எல்க்கானா பலியிடும்நாளிலே, அவன் தன்
பெண்சாதியாகிய பெனின்னாளுக்கும், அவளு
டைய எல்லாக் குமாரருக்கும், குமாரத்திகளுக்
௫ கும், பங்குகளைக் கொடுத்து,—அன்னாளுக்கோ
வென்றால் ஒரு நல்ல பங்கைக் கொடுப்பான்;
ஏனெனில் அன்னாளைச் சிநேகித்துக்கொண்டி
ருந்தான்; ஆனால் கர்த்தர் அவள் கர்ப்பத்தை
௬ அடைத்திருந்தார்.—கர்த்தர் அவள் கர்ப்பத்தை
அடைத்தபடியினாலே, அவளுடைய சக்களத்தி
அவள் துக்கப்படும்படி அவளை மிகவும் எரிச்
௭ சல்மூட்டுவாள்.—அவள் கர்த்தருடைய வீட்டிற்
குப் போயேறும் சமயத்திலே, வருஷம்தோறும்
அந்தப் பிரகாரமாய்ச் செய்வான்; ஆகையால்
இவள் அவளை மனமடிவாக்குவாள்; அப்போது
அவள் அழுதுகொண்டு புசியாதிருப்பாள்.—
௮ அவள் புருஷனாகிய எல்க்கானா அவளுடனே,
அன்னாளே, ஏன் அழுகிறாய்? ஏன் புசியாதிருக்
கிறாய்? ஏன் மனஞ்சலிப்பாயிருக்கிறாய்? பத்துக்
குமாரரைப்பார்க்கிலும், நான் உனக்கு நலமாயி
ருக்கவில்லையோவென்றான்.

அப்போது அன்னாள் சீலோவிலே புசித்துக் ௯
குடித்தபிற்பாடு எழுந்திருந்தாள்; ஆசாரியனாகிய
ஏலியோவென்றால், கர்த்தருடைய தேவாலயத்
தின் வாசல் நிலையண்டையிலே ஒரு ஆசனத்தின்
மேல் உளுக்கார்ந்திருந்தான்.-அவள் போய்,மனோ ௰
துக்கமாய்க் கர்த்தரைநோக்கி,விண்ணப்பம்பண்
ணி அழவே அழுது,—ஒரு பொருத்தனைபண்ணிச் ௰௧
சொன்னதாவது: சேனைகளுடைய கர்த்தாவே,
தேவரீர் உம்முடைய அடியாளின் சிறுமையைப்
பார்க்கவே பார்த்து, உம்முடைய அடியாளை மற
வாமல் என்னை நினைத்து, உம்முடைய அடியா
ளுக்கு ஒரு ஆண்பிள்ளையைக் கொடுத்தால், நான்
அவனை அவன் உயிரோடிருக்கும் சகல நாளும்
கர்த்தருக்கு ஒப்புக்கொடுப்பேன்; அவன் தலை
யின்மேல் சவரகன் கத்தி படுவதில்லையென்றாள்.

அவள் கர்த்தருக்குமுன்பாக அநேகநேரம் ௰௨
விண்ணப்பம்பண்ணுகிறபோதேவெனில், ஏலி
அவள் வாயைக் கவனித்துக்கொண்டிருந்தான்.—
ஏனென்றால் அன்னாள் தன் இருதயத்திலே பேசி ௰௩
னாள்; அவளுடைய உதடுகள்மாத்திரம் அசைந்
தன; அவள் சத்தமோ கேட்கப்பட்டதில்லை;
ஆகையால் அவள் வெறித்திருக்கிறாளென்று ஏலி
நினைத்து,—அவளுடனே, எந்தமட்டும் வெறித் ௰௪
திருப்பாய்; உன் வெறி உன்னைவிட்டு நீங்கட்டு
மென்றான். — அன்னாளோவென்றால், பிரதியுத் ௰௫
தாரமாகச் சொன்னதாவது: அப்படியில்லை என்
ஆண்டவனே, நான் மனக்கிலேசமுள்ள பெண்
சாதி; நான் திராட்சப்பழ இரசமாகிலும், இலாகி
ரியுள்ள பானமென்கிலும் குடித்ததில்லை; நான்
கர்த்தருக்குமுன்பாக என் இருதயத்தை ஊற்றி
விட்டேன்.—உம்முடைய அடியாளைப் பேலி ௰௬
யாளின் மகளாக எண்ணாதிருப்பீராக; ஏனென்
றால் என்னுடைய பெரிய விசாரத்தினாலும் மன
ஸ்தாபத்தினாலும் இந்நேரம்மட்டாகப் பேசிக்
கொண்டிருந்தேனென்றாள். — அப்போது ஏலி ௰௭
பிரதியுத்தாரமாக, நீ சமாதானத்துடனே போ;
நீ இஸ்ரவேலின் பராபரனைக் கேட்ட உன் விண்
ணப்பத்தை அவர் உனக்குக் கட்டளையிடுவார்
என்றான். — அப்போது அவள், உம்முடைய ௰௮
அடியாளுக்கு உம்முடைய கண்களிலே தயை
கிடைக்கக்கடவதென்றாள்; பிற்பாடு அந்தப்
பெண்சாதி தன் வழியே போய், சாப்பிட்டு,
அப்புறம் துக்கமுகமாயிராதிருந்தாள்.

௰௯ அவர்கள் காலமே எழுந்திருந்து, கர்த்தரைப்
பணிந்துகொண்டு, திரும்பிப்போய், இராமாவி
லிருக்கிற தங்கள் வீட்டுக்கு வந்தார்கள்; எல்க்
கானா தன் பெண்சாதியாகிய அன்னாளை அறிந்த
௨௰ போது கர்த்தர் அவளை நினைத்தார். — சில நாள்
சென்றபிற்பாடு அன்னாள் கர்ப்பவதியாகி,
ஒரு குமாரனைப் பெற்று, அவனுக்குச் சாமுவே
லென்று பேரிட்டாள்; ஏனெனில் கர்த்தரிடத்
தில் அவனைக் கேட்டேனென்றாள்.
௨௧ எல்க்கானாவென்கிற புருஷன் கர்த்தருக்கு
வருஷாந்தரம் செலுத்தும்பலியையும் தன் பொ
ருத்தனையையும் செலுத்துகிறதற்கு, தன் வீட்டா
ரனைவரோடும்கூட ஏறிப்போகிறபோதோவெ
௨௨ னில்,—அன்னாள் கூடப்போகவில்லை; ஏனென்
றால் பிள்ளை முலைமறந்தபிற்பாடு, அவன் கர்த்
தரின் சந்நிதியிலே காணப்படவும், அங்கே என்
றென்றைக்கும் இருக்கவும், நான் அவனைக்
கொண்டுபோய் விடுவேனென்று தன் புருஷ
௨௩ னுக்குச் சொன்னாள்.—அப்போது அவள் புருஷ
னாகிய எல்க்கானா அவளுடனே, நீ உனக்குச்
சம்மதியானபடி செய்து, அவனை முலைமறக்
கப்பண்ணும்மட்டும் இரு; கர்த்தர் தம்முடைய
வார்த்தையைமாத்திரம் நிறைவேற்றுவாராகவெ
ன்றான்; அப்படியே அந்தப் பெண்சாதி தன்
பிள்ளையைப் பால்மறக்கப்பண்ணும்மட்டும் அ
தற்கு முலைகொடுத்தாள்.
௨௪ அவள் அவனைப் பால்மறக்கப்பண்ணினபிற்
பாடு, மூன்று காளை எருதுகளையும், ஒரு மரக்கால்
மாவையும், ஒரு துருத்தி திராட்சப்பழ இரசத்
தையும், அவனையும், கூட்டிக்கொண்டு போய்,
சீலோவிலிருக்கிற கர்த்தருடைய வீட்டுக்கு வந்
தாள்; பிள்ளை இன்னம் குழந்தையாயிருந்தது.—
௨௫ அவர்கள் ஒரு காளை எருதைப் பலியிட்டு, பிள்
ளையை ஏலியண்டைக்குக் கொண்டுவந்து விட்
௨௬ டார்கள்.—அவள் சொன்னதாவது: என் ஆண்ட
வனே, கர்த்தரைநோக்கி விண்ணப்பம்பண்ண,
இங்கே உம்மண்டையிலே நின்ற பெண்சாதி
நான்தானே என்று என் ஆண்டவனாகிய உம்மு
டைய ஆத்துமாவின் சீவனைக்கொண்டு சொல்
௨௭ லுகிறேன்.—இந்த ஆண்பிள்ளையைக் கட்டளை
யிட விண்ணப்பம்பண்ணினேன்; நான் கர்த்
தரைக் கேட்ட என் விண்ணப்பத்தை அவர்
௨௮ எனக்குக் கட்டளையிட்டார்.—ஆகையால் அவன்
கர்த்தருக்கென்று கேட்கப்பட்டபடியினாலே
அவனை அவன் உயிரோடிருக்கும் சகலநாளும்
கர்த்தருக்கே ஒப்புக்கொடுக்கிறேன் என்றாள்;
அவர்கள் அங்கே கர்த்தரைப் பணிந்துகொண்
டார்கள்.

## ௨. அதிகாரம்.

க. அன்னாவின் தோத்திரப்பாடல். ௰௨. ஏலியின் குமாரர்கள் செய்த பாவம். ௰அ. சாமுவேல் செய்த தேவ ஊழியம். ௨௰. ஏலியின் ஆசீர்வாதத்தினால் அன்னாளுக்கு மற்றும் பிள்ளைகள் பிறந்தது. ௨௨. ஏலியென்பவன் தன் குமாரர்களைக் கண்டித்தது. ௨௭. ஏலியின் வீட்டிற்கு விரோதமான தீர்க்கதரிசனம்.

௧ அப்போது அன்னாள் செபம்பண்ணிச் சொன்
னதாவது: என் இருதயம் கர்த்தருக்குள் களி
கூர்ந்து, என்னுடைய கொம்பு கர்த்தருக்குள்
உயர்ந்திருக்கின்றது, என் பகைஞரின்மேலே
வாய் விரிவாயிற்று; ஏனெனில் உம்முடைய இ
ரட்சிப்பினாலே சந்தோஷப்படுகிறேன்.—கர்த்த ௨
ரைப்போலப் பரிசுத்தவான் இல்லை; ஏனெனில்
உம்மையல்லாமல் வேறொருவர் இல்லை; எங்கள்
பராபரனைப்போலொத்த கன்மலையில்லை.—பெ ௩
ருமையும் மேட்டிமையுமான அநேகம் பேச்
சைப் பேசாதிருங்கள்; கடினமான பேச்சு உங்
கள் வாயிலிருந்து புறப்படவேண்டாம்; ஏனென்
றால் கர்த்தர் மகா அறிவுள்ள பராபரன்; அவர்
செய்கைகள் யதார்த்தமல்லவோ? — பலவான் ௪
களின் வில் உடைந்தது; தள்ளாடினவர்களோ
வென்றால் பலத்தினாலே இடைகட்டப்பட்
டார்கள். — அப்பத்தால் திருத்தியாயிருந்தவர் ௫
கள் கூலிவேலை செய்கிறார்கள்; பசியாயிருந்
தவர்களோ இனி அப்படிக்கொத்தவர்களல்ல;
மலடியானவள்தானே ஏழு பெற்றாள்; அநேகம்
பிள்ளைகளைப் பெற்றவளோ பலட்சயப்பட்
டாள்.—கர்த்தர் கொல்லுகிறவரும் உயிர்ப்பிக்கி ௬
றவரும் பாதாளத்தில் இறங்கவும் அதிலிருந்து
ஏறவும்பண்ணுகிறவருமாயிருக்கிறார்.—கர்த்தர் ௭
ஏழையாக்குகிறவரும், ஐசுவரியம் அடையப்
பண்ணுகிறவரும், தாழ்த்துகிறவரும், உயர்த்து
கிறவருமாயிருக்கிறார்.—பிரபுக்களோடே உளுக் ௮
காரப்பண்ணவும், கனமுள்ள ஆசனத்தைச் சுதந்
தரிக்கப்பண்ணவும், அவர் எளிமையானவனைத்
தூளிலிருந்து எடுத்து, தரித்திரனைக் குப்பையி
லிருந்து உயரப்பண்ணுகிறார்; ஏனென்றால் பூமி
யின் அஸ்திபாரங்கள் கர்த்தருடையவைகள்;
அவைகள்மேலே பூச்சக்கரத்தை வைத்தார்.—தம் ௯
முடைய சன்மார்க்கரின் கால்களைக் காப்பார்;
ஆகாதவர்களோ இருளிலே அமர்ந்திருக்கப்பண்
ணப்படுவார்கள்; ஏனென்றால் பலத்தினால் ஒரு
வனும் மேல்கொள்ளக்கூடாது.—கர்த்தரோடே ௰
வழக்காடுகிறவர்கள் நொறுக்கப்படுவார்கள்; வா
னத்திலிருந்து அவர்கள்மேலே குமுறுவார்; கர்த்
தர் பூமியின் கடையாந்தரங்களை நியாயம்தீர்த்து,
தாம் வைத்த இராசாவுக்குப் பலன்கொடுத்து,
தாம் அபிஷேகம்பண்ணினவரின் கொம்பை
உயரப்பண்ணுவாரென்றாள்.
பிற்பாடு எல்க்கானா இராமாவிலிருக்கிற தன் ௰௧
வீட்டுக்குப் போனான்; அந்தப் பிள்ளையோவென்
றால், ஆசாரியனாகிய ஏலிக்குமுன்பாகக் கர்த்த
ரைச் சேவித்துக்கொண்டிருந்தது —ஆனால் ஏலி ௰௨
யின் குமாரர் பேலியாளின் பிள்ளைகளாயிருந்
தார்கள்; அவர்கள் கர்த்தரை அறிந்ததில்லை.—அந்த ௰௩
ஆசாரியர்கள் சனத்தை நடப்பித்த வயணம் என்
னவென்றால், எவனாகிலும் யாதொரு பலி
யைச் செலுத்துகிறபோது, இறைச்சி வேகுகை
யில், ஆசாரியனுடைய வேலைக்காரன் மூன்று
கூருள்ள ஒரு ஆயுதத்தைத் தன் கையிலே பிடித்
துவந்து,—அதினாலே, கொப்பரையிலே, அல் ௰௪
லது பானையிலே, அல்லது சருவத்திலே, அல்லது
சட்டியிலே குத்துவான்; அந்த ஆயுதத்தில் வரு

கிறதையெல்லாம் ஆசாரியன் வாங்கிக்கொள்
வான்; அப்படி அங்கே சீலோவிலே வருகிற
௰௫ இஸ்ரவேலருக்கெல்லாம் செய்தார்கள். — கொ
ழுப்பைக் கொளுத்தாததற்குமுன்னும் ஆசா
ரியனுடைய வேலைக்காரன் வந்து பலியிடுகிற
மனுஷனோடே, ஆசாரியனுக்குப் பொரிக்கத்
தக்கதாக இறைச்சி கொடு; ஏனென்றால் பச்
சை இறைச்சியே அல்லாமல், அவித்ததை உன்
௰௬ கையிலே வாங்குகிறதில்லையென்பான்.—அந்த
மனுஷன் இவனுடனே, இன்று செய்யவேண்
டியபடி முதல் கொழுப்பைக் கொளுத்திவிடட்
டும்; பிற்பாடு உன் மனவிருப்பத்தின்படி எடுத்
துக்கொள்ளென்று சொன்னாலும், இவன், அப்
படியல்ல இப்போதுதானே கொடு, இல்லாவிட்
டால் பலவந்தமாய் எடுத்துக்கொள்வேனென்
௰௭ பான்.—ஆனதுகொண்டு அந்த வாலிபரின் பா
வம் கர்த்தரின் சந்நிதிக்குமுன்பாக மிகவும் பெ
ரிதாயிருந்தது; ஏனெனில் மனுஷர் கர்த்தரின்
காணிக்கையை அசட்டைபண்ணினார்கள்.
௰௮ சாமுவேலோவென்றால் சணல்நூல் சால்வை
தரித்த பிள்ளையாண்டானாய்க் கர்த்தருக்குமுன்
௰௯ பாகச் சேவித்திருந்தான்.—அவனுடைய தாய்
வருஷம்தோறும் செலுத்தும் பலியைச் செலுத்
துகிறதற்காக, தன் புருஷனோடேகூட வந்தேறு
கிறபோதெல்லாம், அவனுக்கு ஒரு சிறிய சட்
௨௰ டையைத் தைத்துக்கொண்டுவருவாள். — ஏலி
எல்க்கானாவையும் அவன் பெண்சாதியையும்
ஆசீர்வதித்து, இந்த ஸ்திரி கர்த்தரைக் கேட்ட
விண்ணப்பத்திற்காகக் கர்த்தர் உனக்கு அவளா
லே சந்தானம் கட்டளையிடுவாராகவென்றான்;
அவர்கள் திரும்பத் தங்கள் தானத்திற்குப் போய்
௨௧ விட்டார்கள்.—அப்படியே கர்த்தர் அன்னாளை
விசாரித்தார்; அவள், கர்ப்பம்தரித்து மூன்று
குமாரரையும் இரண்டு குமாரத்திகளையும் பெற்
றாள்; ஆனால் சாமுவேலென்ற பிள்ளையாண்
டான் கர்த்தருக்குமுன்பாக வளர்ந்தான்.
௨௨ ஏலியோவென்றால் மெத்தக் கிழவனாயிருந்
தான்; அவன் தன்னுடைய குமாரர் இஸ்ரவேலுக்
கெல்லாம் செய்கிறதெல்லாவற்றையும், அவர்
கள் ஆசரிப்புக்கூடாரத்தின் வாசலிற்குத் திரட்
சியாய் வருகிற ஸ்திரிகளோடே சயனிக்கிறதை
௨௩ யும் கேட்டு,—அவர்களோடே சொன்னதாவது:
நீங்கள் இப்படிக்கொத்த காரியங்களைச் செய்கி
றதென்ன? ஏனென்றால் நான் இந்த எல்லாச்
சனத்தின் வாயிலும் உங்கள் பொல்லாத அக்கிர
௨௪ மங்களைக் கேட்கிறேன்.—என் குமாரரே, வேண்
டாம்; ஏனென்றால் நான் கேட்கிற இந்தக் கீர்த்தி
நல்லதல்ல; கர்த்தருடைய சனம் மீறிநடக்கிற
௨௫ தற்குக் காரணமாயிருக்கிறீர்கள்.—மனுஷனுக்கு
விரோதமாக மனுஷன் பாவம்செய்தால், நியாயா
திபதிகள் அதைத் தீர்ப்பார்கள்; ஒருவன் கர்த்த
ருக்கு விரோதமாய்ப் பாவம்செய்தானேயாகில்,
அவனுக்காக விண்ணப்பம்செய்யத்தக்கவன் யா
ரென்றான்; ஆனால் அவர்கள் தங்கள் தகப்பன்
சொல்லைக் கேளாமல்போனார்கள்; அதேனென்
றால் அவர்களைக் கொன்றுபோடக் கர்த்தர் சித்த
மாயிருந்தார். — சாமுவேலென்ற பிள்ளையாண் ௨௬
டானோவெனில், வளர்ந்தேறி, கர்த்தருக்கும் ம
னுஷருக்கும் பிரியமாக நடந்தான்.
பராபரனுடைய மனுஷன் ஒருவன் ஏலியண் ௨௭
டைக்கு வந்து, அவனோடே சொன்னதாவது:
கர்த்தர் உரைக்கிறதேதெனில் உன் பிதாவின்
வீட்டார் எகிப்திலே பார்வோனின் வீட்டில் இ
ருக்கையில், நாம் நம்மை அவர்களுக்கு வெளிப்
படுத்தி,—நம்முடைய பலிபீடத்தின்மேலே பலி ௨௮
யிடுகிறதற்கும், தூபம்காட்டுகிறதற்கும், நமக்கு
முன்பாக ஆசாரியசால்வையைப் போர்த்துக்
கொண்டிருக்கிறதற்கும், இஸ்ரவேல் கோத்திரங்
களிலெல்லாம் அவனை நமக்கு ஆசாரியனாகத்
தெரிந்துகொண்டு, உன் பிதாவின் வீட்டாருக்
கும் இஸ்ரவேல் புத்திரருடைய தகனபலிகளை
யெல்லாம் கொடுத்ததில்லையோ?—வாசஸ்தலத்தி ௨௯
லே செலுத்த நாம் கற்பித்த நமது பலியையும்,
நமது காணிக்கையையும், நீங்கள் உதைப்பா
னேன்? நம்முடைய சனமாகிய இஸ்ரவேலின்
காணிக்கைகளிலெல்லாம் பிரதானமானதினால்,
உங்களைக் கொழுக்கப்பண்ணும்படிக்கு, நீ நம்
மைப்பார்க்கிலும் உன் குமாரரை எண்ணுவா
னேனென்கிறார். — ஆகையால் இஸ்ரவேலின் ௩௰
பராபரனாகிய கர்த்தர் சொல்லுகிறதாவது: உன்
வீட்டாரும் உன் பிதாவின் வீட்டாரும் என்
றைக்கும் நம்முடைய சந்நிதியிலே நடந்து
கொள்வார்களென்று நாம் சொல்லவே சொல்லி
யிருந்தாலும், இப்போதும் அது நமக்குத் தூரமா
யிருப்பதாக; ஏனென்றால் நம்மைக் கனம்பண்
ணுகிறவர்களைக் கனம்பண்ணுவோம்; ஆனால்
நம்மை அசட்டைபண்ணுகிறவர்கள் கனவீன
மாவார்களென்று கர்த்தர் சொல்லுகிறார்.—இதோ ௩௧
உன் வீட்டில் ஒரு கிழவனும் இராதபடிக்கு உன்
புயத்தையும் உன் பிதாவுடைய வீட்டாரின் புயத்
தையும் நாம் தறித்துப்போடும் நாள்கள் வரும். —
இஸ்ரவேலுக்குச் செய்யப்படும் சகல நன்மைக் ௩௨
குப் பதிலாக வாசஸ்தலத்திலே நெருக்குதலைக்
காண்பாய்; என்றைக்கும் உன் வீட்டில் ஒரு கிழ
வனும் இருப்பதில்லை —நம்முடைய பலிபீடத் ௩௩
தைச் சேவிக்க, நாம் உன் சந்ததியில் நிர்மூல
மாக்காதவர்களோவென்றால், உன் கண்களைப்
பூத்துப்போகப்பண்ணவும், உன் ஆத்துமாவை
வேதனைப்படுத்தவும் வைக்கப்படுவார்கள்; உன்
வீட்டாரின் திரளெல்லாம் புருஷரானபோது சா
வார்கள்.—ஒப்னி பினேகாசென்ற உன்னுடைய ௩௪
இரண்டு குமாரரின்மேல் வருகின்றது, அது
உனக்கு அடையாளமாயிருக்கும்; அவர்கள் இரு
வரும் ஒரேநாளிலே சாவார்கள்—ஆனால் நம்மு ௩௫
டைய ஆத்துமாவிற்கும் ஏற்றபடி செய்யப்போ
கிற உண்மையான ஒரு ஆசாரியனை நமக்கு எ
ழும்பப்பண்ணி, அவனுக்கு நிசமான வீட்டைக்
கட்டுவோம்; அவன் நம்மால் அபிஷேகம்பண்
ணப்பட்டவனுக்குமுன்பாகச் சகல நாளும்
நடந்துகொள்வான். — சம்பவிப்பதேதென்றால் ௩௬

உன் வீட்டாரில் மீதியாயிருப்பவனெல்லாம் அ
வனை ஒருவெள்ளிப் பணத்தையும்ஒரு அப்பத்து
ணிக்கையையும் கேட்கிறதற்கு வணங்கி, நான்
கொஞ்சம் அப்பம்சாப்பிட என்னை யாதொரு
ஆசாரிய ஊழியத்திற்குச் சேர்த்துக்கொள்ளு
மென்பார்களென்று சொன்னாரென்றான்.

## ௩. அதிகாரம்.

௧. சாமுவேலுக்கு முதல்முதல் கர்த்தருடைய வார்த்தை அறிவிக்கப்பட்ட விதம். ௰௧. ஏலி என்பவனுடைய வீட்டின் நாசத்தைச் சாமுவேலுக்குப் பராபரன் சொன்னது. ௰௫. அதைக்குறித்துச் சாமுவேல் மனதில்லாம லிருந்தபோதிலும், ஏலிக்குச் சொன்னது. ௰௯. சாமுவேலின் கீர்த்தி பெருகினது.

௧ சாமுவேலென்ற பிள்ளையாண்டான் ஏலிக்கு
முன்பாகக் கர்த்தரைச் சேவித்துக்கொண்டிருந்
தான்; அந்நாள்களிலே கர்த்தருடைய வசனம்
அபூர்வமாயிருந்தது; வெளியரங்கமான தரிசனம்
௨ இருந்ததில்லை. — ஒரு நாளிலே சம்பவித்ததே
தென்றால், ஏலி தன்னுடைய தானத்திலே படுத்
துக்கொண்டிருந்தான்; அவன் பார்க்கக் கூடாத
படிக்கு அவனுடைய கண்கள் அப்போது இரு
௩ ளடையத் துவக்கின.-பராபரனுடைய பெட்டி
இருக்கிற கர்த்தருடைய தேவாலயத்திலே பரா
பரனுடைய விளக்கு அவிக்கப்படுகிறதற்கு
முன்னே சாமுவேலும் படுத்துக்கொண்டிருந்
௪ தான்.—அப்போது கர்த்தர் சாமுவேலைக் கூப்
பிட்டார்; அதற்கு அவன், இதோ இங்கே இருக்
௫ கிறேனென்று சொல்லி,-ஏலியண்டைக்கோடி,
இதோ இங்கே இருக்கிறேன்; ஏனென்றால் என்
னைக் கூப்பிட்டீரேயென்றான்; அவனோவென்
றால் நான் கூப்பிட்டதில்லை; திரும்பிப்போய்ப்
படுத்துக்கொள்ளென்றான்; அவன் போய்ப் படுத்
௬ துக்கொண்டான். — மறுபடியும் கர்த்தர், சாமு
வேலே என்று கூப்பிட்டார்; அப்போது சாமு
வேல் எழுந்திருந்து ஏலியண்டைக்குப் போய்,
இதோ இருக்கிறேன்; ஏனெனில் என்னைக் கூப்
பிட்டீரேயென்றான்; ஆனால் அவன், என் மக
னே, நான் உன்னைக் கூப்பிட்டதில்லை; திரும்
௭ பிப்போய்ப் படுத்துக்கொள் என்றான்.—சாமு
வேலோவெனில் கர்த்தரை இன்னம் அறிந்த
தில்லை; ஏனெனில் கர்த்தருடைய வார்த்தை
அவனுக்கு இன்னம் வெளிப்பட்டதில்லை. —
௮ கர்த்தர் மறுபடியும் மூன்றாம்விசை, சாமுவேலே
என்று கூப்பிட்டார்; அவன் எழுந்திருந்து ஏலி
யண்டைக்குப் போய், இதோ இருக்கிறேன்;
ஏனென்றால் என்னைக் கூப்பிட்டீரேயென்றான்;
அப்போது கர்த்தர் பிள்ளையாண்டானைக் கூப்பி
௯ டுகிறாரென்று ஏலி அறிந்து,-சாமுவேலுடனே,
நீ போய்ப் படுத்துக்கொள்; உன்னைக் கூப்பிடுகி
றதுண்டானால், அப்போது நீ, கர்த்தாவே சொல்
லும்; ஏனென்றால் உம்முடைய அடியான் கேட்
கிறானென்று சொல்லுவாயாகவென்றான்; சாமு
வேல் போய், தன்னுடைய தானத்திலே படுத்
௰ துக்கொண்டான். — அப்போது கர்த்தர் வந்து
நின்று, முன்போல, சாமுவேலே, சாமுவேலே
என்று கூப்பிட்டார்; அப்போது சாமுவேல்,
சொல்லும்; ஏனென்றால் உம்முடைய அடியான்
கேட்கிறானென்றான்.
கர்த்தர் சாமுவேலோடே சொன்னதாவது: ௰௧
இதோ நாம் இஸ்ரவேலில் ஒரு காரியத்தைச்
செய்வோம்; அதைக் கேட்கிறவனுக்கெல்லாம்
அவனுடைய இரண்டு காதுகளும் தொனிக்கும்.-
நாம் ஏலியின் வீட்டிற்கு விரோதமாகச் சொன்ன ௰௨
யாவையும், ஏலியின்மேல் அந்நாளிலே எழும்
பப்பண்ணத் துவக்கவும் நிறைவேற்றவும்போகி
றோம்.—ஏனென்றால் அவன் குமாரர் தங்களைச் ௰௩
சபிக்கப்படத்தக்கவர்களாக்குகிறதை அவன் அ
றிந்தும், அவர்களை உறுக்காமல் போன அக்கிர
மத்தின்நிமித்தம், நாம் அவன் வீட்டுக்கு என்
றென்றைக்கும் நியாயம்செய்வோமென்கிறதை
அவனுக்கு அறிவித்தோமே.—அதின் நிமித்தம் ௰௪
ஏலிவீட்டாரின் அக்கிரமம் என்றைக்கும் பலியி
னாலானாலும் காணிக்கையினாலானாலும் நிவிர்த்
தியாவதில்லையென்று ஏலியின் வீட்டைக்கு
றித்து ஆணையிட்டோமென்றார்.
சாமுவேல் விடியற்காலம்மட்டும் படுத்தி ௰௫
ருந்து, கர்த்தருடைய வீட்டின் கதவுகளைத் திறந்
தான்; ஆனால் சாமுவேல் ஏலிக்கு அந்தத் தரிச
னத்தை அறிவிக்கப் பயந்தான்.-ஏலியோவென் ௰௬
றால் என் மகனாகிய சாமுவேலே என்று சாமு
வேலைக் கூப்பிட்டான்; இவன், இதோ இங்கே
இருக்கிறேனென்றான். — அப்போது அவன், ௰௭
உன்னோடே அவர் சொன்ன வார்த்தை என்ன,
எனக்கு அதை மறைக்காயாக; அவர் உன்
னோடே சொன்ன சகல வார்த்தையிலும் யா
தொன்றை எனக்கு மறைத்தாயானால், பராபரன்
உனக்கு இப்படியும் அப்படியும் செய்வாராக
வென்றான்.—அப்போது சாமுவேல் அவனுக்கு ௰௮
மறைக்காமல், அந்த வார்த்தைகளையெல்லாம்
அவனுக்கு அறிவித்தான்; அதற்கு அவன், அவர்
கர்த்தர்தானே; அவர் தமது பார்வைக்கு நலமான
தைச் செய்வாராகவென்றான்.
சாமுவேல் வளர்ந்துவந்தான்; கர்த்தர் அவனு ௰௯
டனே கூட இருந்தார்; அவர் தம்முடைய எல்
லா வார்த்தைகளிலும் ஒன்றையாகிலும் தரையி
லே விழவிட்டதில்லை.—சாமுவேல் நிசமாய்க் ௨௰
கர்த்தருடைய தீர்க்கதரிசியானவனென்று தாண்
ஊர்துவக்கிப் பேர்சேபாமட்டும் இருந்த இஸ்ர
வேல் சனமெல்லாம் அறிந்தது.—கர்த்தர் அப்பு ௨௰௧
றம் சீலோவிலே தரிசனம்கொடுத்தார்; ஏனென்
றால் கர்த்தர் சீலோவிலே தம்முடைய வார்த்தை
யினாலே சாமுவேலுக்கு வெளியானார்.

## ௪. அதிகாரம்.

௧. ஏபேன் ஏசேரில் பெலிஸ்தியர் இஸ்ரவேலரை வென்றது. ௩. பெலிஸ்தியருக்குப் பயமுண்டாக உடம்படிக்கையின் பெட்டியைக் கொண்டு வந்தது. ௰. இஸ்ரவேலர் மறுபடியும் தோற்றதும், பெட்டி பிடிக்கப்பட்டதும், ஓப்னியும், பினேகாசும், கொலைசெய்யப்பட்டதும். ௰௨. ஏலி என்பவன் சமாசாரம் கேள்விப்பட்டுப் பின்னாக விழுந்ததினால் அவன் கழுத்து ஒடிந்தது. ௰௯. பினேகாசின் பெண்சாதி பிள்ளைப்பேற்றில் அதபிரியப்பட்டு, இக்கபோதென்பவனைப் பெற்று மரித்தது.

சாமுவேலின் வார்த்தை இஸ்ரவேலுக்கெல்லாம் ௧
வந்து சம்பவித்தது; இஸ்ரவேல் பெலிஸ்திய

ருக்கு எதிராக யுத்தத்திற்குப் புறப்பட்டு, எபேன்
ஏசேர்கிட்டப் பாளயமிறங்கினார்கள்; பெலிஸ்
தியரோவென்றால் ஆப்பேக்கிலே பாளயமிறங்கி
௨ யிருந்தார்கள். — பெலிஸ்தியர் இஸ்ரவேலுக்கு
எதிராகப் படையெடுத்து வருகிறபோது, யுத்தம்
விஸ்தாரமாகி, இஸ்ரவேல் சனம் பெலிஸ்திய
ருக்குமுன்பாக முறிந்தது; இவர்கள் போர்க்கள
மாகிய வெளியிலே ஏறக்குறைய நாலாயிரம்
பேரை வெட்டிப்போட்டார்கள்.

௩ சனம் திரும்பப் பாளயத்திலே வந்தபோது,
இஸ்ரவேலின் மூப்பரானவர்கள், இன்று கர்த்தர்
பெலிஸ்தியருக்குமுன்பாக நம்மை முறியடித்த
தென்ன? சீலோவிலிருக்கிற கர்த்தருடைய உ
டம்படிக்கையின் பெட்டியை வாங்கிக்கொண்
டுவருவோம்; அது நம்மை நம்முடைய பகைஞ
ரின் கைக்கு விலக்கி இரட்சிக்க, நம்முடைய
௪ நடுவிலே வரக்கடவதென்றார்கள். — அப்படியே
கேரூபீன்களின்மேலே வாசமாயிருக்கிற சேனை
களுடைய கர்த்தரின் உடம்படிக்கைப் பெட்
டியை எடுத்துவர, சனம் சீலோவுக்குச் செய்தி
அனுப்பிற்று; அங்கே ஏலியின் இரண்டு குமார
ராகிய ஓப்னியும் பினேகாசும் பராபரனுடைய
உடம்படிக்கையின் பெட்டியண்டையில் இருந்
௫ தார்கள். — கர்த்தருடைய உடம்படிக்கையின்
பெட்டி பாளயத்திலே வருகிறபோதோவெ
னில், இஸ்ரவேல் சனமெல்லாம் மகா ஆர்ப்பரிப்
பாய்ப் பூமி அதிரத்தக்கதாய்ச் சத்தமிட்டது. —
௬ அவர்கள் ஆர்ப்பரிக்கிற சத்தத்தைப் பெலிஸ்தியர்
கேட்டபோது, எபிரேயருடைய பாளயத்தில்
இந்த மகா ஆர்ப்பரிப்பின் சத்தம் ஏதென்று
சொல்லி, கர்த்தரின் பெட்டி பாளயத்தில் வந்த
௭ தென்று அறிந்துகொண்டார்கள். — பராபரன்
பாளயத்தில் வந்தாரென்று சொல்லப்பட்டபடி
யினாலே, பெலிஸ்தியர் பயந்து, நமக்கு ஐயோ!
ஏனென்றால் முன்னாலே இப்படியிருந்ததில்லை.-
௮ நமக்கு ஐயோ! அந்த மகத்துவமான தேவர்களின்
கைக்கு நம்மைத் தப்புவிப்பவர் யார்? எகிப்திய
ரைச் சகலவித வாதையாலும் வனாந்தரமட்டாக
௯ அடித்த தேவர்கள் அவர்கள்தானே. — பெலிஸ்
தியரே, உங்களைத் திடப்படுத்திக்கொண்டு, புரு
ஷராயிருங்கள்; எபிரேயர் உங்களுக்கு ஊழியம்
செய்ததுபோல, நீங்கள் அவர்களுக்கு ஊழியம்
செய்யாதபடிக்கு, புருஷராயிருந்து, யுத்தம்பண்
ணுங்களென்று சொல்லிக்கொண்டார்கள்.

௰ அப்போது பெலிஸ்தியர் யுத்தம்பண்ணினார்
கள்; இஸ்ரவேலோவென்றால் முறிந்து, அவர
வர் தங்கள் கூடாரங்களுக்கு ஓடிப்போனார்கள்;
மகா பெரிய சங்காரமாகி, இஸ்ரவேலிலே முப்
௰௧ பதினாயிரம் காலாள்கள் விழுந்தார்கள்.-பராபர
னுடைய பெட்டி பிடிக்கப்பட்டது; ஏலியின்
இரண்டு குமாரராகிய ஓப்னியும் பினேகாசும்
செத்தார்கள்.

௰௨ பென்யமீன் கோத்திரத்து மனுஷன் ஒருவன்
படையிலிருந்து ஓடிப்போய், தன் வஸ்திரங்க
ளைக் கிழித்து, தன் தலையின்மேலே புழுதியை
வாரிப்போட்டுக்கொண்டவனாய், அந்நாளிலே
தானே சீலோவுக்கு வந்தான். — அவன் வருகை ௰௩
யில், இதோ ஏலி ஒரு ஆசனத்தின்மேல் வழிப்பு
றத்தைநோக்கி, உளுக்காந்துகொண்டிருந்தான்;
ஏனென்றால் பராபரனுடைய பெட்டிக்காக அ
வன் இருதயம் தத்தளிப்பாயிருந்தது; ஊரிலே
செய்தியை அறிவிக்க அந்த மனுஷன் வந்த
போது, பட்டணமெங்கும் அலறுகை உண்டா
யிற்று. — அலறுகிற அந்தச் சத்தத்தை ஏலி கேட் ௰௪
டபோது, அந்த அமளியின் இரைச்சல் என்ன
வென்றான்; அப்போது அந்த மனுஷன் தீவி
ரித்துவந்து, ஏலிக்கு அறிவித்தான். — ஏலியோ ௰௫
வென்றால் தொண்ணூற்றெட்டுவயதுள்ளவனா
யிருந்தான்; அவன் பார்க்கக்கூடாதபடிக்கு, அ
வன் கண்கள் கம்மலாயிருந்தன. — அந்த மனு ௰௬
ஷன் ஏலியுடனே, படையிலிருந்து வந்தவன்
நான்தானே; இன்று நான் படையிலிருந்து ஓடி
வந்தேனென்றான்; அப்போது அவன், என் மக
னே, நடந்த வர்த்தமானம் என்னவென்று கேட்
டான். — செய்திகொண்டுவந்தவன் பிரதியுத்தார ௰௭
மாக, இஸ்ரவேல் சனம் பெலிஸ்தியருக்குமுன்
பாக முறிந்தோடி, சனத்திலே பெரிய சங்கார
முமாயிற்று; உம்முடைய இரண்டு குமாரராகிய
ஓப்னியும் பினேகாசும் மரித்தார்கள்; பராபரனு
டைய பெட்டியோவென்றால் பிடிக்கப்பட்டுப்
போயிற்றென்றான். — அவன் பராபரனுடைய ௰௮
பெட்டியின் பேச்சை எடுக்கிறபோதோவெ
னில், ஏலி ஆசனத்திலிருந்து கதவின்பக்கமாய்
மல்லாக்கவிழுந்து, அவன் பிடரி முறிந்துபோ
னதினாலே செத்துப்போனான்; ஏனென்றால்
அவன் கிழவனும் தூலித்தவனுமாயிருந்தான்;
அவன் நாற்பது வருஷமாய் இஸ்ரவேலை நியா
யம் விசாரித்திருந்தான்.

அவன் மருமகளாகிய பினேகாசின் பெண் ௰௯
சாதியோவென்றால், நிறைகர்ப்பிணியாயிருந்
தாள்; அவள் பராபரனுடைய பெட்டி பிடிக்
கப்பட்ட செய்தியையும், தன் மாமனாரும் தன்
புருஷனும் செத்துப்போனதையும் கேட்கிற
போது, குனிந்துகொண்டு பெற்றாள்; ஏனெனில்
அவள் பெறுகிற வருத்தம் அவளுக்கு வந்தது. —
அவள் சாகப்போகிற நேரத்திலே அவளண்டை ௨௰
யிலே நிற்கிற ஸ்திரிகள், நீ பயப்படாதே;
ஏனென்றால் ஆண்பிள்ளையைப் பெற்றாயென்று
அவளோடே சொன்னார்கள்; ஆனால் அவள் அ
தற்குப் பிரதியுத்தாரம் சொல்லாமலும், அதின்
மேலே மனது வைக்காமலும், — அந்த ஆண்பிள் ௨௰௧
ளைக்கு இக்கபோத்தென்று பேரிட்டு, பராபர
னுடைய பெட்டி பிடிக்கப்பட்டு, தன் மாமனா
ரும் தன் புருஷனும் செத்துப்போனபடியினா
லே, மகிமை இஸ்ரவேலைவிட்டு விலகிப்போ
யிற்றென்றும், — பராபரனுடைய பெட்டி பிடிக் ௨௰௨
கப்பட்டுப்போனபடியினாலே, மகிமை இஸ்ர
வேலைவிட்டு விலகிப்போயிற்றென்றும் சொன்
னாள்.

## ரு. அதிகாரம்.

க. பெலிஸ்தியர்கள் கர்த்தருடைய பெட்டியை அஸ்தோத்துக்குக் கொண்டுவந்து, தாகோன் கோவிலிலே வைத்தது. ங. தாகோன் முகம்குப்புறவிழுந்து துண்டாக வெட்டப்பட்டிருப்பதையும், அஸ்தோத்தர் மூலவியாதியினால் வாதிக்கப்பட்டதையும் குறித்தது. அ. பெட்டி காத்பட்டணத்திற்குக் கொண்டுவரப்பட்டபோது, அப்பட்டணத்திற்கும் பராபரன் வியாதிவரப்பண்ணினது. ௰. அதை எக்கிரோனூருக்குக் கொண்டுவந்தபோது, அவ்வூராருக்கும் நோய்வந்தது.

க பெலிஸ்தியரோவென்றால் பராபரனுடைய
பெட்டியைப் பிடித்து, அதை ஏபேன் ஏசேரிலி
ருந்து அஸ்தோத்திற்குக் கொண்டுபோனார்கள்.—
உ பெலிஸ்தியர் பராபரனுடைய பெட்டியைப்பி
டித்து, தாகோனின் வீட்டிலே கொண்டுவந்து,
தாகோனண்டையிலே வைத்தார்கள்.
ங அஸ்தோத்தூரார் மறுநாள் காலமே எழுந்திருந்
துவந்தபோதோவெனில்,இதோ தாகோனென்ற
விக்கிரகம் கர்த்தருடைய பெட்டிக்குமுன்பாக
முகம்குப்புறத் தரையிலே விழுந்துகிடந்தது;
அப்போது அவர்கள் தாகோனை எடுத்து, அதை
அதின் தானத்திலே திரும்ப நிறுத்தினார்கள்.—
ச அவர்கள் மறுநாள் காலமே எழுந்திருந்து வந்த
போதோவென்றால், இதோ தாகோன் கர்த்தரு
டைய பெட்டிக்குமுன்பாக முகம்குப்புறத்
தரையிலே விழுந்துகிடந்ததுமல்லாமல், தாகோ
னின் தலையும் அதின் இரண்டு கைகளும் வாசல்
படியின்மேல் வெட்டப்பட்டுக் கிடந்தன; உ
டல்மாத்திரம் தாகோனிலே மீதியாயிருந்தது.—
ரு ஆனதுகொண்டு இந்நாள்வரைக்கும், தாகோ
னின் பூசாரிகளும் தாகோனின் வீட்டிற்குள்
பிரவேசிக்கிற யாவரும் அஸ்தோத்திலிருக்கிற
தாகோனுடைய வாசல்படியை மிதிக்காதிருக்
கிறார்கள்.
சு ஆனால் பராபரனுடைய கை அஸ்தோத்தாரின்
மேல் அவர்களைப் பாழாக்கும்படிக்குப் பார
மாயிருந்தது; அவர் அஸ்தோத்தின் மனுஷரா
கிய அவர்களையும், அதின் எல்லைகளுக்குள்
இருக்கிறவர்களையும், மூலவியாதியினால் வாதித்
எ தார். — இப்படியாயிற்றென்கிறதை அஸ்தோத்
தின் மனுஷர் கண்டபோது, இஸ்ரவேலுடைய
பராபரனின் பெட்டி நம்மிடத்தில் இருக்கப்
போகாது; ஏனெனில் அவருடைய கை நம்மு
டையமேலும், நம்முடைய தேவனாகிய தாகோ
னின்மேலும், கடினமாயிருக்கின்றதென்று சொ
அ ல்லி,—பெலிஸ்தியரின் அதிபதிகளையெல்லாம்
அழைத்தனுப்பி, தங்களண்டையிலே கூட்டிக்
கொண்டு,இஸ்ரவேலுடைய பராபரனின் பெட்
டிக்கு நாம் செய்யவேண்டியதென்னவென்றார்
கள்; அவர்கள் அதைக் காத் பட்டணம்மட்டும்
சுற்றி எடுத்துக்கொண்டுபோகவேண்டுமென்றார்
கள்; அப்படியே இஸ்ரவேலுடைய பராபர
னின் பெட்டியைச் சுற்றி எடுத்துக்கொண்டு
௯ போனார்கள்.—அதைச் சுற்றி எடுத்துக்கொண்டு
போனபிற்பாடோவெனில், கர்த்தருடைய கை
அந்தப் பட்டணத்தின்மேலே மகா பெரிய உக்
கிரமாக வந்து, சிறியவர்களைத்துவக்கிப் பெரிய
வர்கள்மட்டும் இருக்கிற அந்தப் பட்டணத்தின்
மனுஷருக்குள் மூலவாதைகளை உண்டாக்கி,
அவர்களை அடித்தார்.
ஆகையால் பராபரனுடைய பெட்டியை எக் ௰
கிரோனுக்கு அனுப்பினார்கள்; அது எக்கிரோ
னுக்கு வருகிறபோதோவெனில், எக்கிரோனூ
ரார் கூப்பிட்டுக்கொண்டு, எங்களையும் எங்களு
டைய சனத்தையும் கொன்றுபோட, இஸ்ரவே
லுடைய பராபரனின் பெட்டியைச் சுற்றி எடுத்
து, எங்களண்டைக்குக் கொண்டுவந்தார்களெ
ன்று சொல்லி, — பெலிஸ்தியரின் அதிபதிகளை ௰க
யெல்லாம் அழைத்தனுப்பி, கூட்டி, இஸ்ரவே
லுடைய பராபரன் எங்களையும் எங்களுடைய
சனத்தையும் கொன்றுபோடாதபடிக்கு, அவரு
டைய பெட்டியை அதின் தானத்திற்குத் திரும்ப
அனுப்புங்களென்றார்கள்; ஏனென்றால் அந்தப்
பட்டணமெங்கும் சாவு மும்முரமாகிப் பராபர
னுடைய கை அங்கே மகா பாரமாயிருந்தது.—
செத்துப்போகாதிருந்த மனுஷர் மூலவாதைக ௰உ
ளால் வாதிக்கப்பட்டதினால், அந்தப் பட்டணத்
தின் கூக்குரல் வானபரியந்தம் ஏறிற்று.

## சு. அதிகாரம்.

க. ஏழுமாதத்தின்பிறகு பெலிஸ்தியர் கர்த்தருடைய பெட்டியை மறுபடியும் அனுப்ப யோசனைசெய்தது. ௰. அவர்கள் அதை ஒரு புதிய வண்டியின்மேல் சில காணிக்கைகளோடு ஏற்றிக்கொண்டு, பெத்சேமேசுக்கு வந்தது. ௰௯. அந்த ஊரார் பெட்டியை உள்ளே பார்த்ததினால், கர்த்தர் அவர்களைக் கொன்றது. உக. அந்தப்பெட்டியைக் கொண்டுவரக் கீரியாத்யாரீமின் குடிகளுக்குத் தானாதிபதிகளை அனுப்பினது.

கர்த்தருடைய பெட்டி பெலிஸ்தியரின் சீமை க
யில் ஏழுமாதம் இருந்தபோதோவெனில்,—பெலி உ
ஸ்தியர் பூசாரிகளையும் சாஸ்திரம்சொல்லுகிறவர்
களையும் அழைப்பித்து,கர்த்தருடைய பெட்டிக்
கு நாம் செய்யவேண்டியதென்ன? அதை நாங்
கள் எவ்விதமாய் அதின் தானத்திற்கு அனுப்ப
வேண்டுமென்று எங்களுக்கு அறிவியுங்களென்
றார்கள்.—இவர்கள் சொன்னது: இஸ்ரவேலு ங
டைய பராபரனின் பெட்டியை நீங்கள் அனுப்
பினால், அதை வெறுமையாய் அனுப்பாமல்,குற்
றம்போக்கும் காணிக்கையை அதற்குச் செலுத்
தவே செலுத்துவீர்களாக; அப்போது நீங்கள்
குணமாகிறதுமல்லாமல், அவருடைய கை உங்
களை விடாதிருந்த முகாந்தரம் ஏதென்று உங்க
ளுக்குத் தெரியவருமென்றார்கள்.—அப்போது ச
அவர்கள் குற்றம்போக்க, நாங்கள் அதற்குச் செ
லுத்தவேண்டியதென்னவென்று கேட்டதற்கு,
இவர்கள் சொன்னதாவது: பெலிஸ்தியருடைய
அதிபதிகளின் இலக்கத்திற்குச் சரியாக மூல
வியாதியின் சாயலான ஐந்து பொன்சுரூபங்க
ளும் பொன்னான ஐந்து எலிகளும்தானே;ஏனெ
னில் உங்களெல்லாருக்கும் உங்கள் அதிபதிக
ளுக்கும் ஏகமான வாதையாயிருக்கின்றது. —
ஆகையால் உங்கள் மூலவியாதியின் சாயலான ரு
சுரூபங்களையும்,தேசத்தைக் கெடுத்துப்போட்ட
உங்கள் எலிகளின் சாயலான சுரூபங்களையும்,
நீங்கள் உண்டுபண்ணி, இஸ்ரவேலின் பராபர
னுக்கு மகிமையைச் செலுத்துங்கள்; அப்போது

ஒருவேளை உங்கள்மேலும், உங்கள் தேவர்கள்
மேலும், உங்கள் தேசத்தின்மேலும் இருக்கிற
அவருடைய கை உங்களைவிட்டு இலகுவாம்.—
௬ எகிப்தியரும் பார்வோனும் தங்கள் இருதயத்
தைக் கடினமாக்கினதுபோல, நீங்கள் உங்கள்
இருதயத்தைக் கடினப்படுத்துவானேன்; இவர்
களை அவர் தீங்காய் நடப்பித்தபிற்பாடு, அவர்
களை இவர்கள் அனுப்பிவிட்டதும் அவர்கள்
௭ போனதுமில்லையோ?—இப்போதும் நீங்கள் ஒரு
புது வண்டிலைச் செப்பனிட்டு, நுகத்தடி பிணை
க்காதிருக்கிற இரண்டு கறவைப்பசுக்களைப் பிடி
த்து, அவைகளை வண்டியிலே கட்டி, அவைக
ளின் கன்றுக்குட்டிகளை அவைகளுக்குப் பின்
னாகப் போகாதபடிக்கு, வீட்டிலே கொண்டு
௮ வந்துவிட்டு,—பிற்பாடு கர்த்தருடைய பெட்டி
யை எடுத்து, அதை வண்டிலின்மேல் வைத்து,
நீங்கள் குற்றம்போக்க அவருக்குச் செலுத்தும்
பொன்னுருப்படிகளை அதின் பக்கத்தில் ஒரு
சிறிய பெட்டியிலே போட்டு, அதைப் போகவி
௯ டுங்கள்.—அப்போது பாருங்கள்; அது தன் எல்
லைக்குப் போகிறவழியிலே பெத்சேமேசுக்கு
ஏறிப்போனால், இந்தப் பெரிய தீங்கை நமக்குச்
செய்தவர் அவர்தாமே; போகாதிருந்தால், அவ
ருடைய கை நம்மைத் தொடாமல், அது தற்செ
யலாய் நமக்கு வந்ததென்று அறிந்துகொள்ளு
வோமென்றார்கள்.
௰ அந்த மனுஷர் அப்படிச்செய்து, இரண்டு கற
வைப் பசுக்களைப் பிடித்து, அவைகளை வண்டி
லிலே கட்டி, அவைகளின் கன்றுக்குட்டிகளை
௰௧ வீட்டிலே அடைத்து,—கர்த்தருடைய பெட்டி
யையும், பொன்னான எலிகளும் தங்கள் மூலவி
யாதியின் சாயலான சுரூபங்களுமிருக்கிற சிறிய
பெட்டியையும், அந்த வண்டிலின்மேல் வைத்
௰௨ தார்கள்.—அப்போது அந்தப் பசுக்கள் பெத்சே
மேசுக்குப் போகிற வழியிலே செவ்வையாய்ப்
போய், வலது இடதுபக்கமாய் விலகாமல், நடப்
பான ஒரே வழியிலே கூப்பிட்டுக்கொண்டு நட
ந்தன; பெலிஸ்தியரின் அதிபதிகள் பெத்சே
மேசின் எல்லைமட்டும் அவைகளின்பிறகாலே
௰௩ போனார்கள்.—பெத்சேமேசின் மனுஷர் பள்ளத்
தாக்கிலே கோதுமை அறுப்பு அறுத்துக்கொண்
டிருந்தார்கள்; அவர்கள் தங்கள் கண்களை ஏறெ
டுக்கும்போது, பெட்டியைக் கண்டு, அதைப்
பார்க்கிறதினாலே சந்தோஷப்பட்டார்கள். —
௰௪ அந்த வண்டில் பெத்சேமேசூரானாகிய யோசு
வாவின் வயல்வெளிக்கு வந்தபோது, அங்கே
நின்றது; அங்கே ஒரு பெரிய கல்லிருந்தது;
அப்போது வண்டிலின் மரங்களைப் பிளந்து,
பசுக்களைக் கர்த்தருக்குச் சர்வாங்கதகனபலி
௰௫ யாக்கினார்கள்.—லேவியர் கர்த்தருடைய பெட்
டியையும், அதனோடிருந்த பொன்னுருப்படிக
ளுள்ள சிறிய பெட்டியையும் இறக்கி, அந்தப்
பெரிய கல்லின்மேல் வைத்துக்கொண்டிருந்தார்
கள்; பெத்சேமேசின் மனுஷரோவென்றால், அந்
நாளிலே கர்த்தருக்குச் சர்வாங்கதகனங்களை
யும் பலிகளையும் செலுத்தினார்கள்.—பெலிஸ்திய ௰௬
ருடைய ஐந்து அதிபதிகள் இவைகளைக் கண்ட
பிற்பாடு, அந்நாளிலே எக்கிரோனுக்குத் திரும்
பிப் போனார்கள்.—பெலிஸ்தியர் குற்றம்போக்கு ௰௭
கிறதற்காக, கர்த்தருக்குச் செலுத்தின மூலவி
யாதியின் சாயலான பொன்சுரூபங்களாவது:
அஸ்தோத்திற்காக ஒன்று, காசாவுக்காக ஒன்று,
அஸ்கலோனுக்காக ஒன்று, காத்துக்காக ஒன்று,
எக்கிரோனுக்காக ஒன்று.—பொன்னான எலிக ௰௮
ளோவென்றால், அரணான பட்டணங்கள்துவக்
கி நாட்டுப்புறத்தாரின் கிராமங்கள்மட்டுக்கும்,
கர்த்தருடைய பெட்டியை வைத்த பெரிய கல்
இருக்கிற ஆபேல்மட்டுக்கும், ஐந்து அதிபதிக
ளின்கீழிருக்கிற பெலிஸ்தியருடைய சகல ஊர்
களின் இலக்கத்திற்குச் சரியாயிருந்தன; அந்தக்
கல் இந்நாள்வரைக்கும் பெத்சேமேசூரானாகிய
யோசுவாவின் வயல்வெளியில் இருக்கின்றது.
ஆனால் பெத்சேமேசின் மனுஷர் கர்த்தரு ௰௯
டைய பெட்டியைப் பார்த்தபடியினாலே, கர்த்
தர் அவர்களில் சிலரையும், சனத்திலே ஐம்ப
தினாயிரத்து எழுபதுபேரையும் அடித்தார்; அப்
போது கர்த்தர் சனத்தைப் பெரிய சங்காரமாக
அடித்ததின்நிமித்தம், சனம் துக்கித்துக்கொண்
டிருந்தது.—இந்தப் பரிசுத்தமான பராபரனாகிய ௨௰
கர்த்தருக்குமுன்பாக நிற்கத்தக்கவன் யார்? பெ
ட்டி நம்மிடத்திலிருந்து யாரண்டைக்குப் போ
யேறலாமென்று பெத்சேமேசின் மனுஷர் சொ
ல்லி, — கீரியாத்யாரீமின் குடிகளுக்குத் தானா ௨௧
பதிகளை அனுப்பி, பெலிஸ்தியர் கர்த்தருடைய
பெட்டியைத் திரும்ப அனுப்பினார்கள்; நீங்கள்
இறங்கிவந்து, அதை உங்களண்டைக்கு எடுத்
துக்கொண்டு போங்களென்று சொல்லி அனுப்
பினார்கள்.

## ௭. அதிகாரம்.

௧. கீரியாத்யாரீமின் மனிதர்கள் அந்தப் பெட்டியை அபினதாபின் வீட்டில் கொண்டுவந்து, அதைக் காக்கும்படி அவன் குமாரனாகிய எலெயாசாரை ஏற்படுத்தினது. ௨. இருபது வருஷத்திற்குப்பின்பு, ௩. இஸ்ரவேலர் சாமுவேலின் புத்தியால், மிஸ்பாவில் மனந்திரும்பினது. ௫. சாமுவேல் கர்த்தரைப் பிரார்த்தித்து, பலிசெலுத்தினது. அவர் இடிமுழக்கத்தினால் பெலிஸ்தியரைக் கலங்கப்பண்ணினது. ௰௩. பெலிஸ்தியர் முறியடிக்கப்பட்டது. ௰௫. சாமுவேல் சமாதானமாயும், தேவபக்தியாயும், இஸ்ரவேலை நியாயம் விசாரித்தது.

அப்படியே கீரியாத்யாரீமின் மனுஷர் வந்து, ௧
கர்த்தருடைய பெட்டியை எடுத்து, மேட்டின்
மேலிருக்கிற அபினதாபின் வீட்டிலே கொண்டு
வந்து வைத்து, கர்த்தருடைய பெட்டியைக் காக்
கும்படிக்கு, அவன் குமாரனாகிய எலெயாசா
ரைப் பரிசுத்தம் பண்ணினார்கள்.
பெட்டியானது கீரியாத்யாரீமிலே வைக்கப் ௨
பட்ட நாள் முதல்கொண்டேயெனில், அநேக
நாள் சென்றுபோயின; இருபதுவருஷம் அங்
கேதானே இருந்தது; ஆனால் இஸ்ரவேல் வீட்
டாரெல்லாரும் கர்த்தரைத் தேடி, புலம்பிக்கொ
ண்டிருந்தார்கள்.—அப்போது சாமுவேல் இஸ்ர ௩
வேல் வீட்டாரோடெல்லாம் சொன்னதாவது:
நீங்கள் உங்கள் முழு இருதயத்தாலும் கர்த்தரண்

டைக்குத் திரும்புகிறவர்களானால், அந்நியதே
வர்களையும் அஸ்தரோத்தையும் உங்கள் நடுவிலி
ருந்து விலக்கி, உங்கள் இருதயத்தைக் கர்த்த
ருக்கு நேராக்கி, அவர் ஒருவருக்கு ஆராதனை
செய்யுங்கள்; அப்போது உங்களைப் பெலிஸ்திய
ருடைய கைக்கு நீங்கலாக்கிவிடுவாரென்றான்.—
௪ அப்போது இஸ்ரவேல் புத்திரர் பாகால்களையும்
அஸ்தரோத்தையும் விலக்கிவிட்டு, கர்த்தர் ஒரு
௫ வருக்கு ஆராதனை செய்தார்கள்.—பிற்பாடு சாமு
வேல், நான் உங்களுக்காகக் கர்த்தரை மன்றாடும்
படிக்கு, இஸ்ரவேலை எல்லாம் மிஸ்பாவிலே
௬ கூட்டுங்களென்றான். — அப்போது அவர்கள்
மிஸ்பாவிலே கூடிக்கொண்டு, தண்ணீர் மொண்
டு, கர்த்தருக்குமுன்பாக ஊற்றிவிட்டு, அந்நா
ளிலே உபவாசம்பண்ணி, கர்த்தருக்கு விரோத
மாய்ப் பாவம்செய்தோமென்று அங்கே சொன்
ஞர்கள்; அப்படியே மிஸ்பாவிலே சாமுவேல்
இஸ்ரவேல் புத்திரரை நியாயம்விசாரித்துக்கொ
ண்டிருந்தான்.
௭ இஸ்ரவேல் புத்திரர் மிஸ்பாவிலே கூடிவந்
ததைப் பெலிஸ்தியர் கேட்டபோதோவெனில்,
பெலிஸ்தியரின் அதிபதிகள் இஸ்ரவேலுக்கு வி
ரோதமாக ஏறிவந்தார்கள்; அதை இஸ்ரவேல் புத்
திரர் கேட்டு,பெலிஸ்தியருக்குமுன்பாகப் பயப்
௮ பட்டு,—சாமுவேலுடனே, நம்முடைய பராபர
ஞகிய கர்த்தர் எங்களைப் பெலிஸ்தியரின் கைக்கு
நீங்கலாக்கி இரட்சிக்கும்படிக்கு, எங்களுக்காக
அவரைநோக்கிக் கூப்பிடுகிறதில் ஓயாதிருமென்
௯ ருர்கள். — அப்போது சாமுவேல் பால்குடிக்
கிற ஒரு ஆட்டுக்குட்டியைப் பிடித்து, அதைக்
கர்த்தருக்குச் சர்வாங்கதகனமாகப் பலியிட்டு,
இஸ்ரவேலுக்காகக் கர்த்தரைநோக்கிக் கூப்
பிட்டான்; கர்த்தர் அவனுக்கு மறுமொழியும்
௰ அருளிச்செய்தார்.—அதேனெனில் சாமுவேல்
சர்வாங்கதகனபலியைச் செலுத்துகையில், பெ
லிஸ்தியர் இஸ்ரவேலின்மேல் யுத்தம்பண்ணச்
சேர்ந்தார்கள்; அப்போது கர்த்தர் மகா பெரிய
இடிமுழக்கங்களைப் பெலிஸ்தியர்மேல் அந்நாளி
லே முழங்கப்பண்ணி, அவர்களைக் கலங்கடித்த
தினலே, அவர்கள் இஸ்ரவேலுக்குமுன்பாகப்
௰௧ பட்டுவிழுந்தார்கள். — அப்போது இஸ்ரவேல்
மனுஷர் மிஸ்பாவில் இருந்து பெலிஸ்தியரைப்
பின்தொடர்ந்து போய், பெத்காரீம் பள்ளத்தாக்
௰௨ குமட்டும் அவர்களை முறியடித்தார்கள்.—ஆனது
கொண்டு சாமுவேல் ஒரு கல்லை எடுத்து, மிஸ்
பாவுக்கும் சேனுக்கும் நடுவாக நிறுத்தி, இவ்வி
டம்மட்டும் கர்த்தர் எங்களுக்கு ஒத்தாசைபண்
ணினாரென்று சொல்லி, அதற்கு எபேன் ஏசே
௰௩ ரென்று பேரிட்டான்.—இந்தப் பிரகாரமாகப்
பெலிஸ்தியர் அப்புறம் இஸ்ரவேலின் எல்லையி
லே வராதபடிக்குத் தாழ்த்தப்பட்டார்கள்;ஏனெ
னில் சாமுவேல் இருந்த நாளெல்லாம் கர்த்தரு
டைய கை பெலிஸ்தியருக்கு எதிராயிருந்தது.—
௰௪ பெலிஸ்தியர் இஸ்ரவேல் கையிலே பிடித்திருந்த
எக்கிரோனைத்துவக்கிக் காத்மட்டுமுள்ள பட்
டணங்களும் இஸ்ரவேலுக்குத் திரும்பவந்தன;
அவைகளையும் அவைகளின் எல்லைகளையும் இஸ்
ரவேலர் பெலிஸ்தியர் கையிலே இராதபடிக்கு
விடுவித்துக்கொண்டார்கள்; இஸ்ரவேலுக்கும்
எமோரியருக்கும் சமாதானம் உண்டாயிருந்தது.
சாமுவேலோவென்றால் உயிரோடிருந்த நா ௰௫
ளெல்லாம் இஸ்ரவேலை நியாயம்விசாரித்தான்.—
அவன் வருஷத்திற்கு வருஷம் புறப்பட்டு, பேத் ௰௬
தேலையும் கில்காலையும் மிஸ்பாவையும் சுற்றிப்
போய், அவ்விடங்களிலெல்லாம் இஸ்ரவேலை
நியாயம்விசாரித்தபிற்பாடு,—அவன் இராமாவுக் ௰௭
குத் திரும்பிவருவான்; ஏனெனில் அங்கே அவ
னுடைய வீடிருந்தது; அங்கே இஸ்ரவேலை நியா
யம்விசாரித்து, அங்கே கர்த்தருக்கு ஒரு பீடத்
தைக் கட்டினன்.

## ௮. அதிகாரம்.

௧. சாமுவேல் புத்திரரின் அநியாய ஆளுகையால், இஸ்ரவேலர் இராசா
வைக் கேட்டுக்கொண்டது. ௫ சாமுவேல் தயாரத்தோடு மன்றாடி, கர்த்
தரால் ஆறுதலடையப்பட்டது. ௰. அவர் இராசாவினுடைய ஆளுகை
யின் வகையைச் சொன்னது. ௰௯. பராபரன் சாமுவேலைச் சனங்களு
டைய வேண்டுதலுக்கு இணங்கச்செய்தது.

சாமுவேல் முதிர்வயதாகிறபோதோவெனில், ௧
தன் குமாரரை இஸ்ரவேலின்மேலே நியாயாதிப
திகளாக வைத்தான்.—அவனுடைய மூத்தகுமார ௨
னுக்கு யோவேலென்று பேரும், இளையவனுக்கு
அபியாவென்று பேரும் இருந்தது; அவர்கள்
பேர்சேபாவிலே நியாயாதிபதிகளாயிருந்தார்
கள்.—ஆனல் அவனுடைய குமாரர் அவன் வழி ௩
களில் நடவாமல், பொருளாசைக்குச் சாய்ந்து,
பரிதானம் வாங்கி, நியாயத்தைக் கோணலாக்கி
ஞர்கள்.
அப்போது இஸ்ரவேலின் மூப்பரெல்லாரும் ௪
கூடிக்கொண்டு, இராமாவிலே சாமுவேலண்
டைக்கு வந்து,—அவனுடனே, இதோ நீர் முதிர் ௫
வயதுள்ளவரானீர்; உம்முடைய குமாரரோ
வென்றால் உம்முடைய வழிகளில் நடக்கிற
தில்லை; இப்போதும் சகல சாதிகளுக்கும் இருக்
கிறபடியே, எங்களை நியாயம் விசாரிக்கிறதற்கு
ஒரு இராசாவை எங்களுக்குவையுமென்றார்கள்.
ஆனல் எங்களை நியாயம்விசாரிக்கிறதற்கு எங் ௬
களுக்கு ஒரு இராசாவைக் கொடுமென்று அவர்
கள் சொன்ன வார்த்தை சாமுவேலுக்கு ஆகாத
தாய்க் கண்டது; ஆகையால் சாமுவேல் கர்த்த
ரைநோக்கி விண்ணப்பம்பண்ணினன். — அப் ௭
போது கர்த்தர் சாமுவேலோடே சொன்னதா
வது:சனம் உன்னோடே சொன்னபடியெல்லாம்
அவர்கள் சொல்லைக் கேள்; ஏனெனில் அவர்
கள் உன்னைத் தள்ளாமல், நாம் அவர்களை அரசா
ளாதபடிக்கு, நம்மைத்தான் தள்ளினார்கள்.—நாம் ௮
அவர்களை எகிப்திலிருந்து ஏறப்பண்ணின நாள்
துவக்கி இந்நாள்மட்டும் அவர்கள் நம்மைவிட்டு,
வேறே தேவர்களைச் சேவித்துவந்த தங்கள் எல்
லாக் கிரியைகளின்படியும் செய்ததுபோல, அ
வர்கள் உனக்கும் செய்கிறார்கள்.—இப்போதும் ௯
அவர்கள் சொல்லைக் கேள்; ஆனல் அவர்களை

அரசாளும் இராசாவின் நியாயத்தை அவர்களுக்
குத் திடச்சாட்சியாய் அறிவியென்றார்.
௰ அப்போது சாமுவேல் தன்னை ஒரு இராசா
வைக் கேட்ட சனத்தோடே கர்த்தருடைய வார்
௰௧ த்தைகளையெல்லாம் சொல்லி,-உரைத்ததாவது:
உங்களை அரசாளும் இராசாவின் நியாயம் என்
னவென்றால், தன் இரதத்திற்கு முன்ஓட அவன்
உங்கள் குமாரரை எடுத்து, தன் இரதக்காரராக
வும் தன் குதிரைக்காரராகவும் வைத்துக்கொள்
௰௨ வான்.—ஆயிரம்பேருக்கும் ஐம்பதுபேருக்கும்
தலைவராகவும், தன் உழவிடையை உழுகிறவர்க
ளாகவும், தன்னுடைய அறுப்பறுக்கிறவர்களா
கவும், தன்னுடைய யுத்த ஆயுதங்களையும் தன்னு
டைய இரதங்களின் பணிமுட்டுகளையும் செப்
பனிடுகிறவர்களாகவும், அவர்களை வைத்துக்
௰௩ கொள்ளுவான்.—உங்கள் குமாரத்திகளைத் தயில
அவிழ்தம் செய்கிறவர்களாகவும், சமையல்பண்
ணுகிறவர்களாகவும், அப்பம்சுடுகிறவர்களாக
௰௪ வும், வைத்துக்கொள்ளுவான்.—நல்லவைகளா
கிய உங்கள் வயல்களையும், உங்கள் திராட்சத்
தோட்டங்களையும், உங்கள் ஒலீவத்தோப்புகளை
யும், எடுத்து, தன் ஊழியக்காரருக்குக் கொடுப்
௰௫ பான்.-உங்கள் பயிர்களிலும் உங்கள் திராட்சப்
பலனிலும் பத்தில் ஒன்று வாங்கி தன் பிரதானி
களுக்கும் தன் வேலைக்காரருக்கும் கொடுப்
௰௬ பான்.— உங்கள் வேலைக்காரரையும், உங்கள்
வேலைக்காரிகளையும்,உங்கள் வாலிபரையும் உங்
கள் புஷ்டியுள்ள கழுதைகளையும் எடுத்து, தன்
௰௭ னுடைய வேலைக்கு வைப்பான்.—உங்கள் ஆடு
களிலே பத்தில் ஒன்று வாங்குவான்; நீங்களோ
வென்றால் அவனுக்குப் பணிவிடை செய்கிற
௰௮ வர்களாயிருப்பீர்கள்.— நீங்கள் உங்களுக்குத்
தெரிந்துகொண்ட உங்கள் இராசாவின் நிமித்
தம், அந்நாளிலே கூப்பிடுவீர்கள்; ஆனால் கர்த்தர்
உங்களை அந்நாளிலே கேட்பதில்லையென்றான்.
௰௯ சனமோவென்றால் சாமுவேலின் சொல்லைக்
கேட்க மனதில்லாமல் சொன்னதாவது: அப்படி
யல்ல, ஒரு இராசா எங்கள்மேல் இருக்கவேண்
௨௰ டும்.—சகல சாதிகளைப்போல நாங்களும் இருப்
போம்; எங்கள் இராசா எங்களை நியாயம்விசா
ரித்து, எங்களுக்கு முன்பாகப் புறப்பட்டு, எங்
கள் யுத்தங்களை நடத்தவேண்டுமென்றார்கள்.—
௨௧ சாமுவேல் சனத்தின் வார்த்தைகளையெல்லாம்
கேட்டு, அவைகளைக் கர்த்தருடைய செவிகளுக்
௨௨ குமுன்பாகச் சொன்னான். — கர்த்தரோவென்
றால் சாமுவேலுடனே, நீ அவர்கள் சொல்லைக்
கேட்டு, அவர்களை அரசாளும் இராசாவை அவர்
களுக்கு ஏற்படுத்தென்றார்; அப்போது சாமு
வேல் இஸ்ரவேல் மனுஷருடனே, அவரவர் உங்
கள் ஊர்களுக்குப் போய்விடுங்களென்றான்.

## ௯. அதிகாரம்.

*௧. சவுலென்பவன் தன் பிதாவின் கழுதைகளைத் தேடிக் காணக்கூடாதென்றவிடத்து, ௬. வேலைக்காரனுடைய ஆலோசனையினாலும், ௰௧. கன்னியாஸ்திரிகள் சொன்னதினாலும், ௰௫. பராபரன் வெளிப்படுத்தியதின்படி, ௰௮. சாமுவேலண்டைக்கு வந்தது. ௰௯. சாமுவேல் சவுலைத் தன் விருந்துக்கு அழைத்தது. ௨௫. சாமுவேல் சவுலுடனே சில இரகசியங்களைப் பேசி வழிவிடப்போனது.*

கீசென்று பேருள்ள பென்யமீன் கோத்திரத்தா ௧
னாகிய பலத்த ஒரு மனுஷனிருந்தான்; அவன்
எமினி மனுஷனாயிருந்த ஒருவனுடைய குமார
னாகிய அப்பீயாவின் மகனான பெகோராத்திற்
குப் பிறந்த சேரோரின் மகனாகிய அபீயேலின்
குமாரனானவன். — அவனுக்குச் சவுலென்று ௨
பேருள்ள சவுந்தரியமான வாலிபனாகிய ஒரு
குமாரனிருந்தான்; இஸ்ரவேல் புத்திரரில் அவ
னைப்பார்க்கிலும் சவுந்தரியமானவனில்லை; எல்
லாச் சனத்திலும் தன் தோள் உயர்ந்தவனாயிருந்
தான்.
சவுலின் தகப்பனாகிய கீசுடைய பெட்டைக் ௩
கழுதைகள் காணாமல்போயின; ஆகையால் கீசு
தன் குமாரனாகிய சவுலோடே நீ வேலைக்கார
ரில் ஒருவனைக் கூட்டிக்கொண்டு, கழுதைகளைத்
தேட, புறப்பட்டுப் போவென்றான்.—அப்படி ௪
யே அவன் எப்பிராயீம் மலைகளையும் சலீசா
தேசத்தையும் கடந்துபோனான்; அங்கே அவை
களைக் கண்டுபிடியாமல் சாலீம் தேசத்தைக்
கடந்தார்கள்; அங்கேயும் இல்லாமல்போயின;
எமினி தேசத்தை உருவக்கடந்தும் கண்டுபி
டித்ததில்லை. — அவர்கள் சூப்பென்ற தேசத் ௫
திற்கு வந்தபோது, சவுல் தன்னோடிருந்த வே
லைக்காரனுடனே, என் தகப்பன் கழுதைகளின்
மேலிருக்கிற நினைப்பைவிட்டு, நமக்காகக் கவ
லைப்படாதபடிக்குத் திரும்பிப்போவோம் வா
வென்றான். — இவனோவென்றால் அவனுட ௬
னே, இதோ இந்தப் பட்டணத்திலே பராபரனு
டைய மனுஷன் ஒருவன் இருக்கிறான்; அவன்
பெரிய மனுஷன்; அவன் சொல்லுகிறதெல்
லாம் தப்பாமல் வரும்; இப்போதும் அங்கே
போவோம்; ஒருவேளை அவன் நாம் போக
வேண்டிய நம்முடைய வழியை நமக்கு அறி
விப்பானென்றான்.—அப்போது சவுல் தன் வே ௭
லைக்காரனோடே, இதோ நாம் போனாலும் அந்த
மனுஷனுக்கு என்ன கொண்டுபோவோம்;
ஏனென்றால் நம்முடைய அசும்புகளில் இருந்த
தின் பண்டங்கள் போயின; பராபரனுடைய
மனுஷனாகிய அவனுக்குக் கொண்டுபோகத்
தக்க காணிக்கை நம்மிடத்தில் இல்லையேயென்
றான்.—அந்த வேலைக்காரன் அப்புறம் சவுலுக் ௮
குப் பிரதியுத்தாரமாக, இதோ என் கையில் இன்
னும் கால்சேக்கல் வெள்ளியிருக்கின்றது; பரா
பரனுடைய மனுஷன் நமக்கு நம்முடைய வழி
யை அறிவிக்கும்படிக்கு, அதை அவனுக்குக்
கொடுப்பேனென்றான்.--முன்காலத்திலே இஸ்ர ௯
வேலில் எவர் ஒருவர் பராபரனை ஆலோசனை
கேட்கப்போனால், ஞானதிஷ்டிக்காரனண்
டைக்குப் போவோம் வாருங்கள் என்பார்கள்;
ஏனென்றால் இந்நாளிலே தீர்க்கதரிசி என்னப்
படுகிறவன் முன்காலத்திலே ஞானதிஷ்டிக்கா
ரன் என்னப்படுவான்.—அப்போது சவுல் தன் ௰
வேலைக்காரனோடே, உன் வார்த்தை நல்லது

தான்; போவோம் வாவென்றான்; அப்படியே
பராபரனுடைய மனுஷனிருந்த அந்தப் பட்ட
ணத்திற்குப் போனார்கள்.
௰௧ அவர்கள் பட்டணத்தின் படியில் ஏறுகிற
போது, தண்ணீர்மொள்ளப் புறப்பட்ட பெண்
பிள்ளைகளைக் கண்டு, ஞானதிஷ்டிக்காரன் இங்
கே இருக்கிறானோவென்று அவர்களைக் கேட்
௰௨ டார்கள்.—இவர்கள் அவர்களுக்குப் பிரதியுத்தார
மாகச் சொன்னது: இருக்கிறார்; இதோ உங்க
ளுக்கு எதிராய் வருவார்; ஆகையால் தீவிரித்துக்
கொள்ளுங்கள்; ஏனென்றால் இன்றைக்கு மேட்
டின்மேலே பலிசெலுத்துதல் சனத்திற்குண்டா
யிருக்கிறபடியினாலே, இன்று பட்டணத்திற்கு
௰௩ வந்தார்.—நீங்கள் பட்டணத்திற்குள் பிரவேசித்
தவுடனே, அவரை அவர் சாப்பிடத்தக்கதாக
மேட்டின்மேல் ஏறுகிறதற்குமுன்னே காண்பீர்
கள்; ஏனென்றால் அவர் வரும்மட்டும் சனம்
சாப்பிடுகிறதில்லை; ஏனெனில் பலியிட்டதை
அவர் ஆசீர்வதிக்கிறார்; பிற்பாடு அழைக்கப்பட்
டவர்கள் சாப்பிடுகிறார்கள்; இப்போதும் ஏறிப்
போங்கள்; ஏனென்றால் இந்நேரப் பகலிலே
௰௪ அவரைக் காண்பீர்களென்றார்கள். — அவர்கள்
பட்டணத்திற்கு ஏறிப்போய், பட்டணத்தின்
நடுவே வந்தபோது, இதோ சாமுவேல் மேட்
டின்மேல் ஏறிப்போகிறதற்காக, அவர்களுக்கு
எதிராகப் புறப்பட்டுவந்தான்.
௰௫ ஆனால் சவுல் வர ஒரு நாளுக்குமுன்னே கர்த்
தர் சாமுவேலின் காதுகளுக்கு வெளிப்படுத்திச்
௰௬ சொன்னதாவது:—நாளை இந்நேரத்திற்குப் பென்
யமீன் தேசத்தானாகிய ஒரு மனுஷனை உன்னண்
டைக்கு அனுப்புவோம்; அவனை நம்முடைய
சனமாகிய இஸ்ரவேலின்மேலே அதிபதியாக அ
பிஷேகம்பண்ணக்கடவாய்; அவன் நம்முடைய
சனத்தைப் பெலிஸ்தியரின் கைக்கு நீங்கலாக்கி
இரட்சிப்பான்; ஏனெனில் நம்முடைய சனத்
தின் கூப்பிடுதல் நமக்கு எட்டினபடியினாலே,
அதை நோக்கிப் பார்த்தோமென்று சொல்லியி
௰௭ ருந்தார். — சாமுவேல் சவுலைக் காண்கையில்,
கர்த்தர் அவனுக்குப் பிரதியுத்தாரமாக, இதோ
நாம் உன்னோடே சொன்ன மனுஷன் இவன்
தான்; இவன் நம்முடைய சனத்தை ஆண்டு
கொள்வானென்றார்.
௰௮ சவுல் நடுவாசலிலே சாமுவேலண்டையில்
சேர்ந்து, இங்கே ஞானதிஷ்டியுள்ளவன் வீடு
௰௯ எங்கேயென்று எனக்கு அறிவியுமென்றான்.—சா
முவேல் சவுலுக்குப் பிரதியுத்தாரமாகச் சொன்
னதாவது: ஞானதிஷ்டியுள்ளவன் நான்தானே;
நீ எனக்குமுன்பாக மேட்டின்மேல் ஏறிப்போ;
ஏனெனில் நீங்கள் இன்றைக்கு என்னோடே
சாப்பிடவேண்டும்; நாளைக் காலமே நான் உன்
னை அனுப்பி, உன் இருதயத்தில் இருக்கிறதெல்
௰௨ லாவற்றையும் உனக்கு அறிவிப்பேன்.—இதற்கு
மூன்றாம் நாளிலே உனக்குக் காணமல்போன
பெட்டைக் கழுதைகளின் செய்தியை உன் மன
திலே வைக்காயாக; ஏனெனில் அவைகள் அகப்

பட்டன; இதல்லாமல் இஸ்ரவேலில் இச்சிக்கப்
படத்தக்கவைகளெல்லாம் யாருக்கு இருக்கும்?
உனக்கும் உன் தகப்பன் வீட்டைத்திற்குமல்ல
வோ என்றான்.—அப்போது சவுல் பிரதியுத்தார ௨௧
மாக, நான் இஸ்ரவேல் கோத்திரங்களிலே சிறி
தான பென்யமீன் கோத்திரத்தானல்லவோ? பெ
ன்யமீன் கோத்திரத்து வம்சங்களிலெல்லாம் என்
னுடைய வம்சம் கொஞ்சமுமானதல்லவோ?
நீர் இப்படிக்கொத்த வார்த்தையை என்னோடே
சொல்லுவானேனென்றான்.
ஆனால் சாமுவேல் சவுலையும் அவன் வேலைக் ௨௨
காரனையும் சாலைக்குள் அழைத்துக்கொண்டு
போய், அழைக்கப்பட்டவர்களுக்குள்ளே அவர்
களைத் தலையான ஸ்தலத்திலே வைத்தான்; இவர்
கள் ஏறக்குறைய முப்பதுபேராயிருந்தார்கள்.—
பிற்பாடு சாமுவேல் சமையல் ஆளுடனே, நான் ௨௩
உன் கையிலே கொடுத்துவைக்கச் சொன்ன பங்
கைக் கொண்டுவந்து வையென்றான்.— அப் ௨௪
போது சமையல்பண்ணுகிறவன் ஒரு முன்னந்
தொடையையும் அதனோடேகூட இருந்ததை
யும், எடுத்துவந்தான்; அதை அவன் சவுல்முன்
னே வைத்து, இதோ மீதியானது, இதை உனக்கு
முன்பாக வைத்துக்கொண்டு சாப்பிடு; ஏனென்
றால் நான் சனத்தை விருந்துக்கு அழைத்தபடி
யினாலே, இது இந்த வேளைக்கு உனக்காக வைக்
கப்பட்டதென்றான்; அப்படியே சவுல் அந்நா
ளிலே சாமுவேலோடே சாப்பிட்டான்.
அவர்கள் மேட்டிலிருந்து பட்டணத்திற்கு ௨௫
இறங்கிவந்தபிற்பாடு, அவன் மேல்வீட்டிலே
சவுலோடே பேசிக்கொண்டிருந்தான். — அவர் ௨௬
கள் அதிகாலமே கிழக்கு வெளுக்கிற நேரத்தில்
எழுந்திருந்தபோதோவெனில், சாமுவேல் சவு
லை மேல்வீட்டின்மேல் அழைத்து, நான் உன்னை
அனுப்பும்படிக்கு, ஆயத்தப்படுவென்றான்; சவுல்
ஆயத்தப்பட்டபோது, அவனும் சாமுவேலும்
இருவருமாக வெளியே புறப்பட்டார்கள்.
அவர்கள் பட்டணத்தின் முடிவுமட்டும் இறங் ௨௭
கிவந்தபோதோவென்றால், சாமுவேல் சவுலு
டனே, நான் பராபரனுடைய வார்த்தையை
உனக்கு அறியப்பண்ணும்படிக்கு, நீ இப்போது
தரித்து நின்று, வேலைக்காரனை நமக்குமுன்னே
நடந்துபோகச் சொல்லென்றான்; அப்படியே
அவன் நடந்துபோனான்.

## ௰. அதிகாரம்.

௧. சாமுவேல் சவுலுக்கு எண்ணெயால் அபிஷேகம் செய்தது. ௨. சாமுவேல் மூன்று அடையாளங்களினால் அவனைத் திடப்படுத்தினது. ௯. சவுலென்பவனுடைய மனது மாறி, தீர்க்கதரிசனம் சொன்னது. ௰௪. அவன் தன் சிறிய தகப்பனுக்கு இராச்சியபாரகாரியத்தைச் சொல்லாமல் மறைத்தது. ௰௭. சவுல் மிஸ்பாவில் சீட்டினால் நியமிக்கப்பட்டது. ௨௬. அவனைக்குறித்துக் குடிகள் வித்தியாசமாக நினைத்த நினைவு.

அப்போது சாமுவேல் எண்ணெய்ப் பாத்திரத் ௧
தை எடுத்து, அவன் தலையின்மேலே வார்த்து,
அவனை முத்தம்செய்து சொன்னதாவது: கர்த்தர்
உன்னைத் தம்முடைய சுதந்தரத்தின்மேலே தலை
வனாக அபிஷேகம்பண்ணினாரல்லவோ? — நீ ௨
இன்றைக்கு என்னைவிட்டுப் போகிறபோது,

பென்யமீன் எல்லையாகிய செல்சாகில் ராகே
லின் கல்லறையண்டையில் இரண்டு மனுஷ
ரைக் காண்பாய்; அவர்கள் உன்னுடனே, நீ தே
டப்போன கழுதைகள் அகப்பட்டன; இதோ
உன் தகப்பன் கழுதைகளின்மேலிருந்த விசாரத்
தைவிட்டு, உங்களுக்காகக் கவலைப்பட்டு, என்
மகனுக்காக என்னசெய்வேன் என்கிறானென்று
௩ சொல்லுவார்கள்.—நீ அவ்விடத்தைவிட்டு அப்
பால் கடந்து, எலோன்தாபோர்மட்டும் வருகிற
போது, பேத்தேலிலே பராபரனைப் பணிகிற ஸ்
தலத்தில்போகிற மூன்று மனுஷர் அங்கே உன்
னைக் கண்டு சந்திப்பார்கள்; ஒருவன் மூன்று ஆட்
டுக்குட்டிகளையும், பின்னொருவன் மூன்று அப்
பங்களையும், பின்னொருவன் திராட்சப்பழஇரச
மிருக்கிற ஒரு துருத்தியையும் சுமந்துவந்து,—
௪ உன்னுடைய சுகசெய்தியை விசாரித்து, உனக்கு
இரண்டு அப்பங்களைக் கொடுப்பார்கள்; அவை
களை நீ அவர்கள் கையிலே வாங்கவேண்டும்.—
௫ பிற்பாடு பெலிஸ்தியரின் தாணையமிருந்த பராபர
னுடைய மேட்டுக்கு வருவாய்; அங்கே நீ பட்
டணத்திற்குள் பிரவேசிக்கையில், மேட்டிலிருந்
திறங்கிவருகிற தீர்க்கதரிசிகளின் கூட்டத்திற்கு
எதிர்ப்படுவாய்; அவர்களுக்குமுன்பாகத் தம்பு
ருவும் மேளமும் நாகசுரமும் சுரமண்டலமும்
போகும்; அவர்களோவென்றால் தீர்க்கதரிசனம்
௬ சொல்லுவார்கள்.–அப்போது கர்த்தருடையஆவி
உன்மேல் இறங்குகிறதினாலே, நீ அவர்களோ
டேகூடத் தீர்க்கதரிசனம்சொல்லி, வேறே மனு
௭ ஷனாய்ப் போவாய்.–இந்த அடையாளங்கள் உ
னக்கு வந்தபோது, உன் கைக்கு நேராகுகிறதைச்
செய்; ஏனெனில் பராபரன் உன்னோடேயிருக்
௮ கிறார்.–ஆனால் நீ எனக்குமுன்னே கில்காலுக்கு
இறங்கிப்போவாயாக; ஏனென்றால் இதோ சர்
வாங்கதகனங்களையும் சமாதானபலிகளையும் செ
லுத்தும்படிக்கு, நான் உன்னண்டைக்கு இறங்
கிவருவேன்; நான் உன்னண்டைக்கு வந்து, நீ
செய்யவேண்டியதை உனக்கு அறிவிக்கும்மட்
டும், ஏழுநாள் காத்திருப்பாயாகவென்றான்
௯ அவன் சாமுவேலைவிட்டுப் புறப்பட, தன்
தோளைத் திருப்பினபோது சம்பவித்ததேதெ
னில், பராபரன் அவனுக்கு வேறே இருதயத்
தை மாற்றிக்கொடுத்தார்; அந்த எல்லா அடையா
ளங்களும் அந்நாளிலேதானே அவனுக்கு வந்
௰ தன.—அவர்கள் அந்த மேட்டுக்கு வந்தபோது.
இதோ தீர்க்கதரிசிகளின் கூட்டம் அவனுக்கு
எதிராகவந்தது; அப்போது பராபரனுடைய ஆவி
அவன்மேல் இறங்கினதினாலே, அவர்களுக்குள்
௰௧ ளிருந்து தீர்க்கதரிசனம் சொன்னான்.—அதற்கு
முன்னே அவனை அறிந்தவர்களெல்லாரும்
அவன் தீர்க்கதரிசிகளோடிருந்து, தீர்க்கதரிசனம்
சொல்லுகிறதைக் கண்டபோது, அந்தச் சனம்
ஒருவரோடொருவர், கீசின் குமாரனுக்கு வந்த
தென்ன? சவுலும் தீர்க்கதரிசிகளுக்குள் இருக்கி
௰௨ றானோ என்றார்கள்.—அதற்கு அங்கே இருக்கிற
வர்களில் ஒருவன் பிரதியுத்தாரமாக, ஆனால்
இவர்களுடைய தகப்பன் யாரென்றான்; ஆனது
கொண்டு, சவுலும் தீர்க்கதரிசிகளுக்குள் இருக்
கிறானோ என்கிற பழமொழி உண்டாயிற்று.—
அவன் தீர்க்கதரிசனம் சொல்லி முடித்தபிற் ௰௩
பாடு, மேட்டின்மேலே வந்தான்.
அப்போது சவுலுடைய சிறியதகப்பன், நீங் ௰௪
கள் எங்கே போனீர்கள் என்று அவனையும்
அவன் வேலைக்காரனையும் கேட்டான்; அதற்கு
அவன், நாங்கள் கழுதைகளைத் தேடப்போய்,
அவைகளைக் காணாதேபோனபடியினாலே, சாமு
வேலண்டைக்கு வந்தோமென்றான்.–அப்போது ௰௫
சவுலின் சிறியதகப்பன், சாமுவேல் உங்களுக்
குச் சொன்னதென்னவென்று எனக்கு அறிவி
யென்றான்.—சவுல் தன் சிறியதகப்பனுடனே, ௰௬
கழுதைகள் அகப்பட்டனவென்று எங்களுக்கு
அறிவிக்கவே அறிவித்தானென்று சொன்னான்;
ஆனால் சாமுவேல் சொன்ன இராச்சியபாரத்
தின் வர்த்தமானத்தை அவனுக்கு அறிவிக்காதே
போனான்.
சாமுவேலோவென்றால் சனத்தை மிஸ்பாவி ௰௭
லே கர்த்தரண்டைக்கு வரவழைத்து,— இஸ்ர ௰௮
வேல் புத்திரரோடே சொன்னதாவது: இஸ்ரவே
லின் பராபரனாகிய கர்த்தர் சொல்லுகிறதேதெ
னில், நாம் இஸ்ரவேலை எகிப்திலிருந்து ஏறிவ
ரப்பண்ணி, உங்களை எகிப்தியர் கைக்கும் உங்
களை இறுகப்பிடித்த எல்லா இராச்சியத்தாரின்
கைக்கும் நீங்கலாக்கிவிட்டோம். — நீங்களோ ௰௯
வென்றால் உங்களுடைய எல்லாத் தீங்குகளுக்
கும் நெருக்கங்களுக்கும் உங்களை நீங்கலாக்கி
இரட்சித்த உங்கள் பராபரனை இந்நாளிலே புறக்
கணித்து, அவருடனே, ஒரு இராசாவை எங்கள்
மேலே வையுமென்றீர்கள்; இப்போதும் கர்த்த
ருக்குமுன்பாக உங்கள் வம்சங்களின்படியே
யும், ஆயிரங்களான உங்கள் சேர்வைகளின்படி
யேயும், உங்களை நிறுத்துங்களென்றான்.
இஸ்ரவேலின் கோத்திரங்களையெல்லாம் சா ௨௰
முவேல் சேரப்பண்ணினபிற்பாடு பென்யமீன்
கோத்திரத்தின்மேலே சீட்டுவிழுந்தது.—அவன் ௨௧
பென்யமீன் கோத்திரத்தை அதினுடைய வம்சங்
களின்படியே சேரப்பண்ணின பிற்பாடு, மாத்
திரி வம்சத்தின்மேலும் அதிலே கீசின் குமாரனா
கிய சவுலின்மேலும் சீட்டுவிழுந்தது; அவனைத்
தேடுகிறபோதோவெனில், அவன் அகப்படாதே
போனான்.
அவன் இன்னம் இங்கே வருவானோவென்று ௨௨
அவர்கள் திரும்பக் கர்த்தரைக் கேட்டபோது,
இதோ அவன் தளவாடங்களிருக்கிற இடத்
திலே ஒளித்துக்கொண்டிருக்கிறானென்று கர்த்
தர் சொன்னார். — அப்போது அவர்கள் ஓடி, ௨௩
அங்கேயிருந்து அவனை அழைத்துவந்தார்கள்;
அவன் சனத்தின்நடுவே வந்து நிற்கிறபோது,
எல்லாச் சனத்திலும் தன் தோள் உயர்ந்தவனாயி
ருந்தான்.
அப்போது சாமுவேல் எல்லாச் சனத்தோடும், ௨௪
கர்த்தர் தெரிந்துகொண்டவனைப் பார்க்கிறீர்க

ளல்லவோ? ஏனென்றால் எல்லாச் சனத்திலும்,
அவனுக்குச் சரியானவன் இல்லையென்றான்;
அப்போது சனமெல்லாம் ஆர்ப்பரித்து, இராசா
௨௫ வானவர் வாழ்கவென்றார்கள். — சாமுவேலோ
வெனில், இராச்சியபாரத்தின் நியாயத்தைச்
சனத்திற்குச் சொல்லிக்காட்டி, அதை ஒரு புஸ்
தகத்தில் எழுதி, கர்த்தருக்குமுன்பாக வைத்து
விட்டு, பிற்பாடு சனத்தையெல்லாம் அவரவரை
அவர்கள் வீட்டுக்கு அனுப்பிவிட்டான்.
௨௬ சவுலும் கிபேயாவிலிருக்கிற தன் வீட்டுக்குப்
போய்விட்டான்; இராணுவத்தில் பராபரன்
எவர்கள் மனதை ஏவினாரோ, அவர்களும் அவ
௨௭ னோடேகூடப் போனார்கள்.—ஆனால் பேலியா
ளின் பிள்ளைகள் இவன் நம்மை இரட்சிப்பதே
தென்று அவனை அசட்டைபண்ணி, அவனுக்
குக் காணிக்கை கொண்டுபோகாதிருந்தார்கள்;
அவனோவென்றால், அதற்குக் காதுகேளாதவ
னைப்போல இருந்தான்.

## ௰௧. அதிகாரம்.

௧. நாகாசு கிலேயாத்தின் யாபேசு மனிதர்களுக்கு அவமானத் திட்டத்தை நியமித்தது. ௪. அவர்கள் தானாபதிகளை அனுப்பி, சவுலால் விடுதலை பெற்றது. ௰௨. சவுல் இராசனாக ஏற்றுக்கொள்ளப்பட்டதும், அவனுடைய இராசரிகம் விர்த்தியாக்கப்பட்டதும்.

௧ ஆனால் நாகாசென்ற அம்மோனியன் ஏறி வந்
து, கிலேயாத்திலிருக்கிற யாபேசை முற்றிக்கை
போட்டான்; அப்போது யாபேசின் மனுஷ
ரெல்லாரும் நாகாசுடனே, எங்களோடே உடம்
படிக்கைபண்ணும்; அப்போது உம்மைச் சே
௨ விப்போமென்றார்கள். — ஆனால் அம்மோனிய
னாகிய நாகாசு அவர்களுடனே, நான் உங்கள்
எல்லாருடைய வலது கண்ணைப் பிடுங்கி, இதி
னாலே இஸ்ரவேல் எல்லாவற்றின்மேலும் நிந்
தை வரப்பண்ணுவேன் என்கிறதாய் உங்களோ
டே உடம்படிக்கை பண்ணுவேனென்றான்.
௩ அப்போது யாபேசின் மூப்பரானவர்கள் அவ
னுடனே, நாங்கள் இஸ்ரவேலின் எல்லைக்கெல்
லாம் தானாபதிகளை அனுப்ப, ஏழுநாள் எங்களுக்
குத் தவணைகொடும்; எங்களை இரட்சிப்பார் இல்
லாவிட்டால், அப்போது உம்மண்டைக்குப்
௪ புறப்பட்டு வருவோமென்றார்கள்.—அந்தத் தானா
பதிகள் கிபேயாவிலே சவுலண்டைக்கு வந்து,
சனத்தின் காதுகள் கேட்க, அந்த வார்த்தைக
ளைச் சொன்னார்கள்; அப்போது சனமெல்லாம்
௫ சத்தமிட்டு அழுதார்கள்.—இதோ சவுல் மாடுக
ளின் பின்னாலே வயல்வெளியிலிருந்து வந்து,
சனம் அழுகிற முகாந்தரம் என்னவென்று கேட்
டான்; அவனுக்கு யாபேசு மனுஷரின் வார்த்
௬ தைகளை விவரித்தார்கள். — சவுல் இந்த வார்த்
தைகளைக் கேட்கையில், பராபரனுடைய ஆவி
அவன்மேல் இறங்கினதினாலே அவன் மிகவும்
௭ கோபம்மூண்டவனாகி,—ஓர் இணைமாட்டைப்
பிடித்து, அதைத் துண்டித்துப்போட்டு, அந்தத்
தானாபதிகள் கையிலே இஸ்ரவேலின் எல்லைக்
கெல்லாம் அனுப்பி, சவுலின் பின்னாலேயும்,
சாமுவேலின் பின்னாலேயும், புறப்படாதவனு
டைய மாடுகளுக்கு இப்படிச் செய்யப்படு
மென்று சொல்லி அனுப்பினான்; அப்போது
கர்த்தரால் உண்டான பயங்கரம் சனத்தின்மேல்
இறங்கினதினால், ஒருவனைப்போலப் புறப்பட்
டார்கள்.—அவர்களைப் பேசேக்கிலே இலக்கம் ௮
பார்த்தான்; இஸ்ரவேல் புத்திரரில் மூந்நூறாயி
ரம்பேரும், யூதமனுஷரில் முப்பதினாயிரம்பே
ரும் இருந்தார்கள்.
அப்போது வந்த தானாபதிகளுக்கு அவர்கள் ௯
சொன்னதாவது: கிலேயாத்திலிருக்கிற யாபே
சின் மனுஷருக்கு நீங்கள் சொல்லவேண்டிய
தேதெனில், நாளை வெயில் ஏறுகையில், உங்க
ளுக்கு இரட்சிப்புண்டாமென்று சொல்லுங்க
ளென்றார்கள்; தானாபதிகள் வந்து, யாபேசின்
மனுஷருக்கு அதை அறிவிக்கிறபோது, அவர்
கள் சந்தோஷப்பட்டார்கள்.—பிற்பாடு யாபே ௰
சின் மனுஷர், நாளை உங்களண்டைக்குப் புறப்
படுவோம்; அப்போது உங்கள் பார்வைக்குச்
சரியானபடியெல்லாம் எங்களுக்குச் செய்யுங்க
ளென்றார்கள்.
மறுநாளிலோவென்றால் சவுல் சனத்தை மூன் ௰௧
றுவகுப்பாக நிறுத்தினான்; பிற்பாடு அதிகாலைச்
சாமத்திலே பாளயத்திற்குள் வந்து, பகலின் வெ
யில் ஏறும்மட்டும் அம்மோனை முறியடித்தான்;
தப்பி மீதியானவர்களிலோவெனில், இரண்டு
பேராகிலும் சோடாய்க் கூடிப்போகாதபடியா
கச் சிதறினார்கள்.
அப்போது சனம் சாமுவேலுடனே, சவுல் ௰௨
நம்முடையமேல் இராசாவாயிருப்பதேது என்ற
வர்கள் யார்? அந்த மனுஷரை நாங்கள் கொன்று
போடும்படிக்கு ஒப்புக்கொடுங்களென்றார்கள்.—
சவுலோவென்றால் இந்த நாளிலே ஒருவரும் ௰௩
கொன்றுபோடப்படவேண்டாம்; ஏனெனில்
இன்று கர்த்தர் இஸ்ரவேலிலே இரட்சிப்பை
உண்டுபண்ணினாரென்றான்.
அப்போது சாமுவேல் சனத்துடனே, நாம் ௰௪
கில்காலுக்குப் போய், அங்கே இராச்சியபாரத்
தைப் புதிதாக்குவோம் வாருங்களென்றான்.—
அப்படியே சனமெல்லாம்கில்காலுக்குப் போய், ௰௫
அவ்விடத்திலே கர்த்தருக்குமுன்பாகச் சவுலை
இராசாவாக வைத்து, அங்கே கர்த்தருக்குமுன்
பாகச் சமாதான பலிகளைச் செலுத்தி, அங்கே
சவுலும் இஸ்ரவேல் மனுஷர் அனைவரும் மிக
வும் மகிழ்ந்துகொண்டிருந்தார்கள்.

## ௰௨. அதிகாரம்.

௧ சாமுவேல் தன் உண்மையை வெளிப்படுத்தினது. ௬. அவன் சனங்களின் நன்றியில்லாமையைக் கண்டித்தது. ௰௬. அறுப்புக்காலத்திலே இடியினால், அவர்களைப் பயப்படச்செய்தது. ௨௰. அவன் பராபரனுடைய கிருபையினால் அவர்களுக்கு ஆறுதல்செய்தது.

அப்போது சாமுவேல் இஸ்ரவேலனைத்தோடும் ௧
சொன்னதாவது: இதோ நீங்கள் எனக்குச் சொன்
னபடியெல்லாம் உங்கள் சொல்கேட்டு, உங்கள்
மேல் ஒரு இராசாவை வைத்தேன்.—இப்போதும் ௨
இதோ இராசாவானவர் உங்களுக்குமுன்பாக
நடந்துவருகிறார்; நானோவெனில் கிழவனும்

நரைத்தவனுமானேன்; என் குமாரரோவென்
ருல் உங்களோடிருப்பார்கள், நான் என் சிறுவ
யதுதுவக்கி இந்நாள்வரைக்கும், உங்களுக்கு
௩ முன்பாகச் சஞ்சரித்தேன்.—இதோ நான் இங்
கே இருக்கிறேன்; நான் யாருடைய எருதை
எடுத்துக்கொண்டேன்? யாருடைய கழுதையை
எடுத்துக்கொண்டேன்?யாருக்கு இடுக்கண் செய்
தேன்? யாரை ஒடுக்கினேன்? நான் கண்சாய்ப்
பாயிருக்க, யார் கையிலே பரிதானம் வாங்கி
னேனென்று கர்த்தருக்குமுன்பாகவும், அவர் அ
பிஷேகம்பண்ணிவைத்தவருக்கு முன்பாகவும்,
எனக்கு எதிராக மறுவுத்தரம் சொல்லுங்கள்;
அப்போது அதை உங்களுக்குத் திரும்பக் கொ
௪ டுப்பேனென்ருன்.—அப்போது அவர்கள், நீர்
எங்களுக்கு இடுக்கண் செய்ததுமில்லை; எங்களை
ஒடுக்கினதுமில்லை; ஒருவர் கையிலும் ஒன்றும்
௫ எடுத்துக்கொண்டதுமில்லை என்ருர்கள்.—அப்
போது அவன் அவர்களுடனே, நீங்கள் என்
கையிலே ஒன்றும் கண்டுபிடித்ததில்லை என்ற
தற்குக் கர்த்தர் உங்களுக்கு எதிராகச் சாட்சி
யானவர்; அவர் அபிஷேகம்பண்ணுவித்தவரும்
இன்று அதற்குச் சாட்சியென்ருன்; அதற்கு
இவர்கள், அவர் சாட்சிதான் என்ருர்கள்.
௬ அப்புறம் சாமுவேல் சனத்தோடே சொன்ன
தாவது: மோசேயையும் ஆரோனையும் கட்டளை
யிட்டவரும், உங்கள் பிதாக்களை எகிப்துதேசத்தி
லிருந்து ஏறிவரப்பண்ணினவரும், கர்த்தரானவ
௭ ரே.-இப்போதும் கர்த்தர் உங்களுக்கும் உங்கள்
பிதாக்களுக்கும் செய்திருக்கிற எல்லா நீதி நியா
யங்களுக்காகவும், நான் கர்த்தருக்குமுன்பாக
உங்களோடே நியாயம் பேசும்படிக்கு உங்களை
௮ நிறுத்துங்கள்.—யாக்கோப் எகிப்திலே வந்ததற்
குப் பிற்பாடு, உங்கள் பிதாக்கள் கர்த்தரைநோக்
கிக் கூப்பிட்டார்கள்; அப்போது கர்த்தர் மோ
சேயையும், ஆரோனையும் அனுப்பினுர்; இவர்
கள் உங்கள் பிதாக்களை எகிப்திலிருந்து அழைத்
துவந்து, அவர்களை இந்தஸ்தலத்திலே குடியிருக்
௯ கப்பண்ணினுர்கள்.-அவர்கள் தங்கள் பராபரனு
கிய கர்த்தரை மறந்துபோகிறபோதோவெனில்,
இவர் அவர்களை ஆத்சோரின் சேனுபதியாகிய
சிசராவின் கையிலும், பெலிஸ்தியரின் கையி
லும், மோவாபுடைய இராசாவின் கையிலும்,
விற்றுப்போட்டார்; இவர்கள் அவர்களுக்கு வி
௰ ரோதமாக யுத்தம்பண்ணினுர்கள்.—ஆகையால்
அவர்கள் கர்த்தரைநோக்கிக்கூப்பிட்டு, நாங்கள்
கர்த்தரைவிட்டுப் பாகால்களையும் அஸ்தரோத்
தையும்சேவித்ததினுலே, பாவம்செய்தோம்; இப்
போதும் எங்கள் சத்துருக்களின் கைக்கு எங்களை
நீங்கலாக்கிவிடும்; இனி உம்மைச் சேவிப்போ
௰௧ மென்ருர்கள்.—அப்போது கர்த்தர் எருபாகாலை
யும் பேதானையும், ஈப்தாவையும் சாமுவேலையும்
அனுப்பி, நீங்கள் பயமில்லாமல் குடியிருக்கும்
படிக்குச் சுற்றிலுமிருந்த உங்கள் சத்துருக்க
ளின் கைக்கும் உங்களை நீங்கலாக்கிவிட்டார்.-
௰௨ அம்மோன் புத்திரரின் இராசாவாகிய நாகாசு உங்
களுக்கு விரோதமாய் வருகிறதை நீங்கள் காண்
கிறபோதோவெனில், உங்கள் பராபரனுகிய கர்த்
தரே உங்கள் இராசாவாயிருந்தாலும், நீங்கள் என்
னுடனே, அப்படி வேண்டாம்; ஒரு இராசா எங்
கள்மேலே அரசாளவேண்டுமென்றீர்கள்.—இப் ௰௩
போதும் இதோ நீங்கள் வேண்டுமென்று கேட்
டுத் தெரிந்துகொண்ட இராசா இங்கே இருக்கி
ருர்; இதோ கர்த்தர் உங்கள்மேல் இராசாவை
வைத்தார்.—நீங்கள் கர்த்தருடைய வாக்குக்கு ௰௪
விரோதமாய்க் கலகம்பண்ணுமல் கர்த்தருக்குப்
பயந்து, அவரைச் சேவித்து, அவருடைய சத்தத்
திற்குக் கீழ்ப்படிந்தால், நீங்களும் உங்கள்மேல்
ஆளுகிற இராசாவும் உங்கள் பராபரனுகிய கர்த்
தரைப் பின்பற்றுகிறவர்களாயிருப்பீர்கள்.—
நீங்கள் கர்த்தருடைய சத்தத்திற்குக் கீழ்ப்படியா ௰௫
மல், கர்த்தரின் வாக்குக்கு விரோதமாய்க் கலகம்
பண்ணினீர்களேயாகில், கர்த்தருடைய கை உங்
கள் பிதாக்களுக்கு விரோதமாயிருந்ததுபோல
உங்களுக்கும் விரோதமாயிருக்கும். — இப்போ ௰௬
தும் நீங்கள் உங்களை நிறுத்தி, கர்த்தர் உங்கள்
கண்களுக்குமுன்பாகச் செய்யும் பெரிய காரி
யத்தைப் பாருங்கள். — இப்போது கோதுமை ௰௭
அறுப்பின் நாளல்லவோ? நீங்கள் உங்களுக்கு
ஒரு இராசாவைக் கேட்டதினுலே, கர்த்தரின்
பார்வைக்குச் செய்த உங்களுடைய பொல்
லாப்பு பெரியதென்று நீங்கள் அறிந்து, உணர்ந்
து காணும்படிக்கு, நான் கர்த்தரை நோக்கிக்
கூப்பிடுவேன்; அப்போது இடிமுழக்கங்க
ளையும் மழையையும், கட்டளையிடுவாரென்று
சொல்லி,
சாமுவேல் கர்த்தரைநோக்கிக் கூப்பிட்டான்; ௰௮
அப்போது அந்நாளிலேதானே கர்த்தர் இடிமுழக்
கங்களையும், மழையையும், கட்டளையிட்டார்;
அப்போது சனமெல்லாம் கர்த்தருக்கும், சாமு
வேலுக்கும் மிகவும் பயந்திருந்து,—சாமுவேலு ௰௯
டனே, நாங்கள் சாகாதபடிக்கு உம்முடைய
பராபரனுகிய கர்த்தரை உம்முடைய அடியாருக்
காக விண்ணப்பம்செய்யும்; ஏனென்ருல் எங்க
ளுடைய எல்லாப் பாவங்களோடும் நாங்கள் எங்
களுக்கு ஒரு இராசாவைக் கேட்ட பொல்லாப்
பையும் கூட்டினுேமென்று சனமெல்லாம்
சொல்லின.—அப்போது சாமுவேல் சனத்தோ ௨௰
டே சொன்னதாவது: பயப்படாதிருங்கள்; நீங்
கள் இந்தப் பொல்லாப்பையெல்லாம் செய்தீர்
கள்; ஆகிலும் கர்த்தரைவிட்டுப் பின்வாங்காமல்
கர்த்தரை உங்கள் முழு இருதயத்தினுலும் சேவி
யுங்கள்.-விலகிப்போகாதிருங்கள்; மற்றப்படிக் ௨௧
குப் பிரயோசனமற்றதும் இரட்சிக்கமாட்டாத
துமாயிருக்கிற வீண்காரியங்களைப் பின்பற்றுவீர்
கள்; ஏனென்ருல் அவைகள் வீண்தானே.—அ ௨௨
தேனெனில் கர்த்தர் உங்களைத் தமக்குச் சன
மாக்கிக்கொள்ளப் பிரியமானபடியினுலே, கர்த்
தர் தம்முடைய மகத்துவமான நாமத்திற்காகத்
தமது சனத்தைக் கைவிடாதிருப்பார்.—நானும் ௨௩
உங்களுக்காக விண்ணப்பம்செய்யாதேபோகிற

பாவத்தைக் கர்த்தருக்கு விரோதமாகச் செய்வது
எனக்குத் தூரமாயிருக்கக்கடவது; நன்மையும்
செவ்வையுமான வழியையும் உங்களுக்குப்போ
௨௪ தித்துக்கொண்டிருப்பேன். — ஆனால் நீங்கள்
கர்த்தருக்குப் பயந்து, உங்கள் முழு இருதயத்
தினாலும் உண்மையாய் அவரைச் சேவிக்கக்
கடவீர்கள்; ஏனெனில் அவர் உங்களிடத்தில்
எத்தனை மகிமையான காரியங்களைச் செய்தா
௨௫ ரென்கிறதைப் பாருங்கள்.—நீங்கள் பொல்லாப்
பைச் செய்யவே செய்தீர்களானால், நீங்களும்
உங்கள் இராசாவும் கெட்டுப்போவீர்களென்
றான்.

## ௰௩. அதிகாரம்.

*௧. சவுலால் தெரிந்துகொள்ளப்பட்ட சேனை. ௩. யோனத்தான் பெலிஸ்தியரில் சிலரை முறியடித்ததினால் எல்லார்மேலும் படையெடுக்க எபிரேயரைக் கில்காலிலே கூப்பிட்டது. ௫ பெலிஸ்தியர் மிகுந்த சேனைகளை கூட்டியது. ௬. இஸ்ரவேல் சனங்களின் வருத்தம். ௮. சவுல் சாமுவேலுக்காகக் காத்துக்கொண்டிருந்து, இளைப்படைந்து, பலியிட்டது. ௰௧. சாமுவேல் சவுலைக் கடிந்துகொண்டது. ௰௭. பெலிஸ்தியர்களின் அழிக்கின்ற மூன்று தண்டுகள். ௰௯. பெலிஸ்தியர்களின் கட்டளையால் இஸ்ரவேல் தேசத்தில் கருமான் அகப்படாதது.*

௧ சவுல் இராச்சியபாரம்பண்ணி, அப்போது ஒரு
வருஷமாயிருந்தது; அவன் இஸ்ரவேலை இரண்
௨ டுவருஷம் அரசாண்டபோதோவெனில்,-அவன்
இஸ்ரவேலில் மூவாயிரம்பேரைத் தனக்குத் தெ
ரிந்துகொண்டான்; அவர்களில் இரண்டாயிரம்
பேர் சவுலோடேகூட மிக்மாசிலும், பேத்தேல்
மலையிலும், ஆயிரம்பேர் யோனத்தானோடேகூ
டப் பென்யமீன் தேசத்துக் கிபேயாவிலும்
இருந்தார்கள்; ஆனால் மற்றச் சனத்தை அவரவர்
கூடாரங்களுக்கு அனுப்பிவிட்டான்.
௩ யோனத்தானோவென்றால் கிபேயாவிலே தா
ணையமிருந்த பெலிஸ்தியனை முறியடித்தான்;
அதைப் பெலிஸ்தியர் கேட்டார்கள்; ஆகையினா
லே சவுல் தேசமெங்கும் இதை எபிரேயர் கேட்
கக்கடவர்களென்று எக்காளம் ஊதுவித்தான்.—
௪ தாணையமிருந்த பெலிஸ்தியனைச் சவுல் முறிய
டித்தானென்றும், பெலிஸ்தியருக்கு இஸ்ரவேல்
நாற்றமாய்ப் போயிற்றென்றும், இஸ்ரவேலெல்
லாம் கேட்டபோது சனம் சவுலுக்குப் பின்
செல்லக் கில்காலுக்கு வர அழைப்பிக்கப்பட்டு
௫ வந்தது.—பெலிஸ்தியர் இஸ்ரவேலோடு யுத்தம்
பண்ணும்படிக்கு, முப்பதினாயிரம் வண்டில்கா
ரரும், ஆறாயிரம் குதிரைக்காரரும், கடல்கரை
மணலத்தனை சனமுமாய்க் கூடிக்கொண்டு, வந்
தேறி, பெத்தாவேனுக்குக் கிழக்கான மிக்மா
சிலே பாளயமிறங்கினார்கள்.
௬ அப்போது இஸ்ரவேல் மனுஷர் தங்களுக்
குண்டான இக்கட்டைக் காண்கிறதினாலே,
சனம் தமக்குண்டான நெருக்கத்தின்நிமித்தம்,
கெபிகளிலும், முள்காடுகளிலும், கல்மலைகளி
லும், துருக்கங்களிலும், குகைகளிலும் ஒளித்
௭ துக்கொண்டார்கள்.-எபிரேயர் யோர்தானையும்
கடந்து, காத்தேசத்திற்கும் கிலேயாத் தேசத்திற்
கும் போனார்கள்; ஆனால் சவுல் இன்னும் கில்
காலிலிருந்தான்; சனமெல்லாம் தத்தளிப்பாய்
அவனுக்குப் பின்சென்றார்கள்.
அவன் சாமுவேல் தனக்குக் குறித்த காலத் ௮
தின்படி ஏழுநாள்மட்டும் காத்திருந்தான்; ஆ
னால் சாமுவேல் கில்காலுக்கு வாராதிருக்கிற
போது, சனம் அவனைவிட்டுச் சிதறிப்போயிற்
று.—அப்போது சவுல் சர்வாங்கதகனபலியை ௯
யும் சமாதானபலிகளையும் என்னண்டைக்குக்
கொண்டுவாருங்களென்று சொல்லி, சர்வாங்க
தகனத்தைச் செலுத்தினான்.
அவன் சர்வாங்கதகனத்தைச் செலுத்தி முடி ௰
கிறபோதோவெனில், இதோ சாமுவேல் வந்
தான்; அப்போது அவனை வினவிக்கொள்ளச்
சவுல் அவனுக்கு எதிர்கொண்டுபோனான்.—நீர் ௰௧
செய்ததென்னவென்று சாமுவேல் கேட்டதற்
குச் சவுல் சொன்னதாவது: சனம் என்னைவிட்
டுச் சிதறிப்போகிறதையும், குறித்த நாள்களின்
திட்டத்திலே நீர் வராததையும்,பெலிஸ்தியர் மிக்
மாசிலே கூடிக்கொண்டிருக்கிறதையும், நான்
கண்டபடியினாலே,—இப்போது பெலிஸ்தியர் ௰௨
கில்காலிலிருக்கிற என்னண்டைக்கு இறங்கி
வருவார்களென்றும், நானோவென்றால் இன்
னும் கர்த்தருடைய சமுகத்தைநோக்கிக் கெஞ்
சினதில்லையென்றும், சொல்லித் துணிந்து, சர்
வாங்கதகனத்தைச் செலுத்தினேன் என்றான்.—
ஆனால் சாமுவேல் சவுலோடே சொன்னதா ௰௩
வது: புத்தியீனமாய்ச் செய்தீர்; உம்முடைய
பராபரனாகிய கர்த்தர் உமக்குக் கற்பித்த கற்ப
னையைக் கைக்கொள்ளாதேபோனீர்; மற்றப்படி
இப்போது கர்த்தர் இஸ்ரவேலின்மேல் உம்மு
டைய இராச்சியபாரத்தை என்றைக்கும் திடப்
படுத்துவார். — இப்போதோவெனில் உம்மு ௰௪
டைய இராச்சியபாரம் நிலைநிற்காது; கர்த்தர்
தம்முடைய இருதயத்திற்கு ஏற்ற ஒரு புருஷ
னைத் தமக்குத் தேடி, அவனைக் கர்த்தர் தம்மு
டைய சனத்தின்மேலே தலைவனாயிருக்கக் கட்
டளையிட்டார்; ஏனெனில் கர்த்தர் உமக்குக்
கற்பித்ததை நீர் கைக்கொண்டதில்லையென்று
சொல்லி,
சாமுவேல் எழுந்திருந்து, கில்காலைவிட்டு, ௰௫
பென்யமீன் தேசத்துக் கிபேயாவுக்கு ஏறிப்போ
னான்;பிற்பாடு சவுல் தன்னோடேகூட இருக்கிற
சனத்தைத் தொகைபார்க்கிறபோது, ஏறக்கு
றைய அறுநூறுபேராயிருந்தார்கள். — சவுலும் ௰௬
அவன் குமாரனாகிய யோனத்தானும் அவர்களோ
டேகூட இருக்கிற சனமும் பென்யமீன் தே
சத்துக் கிபேயாவிலிருந்துவிட்டார்கள்; பெலி
ஸ்தியரோவென்றால் மிக்மாசிலே பாளயமிறங்கி
யிருந்தார்கள்.
அழிக்கிறவர்கள் பெலிஸ்தியரின் பாளயத்தி ௰௭
லிருந்து மூன்று தண்டாய்ப் புறப்பட்டார்கள்;
ஒரு தண்டு ஒப்பிராவழியாய்ச் சூவால் தேசத்
திற்கு நேராகப் போயிற்று.—வேறொரு தண்டு ௰௮
பெத்தொரோன் வழியாகப் போயிற்று; வே
றொரு தண்டு வனாந்தரத்திலிருக்கிற் சேபோயீ

மின் பள்ளத்தாக்குக்கு எதிரான எல்லை வழி
யாய்ப் போயிற்று.
௰௯ இஸ்ரவேல் தேசத்திலேயென்றால், எங்கும்
ஒரு கருமான் அகப்பட்டதில்லை; ஏனென்றால்
எபிரேயர் பட்டையங்களையாகிலும், ஈட்டிகளை
யென்கிலும், செப்பனிடாதபடிக்குப் பார்க்க
வேண்டுமென்று பெலிஸ்தியர் சொல்லியிருந்தா
௨௰ ர்கள்.—ஆகையால் இஸ்ரவேலனைத்திலும் அவர
வர் தங்கள் கொழுவிரும்புகளையும், தங்கள் மண்
வெட்டிகளையும், தங்கள் கோடாலிகளையும் தீட்
டி, ஆணிகளைக் கூர்மையாக்குகிறதற்கும், பெலி
ஸ்தியரண்டைக்கு இறங்கிப்போகவேண்டியதா
௨௧ யிருந்தது. — அரிவாள்களையும், மண்வெட்டி
களையும், முக்கூருள்ள ஆயுதங்களையும், கோடா
லிகளையும், தாற்றுக்கோல்களையும் கூர்மையாக்கு
கிறதற்கு அவர்களுக்கு அரங்கள்மாத்திரம் இருந்
௨௨ தன.—யுத்தநாள் வந்தபோது, சவுலோடும் யோ
னத்தானோடுமிருக்கிற சகல சனத்தின்கையிலும்
பட்டையமும் ஈட்டியுமில்லாதிருந்தது; சவுலுக்
கும் அவன் குமாரனாகிய யோனத்தானுக்கும்
௨௩ மாத்திரம் இருந்தன.—பெலிஸ்தியரின் பாளய
மோவென்றால், மிக்மாசிலிருந்து போகிறவழி
யாய்ப் புறப்பட்டு வருகிறதாயிருந்தது.

## ௰௪. அதிகாரம்.

*௧. யோனத்தான் தன் தகப்பனுக்கும், ஆசாரியனுக்கும், சனங்களுக்கும், தெரியாமல் புறப்பட்டு, பெலிஸ்தியர்களை ஆச்சரியமாக அடித்தது ௰௬. பராபரனால் பயம்பிடித்து, அவர்களுக்குள் ஒருவரை ஒருவர் அடித்துக்கொண்டது. ௰௭. சவுல் ஆசாரியனுடைய மறு உத்தரவுக்காகத் தாமதியாமல் அவர்கள்மேல் புறப்பட்டுப்போனது. ௨௧. சிறைப்பட்டிருந்த எபிரேயரும் ஒளித்திருந்த இஸ்ரவேல் சனங்களும் பெலிஸ்தியரை எதிர்த்தது. ௨௪. சவுலுடைய புத்தியில்லாத ஆணையானது செயத்தைத் தடுத்தது. ௩௨. அவன் சனங்களை இரத்தத்தைக் குடியாமலிருக்கும்படி தடுத்தது. ௩௫. அவன் ஒரு பலிபீடத்தைக் கட்டினது. ௪௪. யோனத்தான் சீட்டினால் பிடிக்கப்பட்டு, சனங்களால் தப்புவிக்கப்பட்டது. ௪௭ சவுலுடைய பலமும், குலமும்.*

௧ ஒருநாளிலே சம்பவித்ததேதெனில், சவுலின்
குமாரனாகிய யோனத்தான் தன் ஆயுதங்களைப்
பிடிக்கிறபிள்ளையாண்டானுடனே, நமக்கு எதி
ராக அந்தப்பக்கத்தில் இருக்கிற பெலிஸ்தியரின்
தாணையத்திற்குக் கடந்துபோவோம் வாவென்று
சொல்லி, அதைத் தன் தகப்பனுக்கு அறிவிக்கா
௨ திருந்தான்.—சவுலோவென்றால் கிபேயாவின்
கடைசிமுனையாகிய மிக்ரோனிலே ஒரு மாதள
மரத்தின் கீழிருந்தான்; அவனோடேகூட இரு
ந்த சனம் ஏறக்குறைய அறுநூறுபேராயிருந்தார்
௩ கள். — சீலோவிலே கர்த்தருடைய ஆசாரிய
னாயிருந்த ஏலியின் குமாரனாகிய பினேகாசுக்
குப்பிறந்த இக்கபோத்தின் சகோதரனும் அ
கித்தோபின் குமாரனுமாகிய அகியாவென்கிற
வன் ஆசாரியசால்வையை அணிந்தவனாயிருந்
தான்; யோனத்தான் போனதை சனம் அறியா
திருந்தது.
௪ யோனத்தான் பெலிஸ்தியரின் தாணையத்திற்
குக் கடந்துபோகப் பார்த்த வழிகளின் நடுவே,
இந்தப்பக்கம் ஒரு கல்மலைக்குன்றும் அந்தப்
பக்கம் ஒரு கல்மலைக்குன்றும் இருந்தன; ஒன்று
போத்சேஸ் என்றும், மற்றொன்று சேனே என்
றும் பேர்கொண்டது. — அந்தக் குன்றுகளில் ௫
ஒன்று வடக்கே மிக்மாசுக்கு எதிராகவும் மற்
றொன்று தெற்கே கிபேயாவுக்கு எதிராகவுமிருந்
தன.—யோனத்தான் தன் ஆயுதங்களைப் பிடிக் ௬
கிற பிள்ளையாண்டானோடே, சுன்னத்தில்லாத
வர்களின் அந்தத் தாணையத்திற்குக் கடந்துபோ
வோம் வா; ஒருவேளை கர்த்தர் நமக்காக ஒரு கா
ரியம் செய்வார்; ஏனென்றால் அநேகம்பேரைக்
கொண்டாகிலும், கொஞ்சம்பேரைக்கொண்
டென்கிலும், இரட்சிக்கக் கர்த்தருக்குத் தடை
யில்லையென்றான்.—அப்போது அவன் ஆயுதங்க ௭
ளைப் பிடிக்கிறவன் அவனுடனே, உம்முடைய
இருதயத்தில் இருக்கிறவைகளையெல்லாம் செய்
யும்; அப்படியே போம்; இதோ உம்முடைய
மனதுக்கு ஏற்றபடி நானும் உம்மோடேகூட
வருகிறேனென்றான்.—அப்போது யோனத்தான் ௮
சொன்னதாவது: இதோ நாம் கடந்து, அந்த
மனுஷரண்டைக்குப் போகிறவர்களாய் அவர்
களுக்கு நம்மைக் காண்பிப்போம்.—நாங்கள் உங் ௯
களண்டைக்கு வரும்மட்டும் நில்லுங்களென்று
நம்மோடே சொன்னார்களானால், நாம் அவர்கள
ண்டைக்கு ஏறிப்போகாமல், நம்முடைய நிலை
யிலே நிற்போம்.—எங்களண்டைக்கு ஏறிவா ௰
ருங்கள் என்றார்களேயாகில், ஏறிப்போவோம்;
ஏனென்றால் கர்த்தர் அவர்களை நம்முடைய கை
யிலே ஒப்புக்கொடுத்தார்; இது நமக்கு அடையா
ளமென்றான்.
அப்படியே அவர்கள் இருவரும் பெலிஸ்திய ௰௧
ரின் தாணையத்திற்குத் தங்களைக் காண்பித்தார்
கள்; அப்போது பெலிஸ்தியர் இதோ எபிரேயர்
ஒளித்துக்கொண்டிருந்த வளைகளைவிட்டுப் புறப்
படுகிறார்களென்று சொல்லி,—தாணையமிருக்கிற ௰௨
மனுஷர் யோனத்தானையும் அவன் ஆயுதங்களைப்
பிடிக்கிறவனையும் பார்த்து, எங்களண்டைக்கு
ஏறிவாருங்கள்; உங்களுக்குப் புத்தி கற்பிப்போ
மென்றார்கள்; அப்போது யோனத்தான் தன் ஆயு
தங்களைப் பிடிக்கிறவனோடே, என் பின்னா
லே ஏறிவா; ஏனென்றால் கர்த்தர் அவர்களை
இஸ்ரவேலின்கையில் ஒப்புக்கொடுத்தாரென்று
சொல்லி,—யோனத்தான் தன் கைகளாலும் தன் ௰௩
கால்களாலும் தவழ்ந்து ஏறினான்; அவன் ஆயு
தங்களைப் பிடிக்கிறவன் அவன் பின்னாலே ஏறி
னான்; அப்போது அவர்கள் யோனத்தானுக்கு
முன்பாக விழுந்தார்கள்; அவன் ஆயுதங்களைப்
பிடிக்கிறவன் அவன் பின்னாலே வெட்டிக்
கொண்டேபோனான்.—யோனத்தானும் அவன் ௰௪
ஆயுதங்களைப் பிடிக்கிறவனும் அடித்த அந்த முந்
தின அடியிலே ஏறக்குறைய இருபதுபேர் அரை
யேர் நிலமான விசாலத்திலே விழுந்தார்கள்.
அப்போது வெளியிலிருந்த பாளயத்திலும், ௰௫
சகல சனத்திலும், பயங்கரம் உண்டாய், தாணை
யமிருந்தவர்களும் கொள்ளையிடப்போன தண்
டும்கூடத் திகில் அடைந்ததினாலே பூமியதிர்ந்
தது; ஏனெனில் அது பராபரனாலுண்டான
பயங்கரமாயிருந்தது.

௰௬ இதோ அந்த ஏராளமான கூட்டம் கலைந்து,
ஒருவர்மேல் ஒருவர் விழுகிறதைப் பென்யமீன்
கிபேயாவிலே சவுலுக்கிருந்த சாமக்காரர் கண்
௰௭ டார்கள்.—அப்போது சவுல் தன்னோடேகூட
இருக்கிற சனத்துடனே, நம்மிடத்திலிருந்து
போனவர்கள் யாரென்று இலக்கம்பாருங்க
ளென்றான்; அவர்கள் இலக்கம்பார்க்கிறபோது,
இதோ யோனத்தானும் அவன் ஆயுதங்களைப் பி
௰௮ டிக்கிறவனும் இல்லாதிருந்தார்கள்.—அப்போது
சவுல் அகியாவுடனே, பராபரனுடைய பெட்
டியைச் சேரக்கொண்டுவாவென்றான்; ஏனென்
றால் பராபரனுடைய பெட்டி அந்நாளில் இஸ்
௰௯ ரவேல் புத்திரரிடத்தில் இருந்தது.—இப்படிச்
சவுல் ஆசாரியனோடே பேசுகையில், பெலிஸ்
தியரின் பாளயத்திலுண்டான கலகம் வெகு
அதிகமாயிற்று; அப்போது சவுல் ஆசாரியனோ
௨௰ டே இருக்கட்டுமென்றான்.—சவுலும் அவனோ
டிருந்த சனமும் ஒருவரை ஒருவர் கூப்பிட்டு,
யுத்தகளத்திற்கு வந்தார்கள்; இதோ ஒருவர் பட்
டையம் ஒருவருக்கு விரோதமாயிருந்து, மகா
௨௧ பெரிய அமளியாயிற்று. — முன்னாளிலே பெ
லிஸ்தியரிடத்திலிருந்து அவர்களோடேகூடப்
பாளயத்திலே திரிந்துவந்தேறின எபிரேயரும்,
சவுலோடும் யோனத்தானோடும் இருக்கிற இஸ்ர
௨௨ வேலரோடே கூடிக்கொண்டார்கள்.—எப்பிரா
யீம் மலைகளில் ஒளித்துக்கொண்டிருந்த சகல
இஸ்ரவேலரும் பெலிஸ்தியர் முறிந்தோடுகிற
தைக் கேட்டபோது, இவர்களும் யுத்தத்திலே
௨௩ அவர்களை ஒட்டித்தொடர்ந்தார்கள்.—இப்படிக்
கர்த்தர் அன்றைத்தினம் இஸ்ரவேலை இரட்சிக்
கிறதினாலே அந்த யுத்தம் பெத்தாவேல்மட்டுக்
கும் நடந்தது.

௨௪ ஆனால் இஸ்ரவேலர் அன்றைத்தினம் வெகு
வருத்தம் அடைந்தார்கள்; ஏனென்றால் நான்
என் சத்துருக்கள் கையிலே பழிவாங்கும்படிக்
கு, எவன் சாயங்காலம்மட்டும் பொறுக்காமல்
போசனம்செய்கிறானோ, அவன் சபிக்கப்பட்ட
வனென்று சவுல் சனத்தை ஆணையிட்டான்; ஆ
கையால் சனமெல்லாம் போசனம் உருசிக்காதி
௨௫ ருந்தார்கள்.—தேசத்தின் சனமெல்லாம் ஒரு காட்
டிலே வந்தார்கள்; அங்கே வெளியிலே தேன்
௨௬ கட்டியிருந்தது.—சனம் காட்டிலே வந்தபோது
இதோ தேன் ஒழுகிக்கொண்டிருந்தது; ஆனால்
ஒருவனும் அதைத் தன் கையினாலே தொட்டுத்
தன் வாய்க்கு எடுத்துக்கொண்டதில்லை; ஏனெ
னில் சனம் அந்த ஆணையின்நிமித்தம் பயப்பட்
௨௭ டது.—யோனத்தானோவென்றால் தன் தகப்பன்
சனத்தை ஆணையிட்டதைக் கேள்விப்படாதி
ருந்து, தன் கையிலிருந்த கோலை நீட்டி, அதின்
முனையினாலே தேன்கூட்டைக் குத்தி, அதை
எடுத்துத் தன் வாயிலே போட்டுக்கொண்டான்;
௨௮ அதினால் அவன் கண்கள் தெளிவாயின.—அப்
போது சனத்தில் ஒருவன், இன்றைக்குப் போச
னம் சாப்பிடுகிறவன் சபிக்கப்பட்டவனென்று
உம்முடைய தகப்பனார் சனத்தை ஆணையிட

வே இட்டார், ஆகையினாலே சனம் விடாய்த்
திருக்கின்றதென்றான்.— அப்போது யோனத் ௨௯
தான் சொன்னதாவது: என் தகப்பன் தேசத்தின்
சனத்தைக் கலக்கமாக்கினார்; நான் இந்தத் தேனி
லே கொஞ்சம் உருசிபார்த்ததினாலே, என் கண்
கள் தெளிவாயினவென்று பாருங்கள்.— இன் ௩௰
றைத்தினம் சனம் தங்களுக்கு அகப்பட்ட தங்
கள் சத்துருக்களின் கொள்ளையிலே ஏதாகிலும்
புசிக்கவே புசித்திருந்தால், எத்தனை நலமாயி
ருக்கும்; இப்போதோவென்றால் பெலிஸ்திய
ரை முறியடிக்குதல் அத்தனை பெரியதாயிரா
தென்றான்.

அவர்கள் அன்றைத்தினம் மிக்மாசிலிருந்து ௩௧
ஆயலோன்மட்டும் பெலிஸ்தியரை முறியடித்த
போது சனம் மெத்தவும் விடாய்த்திருந்தது.—
அப்போது சனம் கொள்ளையின்மேல் பாய்ந்து, ௩௨
ஆடுகளையும் மாடுகளையும் கன்றுக்குட்டிகளையும்
பிடித்து, தரையிலே போட்டடித்து, இரத்தத்
தோடிருக்கிறதாகப் புசித்தார்கள்.—அப்போது ௩௩
இதோ இரத்தத்தோடிருக்கிறதைப் புசிக்கிறதினா
லே சனங்கள் கர்த்தருக்கு ஏராத பாவம்செய்கி
றார்களென்று சவுலுக்கு அறிவித்தார்கள்; அப்
போது அவன் நீங்கள் துரோகம்பண்ணினீர்கள்;
இந்நேரமே ஒரு பெரியகல்லை என்னண்டைக்கு
உருட்டிக்கொண்டுவாருங்களென்றும்,—நீங்கள் ௩௪
சனத்திற்குள்ளே சிதறித் திரிந்து, இரத்தத்தோ
டே இருக்கிறதைச் சாப்பிடுகிறதினாலே, கர்த்
தருக்கு ஏராத பாவம்செய்யாதபடிக்கு, அவரவர்
தங்கள் மாட்டையும் அவரவர் தங்கள் ஆட்டை
யும் என்னண்டைக்குக் கொண்டுவந்து, இங்கே
அடித்து, பிற்பாடு சாப்பிடவேண்டுமென்று
அவர்களுக்குச் சொல்லுங்களென்றும் சொன்
னான்; ஆகையால் சனமெல்லாம் அவரவர் தங்கள்
மாடுகளை அன்று இராத்திரி தங்கள் கையினாலே
கொண்டுவந்து அங்கே அடித்தார்கள்.—பிற்பாடு ௩௫
சவுல் கர்த்தருக்கு ஒரு பீடத்தைக் கட்டினான்;
அது அவன் கர்த்தருக்குக் கட்டின முந்தின
பீடமானது.

அதற்குப் பின்பு சவுல் நாம் இந்த இராத்திரி ௩௬
யிலே பெலிஸ்தியரின் பின்னாலே இறங்கிப்
போய், விடியற்காலம் வெளிச்சமாகும்மட்டும்
அவர்களைக் கொள்ளையிட்டு, அவர்களில் ஒரு
வரையும் மீதியாக வைக்காதிருப்போமாகவென்
றதற்கு, அவர்கள் உம்முடைய கண்களுக்கு
நலமானபடி எல்லாம் செய்யுமென்றார்கள்;
ஆனால் ஆசாரியன் இங்கே பராபரன் சந்நிதிக்
குச் சேரக்கடவோமென்றான். — அப்படியே ௩௭
பெலிஸ்தியருக்குப் பின்னாக இறங்கிப்போவே
னோ, அவர்களை இஸ்ரவேலின் கையில் ஒப்புக்
கொடுப்பீரோவென்று சவுல் பராபரனைக் கேட்
டான்; ஆனால் அவர் அந்த நாளிலே அவனுக்கு
மறுவுத்தரவு அருளினதில்லை.

அப்போது சவுல் சொன்னதாவது: சனத்தின் ௩௮
சகல சேனைகளே, நீங்கள் இங்கே சேர்ந்து,
எதினாலே இன்று இந்தக் குற்றமிருக்கின்ற

௩௯ தென்று அறிந்துபாருங்கள். — ஏனெனில் அது என் குமாரனாகிய யோனத்தான்மேல் இருந்தாலும், அவன் சாவவே சாவவேண்டுமென்று இஸ்ரவேலை இரட்சிக்கிற கர்த்தருடைய சீவனைக்கொண்டு சொல்லுகிறேனென்றான்; ஆனால் சகல சனத்திலும் ஒருவனும் அவனுக்குப் பிரதி
௪௰ யுத்தாரம் சொல்லவில்லை. — அதற்குப்பிறகு அவன் இஸ்ரவேலோடெல்லாம், நீங்கள் அந்தப் புறத்திலே இருங்கள்; நானும் என் குமாரனாகிய யோனத்தானும் இந்தப்புறத்தில் இருப்போமென்றான்; சனம் சவுலுடனே, உம்முடைய கண்களுக்கு நலமானபடி செய்யுமென்றார்கள்.-
௪௧ அப்போது சவுல் இஸ்ரவேலின் பராபரனாகிய கர்த்தரைநோக்கி, நிதானமாய்க் கட்டளையிடுவீராகவென்றான்; அப்போது யோனத்தானும் சவுலும் பிடிபட்டார்கள், சனமோ தப்பிப்போ
௪௨ யிற்று.— எனக்கும் என் குமாரனாகிய யோனத்தானுக்கும் சீட்டுப்போடுங்களென்று சவுல் சொன்னபோதோவெனில், யோனத்தான் பிடி
௪௩ பட்டான்.—அப்போது சவுல் யோனத்தானோடே, நீ செய்ததென்னவென்று எனக்கு அறிவியென்றான்;யோனத்தான் அவனுக்கு அறிவித்து, என் கையிலிருக்கிற கோலின் முனையினாலே நான் கொஞ்சம் தேனெடுத்து உருசிபார்க்கவே உருசிபார்த்தேன்; இதோ அதற்காக நான் சாவ
௪௪ வேண்டுமென்றான். — அப்போது சவுல், யோனத்தானே, நீ சாவவே சாவவேண்டும்; இல்லாவிட்டால் பராபரன் எனக்கு இப்படியும் அப்ப
௪௫ டியும் செய்யக்கடவரென்றான்.-சனமோவென்றால் சவுலுடனே, இஸ்ரவேலிலே இந்தப் பெரிய இரட்சிப்பைச்செய்த யோனத்தான் கொலை செய்யப்படலாமோ? அது வேண்டாம்; அவன் தலையில் இருக்கிற ஒரு மயிரும் தரையிலே விழப்போகிறதில்லையென்று கர்த்தருடைய சீவனைக் கொண்டு சொல்லுகிறோம்; ஏனெனில் பராபரன் துணையாய் அவன் இன்று காரியம் நடப்பித்தானென்றார்கள்; அப்படியே யோனத்தான் சாவாதபடிக்கு, சனம் அவனை மீட்டுக்கொண்
௪௬ டது.—சவுல் பெலிஸ்தியரைத் தொடருகிறதை விட்டு வந்தேறினான்; பெலிஸ்தியரும் தங்கள் தலத்திற்குப் போய்விட்டார்கள்.

௪௭ இப்படிச் சவுல் இஸ்ரவேலை ஆளுகிற இராச்சியபாரத்தைக் கட்டிக்கொண்டதுமுதல், சுற்றிலும் இருக்கிற தன்னுடைய எல்லாச் சத்துருக்களுமாகிய மோவாபியருக்கும், அம்மோன் புத்திரருக்கும், எதோமுக்கும், சோபாவின் இராசாக்களுக்கும், பெலிஸ்தியருக்கும், விரோதமாக யுத்தம்பண்ணி, எவர்கள்மேலே திரும்பினானோ, அவர்களையெல்லாம் ஆக்கினையிட்டான். —
௪௮ அவன் பலத்து, ஆமலேக்கியரை முறியடித்து, இஸ்ரவேலைக் கொள்ளையிடுகிற யாவர்கைக்கும் அதை நீங்கலாக்கி விடுவித்தான்.

௪௯ சவுலுக்கு இருந்த குமாரர் யோனத்தான், இஸ்வி, மல்கியா, சூவா என்றவர்கள்; அவனுடைய இரண்டு குமாரத்திகளின் நாமங்கள் என்னவென்றால், மூத்தவளுக்கு மோப் என்ற நாமமும் இளையவளுக்கு மீகாளென்ற நாமமும் இருந்தன. — சவுலுடைய பெண்சாதியின்பேர் ௫௰
அகினோவாம்; அவள் அகிமாத்சின் குமாரத்தியாயிருந்தாள்; அவனுடைய சேனாபதியின்பேர் அப்னேர்; இவன் சவுலுடைய சிறியதகப்பனாகிய நேரின் குமாரனாயிருந்தான்.—கீசு சவுலின் ௫௧
தகப்பனானவன்; அப்னேரின் தகப்பனாகிய நேரோவென்றால், ஆபியேலின் குமாரனாயிருந்
தான்.-சவுலிருந்த நாளெல்லாம் பெலிஸ்தியரின் ௫௨
மேலே கடினமான யுத்தம் நடந்தது; சவுல் ஒரு பராக்கிரம மனுஷனையும் ஒரு பலசாலியையும் காண்கிறபோது, அவர்களையெல்லாம் தன்னிடமாகச் சேர்த்துக்கொண்டான்.

## ௰௫. அதிகாரம்.

௧. சாமுவேல் ஆமலேக்கியரை அழிக்கவிடும்படி சவுலை அனுப்பினது. ௬. சவுல் கேனியர்மேல் தயவுகூர்ந்தது. ௮. அவன் ஆகாகையும் கொள்ளையில் அகப்பட்டவைகளில் விசேஷமானவைகளையும் விட்டுவிட்டது. ௰. தன்னைத்தானே புகழ்ந்து வீண்போக்குச் சொன்ன சவுலைப் பராபரன் விலக்கினதை அவனுக்குச் சாமுவேல் அறிவித்தது. ௨௪. சவுல் தாழ்மையாகத் தன் பாவத்தை அறிக்கையிட்டது. ௩௨. சாமுவேல் ஆகாகைக் கொன்றது. ௩௪. சாமுவேலும் சவுலும் பிரிந்துபோனது.

பிற்பாடு சாமுவேல் சவுலோடே சொன்னதாவது: ௧
இஸ்ரவேலராகிய தம்முடைய சனத்தின் மேல் உம்மை இராசாவாக அபிஷேகம்பண்ணுகிறதற்குக் கர்த்தர் என்னை அனுப்பினாரே; இப்போதும் கர்த்தருடைய வார்த்தைகளின் சத்தத்தைக் கேளும்.-சேனைகளுடைய கர்த்தர் சொல் ௨
லுகிறதேதெனில், இஸ்ரவேல் எகிப்திலிருந்து வந்தேறுகிறபோது, ஆமலேக் அதற்கு வழியை மறித்த அதின் செய்கையை மனதிலே வைத்
தோம். — இப்போதும் நீ போய், ஆமலேக்கை ௩
மடங்கடித்து, அவனுக்குண்டானதெல்லாவற்றையும் சங்கரித்து, அவன்மேல் இரக்கம்வைக்காமல், புருஷனையும், பெண்சாதிகளையும், பிள்ளைகளையும், குழந்தைகளையும், மாடுகளையும், ஆடுகளையும், ஒட்டகங்களையும், கழுதைகளையும், கொன்றுபோடக்கடவாயென்கிறாரென்று சொன்னான்.

அப்போது சவுல் இதைச் சனத்திற்கு அறியப் ௪
படுத்தி, தெலாயிமிலே அவர்களைத் தொகைபார்த்தான்; அவர்கள் இருநூறாயிரம் காலாள்களும், யூதமனுஷரில் பதினாயிரம்பேருமாயிருந்தார்
கள்.—சவுல் ஆமலேக்குடைய பட்டணம்மட்டு ௫
டும் வந்து, பள்ளத்தாக்கிலே ஒரு பதிவிடையை
வைத்தான். — ஆனால் சவுல் கேனியருடனே, ௬
நான் ஆமலேக்கியரோடேகூட உங்களையும் வாரிக்கொள்ளாதபடிக்கு, நீங்கள் அவர்கள் நடுவிலிருந்து புறப்பட்டு விலகிவாருங்கள்; ஏனெனில் இஸ்ரவேல் எகிப்திலிருந்து வந்தேறுகிறபோது, நீங்கள் அவர்களெல்லாருக்கும் தயவு செய்தீர்களென்றான்; அப்படியே கேனியர் ஆமலேக்கியரின் நடுவிலிருந்து விலகிப்போனார்
கள்.—அப்போது சவுல் ஆவிலாத்துவக்கி எகிப் ௭
திற்கு எதிரேயிருக்கிற சூருக்குப்போகும் எல்லைமட்டுமிருந்த ஆமலேக்கியரை மடங்கடித்து,—

ஆமலேக்கியரின் இராசாவாகிய ஆகாகை உயி
ரோடே பிடித்தான்; ஆனால் சனமனைத்தையும்
பட்டையக் கருக்கினாலே சங்காரம்பண்ணி
௯ னான்.—ஆனால் சவுலும் சனமும் ஆகாகையும்,
ஆடுமாடுகளில் முதல்த்தரமானவைகளையும், இர
ண்டாம்தரமானவைகளையும், ஆட்டுக்குட்டிகளை
யும், நலமான எல்லாவற்றையும், சங்காரம்பண்
ண மனதில்லாமல் தப்பவைத்து, புறக்கணிக்
கப்படத்தக்கவைகளும் ஆகாதவைகளுமான சக
ல வஸ்துவையுமே சங்காரம்பண்ணினார்கள்.
௰ அப்போது கர்த்தருடைய வார்த்தை சாமுவே
லுக்கு உண்டாகி, அவர் சொன்னதாவது:—
௰௧ நாம் சவுலை இராசாவாக்கினது நமக்கு மனஸ்தா
பமாயிருக்கிறது; ஏனெனில் அவன் நம்மைவிட்
டுத் திரும்பி, நம்முடைய வார்த்தைகளை நிறை
வேற்றாமல் போனானென்றார்; அப்போது சாமு
வேல் மன எரிச்சலாகி, இராமுழுதும் கர்த்தரை
௰௨ நோக்கிக் கூப்பிட்டான்.—மறுநாள் அதிகால
மே சாமுவேல் சவுலைச் சந்திக்கப்போனான்;
அப்போது சவுல் கற்மேலுக்கு வந்து, இதோ
தனக்கு ஒரு வெற்றிவிருதை நாட்டினான் என்
றும், பின்பு சுற்றிக்கொண்டு கடந்து கில்கா
லுக்கு இறங்கிப்போனான் என்றும், சாமுவே
லுக்கு அறிவிக்கப்பட்டது.
௰௩ சாமுவேல் சவுலண்டைக்கு வந்தபோது,
சவுல் அவனுடனே, நீர் கர்த்தருக்குள் ஆசீர்வதிக்
கப்பட்டவர்; கர்த்தருடைய வார்த்தையை நிறை
௰௪ வேற்றினேனென்றான்.—அதற்குச் சாமுவேல்,
ஆனால் என் காதுகளில் விழுகிற அந்த ஆடுக
ளின் சத்தமும், நான் கேட்கிற மாடுகளின் சத்த
௰௫ மும் என்னவென்றான்.—அப்போது சவுல் ஆம
லேக்கியரிடத்திலிருந்து அவைகளைக் கொண்டு
வந்தார்கள்; ஏனெனில் சனம் ஆடுமாடுகளில் நல
மானவைகளை உம்முடைய பராபரனாகிய கர்த்த
ருக்குப் பலியிடும்படிக்குத் தப்பவைத்தார்கள்;
ஆனால் மற்றவைகளைச் சங்காரம்பண்ணினோ
௰௬ மென்றான். — அப்போது சாமுவேல் அந்தப்
பேச்சை விடும், கர்த்தர் இந்த இராத்திரியிலே
என்னோடே சொன்னதை உமக்கு அறிவிப்பே
னென்று சவுலோடே சொன்னான்; இவன் அவ
னுடனே சொல்லுமென்றான்.
௰௭ அப்போது சாமுவேல் சொன்னதாவது: நீர்
உம்முடைய பார்வைக்குச் சிறியவராயிருக்கிற
போதல்லவோ இஸ்ரவேல் கோத்திரங்களுக்குத்
தலைவரானீர்; அப்போது கர்த்தர் உம்மை இஸ்ர
வேலின்மேல் இராசாவாக அபிஷேகம்பண்ணு
௰௮ வித்தார். — இப்போதும் கர்த்தர் உம்மை அந்த
வழியாய் அனுப்பி, நீ போய் ஆமலேக்கியராகிய
அந்தப் பாவிகளைச் சங்கரித்து, அவர்களை நிர்
மூலமாக்கித் தீருமட்டும், அவர்களோடு யுத்
௰௯ தம் பண்ணென்றாரே. — இப்படியிருக்கையில்
நீர் கர்த்தருடைய சொல் கேளாமல், கொள்ளை
யின்மேல் பறந்து, கர்த்தருடைய பார்வைக்
குப் பொல்லாப்பானதைச் செய்ததென்னவென்
௨௰ றான். — அப்போது சவுல் சாமுவேலோடே
சொன்னதாவது: நான் கர்த்தருடைய சொல்
கேட்டு, கர்த்தர் என்னை அனுப்பின வழியாய்ப்
போய், ஆமலேக்கின் இராசாவாகிய ஆகாகைக்
கொண்டுவந்து, ஆமலேக்கியரைச் சங்காரம்பண்
ணினேனே.—சனமோவென்றால் உம்முடைய ௨௧
பராபரனாகிய கர்த்தருக்குக் கில்காலிலே பலியிடு
கிறதற்காக, கொள்ளையிலே சாபத்தீடாகும் ஆடு
மாடுகளிலே பிரதானமானவைகளைப் பிடித்து
ஓட்டிவந்தார்களென்றான்.—ஆனால் சாமுவேல் ௨௨
சொன்னதாவது: கர்த்தருடைய சத்தத்திற்குக்
கீழ்ப்படிகிறதைப்பார்க்கிலும், சர்வாங்கதகனங்
களும் பலிகளும் கர்த்தருக்குப் பிரியமாயிருக்கு
மோ? இதோ பலியைப்பார்க்கிலும் கீழ்ப்படித
லும், ஆட்டுக்கடாக்களின் கொழுப்பைப்பார்க்
கிலும் கவனித்திருக்குதலும் தாவிலே.—ஏனென் ௨௩
றால், இரண்டகம்பண்ணுதல் பில்லி சூனிய
பாவத்திற்கும், முரட்டாட்டம்பண்ணுதல் மா
யைக்கும் சுரூபங்களைக் கும்பிடுகிறதற்கும் சரி
யாய் இருக்கின்றன; நீர் கர்த்தருடைய வார்த்தை
யைப் புறக்கணித்தபடியினாலே, அவர் உம்மை
யும் நீர் இராசாவாயிராதபடிக்குப் புறக்கணித்தா
ரென்றான்.—அப்போது சவுல் சாமுவேலோடே ௨௪
சொன்னதாவது: நான் கர்த்தருடைய வாக்கை
யும் உம்முடைய வார்த்தைகளையும் மீறுகிறதினா
லே பாவம்செய்தேன்; ஏனெனில் நான் சனத்
திற்குப் பயந்து, அவர்கள் சொல்கேட்டேன்.—
இப்போதும் நீர் என் பாவத்தை மன்னித்து, ௨௫
நான் கர்த்தரைப் பணிந்துகொள்ளும்படிக்கு,
என்னோடேகூடத் திரும்பி வாருமென்றான்.—
ஆனால் சாமுவேல் சவுலுடனே, நான் உம்மோ ௨௬
டேகூடத் திரும்புவதில்லை; ஏனெனில் கர்த்த
ருடைய வார்த்தையைப் புறக்கணித்தீர்; நீர் இஸ்
ரவேலின்மேல் இராசாவாயிராதபடிக்கு, கர்த்தர்
உம்மையும் புறக்கணித்தாரென்றான்.—போகிற ௨௭
தற்காகச் சாமுவேல் திரும்புகிறபோதோவெ
னில், இவன், அவன் சால்வையின் நுனியைப்
பிடித்துக்கொண்டான்; அது கிழிந்துபோயிற்
று.—அப்போது சாமுவேல் அவனோடே சொன் ௨௮
னதாவது: உம்மிடத்திலிருந்த இஸ்ரவேலின்
இராச்சியபாரத்தை இன்று கர்த்தர் கிழித்துப்
போட்டு, உம்மைப்பார்க்கிலும் நல்லவனாயிருக்
கிற உம்முடைய தோழனுக்கு அதைக் கொடுத்
தார். — இஸ்ரவேலின் செயபலனானவர் பொய் ௨௯
சொல்லுகிறதும் இல்லை; தாம் சொன்னதற்கு
மனஸ்தாபப்படுகிறதும் இல்லை; ஏனென்றால்
அதற்கு மனஸ்தாபப்பட அவர் மனுஷனல்ல
வென்றான். — அதற்கவன், நான் பாவம்செய் ௩௰
தேன்; இப்போதும் என் சனத்தின் மூப்பருக்கு
முன்பாகவும், இஸ்ரவேலுக்குமுன்பாகவும், நீர்
என்னைக் கனம்பண்ணி, நான் உம்முடைய
பராபரனாகிய கர்த்தரைப் பணிந்துகொள்ளும்ப
டிக்கு, என்னோடேகூடத் திரும்பிவாருமென்
றான்.—அப்போது சாமுவேல் திரும்பிச் சவுலுக் ௩௧
குப் பின்சென்றான்; சவுல் கர்த்தரைப் பணிந்து
கொண்டான்.

௩௨ பிற்பாடு சாமுவேல், ஆமலேக்கின் இராசாவா
கிய ஆகாகை என்னண்டைக்குக் கொண்டுவா
ருங்களென்றான்; ஆகாக் சந்தோஷமயக்கமாய்
அவனண்டைக்குப் போய், மரணத்தின் கசப்பு
௩௩ அற்றுப்போனது நிச்சயமென்றான்.—சாமுவே
லோவென்றால் உன்னுடைய பட்டையம் ஸ்திரி
களைப் பிள்ளைகளற்றவர்களாக்கினதுபோல, ஸ்தி
ரிகளுக்குள்ளே உன்னுடைய தாயாரும் பிள்ளை
களற்றவள் ஆவாளென்று சொல்லி, சாமுவேல்
கில்காலிலே கர்த்தருக்குமுன்பாக ஆகாகைத்
துண்டித்துப்போட்டான்.
௩௪ பிற்பாடு சாமுவேல் ராமாவுக்குப் போனான்;
சவுலோவென்றால் தன் ஊராகிய கிபேயாவிலி
ருக்கிற தன் வீட்டுக்குப் போயேறினான். —
௩௫ சவுல் மரணமடையும் நாள்மட்டும் சாமுவேல்
அப்புறம் அவனைக் கண்டுபேசினதில்லை; ஏ
னென்றால் இஸ்ரவேலின்மேல் சவுலை இராசா
வாக்கினதற்குக் கர்த்தர் மனஸ்தாபப்பட்ட நிமித்
தம், சாமுவேல் சவுலுக்காகத் துக்கித்துக்கொண்
டிருந்தான்.

## ௰௬. அதிகாரம்.

௧. சாமுவேல் பலியிடுகிறதற்காகப் பராபரனால் பெத்லேகேம் பட்டணத்துக்கு அனுப்பப்பட்டது. ௬. அவனுடைய மனுஷீக எண்ணம் கண்டிக்கப்பட்டது. ௰௩. அவன் தாவீதை எண்ணெயால் அபிஷேகம் செய்தது. ௰௪. சவுல் தன்னைப் பிடித்த அசுத்த ஆவியை அடக்கும்பொருட்டு, தாவீதை அழைப்பித்தது.

௧ கர்த்தர் சாமுவேலுடனே, இஸ்ரவேலின்மேல்
இராசாவாயிராதபடிக்கு, நாம் புறக்கணித்த சவு
லுக்காக நீ எந்தமட்டும் துக்கமாயிருப்பாய்; நீ
உன் கொம்பை எண்ணெயால் நிரப்பிவா; பெத்
லேகேமியனாகிய ஈசாயண்டைக்கு உன்னை அ
னுப்புவோம்; ஏனெனில் அவன் குமாரரில் ஒரு
வனை நமக்கு இராசாவாகத் தெரிந்துகொண்
௨ டோமென்றார். — அதற்குச் சாமுவேல், நான்
போவதெப்படி; சவுல் அதைக் கேட்டு, என்
னைக் கொன்றுபோடுவானேயென்றான்; அப்
போது கர்த்தர் சொன்னதாவது: நீ ஒரு கிடாரிக்
கன்றைக் கையோடே கொண்டுபோய், கர்த்த
௩ ருக்குப் பலியிடவந்தேனென்று சொல்லி,—ஈசா
யைப் பலிவிருந்துக்கு அழைப்பாயாக; அப்
போது நீ செய்யவேண்டியதை நாம் உனக்கு
அறிவிப்போம்; நாம் உனக்குச் சொல்லப்போ
கிறவனை நமக்கு அபிஷேகம்பண்ணுவாயாக
வென்றார்.
௪ கர்த்தர் சொன்னபடியே சாமுவேல் செய்து,
பெத்லேகேமுக்கு வந்தான்; அப்போது ஊரின்
மூப்பர் தத்தளிப்போடே அவனுக்கு எதிர்
கொண்டு வந்து, நீர் வருகிறது சமாதானமோ
௫ வென்றார்கள். — அதற்கு அவன், சமாதானம்
தான்; கர்த்தருக்குப் பலியிடவந்தேன்; நீங்கள்
உங்களைப் பரிசுத்தம்பண்ணிக்கொண்டு, என்
னுடனேகூடப் பலிவிருந்திற்கு வாருங்களென்
று சொல்லி, ஈசாயையும் அவன் குமாரரையும்
பரிசுத்தம்பண்ணி, அவர்களைப் பலிவிருந்துக்கு
௬ அழைத்தான். — அவர்கள் உள்பிரவேசிக்கை
யில், அவன் எலியாபைப் பார்த்து, கர்த்தரு
டைய பார்வைக்கு அவரால் அபிஷேகம்பண்
ணப்படுபவன் இவன்தானாக்குமென்றான். —
ஆனால் கர்த்தர் சாமுவேலுடனே, நீ அவனு ௭
டைய உருவையும், அவன் தன் வளர்த்தியினா
லே நெட்டையன் என்பதையும் நோக்காயாக;
ஏனெனில் அவனைப் புறக்கணித்தோம்; அதே
னென்றால் மனுஷன் பார்க்கிறபடி பாரோம்;
ஏனெனில் மனுஷன் கண்களுக்குமுன்பாக
இருக்கிறதைப் பார்ப்பான், கர்த்தரோவென்றால்
இருதயத்தைப் பார்க்கிறாரென்றார். — அப்போது ௮
ஈசாய் அபினதாபை அழைத்து, அவனைச் சாமு
வேலுக்கு எதிராகக் கடந்துபோகப்பண்ணி
னான்; அவனோவென்றால் இவனையும் கர்த்தர்
தெரிந்துகொண்டதில்லை என்றான்.—ஈசாய் சம் ௯
மாவையும் கடந்துபோகப்பண்ணினான்; ஆனால்
அவன் இவனையும் கர்த்தர் தெரிந்துகொண்ட
தில்லையென்றான்.—இப்படி ஈசாய் தன் ஏழு ௰
குமாரரைச் சாமுவேலுக்கு எதிராகக் கடந்து
போகப்பண்ணினான்; ஆனால் சாமுவேல் ஈசா
யுடனே, கர்த்தர் இவர்களில் ஒருவனையும் தெ
ரிந்துகொண்டதில்லையென்று சொல்லி,—இருக் ௰௧
கிற பிள்ளைகள் இந்தமட்டில் சரியோவென்று
ஈசாயைக் கேட்டான்; அதற்கு அவன் சிறிய
வன் ஒருவன் இன்னம் மீதியாயிருக்கிறான்;
இதோ அவன் ஆடுகளை மேய்த்துக்கொண்டிருக்
கிறானென்றான்; அப்போது சாமுவேல் ஈசாயு
டனே, அவனை அழைத்தனுப்பு; ஏனெனில்
அவன் இங்கே வரும்மட்டும் நாம் பந்தியிருப்ப
தில்லையென்றான். — அவனை அழைத்தனுப்பி ௰௨
வரப்பண்ணினான்; அவன் சிவந்தமேனியும்,
அழகான கண்களுள்ளவனும், நல்ல உருவமுள்
ளவனுமாயிருந்தான்; அப்போது கர்த்தர், நீ
எழுந்து, அவனை அபிஷேகம்பண்ணு அவனே
யென்றார்.—அப்போது சாமுவேல் எண்ணெய் ௰௩
இருக்கிற கொம்பை எடுத்து, அவனை அவன்
சகோதரர் நடுவிலே அபிஷேகம்பண்ணினான்;
அந்நாள்முதல்கொண்டு, கர்த்தருடைய ஆவியா
னவர் தாவீதின்மேலே பலனாயிறங்கியிருந்தார்;
சாமுவேல் எழுந்திருந்து ராமாவுக்குப் போய்
விட்டான்.
கர்த்தருடைய ஆவி சவுலைவிட்டு விலகி, கர்த் ௰௪
தரால் வரவிடப்பட்ட ஒரு பொல்லாத ஆவி
அவனைக் கலங்கப்பண்ணிக்கொண்டிருந்தது.—
அப்போது சவுலின் ஊழியக்காரர் அவனோடே ௰௫
சொன்னதாவது: இதோ பராபரனால் விடப்
பட்ட ஒரு பொல்லாத ஆவி உம்மைக் கலங்கப்
பண்ணுகின்றதே. — சுரமண்டலத்தை வாசிக்க ௰௬
அறிந்த ஒருவனைத் தேடும்படிக்கு, எங்கள் ஆண்
டவனாகிய நீர் உமக்குமுன்பாக நிற்கிற உம்மு
டைய அடியாருக்குச் சொல்லும்; அப்போது
பராபரனால் விடப்பட்ட பொல்லாத ஆவி உம்
முடையமேலிறங்குகையில், அவன் தன் கை
யினால் அதைக் கொட்டுகிறதினாலே உமக்குத்
தாவிளையாகுமென்றார்கள். — ஆகையால் சவுல் ௰௭

தன் ஊழியக்காரருடனே, நன்றாய்க் கொட்டத்
தக்க ஒருவனை எனக்காகப் பார்த்து, என்னண்
௰௮ டைக்குக் கொண்டுவாருங்களென்றான்.—அப்
போது அந்த வேலைக்காரரில் ஒருவன் பிரதியுத்
தாரமாக, இதோ கொட்ட அறிந்திருக்கிற பெத்
லேகேமியனாகிய ஈசாயின் குமாரன் ஒருவனைக்
கண்டேன்; அவன் பராக்கிரமசாலியும், நல்ல
சேவகனும், காரியங்களிலே புத்திமானும், சவுந்
தரியமுள்ளவனுமாயிருக்கிறான்; கர்த்தர் அவ
௰௯ னோடேகூட இருக்கிறாரென்றான்.-அப்போது
சவுல் ஈசாயண்டைக்கு ஆள்களை அனுப்பி, ஆடு
களண்டையில் இருக்கிற உன் குமாரனாகிய தா
வீதை என்னண்டைக்கு அனுப்பென்று சொல்
௨௰ லச்சொன்னான்.—அப்போது ஈசாய் அப்பத்தை
யும், ஒரு துருத்தி திராட்சப்பழஇரசத்தையும்,
ஒரு வெள்ளாட்டுக்குட்டியையும் கழுதையின்
மேல் ஏற்றி, அதையும் தன் குமாரனாகிய தாவீ
௨௧ தின் கையிலே சவுலுக்கு அனுப்பினான்.—அப்
படியே தாவீது சவுலண்டைக்கு வந்து, அவனுக்
குமுன்பாக நின்றான்; அவன் இவனை மிகவும்
சிநேகித்தான்; அவனுக்கு இவன் ஆயுதம் பிடிக்
௨௨ கிறவனானான்.—சவுல் ஈசாயண்டைக்கு ஆள
னுப்பி, தாவீது எனக்குமுன்பாக நிற்கட்டும்,
ஏனெனில் என் கண்களில் அவனுக்குத் தயவு
௨௩ கிடைத்ததென்று சொல்லச்சொன்னான்.—அப்
படியே பராபரனால் விடப்பட்ட ஆவி சவுலைப்
பிடிக்கும்போது, தாவீது சுரமண்டலத்தை எடுத்
துக்கொண்டு, தன் கையினாலே கொட்டுவான்;
அதினாலே சவுலுக்கு மூசிப்பாறுதலுண்டாகி,
அவனுக்குத் தாவிளையாய்ப் போய், பொல்லாத
ஆவி அவனைவிட்டு நீங்கும்.

## ௰௭. அதிகாரம்.

௧. இஸ்ரவேல் சனங்களின் சேனையும் பெலிஸ்தியரின் சேனையும் யுத்தத்துக்கு ஆயத்தப்பட்டது. ௪. கோலியாத் இஸ்ரவேலரை ஒவ்வொருவனாகச் சண்டைக்குப் பெருமையோடு அழைத்தது. ௰௨. தாவீது தன் சகோதரரைக் காணும்பொருட்டு, தன் தகப்பனால் அனுப்பப்பட்டு வந்து, கோலியாத்தின் சண்டைக்கேள்விக்கு உத்தரவுகொடுத்தது. ௨௮. எலியாப் அவனைக் கண்டித்தது. ௩௧. சவுல் அவனை அழைப்பித்தது. ௩௨. தாவீது தன் திடனைச் சவுலுக்குக் காண்பித்தது. ௩௮. ஆயுதமில்லாமல் விசுவாசத்தை ஆயுதமாகக்கொண்டு பெலிஸ்தியரின் பராக்கிரமசாலியைக் கொன்றது. ௫௫. சவுல் தாவீதின் செய்தியை விசாரித்தது.

௧ பெலிஸ்தியரோவென்றால் யுத்தம்பண்ணுகிற
தற்குத் தங்கள் இராணுவங்களைச் சேர்த்து, யூதா
விலிருக்கிற சொக்கோவிலே கூடி, சொக்கோ
வுக்கும் அசெக்காவுக்கும் நடுவே இருக்கிற தம்
மிமின் எல்லையிலே பாளயமிறங்கினார்கள்.—
௨ ஆனால் சவுலும் இஸ்ரவேல் மனுஷரும் கூடிக்
கொண்டு, ஏலா பள்ளத்தாக்கிலே பாளய
மிறங்கி, பெலிஸ்தியருக்கு எதிராக யுத்தத்திற்கு
௩ ஆயத்தம்பண்ணினார்கள்.—பெலிஸ்தியர் அந்தப்
பக்கத்தில் ஒரு மலையின்மேலும் இஸ்ரவேலர் இந்
தப்பக்கத்தில் ஒரு மலையின்மேலும் நின்றார்கள்;
பள்ளத்தாக்கு அவர்களுக்கு நடுவேயிருந்தது.
௪ அப்போதுகாத்தூரானாகிய கோலியாத்தென்று
பேருள்ள ஒரு மனுஷன் பெலிஸ்தியரின் பாள
யங்களிலிருந்து புறப்பட்டு நடுவே நிற்பான்;
அவன் உயர்த்தி ஆறுமுழமும் ஒரு சாணுமான
து.—அவன் தன் தலையின்மேலே பஞ்சலோகமு
மான தலைச்சோட்டைப்போட்டு, சொறிசொறி
யான ஒரு சீராவைத் தரித்துக்கொண்டிருந்தான்;
அந்தச் சீராவின் நிறை ஐயாயிரம் சேக்கலான
பஞ்சலோகமாயிருந்தது.-அவன் தன் கால்களி ௬
லே பஞ்சலோகமான தொப்பாரத்தையும் தன்
தோள்களின்மேலே பஞ்சலோகமான கேடயத்
தையும் போட்டுக்கொண்டிருந்தான்.—அவனு ௭
டைய ஈட்டித்தாங்கு நெய்கிறவர்களின் படை
மரத்தின் கனதியும் அவன் ஈட்டியின் அலகு அ
றுநூறு சேக்கலான இரும்புமாயிருந்தது; பரிசை
பிடிக்கிறவன் அவனுக்குமுன்னாக நடப்பான்.—
அவன் நின்றுகொண்டு, இஸ்ரவேலுடைய இரா ௮
ணுவப்பவிஞ்சுகளுக்கு எதிராகக் கூப்பிட்டு
அவர்களுக்குச் சொன்னதாவது: நீங்கள் யுத்தத்
திற்கு ஆயத்தமாகப் புறப்பட்டுவந்து நிற்கிற
தென்ன, நான் பெலிஸ்தியனும் நீங்கள் சவுலின்
வேலைக்காரருமல்லவோ, என்னண்டைக்கு இற
ங்கிவர உங்களில் ஒருவனைத் தெரிந்தெடுங்கள்.—
அவன் என்னோடே யுத்தம்பண்ணச் சமர்த்தனா ௯
யிருந்து, என்னை மடங்கடித்தால், உங்களுக்கு
வேலைக்காரராயிருப்போம்; நான் அவனை மேல்
கொண்டு, அவனை மடங்கடித்தால், நீங்கள் எங்க
ளுக்கு வேலைக்காரராயிருந்து, எங்களைச் சேவிக்
கவேண்டுமென்று சொல்லி,—பின்னையும் நான் ௰
இன்றைத்தினம் இஸ்ரவேலுடைய இராணுவப்
பவிஞ்சுகளைநிந்தித்தேன்;நான் ஒன்றுக்கொன்று
யுத்தம்பண்ண ஒருவனை எனக்கு விடுங்களென்று
அந்தப் பெலிஸ்தியன் சொல்லுவான்.-சவுலும் ௰௧
இஸ்ரவேலனைத்தும் அந்தப் பெலிஸ்தியனு
டைய வார்த்தைகளைக் கேட்கிறபோது, மிகவும்
கலங்கிப் பயப்பட்டார்கள்.
தாவீதோவென்றால் யூதாவுக்கடுத்த பெத்லே ௰௨
கேம் ஊரானாகிய ஈசாயென்று பேருள்ள எப்பி
ராத்திய மனுஷனுடைய குமாரனானவன்; இவ
னுக்கு எட்டுக்குமாரர் இருந்தார்கள்; இந்த மனு
ஷன் சவுலின் நாள்களிலே மற்றச் சனங்களுக்
குள்ளே வயதுசென்ற கிழவனாயிருந்தான்.—
ஈசாயினுடைய மூன்று மூத்தகுமாரர் சவுலின் ௰௩
பிறகாலே யுத்தத்திற்குப் போயிருந்தார்கள்; யுத்
தத்திற்குப்போயிருந்த அவனுடைய மூன்று
குமாரரில் தலைச்சனுக்கு எலியாபென்றும், இ
ரண்டாம் குமாரனுக்கு அபீனதாபென்றும்,
மூன்றாம் குமாரனுக்குச் சம்மாவென்றும் பேரி
ருந்தது.—தாவீதென்றவன் எல்லாரிலும் இளைய ௰௪
வனாயிருந்தான்; மூத்தவர்களாகிய அந்த மூன்று
பேரும் சவுலின் பிறகாலே போகிறபோது,—
தாவீது பெத்லேகேமிலிருக்கிற தன் தகப்பனு ௰௫
டைய ஆடுகளை மேய்க்கும்படிக்கு, சவுலைவிட்
டுத் திரும்பிப்போனான்.—அந்தப் பெலிஸ்திய ௰௬
னென்றால் காலையிலும் அந்தியிலும் நாற்பது
நாளாகச் சேர்ந்துவந்து நின்றுகொண்டிருப்
பான்.

௰௭ ஈசாயோவென்றால் தன் குமாரனாகிய தாவீ
தோடே சொன்னதாவது: உன் சகோதரருக்காக,
இந்த ஒரு மரக்கால் வறுத்த பயற்றையும் இந்தப்
பத்து அப்பங்களையும் எடுத்து ஓடி, பாளயத்திலி
ருக்கிற உன் சகோதரருக்குக் கொண்டுபோய்,—
௰௮ இந்தப் பத்துப் பால்க்கட்டிகளை ஆயிரத்துச் சேர்
வைக்காரனுக்குக் கொடுத்து, உன் சகோதரர்
சுகமாக இருக்கிறார்களோவென்று விசாரித்து,
அவர்களுடைய அடையாளம் வாங்கிக்கொண்டு
௰௯ வாவென்றான். — அப்போது சவுலும், இவர்க
ளும், இஸ்ரவேல் மனுஷரெல்லாரும், கர்வாலியு
பள்ளத்தாக்கிலே பெலிஸ்தியரோடு யுத்தம்பண்
ணியிருந்தார்கள்.
௨௰ தாவீது அதிகாலமே எழுந்திருந்து, ஆடுகளைக்
காக்கிறவன் வசமாய்விட்டு, ஈசாய் தனக்குக் கற்
பித்தபடியே எடுத்துக்கொண்டுபோய்,இரதங்கள்
இருக்கிற இடத்திலே வந்தான்; இராணுவமோ
வெனில் பவிஞ்சாக நிற்கப் புறப்பட்டு, யுத்தத்
௨௧ திற்கென்று ஆர்ப்பரித்தார்கள்.—இஸ்ரவேலரும்
பெலிஸ்தியரும் ஒன்றுக்கொன்று எதிராகப் பவி
௨௨ ஞ்சுகளை நிறுத்தினார்கள். — அப்போது தாவீது
தான் சுமந்துவந்தவைகளை இறக்கி, ரஸ்துக்களைக்
காக்கிறவன் வசமாக வைத்துவிட்டு, இராணுவத்
தினிடத்தில் ஓடி, அங்கே வந்தபோது, சுகமாயி
ருக்கிறீர்களோவென்று தன் சகோதரரைக் கேட்
௨௩ டான்.—அவன் இவர்களோடே பேசிக்கொண்
டிருக்கையில், இதோ காத்தூரானாகிய கோலி
யாத்தென்றுபேருள்ள அந்தப் பெலிஸ்தியன் பெ
லிஸ்தியரின் இராணுவங்களிலிருந்து எழும்பி
வந்து, நடுவே நின்று, அந்த வார்த்தைகளுக்குச்
சரியாகப் பேசினான்; அதைத் தாவீது கேட்
௨௪ டான்.—இஸ்ரவேல் மனுஷரெல்லாரும் அந்த
மனுஷனைக் காணும்போதோவெனில், அவனை
௨௫ விலகி ஓடி, மிகவும் பயப்படுவார்கள்.—அந்நே
ரத்திலே இஸ்ரவேல் மனுஷர் சொன்னதாவது:
எழும்பின அந்த மனுஷனைக் கண்டீர்களோ,
ஏனென்றால் இஸ்ரவேலை நிந்திக்க எழும்பி நிற்
கிறான்; எவன் அவனை மடங்கடிக்கிறானோ, அ
வனை இராசா மிகவும் ஐசுவரியமுள்ளவனாக்கி,
அவனுக்குத் தம்முடைய குமாரத்தியைக் கொ
டுத்து, அவன் தகப்பன் வீட்டை இஸ்ரவேலிலே
௨௬ இஷ்டமாக்குவாரென்றார்கள்.—அப்போது தா
வீது தன்னண்டையிலே நிற்கிற மனுஷருடனே,
இந்தப் பெலிஸ்தியனை மடங்கடித்து நிந்தையை
இஸ்ரவேலைவிட்டு விலக்குகிறவனுக்கு என்ன
செய்யப்படும்; ஏனெனில் சீவனுள்ள பராபர
னுடைய இராணுவங்களை நிந்திக்கிறதற்குச் சுன்
னத்தில்லாத இந்தப் பெலிஸ்தியனானவன் எம்
௨௭ மாத்திரமென்றான்.—அப்போது சனம் அவனை
மடங்கடிக்கிறவனுக்கு இன்ன இன்னபடி செய்
யப்படுமென்று அந்த வார்த்தைக்குச் சரியாக அ
௨௮ வனுக்குச் சொன்னார்கள்.–அந்த மனுஷரோடே
அவன் பேசிக்கொண்டிருக்கிறதை அவன் மூத்த
சகோதரனாகிய எலியாப் கேட்கிறபோது,அவன்
தாவீதின்மேலே கோபமாயெரிந்து, நீ இங்கே
இறங்கிவந்ததென்ன? வனாந்தரத்திலிருக்கிற
அந்தக் கொஞ்ச ஆடுகளை நீ யார்வசமாய் விட்
டாய்? யுத்தத்தைப்பார்க்க இறங்கிவந்தாயென்று
உன்னுடைய துணிகரத்தையும், உன் இருதயத்
தின் அகங்காரத்தையும், நான் அறிவேனென்
றான்.–அதற்குத் தாவீது, நான் இப்போது செய் ௨௯
ததென்ன? நான் வந்ததற்கு முகாந்தரம் இல்லை
யோவென்று சொல்லி,–அவனைவிட்டு, வேறொ ௩௰
ருவனுக்கு எதிராகத் திரும்பிக்கொண்டு, அந்தப்
பிரகாரமாகச் சொன்னான்; அப்போது சனம் முந்
தின சொல்லுக்குச் சரியாக அவனுக்கு மறு
மொழி கொடுத்தார்கள். — தாவீது சொன்ன ௩௧
வார்த்தைகளை அவர்கள் கேட்டபிற்பாடு,அதைச்
சவுலுக்குமுன்பாக அறிவித்தார்கள்; அப்போது
அவனை அழைப்பித்தான்.
தாவீது சவுலுடனே, அவன் நிமித்தமாக ஒருவ ௩௨
னுடைய இருதயமும் திடனற்றுப்போகவேண்
டாம்; உம்முடைய அடியான் போய், இந்தப் பெ
லிஸ்தியனோடே யுத்தம்பண்ணுவானென்றான்.–
அப்போது சவுல் தாவீதுடனே, நீ இந்தப் பெ ௩௩
லிஸ்தியனோடே யுத்தம்பண்ண அவனுக்கு எதி
ராகப் போகக்கூடாது; ஏனென்றால் நீ இளை
ஞன், அவனோ தன் சிறுவயதுதுவக்கி, நல்ல
சேவகனாயிருக்கிறானென்றான்.–ஆனால் தாவீது ௩௪
சவுலோடே சொன்னதாவது: உம்முடைய அடி
யான் என் தகப்பனுடைய ஆடுகளை மேய்த்துக்
கொண்டிருக்கிறபோது, ஒருவிசை ஒரு சிங்க
மும் ஒருவிசை ஒரு கரடியும் வந்து, மந்தையி
லிருக்கிற ஒரு ஆட்டை எடுத்துக்கொண்டது.—
ஆனால் அதின் பிறகாலே நான் புறப்பட்டுப் ௩௫
போய், அதை அடித்து, இதை அதின் வாய்க்குத்
தப்புவித்தேன்; அப்போது அது என்மேலே
பாய்கிறபோது, நான் அதின் தாடியைப் பிடித்
துக்கொண்டு, அதை அடித்துக் கொன்றுபோட்
டேன்.—அந்தச் சிங்கத்தையும் அந்தக் கரடியை ௩௬
யும் உம்முடைய அடியான் மடங்கடித்தான்;
சுன்னத்தில்லாத இந்தப் பெலிஸ்தியனும் அவை
களில் ஒன்றைப்போல இருப்பான்; ஏனென்
றால் அவன் சீவனுள்ள பராபரனுடைய இரா
ணுவங்களை நிந்தித்தானென்றான்.—பின்னையும் ௩௭
தாவீது, என்னைச் சிங்கத்தின் கைக்கும் கரடி
யின் கைக்கும் தப்புவித்த கர்த்தரானவர் இந்தப்
பெலிஸ்தியனுடைய கைக்கும் என்னைத் தப்பு
விப்பாரென்றான்; அப்போது சவுல் தாவீதுட
னே, போ; கர்த்தர் உன்னுடனேகூட இருப்பா
ராகவென்று சொல்லி,
சவுல் தாவீதுக்குத் தன் வஸ்திரங்களை உடுத்து ௩௮
வித்து, பஞ்சலோகமான ஒரு தலைச்சோட்டை
அவன் தலையின்மேல் போட்டு, ஒரு சீராவை
அவனுக்குத் தரிப்பித்தான். — தாவீது அவன் ௩௯
பட்டையத்தைத் தன் வஸ்திரங்கள்மேல் கட்டிக்
கொண்டு நடக்கத் துவக்கினான், ஏனெனில் அ
தை அவன் பரிட்சை பார்த்திருந்ததில்லை; அப்
போது தாவீது சவுலுடனே, நான் இதனுடன்
போகக்கூடாது; ஏனென்றால் நான் இப்படி

அப்பியாசம்பண்ணினதில்லையென்று சொல்லி,
௪௰ அவைகளைக் களைந்துபோட்டு,—தன் தடியைத்
தன் கையிலே பிடித்து,ஆற்றிலிருக்கிற ஐந்து கூ
ழாங்கல்லுகளைத் தெரிந்தெடுத்து, அவைகளைத்
தனக்கிருக்கிற மேய்ப்பரின் அடைப்பமான
பையிலேபோட்டு, தன் கவணைத் தன் கையிலே
பிடித்துக்கொண்டு, அந்தப் பெலிஸ்தியனண்
௪௧ டையில் சேரப்போனான். — பெலிஸ்தியனும்
நடக்கவே நடந்து, தாவீதண்டைக்குக் கிட்டி
வந்தான்; அவன் பரிசையைப் பிடிக்கிறவன்
அவனுக்கு முன்னாக நடந்தான்.
௪௨ பெலிஸ்தியனானவன் தாவீதை நோக்கிப்பார்
த்து, அவன் இளைஞனும் சவுந்தரிய ரூபமான
சிவந்த மேனியனுமாயிருந்தபடியினாலே, அவ
௪௩ னை அசட்டைபண்ணி,—தாவீதுடனே, நீ தடி
களோடே என்னண்டையிலே வர நான் நாயோ
வென்று சொல்லி, அந்தப் பெலிஸ்தியன் தன்
னுடைய தேவர்களைக்கொண்டு தாவீதைச் சபித்
௪௪ தான்.—பின்னையும் அந்தப் பெலிஸ்தியன் தாவீது
டனே, என்னண்டைக்கு வா; நான் உன் மாம்
சத்தை ஆகாயத்துப் பறவைகளுக்கும் வெளி
யின் மிருகங்களுக்கும் கொடுப்பேனென்றான்.-
௪௫ ஆனால் தாவீது பெலிஸ்தியனோடே சொன்னதா
வது: நீ பட்டையத்தோடும், ஈட்டியோடும், கே
டயத்தோடும், என்னண்டைக்கு வருகிறாய்; நா
னோவென்றால் நீ நிந்தித்த இஸ்ரவேலுடைய
இராணுவங்களின் பராபரனாகிய சேனைகளு
டைய கர்த்தரின் நாமத்திலே உன்னண்டைக்கு
௪௬ வருகிறேன்.—இன்றைத்தினம் கர்த்தர் உன்னை
என் கையில் ஒப்புக்கொடுப்பதினால், நான்
உன்னை மடங்கடித்து, உன் தலையை உன்னை
விட்டு வாங்கி,பெலிஸ்தியருடைய பாளயத்தின்
பிணங்களை இன்றைத்தினம் ஆகாயத்துப் பற
வைகளுக்கும், பூமியின் காட்டுமிருகங்களுக்
கும் கொடுப்பேன்; அப்படியே இஸ்ரவேலுக்
குப் பராபரன் உண்டென்று பூலோகத்தாரெல்
௪௭ லாரும் அறிந்து,—கர்த்தர் பட்டையத்தினாலும்
ஈட்டியினாலும் இரட்சிக்கிறதில்லையென்று இந்
தச் சபையெல்லாம் அறிந்துகொள்ளும்;ஏனென்
றால் யுத்தமானது கர்த்தருடையது; அவர் உங்
களை எங்கள் கையில் ஒப்புக்கொடுப்பாரென்
றான்.
௪௮ அப்போது சம்பவித்ததேதென்றால், அந்தப்
பெலிஸ்தியன் எழும்பி, தாவீதுக்கு எதிராகச்
சேர்ந்துவருகிறபோது, தாவீது தீவிரமாய் அந்த
இராணுவத்திற்கும் அந்தப் பெலிஸ்தியனுக்கும்
௪௯ எதிராக ஓடி,—தன் கையை அடைப்பத்திலே
போட்டு, அதில் ஒரு கல்லை எடுத்து, கவணிலே
வைத்துச் சுழற்றி, பெலிஸ்தியனுடைய நெற்றி
யிலே படப்போட்டான்; அந்தக் கல் அவன்
நெற்றிக்குள் உருவிப்போனதினால், அவன்
௫௰ முகங்குப்புறத் தரையிலே விழுந்தான்.—அப்ப
டியே தாவீது ஒரு கவணினாலும், ஒரு கல்லினா
லும், பெலிஸ்தியன்மேலே பலன்கொண்டு, பெ
லிஸ்தியனை மடங்கடித்து, அவனைக் கொன்று
போட்டான்; ஆனால் தாவீதின் கையில் ஒரு
பட்டையமுமில்லை. — ஆகையால் தாவீது பெ ௫௧
லிஸ்தியனண்டையில் ஓடி நின்று, அவன் பட்
டையத்தைப் பிடித்து, அதை அதின் உறையை
விட்டு உருவி, அவனைக் கொன்று, அதினாலே
அவன் தலையை வெட்டிப்போட்டான்; அப்
போது தங்கள் பராக்கிரமசாலி செத்துப்போனா
னென்று பெலிஸ்தியர் கண்டு, ஓடிப்போனார்
கள்.—அப்போது இஸ்ரவேல் மனுஷரும் யூத ௫௨
மனுஷரும் எழும்பி, ஆர்ப்பரித்து, பள்ளத்தாக்
கின் எல்லைமட்டுக்கும், எக்கிரோனின் வாசல்
கள்மட்டுக்கும், பெலிஸ்தியரைத் துரத்தினார்
கள்; சாராயீமின் வழியிலும், காத்பட்டணம்
மட்டுக்கும், எக்கிரோன் பட்டணம்மட்டுக்கும்,
பெலிஸ்தியர் வெட்டுண்டு விழுந்தார்கள்.—இஸ் ௫௩
ரவேல் புத்திரர் பெலிஸ்தியரை அத்தனை மூர்க்க
மாய்த் துரத்தினபிற்பாடு, அவர்கள் திரும்பி
வந்து, அவர்களுடைய பாளயங்களைக் கொள்
ளையிட்டார்கள்.—தாவீது பெலிஸ்தியனுடைய ௫௪
தலையை எடுத்து, அதை எருசலேமுக்குக்கொண்
டுவந்தான்; அவன் ஆயுதங்களையோ தன் கூடா
ரத்திலே வைத்தான்.
தாவீது பெலிஸ்தியனுக்கு எதிராகப் புறப் ௫௫
பட்டுப்போகிறதைச் சவுல் காண்கிறபோது,
அவன் அப்னேர் என்ற சேனாபதியோடே, அப்
னேரே,இந்த வாலிபன் யாருடைய குமாரனென்
றான்; அதற்கு அப்னேர், இராசாவே, நான் அ
றியேனென்று உம்முடைய சீவனைக்கொண்டு
சொல்லுகிறேனென்றான்.—அப்போது இராசா, ௫௬
அந்தப் பிள்ளையாண்டான் யாருடைய குமார
னென்று நீ விசாரியென்றான்.—ஆகையால் தா ௫௭
வீது பெலிஸ்தியனை மடங்கடித்துத் திரும்பின
போது, அப்னேர் அவனை அழைத்து, சவுலுக்கு
முன்பாகக் கொண்டுவந்துவிட்டான்; பெலி
ஸ்தியனுடைய தலை அவன் கையிலும் இருந்
தது.—அப்போது சவுல், வாலிபனே, நீ யாரு ௫௮
டைய குமாரனென்று அவனைக் கேட்டதற்குத்
தாவீது, உம்முடைய அடியானாகிய பெத்லே
கேம் ஊரானாயிருக்கிற ஈசாயின் குமாரன்தான்
என்றான்.

## ௰௮. அதிகாரம்.

௧. யோனத்தான் தாவீதை நேசித்தது. ௫. சவுல் அவனுடைய புகழ்ச்சிக்குப் பொறாமைகொண்டது. ௰. சவுல் கோபித்துக்கொண்டு, தாவீதைக் கொல்லத்தேடினது. ௰௨. பராபரனால் ஆசீர்வதிக்கப்பட்டதைக்குறித்துத் தாவீதுக்குச் சவுல் பயப்பட்டது. ௰௭. அவனை வசப்படுத்திக்கொள்ள அவனுக்குச் சவுல் தன் குமாரத்தியைக் கொடுத்தது. ௨௨. தாவீது இராசாவுக்கு மருமகனாக இருக்கும்படி போதிக்கப்பட்டு, மீகாளின் நிமித்தமாகப் பெலிஸ்தியர்களில் ௨௱-பேர்களின் நுனித்தோல்களைக் கொடுத்தது. ௨௮. சவுலின் பகையும் தாவீதின் மகிமையும் விர்த்தியானது.

அவன் சவுலோடே பேசித் தீர்ந்தபிற்பாடோ
வென்றால், யோனத்தானுடைய ஆத்துமா தாவீ
தின் ஆத்துமாவோடே ஒன்றாய் இணைக்கப்பட்
டது;யோனத்தான் அவனைத் தன்னுடைய ஆத்து
மாவைப்போலச் சிநேகித்தான்.—சவுல் அவனை ௨
அவன் தகப்பன்வீட்டுக்குத் திரும்பிப்போக ஒட்

டாமல், அந்நாளிலே தன்னிடத்தில் வைத்துக்
௩ கொண்டான். — யோனத்தான் தாவீதைத் தன்
ஆத்துமாவைப்போலச் சிநேகிக்கிறதினால், அவ
னும் இவனும் உடம்படிக்கை பண்ணிக்கொ
௪ ண்டு,—யோனத்தான் போர்த்துக்கொண்டிருந்த
சால்வையைக் கழற்றி, அதையும், தன் வஸ்திரத்
தையும், தன் பட்டையத்தையும், தன் வில்லை
யும், தன் கச்சையையுங்கூடத் தாவீதுக்குக் கொ
டுத்தான்.
௫ சவுல் தாவீதை அனுப்பும் எவ்விடத்திற்காகி
லும் அவன் புறப்பட்டுப் புத்தியாய்க் காரியத்தை
நடப்பிக்கிறபடியால், சவுல் அவனை யுத்தமனு
ஷரின்மேல் அதிகாரியாக்கினான்; அவன் எல்
லாச் சனத்தின் கண்களுக்கும் சவுலுடைய
ஊழியக்காரரின் கண்களுக்குங்கூடப் பிரியமா
யிருந்தான்.
௬ ஆனால் தாவீது பெலிஸ்தியனை மடங்கடித்துத்
திரும்பினதற்கும், சனங்கள் திரும்பவந்ததற்கும்
பிற்பாடு சம்பவித்ததென்னவெனில், ஸ்திரிகள்
இஸ்ரவேலின் சகல பட்டணங்களிலுமிருந்து,
பாடிக்கொண்டாடிப் புறப்பட்டு, மேளங்களோ
டும் களிப்போடும் வீணைகளோடும் இராசாவா
௭ கிய சவுலுக்கு எதிர்கொண்டுவந்தார்கள்.—அந்த
ஸ்திரிகள் ஒருவருக்கொருவர் பாடி வீணைவா
சித்து, சவுல் ஆயிரம்பேரையும் தாவீது பதினாயி
ரம்பேரையும் மடங்கடித்தார்களென்றார்கள்.—
௮ அந்த வார்த்தை சவுலின் பார்வைக்கு ஆகாத
தாய்க் கண்டு, அவன் மிகவும் எரிந்துகொண்டு,
தாவீதுக்குப் பதினாயிரம்பேரைக் கொடுத்து,
எனக்கு ஆயிரம்பேரைக் கொடுத்தார்கள்; இன்
னம் இராசாங்கம் தானும் அவனுடையதாகு
௯ மென்று சொல்லி, — அந்நாள்முதல்கொண்டு
சவுல் தாவீதைக் காய்மகாரமாய்ப் பார்த்தான்.
௰ மறுநாளிலே பராபரனால் விடப்பட்ட பொல்
லாத ஆவி சவுல்மேல் இறங்கிற்று; அவன் வீட்
டின் நடுவே தீர்க்கதரிசனம் சொல்லியிருந்தான்;
அப்போது தாவீது தினம்செய்கிறபடி, தன் கை
யினாலே சுரமண்டலத்தைக் கொட்டிக்கொண்டி
ருந்தான்; ஆனால் சவுலின் கையிலே ஈட்டியிருந்
௰௧ தது.—அப்போது சவுல் தாவீதைச் சுவரோடே
உருவக் குத்திப்போடுவேனென்று ஈட்டியை
அவன்மேல் எறிந்தான்; ஆனால் தாவீது இரண்டு
தரம் சுழன்று, அவனுக்கு விலகிப்போனான்.
௰௨ ஆகையால் கர்த்தர் தாவீதோடேகூட இருக்
கிறாரென்றும், தன்னை விட்டு விலகினாரென்றும்,
௰௩ சவுல் தாவீதுக்குப் பயந்து,—அவனைத் தன்னை
விட்டு அப்புறப்படுத்தி, அவனை ஆயிரம்பேருக்
குத் தலைவனாக வைத்துக்கொண்டான்; அப்ப
டியே அவன் சனத்திற்குமுன்பாகப் போக்கும்
௰௪ வரத்துமாயிருந்தான்.—ஆனால் தாவீது தன் வழி
களிலெல்லாம் புத்திமானாய் நடந்தான்; ஏனென்
௰௫ றால் கர்த்தர் அவனோடேகூட இருந்தார்.—அ
வன் மகா புத்திமானாய் நடக்கிறதைச் சவுல் கண்
௰௬ டு, அவனுக்கு ஐயமாயிருந்தான்.—இஸ்ரவேல்
சனமும் யூதசனமும் எல்லாம் தாவீதைச் சிநே
கித்தார்கள்; ஏனெனில் அவர்களுக்குமுன்பா
கப் போக்கும் வரத்துமாயிருந்தான்.
சவுல் தாவீதோடே, இதோ என் மூத்த குமா ௰௭
ரத்தியாகிய மேரபை உனக்கு ஸ்திரியாகக் கொ
டுப்பேன்; நீ எனக்கு நல்ல சேவகனாயிமாத்திர
மிருந்து, கர்த்தருடைய யுத்தங்களை நடத்தென்
றான்; ஏனென்றால் என் கை அல்ல, பெலிஸ்தி
யரின் கை அவனுக்கு விரோதமாயிருப்பதாக
என்று சவுல் நினைத்துக்கொண்டான். — அப் ௰௮
போது தாவீது சவுலுடனே, நான் இராசாவுக்கு
மருமகனாகிறதற்கு நான் எம்மாத்திரம், என் சீவ
னும் இஸ்ரவேலிலே என் தகப்பன் வம்சமும்
எம்மாத்திரமென்றான்.—சவுலின் குமாரத்தியா ௰௯
கிய மேரப் தாவீதுக்குக் கொடுக்கப்படும் காலம்
வந்தபோதோவெனில், அவள் மேகோலாத்திய
னாகிய ஆதரியேலுக்கு ஸ்திரியாகக் கொடுக்கப்
பட்டாள்.
ஆனால் சவுலின் குமாரத்தியாகிய மீகாள் தா ௨௰
வீதைச் சிநேகித்தாள்; அது சவுலுக்கு அறிவிக்
கப்பட்டபோது, அது அவனுக்கு நல்லதாய்க்
கண்டது. — அவள் அவனுக்குக் கண்ணியாயி ௨௧
ருக்கவும், பெலிஸ்தியரின் கை அவன்மேல் வரத்
தக்கதாகவும், அவளை அவனுக்குக் கொடுப்பே
னென்று சவுல் நினைத்து, தாவீதுடனே, நீ என்
னுடைய இரண்டாம் குமாரத்தியினால் இன்று
எனக்கு மருமகனாகு என்றான்.—பிற்பாடு சவுல் ௨௨
தன் ஊழியக்காரருக்கு, நீங்கள் தாவீதோடே
இரகசியமாய்ப்பேசி, இதோ இராசா உன்மேலே
பிரியமாயிருக்கிறார்; அவருடைய எல்லா ஊழி
யக்காரரும் உம்மைச் சிநேகிக்கிறார்கள்; இப்
போதும் நீர் இராசாவுக்கு மருமகனாகுமென்று
சொல்லுங்களென்று கற்பித்தான். — சவுலின் ௨௩
ஊழியக்காரர் இந்த வார்த்தைகளைத் தாவீதின்
செவிகளிலேபடப் பேசினார்கள்; அப்போது
தாவீது, நான் இராசாவுக்கு மருமகனாகிறது
உங்கள் பார்வைக்குக் கொஞ்சக்காரியமோ?
ஏனென்றால் நான் தரித்திரனும், கொஞ்ச எண்
ணிக்கையான மனுஷனுமாயிருக்கிறேனென்
றான். — இன்ன இன்ன வார்த்தைகளைத் தாவீது ௨௪
சொன்னானென்று சவுலின் ஊழியக்காரர் அவ
னுக்கு அறிவித்தார்கள்.—அப்போது சவுலென் ௨௫
கிறவன் இராசாவானவர் பரிசத்தின்மேலல்ல,
இராசாவின் சத்துருக்களுக்குச் சரிக்குச் சரிக்
கட்டும்படிக்கு, பெலிஸ்தியரின் நூறு நுனித்
தோல்களின்மேலே விருப்பமாயிருக்கிறாரென்
று தாவீதுக்குச்சொல்லுங்களென்றான்; ஏனென்
றால் சவுல் தாவீதைப் பெலிஸ்தியரின் கையி
னால் விழப்பண்ண நினைத்தான்.—அவன் ஊழி ௨௬
யக்காரர் தாவீதுக்கு இந்த வார்த்தைகளை அறி
விக்கிறபோது, இராசாவுக்கு மருமகனாகிறது
தாவீதுக்கு நல்லதாய்க்கண்டது. — அதற்குக் ௨௭
குறித்த நாள் நிறைவேறாததற்குமுன்னே, தாவீது
எழுந்து, தன் மனுஷரைக் கூட்டிக்கொண்டு
போய், பெலிஸ்தியரில் இருநூறுபேரைவெட்டி,
அவர்கள் நுனித்தோல்களைக் கொண்டுவந்து,

தான் இராசாவுக்கு மருமகனாகும்படிக்கு, அவை களை இராசாவுக்கு அதிக நிறைவாகச் செலுத்தி னான்; அப்போது சவுல் தன் குமாரத்தியாகிய மீகாளை அவனுக்கு ஸ்திரியாகக் கொடுத்தான்.—
௨௮ கர்த்தர் தாவீதோடிருக்கிறாரென்று சவுல் கண் டறிந்துகொண்டான்; சவுலின் குமாரத்தியாகிய மீகாளும் அவனைச் சிநேகித்துக்கொண்டிருந்
௨௯ தாள். — ஆகையால் சவுல் பின்னையும் அதிக மாய்த் தாவீதுக்குப் பயந்து, தான் உயிரோடி ருந்தநாளெல்லாம் தாவீதுக்குச் சத்துருவாயிருந்
௩௰ தான். — ஆனால் பெலிஸ்தியருடைய பிரபுக் கள் புறப்படுகிறபோதெல்லாம், தாவீது சவுலி னுடைய எல்லா ஊழியக்காரரைப்பார்க்கிலும் புத்தியாய்ச் செய்தான்; அவன் பேர் மெத்தவும் கனம்கொண்டது.

## ௰௯. அதிகாரம்.

*௧. தாவீதைக் கொல்லத் தன் தகப்பன் நினைத்ததை யோனத்தான் வெ ளிப்படுத்தியது. ௪. அவன் தன் தகப்பன் தாவீதுடன் ஒருமைப்படச் செய்தது. ௮. தாவீது புதிய யுத்தத்தில் செயமடைந்ததைக்குறித்துச் சவுல் அவன்மேல் பொறாமைகொண்டது. ௰௨. மீகாள் தாவீதின் படுக்கையில் ஒரு சுருபத்தை வைத்து, தன் தகப்பனை மோசம்செய்தது. ௰௮ நாயோத்திலிருந்த சாமுவேலண்டைக்குத் தாவீது வந்தது. ௨௰. சவுலுடைய தூதர்கள் தாவீதைப் பிடிக்கவந்தது. ௨௨. சவுல் தீர்க்க தரிசனம் சொன்னது.*

௧ தாவீதைக் கொன்றுபோடும்படிக்கு, சவுல் தன் குமாரனாகிய யோனத்தானோடும் தன் எல் லா ஊழியக்காரரோடும் பேசினான்; சவுலின் குமாரனாகிய யோனத்தானோவெனில், தாவீதின்
௨ மேல் மிகவும் பிரியமாயிருந்தான்.—ஆகையால் யோனத்தான் தாவீதுக்கு அதை அறிவித்து, என் தகப்பனாகிய சவுல் உன்னைக் கொன்றுபோட வகைதேடுகிறார்; இப்போதும் நாளைக்காலமே நீ எச்சரிக்கையாயிருந்து, மறைவான இடத்தில்
௩ ஒளித்துக்கொண்டேயிரு. — நானோவென்றால் புறப்பட்டுவந்து, நீ வெளியிலிருக்கும் இடத்தில் என் தகப்பன் பக்கத்திலே நின்று, உனக்காக என் தகப்பனோடே பேசி, நடக்கும் வயணத் தைக் கண்டு, உனக்கு அறிவிப்பேனென்றான்.—
௪ அப்படியே யோனத்தான் தன் தகப்பனாகிய சவுலோடே தாவீதுக்காக நன்மையாய்ப் பேசி, அவனோடே சொன்னதாவது: இராசா தம்மு டைய அடியானாகிய தாவீதுக்கு விரோதமாய்ப் பாவம்செய்யாராக; ஏனெனில் உமக்கு விரோ தமாக அவன் பாவம் செய்ததில்லை; அவன் செய்கைகள் உமக்கு வெகு பிரயோசனமுமா
௫ யிருக்கின்றதே. — அதேதென்றால் அவன் தன் பிராணனைத் தன் கையிலே வைத்து, அந்தப் பெலிஸ்தியனை மடங்கடித்ததினாலே, கர்த்தர் இஸ்ரவேலுக்கெல்லாம் பெரிய இரட்சிப்பைக் கட்டளையிட்டதை நீர் கண்டு, சந்தோஷப்பட் டீரே; இப்போதும் முகாந்தரமில்லாமல் தாவீ தைக் கொல்லுகிறதினாலே, குற்றமில்லாத இரத் தத்திற்கு விரோதமாக நீர் பாவம்செய்வானே
௬ னென்றான்.—அப்போது சவுல் யோனத்தானு டைய சொல்கேட்டு, அவன் கொலைசெய்யப் படுவதில்லையென்று கர்த்தருடைய ஜீவனைக் கொண்டு ஆணையிட்டான். — ஆனதுகொண்டு ௭
யோனத்தான் தாவீதை அழைத்து, அந்த வார்த் தைகளையெல்லாம் அவனுக்கு அறிவித்து, அவ னைச் சவுலண்டையிலே கூட்டிக்கொண்டு வந் துவிட்டான்; அப்படியே அவன் முன்போலே அவனுக்குமுன்பாக இருந்தான்.

திரும்ப ஒரு யுத்தமுண்டாயிற்று; அப்போது ௮
தாவீது புறப்பட்டுப்போய், பெலிஸ்தியரோ டே யுத்தம்பண்ணி, அவர்களை வெகுவாய் மடங் கடித்ததினாலே அவர்கள் அவனுக்குமுன்பாக முறிந்தோடிப்போனார்கள்.—ஆனால் கர்த்தரால் ௯
விடப்பட்ட பொல்லாத ஆவி சவுலின்மேல் வந்தது; அவன் தன் வீட்டில் உளுக்கார்ந்து, தன் ஈட்டியைத் தன் கையிலே பிடித்துக்கொண்டி ருந்தான்; தாவீது தன் கையினாலே சுரமண்ட லம் கொட்டினான்.—அப்போது சவுல் தாவீதை ௰
ஈட்டியினாலே சுவரோடே உருவக் குத்திப்போ டப்பார்த்தான்; ஆனால் இவன் சவுலுக்கு விலகி னதினாலே, அவன் எறிந்த ஈட்டி சுவரிலே பட்டது; தாவீதோவென்றால், ஓடிப்போய், அன்று இராத்திரி தப்புவித்துக்கொண்டான்.—
ஆனால் தாவீதைக் காவல்பண்ணி, மறுநாள் கா ௰௧
லமே அவனைக் கொன்றுபோடும்படிக்கு, சவுல் அவன் வீட்டிற்குச் சேவகரை அனுப்பினான்; இதைத் தாவீதுக்கு அவன் பெண்சாதியாகிய மீகாள் அறிவித்து, நீர் இன்று இராத்திரியில் உம்முடைய பிராணனைத் தப்புவித்துக்கொள் ளாவிட்டால், நாளை நீர் கொன்றுபோடப்படுவீ ரென்று சொல்லி,—மீகாள் தாவீதைப் பலகணி ௰௨
வழியாய் இறக்கிவிட்டாள்; அவன் தப்புவித்துக் கொண்டு ஓடிப்போனான்.—மீகாளோவெனில் ௰௩
ஒரு சிலையை எடுத்து, கட்டிலின்மேல் வைத்து, அதின் தலைமாட்டிலே ஒரு வெள்ளாட்டுத்தோ லைப்போட்டு, பிடவையினால் மூடிவைத்தாள்.—
தாவீதைக் கொண்டுவரச் சவுல் சேவகரைஅனுப் ௰௪
பினபோது, அவர் வியாதியாய் இருக்கிறாரென் றாள்.—அப்போது தாவீதைப் பார்க்கிறதற்குச் ௰௫
சவுல் சேவகரை அனுப்பி, அவனைக் கொன்று போடும்படிக்கு, கட்டிலோடேகூட அவனை என்னண்டைக்கு எடுத்துவாருங்களென்றான்.—
சேவகர் வந்தபோதோவெனில், இதோ சிலை கட் ௰௬
டிலின்மேலும், வெள்ளாட்டுத்தோல் அதின் தலைமாட்டிலும் கிடந்தன. — அப்போது சவுல் ௰௭
நீ இப்படி என்னை ஏய்த்து, என் பகைஞனைத் தப்பவிட்டு அனுப்பினது என்னவென்று மீகா ளைக் கேட்டான்; அப்போது மீகாள் சவுலுட னே, நான் உன்னைக் கொல்லாதபடிக்கு, என்னை அனுப்பிவிடென்று அவன் என்னோடே சொன் னானென்றாள்.

தாவீது தப்பி ஓடிப்போய், ராமாவிலிருக்கிற ௰௮
சாமுவேலண்டைக்கு வந்து, சவுல் தனக்குச் செய்ததெல்லாவற்றையும் அவனுக்கு அறிவித் தான்; பிற்பாடு அவனும் சாமுவேலும் போய், நாயோத்திலே தரித்திருந்தார்கள்.—ஆனால் இதோ ௰௯
தாவீது ராமாவுக்கடுத்த நாயோத்திலே இருக்கிறா

௨௰ னென்று சவுலுக்கு அறிவிக்கப்பட்டது.—அப்
போது சவுல் தாவீதைக் கொண்டுவரச் சேவகரை
அனுப்பினான்; அவர்கள் தீர்க்கதரிசனம் சொல்
லுகிற தீர்க்கதரிசிகளின் கூட்டத்தையும், சாமு
வேல் அவர்களின் தலைவனாக நிற்கிறதையும்
கண்டார்கள்; அப்போது சவுலினுடைய சேவ
கரின்மேலே பராபரனுடைய ஆவி இறங்கினதி
னால் இவர்களும் தீர்க்கதரிசனம்சொன்னார்கள்.-
௨௧ இது சவுலுக்கு அறிவிக்கப்பட்டபோது,அவன்
வேறே சேவகரை அனுப்பினான்; அவர்களும்
தீர்க்கதரிசனம் சொன்னார்கள்; மூன்றாம்தரம்
சவுல் சேவகரை அனுப்பினான்;அவர்களும் தீர்க்
௨௨ கதரிசனம் சொன்னார்கள்.—அப்போது அவன்
தானும் ராமாவுக்குப் போய், சேக்குவிலிருக்கிற
பெரிய கிணற்றண்டையிலே வந்து, சாமுவே
லும் தாவீதும் எங்கேயிருக்கிறார்கள் என்று கேட்
டான்; அதோ ராமாவுக்கடுத்த நாயோத்திலே
௨௩ இருக்கிறார்களென்று சொல்லப்பட்டது.—அப்
போது ராமாவுக்கடுத்த அந்த நாயோத்திற்குப்
போனான்; ஆனால் பராபரனுடைய ஆவி அவன்
மேலும் இறங்கினதினாலே அவன் ராமாவுக்க
டுத்த நாயோத்திலே சேருமட்டும், தீர்க்கதரிச
௨௪ னம்சொல்லிக்கொண்டே நடந்துவந்து,-தானும்
தன் வஸ்திரங்களைக் கழற்றிப்போட்டு, சாமு
வேலுக்குமுன்பாகத் தீர்க்கதரிசனம் சொல்லி,
அன்று பகல்முழுதும் இராமுழுதும் வஸ்திரமில்
லாமல் விழுந்துகிடந்தான்; ஆகையினாலே சவு
லும் தீர்க்கதரிசிகளில் ஒருவரோ என்பார்கள்.

## ௨௰. அதிகாரம்.

*௧. தாவீது தான் தப்பித்துக்கொள்ள யோனத்தானுடன் ஆலோசனை செய்தது. ௰௧. யோனத்தானும் தாவீதும் சத்தியம்செய்து, மறுபடியும் உடம்படிக்கைபண்ணினது. ௰௮. யோனத்தான் தாவீதுக்கு ஒரு அடையாளத்தைக் குறித்தது. ௨௪. சவுல் தாவீதைத் தேடிக்காணாமல் யோனத்தானைக் கொல்லத் தேடினது. ௪௧. தாவீது போம்பொழுது, யோனத்தான் சிநேகமாய் அனுப்புவித்தது.*

௧ தாவீதோவென்றால் ராமாவுக்கடுத்த நாயோத்தி
லிருந்து ஓடிப்போய்,யோனத்தான் முன்பாகவந்
து, உம்முடைய தகப்பன் என் பிராணனைவாங்
கத் தேடுகிறதற்கு,நான் செய்ததென்ன?என் அக்
கிரமமென்ன?அவருக்குமுன்பாக என்னுடைய
௨ பாவம் என்னவென்றான். — அவன் இவனு
டனே, அப்படி ஒருக்காலும் வாராது; நீர் சாவ
தில்லை, இதோ என் செவிகளுக்கு வெளிப்படுத்
தாமல் என் தகப்பன் பெரியகாரியமானாலும்
சின்னக்காரியமென்கிலும் செய்கிறதில்லை; இந்
தக்காரியத்தை என் தகப்பன் எனக்கு ஒளிப்பா
௩ னேன்? அது இல்லையென்றான்.—அப்போது தா
வீது உம்முடைய கண்களில் எனக்குத் தயவு
கிடைத்ததென்று உம்முடைய தகப்பன் நன்றாய்
அறிவார்; ஆகையால் யோனத்தானுக்கு மன
நோவு உண்டாகாதபடிக்கு அவன் இதை அறி
யப்போகாதென்பார்; ஆனால் மெய்யாகவே என
க்கும் மரணத்திற்கும் ஒரு அடி தூரமாத்திரம்
இருக்கின்றதென்று கர்த்தருடைய சீவனையும்
உம்முடைய சீவனையும்கொண்டு சொல்லுகிறே
னென்று மறுமொழியாகச் சொல்லி ஆணையிட்
டான்.-அப்போது யோனத்தான் தாவீதுடனே, ௪
உன் ஆத்துமா எப்படிக் கேட்கின்றதோ, அப்
படி உனக்குச் செய்வேனென்றான்.
தாவீது யோனத்தானோடே சொன்னதாவது: ௫
இதோ நாளைக்கு அமாவாசையானபடியினாலே,
நான் இராசாவோடே சாப்பிடப் பந்தியிருக்க
வேண்டியதாயிருக்கும்; ஆனால் நான் மூன்றாம்
நாள் சாயங்காலம்மட்டும் வெளியிலே ஒளித்
திருக்க என்னைப் போகவிடும்.—நான் எங்கே ௬
என்று உம்முடைய தகப்பன் கேட்டால், தன்
ஊராகிய பெத்லெகேமிலே வருஷம்தோறும்
பலியிடுகிற நாள் வம்சத்திற்கெல்லாம் இருக்கிற
படியினாலே, தாவீது அவ்விடத்திற்கு ஓட
என்னை உத்தரவுகேட்கவே கேட்டானென்று நீர்
சொல்லும்.-அதற்கு அவர் நல்லதென்றால், உம் ௭
முடைய அடியானுக்குச் சமாதானமிருக்கும்;
அவர் கோபமாய் எரிந்தாரேயானால், அவராலே
பொல்லாப்புத் தீர்மானப்பட்டு இருக்கின்ற
தென்று அதினால் அறிந்துகொள்வீர். — ஆகை ௮
யால் உம்முடைய அடியானுக்குத் தயவுசெய்
வீராக; ஏனெனில் கர்த்தருக்குமுன்பாக உம்
முடைய அடியானை உம்மோடே உடம்படிக்
கைக்கு உள்ளாக்கிக்கொண்டீர்; என்னில் ஒரு
அக்கிரமம் இருந்ததேயானால், நீரே என்னைக்
கொன்றுபோடும்; நீர் என்னை உம்முடைய தகப்
பனண்டைக்குக் கொண்டுபோவதென்ன என்
றான்.
அப்போது யோனத்தான், அப்படி உனக்கு ௯
வராதிருப்பதாக; பொல்லாப்பு உன்மேல் வரப்
பண்ண என் தகப்பனாலே தீர்மானப்பட்ட
தென்று நான் அறியவே அறிந்தால் நான் அதை
உனக்கு அறிவிக்காதிருப்பேனோ என்றான்.
தாவீது யோனத்தானுடனே, உம்முடைய ௰
தகப்பன் உமக்குக் கடினமான பிரதியுத்தாரம்
சொன்னாரோ என்கிறதை எனக்கு அறிவிப்ப
வன் யாரென்றான்.-அப்போது யோனத்தான் தா ௰௧
வீதுடனே, ஊருக்கு வெளியேபோவோம் வா
என்றான்; இருவரும் வெளியே புறப்பட்டுப்
போனார்கள்.—அப்போது யோனத்தான் தாவீ ௰௨
தோடே சொன்னதாவது: நான் நாளை நாளையன்
றைக்குள்ளே என் தகப்பனை அறிந்துகொண்டு,
இதோ தாவீதின்மேலே தயவாயிருக்கிறாரென்று
கண்டும், அதை அப்போது உன் செவிகளுக்கு
வெளிப்படுத்தும்படிக்கு, உனக்குச் சொல்லி
அனுப்பாதிருந்தால்,—இஸ்ரவேலின் பராபரனா ௰௩
கிய கர்த்தர் யோனத்தானுக்கு இப்படியும் அப்
படியும் செய்யக்கடவார்; ஆனால் உனக்குத் தீங்
குசெய்யஎன் தகப்பனுக்கு நன்றாய்க்கண்டால்,
அதை உன் செவிகளுக்கு வெளிப்படுத்தி, நீ
சமாதானத்தோடே போகும்படிக்கு, உன்னைப்
போகவிடுவேன்; கர்த்தர் என் தகப்பனோடு இ
ருந்ததுபோல, உன்னோடே இருப்பாராக.-அப் ௰௪
போது நான் இன்னம் உயிரோடிருந்தால், நான்
சாகாதபடிக்கு நீ கர்த்தரின்நிமித்தமாய் எனக்
குத் தயவுசெய்யாவிட்டால், கர்த்தர் உனக்கும்

௰௫ அப்படிச் செய்யக்கடவர்.-கர்த்தர் தாவீதின் சத்
துருக்களாகிய அவரவரைப் பூமியின்மேல் இராத
படிக்கு, வேர் அறுக்கும்போதும், நீ என்றைக்
கும் உன் தயவை என் வீட்டைவிட்டு அகற்றி
௰௬ விடாயாகவென்றான்.—இப்படி யோனத்தான்
தாவீதின் வீட்டோடே உடம்படிக்கைபண்ணி,
தாவீதுடைய சத்துருக்களின் கையிலே கர்த்தர்
கணக்குக் கேட்பாராகவென்று சொல்லி,—
௰௭ யோனத்தான் தாவீதை மிகவும் சிநேகித்தபடியி
னாலே, பின்னையும் அவனுக்கு ஆணையிட்டான்;
ஏனெனில்தன் ஆத்துமாவைச் சிநேகித்ததுபோல
அவனைச் சிநேகித்தான்.
௰௮ பிற்பாடு யோனத்தான் அவனுக்குச் சொன்ன
தாவது: நாளை அமாவாசையானபடியினாலே நீ உ
ளுக்காரவேண்டிய இடத்திலே நீ இல்லையென்று
௰௯ காண்பார்களே.—மூன்றாம் நாளிலே நீ தீவிரம்
பண்ணி, இந்த நடபடியின் நாளாகிய இன்று நீ
ஒளித்திருந்த ஸ்தலத்திற்கு இறங்கிவந்து, ஏசே
௨௰ லென்ற கல்லண்டையில் உளுக்காந்திரு.—அப்
போது நான் குறிப்புவைத்து எய்கிறதுபோல,
அதற்குப் பக்கமாக மூன்று அம்புகளை எய்து,—
௨௧ இதோ நீ போய், அந்த அம்புகளைத் தேடிவா
வென்று பிள்ளையாண்டானை அனுப்புவேன்; இ
தோ அம்புகள் உனக்கிப்பாலே கிடக்கின்றன;
அவைகளை எடுத்துவாவென்று பிள்ளையாண்டா
னோடே நான் சொல்லவே சொன்னால், நீ வா;
ஏனென்றால் அப்போது ஒன்றுமில்லாமல் உனக்
குச் சமாதானமாயிருக்குமென்று கர்த்தருடைய
௨௨ சீவனைக்கொண்டு சொல்லுகிறேன்.-இதோ அம்
புகள் உனக்கு அப்பாலே கிடக்கின்றதென்று
நான் பிள்ளையாண்டானோடே சொன்னேனே
யாகில், நீ போய்விடுவாயாக; ஏனெனில் அப்
போது கர்த்தர் உன்னைப் போகச்சொல்லுகிறார்.-
௨௩ ஆனால் நானும் நீயும் பேசிக்கொண்ட காரியத்
திற்கு, இதோ கர்த்தர் எனக்கும் உனக்கும் என்
றைக்கும் சாட்சியானவரென்றான்.
௨௪ அப்படியே தாவீது வெளியிலே ஒளித்துக்
கொண்டிருந்தான்; அமாவாசையானபோது இ
௨௫ ராசா அசனம்பண்ண உளுக்காந்தான்.—இராசா
சுவரண்டையிலிருக்கிற தன்னுடைய ஸ்தலத்
தில் எப்போதும்போல உளுக்காந்தபோது, யோ
னத்தான் எழுந்திருந்தான்; அப்னேரோவெனில்
சவுலுடைய பக்கத்தில் உளுக்காந்தான்; தாவீது
௨௬ இருக்கும் இடம் வெறுமையாயிருந்தது.-ஆனால்
அவன் சுத்தமாயிராதபடிக்கு, அவனுக்கு ஏதாகி
லும் சம்பவித்தது, சுத்தமில்லாதிருக்கிறானென்று
அன்றைத்தினம் சவுல் ஒன்றும் சொல்லவில்லை.-
௨௭ அமாவாசைக்கு மறுநாளிலும் தாவீது இருக்கும்
இடம் வெறுமையாயிருந்தது; அப்போது சவுல்,
ஈசாயின் மகன் நேற்றும் இன்றும் சாப்பாட்டுக்கு
வராதேபோனதென்னவென்று தன் குமாரனாகிய
௨௮ யோனத்தானைக் கேட்டான். — யோனத்தான்
சவுலுக்குப் பிரதியுத்தாரமாக, பெத்லேகேம்மட்
டும்போக, தாவீது என்னை உத்தரவு கேட்கவே
௨௯ கேட்டு,-அங்கே நான் போகட்டுமே;ஏனெனில்
எங்கள் வம்சத்திற்கு ஊரிலே பலியிடுதலிருக்
கின்றது; என்னை வரச்சொல்லி, என் சகோதரன்
தானே எனக்குக் கற்பித்தான்; இப்போதும் உம்
முடைய கண்களில் எனக்குத் தயவுகிடைத்தா
னால், நான் என் சகோதரரைப் பார்க்கிறதற்குத்
தப்பிப்போகட்டுமேயென்றான்; ஆகையினாலே
அவன் இராசாவின் பந்திக்கு வராதேபோனா
னென்று சொன்னான்.
அப்போது சவுல் யோனத்தான்மேலே கோபம் ௩௰
மூண்டவனாகி, அவனுக்குச் சொன்னதாவது:இ
ரண்டகத்தினாலே மாறுபாடானவளின் மகனே,
நீ உனக்கு வெட்கமாகவும், உன் தாயாரின் அவ
மானத்திற்கு வெட்கமாகவும், ஈசாயின் மகனைத்
தெரிந்துகொண்டிருக்கிறதை நான் அறியேனோ?-
அதேனென்றால் ஈசாயின் மகன் பூமியின்மேல் ௩௧
உயிரோடிருக்கும் நாளெல்லாம் நீயானாலும் உன்
இராச்சியபாரமானாலும் நிலைப்படுவதில்லை; இப்
போது அவனை அழைத்தனுப்பி, என்னண்டைக்
குக் கொண்டுவா; ஏனெனில் அவன் மரணத்திற்
குள்ளானவனென்றான்.-யோனத்தான் தன் தகப் ௩௨
பனாகிய சவுலுக்குப் பிரதியுத்தாரங்கொடுத்து, அ
வனுடனே, அவன் எதுக்காகக் கொலைசெய்யப்
படவேண்டும்; அவன் என்னசெய்தானென்
றான்.-அப்போது சவுல் அவனைக் குத்திப்போட ௩௩
ஈட்டியை அவன்மேல் எறிந்தான்; ஆகையால்
தாவீதைக் கொன்றுபோடத் தன் தகப்பனிடத்
திலே தீர்மானமாயிற்றென்கிறதை யோனத்தான்
அறிந்துகொண்டு,—கோபதாபமாய்ப் பந்தியை ௩௪
விட்டு எழுந்திருந்து போய், அமாவாசையின்
மறுநாளாகிய அன்றைத்தினம் அசனம்பண்ணா
திருந்தான்; ஏனென்றால் தன் தகப்பன் தாவீதை
நிந்தித்துச் சொன்னது, அவனுக்கு மனநோவா
யிருந்தது.
மறுநாள் காலமேயோவென்றால், யோனத் ௩௫
தான் தாவீதுக்குக் குறித்தநேரத்திலே ஒரு சிறிய
பிள்ளையாண்டானைக் கூட்டிக்கொண்டு, வெளி
யே புறப்பட்டு வந்து,—நீ ஓடி, நான் எய்கிற ௩௬
அம்புகளைத் தேடென்று பிள்ளையாண்டானுக்
குச் சொல்லி, அந்தப் பிள்ளையாண்டான் ஓடும்
போது, அவனுக்கு அப்பாலே போகும் ஒரு
அம்பை எய்தான்.—யோனத்தான் எய்த அம்பி ௩௭
ருக்கும் இடம்மட்டும் பிள்ளையாண்டான் வந்த
போது, அம்பு உனக்கு இன்னம் முன்னாலே இல்
லையோவென்று யோனத்தான் பிள்ளையாண்டா
னுக்குப் பிறகாலேயிருந்து கூப்பிட்டான்.—நீ ௩௮
தரித்து நிற்காமல் தீவிரித்துப் பொட்டெனப்
போவென்றும் யோனத்தான் பிள்ளையாண்டா
னுக்குப் பிறகாலேயிருந்து கூப்பிட்டான்; அப்
படியே யோனத்தானின் பிள்ளையாண்டான் அம்
புகளைப் பொறுக்கி, தன் எசமானனண்டைக்குக்
கொண்டுவந்தான்.—அந்தப் பிள்ளையாண்டான் ௩௯
ஒன்றும் அறியாதிருந்தான்; யோனத்தானும் தாவீ
துமே அதின் காரியத்தை அறிந்திருந்தார்கள்.—
அப்போது யோனத்தான் தன் ஆயுதங்களைத் தன் ௪௰
னுடைய பிள்ளையாண்டானுக்குக் கொடுத்து,

அவனுடனே, அவைகளைப் பட்டணத்திற்குள்ளே கொண்டுபோவென்றான்.

௪௧ பிள்ளையாண்டான் போனபிற்பாடு, தாவீது தென்புறமான இடத்திலிருந்து எழுந்து வந்து, முகங்குப்புறத் தரையிலே விழுந்து, மூன்றுவிசை வணங்கிக்கொண்டான்; அவர்கள் ஒருவரை ஒருவர் முத்தஞ்செய்து, ஒருவரை ஒருவர் பார்த்
௪௨ தழுதார்கள்; தாவீது மிகுதியும் அழுதான்.—அப்போது யோனத்தான் தாவீதுடனே, நீ சமாதானத்தோடே போய், கர்த்தர் என்றைக்கும் எனக்கும் உனக்கும், என் வித்தாருக்கும் உன் வித்தாருக்கும், நடுவான சாட்சியென்று கர்த்தருடைய நாமத்தைக்கொண்டு நாம் இருவரும் சொல்லி ஆணையிட்டுக்கொண்டதை நினைத்துக்கொள்ளெ
௪௩ ன்றான்.—பிற்பாடு இவன் எழுந்து புறப்பட்டுப் போனான்; யோனத்தானோவெனில் பட்டணத்திலே பிரவேசித்தான்.

## ௨௧. அதிகாரம்.

௧. நோபேக்கிருந்தபோது, தாவீது கோபில் அகிமேலேக்கிடத்தில் சமுகத்தப்பங்களைப் பெற்றுக்கொண்டதும், ௮. கோலியாத்தின் பட்டையத்தை எடுத்துக்கொண்டதும். ௰. தாவீது காத்தில் பித்தங்கொண்டவனைப்போல இருந்தது.

௧ தாவீதோவென்றால் நோபிலிருக்கிற ஆசாரியனாகிய அகிமேலேக்கண்டைக்கு வந்தான்; அகிமேலேக் நடுக்கத்தோடே தாவீதுக்கு எதிர்கொண்டுபோய், ஒருவரும் உம்மோடே கூட வராமல், நீர் ஒண்டியாய் வருகிறது என்னவென்று
௨ அவனைக் கேட்டான்.—தாவீது ஆசாரியனாகிய அகிமேலேக்குக்குச் சொன்னதாவது: இராசா எனக்கு ஒருகாரியத்தைக் கற்பித்து, நான் உன்னை அனுப்பின காரியமும் உனக்குக் கற்பித்ததும் இன்னதென்று ஒருவரும் அறியாதிருக்கவேண்டுமென்று என்னோடே சொன்னார்; இன்ன இடத்திற்கு வர நான் வேலைக்காரருக்குக் குறித்தி
௩ ருக்கிறேன். — இப்போதும் உம்முடைய கையின்கீழிருக்கிறதென்ன? ஐந்து அப்பமானாலும் எம்மாத்திரம் அகப்படுகின்றதோ அம்மாத்திரமா
௪ கிலும் என் கையிலே கொடுமென்றான்.—ஆசாரியன் தாவீதுக்குப் பிரதியுத்தாரமாக, பரிசுத்த அப்பம் இருக்கிறதே ஒழிய, பொது அப்பம் என் கையின்கீழ் இல்லை; வேலைக்காரர் ஸ்திரிகளோடாகிலும் சேராதிருந்தால் கொடுப்பேனெ
௫ ன்றான்.—தாவீது ஆசாரியனுக்குப் பிரதியுத்தாரமாக நான் புறப்படுகிறதற்குமுன் நேற்றும் மூன்றுநாளும் ஸ்திரிகள் எங்களுக்கு விலகியிருந்தார்கள்; வேலைக்காரருடைய அசம்பிகளும் சுத்தமாயிருக்கின்றன; இந்த வழி பலவேலைக்கடுத்த வழியாயிருந்தாலும், அந்த அப்பம் அசம்பிகளில் இன்றைக்குப் பரிசுத்தமாயிருக்குமென்றான்.—
௬ அப்போது கர்த்தருக்குமுன்பாக இருந்து வாங்கப்பட்ட சமுகத்தப்பங்களைத்தவிர, வேறே அப்பம் அங்கே இராதபடியினாலே ஆசாரியன் அவனுக்குப் பரிசுத்தமான அப்பத்தைக் கொடுத்தான்; ஏனென்றால் அவைகள் வாங்கப்படுகிற நாளிலே அதற்குப் பதிலாகச் சூடான அப்பம்
௭ வைக்கப்படும்.—ஆனால் சவுலுடைய வேலைக்காரரில் ஏதோமியனாகிய தோவேக்கென்று பேருள்ள ஒருவன் அன்றைத்தினம் அங்கே கர்த்தருக்கு முன்பாக அடைக்கப்பட்டிருந்தான்; அவன் சவுலுக்கிருக்கிற மேய்ப்பரில் மகா வல்லவனாயிருந்தான்.

தாவீது அகிமேலேக்குடனே, இங்கே உம்மு ௮
டைய கையின்கீழ் ஒரு ஈட்டியானாலும் பட்டையமானாலும் இல்லையோ? ஏனெனில் இராசாவின் காரியம் துரிசானபடியினாலே, நான் என் பட்டையத்தையாகிலும், என் ஆயுதங்களை என்கிலும், என் கையிலே பிடித்துவரவில்லை
யென்றான்.—அதற்கு ஆசாரியன், இதோ நீர் கர் ௯
வாலியு பள்ளத்தாக்கிலே மடங்கடித்த பெலிஸ்தியனாகிய கோலியாத்தின் பட்டையம் ஆசாரிய சால்வைக்குப்பின்னால் ஒரு புடவையிலே சுருட்டிவைத்திருக்கின்றது; அதை நீர் வாங்க மனதானால் வாங்கும்; ஏனென்றால் அதுவே அல்லாமல் வேறொன்றும் இங்கே இல்லையென்றான்; அப்போது தாவீது அதைப்போல ஒத்ததில்லை; அதை எனக்குத் தாருமென்றான்.

பிறகு தாவீது எழுந்து, அன்றைத்தினம் சவு ௰
லுக்குத் தப்பியோடி, காத்தின் இராசாவாகிய ஆகீஸ் அண்டைக்கு வந்தான்.—ஆனால் ஆகீசின் ௰௧
ஊழியக்காரர் அவனுடனே, இவன் தேசத்தின் இராசாவாகிய தாவீது அல்லவோ? சவுல் ஆயிரம்பேரையும், தாவீது பதினாயிரம்பேரையும் மடங்கடித்தார்களென்று இவனைக்குறித்தல்லவோ களிகூருதலோடே பாடினார்களென்றார்
கள்.—இந்த வார்த்தைகளைத் தாவீது தன் மனதி ௰௨
லே வைத்து, காத்தின் இராசாவாகிய ஆகீசுக்கு
முன்பாக மிகவும் பயப்பட்டு,—அவர்கள் கண் ௰௩
களுக்குமுன்பாகத் தன் முகநாடியை வேறுபடுத்தி, அவர்கள் கையின்கீழிருந்து, பித்தம் மேற்கொண்டவனைப்போலக் காண்பித்து, வாசலின் கதவுகளிலே கிறிக்கொண்டிருந்து, தன் வாயின் நுரையைத் தன் தாடியில் விழப்பண்ணினான்.—
அப்போது ஆகீஸ் தன் ஊழியக்காரருடனே, ௰௪
இதோ இந்த மனுஷன் பயித்தியங்கொண்டவனென்று காண்கிறீர்கள்; அவனை நீங்கள் என்
னண்டைக்குக் கொண்டுவந்ததென்ன?—எனக் ௰௫
குமுன்பாகப் பயித்தியவேலைசெய்ய, நீங்கள் இவனைக் கொண்டுவருகிறதற்கு, பயித்தியக்காரர் எனக்குக் குறைச்சலாயிருக்கிறார்களோ? இவன் என் வீட்டிலே வரலாமோவென்றான்.

## ௨௨. அதிகாரம்.

௧. அதுல்லாம் கெபியில் தாவீதண்டைக்கு அவனுடைய தகப்பன் வீட்டாரும், மற்றும் அநேகரும் வந்தது. ௩. தாவீது தன் தாய்தந்தையரை ஆதரிக்கும்படி மோவாபின் அரசனிடத்தில் விட்டது. ௫. அவன் காத் என்பவனால் எச்சரிக்கப்பட்டு, கேரெத்துக்கு வந்தது. ௬. சவுல் அவனைப் பின்தொடரப்போனபோது, தன் ஊழியக்காரருடைய உண்மை இல்லாமையைக்குறித்து முறையிட்டுக்கொண்டது. ௯. தோவேக் அகிமேலேக்கின்மேல் குற்றம் சொன்னது. ௰௧. சவுல் ஆசாரியர்களைக் கொல்லும்படி கட்டளைகொடுத்தது. ௰௭. இராசாவின் சேவகர்கள் அதைச் செய்யமாட்டோம் என்றதும் தோவேக் செய்ததும், ௨௰. அபியத்தார் தப்பித்துக்கொண்டு தாவீதண்டையில் வந்து, இந்தச் சங்கதியைச் சொன்னது.

தாவீது அவ்விடத்தைவிட்டுத் தப்பி, அதுல்லா ௧
மென்ற மலைக்கெபியிலே வந்தான்; அதை அவன்

சகோதரரும் அவன் தகப்பன் வீட்டாரனைவ
ரும் கேட்டு, அங்கே அவனண்டைக்கு இ
௨ றங்கிவந்தார்கள்.—இக்கட்டுப்பட்ட சகலவித
மனுஷரும், கடன்பட்ட சகலவித மனுஷ
ரும், மனவிசாரப்பட்டிருக்கிற சகலவித மனு
ஷரும் அவனோடே கூடிக்கொண்டார்கள்; அ
வர்களுக்குத் தலைவனானான்; இந்தப்பிரகாரமாக
ஏறக்குறைய நானூறுபேர் அவனோடு இருந்
தார்கள்.
௩ தாவீது அவ்விடத்தைவிட்டு மோவாபியரைச்
சேர்ந்த மிஸ்பேக்குப்போய், மோவாபின் இரா
சாவுடனே, பராபரன் என்னை எப்படி நடத்து
வாரென்று நான் அறியும்மட்டும், என் தகப்ப
னும் என் தாயும் உங்களிடத்திலே தங்கியிருக்
௪ கட்டுமே என்று சொல்லி,— அவர்களை மோ
வாபின் இராசாவுக்குமுன்பாக அழைத்துவந்து
விட்டான்;தாவீது கோட்டையிலிருந்த நாளெல்
௫ லாம் அங்கே அவனோடிருந்தார்கள்.— ஆனால்
காத்தென்ற தீர்க்கதரிசி தாவீதுடனே, நீர் கோட்
டையிலிராமல் யூதாதேசத்திற்குப் புறப்பட்டு
வாருமென்றான்; அப்போது தாவீது புறப்பட்டுக்
கேரேத்தென்ற காட்டிலே வந்தான்.
௬ தாவீதும் அவனோடிருக்கிற மனுஷரும் கா
ணப்பட்ட செய்தியைச் சவுல் கேட்டான்;சவுல்
கிபேயாவைச் சேர்ந்த ராமாவில் ஒரு தோப்பிலே
உளுக்காந்து, தன் ஈட்டியைத் தன் கையிலே
பிடித்துக்கொண்டிருந்து, அவனுடைய ஊழி
யக்காரரெல்லாரும் அவனண்டையிலே நின்றி
௭ ருக்கிறபொழுது,—சவுல் தன்னண்டையில் நிற்
கிற தன் ஊழியக்காரனுக்குச் சொன்னது: எமி
னி புத்திரரே, கேளுங்கள்; ஈசாயின்மகன் உங்க
ளெல்லாருக்கும் வயல்களையும் திராட்சத்தோட்
டங்களையும் கொடுப்பானோ? உங்களெல்லாரை
யும் ஆயிரத்துக்குச் சேர்வைக்காரரும் நூற்றிற்குச்
௮ சேர்வைக்காரருமாக வைப்பானோ? — ஏனென்
றால் நீங்களெல்லாரும் எனக்கு விரோதமாகக்
கட்டுப்பண்ணிக்கொண்டீர்கள்; என்னுடைய
குமாரன் ஈசாயின் மகனுடனே உடம்படிக்கை
பண்ணுகையில், என்னுடைய செவிக்கு அதை
வெளிப்படுத்துகிறவன் ஒருவனுமில்லை; உங்க
ளில் எனக்காகப் பரிதாபப்பட்டு, என் செவிக்கு
அதை வெளிப்படுத்துகிறவன் ஒருவனுமில்லை;
ஏனெனில் இந்நாளில் இருக்கிறபடி எனக்குச்
சதிபண்ண, என் குமாரன் என் வேலைக்காரனை
எனக்கு விரோதமாக எடுத்துவிட்டானென்
றான்.
௯ அப்போது சவுலின் ஊழியக்காரரோடே நிற்
கிற ஏதோமியனாகிய தோவேக் பிரதியுத்தரமாக,
ஈசாயின் மகனை நோபிலிருக்கிற அகீத்தூபின்
குமாரனாகிய அகிமேலேக்கண்டைக்கு வரக்
௰ கண்டேன்.—இவன் அவனுக்காகக் கர்த்தரைக்
கேட்டு, அவனுக்கு வழிக்குப் போசனத்தைக்
கொடுத்து, பெலிஸ்தியனாகிய கோலியாத்தின்
பட்டயத்தையும் அவனுக்குக் கொடுத்தானெ
ன்றான்.

அப்போது இராசா அகீத்தூபின் குமாரனாகிய ௰௧
அகிமேலேக்கென்ற ஆசாரியனையும், நோபிலி
ருக்கிற அவன் தகப்பன் வீட்டாராகிய எல்லா
ஆசாரியரையும் அழைத்தனுப்பினான்; அவர்க
ளெல்லாரும் இராசாவண்டைக்கு வந்தார்கள்.—
அப்போது சவுல், அகீத்தூபின் குமாரனே கே ௰௨
ளென்றதற்கு, இவன், இதோ என் ஆண்டவனே
நான் இங்கேயிருக்கிறேனென்றான்.—அப்போது ௰௩
சவுல் அவனுடனே, நீயும் ஈசாயின் மகனும்
எனக்கு விரோதமாய்க் கட்டுப்பண்ணி, இந்நா
ளில் இருக்கிறபடி எனக்குச் சதிபண்ண அவன்
எனக்கு விரோதமாக எழும்பும்படிக்கு, நீ அவ
னுக்கு அப்பமும் பட்டயமும் கொடுத்து,
பராபரனை அவனுக்காகக் கேட்டதென்னவென்
றான்.—அகிமேலேக் இராசாவுக்குப் பிரதியுத்தர ௰௪
மாகச் சொன்னதாவது: உம்முடைய எல்லா
ஊழியக்காரரிலும் தாவீதைப்போல, உண்மை
யுள்ளவனும், இராசாவுக்கு மருமகனும், உம்மு
டைய கற்பனைகளின்படி செய்து வருகிறவ
னும், உம்முடைய வீட்டிலே கனமுள்ளவனுமா
யிருக்கிறவன் யார்?—இப்போதுமாத்திரம் அவ ௰௫
னுக்காகப் பராபரனைக் கேட்கத் துவக்கினே
னோ? அப்படி என்னைக்குறித்து நினைக்கவேண்
டாம்; இராசா தம்முடைய அடியானாகிய என்
மேலாகிலும் என் தகப்பன் வீட்டாரில் எவன்
மேலாகிலும் குற்றம்சுமத்தவேண்டாம்; ஏனெ
னில் உம்முடைய அடியான் இவைகளிலெல்
லாம் ஒரு சிறியகாரியமாகிலும் பெரியகாரியமா
கிலும் அறிந்திருந்ததில்லை என்றான்.—இராசா ௰௬
வோவென்றால், அகிமேலேக்கே நீயும் உன் தகப்
பன் வீட்டாரனைவரும் சாவவே சாவவேண்டு
மென்று சொல்லி, — இராசா தன்னண்டை ௰௭
யிலே நிற்கிற சேவகரோடே, நீங்கள் திரும்
பிக்கொண்டு, கர்த்தருடைய ஆசாரியர்களைக்
கொலைசெய்யுங்கள்; ஏனென்றால் அவர்கள் கை
யும் தாவீதோடே இருக்கின்றது; அவன் ஓடிப்
போகிறதை அவர்கள் அறிந்திருந்தும், அதை
என் செவிக்கு வெளிப்படுத்தாதேபோனார்க
ளென்றான்; ஆனால் இராசாவின் வேலைக்காரர்,
கர்த்தருடைய ஆசாரியர்கள்மேல் விழத் தங்கள்
கைகளை நீட்டமாட்டோம் என்றார்கள்.—அப் ௰௮
போது இராசா தோவேகுக்கு, நீ திரும்பிக்கொ
ண்டு, ஆசாரியர்கள்மேல் விழு என்றான்; ஏதோ
மியனாகிய அந்தத் தோவேக் ஆசாரியர்கள்மேல்
விழுந்து, ஆசாரியசால்வைகளாகிய சணல்நூல்
சால்வைகளைத் தரித்துக்கொள்ளுகிற எண்பத்
தைந்துபேரை அன்றைத்தினம் கொன்றான்.—ஆ ௰௯
சாரியர்களின் பட்டணமாகிய நோபிலுமுள்ள
புருஷரையும், ஸ்திரிகளையும், பிள்ளைகளையும்,
குழந்தைகளையும், மாடுகளையும், கழுதைகளையும்,
ஆடுகளையும், பட்டயக் கருக்கினாலே வெட்
டிப்போடுவித்தான்.
ஆனால் அகித்தூபின் குமாரனாகிய அகிமே ௨௰
லேக்குக்கு அப்பியத்தாரென்று பேருள்ள ஒரு
குமாரனனவன் தப்பித்துக்கொண்டு, தாவீதிருக்

உக கும் புறமாக ஓடிப்போய்,–சவுல் கர்த்தருடைய
ஆசாரியர்களைக் கொன்றுபோட்ட செய்தியைத்
உஉ தாவீதுக்கு அறிவித்தான்.—அப்போது தாவீது
அப்பியத்தாருக்குச் சொன்னதாவது: ஏதோமிய
ஞகிய தோவேக் அங்கே இருந்தபடியினலே,
அவன் சவுலுக்கு அதை அறிவிக்கவே அறிவிப்
பானென்று அன்றைத்தினமே அறிவேன்; உன்
தகப்பன் வீட்டாராகிய எல்லா ஆத்துமாக்கள்
மேலும் அதைத் திரும்பப்பண்ணினவன் நான்
உங தானே.—என்னண்டையிலே இரு, பயப்படா
யாக; என் பிராணனை வாங்கத்தேடுகிறவன் உன்
பிராணனையும் வாங்கத்தேடுவான்; ஏனென்றல்
நீ என் ஆதரவிலே இருப்பாயென்றான்.

## உங. அதிகாரம்.

க. தாவீது அப்பியத்தாரைக்கொண்டு கர்த்தரைக் கேட்டு, கேகிலாவைத் தப்புவித்தது. எ. பராபரன் அவனுக்குச் சவுல் வருகிறதையும், கேகிலா மனிதர்களின் துரோகத்தையும், அறிவித்ததினல் அவன் அதிலிருந்து ஓடிப்போனது. யச. யோனத்தான் சீப்பென்ற வனந்தரத்தில் தாவீதை ஆதரித்தது. யகூ. சீப்பூரார் அவனைச் சவுலுக்கு வெளிப்படுத்தியது. உஎ. பெலிஸ்தியர்கள் தேசத்தின்மேல் வந்ததினல், அவன் மாகோன் வனந்தரத்திலிருந்து சவுல் கைக்குத் தப்பிப்போனது.

க இதோ பெலிஸ்தியர் கேகிலாவின்மேல் யுத்தம்
பண்ணி, களஞ்சியங்களைக் கொள்ளையிடுகிறார்க
உ ளென்று தாவீதுக்கு அறிவிக்கப்பட்டது.—அப்
போது தாவீது, நான் போய், அந்தப் பெலிஸ்
தியரை முறியடிப்பேனேவென்று கர்த்தரைக்
கேட்டதற்கு, கர்த்தர் தாவீதுடனே, நீ போ; பெ
லிஸ்தியரை முறியடித்து, கேகிலாவை இரட்சிப்
ங பாயென்றார்.—ஆனல் தாவீதின் மனுஷர் அவ
னுடனே, இதோ நாங்கள் இங்கே யூதாவிலே
இருக்கும்போதே பயப்படுகிறோமே, நாங்கள்
பெலிஸ்தியருடைய இராணுவங்களில் இருக்
கிற கேகிலாவுக்குப்போனல், எத்தனை அதிக
ச மென்றார்கள்.—அப்போது தாவீது திரும்பவும்
கர்த்தரைக் கேட்கிறபோது, கர்த்தர் அவனுக்குப்
பிரதியுத்தாரமாக, நீ எழும்பி, கேகிலாவுக்கு
இறங்கிப்போ; ஏனெனில் நாம் பெலிஸ்தியரை
உன் கையில் ஒப்புக்கொடுக்கிறோமென்றார்.—
ரு அப்படியே தாவீது தன் மனுஷரைக் கூட்டிக்
கொண்டு, கேகிலாவுக்குப்போய், பெலிஸ்திய
ரோடு யுத்தம்பண்ணி, அவர்கள் ஆடுமாடுகளை
ஓட்டிக்கொண்டு, அவர்களில் அநேகம்பேரை
வெட்டி, கேகிலாவின் குடிகளை இரட்சித்தான்.—
சா அகிமேலேகின் குமாரனகிய அப்பியத்தார் கே
கிலாவில் இருக்கிற தாவீதண்டைக்கு ஓடிவந்து
இறங்குகிறபோதோவெனில், அவன் கையிலே
ஆசாரியசால்வையும் இருந்தது.

எ தாவீது கேகிலாவுக்கு வந்தானென்று சவு
லுக்கு அறிவிக்கப்பட்டபோது, பராபரன் அ
வனை என் கையில் ஒப்புக்கொடுத்தார்; ஏனென்
றல் அவன் கதவுகளும் தாழ்ப்பாள்களுமுள்ள
பட்டணத்திற்குள் பிரவேசித்ததினலே, அடை
அ பட்டிருக்கிறனென்று சவுல் சொல்லி,–தாவீதை
யும் அவன் மனுஷரையும் முற்றிக்கைபோடும்ப
டிக்கு, கேகிலாவுக்கு இறங்கிப்போக, எல்லாச்
சனத்தையும் யுத்தத்திற்கு அழைப்பித்தான்.—
தனக்குப் பொல்லாப்புச் செய்யச் சவுல் எத்த கூ
னம்பண்ணுகிறான் என்று தாவீது அறிந்து
கொண்டபோது, ஆசாரியனகிய அப்பியத்தாரு
டனே, ஆசாரியசால்வையை இங்கே கொண்டு
வாவென்று சொல்லி,—தாவீது சொன்னதாவது: ய
இஸ்ரவேலின் பராபரனகிய கர்த்தாவே, சவுல்
கேகிலாவுக்குவந்து, என்நிமித்தம் பட்டணத்தை
அழிக்க வகைதேடுகிறனென்று உம்முடைய
அடியான் கேட்கவே கேட்டேன்.—கேகிலாப் யக
பட்டணத்தார் என்னை அவன் கையில் ஒப்புக்
கொடுப்பார்களோ, உம்முடைய அடியான் கேட்
டபடி சவுல் இறங்கிவருவானே, இஸ்ரவேலின்
பராபரனகிய கர்த்தாவே, இதை உம்முடைய
அடியானுக்கு அறிவியுமே என்றான்; அதற்குக்
கர்த்தர் இறங்குவானென்றார்.–கேகிலாப்பட்ட யஉ
ணத்தார் என்னையும் என் மனுஷரையும் சவுலின்
கையில் ஒப்புக்கொடுப்பார்களோ என்று தாவீது
கேட்டதற்கு, கர்த்தர், ஒப்புக்கொடுப்பார்களென்
றார்.—ஆகையால் தாவீதும் ஏறக்குறைய அறுநூ யங
றுபேராகிய அவன் மனுஷரும் எழும்பி, கேகிலா
வை விட்டுப் புறப்பட்டு, போகத்தக்க இடத்திற்
குப் போனர்கள்; தாவீது கேகிலாவிலிருந்து தப்
பிப்போனனென்று சவுலுக்கு அறிவிக்கப்பட்
டபோது, தான் புறப்படுகிறதை நிறுத்திவிட்
டான்.—தாவீதோவென்றல் வனந்தரத்திலுள்ள யச
அரணன ஸ்தலங்களிலே தங்கி, சீப்பென்ற
வனந்தரத்திலிருக்கிற ஒரு மலையிலே தரித்திருந்
தான்; சவுல் சகல நாளும் அவனைத் தேடியும்,
பராபரன் அவனை அவன் கையில் ஒப்புக்கொ
டுக்கவில்லை.—தன் பிராணனை வாங்கத் தேடும் யரு
படிக்கு, சவுல் புறப்பட்டானென்று தாவீது கண்
டபடியினலே, தாவீது சீப்வனந்தரத்தில் ஒரு
காட்டில் இருந்தான்.

அப்போது சவுலின் குமாரனகிய யோனத் யசா
தான் எழுந்து, காட்டிலிருக்கிற தாவீதண்டைக்
குப்போய், பராபரனுக்குள் அவன் கையைத்
திடப்படுத்தி,—அவனுடனே, நீ பயப்படா யஎ
யாக; ஏனென்றல் என் தகப்பனகிய சவுலின்
கை உன்னைக் கண்டுபிடிப்பதில்லை; நீ இஸ்ரவே
லின்மேல் இராசாவாயிருப்பாய்; அப்போது நான்
உனக்கு இரண்டாவதாயிருப்பேன்; அப்படி
நடக்குமென்று என் தகப்பனகிய சவுலும் அறிந்
திருக்கிறார் என்றான்.—அவர்கள் இருவரும் யஅ
கர்த்தருக்குமுன்பாக உடம்படிக்கைபண்ணின
பிற்பாடு, தாவீது காட்டில் இருந்துவிட்டான்;
யோனத்தானேவெனில் தன் வீட்டிற்குப் புறப்
பட்டுப்போனன்.

ஆனல் சீப்பூரார் கிபேயாவிலிருக்கிற சவு யகூ
லண்டைக்கு ஏறிவந்து சொன்னதாவது: தாவீது
எங்களிடமாக எசிமோனுக்கு வலதுபுறமான
ஆகிலாவென்ற மலைக்காட்டிலுள்ள அரணிப்
பான இடங்களில் ஒளித்துக்கொண்டிருக்கிற
தில்லையோ? — இப்போதும் இராசாவாகிய நீர் உய
உம்முடைய மனஆசையின்படியெல்லாம் இறங்

கிவாரும்; அவனை இராசாவின் கையில் ஒப்
புக்கொடுக்க, எங்களால் ஆகுமென்றார்கள்.—
௨௧ அப்போது சவுல் சொன்னதாவது: நீங்கள் என்
மேல் இரக்கமானதினாலே, கர்த்தரால் ஆசீர்வ
௨௨ திக்கப்பட்டிருப்பீர்களாக. — நீங்கள் போய்,
அவன் கால் நடமாடுகிற அவனுடைய தலத்தை
யும், அங்கே அவனைக் கண்டவன் யாரென்கிற
தையும் இன்னம் பத்திரமாய் விசாரித்து அறிந்
துகொண்டு பாருங்கள்; ஏனெனில் அவன் மகா
தந்திரமானவனென்று எனக்குச் சொல்லப்பட்
௨௩ டது.—அவன் ஒளித்துக்கொண்டிருக்கும் எல்
லா மறைவிடங்களையும் பார்த்தறிந்துகொண்டு,
நிச்சயச்செய்தியாய் என்னண்டைக்குத் திரும்பி
வாருங்கள்; அப்போது நான் உங்களோடேகூட
வந்து, அவன் தேசத்திற்குள் இருந்தால், யூதாவி
லிருக்கிற எல்லாச் சேனைகளுக்குள்ளும் அவ
௨௪ னைத் தேடிப்போவேனென்றான்.—அப்போது
சீப்பூரார் எழுந்து, சவுலுக்குமுன்னாகப் புறப்
பட்டுப்போனார்கள்; ஆனால் தாவீதும் அவன்
மனுஷரும் எசிமோனுக்கு வலதுபுறமான அந்
தரவெளியாகிய மாகோன் வனாந்தரத்தில் இருந்
தார்கள்.
௨௫ ஏனென்றால் சவுலும் அவன் மனுஷரும் தாவீ
தைத் தேட வருகிறார்களென்று அவனுக்கு அறி
விக்கப்பட்டபோது, அவன் கல்மலை ஓரமாயி
றங்கி, மாகோன் வனாந்தரத்திலே தங்கினான்;
அதைச் சவுல் கேட்டு, மாகோன் வனாந்தரத்திலே
௨௬ தாவீதுக்குப் பின்தொடர்ந்தான்.—சவுல் பர்வ
தத்தின் இந்தப்பக்கத்திலும், தாவீதும் அவன்
மனுஷரும் பர்வதத்தின் அந்தப்பக்கத்திலும்,
நடந்தார்கள்; சவுலுக்குத் தப்பிப்போக, தாவீது
தீவிரிக்கிறபோதோவெனில், சவுலும் அவன்
மனுஷரும் தாவீதையும் அவன் மனுஷரையும்
பிடிக்கத்தக்கவிதமாக அவர்களை வளைந்துகொ
௨௭ ண்டார்கள்.–ஆனால் ஒரு ஆள் சவுலண்டைக்கு
வந்து, நீர் சீக்கிரமாய் வாரும்; ஏனெனில் பெ
லிஸ்தியர் தேசத்தின்மேல் வந்து விழுந்தார்க
௨௮ ளென்றான்.–ஆகையால் சவுல் தாவீதுக்குப் பின்
தொடருகிறதை விட்டுத் திரும்பி, பெலிஸ்திய
ருக்கு எதிராகப் போனான்; ஆனதுகொண்டு
அவ்விடத்திற்குப் பிரிவு கல்மலையென்று பே
ரிட்டார்கள்.

## ௨௪. அதிகாரம்.

௧. தாவீது என்கேதியில் தங்கினது. ௨. அவன் அதின் ஒரு கெபியில் சவுலைக் கொல்லாமல் அவனுடைய வஸ்திரத்தொங்கலை அறுத்தது. ௮. ஆனால் அவன் தன் உண்மையைக் காண்பித்தது. ௰௬. சவுல் தன் குற்றத்தை அறிக்கையிட்டு, தாவீதிடத்தில் பிரமாணிக்கம் பெற்றுக்கொண்டு போய்விட்டது.

௧ தாவீது அவ்விடத்தைவிட்டு ஏறிப்போய், என்
கேதியிலுள்ள அரணிப்பான இடங்களிலே தங்
௨ கினான்.—சவுல் பெலிஸ்தியருக்குப் பின்தொ
டர்ந்து திரும்பிவந்தபோதோவெனில், இதோ
தாவீது என்கேதியின் வனாந்தரத்தில் இருக்கிறா
௩ னென்று அவனுக்கு அறிவிக்கப்பட்டது.—அப்
போது சவுல் இஸ்ரவேலனைத்திலும் தெரிந்து
கொள்ளப்பட்ட மூவாயிரம்பேரைக் கூட்டிக்
கொண்டு, தாவீதையும் அவன் மனுஷரையும்
காட்டாடுகளுடைய கல்மலைகளின்மேலே தே
டப்போனான்.–வழியோரத்திலிருக்கிற ஆட்டுத் ௪
தொழுவங்களுக்கு அவன் வந்தபோது, அங்கே
ஒரு கெபி இருந்தது; அதிலே சவுல் மலசலாதிக்கு
இருக்கப் பிரவேசித்தான்; ஆனால், தாவீதும் அ
வன் மனுஷரும் அந்தக் கெபியின் பக்கங்களில்
உளுக்காந்திருந்தார்கள்.—அப்போது தாவீதின் ௫
மனுஷர் அவனுடனே, இதோ நாம் உன் சத்து
ருவை உன் கையில் ஒப்புக்கொடுப்போம்; உன்
பார்வைக்கு நலமானபடி அவனுக்குச் செய்வா
யாகவென்று கர்த்தர் உன்னோடே சொன்ன நாள்
இதுதானே என்றார்கள்; தாவீது எழுந்திருந்து
போய், சவுலுக்கு இருந்த சால்வையின் தொங்
கலை மெள்ள அறுத்துக்கொண்டான்.—ஆனால் ௬
அவன் சவுலுக்கு இருந்த சால்வைத்தொங்கலை
அறுத்துக்கொண்டபிற்பாடு, தாவீதை அவன்
மனது அதின்நிமித்தமாக அடித்துக்கொண்டு,-
அவன் தன் மனுஷரோடே, கர்த்தர் அபிஷேகம் ௭
பண்ணுவித்த என் ஆண்டவன்மேல் என் கை
யைப்போடும் இப்படிக்கொத்த வேலையை நான்
செய்யாதபடிக்கு, கர்த்தர் என்னைக் காப்பாராக;
ஏனென்றால் அவர் கர்த்தரால் அபிஷேகம்பண்
ணுவிக்கப்பட்டவரென்று சொல்லி,—தன் மனு ௮
ஷரைச் சவுலின்மேல் எழும்பவொட்டாமல், வார்த்
தைகளினால் அவர்களைத் தடைபண்ணினான்;
சவுல் எழுந்திருந்து, கெபியைவிட்டு, வழியை
நடந்துபோகிறபோதோவெனில்,
தாவீதும் அதற்குப்பிறகு எழுந்து, கெபியிலி ௯
ருந்து புறப்பட்டு, சவுலுக்குப் பின்னிருந்து,
இராசாவாகிய என் ஆண்டவனே என்று கூப்
பிட்டான்; சவுல் திரும்பிப்பார்க்கிறபோது,
தாவீது தரைமட்டும் முகம்குனிந்து வணங்கி,—
சவுலோடே சொன்னதாவது: இதோ தாவீது ௰
உமக்குப் பொல்லாப்புச் செய்யப்பார்க்கிறா
னென்று சொல்லுகிற மனுஷருடைய வார்த்தை
களை என் கேட்கிறீர்?—இதோ கர்த்தர் இன்று ௰௧
கெபியில் உம்மை என் கையில் ஒப்புக்கொடுத்
தாரென்பதை இன்றைத்தினம் உம்முடைய கண்
கள் கண்டன; உம்மைக் கொன்றுபோடவேண்
டுமென்று சொன்னார்கள்; ஆனால் என் கை உம்
மைத் தப்பவிட்டது; என் கையை என் ஆண்
டவன்மேலே போடேன்; ஏனெனில் அவர் கர்த்
தரால் அபிஷேகம்பண்ணுவிக்கப்பட்டவரென்
றேன்.—என் தகப்பனே பாரும்; என் கையிலி ௰௨
ருக்கிற உம்முடைய சால்வையின் தொங்கலை
யே பாரும்; ஏனெனில் உம்மைக் கொன்றுபோ
டாமல், உம்முடைய சால்வையின் தொங்கலை
அறுத்துக்கொண்டேன்; என் கையிலே பொல்
லாப்பும் துரோகமும் இல்லையென்றும், உமக்கு
நான் குற்றம்செய்ததில்லையென்றும் அறிந்து
பாரும்; நீரோவென்றால் என் பிராணனை வாங்க,
அதை வேட்டையாடுகிறீர். — கர்த்தர் எனக் ௰௩
கும் உமக்கும் நடுவாக நியாயம் விசாரித்து, கர்த்

தர் தாமே உம்முடைய கையில் என் பழியை
வாங்குவாராக;என்னுடைய கை உமக்கு விரோ
௰௪ தமாயிருப்பதில்லை. — பழமொழியாய்ச் சொல்
லுகிறபடியே ஆகாதவர்களிடத்திலே ஆகாமி
யம் பிறக்கும்; என் கையோவெனில் உமக்கு
௰௫ விரோதமாயிருப்பதில்லை.—இஸ்ரவேலின் இரா
சாவாகிய நீர் யாரைத் தேடப் புறப்பட்டீர்? நீர்
யாரைப் பின்தொடருகிறீர்? ஒரு செத்த நாயை
யும் ஒரே தெள்ளுப்பூச்சியையும் அல்லவோ?—
௰௬ கர்த்தர் நியாயாதிபதியாயிருந்து, எனக்கும் உமக்
கும் நியாயம்தீர்த்து, என் வழக்கைப்பார்த்து
வழக்காடி, நான் உம்முடைய கைக்குத் தப்ப
என்னை நியாயம் விசாரிப்பாரென்றான்.
௰௭ தாவீது இந்த வார்த்தைகளைச் சவுலோடே
சொல்லித் தீர்ந்தபிற்பாடு, சவுல் என் குமாரனா
கிய தாவீதே, இது உன்னுடைய சத்தமல்லவோ
௰௮ வென்று சொல்லி, சவுல் சத்தமிட்டழுது,—தா
வீதோடே சொன்னதாவது: நீ என்னைப்பார்க்
கிலும் நீதிமான்; ஏனெனில் நீ எனக்கு நன்மை
செய்தாய்;நானோவெனில் உனக்குத் தீமையைச்
௰௯ சரிக்கட்டினேன்.—நீ எனக்கு நன்மைசெய்த
தை இன்று வெளியாக்கினாய்; கர்த்தர் என்னை
உன் கையில் ஒப்புக்கொடுத்திருந்தும்,நீஎன்னைக்
௨௰ கொன்றுபோடாதேபோனாய். — ஏனென்றால்
எவன் ஒருவன் தன் மாற்றானைக் கண்டுபிடித்து,
அவனை நல்ல வழியிலே போகவிடுவான்?
இன்று நீ எனக்குச் செய்ததற்குக் கர்த்தர் உனக்
குப் பதில் நன்மையைச் சரிக்கட்டுவாராக.—
௨௧ இப்போதும் இதோ நீ இராசாவாகவே ஆவா
யென்றும், இஸ்ரவேலின் இராச்சியபாரம் உன்
கையில் நிலைவரப்படுமென்றும் அறிவேன்.—
௨௨ இப்போதும் நீ எனக்குப் பின்னிருக்கும் என்
வித்தாரை வேரறுக்காமலும், என் தகப்பன் வீட்
டாரில் என் பெயரை அழித்துவிடாமலும் இருப்
பேனென்று கர்த்தர்மேல் எனக்கு ஆணையிடு
௨௩ வென்றான்.-அப்போது தாவீது சவுலுக்கு ஆணை
யிட்டான்; பிற்பாடு சவுல் தன் வீட்டுக்குப்
புறப்பட்டுப்போனான்; ஆனால் தாவீதும் அவன்
மனுஷரும் அரணிப்பான இடத்திற்கு ஏறிப்
போனார்கள்.

## ௨௫. அதிகாரம்.

௧. சாமுவேல் மரித்தது. ௨. தாவீது பாரான்வனாந்தரத்தில் இருந்தபோது, நாபாலிடத்திற்கு ஆள் அனுப்பினது. ௰. நாபாலின் கெட்ட குணத்தினால், தாவீது அவனைக் கொல்ல நினைத்தது. ௰௪. அபிகாயில் அதை அறிந்து, ௰௮. ஒரு வெகுமதியை எடுத்து. ௨௩. தன் ஞானகுணத்தினால், ௩௨. தாவீதுக்குப் புத்திசொன்னது. ௩௬. நாபால் அந்தச் செய்தியைக்கேட்டு இறந்துபோனது ௩௯ அபிகாயிலையும், அகினோவாமையும், தாவீது தனக்கு மனைவியாயிருக்கும்படி அழைத்துவரச்சொன்னது. ௪௪. பல்த்திக்கு மீகாள் கொடுக்கப்பட்டது.

௧ சாமுவேல் மரணம் அடைந்தான்; இஸ்ரவே
லெல்லாம் கூடிவந்து, அவனுக்காக இழவு
கொண்டாடி, இராமாவிலிருக்கிற அவனுடைய
வீட்டிலே அவனை அடக்கம்பண்ணினார்கள்;
தாவீதோவென்றால் எழுந்து, பாரான்வனாந்த
௨ ரத்திற்கு இறங்கிப்போனான்.—ஆனால் மாகோ
னிலே ஒரு மனுஷனிருந்தான்; அவனுடைய
தொழில்துறை கற்மேலிலிருந்தது; அந்த மனு
ஷன் மகா பலவானாயிருந்தான்; அவனுக்கு
மூவாயிரம் ஆடும்,ஆயிரம் வெள்ளாடும், உண்டா
யிருந்தன; அவன் அப்போது கற்மேலிலே தன்
ஆடுகளை மயிர்கத்தரித்தான்.-அந்த மனுஷனுக்கு ௩
நாபாலென்றும், அவன் பெண்சாதிக்கு அபி
காயிலென்றும் பெயரிருந்தது; அந்த ஸ்திரி மகா
புத்தியுள்ளவளும் சவுந்தரியரூபமுள்ளவளுமா
யிருந்தாள்;அந்தப் புருஷனோவென்றால், கடின
குணமுள்ளவனும் துர்க்கிரியைக்காரனுமாயிரு
ந்தான்; அவன் காலேபுடைய சந்ததியாயிருந்
தான்.
நாபால் தன் ஆடுகளை மயிர்கத்தரிக்கிற செய் ௪
தியை வனாந்தரத்தில் இருக்கிற தாவீது கேட்ட
போது,-தாவீது பத்துவாலிபரை அனுப்பி அவர் ௫
களோடே சொன்னது: நீங்கள் கற்மேலுக்கு ஏ
றிப்போய், நாபாலண்டையிலே சேர்ந்தபோது,
என் நாமத்திலே அவன் சுகசெய்தியைக் கேட்
டு, — சொல்லவேண்டியதேதெனில், நீர் வாழ ௬
வேண்டும்,உமக்குச் சமாதானமும் உம்முடைய
வீட்டுக்குச் சமாதானமும், உமக்குண்டான எல்
லாவற்றிற்கும் சமாதானமும், உண்டாவதாக
வும்.—இப்போது ஆடுகளை மயிர்கத்தரிக்கிறவர் ௭
களை வைத்திருக்கிறீரென்று கேட்டிருக்கிறேன்;
இப்போதும் உமக்கு இருக்கிற மேய்ப்பர் எங்க
ளோடேகூட இருந்தார்கள்; அவர்கள் கற்மேலி
லிருந்த நாளெல்லாம் நாங்கள் அவர்களை அவமா
னப்படுத்தினதுமில்லை; அவர்களுக்கு ஒன்றும்
காணாமல்போனதுமில்லை. — உம்முடைய வே ௮
லைக்காரரைக் கேளும்;அவர்கள் உமக்குச் சொல்
லுவார்கள்; இப்போதும் இந்த வாலிபருக்கு
உம்முடைய கண்களிலே தயவுகிடைக்கட்டும்;
ஏனெனில் நல்ல நாளிலே வந்தோம்; உம்மு
டைய கையில் அகப்படுகிறதை உம்முடைய
ஊழியக்காரருக்கும் உம்முடைய குமாரனாகிய
தாவீதுக்கும் கொடுமென்று சொல்லுங்களென்
றான்.—தாவீதின் வாலிபர் வந்து, இந்த வார்த் ௯
தைகளையெல்லாம் தாவீதின் நாமத்தினாலே நாபா
லோடே பேசி, பின்னொன்றும் சொல்லாதிருந்
தார்கள்.—ஆனால் நாபால் தாவீதின் ஊழியக்கார ௰
ருக்குப் பிரதியுத்தாரமாகச் சொன்னதாவது:
தாவீதென்கிறவன் யார்? ஈசாயின் குமாரன் யார்?
தங்கள் தங்கள் எசமானன்களைவிட்டுப் பிரிந்து
போகிற வேலைக்காரர் இந்நாளில் அநேகருண்
டு.—நான் என் அப்பத்தையும், என் தண்ணீரை ௰௧
யும், என் ஆடுகளை மயிர்கத்தரிக்கிறவர்களுக்காக
நான் அடித்துச் சமையல்பண்ணுவித்ததையும்
எடுத்துக்கொண்டு, எவ்விடத்தாரென்று நான்
அறியாத மனுஷருக்குக் கொடுப்பேனோ என்
றான்.-தாவீதின் வாலிபர் தங்கள் வழிக்குத் திரு ௰௨
ம்பி, மறுபடியும் தாவீதண்டைக்கு வந்து, இந்த
வார்த்தைகளையெல்லாம் அவனுக்கு அறிவித்தார்
கள்.—அப்போது தாவீது தன் மனுஷருக்கு, ௰௩
நீங்கள் அவரவர் உங்கள் பட்டையத்தைக் கட்
டிக்கொள்ளுங்களென்றான்; அவரவர் தங்கள்

பட்டையத்தைக் கட்டிக்கொண்டார்கள்; தாவீ
தும் தன் பட்டையத்தைக் கட்டிக்கொண்டான்;
ஏறக்குறைய நானூறுபேர் தாவீதுக்குப் பின்
சென்று ஏறிப்போனார்கள்; இருநூறுபேர் இரஸ்
தண்டையில் இருந்துவிட்டார்கள்.
௰௪ ஆனால் வேலைக்காரரில் ஒருவன் நாபாலுடை
ய பெண்சாதியாகிய அபிகாயிலுக்கு அறிவித்துச்
சொன்னதாவது: இதோ எங்கள் எசமானனை வின
விக்கொள்ள, தாவீது வனாந்தரத்திலிருந்து ஆள்
களை அனுப்பினான்; அவர்களை அவர் சீறினார்.—
௰௫ அந்த மனுஷரோவென்றால் எங்களுக்கு மெத்த
நல்லவர்களாயிருந்தார்கள்; நாங்கள் வெளியில்
இருக்கும்போது, அவர்கள் எங்களிடத்தில் நட
மாடின நாளெல்லாம் அவர்கள் எங்களை அவ
மானப்படுத்தினதுமில்லை; எங்களுக்கு ஒன்றும்
௰௬ காணமல்போனதுமில்லை. — நாங்கள் ஆடுகளை
மேய்த்து, அவர்களிடத்தில் இருந்த நாளெல்லாம்
அவர்கள் இரவும்பகலும் எங்களைச் சுற்றி மதிளா
௰௭ யிருந்தார்கள்.— இப்போதும் நீர் செய்யவேண்
டியதைக் கவனித்துப்பாரும்; ஏனென்றால் எங்
கள் எசமானன்மேலும், அவருடைய எல்லா வீட்
டாரின்மேலும், நிச்சயமாய் ஒரு பொல்லாப்பு
வருகிறதாயிருக்கின்றது; இவரோவென்றால் ஒரு
வரும் அவனோடே பேசக்கூடாதபடிக்கு, பேலி
௰௮ யாளின் மனுஷனாயிருக்கிறாரென்றான். —அப்
போது அபிகாயில் தீவிரமாய் இருநூறு அப்பங்
களையும்; இரண்டு துருத்தித் திராட்சப்பழ இரசத்
தையும், சமையல்பண்ணப்பட்ட ஐந்து ஆடுக
ளையும், ஐந்துபடி வறுத்தபயற்றையும், வற்றலாக்
கப்பட்ட நூறு திராட்சப்பழக் குலைகளையும்,
வற்றலான இருநூறு அத்திப்பழ அடைகளையும்
எடுத்துக்கொண்டு, கழுதைகள்மேல் ஏற்றி, —
௰௯ தன் வேலைக்காரரோடே, நீங்கள் எனக்குமுன்
னே போங்கள்; இதோ நான் உங்கள் பிறகாலே
வருகிறேனென்று சொல்லி, தன் புருஷனாகிய
நாபாலுக்கு அதை அறிவிக்காமல்போனாள்.—
௨௰ அவள் ஒரு கழுதையின்மேல் ஏறிப்போய், மலை
யின் மறைவில் இறங்கிவந்தபோதோவெனில்,
இதோ தாவீதும் அவன் மனுஷரும் அவளுக்கு
எதிராக இறங்கிவந்தார்கள்; அவர்களைச் சந்தித்
௨௧ தாள். — தாவீதோவெனில், சொல்லியிருந்தது,
இவனுக்கு வனாந்தரத்தில் இருக்கிறதையெல்
லாம் வீணாகவே காப்பாற்றினேன்; அவனுக்
குண்டானதிலெல்லாம் ஒன்றும் காணமல்போ
னதில்லை; என்றாலும் எனக்கு நன்மைக்குத் தீமை
௨௨ யைச் சரிக்கட்டினான். — அவனுக்குண்டான
எல்லாவற்றிலும் பொழுதுவிடியும்மட்டும் நான்
சுவரில் நீர்விடும் ஒரு நாயை முதலாய் உயிரோ
டேவைத்தால், பராபரன் தாவீதின் சத்துருக்க
ளுக்கு இப்படியும் அப்படியும் செய்யக்கடவ
ரென்று சொல்லியிருந்தான்.
௨௩ அபிகாயில் தாவீதைக் காண்கையில், தீவிர
மாய்க் கழுதையைவிட்டு இறங்கி, தாவீதுக்கு
நேராக முகங்குப்புறத் தரையில் விழுந்து பணிந்
௨௪ து,—அவன் பாதத்திலேவிழுந்து சொன்னதாவது:
ஆ என்ஆண்டவனே, இந்தப் பாதகம் என்மே
லே சுமரட்டும்; உம்முடைய அடியாளுடைய
வார்த்தைகளை நீர் கேட்கும்பொருட்டாக உம்மு
டைய அடியாள் உமது செவியிலேபடப்பேசட்
டுமே.— என் ஆண்டவனாகிய நீர் நாபாலென்ற ௨௫
இந்தப் பேலியாளின் மனுஷனுக்கு விரோத
மாக உம்முடைய இருதயத்தைத் திருப்பீராக;
ஏனெனில் அவன் நாமம் எப்படியோ அப்படி
அவனிருக்கிறான்; அவன் நாமம் பயித்தியக்கார
னென்பது, பயித்தியமும் அவனோடு இருக்கின்
றது; உம்முடைய அடியாளாகிய நானோவெ
னில், என் ஆண்டவன் அனுப்பின வாலிபனைக்
கண்டதில்லை.—இப்போதும் என் ஆண்டவனே, ௨௬
நீர் இரத்தம் சிந்தவரவும், உம்முடைய கையே
உம்மை இரட்சிக்கவும், கர்த்தர் உமக்கு இடம்
கொடுக்கவில்லை என்கிறதைக் கர்த்தருடைய
சீவனைக்கொண்டும், உம்முடைய சீவனைக்
கொண்டும் சொல்லுகிறேன்; இப்போதும் உம்
முடைய சத்துருக்களும், என் ஆண்டவனுக்கு
விரோதமாகப் பொல்லாப்புத் தேடுகிறவர்களும்,
நாபாலைப்போல ஆகக்கடவர்கள். — இப்போ ௨௭
தும் என் ஆண்டவனுடைய காலடிகளில் நடந்
துவருகிற வாலிபருக்குக் கொடுக்கப்படும்படிக்
கு, உம்முடைய பணிவிடைக்காரி என் ஆண்
டவனுக்குக் கொண்டுவந்த காணிக்கை இது
தானே.—உம்முடைய அடியாளின் பாதகத்தை ௨௮
மன்னியுமே; ஏனெனில் கர்த்தர் என் ஆண்டவ
னுக்கு நிலைநிற்கிற வீட்டைக் கட்டவே கட்டு
வார்; ஏனென்றால் என் ஆண்டவன் கர்த்தரு
டைய யுத்தங்களை நடத்துகிறவராமே; நீர் உயி
ரோடே இருக்கிறநாளில் ஒரு பொல்லாப்பும்
உம்மிலே காணப்படாதிருப்பதாக. — அப்படி ௨௯
யே உம்மைத் துன்பப்படுத்தவும், உம்முடைய
பிராணனை வாங்க வகைதேடவும், எவனாகிலும்
ஒரு மனுஷன் எழும்பினால், என் ஆண்டவனு
டைய ஆத்துமா உம்முடைய பராபரனாகிய கர்த்
தரின் ஆதரவிலிருக்கிற சீவனுள்ளோருடைய
கட்டிலே கட்டப்பட்டிருக்கும்; ஆனாலும் உம்
முடைய சத்துருக்களின் ஆத்துமா கவணில்
வைக்கப்பட்டு எறியப்படும்.—கர்த்தர் உம்மைக் ௩௰
குறித்துச் சொன்ன நன்மையின்படி எல்லாம்
இனி என் ஆண்டவனுக்குச் செய்து, இஸ்ரவே
லின் தலைவனாயிருக்க உமக்குக் கற்பிக்கும்
போது,—நீர் விருதாவாய் இரத்தம்சிந்தாமலும், ௩௧
என் ஆண்டவனாகிய நீர் உமக்குத்தானே இரட்
சிப்புச் செய்யாமலும், இருந்ததுண்டானால், அப்
போது என் ஆண்டவனாகிய உமக்கு அதற்காகத்
தடுக்கலுமில்லை; மனதில் இடறுதலுமில்லை; கர்த்
தர் என் ஆண்டவனுக்கு நன்மைசெய்யும்போ
து, உம்முடைய அடியாளை நினைப்பீரென்றாள்.
அப்போது தாவீது அபிகாயிலுக்குச் சொன்ன ௩௨
தாவது: உன்னை இன்றைத்தினம் என்னைச் சந்
திக்க அனுப்பின இஸ்ரவேலின் பராபரனாகிய
கர்த்தர் ஸ்தோத்திரிக்கப்பட்டவர்.—உன் புத்தி ௩௩
யுள்ள வார்த்தை ஆசீர்வதிக்கப்பட்டிருக்கக்கட

வது; நான் இரத்தம்சிந்த வராதபடிக்கும், என்
கையே எனக்கு இரட்சிப்புச் செய்யாதபடிக்
கும், நீ இன்றைத்தினம் எனக்குத் தடைபண்ணி
னபடியினாலே, நீ ஆசீர்வதிக்கப்பட்டவள்.—
௩௪ ஏனெனில் நீ தீவிரமாய் என்னைச் சந்திக்க வரா
தேயிருந்தாயானால்,பொழுதுவிடியும்மட்டும் நா
பாலுக்கு ஒரு நாயும் உயிரோடே வைக்கப்படுவ
தில்லை என்று, உனக்குப் பொல்லாப்புச் செய்ய
எனக்கு இடம்கொடாதிருக்கிற இஸ்ரவேலின்
பராபரனாகிய கர்த்தரின் ஜீவனைக்கொண்டு மெய்
௩௫ யாய்ச் சொல்லுகிறேனென்று சொல்லி,— அ
வள் தனக்குக் கொண்டுவந்ததைத் தாவீது அவள்
கையிலே வாங்கி, அவளுடனே, நீ சமாதானத்
தோடே உன் வீட்டுக்கு ஏறிப்போ; இதோ நான்
உன் சொல்கேட்டு, உன் முகத்தைப் பார்த்தே
னென்றான்.
௩௬ அபிகாயில் நாபாலண்டைக்கு வந்தபோது,
இதோ இராசாவின் விருந்துக்கொத்த விருந்து
அவன் வீட்டிலே அவனுக்கு இருந்தது; அவன்
இருதயம் அவனுக்குள் மகிழ்ச்சியாயிருந்தது;
அவன் மிகவும் வெறித்துமிருந்தான்; ஆகையால்
பொழுதுவிடியும்மட்டும் அவனுக்குச் சிறிய பெ
ரிய காரியங்கள் ஒன்றும் அறிவிக்காதிருந்தாள்.—
௩௭ பொழுதுவிடிந்து, நாபாலின் வெறி தெளிந்து
போனபிற்பாடோவெனில், அவன் பெண்சாதி
இந்த வர்த்தமானங்களை அவனுக்கு அறிவித்தாள்;
அப்போது அவன் இருதயம் அவனுக்குள்ளே
செத்துப்போய், அவன் கல்லைப்போலானான்.—
௩௮ ஏறக்குறைய பத்துநாளுக்குப் பிற்பாடோவென்
றால், கர்த்தர் நாபாலை அடித்ததினால், அவன்
செத்தான்.
௩௯ நாபால் செத்துப்போனானென்று தாவீது கேட்
டபோது, அவன், என் நிந்தையின் வழக்கை
நாபாலின் கையில் விசாரித்து, தம்முடைய
அடியானைப் பொல்லாப்புச் செய்யாதபடிக்கு,
தடுத்திருக்கிற கர்த்தர் ஸ்தோத்திரிக்கப்பட்டவர்;
ஏனெனில் கர்த்தர் தாமே நாபாலின் பொல்லாப்
பை அவன் தலையின்மேலே திரும்பப்பண்ணி
னாரென்று சொல்லி, அபிகாயிலை விவாகம்பண்
ணுகிறதற்காக அவளோடே பேச, தாவீது ஆள்
௪௰ களை அனுப்பினான்.—தாவீதின் ஊழியக்காரர்
கற்மேலில் இருக்கிற அபிகாயிலண்டைக்கு வந்
து, தாவீது உன்னை விவாகம்பண்ண மனதாய்,
எங்களை உன்னண்டைக்கு அனுப்பினாரென்று
௪௧ அவளோடே சொல்லுகிறபோது,— அவள் எ
ழுந்திருந்து, தரைமட்டும் முகம்குனிந்து, இதோ
நான் என் ஆண்டவனுடைய ஊழியக்காரரின்
கால்களைக் கழுவத்தக்க பணிவிடைக்காரியாகிய
௪௨ அவருடைய அடியாளென்றாள்.—பிற்பாடு அபி
காயில் தீவிரித்துக்கொண்டு எழுந்து, ஒரு கழு
தையின்மேல் ஏறி, தன் பிறகாலே நடக்கிற தன்
ஐந்துவேலைக்காரிகளைக் கூட்டிக்கொண்டு,தாவீ
தின் தானாபதிகளைப் பின்சென்று போய், அவ
௪௩ னுக்குப் பெண்சாதியானாள். — இஸ்ரேயேல்
ஊராளாகிய அகினோவாமையும் தாவீது விவாகம்
பண்ணினான்; அவர்கள் இருவரும் அவனுக்குப்
பெண்சாதிகளானார்கள்.—ஏனெனில் சவுல் தாவீ ௪௪
தின் பெண்சாதியான மீகாளென்ற தன் குமாரத்
தியைக் காலீமூரானாகிய லாயீசின் குமாரனான
பலத்தீக்குக் கொடுத்திருந்தான்.

## ௨௬. அதிகாரம்.

க. சிப்பூரார் அறிவித்ததினாலே சவுல் அகிலாமேட்டில் தாவீதின்மேல் போனது. ௫. தாவீது பாளயத்திற்கு வந்து, சவுலைக் கொல்லாதபடி, அபிசாயைத் தடுத்துச் சவுலின் ஈட்டியையும் தண்ணீர்ச்செம்பையும் எடுத்துக்கொண்டது. ௰௩. தாவீது அப்னேரைக் கண்டித்தது. ௰௮. சவுலுக்குத் தாவீது புத்திசொன்னது. ௨௧. சவுல் தன் பாவங்களை அறிக்கைபிட்டது.

சிப்பூராரோவென்றால்,கிபேயாவிலிருக்கிற சவு க
லண்டைக்கு வந்து, தாவீது எசிமோனுக்கு எதி
ரான ஆகிலாமேட்டில் ஒளித்துக்கொண்டிருக்க
வில்லையோ என்றார்கள். — அப்போது சவுல், ௨
சீப்வனாந்தரத்திலே தாவீதைத் தேட எழுந்து,
இஸ்ரவேலிலே தெரிந்துகொள்ளப்பட்ட மூவா
யிரம்பேரோடும்கூட, சீப்வனாந்தரத்திற்கு இறங்
கிப்போனான். — சவுல் எசிமோனுக்கு எதிரே ௩
வழியண்டையிருக்கிற ஆகிலாமேட்டிலே பாள
யமிறங்கினான்; தாவீதோவெனில் சவுல் தன்
னைத் தொடர்ந்து வனாந்தரத்திற்கு வந்ததைக்
கண்டு, வனாந்தரத்தில் இருந்துவிட்டான். —
ஏனென்றால் தாவீது வேவாள்களை அனுப்பி, ௪
சவுல் வந்தது நிச்சயமென்று அறிந்துகொண்
டிருந்தான்.
பிற்பாடு தாவீது எழுந்துபோய், சவுல் பாளய ௫
மிறங்கின இடத்திற்கு வந்து, சவுலும் நேரின்
குமாரனாகிய அப்னேரென்ற அவன் படைத்தலை
வனும் படுத்துக்கொண்டிருக்கிற ஸ்தலத்தைப்
பார்த்தான்; சவுல் இரதங்களிருக்கிற இடத்திற்
குள்ளே படுத்துக்கொண்டிருந்தான்; சனம் அவ
னைச் சுற்றிலும் பாளயமிறங்கியிருந்தது. — தா ௬
வீது ஏத்தியனாகிய அகிமேலேக்கையும், செருயா
வின் குமாரனும் யோவாபின் சகோதரனுமாகிய
அபிசாயையும் பார்த்து, என்னோடேகூடச் சவு
லண்டைக்குப் பாளயத்திலிறங்கிவருபவன் யா
ரென்றதற்கு, அபிசாய் நான் உம்மோடேகூட
இறங்கிவருவேனென்றான்.—அப்படியே தாவீ ௭
தும் அபிசாயும் இராத்திரியிலே அந்தச் சனத்
தண்டை வந்தார்கள்; இதோ சவுல் இரதங்களி
ருக்கிற இடத்திற்குள்ளே படுத்துக்கொண்டு, நித்
திரைபண்ணினான்; அவன் தலைமாட்டிலே அவ
னுடைய ஈட்டி நிலத்திலே குத்தியிருந்தது; அவ
னைச் சுற்றிலும் அப்னேரும் சனமும் படுத்துக்
கொண்டிருந்தார்கள். — அப்போது அபிசாய் ௮
தாவீதுடனே, இன்று பராபரன் உம்முடைய
சத்துருவை உம்முடைய கையில் ஒப்புக்கொ
டுத்தார்; இப்போதும் நான் அவனை ஈட்டியி
னால் இரண்டு குத்தாகக் குத்தாமல், ஒரே குத்தாக
நிலத்தில் உருவக்குத்தட்டுமேயென்றான். — ஆ ௯
னால் தாவீது அபிசாயுடனே, அவனைக் கெடுக்
காதே; ஏனெனில் கர்த்தர் அபிஷேகம்பண்ணு
வித்தவர்மேலே தன் கையைப்போட்டு, குற்ற
மில்லாமல் போகுமவன் யாரென்று சொன்

௰ ஞன்.—பின்னையும் தாவீது சொன்னதாவது: கர்த்
தர் அவரை அடித்து,அல்லவென்று அவருடைய
காலம் வந்து,அவர் மரித்து, அல்லவென்று அவர்
௰௧ யுத்தத்திற்குப் போய் மாண்டாலொழிய,—நான்
என் கையைக் கர்த்தர் அபிஷேகம்பண்ணுவித்
தவர்மேலே போடாதபடிக்கு, கர்த்தர் என்னைக்
காக்கக்கடவரென்று கர்த்தருடைய ஜீவனைக்
கொண்டு சொல்லுகிறேன்; இப்போதும் அவர்
தலைமாட்டிலிருக்கிற ஈட்டியையும், தண்ணீர்ச்
செம்பையும் நீ எடுத்துக்கொள்; நாம் போவோ
௰௨ மென்றான்.—தாவீது சவுலின் தலைமாட்டிலிருந்
த ஈட்டியையும் தண்ணீர்ச் செம்பையும் எடுத்
துக்கொண்ட பிற்பாடு, புறப்பட்டுப்போனார்
கள்; அதை ஒருவரும் கண்டதுமில்லை, அறிந்தது
மில்லை,ஒருவரும் விழித்துக்கொண்டதுமில்லை;
ஏனென்றால் கர்த்தராலே கனநித்திரை அவர்
கள்மேல் இறங்கி இருந்ததினால், அவர்களெல்
லாரும் தூங்கினார்கள்.
௰௩ தாவீது கடந்து, அந்தப் பக்கத்திற்குப் போன
பிற்பாடு, தங்களுக்கும் அவர்களுக்கும் நடுவே
போந்த இடமுண்டாக, தூரத்திலிருக்கிற மலை
௰௪ யின் கொடுமுடியிலே நின்றுகொண்டு,—சனத்
திற்கும் நேரின் குமாரனாகிய அப்னேருக்கும்
நேராகக் கூப்பிட்டுக்கொண்டு, அப்னேரே, நீர்
மறுமொழி சொல்லவில்லையோ என்றான்; அப்
னேர் பிரதியுத்தாரமாக, இராசாவுக்கு நேராகக்
௰௫ கூக்குரலிடுகிற நீ யாரென்றான்.—அப்போது தா
வீது அப்னேருக்குச் சொன்னதாவது: நீர் வீரன்
அல்லவோ? இஸ்ரவேலில் உமக்குச் சரியான
வன் யார்? பின்னை நீர் உம்முடைய ஆண்டவ
னாகிய இராசாவைக் காக்காமல்போனதென்ன?
அதேனென்றால் சனத்தில் ஒருவன் உம்முடைய
ஆண்டவனாகிய இராசாவைக் கெடுக்கும்படி
௰௬ வந்திருந்தான்.—நீர் செய்த இந்தக்காரியம் நல்ல
தல்ல; கர்த்தர் அபிஷேகம்பண்ணுவித்த உங்கள்
ஆண்டவனை நீங்கள் காக்காமல்போனபடியி
னாலே, நீங்கள் மரணத்திற்குப் பாத்திரவான்
கள்; இப்போதும் இராசாவின் தலைமாட்டிலி
ருந்த அவருடைய ஈட்டியும்தண்ணீர்ச்செம்பும்
௰௭ எங்கேயென்று பாருமென்றான். — அப்போது
சவுல் தாவீதின் சத்தத்தை அறிந்து, என் குமார
னாகிய தாவீதே, இது உன் சத்தமல்லவோ என்
றதற்கு, தாவீது, இராசாவாகிய என் ஆண்டவ
௰௮ னே,இது என் சத்தம்தானென்று சொல்லி,—பின்
னையும் சொன்னதாவது: என் ஆண்டவனாகிய
நீர் உம்முடைய அடியானை இப்படிப் பின்தொ
டருகிறதென்ன? நான் என்ன செய்தேன்? என்
கையில் எந்தப் பொல்லாப்பு இருக்கின்றது?—
௰௯ இப்போதும் இராசாவாகிய என் ஆண்டவன் தம்
முடைய அடியானுடைய வார்த்தைகளைக் கேட்
பாராக; கர்த்தர் உம்மை எனக்கு விரோதமாக
எடுத்துவிட்டால், காணிக்கைசெலுத்தல் வாச
னையாயிருப்பதாக; மனுப்புத்திரர் அதைச் செய்
தார்களேயாகில், அவர்கள் கர்த்தருக்குமுன்பா
கச்சபிக்கப்பட்டவர்கள்;ஏனென்றால்நீபோய்,

வேறே தேவர்களைச் சேவியென்று சொல்லி,
அவர்கள் இன்று என்னைக் கர்த்தருடைய சுதந்த
ரத்திற்கு அடுத்தவனாயிராதபடிக்கு, துரத்திவிட்
டார்கள். — இப்போதும் கர்த்தருடைய முகத் ௨௰
திற்குமுன்பாக என் இரத்தம் தரையில் விழாதி
ருப்பதாக; ஏனெனில் மலைகளில் ஒரு காட்டுக்
கோழியைத் துரத்துகிறதுபோல, இஸ்ரவேலின்
இராசா ஒரே தெள்ளுப்பூச்சியைத் தேடப்புறப்
பட்டாரென்றான்.
அப்போது சவுல்,நான் பாவம்செய்தேன்;என் ௨௧
குமாரனாகிய தாவீதே, திரும்பி வா; ஏனெனில்
என் ஜீவன் இன்றைத்தினம் உன் பார்வைக்கு
அருமையாயிருந்தபடியால், இனி உனக்கு ஒரு
பொல்லாப்புச் செய்யேன்; இதோ நான் மதியற்
றவனாய் மகா பெரிய தப்பிதம் செய்தேனென்
றான்.—தாவீது பிரதியுத்தாரமாகச் சொன்னதா ௨௨
வது: இதோ இராசாவின் ஈட்டி இங்கே இருக்
கின்றது; வாலிபரில் ஒருவன் இப்புறம் வந்து,
அதை வாங்கிக்கொண்டு போகக்கடவன். — ஆ ௨௩
னால் கர்த்தர் அவனவனுக்கு அவனவனுடைய
நீதிக்கும் அவனவன் உண்மைக்கும் தக்கதாகப்
பலன் அளிப்பாராக; ஏனெனில் இன்று கர்த்தர்
உம்மை என் கையில் ஒப்புக்கொடுத்திருந்தும்,
கர்த்தர் அபிஷேகம்பண்ணுவித்தவர்மேல், என்
கையை நீட்ட மனதில்லாதிருந்தேன்.—இதோ ௨௪
உம்முடைய ஜீவன் இன்றைத்தினம் என் பார்
வைக்கு எப்படிப் பெரியதாயிருந்ததோ, அப்
படி என் ஜீவன் கர்த்தரின் பார்வைக்குப்பெரிய
தாயிருப்பதினால், அவர் என்னை எல்லா உபத்
திரவத்திற்கும் நீங்கலாக்கி விடுவாராகவென்
றான். — அப்போது சவுல் தாவீதுடனே, என் ௨௫
குமாரனாகிய தாவீதே, நீ ஆசீர்வதிக்கப்பட்ட
வன்; நீ செய்யவும் செய்வாய்; பலப்படவும்
பலப்படுவாயென்றான்; அப்படியே தாவீது
தன் வழியேபோனான்; சவுலும் தன் தானத்திற்
குத் திரும்பினான்.

## உஎ. அதிகாரம்.

க. தாவீது காத்பட்டணத்தில் இருந்ததைச் சவுல் கேள்விப்பட்டு, அவ
னைப் பின்தொடராதிருந்தது. ௫. தாவீது ஆகீசிடத்தில் சிக்லாகைக்
கேட்டுக்கொண்டது. ௮. அவன் மற்றத் தேசங்களை நாசம்பண்ணி,
யூதாவுக்கு விரோதமானவனென்று ஆகீச நம்பச்செய்தது.

தாவீதோவென்றால் எந்த நாளிலாகிலும் நான் ௧
இனிச் சவுலின் கையில் மடிந்துபோவேன்; இ
னிச் சவுல் இஸ்ரவேலின் எல்லைகளிலெல்லாம்
என்னைத் தேடிப்பிடிக்கும் நம்பிக்கையை விடும்
படிக்கும், நான் அவன் கைக்கும் நீங்கலாயி
ருக்கும்படிக்கும், நான் பெலிஸ்தியரின் தேசத்
திற்குப் போய், தப்புவித்துக்கொள்வதைப்பார்க்
கிலும் தாவீனையான காரியம் எனக்கு இல்லை
யென்று தன் இருதயத்தில் யோசித்தான்.—ஆகை ௨
யால் தாவீது தன்னோடிருந்த அறுநூறுபேரோ
டுங்கூட எழுந்திருந்து மாகோகின் குமாரனாகிய
ஆகீசு என்ற காத்தின் இராசாவண்டைக்குக் கட
ந்துபோனான்.—அங்கே தாவீதும், அவன் மனுஷ ௩
ரும், அவரவர் வீட்டாரும், தாவீதோடேகூட

அவன் இரண்டு பெண்சாதிகளாகிய இஸ்ரெ
யேல் ஊராளாகிய அகிநோகாமும், நாபாலின்
பெண்சாதியாயிருந்த கற்மேலூராளாகிய அபிகா
யிலுமாய், காத்பட்டணத்தில் ஆகீசண்டையி
௪ லே தங்கியிருந்தார்கள்.—தாவீது காத்பட்டணத்
திற்கு ஓடிப்போனானென்று சவுலுக்கு அறிவிக்
கப்பட்டபோது, அப்புறம் அவனைத் தேடாதி
ருந்தான்.
௫ தாவீது ஆகீசுடனே, உம்முடைய கண்களில்
எனக்குத் தயவுகிடைத்ததானால், நான் வாசமா
யிருக்கத்தக்கதாக வெளிகளில் இருக்கிற பட்ட
ணங்களில் ஒன்றில் ஒரு ஸ்தலம் எனக்குக் கொ
டுக்கப்படுவதாக; உம்முடைய அடியான் உம்
மோடேகூட இராசதானி பட்டணத்திலே வாச
௬ மாயிருப்பானேன் என்றான்.—அப்போது ஆகீசு
அன்றைத்தினம் சிக்லாகை அவனுக்குக் கொடுத்
தான்; ஆனதுகொண்டு சிக்லாக் இந்நாள்வரைக்
கும் யூதாவின் இராசாக்களைச் சேர்ந்திருக்கின்
௭ றது.—தாவீது பெலிஸ்தியரின் நாட்டுப்புறத்தி
லே குடியிருந்த நாள் ஒருவருஷமும் நாலுமாத
முமாயிருந்தது.
௮ அங்கேயிருந்து தாவீதும் அவன் மனுஷரும்
கெசூரியர்மேலும் கேர்சியர்மேலும் ஆமலேக்கி
யர்மேலும் போய்விழுவார்கள்; ஏனெனில் சூரு
க்குப்போகிற எல்லைதுவக்கி எகிப்துதேசம்மட்
டுமிருக்கிற சீமையிலே பூர்வகாலம்துவக்கிக் கு
௯ டியிருந்தவர்கள் இவர்கள்தான்.—ஆனால் தாவீது
அந்தச் சீமையைக் கொள்ளையடிக்கிறபோது,
புருஷர்களையும் ஸ்திரிகளையும் உயிரோடே
வைக்காமல், ஆடுமாடுகளையும் கழுதைகளையும்
ஒட்டகங்களையும் வஸ்திரங்களையும் எடுத்துக்
கொண்டு, ஆகீசண்டைக்குத் திரும்பிவருவான்.—
௰ இன்று எதின்மேல் விழுந்தீர்களென்று ஆகீசு
கேட்கும்போது, தாவீது யூதாவுடைய தென்
புறத்தின்மேலும், யோர்மேயேலருடைய தென்
புறத்தின்மேலும், கேனியருடைய தென்புறத்
௰௧ தின்மேலும் என்பான். — இன்ன இன்னபடி
தாவீது செய்தானென்று தங்களுக்கு விரோத
மான செய்தியை அறிவிக்கத்தக்க ஒருவனையும்
தாவீது காத்பட்டணத்திற்குக் கொண்டுவாராத
படிக்கு, ஒருபுருஷனையாகிலும் ஸ்திரியை என்
கிலும் உயிரோடே வைக்காதிருப்பான்; அவன்
பெலிஸ்தியரின் நாட்டுப்புறத்திலே குடியிருக்
கிற நாளெல்லாம் இது அவனுடைய பழக்க
௰௨ மாயிருந்தது. — ஆகீசு தாவீதை நம்பி, அவன்
இஸ்ரவேலராகிய தன்னுடைய சனத்திற்குத்
தன்னை நாற்றமெடுக்கிறவன் ஆக்கினபடியினா
லே, என்றைக்கும் என் ஊழியக்காரனாயிருப்
பானென்பான்.

## ௨அ. அதிகாரம்.

௧. ஆகீசு தாவீதை நம்பினது. ௩. சவுல் குனியக்காரிகளைக் கொன்றது. ௫. தான் பரபரனால் கைவிடப்பட்டுப் பயமடைந்தது, ௭. குனியக்காரியைத் தேடினது. ௯. குனியக்காரி சவுலினால் தயிரியப்பட்டு, சாமுவேலை எறிவரப்பண்ணினது. ௰௫. சவுல் தனக்குவரும் நாசத்தைக் கேள்விப் பட்டுச் சோர்ந்தது. ௨௧. அந்த ஸ்திரி அவனையும் அவனுடைய வேலைக் காரர்களையும் போஷித்தது.

அந்நாள்களிலே சம்பவித்ததேதென்றால் பெலி ௧
ஸ்தியர் இஸ்ரவேலின்மேல் யுத்தம்பண்ண, தங்
கள் இராணுவங்களைப் படைக்குக் கூட்டிக்
கொண்டார்கள்; அப்போது ஆகீசு தாவீதுடனே,
நீயும் உன் மனுஷரும் என்னோடேகூடத் தண்
டுக்குப் புறப்பட்டுவரவேண்டுமென்பதை அறி
யவே அறியக்கடவாயென்றான்.—தாவீது ஆகீசு ௨
டனே, அப்படியே உம்முடைய அடியான் செய்
யப்போகிறதை நீர் அறிந்துகொள்ளுவீர் என்
றான்; அப்போது ஆகீசு தாவீதுடனே, இதற்காக
உன்னை எந்நாளும் என் தலையைக் காப்பாற்றுகி
றவனாக வைப்பேனென்றான்.
சாமுவேலோவென்றால் முன்னமே மரித்துப் ௩
போயிருந்தான்; இஸ்ரவேலரெல்லாம் அவனுக்கு
இழவுகொண்டாடி, அவன் ஊராகிய இராமா
விலே அவனை அடக்கம்பண்ணியிருந்தார்கள்;
சவுலோவெனில் அஞ்சனம்பார்க்கிறவர்களையும்
குறிசொல்லுகிறவர்களையும் தேசத்தில் இராதப
டிக்குத் துரத்தியிருந்தான்.—பெலிஸ்தியர் கூடி ௪
க்கொண்டு வந்து, சூநேமிலே பாளயமிறங்கி
னார்கள்; சவுலும் இஸ்ரவேலனைவெல்லாம் கூட்
டினான்; இவர்கள் கில்போவாவிலே பாளயமி
றங்கினார்கள்.—சவுல் பெலிஸ்தியரின் பாளயத் ௫
தைக்கண்டபோதோவெனில் பயந்தான்; அவன்
இருதயம் மிகவும் தத்தளித்துக்கொண்டிருந்
தது.—ஆனால் சவுல் கர்த்தரைக் கேட்கும்போது, ௬
கர்த்தர் அவனுக்குச் சொப்பனங்களினாலாகி
லும், வெளிச்சங்களினாலாகிலும், தீர்க்கதரிசிக
ளைக்கொண்டென்கிலும், மறு உத்தரவு அருளி
னதில்லை.
அப்போது சவுல் தன் ஊழியக்காரருக்கு, ௭
அஞ்சனம்பார்க்கிற ஒரு ஸ்திரியை எனக்குத்
தேடுங்கள்; நான் அவளண்டைக்குப் போய்,
அவளைக் கேட்பேனென்றான்; அவனுடைய
ஊழியக்காரர் அவனுடனே, இதோ எந்தோரில்
அஞ்சனம்பார்க்கிற ஒரு ஸ்திரி இருக்கிறாளென்
றார்கள்.
அப்போது சவுல் தன் உடுப்பை மாற்றி, வே ௮
றே வஸ்திரங்களைத் தரித்துக்கொண்டு, அவனும்
அவனோடேகூட இரண்டுபேருமாய்ப் போய்,
இராத்திரியிலே அந்த ஸ்திரியண்டைக்கு வந்தார்
கள்; அவளோடு அவன், நீ அஞ்சனம்பார்க்கிற
தினால் எனக்குக் குறிசொல்லி, நான் உன்னோ
டே சொல்லுகிறவனை எனக்கு எறிவரப்பண்
ணென்றான்.—அந்த ஸ்திரி அவனுடனே, இதோ ௯
சவுல் அஞ்சனம்பார்க்கிறவர்களையும், குறிசொ
ல்லுகிறவர்களையும், தேசத்தில் இராதபடிக்கு நிர்
மூலமாக்கின செய்தியை நீர் அறிவீரே; இப்
போது என்னைக் கொலைப்படுத்த நீர் என் பிரா
ணனுக்குக் கண்ணியை வைப்பானேன் என்
றாள்.—அப்போது சவுல் இந்தக் காரியத்திற்காக ௰
உனக்குப் பொல்லாப்பு வாராதென்கிறதைக்
கர்த்தருடைய சீவனைக்கொண்டு சொல்லுகிறே
னென்று அவளுக்கு கர்த்தர்மேல் ஆணையிட்
டான்.— அப்போது அந்த ஸ்திரி உமக்கு நான் ௰௧

யாரை எறிவரப்பண்ணவேண்டும் என்றதற்கு, அவன் சாமுவேலை எனக்கு எறிவரப்பண்ணென்றான்.
௰௨ அந்த ஸ்திரி சாமுவேலைக் கண்டு, மகா சத்தமாய்க் கூப்பிட்டு, சவுலுடனே, ஏன் என்னை மோசம்போக்கினீர்? நீர்தானே சவுலென்றாள்.—
௰௩ இராசா அவளோடே, நீ பயப்படாதே; நீ காண்கிறது என்னவென்றதற்கு, அந்த ஸ்திரி சவுலுடனே, தேவர்கள் பூமியிலிருந்து எறுகிறதைக்
௰௪ காண்கிறேனென்றாள்.—அவருடைய ரூபம் என்னவென்று அவளைக் கேட்டான், அதற்கு அவள், சால்வையைப் போர்த்துக்கொண்டிருக்கிற முதிர்ந்தவயதான மனுஷன் எறிவருகிறான் என்றாள்; அதினாலே சவுல் அவன் சாமுவேலென்று அறிந்துகொண்டு, தரைமட்டும் முகம் குனிந்து,
௰௫ வணங்கினான்.— சாமுவேல் சவுலுடனே, நீ என்னை எறிவரப்பண்ணுகிறதினால், என்னைக் கலங்கடித்தது என்னவென்றதற்கு, சவுல் சொன்னதாவது: மிகவும் நெருக்கப்பட்டிருக்கிறேன்; ஏனெனில் பெலிஸ்தியர் எனக்கு விரோதமாய் யுத்தம்பண்ணுகிறார்கள்; பராபரனோவென்றால் என்னைவிட்டுவிலகினார்; அவர் தீர்க்கதரிசிகளைக் கொண்டாகிலும். சொப்பனங்களிலென்கிலும், எனக்கு அப்புறம் மறுவுத்தரவு அருளுகிறதில்லை; ஆகையால் நான் செய்யவேண்டியதை நீர் எனக்கு அறிவிக்கும்படிக்கு, உம்மை அழைப்பித்
௰௬ தேனென்றான்.— சாமுவேல் சொன்னதாவது: கர்த்தர் உன்னைவிட்டு விலகி, உனக்குச் சத்துருவாய்ப் போயிருக்கையில், நீ என்னைக் கேட்பா
௰௭ னேன்?—கர்த்தர் என்னைக்கொண்டு சொன்னபடியே செய்துகொண்டு, இராச்சியத்தை உன் கையிலிருந்து பறித்து, அதை உன் தோழனாகிய
௰௮ தாவீதுக்குக் கொடுத்தார்.— நீ கர்த்தருடைய சொல்கேளாமலும், ஆமலேக்கின்மேல் அவருக்கிருந்த கோபத்தின் உக்கிரத்தைத் தீர்த்துக்கொள்ளாமலும் போனபடியினாலே, கர்த்தர் இந்நாளிலே உனக்கு இந்தப்பிரகாரமாகச் செய்தார்.—
௰௯ கர்த்தர் உன்னுடைய சனமாகிய இஸ்ரவேலரையும் பெலிஸ்தியர் கையில் ஒப்புக்கொடுப்பார்; நாளை நீயும் உன் குமாரரும் என்னோடிருப்பீர்கள்; இஸ்ரவேலின் பாளயத்தையும் கர்த்தர் பெலிஸ்தியரின் கையில் ஒப்புக்கொடுப்பாரென்றான்.
௨௰ அக்கணமே சவுல் நெடிதாங்கிடையாய்த் தரையிலே விழுந்து, சாமுவேலின் வார்த்தைகளினாலே மிகவும் பயப்பட்டான்; அவன் இராப்பகல் முழுதும் ஒன்றும் சாப்பிடாதிருந்தபடியினாலே, அவனுக்குள் பெலனும் இல்லாதேபோ
௨௧ யிற்று.—அப்போது அந்த ஸ்திரி சவுலண்டைக்கு வந்து, அவன் மிகவும் கலங்கினவனென்று கண்டு, அவனோடே சொன்னதாவது: இதோ உம்முடைய அடியாளாகிய நான் உம்முடைய சொல்கேட்டு, என் பிராணனை என் கையிலே வைத்து, நீர் எனக்குச் சொன்ன உம்முடைய
௨௨ வார்த்தைகளுக்குக் கீழ்ப்படிந்தேனே.— இப்போதும் நீர் உம்முடைய அடியாளுடைய சொல்கேட்டு, நான் உமக்குமுன்னே வைக்கும் அப்பத்துண்டத்தைப் புசிப்பீராக; அப்போது நீர் வழிநடக்கத்தக்க பெலன் உமக்குள் இருக்குமென்றாள்.— அவனோவென்றால் தட் ௨௩
டுதல்பண்ணி, நான் புசிப்பதில்லை என்றான்; ஆனால் அவனுடைய ஊழியக்காரரும் அந்த ஸ்திரியும் அவனை மிகவும் வருந்திக்கொண்டதினால், அவன் அவர்கள் சொல்கேட்டு, தரையைவிட்டு எழுந்திருந்து, கட்டிலின்மேல் உளுக்காந்தான்.—அந்த ஸ்திரிக்குக் கொழுத்த கன்று ௨௪
க்குட்டி வீட்டிலிருந்தது; அதைத் தீவிரமாய் அடித்து, மாவெடுத்துப் பிசைந்து, அதைப் புளிப்பில்லாத அப்பங்களாகச் சுட்டு, — சவுலுக்கும் ௨௫
அவன் ஊழியக்காரருக்கும்முன்பாகக் கொண்டுவந்து வைத்தாள்; அவர்கள் புசித்து, எழுந்திருந்து, அந்த இராத்திரியிலேதானே புறப்பட்டுப் போனார்கள்.

## ௨௯. அதிகாரம்.

௧. தாவீது பெலிஸ்தியர்களோடே நடந்துபோனதும், ௩. அவர்களுடைய பிரபுக்களால் நீக்கப்பட்டதும். ௬. ஆகீசு அவனுடைய உண்மையைப் புகழ்ந்து விலக்கிவிட்டது.

பெலிஸ்தியர் தங்கள் இராணுவங்களையெல் ௧
லாம் ஆப்பேக்கிலே கூட்டிக்கொண்டிருக்கும்போதும், இஸ்ரவேலர் இஸ்ரெயேலிலிருக்கிற துரவண்டையிலே பாளயமிறங்கி இருக்கும்போதும்,—பெலிஸ்தியரின் அதிபதிகள் நூறும் ஆயிர ௨
முமான சேர்வைகளோடே நடந்துவந்தார்கள்; ஆனால் தாவீதும் அவன் மனுஷரும் ஆகீசோடே பின்தண்டிலே வந்தார்கள்.—அப்போது பெலிஸ் ௩
தியரின் பிரபுக்கள் இந்த எபிரேயர் ஏதுக்கென்றார்கள்; ஆகீசு அவர்களுடனே, இஸ்ரவேலின் இராசாவாகிய சவுலின் ஊழியக்காரனாயிருந்த இந்தத் தாவீது இத்தனை நாள்களும் இத்தனை வருஷங்களுமாய் என்னோடு இருந்ததில்லையோ? இவன் நம்முடைய வசமாய் ஓடிவந்த நாள்முதல்கொண்டு இந்நாள்வரைக்கும் நான் ஒன்றும் அவனில் கண்டுபிடித்ததில்லையென்றான்.—ஆனால் ௪
பெலிஸ்தியரின் பிரபுக்கள் அவன்மேல் கடுங்கோபமாகி, அவனோடே சொன்னதாவது: இந்த மனுஷன் நீர் அவனுக்குக் குறித்த தன் ஸ்தலத்திற்குத் திரும்பப் போகும்படிக்கு, அங்கே அவனை மறுபடியும் அனுப்பிவிடும்; யுத்தத்தில் இவன் நமக்குச் சத்துருவாயிராதபடிக்கு, இவன் நம்மோடேகூட யுத்தத்திற்கு இறங்கிவரவேண்டாம்; ஏனெனில் இவன் எதினாலே தன் ஆண்டவனுக்குத் தன்னைப் பிரியமாக்கிக்கொள்வான்? இந்த மனுஷருடைய தலைகளினாலல்லவோ?—சவுல் ஆயிரம்பேரையும் தாவீது பதினா ௫
யிரம்பேரையும் மடங்கடித்தானென்று இந்தத் தாவீதைக்குறித்தல்லவோ ஆடிப்பாடிச் சொன்னார்களென்றார்கள்.
அப்போது ஆகீசு தாவீதை அழைத்து, அவ ௬
னோடே சொன்னதாவது: நீ உத்தமனென்றும், நீ பாளயத்தில் என்னோடே போக்கும் வரத்து

மாயிருக்கிறது என் பார்வைக்கு நல்லதென்றும்,
கர்த்தருடைய ஜீவனைக்கொண்டு சொல்லுகி
றேன்; ஏனென்றால் நீ என் வசமாய் வந்த நாள்
முதல்கொண்டு இற்றைவரைக்கும் நான் உன்
னில் ஒரு பொல்லாப்பும் கண்டதில்லை; அந்த
அதிபதிகளின் பார்வைக்கோவென்றால், நீ பிரி
ஏ யப்பட்டவனல்ல.—ஆகையால் நீ பெலிஸ்திய
ருடைய அதிபதிகளின் பார்வைக்கு வராததைச்
செய்யாதபடிக்கு, இப்போது சமாதானமாய்த்
அ திரும்பப் போய்விடு என்றான்.—தாவீது ஆகீசு
டனே, ஏன்? நான் செய்ததென்ன? நான் வந்து,
இராசாவாகிய என் ஆண்டவனுடைய சத்துருக்
களோடே யுத்தம்பண்ணாதபடிக்கு, நான் உமக்
குமுன்பாக வந்திருக்கிற அன்றுமுதல்கொண்டு
இன்றைத்தினம்மட்டும் உம்முடைய அடியானி
கூ லே கண்டுபிடித்ததென்னவென்றான்.—ஆனால்
ஆகீசு தாவீதுக்குப் பிரதியுத்தாரமாகச் சொன்ன
தாவது: அதை அறிவேன்; ஏனெனில் நீ பராபர
னுடைய தூதனைப்போல, என் பார்வைக்குப்
பிரியமானவன்; ஆனால் இவன் எங்களோடே
கூட யுத்தத்திற்கு வந்தேறவேண்டாமென்றுபெ
௰ லிஸ்தியரின் பிரபுக்கள் சொன்னார்கள்.—இப்
போதும் நீ நாளை அதிகாலமே உன்னோடே
வந்த உன் ஆண்டவனுடைய வேலைக்காரரைக்
கூட்டிக்கொண்டு, உங்களுக்கு வெளிச்சமாகிற
பொழுது, விடியும் நேரத்திலேதானே போய்வி
டுங்களென்றான்.
௰க அப்படியே தாவீது அதிகாலமே தன் மனுஷ
ரைக் கூட்டிக்கொண்டு, பொழுதுவிடிகிற நேரத்
திலே, பெலிஸ்தியரின் தேசத்திற்குத் திரும்பப்
போகப் புறப்பட்டான்; பெலிஸ்தியரோவெ
னில் இஸ்ரெயேலுக்கு ஏறிப்போனார்கள்.

## ங௰. அதிகாரம்.

க. ஆமலேக்கியர் சிக்லாகைக் கொள்ளையடித்தது. ச. தாவீது அவர்களைப் பின்தொடரப் பராபரனால் தைரியம்கொண்டது. ௰க. சோர்ந்துபோய் மறுபடியும் பலனடைந்த எகிப்தியன் உதவியினால், அவன் சத்துருக்கள் கொள்ளையடித்துக்கொண்டுவந்த பொருள்களை மீட்டுக்கொண்டது. உஉ. கொள்ளையடித்த உடைமைகளை யுத்தம்செய்தவர்களுக்கும் இரஸ்துக்களை காத்துக்கொண்டிருந்தவர்களுக்கும் சமமாய்ப் பங்கிடுதற்கு கட்டளை. உக. தாவீது தன் சிநேகிதர்களுக்கு வெகுமதியை அனுப்பியது.

க ஆனால் தாவீதும் அவன் மனுஷரும் மூன்றாம்
நாளிலே, சிக்லாகுக்கு வந்து சேருகிறதற்குள்
ளே, ஆமலேக்கியர் தென்புறச் சீமையின்மேலும்
சிக்லாகின்மேலும்விழுந்து, சிக்லாகைக் கொள்
ளை அடித்து, அதை அக்கினியால் சுட்டுப்போட்
உ டு,—அதிலிருந்த ஸ்திரிகளாகிய சிறியவர்களை
யும் பெரியவர்களையும் சிறைபிடித்து, ஒருவரை
யும் கொன்றுபோடாமல், அவர்களைப் பிடித்
துக்கொண்டு, தங்கள் வழியே போனார்கள்.—
ங தாவீதும் அவன் மனுஷரும் அந்தப் பட்டணத்
திற்கு வந்தபோது, இதோ அது அக்கினியினாலே
சுட்டுப்போடப்பட்டதென்றும், தங்கள் பெண்
சாதிகளும் தங்கள் குமாரரும் தங்கள் குமாரத்தி
களும் சிறைபிடித்துக்கொண்டு போகப்பட்டார்
ச களென்றும் கண்டார்கள்.—அப்போது தாவீதும்
அவனோடிருந்த சனமும் அழுகிறதற்குத் தங்க
ளில் பெலனில்லாமல் போகும்மட்டும், சத்த
மிட்டு அழுதார்கள்.—தாவீதின் இரண்டு பெண் ரு
சாதிகளாகிய இஸ்ரெயேல் ஊராளான அகிநோ
வாமும், கற்மேல் ஊராளான நாபாலின் பெண்
சாதியாயிருந்த அபிகாயிலும், சிறைபிடித்துக்
கொண்டுபோகப்பட்டவர்களாயிருந்தார்கள்.—
தாவீது மிகவும் நெருக்கப்பட்டான்; ஏனென் ௬
றால் சகல சனமும் தங்கள் தங்கள் குமாரர் குமா
ரத்திகள்நிமித்தம் மனக்கிலேசமானதினாலே, அ
வனைக் கல்லெறியவேண்டுமென்று சனங்கள்
சொன்னார்கள்; தாவீதோவென்றால் தன் பராபர
னாகிய கர்த்தருக்குள்ளே தன்னைத் திடனாக்கிக்
கொண்டு,
அகிமேலேக்கின் குமாரனாகிய அப்பியத்தா ஏ
ரென்ற ஆசாரியனுடனே, ஆசாரியசால்வையை
என்னண்டைக்குக் கொண்டுவாவென்றான்;
அப்பியத்தார் ஆசாரியசால்வையைத் தாவீதண்
டைக்குக் கொண்டுவந்தபிற்பாடு, — தாவீது அ
கர்த்தரை, நான் அந்தத் தண்டைப் பின்தொடரு
வேனோ, அதைப் பிடிப்பேனோவென்று கேட்
டான்; அதற்கு அவர் அதைப் பின்தொடர்; ஏ
னென்றால் அதை நீ பிடிக்கவே பிடித்து, இரட்
சிப்பு உண்டுபண்ணுவாயென்றார்.—அப்போது கூ
தாவீதும் அவனோடிருந்த அறுநூறுபேரும் போ
னார்கள்; அவர்கள் பேசோர் ஆற்றண்டைக்கு
வந்தபோது அங்கே சிலர் நின்றுபோனார்கள்.—
தாவீதோவென்றால் நானூறுபேரோடும்கூடத் ௰
தொடர்ந்துபோனான்; ஏனெனில் இருநூறுபேர்
பேசோர் ஆற்றைக் கடக்கமாட்டாதபடிக்கு,
விடாய்த்தபடியினாலே நின்றுபோனார்கள்.
ஒரு எகிப்து மனுஷனை வெளியிலே கண்டு ௰க
பிடித்து, அவனைத் தாவீதண்டைக்குக் கொண்டு
வந்து, புசிக்க அவனுக்கு அப்பமும் குடிக்கத்
தண்ணீரும்கொடுத்து,—அத்திப்பழ அடையின் ௰உ
ஒரு துண்டையும், வற்றலான இரண்டு திராட்
சப்பழக்குலைகளையும், அவனுக்குக் கொடுத்தார்
கள்; அதை அவன் சாப்பிட்டபிற்பாடு, அவ
னுடைய உயிர் திரும்ப அவனுக்கு வந்தது;
ஏனென்றால் இராப்பகல் மூன்றுநாளாய் அப்
பம் சாப்பிடாமலும் தண்ணீர்குடியாமலும் இருந்
தான்.—தாவீது அவனை நீ யாருடையவன்? நீ எவ் ௰ங
விடத்தானென்று கேட்டதற்கு, நான் ஒரு ஆம
லேக்கியனுடைய வேலைக்காரனாகிய எகிப்து
தேசத்துப் பிள்ளையாண்டான்; இன்றைய மூன்
றாம்நாள் நான் வியாதியானபோது, என் எசமா
னன் என்னைக் கைவிட்டான்.—நாங்கள் கிரேத் ௰ச
தியருடைய தென்புறத்தின்மேலும், யூதாவுக்க
டுத்ததின்மேலும், காலேப்புடைய தென்புறத்
தின்மேலும் விழுந்து, சிக்லாகை அக்கினியாலே
சுட்டுப்போட்டோமென்றான்.—தாவீது அவனை, ௰ரு
நீ என்னை அந்தத் தண்டுக்குக் கொண்டுபோவா
யோவென்று கேட்டதற்கு, அவன் நீர் என்னைக்
கொன்றுபோடுவதுமில்லை, என்னை என் எசமா
னன் கையில் ஒப்புக்கொடுப்பதுமில்லை என்று
பராபரன்மேலே எனக்கு ஆணையிட்டீரானால்,

உம்மை அந்தத் தண்டுக்குக் கொண்டுபோவே
னென்றான்.
௰௬ அவனை இவன் கொண்டுபோகிறபோது,
இதோ அவர்கள் வெளியெங்கும் பரவிப் புசித்
துக்குடித்துத் தாங்கள் பெலிஸ்தியர் தேசத்திலும்
யூதாதேசத்திலும் கொள்ளையிட்டுவந்த மகா பெ
ரிதான அந்த எல்லாக் கொள்ளைக்காகவும் கொ
௰௭ ண்டாடிக்கொண்டிருந்தார்கள்.–அவர்களைத் தா
வீது இருட்டான வேளைதுவக்கி மறுநாள் சாயங்
காலம்மட்டும் முறியடித்தான்; ஒட்டகங்கள்
மேலே ஏறி ஓடிப்போன நானூறு வாலிபரைத்
தவிர, அவர்களில் வேறொருவரும் தப்பிப்போ
௰௮ னதில்லை. — ஆமலேக்கியர் பிடித்துக்கொண்டு
போன எல்லாவற்றையும், தன்னுடைய இரண்டு
பெண்சாதிகளையும், தாவீது தப்பவைத்தான்.—
௰௯ அவர்கள் கொள்ளையாடிக்கொண்டுபோன எல்
லாவற்றிலும், சிறியதிலும் பெரியதிலும், குமார
ரிலும், குமாரத்திகளிலும், ஒன்றும் குறைபடா
மல் எல்லாவற்றையும் தாவீது திருப்பிக்கொண்
௨௰ டான்.—எல்லா ஆடுமாடுகளையும் தாவீது பிடித்
துக்கொண்டான்; அவைகளைத் தங்கள் மிருகஜீ
வன்களுக்கு முன்னாலே ஓட்டி, இவை தாவீது
கொள்ளையாடினவைகளென்றார்கள்.
௨௧ விடாய்ப்பட்டதினாலே தாவீதைப் பின்செல்
லாமல், பேசோர் ஆற்றண்டையிலே தரித்தி
ருந்த இருநூறுபேரண்டைக்குத் தாவீது வருகிற
போது, இவர்கள் தாவீதுக்கும் அவனோடிருந்த
சனத்திற்கும் எதிர்கொண்டு வந்தார்கள்; தாவீது
அந்தச் சனத்தண்டையிலே சேர்ந்து, அவர்கள்
௨௨ சுகசெய்தியை விசாரித்தான்.—அப்போது தாவீ
தோடே நடந்துவந்த மனுஷரில் பொல்லாதவர்
களும் பேலியாளின் மனுஷருமான எல்லாரும்
பிரதியுத்தாரமாக, அவர்கள் எங்களோடே வராத
படியினாலே நாங்கள் தப்பவைத்த கொள்ளையு
டைமைகளில் அவர்களுக்கு ஒன்றும் கொடுப்ப
தில்லை; அவர்களில் ஒவ்வொருவன் தன் தன்
பெண்சாதியையும் தன் தன் பிள்ளைகளையுமே
௨௩ அழைத்துப்போகட்டுமென்றார்கள். — ஆனால்
தாவீது சொன்னதாவது: என் சகோதரரே, கர்த்தர்
நமக்குக் கொடுத்ததை நீங்கள் இப்படிச் செய்ய
வேண்டாம்; ஏனென்றால் கர்த்தர் நம்மைக் காப்
பாற்றி, நம்மேல் வந்திருந்த அந்தத் தண்டை நம்
௨௪ முடைய கையில் ஒப்புக்கொடுத்தார்.–இந்தக்கா
ரியத்தில் உங்களுக்குக் கேள்விகொடுக்கத்தக்க
வன் யார்? யுத்தத்திற்கு இறங்கிப்போனவர்களின்
பங்கு எம்மாத்திரமோ, அம்மாத்திரம் இரஸ்துக்க
ளண்டையில் இருந்தவர்களின் பங்கும் இருக்க
வேண்டும்; சரிப்பங்காகப் பங்கிடுவார்களாகவெ
௨௫ ன்றான்.—அப்படியே அந்நாள் முதல்கொண்டு
நடக்கிறதாயிற்று; ஏனென்றால் அதை இஸ்ர
வேலிலே இந்நாள்வரைக்கும் இருக்கும் கட்ட
ளையும் பிரமாணமுமாக வைத்தான்.
௨௬ தாவீது சிக்லாகுக்கு வந்தபோது, அவன் கொ
ள்ளையாடினவைகளிலே தன் சிநேகிதராகிய
யூதாவின் மூப்பருக்குச் சிலவற்றை அனுப்பி,
இதோ கர்த்தருடைய சத்துருக்களின் கொள்
ளையில் உங்களுக்குண்டாயிருக்கும் ஆசீர்வாத
மென்று சொல்லச்சொன்னான்.—யாருக்கு அ ௨௭
னுப்பினானென்றால் பேத்தேலில் இருக்கிறவர்க
ளுக்கும், தெற்கான ராமோத்தில் இருக்கிறவர்
களுக்கும், யாத்தீரில் இருக்கிறவர்களுக்கும்,—
ஆரோவேரில் இருக்கிறவர்களுக்கும், சிப்மோத் ௨௮
தில் இருக்கிறவர்களுக்கும், எஸ்தேமோகாவில்
இருக்கிறவர்களுக்கும், — ராக்காலில் இருக்கிற ௨௯
வர்களுக்கும், யெர்மெயெலியரின் பட்டணங்
களில் இருக்கிறவர்களுக்கும், கேனியரின் பட்
டணங்களில் இருக்கிறவர்களுக்கும், — ஒற்மா ௩௰
வில் இருக்கிறவர்களுக்கும், கொராசானில் இ
ருக்கிறவர்களுக்கும், ஆற்றாகில் இருக்கிறவர்க
ளுக்கும்,–எபிரோனில் இருக்கிறவர்களுக்கும், ௩௧
தாவீதும் அவன் மனுஷரும் நடமாடின எல்லா இ
டங்களில் இருக்கிறவர்களுக்கும் அனுப்பினான்.

## ௩௧. அதிகாரம்.

௧. சவுல் தன் சேனைகளை இழந்ததும், அவன் குமாரர்கள் கொல்லப்பட்டதும், தானும் ஆயுதம் பிடித்தவனும் தம்மைத்தாமே கொன்றதும். ௭. இஸ்ரவேலர்கள் விட்டுவிட்ட பட்டணங்களில் பெலிஸ்தியர்கள் வாசம்பண்ணினது. ௮. அவர்கள் செத்தவர்கள்மேல் தங்கள் மேன்மை பாராட்டியது. ௰௧. கீலேயாத்தியாபேசு பட்டணத்தார் அந்த உடல்களை இரவில் எடுத்து, யாபேசில் தக்கத்தோடு சுட்டெரித்து, எலும்புகளை அடக்கம்பண்ணினது.

பெலிஸ்தியரோவென்றால் இஸ்ரவேல்மேல் ௧
யுத்தம்பண்ணினார்கள்; ஆனால் இஸ்ரவேல் மனு
ஷர் பெலிஸ்தியருக்குமுன்பாக முறிந்தோடி,
கில்போகாப் பர்வதத்திலே வெட்டுண்டு விழுந்
தார்கள்.–பெலிஸ்தியர் சவுலையும் அவன் குமார ௨
ரையும் நெருக்கி, சவுலின் குமாரராகிய யோனத்
தானையும் அபீன்தாபையும் மல்கிசூகாவையும்
வெட்டினார்கள்.—அம்பு எய்கிற வில்காரர் சவு ௩
லுக்கு நேராகப் பிடித்ததினால், அவன்மேல் யுத்
தம் பலத்தது; அப்போது சவுல் வில்காரருக்கு
மிகவும் பயப்பட்டு,—தன் ஆயுதங்களைப் பிடிக் ௪
கிறவனோடே, அந்தச் சுன்னத்தில்லாதவர்கள்
வந்து, என்னைக் குத்திப்போட்டு, என்னை இ
கழ்ச்சிபண்ணாதபடிக்கு, நீ உன் பட்டையத்தை
உருவி, என்னை அதினாலே குத்திப்போடென்
றான்; ஆனால் அவன் ஆயுதங்களைப் பிடிக்கிற
வன் மிகவும் பயப்படுகிறதினால், அப்படிச் செய்
யமாட்டேனென்றான்; அப்போது சவுல் பட்
டையத்தை நட்டு, அதின்மேல் விழுந்தான்.—
சவுல் செத்துப்போனதை அவன் ஆயுதங்களைப் ௫
பிடிக்கிறவன் கண்டபோது, அவனும் தன்
பட்டையத்திலே விழுந்து, அவனோடேகூடச்
செத்துப்போனான். — அப்படியே அன்றைத்தி ௬
னம் சவுலும், அவன் மூன்று குமாரரும், அவன்
ஆயுதங்களைப் பிடிக்கிறவனும், அவனுடைய
எல்லா மனுஷரும், ஒருமிக்கச் செத்துப்போ
னார்கள்.
இஸ்ரவேல் மனுஷர் முறிந்தோடினார்களென் ௭
றும், சவுலும் அவன் குமாரரும் செத்துப்போ
னார்களென்றும், பள்ளத்தாக்குக்கு இப்பாலும்
யோர்தானுக்கு இப்பாலுமிருந்த இஸ்ரவேல்

மனுஷர் கண்டபோது, அவர்கள் பட்டணங்க
ளைவிட்டு ஓடிப்போனார்கள்; அப்போது பெலி
ஸ்தியர் வந்து, அவைகளிலே குடியிருந்தார்கள்.
௮ வெட்டுண்டவர்களை உரிந்துகொள்ள, பெ
லிஸ்தியர் மறுநாளிலே வந்தபோதோவெனில்,
அவர்கள் சவுலும் அவன் மூன்று குமாரரும் கில்
போவாப் பர்வதத்திலே கிடக்கிறதைக் கண்டு,–
௯ அவன் தலையை வெட்டி, அவன் ஆயுதங்களை
எடுத்துக்கொண்டு,தங்கள் விக்கிரகங்களின்வீட்
டிலும் சனத்திற்குள்ளும் செய்தியைப் பிரசங்
கிக்கத்தக்கவிதமாக, அவைகளைப் பெலிஸ்தியர்
௰ தேசத்திலே சுற்றிலும் அனுப்பி,—அவன் ஆயு
தங்களை அஸ்தரோத் தேவனுடைய வீட்டிலே
வைத்து, அவன் உடலைப் பெத்சானின் அலங்
கத்திலே தூக்கிப்போட்டார்கள்.
பெலிஸ்தியர் சவுலுக்குச் செய்ததைக் கீலே ௰௧
யாத் தேசத்து யாபேசு பட்டணத்தார் கேட்ட
போதோவெனில்,—அவர்களிலே பலத்த மனு ௰௨
ஷரெல்லாரும் எழுந்து, இராமுழுதும் நடந்து
போய், பெத்சானின் அலங்கத்திலிருந்த சவு
லின் உடலையும் அவன் குமாரரின் உடல்
களையும் எடுத்து, யாபேசுக்குக் கொண்டுவந்து,
அவைகளை அங்கே சுட்டெரித்துப்போட்டு,—
அவர்களுடைய எலும்புகளை எடுத்து, யாபேசி ௰௩
லிருக்கிற தோப்பிலே அடக்கம்பண்ணி, ஏழு
நாள் உபவாசம்பண்ணினார்கள்.

## II. SAMUEL.

# சாமுவேலின்

## இரண்டாம் புஸ்தகம்.

### க. அதிகாரம்.

*க. சவுல் அபசெயப்பட்ட சங்கதியை அறிவித்து, அவனைக் கொன்றேனென்று சொன்ன ஆமலேக்கியன் கொல்லப்பட்டது. ௰௭. தாவீது சவுலையும் யோனத்தானையும்குறித்துப் பாட்டுப்பாடிப் புலம்பினது.*

௧ சவுல் மரித்தபிற்பாடு, தாவீது ஆமலேக்கியரை
முறியடித்து,சிக்லாகுக்குத் திரும்பிவந்து, இரண்
டுநாள் அங்கே இருந்தபிற்பாடு சம்பவித்ததே
௨ தென்றால்,—இதோ மூன்றாம்நாளிலே தன் வஸ்
திரங்களைக் கிழித்துக்கொண்டு,தன் தலையின்மே
லே புழுதியைப் போட்டுக்கொண்டிருந்த ஒரு
மனுஷன் சவுலின் பாளயத்திலிருந்து வந்தான்;
அவன் தாவீதண்டைக்கு வருகையில், தரையி
௩ லே விழுந்து வணங்கிக்கொண்டான்.—தாவீது
அவனை நீ எங்கேயிருந்து வந்தாயென்று கேட்
டதற்கு,அவன் இஸ்ரவேலின் பாளயத்திலிருந்து
௪ தப்பிவந்தேனென்றான்.—தாவீது அவனை நடந்த
செய்தி என்ன? நீ எனக்கு அறிவியென்று கேட்
டதற்கு, அவன், சனம் யுத்தத்தைவிட்டு முறிந்து
ஓடி, சனத்தில் அநேகம்பேரும் விழுந்து மடிந்
தார்கள்; சவுலும் அவர் குமாரனாகிய யோனத்தா
௫ னும் மடிந்தார்களென்றான்.—சவுலும் அவன் கு
மாரனாகிய யோனத்தானும் மடிந்துபோனதை, நீ
எதினாலே அறிவாயென்று தாவீது தனக்கு அதை
௬ அறிவிக்கிற வாலிபனைக் கேட்டதற்கு,—அந்த
வாலிபன் சொன்னதாவது: நான் தற்செயலாய்க்
கில்போகாப் பர்வதத்தில் வந்தேன்; அப்போது
இதோ சவுல் தம்முடைய ஈட்டியின்மேலே
சாய்ந்துகொண்டிருந்தார்; ஆனால் இதோ இரதங்
களும் குதிரைக்காரரும் அவரை நெருங்கியிருந்
௭ தார்கள். — அவர் திரும்பிப்பார்த்து, என்னைக்
கண்டு, என்னை அழைத்தார்; இதோ இருக்கிறே
௮ னென்றேன்.—அப்போது அவர் நீ யாரென்று
என்னைக் கேட்டதற்கு, நான் ஆமலேக்கிய
௯ னென்று அவரோடே சொன்னேன். — அப்
போது அவர் என்னுடனே, நீ என்னண்டை
யில் சேர்ந்து நின்று, என்னைக் கொன்றுபோடு;
ஏனென்றால் குத்து சீராவிலே பிடித்தது; என்
சீவன் இன்னம் முழுதும் எனக்குள்ளே இருக்கி
௰ றதென்றார்.—அப்போது நான் அவரண்டையில்
சேர்ந்து, அவரைக் கொன்றுபோட்டேன்; ஏனெ
ன்றால் அவர் விழுந்ததற்குப்பிற்பாடு, பிழைக்க
மாட்டாரென்று நான் அறிவேன்; பிற்பாடு அவர்
தலையின்மேல் இருந்த முடியையும் அவர் புயத்
திலிருந்த அஸ்தகடயத்தையும் எடுத்துக்கொண்
டு, அவைகளை இங்கே என் ஆண்டவனண்டைக்
குக் கொண்டுவந்தேனென்றான்.
அப்போது தாவீதும் அவனோடிருக்கிற எல்லா ௰௧
மனுஷரும் தங்கள் வஸ்திரங்களைப் பிடித்துக்
கிழித்துக்கொண்டு,—சவுலும், அவன் குமாரனா ௰௨
கிய யோனத்தானும், கர்த்தருடைய சனமும்,
இஸ்ரவேல் வீட்டாரும், பட்டையத்தாலே
விழுந்தபடியினாலே, புலம்பி அழுதுகொண்டு,
அஸ்தமான காலம்மட்டும் உபவாசமாயிருந்தார்
கள்.
தாவீது அதைத் தனக்கு அறிவித்த வாலி ௰௩
பனை நீ எவ்விடத்தானென்று கேட்டதற்கு,
அவன் நான் அந்நியசாதியானவனுடைய மகன்,
நான் ஆமலேக்கியனென்றான்.—அப்போது தா ௰௪
வீது அவனுடனே, கர்த்தர் அபிஷேகம்பண்
ணுவித்தவரை அழிக்கிறதற்கு, நீ உன் கையை
நீட்டப் பயப்படாமல்போனதெப்படி என்று
சொல்லி,-வாலிபரில் ஒருவனைக் கூப்பிட்டு, நீ ௰௫
சேர்ந்து, அவன்மேல் விழுந்து, அவனை வெட்
டென்றான்; இவன் அவனை வெட்டினான்; அ
வன் செத்தான் -தாவீது அவனைப்பார்த்து, உன் ௰௬
இரத்தப்பழி உன் தலையின்மேல் இருப்பதாக;
ஏனெனில் கர்த்தர் அபிஷேகம்பண்ணுவித்தவ
ரை நான் கொன்றுபோட்டேனென்று உன்வாய்
தானே உனக்கு விரோதமான உத்தரவு சொல்
லிற்றென்றான்.
தாவீது சவுலின்மேலும், அவன் குமாரனாகிய ௰௭
யோனத்தானின்மேலும்பாடின புலம்பலாவது:—
இதோ வில் எய்கிறதை யூதா புத்திரருக்குக் கற் ௰௮
றுக்கொடுக்க, அது சன்மார்க்கரின் புஸ்தகத்தில்
எழுதிவைக்கப்படவேண்டுமென்று சொல்லி,
பின்னையும் சொன்னதாவது:—ஆ இஸ்ரவேலின் ௰௯
அலங்காரம் உன்னுடைய மேடுகளின்மேல்
வெட்டுண்டது; பலசாலிகள் எப்படி விழுந்தார்
கள். — பெலிஸ்தியரின் குமாரத்திகள் சந்தோ ௨௰
ஷப்படாதபடிக்கும், சுன்னத்தில்லாதவர்களின்
குமாரத்திகள் களிகூராதபடிக்கும், அதைக் காத்
பட்டணத்தில் அறிவியாமலும் அஸ்கலோனின்
வீதிகளிலே பிரசங்கியாமலும் இருங்கள்.—கில் ௨௰௧
போகாப் பர்வதங்களே, உங்கள்மேலே பனி
யும் மழையும் பெய்யாமலும், காணிக்கை செலுத்
தத்தக்க பலனைக்கொடுக்கும் வயல்கள் இல்லாம

லும் போவதாக; ஏனென்றால் அங்கே பலசாலி
களுடைய கேடயமும், சவுல் எண்ணெயால்
அபிஷேகம்பண்ணப்படாதவர்போல அவர் கே
டயமும், எண்ணமற்றவைகளாய்ப்போயின.—
௨௨ யோனத்தானின் வில்லும் சவுலின் பட்டைய
மும் மடிந்து விழுகிறவர்களின் இரத்தம் சிந்தப்
படாமலும், பலவான்களுடைய கொழுப்பிலே
படாமலும், ஒருக்காலும் பின்னிட்டுப்போன
௨௩ துமில்லை, வீணாய்த் திரும்பினதுமில்லை.—உயி
ரோடே இருக்கையில், பிரியமும் இன்பமுமா
யிருக்கப்பட்ட சவுலும் யோனத்தானும் தங்கள்
மரணத்திலும் பிரிந்துபோனதில்லை;கழுகுகளைப்
பார்க்கிலும் வேகமும் சிங்கங்களைப்பார்க்கிலும்
௨௪ முனையுமுள்ளவர்களாயிருந்தார்கள்.—இஸ்ரவே
லின் குமாரத்திகளே, உங்களுக்கு இரத்தாம்ப
ரத்தைச் சிறப்பாயுடுப்பித்து, உங்கள் உடுப்பின்
மேலே பொன் ஆபரணங்களைத் தரிக்கப்பண்
௨௫ ணின சவுலுக்காக அழுங்கள்.—யுத்தத்திற்குள்
ளே பலசாலிகள் எப்படி விழுந்தார்கள்; உன்
மேடுகளின்மேலே யோனத்தான் எப்படி வெட்
௨௬ டுண்டான்? — யோனத்தானாகிய என் சகோதர
னே, உனக்காக எனக்கு வியாகுலமாயிருக்கின்
றது;நீ எனக்கு வெகு இன்பமாயிருந்தவன்; ஸ்தி
ரிகளின் சிநேகத்தைப்பார்க்க, உன் சிநேகம்
௨௭ எனக்கு ஆச்சரியமாயிருந்தது. — பலவான்கள்
எப்படி விழுந்தார்கள்; யுத்த ஆயுதங்கள் எப்படி
அழிந்துபோயின என்பதுதானே.

## உ. அதிகாரம்.

௧. தாவீது பராபரனுடைய கட்டளையின்படி தன்னுடைய கூட்டத்தோடே எபிரோனுக்கு வந்து, யூதாவின் சனங்கள்மேல் இராசாவாக்கப்பட்டது. ௪. அவன் கீலேயாத் யாபேசின் மனிதர் சவுலின்மேல் வைத்த தயைக்காக அவர்களைப் புகழ்ந்தது. ௮. அப்னேர் இஸ்போசேத்தை இஸ்ரவேலரின்மேல் இராசாவாக்கினது. ௰௨. அப்னேரின் மனிதர்களில் பன்னிரண்டுபேர்களுக்கும் யோவாபின் மனிதர்களின் பன்னிரண்டு பேர்களுக்கும் உண்டான மரணத்துக்கேதுவான சண்டை. ௰௮. ஆசகேல் கொல்லப்பட்டது. ௨௫. அப்னேர் சொல்கேட்டு, யோவாப் தன் சேனைகள் திரும்பிவர எக்காளம் ஊதினது. ௩௨. ஆசகேல் அடக்கம் பண்ணப்பட்டது.

௧ இதற்குப்பிற்பாடு தாவீது கர்த்தரை, நான் யூதா
வின் பட்டணங்களில் ஒன்றிலே போயேறுவே
னோ என்று கேட்டான்; கர்த்தர் அவனுடனே,
போயேறென்றார்; எவ்விடத்திலே போயேறு
வேன் என்று தாவீது கேட்டதற்கு, அவர் எபி
௨ ரோனிலே என்றார்.—அப்படியே தாவீது தன்
இரண்டு பெண்சாதிகளாகிய இஸ்ரெயேல் ஊரா
ளான அகினோகாமோடும், நாபாலின் பெண்சா
தியாயிருந்த கற்மேல் ஊராளான அபிகாயிலோ
௩ டும்கூட அவ்விடத்திலே போயேறி,—தன்னோ
டிருக்கிற மனுஷரில் அவரவரையும், அவர்கள்
வீட்டாரையும், போயேறப்பண்ணினான்; அவர்
கள் வந்து, எபிரோனின் சிற்றூர்களிலே குடி
௪ யேறினார்கள்.—அப்போது யூதாவின் மனுஷர்
வந்து, அங்கே தாவீதை யூதாவீட்டாரின்மேல்
இராசாவாக அபிஷேகம்பண்ணினார்கள்; கீலே
யாத் தேசத்து யாபேசின் மனுஷர் சவுலை அடக்
கம்பண்ணினவர்களென்று அவர்கள் தாவீதுக்கு
அறிவித்தபோது,

தாவீது கீலேயாத் தேசத்து யாபேசின் மனுஷ ௫
ரண்டைக்குத் தானாபதிகளை அனுப்பி, நீங்கள்
உங்கள் ஆண்டவனாகிய சவுலுக்கு இந்தத் தயை
யைச் செய்து, அவரை அடக்கம்பண்ணினபடி
யினாலே, நீங்கள் கர்த்தருக்கு ஆசீர்வதிக்கப்பட்
டவர்கள்.—இப்போதும் கர்த்தர் உங்களைக் கிரு ௬
பையும் உண்மையுமாய் நடத்துவாராக; நீங்கள்
இந்தக் காரியத்தைச் செய்தபடியினாலே, நா
னும் இந்த நன்மைக்குத்தக்கதாக உங்களை நடத்
துவேன்.—இப்போதும் நீங்கள் நல்ல சேவகரா ௭
யிருக்கும்படிக்கு, உங்கள் கைகள் திடப்படக்
கடவது; ஏனெனில் உங்கள் ஆண்டவனாகிய
சவுல் மரித்திருந்தும், யூதாவீட்டார் என்னைத்
தங்கள்மேல் இராசாவாக அபிஷேகம்பண்ணி
னார்களென்று அவர்களுக்குச் சொல்லச்சொன்
னான்.

சவுலின் படைத்தலைவனாகிய நேரின் குமார ௮
னான அப்னேரோவென்றால், சவுலின் குமார
னாகிய இஸ்போசேத்தைச் சேர்த்து, அவனை மக
னாயிமுக்கு அழைத்துக்கொண்டுபோய்,—அவ ௯
னைக் கீலேயாத்தின்மேலும், அசூரியர்மேலும்,
இஸ்ரெயேலின்மேலும், எப்பிராயீமின்மேலும்,
பென்யமீன்மேலும், இஸ்ரவேலனைத்தின்மே
லும் இராசாவாக்கினான்.—சவுலின் குமாரனாகிய ௰
இஸ்போசேத் இஸ்ரவேலின்மேல் இராசாவாகி
றபோது, நாற்பது வயதாயிருந்து, இரண்டுவரு
ஷம் இராச்சியபாரம்பண்ணினான்; யூதாவீட்
டார்மாத்திரம் தாவீதைப் பின்பற்றினார்கள்.—
தாவீது எபிரோனிலே யூதாவீட்டாரின்மேல் இ ௰௧
ராசாவாயிருந்த நாள்களின் இலக்கம் ஏழுவருஷ
மும் ஆறுமாதமுமானது.

நேரின் குமாரனாகிய அப்னேர் சவுலின் குமா ௰௨
ரனாகிய இஸ்போசேத்தின் சேவகரைக் கூட்
டிக்கொண்டு, மகனாயிமிலிருந்து கிபேயோனுக்
குப் புறப்பட்டுவந்தான்.—அப்போது சேருயா ௰௩
வின் குமாரனாகிய யோவாபும் தாவீதின் சேவ
கரும் புறப்பட்டார்கள்; கிபேயோனின் குளத்
தண்டையில் ஒன்றுக்கொன்று எதிர்பட்டு, அவர்
கள் குளத்திற்கு அந்தப்பக்கத்திலும் இவர்கள்
குளத்திற்கு இந்தப்பக்கத்திலும் இறங்கினார்
கள். — அப்னேர் யோவாபுடனே, வாலிபர் ௰௪
எழுந்து, நமக்குமுன்பாகச் சிலம்பம்பண்ணட்
டுமே என்றான்; அதற்கு யோவாப், அவர்கள்
எழுந்து, அப்படிச் செய்யட்டுமென்றான்.—அப் ௰௫
போது சவுலின் குமாரனாகிய இஸ்போசேத்தின்
பக்கத்திற்குப் பென்யமீன் மனுஷரில் இலக்கத்
திற்குப் பன்னிரண்டுபேரும், தாவீதுடைய சே
வகரிலே பன்னிரண்டுபேரும் எழுந்து, இப்பா
லே வந்து,—ஒருவர் தலையை ஒருவர் பிடித்து, ௰௬
ஒருவருடைய விலாவிலே ஒருவர் பட்டையத்தி
னாலே குத்தி, ஒருமிக்க விழுந்தார்கள்; அதினா
லே கிபேயோனிலிருக்கிற அந்த ஸ்தலம் சூர
ரின் நிலமென்னப்பட்டது. — அன்றைத்தினம் ௰௭
மிகவும் கடினமான யுத்தமாகி, அப்னேரும்

இஸ்ரவேல் மனுஷரும் தாவீதின் சேவகரால்
முறியடிக்கப்பட்டார்கள்.
௰௮ அங்கே செருயாவின் மூன்று குமாரராகிய
யோவாபும் அபிசாயும் ஆசகேலும் இருந்தார்
கள்; ஆசகேலோவென்றால் வெளியிலிருக்கிற
கலைமான்களில் ஒன்றைப்போலத் தீவிரக்கால்
௰௯ களுள்ளவனாயிருந்து,—அப்னேரைப் பின்தொ
டர்ந்து, அப்னேரைத் துரத்துகிறதினாலே, வல
துபுறத்திலாகிலும் இடதுபுறத்திலாகிலும், அவ
௨௰ னைவிட்டு விலகாதிருந்தான்.—அப்னேர் திரும்
பிப் பார்த்து, நீ ஆசகேலல்லவோ என்றான்;
௨௧ அவன் நான்தானென்றான்.— அப்போது அப்
னேர் அவனுடனே, நீ வலதுபக்கத்திற்காகிலும்
இடதுபக்கத்திற்காகிலும் விலகி, வாலிபரில்
ஒருவனைப் பிடித்து, அவனை உரிந்துகொள்
ளென்றாலும், ஆசகேல் அவனைவிட்டுப்போக
௨௨ மனதில்லாதிருந்தான்.— பின்னையும் அப்னேர்
ஆசகேலுடனே, நீ என்னை விட்டுப்போ; நான்
உன்னை ஏன் தரையோடே வெட்டவேண்டும்?
பிற்பாடு உன் சகோதரனாகிய யோவாபின் முகத்
௨௩ திலே எப்படி விழிப்பேனென்றான்.— ஆனால்
அவன் விலகிப்போகமாட்டேனென்றபடியினா
லே, அப்னேர் அவனை ஈட்டியின் பின்புற
அலகினாலே அவன் விலாவெலும்புகளில் ஈட்டி
முதுகிலே புறப்படக் குத்தினான்; அவன் அங்
கேதானே விழுந்து செத்தான்; ஆனதுகொண்டு
ஆசகேல் விழுந்துகிடக்கிற ஸ்தலத்திலே வந்த
௨௪ வர்களெல்லாரும் தரித்துநின்றார்கள்.—ஆனால்
யோவாபும் அபிசாயும் சூரியன் அஸ்தமிக்கும்
மட்டும் அப்னேரைப் பின்தொடர்ந்தார்கள்;
கிபேயோன் வனாந்தரவழிக்கு அருகான கீயா
வுக்கெதிரே இருக்கிற அம்மாமேடுமட்டும் வந்
தார்கள்.
௨௫ அப்போது அப்னேரைப் பின்சென்ற பென்
யமீன் புத்திரர் ஒரே பவிஞ்சாகக் கூடி, ஒரே
மேட்டின் கொடுமுடியிலே நின்றுகொண்டிருந்
௨௬ தார்கள்.—அப்போது அப்னேர் யோவாபைப்
பார்த்துக் கூப்பிட்டு, பட்டையம் எப்போதைக்
கும் சங்காரம்பண்ணிக்கொண்டிருக்கவேண்டு
மோ, கடைசியிலே கசப்புண்டாகுமென்று அறி
யீரோ, தங்கள் சகோதரரைவிட்டுப் பின்வாங்
கும்படிக்குச் சனத்திற்கு எந்தமட்டும் சொல்லா
௨௭ திருப்பீரென்றான்.—அதற்கு யோவாப், இன்று
காலமே நீர் பேசினதில்லாதிருந்தால் அப்போது
தானே சனம் அவரவர் தங்கள் சகோதரரைப்பின்
தொடராதபடிக்கு, திருப்பப்படுவார்களென்று
பராபரனுடைய சீவனைக்கொண்டு சொல்லுகி
௨௮ றேனென்று சொல்லி,— யோவாப் எக்காளம்
ஊதினான்; அப்போது சனமெல்லாம் இஸ்ர
வேலை அப்புறம் தொடராதபடிக்கும், அப்புறம்
யுத்தம்பண்ணாதபடிக்கும் நின்றது.
௨௯ அன்று இராமுழுதும் அப்னேரும் அவன்
மனுஷரும் அந்தர வெளிவழியாய்ப் போய்,
யோர்தானைக் கடந்து, பித்ரோன் எல்லையை
யெல்லாம் தாண்டி, மகனாயிமுக்கு வந்தார்
கள்.— யோவாபும் அப்னேரைவிட்டுத் திரும் ௩௰
பிச் சனத்தையெல்லாம் கூட்டிக்கொண்டான்;
தாவீதின் சேவகரில் பத்தொன்பதுபேரும் ஆச
கேலும் குறைந்தார்கள்.—தாவீதின் சேவகரோ ௩௧
வென்றால் பென்யமீனரிலும், அப்னேரின்
மனுஷரிலும், முந்நூற்றறுபதுபேரை மடங்க
டித்தார்கள்.
அவர்கள் ஆசகேலை எடுத்து, பெத்லேகேமிலி ௩௨
ருக்கிற அவனுடைய தகப்பன் கல்லறையிலே
அவனை அடக்கம்பண்ணினார்கள்; யோவாபும்
அவன் மனுஷரும் இராமுழுவதும் நடந்து, எபி
ரோனுக்குச் சேருகிறபோது, அவர்களுக்குப்
பொழுதுவிடிந்தது.

## ௩. அதிகாரம்.

௧. யுத்தத்தில் தாவீது பலத்தது. ௨. எபிரோனிலே அவனுக்கு ஆறு குமாரர்கள் பிறந்தது. ௬. அப்னேர் இஸ்போசேத்தின்மேல் கோபித்துக்கொண்டதும், ௰௨. தாவீதிடத்தில் சேர்ந்ததும். ௰௩. அவனைத் தாவீது தன் மனைவி மீகாளைத் தன்னண்டைக்கு அழைத்துவரச் சொன்னது. ௰௭. அப்னேர் இஸ்ரவேலர்களோடே யோசனைசெய்தபின்பு, தாவீது அவனுக்கு விருந்திட்டு அனுப்பியது. ௨௨. யோவாப் யுத்தத்திலிருந்து திரும்பிவந்து, தாவீதின் செய்கைக்குச் சம்மதியாமல், அப்னேரைக் கொன்றது. ௨௮. தாவீது யோவாபைச் சபித்தது. ௩௧. அப்னேருக்காகத் துக்கம்கொண்டாடியது.

சவுலின் வீட்டுக்கும் தாவீதின் வீட்டுக்கும் நெ ௧
டுநாள் யுத்தம்நடந்தது; ஆனால் தாவீது பலத்துப்
போனான்; சவுலின் வீட்டாரோவெனில் சிறு
கிப்போனார்கள்.—எபிரோனிலே தாவீதுக்குப் ௨
பிறந்த குமாரராவது: இஸ்ரெயேல் ஊராளான
அகிநோகாமிடத்திலே பிறந்த அம்மோன் அவ
னுக்கு முதல்பிறந்தவன்.— நாபாலின் பெண் ௩
சாதியாயிருந்த கற்மேல் ஊராளான அபிகாயிலி
டத்திலே பிறந்த கீலேயாப் அவனுடைய இரண்
டாம் குமாரனானவன்; மூன்றாம் குமாரன் கேசூ
ரின் இராசாவான தல்மாயி குமாரத்தியாகிய மாக்
காள் பெற்ற அப்சலோமென்றவன்.—நாலாம் ௪
குமாரன் ஆகீத்பெற்ற அதொனியாவென்றவன்;
ஐந்தாம் குமாரன் அபித்தால் பெற்ற செப்பத்தி
யா என்றவன்.—ஆறாம்குமாரன் தாவீதின் பெண் ௫
சாதியான எக்லாளிடத்தில் பிறந்த இத்ரேயா
மென்றவன்; இவர்கள் எபிரோனிலே தாவீதுக்
குப் பிறந்தார்கள்.
சவுலின் வீட்டுக்கும் தாவீதின் வீட்டுக்கும் ௬
யுத்தம் நடந்து வருகிறபோதோவெனில், அப்
னேர் சவுலின் வீட்டிலே பலத்தவனானான்.—
சவுலுக்கு ஆயாவின் குமாரத்தியாகிய ரிஸ்பா ௭
ளென்று பேருள்ள ஒரு வைப்பாட்டி இருந்தாள்;
இஸ்போசேத் அப்னேருடனே, நீ என் தகப்ப
னாருடைய வைப்பாட்டியினிடத்திலே பிரவே
சித்ததென்னவென்றான்.—அப்போது அப்னேர் ௮
இஸ்போசேத்தின் வார்த்தைகளுக்காக மிகவும்
கோபமாயெரிந்து சொன்னதாவது: உம்மைத்
தாவீதின் கையில் ஒப்புக்கொடாமல், இந்நாள்
மட்டும் உம்முடைய தகப்பனாகிய சவுலின்
வீட்டுக்கும், அவருடைய சகோதரருக்கும், சிநே
கிதருக்கும் தயவுசெய்கிறவனாகிய என்னை நீர்
இன்று ஒரு ஸ்திரிக்காகக் குற்றம்பிடிக்கிறதற்கு,

நான் யூதாவுக்கு உள்ளையான நாய்த்தலையோ?–
௯ நான் இராச்சியபாரத்தைச் சவுலின் வீட்டை
விட்டுத் தாண்டப்பண்ணி, தாவீதின் ஆசனத்
தைத் தாண்டுவக்கிப் பெர்சேபாமட்டுமுள்ள
இஸ்ரவேலின்மேலும் யூதாவின்மேலும் நிலை
௰ நிறுத்தும்படிக்கு, — கர்த்தர் தாவீதுக்கு ஆணை
யிட்டபடியே, நான் அவனுக்குச் செய்யாதிருந்
தால், பராபரன் அப்னேருக்கு இப்படியும் அப்
௰௧ படியும் செய்யக்கடவரென்றான்.—அப்போது
அவன் அப்னேருக்குப் பயப்படுகிறதினால், அப்
புறம் ஒரு மறுமொழியை அவனுக்குச் சொல்ல
அவனுக்குக் கூடாதிருந்தது.
௰௨ அப்னேரோவென்றால் தன் நாமத்திலே தாவீ
தண்டைக்குத் தானாபதிகளை அனுப்பி, தேசம்
யாருடையதென்றும், என்னோடு உடம்படிக்கை
பண்ணும், இதோ இஸ்ரவேலையெல்லாம் உம்
மண்டைக்குத் திருப்ப, என் கை உம்மோடிருக்
௰௩ குமென்றும், சொல்லச்சொன்னான். — அதற்கு
அவன் நல்லது, உன்னோடே நான் உடம்படிக்
கைபண்ணுவேன்; ஆனால் ஒரேகாரியத்தை
உன்னைக் கேட்கிறேன்; என்னவெனில் நீ என்
முகத்தைப்பார்க்க வரும்போது, சவுலின் குமா
ரத்தியாகிய மீகாளை நீ அழைத்துவரவேண்டும்;
அதற்கு முன் நீ என் முகத்தைப் பார்ப்பதில்லை
௰௪ யென்று சொல்லச்சொல்லி,—தாவீது சவுலின்
குமாரனாகிய இஸ்போசேத்தண்டைக்கும் தானா
பதிகளை அனுப்பி, நான் பெலிஸ்தியருடைய
நூறு நுனித்தோல்களைப் பரிசமாகக் கொடுத்து,
விவாகம்பண்ணின என் பெண்சாதியாகிய மீகா
ளை எனக்குக் கொடுத்துவிடுமென்று சொல்லச்
௰௫ சொன்னான்.–அப்போது இஸ்போசேத் அவளை
லாயிசின் குமாரனாகிய பல்த்தியேலென்ற புரு
ஷனைவிட்டு அழைத்துவர ஆள்களை அனுப்பி
௰௬ னான். — அவள் புருஷன் அவளோடேகூடப்
பகூரீம்மட்டும் அழுது நடந்து, அவளைப் பின்
சென்றான்; அப்னேர் அவனுடனே, நீ திரும்
பிப்போவென்றான்; அப்போது திரும்பிப்போ
னான்.
௰௭ அப்னேர் இஸ்ரவேலின் மூப்பரோடே பேசிக்
கொண்டு சொன்னதாவது: நீங்கள் தாவீதை உங்
கள்மேல் இராசாவாக வைக்கும்படிக்கு, அநேக
௰௮ நாளாய்த் தேடுகிறவர்களாமே.–இப்போதும் அப்
படிச் செய்யுங்கள்; ஏனெனில் நம்முடைய
தாசனாகிய தாவீதின் கையினாலே, நம்முடைய
சனமாகிய இஸ்ரவேலைப் பெலிஸ்தியரின் கைக்
கும், அவர்களுடைய எல்லாச் சத்துருக்களின்
கைக்கும், நீங்கலாக்கி இரட்சிப்போமென்று கர்
த்தர் தாவீதைக்குறித்துச் சொன்னாரென்றான்.—
௰௯ இந்தப்பிரகாரமாக அப்னேர் பென்யமீன் மனு
ஷர் காதுகளிலும் விழப்பேசினான்; பிற்பாடு
அப்னேர் இஸ்ரவேலர் பார்வைக்கும், பென்ய
மீனுடைய எல்லா வீட்டாரின் பார்வைக்கும்,
சம்மதியானதையெல்லாம் எபிரோனிலே தாவீ
தின் காதுகளும் கேட்கப் பேசுகிறதற்குப் போ
௨௰ னான்.–அப்னேரும், அவனோடேகூட இருபது
பேரும் எபிரோனிலிருக்கிற தாவீதண்டைக்கு
வந்தபோது, தாவீது அப்னேருக்கும், அவனோ
டே வந்த மனுஷருக்கும், விருந்துசெய்வித்
தான்.—பிற்பாடு அப்னேர் தாவீதுடனே, நான் ௨௧
எழுந்துபோய், இஸ்ரவேலனையெல்லாம் உம்
மோடே உடம்படிக்கை பண்ணும்படிக்கு, இரா
சாவாகிய என் ஆண்டவனண்டையிலே சேர்த்
துக்கொண்டு வருகிறேன்; அப்படியே உம்மு
டைய ஆத்துமா இச்சிக்கிறதின்மேலெல்லாம்
இராச்சியபாரம் பண்ணுவீரென்றான்; அப்படி
யே தாவீது அப்னேரை அனுப்பிவிட்டான்;
அவன் சமாதானத்தோடே போனான்.
ஆனால் இதோ தாவீதின் சேவகரும் யோவா ௨௨
பும் அநேகம் பொருள்களைக் கொள்ளையிட்டு,
தண்டிலிருந்து கொண்டுவந்தார்கள்; அப்போது
அப்னேர் எபிரோனில் தாவீதண்டையிலே இல்
லை; ஏனெனில் அவனை அனுப்பிவிட்டான்;
அவன் சமாதானத்தோடே போய்விட்டான்.—
யோவாபும் அவனோடிருந்த எல்லா இராணுவ ௨௩
மும் வந்தபோது நேரின் குமாரனாகிய அப்னேர்
இராசாவண்டைக்கு வந்தானென்றும், அவர் அ
வனைச் சமாதானமாய்ப் போக அனுப்பிவிட்டா
ரென்றும், யோவாபுக்கு அறிவித்தார்கள். – அப் ௨௪
போது யோவாப் இராசாவண்டையில் பிரவே
சித்துச் சொன்னதாவது: என்னசெய்தீர்? இதோ
அப்னேர் உம்மண்டைக்கு வந்தபோது, நீர்
அவனைப் போகவிட்டதென்ன?–நேரின் குமா ௨௫
ரனாகிய அப்னேரை அறிவீரே; அவன் உம்மை
மோசம்போக்கவும், உம்முடைய போக்கு வரத்
தை அறியவும், நீர் செய்கிறதையெல்லாம் ஆரா
யவும் வந்தானென்று சொல்லி,
யோவாப் தாவீதைவிட்டுப் புறப்பட்டு, தா ௨௬
வீது அறியாமல் சீராத் துரவுமட்டும் போன அப்
னேரைத் திரும்பி வரச்சொல்ல, அவன் பிறகா
லே ஆள்களை அனுப்பினான்.—அப்னேர் எபி ௨௭
ரோனுக்குத் திரும்பி வருகிறபோதோவெனில்,
யோவாப் அவனோடே இரகசியமாய்ப் பேசப்
போகிறவன்போல, அவனை ஒலிமுகவாசலின்
நடுவே ஒருபக்கமாய் அழைத்துப்போய், தன்
தம்பி ஆசகேலுடைய இரத்தப்பழியை வாங்க,
அங்கே அவனை வயிற்றிலே குத்திக் கொன்று
போட்டான்.
பிற்பாடு தாவீது அதைக் கேட்டபோது சொ ௨௮
ன்னதாவது: நேரின் குமாரனாகிய அப்னேரின்
இரத்தத்திற்காக, என்மேலும் என் இராச்சியத்
தின்மேலும் கர்த்தருக்குமுன்பாக என்றைக்
கும் பழியில்லை.—அது யோவாபுடைய தலை ௨௯
யின்மேலும், அவன் தகப்பன் வீட்டனைத்தின்மே
லும், சுமந்திருப்பதாக; யோவாபின் வீட்டாரி
லே பிரமியக்காரனும், குஷ்டரோகியும், தடிபி
டித்து நடக்கிறவனும், பட்டையத்தால் விழுகி
றவனும், அப்பம் குறைச்சலுள்ளவனும், ஒருக்
காலும் குறையாதிருக்கக்கடவதென்றான். —
அப்படியே அப்னேர் கிபேயோனில் யுத்தத்தி ௩௰
லே தங்கள் தம்பியாகிய ஆசகேலைக் கொன்ற

தின்நிமித்தம் யோவாபும் அவன் சகோதரனு
கிய அபிசாயும் அவனைச் சங்காரம் பண்ணினார்
கள்.
௩௧ தாவீது யோவாபோடும், அவனோடிருந்த எல்
லாச் சனத்தோடும், நீங்கள் உங்கள் வஸ்திரங்க
ளைக் கிழித்துக்கொண்டு, இரட்டுடுத்து, அப்னே
ருக்குமுன்னாலே நடந்து துக்கங்கொண்டாடுங்
களென்று சொல்லி, தாவீது இராசா தானும் பா
௩௨ டையைப் பின்சென்றான்.—அவர்கள் அப்னே
ரை எபிரோனிலே அடக்கம்பண்ணுகையில்,
இராசா அப்னேரின் கல்லறையண்டையிலே
சத்தமிட்டழுதான்; சகல சனமும் அழுதன.—
௩௩ இராசா அப்னேருக்காகப் புலம்பிச் சொன்ன
தாவது: மதியில்லாதவன் சாகிறதுபோல, அப்
௩௪ னேர் மடிந்தானோ? — உன்னுடைய கைகள்
கட்டப்பட்டிருந்ததுமில்லை; உன்னுடைய கால்
கள் விலங்குபோடப்பட்டிருந்ததுமில்லை; அக்
கிரமக்காரர் கையில் மடிகிறதுபோல, மடிந்தா
யென்றான்; அப்போது சனமெல்லாம் பின்னை
௩௫ யும் அதிகமாய் அவனுக்காக அழுதன. — பகல்
இன்னமுண்டாயிருக்கையில், சனமெல்லாம்
வந்து அப்பம் புசியுமென்று தாவீதுக்குச் சொல்
லுகிறபோது, தாவீது சூரியன் அஸ்தமிக்காத
தற்கு முன்னே நான் அப்பத்தையாகிலும் வே
றெதையாகிலும் உருசிபார்த்தால், பராபரன்
எனக்கு இப்படியும் அப்படியும் செய்யக்கட
௩௬ வரென்று ஆணையிட்டுச் சொன்னான். — சன
மெல்லாம் அதை அறிந்தன; அது அவர்கள்
பார்வைக்கு நன்றாயிருந்தது; இராசா செய்த
வையெல்லாம் எல்லாச்சனத்திற்கும் நன்றாய்க்
கண்டன.

௩௭ அப்படியேநேரின் குமாரனாகியஅப்னேரைக்
கொன்றுபோட்டது இராசாவினால் வந்ததல்ல
வென்று அந்நாளிலே சகல சனமும் இஸ்ரவேல
௩௮ னைத்தும் அறிந்துகொண்டன.—இராசா தன் ஊ
ழியக்காரரோடே சொன்னதாவது: இன்றைத்
தினம் இஸ்ரவேலில் ஒரு பிரபும் பெரிய மனு
௩௯ ஷனும் விழுந்தானென்று அறியீர்களோ?—இரா
சாவாக அபிஷேகம்பண்ணப்பட்ட நானோ
வென்றால், இன்னம் புதியவன்; ஆனால் சேரு
யாவின் குமாரராகிய இந்த மனுஷர் என்னைவி
டக் கெட்டியானவர்களாயிருக்கிறார்கள்; அந்
தப் பொல்லாப்பைச் செய்தவனுக்குக் கர்த்தர்
அவன் பொல்லாப்புக்குத்தக்கதாய்ச் சரிக்கட்டு
வாராகவென்றான்.

## ௪. அதிகாரம்.

௧. அப்னேரின் மரணத்தைக்குறித்து இஸ்ரவேலர்கள் கலங்கினது. ௨. பானாவும், ரேகாபும், இஸ்போசேத்தைக் கொன்று, அவன் தலையை எபிரோனுக்குக் கொண்டுவந்தது. ௯. தாவீது அவர்களைக் கொல்லவும், இஸ்போசேத்தின் தலையை அடக்கம்பண்ணவும் கட்டளையிட்டது.

௧ அப்னேர் எபிரோனிலே செத்துப்போனதைச்
சவுலின் குமாரன் கேட்டபோது, அவன் கைகள்
திடனற்றுப்போய், இஸ்ரவேலெல்லாம் கலங்
௨ கின.—ஆனால் சவுலின் குமாரனுக்குத் தண்டு
சேவகரின் தலைவரான இரண்டு மனுஷர் இருந்
தார்கள்; ஒருவனுக்குப் பானாவென்றும், மற்றவ
னுக்கு ரேகாப்பென்றும் பேர் இருந்தது; அவர்
கள் பென்யமீன் புத்திரரில் பேரோத்தியனாகிய
ரிம்மோனின் குமாரரானவர்கள்; ஏனெனில்
பேரோத்தும் பென்யமீனுக்கு அடுத்ததாயெண்
ணப்பட்டது.—பேரோத்தியரோவென்றால் கித் ௩
தாயிமுக்கு ஓடிப்போய், இந்நாள்வரைக்கும் அங்
கே பரதேசிகளாய்த் தங்கியிருக்கிறார்கள்

சவுலின் குமாரன் யோனத்தானுக்கோவெ ௪
னில், இரண்டு காலும் முடமான ஒரு குமாரனி
ருந்தான்; சவுலும் யோனத்தானும் மடிந்த செய்தி
இஸ்ரவேலிலிருந்து வருகிறபோது, அவன் ஐந்
துவயதுள்ளவனாயிருந்தான்; அப்போது அவனு
டைய தாதி அவனை எடுத்து ஓடிப்போனாள்;
அவள் ஓடத் தீவிரிக்கையில், அவன் விழுந்து,
சப்பாணியானான்; அவன் பேர் மேவிபோசேத்
தென்பது.

பேரோத்தியனான அந்த ரிம்மோனின் குமார ௫
ராகிய ரேகாபும் பானாவும் போய், இஸ்போசேத்
மத்தியானத்திலே படுக்கையின்மேலே சயனித்
திருந்த வெய்யில்வேளையிலே அவன் வீட்டிற்
குள் பிரவேசித்து,—கோதுமையை வாங்க வரு ௬
கிறவர்கள்போல, நடுவீடுமட்டும் வந்து, அவனை
வயிற்றிலே குத்திப்போட்டார்கள்; பிற்பாடு ரே
காபும் அவன் சகோதரன் பானாவும் தப்பித்துக்
கொண்டுபோனார்கள். — அவன் தன் படுக்கை ௭
வீட்டிலே தன் கட்டிலின்மேலே படுத்திருக்கும்
பொழுதுதானே இவர்கள் உள்ளே போய், அவ
னைக் குத்திக்கொன்றுபோட்டு, அவன் தலையை
வெட்டிப்போட்டார்கள்; பிறகு அவன் தலையை
அவர்கள் எடுத்துக்கொண்டு, இராமுழுதும் அந்த
ரவெளிவழியாய் நடந்து,-எபிரோனிலிருக்கிற ௮
தாவீதண்டைக்கு இஸ்போசேத்தின் தலையைக்
கொண்டுவந்து, இராசாவுடனே, இதோ உம்மு
டைய பிராணனை வாங்கத்தேடின உம்முடைய
சத்துருவாயிருந்த சவுலின் குமாரனான இஸ்போ
சேத்தின் தலை, இன்றைத்தினம் கர்த்தர் இராசா
வாகிய எங்கள் ஆண்டவனுக்காகச் சவுலின் கை
யிலும் அவன் வித்தாரின் கையிலும் பழிவாங்கி
னாரென்றார்கள்.

ஆனால் தாவீது பேரோத்தியனான ரிம்மோ ௯
னின் குமாரராகிய ரேகாபுக்கும், அவன் சகோ
தரன் பானாவுக்கும், பிரதியுத்தாரமாகச் சொன்
னதாவது: என் ஆத்துமாவை எல்லா இக்கட்டுக்
கும் நீங்கலாக்கி மீட்ட கர்த்தருடைய சீவனைக்
கொண்டு நான் சொல்லுகிறதைக் கேளுங்கள்.–
இதோ சவுல் செத்துப்போனானென்று எனக்கு ௰
அறிவித்து, தன் பார்வைக்குச் சுகசெய்தியைச்
சொல்லுகிறவனாயிருந்து, அதற்காகத் தனக்கு
வெகுமானம் கொடுப்பேனென்று நினைத்த அ
வனை நான் பிடித்து சிக்லாகிலே கொன்றுபோ
ட்டேனே.—தமது வீட்டிற்குள் தமது படுக்கை ௰௧
யின்மேலே படுத்திருந்த நீதிமானைக் கொலை
செய்த பொல்லாத மனுஷர் எத்தனை அதிகம்?

இப்போதும் நான் அவருடைய இரத்தப்பழியை
உங்கள் கைகளில் வாங்கி, உங்களைப் பூமியி
லிருந்து கழித்துப்போடாதிருப்பேனோ என்று
௰௨ சொல்லி,—அவர்களைக் கொன்றுபோடவும், அ
வர்கள் கைகளையும் கால்களையும் தறித்து, எபி
ரோனிலிருக்கிற குளத்தண்டையிலே தூக்கிப்
போடவும், தாவீது வாலிபருக்குக் கற்பித்தான்;
ஆனால் இஸ்போசேத்தின் தலையை எடுத்து,
எபிரோனிலிருக்கிற அப்னேரின் கல்லறையி
லே அடக்கம்பண்ணினார்கள்.

## ரு. அதிகாரம்.

*௧. கோத்திரங்கள் தாவீதை இஸ்ரவேலர்மேல் இராசாவாக அபிஷேகம் பண்ண, எபிரோனுக்கு வந்தது. ௪. தாவீதின் வயது. ௯. அவன் எபூசியரிலிருந்து சீயோனைப் பிடித்து, அதில் வாசம்பண்ணினது. ௰௧. ஈராம் தாவீதண்டைக்கு ஆள்களை அனுப்பியது. ௰௩. எருசலேமில் தாவீதுக்குப் பதினொரு குமாரர்கள் பிறந்தது. ௰௭. தாவீது பராபரனாலே கட்டளையிடப்பட்டு, பால்பிராசீமிலும், ௨௰௨. முசுக்கட்டைச் செடிகளிலும் பெலிஸ்தியனை அடித்தது.*

௧ அக்காலத்திலே இஸ்ரவேலின் கோத்திரங்க
ளெல்லாம் எபிரோனிலிருக்கிற தாவீதண்டைக்
கு வந்து சொன்னதாவது: இதோ நாங்கள் வந்தி
ருக்கிறோம்; நாங்கள் உம்முடைய எலும்பும் உம்
௨ முடைய மாம்சமுமானவர்கள்.—சவுல் எங்கள்
மேல் இராசாவாயிருக்கிற அப்போதுதானும் நீர்
இஸ்ரவேலோடே போக்கும் வரத்துமாயிருந்தீர்;
நம்முடைய சனமாகிய இஸ்ரவேலை நீ மேய்த்து,
நீ இஸ்ரவேலின்மேலே தலைவனாயிருப்பாயென்
று உம்மோடே கர்த்தர் சொன்னாரென்றார்கள்.—
௩ இஸ்ரவேலின் மூப்பரெல்லாரும் எபிரோனிலே
இராசாவண்டைக்கு வந்தார்கள்; தாவீது இரா
சா எபிரோனிலே கர்த்தருக்குமுன்பாக அவர்க
ளோடே உடன்படிக்கை பண்ணினபிற்பாடு,
அவர்கள் தாவீதை இஸ்ரவேலின்மேல் இராசா
௪ வாக அபிஷேகம்பண்ணினார்கள்.—தாவீது இரா
சாவாகிறபோது, முப்பது வயதாயிருந்தான்;
அவன் நாற்பதுவருஷம் இராச்சியபாரம்பண்
௫ ணினான்.—அவன் எபிரோனிலே யூதாவின்மேல்
ஏழுவருஷமும், ஆறுமாதமும், எருசலேமிலே
எல்லா இஸ்ரவேலின்மேலும் யூதாவின்மேலும்
முப்பத்துமூன்று வருஷமும் இராச்சியபாரம்
பண்ணினான்.
௬ தேசத்திலே குடியிருக்கிற எபூசியர்மேல் யுத்
தம்பண்ண இராசாவானவன் தன் மனுஷரோ
டெம்கூட எருசலேமுக்குப் போனான்; அவர்கள்
தாவீதுக்கு, நீ இதற்குள் பிரவேசிப்பதில்லை; கு
ருடரும் சப்பாணிகளும் உன்னை விலக்குவார்க
ளென்று சொல்லி, தாவீது இதிலே உள்பிரவே
௭ சிப்பதில்லை என்றார்கள். — ஆனால் தாவீது சீ
யோன் கோட்டையைப் பிடித்தான்; அது தாவீ
௮ தின் பட்டணம்.—ஏனெனில் எவன் எபூசியனை
முறியடித்து, சாலகத்திலும், தாவீதின் ஆத்துமா
பகைக்கிற சப்பாணிகள் குருடரிடத்திலும்
சேர்ந்து ஏறுகிறானோ, அவன் தலைவனாயிருப்பா
னென்று தாவீது அன்றைத்தினம் சொல்லியிருந்
தான்; குருடனும் சப்பாணியும் வீட்டிலே வர
வேண்டாமென்பதைத்தொட்டுச் சொல்லுகிறார்
கள்.—அந்தக் கோட்டையிலே தாவீது வாசம் ௯
பண்ணி, அதற்குத் தாவீதின் பட்டணமென்று
பேரிட்டு, மில்லோவென்ற தலம்துவக்கி, உள்பு
றம்மட்டும், சுற்றிலும் இருக்கிறதைக் கட்டுவித்
தான்.—தாவீது நாளுக்குநாள் பெரியவனாய்ப் ௰
போனான்; ஏனென்றால் சேனைகளின் பராபர
னாகிய கர்த்தர் அவனோடேகூட இருந்தார்.
தீருவின் இராசாவாகிய ஈராம் தாவீதண்டைக் ௰௧
குத் தானாபதிகளையும், கேதுரு மரங்களையும், தச்
சரையும், கல்தச்சரையும் அனுப்பினான்; இவர்
கள் தாவீதுக்கு ஒரு வீட்டைக் கட்டினார்கள்.—
கர்த்தர் தன்னை இஸ்ரவேலின்மேல் இராசாவா ௰௨
கத் திடப்படுத்தி, தம்முடைய சனமாகிய இஸ்ர
வேலின் நிமித்தம் தன்னுடைய இராச்சியத்தை
உயர்த்தினாரென்று தாவீது கண்டறிந்தபோது,
அவன் எபிரோனிலிருந்து வந்தபிற்பாடு, ௰௩
எருசலேம் ஊராராகிய இன்னம்அதிகமான வை
ப்பாட்டிகளையும் ஸ்திரிகளையும் படைத்தான்;
இன்னம் அதிக குமாரரும் குமாரத்திகளும்
தாவீதுக்குப் பிறந்தார்கள்.—எருசலேமில் அவ ௰௪
னுக்குப் பிறந்த குமாரரின் நாமங்களாவன: சம்
முகா, சோவாப், நாத்தான், சாலோமோன்,—
இப்கார், எலிசூபா, நேப்பேக், யப்பியா,— ௰௫
எலிசாமா, எலியாதா, எலிப்பேலேத் என்றவர் ௰௬
கள்.
தாவீதை இஸ்ரவேலின்மேல் இராசாவாக ௰௭
அபிஷேகம்பண்ணினார்களென்று பெலிஸ்தியர்
கேட்டபோதோவெனில், அவர்களெல்லாரும்
தாவீதைத் தேடவந்து ஏறினார்கள்; அதைத் தா
வீது கேட்கிறபோது, ஒரு அரணிப்பான இடத்தி
லேபோய் இறங்கினான்.—பெலிஸ்தியரோவெ ௰௮
னில் வந்து, ரெப்பாயீம் பள்ளத்தாக்கிலே பரவி
யிருந்தார்கள்.—பெலிஸ்தியரின்மேலே போயே ௰௯
றுவேனோ, அவர்களை என் கையில் ஒப்புக்கொ
டுப்பீரோவென்று தாவீது கர்த்தரைக் கேட்ட
போது, கர்த்தர் தாவீதுடனே ஏறு, ஏனெனில்
பெலிஸ்தியரை உன் கையில் ஒப்புக்கொடுக்க
வே ஒப்புக்கொடுப்பேனென்றார்.—தாவீது பால் ௨௰
பிராசீமுக்கு வந்து, அங்கே அவர்களை முறிய
டித்து, தண்ணீர்கள் வடிகிறதுபோல, கர்த்தர் என்
சத்துருக்களை எனக்குமுன்பாக அடியறுத்துக்
கொண்டுபோனாரென்று சொல்லி, அதுநிமித்தம்
அந்த ஸ்தலத்திற்குப் பால்பிராசீமென்று பே
ரிட்டான்.—அங்கே பெலிஸ்தியர் தங்கள் விக் ௨௰௧
கிரகங்களைவிட்டுப் போனார்கள்; அவைகளைத்
தாவீதும் அவன் மனுஷரும் எடுத்துக்கொண்டார்
கள்.—பெலிஸ்தியர் திரும்பவும் வந்தேறி, ரெப் ௨௰௨
பாயீம் பள்ளத்தாக்கிலே விசாலத்தில் இறங்கி
னார்கள்.—தாவீது கர்த்தரைக் கேட்டதற்கு, அ ௨௰௩
வர் நீ நேராயேறிப்போகாமல், அவர்களுக்குப்
பின்னாலே சுற்றி, முசுக்கட்டைச் செடிகளுக்கு
எதிரேயிருந்து, அவர்கள்மேல் வந்து, — முசுக் ௨௰௪
கட்டைச்செடிகளின் நுனிகளிலே நடந்துவரு
கிற இரைச்சலை நீ கேட்கையில், அப்போது சீக்
கிரமாய்ப் போவாயாக; ஏனெனில் அப்போது

பெலிஸ்தியரின் பாளயத்தை முறியடிக்க, கர்த்தர்
உனக்குமுன்பாகப் புறப்பட்டு இருப்பாரென்
௨௫ றார்.—கர்த்தர் தனக்குக் கற்பித்தபிரகாரமாகத்
தானே தாவீது செய்து, பெலிஸ்தியரைக் கேபா
வைத் துவக்கிக் கேசேரைச் சேரும் எல்லைமட்
டும் முறியடித்தான்.

## ௬. அதிகாரம்.

௧. தாவீது உடம்படிக்கையின் பெட்டியைப் பாலேயூதாவிலிருந்து புதிய இரதத்தின்மேல் கொண்டுவந்தது. ௬. ஊசா அழிக்கப்பட்டது. ௯. பராபரன் அந்தப் பெட்டியின்நிமித்தம் ஓபேத்ஏதோமை ஆசீர்வதித்தது. ௰௨. தாவீது பலிசெலுத்தி, அந்தப் பெட்டியைச் சீயோனுக்குக் கொண்டுவந்து, அதின்முன் நடனம்செய்ததற்காக மீகாள் அவனை அசட்டைபண்ணினது. ௰௭. அவன் அதைக் கூடாரத்தில் வைத்து, சந்தோஷமடைந்து, சனங்களுக்கு விருந்துசெய்தது. ௨௰. தெய்வகளிப்புள்ள தாவீதைக் கடிந்துகொண்டதினால், மீகாள் தன் மரணபரியந்தம் பிள்ளையில்லாதிருந்தது.

௧ பின்னையும் தாவீது இஸ்ரவேலிலே எல்லாம்
தெரிந்துகொள்ளப்பட்ட முப்பதினாயிரம்பே
௨ ரைக் கூட்டி,—கேருபின்களின் நடுவே வாசமா
யிருக்கிற சேனைகளுடைய கர்த்தரின் நாமம் தொ
ழுதுகொள்ளப்படுகிற பராபரனுடைய பெட்
டியைப் பாலேயூதாவிலிருந்து ஏறிவரப்பண்
ணும்படிக்கு, அவனும் அவனோடிருந்த அத்தலத்
துச் சகலரும் எழுந்துபோய்,
௩ பராபரனுடைய பெட்டியை ஒரு புது இரதத்
தின்மேல் ஏற்றி, அதைக் கிபேயாவிலிருக்கிற
அபினதாபின் வீட்டிலிருந்து கொண்டுவந்தார்
கள்; அபினதாபின் குமாரராகிய ஊசாவும் அகி
யோபும் அந்தப் புது இரதத்தை நடத்தினார்கள்.—
௪ அவர்கள் பராபரனுடைய பெட்டி ஏற்றியிருந்த
அதைக் கிபேயாவிலிருக்கிற அபினதாபின் வீட்
டிலிருந்து நடத்திக்கொண்டுவருகிறபோது, அகி
யோப் பெட்டிக்குமுன்னாலே நடந்தான்.—
௫ தாவீதும் இஸ்ரவேல் வீட்டாரனைவரும் தேவதா
ரிமரத்தால் பண்ணப்பட்ட சகலவித கீதவாத்தி
யங்களாகிய சுரமண்டலங்களையும், தம்புருக
ளையும், மேளங்களையும், வீணைகளையும், கைத்
தாளங்களையும் கர்த்தருக்குமுன்பாகச் சேவித்
௬ துக்கொண்டுபோனார்கள். — அவர்கள் நாகோ
னின் களமிருக்கிற இடம்மட்டும் வந்தபோதோ
வெனில், மாடுகள் மிரண்டோடுகிறபடியினா
லே, ஊசா பராபரனுடைய பெட்டியண்டைக்
குத் தன் கையை நீட்டி, அதைப் பிடித்தான்.—
௭ அப்போது பராபரனாகிய கர்த்தர் ஊசாவின்மே
லே கோபம் மூண்டவராகி, அவனுடைய சாவ
தானமில்லாமையின்நிமித்தம் அங்கே அவனை
அழித்தார்; அங்கே பராபரனுடைய பெட்டி
௮ யண்டையிலே அவன் செத்தான்.—அப்போது
கர்த்தர் ஊசாவை இடித்த இடிக்காக தாவீது
மனஸ்தாபப்பட்டு, அந்த ஸ்தலத்திற்கு இந்நாள்
மட்டும் இருக்கிற ஊசாவின் இடியென்று பே
௯ ரிட்டு,—தாவீது அன்றைத்தினம் கர்த்தருக்குப்
பயந்து, கர்த்தருடைய பெட்டி என்னண்டைக்
௰ கு வருவது எப்படியென்று சொல்லி,—அதைத்
தன்னண்டைக்குத் தாவீதின் பட்டணத்திலே
கொண்டுவர மனதில்லாமல், கித்தியனாகிய
ஓபேத்ஏதோமின் வீட்டிலே சேர்த்தான். —
கர்த்தருடைய பெட்டி கித்தியனாகிய ஓபேத் ௰௧
ஏதோமின் வீட்டிலே மூன்றுமாதம் இருக்கை
யில், கர்த்தர் ஓபேத்ஏதோமையும் அவன் வீட
னைத்தையும் ஆசீர்வதித்தார்.
பராபரனுடைய பெட்டியின்நிமித்தம் கர்த்தர் ௰௨
ஓபேத்ஏதோமின் வீட்டையும், அவனுக்குண்
டான எல்லாவற்றையும், ஆசீர்வதித்தாரென்று
தாவீது இராசாவுக்கு அறிவிக்கப்பட்டது; அப்
போது தாவீது பராபரனுடைய பெட்டியை
ஓபேத்ஏதோமின் வீட்டிலிருந்து தாவீதின் பட்
டணத்திலே மகிழ்ச்சியுடனே ஏறிவரப்பண்ணி
னான். — கர்த்தருடைய பெட்டியைச் சுமந்து ௰௩
போகிறவர்கள் ஆறுதப்படி நடந்தபோதோவெ
னில், மாடுகளையும் கொழுத்த ஆட்டுக்கடாக்க
ளையும் பலியிட்டான்.—தாவீது சணல்நூல்சால் ௰௪
வையைத் தரித்துக்கொண்டு, சகல பலத்தோடும்
கர்த்தருக்குமுன்பாக நடனம்பண்ணிக்கொண்
டிருந்தான்.—அப்படியே தாவீதும், இஸ்ரவேல் ௰௫
வீட்டாரனைவரும், கர்த்தருடைய பெட்டியைக்
கெம்பீரத்தோடும், எக்காளத் தொனிப்போடும்
ஏறிவரப்பண்ணினார்கள்.
கர்த்தருடைய பெட்டி; தாவீதின் பட்டணத் ௰௬
திற்குள் பிரவேசிக்கிறபோதோவெனில், சவு
லின் குமாரத்தியாகிய மீகாள் பலகணிவழியாய்ப்
பார்த்து, தாவீது இராசா கர்த்தருக்குமுன்பாகக்
குதித்து, நடனம்பண்ணுகிறதைக் கண்டு, தன்
இருதயத்திலே அவனை அசட்டைபண்ணினாள்.
அவர்கள் கர்த்தருடைய பெட்டியை உள்ளே ௰௭
கொண்டுவந்து, தாவீது அதற்குப்போட்ட கூ
டாரத்திற்குள் இருக்கிற அதின் தானத்திலே
அதை வைத்தபோது, தாவீது கர்த்தருடைய சந்நி
தியிலே சர்வாங்கதகனங்களையும் சமாதானபலி
களையும் பலியிட்டான்.— தாவீது அவைகளைப் ௰௮
பலியிட்டபிற்பாடு, சேனைகளுடைய கர்த்தரின்
நாமத்திலே சனத்தை ஆசீர்வதித்து,—இஸ்ரவே ௰௯
லின் திரள் கூட்டமாகிய எல்லாச்சனத்திற்கும்,
புருஷருக்கும், ஸ்திரிகளுக்கும், அவரவருக்கு
ஒவ்வொரு பணியாரத்தையும், ஒவ்வொரு இ
றைச்சித்துண்டத்தையும், ஒவ்வொருபடி திராட்
சப்பழ இரசத்தையும் பங்கிட்டான்; பிற்பாடு
சனமெல்லாம் அவரவர் தங்கள் வீட்டிற்குப்
போனார்கள்.
தாவீது தன் வீட்டை ஆசீர்வதிக்கிறதற்குத் தி ௨௰
ரும்புகிறபோது, சவுலின் குமாரத்தியாகிய மீகாள்
தாவீதுக்கு எதிர்கொண்டு வந்து, அற்ப மனுஷ
ரில் ஒருவன் வஸ்திரங்களைக் கழற்றிப்போடுகி
றதுபோல, இன்று தம்முடைய ஊழியக்காரரு
டைய சிறுக்கிகளின் கண்களுக்குமுன்பாகத்
தம்முடைய வஸ்திரங்களைக் கழற்றிப்போட்டி
ருந்த இஸ்ரவேலின் இராசா இன்று எத்தனை மகி
மைப்பட்டிருந்தார் என்றாள். — ஆனால் தாவீது ௨௧
மீகாளோடே சொன்னது: உன் தகப்பனைப்
பார்க்கிலும், அவருடைய எல்லா வீட்டாரைப்
பார்க்கிலும், என்னை இஸ்ரவேலாகிய கர்த்தரு

டைய சனத்தின்மேலே தலைவனாகக் கட்டளையி
டும்படிக்குத் தெரிந்துகொண்ட கர்த்தருடைய
௨௨ சமுகத்திற்குமுன்பாக ஆடிப்பாடினேன்.—இன்
னம் இதைப்பார்க்கிலும் நான் நீசனும் என் பார்
வைக்குப் பணிந்தவனுமாகி, இப்படியே நீ
சொன்ன சிறுக்கிகளோடும்கூடத்தானே மகி
௨௩ மைப்படுவேனென்றான்.— சவுலின் குமாரத்தி
யாகிய மீகாள் மரணமடையும் நாள்மட்டும் அவ
ளுக்குப் பிள்ளை இல்லாதிருந்தது.

## ௭. அதிகாரம்.

*௧. தாவீது பாரபரனுக்கு ஆலயம்கட்டும்படி கொண்ட விருப்பத்தை நாத்தான் முதல் ஏற்றுக்கொண்டு, ௪. பின்பு பாரபரனுடைய கட்டளையின்படி தடைசெய்து, ௰௨. உன் சந்ததியில் ஆசீர்வாதம் உண்டாகுமென்று சொன்னது. ௰௮. தாவீதின் செபமும் துதியும்.*

௧ இராசா தன் வீட்டிலே வாசமாயிருந்து, கர்த்தர்
அவனைச் சுற்றிலும் இருந்த அவனுடைய எல்
லாச் சத்துருக்களுக்கும் அவனை நீங்கலாக்கி,
இளைப்பாறப்பண்ணினபோது, சம்பவித்ததே
௨ தென்றால்,—இராசா தீர்க்கதரிசியாகிய நாத்தா
னுடனே, நான் கேதுருமரங்களுடைய வீட்டி
லே வாசம்பண்ணும்போது, பாரபரனுடைய
பெட்டி திரைகளின் நடுவே வாசமாயிருக்கிற
௩ தை நீ பாரென்றான்.—அப்போது நாத்தான் இரா
சாவுடனே, உம்முடைய இருதயத்தில் இருக்
கிறதையெல்லாம் நீர் போய்ச் செய்யும்; ஏனெ
னில் கர்த்தர் உம்மோடு இருக்கிறாரென்றான்.
௪ அன்று இராத்திரியிலே சம்பவித்ததேதென்
றால், கர்த்தருடைய வார்த்தை நாத்தானுக்குண்
௫ டாகி, அவர் சொன்னதாவது:—நீ போய் நம்மு
டைய தாசனாகிய தாவீதுடனே சொல்லவேண்
டியது: கர்த்தர் சொல்லுகிறதேதெனில், நாம்
வாசமாயிருக்கத்தக்க வீட்டை நீ நமக்குக் கட்
௬ டுவாயோ?—ஏனென்றால் நாம் இஸ்ரவேல் புத்
திரரை எகிப்திலிருந்தேறிவரப்பண்ணின நாள்
முதல்கொண்டு இந்நாள்வரைக்கும், நாம் ஒரு
வீட்டிலே வாசம்பண்ணாமல், கூடாரத்திலும்
௭ வாசஸ்தலத்திலும் உலாவியிருந்தோமே.—நாம்
இஸ்ரவேலாகிய நம்முடைய சனத்தை மேய்க்
கக் கற்பித்த இஸ்ரவேல் கோத்திரங்களில் ஒன்
றோடாகிலும் நீங்கள் நமக்குக் கேதுருமரங்க
ளுடைய வீட்டைக் கட்டாதிருக்கிறதென்ன
வென்று நாம் இஸ்ரவேல் புத்திரரோடெல்லாம்
உலாவிவந்த எவ்விடத்திலாகிலும் இருந்து, யா
௮ தொரு வார்த்தையைச் சொன்னோமோ?—இப்
போதும் நீ நம்முடைய தாசனாகிய தாவீதுக்குச்
சொல்வது: சேனைகளுடைய கர்த்தர் சொல்லு
கிறதேதெனில், நீ இஸ்ரவேலென்ற நம்முடைய
சனத்தின்மேலே தலைவனாயிருக்க, நாம் ஆடுக
ளின் பிறகாலே நடந்த உன்னை ஆட்டுமந்தை
௯ யைவிட்டு எடுத்துக்கொண்டு,— நீ நடந்த எவ்
விடத்திலும் உன்னோடே இருந்து, உன் சத்து
ருக்களையெல்லாம் உனக்குமுன்பாக நிர்மூல
மாக்கி, பூமியிலிருக்கிற பெரியவர்களின் நாமத்
திற்கொத்த பெரியநாமத்தை உனக்கு உண்டாக்
௰ கினோம்.—நாம் நம்முடைய சனமாகிய இஸ்ர
வேலுக்கு ஒரு இடத்தை ஏற்படுத்தி, அது தன்
தானத்திலே குடியிருக்கவும், அது இனி, அலைக்
கப்படாமலும், முன்போலும், நாம் நம்முடைய
சனமாகிய இஸ்ரவேல்மேலே நியாயாதிபதிக
ளைக் கட்டளையிட்ட நாள்வரையில் நடந்தது
போலும், அக்கிரமப்புத்திரர் அதை இனிச் சிறு
மைப்படுத்தாமலும் இருக்கவுமாக அதை நாட்
டினோம்.— உன்னுடைய எல்லாச் சத்துருக்க ௰௧
ளுக்கும் உன்னை நீங்கலாக்கி, இளைப்பாறவும்
பண்ணினோம்; இப்போதும் கர்த்தர் உனக்கு
வீட்டை உண்டுபண்ணுவார் என்கிறதைக் கர்த்
தர் உனக்கு அறிவிக்கிறார்.—உன்னுடைய நாள் ௰௨
கள் நிறைவேறி, நீ உன் பிதாக்களோடே நித்தி
ரைபண்ணியிருக்கும்பொழுது, நாம் உனக்குப்
பிறகு உன் கர்ப்பப்பிறப்பாகிய உன் வித்தை
எழும்பப்பண்ணி, அவன் இராச்சியத்தைத்திடப்
படுத்துவோம்.—அவன் நம்முடைய நாமத்திற் ௰௩
கென்று ஒரு வீட்டைக் கட்டுவான்; அவன்
இராச்சியபாரத்தின் ஆசனத்தை என்றைக்கும்
நிலைக்கப்பண்ணுவோம். — நாம் அவனுக்குப் ௰௪
பிதாவாயிருப்போம்; அவன் நமக்குக் குமாரனா
யிருப்பான்; அவன் அக்கிரமம்செய்தால், அவனை
மனுஷர் மிலாற்றினாலும் மனுப்புத்திரர் அடிகளா
லும் தண்டிப்போம்.—ஆனால் உனக்குமுன்பாக ௰௫
நாம் தள்ளிவிட்ட சவுலைவிட்டு, நம்முடைய
கிருபையை விலகப்பண்ணினதுபோல அது
அவனைவிட்டு விலகுவதில்லை.—உன்னுடைய ௰௬
வீடும், உன்னுடைய இராச்சியமும், என்றென்
றைக்கும் உனக்குமுன்பாக நிலைவரமாயிருக்
கும்; உன்னுடைய இராசாசனம் என்றென்றைக்
கும் திடப்பட்டிருக்கும் என்கிறாரென்று சொல்
லச்சொன்னார்.—நாத்தான் இந்த எல்லா வார்த் ௰௭
தைகளுக்கும், இந்த எல்லாத் தரிசனத்திற்கும்
சரியாய்த் தாவீதுக்குச் சொன்னான்.
அப்போது தாவீது இராசா உள்பிரவேசித்து, ௰௮
கர்த்தருக்குமுன்பாகத் தரித்திருந்து சொன்னதா
வது: கர்த்தராகிய ஆண்டவரே, தேவரீர் என்னை
இந்தமட்டும் கொண்டுவந்ததற்கு, நான் எம்மாத்
திரம்? என்னுடைய வீடும் எம்மாத்திரம்?—கர்த் ௰௯
தராகிய ஆண்டவரே, இது இன்னம் உம்மு
டைய பார்வைக்குக் கொஞ்சகாரியமாயிருக்
கின்றதென்று கர்த்தராகிய ஆண்டவராயிருக்கிற
தேவரீர் உம்முடைய அடியானுடைய வீட்டை
க்குறித்து, இதற்குத் தூரமாயிருக்கும் காலத்துச்
செய்தியை முதலாய் மனுஷர்மார்க்கமாய்த் தா
னும்சொன்னீர்.—அப்புறம் தாவீது உம்மோடே ௨௰
சொல்லிக்கொண்டிருப்பதென்ன? கர்த்தராகிய
ஆண்டவராயிருக்கிற தேவரீர் உம்முடைய அடி
யானை அறிவீர்.—உம்முடைய வாக்குத்தத்தத் ௨௧
தின் நிமித்தமும், உம்முடைய சித்தத்தின்படி
யேயும், இந்தப் பெரியகாரியங்களையெல்லாம்
உம்முடைய அடியானுக்கு அறிவிக்கும்படிக்
குத் தயவுபண்ணினீர்.—ஆகையால் பராபரனா ௨௨
கிய கர்த்தரே, நீர் பெரியவரென்று விளங்குகின்
றது; ஏனெனில் நாங்கள் எங்கள் காதுகளாலே

கேட்ட சகல காரியங்களின்படியே, தேவரீரைப்
போல ஒத்தவர் இல்லை; உம்மைத்தவிர வேறே
௨௩ தேவனும் இல்லை. — உம்முடைய சனமாகிய
இஸ்ரவேலைப்போலொத்த சனமும் எது? பூலோ
கத்துச் சாதிகளில் இந்த ஒரே சாதிக்காகப் பரா
பரன் அதைத் தமக்குச் சனமாக மீட்கிறதற்கும்,
தமக்குக் கீர்த்தியை உண்டாக்குகிறதற்கும் போ
னாரே; தேவரீர் எகிப்திலிருந்து மீட்டுவந்த உம்
முடைய சனத்திற்குமுன்பாக இந்தப் பயங்கர
மான பெரிய காரியங்களை உம்முடைய தேசத்
திற்கும், அதிலிருந்த சாதிகளுக்கும், அவர்கள்
௨௪ தேவர்களுக்கும், உமக்காகச் செய்து, — உம்மு
டைய சனமாகிய இஸ்ரவேல் என்றைக்கும் உம்
முடைய சனமாயிருப்பதற்கு, அதை உமக்குத்
திடப்படுத்திக்கொண்டு, கர்த்தராகிய நீர்தாமே அ
௨௫ வர்களுக்குப் பராபரனானீர்.—இப்போதும் பரா
பரனாகிய கர்த்தாவே, தேவரீர் உம்முடைய அடி
யானையும் என் வீட்டையும்குறித்துச் சொன்ன
வார்த்தையை என்றென்றைக்கும் நிலைவரப்
படுத்த, தேவரீர் சொன்னபடியே செய்யும். —
௨௬ அப்படியே சேனைகளுடைய கர்த்தர் இஸ்ரவே
லின்மேலே பராபரனானவர் என்பதினால், உம்
முடைய நாமம் என்றென்றைக்கும் பெரிதாயி
ருந்து, உம்முடைய அடியானாகிய தாவீதின் வீடு
௨௭ உமக்குமுன்பாக நிலைநிற்கும். — ஏனென்றால்
உனக்கு வீடுகட்டுவோமென்று இஸ்ரவேலின்
பராபரனாகிய சேனைகளின் கர்த்தராயிருக்கிற
தேவரீர் உம்முடைய அடியானின் செவிக்கு
வெளிப்படுத்தினீர்; ஆகையால் உம்மைநோக்கி,
இந்த விண்ணப்பத்தைச்செய்ய உம்முடைய அ
௨௮ டியானுக்கு மனத்தயிரியம் கிடைத்தது. — இப்
போதும் கர்த்தராகிய ஆண்டவரே, தேவரீர் பரா
பரனானவர், உம்முடைய வார்த்தைகள் சத்திய
மாயிருக்கும்; தேவரீர் உம்முடைய அடியானோ
டே இந்த நல்விசேஷங்களைச் சொன்னீர்.—
௨௯ இப்போதும் உம்முடைய அடியானின் வீடு என்
றைக்கும் உமக்குமுன்பாக இருக்கும்படிக்கு
அதை ஆசிர்வதித்தருளும்; ஏனெனில் கர்த்தரான
ஆண்டவராகிய தேவரீர் அதைச் சொன்னீர்;
உம்முடைய ஆசீர்வாதத்தினாலே உம்முடைய
அடியானின் வீடு என்றைக்கும் ஆசீர்வதிக்கப்
பட்டிருக்குமென்றான்.

## ௮. அதிகாரம்.

*௧. தாவீது பெலிஸ்தியரையும், மோவாபியரையும், ௩. ஆதாதேசரையும், சூரியரையும் முறியடித்தது. ௯. தோயீ அவனை வாழ்த்தும்படி யோராமைக் காணிக்கைகளோடே அனுப்பியது. ௰௧. தாவீது அந்தக் காணிக்கைகளையும், கொள்ளையையும், பராபரனுக்குச் செலுத்தியது. ௰௪. அவன் ஏதோமிலே தாணயங்களை வைத்தது. ௰௬. தாவீதின் சேனாதலைவர்கள்.*

௧ இதற்குப்பிற்பாடு சம்பவித்ததேதெனில், தா
வீது பெலிஸ்தியரை முறியடித்து அவர்களைக்
கீழ்ப்படுத்தி, மேத்தேக்அம்மாவை அவர்கள் கை
யிலே வாங்கினான்.
௨ அவன் மோவாபியரையும் முறியடித்து, அவர்
களைத் தரைமட்டும் பணியப்பண்ண, அவர்கள்
மேல் நூல்போட்டு, இரண்டுபங்கு மனுஷரைக்
கொன்றுபோட்டு, ஒரு பங்கை உயிரோடே
வைத்தான்; அப்படியே மோவாபியர் தாவீதைச்
சேவித்து, அவனுக்குக் கப்பம்கட்டுகிறவர்களா
னார்கள்.
ரேக்கோப்பின் குமாரனாகிய ஆதாதேசரென்ற ௩
சோபாவின் இராசா, ஐபிராத் நதியண்டையில்
இருக்கிற சீமையைத் திரும்பத் தன் வசமாக்கிக்
கொள்ளப்போகையில், தாவீது அவனையும் முறி
யடித்து, — அவனுக்கு இருந்த இராணுவத்தில் ௪
ஆயிரத்து எழுநூறு குதிரைக்காரரையும், இரு
பதினாயிரம் காலாள்களையும் பிடித்து, இரதங்
களில் நூறு இரதங்களை வைத்து, மற்றவைகளை
யெல்லாம் துண்டாடிப்போட்டான்.—சோபா ௫
வின் இராசாவாகிய ஆதாதேசருக்கு ஒத்தாசை
பண்ண, தமஸ்குப்பட்டணத்துச் சூரியர் வந்
தார்கள்; ஆனால் தாவீது சூரியரில் இருபத்தீராயி
ரம்பேரை வெட்டிப்போட்டு,—தமஸ்குக்கடுத்த ௬
சூரியாவிலே தாணயங்களை வைத்தான்; அப்ப
டியே சூரியர் தாவீதைச் சேவித்து, கப்பம்கட்டு
கிறவர்களானார்கள்; ஏனென்றால் தாவீது போன
விடத்திலெல்லாம், கர்த்தர் அவனை இரட்சித்
தார்.–ஆதாதேசரின் சேவகருக்கு இருந்த பொன் ௭
பரிசைகளைத் தாவீது எடுத்து, அவைகளை எருச
லேமுக்குக் கொண்டுவந்தான்.—ஆதாதேசரின் ௮
பட்டணங்களாகிய பேத்தாகிலும் பேரோத்தா
யிலுமிருந்து தாவீது இராசா மகா திரளான
வெண்கலத்தையும் எடுத்துவந்தான்.
தாவீது ஆதாதேசருடைய எல்லா இராணுவத் ௯
தையும் முறியடித்த செய்தியை ஆமாத்தின் இரா
சாவாகிய தோயீ கேட்டபோது,–இராசாவாகிய ௰
தாவீதின் சுகசெய்தியை விசாரிக்கவும், அவன்
ஆதாதேசரோடே யுத்தம்பண்ணி, அவனை முறி
யடித்ததற்காக அவனுக்கு வாழ்த்துதல் சொல்ல
வும், தோயீ தன் குமாரனாகிய யோராமை இரா
சாவண்டைக்கு அனுப்பினான்; ஏனென்றால்
ஆதாதேசர் தோயீயின்மேல் எப்போதும் யுத்தம்
பண்ணிக்கொண்டிருந்தான்; அவன் கையிலே
வெள்ளியும் பொன்னும் வெண்கலமுமான தட்
டுமுட்டுகள் வந்தன.–தாவீது இராசா கீழ்ப்படுத் ௰௧
தின சூரியர், மோவாபியர், அம்மோன்புத்திரர்,
பெலிஸ்தியர், ஆமலேக்கியரென்ற சகலசாதியார்
களிடத்திலும்,–ரேகோபின் குமாரனாகிய ஆதா ௰௨
தேசரென்ற சோபாவின் இராசாவைக் கொள்
ளையிட்டதிலும் எடுத்து, கர்த்தருக்கு நியமித்த
வெள்ளியோடும் பொன்னோடும்கூட அவைக
ளையும் அவன் கர்த்தருக்கு நியமித்தான்.
தாவீது உப்புப்பள்ளத்தாக்கிலே பதினெண் ௰௩
ணாயிரம் சூரியரை முறியடித்துத் திரும்பினதி
னாலும் கீர்த்திபெற்றான். — ஏதோமிலும் தாண ௰௪
யங்களை வைத்தான்; ஏதோம் எங்கும், அவன் தா
ணயங்களை வைத்ததினாலே, ஏதோமியர் எல்லா
ரும் தாவீதைச் சேவிக்கிறவர்களானார்கள்; ஏனெ
ன்றால் தாவீது போன எல்லாவிடத்திலும் கர்த்
தர் அவனை இரட்சித்தார்.

௰௫ இப்படியே தாவீது இஸ்ரவேல் அனைத்தின்
மேலும் இராசாவாயிருந்தான்; அவன் தன்னு
டைய எல்லாச் சனத்திற்கும் நியாயமும் நீதியும்
௰௬ செய்துவந்தான்.—சேருயாவின் குமாரனாகிய
யோவாப் இராணுவத்தலைவனாயிருந்தான்; ஆகீ
லூதின் குமாரனாகிய யோசபாத் மந்திரியாயிருந்
௰௭ தான்.—அகீத்தூபின் குமாரன் சாதோக்கும், அப்
பியத்தாரின் குமாரன் அகிமேலேக்கும், ஆசாரி
யராயிருந்தார்கள்; செராயா சம்பிரதியாயிருந்
௰௮ தான்.—யோய்தாவின் குமாரன் பெனாயா கிரேத்
தியருக்கும் பிலேத்தியருக்கும் தலைவனாயிருந்
தான்; தாவீதின் குமாரரோவெனில் பிரபுக்களா
யிருந்தார்கள்.

## ௯. அதிகாரம்.

*௧. மேவிபோசேத்தைக் கொண்டுவரும்படி தாவீது சீபாவை அனுப்பியது. ௭. யோனத்தான் நிமித்தம் அவனைப் பந்தியில் வரவழைத்து, சவுலினுடையவைகளை அவனுக்குக் கொடுத்தது. ௯. அவனுக்குத் தாவீது சீபாவைப் பயிரிடுகிறவனாக வைத்தது.*

௧ சவுலின் வீட்டாரில் எவனொருவன் நான் யோ
னத்தான்நிமித்தம் அவனுக்குத் தயவுசெய்யும்ப
டிக்கு, இன்னம் மீதியாயிருக்கிறானோவென்று
௨ தாவீது கேட்டான்.—அப்போது சவுலின் வீட்டு
வேலைக்காரனாகிய சீபாவென்று பேருள்ளவ
னைத் தாவீதண்டைக்கு அழைத்துவந்தார்கள்;
அவனை இராசா, நீ சீபாவோ என்று கேட்டான்;
௩ அவன் அடியேன்தான் என்றான்.—அப்போது
இராசா, சவுலின் வீட்டாரில் எவனொருவன்
நான் அவனுக்குப் பராபரன்நிமித்தம் தயவு
செய்யும்படிக்கு, இன்னம் இருக்கவில்லையோ
வென்று கேட்டதற்கு, சீபா இராசாவுடனே,
இன்னம் யோனத்தானுக்கு இரண்டு கால்களும்
முடமான ஒரு குமாரன் இருக்கிறானென்றான்.—
௪ அவன் எங்கேயென்று இராசா அவனைக் கேட்
டதற்கு, சீபா இராசாவுடனே, இதோ அவன்
லோதேபாரிலே அம்மியேலின் குமாரனாகிய மா
௫ கீரின் வீட்டில் இருக்கிறானென்றான்.— அப்
போது தாவீது இராசா அவனை லோதேபாரிலி
ருக்கிற அம்மியேலின் குமாரனாகிய மாகீரின்
வீட்டிலிருந்து அழைப்பித்தான்.
௬ சவுலின் குமாரனாகிய யோனத்தானின் மகன்
மேவிபோசேத் தாவீதண்டைக்கு வந்தபோது,
முகங்குப்புறவிழுந்து வணங்கினான்; அப்போது
தாவீது, மேவிபோசேத்தே என்றான், அவன் இ
௭ தோ உம்முடைய அடியானென்றான்.—தாவீது
அவனுக்கு, நீ பயப்படாதே; ஏனெனில் உன்
தகப்பனாகிய யோனத்தானின்நிமித்தம் நான்
உனக்குத் தயவுசெய்யவே செய்து, உன் தகப்ப
னாகிய சவுலின் நிலங்களையெல்லாம் உனக்குத்
திரும்பக்கொடுப்பேன்; நீயோவெனில் என்னு
டைய பந்தியில் நித்தம் அப்பத்தைப் புசிப்பா
௮ யென்றான்.— அப்போது அவன் வணங்கிக்
கொண்டு, செத்த நாயைப்போலான என்னை
நீர் நோக்கிப்பார்க்கிறதற்கு, உம்முடைய அடி
யான் எம்மாத்திரமென்றான்.
௯ இராசா சவுலின் வேலைக்காரனான சீபாவை
அழைப்பித்து, அவனோடே சொன்னது: சவு
லுக்கும் அவர் வீட்டாரெல்லாருக்கும் இருந்த
யாவையும் உன் எசமானனுடைய குமாரனுக்குக்
கொடுத்தேன்.—ஆகையால் நீ உன் குமாரரையும் ௰
உன் வேலைக்காரரையும் கூட்டிக்கொண்டு, உன்
எசமானனுடைய குமாரனுக்குப் புசிக்கிறதற்கு
அப்பமுண்டாயிருக்கும்படிக்கு, அந்த நிலத்
தைப் பயிரிட்டு, அதின் பலனைச் சேர்ப்பாயாக;
உன் எசமானனுடைய குமாரன் மேவிபோசேத்
தோவெனில், நித்தம் என் பந்தியிலே அப்பம்
புசிப்பானென்றான்; சீபாவுக்குப் பதினைந்து
குமாரரும் இருபது வேலைக்காரரும் இருந்தார்
கள்.—சீபா இராசாவுடனே, இராசாவாகிய என் ௰௧
ஆண்டவன் தம்முடைய அடியானுக்குக் கற்பித்
தபடியெல்லாம் உம்முடைய அடியான் செய்வா
னென்றான்; இராசாவின் குமாரரில் ஒருவனைப்
போல, மேவிபோசேத் என் பந்தியிலே அசனம்
பண்ணுவானென்று இராசா சொன்னான்.—
மேவிபோசேத்திற்கு மீகாவென்று பேருள்ள ௰௨
ஒரு சின்ன குமாரன் இருந்தான்; சீபாவின் வீட்
டிலே குடியிருந்த யாவரும் மேவிபோசேத்திற்கு
வேலைக்காரராயிருந்தார்கள்.— மேவிபோசேத் ௰௩
தோவெனில் இராசாவின் பந்தியில் நித்தம் அச
னம்பண்ணுகிறபடியினாலே, எருசலேமிலே குடி
யிருந்தான்; அவனுக்கு இரண்டுகாலும் முடமா
யிருந்தன.

## ௰. அதிகாரம்.

*௧. நாகாசின் குமாரனாகிய ஆனோனை ஆறுதல்செய்யத் தாவீது அனுப்பிய தூதர்கள் அவமானப்பட்டது. ௯. அம்மோனியர் சூரியரால் உதவியைப் பெற்றும், யோவாபினாலும் அபிசாயியாலும் செயிக்கப்பட்டது. ௰௫. சோபாக் ஏலாமில் சூரியர்களால் மறுபடியும் உதவியடைந்தும் தாவீதால் கொல்லப்பட்டது.*

இதற்குப்பிற்பாடு சம்பவித்ததேதெனில் அம் ௧
மோன் புத்திரரின் இராசா மரித்தான்; அவன்
குமாரனாகிய ஆனோன் அவன் பட்டத்திற்கு இ
ராசாவானான்.—அப்போது தாவீது, ஆனோனின் ௨
தகப்பனாகிய நாகாஸ் எனக்குத் தயவுசெய்தது
போல, அவன் குமாரனாகிய இவனுக்குத் தயவு
செய்வேனென்று சொல்லி, அவன் தகப்பனுக்
காக அவனுக்கு ஆறுதல் சொல்ல, தன் ஊழியக்
காரரை அனுப்பினான்; தாவீதின் ஊழியக்காரர்
அம்மோன் புத்திரரின் தேசத்திலே வந்தபோதோ
வெனில், — அம்மோன் புத்திரரின் பிரபுக்கள் ௩
தங்கள் ஆண்டவனாகிய ஆனோனுடனே, தாவீது
ஆறுதல்சொல்லுகிறவர்களை உமக்கு அனுப்பின
தினாலே, உம்முடைய தகப்பனைக்கனம்பண்ணு
கிறதாய் உம்முடைய பார்வைக்குக் காணுகின்
றதோ? இந்தப் பட்டணத்தை ஆராய்ந்து, உளவு
பார்த்து, அதைக் கவிழ்த்துப்போட அல்லவோ
தாவீது தன் ஊழியக்காரரை உம்மண்டைக்கு
அனுப்பினானென்றார்கள்.—அப்போது ஆனோன் ௪
தாவீதின் ஊழியக்காரரைப் பிடித்து, அவர்களு
டைய ஒருபக்கத்துத் தாடியைச் சிரைத்து, அவர்
களுடைய சட்டைகளில் அவர்கள் இருப்பிட
மட்டும் இருந்த பாதியைக் கத்தரித்துப்போட்டு,

௫ அவர்களை அனுப்பிவிட்டான்.-அவர்கள் அதைத்
தாவீதுக்கு அறிக்கைபண்ணினபோது, அவன்
அந்த மனுஷர் மிகவும் நிஷ்காரம்பண்ணப்பட்
டபடியினாலே, அவர்களுக்கு எதிராக ஆள்களை
அனுப்பி, உங்கள் தாடி முளைக்கும்மட்டும் நீங்
கள் எரிகோவிலிருந்து, பிற்பாடு திரும்பிவாருங்
களென்று இராசா சொல்லச்சொன்னான்.
௬ அம்மோன் புத்திரர் தாங்கள் தாவீதுக்கு நாற்ற
மெடுத்தவர்களானதைக் கண்டபோது, அவர்கள்
தானாபதிகளை அனுப்பி, பெத்ரேகோப் தேசத்
துச் சூரியரிலும், சோபாவிலிருக்கிற சூரியரி
லும், இருபதினாயிரம் காலாள்களையும், மாக்கா
சீமையின் இராசாவினிடத்திலே ஆயிரம்பேரை
யும், தோபிலிருக்கிற மனுஷரில் பன்னீராயிரம்
பேரையும், கூலிக்குப் பொருந்திக்கொண்டார்
கள்.
௭ அதைத்தாவீது கேட்டபோது,யோவாபையும்
பலசாலிகளோடே எல்லா இராணுவத்தையும்
௮ அனுப்பினான்.-அம்மோன் புத்திரர் புறப்பட்டு,
ஒலிமுகவாசலண்டையிலே போர்செய்ய, ஆயத்
தம்பண்ணினார்கள்; ஆனால் சோபாவிலும் ரே
கோபிலுமிருந்துவந்த சூரியரும், தோபின் மனு
ஷரும், மாக்கா மனுஷரும், வெளியிலே தனித்
௯ திருந்தார்கள்.—யோவாபோ இராணுவங்களின்
படைமுகம் தனக்கு முன்னும் பின்னுமிருக்
கிறதைக் காண்கையில், அவன் இஸ்ரவேலிலே
தெரிந்துகொள்ளப்பட்ட எல்லா இராணுவங்க
ளிலும் ஒருபங்கைப் பிரித்தெடுத்து, அதைச்சூரி
௰ யருக்கு எதிராக நிறுத்தி, — மற்றச் சனத்தைத்
தன் சகோதரனாகிய அபிசாயிக்கு அம்மோன்
புத்திரருக்கு எதிராக நிறுத்தும்படி ஒப்புவித்துச்
௰௧ சொன்னதாவது:—சூரியர் என்னைப்பார்க்கிலும்
பலத்தால் நீ எனக்கு ஒத்தாசையாயிரு; அம்
மோன் புத்திரர் உன்னைப்பார்க்கிலும் பலத்தால்
௰௨ நான் உனக்கு ஒத்தாசையாக வருவேன்.—திட
னாயிரு; நாம் நம்முடைய சனத்திற்காகவும், நம்
முடைய பராபரனுடைய பட்டணங்களுக்கா
கவும், திடன்கொண்டிருப்போம்; கர்த்தர் தமது
பார்வைக்கு நலமானதைச் செய்வாராகவென்று
சொல்லி,
௰௩ யோவாபும் அவனோடிருந்த சனமும் சூரியர்
மேல் யுத்தம்பண்ணச் சேர்ந்தார்கள்; அவர்கள்
௰௪ அவனுக்குமுன்பாகமுறிந்தோடினார்கள்.—சூரி
யர் முறிந்தோடுகிறதை அம்மோன் புத்திரர் கண்
டபோது, அவர்களும் அபிசாயிக்கு முன்பாக
முறிந்தோடிப் பட்டணத்திற்கு உள்பட்டார்
கள்; அப்போது யோவாப் அம்மோன் புத்திரரை
விட்டுத் திரும்பி, எருசலேமுக்கு வந்தான்.
௰௫ தாங்கள் இஸ்ரவேலுக்குமுன்பாக முறியடிக்
கப்பட்டதைச் சூரியர் கண்டபோதோவெனில்,
௰௬ ஒருமிக்கக் கூடினார்கள்.—ஆதாரேசர் நதிக்கப்பா
லிருந்த சூரியரையும் அழைத்தனுப்பினான்; அ
வர்கள் ஏலாமுக்கு வந்தார்கள்; ஆதாரேசருடை
ய படைத்தலைவனாகிய சோபாக் அவர்களுக்கு
௰௭ முன்னாலே நடந்தான். — அது தாவீதுக்கு அறி
விக்கப்பட்டபோது, அவன் இஸ்ரவேலையெல்
லாம் கூட்டிக்கொண்டு, யோர்தானைக் கடந்து,
ஏலாமுக்கு வந்தான்; சூரியர்தாவீதுக்கு எதிராக
இராணுவங்களை நிறுத்தி, அவனோடு யுத்தம்பண்
ணுகிறபோதோவெனில், — சூரியர் இஸ்ரவே ௰௮
லுக்குமுன்பாக முறிந்தோடினார்கள்; தாவீது
சூரியரில் எழுநூறு இரதங்களின் மனுஷரையும்
நாற்பதினாயிரம் குதிரைக்காரரையும் கொன்று,
அவர்களுடைய படைத்தலைவனாகிய சோபா
கையும் வெட்டிப்போட்டான்; அவன் அங்கே
செத்தான்.—அப்போது ஆதாரேசரைச் சேவிக்கி ௰௯
ற சகல இராசாக்களும் தாங்கள் இஸ்ரவேலுக்கு
முன்பாக முறியடிக்கப்பட்டதைக் கண்டு, இஸ்
ரவேலரோடே சமாதானம்பண்ணி, அவர்களைச்
சேவித்தார்கள்; ஏனெனில் அப்புறம் அம்மோன்
புத்திரருக்கு ஒத்தாசைசெய்ய, சூரியர் பயப்பட்
டார்கள்.

## ௰௧. அதிகாரம்.

க. யோவாப் இரப்பாவை முற்றிக்கைபோட்டபோது, தாவீது பத்சேபா
ளோடு விபசாரம்செய்தது. ௬. அந்த விபசாரத்தை மறைக்கும்படி, தாவீ
தினால் அழைக்கப்பட்ட உரீயா வெறிகொண்டும், கொள்ளாதிருந்தும்,
வீட்டுக்குப்போக மனமில்லாமல் இருந்தது. ௰௪. அவன் தன் மரணத்
தைக்குறித்து எழுதியிருந்த நிருபத்தை யோவாபினிடத்தில் கொண்டு
போனது. ௰௮. யோவாப் அதின் சங்கதிகளைத் தாவீதுக்கு அனுப்பியது.
௨௭. தாவீது பத்சேபாளை மனைவியாக எடுத்துக்கொண்டது.

மறுவருஷம் இராசாக்கள் யுத்தத்திற்குப் புறப் க
படும்காலம் வந்தபோது சம்பவித்ததேதென்றால்,
தாவீது யோவாபையும், அவனோடேகூடத் தன்
சேவகரையும், இஸ்ரவேலனைத்தையும், அம்
மோன் புத்திரரை அழிக்கவும், இரப்பாவை முற்
றிக்கைபோடவும் அனுப்பினான்; ஆனால் தாவீ
து எருசலேமில் இருந்துவிட்டான்.

ஒரு சாயங்காலத்திலோவென்றால், தாவீது ௨
தன் படுக்கையிலிருந்து எழுந்து, இராச அரம
னையினுடைய உப்பரிகையின்மேல் உலாத்திக்
கொண்டு, சலகம்பண்ணிக்கொண்டிருக்கிற ஒரு
பெண்சாதியை உப்பரிகையின்மேலிருந்து பார்
த்தான்; அந்தப் பெண்சாதி வெகு சௌந்தரிய
ரூபமாயிருந்தாள்.—அப்போது தாவீது, அந்தப் ௩
பெண்சாதி யாரென்று விசாரிக்க ஆளனுப்பி
னான்; அவள் எலியாமின் குமாரத்தியாகிய பத்
சேபாளென்ற ஏத்தியனான உரீயாவின் பெண்
சாதி அல்லவோ என்றார்கள்.—அப்போது தாவீது ௪
அவளை அழைத்துவரச் சொல்லி, ஆள்களை அனு
ப்பினான்; அவள் அவனண்டைக்கு வந்தபோது,
தன் தீட்டைக்கழிக்கச் சுத்திகரித்துக்கொண்
டிருந்த அவளோடே சயனித்தான்; பிற்பாடு
அவள் தன் வீட்டுக்குப் போனாள். — ஆனால் ௫
அந்தப் பெண்சாதி கர்ப்பம்தரித்திருந்து, தான்
கர்ப்பவதியென்று தாவீதுக்கு அறிவிக்கும்படி
ஆளனுப்பினாள். — அப்போது தாவீது, ஏத்திய ௬
னாகிய உரீயாவை என்னண்டைக்கு அனுப்
பென்று யோவாப்பண்டைக்கு ஆளனுப்பி
னான்; அப்படியே யோவாப் உரீயாவைத் தாவீ
தண்டைக்கு அனுப்பினான்.

௭ ஊரியா அவனண்டைக்கு வந்தபோது, தாவீது
அவனை, யோவாப் சுகமாயிருக்கிறானோ, சனம்
சுகமாயிருக்கின்றதோ, யுத்தத்தின் செய்தி நற்
செய்தியாயிருக்கின்றதோ என்று கேட்டான்.—
௮ பிற்பாடு தாவீது ஊரியாவுடனே, நீ உன் வீட்டிற்
குப்போயிறங்கி, உன் கால்களைக் கழுவென்
றான்; ஊரியா இராசாவின் வீட்டிலிருந்து புறப்
பட்டபோது, இராசாவின் உச்சிதம் அவன் பிற
௯ காலே போயிற்று.—ஆனால் ஊரியா தன் வீட்டிற்
குப் போயிறங்காமல், இராச அரமனையின் வாச
லிலே தன் ஆண்டவனுடைய எல்லாச் சேவக
௰ ரோடும் படுத்துக்கொண்டிருந்தான்.—ஊரியா தன்
வீட்டிற்குப் போயிறங்கினதில்லையென்று தாவீ
துக்கு அறிவிக்கப்பட்டபோது, தாவீது ஊரியாவு
டனே, நீ பயணத்திலிருந்து வந்ததில்லையோ, நீ
உன் வீட்டிற்குப் போயிறங்காதிருக்கிறதென்ன
௰௧ வென்றதற்கு,—ஊரியா தாவீதுடனே, பெட்டி
யானதும் இஸ்ரவேலும் யூதாவும் கூடாரங்களி
லே தங்கி, என் ஆண்டவனாகிய யோவாபும் என்
ஆண்டவனின் சேவகரும் வெளியிலே பாளய
மிறங்கியிருக்கையில், நான் புசிக்கிறதற்கும் கு
டிக்கிறதற்கும், என் பெண்சாதியோடே சய
னிக்கிறதற்கும், என் வீட்டுக்குள் பிரவேசிப்
பேனோ? நான் இப்படிச் செய்கிறதில்லையென்று
உம்முடைய சீவனைக்கொண்டும் உம்முடைய
ஆத்துமாவின் சீவனைக்கொண்டும் சொல்லுகிறே
௰௨ னென்றான்.—அப்போது தாவீது ஊரியாவுடனே,
இன்றைக்கும் இங்கேயிரு; நாளை உன்னை அ
னுப்புவேனென்றான்; அப்படியே ஊரியா அன்
௰௩ றும் மறுநாளும் எருசலேமிலிருந்தான்.—தாவீது
அவனைத் தனக்குமுன்பாகப் புசித்துக் குடிக்கி
றதற்கு அழைத்து, அவனை வெறிக்கப்பண்ணி
னான்; ஆனால் அவன் தன் வீட்டுக்குப் போயிறங்
காமல், சாயங்காலத்திலே தன் ஆண்டவனின்
சேவகரோடே தன் படுக்கையிலே படுத்துக்
கொள்ளப்போனான்.
௰௪ காலமேயோவென்றால் தாவீது யோவாபுக்கு
ஒரு நிருபத்தை எழுதி, ஊரியாவின் கையில் அ
௰௫ னுப்பினான்.—அந்த நிருபத்திலே அவன், பலத்த
படைமுகத்திற்கு நேராக ஊரியாவை நிறுத்தி,
அவன் வெட்டுண்டு சாகும்படிக்கு, அவனை
விட்டுப் பின்வாங்குங்களென்று எழுதி இருந்
தான்.
௰௬ அப்படியே யோவாப் அந்தப் பட்டணத்துக்
காவல்காரர்கையில் நல்ல சேவகர் இருக்கிறார்
களென்று தான் அறிந்த இடத்தில் ஊரியாவை நி
௰௭ றுத்தினான்.—பட்டணத்து மனுஷர் புறப்பட்டு
யோவாபோடே யுத்தம்பண்ணுகையில், தாவீ
தின் சேவகராகிய சனத்தில் சிலர் பட்டார்கள்;
ஏத்தியனாகிய ஊரியாவும் செத்தான்.
௰௮ அப்போது யோவாப் அந்த யுத்தத்தின் செய்
திகளையெல்லாம் தாவீதுக்கு அறிவிக்க ஆள
௰௯ னுப்பி,—தான் அனுப்புகிற ஆளுக்குக் கற்பித்த
தாவது: நீ இந்த யுத்தத்தின் செய்திகளையெல்
லாம் இராசாவுக்குச் சொல்லித் தீர்ந்தபோது,—
இராசாவுக்குக் கோபம் எழும்பி, அவர், யுத்தம் ௨௰
பண்ண, நீங்கள் பட்டணத்திற்கு இத்தனை கிட்
டிச்சேர்ந்ததென்ன? அலங்கத்தில் நின்று எய்வார்
களென்று அறியீர்களோவென்றும்,—எருப்பே ௨௧
சேத்தின் குமாரன் அபிமெலேக்கைக் கொன்ற
வன் யார்? தேபேசிலே ஒரு பெண்சாதி அலங்
கத்திலிருந்து ஒரு எந்திரக்கல்லின் துண்டை அ
வன்மேலே போட்டதினால் அல்லவோ அவன்
செத்தான்; நீங்கள் அலங்கத்திற்கு இத்தனை
கிட்டிப்போனதென்னவென்றும், உன்னோடே
சொன்னால், அப்போது நீ, உம்முடைய சேவக
னாகிய ஊரியாவென்ற ஏத்தியனும் செத்தானென்
று சொல்லென்றான்.
அந்த ஆள் போய், உள்பிரவேசித்து, யோ ௨௨
வாப் தன்னை அனுப்பின செய்திகளெல்லாம்
தாவீதுக்கு அறிவித்து,—தாவீதோடே சொன்ன ௨௩
தாவது: அந்த மனுஷர் எங்கள்மேலே பலத்துக்
கொண்டு, வெளியே எங்களுக்கு எதிராகப் புறப்
பட்டு வருகிறபோது, நாங்கள் பட்டணவாசல்
மட்டும் அவர்களைத் துரத்தினோம்.—அப்போது ௨௪
அம்பு எய்கிறவர்கள் அலங்கத்திலிருந்து உம்மு
டைய சேவகரின்மேல் எய்கிறதினாலே, இராசா
வின் சேவகரில் சிலர் செத்தார்கள்; உம்முடைய
சேவகனாகிய ஊரியாவென்ற ஏத்தியனும் செத்தா
னென்றான்.—அப்போது தாவீது அந்த ஆளோ ௨௫
டே சொன்னதாவது: நீ யோவாபுடனே, இந்
தக்காரியம் உனக்கு ஆகாததாய்க் காணவேண்
டாம்; ஏனெனில் பட்டயம் ஒருவேளை இவ
னையும், ஒருவேளை அவனையும் அழிக்கும்; நீ பட்
டணத்தை இடிக்கும்படிக்கு, அதின்மேல் உன்
யுத்தத்தைப் பலக்கப்பண்ணென்று அவனுக்குத்
திடன்சொல்லென்றான்.
தன் புருஷனாகிய ஊரியா செத்தானென்று ௨௬
அவன் பெண்சாதி கேட்டபோது, அவள் தன்
வீட்டுக்காரனுக்காக இழவுகொண்டாடினாள்.—
துக்கநாள் சென்றபிற்பாடு, தாவீது அவளை அ ௨௭
ழைத்தனுப்பி, தன் வீட்டிலே சேர்த்துக்கொண்
டான்; அவள் அவனுக்குப் பெண்சாதியாகி,
அவனுக்கு ஒரு குமாரனைப் பெற்றாள்; ஆனால்
தாவீது செய்த இந்தக்காரியம் கர்த்தரின் பார்
வைக்குப் பொல்லாததாயிருந்தது.

## ௰௨. அதிகாரம்.

௧. பெண் ஆட்டுக்குட்டியைக்குறித்து நாத்தான் சொன்ன உவமையாலே தாவீது தன்னைத்தானே நியாயந்தீர்க்கச் செய்தது. ௭. தாவீது நாத்தானால் கண்டிக்கப்பட்டு, தன்னுடைய பாவத்தை அறிக்கையிட்டு, மன்னிப்பு அடைந்தது. ௰௫. பிள்ளை உயிரோடிருக்கையில், தாவீது அதற்காகத் துக்கப்பட்டு, செபம்செய்தது. ௨௪. சாலொமோன் பிறந்து, எதிதியாவென்று பேரிடப்பட்டது. ௨௯. தாவீது இரப்பாவைப் பிடித்து, அதின் சனங்களை மிகவும் வருத்தப்படுத்தியது.

கர்த்தர் நாத்தானைத் தாவீதண்டைக்கு அனுப்பி ௧
னார்; இவன் அவனண்டைக்கு வந்து, அவனுக்
குச் சொன்னதாவது: ஒரு பட்டணத்தில் இரண்
டு மனுஷர் இருந்தார்கள்; ஒருவன் ஐசுவரியவா
னும் மற்றவன் தரித்திரனுமாயிருந்தான். — ஐசு ௨
வரியவானுக்கு ஆடுமாடுகள் வெகு திரளாயிருந்
தன.—தரித்திரனுக்கோவென்றால் தான் கொண் ௩

டு வளர்த்த ஒரே சின்ன ஆட்டைத்தவிர வே
றொன்றும் இல்லாதிருந்தது; அது அவனோடும்
அவன் பிள்ளைகளோடும்கூட இருந்து வளர்ந்து,
அவன் வாயின் அப்பத்தைத் தின்று, அவன் பாத்
திரத்திலே குடித்து, அவன் மடியிலே படுத்துக்
கொண்டு, அவனுக்கு ஒரு குமாரத்தியைப்போல
௪ இருந்தது.—ஐசுவரியமுள்ள அந்த மனுஷனுக்கு
ஒரு வழிப்பயணக்காரன் வந்தபோதோவெனில்,
அவன் தன்னண்டைக்குவந்த வழிப்போக்கனுக்
குச் சமையல்பண்ணுவிக்க, தன்னுடைய ஆடு
மாடுகளில் எதையாகிலும் பிடிக்க மனதில்லா
மல், அந்தத் தரித்திர மனுஷனுடைய ஆட்டைப்
பிடித்து, அதைத் தன்னண்டைக்கு வந்த மனுஷ
னுக்குச் சமையல்பண்ணுவித்தானென்றான்.—
௫ அப்போது தாவீது அந்த மனுஷன்மேலே மிக
வும் கோபம்மூண்டவனாகி, நாத்தானோடே சொ
ன்னதாவது: இதைச் செய்த அந்த மனுஷன் மர
ணத்திற்கு ஏதுவானவனென்று கர்த்தருடைய
௬ சீவனைக்கொண்டு சொல்லுகிறேன். — அவன்
இரக்கமாயிராமல், இந்தக் காரியத்தைச் செய்தப
டியினாலே, அந்த ஆட்டுக்காக நாலத்தனையும்
திரும்பச் செலுத்தவேண்டுமென்றான்.
௭ அப்போது நாத்தான் தாவீதுடனே சொன்ன
தாவது: நீர்தானே அந்த மனுஷன்; இஸ்ரவேலின்
பராபரனாகிய கர்த்தர் சொல்லுகிறதேதெனில்,
நாம் உன்னை இஸ்ரவேலின்மேல் இராசாவாக
அபிஷேகம்பண்ணுவித்து, நாம் உன்னைச் சவு
௮ லின் கைக்குத் தப்புவித்து,—உன் ஆண்டவனு
டைய வீட்டையும் உன் ஆண்டவனுடைய ஸ்தி
ரிகளையும், உன் மடியிலே கொடுத்து, இஸ்ரவேல்
வீட்டையும், யூதாவின் வீட்டையும், உனக்குக்
கொடுத்தோம்; இது போதாதிருந்தால், இன்ன
தின்னதை உனக்குப் பின்னையும் கூட்டிக்கொ
௯ டுப்போமே. — நீ கர்த்தருடைய பார்வைக்குப்
பொல்லாப்பான அந்தக் காரியத்தைச் செய்யும்
படிக்கு, அவருடைய வார்த்தையை அசட்டை
பண்ணினதென்ன? நீ ஏத்தியனாகிய உரீயாவைப்
பட்டையத்தால் மடிவித்து, அவன் பெண்சா
தியை உனக்குப் பெண்சாதியாக எடுத்துக்கொ
ண்டு, அவனை அம்மோன் புத்திரரின் பட்டை
௰ யத்தாலே கொன்றுபோட்டாய்.—இப்போதும்
நீ நம்மை அசட்டைபண்ணி, ஏத்தியனாகிய உரீ
யாவின் பெண்சாதியை உனக்குப் பெண்சாதி
யாக எடுத்துக்கொண்டபடியினாலே, பட்டை
யம் என்றைக்கும் உன் வீட்டைவிட்டு விலகா
௰௧ திருக்கும்.—கர்த்தர் சொல்லுகிறதேதெனில் இ
தோ, நாம் உன் வீட்டிலே பொல்லாப்பை உன்
மேல் எழும்பப்பண்ணி, உன் கண்கள் பார்க்க,
உன் ஸ்திரிகளை எடுத்து, உன் தோழனுக்குக்
கொடுப்போம்; அவன் இந்தச் சூரியனுடைய
வெளிச்சத்திலே உன் ஸ்திரிகளோடே சயனிப்
௰௨ பான்.—ஏனென்றால் நீ ஒளிப்பிடத்திலே அதைச்
செய்தாய்; நாமோவென்றால் இந்தக் காரியத்
தை இஸ்ரவேலரெல்லாருக்குமுன்பாகவும், சூரி
யனுக்குமுன்பாகவும் செய்வோமென்றாரென்று
சொன்னான். — அப்போது தாவீது நாத்தானுட ௰௩
னே, நான் கர்த்தருக்கு விரோதமாய்ப் பாவம்
செய்தேனென்றான்; நாத்தான் தாவீதோடே
சொன்னதாவது: நீர் சாகாதபடிக்கு, கர்த்தர் உம்
முடைய பாவத்தை நீங்கவும்பண்ணினார்.—ஆ ௰௪
னால் இந்தக் காரியத்தினாலே கர்த்தருடைய சத்
துருக்கள் தூஷணிக்க நீர் இடம்பண்ணவே பண்
ணினபடியினாலும், உமக்குப் பிறந்த பிள்ளை சா
வவே சாகுமென்று சொல்லி,
நாத்தான் தன் வீட்டுக்குப் போய்விட்டான்; ௰௫
அப்போது கர்த்தர் உரீயாவின் பெண்சாதி தாவீ
துக்குப் பெற்ற ஆண்பிள்ளையை அது கேவல
மாய் வியாதிப்பட அடித்தார். — அப்போது தா ௰௬
வீது அந்தப் பிள்ளைக்காகப் பராபரனைத் தேடி,
உபவாசம்பண்ணி, உள்ளே போய், இரவெல்
லாம் தரையிலே கிடந்தான்.—அவனைத் தரையி ௰௭
லிருந்து எழுந்திருக்கப்பண்ண, அவனுடைய
வீட்டின் மூப்பரானபேர்கள் எழுந்து, அவனண்
டையில் வந்தாலும், அவன் மாட்டேனென்று
சொல்லி, அவர்களோடே அப்பம் சாப்பிடாம
லும் போனான். — ஏழாம் நாளிலோவெனில், ௰௮
பிள்ளை செத்துப்போயிற்று; அப்போது பிள்ளை
செத்துப்போயிற்றென்று தாவீதின் ஊழியக்கா
ரர் அவனுக்கு அறிவிக்க ஐயப்பட்டார்கள்;
ஏனெனில் இதோ பிள்ளை உயிரோடிருக்கையில்,
நாம் அவரோடே பேசுகிறபோது, அவர் நம்மு
டைய சொல்கேட்கவில்லை; பிள்ளை செத்துப்
போயிற்றென்று அவரோடே எப்படிச் சொல்
லுவோம்? அதிகமாக வியாகுலப்படுவாரென்று
சொல்லிக்கொண்டார்கள்.—ஆனால் தாவீது தன் ௰௯
ஊழியக்காரர் இரகசியமாய்ப் பேசுகிறதைக் கா
ண்கிறதினால், பிள்ளை செத்துப்போயிற்றென்று
அறிந்துகொண்டு, தன் ஊழியக்காரரை, பிள்ளை
செத்துப்போயிற்றோவென்று கேட்டான்; செத்
துப்போயிற்று என்றார்கள்.—அப்போது தாவீது ௨௰
தரையைவிட்டு எழுந்திருந்து, தன்னைக் கழுவி,
எண்ணெய் பூசிக்கொண்டு, தன் வஸ்திரங்களை
மாற்றி, கர்த்தருடைய வீட்டிற்குள் பிரவேசித்து,
பணிந்துகொண்டு, தன் வீட்டுக்கு வந்து, போ
சனம்கேட்டு, அதை அவன் முன்னே வைத்த
போது புசித்தான்.—அப்போது அவன் ஊழி ௨௧
யக்காரர் அவனுடனே, நீர் செய்கிற இந்தக் காரி
யம் என்ன? உயிரோடிருக்கிற பிள்ளைக்காக உப
வாசித்து அழுதீர்; ஆனால் பிள்ளை மரித்தபிற்பாடு,
எழுந்திருந்து அசனம்பண்ணுகிறீர் என்றார்கள்.—
அதற்கு அவன் சொன்னது: பிள்ளை இன்னம் ௨௨
உயிரோடிருக்கையில், பிள்ளை பிழைக்கும்படிக்
குக் கர்த்தர் எனக்கு இரங்குவாரோ யாருக்குத்
தெரியுமென்று உபவாசித்து அழுதேன்.—அது ௨௩
மரித்திருக்கிற இப்போதோவெனில் நான் உப
வாசிப்பதென்ன? இனி நான் அதைத் திரும்
பிவரப்பண்ணக் கூடுமோ? நான் அதினண்
டைக்குப் போவேனே அல்லாமல், அது என்
னண்டைக்குத் திரும்பிவரப்போகிறதில்லை என்
றான்.

உச பிற்பாடு தாவீது தன் பெண்சாதியான பற்
சேபாளுக்கு ஆறுதல் சொல்லி, அவளண்டைக்
குப் போய், அவளோடே சயனித்தான்; அவள்
ஒரு குமாரனைப் பெற்றாள்; அவனுக்குச் சாலோ
மோனென்று பேரிட்டான்; அவனைக் கர்த்தர்
உரு சிநேகித்தார்.—அவனைத் தீர்க்கதரிசியாகிய நாத்
தான்வசமாய் விட்டான்; இவன் கர்த்தரின்
நிமித்தம் அவனுக்கு எதிதியாவென்று பேரிட்
டான்.

உசு அதற்குள்ளே யோவாப் அம்மோன் புத்திரரு
டைய இரப்பாப் பட்டணத்தின்மேல் யுத்தம்
உஎ பண்ணி, இராசதானியைப் பிடித்து,—தாவீதண்
டைக்கு ஆளனுப்பி, நான் இரப்பாவின்மேல்
யுத்தம்பண்ணி, தண்ணீர் ஓரமான பட்டணத்
உஅ தைப்பிடித்து இருக்கிறேன்.—இப்போதும் நான்
பட்டணத்தைப் பிடிக்கிறதினால், என்பேர் விள
ங்காதபடிக்கு, நீர் மற்றச் சனத்தைக் கூட்டிக்
கொண்டுவந்து, பட்டணத்தை முற்றிக்கைபோ
ட்டுப் பிடியுமென்று சொல்லச்சொன்னான்.—
உகூ அப்படியே தாவீது சனத்தையெல்லாம் கூட்
டிக்கொண்டு, இரப்பாவுக்குப் போய், அதின்
௩௰ மேல் யுத்தம்பண்ணி, அதைப் பிடித்து,—அவர்க
ளுடைய இராசாவுடைய தலையின்மேல் இருந்த
கிரீடத்தை எடுத்துக்கொண்டான்; அது ஒரு தா
லந்து பொன் நிறையும் இரத்தினங்கள் பதித்தது
வுமாயிருந்தது; அது தாவீதினுடைய தலையில்
வைக்கப்பட்டது; பட்டணத்தின் கொள்ளையை
மகா விஸ்தாரமுமாய் அதிலிருந்து கொண்டுபோ
௩க னான்.—ஆனால் அதிலிருந்த சனத்தை அவன்
வெளியே கொண்டுபோய், அவர்களை வாளறுக்
கிற வேலைக்கும், இருப்புப்பாறைகளின் வே
லைக்கும், இருப்புக்கோடாலிகளின் வேலைக்கும்
வைத்து, அவர்களை மோளோகின் சூளையையும்
கடக்கப்பண்ணினான்; இப்படி அம்மோன் புத்
திரரின் பட்டணங்களுக்கெல்லாம் செய்து, தா
வீது எல்லாச் சனத்தோடும்கூட எருசலேமுக்
குத் திரும்பினான்.

## ௰௩. அதிகாரம்.

க. அம்னோன் தாமாரை இச்சித்து, யோனதாபின் ஆலோசனையினால் தான் வியாதியாயிருக்கிறதாக அவளை அழைப்பித்து கற்பழித்தது. ௰ரு. அவன் அவளைப் பகைத்து, அடாதவிதமாகத் துரத்தியது. ௰கூ. அப்சலோம் அவளை வரவழைத்து, தன் எண்ணத்தை மறைத்தது. உ௩. ஆட்டுமயிர் கத்தரிக்கிற வேளையிலே, இராசாவின் குமாரர்கள் எல்லாருக்கும் நடுவில் அவன் அம்னோனைக் கொன்றது. ௩௰. தாவீது அந்தச் சங்கதிகளைக் கேட்டு, ௩எ. துக்கித்து, யோனதாபினால் தேற்றப்பட்டது. அப்சலோம் கேசூரில் தல்மாயென்பவனிடத்திற்கு ஓடிப்போனது.

க அதற்குப்பிற்பாடு சம்பவித்ததேதெனில், தாவீ
தின் குமாரனாகிய அப்சலோமுக்குத் தாமா
ரென்று பேருள்ள சவுந்தரியமுள்ள சகோதரி
இருந்தாள்; அவள்மேலே தாவீதின் குமாரன்
உ அம்னோன் இச்சைவைத்து,—தன் சகோதரியா
கிய தாமாரின்நிமித்தம் வியாதி அடையத்தக்க
தாக ஏக்கமெடுத்தான்; ஏனெனில் அவள் கன்னி
யாஸ்திரியாயிருந்தாள்; அவளுக்கு ஒரு பொல்
லாப்புச்செய்ய, அம்னோனின் பார்வைக்கு வருத்
௩ தமாயிருந்தது.—ஆனால் அம்னோனுக்குத் தாவீது
டைய அண்ணன் சிமேயாவின் குமாரனாகிய
யோனதாபென்று பேருள்ள ஒரு சிநேகிதன்
இருந்தான்; அந்த யோனதாப் வெகு தந்திரவா
தியாயிருந்தான்.—இவன் அவனோடே, இராசச ச
குமாரனாகிய நீ நாளுக்குநாள் எதினாலே இப்படி
இளைத்துப்போகிறாய், எனக்கு அறிவியாயோ
வென்றான்; அம்னோன் அவனோடே, என் சகோ
தரன் அப்சலோமின் சகோதரியாகிய தாமாரின்
மேல் நான் ஆசைவைத்திருக்கிறேனென்றான்.—
அப்போது யோனதாப் அவனுடனே, நீ வியா ரு
திக்காரனைப்போல, உன் படுக்கையின்மேலே
படுத்துக்கொள்; உன்னைப் பார்க்கிறதற்கு உன்
தகப்பன் வரும்போது, நீ அவருடனே, என்
சகோதரியாகிய தாமார்வந்து, என்னைப் போச
னம் புசிக்கப்பண்ணி, நான் பார்த்து, அவள்
கையினாலே சாப்பிடும்படிக்கு, என் கண்களுக்
குமுன்பாகப் போசனத்தைச் சமைக்கட்டுமே
என்று சொல்லென்றான். — அப்படியே அம் சு
னோன் வியாதிக்காரன்போலப் படுத்துக்கொ
ண்டு, இராசா தன்னைப் பார்க்க வந்தபோது இரா
சாவுடனே, என் சகோதரியாகிய தாமார் வந்து
நான் அவள் கையினாலே சாப்பிடும்படிக்கு,
என் கண்களுக்குமுன்பாக இரண்டு நல்ல பணி
யாரங்களைப் பண்ணட்டுமே என்றான்.
அப்போது தாவீது, தாமாரண்டையில் வீட் எ
டிற்குள் ஆளனுப்பி, நீ உன் சகோதரனாகிய அம்
னோன் வீட்டுக்குப் போய், அவனுக்கு ஒரு சமை
யல்பண்ணென்று சொல்லச்சொன்னான்.—தா அ
மார் தன் சகோதரனாகிய அம்னோன் படுத்துக்
கொண்டிருக்கிற வீட்டுக்குப் போய், மாவெ
டுத்துப் பிசைந்து, அவன் கண்களுக்கு முன்
பாகத் தட்டி, பணியாரங்களைச் சுட்டு,— சட் கூ
டியை எடுத்து, அவனுக்குமுன்பாக அவைகளை
வைத்தாள்; ஆனால் அவன் சாப்பிடமாட்டேனெ
ன்றான்; பிற்பாடு அம்னோன், எல்லாரையும் என்
னைவிட்டு வெளியே போகப்பண்ணுங்களென்
றான்; எல்லாரும் அவனைவிட்டு வெளியேபோ
னார்கள்.—அப்போது அம்னோன் தாமாருடனே, ௰
நான் உன் கையினாலே சாப்பிடும்படிக்கு, அந்தப்
போசனத்தை அறைவீட்டிலே கொண்டுவாவெ
ன்றான்; அப்படியே தாமார் தான் செய்த பணி
யாரங்களை அறைவீட்டில் இருக்கிற தன் சகோ
தரனாகிய அம்னோனுக்குக் கொண்டுபோனாள்.—
ஆனால் அவன் சாப்பிடும்படிக்கு அவள் அவை ௰க
களைச் சேரக்கொண்டுவருகையில், அவன் அவ
ளைப் பிடித்து அவளுடனே, என் சகோதரியே,
நீ வந்து என்னோடே சயனி என்றான்.—அவள் ௰உ
அவனோடே சொன்னதாவது: அப்படி அல்ல,
என் சகோதரனே, என்னைக் கற்பழிக்காதே;
ஏனெனில் இஸ்ரவேலிலே அப்படிச் செய்யப்
பட ஒண்ணாது; இப்படிக்கொத்த மதிகேடான
காரியத்தைச் செய்யாயாக. — மற்றப்படி நான் ௰௩
என் வெட்கத்தோடே எங்கே போவேன்? நீயும்
இஸ்ரவேலிலே மதிகெட்டவர்களில் ஒருவனைப்
போல இருப்பாய்; இப்போதும் நீ இராசாவோ

டே பேசு, அவர் என்னை உன் பேச்சுக்குத்
௰௪ தடைபண்ணுவதில்லையென்றாள்.—அவனோவெ
ன்றால் அவள் சொல்கேட்கமாட்டோமென்று
அவன் அவளிலும் பலவானானதினால் அவளைப்
பலவந்தம்செய்து, அவளோடே சயனித்து அவ
ளைக் கற்பழித்தான்.
௰௫ பிற்பாடு அம்னோன் அவளை மகா பெரிய
பகையாய்ப் பகைத்தான்; அதேனென்றால் அ
வன் அவளைச் சிநேகித்த சிநேகத்தைபபார்க்
கிலும், அவளைப் பகைக்கிற பகை பெரியதாயி
ருந்தது; ஆகையால் நீ எழுந்துபோவென்று அம்
௰௬ னோன் அவளோடே சொன்னான்.—அப்போது
அவள் அவனுடனே, நீ எனக்குச் செய்த அந்
தப் பொல்லாப்பைப்பார்க்கிலும், நீ என்னைத்
தள்ளிவிடுகிற இந்தப் பொல்லாப்பு, பின்னை
யும் அதிகமாயிருக்கின்றதென்றாள்; ஆனால் அ
௰௭ வன் அவளைக் கேட்க மனதில்லாமல்,—தன்னைச்
சேவிக்கிற தன் வேலைக்காரனைக் கூப்பிட்டு, நீ
இவளை என்னைவிட்டு வெளியே துரத்தி, அவள்
௰௮ போனபின் கதவைப் பூட்டென்றான்.—அவள்
பலவருணமான வஸ்திரத்தை உடுத்துக்கொண்
டிருந்தாள்; ஏனெனில் இராசாவின் குமாரத்தி
களாகிய கன்னியாஸ்திரிகள் இப்படிக்கொத்த
சால்வைகளைத் தரித்துக்கொள்ளுவார்கள்; அப்
படியே அவனைச் சேவிக்கிறவன் அவளை வெளி
யே துரத்தி, அவள் போனபின் கதவைப் பூட்டி
னான்.
௰௯ அப்போது தாமார் தன் தலையின்மேல் சாம்
பலை வாரிப்போட்டுக்கொண்டு,தான் தரித்த பல
வருணமான வஸ்திரத்தைக் கிழித்து, தன் கை
யைத் தன் தலையின்மேல் வைத்து, கூப்பிட்டுக்
௨௰ கொண்டே நடந்தாள்.—அப்போது அவள் சகோ
தரனாகிய அப்சலோம் அவளுடனே, உன் சகோ
தரனாகிய அம்னோன் உன்னோடிருந்தானோ? இப்
போதும் என் சகோதரியே, மவுனமாயிரு; அ
வன் உன்னுடைய சகோதரன்; இந்தக் காரியத்
தை உன் மனதிலே வைக்காயாகவென்றான்,
அப்படியே தாமார் தன் சகோதரனாகிய அப்ச
லோமின் வீட்டில் ஒண்டியாயிருந்தாள்.
௨௧ தாவீது இராசா இந்தச் செய்திகளையெல்லாம்
கேட்டபோது, வெகு கோபமாயெரிந்தான்.—
௨௨ அப்சலோம் அம்னோனோடே நன்மையாகிலும்
தீமையாகிலும் பேசினதில்லை; ஏனெனில் தன்
சகோதரியாகிய தாமாளை அம்னோன் கற்பழித்த
காரியத்தினிமித்தம் அப்சலோம் அவனைப்
௨௩ பகைத்தான்.—இரண்டுவருஷம் சென்றபோதோ
வெனில், அப்சலோம் எப்பிராயீமுக்குச் சமீப
மான பாலாத்சோரிலே ஆடுகளை மயிர்கத்திரிக்
கிறவர்களை வைத்திருந்து, இராசாவின் குமார
௨௪ ரையெல்லாம் விருந்துக்கு அழைத்தான்.—அவன்
இராசாவண்டைக்குப்போய், இதோ ஆடுகளை
மயிர்கத்திரிக்கிறவர்களை அடியேன் வைத்திருக்
கிறேன்; இராசாவும் அவருடைய ஊழியக்கார
ரும் உம்முடைய அடியானோடே வரவேண்டிக்
௨௫ கொள்ளுகிறேனென்றான்.—இராசா அப்சலோ
மோடே, அப்படி வேண்டாம்; என் மகனே,
உனக்குப் பாரமாயிராதபடிக்கு நாங்களெல்லா
ரும் வராமலிருப்போமாக என்றான்; அவனை
வருந்திக்கொண்டாலும், அவன் போக மனதில்
லாமல் அவனை ஆசீர்வதித்தான்.—அப்போது ௨௬
அப்சலோம் இல்லாவிட்டால் என் சகோதரனா
கிய அம்னோன் எங்களோடே வரட்டுமே என்ற
தற்கு, இராசா அவனுடனே, அவன் உன்னோ
டே வரவேண்டியதென்ன என்றான்.—பின்னை ௨௭
யும் அப்சலோம் அவனை வருந்திக்கொண்டப
டியினாலே, அவன் அம்னோனையும், இராசாவின்
குமாரர் அனைவரையும், அவனோடே போக
விட்டான்.
ஆனால் அப்சலோம் தன் வேலைக்காரருக்குக் ௨௮
கற்பித்துச் சொன்னது: நன்றாய்ப் பாருங்கள்;
அம்னோன் திராட்சப்பழ இரசத்தினால் சந்தோ
ஷமாயிருக்கையில், நான் உங்களுடனே, அம்
னோனை அடித்துக் கொல்லுங்களென்று சொல்
லும்போது, நீங்கள் பயப்படாமல் அவனைக்
கொன்றுபோடுங்கள்; நான் அல்லவோ அதை
உங்களுக்குக் கற்பிக்கிறவன்; திடனான சேவ
கராயிருங்களென்று சொல்லியிருந்தான்.—அப்ச ௨௯
லோம் கற்பித்தபடியே அப்சலோமின் வேலைக்
காரர் அம்னோனுக்குச் செய்தார்கள்; அப்போது
இராசாவின் குமாரரெல்லாரும் எழுந்திருந்து,
அவரவர் தம்தம் கோவேறுகழுதையின்மேல் ஏறி
ஓடிப்போனார்கள்.
அவர்கள் வழியில் இருக்கிறபோதோவெ ௩௰
னில், அப்சலோம் இராசாவின் குமாரரையெல்
லாம் அடித்துக் கொன்றான்; அவர்களில் ஒரு
வரும் மீதியானதில்லையென்கிறதாய், தாவீதுக்
குச் செய்திவந்தது.—அப்போது இராசா எழுந்தி ௩௧
ருந்து, தன் வஸ்திரங்களைக் கிழித்துக்கொண்டு,
தரையிலே விழுந்துகிடந்தான்; அவன் ஊழியக்
காரரெல்லாரும் தங்கள் வஸ்திரங்களைக் கிழித்
துக்கொண்டு நின்றார்கள். — ஆனால் தாவீதின் ௩௨
அண்ணனாகிய சிமேயாவின் குமாரன் யோனா
தாப் மறு உத்தரவு கொடுத்துச் சொன்னதாவது:
இராசாவின் குமாரரான வாலிபரையெல்லாம்
கொன்றுபோட்டார்களென்று என் ஆண்டவன்
நினைக்கவேண்டாம்; அம்னோன்மாத்திரம் செத்
துப்போனான்; ஏனெனில் இவன் அவன் சகோ
தரியாகிய தாமரைக் கற்பழித்த நாள்முதல்
கொண்டு, அது அப்சலோமின் நெஞ்சில் இருந்
தது.—இப்போதும் இராசாவின் குமாரர்களெல் ௩௩
லாரும் செத்தார்களென்ற பேச்சை இராசாவா
கிய என் ஆண்டவன் தம்முடைய மனதிலே
வைக்கவேண்டாம்; ஏனென்றால் அம்னோன்
ஒருவனே செத்தானென்றான்; அப்சலோம் ஓடி
ப்போனான்.
சாமக்காரச் சேவகன் தன் கண்களை ஏறெடுத் ௩௪
துப்பார்க்கிறபோது, இதோ அநேகம் சனம் அவ
னைவிட்டு வருகிறவழியாகிய மலையின் மறைவி
லிருந்து வருகிறதைக் கண்டான்.—அப்போது ௩௫
யோனதாப் இராசாவுடனே, இதோ இராசாவின்

குமாரர் வருகிறார்கள்; உம்முடைய அடியான்
௩௬ சொன்னபடியே ஆயிற்றென்றான்.-அவன் பேசி
முடிந்தபோதோவென்றால், இதோ இராசாவின்
குமாரர் வந்து, சத்தமிட்டு அழுதார்கள்; இராசா
வும் அவனுடைய எல்லா ஊழியக்காரரும் மகா
பெரிய புலம்பலாய் அழுதார்கள்.
௩௭ அப்சலோமோவெனில் அம்மீயூரின் குமார
னாகிய தல்மாயென்ற கேசூரின் இராசாவண்
டைக்கு ஓடிப்போனான்; ஆனால் தாவீது அந்த
எல்லா நாளும் தன் குமாரனுக்காகத் துக்கித்துக்
௩௮ கொண்டிருந்தான். — அப்சலோம் கேசூருக்கு
ஓடிப்போய், அங்கே மூன்றுவருஷம் இருந்
௩௯ தான்.—தாவீது இராசா அம்னோன் செத்தபடி
யினாலே, அவனுக்காகத் துக்கித்துத் தேறிவிட்
டபோதோவெனில், அப்சலோமைப் பின்தொ
டரும் நினைவை விட்டுவிட்டான்.

## ௰௪. அதிகாரம்.

௧ யோவாப் தெக்கோபா ஊராளாகிய ஒரு விதவையைச் சம்மதப்படுத்தி, ஒரு உவமையினாலே அப்சலோமை வீட்டுக்குக் கொண்டுவரும்படி இராசாவை இணங்கச்செய்து, அவனை எருசலேமுக்குக் கொண்டுவந்தது. ௨௫. அப்சலோமின் சவுந்தரியமும் தலைமயிரும் பிள்ளைகளும். ௨௮. இரண்டுவருஷத்திற்குப்பின்பு அப்சலோம் யோவாபினால் இராசாவின் சமுகத்திற்குக் கொண்டுவரப்பட்டது.

௧ இராசாவின் இருதயம் அப்சலோமின்மேல்
இன்னம் தாங்கலாயிருக்கிறதைச் சேருயாவின்
௨ குமாரன் யோவாப் அறிந்தபடியினாலே,-அவன்
தெக்கோபாவிலிருக்கிற ஞானமுள்ள ஒரு ஸ்தி
ரியை அழைத்தனுப்பி, அவளோடே சொன்ன
தாவது: நீ இழவுகொண்டாடுகிறவளைப்போல,
துக்கவஸ்திரங்களை உடுத்திக்கொண்டு, எண்
ணெய் பூசிக்கொள்ளாமல், செத்துப்போனவ
னுக்காக அநேகநாளாய்த் துக்கித்திருக்கிற பெ
௩ ண்சாதியைப்போலக் காண்பித்து,-இராசாவண்
டைக்குள் பிரவேசித்து, அவரோடே, இன்ன
இன்னபிரகாரமாகப் பேசென்று அவள் சொல்ல
வேண்டிய வார்த்தைகளை யோவாப் அவள் வாயி
லே போட்டான்.
௪ அப்படியே தெக்கோபா ஊராளான அந்த ஸ்
திரி இராசாவோடே பேசப்போய், தரையிலே
முகங்குப்புற விழுந்து வணங்கி, இராசாவே இர
௫ ட்சியுமென்றாள்.-இராசா அவளுடனே, உனக்கு
என்ன வேண்டுமென்றதற்கு, அவள் சொன்ன
தாவது: ஆ, நான் விதவையான பெண்சாதி,
ஏனென்றால் என் புருஷன் சென்றுபோனான்.—
௬ ஆனால் உம்முடைய அடியாளுக்கு இரண்டு குமா
ரர் இருந்தார்கள்; அவர்கள் இருவரும் வெளியி
லே சண்டைபண்ணி, அவர்களை விலக்க ஒருவ
ரும் இல்லாதபடியினாலே, ஒருவன் மற்றவனை
௭ அடித்துக் கொன்றுபோட்டான்.-ஆகையால் இ
தோ வம்சமெல்லாம் உம்முடைய அடியாள்மேல்
எழும்பி, தன் சகோதரனைக் கொன்றுபோட்ட
வனை, அவன் கொன்ற அவன் சகோதரனுடைய
பிராணனுக்காக, நாங்கள் கொன்றுபோட்டு, அந்
தச் சுதந்தரவாளனாகிய அவனையும் அழித்துப்
போடும்படிக்கு, அவனை ஒப்புவியென்று சொல்
லி, என் புருஷனுக்குப் பூமியின்மேலே பேரும்
மீதியும் வைக்கப்படாதபடிக்கு, எனக்கு இன்ன
மிருக்கிற பொறியையும் அவித்துப்போட மன
தாயிருக்கிறார்களென்றாள்.—அப்போது இராசா ௮
அந்த ஸ்திரியோடே, நீ உன் வீட்டுக்குப்போ,
நான் உனக்காகக் கட்டளைபண்ணுவேனென்
றான்.-பின்னையும் அந்தத் தெக்கோபாவூர் ஸ்திரி ௯
இராசாவுடனே, இராசாவாகிய என் ஆண்டவ
னே, இராசாவின்மேலும் அவர் ஆசனத்தின்மே
லும் குற்றமில்லாதபடிக்கு, அந்தப் பழி என்மே
லும் என் தகப்பன் வீட்டின்மேலும் சுமரக்கடவ
தென்றாள்.—அதற்கு இராசா, உனக்கு விரோத ௰
மாகப் பேசுகிறவனை என்னண்டைக்கு அழைத்
துவா, அப்போது அவன் இனி உன்னைத் தொ
டாதிருப்பானென்றான்.—பின்னையும் அவள், ௰௧
இரத்தப்பழி வாங்குகிறவர்கள் அழிம்புசெய்து,
என் குமாரனை அதம்பண்ணப் பெருகிப்போ
காதபடிக்கு, இராசாவானவர் தம்முடைய பரா
பரனாகிய கர்த்தனை நினைப்பாராகவென்றாள்;
அதற்கு இராசா உன் குமாரனுடைய மயிரில்
ஒன்றும் தரையில் விழுவதில்லையென்று கர்த்த
ரின் சீவனைக்கொண்டு சொல்லுகிறேனென்
றான்.
அப்போது அந்த ஸ்திரி, இராசாவாகிய என் ௰௨
ஆண்டவனோடே உம்முடைய அடியாள் ஒரு
வார்த்தையைச் சொல்லட்டுமே என்றாள்; அவன்
சொல்லென்றதற்கு, — அந்த ஸ்திரி சொன்ன ௰௩
தாவது: பின்னை என் பராபரனுடைய சனத்
திற்கு விரோதமாய் அப்படிக்கொத்த நினைவை
வைத்திருக்கிறீர்; துரத்துண்ட தம்முடையவனை
இராசா திரும்ப அழைத்தாலொழிய, இராசா
இப்போது சொன்ன வார்த்தையினாலே குற்ற
முள்ளவரைப்போல இருக்கிறீர்.—ஏனென்றால் ௰௪
மரிக்கவே மரித்து, திரும்பச் சேராதபடிக்கு,
தரையிலே சுவறுகிற தண்ணீரைப்போல இருக்
கிறோம்; பராபரனோவென்றால் சீவனை எடுத்
துக்கொள்ளாமல், துரத்துண்டவன் அப்புறம்
தம்மைவிட்டு விலக்கப்படாதிருக்கும் நினைவு
களை நினைக்கிறார். — இப்போதும் நான் என் ௰௫
ஆண்டவனாகிய இராசாவோடே இந்த வார்த்
தையைப் பேச எதினாலே வந்தேனென்றால்,
சனம் எனக்குப் பயமுண்டாக்கினதினாலேதா
னே; ஆகையால் நான் இராசாவோடே பேசு
வேனாக; ஒருவேளை இராசா தம்முடைய அடி
யாளுடைய வார்த்தையின்படி செய்வாரென்று
உம்முடைய அடியாளாகிய நான் சொன்
னேன்.—ஏனெனில் என்னையும் என் குமாரனை ௰௬
யும் ஏகமாய்ப் பராபரனுடைய சுதந்தரத்திற்குப்
புறம்பாக்கி, அழிக்க நினைக்கிற மனுஷனுடைய
கைக்குத் தம்முடைய அடியாளை நீங்கலாக்கி
விடும்படிக்கு இராசா கேட்பார். — இராசாவா ௰௭
கிய என் ஆண்டவனுடைய வார்த்தை எனக்கு
ஆறுதலாயிருக்குமென்று உம்முடைய அடியா
ளாகிய நான் எண்ணினேன்; ஏனெனில் நன்மை
யையும் தீமையையும் கேட்கும்படி, இராசாவா
கிய என் ஆண்டவன் பராபரனுடைய தூதனைப்

போல இருக்கிறார்; இதற்காக உம்முடைய பரா
பரனாகிய கர்த்தர் உம்மோடேகூட இருக்கிறார்
என்றாள்.
௰௮ அப்போது இராசா அந்த ஸ்திரிக்குப் பிரதி
யுத்தாரமாக, நான் உன்னைக் கேட்கும் காரியத்
தை நீ எனக்கு மறைக்காயாக என்றதற்கு, அந்த
ஸ்திரி, இராசாவாகிய என் ஆண்டவர் சொல்வா
௰௯ ராகவென்றாள்.—அப்போது இராசா, இதிலெல்
லாம் யோவாபின் கை உன்னோடிருக்கின்றதோ
வென்று கேட்டான்; அதற்கு ஸ்திரி பிரதியுத்தா
ரமாகச் சொன்னது: இராசாவாகிய என் ஆண்ட
வன் சொன்னபடி எல்லாம் இருக்கின்றது; வல
துபக்சத்திலும் இடதுபக்கத்திலும் இதிலே வே
றொருவர் இல்லையென்று இராசாவாகிய என்
ஆண்டவனுடைய சீவனைக்கொண்டு சொல்லு
கிறேன்; அதேதென்றால் உம்முடைய அடியா
னாகிய யோவாப்தானே இதை எனக்குக் கற்
பித்து, அவனே இந்த எல்லா வார்த்தைகளையும்
உம்முடைய அடியாளின் வாயிலே போட்
௨௰ டான்.—நான் இந்தக் காரியத்தின் உருவை இப்
படி மாற்றுகிறதற்கு உம்முடைய அடியானாகிய
யோவாப் அதற்குக் காரணமாயிருந்தான்; ஆனால்
தேசத்தில் நடக்கிறதை எல்லாம் அறிய, என்
ஆண்டவனுடைய ஞானம் பராபரனுடையதூத
னின் ஞானத்தைப்போலே இருக்கின்றதென்
றாள்.
௨௧ அப்போது இராசா யோவாபுடனே, இதோ
இந்தக் காரியத்தைச் செய்கிறேன், நீ போய்
வாலிபனாகிய அப்சலோமைத் திரும்ப அழைத்
௨௨ துவாவென்றான்.—அப்போது யோவாப் தரை
யிலே முகங்குப்புற விழுந்து வணங்கி, இரா
சாவை உபசரணைபண்ணி, இராசா தம்முடை
ய அடியானுடைய வார்த்தையின்படி செய்த
தினாலே, என் ஆண்டவனாகிய இராசாவின்
கண்களில் எனக்குத் தயவுகிடைத்ததென்கிறது,
இன்று உம்முடைய அடியானுக்குத் தெரியவந்த
௨௩ தென்றான். — பிற்பாடு யோவாப் எழுந்து, கே
சூருக்குப்போய், அப்சலோமை எருசலேமுக்கு
௨௪ அழைத்துவந்தான். — இராசாவோவெனில் அ
வன் தன் வீட்டுக்குத் திரும்பிப்போகக்கடவன்;
என் முகத்தை அவன் பார்ப்பதில்லையென்றான்;
அப்படியே அப்சலோம் தன் வீட்டுக்குத் திரும்
பிப்போய், இராசாவின் முகத்தைப் பார்க்க
வில்லை.
௨௫ ஆனால் இஸ்ரவேலனைத்திலும்அப்சலோமைப்
போலொத்த சவுந்தரியமுள்ளவனும் மிகவும்
மெச்சிக்கொள்ளப்பட்டவனுமான மனுஷன்
இருக்கவில்லை; அவன் உள்ளங்கால்துவக்கி உச்
சந்தலைமட்டும் அவனில் ஒரு மறுவும் இல்லாதி
௨௬ ருந்தது.—அவன் தன் தலைமயிரை அது தனக்
குப் பாரமாயிருக்கின்றதென்று வருஷாந்தரம்
சிரைத்துக்கொள்வான்;சிரைக்கும்போது,அவன்
தலைமயிர் இராசாவுடைய நிறையின்படி இரு
௨௭ நூறுசேக்கல் நிறையாயிருக்கும். — அப்சலோ
முக்கு மூன்று குமாரரும் தாமாரென்று பேர்
கொண்ட ஒரு குமாரத்தியும் பிறந்திருந்தார்கள்;
இவள் ரூபவதியான பெண்ணாயிருந்தாள்.
அப்சலோம் இராசாவின் முகத்தைக் காணா ௨௮
மல், இரண்டுவருஷமாய் எருசலேமிலே குடியி
ருந்தான்.—ஆகையால் அப்சலோம் யோவாபை ௨௯
இராசாவண்டைக்கு அழைத்தனுப்பினான்; அவ
னோவெனில் அவனண்டைக்கு வரமாட்டே
னென்றான்; இரண்டாம்விசையும் அவன் அ
ழைத்தனுப்பினாலும் வரமாட்டேனென்றான்.—
அப்போது அவன் தன் வேலைக்காரரோடே, இ ௩௰
தோ என் நிலத்திற்கருகான யோவாபின் நிலம்;
அதிலே அவனுக்கு வால்கோதுமை விளைந்திருக்
கின்றது; நீங்கள் போய் அதை அக்கினியால்
கொளுத்திப்போடுங்களென்றான்; அப்படியே
அப்சலோமின் வேலைக்காரர் அந்த நிலத்தை
அக்கினியால் கொளுத்திப்போட்டார்கள்.—அப் ௩௧
போது யோவாப் எழுந்திருந்து, அப்சலோமண்
டைக்கு வீட்டிற்குள் போய், எனக்கிருக்கிற
நிலத்தை உம்முடைய வேலைக்காரர் அக்கினி
யாலே கொளுத்திப்போட்டதென்ன என்று அ
வனைக் கேட்டான். — அப்சலோம் யோவா ௩௨
போடே சொன்னதாவது: இதோ உம்மை இரா
சாவண்டைக்கு அனுப்பி, நான் கேசூரிலிருந்து
வதுக்காக வந்தேன்; நான் இன்னம் அங்கே
இருந்தால் தாவிளையென்று அவருக்குச் சொல்
லும்படிக்கு, உம்மை இங்கே வாருமென்று
அழைத்தனுப்பினேன்; இப்போதும் நான் இரா
சாவின் முகத்தைப் பார்க்கட்டும்; அல்லவென்று
என்மேல் குற்றமிருந்தால், அவரென்னைக் கொ
ல்லக்கடவரென்றான்.—யோவாப் இராசாவண் ௩௩
டையில் பிரவேசித்து அதை அவனுக்கு அறிவித்
தபோது, அப்சலோமை அழைப்பித்தான்; அப்
போது அவன் இராசாவண்டையில் பிரவே
சித்து, இராசாவுக்குமுன்பாகத் தரையிலே முகம்
குப்புறப் பணிந்தான்; அப்போது இராசா அப்ச
லோமை முத்தம்செய்தான்.

## ௰௫. அதிகாரம்.

௧. அப்சலோம் இனிமையான சொற்களாலும் மரியாதைகளினாலும் இஸ்ர வேலரைத் தன் பட்சமாகச் செய்தது. ௭. எபிரோனுக்குப் போகும்படி பொருத்தனையைச் செலுத்துவதாக உபாயமாய் உத்தரவுகேட்டது. ௰. அவன் அங்கே ஒரு கலகத்தைச் செய்தது. ௰௩. தாவீது அதைக் கேள் விப்பட்டு, எருசலேமிலிருந்து ஓடிப்போனது. ௰௯. ஈத்தாய் அவனை விட்டு நீங்குவதற்கு, மனமில்லாமல் இருந்தது. ௨௪. சாதோக்கும் அப் பியத்தாரும் உடம்படிக்கையின் பெட்டியோடே மறுபடியும் அனுப்பப் பட்டது. ௩௰. தாவீதும் அவனுடைய சேனைகளும் அழுகையோடே ஒலிவமலையின்மேலே நின்று, ௩௧. அவன் அகித்தோப்பேலின் ஆலோ சனையைச் சபித்தது. ௩௨. ஊசாய் தாவீதினால் போதிக்கப்பட்டு, திரும் பிப்போனது.

இதற்குப்பிற்பாடு சம்பவித்ததேதென்றால், அப் ௧
சலோம் இரதங்களையும், குதிரைகளையும், தனக்
குமுன் ஓடுகிற ஐம்பது சேவகரையும், தனக்குச்
சம்பாதித்தான்.—இதல்லாமல் அப்சலோம் கால ௨
மே எழுந்திருந்து, வாசல்வழி ஓரத்திலே நின்று
கொண்டு, எவனாகிலும் தனக்கிருக்கிற வழக்கு
நிமித்தம் இராசாவண்டைக்கு நியாயத்திற்காக
உள்பிரவேசிக்கப்போனால், அவனை அவன்
அழைத்து, நீ எந்த ஊரானென்று கேட்பான்;

இவன் உம்முடைய அடியான் இஸ்ரவேல்
கோத்திரங்களில் ஒன்றுக்கடுத்த இன்ன ஊரா
௩ னென்றால்,—அப்போது அப்சலோம் அவனு
டனே, இதோ உன் காரியங்கள் நன்மையும்
செம்மையுமானவைகள்தான்; ஆனால் இராசாவி
டத்திலே உனக்குக் கேள்விகொடுப்பார் இல்லை
௪ யென்பான்.-பின்னையும் அப்சலோம், ஆ, வழக்
குக் காரியங்கள் உண்டானவர்களெல்லாரும்
என்னண்டைக்கு வந்து, நான் அவர்களுக்கு
நியாயம்செய்யும்படிக்கு, என்னைத் தேசத்திலே
நியாயாதிபதியாக வைப்பவன் யாரென்பான்.—
௫ எவனாகிலும் ஒருவன் அவனை வணங்கிக்கொள்
ளச் சேரும்போது, அவன் தன் கையை நீட்டி
௬ அவனைப் பிடித்து, முத்தம்செய்வான்.—இந்தப்
பிரகாரமாக அப்சலோம் இராசாவண்டைக்கு
நியாயத்திற்காக வரும் இஸ்ரவேலுக்கெல்லாம்
செய்து, இஸ்ரவேல் மனுஷருடைய இருதயத்
தைத் திருடிக்கொண்டான்.
௭ நாற்பதுவருஷமாகிறபோதோவெனில், அப்
சலோம் இராசாவோடே சொன்னது: நான் கர்த்
தருக்குப் பண்ணின என் பொருத்தனையை எபி
ரோனிலே செலுத்தும்படிக்கு நான் போகட்டு
௮ மே.—ஏனெனில் கர்த்தர் என்னை எருசலேமுக்
குத் திரும்பவே திரும்பப்பண்ணினால், கர்த்த
ருக்கு ஆராதனைசெய்வேனென்று உம்முடைய
அடியானாகிய நான் சூரியதேசத்தில் கேசூரிலே
குடியிருக்கிறபோது, பொருத்தனைபண்ணினே
௯ னென்றான்.-இராசா அவனுடனே, சமாதானத்
துடனே போவென்றான்; அப்போது அவன்
எழுந்து எபிரோனுக்குப் போனான்.
௰ ஆனால் அப்சலோம் இஸ்ரவேல் கோத்திரங்க
ளிலெல்லாம் வேவாள்களை அனுப்பி, நீங்கள்
எக்காளத்தொனியைக் கேட்கும்போது, அப்ச
லோம் எபிரோனிலே இராசாவானானென்று
சொல்லுவீர்களாகவென்று சொல்லச்சொல்லி
௰௧ இருந்தான்.—அப்சலோமோடே கூட எருசலே
மிலிருந்து இருநூறுபேரும் அழைக்கப்பட்டுப்
போனார்கள்; ஆனால் அவர்கள் ஒன்றும் அறியா
மல், தங்கள் உத்தம குணத்தோடே போனார்
௰௨ கள்.—அப்சலோம் பலிகளைச் செலுத்துகையில்,
தாவீதின் ஆலோசனைக்காரனாகிய அகித்தோப்
பேலென்ற கீலோனியனையும் அவன் ஊராகிய
கீலோவிலிருந்து வரவழைப்பித்தான்; அப்படி
யே ஒப்பந்தம் பலத்து, சனம் அப்சலோமண்
டைக்குத் திரளாய் வந்து கூடிற்று.
௰௩ அதை அறிவிக்கிற ஒருவன் தாவீதண்டைக்கு
வந்து, இஸ்ரவேலில் அவரவருடைய இருதயம்
அப்சலோமைப் பின்பற்றிப்போகின்றதென்
௰௪ றான்.—அப்போது தாவீது எருசலேமிலே தன்
னோடேகூட இருக்கிற தன்னுடைய எல்லா
ஊழியக்காரரோடும் எழுந்து, ஓடிப்போவோ
மாக; மற்றப்படி நாம் அப்சலோமுக்குத் தப்ப
இடமில்லை; அவன் தீவிரித்து, நம்மைச் சேர்ந்து
பிடித்து, நம்மேலே பொல்லாப்பை வரப்பண்
ணி, பட்டணத்தைப் பட்டையக் கருக்கினால்

அடிக்காதபடிக்குப் போக, தீவிரம்பண்ணுங்க
ளென்றான்.—இராசாவின் ஊழியக்காரர் இரா ௰௫
சாவுடனே, இதோ இராசாவாகிய எங்கள் ஆண்
டவன் தெரிந்துகொள்ளும் காரியத்திற்கெல்
லாம் உம்முடைய அடியாராகிய நாங்கள் ஆயத்த
மாயிருக்கிறோம் என்றார்கள்.
அப்படியே இராசாவும் அவனுடைய எல்லா ௰௬
வீட்டாரும் கால்நடையாய்ப் புறப்பட்டார்கள்;
ஆனால் வீட்டைக் காக்க, இராசா வைப்பாட்டி
களாகிய பத்து ஸ்திரிகளைப் பின்வைத்தான்.—
இராசாவும் எல்லாச் சனமும் கால்நடையாய்ப் ௰௭
புறப்பட்டுப்போய், தூரமான ஒரு இடத்திலே
தரித்திருந்தார்கள்.—அவனுடைய எல்லா ஊழி ௰௮
யக்காரரும் எல்லாக் கிரேத்தியரும் எல்லாப்
பிலேத்தியரும் அவன்பக்கத்திலே நடந்துபோ
னார்கள்; காத்தூரிலிருந்து கால்நடையாய் வந்தி
ருந்த அறுநூறுபேராகிய எல்லாக் கேத்தியரும்
இராசாவுக்குமுன்பாக நடந்தார்கள்.-அப்போது ௰௯
இராசா கேத்தியனாகிய ஈத்தாயுடனே சொன்ன
தாவது: நீயும் எங்களுடனேகூட வருவானேன்?
நீ திரும்பிப்போய், இராசாவுடனே கூட இரு;
ஏனெனில் நீ மறுதேசத்தான்; நீ உன் தானத்திற்
குத் திரும்பப்போவாயே.—நீ நேற்றே வந்தாய், ௨௰
இன்று நான் உன்னை எங்களோடேகூட நடக்
கும்படிக்கு அழைத்துப்போவேனோ? நானோ
வெனில் போகக்கூடிய இடத்திற்குப் போகி
றேன்; நீ திரும்பி, உன்னோடே உன் சகோதர
ரையும் திரும்ப அழைத்துக்கொண்டுபோ; கிரு
பையும் உண்மையும் உன்மேல் இருப்பதாக
வென்றான். — ஆனால் ஈத்தாய் இராசாவுக்குப் ௨௧
பிரதியுத்தாரமாக, இராசாவாகிய என் ஆண்ட
வன் எங்கே இருப்பாரோ, அங்கே உம்முடைய
அடியானும் சாவுக்கும் பிழைப்புக்கும் இருப்பா
னென்று கர்த்தருடைய சீவனையும் இராசாவா
கிய என் ஆண்டவனுடைய சீவனையும்கொண்டு
சொல்லுகிறேனென்றான்.—அப்போது தாவீது ௨௨
ஈத்தாயுடனேகூட நடந்துபோ என்றான்; அப்
படியே கேத்தியனாகிய ஈத்தாயும் அவனுடைய
எல்லா மனுஷரும் அவனோடிருக்கிற எல்லாப்
பிள்ளைகளும் நடந்துபோனார்கள். — ஆனால் ௨௩
சனமெல்லாம் நடந்துபோகிறபோது, தேசத்தா
ரெல்லாரும் மகா சத்தமாய் அழுதார்கள்; இராசா
கீதரோன் ஆற்றைக் கடந்தான்; சனமெல்லாம்
வனாந்தரத்திற்குப் போகிறவழியே நடந்துபோ
னார்கள்.
இதோ சாதோக்கும் பராபரனுடைய உடம்ப ௨௪
டிக்கையின் பெட்டியைச் சுமக்கிற அவனோ
டேகூட இருக்கிற எல்லா லேவியரும் வந்து,
பராபரனுடைய பெட்டியை அங்கே வைத்தார்
கள்;சனமெல்லாம் பட்டணத்திலிருந்து கடந்து
தீருமட்டும், அப்பியத்தார் பலியிட்டான். —
ஆனால் இராசா சாதோக்குக்குச் சொன்னதா ௨௫
வது: பராபரனுடைய பெட்டியைப் பட்டணத்
திற்குத் திரும்பக் கொண்டுபோ; கர்த்தருடைய
கண்களில் எனக்குக் கிருபைகிடைத்தால்,

நான் அதையும் அவர் வாசஸ்தலத்தையும் பார்க்
கிறதற்கு, என்னைத்திரும்ப வரப்பண்ணுவார்.—
௨௬ உன்மேல் நமக்குப் பிரியமில்லை என்றுரேயா
கில், இதோ இங்கே இருக்கிறேன், அவர் தம்மு
டைய பார்வைக்கு நலமானபடி எனக்குச் செய்
௨௭ வாராகவென்றான்.—பின்னையும் இராசா ஆசாரி
யனாகிய சாதோக்கோடே சொன்னது: நீ ஞான
திருஷ்டியுள்ளவனல்லவோ? நீ சமாதானத்தோ
டே பட்டணத்திற்குத்திரும்பு; உங்கள் இரண்டு
குமாரராகிய உன் மகன் அகிமாசும் அப்பியத்தா
ரின் மகன் யோனத்தானும் உங்களோடேகூடத்
௨௮ திரும்பிப்போகட்டும். — இதோ எனக்கு அறி
விக்கிறதற்கு உங்களிடத்திலிருந்து செய்திவரும்
மட்டும், நான் வனாந்தரத்தின் வெளிகளிலே
௨௯ தரித்திருப்பேனென்றான்.—அப்படியே சாதோக்
கும் அப்பியத்தாரும் பராபரனுடைய பெட்டி
யை எருசலேமுக்குத் திரும்பக் கொண்டுபோய்
அங்கே இருந்தார்கள்.

௩௦ தாவீது அழுகிறவனுமாய், முக்காடிட்டவனு
மாய், வெற்றுக்காலால் நடக்கிறவனுமாய், ஒலீ
வமலையின்மேல் ஏறிப்போனான்; அவனோடிருக்
கிற எல்லாச் சனமும் அவரவர் முக்காடிட்டு அ
௩௧ ழுகிறவர்களாய் உயர ஏறினார்கள்.—அகித்தோப்
பேலும் அப்சலோமோடே ஒப்பந்தம்பண்ணி
னவர்களில் ஒருவனென்று தாவீதுக்கு அறிவிக்
கப்பட்டபோது தாவீது, கர்த்தாவே, அகித்தோப்
பேலின் ஆலோசனையைப் பயித்தியமாக்கிவிடு
மேயென்றான்.

௩௨ தாவீது மலையின் உயரம்மட்டும் வந்து, அங்
கே பராபரனைப் பணிந்துகொண்டபோது சம்ப
வித்ததேதென்றால், இதோ அற்கியனாகிய ஊசாய்
தன் வஸ்திரத்தைக் கிழித்துக்கொண்டு, தன் தலை
யின்மேலே புழுதியைப் போட்டுக்கொண்டவ
௩௩ னாய் அவனுக்கு எதிர்ப்பட்டான்.—அவனோடே
தாவீது சொன்னதாவது: நீ என்னோடேகூட
௩௪ நடந்துவந்தால் எனக்குப் பாரமாயிருப்பாய்.—நீ
பட்டணத்திற்குத் திரும்பிப்போய், அப்சலோ
முக்கு, இராசாவே, உம்முடைய ஊழியக்கார
னாயிருப்பேன்;முதல் நான் உம்முடைய தகப்ப
னுடைய ஊழியக்காரனாயிருந்தேன்; இப்போ
தோவெனில் நானும் உம்முடைய ஊழியக்கா
ரன் என்றாயேயாகில், எனக்காக அகித்தோப்பே
௩௫ லின் ஆலோசனையை அபத்தமாக்குவாய்.—உன்
னோடே அங்கே சாதோக், அப்பியத்தாரென்ற
ஆசாரியர்கள் இருக்கிறார்களல்லவோ? இராசா
வின் வீட்டிலே பிறக்கிற ஏதேது செய்தியைக்
கேட்கிறாயோ, அதைச் சாதோக், அப்பியத்தா
௩௬ ரென்ற ஆசாரியர்களுக்கு அறிவிப்பாய்.—இதோ
அங்கே அவர்களோடே அவர்கள் இரண்டு
குமாரராகிய சாதோக்கின் மகன் அகிமாசும் அப்
பியத்தாரின் மகன் யோனத்தானும் இருக்கிறார்
கள்; நீங்கள் கேட்கிற செய்தியையெல்லாம்
அவர்கள் கையில் எனக்கு அனுப்புவீர்களாக
௩௭ வென்றான். — அப்படியே தாவீதின் சிநேகித
னாகிய ஊசாய் பட்டணத்திற்கு வந்தான்; அப்ச
லோமும் எருசலேமுக்கு வந்தான்.

## ௧௬. அதிகாரம்.

*௧ சீபா காணிக்கைகளாலும் பொய்யினாலும் தன் எசமானனுடைய சுதந்தரத்தை அடைந்தது. ௫. பகூரிமிலே சீமேயி தாவீதைத் தூஷணித்தது. ௯. தாவீது பொறுமைபோடே சகித்துக்கொண்டு, தன் சனங்களின் கோபத்தை அடக்கியது. ௰௬. ஊசாய் தன்னை அப்சலோம் சம்பசெய்தது. ௨௰. அகித்தோப்பேலினுடைய ஆலோசனை.*

தாவீது மலைச்சிகரத்திலிருந்து சற்றப்புறம் நடந் ௧
துபோனபோது, இதோ மேவிபோசேத்தின் வே
லைக்காரனாகிய சீபா, பொதிகளைச் சுமக்கிற
இரண்டு கழுதைகளை ஓட்டிக்கொண்டு வந்து
அவனைச் சந்தித்தான்;அவைகளில் இருநூறு அப்
பங்களும் வற்றலான நூறு திராட்சப்பழக் குலை
களும், வசந்தகாலத்துப் பலனான நூறு குலை
களும், ஒரு துருத்தி திராட்சப்பழ இரசமும்
இருந்தன.—இராசா சீபாவை, இவைகள் ஏதுக் ௨
கென்று கேட்டதற்கு, சீபாவென்றவன் கழுதை
கள் இராசாவின் வீட்டார் ஏறுகிறதற்கும், அப்
பங்களும் பழங்களும் வாலிபர் புசிக்கிறதற்கும்,
திராட்சப்பழஇரசம் வனாந்தரத்தில் விடாய்த்துப்
போனவர்கள் குடிக்கிறதற்கும்தான் என்றான்.—
அப்போது இராசா, உன் ஆண்டவனுடைய ௩
குமாரன் எங்கேயென்று கேட்டதற்கு, சீபா இ
ராசாவுடனே, இதோ எருசலேமிலிருக்கிறான்;
ஏனெனில் இன்று இஸ்ரவேல்வீட்டார் என்
தகப்பனுடைய இராச்சியத்தை என் வசமாய்த்
திரும்பப்பண்ணுவார்களென்றானென்றுசொன்
னான்.—அப்போது இராசா சீபாவுக்கு, இதோ ௪
மேவிபோசேத்திற்கு உண்டானதெல்லாம் உன்
னுடையதாகக்கடவதென்றான்; அதற்குச் சீபா,
இராசாவாகிய என் ஆண்டவனே, நான் பணிந்
துகொள்ளுகிறேன்; உம்முடைய கண்களில்
எனக்குத் தயைகிடைக்கட்டுமென்றான்.

தாவீது இராசா பகூரிம்மட்டும் வந்தபோது, ௫
இதோ சவுல்வீட்டு வம்சத்தானாயிருக்கிற கேரா
வின் குமாரனாகிய சீமேயியென்று பேருள்ள ஒரு
மனுஷன் அங்கேயிருந்து புறப்பட்டு, தூஷணித்
துக்கொண்டே நடந்துவந்து,— எல்லாச் சன ௬
மும், எல்லாப் பலசாலிகளும், தாவீதின் வலது
புறமாகவும் இடதுபுறமாகவும் நடக்கையில், தா
வீதின்மேலும், தாவீது இராசாவுடைய எல்லா
ஊழியக்காரர்மேலும் கல்களை எறிந்தான். —
சீமேயி அவனைத் தூஷணிக்கையில் சொன்ன ௭
வார்த்தைகளாவது: இரத்தப்பிரியனே, பேலியா
ளின் மனுஷனே, புறப்பட்டுப்போ, புறப்பட்
டுப்போ. — சவுலின் ஸ்தலத்தில் இராசாவான ௮
உன்மேலே கர்த்தர் சவுல்வீட்டாரின் இரத்தப்ப
ழியைத் திரும்பப்பண்ணினார்; கர்த்தர் இராச்சி
யபாரத்தை உன் குமாரனாகிய அப்சலோமின்
கையில் ஒப்புக்கொடுத்தார்; இப்போதும் இதோ
உன் நிர்ப்பாக்கியத்தோடிருக்கிறாய்; ஏனெனில்
நீ இரத்தப்பிரியனான மனுஷனென்றான்.—அப் ௯
போது சேருயாவின் குமாரன் அபிசாய் இரா
சாவுடனே, அந்தச் செத்தநாய் இராசாவாகிய

என் ஆண்டவனைத் தூஷணிப்பானேன்? நான் போய் அவன் தலையை வாங்கட்டுமே என்
௰ றான். — இராசாவோவென்றால், சேருயாவின் குமாரரே,எனக்கும் உங்களுக்கும் கவை என்ன? அவன் என்னைத் தூஷணிக்கட்டும்; ஏனெனில் தாவீதைத் தூஷணி என்று கர்த்தர் அவனுக்குச் சொன்னார்; ஆகையால் ஏன் இப்படிச் செய்கிறாயென்று சொல்லத்தக்கவன் யாரென்றான்.—
௰௧ பின்னையும் தாவீது அபிசாயோடும் தன்னுடைய எல்லா ஊழியக்காரரோடும் சொன்னது: இதோ என் கர்ப்பப் பிறப்பான என்னுடைய குமாரன் என் பிராணனை வாங்கத்தேடுகிறானே.இந்த எமினியின் குமாரன் இப்போது எத்தனை அதிகம்;அவன் தூஷணிக்கட்டும்;ஏனெனில் கர்த்தர்
௰௨ அவனுக்கு அப்படிச் சொன்னார்.—ஒருவேளை கர்த்தர் என் சிறுமையைப்பார்த்து, இந்த நாளில் நடந்த அவன் நிந்தனைக்குப் பதிலாக எனக்கு
௰௩ நன்மையைச் சரிக்கட்டுவாரென்றான்.—அப்படியே தாவீதும் அவன் மனுஷரும் வழியிலே நடந்துபோனார்கள்; சீமேயியும் மலையின் பக்கத்திலே அவனுக்கு எதிராக நடந்து தூஷணித்து, அவனுக்கு எதிராகக் கல்களை எறிந்து, மண்
௰௪ ணைத்தூற்றிக்கொண்டே வந்தான்.—இராசாவும் அவனோடிருக்கிற எல்லாச் சனமும், விடாய்த்தவர்களாக, தங்குமிடத்திலே சேர்ந்து தேறினார்கள்.

௰௫ அப்சலோமும் இஸ்ரவேல் மனுஷராகிய எல்லாச் சனமும் அவனோடேகூட அகித்தோப்
௰௬ பேலும் எருசலேமுக்கு வந்தார்கள். — அற்கியனாகிய ஊசாய் என்ற தாவீதின் சிநேகிதனே வென்றால், அப்சலோமண்டைக்கு வந்தபோது, ஊசாய் அப்சலோமுடனே, இராசாவே வாழ்க,
௰௭ இராசாவே வாழ்கவென்றான்.—அப்போது அப்சலோம் ஊசாயுடனே, உன் சிநேகிதன்மேல் உனக்கிருக்கிற தயை இதுதானோ? உன் சிநேகிதனோடே நீ போகாதேபோனதென்ன என்ற
௰௮ தற்கு, — ஊசாய் அப்சலோமோடே சொன்னது: அப்படியல்ல, கர்த்தரும் இந்தச் சனமும் இஸ்ரவேல் மனுஷர் அனைவரும் தெரிந்துகொள்ளுகிறவனையே நான் சேர்ந்து அவரோடே
௰௯ இருப்பேன்.—இதுவுமல்லாமல், யாருக்கு நான் ஊழியக்காரனாயிருப்பேன்? அவருடைய குமாரனுக்கல்லவோ? உம்முடைய தகப்பனாருக்கு முன்பாக எப்படி ஊழியஞ்செய்தேனோ, அப்படி உமக்குமுன்பாகச் செய்துகொண்டிருப்பேன் என்றான்.

௨௰ அப்சலோம் அகித்தோப்பேலுடனே,நாங்கள் செய்வதென்னவென்று ஆலோசனை கொடுங்க
௨௧ ளென்றான்.—அப்போது அகித்தோப்பேல் அப்சலோமுடனே, வீட்டைக் காக்க உம்முடைய தகப்பன் பின்வைத்த அவருடைய வைப்பாட்டிகளிடத்தில் உள்பிரவேசியும், அப்போது உம்முடைய தகப்பனுக்கு நாற்றமானீரென்பதை இஸ்ரவேலெல்லாம் கேட்டு, உம்மோடிருக்கிற எல்லாருடைய கைகளும் பலக்குமென்றான்.—
அப்படியே அப்சலோமுக்கு உப்பரிகையின் ௨௨
மேல் ஒரு கூடாரத்தைப்போட்டார்கள்;அங்கே அப்சலோம் எல்லா இஸ்ரவேலின் கண்களுக்கு முன்பாக, தன் தகப்பனுடைய வைப்பாட்டிகளிடத்தில் உள்பிரவேசித்தான்.—அந்நாள்களில் ௨௩
அகித்தோப்பேல் சொல்லும் ஆலோசனை பராபரனுடைய வாக்கைக் கேட்டதுபோல இருந்தது; அப்படி அகித்தோப்பேலின் ஆலோசனையெல்லாம் தாவீதுக்கும் இருந்தது, அப்சலோமுக்கும் இருந்தது.

## ௰௭. அதிகாரம்.

௧. பராபரனுடைய நியமப்படி அகித்தோப்பேலின் ஆலோசனையை ஊசாய் அழித்தது. ௰௫. சங்கதி இரகசியமாகத் தாவீதுக்கு அனுப்பப்பட்டது. ௨௩. அகித்தோப்பேல் தான்றானே நான்றுகொண்டது. ௨௫. அமாசா இராணுவத்தலைவனுக்கு அகப்பட்டது. ௨௭. தாவீதுக்கு மக்னாயிமில் சாப்பிடத்தக்க வஸ்துக்கள் மிகுதியும் கிடைத்தது.

பின்னையும் அகித்தோப்பேல் அப்சலோமோ ௧
டே சொன்னது: நான் பன்னீராயிரம்பேரைத் தெரிந்துகொண்டு எழுந்து, இன்று இராத்திரிக்குத் தாவீதைப் பின்தொடரட்டுமே. —அவன் ௨
விடாய்த்தவனும் கை தளர்ந்தவனுமாயிருக்கையில், நான் அவன்மேலே போய், அவனைத் திடுக்கிடப்பண்ணுவேன்; அப்போது அவனோடிருக்கும் சனமெல்லாம் ஓடிப்போவதினால், நான் இராசா ஒருவனையே வெட்டி, —சனத்தையெல் ௩
லாம் உம்முடைய வசமாய்த் திரும்பப்பண்ணுவேன்; இப்படிச் செய்ய நீர் வகை தேடுகையால், எல்லாரும் திரும்பினபின் சனமெல்லாம் சமாதானத்தோடு இருக்குமென்றான்.—இந்த வார்த் ௪
தை அப்சலோமின் பார்வைக்கும், இஸ்ரவேலுடைய எல்லா மூப்பரின் பார்வைக்கும் நன்றாயிருந்தது.— ஆகிலும் அப்சலோம் அற்கியனாகிய ௫
ஊசாயைக் கூப்பிட்டு, அவன் வாய்மொழியையும் கேட்போமே என்றான்.
ஊசாய் அப்சலோமண்டைக்கு வந்தபோது, ௬
அப்சலோம் அவனுடனே, இந்தப்பிரகாரமாக அகித்தோப்பேல் சொன்னான்; அவன் வார்த்தையின்படி செய்வோமோ? அல்லவென்றால், நீ சொல்லென்றான்.—அப்போது ஊசாய் அப்ச ௭
லோமோடே,அகித்தோப்பேல் இந்தவிசை கொடுத்த ஆலோசனை நல்லதல்லவென்றான்.—பின் ௮
னையும் ஊசாய் சொன்னதாவது: உம்முடைய தகப்பனும் அவன் மனுஷரும் பலசாலிகளென்றும்,வெளியிலே குட்டிகளைப் பறிகொடுத்த கரடியைப்போல மனமெரிகிறவர்களென்றும் நீர் அவர்களை அறிவீர்; உம்முடைய தகப்பன் நல்ல சேவகனுமாயிருக்கிறான்; அவன் இராக்காலத்திலே சனத்தோடே தங்குவதில்லை.-இதோ அவன் ௯
இப்போது யாதொரு கெபியிலாகிலும், வேறே யாதோரிடத்திலாகிலும்,ஒளித்திருப்பான்;துவக்கத்திலேதானே இவர்களில் சிலர் பட்டார்களேயானால், அதைக் கேட்கிற யாவரும் அப்சலோமைப் பின்செல்லுகிற சனத்தில் முறிவுண்டாயிற்றென்பார்கள்.-அப்போது சிங்கத்தின் இருதய ௰
யத்திற்கொத்த இருதயமுள்ள பலவானாயிருக்கிற

வனும்கூட முனையற்றுப்போகவே போவான்;
ஏனெனில் உம்முடைய தகப்பன் சவுரியவா
னென்றும், அவனோடிருக்கிறவர்கள் பலசாலிக
௰௧ ளென்றும், இஸ்ரவேலெல்லாம் அறியும்.—நான்
சொல்லுகிற யோசனை என்னவெனில், தாண்
துவக்கிப் பேர்சேபாமட்டும் இருக்கிற கடல்க
ரை மணலத்தனை திரட்சியான இஸ்ரவேலெல்
லாம் உம்மண்டையில் கூட்டவே கூட்டப்பட்
டு, நீர்தானேகூட யுத்தத்திற்குப் போகவேண்டு
௰௨ மென்பதுதானே.—அப்போது அவன் கண்டுபி
டிக்கப்படுகிற எவ்விடத்திலாகிலும், நாம் அவ
னண்டையில் போய், பனி பூமியின்மேலே பெ
ய்கிற அத்தன்மையாய் அவன்மேல் விழுவோம்;
அப்படியே அவனோடிருக்கிற எல்லா மனுஷரி
லும் ஒருவனும் அவனுக்கு இருக்கப்போகிற
௰௩ தில்லை.—ஒரு பட்டணத்திற்குள் புகுந்தானே
யானால், இஸ்ரவேலெல்லாம் அந்தப் பட்டணத்
தின்மேலே கயிறுகளைப்போட்டு, அங்கே ஒரு
பொடிக்கல்லும் காணப்படாதே போகும்மட்
டும், அதை ஆற்றிலே இழுத்துப்போடுவோர்க
௰௪ ளென்றான்.—அப்போது அப்சலோமும், இஸ்ர
வேல் மனுஷரனைவரும், அகித்தோப்பேலின் ஆ
லோசனையைப்பார்க்க, அற்கியனாகிய ஊசாயின்
ஆலோசனையை நல்லதென்றார்கள்; இப்படிக்
கர்த்தர் அப்சலோமின்மேலே பொல்லாப்பை
வரப்பண்ணும்படிக்கு, அகித்தோப்பேலின் நல்
ல ஆலோசனையை அபத்தமாக்குகிறதற்குக் கர்த்
தர் கட்டளையிட்டார்.
௰௫ பிற்பாடு ஊசாய், சாதோக் அப்பியத்தாரென்ற
ஆசாரியர்களோடே சொன்னது: இன்ன இன்ன
படி அகித்தோப்பேல் அப்சலோமுக்கும், இஸ்ர
வேலின் மூப்பருக்கும் ஆலோசனை சொன்னான்;
நானோ இன்ன இன்னபடி ஆலோசனை சொன்
௰௬ னேன்.—இப்போதும் நீங்கள் சீக்கிரமாய்த் தாவீ
துக்கு அறிவிக்கும்படிக்கும் செய்தியை அனுப்
பி, நீர் இராத்திரிக்கு வனாந்தரத்தின் வெளிகளி
லே தங்கவேண்டாம்; இராசாவும் அவரோடி
ருக்கிற எல்லாச் சனமும் விழுங்கப்படாதபடி
க்கு அக்கரைக்குத்தானும் போகவேபோமென்று
௰௭ சொல்லச்சொல்லுங்களென்றான்.—யோனத்தா
னும், அகிமாசும், ரோபேலென்ற துரவண்டை
நின்றிருந்தார்கள்; அவர்கள் போய், தாவீது இரா
சாவுக்கு அதை அறிவிக்கும்படிக்கு, ஒரு வேலை
க்காரி போய், அதை அவர்களுக்குச் சொன்
னாள்; ஏனெனில் அவர்கள் தங்களைக் காண்பிக்கி
றதற்கு, பட்டணத்திற்குள் வரக்கூடாதிருந்தது.—
௰௮ ஆனால் ஒரு பிள்ளையாண்டான் அவர்களைக்
கண்டு, அப்சலோமுக்கு அறிவித்தான்; ஆகை
யால் அவர்கள் இருவரும் சீக்கிரமாய்ப் போய்,
பகூரிமிலிருக்கிற ஒரு மனுஷன் வீட்டிற்குள்
பிரவேசித்து, அவனுக்கு அவன் முற்றத்தில் ஒரு
கிணறு இருக்கையால், அதில் இறங்கினார்கள்.—
௰௯ வீட்டுக்காரி ஒரு பாயை எடுத்து, கிணற்றுவா
யின்மேலே விரித்து, காரியம் அறியவராதப
டிக்கு, அதின்மேல் நொய்யைத் திராவிவைத்
தாள்.—அப்சலோமின் சேவகர் அந்த ஸ்திரி ௨௰
யண்டைக்கு வீட்டிற்குள் வந்து, அகிமாசும்
யோனத்தானும் எங்கேயென்று கேட்டார்கள்;
அவர்களுக்கு அந்த ஸ்திரி, வாய்க்காலுக்கு அப்
பாலே போய்விட்டார்களென்றாள்; இவர்கள்
தேடிக் காணாதேபோய், எருசலேமுக்குத் திரும்
பினார்கள். — இவர்கள் போனபிற்பாடோவெ ௨௧
னில், அவர்கள் கிணற்றிலிருந்து ஏறிப்போய்,
தாவீது இராசாவுக்கு அறிவித்து, தாவீதுடனே
சீக்கிரமாயெழுந்து ஆற்றைக் கடந்துபோங்கள்;
ஏனெனில் இன்னபடி அகித்தோப்பேல் உங்க
ளுக்கு விரோதமாய் ஆலோசனைசொன்னானென்
றார்கள். — அப்போது தாவீதும் அவனோடிருக் ௨௨
கிற எல்லாச் சனமும் எழும்பி யோர்தானைக்
கடந்தார்கள்; பொழுது விடியும்மட்டும், யோர்
தானைக் கடவாத ஒருவரும் பின்வைக்கப்பட்ட
தில்லை.

அகித்தோப்பேலோவெனில் தன் யோசனை ௨௩
யின்படி நடந்ததில்லையென்று கண்டபோது,
தன் கழுதையின்மேலே சேணம்வைத்தேறி, தன்
ஊரிலிருக்கிற தன் வீட்டுக்குப்போய், தன் வீட்
டாருக்குத் திட்டம்பண்ணி, நான்றுகொண்டு
செத்து, தன் தகப்பன் கல்லறையில் அடக்கம்
பண்ணப்பட்டான்.

தாவீது மகனாயிமுக்கு வந்தான்; அப்சலோ ௨௪
மும் தன்னுடைய சனமாகிய எல்லா இஸ்ரவே
லோடும்கூட யோர்தானைக் கடந்தான்.

அப்சலோம், அமாசாவை யோவாபுக்குப் பதி ௨௫
லாக இராணுவத்தலைவனாக வைத்திருந்தான்;
இந்த அமாசா, நாகாசின் குமாரத்தியும் சேருயா
வின் சகோதரியும் யோவாபின் அத்தையாரு
மாகிய அபிகாளைப் படைத்த இஸ்ரவேலனாகிய
எத்திராவென்று பேருள்ள ஒரு மனுஷனுடைய
குமாரனாயிருந்தான்.—இஸ்ரவேலும் அப்சலோ ௨௬
மும், கீலேயாத் தேசத்திலே பாளயமிறங்கினார்
கள்.

தாவீது மகனாயிமுக்குச் சேர்ந்தபோதோவெ ௨௭
னில், அம்மோன் புத்திரரின் தேசத்து இரப்பா
பட்டணத்தானாகிய சோபியென்ற நாகாசின் கு
மாரனும், லோதேபார் ஊரான அம்மியேலின்
குமாரன் மாகீரும், ரொகிலும்ஊரானும் கீலே
யாத்தியனுமாகிய பர்சிலாயும், — மெத்தைகளை ௨௮
யும், கலங்களையும், மண்பாண்டங்களையும், கோ
துமையையும், வால்கோதுமையையும், மாவை
யும், வறுத்தபயற்றையும், பெரும்பயற்றையும்,
சிறுபயற்றையும், வறுத்த சிறுபயற்றையும்,—
தேனையும், வெண்ணெயையும், ஆடுகளையும், ௨௯
பசுவின் கேஸ்கட்டிகளையும், தாவீதுக்கும் அவ
னோடிருக்கிற சனத்திற்கும் சாப்பிடுகிறதற்குக்
கொண்டுவந்தார்கள்; ஏனெனில் அந்தச் சனம்
வனாந்தரத்திலே பசியும் இளைப்பும் தவனமுமா
யிருக்குமென்றார்கள்.

## ௰௮. அதிகாரம்.

௧. தாவீது சேனையைப் போகையில் பார்த்து, அப்சலோமைக்குறித்துக்
கட்டளை கொடுத்தது. ௬. இஸ்ரவேலர் அதிகமாய் எப்பிராயீமின் காட்

டில் முறியடிக்கப்பட்டது. ௯. அப்சலோம் ஒரு கர்வாலியுமரத்தில் தொங்கியிருக்க, யோவாபினாலே கொல்லப்பட்டது, ஒரு குழியில் போடப்பட்டது. ௰௮. அப்சலோமின் அடையாளம். ௰௯. அகிமாசும் கூசியும் தாவீதுக்குச் செய்திகொண்டுவந்தது. ௩௩. தாவீது அப்சலோமுக்காகத் துக்கித்தது.

௧ தாவீது தன்னோடிருக்கிற சனத்தை இலக்கம்
பார்த்து, அவர்கள்மேல் ஆயிரத்துச் சேர்வைக்கா
ரரையும், நூற்றிற்குச் சேர்வைக்காரரையும் வைத்
௨ து,—பிற்பாடு தாவீது சனத்தில் மூன்றத்தொரு
பங்கை யோவாபுடைய கையின்கீழும், மூன்றத்
தொருபங்கைச் சேருயாவின் குமாரனும் யோ
வாபின் சகோதரனுமான அபிசாயின் கையின்
கீழும், மூன்றத்தொருபங்கைக் கேத்தியனாகிய
ஈத்தாயின் கையின்கீழும் அனுப்பி, நானும் உங்
களோடேகூடப் புறப்பட்டு வருவேனென்று
௩ இராசா சனத்தோடே சொன்னான்.—சனமோ
வென்றால் நீர் புறப்படவேண்டாம்; ஏனெனில்
நாங்கள் முறிந்தோடிப்போனாலும், அவர்கள்
எங்கள் காரியத்தை மனதிலே வைப்பதில்லை;
நாங்கள் பாதிப்பேர் செத்துப்போனாலும், எங்
கள் காரியத்தை மனதிலே வைப்பதில்லை; ஏனெ
னில் இன்னம் எங்களைப்போலொத்த பதினாயி
ரம்பேரைத் திரும்பச் சேர்ப்பீர்; இப்போதும் நீர்
பட்டணத்திலிருந்து, எங்களுக்கு ஒத்தாசையா
யிருக்கிறது எங்களுக்குத் தாவிலை என்றார்கள்.—
௪ அப்போது இராசா அவர்களுடனே, உங்களுக்கு
நன்றாகக் காண்கிறதைச் செய்வேனென்று
சொல்லி, இராசா ஒலிமுகவாசல் ஓரத்திலே
நின்றான்; சனமெல்லாம் நூறுகளும் ஆயிரங்க
ளுமாய்ப் புறப்பட்டார்கள்.

௫ இராசா யோவாபுக்கும், அபிசாய்க்கும், ஈத்
தாய்க்கும், அப்சலோமென்ற வாலிபனை எனக்
காக மெதுவாய் நடப்பியுங்களென்று கற்பித்
தான், இப்படி இராசா அப்சலோமுக்காகத் தலை
வருக்கெல்லாம் கற்பிக்கிறதைச் சனமெல்லாம்
கேட்டார்கள்.

௬ சனம் வெளியே இஸ்ரவேலுக்கு எதிராகப்
புறப்பட்டபிற்பாடு, எப்பிராயீமின் காட்டிலே
௭ யுத்தமுண்டாயிற்று.—அங்கே இஸ்ரவேல் சனம்
தாவீதின் சேவகருக்குமுன்பாக முறியடிக்கப்
பட்டார்கள்; அங்கே அன்றைத்தினம் இருபதி
னாயிரம்பேர் விழத்தக்கதான பெரிய சங்காரமா
௮ யிற்று.—அங்கே யுத்தம் அந்தத் தேசத்தின்மீதெங்
கும் பரந்து, அன்றைத்தினம் பட்டையம் பட்
சித்தவர்களைப்பார்க்கிலும், காடு சனத்தில் வெகு
௯ பேரைப் பட்சித்தது. — அப்சலோம் தாவீதின்
சேவகருக்கு எதிர்ப்பட்டான்; ஆனால் அப்ச
லோம் கோவேறுகழுதையின்மேல் ஏறி வரும்
போது அந்தக் கோவேறுகழுதை சன்னல்பின்
னலான ஒரு பெரிய கர்வாலியுமரத்தின்கீழ் வந்
ததினால், அவனுடைய தலை கர்வாலியுமரத்தில்
மாட்டிக்கொண்டு, அவன் ஆகாயத்திற்கும் பூ
மிக்கும் நடுவே தொங்கினான்; ஏனென்றால்
அவன்கீழிருந்த கோவேறுகழுதை அப்பாலே
போயிற்று.

அதை ஒருவன் கண்டு, யோவாபுக்கு அறி ௰
வித்து, இதோ அப்சலோமை ஒரு கர்வாலியு
மரத்திலே தொங்கக்கண்டேனென்றான்.—அப் ௰௧
போது யோவாப் தனக்கு அதை அறிவித்தவ
னுக்கு, இதோ அதைக் கண்டாயே; பின்னை
ஏன் அவனை அங்கே வெட்டி, தரையிலே போ
டாதேபோனாய்? நான் உனக்குப் பத்து வெள்
ளிக்காசையும் ஒரு கச்சையையும் கொடுக்கக்
கடனாளியாய் இருப்பேனே என்றான்.—ஆனால் ௰௨
அந்த மனுஷன் யோவாபுடனே சொன்னதா
வது: நான் என் கைகளில் ஆயிரம்வெள்ளிக்
காசை நிறுத்துக்கொள்ளக் கொடுக்கப்பட்டா
லும், நான் இராசாவுடைய குமாரன்மேல் என்
கையை நீட்டுவதில்லை; ஏனெனில் அப்சலோ
மென்ற வாலிபனை நீங்கள் அவரவர் காப்பாற்
றுங்களென்று இராசா உமக்கும் அபிசாய்க்கும்
ஈத்தாய்க்கும் எங்கள் காதுகள் கேட்கக் கற்பித்
தாரே.—அல்லவென்று நான் என்மனச்சாட்சிக்கு ௰௩
விரோதமாய் அதைச்செய்து மறைத்தாலும், இரா
சாவுக்கு எந்தக்காரியமும் மறைந்திருப்பதில்லை;
நீர்தாமும் எனக்கு எதிராக நிற்பீரென்றான்.—
ஆனால் யோவாப், நான் இப்படி உன்னோடே ௰௪
பேசி, தாமதிக்கமாட்டேனென்று சொல்லி,
மூன்று வல்லயங்களைத் தன் கையிலே பிடித்
துக்கொண்டு, அப்சலோம் இன்னம் கர்வாலி
யுமரத்தின் நடுவிலே உயிரோடே தொங்குகை
யில், அவைகளை அவன் இருதயத்திற்குள் குத்
தினான்.—அப்போது யோவாபின் ஆயுதங்களைப் ௰௫
பிடிக்கிற பத்து வேலைக்காரர் சூழ்ந்துகொண்டு,
அப்சலோமை அடித்துக் கொன்றுபோட்டார்
கள்.

அப்போது யோவாப் எக்காளம் ஊதினான்; ௰௬
ஆனதுகொண்டு இஸ்ரவேலைப் பின்தொடருகி
றதைவிட்டுச் சனம் திரும்பிற்று; ஏனென்றால்
யோவாப் சனத்தை நிறுத்திவிட்டான்.—அவர்கள் ௰௭
அப்சலோமை எடுத்து, அவனைக் காட்டிலிருந்த
ஒரு பெரிய குழியிலே போட்டு, அவன்மேல்
மகா பெரிய கல்க்குவியலைக் குவித்தார்கள்;
ஆனால் இஸ்ரவேலெல்லாம் அவரவர் தங்கள்
கூடாரங்களுக்கு ஓடிப்போனார்கள். — அப்ச ௰௮
லோமோவெனில் உயிரோடே இருக்கையில்,
என்பேரை நினைக்கப்பண்ண எனக்குக் குமா
ரன் இல்லையென்று சொல்லி, இராசாவின்
பள்ளத்தாக்கிலிருக்கிற ஒரு தூணைத் தனக்கு
எடுத்து நிறுத்தி, அந்தத் தூணுக்குத் தன் பேரைத்
தரித்திருந்தான்; அது இந்நாள்வரைக்கும் அப்
சலோமின் அடையாளமென்று சொல்லப்படு
கின்றது.

சாதோக்கின் குமாரனாகிய அகிமாஸ், கர்த்தர் ௰௯
இராசாவை அவர் சத்துருக்களின் கைக்கு நீங்
கலாக்கி, நியாயம்செய்தாரென்ற சுபசெய்தியை
அவருக்குக் கொண்டுபோக, நான் ஓடட்டுமே
யென்றான்.—ஆனால் யோவாப் அவனுடனே, ௨௰
இன்றைத்தினம் நீ சுபசெய்தியைக் கொண்டு
போகிறவனல்ல, பின்னொருநாளிலே நீ சுப

செய்தியைக் கொண்டுபோகலாம்; இராசாவின்
குமாரன் செத்தபடியினாலே, இன்றைக்கு நீ செய்
தியைக் கொண்டுபோகாயாகவென்று சொல்லி,-
௨௧ யோவாப் கூசியுடனே, நீ போய், கண்டதை
இராசாவுக்கு அறிவியென்றான்; கூசி யோவா
௨௨ பை வணங்கி ஓடினான்.—ஆனால் சாதோக்கின்
குமாரனாகிய அகிமாஸ் இன்னம் யோவாபு
டனே, என்னவானாலும் கூசியின் பிறகாலே நா
னும் ஓடட்டுமேயென்று திரும்பக் கேட்டதற்கு
யோவாப் என்றவன், என் மகனே, உனக்கு நல்
லசெய்தி கிடையாதிருக்கையில் நீ ஓடவேண்
௨௩ டியதென்ன என்றான்.—ஆனால் அவன் என்ன
வானாலும் ஓடுவேனென்றான்; அப்போது யோ
வாப் அவனை ஓடென்றான்; அப்படியே அகி
மாஸ் சமனான பூமிவழியாயோடி கூசியைக்
கடந்துபோனான்.
௨௪ தாவீதோவென்றால் இரண்டு ஒலிமுகக் கெவு
னிவாசலுக்கு நடுவாக உளுக்காந்திருந்தான்; சா
மங்காக்கிறவன் அலங்கத்திலிருக்கிற கெவுனி
யின்மேல் நடந்து, தன் கண்களை ஏறெடுத்து, இ
தோ ஒரு மனுஷன் தனியே ஓடிவருகிறதைக்
௨௫ கண்டு,-கூப்பிட்டு இராசாவுக்கு அறிவித்தான்;
அப்போது இராசா, அவன் ஒருவனாய் வந்தால்,
அவன் வாயிலே நல்லசெய்தி இருக்குமென்
௨௬ றான்; அவன் நடந்து கிட்டிவரும்போது,—சா
மங்காக்கிறவன் வேறொருவன் ஓடிவருகிறதைக்
கண்டு, அதோ பின்னொருவன் தனியே ஓடிவரு
கிறானென்று வாசல்காக்கிறவனோடே கூப்பிட்
டுச் சொன்னான்; அப்போது இராசா அவனும்
நற்செய்தியைக் கொண்டுவருகிறவனென்றான்.-
௨௭ பின்னையும் சாமங்காக்கிறவன் முந்தினவனு
டைய ஓட்டம், சாதோக்கின் குமாரன் அகிமா
சுடைய ஓட்டம்போலிருக்கின்றதென்று நான்
காண்கிறேனென்றான்; அப்போது இராசா, அ
வன் நல்ல மனுஷன், அவன் நல்லசெய்தியைச்
சொல்லவருகிறானென்றான்.
௨௮ அகிமாஸ் வந்து இராசாவுடனே, சமாதான
மென்று கூப்பிட்டுக்கொண்டு, முகங்குப்புற
விழுந்து, இராசாவை வணங்கி, இராசாவாகிய
என் ஆண்டவன்மேலே தங்கள் கைகளை எடுத்த
மனுஷரை ஒப்புக்கொடுத்திருக்கிற உம்முடைய
பராபரனாகிய கர்த்தர் ஸ்தோத்திரிக்கப்பட்டவ
௨௯ ரென்றான்.— அப்போது இராசா, அப்சலோ
மென்ற வாலிபன் சுகமாயிருக்கிறானோவென்று
கேட்டதற்கு அகிமாசென்றவன், யோவாப் இ
ராசாவின் வேலைக்காரனையும் உம்முடைய அடி
யானையும் அனுப்புகிறபோது, ஒரு பெரிய சந்
தடியைக் கண்டேன்; ஆனால் அது என்னவென்
௩௰ கிறதை அறியேனென்றான்.-அப்போது இராசா
நீ அப்படிச் சுற்றிவந்து நில்லென்றான்; அவன்
௩௧ சுற்றிவந்து நின்றான்.-இதோ கூசி வந்து, இன்று
கர்த்தர் உமக்கு விரோதமாயெழும்பின எல்லா
ரின் கைக்கும் உம்மை நீங்கலாக்கி நியாயம்
செய்தார்; இன்று இராசாவாகிய என் ஆண்டவ
னுக்கு நல்லசெய்தி வருகின்றதென்றான். —
அப்போது இராசா கூசியை, அப்சலோமென்ற ௩௨
வாலிபன் சுகமாக இருக்கிறானோவென்று கேட்
டதற்கு, கூசியென்றவன் அந்த வாலிபனுக்கு
நடந்ததுபோல, இராசாவாகிய என் ஆண்டவனு
டைய சத்துருக்களுக்கும், பொல்லாப்பு செய்ய
உமக்கு விரோதமாய் எழும்புகிற யாவருக்கும்
நடக்கக்கடவதென்றான்.—அப்போது இராசா ௩௩
கலங்கி, கெவுனிவாசலின் மேல்வீட்டில் ஏறி
அழுது, என் குமாரனாகிய அப்சலோமே, என்
குமாரனே, என் குமாரனாகிய அப்சலோமே,
நான் உனக்குப் பதிலாகச் செத்தேனானால் தா
விளை; அப்சலோமாகிய என் குமாரனே, என்
குமாரனே என்று உலாவிச் சொல்லிக்கொண்டி
ருந்தான்.

## ௰௯. அதிகாரம்.

௧. யோவாப் இராசாவின் துக்கத்தை நீக்கினது. ௯. இஸ்ரவேலர் மறுபடியும் இராசாவை அழைக்க ஆசைகொண்டது. ௰௧. தாவீது யூதர்களை எழுப்ப ஆசாரியர்களுக்குச் சொல்லி அனுப்பினது. ௰௮. சீமேயி மன்னிக்கப்பட்டது. ௨௪. மேவிபோசேத்தை மன்னித்தது. ௩௨. பர்சிலா விடப்பட்டதும், அவனுடைய குமாரன் கிமேகாம் இராசாவின் குடும்பத்தில் எடுத்துக்கொள்ளப்பட்டதும், ௪௧. தங்களுக்கு அறிவிக்காமல் இராசனைக் கூட்டிக்கொண்டுவந்ததைக்குறித்து இஸ்ரவேலர் யூதரைக் கடிந்துகொண்டது.

இதோ இராசா அப்சலோமுக்காக அழுது, துக் ௧
கங்கொண்டாடுகிறாரென்று யோவாபுக்கு அறி
விக்கப்பட்டதினால்,—அன்றைத்தினம் அந்தச் ௨
செயம் சனத்திற்கெல்லாம் துக்கமாய் மாறிற்று;
ஏனெனில் இராசா தம்முடைய குமாரனுக்காக
மனம் நொந்திருக்கிறாரென்று அன்றைத்தினம்
சனம் கேட்டது.—ஆகையால் சனம் யுத்தத்தில் ௩
முறிந்ததினால் வெட்கப்பட்டுத் திருட்டளவாய்
வருகிறதுபோல, சனம் அன்றைத்தினம் திருட்
டளவாய்ப் பட்டணத்திற்குள் வந்தது.—இரா ௪
சாவோவென்றால் முக்காடிட்டு, மகா சத்தமாய்
என் குமாரனாகிய அப்சலோமே, அப்சலோமா
கிய என் குமாரனே, என் குமாரனே என்று
அலறிக்கொண்டிருந்தான். — அப்போது யோ ௫
வாப் உள்ளே இராசாவண்டையில் பிரவேசித்
துச் சொன்னதாவது: இன்று உம்முடைய சீவ
னையும் உம்முடைய குமாரர் குமாரத்திகளின்
சீவனையும் உம்முடைய பெண்சாதிகளின் சீவ
னையும் உம்முடைய வைப்பாட்டிகளின் சீவ
னையும் தப்புவித்த உம்முடைய எல்லா ஊழி
யக்காரரின் முகத்தையும், இன்று நீர் உம்மைப்
பகைக்கிறவர்களைச் சிநேகிக்கிறதினாலும் உம்
மைச் சிநேகிக்கிறவர்களைப் பகைக்கிறதினாலும்
வெட்கப்படுத்தினீர்.—ஏனென்றால் தலைவரும் ௬
சேவகரும் உமக்கு அற்பமானவர்களென்று
இன்று அறியப்பண்ணினீர்; அதேதென்றால் அப்
சலோம் உயிரோடிருந்து, நாங்களனைவரும் இன்
று செத்திருந்தால், அப்போது உம்முடைய பார்
வைக்கு நல்லதாயிருக்குமென்று இன்று அறிந்
துகொண்டேன். — இப்போதும் எழுந்திருந்து ௭
வெளியே வந்து, உம்முடைய ஊழியக்காரரோ
டே அன்பாய்ப் பேசும்; ஏனென்றால் நீர் வெ
ளியே வராதிருந்தால், இராத்திரிக்கு ஒருவரும்

உம்மோடே தங்கியிருப்பதில்லையென்று கர்த்தர்
மேல் ஆணையிடுகிறேன்; அப்போது உம்மு
டைய சிறுவயதுதுவக்கி, இதுவரைக்கும் உம்
முடையமேல் வந்த எல்லாப் பொல்லாப்பை
யும்பார்க்கிலும், அது உமக்கு அதிக பொல்லாப்
௮ பாயிருக்குமென்றான்.—அப்போது இராசா எ
ழுந்திருந்துபோய், ஒலிமுகவாசலில் உளுக்காந்
தான்; இதோ இராசா ஒலிமுகவாசலில் உளுக்
காந்திருக்கிறாரென்று எல்லாச் சனத்திற்கும் அ
றிவிக்கப்பட்டபோது, சனமெல்லாம் இராசா
வுக்குமுன்பாக வந்தன; இஸ்ரவேலரோவெ
னில், அவரவர் தங்கள் கூடாரங்களுக்கு ஓடிப்
போனார்கள்.
௯ இஸ்ரவேலுடைய எல்லாக் கோத்திரங்களி
லுமுள்ள சகல சனமுமோவென்றால், தங்களுக்
குள்ளே வழக்காடிச் சொன்னதாவது: இராசா
நம்முடைய சத்துருக்களின் கைக்கு நம்மை நீங்
கலாக்கிவிட்டு, அவர்தானே பெலிஸ்தியரின்
கைக்கு நம்மைத் தப்புவித்தார்; இப்போதோ
வெனில் அப்சலோமுக்குத் தப்ப, தேசத்தை
௰ விட்டு ஓடிப்போனார்.—ஆனால் நாம் நம்மேல்
அபிஷேகம் பண்ணிவைத்த அப்சலோம், யுத்
தத்திலே செத்தானே, இப்போதும் இராசா
வைத் திரும்ப அழைத்துவர நீங்கள் அமர்ந்தி
ருப்பானேனென்று சொல்லிக்கொண்டார்கள்.
௰௧ இப்படி இஸ்ரவேலெல்லாம்பேசிக்கொண்டி
ருக்கிறது, இராசா இருக்கிற வீட்டிலே அவனுக்
குக் கேள்வியானபடியினாலே, தாவீது இராசா
சாதோக், அப்பியத்தாரென்ற ஆசாரியர்களண்
டைக்கு ஆளனுப்பி, நீங்கள் யூதாவின் மூப்ப
ரோடே பேசி, இராசாவைத் தம்முடைய வீட்
டுக்குத் திரும்ப அழைத்துவர நீங்கள் பிந்தின
௰௨ வர்களாய்ப் போவானேன்.— நீங்கள் என்னு
டைய சகோதரர், நீங்கள் என் எலும்பும் என்
மாம்சமுமானவர்கள்; இராசாவைத் திரும்ப அ
ழைத்துவர நீங்கள் பிந்தினவர்களாயிருப்பா
௰௩ னேன் என்று சொல்லுங்கள்.— அமாசாவுக்
கும் நீங்கள் சொல்லவேண்டியது: நீ என் எலும்
பும் என் மாம்சமுமல்லவோ? நீ யோவாபுக்
குப் பதிலாக எந்நாளும் எனக்குமுன்பாகப்
படைத்தலைவனுமாயிராவிட்டால், பராபரன்
இப்படியும் அப்படியும் எனக்குச் செய்யக்கட
வரென்று சொல்லச்சொல்லுங்களென்று சொ
௰௪ ன்னான்.—இப்படியே சகல யூதமனுஷரின் இ
ருதயத்தையும் ஒரே ஒருவன் இருதயத்தைப்போ
ல இணங்கப்பண்ணினதினாலே, அவர்கள் இரா
சாவுக்கு, நீர் உம்முடைய எல்லா ஊழியக்கா
ரரோடும் திரும்பிவாருமென்றுசொல்லி அனுப்
௰௫ பினார்கள்.-இராசா திரும்பவருகிறதற்கு யோர்
தான்மட்டும் வந்தபோது, யூதா கோத்திரத்தார்
இராசாவுக்கு எதிர்கொண்டுபோய், இராசாவை
யோர்தானைக் கடக்கப்பண்ண கில்கால்மட்டும்
வந்தார்கள்.
௰௬ பகூரிமூரான எமினியின் குமாரனாகிய கே
ராவின் மகன் சீமேயியும் தீவிரித்துக்கொண்டு,
யூதமனுஷரோடும்கூடத் தாவீது இராசாவுக்கு
எதிர்கொண்டு இறங்கிப்போனான்.—அவனோ ௰௭
டே பென்யமீன் மனுஷர் ஆயிரம்பேரும், சவு
லின்வீட்டு வேலைக்காரனாகிய சீபாவும், அவ
னோடேகூட அவனுடைய பதினைந்து குமார
ரும், அவனுடைய இருபது வேலைக்காரரும்
கூட இருந்தார்கள்; அவர்கள் இராசாவுக்குமுன்
பாக யோர்தானை வேகமாய்க் கடந்துவந்தார்
கள்.—அவர்கள் இராசாவின் வீட்டாரை இக்க ௰௮
ரைப்படுத்தவும், அவன் பார்வைக்குப் பொருந்
திய வேலையைச் செய்யவும், படகு அக்கரையி
லே வந்தது; அப்போது கேராவின் குமாரனா
கிய சீமேயி யோர்தானைக் கடக்கப்போகிற இரா
சாவுக்குமுன்பாகத் தாழவிழுந்து,-இராசாவோ ௰௯
டே சொன்னதாவது: என் ஆண்டவன் என்
அக்கிரமத்தை என்மேலே சுமத்தாமலும், இரா
சாவாகிய என் ஆண்டவன் எருசலேமிலிருந்து
புறப்பட்டுவருகிற நாளிலே, உம்முடைய அடி
யான் செய்த தோஷத்தை இராசா நினைக்காம
லும், தம்முடைய மனதில் வைக்காமலும் இருப்
பாராக. — ஏனெனில் நான் பாவம் செய்தே ௨௰
னென்று உம்முடைய அடியானாயிருக்கிற நான்
அறிந்திருக்கிறேன்; இப்போதும் இதோ இராசா
வாகிய என் ஆண்டவனுக்கு எதிர்கொண்டு இ
றங்கிவர, யோசேப்பு வீட்டாரனைவருக்கும்
நான் இன்று முந்திக்கொண்டேனென்றான்.—
அப்போது சேருயாவின் குமாரனாகிய அபிசாய் ௨௧
பிரதியுத்தாரமாக, கர்த்தர் அபிஷேகம்பண்ணு
வித்தவரைச் சீமேயி தூஷணித்தபடியினாலே,
அவன் அதற்காகக் கொலைசெய்யப்படவேண்
டாமோ என்றான்.—தாவீதோவென்றால், சேரு ௨௨
யாவின் குமாரரே, இன்று நீங்கள் எனக்குச் சாத்
தான்களாகிறதற்கு, எனக்கும் உங்களுக்கும்
என்ன? இன்று இஸ்ரவேலில் ஒருவன் கொலை
செய்யப்படலாமோ? ஏனென்றால் இன்று நான்
இஸ்ரவேலின்மேல் இராசாவானேன் என்கிற
தை அறியேனோவென்று சொல்லி,-இராசா சீமே ௨௩
யியுடனே, நீ சாவதில்லையென்று அவனுக்கு
ஆணையிட்டான்.
சவுலின் குமாரனாகிய மேவிபோசேத்தும் ௨௪
இராசாவுக்கு எதிர்கொண்டு இறங்கிவந்தான்;
இராசா போனநாள்துவக்கி, அவன் சமாதானத்
தோடே திரும்பிவருகிற நாள்மட்டும், அவன்
தன் கால்களையும் தன் தாடியையும் சுத்தம்பண்
ணிக்கொள்ளாமலும், தன் வஸ்திரங்களை வெ
ளுக்காமலும் இருந்தான்.—அவன் எருசலேமி ௨௫
லிருந்து இராசாவுக்கு எதிர்கொண்டு வருகிற
போதோவென்றால், இராசா அவனை, மேவி
போசேத்தே, நீ என்னோடேகூட வராதேபோ
னதென்னவென்று கேட்டான்.-அவன் சொன் ௨௬
னதாவது:இராசாவாகிய என் ஆண்டவனே,என்
வேலைக்காரன் என்னை மோசம்போக்கினான்;
அதேனென்றால் உம்முடைய அடியானாயிருக்
கிற நான் சப்பாணியானபடியினாலே, ஒரு கழு
தையின்மேலே சேணம்வைத்து அதின்மேலேறி,

இராசாவோடேகூடப் போகிறேனென்று அடி
௨௭ யேன் சொன்னேன். — அவன் இராசாவாகிய
என் ஆண்டவனோடே, உம்முடைய அடியான்
மேலே குத்திரமும் சொன்னான்; இராசாவாகிய
என் ஆண்டவனோவெனில், பராபரனுடைய
தூதனைப்போல இருக்கிறார்; உம்முடைய பார்
வைக்கு நல்லதாய்க் காண்கிறபடியே செய்யும்.—
௨௮ ஏனெனில் இராசாவாகிய என் ஆண்டவனுக்கு
முன்பாக என் தகப்பன் வீட்டாரெல்லாரும்
சாவுக்கு ஏதுவாயிருந்தார்களே ஒழிய, மற்றப்
படி அல்லவென்றாலும், உமது பந்தியிலே
சாப்பிடுகிறவர்களுக்குள்ளே உம்முடைய அடி
யானை வைத்தீர்; இன்னம் நான் இராசாவைப்
பார்த்து முறையிட, இனி எனக்கு என்ன நீதி
௨௯ யிருக்கின்றதென்றான். — அப்போது இராசா
அவனுடனே, இனி உன் காரியத்தை அதிக
மாய்ப் பேசுவானேன்? நீயும் சீபாவும் நிலத்
தைப் பங்கிட்டுக்கொள்ளுங்கள்; இதை நான்
௩௰ சொன்னேனென்றான். — அதற்கு மேவிபோ
சேத் இராசாவுடனே, இராசாவாகிய என் ஆண்
டவன் சமாதானத்தோடே தம்முடைய வீட்
டிற்கு வந்திருக்கும்போது, அவன் எல்லாவற்
றையும் எடுத்துக்கொள்ளட்டுமென்றான்.
௩௧ கீலேயாத்தியனாகிய பர்சீலாவும் ரோகிலிமி
லிருந்து இறங்கிவந்து, யோர்தான்மட்டும் இரா
சாவை வழிவிட்டனுப்ப, அவனோடேகூட
யோர்தானின் துறைமட்டும் கடந்துவந்தான்.—
௩௨ பர்சீலாவோவெனில் எண்பது வயதுசென்ற
மகா கிழவனாயிருந்தான்; இராசா மக்னாயீமிலே
தங்கியிருக்கும்மட்டும் அவன் இவனைப் பராம
ரித்துக்கொண்டிருந்தான்; ஏனென்றால் அவன்
௩௩ மகா பெரியமனுஷனாயிருந்தான்.—இராசா பர்
சீலாவுடனே, நீ என்னோடேகூடக் கடந்துவா,
எருசலேமிலே உன்னை என்னண்டையிலே
௩௪ வைத்து பராமரிப்பேனென்றான். — ஆனால்
பர்சீலா இராசாவோடே சொன்னதாவது: நான்
இராசாவோடேகூட எருசலேமுக்கு ஏறிவர
நான் இன்னம் உயிரோடிருக்கும் ஆயுசின் நாள்
௩௫ கள் எம்மாத்திரம்?—இப்போதும் நான் எண்பது
வயதுள்ளவன்; இனி நன்மைதீமையினுடைய
வித்தியாசத்தை அறிவேனோ? புசிக்கிறதும் குடி
க்கிறதும் உம்முடைய அடியானுக்கு உருசிகர
மாயிருக்குமோ? கீர்த்தனக்காரர் கீர்த்தனக்காரிக
ளுடைய சத்தத்தை இனிக் கேட்பேனோ? இனி
உம்முடைய அடியானாயிருக்கிற நான் இராசா
வாகிய என் ஆண்டவனுக்குப் பாரமாயிருக்க
௩௬ வேண்டியதென்ன?—அடியேன் கொஞ்சதூரம்
யோர்தான்மட்டும் இராசாவோடேகூட வரு
வேன்; அப்படிக்கொத்த பதில் உபகாரத்தை
௩௭ இராசா எனக்குச் செய்வானேன்?—நான் என்
பட்டணத்தில் என் தாய்தகப்பனின் கல்ல
றையண்டையிலே மரணம் அடையும்படிக்கு,
உம்முடைய அடியான் திரும்பிப்போகட்டும்;
ஆனால் இதோ உம்முடைய அடியானாகிய கிமே
காம் இராசாவாகிய என் ஆண்டவனோடேகூட
நடந்துவருவான்; உம்முடைய பார்வைக்கு
நலமானபடி அவனுக்குச் செய்யுமென்றான்.—
அப்போது இராசா, கிமேகாம் என்னோடேகூட ௩௮
வரட்டும்; உன் பார்வைக்கு நலமானபடியே
நான் அவனுக்கு நடப்பித்து, நீ என்மேலே
சுமத்தத் தெரிந்துகொள்வதெல்லாவற்றையும்
உனக்குச் செய்வேனென்றான்.—சனமெல்லாம் ௩௯
யோர்தானைக்கடந்தபோது, இராசா பர்சீலாவை
முத்தமிட்டு அவனை ஆசீர்வதித்து தானும் கடந்து
போனான்; அவனோ தன்னிடத்திற்குத் திரும்பி
னான்.—இராசா கடந்து, கில்கால்மட்டும் போ ௪௰
னான்; கிமேகாம் அவனோடேகூடக் கடந்துவந்
தான்; யூதாவின் சனமனைத்தும், இஸ்ரவேலிலே
பாதிச்சனமும், இராசாவை இக்கரைப்படுத்தி
வந்தபிற்பாடு,
இதோ இஸ்ரவேல் மனுஷரெல்லாரும் இரா ௪௧
சாவண்டைக்கு வந்து, இராசாவுடனே, எங்கள்
சகோதரராகிய யூதாவின் மனுஷர் திருட்டள
வாய் உம்மை அழைத்துவந்து, இராசாவையும்,
அவர் வீட்டாரையும், அவரோடேகூட இருக்
கிற தாவீதின் மனுஷரனைவரையும், யோர்தா
னைக் கடக்கப்பண்ணினதென்ன என்றார்கள்.—
அப்போது யூதாவின் மனுஷரெல்லாரும் இஸ்ர ௪௨
வேல் மனுஷருக்குப் பிரதியுத்தாரமாக, இராசா
எங்களைச் சேர்ந்தவரானபடியினாலே இதைச்
செய்தோம்; இதற்காக நீங்கள் கோபமாயிருப்பா
னேன்? நாங்கள் இராசாவின் கையிலே வாங்கித்
தின்னவே தின்றோமோ? எங்களுக்கு வெகுமா
னம் கொடுக்கப்பட்டதோ என்றார்கள்.—இஸ் ௪௩
ரவேல் மனுஷரோவெனில் யூதாமனுஷருக்குப்
பிரதியுத்தாரமாக,இராசாவினிடத்தில் எங்களுக்
குப் பத்துப்பங்கு இருக்கின்றது; உங்களைப்
பார்க்கிலும் எங்களுக்குத் தாவீதினிடத்திலே
அதிகமும் உண்டாயிருக்கின்றது; பின்னை ஏன்
எங்களை அற்பமாய் எண்ணினீர்கள், எங்கள்
இராசாவைத் திரும்ப அழைத்துவரவேண்டு
மென்று முந்திச் சொன்னவர்கள் நாங்களல்ல
வோ என்றார்கள்; ஆனால் இஸ்ரவேலின் மனு
ஷரின் பேச்சைப்பார்க்கிலும் யூதாமனுஷரின்
பேச்சு பலத்தது.

## ௨௰. அதிகாரம்.

*௧. கலகம் சேரிட்டதினால், சேபா இஸ்ரவேலரில் சிலரைத் தன் வசமாக்கிக்கொண்டது. ௩. தாவீதின் பத்து வைப்பாட்டிகள் நிரந்தரமான காவலில் வைக்கப்பட்டது. ௪. அமாசா யூதர்மேல் படைத்தலைவனாய் ஏற்படுத்தப்பட்டு, யோவாபினால் கொல்லப்பட்டது. ௱௪. யோவாப் ஆபேலுக்குச் சேபாவைப் பிடிக்க, அவன் பின்சென்றது. ௱௬. ஒரு ஞானமுள்ள ஸ்திரி சேபாவின் தலையைக்கொடுத்து, பட்டணத்தைக் காத்தது. ௨௩. தாவீது வைத்த தலைவர்கள்.*

அப்போது எமினி மனுஷனாகிய பிக்கிரியின் ௧
குமாரனான சேபாவென்றுபேருள்ள பேலியாள்
மனுஷன் ஒருவன் தற்செயலாய் அங்கே இருந்
தான்; அவன் எக்காளம் ஊதி, எங்களுக்குத் தா
வீதினிடத்திலே பங்குமில்லை, ஈசாயின் குமார
னிடத்தில் எங்களுக்குச் சுதந்தரமுமில்லை, இஸ்
ரவேலே அவரவர் தங்கள் கூடாரங்களுக்குப்
போகக்கடவர்களென்றான்.—அப்போது இஸ்ர ௨

வேல் மனுஷரெல்லாரும் தாவீதைவிட்டுப் பின்
வாங்கி, பிக்கிரியின் குமாரனாகிய சேபாவைப்
பின்சென்று போனார்கள்; ஆனால் யோர்தான்
துவக்கி எருசலேம்மட்டுமுள்ள யூதாமனுஷர்
தங்கள் இராசாவைச் சார்ந்திருந்தார்கள்.
௩ தாவீது எருசலேமிலிருக்கிற தன் வீட்டுக்கு
வந்தபோது, வீட்டைக்காக்க இராசா பின்வைத்
துப்போன பத்து வைப்பாட்டிகளை அழைத்து,
அவர்களை ஒரு காவல்வீட்டிலே வைத்துப் பரா
மரித்து, அவர்களிடத்திலே பிரவேசியாதிருந்
தான்; அப்படியே அவர்கள் சாகிற நாள்மட்டும்,
அடைக்கப்பட்டு, உயிரோடிருக்கிற நாளெல்
லாம் விதவைகளைப்போல இருந்தார்கள்.
௪ பிற்பாடு இராசா அமாசாவுடனே, நீ யூதா
மனுஷரை மூன்றும்நாளில் என்னண்டைக்கு
வரவழைப்பித்து, அப்போது நீயும் இங்கே வந்து
௫ நிற்கவேண்டுமென்றான்.—அப்போது அமாசா
யூதாவை அழைப்பிக்கப்போய், தனக்குக் குறித்
௬ தகாலத்திலே வராமல் தாமதித்தான்.—அப்போது
தாவீது அபிசாயுடனே, அப்சலோமைப்பார்க்
கிலும் பிக்கிரியின் குமாரனாகிய சேபா, இப்
போது நமக்குப் பொல்லாப்புச் செய்வான்;
அவன் அரணான பட்டணங்களில் வந்தடைந்து,
நம்முடைய கண்களுக்குத் தப்பிப்போகாத
படிக்கு, நீ உன் எசமானனுடைய சேவகரைக்
கூட்டிக்கொண்டு, அவனைப் பின்தொடர்ந்து
௭ போவென்றான்.—அப்படியே யோவாபின் மனு
ஷரும் கிரேத்தியரும் பிலேத்தியரும் எல்லாப்
பலசாலிகளும், அவன் பிறகாலே புறப்பட்டு,
பிக்கிரியின் குமாரனாகிய சேபாவைப் பின்தொ
டர எருசலேமிலிருந்து போனார்கள்.
௮ அவர்கள் கிபேயோன்கிட்ட இருக்கிற பெ
ரிய கல்லண்டையிலே வந்தபோதோவெனில்,
அமாசா அவர்களுக்கு எதிர்ப்பட்டு வந்தான்;
யோவாபோவென்றால், தான் உடுத்திக்கொண்
டிருக்கிற தன் சட்டையின்மேல் ஒரு கச்சை
யைக் கட்டிக்கொண்டிருந்தான்; அதில் உறை
யோடே ஒரு பட்டையம் அவன் இடுப்பண்
டையிலே தொங்கிற்று; அவன் புறப்படுகை
௯ யில் அது விழுந்தது.—அப்போது யோவாப் அ
மாசாவுடனே, என் சகோதரனே, சுகமாயிருக்
கிறாயோ என்று சொல்லி, அமாசாவை முத்தம்
செய்ய, தன் வலதுகையினால் அவன் தாடியைப்
௰ பிடித்து,—தன் கையிலிருக்கிற பட்டையத்திற்கு
அமாசா எச்சரிக்கையாயிராதபோது, யோவாப்
அவனை அவன் குடல்கள் தரையிலே சரிந்து
போகத்தக்கதாய், அதினால் வயிற்றிலே மறுகுத்
தில்லாமல் குத்திப்போட்டான், அவன் செத்துப்
போனான்; அப்போது யோவாபும் அவன் சகோ
தரனாகிய அபிசாயும் பிக்கிரியின் குமாரனாகிய
௰௧ சேபாவைப் பின்தொடர்ந்தார்கள்.—யோவாபு
டைய வாலிபரில் ஒருவன் செத்தவனண்டை
யிலே நின்று, எவன் யோவாபின்மேல் பிரியப்
பட்டு எவன் தாவீதுக்கடுத்திருக்கிறானோ அவன்
யோவாபைப் பின்செல்வானாகவென்றான். —
ஆனால் அமாசா நடுவழியிலே இரத்தத்திலே புர ௰௨
ண்டுகிடந்தபடியினாலே, சனமெல்லாம் தரித்து
நிற்கிறதை அவன் கண்டு, அமாசாவை வழியிலி
ருந்து வயலிலே இழுத்துப்போட்டு, அவனண்
டையில் வருகிறவனெல்லாம் நிற்கிறான் என்று
கண்டபடியினாலே, ஒரு வஸ்திரத்தை அவன்
மேல் போட்டான்.—அவன் வழியிலிருந்து எடுத் ௰௩
துப்போடப்பட்ட பிற்பாடு, எல்லாரும் கடந்து,
பிக்கிரியின் குமாரனாகிய சேபாவைத் தொடர,
யோவாபைப் பின்சென்றார்கள்.
அவன் இஸ்ரவேல் கோத்திரங்களையெல்லாம் ௰௪
சுற்றி, பெத்மாக்காவாகிய ஆபேல்மட்டாகவும்,
பேரீமின் சகல புறங்கள்மட்டாகவும் வந்திருந்
தான்; ஆனால் அவ்விடத்தாரும் கூடி, தாங்களும்
அவனைப் பின்சென்றார்கள்.—அவர்கள் வந்து ௰௫
பெத்மாக்காவாகிய ஆபேலிலே அவனை முற்றிக்
கைபோட்டு, பட்டணத்திற்கு எதிராகத் தெற்று
மட்டும் கொத்தளம்போட்டார்கள்; யோவா
போடே இருக்கிற சனமெல்லாம் அலங்கத்தை
விழப்பண்ண அழிவுக்கு எத்தனம்பண்ணினார்
கள்.
அப்போது ஞானமுள்ள ஒரு ஸ்திரி பட்ட ௰௬
ணத்திலிருந்து, கேளுங்கள் கேளுங்கள்; நான்
யோவாபோடே பேசத்தக்கதாக அவரிங்கே
கிட்டிவர, அவருக்குச் சொல்லுங்களென்று
கூப்பிட்டாள். — அவன் அவளண்டைக்குச் ௰௭
சேர்ந்துவந்தபோது, அந்த ஸ்திரி நீர் யோவாபோ
வென்று கேட்டாள்; அவன் நான்தானென்ற
போது, அவள் அவனுடனே, உம்முடைய அடி
யாளின் வார்த்தைகளைக் கேளுமென்றாள்; நான்
கேட்கிறேன் என்றான். — அப்போது அவள் ௰௮
சொன்னதாவது: பூர்வகாலத்திலே மனுஷர் ஆ
பேலிலிருக்கிறவர்களை ஆலோசனை கேட்கவே
கேட்கவேண்டுமென்று சொல்லவே சொல்லி,
இப்படியே காரியத்தைத் தீர்த்துப்போடுவார்
கள். — இஸ்ரவேலிலே நான் சமாதானமும் ௰௯
உண்மையுமுள்ளதாயிருக்கையில், நீர் இஸ்ரவே
லிலே தாயாயிருக்கிற பட்டணத்தை நிர்மூல
மாக்கப் பார்க்கிறீரோ? நீர் கர்த்தருடைய சுதந்த
ரத்தை விழுங்குவதென்ன என்றாள்.—யோவாப் ௨௰
பிரதியுத்தாரமாகச் சொன்னது: நான் விழுங்க
வேண்டும், அழிக்கவேண்டுமென்கிற ஆசை
எனக்கு வெகு தூரமாவதாக.—காரியம் அப்படி ௨௧
இராது; பிக்கிரியின் குமாரனாகிய சேபாவென்று
பேருள்ள எப்பிராயீம் பர்வதத்தானாயிருக்கிற
ஒரு மனுஷனேவென்றால், தாவீதாகிய இராசா
வுக்கு விரோதமாய்த் தன் கையை எடுத்தான்;
அவன் ஒருவனையே ஒப்புக்கொடுங்கள்; அப்
போது பட்டணத்தைவிட்டுப் போவேனென்
றான்; அப்போது அந்த ஸ்திரி யோவாபுடனே,
இதோ அவன் தலை மதிளின்மேலிருந்து உம்
மண்டையிலே போடப்படுமென்று சொல்லி,—
அவள் தன் ஞானத்துடனே எல்லாச் சனத்தண் ௨௨
டைக்கும் உள்பிரவேசித்ததினாலே, அவர்கள்
பிக்கிரியின் குமாரனாகிய சேபாவின் தலையை

வெட்டி, யோவாபண்டையிலே போட்டார்
கள்; அப்போது அவன் எக்காளம் ஊதுவித்தநி
ஞல், அவரவர் பட்டணத்தைவிட்டுக் கலைந்து,
தங்கள் கூடாரங்களுக்குப் புறப்பட்டுப்போனார்
கள்; யோவாபும் இராசாவண்டைக்குப்போக
எருசலேமுக்குத் திரும்பினான்.
௨௩ யோவாப் இஸ்ரவேலுடைய எல்லா இராணு
வத்தின்மேலும், யோய்தாவின் குமாரனாகிய பே
னாயா, கிரேத்தியர்மேலும், பிலேத்தியர்மேலும்
௨௪ தலைவராயிருந்தார்கள். — அதோராம் பகுதிகளை
வாங்குகிறவனும், அகிலூதின் குமாரனாகிய யோ
௨௫ சபாத் மந்திரியும்,-சேயா சம்பிரதியும், சாதோக்
கும் அப்பியத்தாரும் ஆசாரியருமாயிருந்தார்கள்.-
௨௬ யயீரியனாகிய ஈராவும் தாவீதுக்கு ஆலோசனைக்
காரனாயிருந்தான்.

## ௨௧. அதிகாரம்.

௧. சவுலின் குமாரர்களிலே ஏழுபேர் தூக்கப்பட்டதால், கிபேயோனர்களுக்கு வந்த மூன்றுவருஷ பஞ்சம் நீங்கியது. ௰. இறந்தவர்கள்மேல் ரிஸ்பாள் பட்சம் வைத்தது. ௰௨. தாவீது, சவுல் யோனத்தானுடைய எலும்புகளைத் தன் தகப்பனுடைய கல்லறையில் அடக்கம்பண்ணினது. ௰௫. பெலிஸ்தியருக்கு விரோதமாக உண்டான நாலு யுத்தங்களில் தாவீதின் நாலு வீரர்கள் நாலு இராட்சதர்களைக் கொன்றது.

௧ தாவீதின் நாள்களில் மூன்று வருஷமாய் ஓயாத
பஞ்சம் உண்டாயிருந்தது; அப்போது தாவீது
கர்த்தருடைய முகத்தைத் தேடினதற்கு, கர்த்தர்
கிபெயோனியரைக் கொன்றுபோட்ட சவுலுக்
காகவும், இரத்தப் பிரியரான அவன் வீட்டாருக்
௨ காகவும்தானே என்றார். — அப்போது இராசா
கிபெயோனியரை அழைப்பித்தான்; கிபெயோ
னியரோவெனில், இஸ்ரவேல் புத்திரராயிரா
மல், எமோரியரில் மீதியாயிருந்தார்கள்; அவர்க
ளுக்கு இஸ்ரவேல் புத்திரர் ஆணையிட்டிருந்தா
லும், சவுல் இஸ்ரவேல் புத்திரருக்காகவும் யூதா
வுக்காகவும் காண்பித்த வைராக்கியத்தினாலே
௩ அவர்களை வெட்ட வகைபார்த்தான். — ஆகை
யால் தாவீது கிபெயோனியரை, நான் உங்களுக்
குச் செய்யவேண்டியதென்ன? நீங்கள் கர்த்தரு
டைய சுதந்தரத்தை ஆசீர்வதிக்கும்படிக்கு, எதி
னாலே சரிபண்ணுவேனென்று கேட்டான்.—
௪ அப்போது கிபெயோனியர் அவனுடனே, சவு
லோடும் அவன் வீட்டாரோடும் எங்களுக்கிருக்
கிற காரியத்திற்காக எங்களுக்கு வெள்ளியும்
பொன்னும் கவையில்லை; இஸ்ரவேலில் ஒருவ
னைக் கொன்றுபோடவேண்டுமென்கிறது எங்க
ளுக்குக் கவையில்லை என்றார்கள்; அப்போது
அவன், ஆனால் நான் உங்களுக்கு என்ன செய்ய
வேண்டுமென்று சொல்லுகிறீர்களென்றான்.—
௫ அவர்கள் இராசாவோடே சொன்னதாவது: நாங்
கள் இஸ்ரவேலின் எல்லையிலெங்கும் நிலைக்காத
படிக்கு, அழிந்துபோக எவன் எங்களை நிர்மூல
மாக்கி எங்களுக்குப் பொல்லாப்புச்செய்ய நினை
௬ த்தானோ,—அவன் குமாரரில் ஏழுபேர் கர்த்தர்
தெரிந்துகொண்ட சவுலின் ஊராகிய கிபெயா
விலே நாங்கள் அவர்களைக் கர்த்தருக்கென்று
தூக்கிப்போட, எங்களுக்கு ஒப்புக்கொடுக்கப்
படட்டும் என்றார்கள்; நான் அவர்களை ஒப்புக்
கொடுப்பேன் என்று இராசா சொன்னான்.
ஆனால் தாவீதாகிய தனக்கும் சவுலின் குமார ௭
னாகிய யோனத்தானுக்கும் உண்டான கர்த்த
ராக்கொண்டு இட்ட ஆணையின்நிமித்தம், இரா
சா சவுலின் குமாரனாகிய யோனத்தானின் மகன்
மேவிபோசேத்தைத் தப்பவிட்டு, — ஆயாவின் ௮
குமாரத்தியாகிய ரிஸ்பாள் சவுலுக்குப் பெற்ற
அவளுடைய இரண்டு குமாரராகிய அற்மோனி
யையும் மேவிபோசேத்தையும், சவுலின் குமா
ரத்தியாகிய மீகாள் மெகொலாவியனான பர்சி
லாவின் குமாரனாகிய ஆதரியேலுக்குப் பெற்ற
அவளுடைய ஐந்து குமாரரையும் பிடித்துக்
கொண்டு,—அவர்களைக் கிபெயோனியர் கையில் ௯
ஒப்புக்கொடுத்தான்; இவர்கள் அவர்களைக் கர்த்
தருக்கு முன்பாகப் பர்வதத்தின்மேலே தூக்கிப்
போட்டார்கள்; அப்படியே அவர்கள் ஏழுபே
ரும் ஒருமிக்க விழுந்தார்கள்; வால்க்கோதுமை
அறுப்பு துவக்குகிற அறுப்புக்காலத்தின் முந்
தின நாள்களிலேதானே அவர்கள் கொன்றுபோ
டப்பட்டார்கள்.—அப்போது ஆயாவின் குமாரத் ௰
தியாகிய ரிஸ்பாள், இரட்டுப்புடவையை எடுத்
துக்கொண்டுபோய் அதைக் கல்மலையில் தனக்
காக விரித்து, அறுப்புநாளின் துவக்கம்முதல்
கொண்டு வானத்திலிருந்து அவர்கள்மேல் மழை
பெய்யுமட்டும் பகலில் ஆகாயத்துப்பறவைக
ளாகிலும் இரவில் காட்டுமிருகங்களாகிலும் அ
வர்கள்மேல் விழவொட்டாதிருந்தாள்.
ஆயாவின் குமாரத்தியாகிய ரிஸ்பாளென்ற ௰௧
சவுலின் வைப்பாட்டி செய்தது, தாவீதுக்கு அறி
விக்கப்பட்டபோது,—தாவீது போய் பெலிஸ்தி ௰௨
யர் கில்போவாவிலே சவுலை வெட்டினபோது,
பெத்சானின் வீதியிலே தூக்கிப்போடப்பட்ட
தும், கிலேயாத்திலுள்ள யாபேஸ் பட்டணத்தா
ரோ அங்கே போய்த் திருடிக்கொண்டு வந்தது
மான சவுலின் எலும்புகளையும், அவன் குமார
னான யோனத்தானின் எலும்புகளையும், அவர்க
ளிடத்தில் எடுத்து,—அங்கே இருந்து அவைகளைக் ௰௩
கொண்டுவந்து தூக்கிப்போடப்பட்டவர்களின்
எலும்புகளையும் அவைகளோடே சேர்த்துக்கொ
ண்டு,—சவுலின் எலும்புகளையும் அவன் குமாரனா ௰௪
கிய யோனத்தானின் எலும்புகளையும், பென்ய
மீன் தேசத்துச் சேலா ஊரிலிருக்கிற அவன்
தகப்பனாகிய கீசின் கல்லறையில் அடக்கம்பண்
ணுவித்தான்; இராசா கற்பித்த இந்தப்படி எல்
லாம் செய்தார்கள்; அதற்குப்பிற்பாடு பராபரன்
தேசத்திற்காகச் செய்யப்பட்ட வேண்டுதலைக்
கேட்டருளினார்.
பின்னையும் பெலிஸ்தியராலே இஸ்ரவேலின் ௰௫
மேல் யுத்தமுண்டாகிறபோது, தாவீதும் அவ
னோடேகூட அவன்சேவகரும்இறங்கிப்போய்,
பெலிஸ்தியரோடு யுத்தம்பண்ணினார்கள்; தாவீது
விடாய்த்துப்போனான். — அப்போது முந்நூறு ௰௬
சேக்கல் நிறை வெண்கலமான ஈட்டியைப் பி
டிக்கிறவனும் புதுப்பட்டையத்தை அரையிலே

கட்டிக்கொண்டவனுமான இஸ்பிபெனோத்தெ
ன்ற ரபா புத்திரரில் ஒருவன் தாவீதை வெட்ட
௰௭ வேண்டுமென்று இருந்தான்.—ஆனால் சேருயா
வின் குமாரனாகிய அபிசாய் அவனுக்கு ஒத்தா
சையாக வந்து, பெலிஸ்தியனை வெட்டிக் கொன்
றுபோட்டான்; அப்போது தாவீதின் மனுஷர்,
நீர் இஸ்ரவேலின் விளக்கை அணைந்துபோகப்
பண்ணாதபடிக்கு, இனி நீர் எங்களோடே யுத்தத்
திற்குப் புறப்படவேண்டாமென்று அவனுக்கு
ஆணையிட்டார்கள்.
௰௮ அதற்குப்பிற்பாடு சம்பவித்ததேதென்றால்,
பெலிஸ்தியரோடே திரும்பவும் கோபிலே யுத்த
முண்டாகிறபோது, ஊசாவியனான சிபேக்காய்
இராட்சதசந்ததியான சாப்பை வெட்டிப்போட்
௰௯ டான்.—பெலிஸ்தியரோடு இன்னம் வேறொரு
யுத்தம் கோபிலே உண்டாகிறபோது, யாரே
யொர்கிமின் குமாரனாகிய எல்க்கானனென்ற
பெத்லேகேமியன் காத்தூரானாகிய கோலியாத்
தை வெட்டினான்; அவன் ஈட்டிமரம் நெய்கிறவர்
௨௰ களின் படைமரம் அத்தனையாயிருந்தது.—இன்
னம் ஒரு யுத்தம் காத்தூரிலே உண்டாகிறபோது,
அங்கே உயர்ந்த ஒரு மனுஷனிருந்தான்; அவன்
கைகளின் விரல்கள் அவ்வாறும் அவன் கால்க
ளின் விரல்கள் அவ்வாறும் ஆக இருபத்துநாலு
விரல்களுமாய் இருந்தன; இவனும் இராட்சதனா
௨௧ ய்ப் பிறந்திருந்து,—இஸ்ரவேலை நிந்தித்தான்; ஆ
னால் தாவீதின் சகோதரனான சிமேயாவின் குமா
ரனாகிய யோனத்தான் அவனை வெட்டினான்.—
௨௨ இந்த நாலுபேரும் காத்தூரிலே ரபாவுக்குப் பிறந்
திருந்து, தாவீதின் கையினாலும் அவன் சேவக
ரின் கையினாலும் மடிந்தார்கள்.

## ௨௨. அதிகாரம்.

௧. பராபரனுடைய வல்லமையுள்ள இரட்சிப்புக்காகவும், பற்பல ஆசீர்வா
தத்துக்காகவும் புகழ்தலின் ஒரு பாட்டு.

௧ கர்த்தர் தாவீதை அவனுடைய எல்லாச் சத்து
ருக்களின் கைக்கும், சவுலின் கைக்கும், நீங்க
லாக்கி விடுவித்தபோது, அவன் கர்த்தருக்கு
முன்பாகச் சொன்ன பாட்டின் வார்த்தைகளா
வது:
௨ கர்த்தர் என் குன்றும், என் கோட்டையும்,
௩ என்னை விடுவிக்கிறவருமானவர். — பராபரன்
நான் நம்பியிருக்கிற குன்றும், என் கேடைய
மும், என் இரட்சிப்பின் கொம்பும், என் உயர்ந்த
அடைக்கலமும், என் மறைவிடமுமானவர்; என்
னை வல்லடிக்கு நீங்கலாக்கிவிட்ட என் இரட்
௪ சகராயிருக்கிறீர்.—ஸ்தோத்திரிக்கப்பட்ட கர்த்த
ரை நோக்கிக் கூப்பிட்டேன்; அப்போது என்
சத்துருக்கள் விலக இரட்சிக்கப்பட்டேன்.—
௫ ஏனென்றால் மரணத்தின் அலைகள் என்னைச்
சூழ்ந்துகொண்டு, பேலியாளின் வாய்க்கால்கள்
௬ என்னைக் கலங்கப்பண்ணின.—நரகத்தின் கயி
றுகள் என்னைச் சுற்றிப்பிடித்து, மரணத்தின்
௭ கண்ணிகள் எனக்கு நேரிட்டன.—எனக்குண்
டான நெருக்கத்திலே கர்த்தரைத் தொழுதுகொ
ண்டு, என் பராபரனை நோக்கிக் கூப்பிட்டேன்;
தமது தேவாயலத்திலிருந்து என் சத்தத்தைக்
கேட்டார்; என் கூப்பிடுதல் அவர் செவிகளுக்
குள்பட்டது.—அப்போது பூமி அசைந்து அதிர்ந் ௮
து, வானத்தின் அஸ்திபாரங்கள் குலுங்கி அசைந்
தன; ஏனெனில் எரிச்சலானார். — புகை அவர் ௯
நாசியாலும் பட்சிக்கிற அக்கினி அவர் வாயா
லும் எழும்பி, அவராலே தணலாக எரிந்தது.—
பரமண்டலங்களைத் தாழ்த்தி இறங்கினார்; அவர் ௰
பாதங்களின்கீழே மந்தாரம் இருந்தது.—கேரு ௰௧
பீனின்மேலேறிப் பறந்து, காற்றின் செட்டைக
ளின்மீதிலே தரிசனையானார்.—ஆகாயத்து மேகங் ௰௨
களிலே கூடிய தண்ணீர்களின் இருளைத் தம்
மைச் சுற்றிலும் இருக்கும் கூடாரமாக்கினார்.—
அவர் முகதாவின் பிரகாசத்தினால் நெருப்புத் ௰௩
தணலாய் எரிந்தது.—கர்த்தர் வானத்திலிருந்து கு ௰௪
முறி, உன்னதமானவர் தமது சத்தத்தைக் காட்டி
னார்.—அவர் அம்புகளை அனுப்பி அவர்களைச்சிதற ௰௫
டித்து, மின்னல்களைப் போகவிட்டு அவர்களைக்
கலங்கப்பண்ணினார்.—கர்த்தருடைய உதம்புத ௰௬
லாலும் அவருடைய நாசியின் சுவாசக் காற்றினா
லும் சமுத்திரத்தின் பள்ளங்கள் காணப்பட்டு,
பூதலத்தின் அஸ்திபாரங்கள் திறவுண்டன.—
உயரத்திலிருந்து கை நீட்டி, என்னைப் பிடித்து, ௰௭
திரள் தண்ணீர்களிலிருந்து என்னைத் தூக்கிவிட்
டார்.—என் வலு சத்துருவுக்கும் என் பகைஞ ௰௮
ருக்கும் என்னை விலக்கி விடுவித்தார்; ஏனெனில்
என்னிலும் பலத்திருந்தார்கள்.—என் ஆபத்தின் ௰௯
நாளிலே எனக்கு எதிரிட்டு மறித்தார்கள்; ஆனால்
கர்த்தர் எனக்கு ஆதரவாயிருந்து,—என்னை எடுத் ௨௰
து விசாலத்திலே வைத்துத் தப்புவித்தார்; ஏனெ
னில் என்மேலே பிரியமாயிருந்தார். — கர்த்தர் ௨௧
என் நீதிக்குத்தக்கதாக எனக்குப் பதில் அளித்
தார்; என் கைகளின் சுத்தத்திற்குத்தக்கதாக எ
னக்கு வரப்பண்ணினார்.—ஏனென்றால் கர்த்தரு ௨௨
டைய வழிகளைக் காத்துக்கொண்டிருந்தேன்,
நான் என் பராபரனைவிட்டு ஆகாமியம்செய்த
தில்லை.—ஏனெனில் அவருடைய நியாயங்களை ௨௩
எல்லாம் எனக்குமுன்பாக நிறுத்தினேன்; நான்
அவருடைய பிரமாணங்களைவிட்டு விலகாமல்,—
அவர்முன்பாக மன உண்மையாயிருந்து, என் ௨௪
துர்க்குணத்திற்கு என்னை விலக்கிக் காத்தேன்.—
ஆகையால் கர்த்தர் என் நீதிக்குத்தக்கதாகவும், ௨௫
தம்முடைய கண்களுக்குமுன் இருக்கிற என்னு
டைய சுத்தத்திற்குத்தக்கதாகவும் எனக்கு வரப்
பண்ணினார்.

சன்மார்க்கனுக்கு உம்மைச் சன்மார்க்கமாக ௨௬
வும், மன உண்மையான புருஷனுக்கு உம்மை
மன உண்மையாகவும், — சுத்தனுக்கு உம்மைச் ௨௭
சுத்தமாகவும், மாறுபாடானவனுக்கோ உம்மைக்
கோணலாகவும் காண்பிக்கிறீர்.—சிறுமைப்பட்ட ௨௮
சனத்தை இரட்சிக்கிறீர்; ஆனால் மேட்டிமையா
னவர்களைத் தாழ்த்த, உம்முடைய கண்கள் அ
வர்களுக்கு விரோதமாகத் திருப்பப்பட்டிருக்

௨௯ கின்றன.—ஏனெனில் கர்த்தராகிய தேவரீர் என்
விளக்காயிருக்கிறீர்; கர்த்தர் என் இருளை வெளிச்
௩௰ சமாக்குகிறார்.—ஏனெனில் உம்மோடே ஒரு
இராணுவத்தண்டிற்குள் பாய்வேன்; என் பராபர
௩௧ னோடே ஒரு மதிலைத் தாண்டுவேன். — பராபர
னுடைய வழி உத்தமமானது; கர்த்தருடைய வச
னம் புடமிடப்பட்டதாயிருக்கின்றது; தம்மை
அண்டிக்கொள்ளுகிற அனைவருக்கும் அவர் கே
௩௨ டையமாயிருக்கிறார். — ஏனென்றால் கர்த்தரை
அல்லாமல் தேவன் யார்? நம்முடைய பராபர
௩௩ னைத்தவிர கன்மலையும் யார்?-பராபரன் எனக்குப்
பலத்த அரணானவர்; அவர் என் வழியைத் தடை
௩௪ யல்லாத நல்வழியாக்குகிறார். — என் கால்களை
மான் கால்களுக்கு ஒப்பாக்கி, என் உயர்தலங்க
௩௫ ளில் என்னை நிறுத்துகிறார்.—வெண்கல வில்லும்
என் புயங்களால் வளைய என் கைகளை யுத்தத்திற்
௩௬ குப் பழக்குவிக்கிறார்.—உம்முடைய இரட்சிப்
பின் கேடையத்தையும் எனக்குத் தந்தீர்; நீர் என்
னைச் சிறுமைப்படுத்துகிறதினால் என்னைப் பெரி
௩௭ யவனாக்குகிறீர்.— என் கணுக்கால்கள் தள்ளாடா
தபடிக்கு நான் நடக்கிற வழியை அகலமாக்கி
௩௮ னீர்.-என் சத்துருக்களைப் பின்தொடர்ந்து, அவர்
களை அழிப்பேன்; அவர்களை நிர்மூலமாக்கும்
௩௯ மட்டும் திரும்பேன். — அவர்கள் எழுந்திருக்க
மாட்டாமல், என் பாதங்களின்கீழ் விழும்படி
யாய், அவர்களை நிர்மூலமாக்கி வெட்டுவேன்.—
௪௰ ஏனெனில் யுத்தத்திற்கு நீர் என்னைப் பலத்தால்
இடைகட்டி, என்மேல் எழும்பினவர்களை என்
௪௧ கீழ் மடங்கப்பண்ணி,-நான் என் பகைஞரைப்
பாழ்க்கடிக்கும்படியாக என் சத்துருக்களின் பி
௪௨ டரியை எனக்கு ஒப்புக்கொடுத்தீர்.—பார்த்துக்
கொள்ளுகிறார்கள், ஆனால் இரட்சிக்கிறவரில்லை;
கர்த்தரைப் பார்த்துக்கொள்ளுகிறார்கள், ஆனால்
அவர்களுக்கு மறு உத்தரவு கொடாதிருக்கிறார்.-
௪௩ அவர்களைப் பூமியின் தூளாக நருக்கி, தெருக்க
ளின் சேற்றைப்போல அவர்களை மிதித்து, சித
௪௪ றப்பண்ணுவேன். — நீர் என் சனத்தின் சண்
டைகளுக்கு என்னை விலக்கிவிட்டு, என்னைச்
சாதிகளுக்குத் தலைவனாக்குகிறீர்; நான் அறியாத
௪௫ சனம் என்னைச் சேவிக்கின்றது. — அந்நியர்
இச்சகம்பேசி எனக்கு அடங்கி, என் சத்தத்தைக்
கேட்டவுடனே எனக்குக் கீழ்ப்படிகிறார்கள்.-
௪௬ அந்நியர் முனைவிழுந்துபோய்த் தங்கள் அடைப்
புகளிலிருந்து தத்தளிப்பாய்ப் புறப்படுகிறார்
கள்.
௪௭ கர்த்தர் சீவனுள்ளவரும் என் கன்மலையும்
௪௮ ஸ்தோத்திரிக்கப்பட்டவருமாயிருக்கிறார்.—என்
இரட்சிப்பின் கன்மலையாகிய பராபரனும் நீதி
யைச் சரிக்கட்டும் செயங்களை எனக்களித்து,
சனங்களை எனக்குக் கீழ்ப்படுத்தி, என் சத்துருக்
களுக்கு என்னை விலக்கிவிடுவிக்கிற பராபரனு
௪௯ மானவர் உயர்ந்தவர்.—என்னை எனக்கு விரோ
தமாயெழும்புகிறவர்கள்மேல் உயர்த்துகிறீர்; வல்
லடிபண்ணுகிற மனுஷனுக்கு என்னைத் தப்பு
௫௰ விக்கிறீர். — கர்த்தாவே இதின்நிமித்தம் சாதிக
ளுக்குள் உம்மைத் துதித்து, உம்முடைய நாமத்
திற்குச் சங்கீதம்பாடுவேன்.—தாம் வைத்த இரா ௫௧
சாவின் இரட்சிப்புகளை அவர் பெரியவைக
ளாக்கி, தாம் அபிஷேகப்படுத்தின தாவீதுக்கும்
அவன் வித்திற்கும் என்றென்றைக்கும் கிருபை
செய்கிறார்.

## ௨௩. அதிகாரம்.

*௧. தாவீது தன் முடிவான வார்த்தையினால் பராபரனுடைய வாக்குத்தத்தத்தில் வைத்த விசுவாசம் புத்திக்கும் உணர்வுக்கும் எட்டாததாக இருக்கின்றதென்று அறிக்கையிட்டது. ௬. பொல்லாதவர்களின் ஆகாத நிலைமை. ௮. தாவீதின் பராக்கிரமசாலிகளின் பெயர்கள்.*

**தா**வீதுடைய கடைசி வார்த்தைகளாவன: மேன் ௧
மையாய் உயர்த்தப்பட்டு, யாக்கோபுடைய பரா
பரனால் அபிஷேகம் பெற்று, இஸ்ரவேலின் சங்
கீதங்களை இன்பமாய்ப் பாடின ஈசாயின் குமா
ரனாகிய தாவீதென்ற புருஷன் உரைத்துச் சொல்
லுகிறதேதெனில்,—கர்த்தருடைய ஆவியானவர் ௨
என்னைக்கொண்டு பேசினார்; அவருடைய வச
னம் என்னுடைய நாவின்மேல் இருந்தது.-இஸ் ௩
ரவேலின் பராபரனும் இஸ்ரவேலின் கன்மலையு
மானவர் எனக்குச் சொல்லி உரைத்ததேதெ
னில், நீதிபரராய் மனுஷரை ஆண்டு, தெய்வபய
மாய்த் துரைத்தனம்பண்ணுகிறவர் உண்டாயி
ருப்பார். — அவர் காலமே மந்தாரமில்லாமல் ௪
உதிக்கிறதும் மழைக்குப்பிற்பாடு தன் காந்தியி
னாலே புல்லைப் பூமியிலிருந்து முளைக்கப்பண்
ணுகிறதுமான சூரியனுடைய விடியற்காலத்தின்
வெளிச்சத்தைப்போல இருப்பாரென்றார். —
ஏனெனில் பராபரனிடத்தில் என்னுடைய வீடு ௫
நிலைவரமாயிராதோ? ஏனென்றால் எல்லாவற்றிற்
கும் திட்டப்பட்டதும் கைக்கொள்ளப்படுவது
மான நித்திய உடம்படிக்கையை எனக்கு ஸ்தா
பித்தார்; ஆனதுகொண்டு என்னுடைய எல்லா
இரட்சிப்பும் எல்லா விருப்பமும் முளைத்தெழும்
பாதோ?- பேலியாளின் மனுஷர் அனைவருமோ ௬
வென்றால் கையினாலே பிடிக்கப்படக்கூடாத
படியினாலே எறியப்பட்டுப்போகிற முள்ளுக்
குச் சமானமானவர்கள்.—அவைகளை ஒருவன் ௭
தொடப்போனால், இருப்பாயுதத்தையும் ஈட்டிக்
கழியையும் கெட்டியாய்ப் பிடிக்கவேண்டும்;
அவைகள் இருக்கிற இடத்திலேதானே அக்கினி
யினால் சுட்டெரிக்கப்படவே சுட்டெரிக்கப்ப
டுமென்றான்.

தாவீதுக்கு இருந்த பராக்கிரமசாலிகளின் நா ௮
மங்களாவன: தக்கெமோனியின் குமாரனாகிய
யோசேப்பாசெபெத்தென்ற சேர்வைக்காரரின்
தலைவன்; இவன் எண்ணூறுபேர்களின்மேல்
விழுந்து, அவர்களை ஒருமிக்க வெட்டிப்போட்
ட அதீனோ ஏஸ்னி ஊரானானவன்.-இவனுக்கு ௯
இரண்டாவது, அகோயி குமாரனாகிய தோதோ
வின் மகன் எலேயாசாரென்றவன்; இவன் பெ
லிஸ்தியர் யுத்தத்திற்குக் கூடின ஸ்தலத்திலே
இஸ்ரவேல் மனுஷர் ஏறிப்போகையில், தாவீ
தோடே இருந்து, பெலிஸ்தியரை நிந்தித்த மூன்று
பராக்கிரமக்காரரில் ஒருவனாயிருந்தான்.-இவன் ௰

எழும்பித் தன் கை சலித்து, தன் கை பட்டையத்
தோடு ஒட்டிக்கொள்ளும்மட்டும் பெலிஸ்தியரை
வெட்டினான்; அன்றைத்தினம் கர்த்தர் பெரிய
இரட்சிப்பை நடப்பித்தார்; சனம் கொள்ளையாட
மாத்திரம் அவனைப் பின்சென்றது.
௰௧ இவனுக்கு மூன்றாவது, ஆகேயின் குமாரனா
கிய சம்மாவென்ற ஆராரியன் சிறுபயறு நிறைந்த
வயலிருந்த இடத்திலே பெலிஸ்தியர் ஏராள
மாய்க்கூடி, சனம் பெலிஸ்தியரைக் கண்டு ஓடு
௰௨ கிறபோது,—இவன் அந்த நிலத்தின் நடுவிலே
நின்று அதைக் காப்பாற்றி, பெலிஸ்தியரை மடங்
கடித்துப்போட்டான்; அதினால் கர்த்தர் பெரிய
இரட்சிப்பை நடப்பித்தார்.
௰௩ முப்பது தலைவருக்குள்ளே இந்த மூன்றுபே
ரும் இறங்கிப்போய், அறுப்புநாளிலே அதுல்
லாம் கெபியிலே தாவீதண்டைக்கு வந்திருந்தார்
கள்; பெலிஸ்தியரின் தண்டு இரப்பாயீம் பள்ளத்
தாக்கிலே பாளயமிறங்கினபோதோவெனில்,—
௰௪ தாவீது அரணான ஒரு இடத்திலிருந்தான்; ஆனால்
பெத்லேகேமிலே அப்போது பெலிஸ்தியரின்
௰௫ தாணயமிருந்தது.—தாவீது ஆசைப்பட்டு, பெத்
லேகேமின் ஒலிமுகவாசலிலிருக்கிற கிணற்
றின் தண்ணீரிலே கொஞ்சம் என் தாகத்திற்குக்
௰௬ கொண்டுவருபவன் யாரென்றான்.—அப்போது
இந்த மூன்று பராக்கிரமக்காரர் பெலிஸ்தியரின்
பாளயத்திலே வலுமையாய்ப் புகுந்துபோய்,
பெத்லேகேமின்ஒலிமுகவாசலிலிருக்கிற கிணற்
றிலே தண்ணீர் மொண்டு, தாவீதண்டைக்குச்
சுமந்துகொண்டு வந்தார்கள்; ஆனால் அவன்
அதைக் குடிக்க மனமில்லாமல் அதைக் கர்த்த
௰௭ ருக்கென்று ஊற்றிப்போட்டு,-கர்த்தாவே, தங்க
ளுக்குப் பிராணமோக்கியத்தோடு போய்வந்த
அந்த மனுஷரின் இரத்தத்தைக் குடிக்கும் இந்
தச்செயல் எனக்குத் தூரமாயிருப்பதாக என்று
சொல்லி, அதைக் குடிக்க மனதில்லாதிருந்
தான்; இப்படி இந்த மூன்று பராக்கிரமக்காரர்
செய்தார்கள்.
௰௮ யோவாபின் சகோதரனும் சேருயாவின் குமா
ரனுமான அபிசாய் என்கிறவன்; அந்த மூன்று
பேரில் பிரதானமானவன்; அவன் தன் ஈட்டி
யை ஓங்கி முந்நூறுபேரை மடங்கடித்ததினால்,
இந்த மூன்றுபேரிலும் பேர்பெற்றவனானான்.—
௰௯ இந்த மூன்றுபேர்களில் அவன் சமர்த்தனாயிருந்
ததினாலல்லவோ அவர்களில் தலைவனானான்; ஆ
னால் அந்த முந்தின மூன்றுபேருக்கு அவன் சரி
யானவனல்ல.
௨௰ நல்ல சேவகனான யோய்தாவின் குமாரனும்
கப்செயெல் ஊரானுமாகிய பெனாயாவும் செய்
கைகளால் பெரியவனாயிருந்தான்; அவன் மோ
வாப் தேசத்தினுடைய இரண்டு வலுமையான
சிங்கங்களைக்கொன்றதுமல்லாமல், அவன் இறங்
கிப்போய் உறைந்த மழையின் நாளில் ஒரு சிங்
கத்தை ஒரு கெபிக்குள்ளே கொன்றுபோட்
௨௧ டான்.-அவன் பயங்கரரூபமான ஒரு எகிப்திய
மனுஷனையும் கொன்றுபோட்டான்; அந்த எகிப்
தியன் கையில் ஒரு ஈட்டியிருக்கையில், இவன்
ஒரு தடியைப் பிடித்து, அவனண்டைக்கு இறங்
கிப்போய், அந்த ஈட்டியை எகிப்தியன் கையி
லே பறித்து, அவனை அவன் ஈட்டியினாலே கொ
ன்றான்.-இவைகளை யோய்தாவின் குமாரனாகிய ௨௨
பெனாயா செய்தபடியினாலே, மூன்று பராக்கிர
மக்காரருக்குள்ளே பேர்பெற்றவனாயிருந்தான்.-
மற்ற முப்பதுபேரைப்பார்க்கிலும் அவன் பிரப ௨௩
லமானவன்; ஆனால் அந்த முந்தின மூன்றுபே
ருக்கும் அவன் சரியானவனல்ல; அவனைத் தா
வீது தன் அரமனைச் சேர்வைக்காரனாக வைத்
துக்கொண்டான்.
யோவாபின் தம்பியாகிய ஆசகேல் மற்ற முப் ௨௪
பதுபேருக்கு அடுத்தவன்; அவர்கள் யாரெனில்,
தோதோவின் குமாரனாகிய பெத்லேகேம் ஊரா
னான எல்க்கானான்,—ஆரோதியனான சம்மா, ஆ ௨௫
ரோதியனான எலிக்கா,-பலத்தியனான ஏலெஸ், ௨௬
இக்கேசின் குமாரனாகிய ஈராவென்ற தேக்கோ
பியன்,-ஆனதோத்தியனான அபியேசர், ஊசாத் ௨௭
தியனான மெபுன்னாயி, — அகோகியனான சல் ௨௮
மோன், நெத்தோபாத்தியனான மகராயி,— பானா ௨௯
வின் குமாரனாகிய ஏலேப்பென்ற நெத்தோபாத்
தியன், பென்யமீன் புத்திரரின் கிபேயா ஊரா
னாகிய ரிபாயின் குமாரன் இத்தாயி,—பிரத்தோ ௩௰
னியனான பெனாயா, காகாஸ் மலை ஆறுகளின்
சீமையான ஈத்தாயி,-அறுபாத்தியனான அபிஅல் ௩௧
பொன், பறும்மியனான அஸ்மாபேத்,-சால்போ ௩௨
னியனான எல்யாபா, யாசேனின் குமாரரில் யோ
னத்தானென்றவன்,-ஆராரியனான சம்மா, சாரா ௩௩
ரின் குமாரனாகிய அகியாமென்ற ஆராரியன்,-
மகாத்தியனின் குமாரனாகிய அகஸ்பாயிம் மகன் ௩௪
எலிப்பேலெத், கீலோனியனாகிய அகித்தோப்
பேலின் குமாரனாகிய எலியாமென்றவன்,-கற் ௩௫
மேலியனான எஸ்ராயி, அரபியனான பாராயி,—
சோபாஊரானாகிய நாத்தானின் குமாரன் ஈகால், ௩௬
காதியனான பானி,-அம்மோனியனான சேலேக், ௩௭
சேருயாவின் குமாரனாகிய யோவாபின் ஆயுதங்
களைப் பிடிக்கிற பேரோத்தியனான நக்ராய்,-ஈத் ௩௮
தேரியனான ஈரா, ஈத்தேரியனான காரேப்,—ஏத்தி ௩௯
யனான உரீயாவும்தானே; இவர்களெல்லாரும்
முப்பத்தேழுபேர்.

## ௨௪. அதிகாரம்.

௧. தாவீது சாத்தானாலே ஏவப்பட்டு, சனங்களை இலக்கப்படுத்த யோவாபைப் பலவந்தம் செய்தது. ௯. படைத்தலைவர்கள் ஒன்பதுமாதம் இருபது நாள்களில் பதின்மூன்றுலட்சம் சேவகரின் கணக்குக்கொண்டுவந்தது. ௰. தாவீது மனஸ்தாபப்பட்டு காத் சொன்ன மூன்று வாதைகளில் மூன்று நாள் பெருவாரிக்காய்ச்சலைத் தெரிந்துகொண்டது. ௰௫. எழுபதினாயிரம் சனம் செத்துபோனபின்பு, தாவீது மனஸ்தாபப்பட்டு எருசலேமை அழிப்பதைத் தடுத்தது. ௰௮. தாவீது காத் சொன்னபடி அர்வினாவின் போரடிக்கிற களத்தை வாங்கி பலிசெலுத்தினதினால் பெருவாரிக்காய்ச்சல் நின்றது.

கர்த்தருடைய கோபம் திரும்ப இஸ்ரவேலின் ௧
மேல் மூண்டு, நீ போய், இஸ்ரவேல் யூதாவென்ற
வர்களின் இலக்கத்தைப் பாரென்று அவர்களுக்
குச் சேதமாகச் சொல்லுகிறதற்கு தாவீதை ஏவி
விட்டது.—அப்படியே இராசா தன்னோடிருக் ௨

கிற சேனாபதியான யோவாபுடனே, சனத்தின்
இலக்கத்தை நான் அறியும்படிக்கு நீ தாண்
துவக்கிப் பேர்சேபாமட்டுமுள்ள இஸ்ரவேல்
கோத்திரங்களெல்லாம் சுற்றித்திரிந்து, சனத்தை
௩ இலக்கம்பாருங்களென்றான்.—அப்போது யோ
வாப் இராசாவுடனே, இராசாவாகிய என் ஆண்
டவனுடைய கண்கள் பார்க்கும்படி உம்மு
டைய பராபரனாகிய கர்த்தர் சனம் இப்போது
இருக்கிறதைப்பார்க்க, அதை நூறத்தனையாய்
வர்த்திக்கப்பண்ணுவாராக; ஆனால் இராசாவா
கிய என் ஆண்டவன் இந்தக் காரியத்தின்மேலே
விருப்பம் வைப்பதென்ன என்றான்.
௪ ஆனால் யோவாபும் இராணுவத்தலைவரும்
சொன்னவார்த்தை செல்லாதபடிக்கு, இராசா
வின் வார்த்தை பலத்தது; அப்படியே இஸ்ரவே
லாகிய சனத்தை இலக்கம்பார்க்க, யோவாபும்
இராணுவத்தலைவரும் இராசாவைவிட்டுப் புறப்
௫ பட்டுப்போய், — யோர்தானைக் கடந்து, காத்
துடைய ஆறுகளின் நடுவே இருக்கிற பட்ட
ணத்திற்கு வலதுபுறமான ஆரோவேரிலும் யா
௬ சேரண்டையிலும் பாளயமிறங்கி, — அங்கேயி
ருந்து கிலேயாத்திற்கும் ஒத்சி என்ற பள்ளச்
சீமைக்கும் வந்து, அங்கேயிருந்து தாண்யானுக்
கும் சீதோனின் சுற்றுப்புறங்களுக்கும் வந்து,—
௭ பிற்பாடு தீருவென்ற கோட்டைக்கும் எவியர்
கானானியருடைய சகல பட்டணங்களுக்கும்
வந்து, அங்கேயிருந்து யூதாவின் தென்புறமான
௮ பேர்சேபாவுக்குப் புறப்பட்டு, — இப்படியே
தேசத்திலெல்லாம் சுற்றித்திரிந்து, ஒன்பதுமாத
மும் இருபதுநாளும் ஆனபிற்பாடு எருசலே
௯ முக்கு வந்தார்கள்.—யோவாப் சனத்தை இலக்
கம்பார்த்த தொகையை இராசாவுக்குக் கொடுத்
தான்; இஸ்ரவேலிலே பட்டையம் உருவத்தக்க
சேவகமனுஷர் எண்ணூறாயிரம்பேர் இருந்தார்
கள்; யூதா மனுஷர் ஐந்நூறாயிரம்பேருமாயிருந்
தார்கள்.
௰ ஆனால் சனத்தை இப்படி எண்ணினபிற்பாடு,
இராசாவின் இருதயம் அவனைக் குத்திற்று; அப்
போது தாவீது கர்த்தரைநோக்கி, நான் இப்படிச்
செய்ததினாலே மகா பெரிய பாவம்செய்தேன்;
இப்போதும் ஆண்டவரே, உம்முடைய அடியா
னின் அக்கிரமத்தை நீக்கிவிடும்; ஏனென்றால்
௰௧ வெகு பயித்தியமாகச் செய்தேனென்றான்.—தா
வீது காலமே எழுந்திருந்தபோது, தாவீதின் ஞா
னதிருஷ்டிப் புருஷனாகிய காத்தென்ற தீர்க்கதரி
சிக்குக் கர்த்தருடைய வார்த்தையுண்டாகிச்சொ
௰௨ ன்னதாவது:—நீ போய், தாவீதுடனே மூன்று
காரியங்களை நாம் உனக்குமுன்பாக வைக்கி
றோம்; அவைகளில் நாம் உனக்குச் செய்யப்போ
கிற ஒரு காரியத்தைத் தெரிந்துகொள்ளென்று
கர்த்தர் உரைக்கிறாரென்று சொல்லென்றார்.—
௰௩ அப்படியே காத் தாவீதண்டைக்கு வந்து, அவ
னுக்கு அறிவித்துச் சொன்னதாவது: உம்மு
டைய தேசத்திலே ஏழுவருஷம் பஞ்சம் உமக்கு
வரவேண்டுமோ? அல்லவென்று மூன்றுமாதம்
உம்முடைய சத்துருக்கள் உம்மைத் தொடர,
நீர் அவர்களுக்குமுன்பாக ஓடிப்போகவேண்டு
மோ? அல்லவென்று உம்முடைய தேசத்திலே
மூன்றுநாள் பெருவாரிக்காய்ச்சலும் உண்டாயி
ருக்கவேண்டுமோ? இப்போதும் என்னை அனுப்
பினவருக்கு நான் என்ன மறுசெய்தி கொண்டு
போகவேண்டும் என்கிறதை நீர் யோசித்துப்பா
ருமென்றான்.—அப்போது தாவீது காத்துடனே, ௰௪
வெகு இடுக்கண் அடைந்திருக்கிறேன்; இப்
போது நாம் கர்த்தருடைய கையிலே விழுவோ
மாக; ஏனெனில் அவருடைய இரக்கம் பெரிய
தாயிருக்கின்றது; மனுஷர்கையிலே விழாதிருப்
பேனாக என்றான்.
அப்போது கர்த்தர் இஸ்ரவேலிலே அன்று ௰௫
காலமேதுவக்கி மறுநாளின் அந்த வேளைமட்டும்
இருக்கும் பெருவாரிக்காய்ச்சலை வரப்பண்ணி
னார்; அதினால் தாண்முதல்கொண்டு பேர்சேபா
மட்டுமுள்ள சனத்தில் எழுபதினாயிரம்பேர்
சென்றுபோனார்கள்.—தெய்வதூதன் எருசலே ௰௬
மை அழிக்கத் தன் கையை அதின்மேலே நீட்டி
னபோதோவெனில், கர்த்தர் அந்தத் தீங்குக்கு
மனஸ்தாபப்பட்டுச் சனத்தை அழிக்கிற தூதனு
டனே போதும், இப்போது உன் கையை நிறுத்
தென்றார்; அப்போது கர்த்தருடைய தூதன்
எபூசியனாகிய அற்வினாவின் போரடிக்கிற களத்
திற்கு நேரே இருந்தான்.—சனத்தை உபாதிக் ௰௭
கிற தூதனைத் தாவீது காண்கிறபோது, அவன்
கர்த்தரைநோக்கி விண்ணப்பம்பண்ணி, இதோ
நான்தான் பாவம்செய்தேன்; நான்தான் அக்
கிரமம் பண்ணினேன்; இந்த ஆடுகள் செய்த
தென்ன? உம்முடைய கை எனக்கும் என் தகப்
பன் வீட்டுக்கும் விரோதமாயிருக்கட்டுமே என்
றான்.
அன்றைத்தினம் காத் தாவீதண்டைக்கு வந்து, ௰௮
அவனுடனே, நீர் ஏறிப்போய், எபூசியனாகிய
அற்வினாவின் களத்திலே கர்த்தருக்கு ஒரு பலி
பீடத்தை ஸ்தாபியுமென்றான்.—காத்துடைய ௰௯
வார்த்தையின்படியே தாவீது கர்த்தர் கற்பித்தபிர
காரமாக ஏறிப்போனான்.—அற்வினா கண்ணெ ௨௰
டுத்து இராசாவும் அவனுடைய ஊழியக்காரரும்
தன்னண்டைக்கு வருகிறதைக் கண்டபோது,
அற்வினா புறப்பட்டுத் தரைமட்டும்குனிந்து இ
ராசாவை வணங்கி,—இராசாவாகிய என் ஆண்ட ௨௧
வன் தம்முடைய அடியானண்டைக்கு வருகிற
காரியம் என்னவென்றதற்கு தாவீதென்றவன்,
வாதை சனத்தைவிட்டு நிறுத்தப்படக் கர்த்தருக்
கு ஒரு பலிபீடத்தைக் கட்டும்படிக்கு இந்தக்க
ளத்தை உன் கையிலே கொள்ளவந்தேனென்
றான்.—அற்வினா தாவீதுடனே, இராசாவாகிய ௨௨
என் ஆண்டவன் அதை வாங்கிக்கொண்டு, தம்
முடைய பார்வைக்கு நலமானபடி பலியிடுவா
ராக; இதோ பலிக்கு மாடுகளும் விறகுகளுக்குப்
போரடிக்கிற உருளைகளும் மாடுகளின் நுகத்தடி
களும் இங்கே இருக்கின்றனவென்று சொல்லி,—
அவை எல்லாவற்றையும் இராசாவாயிருந்த அற் ௨௩

வினு இராசாவுக்குக் கொடுத்து, அற்வினு இரா
சாவுடனே, உம்முடைய பராபரனுகிய கர்த்தர்
உச உம்மிடத்திலே பிரியமாவதாகவென்ருன்.—ஆ
னல் இராசா அற்வினுவுடனே, அப்படி அல்ல;
நான் இலவசமாய் வாங்கி, என் பராபரனுகிய
கர்த்தருக்குச் சர்வாங்க தகனங்களைப் பலியிடா
மல், அதை உன் கையிலே விலைக்கிரயமாய்
வாங்கவே வாங்குவேனென்று சொல்லி, தாவீது
அந்தக் களத்தையும் மாடுகளையும் ஐம்பதுசேக்
கல் நிறை வெள்ளிக்குக் கொண்டான். — அங் உ௫
கேதானே தாவீது கர்த்தருக்கு ஒரு பலிபீடத்
தைக்கட்டுவித்து, சர்வாங்கதகனங்களையும் சமா
தான பலிகளையும் செலுத்தினுன்; அப்போது
கர்த்தர் தேசத்திற்கு ஒப்புரவாக்கப்பட்டார்;
இஸ்ரவேலின்மேலிருந்த அந்த வாதை நிறுத்தப்
பட்டது.

I. KINGS.

# இராசாக்களின்

## முதலாம் புஸ்தகம்.

### ௧. அதிகாரம்.

*௧. தாவீதுக்கு வயதுசென்றபோது, அபிஷாகு உதவிசெய்தது. ௫. தாவீதுக்கு இஷ்டமுள்ள அதோனியா அரசாட்சியை அபகரித்துக்கொண்டது. ௰௧. நாத்தானுடைய ஆலோசனையினால், ௰௫. பத்சேபாள் இராசனுக்கு அதை அறிவித்தது. ௨௨. நாத்தானும் சொன்னது. ௨௮. தாவீது பத்சேபாளுக்கு மறுபடியும் ஆணையிட்டது. ௩௨. தாவீதின் உத்தரவின்படி சாலோமோன் சாதோக்கினாலும், நாத்தானாலும், அரசனென்று எண்ணெயால் அபிஷேகம்பண்ணப்பட்டது. ௪௧. யோனத்தான் இந்தச் சங்கதிகளை அறிவித்ததினால், அதோனியாவின் கூட்டத்தார் ஓடிப்போனது. ௫௰. அதோனியா ஓடி பலிபீடத்தின் கொம்பைப் பிடித்தபோது, அவன் நடக்கையைப் பார்க்கும்படி சாலோமோன் அவனை விடுவித்தது.*

௧ தாவீது இராசா வயதுசென்ற கிழவனானபோது,
வஸ்திரங்களினால் அவனை மூடினாலும், அவ
௨ னுக்கு அனல் கண்டதில்லை.—அப்போது அவ
னுடைய ஊழியக்காரர் அவனுடனே, இராசா
வுக்குமுன்பாக நின்று, அவருக்கு உதவியாயி
ருந்து, இராசாவாகிய எங்கள் ஆண்டவனுக்கு
அனல் உண்டாகும்படிக்கு, உம்முடைய மடி
யிலே படுத்துக்கொள்ளத்தக்க கன்னியாஸ்திரி
யாகிய ஒரு பெண்பிள்ளையை இராசாவாகிய எங்
கள் ஆண்டவனுக்குத் தேடட்டுமென்று சொல்
௩ லி,-இஸ்ரவேலின் எல்லையிலெல்லாம் அழகான
பெண்பிள்ளையைத் தேடி, சூனேம் ஊராளாகிய
அபிஷாகைக் கண்டுபிடித்து, அவளை இராசா
௪ வண்டைக்குக் கொண்டுவந்தார்கள்.— அந்தப்
பெண்பிள்ளை வெகு அழகாயிருந்தாள்; அவள்
இராசாவுக்கு உதவியாக அவனுக்கு வேலைசெய்
தாள்; ஆனால் இராசா அவளை அறிந்ததில்லை.
௫ ஆகீத்திற்குப் பிறந்த அதோனியாவோவெ
னில், தான் இராசா ஆவேனென்று தன்னைத்
தான் உயர்த்தி, தனக்கு இரதங்களையும் குதிரைக்
காரரையும் தனக்குமுன் ஓடும் ஐம்பது ஆள்க
௬ ளையும் சம்பாதித்தான்.—அவன் அப்படியிருக்
கும் நாள்களில் அவன் தகப்பன், நீ அப்படிச்
செய்வானேனென்று அவனை நோகப்பேசின
தில்லை; அவனும் மகா நல்ல ரூபமாயிருந்தவன்;
அப்சலோமுக்குப்பிறகு அவனுடைய தாய் அவ
௭ னைப் பெற்றாள்.-அவன் சேருயாவின் குமாரனா
கிய யோவாபோடும், ஆசாரியனாகிய அப்பி
யத்தாரோடும் யோசித்துக்கொண்டிருப்பான்;
இவர்கள் சகாயக்காரராக அவனைப் பின்பற்றி
௮ னார்கள்.— ஆனால் ஆசாரியனாகிய சாதோக்கும்,
யோய்தாவின் குமாரனாகிய பேனாயாவும், தீர்க்
கதரிசியாகிய நாத்தானும், சீமேயியும், ரேயியும்,
தாவீதோடிருக்கிற பராக்கிரமக்காரரும், அதோ
னியாவுக்கு உடந்தையாயிருந்ததில்லை.-அதோ ௯
னியாவோவென்றால், ரோகேல் கிணற்றிற்குச்
சமீபமான சோகெலெத்தென்ற கல்லின்கிட்ட
ஆடுமாடுகளையும் கொழுத்த செந்துக்களையும்
அடித்து, இராசாவின் குமாரராகிய தன் சகோ
தரரெல்லாரையும் இராசாவின் ஊழியக்கார
ரான யூதாவின் மனுஷர் அனைவரையும் அழைத்
தான்.-ஆனால் தீர்க்கதரிசியாகிய நாத்தானையும், ௰
பேனாயாவையும், பராக்கிரமக்காரரையும், தன்
சகோதரனாகிய சாலோமோனையும் அழைக்கா
திருந்தான்.
அப்போது நாத்தான் சாலோமோனின் தாயா ௰௧
கிய பற்சேபாளோடே சொன்னதாவது: ஆகீத்தி
ன் குமாரனாகிய அதோனியா நம்முடைய ஆண்
டவனாகிய தாவீது அறியாமல், இராசாவாகிற
செய்தியை நீ கேட்கவில்லையோ?-இப்போதும் ௰௨
நீ உன் பிராணனையும், உன் குமாரனாகிய சாலோ
மோனின் பிராணனையும் தப்புவிக்கும்படிக்கு நீ
வா, உனக்கு நான் ஆலோசனை சொல்லட்டும்.—
நீ போய், தாவீது இராசாவண்டையில் பிரவே ௰௩
சித்து, இராசாவாகிய என் ஆண்டவனே, எனக்
குப்பிறகு உன் குமாரனாகிய சாலோமோன் இ
ராசாவாயிருப்பான்; அவனே என் இராசாசனத்
தின்மேல் உளுக்காந்திருப்பானென்று நீர் உம்மு
டைய அடியாளுக்கு ஆணையிட்டதில்லையோ?
ஆனால் அதோனியா இராசாவாய்ப்போனதென்
னவென்று அவரோடே சொல்லிக்கேள்.—இ ௰௪
தோ நீ அங்கே இராசாவோடே இன்னம் பேசு
கையில், நானும் உன் பிறகாலே பிரவேசித்து,
உன் வார்த்தைகளை நிறைவேற்றுவேனென்றான்.
அப்படியே பற்சேபாள் சயனவீட்டிலே ௰௫
இராசாவண்டையில் பிரவேசித்தாள்; ஆனால்
இராசா மிகவும் வயதுசென்றவனாயிருந்தான்;
சூனேம் ஊராளாகிய அபிஷாக் இராசாவுக்கு
ஊழியம்செய்திருந்தாள்.-பற்சேபாள் குனிந்து, ௰௬
இராசாவை வணங்கிக்கொண்டாள்; அப்போது
இராசா, உனக்கு என்னவேண்டுமென்று கேட்
டதற்கு,-அவள் அவனுக்குச் சொன்னதாவது: ௰௭
என் ஆண்டவனே, உன் குமாரனாகிய சாலோ
மோன் எனக்குப்பிறகு இராசாவாகி, அவனே
என் ஆசனத்தின்மேல் உளுக்காந்திருப்பா
னென்று நீர் உம்முடைய பராபரனாகிய கர்த்த

ளைக்கொண்டு. உம்முடைய அடியாளுக்கு ஆ
௰௮ ணையிட்டீரே.—இப்போதும் இதோ அதோனி
யா இராசாவாகிறான்; இராசாவாயிருக்கிற என்
ஆண்டவனாகிய நீர் இப்போது அதை அறியாத
௰௯ வருமாயிருக்கிறீர். — அவன் மாடுகளையும் கொ
ழுத்த செந்துக்களையும் ஆடுகளையும் திரளாக அ
டித்து, இராசாவின் குமாரர் அனைவரையும் ஆசா
ரியனாகிய அப்பியத்தாரையும் யோவாப்பென்ற
படைத்தலைவனையும் அழைத்தான்; ஆனால் உம்
முடைய அடியானாகிய சாலோமோனை அழைக்
௨௰ காதேபோனான். — ஆனால் இராசாவாகிய என்
ஆண்டவனே, இராசாவாகிய என் ஆண்டவனுக்
குப்பிறகு அவருடைய ஆசனத்தின்மேல் உளுக்
கார்பவன் யாரென்று நீர் தங்களுக்கறிவிக்க,
இஸ்ரவேல் அனைத்தின் கண்களும் உம்மை நோ
௨௧ க்கிக்கொண்டிருக்கின்றன. — மற்றப்படி இரா
சாவாகிய என் ஆண்டவன் தம்முடைய பிதாக்
களோடே படுத்துக்கொண்டபிற்பாடு, நானும்
என் குமாரனாகிய சாலோமோனும் பாவிகளாயி
ருப்போமென்றாள்.
௨௨ இதோ அவள் இன்னம் இராசாவோடே பேசு
கையில், தீர்க்கதரிசியாகிய நாத்தான் வந்தான்.—
௨௩ இதோ தீர்க்கதரிசியாகிய நாத்தான் வந்திருக்கிறா
ரென்று இராசாவுக்கு அறிவிக்கப்பட்டபிற்பாடு
அவன் இராசாவுக்குமுன்பாகப் பிரவேசித்து,
முகம்குப்புற விழுந்து, இராசாவை வணங்கி
௨௪ னான்.-நாத்தான் சொன்னதாவது: இராசாவாகிய
என் ஆண்டவனே, அதோனியா எனக்குப்பிற
கு இராசாவாகி, அவனே என் ஆசனத்தின்மேல்
உளுக்காந்திருப்பானென்று நீர் சொன்னீரோ?-
௨௫ ஏனென்றால் அவன் இன்று இறங்கிப்போய்,
மாடுகளையும் கொழுத்த செந்துக்களையும் ஆடுக
ளையும் திரளாக அடித்து, இராசாவின் குமாரரனை
வரையும் இராணுவத்தலைவரையும் ஆசாரியனா
கிய அப்பியத்தாரையும் அழைத்தான்; இதோ
அவர்கள் அவனுக்குமுன்பாகப் புசித்துக் குடித்
து, இராசாவாகிய அதோனியா வாழ்க என்கிறார்
௨௬ கள்.—ஆனால் உம்முடைய அடியானாகிய என்
னையும், ஆசாரியனாகிய சாதோக்கையும், யோய்
தாவின் குமாரனாகிய பேனாயாவையும், உம்மு
டைய அடியானாகிய சாலோமோனையும் அவன்
௨௭ அழைத்ததில்லை.—இராசாவாகிய என் ஆண்ட
வனுக்குப் பிறகு தமது ஆசனத்தில் உளுக்கார்
பவன் யார் என்று நீர் உம்முடைய அடியாருக்கு
அறிவிக்காதிருக்கையில், இந்தக் காரியம் இரா
சாவாகிய என் ஆண்டவன் கட்டளையால் நடந்
ததோவென்றான்.
௨௮ அப்போது தாவீது இராசா பிரதியுத்தாரமாக,
பற்சேபாளை என்னண்டைக்கு வரவழையுங்க
ளென்றான், அவள் இராசாவுக்குமுன்பாகப் பிர
வேசித்து இராசாவுக்குமுன்னே நின்றாள். —
௨௯ அப்போது இராசா, உன் குமாரனாகிய சாலோ
மோன் எனக்குப்பிறகு அரசாண்டு, அவனே
என் ஸ்தலத்தில் என் ஆசனத்தின்மேல் உளுக்
காந்திருப்பானென்று நான் உனக்கு இஸ்ரவே
லின் பராபரனாகிய கர்த்தர்மேலே ஆணையிட்ட
படியே, இன்றைக்குச் செய்து தீர்ப்பேன் என்
பதை, — என் ஆத்துமாவை எல்லா இக்கட்டுச் ௩௰
கும் நீங்கலாக்கி மீட்ட கர்த்தருடைய சீவனைக்
கொண்டு சொல்லுகிறேனென்று ஆணையிட்
டான்.—அப்போது பற்சேபாள் தரைமட்டும் கு ௩௧
னிந்து இராசாவை வணங்கி, என் ஆண்டவனா
கிய தாவீது இராசா என்றைக்கும் வாழ்கவென்
றாள்.
பிற்பாடு தாவீது இராசா, ஆசாரியனாகிய சா ௩௨
தோக்கையும் தீர்க்கதரிசியாகிய நாத்தானையும்
யோய்தாவின் குமாரன் பேனாயாவையும் என்
னண்டைக்கு வரவழையுங்களென்றான்.—அவர் ௩௩
கள் இராசாவுக்குமுன்பாகப் பிரவேசித்தபோது,
அவர்களுக்கு இராசா சொன்னதாவது: நீங்கள்
உங்கள் ஆண்டவனுடைய சேவகரைக் கூட்
டிக்கொண்டு, என் குமாரனாகிய சாலோமோனை
என்னுடைய கோவேறுகழுதையின்மேல் ஏற்றி,
அவனைத் தாழக் கீகோனுக்குக் கொண்டுபோங்
கள்.—அங்கே ஆசாரியனாகிய சாதோக்கும் தீர்க் ௩௪
கதரிசியாகிய நாத்தானும் அவனை இஸ்ரவேலின்
மேல் இராசாவாக அபிஷேகம்பண்ணக்கடவர்
கள்; பிற்பாடு எக்காளம் ஊதி, இராசாவாகிய
சாலோமோன் வாழ்கவென்று சொல்லுங்கள்.—
அதின்பிறகு அவன் பிரவேசம்பண்ணிவந்து, ௩௫
என் ஆசனத்தின்மேல் உளுக்காந்து, அவனே
என் ஸ்தலத்திலே அரசாள அவன் பிறகாலே
ஏறிவாருங்கள்; அவன் இஸ்ரவேலின்மேலும்
யூதாவின்மேலும் தலைவனாயிருக்க அவனுக்குக்
கற்பித்தேனென்றான்.-அப்போது யோய்தாவின் ௩௬
குமாரன் பேனாயா இராசாவுக்குப் பிரதியுத்தார
மாகச் சொன்னதாவது: ஆமென், இப்படி இராசா
வாகிய என் ஆண்டவனுடைய பராபரனாகிய
கர்த்தரும் சொல்வாராக.—கர்த்தர் இராசாவாகிய ௩௭
என் ஆண்டவனோடே எப்படி இருந்தாரோ,
அப்படி அவர் சாலோமோனோடிருந்து, தாவீது
இராசாவாகிய என் ஆண்டவனுடைய ஆசனத்
தைப்பார்க்கிலும் அவருடைய ஆசனத்தைப்
பெரியதாக்குவாராக என்றான்.
அப்படியே ஆசாரியனாகிய சாதோக்கும், தீர்க் ௩௮
கதரிசியாகிய நாத்தானும், யோய்தாவின் குமா
ரன் பேனாயாவும், கிரேத்தியரும், பிலேத்திய
ரும் இறங்கிப்போய், சாலோமோனைத் தாவீது
இராசாவினுடைய கோவேறுகழுதையின்மேல்
ஏற்றி, அவனைக் கீகோன்மட்டும் நடத்தினார்
கள். — ஆசாரியனாகிய சாதோக்கோவெனில், ௩௯
எண்ணெயிருக்கிற கொம்பைக் கூடாரத்திலி
ருந்து எடுத்துக்கொண்டுபோய்ச் சாலோமோனை
அபிஷேகம்பண்ணினான்; அப்போது எக்கா
ளம் ஊதி, சனமெல்லாம் இராசாவாகிய சாலோ
மோன் வாழ்கவென்றார்கள்.-பிற்பாடு சனமெல் ௪௰
லாம் அவன் பிறகாலே ஏறிப்போனார்கள்; சனம்
நாகசுரங்களை ஊதி, பூமி அவர்கள் சத்தத்தினால்
அதிரத்தக்கதாக மகா பூரிப்பாய்ச் சந்தோஷித்
தார்கள்.

௪௧ அதோனியாவும், அவனோடிருந்த எல்லா
விருந்தாளிகளும் அசனம்பண்ணித் தீர்ந்தபிற்
பாடு அதைக் கேட்டார்கள்; யோவாப் எக்காள
சத்தத்தைக் கேட்கிறபோது, பட்டணத்தின் அம
௪௨ ளியான அந்த இரைச்சல் ஏதென்றான்.—அவன்
இன்னம் பேசுகையில், இதோ ஆசாரியனாகிய
அப்பியத்தாரின் குமாரன் யோனத்தான் வந்
தான்; அப்போது அதோனியா, உள்ளே வா, நீ
கெட்டிக்காரன், நீ நற்செய்தியைக் கொண்டு
௪௩ வருகிறவனென்றான். — ஆனால் யோனத்தான்
அதோனியாவுக்குப் பிரதியுத்தாரமாகச் சொன்
னதாவது: ஏது, தாவீது இராசாவாகிய நம்மு
டைய ஆண்டவன் சாலோமோனை இராசாவாக்
௪௪ கினாரே.-இராசா அவனோடே ஆசாரியனாகியசா
தோக்கையும், தீர்க்கதரிசியாகிய நாத்தானையும்,
யோய்தாவின் குமாரன் பெனாயாவையும், கிரேத்
தியரையும், பிலேத்தியரையும் அனுப்பினார்;
இவர்கள் அவனை இராசாவுடைய கோவேறுகழு
௪௫ தையின்மேல் ஏற்றினார்கள். — ஆசாரியனாகிய
சாதோக்கும், தீர்க்கதரிசியாகிய நாத்தானும்,
அவனைக் கீகோனிலே இராசாவாக அபிஷேகம்
பண்ணினார்கள்; பட்டணம் விழுங்கத்தக்கதான
பூரிப்போடே அங்கேயிருந்து ஏறிப்போனார்கள்;
௪௬ நீங்கள் கேட்ட இரைச்சல் அதுதான்.—சாலோ
மோன் இராச்சியபாரத்தின் ஆசனத்தின்மேல்
௪௭ உளுக்காந்தான்.—இராசாவின் ஊழியக்காரரும்
தாவீது இராசாவாகிய நம்முடைய ஆண்டவனை
ஆசீர்வதிக்க உள்பிரவேசித்து, உம்முடைய
பராபரன் சாலோமோனின் கீர்த்தியை உம்மு
டைய கீர்த்தியைப்பார்க்கிலும் பிரபலப்படுத்தி,
அவருடைய ஆசனத்தை உம்முடைய ஆசனத்
தைப்பார்க்கிலும் பெரியதாக்குவாராக என்றார்
கள்; இராசா தம்முடைய கட்டிலின்மேலிருந்து
௪௮ பணிந்துகொண்டார். — பின்னையும் இராசா
என்னுடைய கண்கள் பார்க்க, என் ஆசனத்
தின்மேல் உளுக்காருகிறவனை இன்று கட்ட
ளையிட்ட இஸ்ரவேலின் பராபரனாகிய கர்த்தர்
ஸ்தோத்திரிக்கப்பட்டவரென்று சொன்னாரென்
றான்.

௪௯ அப்போது அதோனியாவின் விருந்தாளிக
ளெல்லாரும் அதிர்ந்து எழுந்திருந்து, அவரவர்
௫௦ தங்கள் வழியே போனார்கள். — ஆனால் அதோ
னியா சாலோமோனுக்குப் பயப்படுகிறதினால்
எழுந்துபோய், பலிபீடத்தின் கொம்புகளைப்
௫௧ பிடித்தான்.-இதோ அதோனியா, இராசாவாகிய
சாலோமோனுக்குப் பயப்படுகிறானென்றும்,
இதோ அவன் பலிபீடத்தின் கொம்புகளைப் பிடி
த்துக்கொண்டு, இராசாவாகிய சாலோமோன்
தம்முடைய அடியானைப் பட்டையத்தாலே
கொன்றுபோடுவதில்லையென்று இன்று எனக்கு
ஆணையிடுவாராக என்கிறானென்றும், சாலோ
௫௨ மோனுக்கு அறிவிக்கப்பட்டது. — அப்போது
சாலோமோன், அவன் சற்குணமுள்ளவனாயி
ருந்தால், அவன் தலைமயிரில் ஒன்றும் தரையிலே
விழப்போகிறதில்லை; அவனில் பொல்லாப்புக்
கண்டுபிடிக்கப்பட்டதேயானால், அவன் சாக
வேண்டுமென்று சொல்லி,—அவனைப் பலிபீடத் ௫௩
திலிருந்து தாழக் கொண்டுவர, இராசாவாகிய
சாலோமோன் ஆள்களை அனுப்பினான்; அவன்
வந்து, இராசாவாகிய சாலோமோனை வணங்கிக்
கொண்டான்; அவனுக்குச் சாலோமோன், உன்
வீட்டிற்குப் போவென்றான்.

## உ. அதிகாரம்.

௧. தாவீது சாலோமோனுக்கு, ௩. தெய்வபக்தியையும், ௫. யோவாப்பையும், ௭. பர்சிலாவையும், ௮. சீமேயியையுங்குறித்துக் கட்டளைகொடுத்து, ௧௦. மரணம் அடைந்தது. ௧௨. சாலோமோன் அரசாட்சிசெய்தது. ௧௩. அதோனியா அபிஷாகைத் தனக்காகச் சாலோமோனிடத்திற் கேட்கப் பத்சேபாளை ஏவினதால் கொல்லப்பட்டது. ௨௬. அப்பியத்தாரை இராசா கொல்லாமல், ஆசாரிய ஊழியத்திலிருந்து தள்ளினது. ௨௮. யோவாப் ஓடி, பலிபீடத்தின் கொம்புகளைப் பிடித்தும் கொலைசெய்யப்பட்டது. ௩௫. யோவாபுக்குப் பதிலாக பெனாயாவும், அப்பியத்தாருக்குப் பதிலாகச் சாதோக்கும் வைக்கப்பட்டது. ௩௬. சீமேயி எருசலேமிலே காவலில் வைக்கப்பட்டு, காத்தினிடத்திற்குப் போனதினால் கொல்லப்பட்டது.

தாவீது மரணம் அடையும் நாள்கள் கிட்டிவந் ௧
தபோது, அவன் தன் குமாரனாகிய சாலோமோ
னுக்குக் கற்பித்துச் சொன்னதாவது: — நான் ௨
சகல பூலோகத்தாருடைய வழியே போகிறேன்;
திடன்கொண்டு புருஷனாயிரு.—நீ என்ன செய் ௩
தாலும் நீ எங்கே திரும்பினாலும் எல்லாவற்றி
லும் புத்திமானாயிருக்கிறதற்கும், கர்த்தர் என்
னைக்குறித்து உன் குமாரர்கள் தங்கள் முழு இரு
தயத்தாலும் தங்கள் முழு ஆத்துமத்தாலும் நமக்
குமுன்பாக உண்மையாய் நடக்கும்படிக்குத்
தங்கள் வழியைக் காத்தால், இஸ்ரவேலின் இரா
சாசனத்தின்மேல் உளுக்காரத்தக்க புருஷன்
உனக்குக் குறைபடுவதில்லையென்று சொன்ன
தம்முடைய வார்த்தையைத் திடப்படுத்துகிறதற்
கும், — நீ மோசேயின் நியாயப்பிரமாணத்தில் ௪
எழுதியிருக்கிறபடி, உன் பராபரனாகிய கர்த்த
ருடைய கட்டளைகளையும், கற்பனைகளையும்,
நியாயங்களையும், சாட்சிகளையும் கைக்கொள்ள,
அவர் வழிகளில் நடக்கும்படிக்கு அவருடைய
காவலைக் காப்பாயாக.—சேருயாவின் குமாரனா ௫
கிய யோவாப், இஸ்ரவேலின் இரண்டு சேனாப
திகளாகிய நேரின் குமாரன் அப்னேருக்கும்,
ஏத்தேரின் குமாரன் அமாசாவுக்கும் பண்ணின
காரியத்தினால் எனக்குச் செய்த குற்றத்தை
நீயும் அறிந்திருக்கிறாய்; அவர்களைக் கொன்று,
சமாதான நாளிலே யுத்த இரத்தத்தைச் சிந்தி,
யுத்த இரத்தத்தைத் தன் அரையிலிருந்த கச்சை
யிலும் தன் கால்களில் இருந்த தன் பாதரட்சை
யிலும் இட்டானே.—ஆகையால் உன் ஞானத் ௬
தின்படியே நீ செய்து, அவனுடைய நரைமயிர்
சமாதானமாய்க் குழியிலிறங்கவொட்டாதிரு.—
கிலேயாத்தியனான பர்சிலாயியின் குமாரருக் ௭
குத் தயைசெய்வாயாக; அவர்கள் உன் பந்தியி
லே சாப்பிடுகிறவர்களுடன் இருப்பார்களாக;
ஏனெனில் உன் சகோதரனாகிய அப்சலோமுக்
குமுன்பாக நான் ஓடிப்போகையில், இப்படி
என்னைச் சேர்ந்து ஆதரித்தார்கள்.—பின்னையும் ௮
இதோ பகூரிம் ஊரானாகிய ஏமினியின் புத்திர

ரான கேராவின் மகன் சீமேயி, உன்னுடனே
இருக்கிறான்; நான் மக்னாயிமுக்கு நடக்கிறநா
ளிலே, அவன் என்னைக் கொடிய தூஷணமாய்த்
தூஷணித்தான்; ஆனால் அவன் யோர்தானிலே
எனக்கு எதிர்கொண்டு இறங்கிவந்தபடியினா
லே, நான் உன்னைப் பட்டையத்தாலே கொன்
றுபோடுவதில்லையென்று கர்த்தர்மேலே அவ
௯ னுக்கு ஆணையிட்டேன்.—இப்போதும் நீ அவ
னைக் குற்றமற்றிருக்க ஒட்டாதே; ஏனெனில்
நீ ஞானமுள்ள புருஷன்; அவனுடைய நரை
யை இரத்தமாய்க் குழியில் இறங்கப்பண்ண, நீ
அவனுக்குச் செய்யவேண்டினதை அறிந்திருப்
பாயென்றான்.
௰ பிற்பாடு தாவீது தன் பிதாக்களோடே படுத்
துக்கொண்டு, தாவீதின் பட்டணத்தில் அடக்கம்
௰௧ பண்ணப்பட்டான்.—தாவீது இஸ்ரவேலை அர
சாண்ட நாள்கள் நாற்பதுவருஷம்; அவன் எபி
ரோனில் ஏழுவருஷமும் எருசலேமிலே முப்
பத்துமூன்றுவருஷமும் அரசாண்டான்.
௰௨ சாலோமோன் தன் தகப்பனாகிய தாவீதுடைய
சிங்காசனத்தின்மேல் உளுக்காந்தான்; அவன்
௰௩ இராச்சியபாரம் வெகு உறுதியுமாயிற்று.—ஆகீத்
தின் குமாரனாகிய அதோனியாவோவெனில், சா
லோமோனின் தாயாகிய பற்சேபாளண்டைக்கு
வந்தான்; நீ சமாதானமாய் வருகிறாயோ என்று
அவள் கேட்டதற்கு, சமாதானமாய்த்தானே என்
௰௪ றான்.—பிறகு அவன், உம்மோடே நான் பேச
வேண்டிய வார்த்தை இருக்கின்றதென்றான்;
௰௫ அதற்கு அவள் சொல்லென்றாள்.—அப்போது
அவன் சொன்னதாவது: இராச்சியம் என்னு
டையதாயிருந்ததென்றும், நான் அரசாளுகிற
தற்கு இஸ்ரவேலெல்லாம் என்மேல் நோக்கமாய்
இருந்ததென்றும் நீர் அறிவீர்; ஆனால் இராச்சிய
பாரம் தாண்டிப்போய், என் சகோதரனுக்கு
வந்தது; ஏனெனில் கர்த்தரால் அவனுக்கு வந்
௰௬ தது.—இப்போதும் நான் உம்மை ஒரு மன்றாட்
டைக் கேட்கிறேன்; என் முகத்தை வெட்கப்ப
டுத்தீராக என்றான்; அவள் அவனோடே சொல்
௰௭ லென்றாள்.—அப்போது அவன், இராசாவாகிய
சாலோமோன் உம்முடைய முகத்தை வெட்கப்
படுத்துவதில்லையே; அவர் சூனேம் ஊராளாகிய
அபிஷாகை எனக்கு விவாகம்பண்ணிக்கொ
டுக்க, அவரோடே பேசிக்கொள்ளுமே என்
௰௮ றான்.—அதற்குப் பற்சேபாள், நல்லது, நான்
உனக்காக இராசாவோடே பேசுவேனென்றாள்.
௰௯ பற்சேபாள் அதோனியாவுக்காக இராசாவா
கிய சாலோமோனோடே பேச அவனண்டைக்
குப் பிரவேசித்தாள்; அப்போது இராசா எழுந்தி
ருந்து, அவளுக்கு எதிர்கொண்டுபோய் அவளை
வணங்கி, தன் ஆசனத்தின்மேல் உளுக்காந்து,
இராசாவின் தாயார் தன் வலதுபுறமாக உளுக்
கார, அவளுக்கு ஒரு ஆசனத்தை வைப்பித்
௨௰ தான்.—அப்போது அவள், நான் உம்மை ஒரு
சிறிய மன்றாட்டைக் கேட்கிறேன்; என் முகத்
தை வெட்கப்படுத்தீராக என்றாள்; இராசா அவ
ளுடனே, என் தாயாரே, கேளும்; நான் உம்மு
டைய முகத்தை வெட்கப்படுத்துவதில்லையென்
றான்.—அப்போது அவள், சூனேம் ஊராளாகிய ௨௧
அபிஷாகை உம்முடைய சகோதரனாகிய அதோ
னியாவுக்கு விவாகம்பண்ணிக் கொடுக்கப்பட
ட்டுமென்றாள்.—ஆனால் இராசாவாகிய சாலோ ௨௨
மோன் தன் தாயாருக்குப் பிரதியுத்தரமாக, நீர்
சூனேம் ஊராளாகிய அபிஷாகை அதோனியா
வுக்குக் கேட்பானேன்? அப்படியானால் இராச்சி
யபாரத்தையும் அவனுக்குக் கேளும்; ஏனெனில்
அவன் எனக்கு மூத்த சகோதரன்; அவனுக்கும்
ஆசாரியனாகிய அப்பியத்தாருக்கும் சேருயா
வின் குமாரன் யோவாபுக்குமே அதைக் கேளு
மென்றான்.—பிற்பாடு சாலோமோன் இராசா, அ ௨௩
தோனியா இந்த வார்த்தையைத் தன் பிராணனு
க்குச் சேதமாகச் சொல்லாதிருந்தால், பராபரன்
எனக்கு இப்படியும் அப்படியும் செய்யக்கடவு
ரென்று சாலோமோன் இராசா கர்த்தர்மேல்
ஆணையிட்டு,—இப்போதும் இன்றைக்கு அதோ ௨௪
னியா கொலையுண்பானென்று என்னைத் திடப்
படுத்தினவரும், என்னை என் தகப்பனாகிய தாவீ
தின் ஆசனத்தில் உளுக்காரப்பண்ணி, தாம்
சொன்னபடி எனக்கு வீட்டைக் கட்டுவித்த
வருமாகிய கர்த்தருடைய சீவனைக்கொண்டு
சொல்லுகிறேனென்று சொல்லி,—இராசாவா ௨௫
கிய சாலோமோன் யோய்தாவின் குமாரன் பே
னாயாவுக்குக் கட்டளைகொடுத்து அவனை அனுப்
பினான்; இவன் அவன்மேல் வந்து அவனைக்
கொன்றுபோட்டான்.
ஆசாரியனாகிய அப்பியத்தாருக்கும் இராசா ௨௬
சொன்னது: நீ ஆனதோத்திலிருக்கிற உன் நிலத்
திற்குப் போ; ஏனெனில் நீ மரணத்திற்குப் பாத்
திரவானாயிருந்தும், நீ என் தகப்பனாகிய தாவீ
துக்குமுன்பாகக் கர்த்தராகிய ஆண்டவருடைய
பெட்டியைச் சுமந்தபடியினாலும், என் தகப்பன்
அநுபவித்த உபத்திரவத்தையெல்லாம் நீ கூட
அநுபவித்தபடியினாலும், இன்றைத்தினம் நான்
உன்னைக் கொலைசெய்விப்பதில்லை என்றான்.—
அப்படியே கர்த்தர் சீலோவிலே ஏலியின் வீட் ௨௭
டாரைக்குறித்துச் சொன்ன வார்த்தையை நிறை
வேற்றும்படியாக, சாலோமோன் அப்பியத்தா
ரைக் கர்த்தருக்கு ஆசாரியனாயிராதபடிக்குத் தள்
ளிப்போட்டான்.
நடந்த இந்தச் செய்தி யோவாபுக்கு வந்த ௨௮
போதோவெனில், அவன் கர்த்தருடைய கூடா
ரத்திற்கு ஓடிப்போய், பலிபீடத்தின் கொம்புக
ளைப் பிடித்தான்; ஏனெனில் யோவாப் அப்ச
லோமின் பாரிசமாய்ச் சாயாதவனாயிருந்தாலும்,
அதோனியாவின் பாரிசமாய்ச் சாய்ந்தான்.—
யோவாப் கர்த்தரின் கூடாரத்திற்கு ஓடிப்போனா ௨௯
னென்றும், இதோ பலிபீடத்தண்டையில் நிற்கி
றானென்றும், இராசாவாகிய சாலோமோனுக்கு
அறிவிக்கப்பட்டபோது, சாலோமோன் யோய்
தாவின் குமாரனாகிய பேனாயாவை அனுப்பி, நீ
போய் அவன்மேல் விழுவென்றான்.—பேனாயா ௩௰

கர்த்தரின் கூடாரத்திற்கு வந்து, அவனுடனே
வெளியே புறப்படுவென்று இராசா சொல்லுகி
றாரென்றான்; அவனோவெனில் அல்ல இங்கே
சாவேனென்றான்; ஆகையால் பேனயா போய்,
இராசாவுக்கு மறுசெய்தி சொல்லி, இன்னபடி
யோவாப் சொல்லி, இன்னபடி எனக்கு மறு
௩௧ உத்தரவு கொடுத்தானென்றான். — அப்போது
இராசா அவனுக்குச் சொன்னதாவது: அவன்
சொன்னபடியே நீ செய்து, அவனைக் கொன்று,
அடக்கம்பண்ணி, இப்படியே யோவாப் முகாந்
தரமில்லாமல் சிந்திப்போட்ட இரத்தத்தை என்
னையும் என் பிதாவின் வீட்டையும் விட்டு விலக்
௩௨ கிப்போடு. — அவன் தன்னைப்பார்க்கிலும் நீதி
யும் நற்குணமுமுள்ள இரண்டுபேராகிய நேரின்
குமாரன் அப்னேரென்ற இஸ்ரவேலின் படைத்
தலைவன்மேலும், ஏதேரின் குமாரனாகிய அமாசா
என்ற யூதாவின் படைத்தலைவன்மேலும் விழுந்
து, என் தகப்பனாகியதாவீது அறியாமல் அவர்க
ளைப் பட்டையத்தால் கொன்ற அவன் இரத்தப்
பழியைக் கர்த்தர் அவனுடைய தலையின்மேலே
௩௩ திருப்புவாராக. — இப்படியே அவர்களுடைய
இரத்தப்பழி யோவாபுடைய தலையின்மேலும்,
என்றுமுள்ள அவன் வித்தாரின் தலையின்மேலும்
திருப்பவும், தாவீதுக்கும் அவர் வித்தாருக்கும்
அவர் வீட்டாருக்கும் அவர் ஆசனத்திற்கும் என்
றென்றைக்கும் கர்த்தராலே சமாதானம் உண்
௩௪ டாயிருக்கவும் கடவதென்றான்.—அப்படியே
யோய்தாவின் குமாரன் பேனயா ஏறிப்போய்,
அவன்மேல் விழுந்து அவனைக் கொன்றுபோட்
டான்; அவன் வனாந்தரத்திலிருக்கிற தன்
னுடைய வீட்டிலே அடக்கம்பண்ணப்பட்
௩௫ டான்.—அவனுக்குப்பதிலாக இராசா யோய்தா
வின் குமாரன் பேனயாவை இராணுவத்தின்
மேலும், ஆசாரியனாகிய சாதோக்கை அப்பியத்
தாரின் ஸ்தலத்திற்கும் வைத்தான்.
௩௬ பிற்பாடு இராசா சீமேயியை அழைத்தனுப்பி
அவனுக்குச் சொன்னது: நீ எருசலேமிலே
உனக்கு ஒரு வீட்டைக் கட்டி, அங்கேயிருந்து
இங்கும் அங்கும் வெளியே போகாமல், அங்கே
௩௭ தானே குடியிரு. — ஏனென்றால் நீ வெளியே
போய்க் கிதரோன் வாய்க்காலைக் கடக்கும் நா
ளிலே, சாவவே சாவாய்; அப்போது உன் இரத்
தப்பழி உன் தலையின்மேலிருக்கும் என்பதை
௩௮ நீ அறியவே அறியென்றான்.—சீமேயி இராசா
வுக்கு, அது நல்ல வார்த்தை; இராசாவாகிய என்
ஆண்டவன் சொன்னதின்படியே, உம்முடைய
அடியான் செய்வானென்று சொல்லி, சீமேயி
அநேகநாள் எருசலேமிலே குடியிருந்தான்.
௩௯ மூன்றுவருஷம் சென்றபோதோவெனில்,
சீமேயிக்கு இருந்த இரண்டு வேலைக்காரர் மாக்
காவின் குமாரனாகிய ஆகீசென்ற காத்தின் இரா
சாவண்டைக்கு ஓடிப்போனார்கள்; இதோ உன்
வேலைக்காரர் காத்தில் இருக்கிறார்களென்று
௪௰ சீமேயிக்கு அறிவித்தார்கள்.—அப்போது சீமே
யி எழுந்து, தன் கழுதையின்மேல் சேணம்
வைத்து, தன் வேலைக்காரரைத் தேட, காத்திலி
ருக்கிற ஆகீசண்டைக்குப் புறப்பட்டுப்போனா
ன்; இப்படிச் சீமேயி போய், தன் வேலைக்கார
ரைக் காத்தூரிலிருந்து கொண்டுவந்தான். — சீ ௪௧
மேயி எருசலேமிலிருந்து காத்துக்குப்போய்,
திரும்பிவந்தானென்று சாலோமோனுக்கு அறி
விக்கப்பட்டபோது,—இராசா சீமேயியை அ ௪௨
ழைத்தனுப்பி அவனோடே சொன்னதாவது:
நீ வெளியே புறப்பட்டு இங்கும் அங்கும் போ
கிற நாளிலே சாவவே சாவாயென்பதை நீ அறி
யவே அறியென்று நான் உன்னைக் கர்த்தர்மேலே
ஆணையிட்டுக்கொண்டு, உனக்குத் திடச்சாட்சி
யாகச் சொல்ல, நீ என்னுடனே நான் கேட்ட
வார்த்தை நல்லதென்று சொன்னதில்லையோ?—
நீ கர்த்தரின் ஆணையையும், நான் உனக்குக் கற் ௪௩
பித்த கற்பனையையும் கைக்கொள்ளாதே போன
தென்ன என்று சொல்லி,—பின்னையும் இராசா ௪௪
சீமேயியோடே சொன்னது: நீ என் தகப்பனா
கிய தாவீதுக்குச் செய்ததும் உன் மனதுக்குத் தெ
ரிந்திருக்கிறதுமான எல்லாப் பொல்லாப்பையும்
அறிந்திருக்கிறாய்; ஆகையால் கர்த்தர் உன்னு
டைய பொல்லாப்பை உன் தலையின்மேல் திருப்
பினார். — இராசாவாகிய சாலோமோனோவெ ௪௫
னில் ஆசீர்வதிக்கப்பட்டிருக்கிறான்; தாவீதின்
ஆசனம் என்றைக்கும் கர்த்தருக்குமுன்பாக உறு
தியுமாயிருக்குமென்று சொல்லி,-இராசா யோய் ௪௬
தாவின் குமாரனாகிய பேனயாவுக்குக் கட்டளை
கொடுத்தான்; அவன் வெளியே போய், அவன்
மேல் விழுந்து அவனைக் கொன்றுபோட்டான்;
இப்படியே இராச்சியபாரம் சாலோமோனின்
கையிலே திடப்பட்டது.

## ௩. அதிகாரம்.

௧. சாலோமோன் பார்வோனின் குமாரத்தியை விவாகம்பண்ணினது. ௨. மேடுகளில் தேவாராதனை செய்கிற வழக்கமாயிருப்பதினால், சாலோமோன் கிபேயோனிலே பலியிட்டது. ௩. கிபேயோனிலே சாலோமோன் ஞானத்தைக் கேட்டதினால், பராபரன் அவனுக்கு ஞானத்தையும் ஐசுவரியத்தையும் மகிமையையும் கொடுத்தது. ௰௬. சாலோமோன் இரண்டு வேசிகளின் வழக்கைத் தீர்த்ததினால் கீர்த்தி அடைந்தது.

சாலோமோன் எகிப்தின் இராசாவாகிய பார் ௧
வோனோடே சம்பந்தம் கலந்து, பார்வோனின்
குமாரத்தியை விவாகம்பண்ணி, தான் தன்னு
டைய வீட்டையும் கர்த்தரின் வீட்டையும் எரு
சலேமின் சுற்று மதிலையும் கட்டித்தீருமட்டும்
அவளைத் தாவீதின் பட்டணத்திலே கொண்டு
வந்து வைத்தான்.—ஆனால் அந்நாள்கள்மட்டும் ௨
கர்த்தருடைய நாமத்திற்கு ஒரு வீடு கட்டப்ப
டாதிருந்ததினாலே சனம் மேடுகளிலேதானே
பலியிடுவார்கள். — சாலோமோன் தன் தகப்ப ௩
னாகிய தாவீதின் கட்டளைகளில் நடக்கும்படி
யாக, கர்த்தரைச் சிநேகித்தான்; ஆனால் அவன்
மேடுகளிலே பலியிட்டு, தூபம்காட்டுவான்.
அப்படியே இராசா கிபேயோனிலே பலி ௪
யிட அங்கே போனான்; ஏனெனில் பெரிய
மேடு அதுதானே; அந்தப் பலிபீடத்தின்மேலே
சாலோமோன் ஆயிரம் சர்வாங்கதகனபலிகளைச்
செலுத்தினான். — கிபேயோனிலே கர்த்தர் சா ௫

லோமோனுக்கு இராத்திரியில் சொப்பனத்திலே
தரிசனையாகி, நாம் என்ன உனக்குக் கொடுக்க
வேண்டுமென்கிறதைக் கேளென்று பராபரன்
௬ சொன்னார்.—சாலோமோன் சொன்னதாவது:
என் தகப்பனாகிய தாவீதென்ற உம்முடைய
அடியான் உம்மைப்பற்றி உண்மையும் நீதியும்
மனச்செம்மையுமாய் உமக்குமுன்பாக நடந்த
படியே தேவரீர் அவனுக்குப் பெரிய கிருபை
யைச் செய்து, அந்தப் பெரிய கிருபையை அவ
னுக்குக் காத்து, இந்நாளில் இருக்கிறபடியே
அவன் ஆசனத்தின்மேல் உளுக்காந்திருக்கிற
௭ குமாரனை அவனுக்குக் கொடுத்தீர். — இப்போ
தும் என் பராபரனாகிய கர்த்தாவே, தேவரீர்
உம்முடைய அடியானை என் தகப்பனாகிய தாவீ
தின் ஸ்தலத்திலே இராசாவாக்கினீரே, நானோ
வென்றால் வெளிப்பிரவேசிக்கவும் உள்பிரவே
சிக்கவும் அறியாத சிறிய வாலிபனாயிருக்கி
௮ றேன். — நீர் தெரிந்துகொண்டதும் ஏராளத்தி
னால் எண்ணிக்கைக்கடங்காததும் இலக்கத்
திற்குள்படாததுமான திரள் சனமாகிய உம்மு
டைய சனத்தின் நடுவில் அடியேன் இருக்கி
௯ றேன்.—ஆகையால் உம்முடைய சனத்தை நியா
யம் விசாரிக்கவும், நன்மை தீமையை வகைய
றுக்கவும், அடியேனுக்கு உணர்வுள்ள இருதயத்
தைத் தாரும்; ஏனெனில் பெருத்திருக்கிற இந்த
உம்முடைய சனத்தை நியாயம் விசாரிக்கவும்
யாராலே ஆமென்றான்.
௰ சாலோமோன் இந்தக்காரியத்தைக் கேட்டது
ஆண்டவருடைய கண்களுக்குப் பொருந்திய
௰௧ விண்ணப்பமாயிருந்தது.—ஆகையினாலே பரா
பரன் அவனோடே சொன்னதாவது: நீ இந்தக்
காரியத்தைக் கேட்டு, நீ உனக்கு நீடித்த நாள்க
ளைக் கேளாமலும், ஐசுவரியத்தைக் கேளாமலும்,
உன் சத்துருக்களின் பிராணனைக் கேளாமலும்,
நியாயம் கேட்கிறதற்கான உணர்வை உனக்குக்
௰௨ கேட்டபடியினாலே,—இதோ உன் வார்த்தைக
ளின்படி செய்தோம்; இதோ ஞானமும் உணர்
வுமுள்ள இருதயத்தை உனக்குக் கொடுத்தோம்;
அதிலே உனக்குச் சரியானவன் உனக்குமுன்
இருந்ததுமில்லை, உனக்குச் சரியானவன் உனக்
௰௩ குப்பின் எழும்புவதுமில்லை.—இதல்லாமல், உன்
னுடைய எல்லா நாள்களிலுமிருக்கிற இராசாக்
களில் ஒருவரும் உன்னைப்போல இராதிருக்கத்
தக்கவிதமாய், நீ கேளாதிருக்கிற ஐசுவரியத்தை
யும் மகிமையையும் உனக்குக் கொடுத்தோம்.—
௰௪ உன் தகப்பனாகிய தாவீது நடந்ததுபோல, நீ நம்
முடைய கட்டளைகளையும் நம்முடைய கற்பனை
களையும் கைக்கொள்ளும்படிக்கு, நம்முடைய
வழிகளில் நடந்தால், உன் நாள்களை நீடித்தி
௰௫ ருக்கவும் பண்ணுவோமென்றார்.—சாலோமோ
னுக்கு நித்திரை தெளிந்தபோது, இதோ அது
சொப்பனமென்று அறிந்து, எருசலேமுக்குள்
பிரவேசித்து, கர்த்தருடைய உடம்படிக்கைப்
பெட்டிக்குமுன்பாக வந்து நின்று, சர்வாங்கத
கனங்களைப் பலியிட்டு, சமாதானபலிகளைச் செ
லுத்தி, தன் ஊழியக்காரருக்கெல்லாம் விருந்து
செய்வித்தான்.
அப்போது வேசிகளான இரண்டு பெண்டுகள் ௰௬
இராசாவண்டைக்கு வந்து, அவனுக்குமுன்பாக
நின்றார்கள்.—அவர்களில் ஒருத்தி சொன்னதா ௰௭
வது: என் ஆண்டவனே, நானும் இந்த ஸ்திரி
யும் ஒரே வீட்டிலே குடியிருக்கிறோம்; நான் அ
வளோடே வீட்டிலிருக்கையில் பிள்ளைபெற்
றேன்.—நான் பிள்ளைபெற்ற மூன்றாம்நாளிலோ, ௰௮
இந்த ஸ்திரியும் பிள்ளைபெற்றாள்; நாங்கள் ஒரு
மித்திருந்தோம்; நாங்கள் இருவரும்தவிர, வீட்
டுக்குள்ளே வேறொருவரும் எங்களோடேகூட
இருந்ததில்லை. — இராத்திரியிலே இந்த ஸ்திரி ௰௯
யின் ஆண்பிள்ளை செத்துப்போயிற்று; ஏனெ
னில் நித்திரையிலே அதை நெருக்கிப்போட்
டாள்.—அப்போது அவள் நடுச்சாமத்தில் எழுந் ௨௰
திருந்து, உம்முடைய அடியாள் நித்திரைபண்
ணுகையில், என் பக்கத்திலே கிடக்கிற என்
ஆண்பிள்ளையை எடுத்துக்கொண்டு, தன் மடியி
லே வைத்து, செத்த தன்னுடைய ஆண்பிள்ளை
யை என் மடியிலே வைத்தாள்.—என் பிள்ளைக்கு ௨௧
முலைகொடுக்கக் காலமே நான் எழுந்திருந்த
போது, இதோ செத்திருந்தது; பொழுது விடிந்த
போது, நான் அதை உற்றுப்பார்க்கும்போதோ
வெனில், அது நான் பெற்ற என்னுடைய பிள்ளை
அல்லவென்று கண்டேனென்றாள்.—மற்ற ஸ்தி ௨௨
ரியோவென்றால், அப்படிஅல்ல, உயிரோடிருக்
கிறது என் பிள்ளை செத்தது உன் பிள்ளை என்
றாள்; ஆனால் அவள் செத்தது உன் பிள்ளை, உயி
ரோடிருக்கிறது என் பிள்ளையென்றாள்; இப்படி
இராசாவுக்குமுன்பாகப் பேசினார்கள். — அப் ௨௩
போது இராசா உயிரோடிருக்கிறது என் பிள்ளை,
செத்தது உன் பிள்ளையென்று இவள் சொல்லுகி
றாள்; அப்படிஅல்ல, செத்தது உன் பிள்ளை, உயி
ரோடிருக்கிறது என் பிள்ளை என்று அவள் சொல்
லுகிறாளென்று சொல்லி,—ஒரு பட்டையத்தை ௨௪
எனக்கு எடுத்துத்தாருங்களென்று இராசா சொன்
னான்; அவர்கள் பட்டையத்தை இராசாவுக்கு
முன்பாகக் கொண்டுவந்தபோது,—இராசாவான ௨௫
வன் உயிரோடிருக்கிற பிள்ளையை இரண்டாகப்
பிளந்து, பாதியை இவளுக்கும் பாதியை அவ
ளுக்கும் கொடுங்களென்றான்.—அப்போது உயி ௨௬
ரோடிருக்கிற ஆண்பிள்ளையின் தாய், தன் பிள்
ளைக்காக அவள் குடல்கள் எரிந்தபடியினாலே,
இராசாவுடனே, ஆ என் ஆண்டவனே, உயிரோ
டிருக்கிற பிள்ளையைக் கொல்லவே கொல்லா
மல், அதை அவளுக்குக் கொடுங்களென்றாள்;
இவளோவெனில் அது எனக்கும் கவையில்லை;
உனக்கும் கவையில்லை பிளவுங்களென்றாள்.—
அப்போது இராசா பிரதியுத்தாரமாக, உயிரோ ௨௭
டிருக்கிற பிள்ளையைக் கொல்லவே கொல்லா
மல், அவளுக்குக் கொடுங்கள் அவளே அதின்
தாயென்றான்.—இராசா தீர்த்த இந்த நியாயத்தை ௨௮
இஸ்ரவேலரெல்லாம் கேள்விப்பட்டு, இராசா
வுக்குப் பயந்துபோனார்கள்; ஏனெனில் நியாயம்

விசாரிக்கிறதற்குப் பராபரனுடைய ஞானம் அ
வனுக்குள் இருக்கின்றதென்று கண்டார்கள்.

## ௪. அதிகாரம்.

*௧. சாலோமோனுடைய பிரபுக்கள். ௭. உண்டி விசாரிப்புக்காரர், ௰௨. உக்கிராணிகள். ௨௰. ௨௪. அவனுடைய இராச்சியத்தின் சமாதானமும் விஸ்தாரமும், ௨௨. சாப்பாட்டுச்செலவு. ௨௬. குதிரைப் பந்திகள். ௨௯. அவனுடைய ஞானம்.*

௧ அப்படியே இராசாவாகிய சாலோமோன் எல்
லா இஸ்ரவேலின்மேலும் இராசாவாயிருந்தான்.-
௨ அவனுக்கிருந்த பிரபுக்களாவது: சாதோக்கின்
குமாரனாகிய அசரீயா பிரதான மந்திரியாயிருந்
௩ தான்.—சீசாவின் குமாரராகிய எலிகோரேப்பும்
அகியாவும் சம்பிரதிகளாயிருந்தார்கள்; அகிலூ
தின் குமாரன் யோசபாத் மந்திரியாயிருந்தான்.—
௪ யோய்தாவின் குமாரன் பேனாயா படைத்தலை
வனும், சாதோக்கும் அப்பியத்தாரும் ஆசாரியர்க
௫ ளுமாயிருந்தார்கள்.—நாத்தானின் குமாரனாகிய
அசரீயா மணியகாரரின் தலைவனும், நாத்தானின்
குமாரன் சாபூத் இராசாவின் சிநேகிதனாகிய
௬ மந்திரியுமாயிருந்தார்கள். — அகீஷார் அரமனை
விசாரிப்புக்காரனும், அப்தாவின் குமாரன் அ
தோனீராம் பகுதி விசாரிப்புக்காரனுமாயிருந்
தார்கள்.

௭ இராசாவையும் அவன் அரமனையையும் பரா
மரித்து வருகிற பன்னிரண்டு மணியகாரர் சா
லோமோனுக்கு இஸ்ரவேல் தேசமெங்கும் வைக்
கப்பட்டிருந்தார்கள்; அவர்களில் ஒவ்வொரு
வன் பராமரிப்புவருஷத்தில் ஒவ்வொருமாதம்.-
௮ அவர்கள் நாமங்களாவன: ஊரின் குமாரன் எப்
௯ பிராயீம் மலைத்தேசத்தில் இருந்தான்.—தேக்கே
ரின் குமாரன் மாக்காத்சீலும், சால்பிமிலும், பெத்
செமேசிலும், ஏலோனிலும், பெத்தானானிலும்
௰ இருந்தான். — ஏசேதின் குமாரன் அறுபோத்தி
லிருந்தான்; சோகோவும் எப்பேர் சீமையனைத்
௰௧ தும் இவன் விசாரிப்பாயிருந்தன. — அபினதா
பின் குமாரன்தோரின் நாட்டுப்புறமனைத்திற்கும்
விசாரிப்புக்காரனாயிருந்தான்; சாலோமோனின்
குமாரத்தியாகிய தாபாத் இவனுக்குப் பெண்சா
௰௨ தியாயிருந்தான்.—அகிலூதின் குமாரனாகிய பா
னாவின் விசாரிப்புக்கு தானாகும், மெகிதோவும்,
சார்த்தனாவுக்குப் பக்கமாகவும் எஸ்ரேயேலுக்குக்
கீழாகவும் பெத்செயான்துவக்கி ஆபேல்மெ
கொல்லாமட்டும் யக்மெயாமுக்கு அந்தப்பக்கம்
மட்டும் இருக்கிற பெத்செயான் அனைத்தும் அ
௰௩ டுத்திருந்தது.—கேபெரின் குமாரன் கீலேயாத்
தின் ஊரான ராமோத்திலிருந்தான்; கீலேயாத்தி
லுள்ள மனாசேயின் குமாரனாகிய யாவீரின் கிரா
மங்களும், மதில்களும், வெண்கலத் தாழ்ப்பாள்
களுமுள்ள பாசான் தேசத்தினுடைய அறுபது
பெரிய பட்டணங்களிலிருக்கிற அற்கோப்
௰௪ சீமையும் அவன் விசாரிப்பாயிருந்தது.—இதோ
வின் குமாரன் அகினதாப், மக்னாயிமில் இருந்
௰௫ தான்.-அகிமாஸ் நப்தலியில் இருந்தான்; இவன்
சாலோமோனுக்கிருந்த ஒரு குமாரத்தியாகிய
பஸ்மாத் என்றவளை விவாகம்பண்ணினான்.—
ஊசாயின் குமாரன் பானா, ஆசேரிலும் ஆலோத்தி ௰௬
லும் இருந்தான்.—பறுவாலின் குமாரன் யோச ௰௭
பாத், ஈசகஷாரில் இருந்தான்.-ஏலாவின் குமாரன் ௰௮
சீமேயி, பென்யமீனில் இருந்தான். — ஊரி ௰௯
யின் குமாரன் கேபேர், எமோரியரின் இராசா
வாகிய சீகோனுக்கும் பாசானின் இராசாவாகிய
ஓகுக்கும் இருந்த சீமையாகிய கீலேயாத்தேசத்
திலிருந்தான்; அவன்மாத்திரம் அத்தேசத்தில்
அதிபதியாய் இருந்தான்.

யூதாவும் இஸ்ரவேலும் கடல்கரை மணலத் ௨௰
தனை ஏராளமாயிருந்தன; புசித்துக் குடித்து
மகிழ்ந்துகொண்டிருந்தார்கள்.-நதிதுவக்கி, பெ ௨௰௧
லிஸ்தியர் தேசவழியாய் எகிப்தின் எல்லைமட்டு
மிருக்கிற எல்லா இராச்சியங்களையும் சாலோ
மோன் ஆண்டுகொண்டிருந்தான்; அவர்கள் சா
லோமோனுக்குக் காணிக்கைகளைக் கொண்டு
வந்து, அவன் உயிரோடிருந்த நாளெல்லாம்
அவனைச் சேவித்தார்கள்.

நாள் ஒன்றிற்குச் சாலோமோனுக்குச் செல் ௨௰௨
லும் சாப்பாட்டுச் செலவு, முப்பது மரக்கால்
மெல்லியமாவும், அறுபது மரக்கால் மாவும்,—
கலைமான்களையும் வெளிமான்களையும், காட் ௨௰௩
டாடுகளையும், உச்சிதமான கொழுத்த செந்துக்
களையும்தவிர, கொழுக்கப்பட்ட பத்து மாடுக
ளும், மேய்கிற இருபது மாடுகளும், நூறு ஆடுக
ளுமாயிருந்தன. — ஏனெனில் நதிக்கிப்பாலே ௨௰௪
திப்சா முதல்கொண்டு காசாமட்டுமுள்ளவை
யெல்லாவற்றையும், நதிக்கு இந்தப்பக்கத்திலி
ருக்கிற எல்லா இராசாக்களையும் ஆண்டுகொண்
டான்; அவனுடைய சுற்றுப்புறத்தாரெல்லாரும்
அமளிபண்ணாதிருக்கிறதினால் அவனுக்குச் சமா
தானமிருந்தது.—சாலோமோனுடைய நாளெல் ௨௰௫
லாம் தாண்துவக்கிப் பேர்சேபாமட்டும், யூதா
வும் இஸ்ரவேலும் அவரவர் தம்தம் திராட்சச்செ
டியின் நிழலிலும், தம்தம் அத்திமரத்தின் நிழலி
லும் சுகமாய்க் குடியிருந்தார்கள்.

சாலோமோனுக்கு நாலாயிரம் இரதக்குதிரை ௨௰௬
களின் லாயங்கள் இருந்தவைகளும்தவிர, பன்
னீராயிரம் குதிரைக்காரரும் இருந்தார்கள்.-அந்த ௨௰௭
மணியகாரர் ஒவ்வொருவன் தன்தன் மாதத்திலே
சாலோமோன் இராசாவுக்கும், இராசாவின் பந்
திக்குச் சேருகிற யாவருக்கும், வேண்டியவை
களை ஒரு குறைவுமில்லாமல் பராமரித்து,—குதி ௨௰௮
ரைகளுக்கும்இரதக்குதிரைகளுக்கும் வேண்டிய
வால்கோதுமையையும், வைக்கோலையும், அவ
னவன் தங்களுக்கிருந்த கட்டளையின்படி அவ
னிருக்கும் ஸ்தலத்திற்கு வரப்பண்ணினார்கள்.
பராபரன் சாலோமோனுக்கு மகா பெரிய ஞா ௨௰௯
னத்தையும், உணர்வையும், கடல்கரை மணலத்
தனையான மனவிவேகத்தையும் கொடுத்தார். —
சகல கிழக்கத்திப் புத்திரரின் ஞானத்தையும் ௩௰
எகிப்தியரின் எல்லா ஞானத்தையும் பார்க்கிலும்
சாலோமோனின் ஞானம் பெரியதாயிருந்தது.—
எல்லா மனுஷரையும், எஸ்ராகியனான ஏத்தானை ௩௰௧

யும்,ஏமான்,கற்கோல்,தற்தாவென்ற மாகோலின்
குமாரரையும்பார்க்கிலும் அவன் ஞானியாயி
ருந்தான்; சுற்றுப்புறத்துச் சாதிகளுக்குள் எல்
௩௨ லாம் பெயரெடுப்பாயிருந்தான். — மூவாயிரம்
வாக்கியங்களைச் சொன்னன்; அவனுடைய
௩௩ பாட்டுக்கள் ஆயிரத்து ஐந்து.–லீபனேனிலிருக்
கிற கேதுருமரங்கள்துவக்கி, சுவரில் முளைக்கிற
ஈசோப் பூண்டுமட்டுமுள்ள மரங்கள் செடிக
ளின்மேலும், மிருகங்கள் பறவைகள் ஊர்வனங்
கள் மச்சங்கள்மேலும், வாக்கியங்களைச் சொன்
௩௪ னன். — எல்லாச் சனசதளங்களிலும், சாலோ
மோனின் ஞானத்தைக் கேள்விப்பட்ட பூமி
யின் சகல இராசாக்களிடத்திலுமிருந்து, அவ
னுடைய ஞானத்தைக் கேட்கிறதற்காக மனு
ஷர் வந்தார்கள்.

## ரு. அதிகாரம்.

*௧. ஈராம் வாழ்த்துதல் செய்ய அனுப்ப, சாலோமோன் தான் ஆலயம் கட்டுவதை அறிவித்து, அதற்கு வேண்டிய மரங்களைக் கேட்டது. ௭. சாலோமோன் இராசனானதற்காக ஈராம் கடவுளைத் தோத்திரித்து, தன் குடும்பத்திற்கு வேண்டும் உணவின் பண்டத்திற்காக மரங்களைக் கொடுத்தது. ௰௩. சாலோமோனுடைய அமஞ்சியாள்களுடனே சுமக்கிறவர்களின் தொகை.*

௧ சாலோமோனை அவனுடைய பிதாவின் ஸ்தலத்
தில் இராசாவாக அபிஷேகம்பண்ணினர்களெ
ன்பதைத் தீருவின் இராசாவாகிய ஈராம் கேட்
டபடியினலே, தன்னுடைய ஊழியக்காரரை
அவனண்டைக்கு அனுப்பினன்; ஏனெனில்
ஈராம் தாவீதைச் சகல நாளும் சிநேகித்திருந்
௨ தான்.—அப்போது சாலோமோன் ஈராம் அண்
டைக்கு மனுஷரை அனுப்பிச் சொல்லச்சொன்
௩ னதாவது:—என் தகப்பனகிய தாவீதின் சத்து
ருக்களைக் கர்த்தர் அவனுடைய பாதங்களுக்குக்
கீழ்ப்படுத்திவிடும் அளவும், அவர்கள் தம்மைச்
சுற்றிலும் பண்ணுகிற யுத்தத்தினலே, அவர் தம்
முடைய பராபரனகிய கர்த்தருடைய நாமத்
திற்கு வீட்டைக்கட்ட, அவருக்குக் கூடாதிருந்
௪ ததென்று நீர் அறிந்திருக்கிறீர். — ஆனல் இப்
போது ஒரு விரோதக்காரனலும் ஒரு பொல்
லாத தடையாலும் இராதபடிக்கு,என் பராபர
னகிய கர்த்தர் சுற்றிலும் எனக்கு இளைப்பாறுத
௫ லைக் கட்டளையிட்டார். — ஆகையால் இதோ,
நாம் உன் ஸ்தலத்தில் உன் ஆசனத்தின்மேல்
வைக்கும் உன்னுடைய குமாரனே நம்முடைய
நாமத்திற்கு வீட்டைக் கட்டுவானென்று கர்த்தர்
என் தகப்பனகிய தாவீதோடே சொன்னப
டியே, என் பராபரனகிய கர்த்தரின் நாமத்திற்கு
வீட்டைக் கட்டவேண்டுமென்றிருக்கிறேன்.—
௬ இப்போதும் லீபனேனில் எனக்குக் கேதுரு
மரங்களை வெட்டக் கற்பியும்; அதற்காக என்
வேலைக்காரர் உம்முடைய வேலைக்காரரோடி
ருப்பார்கள்; நீர் சொல்வதின்படியெல்லாம் உம்
முடைய வேலைக்காரரின் சம்பளத்தை உமக்குக்
கொடுப்பேன்;ஏனெனில்சீதோனியரைப்போல
மரங்களை வெட்ட அறிந்தவர்கள் எங்களுக்குள்
ளே ஒருவருமில்லை என்கிறதை நீர்அறிவீரென்று
சொல்லச்சொன்னன்.

சம்பவித்ததேதென்றால் ஈராம் சாலோமோ ௭
னின் வார்த்தைகளைக் கேட்டபோது, மிகவும்
சந்தோஷப்பட்டு, அந்த ஏராளமான சனத்தின்
மேலே வைக்க, தாவீதுக்கு ஒரு ஞானமுள்ள
குமாரனைக் கொடுத்த கர்த்தர் இன்று ஸ்தோத்தி
ரிக்கப்படுவராகவென்று சொல்லி,—ஈராம் சா ௮
லோமோனண்டைக்கு மனுஷரை அனுப்பி,
நீர் எனக்குச் சொல்லி அனுப்பின காரியத்தைக்
கேட்டேன்; கேதுருமரங்களுக்காகவும், பாய்ம
ரவிருட்சங்களுக்காகவும், உமக்கிருக்கிற விருப்
பத்தின்படியெல்லாம் நான் செய்வேன்.—என் ௯
வேலைக்காரர் லீபனேனில் இருந்து அவைகளை
இறக்கிக் கடலிலே கொண்டுபோவார்கள்; அங்
கே நான் அவைகளைத் தெப்பங்களாகக்கட்டி,
நீர் எனக்குச் சொல்லி அனுப்பும் தலமட்டா
கக் கடலின்மேல் கொண்டுவந்து, அங்கே நீர்
அவைகளை ஒப்புவித்துக்கொள்ள அவிழ்த்துப்
போட்டுவிடச் சொல்லுவேன்; நீர் என் வீட்
டுக்கு ஆகாரம்கொடுக்கிறதினலும் என் விருப்
பத்தின்படி செய்யவேண்டுமென்று சொல்லச்
சொன்னன்.

அப்படியே சாலோமோன் வேண்டுமென்ற ௰
கேதுருமரங்களையும் பாய்மரவிருட்சங்களையும்
எல்லாம் ஈராம் அவனுக்குக் கொடுத்துக்கொண்
டிருந்தான்.–சாலோமோன் ஈராமின் அரமனைக் ௰௧
குப் போசனத்திற்காக இருபதினயிரக் கலம்
கோதுமையையும் இடித்துப் பிழிந்த ஒலீவமரங்
களின் இருபதின்கல எண்ணெயையும் கொடுத்
தான்; இப்படிச் சாலோமோன் ஈராமுக்கு வரு
ஷாந்தரம் கொடுத்தான். — கர்த்தர் சாலோமோ ௰௨
னுக்குச் சொல்லியிருந்தபடியே அவனுக்கு ஞா
னத்தைக் கட்டளையிட்டார்; ஈராமுக்கும் சா
லோமோனுக்கும் சமாதானம் உண்டாயிருந்து,
இருவரும் உடம்படிக்கை பண்ணிக்கொண்
டார்கள்.

இராசாவாகிய சாலோமோன் இஸ்ரவேலி ௰௩
லெல்லாம் அமஞ்சி ஆள்களை எடுத்தான்; அந்த
அமஞ்சியாள்கள் முப்பதினயிரம்பேர்.—அவர்க ௰௪
ளில் ஒவ்வொரு மாதத்திலே பதினயிரம்பேரை
மாற்றிமாற்றி, லீபனேன் பர்வதத்திற்கு அனுப்பி
னன்; அவர்கள் ஒருமாதம் லீபனேனிலும், இ
ரண்டுமாதம் தங்கள் வீடுகளிலும் இருப்பார்கள்;
அதோனீராம் அந்த அமஞ்சி ஆள்களின்மேல்
விசாரிப்புக்காரனயிருந்தான்.–சாலோமோனுக் ௰௫
குச் சுமக்கிறவர்கள் எழுபதினயிரம்பேரும், பர்
வதத்திலே வெட்டுகிறவர்கள் எண்பதினயிரம்
பேரும்,–இவர்களைத்தவிர வேலையை விசாரித்து ௰௬
வேலைசெய்கிற சனத்தை ஆளுகிற தலையான
விசாரிப்புக்காரர் மூவாயிரத்து முந்நூறுபேரும்
இருந்தார்கள்.—வெட்டினகல்லால் வீட்டிற்கு ௰௭
அஸ்திபாரம் போட,இராசா பெரிதும் விலையே
றப்பெற்றதுமான கற்களைக் கொண்டுவரக் கற்பி
த்தான். — வீட்டைக் கட்ட, சாலோமோனின் ௰௮
சிற்பாசாரிகளும், ஈராமின் சிற்பாசாரிகளும்

கிபிலி ஊராரும், அந்த மரங்களையும் கற்களையும் வெட்டி மூஸ்திப்பாக்கினார்கள்.

## சு. அதிகாரம்.

க. சாலோமோன் தேவாலயம் கட்டினது. ரு. அதினுடைய அறைகள். ௰க. அதைக்குறித்துக் கடவுள் வாக்குத்தத்தம்செய்தது. ௰ரு. அதின் மச்சம், அலங்கரிப்பும். உங. கேருபீன்கள், ஙக. கதவுகள், ஙசு. உள்பிரகாரம், ஙஎ. அதைக் கட்டின காலம்.

க இஸ்ரவேல் புத்திரர் எகிப்துதேசத்திலிருந்து புறப்பட்ட நானூற்று எண்பதாம்வருஷத்திலும், சாலோமோன் இஸ்ரவேலின்மேல் இராசாவான நாலாம்வருஷம் சீப்மாதமாகிய இரண்டாம்மாதத்திலும் அவன் கர்த்தரின் வீட்டைக் கட்டத் துவக்கினான்.

உ சாலோமோன் இராசா கர்த்தருக்குக் கட்டின வீடோவென்றால், அறுபதுமுழ நீளமும் இருபதுமுழ அகலமும் முப்பதுமுழ உயரமுமாயி
ங ருந்தது. — வீடென்னப்பட்ட அந்தத் தேவாலயத்தின் முகப்பிலே அவன் கட்டின மண்டபம் வீட்டின் அகலத்திற்குமுன்னே இருபதுமுழ நீளமும் வீட்டின்முன்னே பத்துமுழ அகலமு
ச மாயிருந்தது. — பார்வைக்குக் குறுகிப்போகிற பலகணிகளை வீட்டிற்குச் செய்வித்தான்.

ரு அவன் தேவாலயத்தின் சுவரும் சந்நிதிஸ்தலச்சுவருமாகிய வீட்டின் சுவர்களுக்கு அடுத்ததாய்ச் சுற்றுக்கட்டுகளைக் கட்டி, அவைகளில்
சு அறைகளைச் சுற்றிலும் உண்டாக்கினான்.—கீழேயிருக்கிற சுற்றுக்கட்டு ஐந்துமுழ அகலமும், நடுவாந்தரமானது ஆறுமுழ அகலமும், மூன்றாவதுகள் ஏழுமுழ அகலமுமாயிருந்தன; ஏனெனில் அவைகள் வீட்டினுடைய சுவர்களிலே தாங்காதபடிக்கு வீட்டைச் சுற்றிலும் புறம்பே ஒட்
எ டுச் சுவர்களைப் போடுவித்தான். — வீடுகட்டப்படுகையில், அது கொண்டுவரப்பட்ட பிரகாரமாயிருக்கிற வேலைதீர்ந்த கல்களாலே கட்டப்பட்டது; ஆகையால் அது கட்டப்படுகிறபோது, சுத்திகள் கோடாலிகள் முதலான எந்த இருப்பு ஆயுதங்களின் சத்தமும் அதிலே கேட்கப்பட்ட
அ தில்லை.—நடுவாந்தரமான அறைகளுக்குப்போகிற வாசற்படி வீட்டின் வலதுபுறத்திலிருந்தது; சுழற்படிகளால் நடுவாந்தர அறைகளுக்கும், நடுவாந்தர அறைகளிலிருந்து மூன்றாவது அறை
கூ களுக்கும் ஏறுவார்கள். — அப்படியே அவன் வீட்டைக் கட்டி முடித்து, வீட்டைக் கேதுரு மரங்களின் உத்திரங்களாலும் பலகைகளாலும்
௰ மச்சுப்பாவினான்.—அவன் ஐந்துமுழ உயரமான சுற்றுக்கட்டையை வீட்டின்மேல் எல்லாம் கட்டுவித்தான்; அது கேதுருமரங்களால் வீட்டோடே இணைக்கப்பட்டிருந்தது.

௰க அப்போது கர்த்தருடைய வார்த்தை சாலோமோனுக்கு உண்டாகி, அவர் சொன்னதாவது:-
௰உ நீ நம்முடைய கட்டளைகளில் நடந்து, நம்முடைய நீதிநியாயங்களின்படி செய்து, நம்முடைய கற்பனைகளிலெல்லாம் நடந்துகொள்ளும்படிக்கு, அவைகளைக் கைக்கொண்டால், நாம் உன் தகப்பனாகிய தாவீதோடே நீ கட்டுகிற இந்த வீட்டைக்குறித்துச் சொன்ன நம்முடைய வார்த்தையை உன்னிடத்திலே திடப்படுத்தி,—
இஸ்ரவேல் புத்திரர் நடுவிலே வாசம்பண்ணி, ௰ங
நம்முடைய சனமாகிய இஸ்ரவேலைக் கைவிடா
திருப்போமென்றார்.-அப்படியே சாலோமோன் ௰ச
வீட்டைக் கட்டிமுடித்து,

வீட்டுச் சுவர்களின் உள்புறத்தை, வீட்டின் ௰ரு
தளமயைத்துவக்கிச் சுவர்களின் மேல்மச்சுமட்டும், கேதுருப்பலகைகளால் மூடி, இப்படி உள்புறத்தை மரவேலையாக்கிப்போட்டு, வீட்டின் தளமயைப் பாய்மரவிருட்சங்களின் பலகைக
ளாலே தளவரிசைப்படுத்தினான்.—அவன் தள ௰சு
வரிசையைத்துவக்கிச் சுவர்களின் உயரம்மட்டும் வீட்டின் பக்கங்களைப் பிடித்திருக்கிற இருபதுமுழ மறைப்பையும் கேதுருப்பலகைகளால் உண்டாக்கி, உள்புறத்தைப் பரிசுத்தத்திற்குப் பரிசுத்தமான சந்நிதிஸ்தலமாகக் கட்டினான்.—
அதின் முன்கட்டான தேவாலயமாகிய வீடோ ௰எ
வெனில் நாற்பதுமுழ நீளமாயிருந்தது.—வீட் ௰அ
டிற்குள் இருக்கிற கேதுருமொக்குகளும் மலர்ந்த பூக்களுமான சித்திரவேலையாயிருந்தது; ஒருகல்லாகிலும் காணப்படாமல் எல்லாம் கேதுருவா
யிருந்தன.—வீட்டிலே உள்ளாக அவன் சந்நிதி ௰கூ
ஸ்தலத்தைக் கர்த்தருடைய உடன்படிக்கையின் பெட்டியை அங்கே வைக்கிறதற்காக ஆயத்தப்
படுத்தினான். — சந்நிதி ஸ்தலம் முன்புறம்மட் உ௰
டும், இருபதுமுழ நீளமும், இருபதுமுழ அகலமும், இருபதுமுழ உயரமுமாயிருந்தது; அதை அபரஞ்சித்தகட்டினால் மூடினான்; கேதுருமரப்
பீடத்தையும் அப்படி மூடினான்.—வீட்டின் உள் உக
புறத்தைச் சாலோமோன் அபரஞ்சித் தகட்டினால் மூடி, சந்நிதிஸ்தலத்தின் மறைப்புக்கும் பொன்சங்கிலிகளைக் குறுக்கே போட்டு, அதைப்
பொன்தகட்டால் மூடினான்.—அப்படியே வீடு உஉ
முழுதும் கட்டித்தீரும்மட்டும், அவன் வீட்டையெல்லாம் பொன்தகட்டால் மூடி, சந்நிதிஸ்தலத்திற்குமுன்பாக இருக்கிற பீடத்தை முழுதும் பொன்தகட்டால் மூடினான்.

அவன் சந்நிதிஸ்தலத்தில் ஒலீவமரங்களால் உங
இரண்டு கேருபீன்களை உண்டாக்கி வைத்தான்;
ஒவ்வொன்று பத்துமுழ உயரமாயிருந்தது.—ஒரு உச
கேருபீனுக்கிருக்கிற ஒரு செட்டை ஐந்துமுழமும் கேருபீனின் மற்றச்செட்டை ஐந்துமுழமுமாய், இப்படியே ஒரு செட்டையின் கடைசிமுனைதுவக்கி மற்றச் செட்டையின் கடைசி
முனைமட்டும் பத்துமுழமுமாயிருந்தது.-மற்றக் உரு
கேருபீனும் பத்துமுழமுமாயிருந்தது; இரண்டு கேருபீன்களுக்கும் ஒரே அளவும் ஒரே திட்ட
மும் இருந்தன. — ஒரு கேருபீன் பத்துமுழ உசு
உயரமாயிருந்தது; மற்றக் கேருபீனும் அப்படித்
தான்.—அந்தக் கேருபீன்களை உள்வீட்டிற்குள் உஎ
ளே வைத்தான்; கேருபீன்களின் செட்டைகள் விரித்திருந்ததினாலே, ஒன்றினுடைய செட்டை

இந்தப்பக்கத்துச் சுவரிலும், மற்றக் கேருபீனின்
செட்டை அந்தப்பக்கத்துச் சுவரிலும் சேர்ந்
தன; வீட்டின் நடு மையத்திலோ, அவைகளின்
செட்டைகள் ஒன்றோடொன்று சேர்ந்திருந்
௨௮ தன.-அந்தக் கேருபீன்களைப் பொன்தகட்டால்
மூடினான்.
௨௯ வீட்டின் சுவர்களையெல்லாம் அவன் சுற்றி
லும் உள்ளும் புறம்புமாகக் கேருபீன்களும், பே
ரீச்சுகளும், மலர்ந்த பூக்களுமான சித்திரங்க
௩௰ ளும் கொத்துவேலைகளுமாக்கினான்.—உள்ளும்
புறம்புமாயிருக்கிற வீட்டுத் தளவரிசையையும்
பொன்தகட்டால் மூடினான்.
௩௧ அவன் சந்நிதிஸ்தலத்தின் வாசலுக்கு ஒலீவ
மரங்களால் இரட்டைக் கதவுகளை உண்டாக்கி
னான்; மேல்சட்டமும் நிலைகளும் மறைப்பின்
அளவில் ஐந்தில் ஒருபங்கான விரிவாயிருந்தன.-
௩௨ ஒலீவமரமான அந்த இரட்டைக் கதவுகளில் அ
வன் கேருபீன்களும் பேரீச்சுகளும் மலர்ந்த பூக்
களுமான சித்திரங்களைச் செய்து, அந்தக் கேரு
பீன்களிலும்பேரீச்சுகளிலும் பொன்பதியப்பட
த்தக்கவிதமாய்ப் பொன்தகட்டால் மூடினான்.-
௩௩ இப்படித் தேவாலயத்தின் வாசலுக்கும் ஒலீவமர
நிலைகளை உண்டாக்கினான்; அது சுவர் அளவில்
௩௪ நாலத்தொரு பங்கான விரிவாயிருந்தது.-அதின்
இரண்டு கதவுகளும் தேவதாரிபாய்மரப் பலகை
களாயிருந்தன, ஒரு கதவுக்கு இரண்டு மடிப்புப்
பலகைகளும், மற்றக் கதவுக்கு இரண்டு மடிப்
௩௫ புப் பலகைகளும் இருந்தன. — அவைகளில்
கேருபீன்களும் பேரீச்சுகளும் மலர்ந்த பூக்களு
மான சித்திரவேலையை உண்டாக்கி, சித்திரங்க
ளுக்குச் சரியாக்கப்பட்ட பொன்தகட்டால்
௩௬ அவைகளை மூடினான்.-அவன் உள்பிரகாரத்தை
வெட்டின கல்களின் மூன்று வரிசைகளாலும்,
கேதுருப்பலகைகளின் ஒரு வரிசையினாலும்
கட்டினான்.
௩௭ நாலாம்வருஷம் சீப்மாதத்திலே கர்த்தருடைய
௩௮ வீட்டுக்கு அஸ்திபாரம்போடப்பட்டு,-பதினோ
ராம்வருஷம் எட்டாம்மாதமாகிய பூல் மாதத்
திலே அந்த வீடு தன்னுடைய எல்லா முஸ்திப்
புகளோடும் தன்னுடைய எல்லா நியாயத்தோடும்
கட்டித் தீர்ந்தது; ஏழுவருஷகாலத்தில் அதைக்
கட்டினான்.

## ௭. அதிகாரம்.

௧. சாலோமோன் கட்டின வீடு, ௨. லீபனோன் வீட்டையும், ௩. மண்ட
பத்தின் தூண்களையும், ௭. நியாயம்தீர்க்கும் மண்டபத்தையும், ௮. பார்
வோன் குமாரத்தியின் வீட்டையும், ௰௩. ஈராம் செய்த இரண்டு தூணை
யும், ௨௩. வெண்கலத்தொட்டியையும், ௨௭. பத்து ஆதாரங்களையும்,
௩௮. பத்துக் கொப்பரைகளையும், ௪௰. மற்றெல்லாப் பாத்திரங்களையும்
குறித்தது.

௧ ஆனால் சாலோமோன் தன்னுடைய வீட்டைப்
பதின்மூன்று வருஷகாலத்திலே கட்டி, தன் வீட்
டையெல்லாம் முடித்தான்.
௨ என்னவெனில் அவன் லீபனோன் காட்டு
மரங்களால் நூறுமுழ நீளமும், ஐம்பதுமுழ அ
கலமும் முப்பதுமுழ உயரமுமான வீட்டைக்
கேதுருமர உத்திரங்கள் பாவப்பட்ட கேதுரு
மரத்தூண்களின் நாலு வரிசைகள்மேலே கட்டி
னான்.—ஒவ்வொரு வரிசை பதினைந்து தூணாக ௩
நாற்பத்தைந்து தூண்களின்மேலே கட்டப்
பட்ட அறைகள் உயரக் கேதுருக்களால் மச்சுப்
பாவப்பட்டிருந்தன.—மூன்று வரிசைப் பலக ௪
ணிகள் மூன்று வரிசையிலும் ஒன்றுக்கொன்று
எதிராயிருந்தன.—பலகணிகளின் வாசல்களும் ௫
சட்டங்களுமெல்லாம் நாற்சதுரமும் மூன்று
வரிசைகளிலே ஒன்றுக்கொன்று எதிராகவுமி
ருந்தன.—ஐம்பதுமுழ நீளமும் முப்பதுமுழ அ ௬
கலமுமான தூண்களின் மண்டபத்தையும் கட்
டினான்; இந்த மண்டபமும், அதின் தூண்களும்,
உத்திரங்களும், வீட்டின் தூண்களுக்கும் உத்தி
ரங்களுக்கும் எதிராயிருந்தன.-நியாயம் தீர்க்கிற ௭
தற்கு நியாயாசனமிருக்கும் ஒரு மண்டபத்தை
யும் கட்டி, இந்தப்பக்கம்துவக்கி அந்தப்பக்கம்
மட்டும் கேதுருப்பலகைகளால் தளவரிசைப்படு
த்தினான்.-அவன் வாசம்பண்ணும் அவனுடைய ௮
வீட்டிலே மண்டபத்திற்குள்புறமாக இந்த வே
லையாய்ச் செய்யப்பட்ட வேறொரு முற்றமும்
இருந்தது; சாலோமோன் விவாகம்பண்ணின
பார்வோனின் குமாரத்திக்கும் அவன் அந்த
மண்டபத்தைப்போல இருக்கிற ஒரு வீட்டைக்
கட்டுவித்தான்.
இவைகளெல்லாம், உள்ளேயும் புறம்பேயும், ௯
அஸ்திபாரங்கள்துவக்கி மேல்திரணைகள்மட்டுக்
கும், வெளியே இருக்கும் பெரிய முற்றம்மட்
டுக்கும், அளவுபடி வெட்டி வாளால் அறுக்கப்
பட்ட விலையேறப்பெற்ற கல்களாயிருந்தன.—
அஸ்திபாரமோவென்றால், பத்துமுழக் கல்க ௰
ளும், எட்டுமுழக் கல்களுமான விலையேறப்
பெற்ற பெரிய கல்களாயிருந்தது.—அதின்மேல் ௰௧
உயர அளவுபடி வெட்டின விலையேறப்பெற்ற
கல்களும், கேதுருமரங்களும் வைக்கப்பட்டி
ருந்தன.—பெரிய முற்றத்திற்குச் சுற்றிலும் வெ ௰௨
ட்டின கல்களின் மூன்று வரிசைகளும்,கேதுரு
மரத்துலங்களின் ஒரு வரிசையும் உண்டாயி
ருந்தன; கர்த்தருடைய வீட்டின் உள்பிரகாரத்
திற்கும், வீட்டின் முன் மண்டபத்திற்கும் அப்
படித்தான் இருந்தது.
இராசாவாகிய சாலோமோன் ஈராமைத் தீரு ௰௩
விலிருந்து வரவழைப்பித்தான்.-இவன் நவுதலி ௰௪
கோத்திரத்தாளாகிய ஒரு கைம்பெண்சாதியின்
மகன்; அவன் தகப்பனோவெனில் தீரு மனுஷ
னான கன்னானாயிருந்தான். அவன் சகலவித வெ
ண்கலவேலையையும் செய்யத்தக்க ஞானத்தினா
லும், புத்தியினாலும், அறிவினாலும் நிறையப்பட்
டிருந்தான்; அவன் இராசாவாகிய சாலோமோ
னண்டைக்கு வந்து, அவனுடைய வேலையை
யெல்லாம் செய்தான்.—அவன் இரண்டு வெண் ௰௫
கலத்தூண்களை உண்டாக்கினான்; ஒவ்வொரு
தூண் பதினெட்டுமுழ உயரமும், ஒவ்வொரு
தூணின் சுற்றளவு பன்னிரண்டுமுழ நூலளவு
மாயிருந்தன.—அந்தத் தூண்களுடைய தலைப்பு ௰௬
களில் வைக்க, வெண்கலத்தால் வார்க்கப்பட்ட

இரண்டு கும்பங்களை உண்டாக்கினான்; ஒவ்
வொரு கும்பம் ஐந்துமுழ உயரமாயிருந்தது.—
௰௭ தூண்களுடைய முனையின்மேலுள்ள கும்பங்க
ளுக்கு வலைகளைப்போலொத்த பின்னல்களும்,
சங்கிலிகளைப்போலொத்ததொங்கல்களும்இருந்
தன; ஒவ்வொரு கும்பத்திற்கு ஏழு இருந்தன.—
௰௮ அப்புறம் தூண்களைப் பண்ணினவிதம் எதெ
னில், முனையின்மேலுள்ள கும்பங்களை மூடும்
படிக்கு, கும்பங்களில் ஒவ்வொன்றிலே பின்
னலின்மேல் சுற்றிலும் இரண்டு வரிசை மாதளம்
௰௯ பழங்களைச் செப்பனிட்டான். — மண்டபத்
தின் முன்னிருக்கும் அந்தத் தூண்களுடைய
முனையின்மேலுள்ள கும்பங்கள் லீலிய புஷ்
பங்களின் வேலையும் நாலுமுழ உயரமுமாயிருந்
௨௰ தன.-இரண்டு தூண்களின்மேலுமுள்ள கும்பங்
களில் உயரப் பின்னலுக்கருகே இருக்கிற
வயிற்றுக்கடுத்ததாய், இருநூறு மாதளம்பழங்க
ளின் வரிசைகள் சுற்றிலுமிருந்தன; மற்றக் கும்
௨௧ பத்திலும் அப்படித்தான்.—அந்தத் தூண்களைத்
தேவாலயமண்டபத்தின்முன் நிறுத்தினான்; அ
வன் வலதுபுறத்தில் நிறுத்தின தூணுக்கு யாகீ
னென்றும்,இடதுபுறத்திலே நிறுத்தின தூணுக்கு
௨௨ போவாஸென்றும், பேர் தரித்தான்.—தூண்களு
டைய சிகரத்தில் லீலிய புஷ்பங்களின் வேலை
யாயிருந்தது; அப்படியே தூண்களின் வேலை
முடிந்தது.
௨௩ வெண்கலக்கடல் தொட்டியையும் வார்ப்பித்
தான்; சுற்றிலும் சக்கரமான அதினுடைய உதடு
இந்தப்புறம்துவக்கி அந்தப்புறம்மட்டும் பத்து
முழ அகலமும், அதின் உயரம் ஐந்துமுழமும்,
சுற்றளவு முப்பதுமுழ நூலளவுமாயிருந்தன.—
௨௪ அதின் உதட்டுக்குக் கீழ்ப்புறமாய் அதைச் சுற்
றிலும் மொக்குகள் ஒவ்வொரு முழத்திற்குப் பத்
தாக அந்தக் கடல்தொட்டியின் சக்கரத்திற்கிருந்
தது; தொட்டியோடு ஒன்றாய் வார்க்கப்பட்ட
அந்த மொக்குகளின் வரிசைகள் இரண்டிருந்
௨௫ தன.—அது பன்னிரண்டு எருதுகள்மேல் நின்
றது; அவைகளில் மூன்று வடக்கேயும், மூன்று
மேற்கேயும், மூன்று தெற்கேயும், மூன்று கிழக்
கேயும் நோக்கியிருந்தன; கடல்தொட்டி அவை
களின்மேலாகவும், அவைகளின் பின்புறங்க
௨௬ ளெல்லாம் உள்ளாகவும் இருந்தன.-அதின் கனம்
நாலுவிரல்கடையும், அதின் உதடு குடிக்கிற பாத்
திரத்தின் உதட்டைப்போலும், லீலிய புஷ்பத்
தைப்போலும் இருந்தன; அது இரண்டாயிரம்
குடம்தண்ணீர் பிடித்தது.
௨௭ பத்து வெண்கல ஆதாரங்களையும் உண்டாக்
கினான்; ஒவ்வொரு ஆதாரம் நாலுமுழ நீளமும்
நாலுமுழ அகலமும், மூன்றுமுழ உயரமுமாயி
௨௮ ருந்தன.-அந்த ஆதாரங்களின் வேலை என்னவெ
னில், அவைகளுக்குச் சவுக்கைகள் உண்டாயி
ருந்தன; சவுக்கைகளோ சட்டங்களின் நடுவி
௨௯ லும் இருந்தன.—சட்டங்களுக்கு நடுவே இருக்
கிற அந்தச் சவுக்கைகளில் சிங்கங்களும், எருது
களும், கேருபீன்களும், சட்டங்களுக்கு மே
லாக ஒரு திரணையும், சிங்கங்களுக்கும் எருதுக
ளுக்கும் கீழ்ப்புறமாக இறங்கல்வேலையான சல
தாரைகளும் அதனோடே இருந்தன.-ஒவ்வொரு ௩௰
ஆதாரத்திற்கு நாலுவெண்கல உருளைகளும், வெ
ண்கலத்தட்டுகளும், அதின் நாலு கோடிகளுக்கு
அச்சுகளும் இருந்தன; கொப்பரையின்கிழி
ருக்க, அந்தக் கொம்மைகள் ஒவ்வொன்று சல
தாரைகளுக்கு நேராக வார்க்கப்பட்டிருந்தன.—
திரணைகளுக்குள்ளான அதின் வாய் மேலாக ஒரு ௩௧
முழமும் உயர்ந்திருந்தது; அதினுடைய வாய்
ஒன்றரைமுழச் சக்கரமும் தட்டையுமாய், அ
தின் வாயின்மேலே சித்திரங்களும் உண்டா
யிருந்தன; அவைகளின் சவுக்கைகளோவெனில்
சக்கரமாயிராமல் நாற்சதுரமாயிருந்தன.—அந்த ௩௨
நாலு உருளைகள் சவுக்கைகளின்கீழும், உரு
ளைகளின் அச்சுகள் ஆதாரத்திலும் இருந்தன;
ஒவ்வொரு உருளை ஒன்றரைமுழ உயரமாயிருந்
தது.—உருளைகளின் வேலை இரதத்து உருளைக ௩௩
ளின் வேலைக்கொத்திருந்தது; அவைகளின் அச்
சுகளும், சக்கரங்களும், வட்டங்களும், கம்பி
களும் எல்லாம் வார்ப்பாயிருந்தன.-ஒவ்வொரு ௩௪
ஆதாரத்தினுடைய நாலு கோடிகளிலும், ஆதார
த்திலிருந்து புறப்படுகிற நாலு கொம்மைகள் இ
ருந்தன.—ஒவ்வொரு ஆதாரத்தின் தலைப்பிலே ௩௫
அரைமுழ உயரமான சக்கரங்களும், ஒவ்வொரு
ஆதாரத்தினுடைய தலைப்பின்மேல் அதிலிருந்து
புறப்படுகிற அதின் கைப்பிடிகளும் சவுக்கைக
ளும் இருந்தன.—அவைகளிலிருக்கிற கைப்பி ௩௬
டிகளுக்கும் சவுக்கைகளுக்கும் இருக்கிற சந்து
களிலே, கேருபீன்கள் சிங்கங்கள் பேரீச்சுகளு
டைய சித்திரங்களைத் தீர்த்தான்; சுற்றிலும் ஒவ்
வொன்றிலும் சலதாரைகளிலும் இருக்கும் இட
ங்களுக்குத் தக்கதாய்த்தானே.—இந்தப்பிரகார ௩௭
மாக அந்தப் பத்து ஆதாரங்களையும் செய்தான்;
அவைகளுக்கெல்லாம் ஒரே வார்ப்பும், ஒரே
அளவும், ஒரே கொத்துத் திட்டமுமிருந்தன.—
பத்து வெண்கலக் கொப்பரைகளையும் உண்டாக் ௩௮
கினான்; ஒவ்வொரு கொப்பரை நாற்பது குடம்
பிடித்தது; நாலுமுழ அகலமான ஒவ்வொரு
கொப்பரை அந்தப் பத்து ஆதாரங்களில் ஒவ்
வொன்றின்மேல் வைக்கப்பட்டது. — ஐந்து ௩௯
ஆதாரங்களை வீட்டின் வலதுபுறத்திலும், ஐந்து
ஆதாரங்களை வீட்டின் இடதுபுறத்திலும் வைத்
தான்; ஆனால் கடல்தொட்டியை வீட்டிற்குக்
கிழக்கான வலதுபுறத்திலே தெற்குக்கு எதிராக
வைத்தான்.
பிற்பாடு ஈராம் கொப்பரைகளையும் சாம்பல் ௪௰
எடுக்கிற கரண்டிகளையும் கலங்களையும் உண்
டாக்கினான்; அப்படியே ஈராம் கர்த்தருடைய
வீட்டுக்காக இராசாவாகிய சாலோமோனுக்குச்
செய்யவேண்டிய எல்லா வேலையையும் செய்து
முடித்தான்.-அவைகள் என்னவெனில், இரண் ௪௧
டு தூண்களும், இரண்டு தூண்களுடைய முனை
யின்மேலிருக்கிற இரண்டு உருண்டைக் கும்
பங்களும், தூண்களுடைய முனையின்மேலிருக்

கிற இரண்டு உருண்டைக் கும்பங்களை மூடும்
௪௨ இரண்டு வலைப்பின்னல்களும், — தூண்களின்
மேலுள்ள இரண்டு உருண்டைக் கும்பங்களை மூ
டும்படி ஒவ்வொரு வலைப்பின்னலுக்குப் பண்
ணின இரண்டுவரிசை மாதளம்பழங்களும், ஆக
இரண்டுவலைப் பின்னலுக்கும் நானூறு மாதளம்ப
௪௩ ழங்களும்,–பத்து ஆதாரங்களும், ஆதாரங்களின்
௪௪ மேல் வைத்த பத்துக் கொப்பரைகளும், — ஒரு
கடல்தொட்டியும், கடல்தொட்டியின்கீழிருக்
௪௫ கிற பன்னிரண்டு எருதுகளும்,–செப்புச் சட்டி
களும், சாம்பல் எடுக்கும் கரண்டிகளும், கலங்
களும்தானே; கர்த்தரின் வீட்டுக்காக இராசாவா
கிய சாலோமோனுக்கு ஈராம் செய்த இந்த எல்
லாப் பணிமுட்டுகளும் துப்புரவான வெண்கல
௪௬ மாயிருந்தன.—யோர்தானுக்கடுத்த சமனான பூமி
யிலே, சுக்கோத்திற்கும் சற்தானுக்கும் நடுவே
இராசா அவைகளைக் களிமண்தரையிலே வார்ப்
௪௭ பித்தான். — இந்தச் சகல பணிமுட்டுகளின்
வெண்கலம்மிகுதியும் ஏராளமாயிருந்தபடியால்,
சாலோமோன் அவைகளை நிறுக்காதிருந்தான்;
அதினுடைய நிறை ஆராய்ந்துபார்க்கப்பட்ட
தில்லை.

௪௮ பின்னையும் கர்த்தருடைய வீட்டுக்குத் தேவை
யான பணிமுட்டுகளையெல்லாம் சாலோமோன்
உண்டாக்கினான்; என்னவென்றால் பொன்பீட
த்தையும், சமுகத்தப்பங்களை வைக்கும் பொன்
௪௯ மேசையையும், — சந்நிதிஸ்தலத்திற்கு முன்பாக
வைக்கும் அபரஞ்சியான விளக்குத்தண்டுகள்,
வலதுபுறமாக ஐந்தையும், இடதுபுறமாக ஐந்தை
யும், பொன்னான அதின் பூக்களோடும் விளக்கு
௫௰ களோடும் கத்திரிகளோடும்கூடத்தானே. — அ
பரஞ்சியான கிண்ணிகளையும், வெட்டுக்கத்திக
ளையும், கலங்களையும், கலயங்களையும், தூபகல
சங்களையும், பரிசுத்தத்திற்குப் பரிசுத்தமான
உள்வீட்டினுடைய கதவுகளின் பொன்னான
முளைகளையும், தேவாலய வீட்டுக்கதவுகளின்
பொன்னான முளைகளையும்தானே.

௫௧ அப்படியே இராசாவாகிய சாலோமோன் கர்த்
தருடைய வீட்டுக்காகச் செய்த கிரியையெல்
லாம் முடிந்தன; அப்போது சாலோமோன் தன்
தகப்பனாகிய தாவீது பரிசுத்தம்பண்ணின வெள்
ளியையும் பொன்னையும் பணிமுட்டுகளையும்
கொண்டுவந்து, கர்த்தருடைய வீட்டின் பொக்
கிஷங்களிலே வைத்தான்.

## ௮. அதிகாரம்.

௧. தேவாலயத்தினுடைய பிரதிஷ்டையின் பண்டிகை. ௰௨. சாலோமோன் செய்த ஆசீர்வாதம். ௨௨. சாலோமோனுடைய விண்ணப்பம். ௬௨. அவன் செலுத்தின சமாதானபலிகள்.

௧ அப்போது கர்த்தருடைய உடம்படிக்கையின்
பெட்டியைச் சீயோனென்ற தாவீதின் பட்ட
ணத்திலிருந்து ஏறப்பண்ண, சாலோமோன்
இஸ்ரவேலின் மூப்பரையும், இஸ்ரவேல் புத்
திரரிலிருக்கிற பிதாக்களின் பிரபுக்களாகிய
கோத்திரங்களின் தலைவர் அனைவரையும், எரு
சலேமில் இராசாவாகிய சாலோமோன் தன்னி
டத்திலே கூட்டிக்கொண்டான்.

இஸ்ரவேல் மனுஷரெல்லாரும் ஏழாம்மாத ௨
மாகிய எத்தானீம் மாதத்திலிருக்கிற பண்டிகை
யிலே, இராசாவாகிய சாலோமோனிடத்திலே
கூடினார்கள்.—இஸ்ரவேலின் மூப்பரனைவரும் ௩
வந்திருக்கையில், ஆசாரியர் கர்த்தருடைய பெட்
டியை எடுத்து,— பெட்டியையும், ஆசரிப்புக் ௪
கூடாரத்தையும், கூடாரத்திலிருந்த பரிசுத்த
பணிமுட்டுக்களனைத்தையும் சுமந்தார்கள்; ஆசா
ரியரும், லேவியரும், அவைகளைச் சுமந்தேறினார்
கள்.—இராசாவாகிய சாலோமோனும் அவனோடு ௫
டே கூடின இஸ்ரவேல் சபையனைத்துமாய்ப்
பெட்டிக்குமுன்பாக நடந்து, எண்ணிக்கையும்,
கணக்குமில்லாத திரளான ஆடுகளையும் மாடுக
ளையும் பலியிட்டார்கள்.—அப்படியே ஆசாரி ௬
யர்கள் கர்த்தருடைய உடம்படிக்கையின் பெட்
டியைப் பரிசுத்தத்திற்குப் பரிசுத்தமான சந்நிதி
வீடாகிய அதின் தானத்திலே கேருபீன்களு
டைய செட்டைகளின்கீழே கொண்டுவந்து
வைத்தார்கள்.—ஏனெனில் கேருபீன்கள் பெட் ௭
டியிருக்கும் தானத்திலே தங்கள் இரண்டு செட்
டைகளை விரித்து, உயரஇருந்து பெட்டியையும்
அதின் வாரைகளையும் மூடிக்கொண்டிருந்தன.—
வாரைகளின் முனைகள் சந்நிதிஸ்தலத்திற்கு ௮
முன்னான பரிசுத்தஸ்தலத்திலே காணப்படத்
தக்கவிதமாய் அந்த வாரைகளை முன்னுக்கு இ
ழுத்தார்கள்; ஆகிலும் வெளியே அவைகள் கா
ணப்பட்டதில்லை; அவைகள் இந்நாள்வரைக்
கும் அங்கேதானிருக்கின்றன.—இஸ்ரவேல் புத் ௯
திரர் எகிப்துதேசத்திலிருந்து புறப்பட்டபின்
கர்த்தர் அவர்களோடே உடம்படிக்கை பண்ணு
கிறபோது, மோசே ஓரேபிலிருந்து அந்தப்
பெட்டியிலே வைத்த இரண்டு கல்பலகைக
ளே அல்லாமல் அதிலே வேறொன்றும் இருந்த
தில்லை.

அப்போது சம்பவித்ததேதென்றால் ஆசாரியர் ௰
கள் பரிசுத்தஸ்தலத்திலிருந்து புறப்படுகையில்,
மேகமானது கர்த்தருடைய வீட்டை நிரப்பிற்று.-
மேகத்தின்நிமித்தம் ஆசாரியர்கள் ஊழியம்செய் ௰௧
கிறதற்கு நிற்கக்கூடாதேபோயிற்று; ஏனெனில்
கர்த்தருடைய மகிமை கர்த்தருடைய வீட்டை
நிரப்பியிருந்தது.

அப்போது சாலோமோன் இருளிலே வாசம்ப ௰௨
ண்ணுவோமென்று கர்த்தர் சொன்னாரென்றும்,—
தேவரீர் என்றைக்கும் வாசம்பண்ணும் ஸ்தான ௰௩
மாகிய வாசஸ்தல வீட்டை உமக்குக் கட்டவே
கட்டினேனென்றும் சொல்லி, — இராசா தன் ௰௪
முகத்தைத் திருப்பி, இஸ்ரவேல் சபையையெல்
லாம் ஆசீர்வதித்தான்; இஸ்ரவேல் சபையெல்
லாம் நின்றது.—அவன் சொன்னதாவது: என் ௰௫
தகப்பனாகிய தாவீதுக்குத் தம்முடைய வாக்கி
னால் சொன்னதைத் தம்முடைய கரத்தினாலும்
நிறைவேற்றின இஸ்ரவேலின் பராபரனாகிய
கர்த்தர் ஸ்தோத்திரிக்கப்பட்டவர்.-அவர் சொன் ௰௬

னதேதெனில், நாம் நமது சனமாகிய இஸ்ரவேலை
எகிப்திலிருந்து புறப்படப்பண்ணின நாள்மு
தல்கொண்டு நம்முடைய நாமமிருக்கும் வீட்
டைக் கட்டவேண்டுமென்று நாம் இஸ்ரவேலு
டைய எல்லாக் கோத்திரங்களிலுமுள்ள ஒரு
பட்டணத்தையும் தெரிந்துகொள்ளாமல், நம்மு
டைய சனமாகிய இஸ்ரவேலின்மேல் அதிகாரி
யாயிருக்கத் தாவீதையே தெரிந்துகொண்டோ
௰௭ மென்றதுதானே.—இஸ்ரவேலின் பராபரனாகிய
கர்த்தரின் நாமத்திற்கு வீட்டைக் கட்டவேண்டு
மென்று என் தகப்பனாகிய தாவீதுக்கு மனதுமி
௰௮ ருந்தது.—ஆனால் கர்த்தர் என் தகப்பனாகிய தாவீ
துடனே, நம்முடைய நாமத்திற்கு வீட்டைக்
கட்டவேண்டுமென்று நீ உன் மனதிலே நினைத்
௰௯ தது நல்ல மன நிருணயம்தான்.—ஆகிலும் நீ அந்த
வீட்டைக் கட்டாமல், உன் கர்ப்பப்பிறப்பா
கிற உன்னுடைய குமாரனே நம்முடைய நாமத்
திற்கு அந்த வீட்டைக் கட்டுவானென்றார்.—
௨௰ இப்போதும் கர்த்தர் சொல்லியிருக்கிற தம்மு
டைய வார்த்தையைத் திடப்படுத்தினார்; ஏனெ
னில் கர்த்தர் சொன்னபடியே, நான் என் தகப்ப
னாகிய தாவீதின் ஸ்தலத்திலெழும்பி, இஸ்ரவே
லின் இராசாசனத்தின்மேல் உளுக்காந்து, இஸ்ர
வேலின் பராபரனாகிய கர்த்தரின் நாமத்திற்கு
௨௧ வீட்டைக் கட்டி,—கர்த்தர் நம்முடைய பிதாக்
களை எகிப்துதேசத்திலிருந்து புறப்படப்பண்
ணினபோது, அவர்களோடே பண்ணின உடம்
படிக்கையிருக்கிற பெட்டிக்கு அதில் ஒரு தா
னத்தை உண்டாக்கினேனென்றான்.
௨௨ பிற்பாடு சாலோமோன் கர்த்தருடைய பலிபீ
டத்திற்குமுன்னே இஸ்ரவேல் சபைக்கெல்லாம்
எதிராக நின்றுகொண்டு, தன் கைகளை வானத்
௨௩ திற்கு நேராக விரித்துச் சொன்னதாவது:—இஸ்
ரவேலின் பராபரனாகிய கர்த்தாவே, தங்கள் முழு
இருதயத்தாலும் உமக்குமுன்பாக நடக்கிற உம்
முடைய ஊழியக்காரருக்கு உடம்படிக்கையை
யும் கிருபையையும் காக்கிற தேவரீரைப்போல,
உயரப் பரமண்டலங்களிலும் கீழே பூமியிலும்
௨௪ ஒரு தேவனுமில்லை.—தேவரீர் என் தகப்பனாகிய
தாவீதென்ற உம்முடைய ஊழியக்காரனுக்குச்
சொன்னதை, அவனுக்கு வரப்பண்ணினீர்; அ
தை உம்முடைய வாக்கினாலும் சொன்னீர்; இந்
நாளிலிருக்கிறபடி உம்முடைய கரத்தினாலும்
௨௫ நிறைவேற்றினீர்.—இப்போதும் இஸ்ரவேலின்
பராபரனாகிய கர்த்தாவே, நீ நமக்குமுன்பாக
நடந்ததுபோல, உன்னுடைய குமாரர் நமக்கு
முன்பாக நடக்கும்படிக்குத் தங்கள் வழியைக்
காத்தார்களேயானால், இஸ்ரவேலின் இராசாச
னத்தின்மேல் உளுக்காரும் புருஷன் நமக்கு
முன்பாக உனக்கு இல்லாதிருப்பதில்லையென்று
தேவரீர் என் தகப்பனாகிய தாவீதென்ற உம்மு
டைய ஊழியக்காரனுக்குச் சொன்னதை அவ
௨௬ னுக்கு வரப்பண்ணியருளும்.—இப்போதும் இஸ்
ரவேலின் பராபரனே, தேவரீர் என் தகப்பனா
கிய தாவீதென்ற உம்முடைய ஊழியக்காரனுக்

குச் சொன்ன உம்முடைய வார்த்தை மெய்ப்
படுவதாக.
ஆனால் மெய்தான்; பராபரன் பூமியிலே வாச ௨௭
மாயிருப்பாரோ? இதோ வானங்களும் வானங்க
ளின் வானங்களும் உம்மைக் கொள்ளாதே; நான்
கட்டின இந்த வீடு அதற்கு எம்மாத்திரம்?—என் ௨௮
றாலும் என் பராபரனாகிய கர்த்தாவே, உம்மு
டைய அடியான் இன்று உமக்குமுன்பாக விண்
ணப்பம்பண்ணுகிற கூப்பிடுதலையும் வேண்டு
தலையும் கேட்க உம்முடைய அடியானுடைய
வேண்டுதலையும் மன்றாட்டையும் நோக்கியரு
ளும்.—உம்முடைய அடியான் இவ்விடத்திலே ௨௯
செய்யும் விண்ணப்பத்தைக் கேட்க, உம்முடை
ய கண்கள் நம்முடைய நாமம் இருக்குமென்று
நீர் சொன்ன ஸ்தலமாகிய இந்த வீட்டின்மேல்
இரவும்பகலும் திறந்திருப்பதாக.—உம்முடைய ௩௰
அடியானும், இந்த ஸ்தலத்திலே விண்ணப்பம்
பண்ணப்போகிற உம்முடைய சனமாகிய இஸ்
ரவேலும் பண்ணும் செபத்தைக் கேட்பீராக;
ஆம், நீர் பரமண்டலங்களாகிய உம்முடைய வா
சஸ்தலத்திலே அதைக் கேளும், கேட்டு மன்னி
யும்.
ஒருவன் தனக்கடுத்தவனுக்குக் குற்றம்செய் ௩௧
திருக்கையில், இவன் அவனை ஆணை சத்தியம்
பண்ணச்சொல்லும்போது, அந்த ஆணை இந்த
வீட்டிலே உம்முடைய பலிபீடத்திற்குமுன்
வந்தால்,—அப்போது பரமண்டலங்களிலிருக் ௩௨
கிற தேவரீர் கேட்டு, ஆகாதவனுடைய வழியை
அவன் தலையின்மேல் சுமரப்பண்ண அவனை
நேரஸ்தனாகத் தீர்க்கவும் நீதிமானுக்கு அவனு
டைய நீதிக்குத்தக்கதாய்ச் செய்ய அவனை நீதி
விளங்கப்பண்ணவும் நடப்பித்து உம்முடைய
ஊழியக்காரனை நியாயம்தீர்ப்பீராக.
உம்முடைய சனமாகிய இஸ்ரவேல் உமக்கு ௩௩
விரோதமாகப் பாவம்செய்ததினாலே, சத்துருவுக்
குமுன்பாக முறிந்துபோய், உம்மண்டைக்
குத் திரும்பி, உம்முடைய நாமத்தை மகிமைப்
படுத்தி, இந்த வீட்டிலே உம்மைநோக்கி விண்
ணப்பத்தையும் வேண்டுதலையும் செய்தால்,—
பரமண்டலங்களிலிருக்கிற தேவரீர் கேட்டு, உ ௩௪
ம்முடைய சனமாகிய இஸ்ரவேலின் பாவத்தை
மன்னித்து, அவர்கள் பிதாக்களுக்கு நீர் கொடுத்
த சீமைக்கு அவர்களைத் திரும்ப வரப்பண்ணு
வீராக.
அவர்கள் உமக்குப் பாவம்செய்ததினாலே ௩௫
வானம் அடைபட்டு மழைபெய்யாதிருக்கும்
போது, அவர்கள் இந்த ஸ்தலத்திலே விண்ணப்
பம்பண்ணி, உம்முடைய நாமத்தை மகிமைப்
படுத்தி, தேவரீர் தங்களைக் கஸ்திப்படுத்துகை
யால், தங்கள் பாவங்களைவிட்டுத் திரும்பினால்,—
பரமண்டலங்களிலிருக்கிற தேவரீர்கேட்டு, உம் ௩௬
முடைய அடியாரும் உம்முடைய சனமாகிய
இஸ்ரவேலும் செய்த பாவத்தை மன்னித்து, அவர்
கள் நடக்கவேண்டிய நல்வழியை அவர்களுக்
குப் போதித்து, தேவரீர் உம்முடைய சனத்திற்

குச் சுதந்தரமாகக் கொடுத்த உமது தேசத்திற்கு
மழையைக் கட்டளையிடுவீராக.
௩௭ தேசத்திலே பஞ்சம் உண்டாகிறபோது, பெரு
வாரிக்காய்ச்சல் உண்டாகிறபோது, வறட்சி,
சாவி, வெட்டுக்கிளி, பச்சைக்கிளி உண்டாகிற
போது, அவர்கள் சத்துரு தேசத்திலிருக்கிற அவர்
கள் வாசல்களில் அவர்களை முற்றிக்கைபோடுகி
றபோது, எந்த விதமுமான வாதை, எந்த விதமு
௩௮ மான வியாதி வந்திருக்கிறபோது,—உம்முடைய
சனமாகிய இஸ்ரவேலிலெல்லாம் எந்த மனு
ஷனாலும் தன் தன் இருதயத்தின் கஸ்தியை
உணர்ந்து, இந்த வீட்டுக்கு நேராகத் தன் கை
களை விரித்துச் செய்யும் சகல விண்ணப்பத்தை
௩௯ யும், சகல வேண்டுதலையும்,—உம்முடைய வா
சஸ்தலமாகிய பரமண்டலங்களிலிருக்கிற தேவ
௪௰ ரீர் கேட்டு மன்னித்து,—தேவரீர் எங்கள் பிதாக்
களுக்குக் கொடுத்த தேசத்தில் அவர்கள் உயி
ரோடிருக்கும் நாளெல்லாம் உமக்குப் பயப்ப
டும்படிக்கு, தேவரீர் அவனவன் இருதயத்தை அ
றிந்திருக்கிறபடியே, அவனவனுடைய எல்லா
வழிகளுக்கும்தக்கதாக அவனவனுக்குச் செய்து
கட்டளையிடுவீராக; ஏனென்றால் தேவரீர் ஒருவர்
எல்லா மனுப்புத்திரரின் இருதயத்தையும் அறிந்
தவர்.
௪௧ உம்முடைய சனமாகிய இஸ்ரவேல் சாதியல்
லாத அந்நியதேசத்தார் உம்முடைய பெரிய
கீர்த்தியையும், உம்முடைய பலத்த கரத்தையும்,
நீட்டியிருக்கிற உம்முடைய கைப் புயத்தையும்
௪௨ கேள்விப்படுவார்களே.—அப்படிக்கொத்த அந்நி
யசாதியானும், உம்முடைய நாமத்திற்காகத்
தூரதேசத்திலிருந்துவந்து, இந்த வீட்டுக்குமுன்
௪௩ பாக விண்ணப்பம்பண்ணினால்,—உமது வாசஸ்
தலமாகிய பரமண்டலங்களிலிருக்கிற தேவரீர்
அதைக்கேட்டு, பூமியின் சனசதளங்களெல்லாம்
உம்முடைய சனமாகிய இஸ்ரவேலைப்போல
உமக்குப் பயப்படும்படிக்கும், நான் கட்டின
இந்த வீட்டுக்கு உம்முடைய நாமம் தரிக்கப்
பட்டதென்று அறியும்படிக்கும், உம்முடைய
நாமத்தை அறியத்தக்கதாக, அந்த அந்நியசாதி
யான் உம்மை நோக்கிக்கூப்பிடும் எல்லாக்காரி
யத்திற்கும் தக்கதாய்த் தேவரீர் செய்வீராக.
௪௪ உம்முடைய சனம் நீர் தங்களை அனுப்பும் வ
ழியிலே தங்கள் சத்துருவோடு யுத்தம்பண்ணப்
புறப்பட்டு, நீர் தெரிந்துகொண்ட இந்தப் பட்
டணத்திற்கும், உம்முடைய நாமத்திற்கு நான்
கட்டின இந்த வீட்டுக்கும் நேராகக் கர்த்தரை
௪௫ நோக்கி விண்ணப்பம்பண்ணும்போது,—பர
மண்டலங்களிலிருக்கிற தேவரீர் அவர்கள் விண்
ணப்பத்தையும் வேண்டுதலையும் கேட்டு, அவர்
கள் நியாயத்தை விசாரிப்பீராக.
௪௬ பாவம்செய்யாத மனுஷன் இல்லாமலிருக்கிற
படியினாலே, அவர்கள் உமக்கு விரோதமாய்ப்
பாவம்செய்து, தேவரீர் அவர்கள்மேல் கோப
மாகி, அவர்கள் சத்துருக்களுக்கு அவர்களைத் தூ
ரத்திலும் அல்லது சமீபத்திலுமிருக்கிற தங்கள்
தேசத்திற்கு அவர்களைச் சிறைபிடித்துக்கொண்டு
போகிறதற்கு ஒப்புக்கொடுக்கையில்,—அவர்கள் ௪௭
சிறைப்பட்டுப் போயிருக்கிற தேசத்திலே தங்
கள் இருதயங்களில் அதை உணர்ந்து, மனந்தி
ருப்பி, நாங்கள் பாவம்செய்து, அக்கிரமம்பண்
ணி, துன்மார்க்கமாய் நடந்தோமென்று தங்கள்
சிறையிருப்பான தேசத்திலே உம்மை நோக்கி
வேண்டுதல்பண்ணி,—தங்களைச் சிறைபிடித்துக் ௪௮
கொண்ட தங்கள் சத்துருக்களின் தேசத்திலே
தங்கள் முழு இருதயத்தாலும் தங்கள் முழு ஆத்
துமத்தாலும் உம்மண்டைக்குத் திரும்பி, தேவரீர்
தங்கள் பிதாக்களுக்குக் கொடுத்த தங்கள் தேசத்
திற்கும், தேவரீர் தெரிந்துகொண்ட இந்தப் பட்
டணத்திற்கும், உம்முடைய நாமத்திற்கு நான்
கட்டின இந்த வீட்டிற்கும் நேராக உம்மை
நோக்கி விண்ணப்பம்பண்ணும்போது,—உமது ௪௯
வாசஸ்தலமாகியபரமண்டலங்களிலிருக்கிறதே
வரீர் அவர்கள் விண்ணப்பத்தையும் ஜெபத்தை
யும் கேட்டு, அவர்கள் நியாயத்தை விசாரித்து,—
உமக்கு எராமல் பாவம்செய்த உம்முடைய சனத் ௫௰
திற்கு அவர்கள் உமக்கு இரண்டகம்பண்ணின
அவர்கள் துரோகங்களையெல்லாம் மன்னித்து,
அவர்களைச் சிறைபிடித்திருக்கிறவர்கள் அவர்க
ளுக்கு இரங்கத்தக்கதான இரக்கத்தை அவர்க
ளுக்கு இவர்கள்முன்பாகக் கிடைக்கப்பண்ணு
வீராக.— ஏனெனில் அவர்கள் தேவரீர் எகிப் ௫௧
தென்ற இருப்புக்காளவாயின் நடுவிலிருந்து பு
றப்படப்பண்ணின உம்முடைய சனமும் உம்
முடைய சுதந்தரமும் அவர்கள்தானே.—அவர் ௫௨
கள் உம்மைநோக்கிக் கூப்பிடுகிறவைகளிலெல்
லாம் தேவரீர் அவர்களைக்கேட்க, உம்முடைய
கண்கள் உம்முடைய அடியானின் வேண்டுத
லுக்கும், உம்முடைய சனமாகிய இஸ்ரவேலின்
வேண்டுதலுக்கும் திறந்திருப்பதாக.—ஏனெனில் ௫௩
கர்த்தராகிய ஆண்டவரே, நீர் எங்கள் பிதாக்களை
எகிப்திலிருந்து புறப்படப்பண்ணுகையில், உம்
முடைய தாசனாகிய மோசேயைக்கொண்டு
சொன்னபடியே, தேவரீர் பூமியின் சகல சன
சதளங்களிலும் அவர்களை உமக்குச் சுதந்தரமா
கப் பிரித்தெடுத்தீரே என்றான்.
சாலோமோன் கர்த்தரை நோக்கி, இந்தச் ஜெ ௫௪
பத்தையும் வேண்டுதலையுமெல்லாம் விண்ணப்
பம்பண்ணித் தீர்ந்தபிற்பாடோவென்றால், அ
வன் கர்த்தருடைய பலிபீடத்திற்குமுன்பாகத்
தன் முழங்கால்படியிடுகிறதையும், தன் கைகளை
வானத்திற்கு நேராக விரித்திருக்கிறதையும் விட்
டெழுந்திருந்து,
நின்றுகொண்டு, இஸ்ரவேல் சபையையெல் ௫௫
லாம் ஆசீர்வதித்து, உரத்த சத்தத்தோடே சொன்
னதாவது:—தாம் சொன்னபடியெல்லாம் தம்மு ௫௬
டைய சனமாகிய இஸ்ரவேலுக்கு இளைப்பாறுத
லைக் கட்டளையிட்ட கர்த்தர் ஸ்தோத்திரிக்கப்
பட்டவர்; அவர் தம்முடைய தாசனாகிய மோ
சேயைக்கொண்டு சொன்ன அவருடைய நல்ல
வார்த்தைகளிலெல்லாம் ஒரு வார்த்தையாகிலும்

௫௭ விழுந்துபோனதில்லை.—நம்முடைய பராபரனாகிய கர்த்தர் நம்மைக் கைவிடாமலும், நம்மைக் கைநெகிழாமலும், அவர் நம்முடைய பிதாக்களோடு இருந்ததுபோல, நம்மோடும் இருந்து,—
௫௮ நாம் அவருடைய வழிகளிலெல்லாம் நடக்கிறதற்கும், அவர் நம்முடைய பிதாக்களுக்குக் கற்பித்த அவருடைய கற்பனைகளையும், அவருடைய கட்டளைகளையும், அவருடைய நியாயங்களையும் கைக்கொள்ளுகிறதற்கும், நம்முடைய இருதயத்தைத் தம்மண்டையில் சாயப்
௫௯ பண்ணுவாராக. — அவர் தம்முடைய அடியானுடைய நியாயத்தையும், தமது சனமாகிய இஸ்ரவேலின் நியாயத்தையும், ஒவ்வொன்றை அதற்கொத்த காலத்திலே விசாரிப்பதற்கு, நான் கர்த்தருக்குமுன்பாக விண்ணப்பம்பண்ணின இந்த என்னுடைய வார்த்தைகள் இரவும் பகலும் நம்முடைய பராபரனாகிய கர்த்தரிடத்திலே
௬௰ கிட்டியிருப்பதாக.—கர்த்தரே பராபரன், வேறொருவரில்லையென்கிறதைப் பூமியின் சனசதளங்க
௬௧ ளெல்லாம் அறியும்படியாகத்தானே. — ஆனால் இந்நாளில் இருக்கிறதுபோல, நீங்கள் அவர் கட்டளைகளில் நடந்து, அவர் கற்பனைகளைக் கைக்கொள்ள, உங்களிருதயம் நம்முடைய பராபரனாகிய கர்த்தரோடு உத்தமமாய் இருக்கக்கடவதென்றான்.

௬௨ பிற்பாடு இராசாவும் அவனோடேகூட இஸ்ரவேலனைத்தும்,கர்த்தருக்குமுன்பாகப் பலிகளைச்
௬௩ செலுத்தினார்கள்.—சாலோமோன் கர்த்தருக்குச் சமாதானபலிகளாக, இருபத்திராயிரம் மாடுகளையும், நூற்றிருபதினாயிரம் ஆடுகளையும் பலியிட்டான்; இப்படியே இராசாவும் இஸ்ரவேல் புத்திரரனைவரும் கர்த்தருடைய வீட்டைப் பிர
௬௪ திஷ்டைபண்ணினார்கள்.—அன்றைத்தினம் இராசா கர்த்தருடைய வீட்டிற்கு முன்னிருக்கிற பிரகாரத்தின் நடுமையத்தைப் பரிசுத்தம்பண்ணினான்; ஏனென்றால் கர்த்தருக்குமுன்பாக இருக்கிற வெண்கலப்பலிபீடம் சர்வாங்கதகனங்களையும், காணிக்கைகளையும், சமாதானபலிகளின் கொழுப்புகளையும், கொள்ளமாட்டாத சிறிதானபடியினாலே, அங்கே சர்வாங்கதகனங்களையும், காணிக்கைகளையும், சமாதானபலிகளின் கொழுப்புகளையும் செலுத்தினான்.

௬௫ அக்காலத்தில்தானே சாலோமோனும், அவனோடேகூட ஆமாத்தின் எல்லைதுவக்கி எகிப்தின் நதிமட்டும் இருந்துவந்த பெரிய கூட்டமாகிய இஸ்ரவேலனைத்தும் நம்முடைய பராபரனாகிய கர்த்தருக்குமுன்பாக ஏழுநாளும், அதற்குப் பிறகு வேறே ஏழுநாளும், ஆகப் பதினாலுநாளா
௬௬ கப் பண்டிகையை ஆசரித்தார்கள்.—எட்டாம் நாளிலே சனத்திற்கு விடைகொடுத்தனுப்பினான்; அவர்கள் இராசாவை ஆசீர்வதித்து, கர்த்தர் தம்முடைய தாசனாகிய தாவீதுக்கும் தமது சனமாகிய இஸ்ரவேலுக்கும் செய்த எல்லா நன்மைக்காகவும் சந்தோஷமும் மனமகிழ்ச்சியுமாய்த் தங்கள் கூடாரங்களுக்குப் போய்விட்டார்கள்.

## கூ. அதிகாரம்.

க. பராபரன் சாலோமோனுக்குத் தரிசனையாகிச் செய்த உடம்படிக்கை. ௰. சாலோமோன், ஈராம் ஒருவருக்கொருவர் செய்த வெகுமதி. ௰௩. சாலோமோனுடைய அலுவல்களில் புறச்சாதியார் அமஞ்சிவேலைக்காரராயும், இஸ்ரவேலர் மேன்மையுள்ள உத்தியோகஸ்தர்களாயும் இருந்தது. ௨௪. பார்வோனின் குமாரத்தி தனக்காகக் கட்டப்பட்ட வீட்டிற்குப் போனது. ௨௫. சாலோமோனின் வருஷாந்தரப்பலிகள், அவனுடைய கப்பல்கள் ஓப்பீருக்குப்போய்ப் பொன்னைக் கொண்டுவந்தது.

சாலோமோன் கர்த்தருடைய வீட்டையும் க
இராச அரமனையையும் செய்ய, தான் மனதும் விருப்பமுமாயிருந்ததெல்லாவற்றையும் கட்டித் தீர்க்கையில் சம்பவித்ததேதெனில், — கர்த்தர் ௨
கிபேயோனிலே சாலோமோனுக்குத் தரிசனையானதுபோல, இரண்டாம்விசை அவனுக்குத் தரிசனையானார்.

ஆனால் கர்த்தர் அவனோடே சொன்னதாவது: ௩
நீ நமக்குமுன்பாகப் பண்ணின உன் விண்ணப்பத்தையும் உன் வேண்டுதலையும் கேட்டோம்; நீ கட்டின இந்த வீட்டிலே நம்முடைய நாமத்தை என்றைக்கும் வைக்கத்தக்கதாக,அதைப் பரிசுத்தம்பண்ணினோம்; நம்முடைய கண்களும் நம்முடைய இருதயமும் சகலநாளும் அங்கேயிருக்கும்.—நாம் உனக்குக் கற்பித்தபடியெல்லாம் ௪
நீ செய்து, நம்முடைய கட்டளைகளையும் நம்முடைய நியாயங்களையும் கைக்கொள்ளும்படிக்கு, நமக்குமுன்பாக மன உத்தமமும் செம்மையுமாய் உன் தகப்பனாகிய தாவீது நடந்ததுபோல நடந்தாயானால்,—அப்போது இஸ்ரவேலின் இரா ௫
சாசனத்தின்மேல் உளுக்காரும் புருஷன் உனக்கு இல்லாதிருப்பதில்லையென்று உன் தகப்பனாகிய தாவீதோடே நாம் சொன்னபடியே, இஸ்ரவேலின்மேலுள்ள உன் இராச்சியபாரத்தின் ஆசனத்தை என்றைக்கும் நிற்கப்பண்ணுவோம்.—
நீங்களும் உங்கள் பிள்ளைகளும் நம்மைவிட்டுப் ௬
பின்வாங்கி, நாம் உங்களுக்குமுன்பாக வைத்த நம்முடைய கற்பனைகளையும் நம்முடைய கட்டளைகளையும் கைக்கொள்ளாமல் போய், வேறே தேவர்களைச் சேவித்து, அவைகளைப் பணிந்துகொண்டீர்களேயாகில்,—நாம் இஸ்ரவேலுக்குக் ௭
கொடுத்த சீமையிலே அவர்களை வைக்காதபடிக்கு நிர்மூலமாக்கி, நம்முடைய நாமத்திற்கென்று நாம் பரிசுத்தம்பண்ணின இந்த வீட்டை நம்முடைய முகத்தைவிட்டுத் தள்ளுவோம்; அப்போது இஸ்ரவேல் எல்லாச் சனசதளங்களுக்குள்ளும் பழமொழியாகவும் நிந்தமொழியாகவுமிருக்கும்.—அப்போது உயர்ந்திருந்த இந்த வீட் ௮
டைக் கடந்துபோகிறவனெல்லாம் பிரமித்து, பகிடியாய் ஊதி, கர்த்தர் இந்தத் தேசத்திற்கும் இந்த வீட்டிற்கும் இப்படிச் செய்ததென்ன என்று கேட்கிறதற்கு,—அவர்கள் தங்கள் பிதாக் ௯
களை எகிப்துதேசத்திலிருந்து புறப்படப்பண்ணின தங்கள் பராபரனாகிய கர்த்தரைவிட்டு, வேறே தேவர்களைப் பற்றிக்கொண்டு அவைகளை நமஸ்கரித்துச் சேவித்தபடியினாலே, கர்த்தர் இந்

தத் தீங்கையெல்லாம் அவர்கள்மேல் வரப்பண்
ணினாரென்று சொல்லுவார்களென்றார்.

௰ சாலோமோன் இரண்டு வீடுகளாகிய கர்த்தரு
டைய வீட்டையும் இராச அரமனையையும் கட்
டுகிற இருபதுவருஷகாலம் சென்றபோது,—
௰௧ தன்னுடைய எல்லா விருப்பத்திற்கும்தக்கவைக
ளாய், தனக்குக் கேதுருமரங்களையும், பாய்மர
விருட்சங்களையும், பொன்னையும், கொடுத்தி
ருந்த தீருவின் இராசாவாகிய ஈராமுக்கு, இரா
சாவாகிய சாலோமோன் கலிலேயா தேசத்திலி
ருக்கிற இருபது பட்டணங்களைக் கொடுத்தான்.-
௰௨ அப்போது ஈராம் சாலோமோன் தனக்குக் கொ
டுத்த பட்டணங்களைப் பார்க்கிறதற்கு தீருவிலி
ருந்து புறப்பட்டான்; அவைகள் அவன் பார்
௰௩ வைக்கு இராசிப்படாமல்,—என் சகோதரனே,
நீர் எனக்குக் கொடுத்த இந்தப் பட்டணங்கள்
எப்படிக்கொத்தவைகளென்றான்; அவைகள் இந்
நாள்மட்டும் காபூல் தேசமென்னப்படுகின்றன.-
௰௪ ஈராமோவென்றால் இராசாவுக்கு நூற்றிருபது
தாலந்துபொன் அனுப்பியிருந்தான்.

௰௫ இதின்நிமித்தமாகத்தானே சாலோமோனாகிய
இராசா தான் கர்த்தருடைய வீட்டையும், தன்
வீட்டையும், மில்லோவையும், எருசலேமின்
மதிலையும், ஆத்சோரையும், செகிதோவையும்,
கேசேரையும் கட்டுகிறதற்கு வரிபோட்டு வாங்
௰௬ கினான்.—ஏனெனில் எகிப்தின் இராசாவாகிய
பார்வோன் ஏறிவந்து, அந்தக் கேசேர் பட்டணத்
தைப் பிடித்து, அதை அக்கினியால் சுட்டெ
ரித்து, அதிலே குடியிருந்த கானானியரைக் கொன்
றுபோட்டு, அதைச் சாலோமோனின் பெண்சா
தியாகிய தன் குமாரத்திக்குச் சீதனமாகக் கொ
௰௭ டுத்திருந்தான்.—சாலோமோன் அந்தக் கேசேர்
பட்டணத்தையும், தாழ்வான பெத்தொரோனை
௰௮ யும்,—பாலாத்தையும், தேசத்தின் வனாந்தரத்தி
௰௯ லுள்ள தாத்மோரையும்,—தனக்கிருக்கிற இரஸ்
துக்களை வைக்கும் எல்லாப் பட்டணங்களையும்,
இரதங்களிருக்கும் பட்டணங்களையும், குதிரைக்
காரர் இருக்கும் பட்டணங்களையும், தான் எருச
லேமிலும் லீபனோனிலும் தன் இராச்சியமான
தேசமெங்கும் கட்ட, தனக்கிச்சையானவை அ
௨௰ னைத்தையும் கட்டினான்.—இஸ்ரவேல் புத்திரர்
சங்காரம்பண்ணக்கூடாதிருந்த இஸ்ரவேல் புத்
திரரின் சாதி அல்லாத எமோரியர், ஏத்தியர்,
பெரீசியர், ஏவியர், எபூசியருமான சகல சனத்தி
௨௧ லும் மீதியாயிருந்து,—அவர்களுக்குப்பிறகு தே
சத்தில் வைக்கப்பட்ட அவர்களுடைய பிள்ளை
களைச் சாலோமோன் அமஞ்சிவேலைசெய்ய, இந்
௨௨ நாள்வரைக்கும் அடிமைப்படுத்தினான்.—ஆனால்
இஸ்ரவேல் புத்திரரில் ஒருவரையும் சாலோ
மோன் அடிமைப்படுத்தினதில்லை; இவர்கள் யுத்
தமனுஷரும், அவனுடைய ஊழியக்காரரும்,
அவனுடைய பிரபுக்களும், அவனுடைய சேர்
வைக்காரரும், அவனுடைய இரதங்களுக்கும்
அவனுடைய குதிரைக்காரருக்கும் அதிபதிகளு
மாயிருந்தார்கள்.—ஐந்நூற்றைம்பதுபேர் சாலோ ௨௩
மோனின் வேலையை விசாரித்து, வேலைசெய்கிற
சனத்தை ஆளுகிற தலையான விசாரிப்புக்காரரா
யிருந்தார்கள்.

பார்வோனின் குமாரத்தியோவென்றால், தா ௨௪
வீதின் பட்டணத்திலிருந்து சாலோமோன் தனக்
குக் கட்டின தன் வீட்டிலே குடியேறிவந்தாள்;
அப்போது மில்லோவைக் கட்டினான்.

சாலோமோன் கர்த்தரின் வீட்டை முடித்த ௨௫
பிற்பாடு, அவருக்குக் கட்டின பலிபீடத்தின்
மேல் வருஷத்தில் மூன்றுமுறை சர்வாங்கதக
னங்களையும் சமாதானபலிகளையும் செலுத்தி,
கர்த்தரின் சந்நிதிக்குமுன் இருக்கிற பீடத்தின்
மேலே தூபம் காட்டுவித்தான்.

இராசாவாகிய சாலோமோன் ஏதோம் தேசத் ௨௬
தில் நாணல் சமுத்திரக்கரையிலே ஏலோத்தூ
ரின் கிட்ட இருக்கிற எத்சியோன் கேபேரிலே
கப்பல்களையும் செய்வித்தான்.—அந்தக் கப்பல் ௨௭
களில் ஈராம் சாலோமோனுடைய வேலைக்கார
ரோடேகூடச் சமுத்திர யாத்திரையை அறிந்த
கப்பல் மனுஷராகிய தன்னுடைய வேலைக்கார
ரை அனுப்பினான்.—அவர்கள் ஓப்பீருக்கு வந்து, ௨௮
அவ்விடத்திலிருந்து நானூற்று இருபது தாலந்து
பொன்னை இராசாவாகிய சாலோமோனண்டை
க்குக் கொண்டுவந்தார்கள்.

## ௰. அதிகாரம்.

௧. சேபாவின் இராசஸ்திரி சாலோமோனுடைய ஞானத்தைப் புகழ்ந்தது. ௰௪. சாலோமோனுக்கு வரும் பொன். ௰௬. அவர் செய்த பரிசைகள். ௰௮. தந்தத்தினால் செய்த சிங்காசனம். ௨௧. அவருடைய பாத்திரங்கள். ௨௪. அவருக்கு வந்த காணிக்கைகள். ௨௬. அவருடைய இரதங்களும் குதிரைகளும், ௨௮. அவருக்குச் சனங்கள் கொடுக்கப்பட்ட கப்பல்கள்.

கர்த்தருடைய நாமத்திற்காகச் சாலோமோனுக் ௧
கிருந்த கீர்த்தி சேபாவின் இராசஸ்திரிக்குக் கேள்
வியானபோது, அவள் விடுகதைகளினால் அவ
னைச் சோதிக்கிறதற்காக, — மகா பெரிய தண் ௨
டோடும், சம்பாரங்களையும் வெகு திரள் பொன்
னையும் இரத்தினங்களையும் சுமக்கிற ஒட்டகங்
களோடும், எருசலேமுக்கு வந்தாள்; அவள்
சாலோமோனண்டைக்கு வந்தபோது, தன் மன
தில் இருந்ததெல்லாவற்றையும் அவனோடே பே
சினாள்.—அப்போது சாலோமோன் அவள் சொற் ௩
களையெல்லாம் அவளுக்கு விடுவித்தான்; அவ
ளுக்கு விடுவிக்கக்கூடாதபடிக்கு, ஒன்றாகிலும்
இராசாவுக்கு மறைபொருளாயிருந்ததில்லை. —
சேபாவின் இராசஸ்திரி சாலோமோனுடைய ௪
எல்லா ஞானத்தையும், அவன் கட்டின வீட்டை
யும், — அவன் பந்தியின் சாப்பாட்டையும், ௫
அவன் ஊழியக்காரரின் குடியிருப்பையும்,
அவன் வேலைக்காரரின் வரிசையையும், அவர்
கள் வஸ்திரங்களையும், அவனுக்குப் பானம் பரி
மாறுகிறவர்களையும், அவன் கர்த்தருடைய வீட்
டிற்கு ஏறிப்போகிற போக்கையும் காண்கை
யில் அவள் ஆச்சரியத்தால் பிரமைகொண்டு,—
இராசாவோடே சொன்னது: உம்முடைய வர்த் ௬

தமானங்களையும் உம்முடைய ஞானத்தையும்
குறித்து நான் என் தேசத்திலே கேட்ட செய்தி
௭ மெய்யாயிற்று.–நான் வந்து அதை என் கண்கள்
காணும்மட்டும் அந்த வார்த்தைகளை நான் நம்
பாதிருந்தேன்; ஆனால் இதோ இவைகளில் பாதி
யானாலும் எனக்கு அறிவிக்கப்பட்டதில்லை;
நான் கேட்ட கீர்த்தியைப்பார்க்கிலும், உம்மு
டைய ஞானமும் நன்மையும் அதிகமாயிருக்
௮ கின்றன.—உம்முடைய மனுஷர் பாக்கியவான்
கள்; எப்போதும் உமக்குமுன்பாக நின்று, உம்
முடைய ஞானத்தைக் கேட்கிற இந்த உம்மு
௯ டைய ஊழியக்காரர் பாக்கியவான்கள்.–உம்மை
இஸ்ரவேலின் இராசாசனத்தின்மேல் வைக்க,
உம்முடையமேல் பிரியமான உம்முடைய பரா
பரனாகிய கர்த்தர் ஸ்தோத்திரிக்கப்பட்டிருப்பா
ராக; கர்த்தர் இஸ்ரவேலை என்றைக்கும் சிநே
கிக்கிறபடியினாலே, உம்மை நியாயமும் நீதியும்
செய்கிறதற்கு இராசாவாக வைத்தாரென்றாள்.–
௰ அவள் இராசாவுக்கு நூற்றிருபது தாலந்து பொ
ன்னையும், மிகுதியுமான சம்பாரங்களையும், இரத்
தினங்களையும் கொடுத்தாள்; சேபாவின் இரா
சஸ்திரி இராசாவாகிய சாலொமோனுக்குக் கொ
டுத்த அத்தனை சம்பாரங்கள் பிற்பாடு ஒருக்கா
லும் வந்ததில்லை.

௰௧ ஓப்பீரிலிருந்து பொன்னைக் கொண்டுவருகிற
ஈராமின் கப்பல்களும் ஓப்பீரிலிருந்து வெகுதி
ரளாய் வாசனைமரங்களையும் இரத்தினங்களையும்
௰௨ கொண்டுவந்தன. — அந்த வாசனைமரங்களால்
இராசா கர்த்தருடைய வீட்டிற்கும் இராச அரம
னைக்கும் ஊன்றுகால்களையும், பாடுகிறவர்களுக்
காகச் சுரமண்டலங்களையும், தம்புருகளையும்
உண்டாக்கினான்; அப்படிப்பட்ட வாசனைம
ரங்கள் பிற்பாடு இந்நாள்வரைக்கும் வந்ததுமில்
௰௩ லை, காணப்பட்டதுமில்லை.—இராசாவாகிய சா
லொமோன்தானே சந்தோஷமாய்ச் சேபாவின்
இராசஸ்திரிக்குக் கொடுத்ததுமல்லாமல், அவள்
விருப்பப்பட்டுக் கேட்டதெல்லாவற்றையும் அ
வளுக்குக் கொடுத்தான்; அப்படியே அவள் தன்
ஊழியக்காரரோடேகூடத் திரும்பித் தன் தேசத்
திற்குப் போனாள்.

௰௪ சாலொமோனுக்கு மல்லிகைக்காரராலும், சம்
பாரவர்த்தகரின் வர்த்தகத்தினாலும், அரபியா
வின் சகல இராசாக்களாலும், தேசத்தின் துரை
௰௫ களாலும் வரும் பொன் அல்லாமல்,–அவனுக்கு
ஒவ்வொரு வருஷத்தின் வர்த்தனையாக, அறு
நூற்று அறுபத்தாறு தாலந்து நிறையான பொன்
வந்தது.

௰௬ இராசாவாகிய சாலொமோன் தகடாய் அடித்த
பொன்னினாலே இருநூறு பரிசைகளை உண்
டாக்கினான்; ஒவ்வொரு பரிசைக்கு அறுநூறு
சேக்கல்நிறை பொன்னைச் செலவழித்தான்.—
௰௭ தகடாய் அடித்த பொன்னினாலே முந்நூறு கேட
யங்களையும் உண்டாக்கினான்; ஒவ்வொரு கேட
யத்திற்கு மூன்று இராத்தல் பொன்னைச் செலவ
ழித்தான்; அவைகளை இராசா லீபனோன் காட்டு
மரங்களின் வீட்டிலே வைத்தான்.

இராசா தந்தத்தினாலே பெரிய இராசாசனத் ௰௮
தையும் பண்ணுவித்து, அதை அபரஞ்சித்தகட்
டினால் மூடினான்.—அந்த ஆசனத்திற்கு ஆறு ௰௯
படிகள் உண்டாயிருந்தன; ஆசனத்தின் தலை
பின்னாக வளைவாயிருந்தது; உளுக்காரும் இடத்
திற்கு இருபுறமும் கைச்சாய்மானங்களிருந்தன;
இரண்டு சிங்கங்களும் கைச்சாய்மானங்கள் அரு
கே நின்றன.—ஆறு படிகளின்மேலும், இந்தப் ௨௰
பக்கத்திலும், அந்தப்பக்கத்திலும், பன்னிரண்டு
சிங்கங்கள் நின்றன; எந்த இராச்சியங்களிலும்
அப்படிப் பண்ணப்பட்டிருந்ததில்லை.— இரா ௨௧
சாவாகிய சாலொமோனுக்கிருந்த குடிக்கும்
பாத்திரங்களெல்லாம் பொன்னும், லீபனோன்
காட்டுமரங்களுடைய வீட்டின் பணிமுட்டுக
ளெல்லாம் அபரஞ்சியுமாயிருந்தன; ஒன்றாகி
லும் வெள்ளி அல்ல; ஏனெனில் இது சாலொ
மோனின் நாள்களில் ஒரு பொருட்டாய் எண்
ணப்பட்டதில்லை.—ஏனெனில் இராசாவுக்குச் ௨௨
சமுத்திரத்திலே ஈராமின் கப்பல்களோடேகூ
டத் தர்சீசின் கப்பல்கள் உண்டாயிருந்தன; தர்சீ
சின் கப்பல்கள் மூன்றுவருஷங்களில் ஒருதரம்
பொன்னையும், வெள்ளியையும், யானைத்தந்தங்
களையும், குரங்குகளையும், மயில்களையும் கொண்
டுவந்தன.

பூமியின் இராசாக்களெல்லாரையும் பார்க்க, ௨௩
இராசாவாகிய சாலொமோன் ஐசுவரியத்திலும்
ஞானத்திலும் பெரியவனாயிருந்தான்.–பராபரன் ௨௪
சாலொமோனின் இருதயத்திலே கொடுத்த அவ
னுடைய ஞானத்தைக் கேட்கிறதற்காக, சகல
தேசத்தாரும் அவன் முகதரிசனையைத் தேடினார்
கள்.—அவரவர் வருஷத்திற்கு வருஷம் தங்கள் ௨௫
காணிக்கையாகிய வெள்ளித் தட்டுமுட்டுகளை
யும், பொன் தட்டுமுட்டுகளையும் வஸ்திரங்களை
யும், ஆயுதங்களையும் சம்பாரங்களையும், குதிரை
களையும், கோவேறு கழுதைகளையும் கொண்டு
வருவார்கள்.

சாலொமோன் இரதங்களையும் குதிரைக்கார ௨௬
ரையும் சேர்த்தான்; அவனுக்கு ஆயிரத்துநானூறு
இரதங்களும், பன்னீராயிரம் குதிரைக்காரரின்
இராணுவங்களும் இருந்தன; அவைகளை இரா
சா இரதங்களுடைய பட்டணங்களிலும் எருச
லேமிலே தன்னிடத்திலும் வைத்தான்.

இராசாவானவன் எருசலேமிலே வெள்ளி ௨௭
யைக் கல்களத்தனையும் கேதுருமரங்களைப் பள்
ளத்தாக்குகளில் இருக்கிற காட்டத்திமரங்களத்
தனையும் ஆக்கினான்.–சாலொமோனுக்கிருக்கிற ௨௮
குதிரைகளும் புடவைகளும் எகிப்திலிருந்து
கொண்டுவரப்பட்டன; இராசாவின் வர்த்தகர்
புடவைகளை ஒப்பந்த விலைக்கிரயத்திற்கு வாங்
கினார்கள்.–எகிப்திலிருந்து ஏறிவந்த ஒவ்வொரு ௨௯
இரதத்தின் விலை அறுநூறு வெள்ளிக்காசும், ஒவ்
வொரு குதிரையின் விலை நூற்றைம்பது வெள்
ளிக்காசுமாயிருந்தது; அந்தப்பிரகாரமாக ஏத்தி

யரின் இராசாக்களெல்லாருக்கும், சூரியாவின்
இராசாக்களுக்கும், அவர்கள் முகாந்தரமாய்க்
கொண்டுவரப்பட்டது.

## யக. அதிகாரம்.

க. சாலொமோனுடைய மனைவாட்டிகளும், வைப்பாட்டிகளும், ச. அவன் முதிர்வயதில் அவனை விக்கிரகாராதனை செய்ய அவர்கள் ஏவினது. கூ. பராபரன் அவனைப் பயமுறுத்தினது. யச. முன் எகிப்துக்கு ஓடிப்போன ஆதாதும், உக. தமஸ்குவை ஆண்ட ரேசோனும், உக. அகியாவின் தீர்க்கதரிசனத்தால் இராச்சியம் வருவதை அறிந்த எரொபெயாமும் சாலொமோனை விரோதித்தது. சக. சாலொமோனுடைய நடக்கைகளும், ஆளுகையும், மரணமும, ரேகொபோவாம அவனுக்குப்பின் அரசாண்டதும்.

க இராசாவாகிய சாலொமோனோவெனில், பார்
வோனின் குமாரத்தியை அல்லாமல், மோவாபி
யரும், அம்மோனியரும், ஏதோமியரும், சீதோ
னியரும், ஏத்தியருமாகிய அந்நியசாதியாரான
உ அநேகம் ஸ்திரிகளைச் சிநேகித்தான். — நீங்கள்
அவர்களண்டைக்கும் அவர்கள் உங்களண்டை
க்கும் பிரவேசிக்கவேண்டாம்; அவர்கள் நிச்சய
மாய் உங்கள் இருதயத்தைத் தங்கள் தேவர்கள்
பிறகாலே சாயப்பண்ணுவார்களென்று கர்த்தர்
இஸ்ரவேல் புத்திரனாக்குறித்துச் சொன்ன புற
ச்சாதிகளான அந்த ஸ்திரிகளோடே சாலொ
ங மோன் சிநேக இணக்கமாயிருந்தான்.—அவனு
க்குப் பிரபுக்கள் குலமான எழுநூறு பெண்சா
திகளும் முந்நூறு வைப்பாட்டிகளும் இருந்தா
ர்கள்; அந்த அவனுடைய ஸ்திரிகள் அவன் இரு
ச தயத்தைச் சாயப்பண்ணினார்கள். — அதெதெ
னில் சாலொமோன் பெரிய வயதாகிறபோது,
அவனுடைய பெண்சாதிகள் அவன் இருதயத்
தை வேறே தேவர்கள் பிறகாலே சாயப்பண்ணி
னார்கள்; ஆனதுகொண்டு அவனுடைய இருதயம்
அவன் தகப்பனாகிய தாவீதின் இருதயத்தைப்
போல, தன் பராபரனாகிய கர்த்தரோடே உத்த
ரு மமாயிருந்ததில்லை.-ஏனென்றால் சாலொமோன்
சீதோனியரின் தேவியாகிய அஸ்தரோத்தையும்,
அம்மோனியரின் அருவருப்பாகிய மில்கோமை
சு யும் பின்பற்றினான்.-அப்படியே சாலொமோன்
தன் தகப்பனாகிய தாவீதைப்போல கர்த்தனைப்
பூரணமாய்ப் பின்பற்றிக்கொண்டிராமல், கர்த்
தரின் பார்வைக்குப் பொல்லாப்பானதைச் செ
எ ய்தான்.—அப்போது சாலொமோன் எருசலே
முக்கு எதிரான பர்வதத்திலே மோவாபியரின்
அருவருப்பாகிய காமோசுக்கும், அம்மோன் புத்
திரரின் அருவருப்பான மோளோகுக்கும் மே
அ டையைக் கட்டி,—இந்தப்பிரகாரமாகத் தங்கள்
தேவர்களுக்குத் தூபங்காட்டி, பலியிடுகிற அந்
நியசாதியாரான தன்னுடைய எல்லா ஸ்திரிகளு
க்காகவும் செய்தான்.
கூ ஆகையால் சாலொமோன் தனக்கு இரண்டு
விசை தரிசனையாகி, வேறே தேவர்களைப் பின்
பற்றாதபடிக்கு, இந்தக் காரியமாய்த் தனக்குக்
கற்பனைதந்த இஸ்ரவேலின் பராபரனாகிய கர்த்
ய தனைவிட்டு, தன் இருதயத்தைத் திருப்பி,-கர்த்தர்
கற்பித்ததைக் கைக்கொள்ளாமல் போனதற்காக
யக கர்த்தர் அவன்மேல் கோபமானார்.—ஆகையால்
கர்த்தர் சாலொமோனுக்குச் சொன்னதாவது:
நாம் உனக்குக் கற்பித்த நம்முடைய உடம்ப
டிக்கையையும் நம்முடைய கட்டளைகளையும் நீ
கைக்கொள்ளாமல் போன இந்தக் காரியம் உன்
னிடத்தில் இருந்தபடியினாலே, நாம் இராச்சி
யபாரத்தை உன்னிடத்திலிருந்து பிடுங்கவேபி
டுங்கி, அதை உன் ஊழியக்காரனுக்குக் கொடுப்
போம்.—ஆகிலும் உன் தகப்பனாகிய தாவீதின் யஉ
நிமித்தம், நாம் அதை உன் நாள்களிலே செய்
வதில்லை; உன் குமாரனுடைய கையிலே அதை
ப்பிடுங்குவோம். — ஆனால் இராச்சியபாரத்தை யங
யெல்லாம் நாம் பிடுங்காமல், நம்முடைய தாசனா
கிய தாவீதின் நிமித்தமும், நாம் தெரிந்துகொண்
ட எருசலேமின் நிமித்தமும், ஒரு கோத்திரத்தை
நாம் உன் குமாரனுக்குக் கொடுப்போமென்றார்.
கர்த்தர் ஏதோமியனாகிய ஆதாதென்ற ஒரு யச
விரோதக்காரனையும் சாலொமோனுக்கு எழுப்
பினார்; இவன் ஏதோமிலிருந்த இராசாவின் வித்
தானவன்.—ஏனென்றால் தாவீது ஏதோமிலிரு யரு
க்கும்போதும் படைத்தலைவனாகிய யோவாப்
வெட்டுண்டவர்களை அடக்கம்பண்ண ஏறிப்
போய், ஏதோமிலுள்ள ஆண்சாதிகளையெல்லாம்
சங்கரித்து,—அவர்களையெல்லாம் சங்கரிக்கும யசு
ளவும், தானும் இஸ்ரவேலனைத்தும் அங்கே ஆறு
மாதம் இருக்கும்போதும்,—ஆதாதும் அவனோ யஎ
டேகூட அவன் தகப்பனுடைய ஊழியக்கார
ரில் சில ஏதோமியரும் எகிப்திற்குப் போக
ஓடிப்போனார்கள்; ஆதாத் அப்போது ஒரு சிறு
பிள்ளையாயிருந்தான். — அவர்கள் மீதியானிலி யஅ
ருந்து எழுந்துபோய், பாரானுக்கு வந்து, பாரா
னிலே மனுஷரைக் கூட்டிக்கொண்டு, எகிப்தி
லே பார்வோனென்ற எகிப்தின் இராசாவண்
டைக்கு வந்தார்கள்; இவன் அவனுக்கு ஒரு வீட்
டைக் கொடுத்து, அவனுக்கு ஆகாரத்தைத் திட்
டம்பண்ணி, ஒரு சீமையைக் கட்டளையிட்
டான்.—ஆதாதுக்குப் பார்வோனின் கண்களில் யகூ
மிகுந்த தயைகிடைத்தபடியினாலே, இவன் அவ
னுக்கு இராசஸ்திரியாகிய தாப்பெனேசென்ற
இராசஸ்திரியாகியதன்னுடையபெண்சாதியின்
சகோதரியைக் கொடுத்தான்.—தாப்பெனேசின் உய
சகோதரியாகிய இவள் அவனுக்குக் கேனுபாத்
தென்ற ஒரு குமாரனைப் பெற்றாள்; அவனைத்
தாப்பெனேசு பார்வோனின் வீட்டிலே வளர்
த்தாள்; அப்படியே கேனுபாத் பார்வோனின்
வீட்டில் அவனுடைய குமாரருக்குள்ளே இரு
ந்தான்.
தாவீது தன் பிதாக்களோடே நித்திரை அடை உக
ந்தானென்றும், படைத்தலைவனாகிய யோவாப்
செத்துபோனானென்றும், எகிப்திலே ஆதாத்
கேட்டபோது, ஆதாத் பார்வோனுடனே, நான்
என் சீமைக்குப்போக என்னை அனுப்புமென்
றான். — பார்வோன் அவனுடனே, இதோ நீ உஉ
உன் சீமைக்குப் போகப்பார்க்கிறதற்கு, என்
னிடத்திலே உனக்கு என்ன குறைச்சல் இருக்
கின்றதென்றான்; அதற்கு அவன் ஒன்றுமில்லை
என்றாலும் என்னை அனுப்புமென்றான்.

உ௩ எலியாதாவின் குமாரனாகிய ரேசோனென்ற
வேறொரு விரோதக்காரனையும் பராபரன் அவ
னுக்கு எழுப்பினார்; இவன் தன் ஆண்டவனா
கிய ஆதாதேசேரென்ற சோபாவின் இராசாவை
உ௪ விட்டு ஓடிப்போய்,-தாவீது அவன் மனுஷரைக்
கொன்றுபோடுகையிலே, தன்னோடே மனுஷ
ரைச் சேர்த்துக்கொண்டு,அந்தக் கூட்டத்திற்குத்
தலைவனானான்; அவர்கள் தமஸ்குவுக்குப் போய்,
அங்கே குடியிருந்து, தமஸ்குவில் இராச்சிய
உ௫ பாரம்பண்ணினார்கள். — ஆதாத் செய்த பொல்
லாப்பல்லாமல், ரேசோன் சாலோமோனுடைய
நாளெல்லாம் இஸ்ரவேலுக்கு விரோதக்காரனா
யிருந்து, இஸ்ரவேலை அருவருத்து, சூரியாவின்
மேல் இராசாவாயிருந்தான்.
உ௬ சேரேதா ஊரானும் எப்பிராயீம் மனுஷனு
மான நேபாத்தின் குமாரன் எரோபெயாமென்ற
சாலோமோனின் ஊழியக்காரனும் இராசாவுக்கு
விரோதமாய்க் கை எடுத்தான்; அவனுடைய தாய்
செரூகாளென்று பேருள்ள ஒரு கைம்பெண்சா
உ௭ தியாயிருந்தாள்.—அவன் இராசாவுக்கு விரோத
மாய்க் கையெடுத்த முகாந்திரம் என்னவெனில்,
சாலோமோன் மில்லோவைக் கட்டி, தன் தகப்
பனாகிய தாவீதுடைய பட்டணத்தின் இடிதல்
உ௮ களைப் பழுதுபார்க்கிறபோது,-எரோபெயாமெ
ன்றவன் பராக்கிரமசாலியாயிருந்தான்; அவன்
வேலையை நடப்பிக்கத்தக்க வாலிபனென்று
சாலோமோன் கண்டு, யோசேப் வீட்டாரின்
பாரத்தையெல்லாம் அவன் விசாரிப்புக்கு ஒப்பு
வித்தான்.
உ௯ அக்காலத்திலே சம்பவித்ததேதென்றால்,எரோ
பெயாம் எருசலேமிலிருந்து புறப்படுகையில்,
சீலோனியனான அகீயாவென்ற தீர்க்கதரிசி
புதுச்சால்வையைப் போர்த்துக்கொண்டிருந்து
வழியிலே அவனைக் கண்டுபிடித்தான்; இருவ
௩௰ ரும் வெளியிலே தனித்திருக்கையில்,—அகீயா
போர்த்துக்கொண்டிருக்கிற அந்தப் புதுச்சால்
வையைப் பிடித்து, அதைப் பன்னிரண்டு துண்
௩௧ டாகக் கிழித்துவிட்டு, — எரோபெயாமுக்குச்
சொன்னதாவது: பத்துத் துண்டுகளை எடுத்துக்
கொள்; ஏனென்றால் இஸ்ரவேலின் பராபரனா
கிய கர்த்தர் சொல்லுகிறதேதெனில், இதோ
நாம் இராச்சியபாரத்தைச் சாலோமோனுடைய
கையில் எடுத்துக் கிழித்து, உனக்குப் பத்துக்
௩௨ கோத்திரங்களைக் கொடுப்போம்.—ஆனால் நம்
முடைய தாசனாகிய தாவீதுக்காகவும், நாம் இஸ்
ரவேல் கோத்திரங்களில் எல்லாம் தெரிந்து
கொண்ட எருசலேம்பட்டணத்திற்காகவும்,ஒரு
௩௩ கோத்திரம் அவனுக்கு இருக்கும். — அவர்கள்
நம்மைவிட்டு, சீதோனியரின் தேவியாகிய அஸ்
தரோத்தையும், மோவாபின் தேவனாகிய காமோ
சையும், அம்மோன் புத்திரரின் தேவனாகிய மில்
கோமையும் பணிந்துகொண்டு, அவன் தகப்ப
னாகிய தாவீதைப்போலே நம்முடைய பார்வை
க்குச் செம்மையாயிருக்கிறதைச் செய்யவும், நம்
முடைய கட்டளைகளையும் நம்முடைய நியா
யங்களையும் கைக்கொள்ளவும், அவர்கள் நம்மு
டைய வழிகளில் நடவாதே போனபடியினாலே
அப்படிச் செய்வோம்.—ஆனால் இராச்சியபாரத் ௩௪
தையெல்லாம் நாம் அவன் கையிலேதானே
எடுப்பதில்லை; நாம் தெரிந்துகொண்டவனும்,
நம்முடைய கற்பனைகளையும் நம்முடைய கட்
டளைகளையும் கைக்கொண்டவனுமான நம்மு
டைய தாசனாகிய தாவீதின்நிமித்தம், அவனை
அவன் உயிரோடிருக்கும் நாளெல்லாம் அதிபதி
யாகவைத்து,—அந்த இராச்சியபாரத்தை அவன் ௩௫
குமாரன் கையில் எடுத்து, பத்துக் கோத்திரங்க
ளாகிய அதை உனக்குக் கொடுத்து,—நாம் நம் ௩௬
முடைய நாமத்தை வைக்கும்படிக்குத் தெரிந்து
கொண்ட பட்டணமாகிய எருசலேமிலே நம்
முடைய முகத்திற்குமுன்பாக நம்முடைய தா
சனாகிய தாவீதுக்குச் சகலநாளும் ஒரு விளக்கு
இருக்கத்தக்கதாக, அவன் குமாரனுக்கு ஒரு
கோத்திரத்தைக் கொடுப்போம். — நீ உன் ஆத் ௩௭
துமா இச்சிப்பதையெல்லாம் ஆண்டுகொண்டு,
இஸ்ரவேலின்மேல் இராசாவாய் இருப்பதற்காக
உன்னை எடுப்போம். —நாம் உனக்குக் கற்பித்த ௩௮
தையெல்லாம் நீ கேட்டுக் கைக்கொண்டு, நீ நம்
முடைய வழிகளில் நடந்து, நம்முடைய தாச
னாகிய தாவீது செய்ததுபோல, நம்முடைய கட்
டளைகளையும் நம்முடைய கற்பனைகளையும் கைக்
கொள்ளும்படிக்கு நம்முடைய பார்வைக்குச்
செம்மையானதைச் செய்கிறதுண்டானால், நாம்
உன்னோடிருந்து, நாம் தாவீதுக்குக் கட்டினது
போல உனக்கு நிலைநிற்கிற வீட்டைக் கட்டி,
இஸ்ரவேலை உனக்குக் கட்டளையிடுவோம்.—
இப்படி நாம் அந்தக் காரியத்தின்நிமித்தம் தாவீ ௩௯
தின் வித்தாரைச் சிறுமைப்படுத்துவோம்; ஆகி
லும் எல்லாநாளும்அல்லவென்றாரென்று சொன்
னான்.—ஆனதுகொண்டு சாலோமோன் எரோ ௪௰
பெயாமைக் கொன்றுபோடப் பார்த்தான்; ஆ
னால் எரோபெயாம் எழுந்து, எகிப்திற்குச்
சீசாக்கென்ற எகிப்தின் இராசாவண்டையில்
ஓடிப்போய், சாலோமோன் மரணம் அடையும்
மட்டும் எகிப்தில் இருந்தான்.
சாலோமோனின் மற்ற வர்த்தமானங்களும், ௪௧
அவன் செய்தவை அனைத்தும், அவனுடைய
ஞானமும், சாலோமோனுடைய நடபடிப் புஸ்
தகத்திலல்லவோ எழுதியிருக்கின்றது.-சாலோ ௪௨
மோன் எருசலேமிலே இஸ்ரவேலையெல்லாம்
அரசாண்ட நாள்கள் நாற்பதுவருஷம்.-சாலோ ௪௩
மோன் தன் பிதாக்களோடே நித்திரை அடைந்
து, தன் தகப்பனாகிய தாவீதின் பட்டணத்தில்
அடக்கம்பண்ணப்பட்டான்; அவன் குமாரனா
கிய ரெகாபெயாம் அவன் ஸ்தலத்தில் இராசா
வானான்.

## ௰உ. அதிகாரம்.

க. சீகேமிலே ரெகாபெயாமை முடிசூட்டவந்த இஸ்ரவேலர் அவனுக்கு எரோபெயாமினால் விண்ணப்பம்செய்தது. ௬. மூப்பருடைய ஆலோசனையைத் தடுத்து,வாலிபருடைய புத்தியின்படி ரெகாபெயாம் அவர்களுக்குக் கடினமான உத்தரவு கொடுத்தது. ௰. பத்துக் கோத்திரத்தார் கலகஞ்செய்து, அதோராமைக் கொன்று, ரெகாபெயாமை ஓடிப்போ

கப்பண்ணினது. ௨௧. ரெகொபெயாம் சேனையைக் கூட்டும்போது, செமாயாவினுல் தடுக்கப்பட்டது. ௨௯. எரோபெயாம் பட்டணங்களைக் கட்டி, ௨௮. இரண்டு கன்றுக்குட்டிகளுக்கு விக்கிரகாராதனை செய்து, பலவானது.

௧ ரெகொபெயாம் சீகேமுக்குப் போனுன்; ஏனெ
னில் அவனை இராசாவாக்கும்படிக்கு, இஸ்ர
வேலெல்லாம் சீகேமுக்கு வந்தன.

௨ இராசாவாகிய சாலோமோனை விட்டோடிப்
போய், எகிப்திலே குடியிருக்கிற நேபாத்தின்
குமாரன் எரோபெயாமோவென்றுல், எகிப்திலி
௩ ருக்கையில் அதைக் கேட்டபோது,—அவர்கள்
அவனை அழைத்தனுப்பினதற்கு வந்தான்;பிற்பா
டு எரோபெயாமும் இஸ்ரவேல் சபை அனைத்தும்
௪ வந்து,ரெகொபெயாமோடே பேசி,-உம்முடைய
தகப்பன் எங்கள் நுகத்தடியைக் கடினமாக்கி
ஞர்; இப்போதும் நீர் உம்முடைய தகப்பனு
டைய கடினமான வேலையையும், அவர் எங்கள்
மேல் வைத்த அவருடைய பாரமான நுகத்தடி
யையும் லகுவாக்கும், அப்போது உம்மைச் சே
௫ விப்போமென்றுர்கள்.-அவன் அவர்களுடனே
நீங்கள் போய், மூன்றுநாள் பொறுத்து என்னண்
டைக்குத் திரும்பிவாருங்களென்றுன்; அப்ப
டியே சனம் போனுர்கள்.

௬ அப்போது இராசாவாகிய ரெகொபெயாம் தன்
தகப்பனுகிய சாலோமோன் உயிரோடிருக்கை
யில் அவனுக்குமுன்பாக நின்ற மூப்பரோடே
ஆலோசனை பண்ணி, இந்தச் சனத்திற்கு மறுவுத்
தரவுகொடுக்க, நீங்கள் எப்படிப்பட்ட ஆலோ
சனை சொல்லுகிறீர்களென்று கேட்டான. —
௭ அவர்கள் அவனுடனே, நீர் இன்று இந்தச் சனத்
திற்கு ஊழியக்காரனுகி, அவர்களுக்கு இணங்கி,
அவர்களுக்குப் பிரதியுத்தாரமாக நல்ல வார்த்
தைகளைச் சொன்னுல் சகலநாளும் அவர்கள்
உமக்கு ஊழியக்காரராயிருப்பார்கள் என்றுர்
கள்.

௮ ஆனுல் மூப்பர் தனக்குக் கொடுத்த ஆலோச
னையை அவன் விட்டு, தன்னேடே வளர்ந்த
தனக்குமுன்பாக நிற்கிற வாலிபரோடே ஆலோ
௯ சனைபண்ணி,—அவர்களுடனே, உம்முடைய
தகப்பன் எங்கள்மேல் வைத்த நுகத்தடியை லகு
வாக்குமென்று என்னேடே சொன்ன இந்தச்
சனத்திற்கு மறுவுத்தரவுகொடுக்க, நீங்கள் எப்ப
டிப்பட்ட ஆலோசனை சொல்லுகிறீர்கள் என்
௰ றுன். — அப்போது அவனேடே வளர்ந்த
வாலிபர் அவனேடே சொன்னதாவது: உம்மு
டைய தகப்பன் எங்கள் நுகத்தடியைப் பாரமாக்
கினுர்; நீர் அதை எங்களுக்கு லகுவாக்கு
மென்று உம்மோடே சொன்ன இந்தச் சனத்
திற்கு நீர் சொல்லவேண்டியதேதெனில், என்
சுண்டுவிரல் என் தகப்பனுருடைய இடுப்பைப்
௰௧ பார்க்கிலும் பருமனுயிருக்கும். — இப்போதும்
என் தகப்பனுர் பாரமான நுகத்தடியை உங்கள்
மேல் சுமத்தினுர்; நான் உங்கள் நுகத்தடியை
அதிக பாரமாக்குவேன்; என் தகப்பனுர் உங்
களைச் சவுக்குகளாலே தண்டித்தார்; நானேவெ
னில் தேள்களினுலே உங்களைத் தண்டிப்பே
னென்று நீர் அவர்களோடே சொல்லவேண்டு
மென்றுர்கள்.

மூன்றும்நாளிலே என்னண்டைக்குத் திரும் ௰௨
பிவாருங்களென்று இராசா சொன்னபடியே,
எரோபெயாமும் சகல சனமும் மூன்றும்நாளி
லே ரெகொபெயாமண்டைக்கு வந்தபோது,—
இராசா சனத்திற்குக் கடின உத்தரவுகொடுத்து, ௰௩
மூப்பர் தனக்குச் சொன்ன ஆலோசனையை
விட்டு,—வாலிபருடைய ஆலோசனையின்படி ௰௪
யே அவர்களோடேபேசி,என் தகப்பன் உங்கள்
நுகத்தடியைப் பாரமாக்கினுர்; நான் உங்கள்
நுகத்தடியை அதிக பாரமாக்குவேன்; என் தகப்
பன் உங்களைச் சவுக்குகளாலே தண்டித்தார்;
நானேவெனில் தேள்களினுலே உங்களைத் தண்
டிப்பேனென்று சொல்லி,

இராசா சனத்திற்குக் கேள்விகொடாதேபோ ௰௫
யினுன்; ஏனென்றுல் கர்த்தர் சீலோனியனுன
அகியாவைக்கொண்டு நேபாத்தின் குமாரனு
கிய எரோபெயாமுக்குச் சொன்ன தம்முடைய
வார்த்தையைத் திடப்படுத்தும்படிக்குக் கர்த்த
ரால் இப்படிப் புரளப்பட்டது.—இராசா தங்க ௰௬
ளுக்குச் செவிகொடாததை இஸ்ரவேலெல்லாம்
கண்டபோது, சனம் இராசாவுக்கு மறுவுத்தர
வாக, தாவீதோடே எங்களுக்குப் பங்கேது?
ஈசாயின் குமாரனேடே எங்களுக்குச் சுதந்தர
மில்லை; இஸ்ரவேலே உன் கூடாரங்களுக்குப்
போய்விடு; இப்போதும் தாவீதே, உன் வீட்
டைப் பார்த்துக்கொள்ளென்று சொல்லி, இஸ்ர
வேலர் தங்கள் கூடாரங்களுக்குப் போய்விட்
டார்கள்.—ஆனுல் யூதாவின் பட்டணங்களிலே ௰௭
குடியிருந்த இஸ்ரவேல் புத்திரரின்மேலே ரெகொ
பெயாம் இராசாவாயிருந்தான்.

அப்போது இராசாவாகிய ரெகொபெயாம் பகு ௰௮
திவிசாரிப்புக்காரனுகிய அதோராமை அனுப்பி
னுன்; ஆனுல் இஸ்ரவேலெல்லாம் அவனைக்
கல்லெறிந்து கொன்றுர்கள்; அப்போது இரா
சாவாகிய ரெகொபெயாம் எருசலேமுக்கு ஓடிப்
போகத் தீவிரமாய் இரதத்தின்மேல் ஏறிப்போ
னுன்.—அப்படியே இஸ்ரவேல் இந்நாள்வரைக் ௰௯
கும் தாவீதின் வீட்டைவிட்டு மருளவிழுந்திருக்
கிறுர்கள்.

எரோபெயாம் திரும்பிவந்தானென்று இஸ்ர ௨௰
வேலுக்கெல்லாம் கேள்வியானபோது,அவனைச்
சபை அண்டைக்கு அழைச்சனுப்பி, அவனை
இஸ்ரவேலின்மேலெல்லாம் இராசாவாக்கினுர்
கள்; யூதாகோத்திரம்மாத்திரமே அல்லாமல் வே
றொருவரும் தாவீதின் வீட்டைப் பின்சென்ற
தில்லை.

ரெகொபெயாம் எருசலேமுக்கு வந்தபோது, ௨௧
இஸ்ரவேல் வீட்டாரோடே யுத்தம்பண்ணவும்,
இராச்சியத்தைச் சாலோமோனின் குமாரனுகிய
தன்னிடமாகத் திருப்பிக்கொள்ளவும், யூதாவீட்
டார்பென்யமீன்கோத்திரத்தார் அனைவருமாகிய

தெரிந்துகொள்ளப்பட்ட யுத்தம் செய்யத்தக்க
நூற்றெண்பதினாயிரம்பேரைக் கூட்டிக்கொண்
௨௨ டான்.—ஆனால் பராபரனுடைய மனுஷனாகிய
சேமாயாவுக்குப் பராபரனுடைய வார்த்தை யுண்
௨௩ டாகி, அவர் சொன்னதாவது:—நீ யூதாவின் இரா
சாவாகிய ரெகொபெயாமென்ற சாலோமோனின்
குமாரனுக்கும், யூதாவீட்டார் அனைவருக்கும்,
பென்யமீனுக்கும், மற்றுண்டான சனத்திற்
௨௪ கும்,—நீங்கள் ஏறிப்போகாமலும், இஸ்ரவேல்
புத்திரரான உங்கள் சகோதரரோடு யுத்தம்பண்
ணாமலும், அவரவர் தம்தம் வீட்டிற்குத் திரும்புங்
கள்; ஏனெனில் நம்மாலே இந்தக் காரியம் நடந்த
தென்று கர்த்தர் உரைக்கிறாரென்று சொல்லென்
றார்; அப்போது அவர்கள் கர்த்தருடைய சொல்
கேட்டு, கர்த்தருடைய வார்த்தையின்படியே
போய்விடத் திரும்பினார்கள்.
௨௫ எரோபெயாம் எப்பிராயீம் மலைத்தேசத்தில்
சீகேமைக் கட்டி, அதிலே வாசம்பண்ணி, அங்
கேயிருந்து புறப்பட்டுப் பெனூவேலைக் கட்டி
௨௬ னான்.—ஆனால் எரோபெயாம் தன் மனதிலே
இப்போது இராச்சியபாரம் தாவீது வீட்டுவச
௨௭ மாய்த் திரும்புமென்றும்,—இந்தச் சனம் எருச
லேமிலிருக்கிற கர்த்தரின் வீட்டிலே பலிகளைச்
செலுத்த ஏறிப்போனால், இந்தச் சனத்தின் இரு
தயம் யூதாவின் இராசாவாகிய ரெகொபெயாமெ
ன்ற தங்கள் ஆண்டவன் வசமாய்த் திரும்பி, அ
வர்கள் என்னைக் கொன்று யூதாவின் இராசாவா
கிய ரெகொபெயாமின் பாரிசமாய்த் திரும்புவார்க
௨௮ ளென்றும் சிந்தித்துக்கொண்டிருந்தான்.—ஆகை
யால் இராசாவானவன் யோசனைபண்ணி, பொ
ன்னான இரண்டு கன்றுக்குட்டிகளை உண்டாக்
கி, அவர்களுடனே, எருசலேமுக்கு ஏறிப்போ
கிறது உங்களுக்கு வருத்தம்; இஸ்ரவேலே,
இதோ இவைகள் உன்னை எகிப்துதேசத்திலி
ருந்து ஏறிவரப்பண்ணின உன்னுடைய தேவர்
௨௯ களென்று சொல்லி,—ஒன்றைப் பேத்தேலிலும்
௩௰ ஒன்றைத் தாணிலும் ஸ்தாபித்தான்.—இந்தக்கா
ரியம் பாவமாகி, சனம் இந்த ஒரு கன்றுக்குட்
௩௧ டிக்காகத் தாண்மட்டும் போயிற்று.— அவன் மே
டைகளின் வீட்டையும் கட்டி, லேவியின் புத்தி
ரராயிராத சனத்தில் ஈனமானவர்களை ஆசாரிய
௩௨ ராக்கினான்.—யூதாவில் ஆசரிக்கும் பண்டிகைக்
கொப்பாக எட்டாம்மாதம் பதினைந்தாம் தேதியி
லே எரோபெயாம் ஒரு பண்டிகையையும் கொ
ண்டாடி, பலிபீடத்தின்மேலே பலியிட்டான்;
இப்படித் தான் உண்டாக்கின கன்றுக்குட்டிக
ளுக்குப் பலியிடப்பட அவன் பேத்தேலிலே
செய்து, தான் உண்டுபண்ணின மேடைகளின்
ஆசாரியர்களைப் பேத்தேலிலே ஊன்றிவைத்து,—
௩௩ தன் மனதிலே தானே நியமகம்பண்ணின எட்
டாம்மாதம் பதினைந்தாம் தேதியிலே பேத்தேலி
லே தான் உண்டாக்கின பலிபீடத்தின்மேலே
பலியிட்டு, இஸ்ரவேல் புத்திரருக்குப் பண்டி
கையைக்குறித்து, பலிபீடத்தின்மேலே பலியிட்
டுத் தூபம்காட்டுவான்.

## ௰௩. அதிகாரம்.

௧. பலிபீடத்துக்கு விரோதமாய்த் தீர்க்கதரிசனம் சொன்னவன்மீது எரோபெயாம் நீட்டின கை மரத்துப்போய், ௬. தீர்க்கதரிசியின் விண்ணப்பத்தினால் சொஸ்தப்பட்டது. ௭. அந்தத் தீர்க்கதரிசி இராசா விருந்துக்கு அழைத்ததை மறுத்துப் பேத்தேலைவிட்டுப்போனது. ௰௧. ஒரு கிழவனான தீர்க்கதரிசி அவனை வஞ்சித்து மறுபடியும் அழைத்துக்கொண்டுவந்தது. ௨௰. அவன் பராபரனாலே சபிக்கப்பட்டது. ௨௪. ஒரு சிங்கத்தினாலே கொல்லப்பட்டது. ௨௯. கிழத்தீர்க்கதரிசியினால் அவன் அடக்கம்பண்ணப்பட்டது. ௩௧. அந்தக் கிழவன் அவனுடைய தீர்க்கதரிசனத்தை உறுதிப்படுத்தினது. ௩௩. எரோபெயாம பொல்லாங்கை விட்டு விலகாதிருந்தது.

ஆனால் இதோ பராபரனுடைய மனுஷன் ஒரு ௧
வன் கர்த்தருடைய வார்த்தையின்படியே, யூதா
விலிருந்து பேத்தேலுக்கு வந்து, எரோபெயாம்
தூபம்காட்ட பலிபீடத்தண்டையிலே நிற்கை
யில்,—கர்த்தருடைய வார்த்தையாய் அந்தப் பலி ௨
பீடத்திற்கு எதிராகக் கூப்பிட்டு, பலிபீடமே
பலிபீடமே, இதோ தாவீதின் வீட்டிற்கு யொசி
யாவென்று பேருள்ள ஒரு குமாரன் பிறப்பான்;
அவன் உன்மேலே தூபம்காட்டுகிற மேடைக
ளின் ஆசாரியர்களை உன்மேலே பலியிடுவான்;
மனுஷரின் எலும்புகளும் உன்மேலே சுட்டெ
ரிக்கப்படுமென்கிறதைக் கர்த்தர் உரைக்கிறார்
என்று சொல்லி,—அன்றைத்தினம் அவன் ஒரு ௩
அடையாளத்தைத் தந்து, இதோ இந்தப் பலிபீ
டம் வெடித்து, அதின்மேலுள்ள சாம்பல் கொட்
டுண்டுபோமென்கிறது கர்த்தர் இதை உரைத்த
தற்கு அடையாளமென்றான்.

சம்பவித்ததேதென்றால் பேத்தேலிலிருக்கிற ௪
அந்தப் பலிபீடத்திற்கு எதிராகப் பராபரனு
டைய மனுஷன் கூப்பிட்டுச் சொன்ன வார்த்
தையை இராசாவாகிய எரோபெயாம் கேட்ட
போதோவெனில், அவனைப் பிடியுங்களென்று
தன் கையைப் பலிபீடத்தின்மேலிருந்து நீட்டி
னான்; ஆகிலும் அவனுக்கு விரோதமாய் அவன்
நீட்டின தன்னுடைய கையைத் தன்னண்டைக்
கு முடக்கக்கூடாதபடிக்கு அது மரத்துப்போ
யிற்று. — பராபரனுடைய மனுஷன் கர்த்தரு ௫
டைய வார்த்தையால் குறித்திருந்த அடையா
ளத்தின்படியே பலிபீடம் வெடித்து, சாம்பல்
பலிபீடத்திலிருந்து கொட்டுண்டுபோயிற்று.—
அப்போது இராசா பராபரனுடைய மனுஷனுக் ௬
குப் பிரதியுத்தாரமாக, நீ உன் பராபரனாகிய
கர்த்தருடைய சமுகத்தைநோக்கி வேண்டிக்
கொண்டு, என்னுடைய கை என்னண்டைக்குத்
திரும்பும்படிக்கு எனக்காக விண்ணப்பம்பண்
ணென்றான்; அப்போது பராபரனுடைய மனு
ஷன் கர்த்தருடைய சமுகத்தைநோக்கி வருந்தி
விண்ணப்பம்செய்ததற்கு இராசாவின் கை அவ
னண்டைக்குத் திரும்பி முன்னிருந்த சீருக்கு
வந்தது.—அப்போது இராசா பராபரனுடைய ௭
மனுஷனோடே, நீ என்னோடேகூட வீட்டுக்கு
வந்து தேற்றிக்கொள்; உனக்கு வெகுமானம்
கொடுப்பேனென்றான். — ஆனால் பராபரனு ௮
டைய மனுஷன் இராசாவோடே சொன்னது:
நீர் எனக்கு உம்முடைய பாதி வீட்டைக் கொ

டுத்தாலும், நான் உம்மோடே வருவதுமில்லை,
இந்த ஸ்தலத்தில் அப்பம் புசிப்பதுமில்லை,
௯ தண்ணீர் குடிப்பதுமில்லை. — ஏனென்றால் நீ
அப்பம் புசியாமலும், தண்ணீர் குடியாமலும்,
போனவழியாய்த் திரும்பாமலும் இருவென்று
கர்த்தர் தம்முடைய வார்த்தையால் எனக்குக்
௰ கற்பித்தாரென்று சொல்லி, — அவன் பேத்தே
லுக்கு வந்தவழியாய்த் திரும்பாமல், வேறே
வழியாய்ப் போய்விட்டான்.

௰௧ ஆனால் கிழவனான ஒரு தீர்க்கதரிசி பேத்தே
லிலே குடியிருந்தான்; அவன் குமாரர் வந்து
பராபரனுடைய மனுஷன் அன்றைத்தினம் பேத்
தேலிலே செய்த எல்லாச் செய்கையையும், அ
வன் இராசாவோடே சொன்ன வார்த்தைகளை
௰௨ யும் தங்கள் தகப்பனுக்கு அறிவித்தார்கள்.—அப்
போது அவர்கள் தகப்பன் அவன் போனவழி
எதென்று அவர்களைக் கேட்டான்; ஏனெனில்
யூதாவிலிருந்து வந்த பராபரனுடைய மனுஷன்
போனவழி எதென்று அவன் குமாரர் பார்த்தி
௰௩ ருந்தார்கள்.—அவன் தன் குமாரருடனே, கழுதை
யின்மேலே சேணம் வைத்துத் தாருங்களென்
றான்; அவர்கள் கழுதையின்மேலே சேணம் வை
த்துக் கொடுத்தபின் அவன் அதின்மேல் ஏறி,—
௰௪ பராபரனுடைய மனுஷன் பிறகாலே போய், ஒரு
கருவாலியுமரத்தின்கீழ் உளுக்காந்திருக்கிற அவ
னைக் கண்டுபிடித்து, நீர் யூதாவிலிருந்து வந்த
பராபரனுடைய மனுஷனோவென்று அவனைக்
௰௫ கேட்டதற்கு, அவன் நான்தானென்றான்.—அப்
போது அவனுடனே என்னோடே வீட்டுக்கு
௰௬ வந்து அப்பம்புசியுமென்றான்.—ஆனால் அவன்
சொன்னது: நான் உம்மோடே திரும்பவும் உம்
மோடே உள்ளே போகவும்மாட்டேன்; இந்த
ஸ்தலத்திலே உம்மோடே நான் அப்பம்புசிப்ப
௰௭ தும் தண்ணீர் குடிப்பதுமில்லை.—ஏனெனில் நீ
அப்பம்புசியாமலும் அங்கே தண்ணீர் குடியா
மலும், நீ போனவழியாய் வரத்திரும்பாமலும்
இருவென்று கர்த்தருடைய வார்த்தையாய் எனக்
௰௮ குச் சொல்லப்பட்டதென்றான். — அவனோ
வென்றால் நானும் உம்மைப்போலொத்த தீர்க்கத
ரிசியானவன்; அவன் அப்பம்புசித்துத் தண்ணீர்
குடிக்க, நீ அவனைத் திருப்பி, உன் வீட்டுக்கு
அழைத்துக்கொண்டுவாவென்று ஒரு தூதன் கர்த்
தருடைய வார்த்தையாய் என்னோடே சொன்
னானென்று அவனுக்குப் பொய்சொன்னான். —
௰௯ அப்போது அவன் இவனோடே திரும்பிப்போய்,
இவன் வீட்டிலே அப்பம்புசித்துத் தண்ணீர்
குடித்தான்.

௨௰ அவர்கள் பந்தியில் உளுக்காந்திருக்கிறபோ
தோவெனில் சம்பவித்ததேதென்றால், அவனைத்
திருப்பிக்கொண்டுவந்த தீர்க்கதரிசிக்குக் கர்த்த
௨௰௧ ருடைய வார்த்தை உண்டானதினால்,—அவன்
யூதாவிலிருந்து வந்த பராபரனுடைய மனுஷ
னைப்பார்த்துக் கூப்பிட்டு, உன் பராபரனாகிய
கர்த்தர் உனக்குக் கற்பித்த கற்பனையை நீ கைக்
கொள்ளாமல் கர்த்தருடைய வாக்குக்கெதுகை
பண்ணி,—நீ அப்பம்புசிக்கவும் தண்ணீர் குடிக் ௨௨
கவும் வேண்டாமென்று அவர் உனக்குக் குறித்
துச் சொன்ன ஸ்தலத்திற்கு நீ திரும்பி, அப்பம்
புசித்துத் தண்ணீர் குடித்தபடியினாலே, உன்னு
டைய பிணம் உன் பிதாக்களின் கல்லறையிலே
சேரப்போகிறதில்லையென்று கர்த்தர் சொல்லு
கிறாரென்றான்.

அவன் அப்பம்புசித்தபிற்பாடும், அவன் குடித் ௨௩
தபிற்பாடும், அந்தத் தீர்க்கதரிசியைத் திருப்பிக்
கொண்டவன் அவனுக்குக் கழுதையின்மேலே
சேணம் வைத்துக்கொடுத்தான்.—ஆனால் அவன் ௨௪
போனபிற்பாடு, வழியிலே ஒரு சிங்கம் அவ
னைக்கண்டுபிடித்துக்கொன்றுபோட்டது; பிறகு
அவன் பிணம் வழியிலே கிடந்து, கழுதை அதி
னண்டையிலே நின்றது; சிங்கமும் பிணத்தண்
டையிலே நின்றது.—இதோ கடந்துவருகிற மனு ௨௫
ஷர் வழியிலே கிடக்கிற பிணத்தையும் பிணத்
தண்டையிலே நிற்கிற சிங்கத்தையும் கண்டு, கிழ
வனான தீர்க்கதரிசி குடியிருந்த பட்டணத்திலே
வந்து சொன்னார்கள்.—அவனை வழியிலிருந்து ௨௬
திரும்பப்பண்ணின தீர்க்கதரிசி அதைக்கேட்ட
போது, அவன் கர்த்தருடைய வாக்குக்கு இரண்
டகம்பண்ணின பராபரனுடைய மனுஷன்தா
னென்றும், கர்த்தர் அவனுக்குச் சொன்ன வார்த்
தையின்படியே கர்த்தர் அவனை ஒரு சிங்கத்திற்கு
ஒப்புக்கொடுத்தார்; அது அவனை முறித்துக்
கொன்றுபோட்டதென்றும்சொல்லி,—தன் குமா ௨௭
ரருடனே எனக்குக் கழுதையின்மேலே சேணம்
வைத்துக் கொடுங்களென்றான்; அதை அவர்கள்
சேணம் வைத்துக் கொடுத்தார்கள்.—அப்போது ௨௮
அவன் போய், வழியிலே கிடக்கிற அவன்
பிணத்தையும் பிணத்தண்டையிலே கழுதையும்
சிங்கமும் நிற்கிறதையும் கண்டான்; அந்தச் சிங்
கம் பிணத்தைத் தின்றதுமில்லை; கழுதையை
முறித்துப்போட்டதுமில்லை.—அப்போது கிழ ௨௯
வனான அந்தத் தீர்க்கதரிசி பராபரனுடைய மனு
ஷனின் பிணத்தை எடுத்து, அதைக் கழுதை
யின்மேல் வைத்து, அதற்காகத் துக்கம்கொண்
டாடவும் அதை அடக்கம்பண்ணவும், அதைத்
தன் பட்டணத்திலே கொண்டுவந்து,—அவன் ௩௰
பிணத்தைத் தன் கல்லறையிலே வைத்தான்; அ
வனுக்காக, ஐயோ, என் சகோதரனே என்று
துக்கம்கொண்டாடினார்கள். — அவனை அடக் ௩௧
கம்பண்ணின பிற்பாடோவெனில் அவன் தன்
குமாரரோடே சொன்னது: நான் சென்றுபோ
னபோது, நீங்கள் என்னைப் பராபரனுடைய
இந்த மனுஷன் அடக்கம்பண்ணப்பட்ட கல்ல
றையிலே அடக்கம்பண்ணி, அவன் எலும்புக
ளண்டையிலே என் எலும்புகளை வையுங்கள்.—
ஏனென்றால் அவன் பேத்தேலிலிருக்கிற பலிபீ ௩௨
டத்திற்கும் சமாரியாவின் பட்டணங்களிலி
ருக்கிற மேடைகளுடைய சகல வீடுகளுக்கும்
விரோதமாகக் கர்த்தருடைய வார்த்தையின்படி
யே கூப்பிட்டுச் சொன்னது நடக்கவே நடக்
குமென்றான்.

௩௩ இந்த நடபடிக்குப்பிற்பாடு, எரோபெயாம்
தன் பொல்லாத வழியைவிட்டுத் திரும்பாமல்,
திரும்பவும் சனத்தில் ஈனமானவர்களை மேடை
களின் ஆசாரியராக்கினான்; எவன்மேல் அவ
னுக்கு மனதிருந்ததோ அவன் கையை நிரப்பி
னான்; அப்படிக்கொத்தவர்கள் மேடைகளின்
௩௪ ஆசாரியரானார்கள்.—எரோபெயாமின் வீட்டா
ரைப் பூமியின்மேல் வைக்காமல் அதம்பண்ணி
அழிக்கும்படியாக இந்தக் காரியம் அவர்களுக்
குப் பாவமாய்ப் போயிற்று.

## ௰௪. அதிகாரம்.

*௧. அபியா வியாதியாயிருந்ததினாலே எரோபெயாம் தன் பெண்சாதிக்கு மாறுவேடம் தரித்து, காணிக்கைகளோடு சீலோவில் அகியாவிடத்திற்கு அனுப்பினது. ௫. அகியா பராபரனாலே முன்னறிவிக்கப்பட்டுச் சாபம் கொடுத்தது. ௰௭. அபியா இறந்துபோய் அடக்கம்பண்ணப்பட்டது. ௰௯. நாதாப் எரோபெயாமுக்குப் பதிலாக அரசனாகி வந்தது. ௨௧. ரெகொபெயாமினுடைய கெட்ட ஆளுகை. ௨௫. சீசாக்கு எருசலேமைக் கொள்ளையிட்டது. ௨௧. அபியாம் ரெகொபெயாமுக்குப்பதிலாக அரசனாகிவந்தது.*

௧ அக்காலத்திலே எரோபெயாமின் குமாரனாகிய
௨ அபியா வியாதியாய் விழுந்தான்.—அப்போது
எரோபெயாம் தன் பெண்சாதியோடே சொன்
னதாவது: நீ எழுந்து, நீ எரோபெயாமின் பெண்
சாதியென்று யாரும் அறியாதபடிக்கு வேஷம்
மாறி, சீலோவுக்குப் போ; இதோ இந்தச் சனத்
தின்மேல் நான் இராசாவாவேனென்று என்னோ
டே சொன்ன தீர்க்கதரிசியாகிய அகியா அங்
௩ கே இருக்கிறான்.—நீ உன் கையிலே பத்து
அப்பங்களையும், கச்சாயங்களையும், ஒரு கரகம்
தேனையும் எடுத்து, அவனண்டைக்குப் போ;
பிள்ளைக்குச் சம்பவிக்கப்போகிறதின்னதென்று
௪ அவன் உனக்கு அறிவிப்பானென்றான்.—அப்
படியே எரோபெயாமின் பெண்சாதி செய்தாள்;
அவள் எழுந்து சீலோவுக்குப் போய், அகியா
வின் வீட்டிற்குள் பிரவேசித்தாள்; அகியாவோ
வென்றால் பார்க்கமாட்டாதிருந்தான்; ஏனென்
றால் அவனுடைய முதிர்வயதினால் அவன்
௫ கண்கள் கம்மலாய்ப்போயின.—ஆனால் கர்த்தர்
அகியாவுடனே, இதோ எரோபெயாமின் பெ
ண்சாதி வியாதியாயிருக்கிற தன் குமாரனுக்காக
உன்னை ஒரு விசேஷம் கேட்க வருகிறாள்; நீ
அவளுக்கு இன்ன இன்ன பிரகாரமாகச் சொல்
லவேண்டும்; அவள் உள்பிரவேசிக்கிறபோதோ
வெனில், அந்நிய ஸ்திரீயாகக் காண்பிப்பா
ளென்றார்.
௬ ஆகையால் வாசற்படிக்குள்பிரவேசிக்க, அவ
ளுடைய கால்களின் சத்தத்தை அகியா கேட்ட
உடனே அவன் சொன்னதாவது: எரோபெயா
மின் பெண்சாதியே நீ உள்ளே வா, நீ அந்நியஸ்
திரீயாகக் காண்பிக்கிறதென்ன? கடினச்செய்தி
யை உனக்கு அறிவிக்க நான் அனுப்பப்பட்
௭ டேன்.–நீ போய் எரோபெயாமுக்குச் சொல்ல
வேண்டியது: இஸ்ரவேலின் பராபரனாகிய கர்த்
தர்சொல்லுகிறதேதெனில் சனத்திற்குள்ளிருந்த
உன்னை நாம் உயர்த்தி, உன்னை இஸ்ரவேலென்ற
நம்முடைய சனத்தின்மேல் அதிபதியாக வைத்
தோம்.—நாம் இராச்சியபாரத்தைத் தாவீது ௮
வீட்டாரின் கையிலே பிடுங்கி உனக்குக் கொ
டுத்தோம்; ஆனால் நம்முடைய கற்பனைகளைக்
கைக்கொண்டு, நம்முடைய பார்வைக்குச் செம்
மையானதையே செய்ய, தன் முழு இருதயத்தா
லும் நம்மைப் பின்பற்றின நம்முடைய தாசனா
கிய தாவீதைப்போல நீ இராமல்,–உனக்கு முன் ௯
னால் இருந்த எல்லாரைப்பார்க்கிலும் பொல்லா
ப்புச் செய்தாய்; ஏனென்றால் நமக்குக் கோபம்
உண்டாக்கி, நீ போய் உனக்கு வேறே தேவர்க
ளையும் வார்க்கப்பட்ட விக்கிரகங்களையும் உண்
டுபண்ணி, நம்மை உன் முதுகுக்குப் பின்னாக
எறிந்துபோட்டாய்.—ஆகையால் இதோ நாம் ௰
எரோபெயாமுடைய வீட்டின்மேலே பொல்
லாப்பை வரப்பண்ணி, எரோபெயாமுக்குச்
சுவர்மேலே நீர்விடும் ஒரு நாய்முதலாயிராதப
டிக்கு இஸ்ரவேலிலே அடைக்கப்பட்டவனை
யும் விடுவிடப்பட்டவனையும் சங்காரம்பண்
ணி, குப்பை கழித்துப்போடப்படுகிறதுபோல
எரோபெயாமின் பின்னடியாரை அவர்கள் கட்
டோடே அற்றுப்போகும்மட்டும் கழித்துப்போ
டுவோமென்றார்.—எரோபெயாமின் சந்ததியா ௰௧
ரில் பட்டணத்திலே சாகிறவனை நாய்கள் தின்
னும்; வெளியிலே சாகிறவனை ஆகாயத்தின் பற
வைகள் தின்னும்; ஏனெனில் கர்த்தர் உரைத்
தார்.—இப்போதும் நீ எழுந்து, உன் வீட்டுக்குப் ௰௨
போ; உன் கால்கள் பட்டணத்திற்குள் பிரவே
சிக்கையில் பிள்ளையாண்டான் செத்துப்போ
வான்.—அவனுக்காக இஸ்ரவேலரெல்லாம் துக் ௰௩
கம்கொண்டாடி அவனை அடக்கம்பண்ணுவார்
கள்; ஏனென்றால் எரோபெயாமின் வீட்டாரில்
இஸ்ரவேலின் பராபரனாகிய கர்த்தருக்குமுன்
பாக அவனிலே நற்குணமான காரியம் கண்டுபி
டிக்கப்பட்டபடியினாலே, எரோபெயாமின் சந்
ததியில் அவன் ஒருவனே கல்லறைக்குள்படு
வான்.—ஆனால் கர்த்தர் தமக்கு இஸ்ரவேலின் ௰௪
மேல் ஒரு இராசாவை எழும்பப்பண்ணுவார்;
அவன் அந்நாளிலேதான் எரோபெயாமின்
வீட்டாரைச் சங்கரிப்பான்; இப்போதுதானும்
என்ன நடக்குமோ?—தண்ணீரிலே நாணல் ௰௫
அசைவாடுகிறதுபோல, கர்த்தர் இஸ்ரவேலை
முறிந்தசையப்பண்ணி, அவர்கள் பிதாக்களுக்
குத் தாம் கொடுத்த இந்த நல்ல சீமையில் இஸ்ர
வேலைப் பிடுங்கி, அவர்கள் தங்கள் தோப்பு
களை வைத்து, கர்த்தருக்குக் கோபம் உண்டாக்
கினபடியினாலே அவர்களை நதிக்கப்பாலே சி
தறடித்து,—எரோபெயாம் செய்ததும் இஸ்ர ௰௬
வேலைச் செய்யப்பண்ணினதுமான பாவத்தின்
நிமித்தம் இஸ்ரவேலை ஒப்புக்கொடுத்துவிடுவார்
என்றான்.
அப்போது எரோபெயாமின் பெண்சாதி எ ௰௭
ழுந்து புறப்பட்டு, திற்சாவுக்கு வந்தாள்; அவள்
வாசற்படியிலே சேருகையில் பிள்ளையாண்
டான் செத்துப்போனான்.—கர்த்தர் தீர்க்கதரி ௰௮
சியாகிய அகியாவென்ற தமது ஊழியக்கார

னைக்கொண்டு சொன்ன வார்த்தையின்படியே,
அவர்கள் அவனை அடக்கம்பண்ணி, இஸ்ரவே
லெல்லாம் அவனுக்காகத் துக்கம்கொண்டாடி
னார்கள்.
௰௯ எரோபேயாம் யுத்தம்பண்ணினதும் ஆண்ட
துமான அவனுடைய மற்ற வர்த்தமானங்கள்
இதோ இஸ்ரவேலுடைய இராசாக்களின் நா
ளாகமப் புஸ்தகத்தில் எழுதியிருக்கின்றன. —
௨௰ எரோபேயாம் இராச்சியபாரம்பண்ணினகாலம்
இருபத்திரண்டுவருஷம்; அவன் தன் பிதாக்க
ளோடே நித்திரை அடைந்தபின் அவன் குமா
ரனாகிய நாதாப் அவன் ஸ்தலத்தில் இராசாவா
னான்.
௨௧ சாலோமோனின் குமாரனாகிய ரெகாபெயாம்
யூதாவிலே இராச்சியபாரம்பண்ணினான்; ரெகா
பெயாம் இராசாவாகிறபோது நாற்பத்தொரு
வயதாயிருந்து, கர்த்தர் தம்முடைய நாமத்தை
வைக்க இஸ்ரவேல் கோத்திரங்களிலெல்லாம்
தெரிந்துகொண்ட பட்டணமாகிய எருசலே
மிலே பதினேழுவருஷமாய் இராச்சியபாரம்
பண்ணினான்; அம்மோன் சாதியான அவனு
௨௨ டைய தாயின்பேர் நாமாள். — யூதா கர்த்தரின்
பார்வைக்குப் பொல்லாப்பானதைச் செய்து,
தாங்கள் செய்துவருகிற தங்களுடைய பாவங்க
ளினாலே தங்கள் பிதாக்கள் செய்தவைகளை
யெல்லாம் பார்க்கிலும் அவருக்கு அதிக எரிச்
௨௩ சலை மூட்டி,-உயர்ந்த சகல மேட்டின்மேலும்,
பச்சையான சகல மரத்தின்கீழும், அவர்களும்
மேடைகளையும் சிலைகளையும் தோப்புகளையும்
௨௪ தங்களுக்கு உண்டாக்கினார்கள்.—தேசத்திலே
இலச்சையான புணர்ச்சிக்காரரும் இருந்தார்
கள்; கர்த்தர் இஸ்ரவேல் புத்திரருக்குமுன்பா
கத் துரத்திவிட்ட சாதிகளுடைய அருவருப்பு
களின்படியெல்லாம் செய்தார்கள்.
௨௫ ரெகாபெயாம் இராச்சியபாரம்பண்ணும் ஐந்
தாம் வருஷத்திலேயென்றால், எகிப்தின் இரா
சாவாகிய சீசாக் எருசலேமுக்கு விரோதமாய்
௨௬ ஏறிவந்து,-கர்த்தருடைய வீட்டின் பொக்கிஷங்
களையும், இராசாவுடைய வீட்டின் பொக்கி
ஷங்களையும், சகலத்தையும் எடுத்துக்கொண்டு,
சாலோமோன் செய்வித்த பொன்பரிசைகள் எல்
லாவற்றையும் எடுத்துக்கொண்டு போனான்.—
௨௭ அவைகளுக்குப்பதிலாக இராசாவாகிய ரெகா
பெயாம் வெண்கலப்பரிசைகளைச் செய்வித்து,
அவைகளை இராசாவின் வாசற்படியைக் காக்கி
ற சேவகருடைய தலைவரின் கையில் ஒப்புவித்
௨௮ தான்.—ஆகையால் இராசா கர்த்தருடைய வீட்
டிற்குள் பிரவேசிக்கும்போது, அரமனைச்சேவ
கர் அவைகளை எடுத்துவந்து, பிற்பாடு திரும்பத்
தங்கள் அறையிலே வைப்பார்கள்.
௨௯ ரெகாபெயாமின் மற்ற வர்த்தமானங்களும்,
அவன் செய்தவை அனைத்தும், யூதாவுடைய இ
ராசாக்களின் நாளாகமப் புஸ்தகத்திலல்லவோ
௩௰ எழுதியிருக்கின்றது. — ரெகாபெயாமுக்கும் எ
ரோபேயாமுக்கும் அவர்களிருந்த நாள்களிலெல்
லாம் யுத்தமாயிருந்தது.-ரெகாபெயாம் தன் பிதாக் ௩௧
களோடே நித்திரை அடைந்து, தாவீதின் பட்ட
ணத்தில் தன் பிதாக்களண்டையிலே அடக்கம்
பண்ணப்பட்டான்; அம்மோன் சாதியான அ
வன் தாய்க்கு நாமாளென்று பேரிருந்தது; அவன்
குமாரனாகிய அபியாம் அவன் ஸ்தலத்தில் இரா
சாவானான்.

## ௰௫. அதிகாரம்.

*௧. அபியாமின் கெட்ட ஆளுகை. ௮. ஆசா அவனுக்குப்பிற்பாடு அரசாண்டுவந்தது. ௯. ஆசாவின் நல்ல ஆளுகை. ௧௬. அவனுக்கும் பாசாவுக்கும் நடந்த யுத்தத்தினால், பெனாதாத்தோடு உடம்படிக்கை செய்தது. ௨௪. யோசபாத் ஆசாவுக்குப்பிற்பாடு அரசாண்டுவந்தது. ௨௫. நாதாபினுடைய கெட்ட ஆளுகை. ௨௭. அவனுக்கு விரோதமாய்ப் பாசா கலகம்செய்து, அகியாவின் தீர்க்கதரிசனத்தை நிறைவேற்றினது. ௩௧. நாதாபினுடைய செய்கைகளும், மரணமும். ௩௩. பாசாவினுடைய கெட்ட ஆளுகை.*

நேபாத்தின் குமாரனாகிய எரோபேயாமென்ற ௧
இராசாவின் பதினெட்டாம்வருஷத்திலே அபீ
யாம் யூதாவின்மேல் இராசாவாகி,-மூன்றுவரு ௨
ஷமாய் எருசலேமில் இராச்சியபாரம்பண்ணி
னான்; அப்சலோமின் குமாரத்தியாகிய அவனு
டைய தாயின்பேர் மாகாள். — தன் தகப்பன் ௩
தனக்குமுன்னே செய்த எல்லாப் பாவங்களி
லும் இவன் நடந்தான்; அவன் இருதயம் அவன்
தகப்பனாகிய தாவீதின் இருதயத்தைப்போல,
அவன் பராபரனாகிய கர்த்தருக்குமுன்பாக உத்
தமமாயிருந்ததில்லை.—ஆனால் தாவீதின்நிமித்தம் ௪
அவனுடைய பராபரனாகிய கர்த்தர், அவனுக்
குப்பிற்பாடு அவன் குமாரனை எழும்பப்பண்
ணுகிறதினாலும், எருசலேமை நிலைநிறுத்துகிற
தினாலும், அவனுக்கு எருசலேமில் ஒரு விளக்
கைக் கட்டளையிட்டுவந்தார்.-ஏனெனில் தாவீது ௫
ஏத்தியனாகிய உரீயாவின் வர்த்தமானமே ஒழிய,
கர்த்தர் தனக்குக் கற்பித்ததிலே தான் உயிரோடி
ருந்தநாளெல்லாம் ஒன்றையும்விட்டுவிலகாமல்,
அவர் பார்வைக்குச் செம்மையானதைச் செய்தி
ருந்தான். — ரெகாபெயாமுக்கும் எரோபேயா ௬
முக்குமிருந்த போர் அவன் உயிரோடிருக்கிற
நாளெல்லாம் நடந்தது.

அபீயாமின் மற்ற வர்த்தமானங்களும், அவன் ௭
செய்தவை அனைத்தும் யூதாவுடைய இராசாக்
களின் நளாகமப் புஸ்தகத்திலல்லவோ எழுதியி
ருக்கின்றது; அபியாமுக்கும் எரோபேயாமுக்
கும் போர் உண்டாயிருந்தது. — அபீயாம் தன் ௮
பிதாக்களோடே நித்திரை அடைந்தபின், அவ
னைத் தாவீதின் பட்டணத்தில் அடக்கம்பண்ணி
னார்கள்; அவன் குமாரனாகிய ஆசா அவன் ஸ்த
லத்தில் இராசாவானான்.

இஸ்ரவேலின் இராசாவாகிய எரோபேயா ௯
மின் இருபதாம்வருஷத்திலே ஆசா யூதாவின்
மேல் இராசாவாகி,—நாற்பத்தொருவருஷமாக ௰
எருசலேமில் இராச்சியபாரம்பண்ணினான்; அப்
சலோமின் குமாரத்தியாகிய அவனுடைய தா
யின்பேர் மாகாள். — ஆசா தன் தகப்பனாகிய ௰௧
தாவீதைப்போல கர்த்தரின் பார்வைக்குச் செம்

௰௨ மையானதைச் செய்தான்.—அவன் புணர்ச்சிக்கா
ரரைத் தேசத்திலிருந்து அகற்றி, தன் பிதாக்கள்
உண்டுபண்ணின நரகலான விக்கிரகங்களை
௰௩ யெல்லாம் விலக்கி, — தோப்பிலே அருவருப்
பான விக்கிரகத்தை உண்டுபண்ணின தன் தா
யாகிய மாகாளையும் இராசாத்தியாய் இராதபடிக்
கு விலக்கிவிட்டான்; அவளுடைய விக்கிரகத்
தையும் ஆசா நிர்மூலமாக்கி, கீதரோன் ஆற்றண்
௰௪ டையிலே சுட்டெரித்துவிட்டான்.—மேடைக
ளோவென்றால் தள்ளிவிடப்பட்டதில்லை; என்
றாலும் ஆசா உயிரோடிருந்த நாளெல்லாம் அ
வன் இருதயம் கர்த்தரோடே உத்தமமாயிருந்
௰௫ தது. — தன் தகப்பனும் தானும் நியமகம்பண்
ணின வெள்ளியையும் பொன்னையும் பணி
முட்டுகளையும் அவன் கர்த்தருடைய வீட்டிலே
கொண்டுவந்தான்.

௰௬ ஆசாவுக்கும் இஸ்ரவேலின் இராசாவாகிய
பாசாவுக்கும் அவர்களுடைய எல்லா நாள்களி
௰௭ லும் போர் உண்டாயிருந்தது.—எனெனில் ஒரு
வரும் புறப்பட்டு, யூதாவின் இராசாவாகிய
ஆசாவின்வசமாய்ச் சேராதபடிக்கு, இஸ்ரவே
லின் இராசாவாகிய பாசா யூதாவுக்கு விரோத
மாக வறிவந்து ராமாவைக் கட்டி எடுப்பித்தான்.
௰௮ அப்போது ஆசா கர்த்தருடைய வீட்டின்
பொக்கிஷங்களில் மீதியான எல்லா வெள்ளி
யையும், பொன்னையும், இராசாவுடைய வீட்
டின் பொக்கிஷங்களையும் எடுத்து, அவைகளைத்
தன் ஊழியக்காரர் கையிலே தமஸ்குவில் வாச
மாயிருக்கிற எசியோனின் மகனாகிய தப்பேரி
மோனின் குமாரன் பேனாதாத்தென்ற சூரியா
௰௯ வின் இராசாவுக்குக் கொடுத்தனுப்பி, — எனக்
கும் உமக்கும் என் தகப்பனுக்கும் உம்முடைய
தகப்பனுக்கும் உடம்படிக்கை உண்டே; இதோ
உமக்குக் காணிக்கையாய் வெள்ளியையும்
பொன்னையும் அனுப்பினேன்; இஸ்ரவேலின்
இராசாவாகிய பாசா என்னைவிட்டு அப்பாலே
போகும்படிக்கு, நீர் வந்து அவனோடிருக்கும்
உம்முடைய உடம்படிக்கையைத் தள்ளிப்போ
டுமென்று சொல்லி அனுப்பினான்.
௨௰ பேனாதாத் இராசாவாகிய ஆசாவுக்குக் கேள்வி
கொடுத்து, தனக்குண்டான இராணுவங்களின்
தலைவரை இஸ்ரவேலின் பட்டணங்களுக்கு
விரோதமாக அனுப்பி, ஈயோனையும் தாணையும்
பெத்மாக்காவென்ற ஆபேலையும் கின்னரோத்த
னைத்தையும் நவுதலியின் முழுத்தேசத்தோடுங்கூ
௨௧ ட இடற அடித்தான். — பாசா அதைக் கேட்ட
போது, ராமாவைக் கட்டுகிறதைவிட்டு திற்சாவி
லிருந்துவிட்டான்.
௨௨ அப்போது இராசாவாகிய ஆசா, ஒருவரும்
தப்பாமல் எல்லாரும் போய், பாசா கட்டின ரா
மாவின் கல்களையும் அதின் மரங்களையும் எடுத்
துவரக்கடவர்களென்று யூதாவில் எங்கும் பறை
முறை இடுவித்து, அவைகளால் பென்யமீன்
கோத்திரத்துக் கேபாவையும் மிஸ்பாவையும்
கட்டினான்.

ஆசாவின் மற்ற எல்லா வர்த்தமானங்களும், ௨௩
அவனுடைய எல்லா வல்லமையும், அவன் செய்
தவை அனைத்தும், அவன் கட்டின பட்டணங்
களின் செய்தியும், யூதாவுடைய இராசாக்களின்
நாளாகமப் புஸ்தகத்திலல்லவோ எழுதியிருக்
கின்றது; அவன் முதிர்வயதின் காலத்திலோ
வென்றால் கால்கள் நோய்கொண்டிருந்தான்.—
ஆசா தன் பிதாக்களோடே நித்திரை அடைந் ௨௪
தபின், தன் தகப்பனாகிய தாவீதின் பட்டணத்
திலே தன் பிதாக்களண்டையில் அடக்கம்பண்
ணப்பட்டான்; அவன் குமாரனாகிய யோசபாத்
அவன் ஸ்தலத்தில் இராசாவானான்.

யூதாவின் இராசாவாகிய ஆசாவின் இரண் ௨௫
டாம்வருஷத்திலே எரோபெயாமின் குமாரனா
கிய நாதாப் இஸ்ரவேலின்மேல் இராசாவாகி,
இரண்டுவருஷமாய் இஸ்ரவேலின்மேல் இராச்
சியபாரம்பண்ணினான்.—அவன் கர்த்தருடைய ௨௬
பார்வைக்குப் பொல்லாப்பானதைச் செய்து,
தன் தகப்பன் வழியிலும், அவன் இஸ்ரவேலைப்
பாவம் செய்யப்பண்ணின அவனுடைய பாவத்
திலும் நடந்துகொண்டான்.

ஆனால் ஈசகார் வீட்டானாகிய அகீயாவின் ௨௭
குமாரனான பாசா, அவனுக்கு விரோதமாய் ஒப்
பந்தம்பண்ணி, நாதாபும் இஸ்ரவேலனைத்தும்
பெலிஸ்தியருக்கிருந்த கிபேத்தோனை முற்றிக்
கைபோட்டிருக்கையில், பாசா அவனைக் கிபேத்
தோனிலே வெட்டிப்போட்டான்.—பாசா யூதா ௨௮
வின் இராசாவாகிய ஆசாவின் மூன்றாம்வரு
ஷத்திலே அவனைக் கொன்றுபோட்டபின்,
அவன் ஸ்தலத்தில் இராசாவானான். — அப் ௨௯
போது எரோபெயாம் செய்ததும் இஸ்ரவேலைச்
செய்யப்பண்ணினதுமான பாவங்களின்நிமித்த
மும், அவன் இஸ்ரவேலின் பராபரனாகிய கர்த்த
ருக்கு உண்டாக்கின கோபத்தின்நிமித்தமும்,
கர்த்தர் சீலோனியனாகிய அகீயாவென்ற தமது
ஊழியக்காரனைக்கொண்டு சொல்லியிருந்த வார்
த்தையின்படியே சம்பவித்ததேதென்றால், —
அவன் இராசாவானபின் அவன் எரோபெயா ௩௰
மின் வீட்டாரையெல்லாம் வெட்டிப்போட்
டான்; எரோபெயாமுக்கிருந்த சுவாசமுள்ள
தொன்றையும் அவன் அழிக்காமல் வைத்துவைத்
ததில்லை.—நாதாபின் மற்ற வர்த்தமானங்களும் ௩௧
அவன் செய்தவை அனைத்தும் இஸ்ரவேல் இரா
சாக்களின் நாளாகமப் புஸ்தகத்திலல்லவோ
எழுதியிருக்கின்றது.—ஆசாவுக்கும் இஸ்ரவேல் ௩௨
இராசாவாகிய பாசாவுக்குமோவெனில் அவர்
கள் நாள்களிலெல்லாம் போர் உண்டாயிருந்
தது.

யூதாவின் இராசாவாகிய ஆசாவின் மூன்றாம் ௩௩
வருஷத்திலே அகீயாவின் குமாரனாகிய பாசா,
இஸ்ரவேல் அனைத்தின்மேலே திற்சாவிலே இரா
சாவாகி இருபத்துநாலுவருஷமாக ஆண்டு,—
கர்த்தரின் பார்வைக்குப் பொல்லாப்பானதைச் ௩௪
செய்து, எரோபெயாமின் வழியிலும் அவன்

இஸ்ரவேலைப் பாவம்செய்யப்பண்ணின அவ
னுடைய பாவத்திலும் நடந்துவந்தான்.

## ௰௬. அதிகாரம்.

க. பாசாவுக்கு விரோதமான ஏகூவினுடைய தீர்க்கதரிசனம். ௬. ஏலா, பாசாவுக்குப்பின் அரசாகிவந்தது. ௮. சிமிறி ஏலாவுக்கு விரோதமாகக் கலகம்செய்து, அரசாகிவந்தது. ௰௧. சிமிறி ஏகூவினுடைய தீர்க்கதரிசனத்தை நிறைவேற்றினது. ௰௫. உமிறீ இராணுவத்தாராலே இராசாவாக்கப்பட்டதினால், சிமிறி தன்னைத்தானே கொல்ல வீட்டைக் கொளுத்தினது. ௨௧. அந்த இராச்சியம் பிரிக்கப்பட்டு, உமிறீ பிதினியைச் செயித்தது. ௨௪. உமிறீ சமாரியாவைக் கட்டினது. ௨௫. அவனுடைய கெட்ட ஆளுகை. ௨௮. ஆகாப் அவனுக்குப்பின் அரசாகிவந்தது. ௨௯. ஆகாப்பினுடைய மிகுந்த கெட்ட ஆளுகை. ௩௪. எரிகோவைக் கட்டின ஈயேலென்பவன்மேல் யோசுவாவின் சாபம் வந்தது.

க ஆனால் பாசாவுக்கு விரோதமாகக் கர்த்தரு
டைய வார்த்தை ஆனனியின் குமாரனாகிய ஏகூ
௨ வுக்குண்டாகி, அவர் சொன்னதாவது:-நாம் உன்
னைத் தூளிலிருந்து உயர்த்தி, உன்னை நமது சன
மாகிய இஸ்ரவேலின்மேலே தலைவனாக வைத்
திருக்கையில், நீ எரோபேயாமின் வழியிலே
நடந்து, நமது சனமாகிய இஸ்ரவேல் தங்கள்
பாவங்களால் நமக்குக் கோபமுண்டாக்கும்ப
டிக்கு அவர்களைப் பாவம்செய்யப்பண்ணுகிறப
௩ டியினாலே,-இதோ நாம் பாசாவின் பின்னடியா
ரையும் அவன் வீட்டாரின் பின்னடியாரையும்
எடுத்துப்போட்டு, உன்னுடைய வீட்டை நே
பாத்தின் குமாரனாகிய எரோபேயாமின் வீட்
௪ டைப்போல ஆக்குவோம்.—பாசாவின் சந்ததி
யிலே பட்டணத்தில் சாகிறவனை நாய்களும்
தின்னும்; வெளியிலே அவனுக்குச் சாகிறவனை
ஆகாயத்துப்பறவைகளும் தின்னும்.

௫ பாசாவின் மற்ற வர்த்தமானங்களும், அவன்
செய்ததும், அவனுடைய வல்லமையும், இஸ்ர
வேல் இராசாக்களின் நாளாகமப் புஸ்தகத்தி
௬ லல்லவோ எழுதியிருக்கின்றது. — பாசா தன்
பிதாக்களோடே நித்திரை அடைந்தபின் திற்
சாவில் அடக்கம்பண்ணப்பட்டான்; அவன்
குமாரனாகிய ஏலா அவன் ஸ்தலத்தில் இராசா
வானான்.

௭ பாசா தன் கைகளின் செய்கையால் கர்த்தருக்
குக் கோபம் உண்டாக்கி, அவர் பார்வைக்குச்
செய்த எல்லாப் பொல்லாப்பின்நிமித்தமும்
அவன் எரோபேயாமின் வீட்டாரை வெட்
டிப்போட்டதின்நிமித்தமும் இவர்களைப்போல
ஆவானென்று அவனுக்கும் அவன் வீட்டுக்கும்
விரோதமாக ஆனனியின் குமாரனாகிய ஏகூ
வென்ற தீர்க்கதரிசியினாலேகர்த்தருடைய வார்த்
தை பின்னையும் உண்டாயிற்று.

௮ ஆசா யூதாவின் இராசாவான இருபத்தாறும்
வருஷத்திலே பாசாவின் குமாரனாகிய ஏலா
இஸ்ரவேலின்மேலே திற்சாவிலே இராசாவாகி,
௯ இரண்டுவருஷம் அரசாண்டான்.-ஆனால் பாதி
இரதங்களின்மேலே தலைவனாகிய சிமிறியென்ற
அவன் ஊழியக்காரன் அவனுக்கு விரோதமாய்
ஒப்பந்தம்பண்ணி, அவன் திற்சாவிலே அவ்
விடத்து அரமனை உக்கிராணக்காரனாகிய அற்
சாவின் வீட்டிலே குடித்தும் வெறித்தும் இருக்
கையில்,—சிமிறி உள்பிரவேசித்து, யூதாவின் ௰
இராசாவாகிய ஆசாவின் இருபத்தேழாம்வரு
ஷத்தில் அவனை வெட்டிக் கொன்றுபோட்டு,
அவன் ஸ்தலத்தில் இராசாவானான். — அவன் ௰௧
இராசாவாகி, தன் ஆசனத்தின்மேல் உளுக்காந்த
போது, அவன் பாசாவின் வீட்டாரையெல்லாம்
வெட்டிப்போட்டான்; அவனுக்கு இருந்த ஒரு
நாயையாகிலும், அவன் இனத்தாரையாகிலும்,
அவன் சிநேகிதரையென்கிலும் அவன் உயிரோ
டே வைத்ததில்லை. — அப்படியே பாசாவும், ௰௨
அவன் குமாரனாகிய ஏலாவும், தங்கள் விக்கிரகங்
களினாலே இஸ்ரவேலின் பராபரனாகிய கர்த்தரு
க்குக் கோபமுண்டாக்கிச் செய்ததும் இஸ்ரவே
லைச் செய்யப்பண்ணினதுமான அவர்களுடைய
எல்லாப் பாவங்களின்நிமித்தம்,—கர்த்தர் தீர்க்க ௰௩
தரிசியாகிய ஏகூவினாலே பாசாவைக்குறித்துச்
சொல்லியிருந்த அவருடைய வார்த்தையின்ப
டியே, சிமிறி பாசாவின் வீட்டாரையெல்லாம்
அழித்துவிட்டான்.—ஏலாவின் மற்ற வர்த்தமா ௰௪
னங்களும், அவன் செய்தவையனைத்தும் இஸ்ர
வேல் இராசாக்களின் நாளாகமப் புஸ்தகத்திலல்
லவோ எழுதியிருக்கின்றது.

யூதாவின் இராசாவாகிய ஆசாவின் இருபத் ௰௫
தேழாம்வருஷத்திலே சிமிறி திற்சாவிலே ஏழு
நாள் இராசாவாயிருந்தான்; சனம் அப்போது
பெலிஸ்தியருக்கிருக்கிற கிபேத்தோனுக்கு எதி
ராகப் பாளயம் இறங்கியிருந்தது.—சிமிறி ஒப் ௰௬
பந்தம்பண்ணி, இராசாவைக் கொன்றும்போட்
டானென்பதை அங்கே பாளயமிறங்கின சனம்
கேட்டபோதோவெனில், இஸ்ரவேலெல்லாம்
அந்நாளிலேதானே பாளயத்திலே படைத்தலைவ
னாகிய உமிறீயை இஸ்ரவேல்மேல் இராசாவாக்
கினார்கள்.—அப்போது உமிறீயும் அவனோடே ௰௭
கூட இஸ்ரவேல் அனைத்தும் கிபேத்தோனிலி
ருந்து ஏறிவந்து, திற்சாவை முற்றிக்கைபோட்
டார்கள்.—பட்டணம் பிடிபட்டதைச் சிமிறி ௰௮
கண்டபோதோவென்றால், அவன் இராசாவின்
வீடாகிய அரமனைக்குள் பிரவேசித்து, தான்
இருக்கிற இராசாவின் வீட்டை அக்கினியினால்
கொளுத்தி அதிலே செத்தான்.-அவன் கர்த்தரின் ௰௯
பார்வைக்குப் பொல்லாப்பானதைச் செய்து,
எரோபேயாமின் வழியிலும் அவன் இஸ்ரவே
லைப் பாவம்செய்யப்பண்ணின அவன் பாவத்
திலும் நடக்கிறதினாலே, கட்டிக்கொண்ட அவ
னுடைய பாவங்களினிமித்தம் அப்படி வந்தது.-
சிமிறியின் மற்ற வர்த்தமானங்களும், அவன் ௨௰
பண்ணின அவனுடைய ஒப்பந்தமும், இஸ்ர
வேல் இராசாக்களின் நாளாகமப் புஸ்தகத்திலல்
லவோ எழுதியிருக்கின்றது.

அப்போது இஸ்ரவேல் சனம் இரண்டு வகுப் ௨௧
பாய்ப் பிரிந்து, பாதிச்சனம் கீனாத்தின் குமார
னாகிய திபினீயை இராசாவாக்க, அவனைப் பின்
பற்றி, பாதிச்சனம் உமிறீயைப் பின்பற்றிப்
போயின.—ஆனால் கீனாத்தின் குமாரனாகிய திபி ௨௨
னீயைப் பின்பற்றின சனத்தைப்பார்க்கிலும்,

உமிரீயைப் பின்பற்றின சனம் பலத்துப்போ
யிற்று; திபினீ செத்துப்போனான்; உமிரீயோ
வென்றால் அரசாண்டான்.
௨௩ யூதாவின் இராசாவாகிய ஆசாவின் முப்பத்
தோராம்வருஷத்தில், உமிரீ இஸ்ரவேல்மேல்
இராசாவாகி, பன்னிரண்டுவருஷமாய் இராச்சி
யபாரம்பண்ணினான்; அவன் திற்சாவிலே ஆறுவ
௨௪ ருஷமாய் அரசாண்டு,—பிற்பாடு சேமேரின் கை
யிலே சமாரியா மலையைஇரண்டு தாலந்து வெள்
ளிக்குக் கொண்டு, அந்த மலையின்மேலே பட்ட
ணத்தைக்கட்டி, சமாரியா மலையினுடைய எசமா
னனாயிருந்த சேமேருடைய நாமத்திற்கொத்த
௨௫ பேரை அதற்குத் தரித்தான். — ஆனால் உமிரீ
கர்த்தரின் பார்வைக்குப் பொல்லாப்பானதைச்
செய்து தனக்கு முன்னிருந்த எல்லாரைப்பார்க்
௨௬ கிலும் கேடாய் நடந்து,—நேபாத்தின் குமாரனா
கிய எரோபேயாமின் சகல வழியிலும், இஸ்ர
வேலின் பராபரனாகிய கர்த்தருக்குத் தங்கள் விக்
கிரகங்களாலே கோபம் உண்டாக்கும்படியாய்
இஸ்ரவேலைப் பாவம்செய்யப்பண்ணின அவனு
டைய பாவங்களிலும் நடந்துகொண்டான். —
௨௭ உமிரீ செய்த அவனுடைய மற்ற வர்த்தமானங்
களும், அவன் காண்பித்த வல்லமையும், இஸ்ர
வேல் இராசாக்களின் நாளாகமப் புஸ்தகத்திலல்
௨௮ லவோ எழுதியிருக்கின்றது.—உமிரீ தன் பிதாக்
களோடே நித்திரை அடைந்தபின் சமாரியா
விலே அடக்கம்பண்ணப்பட்டான்; அவன்
குமாரனாகிய ஆகாப் அவன் ஸ்தலத்தில் இராசா
வானான்.
௨௯ யூதாவின் இராசாவாகிய ஆசாவின் முப்பத்
தெட்டாம்வருஷத்தில் உமிரீயின் குமாரனாகிய
ஆகாப் இஸ்ரவேலின்மேல் இராசாவாகி, சமாரி
யாவில் இஸ்ரவேல்மேல் இருபத்திரண்டுவருஷ
௩௰ மாக இராச்சியபாரம்பண்ணினான்.—உமிரீயின்
குமாரனாகிய இந்த ஆகாப், தனக்கு முன்னிருந்த
எல்லாரைப்பார்க்கிலும் கர்த்தரின் பார்வைக்
௩௧ குப் பொல்லாப்பானதைச் செய்தான்.—நேபாத்
தின் குமாரனாகிய எரோபேயாமின் பாவங்க
ளில் நடந்துகொள்ளுகிறது அவனுக்குக் கொஞ்
சக்காரியமாய்க் கண்டு, அவன் சீதோனியரின்
இராசாவாகிய எத்பாகாலின் குமாரத்தி எசபேலை
விவாகம்பண்ணிப்போய், பாகாலைச் சேவித்து,
௩௨ அதைப் பணிந்துகொண்டு, — தான் சமாரியா
விலே கட்டின பாகாலின் வீட்டில் பாகாலுக்குப்
௩௩ பலிபீடத்தை எடுப்பித்தான். — ஆகாப் ஒரு
தோப்பையும் வைத்து, இஸ்ரவேலின் பராபர
னாகிய கர்த்தருக்குக் கோபம் உண்டாக்கும்ப
டிக்கு தனக்கு முன்னிருந்த இஸ்ரவேலின் இரா
சாக்களெல்லாரைப்பார்க்கிலும் அதிகம் செய்து
வந்தான்.
௩௪ அவன் நாள்களிலே பேத்தேல் ஊரானான
ஈயேல் எரிகோவைக் கட்டினான்; கர்த்தர் நூனின்
குமாரனாகிய யோசுவாவைக்கொண்டு சொல்லி
யிருந்த வார்த்தையின்படியே, அவன் அதின் அஸ்
திபாரத்தைப் போடுகிறபோது, அபிராமென்ற
தன் மூத்த குமாரனையும், அதின் வாசல்களை
வைக்கிறபோது சேகூபென்ற தன் இளையகுமா
ரனையும் சாகக்கொடுத்தான்.

## ௰௭. அதிகாரம்.

௧. எலியா ஆகாப்புக்கு விரோதமாய்த் தீர்க்கதரிசனம் சொல்லி, கேரீத் தக்கு அனுப்பப்பட்டு, அங்கே காக்கைகள் இரைகொடுக்கப் பெற்றது. ௮. அவன் சற்பாத்ஊரிலிருந்த கைம்பெண்ணண்டைக்கு அனுப்பப் பட்டது. ௰௭. அவன் அவளுடைய இறந்த பிள்ளையை எழுப்பினது. ௨௪. அவள் அவனை விசுவாசித்தது.

கீலேயாத்தின் குடிகளிலே திஸ்பி ஊரானாகிய ௧
எலியா ஆகாப்புடனே, என் வாக்கின்படியே
ஒழிய இந்த வருஷங்களிலே பனியும் மழையும்
பெய்யாதிருக்குமென்று இஸ்ரவேலின் பராபர
னாகிய கர்த்தருக்குமுன்பாக நிற்கிற நான் அவரு
டைய சீவனைக்கொண்டு சொல்லுகிறேனென்
றான்.
பிற்பாடு கர்த்தருடைய வார்த்தை அவனுக் ௨
குண்டாகி, அவர் சொன்னதாவது:—நீ இவ்விடத் ௩
தைவிட்டுக் கிழக்கே நோக்கிப்போய், யோர்தா
னுக்கு நேராயிருக்கிற கேரீத் ஆற்றண்டையில்
ஒளித்துக்கொண்டிரு.—அந்த ஆற்றின் தண்ணீ ௪
ரைக் குடிப்பாய்; அங்கே உன்னைப் பராமரிக்க,
காக்கைகளுக்குக் கற்பித்தோமென்றார்.—அவன் ௫
போய், கர்த்தருடைய வார்த்தையின்படியே செய்
தான்; அவன் போய் யோர்தானுக்கு நேராயி
ருக்கிற கேரீத் ஆற்றண்டையிலே தங்கியிருந்
தான். — காக்கைகள் அவனுக்கு விடியற்காலத் ௬
தில் அப்பமும் இறைச்சியும், சாயங்காலத்தில்
அப்பமும் இறைச்சியும் கொண்டுவந்தன; தாகத்
திற்கு அந்த ஆற்றின் தண்ணீரைக் குடித்தான்.—
சிலநாளுக்குப்பிற்பாடு சம்பவித்ததேதென்றால், ௭
அந்த ஆறு வற்றிப்போயிற்று; ஏனென்றால் தே
சத்தில் மழைபெய்ததில்லை.
அப்போது கர்த்தருடைய வார்த்தை அவனுக் ௮
குண்டாகி, அவர்சொன்னதேதெனில்,—நீ எழுந் ௯
து, சீதோனுக்கடுத்த சற்பாத் ஊருக்குப்போய்,
அங்கே தங்கியிரு; இதோ உன்னைப் பராமரிக்
கும்படிக்கு அங்கே இருக்கிற ஒரு கைம்பெண்
சாதிக்குக் கற்பித்தோமென்றார்.— அப்படியே அ ௰
வன் எழுந்து, சற்பாத்திற்குப் போனான்; அந்தப்
பட்டணத்தின் ஒலிமுகவாசலுக்கு அவன் வந்த
போது, இதோ அங்கே ஒரு கைம்பெண்சாதி
விறகுகளைப் பொறுக்கிக்கொண்டிருந்தாள்; அ
வளைப் பார்த்துக் கூப்பிட்டு, நான் குடிக்கிறதற்
குக் கொஞ்சம் தண்ணீர் ஒரு பாத்திரத்தில் எனக்
குக் கொண்டுவாவென்றான்.—கொண்டுவர அ ௰௧
வள் போகிறபோது, அவன் ஒரு அப்பத்தின்
துணிக்கையையும் உன் கையில் எனக்குக் கொ
ண்டுவாவென்று அவளைப் பார்த்துக் கூப்பிட்
டான். — அவளோவென்றால் பானையில் ஒரு ௰௨
பிடி மாவும் கலயத்திலே கொஞ்சம் எண்ணெயு
மே அல்லாமல், எனக்கு ஒரு அடையும் இல்லை
யென்று உம்முடைய பராபரனாகிய கர்த்தரு
டைய சீவனைக்கொண்டு சொல்லுகிறேன்;
இதோ நானும் என் குமாரனும் சாப்பிட்டுச் செத்

துப்போக, அதை எனக்கும் அவனுக்கும் சேக
ரம்பண்ணப்போய், இரண்டு விறகுகளைப் பொ
௰௩ றுக்குகிறேனென்றாள்.—அப்போது எலியா அ
வளோடே சொன்னதாவது: நீ பயப்படாதே;
நீ போய் உன் வார்த்தையின்படி சேகரம்பண்;
ஆனால் முதல் அதிலே எனக்கு ஒரு சிறிய அடை
யைச் செய்து வெளியே எனக்குக் கொண்டுவா;
பிற்பாடு உனக்கும் உன் குமாரனுக்கும் செய்வா
௰௪ யாக.—ஏனெனில் கர்த்தர் சீமையின்மேல் மழை
யைக் கட்டளையிடும் நாள்மட்டும் பானையின்
மாச் செலவழிந்துபோவதும் இல்லை; கலயத்தில்
எண்ணெய் குறையப்படுவதுமில்லை என்று இஸ்
ரவேலின் பராபரனாகிய கர்த்தர் சொல்லுகிறா
௰௫ ரென்றான். — அவள் போய், எலியாவுடைய
வார்த்தையின்படி செய்தாள்; அவளும், இவனும்,
அவள் வீட்டாரும் அநேகநாள் சாப்பிட்டார்
௰௬ கள்.—கர்த்தர் எலியாவைக்கொண்டு சொன்ன
வார்த்தையின்படியே, பானையிலே அந்த மாச்
சரிப்பட்டுப்போனதும் இல்லை; கலயத்தில் அந்த
எண்ணெய் குறையப்பட்டதுமில்லை.

௰௭ இந்த வர்த்தமானங்களுக்குப்பிறபாடு சம்ப
விந்ததேதென்றால், வீட்டுக்காரியான அந்தப்
பெண்சாதியின் குமாரன் வியாதியாய் விழுந்
தான்; அவனிலே சுவாசமில்லாதேபோகும்மட்
டும் அவனுடைய வியாதி அதிகரித்துக்கொண்
௰௮ டே இருந்தது.—அப்போது அவள் எலியாவுட
னே, பராபரனுடைய மனுஷனே, எனக்கும்
உமக்கும் என்ன? என் அக்கிரமத்தை நினைக்கப்
பண்ணவும், என் குமாரனைச் சாகப்பண்ணவும்
௰௯ என்னண்டைக்கு வந்தீரோ என்றாள்.—அவன்
அவளுடனே, உன் குமாரனை எனக்குத் தா
வென்று சொல்லி, அவனை அவள் மடியிலிருந்து
எடுத்து, தான் தங்கியிருக்கிற மேல்வீட்டிலே
அவனைக்கொண்டுபோய், தன் கட்டிலின்மேலே
௨௰ வைத்து,—என் பராபரனாகிய கர்த்தாவே, நான்
தங்கியிருக்கிற இந்தக் கைம்பெண்சாதியின்
குமாரனை முதலாய்க் கொன்றுபோடும் கஸ்தி
யை அவளுக்கு வருவித்தீரோ என்று கர்த்தனை
௨௧ நோக்கிக் கூப்பிட்டு,—அந்தப் பிள்ளையின்மேல்
மூன்றுதரம் குப்புறவிழுந்து, என் பராபரனாகிய
கர்த்தாவே, இந்தப் பிள்ளையின் ஆத்துமா அதற்
குள்ளே திரும்பிவரப்பண்ணுமென்று கர்த்தனை
௨௨ நோக்கிக் கூப்பிட்டான்.—கர்த்தர் எலியாவின்
சத்தத்தைக் கேட்டார்; பிள்ளை பிழைக்கும்ப
டிக்கு அவனுடைய ஆத்துமா அவனுள்ளத்திலே
௨௩ திரும்பிவந்தது.—அப்போது எலியா பிள்ளையை
எடுத்து, மேல்வீட்டில் இருந்து அவனைத் தாழ
இருக்கும் வீட்டிற்குள் கொண்டுவந்து, அவனை
அவன் தாய்க்குக் கொடுத்து, பார் உன் பிள்ளை
உயிரோடிருக்கின்றதென்று எலியா சொன்
௨௪ னான்.—அப்போது அந்தப் பெண்சாதி எலியா
வுடனே, நீர் பராபரனுடைய மனுஷனென்றும்,
உம்முடைய வாயிலிருக்கிற கர்த்தாவின் வார்த்
தை உண்மையென்றும், இதனால் இப்போது
அறிந்திருக்கிறேனென்றாள்.

## ௰௮. அதிகாரம்.

௧. கடினமான பஞ்சம் உண்டானபோது எலியா ஆகாப்பண்டையில் அனுப்பப்பட்டு, நல்ல மனிதனாகிய ஒபதியாவைக் கண்டது. ௬. ஒபதியா ஆகாப்பை எலியாவண்டைக்கு அழைத்துக்கொண்டுவந்தது. ௩௮. எலியா வானத்திலிருந்து இறங்கிய அக்கினியினால் பாகாலின் தீர்க்கதரிசிகளுக்குத் திருட்டாந்தப்படுத்தி ஆகாப்பை அதட்டினது ௪௧. எலியா மன்றாடினதினாலே மழை வந்தபோது, யெஸ்ரெயேலுக்கு ஆகாப்புடனே போனது.

அநேகநாள் சென்றபிற்பாடு, மூன்றும் வரு ௧
ஷத்திலே சம்பவித்ததேதென்றால், கர்த்தருடைய
வார்த்தை எலியாவுக்குண்டாகி, நீபோய் ஆகாப்
புக்கு உன்னைக் காண்பி, ஏனென்றால், நாம்
சீமையின்மேல் மழையைக் கட்டளையிடுவோ
மென்றார். — அப்போது எலியா ஆகாப்புக்குத் ௨
தன்னைக் காண்பிக்கப் போனான்; பஞ்சமோவெ
னில் சமாரியாவிலே கடினமாயிருந்தது.

ஆனபடியால் ஆகாப் அரமனை விசாரிப்புக்கா ௩
ரனாகிய ஒபதியாவை அழைத்தனுப்பினான்; ஒப
தியாவோவெனில் கர்த்தருக்கு மிகவும் பயந்து
நடக்கிறவனாயிருந்தான். — அதேதெனில் யேச ௪
பேல் கர்த்தரின் தீர்க்கதரிசிகளைச் சங்கரிக்கிற
போது, ஒபதியா நூறு தீர்க்கதரிசிகளைச் சேர்த்
துக்கொண்டு, அவர்களைக் கெபிக்கு ஐம்பதுபே
ராக ஒளித்துவைத்து, அவர்களுக்கு அப்பமும்
தண்ணீருங்கொடுத்து அவர்களைப் பராமரித்து
வந்தான்.—ஆகாப் ஒபதியாவுடனே, நீ தேசத்தி ௫
லிருக்கிற எல்லா நீரூற்றுகளிடத்திலும் எல்லா
ஆறுகளிடத்திலும் போ; நாம் அதிக மிருகசீவன்
களைச் சாகக்கொடாமல் குதிரைகளையும் கோ
வேறு கழுதைகளையும் உயிரோடே காப்பாற்றும்
படிக்கு நமக்குப் புல் அகப்படுமாக்குமென்
றான்.—அப்படியே தேசத்தைச் சுற்றிப்பார்க்க ௬
அதைத் தங்களுக்குத் திட்டம்பண்ணிக்கொண்
டார்கள்; ஆகாப் ஒரு வழியிலே தனித்துப் போ
னான்; ஒபதியா வேறொரு வழியிலே தனித்துப்
போனான்.

ஒபதியா வழியில் இருக்கும்போது, இதோ ௭
எலியா அவனுக்கு எதிர்ப்பட்டான்; அவன்
இவனை இன்னானென்று அறிந்து முகங்குப்புற
விழுந்து, நீர் என் ஆண்டவனாகிய எலியாவோ
வென்று கேட்டதற்கு,—இவன் அவனுடனே ௮
நான்தானே; நீ போய், இதோ எலியா வந்திருக்
கிறானென்று உன் ஆண்டவனுக்குச் சொல்
லென்றான்.—ஆனால் அவன் சொன்னதாவது: ௯
ஆகாப் என்னைக் கொன்றுபோடும்படிக்கு, நீர்
உம்முடைய அடியானை அவன் கையில் ஒப்புக்
கொடுக்க நான் என்ன பாவம்செய்தேன்.—உம் ௰
மைத் தேடுவிக்க என் ஆண்டவன் மனுஷனை
அனுப்பாத சாதியும் இராச்சியமும் இல்லையெ
ன்று உம்முடைய பராபரனாகிய கர்த்தரின் சீவ
னைக்கொண்டு சொல்லுகிறேன்; அவர்கள் நீர்
இல்லையென்று சொன்னபொழுது, அவன் அந்த
இராச்சியத்தையும் அந்தச் சாதியையும் உம்மைக்
கண்டதில்லையென்று சத்தியம் கேட்டுக்கொண்
டான். — இப்போதும் நீ போய், உன் ஆண்ட ௰௧
வனுக்கு இதோ எலியா வந்திருக்கிறானென்று

௰௨ சொல்லென்று நீர் சொல்லுகிறீரே.—ஆனால் நான்
உம்மை விட்டுப்போகையில் ஒருவேளை கர்த்த
ருடைய ஆவியானவர் உம்மை எடுத்து, நான் அ
றியாத இடத்திற்குக் கொண்டுபோவார்; அப்
போது நான் ஆகாப்புக்கு அறிவிக்க வந்தபிற்
பாடு, அவன் உம்மைக் காணாவிட்டால் என்னைக்
கொன்றுபோடுவானே; உம்முடைய அடியானோ
வென்றால், என் சிறுவயதுதுவக்கிக் கர்த்தருக்
௰௩ குப் பயந்துநடக்கிறவன்.—யேசபேல் கர்த்தரின்
தீர்க்கதரிசிகளைக் கொன்றுபோடுகிறபோது,
நான் கர்த்தருடைய தீர்க்கதரிசிகளில் நூறுபே
ரை ஒவ்வொரு கெபியிலே ஐம்பதைம்பதுபே
ராக ஒளித்துவைத்து, அவர்களுக்கு அப்பமும்
தண்ணீரும் கொடுத்து, பராமரித்துவந்த என்னு
டைய செய்கை என் ஆண்டவனுக்கு அறி
௰௪ விக்கப்பட்டதில்லையோ? — இப்போதும் என்
ஆண்டவன் என்னைக் கொன்றுபோடும்படியா
க, நீர் இதோ எலியா வந்திருக்கிறானென்று நீ
போய் அவனுக்குச் சொல்லென்று சொல்லு
௰௫ கிறீரென்றான். — ஆனால் எலியா, இன்றைக்கு
என்னை அவனுக்குக் காண்பிப்பேனென்று சே
னைகளின் கர்த்தருக்குமுன்பாக நிற்கிற நான்
அவருடைய சீவனைக்கொண்டு சொல்லுகிறே
னென்றான்.

௰௬ அப்போது ஒபதியா போய், ஆகாப்புக்கு
எதிர்ப்பட்டு அவனுக்கு அதை அறிவித்ததற்கு,
ஆகாப் எலியாவுக்கு எதிராகப் போனான். —
௰௭ ஆகாப் எலியாவைக் கண்டபோது, ஆகாப் அவ
னுடனே, இஸ்ரவேலைக் கலக்கம்பண்ணுகிற
௰௮ வன் நீயோ என்றான்.—அதற்கு அவன் சொன்
னதாவது: இஸ்ரவேலைக் கலக்கம்பண்ணின
வன் நானல்ல; கர்த்தரின் கற்பனைகளை விட்டதி
னாலும், நீர் பாகால்களைப் பின்பற்றினதினாலும்,
அதைக் கலக்கம்பண்ணினவர்கள் நீரும் உம்மு
௰௯ டைய தகப்பன் வீட்டாரும்தானே.—இப்போ
தும் கற்மேல் பர்வதத்திலே இஸ்ரவேல் அனைத்
தையும், பாகாலின் நானூற்றைம்பது தீர்க்கதரி
சிகளையும், யேசபேலின் பந்தியிலே சாப்பிடுகிற
தோப்பினுடைய நானூறு தீர்க்கதரிசிகளையும்
என்னண்டைக்குக் கூட்டிக்கொண்டுவர ஆள்
௨௰ களை அனுப்புமென்றான்.—அப்படியே ஆகாப்
இஸ்ரவேல் புத்திரர் எல்லாரிடத்திலும் ஆள்களை
அனுப்பி, கற்மேல் பர்வதத்திலே அந்தத் தீர்க்கத
ரிசிகளைக் கூட்டுவித்தான்.

௨௧ அப்போது எலியா சகல சனத்தண்டைக்கும்
சேர்ந்து, நீங்கள் எந்தமட்டும் இரண்டு நினைவு
களால் குந்திக்குந்தி நடப்பீர்கள்; கர்த்தர் தெய்
வமானால் அவரைப் பின்பற்றுங்கள்; பாகால்
தெய்வமானால் அதைப் பின்பற்றுங்களென்
றான்; சனம் பிரதியுத்தாரமாக அவனுக்கு ஒன்
௨௨ றும் சொல்லவில்லை.—அப்போது எலியா சனத்
தோடே சொன்னதாவது: கர்த்தரின் தீர்க்கத
ரிசியாய் மீந்துவைக்கப்பட்டவன் நான் ஒரு
வன், பாகாலின் தீர்க்கதரிசிகளோவென்றால் நா
௨௩ னூற்றைம்பதுபேர்.—இப்போதும் இரண்டு கா
ளைகளை எங்களுக்குக் கொடுக்கக்கடவர்கள்;
ஒரு காளையை அவர்கள் தெரிந்துகொண்டு, அ
தைச் சந்துசந்தாகத் துண்டித்து, நெருப்புப்போ
டாமல் விறகுகளின்மேல் வைக்கக்கடவர்கள்;
நான்மற்றக் காளையை அப்படியே செய்து, நெ
ருப்புப்போடாமல் விறகுகளின்மேல் வைப்
பேன். — நீங்கள் உங்கள் தேவனுடைய நாமத் ௨௪
தைச் சொல்லிக் கூப்பிடுங்கள்; நான் கர்த்தரு
டைய நாமத்தைச் சொல்லிக் கூப்பிடுவேன்;
அப்போது அக்கினியினால் உத்தரவுசொல்லும்
தெய்வமே தெய்வம் என்றான்; அப்போது சன
மெல்லாம் பிரதியுத்தாரமாக, அது நல்லவார்த்
தை என்றார்கள்.

அப்போது எலியா பாகாலின் தீர்க்கதரிசிக ௨௫
ளுடனே, நீங்கள் ஒரு காளையைத் தெரிந்து
கொண்டு அதை ஆயத்தம்பண்ண முந்திக்கொள்
ளுங்கள்; ஏனெனில் நீங்கள் அநேகர்; பிற்பாடு
நெருப்புப்போடாமல் உங்கள் தேவனுடைய
நாமத்தைச் சொல்லிக் கூப்பிடுங்களென்றான்.—
அவன் தங்களுக்குக் கொடுத்த காளையை அவர் ௨௬
கள் வாங்கி ஆயத்தம்பண்ணி, பாகாலே, எங்க
ளுக்குக் கேள்விகொடுமென்று காலமேதுவக்கி
மத்தியானமட்டும் பாகாலின் நாமத்தைச் சொ
ல்லிக் கூப்பிட்டார்கள்; ஆனால் ஒரு சத்தமும்
மறு உத்தாரம்கொடுக்கிறவனும் இல்லாதிருந்தது;
அவர்கள் பண்ணின பலிபீடத்திற்கு எதிரே
நடனமாய்க் குதித்தார்கள்.—மத்தியானத்திலோ ௨௭
வென்றால் எலியா அவர்களைப் பரியாசம் பண்
ணி, உரத்த சத்தமாய்க் கூப்பிடுங்கள்; ஏனெ
னில் அவன் தேவன், அவன் தியானத்தில் இருக்
கிறான்; அல்லவென்று அலுவலாயிருக்கிறான்;
அல்லவென்று வழிப்பயணத்தில் இருக்கிறான்;
அல்லவென்று அவனை எழுப்பிவிடவேண்டிய
தாய்த் தூங்குகிறானாக்கும் என்றான்.—அவர்கள் ௨௮
உரத்த சத்தமாய்க் கூப்பிட்டு, தங்கள் பழக்கத்
தின்படியே இரத்தம் தங்கள்மேலே வடியும்மட்
டும் கத்திகளாலும் ஊசிகளாலும் தங்களைக் கீறிக்
கொண்டார்கள்.—மத்தியான நேரம் பின்னிட் ௨௯
டுப்போனபிற்பாடு, அவர்கள் அந்திக்காணிக்
கை செலுத்தப்படும் நேரம்மட்டாகச் சன்னதம்
சொல்லிக்கொண்டிருந்தார்கள்; ஆனால் ஒரு சத்
தம் வாராமலும், மறு உத்தரம் கொடுக்கிறவனும்
கவனிக்கிறவனும் இல்லாமலுமிருந்தது.

அப்போது எலியா எல்லாச் சனத்தோடும் என் ௩௰
னண்டையிலே சேருங்களென்றான்; எல்லாச்
சனமும் அவன் அண்டையிலே சேர்ந்தபோது,
அவன் தகர்க்கப்பட்ட கர்த்தருடைய பலிபீடத்
தைச் செப்பனிட்டு,—உனக்கு இஸ்ரவேலென் ௩௧
றபேர் இருப்பதாகவென்று கர்த்தருடைய வார்த்
தை வந்த யாக்கோபுடைய குமாரரால் உண்
டான கோத்திரங்களுடைய இலக்கத்தின்படி
யே, பன்னிரண்டு கல்களை எடுத்துக்கொண்டு,—
அந்தக் கல்களாலே கர்த்தருடைய நாமத்திற் ௩௨
கென்று பலிபீடத்தைக் கட்டி, பலிபீடத்தைச்
சுற்றிலும் தானியம் அளக்கிற இரண்டு மரக்கால்

விதைவிதைக்கத்தக்க இடமான ஒரு வாய்க்
௩௩ காலை உண்டாக்கி,—விறகுகளை அடுக்கி, ஒரு
காளையைச் சந்துசந்தாகத் துண்டித்து விறகுக
௩௪ ளின்மேலே வைத்தான். — பிற்பாடு அவன்,
நீங்கள் நாலு குடங்களைத் தண்ணீரால் நிரப்பி
வந்து, சர்வாங்கதகனபலியின்மேலும், விறகுக
ளின்மேலும் ஊற்றுங்களென்றான்; பிற்பாடு
இரண்டாம்விசையும் அப்படி ஊற்றுங்களென்
றான்; இரண்டாம்விசையும் ஊற்றினார்கள்;
அதற்குப்பிறகு மூன்றாம்விசையும் அப்படி
ஊற்றுங்களென்றான்; மூன்றாம்விசையும் ஊற்
௩௫ றினார்கள்.–அப்போது தண்ணீர் பலிபீடத்தைச்
சுற்றிலும் ஓடினதும்தவிர வாய்க்காலும் தண்
௩௬ ணீரால் நிரம்பிற்று.–அந்திக்காணிக்கை செலுத்
தப்படும் நேரத்திலே, தீர்க்கதரிசியாகிய எலியா
சேர்ந்துசொன்னதாவது: ஆபிரகாமுக்கும் ஈசாக்
குக்கும் யாக்கோபுக்கும் பராபரனாகிய கர்த்தா
வே, இஸ்ரவேலிலே தேவரீர் பராபரனென்றும்,
நான் உம்முடைய ஊழியக்காரனென்றும், நான்
இந்தக் காரியங்களை எல்லாம் உம்முடைய வார்த்
தையின்படி செய்தேனென்றும் இன்றைக்குத்
௩௭ தெரியவரப்பண்ணும்.–கர்த்தாவே, தேவரீர் பரா
பரனாகிய கர்த்தரென்றும், தேவரீர் தங்கள் இரு
தயத்தைப் பின்னிட மறுபடியும் திருப்பினீர்
என்றும், இந்தச் சனம் அறியும்படிக்கு, என்னைக்
கேட்டருளும் என்னைக் கேட்டருளும் என்
௩௮ றான்.—அப்போது கர்த்தருடைய அக்கினி இ
றங்கி, அந்தச் சர்வாங்கதகனபலியையும், விறகு
களையும், கல்களையும், மண்ணையும் பட்சித்து,
வாய்க்காலிலிருந்த தண்ணீரையும் நக்கிவிட்
டது.
௩௯ சனமெல்லாம் இதைக் கண்டபோது, முகங்
குப்புறவிழுந்து, கர்த்தரே தெய்வம் கர்த்தரே
௪௰ தெய்வம் என்றார்கள்.–அப்போது எலியா அவர்
களுடனே, நீங்கள் பாகாலின் தீர்க்கதரிசிகளை
அவர்களில் ஒருவனும் தப்பிப்போகாதபடிக்குப்
பிடியுங்களென்றான்; அவர்களைப் பிடித்தபோது,
எலியா அவர்களைத் தாழக் கீசோன் ஆற்றங்க
ரையிலே கொண்டுபோய் அங்கே அவர்களை
வெட்டுவித்தான்.
௪௧ பிற்பாடு எலியா ஆகாப்புடனே, நீர் ஏறிப்
போய்ப் புசித்துக்குடியும்; ஏனெனில் மிகுந்த
மழையின் முழக்கம் உண்டாமென்றான். —
௪௨ ஆகாப் புசித்துக்குடிக்கிறதற்கு ஏறிப்போனான்;
பிற்பாடு எலியா கற்மேல் பர்வதத்தினுடைய
சிகரத்தின்மேல் ஏறி, தரையிலே விழுந்து, தன்
முகத்தைத் தன் முழங்கால்களின் நடுவே குனி
௪௩ யப்பண்ணி, — தன் வேலைக்காரனுடனே, நீ
ஏறிப்போய்ச் சமுத்திரமுகமாய்ப் பாரென்றான்;
அவன் ஏறிப்போய்ப் பார்த்து, ஒன்றும் இல்லை
யென்றான்; ஏழுவிசை திரும்பப்போய்ப் பாரெ
௪௪ ன்றான். — ஏழாம்விசையிலே இவன் இதோ,
சமுத்திரத்திலிருந்து ஒரு மனுஷனுடைய உள்
ளங்கை அத்தனை சிறிய மேகம் எழும்புகின்ற
தென்றான்; அப்போது அவன் நீ போய், ஆகாப்
புடனே, மழை உம்மை நிறுத்திக்கொள்ளாதப
டிக்கு இரதத்தைப் பூட்டி, ஏறிப்போய் இறங்கு
மென்று சொல்லென்றான். — அத்தறுவாயிலே ௪௫
வானம் மேகங்களினாலும் காற்றினாலும் கறுத்து,
பெருமழை உண்டாயிற்று; ஆகாப்போவெனில்
இரதத்தில் ஏறி, எஸ்ரெயேலுக்குப் போனான்.—
ஆனால் கர்த்தருடைய கை எலியாவின்மேல் வந் ௪௬
ததினால், அவன் தன் அரையைக் கட்டிக்கொ
ண்டு, எஸ்ரெயேலுக்கு வரும்மட்டாக ஆகாப்
புக்கு முந்திக்கொண்டு ஓடினான்.

## ௰௯. அதிகாரம்.

௧. ஏசபேல் பயமுறுத்தினதினாலே எலியா பேர்சேபாவுக்குத் தப்பி ஓடினது. ௪. அவன் வனாந்தரத்திலே பிராண அவஸ்தை அடைந்து, ஒரு தேவதூதனாலே ஆதரிக்கப்பட்டது. ௯. ஓரேப்பிலே பராபரன் அவனுக்குத் தரிசனையாகி, ஆசகேலையும், ஏகூவையும், எலிசாவையும் எண்ணெயால் அபிஷேகம்பண்ண அவனை அனுப்பினது. ௰௯. எலிசா தன் சிநேகிதர்களைவிட்டு எலியாவைப் பின்பற்றினது.

எலியா செய்ததெல்லாவற்றையும், அவன் தீர்க்க ௧
தரிசிகளை எல்லாம் பட்டயத்தாலே கொன்று
போட்ட செய்தி அனைத்தையும், ஆகாப் ஏசபே
லுக்கு அறிவித்தான். — அப்போது ஏசபேல் ௨
எலியாவண்டைக்கு ஆளனுப்பி, நான் நாளை
இந்நேரத்தில் உன் பிராணனுக்கு அவர்களில்
ஒவ்வொருவன் பிராணனுக்குச் செய்யப்பட்
டதுபோலச் செய்யாதேபோனால், தேவர்கள்
எனக்கு இப்படியும் அப்படியும் செய்யக்கட
வர்களென்று சொல்லச்சொன்னான். — அவன் ௩
அதைக் கண்டபோது எழுந்து, தன் பிராணனைக்
காக்க யூதாவைச் சேர்ந்த பேர்சேபாவுக்குப்
புறப்பட்டுப்போய், அங்கே தன் வேலைக்கார
னை வைத்தான்.
அவனோவெனில் வனாந்தரத்தில் ஒருநாள் ௪
வழிபோய், ஒரு சூரைச்செடியின்கீழ் வந்து
உளுக்காந்து, தனக்கு மரணத்தைக் கேட்டு, இப்
போது போதும் கர்த்தாவே, என் ஆத்துமாவை
வாங்கிக்கொள்ளும்; ஏனெனில் என் பிதாக்க
ளைப்பார்க்கிலும் நான் நல்லவனல்லவென்று
சொல்லி,–ஒரு சூரைச்செடியின்கீழ்ப் படுத்துக் ௫
கொண்டு நித்திரைபண்ணினான்; அப்போது
இதோ ஒரு தூதன் அவனைத் தட்டி, அவனுடனே
எழுந்து போசனம்பண்ணென்றான். — அவன் ௬
விழித்துப் பார்க்கிறபோது, இதோ தணலில்
சுடப்பட்ட அடையும், ஒரு பாத்திரம் தண்
ணீரும் அவன் தலைமாட்டிலிருந்தது; அப்போது
அவன் புசித்துக்குடித்துத் திரும்பப் படுத்துக்
கொண்டான்.—கர்த்தருடைய தூதன் திரும்ப ௭
இரண்டாம்விசை வந்து அவனைத் தட்டி, எழுந்து
போசனம்பண், ஏனென்றால் வழிப்பயணம்
உனக்கு வெகு தொலையாயிருக்கும் என்றான்.–
அப்போது அவன் எழுந்திருந்து புசித்துக் கு ௮
டித்து, அந்தப் போசனத்தின் பலத்தினாலே
இரவுபகல் நாற்பதுநாள் ஓரேப்பென்ற பராபர
னுடைய பர்வதம்மட்டும் நடந்தான்.
அங்கே அவன் ஒரு கெபிக்குள் பிரவேசித்து ௯
அங்கே இராத்தங்கினான்; இதோ கர்த்தருடைய
வார்த்தை அவனுக்குண்டாகி, அவர் அவனுட

னே எலியாவே, இங்கே உனக்குக்கவையென்ன
௰ என்றார்.—அதற்கு அவன், சேனைகளின் பரா
பரனாகிய கர்த்தருக்காக வெகு பத்திவயிராக்கி
யமாயிருந்தேன்; ஏனென்றால் இஸ்ரவேல் புத்தி
ரர் உமது உடம்படிக்கையை விட்டார்கள்; உம்
முடைய பீடங்களை இடித்து, உம்முடைய
தீர்க்கதரிசிகளைப் பட்டையத்தாலே கொன்று
போட்டார்கள்; நான் ஒருவனே மீந்திருக்கி
றேன்; என் பிராணனையும் வாங்கத்தேடுகிறார்
௰௧ கள் என்றான்.—அப்போது அவர், நீ வெளியே
வந்து கர்த்தருக்குமுன்பாகப் பர்வதத்தில் நில்
லென்றார்; அப்போது இதோ கர்த்தர் கடந்து
போனார்; கர்த்தருக்குமுன்பாகப் பர்வதங்களைக்
கிழிக்கிறதும் கல்மலைகளை உடைக்கிறதுமான
பலத்த பெருங்காற்று அடித்தது; ஆனால் அந்தக்
காற்றிலே கர்த்தர் இருந்ததில்லை; காற்றிற்குப்
பிறகு பூமி அதிர்தல் வந்தது; அந்தப் பூமி அதிர்த
௰௨ லிலும் கர்த்தர் இருந்ததில்லை.—பூமி அதிர்தலுக்
குப்பிறகு அக்கினி வந்தது; அக்கினியிலும் கர்த்
தர் இருந்ததில்லை; அக்கினிக்குப்பிறகு அமர்ந்த
௰௩ மெதுவான இரைச்சல் வந்தது.—அதை எலியா
கேட்டபோதோவெனில், அவன் தன் சால்வை
யினாலே தன் முகத்தை மூடி வெளியே வந்து,
கெபியின் வாசலில் நின்றான்; அப்போது இ
தோ, எலியாவே, இங்கே உனக்குக் கவை என்ன
வென்கிற சத்தம் அவனுக்கு உண்டாயிற்று.—
௰௪ அதற்கு அவன், சேனைகளின் பராபரனாகிய
கர்த்தருக்காக வெகு பத்திவயிராக்கியமாயிருந்
தேன்; ஏனெனில் இஸ்ரவேல் புத்திரர் உமது
உடம்படிக்கையை விட்டார்கள்; உம்முடைய
பீடங்களை இடித்து, உம்முடைய தீர்க்கதரிசிக
ளைப் பட்டையத்தாலே கொன்றுபோட்டார்
கள்; நான் ஒருவனே மீந்திருக்கிறேன்; என் பிரா
ணனையும் வாங்கத் தேடுகிறார்களென்றான்.—
௰௫ அப்போது கர்த்தர் அவனோடே சொன்னதா
வது: நீ போய் உன் வழிப்பயணத்திலே தமஸ்
குவின் வனாந்தரத்திற்குத் திரும்பிக்கொண்டு,
உள்பிரவேசித்து, ஆசவேலைச் சூரியாவின்மேல்
௰௬ இராசாவாக அபிஷேகம்பண்ணி,— பிற்பாடு
நிமிசியின் குமாரனாகிய ஏகூவை இஸ்ரவேலின்
மேல் இராசாவாக அபிஷேகம்பண்ணி, ஆபேல்
மேகொலா ஊரானான சாப்பாத்தின் குமாரனா
கிய எலிசாவை உன் ஸ்தலத்திலே தீர்க்கதரிசி
௰௭ யாக அபிஷேகம்பண்ணுவாயாக.— சம்பவித்த
தேதெனில் ஆசவேலின் பட்டையத்திற்குத் தப்
பினவனை ஏகூ கொன்றுபோடுவான்; ஏகூவின்
பட்டையத்திற்குத் தப்பினவனை எலிசா கொன்
௰௮ றுபோடுவான்.—ஆனால் பாகாலுக்கு முடங்கா
திருக்கிற சகல முழங்கால்களும் அதை முத்தம்
செய்யாதிருக்கிற சகல வாய்களுமாகிய ஏழாயி
ரம்பேரை இஸ்ரவேலிலே மீத்துவைத்தோமென்
றார்.

௰௯ அப்படியே அவன் அவ்விடம்விட்டுப் புறப்
பட்டு, சாப்பாத்தின் குமாரனாகிய எலிசாவைக்
கண்டுபிடித்தான்; இவன் பன்னிரண்டு ஏர்
ஓட்டி உழுதான்; தானே அந்தப் பன்னிரண்டு
ஏரோடுகூட இருந்தான்; அப்போது எலியா அவ
னிருக்கும் இடம்மட்டும் போய்த் தன் சால்வை
யை அவன்மேலே போட்டான். — அப்போது ௨௰
அவன் மாடுகளை விட்டு, எலியாவின் பிறகாலே
ஓடி, நான் என் தகப்பனையும் என் தாயையும்
முத்தம்செய்யட்டுமே, அதற்குப்பிறகு உம்மைப்
பின்செல்லுவேனென்றான்; அவன் இவனுட
னே, போய்த் திரும்பிவா; ஏனெனில் நான்
உனக்குச் செய்ததை நினைத்துக்கொள்ளென்
றான். — அப்போது இவன் அவனைவிட்டுத் ௨௧
திரும்பி, ஒரு ஏர்மாடுகளைப் பிடித்து அடித்து,
அந்தக் குண்டைகளுக்கடுத்த மரமுட்டுகளால்
அவைகளின் இறைச்சியைச் சமைத்துச் சனத்
திற்குக் கொடுத்தான்; அவர்கள் சாப்பிட்டபிற்
பாடு, அவன் எழுந்து, எலியாவைப் பின்சென்
று அவனுக்கு ஊழியம்செய்தான்.

## ௨௰. அதிகாரம்.

*௧. பெனாதாத் ஆகாப்பின் மரியாதைகளை ஏற்றுக்கொள்ளாமல் சமாரியா வை முற்றிக்கைபோட்டது. ௰௩. ஒரு தீர்க்கதரிசி சொன்னபடி சூரியர்கள் கொல்லப்பட்டது. ௨௨. ஒரு தீர்க்கதரிசி ஆகாப்புக்கு முன் அறிவித்தபடி சூரியர் பள்ளத்தாக்கைத் தேடி, ஆப்பேக்கில் அவன்மேல் வந்தது, ௨௮. தீர்க்கதரிசி வார்த்தையின்படி பராபரனுடைய நியாயத் தீர்ப்பினால் சூரியர்கள் மறுபடியும் செயிக்கப்பட்டது. ௩௧ சூரியர்கள் தனக்குக் கீழ்ப்படிந்ததினால், ஆகாப் பெனாதாத்தை உடம்படிக்கை பண்ணி அனுப்பினது. ௩௫. ஒரு தீர்க்கதரிசி காவலில் வைக்கப்பட்டவனைக்குறித்த உவமையை சொல்லி, ஆகாப் தன்னைத்தானே நியாயந்தீர்க்கச் செய்துவரும் ஆக்கினையை அறிவித்தது.*

சூரியாவின் இராசாவாகிய பெனாதாத் தன் இ ௧
ராணுவத்தையெல்லாம் கூட்டிக்கொண்டு ஏறிப்
போய், சமாரியாவை முற்றிக்கைபோட்டு, அ
தின்மேல் யுத்தம்பண்ணினான்; அவனோடே
கூட முப்பத்திரண்டு இராசாக்களும் குதிரை
களும் இரதங்களும் இருந்தன.—அவன் இஸ்ர ௨
வேலின் இராசாவாகிய ஆகாப்பண்டைக்குத்
தானாபதிகளைப் பட்டணத்திற்குள் அனுப்பி,—
உன்னுடைய வெள்ளியும் உன்னுடைய பொன் ௩
னும் என்னுடையது; உன்னுடைய ஸ்திரிகளும்
உன் குமாரர்களிலே சமர்த்தராயிருக்கிறவர்க
ளும் என்னுடையவர்கள் என்று பெனாதாத்
சொல்லுகிறான் என்பதை அவனுக்குச் சொல்
லச்சொன்னான்.—இஸ்ரவேலின் இராசா பிரதி ௪
யுத்தாரமாக, இராசாவாகிய என் ஆண்டவனே,
உம்முடைய வார்த்தையின்படியே, நானும் எ
னக்குண்டான யாவும் உம்முடையவைகள்
தான் என்று சொல்லி அனுப்பினான்.

அந்தத் தானாபதிகள் திரும்பிவந்து சொன்ன ௫
தாவது: பெனாதாத் சொல்லுகிறதேதெனில், உன்
வெள்ளியையும், உன் பொன்னையும், உன் ஸ்தி
ரிகளையும், உன் குமாரர்களையும் நீ எனக்குக் கொ
டுக்கவேண்டுமென்று உனக்குச் சொல்லி அனுப்
பினேனே.—ஆனால் நாளை இந்நேரத்தில் என் ௬
ஊழியக்காரரை உன்னண்டைக்கு அனுப்பு
வேன்; அவர்கள் உன் வீட்டையும் உன் ஊழி
யக்காரரின் வீடுகளையும் சோதித்து, உன் பார்
வைக்குப் பிரியமானவைகள் எல்லாவற்றையும்
தங்கள் கைகளில் எடுத்துக்கொண்டுவருவார்கள்

௭ என்றாரென்று சொன்னார்கள்.—அப்போது இஸ்ர
வேலின் இராசா,தேசத்தின் மூப்பரையெல்லாம்
அழைப்பித்து,இவன் பொல்லாப்புத் தேடுகிறவி
தத்தைக் கவனித்துப்பாருங்கள்; அதேதென்றால்
என் ஸ்திரிகளையும், என் குமாரர்களையும், என்
வெள்ளியையும், என் பொன்னையும் கேட்க,
அவன் என்னண்டைக்கு ஆளனுப்பினபோது,
நான் அவனுக்குக் கொடுப்பதில்லையென்று
௮ சொன்னதில்லையே என்றான்.—அப்போது
எல்லா மூப்பரும் எல்லாச் சனமும் அவனு
டனே, நீர் அவனுக்குக் கேள்விகொடுக்கவும்,
அவனுக்குச் சம்மதிக்கவும் வேண்டாமென்றார்
௯ கள்.—ஆகையால் அவன் பெனாதாத்தின் தானா
பதிகளுடனே, நீங்கள் இராசாவாகிய என் ஆண்
டவனுக்குச் சொல்லவேண்டியதேதெனில், நீர்
முதல்விசை உம்முடைய அடியானுக்குச் சொ
ல்லி அனுப்பின யாவையும் செய்வேன்; ஆனால்
இந்தக்காரியத்தை நான் செய்யக்கூடாதென்று
சொல்லுங்களென்றான்; தானாபதிகள் போய்,
இந்த மறுமொழியை அவனுக்குச் சொன்னார்
கள்.

௰ அப்போது பெனாதாத் அவனண்டைக்கு ஆள
னுப்பி, என் அடிகளைப் பின்செல்லுகிற சனமெ
ல்லாம் கைக்கு ஒரு பிடிவாரச் சமாரியாவின்
தூள் போதுமானால், தேவர்கள் எனக்கு இப்ப
டியும் அப்படியும் செய்யக்கடவர்களென்று
௰௧ சொல்லச்சொன்னான்.—அதற்கு இஸ்ரவேலின்
இராசா பிரதியுத்தாரமாக, பட்டையத்தை அரை
கட்டிக்கொள்ளுகிறவன், அதை அவிழ்த்துப்
போடுகிறவனைப்போலப் பெருமைபாராட்டல்
ஆகாதென்று அவனுக்குச் சொல்லுங்களென்
௰௨ றான்.—அவன்தானும், மற்ற இராசாக்களும், கூ
டாரங்களிலே குடித்துக்கொண்டிருக்கையில்,
இந்த வார்த்தையைக் கேட்டபோதோவெனில்,
தன் ஊழியக்காரருடனே சண்டைக்கு ஆயத்தம்
பண்ணுங்களென்றான்; அப்படியே பட்டணத்
தின்மேலே சண்டைக்கு ஆயத்தம்பண்ணினார்
கள்.

௰௩ அப்போது இதோ ஒரு தீர்க்கதரிசி இஸ்ரவே
லின் இராசாவாகிய ஆகாப் அண்டையிலே சேர்
ந்து, அந்தப் பெரிய ஏராளத்தையெல்லாம் கண்
டாயோ? இதோ நாமே கர்த்தரென்று நீ அறியும்
படிக்கு இன்றைக்கு அதை உன் கையில் ஒப்
புக்கொடுப்போமென்று கர்த்தர் சொல்லுகிறார்
௰௪ என்றான்.—யாரைக்கொண்டென்று ஆகாப் கேட்
டான்; அதற்கு அவன், மாகாணங்களுடைய
துரைகளின் சேவகரைக்கொண்டென்று கர்த்தர்
சொல்லுகிறாரென்றான்; யுத்தத்தை யார் துவக்க
வேண்டுமென்று அவன் கேட்டதற்கு அவன்
நீர்தானென்றான்.

௰௫ அவன் மாகாணங்களுடைய துரைகளின்சே
வகரை இலக்கம்பார்க்கிறபோது, அவர்கள் இரு
நூற்று முப்பத்திரண்டுபேர்; அவர்களுக்குப்பிற்
பாடு, இஸ்ரவேல் புத்திரராகிய சகல சனத்தின்
இலக்கமும் ஏழாயிரம்பேரென்று கண்டான்.—
அவர்கள் மத்தியான நேரத்திலே,வெளியே புறப் ௰௬
பட்டார்கள்; ஆனால் பெனாதாத்தும், அவனுக்கு
ஒத்தாசைசெய்கிற முப்பத்திரண்டு இராசாக்க
ளாகிய மற்ற இராசாக்களும், கூடாரங்களில்
வெறியெடுக்கக் குடித்திருந்தார்கள்.—மாகாணங் ௰௭
களுடைய துரைகளின் சேவகர் முன்தண்டா
கப் புறப்படுகிறபோது, பெனாதாத் அனுப்பின
மனுஷர் சமாரியாவிலிருந்து மனுஷர் புறப்படு
கிறார்களென்று அவனுக்கு அறிவித்தார்கள்.—
அப்போது அவன் அவர்கள் சமாதானத்திற்கா ௰௮
கப் புறப்பட்டுவந்தாலும் அவர்களை உயிரோடே
பிடியுங்கள்; அவர்கள் யுத்தத்திற்காகப் புறப்
பட்டுவந்தாலும் அவர்களை உயிரோடே பிடி
யுங்களென்றான்.—மாகாணங்களுடைய துரை ௰௯
களின் சேவகரான அவர்களும், அவர்கள் பிற
காலே வருகிற இராணுவமும், பட்டணத்திலி
ருந்து வெளியே வந்தபோதோவெனில்,—அவர் ௨௰
கள் அவரவர் தங்களுக்கு எதிர்ப்படுகிறவர்களை
வெட்டினார்கள்; சூரியர் முறிந்தோடிப்போனார்
கள்; இஸ்ரவேலர் அவர்களைத் துரத்தினார்கள்;
சூரியாவின் இராசாவாகிய பெனாதாத்தோவெ
னில், குதிரையின்மேல் ஏறிச் சில குதிரைக்கார
ரோடேகூடத் தப்பினான்.—இஸ்ரவேலின் இரா ௨௧
சா புறப்பட்டு, குதிரைகளையும் இரதங்களையும்
முறியடித்து,சூரியரில் மகா மடிவுண்டாக வெ
ட்டினான்.—பிற்பாடு அந்தத் தீர்க்கதரிசி இஸ்ர ௨௨
வேலின் இராசாவண்டைக்குச் சேர்ந்து, அவனு
டனே சொன்னதாவது: நீர் போய்ப் பலத்துக்
கொண்டு, நீர் செய்யத்தக்கவைகளைக் கவனித்
துப்பாரும்; ஏனெனில் மறு வருஷத்திலே சூரி
யாவின் இராசா உமக்கு விரோதமாக ஏறிவருவா
னென்றான்.

சூரியாவின் இராசாவோடே அவனுடைய ௨௩
ஊழியக்காரர் சொன்னதாவது: அவர்களுடைய
தேவர்கள் மலைகளின் தேவர்களானதினால், அ
வர்கள் நம்மை மேல்கொண்டார்கள்; நாம் அவர்
களோடே ஒத்த தரையிலே யுத்தம்பண்ணினால்
தாவிளை, அப்போது அவர்களை மேல்கொள்ளோ
மோ?—அதற்காக நீர் செய்யவேண்டியதேதெ ௨௪
னில், அந்த இராசாக்களில் அவரவரை அவர்கள்
தலத்திலிருந்து மாற்றி, அவர்களுக்குப்பதிலா
கச் சேர்வைக்காரரை வைத்து,—நீர் மடியக்கொ ௨௫
டுத்த இராணுவத்தைப்போலொத்த இராணுவத்
தாரையும், அந்தக் குதிரைகளைப்போலொத்த
குதிரைகளையும், இரதங்களைப்போலொத்த இரத
ங்களையும்இலக்கம்பார்த்துக்கொள்ளும்;பிற்பாடு
அவர்களை மேல்கொள்ளோமோ என்று ஒத்ததரை
யிலே அவர்களோடு யுத்தம்பண்ணுவோமென்
றார்கள்; அவன் இவர்கள் சொல்கேட்டு அப்ப
டியே செய்தான்.

ஆகையால் மறு வருஷத்திலே பெனாதாத் ௨௬
சூரியரை இலக்கம்பார்த்து, இஸ்ரவேலோடு
யுத்தம்பண்ண ஆப்பேக்குக்கு ஏறிவந்தான்.—
இஸ்ரவேல் புத்திரரும் இலக்கம்பார்க்கப்பட்டுத் ௨௭
தேவையானதைப் பராமரித்துக்கொண்டு, அவர்

களுக்கு எதிராகப் புறப்பட்டு, அவர்களுக்கு
எதிரே இரண்டு சிறிய வெள்ளாட்டுக்கிடைக
ளைப்போலப் பாளயம் இறங்கினார்கள்; ஆனால்
௨௮ சூரியரால் தேசம் நிரம்பியிருந்தது.—அப்போது
பராபரனுடைய மனுஷன் ஒருவன் சேர்ந்து
வந்து, இஸ்ரவேலின் இராசாவுடனே, கர்த்தர்
பள்ளத்தாக்குகளின் தேவனாயிராமல், மலைக
ளின் தேவனாயிருக்கிறவரென்று சூரியர் சொன்
னபடியினாலே, நான் இந்தப் பெரிய ஏராளத்
தையெல்லாம், நாமே கர்த்தரென்று நீங்கள் அறி
யும்படிக்கு உன் கையில் ஒப்புக்கொடுத்தே
௨௯ மென்று கர்த்தர் சொல்லுகிறாரென்றான்.—ஏழு
நாள் இவர்கள் அவர்களுக்கு எதிராகப் பாளயம்
இறங்கி இருந்தபோதோவெனில், ஏழாம்நாளி
லே யுத்தம் கலந்து, இஸ்ரவேல் புத்திரர் ஒரே
நாளிலே சூரியரில் நூறாயிரம் காலாள்களை மட
௩௰ ங்க அடித்தார்கள். — மீதியானவர்கள் ஆப்பேக்
பட்டணத்திற்குள் ஓடிப்போனார்கள்; ஆனால்
மீதியான இருபத்தேழாயிரம்பேரின்மேல் அலங்
கம் இடிந்து விழுந்தது; பேனாதாத்தும் ஓடிப்
போய்ப் பட்டணத்திற்குள் பிரவேசித்து, அறை
வீடு அறைவீடாகப் பதுங்கினான்.
௩௧ அப்போது அவன் ஊழியக்காரர் அவனு
டனே, இதோ இஸ்ரவேல் வீட்டு இராசாக்கள்
தயவுள்ள இராசாக்களென்று கேட்டிருக்கி
றோம்; நாங்கள் இரட்டுகளை எங்கள் அரையிலே
கட்டி, கயிறுகளை எங்கள் தலைகளில் சுற்றிக்
கொண்டு, இஸ்ரவேலின் இராசாவண்டைக்கு
வெளியே போவோமே; ஒருவேளை உம்மை
௩௨ உயிரோடே வைப்பாரென்று சொல்லி,—இரட்
டுகளைத் தங்கள் அரையிலே கட்டி, கயிறுகளைத்
தங்கள் தலைகளிலே சுற்றிக்கொண்டு, இஸ்ரவே
லின் இராசாவண்டைக்கு வந்து, என்னை உயி
ரோடே வையுமேயென்று உம்முடைய அடியா
னாகிய பேனாதாத் விண்ணப்பம்பண்ணுகிறா
னென்றார்கள்; அதற்கு அவன், அவன் இன்னம்
உயிரோடே இருந்தானானால் அவன் என் சகோ
௩௩ தரனென்றான்.—அந்த மனுஷர் நன்றாய்க் கவ
னித்து, அவன் வாயின் சொல்லை உடனே பிடி
த்து, உம்முடைய சகோதரனாகிய பேனாதாத் இரு
க்கிறானென்றார்கள்; அப்போது அவன், நீங்கள்
போய், அவனை அழைத்துவாருங்களென்றான்;
பேனாதாத் அவனண்டைக்கு வெளியே வந்த
போது, அவன் இவனை இரதத்தில் ஏறிவரப்பண்
௩௪ ணினான்.— அப்போது இவன் அவனுடனே,
என் தகப்பன் உம்முடைய தகப்பனார் கையிலே
பிடித்த பட்டணங்களைத் திரும்பக் கொடுக்கி
றேன்; என் தகப்பன் சமாரியாவிலே வைத்தது
போல, நீர் தமஸ்குவிலே உமக்குத் தெருவீதிகளை
வைத்துக்கொள்ளும் என்றதற்கு, அவன் இந்த
உடம்படிக்கையாய் நான் உம்மை அனுப்பிவிடு
கிறேனென்று சொல்லி, அவனோடு உடம்படிக்
கைபண்ணி, அவனை அனுப்பிவிட்டான்.
௩௫ அப்போது தீர்க்கதரிசிகளின் புத்திரரில் ஒரு
வன், கர்த்தருடைய வார்த்தையாய்த் தன் தோழ
னுடனே, நீ என்னை அடியென்றான்; ஆனால்
அந்த மனுஷன் அவனை அடிக்க மனதில்லாதி
ருந்தான்.—அப்போது அவன் இவனுடனே, ௩௬
நீ கர்த்தருடைய சத்தத்திற்குக் கீழ்ப்படியாதே
போனபடியினாலே, இதோ ஒரு சிங்கம் நீ என்
னைவிட்டுப் புறப்பட்டபின் உன்னைக் கொல்லு
மென்றான்; அப்படியே இவன் அவனைவிட்டுப்
புறப்பட்டபின், ஒரு சிங்கம் அவனைக் கண்டு
பிடித்து, அவனைக் கொன்றுபோட்டது.—அதின் ௩௭
பிறகு அவன் வேறொருவனைச் சந்தித்து, என்
னை அடியென்றதற்கு அந்த மனுஷன் அவனைக்
காயமுண்டாக அடித்தான்.—அப்போது அந்தத் ௩௮
தீர்க்கதரிசி போய், தன் கண்களின்மேல் சாம்
பலைப் போட்டு, வேஷமாறினவனாய் வழியிலே
இராசாவுக்குக் காத்திருந்தான்.—இராசா கடந்து ௩௯
வருகிறபோது, இவன் இராசாவைப் பார்த்துக்
கூப்பிட்டுச் சொன்னதாவது: உம்முடைய அ
டியான் யுத்தத்திற்கு உள்பட்டிருக்கிற போது,
இதோ ஒருவன் விலகி, என்னண்டைக்கு ஒரு
மனுஷனைக் கொண்டுவந்து, இந்த மனுஷனைப்
பத்திரம்பண்; இவன் இல்லாதே போகவேபோ
னால், உன் பிராணன் அவன் பிராணனுக்குப்
பதிலாயிருக்கும்; அல்லது ஒரு தாலந்து வெள்ளி
யை நீ நிறுத்துக்கொடுக்கவேண்டுமென்றான்.—
ஆனால் உம்முடைய அடியான் இங்கும் அங்கும் ௪௰
அலுவலாயிருக்கிறபோது, அவன் இல்லாதே
போனானென்றான்; இஸ்ரவேலின் இராசா அவ
னுடனே, நீதானே சொன்ன உன் தீர்ப்பின்படி
ஆகுமென்றான். — அப்போது அவன் சீக்கிர ௪௧
மாய்த் தன் கண்களின்மேலிருக்கும் சாம்பலைத்
துடைத்துவிட்டதினால், இஸ்ரவேலின் இராசா
அவன் தீர்க்கதரிசிகளில் ஒருவனென்று அவனை
அறிந்தான்.—அப்போது இவன் அவனுடனே, ௪௨
நம்மாலே சங்காரத்திற்கு நியமிக்கப்பட்டு, உன்
கையிலிருந்த மனுஷனை நீ கையிலிருந்து விட்
டபடியினாலே, உன் பிராணன் அவன் பிராண
னுக்குப்பதிலாகவும்,உன்னுடைய சனம் அவன்
சனத்திற்குப்பதிலாகவும் இருக்கும் என்று கர்த்
தர் சொல்லுகிறாரென்றான்.—அதினால் இஸ்ரவே ௪௩
லின் இராசா விதனமும் சினமும் அடைந்தவ
னாய், தன் வீட்டிற்குப்போகப் புறப்பட்டுச்
சமாரியாவுக்கு வந்தான்.

## உக. அதிகாரம்.

௧. ஆகாப் நாபோத்தினுடைய திராட்சத்தோட்டத்தை வாங்கத் தடைபட்டதனால், துக்கமடைந்தது. ௮. ஏசபேல் எழுதின நிருபத்தின்படி நாபோத் குற்றம்சார்த்தப்பட்டதனால் தேவதூஷணக்காரனாகத் தீர்க்கப்பட்டது. ௰௫. ஆகாப் திராட்சத்தோட்டத்தைத் தன் வசமாக்கிக்கொண்டது. ௰௭. எலியா, ஆகாப்புக்கும் ஏசபேலுக்கும் விரோதமாக வரும் ஆக்கினையைச் சொல்லியது. ௨௭. பொல்லாத ஆகாப் குணப்பட்டதனால் அவன்மேல் வரும் தண்டனையைப் பராபரன் தாமசப்படுத்தினது.

இவைகளுக்குப்பிற்பாடு சம்பவித்ததேதெனி ௧
ல், இஸ்ரெயேலனாகிய நாபோத்துக்கு இஸ்ரெ
யேலிலே சமாரியாவின் இராசாவாகிய ஆகா
பின் அரமனை அண்டையில் ஒரு திராட்சத்தோ
ட்டம் இருந்தது.—ஆகாப் நாபோத்துடனேபேசி, ௨

உன்னுடைய திராட்சத்தோட்டம் எனக்குக் கீ
ரைக்கொல்லையாகும்படிக்கு அதை எனக்குக்
கொடு; ஏனெனில் அது என் வீட்டிற்கு அடுத்த
தாயிருக்கின்றது; அதைப்பார்க்கிலும் நல்ல தி
ராட்சத்தோட்டத்தை அதற்குப் பதிலாக உனக்
குக் கொடுப்பேன்; அல்லது உன் பார்வைக்குச்
சம்மதியாயிருந்தால், உனக்கு அதின் விலைக்கிர
யமான வெள்ளியைக் கொடுப்பேனென்றான்.—
௩ ஆனால் நாபோத் ஆகாப்புடனே, உமக்கு நான்
என் பிதாக்களின் சுதந்தரத்தைக் கொடுக்கும் கா
ரியத்திற்குக் கர்த்தர் என்னை விலக்கமாய்க் காப்
பாராகவென்றான்.
௪ அப்போது என் பிதாக்களின் சுதந்தரத்தை
உமக்குக் கொடேனென்று இஸ்ரயேலனாகிய
நாபோத் தன்னோடே சொன்ன வார்த்தைக்காக,
ஆகாப் சலிப்பும் சினமும் அடைந்தவனாகி, தன்
வீட்டிற்கு வந்து. தன் கட்டிலின்மேலே படுத்து,
தன் முகத்தைத் திருப்பிக்கொண்டு, அப்பம் சாப்
௫ பிடாதேபோனான்.—அப்போது அவன் பெண்
சாதியாகிய யேசபேல் அவனண்டையில் வந்து,
நீர் அப்பம்சாப்பிடாதபடிக்கு, உம்முடைய ஆவி
சலிப்படைந்திருக்கிறதென்னவென்று அவனைக்
௬ கேட்டதற்கு,—அவன் அவளுடனே, நான் இஸ்
ரெயேலனாகிய நாபோத்தோடே பேசி, அவனு
டனே, உன் திராட்சத்தோட்டத்தை எனக்கு
விலைக்கிரயமாய்க் கொடு; அல்லவென்று உனக்
கு இராசியானால் அதற்குப்பதிலாக வேறே திரா
ட்சத்தோட்டத்தை உனக்குக் கொடுப்பேனென்
றேன்; ஆனால் அவன் என்னுடைய திராட்
சத்தோட்டத்தை உமக்குக் கொடேனென்று
௭ னென்று சொன்னான்.— அப்போது அவன்
பெண்சாதியாகிய யேசபேல் அவனுடனே, நீர்
இப்போது இஸ்ரவேலின்மேல் இராச்சியபாரம்
பண்ணுகிறவன்போலச் செய்யும்; எழுந்திருந்து
அப்பம் புசித்து மனமகிழ்ச்சியாயிரும்; நான்
உமக்கு இஸ்ரெயேலனாகிய நாபோத்தின் திராட்
சத்தோட்டத்தைக் கொடுப்பேனென்று சொல்
௮ லி,—ஆகாபின் நாமத்திலே நிருபங்களை எழுதி,
அவன் முத்திரையை அவைகளுக்குப் போட்டு,
அந்த நிருபங்களை நாபோத்திருக்கும் பட்டணத்
தில் அவனோடே குடியிருக்கிற மூப்பரண்டைக்
கும் மேல்குலத்தாரண்டைக்கும் அனுப்பினாள்.-
௯ அந்த நிருபங்களில் அவள் எழுதினது, நீங்கள்
உபவாசமென்று அறிவித்து, நாபோத்தைச் சனத்
௰ தின்முன் வைத்து,—பராபரனையும் இராசாவை
யும் தூஷணித்தாயென்று அவன்மேலே சாட்சி
சொல்லுகிற பேலியாளின் பிள்ளைகளாகிய இர
ண்டு மனுஷரை அவனுக்கு எதிராக வைத்து,
அவனை வெளியே கொண்டுபோய் அவன் சா
கும்படிக்கு அவனைக் கல்லெறியுங்களென்று
எழுதினாள்.
௰௧ அவன் பட்டணத்திலே குடியிருக்கிற மூப்ப
ரும் மேல்குலத்தாருமாகிய அவன் பட்டணத்து
மனுஷர், யேசபேல் தங்களுக்கு அனுப்பின நிரு
பங்களில் எழுதிக் கட்டளையிட்டிருந்தபடியே
செய்தார்கள்.—அவர்கள் உபவாசமென்று அறி ௰௨
வித்து, நாபோத்தைச் சனத்தின்முன்னே வைத்
தார்கள்.-அப்போது பேலியாளின் பிள்ளைகளா ௰௩
கிய இரண்டு மனுஷர் வந்து, அவனுக்கு எதிராக
உளுக்காந்து, நாபோத் பராபரனையும் இராசா
வையும் தூஷணித்தானென்று சனத்திற்குமுன்
பாக அவன்மேலே சாட்சிசொன்னார்கள்; அதற்
குப்பிறகு அவனைப் பட்டணத்திற்கு வெளியே
கொண்டுபோய், அவன் சாகும்படிக்கு அவ
னைக் கல்லெறிந்து,—பிற்பாடு யேசபேலுக்கு, நா ௰௪
போத் கல்லெறியுண்டு செத்தானென்று சொல்லி
அனுப்பினார்கள்.
நாபோத் கல்லெறியுண்டு செத்ததை யேசபேல் ௰௫
கேட்டபோது, ஆகாப்புடனே, நீர் எழுந்தி
ருந்து, இஸ்ரெயேலனாகிய நாபோத் உமக்கு
விலைக்கிரயமாகக் கொடுக்கமாட்டேனென்ற அ
வன் திராட்சத்தோட்டத்தைச் சுதந்தரமாக எடுத்
துக்கொள்ளும்; ஏனெனில் நாபோத் உயிரோடி
ராமல் செத்தானென்றாள்.—நாபோத் செத்ததை ௰௬
ஆகாப் கேட்டபோது, அவன் இஸ்ரெயேலனா
கிய நாபோத்தின் திராட்சத்தோட்டத்தைச் சொ
ந்தமாயெடுத்துக்கொள்ள அதில் இறங்கிப்போ
கிறதற்கு எழுந்திருந்தான்.
ஆனால் கர்த்தருடைய வார்த்தை திஸ்பியனா ௰௭
கிய எலியாவுக்குண்டாகி, அவர் சொன்னதாவ
து:-நீ எழுந்து, சமாரியாவிலிருக்கிற இஸ்ரவே ௰௮
லின் இராசாவாகிய ஆகாப்புக்கு எதிர்ப்பட இ
றங்கிப்போ; இதோ அவன் நாபோத்தின் திராட்
சத்தோட்டத்தில், அதைச் சொந்தமாய் எடுத்துக்
கொள்ள இறங்கிப்போனான்.-நீ அவனுடனே, ௰௯
நீ கொலைசெய்ததும் எடுத்துக்கொண்டதும் இல்
லையோவென்று கர்த்தர் சொல்லுகிறார்; நாய்கள்
நாபோத்தின் இரத்தத்தை நக்கின தலத்திலே நாய்
கள் உன்னுடைய இரத்தத்தையும் நக்குமென்று
கர்த்தர் சொல்லுகிறார் என்பாயாக என்றார்.—
அப்போது ஆகாப் எலியாவுடனே, என் பகை ௨௰
ஞனே, என்னைக் கண்டுபிடித்தாயோ என்றான்;
அதற்கு அவன் சொன்னதாவது: கண்டுபிடித்
தேன்; ஏனென்றால் கர்த்தரின் பார்வைக்குப்
பொல்லாப்பானதைச் செய்ய உம்மை விற்றுப்
போட்டீர்.—இதோ நாம் உன்மேலே பொல் ௨௧
லாப்பு வரப்பண்ணி, உன் சந்ததியை எடுத்
துப்போட்டு, ஆகாப்புக்குச் சுவரில் நீர்விடும்
ஒரு நாயாகிலும் மீராதபடிக்கு இஸ்ரவேலில்
அடைக்கப்பட்டவனையும் விட்டுவிடப்பட்ட
வனையும் சங்கரித்து,—நீ நமக்குக் கோபமுண் ௨௨
டாக்கி, இஸ்ரவேலைப் பாவம்செய்யப் பண்
ணினதின்நிமித்தம், உன்னுடைய வீட்டை நே
பாத்தின் குமாரனாகிய எரோபேயாமின் வீட்
டிற்கும், அகீயாவின் குமாரனாகிய பாசாவின்
வீட்டிற்கும் சமானமாக்குவோம் என்றாரென்று
சொன்னான். — யேசபேலையும்குறித்துக் கர்த்தர் ௨௩
சொன்னது: நாய்கள் யேசபேலை இஸ்ரெயேலின்
மதில் அருகே தின்னும்.-ஆகாபின் சந்ததியிலே ௨௪
பட்டணத்திலே சாகிறவனை நாய்களும், வெளி

யிலே சாகிறவனை ஆகாயத்துப்பறவைகளும்தின்
னுமென்றார்.
௨௫ ஆனால் ஆகாபை அவன் பெண்சாதியாகிய யேச
பேல் எடுத்துவிட்டபடியே, கர்த்தரின் பார்வைக்
குப் பொல்லாப்பானதைச் செய்ய, தன்னை விற்
றுப்போட்ட அவனைப்போல ஒருவனுமில்லை.—
௨௬ கர்த்தர் இஸ்ரவேல் புத்திரருக்குமுன்பாகத் துரத்
திவிட்ட எமோரியர் செய்தபடியெல்லாம், அ
வன் விக்கிரகங்களைப் பின்பற்றிப்போய், மகா
அருவருப்பாய் நடந்துகொண்டான்.
௨௭ ஆகாப் இந்த வார்த்தைகளைக் கேட்டபோதோ
வெனில், அவன் தன் வஸ்திரங்களைக் கிழித்து,
தன் சரீரத்தின்மேல் இரட்டைப் போர்த்துக்
கொண்டு, உபவாசம்பண்ணி இரட்டிலே படுத்
௨௮ துக்கொண்டு அசந்து நடந்தான்.—அப்போது
கர்த்தருடைய வார்த்தை திஸ்பியனாகிய எலியா
௨௯ வுக்குண்டாகி, அவர் சொன்னதாவது:—ஆகாப்
நமக்குமுன்பாகத் தன்னைத் தாழ்த்தினதைக் கண்
டதில்லையோ? அவன் நமக்குமுன்பாகத் தன்
னைத் தாழ்த்தினபடியினாலே, நாம் அவன் நாள்க
ளில் அந்தப் பொல்லாப்பை வரப்பண்ணாமல்,
அவன் குமாரன் நாள்களில் அதை அவன் வீட்
டின்மேல் வரப்பண்ணுவோமென்றார்.

## ௨௨. அதிகாரம்.

௧. ஆகாப் மிகாயாவினுடைய சொல்லின்படி, கள்ளத்தீர்க்கதரிசிகளாலே மோசப்பட்டு, கீலேயாத் ராமோத்திலே கொல்லப்பட்டது. ௩௮. அவனுடைய இரத்தத்தை நாய்கள் நக்கினதும், அகசியா அவனுக்குப்பின் அரசாகிவந்ததும். ௪௧. யோசபாத்தினுடைய நல்ல ஆளுகை. ௪௫. அவனுடைய நடக்கைகள். ௫௦. யோராம் அவனுக்குப்பின் அரசாகிவந்தது. ௫௧. அகசியாவின் துன்மார்க்கமான ஆளுகை.

௧ சீரியருக்கும் இஸ்ரவேலுக்கும் மூன்றுவருஷ
மாய் யுத்தமில்லாதபடிக்கு அமர்ந்திருந்தார்கள்.—
௨ மூன்றாம்வருஷத்திலோ சம்பவித்ததேதென்றால்,
யூதாவின் இராசாவாகிய யோசபாத் இஸ்ரவே
லின் இராசாவண்டைக்கு இறங்கிப்போயிருக்
௩ கிறபோது,—இஸ்ரவேலின் இராசா தன் ஊழி
யக்காரருடனே, கீலேயாத்திலிருக்கிற ராமோத்
நம்முடையதென்று அறியீர்களோ? நாம் அதைச்
சீரியாவுடைய இராசாவின் கையிலே பிடிக்கா
மல், சும்மாயிருப்பானேன் என்று சொல்லி,—
௪ யோசபாத்துடனே, கீலேயாத்திலிருக்கிற ரா
மோத்தின்மேல் யுத்தம்பண்ண என்னோடே
கூட வருகிறீரோ என்றான்; யோசபாத் இஸ்ர
வேலின் இராசாவுடனே, உம்மைப்போலே நா
னும் இருப்பேன்; உம்முடைய சனத்தைப்
போல என்னுடைய சனமும், உம்முடைய குதி
ரைகளைப்போல என்னுடைய குதிரைகளும்
இருக்குமென்றான்.
௫ பின்னையும் யோசபாத் இஸ்ரவேலின் இராசா
வுடனே, கர்த்தருடைய வார்த்தையை இன்றைக்
௬ குக் கேட்டறியுமே என்றான்.—அப்போது இஸ்ர
வேலின் இராசா ஏறக்குறைய நானூறுபேராகிய
தீர்க்கதரிசிகளைக் கூட்டி, நான் கீலேயாத்திலிருக்
கிற ராமோத்தின்மேல் யுத்தம்பண்ணப் போகலா
மோ? அதை நிறுத்துவேனோ என்று அவர்களைக்
கேட்டதற்கு, அவர்கள் ஏறிப்போம்; ஆண்ட
வர் அதை இராசாவின் கையில் ஒப்புக்கொடுப்
பார் என்றார்கள்.
ஆனால் யோசபாத் இனிக் கர்த்தருடைய தீர்க் ௭
கதரிசி ஒருவனும், நாம் அவனிடத்திலே கேட்டு
விசாரிக்கிறதற்கு இங்கே இல்லையோ என்று
கேட்டான்.—அப்போது இஸ்ரவேலின் இராசா ௮
யோசபாத்துடனே, கர்த்தரைக் கேட்கிறதற்கு
இம்லாவின் குமாரனாகிய மிகாயாவென்ற இன்
னம் ஒருவன் இருக்கிறான்; ஆனால் நான் அவ
னைப் பகைக்கிறேன்; ஏனெனில் அவன் என்
மேல் நன்மையாக அல்ல, தீமையாகத்தானே
தீர்க்கதரிசனம் சொல்லுகிறவன் என்றதற்கு,
யோசபாத் இராசாவாகிய நீர் அப்படிச் சொல்ல
வேண்டாமென்றான்.
அப்போது இஸ்ரவேலின் இராசா, பிரதானி ௯
களில் ஒருவனை அழைத்து, இம்லாவின் குமார
னாகிய மிகாயாவைச் சீக்கிரமாய் வரவழை என்
றான்.—இஸ்ரவேலின் இராசாவும், யூதாவின் ௰
இராசாவாகிய யோசபாத்தும், சமாரியாவினு
டைய ஒலிமுகவாசலுக்குமுன்னான விசாலத்
திலே அவரவர் தம்தம் ஆசனத்திலே தங்கள் வஸ்
திரங்களைத் தரித்துக்கொண்டவர்களாய் உளுக்
காந்திருந்தார்கள்; சகல தீர்க்கதரிசிகளும் அவர்
களுக்குமுன்பாகத் தீர்க்கதரிசனம் சொன்னார்
கள்.— கேனானாவின் குமாரனாகிய சிதேக்கியா ௰௧
தனக்கு இருப்புக்கொம்புகளை உண்டாக்கி,
இவைகளால் நீர் சீரியரை அவர்களை நிர்மூல
மாக்குமட்டும் முட்டிப்போடுவீர் என்கிறதைக்
கர்த்தர் சொல்லுகிறாரென்றான்.—சகல தீர்க்கத ௰௨
ரிசிகளும் அதற்கு இசைவாய்த் தீர்க்கதரிசனம்
சொல்லி, கீலேயாத்திலிருக்கிற ராமோத்துக்கு
ஏறிப்போம்; உமக்கு வாய்க்கும்; கர்த்தர் அதை
இராசாவின் கையில் ஒப்புக்கொடுப்பார் என்
றார்கள்.
மிகாயாவை அழைக்கப்போன ஆள் அவனு ௰௩
டனே பேசி, இதோ தீர்க்கதரிசிகளுடைய வார்த்
தைகள் ஏக வாக்காய் இராசாவுக்கு நன்மையா
யிருக்கின்றது; உம்முடைய வார்த்தையும் அவர்
களில் ஒவ்வொருவன் வார்த்தையைப்போல
இருக்கும்படிக்கு நன்மையாய்ச் சொல்லுமே
என்றான்.—மிகாயாவோவெனில், கர்த்தர் என் ௰௪
னோடே சொல்வதையே பேசுவேனென்று கர்த்
தருடைய சீவனைக்கொண்டு சொல்லுகிறே
னென்றான்.
அவன் இராசாவண்டைக்கு வந்தபோது, இரா ௰௫
சா அவனுடனே, மிகாயாவே, நாங்கள் கீலே
யாத்திலிருக்கிற ராமோத்தின்மேல் யுத்தம்பண்
ணப்போகலாமோ? அதை நிறுத்துவோமோ என்
றான்; இவன் அவனுடனே ஏறிப்போம்; உமக்கு
வாய்க்கும்; கர்த்தர் அதை இராசாவின் கையில்
ஒப்புக்கொடுப்பாரென்றான்.—இராசா அவனு ௰௬
டனே, நீ கர்த்தருடைய நாமத்திலே மெய்யை
அல்லாமல் வேறொன்றும் என்னோடே சொல்
லாதபடிக்கு, நான் எத்தனைவிசை உன்னை ஆணை
யிட்டுக்கொள்ளவேண்டுமென்று சொன்னான்.—

௰௭ அப்போது அவன், மேய்ப்பன் இல்லாத ஆடுகளைப்போல இஸ்ரவேலெல்லாம் பர்வதங்களிலே
சிதறப்பட்டதைக் கண்டேன்; அப்போது கர்த்தர்
இவர்களுக்கு ஆண்டவனில்லை, அவரவர் தம்தம்
வீட்டிற்குச் சமாதானத்தோடே திரும்பக்கடவர்
௰௮ கள் என்றாரென்று சொன்னான். — அப்போது
இஸ்ரவேலின் இராசா யோசபாத்துடனே,
இவன் என்மேல் நன்மையாயல்ல, தீமையைத்
தானே தீர்க்கதரிசனம் சொல்லுகிறவனென்று
நான் உம்மோடே சொல்லவில்லையா என்றான்.—
௰௯ அப்போது அவன் சொன்னதாவது: இப்போதும்
கர்த்தருடைய வார்த்தையைக் கேளும்; கர்த்தர்
தம்முடைய ஆசனத்தின்மேல் உளுக்காந்திருக்
கிறதையும், பரமண்டலத்தின் சேனையெல்லாம்
அவரண்டை அவர் வலதுபக்கத்திலும் அவர்
இடதுபக்கத்திலும் நிற்கிறதையும் கண்டேன்.—
௨௰ அப்போது கர்த்தர், ஆகாப் ஏறிப்போய், கிலே
யாத்திலிருக்கிற ராமோத்தில் விழும்படிக்கு, அ
வனைப் பயிற்றுவிப்பவன் யார் என்று கேட்ட
தற்கு, ஒருவன் இப்படியும் ஒருவன் அப்படியு
௨௧ மாய்ச் சொன்னார்கள்.—அப்போது ஒரு ஆவி
புறப்பட்டு வந்து, கர்த்தருக்குமுன்பாக நின்று,
நான் அவனைப் பயிற்றுவிப்பேன் என்றதற்கு,
கர்த்தர் அதை எதினாலென்று கேட்டார். —
௨௨ அப்போது அது, நான் புறப்பட்டு அவனுடைய
எல்லாத் தீர்க்கதரிசிகளின் வாயிலும் பொய்யின்
ஆவியாய்இருப்பேனென்றது; அப்போது அவர்,
நீ அவனைப் பயிற்றுவித்து அப்படி நடக்கப்பண்
ணுவாய்; நீ புறப்பட்டுப்போய் அந்தப்பிரகார
௨௩ மாய்ச் செய்யென்றார். — இப்போதும் இதோ
கர்த்தர் பொய்யின் ஆவியை இந்த உம்முடைய
எல்லாத் தீர்க்கதரிசிகளின் வாயிலும் கட்டளை
யிட்டார்; கர்த்தர் உம்முடைய பேரில் தீமை
யாகச் சொன்னாரென்றான்.
௨௪ அப்போது கேனானாவின் குமாரனாகிய சிதேக்
கியா சேர்ந்துவந்து, மிகாயாவைக் கன்னத்தில்
அடித்து, உன்னோடேபேச, கர்த்தருடைய ஆவி
எந்த வழியாய் என்னைவிட்டுத் தாண்டிப்போ
௨௫ யிற்றென்றான். — அதற்கு மிகாயா, இதோ நீ
ஒளித்துக்கொள்ள அறைவீடு அறைவீடாகப்
பதுங்கும் அந்நாளிலே அதைப் பார்ப்பாயென்
றான்.
௨௬ அப்போது இஸ்ரவேலின் இராசா சொன்ன
தாவது: நீ மிகாயாவைப் பிடித்து, அவனைப் பட்
டணத்துத் தலைவனாகிய ஆமோனண்டைக்கும்,
இராசாவின் குமாரனாகிய யோவாசண்டைக்
௨௭ கும் திரும்பக் கொண்டுபோய்,—நீங்கள் இவ
னைச் சிறைச்சாலையிலே வைத்து, நான் சமாதா
னத்தோடே வரும்மட்டும், அவனுக்கு ஒடுக்கத்
தின் அப்பத்தையும் ஒடுக்கத்தின் தண்ணீரையும்
சாப்பிடக் கொடுங்கள் என்கிறதை இராசா
௨௮ சொன்னாரென்று சொல்லுமென்றான். — அப்
போது மிகாயா, நீர் சமாதானத்தோடே திரும்பி
வரவேவந்தால், கர்த்தர் என்னைக்கொண்டு பேசி
னதில்லையென்று சொல்லி, சனங்களின் கும்பா
கிய நீங்களெல்லாரும் இதைக் கேளுங்களென்
றான்.
அப்படியே இஸ்ரவேலின் இராசாவும், யூதா ௨௯
வின் இராசாவாகிய யோசபாத்தும் கிலேயாத்தி
லிருக்கிற ராமோத்துக்கு ஏறிப்போனார்கள்.—
இஸ்ரவேலின் இராசா யோசபாத்துடனே, நான் ௩௰
வேஷம்மாறி யுத்தத்திற்கு உள்ப்படுவேன்; நீரோ
வென்றால் உம்முடைய வஸ்திரங்களைத் தரித்தி
ருமென்று சொல்லி, இஸ்ரவேலின் இராசா
வேஷம்மாறி, யுத்தத்திற்கு உள்ப்பட்டான்.—
சீரியாவின் இராசாவோவெனில், தனக்கிருக் ௩௧
கிற இரதங்களின் முப்பத்திரண்டு தலைவருக்கு,
நீங்கள் சிறியவரோடும் பெரியவரோடும் யுத்தம்
பண்ணாமல் இஸ்ரவேலின் இராசா ஒருவனோடு
யுத்தம்பண்ணுங்களென்று கற்பித்திருந்தான்.—
ஆனதுகொண்டு இரதங்களின் தலைவர் யோச ௩௨
பாத்தைக் காண்கையில், இவனே இஸ்ரவேலின்
இராசாவென்று சொல்லி, யுத்தம்பண்ண அவ
னுக்கு நேராகச் சாய்ந்துவந்தார்கள்; ஆனால் யோ
சபாத் கூக்குரலிட்டான். — அப்போது சம்ப ௩௩
வித்ததேதென்றால், இவன் இஸ்ரவேலின் இரா
சா அல்லவென்று இரதங்களின் தலைவர் காண்
கையில் அவனைவிட்டு விலகிப்போனார்கள்.—
ஆனால் ஒரு மனுஷன் தன் பேதைமையிலே ௩௪
வில்லை நாணேற்றி, இஸ்ரவேலின் இராசாவைச்
சீராவின் சந்துகளுக்குள் எய்தான்; அப்போது
அவன் தன் இரதக்காரனோடே, நீ உன் கையைத்
திருப்பி என்னை இராணுவத்திலிருந்து அப்புறப்
படுத்து; ஏனென்றால் நான் காயப்பட்டிருக்கி
றேனென்றான்.—அன்றைத்தினம் யுத்தம் அதி ௩௫
கரித்திருக்கையில், இராசா சீரியருக்கு எதிராக
இரதத்தின்மேலே நின்றிருந்து சாயங்காலத்தி
லே செத்துப்போனான்; அந்தக் காயத்தின் இரத்
தம் இரதத்தின் தட்டிலே வடிந்தது.—பொழுது ௩௬
புகுந்துபோகிறபோது, அவரவர் தம்தம் பட்ட
ணத்திற்கும் அவரவர் தம்தம் தேசத்திற்கும் போ
கலாமென்று இராணுவத்தில் பறைமுறையிடப்
பட்டது.—அப்படியே இராசா செத்துப்போய், ௩௭
சமாரியாவுக்குக் கொண்டுவரப்பட்டான்; அவர்
கள் இராசாவைச் சமாரியாவில் அடக்கம்பண்
ணினார்கள்.—அந்த இரதம் சமாரியாவின் குளத் ௩௮
திலே வேசிகள் முழுகும் இடத்திலே கழுவப்ப
டுகிறபோது, கர்த்தர் சொல்லியிருந்த வார்த்தை
யின்படியே நாய்கள் அவன் இரத்தத்தைநக்கின.
ஆகாபின் மற்ற வர்த்தமானங்களும், அவன் ௩௯
செய்தவை அனைத்தும், அவன் கட்டின யானைத்
தந்த வீட்டின் செய்தியும், அவன் கட்டின எல்
லாப் பட்டணங்களின் செய்தியும் இஸ்ரவேல்
இராசாக்களின் நாளாகமப் புஸ்தகத்திலல்லவோ
எழுதியிருக்கின்றது.—ஆகாப் தன் பிதாக்களோ ௪௰
டே நித்திரை அடைந்தபின், அவன் குமாரனா
கிய அகசியா அவன்ஸ்தலத்தில் இராசாவானான்.
ஆசாவின் குமாரனாகிய யோசபாத் இஸ்ரவே ௪௧
லின் இராசாவாகிய ஆகாபின் நாலாம்வருஷத்
தில் யூதாவின்மேல் இராசாவானான். — யோச ௪௨

பாத் இராசாவாகிறபோது, முப்பத்தைந்து வய
தாயிருந்து, இருபத்தைந்துவருஷமாய் எருசலே
மில் இராச்சியபாரம்பண்ணினன்; சில்கியின்
குமாரத்தியாகிய அவனுடைய தாயின்பேர் அசூ
௪௩ பாள்.–அவன் தன் தகப்பனாகிய ஆசாவின் வழி
யிலெல்லாம் நடந்தான்; அவன் அதை விட்டு
விலகாமல் கர்த்தரின் பார்வைக்குச் செம்மை
௪௪ யானதைச் செய்தான்.–ஆகிலும் மேடைகள் தள்
ளப்பட்டதில்லை;சனம் இன்னம் மேடைகளின்
மேலே பலியிட்டுத் தூபங்காட்டியிருந்தது.—
௪௫ யோசபாத் இஸ்ரவேலின் இராசாவோடே சமா
தானமாயிருந்தான்.

௪௬ யோசபாத்தின் மற்ற வர்த்தமானங்களும், அ
வன் நடப்பித்த வல்லமையும்,அவன் பண்ணின
யுத்தமும், யூதாவுடைய இராசாக்களின் நாளாக
மப் புஸ்தகத்திலல்லவோ எழுதியிருக்கின்றது.–
௪௭ தன் தகப்பனாகிய ஆசாவின் நாள்களில் மீதியாய்
விட்டிருந்த இலச்சையான புணர்ச்சிக்காரரை
யும் அவன் தேசத்திலிருந்து அற்றுப்போகப்பண்
௪௮ ணினன்.—அப்போது ஏதோமில் இராசா இல்
லாமல் பிரதி இராசா ஒருவன் இருந்தான்.

௪௯ பொன்னுக்காக ஓப்பீருக்குப் போகிறதற்கு,
யோசபாத் தர்சீஸ் கப்பல்களைச் செப்பனிடுவித்
தான்; ஆனல் அவைகள் போனதில்லை; ஏனெ
னில் எத்சீயோன்கேபேரிலே அவைகள் உடைந்
துபோயின.–அப்போது ஆகாபின் குமாரனாகிய ௫௦
அகசீயா யோசபாத்துடனே, என் வேலைக்காரர்
உம்முடைய வேலைக்காரரோடுங்கூடக் கப்பல்
களிலே போகட்டுமென்பான்; ஆனல் யோச
பாத்துக்கு மனதில்லாதேபோயிற்று.–யோசபாத் ௫௧
தன் பிதாக்களோடே நித்திரை அடைந்தபின்,
தாவீதின் பட்டணத்திலே தன் பிதாக்களண்
டையில் அடக்கம்பண்ணப்பட்டான்; அவன்
குமாரனாகிய யோராம் அவன் ஸ்தலத்தில் இரா
சாவானன்.

ஆகாபின் குமாரனாகிய அகசீயா யூதாவின் ௫௨
இராசாவாகிய யோசபாத்தின் பதினேழாம்வரு
ஷத்திலே சமாரியாவில் இராசாவாகி, இஸ்ரவே
லின்மேல் இரண்டுவருஷம் இராச்சியபாரம்
பண்ணி,—கர்த்தரின் பார்வைக்குப் பொல்லாப் ௫௩
பானதைச் செய்து, தன் தகப்பன்வழியிலும்,
தன் தாயின்வழியிலும், இஸ்ரவேலைப் பாவம்
செய்யப்பண்ணின நேபாத்தின் குமாரன் எரோ
பெயாமின் வழியிலும் நடந்துகொண்டு,–பாகா ௫௪
லைச் சேவித்து, அதைப் பணிந்துகொண்டு, தன்
தகப்பன் செய்தபடியெல்லாம் இஸ்ரவேலின்
பராபரனாகிய கர்த்தருக்குக் கோபம் உண்டாக்
கினன்.

II. KINGS.

# இராசாக்களின்

## இரண்டாம் புஸ்தகம்.

### க. அதிகாரம்.

*க. மோவாபியன் கலகஞ்செய்தது. உ. அகசியா பாகால்சேபூவினிடத்திற்கு ஆள்களை அனுப்பினபோது, எலியாவினாலே நியாயத்தீர்ப்பை அடைந்தது. ௩. எலியா தன்னைப் பிடிக்கும்படி அகசியாவாலே அனுப்பப்பட்ட ஆள்களின்மேல் வானத்திலிருந்து இரண்டுதரம் அக்கினியை வருவித்தது. ௰௩. அவன் மூன்றாந்தரம் வந்த சேர்வைக்காரன்மேல் மனதிரங்கினதும், ஒரு தேவதூதனாலே தயிரியங்கொண்டதும். இராசாவினுடைய மரணத்தை அறிவித்தது. ௰௭. யோராம் அகசியாவுக்குப்பின் அரசாய் வந்தது.*

க ஆகாப் மரணம் அடைந்தபின், மோவாபியன்
உ இஸ்ரவேலைவிட்டு மருளவிழுந்தான்.—இதுவும்
தவிர அகசியா சமாரியாவிலிருக்கிற தன்மேல்
வீட்டுக் கிராதியாலே விழுந்து, ரோகங்கொண்டு,
இந்த ரோகம் நீங்கிப் பிழைப்பேனோ என்று
எக்கிரோனின் தேவனாகிய பாகால்சேபூவைப்
போய்க் கேளுங்களென்று ஆள்களை அனுப்பி
௩ னான்.—ஆனால் கர்த்தருடைய தூதன் திஸ்பியனா
கிய எலியாவுடனே சொன்னதாவது: நீ எழுந்து,
சமாரியாவுடைய இராசாவின் ஆள்களுக்கு
எதிர்ப்பட ஏறிப்போய், அவர்களுடனே, இஸ்ர
வேலிலே பராபரன் இல்லையென்கிறதுபோல,
நீங்கள் எக்கிரோனின் தேவனாகிய பாகால்
௪ சேபூவைக் கேட்கப்போகிறீர்களோ? — இதின்
நிமித்தம் நீ ஏறின கட்டிலிலிருந்து இறங்காமல்,
சாவவே சாவாயென்பதைக் கர்த்தர் சொல்லுகிறா
ரென்று அவர்களோடே சொல்லென்றான்; அப்
படியே எலியா போய்ச் சொன்னான்.
௫ அப்போது அந்த ஆள்கள் அவனண்டைக்குத்
திரும்பிவந்தார்கள்; நீங்கள் திரும்பிவந்ததென்ன
௬ என்று அவன் அவர்களைக் கேட்டதற்கு,—அவர்
கள் அவனோடே சொன்னது: ஒரு மனுஷன்
எங்களுக்கு எதிர்ப்பட்டுவந்து, எங்களுடனே,
நீங்கள் உங்களை அனுப்பின இராசாவண்டைக்
குத் திரும்பிப்போய், இஸ்ரவேலிலே பராபரன்
இல்லையென்கிறதுபோல, நீ எக்கிரோனின் தே
வனாகிய பாகால்சேபூவைக் கேட்டனுப்புகி
றாயோ, இதின்நிமித்தம் நீ ஏறின கட்டிலிலி
ருந்து இறங்காமல் சாவவே சாவாயென்பதைக்
கர்த்தர் சொல்லுகிறாரென்று அவரோடே சொல்
௭ லுங்களென்றான் என்று சொன்னார்கள்.— அப்
போது அவன் அவர்களை உங்களுக்கு எதிர்ப்
பட்டுவந்து, இந்த வார்த்தைகளை உங்களோடே
சொன்ன மனுஷனுடைய வேஷமென்ன என்று
௮ கேட்டான்.—அவர்கள் அவனுடனே, அவன்
மயிருடையைத் தரித்து, வார்க்கச்சையைத் தன்
அரையிலே கட்டிக்கொண்டிருந்தான் என்றார்
கள்; அப்போது அவன் திஸ்பியனாகிய எலியா
தானென்று சொல்லி,

அவனண்டைக்கு ஒரு சேர்வைக்காரனையும், ௯
அவனுடைய ஐம்பது சேவகரையும் அனுப்பி
னான்; இதோ பர்வதத்தின் கொடுமுடியில் உளுக்
காந்திருக்கிற அவனண்டைக்கு இவன் ஏறிப்
போய் அவனுடனே, பராபரனுடைய மனுஷ
னே இறங்கிவாவென்று இராசா சொல்லுகிறார்
என்றான்.—அப்போது எலியா அந்த ஐம்பது ௰
பேரின் சேர்வைக்காரனுக்குப் பிரதியுத்தாரமாக,
நான் பராபரனுடைய மனுஷனானால் அக்கினி
வானத்திலிருந்து இறங்கி, உன்னையும் உன் ஐம்ப
துபேரையும் பட்சிக்கக்கடவதென்றான்; உட
னே அக்கினி வானத்திலிருந்து இறங்கி, அவனை
யும் அவன் ஐம்பதுபேரையும் பட்சித்தது. —
மறுபடியும் அவனண்டைக்கு வேறொரு சேர் ௰க
வைக்காரனையும், அவனுடைய ஐம்பது சேவக
ரையும் அனுப்பினான்; இவன் மறுதரம் அவனு
டனே பராபரனுடைய மனுஷனே, சீக்கிரமாய்
இறங்கிவா என்று இராசா சொல்லுகிறார் என்
றான்.—எலியா அவர்களுக்குப் பிரதியுத்தாரமாக, ௰உ
நான் பராபரனுடைய மனுஷனானால் அக்கினி
வானத்திலிருந்து இறங்கி, உன்னையும் உன் ஐம்ப
துபேரையும் பட்சிக்கக்கடவதென்றான்; உட
னே பராபரனுடைய அக்கினி வானத்திலிருந்து
இறங்கி, அவனையும் அவன் ஐம்பதுபேரையும்
பட்சித்தது.—திரும்ப மூன்றாம் சேர்வைக்கார ௰௩
னையும், அவனுடைய ஐம்பது சேவகரையும்
அனுப்பினான்; இந்த மூன்றாம் சேர்வைக்காரன்
ஏறிவந்தபோது, எலியாவுக்குமுன்பாக முழங்
கால்படியிட்டு, அவனை விண்ணப்பம்பண்ணி
அவனுடனே, பராபரனுடைய மனுஷனே, என்
னுடைய பிராணனும், உம்முடைய அடியாரா
கிய இந்த ஐம்பதுபேரின் பிராணனும் உமது
பார்வைக்கு அருமையாயிருக்கட்டுமே.—இதோ ௰௪
அக்கினி வானத்திலிருந்து இறங்கி, முந்தின
இரண்டு சேர்வைக்காரரையும் அவரவருடைய
ஐம்பதுபேரையும் பட்சித்தது; இப்போதும் என்
னுடைய பிராணன் உமது பார்வைக்கு அருமை
யாயிருக்கட்டுமென்றான்.—அப்போது கர்த்தரு ௰௫

டைய தூதன் எலியாவுடனே, அவனோடேகூட
இறங்கிப்போ; அவனுக்குப் பயப்படாதே என்
றான்; அப்படியே அவன் எழுந்து, அவனோடே
கூட இராசாவண்டைக்கு இறங்கிப்போய்,—
௰௬ அவனுடனே, வார்த்தை கேட்க, இஸ்ரவேலிலே
பராபரன் இல்லையென்கிறதுபோலே, நீ எக்கி
ரோனின் தேவனாகிய பாகால்சேபூவைக் கேட்க
ஆள்களை அனுப்பினபடியினாலே, நீ ஏறின கட்டி
லிலிருந்து இறங்காமல் சாவவே சாவாயென்று
கர்த்தர் சொல்லுகிறாரென்றான்.
௰௭ எலியா சொன்ன கர்த்தருடைய வார்த்தையின்
படியே அவன் சென்றுபோனான்; அவனுக்குக்
குமாரன் இல்லாதபடியினாலே, அவன் ஸ்தலத்
திலே யோராம் யூதாவின் இராசாவாகிய யோச
பாத்துடைய குமாரனான யோராமின் இரண்
டாம் வருஷத்தில் அவன் ஸ்தலத்தில் இராசாவா
௰௮ னான்.—அகசியா செய்த மற்ற வர்த்தமானங்கள்
இஸ்ரவேலுடைய இராசாக்களின் நாளாகமப்
புஸ்தகத்திலல்லவோ எழுதியிருக்கின்றது.

## ௨. அதிகாரம்.

*௧. எலியா தன் சால்வையினால் அடித்து, யோர்தானைப் பிரித்தது. ௯. அவன் எலிசாவின் வேண்டுதலை அவனுக்குக் கொடுத்து, அக்கினி இரதத்தின்மேல் பரமண்டலத்திற்குப் போனது. ௰௨. எலிசா எலியாவின் சால்வையினால் யோர்தானைப் பகிர்ந்து, அவனுக்குப் பதில் தீர்க்கதரிசியென்று அறிவிக்கப்பட்டது. ௰௬. வாலிபராகிய தீர்க்கதரிசிகள் எலியாவைத் தேட, வருத்தத்துடனே உத்தரவுபெற்றுத் தேடிக் காணாமல் வந்தது. ௰௯. எலிசா ஆகாத நீரூற்றகளை உப்பினால் குணமாக்கினது. ௨௩. எலிசாவைப் பரிகாசம்செய்த பிள்ளைகளைக் கரடிகள் பீறினது.*

௧ கர்த்தர் எலியாவைப் பெருங்காற்றிலே பரமண்
டலத்திற்கு எடுத்துக்கொள்ளப்போகிறபோதோ
வெனில், எலியா எலிசாவோடேகூடக் கில்கா
௨ லிலிருந்து புறப்பட்டு,-எலியா எலிசாவுடனே,
இங்கே இருந்துவிடு; அதேனென்றால் கர்த்தர்
என்னைப் பேத்தேல்மட்டும்போக அனுப்பினா
ரென்றான்; ஆனால் எலிசா, நான் உம்மை விடு
கிறதில்லையென்று கர்த்தரின் சீவனையும் உம்மு
டைய சீவனையும்கொண்டு சொல்லுகிறேனெ
ன்றான்; அப்படியே பேத்தேலுக்கு இறங்கிப்
௩ போனார்கள்.—அப்போது பேத்தேலிலிருக்கிற
தீர்க்கதரிசிகளின் புத்திரர் எலிசாவண்டைக்குப்
புறப்பட்டுவந்து அவனுடனே, இன்றைக்குக்
கர்த்தர் உன் தலைவனாயிருக்கிற உன் எசமானனை
உன்னைவிட்டு எடுத்துக்கொள்வார் என்கிறதை
அறிவாயோ என்றார்கள்; அதற்கு அவன், நானும்
௪ அறிவேன் சும்மா இருங்களென்றான்.—எலியா
அவனுடனே, எலிசாவே, நீ இங்கே இருந்து
விடு; ஏனென்றால் கர்த்தர் என்னை எரிகோமட்
டும்போக அனுப்பினாரென்றான்; ஆனால் அவன்,
நான் உம்மை விடுகிறதில்லை என்று கர்த்தரு
டைய சீவனையும் உம்முடைய சீவனையும் கொ
ண்டு சொல்லுகிறேனென்றான்; அப்படியே எரி
௫ கோவுக்கு வந்தார்கள்.—அப்போது எரிகோவி
லிருக்கிற தீர்க்கதரிசிகளின் புத்திரர் எலிசாவண்
டையிலே சேர்ந்து, இன்றைக்குக் கர்த்தர் உன்
தலைவனாயிருக்கிற உன் எசமானனை உன்னை
விட்டு எடுத்துக்கொள்வார் என்கிறதை அறிவா
யோ என்று அவனைக் கேட்டார்கள்; அதற்கு
அவன், நானும் அறிவேன், சும்மா இருங்களென்
றான்.—எலியா அவனுடனே, நீ இங்கே இருந் ௬
துவிடு; அதேனென்றால் கர்த்தர் என்னை யோர்
தான் நதிக்கு அனுப்பினாரென்றான்; ஆனால்
அவன் நான் உம்மை விடுகிறதில்லையென்று கர்த்
தருடைய சீவனையும் உம்முடைய சீவனையும்
கொண்டு சொல்லுகிறேனென்றான்; அப்படியே
இருவருமாய்ப் போனார்கள்.-தீர்க்கதரிசிகளின் ௭
புத்திரரில் ஐம்பதுபேர் போய், எதிரே தூரத்தி
லே நின்றார்கள்; அந்த இருவருமோ யோர்தான்
நதி ஓரத்தில் நின்றார்கள்.—அப்போது எலியா ௮
தன் சால்வையை எடுத்துச் சுருட்டித் தண்ணீரை
அடித்தான்; அப்போது அது இந்தப்பக்கத்திலும்
அந்தப்பக்கத்திலும் பிரிந்ததினால், அவர்கள் இரு
வரும் தண்ணீரற்ற தரையிலே அக்கரைக்குப்
போனார்கள்.

அவர்கள் அக்கரைப்பட்டபிற்பாடோவென் ௯
றால், எலியா எலிசாவுடனே நான் உன்னைவிட்
டு எடுத்துக்கொள்ளப்படாததற்குமுன்னே நான்
உனக்குச் செய்யவேண்டியதேதென்று கேளெ
ன்றான்; அப்போது எலிசா, உம்முடைய ஆவி
யின் இரட்டிப்பான வரம் என்மேல் வரவேண்
டுகிறேனென்றான்.—அதற்கு அவன், அரிதானகா ௰
ரியத்தைக் கேட்டாய்; உன்னைவிட்டு எடுபட்
டுப்போகிற என்னை நீ கண்டால் அப்படியே
உனக்காகும்; இல்லாவிட்டால் ஆகாதென்றான்.

அவர்கள் நடந்து வந்து பேசிக்கொண்டிருக் ௰௧
கிறபோது சம்பவித்ததேதென்றால், இதோ அக்
கினி இரதமும் அக்கினிக் குதிரைகளும் அவர்
கள் நடுவாக வந்து, இருவரையும் பிரியப்பண்
ணின; எலியா பெருங்காற்றிலே பரமண்டலத்
திற்கு ஏறினான்.-அதை எலிசா கண்டு, என் தகப் ௰௨
பனே, என் தகப்பனே, இஸ்ரவேலுக்கு இரதங்
களும் குதிரைக்காரருமாய் இருந்தவனே என்று
கூப்பிட்டு, அவனை அப்புறம் காணாதேபோய்,
தன் வஸ்திரங்களைப்பிடித்து அவைகளை இரண்டு
துண்டுகளாய்க் கிழித்தான். — பிற்பாடு அவன் ௰௩
எலியாவின்மேலிருந்து தாழவிழுந்த அவனு
டைய சால்வையை எடுத்துத் திரும்பிக்கொண்டு
யோர்தான் நதி ஓரத்திலே நின்று,—எலியாவின் ௰௪
மேல் இருந்து தாழவிழுந்த அவனுடைய சால்
வையைப் பிடித்து, தண்ணீரை அடித்து, எலியா
வின் பராபரனாகிய கர்த்தர் எங்கேயென்று
சொல்லித் தானும் தண்ணீரை அடித்தான்; அப்
போது அது இந்தப்பக்கத்திலும் அந்தப்பக்கத்
திலும் பிரிந்துபோனதினால் எலிசா இக்கரைப்
பட்டான்.

எரிகோவில் எதிரே நின்றிருந்த தீர்க்கதரிசிக ௰௫
ளின் புத்திரர் அவனைக் காண்கையில், எலியா
வின் ஆவி எலிசாவின்மேல் இறங்கியிருக்கின்
றதென்று அவனுக்கு எதிர்கொண்டுபோய்த்
தரைமட்டும் குனிந்து அவனை வணங்கி.—அவ ௰௬
னுடனே, இதோ உம்முடைய அடியாரோடே
ஐம்பது பலத்த மனுஷர் இருக்கிறார்கள்; அவர்

கள் போய் உம்முடைய எசமானைத் தேடட்டு
மே; ஒருவேளை கர்த்தருடைய ஆவியானவர் அ
வனை எடுத்து, பர்வதங்களில் ஒன்றின்மேலாகி
லும் பள்ளத்தாக்குகளில் ஒன்றிலாகிலும் கொண்
டுபோய் வைத்திருப்பார் என்றார்கள்; ஆனால் அ
வன் அவர்களை அனுப்பாதேயுங்கள் என்றான்.—
௰௭ அவர்கள் அவன் வெட்கப்படுமட்டும் அவனை
அலட்டிக்கொண்டிருக்கிறபோதோவெனில், அ
னுப்புங்கள் என்றான்; அப்படியே ஐம்பதுபே
ரை அனுப்பினார்கள்; இவர்கள் மூன்று நாளாய்
௰௮ அவனைத்தேடிக் காணாமல்போய்,—எரிகோவிலே
தரித்த அவனண்டைக்குத் திரும்பிவந்தபோது,
அவன் இவர்களுடனே போகாதிருங்களென்று
நான் உங்களோடே சொல்லவில்லையோ என்
றான்.
௰௯ பிற்பாடு அந்தப் பட்டணத்தின் மனுஷர் எலி
சாவுடனே, இதோ எங்கள் ஆண்டவன் காண்
கிறபடி இந்தப் பட்டணத்தின் குடியிருப்பு நல்
லது; ஆனால் தண்ணீர் ஆகாததும் நிலம் பாழான
௨௰ துமாய் இருக்கின்றன.—அப்போது அவன் ஒரு
புதுத்தோண்டியை எனக்குக் கொண்டுவந்து
அதில் உப்புப் போடுங்களென்றான்; அதை அ
௨௧ வனண்டைக்குக் கொண்டுவந்தபோது,—அவன்
நீரூற்றண்டைக்குப் புறப்பட்டுப்போய், உப்
பை அதிலே போட்டு இந்தத் தண்ணீரை ஆ
ரோக்கியமாக்கினேன்; இனி அதினால் சாவும்
நிலப்பாழும் வராதென்று கர்த்தர் சொல்லுகிறா
௨௨ ரென்றான்.—எலிசா சொன்ன வார்த்தையின்ப
டியே அந்தத் தண்ணீர் இந்நாள்வரைக்கும் இ
ருக்கிறபடி ஆரோக்கியமாயிற்று.
௨௩ அவ்விடத்தைவிட்டு அவன் பேத்தேலுக்கு
ஏறிப்போனான்; அவன் வழியிலே நடக்கையில்
பிள்ளைகள் பட்டணத்திலிருந்து புறப்பட்டுவந்
து, அவனை நிந்தித்து, மொட்டைத்தலையா ஏறிவா,
மொட்டைத்தலையா ஏறிவாவென்று அவனைச்
௨௪ சொன்னார்கள்.—அப்போது அவன் பின் திரும்பி
அவர்களைப் பார்த்து, கர்த்தரின் நாமத்திலே
அவர்களைச் சபித்தான்; அப்போது காட்டிலி
ருந்து இரண்டு கரடிகள் புறப்பட்டுவந்து, அவர்
களில் நாற்பத்திரண்டு பிள்ளைகளைப் பீறிவிட்
௨௫ டன.—அவன் அவ்விடத்தைவிட்டுக் கற்மேல்
பர்வதத்திற்குப்போய், அங்கேயிருந்து சமாரியா
வுக்குத் திரும்பினான்.

## ௩. அதிகாரம்.

௧. யோராமின் ஆளுகை. ௪. மேசா கலகம்செய்தது. ௬. யோராம், யோசபாத், ஏதோமின் இராசனாகிய இவர்கள் சலமில்லாமல் வருத்தம் அடைந்தபடியால், எலிசாவினால் தண்ணீர் அடைந்ததும், செயத்தின் வாக்குத்தத்தமும். ௨௧. மோவாபியர் சலத்தின் வருணத்தினாலே மோசப்பட்டுக் கொள்ளையாடவந்து செயிக்கப்பட்டது. ௨௬. மோவாபியரின் அரசன் தன் குமாரனைப் பலிகொடுத்து முற்றிக்கைபோட்ட சேனையை நீக்கியது.

௧ யூதாவின் இராசாவாகிய யோசபாத்தின் பதி
னெட்டாம் வருஷத்தில் ஆகாப்பின் குமாரனா
கிய யோராம் சமாரியாவிலே இஸ்ரவேலின்
மேல் இராசாவாகிப் பன்னிரண்டு வருஷமாய்
௨ இராச்சியபாரம்பண்ணி,—கர்த்தரின் பார்வைக்
குப் பொல்லாப்பானதைச் செய்தான்; ஆனால்
தன் தகப்பனைப்போலும் தன் தாயைப்போலு
மல்ல; ஏனென்றால் தன் தகப்பன் பண்ணுவித்த
பாகாலின் சிலையை அகற்றிவிட்டான்.—என்றா ௩
லும் இஸ்ரவேலைப் பாவம்செய்யப்பண்ணின
நேபாத்தின் குமாரனாகிய எரோபெயாமின் பா
வங்களை அவன் விட்டுவிடாமல் அவைகளிலே
சிக்கிக்கொண்டிருந்தான்.
மோவாபின் இராசாவாகிய மேசா ஆடுமாடு ௪
கள் பெருத்தவனாயிருந்து, இஸ்ரவேலின் இரா
சாவுக்கு நூறாயிரம் ஆட்டுக்குட்டிகளையும், நூறா
யிரம் குறும்பாட்டுக்கடாக்களையும் செலுத்து
வான்.—ஆனால் ஆகாப் சென்றுபோனபின் மோ ௫
வாபின் இராசா இஸ்ரவேலின் இராசாவை
விட்டு மருளவிழுந்தான்.
அக்காலத்திலே யோராமென்ற இராசா சமா ௬
ரியாவிலிருந்து புறப்பட்டு, இஸ்ரவேலையெல்
லாம் இலக்கம்பார்த்துப் போய்,— மோவாபின் ௭
இராசா என்னைவிட்டு மருளவிழுந்தான்; மோ
வாபியரின்மேலே யுத்தம்பண்ண, என்னோடே
கூட வருகிறீரோ என்று யூதாவின் இராசாவா
கிய யோசபாத்தைக் கேட்டனுப்பினதற்கு, அ
வன் நான் ஏறிவருவேன்; உம்மைப்போலே
நானும் இருப்பேன்; உமது சனத்தைப்போல
என் சனமும், உம்முடைய குதிரைகளைப்போல
என் குதிரைகளும் இருக்குமென்று சொல்லி,—
எந்த வழியாய் ஏறிப்போவோமென்று கேட் ௮
டான்; அதற்கு அவன் ஏதோம் வனாந்தரவழியா
யென்றான்.—அப்படியே இஸ்ரவேலின் இரா ௯
சாவும் யூதாவின் இராசாவும் ஏதோமின் இராசா
வுமாய்ப் போனார்கள்; ஆனால் அவர்கள் ஏழுநா
ளாய்ச் சுற்றித்திரிந்தபோது, அவர்களைப் பின்
செல்லுகிற இராணுவத்திற்கும் மிருகசீவன்க
ளுக்கும் தண்ணீர் இல்லாமல் போயிற்று.
அப்போது இஸ்ரவேலின் இராசா, ஐயோ ௰
இந்த மூன்று இராசாக்களையும் கர்த்தர் மோவாபி
யரின் கையில் ஒப்புக்கொடுக்க வரவழைத்தாரெ
ன்றான்.—அப்போது யோசபாத், நாம் கர்த்தரைக் ௰௧
கேட்கத்தக்க கர்த்தருடைய தீர்க்கதரிசி ஒருவ
ரும் இங்கே இல்லையோ என்று கேட்டதற்கு,
எலியாவின் கைகளுக்குத் தண்ணீர் வார்த்த சாப்
பாத்தின் குமாரனாகிய எலிசா இங்கே இருக்கி
றானென்று இஸ்ரவேல் இராசாவின் ஊழியக்
காரரில் ஒருவன் மறுமொழியாகச் சொன்னான்.—
அப்போது யோசபாத் அவனோடே, கர்த்தரு ௰௨
டைய வார்த்தை அவனிடத்தில் இருக்கின்ற
தென்றான்; அப்படியே இஸ்ரவேலின் இராசா
வும் யோசபாத்தும் ஏதோமின் இராசாவுமாய்
அவனண்டைக்கு இறங்கிப்போனார்கள். —
ஆனால் எலிசா இஸ்ரவேலின் இராசாவுடனே, ௰௩
எனக்கும் உமக்கும் என்ன? நீர் உம்முடைய
தகப்பனின் தீர்க்கதரிசிகளண்டைக்கும், உம்மு
டைய தாயாரின் தீர்க்கதரிசிகளண்டைக்கும்
போமென்றான்; இஸ்ரவேலின் இராசா அவனு
டனே, அப்படியல்ல; ஏனென்றால் கர்த்தர்

இந்த மூன்று இராசாக்களையும் மோவாபியரின்
கையில் ஒப்புக்கொடுக்கிறதற்கு வரவழைத்தா
௰௪ ரென்றான்.—அப்போது எலிசா சொன்னதாவது:
நான் யூதாவின் இராசாவாகிய யோசபாத்தின்
முகத்தைப் பாராதிருந்தால் நான் உம்மை நோக்
குவதுமில்லை, உம்மைப் பார்ப்பதுமில்லை என்று
நான் ஊழியம்செய்து நின்றிருக்கிற சேனைகளு
டைய கர்த்தரின் சீவனைக்கொண்டு சொல்லுகி
௰௫ றேன்.—இப்போதும் ஒரு சுரமண்டலக்காரனை
என்னண்டைக்குக் கொண்டுவாருங்களென்
றான்; சுரமண்டலக்காரன் வந்து வாசிக்கிறபோ
தோவெனில், கர்த்தருடைய கரம் அவன்மேல்
௰௬ இறங்கி, — அவன் சொன்னதாவது: கர்த்தர் உ
ரைக்கிறதேதெனில், இந்தப் பள்ளத்தாக்கிலே
௰௭ அநேகம் வாய்க்கால்களை வெட்டுங்கள்.—ஏனெ
னில் நீங்கள் காற்றைக் காணாதிருந்தாலும், மழை
யைக் காணாதிருந்தாலும், நீங்களும் உங்கள் ஆடு
மாடுகளும் உங்கள் மிருகசீவன்களும் குடிக்
கும்படிக்கு, இந்தப் பள்ளத்தாக்கு தண்ணீரால்
நிரப்பப்படுமென்று கர்த்தர் சொல்லுகிறார். —
௰௮ இது கர்த்தரின் பார்வைக்கு அற்பகாரியம்; மோ
வாபியரையும் உங்கள் கையில் ஒப்புக்கொடுப்
௰௯ பார்.—நீங்கள் சகல கோட்டைகளையும் தெரிந்
துகொள்ளப்பட்ட சகல பட்டணங்களையும் இ
டறடித்து, நல்ல மரங்களையெல்லாம் வெட்டி,
நீரூற்றுகளையெல்லாம் தூற்று, நல்ல நிலத்தை
யெல்லாம் கல்மேடுகளாக்கிக் கெடுப்பீர்களென்
றான்.
௨௰ சம்பவித்ததேதெனில் காலமே காணிக்கை
செலுத்தப்படும் நேரத்திலே, இதோ தண்ணீர்
ஏதோம் தேசவழியாய் வந்ததினால் தேசம் தண்
௨௧ ணீரால் நிரம்பிற்று.—தங்களோடு யுத்தம்பண்ண,
இந்த இராசாக்கள் ஏறிவருகிறதை மோவாபிய
ரெல்லாம் கேட்டபோதோவெனில், அவர்கள்
ஆயுதம் தரிக்கத்தக்க வயதுக்கு வந்தவர்களையும்
அதற்கு மேல்தரமானவர்களையும் எல்லாம் கூட்
டி, அழைத்துக்கொண்டு வந்து, எல்லையிலே
௨௨ நின்றார்கள்.—மோவாபியர் அதிகாலமே சூரியன்
அந்தத் தண்ணீரின்மேலே உதிக்கையில் எழுந்
திருந்து, அந்தத் தண்ணீருக்கு எதிராகப் பார்க்கி
றபோது அது அவர்களுக்கு இரத்தம்போலச்
௨௩ சிவப்பாய்க் கண்டது. — அப்போது அவர்கள்
அது இரத்தமென்றும், அந்த இராசாக்கள் தங்க
ளைத்தானே அழிக்கவே அழித்து, ஒருவரை ஒரு
வர் வெட்டிக்கொண்டார்கள்; இப்போதும் மோ
வாபியரே, கொள்ளைக்கு வாருங்களென்றும்
௨௪ சொன்னார்கள்.—அவர்கள் இஸ்ரவேலின் பாள
யத்திற்கு வந்தபோதோவெனில், இஸ்ரவேலர்
எழும்பி, மோவாபியரைத் தங்களுக்குமுன்பாக
ஓடிப்போகத்தக்கவிதமாய் முறியடித்து, தேசத்
திற்குள் புகுந்து, அங்கேயும் மோவாபியரை
௨௫ முறியடித்து,—பட்டணங்களை இடித்து, சகல
நல்ல நிலத்தையும் அவரவர் கல்போட்டு நிரப்பி,
நீரூற்றுகளையெல்லாம் தூற்று, நல்ல மரங்களை
யெல்லாம் வெட்டினார்கள்; கிருரேசெத்திலே
மாத்திரம் அதின் கல்கள் இன்னம் இடிபடாதி
ருக்கிறபோது, கவண்கல்காரர் அதைச் சுற்றிக்
கொண்டு அதையும் சேதம்பண்ணினார்கள்.—
யுத்தம் தனக்கு மிஞ்சிப்போயிற்றென்று மோவா ௨௬
பியரின் இராசா கண்டபோது, அவன் ஏதோ
மின் இராசாவின்மேல் வலுமையாய் விழுகிற
தற்குப் பட்டையம் உருவுகிற எழுநூறுபேரைக்
கூட்டிக்கொண்டான்; ஆனால் அவர்களாலே
கூடாதேபோயிற்று. — அப்போது அவன் தன் ௨௭
தலத்தில் இராசாவாகப்போகிற தன் தலையான
குமாரனைப் பிடித்து, அலங்கத்தின்மேல் அவ
னைச் சர்வாங்கதகனபலியாக்கினான்; அப்போது
இஸ்ரவேலர்மேலே கடுங்கோபம் உண்டானதி
னால், அவர்கள் அவனைவிட்டுப் புறப்பட்டுத்
தங்கள் தேசத்திற்குத் திரும்பினார்கள்.

## ௪. அதிகாரம்.

௧. எலிசா கைம்பெண்சாதியின் எண்ணெயை அதிகரிக்கச் செய்தது. ௮. அவன் சூனேமியாளுக்கு ஒரு பிள்ளையைக் கொடுத்தது. ௰௮. அவன் அவளுடைய இறந்த பிள்ளையை எழுப்பினது. ௩௮. கில்காலில் நஞ்சு கலந்த கூழை அவன் ஆரோக்கியமாக்கினது. ௪௨. அவன் நூறுமனிதர்களை இருபது கோதுமை அப்பத்தால் திருப்தி அடையச்செய்தது.

தீர்க்கதரிசிகளுடைய புத்திரரின் பெண்சாதிக ௧
ளில் ஒருத்தி எலிசாவைப் பார்த்துக் கூப்பிட்டு,
உம்முடைய அடியானாகிய என் புருஷன் மர
ணம் அடைந்தான்; உம்முடைய அடியான் கர்த்
தருக்குப் பயந்து நடந்தான் என்பதை அறிவீர்;
இப்போதும் கடன் கொடுத்தவன் என் இரண்டு
குமாரரைத் தனக்கு அடிமைகளாக்கிக்கொள்ள
வந்தானென்றாள்.—எலிசா அவளுடனே, நான் ௨
உனக்கு என்ன செய்யவேண்டும்? வீட்டில்
உனக்கு என்ன இருக்கின்றதென்று எனக்கு
அறிவியென்றான்; அதற்கு அவள் ஒரு குடம்
எண்ணெயை அல்லாமல் உம்முடைய அடியா
ளுக்கு வீட்டிலெங்கும் வேறொன்றும் இல்லை
யென்றாள்.—அப்போது அவன் நீ போய், புறத் ௩
திலே உன்னுடைய எல்லா அயல்வீட்டுக்காரர்
கையிலும் கொஞ்சமாயிராத வெறும் பாத்திரங்க
ளைக் கேட்டுவாங்கி,—உள்பிரவேசித்து, உனக் ௪
கும் உன் பிள்ளைகளுக்கும் பின்னாகக் கதவைப்
பூட்டி, அந்தப் பாத்திரங்களெல்லாம் வார்த்து
நிரப்பினதை அப்பாலே வையென்றான்.—அ ௫
வள் அவனை விட்டுப்போய், தனக்கும் தன்
பிள்ளைகளுக்கும் பின்னாகக் கதவைப் பூட்டின
பின், இவர்கள் அண்டையிலே பாத்திரங்களைச்
சேர்க்க அவள் நிரப்பினாள். — சம்பவித்ததே ௬
தென்றால் அந்தப் பாத்திரங்கள் நிறைந்தபிற்
பாடு, அவள் தன் குமாரனோடே, இன்னம் ஒரு
பாத்திரத்தை என்னண்டையில் கொண்டுவா
வென்றாள்; அவன் அவளுடனே இனிப் பாத்
திரம் இல்லையென்றான்; அப்போது எண்ணெய்
நின்றுபோயிற்று.—அவள் வந்து பராபரனுடைய ௭
மனுஷனுக்கு அறிவித்தாள்; அப்போது அவன்
நீ போய், அந்த எண்ணெயை விற்று, உன் கட
னைத்தீர்த்து, மீந்ததினாலே நீயும் உன் குமாரரும்
சீவனம்பண்ணுங்களென்றான்.

௮ ஒருநாளிலே சம்பவித்ததேதெனில், எலிசா
சூனேமுக்குப் போயிருக்கும்போது, அங்கேயி
ருக்கிற மேன்மையான ஒரு ஸ்திரி அவனை அப்
பம் சாப்பிட வருந்திக்கொண்டாள்; அப்படியே
அவன் பயணப்பட்டு வருகிறபோதெல்லாம்
அப்பம் சாப்பிட, அங்கே வந்து தங்குவான்.—
௯ அவள் தன் புருஷனுடனே சொன்னதாவது:
இதோ நம்மிடத்தில் எப்போதும் வந்துபோகிற
பராபரனுடைய மனுஷனாகிய இவர் பரிசுத்த
௰ வான் என்கிறதை அறிவேன்.—நாம் சுவர் மறை
வான ஒரு சிறிய அறைவீட்டைக் கட்டி, அதில்
அவருக்கு ஒரு கட்டிலேயும், மேசையையும்,
நாற்காலியையும், விளக்குத்தண்டையும் வைப்
போமே; அப்போது அவர் நம்மிடத்திலே வரு
௰௧ கையில் அங்கே தங்கலாமென்றாள்.—ஒருநாள்
அவன் அங்கே வந்து, அந்த அறைவீட்டிலே
தங்கி, அங்கே படுத்துக்கொண்டிருந்த சமயத்தி
௰௨ லே,—அவன் தன் வேலைக்காரனாகிய கேயாசி
யுடனே, அந்தச் சூனேமியாளை அழையென்
றான்; அவளை அழைத்தான்; அவள் இவனுக்கு
௰௩ முன்பாக நிற்கிறபோது,—அவன் இவனுடனே,
இதோ இப்படிப்பட்ட சகல சலக்கரணையோ
டும் எங்களைப் பராமரித்தாயே, உனக்கு நான்
செய்யவேண்டியதென்ன? இராசாவோடாகி
லும் படைத்தலைவனோடாகிலும் உனக்காக
நான் சொல்லத்தக்க காரியம் உண்டோ என்று
அவளைக் கேளென்றான்; ஆனால் அவள் என்
சனத்தின் நடுவே நான் சுகமாய்க் குடியிருக்கி
௰௪ றேனென்றாள்.—இப்போது அவளுக்குச் செய்
யவேண்டியதென்னவென்று அவன் கேட்ட
தற்கு, கேயாசி என்றவன் அவளுக்குக் குமா
ரன் இல்லையே; அவள் புருஷனோ பெரிய வய
௰௫ துள்ளவர் என்றான்.—அப்போது அவன் அவளை
அழையென்றான்; அவளை அழைத்தபோது, அ
௰௬ வள் வந்து கதவடியில் நின்றாள்.—[1]அப்போது
அவன் ஒரு பிராண உற்பத்தியாகும் காலம்
சென்ற வருஷத்திட்டத்திலே ஒரு குமாரனை
அணைத்துக்கொண்டிருப்பாயென்றான்; அதற்கு
அவள் ஏது? பராபரனுடைய மனுஷனாகிய என்
ஆண்டவனே, உம்முடைய அடியாளுக்கு அ
௰௭ பத்தம் சொல்லவேண்டாமென்றாள்.—அந்த ஸ்
திரி கர்ப்பம்தரித்து, எலிசா தன்னோடே சொன்
னபடி, ஒரு பிராண உற்பத்தியாகும் காலத்திட்
டத்தில் ஒரு குமாரனைப் பெற்றாள்.
௰௮ அந்தப் பிள்ளை வளர்ந்தபோதோவெனில், அ
வன் அறுப்பறுக்கிறவர்கள் கிட்ட இருக்கிற தன்
தகப்பனண்டைக்குப் புறப்பட்டுப் போயிருக்
௰௯ கும்போது,—தன் தகப்பனுடனே, என் தலை
நோகின்றது என் தலைநோகின்றது என்றான்;
அப்போது அவன் வேலைக்காரனுடனே, அவனை
அவன் தாயண்டைக்கு எடுத்துக்கொண்டு போ
௨௰ வென்றான்.—அவனை எடுத்து, அவன் தாயண்
டைக்குக் கொண்டுபோனபோது, அவன் மத்தி
யானம்மட்டும் அவள் மடியில் உளுக்காந்து
சென்றுபோனான்.—அப்போது அவள் ஏறிப் ௨௧
போய், அவனைப் பராபரனுடைய மனுஷன்
கட்டிலின்மேல் வைத்து, அவனை வைக்கப்
பட்ட அறையின் கதவைப் பூட்டிப் புறப்பட்
டு,—தன் புருஷனண்டைக்கு ஆளனுப்பி, நான் ௨௨
சீக்கிரமாய்ப் பராபரனுடைய மனுஷன் இருக்
கும் இடம்மட்டும் போய்வரும்படிக்கு, வேலைக்
காரரில் ஒருவனையும் ஒரு கழுதையையும் எ
னக்கு அனுப்புமென்று சொல்லச்சொன்னாள்.—
அப்போது அவன் இது அமாவாசையுமல்ல, ௨௩
ஓய்வுநாளுமல்லவே, நீ இன்றைக்கு அவரண்
டைக்குப் போவானேன் என்று கேட்கச்சொன்
னான்; அவளோவென்றால் எல்லாம் நன்றாயிருக்
கின்றதென்று சொல்லி அனுப்பி,—கழுதை ௨௪
யின்மேலே சேணம்வைத்தேறி, தன் வேலைக்கா
ரனுடனே, இதை நடத்திக்கொண்டு நட, நான்
உனக்குச் சொல்லும்மட்டும் நான் போகிறவழி
யில் என்னை நிற்கப்பண்ணாதே என்று சொல்
லி,—போய், கற்மேல் பர்வதத்திலிருக்கிற பரா ௨௫
பரனுடைய மனுஷனண்டைக்கு வந்தாள்; பரா
பரனுடைய மனுஷன் அவளை எதிராக வரக்
காண்கையில், தன் வேலைக்காரனாகிய கேயாசி
யுடனே அதோ சூனேமியாள் வருகிறாள்.—இப் ௨௬
போதும் நீ அவளுக்கு எதிர்கொண்டு ஓடி, நீ
சுகமாயிருக்கிறாயோ? உன் புருஷன் சுகமாயி
ருக்கிறானோ? அந்தப் பிள்ளை சுகமாயிருக்கின்ற
தோ என்று அவளைக் கேளென்றான்; அவள் சுக
மாயிருக்கிறோமென்று சொல்லி,—பர்வதத்திலி ௨௭
ருக்கிற பராபரனுடைய மனுஷனண்டையிலே
வந்து, அவன் கால்களைப் பிடித்தாள்; அப்போது
கேயாசி அவளை விலக்கிவிடச் சேர்ந்தான்;
ஆனால் பராபரனுடைய மனுஷன், அவள் இருக்
கட்டும்; ஏனென்றால் அவள் ஆத்துமா துக்கத்
தோடு இருக்கின்றது; கர்த்தரோவெனில் அதை
எனக்கு அறிவிக்காமல் மறைத்தாரென்றான்.—
அப்போது அவள் நான் என் ஆண்டவனிடத் ௨௮
தில் ஒரு குமாரனை மனுக்கேட்டேனோ? எனக்கு
அபத்தம் சொல்லாதேயும் என்று நான் சொன்ன
தில்லையோ என்றாள்.—அப்போது அவன் கே ௨௯
யாசிக்கு, நீ உன் இடையைக் கட்டிக்கொண்டு,
என் தடியை உன் கையில் பிடித்துப்போய் ஒரு
வனைச் சந்தித்தாலும் அவனை வினவாமலும்
உன்னை ஒருவன் வினவினாலும் அவனுக்கு மறு
மொழி சொல்லாமலும் இருந்து, என் தடியை
அந்தப் பிள்ளை முகத்தின்மேல் வையென்றான்.—
பிள்ளையின் தாயோவென்றால், நான் உம்மை ௩௰
விடுகிறதில்லையென்று கர்த்தரின் சீவனையும் உம்
முடைய சீவனையும்கொண்டு சொல்லுகிறேன்
என்றாள்; அப்போது அவன் எழுந்திருந்து அ
வள் பிறகே போனான்.—கேயாசி அவர்களுக்கு ௩௧
முன்னாகப் போய், அந்தத் தடியைப் பிள்ளையின்
முகத்தின்மேல் வைத்தும், ஒரு சத்தமும் ஒரு

1 க Gen. ௰௮. ௰.

உணர்வும் இல்லாமல் போயிற்று; ஆகையால் அ
வன் திரும்பி அவனுக்கு எதிர்கொண்டுவந்து,
பிள்ளை விழிக்க இல்லையென்று அவனுக்கு அறி
௩௨ வித்தான். — எலிசா வீட்டிற்குள் வந்தபோது,
இதோ அந்தப் பிள்ளை அவன் கட்டிலின்மேலே
௩௩ செத்ததாய்த்தான் கிடந்தது.—அவன் உள்பிரவே
சித்தபின் அவன் தங்கள் இருவருக்கும் பின்னு
கக் கதவைப் பூட்டிக் கர்த்தரைநோக்கி வேண்டு
௩௪ தல்செய்து, — பிற்பாடு அவன் ஏறி, தன் வாய்
பிள்ளையின் வாயின்மேலும், தன் கண்கள் அவன்
கண்கள்மேலும், தன் உள்ளங்கைகள் அவன் உள்
ளங்கைகளின்மேலும் பட அவன்மேல் குப்பு
றப் படுத்துக்கொண்டான்; அப்போது பிள்ளை
௩௫ யின் மாம்சம் அனலாயிற்று. — அவன் எழுந்தி
ருந்து, வீட்டில் இந்தப்பக்கத்திலும் அந்தப்பக்
கத்திலும் உலாவித் திரும்ப ஏறி, அவன்மேலே
குப்புறப் படுத்தான்; அப்போது அந்தப் பிள்ளை
ஏழுதரம் தும்மித் தன் கண்களைத் திறந்தான். —
௩௬ அப்போது அவன் கேயாசியைக் கூப்பிட்டு, இந்
தச் சூனேமியாளை அழையென்றான்; அவளை
அழைத்தான்; அவள் அவனண்டையில் பிரவே
சித்தபோது அவன் உன் குமாரனை எடுத்துக்
௩௭ கொண்டு போவென்றான்.—அப்போது அவள்
வந்து, அவன் பாதத்திலே விழுந்து, தரைமட்
டும் பணிந்து, தன் குமாரனை எடுத்துப் புறப்பட்
டுப்போனாள்.

௩௮ எலிசா கில்காலுக்குத் திரும்பிக்கொண்டு
போய் இருக்கையில் தேசத்திலே பஞ்சமாயிருந்
தது; தீர்க்கதரிசிகளின் புத்திரரோவெனில், அவ
னுக்குமுன்பாக உளுக்காந்திருந்தார்கள்; அவன்
தன் வேலைக்காரனுக்கு, நீ பெரிய பானையை
அடுப்பிலே வைத்துத் தீர்க்கதரிசிகளின் புத்திர
௩௯ ருக்குக் கூழ்காய்ச்சு என்றான்.—ஒருவன் கீரைக
ளைப் பறிக்க வெளியிலே போய், ஒரு காட்டுக்
கொடியைக் கண்டு, அதிலே தன் சீலைநிறையப்
பேய்க்கொம்மட்டிகளை அறுத்துவந்து அவை
களை அரிந்து கூழ்ப்பானையிலே போட்டான்;
ஏனெனில் அவைகளை அறியாதிருந்தார்கள்.—
௪௰ சாப்பிட அதைச் சனங்களுக்கு வார்த்தார்கள்;
அவர்கள் அந்தக் கூழில் எடுத்துச் சாப்பிடுகிற
போதோவெனில், அதைச் சாப்பிடக் கூடாமல்
பராபரனுடைய மனுஷனே சாவு பானையில்
௪௧ இருக்கின்றதென்று கூப்பிட்டார்கள். — அப்
போது அவன் மாவைக் கொண்டுவாருங்களெ
ன்று அதைப் பானையிலே போட்டுச் சாப்பிடச்
சனத்திற்கு வாரென்றான்; அப்போது ஆகாத
காரியம் பானையில் இருந்ததில்லை.

௪௨ பிற்பாடு பால்சலீசாவிலிருந்து ஒரு மனுஷன்
பராபரனுடைய மனுஷனுக்கு முதல்பலனான
வால்கோதுமையின் இருபது அப்பங்களையும்
தாள்கதிர்களையும் கொண்டுவந்தான்; அப்போது
அவன் சாப்பிடச் சனத்திற்குக் கொடுவென்
௪௩ றான்.—அதற்கு அவனுடைய பணிவிடைக்கா
ரன் இதை நான் நூறுபேருக்கு வைப்பதெப்படி
என்றான்; அவனோவெனில் சாப்பிட அதைச்
சனத்திற்குக் கொடு; ஏனென்றால் சாப்பிட்ட
பிற்பாடு இன்னம் மீதியுண்டாயிருக்குமென்று
கர்த்தர் சொல்லுகிறாரென்றான்.—அப்போது இ ௪௪
வன் அவர்களுக்குமுன்பாக வைத்தான்; கர்த்த
ருடைய வார்த்தையின்படியே அவர்கள் சாப்
பிட்டு மீத்துவைத்தார்கள்.

## ௫. அதிகாரம்.

௧. சிறைப்பட்ட பெண்பிள்ளையின் அறிக்கையால் நாகமான் தன்னுடைய குஷ்டரோகம் நீங்கச் சமாரியா தேசத்துக்குப் போனது. ௮. எலிசா அவனை யோர்தான்நதிக்கு அனுப்பிக் குணமாக்கினது. ௰௫. எலிசா நாகமானுடைய காணிக்கையைத் தடுத்து அவனுக்கு அவன் கேட்டபடி கொஞ்சம் மண்கொடுத்தது. ௨௰. கேயாசி தன் எசமானனின் நாமத்தைச் சொல்லி வஞ்சித்ததினால் நாகமானின் குஷ்டரோகம் அவனுக்கு வந்தது.

சூரிய இராசாவின் படைத்தலைவனாகிய நாக ௧
மான் தன் ஆண்டவனுக்குமுன்பாகப் பெரிய
மனுஷனும் எண்ணமுள்ளவனுமாயிருந்தான்; ஏ
னெனில் அவனைக்கொண்டு, கர்த்தர் சூரியா
வுக்கு இரட்சிப்பைக் கட்டளையிட்டார்; பலத்த
பராக்கிரமசாலியாகிய அவனோவென்றால் குஷ்
டரோகியாயிருந்தான்.—ஆனால் சூரியாவிலிருந் ௨
து தண்டுகள் புறப்பட்டு, இஸ்ரவேல் தேசத்தி
லிருந்து ஒரு சிறு பெண்பிள்ளையைச் சிறைபி
டித்துக்கொண்டு வந்திருந்தார்கள்; இவள் நாக
மானின் பெண்சாதிக்குப் பணிவிடை செய்
தாள்.—இவள் தன் நாச்சியாருடனே, என் ஆண் ௩
டவன் சமாரியாவிலிருக்கிற தீர்க்கதரிசிக்கு
முன்பாக இருந்தாரானால் தாவிளை, அப்போது
அவரா அவர் குஷ்டரோகத்திற்கு நீங்கலாக்கி
விடுவார் என்றாள்.-அப்போது அவன் போய், இ ௪
ஸ்ரவேல் தேசத்தாளாகிய பெண்பிள்ளை இன்ன
இன்ன பிரகாரமாய்ப் பேசினாளென்று தன்
ஆண்டவனுக்கு அறிவித்தான்.—அப்போது சூரி ௫
யாவின் இராசா நீ போய் வா; இஸ்ரவேலின் இ
ராசாவுக்கு நிருபத்தை அனுப்புவேனென்றான்;
அப்படியே அவன் தன் கையிலே பத்துத் தா
லந்து வெள்ளியையும், ஆறாயிரம் சேக்கல் நிறை
பொன்னையும், பத்துமாற்று வஸ்திரங்களையும்
வைத்துக்கொண்டுபோய்,—இஸ்ரவேலின் இரா ௬
சாவண்டைக்கு அந்த நிருபத்தைக் கொண்டு
வந்தான்; அதிலே இந்த நிருபம் உம்மண்டைக்கு
வரும்போது, இதோ அதனோடே என் ஊழியக்
காரனாகிய நாகமானை நீர் அவனை அவன் குஷ்ட
ரோகத்திற்கு நீங்கலாக்கிவிட உம்மண்டைக்கு
அனுப்பினேனென்று எழுதியிருந்தது.—இஸ்ர ௭
வேலின் இராசா அந்த நிருபத்தை வாசித்தபோ
தோவெனில், அவன் தன் வஸ்திரங்களைக் கிழித்
துக்கொண்டு, ஒரு மனுஷனை அவன் குஷ்ட
ரோகத்திற்கு நீங்கலாக்கிவிட, அவன் என்னண்
டைக்கு நிருபம் அனுப்புகிறதற்கு, நான் கொல்
லவும் உயிர்ப்பிக்கவும்தக்க தேவனோ? ஆகை
யால் அவன் எனக்கு விரோதமாகச் சமயம் தே
டுகிறானென்கிறதை உணர்ந்து பாருங்களென்
றான்.

இஸ்ரவேலின் இராசா தன் வஸ்திரங்களைக் ௮
கிழித்துக்கொண்ட செய்தியைப் பராபரனு

டைய மனுஷனாகிய எலிசா கேட்டபோதோ
வெனில், அவன் இராசாவுக்கு நீர் உம்முடைய
வஸ்திரங்களைக் கிழித்துக்கொள்ளுவானேன்? அ
வன் என்னண்டைக்கு வந்து, இஸ்ரவேலிலே
தீர்க்கதரிசி உண்டென்கிறதை அறிந்துகொள்ள
௯ ட்டுமே என்று சொல்லி அனுப்பினான்.-அப்படி
யே நாகமான் தன் குதிரைகளோடும் தன் இரதத்
தோடும் வந்து, எலிசாவின் வாசற்படியிலே நின்
௰ றான்.-அப்போது எலிசா அவனண்டைக்கு ஆள
னுப்பி, நீர் போய், யோர்தானில் ஏழுதரம் ஸ்நா
னம்பண்ணும்; அப்போது உம்முடைய மாம்சம்
உமக்கு மாறி, நீர் சுத்தமாவீரென்று சொல்லச்
௰௧ சொன்னான்.—அப்போது நாகமான் கடுங்கோ
பமாகி, புறப்பட்டுப்போய்ச் சொன்னதாவது:
இதோ அவன் வெளியே வரவே வந்து நின்று,
தன் பராபரனாகிய கர்த்தருடைய நாமத்தைத்
தொழுதுகொண்டு, தன் கையாலே அந்த இடத்
திலே தடவி, இவ்விதமாய்க் குஷ்டரோகியை
நீங்கலாக்கிவிடுவானென்று எனக்குள் நினைத்
௰௨ தேன்.-நான் ஸ்நானம்பண்ணிச் சுத்தமாகிறதற்கு
தமஸ்குவின் நதிகளாகிய ஆப்னாவும் பற்பா
ரும் இஸ்ரவேலின் தண்ணீர்கள் எல்லாவற்றைப்
பார்க்கிலும் நல்லதல்லவோ என்று சொல்லி, உக்
௰௩ கிரத்தோடே திரும்பிக்கொண்டு போனான்.—ஆ
னால் அவன் வேலைக்காரர் சேர்ந்து, அவனோடே
பேசி, எங்கள் தகப்பனே, அந்தத் தீர்க்கதரிசி
ஒரு பெரிய காரியத்தை உமக்குச் சொல்லியிருந்
தால் அதை நீர் செய்வீர் அல்லவோ? ஸ்நானம்
பண்ணும், அப்போது சுத்தமாவீரென்று அவர்
உம்மோடே சொல்ல எத்தனை அதிகமென்றார்
௰௪ கள்.-அப்போது அவன் இறங்கி, பராபரனுடை
ய மனுஷன் வார்த்தையின்படியே யோர்தானில்
ஏழுதரம் முழுகுகிறபோது அவன் மாம்சம் ஒரு
சிறுபிள்ளையின் மாம்சத்தைப்போல மாறி, அவன்
சுத்தமானான்.

௰௫ அப்போது அவன் தன் கூட்டத்தோடெல்
லாம் பராபரனுடைய மனுஷனண்டைக்குத்
திரும்பிவந்து, அவனுக்குமுன்பாக நின்று, இ
தோ இஸ்ரவேலிலிருக்கிற பராபரனைத்தவிர பூ
மியெங்கும் வேறே தேவன் இல்லை என்கிறதை
அறிந்தேன்; இப்போதும் உம்முடைய அடி
யான் கையில் ஒரு காணிக்கை வாங்குமே என்
௰௬ றான்.-அவனோவெனில் நான் வாங்குகிறதில்லை
யென்று நான் ஊழியம்செய்து நிற்கிற கர்த்தரு
டைய சீவனைக்கொண்டு சொல்லுகிறேனென்
றான்; வாங்க அவனை வருந்தினாலும் தட்டுதல்
௰௭ பண்ணிவிட்டான்.-அப்போது நாகமான் சொ
ன்னதாவது: என்றாலும் ஒரு சோடு கோவேறு
கழுதைகள் சுமக்கத்தக்க மண்பொதி உம்மு
டைய அடியானுக்குக் கட்டளையிடப்படட்டு
மே; ஏனெனில் உம்முடைய அடியான் இனிக்
கர்த்தருக்கே அல்லாமல், அந்நியதேவர்களுக்
குச் சர்வாங்கதகனத்தையும் பலியையும் செலுத்
௰௮ துவதில்லை.—ஒரு காரியத்தையே கர்த்தர் உம்மு
டைய அடியானுக்கு மன்னிப்பாராக; என் ஆண்
டவன் பணிந்துகொள்ள ரிம்மோன் வீட்டிற்
குள் பிரவேசிக்கிறபோது, நான் அவருக்குக்
கைலாகுகொடுத்து ரிம்மோன் வீட்டிலே பணி
யவேண்டும்; இப்படி ரிம்மோன் வீட்டில்
நான் பணியவேண்டிய இந்தக் காரியத்தைக்
கர்த்தர் உம்முடைய அடியானுக்கு மன்னிப்
பாராகவென்றான்.—அவன் இவனுடனே சமா ௰௯
தானத்தோடே போமென்றான்; இவன் அவனை
விட்டுக் கொஞ்சத்தூரம் போனபோதோவெ
னில்,

பராபரனுடைய மனுஷனாகிய எலிசாவின் ௨௰
வேலைக்காரன் கேயாசியென்றவன், இதோ, அந்
தச் சூரியனாகிய நாகமான் கொண்டுவந்ததை
என் ஆண்டவன் அவன் கையிலே வாங்காதிருந்
தார்; நான் அவன் பிறகாலே ஓடி, அவன் கையி
லே கொஞ்சம் வாங்குவேன் என்பதற்கு கர்த்த
ரின் சீவன் ஆணை என்று சொல்லி,-அவன் நா ௨௰௧
கமானைப் பின்தொடர்ந்தான், அவன் தன் பிற
காலே ஓடிவருகிறதை நாகமான் கண்டபோது,
அவனுக்கு எதிர்கொண்டுபோக இரதத்திலிருந்து
குதித்துச் சுகசெய்தியோவென்று கேட்டான்.-
அதற்கு அவன் சுகசெய்தியாயிருக்கின்றது; ௨௰௨
இதோ தீர்க்கதரிசிகளின் புத்திரரில் இரண்டு
பிள்ளையாண்டான்மார் இப்போதுதான் எப்பி
ராயீம் மலைத்தேசத்திலிருந்து என்னண்டைக்கு
வந்தார்கள்; அவர்களுக்கு ஒரு தாலந்து வெள்ளி
யையும் இரண்டு மாற்று வஸ்திரங்களையும்
கொடுமென்று சொல்ல, என் எசமானன் என்
னை அனுப்பினாரென்றான். — அப்போது நாக ௨௰௩
மான் தயவுபண்ணி, இரண்டு தாலந்தை வாங்
கென்று சொல்லி, அவனை வருந்தி, இரண்டு தா
லந்து வெள்ளியை இரண்டு பைகளில் இரண்டு
மாற்று வஸ்திரங்களோடே கட்டி, அவனுக்கு
முன்பாகச் சுமந்துபோகத் தன் வேலைக்காரரான
இரண்டுபேர்கள் மேலே வைத்தான்.—அவன் ௨௰௪
மேட்டண்டைக்கு வந்தபோதோவெனில், அ
வன் அதை அவர்கள் கையிலே வாங்கி, ஒரு
வீட்டிலே வைத்து அந்த மனுஷரை அனுப்பி
விட்டான்; அவர்கள் போனபின், — இவன் ௨௰௫
உள்பிரவேசித்துத் தன் எசமானனுக்குமுன்பாக
நின்றான்; கேயாசியே, எங்கேயிருந்துவந்தாய்
என்று எலிசா அவனைக் கேட்டதற்கு, இவன்
உம்முடைய அடியான் இங்கும் அங்கும் போன
தில்லை என்றான்.—அப்போது அவன் இவனோ ௨௰௬
டே சொன்னதாவது: உனக்கு எதிர்கொண்டு
வர அந்த மனுஷன் தன் இரதத்திலிருந்து இறங்
கித் திரும்புகிறபோது என் இருதயம்கூட நடக்
கவில்லையோ? அந்த வெள்ளியை வாங்குகிற
தற்கும், வஸ்திரங்களையும் ஒலிவத் தோப்புக
ளையும் திராட்சத்தோட்டங்களையும் ஆடுமாடுக
ளையும் வேலைக்காரரையும் வேலைக்காரிகளையும்
வாங்குகிறதற்கும் அது காலமாயிருந்ததோ?—
ஆகையால் நாகமானின் குஷ்டரோகம் உன்னை ௨௰௭
யும் உன் வித்தாரையும் என்றைக்கும் பிடித்திருக்
குமென்றான்;அப்படியே இவன் உறைந்த மழை

நிறமான குஷ்டரோகியாகி அவன் முகத்தை
விட்டுப் புறப்பட்டான்.

## ௬. அதிகாரம்.

௧. தீர்க்கதரிசிகளின் புத்திரர்கள் வாசஸ்தலங்களை விசாலமாகக் கட்டும்படி எலிசா உத்தரவுகொடுத்து, நதியில் இரும்பை மிதக்கப்பண்ணினது. ௮. அவர் சூரியாவின இராசனுடைய ஆலோசனையை வெளிப்படுத்தினது. ௰௩. தோத்தானிலிருந்த எலிசாவைப் பிடிக்கும்படி அனுப்பப்பட்ட சேனை கண்குருடாய்ப் போனது. ௰௯. அவர்கள் சமாரியாதேசத்துக்குக் கொண்டுவரப்பட்டு, சமாதானத்தோடு அனுப்பப்பட்டது. ௨௪. சமாரியாதேசத்தில் பஞ்சமுண்டாகி ஸ்திரீகள் தங்கள் குழந்தைகளைப் பட்சித்தது. ௩௰. எலிசாவைக் கொலைசெய்யும்படி இராசன் ஆள்களை அனுப்பினது.

௧ தீர்க்கதரிசிகளின் புத்திரர் எலிசாவுடனே, இ
தோ நாங்கள் உமக்குமுன்பாகக் குடியிருக்கிற
இந்த இடம் எங்களுக்கு நெருக்கமாய் இருக்
௨ கின்றது.—நாங்கள் யோர்தான்மட்டும்போய் அவ்
விடத்திலிருந்து ஒவ்வொருவன் ஒரு உத்திரத்
தைக் கொண்டுவர அங்கே குடியிருக்க அங்கே
எங்களுக்கு ஒரு இடத்தை உண்டாக்குவோமே
என்றார்கள்; அதற்கு அவன் போங்களென்றான்.—
௩ அவர்களில் ஒருவன் நீர் தயவுபண்ணி, உம்மு
டைய அடியாரோடேகூட வாருமென்றதற்கு,
௪ அவன் நான் வருகிறேனென்று சொல்லி,—அ
வர்களோடே கூடப்போனான்; அவர்கள் யோர்
தான் நதிக்கு வந்தபோது மரங்களை வெட்டி
௫ னார்கள்.— ஆனால் ஒருவன் ஒரு உத்திரத்தை
விழப்பண்ணுகையில் கோடாலியும் தண்ணீரில்
விழுந்தது; அவன், ஐயோ என் ஆண்டவனே,
அது இரவலாகவும் வாங்கப்பட்டதென்று கூப்
௬ பிட்டான்.—ஆனால் பராபரனுடைய மனுஷன்
அது எங்கே விழுந்தது என்று கேட்டான்; அ
வன் அந்த இடத்தைத் தனக்குக் காண்பிக்கிற
போது ஒரு கொம்பை வெட்டி, அதை அங்கே
எறிந்து, அந்த இரும்பை மிதக்கப்பண்ணி,—
௭ அதை எடுத்துக்கொள் என்றான்; அப்படியே
அவன் தன் கையை நீட்டி, அதை எடுத்துக்
கொண்டான்.

௮ சூரியாவின் இராசா இஸ்ரவேல்மேல் யுத்தம்
பண்ணி, இன்ன இன்ன ஸ்தலத்திலே பாளயம்
இறங்குவேனென்று தன் ஊழியக்காரரோடே
௯ யோசித்துக்கொண்டிருப்பான்.—ஆகிலும்பராபர
னுடைய மனுஷன் இஸ்ரவேலின் இராசாவுக்கு
இன்ன ஸ்தலத்தைப் பத்திரப்படுத்தாமல் விடா
தபடிக்கு எச்சரிக்கையாயிரும்; ஏனெனில் சூரி
யர் அங்கே இறங்குவார்களென்று சொல்லி அ
௰ னுப்புவான்.—அப்போது பராபரனுடைய மனு
ஷன் தன்னை எச்சரித்துத் தனக்குக் குறித்துச்
சொன்ன ஸ்தலத்திற்கு இஸ்ரவேலின் இராசா
மனுஷரை அனுப்பி,அங்கே காவல் வைப்பான்;
இப்படி ஒருதரம் இரண்டுதரம்மாத்திரம் நடந்த
தில்லை.

௰௧ இந்தக் காரியத்திற்காகச் சூரிய இராசாவின்
இருதயம் குழம்பி, அவன் தன் ஊழியக்காரரை
அழைத்து அவர்களுடனே, நம்முடையவர்க
ளில் இஸ்ரவேலின் இராசாவுக்கு உளவாயிருக்
கிறவன் யார் என்று நீங்கள் எனக்கு அறிவிப்
பதில்லையோவென்றான்.— அப்போது அவன் ௰௨
ஊழியக்காரரில் ஒருவன் அப்படி அல்ல, என்
ஆண்டவனாகிய இராசாவே, நீர் உம்முடைய
சயன அறையிலே பேசுகிற வார்த்தைகளை இஸ்
ரவேலிலிருக்கிற தீர்க்கதரிசியாகிய எலிசா இஸ்
ரவேலின் இராசாவுக்கு அறிவிப்பானென்
றான்.— அப்போது அவன் அவனைப் பிடிக்க ௰௩
நான் மனுஷரை அனுப்பும்படிக்கு, நீங்கள்
போய், அவன் எங்கே இருக்கிறானென்கிறதைப்
பாருங்களென்றான்; அப்படியே இதோ தோத்தா
னில் இருக்கிறானென்று அவனுக்கு அறிவிக்கப்
பட்டது.

அப்போது அவன் அங்கே குதிரைகளையும் ௰௪
இரதங்களையும் பலத்த இராணுவத்தையும் அனுப்
பினான்; அவர்கள் இராக்காலத்திலே வந்து பட்
டணத்தை வளைந்துகொண்டார்கள். — பராபர ௰௫
னுடைய மனுஷனின் வேலைக்காரன் அதிகா
லமே எழுந்து வெளியே புறப்படுகையில்,
இதோ இராணுவமும் குதிரைகளும் இரதங்க
ளும் பட்டணத்தைச் சுற்றிக்கொண்டிருந்தன;
அப்போது அவன் வேலைக்காரன் அவனுடனே,
ஆ என் ஆண்டவனே, என்னசெய்வோமென்
றான். — அவனேனெனில் நீ பயப்படாதே; ஏ ௰௬
னென்றால் அவர்களோடிருக்கிறவர்களைப்பா
ர்க்கிலும் நம்மோடிருக்கிறவர்கள் அதிகமான
வர்களென்றான். — அப்போது எலிசா விண் ௰௭
ணப்பம்பண்ணி, கர்த்தாவே, இவன் பார்க்கும்
படிக்கு இவன் கண்களைத் திறவுமே என்றான்;
அப்போது கர்த்தர் அந்த வேலைக்காரன் கண்க
ளைத் திறந்தார்; இதோ எலிசாவைச் சுற்றி இருக்
கிற அக்கினிக் குதிரைகளாலும் இரதங்களாலும்
அந்த மலை நிறையப்பட்டிருக்கிறதை இவன்
கண்டான்.—இவர்கள் அவர்களண்டைக்கு இறங் ௰௮
கிவந்தபோது, எலிசா கர்த்தரைநோக்கி விண்
ணப்பம்பண்ணி, அந்தச் சாதிக்குக் கண்மயக்கத்
தை உண்டாக்குமென்றான்; எலிசாவுடைய
வார்த்தையின்படியே அவர்களுக்குக் கண்மய
க்கம் பிடிக்கப்பண்ணினார்.

அப்போது எலிசா அவர்களுடனே இது அந்த ௰௯
வழி அல்ல; இது அந்தப் பட்டணமும் அல்ல;
என் பிறகே வாருங்கள்; நீங்கள் தேடுகிற மனுஷ
னண்டைக்கு நான் உங்களை வழிநடத்துவே
னென்று சொல்லி, அவர்களைச் சமாரியாவுக்கு
அழைத்துக்கொண்டு போனான்.—அவர்கள் சமா ௨௰
ரியாவுக்கு வந்தபோதோவெனில், எலிசா என்
றவன், கர்த்தாவே, இவர்கள் பார்க்கும்படிக்
கு இவர்கள் கண்களைத் திறவுமென்றான்; பார்
க்கும்படிக்குக் கர்த்தர் அவர்கள் கண்களைத்
திறக்கும்போது இதோ சமாரியாவின் நடுவே
இருந்தார்கள்.

இஸ்ரவேலின் இராசா அவர்களைக் கண்ட ௨௧
போது, எலிசாவை என் தகப்பனே, நான்
வெட்டவே வெட்டலாமோ என்று கேட்
டான். — அதற்கு அவன், நீர் வெட்டாதிரும்; ௨௨
நீர் உம்முடைய பட்டையத்தாலும் உம்முடைய

வில்லினாலும் சிறையாக்கிப் பிடித்தவர்களை
வெட்டுகிறீரோ? இவர்கள் சாப்பிட்டுக் குடித்து,
தங்கள் ஆண்டவனண்டைக்குப் போகும்படி
க்கு, அப்பமும் தண்ணீரும் அவர்கள் முன்னே
௨௩ வையுமென்றான்.—அப்போது அவர்களுக்குப்
பெரிய விருந்து உண்டாக்கி, அவர்கள் சாப்பிட்
டுக் குடித்தபிற்பாடு அவர்களை அனுப்பிவிட்
டான்; அவர்கள் தங்கள் ஆண்டவனண்டைக்
குப் போனார்கள்; ஆனதுகொண்டு சூரியரின்
தண்டுகள் இஸ்ரவேல் தேசத்திலே அப்புறம்
வர மனதில்லாதிருந்தது.

௨௪ இதற்குப்பிற்பாடோவெனில் சூரியாவின் இ
ராசாவாகிய பெனாதாத் தன் இராணுவத்தை எல்
லாம் கூட்டிக்கொண்டு ஏறிவந்து, சமாரியாவை
௨௫ முற்றிக்கைபோட்டான்.—அதினால் சமாரியா
வில் கன பஞ்சமுண்டாயிற்று; இதோ ஒரு கழு
தைத்தலை எண்பது வெள்ளிக்காசுக்கும் புறாக்க
ளுக்குப் போடுகிற கால்படி பயறு ஐந்து வெள்
ளிக்காசுக்கும் விற்கப்படும்மட்டும் அதை முற்
றிக்கைபோட்டார்கள்.

௨௬ சம்பவித்ததேதெனில், இஸ்ரவேலின் இராசா
அலங்கத்தின்மேல் நடந்துபோகையில், ஒரு
ஸ்திரி அவனைப்பார்த்துக் கூப்பிட்டு, இராசா
வாகிய என் ஆண்டவனே, இரட்சியுமென்றாள்.-
௨௭ அதற்கு அவன், கர்த்தர் உன்னை இரட்சிக்கா
திருந்தால் நான் எதில் எடுத்து உன்னை இரட்
சிக்கலாம்? களஞ்சியத்தில் எடுத்தோ, ஆலையில்
௨௮ எடுத்தோ என்று சொல்லி, — இராசா பின்னை
யும் அவளை, உனக்கு என்னவேண்டும் என்று
கேட்டான்; அவள் சொன்னதாவது: இந்த ஸ்திரி
என்னுடனே, உன் ஆண்பிள்ளையைத் தா, அ
வனை இன்று சாப்பிடுவோம், நாளை என் ஆண்
௨௯ பிள்ளையைச் சாப்பிடுவோமென்றாள். — அப்ப
டியே என் ஆண்பிள்ளையை ஆக்கிச் சாப்பிட்
டோம்; மறுநாளில் நான் அவளுடனே, நாம்
உன் ஆண்பிள்ளையைச் சாப்பிட அவனைத் தா
வென்றேன்; ஆனால் அவள் தன் ஆண்பிள்ளை
௩௰ யை ஒளித்துவைத்தாளென்றாள்.—அந்த ஸ்திரி
யின் வார்த்தைகளை இராசா கேட்டபோதோவெ
னில் அலங்கத்தின்மேல் நடந்துபோகிற அவன்
தன் வஸ்திரங்களைக் கிழித்துக்கொண்டான்; இ
தோ உள்ளே தன் சரீரத்தின்மேல் அவன் இரட்டு
௩௧ உடுத்திருக்கிறதைச் சனம் கண்டது. — அவன்
சாப்பாத்தின் குமாரனாகிய எலிசாவின் தலை
இன்று அவன்மேல் நின்றால், பராபரன் எனக்கு
இப்படியும் அப்படியும் செய்யக்கடவரென்று
சொல்லி,

௩௨ எலிசா தன் வீட்டில் உளுக்காந்திருக்கும்
போதும் மூப்பர் அவனோடு உளுக்காந்திருக்கும்
போதும், ஒரு மனுஷனைத் தனக்குமுன்னே
அனுப்பினான்; அந்த ஆள் எலிசாவண்டைக்கு
வராததற்குமுன்னே, இவன் அந்த மூப்பருட
னே என் தலையை வாங்க, அந்தக் கொலைபாதக
மகன் ஆள் அனுப்பினான், பார்த்தீர்களோ? அந்த
ஆள் வருகிறபோது, நீங்கள் கதவைப்பூட்டி, கத
வால் அவனை மறிக்கப்பாருங்கள்; அவனுக்குப்
பின்னாக அவன் ஆண்டவனுடைய கால்களின்
இரைச்சலல்லவோ உண்டாகின்றதென்றான்.-
அவர்களோடே அவன் இன்னம் பேசுகையில், ௩௩
இதோ அந்த ஆள் அவனண்டையில் இறங்கி
வந்து, இதோ இந்தப் பொல்லாப்பு கர்த்தரால்
உண்டானது; நான் இனிக் கர்த்தரால் பார்த்துக்
கொள்ளவேண்டியதென்னவென்று இராசா
சொல்லுகிறாரென்றான்.

## ௭. அதிகாரம்.

*௧. எலிசா சமாரியாவில் தானியம் மலிவாயிருக்குமென்று தீர்க்கதரிசனம் சொன்னது. ௩. நாலு குஷ்டரோகிகள் சூரியாவின் இராணுவத்தில் போய், அவர்கள் ஓடிப்போன சமாசாரத்தை அறிவித்தது. ௰௨. இராசன் வேவுகாரரால் அது நிசமான சமாசாரமென்று அறிந்து, சூரியாவின் பாசறையைக் கொள்ளையிட்டது. ௰௭. பஞ்சம் நீங்குமென்று சொன்ன தீர்க்கதரிசனத்தை நம்பாதவன் ஒலிமுகவாசலில் மிதிக்கப்பட்டு மரித்தது.*

அப்போது எலிசா, கர்த்தருடைய வார்த்தை ௧
யைக் கேளுங்கள்; நாளை இந்நேரத்திலே சமாரி
யாவின் வாசலிலே ஒரு மரக்கால் கோதுமை
மாவு ஒரு சேக்கலுக்கும், இரண்டு மரக்கால்
வாற்கோதுமை ஒரு சேக்கலுக்கும் விற்கப்படு
மென்று கர்த்தர் சொல்லுகிறாரென்றான்.—அப் ௨
போது இராசாவுக்குக் கைலாகுகொடுக்கிற தலை
வன், பராபரனுடைய மனுஷனுக்குப் பிரதியுத்
தாரமாக, இதோ கர்த்தர் வானத்திலே மதகுகளை
உண்டாக்கினாலும் இப்படியாகுமோ என்றான்;
அதற்கு அவன், இதோ நீர் உம்முடைய கண்க
ளினாலே அதைக் கண்டும் அதிலே சாப்பிடாம
லும் இருப்பீரென்றான்.

குஷ்டரோகிகளான நாலு மனுஷர் ஒலிமுக ௩
வாசலில் இருந்தார்கள்; அவர்கள் ஒருவரோ
டொருவர் நாம் சாகும்மட்டும் இங்கே இருப்
பானேன்?-பட்டணத்திற்குள் போவோமென் ௪
றோமானால் பட்டணத்தில் பஞ்சமாயிருக்கிற
தினால் அங்கே சாவோம்; நாம் இங்கே இருந்
தாலும் சாவோம்; இப்போதும் சூரியருடைய
இராணுவத்தின் வசமாய்ப் போவோம் வாருங்
கள்; அவர்கள் நம்மை உயிரோடே வைத்தால்
பிழைக்கிறோம்; நம்மைக் கொன்றால் சாகிறோ
மென்றுசொல்லி, — சூரியருடைய இராணுவத் ௫
தண்டைக்குப் போக இருட்டோடு எழுந்தி
ருந்து, சூரியருடைய பாளயத்தின் முனையில்
வந்தார்கள்; ஆனால் இதோ அங்கே ஒருவரு
மில்லை.-ஏனெனில் ஆண்டவர் சூரியரின் இரா ௬
ணுவத்திற்கு இரதங்களின் இரைச்சலையும், குதி
ரைகளின் இரைச்சலையும், மகா இராணுவத்தின்
இரைச்சலையும் கேட்கப்பண்ணினதினாலே, அ
வர்கள் ஒருவரோடொருவர், இதோ நம்முடை
யமேல் வர, இஸ்ரவேலின் இராசா ஏத்தியரின்
இராசாக்களையும் எகிப்தியரின் இராசாக்களை
யும் நமக்கு விரோதமாகக் கூலிபொருந்தினா
னென்று சொல்லி, — இருட்டோடு எழுந்தி ௭
ருந்து ஓடிப்போய், தங்கள் கூடாரங்களையும்

தங்கள் குதிரைகளையும் தங்கள் கழுதைகளையும்
தங்கள் பாளயத்தையும் அவைகளிருந்த பிரகா
ரமாக விட்டு, தங்கள் பிராணன்மாத்திரம் தப்ப
ஓடிப்போனார்கள்.
அ அந்தக் குஷ்டரோகிகள் பாளயத்தின் முனை
மட்டும் வந்தபோது, ஒரு கூடாரத்திற்குள் பிர
வேசித்து, புசித்துக் குடித்து, அதிலே வெள்ளி
யையும் பொன்னையும் வஸ்திரங்களையும் எடுத்
துக்கொண்டுபோய் ஒளித்துவைத்து, திரும்பி
வந்து, வேறொரு கூடாரத்திற்குள் பிரவேசித்து,
அதிலும் அப்படி எடுத்துப்போய் ஒளித்து
௯ வைத்து,—பிற்பாடு ஒருவரோடொருவர், நாம்
செய்கிறது நியாயமல்ல, இந்நாள் நல்ல செய்தி
யை அறிவிக்கும் நாள்; நாம் மவுனமாயிருந்து,
பொழுது விடியும்மட்டும் காத்திருந்தால் குற்றம்
நம்முடையமேல் சுமரும்; இப்போதும் இராசா
வின் வீட்டுக்கு அதை அறிவிக்கப் போவோம்
வாருங்களென்றார்கள்.
௰ அப்படியே அவர்கள் வந்து, பட்டணத்து
வாசல் காப்பானைநோக்கிக் கூப்பிட்டு,நாங்கள்
சூரியரின் பாளயத்திற்குப் போய்வந்தோம்;
இதோ அங்கே ஒருவருமில்லை, ஒரு மனுஷனு
டைய சத்தமும் இல்லாமலே கட்டியிருக்கிற
குதிரைகளும் கட்டியிருக்கிற கழுதைகளும்
கூடாரங்களும் இருக்கிறபிரகாரமாக இருக்கின்
றனவென்று அவர்களுக்குச் சொன்னார்கள்.—
௰௧ அப்போது அவன் வாசல்காக்கிற மற்றவர்களைக்
கூப்பிட்டான்; இவர்கள் உள்ளேபோய் இரா
சாவின் வீட்டில் அதை அறிவித்தார்கள்.
௰௨ அப்போது இராசா இராத்திரியில் எழுந்து,
தன் ஊழியக்காரருடனே, சூரியர் நமக்குச்
செய்யும் காரியத்தை உங்களுக்குத் தெரியப்பண்
ணுவேன்; நாம் பட்டினியென்று அவர்கள் அறி
வார்கள்; ஆகையால் இவர்கள் பட்டணத்திலி
ருந்து புறப்பட்டுவந்தால், அவர்களை உயிரோ
டே பிடித்து,பட்டணத்திற்குள் பிரவேசிப்போ
மென்று அவர்கள் வெளியில் ஒளித்துக்கொள்
ளுகிறதற்காகப் பாளயத்தைவிட்டுப் புறப்பட்
௰௩ டார்களென்றான்.—ஆனால் அவன் ஊழியக்கா
ரரில் ஒருவன் பிரதியுத்தாரமாக,இங்கே மீதியான
குதிரைகளில் ஐந்து குதிரைகளை எடுக்கட்டுமே.
இதோ இங்கே மீதியான இஸ்ரவேலின் சகல
ஏராளத்தோடும், இதோ மாண்டுபோன இஸ்ர
வேலின் சகல ஏராளத்தோடும் அவைகள் ஏக
யோக்கியமாயிருக்கும்; அவைகளை நாம் அனுப்
௰௪ பிப் பார்க்கக்கடவோமென்றான்.—அப்படியே
குதிரைகள்பூண்ட இரண்டு இரதங்களைக் கொண்
டுவந்தார்கள்; அவைகளை இராசா சூரியருடைய
இராணுவத்தின்பிறகே அனுப்பிப்போய்ப் பாரு
௰௫ ங்களென்றான்.—இவர்கள் அவர்கள் பிறகாலே
யோர்தான்மட்டும் போனார்கள்; ஆனால் இதோ
சூரியர் தீவிரித்தோடுகையில், அவர்கள் எறிந்து
போட்ட வஸ்திரங்களாலும் தட்டுமுட்டுகளா
லும் வழியெல்லாம் நிறைந்திருந்தன; அனுப்பப்
பட்டவர்கள் திரும்பிவந்து இராசாவுக்கு அதை
அறிவித்தார்கள்.
அப்போது சனம் புறப்பட்டு,சூரியரின் பாள ௰௬
யத்தைக் கொள்ளையிட்டார்கள்; கர்த்தருடைய
வார்த்தையின்படியே, ஒரு மரக்கால் கோதுமை
மா ஒரு சேக்கலுக்கும், இரண்டு மரக்கால் வால்
கோதுமை ஒருசேக்கலுக்கும் விற்கப்பட்டன.—
இராசாவோவெனில்தனக்குக் கைலாகுகொடுக் ௰௭
கிற அந்தத் தலைவனை ஒலிமுகவாசலில் விசா
ரிப்பாயிருக்கக் கட்டளையிட்டிருந்தான்; ஆனால்
இராசா பராபரனுடைய மனுஷனண்டைக்கு
இறங்கிவந்தபோது, இவன் சொன்னபடியே ச
னம் அவனை ஒலிமுகவாசலிலே மிதித்ததினாலே
சென்றுபோனான். — ஏனென்றால் இரண்டு ௰௮
மரக்கால் வால்கோதுமை ஒரு சேக்கலுக்கும்,
ஒரு மரக்கால் கோதுமை மா ஒரு சேக்கலுக்கும்,
நாளை இந்நேரத்திலே சமாரியாவின் ஒலிமுகவா
சலில் விற்குமென்று பராபரனுடைய மனுஷன்
இராசாவோடே சொன்னதின்படியே நடந்
தது. — அதற்கு அப்போது அந்தத் தலைவன் ௰௯
பராபரனுடைய மனுஷனுக்குப் பிரதியுத்தார
மாக, இதோ கர்த்தர் வானத்தில் மதகுகளை உண்
டாக்கினாலும், இந்த வார்த்தையின்படி நடக்கு
மோ என்று சொல்ல, இவன் இதோ நீர் உம்மு
டைய கண்களினால் அதைக் கண்டும் அதிலே
நீர் சாப்பிடப்போகிறதில்லை என்றானே.—அந் ௨௰
தப்பிரகாரமாகத்தானே அவனுக்கு நடந்தது;
அதேதெனில் ஒலிமுகவாசலிலே சனம் அவனை
மிதித்ததினாலே சென்றுபோனான்.

## அ. அதிகாரம்.

*௧. பஞ்சத்தினால் தன் ஊரைவிட்டுப்போன சூனேமியாளுக்காக எலிசா செய்த அற்புதத்தை இராசா அறிந்து அவளுக்கு அவள் வருமானத்தைக் கொடுத்தது. ௭. தமஸ்குவிலிருந்த எலிசாவண்டைக்குப் பெனாதாத்தினால் வெகுமதியோடே அனுப்பப்பட்டு, ஆசகேல் போய், தீர்க்கதரிசனம் கேட்டு, தன் எசமானைக் கொன்று, அவனுக்குப்பின் தான் அரசாண்டது. ௰௬. யூதாவில் யோராமுடைய கெட்ட ஆளுகை, ௨௰. ஏதோமும் லிப்னாவும் கலகம்செய்தது. ௨௧. அகசியா யோராமுக்குப்பின் இராசாவானது. ௨௫. அகசியாவின் கெட்ட ஆளுகை. ௨௮. அவன் காயப்பட்ட யோராமை எசரேயில் காணப்போனது.*

எலிசா உயிர்ப்பித்த குமாரனின் தாயாகிய ஸ்தி ௧
ரியுடனே அவன், நீ உன் வீட்டாரோடும்கூட
எழுந்து புறப்பட்டு எங்கேயாகிலும் பரதே
சம்போயிரு; ஏனெனில் கர்த்தர் பஞ்சத்தை
வரவழைப்பார்; அப்படியே ஏழுவருஷமாய்த்
தேசத்தில் வந்துநிற்குமென்று சொல்லியிருந்
தான்.—அந்த ஸ்திரி எழுந்து, பராபரனுடைய ௨
மனுஷன் வார்த்தையின்படியே செய்து, தன்
வீட்டாரோடும்கூடப் புறப்பட்டு, பெலிஸ்தி
யரின் தேசத்தில் ஏழுவருஷமாய்ப் பரதேசம்
போயிருந்து,
ஏழுவருஷம் சென்றபிற்பாடு, அவள் பெலிஸ் ௩
தியரின் தேசத்தைவிட்டுத் திரும்ப வந்து, தன்
வீட்டுக்காகவும் தன் வயலுக்காகவும் இராசா
வைப்பார்த்துக் கூப்பிடும்படிக்குப் புறப்பட்
டாள்.—அந்நேரம் இராசா பராபரனுடைய மனு ௪
ஷனின் வேலைக்காரனாயிருந்த கேயாசியுடனே

பேசி, எலிசா செய்த பெரிய கிரியைகளையெல்
௫ லாம் நீ எனக்கு விவரியென்றான். — செத்துப்
போனவனை உயிர்ப்பித்தாரென்கிறதை அவன்
இராசாவுக்கு விவரிக்கிறபோதோவெனில், இ
தோ இவன் உயிர்ப்பித்த குமாரனின் தாயாகிய
அந்த ஸ்திரி வந்து, தன் வீட்டுக்காகவும் தன்
வயலுக்காகவும் இராசாவைப்பார்த்துக் கூப்பிட்
டாள்; அப்போது கேயாசி, இராசாவாகிய என்
ஆண்டவனே, இவள்தானே அந்த ஸ்திரி; எலிசா
உயிர்ப்பித்த இவளுடைய குமாரன் இவன்தான்
௬ என்றான்.—இராசா அந்த ஸ்திரியைக் கேட்ட
தற்கு அவள் அதை அவனுக்கு விவரித்தாள்;அப்
போது இராசா அவளுக்கு ஒரு பிரதானியைக்
கட்டளைபண்ணி, அவளுக்குண்டானதெல்லா
வற்றையும், அவள் தேசத்தை விட்டுப்போன
நாள்துவக்கி இதுவரைக்கும் உண்டான அந்த
வயலின் வரத்து அனைத்தையும் அவளுக்குத்
திரும்ப வரப்பண்ணென்றான்.
௭ சூரியாவின் இராசாவாகிய பெனாதாத் வியா
தியாயிருக்கிறபோது, எலிசா தமஸ்குவுக்கு வந்
தான்; பராபரனுடைய மனுஷன் இவ்விடம்மட்
டும் வந்தானென்று அவனுக்கு அறிவிக்கப்பட்
௮ டபோது,—இராசா ஆசகேலுடனே, நீ உன் கை
யிலே ஒரு காணிக்கையை எடுத்துக்கொண்டு,
பராபரனுடைய மனுஷனுக்கு எதிர்கொண்டு
போய்,நான் இந்த வியாதிக்குப் பிழைப்பேனோ
என்று அவனாலே கர்த்தனைக் கேளென்றான்.—
௯ ஆசகேல் தமஸ்குவின் சகல உச்சிதங்களாகிய
நாற்பது ஒட்டகங்களின் சுமையான காணிக்
கையை எடுத்துக்கொண்டு, அவனுக்கு எதிர்
கொண்டுபோய்ச் சேர்ந்தபோது, அவனுக்கு
முன்பாக நின்று, சூரியாவின் இராசாவாகிய
பெனாதாத் என்ற உம்முடைய குமாரன் என்னை
உம்மண்டைக்கு அனுப்பி இந்த வியாதிக்குப்
பிழைப்பேனோ என்று கேட்கச்சொன்னானென்
௰ றான்.—எலிசா அவனுடனே, நீர் போய்,அவனுக்
குப் பிழைக்கவே பிழைப்பீரென்று சொல்லும்;
ஆனால் அவன் சாவவே சாவானென்கிறதைக்
கர்த்தர் எனக்குக் காண்பித்தாரென்றான். —
௰௧ பிற்பாடு பராபரனுடைய மனுஷன் அவனுக்குக்
கூச்சம் உண்டாகத்தக்கவிதமாய், தன் முகத்
தைத் திருப்பாமல்,அவனை நோக்கிக்கொண்டே
௰௨ இருந்து அழுதான்.—அப்போது ஆசகேல்,என் ஆ
ண்டவன் அழுகிறதென்னவென்று கேட்டான்;
அதற்கு அவன், நீர் இஸ்ரவேல் புத்திரருக்குச்
செய்யும் தீங்கை நான் அறிந்திருக்கிறபடியினா
லேதானே; நீர் அவர்கள் கோட்டைகளை அக்கி
னிக்கு இரையாக்கி, அவர்கள் வாலிபரைப்
பட்டையத்தால் கொன்று, அவர்கள் குழந்தை
களைத் தரையோடே மோதி, அவர்களுடைய
௰௩ கர்ப்பவதிகளைப் பீறுவீர் என்றான்.—அப்போது
ஆசகேல், இத்தனை பெரியகாரியத்தைச் செய்ய
நாயாகிய உம்முடைய அடியான் எம்மாத்திர
மென்றான்; எலிசாவோவெனில் நீர் சூரியா
வின்மேல் இராசா ஆவீரென்கிறதைக் கர்த்தர்
எனக்குக் காண்பித்தாரென்றான்.—அவன் எலி ௰௪
சாவைவிட்டுப் புறப்பட்டு, தன் ஆண்டவனண்
டைக்கு வந்தபோது, இவன் எலிசா உனக்கு
என்ன சொன்னானென்று கேட்டதற்கு, அவன்
நீர் பிழைக்கவே பிழைப்பீரென்று எனக்குச்
சொன்னானென்று சொல்லி, — மறுநாளிலோ ௰௫
வென்றால் ஒரு சமுக்காளத்தை எடுத்து, தண்
ணீரிலே தோய்த்து அவன் முகத்தின்மேல் விரித்
தான்; அப்போது சென்றுபோனான்; ஆசகே
லோவெனில் அவனுக்குப்பதிலாய் இராசாவா
னான்.
இஸ்ரவேலின் இராசாவாகிய ஆகாபின் குமா ௰௬
ரன் யோராமுடைய ஐந்தாம்வருஷத்தில், யோ
சபாத் யூதாவிலே இன்னம் இராசாவாயிருக்கை
யில்,யோசபாத்தின் குமாரனாகிய யோராமென்ற
யூதாவின் இராசா இராச்சியபாரம்பண்ணத்துவ
க்கினான்.—அவன் இராசாவாகிறபோது, அவன் ௰௭
முப்பத்திரண்டுவயதாயிருந்து,எட்டுவருஷமாய்
எருசலேமில் இராச்சியபாரம்பண்ணினான். —
அவன் இஸ்ரவேல் இராசாக்களின் வழியில் ௰௮
நடந்து, ஆகாபின் வீட்டார் செய்ததுபோலச்
செய்தான்; ஏனெனில் ஆகாபின் குமாரத்தி
அவனுக்குப் பெண்சாதியாயிருந்தாள்; கர்த்த
ரின் பார்வைக்குப் பொல்லாப்பானதைச் செய்
தான். — கர்த்தரோவென்றால் உன் குமாரருக் ௰௯
குள்ளே சகலநாளும் ஒரு விளக்கை உனக்குக்
கட்டளையிடுவோமென்று தம்முடைய தாசனா
கிய தாவீதுக்குச் சொன்னதின்படியே அவன்
நிமித்தம் யூதாவைக் கெடுக்க மனதில்லாதி
ருந்தார்.
அவன் நாள்களில் யூதாவுடைய கையின்கீழி ௨௰
ருந்த ஏதோமியர் மருளவிழுந்து, தங்கள்மேல்
ஒரு இராசாவை வைத்தார்கள்.—அதற்காக யோ ௨௧
ராம் எல்லா இரதங்களோடும்கூடச் சாயீருக்குப்
புறப்பட்டுப்போனான்; ஆனால் அவன் இராத்தி
ரியில் எழுந்திருந்து, தன்னை வளைந்துகொண்ட
ஏதோமியரையும் இரதங்களின் தலைவரையும்
முறியடித்தபோது, சனம் தங்கள் கூடாரங்களு
க்கு ஓடிப்போனார்கள். — அப்படியே யூதாவு ௨௨
டைய கையின்கீழிருந்த ஏதோமியர் இந்நாள்வ
ரைக்கும் இருக்கிறதுபோல மருளவிழுந்தார்கள்;
அக்காலத்திலேதானே லீப்னா பட்டணமும்
மருளவிழுந்தது.
யோராமின் மற்ற வர்த்தமானங்களும், அவன் ௨௩
செய்ததனைத்தும், யூதாவுடைய இராசாக்களின்
நாளாகமப் புஸ்தகத்திலல்லவோ எழுதியிருக்கி
ன்றது.—யோராம் தன் பிதாக்களோடே நித்திரை ௨௪
அடைந்து, தன் பிதாக்களிடத்திலே தாவீதின்
பட்டணத்திலே அடக்கம்பண்ணப்பட்டான்;
அவனுக்குப்பதிலாக அவன் குமாரனாகிய அ
கசீயா இராசாவானான்.
இஸ்ரவேலின் இராசாவாகிய ஆகாபின் குமா ௨௫
ரன் யோராமுடைய பன்னிரண்டாம்வருஷத்தி
லே யூதாவின் இராசாவாகிய யோராமின் குமா
ரன் அகசீயா இராசாவானான்.—அகசீயா இராசா ௨௬

வாகிறபோது, இருபத்திரண்டு வயதாயிருந்து,
ஒரே வருஷம் எருசலேமில் இராச்சியபாரம்
பண்ணினான்; இஸ்ரவேலின் இராசாவாகிய
ஒம்மிரியின் குமாரத்தியான அவன் தாயின்
௨௭ பேர் அத்தாலியாள்.—அவன் ஆகாபுடைய வீட்
டாரின் வழியே நடந்து, ஆகாபின் வீட்டாரைப்
போலக் கர்த்தரின் பார்வைக்குப் பொல்லாப்
பானதைச் செய்தான்; ஏனெனில் அவன் ஆ
காப் வீட்டாரோடே சம்பந்தம் கலந்தவனாயிருந்
௨௮ தான்.—அவன் ஆகாபின் குமாரனாகிய யோரா
மோடேகூடக் கிலேயாத்திலுள்ள ராமோத்திற்
குச் சூரியாவின் இராசாவாகிய ஆசகேலோடு
யுத்தம்பண்ணப்போனான்; ஆனால் சூரியர் யோ
௨௯ ராமைக் காயப்படுத்தினார்கள்.—அப்போது தான்
சூரியாவின் இராசாவாகிய ஆசகேலோடு யுத்
தம்பண்ணுகையில், சூரியர் ராமாவிலே தன்னை
வெட்டின காயங்களை எஸ்ரெயேலிலே ஆற்
றிக்கொள்ள இராசாவாகிய யோராம் திரும்பி
னான்; ஆகாபின் குமாரனாகிய யோராம் வியா
தியானபடியினாலே, யூதாவின் இராசாவாகிய
யோராமின் குமாரன் அகசியா எஸ்ரெயேலில்
இருக்கிற அவனைப் பார்க்கிறதற்கு இறங்கிப்
போனான்.

## ௯. அதிகாரம்.

*க. கிலேயாத் ராமோத்திலிருந்த ஏகூவுக்கு எண்ணெயால் அபிஷேகம் செய்யும்படி எலிசா ஒரு வாலிப தீர்க்கதரிசியை அனுப்பினது. ச. அந்தத் தீர்க்கதரிசி தனக்குச் சொன்னபடி செய்து ஓடிப்போனது. ௰௧. ஏகூ சேனைகளால் இராசாவாக்கப்பட்டு நாபோத்தின் வயலில் யோராமைக் கொன்றது. ௨௭. அகசியா கூர்மலையில் கொல்லப்பட்டு, எருசலேமில் அடக்கம்பண்ணப்பட்டது. ௩௰. யேசபேல் பலகணியிலிருந்து தள்ளப்பட்டு நாயினால் பட்சிக்கப்பட்டது.*

௧ அப்போது தீர்க்கதரிசியாகிய எலிசா தீர்க்கதரி
சிகளின் புத்திரரில் ஒருவனை அழைத்து, அவ
னுடனே, நீ இடைகட்டிக்கொண்டு, இந்த எண்
ணெய்ப் பாத்திரத்தை உன் கையில் எடுத்துக்
கொண்டு, கிலேயாத்திலுள்ள ராமோத்திற்குப்
௨ போ.— நீ அங்கே சேர்ந்தபோது, நிம்சியின்
மகனான யோசபாத்தின் குமாரன் ஏகூ எங்
கே இருக்கிறானென்று பார்த்து, அங்கே உள்
பிரவேசித்து, அவனைத் தன் சகோதரரின் நடு
விலிருந்து எழுந்திருக்கப்பண்ணி, அவனை உள்
ளுக்குள்ளான அறையில் அழைத்துப்போய்,—
௩ எண்ணெய்ப்பாத்திரத்தை எடுத்து, அவன் தலை
யின்மேல் ஊற்றி, உன்னை இஸ்ரவேலின்மேல்
இராசாவாக அபிஷேகம்பண்ணினேனென்று
கர்த்தர் சொல்லுகிறாரென்று சொல்லி, கதவைத்
௪ திறந்து தாமதியாமல் ஓடிப்போ என்றான்.—அப்
படியே தீர்க்கதரிசியின் வேலையாளாகிய அந்த
வாலிபன் கிலேயாத்திலுள்ள ராமோத்திற்குப்
போனான்.
௫ அவன் உள்பிரவேசித்தபோது, இதோ இரா
ணுவத்தின் சேர்வைக்காரர் அங்கே உளுக்காந்
திருந்தார்கள்; அப்போது அவன் சேர்வைக்
காரனே, உமக்குச் சொல்லவேண்டிய வார்த்
தை எனக்கு இருக்கின்றதென்றான்; எங்களெல்
லாரிலும் யாருக்கென்று ஏகூ கேட்டதற்கு
அவன் சேர்வைக்காரனாகிய உமக்குத்தான் என்
றான்.— இவன் எழுந்து, அறைவீட்டிற்குள் ௬
பிரவேசித்தபின், அவன் அந்த எண்ணெயை
இவன் தலையின்மேல் ஊற்றி, இவனுடனே
சொன்னது: இஸ்ரவேலின் பராபரனாகிய கர்த்
தர் சொல்லுகிறதேதெனில், உன்னைக் கர்த்தரு
டைய சனமாகிய இஸ்ரவேலின்மேல் இராசா
வாக அபிஷேகம்பண்ணினேன். — நாம் நம்மு ௭
டைய ஊழியக்காரராகிய தீர்க்கதரிசிகளின் இ
ரத்தப்பழியையும், கர்த்தருடைய சகல ஊழியக்
காரரின் இரத்தப்பழியையும், ஏசபேலின் கை
யிலே வாங்கும்படிக்கு நீ உன் ஆண்டவனாகிய
ஆகாபின் வீட்டாரை அழித்துவிடக்கடவாய்.—
ஆகாபின் வீடெல்லாம் அழியும்படிக்கு, நாம் ஆ ௮
காபுக்குச் சுவரில் நீர்விடும் ஒரு நாய்முதலாயி
ராதபடிக்கு, இஸ்ரவேலிலே அவனுடையவர்
களில் அடைபட்டவனையும் விடுதலையாயிருக்
கிறவனையும் கருவறுத்து,—ஆகாபின் வீட்டை ௯
நேபாத்தின் குமாரனாகிய எரோபேயாமின் வீட்
டிற்கும் அகியாவின் குமாரனாகிய பாஷாவின்
வீட்டிற்கும் சரியாக்குவோம்.—ஏசபேலை எஸ் ௰
ரெயேலின் நிலத்திலே நாய்கள் தின்றுவிடும்;
அவளை அடக்கம் பண்ணுபவன் இல்லையென்
கிறாரென்று சொல்லி, கதவைத் திறந்து ஓடிப்
போனான்.
ஏகூ தன் ஆண்டவனுடைய ஊழியக்காரரண் ௰௧
டைக்குப் புறப்பட்டு வந்தபோது, இவர்கள்
அவனைச் சுகசெய்தியோ? அந்தப் பயித்தியக்
காரன் உன்னண்டைக்கு வந்ததென்ன என்று
கேட்டார்கள்; அவன் இவர்களுடனே, நீங்கள்
அந்த மனுஷனையும், அவன் பேச்சையும் அறி
வீர்களென்றான்.—ஆனால் அவர்கள் அது பொய், ௰௨
எங்களுக்கு அறிவியென்றார்கள்; அப்போது அ
வன் நாம் உன்னை இஸ்ரவேலின்மேல் இராசா
வாக அபிஷேகம்பண்ணினேனென்று கர்த்தர்
உரைக்கிறாரென்று இன்ன இன்னபிரகாரமாக
என்னோடே சொன்னானென்றான்.—அப்போது ௰௩
அவர்கள் தீவிரமாய் அவரவர் தங்கள் வஸ்திரத்
தைப் படிகளின் உயரத்தில் அவன்கீழே பரப்பி,
எக்காளம் ஊதி, ஏகூ இராசாவானான் என்றார்
கள்.—அப்படியே நிம்சியின் மகனாகிய யோச ௰௪
பாத்தின் குமாரன் ஏகூவென்றவன் யோரா
முக்கு விரோதமாக ஒப்பந்தம்பண்ணினான்;
யோராமோவெனில் எல்லா இஸ்ரவேலோடும்
கூட முதல் கிலேயாத்திலுள்ள ராமோத்திலே
சூரியாவின் இராசாவாகிய ஆசகேலின் நிமித்தம்
காவல் வைத்துவைத்தான்.—ஆனால் சூரியாவின் ௰௫
இராசாவாகிய ஆசகேலோடே பண்ணின யுத்
தத்திலே, சூரியர் தன்னை வெட்டின காயங்களை
எஸ்ரெயேலிலே ஆற்றிக்கொள்ளுகிறதற்கு, இரா
சாவாகிய யோராம் திரும்பினானே; ஏகூவென்ற
வன், உங்களுக்குச் சம்மதியாயிருந்தால் போய்
எஸ்ரெயேலில் இதை அறிவிக்கிறதற்கு ஒருவ
ரும் பட்டணத்திலிருந்து தப்பிப் புறப்பட
வேண்டாமென்றான்.

௰௬ அப்போது ஏகூ இரதத்தின்மேல் ஏறி, எஸ்ரெ
யேலுக்கு நேராகப்போனான்; ஏனெனில் யோ
ராம் அங்கே கிடந்தான்; யோராமைப்பார்க்க,
யூதாவின் இராசாவாகிய அகசியாவும் அங்கே
௰௭ இறங்கியிருந்தான். — எஸ்ரெயேலில் கோபுரத்
தின்மேல் நிற்கிற சாமக்காரன், வருகிற ஏகூ
வின் திரள்கூட்டத்தை வரக்கண்டு, ஒரு திரள்
கூட்டத்தை நான் காண்கிறேனென்றான்; அப்
போது யோராம், நீ ஒரு குதிரைக்காரனை அ
ழைத்து, அவர்களுக்கு எதிராக அனுப்பிச் சமா
தானமோ என்று கேட்கச்சொல்லென்றான். —
௰௮ அந்தக் குதிரைக்காரன் அவனுக்கு எதிர்கொண்
டுபோய், சமாதானமோ என்று இராசா கேட்கச்
சொன்னாரென்றான்; ஏகூவோவெனில் சமாதா
னம் உனக்குக் கவையென்ன? என் பிறகாலே
திரும்பிவா என்றான்; அப்போது அந்தச் சாமக்
காரன், அனுப்பப்பட்டவன் அவர்கள் இருக்
கும் இடம்மட்டும் போகியும் திரும்பினதில்லை
௰௯ என்றான்.—ஆகையால் வேறொரு குதிரைக்கார
னை அனுப்பினான்; இவன் அவர்களண்டைக்கு
வந்தபோது, சமாதானமோ என்று இராசா கேட்
கச்சொன்னாரென்றான்; ஏகூவோவெனில் சமா
தானம் உனக்குக் கவையென்ன? என் பிறகே
௨௰ திரும்பிவா என்றான்.—அப்போது சாமக்காரன்,
அவன் அவர்கள் இருக்கும் இடம்மட்டும்போ
கியும் திரும்பினதில்லை என்றும், அந்த ஓடி
வருதல் நிம்சியின் குமாரனாகிய ஏகூவின் ஓடி
வருதலைப்போல இருக்கின்றது, ஏனெனில் வீரி
யமாய் ஓடிவருகிறானென்றும் சொன்னான். —
௨௧ அப்போது யோராம் இரதத்தை முஸ்திப்பாக்
கென்றான்; அவனுடைய இரதத்தை முஸ்திப்
பாக்கினபோது, இஸ்ரவேலின் இராசாவாகிய
யோராமும், யூதாவின் இராசாவாகிய அகசியா
வும் அவனவன் தன்தன் இரதத்தில் ஏறி ஏகூ
வுக்கு எதிராகப் புறப்பட்டு, எஸ்ரெயேலியனா
கிய நாபோத்தின் நிலத்திலே அவனுக்கு நேரிட்
டார்கள்.
௨௨ யோராம் ஏகூவைக் காண்கையில், ஏகூவே
சமாதானமோ என்றான்; ஏகூவோவெனில் உன்
தாயாகிய ஏசபேலின் வேசித்தனங்களும் அவ
ளுடைய பில்லிசூனியங்களும், இத்தனை ஏராள
மாயிருக்கையில் சமாதானம் ஏது என்றான்.—
௨௩ அப்போது யோராம் தன் இரதத்தைத் திருப்பி
ஓடிப்போய், அகசியாவுடனே, அகசியாவே இது
௨௪ சதி என்றான்.—ஆனால் ஏகூ தன் கையால் வில்லை
நாணேற்றி, அம்பு யோராமுடைய இருதயத்தில்
உருவிப் புறப்படத்தக்கவிதமாய், அவனை அ
வன் புயங்களின் நடுவே எய்தான்; அதினால்
௨௫ தன் இரதத்திலே சுருண்டுவிழுந்தான். — அப்
போது ஏகூ தன் சேர்வைக்காரனாகிய பித்காரு
டனே சொன்னதாவது: அவனை எடுத்து, எஸ்
ரெயேலியனாகிய நாபோத்தின் வயல்நிலத்தில்
எறிந்துவிடு; ஏனெனில் நானும் நீயும் ஒருசோ
டாய் அவன் தகப்பனாகிய ஆகாபின் பிறகாலே
குதிரை ஏறிவருகிறபோது, கர்த்தர் இந்த ஆக்
கினையை அவன்மேலே சுமத்தினார் என்பதை
நினைத்துக்கொள்.—நேற்று நாபோத்தின் இரதத் ௨௬
தையும், அவன் குமாரரின் இரதத்தையும் கண்
டோமல்லவோ என்றும், இந்த நிலத்தில் உன
க்கு நீதியைச் சரிக்கட்டுவோமென்றும் அப்
போது கர்த்தர் சொன்னாரே; இப்போதும் அவனை
எடுத்து, கர்த்தருடைய வார்த்தையின்படியே
இந்த நிலத்தில் எறிந்துபோடென்றான்.
இதை யூதாவின் இராசாவாகிய அகசியா கண் ௨௭
டு, தோட்டத்தின் வீட்டுவழியாய் ஓடிப்போ
னான்; ஆனால் ஏகூ அவனைப் பின்தொடர்ந்து
இவனையும் இரதத்திலே கொன்றுபோடுங்கள்
என்றதற்கு, அவர்கள் இப்லெயாம் கிட்ட இருக்
கிற கூர் மலையின்மேல் ஏறுகிறவழியிலே இப்ப
டிச் செய்தார்கள்; அவன் மெகிதோவுக்கு ஓடிப்
போய் அங்கே சென்றுபோனான்.—அவனுடைய ௨௮
ஊழியக்காரர் அவனை இரதத்தின்மேல் எருசலே
முக்குக் கொண்டுபோய், அவனைத் தாவீதின்
பட்டணத்தில் அவன் பிதாக்களிடத்தில் இருக்
கிற அவனுடைய கல்லறையிலே அடக்கம்பண்
ணினார்கள்.—இந்த அகசியா, ஆகாபுடைய குமா ௨௯
ரனாகிய யோராமின் பதினோராம் வருஷத்தில்
யூதாவின்மேல் இராசாவானான்.
ஏகூவோவென்றால் எஸ்ரெயேலுக்கு வந் ௩௰
தான்; அதை ஏசபேல் கேட்டபோது, தன் கண்
களுக்கு மையிட்டு, தன் தலையைச் சிங்காரித்
துக்கொண்டு பலகணியால் எட்டிப்பார்த்து,—
ஏகூ ஒலிமுகவாசலில் வந்தபோது, அவள் தன் ௩௧
ஆண்டவனைக் கொன்ற சிம்ரீ சுகப்பட்டானோ
என்றாள்.—அப்போது அவன் தன் முகத்தை அந் ௩௨
தப் பலகணிக்கு ஏறெடுத்து, யார் என்னண்டை
யில் இருக்கிறான்? யார் என்றதற்கு இரண்டு
மூன்று பிரதானிகள் அவனை நோக்கிப்பார்த்தார்
கள்.—அப்போது அவன் அவளைத் தாழத்தள்ளுங் ௩௩
களென்றான்; அப்படியே அவளைத் தாழத்தள்ளி
னதினாலே, அவளுடைய இரத்தம் சுவரிலும்
குதிரைகளிலும் தெறித்தது; அவன் அவளை
மிதித்து,—உள்ளே போய், புசித்துக் குடித்தபிற் ௩௪
பாடு, அந்தச் சபிக்கப்பட்டவளைப் பார்த்து அ
வளை அடக்கம்பண்ணுங்கள்; அதேனென்றால்
அவள் ஒரு இராசாவின் குமாரத்தி என்றான்.—
ஆனால் அவர்கள் அவளை அடக்கம்பண்ணப் ௩௫
போகிறபோது, அவளிலிருந்த தலையோட்டை
யும் கால்களையும் உள்ளங்கைகளையுமே அல்லா
மல் பின்னொன்றையும் கண்டுபிடிக்காமல்,—
திரும்ப வந்து அவனுக்கு அறிவித்தார்கள்; அப் ௩௬
போது அவன், இது கர்த்தர் திஸ்பியனாகிய எலி
யாவென்ற தம்முடைய ஊழியக்காரனைக்கொ
ண்டு சொன்ன வார்த்தை, எஸ்ரெயேலின் நிலத்
திலே நாய்கள் ஏசபேலின் மாம்சத்தைத் தின்னு
மென்றும்,—இன்னது ஏசபேலென்றுசொல்லக் ௩௭
கூடாதபடிக்கு, ஏசபேலின் பிரேதம் எஸ்ரெயே
லின் நிலத்திலே வயல்வெளியின்மேலே போ
டும் எருவைப்போல ஆகுமென்றும்சொன்னாரே
என்றான்.

## ௰. அதிகாரம்.

க. ஏகூ நிருபங்களை அனுப்பி, ஆகாபின் எழுபது பிள்ளைகளைச் சிரச்சேதம் செய்வித்தது. அ. அவன் எலியா சொன்ன தீர்க்கதரிசனம் அதற்கு ஏது என்றது. ௰உ. அகசியாவினுடைய நாற்பத்திரண்டு சகோதரரைப் பேத்தேகேத்தில் அவன் வெட்டிப்போட்டது. ௰௫. அவன் யோனதாபைத் தனனிடத்தில் சேர்த்துக்கொண்டது. ௰அ. தந்திரத்தினால் பாகாலின் ஆராதனைக்காரரெல்லாரையும் அவன் கொன்றது. உக. எரோபெயாம் பாவஞ்செய்ததுபோல ஏகூவும் செய்தது. ௩உ. ஆசகேல் இஸ்ரவேலரை முறியடித்தது. ௩௬. யோவாகாஸ் ஏகூவுக்குப்பின் அரசாகி வந்தது.

க ஆகாபுக்கோவென்றால் சமாரியாவிலே எழு
பது குமாரர் இருந்தபடியினாலே, ஏகூ சமாரியா
விலிருக்கிற எஸ்ரெயேலின் பிரபுக்களாகிய மூப்
பரண்டைக்கும், ஆகாபுடைய பிள்ளைகளை வ
ளர்க்கிறவர்களண்டைக்கும் எழுதி அனுப்பின
உ நிருபங்களாவன:—உங்கள் ஆண்டவனுடைய
குமாரர் உங்களோடிருக்கிறார்கள்; இரதங்களும்,
குதிரைகளும், அரணான பட்டணமும் ஆயுதங்
௩ களும் உங்களுக்கு உண்டே. — இப்போதும்
இந்த நிருபம் உங்களண்டைக்கு வருகிறபோது
நீங்கள் உங்கள் ஆண்டவனுடைய குமாரரில் உத்
தமமும் செம்மையுமாயிருக்கிறவனைப் பார்த்து,
அவனை அவன் தகப்பனுடைய ஆசனத்தின்மே
ல்வைத்து, உங்கள் ஆண்டவனுடைய வீட்டுக்
காக யுத்தம்பண்ணுங்களென்று எழுதினான்.—
௪ அவர்களோவெனில் மிகுதியும் பயந்து, இதோ
இரண்டு இராசாக்கள் அவனுக்குமுன்பாக நிற்
கவில்லை; நாங்கள் நிற்பது எப்படி என்றார்கள்.—
௫ ஆகையால் அரமனைவிசாரிப்புக்காரனும், பட்ட
ண விசாரிப்புக்காரனும், மூப்பரும், பிள்ளைக
ளின் விசாரிப்புக்காரரும் ஏகூவுக்கு நாங்கள்
உம்முடைய அடியார், நீர் எங்களுக்குச் சொல்
பவையெல்லாம் செய்வோம்; நாங்கள் ஒருவனை
யும் இராசாவாக்குவதில்லை; உமது பார்வைக்
குச் சம்மதியானதைச் செய்யுமென்று சொல்லி
அனுப்பினார்கள்.

௬ அப்போது அவன் இவர்களுக்கு இரண்டாம்
நிருபத்தை எழுதி, நீங்கள் என் பாரிசமாயிருந்து
என் சத்தத்தைக் கேட்கிறதுண்டானால், உங்
கள் ஆண்டவனுடைய குமாரராகிய மனுஷரின்
தலைகளை வாங்கி, நாளை இந்நேரத்தில் எஸ்ரெ
யேலுக்கு என்னண்டையிலே வாருங்களென்
று எழுதினான்; இராசாவின் குமாரராகிய எழு
பதுபேருமோவெனில், தங்களை வளர்க்கிற
பட்டணத்தின் பெரிய மனுஷரோடு இருந்தார்
எ கள்.—இந்த நிருபம் அவர்களண்டைக்கு வந்த
போது, அவர்கள் இராசாவின் குமாரரைப்
பிடித்து, எழுபதுபேரையும் வெட்டி, அவர்கள்
தலைகளைக் கூடைகளில் வைத்து, எஸ்ரெயேலி
லிருக்கிற அவனண்டைக்கு அனுப்பினார்கள்.—
அ அனுப்பப்பட்ட ஆள்வந்து, இராசகுமாரரின் த
லைகளைக் கொண்டுவந்தார்களென்று அவனுக்கு
அறிவித்தபோது, அவன் விடியற்காலம்மட்டும்
அவைகளை ஒலிமுகவாசலில் இரண்டு குவிய
௯ லாகக் குவித்துவையுங்கள் என்றான்.—மறுநாள்
காலமேயோவென்றால், அவன் புறப்பட்டு நின்
று, சகல சனத்தோடும் சொன்னதாவது: நீங்
கள் நீதிமான்களல்லவோ? இதோ நான் என்
ஆண்டவனுக்கு விரோதமாக ஒப்பந்தம்பண்ணி
அவனைக் கொன்றுபோட்டேனே; ஆனால் இவர்
களையெல்லாம் வெட்டினவன் யார்? — ஆனது ௰
கொண்டு கர்த்தர் ஆகாபின் வீட்டாருக்கு வி
ரோதமாகச் சொன்ன கர்த்தருடைய வார்த்தை
களில் ஒன்றும் தரையிலே விழுந்ததில்லை என்ப
தை அறிந்துகொள்ளுங்கள்; ஏனெனில் கர்த்தர்
தம்முடைய ஊழியக்காரனாகிய எலியாவைக்
கொண்டு சொன்னதையே செய்தாரென்றான்.—
எஸ்ரெயேலிலும் ஆகாபின் வீட்டாரில் மீதி ௰க
யான யாவரையும் அவனுக்கிருந்த எல்லா மந்தி
ரிகளையும் அவனைச்சேர்ந்த மனுஷரையும், அவ
னுடைய ஆசாரியர்களையும், அவனுக்கு ஒருவ
ரையும் மீதியாக வைக்காதபடிக்கு ஏகூ வெட்
டிப்போட்டு,
பிற்பாடு எழுந்து சமாரியாவுக்குப் போகப் ௰உ
புறப்பட்டான்;வழியிலே அவன் பேத்தேக்கேத்
என்ற மேய்ப்பரின் ஊருக்கு வந்தபோது,—யூதா ௰௩
வின் இராசாவாகிய அகசீயாவின் சகோதரரை
அங்கே கண்டு நீங்கள் யார் என்று கேட்டான்;
அவர்கள் நாங்கள் அகசீயாவினுடைய சகோ
தரர்; நாங்கள் இராசாவின் பிள்ளைகளையும் இரா
சஸ்திரியின் பிள்ளைகளையும் வினவுகிறதற்கு இ
றங்கிப்போகிறோமென்றார்கள்.—அப்போது அ ௰௪
வன் இவர்களை உயிரோடே பிடியுங்கள் என்ற
தற்கு, அவர்களை உயிரோடே பிடித்து நாற்பத்தி
ரண்டுபேர்களாகிய அவர்களைப் பேத்தேக்கேத்
தின் துரவண்டையிலே வெட்டிப்போட்டார்
கள்; அவர்களில் ஒருவனையும் அவன் மீதியாக
வைத்ததில்லை.
அவன் அவ்விடத்தைவிட்டுப் புறப்பட்ட ௰௫
போது, அவன் தனக்கு எதிர்ப்படுகிற ரேகா
பின் குமாரனாகிய யோனதாபைச் சந்தித்து, அ
வனை உபசரித்து அவனுடனே, உன் இருதயத்
திற்கு என் இருதயம் இருக்கிறதுபோல உன்
இருதயம் செம்மையாயிருக்கின்றதோ என்றான்;
அதற்கு யோனதாப் இருக்கின்றது இருக்கின்
றது என்றான்; அப்போது அவன், உன் கை
யை எனக்குத் தாவென்று சொல்லி, அவன் தன்
கையைக் கொடுத்தபோது, அவனைத் தன்னண்
டை இரதத்தின்மேல் ஏறிவரச்சொல்லி, — நீ ௰௬
என்னோடேகூட வந்து, கர்த்தருக்காக எனக்கி
ருக்கிற பத்தி வயிராக்கியத்தைப் பாரென்றான்;
அப்படியே இவனை அவன் இரதத்தின்மேல்
ஏற்றினார்கள்.
அவன் சமாரியாவுக்கு வந்தபோது, சமாரி ௰எ
யாவில் ஆகாப்புக்கு மீதியான யாவரையும்,
அவர்களைக் கர்த்தர் எலியாவோடே சொன்ன
வார்த்தையின்படியே அழித்துத்தீருமளவும் வெ
ட்டிப்போட்டான்.— பிற்பாடு ஏகூ சனத்தை ௰அ
யெல்லாம் கூட்டி, அவர்களோடே சொன்ன
தாவது: ஆகாப் பாகாலைச் சேவித்தது மட்டு, ஏகூ
அவனைச் சேவிப்பது மிகுதி. — இப்போதும் ௰௯

பாகாலின் சகல தீர்க்கதரிசிகளையும், அவனு
டைய சகல பணிவிடைக்காரரையும், அவனு
டைய சகல ஆசாரியர்களையும் என்னண்டைக்கு
வரவழையுங்கள்; ஒருவனும் குறையவேண்
டாம்; ஏனெனில் பாகாலுக்குப் பெரிய பலியி
டுதல் எனக்கு இருக்கின்றது; வராதவனெல்லாம்
உயிரோடிருப்பதில்லை என்றான்; பாகாலின்
பணிவிடைக்காரரை அழிக்கும்படிக்கு ஏகூ
௨௰ இதைத் தந்திரத்தினாலே செய்தான்.—பாகாலுக்
குப் பண்டிகையின் ஆசரிப்பைக் கூறுங்க
ளென்று ஏகூ சொன்னான்; அப்படியே கூறினார்
௨௧ கள்.—ஏகூ இஸ்ரவேல் தேசமெங்கும் அதைச்
சொல்லி அனுப்பினபடியினாலே பாகாலின்
பணிவிடைக்காரரெல்லாரும் வந்தார்கள்; வரா
தவன் ஒருவனுமில்லை; அவர்கள் பாகாலின்
வீட்டிற்குள் பிரவேசித்ததினால் பாகாலின் வீடு
௨௨ நாற்சாரியும் நிரம்பிற்று.—அப்போது அவன்
வஸ்திரங்களின் வீட்டுவிசாரிப்புக்காரனுடனே,
பாகாலின் பணிவிடைக்காரருக்கெல்லாம் வஸ்
திரங்களை எடுத்துக்கொண்டுவாவென்றதற்கு,
அவர்களுக்கு வஸ்திரங்களை எடுத்துக்கொண்டு
௨௩ வந்தான்.—பிற்பாடு ஏகூ ரேகாபின் குமாரனாகிய
யோனதாபோடுங்கூடப் பாகாலின் வீட்டிற்
குள் பிரவேசித்து, பகாலின் பணிவிடைக்கார
ருடனே, பாகாலின் ஊழியக்காரரே அல்லா
மல் கர்த்தரின் ஊழியக்காரரில் ஒருவரும் இங்
கே உங்களோடு இராதபடிக்கு ஆராய்ந்து பாருங்
௨௪ களென்றான்.—அவர்கள் பலிகளையும் சர்வாங்க
தகனங்களையும் செலுத்த உள்ப்பிரவேசித்தபிற்
பாடு, ஏகூ வெளியிலே எண்பதுபேரைத் தனக்
கு ஆயத்தமாக வைத்து, நான் உங்கள் கையில்
ஒப்புவிக்கிற மனுஷரில் ஒருவனை எவன் தப்ப
விடுகிறானோ அவனுடைய சீவன் இவன் சீவ
னுக்கு ஈடாயிருக்குமென்றான்.
௨௫ அவர்கள் சர்வாங்கதகனபலியைச் செலுத்தித்
தீர்ந்தபோது, ஏகூ சேவகருக்கும் சேர்வைக்
காரருக்கும் உள்ளே போய், அவர்களை வெட்
டிப்போடுங்கள், ஒருவரும் வெளியே புறப்பட
வேண்டாமென்றான்; அப்படியே பட்டையக்க
ருக்கால் சேவகரும் சேர்வைக்காரரும் அவர்களை
வெட்டி எறிந்துபோட்டு, பாகால் வீட்டுப் பட்
௨௬ டணம்மட்டுக்கும் போய், — பாகால் வீட்டின்
சிலைகளை வெளியே எடுத்துவந்து, அதைக் கொ
௨௭ ளுத்திப்போட்டு,—பாகாலின் சிலையைத்தகர்த்து,
பாகாலின் வீட்டை இடித்து, அதை இந்நாள்
வரைக்கும் இருக்கிறதுபோல மலசலாதி இடங்
௨௮ களாக்கினார்கள்.—இப்படியே ஏகூ பாகாலை இஸ்
ரவேலில் இராதபடிக்கு அழித்துவிட்டான்.—
௨௯ ஆனால் பேத்தேலிலும் தாணிலும் வைத்த பொன்
னான கன்றுக்குட்டிகளால், இஸ்ரவேலைப் பா
வம்செய்யப்பண்ணின நேபாத்தின் குமாரனா
கிய எரோபேயாமின் பாவங்களை ஏகூ விட்டுப்
பின்வாங்கினதில்லை.
௩௰ கர்த்தர் ஏகூவுடனே, நம்முடைய பார்வைக்
குச் செம்மையானதை நீ நன்றாய்ச் செய்து, நம
து இருதயத்தில் இருந்தபடியெல்லாம் ஆகாபின்
வீட்டிற்குச் செய்தபடியினாலே, உன் குமாரர்
இஸ்ரவேலுடைய இராசாசனத்தின்மேல் நாலு
தலைமுறையாக உளுக்காந்திருப்பார்களென்
றார்.—ஆனால் ஏகூ இஸ்ரவேலின் பராபரனாகிய ௩௧
கர்த்தரின் நியாயப்பிரமாணத்தில் நடக்குதலைத்
தன் முழு இருதயத்தாலும் கைக்கொண்டதில்
லை; இஸ்ரவேலைப் பாவம்செய்யப்பண்ணின
எரோபேயாமின் பாவங்களை அவன் விட்டு
விலகாதேபோனான்.—அந்நாள்களிலே கர்த்தர் ௩௨
இஸ்ரவேல் தேசத்தைக் குறுகிப்போகப்பண்ணி
னார்; அதேதென்றால் ஆசகேல் அவர்களை இஸ்ர
வேலின் எல்லைகளிலெல்லாம் இடறடித்து முறி
யடித்து,—யோர்தான்துவக்கிச் சூரியோதயத்தில் ௩௩
அற்னோன் நதிக்குச் சமீபமான ஆரோவேர்
முதற்கொண்டிருக்கிற கீலேயாத்திலும் பாசானி
லுமுள்ள காதியர், ரூபேனியர், மனாசே மனுஷ
ருடைய தேசமாகிய முழுக் கீலேயாத்தையும்
முறியடித்தான்.
ஏகூவின் மற்ற வர்த்தமானங்களும், அவன் ௩௪
செய்ததனைத்தும், அவனுடைய எல்லா வல்ல
மையும் இஸ்ரவேல் இராசாக்களின் நாளாகமப்
புஸ்தகத்திலல்லவோ எழுதியிருக்கின்றது.—
ஏகூ தன் பிதாக்களோடே நித்திரை அடைந்த ௩௫
பின் அவனைச் சமாரியாவில் அடக்கம்பண்ணி
னார்கள்; அவன் ஸ்தலத்தில் அவன் குமாரனா
கிய யோவாகாஸ் இராசாவானான்.—ஏகூ சமாரி ௩௬
யாவிலே இஸ்ரவேலின்மேல் இராச்சியபாரம்
பண்ணின நாள்கள் இருபத்தெட்டுவருஷம்.

## ௰௧. அதிகாரம்.

௧. அகசியாவின் தாயாகிய அத்தாலியாள் இராசவம்சத்தாரைச் சங்கரித்ததனால், யோவாசை யோசேபாள் கர்த்தருடைய வீட்டில் ஆறுவருஷம் ஒளித்துவைத்தது. ௪. யோய்தா படைத்தலைவருக்கு உத்தரவு செய்து, அவனை இராசாவாக ஏழாம்வருஷத்தில் அபிஷேகம் செய்வித்தது. ௰௩. அத்தாலியாள் கொல்லப்பட்டது. ௰௭. யோய்தா மறுபடியும் தேவாராதனையை ஸ்தாபித்தது.

அகசியாவின் தாயாகிய அத்தாலியாள் தன் கு ௧
மாரன் சென்றுபோனதைக் கண்டபோது, எழு
ம்பி இராசவம்சமான வித்தாரையெல்லாம் சங்
காரம்பண்ணினாள்.—ஆனால் யோராமென்ற இரா ௨
சாவின் குமாரத்தியும் அகசீயாவின் சகோதரியு
மாகிய யோசேபாள், கொன்றுபோடப்படுகிற
இராசகுமாரரின் நடுவிலிருக்கிற அகசீயாவின்
ஆண்பிள்ளையாகிய யோவாசைக் களவாய் எடுத்
தாள்; அவன் கொல்லப்படாதபடியாய், அவ
னையும் அவன் தாதியையும் அத்தாலியாளுக்கு
மறைவாயிருக்கிற சயனவீட்டில் ஒளித்தார்கள்.—
இவளோடேகூட அவன் ஆறுவருஷமாய்க் ௩
கர்த்தருடைய வீட்டிலே மறைக்கப்பட்டிருந்
தான்; அத்தாலியாளோ தேசத்தின்மேல் இராச்சி
யபாரம்பண்ணினாள்.
ஆனால் ஏழாம்வருஷத்திலே யோய்தா நூற்றி ௪
ற்குச் சேர்வைக்காரரையும் தலைவரையும் சேவ
கரையும் அழைத்தனுப்பி, அவர்களைத் தன்னண்
டைக்குக் கர்த்தருடைய வீட்டிலே வரச்சொல்

வி,அவர்களோடு உடம்படிக்கைபண்ணி, அவர்
களைக் கர்த்தருடைய வீட்டிலே ஆணை இடுவித்
துக்கொண்டு, அவர்களுக்கு இராசாவின் குமா
௫ ரனைக் காண்பித்து,—அவர்களுக்குக் கற்பித்ததா
வது: நீங்கள் செய்யவேண்டிய காரியம் என்ன
வெனில், உங்களில் முறையிருக்க ஓய்வுநாளில்
வருகிறவர்களாகிய மூன்றத்தொருபங்கு இரா
௬ சாவின் வீட்டைக் காவல்காப்பவர்கள்.—மூன்
றத்தொருபங்கு சூரென்ற ஒலிமுகவாசலிலும்
மூன்றத்தொருபங்கு சேவகருடைய காவலின்
பிறகாலே இருக்கிற ஒலிமுகவாசலிலுமிருந்து
வீட்டின் காவலைப் பத்திரமாய்க் காப்பவர்கள்.—
௭ இப்படியே உங்களில் ஓய்வுநாளில் முறைவிடு
கிற இரண்டு பங்கானவர்களெல்லாரும் இராசா
வினண்டையிலே கர்த்தருடைய வீட்டின் காவ
௮ ல்காப்பவர்கள்.—நீங்கள் அவரவர் தங்கள் ஆயு
தங்களைக் கையிலே பிடித்தவர்களாய், இராசா
வைச் சுற்றிலும் வரிசையாய் நின்றுகொண்டி
ருக்கவேண்டும்; வரிசைகளுக்குள் புகுகிறவன்
கொலையுண்ணப்படக்கடவன்; இராசா புறப்ப
டுகிறபோதும் உள்ப்பிரவேசிக்கிறபோதும் நீங்
கள் அவரோடிருங்கள் என்றான்.

௯ ஆசாரியனாகிய யோய்தா கற்பித்தபடியெல்
லாம் நூற்றிற்குச் சேர்வைக்காரர் செய்து, அவ
ரவர் அவ்வாரத்தில் முறையிருக்கிறவர்களும்
முறை இராதவர்களுமாகிய தங்கள் மனுஷரைக்
கூட்டிக்கொண்டு ஆசாரியனாகிய யோய்தா
௰ வண்டைக்கு வந்தார்கள்.—ஆசாரியன் தாவீது
இராசாவுக்கிருந்த கர்த்தரின் வீட்டிலுள்ள ஈட்
டிகளையும் கேடயங்களையும் நூற்றிற்குச் சேர்
௰௧ வைக்காரருக்குக் கொடுத்தான்.—சேவகர் அவர
வர் தங்கள் ஆயுதங்களைப் பிடித்தவர்களாய்,வீட்
டின் வலதுபக்கம்துவக்கி அதின் இடதுபக்கம்
மட்டும், பலிபீடத்திற்கு எதிராகவும் வீட்டிற்கு
எதிராகவும் இராசாவைச் சுற்றிலும் நின்றார்
௰௨ கள்.—அப்போது அவன் இராசாவின் குமாரனைப்
புறப்படப்பண்ணி, கிரீடத்தை அவன்மேல்
வைத்து, சாட்சியின் ஆகமத்தை அவனுக்குக்
கொடுத்தான்; இப்படி அவனை இராசாவாக்கி,
அபிஷேகம்பண்ணிக் கைகொட்டி இராசா
௰௩ வாழ்க என்றார்கள்.—ஓடிவருகிற சனத்தின் சத்
தத்தை அத்தாலியாள் கேட்டபோதோவெனில்,
அவள் கர்த்தருடைய வீட்டிற்குச் சனத்தண்டை
௰௪ யில் வந்து,—இதோ இராசா முறைமையின்படி
யே தூணண்டையிலே நிற்கிறதையும், இராசா
வண்டையில் நிற்கிற பிரபுக்களையும், எக்காளம்
ஊதுகிறவர்களையும் தேசத்துச் சனமெல்லாம்
சந்தோஷப்பட்டு எக்காளங்களை ஊதுகிறதையும்
காண்கையில், அத்தாலியாள் தன் வஸ்திரங்களைக்
கிழித்துக்கொண்டு கலகம் கலகமென்று கூப்
௰௫ பிட்டாள்.—ஆனால் ஆசாரியனாகிய யோய்தா இரா
ணுவத்தின் தலைவராகிய நூற்றிற்குச் சேர்வைக்
காரருக்குக் கற்பனைதந்து அவர்களுடனே,
அவளை வரிசைகளுக்குப் புறம்பே கொண்டு
போங்கள்; அவளைப் பின்செல்லுகிறவன் பட்

டையத்தாலே சாகக்கடவன் என்றான்; ஏனெ
ன்றால் கர்த்தருடைய வீட்டிலே அவள் கொல்
லப்பட ஒண்ணாதென்று ஆசாரியன் சொல்லி
யிருந்தான்.—அவர்கள் அவளுக்கு இடம் உண் ௰௬
டாக்கினபோது, அவள் குதிரைகள் இராசாவின்
வீட்டிற்குள்பிரவேசிக்கிற வழியிலே வந்தபின்
அங்கே கொன்றுபோடப்பட்டாள்.

அப்போது கர்த்தருடைய சனமாயிருக்கும்ப ௰௭
டிக்கு, யோய்தா கர்த்தருக்கும் இராசாவுக்கும்
சனத்திற்கும், பிற்பாடு இராசாவுக்கும் சனத்
திற்கும் உடம்படிக்கை பண்ணினான். — பிற ௰௮
பாடு தேசத்தின் சனமெல்லாம் பாகாலின் வீட்
டிலே போய், அதை இடித்து, அதின் பலிபீ
டங்களையும் அதின் சுரூபங்களையும் நன்றாய்
உடைத்து, பாகாலின் பூசாரியாகிய மாத்தானைப்
பலிபீடங்களுக்குமுன்பாகக் கொன்றுபோட்
டார்கள்; ஆசாரியனோவென்றால் கர்த்தருடைய
வீட்டை விசாரிக்கும் உத்தியோகங்களைத் திட்
டப்படுத்தி,—நூற்றிற்குச் சேர்வைக்காரரையும் ௰௯
தலைவரையும் சேவகரையும் தேசத்தின் சனம
னைத்தையும் கூட்டி, இராசாவைக் கர்த்தருடை
ய வீட்டிலிருந்து இறங்கப்பண்ணி, அவனைச்
சேவகரின் வாசல்வழியாய் இராச அரமனைக்கு
அழைத்துக்கொண்டு போனார்கள்; அங்கே அ
வன் இராசாக்களுடைய ஆசனத்தின்மேல்
உளுக்காந்தான். — தேசத்தின் சனமெல்லாம் ௨௰
மகிழ்ந்து, பட்டணம் அமரிக்கைபட்டது; அத்
தாலியாளையோவென்றால் இராசாவின் வீட்
டண்டையில் பட்டையத்தால் கொன்றுபோட் ௨௧
டார்கள்.—யோவாசு இராசா ஆகிறபோது ஏழு
வயதாயிருந்தான்.

## ௰௨. அதிகாரம்.

௧. யோய்தாவின் காலம்வரையில் யோவாசு நன்றாய் அரசாண்டது. ௪. ஆலயத்தைப் புதுப்பிக்க அவன் உத்தரவுகொடுத்தது. ௰௭. ஆலயத்தின் பொக்கிஷத்தைக் காணிக்கையாகக் கொடுக்கப்பெற்றதனால் ஆசகேல் எருசலேமை அழிக்காமல் விட்டது. ௰௯. யோவாசு தன் ஊழியக்காரரால் கொல்லப்பட்டபோது அவனுடைய ஸ்தலத்தில் அமத்சியா அரசாள வந்தது.

ஏகூவின் ஏழாம்வருஷத்தில் யோவாசு இராசா ௧
வாகி, எருசலேமிலே நாற்பதுவருஷம் இராச்
சியபாரம்பண்ணினான்; பேர்சேபா ஊராளா
கிய அவனுடைய தாயின்பேர் சீபியாள்.—ஆசா ௨
ரியனாகிய யோய்தா யோவாசைப் போதகம்பண்
ணின நாளெல்லாம் அவன் கர்த்தரின் பார்வைக்
குச் செம்மையானதைச் செய்தான்.—மேடை ௩
களைமாத்திரம் அகற்றாதேபோனார்கள்; சனம்
இன்னம் மேடைகள்மேலே பலியிட்டுத் தூபம்
காட்டுகிறதாயிருந்தது.

யோவாசு ஆசாரியரோடே சொன்னதாவது: ௪
பரிசுத்தம்பண்ணப்பட்ட காரியங்களாலே கர்த்
தருடைய வீட்டிற்குக் கொண்டுவரப்படும் எல்
லாத் திரவியத்தையும், இலக்கத்திற்குள்படுகிற
வர்களின் திரவியத்தையும், மதிக்கப்பட்ட ஆத்
துமாக்களின் திரவியத்தையும், கர்த்தருடைய
வீட்டிற்குக் கொண்டுவர அவரவர் தம்தம் மனதி

லே நியமித்திருக்கும் எல்லாத் திரவியத்தையும்,—
௫ ஆசாரியர்கள் அவரவர் தங்களுக்கு அறிமுக
மானவர்கள் கையில் வாங்கிக்கொண்டு,வீட்டில்
எங்கெங்கே பழுது காண்கின்றதோ, அங்கே
யெல்லாம் வீட்டைப் பழுதுபார்க்கக்கடவர்க
ளென்றான்.
௬ ஆனால் இராசாவாகிய யோவாசின் இருபத்து
மூன்றாம் வருஷம்மட்டும் ஆசாரியர்கள் வீட்
டைப் பழுதுபாராதேபோனபடியினாலே, —
௭ இராசாவாகிய யோவாசு ஆசாரியனாகிய யோய்
தாவையும் மற்ற ஆசாரியர்களையும் அழைப்
பித்து, அவர்களுடனே நீங்கள் வீட்டைப் பழு
துபாராதே போனதென்ன? இப்போதும் நீங்
கள் உங்களுக்கு அறிமுகமானவர்கள் கையிலே
திரவியத்தை வாங்கிவைத்திராமல், அதை வீட்
டைப் பழுதுபார்க்கிறதற்காகக் கொடுங்களென்
றான்.
௮ அப்போது ஆசாரியர்கள் சனத்தின் கையி
லே தாங்கள் திரவியத்தை வாங்கிக்கொள்ளாம
லும் வீட்டைப் பழுதுபாராமலும் இருக்கிறதற்
௯ குச் சம்மதித்தார்கள். — ஆசாரியனாகிய யோய்
தாவோவெனில், ஒரு பெட்டியை வாங்கி,
அதின் மூடியிலே ஒரு துவாரமிட்டு, அதைப்
பலிபீடத்தண்டையிலே கர்த்தருடைய வீட்டிற்
குச் சனங்கள் உள்ப்பிரவேசிக்கும் வலதுபக்
கத்தில் வைத்தான்; அதிலே வாசற்படியைக்
காக்கிற ஆசாரியர்கள் கர்த்தருடைய வீட்டிற்
குக் கொண்டுவரப்பட்ட திரவியத்தையெல்
லாம் போட்டார்கள்.
௰ பெட்டியிலே அநேகம் திரவியம் உண்டெ
ன்று அவர்கள் காணும்போதோவெனில், இராசா
வின் சம்பிரதியும் பிரதான ஆசாரியனும் ஏறி
வந்து, கர்த்தருடைய வீட்டிலே கண்டுபிடித்த
௰௧ திரவியத்தை முடிப்புக்கட்டி எண்ணி,—எண்
ணின திரவியத்தைக் கர்த்தருடைய வீட்டின்
விசாரிப்புக்காரராகிய வேலைக்காரர் கையிலே
கொடுப்பார்கள்; இவர்களோ கர்த்தருடைய
வீட்டைப் பழுதுபார்க்கிற தச்சருக்கும், சிற்பா
௰௨ சாரிகளுக்கும்,—கொல்லத்துக்காரருக்கும், கல்
தச்சருக்கும் கர்த்தருடைய வீட்டைப் பழுது
பார்க்கத் தேவையான மரங்களையும் வெட்டின
கல்களையும் கொள்ளுகிறதற்கும், வீட்டைப் பழு
துபார்க்கிறதற்குச் செல்லும் எல்லாச் செலவுக்
௰௩ கும் கொடுப்பார்கள். — ஆனால் கர்த்தருடைய
வீட்டிற்குக் கொண்டுவரப்பட்ட திரவியத்தினா
லே வெள்ளிக் கிண்ணிகளும், கீதவாத்தியங்க
ளும், கலங்களும், எக்காளங்களும், பொன்னும்
வெள்ளியுமான எந்த முட்டுகளும் பண்ணப்
௰௪ படாமல், — கர்த்தருடைய வீட்டைப் பழுது
பார்க்கும்படிக்கு வேலைசெய்கிறவர்களுக்குத்
௰௫ தானே அதைக் கொடுத்தார்கள்.-வேலைசெய்கிற
வர்களுக்குக் கொடுக்கும்படிக்கு, திரவியத்தை
வரப்பற்றிக்கொண்ட மனுஷர் கையிலே கணக்
குக் கேளாதிருந்தார்கள்; ஏனெனில் இவர்கள்
௰௬ உண்மையாய் அதை நடப்பித்தார்கள். — குற்

றம்போக்கும் பலிகளின் திரவியமும் பாவம்
போக்கும் பலிகளின் திரவியமுமோவென்றால்,
கர்த்தருடைய வீட்டிற்குக் கொண்டுவரப்பட்ட
தில்லை; அது ஆசாரியருடையது.

அதற்குப்பிற்பாடு சீரியாவின் இராசாவாகிய ௰௭
ஆசகேல் ஏறிவந்து, காத்தூரின்மேல் யுத்தம்
பண்ணி அதைப் பிடித்தான்; அதின்பிறகு எரு
சலேமுக்கு விரோதமாய் ஏறிப்போக ஆசகேல்
தன் முகத்தைத் திருப்பினான்.—அப்போது யூதா ௰௮
வின்இராசாவாகிய யோவாசு தன் பிதாக்களாகிய
யோசபாத்தும் யோராமும் அகசியாவுமென்ற
யூதாவின் இராசாக்கள் பரிசுத்தம்பண்ணிவைத்
ததெல்லாவற்றையும், தான் பரிசுத்தம்பண்ணி
வைத்ததையும், கர்த்தருடைய வீட்டிலும் இரா
சாவின் வீட்டிலுமுள்ள பொக்கிஷங்களில்
அகப்பட்ட சகல பொன்னையும் எடுத்து, சீரியா
வின் இராசாவாகிய ஆசகேலுக்கு அனுப்பி
னான்; அப்போது இவன் எருசலேமைவிட்டுப்
புறப்பட்டுப்போனான்.

யோவாசின் மற்ற வர்த்தமானங்களும்,அவன் ௰௯
செய்ததனைத்தும் யூதாவுடைய இராசாக்களின்
நாளாகமப் புஸ்தகத்திலல்லவோ எழுதியிருக்கி
ன்றது.—அவன் ஊழியக்காரர் எழும்பி ஒப்பந் ௨௰
தம்பண்ணிக்கொண்டு, சில்லாவுக்கு இறங்கிப்
போகிற வழியிலிருக்கிற மில்லோ வீட்டிலே
யோவாசைக் கொன்றுபோட்டார்கள். — சீமே ௨௰௧
யாதின் குமாரன் யோசகாரும் சோமேரின்
குமாரன் யோசபாத்துமென்ற அவனுடைய
ஊழியக்காரர் அவனைக் கொன்றவர்கள்; செத்
துபோன அவனைத் தாவீதின் பட்டணத்தில் அ
வன் பிதாக்களிடத்திலே அடக்கம்பண்ணினார்
கள்; அவன் குமாரனாகிய அமத்சியா அவன்
ஸ்தலத்திலே இராசாவானான்.

## ௰௩. அதிகாரம்.

௧. யோவாகாசினுடைய கெட்ட ஆளுகை. ௩. யோவாகாசு ஆசகேலினால் நெருக்கப்பட்டு மன்றாடுதலினால் மீட்கப்பட்டது. ௮. யோவாசு அவனுக்குப்பின் அரசாகிவந்தது. ௰. அவனுடைய கெட்ட ஆளுகை. ௰௨. எரோபேயாம் அவனுக்குப்பின் அரசாகிவந்தது. ௰௪. சீரியரை மூன்றுமுறை செயங்கொள்ளுதலைக்குறித்து எலிசா யோவாசுக்குத் தீர்க்கதரிசனம் சொல்லி மரித்தது. ௨௰. தேசத்தில் வந்த மோவாபியரின் தண்டுகள் எலிசாவின் எலும்பின்மேல் போட்ட சவம் உயிரடைந்தது. ௨௰௨. ஆசகேல் மரித்ததும், யோவாசு பேனாதாத்தை மூன்றுதரம் செயித்ததும்.

அகசியாவென்ற யூதாவுடைய இராசாவின் ௧
குமாரனாகிய யோவாசுடைய இருபத்துமூன்
றாம்வருஷத்திற்கு ஏகூவின் குமாரனாகிய யோ
வாகாசு, இஸ்ரவேலின்மேலே சமாரியாவிலே
பதினேழுவருஷமாய் இராச்சியபாரம்பண்ணி,-
கர்த்தரின் பார்வைக்குப் பொல்லாப்பானதைச் ௨
செய்து, இஸ்ரவேலைப் பாவம்செய்யப்பண்
ணின நேபாத்தின் குமாரனாகிய எரோபேயா
மின் பாவங்களைப் பின்பற்றி நடந்தான்; அவை
களைவிட்டு அவன் விலகினதில்லை.—ஆகையால் ௩
கர்த்தருக்கு இஸ்ரவேலின்மேலே கோபமூ
ண்டு, அவர்களைச் சீரியாவின் இராசாவாகிய

ஆசகேலின் கையிலும் ஆசகேலின் குமாரனு
கிய பெனாதாத் கையிலும் அந்த எல்லா நாள்க
௪ ளிலும் ஒப்புக்கொடுத்தார். — ஆனால் யோவா
காசு கர்த்தருடைய சமுகத்தை நோக்கி வருந்
தினான்; ஆகையால் கர்த்தர் அவனைக் கேட்டார்;
ஏனெனில் சூரியாவின் இராசா இஸ்ரவேலை
ஒடுக்குகிறதினால் அவர்கள் ஒடுங்கிப்போகிற
௫ தைப் பார்த்தார்.—கர்த்தர் இஸ்ரவேலுக்கு ஒரு
இரட்சகனைக் கொடுத்ததினால், அவர்கள் சூரிய
ருடைய கையின்கீழிருந்து நீங்கலானார்கள்; ஆ
னதுகொண்டு இஸ்ரவேல் புத்திரர் முன்போலத்
தங்கள் கூடாரங்களிலே குடியிருந்தார்கள். —
௬ ஆகிலும் இஸ்ரவேலைப் பாவம் செய்யப்பண்
ணின எரோபேயாமின் வீட்டாரின் பாவங்
களை அவர்கள் விட்டுவிலகாமல் அதிலே நடந்
தார்கள்; சமாரியாவிலிருந்த தோப்பும் நிலையா
௭ யிருந்துபோயிற்று. — யோவாகாசுக்குச் சூரியா
வின் இராசா ஐம்பது குதிரைக்காரரையும் பத்து
இரதங்களையும் பதினாயிரம் காலாள்களையுமே
அல்லாமல் சனங்களில் வேறொன்றும் மீதியாக
வைக்காதிருந்தான்; ஏனெனில் அவன் அவர்
களை அழித்துப் போரடிக்குதலின் தூளைப்போல
ஆக்கியிருந்தான்.
௮ யோவாகாசின் மற்ற வர்த்தமானங்களும்,
அவன் செய்ததனைத்தும், அவனுடைய வல்
லமையும் இஸ்ரவேலுடைய இராசாக்களின்
நாளாகமப் புஸ்தகத்திலல்லவோ எழுதியிருக்
௯ கின்றது. — யோவாகாசு தன் பிதாக்களோடே
நித்திரை அடைந்தபின் அவனைச் சமாரியா
விலே அடக்கம்பண்ணினார்கள்; அவன் குமார
னாகிய யோவாசு அவன் ஸ்தலத்தில் இராசா
வானான்.
௰ யூதாவின் இராசாவாகிய யோவாசுடைய முப்
பத்தேழாம்வருஷம் துவக்கி, யோவாகாசின்
குமாரனாகிய யோவாசு, இஸ்ரவேலின்மேலே
சமாரியாவிலே பதினாறுவருஷமாய் இராச்சிய
௰௧ பாரம்பண்ணி,-கர்த்தரின் பார்வைக்குப் பொல்
லாப்பானதைச் செய்தான்; இஸ்ரவேலைப் பாவ
ம்செய்யப்பண்ணின நேபாத்தின் குமாரனாகிய
எரோபேயாமின் பாவங்களை விலக்காமல் அ
௰௨ வைகளிலெல்லாம் நடந்தான். — யோவாசின்
மற்ற வர்த்தமானங்களும், அவன் செய்ததனைத்
தும், அவன் யூதாவின் இராசாவாகிய அமத்சியா
வோடு யுத்தம்பண்ணின அவன் வல்லமையும்
இஸ்ரவேலுடைய இராசாக்களின் நாளாகமப்
புஸ்தகத்திலல்லவோ எழுதியிருக்கின்றது. —
௰௩ யோவாசு தன் பிதாக்களோடே நித்திரை அ
டைந்தபின், எரோபேயாம் அவன் ஆசனத்தில்
உளுக்காந்தான்; யோவாசோவெனில் சமாரி
யாவில் இஸ்ரவேலின் இராசாக்களிடத்திலே
அடக்கம்பண்ணப்பட்டான்.
௰௪ அவன் நாள்களில் எலிசா தான்மரணம் அடை
யப்போகிற வியாதியோடே கிடந்தான்; அப்
போது இஸ்ரவேலின் இராசாவாகிய யோவாசு
அவனண்டைக்கு இறங்கிப்போய், அவன்மேல்
விழுந்தழுது, என் தகப்பனே, என் தகப்பனே
இஸ்ரவேலுக்கு இரதங்களும் குதிரைக்காரரு
மாயிருந்தவனே என்றான். — எலிசா அவனு ௰௫
டனே, வில்லையும் அம்புகளையும் பிடியுமென்
றான்; அப்படியே வில்லையும் அம்பையும் பிடித்
துக்கொண்டான். — அப்போது அவன் இஸ்ர ௰௬
வேலின் இராசாவுடனே உம்முடைய கையை
வில்லின்மேல் வையுமென்றான்; அவன் தன்
கையை வைத்தபோது, எலிசா தன் கைகளை
இராசாவுடைய கைகள்மேல் வைத்து,-பிற்பாடு ௰௭
கிழக்கே இருக்கிற பலகணியைத் திறவுமென்
றான்; அவன் அதைத் திறந்தபோது எலிசா எய்யு
மென்றான்; இவன் எய்தபோது, அவன் அது
கர்த்தருடைய இரட்சிப்பின் அம்பும் சூரியருக்கு
விரோதமான இரட்சிப்பின் அம்புமானது; நீர்
ஆபேக்கிலே சூரியரைத் தீர முறியடிப்பீர் என்று
சொல்லி,-அம்புகளைப் பிடியுமென்றான்; அவை ௰௮
களைப் பிடித்தான்; அப்போது அவன் இஸ்ர
வேலின் இராசாவுடனே தரையிலே அடியுமெ
ன்றான்; அவன் மூன்றுதரம் அடித்து நின்றான்.—
அப்போது பராபரனுடைய மனுஷன் அவன் ௰௯
மேலே கடுங்கோபமாகி, நீர் ஐந்து ஆறுவிசை
அடித்தீரானால், அப்போது சூரியரைத் தீர முறிய
டிப்பீர், இப்போதும் சூரியரை மூன்றுவிசை
முறியடிப்பீரென்றான்.
எலிசா மரணம் அடைந்தபின், அவனை அடக் ௨௰
கம்பண்ணினார்கள்; மறுவருஷத்திலே மோவா
பியரின் தண்டுகள் தேசத்திலே வந்தன.—அப் ௨௰௧
போது சம்பவித்ததேதென்றால் அவர்கள் ஒரு
மனுஷனை அடக்கம்பண்ணப்போகையில், இ
தோ அந்தத் தண்டைக் கண்டு, அந்த மனுஷனை
எலிசாவின் கல்லறையில் போட்டார்கள்; அந்த
மனுஷன் அதிலே விழுந்து, எலிசாவின் எலும்பு
களின்மேலே பட்டபோதோவெனில், அவன்
உயிரடைந்து, தன் கால்களை ஊன்றி எழுந்தி
ருந்தான்.
யோவாகாசின் நாள்களிலெல்லாம் சூரியா ௨௰௨
வின் இராசாவாகிய ஆசகேல் இஸ்ரவேலை இறு
கப்பிடித்திருந்தான். — ஆனால் கர்த்தர் அவர்க ௨௰௩
ளுக்கு இரங்கித் தமக்கு ஆபிரகாம் ஈசாக்கு யாக்
கோபென்றவர்களோடிருந்த உடம்படிக்கை
யின்நிமித்தமாக, அவர்களை அழிக்கச் சித்தமா
யிராமலும், அவர்களை இந்தமட்டும் தம்முடைய
முகத்தைவிட்டுத் தள்ளாமலும் அவர்கள்மேல்
மனதுருகி அவர்கள் வசமாய்த் திரும்பினார்.—
சூரியாவின் இராசாவாகிய ஆசகேல் சென்று ௨௰௪
போய், அவன் குமாரனாகிய பெனாதாத் அவன்
ஸ்தலத்தில் இராசாவானபிற்பாடு,—யோவாகா ௨௰௫
சின் குமாரனாகிய யோவாசு ஆசகேல் யுத்தம்
பண்ணி, தன் தகப்பனாகிய யோவாகாசின் கை
யிலே பிடித்திருந்த பட்டணங்களைத் திரும்ப
அவன் குமாரனாகிய பெனாதாத்தின் கையிலே
பிடித்துக்கொண்டான்; மூன்றுவிசை யோவாசு
அவனை முறியடித்து இஸ்ரவேலின் பட்டணங்
களைத் திரும்பக் கட்டிக்கொண்டான்.

## ௰௪. அதிகாரம்.

௧. அமத்சியாவின் நல்ல ஆளுகை. ௫. அவன் தன் தகப்பனைக் கொன்ற கொலைபாதகரைக் கொன்றது. ௭. அவன் ஏதோமியரை மடங்கடித்தது. ௮. அமத்சியா யோவாசைக் கோபமூட்டி அவனால் முறியடிக்கப்பட்டது. ௰௬. எரோபெயாம் யோவாசுக்குப்பின் அரசாகிவந்தது. ௰௭. அமத்சியா கலகத்தில் கொலைசெய்யப்பட்டது. ௨௧. அசரியா அவனுக்குப்பின் அரசாகிவந்தது. ௨௩. எரோபெயாமின் கெட்ட ஆளுகை. ௨௯. சகரியா அவனுக்குப்பின் அரசாகி வந்தது.

௧ இஸ்ரவேலின் இராசாவாகிய யோவாகாசின்
குமாரன் யோவாசுடைய இரண்டாம் வருஷத்தி
லே யூதாவின் இராசாவாகிய யோவாசின் குமா
௨ ரன் அமத்சியா இராசாவானான்.—அவன் இரா
சாவாகிறபோது இருபத்தைந்து வயதாயிருந்து,
எருசலேமிலே இருபத்தொன்பது வருஷமாய்
இராச்சியபாரம்பண்ணினான்; எருசலேம் பட்
டணத்தாளான அவன் தாயின்பேர் யொவாதா.-
௩ அவன் கர்த்தரின் பார்வைக்குச் செம்மையான
தைச் செய்தான்; ஆனால் தன் தகப்பனாகிய தாவீ
தைப்போலல்ல; தன் தகப்பனாகிய யோவாசு
௪ செய்தபடி எல்லாம் செய்தான்.—மேடைகள்
மாத்திரம் அகற்றப்படவில்லை; சனம் இன்னம்
மேடைகளின்மேலே பலியிட்டுத் தூபம்காட்டு
௫ கிறதாயிருந்தது.—இராச்சியபாரம் அவன் கை
யிலே திடப்பட்டபோது, அவனுடைய தகப்ப
னாகிய இராசாவைக் கொன்றுபோட்ட தன் ஊ
௬ ழியக்காரரைக் கொன்றுபோட்டான்.—ஆனால்
பிதாக்கள் பிள்ளைகளின்நிமித்தம் கொலையுண்
ணப்படாமலும் பிள்ளைகள் பிதாக்களின்நிமித்
தம் கொலையுண்ணப்படாமலும் அவனவன்
தன் தன் பாவத்தின்நிமித்தம் கொலையுண்பானாக
என்று மோசேயின் நியாயப்பிரமாண புஸ்தகத்
தில் எழுதியிருக்கிறபடி, கர்த்தர் கற்பித்தபிரகா
ரமாகக் கொலைசெய்தவர்களின் பிள்ளைகளை அ
௭ வன் கொல்லாதிருந்தான்.—அவன் உப்புப்பள்
ளத்தாக்கிலே ஏதோமியரில் பதினாயிரம்பேரை
மடங்கடித்து, சேலாவை யுத்தத்தால் பிடித்து,
அதற்கு இந்நாள்வரைக்கும் இருக்கிற யொக்தே
யேலென்றபேரைத் தரித்தான்.
௮ அப்போது அமத்சியா ஏகூவின் குமாரனாகிய
யோவாகாசின் குமாரன் யோவாசென்ற இஸ்ர
வேலின் இராசாவண்டைக்குத் தானாபதிகளை
அனுப்பி, நம்முடைய சாமர்த்தியத்தைப் பார்ப்
போம் வாவென்று சொல்லச்சொன்னான்.—
௯ ஆனால் இஸ்ரவேலின் இராசாவாகிய யோவாசு
யூதாவின் இராசாவாகிய அமத்சியாவுக்குச்
சொல்லி அனுப்பினதாவது: லீபனோனில் இருக்
கிற முள்செடி, லீபனோனில் இருக்கிற கேதுரு
மரத்திற்கு உன் குமாரத்தியை என் குமாரனுக்
குப் பெண்சாதியாகக் கொடுவென்று சொல்லச்
சொல்லிற்று; ஆனால் லீபனோனில் இருக்கிற
காட்டுமிருகங்கள் முள்செடியின்மேல் ஓடி
௰ அதை மிதித்தன.— நீ ஏதோமியரை முறியடிக்
கவே அடித்ததினால் உன் இருதயம் உன்னை
மேட்டிமையாக்கிற்று; நீ பெருமைபாராட்டி
உன் வீட்டிலே இரு; நீயும் உன்னோடும்கூட
யூதாவும் விழும்படிக்கு, பொல்லாப்பைத் தே
டிக்கொள்ளுவானேன் என்று சொல்லி அனுப்
பினான். — ஆனால் அமத்சியா செவிகொடாதே ௰௧
போனான்; ஆகையால் இஸ்ரவேலின் இராசா
வாகிய யோவாசு ஏறிவந்தான்; யூதாவிலிருக்
கிற பெத்சேமேசிலே அவனும், யூதாவின் இரா
சா அமத்சியாவும், தங்கள் சாமர்த்தியத்தைப்
பார்க்கிறபோதோவெனில்,—யூதா இஸ்ரவேலுக் ௰௨
குமுன்பாக முறிந்து, அவரவர் தங்கள் கூடா
ரங்களுக்கு ஓடிப்போனார்கள்.—அகசியாவின் ௰௩
குமாரனாகிய யோவாசின் குமாரனான அமத்சியா
வென்ற யூதாவின் இராசாவையோ, இஸ்ரவே
லின் இராசாவாகிய யோவாசு பெத்சேமேசிலே
பிடித்து, எருசலேமுக்கு வந்து, எருசலேமின்
அலங்கத்திலே எப்பிராயீம் வாசலைத் துவக்கிக்
கோடிவாசல்மட்டும் நானூறு முழநீளம் இடித்து
விட்டு, — கர்த்தருடைய வீட்டிலும் இராசாவு ௰௪
டைய வீட்டுப் பொக்கிஷங்களிலும் அகப்
பட்ட சகல பொன்னையும், வெள்ளியையும்,
சகல முட்டுகளையும், கிரி இருப்பவர்களையும்
பிடித்துக்கொண்டுபோய், சமாரியாவுக்குத்திரும்
பினான்.

யோவாசு செய்த மற்ற வர்த்தமானங்களும், ௰௫
அவனுடைய வல்லமையும், அவன் யூதாவின்
இராசாவாகிய அமத்சியாவோடு யுத்தம்பண்
ணின செய்தியும், இஸ்ரவேல் இராசாக்களின்
நாளாகமப் புஸ்தகத்திலல்லவோ எழுதியிருக்
கின்றது.

யோவாசு தன் பிதாக்களோடே நித்திரை அ ௰௬
டைந்தபின், சமாரியாவில் இஸ்ரவேலின் இரா
சாக்களண்டையிலே அடக்கம் பண்ணப்பட்
டான்; அவன் குமாரனாகிய எரோபெயாம் அ
வன் ஸ்தலத்தில் இராசாவானான்.

இஸ்ரவேலின் இராசாவாகிய யோவாகாசின் ௰௭
குமாரன் யோவாசு மரணம் அடைந்தபின், யூதா
வின் இராசாவாகிய யோவாசின் குமாரன் அமத்
சியா பதினைந்துவருஷம் உயிரோடிருந்தான்.—
அமத்சியாவின் மற்ற வர்த்தமானங்கள் யூதாவு ௰௮
டைய இராசாக்களின் நாளாகமப் புஸ்தகத்தி
லல்லவோ எழுதியிருக்கின்றது. — எருசலேமி ௰௯
லே அவனுக்கு விரோதமாக ஒப்பந்தம் பண்ணி
னார்கள்; அப்போது லாகீசுக்கு ஓடிப்போனான்;
ஆனால் அவர்கள் அவன்பிறகாலே லாகீசுக்கு
மனுஷரை அனுப்பி, அங்கே அவனைக் கொன்
றுபோட்டு,—குதிரைகள்மேல் அவனை எடுத்து ௨௰
வந்தார்கள்; அவன் எருசலேமில் இருக்கிற தா
வீதின் பட்டணத்திலே தன் பிதாக்களண்டை
யிலே அடக்கம்பண்ணப்பட்டான்.

யூதசனமெல்லாம் பதினாறு வயதுள்ள அசரீ ௨௰௧
யாவை அழைத்துவந்து, அவனை அவன் தகப்ப
னாகிய அமத்சியாவின் ஸ்தலத்தில் இராசாவாக்
கினார்கள்.—இராசா தன் பிதாக்களோடே நித்தி ௨௰௨
ரைஅடைந்தபிற்பாடு, இவன் ஏலாதைக் கட்டி,
அதைத் திரும்ப யூதாவின் வசமாக்கிக்கொண்
டான்.

உங யூதாவின் இராசாவாகிய யோவாசின்குமாரன் அமத்சியாவின பதினைந்தாம் வருஷம்துவக்கி, இஸ்ரவேலின் இராசாவாகிய யோவாசின் குமாரன் எரோபேயாம் சமாரியாவில் நாற்பத்தொ
உச ருவருஷமாய் அரசாண்டு,—கர்த்தரின் பார்வைக்குப் பொல்லாப்பானதைச் செய்தான்; இஸ்ரவேலைப் பாவம்செய்யப்பண்ணின நேபாத்தின் குமாரனை எரோபேயாமின் சகல பாவங்களை
உரு யும் அவன் விட்டு விலகினதில்லை.—காத்தேப்பேர் ஊராளுகிய அமித்தாயென்ற தீர்க்கதரிசியின் குமாரனை யோனாவென்ற தம்முடைய ஊழியக்காரனைக்கொண்டு இஸ்ரவேலின் பராபரனுகிய கர்த்தர் சொல்லியிருந்த வார்த்தையின் படியே, அவன் ஆமாதின் எல்லைமுதல்கொண்டு சமனான பூமியின் கடல்மட்டுமுள்ள இஸ்ரவேலின் எல்லைகளைத் திரும்பச் சேர்த்துக்கொண்
உசா டான்.—ஏனெனில் இஸ்ரவேலின் சிறுமைத்தனம் மெத்தக் கடுமை என்றும், அடைக்கப்பட்டவனுமில்லை, விடுதலையானவனுமில்லை, இஸ்ரவேலுக்கு ஒத்தாசை செய்கிறவனுமில்லை என்
உஎ றும் கர்த்தர் பார்த்தார்.— இஸ்ரவேலின்பேரை வானத்தின்கீழிருந்து கொலைப்போமென்று கர்த்தர் சொல்லாதிருந்து, யோவாசின் குமாரனுகிய எரோபேயாமின் கையால் அவர்களை இரட்சித்தார்.

உஅ எரோபேயாமின் மற்ற வர்த்தமானங்களும் அவன் செய்ததனைத்தும் அவன் யுத்தம்பண்ணி, யூதாவுக்கிருந்த தமஸ்குவையும் ஆமாதையும் இஸ்ரவேலுக்காகத் திரும்பச் சேர்த்துக்கொண்ட அவனுடைய வல்லமையும், இஸ்ரவேல் இராசாக்களின் நாளாகமப் புஸ்தகத்திலல்லவோ எழுதி
உகூ யிருக்கின்றது. — எரோபேயாம் இஸ்ரவேலின் இராசாக்களாகிய தன் பிதாக்களோடே நித்திரை அடைந்தபின் அவன் குமாரனுகிய சகரீயா அவன் ஸ்தலத்தில் இராசாவானுன்.

## ௰ரு. அதிகாரம்.

க. அசரியாவின் நல்ல ஆளுகை. ரு. அவன் குஷ்டரோகத்தால் மரித்ததும் யோத்தாம் அவனுக்குப்பின் அரசாகிவந்ததும். அ. ஏகூவின் முடிவான சந்ததியாகிய சகரியா தன் மார்க்கமாய் அரசாண்டு சல்லூமினால் கொலைசெய்யப்பட்டது. ௰ங. சல்லூம் ஒருமாதம் அரசாண்டு மெனாகேமினால் கொல்லப்பட்டது. ௰கூ. பூலினால் மெனாகேம் பலப்பட்டது. உக. அவனுக்குப்பின் பெக்காகியா அரசாகிவந்தது. உக. பெக்காகியா பெக்காவினால் கொல்லப்பட்டது. உஎ. பெக்கா திகிலாத்பிலேசேரினால் முறியடிக்கப்பட்டு, ஓசேயாவினால் கொல்லப்பட்டது. கஉ. யோத்தாமினுடைய நல்ல ஆளுகை. கக. ஆகாஸ் அவனுக்குப்பின் அரசாகிவந்தது.

க இஸ்ரவேலின் இராசாவாகிய எரோபேயாமின் இருபத்தேழாம்வருஷத்தில், யூதாவின் இராசாவாகிய அமத்சியாவின் குமாரன் அசரீயா இராசா
உ வானுன்.—அவன் இராசாவாகிறபோது பதினறு வயதாயிருந்து, ஐம்பத்திரண்டுவருஷமாய் எருசலேமிலே அரசாண்டான்; எருசலேம் பட்டணத்தாளான அவன் தாயின்பேர் எக்கோலி
ங யாள்.—அவன் தன் தகப்பனுகிய அமத்சியா செய்தபடியெல்லாம் கர்த்தரின் பார்வைக்குச் செம்
ச மையானதைச் செய்தான். — மேடைகள்மாத்திரம் அகற்றப்படவில்லை; சனம் இன்னம் மேடைகள்மேலே பலியிட்டுத் தூபம்காட்டுகிறதாயிருந்தது.

கர்த்தர் இந்த இராசாவை வாதித்ததினாலே, ரு
அவன் தன் மரண நாள்மட்டும் குஷ்டரோகியாயிருந்து, தனித்த வீட்டிலே வாசம்பண்ணினான்; இராசாவின் குமாரனுகிய யோத்தாமோவெனில் அரமனை விசாரிப்புக்காரனாயிருந்து, தேசத்தின் சனத்தை நியாயம் விசாரித்தான்.

அசரீயாவின் மற்ற வர்த்தமானங்களும், அவன் சா
செய்ததனைத்தும், யூதாவுடைய இராசாக்களின் நாளாகமப் புஸ்தகத்திலல்லவோ எழுதியிருக்
கின்றது.—அசரீயா தன் பிதாக்களோடே நித்தி எ
ரை அடைந்தபின், அவனைத் தாவீதின் பட்டணத்திலே அவன் பிதாக்களண்டையிலே அடக்கம்பண்ணினார்கள்; அவன் குமாரனுகிய யோத்தாம் அவன் ஸ்தலத்தில் இராசாவானுன்.

யூதாவின் இராசாவாகிய அசரீயாவின் முப் அ
பத்தெட்டாம்வருஷத்திலே எரோபேயாமின் குமாரனுகிய சகரீயா இஸ்ரவேலின்மேலே சமாரியாவிலே ஆறுமாதமாய் இராச்சியபாரம்பண்
ணி,—தன் பிதாக்கள் செய்ததுபோல, கர்த்தரின் கூ
பார்வைக்குப் பொல்லாப்பானதைச் செய்தான்; இஸ்ரவேலைப் பாவம்செய்யப்பண்ணின நேபாத்தின் குமாரனுகிய எரோபேயாமின் பாவங்
களை அவன் விட்டு விலகினதில்லை.-யாபேசின் ௰
குமாரனுகிய சல்லூம் அவனுக்கு விரோதமாகப் பந்துக்கட்டுப்பண்ணி, சனத்தின்முன்பாக அவனை வெட்டிக்கொன்றுபோட்டு, அவன் ஸ்தலத்தில் இராசாவானுன்.

சகரீயாவின் மற்ற வர்த்தமானங்கள் இதோ ௰க
இஸ்ரவேலின் இராசாக்களின் நாளாகமப் புஸ்த
கத்திலல்லவோ எழுதியிருக்கிறது.-உன் குமாரர் ௰உ
நாலாம் தலைமுறைமட்டும் இஸ்ரவேலுடைய ஆசனத்தின்மேல் உளுக்காந்திருப்பார்களென்று கர்த்தர் ஏகூவோடே சொன்ன வார்த்தை இது தான்; அப்படியே ஆயிற்று.

யூதாவின் இராசாவாகிய உசியாவின் முப்பத் ௰ங
தொன்பதாம்வருஷத்தில் யாபேசின் குமாரனுகிய சல்லூம் இராசாவாகி, சமாரியாவில் ஒரு
மாதம் அரசாண்டான்.—அதேதெனில் காதியின் ௰ச
குமாரனுகிய மெனாகேம் திற்சாவிலிருந்து சமாரியாவுக்கு ஏறிவந்து, யாபேசின் குமாரனுகிய சல்லூமைச் சமாரியாவிலே வெட்டிக் கொன்று போட்டு, அவன் ஸ்தலத்தில் இராசாவானுன்.

சல்லூமின் மற்ற வர்த்தமானங்களும், அவனு ௰ரு
டைய ஒப்பந்தமும், இதோ இஸ்ரவேல் இராசாக்களின்நாளாகமப் புஸ்தகத்திலல்லவோ எழு
தியிருக்கின்றது.—அப்போது மெனாகேம் திப்சா ௰சா
பட்டணத்தையும், அதிலிருக்கிறதனைத்தையும், திற்சாவைத் துவக்கிப்போகிற அதின் எல்லைகளையும், அவர்கள் தனக்குத் திறந்ததில்லையென்று இடறடித்து, அவர்களை வெட்டி, அவர்களுடைய கர்ப்பவதிகளையெல்லாம் பீறினன்.

௰௭ யூதாவின் இராசாவாகிய அசரீயாவின் முப்
பத்தொன்பதாம்வருஷம்துவக்கி, காதியின் கு
மாரனாகிய மெனாகேம் இஸ்ரவேல்மேலே சமா
ரியாவிலே பத்துவருஷமாய் இராச்சியபாரம்
பண்ணி, அவன் தன் நாள்களிலெல்லாம் கர்த்
தரின் பார்வைக்குப் பொல்லாப்பானதைச்
௰௮ செய்தான்.–இஸ்ரவேலைப் பாவம்செய்யப்பண்
ணின நேபாத்தின் குமாரனாகிய எரோபேயா
௰௯ மின் பாவங்களை விட்டுவிலகாதிருந்தான்.–அசூ
ரின் இராசாவாகிய பூல் தேசத்திற்கு விரோத
மாய் வந்தான்; அப்போது பூலின் கைகள் தன்
னோடிருக்கிறதற்கும், இராச்சியபாரத்தை அவன்
தன்கையில் பலப்படுத்துகிறதற்கும், மெனாகேம்
அவனுக்கு ஆயிரம் தாலந்து வெள்ளியைக் கொ
௨௰ டுத்தான். — இந்தத் திரவியத்தை அசூரின் இரா
சாவுக்குக் கொடுக்க, மெனாகேம் இஸ்ரவேலில்
பலத்திருக்கிற அவரவர் கையிலும் ஒவ்வொரு
வன்கையில் ஐம்பது வெள்ளிச் சேக்கலாகத்
தண்டினான்; அப்படியே அசூரின் இராசாஅங்
கே தேசத்திலே நிற்காமல் திரும்பிப் போனான்.
௨௧ மெனாகேமின் மற்ற வர்த்தமானங்களும், அ
வன் செய்ததனைத்தும், இஸ்ரவேல் இராசாக்க
ளின் நாளாகமப் புஸ்தகத்திலல்லவோ எழுதியி
௨௨ ருக்கின்றது. — மெனாகேம் தன் பிதாக்களோடு
நித்திரை அடைந்தபின், அவன் குமாரனாகிய
பெக்காகீயா அவன் ஸ்தலத்தில் இராசாவானான்.
௨௩ யூதாவின் இராசாவாகிய அசரீயாவின் ஐம்ப
தாம் வருஷம்துவக்கி, மெனாகேமின் குமாரனா
கிய பெக்காகீயா இஸ்ரவேலின்மேலே சமாரி
யாவில் இரண்டுவருஷமாய் இராச்சியபாரம்
௨௪ பண்ணி,—கர்த்தரின் பார்வைக்குப் பொல்லாப்
பானதைச் செய்தான்; அவன் இஸ்ரவேலைப் பா
வம்செய்யப்பண்ணின நேபாத்தின் குமாரனா
கிய எரோபேயாமின் பாவங்களை விட்டுவில
௨௫ கினதில்லை. — ஆனால் ரெமலீயாவின் குமார
னாகிய பெக்காவென்ற அவனுடைய சேர்வைக்
காரன் அவனுக்கு விரோதமாய்ப் பந்துக்கட்டுப்
பண்ணி, கீலேயாத் புத்திரரில் ஐம்பதுபேரைக்
கூட்டிக்கொண்டு, அவனையும் அர்கோபையும்
ஆறியேயையும் இராசாவின் வீடாகிய அரமனை
யிலே சமாரியாவில் வெட்டிக்கொன்றுபோட்டு,
அவன் ஸ்தலத்தில் இராசாவானான்.
௨௬ பெக்காகீயாவின் மற்ற வர்த்தமானங்களும்,
அவன் செய்ததனைத்தும் இதோ இஸ்ரவேல் இரா
சாக்களின் நாளாகமப் புஸ்தகத்திலல்லவோ
எழுதியிருக்கின்றது.
௨௭ யூதாவின் இராசாவாகிய அசரீயாவின் ஐம்பத்
திரண்டாம் வருஷம்துவக்கி, ரெமலீயாவின்
குமாரனாகிய பெக்கா இஸ்ரவேலின்மேலே சமா
ரியாவில் இருபதுவருஷமாய் இராச்சியபாரம்
௨௮ பண்ணி, — கர்த்தரின் பார்வைக்குப் பொல்
லாப்பானதைச் செய்தான்; இஸ்ரவேலைப் பா
வம்செய்யப்பண்ணின நேபாத்தின் குமாரனா
கிய எரோபேயாமின் பாவங்களை அவன் விட்
௨௯ டுவிலகினதில்லை. — இஸ்ரவேலின் இராசாவா
கிய பெக்காவின் நாள்களில் அசூரின் இராசா
வாகிய திகிலாத்பிலேசேர் வந்து, ஈயோனையும்,
பெத்மாக்காவென்ற ஆபேலையும், யனோவாகை
யும், கேதேசையும், ஆத்சோரையும், கீலேயாத்
தையும், கலிலேயாவாகிய நவுதலி தேசமனைத்
தையும் பிடித்துச் சிறையாகக் குடிகளை அசூரி
யாவுக்குக் கொண்டுபோனான். — ஆனால் ஏலா ௩௰
வின் குமாரனாகிய ஒசேயா ரெமலீயாவின் கு
மாரனாகிய பெக்காவுக்கு விரோதமாய் ஒப்பந்
தம்பண்ணி, அவனை உசீயாவின் குமாரனாகிய
யோத்தாமின் இருபதாம்வருஷத்தில் வெட்டிக்
கொன்றுபோட்டு, அவன் ஸ்தலத்தில் இராசா
வானான்.
பெக்காவின் மற்ற வர்த்தமானங்களும், அ ௩௧
வன் செய்ததனைத்தும், இதோ இஸ்ரவேல் இரா
சாக்களின் நாளாகமப் புஸ்தகத்திலல்லவோ எ
ழுதியிருக்கின்றது.
இஸ்ரவேலின் இராசாவாகிய ரெமலீயாவின் ௩௨
குமாரன் பெக்காவின் இரண்டாம்வருஷத்தில்
யூதாவின் இராசாவாகிய உசீயாவின் குமாரனா
கிய யோத்தாம் இராசாவானான்.—அவன் இரா ௩௩
சாவாகிறபோது, இருபத்தைந்து வயதாயிருந்து,
எருசலேமிலே பதினாறுவருஷம் அரசாண்
டான்; சாதோக்கின் குமாரத்தியாகிய அவன் தா
யின்பேர் எருஷாள். — அவன் கர்த்தரின் பார் ௩௪
வைக்குச் செம்மையானதைச் செய்தான்; தன்
தகப்பனாகிய உசீயா செய்தபடியெல்லாம் செய்
தான்.–மேடைகள்மாத்திரம் அகற்றப்படவில் ௩௫
லை; சனம் இன்னம் மேடைகளின்மேலே பலி
யிட்டுத் தூபம்காட்டுகிறதாயிருந்தது; இவன் கர்த்
தருடைய வீட்டின் உயர்ந்த வாசலைக் கட்டி
னான்.
யோத்தாமின் மற்ற வர்த்தமானங்களும், அ ௩௬
வன் செய்ததனைத்தும், யூதாவுடைய இராசாக்க
ளின் நாளாகமப் புஸ்தகத்திலல்லவோ எழுதியி
ருக்கின்றது.—அந்நாள்களிலே கர்த்தர் சூரியா ௩௭
வின் இராசாவாகிய ரேத்சீனையும், ரெமலீயா
வின் குமாரனாகிய பெக்காவையும் யூதாவில் அ
னுப்பத் துவக்கினார்.—யோத்தாம் தன் பிதாக்க ௩௮
ளோடே நித்திரை அடைந்தபின், அவன் தன்
தகப்பனாகிய தாவீதின் பட்டணத்திலே தன்
பிதாக்களண்டையில் அடக்கம்பண்ணப்பட்
டான்; அவன் குமாரனாகிய ஆகாஸ் அவன்
ஸ்தலத்தில் இராசாவானான்.

## ௰௬. அதிகாரம்.

௧. ஆகாசின் கெட்ட ஆளுகை. ௫. ஆகாஸ் ரேத்சீனாலும் பெக்காவினா லும் நெருக்கப்பட்டபோது, அவர்களுடன் யுத்தம்பண்ண திகிலாத் பிலேசேருக்குக் கேள்விகொடுத்தது. ௰. ஆகாஸ் தமஸ்குவிலிருந்த பலி பீடத்தின் மாதிரியை உரியாவுக்கு அனுப்பி, அதின்படி செய்வித்து, வெண்கலப் பலிபீடத்தைத் தன் தொழுதலுக்கு வைத்துக்கொண்டது. ௰௭. அவன் ஆலயத்திற்கு அடுத்தவைகளைக் கிரகித்தது. ௰௯. எசேக்கியா அவனுக்குப்பின் அரசாகிவந்தது.

ரெமலீயாவின் குமாரனாகிய பெக்காவின் பதி ௧
னேழாம்வருஷத்தில், யூதாவின் இராசாவாகிய
யோத்தாமின் குமாரன் ஆகாஸ் இராசாவானான்.-
ஆகாஸ் இராசாவாகிறபோது இருபதுவயதாயி ௨

ருந்து, எருசலேமிலே பதினாறுவருஷம் அரசா
ண்டான்; ஆனால் அவன் தன் தகப்பனாகிய தாவீ
தைப்போலத் தன் பராபரனாகிய கர்த்தரின் பார்
வைக்குச் செம்மையானதைச் செய்யாமல்,—
௩ இஸ்ரவேல் இராசாக்களின் வழியிலே நடந்து,
கர்த்தர் இஸ்ரவேல் புத்திரருக்குமுன்பாகத் துரத்
தின சாதிகளுடைய அருவருப்புகளின்படியே
தன் குமாரனை முதலாய் அக்கினியை மிதிக்கப்
௪ பண்ணினான்.-மேடைகளிலும் மேடுகளின்மே
லும் பச்சையான சகல மரத்தின்கீழும் பலியிட்
டுத் தூபம்காட்டுவான்.
௫ அப்போது சூரியாவின் இராசாவாகிய ரேத்சீ
னும், இஸ்ரவேலின் இராசாவாகிய ரெமலீயா
வின் குமாரன் பெக்காவும், எருசலேமின்மேல்
யுத்தம்பண்ண ஏறிவந்து ஆகாசை முற்றிக்கை
போட்டார்கள்; ஆனால் அதைப் பிடிக்கமாட்டா
௬ தே போனார்கள்.—அக்காலத்திலே சூரியாவின்
இராசாவாகிய ரேத்சீன் ஏலாத்தைத் திரும்பச்
சூரியாவோடே சேர்த்துக்கொண்டு யூதரை ஏலா
த்திலிருந்து துரத்தினான்; சூரியர் ஏலாத்திற்கு
வந்து இந்நாள்வரைக்கும் அவ்விடத்திலே குடி
௭ யாயிருந்தார்கள்.—ஆகாசோவென்றால் அசூரின்
இராசாவாகிய திகிலாத்பிலேசேரண்டைக்குத்
தானாபதிகளை அனுப்பி, நான் உம்முடைய அடி
யானும் உம்முடைய குமாரனுமாயிருக்கிறேன்;
நீர் ஏறிவந்து, எனக்கு விரோதமாய் எழும்
பின சூரியாவுடைய இராசாவின் கைக்கும் இஸ்
ரவேல் இராசாவின் கைக்கும் என்னை நீங்கலாக்
௮ கிவிடுமென்று சொல்லச்சொல்லி, — கர்த்தரு
டைய வீட்டிலும் இராசாவின் வீட்டுப் பொக்
கிஷங்களிலும் அகப்பட்ட வெள்ளியையும்
பொன்னையும் எடுத்து, அசூரின் இராசாவுக்குக்
௯ காணிக்கையாக அனுப்பினான். — அசூரின் இ
ராசா அவனுக்குக் கேள்விகொடுத்து, தமஸ்கு
வுக்கு ஏறிப்போய் அதைப் பிடித்து, அதின்
குடிகளைக் கீர்பட்டணத்திற்குச் சிறைபிடித்துப்
போய், ரேத்சீனைக் கொன்றுபோட்டான்.
௰ அப்போது இராசாவாகிய ஆகாஸ் தமஸ்குவி
லிருக்கிற அசூரின் இராசாவாகிய திகிலாத்
பிலேசேருக்கு எதிர்கொண்டுபோய்த் தமஸ்கு
விலிருக்கிற பலிபீடத்தைக் கண்டான்; அப்
போது இராசாவாகிய ஆகாஸ் அந்தப் பலிபீடத்
தின் சாயலையும், அதினுடைய சகல வேலைக்
கொத்த அதின் மாதிரியையும் ஆசாரியனாகிய
௰௧ உரியாவுக்கு அனுப்பினான்.—அப்போது இரா
சாவாகிய ஆகாஸ் தமஸ்குவிலிருந்து வருகிறதற்
குள் ஆசாரியனாகிய உரியா அப்படிக்கொத்த
பலிபீடத்தைக் கட்டி, இராசாவாகிய ஆகாஸ்
தமஸ்குவிலிருந்து அனுப்பின கட்டளையின்படி
௰௨ யெல்லாம்செய்தான்.-இராசா தமஸ்குவிலிருந்து
வந்தபோது,அவன் அந்தப் பலிபீடத்தைப் பார்த்
து, அந்தப் பலிபீடத்தண்டையில் சேர்ந்து, அ
௰௩ தின்மேலே பலியிட்டு,—தன்னுடைய சர்வாங்
கதகனபலியையும் தன் காணிக்கையையும் கொ
ளுத்தி, தன் ஊற்றுதலை ஊற்றி, தனக்கிருக்கிற
சமாதானபலிகளின் இரத்தத்தை அந்தப் பலிபீ
டத்தின்மேலே தெளித்தான்.—கர்த்தரின் சந்நி ௰௪
திக்குமுன்பாக இருந்த வெண்கலப் பலிபீடத்
தையோவென்றால், அவன் தன்னுடைய பலிபீ
டத்திற்கும் கர்த்தரின் வீட்டுக்கும் நடுவே வீட்
டின் முகப்பிலிருந்து எடுத்து, அதைத் தன்னு
டைய பலிபீடத்திற்கு வடபுறமாய் வைத்தான்.-
இராசாவாகிய ஆகாஸ் ஆசாரியனாகிய உரியா ௰௫
வுக்குக் கற்பித்ததாவது: இந்தப் பெரிய பலிபீ
டத்தின்மேல் நீ விடியுங்காலத்துச் சர்வாங்கதக
னபலியையும், அந்திக் காணிக்கையையும், இரா
சாவின் சர்வாங்கதகனபலியையும்,அவருடைய
காணிக்கையையும், தேசத்தினுடைய சகல
சனத்தின் சர்வாங்கதகனபலியையும், அவர்கள்
காணிக்கையையும், அவர்கள் ஊற்றுதல்களையும்
கொளுத்தி, அதின்மேலே சர்வாங்கதகனங்க
ளின் சகல இரத்தத்தையும், பலிகளின் சகல இர
த்தத்தையும் தெளிப்பாயாக; அந்த வெண்கலப்
பலிபீடமோவென்றால், நான் கேள்விகேட்கிற
தற்கு எனக்காகுமென்றான்.-இராசாவாகிய ஆகா ௰௬
ஸ் கற்பித்தபடியெல்லாம் ஆசாரியனாகிய உரியா
செய்தான்.—பின்னையும் இராசாவாகிய ஆகாஸ் ௰௭
ஆதாரங்களின் சவுக்கைகளை அறுத்துவிட்டு, அ
வைகளின்மேலிருந்த கொப்பரைகளை எடுத்து,
கடல்தொட்டியைக் கீழே நிற்கிற வெண்கல
எருதுகள்மேலிருந்து இறக்கி,அதைக் கல்களின்
தளவரிசையிலே வைத்து, — வீட்டின் அருகே ௰௮
கட்டியிருந்த ஓய்வுநாளின் தாழ்வாரத்தையும், இ
ராசா உள்பிரவேசிக்கிற புறநடையையும், அசூ
ருடைய இராசாவின்நிமித்தமாகக் கர்த்தருடை
ய வீட்டைவிட்டு அப்புறப்படுத்தினான்.
ஆகாஸ் செய்த மற்ற வர்த்தமானங்கள் யூதா ௰௯
வுடைய இராசாக்களின் நாளாகமப் புஸ்தகத்தி
லல்லவோ எழுதியிருக்கின்றது. — ஆகாஸ் தன் ௨௰
பிதாக்களோடே நித்திரை அடைந்தபின், அவன்
தாவீதின் பட்டணத்திலே தன் பிதாக்களண்டை
யிலே அடக்கம்பண்ணப்பட்டான்; அவன் கு
மாரனாகிய எசேக்கியா அவன் ஸ்தலத்தில் இரா
சாவானான்.

## ௰௭. அதிகாரம்.

௧. ஓசேயாவின் கெட்ட ஆளுகை. ௩. அவன் சல்மனாசாராலே முறியடிக்கப்பட்டு, எகிப்தின் இராசாவாகிய சோவோடே உடம்படிக்கைபண்ணினது. ௬. சமாரியா தேசத்தாரின் பாவத்திற்காக அது பிடிக்கப்பட்டது. ௨௪. அஞ்ஞானிகள் சமாரியாவில் குடியேறி, சிங்கங்களினால் வாதைப்பட்டு பலமார்க்கத்தையும் கலந்து அனுசரித்தது.

யூதாவின் இராசாவாகிய ஆகாசின் பன்னிரண் ௧
டாம்வருஷம்துவக்கி, ஏலாவின் குமாரனாகிய
ஓசேயா இஸ்ரவேலின்மேலே சமாரியாவில் ஒன்
பதுவருஷம் இராச்சியபாரம்பண்ணி, — கர்த்த ௨
ரின் பார்வைக்குப் பொல்லாப்பானதைச் செய்
தான்; ஆனால் தனக்கு முன்னிருந்த இஸ்ரவே
லின் இராசாக்களைப்போலல்ல.—அவனுக்கு வி ௩
ரோதமாக அசூரின் இராசாவாகிய சல்மனாசார்
ஏறிவந்தான்; அப்போது ஓசேயா அவனைச் சே
விக்கிறவனாகி, அவனுக்குக் காணிக்கையைச்
செலுத்தினான்.

௪ ஆனால் ஓசேயா எகிப்தின் இராசாவாகிய சோ
வண்டைக்குத் தானபதிகளை அனுப்பினதும்,
தனக்கு வருஷம்தோறும் செய்ததுபோல, கா
ணிக்கையை அனுப்பாதேபோனதுமான துரோ
கத்தை அசூரின் இராசா ஓசேயாவினிடத்திலே
கண்டுபிடித்து, அவனை முற்றிக்கைபோட்டுப்
பிடித்துச் சிறைச்சாலையிலே கட்டிவைத்தான்.-
௫ அதேதென்றால் அசூரின் இராசா தேசத்தின்மே
லெல்லாம் ஏறி, சமாரியாவுக்கும் வந்து, அதை
மூன்றுவருஷமாய் முற்றிக்கைபோட்டான். —
௬ ஓசேயாவின் ஒன்பதாம்வருஷத்தில் அசூரின்
இராசா சமாரியாவைப் பிடித்து, இஸ்ரவேலை
அசூரியாவுக்குச் சிறைபிடித்துப்போய், அவர்
களைக் கோசான் நதி ஓரமான ஆலாகிலும் ஆபோ
ரிலும் மேதியரின் பட்டணங்களிலும் குடியேற்
றுவித்தான்.

௭ அதேதென்றால் எகிப்தின் இராசாவாகிய பார்
வோனுடைய கையின்கீழிருந்த தங்களை எகிப்
துதேசத்திலிருந்து ஏறப்பண்ணின தங்கள் பரா
பரனாகிய கர்த்தருக்கு விரோதமாக இஸ்ரவேல்
புத்திரர் பாவஞ்செய்து, வேறே தேவர்களுக்குப்
௮ பயந்து நடந்து,—கர்த்தர் இஸ்ரவேல் புத்திரருக்
குமுன்பாகத் துரத்தின சாதிகளின் வழிபாடுக
ளிலும் இஸ்ரவேல் இராசாக்கள் பண்ணின வழி
பாடுகளிலும் நடந்துகொண்டிருந்தார்கள். —
௯ செம்மையல்லாத காரியங்களுக்கு இஸ்ரவேல்
புத்திரர் தங்கள் பராபரனாகிய கர்த்தருக்கு விரோ
தமாகப் போக்குச் சொல்லிக்கொண்டு, சாமம்
காக்கிற கோபுரங்களைத்துவக்கி அரணான பட்
டணங்கள் மட்டுமுள்ள தங்கள் எல்லா ஊர்க
௰ ளிலும் தங்களுக்கு மேடைகளைக் கட்டி,-உயர்
ந்த சகல மேட்டின்மேலும் பச்சையான சகல
மரத்தின்கீழும் தங்களுக்குச் சிலைகளையும் விக்
௰௧ கிரகத் தோப்புகளையும் நிறுத்தி,-கர்த்தர் தங்களை
விட்டு குடிவிலக்கின சாதிகளைப்போலே, அங்
கே சகல மேடைகளிலும் தூபம்காட்டி, கர்த்த
ருக்குக் கோபம் உண்டாகப் பொல்லாத காரி
௰௨ யங்களைச் செய்து,—இப்படிச் செய்யாதேயுங்
கள் என்று கர்த்தர் தங்களை விலக்கச் சொன்ன
நரகலான தேவர்களைச் சேவித்துக்கொண்டிருந்
தார்கள்.

௰௩ நீங்கள் உங்கள் பொல்லாத வழிகளைவிட்டுத்
திரும்பி, நாம் உங்கள் பிதாக்களுக்குக் கற்பித்த
தும் நம்முடைய ஊழியக்காரராகிய தீர்க்கதரிசி
களைக்கொண்டு உங்களுக்கு அனுப்பினதுமான
நியாயப்பிரமாணத்தின்படி எல்லாம் நம்முடை
ய கற்பனைகளையும் நம்முடைய கட்டளைகளை
யும் கைக்கொள்ளுங்கள் என்று கர்த்தர் எல்லாத்
தீர்க்கதரிசிகளையும் எல்லா ஞானதிருஷ்டிக்கா
ரரையும்கொண்டு இஸ்ரவேலுக்கும் யூதாவுக்
கும் திடச்சாட்சியாய் எச்சரித்துக்கொண்டிருந்
௰௪ தாலும்,—அவர்கள் கேள்விகொடாமல், தங்கள்
பராபரனாகிய கர்த்தர்மேலே விசுவாசியாதே
போன கடினக்கழுத்தான தங்கள் பிதாக்களைப்
போல, தங்கள் கழுத்தைக் கடினப்படுத்தி,-அவ ௰௫
ருடைய கட்டளைகளையும், அவர் தங்கள் பிதாக்
களோடே பண்ணின அவருடைய உடம்படிக்
கையையும், அவர் தங்களுக்குத் திடச்சாட்சி
யாய்க் காண்பித்த அவருடைய சாட்சிகளையும்
வெறுத்துவிட்டு, மாயையைப் பின்பற்றி, மாயை
க்காரராகி, அவர்களைச் சுற்றிலும் இருக்கிறவர்
களைப்போல, அவர்களைச் செய்யவேண்டாமெ
ன்று கர்த்தர் அவர்களுக்குக் கற்பித்திருக்கிறாரே,
அந்தச் சாதிகளைத்தான் அவர்கள் பின்பற்றி, —
தங்கள் பராபரனாகிய கர்த்தரின் கற்பனைகளை ௰௬
யெல்லாம் விட்டுவிட்டு, இரண்டு கன்றுக்குட்டி
களாகிய வார்ப்பித்த சுரூபங்களைத் தங்களுக்கு
உண்டாக்கி, விக்கிரகத் தோப்புகளை நாட்டி,
வானத்தின் சேனையையெல்லாம் பணிந்துகொ
ண்டு பாகாலைச் சேவித்தார்கள்.—அவர்கள் தங் ௰௭
கள் குமாரரையும் தங்கள் குமாரத்திகளையும் அக்
கினி மிதிக்கப்பண்ணி, நிமித்தங்களைப் பார்த்து,
சகுனங்களை நம்பி, கர்த்தருக்குக் கோபமுண்
டாக்க அவர் பார்வைக்குப் பொல்லாப்பான
தைச் செய்கிறதற்குத் தங்களை விற்றுப்போட்
டார்கள். — ஆகையால் கர்த்தர் இஸ்ரவேலின் ௰௮
மேல் மிகவும் கோபமடைந்து, அவர்களைத் தம்மு
டைய முகத்தைவிட்டு அகற்றினார்; யூதாகோத்
திரம்மாத்திரமே மீதியாயிற்று.—யூதாவும் தங்கள் ௰௯
பராபரனாகிய கர்த்தரின் கற்பனைகளைக் கைக்
கொள்ளாமல் இஸ்ரவேல் திட்டம்பண்ணின
வழிபாடுகளில் நடந்தார்கள்.

ஆகையால் கர்த்தர் இஸ்ரவேலின் வித்தானை ௨௰
யெல்லாம் புறக்கணித்து, அவர்களைத் தமது மு
கத்தைவிட்டுத் தள்ளும்மட்டாக ஒடுக்கி, அவர்க
ளைப் பறிகாரர் கையில் ஒப்புக்கொடுத்தார்.—
ஏனெனில் இஸ்ரவேல் தாவீது வீட்டாரைவிட் ௨௧
டுப்பிரிந்து, நேபாத்தின் குமாரனாகிய எரோபே
யாமை இராசாவாக்கினார்கள்; அப்போது எரோ
பேயாம் இஸ்ரவேலைக் கர்த்தரைவிட்டுப் பின்
வாங்கவும், பெரிய பாவத்தைச் செய்யவும் பண்
ணினான். — அப்படியே இஸ்ரவேல் புத்திரர் ௨௨
எரோபேயாம்செய்த எல்லாப் பாவங்களிலும்
நடந்துகொண்டு, — கர்த்தர் தீர்க்கதரிசிகளாகிய ௨௩
தம்முடைய எல்லா ஊழியக்காரரைக்கொண்டு
சொல்லியிருந்தபடி, தமது முகத்தைவிட்டு அகற்
றும்மட்டாக அவைகளை விட்டு விலகாதிருந்தார்
கள்; இப்படியே இஸ்ரவேல் இந்நாள்வரைக்கும்
தங்கள் சீமையிலே குடியாயிருந்து அசூரியாவுக்
குக் கொண்டுபோகப்பட்டது.

அசூரின் இராசாவோவெனில் பாபேலிலும், ௨௪
கூத்தாவிலும், ஆபாவிலும், ஆமாத்திலும், செப்
பார்வாமியிலுமிருந்து மனுஷரை வரப்பண்ணி,
அவர்களை இஸ்ரவேல் புத்திரருக்குப்பதிலாகச்
சமாரியாவின் பட்டணங்களிலே குடியேற்றி
னான்; இவர்கள் சமாரியாவைச் சொந்தமாய்க்
கட்டிக்கொண்டு அதின் பட்டணங்களிலே
குடியிருந்தார்கள்.—கர்த்தருக்குப் பயப்படாத ௨௫
அவர்கள் அங்கே குடியிருக்கத் துவக்கினபோ

தோவெனில், கர்த்தர் அவர்களுக்குள்ளே சிங்
கங்களை அனுப்பினார்; அவைகள் அவர்களிலே
௨௬ சிலரைக் கொன்றுபோட்டன. — அப்போது
அசூரின் இராசாவுக்கு, நீர் இங்கேயிருந்து அனு
ப்பி, சமாரியாவின் பட்டணங்களிலே குடி
யேற்றுவித்த சாதிகள் அந்தத் தேசத்தினுடைய
தேவனுடைய நியாயத்தை அறியாதபடியினாலே
அவர்களுக்குள்ளே சிங்கங்களை அனுப்பினார்;
இதோ அந்தத் தேசத்தினுடைய தேவனுடைய
நியாயத்தை அவர்கள் அறியாதபடியினாலே,
அவைகள் அவர்களைக் கொன்றுபோடுகின்றன
௨௭ என்று சொன்னார்கள். — அப்போது அசூரின்
இராசா, நீங்கள் அங்கேயிருந்து கொண்டுவந்த
ஆசாரியர்களில் ஒருவனை அங்கே அழைத்துக்
கொண்டுபோங்கள்; அவர்கள் போய் அங்கே
குடியிருக்கும்படிக்கு, இவன் அவர்களுக்கு அந்
தத் தேசத்தினுடைய தேவனுடைய நியாயத்
தைப் போதிக்கக்கடவனென்று கற்பித்தான்.—
௨௮ அப்புடியே அவர்கள் சமாரியாவிலிருந்துகொ
ண்டுபோயிருந்த ஆசாரியர்களில் ஒருவன் வந்து,
பேத்தேலிலே குடியிருந்து கர்த்தருக்குப் பயந்
துநடக்கிற விதத்தை அவர்களுக்குப் போதித்
௨௯ தான். — ஆனால் அந்தந்தச் சாதி அந்தந்தத் தே
வர்களைத் தங்களுக்குண்டாக்கி, ஒவ்வொரு சா
தியாகிய அந்தச் சமாரியர் குடியேறின தங்கள்
தங்கள் பட்டணங்களில் உண்டுபண்ணின மே
௩௰ டைகளின் வீடுகளில் வைத்தார்கள். — பாபே
லின் மனுஷர் சுக்கோத்பெனோத்தையும், கூத்
தின் மனுஷர் நேர்காலையும், ஆமாத்தின் மனு
௩௧ ஷர் அசிமாவையும்,—ஆபியர் நிபேகாசையும்,
தரத்தாக்கையும் உண்டாக்கினார்கள்; செப்பர
வியர் செப்பர்வாயிமின் தேவர்களாகிய ஆதர
மேலெகுக்கும் ஆனமேலெகுக்கும் தங்கள் பிள்
௩௨ ளைகளை அக்கினியால் தகனிப்பார்கள்.—அவர்
கள் கர்த்தருக்கும் பயந்தார்கள்; மேடைகளின்
வீடுகளிலும் தங்களுக்காக ஆராதனை செய்கிற
தற்காக, தங்களுக்குள் நீசமானவர்களிலே தங்க
௩௩ ளுக்கு ஆசாரியர்களை ஏற்படுத்தினார்கள்.—அப்
படியே கர்த்தருக்கும் பயந்து, தாங்கள் விட்டு
வந்த சாதிகளுடைய முறைமையின்படியே தங்
கள் தேவர்களையும் சேவித்திருந்தார்கள்.

௩௪ இந்நாள்வரைக்கும் அவர்கள் தங்கள் முந்தின
முறைமைகளின்படியே செய்கிறார்கள்; அவர்
கள் கர்த்தருக்குப் பயந்து நடக்கிறதுமில்லை;
தங்கள் சுய திட்டங்கள் முறைமைகளின்படியா
கிலும், கர்த்தர் இஸ்ரவேலென்று பேரிட்ட
யாக்கோபின் புத்திரருக்குக் கற்பித்த நியாயப்பி
ரமாணத்திற்கும் கற்பனைக்கும் ஒத்தபடியென்கி
௩௫ லும் செய்கிறதுமில்லை.—அதேதெனில் கர்த்தர்
இவர்களோடே உடம்படிக்கைபண்ணி இவர்
களுக்குக் கற்பித்ததாவது: நீங்கள் வேறே தேவர்
களுக்குப் பயப்படாமலும், அவர்களைப் பணிந்
துகொள்ளாமலும், சேவிக்காமலும், அவர்களுக்
௩௬ குப் பலியிடாமலும்,—உங்களை மகா வல்லமை
யினாலும் நீட்டின புயத்தினாலும் எகிப்துதேசத்
திலிருந்து ஏறிவரப்பண்ணின கர்த்தருக்கே பய
ந்து, அவரையே பணிந்துகொண்டு, அவருக்கே
பலியிட்டு,-அவர் உங்களுக்கு எழுதிக்கொடுத்த ௩௭
திட்டங்களின்படியும், முறைமைகளின்படி
யும், நியாயப்பிரமாணத்தின்படியும் கற்பனைக
ளின்படியுமே, நீங்கள் சகலநாளும் செய்கிறதற்
குக் கவனமாயிருந்து, வேறே தேவர்களுக்குப்
பயப்படாதிருங்கள்.-நாம் உங்களோடே பண் ௩௮
ணின உடம்படிக்கையை மறக்காமலும், வேறே
தேவர்களுக்குப் பயப்படாமலும், — உங்கள் ௩௯
பராபரனாகிய கர்த்தருக்கே பயந்து நடப்பீர்க
ளாக; அப்போது அவர் உங்களை உங்கள் எல்லாச்
சத்துருக்களின் கைக்கும் தப்புவிப்பாரென்று
அவர்களுக்குக் கற்பித்திருந்தார்—ஆனால் அவர் ௪௰
கள் கேள்விகொடாமல் தங்கள் முந்தின முறை
மைகளின்படியே செய்தார்கள்.

அப்படியே அந்தச் சாதிகள் கர்த்தருக்கும் ௪௧
பயந்து தங்கள் விக்கிரகங்களையும் சேவித்திருந்
தார்கள்; அவர்கள் பிள்ளைகளும் அவர்கள் பிள்
ளைகளின் பிள்ளைகளும் தங்கள் பிதாக்கள் செய்
தபடியே இந்நாள்வரைக்கும் செய்கிறார்கள்.

## ௰அ. அதிகாரம்.

௧. எசேக்கியாவின் நல்ல ஆளுகை. ௪. அவன் விக்கிரக ஆராதனையைத் தடுத்து வாழ்ந்தது. ௯. சமாரியாதேசத்தார் தங்கள் பாவத்துக்காகச் சிறை கொண்டுபோகப்பட்டது. ௰௩. சனகேரிப் யூதாவில் ஏறிவந்தபோது, திரவியம் வாங்கிக்கொண்டு சம்மதப்பட்டது. ௰௭. மறுபடியும் சனகேரிப்பினால் அனுப்பப்பட்டு, ரப்சாக்கே எசேக்கியாவை நிந்தித்து, தூஷணவார்த்தைகளினால் சனங்களைக் கலகப்படுத்தினது.

இஸ்ரவேலின் இராசாவாகிய ஏலாவின் குமா ௧
ரன் ஓசேயாவின் மூன்றாம் வருஷத்திலோ
வென்றால் ஆகாசென்ற யூதாவுடைய இராசா
வின் குமாரனாகிய எசேக்கியா இராசாவானான்.—
அவன் இராசாவாகிறபோது, இருபத்தைந்து வ ௨
யதாயிருந்து எருசலேமிலே இருபத்தொன்பது
வருஷம் அரசாண்டான்; சகரியாவின் குமாரத்
தியாகிய அவன் தாயின்பேர் ஆபி.—அவன் தன் ௩
தகப்பனாகிய தாவீது செய்தபடியெல்லாம் கர்த்
தரின் பார்வைக்குச் செம்மையானதைச் செய்
தான்.

அவன் மேடைகளை அகற்றி, சிலைகளைத் ௪
தகர்த்து, விக்கிரகத்தோப்பை வெட்டி, மோசே
பண்ணியிருந்த வெண்கலச்சர்ப்பத்தை உடைத்
துவிட்டான்; ஏனென்றால் அந்நாள்கள்மட்டும்
இஸ்ரவேல் புத்திரர் அதற்குத் தூபம்காட்டினார்
கள்; அதை வெண்கலத் துண்டென்று சொன்
னான். — அவன் இஸ்ரவேலின் பராபரனாகிய ௫
கர்த்தரின்மேல் வைத்த நம்பிக்கையிலே, அவ
னுக்குப்பிற்பாடும் அவனுக்கு முன்னுமிருந்த
யூதாவின் இராசாக்களிலெல்லாம் அவனைப்போ
லொத்தவன் இருந்ததில்லை.—அவன் கர்த்தரை ௬
விட்டுப் பின்வாங்காமல் அவரைச் சார்ந்திருந்து,
கர்த்தர் மோசேக்குக் கற்பித்த அவர் கற்பனைக
ளைக் கைக்கொண்டான்.

ஆகையால் கர்த்தர் அவனோடிருந்தார்; அவன் ௭
செய்யப் புறப்படுகிற காரியமெல்லாம் அவனுக்

கு கைகூடிவந்தன; அவன் அசூரின் இராசா
வைச் சேவிக்காமல் அவனை விட்டு மருளவிழுந்
௮ தான்.—அவன் பெலிஸ்தியரைக் காசாமட்டுக்
கும் அதின் எல்லைகள் பரியந்தமும், சாமக்காக்
கிற கோபுரங்களைத்துவக்கி அரணான பட்டணங்
கள் பரியந்தமும் இடறடித்தான்.
௯ இஸ்ரவேலின் இராசாவாகிய ஏலாவின் குமா
ரன் ஓசேயாவின் ஏழாம்வருஷத்திலும் எசேக்
கியா இராசாவின் நாலாம்வருஷத்திலும் சம்ப
வித்ததேதென்றால், அசூரின் இராசாவாகிய சல்
மனாசார் சமாரியாவுக்கு விரோதமாய் ஏறிவந்து,
௰ அதை முற்றிக்கைபோட்டான். — மூன்றுவரு
ஷம் சென்றபிற்பாடு, அவர்கள் அதை எசேக்கி
யாவின் ஆறும் வருஷத்திலே பிடித்தார்கள்;சமா
ரியா பிடிபட்டது,இஸ்ரவேலின் இராசாவாகிய
ஓசேயாவின் ஒன்பதாம் வருஷமாயிருந்தது.—
௰௧ அசூரின் இராசா இஸ்ரவேலை அசூரியாவுக்குச்
சிறைபிடித்துக்கொண்டுபோய், கோசான் நதி
யோரமான ஆலாகிலும் ஆபோரிலும் மேதியரின்
பட்டணங்களிலும் இருக்கப்பண்ணினான். —
௰௨ ஏனென்றால் அவர்கள் தங்கள் பராபரனாகிய
கர்த்தருடைய சத்தத்திற்குச் செவிகொடாமல்,
அவருடைய உடம்படிக்கையையும் கர்த்தரின்
தாசனாகிய மோசே கற்பித்த யாவையும் மீறி,
அதற்குச் செவிகொடாமலும் அதின்படி செய்
யாமலும் இருந்தார்கள்.
௰௩ யூதாவின் இராசாவாகிய எசேக்கியாவின்
பதினாலாம்வருஷத்திலேயென்றால், அசூரின்
இராசாவாகிய சனகேரிப் யூதாவிலிருக்கிற அர
ணான சகல பட்டணங்களுக்கும் விரோதமாய்
௰௪ ஏறிவந்து அவைகளைப் பிடித்தான்.—அப்போது
யூதாவின் இராசாவாகிய எசேக்கியா லாகீசிலி
ருக்கிற அசூரின் இராசாவுக்கு நான் குற்றம்
செய்தேன்; என்னைவிட்டுத் திரும்பிப்போம்; நீர்
என்மேல் சுமத்துவதைச் சுமப்பேனென்று சொ
ல்லி அனுப்பினான்;அப்படியே அசூரின் இராசா
யூதாவின் இராசாவாகிய எசேக்கியாவின்மேல்
முந்நூறு தாலந்து வெள்ளியையும் முப்பது
௰௫ தாலந்து பொன்னையும் சுமத்தினான். — ஆனது
கொண்டு எசேக்கியா கர்த்தரின் வீட்டிலும் இரா
சாவுடைய வீட்டுப் பொக்கிஷங்களிலும் அகப்
பட்ட எல்லா வெள்ளியையும் கொடுத்தான்.—
௰௬ அக்காலத்திலே யூதாவின் இராசாவாகிய எசேக்
கியா கர்த்தருடைய தேவாலயக் கதவுகளிலும்
நிலைகளிலும் தான் அழுத்தியிருந்த பொன்தகடுக
ளைக் கழற்றி, அவைகளை அசூரின் இராசாவுக்குக்
கொடுத்தான்.
௰௭ ஆகிலும் அசூரின் இராசா லாகீசிலிருந்து தற்
தானையும் ரப்சாரீசையும் ரப்சாக்கேயையும் கன
இராணுவத்தோடே எருசலேமுக்கு எசேக்கியா
இராசாவண்டைக்கு அனுப்பினான்; இவர்கள்
எருசலேமுக்கு ஏறிவந்து, வண்ணார் துறையின்
வழியிலுள்ள மேல்குளத்துச் சாலகத்தண்டை
௰௮ யிலே நின்று,—இராசாவை அழைத்தனுப்பினார்
கள்; அப்போது இல்க்கியாவின் குமாரன் எலி
யாக்கீமென்ற அரமனை விசாரிப்புக்காரனும்,
செப்னாவென்ற சம்பிரதியும், ஆசாப்பின் குமா
ரனாகிய யோவாவென்ற கணக்கனும் அவர்கள
ண்டையிலே புறப்பட்டுப் போனார்கள்.
ரப்சாக்கே அவர்களோடே சொன்னதாவது: ௰௯
அசூரின் இராசாவாகிய பெரிய அரசனானவர்
உரைக்கிறதும் நீங்கள் எசேக்கியாவுக்குச் சொல்
லவேண்டியதும் ஏதெனில், நீ நம்பியிருக்கிற
இந்த நம்பிக்கை ஏது?—யுத்தத்திற்கு யோசனையும் ௨௰
பலனும் உண்டென்று நீ சொல்லுகிறது உதடுக
ளின் வசனிப்புமாத்திரம்தானே; இப்போதும்
நீ என்னைவிட்டு மருளவிழுந்ததற்கு யாரை நம்பி
யிருக்கிறாய்?—இப்போதும் இதோ முறிந்த அந்த ௨௰௧
நாணல் கோலாகிய எகிப்தியனை நம்புகிறாய்;
அதின்மேல் ஒருவன் சாய்ந்தால் அது அவன்
உள்ளங்கையில் பட்டு உருவிப்போம்; அப்படி
எகிப்தின் இராசாவாகிய பார்வோன் தன்னை
நம்புகிற யாவருக்கும் இருக்கிறான். — நீங்கள் ௨௰௨
என்னுடனே எங்கள் பராபரனாகிய கர்த்தரை
நம்புகிறோம் என்றீர்களேயாகில், அவருடைய
மேடைகளையும் அவருடைய பலிபீடங்களையு
மல்லவோ எசேக்கியா அகற்றி,யூதாவோடும் எரு
சலேமியரோடும் எருசலேமிலிருக்கிற இந்தப்
பலிபீடத்தின்முன் பணியுங்களென்றானே.—
இப்போதும் உனக்கு இரண்டாயிரம் குதிரைக ௨௰௩
ளைக் கொடுப்பேன்; அவைகள்மேல் ஏறத்தக்க
வர்களைச் சம்பாதித்துக்கொள்ள, உனக்குக் கூடு
மோ என்று அசூரின் இராசாவாகிய என் ஆண்ட
வனோடே நீ சபதம் கூறு.—பின்னை எப்படி நீ ௨௰௪
என் ஆண்டவனுடைய சிறிய ஊழியக்காரரில்
ஒரே ஒரு தலைவனின் முகத்தைத் திருப்புவாய்?
இரதங்களும் குதிரைக்காரரும் உனக்கு வரு
மென்று எகிப்தியனையோ நம்புகிறாய்? — இப் ௨௰௫
போதும் இந்த ஸ்தலத்தை அழிக்க, கர்த்தரை
அல்லாமல் அதின்மேல் ஏறிவந்தேனோ? இந்தத்
தேசத்தின்மேல் ஏறிப்போய் அதை அழியென்று
கர்த்தர் என்னோடே சொன்னாரென்று சொன்
னான்.
அப்போது இல்க்கியாவின் குமாரன் எலியாக் ௨௰௬
கீமும் செப்னாவும் யோவாகும் ரப்சாக்கேயுட
னே,உம்முடைய அடியாரோடே சூரியபாஷை
யிலே பேசும்; அதை அறிந்திருக்கிறோமே; அ
லங்கத்திலிருக்கிற சனத்தின் செவிகளிலே பட
எங்களோடே யூதர் பாஷையிலே பேசீராக என்
றார்கள்.—ரப்சாக்கேயோவென்றால் அவர்களுட ௨௰௭
னே, உங்களோடும்கூடத் தங்கள் கஷ்டத்தைத்
தின்னவும் தங்கள் நீரைக் குடிக்கவும் அலங்கத்
திலே தங்கியிருக்கிற மனுஷரண்டைக்கே அல்
லாமல், உன் ஆண்டவரண்டைக்கும் உன்ன
ண்டைக்கும் என் ஆண்டவன் என்னை இந்த
வார்த்தைகளைப் பேச அனுப்பினாரோ என்று
சொல்லி,
ரப்சாக்கே நின்றுகொண்டு யூதர் பாஷையிலே ௨௰௮
மகா சத்தமாய்க் கூப்பிட்டுச் சொன்னதாவது:
அசூரின் இராசாவாகிய பெரிய அரசனுடைய

௨௯ வார்த்தையைக் கேளுங்கள்.—எசேக்கியா உங்களை எத்த ஒட்டாதேயுங்கள்; ஏனெனில் அவன் உங்களை அவர் கைக்குத் தப்புவிக்கமாட்டான்.—
௩௰ கர்த்தர் நம்மைத் தப்பவே தப்பப்பண்ணுவார்; இந்தப் பட்டணம் அசூரிய இராசாவின் கையில் ஒப்புக்கொடுக்கப்படுவதில்லையென்று எசேக்கியா உங்களைக் கர்த்தனை நம்பப்பண்ணவும் ஒட்டாதேயுங்களென்று இராசா சொல்லுகிறார்.—
௩௧ எசேக்கியாவின் சொல்லைக் கேளாதிருங்கள்; ஏனெனில் அசூரின் இராசா சொல்லுகிறதாவது: நீங்கள் நன்மையாக நமக்கிணங்கி நம்மண்டை
௩௨ யிலே புறப்பட்டு,—நாம் வந்து, உங்களை உங்கள் தேசத்தைப்போலிருக்கிற தானியமும் திராட்சப்பழ இரசமுமுள்ள தேசமும், அப்பமும் திராட்சத்தோட்டமுமுள்ள தேசமும், எண்ணெய்தருகிற ஒலிவமரங்களும் தேனுமுள்ள தேசமுமாகிய சீமைக்கு அழைத்துக்கொண்டு போகுமளவும், அவரவர் தம்தம் திராட்சச்செடியின் கனியையும் தம்தம் அத்திமரத்தின் கனியையும் புசித்து, அவரவர் தம்தம் கிணற்றின் தண்ணீரைக் குடியுங்கள்; அப்படியே நீங்கள் சாவாமல் பிழைப்பீர்கள்; கர்த்தர் நம்மைத் தப்புவிப்பாரென்று உங்களைப் பயிற்றுவிக்கிற எசே
௩௩ க்கியாவுக்குச் செவிகொடாதிருங்கள். — சாதிகளின் தேவர்கள் அவரவர் தங்கள் தேசத்தை அசூருடைய இராசாவின் கைக்குத் தப்புவிக்க
௩௪ வே தப்புவித்ததுண்டோ?—ஆமாத், அர்பாத் பட்டணங்களின் தேவர்கள் எங்கே? செப்பர்வாயிம், ஏனா, ஈபாப் பட்டணங்களின் தேவர்கள் எங்கே? சமாரியாவை நமது கைக்குத் தப்புவித்
௩௫ தார்களோ?—கர்த்தர் எருசலேமை நமது கைக்குத் தப்புவிக்கத்தக்கதாக, அந்தத் தேசங்களின் எல்லாத் தேவர்களிலே தங்கள் தேசத்தை நம்முடைய கைக்குத் தப்புவித்தவர் யார் என்கிறாரென்று சொன்னான்.

௩௬ ஆனால் சனம் அவனுக்கு ஒரு வார்த்தையையும் பிரதியுத்தாரமாகச் சொல்லாமல் மவுனமாயிருந்தார்கள்; ஏனெனில் அவனுக்கு மறு உத்தரவு சொல்லாதிருங்களென்று இராசாவின் கட்டளை உண்டாயிருந்தது.

௩௭ அப்போது இல்க்கியாவின் குமாரன் எலியாக்கீமென்ற அரமனை விசாரிப்புக்காரனும், செப்னாவென்ற சம்பிரதியும், ஆசாபின் குமாரன் யோவாகென்ற கணக்கனும், வஸ்திரங்களைக் கிழித்துக்கொண்டவர்களாய் எசேக்கியாவண்டைக்கு வந்து, அவனுக்கு ரப்சாக்கேயின் வார்த்தைகளை அறிவித்தார்கள்.

## ௰௯. அதிகாரம்.

௧. எசேக்கியா மனஸ்தாபப்பட்டு செபம்பண்ண, ஏசாயாவிடத்திற்கு ஆள் அனுப்பினது. ௬. ஏசாயா அவர்களுக்கு ஆறுதல்செய்தது. ௮. சனகேரிப் திர்காகாவுடனே யுத்தம்பண்ணப்போய், எசேக்கியாவினிடத்துக்குத் தேவதூஷணமான நிருபம் அனுப்பினது. ௰௪. எசேக்கியாவின் விண்ணப்பம். ௨௰. சீயோன்பர்வதத்தின் நன்மையையும், சனகேரிப்பின் அகந்தையையும், நாசத்தையும் ஏசாயா தீர்க்கதரிசனமாகச் சொன்னது. ௩௫. ஒரு தேவதூதன் அசூரின் பாளயத்தைச் சங்கரித்தது. ௩௭. நினிவேயில் சனகேரிப் தன் குமாரர்களாலே கொல்லப்பட்டது.

இராசாவாகிய எசேக்கியா அதைக் கேட்டபோது ௧
தோவெனில், அவன் தன் வஸ்திரங்களைக் கிழித்து, இரட்டு உடுத்துக்கொண்டு, கர்த்தருடைய வீட்டிற்குள் பிரவேசித்து, — அரமனை விசாரிப் ௨
புக்காரனாகிய எலியாக்கீமையும், சம்பிரதியாகிய செப்னாவையும், ஆசாரியர்களின் மூப்பரையும், ஆமோத்சின் குமாரனாகிய ஏசாயாவென்ற தீர்க்கதரிசியண்டைக்கு இரட்டு உடுத்திக்கொண்டவர்களாக அனுப்பினான்.—அவர்கள் அவனுட ௩
னே, இந்த நாள் நெருக்கமும் சீறுமாறும் தூஷணமும் அநுபவிக்கிற நாள்; ஏனெனில் பிள்ளைகள் பேறுநோக்கச் சமீபித்தது; ஆனால் பெறப்பலனில்லை.—சீவனுள்ள பராபரனை நிந்திக்க ௪
வும், உன் பராபரனாகிய கர்த்தர் கேட்டிருக்கிற வார்த்தைகளாலே சீறுமாறுபண்ணவும், அசூரின் இராசாவாகிய தன் ஆண்டவனால் அனுப்பப்பட்ட ரப்சாக்கேயின் வார்த்தைகளையெல்லாம் உன் பராபரனாகிய கர்த்தர் கேட்பாராக்கும்; ஆகையால் இன்னும் மீந்திருக்கிறவர்களுக்காக விண்ணப்பம் செய்வாயாகவென்று எசேக்கியா சொல்லச் சொன்னாரென்று,

எசேக்கியா இராசாவின் ஊழியக்காரர் ஏசாயா ௫
வண்டையில் வந்து சொன்னார்கள்.—அப்போது ௬
ஏசாயா அவர்களுடனே, அசூரியாவின் இராசாவின் ஊழியக்காரர் நம்மைத் தூஷணித்ததும் நீ கேட்டதுமான வார்த்தைகளினாலே பயப்படாதே.—இதோ அவன் ஒரு செய்தியைக் கேட்டு, தன் தேசத்திற்குத் திரும்புவதற்கான ஆவியை நாம் அவனுக்குக் கொடுத்து, அவனை அவன் தேசத்திலே பட்டையத்தால் விழப்பண்ணுவோமென்று கர்த்தர் உரைக்கிறார் என்கிறதை உங்கள் ஆண்டவனோடே சொல்லுங்களென்றான்.

ரப்சாக்கே திரும்பிப்போகிறபோது, அசூரின் ௮
இராசா லாகீசைவிட்டுப் புறப்பட்டானென்று கேட்டு, அவனை லீப்னாவின்மேல் யுத்தம்பண்ணக்கண்டான்.—ஆனால் இதோ எத்தியோப்பி ௯
யாவின் இராசாவாகிய திர்காக்கா உம்மோடு யுத்தம்பண்ணப் புறப்பட்டானென்று செய்தியைக் கேட்டான்; அப்போது அவன் திரும்ப எசேக்கியாவண்டைக்குத் தானாபதிகளை அனுப்பிச் சொன்னதாவது: — நீங்கள் யூதாவின் இராசா ௰
வாகிய எசேக்கியாவுக்குச் சொல்லவேண்டியதேதெனில், எருசலேம் அசூரிய இராசாவின் கையில் ஒப்புக்கொடுக்கப்படுவதில்லையென்று நீ நம்பியிருக்கிற உன் தேவன் உன்னை எத்த ஒட்டாதே.—இதோ அசூரின் இராசாக்கள் எல்லாத் ௰௧
தேசங்களுக்கும் அவைகளைச் சங்கரிக்கும்படிக்குச் செய்ததை நீ கேட்டாயே, நீ தப்புவாயோ?—என் பிதாக்கள் அழித்துவிட்ட கோசா ௰௨
னும் ஆரானும் ரேத்சேப்பும் தெலாசாரிலிருந்த ஏதேனின் புத்திரருமென்ற சாதிகளை அவர்களுடைய தேவர்கள் தப்புவித்ததுண்டோ?—ஆமா ௰௩
தின் இராசாவும், அர்பாதின் இராசாவும், செப்

பர்வாயிம், ஏனா, ஈபா பட்டணங்களின் இராசா
வும் எங்கே என்று சொல்லுங்களென்றான்.
௰௪ எசேக்கியா தானாபதிகளின் கையிலே நிரு
பங்களை வாங்கி, அவைகளை வாசித்தபிற்பாடு,
எசேக்கியா கர்த்தரின் வீட்டிற்குப் போயேறி,
அவைகளைக் கர்த்தருக்குமுன்பாக விரித்து,—
௰௫ கர்த்தருக்குமுன்பாகப் பண்ணின விண்ணப்ப
மாவது: கேருபீன்களின்மேலே வாசம்பண்ணு
கிற இஸ்ரவேலின் பராபரனாகிய கர்த்தாவே, தே
வரீர் ஒருவரே பூமியின் இராச்சியங்களுக்கெல்
லாம் தேவனானவர்; தேவரீர் வானத்தையும் பூமி
௰௬ யையும் உண்டாக்கினீர். — கர்த்தாவே, உமது
செவியைச் சாய்த்துக் கேளும், கர்த்தாவே, நீர்
உம்முடைய கண்களைத் திறந்துபார்த்து, சனகே
ரிப் சீவனுள்ள பராபரனை நிந்திக்கும்படிக்கு
௰௭ அனுப்பின வார்த்தைகளைக் கேளும்.—மெய்தான்
கர்த்தாவே, அசூரின் இராசாக்கள் அந்தச் சாதிக
ளையும் அவர்கள் தேசத்தையும் பாழ்க்கடித்து,—
௰௮ அவர்களுடைய தேவர்களை நெருப்பிலே போட்
டார்கள்; ஏனெனில் அவைகள் தேவர்களாயிரா
மல், மனுஷர் கைகளின் வேலையாகிய மரமும்
கல்லுமாயிருந்தன; ஆகையால் அவைகளை நிர்த்
௰௯ தூளியாக்கினார்கள்.—இப்போதும் எங்கள் பரா
பரனாகிய கர்த்தாவே, தேவரீர் ஒருவரே பராபர
னாகியகர்த்தரென்று பூமியின் இராச்சியங்களெல்
லாம் அறியும்படிக்கு, எங்களை அவன் கைக்கு
நீங்கலாக்கி இரட்சியுமே என்றான்.
௨௰ அப்போது ஆமோத்சின் குமாரனாகிய எசாயா
எசேக்கியாவுக்குச் சொல்லி அனுப்பினதாவது:
இஸ்ரவேலின் பராபரனாகிய கர்த்தர் உரைக்கிற
தேதெனில், நீ அசூரின் இராசாவாகிய சனகே
ரிப்பின்நிமித்தம் நம்மை நோக்கிப் பண்ணின
௨௧ விண்ணப்பத்தைக் கேட்டோம். — அவனைக்
குறித்துக் கர்த்தர் சொல்லுகிற வசனமாவது:
சீயோன் குமாரத்தியாகிய கன்னியாஸ்திரி உன்
னை இகழ்ந்து உன்னை ஆகடியம்பண்ணுகிறாள்;
எருசலேம் குமாரத்தி உன் பிறகாலே தலையைத்
௨௨ துலுக்குகிறாள். — யாரை நிந்தித்துத் தூஷணித்
தாய்? யாருக்கு விரோதமாய்ச் சத்தத்தை உயர்த்
தினாய்? நீ இஸ்ரவேலின் பரிசுத்தருக்கு விரோ
தமாயல்லவோ உன் கண்களை மேட்டிமையாய்
௨௩ ஏறெடுத்தாய்? — உன் தானாபதிகளைக்கொண்டு
நீ ஆண்டவரை அல்லவோ நிந்தித்து, என் இர
தங்களின் திரட்சியினாலே நான் லீபனோனின்
பக்கங்களாகிய மலைகளின் உயரத்தில் ஏறி
னேன், அதில் ஓங்கலான அதின் கேதுருக்களை
யும், தெரிந்துகொள்ளப்பட்ட அதின் தேவதாரி
விருட்சங்களையும் நான் வெட்டி, அதின் கடை
சித் தாபரமாகிய அதின் செழுமையான காடு
௨௪ மட்டும் வருவேனென்றும்,-நான் வெட்டின அந்
நியதேசங்களின் தண்ணீர்களைக் குடித்தேன்,
என் கால்களின் அடியினால் எகிப்தின் ஆறுக
ளையெல்லாம் வறளவும் பண்ணுவேனென்றும்
௨௫ சொன்னாய்.—நாம் வெகுகாலத்திற்குமுன் அதை
உண்டாக்கி, பூர்வநாள்கள்முதற்கொண்டு அ
தைச் செப்பனிட்டிருக்கிறோமென்பதை நீ கே
ட்டதில்லையோ? இப்போது நீ அரணான பட்ட
ணங்களைப் பாழான மண்மேடுகள் ஆக்கும்ப
டிக்கு அதை நாம் வரப்பண்ணினோம். — அதி ௨௬
னாலே அவைகளின் குடிகள் கைகுறுகினவர்க
ளாகி, கலங்கி, வெட்கப்பட்டு, வெளியின் பூண்
டுக்கும், பச்சிலைக்கும், மேல்கூரைகளின் புல்
லிற்கும், ஓங்கிவளராததற்குமுன் தீய்ந்துபோன
பயிருக்கும் சமானமானார்கள். — ஆனால் உன் ௨௭
குடியிருப்பையும், உன் புறப்படுதலையும், உன்
வருகையையும், நீ நமக்கு விரோதமாய்க் கொந்த
ளிக்கிறதையும் அறிவோம். — ஆனதுகொண்டு ௨௮
நீ நமக்கு விரோதமாய்க் கொந்தளித்து, உன்
பெத்தரிக்கம் நம்முடைய செவிகளில் ஏறினப
டியினாலே, நாம் நம்முடைய துறட்டை உன்
மூக்கிலும் நம்முடைய கடிவாளத்தை உன் உத
டுகளிலும் போட்டு, நீ வந்தவழியே உன்னைத்
திருப்பிக்கொண்டுபோவோம் என்று அவனைக்
குறித்துச் சொல்லுகிறார்.—உனக்கோவெனில் ௨௯
அடையாளமாயிருப்பதாவது: இந்த வருஷத்தி
லே தப்பிப் பயிராகிறதையும் இரண்டாம்வரு
ஷத்திலே தானாய் விளைகிறதையும் சாப்பிடு;
மூன்றாம் வருஷத்திலோ விதைத்து அறுத்து,
திராட்சத்தோட்டங்களை நாட்டி, அவைகளின்
கனிகளைப் புசியுங்கள்.—யூதாவின் வீட்டாரில் ௩௰
தப்பி மீதியானது அப்புறம் தாழ வேர்பற்றி உய
ரக் கனிகொடுக்கும்.—ஏனெனில் மீதியானவர் ௩௧
கள் எருசலேமிலும் தப்பினவர்கள் சீயோன்
பர்வதத்திலும் இருந்து புறப்படுவார்கள்; சேனை
களுடைய கர்த்தரின் சுறுசுறுப்பு அதை நடப்
பிக்கும்.—ஆகையால் கர்த்தர் அசூரின் இராசா ௩௨
வைக்குறித்து உரைக்கிறதாவது: அவன் இந்தப்
பட்டணத்திற்குள்படுவதுமில்லை; அதற்குள்
அம்பை எய்வதுமில்லை; அதற்குமுன் கேடயத்
தோடே வருவதுமில்லை; அதற்கு எதிராகக்
கொத்தளம் போடுவதுமில்லை.—அவன் இந்தப் ௩௩
பட்டணத்திற்குள் பிரவேசியாமல், தான் வந்த
வழியே திரும்பிப்போவான்.—ஏனெனில் நம் ௩௪
முடைய நிமித்தமும் நம்முடைய தாசனாகிய
தாவீதின்நிமித்தமும் நாம் இந்தப் பட்டணத்தை
இரட்சிக்கும்படிக்கு, அதை ஆதரிப்போம் என்
பதைக் கர்த்தர் உரைக்கிறாரென்று சொல்லி அ
னுப்பினான்.
அன்று இராத்திரியில் சம்பவித்ததேதெனில், ௩௫
கர்த்தருடைய தூதன் புறப்பட்டு அசூரியரின்
பாளயத்தில் நூற்றெண்பத்தையாயிரம்பேரைச்
சங்கரித்தான்; அவர்கள் அதிகாலமே எழுந்திருக்
கும்போது, இதோ அவர்களெல்லாரும் செத்த
சவங்களாய்க் கிடந்தார்கள்.—அப்போது அசூ ௩௬
ரின் இராசாவாகிய சனகேரிப் பயணப்பட்டு,
திரும்பிப்போய், நினிவேயில் இருந்துவிட்
டான். — அவன் தன் தேவனாகிய நிஸ்ரோகின் ௩௭
வீட்டிலே பணிந்துகொள்ளுகிறபோதோவெ
னில், அவன் குமாரராகிய ஆதாரமேலேகும்
சரேத்சேரும் அவனைப் பட்டயத்தாலே வெட்

டிப்போட்டு, ஆரராத் தேசத்திற்குத் தப்பி ஓடி
னார்கள்; அவன் குமாரனாகிய எசர்காதோனே
அவன் பட்டத்திற்கு வந்து அரசாண்டான்.

## ௨௰. அதிகாரம்.

*௧. எசேக்கியா சாகத்தக்க வியாதியாயிருந்தபோது, கர்த்தரை நோக்கி விண்ணப்பம்பண்ணி, தன் உயிரைப் பெற்றது. ௮. அதற்கு அடையாளமாகச் சூரிய சாயை பத்துவரி பின்னிட்டுப்போனது. ௰௨. அந்த அதிசயத்துக்காகப் பாபேலின் இராசா நிருபங்களையும் வெகுமானத்தையும் அனுப்பி, எசேக்கியாவின் பொக்கிஷத்தை அறிந்தது. ௰௪. அதினாலே பாபிலோனுக்குக் கொண்டுபோகப்பட்டதை எசாயா அறிவித்தது. ௨௰. மனாசே எசேக்கியாவுக்குப்பின் அரசாண்டது.*

௧ அந்நாள்களில் எசேக்கியா சாவத்தக்கவிதமாய்
வியாதிப்பட்டிருந்தான்; அப்போது ஆமோத்
சின் குமாரனாகிய எசாயாவென்ற தீர்க்கதரிசி
அவனண்டைக்கு வந்து அவனுடனே, நீ உன்
வீட்டுக்காரியத்தைத் திட்டப்படுத்து; ஏனெனில்
நீ பிழைக்காமல் மரிப்பாயென்று கர்த்தர் சொல்
௨ லுகிறாரென்றான்.—அப்போது எசேக்கியா தன்
முகத்தைச் சுவர்ப்புறமாகத் திருப்பி, கர்த்தரை
௩ நோக்கி விண்ணப்பம்பண்ணி,—ஆ கர்த்தாவே,
நான் உமக்குமுன்பாக உண்மையும் மன உத்த
மமுமாய் நடந்துகொண்டு, உமது பார்வைக்கு
நலமானதைச் செய்தேன் என்கிறதை நினையுமே
என்று மிகுதியுமாய் அழுதான்.

௪ அப்போது சம்பவித்ததேதென்றால், எசாயா
பாதி முற்றத்தை விட்டு அப்புறப்படாததற்கு
முன்னே, கர்த்தருடைய வார்த்தை அவனுக்கு
௫ உண்டாய் அவர் சொன்னதாவது: — நீ திரும்
பிக்கொண்டு, நமது சனத்தின் அதிபதியாகிய
எசேக்கியாவுடனே சொல்லவேண்டியது: உன்
தகப்பனாகிய தாவீதின் பராபரனாகிய கர்த்தர்
சொல்லுகிறதேதெனில், உன் விண்ணப்பத்
தைக் கேட்டோம்; உன் கண்ணீரைக் கண்
டோம்; இதோ நாம் உன்னைக் குணமாக்குகி
றோம்; மூன்றாம்நாளிலே நீ கர்த்தருடைய வீட்
௬ டிலே போய் ஏறுவாய்.—நாம் உன் நாள்களோ
டே பதினைந்துவருஷங்களைக் கூட்டி, அசூரிய
இராசாவின்கைக்கு உன்னையும் இந்தப் பட்ட
ணத்தையும் தப்புவித்து, நம்முடையநிமித்தமும்
நம்முடைய தாசனாகிய தாவீதின்நிமித்தமும்
இந்தப் பட்டணத்தை ஆதரிப்போமென்று சொ
௭ ல்லென்றார். — எசாயா அதைச்சொல்லி, அத்
திப்பழத் துவையலைக் கொண்டுவாருங்களென்
றான்; அதை அவர்கள் கொண்டுவந்து, எரிபந்
தத்தின்மேல் பற்றுப் போட்டபோது அவன் பி
௮ ழைத்தான்.—எசேக்கியா எசாவுடனே, கர்த்தர்
என்னைக் குணமாக்குவதற்கும், மூன்றாம்நாளி
லே நான் கர்த்தரின் வீட்டிலே போய் ஏறுவதற்
௯ கும் அடையாளம் என்னவென்றான். — அப்
போது எசாயா, கர்த்தர் தாம் சொன்ன வார்த்
தையின்படியே செய்வாரென்கிறதற்கு, கர்த்த
ரால் உனக்குண்டாகும் அடையாளமாக நிழல்
பத்துவரி முன்னிட்டுப் போகவேண்டுமோ, பத்
துவரி பின்னிட்டுத் திரும்பவேண்டுமோவென்
௰ று கேட்டதற்கு,—எசேக்கியா, நிழல் பத்துவரி
இறங்குகிறது லேசான காரியம்; அப்படி வேண்
டாம்; நிழல் பத்துவரி பின்னிட்டுத் திரும்புவ
தாக என்றான்.—அப்போது எசாயா தீர்க்கதரிசி ௰௧
கர்த்தரை நோக்கிக் கூப்பிடுகையில், அவர் ஆகா
சுடைய சூரியகடியாரத்தில் வரிக்குவரி இறங்
கின நிழலைப் பத்துவரி பின்னிட்டுத் திரும்பப்
பண்ணினார்.

அக்காலத்திலே பலாதானின் குமாரனாகிய பெ ௰௨
ரோதாக் பலாதான் என்ற பாபேலின் இராசா
எசேக்கியா வியாதிப்பட்டிருந்ததைக் கேட்டு,
அவனண்டைக்கு நிருபங்களையும் வெகுமானத்
தையும் அனுப்பினான்.-எசேக்கியா அவர்களுக் ௰௩
குச் செவிகொடுத்தபிற்பாடு,அவர்களுக்குத் தன்
பொக்கிஷ சாலை அனைத்தையும், வெள்ளியை
யும், பொன்னையும், கந்தவர்க்கங்களையும், நல்ல
பரிமளதயிலத்தையும், தன் ஆயுதசாலை அனைத்
தையும் தன் பொக்கிஷங்களிலுள்ளதெல்லாவற்
றையும் காண்பித்தான்; தன் வீட்டிலும் தன்
ஆளுகை அனைத்தின் கீழிலும் எசேக்கியா அவர்
களுக்குக் காண்பியாத பொருளில்லை.

அப்போது எசாயா தீர்க்கதரிசி எசேக்கியா ௰௪
இராசாவண்டைக்கு வந்து, அவனுடனே, அந்த
மனுஷர் என்ன சொன்னார்கள், எங்கேயிருந்து
உம்மண்டைக்கு வந்தார்களென்றான்; அதற்கு
எசேக்கியா பாபேலென்ற தூரதேசத்திலிருந்து
வந்தார்கள்.—அப்போது அவன், உம்முடைய ௰௫
வீட்டில் என்னத்தைக் கண்டார்களென்றான்;
அதற்கு எசேக்கியா என் வீட்டிலுள்ளதெல்லா
வற்றையும் கண்டார்கள்; என் பொக்கிஷங்க
ளில் நான் அவர்களுக்குக் காண்பியாத பொரு
ளில்லை என்றான்.—அப்போது எசாயா எசேக் ௰௬
கியாவுடனே சொன்னதாவது: கர்த்தருடைய
வார்த்தையைக் கேளும்.—இதோ நாள்கள் வரும்; ௰௭
அப்போது உன் வீட்டிலுள்ளதிலும் உன் பிதாக்
கள் இந்நாள்வரைக்கும் சேர்த்ததிலும் ஒன்றும்
வைக்கப்படாமல் எல்லாம் பாபேலுக்குக் கொ
ண்டுபோகப்படும். — நீ பெற்றிருக்கும் உன் ௰௮
சந்தானமாகிய உன் பிள்ளைகளிலும் சிலரைப்
பாபேலுடைய இராசாவின் அரமனையிலே பி
ரதானிகளாயிருக்க எடுப்பார்களென்று கர்த்தர்
சொல்லுகிறாரென்றான்.—அப்போது எசேக்கி ௰௯
யா எசாயாவுடனே, நீ சொன்ன கர்த்தருடைய
வார்த்தை நல்லதேயென்று சொல்லி, என் நாள்
களிலல்லவோ சமாதானமும் உண்மையும் இரு
க்குமென்றான்.

எசேக்கியாவின் மற்ற வர்த்தமானங்களும், ௨௰
அவனுடைய எல்லா வல்லமையும், அவன் ஒரு
குளத்தையும் சாலகத்தையும் உண்டாக்கினதினா
லே தண்ணீரைப் பட்டணத்திற்குள்ளே வரப்
பண்ணினதும், யூதாவுடைய இராசாக்களின்
நாளாகமப் புஸ்தகத்திலல்லவோ எழுதியிருக்
கின்றது.—எசேக்கியா தன் பிதாக்களோடே ௨௧
நித்திரை அடைந்தபின், அவன் குமாரனாகிய
மனாசே அவன் ஸ்தலத்தில் இராசாவானான்.

## ௨௧. அதிகாரம்.

௧. மனாசேயின் ஆளுகை. ௩. அவனுடைய பொல்லாத விக்கிரக ஆராதனை. ௰. அவனுடைய கெட்ட நடக்கையினால் யூதாவுக்கு விரோதமான தீர்க்கதரிசனம் சொல்லப்பட்டது. ௰௭. அவனுக்குப்பின ஆமோன் அரசாளவந்தது. ௰௯. ஆமோனின் கெட்ட ஆளுகை. ௨௩. அவன் தன் வேலைக்காரர்களால் கொல்லப்பட அவர்களைச் சனங்கள் கொன்று, அவன் குமாரன் யோசியாவை இராசாவாக்கினது.

௧ மனாசே இராசாவாகிறபோது பன்னிரண்டு வய
தாயிருந்து, ஐம்பத்தைந்து வருஷம் எருசலே
மில் அரசாண்டான்; அவன் தாயின்பேர் எப்சி
௨ பாள்.—கர்த்தர் இஸ்ரவேல்புத்திரருக்குமுன்பா
கத் துரத்தின சாதிகளுடைய அருவருப்புகளின்
படியே, அவன் கர்த்தரின் பார்வைக்குப் பொல்
௩ லாப்பானதைச் செய்து,—தன் தகப்பனாகிய
எசேக்கியா இடித்துப்போட்ட மேடைகளைத்
திரும்பக் கட்டி, பாகாலுக்குப் பலிபீடங்களை
எடுப்பித்து, இஸ்ரவேலின் இராசாவாகிய ஆகாப்
செய்ததுபோல விக்கிரகத்தோப்பை உண்டாக்
கி, வானத்தின் சேனையையெல்லாம் பணிந்து
௪ கொண்டு அவைகளைச் சேவித்தான்.—எருசலே
மிலே நம்முடைய நாமத்தை வைப்போமென்
று கர்த்தர் சொல்லிக்குறித்த கர்த்தரின் வீட்டி
௫ லே அவன் பலிபீடங்களைக் கட்டி,—கர்த்தரு
டைய வீட்டின் இரண்டு பிரகாரங்களிலும் வா
னத்தின் சேனைக்கெல்லாம் பலிபீடங்களைக்
௬ கட்டி,—தன் குமாரனை அக்கினியை மிதிக்கப்
பண்ணி, நாள் பார்க்கிறவனும் நிமித்தம்பார்க்
கிறவனுமாயிருந்து, அஞ்சனம்பார்க்கிறவர்களை
யும் குறிசொல்லுகிறவர்களையும் வைத்து, கர்த்த
ருக்குக் கோபம் உண்டாக்க அவர் பார்வைக்
குப் பொல்லாப்பானதை மிகுதியாய்ச் செய்
௭ தான். — இந்த வீட்டிலும், நாம் இஸ்ரவேலின்
சகல கோத்திரங்களிலும் தெரிந்துகொண்ட எ
ருசலேமிலும், நம்முடைய நாமத்தை என்றைக்
கும் தங்கப்பண்ணுவோமென்று கர்த்தர் தாவீ
தோடும் அவன் குமாரனாகிய சாலோமோனோ
டும் சொல்லிக் குறித்த வீட்டிலே அவன் பண்
ணின தோப்பின் விக்கிரகத்தை வைத்தான்.—
௮ நாம் அவர்களுக்குக் கற்பித்ததெல்லாவற்றின்
படியேயும், நம்முடைய தாசனாகிய மோசே அ
வர்களுக்குக் கற்பித்த எல்லா நியாயப்பிரமா
ணத்தின்படியேயும் செய்ய சாக்கிரதையாய் இ
ருந்தார்களேயானால், நாம் இனி இஸ்ரவேலின்
காலை அவர்கள் பிதாக்களுக்கு நாம் கொடுத்த
தேசத்தைவிட்டு அலையப்பண்ணுவதில்லையெ
௯ ன்று சொல்லியிருந்தார்.—ஆனால் அவர்கள் கே
ளாதேபோனார்கள்; ஏனெனில் கர்த்தர் இஸ்ர
வேல் புத்திரருக்குமுன்பாக அழித்த சாதிகளைப்
பார்க்கிலும் பொல்லாப்பானதைச் செய்ய மனா
சே அவர்களை ஏய்த்துப்போட்டான்.
௰ ஆகையால் கர்த்தர் தீர்க்கதரிசிகளாகிய தம்மு
டைய ஊழியக்காரரைக்கொண்டு உரைத்ததா
௰௧ வது:—யூதாவின் இராசாவாகிய மனாசே தனக்கு
முன்னிருந்த எமோரியர் செய்ததெல்லாவற்றை
யும்பார்க்கிலும் கேடானபிரகாரமாக இந்த அரு
வருப்புகளைச் செய்து, தன்னுடைய நரகலான
தேவர்களால் யூதாவையும் பாவஞ்செய்யப்பண்
ணினபடியினாலே,—இஸ்ரவேலின் பராபரனா ௰௨
கிய கர்த்தர் சொல்லுகிறதேதெனில், இதோ கேட்
கப்போகிற யாவருடைய இரண்டு செவிகளும்
குறுகுறென்னத்தக்கவிதமான பொல்லாப்பை
நாம் எருசலேமின்மேலும் யூதாவின்மேலும் வர
ப்பண்ணி,—எருசலேமின்மேலே சமாரியாவின் ௰௩
மட்ட நூலையும் ஆகாப் வீட்டின் தூக்குநூலையும்
பிடித்து, ஒருவன் ஒரு தாலத்தை விளக்கினபின்
அதைக் கவிழ்த்துவைக்கிறதுபோல எருசலே
மை விளக்கிவிட்டு,—நமது சுதந்தரத்தில் மீதியா ௰௪
னதைக் கைவிட்டு, அவர்களை அவர்கள் பகை
ஞரின் கையில் ஒப்புக்கொடுப்போம்.—அப்ப ௰௫
டியே அவர்கள் தங்கள் பிதாக்கள் எகிப்திலி
ருந்து புறப்பட்ட நாள்முதல்கொண்டு இந்நாள்
வரைக்கும் நமது பார்வைக்குப் பொல்லாப்பா
னதைச் செய்து, நமக்குக் கோபம் உண்டாக்கி
னவர்களாய் இருந்தபடியினாலே தங்கள் பகை
ஞருக்கு எல்லாம் கொள்ளையும் சூறையுமாய்ப்
போவார்களென்றார்.—கர்த்தரின் பார்வைக்குப் ௰௬
பொல்லாப்பானதைச் செய்யும்படியாக, மனா
சே யூதாவைப் பாவஞ்செய்யப்பண்ணின அந்தத்
தன்னுடைய பாவமுந்தவிர அவன் எருசலேமை
நவரங்கமும் இரத்தப்பழிகளால் நிரப்பத்தக்கவி
தமாய், குற்றமில்லாத இரத்தத்தையும் மிகுதியா
கச் சிந்தவைத்தான்.
மனாசேயின் மற்ற வர்த்தமானங்களும், அவன் ௰௭
செய்ததனைத்தும், அவன் பண்ணின அவனு
டைய பாவமும் யூதாவுடைய இராசாக்களின்
நாளாகமப் புஸ்தகத்திலல்லவோ எழுதியிருக்
கின்றது.—மனாசே தன் பிதாக்களோடே நித்தி ௰௮
ரை அடைந்தபின், அவன் ஊசாவின் தோட்ட
மாகிய தன் வீட்டுத்தோட்டத்தில் அடக்கம்பண்
ணப்பட்டான்; அவன் ஸ்தலத்திலே அவன்
குமாரனாகிய ஆமோன் இராசாவானான்.
ஆமோன் இராசாவாகிறபோது இருபத்தி ௰௯
ரண்டு வயதாயிருந்து, இரண்டுவருஷம் எருச
லேமில் அரசாண்டான்; யோத்பா ஊரானாகிய
ஆரூத்சின் குமாரத்தியான அவன் தாயின்பேர்
மெசுல்லேமேத். — அவன் தன் தகப்பனாகிய ௨௰
மனாசே செய்ததுபோல, கர்த்தரின் பார்வைக்
குப் பொல்லாப்பானதைச் செய்து,—தன் தகப் ௨௧
பன் நடந்த எல்லா வழியிலும் நடந்து, தன் தகப்
பன் சேவித்த நரகலான தேவர்களைச் சேவித்து,
அவைகளைப் பணிந்துகொண்டு,—கர்த்தரின்வழி ௨௨
யிலே நடவாமல் தன் பிதாக்களின் பராபரனா
கிய கர்த்தரை விட்டுவிட்டான்.—ஆனால் ஆமோ ௨௩
னின் ஊழியக்காரர் அவனுக்கு விரோதமாய்ப்
பந்துக்கட்டுப் பண்ணிக்கொண்டு, இராசாவா
கிய அவனை அவன் வீட்டிலே கொன்றுபோட்
டார்கள்.—ஆனால் தேசத்தின் சனம் இராசாவா ௨௪
கிய ஆமோனுக்கு விரோதமாய் ஒப்பந்தம்பண்
ணினவர்களையெல்லாம் வெட்டிப்போட்டு, அ
வன் குமாரனாகிய யோசியாவை அவன் ஸ்தலத்
தில் இராசாவாக்கினார்கள்.

௨௫ ஆமோன் செய்த மற்ற வர்த்தமானங்கள் யூதா
வுடைய இராசாக்களின் நாளாகமப் புஸ்தகத்தி
௨௬ லல்லவோ எழுதியிருக்கின்றது.—அவன் ஊசா
வின் தோட்டத்திலுள்ள அவனுடைய கல்லறை
யில் அடக்கம்பண்ணப்பட்டான்; அவன் ஸ்த
லத்திலே அவன் குமாரனாகிய யோசியா இராசா
வானான்.

## ௨௨. அதிகாரம்.

*௧. யோசியாவின் நல்ல ஆளுகை. ௩. அவன் ஆலயத்தை உண்மையோடு பழுதுபார்த்தது. ௮. இல்க்கியா நியாயப்பிரமாணத்தின புஸ்தகத்தைக் கண்டெடுத்தது. அதைக்குறித்துக் கர்த்தரிடத்தில் கேட்கும்படி உல்தாளண்டைக்கு அனுப்பினது. ௰௫. அவன் யோசியாவின் காலத்திற்குப் பின் எருசலேமுக்கு வரும் நாசத்தைச் சொன்னது.*

௧ யோசியா இராசாவாகிறபோது, எட்டுவயதா
யிருந்து, முப்பத்தொரு வருஷம் எருசலேமில்
அரசாண்டான்; பொஸ்காத்தூராளாகிய அதாயா
வின் குமாரத்தியான அவன் தாயின்பேர் எதி
௨ தாள்.—அவன் கர்த்தரின் பார்வைக்குச் செம்மை
யானதைச் செய்து, தன் தகப்பனாகிய தாவீதின்
வழியிலெல்லாம் வலது இடதுபுறமாய் விலகா
மல் நடந்தான்.

௩ இராசாவாகிய யோசியாவின் பதினெட்டாம்
வருஷத்திலே சம்பவித்ததேதென்றால், இராசா
மெசுல்லாமின் குமாரனாகிய அத்சலியாவின்
மகன் சாப்பானென்ற சம்பிரதியைக் கர்த்தரின்
௪ வீட்டிற்கு அனுப்பிச் சொன்னதாவது:—நீ பிர
தான ஆசாரியனாகிய இல்க்கியாவண்டைக்கு ஏ
றிப்போய், கர்த்தருடைய வீட்டிற்குக் கொண்டு
வரப்பட்டதும் வாசல்காக்கிறவர்கள் சனத்தின்
கையிலே சேர்த்துக்கொண்டதுமான திரவியத்
௫ தை அவன் தொகைபார்த்து,—பிற்பாடு அவர்
கள் அதைக் கர்த்தருடைய வீட்டின் வேலையை
விசாரிக்கிறவர்கள் கையிலே கொடுத்து, இவர்
கள் அதைக் கர்த்தரின் வீட்டைப் பழுதுபார்க்
கிறதற்கு அதிலிருக்கிற வேலையைச் செய்கிற-
௬ தச்சருக்கும், சிற்பசாஸ்திரிகளுக்கும், கொல்
லத்துக்காரருக்கும், வீட்டைப் பழுதுபார்க்க
வேண்டிய மரங்களையும் வெட்டின கற்களை
௭ யும் வாங்குகிறதற்கும் கொடுக்கவும்,—ஆகிலும்
அந்தத் திரவியத்தைத் தங்கள் கையில் ஒப்புவித்
துக்கொள்ளுகிறவர்களோ காரியத்தை உண்
மையாய் நடப்பிக்கிறபடியினாலே, அவர்களை
அதின் கணக்கைக் கேளாதிருக்கவும் வேண்டு
மென்று சொல்லென்றான்.

௮ அப்போது பிரதான ஆசாரியனாகிய இல்க்
கியா சம்பிரதியாகிய சாப்பானுடனே, நியா
யப்பிரமாண புஸ்தகத்தைக் கர்த்தரின் வீட்டி
லே கண்டுபிடித்தேனென்று சொல்லி, அந்தப்
புஸ்தகத்தைச் சாப்பானுக்குக் கொடுத்தான்;
௯ இவன் அதை வாசித்தான்.—அப்போது சம்பிர
தியாகிய சாப்பான் இராசாவண்டைக்கு வந்து,
இராசாவுக்கு மறு உத்தரவு சொல்லி, வீட்டி
லே கண்டுபிடிக்கப்பட்ட திரவியத்தை உம்மு
டைய அடியார் சேர்த்துக் கட்டி, அதைக் கர்த்
தருடைய வீட்டின் வேலையை விசாரிக்கிறவர்
கள் கையிலே கொடுத்தார்களென்று சொல்லி,—
சம்பிரதியாகிய சாப்பான் பின்னையும் இராசா ௰
வுக்கு ஆசாரியனாகிய இல்க்கியா எனக்கு ஒரு
புஸ்தகத்தைக் கொடுத்தான் என்று அறிவித்து
அதை இராசாவுக்குமுன்பாக வாசித்துக்கொண்
டிருந்தான். — இராசா நியாயப்பிரமாண புஸ்த ௰௧
கத்தின் வார்த்தைகளைக் கேட்டபோதோவெ
னில், அவன் தன் வஸ்திரங்களைக் கிழித்துக்கொ
ண்டு,—ஆசாரியனாகிய இல்க்கியாவுக்கும் சாப் ௰௨
பானின் குமாரனாகிய அகீக்காமுக்கும், மிகா
யாவின் குமாரனாகிய அக்போருக்கும், சம்பிர
தியாகிய சாப்பானுக்கும், இராசாவின் ஊழி
யக்காரனாகிய அசாயாவுக்கும் இராசா கற்பித்துச்
சொன்னதாவது:—கண்டுபிடிக்கப்பட்ட இந்தப் ௰௩
புஸ்தகத்தினுடைய வார்த்தைகளின்நிமித்தம்
நீங்கள் போய், எனக்காகவும் சனத்திற்காகவும்
யூதாவனைத்திற்காகவும் கர்த்தரைக் கேளுங்கள்;
ஏனெனில் நமக்காக எழுதியிருக்கிறதெல்லா
வற்றின்படியேயும் செய்ய நம்முடைய பிதாக்
கள் இந்தப் புஸ்தகத்தின் வார்த்தைகளுக்குச்
செவிகொடாதபடியினாலே, நம்முடையமேலே
பற்றியெரிந்த கர்த்தருடைய உக்கிரம் பெரிய
தென்றான்.

அப்போது ஆசாரியனாகிய இல்க்கியாவும், ௰௪
அகீக்காமும், அக்போரும், சாப்பானும், அசா
யாவும், அற்காசின் குமாரனாகிய திக்வாவின்
மகனான சல்லுமென்ற வஸ்திரங்களுடையவிசா
ரிப்புக்காரன் பெண்சாதியாகிய உல்தாள் என்ற
தீர்க்கதரிசியானவள் அண்டைக்குப் போய் அ
வளோடே பேசினார்கள்; அவள் எருசலேமின்
இரண்டாம் வகுப்பிலே குடியிருந்தாள்.—இவள் ௰௫
அவர்களோடே சொன்னதாவது: உங்களை என்
னண்டைக்கு அனுப்பினவருக்கு நீங்கள் சொல்
லவேண்டியதேதெனில் இஸ்ரவேலின் பராபர
னாகிய கர்த்தர் உரைக்கிறதாவது:—இதோ நாம் ௰௬
இந்த ஸ்தலத்தின்மேலும், அதின் குடிகளின்மே
லும், யூதாவின் இராசா வாசித்த புஸ்தகத்தின்
வார்த்தைகளிலெல்லாம் விளங்கிய பொல்லாப்
பை வரப்பண்ணுவோம். — அவர்கள் நம்மை ௰௭
விட்டு, தங்கள் கைகளின் கிரியைகளால் எல்
லாம் நமக்குக் கோபமுண்டாக்க வேறே தேவர்
களுக்குத் தூபம்காட்டினபடியினாலே, நம்மு
டைய உக்கிரம் இந்த ஸ்தலத்தின்மேல் பற்றியெ
ரிந்தது; அது அவிந்துபோவதும் இல்லையென்று
கர்த்தர் சொல்லுகிறாரென்று சொல்லுங்கள்.—
கர்த்தரைக் கேட்கிறதற்கு உங்களை அனுப்பின ௰௮
யூதாவின் இராசாவுக்கோ, நீங்கள் சொல்லவேண்
டியது: நீர் கேட்ட வார்த்தைகளைக்குறித்து இஸ்
ரவேலின் பராபரனாகிய கர்த்தர் சொல்லுகிற
தேதெனில்,—நாம் இந்த ஸ்தலத்திற்கும் அதின் ௰௯
குடிகளுக்கும் விரோதமாக, அவர்கள் பாழும்
சாபமுமாவார்களென்றுசொன்னதை நீ கேட்ட
போது, உன் இருதயம் இளகி, நீ கர்த்தருக்குமுன்
பாக உன்னைத் தாழ்த்தி, உன் வஸ்திரங்களைக்
கிழித்துக்கொண்டு, நமக்குமுன்பாக அழுதபடி

௨௰ யினாலே உன்னை நாமும் கேட்டோம்.—ஆகை
யால் இதோ நாம் உன்னை உன் பிதாக்களண்
டையிலே சேர்த்துக்கொள்ளுவோம்; நீ சமாதா
னத்தோடே உன் கல்லறையில் சேர்க்கப்படு
வாய்; நாம் இந்த ஸ்தலத்தின்மேல் வரப்பண்
ணும் சகலமான பொல்லாப்பையும் உன் கண்
கள் காண்பதில்லையென்று கர்த்தர் சொல்லுகி
றார் என்பதைச் சொல்லுங்களென்றார்கள்; இந்த
மறு உத்தரவை அவர்கள் போய் இராசாவுக்குச்
சொன்னார்கள்.

## ௨௩. அதிகாரம்.

௧. முதா சபையில் யோசியா நியாயப்பிரமாண புஸ்தகத்தை வாசிக்கச் செய்தது ௩ அவன் கடவுளுடன் உடம்படிக்கை செய்தது. ௪. அவன் விக்கிரக ஆராதனையை அழித்தது. ௰௬. தீர்க்கதரிசனமாய்ச் சொல்லப்பட்டபடி பெத்தேலில் பலிபீடத்தின்மேல் செத்தவரின் எலும்புகளை அவன் சுட்டது. ௨௧. வேதமுறைமையோடு பஸ்காபண்டிகையைச் செய்தது. ௨௪. குறிசொல்லுகிறவர்களையும், மற்றும் அருவருக்கப்படத்தக்கவர்களையும் அவன் அற்றுப்போகப்பண்ணினது. ௨௬. பராபரனுடைய கோபம் யூதாவின்மேல் சென்றது. ௨௯. யோசியா பார்வோன் நேகோவுடனே யுத்தம்பண்ணி அவனால் கொல்லப்பட்டது. ௩௧ யோவாகாஸ் அவனுக்குப்பின் அரசாகிவந்து, பார்வோன் நேகோவினால் காவலில் வைக்கப்பட்டிருக்க அவனுக்குப்பதில் யோயாக்கீம் அரசாகிவந்தது. ௩௬. யோயாக்கீமின் கெட்ட ஆளுகை.

௧ அப்போது இராசா யூதாவிலும் எருசலேமிலும்
இருக்கிற மூப்பரையெல்லாம் அழைத்தனுப்பி
னான்; இவர்கள் அவனண்டையிலே கூடின
௨ போது, — இராசாவும், அவனோடேகூட யூதா
வின் மனுஷர் எருசலேமின் குடிகளனைவரும்,
ஆசாரியர்களும், தீர்க்கதரிசிகளும், சிறியோர்
துவக்கிப் பெரியோர்மட்டுமுள்ள சகல சன
மும் கர்த்தரின் வீட்டிற்குப் போயேறினார்கள்;
கர்த்தரின் வீட்டிலே கண்டுபிடிக்கப்பட்ட
உடம்படிக்கையினுடைய புஸ்தகத்தின் வார்த்
தைகளெல்லாம் அவர்கள் காதுகள் கேட்க வா
௩ சிக்கப்பட்டன. — அப்போது இராசா தூண்
அண்டையிலே நின்றுகொண்டு, கர்த்தரைப்
பின்பற்றி நடக்கவும், அவருடைய கற்பனைக
ளையும் அவருடைய சாட்சிகளையும் அவருடை
ய கட்டளைகளையும் முழு இருதயத்தாலும், முழு
ஆத்துமத்தாலும் கைக்கொள்ளவும் இப்படியே
அந்தப் புஸ்தகத்தில் எழுதியிருக்கிற அந்த உ
டம்படிக்கையின் வார்த்தைகளைத் திடப்படுத்த
வும் கர்த்தருக்குமுன்பாக உடம்படிக்கைபண்
ணினான்; சனமெல்லாம் உடம்படிக்கைக்கு
உள்பட்டன.
௪ பிற்பாடு இராசா பாகாலுக்கும் விக்கிரகத்
தோப்பிற்கும் வானத்தின் எல்லாச் சேனைக்கு
மென்று பண்ணப்பட்டிருந்த சகல முட்டுகளை
யும் கர்த்தருடைய தேவாலயத்திலிருந்து புறம்
பாக்க, பிரதான ஆசாரியனாகிய இல்க்கியாவுக்
கும் இரண்டாம்தரமான ஆசாரியர்களுக்கும்
வாசல்காக்கிறவர்களுக்கும் கற்பித்து, அவை
களை எருசலேமுக்குப் புறம்பாய்க் கீதரோன்
வெளிகளில் சுட்டெரித்து அவைகளின் சாம்
பலைப் பேத்தேலுக்குக் கொண்டுபோகப்பண்
௫ ணி,—யூதாவின் பட்டணங்களிலும் எருசலே
மைச் சுற்றிலும் மேடைகளின்மேலே தூபம்
காட்ட, யூதாவின் இராசாக்கள் வைத்த பூசா
ரிகளையும், பாகாலுக்கும் சூரியனுக்கும் சந்திர
னுக்கும் கிரகங்களுக்கும் வானத்தின் சகல
சேனைக்கும் தூபம்காட்டினவர்களையும் அற்றுப்
போகப்பண்ணி,—விக்கிரகத்தோப்பைக் கர்த்த ௬
ரின் வீட்டிலிருந்து எருசலேமுக்குப் புறம்பே
கீதரோன் ஆற்றிற்குக் கொண்டுபோய், அதைக்
கீதரோன் ஆற்று ஓரத்திலே சுட்டெரித்து, அ
தைத் தூளாக்கி, அந்தத் தூளைச் சன புத்திரரு
டைய பிரேதக் குழிகளின்மேல் போடுவித்து,—
ஸ்திரிகள் விக்கிரகத்தோப்பிற்குக் கூடாரங்க ௭
ளை நெய்த கர்த்தரின் வீட்டிலுள்ள இலச்சை
யான புணர்ச்சிக்காரரின் அறைகளை இடித்துப்
போடுவித்தான்.—அவன் யூதாவின் பட்டணங் ௮
களிலிருக்கிற எல்லா ஆசாரியரையும் வரச்சொ
ல்லி, கேபாவைத்துவக்கிப் பெர்சேபாமட்டும்
ஆசாரியர்கள் தூபம்காட்டியிருந்த மேடைக
ளைத் தீட்டாக்கி, ஒலிமுக வாசல்களின் மேடை
களையும், பட்டணத்தின் வாசலுள் பிரவேசிக்கி
றவனுக்கு இடதுபுறமாயிருக்கிற பட்டணத்த
லைவனாகிய யோசுவாவின் வாசல்படியில் இருந்
ததையும் இடிப்பித்தான்.—மேடைகளின் ஆசாரி ௯
யர்களோவென்றால், எருசலேமிலிருக்கிற கர்த்
தருடைய பலிபீடத்தின்மேல் பலியிடாமல்,
தங்கள் சகோதரருக்குள்ளே புளிப்பில்லா அப்
பங்களைப் புசிக்கிறதற்குமாத்திரம் உத்தாரம்பெ
ற்றார்கள்.—ஒருவனும் மோளேகுக்கென்று தன் ௰
குமாரனையாகிலும் தன் குமாரத்தியையாகிலும்
அக்கினியை மிதிக்கப்பண்ணுதபடிக்கு, இன்
னோம் புத்திரரின் பள்ளத்தாக்கிலிருக்கிற தோப்
பேத்தென்ற தலத்தையும் அவன் தீட்டாக்கி,—
கர்த்தரின் வீட்டிற்குள்போகிற முனைதுவக்கி, ௰௧
பர்வாரிமிலிருக்கிற நாத்தான்மேலேகென்ற பிர
தானியின் அறைவீடுமட்டும் யூதாவின் இரா
சாக்கள் சூரியனுக்கென்று வைத்திருந்த குதி
ரைகளை அகற்றி, சூரியனின் இரதங்களை அக்
கினியால் சுட்டெரித்தான்.—யூதாவின் இராசாக் ௰௨
கள் உண்டாக்கினதும் ஆகாசுடைய மேல்வீட்
டின்மேலிருக்கிறதுமான பலிபீடங்களையும். ம
னாசே கர்த்தருடைய வீட்டின் இரண்டு பிரகா
ரங்களிலும் உண்டாக்கின பலிபீடங்களையும்
இராசா இடித்து, அவைகளின் தூளை அங்கே
யிருந்து எடுத்து, கீதரோன் ஆற்றில் கொட்டுவித்
தான்.—எருசலேமுக்கு எதிரே மஸ்கீத் மலையின் ௰௩
வலதுபுறத்தில் இஸ்ரவேலின் இராசாவாகிய சா
லோமோன் சீதோனியரின் அருவருப்பாகிய
அஸ்தரோத்திற்கும், மோவாபியரின் அருவருப்
பாகிய காமோசுக்கும், அம்மோன் புத்திரரின்
அருவருப்பாகிய மில்கோமுக்கும்கட்டியிருந்த
மேடைகளையும் இராசா தீட்டாக்கி,—சிலைக ௰௪
ளை உடைத்து, விக்கிரகத்தோப்புகளை நிர்மூல
மாக்கி, அவைகளின் ஸ்தலத்தை மனுஷரின்
எலும்புகளால் நிரப்புவித்தான்.
இஸ்ரவேலைப் பாவம்செய்யப்பண்ணின நே ௰௫
பாத்தின் குமாரனாகிய எரொபெயாம் பேத்தே
லில் உண்டாக்கியிருந்த பலிபீடத்தையும், மே

டையையும், அவ்விரண்டையும் அவன் இடித்
து, அந்தமேடையைச் சுட்டெரித்துத் தூளாக்கி
விக்கிரகத்தோப்பைச் சுட்டுப்போட்டான். —
௧௬ யோசியா திரும்பிப்பார்க்கிறபோது அங்கே
அந்த மலையிலிருக்கிற கல்லறைகளைக் கண்டு,
ஆள்களை அனுப்பி, அந்தக் கல்லறைகளிலுள்ள
எலும்புகளை எடுத்துவரப்பண்ணி, இப்படி வரு
மென்று கூப்பிட்ட பராபரனுடைய மனுஷன்
கூப்பிட்டுச் சொன்ன கர்த்தருடைய வார்த்தை
யின்படியே, அவைகளை அந்தப் பலிபீடத்தின்
மேலே சுட்டெரித்து அதைத் தீட்டாக்கினான்.—
௧௭ அப்போது அவன் நான் காண்கிற இந்தக் குறிப்
பென்ன என்று கேட்டதற்கு, அந்தப் பட்ட
ணத்தின் மனுஷர் அவனுடனே, அது யூதாவி
லிருந்துவந்து, நீர் செய்த இந்தக் கிரியைகளைப்
பேத்தேலின் பலிபீடத்திற்கு விரோதமாய்க் கூப்
பிட்டு அறிவித்த பராபரனுடைய மனுஷனின்
௧௮ கல்லறை என்றார்கள். — அப்போது அவன்,
அவன் இருக்கட்டும், ஒருவரும் அவன் எலும்பு
களைத் தொடவேண்டாமென்றான்; அப்படியே
அவன் எலும்புகளைச் சமாரியாவிலிருந்துவந்த
தீர்க்கதரிசியின் எலும்புகளோடும்கூடத் தப்பு
வித்தார்கள்.

௧௯ கோபம் உண்டாக்க, இஸ்ரவேலின் இராசாக்
கள் சமாரியாவின் பட்டணங்களில் உண்டா
யிருந்த மேடைகளின் வீடுகளையுமெல்லாம் யோ
சியா அகற்றி, பேத்தேலிலே தான் செய்த செய்
கைகளுக்கு ஒத்தபடியெல்லாம் அவைகளுக்குச்
௨௰ செய்து,—அவ்விடங்களில் இருக்கிற மேடைக
ளின் ஆசாரியர்களையெல்லாம் பலிபீடங்களின்
மேலே கொன்றுபோட்டு, அவைகளின்மேல்
மனுஷரின் எலும்புகளைச் சுட்டெரித்து, எருச
லேமுக்குத் திரும்பினான்.

௨௧ பிற்பாடு இராசா எல்லாச் சனத்திற்கும், இந்த
உடம்படிக்கையின் புஸ்தகத்தில் எழுதியிருக்
கிறபடியே உங்கள் பராபரனாகிய கர்த்தருக்குப்
பஸ்காவை ஆசரியுங்களென்று கற்பித்தான். —
௨௨ இஸ்ரவேலை நியாயம்விசாரித்த நியாயாதிபதிக
ளின் நாள்களைத்துவக்கி, இஸ்ரவேலின் இரா
சாக்கள் யூதாவின் இராசாக்களுடைய சகல நாள்
களிலும் இந்தப் பஸ்காவைப்போலொத்தது ஆச
௨௩ ரிக்கப்பட்டதேயில்லை.—இராசாவாகிய யோசி
யாவின் பதினெட்டாம் வருஷத்திலோவென்
றால், இந்தப் பஸ்கா எருசலேமிலே கர்த்தருக்கு
ஆசரிக்கப்பட்டது.

௨௪ ஆசாரியனாகிய இல்க்கியா கர்த்தருடைய வீட்
டிலே கண்டுபிடித்த புஸ்தகத்தில் எழுதியிருக்
கிற நியாயப்பிரமாணத்தின் வார்த்தைகளை நிறை
வேற்றும்படிக்கு, யோசியா அஞ்சனக்காரரை
யும், குறிசொல்லுகிறவர்களையும், சுரூபங்களை
யும், நரகலான தேவர்களையும், யூததேசத்திலும்
எருசலேமிலும் காணப்பட்ட எல்லா அருவருப்
புகளையும் முதலற்றுப்போகப்பண்ணினான். —
௨௫ கர்த்தரண்டைக்குத் தன் முழு இருதயத்தாலும்
தன் முழு ஆத்துமத்தாலும் தன் முழு பலத்தா
லும் மோசேயின் நியாயப்பிரமாணத்திற்கு ஒத்த
படியெல்லாம் மனதைத் திருப்பின அவனைப்
போலொத்த இராசா அவனுக்குமுன் இருந்தது
மில்லை, அவனுக்குப்பின் எழும்பினதுமில்லை.-
ஆகிலும் மனாசே கர்த்தருக்குக் கோபமுண்டாக் ௨௬
கின சகல காரியங்களின்நிமித்தமும் அவர் யூதா
வின்மேல் மூண்ட தம்முடைய மகா கோபத்
தின் உக்கிரத்தைவிட்டுத் திரும்பாமல், — நாம் ௨௭
இஸ்ரவேலைத் தள்ளிவிட்டதுபோலே யூதாவை
யும் நமது முகத்தைவிட்டுத் தள்ளி, நாம் தெரிந்
துகொண்டிருந்த இந்த எருசலேம்பட்டணத்
தையும், நம்முடைய நாமம் தங்கியிருக்குமென்
று நாம் சொன்ன வீட்டையும் வெறுத்துவிடு
வோமென்று கர்த்தர் சொன்னார்.

யோசியாவின் மற்ற வர்த்தமானங்களும், அ ௨௮
வன் செய்ததனைத்தும் யூதாவுடைய இராசாக்க
ளின் நாளாகமப் புஸ்தகத்திலல்லவோ எழுதியி
ருக்கின்றது.

அவன் நாள்களில் எகிப்தின் இராசாவாகிய ௨௯
பார்வோன்நேகோ அசூரின் இராசாவுக்கு வி
ரோதமாய் ஐபிராத்நதிக்கு ஏறிப்போகிறபோது
இராசாவாகிய யோசியா அவனுக்கு எதிராகப்
புறப்பட்டான்; அவன் இவனைக் காண்கிறபோ
தோவெனில், இவன் அவனை மெகிதோவிலே
கொன்றுபோட்டான்.—அவனுடைய ஊழியக் ௩௰
காரர் மரணமடைந்த அவனை இரதத்தின்மேல்
ஏற்றி, மெகிதோவிலிருந்து எருசலேமுக்குக்
கொண்டுவந்து, அவனை அவன் கல்லறையில் அ
டக்கம்பண்ணினார்கள்; அப்போது தேசத்தின்
சனம் யோசியாவின் குமாரனாகிய யோவாகா
சை அழைத்து, அவனை அபிஷேகம்பண்ணி,
அவனை அவன் தகப்பன் ஸ்தலத்தில் இராசா
வாக்கினார்கள்.

யோவாகாஸ் இராசாவாகிறபோது இருபத்து ௩௧
மூன்று வயதாயிருந்து மூன்றுமாதம் எருசலே
மில் அரசாண்டான்; லீப்னா ஊராளாகிய எரே
மியாவின் குமாரத்தியான அவன் தாயின்பேர்
அமூத்தாள். — அவன் தன் பிதாக்கள் செய்த ௩௨
படியெல்லாம் கர்த்தரின் பார்வைக்குப் பொல்
லாப்பானதைச்செய்தான். — ஆனால் அவன் ௩௩
எருசலேமில் அரசாளாதபடிக்கு, பார்வோன்
நேகோ அவனை ஆமாத்தேசமான ரிப்லாவிலே
பிடித்துக் கட்டுவித்து, தேசத்தின்மேல் நூறுதா
லந்து வெள்ளியையும் ஒரு தாலந்து பொன்
னையும் அபராதமாகச் சுமத்தி, — யோசியாவின் ௩௪
குமாரனாகிய எலியாக்கீமை அவன் தகப்பனா
கிய யோசியாவின் ஸ்தலத்தில் இராசாவாக வை
த்து, அவன்பேரை யோயாக்கீமென்று மாற்றி,
யோவாகாசைக் கொண்டுபோனான்; இவன் எ
கிப்திலே வந்து அங்கே மரணம்அடைந்தான்.—
அந்த வெள்ளியையும் பொன்னையும் யோயாக் ௩௫
கீம் பார்வோனுக்குக் கொடுத்தான்; ஆனால் பார்
வோனுடைய கற்பனையின்படி அந்த வெள்ளி

யைக் கொடுக்கும்படிக்கு அவன் தேசத்தை
மதித்து, அவரவர் மதிப்பின்படி அந்த வெள்
ளியையும் பொன்னையும் பார்வோன்நேகோ
வுக்குக் கொடுக்கத்தக்கதாகத் தேசச்சனத்தின்
கையிலே தண்டினான்.

௩௬ யோயாக்கீம் இராசாவாகிறபோது இருபத்
தைந்து வயதாயிருந்து, பதினொருவருஷம் எரு
சலேமில் அரசாண்டான்; ரூமா ஊரானாகிய
பெதாயாமின் குமாரத்தியாகிய அவன் தாயின்
௩௭ பேர் செபுதாள்.—அவன் தன் பிதாக்கள் செய்த
படியெல்லாம் கர்த்தரின் பார்வைக்குப் பொல்
லாப்பானதைச் செய்தான்.

## ௨௪. அதிகாரம்.

க. யோயாக்கீம் நேபுகாத்நேச்சாரினால் உள்ளாக்கப்பட்டு, பின்பு கலகம் செய்து கேட்டைத் தேடிக்கொண்டது. ௬. யோயாக்கீன் அவனுக்குப் பின் அரசாகிவந்தது. எ. எகிப்தின் இராசா பாபேலின இராசாவினால் செயிக்கப்பட்டது. அ. யோயாக்கீனின் பொல்லாத ஆளுகை. ௰. எருசலேம்பிடிக்கப்பட்டு, அதின் சனங்கள் பாபிலோனுக்குச் சிறைகொண்டு போகப்பட்டது. ௰எ. சிதேக்கியா இராசாவாகி எருசலேம் அழியும் மட்டும் அரசாண்டது.

௧ அவன் நாள்களிலே பாபேலின் இராசாவா
கிய நேபுகாத்நேச்சார் ஏறிவந்தான்; இவனை
யோயாக்கீம் மூன்றுவருஷம் சேவிக்கிறவனா
யிருந்து, அதின் பிறகு புரண்டு இவனைவிட்டு
௨ மருளவிழுந்தான்.—அப்போது கர்த்தர் கல்தே
யரின் தண்டுகளையும், சூரியரின் தண்டுகளையும்,
மோவாபியரின் தண்டுகளையும், அம்மோன் புத்தி
ரரின் தண்டுகளையும் அவன்மேல் வரவிட்டார்;
தீர்க்கதரிசிகளாகிய தம்முடைய ஊழியக்கார
ரைக்கொண்டு கர்த்தர் சொன்ன வார்த்தையின்
படியே அவர் அவைகளை யூதாவின்மேல் அதை
௩ அழிக்கும்படிக்கு வரவிட்டார்.—மனாசே தன்னு
டைய எல்லாச் செய்கைகளினாலும் பண்ணின
பாவங்களின்நிமித்தம் யூதாவைத் தமது முகத்
தைவிட்டு விலக்க, அப்படிக் கர்த்தருடைய
௪ கட்டளையின்படி நடந்தது. — அவன் சிந்திப்
போட்ட குற்றமில்லாத இரத்தத்திற்காகவும் எரு
சலேமைக் குற்றமில்லாத இரத்தத்தால் நிரப்
பினதற்காகவும்கூடக் கர்த்தர் மன்னிக்கச் சித்த
மில்லாதிருந்தார்.

௫ யோயாக்கீமின் மற்ற வர்த்தமானங்களும், அ
வன் செய்ததனைத்தும், யூதாவுடைய இராசாக்
களின் நாளாகமப் புஸ்தகத்திலல்லவோ எழுதி
யிருக்கின்றது.

௬ யோயாக்கீம் தன் பிதாக்களோடே நித்திரை
அடைந்தபின், அவன் குமாரனாகிய யோயாக்
௭ கீன் அவன் ஸ்தலத்தில் இராசாவானான்.—ஆனால்
எகிப்தின் இராசா அப்புறம் தன் தேசத்திலி
ருந்து புறப்பட்டுவந்ததில்லை; ஏனெனில் எகிப்
தின் இராசாவுக்கு எகிப்தின் நதியைத்துவக்கி
ஐபிருத் நதிமட்டுமிருந்த யாவையும் பாபேலின்
இராசா பிடித்திருந்தான்.

௮ யோயாக்கீன் இராசாவாகிறபோது, பதினெ
ட்டு வயதாயிருந்து, எருசலேமிலே மூன்றுமா
தம் அரசாண்டான்; எருசலேம் ஊரானாகிய எல்
நாத்தானின் குமாரத்தியான அவன் தாயின்பேர்
நெகுஸ்தாள்.—அவன் தன் தகப்பன் செய்தபடி ௯
யெல்லாம் கர்த்தரின் பார்வைக்குப் பொல்லாப்
பானதைச் செய்தான்.

அக்காலத்திலே பாபேலின் இராசாவாகிய ௰
நேபுகாத்நேச்சாரின் ஊழியக்காரர் எருசலே
முக்கு ஏறிவந்தார்கள்; பட்டணம் முற்றிக்கை
போடப்பட்டது.—பாபேலின் இராசாவாகிய ௰௧
நேபுகாத்நேச்சாருடைய ஊழியக்காரர் பட்ட
ணத்தை முற்றிக்கைபோட்டபின் அவன்தானும்
அதற்கு விரோதமாய் வந்தான்.-அப்போது யூதா ௰௨
வின் இராசாவாகிய யோயாக்கீனும், அவன்
தாயும், அவன் ஊழியக்காரரும், அவனுடைய
பிரபுக்களும், பிரதானிகளும் பாபேலின் இரா
சாவண்டைக்குப் புறப்பட்டார்கள், அவனைப்
பாபேலின் இராசா தன் இராச்சியபாரத்தின்
எட்டாம் வருஷத்திலே பிடித்துக்கொண்டு, —
அங்கேயிருந்து கர்த்தருடைய வீட்டின் சகல ௰௩
பொக்கிஷங்களையும், இராசாவுடைய வீட்டின்
பொக்கிஷங்களையும் எடுத்துக்கொண்டு, இஸ்ர
வேலின் இராசாவாகிய சாலோமோன் கர்த்த
ரின் தேவாலயத்தில் உண்டாக்கியிருந்த பொன்
னான தட்டுமுட்டுகளையெல்லாம் கர்த்தர் சொல்
லியிருந்தபடியே உடைத்துவிட்டு, — எருசலே ௰௪
மியர் அனைவரும் எல்லாப் பிரபுக்களும் எல்லாப்
பலசாலிகளுமாகிய பதினாயிரம்பேரையும், எல்
லாத் தச்சரையும், கருமாரையும் சிறைபிடித்துப்
போனான்; தேசத்தில் ஏழைசனமே அல்லாமல்
வேறொருவரும் மீதியானதில்லை.—அவன் யோ ௰௫
யாக்கீனையும், இராசாவின் தாயையும், இராசா
வின் ஸ்திரிகளையும், அவன் பிரதானிகளையும்,
தேசத்தில் பலத்தவர்களையும் எருசலேமிலிருந்து
பாபேலுக்குச் சிறைபிடித்துக் கொண்டுபோ
னான்.—இப்படியே பாபேலின் இராசா பலத்த ௰௬
சகல மனுஷராகிய ஏழாயிரம்பேரையும், தச்ச
ரும் கருமாருமாகிய ஆயிரம்பேரையும், நல்ல
சேவகராகிய சகல பராக்கிரமரையும் பாபேலுக்
குச் சிறைபிடித்துக் கொண்டுபோனான்.—அவ ௰௭
னுக்குப் பதிலாகப் பாபேலின் இராசா அவன்
சிறியதகப்பனாகிய மத்தனீயாவை இராசாவாக
வைத்து, அவனுக்குச் சிதேக்கியா என்று மறு
பேரிட்டான்

சிதேக்கியா இராசாவாகிறபோது இருபத் ௰௮
தொரு வயதாயிருந்து, பதினொருவருஷம் எரு
சலேமிலே அரசாண்டான்; லிப்னா ஊரானாகிய
எரேமியாவின் குமாரத்தியான அவன் தாயின்
பேர் அமீத்தாள்.—யோயாக்கீம் செய்தபடியெல் ௰௯
லாம் அவன் கர்த்தருடைய பார்வைக்குப் பொல்
லாப்பானதைச் செய்தான்.—ஏனென்றால் எரு ௨௰
சலேமையும் யூதாவையும் கர்த்தர் தம்முடைய
முகத்தைவிட்டுத் தள்ளித் தீரும்அளவும், அவை
களின்மேலுள்ள அவருடைய கோபத்தினால்
இப்படி நடந்ததும்தவிர, சிதேக்கியா பாபேலின்
இராசாவைவிட்டு மருளவிழுந்தான்.

## உரு. அதிகாரம்.

*க. எருசலேம் முற்றிக்கை போடப்பட்டது. ச. சிதேக்கியா பிடிபட்டு கண் குருடானதுமல்லாமல், அவனுடைய குமாரர்களும் கொலைசெய்யப்பட்டது. அ. நேபுசார்தான் பட்டணத்தை அழித்து, சில எளியவர்களை விட்டுவிட்டு மீதியானவர்களைச் சிறைகொண்டுபோனது. யங. அவன் தேசத்தைப் பாழாக்கிப் பொக்கிஷங்களை எடுத்துக்கொண்டு போனது. யஅ. பிரபுக்கள் ரிப்லாவிலே கொலைசெய்யப்பட்டது. உஉ. அதிகாரியாக வைக்கப்பட்ட கெதலியா கொல்லப்பட்டதும் மீதியானவர்கள் எகிப்துக்கு ஓடிப்போனதும், உஎ. எவில்மெரோதாக் யோயாக்கீனின் ஆசனத்தை உயர்த்தினது.*

க அவன் இராச்சியபாரம்பண்ணும் ஒன்பதாம்
வருஷம் பத்தாம்மாதம் பத்தாம்தேதியிலேயென்
றால், பாபேலின் இராசாவாகிய நேபுகாத்நேச்
சார், அவனும் அவனுடைய எல்லா இராணுவ
மும் எருசலேமுக்கு விரோதமாய் வந்து, அதற்கு
எதிரே பாளயமிறங்கி, சுற்றிலும் அதற்கு எதிரே
உ கொத்தளங்களைக் கட்டினார்கள். — அப்படியே
பட்டணம் சிதேக்கியா இராசாவின் பதினோ
ராம் வருஷம்மட்டும் முற்றிக்கை போடப்பட்
ங டிருந்தது.—நாலாம்மாதம் ஒன்பதாம்தேதியிலே
பஞ்சம் பட்டணத்திலே மிஞ்சி, தேசத்தின்
சனத்திற்கு ஆகாரம் இல்லாதேபோனபோதோ
ச வெனில் பட்டணமதில் திறப்பாயிற்று.—அப்
போது யுத்தமனுஷரெல்லாரும் கல்தேயர் பட்
டணத்தைச் சூழ்ந்திருக்கையில், இராத்திரிகா
லத்திலே இராசாவுடைய தோட்டத்தின்வழியே
இரண்டு மதில்களுக்கு நடுவான வாசலால் ஓடி,
அவர்களும் இராசாவுமாய் வயல்வெளிவழியே
ரு புறப்பட்டுப்போனார்கள்.—ஆனால் கல்தேயரின்
இராணுவத்தார் இராசாவைப் பின்தொடர்ந்து,
எரிகோவின் வயல்வெளிகளில் அவன் கிட்ட
வந்தார்கள்; அப்போது அவன் இராணுவமெல்
௬ லாம் அவனை விட்டுச் சிதறிப்போயின.—அவர்
கள் இராசாவைப் பிடித்து, அவனை ரிப்லா
விலிருக்கிற பாபேலின் இராசாவண்டைக்குக்
எ கொண்டுபோய் அவனை நியாயம்தீர்த்து,—சிதே
க்கியாவின் குமாரரை அவன் கண்களுக்குமுன்
பாக வெட்டி, சிதேக்கியாவின் கண்களைக் குரு
டாக்கி, அவனுக்கு இரண்டு வெண்கல விலங்கு
களைப் போட்டு, அவனைப் பாபேலுக்குக் கொ
ண்டுபோனார்கள்.

அ ஐந்தாம்மாதம் ஏழாம்தேதியாகிற நேபுகாத்
நேச்சாரென்ற பாபேலுடைய இராசாவின் பத்
தொன்பதாம்வருஷத்திலே பாபேலுடைய இரா
சாவின் ஊழியக்காரனாகிய நேபுசார்தானென்ற
தலையாரிகளின் அதிபதி எருசலேமுக்கு வந்
கூ து,—கர்த்தரின் வீட்டையும், இராசாவின் வீட்
டையும்,எருசலேமின் சகல வீடுகளாகிய பெரிய
வீடுகளெல்லாவற்றையும் அக்கினியால் சுட்டெ
ய ரித்துவிட்டான் —தலையாரிகளின் அதிபதியோ
டிருக்கிற கல்தேயரின் இராணுவமெல்லாம்,
எருசலேமைச் சுற்றிலும் இருந்த அலங்கங்களை
யக இடித்துவிட்டார்கள்.—பட்டணத்தில் மீதியான
மற்றச் சனத்தையும்,பாபேலுடைய இராசாவின்
வசமாக ஓடிவந்துவிட்டவர்களையும், மற்றச்
சனக்கூட்டத்தையும், தலையாரிகளின் தலைவ
னாகிய நேபுசார்தான் சிறைகளாகக் கொண்டு
போய்,—நீசமான தேசத்தாரில் சிலரைத் திராட் யஉ
சத்தோட்டக்காரராகவும் பயிர்க்குடிகளாகவும்
விட்டுவந்தான்.

கர்த்தருடைய வீட்டிலிருந்த வெண்கலத்தூ யங
ண்களையும், அதிலிருந்த ஆதாரங்களையும், கர்த்த
ருடைய வீட்டிலிருந்த வெண்கலக் கடல்தொ
ட்டியையும், கல்தேயர் உடைத்துப்போட்டு, அ
வைகளின் வெண்கலத்தைப் பாபேலுக்கு எடுத்
துக்கொண்டுபோய், — செப்புச்சட்டிகளையும், யச
சாம்பல் எடுக்கும் ஆலக்கரண்டிகளையும், வெட்
டுக்கத்திகளையும், தூபகலசங்களையும், ஆராதனை
செய்யப்பட்ட சகல வெண்கலமுட்டுகளையும்
எடுத்துக்கொண்டார்கள்.—சுத்தப் பொன்னும் யரு
சுத்த வெள்ளியுமான தூபகலசங்களையும் கலங்
களையும் தலையாரிகளின் அதிபதி எடுத்துக்கொ
ண்டான்.—சாலோமோன் கர்த்தருடைய வீட் ய௬
டிற்காகப் பண்ணுவித்த அந்த இரண்டு தூண்
களும் ஒரு கடல்தொட்டியும் ஆதாரங்களுமா
கிய அந்தச் சகல முட்டுகளுடைய வெண்கலத்
திற்கும் நிறையில்லை. — ஒரு தூண் பதினெட் யஎ
டுமுழ உயரமாயிருந்தது; அதின்மேல் அதற்கு
மூன்றுமுழ உயரமான வெண்கலமுடி உண்டா
யிருந்தது; குமிழிலே சுற்றிலுமிருந்த பின்னலும்
மாதளம்பழங்களும் எல்லாம் வெண்கலமாயி
ருந்தன; மற்றத் தூணும் அதின் பின்னலும்
அதற்குச் சரியாயிருந்தது.

தலையாரிகளின் அதிபதி பிரதான ஆசாரியனா யஅ
கிய சேராயாவையும், இரண்டாம் ஆசாரியனா
கிய செப்பனியாவையும் வாசற்படியின் மூன்று
காவல்காரனையும் பிடித்தான். — பட்டணத்தி யகூ
லேயெனில் அவன் யுத்தமனுஷரின் விசாரிப்
புக்காரனாகிய பிரதானி ஒருவனையும், இராசா
வின் மந்திரிகளில் பட்டணத்தில் அகப்பட்ட
ஐந்துபேரையும், தேசத்தின் சனத்தைச் சேவ
கம் எழுதுகிற தலையான இராணுவச் சம்பிரதி
யையும், தேசச்சனத்திலே பட்டணத்தில் அகப்
பட்ட அறுபதுபேரையும் பிடித்தான்.—அவர் உய
களைத் தலையாரிகளின் அதிபதியாகிய நேபுசார்
தான் பிடித்து, ரிப்லாவில் இருக்கிற பாபேலின்
இராசாவண்டைக்குக் கொண்டுபோனான்.—அ உக
வர்களைப் பாபேலின் இராசா ஆமாத்தேசத்தின்
பட்டணமான ரிப்லாவிலே வெட்டிக் கொன்று
போட்டான்; இப்படியே யூதர் தங்கள் தேசத்தி
லிருந்து சிறையிருப்புக்குக் கொண்டுபோகப்
பட்டார்கள்.

ஆனால் பாபேலின் இராசாவாகிய நேபுகாத் உஉ
நேச்சார், யூதேயா தேசத்தில் மீதியாக வைத்த
சனத்தின்மேல், அவன் சாப்பானின் குமாரனா
கிய அகீக்காமின் மகன் கெதலியாவை அதிகா
ரியாக வைத்தான்.—பாபேலின் இராசா கெதலி உங
யாவை அதிகாரியாக வைத்ததை, சகல இராணு
வச் சேர்வைக்காரரும் அவர்களுடைய மனுஷ
ரும் கேட்டபோதோவெனில், அவர்கள் மிஸ்

பாவிலிருக்கிற கெதலியாவண்டையிலே வந்
தார்கள்; யாரெனில் நெத்தனியாவின் குமாரன்
இஸ்மவேலும், கரேயாவின் குமாரன் யோக்ன
னும், நெத்தோப்பாத்தியனாகிய தன்கூமேத்தின்
குமாரன் செராயாவும், மாகாத்தியனான ஒருவனு
டைய குமாரன் யாசனீயாவும் அவர்களும் அவர்
உ௪ கள் மனுஷருமாய்த்தானே. — அப்போது கெத
லியா அவர்களுக்கும் அவர்கள் மனுஷருக்கும்
ஆணையிட்டு, அவர்களுடனே நீங்கள் கல்தேய
ரைச் சேவிக்கப் பயப்படவேண்டாம்; தேசத்தி
லிருந்து பாபேலின் இராசாவைச் சேவியுங்கள்;
அப்போது உங்களுக்கு நன்மை ஆகுமென்
உ௫ றான்.—ஏழாம்மாதத்திலேயென்றால், இராசவித்
திலே பிறந்த எலிசாமாவின் குமாரனாகிய நெத்த
னியாவின் மகன் இஸ்மவேல் பத்துமனுஷரோ
டேகூட வந்து, கெதலியாவையும், அவனோடே
மிஸ்பாவிலிருந்த யூதரையும், கல்தேயரையும்
உ௬ வெட்டிக் கொன்றுபோட்டான். — அப்போது
சிறியோரும் பெரியோருமாகிய சனம் அனைத்
தும் இராணுவச் சேர்வைக்காரரும் எழுந்து
புறப்பட்டு, எகிப்திற்கு வந்தார்கள்; ஏனெனில்
கல்தேயருக்குப் பயந்திருந்தார்கள்.

யூதாவின் இராசாவாகிய யோயாக்கீனுடைய உ௭
சிறையிருப்பின் முப்பத்தேழாம்வருஷம் பன்னி
ரண்டாம்மாதம் இருபத்தேழாம்தேதியிலே சம்ப
வித்ததேதென்றால், ஏவில்மெரோதாக்கென்ற
பாபேலின் இராசா தான் இராசாவான வருஷத்
திலே, யூதாவின் இராசாவாகிய யோயாக்கீனின்
தலையை உயர்த்தி, அவனைக் காவல்வீட்டிலி
ருந்து புறப்படப்பண்ணி,—அவனோடே அன் உ௮
பாய்ப் பேசி, அவனுடைய ஆசனத்தைத் தன்
னோடே பாபேலிலிருந்த இராசாக்களின் ஆசன
ங்களுக்கு உயரமாக வைத்து,— அவனுடைய உ௯
காவல்வீட்டு வஸ்திரங்களை மாற்றினான்; அவன்
உயிரோடிருந்த சகல நாளும் நித்தம் இவனுக்கு
முன்பாக அப்பம்சாப்பிட்டான்.-அவனுடைய ௩௰
செலவுக்கோவெனில், அவன் உயிரோடிருந்த
நாளெல்லாம் அவனுக்கு இராசாவினால் அநுதி
னக் கட்டளையான திட்டம் எப்போதும் அநுதி
னமும் கொடுக்கப்பட்டது.

I. CHRONICLES.

# நாளாகமத்தின்

## முதலாம் புஸ்தகம்.

### க. அதிகாரம்.

*௧. நோவாவரையிலுள்ள ஆதாமுடைய வம்சவரிசை. ௫. யாப்பேத்தின் குமாரர். ௮. யாப்பானின் குமாரர். ௰௭. சேமின் குமாரர். ௨௪. ஆபிரகாம்வரையிலுள்ள சேமின் வம்சவரிசை. ௨௯. இஸ்ரவேலின் குமாரர். ௩௨. கேத்தூராளின் குமாரர். ௩௪. ஏசாவிலுண்டான ஆபிரகாமின் சந்ததி. ௪௩. ஏதோம் தேசத்தின் இராசாக்கள். ௫௧. ஏதோம் தேசத்தின் அதிபதிகள்.*

௧,௨ ஆதாம், சேத், ஏனோஸ்,—கேனான், மகலா
௩ லேயேல், யாரேத், — ஏனோக், மெத்தூசலா,
௪ லாமேக்,—நோவா, சேம், காம், யாபேத்.

௫ யாபேத்துக்கு இருந்த குமாரர், கோமேர்,
மாகோக், மாதாய், யாபான், தூபால், மேசேக்,
௬ தீராஸ் என்பவர்கள். — கோமேரின் குமாரர்,
அஸ்கேனாஸ், தீப்பாத், தோகர்மா என்பவர்
௭ கள்.—யாபானின் குமாரர், எலீசா, தற்சீஸ், கித்
தீம், தொதானிம் என்பவர்கள்.

௮ காமின் குமாரர், கூஸ், மிஸ்ராயிம், பூத், கா
௯ னான் என்பவர்கள். — கூசின் குமாரர், சேபா,
ஆவிலா, சப்தா, ராமா, சப்தேகா என்பவர்கள்;
ராமாவின் குமாரர், சேபா, தேதான் என்பவர்
௰ கள். — கூஸ், நிம்ரோதைப் பெற்றான்; இவன்
பூமியிலே பராக்கிரமசாலியாகத் துவக்கினான்.—
௰௧ மிஸ்ராயிம் லூதியரையும், ஆனாமியரையும், லெ
௰௨ காபியரையும், நப்தூகியரையும்,—பத்ரூசியரை
யும், பெலிஸ்தியர் பிறந்த கஸ்லூகியரையும், கப்
௰௩ தோரியரையும் பெற்றான். — கானான் சீதோ
னென்ற தன் மூத்த குமாரனையும், ஏத்தையும்,—
௰௪ எபூசியரையும், எமோரியரையும், கிர்காசியரை
௰௫ யும்,—ஏவியரையும், அற்கீயரையும், சீனியரை
௰௬ யும்,—அற்பாதியரையும், சேமாரியரையும், ஆமாத்
தியரையும் பெற்றான்.

௰௭ சேமின் புத்திரர், ஏலாம், ஆசூர், அற்பக்சாத்,
லூத், ஆராம், ஊஸ், ஊல், கேத்தேர், மேசெக்
௰௮ என்பவர்கள். — அற்பக்சாத், சாலாவைப் பெற்
௰௯ றான்; சாலாக், ஏபேரைப் பெற்றான். — ஏபே
ருக்கு இரண்டு குமாரர் பிறந்தார்கள்; ஒருவன்
பேர் பேலேக்; ஏனெனில் அவன் நாட்களிலே
பூமி பிரிவுபட்டது; அவன் சகோதரன்பேர்
௨௰ யோக்தான்.—யோக்தான் அல்மோதாதையும், சே
லேப்பையும், ஆத்சர்மாவேத்தையும், யேராகை
௨௧ யும்,—அதோராமையும், ஊசாலையும், திக்லாவை
௨௨ யும்,—ஏபாலையும், அபிமாவேலையும், சேபாவை
௨௩ யும், — ஓப்பீரையும், ஆவிலாவையும், யோவா
பையும் பெற்றான்; இவர்கள் எல்லாரும் யோக்
தானின் குமாரர்.

சேம், அற்பக்சாத், சாலா, — ஏபேர், பே ௨௪, ௨௫
லெக், ரெகூ,—செரூக், நாகோர், தாரா,—ஆபி ௨௬, ௨௭
ராமாகிய ஆபிரகாம்.

ஆபிரகாமின் குமாரர், ஈசாக்கும் இஸ்மவே ௨௮
லும் என்பவர்கள்.

இவர்களுடைய சந்ததிகளாவன: இஸ்மவே ௨௯
லின் மூத்த குமாரனாகிய நெபாயோத், கேதார்,
அத்பெயேல், மிப்சாம்,—மிஸ்மா, தூமா, மாசா, ௩௰
ஆதாத், தேமா,—எத்தூர், நாப்பிஸ், கெத்மாவும் ௩௧
தானே; இவர்கள் இஸ்மவேலின் குமாரர்.

ஆபிரகாமின் வைப்பாட்டியாகிய கேத்தூராள் ௩௨
பெற்ற குமாரர், சிம்ரான், யொக்சான், மேதான்,
மீதியான், இஸ்பாக், சூவா என்றவர்கள்; யொக்
சானின் குமாரர், சேபா, தேதான் என்றவர்
கள். — மீதியானின் குமாரர், ஏப்பா, ஏப்பேர், ௩௩
ஆனோக், அபிதா, எல்தாகா என்பவர்கள்; இவர்க
ளெல்லாரும் கேத்தூராளின் புத்திரர்.

ஆபிரகாம் ஈசாக்கைப் பெற்றான்; ஈசாக்கின் ௩௪
குமாரர், ஏசாவும் இஸ்ரவேலும்தானே.

ஏசாவின் குமாரர், எலிப்பாஸ், ரேகூவேல், ௩௫
எகூஸ், யாலாம், கோராக் என்பவர்கள்.—எலிப் ௩௬
பாசின் குமாரர், தேமான், ஓமார், சேப்பி, காத்
தாம், கேனாஸ், திம்னா, ஆமலேக் என்றவர்கள்.—
ரேகூவேலின் குமாரர், நாகாத், சேராக், சம்மா, ௩௭
மிசா என்றவர்கள்.—சேயீரின் குமாரர், லோத் ௩௮
தான், சோபால், சிபேயோன், ஆனா, தீசோன்,
எத்சேர், தீசான் என்பவர்கள்.—லோத்தானின் ௩௯
குமாரர், ஓரி, ஓமாம் என்றவர்கள்; லோத்தா
னின் சகோதரி திம்னாளென்றவள்.—சோபாலின் ௪௰
குமாரர், அல்யான், மனாகாத், ஏபால், சேப்பி,
ஓனாம் என்றவர்கள்; சிபேயோனின் குமாரர்,
ஆயா, ஆனாம் என்றவர்கள். — ஆனாவின் குமா ௪௧
ரரில் ஒருவன் தீசோன் என்றவன்; தீசோனின்
குமாரர், அம்ரான், எஸ்பான், இத்ரான், கேரான்
என்றவர்கள். — எத்சேரின் குமாரர், பில்லான், ௪௨
சாவான், யாக்கான் என்றவர்கள்; தீசானின்
குமாரர், ஊஸ், ஆரான் என்றவர்கள். — இஸ்ர ௪௩
வேல் புத்திரரை ஒரு இராசா ஆளாததற்குமுன்
னே, ஏதோம் தேசத்தில் அரசாண்ட இராசாக்க
ளாவது: பேயோரின் குமாரன் பேலா என்ற
வன்; அவன் பட்டணத்தின்பேர் தின்னாபா.—

௪௪ பேலா மரித்தபின், போஸ்ரா ஊராகிய சேரா
கின் குமாரன் யோவாப் அவன் ஸ்தலத்தில்
௪௫ இராசாவானான் —யோவாப் மரித்தபின், தேமா
னியரின் தேசத்தானாகிய ஊசாம் அவன் ஸ்தலத்
௪௬ தில் இராசாவானான்.—ஊசா மரித்தபின், பேதா
தின் குமாரன் ஆதாத் அவன் ஸ்தலத்தில் இரா
சாவானான்; இவன் மீதியானியரை மோவாபின்
வெளியிலே முறியடித்தவன்; இவன் பட்டண
௪எ த்தின்பேர் ஆபித்.—ஆதாத் மரித்தபின், மஸ்ரேக்
கா ஊராகிய சம்லா அவன் ஸ்தலத்தில் இரா
௪அ சாவானான் — சம்லா மரித்தபின், நதி ஓரமான
ரேகோபோத்தானாகிய சவுல் அவன் ஸ்தலத்தில்
௪௯ இராசாவானான். — சவுல் மரித்தபின், அக்போ
ரின் குமாரன் பால்கானான் அவன் ஸ்தலத்திலே
௫௰ இராசாவானான்.—பால்கானான் மரித்தபின், ஆ
தாத் அவன் ஸ்தலத்தில் இராசாவானான்; இவன்
பட்டணத்தின்பேர் பாகி என்பது; மேசகாபின்
குமாரத்தியாகிய மாத்திரேத்தின் மகளான அவன்
௫௧ பெண்சாதியின்பேர் மெகேத்தபேல்.-ஆதாத் மரி
த்தபின், ஏதோமில் ஏற்பட்ட அதிபதிகளா
வது: திவனா அதிபதி, அல்யா அதிபதி, ஏத்தேத்
௫௨ அதிபதி,—அகோலிபாமா அதிபதி, ஏதா அதிபதி,
௫௩ பீனோன் அதிபதி,—கேனாஸ் அதிபதி, தேமான்
௫௪ அதிபதி, மிப்சார் அதிபதி,—மக்தியேல் அதிபதி,
ஈராம் அதிபதி, இவர்கள் ஏதோமின் அதிபதிக
ளானவர்கள்.

## உ. அதிகாரம்.

க. இஸ்ரவேலின் குமாரர். ௩. தாமாரினாலுண்டான யூதாவின் சந்ததி. ௰௩. ஈசாயின் குமாரர்கள். ௰அ எஸ்ரோனின குமாரன் காலேப் உக. மகீரி யின் குமாரத்தியினாலுண்டான எஸ்ரோனின் சந்ததி உ௫. யோர்மேயே லின் சந்ததி. ௩௪ சேசானின சந்ததி ௪உ. காலேப்பின் வைப்பாட்டி யினாலுண்டான சந்ததி. ௫௰. ஊருடைய குமாரனாகிய காலேப்பின் சந்ததி.

க இஸ்ரவேலின் குமாரர், ரூபேன், சிமேயோன்,
உ லேவி, யூதா, ஈசக்கார், செபுலோன்,—தாண்,
இயோசேப், பென்யமீன், நவுதலி, காத், ஆசேர்
என்றவர்கள்.

௩ யூதாவின் குமாரர், ஏர், ஓனான், சேலா என்ற
வர்கள்; இந்த மூன்று குமாரர் சூவாபின் மக
ளான கானான் ஸ்திரியினிடத்தில் அவனுக்குப்
பிறந்தார்கள்; ஏர் என்ற யூதாவின் மூத்த குமா
ரன் கர்த்தரின் பார்வைக்குப் பொல்லாதவனான
௪ படியால் அவர் அவனைக் கொன்றார்.—அவன்
மருமகளாகிய தாமார் அவனுக்குப் பேரேத்சை
யும் சேராகையும் பெற்றாள்; யூதாவின் குமார
ரெல்லாம் ஐந்துபேர்.

௫ பேரேத்சின் குமாரர், எஸ்ரோன், ஆமூல்
௬ என்றவர்கள்.—சேராகின் குமாரரெல்லாம், சிம்ரீ,
ஏத்தான், ஏமான், கலக்கோல், தாரா என்ற ஐந்
எ துபேர் —சங்காரத்திற்கு நியமிக்கப்பட்டதிலே
துரோகம்பண்ணி இஸ்ரவேலைக் கலங்கப்பண்
ணின ஆகாரென்றவன், கற்மி புத்திரரில் ஒரு
அ வன். — ஏத்தானின் குமாரர் அசரீயாமுதலான
௯ வர்கள்.—எஸ்ரோனுக்குப் பிறந்த குமாரர், எர்
மேயேல், ராம். கெலுபா என்றவர்கள்.

ராம் அமீன்தாபைப் பெற்றான்; அமீன்தாப் ௰
யூதா புத்திரரின் பிரபுவாகிய நக்சோனைப் பெற்
றான்.—நக்சோன் சல்மாவைப் பெற்றான்; சல் ௰க
மா போவாசைப் பெற்றான்.—போவாஸ் ஓபே ௰உ
தைப் பெற்றான்; ஓபேத் ஈசாயைப் பெற்றான்.-
ஈசாய் தன் மூத்தகுமாரன் எலியாவையும், அ ௰௩
பின்தாப்பென்ற இரண்டாம்குமாரனையும், சிமே
யாவென்ற மூன்றாம் குமாரனையும்,—நாத்தானே ௰௪
யேலென்ற நாலாம் குமாரனையும், ரதாயி என்ற
ஐந்தாம் குமாரனையும்,—ஓத்சேமென்ற ஆறாம் ௰௫
குமாரனையும், தாவீதென்ற ஏழாம் குமாரனையும்
பெற்றான்.—அவர்கள் சகோதரிகள் செரூயாள், ௰௬
அபிகாயிலென்றவர்கள்; செரூயாளின் குமாரர்,
அபிசாய், யோவாப், ஆசகேலென்ற மூன்று
பேர். — அபிகாயில் அமாசாவைப் பெற்றாள்; ௰எ
அமாசாவின் தகப்பன் இஸ்மவேலியனாகிய
எத்தேர் என்றவன்.

எஸ்ரோனின் குமாரன் காலேப் எரீயோத் என் ௰அ
னப்பட்ட தன் பெண்சாதியாகிய அசுபாளாலே
பெற்ற குமாரர், ஏசேர், சோபாப், அற்தோன்
என்றவர்கள்.—அசுபாள் சென்றுபோனபின் கா ௰௯
லேப் எப்றாத்தை விவாகம்பண்ணினான்; இவள்
அவனுக்கு ஊரைப் பெற்றாள்.-ஊர் ஊரியைப் உ௰
பெற்றான்; ஊரி பெத்சாலெயேலைப்பெற்றான்.-
பிற்பாடு எஸ்ரோன் கீலேயாத்தின் தகப்பனாகிய உக
மாகீரின் குமாரத்தியினிடத்தில் உள்பிரவேசித்
து, தான் அறுபது வயதானபோது அவளை விவா
கம்பண்ணினான்; இவள் அவனுக்குச் சேகு
பைப்பெற்றாள்.—சேகுப் யாவீரைப்பெற்றான்; உஉ
இவனுக்குக் கீலேயாத் தேசத்தில் இருபத்துமூ
ன்று ஊர்களிருந்தன.—கேசூரும் ஆராமும் யவீ உ௩
ரின் கிராமங்களையும், கேனாத்தும் அதற்கடுத்த
கிராமங்களுமாகிய அறுபது ஊர்களையும் அவர்
கள் கையிலே வாங்கினார்கள்; இவர்களெல்லா
ரும் கீலேயாத்தின் கப்பனாகிய மாகீரின் குமா
ரர்.—காலேபின் ஊரான எப்பிறாத்தாவில் எஸ் உ௪
ரோன் சென்றுபோனபின், எஸ்ரோனின் பெ
ண்சாதியாகிய அபீயாள் அவனுக்குத் தெக்கோ
வாபின் தகப்பனாகிய ஆசூரைப் பெற்றாள்.

எஸ்ரோனுக்கு முதல்பிறந்த யொர்மெயே உ௫
லின் குமாரர், ராம் என்ற மூத்தவனும், பூனா,
ஓரேன், ஒத்சேம், அகியா என்றவர்களுந்தா
னே. — அத்தாராளென்று பேருள்ள வேறொரு உ௬
பெண்சாதியும் யொர்மெயேலுக்கு இருந்தாள்;
இவள் ஓனாமின் தாய்.—யொர்மெயேலுக்கு மு உஎ
தல்பிறந்த ராமின் குமாரர், மாஸ், யாமின், ஏக்
கேர் என்றவர்கள்.—ஓனாமின் குமாரர், சம்மாய், உஅ
யாதா என்றவர்கள்; சம்மாயின் குமாரர், நாதாப்,
அபிசூர் என்றவர்கள்.—அபிசூருடைய பெண் உ௯
சாதியின்பேர் அபிகாயில்; அவள் அவனுக்கு
அக்பானையும் மோளிதையும் பெற்றாள்.—நாதா ௩௰
பின் குமாரர், சேலேத், அப்பாயிம் என்றவர்
கள்; சேலேத் குமாரர் இல்லாமல் மரித்தான்.—
அப்பாயின் குமாரர், ஈசேய்முதலானவர்கள்; ௩க
ஈசேயின் குமாரர் சேசான்முதலானவர்கள்; சே

௰௩ யோக்னான், ஒன்பதாவது எல்சபாத், — பத்தா
வது எரேமியா, பதினோராவது மக்பன்னாயி,—
௰௪ காத்புத்திரரான இவர்கள் இராணுவத்தலைவரா
யிருந்தார்கள்; அவர்களில் சிறியவன் நூறுபே
ருக்கும் பெரியவன் ஆயிரம்பேருக்கும் சேர்
௰௫ வைக்காரராய் இருந்தார்கள்.—யோர்தான் தன்
கரைகளின்மேலெல்லாம் புரண்டுபோயிருக்கிற
முதலாம்மாதத்தில் அதைக் கடந்து, கிழக்கேயும்
மேற்கேயும் பள்ளத்தாக்குகளில் இருக்கிற யா
வரையும் துரத்திவிட்டவர்கள் இவர்கள்தான்.

௰௬ பின்னையும் பென்யமீன் புத்திரரிலும் யூதபுத்
திரரிலும் சிலர் அரணான தலத்தில் இருக்கிற
௰௭ தாவீதண்டைக்கு வந்தார்கள்.—தாவீது புறப்ப
ட்டு, அவர்களுக்கு எதிர்கொண்டு, அவர்களுக்கு
உத்தரவு கொடுத்து, நீங்கள் எனக்கு ஒத்தாசை
பண்ணச் சமாதானமாய் என்னண்டைக்கு வந்
தீர்களானால், என் இருதயம் உங்களோடு ஒன்றி
யிருக்கும்; என் கைகளில் கொடுமை இல்லாதி
ருக்கையில், என்னை என் சத்துருக்களுக்குக்
காட்டிக்கொடுக்க வந்தீர்களேயாகில், நம்மு
டைய பிதாக்களின் பராபரன் அதைப் பார்த்துக்
௰௮ கண்டிப்பாராகவென்றான். — அப்போது முப்
பதுபேருக்குத் தலைவனான அமாசாயின்மேல்
ஆவி இறங்கினதினால், அவன் தாவீதே, நாங்கள்
உம்முடையவர்கள்; ஈசாயின் குமாரனே, உமது
வசமாயிருப்போம்; உமக்குச் சமாதானம், சமா
தானம்; உமக்கு ஒத்தாசைபண்ணுகிறவர்களுக்
கும் சமாதானம்; ஏனெனில் உம்முடைய பரா
பரன் உமக்கு அநுக்கிரகம்செய்கிறாரென்றான்;
அப்போது தாவீது அவர்களைச் சேர்த்துக்கொ
ண்டு, பிற்பாடு அவர்களைத் தண்டுத்தலைவருக்
குள்ளே வைத்தான்.

௰௯ சவுலின்மேல் யுத்தம்பண்ணப்போகிற பெ
லிஸ்தியருடனேகூடத் தாவீது வருகிறபோது,
மனாசேயிலும் சிலர் அவன் வசமாய்ச் சேர்ந்தார்
கள்; ஆனால் அவர்களுக்கு உதவியானதில்லை;
ஏனெனில் பெலிஸ்தியரின் பிரபுக்கள் யோசனை
பண்ணி, அவன் நம்முடைய தலைகளுக்கு மோ
சமாய்த் தன் ஆண்டவனாகிய சவுலின் வசமாய்ப்
போவானென்று அவனை அனுப்பிவிட்டார்கள்.-
௨௰ அப்படியே அவன் சிக்லாவுக்குத் திரும்பிப்போ
கையில், மனாசேயில் அத்னாக், யோசபாத், எதி
யாவேல், மிகவேல், யோசபாத், எலிகூ, சில்லத்
தாயி என்ற மனாசே கோத்திரத்தாரின் ஆயிரத்துச்
சேர்வைக்காரர் அவன்வசமாய் வந்தார்கள்.—
௨௧ இவர்கள் தாவீதுக்கு அந்தத் தண்டுக்கு விரோத
மாய் ஒத்தாசைபண்ணினார்கள்; ஏனெனில் அ
வர்களெல்லாரும் பராக்கிரமக்காரரும் இராணு
வத்தில் சேர்வைக்காரருமாய் இருந்தார்கள்.—
௨௨ அதேதென்றால் தாவீதின் பாளயம் பராபரனு
டைய சேனையைப்போலப் பெருகும்மட்டும்,
அக்காலத்திலே நாளுக்குநாள் அவனுக்கு ஒத்
தாசைபண்ணும் மனுஷர் அவனண்டை வந்
தார்கள்.

கர்த்தருடைய வாக்கின்படியே, சவுலின் இரா ௨௩
ச்சியபாரத்தைத் தாவீதண்டைக்குத் திருப்ப,
எபிரோனிலிருக்கிற அவனண்டைக்கு வந்த
சேவகத்திற்கு ஆயுதம் அணிந்த தலைவரின் இலக்
கங்களாவது:—யூதபுத்திரரில் பரிசையும் ஈட் ௨௪
டியும் பிடித்து, சேவகத்திற்கு ஆயுதம் அணிந்த
வர்கள் ஆறாயிரத்து எண்ணூறுபேர். — சிமே ௨௫
யோன் புத்திரரில் சேவகத்திற்குப் பராக்கிரம
மானவர்கள் ஏழாயிரத்து ஒருநூறுபேர்.—இலே ௨௬
வி புத்திரரில் நாலாயிரத்து அறுநூறுபேரும்,—
ஆரோன் சந்ததியாரின் முனையாளியாகிய யோய் ௨௭
தாவும், அவனோடிருந்த மூவாயிரத்து எழுநூறு
பேரும்,—பராக்கிரமசாலியான சாதோக்கென்ற ௨௮
வாலிபனும், அவன் தகப்பன் வீட்டாரான இரு
பத்திரண்டு பிரபுக்களும்தானே.—பென்யமீன் ௨௯
புத்திரரான சவுலின் சகோதரரில் மூவாயிரம்
பேர்; ஏனெனில் அந்தமட்டுக்கும் அவர்களில்
மிச்சமானவர்கள் சவுலின் வீட்டைக் காப்பாற்
றப்பார்த்தார்கள். — எப்பிராயீம் புத்திரரில் தங் ௩௰
கள் பிதாக்களின் வீட்டாருக்குள்ளே பேர்
போன மனுஷரான பராக்கிரமசாலிகள் இருப
தினாயிரத்து எண்ணூறுபேர். — மனாசேயின் ௩௧
பாதிக்கோத்திரத்தில் தாவீதை இராசாவாக்குகி
றதற்கு வர, பேர்பேராகக் குறிக்கப்பட்டவர்
கள் பதினெண்ணாயிரம்பேர்.—ஈசகார் புத்திர ௩௨
ரில் இஸ்ரவேல் செய்யவேண்டியதேதென்று
அறிந்து, காலங்களுக்குத்தக்க உணர்வுள்ளவர்
களான அவர்களின் இருநூறு தலைவமாரும்,
இருநூறுபேரும், இவர்கள் வாக்குக்குச் செவி
கொடுத்த இவர்களுடைய எல்லாச் சகோதரரும்
தானே.—சேபுலோனில் சகலவித யுத்த ஆயுதங் ௩௩
களாலும் யுத்தம்செய்கிறதற்கும் மனவஞ்சனை
யில்லாத வரிசையாய் நிற்கிறதற்கும் பழகி, யுத்
தத்திற்குப் போகத்தக்கவர்கள் ஐம்பதினாயிரம்
பேர்.—நவுதலியில் ஆயிரம் பிரபுக்களும் அவர் ௩௪
களோடேகூட இருந்த பரிசையும் ஈட்டியும்
பிடித்த முப்பத்தேழாயிரம்பேர். — தாணியரில் ௩௫
யுத்தத்திற்கு ஆயத்தப்பட்டவர்கள் இருபத்து
எண்ணாயிரத்து அறுநூறுபேர். — ஆசேரில் யுத் ௩௬
தத்திற்கு ஆயத்தப்பட்டவர்களாய், சேவகம்பண்
ணப்போகத்தக்கவர்கள் நாற்பதினாயிரம்பேர்.—
யோர்தானுக்கு அக்கரையான ரூபேனியரிலும், ௩௭
காதியரிலும், மனாசேயின் பாதிக்கோத்திரத்தி
லும், யுத்தம்பண்ணும் சகலவித ஆயுதங்களையும்
தரித்தவர்கள் நூற்றிருபதினாயிரம்பேர்.–தாவீதை ௩௮
இஸ்ரவேல்மேல் இராசாவாக்குகிறதற்கு, இந்த
யுத்தமனுஷரெல்லாரும் அணி அணியாய் வைக்
கப்பட்டவர்களாய், உத்தம இருதயத்தோடே
எபிரோனுக்கு வந்தார்கள்; இஸ்ரவேலில் மற்ற
அனைவரும் தாவீதை இராசாவாக்குகிறதற்கு
ஒருமனப்பட்டிருந்தார்கள்.—அவர்கள் அங்கே ௩௯
தாவீதோடேகூட மூன்றுநாளிருந்து, புசித்துக்
குடித்தார்கள்; ஏனெனில் அவர்கள் சகோதரர்
அவர்களுக்காகச் சேகரம்பண்ணினார்கள்.—ஈச ௪௰
ஷார், சேபுலோன், நவுதலியின் எல்லைமட்டும்

அவர்களுக்குச் சமீபமாயிருந்தவர்களும் கழுதை
கள்மேலும் ஒட்டகங்களின்மேலும் கோவேறுக
ழுதைகள்மேலும் மாடுகள்மேலும் ஏற்றின தின்
பண்டங்களாகிய மாவின் வர்க்கங்களையும், அத்
திப்பழ அடைகளையும், வற்றலான திராட்சப்
பழங்களையும், திராட்சப்பழ இரசத்தையும், எண்
ணெயையும், ஆடுமாடுகளையும் நிரம்ப ஏற்றிக்
கொண்டுவந்தார்கள்; ஏனெனில் இஸ்ரவேலிலே
மகிழ்ச்சியுண்டாயிருந்தது.

## யங. அதிகாரம்.

க. தாவீது கீரியாத்யாரீமிலிருந்து நியாயப்பிரமாணப்பெட்டியை வணக்கத்தோடு கொண்டுவந்தது. ங. ஊசா அழிக்கப்பட்டதும், பெட்டி ஓபேதேதோமின் வீட்டில் வைக்கப்பட்டதும்.

க தாவீது ஆயிரத்திற்குச் சேர்வைக்காரரோடும்
நூற்றிற்குச் சேர்வைக்காரரோடும் சகல பிரபுக்
உ களோடும் ஆலோசனைபண்ணி, — இஸ்ரவேல்
சபைக்கெல்லாம் சொன்னதாவது: உங்களுக்
குச் சம்மதியும் நம்முடைய பராபரனாகிய கர்த்
தருடைய சித்தமுமாயிருந்தால், இஸ்ரவேலின்
தேசங்களிலெல்லாமிருக்கிற நம்முடைய மற்
றச் சகோதரரும், அவர்களோடே தங்கள் பேட்
டைகளின் பட்டணங்களிலிருக்கிற ஆசாரியர்
களும், இலேவியரும் நம்மோடே கூடும்படிக்கு
நாம் சீக்கிரமாக அவர்களண்டைக்கு ஆள்களை
ங அனுப்பி,—நமது பராபரனுடைய பெட்டியைத்
திரும்ப நம்மண்டைக்குக் கொண்டுவருவோ
மாக; ஏனென்றால் சவுலின் நாள்களில் அதைத்
ச தேடாதே போனோமென்றான். — அப்போது
சபையெல்லாம் இப்படிச் செய்யவேண்டுமென்
றார்கள்; ஏனெனில் இந்தக்காரியம் சகல சனத்
தின் பார்வைக்கும் செம்மையாயிருந்தது.
ரு அப்படியே பராபரனுடைய பெட்டியைக்
கீரியாத்யாரீமிலிருந்து கொண்டுவர, தாவீது எ
கிப்தினுடைய சீகோர் நதியைத்துவக்கி ஆமாத்
தின் எல்லைமட்டுமுள்ள இஸ்ரவேலையெல்லாம்
சு கூட்டி,—கேருபீன்களின் நடுவே வாசம்பண்
ணுகிற கர்த்தராகிய பராபரனுடைய நாமம் தொ
ழுதுகொள்ளப்படுகிற அவருடைய பெட்டியை
யூதாவிலிருக்கிற கீரியாத்யாரீமுக்கடுத்த பாலா
விலிருந்து ஏறிவரப்பண்ணும்படிக்கு, அவனும்
இஸ்ரவேல் அனைத்துமாய் அவ்விடத்திற்கு
எ ஏறிப்போனார்கள்.—அவர்கள் பராபரனுடைய
பெட்டியை அபினதாபின் வீட்டிலிருந்து ஒரு
புது இரதத்தின்மேல் ஏற்றிக்கொண்டுவந்தார்கள்;
ஊசாவும் அகீயோகும் இரதத்தை நடத்தினார்
அ கள். — தாவீதும் சகல இஸ்ரவேலும் எல்லாப்
பலத்தோடும் பராபரனுக்குமுன்பாகப் பாட்டு
களைப் பாடி, சுரமண்டலங்களையும் தம்புருகளை
யும் மேளங்களையும் கைத்தாளங்களையும் பூரிகை
களையும் மகிழ்ச்சியாய்ச் சேவித்துக்கொண்டிரு
கூ ந்தார்கள்.—அவர்கள் கீதோனின் களம்மட்டும்
வந்தபோதோவெனில், மாடுகள் இடறினபடியி
னாலே, ஊசா பெட்டியைப் பிடிக்கத் தன் கை
ய யை நீட்டினான்.—அப்போது கர்த்தர் ஊசாவின்
மேல் கோபமூண்டவராகி, அவன் தன் கை
யைப் பெட்டியண்டைக்கு நீட்டினநிமித்தம் அ
வனை அடித்தார்; அங்கே அவன் பராபரனுக்கு
முன்பாக மரித்தான்.—அப்போது கர்த்தர் ஊசா யக
வை இடித்த இடிக்காக, தாவீது மனஸ்தாபப்
பட்டு, அந்த ஸ்தலத்திற்கு, இந்நாள்மட்டுமி
ருக்கிற ஊசாவின் இடியென்று பேரிட்டு,—
அன்றைத்தினம் பராபரனுக்குப் பயந்து, பரா யஉ
பரனுடைய பெட்டியை நான் என்னண்டைக்
குக் கொண்டுவருவது எப்படியென்று சொல்
லி,—பெட்டியைத் தன்னண்டைக்குத் தாவீதின் யங
பட்டணத்திலே கொண்டுவராமல், அதைக்
கேத்தியனாகிய ஓபேதேதோமின் வீட்டிலே
சேர்த்தான்.
ஆனால் பராபரனுடைய பெட்டி ஓபேதேதோ யச
மின் வீடாகிய அவனிடத்திலே மூன்றுமாதம்
இருக்கையில், கர்த்தர் ஓபேதேதோமின் வீட்
டையும் அவனுக்குண்டானதெல்லாவற்றையும்
ஆசீர்வதித்தார்.

## யச. அதிகாரம்.

க. ஈராம் தாவீதினிடத்தில் அன்புகூர்ந்தது. உ. தாவீதின் சனங்களும், பெண்சாதி பிள்ளைகளும். அ. அவன் பெலிஸ்தியர்களை இரண்டுதரம் செயித்தது.

தீருவின் இராசாவாகிய ஈராம் தாவீதண்டைக் க
கு, தானாபதிகளையும், அவனுக்கு ஒரு வீட்டைக்
கட்டுகிறதற்குக் கேதுருமரங்களையும், கல்தச்ச
ரையும், தச்சரையும் அனுப்பினான்.—கர்த்தர் தன் உ
னை இஸ்ரவேலின்மேல் இராசாவாகத் திடப்ப
டுத்தினார் என்பதைத் தாவீது கண்டறிந்தான்;
ஏனெனில் இஸ்ரவேலென்கிற அவருடைய
சனத்தின்நிமித்தம் அவனுடைய இராச்சியம்
மிகவும் உயர்ந்தது.
எருசலேமிலே தாவீது பின்னையும் சில ஸ்தி ங
ரிகளை விவாகம்பண்ணி, இன்னம் குமாரரையும்
குமாரத்திகளையும் பெற்றான். — எருசலேமிலே ச
அவனுக்குப் பிறந்த குமாரரின் நாமங்களாவது:
சம்மூவா, சோபாப், நாத்தான், சாலோமோன்,—
இப்கார், எலிசூவா, எலிப்பேலேத்,—நோகா, ரு, சு
நெபெக், யப்பீயா, — எலிஷாமா, பெலியாதா, எ
எலிப்பெலேத் என்பவர்கள்.
தாவீது இஸ்ரவேலின்மேலெல்லாம் இராசா அ
வாக அபிஷேகம்பண்ணப்பட்டதைப் பெலிஸ்
தியர்கேட்டபோதோவெனில், பெலிஸ்தியரெல்
லாரும் தாவீதைத் தேட ஏறிவந்தார்கள்; அதைத்
தாவீது கேட்கிறபோது அவர்களுக்கு எதிராகப்
புறப்பட்டான்.—பெலிஸ்தியரோவெனில்வந்து, கூ
ரெப்பாயீம் பள்ளத்தாக்கில் விசாலத்தில் இறங்
கினார்கள். — பெலிஸ்தியரின்மேலே போயேறு ய
வேனோ அவர்களை என் கையில் ஒப்புக்கொடுப்
பீரோ என்று தாவீது பராபரனைக் கேட்டபோது,
கர்த்தர் அவனுக்கு, ஏறு அவர்களை உன் கையில்
ஒப்புக்கொடுப்போமென்றார்.—அவர்கள் பால் யக
பிராசீமுக்கு ஏறிவந்தபோது, தாவீது அங்கே
அவர்களை முறியடித்து, தண்ணீர்கள் வடிந்து
போகிறதுபோல, பராபரன் என் கையினால் என்

சத்துருக்களை வடிந்துபோகப்பண்ணினரென்
றான்; அதைக்குறித்து அந்த ஸ்தலத்திற்குப் பால்
௰௨ பிராச்சிமென்று பேரிட்டார்கள். — அங்கே அ
வர்கள் தங்கள் தேவர்களைவிட்டு ஓடினார்கள்;
அவைகள் தாவீது கற்பித்தபடி அக்கினியாலே
சுட்டெரிக்கப்பட்டன.

௰௩ ஆனால் பெலிஸ்தியர் மறுபடியும் அந்தப் பள்
ளத்தாக்கின் விசாலத்திலே வந்து இறங்கினார்
௰௪ கள்.—அப்போது தாவீது திரும்பப் பராபரனைக்
கேட்டதற்கு, பராபரன் அவனுக்கு, நீ அவர்க
ளுக்குப் பின்னாலே ஏறிப்போகாமல், அவர்க
ளுக்குப் பக்கமாய்ச்சுற்றி, முசுக்கட்டைச் செடி
களுக்கு எதிரேயிருந்து அவர்கள்மேல் வந்து,—
௰௫ முசுக்கட்டைச் செடிகளின் நுனிகளில் நடந்
துவருகிற இரைச்சலை நீ கேட்கையில், அப்
போது யுத்தத்திற்குப் புறப்படு; ஏனெனில் அப்
போது பெலிஸ்தியரின் பாளயத்தை முறியடிக்க,
பராபரன் உனக்கு முன்னாகப் புறப்பட்டிருப்
௰௬ பாரென்றார்.—பராபரன் தனக்குக் கற்பித்தபடி
யே தாவீது செய்கிறபோது, பெலிஸ்தியரின் இ
ராணுவத்தைக் கிபேயோனைத்துவக்கிக் காசேர்
௰௭ மட்டும் முறியடித்தார்கள். — அப்படியே தாவீ
தின் கீர்த்தி சகல தேசங்களிலும் பிரசித்தமாகி,
அவனுக்குப் பயப்படுகிற பயத்தைக் கர்த்தர்
சகல சாதிகளின்மேலும் வரப்பண்ணினார்.

## ௰௫. அதிகாரம்.

௧. தாவீது ஒரு இடத்தை ஏற்படுத்தி, ஓபேதேதோமின் வீட்டிலிருந்து பெட்டியை ஆசாரியர்களும் இலேவியரும் கொண்டுவரும்படி செய்தது. ௨௫. அவன் அதை மிகுந்த சந்தோஷத்துடனே ஏறிவரப்பண்ணினது. ௨௯. மீகாள் அவனைத் தன் இருதயத்தில் அசட்டைபண்ணினது.

௧ அவன் தனக்குத் தாவீதின் பட்டணத்தில் வீடு
களை உண்டாக்கி, பராபரனுடைய பெட்டிக்கு
ஒரு ஸ்தலத்தை ஆயத்தப்படுத்தி, அதின்மேல்
௨ ஒரு கூடாரத்தை விரித்தான்.—பிற்பாடு தாவீது
இலேவியர் ஒழிய வேறொருவரும் பராபரனு
டைய பெட்டியை எடுக்கலாகாது; ஏனெனில்
பராபரனுடைய பெட்டியை எடுக்கவும், என்
றைக்கும் அவருக்குப் பணிவிடைசெய்யவும்,
அவர்களைக் கர்த்தர் தெரிந்துகொண்டாரென்
றான்.

௩ அப்படியே தான் கர்த்தருடைய பெட்டிக்கு
ஆயத்தப்படுத்தின அதின் ஸ்தலத்திற்கு அதை
ஏறிவரப்பண்ண, தாவீது இஸ்ரவேலையெல்லாம்
௪ எருசலேமிலே கூட்டி,—ஆரோனின் புத்திரரை
௫ யும்,—இலேவியராகிய காகாத் புத்திரரில் பிரபு
வாகிய ஊரியேலையும், அவன் சகோதரராகிய
௬ நூற்றிருபதுபேரையும்,—மெராரியின் புத்திரரில்
பிரபுவாகிய அசாயாவையும், அவன் சகோதர
௭ ராகிய இருநூற்றிருபதுபேரையும்,—கெர்சோம்
புத்திரரில் பிரபுவாகிய யோவேலையும், அவன்
௮ சகோதரராகிய நூற்றுமுப்பதுபேரையும்,—எலி
சாப்பான் புத்திரரிலே பிரபுவாகிய செமாயா
வையும், அவன் சகோதரராகிய இருநூறுபேரை
௯ யும்,—எபிரோன் புத்திரரிலே பிரபுவாகிய எலி
யேலையும், அவன் சகோதரராகிய எண்பதுபே
ரையும்,—ஊசியேல் புத்திரரில் பிரபுவாகிய அம் ௰
மினதாபையும், அவன் சகோதரராகிய நூற்றுப்
பன்னிரண்டுபேரையும் தாவீது கூடிவரப்பண்
ணினான்.

பிற்பாடு தாவீது ஆசாரியராகிய சாதோக்கை ௰௧
யும், அப்பியத்தாரையும், இலேவியராகிய ஊரி
யேல், அசாயா, யோவேல், செமாயா, எலியேல்,
அம்மினதாபென்றவர்களையும் அழைத்து, — அ ௰௨
வர்களுடனே, இலேவியரில் நீங்கள் பிதாக்களு
டைய சந்ததிகளின் தலைவர்; நீங்கள் இஸ்ரவே
லின் பராபரனாகிய கர்த்தரின் பெட்டியை அதற்
கு நான் ஆயத்தம்பண்ணின ஸ்தலத்திற்கு ஏறிவர
ப்பண்ண, உங்களையும் உங்கள் சகோதரரையும்
பரிசுத்தம்பண்ணிக்கொள்ளுங்கள். — ஏனென் ௰௩
றால் முதல் நீங்கள் அதைச் சுமக்காதபடியினா
லும், நாம் நம்முடைய பராபரனாகிய கர்த்தரை
நியாயமானபடியே தேடாதேபோனபடியினா
லும் அவர் நமக்குள்ளே இடிக்குதலை உண்டாக்
கினாரென்றான்.

அப்படியே ஆசாரியர்களும் இலேவியர்களும் ௰௪
இஸ்ரவேலின் பராபரனாகிய கர்த்தரின் பெட்டி
யை ஏறிவரப்பண்ணத் தங்களைச் சுத்தம்பண்
ணிக்கொண்டார்கள்.-பிற்பாடு இலேவி புத்திரர் ௰௫
கர்த்தருடைய வார்த்தையின்படியே, மோசே
கற்பித்தபிரகாரமாகப் பராபரனுடைய பெட்
டியை அவைகளிலிருக்கிற வாரைகளினாலே
தங்கள் தோள்களின்மேல் எடுத்தார்கள்.

தாவீது இலேவியரின் பிரபுக்களுடனே, நீங் ௰௬
கள் உங்கள் சகோதரராகிய பாட்டகரைக் கீத
வாத்தியங்களாகிய தம்புருகளாலும் சுரமண்ட
லங்கள் கைத்தாளங்களாலும் தங்கள் சத்தத்தை
உயர்த்தி, சந்தோஷம் உண்டாகக் கேட்கப்பண்
ணும்படிக்கு நிறுத்தவேண்டுமென்று சொன்
னான். — அப்படியே இலேவியர் யோவேலின் ௰௭
குமாரனாகிய ஏமானையும், அவன் சகோதரரில்
பெரகியாவின் குமாரன் ஆசாப்பையும், மெரா
ரியின் புத்திரரான தங்கள் சகோதரரில் குஷாயா
வின் குமாரன் ஏத்தானையும், — இவர்களோடும் ௰௮
கூட இரண்டாவது வரிசையாகத் தங்கள் சகோ
தரராகிய சகரியா, பேன், யாசியேல், செமிர
மோத், எகியேல், உன்னி, எலியாப், பெனாயா,
மசெயா, மத்தித்தியா, எலிப்பேலேகு, மிக்னே
யா, ஓபேதேதோம், ஏயேலென்ற வாசல்காப்பா
ரை நிறுத்தினார்கள்.—பாட்டகராகிய ஏமானும், ௰௯
ஆசாப்பும், ஏத்தானும், பஞ்சலோகக் கைத்தா
ளங்களைத் தொனிக்கப்பண்ணிப் பாடினார்கள்.—
சகரியா, ஆசியேல், செமிரமோத், எகியேல், ௨௰
உன்னி, எலியாப், மாசெயா, பெனாயா என்ற
வர்கள் கீச்சுக்குரலாய்ப் பாடித் தம்புருகளை வா
சித்தார்கள்.—ஆனால் மத்தித்தியா, எலிபேலேகு, ௨௧
மிக்னேயா, ஓபேதேதோம், ஏயேல், அச்சியா
வென்றவர்கள் இராகம்பிடிக்க எண்ணரம்புச்
சுரமண்டலங்களை வாசித்தார்கள்.

௨௨ இலேவியரின் பிரபுவாகிய கேனனியாவோ
வெனில் பெட்டியைச் சுமக்கிற வேலையை
விசாரித்து, அதைச் சுமக்கும்விதத்தைப் போதித்
தான்; ஏனென்றால் அவன் உணர்வுள்ளவனாயி
௨௩ ருந்தான்.—பெர்கியாவும் எல்க்கானாவும் பெட்
டிக்குமுன்பாகக் காவல்காத்து நடந்தார்கள்.
௨௪ ஆனால் சேப்னியா, யோஷபாத், நெத்தானி
யேல், அமாசாயி, சகரீயா, பெனாயா, எலியேச
ரென்ற ஆசாரியர் பராபரனுடைய பெட்டிக்கு
முன்பாகப் பூரிகைகளை ஊதினார்கள்; ஓபேதே
தோமும் எகியாவுமோவெனில், பெட்டியின்
பிறகாலே காவல்காத்துவந்தார்கள்.
௨௫ இப்படித் தாவீதும் இஸ்ரவேலின் மூப்பரும்
ஆயிரத்துச் சேர்வைக்காரரும் கர்த்தருடைய உட
ம்படிக்கையின் பெட்டியை ஓபேதேதோமின்
வீட்டிலிருந்து மகிழ்ச்சியோடே ஏறிவரப்பண்
௨௬ ணப்போனார்கள்.—கர்த்தருடைய உடம்படிக்
கையின் பெட்டியைச் சுமக்கிற இலேவியருக்
குப் பராபரன் அநுக்கிரகம்பண்ணுகிறபோதோ
வெனில், அவர்கள் ஏழு காளைகளையும் ஏழு
௨௭ ஆட்டுக்கடாக்களையும் பலியிட்டார்கள்.—தாவீ
தும், பெட்டியைச் சுமக்கிற எல்லா இலேவிய
ரும், பாட்டகர்களும், பாட்டகரின் வேலையை
விசாரிக்கிற பிரபுவாகிய கெனனீயாவும், மெல்
லிய புடவையான சால்வைகளைத் தரித்திருந்
தார்கள்; தாவீது சணல்நூலான ஆசாரியசால்வை
௨௮ யையும் போர்த்துக்கொண்டிருந்தான்.—அப்ப
டியே இஸ்ரவேலனைத்தும் கர்த்தருடைய உடம்
படிக்கையின் பெட்டியைக் கெம்பீரத்தோடும்,
எக்காளங்கள் பூரிகைகள் கைத்தாளங்களுடைய
தொனிப்போடும், தம்புருகளையும் சுரமண்டலங்
களையும் வாசிக்கிற சத்தத்தோடும் ஏறிவரப்பண்
ணினார்கள்
௨௯ கர்த்தருடைய உடம்படிக்கையின் பெட்டி
தாவீதின் பட்டணம்மட்டும் வந்தபோதோவெ
னில், சவுலின் குமாரத்தியாகிய மீகாள் பலகணி
வழியாய்ப் பார்த்து, தாவீது இராசா நடனம்பண்
ணுகிறதையும் கீதவாத்தியம் பாடுகிறதையும்
கண்டு, அவனைத் தன் இருதயத்திலே அசட்டை
பண்ணினாள்.

## ௰௬. அதிகாரம்.

௧. தாவீது செலுத்திய கொண்டாட்டப்பலி. ௪. அவன் சிலரைப் பாடு தற்கு வைத்தது. ௭. அவர்கள் பாடின பாட்டு. ௩௭. அவன் பெட்டியி னிடத்தில் சேவகர்களையும், வாசல்காக்கிறவர்களையும் வாத்தியகார ரையும் வைத்தது.

௧ அவர்கள் பராபரனுடைய பெட்டியை உள்ளே
கொண்டுவந்தபோது, அவர்கள் அதைத் தாவீது
அதற்குப் போட்ட கூடாரத்தின் நடுவே வைத்
து, பராபரனுடைய சந்நிதியில் சர்வாங்கதகன
பலிகளையும் சமாதானபலிகளையும் செலுத்தினா
௨ ர்கள்.—தாவீது சர்வாங்கதகனபலிகளையும் சமாதா
னபலிகளையும் செலுத்தித் தீர்ந்தபிற்பாடு, அவன்
சனத்தைக் கர்த்தருடைய நாமத்திலே ஆசீர்வ
௩ தித்து,—புருஷனாத்துவக்கி ஸ்திரிகள் மட்டுக்
கும், இஸ்ரவேலராகிய அனைவருக்கும் அவரவ
ருக்கு ஒவ்வொரு பணியாரத்தையும், ஒவ்வொரு
இறைச்சித்துண்டையும், ஒவ்வொருபடி திராட்
சப்பழஇரசத்தையும் பங்கிட்டான்.
இஸ்ரவேலின் பராபரனாகிய கர்த்தரைப் பிரஸ் ௪
தாபம்பண்ணித் துதித்துப் புகழுகிறதற்கு, கர்த்த
ருடைய பெட்டிக்குமுன்பாகச் சேவிக்கத்தக்க
இலேவியரில் சிலரை அவன் வைத்தான்.-அவர் ௫
களில் ஆசாப் தலைவனும், சகரீயா அவனுக்கு
இரண்டாவதுமாயிருந்தார்கள்; ஏயேல், செமிர
மோத், எகியேல், மத்தித்தீயா, எலியாப், பெனா
யா, ஓபேதேதோம், ஏயேலென்றவர்கள் தம்புரு
கள் சுரமண்டலங்களென்ற கீதவாத்தியங்களை
யும், ஆசாப்போவெனில் கைத்தாளங்களையும்
வாசிக்கவும்,-பெனாயா, ஆகாசீயேலென்ற ஆசா ௬
ரியர்கள் எப்போதும் பராபரனுடைய உடம்ப
டிக்கையின் பெட்டிக்குமுன்பாகப் பூரிகைகளை
ஊதவும் வைக்கப்பட்டார்கள்.
அப்படித் துவக்கப்பட்ட அந்நாளிலேதானே ௭
தாவீது ஆசாப்பையும் அவன் சகோதரரையும்
கொண்டு கர்த்தரைத் துதிக்கிறதற்கு வாசிக்கப்
பண்ணின சங்கீதமாவது:
கர்த்தரைத் துதித்து, அவர் நாமத்தைப் பிரஸ் ௮
தாபமாக்கி, அவர் செய்கைகளைச் சனசதளங்க
ளுக்குள்ளே அறிவியுங்கள். — அவரைப் பாடி, ௯
அவரைக் கீர்த்தனம்பண்ணி, அவருடைய அதி
சயங்களையெல்லாம் தியானியுங்கள். — அவரு ௰
டைய பரிசுத்த நாமத்தைப்பற்றி மேன்மைபா
ராட்டுங்கள்; கர்த்தரைத் தேடுகிறவர்களின் இரு
தயம் மகிழ்வதாக.—கர்த்தருக்காகவும் அவர் வல் ௰௧
லமைக்காகவும் விசாரித்துக்கொண்டு நித்தம்
அவர் சமுகத்தைத் தேடுங்கள் — அவருடைய ௰௨
தாசனாகிய இஸ்ரவேலின் வித்தானவர்களே,
அவர் தெரிந்துகொண்டவர்களாகிய யாக்கோ
பின் புத்திரரே,-அவர் செய்த அவருடைய அதி ௰௩
சயங்களையும், அவருடைய அற்புதங்களையும்,
அவர் வாக்கின் நியாயத்தீர்ப்புகளையும் நினையுங்
கள்.—அவரே நம்முடைய பராபரனாகிய கர்த் ௰௪
தர்; பூமியெங்கும் அவருடைய நியாயத்தீர்ப்பு
கள் விளங்கும். — உனக்குக் கானான்தேசத்தை ௰௫
உங்கள் சுதந்தரவிகிதமாகக் கொடுப்போமென்று
அவர் ஆபிரகாமோடே, — இவர்கள் கொஞ்சத் ௰௬
தொகைக்குள்பட்டபேரும் அதில் பரதேசிகளு
மாய் இருக்கையில்,—பண்ணின அவருடைய ௰௭
உடம்படிக்கையும் ஈசாக்குக்கு இட்ட ஆணையு
மாகிய,—அவருடைய ஏற்பாட்டையும், அவர் ௰௮
ஆயிரம்தலைமுறைக்குக் கட்டளையிட்ட வார்த்
தையையும் என்றைக்கும் நினையுங்கள்.—அதை ௰௯
யாக்கோபுக்குக் கட்டளையாகவும், இஸ்ரவே
லுக்கு நித்திய உடம்படிக்கையாகவும் நிலைப்ப
டுத்தினார்.-அவர்கள் சாதிசாதிக்கும், ஒரு இராச் ௨௰
சியத்திலிருந்து மறு சனத்தண்டைக்கும் நடந்து
போனார்கள். — ஒருவரும் அவர்களை ஒடுக்க ௨௧
ஒட்டாதிருந்தார்.—நாம் அபிஷேகம்பண்ணின ௨௨
வர்களை நீங்கள் தொடாமலும் நம்முடைய தீர்க்

கதரிசிகளுக்குத் தீங்குசெய்யாமலும் இருங்க
ளென்று அவர்கள் நிமித்தமாக இராசாக்களைக்
கடிந்துகொண்டார்.
௨௩ பூமியின் சகல குடிகளே, கர்த்தரைப் பாடி,
நாளுக்குநாள் அவருடைய இரட்சிப்பைச் சுவி
௨௪ சேஷமாய் அறிவியுங்கள்.-சாதிகளுக்குள் அவரு
டைய மகிமையையும்,எல்லாச் சனசதளங்களுக்
குள்ளும் அவருடைய அதிசயங்களையும் விவரி
௨௫ யுங்கள்.-ஏனெனில் கர்த்தர் பெரியவரும், மிகு
தியாய்த் துதிக்கப்படத்தக்கவரும், எல்லாத் தே
௨௬ வர்களின்மேலும் பயங்கரமுமானவர்.-ஏனென்
றால் சனசதளங்களுடைய எல்லாத் தேவர்களும்
மாயைதானே; கர்த்தரோ வானங்களை உண்டாக்
௨௭ கினார்.—மகிமையும் பிரகாசமும் அவருக்குமுன்
பாகவும், வல்லமையும் சந்தோஷமும் அவர்
௨௮ ஸ்தலத்திலும் இருக்கின்றன.-சனசதளங்களின்
வம்சங்களே, கர்த்தருக்கு மகிமையையும் பல
னையும் செலுத்துங்கள்; கர்த்தருக்கு அதைச் செ
௨௯ லுத்துங்கள். — கர்த்தருக்கு அவருடைய நாமத்
தின் மகிமையைச் செலுத்தி, காணிக்கைகளைக்
கொண்டுவந்து அவருக்குமுன்பாகச் சேருங்
கள்; கர்த்தரைப் பரிசுத்த அலங்காரத்துடனே
௩௰ பணியுங்கள்.—பூமியின் சகல குடிகளே, அவ
ருக்குமுன்பாக நடுங்குங்கள்; அவர் பூச்சக்கரத்
தை அசையாதபடிக்கு உறுதிப்படுத்துகிறவர்.-
௩௧ வானங்கள் மகிழ்ந்து, பூமி பூரிப்பதாக; கர்த்தர்
இராசரிகம்பண்ணுகிறாரென்று சாதிகளுக்குள்
௩௨ ளே சொல்லப்படுவதாக.—சமுத்திரமும் அதின்
நிறைவும் முழங்கி, நாடும் அதிலுள்ளதனைத்தும்
௩௩ களிகூருவதாக.—அப்போது கர்த்தருக்குமுன்
பாக காட்டுமரங்களும் கெம்பீரிக்கும், ஏனெ
னில் அவர் பூமியை நியாயந்தீர்க்க வருகிறார்.—
௩௪ கர்த்தரைத் துதியுங்கள்; ஏனெனில் அவர் நல்ல
வர்; ஏனென்றால் அவர் கிருபை என்றுமுள்
௩௫ ளது.—எங்கள் இரட்சிப்பின் பராபரனே, நாங்
கள் உம்முடைய பரிசுத்த நாமத்தைப் போற்றி,
உம்மைத் துதிக்கிறதினால் மேன்மைபாராட்டும்
படிக்கு, எங்களை இரட்சித்து, எங்களைச் சேர்த்
துக்கொண்டு, சாதிகளுக்கு எங்களை நீங்கலாக்
௩௬ கியருளுமென்று சொல்லுங்கள். — இஸ்ரவே
லின் பராபரனாகிய கர்த்தர் சதாகாலங்கள் சதா
காலங்களாக ஸ்தோத்திரிக்கப்பட்டவர் என்ப
துதானே; அதற்குச் சனமெல்லாம் ஆமன் என்று
சொல்லிக் கர்த்தரைத் துதித்தன.
௩௭ பிற்பாடு பெட்டிக்குமுன்பாக நித்தம் அன்று
டகமுறையாய்ச் சேவிக்கும்படிக்கு, அவன் அ
ங்கே கர்த்தருடைய உடம்படிக்கையின் பெட்
டிக்குமுன்பாக ஆசாப்பையும், அவன் சகோ
தரரையும், ஓபேதேதோமையும், அவர்களுடைய
சகோதரராகிய அறுபத்தெட்டுப்பேரையும் வை
௩௮ த்துவிட்டு,—எதித்தூனின் குமாரனாகிய இந்த
ஓபேதேதோமையும் ஓசாமையும் வாசல்காக்கிற
௩௯ வர்களாக வைத்துவிட்டான். — ஆனால் கிபே
யோனிலுள்ள மேட்டின்மேலிருக்கிற கர்த்தரு
டைய கூடாரத்திற்குமுன்பாக இருக்கிற சர்
வாங்கதகனபலிபீடத்தின்மேலே சர்வாங்கதக
னங்களை நித்தம்,அந்திசந்தி கர்த்தர் இஸ்ரவேலுக்
குக் கற்பித்த நியாயப்பிரமாணத்தில் எழுதியி
ருக்கிறபடியெல்லாம் கர்த்தருக்குச் செலுத்து
வதற்காக,—அங்கே அவன் ஆசாரியனாகிய சா ௪௰
தோக்கையும், அவன் சகோதரராகிய ஆசாரியர்
களையும் வைத்து,—இவர்களோடுங்கூட ஏமா ௪௧
னையும், எதித்தூனையும், பேர்பேராகக் குறித்துத்
தெரிந்துகொள்ளப்பட்ட மற்றச் சிலரையும், கர்
த்தருடைய கிருபை என்றும் உள்ளதென்று அவ
ரைத் துதிக்கவும்,—இவர்களிலிருக்கிற ஏமானை ௪௨
யும் எதித்தூனையும் பூரிகைகளையும் கைத்தாளங்
களையும் பராபரனைப் பாடுகிற கீதவாத்தியங்க
ளையும் தொனிக்கப்பண்ணவும் வைத்து, எதித்
தூனின் குமாரரை வாசல்காக்கிறவர்களாகக் கட்
டளையிட்டான்.—பிற்பாடு சனமெல்லாம் அவ ௪௩
ரவர் தங்கள் வீட்டிற்குப் போனார்கள்; தாவீதும்
தன் வீட்டாரை ஆசீர்வதிக்கத் திரும்பினான்.

## ௰௭. அதிகாரம்.

க. தாவீது பராபரனுக்குத் தேவாலயத்தைக் கட்டும்படி நியமித்ததற்கு நாத்தான் சம்மதித்தது. ௩. பின்பு பராபரனுடைய வார்த்தையினால் தடுத்தது. ௰௧. அவன் சந்ததிக்கும் ஆசீர்வாதம் வருமென்று சொன்னது. ௰௬. தாவீதின் பிரார்த்தனையும் வந்தனமும்.

தாவீது தன் வீட்டிலே வாசமாயிருக்கிறபோ க
தோவெனில், அவன் தீர்க்கதரிசியாகிய நாத்தா
னுடனே, இதோ நான் கேதுருமரவீட்டிலே
வாசம்பண்ணுகிறேன்; கர்த்தருடைய உடம்ப
டிக்கையின் பெட்டியோவென்றால் திரைகளின்
கீழிருக்கின்றதென்றான்.
அப்போது நாத்தான் தாவீதுடனே, உம்மு ௨
டைய இருதயத்திலிருக்கிறதையெல்லாம் செய்
யும்; ஏனெனில் பராபரன் உம்மோடிருக்கிறார்
என்றான்.—அன்று இராத்திரியிலே சம்பவித்த ௩
தேதென்றால், பராபரனுடைய வார்த்தை நாத்
தானுக்குண்டாகி, அவர் சொன்னதாவது:— நீ ௪
போய், நம்முடைய தாசனாகிய தாவீதுடனே
சொல்லவேண்டியது: கர்த்தர் உரைக்கிறதேதெ
னில், நாம் வாசமாயிருக்க நீ நமக்கு வீட்டைக்
கட்டவேண்டாம். — ஏனெனில் நாம் இஸ்ர ௫
வேலை ஏறிவரப்பண்ணின நாள்முதல்கொண்டு
இந்நாள்வரைக்கும் நாம் ஒரு வீட்டிலே வாசம்
பண்ணாமல், கூடாரம் கூடாரமாகவும், வாசஸ்
தலம் வாசஸ்தலமாகவும் நடந்தோம்.-நாம் இஸ்ர ௬
வேலோடெல்லாம் உலாவிவந்த எவ்விடத்திலா
கிலும், நாம் நம்முடைய சனத்தை மேய்க்கக் கற்
பித்த இஸ்ரவேலின் நியாயாதிபதிகளில் ஒருவ
னோடாகிலும், நீங்கள் நமக்குக் கேதுருமரவீட்
டைக் கட்டாதிருக்கிறதென்ன என்று யாதொரு
வார்த்தை சொன்னேமோ?-இப்போதும் நீ நம் ௭
முடைய தாசனாகிய தாவீதுக்குச் சொல்லவேண்
டியது: சேனைகளுடைய கர்த்தர் உரைக்கிறதே
தெனில், நீ நம்முடைய சனமாகிய இஸ்ரவே
லின்மேல் அதிபதியாயிருக்க, நாம் ஆடுகள்பிற
காலே நடந்த உன்னை ஆட்டுமந்தையை விட்
டெடுத்துக்கொண்டு,—நீ போன இடமெல்லாம் ௮

உன்னோடேகூட இருந்து, உன் பகைஞரையெல்
லாம் உனக்குமுன்பாக நிர்மூலமாக்கி, பூமியிலி
ருக்கிற பெரியவர்களின் நாமத்திற்கு ஒத்த நாமத்
௯ தை உனக்குண்டாக்கினோம்.—நாம் நமது சன
மாகிய இஸ்ரவேலுக்கு ஒரு இடத்தையும் ஏற்ப
டுத்தி, அது தன் தானத்திலே குடியிருக்கவும்,
அது இனி அலையாமலும், முன்போலும் நாம்
நமது சனமாகிய இஸ்ரவேலின்மேல் நியாயாதி
பதிகளைக் கட்டளையிட்ட நாள் முதல்கொண்டு
நடந்ததுபோலும் அக்கிரமப் புத்திரர் அதை இ
னிச் சிறுமைப்படுத்தாமல் இருக்கவுமாக அதை
௰ நாட்டி, — உன் பகைஞரையெல்லாம் தாழ்த்தி
விட்டோம்; இப்போதும் கர்த்தர் உனக்கு ஒரு
வீட்டைக் கட்டுவார் என்கிறதை உனக்கு அறி
௰௧ விக்கிறோம்.-நீ உன் பிதாக்களிடத்திலேபோக,
உன் நாள்கள் நிறைவேறினபோது, நாம் உனக்
குப்பிற்பாடு உன் புத்திரரில் ஒருவராகிய உன்
வித்தை எழும்பப்பண்ணி, அவன் இராச்சியத்
௰௨ தைத் திடப்படுத்துவோம்.—அவர் நமக்கு வீட்
டைக் கட்டுவார்; அவருடைய ஆசனத்தை என்
௰௩ றென்றைக்கும் நிலைக்கப்பண்ணுவோம்.—நாம்
அவருக்குப் பிதாவாயிருப்போம்; அவர் நமக்
குக் குமாரனாயிருப்பார்; நாம் உனக்குமுன்னிரு
ந்தவனை விட்டு, நம்முடைய கிருபையை வில
கப்பண்ணினதுபோல, அதை அவரைவிட்டு
௰௪ விலகப்பண்ணாமல்,—அவரை நம்முடைய வீட்
டிலும் நம்முடைய இராச்சியத்திலும் என்றென்
றைக்கும் நிலைக்கப்பண்ணுவோம்; அவருடைய
ஆசனம் என்றென்றைக்கும் நிலைவரமாயிருக்கு
மென்று சொல்லென்றார்.

௰௫ நாத்தான் இந்த எல்லா வார்த்தைகளுக்கும்
இந்த எல்லாத் தரிசனத்திற்கும் சரியாய்த் தாவீ
துக்குச் சொன்னான்.

௰௬ அப்போது தாவீது இராசா உள்பிரவேசித்து,
கர்த்தருக்குமுன்பாகத் தரித்திருந்து சொன்னதா
வது: பராபரனாகிய கர்த்தாவே, தேவரீர் என்னை
இந்தமட்டும் கொண்டுவந்ததற்கு நான் எம்மாத்
௰௭ திரம்? என்னுடைய வீடும் எம்மாத்திரம்?—பரா
பரனே, இது இன்னம் உம்முடைய பார்வைக்
குக் கொஞ்சக்காரியமாயிருக்கின்றதென்று பரா
பரனான கர்த்தராயிருக்கிற தேவரீர் உமது அடி
யானுடைய வீட்டைக்குறித்து இதற்குத் தூர
மாயிருக்கும் காலத்துச் செய்தியையும் சொல்லி,
என்னை மகா மேன்மையான சந்ததியின் மனு
௰௮ ஷனைப் பார்த்தீர். — உம்முடைய அடியானுக்
குண்டாகும் கனத்தைத்தொட்டு, தாவீது அப்
புறம் உம்மோடே சொல்வதென்ன? தேவரீர்
௰௯ உம்முடைய அடியானை அறிவீர்.—கர்த்தாவே,
உம்முடைய அடியானின்நிமித்தமும், உம்மு
டைய இருதயத்தின்படியேயும், இந்தப் பெரி
யகாரியங்களையெல்லாம் அறியப்பண்ணும்ப
டிக்கு, இந்தப் பெரியகாரியத்தையெல்லாம் செ
௨௰ ய்தீர்.—கர்த்தாவே, நாங்கள் எங்கள் காதுகளால்
கேட்டதெல்லாவற்றின்படியேயும், தேவரீரைப்
போல ஒத்தவரில்லை; உம்மைத்தவிர வேறே
தேவனுமில்லை.—உம்முடைய சனமாகிய இஸ்ர ௨௧
வேலைப்போலொத்த சனமும் ஏது? பூலோகத்
தில் இந்த ஒரே சாதியைப் பராபரனாகிய தே
வரீர் உமக்குச் சனமாக மீட்கப்போய், பயங்
கரமான பெரியகாரியங்களினால் உமக்குக் கீர்த்
தியை உண்டாக்கி, நீர் எகிப்திற்கு நீங்கலாக்கி
மீட்ட உம்முடைய சனத்திற்குமுன்பாகச் சா
திகளைத் துரத்தி,—உம்முடைய சனமாகிய இஸ் ௨௨
ரவேல் என்றைக்கும் உம்முடைய சனமாயிருப்
பதற்கு, அதை நிலைப்படுத்தி அவர்களுக்குக்கர்த்
தராகிய தேவரீர் பராபரனானீரே.—இப்போதும் ௨௩
கர்த்தாவே,தேவரீர் அடியேனையும் என்வீட்டை
யும் குறித்துச் சொன்ன வார்த்தை என்றென்
றைக்கும் நிலைவரப்பட்டிருப்பதாக; தேவரீர்
சொன்னபடியே செய்யும்.-ஆம், அது நிலைவரப் ௨௪
பட்டிருக்கவும், இஸ்ரவேலின் பராபரனாகிய
சேனைகளுடைய கர்த்தர் இஸ்ரவேலுக்குப் பரா
பரனென்றும், உம்முடைய அடியானாகிய தாவீ
தின் வீடு உமக்குமுன்பாகத் திடமானதென்றும்
சொல்லப்படுவதினால், உம்முடைய நாமம் என்
றைக்கும் மகிமைப்படவுங்கடவது.—ஏனென் ௨௫
றால் உனக்கு வீட்டைக் கட்டுவோமென்று என்
பராபரனாகிய தேவரீர் உம்முடைய அடியான்
செவிகேட்க வெளிப்படுத்தினீர்; ஆகையால்
உமக்குமுன்பாக விண்ணப்பம்பண்ண, உம்மு
டைய அடியானுக்கு மனத்தயிரியம் கிடைத்
தது.—இப்போதும் கர்த்தாவே, தேவரீர் பராபர ௨௬
னானவர்; தேவரீர் உம்முடைய அடியானைக்கு
றித்து இந்த நல்ல விசேஷத்தைச் சொன்னீர்.—
இப்போதும் உம்முடைய அடியானின் வீடு ௨௭
என்றைக்கும் உமக்குமுன்பாக இருக்கும்படி
க்கு, அதை ஆசீர்வதித்தருளினீர்; கர்த்தராகிய
தேவரீர் அதை ஆசீர்வதித்தபடியினாலே, அது
என்றைக்கும் ஆசீர்வதிக்கப்பட்டிருக்குமென்
றான்.

## ௰௮. அதிகாரம்.

*௧. தாவீது பெலிஸ்தியர்களையும், மோவாபியர்களையும் முறியடித்தது. ௩. ஆதாரேசேரையும், சூரியர்களையும் அவன் அடித்தது. ௯. தோகூ அதோராமைக்கொண்டு தாவீதை வெகுமதியோடு வினவினது. ௰௧. அந்தக் காணிக்கையையும், மற்றும் கொள்ளையாடின பொருளையும் கர்த்தருக்குச் செலுத்தினது; அவன் ஏதோமிலே தாணயங்களை வைத்தது. ௰௪. தாவீது வைத்த தலைவர்கள்.*

இதற்குப்பிற்பாடு சம்பவித்ததேதென்றால், தா ௧
வீது பெலிஸ்தியரை முறியடித்து, அவர்களைக்
கீழ்ப்படுத்திக் காத்பட்டணத்தையும் அதின் கிரா
மங்களையும் பெலிஸ்தியரின் கையிலே வாங்கி
னான்.—அவன் மோவாபியரையும் முறியடித்த ௨
தினால், மோவாபியர் தாவீதைச் சேவித்து அவ
னுக்குக் காணிக்கைகளைச் செலுத்தினார்கள்.

சோபாவின் இராசாவாகிய ஆதாரேசேர் ஐபி ௩
ராத் நதியண்டையில் தன் இராணுவத்தை நிறுத்
தப்போகிறபோது, தாவீது அவனையும் ஆமாத்
தின்கிட்ட முறியடித்தான். — அவனுக்கிருந்த ௪
ஆயிரம் இரதங்களையும் ஏழாயிரம் குதிரைக்கார
ரையும் இருபதினாயிரம் காலாள்களையும் பிடித்து,

இரதங்களில் நூறு இரதங்களை வைத்து மற்றவை
களையெல்லாம் முறித்துப்போட்டான்.
௫ சோபாவின் இராசாவாகிய ஆதாரேசேருக்கு
ஒத்தாசைபண்ணத் தமஸ்குவின் சூரியர் வந்தார்
கள்; ஆனால் தாவீது சூரியரில் இருபத்தீராயிரம்
௬ பேரை வெட்டிப்போட்டு, — தமஸ்குவிலிருக்
கிற சூரியாவிலே தாணயம் வைத்தான்; அப்ப
டியே சூரியர் தாவீதைச் சேவித்து, அவனுக்குக்
காணிக்கைகளைச் செலுத்தினார்கள்; தாவீது
போன இடத்திலெல்லாம் கர்த்தர் அவனை இரட்
௭ சித்தார். — ஆதாரேசேரின் சேவகருக்கிருந்த
பொன்பரிசைகளைத் தாவீது எடுத்து, எருசலே
௮ முக்குக் கொண்டுவந்தான்.-ஆதாரேசேரின் பட்
டணங்களாகிய திப்காத்திலும் கூனிலுமிருந்து
தாவீது வெகு திரளான வெண்கலத்தையும் எடுத்
துவந்தான்; அதினாலே சாலோமோன் வெண்க
லக் கடல்தொட்டியையும் தூண்களையும் வெண்
கலத் தட்டுமுட்டுகளையும் உண்டாக்கினான்.
௯ தாவீது சோபாவின் இராசாவாகிய ஆதாரே
சேரின் இராணுவத்தையெல்லாம் முறியடித்த
செய்தியை ஆமாத்தின் இராசாவாகிய தோகூ
௰ கேட்டபோது, — அவன் தாவீது இராசாவின்
சுகசெய்தியை விசாரிக்கவும், அவன் ஆதாரேசே
ரோடு யுத்தம்பண்ணி, அவனை முறியடித்ததற்
காக அவனுக்கு வினவுகிற வார்த்தையைச்
சொல்லவும், தன் குமாரனாகிய அதோராமையும்,
பொன்னும் வெள்ளியும் வெண்கலமுமான சக
லவித தட்டுமுட்டுகளையும் அவனண்டைக்கு
அனுப்பினான்; ஏனென்றால் ஆதாரேசேர் தோ
கின்மேல் யுத்தங்களைப்பண்ணுகிற மனுஷனா
௰௧ யிருந்தான்.—அந்தத் தட்டுமுட்டுகளையும், தான்
ஏதோமியர், மோவாபியர், அம்மோன் புத்திரர்,
பெலிஸ்தியர், ஆமலேக்கியரென்ற சகலசாதிக
ளின் கையிலும் வாங்கின வெள்ளியையும்,
பொன்னையும்கூடத் தாவீது இராசா கர்த்தருக்
குப் பரிசுத்தமாக்கினான்.
௰௨ சேரூயாவின் குமாரன் அபிசாயி உப்புப்பள்
ளத்தாக்கிலே பதினெண்ணாயிரம் ஏதோமியரை
௰௩ முறியடித்தான். — ஆகையால் தாவீது ஏதோமி
லே தாணயம் வைத்தான்; ஏதோமியரெல்லாரும்
அவனைச் சேவிக்கிறவர்களானார்கள்; தாவீது
போன இடத்திலெல்லாம் கர்த்தர் அவனை இரட்
சித்தார்.
௰௪ தாவீது இஸ்ரவேலையெல்லாம் ஆண்டு, தன்
னுடைய சனத்திற்கெல்லாம் நியாயமும் நீதியும்
௰௫ செய்தான்.—சேரூயாவின் குமாரன் யோவாப்
இராணுவத்தலைவனாயிருந்தான்;ஆகிலூதின் குமா
ரனாகிய யோசபாத் மந்திரியாயிருந்தான்.—ஆகீத்
௰௬ தூவின் குமாரன் சாதோகும், அப்பியத்தாரின்
குமாரன் அபிமேலேக்கும் ஆசாரியராயிருந்தார்
௰௭ கள்; சவுஷா சம்பிரதியாயிருந்தான். — யோய்
தாவின் குமாரன் பெனாயா, கிரேத்தியருக்கும்
பிலேத்தியருக்கும் தலைவனாயிருந்தான்; ஆனால்
தாவீதின் மூத்த குமாரர் இராசாவுக்கு உதவியா
யிருந்தார்கள்.

## ௰௯. அதிகாரம்.

௧. நாகாசின் புத்திரனாகிய ஆனூனை ஆறுதல்செய்ய, தாவீதினால் அனுப்பப்பட்ட தூதர்கள் அவமானப்பட்டது. ௬. அம்மோனியர்கள் சூரியர்களால் உதவிசெய்யப்பெற்றும் அபிசாயினாலும் யோவாபினாலும் செயிக்கப்பட்டது. ௰௬. சோப்பார் மறுபடி சூரியர்களைச் சேர்த்துக்கொண்டும் தாவீதால் கொல்லப்பட்டது.

இதற்குப்பிற்பாடு சம்பவித்ததேதெனில், அம் ௧
மோன் புத்திரரின் இராசாவாகிய நாகாஸ் மரித்
து, அவன் குமாரன் அவன் ஸ்தலத்தில் இராசா
வானபோது,—தாவீது ஆனூனின் தகப்பனாகிய ௨
நாகாஸ் எனக்குத் தயவுசெய்ததுபோல, நான்
அவன் குமாரனாகிய இவனுக்குத் தயவுசெய்வே
னென்று சொல்லி, அவன் தகப்பனுக்காக அவ
னுக்கு ஆறுதல்சொல்லத் தானாபதிகளை அனுப்
பினான்; ஆனால் தாவீதின் ஊழியக்காரர் ஆனூ
னுக்கு ஆறுதல் சொல்ல அம்மோன் புத்திரரின்
தேசத்திலே வந்தபோது, — அம்மோன் புத்திர ௩
ரின் பிரபுக்கள் ஆனூனுக்குச் சொன்னதாவது:
தாவீது ஆறுதல் சொல்லுகிறவர்களை உமக்கு
அனுப்பினதினாலே, உம்முடைய தகப்பனைக்
கனம்பண்ணுகிறதாய் உமக்குத் தோன்றுகிற
தோ? தேசத்தை ஆராயவும், அதைக் கீழதுமே
லதாக்கும்படிக்கும் உளவுபார்க்கவுமல்லவோ,
அவன் ஊழியக்காரர் உம்மண்டைக்கு வந்தார்
கள்? — அப்போது ஆனூன் தாவீதின் ஊழியக் ௪
காரரைப் பிடித்து, அவர்களைச் சிரைத்து, அவர்க
ளுக்கிருந்த வஸ்திரங்களை இடுப்புமட்டும் வைத்
துவிட்டு, மற்றப்பாதியைக் கத்தரித்துப்போட்டு,
அவர்களை அனுப்பிவிட்டான்.—அந்த மனுஷர் ௫
வருகையில், அவர்கள் செய்தி தாவீதுக்கு அறி
விக்கப்பட்டது; அப்போது அவன் அந்த மனு
ஷர் மிகவும் இகழ்ச்சிபண்ணப்பட்டபடியினா
லே அவர்களுக்கு எதிராக ஆள்களை அனுப்பி,
உங்கள் தாடி முளைக்குமட்டும் நீங்கள் எரிகோ
விலிருந்து, பிற்பாடு திரும்பிவாருங்களென்று
இராசா சொல்லச்சொன்னான்.
தாங்கள் தாவீதுக்கு நாற்றமெடுத்தவர்களான ௬
தை அம்மோன் புத்திரர் கண்டபோது,ஆனூனும்
அம்மோன் புத்திரரும் மேசோபொத்தாமியாவி
லும் மாக்கா சோபாவென்ற சூரியரின் தேசத்தி
லுமிருந்து தங்களுக்கு இரதங்களும் குதிரைக்கா
ரரும் கூலிக்கு வரும்படிக்கு ஆயிரம் தாலந்து
வெள்ளியை அனுப்பி, — முப்பத்தீராயிரம் இர ௭
தங்களையும், மாக்காவின் இராசாவையும் அவன்
சனத்தையும் கூலி பொருந்திக்கொண்டார்கள்;
இவர்கள் வந்து, மேதேபாவுக்கு முன்புறத்திலே
பாளயமிறங்கினார்கள்; அம்மோன் புத்திரரும்
தங்கள் பட்டணங்களிலிருந்து கூடிக்கொண்டு
யுத்தம்பண்ண வந்தார்கள்.
அதைத் தாவீது கேட்டபோது, யோவாபை ௮
யும் பலசாலிகளின் இராணுவம் அனைத்தையும்
அனுப்பினான்.-அம்மோன் புத்திரர் புறப்பட்டுப் ௯
பட்டணத்தின் ஒலிமுகவாசலண்டையிலும்,
வந்த இராசாக்களோவெனில் தனித்து வெளியி
லும் போருக்கு ஆயத்தமாய் நின்றார்கள்.—யுத்த ௰

இராணுவங்களின் முகப்புத் தனக்கு முன்னும்
பின்னும் இருக்கிறதை யோவாப் காண்கையில்,
அவன் இஸ்ரவேலிலே தெரிந்துகொள்ளப்பட்ட
அனைவரிலும் ஒரு பங்கைப் பிரித்தெடுத்து அ
௰௧ தைச் சூரியருக்கு எதிராக நிறுத்தி,-மற்றச் சனத்
தை அம்மோன் புத்திரருக்கு எதிராகப் போருக்
கு ஆயத்தமாயிருக்கப்பண்ணி, தன் சகோதரனா
கிய அபிசாயிக்கு ஒப்புவித்துச் சொன்னதாவ
௰௨ து:—சூரியர் என்னைப்பார்க்கிலும் பலத்தால் நீ
எனக்கு ஒத்தாசையாயிரு; அம்மோன் புத்திரர்
உன்னைப்பார்க்கிலும் பலத்தால் நான் உனக்கு
௰௩ ஒத்தாசையாயிருப்பேன். — திடனாயிரு; நாம்
நம்முடைய சனத்திற்காகவும் நமது பராபரனு
டைய பட்டணங்களுக்காகவும் திடன்கொண்
டிருக்கக்கடவோம்; கர்த்தர் தமது பார்வைக்கு
நலமானதைச் செய்வாராகவென்று சொல்லி,
௰௪ யோவாபும் அவனோடிருந்த சனமும் சூரிய
ரோடு யுத்தம்பண்ணச் சேர்ந்தார்கள்; அவர்கள்
௰௫ அவனுக்குமுன்பாக முறிந்தோடினார்கள். — சூ
ரியர் முறிந்தோடுகிறதை அம்மோன் புத்திரர்
கண்டபோது, அவர்களும் அவன் சகோதரனா
கிய அபிசாயிக்குமுன்பாக முறிந்தோடிப் பட்
டணத்திற்குள்பட்டார்கள்; யோவாப் திரும்ப
எருசலேமுக்கு வந்தான்.
௰௬ தாங்கள் இஸ்ரவேலுக்குமுன்பாக முறியடிக்க
ப்பட்டதைச் சூரியர் கண்டபோதோவெனில்,
அவர்கள் நதிக்கப்பாலிருக்கிற சூரியரை அழை
த்தனுப்பிப் புறப்பட்டு வரப்பண்ணினார்கள்; ஆ
தாரேசேரின் படைத்தலைவனாகிய சோப்பாக்
௰௭ அவர்களுக்கு முன்னாலே நடந்தான்.-அது தாவீ
துக்கு அறிவிக்கப்பட்டபோது, அவன் இஸ்ர
வேலையெல்லாம் கூட்டிக்கொண்டு, யோர்தா
னைக் கடந்து, அவர்களுக்குச் சமீபமாய் வந்த
போது அவர்களுக்கு எதிராக இராணுவங்களை
நிறுத்தினான்; தாவீது சூரியருக்கு எதிராக இரா
ணுவங்களைப் போருக்கு ஆயத்தமாயிருக்கப்ப
ண்ணினபின் அவனோடு யுத்தம்பண்ணினார்
௰௮ கள்.—ஆனால் சூரியர் இஸ்ரவேலுக்குமுன்பாக
முறிந்தோடினார்கள்; தாவீது சூரியரில் ஏழாயி
ரம் இரதங்களின் மனுஷரையும், நாற்பதினாயி
ரம் காலாள்களையும் கொன்று, படைத்தலைவனா
௰௯ கிய சோப்பாக்கையும் மடிவித்தான்.—தாங்கள்
இஸ்ரவேலுக்குமுன்பாக முறியடிக்கப்பட்ட
தை ஆதாரேசேரின் சேவகர் கண்டபோதோ
வென்றால், அவர்கள் தாவீதோடே சமாதானம்
பண்ணி அவனைச் சேவித்தார்கள்; அப்புறம் அம்
மோன் புத்திரருக்கு ஒத்தாசைபண்ண, சூரியர்
மனதில்லாதிருந்தார்கள்.

## ௨௰. அதிகாரம்.

௧. யோவாப் ரபாவை முற்றிக்கைபோட்டதும், தாவீது அதின் பொருளை எடுத்து, சனங்களை வருத்தப்படுத்தினதும். ௪. பெலிஸ்தியர்கள் மூன்று தரம் செயிக்கப்படுகையில், அவர்களில் மூன்று இராட்சதர் கொல்லப்பட்டது.

௧ மறுவருஷம் இராசாக்கள் யுத்தத்திற்குப் புறப்
படும் காலம் வந்தபோது, யோவாப் இராணு
வப் பலனைக் கூட்டிக்கொண்டு போய், அம்
மோன் புத்திரரின் தேசத்தைப் பாழ்க்கடித்து
வந்து, ரபாவை முற்றிக்கைபோட்டான்; தாவீ
தோவெனில் எருசலேமில் இருந்துவிட்டான்;
யோவாப் ரபாவை இடறடித்துவிட்டபோது,-
தாவீது வந்து, அவர்கள் இராசாவுடைய தலை ௨
யின்மேல் இருந்த கிரீடத்தை எடுத்துக்கொண்
டான்; அது ஒரு தாலந்து பொன்நிறையும் இரத்
தினங்கள் பதித்ததுமாயிருந்தது; அது தாவீ
தின் தலையில் வைக்கப்பட்டது; பட்டணத்
தின் கொள்ளையையும் வெகு விஸ்தாரமாய் அதி
லிருந்து கொண்டுபோனான். — ஆனால் அதிலி ௩
ருந்த சனத்தை அவன் வெளியே கொண்டு
போய், அவர்களை வாள் அறுக்கிற வேலைக்கும்,
இருப்புப் பாரைகளின் வேலைக்கும், கோடாலி
களின் வேலைக்கும்வைத்து, இப்படி அம்மோன்
புத்திரரின் பட்டணங்களுக்கெல்லாம் தாவீது
செய்து, எல்லாச் சனத்தோடுங்கூட எருசலே
முக்குத் திரும்பினான்.
அதற்குப்பிற்பாடு கேசேரிலே பெலிஸ்திய ௪
ரோடு யுத்தம் உண்டாயிற்று; அப்போது ஊஷாத்
தியனான சிபேக்காயி இராட்சதபுத்திரரில் ஒருவ
னை சிப்பாயி என்றவனை மடங்கடித்தான்; அதி
னால் அவர்கள் தாழ்த்தப்பட்டார்கள்.-திரும்பப் ௫
பெலிஸ்தியரோடு யுத்தம் உண்டாகிறபோது, யா
வீரின் குமாரனாகிய எல்க்கானான் காத்தூரானா
கிய கோலியாத்தின் சகோதரனை லாகேமியை
மடங்கடித்தான்; அவன் ஈட்டி தாங்கு நெய்கிற
வர்களின் படைமரமத்தனையாயிருந்தது.
மறுபடியும் ஒரு யுத்தம் காத்திலே உண்டாகி ௬
றபோது, அங்கே உயர்ந்த ஒரு மனுஷன் இருந்
தான்; அவனுக்கு அவ்வாறு விரலாக இருபத்து
நாலுவிரல்கள் இருந்தன; அவனும் இராட்சத
சந்ததியாயிருந்து,-இஸ்ரவேலை நிந்தித்தான்; ஆ ௭
னால் தாவீதின் சகோதரனாகிய சீமேயாவின் குமா
ரன் யோனத்தான் அவனை மடங்கடித்தான்.—
காத்தூரிலிருந்த இராட்சதனுக்குப் பிறந்த இவர் ௮
கள் தாவீதின் கையினாலும் அவன் சேவகரின்
கையினாலும் மடிந்தார்கள்.

## ௨௧. அதிகாரம்.

௧. தாவீது சாத்தானால் ஏவப்பட்டு, சனங்களை இலக்கம்பார்க்க யோவாப்பைப் பலவந்தம்செய்தது. ௫. சனங்களின் தொகை கொண்டுவரப்பட்டபோது தாவீது மனஸ்தாபப்பட்டது. ௯. காத்தினால் அறிவிக்கப்பட்ட மூன்று வாதைகளில் அவன் பெருவாரிக்காய்ச்சலை ஏற்றுக்கொண்டது. ௰௪. எழுபதினாயிரம் சனங்கள் மரித்தபிறகு, அவன் மனந்திரும்பினதினால் எருசலேமுக்கு வரும் அழிவு நீங்கினது. ௰௮. அவன் காத் சொன்னபடி ஒர்னானின் போரடிக்கிற களத்தை வாங்கி, பலிபீடத்தைக் கட்டினபின்பு, பராபரன் அக்கினியினால் அவனுக்கு மறு உத்தரவுகொடுத்து, வாதையை நிறுத்தினது. ௨௮. அவன் தேவதூதனுக்குப் பயந்து, கிபேயோனுக்குப் போகாமல் அதிலே பலிசெலுத்தினது.

சாத்தானோவென்றால் இஸ்ரவேலுக்கு விரோத ௧
மாய் எழும்பி, தாவீதை இஸ்ரவேலைத் தொகை
பார்க்கிறதற்கு ஏவிவிட்டது.-அப்படியே தாவீ ௨
து யோவாபுக்கும், சனத்தின் சேர்வைக்காரருக்
கும், நீங்கள் போய், பெர்சேபாவைத் துவக்கித்
தாண்மட்டுமிருக்கிற இஸ்ரவேலை எண்ணி, அ

வர்கள் இலக்கத்தை நான் அறியும்படிக்கு, என்
னண்டைக்குக் கொண்டுவாருங்களென்றான்.—
௩ அப்போது யோவாப்பென்றவன் கர்த்தருடைய
சனம் இருக்கிறதைப் பார்க்க, அவர் அதை நூறத்
தனையாய் வர்த்திக்கப்பண்ணுவாராக; ஆனால் இ
ராசாவாகிய என் ஆண்டவனே, அவர்களெல்லா
ரும் என் ஆண்டவனின் சேவகரல்லவோ? என்
ஆண்டவன் இதை விசாரிப்பானேன்? இஸ்ரவே
லின்மேல் குற்றமுண்டாக இது நடக்கவேண்
௪ டியதென்னவென்றான்.—ஆனால் யோவாப் அப்
படிச் சொல்லியும் இராசாவின் வார்த்தை மேல்
வட்டமானபடியினாலே, யோவாப் புறப்பட்டு,
இஸ்ரவேலில் எங்கும் சுற்றித்திரிந்து, எருசலே
௫ முக்கு வந்து,—சனத்தை இலக்கம்பார்த்த தொ
கையைத் தாவீதுக்குக் கொடுத்தான்; இஸ்ரவே
லிலெல்லாம் பட்டையம் உருவத்தக்கவர்கள்,
பதினொருலட்சம்பேரும், யூதாவில் பட்டையம்
உருவத்தக்கவர்கள், நாலுலட்சத்து எழுபதினாயி
௬ ரம்பேருமாயிருந்தார்கள்.-ஆனால் இலேவி பென்
யமீன் கோத்திரங்களில் உள்ளவர்களை அவர்க
ளுடைய இலக்கத்திற்குள்பட எண்ணாதேபோ
னான்; ஏனெனில் இராசாவின் வார்த்தை யோ
வாபுக்கு அருவருப்பாயிருந்தது.
௭ இந்தக் காரியம் பராபரனுடைய பார்வைக்
கும் ஆகாததானபடியினாலே அவர் இஸ்ரவேலை
௮ வாதித்தார்.—தாவீது பராபரனை நோக்கி, நான்
இந்தக் காரியத்தைச் செய்ததினாலே மிகவும் பா
வம்செய்தேன்; இப்போதும் உம்முடைய அடி
யானின் அக்கிரமத்தை நீக்கிப்போடும், ஏனென்
றால் வெகு பயித்தியமாய்ச் செய்தேனென்றான்.-
௯ அப்போது கர்த்தர் தாவீதுக்கு ஞானதிருஷ்டி
௰ யுள்ள புருஷனாகிய காத்துடனே பேசி, — நீ
போய், தாவீதுக்குச் சொல்லவேண்டியதேதெ
னில், மூன்று காரியங்களை நாம் உனக்குமுன்
பாக வைக்கிறோம்; அவைகளில் நாம் உனக்குச்
செய்ய, ஒரு காரியத்தைத் தெரிந்துகொள்ளென்
று கர்த்தர் உரைக்கிறாரென்று சொல்லென்றார் —
௰௧ அப்படியே காத் தாவீதண்டைக்கு வந்து அவ
னுக்குச் சொன்னதாவது: கர்த்தர் உரைக்கிறதே
௰௨ தெனில்,—மூன்று வருஷம் பஞ்சத்தையாகிலு
ம், மூன்று மாதம் உன் பகைஞரின் பட்டையம்
உன்னைத் தொடர்ந்துசேர நீ உன் சத்துருக்களுக்
குமுன்பாக முறிந்துபோகுதலையாகிலும், மூன்
றுநாள் கர்த்தருடைய தூதன் இஸ்ரவேலுடைய
எல்லையெங்கும் அழிவுண்டாக்கும்படிக்குத் தே
சத்திலுண்டாகும் கர்த்தருடைய பட்டையத்தை
யென்கிலும் தெரிந்துகொள்ளென்கிறார்; இப்
போதும் என்னை அனுப்பினவருக்கு நான் என்
ன மறுஉத்தரவு கொண்டுபோகவேண்டும் என்கி
௰௩ றதைப் பாருமென்றான். — அப்போது தாவீது
காத்துடனே, வெகு இடுக்கண் அடைந்திருக்கி
றேன்; இப்போதும் கர்த்தரின் கையிலே விழு
வேனாக; ஏனெனில் அவருடைய இரக்கங்கள்
மகா பெரியவைகள்; மனுஷர் கையிலே விழாதி
ருப்பேனாகவென்றான்.

ஆகையால் கர்த்தர் இஸ்ரவேலிலே பெரு ௰௪
வாரிக்காய்ச்சலைக் கட்டளையிட்டார்; அதினால்
இஸ்ரவேலில் எழுபதினாயிரம்பேர் மடிந்தார்
கள். — எருசலேமையும் அழிக்கப் பராபரன் ௰௫
தூதனை அனுப்பினார்; ஆனால் அவன் அழிக்
கையில் கர்த்தர் பார்த்து, அந்தத் தீங்குக்கு மனஸ்
தாபப்பட்டு, அழிக்கிற தூதனுக்குப் போதும்;
இப்போது உன் கையை வாங்கிக்கொள்ளென்
றார்; கர்த்தருடையஅந்தத் தூதன் எபூசியனாகிய
ஒற்னானின் களத்தண்டையிலே நின்றான். —
தாவீது தன் கண்களை ஏறெடுத்து, பூமிக்கும் வா ௰௬
னத்திற்கும் நடுவேநிற்கிற கர்த்தருடைய தூதனை
எருசலேமின்மேல் நீட்டித் தன் கையில் உரு
வின தன்னுடைய பட்டையத்தைப் பிடித்தவ
னாகக் கண்டான்; அப்போது தாவீதும் மூப்ப
ரானவர்களும் இரட்டுகளைப் போர்த்தவர்களாய்
முகம் குப்புறவிழுந்தார்கள். — தாவீது பராபர ௰௭
னுடனே சனத்தை எண்ணச் சொன்னவன் நா
னல்லவோ? பாவம்செய்து, பொல்லாப்பு நடப்
பிக்கவே நடப்பித்தவன் நான்தானே; இந்த
ஆடுகள் செய்ததென்ன? என் பராபரனாகிய கர்த்
தாவே, வாதைசெய்ய உம்முடைய கரம் உம்
முடைய சனத்திற்கல்ல, எனக்கும் என் தகப்
பன் வீட்டிற்கும் விரோதமாயிருக்கட்டுமே என்
றான்.
அப்போது எபூசியனாகிய ஒற்னானின் களத் ௰௮
திலே கர்த்தருக்கு ஒரு பலிபீடத்தை எடுப்பிக்
கும்படிக்கு, தாவீது அங்கே போய் ஏறவேண்டு
மென்கிறதைத் தாவீதுக்குச் சொல்லென்று கர்த்
தருடைய தூதன் காத்துக்குச் சொன்னான். —
அப்படியே தாவீது கர்த்தரின் நாமத்திலே காத் ௰௯
சொன்ன வார்த்தையின்படியே போயேறி
னான்.—ஆனால் ஒற்னான் திரும்பிப்பார்த்து, அவ ௨௰
னும் அவனோடிருக்கிற அவனுடைய நாலு குமா
ரரும் அந்தத் தேவதூதனைக் கண்டு ஒளித்துக்
கொண்டார்கள்; ஒற்னானோவெனில் போரடித்
துக்கொண்டிருந்தான். — தாவீது ஒற்னானண் ௨௧
டைக்கு வந்தபோது, ஒற்னான் கவனித்துத் தாவீ
தைப் பார்க்கிறபோது, அவன் களத்திலிருந்து
புறப்பட்டு, தரைமட்டும் முகம்குனிந்து தாவீ
தை வணங்கினான்.—அப்போது தாவீது ஒற்னா ௨௨
னுடனே, இந்தக் களத்தின் நிலத்திலே நான் கர்த்
தருக்கு ஒரு பலிபீடத்தைக் கட்டும்படிக்கு
அதை எனக்குக் கொடு; இந்த வாதை சனத்தை
விட்டு நிறுத்தப்பட, எனக்கு அதைப் பெறும்
விலைக்குக் கொடுவென்றான்.—அப்போது ஒற் ௨௩
னான் தாவீதுடனே, இராசாவாகிய என் ஆண்ட
வன் அதை வாங்கிக்கொண்டு, தம்முடைய பார்
வைக்கு நலமானபடி செய்வாராக; இதோ சர்
வாங்கதகனங்களுக்கு மாடுகளும் விறகுகளுக்
குப் போரடிக்கிற உருளைகளும் காணிக்கைக்
குக் கோதுமையுமாகிய யாவையும் கொடுக்கிறே
னென்றான்.—ஆனால் தாவீது இராசா ஒற்னானுக் ௨௪
கு, அப்படி அல்ல, நான் உன்னுடையதை இல
வசமாய் வாங்கி, கர்த்தருக்குச் சர்வாங்கதகனத்

தைப் பலியிடாமல், அதைப் பெறும் விலைக்கு
௨௫ வாங்கவே வாங்குவேனென்று சொல்லி, — தா
வீது அந்த நிலத்திற்கு அறுநூறு சேக்கல் நிறை
௨௬ பொன்னை ஒர்னானுக்குக் கொடுத்து,—அங்கே
கர்த்தருக்கு ஒரு பலிபீடத்தைக் கட்டி, சர்வாங்க
தகனங்களையும் சமாதானபலிகளையும் செலுத்தி,
கர்த்தரை நோக்கிக் கூப்பிட்டான்; அப்போது
அவர் வானத்திலிருந்து சர்வாங்கதகன பலிபீ
டத்தின்மேல் இறங்கின அக்கினியினால் அவ
னுக்கு மறு உத்தரம் கொடுத்ததுமல்லாமல்,—
௨௭ தேவதூதன் தன்னுடைய பட்டையத்தைஅதின்
உறையிலே திரும்பப் போடவேண்டுமென்று
கர்த்தர் அவனுக்குச் சொன்னார்.
௨௮ எபூசியனாகிய ஒர்னானின் களத்திலே கர்த்தர்
தனக்கு உத்தரவு அருளினதைத் தாவீது அக்கா
லத்திலே கண்டு, அங்கேதானே பலியிடுவான்.-
௨௯ ஏனென்றால் மோசே வனாந்தரத்தில் உண்டாக்
கின கர்த்தருடைய வாசஸ்தலமும் சர்வாங்க
தகனபலிபீடமும் அக்காலத்திலே கிபேயோ
௩௰ னின் மேட்டிலிருக்கும்போது,—தாவீது அதின்
முன்பாகப் போய், பராபரனைத் தேடக்கூடாதி
ருந்தது; ஏனென்றால் கர்த்தருடைய தூதனின்
பட்டையத்திற்குக் கலங்கியிருந்தான்.

## ௨௨. அதிகாரம்.

*௧. தாவீது ஆலயத்தைக் கட்டும் இடத்தை அறிந்து கட்டுதற்கு அநேகம் சாமான்களை எத்தனம்பண்ணினது. ௬. அவன் பராபரனுடைய வாக்குத் தத்தத்தைச் சாலோமோனுக்கு அறிவித்து, ஆலயத்தைக் கட்டக் கட்டளை பிட்டது. ௰௭. தன் குமாரனுக்கு உதவிசெய்யும்படி, பிரபுக்களுக்குத் தான் சொன்னது.*

௧ அப்போது தாவீது, பராபரனாகிய கர்த்தருடை
ய வீடு இருக்கும் ஸ்தலம் இதுதானே; இஸ்ரவேல்
பலியிடும் சர்வாங்கதகனபலிபீடம் இருக்கும்
ஸ்தலமும் இதுதானேயென்றான்.
௨ பிற்பாடு தாவீது இஸ்ரவேல் தேசத்திலிருக்கிற
அந்நியசாதியாரைக்கூட்டிக்கொள்ளச்சொல்லி,
பராபரனுடைய வீட்டைக் கட்டுகிறதற்கான
கல்லுகளை வெட்டும் கல்த்தச்சரை ஏற்படுத்தி
௩ னான்.-தாவீது வாசல்களின் கதவுகளுக்கு வேண்
டிய ஆணிகளுக்கும் கீல்களுக்கும் மிகுதியான
இரும்பையும், நிறுத்து முடியாத திரள் வெண்க
௪ லத்தையும்,—எண்ணிமுடியாத கேதுரு மரங்க
ளையும் சம்பாதித்தான்; ஏனெனில் சீதோனிய
ரும் தீரியரும் தாவீதுக்குத் திரளான கேதுரு மரங்
௫ களைக் கொண்டுவந்தார்கள்.-ஏனென்றால் தாவீ
தென்றவன், என் குமாரனாகிய சாலோமோன்
வாலிபனும் இளந்தையுமாயிருக்கிறான்; கர்த்த
ருக்குக் கட்டப்படும் வீடோவென்றால் சகல
தேசங்களுக்கும் கீர்த்தியும் மகிமையும் விளங்கத்
தக்கதாக மகா பெரியதாயிருக்கும்; ஆகையால்
அதற்காகச் சிலவற்றைச் சம்பாதிப்பேனாக என்
று சொல்லி, தாவீது தன் மரணத்திற்குமுன்னே
திரளாய்ச் சவதரித்துவைத்து,
௬ தன் குமாரனாகிய சாலோமோனை அழைத்து,
இஸ்ரவேலின் பராபரனாகிய கர்த்தருக்கு வீட்
டைக் கட்டுகிறதற்காக அவனுக்குக் கற்பனை தந்
து,—சாலோமோனுக்குச் சொன்னதாவது: என் ௭
குமாரனே, நான் என் பராபரனாகிய கர்த்தரின்
நாமத்திற்கு ஒரு வீட்டைக் கட்ட என் இருதயத்
திலே நினைத்திருந்தேன்.—ஆனால் கர்த்தருடைய ௮
வார்த்தை எனக்கு உண்டாகி, அவர் சொன்ன
தாவது: நீ திரளான இரத்தத்தைச் சிந்தி, பெரிய
யுத்தங்களைப் பண்ணினாய்; நீ நம்முடைய நாமத்
திற்கு வீட்டைக் கட்டவேண்டாம்; ஏனெனில்
நமக்குமுன்பாக வெகு இரத்தத்தைத் தரையிலே
சிந்தப்பண்ணினாய். — இதோ உனக்குப் பிறக் ௯
கப்போகிற குமாரன் இளைப்பாறுகிற புருஷனா
யிருப்பான்; ஏனெனில் சுற்றிலுமிருக்கும் அ
வன் சத்துருக்களையெல்லாம் விலக்கி, அவனுக்
கு இளைப்பாறுதலைக் கொடுப்போம்; ஆகையால்
அவன்பேர் சாலோமோனென்றிருக்கும்; அவன்
நாள்களில் இஸ்ரவேலின்மேல் சமாதானத்தை
யும் அமரிக்கையையும் கட்டளையிடுவோம். —
அவன் நம்முடைய நாமத்திற்கு வீட்டைக் கட் ௰
டுவான்; அவன் நமக்குக் குமாரனாயிருப்பான்;
நாம் அவனுக்குப் பிதாவாயிருந்து, அவன் இஸ்
ரவேலை ஆளும் இராச்சியபாரத்தின் ஆசனத்
தை என்றென்றைக்கும் திடப்படுத்துவோமென்
றார்.—இப்போதும் என் குமாரனே, நீ பாக்கிய ௰௧
வானாயிருந்து, கர்த்தர் உன்னைக்குறித்துச் சொ
ன்னபடியே உன் பராபரனாகிய கர்த்தரின் வீட்
டைக் கட்டும்படிக்கு, அவர் உன்னுடனேகூட
இருப்பாராக. — கர்த்தர் உனக்கு விவேகத்தை ௰௨
யும் உணர்வையுமே கட்டளையிட்டு, இஸ்ரவே
லுக்காகவும், உன் பராபரனாகிய கர்த்தரின் நியா
யப்பிரமாணத்தைக் கைக்கொள்வதற்காகவும் உ
னக்குக் கல்வியைக் கற்பிப்பாராக. — கர்த்தர் ௰௩
இஸ்ரவேலுக்காக மோசேக்குக் கற்பித்த கட்ட
ளைகளின்படியும் நியாயங்களின்படியும் செய்ய
நீ கவனமாயிருந்தால், அப்போது பாக்கியவானா
யிருப்பாய்; நீ திடன்கொண்டு பலப்படு; பயப்
படாமலும் கலங்காமலுமிரு.
இதோ நான் என் சிறுமையிலே கர்த்தருடைய ௰௪
வீட்டிற்காக ஒரு லட்சம் தாலந்து பொன்னை
யும், பத்துலட்சம் தாலந்து வெள்ளியையும்,
நிறுத்து முடியாத திரளான வெண்கலத்தையும்,
இரும்பையும் சவதரித்தும், மரங்களையும் கற்க
ளையும் சவதரித்தும் வைத்தேன்; நீ இன்னம்
அவைகளுக்கு அதிகமாய்ச் சவதரிப்பாய்.-வே ௰௫
லைசெய்யத்தக்க திரளான சிற்பாசாரிகளும், கல்
தச்சரும், எந்த வேலைக்குமான சகலவித சாஸ்
திரிகளும் உன்னோடிருக்கிறார்கள்.-பொன்னுக் ௰௬
கும், வெள்ளிக்கும், வெண்கலத்திற்கும், இரும்
புக்கும் இலக்கமில்லை; நீ எழும்பிக் காரியத்
தை நடப்பி; கர்த்தர் உன்னண்டையில் இருக்
கிறார்.
தன் குமாரனாகிய சாலோமோனுக்கு ஒத்தா ௰௭
சைசெய்ய, தாவீது இஸ்ரவேலின் பிரபுக்கள் அ
னைவருக்கும் கற்பித்துச் சொன்னதாவது:—உங் ௰௮
கள் பராபரனாகிய கர்த்தர் உங்களோடிருந்து, சுற்
றுப்புறத்தாரை அடக்கி, உங்களுக்கு இளைப்பா

றுதலைக் கொடுத்ததில்லையோ? எனெனில் தேசத்
தின் குடிகளை என் கையில் ஒப்புக்கொடுத்தார்;
கர்த்தருக்குமுன்பாகவும், அவருடைய சனத்திற்
குமுன்பாகவும் தேசம் கீழ்ப்பட்டிருக்கின்றது.-
௰௯ இப்போதும் நீங்கள் உங்கள் இருதயத்தையும்,
உங்கள் ஆத்துமத்தையும், உங்கள் பராபரனாகிய
கர்த்தரைத் தேடுகிறதற்கு நேராக்கி, கர்த்தரு
டைய உடம்படிக்கையின் பெட்டியையும், பரா
பரனுடைய பரிசுத்தப் பணிமுட்டுகளையும்,
கர்த்தருடைய நாமத்திற்குக் கட்டப்படும் அந்த
வீட்டிற்குள் கொண்டுபோகும்படிக்கு, நீங்கள்
எழும்பி, பராபரனாகிய கர்த்தரின் பரிசுத்தஸ்த
லத்தைக் கட்டுங்களென்றான்.

## உ௩. அதிகாரம்.

௧. தாவீது வயதுசென்றவனானபோது சாலோமோனை இராசாவாக்கினது. ௨. இலேவியரின தொகையும், வகுப்பும். ௭. கெர்சோனியரின் குடும்பம். ௰௨. கோகாத்தின் குமாரர். ௨௧. மோராரியின் குமாரர். ௨௪. இலேவியர்களின் அலுவல்.

௧ தாவீது கிழவனாகிப் பரிபூரண வயதானபோ
து, தன் குமாரனாகிய சாலோமோனை இஸ்ரவே
லின்மேல் இராசாவாக்கி,
௨ இஸ்ரவேலின் எல்லாப் பிரபுக்களையும், ஆசா
ரியரையும், இலேவியரையும் கூட்டிக்கொண்
௩ டான்.—அப்போது முப்பதுவயதுமுதல்கொண்
டு அதற்கு மேல்தரமான இலேவியர் எண்ணப்
பட்டார்கள்; அவர்களுடைய இலக்கம் தலைக்
குத்தலையாக முப்பத்தெண்ணாயிரம் புருஷரா
௪ னது. — இவர்களில் இருபத்துநாலாயிரம்பேர்
கர்த்தருடைய வீட்டின் வேலையை விசாரித்து,
ஆறாயிரம்பேர் தலைவரும் நியாயாதிபதிகளுமாயி
௫ ருந்து,—நாலாயிரம்பேர் வாசல்காக்கிறவர்களாய்
இருக்கவேண்டுமென்று தாவீது சொல்லி, துதி
செய்கிறதற்கு நாம் பண்ணுவித்த வாத்திய முட்
டுகளால் நாலாயிரம்பேரோ, கர்த்தரைத் துதிக்கி
றவர்களாயிருக்கவேண்டுமென்று சொல்லி,
௬ அவர்களை இலேவியின் குமாரராகிய கெர்
சோன், கோகாத், மேராரி என்றவர்களுடைய
சந்ததிகளின்படி பங்குபிரித்தான்.
௭ கெர்சோனியரில், லாதானும், சீமேயும் இருந்
௮ தார்கள்.—லாதானின் குமாரர், எகியேலென்ற
தலைச்சன், சேத்தாம், யோவேலென்ற மூன்று
௯ பேர். — சீமேயின் குமாரர், செலோமித், ஆசி
யேல், ஆரான் என்ற மூன்றுபேர்; இவர்கள் லா
தான் வம்சப்பிதாக்களின் தலைவராயிருந்தார்
௰ கள்.—யாகாத், சீனா, எகூஸ், பெரீயாவென்ற
நாலுபேரும் சீமேயின் குமாரராயிருந்தார்கள்.—
௰௧ யாகாத் தலைச்சனாயிருந்தான்; சீனா இரண்டாம்
குமாரனாயிருந்தான்; ஆனால் எகூசுக்கும் பெரீ
யாவுக்கும் அநேகம் குமாரர் இராதபடியினாலே
அவர்கள் பிதாக்களின் வீட்டாரில் ஒரே வம்ச
மாக எண்ணப்பட்டார்கள்.
௰௨ கோகாத்தின் குமாரர், அம்ராம், இச்சேகார்;
௰௩ எபிரோம், ஊசியேலென்ற நாலுபேர்.—அம்ரா
மின் குமாரர், ஆரோன், மோசே என்றவர்கள்,
ஆனால் ஆரோனும், அவன் குமாரரும் பரிசுத்தத்
திற்குப் பரிசுத்தமான ஸ்தலத்தை என்றைக்கும்
பரிசுத்தமாய்க் காக்கிறதற்கும், என்றைக்கும்
கர்த்தருக்குமுன்பாகத் தூபம்காட்டுகிறதற்கும்,
அவரைச் சேவிக்கிறதற்கும், அவர் நாமத்திலே
ஆசீர்வாதம் கொடுக்கிறதற்கும் பிரித்துவைக்கப்
பட்டார்கள். — பராபரனுடைய மனுஷனாகிய ௰௪
மோசேயின் குமாரரோவெனில், இலேவிகோத்
திரத்தாருக்குள் எண்ணப்பட்டார்கள்.—மோசே ௰௫
யின் குமாரர், கெர்சோம், எலீயேசர் என்றவர்
கள்.-கெர்சோமின் குமாரரில் சேபுவேல் தலைச் ௰௬
சனாயிருந்தான்.— எலீயேசருடைய குமாரரில் ௰௭
ரேகபீயாவென்ற அவன் குமாரன் தலைவனான
வன்; எலீயேசருக்கு வேறே குமாரர் இருந்ததில்
லை; ரேகபீயாவின் குமாரரோவென்றால் மிகவும்
பெருகினார்கள். — இச்சேகாரின் குமாரரிலே ௰௮
செலோமீத் தலைச்சனாயிருந்தான்.—எபிரோனின் ௰௯
குமாரர், எரியாவென்ற தலைச்சனும், அம்ரீயா
இரண்டாம் குமாரனும், யாகாசீயேல் மூன்றாம்
குமாரனும், எக்காமம் நாலாம் குமாரனும்தானே.-
ஊசீயேலின் குமாரர், மிகாவென்ற தலைச்ச ௨௰
னும், இஷியாவென்ற இரண்டாம் குமாரனும்.
மேராரியின் குமாரர், மகேலி, மூசி என்றவர் ௨௧
கள்; மகேலியின் குமாரர், எலேயாசார், கீஸ்
என்றவர்கள். — எலேயாசார் மரிக்கிறபோது, ௨௨
அவனுக்குக் குமாரத்திகளே அல்லாமல் குமாரர்
உண்டாயிருந்ததில்லை; இவர்களைக்கீசின் குமார
ராகிய இவர்களுடைய சகோதரர் விவாகம்பண்
ணினார்கள்.—மூசியின் குமாரர் மகேலி, ஏதேர், ௨௩
எரேமோத்தென்று மூன்றுபேர்.
தங்கள் பிதாக்களுடைய வீட்டாரின்படியே, ௨௪
பிதாக்களின் தலைவராகிய இலேவி புத்திரரின்
பேர்களுடைய டாப்பின்படியே, தலை தலையாக
எண்ணப்பட்ட இருபதுவயதும் அதற்கு மேல்
தரமுமான இவர்களுடைய சந்ததியார் கர்த்தரு
டைய வீட்டுப் பணிவிடையைச் செய்பவர்
கள். — எனென்றால் இஸ்ரவேலின் பராபரனா ௨௫
கிய கர்த்தர் தமது சனத்தை இளைப்பாறப்பண்ணி
னார்; அவர் என்றென்றைக்கும் எருசலேமில் வா
சம்பண்ணுவாரென்றும்,—இனி இலேவியர் வா ௨௬
சஸ்தலத்தையாகிலும் அதின் ஊழியத்திற்கடுத்த
அதின் தட்டுமுட்டுகளில் எதையென்கிலும் சுமக்
கத் தேவை இல்லை என்றும்,—தாவீது அவர்களைக் ௨௭
குறித்துச் சொன்ன கடைசி வார்த்தைகளின்
படியே, இலேவிபுத்திரரில் தொகைக்குள்பட்
டவர்கள் இருபதுவயதும் அதற்கு மேல்தரமுமா
னவர்கள்தானே.—எனென்றால் அவர்கள் ஆரோ ௨௮
னுடைய குமாரரின்கீழ்க் கர்த்தருடைய வீட்
டின் ஊழியமாய் நின்று, பிரகாரங்களையும், அ
றைகளையும், சகல பரிசுத்த தட்டுமுட்டுகளின்
சுத்திகரிப்பையும், பராபரனுடைய வீட்டு ஊழி
யத்தின் கிரியையையும் விசாரிப்பதும்,—சமுகத் ௨௯
தப்பங்களையும், காணிக்கைக்கு மெல்லிய மா
வையும், புளிப்பில்லா அதிரசங்களையும், சட்டி
களிலே செய்கிறதையும், சுடுகிறதையும், திட்ட
மான சகல கட்டளையையும், அளவையும் பரா

௩௰ மரிப்பதும்,—காலையிலும் அந்தப்படியே சாயங்
காலந்தோறும் கர்த்தரைப் போற்றித் துதித்து,
ஓய்வுநாள்களிலும், அமாவாசைகளிலும், பண்
டிகைகளிலும், கர்த்தருக்குச் சர்வாங்கதகனங்
கள் செலுத்தப்படுகிற சகல வேளையிலும், —
௩௧ இலக்கத்திற்குள்ளான அவர்கள் தங்கள் நியாயத்
தின்படியே, எப்போதும் அந்தப்பிரகாரமாகச்
௩௨ செய்ய, கர்த்தருக்குமுன்பாக நிற்பதும்,—ஆச
ரிப்புக்கூடாரத்தின் காவலையும் பரிசுத்தஸ்தலத்
தின் காவலையும் தங்கள் சகோதரராகிய ஆரோ
னுடைய குமாரரின் காவலையும் காப்பதும்,
அவர்கள் கர்த்தருடைய வீட்டின் பணிவிடை
யாய்ச் செய்யும் உத்தியோகமாயிருக்கும்.

## ௨௪. அதிகாரம்.

௧. இருபத்திநாலு சீட்டினால் உண்டான ஆரோனுடைய குமாரர்களின் வகுப்புகள். ௨௰. கோகாத்தியர்களும், ௨௭. மெராரியர்களும், சீட்டினால் வகுக்கப்பட்டது.

௧ ஆரோன் புத்திரரின் வகுப்புகளாவது: ஆரோ
னின் குமாரர், நாதாப், அபிகூ, எலேயாசார்,
௨ இத்தாமார் என்றவர்கள். — ஆனால் நாதாபும்
அபிகூவும் தங்கள் தகப்பனுக்குமுன்னே குமா
ரர் இல்லாமல் மரித்தபடியினாலே, எலேயாசா
ரும் இத்தாமாரும் ஆசாரிய ஊழியம்செய்தார்
௩ கள். — தாவீதும் எலேயாசாரின் புத்திரரில் சா
தோக்கென்கிறவனும், இத்தாமாரின் புத்திரரில்
அகிமேலேக் என்றவனும், அவர்களை அவர்கள்
ஊழியம்செய்ய முறைவரிசைகளாக வகுத்தார்
கள்.

௪ அவர்களை வகுக்கிறபோது, இத்தாமாரின் புத்
திரரைப்பார்க்கிலும் எலேயாசாரின் புத்திரருக்
குள்ளே அதிகமான தலைவராகிய புருஷர் காண
ப்பட்டபடியினாலே, எலேயாசாரின் புத்திரரில்
பதினாறுபேர் தங்கள் பிதாக்களுடைய வீட்டா
ருக்கும் இத்தாமாரின் புத்திரரில் எட்டுப்பேர்
தங்கள் பிதாக்களுடைய வீட்டாருக்கும் தலை
௫ வராக வைக்கப்பட்டார்கள். — எலேயாசாரின்
புத்திரரிலும், இத்தாமாரின் புத்திரரிலும் பரிசுத்
தஸ்தலத்தையும் பராபரனையும் சேவிக்கிற பிர
புக்கள் உண்டாயிருக்கும்படிக்கு, அவர்களை
இவர்களுக்கும் அவர்களுக்கும் சீட்டுகளைப்
போட்டுப் பகுத்தார்கள்.

௬ இலேவியரில்சம்பிரதியாகிய செமாயாவென்ற
நேத்தானியேலின் குமாரன், அவர்களை இராசா
வுக்கும் பிரபுக்களுக்கும் ஆசாரியனாகிய சாதோ
குக்கும் அப்பியத்தாரின் குமாரனாகிய அகிமே
லேகுக்கும் ஆசாரியரும் இலேவியருமான பி
தாக்களின் தலைவருக்கும்முன்பாக எழுதினான்;
ஒரு பிதாவின் வீட்டுச்சீட்டு எலேயாசாருக்காக
எடுக்கப்பட்டது; பிறகு அந்தப்படியே இத்தா
மாருக்காகவும் எடுக்கப்பட்டது.

௭ முதலாம் சீட்டு யோயாரிபின் பேர்வழிக்
கும், இரண்டாவது எதாயாவின் பேர்வழிக்
௮ கும், — மூன்றாவது ஆரிமின் பேர்வழிக்கும்,
௯ நாலாவது சேயோரீமின் பேர்வழிக்கும்,—ஐந்
தாவது மல்கியாவின் பேர்வழிக்கும், ஆறாவது
மியாமினின் பேர்வழிக்கும், — ஏழாவது அக் ௰
கோத்சின் பேர்வழிக்கும், எட்டாவது அபியா
பின் பேர்வழிக்கும், — ஒன்பதாவது எசுவா ௰௧
வின் பேர்வழிக்கும், பத்தாவது செக்கனியா
வின் பேர்வழிக்கும், — பதினோராவது எலியா ௰௨
சிவின் பேர்வழிக்கும், பன்னிரண்டாவது யாக்
கீமின் பேர்வழிக்கும்,—பதின்மூன்றாவது உப் ௰௩
பாவின் பேர்வழிக்கும், பதினாலாவது எசெபெ
யாவின் பேர்வழிக்கும்,—பதினைந்தாவது பில் ௰௪
காவின் பேர்வழிக்கும், பதினாறாவது இம்மே
ரின் பேர்வழிக்கும், — பதினேழாவது எசீரின் ௰௫
பேர்வழிக்கும், பதினெட்டாவது அப்பித்சே
சின் பேர்வழிக்கும்,-பத்தொன்பதாவது பெத்த ௰௬
கீயாவின் பேர்வழிக்கும், இருபதாவது எகே
செக்கியேலின் பேர்வழிக்கும்,—இருபத்தோரா. ௰௭
வது யாகினின் பேர்வழிக்கும், இருபத்திரண்
டாவது காமுவேலின் பேர்வழிக்கும்,—இருபத் ௰௮
துமூன்றாவது தெலாயாவின் பேர்வழிக்கும்,
இருபத்துநாலாவது மாசியாவின் பேர்வழிக்கும்
புறப்பட்டது.

இஸ்ரவேலின் பராபரனாகிய கர்த்தர் அவர்கள் ௰௯
தகப்பனாகிய ஆரோனுக்குக் கற்பித்தபடியே, அ
வர்கள் அவனுடைய கட்டளையின்பிரகாரமாக,
தங்கள் முறைவரிசைகளில் கர்த்தருடைய வீட்
டிற்குள் பிரவேசிக்கும் அவர்களுடைய ஊழி
யத்திற்காகப் பண்ணப்பட்ட வகுப்புகள் இ
வைகள்தானே.

இலேவியின் மற்றப் புத்திரருக்குள்ளே இருக் ௨௰
கிற அம்ராமின் புத்திரரில் சூபவேலும், சூபவே
லின் குமாரரில் எகேதியாவும்,-ரெகேபியாவின் ௨௧
குமாரரிலோவென்றால் மூத்தவனாகிய இஷியா
வும்,-இச்சேகாரியரில் செலேமோத்தும், செலே ௨௨
மோத்தின் குமாரரில் யாகாத்தும்,-எபிரோனின் ௨௩
குமாரரில் மூத்தவனாகிய எரியாவும்,இரண்டாம்
குமாரனாகிய அமரீயாவும், மூன்றாம்குமாரனாகிய
யாகாசியேலும், நாலாம்குமாரனாகிய எக்காமா
மும்,—ஊசியேலின் புத்திரரில் மிகாவும், மிகா ௨௪
வின் குமாரரில் சாமீரும்,—மிகாவின் சகோதர ௨௫
னாகிய இஷியாவும், இஷியாவின் குமாரரில் சக
ரீயாவும்,—மெராரியின் குமாரராகிய மாகேலி, ௨௬
மூசி என்றவர்களும், யாசீயாவின் குமாரனாகிய
பேனோவும், — மெராரியின் குமாரனாகிய யாசி ௨௭
யாவின் குமாரரான பேனோ, சோகாம், சக்கூர்,
இப்ரீ என்றவர்களும்,—மகேலியின் புத்திரரில் ௨௮
குமாரரில்லாத எலேயாசாரும்,—கீசின் புத்திர ௨௯
ரிலோவென்றால் எரామேயேலும், — மூசியின் ௩௰
குமாரரான மகேலி, ஏதேர், எரிமோத்தென்ப
வர்களுமாகிய இவர்கள் தங்கள் பிதாக்களுடைய
வீடுகளின்படியே இலேவியரின் புத்திரரானவர்
கள்.—இவர்களும் இராசாவாகிய தாவீதுக்கும் ௩௧
சாதோகுக்கும் அகிமேலேகுக்கும் ஆசாரியரி
லும் இலேவியரிலும் பிதாக்களாயிருக்கிற தலை
வருக்கும்முன்பாக, தங்கள் சகோதரராகிய ஆ
ரோனின் புத்திரர் செய்ததுபோல, தங்களில்

ருக்கிற பிதாக்களான தலைவருக்கும், அவர்களு
டைய சிறிய சகோதரருக்கும், சரிசமானமாய்ச்
சீட்டுகளைப் போட்டுக்கொண்டார்கள்.

## ௨௫. அதிகாரம்.

௧. பாட்டகரின் தொழிலும், தொகையும், ௮. சீட்டினால் அவர்கள் இருபத்திநாலு வகுப்பானது.

௧ பின்னையும் சுரமண்டலங்களாலும் தம்புருக
ளாலும் கைத்தாளங்களாலும் தீர்க்கதரிசனம்
சொல்லுகிற ஆசாப், ஏமான், எதுத்தூன் என்ற
வர்களின் குமாரரில் சிலரை, தாவீதும் சேனைக
ளின் பிரபுக்களும் ஊழியத்திற்கென்று பிரித்து
வைத்தார்கள்; தங்கள் ஊழியத்தின் கிரியைக்
குக் குறித்துவைக்கப்பட்ட மனுஷர்களின்
௨ இலக்கம்.—யாரென்றால் இராசாவுடைய கட்ட
ளைப்பிரமாணமாய்த் தீர்க்கதரிசனம்சொல்லுகிற
ஆசாப்பின் வசத்திலிருக்க, ஆசாப்பின் குமார
ரில் சக்கூர், யோசேப், நெத்தானியா, அஷா
௩ ரேலா என்றவர்களையும்,—கர்த்தரைப் போற்றித்
துதித்துத் தீர்க்கதரிசனம் சொல்லுகிற தங்கள்
தகப்பனாகிய எதுத்தூனின் வசத்திலே சுரமண்
டலங்களை வாசிக்க, எதுத்தூனின் குமாரராகிய
கெதலீயா, சேரீ, எசாயா, அஷபீயா, மத்தித்
௪ தீயாவென்ற ஆறுபேரையும்,—கொம்பைத் தொ
னிக்கப்பண்ண, பராபரனுடைய வார்த்தை
களில் இராசாவுக்கு ஞானதிருஷ்டியுள்ள புரு
ஷனாகிய ஏமானின் குமாரரான புக்கீயா, மத்த
னீயா, ஊசியேல், செபுவேல், எரிமோத், அன
னீயா, அனானி, எலியாத்தா, கிதல்தி, ரொமந்தி
யேசர், யோஸ்பெகாஷா, மலோத்தி, ஒத்திர்,
௫ மகாசியோத்தென்றவர்களையும்தானே. — இவர்
களெல்லாரும் ஏமானின் குமாரராயிருந்தார்கள்;
ஏனெனில் பராபரன் ஏமானுக்குப் பதினாலு
குமாரரையும் மூன்று குமாரத்திகளையும் கொடுத்
௬ திருந்தார்.—இவர்கள் அனைவரும் இராசாவுடைய
கட்டளைப் பிரமாணமாய்க் கர்த்தருடைய வீட்
டில் தாளங்கள் தம்புருகள் சுரமண்டலங்களு
டைய கீதவாத்தியம்செய்ய, பராபரனுடைய
வீட்டு ஊழியமாக அவரவர் தங்கள் தங்கள் தகப்
பனாகிய ஆசாப், எதுத்தூன், ஏமான் என்றவர்
௭ கள் வசத்திலிருந்தார்கள். — கர்த்தரைப் பாடும்
பாட்டுகளைக் கற்றுக்கொண்டு, அனைவரும் அறி
வுள்ளவர்களான தங்கள் சகோதரரோடும்கூட
அவர்கள் இலக்கத்திற்கு இருநூற்றெண்பத்தெட்
டுப்பேராயிருந்தார்கள்.

௮ அவர்களில் சிறியவனும்பெரியவனும்,கற்றுக்
கொடுக்கிறவனும் கற்றுக்கொள்ளுகிறவனும்,
சரிசமானமாய் முறைவரிசைக்காகச் சீட்டுக
௯ ளைப் போட்டுக்கொண்டார்கள்.—முதலாம்சீட்டு
ஆசாப் வசமான யோசேப்பின் பேர்வழிக்கும்,
இரண்டாவது கெதலீயா, அவன் சகோதரர்,
அவன் குமாரரென்ற பன்னிரண்டு பேர்வழிக்
௰ கும்,—மூன்றாவது சக்கூர், அவன் குமாரர்,
அவன் சகோதரரென்ற பன்னிரண்டு பேர்வ
௰௧ ழிக்கும்,—நாலாவது இஸ்ரீ, அவன் குமாரர், அ
வன் சகோதரரென்ற பன்னிரண்டு பேர்வழிக்
கும்,—ஐந்தாவது நெத்தனீயா, அவன் குமாரர், ௰௨
அவன் சகோதரரென்ற பன்னிரண்டு பேர்வ
ழிக்கும், — ஆறாவது பக்கீயா அவன் குமாரர், ௰௩
அவன் சகோதரரென்ற பன்னிரண்டு பேர்வழிக்
கும்,—ஏழாவது எசரேலா; அவன் குமாரர், அ ௰௪
வன் சகோதரரென்ற பன்னிரண்டு பேர்வழிக்
கும், — எட்டாவது எசாயா, அவன் குமாரர், ௰௫
அவன் சகோதரரென்ற பன்னிரண்டு பேர்வ
ழிக்கும்,-ஒன்பதாவது மத்தனீயா, அவன் குமா ௰௬
ரர், அவன் சகோதரரென்ற பன்னிரண்டு பேர்
வழிக்கும்,-பத்தாவது சீமேயா, அவன் குமாரர், ௰௭
அவன் சகோதரரென்ற பன்னிரண்டு பேர்வழிக்
கும், — பதினோராவது அசாரேயெல், அவன் ௰௮
குமாரர், அவன் சகோதரரென்ற பன்னிரண்டு
பேர்வழிக்கும்,-பன்னிரண்டாவது அஷாபீயா, ௰௯
அவன் குமாரர், அவன் சகோதரரென்ற பன்னி
ரண்டு பேர்வழிக்கும்,—பதின்மூன்றாவது சுப ௨௰
வேல், அவன் குமாரர், அவன் சகோதரரென்ற
பன்னிரண்டு பேர்வழிக்கும், — பதினாலாவது ௨௧
மத்தித்தீயா, அவன் குமாரர், அவன் சகோதர
ரென்ற பன்னிரண்டு பேர்வழிக்கும்,—பதினைந் ௨௨
தாவது எரேமோத், அவன் குமாரர், அவன் சகோ
தரரென்ற பன்னிரண்டு பேர்வழிக்கும்,—பதி ௨௩
னாறாவது அனனீயா, அவன் குமாரர், அவன்
சகோதரரென்ற பன்னிரண்டு பேர்வழிக்கும்,—
பதினேழாவது யோஸ்பேக்காஷா, அவன் குமா ௨௪
ரர், அவன் சகோதரரென்ற பன்னிரண்டு பேர்
வழிக்கும்,—பதினெட்டாவது ஆனானி, அவன் ௨௫
குமாரர், அவன் சகோதரரென்ற பன்னிரண்டு
பேர்வழிக்கும்,-பத்தொன்பதாவது மல்லோத்தி, ௨௬
அவன் குமாரர், அவன் சகோதரரென்ற பன்னி
ரண்டு பேர்வழிக்கும்,—இருபதாவது எலியாற் ௨௭
று, அவன் குமாரர், அவன் சகோதரரென்ற பன்
னிரண்டு பேர்வழிக்கும், — இருபத்தோராவது ௨௮
ஒத்திர், அவன் குமாரர், அவன் சகோதரரென்ற
பன்னிரண்டு பேர்வழிக்கும்,-இருபத்திரண்டா ௨௯
வது கீதல்த்தி, அவன் குமாரர், அவன் சகோதர
ரென்ற பன்னிரண்டு பேர்வழிக்கும்,-இருபத்து ௩௰
மூன்றாவது மகாசீயோத், அவன் குமாரர், அவன்
சகோதரரென்ற பன்னிரண்டு பேர்வழிக்கும்,—
இருபத்துநாலாவது ரொமந்தியேசர், அவன் கு ௩௧
மாரர், அவன் சகோதரரென்ற பன்னிரண்டு
பேர்வழிக்கும் புறப்பட்டது.

## ௨௬. அதிகாரம்.

௧. வாசல்காக்கிறவர்களின் வகுப்புகள். ௰௩. சீட்டினால் வாசல் வகுக்கப்பட்டது. ௨௰. பொக்கிஷங்களைக் காப்பாற்றும் இலேவியர். ௨௯. மணியகாரர்களும், நியாயாதிபதிகளும்.

வாசல்காக்கிறவர்களின் வகுப்புகளாவது:கோ ௧
ராகியர் சந்ததியான ஆசாபின் புத்திரரிலே கோ
ரேயின் குமாரன் மெஷெலெமீயா என்றவன்,—
மெஷெலெமீயாவின் குமாரர், மூத்தவனாகிய சஉ ௨
கரீயாவும்,-எதியாவேல், செப்தீயா, யத்னீயேல், ௩
ஏலாம், யோக்னான், எலியோனாயி என்ற
இரண்டாம் மூன்றாம் நாலாம் ஐந்தாம் ஆறாம்
ஏழாம் குமாரரும், — ஓபேதேதோமின் குமா ௪

௫ ரர், மூத்தவனாகிய சேமாயாவும், — யோசபாத், யோவாத், சாக்கார், நெத்தானெயேல், அம்மியேல், ஈசக்கார், பெவுல்தாயி என்ற இரண்டாம் மூன்றும் நாலாம் ஐந்தாம் ஆறும் ஏழாம் எட்டாம் குமாரருந்தானே; ஏனென்றால் பராபரன்
௬ அவனை ஆசீர்வதித்திருந்தார்.—அவன் குமாரனாகிய சேமாயாவுக்கும் குமாரர் பிறந்து, தங்கள் தகப்பன் வீட்டாரை ஆண்டார்கள்; ஏனெனில்
௭ பராக்கிரமசாலிகளாயிருந்தார்கள்.-சேமாயாவுக்கிருந்த குமாரர் ஒத்நீயும், பலசாலிகளாகிய ரேப்பவேல், ஓபேத், எல்சாபாத்தென்ற அவன் சகோ
௮ தரரும் எலிகூவும் செம்கியாவும்தானே.—ஓபேதேதோமின் புத்திரரும் அவர்கள் குமாரரும் அவர்கள் சகோதரருமாகிய ஊழியத்திற்குப் பலத்த பராக்கிரமரான அவர்களெல்லாரும் அறுபத்தி
௯ ரண்டுபேர்.-மெஷெலெமியாவின் குமாரரும் சகோதரருமான பராக்கிரமர் பதினெட்டுப்பேர்.-
௰ மேராரியின் புத்திரரில் ஓசா என்றவனுடைய குமாரராவது: சிம்ரீயென்ற தலைவன்; இவன் மூத்தவனாயிராவிட்டாலும் அவன் தகப்பன் அவ
௰௧ னைத் தலைவனாக வைத்தான்.—இல்க்கியா, தெப்லீயா, சகரீயாவென்ற இரண்டாம் மூன்றும் நாலாம் குமாரரானவர்கள்; ஓசாவின் குமாரரும் சகோதரருமெல்லாம் பதின்மூன்றுபேர்.

௰௨ காவல்காரரான தலைவரின்கீழ்த் தங்கள் சகோதரருக்கொத்த முறையாய்க் கர்த்தருடைய வீட்டில் வாசல்காக்கிறவர்களாய்ச் சேவிக்க இவர்
௰௩ கள் வகுக்கப்பட்டு,—தங்கள் பிதாக்களின் வீட்டாராகிய சிறியவர்களும் பெரியவர்களுமாய் இன்ன வாசலுக்கு இன்னாரென்று சீட்டுகளைப்
௰௪ போட்டுக்கொண்டார்கள். — கீழ்ப்புறத்திற்குச் செலேமியாவுக்குச் சீட்டு விழுந்தது; விவேகமுள்ள யோசனைக்காரனாகிய சகரீயாவென்ற அவன் குமாரனுக்குச் சீட்டைப்போட்டபோது, புறப்பட்ட அவன் சீட்டு வடபுறத்திற்கென்றி
௰௫ ருந்தது. — ஓபேதேதோமுக்குத் தென்புறத்திற்கும், அவன் குமாரருக்குத் தருமப்பணங்கள்
௰௬ சேருகிற வீட்டிற்கும்,—சூப்பீமுக்கும் ஓசாவுக்கும் மண்போட்டு உயர்த்தப்பட்ட வழியும் காவலுக்கு எதிரே காவலுமிருக்கிற மேற்புறமான
௰௭ வாசலுக்கும் சீட்டு விழுந்தது.—கிழக்கே இலேவியரான ஆறுபேரும், வடக்கே பகலிலே நாலுபேரும், தெற்கே பகலிலே நாலுபேரும், தருமம் சேரும் வீட்டண்டையில் இரண்டிரண்டுபே
௰௮ ரும்,—வெளிப்புறமான வாசல் அண்டையில் மேற்கே இருக்கிற உயர்ந்த வழிக்கு நாலுபேரும், வெளிப்புறமான வழியில் இரண்டுபேரும்
௰௯ இருப்பவர்கள்.-கோராகின் புத்திரருக்குள்ளும்; மேராரியின் புத்திரருக்குள்ளும் வாசல்காக்கிறவர்களின் வகுப்புகள் இவைகள்தானே.

௨௰ மற்ற இலேவியரில் அகியாவென்றவன் பராபரனுடைய வீட்டுப் பொக்கிஷங்களையும், பரிசுத்தம்பண்ணப்பட்ட பொருள்களின் பொக்கி
௨௧ ஷங்களையும் விசாரிக்கிறவனாயிருந்தான்.-லாதானின் குமாரர் யாரென்றால், கெர்சோனியனான அவனுடைய குமாரராகிய பிதாக்களின் தலைவராயிருந்தவர்கள் எகியேலியும்,—எகியேலியின் ௨௨
குமாரராகிய சேத்தாமும், அவன் சகோதரனாகிய யோவேலும் கர்த்தருடைய வீட்டுப் பொக்கிஷங்களை விசாரிக்கிறவர்களுமாயிருந்தார்கள்.—அம் ௨௩
ராமீயரிலும், இச்சேகாரியரிலும், எபிரோனியரிலும், ஊசியேரியரிலும் சிலர் அப்படித்தானே.—மோசேயின் குமாரனாகிய கெர்சோமின் ௨௪
சந்ததியான செபூவேல் பொக்கிஷங்களின்மேலே பிரதானியாயிருந்தான். — எலியேசரைத் ௨௫
தொட்டு அவனுக்கிருந்த சகோதரரானவர்கள் இவனுடைய குமாரனாகிய ரெகபீயாவும், இவனுடைய குமாரனாகிய எசாயாவும், இவன் குமாரன் யோராமும், இவன் குமாரன் சிக்ரீயும், இவன் குமாரன் செலோமீதும்தானே.—இராசா ௨௬
வாகிய தாவீதும், ஆயிரத்துச் சேர்வைக்காரரும் நூற்றிற்குச் சேர்வைக்காரருமான பிதாக்களின் தலைவரும், சேனாபதிகளும் யுத்தங்களில் பிடித்துக் கொள்ளையிட்டவைகளில் எடுத்து,—கர்த்த ௨௭
ருடைய வீட்டைப் பலப்படுத்தும்படிக்குப் பரிசுத்தம்பண்ணின பொருள்களின் பொக்கிஷங்களையெல்லாம் அந்தச் செலோமீதும் அவனுடைய சகோதரரும் விசாரித்தார்கள். — ஞானதிருஷ் ௨௮
டியுள்ள புருஷனாகிய சாமுவேலும், கீசின் குமாரனாகிய சவுலும், நேரின் குமாரனாகிய அப்னேரும், செரூயாவின் குமாரனாகிய யோவாபும், அவரவர் பரிசுத்தம்பண்ணினதனைத்தும் செலோமீதின் கையின்கீழும் அவன் சகோதரர் கையின் கீழும் இருந்தன.

இச்சகாரியரில் கெனனீயாவும் அவன் குமா ௨௯
ரரும் வெளிப்புறத்து வேலைக்கு வைக்கப்பட்டு, இஸ்ரவேலின்மேல் மணியகாரரும் நியாயாதிபதிகளுமாயிருந்தார்கள்.—எபிரோனியரில் அசபீ ௩௰
யாவும் அவன் சகோதரருமாகிய ஆயிரத்து எழுநூறு பராக்கிரமசாலிகள் யோர்தானுக்கிப்பால் மேற்கேயிருக்கிற இஸ்ரவேலின்மேல் கர்த்தருடைய எல்லா வேலைக்கும் இராசாவின் ஊழியத்திற்குமாக வைக்கப்பட்டார்கள்.—எபிரோ ௩௧
னியரில் எரீயாவும் இருந்தான்; அவன் தன் பிதாக்களின் வம்சங்களான எபிரோனியரில் தலைவனானவன்; தாவீது அரசாண்ட நாற்பதாம் வருஷத்திலே அவர்கள் தேடப்பட்டு, அவர்களுக்குள்ளே கீலேயாத் தேசத்தின் யசேரிலே பலத்த மனுஷர் கண்டுபிடிக்கப்பட்டார்கள். — பலசா ௩௨
லிகளாகிய அவனுடைய சகோதரர் இரண்டாயிரத்து எழுநூறு பிரதான தலைவராயிருந்தார்கள்; அவர்களைத் தாவீது இராசா பராபரனுடைய எல்லாக் காரியத்திற்காகவும், இராசாவின் காரியத்திற்காகவும், ரூபேனியர்மேலும், காதியர்மேலும், மனாசேயின் பாதிக்கோத்திரத்தின்மேலும் வைத்தான்.

## ௨௭. அதிகாரம்.

௧. பன்னிரண்டு மாதத்திற்கு ஒவ்வொருத்தராக வைக்கப்பட்ட பன்னிரண்டு சேனைத்தலைவர்கள், கோத்திரத்திற்கு ஒவ்வொருத்தராயிருந்த பன்னிரண்டு பிரபுக்கள். ௨௩. சனங்களை இலக்கம்பார்ப்பது தடைசெய்யப்பட்டது. ௨௫. தாவீதின் வெவ்வேறான தலைமைக்காரர்கள்.

௧ தங்கள் இலக்கத்தின்படி இருக்கிற இஸ்ரவேல்
புத்திரருக்கு வம்சங்களின் தலைவரும், ஆயிரத்
துச் சேர்வைக்காரரும், நூற்றிற்குச் சேர்வைக்கா
ரரும், இவர்களுடைய தலைவரும் வைக்கப்பட்
டிருந்தார்கள்; இவர்கள் வருஷத்திலுண்டான
மாதங்களிலெல்லாம் மாதத்திற்குமாதம் இராசா
வைச் சேவிக்கிறதற்கு வகுக்கப்பட்ட வரிசைக
ளின்படியெல்லாம் மாற்றிமாற்றி வருவார்கள்;
ஒவ்வொரு வகுப்பில் இருபத்துநாலாயிரம்பே
ரிருந்தார்கள்.
௨ முதலாம் மாதத்தின் முதல் வகுப்பின்மேல்
சப்தியேலின் குமாரன் யஷோபெயாம் இருந்
தான்; அவன் வகுப்பில் இருபத்துநாலாயிரம்பே
௩ ரிருந்தார்கள்.—பேரேசின் சந்ததியாரில் இவன்
சகல சேனாபதிகளின் தலைவனாயிருந்து முதல்
௪ மாதத்தை விசாரித்தான். — இரண்டாம் மாதத்
தின் வகுப்பின்மேல் அகோகியனான தோதாயி
இருந்தான்; இவன் வகுப்பிலே மிக்லோத் தள
கர்த்தனாயிருந்தான்; அவன் வகுப்பில் இருபத்து
௫ நாலாயிரம்பேரிருந்தார்கள்.—மூன்றாவது மாதத்
தின் மூன்றாம் சேனாபதி யோய்தாவின் குமார
னாகிய பெனாயாவென்ற தலையான பிரதானி; அ
வன் வகுப்பில் இருபத்துநாலாயிரம்பேரிருந்
௬ தார்கள்.-இந்தப் பெனாயா அந்த முப்பது பராக்
கிரமசாலிகளில் ஒருவனும் அந்த முப்பதுபேர்
களின் தலைவனுமாயிருந்தான்; அவனுடைய
வகுப்பை அவன் குமாரனாகிய அமீசபாத் விசா
௭ ரித்தான்.—நாலாவது மாதத்தின் நாலாம் சேனா
பதி யோவாபின் சகோதரனாகிய ஆசகேலும் அ
வனுக்குப்பிற்பாடு அவன் குமாரன் செப்தியா
வும்தானே; அவன் வகுப்பில் இருபத்துநாலாயி
௮ ரம்பேரிருந்தார்கள்.—ஐந்தாவது மாதத்தின் ஐந்
தாம் சேனாபதி இஸ்ருகியனான சம்கூத்தென்ற
வன்; அவன் வகுப்பில் இருபத்துநாலாயிரம்பே
௯ ரிருந்தார்கள்.-ஆறாவது மாதத்தின் ஆறாம் சேனா
பதி இக்கேசின் குமாரன் ஈராவென்ற தெக்கோ
கியன்; அவன் வகுப்பில் இருபத்துநாலாயிரம்
௰ பேரிருந்தார்கள்.—ஏழாவது மாதத்தின் ஏழாம்
சேனாபதி எப்பிராயீம் புத்திரரில் ஒருவனாகிய
ஏலேசென்ற பெலோனியன்; அவன் வகுப்
௰௧ பில் இருபத்துநாலாயிரம்பேரிருந்தார்கள்.-எட்
டாவது மாதத்தின் எட்டாம் சேனாபதி சாரிய
ரில் ஒருவனாகிய சிபேகாயியென்ற ஊஷாத்தி
யன்; அவன் வகுப்பில் இருபத்துநாலாயிரம்
௰௨ பேரிருந்தார்கள்.—ஒன்பதாவது மாதத்தின் ஒன்
பதாம் சேனாபதி பென்யமீனரில் அபியேசே
ரென்ற ஆனதோத்தான்; அவன் வகுப்பில் இரு
௰௩ பத்துநாலாயிரம்பேரிருந்தார்கள்.-பத்தாவது மா
தத்தின் பத்தாம் சேனாபதி சாரியரில் ஒருவனா
கிய மக்ராயியென்ற நெத்தோபாத்தியன்; அவன்
வகுப்பில் இருபத்துநாலாயிரம்பேரிருந்தார்கள்.-
௰௪ பதினோராவது மாதத்தின் பதினோராம் சேனாபதி
எப்பிராயீம் புத்திரரில் பெனாயாவென்ற பீரத்
தோனியன்; அவன் வகுப்பில் இருபத்துநாலா
௰௫ யிரம்பேரிருந்தார்கள்.—பன்னிரண்டாவது மா
தத்தின் பன்னிரண்டாம் சேனாபதி ஒத்னியேல்
சந்ததியான எல்தாயியென்ற நெத்தோபாத்தியன்
தானே; அவன் வகுப்பிலும் இருபத்துநாலாயி
ரம்பேரிருந்தார்கள்.
இஸ்ரவேல் கோத்திரங்களுக்குத் தலைவராவது: ௰௬
ரூபெனியருக்குத் தலைவன் சிக்ரியின் குமாரன்
எலியேசர்; சிமேயோனியருக்கு மாக்காவின்
குமாரன் செப்பத்தியா.—இலேவியருக்கு கேமு ௰௭
வேலின் குமாரன் அஷாபியா; ஆரோன் சந்ததிக்
குச் சாதோக்.—யூதாவுக்குத் தாவீதின் சகோதர ௰௮
ரில் ஒருவனாகிய எலிகூ; ஈசஷாருக்கு மீகவே
லின் குமாரன் ஒம்றி. — சேபுலோனுக்கு ஒப்தி ௰௯
யாவின் குமாரன் இஸ்மாயா; நவுதலிக்கு அஸ்ரீ
யேலின் குமாரன் எரிமோத்.— எப்பிராயீம் புத்தி ௨௰
ரருக்கு அதசியாவின் குமாரன் ஒசேயா; மனாசே
யின் பாதிக்கோத்திரத்திற்குப் பெதாயாவின்
குமாரன் யோவேல். — கீலேயாத்திலுள்ள மனா ௨௧
சேயின் பாதிக்கோத்திரத்திற்குச் • சகரீயாவின்
குமாரன் இத்தோ; பென்யமீனுக்கு அப்நேரின்
குமாரன் யாசியேல்.—தாணுக்கு எரோகாமின் ௨௨
குமாரன் அசாரேல்; இவர்கள் இஸ்ரவேல் கோத்
திரங்களுக்குத் தலைவராயிருந்தார்கள்.
ஆனால் இருபது வயதும் அதற்குக் கீழ்த்தரமு ௨௩
மானவர்களின் இலக்கத்தைத் தாவீது தொகை
யேற்றாதிருந்தான்; ஏனெனில் இஸ்ரவேலை வா
னத்தின் நட்சத்திரங்களத்தனையாய்ப் பெருகப்
பண்ணுவோமென்று கர்த்தர் சொல்லியிருந்
தார். —.செரூயாவின் குமாரன் யோவாப் எண் ௨௪
ணத்துவக்கியும் முடிக்காதேபோனான்; ஏனெ
னில் அதற்காக இஸ்ரவேலின்மேலே கடுங்கோ
பம் வந்தது; ஆனதுகொண்டு அந்தத் தொகை
தாவீது இராசாவின் நாளாகமக் கணக்கிலே ஏறி
னதில்லை.
இராசாவுடைய பொக்கிஷங்களின்மேல் ஆ ௨௫
தியேலின் குமாரன் அஸ்மாவேத்தும், பட்ட
ணங்களுக்கும் கிராமங்களுக்கும் துருக்கங்களு
க்குமுள்ள நிலத்தினுடைய பொக்கிஷங்களின்
மேலும் உசியாவின் குமாரன் யோனத்தானும்,—
நிலத்தைப்பயிரிட வயல்வெளியின் வேலைசெய் ௨௬
கிறவர்களின்மேலே கேலூப்பின் குமாரன் எஸ்
ரியும்,—திராட்சத்தோட்டங்களின்மேல் ராமாத் ௨௭
தியனான சீமேயும், திராட்சத்தோட்டங்களின்
வரத்தாகிய திராட்சப்பழஇரச இருப்புகளின்மே
லே சிப்மியனாகிய சப்தியும், — பள்ளத்தாக்குக ௨௮
ளிலுள்ள ஒலிவமரங்களின்மேலும் முசுக்கட்
டை விருட்சங்களின்மேலும் கெதேரியனான
பால்கானானும், எண்ணெயிருப்புகளின்மேல்
யோவாசும்,—சாரோனில் மேய்கிற மாடுகளின் ௨௯
மேல் சாரோனியனான சித்ராயும், பள்ளத்தாக்
குகளிலுள்ள மாடுகளின்மேல் அத்லாயின் குமா
ரன் சாப்பாத்தும்,—ஒட்டகங்களின்மேல் இஸ் ௩௰
மவேலியனாகிய ஓபிலும், கழுதைகள்மேல் மே
ரோனோத்தியனாகிய எகெதியாவும்,—ஆடுகளின் ௩௧
மேல் ஆகாரியனான யாசிசும், விசாரிப்புக்கார
ராயிருந்தார்கள்;இவர்களெல்லாரும் தாவீது இரா

சாவுக்கு இருந்த ஆஸ்தியின் தலைவராயிருந்தார்
கள்.
௩௨ தாவீதின் சிறியதகப்பனாகிய யோனத்தா
னென்ற புத்தியுள்ள மனுஷன், ஆலோசனைக்
காரனும் சம்பிரதியுமாயிருந்தான்; அக்மோனி
யின் குமாரன் எகியேலோவென்றால், இராசா
௩௩ வின் குமாரரோடிருந்தான்.—அகித்தோப்பேல்
இராசாவுக்கு ஆலோசனைக்காரனாயிருந்தான்;
அற்கியனான ஊஷாயியோவெனில் இராசாவின்
௩௪ சிநேகிதனாயிருந்தான்.—அகித்தோப்பேலுக்குப்
பிற்பாடு பெனாயாவின் குமாரன் யோய்தாவும்
அப்பியத்தாரும் இருந்தார்கள்; யோவாபோ
வென்றால் இராசாவின் படைத்தலைவனாயிருந்
தான்.

## ௨௮. அதிகாரம்.

௧. தாவீது ஆலோசனைச் சங்கத்தில் பராபரன் தனக்குச் செய்த நன்மை யையும் சாலோமோனைக்குறித்து வாக்குத்தத்தத்தையும் சொல்லி, சன ங்கள் பயப்படும்படி கற்பித்தது. ௯. ௨௰. அவன் சாலோமோனை ஆல யத்தைக் கட்டும்படி தைரியப்படுத்தினது. ௰௧. அதைக் கட்டும்படி யான மாதிரியையும், அதற்கு வேண்டிய பொன்னையும், வெள்ளியை யும் அவன் கொடுத்தது.

௧ கோத்திரங்களின் தலைவரும், இராசாவைச் சே
விக்கிற வகுப்புகளின் தலைவரும், ஆயிரத்துச்
சேர்வைக்காரரும், நூற்றிற்குச் சேர்வைக்கார
ரும், இராசாவுக்கும் இராசகுமாரருக்கும் உண்
டான எல்லா ஆஸ்தியையும் மிருகஜீவன்களையும்
விசாரிக்கிற தலைவருமாகிய இஸ்ரவேலின் சகல
பிரபுக்களையும், பிரதானிகளையும், பலசாலிகளை
யும், சகல பராக்கிரமக்காரரையும் தாவீது எருச
லேமிலே கூட்டினான்.
௨ அப்போது இராசாவாகிய தாவீது எழுந்திருந்து,
காலூன்றி நின்று சொன்னதாவது: என் சகோத
ரரே, என் சனமே, நான் சொல்வதைக் கேளுங்
கள்; கர்த்தருடைய உடம்படிக்கைப் பெட்டி
யின் இளைப்பாறுதலுக்கும், நம்முடைய பராபர
னுடைய பாதப்படிக்குமாக ஒரு வீட்டைக்
கட்ட நான் என் மனதிலே நினைத்து, கட்டுகிற
௩ தற்கு ஆயத்தமும் பண்ணினேன்.—ஆனால் பரா
பரன் என்னுடனே, நீ நம்முடைய நாமத்திற்கு
வீட்டைக் கட்டவேண்டாம்; ஏனெனில் நீ யுத்
தமனுஷனாயிருந்து, இரத்தங்களைச் சிந்திப்போ
௪ ட்டாயென்றார். — இப்போதும் இஸ்ரவேலின்
மேல் என்றைக்கும் இராசாவாயிருக்க, இஸ்ரவே
லின் பராபரனாகிய கர்த்தர் என் தகப்பனுடைய
வீட்டாரிலெல்லாம் என்னைத் தெரிந்துகொண்
டார்; ஏனெனில் அவர் யூதாவையும் யூதாவின்
வீட்டில் என் தகப்பன் வீட்டையும் தலைமை
யாகத் தெரிந்துகொண்டு, என்னை எல்லா இஸ்ர
வேலின்மேலும் இராசாவாக்க, என் தகப்பனு
டைய குமாரரில் என்மேல் பிரியம் வைத்தார்.—
௫ இப்போதும் கர்த்தர் எனக்கு அநேகம் குமார
ரைக் கட்டளையிட்டார்; ஆனால் இஸ்ரவேலை
ஆளும் கர்த்தருடைய இராச்சியபாரத்தின் ஆச
னத்தின்மேல் உளுக்காருகிறதற்கு, அவர் என்
னுடைய எல்லாக் குமாரரிலும் என் குமாரனாகிய
௬ சாலோமோனைத் தெரிந்துகொண்டு,—எனக்குச்
சொன்னதாவது: உன் குமாரனாகிய சாலோ
மோனே நம்முடைய வீட்டையும் நம்முடைய
பிரகாரங்களையும் கட்டக்கடவன்; ஏனெனில்
அவனை நமக்குக் குமாரனாகத் தெரிந்துகொண்
டோம்; நாம் அவனுக்குப் பிதாவாயிருப்போம்.—
இந்நாளில் நடக்கிறபடியே அவன் நம்முடைய ௭
கற்பனைகளின்படியும் நம்முடைய நியாயங்க
ளின்படியும் செய்யப் பலப்பட்டிருந்தானானால்,
அவன் இராச்சியபாரத்தை என்றென்றைக்கும்
திடப்படுத்துவோமென்றார். — இப்போதும் ௮
நீங்கள் என்றென்றைக்கும் இந்த நல்ல தேசத்
தைச் சுதந்தரமாய் அநுபவித்து, உங்களுக்குப்
பிறகு அதை உங்கள் பிள்ளைகளுக்குச் சுதந்தர
மாய்ப் பின்வைக்கும்பொருட்டாக, நீங்கள்
உங்கள் பராபரனாகிய கர்த்தரின் கற்பனைகளை
யெல்லாம் கைக்கொண்டு விசாரியுங்களென்று
கர்த்தரின் சபையாகிய இஸ்ரவேலனைத்தின்
கண்களுக்குமுன்பாகவும், நம்முடைய பராபர
னுடைய செவிகளுக்குமுன்பாகவும் உங்களுக்
குப் புத்திசொல்லுகிறேன்.
என் குமாரனாகிய சாலோமோனே, நீ உன் ௯
பிதாவின் பராபரனை அறிந்து, அவரை உத்தம
இருதயத்தாலும் மனப்பூர்வத்தாலும் சேவி;
ஏனென்றால் கர்த்தர் எல்லா இருதயங்களையும்
ஆராய்ந்து, சிந்தனைகளின் தோற்றுதலையெல்
லாம் உணருகிறார்; நீ அவரைத் தேடினால்
உனக்குத் தென்படுவார்; நீ அவரை விட்டுவிட்
டாயேயாகில் உன்னை என்றைக்கும் தள்ளிப்
போடுவார்.—இப்போதும் எச்சரிக்கையாயிரு; ௰
ஏனெனில் பரிசுத்தஸ்தலமாக ஒரு வீட்டைக்
கட்டுவதற்குக் கர்த்தர் உன்னைத் தெரிந்துகொண்
டார்; நீ திடன்கொண்டு அதை நடப்பியென்று
சொல்லி,
தாவீது தன் குமாரனாகிய சாலோமோனுக்கு, ௰௧
மண்டபமும் அதின் அறைகளும் அதின் பொக்
கிஷசாலைகளும் அதின் மேல்வீடுகளும் அதின்
உள்ளறைகளும் கிருபாசன அறையும் இருக்கும்
மாதிரியையும்,—ஆவியினாலே தனக்குக் கட்ட ௰௨
ளையிடப்பட்டபடியெல்லாம் அவன் செய்ய
வேண்டிய கர்த்தருடைய வீட்டுப்பிரகாரங்க
ளும் பராபரனுடைய வீட்டுப் பொக்கிஷங்களை
யும் பரிசுத்தம்பண்ணப்பட்டவைகளின் பொக்
கிஷங்களையும் வைக்கும் சகல சுற்றறைகளும்
இருக்கும் மாதிரியையும், — ஆசாரியரையும் இ ௰௩
லேவியரையும் வரிசைகளாக வகுக்கிறதற்கும்
கர்த்தருடைய வீட்டுப்பணிவிடை வேலையனைத்
திற்கும் கர்த்தருடைய வீட்டுவேலையின் தட்டு
முட்டுகளனைத்திற்குமான கட்டளையையும் கொ
டுத்தான்.—அவன் பலபல வேலைக்கு வேண்டிய ௰௪
சகல பொன் தட்டுமுட்டுகளுக்காக நிறையின்
படி பொன்னையும், பலபல வேலைக்கு வேண்
டிய சகல வெள்ளித் தட்டுமுட்டுகளுக்காக
நிறையின்படி வெள்ளியையும்,—பொன்னான ௰௫
விளக்குத்தண்டுகளுக்கும் அவைகளின் பொன்
னான விளக்குகளுக்கும் ஒவ்வொரு விளக்குத்

தண்டுக்கும் அதின் விளக்குகளுக்கும் நிறையின்
படி வேண்டிய பொன்னையும், வெள்ளி விளக்
குத்தண்டுகளில் ஒவ்வொரு விளக்குத்தண்டுக்
கும் அதின் விளக்குகளுக்கும் நிறையின்படி
௰௬ வேண்டிய வெள்ளியையும்,–சமுகத்தப்பங்களை
வைக்கும் ஒவ்வொரு மேசைக்கு நிறையின்படி
வேண்டிய பொன்னையும், வெள்ளிமேசைக
௰௭ ளுக்கு வேண்டிய வெள்ளியையும்,—முள்குறடு
களுக்கும் கலங்களுக்கும்தட்டுகளுக்கும் வேண்
டிய சுத்தப்பொன்னையும்,பொன் கிண்ணிகளில்
ஒவ்வொரு கிண்ணிக்கு நிறையின்படி வேண்டி
யதையும், வெள்ளிக்கிண்ணிகளில் ஒவ்வொரு
கிண்ணிக்கு நிறையின்படி வேண்டியதையும்,–
௰௮ தூபம்காட்டும் பீடத்திற்கு நிறையின்படி வேண்
டிய புடமிடப்பட்ட பொன்னையும் கொடுத்து,
செட்டைகளை விரித்துக் கர்த்தருடைய உடம்ப
டிக்கைப் பெட்டியை மூடும் பொன் கேருபீன்
களான வாகனத்தின் மாதிரியையும் கொடுத்து,–
௰௯ இந்த மாதிரியின் சகல கிரியைகளும் எனக்குத்
தெரியப்பண்ண, இவையெல்லாம் கர்த்தரு
டைய கரத்தினால் எனக்கு எழுதிக்கொடுக்கப்
பட்டனவென்றான்.

௨௰ தாவீது தன் குமாரனாகிய சாலோமோனுக்குச்
சொன்னதாவது: நீ பலத்து, திடன்கொண்டு,
இதை நடப்பி; பயப்படாமலும் கலங்காமலும்
இரு; ஏனெனில் பராபரனாகிய கர்த்தரென்ற
என்னுடைய பாரபரன் உன்னோடிருப்பார்; கர்
த்தருடைய வீட்டுவேலையின் கிரியை அனைத்
தையும் நீ முடித்துத்தீருமட்டும், அவர் உன்
னைக் கைநெகிழ்வதும் இல்லை, உன்னைக் கைவி
௨௧ டுவதும் இல்லை.–இதோ பராபரனுடைய வீட்டு
வேலைக்கெல்லாம் ஆசாரியர் இலேவியருடைய
வகுப்புகளிருக்கின்றன;அந்த எல்லாக்கிரியைக்
கும் சகலவித வேலைக்கும் ஞானமுள்ள மனப்
பூர்வமான சகல மனுஷரும்,உன் சொற்படியெல்
லாம் கேட்கும் பிரபுக்களும், சகல சனங்களும்
உன்னண்டையில் இருக்கிறார்களென்றான்.

## ௨௯. அதிகாரம்.

௧. தாவீது தன் செய்கையினாலும், சொல்லினாலும், தலைவர்களுக்கும் மற்றச் சனங்களுக்கும் தேவாலயத்திற்காக மனப்பூர்வமாய்க் கொடுக்கச் செய்தது. ௰. தாவீதின் வந்தனமும், பிரார்த்தனையும், ௨௰. சனங்கள் பராபரனைத் துதித்து, பலிகளைச் செலுத்தி, சாலோமோனை இராசாவாக்கினது. ௨௬. தாவீதின் ஆளுகையும் மரணமும்.

௧ பிற்பாடு தாவீது இராசா சபைக்கெல்லாம் சொ
ன்னதாவது: பராபரன் என் குமாரனாகிய சா
லோமோன் ஒருவனையே தெரிந்துகொண்டிருக்
கையில், அவன் இன்னம் வாலிபமும் இளந்தை
யுமாயிருக்கிறான்; கிரியையோவென்றால் பெரி
யது; ஏனெனில் அது ஒரு மனுஷனுக்கல்ல,
பராபரனாகிய கர்த்தருக்குக் கட்டும் அரமனை.—
௨ நான் என்னாலே ஆனமட்டும் என் பராபரனு
டைய வீட்டுக்கென்று பொன்வேலைக்குப் பொ
ன்னையும், வெள்ளிவேலைக்கு வெள்ளியையும்,
வெண்கலவேலைக்கு வெண்கலத்தையும், இரும்
புவேலைக்கு இரும்பையும், மரவேலைக்கு மரங்
களையும், கோமேதகக் கற்களையும், பதிக்கப்ப
டும் கற்களையும், ஒளிவான பலவருணக் கற்க
ளையும், விலையேறப்பெற்ற சகலவித இரத்தினங்
களையும், வெண்கற்களையும் ஏராளமாகச் சவத
ரித்தேன்.—இன்னம் என் பராபரனுடைய வீட் ௩
டின்மேல் எனக்கிருக்கிற விருப்பத்தினால் நான்
பரிசுத்தவீட்டுக்காகச் சவதரித்ததனைத்தையும்
தவிர, என்னுடைய சொந்தமாயிருக்கிற பொன்
னையும் வெள்ளியையும் என் பராபரனுடைய
வீட்டுக்கென்று கொடுக்கிறேன். — என்னவெ ௪
னில் அறைகளின் சுவர்களை மூடுவதற்காகவும்,
பொன்வேலைக்குப் பொன்னும் வெள்ளிவே
லைக்கு வெள்ளியும் உண்டாவதற்காகவும், கம்
மாளர் செய்யும் வேலை அனைத்திற்காகவும், ஓப்
பீரின் பொன்னாகிய மூவாயிரம்தாலந்து பொ
ன்னையும், புடமிடப்பட்ட வெள்ளி ஏழாயிரம்
தாலந்தையும் கொடுக்கிறேன். — இப்போதும் ௫
உங்களில் இன்றைத்தினம் கர்த்தருக்குத் தன்
கைக்காணிக்கைகளைச் செலுத்த மனப்பூர்வமா
னவர்கள் யாரென்றான்.

அப்போது வம்சங்களின் பிரபுக்களும், இஸ் ௬
ரவேல் கோத்திரங்களின் பிரபுக்களும், ஆயிரத்
திற்குச் சேர்வைக்காரரும், நூற்றிற்குச் சேர்
வைக்காரரும், இராசாவின் வேலைக்காரராகிய
பிரபுக்களும் மனப்பூர்வமாகி,–பராபரனுடைய ௭
வீட்டுவேலைக்கு ஐயாயிரம் தாலந்து பொன்னை
யும், பதினாயிரம் தங்கக்காசுகளையும்,பதினாயிரம்
தாலந்து வெள்ளியையும், பதினெண்ணாயிரம்
தாலந்து வெண்கலத்தையும், நூறாயிரம் தாலந்து
இரும்பையும் கொடுத்தார்கள்.—யார் கையிலே ௮
இரத்தினங்கள் அகப்பட்டதோ,அவர்கள் அவை
களையும் கர்த்தருடைய வீட்டுப் பொக்கிஷத்
திற்கென்று கெர்சோனியனான எகியேலின்கை
யிலே கொடுத்தார்கள். — இப்படி மனப்பூர்வ ௯
மாய்க் கொடுத்ததற்காகச் சனம் சந்தோஷப்பட்
டது; ஏனெனில் மன உத்தமமும் உச்சாகமு
மாய்க் கர்த்தருக்குக் கொடுத்தார்கள்; தாவீது இரா
சாவும் மிகுதியாகவும் சந்தோஷப்பட்டான்.

ஆகையால் தாவீது சபையனைத்தின் கண்க ௰
ளுக்குமுன்பாகவும் கர்த்தருக்கு ஸ்தோத்திரம்
செலுத்திச் சொன்னதாவது: எங்கள் தகப்பனா
கிய இஸ்ரவேலின் பராபரனான கர்த்தாவே,
தேவரீர் சதாகாலங்களாகிய என்றென்றைக்கும்
ஸ்தோத்திரிக்கப்பட்டவர்.–கர்த்தராகிய உமக்கு ௰௧
மகிமையும் வல்லமையும் முக்கியமும் செயமும்
மகத்துவமும் உண்டாவதாக; ஏனென்றால் வா
னத்திலும் பூமியிலும் உள்ளவையெல்லாம் உம்
முடையவைகள்; கர்த்தாவே,இராச்சியமும் உம்
முடையது; தேவரீர் எல்லாரின்மேலும் தலைவ
ராய் உயர்ந்திருக்கிறவர். — இந்த ஐசுவரியமும் ௰௨
கனமும் உம்மாலே உண்டாயிருக்கின்றன;தேவ
ரீர் எல்லாவற்றையும் ஆளுகிறவர்; உம்முடைய
கரத்திலே பலனும் வல்லமையும். உம்முடைய
கரத்தில் இவையெல்லாம் பெருகவும் பலக்கவும்
பண்ணுதலும் இருக்கின்றன.–இப்போதும் எங் ௰௩

கள் பராபரனே, நாங்கள் உமக்கு ஸ்தோத்திரம்
செலுத்தி, உமது மகிமையுள்ள நாமத்தைத் துதிக்
௰௪ கிறோம்.—ஏனெனில் இப்படி மனப்பூர்வமாய்க்
கொடுக்கும் சாமர்த்தியம் எங்களுக்கு இருக்கிற
தற்கு நான் எம்மாத்திரம்? என்னுடைய சனமும்
எம்மாத்திரம்? ஏனென்றால் இவையெல்லாம் உம்
மால் உண்டானவை; உமது கரத்திலே அவை
௰௫ களை வாங்கி உமக்குக் கொடுத்தோம்.—ஏனென்
றால் உமக்குமுன்பாக நாங்கள் எங்களுடைய
எல்லாப் பிதாக்களைப்போல, அரதேசிகளும் பர
தேசிகளுமாயிருக்கிறோம்; பூமியின்மேல் எங்
கள் நாள்கள் ஒரு நிழலைப்போல இருக்கின்றன;
௰௬ தரித்திருக்க நம்பிக்கையில்லை.—எங்கள் பராபர
னாகிய கர்த்தாவே, உம்முடைய பரிசுத்த நாமத்
திற்கென்று உமக்கு ஒரு வீட்டைக் கட்டுகிற
தற்கு, நாங்கள் சவதரித்த இந்த எல்லாத் திரட்சி
யும் உமது கரத்திலிருந்து வந்தன; அவையெல்
௰௭ லாம் உம்முடையவை. — என் பராபரனே,
தேவரீர் இருதயத்தைச் சோதித்து, செம்மையான
குணங்களின்மேலே பிரியமாயிருக்கிறீர் என்கி
றதை அறிவேன்; இவையெல்லாம் நான் என்
இருதயத்தின் செம்மையான குணத்தினாலே
மனப்பூர்வமாய்க் கொடுத்தேன்; இப்போது இங்
கேயிருக்கிற உம்முடைய சனமும் உமக்கு
மனப்பூர்வமாய்க் கொடுத்ததைச் சந்தோஷத்
௰௮ தோடே பார்த்தேன்.—ஆபிரகாம் ஈசாக் இஸ்ர
வேலென்ற எங்கள் பிதாக்களின் பராபரனாகிய
கர்த்தாவே, உமது சனத்தின் இருதயத்திலுண்
டான இந்தச் சிந்தையையும் நினைவுகளையும்
என்றைக்கும் காத்துக்கொண்டு, அவர்கள் இருத
௰௯ யத்தை உமக்கு நேராக்கி அருளும்.—என் குமா
ரனாகிய சாலோமோன் உம்முடைய கற்பனை
களையும் உம்முடைய சாட்சிகளையும் உம்மு
டைய கட்டளைகளையும் கைக்கொள்ளும்படிக்
கும், இவைகளெல்லாவற்றையும் செய்து, நான்
ஆயத்தம்பண்ணின இந்த அரமனையைக் கட்டும்
படிக்கும், அவனுக்கு உத்தம இருதயத்தைக்
கொடுத்தருளுமென்று சொல்லி,
௨௰ அதின்பிறகு தாவீது சபையனைத்திற்கும், இப்
போதும் உங்கள் பராபரனாகிய கர்த்தனை ஸ்தோ
த்திரியுங்களென்றான்; அப்போது சபையெல்
லாம் தங்கள் பிதாக்களின் பராபரனாகிய கர்த்
தனை ஸ்தோத்திரித்து, கர்த்தருக்கும் இராசாவுக்
௨௧ கும் முன்பாகக் குனிந்து பணிந்து, — கர்த்த
ருக்குப் பலிகளைப் பலியிட்டு, மறுநாளிலே சர்
வாங்கதகனங்களாக ஆயிரம் எருதுகளையும், ஆயி
ரம் ஆட்டுக்கடாக்களையும், ஆயிரம் ஆட்டுக்
குட்டிகளையும், அவைகளின் ஊற்றுதல்களையும்
இஸ்ரவேலனைத்திற்காகவும் கர்த்தருக்குச் செ
லுத்தினார்கள்.—அவர்கள் அந்நாளிலே மிகுந்த ௨௨
சந்தோஷத்தோடே கர்த்தருக்குமுன்பாகப் புசி
த்துக்குடித்து, தாவீதின் குமாரனாகிய சாலோ
மோனை இரண்டாம்விசை இராசாவாக்கி, கர்த்
தருக்குமுன்பாக அவனை அதிபதியாகவும் சா
தோக்கை ஆசாரியனாகவும் அபிஷேகம்பண்ணி
னார்கள்.
அப்படியே சாலோமோன் தன் தகப்பனாகிய ௨௩
தாவீதின் ஸ்தலத்திலே கர்த்தருடைய ஆசனத்
தின்மேல் இராசாவாய் உளுக்காந்து யோகசாலி
யாயிருந்தான்; இஸ்ரவேலெல்லாம் அவனுக்குக்
கீழ்ப்படிந்தன.—சகல பிரபுக்களும் பராக்கிரம ௨௪
சாலிகளும் தாவீது இராசாவினுடைய சகல
குமாரரும்கூட இராசாவாகிய சாலோமோனுக்
குக் கீழடங்கியிருக்கக் கைகொடுத்தார்கள்.–கர்த் ௨௫
தர் சாலோமோனை எல்லா இஸ்ரவேலைப்பார்க்
கிலும் மகா பெரியவனாக்கி, அவனுக்குமுன்னே
இஸ்ரவேலின்மேல் இராசாவான ஒருவனுக்கும்
இல்லாதிருந்த இராசரிகமான மகிமையை அவ
னுக்குக் கட்டளையிட்டார்.
இப்படியே ஈசாயின் குமாரனாகிய தாவீது ௨௬
இஸ்ரவேலின்மேலெல்லாம் இராசாவாயிருந்
தான்.—அவன் இஸ்ரவேலை அரசாண்ட நாள் ௨௭
கள் நாற்பதுவருஷம்; எபிரோனிலே ஏழுவரு
ஷமும், எருசலேமிலே முப்பத்துமூன்று வரு
ஷமும் இராசாவாயிருந்தான்.–அவன் பரிபூரண ௨௮
வயதும் ஐசுவரியமும் மகிமையுமுள்ளவனாய்,
நல்ல முதிர்மையிலே மரணமடைந்தபின் அவன்
குமாரனாகிய சாலோமோன் அவன் ஸ்தலத்திலே
அரசாண்டான்.—தாவீது இராசாவினுடைய ஆ ௨௯
தியோடந்தமான நடபடிகளும், அவனுடைய
எல்லா இராச்சியபாரமும், வல்லமையும், அவன்
மேலும் இஸ்ரவேல்மேலும் தேசங்களுடைய
எல்லா இராச்சியங்கள்மேலும் சென்றுபோன
காலங்களும்கூட,–இதோ ஞானதிருஷ்டியுள்ள ௩௰
புருஷனாகிய சாமுவேலின் பிரபந்தத்திலும், தீர்
க்கதரிசியாகிய நாத்தானின் பிரபந்தத்திலும்,
ஞானதிருஷ்டியுள்ள புருஷனாகிய காதின் பிர
பந்தத்திலும் எழுதியிருக்கின்றது.

II. CHRONICLES.

# நாளாகமத்தின்

## இரண்டாம் புஸ்தகம்.

### க. அதிகாரம்.

௧. கிபேயோனிலே சாலோமோன் செலுத்தின பலிகள். ௭. அவன் ஞானத்தைக்கேட்டு, பராபரனால் ஆசீர்வதிக்கப்பட்டது. ௰௪. அவனுடைய பலமும் சௌக்கியமும்.

௧ தாவீதின் குமாரனாகிய சாலோமோன் தன் இரா
சரிகத்திலே பலப்பட்டான்; ஏனெனில் அவ
னுடைய பராபரனாகிய கர்த்தர் அவனுடனே
இருந்து அவனை மிகவும் பெரியவனாக்கினார்.—
௨ சாலோமோன் ஆயிரத்துச் சேர்வைக்காரரும்,
நூற்றிற்குச் சேர்வைக்காரரும், நியாயாதிபதிக
ளும், இஸ்ரவேல் எங்குமிருக்கிற வம்சங்களின்
தலைவராகிய சகல பிரபுக்களுமான இஸ்ரவேல
௩ னைத்தோடும் பேசி, — அவனும் அவனோடே
கூடச் சபையனைத்துமாய், கிபேயோனிலிருக்
௪ கிற மேட்டிற்குப் போனார்கள். — ஏனென்றால்
தாவீது பராபரனுடைய பெட்டியைக் கீரியாத்
யாரிமிலிருந்து, தான் இதற்கு எருசலேமிலே
கூடாரம்போட்டு ஆயத்தம்பண்ணின ஸ்தலத்
திற்கு ஏறிவரப்பண்ணியிருந்தாலும், கர்த்தரின்
தாசனாகிய மோசே வனாந்தரத்திலே பண்ணுவி
த்த பராபரனுடைய ஆசரிப்புக்கூடாரம் அங்கே
௫ இருந்தது.—ஊரின் குமாரனாகிய ஊரியின் குமா
ரன் பெத்சாலேயேல் உண்டுபண்ணின வெண்
கலப் பலிபீடமும் அங்கே கர்த்தரின் வாசஸ்
தலத்திற்குமுன்பாக இருந்தது; அதைச் சாலோ
மோனும் சபையுமாய்த் தேடிப்போனார்கள்.—
௬ அங்கே சாலோமோன் ஆசரிப்புக்கூடாரத்திற்கு
முன்பாகக் கர்த்தரின் சந்நிதியிலிருக்கிற வெண்
கலப் பலிபீடத்தின்மேல் ஆயிரம் சர்வாங்கதக
னபலிகளைச் செலுத்திப் பலியிட்டான்.
௭ அன்று இராத்திரியிலே பராபரன் சாலோ
மோனுக்குத் தரிசனையாகி, அவனுடனே நாம்
உனக்கு என்ன கொடுக்கவேண்டுமென்று கே
௮ ளென்றார்.—அப்போது சாலோமோன் பராபர
னுடனே சொன்னதாவது: தேவரீர் என் தகப்ப
னாகிய தாவீதுக்குப் பெரிய கிருபையைச் செய்
து, என்னை அவன் ஸ்தலத்திலே இராசாவாக்கி
௯ னீர்.—இப்போதும் பராபரனாகிய கர்த்தாவே,
தேவரீர் என் தகப்பனாகிய தாவீதுக்குப்பண்
ணின உமது வாக்குத்தத்தம் உறுதிப்படுவதாக;
ஏனெனில் தேவரீர் பூமியின் தூளத்தனை ஏராள
மான சனத்தின்மேல் என்னை இராசாவாக்கி
௰ னீர். — இப்போதும் நான் இந்தச் சனத்திற்கு
முன்பாகப் போக்கும் வரத்துமாயிருக்கத்தக்க
ஞானத்தையும் அறிவையும் எனக்குத் தாரும்;
ஏனெனில் இந்த உம்முடைய பெரிய சனத்தை
நியாயம் விசாரிக்கத்தக்கவன் யாரென்றான்.

அப்போது பராபரன் சாலோமோனுக்குச் ௰௧
சொன்னதாவது: இதை நீ உன் மனதிலே வைத்
திருந்து, நீ ஐசுவரியம் ஆஸ்திகளையானாலும் மகி
மையையானாலும் உன் பகைஞரின் பிராணனை
யானாலும் கேளாமலும், நீடித்த ஆயுசைக் கேளா
மலுமிருந்து, நான் உன்னை அரசாளப்பண்ணின
நம்முடைய சனத்தை நியாயம்விசாரிக்கத்தக்க
ஞானத்தையும் அறிவையும் உனக்குக் கேட்ட
படியினாலே, — ஞானமும் அறிவும் உனக்குக் ௰௨
கொடுத்திருக்கிறதுமல்லாமல், உனக்கு முன்
இருந்த இராசாக்களுக்காகிலும் உனக்குப்பின்
இருப்பவர்களுக்காகிலும் இல்லாத ஐசுவரியத்
தையும் ஆஸ்திகளையும் மகிமையையும் உனக்குக்
கொடுப்போமென்றார்.-இப்படிச் சாலோமோன் ௰௩
கிபேயோனிலிருக்கிற மேட்டிற்குப்போய், ஆச
ரிப்புக்கூடாரத்தின் சந்நிதியிலிருந்து எருசலே
முக்கு வந்து இஸ்ரவேலை அரசாண்டான்.

சாலோமோன் இரதங்களையும் குதிரைக்கார ௰௪
ரையும் சேர்த்தான்; ஆயிரத்துநானூறு இரதங்க
ளும், குதிரைக்காரர் பன்னீராயிரமும் அவனுக்
கு இருந்தன; அவைகளை இரதங்களின் பட்ட
ணங்களிலும், இராசாவாகிய தன்னிடத்தில் எரு
சலேமிலும் வைப்பித்தான்.

இராசா எருசலேமிலே வெள்ளியையும் பொ ௰௫
ன்னையும் கற்களைப்போலவும், கேதுருமரங்க
ளைப் பள்ளத்தாக்கில் இருக்கிற முசுக்கட்டைச்
செடிகளைப்போலவும் திரளாயிருக்கப்பண்ணி
னான்.—சாலோமோனுக்கு இருக்கிற குதிரைக ௰௬
ளும் புடவைகளும் எகிப்திலிருந்து கொண்டுவ
ரப்பட்டன; இராசாவின் வர்த்தகர் புடவைகளை
ஒப்பந்த விலைக்கிரயத்திற்கு வாங்குவார்கள்.—
அவர்கள் எகிப்திலிருந்து ஒரு இரதத்தை அறு ௰௭
நூறு வெள்ளிக்காசுக்கும், ஒரு குதிரையை நூற்
றைம்பது வெள்ளிக்காசுக்கும் கொண்டுவந்து
ஏறுவார்கள்; அந்தப்படியே ஏத்தியரின் சகல
இராசாக்களுக்கும், சூரியாவின் இராசாக்களுக்
கும், அவர்கள் முகாந்தரமாய்க் கொண்டுவரப்
பட்டன.

## உ. அதிகாரம்.

க. ஆலயத்தைக் கட்டுகிற சாலோமோனின் வேலைக்காரர்கள். ங. வேலைக்காரரையும், சாமான்களையும், அவன் ஈராமைக் கேட்டது. ௰௧. ஈராம் அவனுக்கு நல்ல உத்தரவு அனுப்பினது.

க சாலோமோன் கர்த்தருடைய நாமத்திற்கு ஒரு
வீட்டையும் தன் இராசரிகத்திற்கு ஒரு வீட்டை
உ யும் கட்ட நிருணயம்பண்ணி,—சுமைசுமக்கி
றதற்கு எழுபதினாயிரம்பேரையும், பர்வதத்தில்
மரம் வெட்டுகிறதற்கு எண்பதினாயிரம்பேரை
யும், இவர்கள்மேலே தலைவராக மூவாயிரத்து
அறுநூறுபேரையும் எண்ணிவைத்து,
௩ தீருவின் இராசாவாகிய ஈராமுக்குச் சொல்லி
அனுப்பினதாவது: என் தகப்பனாகிய தாவீது
தாம் வாசமாயிருக்கும் வீட்டைத் தமக்குக் கட்
டும்படிக்கு, நீர் அவருக்குத் தயவுசெய்து, அவ
ருக்குக் கேதுருமரங்களை அனுப்பினதுபோல
௪ எனக்கும் செய்யும்.—இதோ என் பராபரனாகிய
கர்த்தருக்கு முன்பாகச் சுகந்தவர்க்கங்களின்
தூபம் காட்டுகிறதற்கும், சமுகத்தப்பங்களை
எப்போதும் வைக்கிறதற்கும், அந்திசந்தியும்
ஓய்வுநாள்களிலும் மாதப்பிறப்புகளிலும் எங்கள்
பராபரனாகிய கர்த்தரின் பண்டிகைகளிலும் இஸ்
ரவேல் நித்தியகாலமாகச் செலுத்தவேண்டிய
படி சர்வாங்கதகனங்களைப் பலியிடுகிறதற்கும்,
அவருடைய நாமத்திற்கு ஒரு வீட்டை அதை அ
வருக்குப் பிரதிஷ்டைபண்ணும்படியாக நான்
௫ கட்டப்போகிறேன். — நான் கட்டப்போகிற
வீடோவென்றால் பெரியதாயிருக்கும்; ஏனெ
னில் எங்கள் பராபரன் எல்லாத் தேவர்களைப்
௬ பார்க்கிலும் பெரியவர்.—அவருக்கு வீட்டைக்
கட்டவும் சாமர்த்தியமுள்ளவன் யார்? ஏனென்
றால் வானங்களும் வானங்களின் வானங்களும்
அவரைக் கொள்ளாதே; அவருக்கு முன்பாகத்
தூபம்காட்டுகிறதற்கே ஒழிய, வேறே கணக்காய்
அவருக்கு வீட்டைக் கட்டுகிறதற்கும் நான்
௭ எம்மாத்திரம்?—இப்போதும் என் தகப்பனாகிய
தாவீது குறித்தவர்களும், என்னண்டையிலே
யூதாவிலும் எருசலேமிலும் இருக்கிறவர்களுமா
கிய விவேகிகளோடு, பொன்னிலும் வெள்ளி
யிலும் வெண்கலத்திலும் இரும்பிலும் இரத்தாம்
பரநூலிலும் சிவப்புநூலிலும் இளநீலநூலிலும்
வேலைசெய்ய ஞானமுள்ளவனும், கொத்துவே
லைசெய்ய அறிந்தவனுமான ஒரு மனுஷனை
௮ எனக்கு அனுப்பும்.—லீபனோனிலிருந்து கேது
ருமரங்களையும், தேவதாரிப் பாய்மரவிருட்சங்க
ளையும், வாசனைமரங்களையும் எனக்கு அனுப்பும்;
ஏனெனில் லீபனோனின் மரங்களை வெட்ட
உம்முடைய வேலைக்காரர் அறிந்தவர்களென்கி
றதை நான் அறிவேன்; இதோ எனக்கு மரங்க
ளைத் திரளாக ஆயத்தப்படுத்த என் வேலைக்காரர்
உம்முடைய வேலைக்காரரோடும் கூடுவார்கள்.-
௯ ஏனெனில் நான் கட்டப்போகிற அந்த வீடு பெ
ரியதும் ஆச்சரியப்படத்தக்கதுமாயிருக்கும். —
௰ இதோ அந்த மரங்களை வெட்டுகிற உம்முடைய
வேலைக்காரருக்கு இருபதினாயிரம் மரக்கால்
கோதுமை அரிசிகளையும், இருபதினாயிரம் மரக்
கால் வால்கோதுமையையும், இருபதினாயிரம்
குடம் திராட்சப்பழ இரசத்தையும், இருபதி
னாயிரம் குடம் எண்ணெயையும் கொடுப்பே
னென்று சொல்லி அனுப்பினான்.
அப்போது தீருவின் இராசாவாகிய ஈராம் சா ௰௧
லோமோனுக்குப் பிரதியுத்தரமாக அனுப்பின
காகிதத்தின் விவரமாவது: கர்த்தர் தம்முடைய
சனத்தைச் சிநேகித்ததினால், உம்மை அவர்கள்
மேல் இராசாவாக வைத்தாரென்றபிற்பாடு, —
அப்புறம் ஈராம் எழுதினது: கர்த்தருக்கு ஒரு வீட் ௰௨
டையும் தமது இராசரிகத்திற்கு ஒரு வீட்டை
யும் கட்டத்தக்க விவேகமும் உணர்வும் அறிந்த
ஞானமுள்ள குமாரனை, தாவீதென்ற இராசாவுக்
குக் கட்டளையிட்டவராகிய வானத்தையும் பூமி
யையும் உண்டாக்கின இஸ்ரவேலின் பராபர
னாகிய கர்த்தர் ஸ்தோத்திரிக்கப்பட்டவர்.—இப் ௰௩
போதும் ஈராம் அபியென்ற உணர்வறிந்த ஞான
முள்ள மனுஷனை அனுப்பினேன். — அவன் ௰௪
தாண் குமாரத்திகளிலுள்ள ஒரு ஸ்திரியின் குமா
ரன்; அவன் தகப்பன் தீருவின் மனுஷனாயிருந்
தான்; அவன் பொன்னிலும், வெள்ளியிலும்,
வெண்கலத்திலும், இரும்பிலும், கற்களிலும்,
மரங்களிலும், இரத்தாம்பரநூலிலும், இளநீலநூ
லிலும், மெல்லியநூலிலும், சிவப்புநூலிலும் வே
லைசெய்யவும், சகலவிதக் கொத்துவேலைசெய்ய
வும், என்னென்ன அவனுக்குக் காண்பிக்கப்படு
மோ, அதற்கு அவன் உம்முடைய ஞானிகளோ
டும் உம்முடைய தகப்பனாகிய தாவீதென்ற என்
ஆண்டவனின் ஞானிகளோடும்கூட வகையுண்
டுபண்ணவும் அறிவான். — இப்போதும் என் ௰௫
ஆண்டவன் தாம் சொன்ன கோதுமையையும்,
வால்கோதுமையையும், எண்ணெயையும், திரா
ட்சப்பழ இரசத்தையும் தம்முடைய ஊழியக்கா
ரருக்கு அனுப்பவும்,-அப்போது நாங்கள் உமக் ௰௬
குத் தேவையான மரங்களையெல்லாம் லீபனோ
னிலே வெட்டி அவைகளை உமக்குக் கடலின்
மேல் தெப்பங்களாய் யோப்பேமட்டுக்கும் கொ
ண்டுவருவோம்; பிற்பாடு நீர் அவைகளை எருச
லேமுக்கு ஏறிவரப்பண்ணலாமென்பதுதானே.
சாலோமோன் தன் தகப்பனாகிய தாவீது இஸ் ௰௭
ரவேல் தேசத்திலுண்டான மறுசாதியாரையெல்
லாம் எண்ணின தொகையின்படி அவர்களை
எண்ணினான்; அவர்கள் நூற்றைம்பத்து மூவா
யிரத்து அறுநூறுபேரென்று கண்டது.—இவர்க ௰௮
ளில் அவன் எழுபதினாயிரம்பேரைச் சுமைசுமக்
கவும், எண்பதினாயிரம்பேரைப் பர்வதத்தில் மர
ங்களை வெட்டவும், மூவாயிரத்து அறுநூறுபே
ரைச் சனத்திற்கு வேலையைக் கற்பிக்கும் தலைவ
ராயிருக்கவும் வைத்தான்.

## ௩. அதிகாரம்.

க. ஆலயத்தைக் கட்டும் இடமும், காலமும். ங. அதின் அளவும், அலங்காரமும். ௰. கேருபீன்கள். ௰௫. தூண்களும் திரையும்.

க பிற்பாடு சாலோமோன் எருசலேமிலே தன்
தகப்பனாகிய தாவீதுக்குக் காண்பிக்கப்பட்ட

மொரியாவென்ற பர்வதத்தில் எபூசியனாகிய ஒற்
னானின் களமென்ற தாவீது குறித்துவைத்த ஸ்த
லத்திலே கர்த்தருடைய வீட்டைக் கட்டத்துவக்
௨ கினான். — அவன் இராச்சியபாரம்பண்ணுகிற
நாலாம் வருஷம் இரண்டாம்மாதம் இரண்டாம்
தேதியிலே கட்டத்துவக்கினான்.
௩ பராபரனுடைய வீட்டைக் கட்டுகிறதற்கு, சா
லோமோன் போட்ட அஸ்திபாரமானது: முன்
அளவான முழங்களின்படியே, அறுபதுமுழ
௪ நீளமும் இருபதுமுழ அகலமுமானது.—முகப்
பிலிருக்கிற மண்டபம் வீட்டினுடைய அகலத்
தின்படியே இருபதுமுழ நீளமும், நூற்றிருபது
முழ உயரமுமாயிருந்தது; அதின் உள்புறத்தைச்
சுத்தப் பொன்னினால் மூடினான்.
௫ பெரிய வீட்டையோவென்றால் பாய்மரவிரு
ட்சப் பலகைகளாலும் பிறகு நல்ல பொன்னி
னாலும் இழைத்து, அதின்மேலே பேரீச்சுகளின்
வேலையையும் சங்கிலிகளின் வேலையையும்
௬ செய்து, — அந்த வீட்டை அலங்காரத்திற்காக
இரத்தினங்களால் பதித்தான்; பொன்னோவெ
௭ னில் பற்வாயீமின் பொன்னாயிருந்தது.—அந்த
வீட்டு உத்திரங்களையும், நிலைகளையும், அதின்
சுவர்களையும், அதின் கதவுகளையும், பொன்னி
னால் மூடி, சுவர்களிலே கேருபீன்களின் கொத்
துவேலையைச் செய்வித்தான்.
௮ பரிசுத்தத்திற்குப் பரிசுத்தமான வீட்டையும்
கட்டினான்; அது வீட்டினுடைய அகலத்தின்
படி இருபதுமுழ நீளமும் இருபதுமுழ அகல
முமாயிருந்தது; அதை அறுநூறு தாலந்து நல்ல
௯ பொன்னினால் இழைத்தான். — ஆணிகளின்
நிறை ஐம்பது பொன் சேக்கலானது; மேல்வீடு
களையும் பொன்னினால் இழைத்தான்.
௰ அவன் பரிசுத்தத்திற்குப் பரிசுத்தமான வீட்
டிலே இரண்டு கேருபீன்களையும் அசைகிற பா
வனையாய் உண்டுபண்ணினான்; அவைகளைப்
௰௧ பொன்னால் மூடினான்.—அந்தக் கேருபீன்களு
டைய செட்டைகளின் நீளம் இருபதுமுழமா
னது; ஒன்றினுடைய ஒரு செட்டை ஐந்துமுழ
மாயிருந்து, வீட்டுச் சுவரைத் தொட்டது; மறு
செட்டை ஐந்துமுழமாயிருந்து, மற்றக் கேருபீ
௰௨ னின் செட்டையைத் தொட்டது.—மற்றக் கேரு
பீனின் ஒரு செட்டையும் ஐந்துமுழமாயிருந்து,
வீட்டுச் சுவரைத் தொட்டது; அதின் மறு செட்
டையும் ஐந்துமுழமாயிருந்து, மற்றக் கேருபீ
௰௩ னின் செட்டையைப் பிடித்தது.—இப்படியே
அந்தக் கேருபீன்களின் செட்டைகள் இருபது
முழ விரிவாயிருந்தன; அவைகள் தங்கள் கால்க
ளால் ஊன்றி நின்றன; அவைகளின் முகங்கள்
வீட்டை உள்ளாக நோக்கியிருந்தன.
௰௪ அவன் இளநீலநூலாலும், இரத்தாம்பரநூலா
லும், சிவப்புநூலாலும், மெல்லியநூலாலும்,
திரையையும் அதிலே கேருபீன்களின் உருவுக
ளையும் உண்டுபண்ணினான்.
௰௫ அவன் வீட்டிற்கு முன்னாக முப்பத்தைந்து
முழ உயரமான இரண்டு தூண்களையும், அவை
களுடைய முனைகளின்மேலிருக்கும் ஐந்துமுழ
உயரமான குமிழ்களையும் உண்டாக்கி,—சந்நி ௰௬
திக்குமுன்னிருக்கச் சங்கிலிகளையும் அவன்
பண்ணுவித்து, தூண்களின் முனைகளின்மேலே
பற்றவைத்து, நூறு மாதளம்பழங்களையும் பண்
ணுவித்து, அந்தச் சங்கிலிகளில் கோத்தான்.—
அந்தத் தூண்களை அவன் தேவாலயத்திற்கு முன் ௰௭
பாக ஒன்றை வலதுபுறத்திலும் ஒன்றை இடது
புறத்திலும் நாட்டி, வலதுபுறமானதற்கு யாகி
னென்றும், இடதுபுறமானதற்குப் போவாசெ
ன்றும் பேர்தரித்தான்.

## ௪. அதிகாரம்.

௧. பித்தளைப் பலிபீடம். ௨. பன்னிரண்டு எருதுகளின்மேல் வைக்கப்பட்ட கடல்தொட்டி. ௬. பத்துக்கொப்பரைகளும், விளக்குத்தண்டுகளும், மேசைகளும். ௯. பிராகாரங்களும், பித்தளைத் தட்டுமுட்டுகளும. ௰௯. பொன்தட்டுமுட்டுகள்.

அவன் இருபதுமுழ நீளமும் இருபதுமுழ ௧
அகலமும் பத்துமுழ உயரமுமான வெண்கலப்
பலிபீடத்தையும் பண்ணுவித்தான்.
கடல்தொட்டியையும் வார்ப்பித்தான்; சக்கர ௨
மான அதின் உதடு, ஒருபுறம்துவக்கி மற்றப்புறம்
மட்டும் பத்துமுழ அகலமும், ஐந்துமுழ உயர
மும், சுற்றளவு முப்பதுமுழ நூலளவுமாயிருந்த
து.—அதின் கீழ்ப்புறமாய் எருதுகளின் உருவங் ௩
கள் ஒவ்வொரு முழத்திற்குப் பத்து உருவமாக
அந்தக் கடல்தொட்டியின் சக்கரத்திற்கு இருந்
தது; தொட்டியோடு ஒன்றாய் வார்க்கப்பட்ட
அந்த எருதுகளின் வரிசைகள் இரண்டு இருந்
தன.—அது பன்னிரண்டு எருதுகள்மேல் நின் ௪
றது; இவைகளில் மூன்று வடக்கேயும், மூன்று
மேற்கேயும், மூன்று தெற்கேயும், மூன்று கிழக்
கேயும் நோக்கியிருந்தன, கடல்தொட்டி அவை
களின்மேல் உயர இருந்தது, அவைகளின் பின்
புறங்களெல்லாம் உள்ளாக இருந்தன.—அதின் ௫
கனம் நால்விரல்கடையும், அதின் உதடு குடிக்
கிற பாத்திரத்தின் உதட்டைப்போலும், லீலிய
புஷ்பத்தைப்போலும் இருந்தன, அது மூவாயிரம்
குடம்தண்ணீர் பிடிக்கத்தக்கதாயிருந்தது.
கழுவுகிறதற்குப் பத்துக்கொப்பரைகளையும் ௬
உண்டாக்கி, சர்வாங்கதகனமாகிறவைகளை அ
வைகளில் அலசுகிறதற்கு, ஐந்தை வலதுபு
றத்திலும், ஐந்தை இடதுபுறத்திலும் வைத்தான்;
கடல்தொட்டியோவென்றால், ஆசாரியர்கள் அதி
லே தங்களைச் சுத்தம்பண்ணிக்கொள்ளுகிறதற்கு
இருந்தது.
அவன் பத்துப் பொன் விளக்குத்தண்டுகளை ௭
யும், அவைகளுடைய பிரமாணத்தின்படி செய்
வித்து, அவைகளைத் தேவாலயத்தில் ஐந்தை வல
துபுறமும், ஐந்தை இடதுபுறமுமாக வைத்தான்.
பத்து மேசையையும் செய்வித்து, அவைக ௮
ளைத் தேவாலயத்தில் ஐந்தை வலதுபுறமும், ஐந்
தை இடதுபுறமுமாக வைத்து, நூறு பொன்கலங்
களையும் பண்ணுவித்தான்.
அவன் ஆசாரியன் பிரகாரத்தையும், பெரிய ௯
பிரகாரத்தையும் பிரகாரத்தின் வாசல்களையும்

உண்டாக்கி, அவைகளின் கதவுகளை வெண்க
௰ லத்தால் மூடினான்.—கடல்தொட்டியை அவன்
கிழக்கான வலதுபுறத்திலே தெற்குக்கு எதிராக
வைத்தான்.
௰௧ ஈராம் செப்புச்சட்டிகளையும், சாம்பலெடுக்
கிற கரண்டிகளையும், கலங்களையும் உண்டாக்கி
னான்; அப்படியே ஈராம் கர்த்தருடைய வீட்டிற்
காக இராசாவாகிய சாலோமோனுக்குச் செய்ய
வேண்டிய வேலையை முடித்துப்போட்டான்.–
௰௨ அது என்னவெனில் அந்த இரண்டு தூண்களும்
இரண்டு தூண்களுடைய முனையின்மேலிருக்
கிற குண்டுகளும், குமிழ்களும், தூண்களுடைய
முனையின்மேலிருக்கிற குமிழ்களான இரண்டு
குண்டுகளை மூடுகிறதற்கு இரண்டு வலைப்பின்
௰௩ னல்களும்,-தூண்களின்மேலுள்ள குமிழ்களான
இரண்டு குண்டுகளை மூடுகிறதற்கு, ஒவ்வொரு
வலைப்பின்னலின் இரண்டுவரிசை மாதளம்ப
ழங்களாக, இரண்டு வலைப்பின்னலிலுமிருக்கிற
௰௪ நானூறு மாதளம்பழங்களும்தானே.—ஆதாரங்க
ளையும், ஆதாரங்களின்மேலிருக்கும் கொப்பரை
௰௫ களையும், — ஒரு கடல்தொட்டியையும், அதின்
௰௬ கீழிருக்கும் பன்னிரண்டு எருதுகளையும்,—செப்
புச்சட்டிகளையும், சாம்பலெடுக்கும் கரண்டிக
ளையும், முள்துறடுகள்முதலான பணிமுட்டுகளை
யும், ஈராம் ஆபி இராசாவாகிய சாலோமோனுக்
குக் கர்த்தரின் வீட்டிற்காகத் துப்புரவானவெண்
௰௭ கலத்தால் பண்ணினான். — யோர்தானுக்கடுத்த
சமனான பூமியில் சுக்கோத்திற்கும் சரேத்தாவுக்
கும் நடுவே இராசா அவைகளைக் களிமண்தரை
யிலே வார்ப்பித்தான்.
௰௮ இந்தத் தட்டுமுட்டுகளையெல்லாம் சாலோ
மோன் வெகு ஏராளமாய் உண்டுபண்ணினான்;
ஏனெனில் வெண்கலத்தின் நிறை தொகைக்கு
௰௯ அடங்காததாயிருந்தது.—பராபரனுடைய வீட்
டிற்கு வேண்டிய சகல தட்டுமுட்டுகளையும்,
பொன்பீடத்தையும், சமுகத்து அப்பங்களை
௨௰ வைக்கும் மேசைகளையும்,—முறையின்படியே
சந்நிதிக்குமுன்பாக வெளிச்சம் கொளுத்துகிற
தற்கு அபரஞ்சியான விளக்குத்தண்டுகளையும்,
௨௧ அவைகளின் விளக்குகளையும், — சுத்த தங்கப்
பொன்னான பூக்களையும், விளக்குகளையும், கத்த
௨௨ ரிகளையும்,—அபரஞ்சியான வெட்டுக்கத்திகளை
யும், கலங்களையும், கலயங்களையும், தூபகலயங்
களையும் சாலோமோன் பண்ணுவித்தான்; வீட்டி
னுடைய வாசல் கதவுகளான பரிசுத்தத்திற்குப்
பரிசுத்தமான ஸ்தலத்திற்கு இருக்கிற உள்ளான
கதவுகளும், தேவாலய வீட்டின் கதவுகளும்
பொன்னாயிருந்தன.

## ௫. அதிகாரம்.

௧. ஆலயத்துப் பொக்கிஷங்கள். ௨. ஆலயத்தில் நியாயப்பிரமாணப்பெட்டி வணக்கத்துடன் வைக்கப்பட்டது. ௰௧. பராபரன் துதிக்கப்பட்டு, தமது மகிமையைக் காண்பித்தது.

௧ கர்த்தருடைய வீட்டிற்காகச் சாலோமோன்
செய்த வேலையெல்லாம் முடிந்தபோது, சாலோ
மோன் தன் தகப்பனாகிய தாவீது பரிசுத்தம்பண்
ணினவைகளைக் கொண்டுவந்து, வெள்ளியை
யும், பொன்னையும், சகல தட்டுமுட்டுகளையும்,
பராபரனுடைய வீட்டுப் பொக்கிஷங்களில்
வைத்தான்.
பிற்பாடு கர்த்தருடைய உடம்படிக்கையின் ௨
பெட்டியைச் சீயோனென்ற தாவீதின் பட்ட
ணத்திலிருந்து ஏறிவரப்பண்ண, சாலோமோன்
இஸ்ரவேலின் மூப்பரையும், இஸ்ரவேல் புத்தி
ரரில் வம்சங்களின் பிரபுக்களாகிய எல்லாக்
கோத்திரத் தலைவரையும் எருசலேமிலே கூடி
வரப்பண்ணினான்.
அப்படியே இஸ்ரவேலரெல்லாரும் ஏழாம் மா ௩
தத்தின் பண்டிகையிலே இராசாவண்டையில்
கூடினார்கள்.–இஸ்ரவேலின் மூப்பரெல்லாரும் ௪
வந்தபிற்பாடு இலேவியர் பெட்டியை எடுத்து,–
பெட்டியையும், ஆசரிப்புக்கூடாரத்தையும், கூ ௫
டாரத்திலிருக்கிற பரிசுத்தமான எல்லாத் தட்டு
முட்டுகளையும் ஏறிவரப்பண்ணினார்கள்; அவை
களை ஏறிவரப்பண்ணினவர்கள் இலேவியரான
ஆசாரியர்தானே. — ஆனால் இராசாவாகிய சா ௬
லோமோனும் அவனோடே கூடின இஸ்ரவேல்
சபை அனைத்தும், பெட்டிக்குமுன்பாக என்
ணிக்கைக்கும் தொகைக்கும் அடங்காத ஏராள
மாய் ஆடுமாடுகளைப் பலியிட்டுக்கொண்டிருந்
தார்கள்.—அப்படியே ஆசாரியர் கர்த்தருடைய ௭
உடம்படிக்கையின் பெட்டியை, வீட்டின் சந்நி
தியாகிய பரிசுத்தத்திற்குப் பரிசுத்தமான அதின்
ஸ்தலத்திலே, கேருபீன்களுடைய செட்டைக
ளுக்குக் கீழாகக் கொண்டுவந்துவைத்தார்கள்.—
ஏனெனில் கேருபீன்கள் பெட்டியிருக்கும் தா ௮
னத்தின்மேல் தங்கள் இரண்டிரண்டு செட்டை
களை விரித்து, உயர இருந்து பெட்டியையும்
அதின் வாரைகளையும் மூடிக்கொண்டிருந்தன.–
பெட்டியிலிருக்கிற வாரைகளின் முனைகள் சந் ௯
நிதி ஸ்தலத்திற்குமுன்னே காணப்படத்தக்கவி
தமாய் அந்த வாரைகளை இழுத்தார்கள்; ஆனால்
புறம்பே அவைகள் காணப்பட்டதில்லை; அது
இந்நாள்வரைக்கும் அங்கே இருந்தது. — இஸ்ர ௰
வேல் புத்திரர் எகிப்திலிருந்து புறப்பட்டபின்
கர்த்தர் ஓரேபிலே அவர்களோடு உடம்படிக்கை
பண்ணினபோது, மோசே அந்தப் பெட்டியிலே
வைத்த இரண்டு கல்ப்பலகைகளல்லாமல் அதி
லே வேறொன்றும் இருந்ததில்லை.
வகுப்புகளின் முறைகளைப் பாராமலிருக்கிற ௰௧
எல்லா ஆசாரியரும் தங்களைப் பரிசுத்தம்பண்
ணிக்கொண்டிருந்தார்கள். — ஆசாப், ஏமான், ௰௨
எதுத்தூனுடைய கூட்டத்தாரும், அவர்களு
டைய குமாரர் சகோதரருடைய கூட்டத்தாரு
மாகிய பாடகரான இலேவியரனைவரும் மெல்
லிய புடவைகளைத் தரித்து, கைத்தாளங்களையும்
தம்புருகளையும் சுரமண்டலங்களையும் பிடித்துப்
பலிபீடத்திற்குக் கிழக்கே நின்றார்கள்; அவர்
களோடுங்கூடப் பூரிகைகளை ஊதுகிற ஆசாரி
யர்கள் நூற்றிருபதுபேராக நின்றார்கள்.—அவர் ௰௩
கள் ஒருமிக்கப் பூரிகைகளை ஊதி, ஒரு சத்தத்

தோடே கர்த்தரைத் துதித்து ஸ்தோத்திரித்துப்
பாடினார்கள்; சம்பவித்ததேதென்றால் ஆசாரியர்
பரிசுத்த ஸ்தலத்திலிருந்து புறப்படுகையிலும்,
பாடகர் பூரிகைகள் தாளங்கள் கீதவாத்தியங்க
ளுடைய சத்தத்தைத் தொனிக்கப்பண்ணி, கர்த்
தரை அவர் நல்லவர், அவர் கிருபை என்றுமுள்
ளதென்று ஸ்தோத்திரிக்கையிலும்,கர்த்தருடைய
வீடாகிய தேவாலயம் ஒரு மேகத்தினால் நிறை
௰௪ யப்பட்டது.—அந்த மேகத்தின்நிமித்தம் ஆசாரி
யர்கள் ஊழியம்செய்து நிற்கமாட்டாதே போ
னார்கள்; ஏனெனில் கர்த்தருடைய மகிமை பரா
பரனுடைய வீட்டை நிரப்பிற்று.

## ௬. அதிகாரம்.

௧ சாலோமோன் சனங்களை ஆசீர்வதித்ததும், பராபரனைத் துதித்ததும். ௰௨. அவன் வெண்கலப் பலிபீடத்தின்மேலிருந்து ஆலயப்பிரதிஷ்டை பண்ணும் பிரார்த்தனை.

௧ அப்போது சாலோமோன், இருளிலே வாசம்ப
ண்ணுவோமென்று கர்த்தர் சொன்னாரென்றும்,—
௨ தேவரீர் என்றைக்கும் இருக்கும் ஸ்தானமாகிய
வாசஸ்தலவீட்டை நான் உமக்குக் கட்டினே
௩ னென்றும் சொல்லி,—இராசா தன் முகத்தைத்தி
ருப்பி, இஸ்ரவேல் சபையையெல்லாம் ஆசீர்வ
தித்தான்; இஸ்ரவேல் சபையெல்லாம் நின்று
கொண்டிருந்தது.
௪ அவன் சொன்னதாவது: என் தகப்பனாகிய
தாவீதுக்குத் தம்முடைய வாக்கினாலே சொன்ன
தை, தம்முடைய கரங்களினாலே நிறைவேற்றி
ன இஸ்ரவேலின் பராபரனாகிய கர்த்தர் ஸ்தோத்
௫ திரிக்கப்பட்டவர்.—நாம் நமது சனத்தை எகிப்
துதேசத்திலிருந்து புறப்படப்பண்ணின நாள்
முதல்கொண்டு நம்முடைய நாமம் இருக்கும்
ஒரு வீட்டைக் கட்டவேண்டுமென்று நாம் இஸ்
ரவேலுடைய எல்லாக் கோத்திரங்களிலுமுள்ள
வேறே யாதொரு பட்டணத்தைத் தெரிந்து
கொள்ளாமலும், நமது சனமாகிய இஸ்ரவேலின்
மேல் அதிபதியாயிருக்க வேறே ஒருவனைத்
௬ தெரிந்துகொள்ளாமலும்,—நம்முடைய நாமமி
ருக்கும் தானமாக எருசலேமையும், நமது சன
மாகிய இஸ்ரவேலின்மேல் அதிபதியாயிருக்கத்
தாவீதையும் தெரிந்துகொண்டோம் என்கிற
௭ தைத்தானே.—இஸ்ரவேலின் பராபரனாகிய கர்த்
தரின் நாமத்திற்கு வீட்டைக் கட்டவேண்டு
மென்று என் தகப்பனாகிய தாவீதின் மனதிலும்
௮ இருந்தது.—ஆனால் கர்த்தர் என் தகப்பனாகிய
தாவீதுடனே, நமது நாமத்திற்கு வீட்டைக் கட்
டவேண்டுமென்று நீ உன் மனதிலே நினைத்தது,
௯ உன் மனதின் நல்ல நினைவுதானே.—ஆகிலும் நீ
அந்த வீட்டைக் கட்டாமல், உன் கர்ப்பப்பி
றப்பாகிற உன்னுடைய குமாரனே நம்முடைய
நாமத்திற்கு அந்த வீட்டைக் கட்டுவானென்
௰ றார். — இப்போதும் கர்த்தர் சொல்லியிருக்கிற
தமது வார்த்தையைத் திடப்படுத்தினார்; ஏனெ
னில் கர்த்தர் சொன்னபடியே நான் என் தகப்ப
னாகிய தாவீதின் ஸ்தலத்தில் எழும்பி, இஸ்ரவே
லுடைய இராசாசனத்தின்மேல் உளுக்கார்ந்து,
இஸ்ரவேலின் பராபரனாகிய கர்த்தரின் நாமத்
திற்கு வீட்டைக் கட்டி,—கர்த்தர் இஸ்ரவேல் புத் ௰௧
திரருடனே பண்ணின உடம்படிக்கையிருக்கிற
பெட்டியை அதிலே வைத்தேனென்றுசொல்லி,
கர்த்தருடைய பலிபீடத்திற்குமுன்னே இஸ்ர ௰௨
வேல் சபைக்கெல்லாம் எதிராக நின்றுகொண்டு
தன் கைகளை விரித்தான். — ஏனெனில் சாலோ ௰௩
மோன் ஐந்துமுழ நீளமும்,ஐந்துமுழ அகலமும்,
மூன்றுமுழ உயரமுமான வெண்கலமாகிய ஒரு
பிரசங்கத்தொட்டியை உண்டாக்கி, அதை நடுப்
பிரகாரத்திலே வைத்திருந்தான்; அதின்மேல்
அவன் நின்றுகொண்டு, இஸ்ரவேலின் சபைக்
கெல்லாம் எதிராக இருந்து, முழங்கால்படியிட்
டு, தன் கைகளை வானத்திற்கு நேராக விரித்து,
சொன்னதாவது: இஸ்ரவேலின் பராபரனாகிய ௰௪
கர்த்தாவே, தங்கள் முழு இருதயத்தால் உமக்கு
முன்பாக நடக்கிற உம்முடைய அடியாருக்கு
உடம்படிக்கையையும் கிருபையையும் காக்கிற
தேவரீரைப்போல, பரமண்டலங்களிலும் பூமி
யிலும் ஒரு தேவனில்லை.—தேவரீர் உம்முடைய ௰௫
அடியானாகிய தாவீதென்ற என் தகப்பனுக்குச்
சொன்னதை அவனுக்குக் காத்தீர்; உம்முடைய
வாக்கினாலும் அதைச் சொன்னீர்; உம்முடைய
கரத்தினாலும் அதை இந்நாளில் இருக்கிறபடி
நிறைவேற்றினீர்.—இப்போதும் இஸ்ரவேலின் ௰௬
பராபரனாகிய கர்த்தாவே, நீ நமக்குமுன்பாக
நடந்ததுபோல, உன் குமாரர் நம்முடைய நியா
யப்பிரமாணத்தில் நடக்கும்படிக்கு,தங்கள் வழி
யைக் காத்தார்களேயானால், இஸ்ரவேலுடைய
இராசா சனத்தின்மேல் உளுக்காரும் புருஷன்
நமக்குமுன்பாக உனக்கு இல்லாதேபோவதில்
லை என்று தேவரீர் உம்முடைய அடியானாகிய
தாவீதென்ற என் தகப்பனுக்குச் சொன்னதை
அவனுக்கு வரப்பண்ணி அருளும்.—இப்போ ௰௭
தும் இஸ்ரவேலின் பராபரனாகிய கர்த்தாவே,
தேவரீர் உம்முடைய அடியானாகிய தாவீதுக்குச்
சொன்ன உம்முடைய வார்த்தை மெய்ப்படு
வதாக.
ஆனால் மெய்தான்; பராபரன் மனுஷரோடே ௰௮
பூமியிலே வாசம்பண்ணுவாரோ? இதோ வானங்
களும், வானங்களின் வானங்களும் உம்மைக்
கொள்ளாதே; நான் கட்டின இந்த வீடு அதற்கு
எம்மாத்திரம்? — என்றாலும் என் பராபரனாகிய ௰௯
கர்த்தாவே, உம்முடைய அடியான் உமக்குமுன்
பாகக் கெஞ்சுகிற கூப்பிடுதலையும் விண்ணப்
பத்தையும் கேட்க, உம்முடைய அடியானு
டைய விண்ணப்பத்தையும், மன்றாட்டையும்
நோக்கியருளும்.—உம்முடைய அடியான் இவ் ௨௰
விடத்திலே செய்யும் விண்ணப்பத்தைக் கேட்க,
நம்முடைய நாமம் இருக்குமென்று நீர் சொன்ன
ஸ்தலமாகிய இந்த வீட்டின்மேல் உம்முடைய
கண்கள் இரவும் பகலும் திறந்திருப்பதாக. —
உம்முடைய அடியானும், உம்முடைய சனமா ௨௧
கிய இஸ்ரவேலும், இந்த ஸ்தலத்திலே விண்ணப்
பம்பண்ணப்போகிற செபங்களைக் கேட்பீராக;

ஆம், பரமண்டலங்களாகிய உம்முடைய வாசஸ்
தலத்திலே அதைக் கேளும்; கேட்டு மன்னியும்.
௨௨ ஒருவன் தனக்கடுத்தவனுக்குக் குற்றஞ்செய்
திருக்கையில், இவன் அவனை ஆணைசத்தியம்
பண்ணச் சொல்லும்போது, அந்த ஆணை இந்த
வீட்டிலிருக்கிற உம்முடைய பீடத்திற்கு முன்
௨௩ பாக வந்தால், — அப்போது பரமண்டலங்களி
லிருக்கிற தேவரீர் கேட்டு, ஆகாதவனுடைய
வழியை அவன் தலையின்மேலே சுமரப்பண்ண
அவனுக்கு நீதியைச் சரிக்கட்டவும், நீதிமானுக்
கு அவனுடைய நீதிக்குத்தக்கதாய்ச் செய்ய அ
வனை நீதிவிளங்கப்பண்ணவும் நடப்பித்து, உம்
முடைய அடியாரை நியாயந்தீர்ப்பீராக.
௨௪ உம்முடைய சனமாகிய இஸ்ரவேல் உமக்கு
விரோதமாகப் பாவஞ்செய்ததினாலே, சத்துருவுக்
குமுன்பாக முறிந்துபோய், உம்மண்டைக்குத்
திரும்பி, உம்முடைய நாமத்தை அறிக்கைபண்
ணி, இந்த வீட்டிலே உமக்குமுன்பாக விண்
ணப்பத்தையும் வேண்டுதலையும் செய்தால், —
௨௫ பரமண்டலங்களிலிருக்கிற தேவரீர் கேட்டு, உம்
முடைய சனமாகிய இஸ்ரவேலின் பாவத்தை
மன்னித்து, அவர்களுக்கும் அவர்கள் பிதாக்க
ளுக்கும் நீர் கொடுத்த சீர்மைக்கு அவர்களைத்
திரும்பிவரப்பண்ணுவீராக.
௨௬ அவர்கள் உமக்கு விரோதமாய்ப் பாவஞ்செய்
ததினால், வானம் அடைபட்டு மழைபெய்யாதி
ருக்கும்போது, அவர்கள் இந்த ஸ்தலத்திற்கு நே
ராக விண்ணப்பம்பண்ணி, உம்முடைய நாமத்
தை அறிக்கைபண்ணி, தேவரீர் தங்களைச் சிறு
மைப்படுத்தினதினாலே தங்கள் பாவங்களைவிட்
௨௭ டுத் திரும்பினால், — பரமண்டலங்களிலிருக்கிற
தேவரீர் கேட்டு, உம்முடைய அடியாரும் உம்
முடைய சனமாகிய இஸ்ரவேலும் செய்த பாவ
த்தை மன்னித்து, அவர்கள் நடக்கவேண்டிய
நல்வழியை அவர்களுக்குப் போதித்து, தேவரீர்
உம்முடைய சனத்திற்குச் சுதந்தரமாகக் கொ
டுத்த உம்முடைய தேசத்தின்மேல் மழையைக்
கட்டளையிடுவீராக.
௨௮ தேசத்திலே பஞ்சம் உண்டாகிறபோது, பெ
ருவாரிக்காய்ச்சல் உண்டாகிறபோது, வரட்சி,
பயிர்ச்சாவி, வெட்டுக்கிளி, பச்சைக்கிளி உண்
டாகிறபோது, அவர்களுடைய சத்துருக்கள் அ
வர்கள் வாசஞ்செய்கிற தேசத்திலே அவர்களை
முற்றிக்கைபோடுகிறபோது, யாதொரு வாதை
யாகிலும் யாதொரு ரோகமாகிலும் வந்திருக்கி
௨௯ றபோது, — எந்த மனுஷனாலும், இஸ்ரவே
லாகிய உம்முடைய சனத்தில் எவனாகிலும், தன்
தன் வாதையையும் கஸ்தியையும் உணர்ந்து,
இந்த வீட்டிற்கு நேராகத் தன் கைகளை விரித்
துச் செய்யும் சகல விண்ணப்பத்தையும், சகல
௩௰ வேண்டுதலையும், — உம்முடைய வாசஸ்தலமா
கிய பரமண்டலங்களிலிருக்கிற தேவரீர் கேட்டு
௩௧ மன்னித்து, — தேவரீர் எங்கள் பிதாக்களுக்குக்
கொடுத்த தேசத்தில் அவர்கள் உயிரோடிருக்கும்
நாளெல்லாம் உமக்குப் பயப்பட்டு, உம்மு
டைய வழிகளில் நடக்கும்படிக்கு, தேவரீர்
அவனவன் இருதயத்தை அறிந்திருக்கிறபடியே,
அவனவனுடைய எல்லா வழிகளுக்குந்தக்க
தாய்க் கட்டளையிடுவீராக; ஏனெனில் தேவரீர்
ஒருவரே மனுப்புத்திரரின் இருதயத்தை அறிந்
தவர்.
அந்தப்பிரகாரமாக உம்முடைய சனமாகிய ௩௨
இஸ்ரவேல் சாதியல்லாத அந்நியசாதியான் உம்
முடைய பெரிய கீர்த்தியின்நிமித்தமும், உம்மு
டைய பலத்த கரத்தின்நிமித்தமும், நீட்டி இருக்
கிற உம்முடைய புயத்தின் நிமித்தமும், தூரதே
சங்களிலிருந்து வந்து, இந்த வீட்டுக்கு நேராக
நின்று விண்ணப்பம்பண்ணினால், - உம்முடைய ௩௩
வாசஸ்தலமாகிய பரமண்டலங்களிலிருக்கிற தே
வரீர் அதைக் கேட்டு, பூமியின் சனசதளங்களெ
ல்லாம் உம்முடைய சனமாகிய இஸ்ரவேலைப்
போல, உம்முடைய நாமத்தை அறிந்து உமக்குப்
பயப்பட்டு, நான் கட்டின இந்த வீட்டிற்கு உம்
முடைய நாமம் தரிக்கப்பட்டதென்று அறியும்
படிக்கு, அந்த அந்நியசாதியான் உம்மை நோக்
கிக் கூப்பிடும் எல்லாக் காரியத்திற்குந்தக்கதாய்ச்
செய்வீராக.
உம்முடைய சனம் நீர் தங்களை அனுப்பும் ௩௪
வழியிலே தங்கள் சத்துருக்களோடு யுத்தம்பண்
ணப் புறப்பட்டு, நீர் தெரிந்துகொண்ட இந்தப்
பட்டணத்திற்கும், உம்முடைய நாமத்திற்கும்,
நான் கட்டின இந்த வீட்டிற்கும் நேராக விண்
ணப்பம்பண்ணினால், — பரமண்டலங்களிலிருக் ௩௫
கிற தேவரீர் அவர்கள் விண்ணப்பத்தையும், வே
ண்டுதலையும் கேட்டு அவர்கள் நியாயத்தை விசா
ரிப்பீராக.
பாவஞ்செய்யாத மனுஷனில்லையே; ஆனது ௩௬
கொண்டு அவர்கள் உமக்கு விரோதமாய்ப் பா
வஞ்செய்தபோது, தேவரீர் அவர்கள்மேலே கோ
பமாகி, அவர்களைச் சத்துருவுக்கு ஒப்புக்கொடுக்
கிறதினால் அவர்களைச் சிறைபிடிக்கிறவர்கள் அ
வர்களைத் தூரத்திலும் அல்லது சமீபத்திலுமிருக்
கிற தங்கள் தேசத்திற்குக் கொண்டுபோயிருக்
கையில், - அவர்கள் சிறைப்பட்டுப்போன தேசத் ௩௭
திலே தங்களில் உணர்வடைந்து, மனந்திரும்பி,
நாங்கள் பாவஞ்செய்து அக்கிரமம்பண்ணித் துன்
மார்க்கமாய் நடந்தோமென்று தங்கள் சிறையி
ருப்பான தேசத்தில் உம்மைநோக்கிக் கெஞ்சி, —
தாங்கள் சிறைகளாகக் கொண்டுபோகப்பட்ட ௩௮
தங்கள் சிறையிருப்பான தேசத்திலே, தங்கள்
முழு இருதயத்தாலும் தங்கள் முழு ஆத்துமத்தா
லும் உம்மண்டைக்குத் திரும்பி, தேவரீர் தங்கள்
பிதாக்களுக்குக் கொடுத்த தங்கள் தேசத்திற்கும்,
தேவரீர் தெரிந்துகொண்ட இந்தப் பட்டணத்தி
ற்கும், உம்முடைய நாமத்திற்கும், நான் கட்டின
இந்த வீட்டிற்கும் நேராக உம்மைநோக்கி விண்
ணப்பம்பண்ணினால், — உம்முடைய வாசஸ்த ௩௯
லமாகிய பரமண்டலங்களிலிருக்கிற தேவரீர்
அவர்கள் விண்ணப்பத்தையும் செபங்களையும்
கேட்டு, அவர்கள் நியாயத்தை விசாரித்து, உமக்கு

விரோதமாய்ப் பாவம்செய்த உம்முடைய சனத்
திற்கு மன்னித்தருளும்.
௪௰ இப்போதும் என் பராபரனே, இந்த ஸ்தலத்தி
லே செய்யப்படப்போகிற விண்ணப்பத்திற்கு
உம்முடைய கண்கள் திறந்தவைகளும் உம்மு
டைய செவிகள் கவனிக்கிறவைகளுமாயிருப்
௪௰௧ பதாக.—இப்போதும் பராபரனாகிய கர்த்தாவே,
உம்முடைய தாபர இடத்திற்குத் தேவரீரும் உம்
முடைய வல்லமையின் பெட்டியுமாய் எழுந்த
ருளும்; பராபரனாகிய கர்த்தாவே, உம்முடைய
ஆசாரியர் இரட்சிப்புத் தரிப்பிக்கப்பட்டு, உம்
முடைய பரிசுத்தவான்கள் நன்மையினாலே
௪௰௨ மகிழ்வார்களாக. — பராபரனாகிய கர்த்தாவே,
நீர் அபிஷேகம்பண்ணுவித்தவனின் முகத்தைப்
புறக்கணியீராக; தேவரீர் உம்முடைய அடியா
னாகிய தாவீதுக்கு வாக்குத்தத்தம்பண்ணின கிரு
பைகளை நினைத்தருளுமென்றான்.

## ௭. அதிகாரம்.

*௧. சாலோமோனின் பிரார்த்தனைக்காகப் பாபரன் வானத்தின் அக்கினியி னாலும் மகிமையினாலும் உத்தரவு கொடுத்தபோது சனங்கள் அவரைத் துதித்தது. ௪. அவனுடைய வேதமுறைப் பலி. ௮. கூடாரத்தின் பண்டிகையையும், பலிபீடத்தின் பிரதிஷ்டைப் பண்டிகையையும் அவன் அநுசரித்துச் சனங்களை அனுப்பினது. ௰௨. பராபரன் சாலோமோனுக்குத் தரிசனையாகி வாக்குத்தத்தம் செய்தது.*

௧ சாலோமோன் செபம்பண்ணி முடிக்கிறபோ
து, அக்கினி வானத்திலிருந்திறங்கி, சர்வாங்க
தகனபலியையும் மற்றப் பலிகளையும் பட்சித்த
துமல்லாமல், கர்த்தருடைய மகிமை வீட்டை
௨ நிரப்பிற்று.—கர்த்தருடைய மகிமை கர்த்தரின்
வீட்டை நிரப்பினதினால், ஆசாரியர்கள் கர்த்த
ருடைய வீட்டிற்குள் பிரவேசிக்கக்கூடாதிருந்
௩ தது.—அக்கினி இறங்குகிறதையும், கர்த்தரின்
மகிமை வீட்டின்மேல் இருக்கிறதையும், இஸ்ர
வேல் புத்திரரெல்லாரும் காண்கிறபோது, தளவ
ரிசையாகிய தரைமட்டும் முகம்குப்புறக்குனி
ந்து, கர்த்தர் நல்லவர், அவருடைய கிருபை என்
றுமுள்ளதென்று அவரைப் பணிந்துகொண்டு
துதித்தார்கள்.
௪ அப்போது இராசாவும் எல்லாச் சனமும் கர்த்த
ருக்குமுன்பாகப் பலிகளைச் செலுத்தினார்கள்.—
௫ இராசாவாகிய சாலோமோன் இருபத்தீராயிரம்
மாடுகளையும் நூற்றிருபதினாயிரம் ஆடுகளையும்
பலியிட்டான்; இப்படி இராசாவும் எல்லாச்
சனமும் பராபரனுடைய வீட்டைப் பிரதிஷ்
௬ டைபண்ணினார்கள். — ஆசாரியர்கள் தங்கள்
ஊழியங்களைச் செய்து நின்றார்கள்; இலேவிய
ரோவென்றால், தாவீது இராசா கர்த்தருடைய
கிருபை என்றுமுள்ளதென்று அவரைத் துதிக்க
வும், தங்கள் ஊழியத்தினால் ஸ்தோத்திரிக்கவும்
பண்ணுவித்த கர்த்தரின் கீதவாத்தியங்களை
வாசித்துநின்றார்கள்; ஆசாரியர்கள் அவர்களுக்கு
எதிராக நின்று பூரிகைகளை ஊதினார்கள்; இஸ்ர
வேலரெல்லாரும் நின்றுகொண்டிருந்தார்கள்.—
௭ கர்த்தருடைய வீட்டிற்கு முன்னிருக்கிற பிரகா
ரத்தின் நடுமையத்தைச் சாலோமோன் பரிசுத்
தம்பண்ணி, அங்கே சர்வாங்கதகனங்களையும்
சமாதானபலிகளின் கொழுப்புகளையும் செலுத்
தினான்; ஏனென்றால் சாலோமோன் உண்டாக்
கின வெண்கலப் பலிபீடம் சர்வாங்கதகனத்தை
யும் காணிக்கையையும் கொழுப்புகளையும் கொ
ள்ளமாட்டாதிருந்தது.
அக்காலத்திலேதானே சாலோமோனும், அவ ௮
னுடனேகூட ஆமாத்தின் எல்லைதுவக்கி எகிப்தி
ன் நதிமட்டும் இருந்துவந்த மகா பெரிய கூட்ட
மாகிய இஸ்ரவேலனைத்தும், ஏழுநாளாகப் பண்
டிகையை ஆசரித்து,—எட்டாம் நாளிலே பண் ௯
டிகையை முடித்தார்கள்; ஏனெனில் ஏழுநாளா
ய்ப் பலிபீடத்தைப் பிரதிஷ்டைபண்ணி, ஏழு
நாளாய்ப் பண்டிகையை ஆசரித்தார்கள். — ஆ ௰
னால் ஏழாம்மாதத்தின் இருபத்து மூன்றாம்தேதியி
லே சனத்திற்குத் தங்கள் தங்கள் கூடாரங்களுக்
குப் போக விடைகொடுத்தான்; கர்த்தர் தாவீதுக்
கும், சாலோமோனுக்கும், தமது சனமாகிய இஸ்
ரவேலுக்கும் செய்த நன்மைக்காகச் சந்தோஷ
மும் மனமகிழ்ச்சியுமாய்ப் போனார்கள்.
அப்படியே சாலோமோன் கர்த்தருடைய ௰௧
வீட்டையும் இராச அரமனையையும் கட்டித்தீர்ந்
தது; கர்த்தரின் வீட்டிலும் தன் அரமனையிலும்
சாலோமோன் செய்ய மனதாயிருந்ததெல்லாம்
கைகூடிவந்தன.
கர்த்தர் இரவிலே சாலோமோனுக்குத்தரிசனை ௰௨
யாகி, அவனுக்குச் சொன்னதாவது: நாம் உன்
விண்ணப்பத்தைக் கேட்டு, இந்த ஸ்தலத்தை நமக்
குப் பலியிடும் வீடாகத் தெரிந்துகொண்டோம்.-
இதோ நாம் மழையில்லாதபடிக்கு வானத்தை ௰௩
அடைத்து, அல்லது தேசத்தை அழிம்பாக்க
வெட்டுக்கிளிகளுக்குக் கற்பித்து, அல்லது நம்
முடைய சனத்திற்குள் பெருவாரிக்காய்ச்சலை
அனுப்பும்போது,—நம்முடைய நாமம் தரிக்கப் ௰௪
பட்ட நம்முடைய சனம் தங்களைத் தாழ்த்தி, செ
பம்பண்ணி, நம்முடைய முகத்தைத் தேடி, தங்
கள் பொல்லாத வழிகளைவிட்டுத் திரும்பினால்,
அப்போது பரமண்டலங்களிலிருக்கிற நாம்
கேட்டு, அவர்கள் பாவத்தை மன்னித்து, அவர்
கள் தேசத்தைச் சொஸ்தமாக்குவோம். — இப் ௰௫
போதும் இந்த ஸ்தலத்திலே செய்யப்படப்போ
கிற செபத்திற்கு, நம்முடைய கண்கள் திறந்த
வைகளும் நம்முடைய செவிகள் கவனிக்கிற
வைகளுமாயிருக்கும்.-இப்போதும் நம்முடைய ௰௬
நாமம் இந்த வீட்டிலே என்றென்றைக்கும் இரு
க்கும்படிக்கு, நாம் அதைத் தெரிந்துகொண்டு
பரிசுத்தம்பண்ணினோம்; நம்முடைய கண்களும்
நம்முடைய இருதயமும் சகல நாளும் அங்கே
இருக்கும்.
உன் தகப்பனாகிய தாவீது நடந்ததுபோல, நீ ௰௭
நமக்குமுன்பாக நடந்து, நாம் உனக்குக் கற்பித்
தபடியெல்லாம் செய்து, நம்முடைய கட்டளைக
ளையும் நம்முடைய நியாயங்களையும் கைக்கொ
ண்டாயானால்,—அப்போது இஸ்ரவேலை அரசா ௰௮
ளும் புருஷன் உனக்கு இல்லாதே போவதில்லை
என்று நாம் உன் தகப்பனாகிய தாவீதோடே

உடம்படிக்கை பண்ணினபடியே, உன் இராச்
சியபாரத்தின் ஆசனத்தைத் திடப்படுத்துவோம்.
௧௯ நீங்கள் வழிவிலகி, நாம் உங்களுக்கு முன்
வைத்த நம்முடைய கட்டளைகளையும் நம்மு
டைய கற்பனைகளையும் விட்டுப்போய், வேறே
தேவர்களைச் சேவித்து, அவர்களைப் பணிந்து
௨௰ கொண்டீர்களேயாகில்,—நாம் அவர்களுக்குக்
கொடுத்த நம்முடைய தேசத்தில் இருந்தவர்க
ளைப் பிடுங்கி, நம்முடைய நாமத்திற்கு நாம் பரி
சுத்தம்பண்ணின இந்த வீட்டை நம்முடைய
முகத்தைவிட்டுத் தள்ளி, அதை எல்லாச் சனச
தளங்களுக்குள்ளும் பழமொழியாகவும் பழிப்
௨௧ பாகவும் வைப்போம். — அப்போது உயர்ந்தி
ருந்த இந்த வீட்டைக் கடந்துபோகிறவனெல்
லாம் பிரமித்து, கர்த்தர் இந்தத் தேசத்திற்கும்
இந்த வீட்டிற்கும் இப்படிச் செய்ததென்ன
௨௨ வென்று கேட்கிறதற்கு, — அவர்கள் தங்கள்
பிதாக்களை எகிப்துதேசத்திலிருந்து புறப்படப்
பண்ணின அவர்களுடைய பராபரனாகிய கர்த்த
ரைவிட்டு,வேறே தேவர்களைப் பற்றிக்கொண்டு,
அவைகளை நமஸ்கரித்து, அவைகளைச் சேவித்த
படியினாலே, கர்த்தர் இந்தத் தீங்கையெல்லாம்
அவர்கள்மேல் வரப்பண்ணினாரென்று சொல்லு
வார்களென்றார்.

## ௮. அதிகாரம்.

*௧. சாலோமோன் கட்டினவைகள். ௭. அவன் புறச்சாதியாரில் மீதியான வர்களைக் கப்பம்கட்டுகிறவர்களாகவும், இஸ்ரவேலரைத் தலைவர்களாக வும் வைத்தது. ௰௧. பார்வோனின் குமாரத்தி தனக்குக் கட்டப்பட்ட வீட்டில் வாசம்பண்ணினது. ௰௨. அவன் வருஷத்தோறும் செய்கிற வேதமுறைப்பலி. ௰௪. அவன் ஆசாரியர்களையும், இலேவியர்களையும் உத்தியோகத்தில் வைத்தது. ௰௭. அவனுடைய கப்பல்கள் ஓப்பீரிலி ருந்து பொன்னைக் கொண்டுவந்தது.*

௧ சாலோமோன் கர்த்தருடைய வீட்டையும் தன்
வீட்டையும் கட்டுகிற இருபது வருஷகாலம்
௨ சென்றபோது, — ஈராம் தனக்குக் கொடுத்து
விட்ட பட்டணங்களைச் சாலோமோன் கட்டி,
அவைகளில் இஸ்ரவேல் புத்திரரைக் குடியேற்
றினான்.
௩ பிற்பாடு சாலோமோன் சோபாத்தேசத்து
ஆமாத்திற்குப் போய், அதைச் செயம்கொண்
௪ டான்.—அவன் வனாந்தரத்திலுள்ள தத்மோரை
யும்,ஆமாத்தின் தேசத்திலே இரஸ்துக்களின் பட்
௫ டணங்களனைத்தையும் கட்டினான்.—அவன் மே
லான பெத்தோரோனையும், கீழான பெத்தோரோ
னையும், அலங்கங்களும் கதவுகளும் தாழ்ப்பாள்
களுமுள்ள அரணான பட்டணங்களாகக் கட்
௬ டி,—பாலாத்தையும், தனக்கிருக்கிற இரஸ்துக்க
ளைவைக்க எல்லாப் பட்டணங்களையும், இரதங்க
ளிருக்கும் எல்லாப்பட்டணங்களையும்,குதிரைக்
காரர் இருக்கும் பட்டணங்களையும், தான் எரு
சலேமிலும் லீபனோனிலும் தான் ஆளும் தேச
மெங்கும் கட்டத் தனக்கு இச்சையானதனைத்
தையும் சாலோமோன் கட்டினான்.
௭ இஸ்ரவேல் புத்திரர் சங்காரம்பண்ணாதிருந்த
இஸ்ரவேல் சாதி அல்லாத எத்தியர், எமோரியர்,
பேரிசியர், ஏவியர், எபூசியரில் மீதியான எல்
லாச் சனத்திலும்,—அவர்களுக்குப் பிற்பாடு தே ௮
சத்தில் வைக்கப்பட்ட அவர்கள் பிள்ளைகளைச்
சாலோமோன் இந்நாள்வரைக்கும் இருக்கிற
தைப்போல, அமஞ்சிவேலை செய்ய, வரியிறுக்
கும் கீழ்க்குடியாக்கினான்.—ஆனால் இஸ்ரவேல் ௯
புத்திரரில் ஒருவரையும் சாலோமோன் தன்
வேலையைச் செய்ய அடிமைப்படுத்தினதில்லை;
ஏனென்றால் இவர்கள் யுத்தமனுஷரும், அவனு
டைய சேர்வைக்காரரின் தலைவரும், அவனு
டைய இரதங்களுக்கும், குதிரைக்காரருக்கும்
தலைவருமாயிருந்தார்கள்.
இராசாவாகிய சாலோமோனுடைய ஊழியக் ௰
காரரின் தலைவராகிய இவர்களில் இருநூற்று
ஐம்பதுபேர் சனத்தை ஆண்டார்கள்.
பார்வோனின் குமாரத்தியைச் சாலோமோன் ௰௧
தாவீதின் பட்டணத்திலிருந்து தான் அவளுக்குக்
கட்டுவித்த வீட்டிற்குக் குடியேறிவரப்பண்ணி
னான்; ஏனென்றால் இஸ்ரவேலின் இராசாவா
கிய தாவீதின் வீட்டிலே என் பெண்சாதி வாசம்
பண்ணவேண்டாம்; ஏனெனில் கர்த்தருடைய
பெட்டி வந்த ஸ்தலங்கள் பரிசுத்தமாயிருக்கின்
றன என்றான்.
அதுமுதல்கொண்டு சாலோமோன் தான் மண் ௰௨
டபத்திற்கு முன்பாகக் கட்டியிருந்த கர்த்தரு
டைய பலிபீடத்தின்மேல்,—ஒவ்வொரு நாளின் ௰௩
கட்டளைக்குத்தக்கதாய் மோசேயுடைய கற்பனை
யின்படியே ஓய்வுநாள்களிலும் மாதப்பிறப்புக
ளிலும், வருஷத்தில் மூன்றுதரம் ஆசரிக்கிறபண்
டிகைகளாகிய புளிப்பில்லாத அப்பங்களின் ப
ண்டிகையிலும், வாரங்களின் பண்டிகையிலும்,
கூடாரங்களின் பண்டிகையிலும் கர்த்தருக்குச்
சர்வாங்கதகனபலிகளைச் செலுத்தினான்.—அவன் ௰௪
தன் தகப்பனாகிய தாவீதுடைய பிரமாணத்தின்
படியே, ஆசாரியர்கள் தங்கள்தங்கள் ஊழியம்
செய்யும் வகுப்புகளையும், இலேவியர் ஒவ்வொ
ரு நாளின் கட்டளையின்படியே துதிபாடி ஆசா
ரியருக்குமுன்பாகத் தங்கள் ஊழியம்செய்யும்
முறைகளையும், வாசல்காப்பார் ஒவ்வொரு வாச
லில் காவல்காக்கும் வகுப்புகளையும் நிற்கப்பண்
ணினான்; ஏனெனில் பராபரனுடைய மனுஷ
னாகிய தாவீது இப்படிக் கற்பித்திருந்தான்.—
சகல காரியத்தையும் பொக்கிஷங்களின் காரி ௰௫
யத்தையும்குறித்து, இராசா ஆசாரியர்களுக்காக
வும் இலேவியருக்காகவும் கொடுத்த கற்பனை
யை விட்டுவிலகாதிருந்தார்கள். — இப்படியே ௰௬
கர்த்தருடைய வீட்டிற்கு அஸ்திபாரம்போடப்
பட்ட நாள்மட்டுக்கும் அதை முடிக்கும்மட்டுக்
கும் சாலோமோனின் வேலையெல்லாம் நடந்தே
றிக் கர்த்தருடைய வீடு கட்டித்தீர்ந்தது.
பிற்பாடு சாலோமோன் ஏதோம்தேசத்தினு ௰௭
டைய கடல்ஓரத்திலிருக்கும் எத்சீயோன்கே
பேருக்கும் ஏலோத்திற்கும் போனான்.—அவ ௰௮
னுக்கு ஈராம் தன் ஊழியக்காரர் முகாந்தரமாய்க்
கப்பல்களையும், சமுத்திர யாத்திரையை அறிந்த
வேலைக்காரரையும் அனுப்பினான்; இவர்கள் சா

லோமோனின் வேலைக்காரரோடேகூட ஒப்பீ
ருக்குப் போய், அங்கேயிருந்து நானூற்று ஐம்
பது தாலந்து பொன்னை ஏற்றி, இராசாவாகிய
சாலோமோனுக்குக் கொண்டுவந்தார்கள்.

## ௯. அதிகாரம்.

௧. சேபாவின் இராசஸ்திரி சாலோமோனின் ஞானத்தைப் புகழ்ந்தது. ௰௩. அவனுடைய பொன. ௰௫. பொன்தகடுகள். ௰௭. தந்தத்தின் சிங்காதனம். ௨௰. பாத்திரங்கள். ௨௧. வெகுமதி. ௨௫. இரதங்களும் குதிரைகளும், ௨௬. கப்பணங்கள், ௨௯. அவனுடைய ஆளுகையும், மரணமும்.

௧ சேபாவின் இராசஸ்திரி சாலோமோனின் கீர்த்
தியைக் கேட்டபோது, சாலோமோனை விடுக
தைகளினாலே சோதிக்கிறதற்காக, மகா பெரிய
தண்டோடும், சம்பாரங்களையும் வெகுவான
பொன்னையும் இரத்தினங்களையும் சுமக்கிற ஒட்
டகங்களோடும் எருசலேமுக்கு வந்தாள்; அவள்
சாலோமோனண்டையிலே வந்தபோது, தன்
மனதிலிருந்ததெல்லாவற்றையும் அவனோடே
௨ பேசினாள்.—அப்போது சாலோமோன் அவள்
மொழிகளையெல்லாம் அவளுக்கு விடுவித்தான்;
ஒன்றாகிலும் அவளுக்கு விடுவிக்காதபடிக்கு சா
லோமோனுக்கு மறைபொருளாயிருந்ததில்லை.
௩ சேபாவின் இராசஸ்திரி சாலோமோனின்
ஞானத்தையும், அவன் கட்டின வீட்டையும்,—
௪ அவன் பந்தியின் சாப்பாட்டையும், அவன் ஊ
ழியக்காரரின் இருப்பையும், அவன் வேலைக்கா
ரரின் வரிசையையும், அவர்கள் வஸ்திரங்களை
யும், அவனுடைய பான விசாரிப்புக்காரரையும்,
அவர்கள் வஸ்திரங்களையும், கர்த்தருடைய வீட்
டிற்கு அவன் ஏறிப்போகிற அவன் நடையை
யும் காண்கையில் அவள் பிரமிப்புக்கொண்டு,—
௫ இராசாவோடே சொன்னதாவது: உம்முடைய
வர்த்தமானங்களையும் உம்முடைய ஞானத்தை
யுங்குறித்து, நான் என் தேசத்திலே கேட்ட செ
௬ ய்தி மெய்யாயிற்று.—நான் வந்து அதைக் கண்
ணாரக் காணும்மட்டும் அவர்கள் வார்த்தைகளை
நம்பாதிருந்தேன்; ஆனால் இதோ உம்முடைய
பெரிய ஞானத்தில் பாதியையாகிலும் அவர்கள்
எனக்கு அறிவித்ததில்லை; நான் கேட்ட கீர்த்தி
யைப்பார்க்கிலும் அதிகம் உண்டாயிருக்கின்
௭ றது.—உம்முடைய மனுஷர் பாக்கியவான்கள்;
எப்போதும் உமக்குமுன்பாக நின்று, உம்மு
டைய ஞானத்தைக் கேட்கிற இந்த உம்முடைய
௮ ஊழியக்காரர் பாக்கியவான்கள்.—உம்முடைய
பராபரனாகிய கர்த்தருக்குமுன்பாக நீர் இராசா
வாயிருக்கும்படிக்கு, உம்மைத் தம்முடைய இ
ராசாசனத்தின்மேலிருக்கப்பண்ண, உம்முடை
யமேலே பிரியம்வைத்த உம்முடைய பராபரனா
கிய கர்த்தர் ஸ்தோத்திரிக்கப்பட்டவர்; உம்மு
டைய பராபரன் இஸ்ரவேலை என்றென்றைக்கு
ம் நிலைநிறுத்தும்படிக்குச் சிநேகிக்கிறதினாலே,
அவர் உம்மை நியாயமும் நீதியும் செய்கிறதற்கு
அவர்கள்மேல் இராசாவாக வைத்தாரென்றாள்.—
௯ அவள் இராசாவுக்கு நூற்றிருபது தாலந்து பொ
ன்னையும், மிகுந்த சம்பாரங்களையும், இரத்தி
னங்களையும் கொடுத்தாள்; சேபாவின் இராச
ஸ்திரி இராசாவாகிய சாலோமோனுக்குக் கொ
டுத்த அப்படிப்பட்ட சம்பாரங்களுக்குச் சரியா
னவைகள் ஒருக்காலும் வந்ததில்லை.
இதல்லாமல் ஒப்பீரிலிருந்து பொன்னைக் ௰
கொண்டுவருகிற ஈராமின் வேலைக்காரரும் சா
லோமோனின் வேலைக்காரரும் வாசனைமரங்க
ளையும் இரத்தினங்களையும் கொண்டுவந்தார்கள்.—
அந்த வாசனைமரங்களால் இராசா கர்த்தருடைய ௰௧
வீட்டிற்கும் இராச அரமனைக்கும் ஊன்றுகால்
களையும், பாடுவான்களுக்குச் சுரமண்டலங்க
ளையும், தம்புருகளையும் உண்டாக்கினான்; அப்
படிக்கொத்தவைகள் அதற்குமுன்னே யூதேயா
தேசத்தில் ஒருக்காலும் காணப்பட்டதில்லை.—
சேபாவின் இராசஸ்திரி இராசாவுக்குக் கொண் ௰௨
டுவந்த விதங்களைத்தவிர, அவள் ஆசைப்பட்டுக்
கேட்டதெல்லாவற்றையும் இராசாவாகிய சா
லோமோன் அவளுக்குக் கொடுத்தான்; பிற்பாடு
அவள் தன் ஊழியக்காரரோடுங்கூடத் திரும்
பித் தன் தேசத்திற்குப் போனாள்.
மளிகைக்காரரும் வர்த்தகரும் கொண்டுவரும் ௰௩
பொன்னைத்தவிர, சாலோமோனுக்கு ஒவ்வொ
ரு வருஷத்து வர்த்தனையாக அறுநூற்று அறுபத்
தாறு தாலந்து நிறையான பொன்னும் வந்தது.—
அரபியாவின் சகல இராசாக்களும் அத்தேசத் ௰௪
துப் பிரபுக்களுங்கூடச் சாலோமோனுக்குப்
பொன்னையும் வெள்ளியையும் கொண்டுவரு
வார்கள்.
இராசாவாகிய சாலோமோன் தகடாய் அ ௰௫
டித்த பொன்னினால் இருநூறு பரிசைகளை உண்
டாக்கினான்; ஒவ்வொரு பரிசைக்கு அறுநூறு
சேக்கல் நிறை பொன்தகட்டைச் செலவழித்
தான்.—தகடாய் அடித்த பொன்னினாலே முந் ௰௬
நூறு கேடயங்களையும் உண்டாக்கினான்; ஒவ்
வொரு கேடயத்திற்கு முந்நூறு சேக்கல் நிறை
பொன்னைச் செலவழித்தான்; அவைகளை இரா
சா லீபனோன் காட்டுமரங்களின் வீட்டிலே
வைத்தான்.
இராசா தந்தத்தினாலே பெரிய இராசாசனத் ௰௭
தையும் பண்ணுவித்து, அதை அபரஞ்சித்தகட்
டினால் மூடினான்.—அந்த ஆசனத்தோடே சேர் ௰௮
க்கப்பட்ட பொன்னான ஆறு படிகளும், ஒரு
பாதப்படியும், உளுக்காரும் இடத்திற்கு இந்தப்
பக்கமும் அந்தப்பக்கமும் கைச்சாய்மானங்க
ளும் அதற்கிருந்தன; இரண்டுசிங்கங்களும் கைச்
சாய்மானங்கள் அருகே நின்றன.—அந்த ஆறு ௰௯
படிகளின்மேலும், இந்தப்பக்கமும் அந்தப்பக்
கமும் பன்னிரண்டு சிங்கங்கள் நின்றன;
எந்த இராச்சியத்திலும் அப்படிப் பண்ணப்பட்
டதில்லை.— இராசாவாகிய சாலோமோனுக்கி ௨௰
ருந்த குடிக்கும் பாத்திரங்களெல்லாம் பொன்
னும், லீபனோன் காட்டுமரங்களுடைய வீட்
டின் தட்டுமுட்டுகளெல்லாம் அபரஞ்சியுமாயி
ருந்தன; ஒன்றும் வெள்ளியல்ல,வெள்ளி சாலோ
மோனின் நாள்களில் ஒரு பொருட்டாய் எண்
ணப்பட்டதில்லை. — ஏனெனில் ஈராமின் வே ௨௧

லைக்காரரோடேகூட யாத்திரைபண்ணப்போ
கிற இராசாவின் கப்பல்கள் மூன்று வருஷங்க
ளில் ஒருதரம் திரும்பிச் சேர்ந்து, பொன்னையும்,
வெள்ளியையும், யானைத்தந்தங்களையும், குரங்கு
களையும், மயில்களையும் கொண்டுவந்தன.
௨௨ அப்படியே இராசாவாகிய சாலொமோன் பூமி
யின் இராசாக்களையெல்லாம்பார்க்கிலும் ஐசுவரி
யத்திலும் ஞானத்திலும் பெரியவனாயிருந்தான்.—
௨௩ பராபரன் சாலொமோனின் இருதயத்தில் கொ
டுத்த அவனுடைய ஞானத்தைக் கேட்பதற்குப்
பூமியின் இராசாக்களெல்லாரும் அவன் முகத
௨௪ ரிசனையைத் தேடினார்கள்.—இவர்களில் அவர
வர் வருஷத்திற்கு வருஷம் தம்தம் காணிக்கையா
கிய வெள்ளி ஆபரணங்களையும், பொன் உடை
மைகளையும், வஸ்திரங்களையும், ஆயுதங்களையும்,
சம்பாரங்களையும், குதிரைகளையும், கோவேறுக
ழுதைகளையும் கொண்டுவருவார்கள்.
௨௫ சாலொமோனுக்கு நாலாயிரம் குதிரை லாயங்க
ளும் இரதங்களும் இருந்தன; பன்னீராயிரம் குதி
ரைக்காரரும் இருந்தார்கள்; அவைகளையும் இவர்க
ளையும் இராசா இரதங்களின் பட்டணங்களிலும்,
எருசலேமிலே தன்னிடத்திலும் வைத்தான்.
௨௬ நதியைத்துவக்கிப் பெலிஸ்தியரின் தேசம்
மட்டுக்கும் எகிப்தின் எல்லைமட்டுக்குமிருக்கிற
சகல இராசாக்களையும் அவன் ஆண்டான்.—
௨௭ இராசாவானவன் எருசலேமிலே வெள்ளியைக்
கல்லுகளத்தனையும், கேதுருமரங்களைப் பள்ளத்
தரையிலுண்டான காட்டத்திமரங்களத்தனையும்
௨௮ ஆக்கினான்.—எகிப்திலும் சகல தேசங்களிலுமி
ருந்து சாலொமோனுக்குக் குதிரைகள் கொண்
டுவரப்பட்டன.
௨௯ சாலொமோனுடைய முந்தினதும் பிந்தினது
மான மற்ற வர்த்தமானங்கள் தீர்க்கதரிசியாகிய
நாத்தானின் புஸ்தகத்திலும், நேபாத்தின் குமார
னாகிய எரோபெயாமைக்குறித்துச் சீலோ ஊரா
னாகிய அகியா எழுதின தீர்க்கதரிசனத்திலும்,
ஞானதிருஷ்டியுள்ள புருஷனாகிய இடோ எழு
தின தரிசனங்களிலுமல்லவோ எழுதியிருக்கின்
௩௰ றது.—சாலொமோன் எருசலேமிலே இஸ்ரவே
லையெல்லாம் நாற்பது வருஷம் அரசாண்டான்.—
௩௧ பிற்பாடு சாலொமோன் தன் பிதாக்களோடே
நித்திரை அடைந்தான்; அவனை அவன் தகப்ப
னாகிய தாவீதின் பட்டணத்தில் அடக்கம் பண்
ணினார்கள்; அவன் ஸ்தலத்திலே அவன் குமார
னாகிய ரெகாபெயாம் இராசாவானான்.

## ௰. அதிகாரம்.

௧. சிகேமிலே இஸ்ரவேலர் ரெகாபெயாமுக்கு முடிசூட்ட வந்தபோது அவனுக்கு எரோபெயாமினால் விண்ணப்பம் செய்தது. ௬. மூப்பருடைய ஆலோசனையைத் தடுத்த வாலிபருடைய புத்தியின்படி ரெகாபெயாம் கடினமான உத்தரவு கொடுத்தது. ௰௬. பத்துக்கோத்திரத்தார் கலகம் செய்து, அதோராமைக் கொன்று ரெகாபெயாமை ஓடிப்போகப் பண்ணினது.

௧ ரெகாபெயாம் சிகேமுக்குப் போனான்; ஏனெ
னில் அவனை இராசாவாக்கும்படிக்கு இஸ்ரவே
லெல்லாம் சிகேமுக்கு வந்தன.

இராசாவாகிய சாலொமோனைவிட்டு ஓடிப் ௨
போய், எகிப்திலிருக்கிற நேபாத்தின் குமாரனா
கிய எரோபெயாம் அதைக் கேட்டபோதோ
வென்றால், அவன் எகிப்திலிருந்து திரும்பிவந்
தான்.—ஏனெனில் அவனை அழைத்தனுப்பினார் ௩
கள்; பிற்பாடு எரோபெயாமும் இஸ்ரவேலனைத்
துமாய் வந்து, ரெகாபெயாமோடே பேசி,—உம் ௪
முடைய தகப்பன் எங்கள் நுகத்தடியைக் கடின
மாக்கினார்; இப்போதும் நீர் உம்முடைய தகப்ப
னின் கடினமான வேலையையும், அவர் எங்கள்
மேல் வைத்த அவருடைய பாரமான நுகத்தடி
யையும் இலகுவாக்கும்; அப்போது உம்மைச்
சேவிப்போம் என்றார்கள்.—அவன் இவர்களுட ௫
னே, நீங்கள் மூன்று நாளைக்குப் பிற்பாடு திரும்ப
என்னண்டைக்கு வாருங்களென்றான்; அப்படி
யே சனம் போயிற்று.
அப்போது இராசாவாகிய ரெகாபெயாம் தன் ௬
தகப்பனாகிய சாலொமோன் உயிரோடிருக்கை
யில் அவனுக்குமுன்பாக நின்ற மூப்பரோடே
ஆலோசனைபண்ணி, இந்தச் சனத்திற்கு என்ன
மறு உத்தரவுகொடுக்க நீங்கள் ஆலோசனைசொல்
லுகிறீர்களென்று கேட்டான்.—அவர்கள் அவனு ௭
டனே, நீர் இந்தச் சனத்திற்குத் தயவையும் பட்
சத்தையும் காண்பித்து, அவர்களுக்கு நல்லவார்
த்தைகளைச் சொன்னால், சகல நாளும் உமக்கு
ஊழியக்காரராயிருப்பார்களென்றார்கள்.—அவ ௮
னோவென்றால் மூப்பர் தனக்குக் கொடுத்த
ஆலோசனையைவிட்டு, தன்னோடே வளர்ந்தவர்
களும் தனக்குமுன்பாக நிற்கிறவர்களுமாகிய
வாலிபரோடே ஆலோசனைபண்ணி,—அவர்க ௯
ளுடனே, உம்முடைய தகப்பன் எங்கள்மேல்
வைத்த நுகத்தடியை இலகுவாக்குமென்று என்
னுடனே சொன்ன இந்தச் சனத்திற்கு என்ன
மறு உத்தரவுகொடுக்க நீங்கள் ஆலோசனை சொல்
லுகிறீர்கள் என்றான். — அவனோடே வளர்ந்த ௰
வாலிபர் அவனோடே சொன்னதாவது: உம்மு
டைய தகப்பன் எங்கள் நுகத்தடியைப் பாரமாக்
கினார்; நீர் அதை எங்களுக்கு இலகுவாக்கு
மென்று உம்முடனே சொன்ன இந்தச் சனத்திற்
கு நீர் சொல்லவேண்டியதேதெனில், என் சுண்
டுவிரல் என் தகப்பனுடைய இடுப்பைப்பார்க்
கிலும் பருமனாயிருக்கும்.— இப்போதும் என் ௰௧
தகப்பன் பாரமான நுகத்தடியை உங்கள்மேல்
சுமத்தினார்; நான் உங்கள் நுகத்தடியை அதிக
பாரமாக்குவேன்; என் தகப்பன் உங்களைச் சவுக்
குகளால் தண்டித்தார்; நான் தேள்களினால் உங்க
ளைத் தண்டிப்பேன் என்பீராகவென்றார்கள்.
மூன்றாம் நாளிலே என்னண்டைக்குத் திரும் ௰௨
பிவாருங்களென்று இராசா சொன்னபடியே,
எரோபெயாமும் சகல சனமும் மூன்றாம் நாளி
லே ரெகாபெயாமண்டைக்கு வந்தபோது, —
இராசா அவர்களுக்குக் கடின உத்தரவு கொடுத் ௰௩
தான்; ஏனெனில் இராசாவாகிய ரெகாபெயாம்
மூப்பரின் ஆலோசனையை விட்டு, — வாலிபரு ௰௪
டைய ஆலோசனையின்படியே அவர்களோடே

பேசி, என் தகப்பன் உங்கள் நுகத்தடியைப்
பாரமாக்கினார், நான் அதை அதிக பாரமாக்கு
வேன்; என் தகப்பன் உங்களைச் சவுக்குகளால்
தண்டித்தார், நான் உங்களைத் தேள்களினால் தண்
டிப்பேனென்று சொல்லி,
௰௫ இராசா சனத்திற்குச் செவிகொடாதேபோ
னான்; ஏனென்றால் கர்த்தர் சீலோவூரானான
அகியாவைக்கொண்டு நேபாத்தின் குமாரனாகிய
எரோபெயாமுக்குச் சொன்ன தமது வார்த்தை
யைத் திடப்படுத்தும்படிக்குப் பராபரனாலே
இப்படிப் புரண்டது.
௰௬ இராசா தங்களுக்குச் செவிகொடாததை இஸ்ர
வேலெல்லாம் கண்டபோது,சனம் இராசாவுக்கு
மறுவுத்தரமாக, தாவீதோடே எங்களுக்குப் பங்
கேது? ஈசாயின் குமாரனிடத்தில் எங்களுக்குச்
சுதந்தரமில்லை; இஸ்ரவேலே, உன் கூடாரங்க
ளுக்குப் போய்விடு; இப்போது தாவீதே, உன்
வீட்டைப் பார்த்துக்கொள்ளென்று சொல்லி,
இஸ்ரவேலரெல்லாம் தங்கள் கூடாரங்களுக்குப்
௰௭ போய்விட்டார்கள்.—ஆனால் யூதாவின் பட்ட
ணங்களிலே குடியிருக்கிற இஸ்ரவேல் புத்திரர்
மேல் ரெகாபெயாம் இராசாவாயிருந்தான்.
௰௮ அப்போது இராசாவாகிய ரெகாபெயாம் பகு
தி விசாரிப்புக்காரனாகிய அதோராமை அனுப்
பினான்; ஆனால் இஸ்ரவேல் புத்திரர் அவனைச்
சாகத்தக்கவிதமாய்க் கல்லெறிந்தார்கள்; அப்
போது இராசாவாகிய ரெகாபெயாம் எருசலே
முக்கு ஓடிப்போகத் தீவிரமாய் இரதத்தின்மேல்
௰௯ ஏறிப்போனான்.—அப்படியே இஸ்ரவேலர் இந்
நாள்வரைக்கும் தாவீதின் வீட்டைவிட்டு மருள
விழுந்திருக்கிறார்கள்.

## ௰௧. அதிகாரம்.

*௧. ரெகாபெயாம் இஸ்ரவேலைச் செயிக்கச் சேனையைக் கூட்டும்போது செமாயாவினால் தடுக்கப்பட்டது. ௫. அவன் கோட்டைகளைக் கட்டி, தின்பண்டங்களை வைத்தது தன இராச்சியத்தைப் பலப்படுத்தினது. ௰௩ ஆசாரியர்களும், இலேவியர்களும், கர்த்தருக்குப் பயப்படுகிற மற்றவர்களும், எரோபெயாமினால் கைவிடப்பட்டு, யூதாவின் இராச்சியத்தைப் பலக்கப்பண்ணினது. ௰௮ ரெகாபெயாமின் மனைவிகளும் பிள்ளைகளும்.*

௧ ரெகாபெயாம் எருசலேமுக்கு வந்தபோது இஸ்
ரவேலோடு யுத்தம்பண்ணவும், இராச்சியத்தை
ரெகாபெயாமின் இடமாகத் திருப்பிக்கொள்ள
வும், அவன் யூதா வீட்டாரும் பென்யமீன் கோத்
திரத்தாருமாகிய யுத்தம்பண்ணத்தக்கத் தெரிந்து
கொள்ளப்பட்ட நூற்று எண்பதினாயிரம்பேரைக்
௨ கூட்டிக்கொண்டான்.—ஆனால் பராபரனுடைய
மனுஷனாகிய செமாயாவுக்குக் கர்த்தருடைய
வார்த்தை உண்டாகி, அவர் சொன்னதாவது:—
௩ நீ யூதாவின் இராசாவாகிய ரெகாபெயாமென்ற
சாலோமோனின் குமாரனோடும், யூதாவிலும்
பென்யமீனிலும் இருக்கிற எல்லா இஸ்ரவே
௪ லோடும்,—நீங்கள் ஏறிப்போகாமலும், உங்கள்
சகோதரரோடு யுத்தம்பண்ணாமலும், அவரவர்
தம்தம் வீட்டுக்குத் திரும்புங்கள்; ஏனெனில் நம்
மாலே இந்தக் காரியம் நடந்ததென்று கர்த்தர்
உரைக்கிறாரென்று சொல்லென்றார்; அப்போது
அவர்கள்கர்த்தருடைய வார்த்தைகளுக்குக் கீழ்ப்
படிந்து, எரோபெயாமுக்கு விரோதமாய் யுத்தம்
பண்ணுவதை விட்டுத் திரும்பினார்கள்.
ஆனால் ரெகாபெயாம் எருசலேமில் வாசமா ௫
யிருந்து, யூதாவிலே அரணான பட்டணங்களை
யும் கட்டினான்.—அவன் பெத்லேகேமும், ஏத் ௬
தாமும், தெக்கொபாவும்,-பெத்சூரும், சோகோ ௭
வும், அதுல்லாமும்,-காத்தும், மரேஷாவும், சீப் ௮
பும்,-அதோராயிமும், லாகீசும், அசெக்காவும்,- ௯
சோராவும், ஆயிலோனும், எபிரோனுமென்ற ௰
யூதாவிலும் பென்யமீனிலும் இருக்கிற அரணிப்
பான பட்டணங்களைக் கட்டி,-அந்த அரணிப் ௰௧
புகளைப் பலப்படுத்தி, அவைகளிலே தலைவரை
யும் ஆகாரமும் எண்ணெயும் திராட்சப்பழஇர
சமுமுள்ள பண்டகசாலைகளையும்,—ஒவ்வொரு ௰௨
பட்டணத்திலே பரிசைகளையும், ஈட்டிகளையும்
வைத்து, அவைகளை மிகுதியும் பலப்பட்டவைக
ளாக்கினான்; அப்படியே யூதாவும் பென்யமீனும்
அவன்கீழிருந்தது. — இஸ்ரவேலெங்கும் இருக் ௰௩
கிற ஆசாரியரும் இலேவியரும் தங்கள் எல்லா
எல்லைகளிலுமிருந்து அவனண்டை வந்து சேர்ந்
தார்கள். — அதேதென்றால் இலேவியர் தங்கள் ௰௪
பேட்டைகளையும் தங்கள் காணியாட்சிகளையும்
விட்டு, யூததேசத்திற்கும் எருசலேமுக்கும் வந்
தார்கள்; ஏனெனில் எரோபெயாமும் அவன்
குமாரரும் அவர்களைக் கர்த்தருக்கு ஆசாரிய ஊ
ழியம்செய்யாதபடிக்குத் தள்ளினார்கள்.-அவன் ௰௫
மேடைகளுக்கென்றும், பேய்களுக்கென்றும்,
தான் உண்டாக்கின கன்றுக்குட்டிகளுக்கென்
றும் தனக்கு ஆசாரியர்களை வைத்தான்.—அந்த ௰௬
இலேவியரின் பிறகாலே இஸ்ரவேலின் கோத்
திரங்களிலெல்லாம் இஸ்ரவேலின் பராபரனாகிய
கர்த்தரைத் தேடுகிறதற்கு, தங்கள் இருதயத்தை
நேராக்கினவர்கள் தங்கள் பிதாக்களின் பராபர
னாகிய கர்த்தருக்குப் பலியிடும்படிக்கு எருசலே
முக்கு வந்தார்கள்.-இப்படி மூன்று வருஷம்மட் ௰௭
டும் யூதாவின் இராச்சியத்தைப் பலக்கப்பண்
ணி, சாலோமோனின் குமாரனாகிய ரெகாபெ
யாமைத் திடப்படுத்தினார்கள்; ஏனெனில் தாவீ
தும் சாலோமோனும் நடந்த வழியிலே மூன்று
வருஷம்மட்டும் நடந்தார்கள்.
ரெகாபெயாம் தாவீதின் குமாரனாகிய எரிமோ ௰௮
த்தின் குமாரத்தி மகலாத்தோடேகூட ஈசாயின்
குமாரனாகிய எலியாபின் குமாரத்தி அபிகாயிலை
யும் விவாகம்பண்ணினான்.— இவள் அவனுக்கு ௰௯
எகூசும் செமரியாவும் சாகாமுமென்ற குமார
ரைப் பெற்றாள்.-இவளுக்குப் பிறகு அப்சலோ ௨௰
மின் குமாரத்தியாகிய மாகாளை விவாகம்பண்ணி
னான்; இவள் அவனுக்கு அபியாவையும், அத்தா
யையும், சீசாவையும், செலோமீத்தையும் பெற்
றாள்.-ரெகாபெயாம் தன்னுடைய எல்லா ஸ்திரி ௨௰௧
களையும் வைப்பாட்டிகளையும்பார்க்கிலும், அப்
சலோமின் குமாரத்தியாகிய மாகாளைச் சிநேகித்
தான்; அதேதெனில் பதினெட்டுப் பெண்சாதி
களையும் அறுபது வைப்பாட்டிகளையும் படைத்
து, இருபத்தெட்டுக் குமாரரையும் அறுபது குமா

௨௨ ரத்திகளையும் பெற்றான். — ரெகாபெயாம் மாகா
ளின் குமாரனாகிய அபியாவை அவன் சகோதர
ருக்குள்ளே தலைவனும் பெரியவனுமாக வைத்
தான்; ஏனெனில் இவனை அவன் இராசாவாக்க
௨௩ நினைத்து,—அதைப் புத்தியாய் நடப்பித்து, தன்
னுடைய எல்லாக் குமாரரிலும் சிலரை யூதா
பென்யமீனுடைய எல்லாத் தேசங்களிலுமுள்ள
அரணான எல்லாப் பட்டணங்களிலும் பிரித்து
வைத்து, அவர்களுக்குத் திரள் ஆகாரத்தைக் கொ
டுத்து, அவர்களுக்கு அநேகம் பெண்களை விசா
ரித்தான்

## ௰௨. அதிகாரம்.

௧. ரெகபெயாம் கர்த்தருக்குத் துரோகம்பண்ணி, சீஷாக்கினால் தண்டிக்கப்பட்டது. ௫. செமாயாவின் பிரசங்கத்தினால் ரெகாபெயாமும் பிரபுக்களும் குணப்பட்டு, நாசத்திற்குத் தப்பித்துக்கொண்டும் கொள்ளை கொடுத்தது. ௰௩. ரெகாபெயாமின் ஆளுகையும் மரணமும்.

௧ சம்பவித்ததேதென்றால் ரெகாபெயாம் இராச்சி
யத்தைத் திடப்படுத்திப் பலப்பட்டபிற்பாடோ
வெனில், அவனும் அவனோடே இஸ்ரவேலனை
த்துமாய்க் கர்த்தருடைய நியாயப்பிரமாணத்தை
விட்டுவிட்டார்கள்.
௨ ஆகையால் அவர்கள் கர்த்தருக்கு விரோதமா
ய்த் துரோகம்பண்ணினபடியினாலே, இராசா
வாகிய ரெகாபெயாமின் ஐந்தாம் வருஷத்தில்
எகிப்தின் இராசாவாகிய சீஷாக் ஆயிரத்து இரு
நூறு இரதங்களோடும், அறுபதினாயிரம் குதிரைக்
காரரோடும் எருசலேமுக்கு விரோதமாய் ஏறிவந்
௩ தான்.—அவனோடே கூட எகிப்திலிருந்து வந்த
லூபியர், சூக்கியர், எத்தியோப்பியரான சனம்
௪ எண்ணிக்கைக்கு அடங்காததாயிருந்தன. — அ
வன் யூதாவுக்கு அடுத்த அரணான பட்டணங்
களைப்பிடித்து, எருசலேம்மட்டும் வந்தான். —
௫ அப்போது செமாயா தீர்க்கதரிசி ரெகாபெயா
மண்டைக்கும், சீஷாக்கின் நிமித்தம் எருசலே
மிலே வந்து கூடியிருக்கிற யூதாவின் பிரபுக்க
ளண்டைக்கும் வந்து, அவர்களுடனே, நீங்கள்
நம்மை விட்டீர்கள், ஆகையால் நாம் உங்களை
யும் சீஷாக்கின் கையிலே விழவிட்டோமென்று
௬ கர்த்தர் சொல்லுகிறாரென்றான். — அப்போது
இஸ்ரவேலின் பிரபுக்களும் இராசாவும் தங்க
ளைத் தாழ்த்திக் கர்த்தர் நீதியுள்ளவரென்றார்கள்.—
௭ அவர்கள் தங்களைத் தாழ்த்தினதைக் கர்த்தர் கண்
டபோது, கர்த்தருடைய வார்த்தை செமாயா
வுக்கு உண்டாகி, அவர் சொன்னதாவது: தங்க
ளைத் தாழ்த்தினார்கள்; அவர்களை அழிக்காதிருப்
போம்; நம்முடைய உக்கிரம் சீஷாக்கைக்கொ
ண்டு எருசலேமின்மேல் ஊற்றப்படாதபடிக்கு,
அவர்களுக்குக் கொஞ்சம் தப்பிப்போகுதலைக்
௮ கட்டளையிடுவோம்.—ஆனால் நம்மைச் சேவிக்கி
றதற்கும், தேசங்களின் இராச்சியங்களைச் சேவி
க்கிறதற்கும், இருக்கிற வித்தியாசத்தை அவர்கள்
அறியும்படிக்கு அவனைச் சேவிக்கிறவர்களா
௯ வார்கள் என்றார்.—அப்படியே எகிப்தின் இரா
சாவாகிய சீஷாக் எருசலேமின்மேல் வந்தேறி,
கர்த்தருடைய வீட்டின் பொக்கிஷங்களையும்
இராசாவுடைய வீட்டின் பொக்கிஷங்களையும்
சகலத்தையும் எடுத்துக்கொண்டு, சாலோமோன்
செய்வித்த பொன்கேடயங்களையும் எடுத்துக்
கொண்டு போனான்.—அவைகளுக்குப் பதிலாக ௰
இராசாவாகிய ரெகாபெயாம் வெண்கலக் கேட
யங்களைச் செய்வித்து, அவைகளை இராசாவின்
வாசல்படியைக்காக்கிற சேவகருடைய தலைவ
ரின் கையில் ஒப்புவித்தான்.—இராசா கர்த்தரு ௰௧
டைய வீட்டிற்குள் பிரவேசிக்கும்போதெல்
லாம் அரமனைச் சேவகர் வந்து, அவைகளை எடுத்
துப்பிடித்து, பிற்பாடு திரும்பத் தங்கள் அறை
யிலே வைப்பார்கள்.—அவன் தன்னைத் தாழ்த்தி ௰௨
னபடியினாலே கர்த்தர் அவனை முழுதும் கெடுக்
காதபடிக்கு அவருடைய கோபம் அவனை விட்
டுத் திரும்பிற்று; ஏனெனில் யூதாவில் இன்னம்
சில நல்ல கருமங்கள் இருந்தன.
அப்படியே இராசாவாகிய ரெகாபெயாம் எரு ௰௩
சலேமிலே தன்னைத் திடப்படுத்திக்கொண்டு
அரசாண்டான்; அதேதெனில் ரெகாபெயாம்
இராசாவாகிறபோது, நாற்பத்தொரு வயதாயி
ருந்து. கர்த்தர் தம்முடைய நாமத்தை வைக்க
இஸ்ரவேல் கோத்திரங்களிலெல்லாம் தெரிந்து
கொண்ட பட்டணமாகிய எருசலேமிலே பதி
னேழு வருஷம் இராச்சியபாரம்பண்ணினான்;
அம்மோன் சாதியான அவனுடைய தாயின்பேர்
நாமாள்.—அவன் பொல்லாப்பானதைச் செய் ௰௪
தான்; ஏனெனில் அவன் தன் இருதயத்தைக்
கர்த்தரைத் தேடுகிறதற்கு நேராக்கினதில்லை.
ரெகாபெயாமின் முன்பின் நடபடிகளும், ரெ ௰௫
காபெயாமுக்கும் எரோபேயாமுக்கும் சகல நா
ளுமாயிருந்த போர்களும், செமாயாவின் புஸ்த
கத்திலும் ஞானதிருஷ்டிக்காரனாகிய இடோ
வின் வம்சத்து அட்டவணையிலுமல்லவோ எழு
தியிருக்கின்றது. — ரெகாபெயாம் தன் பிதாக் ௰௬
களோடே நித்திரை அடைந்தபின் தாவீதின்
பட்டணத்தில் அடக்கம்பண்ணப்பட்டான்;
அவன் குமாரனாகிய அபியா அவன் ஸ்தலத்தில்
இராசாவானான்.

## ௰௩. அதிகாரம்.

௧. அபியா அரசாளுகிறது, எரோபேயாமுடனே யுத்தம் செய்தது. ௪. அவன் தன்னுடைய சேர்க்கைக்கு நியாயமென்று சொன்னது. ௰௩. அவன் கர்த்தரை நம்பி, எரோபேயாமைச் செயித்தது. ௨௧. அபியாவின் மனைவிகளும் பிள்ளைகளும்.

இராசாவாகிய எரோபேயாமின் பதினெட்
டாம் வருஷத்தில் அபியா யூதாவின்மேல் இரா ௧
சாவாகி, — மூன்று வருஷமாய் எருசலேமின் ௨
மேல் இராச்சியபாரம் பண்ணினான்; கிபேயா
ஊரானாகிய ஊரியேலின் குமாரத்தியாகிய அவ
னுடைய தாயின்பேர் மிகாயாள்; அபியாவுக்கும்
எரோபேயாமுக்கும் யுத்தம் உண்டானபடியி
னாலே,
அபியா தெரிந்துகொள்ளப்பட்ட நானூறாயி ௩
ரம்பேராகிய பராக்கிரம சேவகரின் இராணுவத்
தாரை யுத்தத்திற்கு ஆயத்தம்பண்ணினான்; எரோ
பேயாமோவெனில் தெரிந்துகொள்ளப்பட்ட

எண்ணூறாயிரம்பேராகிய பலத்த பராக்கிரமரை
அவனுக்கு எதிராக யுத்தத்திற்கு நிறுத்தினான்.—
௪ அப்போது அபியா எப்பிராயீம் மலைத்தேசத்தி
லுள்ள செமராயீமென்ற பர்வதத்தின்மேல் ஏறி
எழும்பிச் சொன்னதாவது: எரோபேயாமே, எல்
லா இஸ்ரவேலரே, என்னைக் கேளுங்கள். —
௫ இஸ்ரவேலை என்றைக்கும் ஆளும் இராச்சியபா
ரத்தை இஸ்ரவேலின் பராபரனாகிய கர்த்தர் தாவீ
துக்கும் அவன் குமாரருக்கும் மாறாத உடம்படிக்
கையாய்க் கட்டளையிட்டதை நீங்கள் அறியவே
௬ ண்டியதில்லையோ? — ஆகிலும் தாவீதின் குமா
ரனாகிய சாலோமோனின் ஊழியக்காரனான
எரோபேயாமென்ற நேபாத்தின் குமாரன் எழும்
பி, தன் எசமானனுக்கு விரோதமாகக் கலகம்பண்
௭ ணினான்.—பேலியாளின் பிள்ளைகளாகிய வீண்
மனுஷர் அவனோடே கூடி, சாலோமோனின்
குமாரனாகிய ரெகாபெயாம் அவர்களுக்குமுன்
பாகப் பலன்கொள்ளமாட்டாமல் வாலவயதும்
திடனற்ற மனதுமாயிருக்கையில், அவனுக்கு
௮ விரோதமாகப் பலத்துப்போனார்கள்.—இப்போ
தும் தாவீதுடைய குமாரன் கையிலிருக்கிற கர்த்
தருடைய இராச்சியத்திற்கு எதிராக நீங்கள்
பலன் கொள்ளலாமென்று நினைக்கிறீர்கள்;
நீங்கள் மகா ஏராளம்தானே; ஆனால் எரோபே
யாம் உங்களுக்குத் தேவர்களாக உண்டாக்கின
பொன்னான கன்றுக்குட்டிகள் உங்களிடத்தில்
௯ இருக்கின்றன.—நீங்கள் ஆரோனின் குமாரனா
கிய கர்த்தருடைய ஆசாரியர்களையும் இலேவிய
ரையும் தள்ளிவிட்டு, தேசாதேசங்களின் சனசத
ளங்களைப்போல உங்களுக்கு ஆசாரியர்களை
உண்டுபண்ணினதில்லையோ? மாட்டின் கன்றா
கிய ஒரு காளையினாலும், எருதினாலும், ஏழு ஆட்
டுக்கடாக்களினாலும், தன் கையை நிரப்பத்தக்
கவிதமாக வருகிறவனெல்லாம் தேவர்கள் அல்
௰ லாதவைகளுக்கு ஆசாரியனாகிறானே. — எங்க
ளுக்கோவென்றால் கர்த்தரே பராபரனாயிருக்
கிறார்; நாங்கள் அவரை விட்டு விலகினதில்லை;
கர்த்தருக்கு ஊழியம்செய்கிற ஆசாரியர்கள்
ஆரோனின் குமாரரும், பணிவிடையில் இருக்
௰௧ கிறவர்கள் இலேவியரும்தானே. — அவர்கள்
காலையிலும் மாலையிலும் தினம் கர்த்தருக்குச்
சர்வாங்க தகனபலிகளையும் நற்கந்தமான தூப
வர்க்கத்தையும் கொளுத்தி, சுத்தமான மேசை
யின்மேல் அப்பங்களை அடுக்கிவைக்கிறதையும்,
பொன்னான குத்துவிளக்கையும் அதின் விளக்
குகளைச் சாயங்காலம்தோறும் ஏற்றுகிறதையும்
விசாரிக்கிறார்கள்; ஏனெனில் நாங்கள் எங்கள்
பராபரனாகிய கர்த்தரின் காவலைக் காக்கிறோம்;
௰௨ நீங்களோ அவரை விட்டு விலகினீர்கள்.—இதோ
பராபரன் எங்களோடேகூட முகனையில் இருக்
கிறார், உங்களுக்கு விரோதமாய் ஆர்ப்பரிக்கும்
படிக்குத் தொனிக்கிற பூரிகைகளைப் பிடித்தி
ருக்கிற அவருடைய ஆசாரியர்களும்தானே;
இஸ்ரவேல் புத்திரரே, உங்கள் பிதாக்களின்
பராபரனாகிய கர்த்தருக்கு விரோதமாக யுத்தம்
பண்ணீர்களாக; ஏனெனில் உங்களுக்குக் கை
கூடிவராதென்றான்.

ஆனால் எரோபேயாம் அவர்களுக்குப் பின் ௰௩
னாகவரத்தக்கவிதமாக ஒரு பதிவிடையைச் சுற்
றிப்போகப்பண்ணினான்; அப்படியே யூதாவுக்
குமுன்னும் அந்தப் பதிவிடை அவர்களுக்குப்
பின்னுமாயிருந்தது. — யூதா திரும்பிப்பார்க்கிற ௰௪
போது, இதோ முன்னும் பின்னும் தங்களுக்கு
யுத்தமுண்டென்று கண்டு கர்த்தரை நோக்கிக்
கூப்பிட்டார்கள்; ஆசாரியர்களோவென்றால் பூ
ரிகைகளைத் தொனிக்கப்பண்ணினார்கள்.—யூதா ௰௫
மனுஷரோவென்றால் ஆர்ப்பரித்தார்கள்; யூதாம
னுஷர் ஆர்ப்பரிக்கிறபோது சம்பவித்ததேதென்
றால், பராபரன் எரோபேயாமையும் இஸ்ரவே
லனைத்தையும் அபியாவுக்கும் யூதாவுக்கும் முன்
பாக முறியடித்தார்.— இஸ்ரவேல் புத்திரர் யூதா ௰௬
வுக்குமுன்பாக முறிந்தோடினார்கள்; பராபரன்
அவர்களை இவர்கள் கையில் ஒப்புக்கொடுத்தார்.-
அபியாவும் அவனுடைய சனமும் அவர்களில் ௰௭
மகா சங்காரம் உண்டாக்கினார்கள்; தெரிந்து
கொள்ளப்பட்ட ஐந்நூறாயிரம்பேர் இஸ்ரவேலி
லே வெட்டுண்டு விழுந்தார்கள். — அப்படியே ௰௮
இஸ்ரவேல் புத்திரர் அக்காலத்திலே தாழ்த்தப்
பட்டார்கள்; யூதா புத்திரரோவென்றால் தங்கள்
பிதாக்களின் பராபரனாகிய கர்த்தரைச் சார்ந்து
கொண்டதினால் பலத்துப்போனார்கள்.-அபியா ௰௯
எரோபேயாமைப் பின்தொடர்ந்து, அவனுக்
குண்டான பட்டணங்களாகிய பேத்தேலையும்
அதின் கிராமங்களையும், எஷானாவையும் அதின்
கிராமங்களையும், எப்பிரோனையும் அதின் கிரா
மங்களையும் பிடித்தான்.-அப்புறம் அபியாவின் ௨௰
நாள்களில் எரோபேயாம் பலன் அடையமாட்
டாதேபோய், கர்த்தர் அவனை அடித்ததினால் மர
ணம் அடைந்தான்.

அப்படியே அபியா பலத்துக்கொண்டான்; ௨௧
அவன் பதினாலு பெண்சாதிகளை விவாகம்பண்
ணி, இருபத்திரண்டு குமாரரையும் பதினாறு குமா
ரத்திகளையும் பெற்றான்.

அபியாவின் மற்ற நடபடிகளும் அவன் வழி ௨௨
களும் அவன் வர்த்தமானங்களும் தீர்க்கதரிசியா
கிய இடோவின் சரித்திரத்தில் எழுதியிருக்கின்
றன.

## ௰௪. அதிகாரம்.

௧. ஆசா அரசாகி விக்கிரக ஆராதனையை விலக்கினது. ௬. அவன் சத்துருக்கள் இல்லாததினால் கோட்டையைக் கட்டி, சேனைகளைச் சேர்த்து இராச்சியத்தைப் பலப்படுத்தினது. ௯. கர்த்தரை மன்றாடிச் சேராவைச் செயித்து எத்தியோப்பியரை முறியடித்தது.

அபியா தன் பிதாக்களோடே நித்திரை அடைந் ௧
தபின், அவனைத் தாவீதின் பட்டணத்தில் அடக்
கம்பண்ணினார்கள்; அவன் ஸ்தலத்திலே அவன்
குமாரனாகிய ஆசா இராசாவானான்; இவனுடைய
நாள்களிலே தேசம் பத்து வருஷம்மட்டும் அம
ரிக்கையாயிருந்தது.

ஆசா தன் பராபரனாகிய கர்த்தரின் பார்வைக் ௨
கு நன்றும் செம்மையுமானதைச் செய்தான்.—

௩ அந்நிய தேவர்களின் பீடங்களையும் மேடைக
ளையும் அகற்றி, சிலைகளை உடைத்து, தோப்பு
௪ களை வெட்டி,—தங்கள் பிதாக்களின் பராபர
ஞகிய கர்த்தரைத் தேடவும், நியாயப்பிரமாணத்
தின்படியும் கற்பனையின்படியும் செய்யவும்
௫ யூதாவுக்குக் கற்பித்து, — மேடைகளையும் சிலை
களையும் யூதாவுடைய எல்லாப்பட்டணங்களி
லுமிருந்து அகற்றினன்; அவனுக்குமுன்பாக
இராச்சியம் அமரிக்கையாயிருந்தது.
௬ அந்த வருஷங்களில் அவனுக்கு விரோதமான
யுத்தமில்லாமல், தேசம் அமரிக்கையானபடியி
னலே யூதாவிலே அரணுன பட்டணங்களைக்
கட்டினன்; ஏனெனில் கர்த்தர் அவனுக்கு
௭ இளைப்பாறுதலைக் கட்டளையிட்டார்.—அவன்
யூதாவுடனே, தேசம் நமக்குமுன்பாக இன்னம்
இப்படியிருக்கையில், நாம் இந்தப் பட்டணங்க
ளைக் கட்டி, அலங்கங்கள், கோபுரங்கள், வாசல்
கள், தாழ்ப்பாள்களாலும் அவைகளை அடைப்
போமாக; ஏனெனில் நம்முடைய பராபரஞ
கிய கர்த்தரைத் தேடினேம்; தேடினபோது, சுற்
றிலும் நமக்கு இளைப்பாறுதலைக் கட்டளையிட்
டாரென்றான்; அப்படியே கட்டினர்கள்; அவர்
௮ களுக்குக் கைகூடிவந்தது.—யூதாவிலே பரி
சையையும் ஈட்டியையும் பிடிக்கிற முந்நூறா
யிரம்பேரும், பென்யமீனிலே கேடயம் பிடித்து
வில்லை நாணேற்றுகிற இருநூற்று எண்பதினா
யிரம்பேருமான இராணுவங்கள் ஆசாவுக்கு
இருந்தன; இவர்களெல்லாரும் பராக்கிரமசேவ
கரானவர்கள்.
௯ அவர்களுக்கு விரோதமாக எத்தியோப்பியனா
கிய சேரா ஆயிரத்தாயிரம்பேர்களின் இராணு
வங்களோடும் முந்நூறு இரதங்களோடும் புறப்
௰ பட்டு மரேசாமட்டும் வந்தான். — அப்போது
ஆசா அவனுக்கு எதிராகப் புறப்பட்டான்; மரே
சாவுக்கடுத்த செப்பத்தாவென்ற பள்ளத்தாக்கில்
௰௧ யுத்தத்திற்கு ஆயத்தம்பண்ணினர்கள்.—ஆசா தன்
பராபரஞகிய கர்த்தரைநோக்கிக் கூப்பிட்டு,
கர்த்தாவே, பலத்தவனுக்காகிலும் பலனற்றவ
னுக்காகிலும் ஒத்தாசைபண்ணுகிறது உமக்கு
அற்பகாரியமாயிருக்கின்றது; எங்கள் பராபர
ஞகிய கர்த்தாவே, எங்களுக்கு ஒத்தாசைபண்
ணும்; ஏனெனில் உம்மைச் சார்ந்துகொண்டு
உம்முடைய நாமத்தில் இருந்த ஏராளத்திற்கு
எதிராக வந்தோம்; கர்த்தாவே, தேவரீர் எங்கள்
பராபரன்; மனுஷன் உம்மை மேல்கொள்ளா
௰௨ ஞக என்றான்.—அப்போது கர்த்தர் அந்த எத்தி
யோப்பியரை ஆசாவுக்கும் யூதாவுக்கும்முன்
பாக முறியடிக்கிறதினல் எத்திபோப்பியர் ஒடி
௰௩ ப்போனர்கள்.—அவர்களை ஆசாவும் அவனேடி
ருக்கிற சனமும் கேரார்மட்டும் துரத்தினர்கள்;
எத்தியோப்பியரில் ஒரு பலனும் இராதபடிக்கு
விழுந்தார்கள்; ஏனென்றால் கர்த்தருக்கும் அவ
ருடைய இராணுவத்திற்கும்முன்பாக நொறுங்
கிப்போனர்கள்; கொள்ளையை மிகவும் திரட்சி
௰௪ யாயெடுத்து,—கேராரின் சுற்றுப் பட்டணங்க
ளையெல்லாம் இடறடித்தார்கள்; ஏனெனில் கர்த்
தரால் அவர்கள்மேலே பயங்கரம் உண்டாயிற்று;
அந்தப் பட்டணங்களையெல்லாம் கொள்ளையிட்
டார்கள்; ஏனெனில் அவைகளில் கொள்ளை நிர
ம்ப இருந்தது.—மிருகசீவன்கள் இருந்த கொட் ௰௫
டாரங்களையும் அவர்கள் இடறடித்து, திரள் ஆடு
களையும் ஒட்டகங்களையும் சாய்த்துக்கொண்டு
எருசலேமுக்குத் திரும்பினர்கள்.

## ௰௫. அதிகாரம்.

௧. ஆசா அசரியாவின் தீர்க்கதரிசனத்தால் ஏவப்பட்டு, யூதரையும், இஸ்ரவேலில் அநேகரையும் கூட்டி, பராபரனேடே உடம்படிக்கைபண்ணினது. ௰௬. அவன் தன் தாயாகிய மாகாளை விக்கிரகபத்திக்காக விலக்கினது. ௰௮. அவன் தேவாலயத்திற்கென்று நியமித்த பொருளை அதில் கொண்டுவந்ததும், நெடுங்காலம் சமாதானமாயிருந்ததும்.

அப்போது பராபரனுடைய ஆவி ஓதேதின் ௧
குமாரஞகிய அசரியாவின்மேல் இறங்கினதி
னல்,—அவன் வெளியே ஆசாவுக்கு எதிர்கொ ௨
ண்டுபோய் அவனுக்குச் சொன்னதாவது: ஆசா
வே, யூதா பென்யமீன் கோத்திரங்களின் சகல
மனுஷரே என்னைக் கேளுங்கள்; நீங்கள் கர்த்
தரோடிருக்கையால், அவர் உங்களோடிருக்கி
ருர்; நீங்கள் அவரைத் தேடினல் உங்களுக்கு
வெளிப்படுவார்; அவரை விட்டீர்களேயாகில்
உங்களை விடுவார்.—இஸ்ரவேலிலே மெய்யான ௩
தேவனும் உபதேசிக்கிற ஆசாரியனும் வேதமு
மில்லாத அநேகநாளிருக்கும்.—தங்கள் நெருக் ௪
கத்திலே இஸ்ரவேலின் பராபரஞகிய கர்த்தரண்
டைக்குத் திரும்பி, அவரைத் தேடினர்களேயா
னல், அவர் இவர்களுக்கு வெளிப்படுவார்.—
அக்காலங்களிலே புறப்படுகிறவர்களுக்கும் உள் ௫
பிரவேசிக்கிறவர்களுக்கும் சமாதானமில்லாதி
ருக்கும்; ஏனெனில் தேசங்களின் குடிகளெல்
லாரின்மேலும் மகா அமளிகள் உண்டாயிருந்
து,—சாதியைச் சாதியும், பட்டணத்தைப் பட் ௬
டணமும் நொறுக்கும்; ஏனென்றால் பராபரன்
அவர்களைச் சகலவித இடுக்கத்தினலும் கலங்
கப்பண்ணுவார்.—நீங்களோவென்றால் உங்கள் ௭
கைகளை நெகிழவொட்டாமல் திடன்கொள்
ளுங்கள்; ஏனெனில் உங்கள் கிரியைகளுக்குப்
பலனுண்டென்றான்.

ஆசா இந்த வார்த்தைகளையும் தீர்க்கதரிசியாகிய ௮
ஓதேதின் தீர்க்கதரிசனத்தையும் கேட்டபோது,
அவன் திடன்கொண்டு, அருவருப்புகளை யூதா
பென்யமீன் தேசமனைத்திலும் எப்பிராயீமின்
மலைத்தேசத்தில் தான் பிடித்த பட்டணங்களிலு
மிருந்து அகற்றி, கர்த்தருடைய மண்டபத்தின்
முன்னிருக்கிற கர்த்தருடைய பலிபீடத்தைப்
புதிதாக்கி,—அவன் யூதா பென்யமீன் அனைத்தை ௯
யும், அவர்களோடேகூட எப்பிராயீமிலும் மனா
சேயிலும் சிமேயோனிலும் இருந்துவந்த பரதே
சிகளையும் கூட்டினன்; ஏனெனில் இஸ்ரவேலி
லே திரள் சனங்கள் அவனுடைய பராபரஞகிய
கர்த்தர் அவனேடிருக்கிறதைக் கண்டு அவன்
வசத்திலே சேர்ந்தார்கள்.—ஆசா அரசாண்ட பதி ௰
னைந்தாம் வருஷம் மூன்றும் மாதத்திலே அவர்

௰௧ கள் எருசலேமிலே கூடி,—தாங்கள் கொள்ளை
யிட்டு ஒட்டிவந்தவைகளில் அந்நாளிலே எழு
நூறு மாடுகளையும் ஏழாயிரம் ஆடுகளையும் கர்த்த
௰௨ ருக்குப் பலியிட்டு,—தங்கள் பிதாக்களின் பரா
பரனாகிய கர்த்தனைத் தங்கள் முழு இருதயத்தா
லும் தங்கள் முழு ஆத்துமத்தாலும் தாங்கள் தேடு
௰௩ வோமென்றும்,—சிறியவன் துவக்கிப் பெரிய
வன்மட்டாகவும், புருஷன் துவக்கி ஸ்திரிமட்
டாகவும், இஸ்ரவேலின் பராபரனாகிய கர்த்த
னைத் தேடாதவனெல்லாம் கொலையுண்ணப்ப
டவேண்டுமென்றும் ஒரு உடம்படிக்கைக்குள்
௰௪ ளாகி, — கர்த்தருக்கு மகா சத்தத்தோடும் கெம்
பீரத்தோடும் பூரிகைகளோடும் எக்காளங்களோ
௰௫ டும் ஆணையிட்டார்கள்.–இந்த ஆணைக்காக யூதா
வனைத்தும் சந்தோஷப்பட்டது; ஏனெனில் தங்
கள் முழு இருதயத்தாலும் ஆணையிட்டு, தங்கள்
முழு மனதினாலும் அவனைத் தேடினார்கள்;ஏனெ
னில் கர்த்தர் அவர்களுக்குவெளிப்பட்டு,சுற்றுப்
புறத்தாரால் போரில்லாதபடிக்கு அவர்களை
இளைப்பாறப்பண்ணினார்.

௰௬ தோப்பிலே அருவருப்பான விக்கிரகத்தை
உண்டுபண்ணின இராசாவாகிய ஆசாவின் தா
யான மாகாளையும் இராசஸ்திரியாயிராதபடிக்கு
ஆசா விலக்கிப்போட்டு, அவளுடைய அந்த
விக்கிரகத்தையும் நிர்மூலமாக்கித் தகர்த்து, கீத
ரோன் ஆற்றிலே சுட்டெரித்துப்போட்டான்.–
௰௭ மேடைகளோவெனில் இஸ்ரவேலிலிருந்து தள்
ளிப்போடப்பட்டதில்லை என்றாலும், ஆசாவின்
இருதயம் அவன் நாள்களிலெல்லாம் உத்தமமா
யிருந்தது.

௰௮ தன் தகப்பனும் தானும் பரிசுத்தம்பண்ணின
தாகிய வெள்ளியையும் பொன்னையும் தட்டுமுட்
டுகளையும் அவன் பராபரனுடைய வீட்டிலே
௰௯ கொண்டுவந்து வைத்தான்.— ஆசா அரசாண்ட
இராச்சியத்தின் முப்பத்தைந்தாம் வருஷம்மட்
டுக்கும் யுத்தம் இல்லாதிருந்தது.

## ௰௬. அதிகாரம்.

௧. ஆசா சூரியர்களுடைய உதவியினால் பாஷா ராமாவைக் கட்டுகிற
தை விலக்கினது. ௭. அவன் அனானியென்பவனால் கண்டிக்கப்பட்டு
அவனைக் காவலில் வைத்தது. ௰௨. வியாதியாயிருக்கும்போது, அவன்
பராபரனைத் தேடாமல் பரியாரிகளைத் தேடினது. ௰௩. அவனுடைய
மரணமும் அடக்கமும்.

௧ ஆசா அரசாண்ட முப்பத்தாறும் வருஷத்திலே
இஸ்ரவேலின் இராசாவாகிய பாஷா யூதாவுக்கு
விரோதமாய் ஏறிவந்து, ஒருவரும் யூதாவின்
இராசாவாகிய ஆசாவண்டையிலே போக்கும்
வரத்துமாயிராதபடிக்கு ராமாவைக் கட்டினான்.

௨ அப்போது ஆசா கர்த்தருடைய வீட்டிலும்
இராசாவின் வீட்டிலுமுள்ள பொக்கிஷங்களில்
வெள்ளியும் பொன்னும் எடுத்து, தமஸ்குவில்
வாசம்பண்ணுகிற பென்னாதாத்தென்ற சூரியா
௩ வின் இராசாவண்டைக்கு அனுப்பி,–எனக்கும்
உமக்கும்,என் தகப்பனுக்கும் உம்முடைய தகப்
பனுக்கும் உடம்படிக்கை உண்டே; இதோ வெ
ள்ளியும் பொன்னும் உமக்கு அனுப்பினேன்;
இஸ்ரவேலின் இராசாவாகிய பாஷா என்னை
விட்டு அப்பாலே போகும்படிக்கு நீர் வந்து,
அவனோடிருக்கும் உம்முடைய உடம்படிக்
கையை விட்டுவிடுமென்று சொல்லி அனுப்பி
னான்.–பென்னாதாத் இராசாவாகிய ஆசாவுக்குச் ௪
செவிகொடுத்துத் தனக்குண்டான இராணுவங்
களின் தலைவரை இஸ்ரவேலின் பட்டணங்க
ளுக்கு விரோதமாக அனுப்பினான்; இவர்கள்
ஈயோனையும், தாணையும், ஆபேல்மாயிமையும்,
நவ்தலி பட்டணங்களின் எல்லாப் பண்டகசா
லைகளையும் இடறடித்தார்கள்.
இதைப் பாஷா கேட்டபோது,ராமாவைக் கட் ௫
டுகிறதை நிறுத்தித் தன் வேலையைவிட்டு ஓய்ந்
தான்.—அப்போது இராசாவாகிய ஆசா யூதாவ ௬
னைத்தையும் கூட்டிக்கொண்டான்; இவர்கள்
போய், பாஷா கட்டின ராமாவின் கற்களையும்
அதின் மரங்களையும் எடுத்துவந்தார்கள்; அவை
களால் அவன் கேபாவையும் மிஸ்பாவையும்
கட்டினான்.
அக்காலத்திலே ஞானதிருஷ்டியுள்ள புருஷ ௭
னாகிய அனானீ யூதாவின் இராசாவாகிய ஆசா
வண்டைக்கு வந்து, அவனுடனே சொன்னதா
வது: நீர் உம்முடைய பராபரனாகிய கர்த்தனைச்
சார்ந்துகொள்ளாமல், சூரியாவின் இராசாவைச்
சார்ந்துகொண்டபடியினாலே, சூரியாவுடைய
இராசாவின் இராணுவம் உமது கைக்குத் தப்பிப்
போயிற்று.—மிகவும் ஏராளமான இரதங்களும் ௮
குதிரைக்காரருமுள்ள எத்தியோப்பியரும் லூவி
யரும் பெரிய இராணுவமாயிருந்ததில்லையோ?
நீர் கர்த்தனைச் சார்ந்துகொண்டபோதோவெ
னில், அவர்களை உமது கையில் ஒப்புக்கொடுத்
தாரே.—ஏனெனில் தம்மைநோக்கி உத்தம இரு ௯
தயத்தோடிருக்கிறவர்களுக்குத் தம்முடைய பல
னை விளங்கப்பண்ணும்படிக்கு, கர்த்தருடைய
கண்கள் பூமியெங்கும் சுற்றிப்பார்த்துக்கொண்
டிருக்கின்றன; இதிலே மதியில்லாதவராயிருந்
தீர்; ஆகையால் இதுமுதல்கொண்டு உமக்கு யுத்
தங்கள் இருக்குமென்றான்.—ஆனால் ஆசா ஞா ௰
னதிருஷ்டியுள்ள புருஷன்மேல் மனமடிவாகி,
அதின் நிமித்தம் அவன்மேலே சினமானபடியி
னாலே அவனைக் காவலறையிலே வைத்தான்;
இதல்லாமல் அக்காலத்தில் சனத்தில் சிலரையும்
கொடூரமாய் நடப்பித்தான்.
ஆசாவின் முன் பின் நடபடிகளோவென்றால் ௰௧
இதோ அவைகள் யூதா இஸ்ரவேல் இராசாக்க
ளின் புஸ்தகத்தில் எழுதியிருக்கின்றன.
ஆசா அரசாண்ட இராச்சியத்தின் முப்பத்தொ ௰௨
ன்பதாம் வருஷத்திலே தன் கால்களில் நோய்
கொண்டான்; ஆனால் அவன் வியாதி வெகு உக்
கிரமாயிருந்தாலும், தன்னுடைய வியாதியிலும்
அவன் கர்த்தனை அல்ல, பரிகாரிகளையே தேடி
னான். — ஆசா தன் பிதாக்களோடே நித்திரை ௰௩
அடைந்து, தன்னுடைய இராச்சியத்தின் நாற்
பத்தோராம் வருஷத்திலே மரித்தான்.–தயிலக்கா
ரருடைய வேலையாய்க் கந்தவர்க்கங்களினாலும்

பரிமளங்களினாலும் நிரப்பிவைக்கப்பட்ட மெத்
தையின்மேல் அவனை வளர்த்தி, அவனுக்காக
வெகு திரளான கந்தவர்க்கங்களைக் கொளுத்தி
னபிற்பாடு, அவன் தாவீதின் பட்டணத்தில்
தனக்கு வெட்டிவைத்திருந்த அவனுடைய கல்
லறையிலே அவனை அடக்கம்பண்ணினார்கள்.

## ௰எ. அதிகாரம்.

௧. ஆசாவுக்குப்பின் யோசபாத் என்பவன் அரசாண்டு வாழ்ந்தது. ௭. அவன்
யூதருக்குக் கற்பிக்கும்படி இலேவியரையும் பிரபுக்களையும் அனுப்பினது.
௰. அவனுடைய சத்துருக்கள் பராபரனால் பயமுறுத்தப் பட்டபடியினாலே
அவர்களில் சிலர் அவனுக்குக் காணிக்கையும் கப்பமும் கொண்டுவந்தது.
௰௨. அவனுடைய பெருந்தன்மையும் சேனைத்தலைவரும் சேனைகளும்.

௧ அவன் ஸ்தலத்திலே அவன் குமாரனாகிய யோ
சபாத் இராசாவாகி, இஸ்ரவேலுக்கு எதிரே பலப்
௨ பட்டான்.—அவன் யூதாவின் அரணான பட்ட
ணங்களிலெல்லாம் இராணுவத்தை வைத்து, யூத
தேசத்திலும், தன் தகப்பனாகிய ஆசா பிடித்த எப்
பிராயீமின் பட்டணங்களிலும் தாணயங்களை
௩ வைத்தான்.—கர்த்தர் யோசபாத்தோடிருந்தார்;
ஏனெனில் அவன் தகப்பனாகிய தாவீது முன்
நாள்களில் நடந்த வழிகளில் அவன் நடந்து,
௪ பாகால்களைத் தேடாமல்,—தன் தகப்பனுடைய
பராபரனைத் தேடி, இஸ்ரவேலுடைய செய்கை
யின்படி அல்ல, அவருடைய கற்பனைகளிலே
௫ நடந்துகொண்டான்.-ஆகையால் கர்த்தர் அவன்
கையில் இராச்சியபாரத்தைத் திடப்படுத்தினார்;
யூதகோத்திரத்தார் எல்லாரும் யோசபாத்துக்குக்
காணிக்கைகளைக் கொடுத்தார்கள்; அவனுக்கு
ஐசுவரியமும் கனமும் மிகுதியும் உண்டாயின.-
௬ கர்த்தருடைய வழிகளில் அவன் இருதயம் வெகு
திடனானபோது, அப்புறம் அவன் மேடைகளை
யும் தோப்புகளையும் யூதாவைவிட்டகற்றினான்.
௭ அவன் அரசாண்ட மூன்றாம் வருஷத்தில்
யூதாவின் பட்டணங்களில் உபதேசம்பண்ணும்
படிக்கு, அவன் தன் பிரபுக்களாகிய பென்ஹயி
லையும், ஒபதீயாவையும், சகரீயாவையும், நாத்தா
௮ ன்வேலையும், மிகேயாவையும், — இவர்களோ
டேகூடச் செமாயா, நெத்தனீயா, செபதீயா,
ஆசகேல், சேமீர்மோத், யோனத்தான், அதோ
னீயா, தோபீயா, தோப்பத்தோனியாவென்ற
இலேவியரையும், இவர்களோடேகூட ஆசாரிய
ரான எலிஷாமாவையும், யோராமையும் அனுப்பி
௯ னான்.-இவர்கள் யூதாவிலே உபதேசம்பண்ணி,
கர்த்தருடைய வேதபுஸ்தகத்தை வைத்திருந்து,
யூதாவின் பட்டணங்களிலெல்லாம் திரிந்து,
சனத்தை உபதேசித்தார்கள்.

௰ யூதாவைச் சுற்றியிருக்கிற தேசங்களுடைய
இராச்சியங்களின்மேலெல்லாம் கர்த்தரின் பயங்
கரம் உண்டானதினால், யோசபாத்தோடு யுத்தம்
௰௧ பண்ணாதிருந்தார்கள்.—பெலிஸ்தியரிலும் சிலர்
யோசபாத்துக்குப் பகுதியின் திரவியத்தோடே
கூடக் காணிக்கைகளைக் கொண்டுவந்தார்கள்;
அராபியரும் அவனுக்கு ஏழாயிரத்து எழுநூறு
ஆட்டுக்கடாக்களையும், ஏழாயிரத்து எழுநூறு
வெள்ளாட்டுக்கடாக்களையும் கொண்டுவந்தார்
கள்.—இப்படியே யோசபாத் வரவர மிகுதியும் ௰௨
பெரியவனாகி, யூதாவிலே கோட்டைகளையும்,
இரஸ்துக்களை வைக்கும் பட்டணங்களையும் கட்
டினான்.—யூதாவின் பட்டணங்களில் அவனுக் ௰௩
குப் பெரிய வேலை நடந்தது; எருசலேமிலோ
வென்றால் பராக்கிரமசாலிகளான சேவகர் அவ
னுக்கு இருந்தார்கள்.

தங்கள் பிதாக்களுடைய வம்சங்களின்படி ௰௪
இவர்களுடைய இலக்கமாவது: யூதாவிலே ஆயி
ரத்துச் சேர்வைக்காரரானவர்கள் யாரென்றால்
அத்னாவென்ற சேர்வைக்காரன்; இவனிடத்
திலே பராக்கிரமசாலிகள் மூந்நூறாயிரம்பேர்
இருந்தார்கள். — இவனோடேகூட யோக்னா ௰௫
னென்ற சேர்வைக்காரன்; இவனிடத்தில் இரு
நூற்று எண்பதினாயிரம்பேர் இருந்தார்கள்.-இவ ௰௬
னோடேகூடக் கர்த்தருக்கு உச்சாய சேவகனான
சிக்கிரியின் குமாரனாகிய அமசியாவென்கிறவ
னும் இருந்தான்; இவனிடத்திலே பராக்கிரமசா
லிகள் இருநூறாயிரம்பேர் இருந்தார்கள்.-பென் ௰௭
யமீனிலோவென்றால் எலியாதாவென்ற பராக்
கிரமசாலி இருந்தான்; இவனிடத்திலே வில்லும்
கேடயமும் பிடிக்கிறவர்கள் இருநூறாயிரம்பேர்
இருந்தார்கள்.-இவனோடேகூட யோசபாத்தும் ௰௮
இருந்தான்; இவனிடத்திலே சேவகத்திற்கு ஆயு
தம் அணிந்தவர்கள் நூற்று எண்பதினாயிரம் பேரி
ருந்தார்கள்.— இராசா யூதாவெங்குமுள்ள அர ௰௯
ணான பட்டணங்களிலும் வைத்தவர்களைத் தவிர
இவர்கள் இராசாவைச் சேவித்தவர்கள்தானே.

## ௰அ. அதிகாரம்.

௧. யோசபாத் ஆகாப்போடே சம்பந்தமாகி, கீலேயாத்ராமோத்திற்கு ஏறிவரச்
சம்மதப்பட்டது. ௪. அதிலே ஆகாப் மிகாயாவின் வார்த்தைபின்படி கள்
ளத்தீர்க்கதரிசிகளால் வஞ்சிக்கப்பட்டுக் கொல்லப்பட்டது.

யோசபாத்துக்கு ஐசுவரியமும் கனமும் மிகு ௧
தியும் உண்டாயிருந்தன; ஆனால் அவன் ஆகாப்
போடே சம்பந்தம்கலந்து,—சில வருஷங்கள் ௨
சென்ற பிற்பாடு சமாரியாவிலிருக்கிற ஆகாப்
பண்டைக்கு இறங்கிப்போனான்; அப்போது ஆ
காப் அவனுக்கும் அவனோடிருக்கிற சனத்திற்கு
மாக அநேகம் ஆடுமாடுகளை அடிப்பித்து, கீலே
யாத்திலுள்ள ராமோத்திற்கு ஏறிவர அவனைப்
பயிற்றுவித்தான். — எப்படியெனில் இஸ்ரவே ௩
லின் இராசாவாகிய ஆகாப் யூதாவின் இராசாவா
கிய யோசபாத்தை, கீலேயாத்திலுள்ள ராமோத்
துக்கு என்னோடே வருகிறீரோவென்று கேட்
டதற்கு, அவன், உம்மைப்போல நானும் இருப்
பேன்; உம்முடைய சனத்தைப்போல என்னு
டைய சனமும் இருக்கும்; உம்மோடேகூட
யுத்தத்திற்கு வருகிறேனென்றான்.

ஆனால் பின்னையும் யோசபாத் இஸ்ரவேலின் ௪
இராசாவுடனே, கர்த்தருடைய உத்தரவை இன்
றைக்குக் கேட்டு விசாரியுமே என்றான்.—அப் ௫
போது இஸ்ரவேலின் இராசா நானூறுபேராகிய
தீர்க்கதரிசிகளைக் கூட்டி, நாங்கள் கீலேயாத்தி
லுள்ள ராமோத்தின்மேல் யுத்தம்பண்ணப் போ
கலாமோ போகாதிருக்கலாமோவென்று அவர்

களைக் கேட்டான்; அதற்கு அவர்கள், போயே
றும், பராபரன் அதை இராசாவின் கையில் ஒப்
புக்கொடுப்பாரென்றார்கள்.
௬ ஆனால் யோசபாத், இன்னம் கர்த்தருடைய
தீர்க்கதரிசி யாராகிலும் நாம் அவனிடத்தில் கே
ட்டுவிசாரிக்க இங்கே இல்லையோவென்று கேட்
௭ டான்.—அப்போது இஸ்ரவேலின் இராசா யோ
சபாத்துடனே, கர்த்தரைக் கேட்கிறதற்கு இம்
லாவின் குமாரனாகிய மிகாயாவென்கிற இன்னம்
ஒருவன் இருக்கிறான்; ஆனால் நான் அவனைப்
பகைக்கிறேன்; ஏனெனில் அவன் என்மேல்
நன்மையாக அல்ல; தன் நாள்களிலெல்லாம்
தீமையாகத்தானே தீர்க்கதரிசனம் சொல்லுகிறவ
னென்றான்; அதற்கு யோசபாத், இராசா அப்ப
டிச் சொல்லாராகவென்றான்.
௮ அப்போது இஸ்ரவேலின் இராசா பிரதானி
ஒருவனைக் கூப்பிட்டு, இம்லாவின் குமாரனா
கிய மிகாயாவைச் சீக்கிரமாய் அழைத்துவா
௯ வென்றான்.—இஸ்ரவேலின் இராசாவும் யோச
பாத்தென்ற யூதாவின் இராசாவுமோவென்றால்,
சமாரியாவின் ஒலிமுகவாசலுக்கு முன்னான
விசாலத்திலே, அவரவர் தங்கள் வஸ்திரங்களைத்
தரித்துக்கொண்டவர்களாய் தம்தம் ஆசனத்தில்
உளுக்காந்திருந்தார்கள்; சகல தீர்க்கதரிசிகளும்
அவர்களுக்குமுன்பாகத் தீர்க்கதரிசனம் சொல்
௰ லிக்கொண்டிருந்தார்கள்.—கெனானாவின் குமா
ரனாகிய சிதேக்கியா தனக்கு இருப்புக்கொம்பு
களை உண்டாக்கி, இவைகளால் சூரியரை அவர்
களை நிர்மூலமாக்கும்மட்டும், நீர் முட்டிப்போ
டுவீரென்று கர்த்தர் சொல்லுகிறாரென்றான்.—
௰௧ சகல தீர்க்கதரிசிகளும் அதற்கு இசைவாய்த்
தீர்க்கதரிசனம் சொல்லி, கீலேயாத்திலுள்ள ரா
மோத்திற்குப் போயேறும், உமக்கு வாய்க்கும்,
கர்த்தர் அதை இராசாவின் கையில் ஒப்புக்கொ
டுப்பாரென்றார்கள்.
௰௨ மிகாயாவை அழைக்கப்போன ஆள் அவனு
டனே, இதோ தீர்க்கதரிசிகளின் வார்த்தைகள்
ஏகவாக்காய் இராசாவின்மேல் நன்மையாக இ
ருக்கின்றது; உம்முடைய வார்த்தையும் அவர்க
ளில் ஒருவர் வார்த்தையைப்போல இருக்கும்ப
௰௩ டிக்கு நன்மையாய்ப் பேசுமேயென்றான்.-மிகா
யாவோவெனில் என்னுடைய பராபரன் சொல்
வதையே பேசுவேனென்று கர்த்தருடைய சீவ
னைக்கொண்டு சொல்லுகிறேனென்றான்.
௰௪ அவன் இராசாவண்டைக்கு வந்தபோது,
இராசா அவனுடனே, மிகாயாவே, நாங்கள் கீ
லேயாத்திலுள்ள ராமோத்தின்மேல் யுத்தம்பண்
ணப் போகலாமோ, போகாதிருக்கலாமோ என்
றான்; அதற்கு இவன் போயேறுங்கள்; உங்களு
க்கு வாய்க்கும்; உங்கள் கையில் ஒப்புக்கொடுக்
௰௫ கப்படுவார்களென்றான்.—இராசா அவனுடனே,
நீ கர்த்தருடைய நாமத்திலே நிசத்தைமாத்திரம்
என்னோடே சொல்ல, நான் எத்தனைதரம் உன்
னை ஆணையிட்டுக்கொள்ள வேண்டுமென்றான்.-
௰௬ அப்போது அவன், இஸ்ரவேலெல்லாம் மேய்ப்
பனில்லாத ஆடுகளைப்போல பர்வதங்களில்
சிதறப்பட்டதைக் கண்டேன்; அப்போது கர்த்
தர் இவர்களுக்கு ஆண்டவனில்லை; அவரவர்
தம்தம் வீட்டிற்குச் சமாதானத்தோடே திரும்பக்
கடவர்களென்று உரைத்தாரென்றான். — அப் ௰௭
போது இஸ்ரவேலின் இராசா யோசபாத்துட
னே, இவன் என்மேலே தீமையாயல்லாமல்,
நன்மையாய்த் தீர்க்கதரிசனம் சொல்லுகிறவன்
அல்லவென்று நான் உம்மோடே சொல்லவில்
லையோவென்றான்.—அப்புறம் அவன் சொன்ன ௰௮
தாவது: இப்போதும் கர்த்தருடைய வார்த்தை
யைக் கேளுங்கள்; கர்த்தர் தம்முடைய ஆசனத்
தின்மேல் உளுக்காந்திருக்கிறதையும், பரத்தின்
சேனையெல்லாம் அவர் வலதுபக்கத்திலும் அவர்
இடதுபக்கத்திலும் நிற்கிறதையும் கண்டேன்.—
அப்போது கர்த்தர் இஸ்ரவேலின் இராசாவாகிய ௰௯
ஆகாப் போயேறிக் கீலேயாத்திலுள்ள ராமோத்
தில் விழும்படிக்கு, அவனைப் பயிற்றுவிப்பவன்
யாரென்று கேட்டதற்கு, ஒருவர் இப்படியும்
ஒருவர் அப்படியுமாகச் சொன்னார்கள்.-ஆனால் ௨௰
ஒரு ஆவி புறப்பட்டு வந்து, கர்த்தருக்குமுன்
பாக நின்று நான் அவனைப் பயிற்றுவிப்பேன்
என்றது; எதினால் என்று கர்த்தர் அதைக் கேட்
டார். — அப்போது அது, நான் புறப்பட்டுப் ௨௧
போய், அவனுடைய எல்லாத் தீர்க்கதரிசிகளின்
வாயிலும் பொய்யின் ஆவியாயிருப்பேன் என்ற
து; அப்போது அவர், நீ அவனைப் பயிற்றுவித்து,
அப்படியாகவும்பண்ணுவாய்; போய் அப்படிச்
செய்யென்றார். — இப்போதும் இதோ கர்த்தர் ௨௨
பொய்யின் ஆவியை இந்த உம்முடைய தீர்க்கத
ரிசிகளின் வாயிலே கட்டளையிட்டார்; கர்த்தர்
உன்மேலே தீமையாகப் பேசினாரென்றான்.
அப்போது கெனானாவின் குமாரனாகிய சிதேக் ௨௩
கியா சேர்ந்துவந்து, மிகாயாவைக் கன்னத்தில்
அடித்து, உன்னோடேபேச, கர்த்தருடைய ஆவி
எந்தவழியாய் என்னைவிட்டுத் தாண்டிப்போ
யிற்றென்றான்.—அதற்குமிகாயா, இதோ நீ ஒளித் ௨௪
துக்கொள்ள அறைவீடு அறைவீடாகப் பதுங்
கும் அந்நாளிலே அதைப் பார்ப்பாயென்றான்.
அப்போது இஸ்ரவேலின் இராசா சொன்ன ௨௫
தாவது: நீங்கள் மிகாயாவைப் பிடித்து அவனைப்
பட்டணத்துத் தலைவனாகிய ஆமோனண்டைக்
கும், இராசகுமாரனாகிய யோவாசண்டைக்கும்
திரும்பக் கொண்டுபோய், — நீங்கள் இவனைச் ௨௬
சிறைச்சாலையில் வைத்து, நான் சமாதானத்தோ
டே திரும்பிவரும்மட்டும், அவனுக்கு ஒடுக்கத்
தின் அப்பத்தையும் ஒடுக்கத்தின் தண்ணீரையும்
சாப்பிடக் கொடுங்கள் என்கிறதை இராசா சொ
ன்னாரென்று சொல்லுங்களென்றான்.—அப்போ ௨௭
து மிகாயா, நீர் சமாதானத்தோடே திரும்பவே
திரும்பினால், கர்த்தர் என்னைக்கொண்டு பேசின
தில்லையென்று சொல்லி, சனக்கும்புகளாகிய
நீங்களெல்லாரும் இதைக் கேளுங்களென்றான்.
அப்படியே இஸ்ரவேலின் இராசாவும், யோ ௨௮
சபாத்தென்ற யூதாவின் இராசாவும் கீலேயாத்

திலுள்ள ராமோத்துக்கு ஏறிப்போனார்கள்.—
௨௯ ஆனால் இஸ்ரவேலின் இராசா யோசபாத்துட
னே, நான் வேஷம்மாறி யுத்தத்திலே வருவேன்;
நீரோவென்றால் உம்முடைய வஸ்திரங்களைத்
தரித்திருமென்று சொல்லி, இஸ்ரவேலின் இரா
சா வேஷம்மாறினான்; அப்படியே யுத்தத்திலே
௩௰ வந்தான். — சூரியாவின் இராசாவோவெனில்,
தனக்கிருக்கிற இரதங்களின் தலைவருக்கு, நீங்
கள் இஸ்ரவேலின் இராசா ஒருவனோடொழிய,
சிறியவனோடும் பெரியவனோடும் யுத்தம்பண்ணா
௩௧ திருங்களென்று கற்பித்திருந்தான். — ஆனது
கொண்டு இரதங்களின் தலைவர் யோசபாத்தைக்
காண்கையில், இவன் இஸ்ரவேலின் இராசா
வென்று சொல்லி யுத்தம்பண்ண அவனைச் சுற்
றினார்கள்; ஆனால் யோசபாத் கூக்குரலிட்டான்;
அப்போது கர்த்தர் அவனுக்கு அநுசாரியாகி,
பராபரன் அவர்களை அவனைவிட்டு விலக்கினார்.-
௩௨ இவன் இஸ்ரவேலின் இராசா அல்லவென்று இர
தங்களின் தலைவர் கண்டபோது அவனைவிட்டுத்
௩௩ திரும்பினார்கள்.—ஆனால் ஒரு மனுஷன் நினையா
மல் வில்லை நாணேற்றி, இஸ்ரவேலின் இராசா
வைச் சீராவின் சந்துகளுக்குள்ளே எய்துபோட்
டான்; அப்போது அவன் இரதக்காரனுடனே, நீ
உன் கையைத்திருப்பி என்னை இராணுவத்தி
லிருந்து அப்புறப்படுத்து; ஏனென்றால் காயப்
௩௪ பட்டிருக்கிறேனென்றான்.—அன்றையத்தினம்
யுத்தம் அதிகரிக்கையில், இஸ்ரவேலின் இராசா
சூரியருக்கு எதிராக இரதத்தின்மேலே சாயங்
காலம்மட்டும் நின்றிருந்து, சூரியன் அஸ்தமிக்
கும் நேரத்திலே சென்றுபோனான்.

## ௰௯. அதிகாரம்.

௧. யோசபாத் தன் இராசசிம்மாசனத்திற்குத் திரும்பிவந்து ஏகூவினால் கண்டிக்கப்பட்டது. ௫. நியாயாதிபதிகளுக்கும், ௮. ஆசாரியர்களுக்கும், இலேவியர்களுக்கும் அவன் கற்பித்த கற்பனை.

௧ யூதாவின் இராசாவாகிய யோசபாத்தோவென்
றால், எருசலேமிலிருக்கிற தன்னுடைய வீட்டிற்
௨ குச் சமாதானத்தோடே திரும்பிவந்தான்.—அப்
போது அனானீயின் குமாரனாகிய ஏகூவென்ற
ஞானதிருஷ்டியுள்ள புருஷன் புறப்பட்டு, அவ
னைச் சந்தித்து இராசாவாகிய யோசபாத்துடனே
சொன்னதாவது: ஆகாதவனுக்கு ஒத்தாசைசெய்
து, கர்த்தரைப் பகைக்கிறவர்களை நீர் சிநேகிக்க
லாமோ? இதின்நிமித்தம் கர்த்தராலே கடுங்கோ
பம் உம்முடையமேல் வருகிறதாயிருந்தது. —
௩ ஆகிலும் நீர் விக்கிரகத்தோப்புகளைத் தேசத்தை
விட்டகற்றிப் பராபரனைத் தேட உம்முடைய
இருதயத்தை நேராக்கின சற்குண காரியங்கள்
உம்மிடத்திலே காணப்பட்டன என்றான்.
௪ அப்படியே யோசபாத் எருசலேமிலே வாச
மாயிருந்து, திரும்பப் பெர்சேபாவைத்துவக்கி,
எப்பிராயீம் மலைத்தேசம்மட்டுமுள்ள சனத்திற்
குள்ளே பயணமாய்ப்போய், அவர்களைத் தங்கள்
பிதாக்களுடைய பராபரனாகிய கர்த்தர் அண்
டைக்குத் திரும்பப்பண்ணினான்.—அவன் யூதா
வின் அரணான சகல பட்டணங்களாகிய ஒவ்
வொரு பட்டணங்களிலே நியாயாதிபதிகளை
வைத்து,—நியாயாதிபதிகளோடே சொன்னதா ௬
வது: நீங்கள் செய்கிற காரியத்திற்காக எச்சரிக்
கையாயிருங்கள்; ஏனெனில் நீங்கள் மனுஷனு
டைய கட்டளையினால் அல்ல, கர்த்தருடைய
கட்டளையினாலே நியாயம் விசாரிக்கிறீர்கள்;
நியாயம்விசாரிக்கிற காரியத்திலே அவர் உங்க
ளுடனே இருக்கிறார்.—இப்போதும் கர்த்தருக் ௭
குப் பயப்படுதல் உங்கள்மேல் இருக்கக்கடவது;
சாவதானமாயிருந்து அதைச் செய்யுங்கள்; ஏனெ
ன்றால் உங்கள் பராபரனாகிய கர்த்தரிடத்திலே
அநியாயமும் முகதாட்சணியமும் பரிதானம்
வாங்குதலுமில்லையென்றான்.
எருசலேமிலும் யோசபாத் இலேவியரிலும், ௮
ஆசாரியரிலும், இஸ்ரவேலுடைய வம்சத்தலை
வரிலும், சிலரைக் கர்த்தருடைய நியாயத்திற்
கும் வழக்குக்காரியங்களுக்கும் விசாரிப்புக்கா
ரராக்கி, அவர்களை எருசலேமுக்குத் திரும்பிக்
கொள்ளப்பண்ணி, — அவர்களுக்குக் கற்பித்த ௯
தாவது: நீங்கள் கர்த்தருக்குப் பயந்து, உண்மை
யோடும் உத்தம இருதயத்தோடும் உத்தியோகம்
செய்து,—தங்கள் பட்டணங்களிலே குடியிருக் ௰
கிற உங்கள் சகோதரரிடத்திலிருந்து விதம்வித
மான இரத்தப்பழிக் காரியங்களுக்கும், விதம்வி
தமான பிரமாணத்திற்கும், கற்பனைக்கும், கட்ட
ளைகளுக்கும், நியாயங்களுக்கும் அடுத்த எந்தவ
ழக்கு உங்களண்டைக்கு வந்தாலும், அவர்கள்
கர்த்தருக்கு நேரஸ்தராகி,உங்கள்மேலும் உங்கள்
சகோதரர்மேலும் கடுங்கோபம் வராதபடிக்கு
நீங்கள் அவர்களை எச்சரியுங்கள், நீங்கள் நேரஸ்
தராகாதபடிக்கு இப்படிச் செய்வீர்களாக. —
இதோ ஆசாரியனாகிய அமரீயா கர்த்தருக்கடுத்த ௰௧
எல்லா நியாயத்திலும், இஸ்மவேலின் குமாரனா
கிய செப்தியாவென்ற யூதா வீட்டின் தலைவன்
இராசாவுக்கடுத்த எல்லா நியாயத்திலும் உங்க
ளுக்குப் பெரியவர்கள்; இலேவியரான ஆதிக்க
க்காரரும் உங்களுக்குமுன்பாக இருக்கிறார்கள்;
நீங்கள் பலப்பட்டு உத்தியோகங்கள் செய்
யுங்கள்; நல்லவனோடே கர்த்தர் இருப்பாரென்
றான்.

## ௨௰. அதிகாரம்.

௧. யோசபாத் பயத்தோடே உபவாசத்தைக் கட்டளையிட்டது. ௫. அவனுடைய பிரார்த்தனை. ௰௪. எகியேலின் தீர்க்கதரிசனம். ௨௰. யோசபாத் சனங்களைத் திடப்படுத்திக் கர்த்தரைத் துதிக்கும்படி பாட்டகரை வைத்தது. ௨௨. சத்துருக்களின் அழிவு. ௨௬. சனங்கள் ஸ்தோத்திரப் பள்ளத்தாக்கிலே கர்த்தரைத் துதித்துத் திரும்பினது. ௩௧. யோசபாத்தின் ஆளுகை. ௩௫. அவன் அகசியாவோடு செய்த கப்பல்கள் எலியேசருடைய தீர்க்கதரிசனத்தின்படி உடைந்தது.

இதற்குப்பிற்பாடு சம்பவித்ததேதென்றால்,மோ ௧
வாப் புத்திரரும், அம்மோன் புத்திரரும், அவர்க
ளோடே அம்மோனியருக்கு அப்புறத்தாரான
மனுஷரும்கூட யோசபாத்தின்மேல் யுத்தம்
பண்ண வந்தார்கள்.—சிலர் வந்து, யோசபாத் ௨
துக்கு அதை அறிவித்து, உம்முடையமேல் ஏரா
ளமான சனம் கடலுக்கு அக்கரையிலிருக்கிற
சூரியப்புறத்திலிருந்து வருகின்றது; இதோஅவர்

கள் எங்கேதியாகிய ஆத்சோம்தாமாரில் இருக்
௩ கிறார்களென்றார்கள். — அப்போது யோசபாத்
பயந்து, கர்த்தரைத் தேடுகிறதற்குத் தன் முகத்
தைத் திருப்பி, யூதாவெங்கும் உபவாசத்தைக்
௪ கூறுவித்தான்.— அப்படியே யூதசனங்கள் கர்த்த
ரிடத்திலே சகாயம்தேடக் கூடினார்கள்; யூதாவி
லுள்ள எல்லாப் பட்டணங்களிலும் இருந்து
மனுஷர் கர்த்தரைத் தேடவந்தார்கள்.
௫ அப்போது யோசபாத் கர்த்தருடைய வீட்டி
லே புதுப்பிரகாரத்து முகனையிலே, யூதசனங்க
ளும் எருசலேமியரும் கூடின சபையிலே நின்று
௬ சொன்னதாவது:—எங்கள் பிதாக்களின் பராபர
னாகிய கர்த்தாவே, பரமண்டலங்களிலிருக்கிற
தேவரீர் அல்லவோ பராபரன்; தேவரீர் சாதிகளு
டைய இராச்சியங்களையெல்லாம் ஆளுகிறவர்;
உம்முடைய கரத்திலே வல்லமையும் பராக்கிர
மமும் உண்டாயிருக்கின்றன; ஒருவரும் உம்
௭ மோடு எதிர்த்து நிற்கக்கூடாது.—எங்கள் பரா
பரனாகிய தேவரீர் உம்முடைய சனமாகிய இஸ்ர
வேலுக்குமுன்பாக இந்தத் தேசத்துக் குடிகளைத்
துரத்திவிட்டு, இதை உம்முடைய பிரியனாகிய
ஆபிரகாமுடைய வித்திற்கு என்றைக்குமென்று
௮ கொடுத்ததில்லையோ?—ஆனதுகொண்டு இதிலே
குடியிருந்து, இதிலே உம்முடைய நாமத்திற்
கென்று ஒரு பரிசுத்த ஸ்தலத்தை உமக்குக் கட்
௯ டினார்கள். — எங்கள்மேலே பட்டையம், ஆக்
கினை, பெருவாரிக்காய்ச்சல், பஞ்சம் முதலான
பொல்லாப்பு வந்தால், அப்போது உம்முடைய
நாமம் இந்த வீட்டிலிருக்கிறபடியினாலே நாங்கள்
இந்த வீட்டிற்கும் உமக்கு முன்பாகவும் வந்து
நின்று, எங்கள் இடுக்கணில் உம்மை நோக்கிக்
கூப்பிடுகையில், தேவரீர் கேட்டு இரட்சிப்பீர்
௰ என்று அப்போது சொல்லப்பட்டதே.-இப்போ
தும் இதோ இஸ்ரவேலர் எகிப்துதேசத்திலிருந்து
வருகிறபோது, அம்மோன் புத்திரர், மோவாபி
யர், சேயீர் மலைத்தேசத்தாருடைய சீமைகள் வழி
யாய்ப் போக நீர் உத்தாரம் கொடுத்ததில்லை; ஆ
கையால் அவர்களை விட்டுவிலகி அவர்களுக்குக்
௰௧ கேடுசெய்யாதே போனார்களே. — இப்போதும்
இதோ அவர்கள் எங்களுக்கு நன்மைக்குத் தீமை
யைச் சரிக்கட்டி, தேவரீர் எங்களைச் சுதந்தரிக்
கப்பண்ணின உம்முடைய சுதந்தரத்தில் இருந்து
௰௨ எங்களைத் துரத்திவிட வருகிறார்கள். — எங்கள்
பராபரனே, அவர்களை நீர் நியாயம்தீரீரோ?
ஏனெனில் எங்களுக்கு விரோதமாக வந்த இந்த
ஏராளமான கூட்டத்திற்கு முன்பாக நிற்க எங்
களிலே பலனில்லை; நாங்கள் செய்யவேண்டி
யதையும் நாங்கள் அறிகிறதுமில்லை; ஆகையால்
எங்கள் கண்கள் உம்மை நோக்கிக்கொண்டிருக்
கின்றனவென்றான்.
௰௩ யூதகோத்திரத்தார் அனைவரும், அவர்கள் குழந்
தைகளும், அவர்கள் பெண்சாதிகளும், அவர்கள்
குமாரரும்கூட கர்த்தருக்குமுன்பாக நின்றார்
௰௪ கள்.—அப்போது சபையின் நடுவிலிருக்கிற மத்
தனீயாவின் குமாரனாகிய எகியேலின் மகனான
பேனாயாவுக்குப் பிறந்த சகரீயாவின் குமாரன்
யகாசியேலென்ற ஆசாப்பின் புத்திரரில் ஒருவ
னான இலேவியனின்மேலே கர்த்தருடைய ஆவி
இறங்கினதினால் அவன் சொன்னதாவது:—எல் ௰௫
லா யூதகோத்திரத்தாரே, எருசலேமின் குடிக
ளே, இராசாவாகிய யோசபாத்தே, கவனியுங்கள்;
நீங்கள் அந்த ஏராளமான கூட்டத்திற்குப் பயப்
படாமலும் தத்தளிக்காமலும் இருங்களென்று
கர்த்தர் உங்களுக்குச் சொல்லுகிறார்; ஏனெனில்
அந்த யுத்தம் உங்களுடையதல்ல, பராபரனுடை
யது. — நாளை அவர்களுக்கு எதிராக இறங்கிப் ௰௬
போங்கள்; இதோ அவர்கள் சிஸ்ரின் மேட்டுவ
ழியாய் ஏறிவருகிறார்கள்; நீங்கள் அவர்களை எரு
வேல் வனாந்தரத்திற்கு எதிரான பள்ளத்தாக்கின்
கடையாந்தரத்திலே கண்டு சந்திப்பீர்கள். —
இந்த யுத்தத்தைப் பண்ணுபவர்கள் நீங்களல்ல; ௰௭
யூதா மனுஷரே, எருசலேம் ஊராரே, நீங்கள்
தரித்து நின்றுகொண்டு, உங்களோடிருக்கிற கர்த்
தரின் இரட்சிப்பைப் பாருங்கள்; பயப்படாம
லும் தத்தளிக்காமலும் இருங்கள்; நாளைக்கு
அவர்களுக்கு எதிராகப் புறப்படுங்கள்; ஏனெ
னில் கர்த்தர் உங்களோடிருக்கிறாரென்றான்.—
அப்போது யோசபாத் தரைமட்டும் முகம்குனிந் ௰௮
தான்; எல்லா யூதகோத்திரத்தாரும் எருசலேமின்
குடிகளும் கர்த்தரைப் பணிந்துகொள்ளக் கர்த்த
ருக்குமுன்பாகத் தாழவிழுந்தார்கள்.—கோகாத் ௰௯
தியரின் புத்திரரிலும் கோராகியரின் புத்திரரி
லும் இருந்த இலேவியர் எழுந்திருந்து, இஸ்ரவே
லின் பராபரனாகிய கர்த்தரை மகா சத்தத்தோ
டே மிகுதியுமாய்த் துதித்தார்கள்.
அவர்கள் அதிகாலமே எழுந்திருந்து, தெக்கொ ௨௰
பாவின் வனாந்தரத்திற்குப் புறப்பட்டார்கள்;
புறப்படுகையில் யோசபாத் நின்று, யூதாவே,
எருசலேமின் குடிகளே, என்னைக் கேளுங்கள்;
உங்கள் பராபரனாகிய கர்த்தர்மேலே விசுவாசி
யுங்கள்; அப்போது நிச்சயப்படுவீர்கள்; அவரு
டைய தீர்க்கதரிசிகளை நம்புங்கள்; அப்போது
உங்களுக்கு வாய்க்குமென்றான். — பிற்பாடு ௨௰௧
அவன் சனத்தோடே ஆலோசனைபண்ணி, பரிசு
த்தமுள்ள மகத்துவத்தைத் துதிக்கவும், ஆயுதம்
அணிந்தவர்களுக்கு முன்னாக நடந்துபோய்,
கர்த்தரைத் துதியுங்கள்;ஏனெனில் அவர் கிருபை
என்றும் உள்ளதென்று கர்த்தரைப் பாடவும் பா
டகரை நிறுத்தினான்.
அவர்கள் கெம்பீரத்தோடும் துதியோடும் பா ௨௰௨
டத் துவக்குகிற நேரத்திலேயென்றால், கர்த்தர்
யூதாவுக்கு விரோதமாய் வந்த அம்மோன் புத்திர
ரையும், மோவாபியரையும், சேயீர் மலைத்தேசத்
தாரையும், ஒன்றுக்கொன்று விரோதிக்கிற
பதிவிடைகளாய்ப் போகப்பண்ணுகிறதினாலே
அவர்கள் வெட்டுண்டு விழுந்தார்கள். — அதே ௨௰௩
னென்றால் அம்மோன் புத்திரரும், மோவாபிய
ரும், சேயீர் மலைத்தேசக் குடிகளைச் சங்கரிக்க
வும் அழிக்கவும் அவர்களுக்கு விரோதமாய்
எழும்பினார்கள்; சேயீர் குடிகளை அழித்துத் தீர்ந்

தபோது, தாங்களும் தங்களில் ஒருவருக்கொருவர் அழியத்தக்கவிதமாய்க் கைகலந்தார்கள்.
௨௪ யூதாமனுஷர் வனாந்தரத்திலுள்ள சாமக்கூட்
டண்டையிலே வந்து, அந்த ஏராளமான கூட்டமிருக்கும் திக்கை நோக்குகிறபோது, இதோ அவர்கள் தரையிலே விழுந்துகிடக்கிற பிரேதங்களென்று கண்டார்கள்; ஒருவரும் தப்பினதில்
௨௫ லை. — அப்போது யோசபாத்தும் அவனுடைய சனமும் அவர்கள் உடைமைகளைக் கொள்ளையிட வந்து, அவர்களில் பரிபூரணமான ஆஸ்தியையும் பிரேதங்களிலிருக்கிற ஆடை ஆபரணங்களையும் கண்டு, இனி எடுக்கமாட்டாத சுமையாய் எடுத்துக்கொண்டார்கள்; மூன்றுநாளாய்க் கொள்ளையிட்டார்கள்; ஏனெனில் அது வெகு
௨௬ வாயிருந்தது. — நாலாம் நாளிலே ஸ்தோத்திரப் பள்ளத்தாக்கிலே கூடினார்கள்; ஏனெனில் அங்கே கர்த்தருக்கு ஸ்தோத்திரம் செலுத்தினார்கள்; ஆனதுகொண்டு அவ்விடத்திற்குஇந்நாள்வரைக்குமிருக்கிற ஸ்தோத்திரப்பள்ளத்தாக்கென்றபேரைத் தரித்தார்கள்.
௨௭ பிற்பாடு எல்லா யூதமனுஷரும் எருசலேம் ஊராரும் அவர்களுக்கு முன்னாலே யோசபாத்தும் மகிழ்ச்சியோடே எருசலேமுக்குத் திரும்பி வரப் புறப்பட்டார்கள்; ஏனென்றால் கர்த்தர் அவர்களை அவர்கள் சத்துருக்களைத்தொட்டு மகி
௨௮ ழ்ச்சியாக்கியிருந்தார்.— அவர்கள் தம்புருகளோடும் சுரமண்டலங்களோடும் பூரிகைகளோடும் எருசலேமிலிருக்கிற கர்த்தருடைய வீட்டிற்கு
௨௯ வந்தார்கள்.—கர்த்தர் இஸ்ரவேலின் சத்துருக்களோடு யுத்தம்பண்ணினாரென்று கேள்விப்பட்ட அந்தத் தேசங்களின் இராச்சியங்கள்மேலெல்லாம் பராபரனால் பயங்கரம் உண்டாயிற்று.—
௩௰ அப்படியே யோசபாத்தின் இராச்சியபாரம் அமரிக்கையாயிருந்தது; அவனுடைய பராபரன் சுற்றுப்புறத்தாரால் யுத்தமில்லாத இளைப்பாறுதலை அவனுக்குக் கட்டளையிட்டார்.
௩௧ யோசபாத் யூதாவை அரசாண்டான்; அவன் இராசாவாகிறபோது, முப்பத்தைந்து வயதாயிருந்து, இருபத்தைந்து வருஷமாய் எருசலேமிலே அரசாண்டான்; சில்கீயின் குமாரத்தியாகிய அவனுடைய தாயின்பேர் அசுபாள். —
௩௨ அவன் தகப்பனாகிய ஆசாவின் வழியிலே நடந்து, அதை விட்டுவிலகாதிருந்து, கர்த்தரின் பார்
௩௩ வைக்குச் செம்மையானதைச் செய்தான்.—ஆகிலும் மேடைகள் தள்ளப்பட்டதில்லை; ஏனெனில் சனம் தங்கள் இருதயத்தைத் தங்கள் பிதாக்களின் பராபரனுக்கு இன்னம் நேராக்காதிருந்
௩௪ தது. — யோசபாத்துடைய முன்பின் நடபடியான மற்ற வர்த்தமானங்களோவென்றால், இதோ அவைகள் இஸ்ரவேல் இராசாக்களின் புஸ்தகத்தில் ஏறின ஆனானியின் குமாரனாகிய ஏகூவின் வசனங்களில் எழுதியிருக்கின்றன.
௩௫ அதற்குப்பிற்பாடு யூதாவின் இராசாவாகிய யோசபாத் பொல்லாப்பைச் செய்கிறவனான அக்சீயாவென்ற இஸ்ரவேலின் இராசாவோடே
தோழமைபண்ணினான்.—யாத்திரைபோகிறதற் ௩௬
குக் கப்பல்களைச் செப்பனிட அவனோடே தோழமைபண்ணினான்; அப்படியே எத்சேயோன் கேபேரிலே கப்பல்களைச் செப்பனிட்டார்
கள். — ஆனால் மரேசா ஊரானாகிய தொதாவா ௩௭
வின் குமாரனான எலியேசர் யோசபாத்துக்கு விரோதமாகத் தீர்க்கதரிசனம் சொல்லி, நீர் அக்சீயாவோடே தோழமைபண்ணினபடியினாலே, கர்த்தர் உம்முடைய கிரியைகளை முறித்துப் போட்டாரென்றான்; அப்படியே கப்பல்கள் யாத்திரை போகக்கூடாமல் உடைந்தன

## ௨௧. அதிகாரம்.

௧. யோசபாத்துக்குப்பின் யோராம் இராசாவாகி அவனுடைய சகோதரரைக் கொன்றது. ௫. அவனுடைய கெட்ட ஆளுகை. ௮. ஏதோமியரும், லீப்னாவூரும், கலகம்செய்தது. ௰௨. தீர்க்கதரிசியாகிய எலியா அவனுக்கு விரோதமாக எழுதினது. ௰௬. பெலிஸ்தியர்களும் அராபியரும் அவனை நெருக்கினது. ௰௮. அவனுடைய மீளாத வியாதியும், கெட்ட மரணமும், அடக்கம்பண்ணப்பட்ட இடமும்.

யோசபாத் தன் பிதாக்களோடே நித்திரை ௧
அடைந்தபின், தாவீதின் பட்டணத்திலே தன் பிதாக்களண்டையிலே அடக்கம்பண்ணப்பட்டான்; அவன் ஸ்தலத்திலே அவன் குமாரனான யோராம் இராசாவானான்.
யோசபாத்தின் குமாரராகிய அசரீயா, எகி ௨
யேல், சகரீயா, ஆசரீயா, மிகவேல், செப்பத்தியாவென்ற சகோதரர் அவனுக்கு இருந்தார்கள்; இவர்களெல்லாரும் இஸ்ரவேலின் இராசாவா
கிய யோசபாத்தின் குமாரரானவர்கள்.—இவர்க ௩
ளுக்கு இவர்களுடைய தகப்பன் வெள்ளியும் பொன்னும் உச்சிதங்களுமான அநேகம் காணிக்கைகளையும், யூதாவிலே அரணான பட்டணங்களையும் கொடுத்தான்; ஆனால் யோராம் தலைச்சனானபடியினாலே அவனுக்கு இராச்சியத்தைக்
கொடுத்தான். — யோராம் தன் தகப்பனுடைய ௪
இராச்சியபாரத்திற்கு வந்து பலன்கொண்ட பிற்பாடோவெனில், அவன் தன்னுடைய எல்லாச் சகோதரரையும் இஸ்ரவேலின் பிரபுக்களிலே சிலரையும்கூடப் பட்டயத்தால் கொன்று போட்டான்.
யோராம் இராசாவாகிறபோது, முப்பத்திரண்டு ௫
வயதாயிருந்து, எட்டு வருஷமாக எருசலேமில்
அரசாண்டான்.—அவன் இஸ்ரவேல் இராசாக் ௬
களின்வழியில் நடந்து, ஆகாப்பின் வீட்டார் செய்ததுபோலச் செய்தான்; ஏனெனில் ஆகாப்பின் குமாரத்தி அவனுக்குப் பெண்சாதியாயிருந்தாள்; அவன் கர்த்தரின் பார்வைக்குப் பொல்
லாப்பானதைச் செய்தான். — கர்த்தரோவென் ௭
றால் தாவீதுக்கும் அவன் குமாரருக்கும் சகல நாளும் ஒரு விளக்கைக் கட்டளையிடுவோமென்று சொல்லி, அவனுக்குப் பண்ணின உடம்படிக்கையின் நிமித்தம் தாவீதின் வீட்டைக்கெடுக்கச் சித்தமில்லாதிருந்தார்.
அவன் நாள்களில் யூதாவுடைய கையின்கீழி ௮
ருந்த ஏதோமியர் மருளவிழுந்து, தங்கள்மேல்
ஒரு இராசாவை வைத்தார்கள்.—அதற்காக யோ ௯

ராம் தன் பிரபுக்களோடும் தன் எல்லா இரதங்க
ளோடும் புறப்பட்டுப்போனான்; அவன் இராத்
திரியில் எழுந்திருந்து, தன்னை வளைந்துகொண்ட
ஏதோமியரையும் இரதங்களின் தலைவரையும்
௰ முறியடித்தான்.—ஆகிலும் யூதாவுடைய கையின்
கீழிருந்த ஏதோமியர் இந்நாள்வரைக்கும் இருக்
கிறதைப்போல, மருளவிழுந்தார்கள்; அவன் தன்
பிதாக்களின் பராபரனாகிய கர்த்தரை விட்டப
டியினாலே, அக்காலத்திலே லீப்னாபட்டணமும்
அவன் கையின்கீழிருந்து மருளவிழுந்தது.
௰௧ அவன் யூதாவுடைய மலைகளின்மேல் மேடை
களையும் உண்டாக்கி, எருசலேமின் குடிகளைச்
சோரம்போகப்பண்ணி, யூதாவை அதற்கு ஏவி
௰௨ விட்டான்.—அப்போது தீர்க்கதரிசியாகிய எலி
யா எழுதியிருந்த ஒரு நிருபம் அவனண்டைக்கு
வந்தது; அதின் விவரமாவது: உம்முடைய தகப்
பனான தாவீதின் பராபரனாகிய கர்த்தர் உரைக்கிற
தேதெனில், நீ உன் தகப்பனாகிய யோசபாத்தின்
வழிகளிலும், யூதாவின் இராசாவாகிய ஆசாவின்
௰௩ வழிகளிலும் நடவாமல்,—இஸ்ரவேல் இராசாக்க
ளின் வழியிலே நடந்து, ஆகாப்புடைய வீட்டின்
சோரமார்க்கத்திற்கு ஒத்தபடியே யூதாவையும்
எருசலேமின் குடிகளையும் சோரம்போகப்பண்
ணி, உன்னைப்பார்க்கிலும் நல்லவர்களாயிருந்த
உன் தகப்பன் வீட்டாரான உன் சகோதரரையும்
௰௪ கொன்றுபோட்டபடியினாலே,—இதோ கர்த்தர்
உன்னுடைய சனத்தையும், உன் பிள்ளைகளையும்,
உன் பெண்சாதிகளையும், உனக்கு உண்டானதெ
ல்லாவற்றையும் மகா வாதையாக வாதிப்பார்.—
௰௫ நீயோவென்றால் ரோகத்தினாலே உன் குடல்கள்
நாளுக்குநாள் இற்றுவிழுந்தனிலும் உன் குடல்
களின் ரோகமான மகா வியாதிகளினாலே வாதிக்
கப்படுவாயென்பதுதானே.
௰௬ அப்படியே கர்த்தர் பெலிஸ்தியரின் ஆவி
யையும், கூஷியரின் அயல்தேசத்தாரான அரா
பியரின் ஆவியையும் யோராமுக்கு விரோதமாக
௰௭ எழுப்பினார். — இவர்கள் யூதாவில் வந்தேறி,
அதற்குள் புகுந்து, இராசாவின் வீட்டில் அகப்
பட்ட எல்லா ஆஸ்தியையும், அவன் பிள்ளை
களையும், அவன் பெண்சாதிகளையும் பிடித்துக்
கொண்டுபோனார்கள்; யோவாகாஸ் என்ற அ
வன் குமாரரில் இளையவனை அல்லாமல் ஒரு
௰௮ குமாரனும் அவனுக்கு மீதியானதில்லை.—இவை
களெல்லாவற்றிற்கும் பிற்பாடு கர்த்தர் அவனை
அவன் குடல்களில் உண்டான தீராத ரோகத்
௰௯ தினால் வாதித்தார்.—அப்படி நாளுக்குநாள் இரு
ந்து, இரண்டுவருஷங்கள் முடிகிறகாலத்திலே
அவனுடைய குடல்கள் அவனுடைய ரோகத்
தோடே சரிந்து, கடின வியாதிகளினாலே செத்
துப்போனான்; அவனுடைய பிதாக்களுக்காகக்
கந்தவர்க்கங்களைக் கொளுத்தினதுபோல, அவ
னுடைய சனம் அவனுக்காகக் கொளுத்தின
௨௰ தில்லை. — அவன் இராசாவாகிறபோது முப்பத்
திரண்டு வயதாயிருந்து, எட்டுவருஷமாய் எருச
லேமில் அரசாண்டு, விருப்பப்பட்டிராமல்போ
னான்; அவனைத் தாவீதின் பட்டணத்தில் அடக்
கம்பண்ணினார்கள்; ஆனால் இராசாக்களின் கல்
லறைகளில் அல்ல.

## ௨௨. அதிகாரம்.

௧. பின்பு அக்சீயா அநீதியாய் அரசாண்டது. ௭. அவன் ஆகாப்பின் குமா
ரன் யோராமுடனே சம்பந்தமாய் ஏகூவினால் கொல்லப்பட்டது. ௰. சிறி
யதாயாகிய யோசபாத் ஒளித்த யோவாசதவிர இராசவம்சத்தாரையெல்
லாம் அத்தலியாள் கொன்று இராச்சியத்தை அபகரித்துக்கொண்டது.

எருசலேமின் குடிகள் அவன் இளையகுமாரனா ௧
கிய அக்சீயாவை அவன் ஸ்தலத்தில் இராசாவா
க்கினார்கள்; ஏனெனில் அராபியரோடே கூட
வந்து பாளயமிறங்கின தண்டு மூத்தவர்களை
யெல்லாம் கொன்றுபோட்டது; அப்படியே
அக்சீயாவென்ற யூதாவின் இராசாவாகிய யோ
ராமின் குமாரன் அரசாண்டான்.—அக்சீயா இரா ௨
சாவாகிறபோது இருபத்திரண்டு வயதாயிருந்து
ஒருவருஷம் எருசலேமில் அரசாண்டான்; ஓம்
ரீயின் குமாரத்தியாகிய அவன் தாயின்பேர் அத்
தலியாள்.—இவனும் ஆகாப் வீட்டாரின் வழிக ௩
ளில் நடந்தான்; ஏனெனில் துன்மார்க்கமாய்
நடக்க, அவனுடைய தாய் அவனுக்கு ஆலோச
னைக்காரியாயிருந்தாள். — அவன் ஆகாப்பின் ௪
வீட்டாரைப்போல கர்த்தரின் பார்வைக்குப்
பொல்லாப்பானதைச் செய்தான்; ஏனென்றால்
அவன் தகப்பன் சென்றுபோன பிற்பாடு, அவர்
கள் அவனுக்குக் கேடாக அவனுடைய ஆலோ
சனைக்காரராயிருந்தார்கள்.—அவர்களுடைய ஆ ௫
லோசனைக்கு உள்பட்டவனுமாய், அவன் இஸ்
ரவேலின் இராசாவாகிய யோராமென்ற ஆகாப்
பின் குமாரனோடேகூட, கீலேயாத்திலுள்ள ரா
மோத்திற்குச் சூரியாவின் இராசாவாகிய ஆசகே
லுக்கு விரோதமாக யுத்தம்பண்ணப்போனான்;
அங்கே சூரியர் யோராமைக் காயப்படுத்தினார்
கள்.—அப்போது தான் சூரியாவின் இராசாவாகி ௬
ய ஆசகேலோடு யுத்தம்பண்ணுகையில், தன்னை
அவர்கள் ராமாவிலே வெட்டின காயங்களை
எஸ்ரெயேலிலே ஆற்றிக்கொள்ள அவன் திரும்
பினான்; அப்போது ஆகாப்பின் குமாரனாகிய
யோராம் வியாதியானபடியினாலே யூதாவின்
இராசாவாகிய யோராமின் குமாரன் அக்சீயா,
எஸ்ரெயேலிலிருக்கிற அவனைப் பார்க்கிறதற்கு
இறங்கிப்போனான்.
ஆனால் அக்சீயா யோராமண்டைக்கு வந்தது ௭
அவனுக்குப் பராபரனால் உண்டான அழிதலாக
லபித்தது; அதேதென்றால் அவன் வந்தபோது
யோராமுடனேகூட, கர்த்தர் ஆகாப்பின் வீட்
டாரைச் சங்கரிக்க அபிஷேகம்பண்ணுவித்த
நிம்சியின் குமாரனாகிய ஏகூவுக்கு எதிர்ப்பட
வெளியே போனான்.—ஏகூ ஆகாப்பின் வீட்டா ௮
ரை ஆக்கினையிடுகிறபோதோவெனில், அவன்
அக்சீயாவைச் சேவிக்கிற யூதாவின் பிரபுக்களை
யும், அக்சீயாவுடைய சகோதரரின் குமாரரையும்
கண்டுபிடித்துக் கொன்றுபோட்டான்.—பிற்பாடு ௯
அவன் அக்சீயாவைத் தேடினான்; சமாரியாவில்
ஒளித்துக்கொண்ட அவனை அவர்கள் பிடித்து,

எகூவண்டைக்குக் கொண்டுவந்து, அவனைக்
கொன்றுபோட்டு, இவன் தன் முழு இருதயத்தா
லும் கர்த்தரைத் தேடின யோசபாத்தின் குமார
னென்று சொல்லி, அவனை அடக்கம்பண்ணி
னார்கள்; அப்படியே அரசாளுகிறதற்குப் பலன்
கொள்ளத்தக்க ஒருவரும் அக்சியாவின் வீட்
டிற்கு இல்லாதே போயிற்று.
௰ அக்சியாவின் தாயாகிய அத்தலியாள் தன் கு
மாரன் செத்துப்போனதைக் கண்டபோதோவெ
னில், அவள் எழும்பி, யூதாவின் வீட்டிலுள்ள
இராச வம்சமான வித்தானையெல்லாம் சங்காரம்
௰௧ பண்ணினாள்.—ஆனால் இராசாவின் குமாரத்தி
யாகிய யோசபாத், கொன்றுபோடப்படுகிற
இராச குமாரருக்குள் இருக்கிற அக்சியாவின்
ஆண்பிள்ளையாகிய யோவாசைக் களவாயெடுத்
துக்கொண்டு, அவனையும் அவன் தாதியையும்
சயனவீட்டிலே வைத்தாள்; அப்படியே அத்த
லியாள் அவனைக் கொன்றுபோடாதபடிக்கு, இ
ராசாவாகிய யோராமின் குமாரத்தியும் ஆசாரிய
னாகிய யோய்தாவின் பெண்சாதியுமாகிய யோ
சபாத் அவனை அத்தலியாளுக்கு இடைதலவொ
ளித்தாள்; ஏனெனில் அவள் அக்சியாவின் சகோ
௰௨ தரியாயிருந்தாள்.—இவர்களோடு அவன் ஆறு
வருஷமாய்க் கர்த்தருடைய வீட்டிலே மறைக்
கப்பட்டிருந்தான்; அத்தலியாளோவென்றால்
தேசத்தின்மேல் இராச்சியபாரம்பண்ணினாள்.

## ௨௩. அதிகாரம்.

௧. யோய்தா பிரயத்தனம்செய்து யோவாசை இராசாவாக்கினது. ௰௨. அத்தலியாள் கொல்லப்பட்டது. ௰௬. யோய்தா தேவாராதனையை முறைப்படியும் நடப்பித்தது.

௧ ஏழாம் வருஷத்திலோவென்றால் யோய்தா திட
ன்கொண்டு, நூற்றிற்குத் தலைவராகிய எரோகா
மின் குமாரன் அசரீயாவையும், யோக்னானின்
குமாரன் இஸ்மவேலையும், ஓபேதின் குமாரன்
அசரீயாவையும், ஆதாயாவின் குமாரன் மாசே
யாவையும், சிக்ரியின் குமாரன் எலிஷாபாத்தை
யும் தன் உடம்படிக்கைக்கு உள்ளாக்கிக்கொண்
௨ டான்.—இவர்கள் யூதாவிலே சுற்றித்திரிந்து,
யூதாவின் பட்டணங்களிலெல்லாம் இருக்கிற
இலேவியரையும், இஸ்ரவேலுடைய பிதாக்க
ளின் வம்சத்தலைவரையும் கூட்டிக்கொண்டு
௩ எருசலேமுக்கு வந்தார்கள்.—அந்தச் சபையெல்
லாம் பராபரனுடையவீட்டிலே இராசாவோடே
உடம்படிக்கைபண்ணிற்று; யோய்தா அவர்களு
டனே சொன்னதாவது: இதோ கர்த்தர் தாவீதின்
குமாரரைக்குறித்துச் சொன்னபடியே இராசா
௪ வின் குமாரன் இராசாவாகவேண்டும்.—நீங்கள்
செய்யவேண்டிய காரியம் என்னவெனில், இவ்
வாரத்தில், முறையிருக்க வருகிற ஆசாரியரும்
இலேவியருமான உங்களில் மூன்றத்தொரு
௫ பங்கு ஒலிமுக வாசல்களையும்,—மூன்றத்தொரு
பங்கு இராசாவின் வீட்டையும், மூன்றத்தொ
ருபங்கு அஸ்திபார வாசலையும் காக்கவும், சன
மெல்லாம் கர்த்தருடைய வீட்டுப்பிரகாரங்களில்
௬ இருக்கவும் வேண்டும்.—ஆனால் ஆசாரியரையும்
இலேவியரில்ஊழியம்செய்கிறவர்களையும்தவிர,
ஒருவரும் கர்த்தருடைய வீட்டிற்குள் பிரவே
சிக்கவேண்டாம்; அவர்களே உள்ப்பிரவேசிப்
பார்களாக; ஏனெனில் அவர்கள் பரிசுத்தவான்
கள்; ஆனால் சனமெல்லாம் கர்த்தருடைய காவ
லைக் காப்பதாக.—இலேவியரோவெனில் அவ ௭
ரவர் தங்கள் ஆயுதங்களைத் தங்கள் கையிலே
பிடித்துக்கொண்டவர்களாய், இராசாவைச் சுற்
றிலும் வளைந்துகொள்வார்களாக; வீட்டிற்குள்ப்
படுகிற எவனும் கொலையுண்ணக்கடவன்; இரா
சா உள்ப்பிரவேசிக்கிறபோதும் புறப்படுகிற
போதும் நீங்கள் அவரோடிருங்களென்றான்.
ஆசாரியனாகிய யோய்தா கற்பித்தபடியெல் ௮
லாம் இலேவியரும் யூதாகோத்திரத்தார் அனை
வரும் செய்து, அவரவர் அவ்வாரத்து முறையி
ருக்க வருகிறவர்களும், முறைதீர்ந்துபோகிறவர்
களுமான தம்தம் மனுஷரைக் கூட்டிக்கொண்
டார்கள்; ஏனென்றால் வகுப்புகள் பிரிந்துபோக
ஆசாரியனாகிய யோய்தா உத்தாரம் கொடுக்க
வில்லை.—தாவீது இராசாவுக்கிருந்த பராபரனு ௯
டைய வீட்டிலுள்ள ஈட்டிகளையும் கேடயங்க
ளையும் பரிசைகளையும் ஆசாரியனாகிய யோய்தா
நூற்றிற்குத் தலைவருக்குக் கொடுத்து,—அவரவர் ௰
தங்கள் ஆயுதங்களைக் கையிலே பிடித்துக்கொண்
டவர்களாய்,வீட்டின் வலதுபக்கம்துவக்கி, வீட்
டின் இடதுபக்கம்மட்டும், பலிபீடத்திற்கும்
வீட்டிற்கும் எதிரே இராசாவைச் சுற்றிலும் நிற்
கச் சனத்தையெல்லாம் நிறுத்தினான்.—பிற்பாடு ௰௧
இராசாவின் குமாரனைப் புறப்படவரப்பண்
ணி, அவன்மேலே கிரீடத்தை வைத்து, அவனுக்
குச்சாட்சியின் ஆகமத்தைக் கொடுத்து, அவனை
இராசாவாக்கினார்கள்; யோய்தாவும் அவன்
குமாரரும் அவனை அபிஷேகம்பண்ணி, இராசா
வாழ்கவென்றார்கள்.
சனம் ஓடிவந்து, இராசாவைப் புகழுகிற சத் ௰௨
தத்தை அத்தலியாள் கேட்டபோதோவெனில்,
அவள் கர்த்தருடைய வீட்டிற்குச் சனத்தண்டை
யிலே வந்து,—இதோ நடையிலுள்ள தன்னு ௰௩
டைய தூணண்டையிலே இராசா நிற்கிறதை
யும், இராசாவண்டையில் நிற்கிற பிரபுக்களை
யும், பூரிகைகளை ஊதுகிறவர்களையும், தேசச்
சனமெல்லாம் சந்தோஷப்பட்டுப் பூரிகைகளை
ஊதுகிறதையும், பாட்டகர் கீதவாத்தியங்களைப்
பிடித்துத் துதிக்க வகைகாண்பிக்கிறதையும்
கண்டாள்; அப்போது அத்தலியாள் தன் வஸ்தி
ரங்களைக் கிழித்துக்கொண்டு, இரண்டகம் இர
ண்டகமென்று கூப்பிட்டாள்.—ஆனால் ஆசா ௰௪
ரியனாகிய யோய்தா இராணுவத்தை விசாரிக்கிற
நூற்றிற்குச் சேர்வைக்காரரைப் புறப்படப்பண்
ணி, அவர்களுடனே, அவளை வரிசைக்குப்
புறம்பே கொண்டுபோங்கள்; அவளைப் பின்
செல்லுகிறவன் பட்டயத்தால் சாவக்கடவ
னென்றான்; ஏனென்றால் கர்த்தரின் வீட்டிலே
அவளைக் கொன்றுபோடாதேயுங்களென்று ஆ
சாரியன் சொல்லியிருந்தான்.—அவர்கள் அவ ௰௫

ளுக்கு இடமுண்டாக்கினபோது, அவள் இரா சாவின் வீட்டிற்கிருக்கிற குதிரைகளின் வாச லுக்குள் பிரவேசிக்கும் இடம்மட்டும் போனாள்; அங்கே அவளைக் கொன்றுபோட்டார்கள்.

௰௬ பிற்பாடு யோய்தா தாங்கள் கர்த்தருடைய சன மாயிருக்கும்படிக்கு, தனக்கும் எல்லாச் சனத் திற்கும் இராசாவுக்கும் உடம்படிக்கைபண்ணி
௰௭ க்கொண்டான்.—அப்போது சனமெல்லாம் பா கால் வீட்டிலே போய், அதை இடித்து, அதின் பலிபீடங்களையும் அதின் சுரூபங்களையும் தகர்த் து, பாகாலின் பூசாசாரியாகிய மாத்தானைப் பலி பீடங்களுக்கு முன்பாகக் கொன்றுபோட்டார்
௰௮ கள். — தாவீது கட்டளையிட்டபிரகாரமாக, சந் தோஷத்தோடும் கீதத்தோடும் கர்த்தரின் தகன பலிகளை மோசேயின் நியாயப்பிரமாணத்தில் எ ழுதியிருக்கிறபடியே செலுத்தத்தக்கதாக, யோய் தா கர்த்தருடைய வீட்டை விசாரிக்கும் உத்தி யோகங்களைத் தாவீது கர்த்தருடைய வீட்டிற் கென்று பகுத்துவைத்த இலேவியரான ஆசாரி
௰௯ யர்களின் கையில் ஒப்புவித்து,—யாதொரு காரி யத்தினாலே தீட்டுப்பட்டவன் கர்த்தருடைய வீட்டிற்குள் பிரவேசியாதபடிக்கு, அதின் வா
௨௰ சல்களுக்கு வாசல்காப்பாளரை நிறுத்தி,-நூற்றிற் குச் சேர்வைக்காரரையும், பெரியவர்களையும், சனத்தை ஆளுகிறவர்களையும், தேசச்சனமனைத் தையும் கூட்டிக்கொண்டு, இராசாவைக் கர்த்த ருடைய வீட்டிலிருந்து இறங்கப்பண்ணி, உய ர்ந்த வாசல்வழியாய் இராச அரமனைக்குள் அழைத்துவந்து இராசாவை அரசாளும் ஆசனத்
௨௧ தின்மேல் உளுக்காரப்பண்ணினார்கள்.—தேசச் சனமெல்லாம் மகிழ்ந்து, அத்தலியாளைப் பட் டையத்தால் கொன்றபிற்பாடு பட்டணம் அம ரிக்கைப்பட்டது.

## ௨௪. அதிகாரம்.

௧. யோவாஸ் யோய்தா நாள்வரையில் நன்றாய் அரசாண்டு வாழ்ந்தது. ௪. தேவாலயத்தைப் புதுப்பிக்க அவன் கட்டளையிட்டது. ௰௫. யோய்தாவினுடைய மரணமும், மேன்மையான அடக்கமும். ௰௭. யோவாஸ் விக்கிரக ஆராதனைக்காரனாகி யோய்தாவின் குமாரனான சகரியாவைக் கொன்றது. ௨௩. யோவாஸ் சூரியர்களாலே நெருக்கப்பட்டு, சாபாத்தினாலேயும் யோசபாத்தினாலேயும் கொல்லப்பட்டது. ௨௭. அமத்சியா அவனுக்குப் பின் அரசானது.

௧ யோவாஸ் இராசாவாகிறபோது ஏழு வயதா யிருந்து, நாற்பது வருஷமாய் எருசலேமில் அர சாண்டான்; பேர்சேபா பட்டணத்தாளான அ
௨ வன் தாயின்பேர் சிபீயாள். — ஆசாரியனாகிய யோய்தாவின் நாளெல்லாம் யோவாஸ் கர்த்தரின் பார்வைக்குச் செம்மையானதைச் செய்தான்.—
௩ அவனுக்கு யோய்தா இரண்டு பெண்சாதிகளை ஏற்படுத்தினான், அவர்களால் குமாரரையும் குமா ரத்திகளையும் பெற்றான்.
௪ அதற்குப்பிறகு கர்த்தருடைய வீட்டைப்
௫ புதுப்பிக்க யோவாசுக்கு மனதுவந்தது.-அவன் ஆசாரியரையும் இலேவியரையும் கூட்டி, அவர் களுடனே, நீங்கள் யூதாபட்டணங்களுக்குப் புறப்பட்டுப்போய், உங்கள் பராபரனுடைய வீட்டை வருஷத்திற்கு வருஷம் பழுதுபார்க்கி றதற்கு, இஸ்ரவேலெங்கும் திரவியம் சேருங் கள்; இந்தக்காரியத்தை நீங்கள் தீவிரியுங்களெ ன்றான்; ஆனால் இலேவியர் தீவிரித்துக்கொண் டதில்லை.

அப்போது இராசா யோய்தாவென்ற தலை ௬
வனை அழைப்பித்து அவனுக்குச் சொன்னதா வது: ஆசரிப்புக்கூடாரத்திற்குக் கொடுக்க, கர்த் தரின் தாசனாகிய மோசே கற்பித்த வரியை யூதா வினிடத்திலும், எருசலேமியரிடத்திலும், இஸ்ர வேல் சபையாரிடத்திலும் வாங்கிவருகிறதற்கு, இலேவியரை நீர் விசாரிக்காதே போனதென் னெ?—ஏனென்றால் அத்தலியாள் துன்மார்க்கமா ௭
யிருந்ததினால், அவளுடைய குமாரர் பராபரனு டைய வீட்டைப் பலவந்தமாய்த் திறந்து, கர்த்த ருடைய வீட்டிலுள்ள பரிசுத்தம்பண்ணப்பட் டவைகளையெல்லாம் பாகால்களுக்காகச் செல வுபண்ணினார்களென்றான்.

அப்போது இராசாவின் சொற்படி ஒரு பெட் ௮
டியை உண்டாக்கி, அதைக் கர்த்தருடைய வீட்டு வாசலுக்குப் புறம்பே வைத்து,—கர்த்தரின் தாச ௯
னாகிய மோசே வனாந்தரத்தில் இஸ்ரவேலுக்குக் கற்பித்த வரியைக் கர்த்தருக்குக் கொண்டுவாருங் களென்று யூதாவிலும் எருசலேமிலும் பறைமு றையிடுவித்தார்கள்.—அப்போது எல்லாப் பிரபுக் ௰
களும் சனமனைத்தும் சந்தோஷப்பட்டு, பெட்டி நிறையும்மட்டுக்கும் கொண்டுவந்து, அதிலே போட்டார்கள்.—அநேகம் திரவியம் உண்டென் ௰௧
று கண்டு, இலேவியர் கையால் அந்தப் பெட்டி இராசாவின் விசாரிப்புக்காரர் அண்டையிலே கொண்டுவரப்படும்போதோவெனில், இராசா வின் சம்பிரதியும் பிரதான ஆசாரியனுடைய விசாரிப்புக்காரனும் வந்து, பெட்டியிலிருக்கி றதைக் கொட்டி எடுத்துக்கொண்டு, அதைத் திரும்ப அதின் தானத்திலே வைப்பார்கள்; இப் படி நாளுக்குநாள் செய்து மிகுந்த திரவியத்தைச் சேர்த்தார்கள்.—அதை இராசாவும் யோய்தாவும் ௰௨
கர்த்தருடைய வீட்டின் வேலையை விசாரிக்கும் ஊழியக்காரர் கையிலே கொடுத்தார்கள்; அதி னால் இவர்கள் கர்த்தருடைய வீட்டைப் புதுப் பிக்கும்படிக்கு, கல்தச்சரையும் தச்சரையும், கர்த் தருடைய வீட்டைப் பழுதுபார்க்க கருமாரை யும் கன்னாரையும் கூலிபொருந்திக்கொண்டார் கள். — அப்படி வேலையை விசாரிக்கிறவர்கள் ௰௩
தங்கள் கையினாலே வேலையை நடந்தேறப் பண்ணி, பராபரனுடைய வீட்டை அதின் முந்தின சீராக வைத்துப் பலப்படுத்தினார்கள்.— அதை முடித்துத் தீர்ந்தபிற்பாடு, மீந்த திரவியத் ௰௪
தை இராசாவுக்கும் யோய்தாவுக்கும் முன்பாகக் கொண்டுவந்தார்கள்; அதினாலே கர்த்தருடைய வீட்டிற்குப் பணிமுட்டுகளாகிய ஆராதனைக்கும் பலியிடுகிறதற்குமான தட்டுமுட்டுகளையும், கல சங்களையும், பொன்பாத்திரங்களையும், வெள்ளிப் பாத்திரங்களையும் பண்ணுவித்தான்; யோய்தா வின் நாளெல்லாம் நித்தம் கர்த்தருடைய வீட்டி லே தகனபலிகளைச் செலுத்திவந்தார்கள்.

௰௫ ஆனால் யோய்தா கிழவனாகி, நாள் நீடித்தவ
னாய் மரித்தான்; அவன் மரணம் அடைகிறபோது
௰௬ நூற்று முப்பதுவயதாயிருந்தான்.—அவன் இஸ்
ரவேலுக்கும் பராபரனுக்காகவும் அவருடைய
வீட்டிற்காகவும்நன்மைசெய்தபடியினாலே, அவ
னைத் தாவீதின் பட்டணத்தில் இராசாக்களண்
டையிலே அடக்கம்பண்ணினார்கள்.
௰௭ யோய்தா மரணம் அடைந்தபிற்பாடோவெ
னில், யூதாவின் பிரபுக்கள் வந்து, இராசாவைப்
பணிந்துகொண்டார்கள்; அப்போது இராசா
௰௮ அவர்களுக்குக் கேள்விகொடுத்தான்.—அப்படி
யே அவர்கள்தங்கள் பிதாக்களின் பராபரனாகிய
கர்த்தரின் வீட்டை விட்டுவிட்டு, தோப்புகளை
யும் சிலைகளையும் சேவித்தார்கள்; அப்போது
இந்த அவர்களுடைய குற்றத்தின்நிமித்தம் யூதா
வின்மேலும், எருசலேமின்மேலும் கடுங்கோப
௰௯ முண்டாயிற்று.—அவர்களைத் தம்மண்டைக்குத்
திரும்பப்பண்ணக் கர்த்தர் அவர்களிடத்திலே
தீர்க்கதரிசிகளை அனுப்பினார்; இவர்கள் அவர்க
ளைத் திடச்சாட்சியாகக் கடிந்துகொண்டார்கள்;
௨௰ ஆனால் அவர்கள் செவிகொடுக்கவில்லை.—அப்
போது பராபரனுடைய ஆவி ஆசாரியனாகிய
யோய்தாவின் குமாரனான சகரீயாவின்மேல்
இறங்கினதினால், அவன் சனத்திற்கு எதிரே
நின்று, அவர்களுடனே, நீங்கள் கர்த்தருடைய
கற்பனைகளை மீறுகிறதென்னவென்று பராபரன்
சொல்லுகிறார்; ஆகையால் நீங்கள் பாக்கியவான்
களாய் இருப்பதில்லை; நீங்கள் கர்த்தரை விட்டு
விட்டதினால் அவர் உங்களைக் கைவிடுவாரென்
௨௧ றான். — ஆனால் அவர்கள் அவனுக்கு விரோத
மாக ஒப்பந்தம்பண்ணி, கர்த்தருடைய வீட்டுப்
பிரகாரத்தில் இராசாவினுடைய கற்பனையின்
படி அவனைக் கல்லெறிந்து கொன்றார்கள்.—
௨௨ அப்படியே இவனுடைய தகப்பனாகிய யோய்
தா தனக்குச் செய்த தயையை இராசாவாகிய
யோவாஸ் நினைக்காமல் அவனுடைய குமார
னைக் கொன்றுபோட்டான்; இவன் சாகும்போ
து, கர்த்தர் அதைப்பார்த்துக் கணக்குக் கேட்
பாரென்றான்.
௨௩ ஆனதுகொண்டு மறு வருஷத்திலே சூரியா
வின் இராணுவத்தார் அவனுக்கு விரோதமாக
வந்தேறி, யூதாவிலும் எருசலேமிலும் வந்து,
சனத்திலிருக்கிற சனத்தின் பிரபுக்களையெல்
லாம் அழித்து, கொள்ளையிட்ட அவர்கள் உடை
மைகளையெல்லாம் தமஸ்குவின் இராசாவுக்கு
௨௪ அனுப்பினார்கள். — ஏனென்றால் சூரியாவின்
இராணுவம் கொஞ்சம் மனுஷராய் வந்திருந்தா
லும், இவர்கள் தங்கள் பிதாக்களின் பராபரனா
கிய கர்த்தரை விட்டுவிட்டபடியினாலே, கர்த்தர்
மகா பெரிய இராணுவத்தை அவர்கள் கையில்
ஒப்புக்கொடுத்தார்; அவர்கள் யோவாசினிடத்தி
லும் நியாயத்தீர்ப்புகளை நிறைவேற்றினார்கள்.
௨௫ அவர்கள் அவனை மகா வேதனைக்குள்ளானவ
னாக விட்டுப்போனார்கள்; ஆனதுகொண்டு அவர்
கள் புறப்பட்டபின், அவனுடைய ஊழியக்காரர்
ஆசாரியனாகிய யோய்தாவுடைய குமாரரின் இ
ரத்தப்பழியின்நிமித்தம், அவனுக்கு விரோதமாய்
ஒப்பந்தம்பண்ணி, அவனை அவன் படுக்கையி
லே கொன்றுபோட்டார்கள்; செத்துப்போன
அவனைத்தாவீதின் பட்டணத்தில் அடக்கம்பண்
ணினார்கள்; ஆனால் இராசாக்களின் கல்லறை
களில் அவனை வைக்காதே போனார்கள்.—அவ ௨௬
னுக்கு விரோதமாக ஒப்பந்தம்பண்ணிக்கொண்
டவர்கள், அம்மோனிய ஸ்திரியாகிய சீமாத்தின்
குமாரனாகிய சாபாத்தும், மோவாப் ஸ்திரியாகிய
சிம்ரீதின் குமாரனாகிய யோசபாத்தும்தானே.—
அவன் குமாரரின் செய்தியும், அவன்மேலே ௨௭
சுமந்த பெரிய சுமத்தலின் செய்தியும், பராபரனு
டைய வீட்டை அவன் பலப்படுத்தினதும், இ
தோ இராசாக்களின் புஸ்தகமான சரித்திரத்தில்
எழுதியிருக்கின்றன; அவன் குமாரனாகிய அமத்
சீயா அவன் ஸ்தலத்தில் இராசாவானான்.

## ௨௫. அதிகாரம்.

௧. அமத்சியா ஆரம்பத்தில் நன்றாய் அரசாண்டது. ௩. அவன் தகப்பனைக் கொன்ற ஊழியக்காரரை ஆக்கினைபண்ணினது. ௫. ஏதோமியருடனே யுத்தம்செய்ய இஸ்ரவேலர்களையும் கூட்டி, தீர்க்கதரிசியின் வார்த்தையினால் அவர்களைவிட்டு, நூறு தாலந்து பொன்னை இழந்தது. ௰௧. ஏதோமியரைச் செயித்தது. ௰. ௰௩. இஸ்ரவேலர்கள் தண்டைவிட்டு அனுப்பப்பட்டு, சொந்ததேசத்துக்குப் போகும்போது கொள்ளையடித்தது. ௰௪. அமத்சியா செயித்ததினால் அகங்கரித்து, ஏதோம் தேவர்களை வணங்கி, தீர்க்கதரிசியின் வார்த்தையை வெறுத்தது. ௰௭. அவன் யோவாசுடனே யுத்தம்செய்து தோற்றுப்போனது. ௨௬. அவனுடைய ஆளுகை. ௨௭. கலகத்தினால் அவன் கொல்லப்பட்டது.

அமத்சீயா இருபத்தைந்தாம் வயதிலே இராசா ௧
வாகி, இருபத்தொன்பது வருஷமாக எருசலே
மில் அரசாண்டான்; எருசலேம் ஊராளாகிய
அவனுடைய தாயின்பேர் யோவாதானி.—அவன் ௨
கர்த்தரின் பார்வைக்குச் செம்மையானதைச்
செய்தான்; ஆனால் முழு மனதோடே அல்ல.—
இராச்சியபாரம் அவனுக்குத் திடப்பட்டபோ ௩
தோவெனில், அவன் தன் தகப்பனாகிய இராசா
வைக் கொலைசெய்த தன்னுடைய ஊழியக்கார
ரைக் கொன்றுபோட்டான்.—ஆனால் பிதாக்கள் ௪
பிள்ளைகளின்நிமித்தமும், பிள்ளைகள் பிதாக்க
ளின்நிமித்தமும் கொலையுண்ணப்படாமல், அவ
னவன் தன்தன் பாவத்தின்நிமித்தம் கொலையுண்
பானாகவென்று மோசேயின் நியாயப்பிரமாணத்
தின் புஸ்தகத்தில் எழுதியிருக்கிறபடி, கர்த்தர்
கற்பித்தபிரகாரமாக அவர்களுடைய பிள்ளைக
ளைக் கொல்லாதிருந்தான்.
அமத்சீயா யூதா மனுஷரைக் கூட்டி, அவர் ௫
களில் பிதாக்களுடைய வம்சங்களின்படியே,
யூதா பென்யமீன் தேசங்கள் எங்கும் ஆயிரத்துச்
சேர்வைக்காரரையும் நூற்றிற்குச் சேர்வைக்கார
ரையும் வைத்து, இருபது வயதுமுதல்கொண்டு
அதற்கு மேல்தரமானவர்களை இலக்கம்பார்த்து,
யுத்தத்திற்குப் புறப்படவும், ஈட்டியையும் கேட
யத்தையும் பிடிக்கவும்தக்க தெரிந்துகொள்ளப்
பட்டவர்கள் மூந்நூறாயிரம்பேரென்று கண்
டான்.—இஸ்ரவேலிலும் நூறாயிரம் பராக்கிரமக் ௬
காரரை நூறு தாலந்து வெள்ளிக்குச் சம்பளத்
திற்கு வைத்தான்.

௭ ஆனால் பராபரனுடைய மனுஷன் ஒருவன்
அவனண்டைக்கு வந்து சொன்னதாவது: இரா
சாவே, இஸ்ரவேலின் இராணுவம் உம்முடனே
வராதிருப்பதாக; ஏனெனில் கர்த்தர் இஸ்ரவே
லராகிய எப்பிராயீமின் சகல புத்திரரோடும் இ
௮ ருக்கவில்லை.—ஏனென்றால் நீர் போய், யுத்தத்திற்
குப் பலத்துக்கொண்டாலும் பராபரன் உம்மைச்
சத்துருவுக்குமுன்பாக விழப்பண்ணுவார்; அதே
தென்றால் ஒத்தாசைசெய்யவும் விழப்பண்ண
வும் பராபரனிடத்தில் பலன் உண்டென்றான்.—
௯ அப்போது அமத்சியா, ஆனால் நான் இஸ்ரவே
லின் தண்டுக்குக் கொடுத்த நூறு தாலந்திற்காகச்
செய்வதென்னவென்று பராபரனுடைய மனு
ஷனைக் கேட்டான்; அதற்குப் பராபரனுடைய
மனுஷன், அதைப்பார்க்கிலும் அதிகமாய் உமக்
குக் கொடுக்கக் கர்த்தருக்கு இருக்கின்றதென்
றான்.
௰ அப்போது அமத்சியா எப்பிராயீமரில் தன்
னண்டைக்கு வந்த தண்டைத் தங்களிடத்திற்
குப் போய்விடப் பிரித்தான், அதினால் அவர்
களுக்கு யூதாவின்மேல் கோபம் மிகுதியாய்
மூண்டு, உக்கிரமான எரிச்சலோடே தங்களி
௰௧ டத்திற்குத் திரும்பினார்கள். — அமத்சியாவோ
வெனில் திடன்கொண்டு, தன் சனத்தைக் கூட்
டி, உப்புப்பள்ளத்தாக்குக்குப் போய், சேயீர்
புத்திரரில் பதினாயிரம்பேரை வெட்டினான்.—
௰௨ யூதபுத்திரர் பதினாயிரம்பேரை உயிரோடும் பிடி
த்து, ஒரு கல்மலைக் குன்றின்மேல் கொண்டு
போய், அவர்களெல்லாரும் நசுங்கிப்போகத்
தக்க விதமாய் அந்தக் கல்மலையின் சிகரத்திலி
௰௩ ருந்து தாழத்தள்ளினார்கள்.—தன்னோடுகூட யுத்
தத்திற்கு வராதபடிக்கு, அமத்சியா திருப்பிவிட்
ட தண்டு மனுஷரோவெனில், சமாரியாவைத்
துவக்கிப் பெத்தோரோன் மட்டுமுள்ள யூத பட்
டணங்களின்மேல் விழுந்து, அவைகளில் மூவா
யிரம்பேரை வெட்டித் திரளாய்க் கொள்ளையிட்
டார்கள்.
௰௪ அமத்சியா ஏதோமியரை முறியடித்து வந்து,
சேயீர் புத்திரரின் தேவர்களைக் கொண்டுவந்த
பிற்பாடோவெனில் அவன் அவைகளைத் தனக்
குத் தேவர்களாக வைத்து, அவைகளுக்கு முன்
பாகப் பணிந்து, அவைகளுக்குத் தூபம்காட்டி
௰௫ னான்.—அப்போது, கர்த்தர் அமத்சியாவின்மேல்
கோபம்மூண்டவராகி, அவனண்டைக்கு ஒரு
தீர்க்கதரிசியை அனுப்பினார்; இவன் அவனுட
னே, தங்கள் சனத்தை உமது கைக்குத் தப்புவிக்
காதேபோன சனத்தின் தேவர்களை நீர் தேடுவா
௰௬ னேன் என்றான். — தன்னோடே இவன் இப்
படிப் பேசினபோதோவெனில், அவன் இவனு
டனே, உன்னை இராசாவுக்கு ஆலோசனைக்கார
னாக வைத்தார்களோ? அதை விட்டுவிடு; உன்னை
ஏன் வெட்டிப்போடவேண்டுமென்றான்; அப்
போது அந்தத் தீர்க்கதரிசி அதை விட்டுவிட்டு,
நீர் இப்படிச் செய்து, என் ஆலோசனையைக்
கேளாமல்போனபடியினாலே பராபரன் உம்மை
அழிக்க யோசனையாயிருக்கிறாரென்கிறதை அறி
வேனென்றான்.
பிற்பாடு யூதாவின் இராசாவாகிய அமத்சியா ௰௭
யோசனைபண்ணி, ஏகூவின் குமாரனாகிய யோ
வாகாசின் குமாரன் யோவாசென்ற இஸ்ரவே
லின் இராசாவுக்கு, நம்முடைய சாமர்த்தியத்
தைப் பார்ப்போம் வாவென்று சொல்லி அனுப்
பினான்.—ஆனால் இஸ்ரவேலின் இராசாவாகிய ௰௮
யோவாஸ் யூதாவின் இராசாவாகிய அமத்சியா
வுக்குச் சொல்லி அனுப்பினதாவது: லீபனோ
னிலிருக்கிற முள்செடி லீபனோனிலிருக்கிற
கேதுருமரத்திற்கு, உன் குமாரத்தியை என்
குமாரனுக்குப் பெண்சாதியாகக் கொடுவென்று
சொல்லி அனுப்பிற்று; ஆனால் லீபனோனிலி
ருக்கிற காட்டுமிருகங்கள் முள்செடியின்மேல்
ஓடி, அதை மிதித்தன. — இதோ ஏதோமியரை ௰௯
அடித்தேனென்று நீ பெருமைபாராட்ட உன்
இருதயம் உன்னை மேட்டிமையாக்கிற்று; இப்
போதும் உன் வீட்டிலிரு; நீயும் உன்னோடே
யூதாவும்கூட விழும்படிக்கு, பொல்லாப்பைத்
தேடிக்கொள்வானேன் என்று சொல்லி அனுப்
பினான். — ஆனால் அமத்சியா செவிகொடாதே ௨௰
போனான்; ஏனென்றால் அவர்கள் ஏதோமின்
தேவர்களைத் தேடினதின்நிமித்தம் அவர்களை
ஒப்புக்கொடுக்கும்படிக்கு பராபரனாலே அப்
படி வந்தது.—அப்படியே இஸ்ரவேலின் இராசா ௨௧
வாகிய யோவாஸ் ஏறிவந்தான்; யூதாவிலிருக்கிற
பெத்செமேசிலே அவனும், அமத்சியாவென்ற
யூதாவின் இராசாவும் தங்கள் சாமர்த்தியத்தைப்
பார்த்தார்கள். — ஆனால் யூதா இஸ்ரவேலுக்கு ௨௨
முன்பாக முறிந்து, அவரவர் தங்கள் கூடாரங்
களுக்கு ஓடிப்போனார்கள். — இஸ்ரவேலின் ௨௩
இராசாவாகிய யோவாஸ் அக்சியாவின் குமார
னான யோவாசுக்குப் பிறந்த அமத்சியாவென்ற
யூதாவின் இராசாவைப் பெத்செமேசிலே பிடித்
து, அவனை எருசலேமுக்குக் கொண்டுவந்து,
எருசலேமின் அலங்கத்திலே எப்பிராயீம் வாச
லைத்துவக்கிக் கோடிவாசல்மட்டும் நானூறுமுழ
நீளம் இடித்துவிட்டு, — பராபரனுடைய வீட் ௨௪
டில் ஓபேதேதோமின் வசத்திலே அகப்பட்ட
சகல பொன்னையும், வெள்ளியையும், சகல
தட்டுமுட்டுகளையும், இராசாவின் வீட்டுப் பொ
க்கிஷங்களையும், கிரியிருப்பவர்களையும் பிடித்
துக்கொண்டு, சமாரியாவுக்குத் திரும்பிப்போ
னான்.
யோவாகாசின் குமாரனாகிய யோவாசென்ற ௨௫
இஸ்ரவேலின் இராசா மரணம் அடைந்தபின்
யோவாசின் குமாரனாகிய அமத்சியாவென்ற யூ
தாவின் இராசா பதினைந்து வருஷம் உயிரோடி
ருந்தான். — அமத்சியாவின் முன்பின் நடபடி ௨௬
யான மற்ற வர்த்தமானங்கள் இதோ யூதா இஸ்ர
வேல் இராசாக்களின் புஸ்தகத்திலல்லவோ எழு
தியிருக்கின்றன.—அமத்சியா கர்த்தரைவிட்டுப் ௨௭
பின்வாங்கின காலம் முதல்கொண்டு எருசலே
மிலிருக்கிறவர்கள் அவனுக்கு விரோதமாக ஒப்

பந்தம்பண்ணிக்கொண்டார்கள்; அதின்நிமித்
தம் லாகீசுக்கு ஓடிப்போனான்; ஆனால் அவன்
பிறகாலே லாகீசுக்கு மனுஷரை அனுப்பினார்
கள்; அவர்கள் அங்கே அவனைக் கொன்று
௨௮ போட்டு, — அவனைக் குதிரைகள்மேல் எடுத்து
வந்து, யூதாவின் பட்டணத்தில் அவன் பிதாக்க
ளண்டையிலே அடக்கம்பண்ணினார்கள்.

## ௨௬. அதிகாரம்.

௧. உசியா சகரீயாவின் நாள்களில் நன்றாய் அரசாண்டு வாழ்ந்தது. ௰௬. அவன் இறுமாப்பாகி ஆசாரியன் தொழிலைச் செய்யத் துணிந்து, குஷ்டரோகத்தால் வாதைப்பட்டது. ௨௨. அவன் மரித்ததும், யோத்தாம் அவனுக்குப்பின் அரசாகிவந்ததும்.

௧ அப்போது யூதசனமெல்லாம் பதினாறு வய
தான உசியாவை அழைப்பித்து வந்து, அவனை
அவன் தகப்பனாகிய அமத்சியாவின் ஸ்தலத்தி
௨ லே இராசாவாக்கினார்கள்.—இராசா தன் பிதாக்
களோடே நித்திரை அடைந்தபிற்பாடு, இவன்
ஏலோதைக் கட்டி, அதைத் திரும்ப யூதாவின்
வசமாக்கிக்கொண்டான்.
௩ உசியா இராசாவாகிறபோது, பதினாறு வய
தாயிருந்து, ஐம்பத்திரண்டு வருஷமாய் எருசலே
மில் அரசாண்டான்; எருசலேம் பட்டணத்தா
ளான அவன் தாயின்பேர் எக்கோலியாள். —
௪ அவன் தன் தகப்பனாகிய அமத்சியா செய்தபடி
யெல்லாம் கர்த்தரின் பார்வைக்குச் செம்மையா
௫ னதைச் செய்து,—பராபரனுடைய தரிசனங்க
ளில் உணர்வுள்ள சகரீயாவின் நாள்களிலே
பராபரனைத் தேட மனதிணங்கியிருந்தான்; அ
வன் கர்த்தனைத் தேடின நாள்களில் பராபரன்
அவனைப் பாக்கியவானாக்கினார்.
௬ அவன் புறப்பட்டுப்போய், பெலிஸ்தியரோடு
யுத்தம்பண்ணி, காத்தின் அலங்கத்தையும் யப்
னேயின் அலங்கத்தையும் அஸ்தோத்தின் அலங்
கத்தையும் இடித்துப்போட்டு, அஸ்தோத் சீமை
யிலும் பெலிஸ்தியருக்குள்ளும் பட்டணங்க
௭ ளைக் கட்டினான். — பெலிஸ்தியரையும் கூர்பா
காலிலே குடியிருக்கிற அராபியரையும் மெகு
னியரையும் வெல்ல,பராபரன் அவனுக்கு ஒத்தா
௮ சைபண்ணினார்.–அம்மோனியர் உசியாவுக்குக்
காணிக்கைகளைக் கொடுத்தார்கள்; அவனுடைய
கீர்த்தி எகிப்தின் எல்லைமட்டும் போயிற்று;
ஏனென்றால் மிகவும் பலன்கொண்டான்.
௯ உசியா எருசலேமிலே கோடிவாசல்மேலும்,
பள்ளத்தாக்கு வாசல்மேலும், அலங்கச் சந்துக
ளின்மேலும், சிகரங்களைக் கட்டி, அவைகளைப்
௰ பலனாக்கினான். — அவனுக்குப் பள்ளத்தரையி
லும் சமனான தரையிலும் அநேகம் ஆடுமாடுக
ளும், மலைகளிலேயும் வயல்வெளியிலேயும்
பயிர்க்குடிகளும், திராட்சத்தோட்டக்காரரும்
உண்டானபடியினாலே, அவன் வனாந்தரத்தி
லே கோபுரங்களைக் கட்டி, அநேக துரவுகளை
வெட்டுவித்தான்; ஏனெனில் வெள்ளாண்மைப்
பிரியனாயிருந்தான்.
௰௧ உசியாவுக்குச் சேவகம்பண்ணுகிற இராணு
வமும் இருந்தது; அது சம்பிரதியாகிய ஏயெ
லாலும், ஆதிக்கக்காரனான மாசேயாவினாலும்,
இலக்கம்பார்க்கப்பட்டபடியே இராசாவின்
பிரபுக்களில் ஒருவனாகிய அனனீயாவின்கீழே
வகுப்பு வகுப்பாய்ச் சேவகம்பண்ணப் புறப்
பட்டது. — பராக்கிரமசாலிகளான வம்சத்தலை ௰௨
வரின் தொகையெல்லாம் இரண்டாயிரத்து அறு
நூறு.—இவர்கள் கையின்கீழே இராசாவுக்குச் ௰௩
சத்துருக்களுக்கு விரோதமாக ஒத்தாசைசெய்ய,
பராக்கிரமத்தோடே யுத்தம்பண்ணுகிற மூந்
நூற்று ஏழாயிரத்து ஐந்நூறுபேரான இராணுவப்
பலன் இருந்தது.-இந்த இராணுவத்தாருக்கெல் ௰௪
லாம் உசியா கேடயங்களையும், ஈட்டிகளையும்,
தலைச்சோடுகளையும், சீராக்களையும், வில்லுகளை
யும்,கல்லெறிகிற கவண்களையும் சவதரித்தான்.—
அம்புகளையும் பெரிய கற்களையும் எய்யத்தக்க ௰௫
தாக, விநோதமாய் உண்டுபண்ணினதும் சிகரங்
களின்மேலும் அலங்கக் கோடிகளின்மேலும்
இருப்பதுமான எத்தனங்களையும் அவன் எருச
லேமில் உண்டாக்கினான்; அப்படியே அவன்
கீர்த்தி தூரத்திற்குப் பரம்பிற்று; ஏனெனில்
அவன் பலப்படும்மட்டும் ஆச்சரியமானபடி
ஒத்தாசை செய்யப்பட்டான்.
அவன் பலப்பட்டபோதோவெனில், தனக் ௰௬
குக் கேடுண்டாகும்மட்டும் அவனுடைய மனம்
மேட்டிமையாகி, தன் பராபரனாகிய கர்த்தருக்கு
ஏராத மீறின வேலையைச் செய்து, தூபம்காட்
டும் பீடத்தின்மேலே தூபம்காட்ட கர்த்தரு
டைய தேவாலயத்திற்குள் பிரவேசித்தான். —
ஆனால் ஆசாரியனாகிய அசரீயாவும், அவனோ ௰௭
டேகூடக் கர்த்தரின் ஆசாரியரான பராக்கிரமக்
காரராகிய எண்பதுபேரும், அவன் பிறகாலே
உள்பிரவேசித்து,-இராசாவாகிய உசியாவோடு ௰௮
எதிர்த்து நின்று, அவனுடனே, உசியாவே, கர்த்த
ருக்குத் தூபம்காட்டுகிறது உமக்கு அடுத்ததல்ல;
தூபம்காட்டப் பரிசுத்தமாக்கப்பட்ட ஆரோ
னின் குமாரராகிய ஆசாரியருக்கே அடுக்கும்;
பரிசுத்தஸ்தலத்தைவிட்டு வெளியே போம்;
ஏனெனில் மீறினவேலையைச் செய்தீர்; இது
பராபரனாகிய கர்த்தராலே உமக்கு மேன்மை
யாக லபியாதென்றார்கள்.
அப்போது உசியா மனமடிவாகி, தூபம்காட் ௰௯
ட ஒரு கலசத்தைக் கையிலே பிடித்திருந்தான்;
அவன் ஆசாரியரோடே மனமடிவாய்ப் பேசுகி
றபோதோவெனில், கர்த்தருடைய வீட்டிலே
தூபம்காட்டும் பீடத்தின் முன்நிற்கிற அவனு
டைய நெற்றியில் ஆசாரியர்களுக்குமுன்பாகக்
குஷ்டம் எழும்பிற்று. — பிரதான ஆசாரியனா ௨௰
கிய அசரீயாவும் எல்லா ஆசாரியர்களும் அவனை
ஏறிட்டுப்பார்க்கும்போது, இதோ அவன் தன்
நெற்றியிலே குஷ்டம்பிடித்தவனென்று கண்டு,
அவனைத் தீவிரமாக அங்கேயிருந்து புறப்படப்
பண்ணினார்கள்; அவன் தானும் கர்த்தர் தன்னை
அடித்ததினால் புறப்பட ஏவப்பட்டான்.—அப் ௨௧
படியே இராசாவாகிய உசியா தன் மரணநாள்
மட்டும் குஷ்டரோகியாயிருந்து, கர்த்தருடைய

வீட்டிற்குப் புறம்பாக்கப்பட்டபடியினாலே,
ஒரு தனித்த வீட்டிலே குஷ்டரோகியாய் வா
சம்பண்ணினான்; அவன் குமாரனாகிய யோத்
தாமோவெனில், இராசாவின் வீட்டுவிசாரிப்
புக்காரனாயிருந்து, தேசத்தின் சனத்தை நியாயம்
விசாரித்தான்.
உஉ உசியாவின் முன்பின் நடபடியான மற்ற வர்
த்தமானங்களை ஆமோத்சின் குமாரனாகிய ஏசா
உ௩ யாவென்ற தீர்க்கதரிசி எழுதினான். — உசியா
தன் பிதாக்களோடே நித்திரை அடைந்தபின்,
அவனை அவன் பிதாக்களண்டையில், இராசாக்
கள் அடக்கம்பண்ணப்படுகிறதற்கு அருகான
நிலத்திலே அடக்கம்பண்ணினார்கள்; ஏனென்
றால் அவர் குஷ்டரோகியென்றார்கள்; அவன்
குமாரனாகிய யோத்தாம் அவன் ஸ்தலத்தில்
இராசாவானான்.

## உஎ. அதிகாரம்.

*க. யோத்தாம் நன்றாய் அரசாண்டு வாழ்ந்தது. ரு. அம்மோனியர்களைச் செயித்தது. எ. அவன் அரசாண்ட காலம். கூ. ஆகாஸ் அவனுக்குப்பின் அரசாகிவந்தது.*

க யோத்தாம் இராசாவாகிறபோது, இருபத்தைந்
து வயதாயிருந்து, பதினாறு வருஷமாக எருசலே
மில் அரசாண்டான்; சாதோக்கின் குமாரத்தி
உ யாகிய அவன் தாயின்பேர் எருசாள்.—அவன்
தன் தகப்பனாகிய உசியா செய்தபடியெல்லாம்
கர்த்தரின் பார்வைக்குச் செம்மையானதைச்
செய்தான்; ஆனால் அவனைப்போலக் கர்த்தரின்
தேவாலயத்திற்குள் பிரவேசியாதிருந்தான்; சன
மோவென்றால் இன்னம் தன்னைக் கெடுத்துக்
௩ கொண்டிருந்தது.—இவன் கர்த்தருடைய வீட்
டின் உயர்ந்த வாசலைக் கட்டி, ஓபேலின் மதிலி
லும் வெகுவாய்க் கட்டினான்.
ச யூதாவின் மலைகளிலே பட்டணங்களையும்,
காடுகளிலே கோட்டைகளையும் கோபுரங்களை
ரு யும் கட்டினான்.—அவன் அம்மோன் புத்திரரு
டைய இராசாவோடு யுத்தம்பண்ணி அவர்க
ளுக்கு மேற்கொண்டான்; ஆனதுகொண்டு அம்
மோன் புத்திரர் அவனுக்கு அந்த வருஷத்திலே
நூறு தாலந்து வெள்ளியையும், பதினாயிரக்கலக்
கோதுமையையும், பதினாயிரக்கல வால்கோது
மையையும் கொடுத்தார்கள்; இப்படி அம்மோன்
புத்திரர் திரும்ப இரண்டாம் மூன்றாம் வருஷத்
சா திலும் அவனுக்குச் செலுத்தினார்கள். — அப்ப
டியே யோத்தாம் தன் வழிகளைத் தன் பராபர
னாகிய கர்த்தருக்குமுன்பாக நேராக்கினதினாலே
பலப்பட்டுப்போனான்.
எ யோத்தாமின் மற்ற வர்த்தமானங்களும், அவ
னுடைய எல்லா யுத்தங்களும், அவனுடைய
வழிகளும், இதோ இஸ்ரவேல் யூதா இராசாக்க
அ ளின் புஸ்தகத்தில் எழுதியிருக்கின்றன.—அவன்
இராசாவாகிறபோது, இருபத்தைந்து வயதாயி
ருந்து, பதினாறு வருஷமாய் எருசலேமில் அர
கூ சாண்டான்.—யோத்தாம் தன் பிதாக்களோடே
நித்திரை அடைந்தபின், அவனைத் தாவீதின் பட்
டணத்தில் அடக்கம்பண்ணினார்கள்; அவன்
குமாரனாகிய ஆகாஸ் அவன் ஸ்தலத்தில் இராசா
வானான்.

## உஅ. அதிகாரம்.

*க. ஆகாஸ் அநியாயமாய் அரசாண்டு சூரியர்களால் வாதிக்கப்பட்டது. கூ. யூதர் இஸ்ரவேல் சனங்களால் சிறைபிடிக்கப்பட்டு, ஓதேதென்னும் தீர்க்கதரிசியின் யோசனையினால் சொந்த தேசத்துக்கு அனுப்பப்பட்டது. ௰௬. ஆகாஸ் உதவிக்காக அசூரியனிடத்தில் ஆள்களை அனுப்பியும் பெறாதிருந்தது. உஉ. அவன் வருத்தப்பட்டகாலத்தில் அதிகமாய் விக்கிரகஆராதனையைச் செய்தது. உக. அவன் மரித்தபின் இஸ்கியா அரசாகிவந்தது.*

ஆகாஸ் இராசாவாகிறபோது இருபது வயதா க
யிருந்து, பதினாறு வருஷமாய் எருசலேமிலே
அரசாண்டான்; ஆனால் அவன் தன் தப்பனாகிய
தாவீதைப்போல, கர்த்தரின் பார்வைக்குச் செம்
மையானதைச் செய்யாமல்,—இஸ்ரவேல் இரா உ
சாக்களின் வழிகளில் நடந்து பாகால்களுக்குச்
சிலைகளையும் வார்ப்பித்தான்.—அவன் இன்னும் ௩
குமாரரின் பள்ளத்தாக்கிலே தூபம்காட்டி, கர்த்
தர் இஸ்ரவேல் புத்திரருக்குமுன்பாகத் துரத்தின
சாதிகளுடைய அருவருப்புகளின்படியே தன்
குமாரனை அக்கினியால் சுடுபோட்டு,—மேடை ச
களிலும், மேடுகளின்மேலும், பச்சையான சகல
மரங்களின்கீழும் பலியிட்டுத் தூபம்காட்டு
வான்.
ஆகையால் அவனுடைய பராபரனாகிய கர்த்தர் ரு
அவனைச் சூரியருடைய இராசாவின் கையில்
ஒப்புக்கொடுத்தார்; இவர்கள் அவனை முறியடித்
து, அவனுக்கிருக்கிறவர்களிலே பெரிய கூட்டத்
தைச் சிறைபிடித்துத் தமஸ்குவுக்குக் கொண்டு
போனார்கள்; அவன் இஸ்ரவேலனுடைய இராசா
வின் கையிலும் ஒப்புக்கொடுக்கப்பட்டான்;
இவன் அவனை வெகுவாய் முறியடித்தான்.—
ஏனெனில் யூதா மனுஷர் தங்கள் பிதாக்களின் சா
பராபரனாகிய கர்த்தரை விட்டபடியினாலே, ரெ
மலியாவின் குமாரனாகிய பேக்கா அவர்களில்
ஒரேநாளிலே நூற்றிருபதினாயிரம்பேரைக் கொ
ன்றுபோட்டான்; அவர்களெல்லாரும் நல்ல
சேவகராயிருந்தவர்கள்.—இதல்லாமல் எப்பிராயீ எ
மின் பலத்த மனுஷனாகிய சிக்ரீயும் இராசாவின்
குமாரனாகிய மாசேயாவையும், அரமனைத்தலைவ
னாகிய அஸ்ரீக்காமையும், இராசாவுக்கு இரண்
டாவதான எல்க்கானாவையும் கொன்றுபோட்
டான்.—இஸ்ரவேல் புத்திரர் தங்கள் சகோதரரில் அ
இருநூறாயிரம்பேராகிய ஸ்திரிகளையும் குமாரரை
யும் குமாரத்திகளையும் சிறைபிடித்து, அவர்களில்
மகா ஏராளமுமாய்க் கொள்ளையிட்டு, கொள்ளை
யைச் சமாரியாவுக்குக் கொண்டுபோனார்கள்.
ஆனால் அங்கே ஓதேதென்று பேருள்ள கர்த் கூ
தருடைய தீர்க்கதரிசி இருந்தான்; அவன் சமா
ரியாவுக்கு வருகிற இராணுவத்திற்கு எதிராகப்
புறப்பட்டு, அவர்களுடனே சொன்னதாவது:
இதோ உங்கள் பிதாக்களின் பராபரனாகிய கர்
த்தர் யூதாவின்மேல் உக்கிரமானதினால் அவர்களை
உங்கள் கைகளில் ஒப்புக்கொடுத்தார்; நீங்களோ
வென்றால் வானபரியந்தம் எட்டுகிற சினத்தோ
டே அவர்களில் சங்காரம் உண்டாக்கினீர்கள்.—

௰ இப்போதும் யூதாவின் புத்திரரையும் எருசலேமி
யரையும் நீங்கள் உங்களுக்கு வேலைக்காரராக
வும் வேலைக்காரிகளாகவும் கீழ்ப்படுத்தவேண்டு
மென்று நினைக்கிறீர்கள்; உங்கள் பராபரனாகிய
கர்த்தருக்கு விரோதமான குற்றமுள்ளவர்கள்
௰௧ நீங்கள்தானுமல்லவோ? — இப்போதும் நீங்கள்
எனக்குக் கேள்விகொடுத்து, நீங்கள் உங்கள்
சகோதரரிடத்திலே சிறைபிடித்துக்கொண்டுவந்
தவர்களைத் திரும்ப அனுப்பிவிடுங்கள்; ஏனெ
னில் கர்த்தருடைய கோபத்தின் உக்கிரம் உங்
௰௨ கள்மேல் இருக்கின்றதென்றான். — அப்போது
எப்பிராயீம் புத்திரரின் தலைவரில் சிலபேராகிய
யோக்கனனின் குமாரன் அசரீயாவும், மெஷிலே
மோதின் குமாரன் பேரேகீயாவும், சல்லூமின்
குமாரன் இஸ்கீயாவும், அத்லாயின் குமாரன்
அமாசாவும் இராணுவத்தில் இருந்தவர்களுக்கு
௰௩ விரோதமாக எழும்பி,—அவர்களுடனே, நீங்கள்
சிறைபிடித்த இவர்களை இங்கே உள்ளே கொண்
டுவரவேண்டாம்; ஏனென்றால் நம்முடைய
மேல் திரள் குற்றமும், இஸ்ரவேலின்மேல் கோ
பத்தின் உக்கிரமும் இருக்கையில், நீங்கள் கர்த்த
ருக்குமுன்பாக நம்முடையமேல் குற்றம்சுமரப்
பண்ணத்தக்கவிதமாய், நம்முடைய பாவங்களை
யும் நம்முடைய குற்றங்களையும் அதிகமாக்க
௰௪ நினைக்கிறீர்களென்றார்கள்.—அப்போது ஆயுத
முஸ்திப்பானவர்கள் சிறைபிடித்தவர்களையும்
கொள்ளையுடைமைகளையும் பிரபுக்களுக்கும்
எல்லாச் சபைக்குமுன்பாக விட்டுவிட்டார்
௰௫ கள்.—அப்போது பேர்பேராகச் சொல்லப்பட்ட
மனுஷர் எழும்பி, சிறைபிடிக்கப்பட்டவர்களைச்
சேர்த்துக்கொண்டு, அவர்களில் அம்மணமான
வர்கள் எல்லாருக்கும் கொள்ளை உடைமைக
ளால் வஸ்திரங்களைக் கொடுத்து, அவர்களுக்கு
உடுப்பையும் பாதரட்சைகளையும் போடுவித்து,
அவர்களுக்குச் சாப்பாடும் தாகத்திற்கும் கொ
டுத்து, அவர்களுக்கு எண்ணெய் வார்த்து, அவர்
களில் பலட்சயமானவர்களையெல்லாம் கழுதை
கள்மேல் ஏற்றி, பேரீச்சுகளின் பட்டணமாகிய
எரிகோவிலே அவர்கள் சகோதரரண்டைக்குக்
கொண்டுவந்துவிட்டு, சமாரியாவுக்குத் திரும்பி
னார்கள்.

௰௬ அக்காலத்திலே ஆகாசென்ற இராசா அசூரின்
இராசாக்கள் தனக்கு ஒத்தாசைபண்ண அவர்க
௰௭ ளண்டைக்கு ஆள்களை அனுப்பினான்.—ஏதோ
மியரும் கூடவந்து, யூதாவை முறியடித்து, சில
௰௮ ரைச் சிறைபிடித்துப் போயிருந்தார்கள். — பெ
லிஸ்தியரும் யூதாவிலே சமனான பூமியிலும்
தெற்கேயுமிருக்கிற பட்டணங்கள்மேல் விழுந்
து, பெத்சேமேசையும், ஆயலோனையும், கெதே
ரோத்தையும், சொக்கோபையும் அதின் கிராமங்
களையும், திம்னாவையும் அதின் கிராமங்களையும்,
கிம்சோவையும் அதின் கிராமங்களையும் பிடித்
௰௯ து, அங்கே குடியேறினார்கள்.—ஏனென்றால் யூ
தாவின் இராசாவாகிய ஆகாசின்நிமித்தம் கர்த்தர்
யூதாவைத் தாழ்வாக்கினார்; அதேனென்றால்
அவன் யூதாவைச் சீர்கேடாக்கி, கர்த்தருக்கு
விரோதமாய் மிகவும் துரோகம்பண்ணினான்.—
அசூரின் இராசாவாகிய தில்காத்பில்நேசர் அவ ௨௰
னண்டைக்கு வந்தான்; ஆனால் அவனைத் திடப்
படுத்தாமல் அவனை நெருக்கம்பண்ணினான்.—
ஏனெனில் ஆகாஸ் கர்த்தருடைய வீட்டில் ஒரு ௨௧
பங்கும், இராச அரமனையில் ஒருபங்கும் பிரபுக்
களின் கையில் ஒருபங்கும் பிடித்து, அசூரின்
இராசாவுக்குக் கொடுத்தும், அவனுக்கு உதவா
தேபோயிற்று.—தான் நெருக்கப்படுகிற காலத்தி ௨௨
லும்கூடக் கர்த்தருக்கு விரோதமாய் அந்த ஆகா
சென்ற இராசா துரோகம்பண்ணிக்கொண்டே
இருந்தான்.

அதேதெனில் தன்னை முறியடித்த தமஸ்கு ௨௩
வின் தேவர்களுக்கு அவன் பலியிட்டு, சூரியா
வினுடைய இராசாக்களின் தேவர்கள் அவர்க
ளுக்கு ஒத்தாசைபண்ணுகிறபடியினாலே, அவர்
கள் எனக்கும் ஒத்தாசைபண்ண அவர்களுக்
குப் பலியிடுவேனென்பான்; ஆனால் அவைகள்
அவனுக்கும் இஸ்ரவேலனைத்திற்கும் விழுகிற
தற்கு இனமாயிற்று.—ஆகாஸ் பராபரனுடைய ௨௪
வீட்டின் தட்டுமுட்டுகளைக் கூட்டி, பராபரனு
டைய வீட்டின் தட்டுமுட்டுகளைத் துண்டுதுண்
டாக்கி, கர்த்தருடைய வீட்டின் கதவுகளைப் பூட்
டிப்போட்டு, எருசலேமில் சகல மூலையிலும்
தனக்குப் பலிபீடங்களை உண்டுபண்ணி,—அந் ௨௫
நிய தேவர்களுக்குத் தூபம்காட்டும்படிக்கு, யூதா
வின் ஒவ்வொரு பட்டணத்திலே மேடைகளை
உண்டுபண்ணி, தன் பிதாக்களின் பராபரனாகிய
கர்த்தருக்குக் கோபமுண்டாக்கினான்.

அவனுடைய மற்ற வர்த்தமானங்களும் அவ ௨௬
னுடைய முன்பின் வழிகளுமெல்லாம் இதோ
அவைகள் யூதா இஸ்ரவேல் இராசாக்களின் புஸ்
தகத்தில் எழுதியிருக்கின்றன.—ஆகாஸ் தன் பி ௨௭
தாக்களோடே நித்திரை அடைந்தபின், அவனை
எருசலேம் பட்டணத்தில் அடக்கம்பண்ணினார்
கள்; ஆனால் இஸ்ரவேல் இராசாக்களின் கல்ல
றைகளில் அவனைக் கொண்டுவந்து வைக்கவில்
லை; அவன் குமாரனாகிய இஸ்கீயா அவன் ஸ்த
லத்தில் இராசாவானான்.

## ௨௯. அதிகாரம்.

௧. இஸ்கீயாவின் நல்ல ஆளுகை. ௩. அவன் தேவாராதனையை விர்த்தி பண்ணினது. ௫. அவன் இலேவியர்களைச் சீர்திருத்தினது. ௰௬. அவர்கள் பரிசுத்தமாகிய தேவாலயத்தைச் சுத்திசெய்தது. ௨௰. இஸ்கீயா பலி செலுத்தினபோது, ஆசாரியர்களைப்பார்க்கிலும் இலேவியர் அதிக சாக்கிரதையாயிருந்தது.

இஸ்கீயா இருபத்தைந்தாம் வயதில் இராசாவா ௧
கி, இருபத்தொன்பது வருஷமாய் எருசலேமில்
அரசாண்டான்; சகரீயாவின் குமாரத்தியாகிய
அவனுடைய தாயின்பேர் அபியாள்.—அவன் ௨
தன் தகப்பனாகிய தாவீது செய்தபடியெல்லாம்
கர்த்தரின் பார்வைக்குச் செம்மையானதைச்
செய்தான்.

அவன் தன் இராச்சியபாரத்தின் முதலாம் ௩
வருஷம் முதலாம்மாதத்திலே கர்த்தருடைய வீட்

டின் கதவுகளைத் திறந்து, அவைகளைப் பழுது
௪ பார்த்து,— ஆசாரியரையும் இலேவியரையும்
அழைத்துவந்து, அவர்களைக் கிழக்கு வீதியிலே
௫ கூட்டிக்கொண்டு,—அவர்களுடனே சொன்ன
தாவது: இலேவியரே, என்னைக் கேளுங்கள்;
நீங்கள் இப்போது உங்களைப் பரிசுத்தம்பண்
ணிக்கொண்டு, உங்கள் பிதாக்களின் பராபரனா
கிய கர்த்தருடைய வீட்டைப் பரிசுத்தம்பண்
ணி, அழுக்கைப் பரிசுத்தஸ்தலத்திலிருந்து வெ
௬ ளியே கொண்டுபோங்கள்.— ஏனென்றால் நம்
முடைய பிதாக்கள் துரோகம்பண்ணி, நம்மு
டைய பராபரனாகிய கர்த்தரின் பார்வைக்குப்
பொல்லாப்பானதைச் செய்து, அவரை விட்டு,
தங்கள் முகங்களைக் கர்த்தருடைய வாசஸ்தலத்
தைவிட்டுத் திருப்பி அதற்குப் பிடரியைக் காட்
௭ டினார்கள்.—அவர்கள் மண்டபத்தின் கதவுகளை
யும் பூட்டி, விளக்குகளை அணைத்துப்போட்டு,
தூபவர்க்கத்தைக் காட்டாமலும் பரிசுத்தஸ்த
லத்தில் இஸ்ரவேலின் பராபரனுக்குச் சர்வாங்
கதகனபலியைச் செலுத்தாமலும் போனார்கள்.—
௮ ஆகையால் கர்த்தருடைய கடுங்கோபம் யூதா
வின்மேலும் எருசலேமின்மேலும் வந்து, அவர்
இவர்களை நீங்கள் உங்கள் கண்களினால் காண்கி
றபடி, அலைச்சலுக்கும் பாழாகுதலுக்கும் பயில்
௯ போடுதலுக்கும் ஒப்புக்கொடுத்தார். — இதோ
இதின்நிமித்தமாக நம்முடைய பிதாக்கள் பட்
டையத்தினால் விழுந்து, நம்முடைய குமாரரும்
நம்முடைய குமாரத்திகளும் நம்முடைய பெ
ண்சாதிகளும் சிறையிருப்பில் அகப்பட்டார்
௰ கள்.—இப்போதும் இஸ்ரவேலின் பராபரனாகிய
கர்த்தருடைய கோபத்தின் உக்கிரம் நம்மை
விட்டுத் திரும்பும்படிக்கு, அவரோடே உடம்ப
டிக்கைபண்ண என் மனதிலே நிருணயித்துக்
௰௧ கொண்டேன்.—என் குமாரரே, இப்போது
அசதியாயிராதேயுங்கள்; ஏனெனில் நீங்கள்
கர்த்தருக்குப் பணிவிடை செய்கிறதற்கு, அவ
ருக்குமுன்பாக நிற்கவும், அவருக்கு ஊழியம்
செய்கிறவர்களும் தூபங்காட்டுகிறவர்களுமாயி
ருக்கவும் உங்களை அவர் தெரிந்துகொண்டா
ரென்றான்.
௰௨ அப்போது கேகாத் புத்திரரில் அமாசாயின்
குமாரன் மகாதும், அசரியாவின் குமாரன் யோ
வேலும், மெராரியின் புத்திரரில் அப்தியின்
குமாரன் கீசும், எக்லேலின் குமாரன் அசரியாவு
ம், கெர்சோனியரில் சிம்மாவின் குமாரன் யோ
௰௩ வாகும், யோவாகின் குமாரன் ஏதேனும்,—எலிச்
சாப்பான் புத்திரரில் சிம்ரியும்,ஏயேலும்,ஆசாப்
பின் புத்திரரில் சகரியாவும், மத்தனியாவும்,—
௰௪ ஏமானின் புத்திரரில் எகியேலும், சீமேயியும்,
எதுத்தூனின் புத்திரரில் செமாயாவும், ஊசியே
௰௫ லுமென்ற இலேவியர் எழும்பி,—தங்கள் சகோ
தரரைக் கூட்டி, பரிசுத்தம்பண்ணிக்கொண்டு,
கர்த்தருடைய வசனங்களுக்கொத்த இராசாவி
னுடைய கற்பனையின்படியே கர்த்தருடைய
௰௬ வீட்டைச் சுத்திகரிக்க வந்தார்கள்.—ஆசாரியர்
கள் கர்த்தருடைய வீட்டின் உள்புறத்திலே சுத்
திகரிக்கும்படிக்குப் பிரவேசித்து, கர்த்தருடைய
தேவாலயத்தில் கண்டுபிடித்த சகல அசுத்தத்
தையும் வெளியே கர்த்தருடைய வீட்டுப் பிரகா
ரத்தில் கொண்டுவந்தார்கள்; அப்போது இலே
வியர் அதை வெளியே கீதரோன் ஆற்றிற்குக்
கொண்டுபோக வாங்கிக்கொண்டார்கள். —
முதல்மாதம் முதல்தேதியிலே அவர்கள் பரிசுத் ௰௭
தம் பண்ணத்துவக்கி, எட்டாம்தேதியிலே கர்த்
தருடைய மண்டபத்திலே பிரவேசித்து, கர்த்த
ருடைய வீட்டை எட்டுநாளில் பரிசுத்தம்பண்
ணி, முதலாம்மாதம் பதினாறாம்தேதியிலே அதை
முடித்து,
இராசாவாகிய இஸ்கியாவண்டைக்கு உள்ளே ௰௮
பிரவேசித்து, நாங்கள் கர்த்தரின் வீடனைத்தை
யும், சர்வாங்கதகனபலிபீடத்தையும், அதினு
டைய எல்லாப் பணிமுட்டுகளையும், சமுகத்தப்
பங்களின் மேசையையும், அதின் சகல பணி
முட்டுகளையும் சுத்திகரித்து,— இராசாவாகிய ௰௯
ஆகாஸ் அரசாளுகிறபோது தம்முடைய பாதகத்
தினால் எறிந்துபோட்ட சகல தட்டுமுட்டுகளை
யும் முஸ்திப்பாக்கிப் பரிசுத்தம்பண்ணினோம்;
இதோ அவைகள் கர்த்தரின் பீடத்திற்குமுன்
பாக இருக்கின்றன என்றார்கள்.
அப்போது இராசாவாகிய இஸ்கியா காலமே ௨௰
எழுந்திருந்து, பட்டணத்தின் பிரபுக்களைக் கூட்
டிக்கொண்டு, கர்த்தரின் வீட்டிற்குப் போயேறி
னான்.—அப்போது இராச்சியபாரத்திற்காகவும் ௨௧
பரிசுத்தஸ்தலத்திற்காகவும் யூதாவுக்காகவும் ஏழு
காளைகளையும், ஏழு ஆட்டுக்கடாக்களையும், ஏழு
ஆட்டுக்குட்டிகளையும், ஏழு வெள்ளாட்டுக்க
டாக்களையும் பாவம்போக்கும்பலியாகக் கொண்
டுவந்தார்கள்; அவைகளைக் கர்த்தருடைய பலிபீ
டத்தின்மேல் பலியிடுங்களென்று அவன் ஆசா
ரியராகிய ஆரோனின் புத்திரருக்குச் சொன்
னான். — அப்படியே எருதுகளைக் குரல்வளை ௨௨
அறுத்தார்கள்; அந்த இரத்தத்தை ஆசாரியர் பிடித்
துப் பலிபீடத்தின்மேலே தெளித்தார்கள்; ஆட்
டுக்கடாக்களைக் குரல்வளை அறுத்து, அவைக
ளின் இரத்தத்தைப் பலிபீடத்தின்மேலே தெளித்
தார்கள்; ஆட்டுக்குட்டிகளையும் குரல்வளை அறு
த்து அவைகளின் இரத்தத்தைப் பலிபீடத்தின்
மேலே தெளித்தார்கள்.—பிற்பாடு பாவம்போக் ௨௩
குதலின் வெள்ளாட்டுக்கடாக்களை இராசாவுக்
கும் சபைக்கும்முன்பாக ஓட்டிவந்தார்கள்; அ
வைகள்மேல் இவர்கள் தங்கள் கைகளை வைத்
தார்கள்.—பிற்பாடு ஆசாரியர் அவைகளைக் குரல் ௨௪
வளை அறுத்து, இஸ்ரவேலனைத்திற்கும் பாவ
நிவிர்த்தி உண்டாக்க, அவைகளின் இரத்தத்
தால் பலிபீடத்தின்மேல் பாவம்போக்கினார்கள்;
ஏனென்றால் இஸ்ரவேல் அனைத்திற்காகவும், சர்
வாங்கதகனபலியையும் பாவம்போக்கும் பலி
யையும் செலுத்துங்கள் என்று இராசா சொல்லி
யிருந்தான்.—அவன் தாவீதும், இராசாவின் ஞா ௨௫
னதிருஷ்டியுள்ள புருஷனாகிய காதும், தீர்க்கத

ரிசியாகிய நாத்தானும் கற்பித்தபடியே, கைத்தா
ளங்களையும் தம்புருகளையும் சுரமண்டலங்களை
யும் வாசிக்கிற இலேவியரையும் கர்த்தருடைய
வீட்டிலே நிறுத்தினான்; ஏனென்றால் கர்த்தரால்
இந்தக் கற்பனை அவருடைய தீர்க்கதரிசிகளைக்
௨௬ கொண்டு உண்டாயிருந்தது.-அப்படியே இலே
வியர் தாவீதின் கீதவாத்திய முட்டுகளையும், ஆ
சாரியர்கள் பூரிகைகளையும் பிடித்து நின்றார்கள்.-
௨௭ அப்போது இஸ்கியா சர்வாங்கதகனபலிகளைப்
பலிபீடத்தின்மேலே செலுத்தக் கற்பித்தான்;
அதைச் செலுத்தத் துவக்கப்படுகிற நேரத்திலே
கர்த்தரின் கீதமும் பூரிகைகளும், தாவீதென்ற
இஸ்ரவேலுடைய இராசாவின் கீதவாத்திய முட்
௨௮ டுகளும் முழங்கத் துவக்கின.—கீதத்தைப் பாடி,
பூரிகைகளை ஊதிக்கொண்டிருக்கையில், சபை
யெல்லாம் பணிந்துகொண்டிருந்து, சர்வாங்கத
கனத்தைச் செலுத்தித் தீருமட்டும் இப்படி
௨௯ யெல்லாம் இருந்தது.-பலியிட்டுத் தீர்ந்தபோது,
இராசாவும் அவனோடிருந்த அனைவரும் குனிந்
௩௰ து பணிந்துகொண்டார்கள்.—பிற்பாடு இஸ்கியா
இராசாவும் பிரபுக்களும் இலேவியருடனே, நீங்
கள் கர்த்தரைத் தாவீதும் ஞானதிருஷ்டியுள்ள
புருஷனாகிய ஆசாபும் பாடின வார்த்தைகளினா
லே துதியுங்களென்றார்கள்; அப்போது மகிழ்ச்
சியாகுமட்டும் துதிசெய்து குனிந்து பணிந்து
கொண்டார்கள்.

௩௧ அதின்பிறகு இஸ்கியா மாறுத்தரவாக, இப்
போதும் கர்த்தருக்கென்று உங்கள் கைகளை நிரப்
பினீர்களே; ஆகையால் சேர்ந்து, கர்த்தருடைய
வீட்டிற்குப் பலிகளையும் துதியின் பலிகளையும்
கொண்டுவாருங்களென்றான்; அப்போது சபை
யானது பலிகளையும், துதியின் பலிகளையும், மனப்
பூர்வமானவனெல்லாம் சர்வாங்கதகனபலிகளை
௩௨ யும் கொண்டுவந்தார்கள்.—சபை கொண்டுவந்த
சர்வாங்கதகனபலிகளின் தொகை எழுபது கா
ளைகளும் நூறு ஆட்டுக்கடாக்களும் இருநூறு
ஆட்டுக்குட்டிகளுமானது; இவைகளெல்லாம்
௩௩ கர்த்தருக்குச் சர்வாங்கதகனமாயின.—பரிசுத்த
வேலைக்குக் கொடுக்கப்பட்டவைகளோவெ
னில், அறுநூறு காளைகளும் மூவாயிரம் ஆடுகளு
௩௪ மானவை.-ஆனால் அந்தச் சர்வாங்கதகனமாகும்
சீவன்களையெல்லாம் குரல்வளை அறுக்க, கொஞ்
சம்பேரான ஆசாரியர்களால் முடியாதபடியினா
லே, அந்த வேலை தீருமட்டாகவும், மற்ற ஆசா
ரியர் தங்களைப் பரிசுத்தம்பண்ணுமட்டாகவும்,
அவர்கள் சகோதரராகிய இலேவியர் அவர்க
ளுக்கு உதவிசெய்தார்கள்; ஏனெனில் தங்களைப்
பரிசுத்தம்பண்ண இலேவியர் ஆசாரியரைப்
பார்க்கிலும் மனம் செம்மையாயிருந்தார்கள். —
௩௫ ஏனென்றால் சர்வாங்கதகனபலிகளும், ஸ்தோத்
திரப்பலிகளின் கொழுப்புகளோடும் சர்வாங்க
தகனங்களுக்கடுத்த ஊற்றுதல்களோடுங்கூட அ
நேகமாயிருந்தன; அப்படியே கர்த்தருடைய
வீட்டின் ஆராதனை திட்டம்பண்ணப்பட்டது.-
௩௬ பராபரன் சனத்தை ஆயத்தப்படுத்தினதற்காக,
இஸ்கியாவும் சனமனைத்தும் சந்தோஷப்பட்டார்
கள்; ஏனென்றால் இந்தக்காரியம் தீவிரத்துடனே
செய்யப்பட்டது.

## ௩௰. அதிகாரம்.

௧. இஸ்கியா இரண்டாம் மாதத்தில் யூதர்களுக்கும் இஸ்ரவேலருக்கும், பஸ்காப்பண்டிகையைக் கட்டளையிட்டது. ௰௩. சனக்கூட்டம் விக்கிரக ஆராதனையின் பலிபீடத்தை அழித்து, பதினாலு நாள்மட்டும் விருந்தை அநுசரித்தது. ௨௭ ஆசாரியர்களும் இலேவியர்களும் சனங்களை ஆசீர்வதித்தது.

அதின்பிறகு இஸ்ரவேலின் பராபரனாகிய கர்த் ௧
தருக்குப் பஸ்காவை ஆசரிக்கும்படிக்கு, எருச
லேமிலிருக்கிற கர்த்தருடைய வீட்டிற்கு வா
ருங்களென்று இஸ்கியா இஸ்ரவேல் யூதாவெங்
கும் ஆள்களை அனுப்பி, எப்பிராயீம் மனாசே
கோத்திரங்களுக்கும் நிருபங்களை எழுதி அனுப்
பினான்.—ஏனெனில் பஸ்காவை இரண்டாம்மா ௨
தத்தில் ஆசரிக்கும்படிக்கு, இராசாவும் அவனு
டைய பிரபுக்களும் எருசலேமிலுள்ள சபைய
னைத்துமாய் யோசனைபண்ணி இருந்தார்கள்.—
அதேதென்றால் ஆசாரியர் போந்தபிரகாரமாய்த் ௩
தங்களைப் பரிசுத்தம்பண்ணாமலும், சனம் எருச
லேமிலே இன்னம் கூடிவராமலும் இருந்தபடியி
னாலே அக்காலத்திலே அதை ஆசரிக்கக்கூடா
தேபோயிற்று.-இந்தக்காரியம் இராசாவின் பார் ௪
வைக்கும் எல்லாச் சபையின் பார்வைக்கும்
நியாயமாய்க் கண்டு,—இஸ்ரவேலின் பராபரனா ௫
கிய கர்த்தருக்குப் பஸ்காவை ஆசரிக்கிறதற்கு, எ
ருசலேமுக்கு வாருங்களென்று பெர்சேபாவை
த்துவக்கித் தாண்மட்டுமுள்ள இஸ்ரவேல் தேச
மெங்கும் பறைமுறையிடுவிக்கத் தீர்மானம்பண்
ணினார்கள்; ஏனெனில் திரள்கூட்டமாய் அவர்
கள் அதை எழுதியிருக்கிறபடி ஆசரித்ததில்லை.

அப்படியே இராசாவும் அவனுடைய பிரபுக்க ௬
ளும் கொடுத்த நிருபங்களை அஞ்சல்காரர் வாங்கி,
இராசாவுடைய கற்பனையின்படியே இஸ்ரவேல்
யூதாவெங்கும் போய்ச் சொன்னதாவது: இஸ்ர
வேல் புத்திரரே, ஆபிரகாம், ஈசாக், இஸ்ரவேலு
டைய பராபரனாகிய கர்த்தரண்டைக்குத் திரும்
புங்கள்; அப்போது அசூருடைய இராசாக்க
ளின் கைக்குத் தப்பி உங்களுக்கு மீதியானவர்
களண்டைக்கு அவர் திரும்புவார்.-தங்கள் பிதாக் ௭
களின் பராபரனாகிய கர்த்தருக்குத் துரோகம்
பண்ணின உங்கள் பிதாக்களைப்போலும் உங்கள்
சகோதரரைப்போலும் இராதேயுங்கள்; அதற்
காக நீங்கள் காண்கிறபடியே அவர்களைப் பா
ழாக்குதலுக்கு ஒப்புக்கொடுத்தாரே.—இப்போ ௮
தும் உங்கள் பிதாக்களைப்போல உங்கள் பிடரி
யைக் கடினப்படுத்தாதேயுங்கள்; நீங்கள் கர்த்த
ருக்கு அஸ்தம்கொடுத்து, அவர் என்றுமுள்ள கா
லமாகப் பரிசுத்தம்பண்ணின அவருடைய பரி
சுத்தஸ்தலத்திற்கு வந்து, உங்கள் பராபரனாகிய
கர்த்தரைச் சேவியுங்கள்; அப்போது அவருடை
ய கோபத்தின் உக்கிரம் உங்களைவிட்டுத் திரும்
பும். — ஏனெனில் நீங்கள் கர்த்தரண்டைக்குத் ௯
திரும்பினால், உங்கள் சகோதரரும் உங்கள் பிள்

ளைகளும் தங்களைச் சிறைபிடித்தவர்களுக்கு முன்பாக இரக்கம்பெறுகிறதற்கும், இந்தத் தேசத்திற்குத் திரும்புகிறதற்கும் அது உதவும்; அதேதென்றால் உங்கள் பராபரனாகிய கர்த்தர் கிருபையும் இரக்கமுமுள்ளவர்; நீங்கள் அவரண்டைக்குத் திரும்பினால், அவர் தம்முடைய முகத்தை உங்களைவிட்டு விலக்குவதில்லையென்றார்கள்.

௰ அப்படி அந்த அஞ்சல்காரர் எப்பிராயீம் மனாசே தேசங்களிலும் சேபுலோன்மட்டுக்கும் ஊரூராகத் திரிந்தார்கள்; ஆனால் அவர்கள் இவர்களை
௰௧ நகைத்துப் பரியாசம்பண்ணினார்கள்.—ஆகிலும் ஆசேரிலும் மனாசேயிலும், சேபுலோனிலும், சிலர் மனத்தாழ்மையாகி எருசலேமுக்கு வந்தார்
௰௨ கள்.–கர்த்தருடைய வார்த்தையின்படியே, இராசாவும் பிரபுக்களும் கற்பித்தபிரகாரமாகச் செய்கிறதற்கு,யூதாவின்மேலும் பராபரனுடைய கரம் அவர்களை ஒருமனப்படுத்தி இருந்தது.
௰௩ அப்படியே இரண்டாம்மாதத்தில் புளிப்பில்லாத அப்பங்களின் பண்டிகையை ஆசரிக்க வெகு சனம் எருசலேமிலே கூடிற்று; மகா பெரிய
௰௪ கூட்டமாயிற்று.—அவர்கள் எழும்பி, எருசலேமிலுண்டான பீடங்களை அகற்றி, தூபம்காட்டும் தட்டுமுட்டுகளையெல்லாம் அகற்றிக் கீதரோன்
௰௫ ஆற்றிலே போட்டார்கள்.—பிற்பாடு அந்த இரண்டாம்மாதம் பதினாலாம்தேதியிலே பஷாவின் ஆட்டுக்குட்டிகளைக் குரல்வளை அறுத்தார்கள்; ஆசாரியரும் இலேவியரும் வெட்கி, தங்களைச் சுத்தம்பண்ணி, சர்வாங்கதகனபலிகளைக் கர்த்த
௰௬ ருடைய வீட்டிற்குக் கொண்டுவந்து,—பராபரனுடைய மனுஷனாகிய மோசேயின் நியாயப்பிரமாணத்திற்கு ஒத்த தங்கள் முறைமையின்படியே தங்கள் தானத்திலே நின்றார்கள்; ஆசாரியர் இலேவியரின் கையிலே இரத்தத்தை வாங்கித் தெளித்தார்கள்.
௰௭ ஏனெனில் சபையிலே அநேகர் தங்களைப் பரிசுத்தம் பண்ணிக்கொள்ளாதிருந்தார்கள்; ஆகையால் சுத்தமில்லாத எல்லாரையும் கர்த்தருக்குப் பரிசுத்தம்பண்ண, இலேவியர் அவர்களுக்காகப் பஷாவின் ஆட்டுக்குட்டிகளைக்குரல்வளை
௰௮ அறுக்கும் வேலையை விசாரித்தார்கள்.—அதேதென்றால் எப்பிராயீம், மனாசே, ஈசகார், சேபுலோன் மனுஷரில் ஏராளமான அநேகம் சனம் சுத்தம்பண்ணிக்கொள்ளாதிருந்தும், எழுதியிராத பிரகாரமாகப் பஷாவைச் சாப்பிட்டார்கள். —
௰௯ ஏனெனில் இஸ்கியா அவர்களுக்காக விண்ணப்பம்பண்ணி, தங்கள் பிதாக்களின் தேவனாகிய கர்த்தரான பராபரனைத் தேடும்படிக்கு, தங்கள் இருதயத்தை நேராக்கினவர்கள் பரிசுத்தஸ்தலத்தில் சுத்தாங்கம் அடையாதிருந்தாலும், கிருபையுள்ள பராபரன் அவர்களெல்லாருக்கும் மன்
௨௰ னிப்பாராகவென்றான்.—கர்த்தர் இஸ்கியாவின் விண்ணப்பம் கேட்டுச் சனத்திற்கு ஆரோக்கியம் கொடுத்தார்.
௨௧ அப்படியே எருசலேமிலே காணப்பட்ட இஸ்ரவேல் புத்திரர் புளிப்பில்லாத அப்பங்களின் பண்டிகையை ஏழுநாளாக மகா மகிழ்ச்சியோடே ஆசரித்தார்கள்; இலேவியரும் ஆசாரியரும் தினம்தினம் கர்த்தருக்கென்று ஓசையாய்த் தொனிக்கும் கீதவாத்தியங்களால் கர்த்தனைத்
துதித்துக்கொண்டிருந்தார்கள்.—கர்த்தருக்கடுத்த ௨௨
காரியத்திலே நல்ல உணர்வுள்ள எல்லா இலேவியரோடும் இஸ்கியா பட்சமாய்ப் பேசுவான்; இப்படி அவர்கள் பண்டிகைக்கானதை ஏழுநாள் புசித்து, ஸ்தோத்திரப்பலிகளைச் செலுத்தி, தங்கள் பிதாக்களின் பராபரனாகிய கர்த்தனைத் துதித்துக்கொண்டிருந்தபிற்பாடு,

வேறே ஏழுநாளை ஆசரிக்கச் சபையெல்லாம் ௨௩
யோசனைபண்ணி, அந்த ஏழுநாளையும் மகிழ்ச்சியோடே ஆசரித்தார்கள்.—ஏனெனில் யூதாவின் ௨௪
இராசாவாகிய இஸ்கியா சபைக்கு ஆயிரம் காளைகளையும் ஏழாயிரம் ஆடுகளையும் கொடுத்தான்; பிரபுக்களும் சபைக்கு ஆயிரம் காளைகளையும் பதினாயிரம் ஆடுகளையும் கொடுத்தார்கள்; ஆசாரியரின் திரள் சனமும் தங்களைச் சுத்தம்பண்ணி
னார்கள்.—யூதாவின் சபையனைத்தும், ஆசாரிய ௨௫
ரும், இலேவியரும்,இஸ்ரவேலிலிருந்து வந்தவர்களுடைய சபையனைத்துமாகிய இஸ்ரவேல் தேசத்திலிருந்து வந்த அந்நியரும், யூதாவில் குடியிருக்கிறவர்களும் மகிழ்ச்சியாயிருந்தார்கள்.—
அப்படியே எருசலேமில் மகா சந்தோஷம் உண் ௨௬
டாயிருந்தது; ஏனெனில் தாவீதின் குமாரனாகிய சாலோமோனென்ற இஸ்ரவேலுடைய இராசாவின் நாள்கள் முதல்கொண்டு இப்படிக்கொத்தது எருசலேமிலே நடந்ததில்லை.

இலேவியரான ஆசாரியர்கள் எழுந்து நின்று, ௨௭
சனத்தை ஆசீர்வதித்தார்கள்; அவர்களுடைய சத்தம் கேட்கப்பட்டு, அவர்கள் விண்ணப்பம் பரமண்டலங்களிலுள்ள அவருடைய பரிசுத்த வாசஸ்தலத்திற்கு ஏறிற்று.

## ௩௧. அதிகாரம்.

*௧. சனங்கள் விக்கிரகஆராதனையை அழிக்கத் தலைப்பட்டது. ௨. இஸ்கியா ஆசாரியர் இலேவியர் முறைமையை ஏற்படுத்தி, அவர்களின் வேலைக்கும் போசனத்துக்கும் திட்டம்பண்ணினது. ௫. சனங்கள் காணிக்கைகளையும் பத்தில் ஒரு பலனையும் செலுத்தப் பிரியப்பட்டது. ௰௧. பத்தில் ஒரு பங்கை வாங்க, இஸ்கியா வேலைக்காரரை நியமித்தது. ௨௰. இஸ்கியாவின் உண்மை.*

இதையெல்லாம் முடித்தபிற்பாடு வந்திருந்த ௧
இஸ்ரவேலரெல்லாம் யூதாவின் பட்டணங்களுக்குப் புறப்பட்டுப்போய், யூதா பென்யமீனெங்கும் எப்பிராயீமிலும் மனாசேயிலும்கூட உண்டான சிலைகளை உடைத்து, தோப்புகளை வெட்டி,மேடைகளையும் பீடங்களையும் இடித்து, அவைகளையெல்லாம் தீரத்தள்ளி, பிற்பாடு இஸ்ரவேல் புத்திரரெல்லாம் அவரவர் தங்கள் ஊர்களிலிருக்கிற தங்கள் காணியாட்சிக்குத் திரும்பினார்கள்.

இஸ்கியா ஆசாரியர்கள் இலேவியருடைய ௨
வகுப்புகளை அவர்கள் வரிசைகளின்படியேயும், அவரவரை அவர்கள் ஊழியத்தின்படியேயும் திடப்படுத்தி, ஆசாரியரையும் இலேவியரையும்

சர்வாங்கதகனத்தையும் ஸ்தோத்திரப்பலிகளை
யும் செலுத்தவும், கர்த்தருடைய பாளயத்தின்
வாசல்களில் ஊழியஞ்செய்து துதித்து ஸ்தோத்
௩ திரிக்கவும் வரிசைப்படுத்தினான்.—இராசா கர்த்த
ருடைய நியாயப்பிரமாணத்தில் எழுதியிருக்கிற
படியே அந்திசந்தி செலுத்தவேண்டிய சர்வாங்
கதகனபலிகளுக்கும், ஓய்வுநாள்களிலும் மாதப்
பிறப்புகளிலும் பண்டிகைகளிலும் செலுத்தும்
சர்வாங்கதகனபலிகளுக்கும் தன்னுடைய ஆஸ்
தியிலே தன் பங்கைக் கொடுத்து,
௪ ஆசாரியரும் இலேவியரும் கர்த்தருடைய
நியாயப்பிரமாணத்தைத் திடனாய்க் கைக்கொள்
ளும்படிக்கு, அவர்களுக்கு அவர்கள் பங்கைக்
கொடுக்கச் சனத்திற்கும் எருசலேமின் குடிக
௫ ளுக்கும் கற்பித்தான்.—இந்த வார்த்தை பிரசித்
தமானபோது இஸ்ரவேல் புத்திரர் தானியத்தி
லும், திராட்சப்பழ இரசத்திலும், எண்ணெயி
லும், தேனிலும், நிலத்தின் எல்லா வரத்திலும்
முதல்பலன்களைத் திரளாகக் கொண்டுவந்து,
சகலத்திலும் பத்தில் ஒன்றைப் பரிபூரணமாய்க்
௬ கொண்டுவந்தார்கள்.—யூதாவின் பட்டணங்க
ளில் குடியிருந்த இஸ்ரவேல் புத்திரருங்கூட யூத
புத்திரருமோவெனில்,மாடுகளிலும் ஆடுகளிலும்
பத்தில் ஒன்றையும், தங்கள் பராபரனாகிய கர்த்
தருக்குப் பரிசுத்தம்பண்ணப்பட்டவைகளில்
பத்தில் ஒன்றையும் கொண்டுவந்து அம்பாரங்க
௭ ளாகக் கொட்டினார்கள்.—மூன்றும் மாதத்தில்
அம்பாரங்களைப் போடத் துவக்கம்பண்ணி
௮ ஏழாம் மாதத்தில் முடித்துப்போட்டார்கள்.—இ
ஸ்கியாவும் பிரபுக்களும் வந்து, அந்த அம்பாரங்
களைக் காணும்போது, கர்த்தருக்கு ஸ்தோத்திரம்
செலுத்தி, அவருடைய சனமாகிய இஸ்ரவே
௯ லைப் புகழ்ந்தார்கள்.—அந்த அம்பாரங்களைக்கு
றித்து இஸ்கியா ஆசாரியரையும் இலேவியரையும்
௰ கேட்டு விசாரித்தபோது,—சாதோக்கின் சந்ததி
யானாகிய அசரீயாவென்ற பிரதான ஆசாரியன்
அவனுடனே சொன்னதாவது: இந்தக் காணிக்
கையைக் கர்த்தருடைய வீட்டிற்குக் கொண்டு
வரத்துவக்கினதுமுதல் நாங்கள் சாப்பிட்டுத்
திர்ப்தி அடைந்தோம்; நிரம்ப மீதியுமாயிருக்கி
ன்றன; ஏனெனில் கர்த்தர் தம்முடைய சனத்தை
ஆசீர்வதித்ததினால் இந்தத் திரட்சியுள்ள அம்பா
ரம் மீந்து வைக்கப்பட்டிருக்கின்றதென்றான்.
௰௧ அப்போது இஸ்கியா கர்த்தருடைய வீட்டில்
௰௨ அறைகளை ஆயத்தப்படுத்தச்சொன்னான்.—அவை
களை ஆயத்தப்படுத்தினபின், அவர்கள் அவைக
ளிலே காணிக்கைகளையும், பத்தில் ஒரு பங்கா
னதையும், பரிசுத்தம்பண்ணப்பட்டவைகளை
யும் உண்மையாய் எடுத்துவைத்தார்கள்; அவைக
ளின்மேல் இலேவியனாகிய கொனன்னியா தலை
வனும், அவன் தம்பியாகிய சீமேயி இரண்டா
௰௩ வதுமாயிருந்தான்.—ஆனால் இராசாவாகிய இஸ்
கியாவும் பராபரனுடைய வீட்டுத் தலைவனாகிய
அசரீயாவும்பண்ணின கட்டளையின்படியே,
எகியேலும், அக்சீயாவும், நாகாதும், ஆசகேலும்,
எரிமோதும், யோசபாத்தும், எலியேலும், இஸ்
மகியாவும், மாகாதும், பேனாயாவும், கொனன்னி
யாவின்கீழும் அவன் தம்பியாகிய சீமேயின்கீ
ழும் விசாரிப்புக்காரராயிருந்தார்கள்.—ஆனால் ௰௪
இம்னாவின் குமாரனாகிய கோரே என்றவன் கிழ
க்குவாசலைக்காக்கிற இலேவியன், கர்த்தருக்குச்
செலுத்தப்பட்ட காணிக்கைகளையும் பரிசுத்தத்
திற்குப் பரிசுத்தமானவைகளையும் பங்கிடும்ப
டிக்கு, பராபரனுக்குச் சென்ற உச்சாகக் காணிக்
கைகள்மேல் அதிகாரியானவன்.—அவனுடைய ௰௫
கைக்கு உதவியாக ஆசாரியரின் பட்டணங்க
ளில் வகுப்புகளின்படி இருக்கிற தங்கள் சகோ
தரரிலே பெரியவனுக்கும் சிறியவனுக்கும் சரிச
மானமாய்க் கொடுக்கும்படிக்கு, உண்மையுள்ள
வர்களாக எண்ணப்பட்ட ஏதேனும், மின்யமீ
னும், எசுவாவும், செமாயாவும், அமரியாவும்,
செக்கனியாவும் இருந்தார்கள்.—வம்சத்து அட் ௰௬
டவணைகளில் எழுதப்பட்ட மூன்றுவயதுமுதல்
கொண்டு, அதற்கு மேல்தரமாயிருந்த ஆண்பிள்
ளைகளையுந்தவிர, கர்த்தருடைய வீட்டிற்குள் பிர
வேசிக்கிற அவரவருக்கும் தங்கள் வகுப்புகளி
ன்படியே, தங்கள் முறைகளிலே தாங்கள் செய்
கிற தங்கள் பணிவிடைக்குத்தக்க அன்றாடகத்
திட்டம் கொடுக்கப்பட்டது.—தங்கள் பிதாக்க ௰௭
ளின் வம்சத்தட்டவணைகளில் எழுதப்பட்ட
தங்கள் வகுப்புகளின்படியே தங்கள் முறைகளி
லிருக்கிற இருபதுவயதுமுதல்கொண்டு, அதற்கு
மேல்தரமான ஆசாரியருக்கும், இலேவியருக்
கும்,—அவர்களுடைய எல்லாக் கூட்டத்தின் அ ௰௮
ட்டவணையில் எழுதப்பட்ட அவர்களுடைய
எல்லாக் குழந்தைகளுக்கும், பெண்சாதிகளுக்
கும், குமாரருக்கும், குமாரத்திகளுக்குங்கூடக்
கொடுத்தார்கள்; ஏனென்றால் பரிசுத்தமானதைத்
தங்கள் உண்மையின்படியே பரிசுத்தமாய் விசா
ரித்தார்கள்.—ஆசாரியரில் எல்லா ஆண்பிள்ளைக ௰௯
ளுக்கும் இலேவியருக்குள்ளே அட்டவணையில்
எழுதப்பட்டவர்கள் எல்லாருக்கும் படிகளைக்
கொடுக்க, ஆசாரியருடைய ஒவ்வொரு பட்
டணத்து வெளிப்பாளயங்களிலே ஆரோன்புத்
திரரில் பேர்பேராகக் குறிக்கப்பட்ட மனுஷரி
ருந்தார்கள்.
இந்தப்பிரகாரமாக இஸ்கியா யூதாவெங்கும் ௨௰
நடப்பித்து, தன்னுடைய பராபரனாகிய கர்த்த
ருக்குமுன்பாக நன்றும் செம்மையும் உண்மை
யுமானதைச் செய்தான்.—அவன் பராபரனு ௨௧
டைய வீட்டின் வேலையிலும், தன்னுடைய பரா
பரனைத் தேடும்படிக்கு நியாயப்பிரமாணத்திற்
கும் கற்பனைக்கும் அடுத்த காரியத்திலும் என்ன
செய்யத் துவக்கினானோ, அவையெல்லாம் தன்
முழு இருதயத்தாலும் செய்து பாக்கியமுள்ள
வனாயிருந்தான்.

## ௩௨. அதிகாரம்.

௧. சனகெரிப் யூதாவுக்குள் பிரவேசித்தபோது, இஸ்கியா பெலன்கொண்டு தன்னுடைய சனங்களைத் தயிரியப்படுத்தினது. ௯. சனகெரிப் தூதாலும் கடிதத்தினாலும் அறிவித்த தூஷணையைக்குறித்து இஸ்கியாவும் ஏசாயா

வும் மன்றுடினது. ௨௧. தேவதூதன் அசூருடைய பாளயத்தை நாச
மாக்கினதால் இஸ்கியாவுக்கு மேன்மையுண்டாக்கினது. ௨௪. வியாதி
யாயிருந்து மன்றுடினதினால் பராபரன் சொஸ்தமாகுமென்ற அடையா
ளத்தைத் தந்தது. ௨௫. அவன் இறுமாப்பாகிப் பராபரனால் தாழ்த்தப்பட்
டது. ௨௭. அவனுடைய ஐசுவரியமும், செய்கைகளும், ௩௧. பாபி
லோன் தூதர் வருகையில், அவன் செய்த குற்றம். ௩௨. அவன் மரித்
தபின் மனாசே இராசாவானது.

௧ இந்த நடபடிகளுக்கும் அவைகளின் உண்மை
க்கும் பிற்பாடு, அசூரின் இராசாவாகிய சனகெ
ரிப் வந்து, யூதாவுக்குள் பிரவேசித்து, அரணான
பட்டணங்களுக்கு எதிராகப் பாளயமிறங்கி
அவைகளைத் தன் வசமாக்கிக்கொள்ள நினைத்
தான்.
௨ சனகெரிப் வந்து, எருசலேமின்மேல் யுத்தம்
பண்ணத் தன் முகத்தைத் திருப்பினதை இஸ்கி
௩ யா கண்டபோது,—பட்டணத்திற்குப் புறம்பே
யிருக்கிற ஊற்றுகளைத் தூற்றுப்போட, தன்னு
டைய பிரபுக்களோடும் தன்னுடைய பராக்கிரம
சாலிகளோடும் ஆலோசனைபண்ணினான்; அதற்
காக அவனுக்கு ஒத்தாசைபண்ணினார்கள்.—
௪ அநேகம் சனம்கூடி, அசூரின் இராசாக்கள் வந்
து, அநேகம் தண்ணீரைக் கண்டுபிடிப்பானே
னென்று எல்லா ஊற்றுகளையும் நடுத்தேசத்திலே
பாயும் ஆற்றையும் தூற்றுப்போட்டார்கள்.—
௫ அவன் பலன்கொண்டு, இடிந்துபோன மதிலை
யெல்லாம் கட்டி, அதையும் வெளியிலுள்ள மற்ற
மதிலையும் சிகரங்களின்மட்டும் உயர்த்தி, தாவீ
துடைய பட்டணத்தின் கோட்டையைப் பலப்
படுத்தி, திரளான ஆயுதங்களையும் கேடயங்களை
௬ யும் பண்ணுவித்து,—சனத்தின்மேலே படைத்
தலைவரை வைத்து, அவர்களைப் பட்டணவாச
லின் வீதியிலே தன்னண்டையில் கூட்டிக்கொ
ண்டு, அவர்களுடனே பட்சமாய்ப் பேசிச்
௭ சொன்னதாவது: — பலன்கொண்டு தயிரியமா
யிருங்கள்; அசூரின் இராசாவுக்கும் அவனோடி
ருக்கிற எல்லா ஏராளத்திற்கும் பயப்படாமலும்
கலங்காமலும் இருங்கள்; ஏனெனில் அவனோ
டிருக்கிறவர்களைப்பார்க்கிலும், நம்மோடிருக்
௮ கிறவர்கள் அதிகமானவர்கள்.—அவனோடிருக்
கிறது மாம்ச புயம்; ஆனால் நமக்குச் சகாயம்
பண்ணவும் நம்முடைய யுத்தங்களை நடத்தவும்
நம்மோடிருக்கிறவர் நம்முடைய பராபரனாகிய
கர்த்தர்தானே என்றான்; யூதாவின் இராசாவா
கிய இஸ்கியா சொன்ன இந்த வார்த்தைகளின்
மேலே சனம் நம்பிக்கை வைத்தது.

௯ இதின்பிறகு அசூரின் இராசாவாகிய சன
கெரிப்தானும் தன் ஆளுகையின்கீழிருக்கிறவர்
களுமாய் லாகீசுக்கு எதிராயிருக்கையில், யூதா
வின் இராசாவாகிய இஸ்கியாவண்டைக்கும்,
எருசலேமிலிருக்கிற எல்லா யூதசனத்தண்டைக்
கும், தன் ஊழியக்காரரை அனுப்பிச் சொல்லச்
௰ சொன்னதாவது:—அசூரின் இராசாவாகிய சன
கெரிப் சொல்லுகிறதேதெனில், முற்றிக்கை
போடப்படும் எருசலேமிலே நீங்கள் இருக்கும்
படிக்கு, நீங்கள் எதின்மேலே நம்பிக்கையாயி
௰௧ ருக்கிறீர்கள்?—நம்முடைய பராபரனாகிய கர்த்
தர் நம்மை அசூருடைய இராசாவின் கைக்குத்
தப்பப்பண்ணுவாரென்று இஸ்கியா சொல்லி,
உங்களைப். பசியினாலும் தாகத்தினாலும் உங்
களைச் சாவப்பண்ணப் பயிற்றுவிக்கிறானல்ல
வோ?—அவருடைய மேடைகளையும் அவரு ௰௨
டைய பீடங்களையும் தள்ளிவிட்டவனும், ஒரே
பீடத்திற்குமுன்பாகப் பணிந்து, அதின்மேலே
தூபம்காட்டுங்களென்று யூதாவுக்கும் எருசலே
மியருக்கும் சொன்னவனும் அந்த இஸ்கியா
தான் அல்லவோ?—நாமும் நம்முடைய பிதாக் ௰௩
களும் தேசங்களின் சகல சனசதளங்களுக்கும்
செய்ததை அறியீர்களோ? அந்தத் தேசங்களு
டைய சாதிகளின் தேவர்கள் அவர்கள் தேசத்
தை நம்முடைய கைக்குத் தப்பப்பண்ண அவர்
களுக்குப் பலனிருக்கவே இருந்ததோ?—உங் ௰௪
கள் பராபரன் உங்களை நம்முடைய கைக்குத்
தப்புவிக்கக்கூடும்படிக்கு, நம்முடைய பிதாக்
கள் பாழாக்கின அந்தச் சாதிகளுடைய எல்லாத்
தேவர்களிலும் எவன் தன்னுடைய சனத்தை நம்
முடைய கைக்குத் தப்புவிக்கப் பலனாயிருந்
தான்?—இப்போதும் இஸ்கியா உங்களை மோசம் ௰௫
போக்கவும், இப்படி உங்களைப் பயிற்றுவிக்க
வும் வேண்டாம்; நீங்கள் அவனை நம்பாதேயுங்
கள்; ஏனென்றால் எந்தச் சாதிக்கும் எந்த இராச்
சியத்திற்கும் இருந்த ஒரு தேவன் தன்னுடைய
சனத்தை நம்முடைய கைக்கும் நம்முடைய
பிதாக்களின் கைக்கும் தப்புவிக்கக்கூடாதிருந்
ததே; உங்கள் தேவன் உங்களை நம்முடைய
கைக்குத் தப்புவிப்பது எப்படி என்கிறாரென்று
சொல்லி,—அவனுடைய ஊழியக்காரர் பராபர ௰௬
னாகிய கர்த்தருக்கு விரோதமாகவும், அவரு
டைய தாசனாகிய இஸ்கியாவுக்கு விரோதமாக
வும் பின்னையும் அதிகமாய்ப் பேசினார்கள்.
தேசங்களுடைய சாதிகளின் தேவர்கள் தங் ௰௭
கள் சனத்தை என் கைக்குத் தப்புவிக்காதிருந்த
துபோல, இஸ்கியாவின் தேவனும் தன்னுடைய
சனத்தை என் கைக்குத் தப்புவிப்பதில்லையென்
று இஸ்ரவேலின் பராபரனாகிய கர்த்தரை நிந்திக்
கவும், அவருக்கு விரோதமாகப் பேசவும் அவன்
நிருபங்களையும் எழுதினான். — அலங்கத்தின் ௰௮
மேலிருக்கிற எருசலேமின் சனத்தைப் பயப்ப
டுத்தி, கலங்கப்பண்ணும்படிக்கும், தாங்கள்
பட்டணத்தைப் பிடிக்கும்படிக்கும், அவர்கள்
அதைப் பார்த்து, யூதபாஷையிலே மகா சத்தத்
தோடும் கூப்பிட்டு,—மனுஷர் கைகளின் வேலை ௰௯
யான பூச்சக்கர சனசதளங்களின் தேவர்களைக்
குறித்துப் பேசுகிறபிரகாரமாக எருசலேமின்
பராபரனைக்குறித்துப் பேசினார்கள்.
இதின்நிமித்தம் இராசாவாகிய இஸ்கியாவும் ஆ ௨௰
மோத்சின் குமாரனாகிய ஏசாயா தீர்க்கதரிசியும்
செபம்பண்ணி, வானத்தை அண்ணாந்து கூப்பி
ட்டுக்கொண்டிருந்தார்கள்.—அப்போது கர்த்தர் ௨௰௧
ஒரு தூதனை அனுப்பினார்; இவன் அசூருடைய
இராசாவின் பாளயத்திலுள்ள சகல பராக்கிரம
சாலிகளையும், தலைவரையும், சேர்வைக்காரரை

யும் அதம்பண்ணினான்; அப்படியே அவன் செத்
தமுகமாய்த் தன் தேசத்திற்குத் திரும்பினான்;
அங்கே அவன் தன் தேவனுடைய வீட்டிற்குள்
பிரவேசிக்கிறபோது, அவனுடைய கர்ப்பப்
பிறப்பான சிலர் அவனைப் பட்டையத்தால் மடி
௨௨ வித்தார்கள்.—இப்படிக் கர்த்தர் இஸ்கியாவையும்
எருசலேமின் குடிகளையும் அசூருடைய இராசா
வாகிய சனகெரிப்பின் கைக்கும் எல்லாருடைய
கைக்கும் நீங்கலாக்கி இரட்சித்துச் சுற்றுப்புறத்
௨௩ தாருக்கு விலக்கி ஆதரித்து நடத்தினார். — அ
நேகம்பேர் கர்த்தருக்கென்று எருசலேமுக்குக்
காணிக்கைகளையும், யூதாவின் இராசாவாகிய
இஸ்கியாவுக்கு உச்சிதங்களையும் கொண்டுவந்
தார்கள்; அவன் இதற்குப் பிற்பாடு எல்லாச் சா
திகளின் பார்வைக்கும் மேன்மைப்பட்டவனா
யிருந்தான்.
௨௪ அந்த நாள்களிலே இஸ்கியா சாவுக்கினமான
வியாதிப்பட்டான்; அவன் கர்த்தரைநோக்கிச்
செபம்பண்ணும்போதோவெனில், அவர் அவ
னுக்கு வாக்குத்தத்தம்பண்ணி, ஒரு அற்புதத்தை
௨௫ அவனுக்குக் கட்டளையிட்டார்.—ஆனால் இஸ்
கியா தனக்குச் செய்யப்பட்ட உபகாரத்திற்குத்
தக்கதாய்ச் செய்யவில்லை; அதேதெனில் மன
மேட்டிமையானான்; ஆகையால் அவன்மேலும்,
யூதாவின்மேலும், எருசலேமின்மேலும் கடுங்
௨௬ கோபமுண்டாயிற்று. — ஆனால் தன்னுடைய
மனமேட்டிமையின்நிமித்தம் இஸ்கியாவும் எரு
சலேமின் குடிகளும் தங்களைத் தாழ்த்தினபடியி
னாலே, கர்த்தருடைய கடுங்கோபம் இஸ்கியா
வின் நாள்களிலே அவர்கள்மேல் வந்ததில்லை.—
௨௭ இஸ்கியாவுக்கு மிகுதியான ஐசுவரியமும் கன
மும் உண்டாயிருந்தன; வெள்ளியும் பொன்னும்
இரத்தினங்களும் சுகந்தவர்க்கங்களும் கேடய
ங்களும் இச்சிக்கப்படத்தக்க சகலவித தட்டுமு
௨௮ ட்டுகளுமான பொக்கிஷங்களையும்,—தானியம்
திராட்சப்பழ இரசம் எண்ணெயினுடைய வரத்
துகளை வைக்கும் கிடங்குகளையும், சகல வகை
யுள்ள மிருகசீவன்களுக்குக் கொட்டாரங்களை
யும், முன்னணைகளோடே கட்டும் மந்தைகளை
யும் தனக்குச் சம்பாதித்துக்கொண்டான். —
௨௯ அவன் தனக்குப் பட்டணங்களைக் கட்டுவித்து,
ஏராளமான ஆடுமாடுகளை வைத்திருந்தான்;
ஏனென்றால் பராபரன் அவனுக்கு மகா திரள்
ஆஸ்தியைக் கொடுத்தார்.
௩௰ இந்த இஸ்கியா கீயோனென்ற தண்ணீரின்
மேல் ஆற்றுக்காலை அடைத்து, அதை மேற்கே
யிருந்து தாழத் தாவீதின் பட்டணத்திற்கு நேரா
கத் திருப்பினான்; ஏனெனில் இஸ்கியாவுக்கு
அவன் செய்கையெல்லாம் கைகூடிவந்தன.—
௩௧ ஆகிலும் பாபேலுடைய பிரபுக்களின் தானாபதி
கள் தேசத்திலே நடந்த அற்புதத்தைக் கேட்க
அவனண்டைக்கு அனுப்பப்பட்டுவருகையில்
அவன் இருதயத்திலுண்டானதெல்லாவற்றை
யும் அறியும்படிக்கு அவனைச் சோதிக்கிறதற்கா
கப் பராபரன் அவனைக் கைவிட்டார்.

இஸ்கியாவின் மற்ற வர்த்தமானங்களும் அவ ௩௨
னுடைய உபகாரங்களுமோவென்றால், இதோ
அவைகள் ஆமோத்சின் குமாரனாகிய ஏசாயா
தீர்க்கதரிசியின் தரிசனத்திலும், யூதா இஸ்ரவேல்
இராசாக்களின் புஸ்தகத்திலும் எழுதியிருக்கின்
றன.—இஸ்கியா தன் பிதாக்களோடே நித்திரை ௩௩
அடைந்தபின், அவனைத் தாவீதுடைய குமார
ரின் கல்லறைகளுக்கு உயர அடக்கம்பண்ணி
னார்கள்; யூதாவனைத்தும் எருசலேமின் குடிக
ளும் அவன் மரணத்திலே அவனைக் கனம்பண்
ணினார்கள்; அவன் குமாரனாகிய மனாசே அவன்
ஸ்தலத்தில் இராசாவானான்.

## ௩௩. அதிகாரம்.

௧. மனாசேயின் கெட்ட ஆளுகை. ௩. அவன் விக்கிரக ஆராதனையைச்செய்து எச்சரிப்புக்குச் செவிகொடாதிருந்தது. ௰௧. அவன் பாபேலுக்குச் சிறை கொண்டுபோகப்பட்டது. ௰௨. அவன் பராபரனை மன்றாடினதினால் விடுதலையாகி விக்கிரக ஆராதனையை நீக்கினது. ௰௮. அவனுடைய நடக்கைகள். ௨௰. அவன் மரித்தபின் ஆமோன் அரசாகிவந்தது. ௨௧. ஆமோன் அநியாயமாய் அரசாண்டு வேலைக்காரர்களால் கொல்லப்பட்டது. ௨௫. கொலைகாரர்கள் கொல்லப்பட்டதும், யோசியா அவனுக்குப்பின் இராசாவானதும்.

மனாசே இராசாவாகிறபோது, பன்னிரண்டு ௧
வயதாயிருந்து, ஐம்பத்தைந்து வருஷம் எருசலே
மிலே அரசாண்டான்.—கர்த்தர் இஸ்ரவேல் புத் ௨
திரருக்குமுன்பாகத் துரத்தின சாதிகளுடைய
அருவருப்புகளின்படியே, அவன் கர்த்தரின் பார்
வைக்குப் பொல்லாப்பானதைச் செய்தான்.—
அவன் தன் தகப்பனாகிய இஸ்கியா தகர்த்துப் ௩
போட்ட மேடைகளைத் திரும்பக் கட்டி, பாகால்
களுக்குப் பலிபீடங்களை எடுப்பித்து, விக்கிர
கத்தோப்புகளை உண்டுபண்ணி, வானத்தின்
சேனையையெல்லாம் பணிந்துகொண்டு, அவை
களைச் சேவித்து,—எருசலேமிலே நம்முடைய ௪
நாமம் என்றென்றைக்கும் இருக்குமென்று கர்த்
தர் சொன்ன தம்முடைய வீட்டிலே பலிபீடங்
களைக் கட்டி,—கர்த்தருடைய வீட்டின் இரண்டு ௫
பிரகாரங்களிலும் வானத்தின் சேனைக்கெல்லாம்
பலிபீடங்களைக் கட்டினான். — அவன் இன் ௬
னோம் குமாரனின் பள்ளத்தாக்கிலே தன் குமா
ரரைத் தீ மிதிக்கப்பண்ணி, சகுனமும் நிமித்த
மும் பார்த்து, சூனியம்பண்ணி, அஞ்சனம்
பார்க்கிறவர்களையும் குறிகாரரையும் வைத்து,
கர்த்தருக்குக் கோபமுண்டாக்க அவர் பார்
வைக்கு மிகுதியும் பொல்லாப்பானதைச் செய்
தான்.—இந்த வீட்டிலும் இஸ்ரவேல் கோத்தி ௭
ரங்களிலெல்லாம் நாம் தெரிந்துகொண்ட எரு
சலேமிலும் நம்முடைய நாமத்தை என்றென்
றைக்கும் இருக்கப்பண்ணுவோமென்றும், —
நாம் மோசேயைக்கொண்டு இஸ்ரவேலுக்குக் ௮
கொடுத்த சகல நியாயப்பிரமாணத்திற்கும். கட்
டளைகளுக்கும் நியாயங்களுக்கும் ஒத்தபடியே
அவர்கள் நாம் தங்களுக்குக் கற்பித்தவைகளை
யெல்லாம் செய்யச் சாவதானமாய் இருந்தார்க
ளேயாகில், நாம் இனி அவர்கள் காலை அவர்கள்
பிதாக்களுக்கு நாம் ஸ்தாபித்துவைத்த சீமை
யிலிருந்து விலகப்பண்ணுவதில்லையென்றும்,

பராபரன் தாவீதோடும் அவன் குமாரனாகிய சா
லோமோனோடும் சொன்ன பராபரனுடைய
வீட்டிலேதானே, அவன் தான் பண்ணுவித்த
௯ சுரூபமான சிலையை வைத்தான்.—அப்படியே
கர்த்தர் இஸ்ரவேல் புத்திரருக்குமுன்பாக அழி
த்த சாதிகளைப்பார்க்கிலும், யூதாவும் எருசலே
மின் குடிகளும் பொல்லாப்புச் செய்யத்தக்கவித
மாய், மனாசே அவர்களை வழிதப்பிப்போகப்
௰ பண்ணினான்.—கர்த்தர் மனாசேயோடும் அவனு
டைய சனத்தோடும் பேசுவித்தாலும், அவர்கள்
௰௧ கவனிக்காதே போனார்கள். — ஆகையால் கர்த்
தர் அசூரின் இராசாவுக்கிருக்கிற சேனாபதிகளை
அவர்கள்மேல் வரப்பண்ணினார்; இவர்கள் முள்
செடிகளில் மனாசேயைப் பிடித்து, இரண்டு வெ
ண்கலச் சங்கிலியால் அவனைக் கட்டிப் பாபே
௰௨ லுக்குக் கொண்டுபோனார்கள்.—இப்படி அவன்
நெருக்கப்படுகையில், அவன் தன் பராபரனாகிய
கர்த்தரைநோக்கிக் கெஞ்சி, தன் பிதாக்களின்
பராபரனுக்குமுன்பாக மிகவும் தன்னைத் தாழ்த்
௰௩ தினான். — அவரை நோக்கி, அவன் விண்ணப்
பம்பண்ணிக்கொண்டிருக்கிறபோது, அவர் அ
வன் கெஞ்சுதலுக்கிரங்கி, அவன் செபத்தைக்
கேட்டு, அவனைத் திரும்ப எருசலேமுக்குத் தன்
இராச்சியபாரத்திற்கு வரப்பண்ணினார்;கர்த்தரே
பராபரனென்று அப்போது மனாசே அறிந்தான்.
௰௪ அதற்குப்பிற்பாடு அவன் தாவீதுடைய பட்
டணத்தின் வெளி அலங்கத்தைக் கீயோனுக்கு
மேற்கேயிருக்கிற பள்ளத்தாக்கைத்துவக்கி மீன்
வாசல்மட்டும் கட்டி, அதை ஒபேலைச் சுற்றிலும்
நடத்தி, அதை மிகவும் உயர்த்தி, யூதாவிலுள்ள
அரணான பட்டணங்களிலெல்லாம் இராணுவத்
௰௫ தலைவரை வைத்து,—அந்நியதேவர்களையும் அந்
தச் சுரூபத்தையும் கர்த்தருடைய வீட்டிலிருந்து
எறிந்துபோட்டு,கர்த்தருடைய வீடுள்ள பர்வதத்
திலும் எருசலேமிலும் தான் கட்டியிருந்த எல்
லாப் பலிபீடங்களையும் அகற்றி, பட்டணத்திற்
௰௬ குப் புறம்பாகப் போடுவித்து,— கர்த்தருடைய
பலிபீடத்தைச் செப்பனிட்டு, அதின்மேல்
ஸ்தோத்திரப்பலிகளையும் துதியின் பலிகளையும்
செலுத்தி, இஸ்ரவேலின் பராபரனாகிய கர்த்த
ரைச் சேவிக்கவேண்டுமென்று யூதாவுக்குக் கற்
௰௭ பித்தான். — ஆகிலும் சனம் இன்னம் மேடை
களில் பலியிடுவார்கள்; என்றாலும் தங்கள் பரா
பரனாகிய கர்த்தருக்கென்று செய்வார்கள்.
௰௮ மனாசேயின் மற்ற வர்த்தமானங்களும், அவன்
தன் பராபரனை நோக்கிப் பண்ணின விண்ணப்
பமும், இஸ்ரவேலின் பராபரனாகிய கர்த்தரின்
நாமத்தில் அவனோடே பேசின ஞானதிருஷ்டி
யுள்ள புருஷரின் வார்த்தைகளும், இதோ அவை
கள் இஸ்ரவேல் இராசாக்களின் பிரபந்தத்தில்
௰௯ எழுதியிருக்கின்றன.—அவனுடைய விண்ணப்
பமும், அவன் கெஞ்சுதலுக்கு அவர் இரங்கின
தும், அவன் தன்னைத் தாழ்த்தாததற்குமுன்னே
பண்ணின அவனுடைய எல்லாப் பாவமும் து
ரோகமும், அவன் மேடைகளைக் கட்டித் தோப்
புகளையும் சுரூபங்களையும் ஸ்தாபித்த இடங்க
ளும், இதோ ஓசாயின் பிரபந்தத்தில் எழுதியிருக்
கின்றன.—மனாசே தன் பிதாக்களோடே நித்தி ௨௰
ரை அடைந்தபின், அவனை அவன் வீட்டிலே
அடக்கம்பண்ணினார்கள்; அவன் குமாரனாகிய
ஆமோன் அவன் ஸ்தலத்தில் இராசாவானான்.
ஆமோன் இராசாவாகிறபோது இருபத்திரண் ௨௧
டுவயதாயிருந்து, இரண்டு வருஷமாய் எருசலே
மில் அரசாண்டான்.—அவன் தன் தகப்பனாகிய ௨௨
மனாசே செய்திருந்தபடி கர்த்தரின் பார்வைக்
குப் பொல்லாப்பானதைச் செய்தான்; தன் தகப்
பனாகிய மனாசே பண்ணுவித்திருந்த சுரூபங்க
ளுக்கெல்லாம் ஆமோன் பலியிட்டு அவைகளைச்
சேவித்தான். — ஆனால் தன் தகப்பனாகிய மனா ௨௩
சே தன்னைத் தாழ்த்திக்கொண்டதுபோல, இந்த
ஆமோனென்றவன் கர்த்தருக்குமுன்பாகத் தன்
னைத் தாழ்த்தாமல் தன் குற்றத்தைப் பெருகப்
பண்ணினான். — அவன் ஊழியக்காரர் அவ ௨௪
னுக்கு விரோதமாய் ஒப்பந்தம்பண்ணி அவனை
அவன் வீட்டிலே கொன்றுபோட்டார்கள். —
அப்போது தேசச்சனம் ஆமோனென்ற இராசா ௨௫
வுக்கு விரோதமாய் ஒப்பந்தம்பண்ணின யாவ
ரையும் வெட்டிப்போட்டு, அவன் குமாரனாகிய
யொசியாவை அவன் ஸ்தலத்திலே இராசாவாக்
கினார்கள்.

## ௩௪. அதிகாரம்.

௧. யொசியாவின் நல்ல ஆளுகை. ௩. அவன் விக்கிரக ஆராதனையை அழித்தது. ௮. ஆலயத்தைப் புதுப்பிக்க உத்தரவுகொடுத்தது. ௰௪. இல்க்கியா நியாயப்பிரமாணத்தின் புஸ்தகத்தைக் கண்டெடுத்ததும் யொசியா பராபரனைக் கேட்க உல்தாளுக்குக் கட்டளையிட்டதும். ௨௩. யொசியாவின் காலத்தில் வராமல் பின்னை வரும் எருசலேமின் நாசத்தை உல்தாள் அறிவித்தது. ௨௯. யொசியா கண்டெடுத்த புஸ்தகத்தை வாசிக்கச்செய்து பராபரனுடனே உடம்படிக்கைபண்ணினது.

யொசியா இராசாவாகிறபோது எட்டுவயதா ௧
யிருந்து, முப்பத்தொரு வருஷம் எருசலேமில்
அரசாண்டான். — அவன் கர்த்தருடைய பார் ௨
வைக்குச் செம்மையானதைச் செய்து, தன் தக
ப்பனாகிய தாவீதின் வழிகளில்,வலது இடதுபுற
மாக விலகாமல் நடந்தான்.—அவன் தன் இராச் ௩
சியபாரத்தின் எட்டாம் வருஷத்தில், தான்
இன்னம் இளவயதாயிருக்கையில், தன் தகப்ப
னாகிய தாவீதின் பராபரனைத் தேடத் துவக்கி,
பன்னிரண்டாம் வருஷத்தில் யூதாவையும் எரு
சலேமையும் மேடைகள் தோப்புகள் சுரூபங்கள்
விக்கிரகங்களும் அறச் சுத்திகரிக்கத் துவக்கி
னான். — அவனுக்குமுன்பாகப் பாகால்களின் ௪
பலிபீடங்களை இடித்தார்கள்; உயர அவைகள்
மேலிருந்த சிலைகளை வெட்டி, தோப்புகளையும்
சுரூபங்களையும் விக்கிரகங்களையும் உடைத்து
நொறுக்கி, அவைகளுக்குப் பலியிட்டவர்களு
டைய பிரேதக்குழிகளின்மேல் தெளித்து, —
பூசாசாரிகளின் எலும்புகளை அவர்களுடைய ௫
பீடங்களின்மேல் சுட்டெரித்து, இப்படியே
யூதாவையும் எருசலேமையும் சுத்திகரித்தான்.—
அப்படித்தானே மனாசே எப்பிராயீம் சீமேயோ ௬
னிலுமுள்ள பட்டணங்களிலும், நவுதலிமட்டும்

பாழான அவைகளின் சுற்றுப்புறங்களிலும்
௭ செய்தான்.—அவன் இஸ்ரவேல் தேசம் எங்கு
முள்ள பலிபீடங்களையும் தோப்புகளையும் தகர்
த்து,சுரூபங்களை நொறுக்கித் தூளாக்கி, எல்லாச்
சிலைகளையும் வெட்டிப்போட்டபிற்பாடு எருச
லேமுக்குத் திரும்பினான்.
௮ அவன் தேசத்தையும் வீட்டையும் சுத்திகரித்
தபிறகு அவன் தன் இராச்சியபாரத்தின் பதி
னெட்டாம் வருஷத்திலே அச்சலியாவின் குமா
ரனாகிய சாப்பானையும், பட்டணத்தலைவனாகிய
மாசெயாவையும், யோவாகாசின் குமாரனாகிய
யோவாக்கென்ற மந்திரியையும், தன் பராபரனா
கிய கர்த்தரின் வீட்டைப் பழுதுபார்க்கும்ப
௯ டிக்கு அனுப்பினான்.—அவர்கள் பிரதான ஆசா
ரியனாகிய இல்க்கியாவண்டைக்கு வந்து, வாசல்
படியைக் காக்கிற இலேவியர் மனாசேயிலும் எப்
பிராயீமிலும் இஸ்ரவேலில் மீதியானவர்களெல்
லாரின் கையிலும் யூதா பென்யமீனெங்கும் சேர்
த்து,எருசலேமுக்குத் திரும்பிப் பராபரனுடைய
வீட்டிற்குக் கொண்டுவந்த திரவியத்தை ஒப்பு
௰ வித்துக்கொண்டு,—வேலையைச் செய்விக்கும்ப
டிக்கு, கர்த்தருடைய வீட்டின் விசாரிப்புக்கார
ரானவர்களின் கையில் அதைக் கொடுத்தார்கள்;
இவர்கள் அதைக் கர்த்தருடைய வீட்டைச் சோ
தித்துப் பழுதுபார்க்கிறதற்கு வீட்டில் வேலை
செய்கிறவர்கள் கையிலே கொடுத்தார்கள். —
௰௧ அப்படியே வெட்டின கல்லுகளையும்,இணைதலு
க்கும் யூதாவின் இராசாக்கள் கெடுத்துப்போட்ட
அறைகளில் பலகை பாய்ச்சுகிறதற்குமான மரங்
களையும் கொள்ளத் தச்சருக்கும், சிற்பாசாரிக
௰௨ ளுக்கும் கொடுத்தார்கள்.—இந்த மனுஷர் வே
லையை உண்மையாய்ச் செய்தார்கள்; வேலை
யை நடத்த மேராரியின் புத்திரரில் யாகாத் ஒப
தீயாவென்ற இலேவியரும், கோகாதியரின் புத்
திரரிலே சகரீயாவும், மெசுல்லாமும் அவர்கள்
மேல் விசாரிப்புக்காரராயிருந்தார்கள்; இந்த இ
லேவியரெல்லாரும் கீதவாத்தியங்களை வாசிக்க
௰௩ அறிந்தவர்கள்.—அவர்கள் சுமைக்காரர்மேலும்,
சகலவித வேலையின் கிரியையைச் செய்கிறவர்
களெல்லாருடையஆளோட்டிகளின்மேலும் வி
சாரிப்பாயிருந்தார்கள்; ஏனெனில் இலேவியரு
க்குள் இருக்கிறவர்கள்தானே கணக்கரும் ஆதிக்
கக்காரரும் வாசல்காப்பாருமானவர்கள்.
௰௪ கர்த்தருடைய வீட்டிற்குக் கொண்டுவரப்ப
ட்ட திரவியத்தை அவர்கள் எடுக்கிறபோதோ
வெனில்,ஆசாரியனாகிய இல்க்கியா மோசேயை
க்கொண்டு கட்டளையிடப்பட்ட கர்த்தருடைய
நியாயப்பிரமாணத்தின் புஸ்தகத்தைக் கண்டுபி
௰௫ டித்தான்.—அப்போது இல்க்கியா சம்பிரதியா
கிய சாப்பானுக்குப் பிரதியுத்தாரமாக, கர்த்தரு
டைய வீட்டிலே நியாயப்பிரமாணப் புஸ்தகத்
தைக் கண்டுபிடித்தேனென்று சொல்லி, அந்தப்
புஸ்தகத்தைச் சாப்பான் கையில் கொடுத்தான்.—
௰௬ சாப்பான் அந்தப் புஸ்தகத்தை இராசாவண்டை
க்குக் கொண்டுபோய், உம்முடைய ஊழியக்
காரருக்குக் கட்டளையிடப்பட்டவைகளையெல்
லாம் அவர்கள் செய்கிறார்கள்.—கர்த்தருடைய ௰௭
வீட்டிலே கண்டுபிடிக்கப்பட்ட திரவியத்தை
அவர்கள் கூட்டி, அதை விசாரிப்புக்காரர் கை
யிலும், வேலைசெய்கிறவர்கள் கையிலும், கொடு
த்தார்களென்று இராசாவுக்கு மறுசெய்தி சொன்
னதும் அல்லாமல்,—ஆசாரியனாகிய இல்க்கியா ௰௮
என் கையில் ஒரு புஸ்தகத்தைக் கொடுத்தானெ
ன்கிறதைச் சம்பிரதியாகிய சாப்பான் இராசா
வுக்கு அறிவித்து அதிலே இராசாவுக்கு முன்பாக
வாசித்தான்.—நியாயப்பிரமாணத்தின் வார்த்தை ௰௯
களை இராசா கேட்டபோதோவெனில், அவன்
தன் வஸ்திரங்களைக் கிழித்துக்கொண்டு,-இல்க் ௨௰
கியாவுக்கும்,சாப்பானின் குமாரனாகிய அகீக்கா
முக்கும், மீகாவின் குமாரனாகிய அப்தோனுக்
கும், சம்பிரதியாகிய சாப்பானுக்கும், இராசா
வின் ஊழியக்காரனாகிய அசாயாவுக்கும் கற்பித்
துச் சொன்னதாவது: — கண்டுபிடிக்கப்பட்ட ௨௧
இந்தப் புஸ்தகத்தினுடைய வார்த்தைகளின்நிமி
த்தம் நீங்கள் போய், எனக்காகவும் இஸ்ரவேலி
லும் யூதாவிலும் மீதியானவர்களுக்காகவும் கர்த்
தரைக் கேளுங்கள்; ஏனெனில் இந்தப் புஸ்தகத்
தில் எழுதியிருக்கிறதெல்லாவற்றின்படியேயும்
செய்யும்படிக்கு, கர்த்தருடைய வார்த்தையை
நம்முடைய பிதாக்கள் கைக்கொள்ளாதேபோன
படியினாலே, நம்முடையமேல் ஊற்றிப்போ
டப்பட்ட கர்த்தருடைய உக்கிரம் பெரிதென்
றான்.
அப்போது இல்க்கியாவும் இராசா அனுப்பின ௨௨
மற்றவர்களும் அஸ்ருவின் குமாரனாகிய தோக்
காதின் மகனான சல்லூமென்ற வஸ்திரங்களைக்
காக்கிறவனுடைய பெண்சாதியாகிய உல்தா
ளென்ற தீர்க்கதரிசியானவளண்டைக்குப் போ
னார்கள்; அவள் எருசலேமில் இரண்டாம் வகுப்
பிலே குடியிருந்தாள்; அவளோடே அதற்கொத்
தபிரகாரமாகப் பேசினார்கள்.—அவள் இவர்க ௨௩
ளோடே சொன்னதாவது: இஸ்ரவேலின் பரா
பரனாகிய கர்த்தர் உரைக்கிறபடி, என்னண்
டைக்கு உங்களை அனுப்பினவருக்கு நீங்கள்
சொல்லவேண்டியதாவது:—கர்த்தர் உரைக்கிற ௨௪
தேதெனில், இதோ யூதாவின் இராசாவுக்கு முன்
பாக வாசிக்கப்பட்ட புஸ்தகத்தில் எழுதியிருக்
கிற சகல சாபங்களுமாகிய பொல்லாப்பை நாம்
இந்த ஸ்தலத்தின்மேலும் அதின் குடிகளின்மே
லும் வரப்பண்ணுவோம். — அவர்கள் நம்மை ௨௫
விட்டு,தங்கள் கைகளின் கிரியைகளாலெல்லாம்
நமக்குக் கோபம் உண்டாக்க, அந்நியதேவர்க
ளுக்குத் தூபங்காட்டினபடியினாலே, நம்மு
டைய உக்கிரம் அவித்துப்போடப்படாத பிர
காரமாக இந்த ஸ்தலத்தின்மேல் இறங்குமென்
கிறார்.—ஆனால் கர்த்தரிடத்திலே கேட்கத்தக்க ௨௬
விதமாக உங்களை அனுப்பின யூதாவின் இராசா
வுடனே நீங்கள் சொல்லவேண்டியது: இஸ்ர
வேலின் பராபரனாகிய கர்த்தர் நீர் கேட்ட வார்த்
தைகளின் செய்தியைக்குறித்து உரைக்கிறதே

௨௭ தெனில், — இந்த ஸ்தலத்திற்கும் அதின் குடிக
ளுக்கும் விரோதமாகப் பராபரன் சொன்ன அவ
ருடைய வார்த்தைகளை நீர் கேட்கையில், உன்
இருதயம் இளகிப்போய், அவருக்குமுன்பாக நீ
உன்னைத் தாழ்த்தி, நமக்குமுன்பாகப் பணிந்து,
உன் வஸ்திரங்களைக் கிழித்துக்கொண்டு, நமக்கு
முன்பாக அழுதபடியினாலே, நாமும் உன்னைக்
௨௮ கேட்டோமென்று கர்த்தர் சொல்லுகிறார். — இ
தோ நாம் இந்த ஸ்தலத்தின்மேலும் அதின் குடி
களின்மேலும் வரப்பண்ணும் எல்லாப் பொல்
லாப்பையும் உன்னுடைய கண்கள் காணாதப
டிக்கு, நீ சமாதானத்தோடே உன் கல்லறையில்
சேர்த்துக்கொள்ளப்பட, நாம் உன்னை உன்
பிதாக்களண்டையிலே சேரப்பண்ணுவோம்
என்கிறாரென்று சொன்னாள்; அவர்கள் இராசா
வுக்கு மறுசெய்தி கொண்டுபோனார்கள்.
௨௯ அப்போது இராசா யூதா எருசலேமுடைய
மூப்பரையெல்லாம் அழைத்தனுப்பிக் கூட்டிக்
௩௰ கொண்டு, — இராசாவும், எல்லா யூதமனுஷ
ரும், எருசலேமின் குடிகளும், ஆசாரியரும்,
இலேவியரும், பெரியோர்துவக்கிச் சிறியோர்
மட்டுமுள்ள சகல சனமுமாய்க் கர்த்தருடைய
வீட்டிற்குப் போயேறினார்கள்; கர்த்தருடைய
வீட்டிலே கண்டுபிடிக்கப்பட்ட உடம்படிக்
கைப் புஸ்தகத்தின் வார்த்தைகளையெல்லாம் அ
௩௧ வர்கள் காதுகள்கேட்க வாசித்தார்கள். — இராசா
தன் தானத்திலே நின்று, அந்தப் புஸ்தகத்தில்
எழுதியிருக்கிற உடம்படிக்கையினுடைய வார்த்
தைகளின்படி தான் செய்வதினாலே, கர்த்தரைப்
பின்பற்றி நடப்பேனென்றும், தன் முழு
இருதயத்தாலும் தன் முழு ஆத்துமத்தாலும் அவ
ருடைய கற்பனைகளையும் அவருடைய சாட்சி
களையும் அவருடைய கட்டளைகளையும் கைக்
கொள்ளுவேனென்றும் கர்த்தருக்கு முன்பாக
௩௨ உடம்படிக்கைபண்ணி, — எருசலேமிலும் பென்
யமீனிலும் அகப்பட்ட யாவரையும் அதற்கு உள்
படப்பண்ணினான்; அப்படியே எருசலேமின்
குடிகள் தங்கள் பிதாக்களின் தேவனாகிய பரா
பரனுடைய உடம்படிக்கையின்படியே செய்
௩௩ தார்கள். — யொசியா இஸ்ரவேல் புத்திரரிலே
தேசங்கள் எங்கும் உண்டான அருவருப்புகளை
எல்லாம் அகற்றி, இஸ்ரவேலிலே அகப்பட்ட
வர்களையெல்லாம் தங்கள் பராபரனாகிய கர்த்த
ரைச் சேவிக்கிறதற்குக் கீழ்ப்படுத்தினான்; அ
வன் உயிரோடிருந்த நாளெல்லாம் அவர்கள்
தங்கள் பிதாக்களின் பராபரனாகிய கர்த்தரை
விட்டுப் பின்வாங்கினதில்லை.

## ௩௫. அதிகாரம்.

௧. யொசியா பஸ்காபண்டிகையைச் செய்தது. ௨௰. அவன் நேகோவோடே யுத்தம்பண்ணிக் கொல்லப்பட்டது ௨௫. யொசியாவைக் குறித்த புலம்பல்.

௧ அதற்குப்பிற்பாடு யொசியா எருசலேமிலே
கர்த்தருக்குப் பஷாவை ஆசரித்தான்; அவர்கள்
முதலாம்மாதம் பதினாலாம்தேதியிலே பஷாவின்
ஆட்டுக்குட்டிகளைக் குரல்வளை அறுத்தார்கள். —
அவன் ஆசாரியர்களை அவர்கள் முறைவரிசை ௨
களில் வைத்து, அவர்களைக் கர்த்தருடைய வீட்
டின் ஊழியத்தைச் செய்யத் திடப்படுத்தி, — இஸ் ௩
ரவேலையெல்லாம் உபதேசிக்கிறவர்களும், கர்த்
தருக்குப் பரிசுத்தமாக்கப்பட்டவர்களுமாகிய
இலேவியருக்குச் சொன்னதாவது: பரிசுத்தப்
பெட்டியைத் தாவீதின் குமாரனாகிய சாலோ
மோனென்ற இஸ்ரவேலின் இராசா கட்டின
வீட்டிலே வையுங்கள்; தோளின்மேல் அதைச்
சுமக்கும் பாரம் உங்களுக்கு இல்லை; இப்போது
நீங்கள் உங்கள் பராபரனாகிய கர்த்தருக்கும்,
அவருடைய சனமாகிய இஸ்ரவேலுக்கும் ஊழி
யம்செய்து, — இஸ்ரவேலின் இராசாவாகிய தா ௪
வீது எழுதின கட்டளைக்கும், அவன் குமாரனா
கிய சாலோமோன் எழுதின கட்டளைக்கும், ஒத்
தபடியே உங்கள் பிதாக்களின் வீட்டாருக்காகப்
பண்ணின வரிசையிலே உங்களை ஆயத்தப்
படுத்தி, — சனபுத்திரராகிய உங்கள் சகோதரருக் ௫
காகப் பரிசுத்தஸ்தலத்திலே பிதாக்களுடைய
வீட்டுப் பிரிவுகளின்படியேயும், இலேவியரு
டைய வம்சத்தார் வகுக்கப்பட்டபடியேயும்
நின்று, — பஷாவின் ஆட்டுக்குட்டிகளைக் குரல் ௬
வளை அறுத்து, உங்களைப் பரிசுத்தம்பண்ணி,
மோசேயைக்கொண்டு கர்த்தர் சொன்னபடியே
உங்கள் சகோதரர் செய்யும்படிக்கு, அவர்க
ளுக்கு அவைகளை ஆயத்தப்படுத்துங்களென்
றான். — வந்திருந்த சனபுத்திரர் எல்லாருக்கும் ௭
அவர்கள் இலக்கத்தின்படியே, பஷாவின் பலி
களுக்காக முப்பதினாயிரம் ஆட்டுக்குட்டிகளை
யும், வெள்ளாட்டுக்குட்டிகளையும், மூவாயிரம்
எருதுகளையும் இராசாவாகிய யொசியா தன்னு
டைய ஆஸ்தியிலே கொடுத்தான். — அவனுடைய ௮
பிரபுக்களும் மனப்பூர்வமான காணிக்கையாகச்
சனத்திற்கும் ஆசாரியருக்கும் இலேவியருக்கும்
கொடுத்தார்கள்; பராபரனுடைய வீட்டுத் தலைவ
ராகிய இல்க்கியாவும் சகரீயாவும் எகியேலும்
ஆசாரியர்களுக்குப் பஷாவின் பலிகளுக்கென்று
இரண்டாயிரத்து அறுநூறு ஆட்டுக்குட்டிகளை
யும், முந்நூறு எருதுகளையும் கொடுத்தார்கள். —
ஆனால் கொனனியா, செமாயா, நத்தானெயே ௯
லென்ற அவர்கள் சகோதரரும், அசபீயா,
ஏயேல், யோசபாத்தென்ற இலேவியரின் பிரபுக்
களும், இலேவியருக்குப் பஷாவின் பலிகளுக்
கென்று ஐயாயிரம் ஆட்டுக்குட்டிகளையும் ஐந்
நூறு எருதுகளையும் கொடுத்தார்கள்.
இப்படி ஊழியம் திட்டம்பண்ணப்பட்ட ௰
போது, இராசாவினுடைய கற்பனையின்படியே,
ஆசாரியர் தங்கள் தானத்திலும் இலேவியர் தங்
கள் வகுப்புகளின் வரிசையிலும் நின்று, — இவர் ௰௧
கள் பஷாவின் ஆட்டுக்குட்டிகளைக் குரல்வளை
அறுத்தார்கள்; ஆசாரியர் அவர்கள் கையில் இரத்
தத்தை வாங்கித் தெளித்தார்கள்; இலேவியர்
தோல்களை உரித்தார்கள். — மோசேயின் புஸ்தகத் ௰௨
தில் எழுதியிருக்கிறபடி சனபுத்திரர் கர்த்தருக்
குப் பலிசெலுத்தும்படிக்கு, அவர்கள் தகனபலி

மிருகங்களை இவர்களுக்குப் பிதாக்கள் வீட்டுப்
பிரிவுகளின்படியே, அவைகளைக் கொடுக்கத்
தக்கவிதமாய்ப் பிரித்துவைத்தார்கள்; எருதுகளை
௰௩ அப்படித்தான் செய்தார்கள்.—அவர்கள் பஸ்கா
வை நியாயமுறைமையின்படியே, அக்கினி
யால் பொரித்து, பரிசுத்தமாக்கப்பட்ட மற்ற
வைகளைப் பானைகளிலும் கொப்பரைகளிலும்
சட்டிகளிலும் சமைத்து, சனபுத்திரருக்கெல்
லாம் தீவிரமாய்ப் பங்கிட்டு,
௰௪ பிற்பாடு தங்களுக்காகவும் ஆசாரியருக்காக
வும் சேகரம்பண்ணினார்கள்; ஏனெனில் ஆரோ
னின் புத்திரராகிய ஆசாரியர்கள் சர்வாங்க தக
னபலிகளையும் கொழுப்புகளையும் செலுத்துகிற
தில், இராமட்டும் வேலையாயிருந்தபடியினாலே
இலேவியர் தங்களுக்காகவும், ஆரோனின் புத்தி
ரராகிய ஆசாரியருக்காகவும் சேகரம்பண்ணினார்
௰௫ கள்.–தாவீதும், ஆசாபும், ஏமானும், இராசாவின்
ஞானதிருஷ்டியுள்ள புருஷனாகிய எதுத்தூனும்
கற்பித்தபடியே ஆசாபின் புத்திரராகிய பாடகர்
தங்கள் தானத்திலும், வாசல்காப்பார் வாசல் வா
சல்களிலும் நின்றார்கள்; அவர்கள் தங்கள் ஊழி
யத்தைவிட்டு விலகத் தேவையில்லாதிருந்தது;
ஏனெனில் இலேவியரான அவர்கள் சகோதரர்
௰௬ அவர்களுக்காகச் சேகரம்பண்ணினார்கள்.–அப்
படியே இராசாவாகிய யொசியாவினுடைய கற்
பனையின்படி, பஸ்காவை ஆசரிக்கிறதற்கும்,
சர்வாங்கதகனங்களைக் கர்த்தருடைய பலிபீடத்
தின்மேல் பலியிடுகிறதற்கும் அடுத்த கர்த்தரு
டைய ஊழியமெல்லாம் அன்றையத்தினம் திட்
௰௭ டமாயிற்று.—இந்தப்பிரகாரமாக அங்கே வந்தி
ருந்த இஸ்ரவேல் புத்திரர் அக்காலத்திலே பஸ்கா
வையும், புளிப்பில்லாத அப்பங்களின் பண்டி
கையையும் ஏழுநாளாக ஆசரித்தார்கள்.
௰௮ தீர்க்கதரிசியாகிய சாமுவேலின் நாள்கள் து
வக்கி, இஸ்ரவேலிலே அப்படிக்கொத்த பஸ்கா
ஆசரிக்கப்பட்டதில்லை; யொசியாவும், ஆசாரி
யரும், இலேவியரும், யூதாவனைத்தும், இஸ்ரவே
லில் வந்திருந்தவர்களும், எருசலேமின் குடிக
ளும் ஆசரித்த பஸ்காவைப்போல இஸ்ரவேல் இ
௰௯ ராசாக்களில் ஒருவரும் ஆசரித்ததில்லை.–யொசி
யாவுடைய இராச்சியபாரத்தின் பதினெட்டாம்
வருஷத்திலே இந்தப் பஸ்கா ஆசரிக்கப்பட்டது.
௨௰ யொசியா தேவாலயத்திற்கு அடுத்ததைத் திடப்
படுத்தின இந்த எல்லா நடபடிகளுக்கும் பிற்
பாடு, எகிப்தின் இராசாவாகிய நேகோ ஐப்பி
ரூத்தின் நதியோரமான கர்கேமிஸ் பட்டணத்
தின்மேல் யுத்தம்பண்ண ஏறிவந்தான்; அப்போ
து யொசியா அவனுக்கு எதிராகப் புறப்பட்
௨௧ டான். — அவன் இவனண்டைக்குத் தானாபதி
களை அனுப்பி, யூதாவின் இராசாவே, எனக்கும்
உமக்கும் என்ன? நான் இப்போது உம்முடைய
மேலல்ல, என்னோடு யுத்தம்பண்ணுகிற ஒரு
வீட்டான்மேலே போகிறேன்; நான் தீவிரிக்க
வேண்டுமென்று பராபரன் சொன்னார்; என்னோ
டிருக்கிற பராபரன் உம்மைக் கெடுக்காதபடிக்கு
அவரைவிட்டு ஒழிந்திருமென்று சொல்லச்
சொன்னான்.—ஆனால் யொசியா தன் முகத்தை ௨௨
அவனைவிட்டுத் திருப்பாமல், அவனோடு யுத்தம்
பண்ண வேஷம்மாறி, நேகோ சொன்ன பரா
பரனுடைய வாக்கின் வார்த்தைகளுக்குக் கேள்
விகொடாமல் மெகிதோவின் பள்ளத்தாக்கிலே
யுத்தம்பண்ணுகிறதற்கு வந்தான்.—ஆனால் வில் ௨௩
காரர் யொசியா இராசாவின்மேலே பட எய்தார்
கள்; அப்போது இராசா தன் ஊழியக்காரருக்கு
என்னை அப்புறப்படுத்துங்கள், ஏனென்றால் மிக
வும் காயம்பட்டேன் என்றான்.–அப்போது அவ ௨௪
னுடைய ஊழியக்காரர் இரதத்தின்மேலிருந்த
அவனை இறக்கி, அவனுக்கிருந்த மற்றொரு இர
தத்தின்மேலேற்றுவித்து அவனை எருசலேமுக்
குக் கொண்டுவந்தார்கள்; அவன் மரணம் அ
டைந்தான்; அவன் பிதாக்களின் கல்லறைகளில்
அடக்கம்பண்ணப்பட்டான்; யூதா எருசலே
மின் மனுஷரெல்லாம் யொசியாவுக்காகத் துக்
கம்கொண்டாடினார்கள்.—எரேமியா யொசியா ௨௫
வின்மேலே புலம்பல் பாடினான்; சகல பாடக
ரும் பாடகிகளும் இந்நாள்வரைக்கும் யொசியா
வின்மேலே தங்கள் புலம்புதல்களில் பாடிக்
கொண்டிருந்து அவைகளை இஸ்ரவேலிலே ஒரு
பழக்கமாக்கினார்கள்; இதோ அவைகள் புலம்பு
தலின் புஸ்தகத்தில் எழுதியிருக்கின்றன.
யொசியாவின் மற்ற வர்த்தமானங்களும், கர்த் ௨௬
தருடைய நியாயப்பிரமாணத்தில் எழுதியிருக்கி
றதற்கொத்த அவனுடைய உபகாரங்களும்,—
அவனுடைய முன்பின் நடபடிகளுமோவெ ௨௭
னில், இதோ அவைகள் இஸ்ரவேல் யூதா இரா
சாக்களின் புஸ்தகத்தில் எழுதியிருக்கின்றன.

## ௩௬. அதிகாரம்.

௧. யொவாகாஸ் அரசாகி நீக்கப்பட்டுப் பார்வோனால் எகிப்துதேசத்துக்குக் கொண்டுபோகப்பட்டது. ௫. யோய்கீம் பொல்லாப்பாய் அரசாண்டு சங்கிலியால் கட்டப்பட்டுப் பாபிலோனுக்குக் கொண்டுபோகப்பட்டது. ௯. யோய்கீன் பொல்லாப்பாய் அரசாண்டு பாபிலோனுக்குக் கொண்டுபோகப்பட்டது. ௰௧. பின்பு சிதேக்கியா பொல்லாப்பாய் அரசாண்டு, தீர்க்கதரிசிகளை வெறுத்து, நேபுகாத்நேச்சாருக்கு விரோதமாகக் கலகம் செய்தது. ௰௪. ஆசாரியரும் சனங்களும் செய்த பாவத்துக்காக எருசலேம் அழிக்கப்பட்டது. ௨௨. கோரேஸ் அறிவித்த பிரசித்தபத்திரிகை.

அப்போதே சனம் யொசியாவின் குமாரனாகிய ௧
யொவாகாசைச் சேர்த்துக்கொண்டு, அவனை எரு
சலேமிலே அவன் தகப்பன் ஸ்தலத்திலே இரா
சாவாக்கினார்கள்.—யொவாகாஸ் இராசாவாகிற ௨
போது, இருபத்துமூன்று வயதாயிருந்து, மூன்
றுமாதம் எருசலேமில் அரசாண்டான்.—அதே ௩
னெனில் எகிப்தின் இராசா அவனை எருசலேமில்
அரசாளாதபடிக்குத் தள்ளிவிட்டு, தேசத்தின்
மேல் நூறுதாலந்து வெள்ளியும் ஒருதாலந்து
பொன்னுமான தண்டத்தை வைத்து,—அவனு ௪
டைய அண்ணனாகிய எலியாக்கிமை யூதாவின்
மேலும் எருசலேமின்மேலும் இராசாவாக்கி,
யோய்கீமென்று அவன்பேரை மாற்றினான்; ஆ
னால் அவன் தம்பியாகிய யொவாகாசை எகிப்
தின் இராசாவாகிய நேகோ எகிப்திற்கு அழைத்
துக்கொண்டுபோனான்.

௫ யோய்கீம் இராசாவாகிறபோது இருபத்தைந்து வயதாயிருந்து, பதினொரு வருஷம் எருசலேமில் அரசாண்டு, தன் பராபரனாகிய கர்த்தருடைய பார்வைக்குப் பொல்லாப்பானதைச் செ
௬ ய்தான்.—அவனுக்கு விரோதமாகப் பாபேலின் இராசாவாகிய நேபுகாத்நேச்சார் ஏறிவந்து, அவனைப் பாபேலுக்குக் கொண்டுபோக அவனை இரண்டு வெண்கலச் சங்கிலியால் கட்டினான்.—
௭ கர்த்தருடைய வீட்டின் தட்டுமுட்டுகளிலும் சிலவற்றை நேபுகாத்நேச்சார் பாபேலுக்குக் கொண்டுபோய், அவைகளைப் பாபேலிலுள்ள தன்னுடைய தேவாலயத்திலே வைத்தான்.
௮ யோய்கீமுடைய மற்ற வர்த்தமானங்களும், அவன் செய்ததும், அவனிடத்திலே கண்டுபிடிக்கப்பட்டதுமான அவனுடைய அருவருப்புகளும், இதோ அவைகள் இஸ்ரவேல் யூதா இராசாக்களின் புஸ்தகத்தில் எழுதியிருக்கின்றன; அவன் ஸ்தலத்தில் அவன் குமாரனாகிய யோய்கீன் இராசாவானான்.
௯ யோய்கீன் இராசாவாகிறபோது, எட்டுவயதாயிருந்து, மூன்றுமாதமும் பத்துநாளும் எருசலேமில் அரசாண்டு கர்த்தரின் பார்வைக்குப் பொல்
௰ லாப்பானதைச் செய்தான்.—ஆனால் மறுவருஷப் பிறப்பிலே நேபுகாத்நேச்சாரென்ற இராசா அவனையும், கர்த்தருடைய வீட்டின் உச்சிதமான தட்டுமுட்டுகளையும், பாபேலுக்குக் கொண்டுவரப்பண்ணி, அவன் சிறிய தகப்பனாகிய சிதேக்கியாவை யூதாவின்மேலும் எருசலேமின்மேலும் இராசாவாக்கினான்.
௰௧ சிதேக்கியா இராசாவாகிறபோது, இருபத்தொருவயதாயிருந்து, பதினொரு வருஷம் எருச
௰௨ லேமில் அரசாண்டு,—தன் பராபரனாகிய கர்த்தரின் பார்வைக்குப் பொல்லாப்பானதைச் செய்தான்; அவன் கர்த்தருடைய வாக்கால் பேசின எரேமியாவென்ற தீர்க்கதரிசிக்கு முன்பாகத்
௰௩ தன்னைத் தாழ்த்தினதில்லை. — பராபரன்மேலே தன்னை ஆணையிடுவித்துக்கொண்ட நேபுகாத்நேச்சாரென்ற இராசாவையும் விட்டு மருளவிழுந்து, இஸ்ரவேலின் பராபரனாகிய கர்த்தரண்டைக்குத் திரும்பாதபடிக்கு, தன் பிடரியைக் கடினப்படுத்தி, தன் இருதயத்தை அழுத்தமாக்கி
௰௪ னான். — ஆசாரியரின் எல்லாப் பிரபுக்களும் சனமும் கூடிப் புறச்சாதிகளுடைய அருவருப்புகளின்படி எல்லாம் துரோகம்பண்ணும் பாவங்களைப் பெருகப்பண்ணி, கர்த்தர் எருசலேமிலே பரிசுத்தம்பண்ணின அவருடைய வீட்
௰௫ டைத் தீட்டுப்படுத்தினார்கள்.—அவர்களுடைய பிதாக்களின் பராபரனாகிய கர்த்தர் அவர்களண்டைக்குத் தம்முடைய தானாபதிகளை ஏற்கெனவே அனுப்பவே அனுப்பினார்; ஏனெனில் அவர் தமது சனத்தையும் தமது வாசஸ்தலத்தையும் காப்பதற்கான இரக்கமாயிருந்தார். — ஆனால் கர்த்த ௰௬
ருடைய உக்கிரம் அவருடைய சனத்தைப் பிடித்து, ஆரோக்கியத்திற்கு இடமில்லாதமட்டும், அவர்கள் பராபரனுடைய தானாபதிகளைப் பரியாசம்பண்ணி, அவருடைய வார்த்தைகளை அசட்டைபண்ணி அவருடைய தீர்க்கதரிசிகளை வைத்தார்கள்.

அதேதென்றால் அவர் அவர்கள்மேலே கல்தேயரின் இராசாவை ஏறிவரப்பண்ணி, அவர்கள் ௰௭
வாலிபரை அவர்களுடைய பரிசுத்தஸ்தலமான வீட்டிலே பட்டையத்தாலே கொல்லுவித்து, வாலிபரையும் கன்னியாஸ்திரிகளையும் கிழவரையும் விருத்தாப்பியரையும் தப்பவிடாமல் எல்லாரையும் அவன் கையில் ஒப்புக்கொடுத்தார்.—அவன் ௰௮
பராபரனுடைய வீட்டின் பெரிய சிறிய தட்டுமுட்டுகளனைத்தையும், கர்த்தருடைய வீட்டுப் பொக்கிஷங்களும் இராசாவுக்கும் அவன் பிரபுக்களுக்குமிருந்த பொக்கிஷங்களுமானவை அனைத்தையும் பாபேலுக்குக் கொண்டுபோனான். — அவர்கள் பராபரனுடைய வீட்டைக் ௰௯
கொளுத்தி, எருசலேமின் அலங்கத்தை இடித்து, அதின் மாளிகைகளையெல்லாம் அக்கினியால் சுட்டுப்போட்டு, அதிலுண்டான உச்சிதமான தட்டுமுட்டுகளையெல்லாம் கெடுத்தார்கள். — பட்டையத்திற்குத் தப்பின மீதியானவர்களை ௨௰
அவன் பாபேலுக்குச் சிறைபிடித்துப்போனான்; பெர்சியா இராச்சியபாரம் துவக்கப்படும்மட்டும் அங்கே அவர்கள் அவனுக்கும் அவன் குமாரருக்கும் அடிமைகளாயிருந்தார்கள். — கர்த்தர் ௨௰௧
எரேமியாவின் வாயினாலே சொன்ன வார்த்தை நிறைவேறும்படிக்கு, தேசம் தன்னுடைய ஓய்வு வருஷங்களை இரம்மியமாய் அநுபவித்துத் தீருமட்டும், அது பாழான நாளெல்லாம் எழுபதுவருஷம் முடியும்மட்டாக ஓய்ந்திருந்தது.

ஆனால் எரேமியாவின் வாயினாலே கர்த்தர் ௨௰௨
சொன்ன வார்த்தை நிறைவேறும்படிக்கு, பெர்சியாவின் இராசாவாகிய கோரேசின் முதலாம் வருஷத்திலே, கர்த்தர் பெர்சியாவின் இராசாவாகிய கோரேசின் ஆவியை எழுப்பினதினால், அவன் தன்னுடைய இராச்சியமெங்கும் சத்தமுங்காட்டி, வாசகத்தினாலும் கூறுவித்ததாவது:—
பெர்சியாவின் இராசாவாகிய கோரேசு சொல் ௨௰௩
லுகிறதேதெனில், பரமண்டலங்களின் பராபரனாகிய கர்த்தர் பூமியின் இராச்சியங்களையெல்லாம் எனக்குக் கொடுத்து, யூதாவிலிருக்கிற எருசலேமிலே தமக்கு வீட்டைக் கட்ட எனக்குக் கற்பித்தார்; அவருடைய எல்லாச் சனத்திலும் உங்களில் எவனுண்டோ, அவனோடே அவனுடைய பராபரனாகிய கர்த்தர் இருப்பாராக; அவன் ஏறிப்போகக்கடவனென்று கூறுவித்தான்.

EZRA.

# எஸ்றுவின் புஸ்தகம்.

## க. அதிகாரம்.

*க. தேவாலயத்தைக் கட்டுதற்குக் கோரேசு பிரசித்தம்பண்ணினது. ரு. அதைச் செய்யச் சனங்கள் எத்தனப்பட்டது. எ. கோரேசு ஆலயத்தின் தட்டுமுட்டுகளைச் சேஸ்பாத்சாருக்குக் கொடுத்தது.*

௧ எரேமியாவின் வாயினாலே கர்த்தர் சொன்ன
வார்த்தை நிறைவேறும்படிக்கு, பெர்சியாவின்
இராசாவாகிய கோரேசுடைய முதலாம் வரு
ஷத்திலே கர்த்தர் பெர்சியாவின் இராசாவாகிய
கோரேசின் ஆவியை எழுப்பினதினாலே,அவன்
தன் இராச்சியமெங்கும் சத்தம் காட்டி, வாசகத்
தினாலும் பறையிடுவித்து,
௨ பெர்சியாவின் இராசாவாகிய கோரேசு சொல்
லுகிறதேதெனில், பரமண்டலங்களின் பராபர
னாகிய கர்த்தர் பூமியின் இராச்சியங்களையெல்
லாம் எனக்குக் கொடுத்து,யூதாவிலிருக்கிற எருச
லேமிலே தமக்கு வீட்டைக் கட்டுவிக்க அவர்
௩ எனக்குக் கற்பித்தார். — அவருடைய எல்லாச்
சனத்திலும் உங்களில் எவனுண்டோ, அவனோ
டே அவனுடைய பராபரன் இருப்பாராக; அ
வன் யூதாவிலிருக்கிற எருசலேமுக்குப் போய்
ஏறி, இஸ்ரவேலின் பராபரனாகிய கர்த்தருடைய
வீட்டைக் கட்டுவிக்கக்கடவன்; அவர்தானே
எருசலேமிலே வாசம்பண்ணுகிற பராபரனான
௪ வர். — எவன் தான் புறத்தேசமாய்த் தங்குகிற
எவ்விடங்களிலாகிலும் மீதியாயிருக்கிறானோ
அவனுடைய தலத்து மனிதர் எருசலேமிலிருக்
கிற பராபரனுடைய வீட்டுக்கென்று உச்சாக
மாய்க் கொடுக்கிறதும் அல்லாமல், அவனுக்கு
வெள்ளியினாலும் பொன்னினாலும் உடைமைக
ளினாலும் மிருகசீவன்களினாலும் உதவிபண்
ணக்கடவர்களென்று கூறுவித்தான்.
௫ அப்பொழுது யூதாபென்யமீனுடைய வம்சங்
களின் தலைவரும் ஆசாரியரும் இலேவியரும் எரு
சலேமிலிருக்கிற கர்த்தருடைய வீட்டைக் கட்
டுகிறதற்குப் போயேறி,எவர்கள் ஆவியைப் பரா
பரன் எழுப்பினாரோ அவர்களெல்லாரும் எழும்
௬ பினார்கள்.—அவர்களைச் சுற்றிலும் குடியிருக்கிற
யாவரும் மன உச்சாகமாய்க் கொடுத்ததெல்லா
வற்றையும்தவிர,அவர்களுடைய கைகளை வெள்
ளித்தட்டுமுட்டுகளையும் பொன்னையும் உடை
மைகளையும் மிருகசீவன்களையும் உச்சிதங்களை
யும் கொடுக்கிறதினாலே திடப்படுத்தினார்கள்.
௭ நேபுகாத்நேச்சார் எருசலேமிலிருந்து கொண்
டுவந்து, தன் தேவனுடைய வீட்டிலே வைத்த
கர்த்தருடைய வீட்டுத் தட்டுமுட்டுகளையும் கோ
௮ ரேசு இராசா எடுத்துக்கொடுத்தான். — அவைக
ளைப் பெர்சியாவின் இராசாவாகிய கோரேசு
பொக்கிஷக்காரனாகிய மித்திரேதாதின் கையி
னால் எடுத்து, யூதாவின் பிரபுவாகிய சேஸ்பாத்
சாருக்கு எண்ணிக் கொடுப்பித்தான்.—அவைக ௯
ளின் இலக்கமாவது: முப்பது பொன்தட்டுக
ளும், ஆயிரம் வெள்ளித்தாலங்களும் இருபத்
தொன்பது கத்திகளும்,—முப்பது பொன்கிண் ௰
ணிகளும், நானூற்றுப்பத்து வெள்ளிக்கிண்ணிக
ளும்,வேறேதட்டுமுட்டுகள் ஆயிரமும்,—பொன் ௰௧
வெள்ளித் தட்டுமுட்டுகளெல்லாம் ஐயாயிரத்து
நானூறுமாயிருந்தன; சிறையிருப்பானவர்கள்
பாபேலிலிருந்து எருசலேமுக்கு ஏறிப்போகை
யில், அவைகளையெல்லாம் சேஸ்பாத்சார் எடுத்
துக்கொண்டுபோனான்.

## உ. அதிகாரம்.

*க. திரும்பிப்போன சனங்களின் இலக்கம். ௩௬. ஆசாரியர். ௪௦. இலேவியர். ௪௩. நெத்தானியர். ௫௫. சாலொமோனின் வேலைக்காரர். ௬௧. தங்கள் வம்சத்தை அறியாத ஆசாரியர். ௬௪. சனங்களின் தொகையும், ஆஸ்தியும், ௬௮. அவர்கள் செலுத்தின காணிக்கைகள்.*

பாபேலின் இராசாவாகிய நேபுகாத்நேச்சார் பி ௧
டித்து, பாபேலுக்குக் கொண்டுபோனவர்களின்
சிறையிருப்பிலிருந்து எருசலேமுக்கும் யூதா
விலுள்ள தங்கள் தங்கள் பட்டணங்களுக்கும்
திரும்பி,—செருபாபேல், எசுவா, நெகேமியா, ௨
செராயா, ரெலாயா, மொற்தேகாய், பில்சான்,
மிஸ்பார், பிகேபாய், ரெகூம், பானா என்கிறவர்
களோடே கூடவந்தேறின சீமையின் புத்திரரா
கிய இஸ்ரவேல் சனமான மனிதரின் இலக்கமா
வது:-பாரோசின் புத்திரர் இரண்டாயிரத்து ஒரு ௩
நூற்று எழுபத்திரண்டு.-செபத்தியாவின் புத்திரர் ௪
முந்நூற்று எழுபத்திரண்டு. — ஆராகின் புத்திரர் ௫
எழுநூற்று எழுபத்தைந்து. — ஏசுவா, யோவா ௬
பின் புத்திரருக்குள்ளிருந்த பாகாத்மோவாபின்
புத்திரர் இரண்டாயிரத்து எண்ணூற்றுப்பன்னி
ரண்டு. — ஏலாமின் புத்திரர் ஆயிரத்து இரு ௭
நூற்று ஐம்பத்துநான்கு. — சத்தூவின் புத்திரர் ௮
தொள்ளாயிரத்து நாற்பத்தைந்து. — சக்காயிம் ௯
புத்திரர் எழுநூற்று அறுபது.—பானியின் புத்தி ௰
ரர் அறுநூற்று நாற்பத்திரண்டு. — பெபாயின் ௰௧
புத்திரர் அறுநூற்று இருபத்துமூன்று. — அஸ் ௰௨
காதின் புத்திரர் ஆயிரத்து இருநூற்று இருபத்தி
ரண்டு.—அதொனிக்காமின் புத்திரர் அறுநூற்று ௰௩
அறுபத்தாறு.—பிக்வாயின் புத்திரர் இரண்டாயி ௰௪
ரத்து ஐம்பத்தாறு.—ஆதினின் புத்திரர் நானூற்று ௰௫
ஐம்பத்துநான்கு. — எசக்கியாவின் சந்ததியான ௰௬
அதேரின் புத்திரர் தொண்ணூற்றெட்டு. —

௰௭ பெத்சாயின் புத்திரர் முந்நூற்று இருபத்து
௰௮ மூன்று. — யோராகின் புத்திரர் நூற்றுப்பன்னி
௰௯ ரண்டு. — ஆசூமின் புத்திரர் இருநூற்று இரு
௨௰ பத்துமூன்று —கிபாரின் புத்திரர் தொண்ணூற்
௨௧ றைந்து. — பெத்லேகேமின் புத்திரர் நூற்றிரு
௨௨ பத்துமூன்று. — நெத்தோபாவின் மனிதர் ஐம்
௨௩ பத்தாறு. — ஆனதோத்தின் மனிதர் நூற்றிருபத்
௨௪ தெட்டு.—அஸ்மாவேத்தின் புத்திரர் நாற்பத்தி
௨௫ ரண்டு. — கீரியாத்யாரீம், கெப்பீரு, பேரோ
தென்றவைகளின் புத்திரர் எழுநூற்று நாற்பத்து
௨௬ மூன்று. — ராமா, காபா என்றவைகளின் புத்
௨௭ திரர் அறுநூற்று இருபத்தொன்று.—மிக்மாசின்
௨௮ மனிதர் நூற்றிருபத்திரண்டு. — பேதேல், ஆயி
என்றவைகளின் மனிதர் இருநூற்று இருபத்து
௨௯ மூன்று.—நேபோவின் புத்திரர் ஐம்பத்திரண்டு.—
௩௰, ௩௧ மக்பீசின் புத்திரர் நூற்றைம்பத்தாறு.—மற்ற
ஏலாமின் புத்திரர் ஆயிரத்து இருநூற்றைம்பத்து
௩௨ நான்கு. — ஆரீமின் புத்திரர் முந்நூற்று இரு
௩௩ பது.—லோத், ஆதீத், ஓனோ என்றவைகளின்
௩௪ புத்திரர் எழுநூற்று இருபத்தைந்து. — எரிகோ
வின் புத்திரர் முந்நூற்று நாற்பத்தைந்து. —
௩௫ சேனாகின் புத்திரர் மூவாயிரத்து அறுநூற்று
முப்பது.

௩௬ ஆசாரியராவது: ஏசுவாவின் வீட்டாராகிய
யெதாயாவின் புத்திரர் தொள்ளாயிரத்து எழுபத்து
௩௭ மூன்று.—இம்மேரின் புத்திரர் ஆயிரத்து ஐம்பத்
௩௮ திரண்டு.—பஸ்கூரின் புத்திரர் ஆயிரத்து இரு
௩௯ நூற்று நாற்பத்தேழு.—ஆரீமின் புத்திரர் ஆயிரத்
துப் பதினேழு.

௪௰ இலேவியராவது: ஒதயாவின் சந்ததியான
ஏசுவா, கத்மியேல் என்றவர்களின் புத்திரர் எழு
பத்துநான்கு.

௪௧ பாடகராவது: ஆசாபின் புத்திரர் நூற்றிருபத்
தெட்டு.

௪௨ வாசல்காப்பாரின் புத்திரராவது: சல்லூமின்
புத்திரரும், அதேரின் புத்திரரும், தல்மோனின்
புத்திரரும், ஆக்கூவின் புத்திரரும், அதிதாவின்
புத்திரரும், சோபாயிம் புத்திரருமானவர்களெல்
லாம் நூற்று முப்பத்தொன்பது.

௪௩ இஸ்ரவேலைச் சேர்ந்தவர்களாவது: சீகாவின்
புத்திரர், அசூபாவின் புத்திரர், தபாகோத்தின்
௪௪ புத்திரர், — கேரோசின் புத்திரர், சீயாகாவின்
௪௫ புத்திரர், பாதோனின் புத்திரர்,—லெபானாகிம்
புத்திரர், ஆகாபாவின் புத்திரர், ஆக்கூவின் புத்தி
௪௬ ரர், — ஆகாபின் புத்திரர், சம்லாயின் புத்திரர்,
௪௭ ஆனானின் புத்திரர்,—கீதேலின் புத்திரர், காகா
௪௮ ரின் புத்திரர், ராயாகின் புத்திரர்,—ரேத்சீனின்
புத்திரர், நேகோதாவின் புத்திரர், காசாமின் புத்
௪௯ திரர்,—ஊசாவின் புத்திரர், பாசெயாகின் புத்தி
௫௰ ரர், பேசாயின் புத்திரர்,—அஸ்னாவின் புத்திரர்,
மெயூனியரின் புத்திரர், நெபுசியரின் புத்திரர்,—
௫௧ பக்பூக்கின் புத்திரர், அக்குபாவின் புத்திரர்,
௫௨ அர்கூரின் புத்திரர்,—பஸ்லூதின் புத்திரர், மெகி
௫௩ தாவின் புத்திரர், அற்சாவின் புத்திரர்,—பற்கோ
சின் புத்திரர், சிஸ்ராவின் புத்திரர், தாமாகின்
புத்திரர்,—நெத்சியாகின் புத்திரர், அதிபாவின் ௫௪
புத்திரரும்தானே.—சாலோமோனுடைய வேலை ௫௫
யாள்களின் புத்திரராவது: சோதாயின் புத்திரர்,
சொபேரேதின் புத்திரர், பெருதாவின் புத்திரர்,—
யாலாகின் புத்திரர், தற்கோனின் புத்திரர், கீதே ௫௬
லின் புத்திரர்,—செபத்தியாவின் புத்திரர், அத் ௫௭
தீலின் புத்திரர், பொகெரேத் அத்செபாயிமின்
புத்திரர், ஆமியின் புத்திரரும்தானே.—இஸ்ரவே ௫௮
லைச் சேர்ந்தவர்களும் சாலோமோனுடைய வே
லையாள்களின் புத்திரருமெல்லாம் முந்நூற்றுத்
தொண்ணூற்றிரண்டு.

தெல்மெலாகிலும், தேல் அரசாவிலும், கேரு ௫௯
பிலும், ஆதோனிலும், இம்மேரிலுமிருந்து வறிவ
ந்தும், தாங்கள் இஸ்ரவேலரோவென்று தங்கள்
பிதாக்களின் வீட்டையும் தங்கள் பூர்வோத்திரத்
தையும் சொல்லமாட்டாமல் இருந்தவர்களா
வது: — தேலாயாவின் புத்திரரும், தொபியா ௬௰
வின் புத்திரரும், நெகோதாவின் புத்திரருமான
அறுநூற்று ஐம்பத்திரண்டுபேர்.—ஆசாரியரின் புத் ௬௧
திரரிலும் அபாயாவின் புத்திரர், கோசின் புத்தி
ரர், கிலேயாத்தியனான பற்சில்லாயின் குமாரத்தி
களில் ஒருத்தியை விவாகம்பண்ணி அவர்கள்
நாமம் தரிக்கப்பட்ட பற்சில்லாயினுடைய புத்தி
ரர்தானே. — இவர்கள் தங்கள் வம்ச அட்டவ ௬௨
ணையைத் தேடி, அதைக் காணாமல்போய், ஆசா
ரிய ஊழியத்திற்கு அசுத்தமானவர்களானபடியி
னாலே விலக்கப்பட்டார்கள்.—வெளிச்சங்களும் ௬௩
உத்தமங்களுமுள்ள ஆசாரியன் எழும்புமட்
டும், பரிசுத்தத்திற்குப் பரிசுத்தமானதிலே புசிக்
கவேண்டாமென்று திற்ஷாதா அவர்களுக்குச்
சொன்னான்.

இந்தச் சபையெல்லாம் ஏகத்திற்கு நாற்பத்தீ ௬௪
ராயிரத்து முந்நூற்றறுபதுபேராயிருந்தது. —
அவர்களைத்தவிர, ஏழாயிரத்து முந்நூற்று முப்பத் ௬௫
தேழுபேரான அவர்களுடைய வேலைக்காரரும்,
வேலைக்காரிகளும், இருநூறு பாடகரும், பாட
கிகளும் அவர்களுக்கு இருந்தார்கள்.—அவர்க ௬௬
ளுடைய குதிரைகள் எழுநூற்று முப்பத்தாறும்,
அவர்கள் கோவேறுகழுதைகள் இருநூற்று நாற்
பத்தைந்தும், — அவர்களுடைய ஒட்டகங்கள் ௬௭
நானூற்று முப்பத்தைந்தும், கழுதைகள் ஆறாயி
ரத்து எழுநூற்று இருபதுமாயிருந்தன.

வம்சங்களின் தலைவரின் சிலர் எருசலேமில் ௬௮
வாசம்பண்ணின கர்த்தருடைய வீட்டுக்கு வந்த
பொழுது, பராபரனுடைய வீட்டை அதின் தான
த்திலே எடுப்பிக்கும்படிக்கு, அதற்காக மன உச்
சாகமான காணிக்கைகளைக் கொடுத்தார்கள்.—
அவர்கள் தங்கள சக்திக்குத்தக்கவிதமாக வேலை ௬௯
யின் பொக்கிஷத்திற்கு அறுபத்தோராயிரம் தங்
கக்காசையும், ஐயாயிரம் இராத்தல் வெள்ளியை
யும், நூறு ஆசாரிய வஸ்திரங்களையும் கொடுத்
தார்கள்.

ஆசாரியரும், இலேவியரும், சனத்தில் சிலரும், ௭௰
பாட்டகரும், வாசல்காப்பாரும், இஸ்ரவேலைச்
சேர்ந்தவர்களும், தங்கள் தங்கள் பட்டணங்களி

லும் இஸ்ரவேலெல்லாம் தங்கள் பட்டணங்க
ளிலும்தானே குடியேறினார்கள்.

## ௩. அதிகாரம்.

௧. பலிபீடம் கட்டப்பட்டது. ௪. பலமுறை செலுத்தின பலிகள். ௭. வேலைக்காரர்கள் எத்தனப்பட்டது. ௮. ஆலயத்தின் அஸ்திபாரத்தைச் சந்தோஷத்தோடும், துக்கத்தோடும் கட்டினது.

௧ ஏழாம் மாதம் வந்து இஸ்ரவேல் புத்திரர் பட்ட
ணங்களிலே குடியிருக்கிறபொழுது, சனம் ஒரு
மனிதனைப்போல எருசலேமிலே கூடிக்கொண்
௨ டது.—அப்பொழுது யோத்சதாக்கின் குமாரனா
கிய ஏசுவாவும், அவன் சகோதரராகிய ஆசாரிய
ரும், சேயல்தியேலின் குமாரனாகிய செருபாபே
லும், அவன் சகோதரரும் எழும்பி, பராபரனு
டைய மனிதனாகிய மோசேயின் நியாயப்பிரமா
ணத்தில் எழுதியிருக்கிறபடி சர்வாங்கதகனங்க
ளைப் பலியிடும்படிக்கு, இஸ்ரவேலுடைய பரா
பரனின் பலிபீடத்தைக் கட்டி,
௩ பலிபீடத்தை மூலாதாரங்களின்மேலே எடுப்
பித்தார்கள்; ஏனென்றால் தேசங்களின் சனங்க
ளுக்குப் பயப்படுகிற பயங்கரம் அவர்கள்மே
லிருந்தது; அதின்மேல் அவர்கள் அந்திசந்தி
கர்த்தருக்குச் சர்வாங்கதகனபலிகளைச் செலுத்தி
௪ னார்கள்.—எழுதியிருக்கிறபடியே அவர்கள் கூ
டாரப்பண்டிகையை ஆசரித்து, ஒவ்வொரு நா
ளுக்குத்தக்க நியாயமானபடி ஒவ்வொரு நாளின்
இலக்கமானதை ஒவ்வொருநாளிலும் பலியிட்
௫ டார்கள்.—அதற்குப்பிற்பாடு நித்தமும் மாதப்
பிறப்புகளிலும் கர்த்தருடைய பரிசுத்த எல்லாப்
பண்டிகைகளிலும் செலுத்தும் சர்வாங்கதகனத்
தையும், கர்த்தருக்கு அவரவர் செலுத்தும் உச்
௬ சாகபலிகளையும் நடத்தினார்கள்.—ஏழாம் மாதம்
முதல்தேதியிலே கர்த்தருக்குச் சர்வாங்கதகனப
லிகளைச் செலுத்தத் துவக்கினார்கள்; ஆனால் கர்த்
தருடைய தேவாலயத்தின் அஸ்திபாரம் இன்னம்
௭ போடப்பட்டதில்லை.—அப்பொழுது அவர்கள்
கல்தச்சருக்கும் சிற்பாசாரிகளுக்கும் திரவியத்
தையும், பெர்சியாவின் இராசாவாகிய கோரேஸ்
தங்களுக்குக் கொடுத்த உத்தரவின்படியே லீப
னோனிலிருந்து கேதுருமரங்களைச் சமுத்திரத்தி
ன்மேல் யாபோமட்டும் கொண்டுவரச் சீதோனி
யருக்கும் தீரியருக்கும் போசனத்தையும் பானத்
தையும் எண்ணெயையும் கொடுத்தார்கள்.
௮ அவர்கள் எருசலேமிலிருந்த பராபரனுடைய
வீட்டிற்கு வந்த இரண்டாம் வருஷம் இரண்
டாம் மாதத்திலோவென்றால், சேயல்தியேலின்
குமாரனாகிய செருபாபேலும், யோத்சதாக்கின்
குமாரனாகிய ஏசுவாவும், மற்றுமுண்டான அவர்
கள் சகோதரராகிய ஆசாரியரும், இலேவியரும்,
சிறையிருப்பிலிருந்து எருசலேமுக்கு வந்த அ
னைவரும், துவக்கம்பண்ணி இருபது வயதும்
அதற்கு மேல்தரமுமான இலேவியரைக் கர்த்த
ருடைய வீட்டின் வேலையைக் கண்காணிக்க
௯ வைத்தார்கள். — அப்படியே பராபரனுடைய
வீட்டின் வேலையைச் செய்கிறவர்களைத் துரிதம்
பண்ணி, ஏசுவாவும் அவனுடைய குமாரரும்
சகோதரரும், கத்மியேலும் அவன் குமாரரும், யூ
தாவின் குமாரரும், ஏனாதாதும் அவன் குமாரரும்,
சகோதரர்களுமாகிய இலேவியர் ஒருவனைப்
போல நின்றார்கள்.
சிற்பாசாரிகள் கர்த்தருடைய தேவாலயத் ௰
திற்கு அஸ்திபாரம் போடுகிறபொழுது, இஸ்ர
வேல் இராசாவாகிய தாவீதுடைய கட்டளை
யின்படியே, கர்த்தரைத் துதிக்கும்படிக்கு, வஸ்
திரங்கள் தரிக்கப்பட்டுப் பூரிகைகளை ஊதுகிற
ஆசாரியரையும், தாளங்களைக் கொட்டுகிற ஆசா
பின் குமாரராகிய இலேவியரையும் நிறுத்தினார்
கள்.—கர்த்தர் நல்லவர்; ஏனெனில் இஸ்ரவே ௰௧
லின்மேலே அவருடைய கிருபை என்றுமுள்
ளதென்று அவரைப் புகழ்ந்து துதிக்கையில்,
மாற்றிமாற்றிப் பாடினார்கள்; கர்த்தரைத் துதிக்
கையில், சனமெல்லாம் கர்த்தருடைய வீட்டின்
அஸ்திபாரம் போடப்படுகிற நிமித்தம் மகா கெம்
பீரமாய்க் கெம்பீரித்தது.—முதிர்ந்த வயதான ஆ ௰௨
சாரியரிலும், இலேவியரிலும், பிதாக்களின் வம்
சங்களின் தலைவரிலும், தன் அஸ்திபாரத்தின்
மேலிருந்த முந்தின வீட்டைக் கண்டிருந்து,
இந்த வீட்டையும் தங்கள் கண்களினாலே நோக்
கியிருக்கிற அநேகரோ மகா சத்தம்காட்டி அழு
தார்கள்; வேறே அநேகம்பேரோவென்றால்
கெம்பீரமும் சந்தோஷமுமாய்ச் சத்தம்காட்டி
னார்கள்.—ஆனால் சந்தோஷ கெம்பீரத்தின் சத் ௰௩
தம் இன்னதென்றும், சனத்தினுடைய அழுகை
யின் சத்தம் இன்னதென்றும் சனம் அறியாதே
போனார்கள்; ஏனெனில் சனம் மகா கெம்பீர
மாய்க் கெம்பீரிக்கிறதினாலே அவர்கள் சத்தம்
தூரத்திற்குக் கேட்கப்பட்டது.

## ௪. அதிகாரம்.

௧. ஆலயத்தைக் கட்டுதற்கு யூதர்களுடனே சத்துருக்கள் சேர்க்கப்படாததினால், அவர்கள் அதைத் தடைசெய்தது. ௭. அவர்கள் அர்தசஷ்டாவுக்கு எழுதின காகிதம். ௰௭. அர்தசஷ்டாவின் கட்டளை. ௨௪. ஆலயம் கட்டுதல் தடைபட்டது.

சிறையிருப்பின் புத்திரர் இஸ்ரவேலின் பராபர ௧
னாகிய கர்த்தருக்குத் தேவாலயத்தைக் கட்டுகி
றார்களென்பதை யூதாவுக்கும் பென்யமீனுக்கு
மிருந்த சத்துருக்கள் கேட்டபொழுதோவெ
னில், — அவர்கள் செருபாபேலண்டைக்கும் ௨
தலைவரானபிதாக்களண்டைக்கும்சேர்ந்துவந்து,
உங்களோடேகூடக் கட்டுவோம்; ஏனென்
றால் உங்கள் பராபரனை உங்களைப்போலத் தேடு
வோம்; எங்களை இங்கே ஏறிவரப்பண்ணின அ
சூரின் இராசாவாகிய ஆசார் அதோனின் நாள்
கள்முதல்கொண்டு அவருக்கு நாங்களும் பலி
யிடுகிறோமென்று அவர்களோடே சொன்னார்
கள்.—ஆனால் செருபாபேலும், ஏசுவாவும், இஸ் ௩
ரவேலில் மற்றுமுண்டான தலைவரான பிதாக்க
ளும், அவர்களுடனே, எங்கள் பராபரனுடைய
வீட்டை நீங்களும் நாங்களும் கட்டவொண்
ணாது; பெர்சியாவின் இராசாவாகிய கோரேஸ்
இராசா எங்களுக்குக் கற்பித்தபடி, நாங்களே
இஸ்ரவேலின் பராபரனாகிய கர்த்தருக்கு அதைக்

௪ கட்டுவோமென்றார்கள்.—ஆகையினாலே அந்தத்
தேசத்தின் சனம் யூதாசனத்தின் கைகளைத் தளர்ந்
துபோகப்பண்ணி, கட்டாதபடிக்கு அவர்க
௫ ளைக் கலங்க அடித்து,—பெர்சியாவின் இராசா
வாகிய கோரேசின் நாளெல்லாம் தரீயு என்ற
பெர்சியாவுடைய இராசாவின் இராச்சியபாரம்
மட்டும், அவர்கள் யோசனையை அவத்தமாக்கத்
தக்க ஆலோசனைக்காரரை அவர்களுக்கு விரோ
தமாய்க் கையிடை கட்டி,
௬ அகாஸ்வேரு அரசாளுகிறபொழுது, அவனு
டைய இராச்சியபாரத்தின் துவக்கத்திலே, யூதா
விலும் எருசலேமிலும் குடியிருக்கிறவர்களுக்கு
௭ விரோதமாக மிகையை எழுதினார்கள்.— அற்த
சஷ்டாவின் நாள்களிலும் விஸ்லாமும், மித்தி
ரேதாத்தும், தபேயேலும், மற்றும் உண்டான அ
வர்கள் கூட்டத்தாரும், பெர்சியாவின் இராசா
வான அற்தசஷ்டாவுக்கு ஒரு காகிதத்தை எழு
தினார்கள்; அந்தக் காகிதத்தின் வயணம் சூரிய
எழுத்தும் சூரியபாஷையுமாய் எழுதியிருந்தது.—
௮ ஆலோசனைத் தலைவனாகிய ரேகூமும் கணக்க
னாகிய சிம்சாவும் எருசலேமுக்கு விரோதமாக
அற்தசஷ்டாவென்ற இராசாவுக்கு எழுதின கா
௯ கிதத்திலே போடப்பட்ட நாமங்களாவது:—ஆ
லோசனைக்குத் தலைவனாகிய ரேகூமும், கணக்
கனாகிய சிம்சாயும், மற்றுமுண்டான அவர்கள்
கூட்டத்தாராகிய தீனாயர், அபற்சாத்தியர், தர்
பேலியர், அப்பார்சியர், அற்கேவியர், பாபிலோ
னியர், சூஷங்கியர், தெகாவியர், ஏலாமியரான
௰ வர்களும்,—பெரியவரும் பேர்போனவருமான
அஸ்னாப்பார் அவ்விடங்களிலிருந்து அழைத்து
வந்து சமாரியாவின் பட்டணத்திலே குடியே
றப்பண்ணின மற்றச் சனசதளங்களும், நதிக்
கிப்பாலே இருக்கிற மற்றச் சனங்களும் முத
௰௧ லான நாமங்கள்தானே.—அவர்கள் அற்தசஷ்டா
வென்ற இராசாவுக்கு அனுப்பின காகிதத்தின்
விபரமாவது: நதிக்கு இப்பாலிருக்கிற உம்மு
டைய அடியாராகிய மனிதர் மற்றது.
௰௨ உம்மிடத்திலிருந்து எங்களண்டையில் எரு
சலேமுக்கு வந்தேறியிருக்கிற யூதர் அந்தக் கலக
மும் பொல்லாப்புமான அந்தப் பட்டணத்தைக்
கட்டி, அதின் மதில்களை எழுப்பி, அஸ்திபாரங்
களைப் போட்டிசைக்கிறார்களென்பது இராசா
௰௩ வுக்கு அறியலாகக்கடவது.—இப்போதும் அந்தப்
பட்டணம் கட்டப்பட்டு, அலங்கங்கள் எடுப்
பிக்கப்பட்டுத் தீர்ந்தால், அவர்கள் பகுதியையும்
இறையையும் தீர்வையையும் கொடாதே போ
வார்கள்; அப்படியே இராசாக்களின் வரத்திற்கு
நஷ்டம் வருமென்று இராசாவுக்கு அறியப்படக்
௰௪ கடவது. — இப்போதும் நாங்கள் இராசாவினு
டைய அரமனைச் சம்பளக்காரராயிருந்துகொண்
டு, இராசாவுக்குக் கனவீனம் வரப்பார்த்திருக்கி
றது எங்களுக்கு அடாததானபடியால், நாங்கள்
இதை அனுப்பி, உம்முடைய பிதாக்களின் நா
ளாகமத்தில் ஆராயப்படும்படிக்கு இதை இராசா
௰௫ வுக்குத் தெரியப்பண்ணுவித்தோம்.—அது கலக
மும், இராசாக்களுக்கும் சீமைகளுக்கும் நஷ்ட
முண்டாக்குகிறதுமான பட்டணமாயிருந்ததெ
ன்றும், அதிலே அவர்கள் பூர்வகாலந்துவக்கிக்
கலாதி உண்டாக்கினபடியினாலேதானே அந்தப்
பட்டணம் பாழ்க்கடிக்கப்பட்டதென்றும் அந்த
நாளாகமத்திலே கண்டறிந்துகொள்ளுவீர். —
ஆகையால் அந்தப் பட்டணம் கட்டப்பட்டு, ௰௬
அதின் அலங்கங்கள் எடுப்பிக்கப்பட்டுத் தீர்ந்தா
ல், நதிக்கு இப்பாலே உமக்கு அதினால் ஒன்றும்
இராதேபோமென்கிறதை இராசாவுக்கு அறியப்
பண்ணுகிறோமென்று எழுதி அனுப்பினார்கள்.
அப்போது இராசா ஆலோசனைத் தலைவனாகிய ௰௭
ரேகூமுக்கும், கணக்கனாகிய சிம்சாயிக்கும்,
சமாரியாவில் குடியிருக்கிற மற்ற அவர்களு
டைய கூட்டத்தாருக்கும், நதிக்கு இப்பாலிருக்
கிற மற்றவர்களுக்கும் எழுதி அனுப்பின பிரதி
யுத்தாரமாவது: உங்களுக்குச் சமாதானம். மு.—
நீங்கள் எங்களுக்கு அனுப்பின காகிதம் எனக்கு ௰௮
முன்பாகத் தீர்க்கமாய் வாசிக்கப்பட்டது.—என் ௰௯
கட்டளையினால் ஆராய்ந்துபார்க்கப்பட்டபொ
ழுது, அந்தப் பட்டணம் பூர்வகாலந்துவக்கி
இராசாக்களுக்கு விரோதமாய் எழும்பிற்றென்
றும், அதிலே கலகமும் பந்துக்கட்டும் பிறந்த
தென்றும்,—எருசலேமில் வல்லமையுள்ள இரா ௨௰
சாக்கள் இருந்தார்களென்றும், அவர்கள் நதிக்கு
இப்பாலிருக்கிற எல்லா இடங்களின்மேலும்
ஆண்டுகொண்டார்களென்றும், பகுதியும் இறை
யும் தீர்வையும் அவர்களுக்குச் செலுத்தப்பட்ட
தென்றும் கண்டுபிடிக்கப்பட்டன.— இப்பொ ௨௧
ழுதும் என்னாலே வேறே கட்டளை கொடுக்கப்
படும்மட்டும் அந்தப் பட்டணம் கட்டாதபடி
க்கு அந்த மனிதர் அதை நிறுத்திவிட நீங்கள்
கற்பியுங்கள்.—இதிலே நீங்கள் தப்பிதம்செய்யா ௨௨
தபடிக்கு எச்சரிக்கையாயிருங்கள்; இராசாக்க
ளுக்கு நஷ்டமாய்ச் சேதம் அதிகரிப்பதென்ன
வென்று எழுதி அனுப்பினான்.
இராசாவாகிய அற்தசஷ்டாவுடைய நிருபத் ௨௩
தின் விவரம் ரேகூமுக்கும் கணக்கனாகிய சிம்
சாயிக்கும் அவர்கள் கூட்டத்தாருக்குமுன்பாக
வாசிக்கப்பட்டபொழுது, அவர்கள் தீவிரத்துட
னே எருசலேமிலிருக்கிற யூதரண்டைக்குப்
போயேறி, கைப்பலத்தோடும் பலவந்தத்தோடும்
அவர்களை வேலைசெய்யாதபடிக்குத் தவிர்த்து
விட்டார்கள்.—அப்பொழுது எருசலேமிலுள்ள ௨௪
பராபரனுடைய வீட்டுவேலை நிறுத்தப்பட்டு,
பெர்சியாவின் இராசாவாகிய தரீயு இராச்சிய
பாரம்பண்ணின இரண்டாம் வருஷம்மட்டும்
தவிர்ந்திருந்தது.

## ௫. அதிகாரம்.

௧. ஆலயத்தைக் கட்டும்படி செருபாபேலும், ஏசுவாவும், அகாயினாலும், சகரீயாவினாலும் ஏவப்பட்டது. ௩. தத்னையும், சேத்தார்பொஸ்னையும், யூதர்களைத் தடுக்கக்கூடாதது. ௬. அவர்கள் யூதர்களுக்கு விரோதமாகத் தரீயுவுக்கு எழுதின கடிதம்.

ஆனால் தீர்க்கதரிசியாகிய அகாயும் இத்தோவின் ௧
குமாரனாகிய சகரீயாவும் என்ற தீர்க்கதரிசிகள்,

யூதாவிலும் எருசலேமிலுமுள்ள யூதருக்குத் தீர்க்
கதரிசனம் சொல்லி, இஸ்ரவேலுடைய பராபர
னின் நாமத்திலே அவர்களோடே பேசினார்
௨ கள்.—அப்பொழுது சேயல்தியேலின் குமாரனா
கிய செருபாபேலும் யோத்சதாக்கின் குமாரனா
கிய எசுவாவும் எழும்பி, எருசலேமிலுள்ள பரா
பரனுடைய வீட்டைக் கட்டத்துவக்கினார்கள்;
அவர்களுக்குத் திடன்சொல்லுகிற பராபரனு
டைய தீர்க்கதரிசிகளும் அவர்களோடிருந்தார்
கள்.
௩ அக்காலத்திலே நதிக்கு இப்பாலிருக்கிற தத்
னாயென்கிற துரையும், சேத்தார்பொஸ்னாயும்,
அவர்கள் கூட்டத்தாரும் அவர்களண்டைக்கு
வந்து, இந்த வீட்டைக் கட்டவும் இந்த மதிலை
எடுப்பிக்கவும் உங்களுக்குக் கட்டளையிட்ட
௪ வன் யாரென்று அவர்களைக் கேட்டார்கள்.—அப்
பொழுது அதையும், இந்த மாளிகையைக் கட்டு
கிற மனிதரின் நாமங்கள் ஏதென்கிறதையும்
௫ அவர்களுக்குச் சொன்னோம். — ஆனால் இந்தச்
செய்தி தரீயுவண்டைக்குப் போய் எட்டும்மட்
டுக்கும் இவர்கள் யூதருடைய மூப்பரின் வேலை
யைத் தவிர்க்காதபடிக்கு, அவர்களுடைய பரா
பரனின் கண் அவர்கள்மேல் வைக்கப்பட்டிருந்
தது; அப்பொழுது இதைக்குறித்து அவர்கள்
சொன்ன மறுமொழியைக் காகிதத்தில் எழுதி
அனுப்பினார்கள்.
௬ நதிக்கு இப்பாலிருக்கிற தத்னாய் என்ற துரை
யும்,சேத்தார்பொஸ்னாயும், நதிக்கு இப்பாலிருக்
கிற அப்பற்சாகியரான அவன் கூட்டத்தாரும்,
இராசாவாகிய தரீயுவுக்கு எழுதி அனுப்பின கா
௭ கிதத்தின் விவரமாக, — அதில் எழுதியிருந்ததா
வது: இராசாவாகிய தரீயுவுக்குச் சகலவிதமான
சமாதானமும் உண்டாகக்கடவது.
௮ நாங்கள் யூதர் சீமையிலுள்ள மகா பராபரனு
டைய வீட்டுக்குப் போனோம்; அது பெருங்கற்
களால் கட்டப்படுகிறது; மதில்களின்மேல் உத்
திரங்கள் பாய்ச்சப்பட்டு, அந்த வேலை துரிசாய்
நடந்து, அவர்களுக்குக் கைகூடி வருகிறதென்
௯ பது இராசாவுக்கு அறியப்படக்கடவது.—அப்
பொழுது இந்த வீட்டைக் கட்டவும், இந்த மதி
லை எடுப்பிக்கவும் உங்களுக்குக் கட்டளையிட்ட
வன் யாரென்று அந்த மூப்பரைக் கேட்டோம்.—
௰ இதுவுமல்லாமல் அவர்களுக்குள்ளே தலைவரான
மனிதரின் நாமங்களை உமக்கு எழுதி அறியப்
பண்ணும்படிக்கு அவைகளையும் அவர்களைக்
௰௧ கேட்டோம்.—அவர்கள் எங்களுக்குக் கொடுத்த
பிரதியுத்தாரமாவது: நாங்கள் பரலோகத்துக்கும்
பூலோகத்துக்கும் பராபரனாயிருக்கிறவருக்கு ஊ
ழியக்காரராயிருந்து, அநேக வருஷங்களுக்கு
முன்னே கட்டப்பட்டிருந்த வீட்டைக் கட்டு
கிறோம்; அதை இஸ்ரவேலுடைய பெரிய இரா
௰௨ சா ஒருவன் கட்டித்தீர்த்தான்.—ஆனால் எங்கள்
பிதாக்கள் பரமண்டலத்தின் பராபரனுக்குக்
கோபம் வருவித்தபிற்பாடு, அவர் இவர்களைப்
பாபேலின் இராசாவாகிய நேபுகாத்நேச்சார்
என்ற கல்தேயன் கையில் ஒப்புக்கொடுத்தார்;
அவர் இந்த வீட்டை நிர்மூலமாக்கிச் சனத்தைப்
பாபேலுக்குக் கொண்டுபோனார். — ஆனால் பா ௰௩
பேலின் இராசாவாகிய கோரேசின் முதலாம்
வருஷத்திலே கோரேசு இராசாவானவர் பராபர
னுடைய இந்த வீட்டைக் கட்டக் கட்டளையிட்
டார். — நேபுகாத்நேச்சார் எருசலேமிலிருந்த ௰௪
தேவாலயத்தில் எடுத்து, பாபேலின் தேவாலயத்
தில் கொண்டுபோய் வைத்த பராபரனுடைய
வீட்டின் பொன் வெள்ளித் தட்டுமுட்டுகளையும்
இராசாவாகிய கோரேசு பாபேலின் தேவாலயத்
தில் எடுத்துக்கொடுத்தார்;அவர் துரையாக வைத்த
செஸ்பாத்சாரென்ற நாமமுள்ளவனுக்கு அவை
ஒப்புவிக்கப்பட்டன. — இவனோடே அவர், நீ ௰௫
இந்தத் தட்டுமுட்டுகளை வாங்கி, எருசலேமிலி
ருக்கும் தேவாலயத்துக்குக் கொண்டுபோய்,பரா
பரனுடைய வீடு தன்னுடைய தானத்திலே கட்
டப்படுவதை விசாரியென்றார்.—அப்பொழுது ௰௬
அந்தச் செஸ்பாத்சார் வந்து, எருசலேமிலுள்ள
பராபரனுடைய வீட்டின் அஸ்திபாரத்தைப்
போட்டான்; அந்நாள்துவக்கி இதுவரைக்கும்
அது கட்டப்படுகிறது; ஆனால் அது இன்னம்
முடியவில்லையென்றார்கள்.—இப்பொழுதும் இ ௰௭
ராசாவுக்குச் சம்மதியாயிருந்தால், எருசலேமிலி
ருக்கிற பராபரனுடைய அந்த வீட்டைக் கட்ட,
இராசாவாகிய கோரேஸ் கட்டளையிட்டதுண்
டோவென்று பாபேலிலிருக்கிற இராசாவின்
பொக்கிஷ வீட்டிலே ஆராய்ந்துபார்க்கப்பட்டு,
இதற்காக இராசாவினுடைய சித்தமின்னதென்
று எங்களுக்கு எழுதி அனுப்பப்படக்கடவ
தென்று எழுதியிருந்தது.

## ௬. அதிகாரம்.

௧. கோரேசின் பிரசித்தபத்திரத்தைத் தரீயு கண்டுபிடித்து, ஆலயத்தைக் கட்டும்படி புதிய கட்டளையிட்டது. ௰௩. பகையாளிகளின் உதவியினாலும், தீர்க்கதரிசிகள் கட்டளைகளினாலும் ஆலயம் முடிந்தது. ௰௬. பிரதிஷ்டைப்பண்டிகையும், பஸ்காபண்டிகையும் செய்யப்பட்டது.

அப்பொழுது இராசாவாகிய தரீயு இட்ட கட் ௧
டளையின்படியே பாபேலில் பொக்கிஷங்களை
வைக்கும் புஸ்தகங்களின் சாலையிலே தேடினார்
கள்.—பிற்பாடு மேதிய சீமையிலிருக்கிற அக்மே ௨
தாப் பட்டணத்தின் அரமனையிலே ஒரு புஸ்
தகச்சுருள் கண்டுபிடிக்கப்பட்டது; அதிலே
நினைவுகூருதலுக்காக எழுதியிருந்ததாவது:
இராசாவாகிய கோரேசின் முதலாம் வருஷத் ௩
தில் கோரேஸ் என்ற இராசா இட்ட கட்டளை
யேதென்றால், எருசலேமிலிருந்த பராபரனுடைய
வீடு பலிகள் செலுத்தப்படும் தானத்திலே கட்
டப்படக்கடவது; அதின் அஸ்திபாரங்கள் பல
மாயிருப்பதாக; அது அறுபதுமுழ உயரமும்,
அறுபதுமுழ அகலமுமாயிருக்கவேண்டும். —
பெருங்கல்களான மூன்று வரிசைகளும், புது ௪
உத்திரங்களான ஒரு மச்சுவரிசையும் அதற்கு
உண்டாயிருக்கக்கடவது;செல்லும்செலவு இரா
சாவின் அரமனையிலிருந்து கொடுக்கப்படுவது.—
இதுவுமல்லாமல் நேபுகாத்நேச்சார் எருசலேமி ௫

லிருந்த தேவாலயத்தில் எடுத்து, பாபேலுக்குக்
கொண்டுவந்த பராபரனுடைய வீட்டுக்கடுத்த
பொன் வெள்ளித் தட்டுமுட்டுகள் எருசலேமி
லிருக்கும் தேவாலயமாகிய தங்கள் தானத்திற்
குப்போய்ச் சேரும்படிக்குத் திரும்பக் கொடுக்
கப்படக்கடவது; அவைகளைப் பராபரனுடைய
வீட்டுக்குக் கொண்டுபோகக்கடவர்களென்று
அதில் எழுதியிருந்தது.
௬ அப்பொழுது தரியு இராசா எழுதி அனுப்பி
னதாவது: இப்பொழுதும் நதிக்கப்பாலிருக்கிற
துரையாகிய தத்னாயே சேத்தார்பொஸ்னாயே நீங்
களும், நதிக்கப்பாலிருக்கிற அப்பற்சாகியரான
உங்கள் கூட்டத்தாரும் அவ்விடத்தைவிட்டு
௭ விலகியிருங்கள்.—பராபரனுடைய அந்த வீட்
டின் வேலையை அவர்கள் செய்யட்டும், யூதரு
டைய துரையும், யூதரின் மூப்பரும், பராபரனு
டைய அந்த வீட்டை அதின் தானத்திலே கட்ட
௮ க்கடவர்கள்.—பராபரனுடைய அந்த வீட்டை
யூதரின் மூப்பர் கட்டும்படிக்கு நீங்கள் அவர்க
ளுக்குச் செய்ய, நம்மாலும் உண்டான கட்டளை
ஏதென்றால், அந்த மனிதருக்குத் தடை உண்டா
காதபடிக்கு, நதிக்கப்பால் எடுக்கும் பகுதி
யென்ற இராசாவின் ஆஸ்திகளிலே அவர்களுக்
குத் தாமதமில்லாமல் செல்லும்செலவு கொடுக்
௯ கப்படுவதாக. — பரமண்டலங்களின் பராபர
னுக்குச் சர்வாங்கதகனங்களைப் பலியிடத் தே
வையான காளையெருதுகள், ஆட்டுக்கடாக்கள்,
ஆட்டுக்குட்டிகள், கோதுமை, உப்பு, திராட்சப்
பழஇரசம், எண்ணெய் முதலானவை தினந்தி
னம் அவர்கள் சொற்படி தாழ்ச்சியில்லாமல்
௰ கொடுக்கப்படக்கடவது —எருசலேமிலிருக்கிற
ஆசாரியர்கள் பரமண்டலங்களின் பராபரனுக்கு
ஆற்றுகிற வாசனையான பலிகளைச் செலுத்தி,
இராசாவுக்கும் அவர் குமாரருக்கும் இருக்கிற
பிராணனுக்காக மன்றாடும்படிக்குத்தானே.—
௰௧ பின்னையும் நம்மால் உண்டான கட்டளை என்ன
வெனில், எந்த மனிதனாகிலும் இந்தக் கட்டளை
யைப் புரட்டினால், அவன் வீட்டில் ஒரு உத்திரம்
பிடுங்கி நாட்டப்பட்டு, அவன் அதில் தூக்கிப்
போடப்படவும், அவனுடைய வீடு அதின்நிமித்
தமாகக் குப்பைமேடாக்கப்படவும் வேண்டு
௰௨ மென்பதுதானே.—ஆகையால் இதைப் புரட்ட
வும், எருசலேமிலிருக்கிற பராபரனுடைய அந்த
வீட்டைக் கெடுக்கவும், தங்கள் கையை நீட்டப்
போகிற எந்த இராசாவையும் சனத்தையும் தம்
முடைய நாமத்தை அங்கே வாசமாயிருக்கப்
பண்ணின பராபரன் நிர்மூலமாக்கக்கடவார்;
தரீயுவாகிய நாம் இந்தக் கட்டளையைக் கொடுத்
தோம்; அதின்படி சீக்கிரமாகச் செய்யப்படக்
கடவதென்று எழுதி அனுப்பினான்.
௰௩ அப்பொழுது நதிக்கப்பாலிருக்கிற துரையா
கிய தத்னாயும், சேத்தார்பொஸ்னாயும், அவர்கள்
கூட்டத்தாரும், தரீயு இராசா கட்டளையிட்ட
௰௪ பிரகாரமாகச் சீக்கிரமாய்ச் செய்தார்கள்.—அப்
படியே யூதரின் மூப்பர், தீர்க்கதரிசியாகிய அகா
யும் ஈதோவின் குமாரனாகிய சகரீயாவும் தீர்க்க
தரிசனம் சொல்லுகையில் கட்டிக்கொண்டிருந்
தார்கள்; அவர்களுக்குக் கைகூடியும் வந்தது;
அவர்கள் இஸ்ரவேலுடைய பராபரனின் கட்
டளையின்படியேயும், கோரேஸ், தரீயு, பெர்சியா
வின் இராசாவாகிய அர்த்தசஷ்டாவென்றவர்களு
டைய கட்டளையின்படியேயும் அதைக் கட்டிமு
டித்தார்கள்.— இராசாவாகிய தரீயு அரசாளுகிற ௰௫
ஆறாம் வருஷம் ஆதாரென்ற மாதம் மூன்றாம்தே
தியிலே அந்த வீடு கட்டித்தீர்ந்தது.
அப்பொழுது இஸ்ரவேல் புத்திரரும், ஆசாரிய ௰௬
ரும், இலேவியரும், சிறையிருப்பிலிருந்துவந்த
மற்றவர்களும், பராபரனுடைய அந்த வீட்டைச்
சந்தோஷத்தோடே பிரதிஷ்டைபண்ணி,—பரா ௰௭
பரனுடைய அந்த வீட்டின் பிரதிஷ்டைக்காக
நூறு காளைகளையும் இருநூறு ஆட்டுக்கடாக்களை
யும், நானூறு ஆட்டுக்குட்டிகளையும், இஸ்ரவேல்
கோத்திரங்களுடைய இலக்கத்தின்படியே, இஸ்
ரவேலனைத்தின் பாவம்போக்குதலுக்காகப் பன்
னிரண்டு வெள்ளாட்டுக்கடாக்களையும் பலியி
ட்டு, — மோசேயின் புஸ்தகத்தில் எழுதியிருக் ௰௮
கிறபடியே, அவர்கள் எருசலேமில் வாசமாயி
ருக்கிற பராபரனுடைய ஆராதனைக்கென்று
ஆசாரியரை அவர்கள் வகுப்புகளிலும், இலேவி
யரை அவர்கள் முறைவரிசைகளிலும் நிறுத்தி
னார்கள்.
பஸ்காவையும், சிறையிருப்பிலிருந்து வந்தவர் ௰௯
கள் முதலாம் மாதம் பதினாலாம்தேதியிலே ஆச
ரித்தார்கள்.—ஏனெனில் ஆசாரியரும் இலேவி ௨௰
யரும் ஒருவனைப்போலே தங்களைச் சுத்தம்பண்
ணிக்கொண்டதினாலே, எல்லாரும் சுத்தமாயி
ருந்து சிறையிருப்பிலிருந்து வந்தவர்கள் எல்லா
ருக்காகவும், ஆசாரியரான தங்கள் சகோதரருக்
காகவும், தங்களுக்காகவும் பஸ்காவின் ஆட்டுக்
குட்டிகளைக் குரல்வளை அறுத்தார்கள்.—அப்ப ௨௰௧
டியே சிறையிருப்பிலிருந்து திரும்பிவந்த இஸ்ர
வேல் புத்திரரும், இஸ்ரவேலின் பராபரனாகிய
கர்த்தரைத் தேடப் பூலோகச் சாதிகளின் அசுத்தத்
தைவிட்டு, அவர்களண்டையிலே சேர்ந்த அனை
வருமாய் அதைப் புசித்து,—புளிப்பில்லாத அப் ௨௰௨
பங்களின் பண்டிகையை ஏழுநாளாகச் சந்தோ
ஷத்துடனே ஆசரித்தார்கள்;ஏனென்றால் கர்த்தர்
அவர்களை மகிழ்ச்சியாக்கி, அவர்கள் கைகளை
இஸ்ரவேலின் பராபரனாகிய பராபரனுடைய
வீட்டின் வேலையிலே பலப்படுத்தத்தக்கவிதமாய்
அசூருடைய இராசாவின் இருதயத்தை அவர்க
ளுக்குச் சார்ந்திருக்கப்பண்ணியிருந்தார்.

## ௭. அதிகாரம்.

௧. எஸ்றா எருசலேமுக்குப் போனது. ௰௧. அர்த்தசஷ்டா அவனுக்குத் தயையாகக் கொடுத்த அதிகாரபத்திரம். ௨௭. பராபரன் செய்த கிருபைக்காக அவன் அவரைத் துதித்தது.

இந்த வர்த்தமானங்களுக்குப் பிற்பாடு செராயா ௧
வின் குமாரனாகிய எஸ்றா பெர்சியாவின் இரா
சாவாகிய அர்த்தசஷ்டா அரசாளுகிற காலத்தி
லே பாபேலிலிருந்து ஏறிவந்தான்; அந்தச் செ

ராயா அசரீயாவின் குமாரனும், இவன் இல்க்கி
௨ யாவின் குமாரனும்,—இவன் சல்லூமின் குமா
ரனும், இவன் சாதோக்கின் குமாரனும், இவன்
௩ அகித்தூபின் குமாரனும்,—இவன் அமரீயாவின்
குமாரனும், இவன் அசரீயாவின் குமாரனும், இ
௪ வன் மெராயோதின் குமாரனும்,—இவன் சேரா
கியாவின் குமாரனும், இவன் ஊசியின் குமார
௫ னும், இவன் புக்கியின் குமாரனும்,—இவன் அ
பிசூகாவின் குமாரனும், இவன் பினேகாசின்
குமாரனும், இவன் எலேயாசாரின் குமாரனும்,
இவன் பிரதான ஆசாரியனான ஆரோனின் குமா
௬ ரனுமாயிருந்தான்.—ஏறிவந்த இந்த எஸ்றா இஸ்
ரவேலின் பராபரனாகிய கர்த்தர் கொடுத்த மோ
சேயின் நியாயப்பிரமாணத்திலே சவரணையான
வேதபாரகனாயிருந்தான்; அவன்மேலிருந்த அவ
னுடைய பராபரனாகிய கர்த்தருடைய கரத்தின்
படியே இராசா அவனுக்கு அவன் கேட்டவைக
௭ ளையெல்லாம் கொடுத்தான்.—அவனோடேகூட
இஸ்ரவேல் புத்திரரிலும், ஆசாரியரிலும் இலே
வியரிலும், பாட்டகரிலும், வாசல்காப்பாரிலும்,
இஸ்ரவேலைச் சேர்ந்தவர்களிலும், சிலர் அற்த
சஷ்டா இராசாவின் ஏழாம் வருஷத்திலே எருச
௮ லேமுக்கு ஏறிப்போனார்கள்.—ஐந்தாம் மாதத்தில்
அவன் எருசலேமுக்கு வந்தான்; அது அந்த இரா
௯ சாவின் ஏழாம் வருஷமானது.—அதேதெனில்
முதலாம்மாதம் முதல்தேதியிலே அவன் பாபேலி
லிருந்து ஏறிப்போகுதல் திட்டப்பட்டு ஐந்தாம்
மாதம் முதல்தேதியிலே அவன் தன்மேலிருந்த
தன் பராபரனுடைய தயவுள்ள கரத்தின்படி
௰ எருசலேமுக்கு வந்தான்.—ஏனென்றால் கர்த்த
ருடைய வேதத்தை ஆராயவும், அதின்படி செய்
யவும், இஸ்ரவேலிலே கட்டளைகளையும் நீதிநியா
யங்களையும் உபதேசிக்கவும், எஸ்றா தன் இருத
யத்தைப் பண்படுத்தியிருந்தான்.
௰௧ கர்த்தருடைய கற்பனைகளின் வார்த்தைகளி
லும், அவர் இஸ்ரவேலுக்குக் கொடுத்த கட்டளை
களிலும், படித்தெடுத்த வேதபாரகனாகிய எஸ்றா
வென்ற ஆசாரியனுக்கு, இராசாவாகிய அற்த
சஷ்டா கொடுத்த நிருபத்தின் விவரமாவது:
௰௨ இராசாக்களுக்கு இராசாவாகிய அற்தசஷ்
டா பரமண்டலங்களின் பராபரனுடைய நியா
யப்பிரமாணத்திற்கு உத்தம வேதபாரகனாகிய
எஸ்றாவென்ற ஆசாரியனுக்குப் பூரண சமாதா
௰௩ னம்.ஹ.—நம்முடைய இராச்சியத்தில் இருக்கிற
இஸ்ரவேல் சனத்திலும், அதின் ஆசாரியரிலும்,
இலேவியரிலும், உன்னோடேகூட எருசலே
முக்குப் போக மனப்பூர்வமாயிருக்கிற யாவரும்
போகலாமென்று நம்மாலே கட்டளை பிறந்
௰௪ தது.—ஏனென்றால் நீ உன் கையிலிருக்கிற உன்
பராபரனுடைய நியாயப்பிரமாணத்தின்படி, யூ
தாவிலும் எருசலேமிலும் நடக்கிறதோவென்று
௰௫ விசாரிக்கவும், — இராசாவும் அவருடைய
ஆலோசனைக்காரரும் எருசலேமில் வாசம்பண்
ணுகிற இஸ்ரவேலின் பராபரனுக்கு மனப்பூர்
வமாய்க் கொடுத்த வெள்ளியையும், பொன்னை

யும்,—பாபேலின் சீமையெங்கும் உனக்குக் கி ௰௬
டைக்கும் எல்லா வெள்ளியையும் பொன்னை
யும், உன்னுடைய சனமும் ஆசாரியரும் எருச
லேமிலுள்ள தங்கள் பராபரனுடைய வீட்டுக்
கென்று மன உச்சாகமாய்க் கொடுக்கும் காணிக்
கைகளையும், நீ கொண்டுபோகவும், நீ இராசா
வினாலும் அவருடைய ஏழு ஆலோசனைக்கார
ராலும் அனுப்பப்படுகிறாய்.—ஆகையால் அந்தத் ௰௭
திரவியத்தினாலே நீ சீக்கிரமாக எருதுகளையும்,
ஆட்டுக்கடாக்களையும், ஆட்டுக்குட்டிகளையும்,
அவைகளுக்கடுத்த காணிக்கைகளையும், ஊற்று
தல்களையும் வாங்கி, அவைகளை எருசலேமிலி
ருக்கிற உங்கள் பராபரனுடைய வீட்டுப் பலிபீ
டத்தின்மேல் செலுத்துவாயாக. — மீதியான ௰௮
வெள்ளியினாலும் பொன்னினாலும் செய்ய
உனக்கும் உன் சகோதரருக்கும் எப்படி எது
நன்றாய்க் காணுமோ, அதை உங்கள் பராபரனு
டைய சித்தத்தின்படியே செய்யுங்கள்.—உன் ௰௯
பராபரனுடைய வீட்டின் ஆராதனைக்காக உனக்
குக் கொடுக்கப்பட்ட தட்டுமுட்டுகளையும் நீ
எருசலேமின் பராபரனுக்குமுன்பாக ஒப்புவிக்
கக்கடவாய்.—பின்னையும் உன் பராபரனுடைய ௨௰
வீட்டுக்கு நீ கொடுக்க ஏற்றதும் வேண்டியதுமா
யிருப்பதை, நீ இராசாவின் பொக்கிஷ வீட்டில்
வாங்கிக்கொடுப்பாயாக.—நதிக்கப்பாலிருக்கிற ௨௧
எல்லாப் பொக்கிஷக்காரருக்கும் அற்தசஷ்டா
வென்ற இராசாவாகிய நாம் இடுகிற கட்டளை
ஏதென்றால், பரமண்டலங்களுடைய பராபர
னின் வேதபாரகனாகிய எஸ்றாவென்ற ஆசாரி
யன் நூறு தாலந்து வெள்ளி, நூற்றுக்கலக் கோது
மை, நூற்றுக்கலத் திராட்சப்பழஇரசம், நூற்றுக்
கல எண்ணெய்மட்டாக உங்களைக் கேட்பவை
எல்லாவற்றையும்,—கணக்கில் எழுதக் கவையில் ௨௨
லாத உப்பையும், தாமதமில்லாமல் கொடுக்க
வும், — பரமண்டலங்களின் பராபரனுடைய ௨௩
கற்பனையின்படியே, எது தேவையாயிருக்கு
மோ அதுவெல்லாம் பரமண்டலத்துப் பராபர
னுடைய வீட்டுக்குக் கருத்தோடே செலுத்தப்ப
டவும் வேண்டும்; ஏனெனில் இராசாவும் அவர்
குமாரரும் ஆளும் இராச்சியத்தின்மேல் கடுங்
கோபம் வருவானேன்.—பின்னையும் ஆசாரியர் ௨௪
களும், இலேவியரும், பாட்டகரும், வாசல்காப்
பாரும், இஸ்ரவேலைச் சேர்ந்தவர்களும், அந்தப்
பராபரனுடைய வீட்டின் வேலைக்காரருமான
ஒருவன்மேலும் பகுதியாகிலும் வரியாகிலும்,
தீர்வையென்கிலும் சுமத்தப்படவேண்டாமென்
று அவர்களைக்குறித்து உங்களுக்கு அறியப்படுத்
துகிறோம். — பின்னையும் நதிக்கப்பாலிருந்து ௨௫
உன் பராபரனுடைய நியாயப்பிரமாணங்களை
அறிந்த எல்லாச் சனத்தையும், நியாயம் விசாரிக்
கத்தக்க துரைகளையும், நியாயாதிபதிகளையும்,
எஸ்றாவாகிய நீ உன்னிலுள்ள உன் பராபரனு
டைய ஞானத்தின்படியே வைப்பாயாக; அவை
களை அறியாதவர்களுக்கு அவைகளை உபதேசிக்
கக்கடவீர்கள்.—உன் பராபரனுடைய நியாயப் ௨௬

பிரமாணத்தின்படியேயும், இராசாவினுடைய
நியாயப்பிரமாணத்தின்படியேயும் செய்யாதவ
னெல்லாம் உடனேதானே மரணத்துக்காகிலும்,
தேசத்துக்குப் புறம்பாக்குதலுக்காகிலும், ஆஸ்தி
யின் அபராதத்துக்காகிலும்,காவலுக்கென்கிலும்
தீர்க்கப்படக்கடவனென்று எழுதியிருந்தது.
௨௭ எருசலேமிலிருக்கிற கர்த்தருடைய வீட்டை
அலங்கரிக்க, இப்படிப்பட்டவைகளை இராசா
வின் இருதயத்தில் கொடுத்து, இராசாவுக்கும் அ
வர் ஆலோசனைக்காரருக்கும் இராசாவின் கீழான
பலத்த எல்லாப் பிரபுக்களுக்கும்முன்பாக என்
னைக் கிருபை அடையப்பண்ணின எங்கள் பிதா
க்களின் பராபரனாகிய கர்த்தர் தோத்திரிக்கப்பட்
௨௮ டவர். — அப்படியே என்மேலுள்ள என் பரா
பரனாகிய கர்த்தருடைய கரத்தினால் நான் பலத்
துக்கொண்டு, இஸ்ரவேலில் சில தலைவரை என்
னோடேகூட ஏறிப்போகும்படிக்குச் சேர்த்துக்
கொண்டேன்.

## ௮. அதிகாரம்.

௧. பாபேலிலிருந்து போன எஸ்றாவின் கூட்டாளிகள். ௰௫. அவன் தேவாலயத்திற்காகப் பணிவிடைக்காரரை அனுப்பும்படி இத்தோவைக்கேட்டது. ௨௪. அவன் பொக்கிஷங்களை ஆசாரியர்களின் வசத்தில் வைத்தது. ௩௧. அவர்கள் அகபாவிலிருந்து எருசலேமுக்கு வந்தது. ௩௩. பொக்கிஷங்களை ஆலயத்தில் நிறுத்தது. ௩௫. அதிகாரபத்திரம் ஒப்புவிக்கப்பட்டது.

௧ அற்தசஷ்டா இராசா அரசாளும்காலத்தில் பா
பேலிலிருந்து என்னோடேகூட ஏறிப்போன
தங்கள் பிதாக்கள் வம்சங்களின் தலைவரும் அவர்
௨ கள் வம்சத்து அட்டவணைகளுமாவன:—பினே
காஸ் புத்திரரில் கெர்சோம், இத்தாமாரின் புத்தி
ரரில் தானியேல், தாவீதின் புத்திரரில் அத்
௩ தூஸ்,—பாரோஷின் புத்திரரில் ஒருவனான செ
கனியாவின் புத்திரரில் சகரீயாவும், அவனோ
டேகூட வம்சத்து அட்டவணையில் எழுதியி
௪ ருக்கிற நூற்றைம்பது ஆண்பிள்ளைகளும்,—பா
காத் மோவாபின் புத்திரரில் செரகியாவின்
குமாரனாகிய எலியோனாயும், அவனோடேகூட
௫ இருநூறு ஆண்பிள்ளைகளும்,—செகனியாவின்
புத்திரரில் யகசீயேலின் குமாரனும், அவனோ
௬ டேகூட முந்நூறு ஆண்பிள்ளைகளும், — ஆதி
னின் புத்திரரில் யோனத்தானின் குமாரனாகிய
எபேதும், அவனோடேகூட ஐம்பது ஆண்பிள்
௭ ளைகளும்,—ஏலாமின் புத்திரரில் அதலீயாவின்
குமாரனாகிய எசாயாவும், அவனோடேகூட எழு
௮ பது ஆண்பிள்ளைகளும்,–செப்பதீயாவின் புத்திர
ரில் மிகவேலின் குமாரனாகிய செப்பதியாவும்,
அவனோடேகூட எண்பது ஆண்பிள்ளைகளும்,–
௯ யோவாபின் புத்திரரில் எகியேலின் குமாரனா
கிய ஒபதீயாவும், அவனோடேகூட இருநூற்றுப்
௰ பதினெட்டு ஆண்பிள்ளைகளும்,–சேலோமீதின்
புத்திரரில் யொசிபீயாவின் குமாரனும், அவ
னோடேகூட நூற்றறுபது ஆண்பிள்ளைகளும்,—
௰௧ பெயாயி புத்திரரில் பெயாயி குமாரனாகிய சகரீ
யாவும், அவனோடேகூட இருபத்தெட்டு ஆண்
௰௨ பிள்ளைகளும்,—அஸ்காதின் புத்திரரில் காத்தா
னின் குமாரனாகிய யோகனானும், அவனோடே
கூட நூற்றுப்பத்து ஆண்பிள்ளைகளும்,—அதோ ௰௩
னிகாமின் கடைசிப்புத்திரரான எலிபேலேத்,
ஏயேல், செமாயாவென்ற நாமங்களுள்ளவர்க
ளும், அவர்களோடேகூட அறுபது ஆண்பிள்
ளைகளும்,—பிகேவாயின் புத்திரரில் ஊற்றாயும், ௰௪
சபூதும், அவர்களோடேகூட எழுபது ஆண்
பிள்ளைகளும்தானே.
இவர்களை நான் அகாபாவுக்கு ஓடுகிற நதி ௰௫
யண்டையிலே கூட்டிக்கொண்டுபோனேன்;
அங்கே மூன்றுநாள் இறங்கி இருந்தோம்; நான்
சனத்தையும் ஆசாரியரையும் ஆராய்ந்துபார்க்
கிறபோதோவெனில், இலேவியின் புத்திரரில்
ஒருவரையும் அங்கே கண்டதில்லை. — ஆகை ௰௬
யால் நான் எலியேசர், ஆறியேல், செமாயா,எல்
நாத்தான், யாரிப், எல்நாத்தான், நாத்தான், சக
ரீயா, மெசுல்லாமென்ற தலைவரையும், யோய
ரிப், எல்நாத்தானென்ற விவேகிகளையும் அழை
த்தனுப்பி,—கசிப்பீயாவென்ற ஸ்தலத்திலிருக் ௰௭
கிற தலைவனாகிய இத்தோவண்டைக்குச் செய்தி
யைக் கொண்டுபோக அவர்களுக்குக் கற்பித்து,
நமது பராபரனுடைய வீட்டுக்குப் பணிவிடை
க்காரரை எங்களண்டைக்கு அழைத்துவரும்
படிக்கு, அவர்கள் கசிப்பீயாவென்ற ஸ்தலத்தி
லிருக்கிற தங்கள் சகோதரனாகிய இத்தோவுக்
கும், இஸ்ரவேலைச் சேர்ந்தவர்களுக்கும் சொல்
லும் வார்த்தைகளை அவர்கள் வாயிலே போட்
டேன். — அவர்கள் எங்கள்மேலிருந்த எங்கள் ௰௮
பராபரனுடைய தயையுள்ள கரத்தின்படியே,
இஸ்ரவேலுக்குப் பிறந்த இலேவியின் குமார
னாகிய மகிலீயின் புத்திரரில் புத்தியுள்ள மனுஷ
னாகிய சேரேபியாவும் அவன் குமாரரும் சகோ
தரருமான பதினெட்டுப்பேரையும்,—மேராரிய ௰௯
ரின் புத்திரரில் அஷபியாவும் அவனோடே எசா
யாவும் அவன் சகோதரரும் அவர்கள் குமாரரு
மான இருபதுபேரையும், — தாவீதும் பிரபுக்க ௨௰
ளும் இலேவியருக்குப் பணிவிடைக்காரராக
வைத்த இஸ்ரவேலைச் சேர்ந்தவர்களில் இருநூ
ற்று இருபதுபேரையும் எங்களுக்கு அழைத்துக்
கொண்டுவந்தார்கள்; அவர்களெல்லாருடைய
பேர்களும் சொல்லப்பட்டன.
அப்போது நாங்கள் எங்கள் பராபரனுக்கு ௨௧
முன்பாக எங்களைத் தாழ்த்துகிறதற்கும், எங்க
ளுக்கும் எங்கள் பிள்ளைகளுக்கும் எங்கள் எல்லா
ஆஸ்திக்கும் அவராலே செவ்வையான வழியைத்
தேடுகிறதற்கும், நான் அங்கே அந்த அகாபா ந
தியண்டையிலே உபவாசத்தைக் கூறினேன்.—
ஏனெனில் வழியிலே சத்துருவை விலக்கி, எங் ௨௨
களுக்குத் துணையாயிருக்க, நான் இராசாவைச்
சேவகரையும் குதிரைக்காரரையும் கேட்கவெட்
கப்பட்டிருந்தேன்; ஏனென்றால் எங்கள் பராபர
னுடைய கரம் நலமுண்டாகத் தம்மைத் தேடுகி
றவர்களெல்லாரின்மேலும், அவருடைய பெல
னும் அவருடைய கோபமும் அவரைவிட்டு
விலகுகிறவர்களெல்லாரின்மேலும் இருக்கிற
தென்று நாங்கள் இராசாவுக்குச் சொல்லியிருந்

௨௩ தோம்.—அப்படியே நாங்கள் உபவாசம்பண்ணி,
எங்கள் பராபரனிடத்திலே அதைத் தேடினோம்,
எங்கள் விண்ணப்பத்தைக் கேட்டுத்தந்தார்.
௨௪ பிற்பாடு நான் ஆசாரியரின் தலைவரிலே பன்
னிரண்டுபேராகிய செரெபீயாவையும், அஷபீ
யாவையும், அவர்கள் சகோதரரிலே பத்துப்பே
௨௫ ரையும் கூடப் பிரித்தெடுத்து,—இராசாவும், அ
வருடைய ஆலோசனைக்காரரும், அவருடைய
பிரபுக்களும், தென்பட்ட எல்லா இஸ்ரவேல
ரும், எங்கள் பராபரனுடைய வீட்டுக்கென்று
எடுத்துக்கொடுத்த காணிக்கையாகிய வெள்ளி
யையும், பொன்னையும், தட்டுமுட்டுகளையும் அ
௨௬ வர்களுக்கு நிறுத்துக்கொடுத்தேன். — அவர்கள்
கையிலே நான் அறுநூற்றைம்பது தாலந்து வெள்
ளியையும், நூறு தாலந்து நிறையான வெள்ளித்
தட்டுமுட்டுகளையும், நூறு தாலந்து பொன்னை
௨௭ யும், — ஆயிரம் தங்கக்காசின் விலையான இரு
பது பொன் கிண்ணிகளையும், பொன்னைப்போல
எண்ணப்பட்ட பளபளப்பான நல்ல வெண்க
லமான இரண்டு பாத்திரங்களையும் நிறுத்துக்
௨௮ கொடுத்து,—அவர்களுடனே சொன்னது: நீங்
கள் கர்த்தருக்குப் பரிசுத்தவான்கள்; இந்தத் தட்டு
முட்டுகளும், உங்கள் பிதாக்களுடைய பராபர
னாகிய கர்த்தருக்கு மன உச்சாகமாய்ச் செலுத்தப்
பட்ட இந்த வெள்ளியும், இந்தப் பொன்னும்
௨௯ பரிசுத்தம்.—நீங்கள் அதை எருசலேமிலிருக்கிற
பராபரனுடைய வீட்டின் அறைகளில் ஆசாரி
யர் இலேவியருடைய பிரபுக்களுக்கும்,இஸ்ரவே
லுடைய பிதா வம்சங்களின் தலைவருக்கும்முன்
பாக நிறுத்து ஒப்புவிக்கும்மட்டும் விழித்து,
அதைக் காத்துக்கொண்டிருங்களென்றேன். —
௩௰ அப்படியே அந்த ஆசாரியரும் இலேவியரும்
அந்த வெள்ளியையும் பொன்னையும் தட்டுமுட்
டுகளையும் எருசலேமிலிருக்கிற எங்கள் பராபர
னுடைய வீட்டுக்குக் கொண்டுபோகும்படிக்கு
நிறைப்பிரகாரமாய் வாங்கிக்கொண்டார்கள்.
௩௧ அப்படியே நாங்கள் எருசலேமுக்குப்போக,
முதலாம்மாதம் பன்னிரண்டாம்தேதியிலே அ
காபா நதியைவிட்டுப் பயணமாய்ப் புறப்பட்
டோம்; எங்கள் பராபரனுடைய கரம் எங்கள்
மேலிருந்து வழியிலே சத்துருவின் கைக்கும்,
பதிவிருக்கிறவர்களுடைய கைக்கும் எங்களைத்
௩௨ தப்புவித்தது.—நாங்கள் எருசலேமுக்கு வந்து,
௩௩ அங்கே மூன்றுநாள் இருந்தபிற்பாடு,—நாலாம்
நாளிலே அந்த வெள்ளியும் பொன்னும் தட்டு
முட்டுகளும், எங்கள் பராபரனுடைய வீட்டில்
ஆசாரியனாகிய உரியாவின் குமாரன் மெரேமோ
தின் கையிலும் பினேகாசின் குமாரன் எலேயா
சாரின் கையிலும்கூட எல்லாவற்றிற்குமிருந்த
இலக்கத்தின்படியேயும் நிறுத்து ஒப்புவிக்கப்
பட்டன; எசுவாவின் குமாரன் யோசபாத்தும்,
பின்னுவியின் குமாரன் நொபதீயாவுமென்ற
இலேவியரும் அவர்களோடேகூட இருந்தார்
௩௪ கள்.—அந்த நிறையெல்லாம் அக்காலத்தில் எழு
தப்பட்டன.

குடிவிலகிச் சிறையிருப்பிலிருந்து வந்தவர் ௩௫
கள் இஸ்ரவேலின் பராபரனுக்குச் சர்வாங்கதக
னங்களாக இஸ்ரவேலனைத்தின்நிமித்தம் பன்னி
ரண்டு எருதுகளையும், தொண்ணூற்றாறு ஆட்டுக்
கடாக்களையும், எழுபத்தேழு ஆட்டுக்குட்டிகளை
யும், பாவம்போக்கப் பன்னிரண்டு வெள்ளாட்
டுக்கடாக்களையும் பலியிட்டு, அவை எல்லாம்
கர்த்தருக்குச் சர்வாங்கதகனமாகச் செலுத்தினார்
கள்.-பிற்பாடு இராசாவின் கட்டளைகளை நதிக்கு ௩௬
இப்பாலிருக்கிற இராசாவின் சுபையதார்களுக்
கும், அதிகாரிகளுக்கும் ஒப்புவித்தார்கள்; அப்
பொழுது இவர்கள் சனத்துக்கும் பராபரனுடை
ய வீட்டுக்கும் உதவியாயிருந்தார்கள்.

## ௯. அதிகாரம்.

௧. இஸ்ரவேலர் அந்நியர்களுடனே செய்த சம்பந்தத்திற்காக எஸ்றா துக்கித்தது. ௫. பாவத்தை மன்னிக்கும்படிக்கு அவன் பராபரனை மன்றாடினது.

இவைகள் செய்து முடிந்தபிற்பாடு, பிரபுக்கள் ௧
என்னண்டைக்குச் சேர்ந்து சொன்னதாவது:
இஸ்ரவேல் சனமும், ஆசாரியரும் இலேவிய
ரும், கானானியர், ஏத்தியர், பெரிசியர், எபூசியர்,
அம்மோனியர், மோவாபியர், எகிப்தர், அம்மோ
ரியரென்ற தங்கள் அருவருப்புகளின்படியிருக்
கிறஇந்தத் தேசங்களின் சனசதளங்களை விட்டுப்
பிரியாதேபோனார்கள்.—ஆதேதெனில் அவர்களு ௨
டைய குமாரத்திகளிலே தங்களுக்கும், தங்கள்
குமாரருக்கும் பெண்களைக் கொண்டார்கள்; இப்
படியே பரிசுத்தவித்து தேசங்களின் சனசதளங்
களோடே கலந்துபோயிற்று; பிரபுக்களின் கை
யும், ஆளுகிறவர்களின் கையும், இந்தப் பாத
கத்தில் முந்தினவையுமாயிருந்ததென்றார்கள்.—
நான் இந்த வர்த்தமானத்தைக் கேட்டபொழுது, ௩
நான் என் வஸ்திரத்தையும் என் சால்வையையும்
கிழித்து, என் தலையிலும் என் தாடியிலும் மயி
ரைப் பிடுங்கிக்கொண்டு திகைத்தவனாய் உளுக்
காந்திருந்தேன். — அப்போது சிறையிருப்பிலி ௪
ருந்து வந்தவர்களுடைய பாதகத்தின்நிமித்தம்
இஸ்ரவேலுடைய பராபரனின் வார்த்தைகளால்,
நடுங்குகிற யாவரும் என்னோடே கூடிக்கொண்
டார்கள்; நானோவெனில் அந்திப்பலி செலுத்
தப்படும்மட்டும் திகைத்தவனாய் உளுக்காந்து
கொண்டிருந்தேன்.
அந்திப்பலியின் நேரத்திலோவெனில், நான் ௫
என் சிறுமையோடும், கிழித்துக்கொண்டிருக்கிற
என் வஸ்திரத்தோடும், என் சால்வையோடும்
எழுந்திருந்து, என் முழங்கால்களையும் முடக்கி,
என் கைகளை என் பராபரனாகிய கர்த்தருக்கு நே
ராக விரித்து,—என் பராபரனே, நான் என் முகத் ௬
தை என் பராபரனாகிய தேவரீருக்குமுன்பாக
ஏறெடுக்க வெட்கிக் கூச்சப்பட்டிருக்கிறேன்;
ஏனெனில் எங்கள் அக்கிரமங்கள் எங்கள் தலைக்
குமேலாகப் பெருகி, எங்கள் குற்றம் வானபரி
யந்தம் வளர்ந்துபோயிற்று. — எங்கள் பிதாக்க ௭
ளின் நாள்கள்துவக்கி இந்நாள்மட்டும் நாங்கள்
பெரிய குற்றத்துக்கு உள்ளாயிருக்கிறோம்; எங்

கள் அக்கிரமங்களின் நிமித்தம் நாங்களும் எங்கள் இராசாக்களும், எங்கள் ஆசாரியர்களும், இந்நாளிலிருக்கிறதுபோல, தேசங்களுடைய இராசாக்களின் கையிலே பட்டையத்துக்கும், சிறையிருப்புக்கும், கொள்ளைக்கும், முகம் செத்துப்போகுதலுக்கும் ஒப்புக்கொடுக்கப்பட்
௮ டோம்.—இப்போதும் எங்கள் பராபரனாகிய கர்த்தர் எங்களிலே தப்பின சிலரை மீதியாக வைக்கவும், தம்முடைய பரிசுத்தஸ்தலத்தில் எங்களுக்கு ஒரு குச்சைக் கொடுக்கவும், இப்படியே எங்கள் பராபரன் எங்கள் கண்களைப் பிரகாசிப்பித்து, எங்கள் அடிமைத்தனத்திலே எங்களுக்குக் கொஞ்சம் சீவனம் கட்டளையிடவும், அவராலே கொஞ்ச நிமிஷம்போலே கிருபை
௯ கிடைத்தது.—ஏனெனில் நாங்கள் அடிமைகளாமே; ஆனால் எங்கள் அடிமைத்தனத்திலே எங்கள் பராபரன் எங்களைக் கைவிடாமல், நாங்கள் எங்கள் பராபரனுடைய வீட்டை எடுப்பித்து, பாழாய்ப்போன அதை ஸ்தாபிக்கிறதற்காக எங்களுக்குச் சீவனம் கொடுக்கும்படிக்கும், எங்களுக்கு யூதாவிலும் எருசலேமிலும் ஒரு வேலியைக் கட்டளையிடும்படிக்கும், பெர்சியாவின் இராசாக்களுக்குமுன்பாக எங்கள்மேல் கிரு
௰ பையைச் சாய்த்தார்.—இப்போதும் எங்கள் பராபரனே, நாங்கள் இதின்பிறகு என்ன சொல்லுவோம்; ஏனென்றால் தேவரீர் உம்முடைய ஊழியக்காரராகிய தீர்க்கதரிசிகளைக்கொண்டு கற்பித்த உம்முடைய கற்பனைகளை விட்டுவிட்டோமே.—
௰௧ நீங்கள் சுதந்தரிக்கிறதற்கு உள்பிரவேசிக்கும் தேசதேசங்களுடைய சனசதளங்களின் அழுக்கினாலும், அவர்கள் அதை ஒரு முனைதுவக்கி மற்றமுனைமட்டும் நிறையப்பண்ணின அவர்களுடைய அருவருப்புகளினாலும், அவர்களுடைய அசுத்தத்தினாலும், தீட்டுப்பட்ட தேசமா
௰௨ யிருக்கிறது.—இப்போதும் நீங்கள் பலத்துக்கொண்டு, தேசத்தின் நன்மையைப் புசித்து, அதை நித்தியகாலமாக உங்கள் பிள்ளைகளுக்கு உம்பிளிக்கையாகப் பின் வைக்கும்படிக்கு, நீங்கள் உங்கள் குமாரத்திகளை அவர்களுடைய குமாரருக்குக் கொடாமலும், அவர்களுடைய குமாரத்திகளை உங்கள் குமாரருக்குக் கொள்ளாமலும், அவர்களுக்குச் சமாதானமும், நன்மையுமாயிருக்கிறதை என்றென்றைக்கும் பராமரிக்காமலும்
௰௩ இருப்பீர்களாகவென்றீரே.—இப்போதும் எங்கள் பராபரனே, எங்கள் பொல்லாத செய்கைகளினாலும், எங்கள் பெரிய குற்றத்தினாலும், எங்கள்மேல் எல்லாம் வந்தபிற்பாடு தேவரீர் எங்கள் அக்கிரமத்துக்குத்தக்க ஆக்கினையை எங்களுக்குக் கொடாமல், எங்களை இப்படித் தப்பவிட்
௰௪ டிருக்கையில்,—நாங்கள் உம்முடைய கற்பனைகளை வீணாக்கவும், இந்த அருவருப்புகளுள்ள சனசதளங்களோடே சம்பந்தம் கலக்கவும் திரும்புவோமோ; அப்படியானால், எங்களில் ஒருவரும் மீந்து தப்பாதபடிக்கு, தேவரீர் எங்களை நிர்மூலமாக்கும்மட்டும் எங்கள்மேலே கோபமாயிருப்பீரல்லவோ.—இஸ்ரவேலின் பராபரனாகிய ௰௫
கர்த்தாவே, தேவரீர் நீதியுள்ளவர்; ஏனெனில் இதின்நிமித்தம் இந்நாளில் இருக்கிறதுபோல, நாங்கள் தப்பி மீதியானோம்; இதோ நாங்கள் உமக்கு முன்பாக எங்கள் குற்றத்திலிருக்கிறோம்; உமக்குமுன்பாக நிற்கத்தக்கவன் ஒருவனும் இல்லையென்று சொன்னேன்.

## ௰. அதிகாரம்.

௧. எஸ்றா அந்நிய விவாகத்தை விலக்க, செகனியா அவனைத் தைரியப்படுத்தினது. ௬. எஸ்றா துக்கப்பட்டுச் சனங்களைக் கூட்டினது. ௯. அவன் கடிந்துகொண்டதினால் அவர்கள் மனஸ்தாபப்பட்டு, சீராய் நடப்போமென்று சொன்னது. ௰௫. அவர்கள் அப்படிச் செய்யத் தேடினது. ௰௮. அந்நிய விவாகம் செய்தவர்களின் பேர்.

எஸ்றா இப்படி விண்ணப்பம்பண்ணி, அறிக் ௧
கையிட்டு, அழுது, பராபரனுடைய வீட்டுக்கு முன்பாகத் தாழவிழுந்து கிடக்கையில், இஸ்ரவேலில் புருஷரும் பெண்சாதிகளும் பிள்ளைகளுமான மகா பெரிய சபை அவனண்டையிலே கூடிக்கொண்டது; ஏனெனில் சனம் மிகவும் அழுதுகொண்டிருந்தது.—அப்போது ஏலாமின் புத் ௨
திரரில் ஒருவனாகிய எகியேலின் குமாரன் செகனியா எஸ்றாவுக்குப் பிரதியுத்தாரமாகச்சொன்னதாவது: நாங்கள் தேசச்சனசதளங்களில் உண்டான அந்நியஸ்திரிகளைச் சேர்த்துக்கொண்டதினால், எங்கள் பராபரனுக்கு விரோதமாகப் பாதகம்பண்ணினோம், ஆகிலும் இப்போது இந்தக் காரியத்திலே இன்னம் இஸ்ரவேலுக்காக நம்பிக்கை இருக்கிறது.—இப்போதும் அந்த எல்லா ஸ்தி ௩
ரிகளையும், அவர்களில் பிறந்தவர்களையும், ஆண்டவருடைய ஆலோசனைக்கும், எங்கள் பராபரனுடைய கற்பனைக்கு நடுங்குகிறவர்களின் ஆலோசனைக்கும், ஒத்தபிரகாரமாக அகற்றிப்போடுவோமென்று எங்கள் பராபரனோடே உடம்படிக்கைபண்ணக்கடவோம்; நியாயப்பிரமாணத்தின்படியே செய்யப்படக்கடவது.—எழுந்தி ௪
ரும்; ஏனென்றால் இந்தக்காரியத்தை நடப்பிக்க உமக்கு அடுத்திருக்கிறது; நாங்கள் உம்மோடேகூட இருப்போம்; நீர் திடன்கொண்டு இப்படி நடப்பியுமென்றான்.

அப்போது எஸ்றா எழுந்திருந்து, ஆசாரியர் ௫
இலேவியருடைய பிரபுக்களும் இஸ்ரவேல் அனைத்தும் இந்த வார்த்தையின்படி செய்யும்படிக்கு, அவர்களை ஆணையிட்டுக்கொண்டான்; அவர்கள் ஆணையிட்டார்கள்.—அதின்பிறகு ௬
எஸ்றா பராபரனுடைய வீட்டுக்கு முன்பாக இருந்து எழுந்து, எலியாசிபின் குமாரனாகிய யோகனானின் அறைக்குள் பிரவேசித்து, அங்கே வந்தபோது, அப்பம்புசிக்காமலும் தண்ணீர் குடிக்காமலுமிருந்தான்; ஏனெனில் சிறையிருப்பிலிருந்து வந்தவர்களுடைய பாதகத்தின் நிமித்தம் துக்கித்துக்கொண்டிருந்தான்.—அப் ௭
போது சிறையிருப்பிலிருந்து வந்தவர்களெல்லாரும் எருசலேமிலேவந்து கூடவேண்டுமென்றும்,—மூன்று நாளுக்குள்ளே பிரபுக்கள் மூப்பர் ௮
களுடைய ஆலோசனையின்படியே எவனாகிலும்

வராதேபோனால், அவனுடைய ஆஸ்தியெல்லாம் சாபத்திற்கு ஈடாகி, அவன் சிறையிருப்பிலிருந்து வந்தசபைக்குப் புறம்பாக்கப்படுவானென்றும், யூதாவிலும் எருசலேமிலும் கூறப்பண்ணினார்கள்.

௯ அப்படியே யூதா பென்யமீன் கோத்திரத்தாரெல்லாரும் மூன்றுநாளுக்குள்ளே எருசலேமிலே கூடினார்கள்; அது ஒன்பதாம் மாதம் இருபதாம்தேதியாயிருந்தது; சனமெல்லாம் பராபரனுடைய வீட்டு வீதியிலே அந்தக் காரியத்துக்காகவும், மழைகள்நிமித்தமாகவும் நடுங்கிக்கொண்
௰ டிருந்தார்கள்.—அப்போது ஆசாரியனாகிய எஸ்ரு எழுந்திருந்து அவர்களுடனே சொன்னதாவது: நீங்கள் இஸ்ரவேலின்மேலிருக்கிற குற்றத்தை அதிகரிக்கப்பண்ண, மறுசாதியான ஸ்திரிகளைப்
௰௧ படைத்ததினால் பாதகம்பண்ணினீர்கள்.—இப்போதும் நீங்கள் உங்கள் பிதாக்களின் பராபரனாகிய கர்த்தருக்கு அறிக்கைபண்ணி, அவருடைய பிரியத்தின்படியே செய்து, தேசத்தின் சனசதளங்களையும், மறுசாதியான ஸ்திரிகளையும் விட்டு விலகுங்கள் என்றான்.

௰௨ அதற்குச் சபையெல்லாம் மகா சத்தத்தோடே சொன்ன பிரதியுத்தாரமாவது: ஆம் நீர் எங்களோடே சொன்ன உம்முடைய வார்த்தைகளின்ப
௰௩ டியே செய்யப்படக்கடவது.—ஆனால் சனம் திரளானது; இது மாரிகாலமுமாயிருக்கிறதினால், இங்கே வெளியிலே நிற்கப் பெலனில்லை; அது ஒருநாள் வேலையுமல்ல; இரண்டுநாள் வேலையுமல்ல; ஏனெனில் இந்தக்காரியத்திலே விஸ்தார
௰௪ மானபடி பாதகம்பண்ணினோம்.—ஆகையால் இதற்குச் சபையெங்கும் எங்கள் பிரபுக்கள் விசாரிப்புக்காரராக வைக்கப்படட்டுமே? அப்படியே இந்தக் காரியத்தின்நிமித்தம் நம்முடைய பராபரனுக்கிருக்கிற உக்கிரமான கோபத்தை நாங்கள் எங்களைவிட்டுத்திரும்பப்பண்ணும்மட்டும், எங்கள் பட்டணங்களில் மறுசாதியான ஸ்திரிகளைப் படைத்த அனைவரும் ஒவ்வொரு பட்டணத்தின் மூப்பரோடும் தங்கள் நியாயாதிபதிகளோடுங்கூடக் குறித்தகாலங்களில் வரக்கட
௰௫ வர்களென்றார்கள்.—ஆனால் ஆசகேலின் குமாரன் யோனத்தானும், திக்காவின் குமாரன் யக்சியாவும்மாத்திரம் அதை விசாரிக்க வைக்கப்பட்டார்கள்; மெசுல்லாமும், சப்பேதாயென்ற இலேவியனும் அவர்களுக்கு ஒத்தாசை பண்ணினார்கள்.

௰௬ சிறையிருப்பிலிருந்து வந்தவர்கள் இந்தப்பிரகாரமாகச் செய்தார்கள்; ஆசாரியனாகிய எஸ்ருவும், தங்கள் பிதாக்களுடைய வீட்டின்படியே பேர்பேராக அழைக்கப்பட்ட பிதா வம்சங்களின் தலைவர் அனைவரும், இந்தக்காரியத்தை ஆராய்ந்துபார்க்கும்படிக்குப் பத்தாம்மாதம் முதல்
௰௭ தேதியிலே தனித்து உளுக்காந்து,—அந்நியசாதியான ஸ்திரிகளைப் படைத்தவர்கள் எல்லாருடைய காரியத்தையும் முதலாம்மாதம் முதல்தேதியிலே முடித்துவிட்டார்கள்.

ஆசாரியர் புத்திரரில் மறுசாதியான பெண்சா ௰௮
திகளைப் படைத்தவர்களாகக் காணப்பட்டவர்கள் யாரென்றால், யோத்சதாக்கின் குமாரனாகிய ஏசுவாவின் குமாரரிலும் அவன் சகோதரரிலும் மாசெயாவும், எலியேசரும், யாரீபும், கெதலியா
வும்,—இவர்கள் தங்கள் ஸ்திரிகளைத் தள்ளிவிடு ௰௯
வோமென்று தங்கள் கைகொடுத்து, தாங்கள் குற்றவாளிகளானபடியினாலே, குற்றம்போக்கும்பலியாக ஒரு ஆட்டுக்கடாவைச் செலுத்தினார்
கள்.—இம்மோரின் புத்திரரில் ஆனானியும், செப ௨௰
தீயாவும்,—ஆரீமின் புத்திரரில் மசெயா, எலியா, ௨௧
செமாயா, எகியேல், உசியாவென்கிறவர்களும்,-
பாசூரின் புத்திரரில் எலியோனாய், மசெயா, ௨௨
இஸ்மவேல், நெத்தானெயேல், யோசபாத், எலாசா என்றவர்களும்,—இலேவியரில் யோசபாத், ௨௩
சீமேய், கெலிந்தாவென்று பேருமுள்ள கெலாயா, பெத்லகியா, யூதா, எலியேசர் என்றவர்க
ளும்,-பாட்டகரில் எலியாசிபும், வாசல்காப்பா ௨௪
ரில் சல்லூமும், தேலேமும், ஊரியென்றவர்க
ளும்,—மற்ற இஸ்ரவேலுக்குள்ளே பாரோசின் ௨௫
புத்திரரில் ரமீயா, எசியா, மல்கியா, மியாமின், எலேயாசார், மல்கீயா, பேனாயா என்றவர்க
ளும்,-ஏலாமின் புத்திரரில் மத்தனீயா, சகரீயா, ௨௬
எகியேல், அப்தி, எரேமோத், எலியா என்றவர்
களும், — சத்தூவின் புத்திரரில் எனியோனாய், ௨௭
எலியாசீப், மத்தனீயா, எரேமோத், சாபாத்,
அசீசா என்றவர்களும்,—பெபாயின் புத்திரரில் ௨௮
யோக்னான், அனனீயா, சாபாயி, அதலாயி என்ற
வர்களும்,—பானியின் புத்திரரில் மெசுல்லாம், ௨௯
மல்லூக், அதாயா, யாசூப், செயால், எரேமோத்து
என்றவர்களும்,—பாகாத்மோவாபின் புத்திரரில் ௩௰
அத்னா, கேலால், பேனாயா, மாசெயா, மத்தனீயா, பெத்சாலெயெல், பின்னூயி, மனாசே என்றவர்க
ளும்,—ஆரீமின் புத்திரரில், எலியேசர், இசியா, ௩௧
மல்கீயா, செமாயா, சீமேயோன்,— பென் ௩௨
யமீன், மல்லூக், செமரியா என்றவர்களும், —
ஆசூமின் புத்திரரில் மத்னாயி, மத்தத்தா, சாபாத், ௩௩
எலிபேலேத், எரேமாயி, மனாசே, சீமேயி என்
றவர்களும், — பரனியின் புத்திரரில் மாதாயி, ௩௪
அம்ராம், ஊவேல்,—பேனாயா, பெதியா, கெலூ ௩௫
கி,-வனீயா, மெரேமோத், ஏலியாசீப்,—மத் ௩௬, ௩௭
தனீயா, மத்னாயு, யாசாய், — பானீ, பின் ௩௮
னூயி, சீமெயி, — செலேமியா, நாத்தான், அதா ௩௯
யா,—மகநாத்பாயி, சாசாயி, சாராயி,—அச ௪௰, ௪௧
ரேயேல், செலேமியா, செமரியா, — சல்லூம், ௪௨
அம்ரீயா, யோசேப்பென்றவர்களும்,—நேபோ ௪௩
வின் புத்திரரில் ஏயேல், மத்தித்தீயா, சாபாத், செபினா, யதாய், யோவேல், பேனாயா என்றவர்
களும்தானே. — இவர்களெல்லாரும் மறுசாதி ௪௪
யான ஸ்திரிகளைப் படைத்தவர்கள்; இவர்களில் சிலர் தங்களுக்குப் பிள்ளைகளைப் பெற்ற ஸ்திரிகளைப் படைத்தவர்களுமாயிருந்தார்கள்.

# NEHEMIAH.

# நெகெமீயாவின் புஸ்தகம்.

## க. அதிகாரம்.

க. நெகெமீயா எருசலேமின் இக்கட்டை ஆனானியினால் அறிந்து, துக்கப்பட்டு, உபவாசித்து மன்றாடினது. ௫. அவனுடைய பிரார்த்தனை.

௧ அக்லியாவின் குமாரனாகிய நெகெமீயாவின்
வர்த்தமானங்கள்: இருபதாம் வருஷம் கிஸ்லே
யுமாதத்தில் நான் சூசானென்ற கோட்டையில்
௨ இருக்கிறபோது சம்பவித்ததேதெனில், — என்
சகோதரரில் ஒருவனாகிய ஆனானியும், வேறே
சில மனுஷரும் யூதாவிலிருந்து வந்தார்கள்; அ
வர்களை நான் சிறையிருப்பில் மீந்து தப்பின
யூதரின் செய்தியையும், எருசலேமின் செய்தி
௩ யையும் கேட்டேன்.—அவர்கள் எனக்குச் சொன்
னதாவது: சிறையிருப்பில் மீந்திருக்கிறவர்கள்
அந்தச் சீமையிலே மகா தீங்கையும் நிந்தையை
யும் அநுபவிக்கிறார்கள், எருசலேமின் அலங்கம்
இடிபட்டதும் அதின் வாசல்கள் அக்கினியால்
சுட்டுப்போடப்பட்டதுமாய்க் கிடக்கிறதென்
றார்கள்.
௪ நான் இந்த வார்த்தைகளைக் கேட்டபோது சம்
பவித்ததேதென்றால், நான் உளுக்காந்து அழுது,
சிலநாளாய்த் துக்கித்துக்கொண்டு, பரமண்ட
லங்களின் பராபரனுக்குமுன்பாக உபவாசிக்
௫ கிறவனும் மன்றாடுகிறவனுமாயிருந்து,—சொன்
னதாவது: ஆ பரமண்டலங்களின் பராபரனாகிய
கர்த்தாவே, உம்மைச் சிநேகிக்கிறவர்களுக்கும்,
உம்முடைய கற்பனைகளைக் கைக்கொள்ளுகிற
வர்களுக்கும், உடம்படிக்கையையும் கிருபை
யையும் காக்கிற மகத்துவமும் பயங்கரமுமுள்ள
௬ பராபரனே,—உம்முடைய அடியாராகிய இஸ்
ரவேல் புத்திரருக்காக இன்று இரவும்பகலும்,
உமக்குமுன்பாக மன்றாடி, இஸ்ரவேல் புத்திர
ராகிய நாங்கள் உமக்கு விரோதமாகச் செய்த
பாவங்களை அறிக்கையிடுகிற அடியேனுடைய
செபத்தைக் கேட்கிறதற்கு, உம்முடைய செவி
கவனித்தும் உம்முடைய கண்கள் திறந்தும்
இருப்பதாக; நானும் என் தகப்பன் வீட்டாரும்
௭ பாவம்செய்தோம். — நாங்கள் உமக்குமுன்பா
கக் கெட்டுப்போகவே கெட்டுப்போய், தேவரீர்
உம்முடைய தாசனாகிய மோசேயுக்குக் கற்பித்த
கற்பனைகளையும் கட்டளைகளையும், நியாயங்களை
௮ யும் கைக்கொள்ளாதேபோனோம். — நீங்கள் து
ரோகம்பண்ணுவீர்கள்; அப்போது நாம் உங்க
ளைச் சனசதளங்களுக்குள்ளே சிதறடிப்போமெ
௯ ன்றும்,—நீங்கள் நம்மண்டைக்குத் திரும்பி, நம்
முடைய கற்பனைகளைக் கைக்கொண்டு, அவை
களின்படி செய்யும்போதோவென்றால், உங்க
ளிலே தள்ளுண்டவர்கள் வானத்தின் கடை
யாந்தரத்தில் இருந்தாலும், நாம் அங்கே இருந்து,
அவர்களைச் சேர்த்து, நம்முடைய நாமத்தை வா
சமாயிருக்கப்பண்ண, நாம் தெரிந்துகொண்ட
ஸ்தலத்துக்கு அவர்களைக் கொண்டுவருவோம்
என்றும் தேவரீர் உம்முடைய தாசனாகிய மோ
சேயுக்குக் கற்பித்த வார்த்தையை நினையுமே.—
தேவரீர் உம்முடைய சத்துவத்தினாலும், உம்மு ௰
டைய பலத்த கரத்தினாலும், மீட்டுக்கொண்ட
உம்முடைய அடியாரும் உம்முடைய சனமும்
அவர்கள்தானே.—ஆ ஆண்டவரே, உம்முடைய ௰௧
செவிகள் உம்முடைய அடியானின் செபத்தை
யும் உம்முடைய நாமத்துக்குப் பயப்பட ஆசை
யுள்ள உம்முடைய அடியாரின் செபத்தையும்
கவனித்திருக்கட்டுமே; இன்றைக்கு உம்முடைய
அடியானுக்குக் காரியத்தைக் கைகூடிவரப்ப
ண்ணி, இந்தப் புருஷனுக்குமுன்பாக எனக்கு
இரக்கம் கிடைக்கப்பண்ணியருளுமே என்
றேன்; அதேதெனில் நான் இராசாவுக்குப் பா
னம் வார்த்துக்கொடுக்கிறவனாயிருந்தேன்.

## உ. அதிகாரம்.

க. அர்த்தசஷ்டா நெகெமீயாவின் துக்கத்தின் காரணத்தை அறிந்து, அவனைக் கடிதத்தோடும், அதிகாரத்தோடும், எருசலேமுக்கு அனுப்பினது. ௯. நெகெமீயா பகையாளிகளுக்குத் துன்பமுண்டாக எருசலேமுக்கு வந்தது. ௰௨. இடிந்துபோன மதில்களை அவன் இரகசியத்தில் கண்டது. ௰௭. பகையாளிகளால் தடைபடாமல், அலங்கத்தைக் கட்டும்படி அவனை யூதர்கள் ஏவினது.

அர்த்தசஷ்டா இராசாவின் இருபதாம் வருஷம் ௧
நீசான் மாதத்திலே சம்பவித்ததேதெனில், அவ
னுக்குமுன்பாகத் திராட்சப்பழ இரசமுண்டா
யிருக்கையில், நான் அதை எடுத்து இராசாவுக்குக்
கொடுத்தேன்; ஆனால் நான் முந்தி அவனுக்கு
முன்பாகச் சலிப்பாயிருந்ததில்லை.—அப்போது ௨
இராசா என்னுடனே, நீ துக்கமுகமாயிருக்கிற
தென்ன? நீ வியாதியாயிருக்கவில்லையே, இது
மனதின் துக்கமாயிருக்கிறதொழிய மற்றப்படி
யல்லவென்றான்; அப்போது நான் மிகுதியாக
வும் பயந்துகொண்டு,—இராசாவுக்குச் சொன்ன ௩
தாவது: இராசா என்றைக்கும் வாழ்க; என் பிதா
க்களின் பிரேதக்குழிகள் இருக்கும் ஸ்தலமா
கிய பட்டணம் பாழானதும், அதின் வாசல்கள்
அக்கினியால் எரித்துப்போடப்பட்டதுமாய்க்
கிடக்கையில், நான் துக்கமுகத்தோடு இராதிரு
ப்பது எப்படியென்றேன்.—அப்போது இராசா ௪
என்னுடனே, நீ கேட்கிற காரியமென்னவென்
றான், அப்போது நான் பரமண்டலங்களின் பரா
பரனைநோக்கிச் செபம்பண்ணி, — இராசாவுட ௫

னே, இராசாவுக்குச் சம்மதியாயிருந்து, அடியே
னுக்கு உமக்குமுன்பாகத் தயைகிடைத்தால்,
நீர் என்னை என் பிதாக்களின் பிரேதக்குழிகளி
ருக்கும் பட்டணத்தைக் கட்ட, யூதாவிலிருக்கிற
அவ்விடத்துக்கு அனுப்ப வேண்டிக்கொள்ளுகி
௬ றேனென்றேன்.—அப்போது இராசாவும், அவன்
பக்கத்தில் உளுக்காந்திருந்த இராசஸ்திரியும் உன்
பயணத்தில் எத்தனை நாள் செல்லும்? நீ எப்
போது திரும்ப வருவாயென்று என்னைக் கேட்
டார்கள்; இன்னகாலமென்று நான் இராசாவுக்
குக் குறித்தபோது என்னை அனுப்ப அவருக்குச்
௭ சம்மதியாயிற்று.—பின்னையும் நான் இராசாவோ
டே சொன்னதாவது: இராசாவுக்குச் சம்மதியா
யிருந்தால், நான் யூதாவுக்கு வந்துசேருமட்டும்,
நதிக்கப்பாலிருக்கிற துரைகள் என்னை வழிவிட்
டனுப்பும்படிக்கு அவர்களுக்குக் கொடுக்கும்
௮ காகிதங்களும்,—நான் தேவாலயத்துக்கிருக்கிற
அரணின் கதவுகளைப் பலகையால் செப்பனிடுகி
றதற்கும், பட்டண அலங்கத்தின் வேலைக்கும்,
நான் உள்ப்பிரவேசித்திருக்கும் வீட்டின் வேலை
க்குமென்று இராசாவுக்கிருக்கிற வனத்தின் கா
வல்காரனாகிய ஆசாப் எனக்கு மரங்களைக் கொ
டுக்கும்படிக்கு, அவனுக்கும் கொடுக்கும் ஒரு
காகிதமும் எனக்குக் கட்டளையிடப்படுவதா
கவென்றேன்; அவைகளை இராசா எனக்கு என்
மேலிருக்கிற என் பராபரனுடைய நல்ல கரத்
தின்படியே கொடுத்தான்.
௯ அப்படியே நான் நதிக்கப்பாலிருக்கிற துரை
களண்டைக்கு வந்து, இராசாவின் காகிதங்களை
அவர்களுக்குக் கொடுத்தேன்; ஆனால் இராசா
என்னோடேகூட இராணுவத்தலைவர்களையும், கு
௰ திரைக்காரரையும் அனுப்பியிருந்தான்.—இதை
ஒரோனியனான சனெபல்லாத்தும் அம்மோன்
சாதியான ஊழியக்காரனாகிய தொபியாவும்
கேட்டபோது, இஸ்ரவேல் புத்திரரின் நன்மை
யை விசாரிக்கிற மனுஷன் வந்தானென்கிறது
அவர்களுக்கு மிகவும் விசனமாயிருந்தது.
௰௧ நான் எருசலேமுக்கு வந்து, அங்கே மூன்று
௰௨ நாளிருந்தபிற்பாடு,—நான் கொஞ்ச மனுஷரைக்
கூட்டிக்கொண்டு, இராத்திரியில் எழுந்து புறப்
பட்டேன்; ஆனால் எருசலேமுக்காகச் செய்ய,
என்னுடைய பராபரன் என் மனதிலே கொடுத்
ததை ஒருவருக்கும் நான் அறிவிக்காதிருந்தேன்;
நான் ஏறிக்கொண்டிருந்த மிருகமேயல்லாமல்
வேறொரு மிருகமும் என்னோடிருந்ததுமில்லை.—
௰௩ நான் அன்று இராத்திரி பள்ளத்தாக்கின் வாச
லால் புறப்பட்டு, வலுசர்ப்பத் துரவைக் கடந்து,
குப்பைமேட்டு வாசலுக்கு வந்து, எருசலேமின்
அலங்கம் இடித்துப்போடப்பட்டும், அதின் வா
சல்கள் அக்கினியால் எரித்துப்போடப்பட்டும்
கிடக்கிற விதத்தை விசாரித்துப்பார்த்தேன்.—
௰௪ அவ்விடத்தைவிட்டுக் கிணற்றுவாசலண்டைக்
கும், இராசாவின் குளத்தண்டைக்கும் போ
னேன்; நான் ஏறியிருந்த மிருகம் அங்கே கடந்
துபோகிறதற்கு இடமுண்டாயிருக்கவில்லை.—
பிற்பாடு அன்று இராத்திரியிலே நான் ஆற்றோர ௰௫
மாய்ப்போய், அலங்கத்தைக் கவனித்துப்பார்த்
துத் திரும்பிக்கொண்டு, பள்ளத்தாக்கின் வாச
லால் பிரவேசித்துத் திரும்பவந்தேன்.
நான் எங்கே போனேனென்றும், நான் என் ௰௬
னசெய்தேனென்றும் அதிகாரிகள் அறியாதிருந்
தார்கள்; ஏனெனில் அந்தமட்டும் நான் யூதருக்
காகிலும், ஆசாரியர்கள் பெரியவர்கள் அதிகாரி
களுக்காகிலும், வேலைசெய்கிற மற்றவர்களுக்
கென்கிலும் நான் ஒன்றும் அறிவித்ததில்லை.
பிற்பாடு நான் அவர்களுடனே, எருசலேம் பா ௰௭
ழும், அதின் வாசல்கள் அக்கினியால் சுட்டுப்
போடப்பட்டதுமாய்க் கிடக்கிறதையும் நாங்
கள் இருக்கிற சிறுமையையும் நீங்கள் பார்க்கி
றீர்களே; நாங்கள் இனி நிந்தைக்குள்ளாயிராதப
டிக்கு, எருசலேமின் அலங்கத்தைக் கட்டுவோம்
வாருங்களென்று சொல்லி,—என்மேல் நல்லதாயி ௰௮
ருந்த என் பராபரனுடைய கரத்தையும், இராசா
என்னோடே சொன்ன வார்த்தைகளையும் அவர்க
ளுக்கு அறிவித்தேன்; அப்போது அவர்கள்
எழும்பிக் கட்டுவோமாக என்று சொல்லி, தங்
கள் கைகளை அந்த நல்ல வேலைக்குத் திடப்ப
டுத்தினார்கள்.
ஒரோனியனான சனெபல்லாத்தும், அம்மோன் ௰௯
சாதியான ஊழியக்காரனாகிய தொபியாவும்,
அரபியனான கேஷேமும் இதைக் கேட்ட
போது, எங்களைப் பரியாசம்பண்ணி, எங்களை
அசட்டைபண்ணி, நீங்கள் செய்கிற இந்தக்காரி
யமென்ன? நீங்கள் இராசாவுக்கு விரோதமாகக்
கலகம்பண்ணுவீர்களோவென்றார்கள்.—ஆனால் ௨௰
நான் அவர்களுக்கு மறுமொழியாக, பரமண்டல
ங்களின் பராபரனானவர் எங்களுக்குக் கைகூடி
வரப்பண்ணுவார்; அவருடைய ஊழியக்கார
ராகிய நாங்கள் எழும்பிக் கட்டுவோம்; உங்களுக்
கோவென்றால் எருசலேமிலே பங்கும், நீதியும்,
நினைப்பும் இல்லையென்று அவர்களுடனே
சொன்னேன்.

## ௩. அதிகாரம்.

௧. அலங்கத்தைக் கட்டினவர்களுடைய பெயரும் வகுப்புகளும்.

அப்போது பிரதான ஆசாரியனாகிய எலியாசி ௧
பும், அவன் சகோதரராகிய ஆசாரியர்களும்
எழும்பி, ஆட்டுவாசலைக் கட்டினார்கள்; அதைக்
கட்டி, அவர்கள் பிரதிஷ்டைபண்ணி, அதின்
கதவுகளை வைத்து, மேயாவென்ற கொம்மை
மட்டுக்கும் அனனெயேலின் கொம்மைமட்டுக்
கும் கட்டிப் பிரதிஷ்டைபண்ணினார்கள்.—அ ௨
வன் அருகே எரிகோவின் மனுஷர் கட்டினார்
கள்; அவர்கள் அருகே இம்மிரியின் குமாரனா
கிய சக்கூர் கட்டினான்.
மீன் வாசலைச் செனாபாவின் குமாரர் கட்டி ௩
னார்கள்; அதை அவர்கள் வளையாக்கி, அதின்
கதவுகளையும், அதின் பூட்டுகளையும், அதின்
தாழ்ப்பாள்களையும் போட்டார்கள்.—அவர்கள் ௪
அருகே யாகோத்தின் குமாரனாகிய உரீயாவின்

மகன் மெரேமோத் பழுதுபார்த்துக் கட்டினான்;
அவர்கள் அருகே மெஷேசாபெயேலின் குமா
ரனாகிய பெரேகியாவின் மகன் மெசுல்லாம்
பழுதுபார்த்துக் கட்டினான்; அவர்கள் அருகே
பானாவின் குமாரனாகிய சாதோக் பழுதுபார்த்
௫ துக்கட்டினான்.—அவர்கள் அருகே தெக்கோவா
ஊரார் பழுதுபார்த்துக் கட்டினார்கள்; அவர்களு
டைய வல்லபக்காரரோவென்றால், தங்கள் ஆண்
டவருடைய வேலைக்குத் தங்கள் கழுத்தை நீட்
டினதில்லை.
௬ பழையவாசலைப் பசெயாகின் குமாரனாகிய
யோய்தாவும், பேசோதியாவின் குமாரனாகிய
மெசுல்லாமும், பழுதுபார்த்துக் கட்டினார்கள்;
அவர்கள் அதை வளைவாக்கி, அதின் கதவுகளை
யும், அதின் பூட்டுகளையும், அதின் தாழ்ப்பாள்க
௭ ளையும் போட்டார்கள்.—அவர்கள் அருகே கிபே
யோன் மிஸ்பா ஊர்களின் மனுஷரான மெல்தி
யாவென்ற கிபேயோனியனும், யாதோனென்ற
மெரோனோத்தியனும், நதிக்கிப்பாலிருக்கிற
துரையின் சமஸ்தானம்மட்டும் பழுதுபார்த்துக்
௮ கட்டினார்கள்.—அவர்கள் அருகே தட்டாரில்
ஒருவனாகிய அராயாவின் குமாரன் ஊசியேல்
பழுதுபார்த்துக் கட்டினான்; அவன் அருகே தயி
லக்காரரில் ஒருவனின் குமாரனான அனனியா
பழுதுபார்த்துக் கட்டினான்; அதுமுதற்கொண்டு
அகலமான மதில்மட்டும் எருசலேமை இடிக்கா
௯ மல் விட்டிருந்தது.—அவர்கள் அருகே எருசலேம்
பட்டணத்தின் பாதிக்குப் பிரபுவாகிய ஊரின்
குமாரன் ரெப்பாயா பழுதுபார்த்துக்கட்டி
௰ னான்.—அவர்கள் அருகே அருமாப்பின் குமாரன்
யெதாயா தன் வீட்டுக்கு எதிரானதைப் பழுது
பார்த்துக் கட்டினான்; அவன் அருகே ஆசாப்னெ
யாவின் குமாரன் அத்தூஸ் பழுதுபார்த்துக்கட்டி
௰௧ னான்.—மற்றப் பங்கையும், சூளைகளின் கொம்மை
யையும், ஆரீமின் குமாரன் மல்கியாவும், பாகாத்
மோவாபின் குமாரன் அசூபும் பழுதுபார்த்துக்
௰௨ கட்டினார்கள்.—இவனருகே எருசலேம்பட்ட
ணத்தின் மறுபாதிக்குப் பிரபுவாகிய அலோகே
சின் குமாரன் சல்லூமும், அவன் குமாரத்தி
களும் பழுதுபார்த்துக் கட்டினார்கள்.
௰௩ பள்ளத்தாக்கின் வாசலை ஆனூனும், சானோ
வாக்கின் குடிகளும், பழுதுபார்த்துக் கட்டினார்
கள்; அவர்கள் அதைக் கட்டி, அதின் கதவுகளை
யும் அதின் பூட்டுகளையும் அதின் தாழ்ப்பாள்
களையும் போட்டு, அலங்கத்தில் ஆயிரம்முழமும்
குப்பைமேட்டு வாசல்மட்டாகக் கட்டினார்கள்.
௰௪ குப்பைமேட்டு வாசலைப் பெத்கேரேமின் மா
காணத்துக்குப் பிரபுவாகிய ரெக்காவின் குமா
ரன் மல்கியா பழுதுபார்த்து, அதைக் கட்டி,
அதின் கதவுகளையும், அதின் பூட்டுகளையும்,
அதின் தாழ்ப்பாள்களையும் போட்டான்.
௰௫ கிணற்றுவாசலை மிஸ்பாவின் மாகாணத்துப்
பிரபுவாகிய கொல்லோசேயின் குமாரன் சல்
லூம் பழுதுபார்த்து, அதைக் கட்டி, மச்சுப்பாவி
அதின் கதவுகளையும் பூட்டுகளையும் தாழ்ப்பாள்க
ளையும் போட்டு, இராசாவின் சிங்காரத்தோட்
டத்தண்டையிலிருக்கிற சீலோவாவின் குளத்து
மதிலையும் தாவீதின் பட்டணத்திலிருந்து இறங்
குகிற படிகள்மட்டாக இருக்கிறதையும் கட்டி
னான்.—அவனுக்குப் பின்னாகப் பெத்சூர் மாகா ௰௬
ணத்தின் பாதிக்குப் பிரபுவாகிய அஸ்பூக்கின்
குமாரன் நெகெமியா தாவீதின் பிரேதக்குழிக
ளுக்கு எதிரான இடம்மட்டாகவும், வெட்டப்
பட்ட குளம்மட்டாகவும், பராக்கிரமசாலிக
ளின் வீடுமட்டாகவும், இருக்கிறதைப் பழுது
பார்த்துக் கட்டினான். — அவனுக்குப்பின்னாக ௰௭
இலேவியரில் பானியின் குமாரன் ரேகூமும்,
அவனருகே கேகிலா மாகாணத்தில் தன்னு
டைய பாதிப்பங்குக்குப் பிரபுவாகிய அசபியா
வும் பழுதுபார்த்துக் கட்டினார்கள்.—அவனுக்கு ௰௮
ப்பின்னாக அவனுடைய சகோதரரில் கேகிலா
மாகாணத்து மறுபாதிக்குப் பிரபுவாகிய எனாதா
தின் குமாரன் பாபாயி பழுதுபார்த்துக் கட்டி
னான்.—அவனருகே மிஸ்பாவின் பிரபுவாகிய ௰௯
எசூவாவின் குமாரன் எசா என்றவன் மூலையிலே
ஆயுதசாலையின் படிகளுக்கு எதிரேயிருக்கிற
வேறொரு பங்கைப் பழுதுபார்த்துக் கட்டினான்.—
அவனுக்குப்பின்னாகச் சபாயின் குமாரன் பா ௨௰
ருக் அந்த மூலையைத்துவக்கிப் பிரதான ஆசாரிய
னாகிய எலியாசீபின் வாசற்படிமட்டுமிருக்கிற
பின்னொரு பங்கை வெகு சாக்கிரதையோடே
பழுதுபார்த்துக் கட்டினான்.—அவனுக்குப் பின் ௨௧
னாகக் கோத்தின் குமாரனாகிய உரீயாவின் மகன்
மெரேமோத் எலியாசீபின் வீட்டு வாசற்படி
யைத்துவக்கி அவனுடைய வீட்டின் கடைசிக்
கோடிமட்டுமிருக்கிற பின்னொரு பங்கைப் பழு
துபார்த்துக் கட்டினான். — அவனுக்குப் பின் ௨௨
னாகச் சமனான பூமியில் வாசமாயிருக்கிற ஆசாரி
யர்கள் பழுதுபார்த்துக் கட்டினார்கள். — அவர் ௨௩
களுக்குப்பின்னாகப் பென்யமீனும், அசூபும்
தங்கள் வீட்டுக்கு எதிரே இருக்கிறதைப் பழுது
பார்த்துக் கட்டினார்கள்; அவர்களுக்குப்பின்னாக
அனனியாவின் குமாரனாகிய மாசேயாவின்
மகன் அசரியா தன் வீட்டின் அருகே இருக்கி
றதைப் பழுதுபார்த்துக் கட்டினான்.—அவனுக் ௨௪
குப்பின்னாக எனாதாதின் குமாரன் பின்னூவி
அசரியாவின் வீட்டைத்துவக்கி அலங்கம் திரும்
பும் கோடிமட்டும் இருக்கிற வேறொரு பங்கைப்
பழுதுபார்த்துக் கட்டினான்.—ஊசாயின் குமாரன் ௨௫
பாலால் மூலைக்கு எதிரேயும், காவல் வீட்டின்
முற்றத்துக்கடுத்த இராசாவின் உயரமான வீட்
டுக்கு வெளிப்புறமாயிருக்கிற கொம்மைக்கு
எதிரேயும் இருக்கிறதைக் கட்டினான்; அவனுக்
குப் பின்னாகப் பாரோசின் குமாரன் பெதாயா
வும், — ஒப்பேலிலே குடியிருக்கிற இஸ்ரவே ௨௬
லைச் சேர்ந்த மனிதரும் கிழக்கேயிருக்கிற தண்
ணீர் வாசலுக்கு வெளிப்புறமான கொம்மைக்கு
எதிரேயிருக்கிற இடம்மட்டும் கட்டினார்கள்.
அவர்களுக்குப் பின்னாகத் தெக்கோவா ஊ ௨௭
ரார் வெளிப்புறமான பெரிய கொம்மைக்கு

எதிரே ஓப்பேலின் மதில்மட்டும் இருக்கிற பின்
ஞெரு பங்கைப் பழுதுபார்த்துக் கட்டினார்கள்.
௨௮ குதிரைகளின் வாசல் முதல்கொண்டு ஆசாரி
யர்கள் அவரவர் தங்கள் வீடுகளுக்கு எதிரே இ
ருக்கிறதைப் பழுதுபார்த்துக் கட்டினார்கள்.—
௨௯ அவர்களுக்குப்பின்னுக இம்மேரின் குமாரன்
சாதோக் தன் வீட்டுக்கு எதிரே இருக்கிறதைப்
பழுதுபார்த்துக் கட்டினான்; அவனுக்குப் பின்
னுகக் கிழக்குவாசலைக் காக்கிற செக்னீயாவின்
குமாரன் செமாயா பழுதுபார்த்துக் கட்டினான்.-
௩௰ அவனுக்குப்பின்னுகச் செல்மீயாவின் குமாரன்
அனனீயாவும், சாலாப்பின் ஆரும் குமாரனுகிய
ஆனூனும், வேறொரு பங்கைப் பழுதுபார்த்துக்
கட்டினார்கள்; அவர்களுக்குப்பின்னுகப் பெரெ
கியாவின் குமாரன் மெசுல்லாம், தன்னுடைய
அறைவீட்டுக்கு எதிரே இருக்கிறதைப் பழுது
௩௧ பார்த்துக் கட்டினான்.—அவனுக்குப்பின்னுகத்
தட்டானின் குமாரன் மல்கியா இலக்கம் பார்க்
கிற வாசலுக்கு எதிரே இஸ்ரவேலைச் சேர்ந்த
வர்களும், மளிகைக்காரரும் குடியிருக்கிற ஸ்தல
மட்டாகவும், கோடியின் மேல்வீடுமட்டாகவும்
இருக்கிறதைப் பழுதுபார்த்துக் கட்டினான்.—
௩௨ கோடியின் மேல்வீட்டுக்கும், ஆட்டுவாசலுக்
கும், நடுவே இருக்கிறதைத் தட்டாரும் மளி
கைக்காரரும் பழுதுபார்த்துக் கட்டினார்கள்.

## ௪. அதிகாரம்.

௧. பகைஞரின் பரிகாசம் செய்கையில், நெகெமீயா பிரார்த்தித்த வே
லைசெய்தது. ௭. அவர்களின் விரோதத்தையும், இரகசிய ஆலோசனை
யையும் அறிந்து, அவன் காவல்வைத்தது. ௰௩. அவன் வேலைக்காரர்கள்
கையில் ஆயுதங்களைக் கொடுத்தது, ௰௯. அவர்களைக் கற்பித்தது.

௧ ஆனால் நாங்கள் அலங்கத்தைக் கட்டுகிற செய்
தியைச் சனெபல்லாத் கேட்டபோது சம்பவித்
ததேதென்றால், அவன் எரிச்சலும் வெகு தாங்
கலும் அடைந்து யூதரைச் சக்கந்தம்பண்ணி,—
௨ அந்தப் பெலவீன யூதர் செய்கிறதென்ன, அவர்
களுக்கு இடம்கொடுக்கப்படுமோ, பலியிடுவார்
களோ, இன்றைக்குள்ளே முடித்துப்போடுவார்
களோ, சுட்டெரித்துப்போடப்பட்டு, மண்மே
டுகளுமான கல்லுகளை உயிர்ப்பிப்பார்களோவெ
ன்று தன் சகோதரருக்கும் சமாரியாவின் இரா
௩ ணுவத்திற்கும் முன்பாகச் சொன்னான்.—அப்
போது அம்மோனியனான தொபியா அவனண்
டையிலிருந்து அவர்கள் கட்டினாலும், நரியேறி
வந்தால் அவர்களுடைய கல்மதிலை இடிக்கு
மென்றான்.
௪ எங்கள் பராபரனே, நாங்கள் அசட்டைபண்
ணப்படுகிற விதத்தைக் கேட்டு, அவர்கள் நிந்
திக்கிற நிந்தையை அவர்கள் தலையின்மேல்
திருப்பி, அவர்களைச் சிறையிருப்பின் தேசத்தி
௫ லே சூறைக்கு ஒப்புக்கொடும்.—அவர்கள் அக்
கிரமத்தை மூடிப்போடாதேயும், அவர்கள் பா
வம் உமக்குமுன்பாகக் கொலைக்கப்படாதிருப்ப
தாக; ஏனென்றால் கட்டுகிறவர்களுக்கு மனம
டிவுண்டாகப் பேசினார்கள்.
௬ நாங்களோவென்றால் அலங்கத்தைக் கட்டி
வந்தோம்; அலங்கமெல்லாம் பாதிமட்டும் ஒன்
ருய் இணைந்து உயர்ந்தது; ஏனெனில் சனம்
வேலைசெய்கிறதற்கு ஆசையோடிருந்தது.
எருசலேமின் அலங்கத்தைக் கட்டுகிற வேலை ௭
வளர்ந்தேறுமென்றும், இடிக்கப்பட்ட இடங்
கள் அடைபடத்துவக்கிற்றென்றும், சனெபல்
லாத்தும், தொபியாவும், அரபியரும், அம்மோ
னியரும், அஸ்தோதியரும் கேட்டபோது சம்ப
வித்ததேதென்றால், அவர்கள் மிகவும் எரிச்ச
லாகி,—எல்லாரும் ஏகமாய் எருசலேமின்மேல் ௮
யுத்தம்பண்ண வரவும், அதில் ஒரு கலக்கமுண்
டாக்கவும் பந்துக்கட்டுப்பண்ணினார்கள்.— ஆ ௯
னால் நாங்கள் எங்கள் பராபரனைநோக்கிச் செ
பம்பண்ணி, அவர்கள்நிமித்தம் இரவும்பகலும்
சாமம்காக்கிறவர்களை அவர்களுக்கு நேராக
வைத்தோம்.—அப்போது யூதமனிதர், சுமைக் ௰
காரரின் பெலன் குறையும், மண்மேடோ மிச்ச
மானது; நாங்கள் அலங்கத்தைக் கட்டக்கூடா
தென்றார்கள். — எங்கள் சத்துருக்களோவென் ௰௧
றால், நாங்கள் அவர்கள் நடுவிலே வந்து, அவர்
களைக் கொன்றுபோடும்மட்டும், அவர்கள் அதை
அறியாமலும் பாராமலும் இருக்கவேண்டும்;
அப்படியே அந்த வேலையை ஓயப்பண்ணுவோ
மென்றார்கள்.
அதை அவர்களண்டையிலே குடியிருக்கிற ௰௨
யூதரும் தாங்கள் எல்லா இடங்களிலுமிருந்து
எங்களண்டைக்குத் திரும்பவந்து, பத்துவிசை
எங்களுக்குச் சொன்னபோதோவெனில்,—நான் ௰௩
அலங்கத்துக்குப் பின்னுக இருக்கிற பள்ளமான
ஸ்தலங்களிலும் மேடுகளிலும் தங்கள் பட்டை
யங்களையும், தங்கள் ஈட்டிகளையும், தங்கள்
வில்களையும், தரித்திருக்கிற சனத்தை வம்சம்
வம்சமாக நிறுத்தினேன்.—அதை நான் பார்த் ௰௪
துக்கொண்டு எழும்பி, பெரியவர்களோடும் மூப்
பரோடும் மற்றச் சனத்தோடும் அவர்களுக்குப்
பயப்படாதிருங்கள்; நீங்கள் மகத்துவமும் பய
ங்கரமுமுள்ள ஆண்டவரை நினைத்து, உங்கள்
சகோதரருக்காகவும், உங்கள் குமாரர்களுக்காக
வும், உங்கள் குமாரத்திகளுக்காகவும், உங்கள்
பெண்சாதிகளுக்காகவும், உங்கள் வீடுகளுக்காக
வும் யுத்தம்பண்ணுங்களென்றேன்.
எங்களுக்குச் செய்தி தெரியவந்ததென்று எங் ௰௫
கள் பகைஞர் கேட்டபோதோவென்றால், பரா
பரன் அவர்கள் ஆலோசனையை அபத்தமாக்கி
னார்; அப்போது நாங்களெல்லாருமாக அவரவர்
தங்கள் வேலையைச் செய்ய அலங்கத்துக்குத்
திரும்பினோம்.—அன்றுமுதல்கொண்டு சம்பவித் ௰௬
ததேதெனில், என் வேலைக்காரரில் பாதிப்பேர்
வேலையிலே இறங்கிப் பாதிப்பேர் ஈட்டிகளையும்
பரிசைகளையும் வில்களையும் சீராக்களையும் தரித்
திருந்தார்கள்; பிரபுக்கள் யூதாவீட்டாரெல்லா
ருக்கும் பின்னுக நின்றார்கள்.—அலங்கத்திலே ௰௭
கட்டுகிறவர்களும், சுமையைச்சுமக்கிறவர்களும்,
சுமையைச் சுமத்துகிறவர்களும், அவரவர் ஒரு
கையினாலே வேலையைச் செய்து, மறுகையி

௰௮ னாலே ஆயுதம் பிடித்திருந்தார்கள்.—கட்டுகிற
வர்கள் அவரவர் தங்கள் பட்டையத்தைத் தங்கள்
இடுப்பிலே கட்டிக்கொண்டவர்களாய்க் கட்டி
னார்கள்; ஆனால் எக்காளம் ஊதுகிறவன் என்ன
ண்டையிலே இருந்தான்.

௰௯ நான் பெரியவர்களோடும் மூப்பரோடும் மற்
றச் சனத்தோடும் சொன்னது: வேலை பெரியதும்
விஸ்தாரமுமானது; நாம் அலங்கத்தின்மேலே
சிதறப்பட்டு ஒருவருக்கொருவர் தூரமாயிருக்கி
௨௰ றோம்.—நீங்கள் எவ்விடத்திலே எக்காளத்தின்
சத்தத்தைக் கேட்பீர்களோ அவ்விடத்திலே வந்
து, எங்களோடே கூடுங்கள்; நம்முடைய பரா
பரன் நமக்காக யுத்தம்பண்ணுவாரென்றேன்.

௨௧ இப்படியே நாங்கள் வேலையிலிறங்கியிருந்
தோம்; அவர்களிலே பாதிப்பேர் கிழக்கு வெ
ளுக்கும் நேரந்துவக்கி நட்சத்திரங்கள் புறப்ப
௨௨ டும்மட்டும் ஈட்டிகளைப் பிடித்திருந்தார்கள்.—அக்
காலத்திலே நான் சனத்தோடே இராமாறு நமக்
குக் காவலுக்கும் பகல்மாறு வேலைக்கும் உதவ,
அவரவர் தங்கள் வேலைக்காரரோடும்கூட எருச
லேமுக்குள்ளே இராத்தங்கக்கடவர்களென்றும்
௨௩ சொல்லி,—நானாகிலும் என் சகோதரராகிலும்,
என் வேலைக்காரராகிலும் என்னைப் பின்சென்று
காவல்காக்கிற மனிதரென்கிலும் எங்கள் வஸ்தி
ரங்களைக் களைந்துபோடாதிருந்தோம்; அவரவ
ருக்கு அவர்கள் ஆயுதமும் தண்ணீரும் இருந்தது.

## ௫. அதிகாரம்.

*௧. யூதர்கள் தங்கள் கடனையும், கொறவையையும் அடிமைத்தனத்தையும் குறித்து முறையிட்டது. ௬. நெகெமீயா கடும்வட்டி வாங்கினவர்களைக் கண்டித்து, திரும்பக் கொடுக்கும்படி செய்வித்தது. ௰௪. அவன் சனங்க ளிவிடத்தில் ஒன்றையும் வாங்காமல் அவர்களுக்குத் தான் உபகரித்தது.*

௧ சனமும் அவர்கள் பெண்சாதிகளும் யூதராகிய
தங்கள் சகோதரர்மேலே முறையிடுகிற பெரிய
௨ கூக்குரலுண்டாயிற்று.— அதேதெனில் எங்க
ளோடும்கூட எங்கள் குமாரரும் எங்கள் குமாரத்
திகளும் அநேகரானபடியினாலே, நாங்கள் சாப்
பிட்டுப் பிழைக்கும்படிக்குத் தானியத்தைக்கட
னாக வாங்கினோமென்று சொல்லுகிற சிலர் இருந்
௩ தார்கள்.—எங்கள் நிலங்களையும் எங்கள் திராட்சத்
தோட்டங்களையும் எங்கள் வீடுகளையும் நாங்கள்
அடகாக வைத்து, இந்தப் பஞ்சத்திலே தானியம்
வாங்கினோமென்று சொல்லுகிறவர்களும் இருந்
௪ தார்கள்.—இராசாவுக்கு இறைகொடுக்க, நாங்கள்
எங்கள் நிலங்களின்மேலும், எங்கள் திராட்சத்
தோட்டங்களின்மேலும், திரவியத்தைக் கடனாக
௫ வாங்கினோமென்றும், — இப்போது எங்கள்
சகோதரரின் மாம்சத்துக்கு எங்கள் மாம்சமும்,
அவர்கள் பிள்ளைகளுக்கு எங்கள் பிள்ளைகளும்
சரியாயிருந்தாலும், இதோ நாங்கள் எங்கள் குமா
ரரையும் எங்கள் குமாரத்திகளையும் அடிமைத்த
னத்திற்கு உள்ப்படப்பண்ணுகிறோம்; எங்கள்
குமாரத்திகளிலே சிலர் அப்பொழுதே அதற்கு
உள்ப்பட்டார்கள்; அவர்களை மீட்க எங்கள் கை
யிலே சத்துவமுமில்லை; எங்கள் நிலங்களும்
எங்கள் திராட்சத்தோட்டங்களும் வேறே மனி
தரைச் சேர்ந்ததென்றும், சொல்லுகிற வேறே
சிலரும் இருந்தார்கள்.

அவர்கள் கூக்குரலையும் இப்படிப்பட்ட வா ௬
ர்த்தைகளையும் நான் கேட்டபோது, நான் மிக
வும் எரிச்சலாகி,—என் மனதிலே ஆலோசனை ௭
பண்ணிக்கொண்டு, பிற்பாடு பெரியவர்களோ
டும் மூப்பரோடும் வழக்காடி, அவர்களுடனே
நீங்கள் வரவரத் தங்கள் சகோதரர்மேலே கட
னைச் சுமத்துகிறீர்களோவென்று சொல்லி, அவர்
களுக்கு விரோதமாகப் பெரிய சபையை வந்து
நிற்கப்பண்ணி,—அவர்களுடனே, புறச்சாதியா ௮
ருக்கு விற்கப்பட்ட யூதராகிய எங்கள் சகோத
ரரை நாங்கள் எங்கள் சத்திக்குத்தக்கவிதமாய்
மீட்டிருக்கையில், நீங்கள் திரும்ப உங்கள் சகோ
தரரை விற்கிறீர்களோ? இவர்கள் நமக்கு விலைப்
பட்டுப்போகலாமோவென்றேன்; அப்போது
அவர்கள் மவுனமாயிருந்து மறு உத்தரவு சொல்ல
இடமில்லாதிருந்தார்கள். — பின்னையும் நான் ௯
சொன்னதாவது: நீங்கள் செய்கிற காரியம் நல்
லதல்ல, நம்முடைய பகைஞராகிய புறச்சாதி
யார் நிந்திக்கிறதின்நிமித்தம் நீங்கள் நம்முடைய
பராபரனுக்குப் பயந்து நடக்கவேண்டாமோ?—
நானும் என் சகோதரரும் என் வேலைக்காரரும் ௰
இப்படியாக அவர்களுக்குத் திரவியமும் தானி
யமும் கடன்கொடுத்தோமோ? இந்த வட்டியை
விட்டுவிடுவோமாக.—நீங்கள் இன்றைக்கு அவர் ௰௧
கள் நிலங்களையும், அவர்கள் திராட்சத்தோட்
டங்களையும், அவர்கள் ஒலீவத்தோப்புகளையும்,
அவர்கள் வீடுகளையும், நீங்கள் திரவியத்திலும்
தானியத்திலும் திராட்சப்பழ இரசத்திலும் எண்
ணெயிலும் நூற்றுக்கொன்று விழுக்காடு அவர்க
ளிடத்தில் தண்டிவருகிற வட்டியையும், அவர்
களுக்குத் திரும்பக் கொடுத்துவிடுங்களென்
றேன்.—அப்போது அவர்கள் நாங்கள் அதைத் ௰௨
திரும்பக் கொடுத்து, இனி அப்படி அவர்களி
டத்தில் கேளாதிருப்போம்; நீர் சொல்லுகிறபடி
யே செய்வோமென்றார்கள்; அப்போது நான்
ஆசாரியர்களை அழைப்பித்து, அவர்கள் இந்த
வார்த்தையின்படி செய்யும்படிக்கு அவர்களை
ஆணையிடுவித்துக்கொண்டேன்.—நான் என் மடி ௰௩
யையும் உதறிப்போட்டு, இப்படிப் பராபரன்
இந்த வார்த்தையை நிலைநிற்கப்பண்ணாத எந்த
மனிதனையும் அவன் வீட்டிலும் அவன் சம்பா
தித்ததிலுமிருந்து உதறிப்போடக்கடவர்; இந்தப்
பிரகாரமாக அவன் உதறப்பட்டு, வெறுமையாய்ப்
போவானாக என்றேன்; அதற்கு அந்தச் சபை
யெல்லாம் ஆமென்று சொல்லிக் கர்த்தரைத்
துதித்தார்கள்; பிற்பாடு சனம் இந்த வார்த்தை
யின்படியே செய்தது.

நான் யூததேசத்திலே துரையாயிருக்க இராசா ௰௪
வாகிய அர்த்தசஷ்டா எனக்குக் கற்பித்த நாளா
கிய அவருடைய இருபதாம் வருஷந்துவக்கி அ
வருடைய முப்பத்திரண்டாம் வருஷம்மட்டுமி
ருந்த பன்னிரண்டு வருஷம்வரையிலே நானும்
என் சகோதரரும் துரையின் அப்பத்தைச் சாப்

௰௫ பிட்டதுமில்லை. — எனக்கு முன்னிருந்த முந்தின துரைகளோவென்றால் சனத்தின்மேலே பாரமாயிருந்து, அவர்கள் கையிலே அப்பமும் திராட்சப்பழஇரசமும்,அதுவுமல்லாமல்நாற்பது சேக்கல் வெள்ளியும் வாங்கினார்கள்; அவர்கள் வேலைக்காரரும் சனத்தை ஆண்டுகொண்டார்கள்; ஆனால் நான் பராபரனுக்குப் பயந்ததினால்
௰௬ இப்படிச் செய்ததில்லை.—ஒரு வயலையும் நாங்கள் கொள்ளாமல், அந்த அலங்கத்தின் வேலையிலே இறங்கிக்கொண்டேயிருந்தேன்; என் வேலைக்காரரனைவரும் அங்கே அந்த வேலைக்குக் கூ
௰௭ டிக்கொண்டார்கள்.—யூதரும் மூப்பருமான நூற்றைம்பதுபேரும், எங்களைச் சுற்றிலுமிருக்கிற புறச்சாதிகளிடத்திலிருந்து எங்களண்டைக்கு வந்தவர்களும் என் பந்தியிலும் சாப்பிட்டார்
௰௮ கள்.—ஒரு நாளைக்கு ஒரு மாடும், பொறுக்கியெடுத்த ஆறு ஆடும் சமைக்கப்பட்டன; குருவிகளும் எனக்குச் சமைக்கப்பட்டன; பத்துநாள் வரையிலே சகலவித திராட்சப்பழஇரசமும் நிரம்பச் செலவழிந்தது;ஆகிலும் துரையின் அப்பத்தை நான் கேட்டதில்லை; ஏனெனில் இந்தச் சனத்தின்மேல் இருந்த பாடு கடினமாயிருந்தது.
௰௯ என் பராபரனே, நான் இந்தச் சனத்துக்காகச் செய்தவையெல்லாவற்றையும் எனக்கு நன்மையாக நினைத்தருளும்.

## ௬. அதிகாரம்.

*௧. சனெபல்லாத் நெகெமியாவை உபாயத்தினாலேயும், வதந்தியினாலேயும், கள்ளத் தீர்க்கதரிசிகளாலேயும் பயப்படுத்தத் தேடினது. ௧௫. சத்துருக்கள் விசனப்படும்படி மதில் கட்டிமுடிந்தது. ௰௭. யூதாவின் பிரபுக்களுக்குள்ளும், பகையாளிகளுக்குள்ளும் நடந்த இரகசிய சமாச்சாரம்.*

௧ **நா**ன் அலங்கத்தைக் கட்டிப்போட்டதும்,இனி அதிலே வெடிப்பு ஒன்றுமில்லை என்கிறதும் சனெபல்லாத்துக்கும், தொபியாவுக்கும், அரபியனான கேஷேமுக்கும், எங்களுக்குண்டான மற்றப் பகைஞருக்கும் கேள்வியானபோது சம்
௨ பவித்ததேதெனில், — நான் கதவுகளை வாசல்களில் அக்காலமட்டும் இன்னம் போடாதிருக்கையில், சனெபல்லாத்தும், கேஷேமும், நாம் ஓனோம் பள்ளத்தாக்கிலிருக்கிற கிராமங்களில் ஒருவரை ஒருவர் கண்டுபேசுவோம் வாருமென்று எனக்குச் சொல்லியனுப்பினார்கள்; அவர்களோவென்றால் எனக்குப் பொல்லாப்புச்செய்ய
௩ நினைத்தார்கள்.—அப்போது நான் அவர்களண்டைக்கு ஆள்களை அனுப்பி, பெரியவேலையை நான் செய்கிறேன், நான் இறங்கிவரக்கூடாது; நான் அந்த வேலையைவிட்டு உங்களண்டைக்கு இறங்கிவருகிறதினால் அது விக்கினப்பட்டுப் போவானேனென்று சொல்லச்சொன்னேன்.—
௪ அவர்கள் இந்தப்பிரகாரமாக நாலுதரம் எனக்குச் சொல்லி அனுப்பினார்கள்; நானும் இந்தப் பிரகாரமாகவே அவர்களுக்கு மறுமொழிகளை அனுப்பினேன்.
௫ ஐந்தாம்தரம் சனெபல்லாத்து அந்தப்பிரகாரமாகத் தன் வேலைக்காரனையும், அவன் கையிலே திறந்திருக்கிற ஒரு காகிதத்தையும் எனக்கு அனுப்பினான்.-அதிலே எழுதியிருந்தது, நீரும் யூதரும் கலகம்பண்ணநினைக்கிறீர்களென்றும், அதற்காக நீர் அலங்கத்தைக் கட்டுகிறீர், இந்தப் பிரகாரமாக நீர் அவர்களுக்கு இராசாவாயிருப்பீரென்றும்,-யூதாவிலே இராசாவென்று உம்மைக் ௬
குறித்து எருசலேமிலே கூறப்போகிற தீர்க்கதரிசிகளையும் சம்பாதித்தீரென்றும், சாதிகளுக்குள்ளே கேட்கப்படுகிறது; கஷ்மூவும் அப்படிச் சொல்லுகிறான்; இப்போதும் இராசாவுக்கு இந்தப் பிரகாரமாகக் கேட்கப்படுமே; ஆகையால் நாம் ஒருவருக்கொருவர் ஆலோசனை பண்ணுகிறதற்காக நீர் வாருமென்று எழுதியிருந்தது.—ஆனால் நான் அவனுக்கு, நீர் சொல்லுகிற ௮
அந்தக் காரியங்களில் ஒன்றும் நடந்ததில்லை; நீர் அவைகளை உம்முடைய இருதயத்திலே கட்டினீரென்று சொல்லியனுப்பினேன். — ஏனென் ௯
றால் அந்த வேலை நடந்தேறாதபடிக்கு, அவர்களுடைய கை சலித்துப்போமென்று சொல்லி, அவர்களெல்லாரும் எங்களுக்குப் பயமுண்டாக்கப்பார்த்தார்கள்; இப்போதும் பராபரனே, என் கைகளை திடப்படுத்தும்.
நான் மேத்தாபேயேலின் குமாரனாகிய தெலாயாவின் மகன் செமாயாவின் வீட்டிலே வந்தேன்; ஏனெனில் அவன் அடைக்கப்பட்டிருந்தான்; அப்போது அவன், நாம் இருவருமாய்ப் பராபரனுடைய வீடாகிய தேவாலயத்துக்குள்ளே போய், தேவாலயத்தின் கதவுகளைப் பூட்டுவோம் வாரும்; ஏனென்றால் உம்மைக் கொன்றுபோட வருவார்கள்; உம்மைக் கொன்றுபோட இரவிலே வருவார்களென்றான்.—அதற்கு நான் ௰௧
என்னைப்போலொத்த மனிதன் ஓடிப்போவானோ? என்னைப்போலொத்தவன் உயிரோடிருக்கும்படிக்குத் தேவாலயத்திலே போய், பதுங்குவானோ? நான் போவதில்லையென்றேன். —
ஏனென்றால் இதோ பராபரன் அவனை அனுப்பினதில்லையென்றும், தொபியாவும் சனெபல்லாத்தும் அவனுக்குக் கூலி கொடுத்ததினால், அவன் எனக்கு விரோதமாய் அந்தத் தீர்க்கதரிசனத்தைச் சொன்னானென்றும் அறிந்துகொண்டேன்.—
நான் பயந்து அப்படிச் செய்து பாவம் கட்டிக் ௰௩
கொள்ளுகிறதற்கும், என்னை நிந்திக்கத்தக்க ஒரு அபகீர்த்தியின் முகாந்தரம் தங்களுக்கு உண்டாக்குகிறதற்குமாக அவனுக்குக் கூலிகொடுத்திருந்தார்கள்.
என் பராபரனே; தொபியாவும் சனெபல்லாத் ௰௪
தும் செய்த இந்தச் செய்கைகளுக்குத்தக்கதாகத் தேவரீர் அவர்களையும், நொவதியாவென்ற தீர்க்கதரிசியானவளையும், எனக்குப் பயமுண்டாக்கப் பார்த்த மற்றத் தீர்க்கதரிசிகளையும் நினையும்.
அப்படியே அலங்கமானது ஐம்பத்திரண்டு ௰௫
நாளுக்குள்ளே கட்டப்பட்டு, எலூல்மாதம் இருபத்தைந்தாம் தேதியிலே தீர்ந்தது.—எங்கள்பகை ௰௬
ஞரெல்லாரும்அதைக்கேட்டபோதோவெனில், எங்கள் சுற்றுப்புறத்தாராகிய புறச்சாதியான அனைவரும் பயந்து, மெத்த முனையற்றுப்போய்,

இந்தக் கிரியை எங்கள் பராபரனால் கைகூடிவந்ததென்று அறிந்தார்கள்.
௰௭ அந்த நாள்களில் யூதாவிலுள்ள பெரிய மனிதரிடத்திலிருந்து, தொபியாவுக்குப் போகிறதும், தொபியாவினிடத்திலிருந்து அவர்களுக்கு வருகிறதுமான காகிதங்கள் அநேகமாயிருந்தன.—
௰௮ ஏனெனில் யூதாவில் அநேகர் அவனுக்கு ஆணையிட்டுக்கொடுத்திருந்தார்கள்; அதேதென்றால் அவன் ஆராகின் குமாரனாகிய செக்னியாவுக்கு மருமகனாயிருந்ததுமல்லாமல், அவன் குமாரனாகிய யோகனான் பெரேகியாவின் குமாரனாகிய மெசுல்லாமின் குமாரத்தியை விவாகம்பண்ணி
௰௯ யிருந்தான்.—அவனுடைய நன்மைகளையும் அவர்கள் எனக்குமுன்பாக விவரித்து, என்னுடைய வார்த்தைகளை அவனுக்குக் கொண்டுபோவார்கள்; ஆகையால் தொபியா எனக்குப் பயமுண்டாகக் காகிதங்களை அனுப்புவான்.

## ௭. அதிகாரம்.

௧. நெகெமீயா எருசலேமை விசாரிக்க, ஆனானிக்கும் அனனியாவுக்கும் ஒப்புவித்தது. ௫. பாபிலோன் பட்டணத்திலிருந்து முதல் வந்தவர்களுடைய அட்டவணை. ௮. சனங்கள். ௩௯. ஆசாரியர்கள். ௪௩. இலேவியர். ௪௪. இஸ்ரவேலைச் சேர்ந்தவர்கள். ௫௭. சாலொமோனின் வேலைக்காரர்கள். ௬௩. தங்கள் வம்சத்தை அறியாத ஆசாரியர்கள். ௬௬. சனங்களின் தொகையும், ஆஸ்தியும், ௭௰. அவர்கள் செலுத்தின காணிக்கைகள்.

௧ அலங்கம் கட்டித்தீர்ந்து, நான் கதவுகளைப் போட்டபிற்பாடேயென்றால், வாசல்காப்பாரும், பாட்டகரும், இலேவியரும் வைக்கப்பட்
௨ டார்கள்.—அப்போது நான் என் சகோதரனாகிய ஆனானிக்கும், அரமனைத் தலைவனாகிய அனனியாவுக்கும், எருசலேமின் காவலைக் கற்பித்தேன்; ஏனென்றால் இவன் அநேகரைப்பார்க்கிலும் உண்மையுள்ள மனிதனும் பராபரனுக்குப் பயந்
௩ தவனுமாயிருந்தான்.—அவர்களுக்கு நான் சொன்னது: சூரியன் காந்தியாய் எறிக்கும்மட்டும் எருசலேமின் வாசல்கள் திறக்கப்படவேண்டாம்; காவல்காப்பார் இன்னம் நிற்கையிலும் கதவுகளைப் பூட்டவேண்டும்; அப்போது நீங்கள் அவைகளை இழுத்துப்பாருங்கள்; எருசலேமின் குடிகளில் காவல்காப்பார் அவரவர் தங்கள் காவலிலும், அவரவர் தங்கள் வீடுகளுக்கு எதிராகவும் நிறுத்தப்படக்கடவர்களென்றேன்.
௪ ஆனால் பட்டணம் விஸ்தாரமும் பெரியதும் அதற்குள்ளே சனம் கொஞ்சமுமாய் இருந்தது, வீடுகள் கட்டப்படாமலும் இருந்தன.
௫ அப்போது வம்சத்து அட்டவணைகளைப் பார்க்கிறதற்கு, நான் பெரியவர்களையும் மூப்பரையும் சனத்தையும் கூட்டிக்கொள்ள, என்னுடைய பராபரன் என் மனதிலே நினைவுகொடுத்தார்; முந்தி ஏறிவந்த வம்சங்களின் அட்டவணைப்புஸ்தகம் அப்போது எனக்கு அகப்பட்டது; அதிலே நான் எழுதியிருக்கக்கண்டதாவது:
௬ பாபேலின் இராசாவாகிய நேபுகாத்நேச்சார் சிறைபிடித்துப் போனவர்களும் சிறையிருப்பிலிருந்து செருபாபேலோடும், ஏசுவா, நெகெமீயா, அசரீயா, ராமியா, நகமானி, மற்தகாயி,
பில்சான், மிஸ்பெரேத், பிக்பாயி, நெகூம், பானா
வென்கிறவர்களோடும்கூட ஏறிவந்து,-எருசலே ௭
முக்கும் யூதாவுக்கும் திரும்பித் தங்கள் தங்கள்
பட்டணங்களிலே குடியிறங்கினவர்களுமான
இந்தச் சீமையின் புத்திரராகிய இஸ்ரவேல் சன
மான மனிதரின் இலக்கமாவது:—பாரோசின் ௮
புத்திரர் இரண்டாயிரத்து ஒருநூற்று எழுபத்திர
ண்டுபேர்.—செப்பத்தியாவின் புத்திரர் மூந்நூற்று ௯
எழுபத்திரண்டுபேர்.—ஆராகின் புத்திரர் அறு ௰
நூற்றைம்பத்திரண்டுபேர்.—ஏசுவா, யோவாப் ௰௧
என்றவர்களின் புத்திரருக்குள்ளே பாகாத், மோ
வாபின் புத்திரர் இரண்டாயிரத்து எண்ணூற்றுப்
பதினெட்டுப்பேர்.—ஏலாமின் புத்திரர் ஆயிரத்து ௰௨
இருநூற்று ஐம்பத்துநாலுபேர். — சத்தூவின் ௰௩
புத்திரர் எண்ணூற்று நாற்பத்தைந்துபேர்.—சக்கா ௰௪
யின் புத்திரர் எழுநூற்று அறுபதுபேர்.—பின்னூ ௰௫
வின் புத்திரர் அறுநூற்று நாற்பத்தெட்டுப்பேர்.—
பெபாயிம் புத்திரர் அறுநூற்று இருபத்தெட்டுப் ௰௬
பேர்.—அஸ்கத்தின் புத்திரர் இரண்டாயிரத்து ௰௭
மூந்நூற்று இருபத்திரண்டுபேர்.—அதோனிக்கா ௰௮
மின் புத்திரர் அறுநூற்று அறுபத்தேழுபேர்.—
பிக்வாயின் புத்திரர் இரண்டாயிரத்து அறுபத்தே ௰௯
ழுபேர்.—ஆதீனின் புத்திரர் அறுநூற்று ஐம்பத் ௨௰
தைந்துபேர்.—எசேக்கியாவின் குமாரனாகிய ௨௧
ஆதேரின் புத்திரர் தொண்ணூற்று எட்டுப்பேர்.-
ஆசூமின் புத்திரர் மூந்நூற்று இருபத்தெட்டுப் ௨௨
பேர்.—பெத்சாயின் புத்திரர் மூந்நூற்று இருபத் ௨௩
துநாலுபேர்.—ஆரிப்பின் புத்திரர் நூற்றுப்பன் ௨௪
னிரண்டுபேர்.—கிபேயோன் புத்திரர் தொண் ௨௫
ணூற்று ஐந்துபேர்.—பெத்லேகேம் ஊராரும், ௨௬
நேதோப்பா ஊராரும், நூற்றெண்பத்து எட்டுப்
பேர்.—ஆனதோத்தூர் மனிதர் நூற்றிருபத்து எட் ௨௭
டுப்பேர்.—பெத் அஸ்மாவேத் ஊரார் நாற்பத்தி ௨௮
ரண்டுபேர்.—கீரியாத்யாரிம், கெபிரா, பேரோத் ௨௯
ஊர்களின் மனிதர் எழுநூற்று நாற்பத்துமூன்று
பேர்.—ராமா, காபா ஊர்களின் மனிதர் அறு ௩௰
நூற்று இருபத்தொருபேர்.—மிக்மாஸ் ஊரார் ௩௧
நூற்றிருபத்து இரண்டுபேர்.—பேதேல், ஆயி ஊர் ௩௨
களின் மனிதர் நூற்றிருபத்துமூன்றுபேர்.—வே ௩௩
றொரு நேபோ ஊரார் ஐம்பத்திரண்டுபேர்.—மறு ௩௪
ஏலாம் புத்திரர் ஆயிரத்து இருநூற்று ஐம்பத்து
நாலுபேர்.—ஆரிம்புத்திரர் மூந்நூற்று இருப ௩௫
துபேர்.—எரிகோ புத்திரர் மூந்நூற்று நாற்பத்தைந் ௩௬
துபேர்.—லோத், ஆதீத், ஓனோஊர்களின் புத்திரர் ௩௭
எழுநூற்று இருபத்தொருவர்.—செனாபா புத்திரர் ௩௮
மூவாயிரத்துத் தொள்ளாயிரத்து முப்பதுபேர்.
ஆசாரியர்களாவது: ஏசுவா வீட்டானாகிய ௩௯
ஏதாயாவின் புத்திரர் தொள்ளாயிரத்து எழுபத்து
மூன்றுபேர்.—இம்மேரின் புத்திரர் ஆயிரத்து ௪௰
ஐம்பத்திரண்டுபேர்.—பஸ்கூரின் புத்திரர் ஆயி ௪௧
ரத்து இருநூற்று நாற்பத்தேழுபேர்.—ஆரிமின் ௪௨
புத்திரர் ஆயிரத்துப் பதினேழுபேர்.
இலேவியராவது: ஒதியாவின் புத்திரருக்குள் ௪௩
ளே கத்மியேலின் குமாரனாகிய ஏசுவாவின் புத்
திரர் எழுபத்துநாலுபேர்.

௪௪ பாட்டகராவது: ஆசாபின் புத்திரர் நூற்று
நாற்பத்தெட்டுப்பேர்.
௪௫ வாசல் காப்பாராவது: சல்லூமின் புத்திரர்,
அதேரின் புத்திரர், தல்மோனின் புத்திரர், அக்கூ
வின் புத்திரர், அதிதாவின் புத்திரர், சோபாயிம்
புத்திரர், நூற்று முப்பத்தெட்டுப்பேர்.
௪௬ இஸ்ரவேலைச் சேர்ந்தவர்களாவது: சீகாவின்
புத்திரர், அசுபாவின் புத்திரர், தபாகோதின் புத்
௪௭ திரர்,—கேரோசின் புத்திரர், சீயாவின் புத்திரர்,
௪௮ பாதோனின் புத்திரர்,—லெபானாவின் புத்திரர்,
௪௯ ஆக்பாவின் புத்திரர், சல்மாயின் புத்திரர்,—ஆனா
னின் புத்திரர், கிதேலின் புத்திரர், காகாரின் புத்
௫௰ திரர்,—ரெயாயாவின் புத்திரர், ரேத்சினின் புத்தி
௫௧ ரர், நெகோதாவின் புத்திரர்,—காசாமின் புத்தி
ரர், ஊசாவின் புத்திரர், பசேயாகின் புத்திரர்,—
௫௨ பேசாயின் புத்திரர், மெயுநீமின் புத்திரர், நெபூ
௫௩ சிமின் புத்திரர்,—பக்பூக்கின் புத்திரர், அகூபா
௫௪ வின் புத்திரர், அற்கூரின் புத்திரர்,—பஸ்லீதின்
புத்திரர், மெகிதாவின் புத்திரர், அற்ஷாவின் புத்
௫௫ திரர்,—பற்கோசின் புத்திரர், சிஸ்ராவின் புத்திரர்,
௫௬ தாமாகின் புத்திரர், — நெற்சியாகின் புத்திரர்,
௫௭ அதிபாவின் புத்திரர், — சாலோமோனுடைய
வேலைக்காரரின் புத்திரராவது: சொதாயின் புத்
திரர், சொபெரேதின் புத்திரர், பெரிதாவின் புத்
௫௮ திரர்,—யாலாவின் புத்திரர், தற்கோனின் புத்தி
௫௯ ரர், கிதேலின் புத்திரர்,—செபதியாவின் புத்திரர்,
அத்தீலின் புத்திரர், பொகேரேத் செபாயிமின்
புத்திரர், ஆமோனின் புத்திரர்,
௬௰ இஸ்ரவேலைச் சேர்ந்தவர்களும், சாலோமோ
னுடைய வேலைக்காரரின் புத்திரரும் ஏகத்துக்கு
முந்நூற்றுத் தொண்ணூற்றிரண்டுபேராயிருந்தார்
கள்.
௬௧ கேரூப், அதோன், இம்மேரென்றவர்களும்
தெல்மேலாகிலும் தெல்அற்ஷாவிலுமிருந்து ஏறி
வந்தார்கள்; ஆனால் தாங்கள் இஸ்ரவேலரென்று
தங்கள் பிதாக்களின் வீட்டையும், தங்கள் பூரு
வோத்தரத்தையும் அறிவிக்கமாட்டாதிருந்தார்
௬௨ கள். — தெலாயாவின் புத்திரர், தொபியாவின்
புத்திரர், நெகோதாவின் புத்திரர், அறுநூற்று
நாற்பத்திரண்டுபேர்.
௬௩ ஆசாரியர்களில் ஒபாயாவின் புத்திரர், கோத்
சின் புத்திரர், கீலெயாதியனான பற்சிலாயின்
குமாரத்திகளில் ஒருத்தியை விவாகம்பண்ணி,
அவர்கள் வம்சநாமம் தரிக்கப்பட்ட பற்சிலா
௬௪ யின் புத்திரர்.—இவர்கள் தங்கள் வம்சத்து அட்
டவணைகளில் எழுதப்பட்டவர்களில் இவர்கள்
தங்கள் பேரைத் தேடிக் காணாதேபோய், அசுத்த
ரென்று ஆசாரிய ஊழியத்துக்குப் புறம்பானார்
௬௫ கள்.—வெளிச்சங்களும் உத்தமங்களுமுள்ள ஒரு
ஆசாரியன் எழும்பும்மட்டும், அவர்கள் பரிசுத்
தத்துக்குப் பரிசுத்தமானதிலே புசிக்கவேண்டா
மென்று திற்ஷாதா அவர்களுக்குச் சொன்னான்.
௬௬ இந்தச் சபையெல்லாம் ஏகத்துக்கு நாற்பத்தீரா
௬௭ யிரத்து முந்நூற்றறுபதுபேராயிருந்தது.—அவர்
களைத்தவிர ஏழாயிரத்து முந்நூற்று முப்பத்தே
ழுபேரான அவர்களுடைய வேலைக்காரரும்,
வேலைக்காரிகளும், இருநூற்று நாற்பத்தைந்து
பாட்டகரும், பாட்டகிகளும் அவர்களுக்கு இ
ருந்தார்கள்.—அவர்களுடைய குதிரைகள் எழு ௬௮
நூற்று முப்பத்தாறும், அவர்கள் கோவேறுகழு
தைகள் இருநூற்று நாற்பத்தைந்தும்,—ஒட்டகங் ௬௯
கள் நானூற்று முப்பத்தைந்தும், கழுதைகள் ஆறா
யிரத்து எழுநூற்று இருபதுமாயிருந்தன.
வம்சங்களின் தலைவரிலே சிலர் வேலைக் ௭௰
கென்று கொடுத்ததாவது: திற்ஷாதா ஆயிரம் தங்
கக்காசையும், ஐம்பது கலங்களையும், ஐந்நூற்று
முப்பது ஆசாரியவஸ்திரங்களையும் பொக்கிஷத்
துக்குக் கொடுத்தான்.—வம்சங்களின் தலைவரில் ௭௧
சிலர் வேலையின் பொக்கிஷத்துக்கு இருபதி
னாயிரம் தங்கக்காசையும், இரண்டாயிரத்து இரு
நூறு இராத்தல் வெள்ளியையும் கொடுத்தார்
கள்.—மற்றச் சனம் கொடுத்தது இருபதினாயிரம் ௭௨
தங்கக்காசும், இரண்டாயிரம் இராத்தல் வெள்ளி
யும், அறுபத்தேழு ஆசாரியவஸ்திரங்களும்.
ஆசாரியர்களும், இலேவியரும், வாசல் காப் ௭௩
பாரும், பாட்டகரும், சனத்தில் சிலரும், சனத்
தைச் சேர்ந்தவர்களும், இஸ்ரவேலனைத்தும் தங்
கள் பட்டணங்களில் குடியிறங்கி, ஏழாம்மாதம்
சேருகிறபோது இஸ்ரவேல் புத்திரர் தங்கள் பட்
டணங்களிலிருந்தார்கள்.

## ௮. அதிகாரம்.

௧. நியாயப்பிரமாணத்தின் புஸ்தகத்தைப் பயபத்தியாய் வாசிக்கக் கேட்டது. ௯. சனங்களை ஆறுதல் செய்தது. ௧௩. அவர்கள் போதனையடைய விரும்பினது. ௧௬. அவர்கள் கூடாரத்தின் பண்டிகையை ஆசரித்தது.

சனமெல்லாம் அப்போது தண்ணீர் வாசலுக்கு ௧
முன்னான வீதியிலே ஒருவனைப்போலக் கூடிக்
கொண்டு, கர்த்தர் இஸ்ரவேலுக்குக் கற்பித்த
மோசேயின் நியாயப்பிரமாணப் புஸ்தகத்தைக்
கொண்டுவரவேண்டுமென்று வேதபாரகனாகிய
எஸ்றாவுக்குச் சொன்னார்கள். — அப்படியே ௨
ஏழாம் மாதம் முதல் தேதியிலே ஆசாரியனாகிய
எஸ்றா நியாயப்பிரமாணத்தைப் புருஷரும் ஸ்தி
ரிகளும் கேட்கிறதற்கு, உணர்வுள்ள அனைவரு
மாகிய சபைக்குமுன்பாகக் கொண்டுவந்து, —
தண்ணீர் வாசலுக்குமுன்னான வீதிக்கு எதிரே ௩
யிருந்து அதிலே காலமேதுவக்கி மத்தியானம்
மட்டும் புருஷருக்கும், ஸ்திரிகளுக்கும், உணர்
வுள்ளவர்களுக்கும்முன்பாக வாசித்தான்; சகல
சனத்தின் செவிகளும், நியாயப்பிரமாணபுஸ்தக
த்தின்மேலே கவனித்திருந்தன.—வேதபாரகனா ௪
கிய எஸ்றா அதற்காகச் செய்யப்பட்ட ஒரு மர
மேடையின்மேலே நின்றான்; அவனண்டையில்
அவனுக்கு வலதுபக்கமாக மத்தித்தியாவும், செ
மாவும், அனாயாவும், உரீயாவும், இல்க்கியாவும்,
மாசெயாவும், அவனுக்கு இடதுபக்கமாகப் பெ
தாயாவும், மீஷ்வேலும், மல்கியாவும், அசூமும்
அஸ்பதானாவும், சகரியாவும், மெசுல்லாமும் நின்
றார்கள்.—எஸ்றா சகல சனத்தின் கண்களுக்கு ௫
முன்பாகப் புஸ்தகத்தைத் திறந்தான்; ஏனெனில்
அவன் சகல சனத்துக்கும் உயரமாய் நின்றான்;

அவன் அதைத் திறக்கிறபோது சனமெல்லாம்
௬ எழுந்து நின்றன.—அப்போது எஸ்றா மகத்துவ
முள்ள பராபரனாகிய கர்த்தரைத் தோத்திரித்தான்;
சனமெல்லாம் தங்கள் கைகளைக் குவித்து, அதற்கு
மறுமொழியாக, ஆமன் ஆமன் என்று சொல்லிக்
குனிந்து, முகம் குப்புறவிழுந்து கர்த்தரைப்
௭ பணிந்துகொண்டார்கள்.—ஏசுவா, பானி, செ
ரேபீயா, யாமின், ஆகூப், சபெதாயி, ஒதியா,
மாசேயா, கேலிதா, அசரீயா, யோசபாத், ஆனான்,
பெலாயாவென்றவர்களும், இலேவியரும், நியா
யப்பிரமாணத்தைச் சனம் உணரப்பண்ணினார்
கள்; சனம் தங்கள் நிலையிலே நின்றார்கள்.—
௮ அவர்கள் பராபரனுடைய நியாயப்பிரமாண
மென்ற புஸ்தகத்திலே தீர்க்கமாக வாசித்து, அரு
த்தம் சொல்லி, வாசிக்கப்படுகிறதை அவர்கள்
உணரப்பண்ணினார்கள்.
௯ திர்ஷாதா என்னப்பட்ட நெகெமீயாவும்,
வேதபாரகனாகிய எஸ்றாவென்ற ஆசாரியனும்,
சனத்தை உணரப்பண்ணுகிற இலேவியரும் எல்
லாச் சனத்துடனேயும், இந்தநாள் உங்கள் பரா
பரனாகிய கர்த்தருக்குப் பரிசுத்தமானது; நீங்கள்
துக்கித்துக்கொண்டு அழாதிருங்களென்றார்கள்;
ஏனென்றால் சனமெல்லாம் நியாயப்பிரமாணத்
தின் வார்த்தைகளைக் கேட்கிறபோது அழுதார்
௰ கள்.—அவன் அவர்களுடனே, நீங்கள் போய்க்
கொழுத்தவைகளைப் புசித்து, தித்திப்பானவைக
ளைக் குடித்து, தங்களுக்காகச் சேகரம்பண்ணா
தவர்களுக்குப் பங்குகளை அனுப்புங்கள்; ஏனெ
னில் இந்தநாள் நம்முடைய ஆண்டவருக்குப்
பரிசுத்தமானது; மனம்நொந்துகொண்டு இராதே
யுங்கள்; ஏனென்றால் கர்த்தருக்குள் மகிழ்ச்சியா
யிருக்குதலே உங்களுடைய பெலனென்றான்.—
௰௧ இலேவியரும் சனத்தையெல்லாம் அமர்த்தி, அ
ழாதிருங்கள், ஏனெனில் இந்தநாள் பரிசுத்தமா
னது; மனம்நொந்திராதேயுங்கள் என்றார்கள்.—
௰௨ அப்போது சனமெல்லாம் புசித்துக் குடிக்கவும்,
பங்குகளை அனுப்பவும், பெரிய சந்தோஷத்தை
நடப்பிக்கவும் போனார்கள்; ஏனெனில் தங்க
ளுக்கு அறியப்பண்ணின வார்த்தைகளை உணர்
ந்திருந்தார்கள்.
௰௩ மறுநாளிலே சகல சன வம்சங்களின் தலைவ
ரும், ஆசாரியர்களும், இலேவியரும், நியாயப்பி
ரமாணத்தின் வார்த்தைகளை உணர்ந்துகொள்ள,
வேதபாரகனாகிய எஸ்றாவண்டையிலே கூடி
௰௪ வந்தார்கள்.—அப்போது நியாயப்பிரமாணத்தி
லே இஸ்ரவேல் புத்திரர் ஏழாம்மாதத்தின் பண்
டிகையிலே கூடாரங்களிலே குடியிருக்கவேண்
டுமென்று கர்த்தர் மோசேயைக்கொண்டு கற்பி
த்த செய்தி எழுதியிருக்கிறதென்று கண்டுபிடித்
௰௫ தார்கள்.—ஆகையால் எழுதியிருக்கிறபடி கூடா
ரங்களைப் போடும்படிக்கு, நீங்கள் மலைகளுக்
குப் புறப்பட்டு, ஒலிவக் கிளைகளையும், எண்
ணெய் விருட்சங்களின் கிளைகளையும், மிருது
வான செடிகளின் கிளைகளையும், பேரீச்சுமட்
டைகளையும், அடர்ந்த மரக்கிளைகளையும் கொண்
டுவாருங்களென்று தங்களுடைய எல்லாப் பட்
டணங்களிலும், எருசலேமிலும் கூறிச் சத்தமி
டுவித்தார்கள்.
அப்படியே சனம் வெளியே போய்க்கொண் ௰௬
டுவந்து, அவரவர் தங்கள் வீடுகள்மேலும், தங்கள்
முற்றங்களிலும், பராபரனுடைய வீட்டுப்பிரகா
ரங்களிலும், தண்ணீர்வாசல் வீதியிலும் எப்பிரா
யீம்வாசல் வீதியிலும், தங்களுக்குக் கூடாரங்க
ளைப் போட்டார்கள்.-இந்தப்பிரகாரமாகச் சிறை ௰௭
யிருப்பிலிருந்து திரும்பிவந்தவர்களின் சபை
யெல்லாம் கூடாரங்களைப் போட்டு, கூடாரங்
களில் குடியிருந்தார்கள்; இப்படியே நூனின்
குமாரனாகிய யோசுவாவின் நாள்கள் துவக்கி
அந்தநாள்மட்டும் இஸ்ரவேல் புத்திரர் செய்யாதி
ருந்தபடியினாலே மகா பெரிய சந்தோஷமுண்
டாயிருந்தது.
முதலாம் நாள்துவக்கிக் கடைசிநாள்மட்டும், ௰௮
தினம்தினம் பராபரனுடைய நியாயப்பிரமாண
புஸ்தகத்திலே வாசிக்கப்பட்டது; ஏழுநாளாய்ப்
பண்டிகையை ஆசரித்தார்கள்; எட்டாம் நாளோ
வெனில், முறைமையின்படியே சபைகூடுகிற
நாளாயிருந்தது.

## ௯. அதிகாரம்.

௧. சனங்கள் தங்கள் பாவத்தை உணர்ந்து வணக்கமாய் உபவாசித்தது. ௪. இலேவியர் பராபரனுடைய நன்மையையும், சனங்களின் துன்மார்க்கத்தையும் பிரசித்தம்பண்ணினது.

அந்த மாதம் இருபத்துநாலாம் தேதியிலோ ௧
வென்றால், இஸ்ரவேல் புத்திரர் உபவாசம்பண்
ணி, இரட்டுடுத்தித் தங்கள்மேல் புழுதியைப்
போட்டுக்கொண்டவர்களாய்க் கூடினார்கள்.—
இஸ்ரவேல் வித்தார் மறுசாதியாரையெல்லாம் ௨
விட்டுப்பிரிந்துவந்து நின்று, தங்கள் பாவங்களை
யும், தங்கள் பிதாக்களின் அக்கிரமங்களையும் அ
றிக்கையிட்டார்கள்.—அவர்கள் எழுந்திருந்து, ௩
தங்கள் நிலையில் நின்றார்கள்; அப்போது ஒரு
சாமம்மட்டும் அவர்களுடைய பராபரனாகிய
கர்த்தரின் நியாயப்பிரமாணப் புஸ்தகத்தில் வாசி
க்கப்பட்டது; பின் ஒரு சாமம்மட்டும் அவர்கள்
பாவஅறிக்கைபண்ணி, தங்கள் பராபரனாகிய
கர்த்தரைப் பணிந்துகொண்டார்கள். — ஏசுவா, ௪
பானி, கத்மீயேல், செப்பனீயா, புன்னி, செ
ரேபீயா, பானி, கெனானியென்றவர்கள் இலே
வியருடைய படிகளின்மேல் நின்று, தங்கள்
பராபரனாகிய கர்த்தரை நோக்கி மகா சத்தமாய்க்
கூப்பிட்டார்கள்.
பிற்பாடு இலேவியரான ஏசுவா, கத்மீயேல், ௫
பானி, ஆசாப்னீயா, செரேபியா, ஒதியா, செப்
னீயா, பெத்தகியா என்றவர்கள் நீங்கள் எழுந்
திருந்து, அநாதியாய் என்றென்றைக்குமிருக்கிற
உங்கள் பராபரனாகிய கர்த்தரைத் தோத்திரியுங்க
ளென்று உரைத்துச் சொன்னதாவது: எந்தத்
தோத்திரிப்புக்கும், துதிப்புக்கும், உயரமான உம்
முடைய மகிமையுள்ள நாமம் தோத்திரிக்கப்ப
டக்கடவது.—தேவரீர் ஒருவரே கர்த்தரானவர்; ௬
தேவரீர் பரமண்டலங்களையும் பரமண்டலங்க

ளின் பரமண்டலங்களையும், அவைகளுடைய
எல்லாச் சேனையையும், பூமியையும், அதிலுள்ள
தெல்லாவற்றையும், சமுத்திரங்களையும், அவை
களிலுள்ளவை எல்லாவற்றையும் உண்டாக்கி
னீர்; அவைகளையெல்லாம் தேவரீர் உயிர்ப்பிக்
கிறீர்; பரமண்டலங்களின் சேனைகள் உம்மைப்
பணிந்துகொள்ளுகின்றன.
௭ தேவரீர் ஆபிராமைத் தெரிந்துகொண்டு, அ
வனை ஊர் என்கிற கல்தேயரின் பட்டணத்திலி
ருந்து புறப்படப்பண்ணி, அவனுக்கு ஆபிரகா
௮ மென்று பேரிட்ட பராபரனாகிய கர்த்தர்.—அ
வன் இருதயத்தைத் தேவரீர் உமக்குமுன்பாக
உண்மையுள்ளதாகக் கண்டுபிடித்து, கானானியர்
ஏத்தியர், எமோரியர், பெரீசியர், எபூசியர், கிர்
காசியருடைய தேசத்தை அவன் வித்துக்குக்
கொடுக்கும்படிக்கு, அவனோடு உடம்படிக்கை
பண்ணி,உம்முடைய வார்த்தைகளை நிருவாகமு
ம்பண்ணினீர்; ஏனெனில் தேவரீர் நீதியுள்ளவர்.
௯ எகிப்திலே எங்கள் பிதாக்கள் அநுபவித்த சிறு
மையை நீர் கண்டு, நாணல்கடலண்டையில்
௰ அவர்கள் கூப்பிடுதலைக் கேட்டீர்.— பார்வோ
னிடத்திலும், அவனுடைய எல்லா ஊழியக்கா
ரரிடத்திலும், அவன் தேசத்தின் சகல சனத்தி
னிடத்திலும், அடையாளங்களையும் அற்புதங்க
ளையும் செய்தீர்; ஏனெனில் அவர்களை அகந்தை
யாக நடத்தினார்களென்கிறதை அறிந்திருந்தீர்;
இப்படியே இந்நாள்வரைக்கும் இருக்கிறபடி
௰௧ உமக்குக் கீர்த்தியை உண்டாக்கினீர்.—தேவரீர்
அவர்களுக்குமுன்பாகச் சமுத்திரத்தைக் கிழித்
ததினால் நடுக்கடலைக் கால்நனையாமல் கடந்
தார்கள்; ஆனால் வலுவான தண்ணீர்களிலே கல்
லைப்போடுகிறதுபோல, அவர்களைத் தொடருகி
௰௨ றவர்களை ஆழங்களிலே போட்டீர்.—அவர்கள்
நடக்கவேண்டிய வழியை அவர்களுக்கு வெ
ளிச்சமாக்கப் பகலிலே மேகத்தூணினாலும், இர
விலே அக்கினித்தூணினாலும், அவர்களை வழிந
௰௩ டத்தினீர். — தேவரீர் சீனாய்பர்வதத்திலிறங்கி,
வானத்திலிருந்து அவர்களோடே பேசி, அவர்க
ளுக்குச் செம்மையான நீதிநியாயங்களையும்
நல்ல கட்டளைகளும் கற்பனைகளுமாகிய உண்
௰௪ மையான பிரமாணங்களையும் கொடுத்தீர்.—உமது
பரிசுத்த ஓய்வுநாளை அவர்களுக்குத் தெரியப்
படுத்தி, உம்முடைய தாசனாகிய மோசேயைக்
கொண்டு, அவர்களுக்குக் கற்பனைகளையும், கட்
டளைகளையும், நியாயப்பிரமாணத்தையும், கற்
௰௫ பித்தீர்.—அவர்கள் பசியில் அவர்களுக்கு வானத்
திலிருந்து அப்பம்கொடுத்து, அவர்கள் தாகத்தில்
அவர்களுக்குக் கன்மலையிலிருந்து தண்ணீர் புற
ப்படப்பண்ணி, தேவரீர் அவர்களுக்குக் கொடு
க்க உம்முடைய கையை ஏறெடுத்த தேசத்தைச்
சுதந்தரித்துக்கொள்ளப் பிரவேசியுங்களென்று
அவர்களுக்குச் சொன்னீர்.
௰௬ ஆனால் எங்கள் பிதாக்களாகிய அவர்களும்
அகந்தைபண்ணி, தங்கள் பிடரியைக் கடினப்ப
டுத்தி, உம்முடைய கற்பனைகளுக்குச் செவி
கொடாதேபோனார்கள். — அவர்கள் செவிகொ ௰௭
டுக்க மனதில்லாமலும் தேவரீர் அவர்களிடத்
திலே செய்த உம்முடைய அதிசயங்களை நினை
யாமலும் போய், தங்கள் பிடரியைக் கடினப்ப
டுத்தி, தங்கள் அடிமைத்தனத்துக்குத் திரும்பும்
படிக்குத் தங்கள் கலகத்திலே ஒரு தலைவனை
வைத்தார்கள்; ஆகிலும் வெகுவாய் மன்னிக்
கிறவரும், இரக்கமும், மனஉருக்கமும், நீடிய
சாந்தமும், மகா கிருபையுமுள்ளவருமான பரா
பரனாகிய தேவரீர் அவைகளைக் கைவிட்டதில்
லை.—அவர்கள் தங்களுக்கு வார்ப்பிக்கப்பட்ட ௰௮
ஒரு கன்றுக்குட்டியை உண்டாக்கி, இது உன்
னை எகிப்திலிருந்து ஏறிவரப்பண்ணின உன்னு
டைய தேவனென்று சொல்லி, கோபம் வருவிக்
கும் பெரிய அக்கிரமங்களைப் பண்ணியிருந்தா
லும்,—தேவரீர் உம்முடைய மிகுந்த மன உருக் ௰௯
கத்தின்படியே, அவர்களை வனாந்தரத்திலே கை
விட்டதில்லை; அவர்களை வழிநடத்தப் பகலி
லே மேகத்தூணும், அவர்களுக்கு வெளிச்சத்
தையும் அவர்கள் நடக்கவேண்டிய வழியையும்
காட்ட இரவிலே அக்கினித்தூணும், அவர்களை
விட்டு விலகினதில்லை.—அவர்களுக்குப் புத்தி ௨௰
யைப் படிப்பிக்க உம்முடைய நல்ல ஆவியைக்
கட்டளையிட்டீர்; உம்முடைய மன்னாவை
அவர்கள் வாய்க்கு விலக்கிவிடாமல், அவர்கள்
தாகத்தில் அவர்களுக்குத் தண்ணீரைக் கொடுத்து
வந்தீர்.—இப்படி நாற்பது வருஷமாக வனாந்தரத் ௨௧
தில் அவர்களுக்கு ஒன்றும் குறைபடாதபடிக்கு,
அவர்களைப் பராமரித்தீர்; அவர்கள் வஸ்திரங்கள்
பழமையாய்ப் போனதுமில்லை; அவர்கள் கால்
கள் வீங்கிப்போனதுமில்லை. — அவர்களுக்கு ௨௨
இராச்சியங்களையும் சனசதளங்களையும் ஒப்புக்
கொடுத்து,அவைகளை எல்லை எல்லையாக அவர்க
ளுக்குப் பங்கிட்டீர்; எஸ்போனின் இராசாவா
கிய சீகோனின் தேசத்தையும், பாசானின் இரா
சாவாகிய ஓகின் தேசத்தையும் கட்டிக்கொண்
டார்கள்.—அவர்கள் பிள்ளைகளை வானத்தின் நட் ௨௩
சத்திரங்களைப்போலப் பெருகப்பண்ணி, சுதந்
தரித்துக்கொள்ளப்போக, தேவரீர் அவர்கள்
பிதாக்களுக்குச் சொன்ன தேசத்திலே அவர்களை
அழைத்துவந்தீர்.—அப்படியே பிள்ளைகள் உள்ப் ௨௪
பிரவேசித்து, தேசத்தைச் சுதந்தரித்துக்கொண்
டார்கள்;தேவரீர் அவர்களுக்குமுன்பாகத்தேசத்
தின் குடிகளாகிய கானானியரைத் தாழ்த்தி, அவர்
களையும் அவர்கள் இராசாக்களையும், தேசத்தின்
சனசதளங்களையும், தங்களுக்குச் சரிப்போனாற்
போலே செய்ய, அவர்கள் கைக்கு ஒப்புக்கொ
டுத்தீர்.—அவர்கள் அரணான பட்டணங்களையும் ௨௫
புஷ்டியான பூமியையும் பிடித்து, சகலவித உ
டைமைகள் நிறைந்த வீடுகளையும், வெட்டப்ப
ட்ட துரவுகளையும், ஏராளமான திராட்சத்தோட்
டங்களையும், ஒலீவத்தோப்புகளையும், கனிகொ
டுக்கிற மரங்களையும் சுதந்தரித்துக்கொண்டு புசித்
துத் திருப்தியாகிக் கொழுத்து, உம்முடைய பெ
ரிய தயையினாலே செல்வமாய் வாழ்ந்தார்கள்.

௨௬ ஆனால் அவர்கள் கீழ்ப்படியாதவர்களாகி,
உமக்கு விரோதமாகக் கலகம்பண்ணி, உம்மு
டைய நியாயப்பிரமாணத்தைத் தங்கள் முதுகுக்
குப் பின்னாக எறிந்து, தங்களை உம்மண்டைக்
குத் திருப்பும்படிக்கு, அவர்களைத் திடச்சாட்சி
யாய்க் கடிந்துகொண்ட உம்முடைய தீர்க்கதரி
சிகளைக் கொன்றுபோட்டுக் கோபம் வருவிக்
கிற பெரிய அக்கிரமங்களைச் செய்தார்கள். —
௨௭ ஆகையால் அவர்களை நெருக்குகிற அவர்கள் சத்
துருக்களின் கையில் அவர்களை ஒப்புக்கொடுத்
துவிட்டீர்; அவர்கள் நெருக்கம் அநுபவிக்கிற
காலத்தில் அவர்கள் உம்மைநோக்கிக் கூப்பிடு
கிறபோதோவெனில், தேவரீர் பரமண்டலங்க
ளிலிருந்து கேட்டு, உம்முடைய மிகுந்த இரக்
கத்தினாலே அவர்களை அவர்கள் சத்துருக்களின்
கைக்கு நீங்கலாக்கிவிடுகிற இரட்சகர்களை அ
௨௮ வர்களுக்குக் கொடுத்தீர்.—அவர்களுக்கு இளைப்
பாறுதல் உண்டாகும்போதோவென்றால், உமக்
குமுன்பாகப் பொல்லாப்புச்செய்யத் திரும்பி
னார்கள்; ஆகையால் அவர்கள் சத்துருக்கள் அவர்
களை ஆளும்படிக்கு, அவர்களை இவர்கள் கை
யிலே விட்டீர்; அவர்கள் மனம்திரும்பி, உம்மை
நோக்கிக் கூப்பிடும்போதோவென்றால், தேவரீர்
பரமண்டலங்களிலிருந்து கேட்டு, அவர்களை
உம்முடைய இரக்கங்களின்படியே அநேகம்
௨௯ விசை நீங்கலாக்கிவிட்டீர்.—அவர்களை உம்மு
டைய நியாயப்பிரமாணத்துக்குத் திருப்ப அவர்
களைத் திடச்சாட்சியாய்க் கடிந்துகொண்டீர்;
ஆனால் அவர்கள் அகந்தையாகி, உம்முடைய
கற்பனைகளுக்குச் செவிகொடாமல் கீழ்ப்படிந்
து நடக்கிற மனுஷன் செய்து பிழைக்கிற அந்த
உம்முடைய நீதிநியாயங்களுக்கு விரோதமாகப்
பாவம்செய்து, தங்கள் தோளை முண்டுத்தனமாய்
விலக்கிச் செவிகொடாமல் தங்கள் பிடரியைக்
௩௰ கடினப்படுத்திக்கொண்டார்கள். — தேவரீர் அ
நேக வருஷமாக அவர்கள்மேலே பொறுமை
யாயிருந்து, உம்முடைய ஆவியினாலே பேசின
உம்முடைய தீர்க்கதரிசிகளைக்கொண்டு அவர்
களைத் திடச்சாட்சியாய்க் கடிந்துகொண்டா
லும், அவர்கள் கேள்விகொடாதபடியினாலே,
அவர்களைத் தேசங்களுடைய சனசதளங்களின்
௩௧ கையிலே ஒப்புக்கொடுத்தீர்.—ஆகிலும் உம்மு
டைய மிகுந்த இரக்கங்களின்படியே, அவர்களை
நிர்மூலமாக்காமலும் அவர்களைக் கைவிடாமலும்
இருந்தீர்; ஏனெனில் தேவரீர் கிருபையும் இரக்
கமுமுள்ள பராபரன்.
௩௨ இப்போதும் உடம்படிக்கையையும் கிருபை
பையையும் காக்கிற வல்லமையும் பயங்கரமு
முள்ள மகா தெய்வமாகிய எங்கள் பராபரனே,
அசூருடைய இராசாக்களின் நாள்கள் முதல்கொ
ண்டு இந்நாள்வரைக்கும், எங்களையும், எங்கள்
இராசாக்களையும், எங்கள் பிரபுக்களையும், எங்
கள் ஆசாரியர்களையும், எங்கள் தீர்க்கதரிசிகளை
யும், எங்கள் பிதாக்களையும், உம்முடைய சன
மனைத்தையும், பிடித்த சகல வருத்தமும் உமக்கு
முன்பாகக் கொஞ்சமாய் எண்ணப்படாதிருப்ப
தாக.—தேவரீரோவென்றால் எங்கள்மேல் வந்த ௩௩
வை எல்லாவற்றிலும் நீதியுள்ளவர்; ஏனெனில்
உண்மையாய் நடப்பித்தீர்; நாங்களோவெனில்
ஆகாமியம்பண்ணினோம்.—எங்கள் இராசாக்க ௩௪
ளும், எங்கள் பிரபுக்களும், எங்கள் ஆசாரியர்
களும், எங்கள் பிதாக்களும், உம்முடைய நியா
யப்பிரமாணத்தின்படி செய்யாமலும், உம்மு
டைய கற்பனைகளையும் தேவரீர் அவர்களைக்
கடிந்துகொண்ட உம்முடைய சாட்சிகளையும்
கவனிக்காமலும் போனார்கள். — அவர்கள் தங் ௩௫
கள் இராச்சியத்திலும், தேவரீர் அவர்களுக்குக்
கொடுத்த உம்முடைய தயையின் ஏராளத்திலும்
தேவரீர் அவர்களுக்குமுன்பாகத் திறந்துவைத்
து, விசாலமும் புஷ்டியுமான தேசத்திலும் உ
மக்கு ஊழியம்செய்யாமலும், தங்கள் பொல்
லாத கருமங்களைவிட்டுத் திரும்பாமலும் போ
னார்கள்.—இதோ இன்றையத்தினம் நாங்கள் அ ௩௬
டிமைகள்; இதோ உண்டாகிய பலனையும், நன்
மையையும் சாப்பிடத் தேவரீர் எங்கள் பிதாக்க
ளுக்குக் கொடுத்த இந்தத் தேசத்தில்தானே நாங்
கள் அடிமைகள்.–அதின் வரத்து எங்கள் பாவங் ௩௭
களின் நிமித்தம் தேவரீர் எங்கள்மேல் வைத்த
இராசாக்களுக்குத் திரளாகப்போகிறது; அவர்
கள் தங்களுக்குச் சரிப்போனபடியே, எங்கள்
சரீரங்களையும் எங்கள் மிருகசீவன்களையும் ஆ
ளுகிறார்கள்; நாங்கள் மகா இக்கட்டில் அகப்
பட்டிருக்கிறோம்.
இப்படி எல்லாம் இருக்கையில், நாங்கள் நிச ௩௮
மான உடம்படிக்கையைப்பண்ணி எழுதுகி
றோம்; எங்கள் பிரபுக்களும், எங்கள் இலேவிய
ரும், எங்கள் ஆசாரியர்களும் அதற்கு முத்திரை
போடுகிறார்களென்றார்கள்.

## ௰. அதிகாரம்.

௧. உடம்படிக்கைக்கு முத்திரைபோட்டவர்களின் பெயர். ௨௯. உடம்படிக்கையின் விசேஷங்கள்.

முத்திரை போடப்பட்டவர்களாவது: அக்லி ௧
யாவின் குமாரனாகிய திர்ஷாதாவென்ற நெகெ
மீயாவும், சிதேகியாவும், — செராயா, அசரீ ௨
யா, எரேமியா, — பஸ்கூர், அமரியா, மல்கி ௩
யா,—அத்தூஸ், செப்னியா, மல்லூக்,—ஆறீம், ௪, ௫
மெரேமோத், ஒபதீயா, — தானியேல், கினே ௬
தோன், பாருக், — மெசுல்லாம், அபியா, மீயா ௭
மீன், — மாசியா, பில்காயி, செமாயாவென்ற ௮
ஆசாரியர்களும்,
இலேவியராகிய அசனியாவின் குமாரன் ஏசு ௯
வா, எனாகாதின் குமாரரில் ஒருவனாகிய பின்
னூயி, கத்மீயேல் என்கிறவர்களும்,—அவர்கள் ௰
சகோதரராகிய செப்னீயா, ஒதியா, கெலீதா,
பெலாயா, ஆனான், — மீகா, ரேகோப், அசபீ ௰௧
யா,—சக்கூர், செரேபீயா, செப்னீயா,—ஒதி ௰௨, ௰௩
யா, பானி, பெனினு என்றவர்களும்,
சனத்தின் தலைவராகிய பாரோனி, பாகாத், ௰௪
மோவாப், ஏலாம், சத்தூ, பாஸ்,—புன்னி, அஸ் ௰௫

௰௬ காத், பெபாயி,—அதோனியா, பிக்வாயி, ஆ
௰௭,௰௮ தின்,—ஆதேர், இஸ்கியா, ஆசூர்,—ஓதியா, ஆ
௰௯ சும், பெத்சாயி,—ஆரீப், ஆனதோத், நெபாயி,—
௨௰,௨௧ மக்பீயாஸ், மெசுல்லாம், ஏசீர்,—மெஷெசா
௨௨ பெயேல், சாதோக், யதுவா,—பெல்தீயா, ஆனான்,
௨௩,௨௪ ஆனாயா,—ஓசெயா, அனனீயா, ஆசூப்,—அல்
௨௫ லோகேஸ், பில்கா, சோபேக்,—ரேகூம், அஷ
௨௬ ப்னா, மாசெயா,—அகியா, கானான், ஆனான்,—
௨௭ மல்லூக், ஆரீம், பானா என்றவர்களும்தானே.
௨௮ சனத்தில் மற்றவர்களாகிய ஆசாரியர்களும், இலேவியரும், வாசல்காப்பாரும், பாட்டகரும், இஸ்ரவேலைச் சேர்ந்தவர்களும், தேசங்களின் சனசதளங்களைவிட்டுப் பிரிந்துபோய் விலகிப் பராபரனுடைய நியாயப்பிரமாணத்துக்குத் திரும்பின அனைவரும், அவர்கள் பெண்சாதிகளும், அவர்கள் குமாரரும், அவர்கள் குமாரத்திகளுமாகிய அறிவும் உணர்வும் உள்ளவர்களெல்
௨௯ லாரும்,—தங்களுக்குப் பெரியவர்களாகிய தங்கள் சகோதரரோடே உறுதியாய்க் கூடிக்கொண்டு, பராபரனுடைய தாசனாகிய மோசேயைக் கொண்டு கொடுக்கப்பட்ட பராபரனுடைய நியாயப்பிரமாணத்திலே நடந்துகொள்ளுகிறதற்கும், எங்கள் ஆண்டவராகிய கர்த்தரின் கற்பனைகளையும் அவர் நீதிநியாயங்களையும் அவருடைய கட்டளைகளையும் எல்லாம் கைக்கொண்டு, அ
௩௰ வைகளின்படி செய்கிறதற்கும்,—நாங்கள் எங்கள் குமாரத்திகளைத் தேசத்தின் சனசதளங்களுக்குக் கொடாமலும், எங்கள் குமாரருக்கு அவர்கள் குமாரத்திகளைக் கொள்ளாமலும் இருக்கிற
௩௧ தற்கும்,—தேசத்தின் சனசதளங்கள் ஓய்வுநாளிலே சரக்குகளையும், எந்தவிதத் தானிய தவசத்தையும், விற்கிறதற்குக் கொண்டுவந்தால், நாங்கள் அதை ஓய்வுநாளிலும் பரிசுத்தநாளிலும் அவர்கள் கையில் வாங்காதிருக்கிறதற்கும், நாங்கள் ஏழாம் வருஷத்தை விடுதலை வருஷமாக்கிச் சகல கடனின் பாரத்தையும் நீங்கலாக்கிவிடுகிறதற்குமான சாபமிடுகிற சத்தியப்பிரமாணத்திற்கு உள்ப்பட்டார்கள்.
௩௨ இதல்லாமல் நாங்கள் எங்கள் பராபரனுடைய வீட்டின் ஆராதனையாகிற சமுகத்தப்பங்களுக்கும், நித்தியகாணிக்கைக்கும், ஓய்வுநாள்களிலும் மாதப்பிறப்புகளிலும் செலுத்தும் நித்தியசர்வாங்கதகனங்களுக்கும், பண்டிகைகளுக்கும், பரிசுத்தகாரியங்களுக்கும், இஸ்ரவேலுக்காகப் பாவ
௩௩ நிவிர்த்தி உண்டாக்கும் பலிகளுக்கும்,—எங்கள் பராபரனுடைய வீட்டின் சகல வேலைக்கும், வருஷம்தோறும் நாங்கள் சேக்கலில் மூன்றத்தொரு பங்கைக் கொடுப்போமென்று எங்கள் மேலே கற்பனைகளைச் சுமத்திக்கொண்டோம்.
௩௪ நியாயப்பிரமாணத்தில் எழுதியிருக்கிறபடியே, எங்கள் பராபரனாகிய கர்த்தருடைய பலிபீடத்தின்மேல் எரிகிறதற்காகக் குறிக்கப்பட்ட காலங்களில் வருஷத்துக்கு வருஷம் எங்கள் பிதாக்களுடைய வீட்டு வம்சங்களின்படியே, எங்கள் பராபரனுடைய வீட்டுக்குக் கொண்டு வரவேண்டிய விறகு காணிக்கைக்காகவும், நாங்கள் ஆசாரியர்களுக்கும், இலேவியருக்கும், சன
த்துக்கும் சீட்டுகளைப் போட்டோம்.—நாங்கள் ௩௫
வருஷம்தோறும் எங்கள் பராபரனுடைய வீட்டுக்கு எங்கள் சீமையின் முதல்பலனையும், சகல வித மரக்கனிகளிலெல்லாம் முதல் கனிகளையும்
கொண்டுவரவும்.—நியாயப்பிரமாணத்தில் எழு ௩௬
தியிருக்கிறபடியே, எங்கள் குமாரரில் முதல் பேறுகளையும், எங்கள் மிருகசீவன்களின் முதல் ஈற்றுகளையும், எங்கள் ஆடுமாடுகளின் முதல் ஈற்றுகளையும், எங்கள் பராபரனுடைய வீட்டுக்கும் எங்கள் பராபரனுடைய வீட்டிலே ஊழியம் செய்கிற ஆசாரியர்களண்டையிலும் கொண்டு
வரவும், — நாங்கள் எங்கள் பிசைந்தமாவில் ௩௭
முந்தினதையும், எங்கள் படைப்புகளையும், சகல மரங்களின் முந்தின பலனாகிய திராட்சப்பழ இரசத்தையும், எண்ணெயையும், எங்கள் பராபரனுடைய வீட்டின் அறைகளில் வைக்க, ஆசாரியர்களண்டைக்கும் எங்கள் நிலப்பயிர்களில் பத்திலொன்று இலேவியரண்டைக்கும் கொண்டுவரவும், இலேவியராகிய இவர்கள் எங்கள் வெள்ளாண்மையின் பட்டணங்களிலெல்லாம் பத்தி
லொன்றைச் சேர்க்கவும், — இலேவியர் பத்தி ௩௮
லொன்று சேர்க்கும்போது, ஆரோனின் குமாரனாகிய ஒரு ஆசாரியன் இலேவியரோடேகூட இருக்கவும், பத்தில் ஒன்றாகிய அதிலே இலேவியர் பத்தில் ஒருபங்கை எங்கள் பராபரனுடைய வீட்டிலுள்ள பொக்கிஷவீட்டு அறைகளில் கொண்டுவரவும் திட்டம்பண்ணிக்கொண்
டோம்.—ஏனென்றால் பரிசுத்தஸ்தலத்தின் தட்டு ௩௯
முட்டுகளும், ஊழியம்செய்கிற ஆசாரியர்களும், வாசல்காப்பாரும், பாட்டகருமிருக்கிற அந்த அறைகளிலே இஸ்ரவேல் புத்திரரும் இலேவி புத்திரரும் தானியம் திராட்சப்பழ இரசம் எண்ணெய் என்றவைகளின் படைப்புகளைக் கொண்டுவரவேண்டியது; இப்படியே நாங்கள் எங்கள் பராபரனுடைய வீட்டைப் பராமரியாமல் விடுவதில்லையென்று திட்டம்பண்ணிக்கொண்டோம்.

## ௰௧. அதிகாரம்.

௧. பிரபுக்களும், சனங்களில் பத்தில் ஒருபங்கு பிரிக்கப்பட்டவர்களும், வலியவந்தவர்களும் எருசலேமில் வாசம்செய்தது. ௩. அவர்களுடைய பெயர்களின் வரிசை. ௨௰. மற்றச்சனங்கள் இதரமான பட்டணங்களில் வாசம்செய்தது.

சனத்தின் பிரபுக்கள் எருசலேமிலே குடியிருந் ௧
தார்கள்; மற்றச் சனமோவென்றால், தங்களுக்குள்ளே பத்துப்பேரில் ஒருவனை எருசலேமென்ற பரிசுத்த பட்டணத்திலும் ஒன்பதுபேரை மற்றப் பட்டணங்களிலும் குடியிருக்கப்பண்ணி,
சீட்டுகளைப் போட்டுக்கொண்டார்கள்.—ஆனால் ௨
எருசலேமிலே குடியிருக்க, மனப்பூருவமான மனுஷருக்கெல்லாம் சனம் ஆசீர்வாதத்தை வாழ்த்திற்று.
யூதாவின் பட்டணங்களின் இஸ்ரவேலும், ௩
ஆசாரியர்களும், இலேவியரும், இஸ்ரவேலைச் சேர்ந்தவர்களும், சாலோமோனுடைய வேலைக்

காரரின் புத்திரரும், அவரவர் தங்கள் காணிபூமி
யிலும் தங்கள் பட்டணங்களிலும் குடியிருந்தார்
கள்; ஆனால் எருசலேமிலே குடியிருந்த சீமை
யின் தலைவர் யாரென்றால்,
௪ எருசலேமிலே யூதபுத்திரரில் சிலரும், பென்
யமீன் புத்திரரில் சிலரும், குடியிருந்தார்கள்;யூத
புத்திரரிலே பேரேசின் புத்திரருக்குள் ஒருவ
னான மகலாலெயேலின் குமாரனாகிய செபதியா
வின் குமாரன் அமரியாவுக்குப் பிறந்த சகரியா
வுக்குக் குமாரனான உசியாவின் மகன் அத்தா
௫ யாவும்,—சீலோனியின் குமாரன் சகரியாவுக்குக்
குமாரனாகிய யோயாரீபுக்குக் குமாரனான அதா
யாவுக்குப் பிறந்த அசாயாவின் குமாரன் கொல்
லோசே பெற்ற பாரூகின் மகன் மாசெயாவும்
௬ தானே.—எருசலேமிலே குடியிருக்கிற பேரே
சின் புத்திரரெல்லாம் நானூற்று அறுபத்தெட்டுப்
பராக்கிரமசாலிகளாயிருந்தார்கள்.
௭ பென்யமீன் புத்திரரில் யாரென்றால், சல்லூ
என்றவன்; இவன் மெசுல்லாமுக்கும், இவன்
யோவேதுக்கும், இவன் பெதாயாவுக்கும், இ
வன் கொலாயாவுக்கும் இவன் மாசெயாவுக்கும்
இவன் இதியேலுக்கும், இவன் எசாயாவுக்கும்,
௮ குமாரனானவன்.—அவனுக்குப்பிறகு காபாயி,
சல்லாயிமுதலானவர்கள் தொள்ளாயிரத்து இரு
௯ பத்தெட்டுப்பேர்.—அவர்கள்மேல் விசாரிப்புக்
காரனான சிக்கிரியின் குமாரன் யோவேலும்,பட்
டணத்தின்மேல் இரண்டாவது விசாரிப்புக்கா
ரனான செனுபாவின் குமாரன் யூதாவும்தானே.
௰ ஆசாரியர்களில் யோயரிபின் குமாரன் எதாயா,
௰௧ யாகின் என்றவர்களும்,—அகிதூவின் குமாரன்
மெராயோத்துக்குப் பிறந்த சாதோகின் குமாரன்
மெசுல்லாம் பெற்ற இல்க்கியாவின் மகன் செரா
யாவென்ற பராபரனுடைய வீட்டின் தலைவ
௰௨ னும்,—அவர் வீட்டிலே பணிவிடையைச் செய்
கிற அவர்கள் சகோதரராகிய எண்ணூற்று இரு
பத்திரண்டுபேரும், மல்கியாவின் குமாரன் பஸ்
கூருக்கு மகனான சகரியாவின் குமாரன் அம்சிக்
குப் பிறந்த பெலலியாவின் குமாரன் எரோகா
௰௩ முக்குப் பிறந்த அதாயாவும், — பிதா வம்சங்
களின் தலைவராகிய அவனுடைய சகோதரர் இ
ருநூற்று நாற்பத்திரண்டுபேரும், இம்மேரின்
குமாரன் மெசில்லேமோத்தின் மகனாகிய ஆக்சா
யக்குப் பிறந்த அசாரெயேலின் மகன் அமாசெ
௰௪ சாயும்,—அவர்களுடைய சகோதரராகிய பராக்
கிரமசாலிகள் இருநூற்று இருபத்தெட்டுப்பேரும்
தானே; இவர்கள்மேலே அகேதோலிமின் குமா
ரன் சப்தியேல் விசாரிப்புக்காரனாயிருந்தான்.
௰௫ இலேவியரிலே பூனியின் குமாரன் அசபியா
வின் மகனாகிய அஸ்ரீக்காமின் குமாரனான அ
௰௬ சூபின் மகன் செமாயாவும்,—பராபரனுடைய
வீட்டின் வெளிவேலையை விசாரிக்கிற இலே
வியரின் தலைவரிலே சபெதாயும், யோசபாத்
௰௭ தும்,-ஆசாபின் குமாரன் சப்தியின் குமாரனாகிய
மீகாபின் மகன் மத்தனியாவென்கிற செபத்தில்
துதிசெய்தலைத் துவக்குகிற தலைவனும் இரண்
டாவதான பக்பூக்கியாவென்ற அவன் சகோதர
ரில் ஒருவனும், எதுத்தூனின் குமாரன் காலா
வின் மகனாகிய சமூவாவின் குமாரன் அப்தாவும்
தானே.—பரிசுத்தபட்டணத்திலிருந்த இலேவி ௰௮
யரெல்லாம் இருநூற்று எண்பத்துநாலுபேர்.
வாசல்காப்பார் அக்கூபும், தல்மோனும், வா ௰௯
சல்களில் காவல்பண்ணுகிற அவர்கள் சகோதர
ரும் நூற்றெழுபத்து இரண்டுபேராயிருந்தார்கள்.
மற்ற இஸ்ரவேலும், ஆசாரியரும், இலேவி ௨௰
யரும், யூதாவின் சகல பட்டணங்களிலும், அவ
ரவர் தங்கள் சுதந்தரத்திலிருந்தார்கள்.—இஸ்ர ௨௧
வேலைச் சேர்ந்தவர்கள் ஒப்பேலிலே குடியிருந்
தார்கள்; அவர்கள்மேல் சீகாவும், கிஸ்பாவும்,
விசாரிப்புக்காரராய் இருந்தார்கள்.
எருசலேமிலிருக்கிற இலேவியரின் விசாரிப் ௨௨
புக்காரன் மீகாவின் குமாரன் மத்தனியாவின் மக
னாகிய அசபியாவுக்குப் பிறந்த பானியின் குமா
ரன் ஊசி என்கிற பராபரனுடைய வீட்டின் வே
லைக்கு எதிராக நிற்கிற பாட்டகராகிய ஆசாபின்
குமாரரில் ஒருவன். — ஏனென்றால் பாட்டக ௨௩
ராகிய அவர்களுக்காக அன்றாடகப் படியாகிய
ஒரு கட்டளை இராசாவினாலே கற்பிக்கப்பட்டி
ருந்தது.
யூதாவின் குமாரனாகிய சேராகின் புத்திரரில் ௨௪
மெசேசாபேயேலின் குமாரன் பெத்தகியா சனத்
தின் காரியத்துக்கெல்லாம் இராசாவினால் வைக்
கப்பட்டிருந்தான்.
தங்கள் நாட்டுப்புறங்களான கிராமங்களில் ௨௫
இருக்கிறவர்களுக்குள்ளே யூதாவின் புத்திரரி
லே சிலர் கீரியத்அர்பாவிலும், அதின் கிராமங்க
ளிலும், தீபோனிலும், அதின் கிராமங்களிலும்,
எகாப்செயேலிலும், அதின் கிராமங்களிலும்,—
எசுவாவிலும், மோலாதாகிலும், பெத்பேலேதி ௨௬
லும்,—ஆத்சார் சூகாவிலும், பெர்சேபாவிலும், ௨௭
அதின் கிராமங்களிலும்,–சிக்லாகிலும், மேகோ ௨௮
னாகிலும், அதின் கிராமங்களிலும்,–ஏனரிம்மோ ௨௯
னிலும், சாரேயாகிலும், யர்மூதிலும்,–சானோவா ௩௰
கிலும், அதுல்லாமிலும் அவைகளின் கிராமங்க
ளிலும், லாகீசிலும், அதின் நாட்டுப்புறங்களி
லும், அசெக்காவிலும் அதின் கிராமங்களிலும்,
பெர்சேபாவைத்துவக்கி இன்னோமின் பள்ளத்
தாக்குமட்டும் குடியிறங்கினார்கள்.
கேபாவின் ஊரராயிருந்த பென்யமீன் புத் ௩௧
திரர், மிக்மாஸ், ஆயாபெதேல் ஊர்களிலும், அ
தின் கிராமங்களிலும்,—ஆனதோத், நோப், அன ௩௨
னியா,—ஆத்சோர், ராமா, கித்தாயிம்,—ஆதீத், ௩௩, ௩௪
செபோயிம், நெபலாத்,—லோத், ஓனோ என்கிற ௩௫
ஊர்களிலும், சிற்பாசாரிகளின் பள்ளத்தாக்கி
லும் குடியிருந்தார்கள்.
இலேவியரிலே சில வகுப்புகள் யூதாவிலும் ௩௬
சில பென்யமீனிலுமிருந்தன.

## ௰௨. அதிகாரம்.

௧. ஆசாரியர்கள். ௮. செருபாபேலோடு வந்த இலேவியர். ௰. ஆசாரியர்களின் வம்சவரிசை. ௨௨. முக்கியமான இலேவியர்கள். ௨௭. அலங்கத்தை வணக்கத்தோடு பிரதிஷ்டைபண்ணினது. ௪௪. ஆசாரியர்களுக்கும், இலேவியருக்கும், நியமிக்கப்பட்ட தேவாலயத்தின் ஊழியம்.

௧ செயல்தியேலின் குமாரனாகிய சொரோபாபே
லோடும் எசுவாவோடும் ஏறிவந்த ஆசாரியரும்
இலேவியரும் யாரென்றால், செராயா, எரேமியா,
௨, ௩ எஸ்றா,—அம்ரீயா, மல்லூக், அதூஸ்,—செக்னி
௪ யா, ரெகூம், மெரேமோத்,—ஈதோ, கினெதோயி,
௫, ௬ அபியா,—மீயாமின், மாதியா, பில்கா,—செமா
௭ யா, யோயரீப், எதாயா, — சல்லூ, ஆமோக்,
இல்க்கியா, எதாயா என்றவர்கள்; இவர்கள் எசு
வாவின் நாள்களில், ஆசாரியர்களுக்கும், தங்கள்
சகோதரருக்கும் தலைவராயிருந்தார்கள்.
௮ இலேவியர் யாரென்றால், எசுவா, பின்னூயி,
கத்மியேல், செரேபியா, யூதா, மத்தனியாவென்
றவர்கள்; இவனும் இவன் சகோதரரும் துதிசெய்
௯ தலை விசாரித்தார்கள். — பக்புக்கியாவும் உன்
னியும் என்ற அவர்கள் சகோதரர் அவர்களுக்கெ
திரே காவல்காத்திருந்தார்கள்.
௰ எசுவா யோய்கீமைப் பெற்றான்; யோய்கீம்
எலியாசிபைப் பெற்றான்; எலியாசிப் யோய்தா
௰௧ வைப் பெற்றான்.—யோய்தா யோனத்தானைப்
பெற்றான்; யோனத்தான் யதுபாவைப் பெற்
றான்.
௰௨ யோய்கீமின் நாள்களிலே பிதா வம்சங்களின்
தலையான ஆசாரியர்கள் யாரென்றால், செராயா
வின் சந்ததியில் மெராயா, எரேமியாவின் சந்த
௰௩ தியில் அனனியா,—எஸ்றாவின் சந்ததியில் மெ
சுல்லாம், அம்ரியாவின் சந்ததியில் யோக்னான்,—
௰௪ மெலிக்குவின் சந்ததியில் யோனத்தான், செப்
௰௫ னியாவின் சந்ததியில் யோசேப், — ஆரீமின்
சந்ததியில் அத்னா, மெரேயோதின் சந்ததியில்
௰௬ எல்காயி,—ஈதோவின் சந்ததியில் சகரியா, கின்
௰௭ னேத்தோனின் சந்ததியில் மெசுல்லாம்,—அபி
யாவின் சந்ததியிலே சிக்றி, மிஞ்ஞாமீன் மொ
வதியா என்றவர்களின் சந்ததியிலே பில்தாயி,—
௰௮ பில்காவின் சந்ததியிலே சம்மூவா, செமாயா
௰௯ வின் சந்ததியிலே யோனத்தான்,—யோய்ரீபின்
சந்ததியிலே மத்தனாயி, எதாயாவின் சந்ததியிலே
௨௰ ஊசி,—சல்லாயின் சந்ததியிலே கல்லாயி, ஆ
௨௧ மோக்கின் சந்ததியிலே ஏபேர்,—இல்க்கியாவின்
சந்ததியிலே அசபீயா, எதாயாவின் சந்ததியிலே
நத்தானெயேல் என்றவர்கள்.
௨௨ எலியாசிபின் நாள்களில் யோய்தா, யோக்னா
ன், யதுவா என்ற இலேவியர் பிதாவம்சங்களின்
தலைவராக எழுதப்பட்டார்கள்; பெர்சியனாகிய
தரியுவின் இராச்சியபாரம்மட்டும் இருந்த ஆசாரி
௨௩ யர்களும் அப்படித்தானே.—இலேவி புத்திரரா
கிய பிதா வம்சங்களின் தலைவர் எலியாசிபின்
குமாரனாகிய யோக்னானின் நாள்கள்மட்டும் நா
௨௪ ளாகமப் புஸ்தகத்தில் எழுதப்பட்டார்கள்.—இ
லேவியரின் தலைவராகிய அசபீயாவும், செரேபி
யாவும், கத்மீயேலின் குமாரன் எசுவாவும், அவர்
களுக்கு எதிரே நிற்கிற அவர்கள் சகோதரரும்
பராபரனுடைய மனுஷனாகிய தாவீதினுடைய
கற்பனையின்படியே துதிக்கவும், தோத்திரிக்க
வும், ஒருவர்க்கொருவர் எதிராக முறைமுறை
௨௫ யாயிருந்தார்கள்.—மத்தனீயா, பக்புக்கியா, ஒப
தீயா, மெசுல்லாம், தல்மோன், அக்கூபென்ற
வர்கள் வாசல்களில் இருக்கிற பொக்கிஷ அறை
களைக் காவல்காக்கிறவர்களாயிருந்தார்கள். —
யோத்சதாக்கின் குமாரனாகிய எசுவாவின் குமா ௨௬
ரன் யோய்கீமின் நாள்களிலும், துரையாகிய நெ
கெமீயாவும், வேதபாரகனாகிய எஸ்றாவென்ற
ஆசாரியனும், இருக்கிற நாள்களிலும் அவர்களி
ருந்தார்கள். .
எருசலேமின் அலங்கத்தைப் பிரதிஷ்டை ௨௭
பண்ணுகையில், தோத்திரிப்புகளினாலும், கைத்
தாளங்கள், தம்புருகள், சுரமண்டலங்களின் கீத
வாத்தியத்தாலும், பிரதிஷ்டையை மகிழ்ச்சியோ
டே செய்யும்படிக்கு எல்லா இடங்களிலும் இ
ருக்கிற இலேவியரை எருசலேமுக்கு வரப்பண்
ணத் தேடினார்கள்.—அப்படியே பாட்டகரின் ௨௮
புத்திரர் எருசலேமின் சுற்றுப்புறங்களான சம
பூமியிலும், நெத்தோபாத்தியரின் கிராமங்களி
லும்,—பேத்தில்காலிலும், கேபா, அஸ்மாவேத் ௨௯
ஊர்களின் நாட்டுப்புறங்களிலும் இருந்துவந்து
கூடினார்கள்; அதேதெனில் பாட்டகர் எருசலே
மைச் சுற்றிலும் தங்களுக்குக் கிராமங்களைக் கட்
டியிருந்தார்கள். — ஆசாரியர்களும், இலேவிய ௩௰
ரும், சுத்தம்பண்ணிக்கொண்டு சனத்தையும்,
பட்டணவாசல்களையும், அலங்கத்தையும் சுத்தம்
பண்ணினார்கள்.
அப்போது நான் யூதாவின் பிரபுக்களை அலங் ௩௧
கத்தின்மேல் ஏறப்பண்ணி, துதிசெய்து நடந்து
போக இரண்டு பெரிய கூட்டங்களை நிறுத்தி
னேன்; அவைகளில் ஒன்று அலங்கத்தின்மேல்
வலதுபுறமாகக் குப்பைமேட்டு வாசலுக்குப்
போயிற்று.—இவர்கள் பிறகாலே ஒசாயாவும், ௩௨
யூதாவின் பிரபுக்களில் பாதிப்பேரும்,—அசரி ௩௩
யா, எஸ்றா, மெசுல்லாம்,—யூதா, பென்யமீன், ௩௪
செமாயா, எரேமியா என்றவர்களும்,—பூரிகை ௩௫
களைப் பிடிக்கிற ஆசாரியரின் புத்திரரில் ஆசாப்
பின் குமாரன் சக்கூரின் மகனாகிய மிகாவுக்குக்
குமாரனான மத்தனீயாவின் மகன் செமாயாவுக்
குப் பிறந்த யோனத்தானின் குமாரன் சகரியா
வும்,—பராபரனுடைய மனுஷனாகிய தாவீதின் ௩௬
கீதவாத்தியங்களை வாசிக்கிற அவன் சகோதர
ரான செமாயா, அசாரேயேல், மிலாலாயி, கிலா
லாயி, மகாயி, நெத்தானேயேல், யூதா, அனானி என்
றவர்களும் போனார்கள்; வேதபாரகனாகிய எஸ்றா
இவர்களுக்குமுன்னாக நடந்தான். — அங்கேயி ௩௭
ருந்து அவர்கள் தங்களுக்கு எதிரான கிணற்று
வாசலுக்கு வந்தபோது, அலங்கத்திலும் உயர
மான தாவீது பட்டணத்தின் படிகளால் ஏறி,
தாவீது வீட்டின்மேலாகக் கிழக்கேயிருக்கிற
தண்ணீர் வாசல்மட்டுக்கும் போனார்கள்.
துதிசெய்கிற இரண்டாம் கூட்டம் எதிரேயி ௩௮
ருக்கிற வழியாய் நடந்துபோயிற்று; அதின் பிற
காலே நான் வந்தேன்; சனத்தின் இந்தப் பா
திப்பேர் அலங்கத்தின்மேல் சூளைகளின் கொம்
மையைக் கடந்து, அகல மதில்மட்டும் நெடுகப்
போய்,—எப்பிராயீம் வாசலையும், பழையவாச ௩௯

லேயும் மீன்வாசலேயும், அனனெயேலின் கொம்
மையையும், மேயாவென்ற கொம்மையையும்,
கடந்து, ஆட்டு வாசல்மட்டும் புறப்பட்டுக் கா
வல்வீட்டுவாசலிலே நின்றார்கள்.
௪௰ அதற்குப்பிற்பாடு துதிசெய்கிற இரண்டுகூட்
டங்களும் பராபரனுடைய வீட்டுக்கு வந்து நின்
றன; நானும் என்னோடேகூட இருக்கிற தலைவ
௪௧ ரின் பாதிப்பேரும்.—பூரிகைகளைப் பிடிக்கிற
எலியாக்கீம், மாசேயா, மிஞ்ஞாமீன், மிகாயா,
எலியோனாயி, சகரியா, அனனியாவென்ற ஆ
௪௨ சாரியர்களும்,—மாசேயா, செமாயா, எலேயா
சார், ஊசி, யோக்னான், மல்கீயா, எலாம், ஏசேர்
என்றவர்களும்தானே; பாட்டகரும், அவர்கள்
விசாரிப்புக்காரனாகிய இஷாகீயாவும் சத்தமாய்ப்
௪௩ பாடினார்கள்.—அந்நாளிலே பெரிய பலிகளைச்
செலுத்தி, பராபரன் தங்களுக்கு மகா சந்தோ
ஷத்தை உண்டாக்கினதினாலே, மகிழ்ச்சியாயி
ருந்தார்கள்; ஸ்திரிகளும் பிள்ளைகளும்கூடக்
களிகூர்ந்தார்கள்; எருசலேமின் மகிழ்ச்சி தூரத்
திலே கேட்கப்பட்டது.
௪௪ அன்றையத்தினம் பொக்கிஷங்களையும் படை
ப்புகளையும், முதல்கனிகளையும், பத்தில் ஒன்று
ஒனவைகளையும் வைக்கும் அறைகளின்மேலே
சில மனுஷர் ஆசாரியர்களுக்கும் இலேவியர்க
ளுக்கும் நியாப்பிரமாணத்தின்படியே, வரவே
ண்டிய பட்டணங்களுடைய நிலங்களின் பங்
குகளை அவைகளில் சேர்க்கும்படிக்கு, விசா
ரிப்புக்காரராக வைக்கப்பட்டார்கள்; ஏனென்
றால் ஊழியம்செய்து நிற்கிற ஆசாரியர்கள்மே
லும், இலேவியர்மேலும், யூதமனிதர் சந்தோஷ
௪௫ மாயிருந்தார்கள்.—ஏனெனில் அவர்கள் தங்கள்
பராபரனுடைய காவலையும், சுத்தம்பண்ணுத
லின் காவலையும் காத்தார்கள்; பாட்டகரும்,
வாசல்காப்பாரும் தாவீதும் அவன் குமாரனாகிய
சாலோமோனும் கற்பித்தபடியே நின்றார்கள்.—
௪௬ ஏனென்றால் தாவீதும் ஆசாப்பும் இருந்த பூருவ
நாள்களில் பாட்டகரின் தலைவரும் வைக்கப்
பட்டு, பராபரனுக்குத் துதியும் தோத்திரங்களும்
செலுத்துகிற கீதங்கள் திட்டம்பண்ணப்பட்டி
௪௭ ருந்தன.—ஆகையால் செருபாபேலின் நாள்க
ளிலும், நெகெமீயாவின் நாள்களிலும், இஸ்ரவே
லெல்லாம் பாட்டகருக்கும் வாசல்காப்பாருக்
கும் அன்றாடகத் திட்டமாகிய பங்குகளைக்
கொடுத்து, இலேவியருக்கென்று பரிசுத்தம்பண்
ணினார்கள்; இலேவியரோவெனில் ஆரோனின்
புத்திரருக்கென்று அவர்கள் பங்கைப் பரிசுத்தம்
பண்ணிக்கொடுத்தார்கள்.

## ௰௩. அதிகாரம்.

௧. நியாயப்பிரமாணத்தின் புஸ்தகத்தை வாசித்தபிறகு கலந்த சனம் பிரிக்கப்பட்டது. ௪. நெகெமீயா வந்து, அறைவீட்டைச் சுத்திசெய்தது. ௰. அவன் பராபரனுடைய வீட்டின் ஊழியத்தைச் சீர்திருத்தினது. ௰௫. சனங்கள் ஓய்வுநாளை மீறினது. ௨௩. அந்நிய விவாகம்.

௧ அந்நாளில் சனம் கேட்க, மோசேயின் புஸ்த
கத்தில் வாசிக்கப்படுகிறபோது, அதிலே அம்
மோனியரும், மோவாபியரும் இஸ்ரவேல் புத்தி
ரருக்கு அப்பமும் தண்ணீரும் கொடுக்க எதிர்
கொண்டுவராமல், அவர்களைச் சபிக்க அவர்க
ளுக்கு விரோதமாகப் பிலேயாமைக் கூலிபொ
ருந்திக்கொண்டபடியினாலே,—அவர்கள் என் ௨
றைக்கும் அந்தச் சாபத்தை ஆசீர்வாதமாகத்
திருப்பின எங்கள் பராபரனுடைய சபைக்கு
உள்படவேண்டாமென்று எழுதியிருக்கின்றது
கண்டுபிடிக்கப்பட்டது.—ஆகையால் அவர்கள் ௩
அந்த நியாயப்பிரமாணத்தைக் கேட்டபிற்பாடு,
கலந்துகொண்ட சனத்தையெல்லாம் இஸ்ரவே
லை விட்டுப் பிரித்துவிட்டார்கள்.
இதற்குமுன்னே எங்கள் பராபரனுடைய ௪
வீட்டின் அறைகளை விசாரிக்க வைக்கப்பட்ட
ஆசாரியனாகிய எலியாசிப் தொபியாவோடே
சம்பந்தம் கலந்தவனாயிருந்து,— முதல் காணிக் ௫
கைகளும், குங்குலிகமும், தட்டுமுட்டுகளும்,
இலேவியருக்கும் பாட்டகருக்கும் வாசல்காப்
பாருக்கும் கட்டளைபண்ணப்பட்ட தானியம்
திராட்சப்பழஇரசம் எண்ணெய் என்றவைக
ளிலே பத்திலொன்றானதும், ஆசாரியரைச் சே
ருகிற படைப்பான காணிக்கைகளும், வைக்
கப்பட்டிருந்த இடத்தில் ஒரு பெரிய அறையை
அவனுக்கு உண்டுபண்ணியிருந்தான்.—ஆனால் ௬
இப்படியெல்லாம் நடக்கையில் நான் எருசலே
மில் இருந்ததில்லை; ஏனெனில் பாபேலின் இரா
சாவாகிய அற்தசஷ்டாவின் முப்பத்திரண்டாம்
வருஷத்திலே நான் இராசாவண்டைக்குப்
போய், சிலநாளுக்குப் பிற்பாடு திரும்ப இராசா
வினிடத்தில் உத்தாரம் வாங்கி,—எருசலேமுக்கு ௭
வந்தேன்; அப்போது எலியாசிப் தொபியாவுக்குப்
பராபரனுடைய வீட்டுப்பிரகாரங்களில் ஒரு
அறையை உண்டுபண்ணினதினாலே, செய்த
பொல்லாப்பை அறிந்துகொண்டேன். — அதி ௮
னால் நான் மிகவும் மனமடிவாகி, தொபியாவின்
வீட்டுத் தட்டுமுட்டுகளையெல்லாம் அந்த அறை
யிலிருந்து வெளியே எறிந்துவிட்டேன்.—பிறகு ௯
நான் அறைவீடுகளைச் சுத்திகரிக்கச் சொல்லி,
பராபரனுடைய வீட்டுத் தட்டுமுட்டுகளையும்
காணிக்கைகளையும் குங்குலிகத்தையும் அங்கே
திரும்ப வைப்பித்தேன்.
பின்னையும் இலேவியருக்கு அவர்கள் பங் ௰
குகள் கொடுக்கப்பட்டதில்லையென்கிறதையும்,
பணிவிடை செய்கிற இலேவியரும் பாட்ட
கரும் அவரவர் தங்கள் நாட்டுக்கு ஓடிப்போ
னார்கள் என்கிறதையும் நான் அறிந்தேன்—அப் ௰௧
போது நான் தலைமையான பேர்களோடே வழக்
காடி, பராபரனுடைய வீடு கைவிடப்பட்டுப்
போவானேனென்று சொல்லி, அவர்களைச் சேர்
த்து, அவர்களுடைய ஸ்தலத்திலே அவர்களை
வைத்தேன். — அப்போது யூதரெல்லாம் தானி ௰௨
யம் திராட்சப்பழ இரசம் எண்ணெய் என்றவைக
ளில் பத்தில் ஒரு பங்கைப் பொக்கிஷ அறைக
ளில் கொண்டுவந்தார்கள். — அப்போது நான் ௰௩
ஆசாரியனாகிய செலேமியாவையும், இலேவிய
ரில் வேதபாரகனாகிய சாதோக்கையும், பெதா

யாவையும், இவர்களுக்குக் கைத்துணையாக மத்
தனியாவின் குமாரன் சக்கூரின் மகனாகிய ஆனா
னையும் பொக்கிஷ அறைகளின்மேல் விசாரிப்
புக்காரராக வைத்தேன்; ஏனெனில் அவர்கள்
உண்மையுள்ளவர்களென்று எண்ணப்பட்டார்
கள்; ஆகையால் தங்கள் சகோதரருக்குப் பங்கி
டுகிற தொழில் அவர்களுக்கு ஒப்புவிக்கப்பட்
டது.
௰௪ என் பராபரனே, இதற்காகத் தேவரீர் என்னை
நினைத்து, நான் என் பராபரனுடைய வீட்டுக்கும்
அதின் காவல்களுக்குமாகச் செய்த என்னுடைய
உபகாரங்களைக் கொலைக்காதிரும்.
௰௫ அந்த நாள்களில் நான் யூதாவிலே ஓய்வுநாளில்
ஆலைகளை மிதிக்கிற சிலரையும், கழுதைகள்மே
லேற்றின தானியப்பொதிகளைக் கொண்டுவரு
கிற சிலரையும், ஓய்வுநாளிலே எருசலேமுக்குக்
கொண்டுவரப்படுகிற திராட்சப்பழஇரசம், திரா
ட்சப்பழங்கள், அத்திப்பழங்கள் முதலானவைக
ளின் பலபல சுமைகளையும் கண்டு, அவர்கள்தின்
பண்டங்களை விற்கிறநாளிலே திடச்சாட்சியாய்
௰௬ அவர்களைக் கடிந்துகொண்டேன்.—மீன்களையும்
சகலவித சரக்கையும் கொண்டுவந்து, ஓய்வுநா
ளிலே யூதபுத்திரருக்கும் எருசலேமிலும் விற்கிற
சில தீரியரும் உள்ளே குடியிருந்தார்கள். —
௰௭ ஆகையால் நான் யூதாவின் பெரியவர்களோடே
வழக்காடி, நீங்கள் ஓய்வுநாளைப் பரிசுத்தக் கொ
லைச்சலாக்குகிற இந்தப் பொல்லாத செய்கை
௰௮ யென்ன?—உங்கள் பிதாக்கள் இப்படிச் செய்
ததினால், எங்கள் பராபரன் எங்கள்மேலும் இந்
தப் பட்டணத்தின்மேலும் இந்தத் தீங்கையெல்
லாம் வரப்பண்ணினதில்லையோ? நீங்களோவெ
ன்றால் ஓய்வுநாளைப் பரிசுத்தக் கொலைச்சலாக்
குகிறதினால், இஸ்ரவேலின்மேலிருக்கிற உக்கி
ரத்தை வர்த்திக்கப்பண்ணுகிறீர்களென்று அவர்
களுக்குச் சொன்னேன்.
௰௯ ஆகையால் ஓய்வுநாளுக்குமுன்னே எருச
லேமின் பட்டணவாசல்களுக்கு நிழல்படுகிற
போது, நான் கதவுகளைப் பூட்டவும், ஓய்வுநாள்
கழியும்மட்டும் அவைகளைத் திறவாதிருக்கவும்,
வேண்டுமென்று சொல்லி ஓய்வுநாளிலே ஒரு
சுமையும் உள்ளே வராதபடிக்கு வாசலண்டை
யிலே என் வேலைக்காரரிலே சிலரை நிறுத்தி
௨௰ னேன். — அப்போது வர்த்தகரும், சகலவித
சரக்கு விற்கிறவர்களும், இரண்டொருதரம் எரு
சலேமுக்குப் புறம்பே இராத்தங்கினார்கள். —
௨௧ அப்போது நான் அவர்களைத் திடச்சாட்சியாய்க்
கடிந்துகொண்டு, நீங்கள் அலங்கத்தண்டையி
லே இராத்தங்குகிறதென்ன? நீங்கள் இன்னம்
ஒருதரம் அப்படிச் செய்தால், உங்கள்மேலே
கைகளைப் போடுவேனென்று அவர்களோடே
சொன்னேன்; அந்தக் காலந்துவக்கி அவர்கள்
ஓய்வுநாளில் வராதிருந்தார்கள். — ஓய்வுநாளைப் ௨௨
பரிசுத்தமாக்கும்படிக்கு, உங்களைச் சுத்தம்பண்
ணிக்கொண்டு வாசல்களைக் காக்க வாருங்க
ளென்று இலேவியருக்கும் சொன்னேன்; என்
பராபரனே, இதையும் தேவரீர் எனக்கு நன்
மையாக நினைத்து, உம்முடைய மிகுந்த கிரு
பையின் நிமித்தமாய் எனக்கு இரங்கும்.
அஸ்தோத், அம்மோன், மோவாப் சாதிகளான ௨௩
ஸ்திரிகளைச் சேர்த்துக்கொண்ட சில யூதரையும்
அந்த நாள்களில் கண்டேன்.—அவர்கள் பிள்ளை ௨௪
கள் பாதி அஸ்தோத்பாஷையைப் பேசினார்கள்;
இவர்கள் அந்தந்தச் சனச்சாதியின் பாஷையைத்
தவிர, யூதபாஷையைப் பேச அறியாதிருந்தார்
கள்.—அவர்களோடே, நான் வழக்காடி, அவர் ௨௫
களைச் சபித்து, அவர்களிலே சில மனுஷரை
அடித்து, மயிரைப் பிய்த்து, நீங்கள் உங்கள் குமா
ரத்திகளை அவர்கள் குமாரருக்குக் கொடாமலும்,
அவர்கள் குமாரத்திகளில் ஒருவரையும் உங்கள்
குமாரருக்காகவும் உங்களுக்கென்கிலும் கொள்
ளாமலும் இருக்கவேண்டுமென்று அவர்களைப்
பராபரன்மேலே ஆணையிடப்பண்ணி, நான்
சொன்னதாவது:—இஸ்ரவேலின் இராசாவாகிய ௨௬
சாலோமோன் இதினாலே பாவஞ்செய்தானல்ல
வோ; அவனைப்போலொத்த இராசா அநேகம்
சாதிகளுக்குள்ளே உண்டாயிருந்ததில்லை; தன்
பராபரனாலே சிநேகிக்கப்பட்டவனாயிருந்தான்;
பராபரன் அவனை இஸ்ரவேலனைத்தின்மேலும்
இராசாவாக வைத்தார்; அப்படிக்கொத்தவனை
யும் மறுசாதியான ஸ்திரிகள் பாவஞ்செய்யப்பண்
ணினார்களே. — நீங்கள் மறுசாதியான ஸ்திரிக ௨௭
ளைச் சேர்த்துக்கொள்ளுகிறதினால், நம்முடைய
பராபரனுக்குத் துரோகிகளாய்ப் போய், இந்தப்
பெரிய பொல்லாப்பையெல்லாம் செய்யும்ப
டிக்கு, உங்களுக்குச் செவிகொடுப்போமோ
வென்றேன்.
யோய்தாவின் புத்திரரிலே பிரதான ஆசாரிய ௨௮
னாகிய எலியாசிபின் குமாரன் ஒருவனியனை
சனபல்லாத்துக்கு மருமகனுமானான்; ஆகை
யால் அவனை என்னைவிட்டுத் துரத்தினேன்.—
என் பராபரனே, அவர்கள் ஆசாரிய ஊழியத் ௨௯
தையும், ஆசாரிய ஊழியத்துக்கும் இலேவியருக்
குமிருக்கிற உடம்படிக்கையையும், தீட்டுப்ப
டுத்தினார்களென்று அவர்களை நினையும்.
இப்படியே நான் மறுசாதியாரையெல்லாம் ௩௰
நீக்கி, அவர்களைச் சுத்திகரித்து, ஆசாரியர்களை
யும், இலேவியரையும் அவரவரை இவர்கள் வே
லையின் முறைகளில் நிறுத்தி,—குறிக்கப்பட்ட ௩௧
காலங்களிலே செலுத்தப்படவேண்டிய விறகு
களின் காணிக்கையையும், முதற்பலனையும்
திட்டம்பண்ணினேன்; என் பராபரனே, என்
னை நன்மைக்கென்று நினைத்தருளும்.

ESTHER.

# ஏஸ்தரென்றவளுடைய

## சரித்திரம்.

### க. அதிகாரம்.

க. அகாஸ்வேரு இராசா விருந்துசெய்தது. ௰. வஸ்தி அழைக்கப்பட்டபோது, வரமாட்டேனென்று தடுத்தது. ௰௬. அகாஸ்வேரு மெமுகானின் ஆலோசனையினால், எந்தப் புருஷனும் தன் வீட்டாரை ஆளக் கட்டளையிட்டது.

க சிந்துதேசந்துவக்கி எத்தியோப்பிய தேசம்மட்
டும் இருக்கிற நூற்றிருபத்தேழு சீமைகளை ஆண்
ட அகாஸ்வேருவின் நாள்களிலே சம்பவித்த
௨ தாவது: — இராசாவாகிய அகாஸ்வேரு சூசான்
கோட்டையிலிருக்கிற தன்னுடைய இராச்சிய
பாரத்தின் ஆசனத்தின்மேல் உளுக்காந்த அந்நா
௩ ளுக்குப்பிற்பாடு,—அவன் தன் இராச்சியபாரத்
தின் மூன்றும் வருஷத்திலே தன்னுடைய எல்
லாப் பிரபுக்களுக்கும் ஊழியக்காரருக்கும் விரு
ந்துபண்ணினான்; பெர்சியா மேதியா தேசங்க
ளின் பெலசாலிகளும், சீமைகளின் துரைகளும்,
பிரபுக்களும், அப்போது அவனுக்குமுன்பாக
௪ இருந்தார்கள்.—அவன் தன் இராச்சியபார மகி
மையின் ஐசுவரியத்தையும் தன்னுடைய மகத்
துவத்தின் சிங்காரமான முக்கியத்தையும் காண்
பிக்கும்படிக்கு, அநேகநாளாகிற நூற்றெண்ப
துநாளாக விருந்து கொடுத்தான்.
௫ அந்த நாள்கள் முடிந்தபோது, இராசா சூசான்
கோட்டையில் அகப்பட்ட பெரியோர்துவக்
கிச் சிறியோர்மட்டுமாகிய எல்லாச் சனத்துக்கும்
இராச அரமனையினுடைய தோட்டத்தின் முற்
றத்தில் ஏழுநாளாக விருந்து செய்வித்தான்.—
௬ அங்கே வெண்கல்லான தூண்களின்மேலுண்
டான வெள்ளி வளையங்களில் மெல்லியநூலும்
சிவப்புநூலுமான கயிறுகளால், வெள்ளையும்
பச்சையும் இளநீலமுமாகிற திரைகள் கட்டித்
தொங்கியிருந்தன; சிவப்பும், நீலமும், வெள்ளை
யும், கறுப்புமான கற்கள் பதித்திருக்கிற தளவ
ரிசையின்மேலே பொன்சரிகையும், வெள்ளிச்
சரிகையுமான மெத்தைகள் வைக்கப்பட்டன.—
௭ பொன்பாத்திரங்களாகிய வெவ்வேறுவிதமான
பாத்திரங்களிலே பானம்கொடுக்கப்பட்டது;
மேல்தரமான திராட்சப்பழஇரசம் இராசாவு
டைய ஆஸ்திக்குத்தக்கதாய்ப் பரிபூரணமாயிருந்
௮ தது.—ஒருவனையும்பலவந்தம்பண்ணவேண்டா
மென்ற கட்டளையின்படி குடிக்கப்பட்டது; ஏ
னெனில் அவரவருடைய மனதின்படியே செய்
யவேண்டுமென்றதாக இராசா தன் அரமனையின்
பெரிய மனுஷருக்கெல்லாம் கற்பித்திருந்தான்.—
இராசஸ்திரியாகிய வஸ்தியும் இராசாவாகிய ௯
அகாஸ்வேருவின் அரமனையிலே ஸ்திரிகளுக்கு
ஒரு விருந்து செய்வித்தாள்.

ஏழாம் நாளிலே இராசா திராட்சப்பழஇரசத் ௰
தினால் மனமகிழ்ச்சியாயிருக்கிறபோது, சனசத
ளங்களுக்கும் பிரபுக்களுக்கும் இராசஸ்திரியா
கிய வஸ்தியின் சவுந்தரியத்தைக் காண்பிக்கும்
படிக்கு, அவளை இராசகிரீடம் தரிக்கப்பட்டவ
ளாக இராசாவுக்குமுன்பாக அழைத்துவரவேண்
டுமென்று,—இராசாவாகிய அகாஸ்வேரு தனக் ௰௧
குமுன்பாகச் சேவிக்கிற மெகுமான், பிஸ்தா,
அற்போனா, பிகத்தா, அப்கத்தா, சேத்தார், கற்கா
சென்ற ஏழு பிரதானிகளுக்குக் கட்டளையிட்
டான்; ஏனென்றால் அவள் ரூபவதியாயிருந்
தாள்.—ஆனால் இராசா பிரதானிகளைக்கொண்டு ௰௨
சொல்லியனுப்பின வார்த்தைக்கு இராசஸ்திரி
யாகிய வஸ்தி வரமாட்டோமென்றாள்; அப்போ
து இராசா கடுங்கோபமடைந்து, தனக்குள்ளே
மூர்க்கம் மூண்டவனாகி,— இராசஸ்திரியாகிய ௰௩
வஸ்திஇராசாவாகிய அகாஸ்வேரு பிரதானிகளை
க்கொண்டு சொல்லியனுப்பின வார்த்தையின்ப
டியே செய்யாதேபோனதின்நிமித்தம், அவளுக்
கு நியாயப்பிரமாணத்தின்படி செய்யவேண்டி
யது என்னவென்று,—காலாகாலங்களை அறிந்த ௰௪
ஞானிகளை இராசா கேட்டான்; ஏனெனில் இந்
தப்பிரகாரமாக இராசாவின் காரியங்கள் நியாயப்
பிரமாணத்தையும், நீதியையும் அறிந்த எல்லாருக்
கும்முன்பாக வைக்கப்படும்.—அப்போது கற் ௰௫
ஷேனா, சேத்தார், அத்மாத்தா, தற்சீஸ், மேறேஸ்,
மற்சேனா, மெமுகான் என்கிற இராசாவின் சமு
கத்தைப் பார்க்கிறவர்களும், இராச்சியத்தின்
முதல்ஆசனங்களில்உளுக்காருகிறவர்களுமான
பெர்சியர் மேதியருடைய ஏழு பிரபுக்கள் அவ
னைச் சேர்ந்தவர்களாயிருந்தார்கள்.

அப்போது மெமுகான் இராசாவுக்கும் பிரபுக் ௰௬
களுக்கும்முன்பாகச் சொன்னதாவது: இராசஸ்
திரியாகிய வஸ்தி இராசாவுக்குமாத்திரமல்ல, இ
ராசாவாகிய அகாஸ்வேருவினுடைய சகலசீமை
களிலுமுள்ள எல்லாப் பிரபுக்களுக்கும் எல்லாச்
சனசதளங்களுக்கும் ஏராத அவநீதியைச் செய்
தாள்.—ஏனென்றால் இராசாவாகிய அகாஸ்வேரு ௰௭

இராசஸ்திரியாகிய வஸ்தியைத் தமக்குமுன்பாக அழைத்துவரச் சொன்னபோது, அவள் வரமாட்டோம் என்றாளென்கிற இராசஸ்திரியின் செய்தி எல்லா ஸ்திரிகளுக்கும் பிரசித்தமாவதினால், இவர்கள் தங்கள் புருஷனைத் தங்கள் பார்வைக்குக் கொஞ்ச எண்ணிக்கையாய் எண்ணுவார்கள்.—
௰௮ இன்றைக்குத்தானே பெர்சியா மேதியாவினுடைய பிரபுக்களின் ஸ்திரிகள் இராசஸ்திரியின் செய்தியைக் கேட்கும்போது, இராசாவின் பிரபுக்களுக்கெல்லாம் அப்படித்தான் சொல்லுவார்கள்; மிகுந்த அசட்டையும், கடுமையும்
௰௯ எழும்பும்.—இராசாவுக்குச் சம்மதியாயிருந்தால், வஸ்தி இனி இராசாவாகிய அகாஸ்வேருக்கு முன்பாக வரவேண்டாமென்றும், இராசா அவளுடைய இராசமேன்மையை அவளைப்பார்க்கிலும் நல்லவளான அவளுடைய கூட்டாளிக்குக் கொடுப்பாராகவென்றும், அவரால் ஒரு இராசகட்டளை பிறந்து, அது மீறப்படாதபடிக்கு, பெர்சியர் நியாயப்பிரமாணத்திலும் மேதியர் நியாயப்பிரமாணத்திலும் எழுதப்படக்கடவது.—
௨௰ இப்படி இராசா தீர்த்தகாரியம் விஸ்தாரமாயிருக்கிற அவருடைய இராச்சியமெங்கும் கேட்கப்படும்போது, பெரியோர்துவக்கிச் சிறியோர்மட்டுமுள்ள எல்லா ஸ்திரிகளும் தங்கள் புருஷனைக் கனம்பண்ணுவார்கள் என்றான்.
௨௧ இந்த வார்த்தை இராசாவுக்கும் பிரபுக்களுக்கும் நன்றாய்க் கண்டு, இராசா மெமுகானுடைய
௨௨ வார்த்தையின்படியே செய்து,—எந்தப் புருஷனும் தன் வீட்டிலே அதிகாரம்செய்கிறவனும் தன் சனசாதியின் பாஷையைப் பேசிக்கொண்டிருக்கவும் தகுமென்று இராசாவின் சீமைகளுக்கெல்லாம் சீமைசீமையினுடைய எழுத்திலும், சாதிசாதியின் பாஷையிலும் எழுதியிருக்கிற நிருபங்களை அனுப்பினான்.

## ௨. அதிகாரம்.

௧. அழகுள்ள கன்னிகைகளில் ஒருத்தியைத் தெரிந்துகொள்வதற்கான நியமம். ௫. எஸ்தரென்றவளை வளர்த்த மொற்தேகாயி. ௮. மற்றவர்களைப் பார்க்கிலும் எஸ்தர் ஏகேயிக்குப் பிரியமாயிருந்தது. ௰௨. கன்னிகைகள் அலங்கரித்துக்கொண்டு இராசனிடத்துக்குப் பிரவேசிக்கும் முறை. ௰௫. இராசன் எஸ்தரை நேசித்து இராசஸ்திரியாக்கினது. ௨௧. மொற்தேகாயி துரோகத்தை வெளிப்படுத்தினது நாளாகமப் புஸ்தகத்திலே எழுதப்பட்டிருக்கின்றது.

௧ இவைகள் சம்பவித்துத் தீர்ந்து, இராசாவாகிய அகாஸ்வேருவின் உக்கிரம் தணிந்தபிற்பாடு, அவன் வஸ்தியையும் அவள் செய்ததையும் அவள்மேல் தீர்மானிக்கப்பட்டதையும் நினைத்தான்.—
௨ அப்போது இராசாவைச் சேவிக்கிற அவனுடைய வேலைக்காரர் சொன்னதாவது: ரூபவதிகளாயிருக்கிற கன்னிப்பெண்கள் இராசாவுக்
௩ காகத் தேடப்படக்கடவர்கள்.—அதற்காக இராசா தம்முடைய இராச்சியத்தின் சீமைகளிலெல்லாம் விசாரிப்புக்காரனை வைப்பாராக; இவர்கள் ரூபவதிகளாயிருக்கிற சகல கன்னிப்பெண்களையும் கூட்டி, சூசான் கோட்டையிலிருக்கிற ஸ்திரிகளின் மடத்துக்கு அழைத்துவந்து, ஸ்திரிகளைக் காவல்பண்ணுகிற இராசாவின் பிரதானியாகிய ஏகேயின்வசத்திலே ஒப்புவிப்பார்களாக; இவர்களுக்கு இவர்கள் சோடிப்புக் கொடுக்கப்
படக்கடவது.—அப்போது இராசாவின் கண்க ௪
ளுக்குச் சம்மதமான குமரி வஸ்திக்குப்பதிலாக, இராசஸ்திரி ஆவாளாகவென்றார்கள்; இந்த வார்த்தை இராசாவுக்கு நன்றாய்க் கண்டு அப்படித்தான் செய்தான்.

அப்போது சூசான் கோட்டையிலே எமினிே ௫
யனாகிய கீசின் குமாரன் சீமேயினுடைய மகனாகிய யாயிரின் குமாரன் மொற்தேகாயி என்ற
பேருள்ள ஒரு யூதமனுஷனிருந்தான்.—இவன் ௬
பாபேலின் இராசாவாகிய நேபுகாத்நேச்சார்யூதாவின் இராசாவாகிய எகோனியாவைப் பிடித்துப்போகிறபோது, அவனோடேகூட எருசலேமிலிருந்து பிடித்துக்கொண்டு போகப்பட்டவர்க
ளில் ஒருவனாயிருந்தான்.—இவன் தன் சிறிய ௭
தகப்பன் குமாரத்தியாகிய ஏஸ்தரென்ற அத்சாளை வளர்த்தவனாயிருந்தான்; ஏனெனில் தாய்தகப்பனில்லாதவளாயிருந்தாள்; அவள் சவுந்தரவதியும் ரூபவதியுமான பெண்பிள்ளையாயிருந்தாள்; அவள் தகப்பனும், அவள் தாயும், மரணம்அடைந்தபோது மொற்தேகாயி அவளைத் தன் குமாரத்தியாக ஏற்றுக்கொண்டான்.

சம்பவித்ததேதெனில், இராசாவின் கட்டளை ௮
யும் அவனுடைய தீர்மானமும் பிரசித்தமாகி, அநேகம் பெண்பிள்ளைகள் கூட்டப்பட்டு, சூசான் கோட்டையிலுள்ள ஏகேயின்வசத்தில் ஒப்புவிக்கப்படுகிறபோது, ஏஸ்தரும் இராசாவின் வீட்டுக்கு அழைத்துப்போகப்பட்டு, ஸ்திரிகளைக் காவல்பண்ணுகிற ஏகேயின் வசத்தில்
ஒப்புவிக்கப்பட்டாள்.—அந்தப் பெண்பிள்ளை ௯
அவன் பார்வைக்கு நன்றாயிருந்ததினால், அவளுக்கு அவன் கண்களிலே தயைகிடைத்தது; ஆகையால் அவளுடைய சோடிப்புகளையும் அவளுக்கடுத்தவைகளையும் அவளுக்குக் கொடுக்கவும், இராசாவின் வீட்டிலிருக்கிற ஏழுபெண்களையும் அவளுக்குக் கொடுக்கவும் தீவிரித்து, ஸ்திரிகளின் மடத்தில் நல்லதாகிய வேறே ஸ்தலத்திலே அவளையும் அவள் வேலைக்காரிகளையும்
வைத்தான்.—ஏஸ்தரோவென்றால் தன் சனத்தை ௰
யும், தன் பூருவோத்தரத்தையும், அறிவிக்காதிருந்தாள்; ஏனெனில் அதை அறிவிக்கவேண்டாமென்று மொற்தேகாயி அவளுக்குக் கற்பித்திருந்தான்.

ஆனால் ஏஸ்தருடைய சுகசெய்தியையும் அவ ௰௧
ளுக்கு என்ன நடக்குமென்கிறதையும் அறிய, மொற்தேகாயி ஒவ்வொருநாளிலே ஸ்திரிகளுடைய மடத்து முற்றத்துக்குமுன்பாக உலாவு
வான். — ஒவ்வொரு பெண்பிள்ளை ஆறுமாதம் ௰௨
வெள்ளைப்போளத் தயிலத்தினாலும், ஆறுமாதம் கெந்தவர்க்கங்களாலும், ஸ்திரிகளின் ஆபரணங்களினாலும், சோடிக்கப்படுகிற நாள்கள் நிறைவேறி, இப்படியே பன்னிரண்டுமாதமாக ஸ்திரிகளுடைய திட்டத்தின்படியே செய்யப்பட்டுத் தீர்ந்தபிற்பாடு, இராசாவாகிய அகாஸ்வேருவண்

டைக்குப் பிரவேசிக்க, அவள் அவளுடைய
௰௩ முறை வருகிறபோது,—இப்படிச் சோதிக்கப்
பட்ட பெண்பிள்ளை இராசாவண்டையில் பிர
வேசிப்பாள்; ஸ்திரிகளின் மடத்திலிருந்து தன்
ணோடேகூட இராசாவின் வீடுமட்டும் போக,
அவள் கேட்பவையெல்லாம் அவளுக்குக் கொ
௰௪ டுக்கப்படும்.—சாயங்காலத்திலே அவள் உள்ப்
பிரவேசித்து, காலமே வைப்பாட்டிகளைக் கா
வல்பண்ணுகிற இராசாவின் பிரதானியாகிய
சாஸ்காசுடைய விசாரிப்பின்கீழிருக்கிற ஸ்திரி
களின் இரண்டாம் மடத்துக்குத் திரும்பி, இரா
சா தன்னை விரும்பிப் பேர்சொல்லி அழைப்
பித்தாலொழிய இனி இராசாவண்டைக்குப்
பிரவேசியாதிருப்பாள்.
௰௫ மொற்தேகாயி தன் குமாரத்தியாய் ஏற்றுக்
கொண்ட அவன் சிறியதகப்பனாகிய அபிகாயி
லின் குமாரத்தியான ஏஸ்தரின் முறை இராசா
வண்டைக்குப் பிரவேசிக்கிறதற்கு வந்தபோது,
அவள் ஸ்திரிகளைக் காவல்பண்ணுகிற இராசா
வின் பிரதானியாகிய ஏகாயி சொன்ன காரிய
மேயல்லாமல் ஒன்றும் கேட்டதில்லை; ஏஸ்த
ருக்கோவென்றால், தன்னைக் காண்கிற எல்லார்
௰௬ கண்களிலும் தயைகிடைத்தது.—அப்படியே
ஏஸ்தர் இராசாவாகிய அகாஸ்வேரு அரசாளுகிற
ஏழாம் வருஷம் தேபேத்மாதமாகிய பத்தாம்மா
தத்திலே அவனண்டைக்கு அவனுடைய இராச
௰௭ அரமனையில் அழைத்துப்போகப்பட்டாள்.—இ
ராசா சகல ஸ்திரிகளைப்பார்க்கிலும், ஏஸ்தர்மே
லே அன்புவைத்தான்; சகல கன்னியாஸ்திரிக
ளைப்பார்க்கிலும், அவளுக்கு அவனுக்குமுன்பா
கக் கிருபையும் தயையும் கிடைத்தது; ஆகையால்
அவன் இராசகிரீடத்தை அவள் சிரசின்மேல்
வைத்து, அவளை வஸ்தியின் ஸ்தலத்திலே இரா
௰௮ சஸ்திரியாக்கினான்.—அப்போது இராசா தன்னு
டைய எல்லாப் பிரபுக்களுக்கும், ஊழியக்கார
ருக்கும், ஏஸ்தருக்காகச் செய்கிற ஒரு பெரிய
விருந்து செய்வித்து, சீமைகளுக்குச் சலக்கரணை
உண்டாக்கி, இராச ஆஸ்திக்குத்தக்க அதியாக்
களைக் கொடுத்தான்.
௰௯ இரண்டாம்விசை கன்னியாஸ்திரிகள் சேர்க்
கப்படுகிறபோது, மொற்தேகாயி இராசாவின்
௨௰ அரமனைவாசலில் உளுக்காந்திருந்தான்.—ஏஸ்
தர் மொற்தேகாயி தனக்குக் கற்பித்திருந்தபடி,
தன் பூருவோத்தரத்தையும் தன் சனசாதியையும்
அறிவிக்காதிருந்தாள்; ஏனெனில் ஏஸ்தர் மொற்
தேகாயி இடத்திலே வளர்ந்தகாலத்திலே செய்த
துபோல இன்னம் அவன் சொற்படி செய்
தாள்.
௨௧ அந்த நாள்களில் மொற்தேகாயி இராசாவின்
அரமனைவாசலில் உளுக்காந்திருக்கிறபோது,
வாசல்காக்கிற இராசாவின் இரண்டு பிரதானிக
ளாகிய பிக்தானும் தேரேசும் கடுங்கோபமடைந்
து, இராசாவாகிய அகாஸ்வேருவின்மேலே கை
௨௨ போட வகைதேடினார்கள். — இந்தக் காரியம்
மொற்தேகாயிக்கு அறியப்பட்டபடியினாலே,
அவன் அதை இராசஸ்திரியாகிய ஏஸ்தருக்கு
அறிவித்தான்; ஏஸ்தர் மொற்தேகாயியின் நாமத்
தில் இராசாவுக்குச் சொன்னாள்.—இந்தக்காரியம் ௨௩
விசாரிக்கப்படுகிறபோது, அது மெய்யென்று
கண்டுபிடிக்கப்பட்டது; ஆகையால் அவர்கள்
இருவரும் மரத்திலே தூக்கிப்போடப்பட்டார்
கள்; இது இராசாவுக்குமுன்பாக நாளாகமப்
புஸ்தகத்தில் எழுதப்பட்டது.

## ௩. அதிகாரம்.

௧. ஆமான் இராசனால் உயர்த்தப்பட்டதும், மொற்தேகாயினால் சங்கிக்கப்படாமையால் யூதர்களைச் சங்கரிக்கத் தேடினது. ௭. அவன் திருவுளச்சீட்டுப்போட்டது. ௮. அவன் அவதூறு பேசி, யூதர்களைக் கொல்லும்படி இராசாவின் கட்டளை பெற்றது.

இந்த நடபடிகளுக்குப்பிற்பாடு, இராசாவாகிய ௧
அகாஸ்வேரு அம்மெதாத்தாவின் குமாரனாகிய
ஆமானென்ற ஆகாகியனைப் பெரியவனாக்கி,
அவனை உயர்த்தி, அவனுடைய ஆசனத்தைத்
தன்னிடத்திலிருக்கிற சகல பிரபுக்களுக்கும்
உயரவைத்தான்.—ஆகையால் இராசாவின் அர ௨
மனைவாசலிலிருக்கிற இராசாவின் ஊழியக்கா
ரரெல்லாம் ஆமானைக் குனிந்து பணிந்துகொண்
டார்கள்; ஏனெனில் இராசா இப்படிச்செய்ய,
அவனுக்காகக் கற்பித்தான்; ஆனால் மொற்தே
காயி குனிந்ததுமில்லை, பணிந்ததுமில்லை.—அப் ௩
போது இராசாவின் அரமனைவாசலிலிருக்கிற
இராசாவின் ஊழியக்காரர் மொற்தேகாயியுட
னே நீர் இராசாவின் கற்பனையை மீறுவானே
னென்றார்கள்.
இப்படி அவர்கள் நாளுக்குநாள் அவனுட ௪
னே சொல்லியும், அவன் தங்களுக்குச் செவி
கொடாதபோதோவெனில், அவர்கள் மொற்தே
காயியின் சொற்கள் நிலைநிற்குமோவென்று பார்
க்கிறதற்கு, அதை ஆமானுக்கு அறிவித்தார்கள்;
ஏனெனில் தான் யூதனென்று அவன் அவர்க
ளுக்கு அறிவித்திருந்தான்.—மொற்தேகாயி தன் ௫
னைக் குனிந்து பணிந்துகொள்ளாததை ஆமான்
கண்டபோது, ஆமான் மூர்க்கம் நிறைந்தவனா
னான். — ஆனால் மொற்தேகாயியின்மேல்மாத் ௬
திரம் கைபோட, அவனுக்குக் கொஞ்சக்காரிய
மாகக் கண்டது; ஏனென்றால் மொற்தேகாயியின்
சனம் ஏதென்று அவனுக்கு அறிவித்திருந்தார்
கள்; ஆகையால் அகாஸ்வேருவின் இராச்சிய
மெங்கும் இருக்கிற மொற்தேகாயியின் சனமா
கிய யூதரையெல்லாம் சங்கரிக்க ஆமான் வகை
தேடினான்.
இராசாவாகிய அகாஸ்வேருவின் பன்னிரண் ௭
டாம் வருஷம் நீசான்மாதமாகிய முதலாம் மா
தத்திலே ஆமானுக்குமுன்பாகப் பூர் என்னப்
பட்ட தாயம் நாளுக்குநாளும் மாதத்துக்குமா
தமும் போடப்பட்டு, ஆதார் மாதமான பன்னி
ரண்டாம்மாதத்தின்மேல் விழுந்தது.—அப்போது ௮
ஆமான் அகாஸ்வேரு இராசாவுடனே சொன்ன
தாவது: உம்முடைய இராச்சியத்தின் சகல
சீமைகளிலுமுள்ள சனசதளங்களுக்குள்ளே
ஒரே ஒரு சனசதளம் சிதறினதும் பரம்பினதுமா

யிருக்கிறது; அவர்களுடைய நியாயப்பிரமாண
ங்கள் சகல சனசதளங்களைப்பார்க்கிலும் வெவ்
வேறாயிருக்கின்றன; அவர்கள் இராசாவுடைய
நியாயப்பிரமாணங்களின்படி செய்கிறதில்லை;
அவர்களை அப்படிவிட இராசாவுக்கு நியாய
௯ மல்ல.—இராசாவுக்குச் சம்மதியானால், அவர்களை
அழிக்கவேண்டுமென்று எழுதி அனுப்பப்படக்
கடவது; அப்போது நான் அந்த வேலையைச்
செய்திருப்பவர்களின் கைகளிலே பதினாயிரம்
தாலந்து வெள்ளியை இராசாவின் பொக்கிஷங்
களிலே கொண்டுவந்துவைக்க நிறுத்துக்கொடுப்
௰ பேனென்றான்.—அப்போது இராசா தன் கை
யிலிருக்கிற தன் மோதிரத்தைக் கழற்றி, அதை
அம்மெதாத்தாவின் குமாரனாகிய ஆமானென்ற
யூதரின் சத்துருவாகிய ஆகாகியனுக்குக் கொடு
௰௧ த்து,—ஆமானுடனே அந்த வெள்ளி உனக்குக்
கொடுக்கப்பட்டிருக்கிறது; உன் பார்வைக்குச்
சம்மதியானபடி அந்தச் சனத்துக்குச் செய்கிற
தற்கு, அதுவும் உனக்கு ஒப்புக்கொடுக்கப்பட்
டிருக்கிறதென்றான்.

௰௨ அப்போது முதலாம்மாதம் பதின்மூன்றாம்
தேதியிலே, இராசாவின் சம்பிரதிகள் அழைக்
கப்பட்டார்கள்; ஆமான் கற்பித்தபடியெல்லாம்
இராசாவின் சுபையதார்களுக்கும், ஒவ்வொரு
சீமையின்மேல் வைக்கப்பட்டிருந்த துரைகளுக்
கும், ஒவ்வொரு சனசதளத்தின் பிரபுக்களு
க்கும், சீமைசீமையினுடைய எழுத்திலும் சாதி
சாதியினுடைய பாஷையிலும் எழுதப்பட்டது;
இராசாவாகிய அகாஸ்வேருவின் நாமத்திலே
எழுதப்பட்டு, இராசாவின் மோதிரத்தினால் முத்
௰௩ திரை போடப்பட்டது.—ஆதார் மாதமாகிய பன்
னிரண்டாம் மாதம் பதின்மூன்றாம் தேதியாயிரு
க்கும் ஒரேநாளிலே எல்லா யூதரையும், சிறி
யோர்முதல் பெரியோர்மட்டுமிருக்கிற எல்லா
யூதரையும், குழந்தைகளையும், ஸ்திரிகளையும்,
அழித்துக் கொன்று நிர்மூலமாக்கவும், அவர்க
ளைக் கொள்ளையிடவும் நிருபங்கள் அஞ்சற்கா
ரர் கையிலே இராசாவின் சீமைகளுக்கெல்லாம்
௰௪ அனுப்பப்பட்டன.—அந்த நாளுக்கு ஆயத்தப்
பட்டிருக்கவேண்டுமென்று சகல சனசதளங்க
ளுக்கும் கூறுவிக்கிறதற்கான பிரமாணம் ஒவ்
வொரு சீமையிலே அறிவிக்கப்படவேண்டு
௰௫ மென்பது அவைகளில் எழுதியிருந்தது.—அந்த
அஞ்சற்காரர் இராசாவின் கற்பனையினாலே தீவி
ரிக்கப்பட்டுப் புறப்பட்டுப்போனார்கள்; அந்தப்
பிரமாணம் சூசான் கோட்டையிலும் அறிவிக்
கப்பட்டது; இராசாவும், ஆமானும் குடித்துக்
கொண்டிருக்க உளுக்காந்தார்கள்; சூசான் பட்
டணமோவென்றால் கலங்கலாயிற்று.

## ச. அதிகாரம்.

க. மொர்தேகாயியும், மற்ற யூதரும், மிகவும் துக்கப்பட்டிருந்தது. ச. ஏஸ்தர் அதை அறிந்து, மொர்தேகாயியினிடத்துக்கு ஆளனுப்பினதும், அவன் அதைக்குறித்து விசாரிக்க அவளுக்குப் புத்திசொன்னதும், ௰. அதை மன்னித்ததின்மேல் மொர்தேகாயி அவளைப் பயமுறுத்தியது. ௰௫. அவள் அதை விசாரிக்க உடன்பட்டு உபவாசத்தைக் கட்டளையிட்டது.

செய்யப்பட்டவைகளையெல்லாம் மொர்தே ௧
காயி அறிந்தபோது மொர்தேகாயி தன் வஸ்தி
ரங்களைக்கிழித்து, இரட்டுடுத்து, சாம்பல்போட்
டுக்கொண்டு, பட்டணத்தின் நடுவே புறப்பட்
டுப்போய், துயரமுள்ள மகா சத்தத்துடனே
அலறி,— இராசாவின் அரமனைவாசல் முகப்பு ௨
மட்டும் வந்தான்; ஏனெனில் இரட்டுடுத்தவனாய்
இராசாவின் அரமனை வாசலுக்குள்ப் பிரவே
சிக்க ஒருவனுக்கும் உத்தாரமில்லை.—இராசா ௩
வின் வார்த்தையும், அவனுடைய நியாயப்பிர
மாணமும், போய்ச்சேர்ந்த ஒவ்வொரு சீமை
யிலும் ஸ்தலத்திலும் யூதருக்குள்ளே மகா துக்க
மும், உபவாசமும், அழுகையும், புலம்பலுமுண்
டாய், அநேகர் இரட்டிலும் சாம்பலிலும் கிடந்
தார்கள்.

அப்பொழுது ஏஸ்தரின் குமரிப்பெண்களும், ௪
அவளுடைய பிரதானிகளும் வந்து, அதை அவ
ளுக்கு அறிவித்தார்கள்; அதினாலே இராசஸ்திரி
மிகவும் மனநோவடைந்து, மொர்தேகாயி உடுத்
திருந்த இரட்டை எடுத்துப்போட்டு, அவனை
உடுத்துவிக்கிறதற்கு வஸ்திரங்களை அவனுக்கு
அனுப்பினாள்; ஆனால் அவன் அவைகளை ஏற்
றுக்கொள்ளாதிருந்தான். — அப்போது ஏஸ்தர் ௫
தன் ஊழியத்துக்கு இராசா வைத்திருந்த, அவனு
டைய பிரதானிகளில் ஒருவனாகிய ஆத்தாகை
அழைப்பித்து, அதேதென்றும் அதின் முகாந்
தரம் ஏதென்றும் அறிய, மொர்தேகாயியினிடத்
தில் விசாரிக்க அவனுக்குக்கட்டளையிட்டாள்.—
அப்படியே ஆத்தாக் இராசாவின் அரமனை வாச ௬
லுக்குமுன்னானபட்டணவீதியிலிருக்கிற மொர்
தேகாயி அண்டைக்குப் புறப்பட்டுப்போனான்.—
அப்போது மொர்தேகாயி தனக்குச் சம்பவித்த ௭
வை எல்லாவற்றையும் யூதரை அழிக்கும்படிக்
கு, ஆமான் அவர்கள்நிமித்தம் இராசாவின் பொக்
கிஷங்களுக்கு நிறுத்துக்கொடுப்பேனென்று
சொன்ன ரொக்கவெள்ளியின் செய்தியையும்
அவனுக்கு அறிவித்து,—ஏஸ்தருக்குக் காண்பிக் ௮
கும்படிக்கும், அவளுக்கு அறிவிக்கும்படிக்கும்,
அவள் தன் சனத்துக்காக இராசாவை வேண்டிக்
கொண்டு, அவர் சமுகத்திலே விண்ணப்பம்பண்
ணுவதற்கு அவரண்டைக்குப்போக அவளுக்குக்
கற்பிக்கும்படிக்கும், அவன் இவனுக்கு அவர்க
ளைச் சங்கரிக்கிறதற்கு, சூசானில் அறிவிக்கப்
பட்ட கட்டளையினுடைய கடிதாசியின் பிரதி
யைக் கொடுத்தான்.

ஆத்தாக் வந்து, மொர்தேகாயியின் வார்த்தை ௯
களை ஏஸ்தருக்கு அறிவித்தான். — அப்போது ௰
ஏஸ்தர் மொர்தேகாயிக்குச் சொல்லச்சொல்லி,
ஆத்தாகுக்குக் கற்பித்ததாவது: — அழைப்பிக் ௰௧
கப்படாமல், இராசாவண்டைக்கு அவருடைய
உள்முற்றத்திலே பிரவேசிக்கிற எந்த ஆணாகி
லும் பெண்ணானாகிலும்சரி, அப்படிப்பட்ட
வர்கள் பிழைக்கும்படிக்கு, இராசா பொன்செங்
கோலை அவர்கள் அண்டைக்கு நீட்டினாலொ
ழியக் கொல்லப்படவேண்டுமென்கிறதே அவ

னுடைய நியாயப்பிரமாணமாயிருக்கிறதென்கி
றதை இராசாவின் சகல ஊழியக்காரரும், இரா
சாவினுடைய சீமையின் சனமும் அறிந்திருக்கி
றார்கள்; நானோவெனில் இந்த முப்பதுநாளிலே
இராசாவண்டைக்கு வரவழைப்பிக்கப்பட்ட
௰௨ தில்லையென்று சொல்லக் கற்பித்தாள்.—எஸ்த
ரின் வார்த்தைகளை மொற்தேகாயிக்கு அறிவித்
தார்கள்.

௰௩ ஆனால் மொற்தேகாயி எஸ்தருக்குத் திரும்பச்
சொல்லச்சொன்னதாவது: நீ இராசாவின் அர
மனையிலிருக்கிறதினால், எல்லா யூதரைப்பார்க்கி
லும் தப்புவாயென்று உன் மனதிலே நினைவு
௰௪ கொள்ளாதே.—ஏனென்றால் நீ இந்தக்காலத்தி
லே மவுனமாயிருக்கவே இருந்தால், யூதருக்கு
மூசிப்பாறுதலும் விடுவிப்பும் வேறொரு ஸ்தலத்
திலிருந்து எழும்பி, நீயும் உன் தகப்பன் வீட்
டாருமாய் அழிவீர்கள்;நீ இப்படிக்கொத்த காலத்
துக்கு உதவியாக இராசமேன்மைக்கு வந்ததில்
லையோவென்கிறது யாருக்குத் தெரியுமென்று
௰௫ சொல்லச்சொன்னான்.—அப்போது எஸ்தர் மொ
ற்தேகாயிக்கு மறுபடியும் சொல்லச்சொன்ன
௰௬ தாவது:—நீர் போய், சூசானில் அகப்படுகிற
யூதரையெல்லாம் கூட்டிக்கொண்டு, எனக்காக
உபவாசம்பண்ணி, மூன்றுநாள் அல்லும்பகலும்
புசியாமலும் குடியாமலுமிருங்கள்; நானும் என்
குமரிப்பெண்களும்கூட இப்படி உபவாசம்
பண்ணுவோம்; இந்தப்பிரகாரமாக நியாயப்பிர
மாணத்தை மீறி, இராசாவண்டைக்குப் பிரவே
சிப்பேன்; நான் மடிந்தாலும் மடிகிறேனென்று
௰௭ சொல்லச்சொன்னாள்.—அப்போது மொற்தே
காயி அப்புறப்பட்டு, எஸ்தர் தனக்குக் கற்பித்த
படியெல்லாம் செய்தான்.

## ௫. அதிகாரம்.

௧. எஸ்தர் இராசாவின் தயையைப் பெற்றுக்கொள்ளத் துணிந்து, செங்கோலைத் தொட, அவனையும் ஆமானையும் விருந்துக்கு வரவழைத்தது. ௫. அவள் இராசனால் தைரியமடைந்து, அவர்களை மற்றநாள் விருந்துக்கு அழைத்தது. ௯. ஆமான் மேம்பட்டு, மொற்தேகாயியை நிந்தித்தது. ௰௪. அவனுக்காகச் சேரேசின் ஆலோசனையின்படி ஒருசோடு தூக்குமரத்தைச் செப்பனிட்டது.

௧ சம்பவித்ததேதெனில் மூன்றாம் நாளிலே எஸ்தர்
இராசவஸ்திரங்களைத் தரித்துக்கொண்டு, இராச
அரமனையின் உள் முற்றத்தில் இராசாவின் வீட்
டுக்கு எதிராகப் போய் நின்றாள்; இராச அர
மனையிலே அரமனைவாசலுக்கு எதிரேயிருக்கிற
தன்னுடைய இராசாசனத்தில் இராசா உளுக்
௨ காந்திருந்தான்.—சம்பவித்ததேதென்றால் இரா
சா இராசஸ்திரியாகிய எஸ்தர் முற்றத்தில் நிற்கி
றதைக் காண்கையில், அவளுக்கு அவன் கண்க
ளில் தயைகிடைத்ததினால், இராசா தன் கையிலி
ருக்கிற பொன் செங்கோலை எஸ்தரண்டைக்கு
நீட்டினான்; அப்போது எஸ்தர் சேர்ந்து செங்
௩ கோலின் நுனியைத் தொட்டாள்.—இராசா அவ
ளுடனே, இராசஸ்திரியாகிய எஸ்தரே, உனக்
கென்னவேண்டும்? நீ கேட்கிற உன் மன்றாட்
டென்ன? நீ இராச்சியத்தில் பாதிமட்டுக்கும்
கேட்டாலும், உனக்குக் கொடுக்கப்படுமென்
றான்.—அப்போது எஸ்தர் இராசாவுக்குச் சம்ம ௪
தியாயிருந்தால், நான் தமக்குச் செய்வித்த விருந்
துக்கு இராசாவும், ஆமானும் இன்றைக்கு வர
வேண்டுமென்றாள்.—அப்போது இராசா எஸ்தர் ௫
சொற்படி செய்ய,ஆமானைத் தீவிரியுங்களென்று
சொல்லி,எஸ்தர் செய்வித்த விருந்துக்கு இராசா
வும் ஆமானும் வந்தார்கள்.
திராட்சப்பழ இரசம் நடந்த விருந்திலே இரா ௬
சா எஸ்தருடனே, நீ வேண்டிக்கொள்ளுகிற
தென்ன? உனக்குக் கொடுக்கப்படும்; நீ கேட்கி
றதென்ன? நீ இராச்சியத்தின் பாதிமட்டும் கேட்
டாலும் நடக்குமென்றான். — எஸ்தர் பிரதியுத் ௭
தாரமாகச் சொன்னதாவது:—இராசாவின் கண் ௮
களில் எனக்குக் கிருபைகிடைத்து, என் வேண்
டுதலைக் கட்டளையிடவும், என் விண்ணப்பத்
தின்படி செய்யவும், இராசாவுக்குச் சம்மதியா
யிருந்தால், இராசாவும் ஆமானும் நான் இன்
னம் தங்களுக்குச் செய்விக்கப்போகிற விருந்
துக்கு வரவேண்டுமென்கிறதே என் வேண்டு
தலும் என் விண்ணப்பமுமாயிருக்கின்றது; நா
ளைக்கு இராசாவுடைய சொல்படி செய்வே
னென்றாள்.
அன்றைத்தினம் ஆமான் சந்தோஷமும் மன ௯
மகிழ்ச்சியுமாய்ப் புறப்பட்டான்; ஆனால் இராச
அரமனையின் வாசலிலிருக்கிற மொற்தேகாயி
எழுந்திராமலும், தன்னிமித்தம் அசையாமலுமி
ருக்கிறதை ஆமான் காண்கையில், அவன் மொற்
தேகாயியின்மேல் உக்கிரம் நிறைந்தவனானான்.—
ஆகிலும் ஆமான் அதை அடக்கிக்கொண்டு, தன் ௰
வீட்டுக்குவந்து, தன் சிநேகிதரையும் தன் பெண்
சாதியாகிய சேரேசையும் அழைத்தனுப்பி,—தன் ௰௧
னுடைய ஐசுவரியத்தின் மகிமையையும், தன்
பிள்ளைகளின் திரட்சியையும், இராசா தன்னைப்
பெரியவனாக்கி, தன்னைப் பிரபுக்களின்மேலும்
இராசாவின் ஊழியக்காரர்மேலும் உயர்த்தின
வை எல்லாவற்றையும் ஆமான் அவர்களுக்கு
விவரித்தான்.—பின்னையும் ஆமான் சொன்னதா ௰௨
வது: இராசஸ்திரியாகிய எஸ்தரும் தான் செய்
வித்த விருந்துக்கு என்னைத்தவிர வேறொருவ
ரையும், இராசாவுடனேகூட வரச்சொன்னதில்
லை; நாளைக்கும் இராசாவுடனேகூட அவளால்
விருந்துக்கு அழைக்கப்பட்டவன் நானே.—
ஆனால் எந்தமட்டும் யூதனாகிய மொற்தேகாயி ௰௩
இராச அரமனையின் வாசலில் உளுக்காந்திருக்கி
றதை நான் காண்கிறேனோ அந்தமட்டும் அவை
யெல்லாம் எனக்குப் போதாதென்றான்.—அப் ௰௪
போது அவன் பெண்சாதியாகிய சேரேசும் அவ
னுடைய எல்லாச் சிநேகிதரும் அவனுடனே
ஐம்பதுமுழ உயரமான ஒரு தூக்குமரம் செய்யப்
படக்கடவது; அதிலே மொற்தேகாயி தூக்கிப்
போடப்பட நாளைக்காலமே நீர் இராசாவுக்குச்
சொல்லி, பிற்பாடு சந்தோஷமாய் இராசாவுட
னேகூட விருந்துக்குப் போமென்றார்கள்; இந்
தக்காரியம் ஆமானுக்கு நன்றாய்க் கண்டதினால்
தூக்குமரத்தைச செப்பனிடுவித்தான்.

## ௬. அதிகாரம்.

க. அகாஸ்வேரு நாளாகமப் புஸ்தகத்தில் மொர்தேகாயியின் நன்மையை வாசித்து, அவனுக்கு உபகாரஞ்செய்ய நினைத்தது. ௪. ஆமான் மொற தேகாயியைத் தூக்கும்படி உத்தரவைக் கேட்கவந்தபோது, அறியாமையாய் அவன் சங்கைக்கு யோசனை சொன்னது. ௰உ. அவன் தனக்கு நேரிட்ட துன்பத்தைச் சொன்னபோது, அவனுடைய சிநேகிதர் இனி நாசம்வருமென்று சொன்னது.

க அந்த இராத்திரியிலே இராசாவுக்கு நித்திரை
வராதபடியினாலே, நினைப்புக்காக எழுதியிருக்
கிற நாள்செய்திகளின் புஸ்தகத்தைக் கொண்
டுவரச்சொன்னான்; இராசாவுக்குமுன்பாக அ
உ வைகள் வாசிக்கப்பட்டது.—அப்போது வா
சல்படிக் காவலாளிகளில் இராசாவின் இரண்டு
பிரதானிகளாகிய பிக்தானாவும், தேரேசும், இரா
சாவாகிய அகாஸ்வேருவின்மேலே கைபோ
டப்பார்த்த செய்தியை மொற்தேகாயி அறிவித்
தானென்று எழுதியிருக்கிறது கண்டுபிடிக்கப்
பட்டபொழுது,
௩ இராசாவானவன் இதற்காக மொற்தேகாயிக்
குச் செய்யப்பட்ட கனமும், வெகுமானமும்
என்னவென்று கேட்டான்; ஒன்றும் அவனுக்
குச் செய்யப்படவில்லையென்று இராசாவைச்
சேவிக்கிற அவனுடைய வேலைக்காரர் சொன்
௪ னார்கள்.—அப்போது இராசா முற்றத்திலிருக்கி
றவன் யாரென்று கேட்டான்; ஆனால் ஆமான்
மொற்தேகாயிக்குத் தான் செப்பனிடுவித்த மரத்
திலே அவனைத் தூக்கிப்போடும்படிக்கு, இரா
சாவுக்குச் சொல்லத்தக்கவிதமாக இராசா அர
மனையின் புறமுற்றத்திலே வந்திருந்தான்.—
௫ ஆகையால் இராசாவின் வேலைக்காரர் அவனுட
னே, இதோ ஆமான் முற்றத்திலே நிற்கிரு
னென்றார்கள்; அப்போது இராசா அவன் வரட்
டுமென்றான்.
௬ ஆமான் உள்ளே வந்தபோது, இராசா அவனு
டனே, இராசா கனம்பண்ண விருப்பமாயிருக்
கிற மனுஷனுக்குச் செய்யப்படவேண்டிய
தென்னவென்றான்; அப்போது ஆமான் என்
னைப்பார்க்கிலும், இராசா யாரைக் கனம்பண்ண
விருப்பமாயிருப்பாரென்று தன் இருதயத்திலே
எ நினைத்துக்கொண்டு,—இராசாவுடனே சொன்
னதாவது: இராசா கனம்பண்ண விருப்பமாயி
ருக்கிற மனுஷனுக்குச் செய்யவேண்டியதேதெ
அ னில்,—இராசா உடுத்திக்கொள்ளுகிற இராசவஸ்
திரமும், இராசா ஏறுகிற குதிரையும் கொண்டு
வரப்பட்டு, இராசமுடி அவன் தலையிலே வைக்
௯ கப்பட்டு,—அந்த வஸ்திரமும் குதிரையும் இராசா
வுடைய பிரதான பிரபுக்களில் ஒருவனுடைய
கையிலே கொடுக்கப்படக்கடவது; இராசா
கனம்பண்ண விருப்பமாயிருக்கிற மனுஷனுக்கு
வஸ்திரம் தரிப்பித்தபின், அவனைக் குதிரையின்
மேலேற்றி, பட்டணவீதியாய்க் கொண்டுபோய்,
இராசா கனம்பண்ண விருப்பமாயிருக்கிற மனு
ஷனுக்குஇப்படிச்செய்யப்படுமென்று அவனுக்
௰ குமுன்பாகக் கூறக்கடவர்களென்றான்.—அப்
போது இராசா ஆமானுடனே, நீ சீக்கிரமாய்
வஸ்திரத்தையும் குதிரையையும் நீ சொன்னபடி
வாங்கி, இராச அரமனையின் வாசலில் உளுக்
கார்ந்திருக்கிற யூதனாகிய மொற்தேகாயிக்கு அந்
தப்பிரகாரமாகச் செய்; நீ சொன்னவை எல்லா
வற்றிலும் ஒன்றும் குறையவிடாதேயென்றான்.
அப்படியே ஆமான் வஸ்திரத்தையும் குதிரை ௰க
யையும் வாங்கி, மொற்தேகாயிக்கு வஸ்திரம்
தரித்து, அவனைக்குதிரையின்மேலேற்றி, பட்ட
ணவீதியாய்க் கொண்டுபோய், இராசா கனம்
பண்ண விருப்பமாயிருக்கிற மனுஷனுக்கு இப்
படிச் செய்யப்படுமென்று அவனுக்குமுன்பா
கக் கூறினான்.
பிற்பாடு மொற்தேகாயி இராச அரமனையின் ௰உ
வாசலுக்குத் திரும்பிவந்தான்; ஆமானோவெனில்
சஞ்சலப்பட்டவனும் முக்காடிட்டவனுமாய்த்
தன் வீட்டுக்குத் தீவிரித்தான்.—ஆமான் தனக்குச் ௰௩
சம்பவித்தவையெல்லாவற்றையும் தன் பெண்
சாதியாகிய சேரேசுக்கும் தன்னுடைய எல்லாச்
சிநேகிதருக்கும் விவரித்தபோது, அவனுடைய
ஞானிகளும் அவன் பெண்சாதியாகிய சேரே
சும் அவனுடனே, மொற்தேகாயிக்குமுன்பாக
நீர் விழத்துவக்கினீரே; அவன் யூதரின் வித்தா
யிருந்தால், நீர் அவனை மேற்கொள்ளாமல் அவ
னுக்குமுன்பாக விழவே விழுவீரென்றார்கள்.
அவர்கள் இன்னம் அவனோடே பேசும் ௰௪
போது, இராசாவின் பிரதானிகள் வந்து, ஏஸ்தர்
செய்வித்த விருந்துக்கு வர ஆமானைத் துரிதம்
பண்ணினார்கள்.

## எ. அதிகாரம்.

க. ஏஸ்தர் இராசனையும், ஆமானையும், விருந்துக்கு வரவழைத்து, தன் சீவனுக்காகவும், தன் சனங்களின் சீவனுக்காகவும் மன்றாடினது. ௬. அவள் ஆமானைக் குற்றஞ்சாற்றினது. எ. இராசன் மொர்தேகாயிக்காகத் தூக்குமரம் செய்யப்பட்டதென்றறிந்து கோபமடைந்து அதில் ஆமானைத் தூக்கக் கட்டளையிட்டது.

இராசஸ்திரியாகிய ஏஸ்தருடனே விருந்துண் க
ண, இராசாவும் ஆமானும் வந்தபோது,—திராட் உ
சப்பழஇரசம் நடந்த அந்த இரண்டாம் நாள்
விருந்திலும் இராசா ஏஸ்தருடனே, இராசஸ்தி
ரியாகிய ஏஸ்தரே, உன் மன்றாட்டென்ன?
உனக்குக் கொடுக்கப்படும், நீ கேட்கிற காரிய
மென்ன? நீ இராச்சியத்தின் பாதிமட்டும் கேட்
டாலும் நடக்கும் என்றான்.—அப்போது இரா ௩
சஸ்திரியாகிய ஏஸ்தர் பிரதியுத்தாரமாகச் சொன்
னதாவது: இராசாவே, உம்முடைய கண்க
ளில் எனக்குக் கிருபைகிடைத்து, இராசாவுக்
குச் சம்மதியாயிருந்தால், என் வேண்டுதலுக்கு
என் சீவனும், என் விண்ணப்பத்துக்கு என்
சனமும் எனக்குக் கட்டளையிடப்படுவதாக.—
ஏனெனில் எங்களைச் சங்கரிக்கிறதற்கும், கொ ௪
ன்றுபோடுகிறதற்கும், அழிக்கிறதற்கும், நானும்
என் சனமுமாய் விற்கப்பட்டோம்; அடிமைக
ளாகவும் வெள்ளாட்டிகளாகவும் விற்கப்பட்
டோமானால், அப்போது அந்தச் சத்துரு இரா
சாவின் நஷ்டத்துக்கு உத்தரவாதம் பண்ணக்
கூடாதிருந்தாலும், நான் மவுனமாயிருப்பே
னென்றாள்.

௫ அப்போது இராசாவாகிய அகாஸ்வேரு உத்
தரவு கொடுத்து, இராசஸ்திரியாகிய எஸ்தரு
டனே அவன் யார்? இப்படிச்செய்யும் நினைவு
களாலே தன் இருதயத்தை நிரப்பினவன் எங்
௬ கேயிருக்கிறானென்றான்.—அதற்கு எஸ்தர் சத்
துருவும் பகைஞனுமாகிய மனிதன் இந்தப்
பொல்லாத ஆமான்தானென்றாள்; அப்போது
ஆமான் இராசாவுக்கும் இராசஸ்திரிக்கும் முன்
பாகத் திகிலடைந்தான்.
௭ இராசாவோவெனில் தன் உக்கிரத்தோடே திரா
ட்சப்பழ இரசம்நடந்த விருந்தைவிட்டெழுந்து,
அரமனைத் தோட்டத்திற்குப்போனான்; ஆனால்
ஆமான் இராசஸ்திரியாகிய எஸ்தரைத் தன் பிரா
ணனுக்காக விண்ணப்பம்பண்ண நின்றான்; ஏ
னெனில் இராசாவினால் தனக்குப் பொல்லாப்பு
நிருணயிக்கப்பட்டதென்று கண்டான்.
௮ இராசா அரமனைத் தோட்டத்திலிருந்து திராட்
சப்பழஇரசம் நடந்த விருந்தின் வீட்டிற்குத்
திரும்பிவருகையில், எஸ்தர் உளுக்காந்திருக்கிற
மெத்தையின்மேல் ஆமான் விழுந்திருந்தான்; அ
ப்போது இராசா இவன் என்னோடே வீட்டிலு
மிருந்து இராசஸ்திரியைப் பலவந்தம் செய்ய
வேண்டுமென்றிருக்கிறானோவென்றான்; இந்த
வார்த்தை இராசாவின் வாயிலிருந்து புறப்பட்
டவுடனே ஆமானின் முகத்தை மூடினார்கள்.—
௯ அப்போது இராசாவுக்குமுன்பாக இருக்கிற பிர
தானிகளில் ஒருவனான அற்போனா என்றவன்,
இதோ இராசாவின் நன்மைக்காகப் பேசின மொ
ற்தேகாயிக்கு ஆமான் செப்பனிடுவித்த ஐம்பது
முழ உயரமான தூக்குமரமும் ஆமானின் வீட்
டண்டை நாட்டப்பட்டிருக்கிறதென்றான்; அ
ப்போது இராசா அதிலே அவனைத் தூக்கிப்போ
௰ டுங்களென்றான்.—அப்படியே ஆமான் மொற்
தேகாயிக்கு ஆயத்தம்பண்ணின தூக்குமரத்தி
லே அவனைத் தான் தூக்கிப்போட்டார்கள்; அப்
போது இராசாவின் உக்கிரம் தணிந்துபோயிற்று.

## ௮. அதிகாரம்.

*௧. மொற்தேகாயி உயர்த்தப்பட்டது. ௩. ஆமான் எழுதின கடிதத்தை விலக்க, எஸ்தர் விண்ணப்பஞ்செய்தது. ௭. அகாஸ்வேரு சத்துருக்களை எதிர்க்க யூதர்களுக்கு உத்தரவு கொடுத்தது. ௰௫. மொற்தேகாயியின் கனமும் யூதரின் சந்தோஷமும்.*

௧ அன்றைத்தினம் அகாஸ்வேரு இராசா யூதரின்
சத்துருவாயிருந்த ஆமானின் வீட்டை இராசஸ்
திரியாகிய எஸ்தருக்குக் கொடுத்தான்; மொற்
தேகாயி இராசாவுக்குமுன்பாகவும் வந்தான்;
ஏனெனில் அவன் தனக்கென்னமாயிருக்கிறா
௨ னென்று எஸ்தர் அறிவித்திருந்தாள்.— இராசா
ஆமானின் கையிலிருந்து வாங்கிப்போட்ட தம்
முடைய மோதிரத்தை எடுத்து, அதை மொற்தே
காயிக்குக் கொடுத்தான்; எஸ்தரோவெனில் மொ
ற்தேகாயியை ஆமானின் வீட்டுக்கு அதிகாரியாக
வைத்தாள்.
௩ பின்னையும் எஸ்தர் இராசாவுக்குமுன்பாகப்
பேசி, அவன் பாதங்களில் விழுந்தழுது, ஆகா
கியனான ஆமானின் தீவினையையும் அவன் யூத
ருக்கு விரோதமாக நினைத்த அவனுடைய யோ
சனையையும் பரிகரிக்க அவனை விண்ணப்பம்
பண்ணினாள்.—அப்போது இராசா பொற்செங் ௪
கோலை எஸ்தர் அண்டைக்கு நீட்டினான்; எஸ்தர்
எழுந்திருந்து இராசாவுக்குமுன்பாக நின்று,—
சொன்னதாவது: இராசாவுக்குச் சம்மதியாயி ௫
ருந்து, தமக்குமுன்பாக எனக்குக் கிருபைகி
டைத்து, இராசாவுக்குமுன்பாக நான் சொல்
லும் வார்த்தை சரிப்பட்டு, தம்முடைய கண்க
ளுக்கு நான் பிரியப்பட்டிருந்தால் அப்போது
இராசாவின் சீமைகளெல்லாம் இருக்கிற யூதரை
அழிக்கவேண்டுமென்று அம்மெதாத்தாவின் கு
மாரனாகிய ஆமானென்ற ஆகாகியன் தீவினையாய்
எழுதின நிருபங்களைச் செல்லாதேபோகப்பண்
ணும்பிரகாரமாக எழுதி அனுப்பப்படக்கடவ
து.—ஏனென்றால் என் சனத்தின்மேலே வரும் ௬
பொல்லாப்பைப்பார்க்க, எனக்கு எப்படிக்
கூடும்? என் வம்சத்தின் அழிவையும்பார்க்க
எனக்கு எப்படிக்கூடுமென்றாள்.
அப்போது அகாஸ்வேரு இராசா இராசஸ்திரி ௭
யாகிய எஸ்தருக்கும் யூதனாகிய மொற்தேகாயிக்
கும்சொன்னதாவது: இதோ ஆமானின் வீட்டை
எஸ்தருக்குக் கொடுத்தேன்; அவன் யூதரின்மே
லே தன் கையைப் போடப்போனபடியினாலே
அவனையும் மரத்திலே தூக்கிப்போட்டார்கள்.—
இப்போதும் உங்கள் பார்வைக்குச் சம்மதியான ௮
படி நீங்கள் இராசாவின் நாமத்திலே யூதருக்காக
எழுதி, இராசாவின் மோதிரத்தினால் முத்திரை
போடுங்கள்; ஏனெனில் இராசாவின் நாமத்தில்
எழுதப்பட்டு, இராசாவின் மோதிரத்தால் முத்தி
ரைபோடப்படுகிறதைச் செல்லாதேபோகப்ப
ண்ணக்கூடாதென்றான்.
சீவான் மாதமென்ற மூன்றாம்மாதம் இருபத்து ௯
மூன்றாம் தேதியாகிய அக்காலத்திலேதானே இ
ராசாவின் சம்பிரதிகள் அழைக்கப்பட்டார்கள்;
மொற்தேகாயி கற்பித்தபடியெல்லாம்யூதருக்கும்,
சிந்துதேசம்துவக்கி எத்தியோப்பியாமட்டுமுள்ள
நூற்றிருபத்தேழு சீமைகளின் சுபையதாருக்கும்,
துரைகளுக்கும், பிரபுக்களுக்கும், சீமை சீமை
யின் எழுத்திலும், சாதிசாதியின் பாஷையிலும்,
யூதருக்கு அவர்கள் எழுத்திலும் அவர்கள் பா
ஷையிலும் எழுதப்பட்டது.
அது அகாஸ்வேரு இராசாவின் நாமத்தில் எழு ௰
தப்பட்டு, இராசாவின் மோதிரத்தால் முத்திரை
போடப்பட்டபின், அந்த நிருபங்கள் அஞ்சல்
குதிரைக்காரர் கையிலும், வேகமான ஒட்டகங்
கள்மேலும், கோவேறுகழுதைகள்மேலும், ஏறிப்
போகிற அஞ்சல்காரர் கையிலும் அனுப்பப்பட்
டன.—அகாஸ்வேரு இராசாவுடைய எல்லாச் ௰௧
சீமைகளிலும் ஆதார் மாதமென்ற பன்னிரண்
டாம் மாதம் பதின்மூன்றாம் தேதியாகிய அந்த
ஒரேநாளில்,—ஒவ்வொரு பட்டணங்களிலிருக் ௰௨
கிற யூதர் கூடிக்கொண்டு, தங்கள் பிராணனைக்
காப்பாற்றவும், தங்கள்மேல் சத்துருக்களாய் வி
ழும் சனத்தாரும் தேசத்தாருமான எல்லா இரா

னுவங்களையும், அவர்கள் குழந்தைகளையும், ஸ்திரிகளையும் சங்கரிக்கவும், கொன்றுபோடவும், அழிக்கவும், அவர்கள் உடைமைகளைக் கொள்ளையிடவும், இராசா யூதருக்குக் கட்டளையிட்டாரென்று அவைகளில் எழுதியிருந்தது.

௰௩ யூதர் தங்கள் பகைஞருக்குச் சரிக்குச்சரிக்கட்ட அன்றைத்தினத்துக்கு ஆயத்தமாயிருக்க வேண்டுமென்று ஒவ்வொரு சீமையிலுள்ள எல்லாச் சனசதளங்களுக்கும் கூறப்படுகிறதற்கான கட்டளை கொடுக்கப்பட்டதென்கிறதும் அவை
௰௪ களில் எழுதியிருந்தது.—அப்படியே வேகமான ஒட்டகங்களின்மேலும், கோவேறுகழுதைகள் மேலும், ஏறின அஞ்சல்காரர் இராசாவின் வார்த்தையினாலே ஏவப்பட்டு, தீவிரத்தோடே புறப்பட்டுப்போனார்கள்; அந்தப் பிரமாணம் சூசான் கோட்டையிலும் அடிக்கப்பட்டது.

௰௫ அப்போது மொறத்தேகாயி இளநீலமும் வெள்ளையுமான இராசவஸ்திரமும் பெரிய பொன்முடியும், மெல்லியபுடவையும், சிவப்புமான சால்வையும் அணிந்தவனாய் இராசாவினிடத்திலிருந்து புறப்பட்டான்; அதற்காகச் சூசான் பட்டணம்
௰௬ ஆர்ப்பரித்து மகிழ்ந்திருந்தது.—அப்படியே யூதருக்கு வெளிச்சமும், மகிழ்ச்சியும், களிகூருத
௰௭ லும், கனமும் உண்டாயின.—இராசாவின் வார்த்தையும் அவனுடைய பிரமாணமும் போய்ச்சேர்ந்த எல்லாச் சீமையிலும், எல்லாப் பட்டணத்திலும், யூதருக்குள்ளே மகிழ்ச்சியும், சந்தோஷமும், விருந்துண்டு கொண்டாடுகிற நாளுமாயிருந்தன; தேசச்சனசதளங்களில் அநேகர் யூதமார்க்கமமைந்தார்கள்; ஏனெனில் யூதருக்குப் பயப்படுகிற பயம் அவர்களைப் பிடித்தது.

## ௯. அதிகாரம்.

௧. மொறத்தேகாயிக்குப் பயந்து பிரபுக்கள் உதவிசெய்ததினால் யூதர்கள் ஆமான் புத்திரர் பத்துப்பேரையும், மற்றப் பகையாளிகளையும் கொன்றது. ௰௨. அகாஸ்வேரு ஏஸ்தரின் வேண்டுதலினால் வேறொருநாளில் சத்துருக்களைக் கொல்லவும், ஆமான் புத்திரர்களைத் தூக்கவும் கட்டளைகொடுத்தது. ௨௰. பூரீமைக்குறித்துச் செய்த இரண்டொரு பண்டிகை.

௧ இராசாவின்வார்த்தையின்படியும் அவனுடைய பிரமாணத்தின்படியும் செய்யப்படுகிறதற்கு, ஆதார் மாதமென்ற பன்னிரண்டாம்மாதம் பதின்மூன்றாம் தேதியிலே, யூதரின் பகைஞர் அவர்களை மேற்கொள்ளலாமென்று நம்பினார்களே; அந்நாளிலேதான், யூதரானவர்கள் தங்கள் பகைஞரை மேற்கொள்ளும்படிக்குக் காரியம் மாறிப்போய்,-
௨ யூதர் அகாஸ்வேரு இராசாவின் சகல சீமைகளிலுமுள்ள பட்டணங்களிலே தங்களுக்குப் பொல்லாப்பு வரப்பண்ணப் பார்த்தவர்கள்மேல் கைபோடக் கூடிக்கொண்டார்கள்; ஒருவரும் அவர்களுக்குமுன்பாக நிற்கக்கூடாதிருந்தது; ஏனெனில் அவர்களாலே சகல சனசதளங்களின்மே
௩ லும் பயங்கரம் விழுந்தது.—சீமைகளின் சகல பிரபுக்களும், சுபையதார்களும், துரைகளும், இராசாவின் வேலையை நடப்பிக்கிறவர்களும், யூதரை உயர்த்தினார்கள்; ஏனென்றால் மொறத்தேகாயினால் உண்டான பயங்கரம் அவர்கள்மேல் விழுந்தது.—ஏனெனில் மொறத்தேகாயி இராசா ௪
வின் அரமனையில் பெரியவனாயிருந்தான்; அவனுடைய கீர்த்தி எல்லாச் சீமைகளிலும் பிரசித்தமாயிற்று; ஏனென்றால் இந்த மொறத்தேகாயி என்கிறவன் வரவரப் பெலத்துப்போனான்.

அப்படியே யூதர் தங்கள் பகைஞரையெல்லாம் ௫
பட்டையத்தாலே வெட்டிக் கொன்று அழித்துவிட்டு, தங்கள் விரோதக்காரருக்குத் தங்களுக்குச் சரிப்போனாற்போலே செய்தார்கள்.— சூசான் ௬
கோட்டையிலும் யூதர் ஐந்நூறுபேரைக் கொன்று அழித்தார்கள்.—அம்மெதாத்தாவின் குமாரனாகிய ௭
ஆமானென்ற யூதருடைய சத்துருவின் பத்துக் குமாரரான பற்சான்தாத்தாவையும், தல்போனையும், ஸ்பாத்தாவையும்,—பொருத்தாவையும், ஆத ௮
லியாவையும், அரிதாத்தாவையும்,—பற்மஷ்டா ௯
வையும், அரிசாயையும், அரிதாயையும், வாய்ச்சாத்தாவையும் கொன்றுபோட்டார்கள். — ஆனால் ௰
கொள்ளையிடத் தங்கள் கைகளை நீட்டினதில்லை.

அன்றைத்தினம் சூசான் கோட்டையில் கொன் ௰௧
றுபோடப்பட்டவர்களின் தொகை இராசாவுக்குமுன்பாக வந்தது. — அப்போது இராசா இரா ௰௨
சஸ்திரியாகிய ஏஸ்தருடனே, சூசான் கோட்டையில் யூதர் ஐந்நூறுபேரையும் ஆமானின் பத்துக் குமாரரையும் கொன்று அழித்தார்கள்; இராசாவின் மற்றச் சீமைகளில் என்னசெய்திருப்பார்களோ, இப்போதும் உன் மனுவென்ன உனக்குக் கட்டளையிடப்படும்; நீ அப்புறம் கேட்கும் காரியமென்ன? அது செய்யப்படுமென்றான்.

அப்போது ஏஸ்தரென்றவள், இராசாவுக்குச் ௰௩
சம்மதியாயிருந்தால், இன்றைத்தினத்தின் பிரமாணத்துக்கொத்தபடி சூசானிலிருக்கிற யூதர் நாளைத்தினம் செய்யவும், ஆமானின் பத்துக் குமாரரைத் தூக்குமரத்தில் தூக்கிப்போடவும், உத்தரவுகொடுக்கப்படக்கடவதென்றாள்.—அப் ௰௪
போது அப்படிச்செய்யும்படிக்கு இராசா சொன்னான்; அதற்குச் சூசானிலே பிரமாணம் கட்டளையிடப்பட்டது; ஆமானின் பத்துக்குமாரரைத் தூக்கிப்போட்டார்கள்.—சூசானிலிருக்கிற யூதர் ௰௫
ஆதார்மாதத்தின் பதினாலாம் தேதியிலும் கூடிக்கொண்டு, சூசானில் மூந்நூறுபேரைக் கொன்றுபோட்டார்கள்; ஆனால் கொள்ளையிடத் தங்கள் கையை நீட்டினதில்லை.

இராசாவின் சீமைகளிலுள்ள மற்ற யூதர் தங்கள் ௰௬
பிராணனைத் தற்காக்கவும், தங்கள் பகைஞரை விலகி இளைப்பாறுதல் அடையவும் கூடிக்கொண்டு, தங்கள் விரோதக்காரரில் எழுபத்தையாயிரம்பேரைக் கொன்றுபோட்டார்கள்; ஆனால் கொள்ளையிடத் தங்கள் கையை நீட்டினதில்லை.—
ஆதார்மாதத்தின் பதின்மூன்றாம் தேதியிலே இப் ௰௭
படிச்செய்து, பதினாலாம் தேதியில் இளைப்பாறி, அதை விருந்துண்கிற சந்தோஷ நாளாக்கினார்கள்.—சூசானிலுள்ள யூதரோவெனில், அந்த மாத ௰௮
த்தின் பதின்மூன்றாம் தேதியிலும் பதினாலாம் தேதியிலும் கூடிக்கொண்டிருந்து, பதினைந்தாம் தேதியில் இளைப்பாறி, அதை விருந்துண்கிற சந்

௰௯ தோஷநாளாக்கினார்கள்.—ஆனதுகொண்டு அலங்
கமில்லாத ஊர்களில் குடியிருக்கிற நாட்டுப்புறத்
தாரான யூதர் ஆதார்மாதத்தின் பதினாலாம் தேதி
யைச் சந்தோஷமும், விருந்துண்கிற பூரிப்பு
மான நாளும், ஒன்றுக்கொன்று அதியாப்பங்கு
களை அனுப்புகிற நாளுமாக்கினார்கள்.
௨௰ இந்த வர்த்தமானங்களை மொற்தேகாயி எழுதி,
அகாஸ்வேரு இராசாவின் சகல சீமைகளிலும்,
கிட்டவும் தூரமுமாயிருக்கிற எல்லா யூதருக்கும்
௨௧ நிருபங்களை அனுப்பி,—யூதர் தங்கள் பகைஞ
ரை விலகி, இளைப்பாறுதல் அடைந்த நாள்க
ளின்படியேயும், அவர்கள் சஞ்சலம் சந்தோஷ
மாகவும், அவர்கள் துக்கம் மகிழுகிற நாளாகவும்
மாறின மாதத்தின்படியேயும், வருஷந்தோறும்
ஆதார் மாதத்தின் பதினாலாம் தேதியையும் பதி
௨௨ னைந்தாம் தேதியையும் ஆசரிக்கவும்,—அவைகளை
விருந்துண்கிற சந்தோஷ நாள்களுமாக்கவும்,ஒரு
வருக்கொருவர் காணிக்கைகளையும் எளியவர்க
ளுக்கு ஈவுகளையும் அனுப்புகிற நாள்களுமாக்க
வும், அவர்களுக்குத் திட்டம்பண்ணினான்.—
௨௩ அப்பொழுது யூதர் தாங்கள் செய்யத்துவக்கின
படியும் மொற்தேகாயி தங்களுக்கு எழுதினபடி
௨௪ யும் செய்ய ஏற்றுக்கொண்டார்கள்.— அம்மெ
தாத்தாவின் குமாரனாகிய ஆமானென்ற ஆகாகி
யனும் யூதருக்கெல்லாம் சத்துருவுமானவன் யூத
ரைச் சங்கரிக்க நினைத்து, அவர்களை அழிக்கவும்,
நிர்மூலமாக்கவும், பூறென்னப்பட்ட சீலியைப்
௨௫ போடுவித்தானென்றும்,—ஆனால் அது எஸ்தர்.
இராசாவுக்குமுன்பாக வந்தபின், யூதருக்கு
விரோதமாய் அவன் நினைத்த அவனுடைய பொ
ல்லாத யோசனை அவனுடைய தலையின்மேல்
திரும்புகிறதற்காக, நிருபங்களினாலே கட்டளை
பண்ணினதினால் அவனையும் அவன் குமாரரை
யும் மரத்திலே தூக்கிப்போட்டார்கள் என்றும்,—
௨௬ ஆகையினாலே அந்த நாள்கள் பூறென்ற நாமத்தி
னால் பூரீமென்னப்பட்டதென்றும், அவன் அந்த
நிருபத்தில் எழுதியிருந்த எல்லா வார்த்தைகளின்
நிமித்தமும், தாங்கள்தானே இதைத்தொட்டுக்
கண்டதின்நிமித்தமும்,தங்கள்மேல் இப்படி வந்
௨௭ ததின்நிமித்தமும்,—யூதர் அதைத் திடப்படுத்தி,
இந்த இரண்டுநாள்களைக் குறித்து எழுதியிருக்
கிறபடியே, அவைகளை வருஷந்தோறும் அவை
களின் திட்டமான காலத்திலே ஆசரியாதிருப்
௨௮ பதில்லை என்பதையும்,—இந்த நாள்கள் எல்லாத்
தலைமுறைகளிலும், வம்சங்களிலும், சீமைகளி
லும், ஊர்களிலும், நினைக்கப்பட்டு ஆசரிக்கப்
படவேண்டும் என்பதையும், இந்தப் பூரீமென்ற
நாள்கள் யூதருக்குள்ளே அற்றுப்போகாமலும்
அவைகளை நினைவுகூருதல் தங்கள் வித்தாருக்
குள்ளே அழியாமலுமிருக்கும் என்பதையும்,
தங்கள்மேலும் தங்கள் வித்தாரின்மேலும் தங்கள்
மார்க்கத்தில் அமையப்போகிற யாவர்மேலும்
ஏற்றுக்கொண்டார்கள்.

பூரீமைக்குறித்து எழுதியிருக்கிற இந்த இரண் ௨௯
டாம் நிருபத்தைத் திடப்படுத்தும்படிக்கு, அபி
காயலின் குமாரத்தியாகிய எஸ்தரென்ற இராசஸ்
திரியும், யூதனாகிய மொற்தேகாயியும், பின்னை
யும் மகா பெலனாய் எழுதினார்கள்.—யூதனாகிய ௩௰
மொற்தேகாயியும், இராசஸ்திரியாகிய எஸ்தரும்
யூதருக்கு உறுதிப்பாடுபண்ணினதும், அவர்கள்
தானே உபவாசத்தோடும் அலறுதலோடும் ஆச
ரிப்போமென்று தங்கள்மேலும் தங்கள் வித்தாரி
ன்மேலும், உறுதிப்பாடாக்கிக்கொண்டதுமான
பூரீமென்னப்பட்ட இந்த நாள்கள் அவைகளின்
திட்டமான காலங்களில் ஆசரிக்கப்படும் காரி
யத்தை உறுதியாக்க,— அவன் அகாஸ்வேரு ௩௧
வின் இராச்சியத்திலுள்ள நூற்றிருபத்தேழு சீமை
களிலிருக்கிற எல்லா யூதருக்கும் சமாதானமும்
உண்மையுமான வார்த்தைகளாய் நிருபங்களை அ
னுப்பினான்.—இப்படியே எஸ்தரின் கட்டளை ௩௨
பூரீம் நாள்களின் வர்த்தமானத்தைத் திடப்படுத்தி
ஒரு புஸ்தகத்தில் எழுதப்பட்டது.

## ௰. அதிகாரம்.

௧. அகாஸ்வேருவின் பெருந்தன்மை. ௩. மொற்தேகாயியின் மேன்மை.

இராசாவாகிய அகாஸ்வேரு தேசத்தின்மேலும், ௧
சமுத்திரத்தின் தீவுகள்மேலும், இறைவரி வைத்
தான்.— பெலனும் வல்லமையுமான அவனு ௨
டைய எல்லாச் செய்கைகளும் இராசா பெரிய
வனாக்கின மொற்தேகாயியினுடைய முக்கியத்
தின் விவரமும் மேதியா பெர்சியா இராசாக்க
ளின் நாளாகமப் புஸ்தகத்திலல்லவோ எழுதியி
ருக்கின்றன.—ஏனென்றால் யூதனாகிய மொற்தே ௩
காயி இராசாவாகிய அகாஸ்வேருக்கு இரண்டா
வதும் யூதருக்குப் பெரியவனும் தன்னுடைய தி
ரள் சகோதரருக்குப் பிரியமானவனுமாயிருந்து,
தன் சனத்துக்கு நன்மையைப் பராமரித்து, தன்
வித்தாருக்கெல்லாம் சமாதானமுண்டாகப் பே
சிக்கொண்டிருந்தான்.

JOB.

# யோபுடைய சரித்திரம்.

## க. அதிகாரம்.

*௧. யோபினுடைய உத்தமமும் ஐசுவரியமும், பிள்ளைகளை விசாரித்ததும். ௬. சாத்தான் பராபரனுக்குக் காணப்பட்டு, யோபைச் சோதிக்க விடை பெறறது. ௰௩. அவன் ஆஸ்தியையும் பிள்ளைகளையும் இழந்தபோது துக்கப்பட்டும், பராபரனைத் துதித்தது.*

௧ ஊத்ஸ்தேசத்திலே யோபு என்று பேருள்ள
ஒரு மனுஷன் இருந்தான்; அந்த மனுஷன் உத்
தமனும் செம்மைமார்க்கத்தானும் பராபரனுக்
குப் பயந்து, பொல்லாப்பை விலக்குகிறவனு
௨ மாயிருந்தான். — அவனுக்கு ஏழு குமாரரும்,
௩ மூன்று குமாரத்திகளும் பிறந்தார்கள். — அவ
னுக்கு மிருகசீவன்கள், ஏழாயிரம் ஆடுகளும்,
மூவாயிரம் ஒட்டகங்களும், ஐந்நூறு ஏர்மாடும்,
ஐந்நூறு கழுதைகளும், அவனுடைய பணிவி
டைச்சனம் மகா திரளுமாயிருந்ததினால், அந்த
மனுஷன் கிழக்கத்திப் புத்திரரெல்லாரைப்பார்க்
கிலும் பெரியவனாயிருந்தான்.
௪ அவன் குமாரர் அவனவன் தன் தன் நாளிலே
தன் தன் வீட்டிலும் விருந்துசெய்விக்கப் போய்,
தங்கள் மூன்று சகோதரிகளைத் தங்களோடே
கூடப் புசித்துக் குடிக்கிறதற்கு அழைத்தனுப்
௫ புவார்கள். — விருந்துசெய்விக்கிற அவரவரு
டைய நாள்களின் வரிசை முடிகிறபோதோ
வென்றால், யோபு அவர்களை அழைத்தனுப்பி,
பரிசுத்தம்பண்ணி, அதிகாலமே எழுந்திருந்து,
அவர்களெல்லாருடைய இலக்கத்தின்படியே
யும் சர்வாங்கதகனபலிகளைச் செலுத்துவான்;
ஏனென்றால் யோபு, ஒருவேளை என் குமாரர்
பாவம்செய்து, பராபரனைத் தங்கள் இருதயத்
தில் வெறுத்துவிட்டிருப்பார்களென்பான்; இந்
தப்பிரகாரமாக யோபு அப்படிக்கொத்த நாள்க
ளிலெல்லாம் செய்வான்.
௬ ஆனால் பராபரனுடைய குமாரர்கள் கர்த்தருக்
குமுன்பாக நிற்கவந்த ஒருநாளிலே, சாத்தானும்
௭ அவர்கள் நடுவிலே வந்தது.—கர்த்தர் சாத்தானு
டனே, நீ எங்கேயிருந்து வந்தாயென்றார்; சாத்
தான் கர்த்தருக்குப் பிரதியுத்தாரமாக,தேசத்தைச்
சுற்றி, அதிலே நடந்து திரிந்துவந்தேனென்
௮ றது. — கர்த்தர் சாத்தானுடனே, நம்முடைய
ஊழியக்காரனாகிய யோபின்மேலே கவனம்வை
த்தாயோ? ஏனென்றால் உத்தமமனுஷனும், செம்
மைமார்க்கத்தானும், பராபரனுக்குப் பயந்து,
பொல்லாப்பை விலக்குகிறவனுமாகிய அவனை
ப்போலத் தேசத்தில் ஒருவனும் இல்லை என்
௯ றார்.—அப்போது சாத்தான் கர்த்தருக்குப் பிரதி
யுத்தாரமாகச் சொன்னதாவது: யோபு விருதா
வாய்ப் பராபரனுக்குப் பயந்து நடக்கிறானோ?—
தேவரீர் அவனையும் அவன் வீட்டையும் அவனுக் ௰
குண்டான எல்லாவற்றையும் சுற்றிலும் வேலி
அடைக்கவில்லையோ? அவன் கைகளின் கிரி
யையை ஆசீர்வதித்தீர்;அவனுடைய மிருகசீவன்
கள் தேசத்திலே ஏராளமாயின.—ஆனால் தேவரீர் ௰௧
உம்முடைய கையை நீட்டி அவனுக்குண்டா
னவை எல்லாம் தொடுமேன்? அப்போது அவன்
உம்முடைய முகத்துக்கு எதிரே உம்மை வெறு
க்கானோவென்று பாருமென்றது. — அப்போது ௰௨
கர்த்தர் சாத்தானுடனே, இதோ அவனுக்குண்
டானவை எல்லாம் உன் கையிலிருப்பதாக; அ
வன்மேல்மாத்திரம் உன் கையைநீட்டாதேயென்
றார்; அப்போது சாத்தான் கர்த்தருடைய சமுகத்
தைவிட்டுப் புறப்பட்டுப்போயிற்று.

பிறகு அவன் குமாரரும், அவன் குமாரத்திக ௰௩
ளும், தங்கள் மூத்த சகோதரன் வீட்டிலே புசி
த்து, திராட்சப்பழஇரசம் குடிக்கிற ஒரு நாளி
லே சம்பவித்ததேதெனில்,—ஒரு ஆள் யோபண் ௰௪
டைக்கு வந்து, எருதுகள் உழுது, கழுதைகள்
அவைகளின் பக்கத்திலேமேய்ந்துகொண்டு இரு
க்கையில்,—சபேயோர் அவைகள்மேல் விழுந்து, ௰௫
அவைகளைப் பிடித்துக்கொண்டு, வேலையாள்க
ளைப் பட்டையக்கருக்கினால் வெட்டிப்போட்
டார்கள்; நான் ஒருவன்மாத்திரம் அதை உமக்கு
அறிவிக்கும்படிக்குத் தப்பிவந்தேனென்றான்.—
இவன் இன்னம் பேசுகையில், வேறொருவன் ௰௬
வந்து, பராபரனுடைய அக்கினி வானத்திலி
ருந்து விழுந்து, ஆடுகளையும் வேலையாள்களையும்
சுட்டழித்துப்போட்டது; நான் ஒருவன்மாத்தி
ரம் அதை உமக்கு அறிவிக்கும்படிக்குத் தப்பி
வந்தேனென்றான்.—இவன் இன்னம் பேசுகை ௰௭
யில் வேறொருவன் வந்து, கல்தேயர் மூன்றுப
விஞ்சாய் வந்து, ஒட்டகங்களின்மேல் விழுந்து,
அவைகளை ஒட்டிக்கொண்டு, வேலையாள்களைப்
பட்டையக்கருக்கினால் வெட்டிப்போட்டார்
கள்; நான் ஒருவன்மாத்திரம் அதை உமக்கு அறி
விக்கும்படிக்குத் தப்பிவந்தேனென்றான்.—இ ௰௮
வன் இன்னம்பேசுகையில்வேறொருவன்வந்து,
உம்முடைய குமாரரும், உம்முடைய குமாரத்
திகளும், தங்கள் மூத்த சகோதரன் வீட்டிலே
புசித்துத் திராட்சப்பழஇரசம் குடிக்கையில்,—
இதோ பெருங்காற்று வனாந்தரவழியாய் வந்து, ௰௯

அந்த வீட்டினுடைய நாலு கோடியிலும் அடித்
தது; அப்போது அது பிள்ளைகளின்மேல் விழுந்
ததினால் அவர்கள் மடிந்துபோனார்கள்; நான்
ஒருவன்மாத்திரம் அதை உமக்கு அறிவிக்கும்ப
டிக்குத் தப்பிவந்தேனென்றான்.
௨௰ அப்போது யோபு எழுந்திருந்து, தன் சால்வை
யைக் கிழித்துக்கொண்டு, தன் தலைமயிரை வாங்
கித் தரையிலே விழுந்து பணிந்துகொண்டு,—
௨௧ நிருவாணமாய் என் தாயின் கர்ப்பத்திலிருந்து
புறப்பட்டேன்; நிருவாணமுமாய் அவ்விடத்து
க்குத் திரும்புவேன்; கர்த்தர் கொடுத்தார்; கர்த்தர்
எடுத்தார்; கர்த்தருடைய நாமம் ஸ்தோத்திரிக்கப்
௨௨ படக்கடவதென்றான்.—இவைகள் எல்லாவற்றி
லும் யோபு பாவம்செய்யாமலும், பராபரனுக்கு
ஏராததொன்றும் நினைக்காமலுமிருந்தான்.

## ௨. அதிகாரம்.

*௧ சாத்தான் பராபரனுக்குக் காணப்பட்டு, மறுபடியும் யோபைச் சோதிக்க விடைபெற்றது. ௭. அவனைப் பொல்லாத பருக்களால் வாதித்தது. ௯. பராபரனைச் சபிக்க ஏவின பெண்சாதியை யோபு கடிந்துகொண்டது. ௰௧. மூன்று சிநேகிதர்கள் அவனுக்கு ஆறுதல் செய்யவந்து மவுனமாயிருந்தது.*

௧ பராபரனுடைய குமாரர்கள் கர்த்தருக்குமுன்
பாக நிற்கவந்த பின்னொருநாளிலேயென்றால்,
அவர்கள் நடுவிலே சாத்தானும் கர்த்தருக்குமுன்
௨ பாக நிற்கவந்தது.—கர்த்தர் சாத்தானுடனே, நீ
எங்கேயிருந்து வருகிறாயென்றார்; சாத்தான்,
கர்த்தருக்குப் பிரதியுத்தாரமாகத் தேசத்தைச்
௩ சுற்றி, அதில் நடந்து திரிந்தேனென்றது.—அப்
போது கர்த்தர் சாத்தானுடனே, நீ நம்முடைய
ஊழியக்காரனாகிய யோபின்மேலே கவனம்வை
த்தாயோ? ஏனெனில் உத்தமனும், செம்மைமார்க்
கத்தானும், பராபரனுக்குப் பயந்து பொல்லாப்
பைவிலக்குகிறவனுமான மனுஷனாகிய அவனை
ப்போல தேசத்திலே ஒருவனுமில்லை; முகாந்தர
மில்லாமல் அவனை நிர்மூலம்பண்ண நீ நம்மை
எடுத்துவிட்டிருந்தாலும், அவன் இன்னம் தன்
உத்தமத்திலே உறுதியாய் நிற்கிறானென்றார்.—
௪ ஆனால் சாத்தான் கர்த்தருக்குப் பிரதியுத்தாரமாக,
தோலுக்குப்பதிலாகத் தோலையும், தனக்கு உண்
டான எல்லாவற்றையும், தன் ஜீவனுக்குப்பதி
௫ லாக மனுஷன் கொடுத்துவிடுவான்.—ஆனால்
தேவரீர் உம்முடைய கையை நீட்டி, அவன்
எலும்பையும் அவன் மாம்சத்தையும் தொடும்;
அப்போது அவன் உமது முகத்துக்கு எதிரே
உம்மைவெறுக்கானோவென்று பாருமென்றது.—
௬ அப்போது கர்த்தர் சாத்தானுடனே, இதோ அ
வன் உன் கையிலிருப்பானாக; ஆகிலும் அவன்
பிராணனைக் காவென்றார்.
௭ அப்போது சாத்தான் கர்த்தருடைய சமுகத்
தைவிட்டுப் புறப்பட்டு, யோபின் உள்ளங்
கால்துவக்கி அவன் உச்சந்தலைமட்டும் எழும்
புகிற பொல்லாத பருக்களால் அவனை வாதித்
௮ தது.—அப்போது அவன் ஒரு ஓட்டை எடுத்துக்
கொண்டு, தன்னைச் சுறண்டிச் சாம்பலில் உளுக்
காந்தான்.

அவன் பெண்சாதி அவனைப்பார்த்து, இன் ௯
னம் உம்முடைய உத்தமத்தில் உறுதியாய் நிற்கி
றீரோ? பராபரனை அரோசித்துச் செத்துப்போ
மென்றாள்.—அவனோவென்றால் அவளுடனே, ௰
நீ பயித்தியக்காரிகளில் ஒருத்தி பேசுகிறதுபோ
லப் பேசுகிறாய்; பராபரன் கையிலே நன்மை
யைவாங்கின நாம் தீமையையும் வாங்கவேண்
டாமோவென்றான்; இவைகளிலெல்லாம் யோபு
தன் உதடுகளினாலே பாவம்செய்யாதிருந்தான்.

யோபுடைய மூன்று சிநேகிதராகிய தேமானி ௰௧
யனான எலிப்பாசும், சூகியனான பில்தாதும், நா
மாத்தியனான சோப்பாரும், யோபின்மேல் வந்த
இந்தப் பொல்லாப்பெல்லாம் கேட்டபோது,
அவரவர் தங்கள் ஸ்தலங்களில் இருந்துவந்து, அ
வனுக்காகப் பரதபிக்கவும், அவனுக்கு ஆறுதல்
சொல்லவும், ஒருவர்க்கொருவர் யோசனை பண்
ணிக்கொண்டார்கள்.—அவர்கள் தூரத்திலிருக் ௰௨
கையில் தங்கள் கண்களை ஏறெடுத்தபோது,
அவனை அறியமாட்டாதேபோய்ச் சத்தமிட்ட
ழுது, அவரவர் தங்கள் சால்வையைக் கிழித்து,
வானத்தைப்பார்த்து, தங்கள் தலைகளின்மேல்
புழுதியைத் தூற்றிக்கொண்டு,—வந்து ஒருவரும் ௰௩
அவனோடு ஒரு வார்த்தையையும் பேசாமல் இர
வுபகல் ஏழுநாள் அவனோடேகூடத் தரையிலே
உளுக்காந்திருந்தார்கள்; ஏனெனில் அந்த நோய்
மகா கடினமென்று கண்டார்கள்.

## ௩. அதிகாரம்.

*௧. யோபு தான் பிறந்தநாளைச் சபித்தது. ௰௧. மரணம் சஞ்சலமில்லாமை. ௨௰ தன் உபத்திரவத்தினாலே ஜீவனைக்குறித்து முறையிட்டது.*

அதற்குப்பிற்பாடு யோபு தன் வாயைத்திறந்து, ௧
தான் பிறந்தநாளைச் சபித்துக்கொண்டு, — வச ௨
னித்துச் சொன்னதாவது:

நான் பிறந்தநாளும், ஒரு ஆண்பிள்ளை உற் ௩
பத்தியாயிற்றென்று சொல்லப்பட்ட இராத்திரி
யும் அழிவதாக.—அந்த நாள் அந்தகாரமாவதாக; ௪
பராபரன் உயர இருந்து அதை விசாரியாமலும்,
பிரகாசம் அதின்மேலே துலங்காமலும்,—இரு ௫
ளும் மரணநிழலும் அதை அழுக்குப்படுத்தி, மப்
பும் அதை மூடி, மந்தாரநாளின் பயங்கரங்கள்
அதை அருக்களிப்பாக்குவதாக.

அந்த இராத்திரியை அந்தகாரம் பிடிப்பதாக; ௬
அது வருஷத்தின் நாள்களில் சந்தோஷப்படுகிற
நாளாயிராமலும், மாதங்களின் கணக்கிலே வரா
மலும் போவதாக.—இதோ அந்த இராத்திரி ௭
தனிமையாகவும், அதிலே கெம்பீர சத்தமில்லாம
லும் இருந்ததானால் தாவிளை.—நாளைச் சபிக்கிற ௮
வர்களும், முதலைகளையும் எழும்பப்பண்ணத்தக்
கவர்களும், அதைச் சபித்திருந்தால் தாவிளை.—
அஸ்தமித்தவுடனே அதில் உதித்த நட்சத்திரங் ௯
கள் இருண்டு, அது வரப்பார்த்த வெளிச்சம்
உண்டாகாமலும், விடியுங்காலத்தின் வெளுப்
பை அது காணாமலுமிருந்ததானால் தாவிளை.—
ஏனென்றால் நான் கிடந்த கர்ப்பத்தின் வாசல் ௰

களை அது அடைக்காமலும், என் கண்கள்
காண்கிற வருத்தத்தை மறைத்துவிடாமலும் இ
ருந்ததே.
௰௧ நான் கர்ப்பத்தில்தானே சாகாமலும், கர்ப்பத்
திலிருந்து புறப்படுகிறபோதே சீவித்துப்போகா
௰௨ மலும் போனதென்ன?—முழங்கால்கள் என்னை
ஏந்திக்கொண்டதென்ன? நான் முலையுண்ணக்
௰௩ கொங்கைகள் உண்டாயிருந்ததென்ன?—ஏனெ
ன்றால் இப்போது கிடந்து அமர்ந்திருப்பேனே.—
௰௪ பாழ்நிலங்களில் தங்களுக்கு மாளிகையைக் கட்
டின பூமியிலுள்ள இராசாக்களோடும், ஆலோச
௰௫ னைக்காரரோடும்,—அல்லவென்று பொன் ஆஸ்தி
க்காரரும் தங்கள் வீடுகளை வெள்ளியினால் நிரப்பி
னவர்களுமான பிரபுக்களோடுங்கூட நான் இப்
போது இளைப்பாறிக்கொண்டு தூங்குவேனே.—
௰௬ அல்லவென்று கர்ப்பம் விழுந்துபோன அடக்க
மான பிண்டமும், வெளிச்சத்தைக் காணாத குழந்
தைகளும், இல்லாமல் போகிறதுபோல ஆவே
௰௭ னே.—அங்கே ஆகாதவர்கள் கலங்கடிக்குதலை
விட்டு ஓய்ந்திருக்கிறார்கள்; அங்கே பெலனற்று
விடாய்த்துப்போனவர்கள் இளைப்பாறுகிறார்
௰௮ கள்.— கட்டுண்டிருந்தவர்கள் அங்கே ஏகமாக
அமைதலாயிருந்து, ஒடுக்குகிறவனுடைய சத்தத்
௰௯ தைக் கேளாதிருக்கிறார்கள்.—சிறியவனும் பெரி
யவனும் அங்கே ஏகம்; அங்கே அடிமை தன் எச
மானனைவிட்டுத் தன்னீங்கலாயிருக்கிறான்.
௨௰ மரணத்துக்கு ஆசையாய்க் காத்திருந்து, புதை
யல்களைத் தோண்டித் தேடுகிறதைப்பார்க்கிலும்
அதைத் தேடியும் அதை அடையாமல்போகிறவர்
௨௧ களுக்கும்,—பிரேதக்குழியைக் கண்டுபிடித்ததி
௨௨ னால் மிகவும் களிகூர்ந்து,—அதற்காகச் சந்தோ
ஷப்படுகிற நிர்ப்பந்தக்காரருக்கு வெளிச்சமும்,
மனச்சஞ்சலக்காரருக்குச் சீவனும் கொடுக்கப்
௨௩ படுகிறதென்ன?—அது தன் வழியை அறியாதவ
னுக்கும், பராபரன் அதை மறைந்திருக்கிறவனுக்
௨௪ கும் கொடுக்கப்படுகிறதென்ன?—ஏனென்றால்
என்னுடைய சாப்பாட்டுக்குமுன்னே எனக்குப்
பெருமூச்சு வரும்; என் அலறுதல்கள் தண்ணீ
௨௫ ரைப்போல ஊற்றுண்கின்றன. — ஏனெனில்
வருமென்று நான் அருக்களித்தது எனக்கு நேரி
௨௬ ட்டது; நான் பயந்தது எனக்கு வந்தது.—சுகிக்கா
மலும், அமராமலும், இளைப்பாறாமலும் இருக்
கிற எனக்குத் தத்தளிப்பு வந்தது.

## ௪. அதிகாரம்.

௧. யோபுக்குத் தேவபத்தி இல்லாமையை எலிப்பாஸ் கண்டித்தது. ௭. அவன் பராபரனுடைய நியாயத்தீர்ப்புகள் நீதிமான்களுக்காக அல்ல, துன்மார்க்கருக்காக உண்டென்று போதித்தது. ௰௨. பராபரனுக்குமுன் பாகச் சிருஷ்டிகளின் மகிமையை அடக்கும்படி அவனுக்குண்டான பயங்கரமுள்ள தரிசனை.

௧ அப்போது தேமானியனாகிய எலிப்பாஸ் பிரதி
௨ யுத்தாரமாகச் சொன்னதாவது:—நாங்கள் உம்மு
டனே பேச வகைபார்த்தால், ஆயாசப்படுவீரோ?
ஆனால் வசனிக்காதபடிக்கு, அடக்கிக்கொள்ளத்
௩ தக்கவன் யார்?—இதோ நீர் அநேகருக்குப் புத்தி
சொல்லி, இளைத்த கைகளைத் திடப்படுத்தினீர்.—
விழுகிறவனை உம்முடைய வார்த்தைகள் நிற்கப் ௪
பண்ணி, தள்ளாடுகிற முழங்கால்களைப் பலப்ப
டுத்தினீர்.—இப்போதோவென்றால் இது உம்மு ௫
டையமேல் வந்தபடியினாலே ஆயாசப்படுகிறீர்;
இது உம்மைத் தொட்டதினால் நீர் கலங்குகிறீர்.—
உம்முடைய தேவபத்தி உம்முடைய உறுதியும், ௬
உம்முடைய வழிகளின் உத்தமம் உம்முடைய
நம்பிக்கையுமாய் இருக்கவேண்டியதல்லவோ?—
குற்றமில்லாமல் அழிந்தவன் யார்? செம்மை ௭
மார்க்கத்தார் அதம்பண்ணப்பட்டது எப்போ
தென்கிறதை நினைத்துக்கொள்ளுமே. — நான் ௮
கண்டிருக்கிறபடி அநியாயத்தை உழுது, வருத்
தத்தை விதைத்தவர்கள் அதைத்தான் அறுக்கிறார்
கள்.—பராபரனுடைய சுவாசத்தினாலே அவர் ௯
கள் அழிந்து, அவருடைய நாசியின் காற்றினாலே
நிர்மூலமாகிறார்கள் —சிங்கத்தின் கெர்ச்சிப்பும், ௰
துஷ்டசிங்கத்தின் சத்தமும், இளம் சிங்கங்க
ளின் பல்லுகளும் முறிந்துபோம்.—கிழச்சிங்கம் ௰௧
இரையில்லாததினால் அழிந்து, சிங்கக்குட்டிகள்
சிதறுண்டுபோகின்றன.
இப்போதும் ஒரு வார்த்தை இரகசியமாய் என் ௰௨
னண்டைக்கு வந்தது; அதினுடைய சிறிய ஓசை
என் செவியில் விழுந்தது.—மனுஷர்மேல் அயர்ந்த ௰௩
நித்திரை இறங்குகிறபோது, இராத்தரிசனைக
ளான பலவித தோற்றல்கள் உண்டாயிருக்கை
யில்,—திகிலும் நடுக்கமும் என்னைப் பிடித்து, ௰௪
என் எலும்புகளையெல்லாம் திடுக்கிடப்பண்ணி
ன.—அப்போது ஒரு ஆவி என் முகத்துக்குமுன் ௰௫
பாகக் கடந்தது; என் உடலின் மயிர் சிலிர்த்துக்
கொண்டது.—அது நின்று ஒரு உருப்போலே ௰௬
என் கண்களுக்கு எதிரேயிருந்தது; ஆனால் நான்
அதின் உருவத்தை அறிந்ததில்லை; அமைதலுண்
டானபின் நான் கேட்ட சத்தமாவது:—மனுஷன் ௰௭
பராபரனைப்பார்க்கிலும் நீதிமானாயிருப்பானோ?
ஒரு புருஷன் தன்னை உண்டாக்கினவரைப்பார்
க்கிலும் சுத்தமாயிருப்பானோவென்றது.—இதோ ௰௮
அவர் தம்முடைய வேலையாள்களை நம்பாமல்,
தம்முடைய தூதரின்மேலே புத்தியில்லாமை
யைச் சுமத்துவாரே.—களிமண் வீடுகளில் வாசம் ௰௯
பண்ணி, மண்ணில் அஸ்திபாரப்பட்டுப் பொட்
டால் அரிக்கப்படுகிறவர்கள்மேல் எத்தனை அதி
கம்?—அவர்கள் காலமே துவக்கிச் சாயங்கால ௨௰
மாகும்மட்டும் நொறுங்குண்டு, ஒருவரும் கவனி
யாமல் நித்திய அழிவடைகிறார்கள்.—அவர்களி ௨௧
லிருக்கிற அவர்களுடைய மகிமை போய்விடு
மல்லவோ? ஞானமில்லாமல் சாகிறார்கள்.

## ௫. அதிகாரம்.

௧. யோசனையில்லாமையின் கேடு. ௩. பொல்லாதவர்களின் முடிவு நிர்ப்பாக்கியம். ௬. துன்பத்திலே பராபரனை நினைக்கிறது நியாயம். ௰௭. பராபரனுடைய தண்டனையின் முடிவு ஆசீர்வாதம்.

இப்போதும் உமக்காக மறு உத்தரவு சொல்வா ௧
ருண்டோவென்று கூப்பிடுமே? பரிசுத்தவான்
களில் எவனை நோக்கிப் பார்ப்பீர்? — ஏனென் ௨
றால் நிர்மூடனையே மனமடிவு கொல்லும்; புத்

௩ தியில்லாதவனை எரிச்சல் மடிவிக்கும். — நிர்மூ
டன் ஒருவன் வேர்ப்பிடிக்கிறதை நான் கண்டு,
உடனே அவன் வாசஸ்தலத்தைச் சபித்தேன்.—
௪ அவன் பிள்ளைகள் இரட்சிப்புக்குத் தூரமாகி,
தப்புவிப்பாரில்லாமல், வாசலில் நொறுக்கப்பட்
௫ டார்கள். — அவனுடைய அறுப்பைப் பசித்த
வன் தின்று, முள்செடிகளுக்குள்ளும் இருந்து
அதைப் பறித்தான்; பறிகாரன் அவன் ஆஸ்தியை
௬ விழுங்கினான்.—ஏனெனில் அக்கிரமம் மண்ணி
லிருந்து புறப்படாமலும், வருத்தம் பூமியிலிருந்
௭ து முளைக்காமலும், — அக்கினியின் பொறிகள்
உயரப் பறக்கிறதுபோல, மனுஷன் கஸ்தி அநுப
விக்கிறதற்குப் பிறந்தான்.
௮ ஆனால் நான் பராபரனுடைய நியாயத்தை
ஆராய்ந்து, என் வசனத்தைப் பராபரனுக்கு நேரா
௯ கத் திருப்பினால் தாவிளை.-அவர் ஆராய்ந்து முடி
யாத பெரிய காரியங்களையும், எண்ணிமுடியாத
௰ அதிசயங்களையும் செய்கிறார். — தாழ்ந்தவர்களை
உயர்த்திவைக்கவும், இந்த அடைவாய்த் துக்கிக்
௰௧ கிறவர்கள் இரட்சிக்கப்பட்டு உயரவும்,—அவர்
பூமியின்மேல் மழையைக் கட்டளையிட்டு, வெ
ளிகளின்மேலே தண்ணீர்களை வரவிடுகிறார்.—
௰௨ தந்திரக்காரரின் கைகள் காரியத்தை முடிய நடத்
தக்கூடாதபடிக்கு, அவர் இவர்கள் நினைவுகளை
௰௩ அவத்தமாக்குகிறார்.—அவர் ஞானிகளை அவர்
கள் தந்திரத்திலே பிடிக்கிறார்; அதினால் திரியா
வரக்காரரின் ஆலோசனை கவிழ்ந்துபோகிறது.—
௰௪ பகல்காலத்தில் அந்தகாரத்துக்கு நேராகி, மத்தி
யானவேளையிலே இராவில் இருக்கிறதுபோலே
௰௫ தடவித் திரிகிறார்கள்.—ஆனால் எளியவனை அ
வர்கள் வாயிலிருக்கிற பட்டையத்துக்கும், பெ
லவானின் கைக்கும், விலக்கி இரட்சிக்கிறார்.—
௰௬ அப்படியே தரித்திரனுக்கு நம்பிக்கையுண்டு;
ஆனால் அக்கிரமமானது தன் வாயை மூடும்.
௰௭ இதோ பராபரன் தண்டிக்கிற மனுஷன் பாக்
கியவான்; ஆகையால் சர்வத்துக்கும் வல்லவரு
௰௮ டைய கண்டனையை வெறுக்காதிரும்.—ஏனெ
னில் அவர் நோவுண்டாக்கி, திரும்பக் காயம்
கட்டுகிறார்; அவர் காயப்படுத்துகிறார்; அவரு
௰௯ டைய கை திரும்ப ஆற்றுகிறது.—ஆறு இக்கட்
டுகளுக்கு உம்மை நீங்கலாக்குவார்; ஏழாவதி
லும் பொல்லாப்பு உம்மைத் தொடாதிருக்கும்.—
௨௰ பஞ்சகாலத்திலே அவர் உம்மை மரணத்துக்கும்
யுத்தத்திலே பட்டையத்தின் வெட்டுகளுக்கும்
௨௧ விலக்கிமீட்பார்.—நாவின் சவுக்குக்கும் மறைக்
கப்படுவீர்; பாழ்க்கடிப்பு வரும்போது, பயப்ப
௨௨ டாமலுமிருப்பீர்.—பாழ்க்கடிப்பையும் பஞ்சத்
தையும் நகைப்பீர்; பூமியின் மிருகங்களுக்குப்
௨௩ பயப்படாமலுமிருப்பீர். — ஏனெனில் வெளி
யின் கல்லுகளோடும் உமக்கு உடம்படிக்கையி
ருக்கும்; வெளியின் மிருகசீவன்களும் உம்மோ
௨௪ டே சமாதானமாயிருக்கும்.—உம்முடைய கூடா
ரம் சமாதானத்தோடிருக்கும் என்பதை நீர் கண்
டறிந்து, உம்முடைய வாசஸ்தலத்தைப் பழுது
௨௫ வராதபடிக்குப் பராமரிப்பீர். — உம்முடைய
வித்தார் பெருகி, உம்முடைய சந்ததியார் பூமி
யின் பூண்டுகளைப்போல இருப்பார்களென்கி
றதை அறிந்துகொள்வீர்.—தானியம் ஏற்றகாலத் ௨௬
திலே அம்பாரமாய்க் கூட்டப்படுவதுபோல,
முதிர்வயதிலே கல்லறையில் வந்து சேருவீர்.—
இதோ நாங்கள் ஆராய்ந்தறிந்தது இதுதான் இப் ௨௭
படியிருக்கிறது; இதை நீர் கேட்டு உமக்கு நன்
மையாக அறிந்துகொள்ளுமென்றான்.

## ௬. அதிகாரம்.

௧. யோபு தன் முறைப்பாடுகளின் முகாந்தரத்தைக் காட்டினது. ௮. மரணத்தினாலே வரும் ஆறுதலை விரும்பினது. ௰௪. தன் சிநேகிதர் வெறுப்படைந்ததைக் கண்டித்தது.

யோபோவென்றால் பிரதியுத்தாரமாகச் சொன் ௧
னதாவது:—என்னுடைய சஞ்சலம் நிறுக்கவே ௨
நிறுக்கப்பட்டு, என்னுடைய நிர்ப்பந்தம் எல்
லாம் தராசிலே வைக்கப்பட்டால் தாவிளை.—
ஏனெனில் அது இப்போது கடற்கரை மணலைப் ௩
பார்க்கிலும் பாரமாயிருக்கும்; ஆகையால் என்
னுடைய வார்த்தைகள் உள்ளடங்கிப்போம்.—
ஏனென்றால் சர்வத்துக்கும் வல்லவரின் அம்பு ௪
கள் எனக்குள் இறங்கி இருக்கின்றன; அவைக
ளின் எரிவை என்னுடைய ஆவி குடிக்கிறது;
பராபரனுடைய பயங்கரங்கள் எனக்கு முன்
பாக அணியணியாய் நிற்கின்றன. — புல்லிருக் ௫
கிற இடத்திலே காட்டுக்கழுதை கதறுமோ? தன்
னுடைய தீனியிருக்கிற இடத்தில் எருது கூப்பி
டுமோ?—ருசியில்லாததை உப்பில்லாமல் சாப்பி ௬
டக்கூடுமோ? முட்டையின் வெள்ளைக்கருவில்
ருசியுண்டோ? — உங்கள் வார்த்தைகளை என் ௭
ஆத்துமா தொடமாட்டேனென்கிறது; அவை
கள் குமட்டலெடுக்கிற என்னுடைய போசனத்
துக்கு ஒத்தவைகள்.

என்னுடைய மன்றாட்டு எனக்கு வந்து நான் ௮
வரப்பார்த்திருக்கிறதைப் பராபரன் எனக்குக்
கொடுத்து,—பராபரன் என்னை நொறுக்கச் சித் ௯
தமாயிருந்து, தம்முடைய கையை என்னைவிட்
டெடுத்து என்னைத் துண்டித்தால் தாவிளை.—அது ௰
இன்னம் எனக்கு ஆறுதலாயிருக்குமே, அப்
பொழுது என்னைத் தப்பவிடாத நோவிலே மரத்
திருப்பேன்; ஏனெனில் பரிசுத்தமுள்ளவரு
டைய வார்த்தைகளை நான் மறைத்ததில்லை.—
நான் காத்துக்கொண்டிருக்க, என்னுடைய பெ ௰௧
லன் எம்மாத்திரம்? என் சீவனை நீடித்திருக்கப்
பண்ண என் முடிவேது? — என்னுடைய பெ ௰௨
லன் கல்லுகளின்பெலனோ? என் மாம்சம்வெண்
கலமோ?—எனக்கு உதவியான உத்தரவு எனக் ௰௩
குள் இல்லையோ? மெய்ஞ்ஞானம் என்னைவிட்டு
வாங்கிப்போயிற்றோ?

உபாதிக்கப்படுகிறவனுக்கு அவனுடைய ௰௪
சிநேகிதனால் தயை காண்பிக்கப்படவேண்டும்;
ஆனால் இவன் சர்வத்துக்கும் வல்லவருக்குப்
பயப்படாதே போகிறான்.—என்னுடைய சகோ ௰௫
தரர் ஆற்றைப்போல மோசம்பண்ணுகிறார்கள்;
ஆறுகளின் வெள்ளத்தைப்போலக் கடந்துபோ

௰௬ கிறார்கள்.—அவைகள் குளிர்காலப் பனியினா
லும், உறைந்த மழை அவைகளில் உருகினதினா
௰௭ லும், அலைவிரிதலாய் வந்து கறுத்து,—உஷ்ண
மாகிறகாலத்திலே வற்றி, அனல்பட்டபோது
தங்கள் ஸ்தலத்தில் உருவழிந்துபோகின்றன.—
௰௮ அவைகளுடைய வழிகளின் போக்குகள் இங்
குமங்கும் பிரியும்; அவைகள் விருதாவிலே ஏற்ற
௰௯ மானபின் ஒன்றும் இல்லாமல்போம்.—தேமா
வின் பயணக்காரர் பார்த்துத் தேடி, சேபாவின்
பயணக்கூட்டங்கள் அவைகள்மேல் நம்பிக்
௨௰ கைவைத்து,—தாங்கள் இப்படி நம்பினதினாலே
வெட்கப்படுகிறார்கள்; அவ்விடம்மட்டும் வந்து
௨௧ கலங்கிப்போகிறார்கள். — அதென்னவென்றால்
இப்போதும் நீங்கள் ஒன்றுக்கும் உதவாமல்போ
னீர்கள்; என் கலங்குதலைக் கண்டு ஐயப்படுகி
௨௨ றீர்கள்.—எனக்கு ஏதாகிலும் கொண்டுவாருங்க
ளென்றும், உங்கள் ஆஸ்தியில் எனக்கு யாதொரு
௨௩ அநியாவைக் கொடுங்களென்றும், — அல்லது
சத்துருவின் கைக்கு என்னைத் தப்புவியுங்கள்;
வல்லடிக்காரரின் கைக்கு என்னை நீங்கலாக்கி
மீட்டுக்கொள்ளுங்களென்றும் நான் சொன்னே
னோ?
௨௪ என்னை உபதேசியுங்கள்; நான் மவுனமாயி
ருப்பேன்; நான் எதிலே பிசகிப்போனேன் என்
௨௫ பதை எனக்கு அறியப்படுத்துங்கள்.—செம்மை
யான வார்த்தைகளில் என்ன கடினமிருக்கிறது?
உங்களில் யாராகிலும் கடிந்துகொள்ளத்தக்க கா
௨௬ ரியமென்ன? — கடிந்துகொள்ள நீங்கள் வார்த்
தைகளை யோசித்துத் திடனற்றவனுடைய வார்த்
தைகளைக் காற்றிலே விட்டுவிடுகிறீர்களோ?—
௨௭ இப்படிச்செய்து திக்கற்றவன்மேலே நீங்கள்
விழுந்து உங்கள் சிநேகிதனுக்குப் படுகுழியை
௨௮ வெட்டுகிறீர்கள். — இப்போதும் உங்களுக்குச்
சித்தமுண்டானால் என்னை நோக்குங்கள்; அப்
போது நான் பொய்சொல்லுகிறேனோவென்று
உங்கள் முகத்துக்குமுன்பாகத் தெரியவரும்.—
௨௯ நீங்கள் இப்படித் திரும்பினாலும் அக்கிரமம் கா
ணாதிருக்கும்; அப்படித் திரும்பினாலும் என்னு
௩௰ டைய நீதி அதிலே விளங்கும்.—என்னுடைய
நாவிலே அக்கிரமம் உண்டோ? என்னுடைய
வாய் என் நிர்ப்பதங்களை அறிவிக்காதிருக்
குமோ?

## ௭. அதிகாரம்.

௧. யோபு தான் மரணத்தை விரும்பினது நியாயமென்றது. ௰௨. அவன் தன் கலக்கத்தையும், ௰௭. பராபரன் பாதுகாத்தலையும் குறித்து முறையிட்டது.

௧ மனுஷனுக்குப் பூமியின்மேல் போராட்டம்
உண்டல்லவோ? அவன் நாள்கள் ஒரு கூலிக்
காரன் நாள்களைப்போலிருக்கிறதல்லவோ? —
௨ ஒரு வேலையாள் நிழலை வாஞ்சித்து, ஒரு கூலிக்
காரன் தன் கூலியை வரப்பார்த்திருக்கிறதுபோ
௩ ல,—மாயையான மாதங்கள் என்னுடைய சுதந்
தரமாகி, பிரயாசமான இராத்திரிகள் எனக்குக்
௪ குறிக்கப்பட்டன. — நான் படுத்துக்கொள்ளுகி
றபோது நான் எழுந்திருப்பதெப்போது, இராத்
திரிகாலம் சரியாவது எப்போதென்று சொல்லி,
கிழக்கு வெளுக்கிறநேரம்மட்டும் அருண்டு புர
ளுகிறதினால் எனக்குப் போதுமென்று போகி
றது.—என்னுடைய மாம்சம் பூச்சிகளினாலும் ௫
அடைபற்றின புழுதியினாலும் மூடப்பட்டிருக்
கிறது; என்னுடைய தோல் வெடித்து அருவருப்
பாயிற்று.—என்னுடைய நாள்கள் நெய்கிறவன் ௬
எறிகிற நாடாவிலும் தீவிரமாய் ஓடி, நம்பிக்கை
யில்லாமல் முடிந்துபோகும். — என்னுடைய ௭
பிராணன் காற்றைப்போலிருக்கிறதென்றும் என்
கண்கள் திரும்ப நன்மையைக் காணப்போகிற
தில்லையென்றும் நினைத்தருளும். — இப்போது ௮
என்னைக் காண்கிறவர்களின் கண்கள் இனி என்
னைப் பார்ப்பதில்லை; உம்முடைய கண்கள் என்
மேலிருக்கின்றன; ஆனால் நான் இல்லாதேபோ
கிறேன்.—ஒரு மேகம் பறிந்துபோகிறதுபோல, ௯
குழியில் இறங்குகிறவன் இனி ஏறாதிருப்பான்.—
இனி தன் வீட்டுக்குத் திரும்பான், அவன் ஸ்தலம் ௰
இனி அவனை அறியாது.—ஆகையினாலே நானும் ௰௧
என் வாயை அடக்காமல், என் ஆவியின் இடுக்
கத்திலே பேசி, என் ஆத்துமத்தின் கசப்பிலே
அங்கலாய்ப்பேன்.

தேவரீர் என்னைக் காவல்வைக்கிறதற்கு நான் ௰௨
ஒரு சமுத்திரமோ? நான் ஒரு திமிங்கலமோ?—
என்னுடைய கட்டில் எனக்கு ஆறுதல் கொடுக்கு ௰௩
மென்றும், என்னுடைய படுக்கை என்னுடைய
தவிப்பைக் குறைக்குமென்றும், நான் சொன்
னால்,—நீர் சொப்பனங்களினால் என்னைக் கலங் ௰௪
கப்பண்ணி, தரிசனைகளால் எனக்குத் திகிலுண்
டாக்குகிறீர்.—அதினால் என் ஆத்துமம் நெருக் ௰௫
குண்டு சாகிறதையும், என் எலும்புகளோடே
உயிரோடிருக்கிறதைப்பார்க்கிலும் மரணத்தை
யும் தெரிந்துகொள்ளும்.—இப்படியிருக்கிறதை ௰௬
அரோசிக்கிறேன்; இப்படியென்றும் உயிரோடி
ருக்கமாட்டேன், என்னைப் போகவிடும்; ஏனெ
னில் என் நாள்கள் மாயைதானே.—மனுஷனை ௰௭
நீர் ஒருபொருட்டாய் எண்ணுகிறதற்கும், அவன்
மேல் உம்முடைய இருதயத்தை வைக்கிறதற்
கும்,—அவனைக் காலையில் விசாரித்து, அடிக்கடி ௰௮
அவனைச் சோதிக்கிறதற்கும், அவன் எம்மாத்
திரம்? — நான் என் உமிழ்நீரை விழுங்கும் ௰௯
மட்டும் எத்தனைகாலம் என்னை நெகிழாமலும்,
என்னை விடாமலுமிருப்பீர்.—மனுஷரைக் காப்ப ௨௰
வரே, பாவம்செய்தேனானால் உமக்கு நான் செய்
யவேண்டியதென்ன? நான் எனக்குத்தானே
பாரமாயிருக்கும்படிக்கு, நீர் என்னை உமக்கு
இலக்காக வைத்ததென்ன? — என் மீறுதலை நீர் ௨௧
மன்னிக்காமலும், என் அக்கிரமத்தை நீக்காம
லும் இருப்பானேன்? ஏனென்றால் இப்போது
மண்ணிலே படுத்துக்கொள்ளுவேன்; விடியற்
காலத்திலே என்னைத் தேடினீரானால் இல்லாதி
ருப்பேனென்றான்.

## ௮. அதிகாரம்.

௧. பில்தாத் பராபரன் மனிதருடைய கிரியைகளின்படி அவர்களை நடத்துகிறது நியாயமென்றது. ௮. அவன் மாயக்காரர் அழிவதைப் பூர்வசரித்திரத்தால் காட்டினது. ௨௰. அவன் யோபுக்குப் பராபரன் நீதியைச் செய்வாரென்றது.

க அப்போது சூகியனான பில்தாத் பிரதியுத்தர
உ மாகச் சொன்னதாவது:—நீர் எந்தமட்டும் இப்ப
டிப்பட்டவைகளைப் பேசுவீர்? எந்தமட்டும் உம்
முடைய வாயின் வார்த்தைகள் வலுவான காற்
ங றைப்போலிருக்கும்.—பராபரன் நியாயத்தைப்
புரட்டுவாரோ? சர்வத்துக்கும் வல்லவர் நீதி
ச யைப் புரட்டுவாரோ?—உம்முடைய பிள்ளைகள்
அவருக்கு விரோதமாகப் பாவஞ்செய்திருந்தால்,
இவர் அவர்களை அவர்கள் பாதகத்தின் ஆக்கினை
ரு க்கு ஒப்புக்கொடுத்தார்.—நீர் பராபரனைக் காலம்
பெறத் தேடி, சர்வத்துக்கும் வல்லவரை நோக்கி
சு விண்ணப்பஞ்செய்து,—சுத்தமும்,செம்மையுமா
யிருந்தீரேயானால், அப்போது அவர் உமக்காக
விழித்து, நீதியுள்ள உம்முடைய வாசஸ்தலத்
எ தைச் சாங்கோபாங்கமாக்குவார்.—உம்முடைய
துவக்கம் கொஞ்சமாயிருந்தாலும், உமக்கிருக்
கிறது பிற்பாடு மிகவும் வர்த்திக்கும்.

அ இதற்காக நீர் முந்தின தலைமுறையில் விசா
ரித்து, அவர்கள் பிதாக்களின் செய்தியை ஆராய
கூ வகைபாருமே.—ஏனெனில் நாம் நேற்று உண்
டாகி ஒன்றும் அறியாதிருக்கிறோம்; ஏனென்
றால் பூமியின்மேல் நம்முடைய நாள்கள் நிழலை
௰ ப்போலிருக்கின்றன.—அவர்கள் உம்மை உபதே
சித்து உமக்கு அதைச்சொல்லி, தங்கள் இருதயத்
திலிருக்கும் நியாயங்களை வெளிப்படுத்துவார்க
௰க ளல்லவோ?—சேறில்லாமல் நாணல் ஓங்கி வள
ருமோ? தண்ணீரில்லாமல் கோரைப்புல் முளைக்
௰உ குமோ?—இல்லாவிட்டால் அது இன்னம் தன்
பச்சையோடிருந்தும், அறுக்கப்படாதிருந்தும்
மற்றப் புல்லையெல்லாம் பார்க்க வாடிப்போமல்
௰ங லவோ? — பராபரனை மறக்கிற எல்லாருடைய
வழிகளும் அப்படித்தானிருக்கின்றன; மாயக்
காரன் வரப்பார்த்துக்கொள்ளுதல் அழியும்.—
௰ச அவனுடைய வீண் நினைவு அறுந்துபோய், அவ
னுடைய நம்பிக்கை சிலந்திப்பூச்சிக் கூடுபோ
௰ரு லிருக்கும்.—அவன் தன் வீட்டின்மேல் ஊன்று
கிறான்; ஆனால் அது உறுதியாயிராது; அதைப்
பிடித்துக்கொண்டிருக்கிறான்; ஆனால் அது நிற்
௰சு காது.—வெயில் எறிக்காததற்குமுன்னே அவன்
பச்சைச்செடி; அதின் கொடிகள் அவன் தோட்
௰எ டத்தின்மேலே படருகிறது.— அதின் வேர்கள்
கல்குவியலில் சிக்கி, கற்பாறைக்கு நேரிடும்.—
௰அ அது அதினிடத்தில் இராதபடிக்கு நிர்மூலமான
பின், அது இருந்த இடம் உன்னை நான் கண்ட
௰கூ தில்லையென்று அதை மறுதலிக்கும். — இதோ
அவன் மார்க்கத்தின் மகிழ்ச்சி இப்படிப் போகி
றது, ஆனால் வேறே பேர் மண்ணிலிருந்து
முளைப்பார்கள்.

உ௰ இதோ பராபரன் உத்தமனை வெறுக்கிறதுமில்
லை,பொல்லாதவர்களுக்கு கைலாகு கொடுக்கிற
உக துமில்லை.—நீர் உத்தமனாயிருக்கும்போது, உம்மு
டைய வாய் நகைப்பினாலும், உம்முடைய உத
டுகள் கெம்பீரத்தினாலும், நிரப்பப்படும்மட்டும்
உஉ இப்படிக் காண்பீர்.—உம்மைப் பகைக்கிறவர்கள்
வெட்கத்தால் மூடப்படுவார்கள்; ஆகாதவர்களு
டைய கூடாரம் இல்லாதேபோம் என்றான்.

## கூ. அதிகாரம்.

க. யோபு பராபரனுடைய நீதியை ஒத்துக்கொண்டு, அவரிடத்தில் வழக்காடுவதில்லையென்றது. உஉ. அவன் மனிதனுடைய உத்தமத்திற்கு உபத்திரவத்தால் கேடில்லை என்றது.

யோபு மறுவுத்தரவு கொடுத்துச் சொன்னதா க
வது:—ஆம், இது இப்படியிருக்கிறது என்கிறதை உ
அறிவேன்; பராபரனுக்குமுன்பாக மனுஷன்
நீதிமானாய் இருப்பதெப்படி?—அவர் இவனோ ங
டே வழக்காடச் சித்தமாயிருந்தால், ஆயிரத்தில்
ஒன்றுக்காகிலும் அவருக்கு உத்தரவு சொல்ல
மாட்டான்.—அவர் இருதயத்திலே ஞானமுள்ள ச
வரும் பெலத்தில் பராக்கிரமருமாயிருக்கிறார்;
அவருக்கு விரோதமாகத் தன்னைக் கடினப்ப
டுத்திச் சுகித்தவன் யார்?—அவர் பர்வதங்களை ரு
அவைகளறியாமல் பேர்த்து, தம்முடைய கோ
பத்தில் அவைகளைப் புரட்டிப்போடுகிறார்.—
அவர் பூமியைஅதின் தூண்கள் அதிரத்தக்கதாய் சு
அதின் ஸ்தலத்தைவிட்டு அசைக்கிறார்.—அவர் எ
சூரியனுக்குச் சொல்ல அது உதிக்காதிருக்கும்;
அவர் நட்சத்திரங்களை முத்திரிக்கிறார்.—அவர் அ
ஒருவர் வானங்களை விரித்து, சமுத்திர அலைக
ளின்மேல் நடக்கிறவர். — அவர் ஆயிலியத்தை கூ
யும், மிருகசீரிஷத்தையும், சத்த நட்சத்திரத்
தையும்,தெற்கத்தி மண்டலங்களையும் உண்டாக்
கினவர்.—ஆராய்ந்துமுடியாத பெரிய காரியங் ௰
களையும், எண்ணிமுடியாத அதிசயங்களையும்
அவர் செய்கிறார். — இதோ நான் காணாமல் ௰க
அவர் என்னைக்கடந்து,நான் அவரை உணராமல்
அவர் மாறுபட்டுப்போகிறார். — இதோ அவர் ௰உ
பறித்துக்கொண்டு போகிறபோது அவரை மறிப்
பவனார்? நீர் என்னசெய்கிறீர் என்று அவரைக்
கேட்பவனார்?—பராபரன் தம்முடைய கோபத் ௰ங
தைத் திருப்பார்; பெருமையாய்ச் சகாயம்பண்
ணுபவர்கள் அவர் கீழ்ப்பணியவேண்டும்.—
இப்படியிருக்கையில் நான் அவருக்கு மறுமொ ௰ச
ழிகொடுத்து, அவரோடே பேச எனக்கான
வார்த்தைகளைத் தெரிந்துகொள்ளுகிறதற்கு நான்
எம்மாத்திரம்?—நான் நீதி விளங்கப்பட்டாலும் அ ௰ரு
வருக்கு மறுமொழி சொல்லக்கூடாமல்,என்னை
நியாயந்தீர்க்கிறவரை இரக்கத்துக்குக் கெஞ்சு
வேன்.—எனக்கு மறுவுத்தரவு கொடுப்பாரென்று ௰சு
நான் கூப்பிட்டாலும், அவர் என் சத்தத்துக்குச்
செவிகொடுப்பாரென்று நம்பேன். — ஏனென் ௰எ
றால் அவர் புசலினால் என்னை நொறுக்கி, முகாந்
திரமில்லாமல் அநேகம் காயங்களை எனக்கு வரு
விக்கிறார்.—நான் சுவாசம் வாங்குகிறதற்கு என ௰அ
க்கு இடங்கொடாமல், கசப்புகளால் என்னைத்
திருப்தியாக்குகிறார்.—சத்துவத்தைப் பார்த்தால் ௰கூ
இதோ அவரே பெலத்தவர்; நியாயத்தைப்
பார்த்தால் என்னை வரவழைத்து விசாரிப்பவன்
யார்?—நான் என்னை நீதிமானாக்கினாலும் என் உ௰
வாய் என்னைக் குற்றஞ் சுமத்தும்; நான் உத்தம

னென்றாலும் என்னை மாறுபாடானவனென்று
௨௧ தீர்ப்பார்.—நான் உத்தமனென்றாலும் என்னைத்
தானே நான் எண்ணேன்; என் சீவனை அரோ
சிக்கிறேன்.

௨௨ இந்த ஒரு காரியம் நமக்கு வழக்காயிருக்கி
றது; ஆகையினால் அதைச் சொல்லுகிறேன்;
அதென்னவெனில் உத்தமனையும் ஆகாதவனை
௨௩ யும் அவர் அழிக்கிறார் என்பதுதானே.—சவுக்
கானது அசுப்பிலே வாதித்துக் கொல்லுகிறபோ
து, குற்றமில்லாதவர்களின் சோதனைக்கு நகைக்
௨௪ கிறார்.—தேசம் ஆகாதவன் கையில் ஒப்புக்கொ
டுக்கப்படும்; அதிலிருக்கிற நியாயாதிபதிகளின்
முகத்தை மூடிப்போடுகிறார்; அவர் இதைச்
செய்கிறதில்லையென்றால் பின்னை யார் இதைச்
௨௫ செய்கிறார்.—என்னுடைய நாள்கள் அஞ்சற்கா
ரனைப்பார்க்கிலும் தீவிரித்து, நன்மை காணாமல்
௨௬ பறந்துபோம்.—அவைகள் நன்றாய் ஓடுகிற கப்
பல்களைப்போலும், இரையின்மேல் பாய்கிற
௨௭ கழுகைப்போலும் கடந்துபோம்.—என்னுடைய
அங்கலாய்ப்பை நான் மறந்து, என் முகத்தின்
துக்கத்தைவிட்டு, திடன்கொள்வேனென்று
௨௮ சொன்னால்,— என் நோய்களுக்கெல்லாம் பய
மாயிருக்கிறேன், என்னைக் குற்றமில்லாதவனாக
௨௯ நடத்தீர் என்றறிவேன்.—நான் பொல்லாதவனா
யிருந்தால், நான் இத்தனை விருதாவாய்ப் போரா
௩௰ டுவானேன்?—நான் என்னை உறைந்த மழைத்
தண்ணீரால் கழுவி, என் கைகளைச் சவுக்காரத்தி
௩௧ னாலே சுத்தம்பண்ணினாலும்,—அப்போது தே
வரீர் என்னை என் வஸ்திரங்கள் எனக்கு அருவ
ருப்பாயிருக்கும்படிக்கு, சேற்றுப்பள்ளத்திலே
௩௨ தோய்ப்பீர்.—ஏனெனில் நான் அவருக்குப் பிர
தியுத்தாரம் சொல்லுகிறதற்கும், நாங்கள் கூட
நியாயத்திற்கு வருகிறதற்கும், அவர் என்னைப்
௩௩ போல மனுஷனல்ல.—எங்கள் இருவரின்மே
லே தன் கையை வைக்கத்தக்க மத்தியஸ்தன் எங்
௩௪ களுக்குள்ளே இல்லை.—அவர் தமது மிலாற்றை
என்னைவிட்டு அகற்றுவாராக; அவருடைய
பயங்கரம் என்னைக் கலங்கப்பண்ணாதிருப்ப
௩௫ தாக.— அப்போது நான் பேசி, அவருக்குப்
பயப்படாதிருப்பேன்; ஏனென்றால் நீங்கள்
நினைக்கிறபடி என் காரியமிராது.

## ௰. அதிகாரம்.

௧. யோபு முறையிடத்துணிந்து, தன் உபத்திரவத்தைக்குறித்துப் பராபரனோடெதிர்த்தது. ௰௮. அவன் சீவித்தலைக்குறித்து முறையிட்டு மரணத்திற்குமுன் சிறிது ஆறுதலை விரும்பினது.

௧ நான் உயிரோடிருக்கிறதை என் ஆத்துமா
அரோசிக்கிறது; நான் என் துயரத்துக்கு எனக்
குள்ளே இடம்கொடுத்து, என் மனச்சஞ்சலத்
௨ தினாலே பேசுவேன்.—நான் பராபரனுடனே
என்னைத் துன்மார்க்கனென்று தீர்க்காதிரும், தே
வரீர் எதின்நிமித்தம் என்னோடே வழக்காடுகிறீர்
என்று எனக்குத் தெரியப்பண்ணுமென்பேன்.—
௩ நீர் என்னை ஒடுக்கி, உம்முடைய கைகளின்
வேலையை வெறுத்து ஆகாதவர்களின் யோசனை
யைக் கிருபாகடாட்சமாய்ப் பார்க்கிறது உமக்கு
நன்றாயிருக்குமோ? — மாம்சக்கண்கள் உமக்கு ௪
ண்டோ? மனுஷன் பார்க்கிறபிரகாரமாய்ப்
பார்க்கிறீரோ?—நீர் என் அக்கிரமத்தை நோண் ௫
டித் தேடி, என் பாவத்துக்காக ஆராய்ந்து விசா
ரிக்கிறதற்கு, — உம்முடைய நாள்கள் ஒரு ௬
மனுஷன் நாள்களைப்போலும்,உம்முடைய வரு
ஷங்கள் ஒரு புருஷனுடைய நாள்களைப்போ
லுமிருக்கின்றனவோ?—நான் துன்மார்க்கனல்ல ௭
என்பது உம்முடைய அறிவிலிருக்கிறது;ஆனால்
உம்முடைய கைக்கு என்னைத் தப்புவிக்கிறவ
னில்லை.

உம்முடைய கரங்கள் என்னையும் என்னைச் ௮
சூழ்ந்திருக்கிற எல்லாவற்றையும் உருவாக்கிப்
படைத்திருந்தும், என்னை நிர்மூலமாக்குகிறீர்.—
தேவரீர் என்னைக் களிமண்ணைப்போலும் உண் ௯
டாக்கினீர் என்பதையும், என்னைத் திரும்பத்
தூளாகப்போகப்பண்ணுவீர் என்பதையும் நினை
வுகூரும்.—தேவரீர் என்னைப் பாலைப்போல ௰
வார்த்து, தயிரைப்போல என்னை உறையப்பண்
ணினதில்லையோ?—எனக்குத் தோலையும் சதை ௰௧
யையும் தரித்து, என்னை எலும்புகளாலும் நரம்பு
களாலும் இசைத்தீர்.—எனக்கு உயிரைத் தந்தது ௰௨
மல்லாமல், உபகாரத்தையும் எனக்குச் செய்து
வந்தீர்; உம்முடைய பராமரிப்பு என் ஆவியைக்
காப்பாற்றிற்று.-ஆனால் இவைகளை உம்முடைய ௰௩
மனதிலே அடக்கினாலும், இது உமக்குள் இருக்
கிறது என்கிறதை அறிவேன்.

நான் பாவம்செய்தால், அதை நீர் என்னிடத் ௰௪
திலே விசாரித்து, என் அக்கிரமத்தை என்மேல்
சுமத்தாமல் விடீர்.—நான் துன்மார்க்கனாயிருந் ௰௫
தால் எனக்கையோ! நான் நீதிமானாயிருந்தாலும்
என் தலையை நான் எடுக்கக்கூடாது; கனஈனத்
தால் திருப்தியானேன், நீர் என் சிறுமையைப்
பாரும்—ஏனென்றால் அது பெருகுகிறது; சிங் ௰௬
கத்தைப்போல என்னை வேட்டையாடுகிறீர்;
பின்னையும் ஆச்சரியமானபடி என்னை நடத்து
கிறீர்.—நீர் உம்முடைய சாட்சிகளை எனக்கு ௰௭
எதிராக இரட்டிக்கவும், என்மேல் உம்முடைய
தாங்கலைப் பெருகவும்பண்ணுகிறீர்; விசைக்கு
விசை அதிக போராட்டம் எனக்குண்டு.

நீர் என்னைக் கர்ப்பத்திலிருந்து புறப்படப் ௰௮
பண்ணினதென்ன? ஒரு கண்ணும் என்னைக்
காணாதபடிக்கு, நான் அப்போது சீவித்துப்போ
னால் தாவிளை.—அப்போது நான் ஒருக்காலும் ௰௯
இல்லாததுபோலிருந்து, கர்ப்பத்திலிருந்து
பிரேதக்குழிக்குக் கொண்டுபோகப்பட்டிருப்
பேன்.—என்னுடைய நாள்கள் கொஞ்சமல்ல ௨௰
வோ?—காரிருளும் மரண அந்தகாரமுமான இ ௨௧
ருண்ட தேசத்துக்கும், அந்தகாரமாய்க் கிடக்கிற
ஒழுங்கில்லாத மரணநிழலிலுள்ள தேசத்துக்கும்,
நான் போய்த் திரும்ப வராதவனாகுமுன்னே,—
நான் சற்று முசிப்பாறும்படிக்குத் தேவரீர் ௨௨
ஒய்ந்து என்னை விட்டிருமென்றான்.

## ௰௧. அதிகாரம்.

௧. யோபு தன்னை நீதிமான் என்றதினால் சோப்பார் கண்டித்தது. ௬. பராபரனுக்கு ஆராயப்படாத ஞானம். ௰௩. குணப்படுதலுக்கு நிச்சயமாய் வரும் நன்மை.

௧ அப்போது நாகமாத்தியனான சோப்பார் பிரதி
௨ யுத்தாரமாகச் சொன்னதாவது:–வார்த்தைகளின்
ஏராளத்துக்கு எதிர் உத்தரவு சொல்லப்படத்
தேவையில்லையோ? சள்ளுவாயன் நீதி விளங்கப்
௩ படுவானோ?— உம்முடைய வீம்பு வார்த்தைக
ளுக்கு மனுஷர் மவுனமாயிருப்பார்களோ? நீர்
சக்கந்தம்பண்ணுகையில், ஒருவரும் உம்மை
௪ வெட்கப்படுத்தத் தேவையில்லையோ? — நான்
சொல்லிக் காண்பிக்கிறது சுத்தமென்றும், நான்
தேவரீருடைய பார்வைக்குத் துப்புரவானவன்
௫ என்றும் நீர் சொல்லுகிறீர்.— ஆனால் பராபரன்
பேசி, உமக்கு எதிராகத் தம்முடைய உதடுகளைத்
௬ திறந்து,—உமக்கு ஞானத்தின் இரகசியங்களை
அறியப்படுத்தினால் தாவிலை; ஏனெனில் உள்நி
யாயத்தைப் பார்த்தால், அது இரட்டிப்புள்ளதா
யிருக்கிறது; ஆகையால் உம்முடைய அக்கிரமத்
தின்நிமித்தம் பராபரன் உம்மை மறந்தாரென்
றறியும்.
௭ பராபரனுடைய அந்தரங்க ஞானத்தை நீர்
கண்டு, சர்வத்துக்கும் வல்லவருடைய குறை
யற்ற நியாயம்மட்டும் எட்டி, அதைக் கண்டுபி
௮ டிப்பீரோ?—அது வானம் அத்தனையாய் உயர்ந்
தது; நீர் செய்யத்தக்கதென்ன? அது பாதாளத்தி
௯ லும் ஆழமானது, நீர் அறியத்தக்கதென்ன?—அ
தின் அளவு பூமியைப்பார்க்கிலும் நீளமும் சமுத்
திரத்தைப்பார்க்கிலும் அகலமுமாயிருக்கிறது.–
௰ அவர் கடந்துபோனாலும், அவர் அடைத்துப்
போட்டாலும், அவர் கூட்டம்கூட்டினாலும்
௰௧ அவனைத் தடைபண்ணுபவன் யார்? — ஏனெ
னில் அவர் மாயையான மனுஷரை அறிவார்;
அவர் அக்கிரமத்தைக் கண்டும் அதை உணர்ந்து
௰௨ கொள்ளாரோ?—மனுஷன் புத்தியில்லாமலிருந்
தாலும் காட்டுக் கழுதைக்குட்டிக்கு ஒப்பாகப்
பிறந்திருக்கிறான்; பெருநெஞ்சுள்ளவனாயிருக்
கிறான்.
௰௩ நீர் உம்முடைய இருதயத்தை ஆயத்தப்படுத்தி,
உம்முடைய கைகளை அவருக்கு நேராக விரித்
௰௪ தால் தாவிலை.-உம்முடைய கையிலே அக்கிரமம்
உண்டாயிருந்தால், அதைத் தூரத்தில் அகற்றி,
அநியாயம் உம்முடைய கூடாரங்களில் வாசமா
௰௫ யிருக்கவொட்டாதிரும்.–ஏனென்றால் அப்போ
து உம்முடைய முகத்தை மாசில்லாமல் ஏறெ
டுத்துப் பயப்படாமல் பெலப்பட்டிருப்பீர்.—
௰௬ அப்போது நீர் வருத்தத்தை மறந்து, அதைக் கடந்
௰௭ துபோன தண்ணீரைப்போல நினைப்பீர்.—அப்
போது உம்முடைய ஆயிசுகாலம் பட்டப்ப
கலைப்பார்க்கிலும் விளங்கிநிற்கும்; இருள் அ
டைந்த நீர் விடியுங்காலத்தைப்போலிருப்பீர்.—
௰௮ நம்பிக்கை உண்டாகையால் திடனாயிருப்பீர்;
தோண்டியெடுத்துச் சுகமாய்ப் படுத்துக்கொள்
௰௯ ளுவீர். — பயப்படுத்துவாரில்லாமல் படுத்துக்
கொண்டிருப்பீர்; அநேகர் உமது முகத்தை
நோக்கி விண்ணப்பம்பண்ணுவார்கள்.—ஆனால் உம ௨௰
ஆகாதவர்களுடைய கண்கள் பூத்துப்போய், அ
வர்கள் அடைக்கலம் அவர்களை விட்டழிந்து,
அவர்கள் நம்பிக்கை சீவித்துப்போகுதலாயிருக்
குமென்றான்.

## ௰௨. அதிகாரம்.

௧. யோபு தன்னை வெறுத்த சிநேகிதருக்குத் தனது உண்மையைச் சொன்னது. ௭. பராபரனுடைய சர்வவல்லமையைக்குறித்துச் சம்மதித்தது.

யோபு பிரதியுத்தாரமாகச் சொன்னதாவது:— ௧
ஆம், நீங்களே ஞானமுள்ள சனம்; உங்களு ௨
டனே ஞானம் சாகும்.—எனக்கும் உங்களைப் ௩
போலப் புத்தியிருக்கிறது; நான் உங்களுக்குத்
தாழ்கிறதில்லை; இப்படிக்கொத்தவைகளுடைய
அறிவு யாருக்கு இல்லாதிருக்கும்?— என் சிநே ௪
கிதரால் நான் நகைக்கப்பட்டு, பராபரனைநோக்
கிக் கூப்பிடுகிறேன்; அவர் எனக்கு மறு உத்தரவு
அருளுவார்; உத்தமனாகிய நீதிமான் நகைப்புக்கி
டமானவன்.–ஆபத்துப்படுகிறவனுக்குச் சுகமா ௫
யிருக்கிறவனுடைய நினைவினால் உண்டாகிறது
அசங்கதம், காலிடறினவர்களுக்கு அது நேரிட்
டிருக்கிறது.
பாழ்க்கடிக்கிறவர்களின் கூடாரங்களுக்குச் ௬
சாங்கோபாங்கமும், பராபரனுக்குச் சினம் உண்
டாக்குகிறவர்களுக்கு அவர் தம்முடைய கையி
னால் கொடுத்ததினாலே வெகு சுகமுமுண்டு.—
இப்போதும் நீ மிருகங்களைத்தானே கேள், அ ௭
வைகள் உனக்குப் போதிக்கும்; ஆகாயத்துப்பற
வைகளைக் கேள், அவைகள் உனக்கறிவிக்கும்.–
அல்லது பூமியை விசாரித்துக் கேள், அது உன ௮
க்கு உபதேசிக்கும், சமுத்திரத்தின் மச்சங்கள்
அதை உனக்கு விவரிக்கும்.— கர்த்தருடைய ௯
கரம் இதைச்செய்ததென்று இவைகளெல்லாவற்
றினாலும் அறியாதவன் யார்?—எல்லா உயிர்ப்பி ௰
ராணிகளின் சீவனும், எல்லா மனுஷ மாம்சத்
தின் ஆவியும் அவர் கையிலிருக்கின்றன.
வாய் போசனத்தை ருசிபார்க்கிறதுபோல, ௰௧
செவி வார்த்தைகளைச் சோதித்துப்பார்க்கிறதும்
இல்லையோ? — விருத்தாப்பியரிடத்தில் ஞான ௰௨
மும் வயதுசென்றவர்களிடத்திலே உணர்வும்
இருக்கிறதே.—எத்தனை அதிகம் அவரிடத்தில் ௰௩
ஞானமும் வல்லமையுமிருக்கும்? அவருக்குத்
தான் ஆலோசனையும் உணர்வும் இருக்கின்றன.–
இதோ அவர் இடித்தால் கட்டப்படுதலில்லை, ௰௪
அவர் மனுஷனை அடைத்தால் திறக்கப்படுத
லில்லை.—இதோ அவர் தண்ணீர்களை அடக்கி ௰௫
னால் அவைகள் சுவறிப்போம், அவர் அதை வர
விட்டால், பூமியைக் கீழதுமேலதாக்கும்.—
அவரிடத்திலே பெலனும் மெய்ஞ்ஞானமும் ௰௬
இருக்கின்றன; மோசம்போகிறவனும் மோசம்
போக்குகிறவனும், அவர் கையின்கீழிருக்கிறார்
கள்.— அவர் யோசனைக்காரரைக் கொள்ளையிட் ௰௭
டுக்கொண்டுபோய், நியாயாதிபதிகளின் புத்தி
யைப் பயித்தியமாக்குகிறார்.—அவர் இராசாக்க ௰௮

ளுடைய சுருக்கைக் கட்டவிழ்த்து, அவர்கள்
௰௯ இடுப்புகளைக் கச்சைகட்டுகிறார்.—அவர் மந்திரி
களைக் கொள்ளையிட்டுக்கொண்டுபோய், பெலத்
௨௰ தோன்றாப் புரட்டிப்போடுகிறார்.—அவர் நிசமுள்
ளவர்களுடைய உதட்டை விலக்கி, முதிர்வய
துள்ளவர்களின் ஆலோசனையை வாங்கிப்போ
௨௧ டுகிறார்.—அவர் பிரபுக்களின்மேல் அசங்கதத்
தை ஊற்றி, வல்லமையுள்ளவர்களின் கச்சை
௨௨ யைத் தளர்ந்துபோகப்பண்ணுகிறார்.—அந்தகா
ரத்திலிருக்கிற ஆழங்களை அவர் வெளியரங்க
மாக்கி, மரணநிழலை வெளிச்சத்தில் புறப்படப்
௨௩ பண்ணுகிறார். — அவர் சாதிகளைப் பெருகவும்
அழியவும்பண்ணுகிறார்; அவர் சாதிகளைப் பரவ
௨௪ வும் குடிவிலகவும்பண்ணுகிறார்.—அவர் தேசச்
சனத்தினுடைய தலைவரின் நெஞ்சை வாங்கிப்
போட்டு, அவர்களை வழியில்லாத அந்தரத்திலே
௨௫ அலையப்பண்ணுகிறார். — அவர்கள் வெளிச்ச
மற்ற இருளிலே தடவித்திரிகிறார்கள்; அவர்களை
வெறித்தவர்களைப்போலத் தடுமாறித் திரியப்ப
ண்ணுகிறார்.

## ௰௩. அதிகாரம்.

௧. யோபு பராபட்சத்தைக்குறித்துத் தன் சிநேகிதரைக் கண்டித்தது. ௰௪. பராபரனில் தனக்குள்ள நம்பிக்கையை அறிக்கையிட்டது. ௨௰. தன் பாவத்தையும், பராபரன் தன்னை உபத்திரவப்படுத்திய காரணத்தையும் அறிய வேண்டிக்கொண்டது.

௧ இதோ இவைகளெல்லாவற்றையும் என்னு
டைய கண் கண்டு, என்னுடைய காதுகேட்டு
௨ உணர்ந்துகொண்டிருக்கின்றன.—நீங்கள் அறிந்
திருக்கிறதை நானும் அறிந்திருக்கிறேன்; நான்
உங்களுக்குத் தாழ்கிறவனல்ல.

௩ சர்வத்துக்கும் வல்லவரோடே நான் பேசி
னால் நல்லது; பராபரனோடே என் நியாயத்தைத்
௪ தீர்த்துக்கொள்ள விரும்புவேன். — ஏனெனில்
நீங்கள் பொய்யைப் பிணைக்கிறவர்களாமே; நீங்
௫ களெல்லாரும் காரியமில்லாத வயித்தியர்;—நீங்
கள் மவுனமாய் இருக்கவேயிருந்தால் தாவிளை;
அது உங்களுக்கு ஞானமாயிருக்கும்.

௬ நீங்கள் என் நியாயத்தைக்கேட்டு, என் உதடு
கள் சொல்லும் விசேஷங்களைக் கவனியுங்கள்.—
௭ நீங்கள் பராபரனுக்காக நியாயக்கேடாய்ப் பேசி,
அவருக்காகக் கபட்டை வசனிக்கவேண்டு
௮ மோ?—அவர் முகத்தைப் பார்ப்பீர்களோ? பரா
௯ பரனுக்காக வழக்காடுவீர்களோ? — அவர் உங்
களை ஆராய்ந்தால் அது உங்களுக்கு நன்மையோ?
மனுஷனைச் சக்கந்தம்பண்ணுகிறதுபோல அவ
௰ ரைச் சக்கந்தம்பண்ணுவீர்களோ?—நீங்கள் அந்த
ரங்கமாய் முகதாட்சிணியம்பண்ணினால் அவர்
௰௧ உங்களைக் கண்டிக்கவே கண்டிப்பார்.—அவரு
டைய மகத்துவம் உங்களைத் திடுக்கிடப்பண்
ணாதோ? அவருடைய பயங்கரம் உங்கள்மேல்
௰௨ விழாதோ?—நீங்கள் உங்கள் பேரை நினைக்கப்
பண்ணும் அடையாளங்கள் சாம்பலுக்கும், உங்
கள் மேட்டிமைகள் சேற்றுக்குவியல்களுக்கும்
சமானமானது.

நான் பேசும்படிக்கு எனக்குமுன்பாக மவுன ௰௩
மாயிருங்கள்; என்மேல் வருகிறது வரட்டும்.—
நான் என் பல்லுகளினால் என் சதையைப்பிடுங் ௰௪
கி, என் பிராணனை என் கையிலே யோக்கியத்து
க்குள் வைப்பானேன்?—இதோ அவர் என்னைக் ௰௫
கொன்றுபோட்டாலும், அவர்மேல் நம்பிக்கை
யாயிருப்பேன்; ஆனால் என் வழிகளை அவருக்கு
முன்பாக ரூபகாரம்பண்ணுவேன்.—அவர் என் ௰௬
இரட்சிப்புமாயிருப்பார்; ஏனெனில் ஒரு மா
யக்காரன் அவருக்குமுன்பாக வரமாட்டான்.—
நீங்கள் என் வசனத்தையும், நான் சொல்லிக் ௰௭
காண்பிக்கிறதையும், உங்கள் செவிகளால் கேட்
கவே கேளுங்கள்.—இதோ என்னுடைய நியா ௰௮
யத்தை அணியணியாய் வைத்தேன்; நான் நீதி
விளங்கப்படுவேன் என்றறிவேன். — என்னோ ௰௯
டே வழக்காடவேண்டுமென்று இருக்கிறவன்
யார்? இப்போது நான் மவுனமாகிச் சீவித்துப்
போவேனே.

இரண்டு காரியங்களைமாத்திரம் எனக்குச் ௨௰
செய்யாதிருப்பீராக; அப்போது உமது முகத்துக்
குமுன்பாக ஒளித்துக்கொள்ளாதிருப்பேன்.—
உம்முடைய கையை என்னைவிட்டுத் தூரப்படுத் ௨௧
தும்; உம்முடைய பயங்கரம் என்னைக் கலங்கப்
பண்ணாதிருப்பதாக.—அப்போது நீர் கூப்பிடும்; ௨௨
நான் மறு உத்தரவு கொடுப்பேன்; அல்லது நான்
பேசுவேன், நீர் எனக்கு மறுமொழியை அரு
ளும்.—என்மேலிருக்கிற அக்கிரமங்களும் பாவ ௨௩
ங்களும் எத்தனை? என் மீறுதலையும் என் பாவத்
தையும் எனக்கறிவியும்.—தேவரீர் உம்முடைய ௨௪
முகத்தை மறைத்து, என்னை உமக்குப் பகைஞ
னாக எண்ணிக்கொள்ளுவானேன்?—காற்றடித்த ௨௫
சருகை நொறுக்குவீரோ? காய்ந்துபோன துரும்
பைப் பின்தொடருவீரோ?—ஏனெனில் தேவரீர் ௨௬
மகா கசப்பான தீர்ப்புகளை என்மேலெழுதி, என்
சிறுவயதின் அக்கிரமங்களை எனக்குப் பலிக்கப்
பண்ணி, — என் கால்களைத் தொழுவடித்துப் ௨௭
போட்டு, என் வழிகளையெல்லாம் காவல்பண்
ணுகிறீர்; என் கால் அடிகளில் அடையாளத்தைப்
போடுகிறீர். — இப்படிக்கொத்தவன் அழுகிப் ௨௮
போகிற வஸ்துவைப்போலவும், பொட்டரித்த
வஸ்திரத்தைப்போலவும் அழிந்துபோகையில்
தானே.

## ௰௪. அதிகாரம்.

௧. யோபு ஆயிசு குறுகினதும், மரணம் நிச்சயமும் என்று பராபரனுடைய தயவை வேண்டினது. ௭. இழந்த உயிரைப் பெறக்கூடாதிருந்தும் இறப்பை எதிர்பார்த்தது. ௰௬. பாவத்தினாலே சிருஷ்டி கேட்டுக்குள்ளானது.

ஸ்திரீயினிடத்தில் பிறந்த மனுஷன் நாள் குறு ௧
கினவனும் சஞ்சலம் நிறையப்பட்டவனுமாயி
ருக்கிறான்.—அவன் பூப்போலப் பூத்து, அறுப் ௨
புண்டு, நிலைநிற்காமல் நிழலைப்போல ஓடிப்
போகிறான். — ஆகிலும் இப்படிக்கொத்தவன் ௩
மேலே தேவரீர் உம்முடைய கண்களைத் திறந்து
வைத்து, உம்மோடே தீர்த்துக்கொள்ளும் நியாயத்
துக்கு என்னைக் கொண்டுவருகிறீர்.—அசுத்தமான ௪

வர்களிலே சுத்தமான ஒருவனையாகிலும் கண்
௫ டெடுக்கத்தக்கவன் யார்?—அவனுடைய நாள்
கள் இம்மாத்திரம் என்று குறிக்கப்பட்டிருக்கை
யால், அவனுடைய மாதங்களின் தொகை உம்
மிடத்திலிருக்கிறது; அவன் கடந்துபோகக்கூ
டாத எல்லைகளை அவனுக்குக் கட்டளையிட்டீர்.–
௬ அவன் ஒரு கூலிக்காரனைப்போலே தன் நாளின்
வேலையாயிற்றென்று இரம்மியப்படுமட்டும்
அவன் ஓய்ந்திருக்கும்படிக்கு உமது பார்வையை
அவனைவிட்டு விலக்கும்.

௭ ஒரு மரம் வெட்டிப்போடப்பட்டாலும், இன்
னம் பயிராகுமென்றும், அதின் துளிர் துளிர்க்கா
திருப்பதில்லை என்றும், அதற்காக நம்பிக்கை
௮ யுண்டு.—அதின் வேர் தரையிலே பழையதாகி,
அதின் அடிக்கட்டை மண்ணிலே செத்தாலும்,–
௯ தண்ணீரின் வாசனையினால் அது துளிர்த்து, ஒரு
௰ நாற்றைப்போலக் கிளைக்கும்.—மனுஷனோவெ
ன்றால் செத்தபின் சாரமில்லை; நரஜீவன் ஜீவித்
துப்போனபின் அவன் எங்கே?

௰௧ தண்ணீர்கள் ஏரியிலிருந்து வடிந்து, ஆறு வற்
௰௨ றிச் சுவறிப்போகிறதுபோலே,—மனுஷர் படுத்
துக்கிடந்து வானங்கள் இல்லாதேபோகுமளவி
லும் எழுந்திருக்கிறதுமில்லை; நித்திரைதெளிந்து
விழிக்கிறதுமில்லை.

௰௩ தேவரீர் என்னைப் பிரேதக்குழியில் மறைத்து,
உமது கோபம் திரும்புமட்டும்என்னை ஒளித்து,
என்னைத் திரும்ப நினைக்கும்படிக்கு எனக்கு
௰௪ ஒரு திட்டத்தைக்குறித்தால் தாவிளை.–மனுஷன்
செத்தபின் பிழைப்பானோ? என்னுடைய போ
ராட்டத்தின் நாளெல்லாம் என்னுடைய சீர்மாறு
தல் எப்போது வருமென்று காத்திருக்கிறேன்.

௰௫ என்னைக் கூப்பிடும், அப்போது நான் உமக்கு
மறுஉத்தரவு சொல்லுவேன்; உம்முடைய கைக
ளின் கிரியையின்மேல் விருப்பம் வைப்பீராக.–
௰௬ இப்போதோவென்றால் என் நடைகளை எண்
ணுகிறீர்; என் பாவத்தின்மேலல்லவோ கவனமா
௰௭ யிருக்கிறீர்.—என்னுடைய மீறுதல் ஒரு கட்டா
கக் கட்டப்பட்டு முத்திரைபோட்டிருக்கிறது;
என் அக்கிரமத்தை ஒருமிக்கச் சேர்த்தீர்.

௰௮ ஒரு பர்வதம்முதலாய் விழுந்து கரையும், ஒரு
கன்மலை தன் இடத்தைவிட்டுப் பேர்ந்துபோம்.—
௰௯ தண்ணீர்கள் கல்லுகளைக் குடையும், பூமியின்
தூள் அதிலே தானாய் முளைத்து அதை மூடும்;
அப்படி மனுஷன் வரப்பார்த்துக்கொண்டதை
௨௰ அழிக்கிறீர். — தேவரீர் என்றைக்கும் அவனைப்
பெலனாய் நெருக்குகிறதினால் அவன் போகி
றான்; அவன் முக உருவை மாறப்பண்ணி அவ
௨௰௧ னை அனுப்பிவிடுகிறீர். — அவன் பிள்ளைகள்
கனப்பட்டாலும் அவன் அறியான்; அவர்கள்
சிறுமைப்பட்டாலும் அவர்களைக் கவனியான்.—
௨௰௨ அவன் மாம்சம் அவனிலிருக்கும் தறுவாயிலோ
வென்றால், அதற்கு நோவிருக்கும்; அவன் ஆத்
துமம் அவனுக்குள்ளிருக்கும்மட்டும் துக்கிக்கு
மென்றான்.

## ௰௫. அதிகாரம்.

௧. யோபு தன்னை நீதிமானாக எண்ணச்செய்த அவபத்தியை எலிப்பாஸ் கண்டித்தது. ௰௭. பொல்லாதவர்களுடைய அமைதல் இல்லாமையைப் பாரம்பரிய நியாயத்தால் காட்டினது.

அப்போது தேமானியனாகிய எலிப்பாஸ் பிர ௧
தியுத்தாரமாகச் சொன்னதாவது: — ஞானமுள் ௨
ளவன் காற்றைப்போலொத்த அறிவாய் உத்தரவு
சொல்லி, தன் வயிற்றைக் கொண்டல்காற்றினால்
நிரப்பி,—ஒரு பிரயோசனமும் இல்லாத வார்த் ௩
தைகளாலும், ஒன்றுக்கும் உதவாத வசனங்களா
லும், தர்க்கிக்கலாமோ? — நீர் பயப்படுதலையும் ௪
வீணென்று சொல்லி, பராபரனுக்குமுன்பாகச்
செபத்தியானத்தைக் குறையப்பண்ணுகிறீர்.—
ஏனெனில் உம்முடைய வாய் உம்முடைய ௫
அக்கிரமத்தைச் சொல்லிக்காட்டுகிறது; நீர் தந்
திரமுள்ளவர்களின் நாவைத் தெரிந்துகொண்
டீர்.–நானல்ல, உம்முடைய வாய் உம்மை ஆகா ௬
தவன் என்று தீர்க்கிறது; உம்முடைய உதடுகள்
உமக்கு விரோதமாக உத்தரவு சொல்லுகின்றன.

நீர் மனுஷரில் முந்திப் பிறந்தவரோ? மேடுக ௭
ளுக்குமுன்னே உருவாக்கப்பட்டீரோ? — நீர் ௮
பராபரனுடைய இரகசிய ஆலோசனையைக்
கேட்டு, ஞானத்தை உம்மண்டைக்கே சேரப்
பண்ணினீரோ?—நாங்கள் அறியாத எந்தக்காரி ௯
யத்தை நீர் அறிந்திருக்கிறீர்? எங்களுக்குள்ளே
இல்லாத எந்த உணர்வு உமக்கிருக்கிறது?—எங் ௰
களுக்குள்ளே உம்முடைய தகப்பனைப்பார்க்கி
லும் பெரிய வயதுள்ள நரைத்தோரும் விருத்
தாப்பியரும் இருக்கிறார்கள்.—பராபரனால் உண் ௰௧
டாகத்தக்க ஆறுதல்களும், உம்மோடே சொல்
லப்படுகிற மெதுவான பேச்சும் உமக்கு அற்ப
காரியமாயிருக்கிறதோ?

உம்முடைய இருதயம் உம்மை எங்கே கொண் ௰௨
டுபோகிறது? உம்முடைய கண்கள் நெறிப்பா
யிருக்கிறதென்ன?–அதேதெனில் பராபரனுக்கு ௰௩
விரோதமாக உம்முடைய ஆவியை வைத்து,
உம்முடைய வாயிலிருந்து வசனங்களைப் புறப்ப
டப்பண்ணுகிறீர்? — ஒரு மனுஷன் சுத்தமாயி ௰௪
ருக்கிறதற்கும், ஸ்திரியினிடத்தில் பிறந்தவன்
நீதிமானாயிருக்கிறதற்கும், அவன் எம்மாத்திரம்?–
இதோ தம்முடைய பரிசுத்தவான்களையும் அவர் ௰௫
நம்பார்; பரமண்டலங்களும் அவர் பார்வைக்
குச் சுத்தமல்ல.—எத்தனை அதிகமாய் அநியாயத் ௰௬
தைத் தண்ணீரைப்போலக் குடிக்கிற மனுஷன்
அருவருப்பும் துர்க்கந்தமும் உள்ளவனாயிருக்
கிறான்?

உமக்குக் காரியத்தைத் தெரியப்பண்ணுவேன்; ௰௭
என்னைக் கேளும்; நான் கண்டதை உமக்கு
விவரிப்பேன்.— ஞானிகள் தங்கள் பிதாக்கள் ௰௮
சொல்லைக்கேட்டு மறைக்காமல் அறிவித்ததைத்
தானே சொல்லுவேன்.—அப்படிக்கொத்தவர்க ௰௯
ளுக்குமாத்திரம் தேசமானது, அந்நியர் அவர்கள்
நடுவாய்க் கடந்துபோகாதபடிக்கு கொடுக்கப்
பட்டிருந்ததே. — அவர்கள் அறிவித்ததேதெ ௨௰

னில் ஆகாதவன் உயிரோடிருக்கிற நாளெல்லாம்
அவன் தனக்கு வாதை உண்டாக்குகிறான்;பலவ
ந்தனுக்கு அவன் வருஷங்களின் தொகை இன்
௨௧ னதென்று மறைக்கப்பட்டிருக்கிறது. — பயங்
கரங்களின் சத்தம் அவன் காதுகளிலிருக்கிறது;
சமாதானநாளிலும் பாழ்க்கடிக்கிறவன் அவன்
௨௨ மேல் வருவான். — இருளிலிருந்து திரும்பிவர
அவனுக்கு நம்பிக்கையில்லாமல், பதிவிருக்கிற
வர்களின் பட்டையத்துக்கு அவன் பயப்படுகி
௨௩ றான்.-அப்பம் எங்கே கிடைக்குமென்று அவன்
அலைந்து திரிகிறான்; அந்தகார நாள் தன் கை
யின் செய்கையினாலே தனக்கு ஆயத்தப்பட்டி
௨௪ ருக்கிறதை அறிவான்.—இக்கட்டும் நெருக்கமும்
அவனைக் கலங்கப்பண்ணி, படைக்கு ஆயத்த
மான இராசாவைப்போல அவன்மேல் பெலக்
௨௫ கும்.—ஏனெனில் அவன் பராபரனுக்கு விரோ
தமாகத் தன் கையை நீட்டி, சர்வத்துக்கும் வல்
லவருக்கு விரோதமாகப் பராக்கிரமம் பாராட்டு
௨௬ கிறான்.—கடினக் கழுத்தோடும், பருத்ததும் எடுப்
பானதுமான தன்னுடைய கேடயங்களோடும்
௨௭ அவருக்கு எதிராக ஓடுகிறான். — ஏனென்றால்
அவன் தன் முகத்தைத் தன் கொழுப்பினாலே
மூடி, தன்னுடைய அடிவயிறு தொங்கிவிடப்
௨௮ பண்ணுகிறான்.—ஆனால் பாழான பட்டணங்க
ளிலும், குடியிருக்கக்கூடாமல் கல்க்குவியலா
ய்ப்போகவிருக்கிற வீடுகளிலும் வாசம்பண்ணு
௨௯ வான்.—அவன் ஐசுவரியவானாவதுமில்லை; அ
வன் ஆஸ்தி நிற்பதுமில்லை; அப்படிப்பட்டவர்
களின் வளர்த்தி தேசத்தில் படருவதுமில்லை.—
௩௰ இருளுக்கு அவன் தப்புவதில்லை; அக்கினிச்சு
வாலை அவனுடைய கிளையைக் காய்ந்துபோகப்
பண்ணும்; அவருடைய வாயின் சுவாசத்தால்
௩௧ அற்றுப்போவான்.—வழிதப்பினவன் மாயையை
நம்பானாக; ஏனென்றால் மாயைதான் அவன்
௩௨ பலனாயிருக்கும்.—அது அவன் நாள் வராததற்கு
முன்னே அவனுக்கு நிறைந்தபடி பலிக்கும்;
அவனுடைய கப்பு பச்சைகொள்வதில்லை. —
௩௩ அவன் திராட்சச்செடியைப்போலத் தன் பிஞ்சு
களை உலுக்கி, ஒலீவமரத்தைப்போலத் தன் பூக்
௩௪ களை உதிரப்பண்ணுவான்.—ஏனென்றால் மாயக்
காரரின் கூட்டம் அந்தரமாம்; பரிதானம் வாங்
கினவர்களின் கூடாரங்களை அக்கினி பட்சிக்
௩௫ கும்.—அப்படிப்பட்டவன், வருத்தத்தைக் கர்ப்
பம்தரித்து அநியாயத்தைப் பெறுகிறான்; அவர்
கள் கர்ப்பம் கபட்டைப் பிறப்பிக்கும் என்
றான்.

## ௰௬. அதிகாரம்.

௧ யோபு தன் சிநேகிதருடைய இரக்கமில்லாமையைக் கண்டித்தது. ௭. பாதபிக்கப்படத்தக்க தன் நிலைமையைக் காட்டினது. ௰௭. குற்றமடையாமல் தன்னைக் காத்துக்கொண்டது.

௧ யோபு மறுமொழிகொடுத்துச் சொன்னதாவ
௨ து: — இப்படிப்பட்ட அநேகம் காரியங்களை
நான் கேட்டேன்; நீங்கள் எல்லாரும் அலட்டு
௩ ண்டாக்குகிற தேற்றரவுகாரர்.—காற்றான வார்த்
தைகளுக்கு முடிவுண்டாகாதோ? அல்லது இப்
படி நீ உத்தரவுகொடுக்க உனக்கு உரம் உண்
டாக்குகிறதென்ன? — உங்கள் ஆத்துமம் என் ௪
ஆத்துமத்தின் ஸ்தலத்திலிருந்தால், உங்களைப்
போல நானும் பேசுவேனோ? அப்போது நான்
உங்களுக்கு விரோதமாக வார்த்தைகளை மிச்ச
மாக்கி, உங்களுக்கு எதிராக என் தலையைத் துலு
க்குவேனோ?—நான் என் வாயினால் உங்களுக் ௫
குத் திடன்சொல்லுவேனே, என் உதடுகளின்
அசைவு துக்கமாற்றுமே.
நான் பேசினாலும் என் நோய் ஆறாது; நான் ௬
பேசாவிட்டாலும் எந்த நோய் என்னை விட்டுப்
பிரிந்துபோம்? — இப்போது என்னை நன்றாய் ௭
இளைப்பாக்கினார்; என் கூட்டத்தையெல்லாம்
பாழாக்கினீர்.—தேவரீர் என்னைச் சுருங்கிப்போ ௮
கப்பண்ணினது, அதற்குச் சாட்சி; என்னுடைய
இளைத்தல் என்னில் அத்தாட்சியாக நின்று, என்
முகத்துக்குமுன்பாக உத்தரவுசொல்லும்.—அவ ௯
னுடைய கோபம் என்னைப் பீறுகின்றது; என்
னைப் பகைக்கிறான்; தன் பல்லுகளை என்மேலே
கடித்துக்கொள்ளுகிறான்; என் சத்துரு எனக்கு
விரோதமாகத் தன் கண்களைக் கூர்மையாக்கி
னான்.—எனக்கு விரோதமாகத் தங்கள் வாயை ௰
விரிவாய்த் திறந்தார்கள்;நிந்தையாக என்னை என்
கன்னங்களில் அடித்தார்கள்; ஏகமாய் எனக்கு
விரோதமாகக் கூட்டம்கூடினார்கள்.
பராபரன் என்னை அநியாயக்காரன் வசமாக ௰௧
ஒப்புவித்து, ஆகாதவர்களின் கையில் என்னை
அகப்படப்பண்ணினார். — சாங்கோபாங்கத்து ௰௨
டனே இருந்தேன்; ஆனால் அவர் என்னை நசுக்கி,
என் பிடரியைப் பிடித்து, என்னை நொறுக்கி,
என்னைத் தமக்கு இலக்காக நிறுத்தினார்.—அவரு ௰௩
டைய வில்க்காரர் என்னைச் சூழ்ந்துகொண்டார்
கள்; என் ஈரல்களைத் தப்பவிடாமல் பிளந்தார்;
எனது பிச்சைத் தரையில் ஊற்றிவிட்டார்.-அவர் ௰௪
எனக்கு நொறுக்குதலின்மேல் நொருக்குதலை
வரப்பண்ணினார்; பராக்கிரமசாலியைப்போல
என்மேல் விழுந்தார்;—நான் இரட்டுச்சீலையைத் ௰௫
தைத்து,என் தோளின்மேலே போர்த்துக்கொண்
டேன்; என் மகிமையைத் தூளிலே போட்டு
விட்டேன்.—என் முகம் அழுகிறதினால் அழுக் ௰௬
குப்பட்டது; என் கண்ணிமைகளின்மேல்
மரணநிழல் உண்டாயிருக்கிறது. — என் கைக ௰௭
ளிலே கொடுமையில்லாதிருக்கையிலும், என்
செபம் சுத்தமாயிருக்கையிலும்தானே.
பூமியே, என் இரத்தத்தை மூடிப்போடாதே; ௰௮
என் அலறுதலுக்கு இனி இடம் உண்டாகாதி
ருப்பதாக.—இப்போதும் இதோ என் சாட்சி பர ௰௯
மண்டலத்திலும், என்னை அறிந்தவர் உன்னதங்
களிலுமிருக்கிறார். — என் சிநேகிதர் என்னைப் ௨௰
பரியாசம்பண்ணுகிறவர்கள்; என் கண் பரா
பரனைநோக்கிக் கண்ணீர் சொரிகிறது. — ஒரு ௨௧
மனுப்புத்திரன் தன் சிநேகிதனுக்காக வழக்குத்
தீர்த்துக்கொள்ளுகிறதுபோல, பராபரனோடே
இந்த மனுஷனுக்காக வழக்குத்தீர்த்துக்கொள்ளு
வார் ஒருவருண்டு.—ஏனென்றால் குறுகின வரு ௨௨

ஷங்களின் முடிவு வந்தது; நான் திரும்பிவராத
வழியிலே போவேன்.

## ௰௭. அதிகாரம்.

௧. யோபு மனிதருடைய நியாயத்தைவிட்டு, பராபரனுடைய மத்தியஸ்தத்தை விரும்பினது. ௬. உபத்திரவப்படுகிறவர்களின்மேல் மனிதருடைய இரக்கமில்லாமை அதிசயமன்றி நல்லவருக்குத் தயிரிய ஈனமல்ல. ௰௧. அவன் வாழ்நாளை நம்பாமல் மரணத்தை நம்பினது.

௧ என் சுவாசம் அழியும்; என் நாள்கள் அவிந்து
போகின்றன; பிரேதக்குழி எனக்குமுன்பாக
இருக்கிறது.
௨ பரியாசம்பண்ணுகிறவர்கள் என்னிடத்திலில்
லையோ? அவர்கள் உண்டாக்குகிற கசப்பின்
நிமித்தம் என் கண் இராநித்திரை தீராதோ?—
௩ தேவரீர் மேற்போட்டுக்கொண்டு, எனக்காகப்
பிணைப்படுமே; வேறே யார் எனக்கு அஸ்தம்
௪ கொடுக்கத்தக்கவர்? — ஏனென்றால் அவர்கள்
இருதயத்துக்கு ஞானத்தை மறைத்தீர்; ஆகை
௫ யால் அவர்களை உயர்த்தாதிருப்பீர்.—எவன் தன்
சிநேகிதருக்குக் கேடாகத் துரோகம் பேசுகிறா
னோ, அவன் பிள்ளைகளின் கண்களும் பூத்துப்
போகும்.
௬ அவர் என்னைச் சனக்கூட்டங்களில் பழமொ
ழியாக வைத்ததினால், அவரவர் முகத்துக்கு அ
௭ ருவருப்பானேன்.—இதின் நிமித்தமாக என் கண்
கள் சஞ்சலத்தினால் இருள் அடைந்தன; என் அ
வயவங்களெல்லாம் ஒரு நிழலைப்போலிருக்கின்
௮ றன.—செம்மைமார்க்கத்தார் இதற்காகப் பிரமிப்
பார்கள்; குற்றமில்லாதவன் மாயக்காரனுக்கு
௯ விரோதமாக எழும்புவான்.—நீதிமான் தன் வழி
யைக் கெட்டியாய்ப் பிடிப்பான்; கைகள் சுத்த
மானவன் பலத்துக்கொண்டே இருப்பான்.—
௰ இப்போதும் நீங்களெல்லாரும் திரும்பிக்கொ
ண்டு வாருங்கள்; உங்களில் ஞானமுள்ள ஒருவ
னையும் காணேன்.
௰௧ என் நாள்கள் போயின; என் இருதயத்தில்
எனக்குண்டாயிருந்த சிந்தனைகள் அறுந்துபோ
௰௨ யின.—அவைகள் இராவைப் பகலாக்கின; இரு
ளுக்கு வெளிச்சம் சமீபித்துவருமென்று எண்
௰௩ ணின.—அப்படி நான் பார்த்துக்கொண்டிருந்
தாலும், பாதாளம் என் வீடாயிருக்கும்; இருளில்
௰௪ என் படுக்கையைப் போடுவேன்.—அழிவைப்
பார்த்து, நீ என் தகப்பனென்கிறேன்; பூச்சிக
ளைப் பார்த்து, நீங்கள் என் தாயும் என் சகோதரி
௰௫ யுமென்கிறேன். — என் பார்த்துக்கொள்ளுதல்
இப்போது எங்கே? நான் பார்த்துக்கொண்ட
௰௬ தைக் காண்பவன் யார்?—பாதாளத்தின் தாழ்ப்பா
ள்களுக்குள்ளாக இறங்கும்; அப்போது தூளில்
ஏகமாய்க்கிடக்கையில் இளைப்பாறுதல் இருக்கு
மென்றான்.

## ௰௮. அதிகாரம்.

௧. பில்தாத் யோபின் தணிகரத்தையும், பொறுமையில்லாமையையும் கண்டித்தது. ௫. துன்மார்க்கருக்கு வரும் ஆபத்து.

௧ அப்போது சூகியனான பில்தாத் பிரதியுத்தர
௨ மாகச் சொன்னதாவது:—நீங்கள் எந்தமட்டும்
பேச்சுகளை முடிக்காதிருப்பீர்கள்? புத்திமான்க
ளாயிருங்கள்; நாங்களும் பிறகு பேசட்டும்.—
நாங்கள் மிருகங்களைப்போல எண்ணப்பட்டு, ௩
உங்கள் பார்வைக்குத் தீட்டுள்ளவர்களாயிருப்
பானேன்?—உமது கோபத்தினால் உம்மைத்தா ௪
னே பீறுகிறவனாகிய உம்முடைய நிமித்தமாகப்
பூமி பாழாய்விடப்பட்டுக் கன்மலை தன்னிடத்
தைவிட்டுப் பேருமோ?
ஆகாதவர்களுடைய வெளிச்சமும் அவிந்து ௫
அவர்களுடைய நெருப்பின் பொறிகளும் பிர
காசியாதிருக்கும்.— அப்படிப்பட்டவனுடைய ௬
கூடாரத்தில் வெளிச்சம் அந்தகாரப்பட்டு,
அவன் விளக்கு அவனுக்குமுன்பாக அணைந்து
போகும்.—அவன் பெலனாய் நடந்த நடைகள் ௭
குறைந்துபோய், அவன் ஆலோசனை அவனை
விழப்பண்ணும். — ஏனென்றால் அவன் தன் ௮
கால்களாலே வலையில் அகப்பட்டு வலைச்சிக்க
லிலே நடக்கிறான். — கண்ணி அவன் குதிகா ௯
லைப் பிடிக்கும், பறிகாரர் அவனை மேற்கொள்
ளுவார்கள். — அவனுக்காகச் சுருக்கு தரையில் ௰
ஒளித்து, அவனுக்காக கண்ணி வழியிலே வைக்
கப்பட்டிருக்கிறது.—சுற்றிலுமிருந்துண்டாகும் ௰௧
பயங்கரங்கள் அவனைத் திடுக்கிடப்பண்ணி,
அவன் கால்களைத் திக்குத்தெரியாமல் அலையப்
பண்ணும்.—அவனுடைய பெலத்துக்குப் பட்டி ௰௨
னியாயிருக்குதல் வந்து, அவன் பாரிசத்திலே
கேடு ஆயத்தப்பட்டு நிற்கும். — அது அவன் ௰௩
தோலின் திராணியைப் பட்சிக்கும்; பயங்கர
மான மரணமே அவன் திராணியைப் பட்சிக்
கும்.—அவன் நம்பிக்கை அவன் கூடாரத்திலி ௰௪
ருந்து பிடுங்கப்படும்; இது அவனைப் பயங்கரங்
களின் இராசாவண்டைக்குத் துரத்தும்.—அவ ௰௫
னுக்கு ஒன்றுமில்லாதேபோனதினால், பயங்கரம்
அவன்கூடாரத்திலே குடியிருக்கும்; கெந்தகம்
அவன் வாசஸ்தலத்தின்மேலே தெளிக்கப்
படும்.—தாழவிருக்கிற அவன் வேர்கள் பட்டுப் ௰௬
போகும்; உயரவிருக்கிற அவன் கொப்புகள்
வெட்டப்பட்டுப்போகும்.—அவனை நினைக்கும் ௰௭
நினைப்பு பூமியிலிருந்தழியும்; வீதிகளில் அவன்
பேரில்லாமல்போகும். — அவன் வெளிச்சத்தி ௰௮
லிருந்து இருளில் துரத்திவிடப்பட்டுப் பூலோ
கத்திலிருந்து தள்ளுண்டுபோவான்.—அவன் சன ௰௯
த்துக்குள்ளே அவனுக்குப் புத்திரனில்லாமலும்,
பேரனில்லாமலும், அவன் குடித்தனங்களில்
மீதியாயிருக்கத்தக்க ஒருவனில்லாமலும் இருக்
கும்.—பின்னடியார் அவன் நாளுக்காகப் பிர ௨௰
மிப்பார்கள்; முற்காலம்முதல் இன்னமிருக்கிற
வர்களை அருக்களிப்புப் பிடிக்கும்.—அக்கிரமக் ௨௧
காரன் குடியிருந்த தானங்கள் இவைகள்தான்;
பராபரனை அறியாதேபோனவன் ஸ்தலம் இது
தான் என்பார்களென்றான்.

## ௰௯. அதிகாரம்.

௧. யோபு தன் உபத்திரவம் போதுமென்று சிநேகிதரின் கொடுமையைக் கண்டித்தது. ௨௧. ௨௮. அவர்கள் தனக்கிரங்க மன்றாடினது. ௨௫. உயிர்த்தெழுதல் உண்டென்று நம்பினது.

யோபு மறுமொழிகொடுத்துச் சொன்னதாவது: ௧

௨ நீங்கள் எந்தமட்டும் என் ஆத்துமாவை வருத்
தப்படுத்தி, என்னை வார்த்தைகளினாலே நொ
௩ றுக்குவீர்கள்?—இப்போது பத்துத்தரம் என்னை
நிந்தித்தீர்கள், நீங்கள் எனக்குக் கடினமுகம் கா
ண்பிக்கிறதினால் உங்களுக்கு வெட்கமில்லை.—
௪ நான் தப்பிநடந்தது மெய்யானாலும், என் தப்பி
௫ தம் என்னோடேதானே இருக்கிறது.— நீங்கள்
எனக்கு விரோதமாக உயர்ந்து, எனக்கு நிந்தை
யாக என்னைக் கடிந்துகொள்ளவேண்டும் என்
௬ றிருந்தீர்களேயாகில்,—பராபரன் என்னைக் கவி
ழ்த்து, தம்முடைய வலையை என்மேல் வீசினார்
௭ என்றறியுங்கள்.—இதோ கொடுமை என்று கூப்
பிடுகிறேன்; ஆனால் நான் கேட்கப்படுகிறதில்
லை; கூக்குரலிடுகிறேன், ஆனால் நியாயம் செய்
௮ யதில்லை.—நான் கடந்துபோகக்கூடாதபடிக்கு
அவர் என் பாதையை வேலி அடைத்து என்
௯ வழிகளை இருளாக்கிவிட்டார்.—என்னிலிருந்த
என் மகிமையை அவர் உரிந்துகொண்டு என்
௰ சிரசின் கிரீடத்தை எடுத்துப்போட்டார்.-அவர்
என்னைச் சுற்றிலும் இடித்துப்போட்டதினால்,
நான் போகிறேன்; என் நம்பிக்கையை ஒரு செடி
யைப்போலப் பிடுங்கிப்போட்டார். — அவர்
௰௧ தமது கோபத்தை என்மேல் எரியப்பண்ணினார்;
என்னைத் தம்முடைய சத்துருக்களில் ஒருவனாக
௰௨ எண்ணிக்கொள்ளுகிறார். — அவருடைய தண்
டுப்படைகள் ஏகமாய் வந்து, எனக்கு விரோதமா
கத் தங்கள் வழியை உயர்த்தி, என் கூடாரத்தைச்
௰௩ சுற்றிப் பாளயம் இறங்கினார்கள்.—என் சகோ
தரரை என்னைவிட்டுத் தூரப்படுத்தினார்;எனக்கு
அறிமுகமானவர்கள் எனக்கு அந்நியராய்ப்போ
௰௪ னார்கள்.—என் பந்துசனங்கள் விலகிப்போய்,
௰௫ என் வங்கணக்காரர் என்னை மறந்தார்கள்.—என்
வீட்டாள்களும், என் வேலைக்காரிகளும், என்
னை அந்நியனாகப் பார்க்கிறார்கள்; அவர்கள் பார்
வைக்கு நான்அசலூரானைப்போலிருக்கிறேன்.-
௰௬ நான் என் வேலைக்காரனைக் கூப்பிடுகிறபோது
எனக்கு மறுவுத்தரவுகொடான்; என் வாயினால்
நான் அவனைக் கெஞ்சிக்கேட்கவேண்டும்.—
௰௭ என் சுவாசம் என் பெண்சாதிக்கு வேறுபட்டி
ருக்கிறது; என் கர்ப்பத்தின் பிள்ளைகளுக்காகப்
௰௮ பரதபிக்கிறேன். — சிறுபிள்ளைகளும் என்னை
அசட்டைபண்ணுகின்றன; நான் எழுந்தால், அ
வைகள் எனக்கு விரோதமாகப் பேசுகின்றன.—
௰௯ என் பிராணசிநேகிதரெல்லாரும் என்னை அரோ
சிக்கிறார்கள்; நான் சிநேகித்தவர்கள் எனக்கு
௨௰ விரோதமாய்த் திரும்பினார்கள். — என் எலும்
புகள் என் தோலோடும் என் மாம்சத்தோடும்
ஒட்டிக்கொண்டிருக்கின்றன; என் பல்லுகளை
௨௧ மூடக் கொஞ்சம் தோல் தப்பினது.—என் சிநேகி
தராகிய நீங்கள் எனக்கிரங்குங்கள், எனக்கிரங்
குங்கள்; ஏனென்றால் பராபரனுடைய கை என்
௨௨ னைத் தொட்டது.—பராபரனைப்போல நீங்கள்
என்னைத் துன்பப்படுத்துவானேன்? என் மாம்
சத்தைப் பட்சித்தும் ஆற்றாமையாய் இருக்கிற
தென்ன?

ஆ நான் இப்போது சொல்லும் வார்த்தைகள் ௨௩
எழுதப்பட்டால் தாவிளை, அவைகள் ஒரு புஸ்த
கத்தில் வரையப்பட்டு, — என்றைக்குமிருக்க ௨௪
அவைகள் கருங்கல்லிலே உளிவெட்டும் ஈய
எழுத்துமாய் வெட்டப்பட்டுப் பதிந்தால் தா
விளை.—ஏனென்றால் என் மீட்பர் உயிரோடி ௨௫
ருக்கிறார் என்கிறதையும், அவர் ஈறுங்கடைசி
யானவராய்த் தூளின்மேல் நிற்பார் என்கிறதை
யும் நான் அறிந்திருக்கிறேன். — இந்த என்னு ௨௬
டைய தோல்முதலானவை அழுகிப்போனபிற்
பாடு, நான் என் மாம்சத்திலிருந்து பராபரனைப்
பார்ப்பேன்.—அவரை நான் எனக்கென்று பார்ப் ௨௭
பேன்; அந்நியக்கண்ணல்ல, என்னுடைய கண்
களே அவரைக் காணும்; இந்த வாஞ்சையாய்
என் உள்ளிந்திரியங்கள் எனக்குள் தொய்ந்து
போகின்றன.

இந்த வார்த்தையின் வேர் எனக்குள் கண்டு ௨௮
பிடிக்கப்படுகையில், நாம் ஏன் அவனைத் துன்
பப்படுத்துகிறோம் என்று நீங்கள் சொல்லவேண்
டியதாமே.—பட்டையத்துக்குப் பயப்படுங்கள்; ௨௯
ஏனெனில் மூர்க்கமானது பட்டைய ஆக்கி
னைக்கு நேரான அநியாயம், நியாயத்தீர்ப்பு உண்
டென்கிறதை நீங்கள் அறியவும் என்றான்.

## ௨௰. அதிகாரம்.

௧ சோப்பார் துன்மார்க்கருடைய நிலைமையையும் வரும் பங்கையும் காட்டினது.

அப்போது நாகமாத்தியனான சோப்பார் பிரதி ௧
யுத்தாரமாகச் சொன்னதாவது:—இதற்காக மறு ௨
உத்தரவுகொடுக்க என் சிந்தனைகள் என்னை ஏவு
கையால் நான் தீவிரித்துக்கொள்ளுகிறேன்.—
நான் நிந்தித்தேன் என்று கடிந்துகொள்ளப்பட் ௩
டதைக் கேட்டேன்; ஆனால் என் உணர்வினு
டைய ஆவி எனக்காகப் பிரதியுத்தாரம் சொல்
லும்.

ஆகாதவர்களின் கெம்பீரம் குறுகினதாயி ௪
ருந்து, மாயக்காரரின் சந்தோஷம் ஒருநிமிஷம்
மாத்திரம் நிற்குமென்கிறதையும்,—அவர் மனுஷ ௫
னைப் பூமியில் வைத்த ஆதிகாலமுதல் இப்படி
யிருக்கிறதென்கிறதையும் நீர் அறியீரோ?—அவ ௬
னுடைய மேன்மை வானபரியந்தம் உயர்ந்தா
லும், அவன் தலை மேகங்கள்மட்டும் எட்டினா
லும்,—அவன் தன் நரகலைப்போல என்றைக்கும் ௭
அழிவான்; அவனைக் கண்டவர்கள், அவன் எங்
கே என்பார்கள்?—அவன் ஒரு சொப்பனத்தைப் ௮
போலப் பறந்து, காணப்படாதேபோய், இராத்
தரிசனத்தைப்போலப் பறக்கடிக்கப்படுவான்.—
அவனைப்பார்த்த கண் இனி அவனைப் பார்ப்ப ௯
தில்லை; அவனிருந்த ஸ்தலம் இனி அவனைக்
காண்பதுமில்லை.—அவன் பிள்ளைகள் எளிமை ௰
யானவர்களுக்கு இராசிபண்ணி, அவன் பறித்
ததை அவன் கைகள் திரும்பக் கொடுக்கவேண்
டும்.—அவன் எலும்புகள் அவனுடைய அந்தரங் ௰௧
க பாவங்களினால் நிறைந்திருந்து, அவனோடே
கூட மண்ணிலே படுத்துக்கொள்ளும்.

௰உ பொல்லாப்பு அவன் வாயிலே தித்திக்கை
யால், அவன் அதைத் தன் நாவின்கீழடக்கி,—
௰௩ அதை விடாமல், பதனம்பண்ணி, தன் வாய்க்
௰௪ குள்ளே வைத்துக்கொண்டிருந்தாலும்,—அவன்
போசனம் அவன் குடல்களில் மாறப்பட்டு,
அவனுக்குள் விரியன்பாம்புகளின் பிச்சாய்ப்
௰௫ போகும்.—அவன் விழுங்கின ஆஸ்தியை வாந்
திபண்ணுவான்; பராபரன் அதை அவன் வயிற்
றிலிருந்து வெளியே தள்ளிவிடுவார்.
௰௬ அவன் விரியன்பாம்புகளின் விஷத்தை உ
றிஞ்சுவான்; விரியனின் நாக்கு அவனைக்கொன்
௰௭ றுபோடும்.—தேனும் நெய்யும் ஓடும் வாய்க்கால்
களையும் ஆறுகளையும் அவன் காண்பதில்லை.—
௰௮ தான் பிரயாசப்பட்டுத் தேடினதை அவன் விழுங்
காமல் திரும்பக் கொடுப்பான்; அவன் திரும்பக்
கொடுக்கிறது அவன் ஆஸ்திக்குச் சரியாயிருக்
௰௯ கும்; களிகூராதிருப்பான்.—அவன் ஒடுக்கி, எ
ளியவர்களைக் கைவிட்டு, தான் கட்டாத வீட்டைப்
உ௰ பறித்தபடியினாலும்,—தன் வயிற்றில் ஆற்றாமை
யாயிருந்தபடியினாலும், அவனுக்கு அவன் இச்சி
உக த்த காரியங்களில் ஒன்றுமிருப்பதில்லை.—அவன்
போசனத்தில் ஒன்றும் மீதியானதில்லை; ஆகை
உஉ யால் அவன் ஆஸ்தி நிலைநிற்பதில்லை.—அவன்
வேண்டுமென்ற பரிபூரணம் அவனுக்கு வந்தபி
ன், அவனுக்கு வியாகுலம் உண்டாம்; சிறுமைப்
படுகிற ஒவ்வொருவர் கை அவன்மேல் வரும்.
உ௩ தன் வயிற்றை நிரப்பத்தக்கது இன்னம் அவ
னுக்கிருந்தாலும், அவர் அவன்மேல் தமது கோ
பத்தின் உக்கிரத்தை வரவிட்டு, அவன் அசனம்
பண்ணுகையில், அதை அவன்மேல் வருஷிக்
உ௪ கப்பண்ணுவார்.— இருப்பு ஆயுதங்களுக்கு அ
வன் தப்பி ஓடினாலும் எகுவில் அவனை உருவ
உ௫ எய்யும்.—உருவின பட்டையம் அவன் சரீரத்
தையும், அதின் மின்னுதல் அவன் பிச்சையும்,
உருவிப்போய்ப் புறப்படும்; பயங்கரங்கள் அ
உ௬ வன்மேல் வரும்.—அவன் ஒளிக்கும் இடங்களில்
சகலவித இருளும் அடங்கியிருக்கும்; ஊதப்பட்
டிராத அக்கினி அவனைப் பட்சிக்கும்; அவன்
கூடாரத்தில் மீதியாயிருக்கின்றவன் தீங்கு அநு
உ௭ பவிப்பான்.—வானங்கள் அவன் அக்கிரமத்தை
வெளிப்படுத்தி, பூமி அவனுக்கு விரோதமாக
உ௮ எழும்பும்.—அவன் வீட்டின் வரத்துப் போய்வி
டும், அவருடைய கோபத்தின் நாளிலே அவை
உ௯ கள் கரைந்துபோகும்.—இது பராபரனால் பொல்
லாத மனுஷனுக்கு வருகிற பங்கும், அவன் பேச்
சுக்குப் பராபரனால் வருகிற சுதந்தரமுமாய்
இருக்கிறதென்றான்.

## உக. அதிகாரம்.

*க. யோபு மனுஷனுடைய தீர்மானத்திலும் தான் துக்கப்படுதல் நியாய மென்றும், எ. துன்மார்க்கர் சுகசெல்வராயிருப்பது சிலவேளை பராபரனை அசட்டைபண்ணுதற்கு ஏதுவென்றும், ௰௯. அவர்களின் அழிவு சிலவேளை வெளிப்படையாகின்றதென்றும், உஉ. செல்வரும் தரித்திரரும் மரணத்திலே சமமென்றும், உஎ. துன்மார்க்கருடைய நியாயத்தீர்ப்பு மறுலோகத்துக்கு உரியதென்றும் காட்டினது.*

க யோபோவென்றால் பிரதியுத்தாரமாகச் சொன்
உ னதாவது:—என் வசனத்தைக் கேட்கவே கே
ளுங்கள்; இது நீங்கள் என்னைத் தேற்றரவுபண்
ணுமாப்போல எனக்கிருக்கும்.—நான் பேசும்ப ௩
டிக்கு என்னைச் சகித்திருங்கள்; நான் பேசின
தற்குப்பிற்பாடு பரியாசம்பண்ணுங்கள்.—நான் ௪
மனுஷனைப்பார்த்துஅங்கலாய்க்கிறேனோ? ஆனா
லும் என் ஆவி விதனப்படாதிருப்பானேன்?—
என்னண்டைக்கு முகம்திருப்புங்கள்; அப் ௫
போது நீங்கள் பிரமித்து, உங்கள் வாயைக் கை
யால் பொத்துவீர்கள்.
இதை நான் நினைக்கையில் கலங்குகிறேன்; ௬
என் மாம்சத்துக்கு நடுக்கம்பிடிக்கும். — துன் ௭
மார்க்கர் பிழைத்து, கிழவராய்ப்போய், வல்ல
மையிலும் பெலப்பானேன்?—அவர்களோடும் ௮
கூட அவர்கள் வித்தார் அவர்களுக்குமுன்பாக
வும், அவர்கள் சந்ததியார் அவர்கள் கண்களுக்கு
முன்பாகவும் திடப்படுகிறார்கள். — அவர்கள் ௯
வீடுகள் பயமில்லாமல் சுகமாயிருக்கும்; பராபர
னுடைய மிலாறு அவர்கள்மேல் இறங்காது.—
அவர்களுடைய எருது பொலிந்தால், அவத்தமா ௰
யிராது; அவர்களுடைய பசு சினை அழியாமல்
ஈன்றது.— அவர்கள் தங்கள் குழந்தைகளை ஒரு ௰க
மந்தையைப்போல, வெளியே போகவிடுவார்
கள்; அவர்கள் பிள்ளைகள் குதித்துக்கொண்டு
திரிகின்றன.—அவர்கள் மேளத்தையும் சுரமண் ௰உ
டலத்தையும் பிடித்து, சத்தமிட்டு கின்னரத்
தின் ஓசைக்குச் சந்தோஷப்படுகிறார்கள்.—அவர் ௰௩
கள் செல்வத்தோடே தங்கள் நாள்களைப்போக்கி,
ஒரு கணப்பொழுதிலே குழியில் இறங்குகிறார்
கள். — இப்படிப்பட்டவர்கள் பராபரனுக்கு, ௰௪
எங்களைவிட்டு விலகியிரும், உம்முடைய வழி
களை அறிய விரும்போமென்று சொல்லி,—சர் ௰௫
வத்துக்கும் வல்லவரை நாம் சேவிக்க அவர் யார்?
அவரைநோக்கிச் செபம்பண்ணுவதினால் நமக்
குப் பிரயோசனம் என்னவென்கிறார்கள்.
ஆனால் இதோ அவர்கள் வாழ்வு அவர்கள் கை ௰௬
யிலிராது; ஆகாதவர்களின் ஆலோசனை எனக்
குத் தூரமாயிருக்கக்கடவது. — எத்தனை அசுப் ௰௭
பாய் ஆகாதவர்களின் விளக்கு அணைந்து, அவர்
தமது கோபத்தினால் வேதனைகளைப் பகிர்ந்து
கொடுக்கையில், அவர்கள் ஆபத்து அவர்கள்
மேல் வரும்.—அவர்கள் காற்றுமுகத்திலிருக்கிற ௰௮
துரும்பைப்போலும், பெருங்காற்றுப் பறக்க
டிக்கிற பதரைப்போலும் இருக்கிறார்கள்.—
பராபரன் அவனுடைய அக்கிரமத்தை அவன் ௰௯
பிள்ளைகளுக்கு வைத்துவைக்கிறார்; அவன் உண
ரத்தக்கவிதமாய் அதை அவனுக்குப் பலிக்கப்
பண்ணுகிறார்.—தன்னுடைய சங்காரத்தை அவ உ௰
னுடைய கண்கள் காணும், சர்வத்துக்கும் வல்ல
வருடைய உக்கிரத்தைக் குடிப்பான்.—ஏனெ உக
னில் அவன் மாதங்களின் தொகை குறுக்கப்படு
கையில், அவனுக்குப்பிற்பாடு அவன் வீட்டி
னால் அவனுக்கிருக்கும் விருப்பமென்ன?
உயர்ந்தவர்களை நியாயம்தீர்க்கிற பராபரனுக் உஉ
கு அறிவுசொல்லப்படலாமோ?—ஒருவன் தன் உ௩
சர்வசாங்கோபாங்கத்தோடும்சுகத்தோடுமிருந்து

குறையற்ற பெலனுள்ளவனாய்ச் சாகிறான். —
௨௪ அவனுடைய பால்ப்பானைகள் பால் நிரம்பின
தும், அவன் எலும்புகளின் ஊன் புஷ்டியுமாயி
௨௫ ருந்தன.—பின்னொருவன் சந்தோஷத்தோடே
சாப்பிடாதவனாயிருந்து, மனக்கிலேசத்தோடே
௨௬ சாகிறான்.— இருவரும் மண்ணிலே கிடக்கிறார்
கள்; பூச்சிகள் அவர்களை மூடிக்கொள்ளும்.
௨௭ இதோ நான் உங்கள் நினைவுகளையும், நீங்கள்
எனக்குக் கொடுமையாய்ச் செய்கிற வினைகளை
௨௮ யும் அறிவேன்.—ஏனென்றால், நீங்கள் பிரபு
வினுடைய வீடு எங்கே என்றும், ஆகாதவர்கள்
வாசம்பண்ணின கூடாரம் எங்கே என்றும்
௨௯ சொல்லுகிறீர்கள். — வழியிலே கடந்துபோகிற
வர்களை நீங்கள் கேட்டு, அவர்கள் சொல்லும்
அடையாளங்களை நீங்கள் அறியவில்லையோ?—
௩௰ ஏனென்றால் பொல்லாதவன் ஆபத்தின் நாளுக்
கென்று வைக்கப்படுகிறான்; அப்படிப்பட்டவர்
கள் கோபாக்கினைகளின் நாளுக்கென்று கொண்
௩௧ டுபோகப்படுகிறார்கள். — அப்படிப்பட்டவனு
டைய மார்க்கத்தை அவன் முகத்துக்குமுன்
பாகத் தூண்டிக் காண்பிப்பவன் யார்? அவன்
செய்ததற்குத்தக்கதை அவனுக்குச் சரிக்கட்டுப
௩௨ வன் யார்?—அவனோவென்றால் கல்லறைக்குக்
கொண்டுவரப்படுகிறான்; அவன் கோரிக்காகப்
௩௩ பராமரிக்கையுமாயிருந்தான். — பள்ளத்தாக்கின்
கழுப்பத்தைகள் அவனுக்கு இன்பமாயிருந்து,
தனக்குப் பின்னான மனுஷரை எல்லாம் இழுத்
துக்கொள்ளுகிறான்; அவனுக்கு முன்னாகப்
போனவர்களும் எண்ணிக்கைக்கு அடங்காத
௩௪ வர்கள்.—இப்போதும் நீங்கள் மாயையான ஆறு
தலை எனக்குச் சொல்லுகிறதென்ன? உங்கள்
மறுமொழிகளில் உண்மைக் கேடுதான் பிடித்தி
ருக்கிறதென்றான்.

## ௨௨. அதிகாரம்.

௧. எலிப்பாஸ் மனுஷனுடைய நன்மை பராபரனுக்குப் பிரயோசனமில்லை யென்றது. ௫. யோபைப் பலவகைப் பாவஞ்செய்ததாகக் குற்றம் சாட்டினது. ௨௧. மனந்திரும்பினால் பராபரன் இரங்குவாரென்று அவனுக்குப் புத்திசொன்னது.

௧ அப்போது தேமானியனான எலிப்பாஸ் பிரதி
௨ யுத்தாரமாகச் சொன்னதாவது:—ஒரு மனுஷன்
விவேகியாயிருந்து, தனக்குத்தான் பிரயோசன
மாயிருக்கிறதினால் பராபரனுக்குப் பிரயோசன
௩ மாயிருப்பானோ?—நீர் உம்மை நீதிமானாக்குகிறது
சர்வத்துக்கும் வல்லவருக்கு விருப்பமாயிருக்கு
மோ? நீர் உம்முடைய வழிகளை உத்தமமென்று
௪ எண்ணுகிறது ஆதாயமாயிருக்குமோ? — அவர்
உமக்குப் பயப்படுகிறதினால் உம்மோடே வழக்
காடி, உம்மோடே நியாயத்துக்கு வருவாரோ?—
௫ உம்முடைய பொல்லாப்பு பெரியதும், உம்மு
டைய அக்கிரமங்கள் முடிவில்லாதவைகளுமாய்
௬ இருக்கின்றனவல்லவோ?–ஏனென்றால் முகாந்
தரமில்லாமல் உம்முடைய சகோதரர் கையில்
அடகுவாங்கி, அம்மணமானவர்களின் வஸ்திரங்
௭ களைப் பறித்துக்கொண்டீர்? — விடாய்த்தவனுக்
குத் தாகத்துக்குத் தண்ணீர் வாராமலும், பசியா
யிருக்கிறவனுக்கு அப்பம் கொடாமலும் போ
னீர்.—பெலத்தவனுக்கே சீமையில் இடமுண் ௮
டாயிற்று; முகத்தாட்சிணியமாய்ப் பார்க்கப்பட்
டவன் அதில் குடியிருந்தான். — விதவைகளை ௯
வெறுமையே அனுப்பிவிட்டீர்; தாய்தகப்பன்
இல்லாதவர்களின் புயங்கள் முறிக்கப்பட்டன.-
ஆகையால் உம்மைச் சுற்றிலும் சுருக்குகள் போ ௰
டப்பட்டு, அசுப்பிலே உமக்கு வந்த பயங்கரம்,
அல்லவென்று நீர் பார்க்கக்கூடாதபடிக்கு இரு
ளும் உம்மைக் கலங்கப்பண்ணி,—சலப்பிரளயம் ௧௧
உம்மை மூடுகிறது.
பராபரன் பரமண்டலங்களில் உயரத்திலிருக் ௧௨
கிறாரல்லவோ? நட்சத்திரங்கள் எத்தனை உயர
மென்று அவைகளின் உயரத்தைப் பாரும். —
ஆனால் நீர், பராபரன் அறிகிறதேது, அந்தகாரத் ௧௩
துக்குள் இருக்கிறதை நியாயந்தீர்ப்பாரோவென்
றும்,–அவர் பாராதபடிக்கு மேகங்கள் அவருக்கு ௧௪
மறைவிடமாயிருக்கின்றன,பரமண்டலங்களின்
சக்கரத்திலே அவர் உலாவுகிறாரென்றும் சொல்
லுகிறீர். — அக்கிரமமாந்தர் பூர்வத்தில் நடந்த ௧௫
மார்க்கத்தைக் கைக்கொள்ளுவீரோ? — காலம் ௧௬
வராததற்குமுன்னே அவர்கள் வாடிப்போனார்
கள்; அவர்களுடைய அஸ்திபாரத்தின்மேலே
வெள்ளம் புரண்டது.—பராபரன் அவர்கள் வீடு ௧௭
களை நன்மையால் நிரப்பியிருந்தாலும், அவர்கள்
அவருக்கு எங்களை விட்டுவிலகும்,சர்வத்துக்கும்
வல்லவர் தங்களுக்கு என்னசெய்வாரென்றார்
கள்.—ஆகையால் துன்மார்க்கரின் ஆலோசனை ௧௮
எனக்குத் தூரமாயிருப்பதாக.—எங்கள் நிலை நிர் ௧௯
மூலமாகாமல், அவர்களுக்கு மீதியானதையோ
அக்கினி பட்சித்ததென்பதை நீதிமான்கள் கண்டு
சந்தோஷப்படுகிறார்கள். — குற்றமில்லாதவன் ௨௰
அவர்களை நகைக்கிறான்.
நீர் அவரோடே பழக்கம்பண்ணிக்கொண்டு, ௨௧
சமாதானமாகுமே; இதினால் நன்மை உமக்கு
வரும்.—அவருடைய வாக்கின் நியாயப்பிரமா ௨௨
ணத்தை ஏற்றுக்கொண்டு, அவர் வார்த்தைகளை
உம்முடைய இருதயத்தில் தரித்துக்கொள்ளு
மே. — நீர் சர்வத்துக்கும் வல்லவரண்டைக்கு ௨௩
மனந்திரும்பினால், திரும்பக் கட்டப்படுவீர்; நீர்
அக்கிரமத்தை உமது கூடாரத்துக்குத் தூரமாக்
கினால்,—அப்போது பொன்னைத் தூளைப்போ ௨௪
லும், ஓப்பீரின் தங்கத்தை ஆற்றுக்கல்லுகளைப்
போலும் சேர்த்துவைப்பீர்.—அப்போது சர்வத் ௨௫
துக்கும் வல்லவர் தாமே உம்முடைய அபரஞ்
சிப்பொன்னும், உமக்குச் சொக்கவெள்ளியுமா
யிருப்பார்.—ஏனென்றால் அப்போது சர்வத்துக் ௨௬
கும் வல்லவர்மேலே மனமகிழ்ச்சியாயிருந்து,
பராபரனுக்கு நேராக உம்முடைய முகத்தை
ஏறெடுப்பீர்.—நீர் அவரைநோக்கி விண்ணப்பம் ௨௭
பண்ண அவர் உம்மைக் கேட்பார்; அப்போது
உம்முடைய பொருத்தனைகளைச் செலுத்துவீர்.–
அப்போது நீர் ஒரு காரியத்தை நிருணயம்பண் ௨௮
ணினால், அது உமக்கு நிலைவரப்படும், அப்
போது உம்முடைய வழிகளில் வெளிச்சம் பிர

௨௯ காசிக்கும்.—மனுஷர் ஒருவனை ஒடுக்குகையில்,
நீர் அவன் உயர்த்தப்படக்கடவானென்றால்,
அவர் முனையற்றுப்போனவனை இரட்சிப்பார்.-
௩௰ குற்றமற்றிராதவனையுங்கூடத் தப்புவிப்பார்,
உம்முடைய கைகளின் சுத்தத்தின்நிமித்தம்
அவன் தப்பிப்போவானென்றான்.

## ௨௩. அதிகாரம்.

க. யோபு பராபரனுடைய இரக்கத்தை நம்பி, அவருடைய சமுகத்தில் நிற்க ஆசைகொண்டது. அ. பராபரன் அரூபியாயிருந்தும் நம்முடைய வழிகளைப் பார்க்கின்றது. ௰௧ யோபுடைய நன்னெறி. ௰௩. பராபரனுடைய தீர்மானம் மாற்றப்படாதது.

௧ யோபு பிரதியுத்தாரமாகச் சொன்னதாவது:—
௨ இந்நாள்மட்டும் என்னுடைய அங்கலாய்ப்பு
முண்டுத்தனமாக எண்ணப்படும்; என்னுடைய
வாதை என் தவிப்பைப்பார்க்கிலும் கடினமான
௩ து.—நான் அவரை எங்கே கண்டு சந்திக்கலா
மென்பதை அறிந்தால் தாவிலை; அப்போது நான்
அவர் ஆசனத்துக்குமுன்பாக வந்துசேர்ந்து,—
௪ நியாயத்தை அவருக்குமுன்பாக வரிசையாய்
வைத்து, காரியத்தை ரூபிக்கும் வார்த்தைகளால்
௫ என் வாயை நிரப்புவேன்.—அவருடைய மறு
மொழிகளை அறிந்து, எனக்கு என்ன சொல்வா
௬ ரென்பதை உணர்ந்துகொள்ளுவேன். — அவர்
தம்முடைய மகா வல்லமையின்படியே என்
னோடே வழக்காடுவாரோ? அவர் அப்படிச்செய்
௭ யாமல் என்மேலே தயைவைப்பார்.—செம்மை
மார்க்கத்தான் அங்கே அவரோடே நியாயம்
பார்த்துக்கொள்ளலாம், ஆனதுகொண்டு என்னை
நியாயந்தீர்க்கிறவரின் கைக்கு என்றைக்கும் நீங்
௮ கலாய்த் தப்புவித்துக்கொள்ளுவேன். — இதோ
நான் முன்னாகப்போனாலும் அவர் இல்லை; பின்
௯ னாகப்போனாலும் அவரை உணரேன்.—இடது
புறத்திலும் அவர் செயலைக் காணேன்; வலதுபு
றத்திலும் நான் அவரைப் பாராதபடிக்கு ஒளித்தி
௰ ருக்கிறார்.—ஆனால் என்னிடத்திலிருக்கிற மார்க்
கத்தை அறிவார்; அவர் என்னைச் சோதிக்கை
௰௧ யில் பொன்னாக விளங்கிப்போவேன்.—என்
கால்கள் அவர் அடிகளைப் பற்றிப்பிடித்தன;
அவருடைய நெறியை நான் சாயாமல் கைக்
௰௨ கொண்டேன்.-அவர் உதடுகளின் கற்பனைகளை
நான்விட்டுப் பின்வாங்கினதில்லை;அவருடைய
வாயின் வார்த்தைகளை என் அப்பத்தைப்பார்க்
கிலும் காத்துக்கொண்டேன்.
௰௩ அவரோவென்றால் ஒரே நிலைமையாயிருக்கி
றார்; அவரைத் திருப்பப்போகிறவர் யார்? அவரு
டைய சித்தம் வேண்டுமென்றிருக்கிறதை அவர்
௰௪ செய்வார்.—எனக்குக் குறித்திருக்கிறதை நிறை
வேற்றுவார்; இதைப்போல ஒத்தவைகள் இன்
௰௫ னம் அவரிடத்தில் வெகுவாக இருக்கின்றன.-ஆ
கையால் அவருக்குமுன்பாகக் கலங்குகிறேன்;
அதை நான் தியானிக்கிறபோது, அவருக்குப்
௰௬ பயப்படுகிறேன்.—ஏனெனில் பராபரன் என்
இருதயத்தை இளக்கரிக்கப்பண்ணினார்; சர்வத்
துக்கும் வல்லவர் என்னைக் கலங்கப்பண்ணி
௰௭ னார். — அந்தகாரம் வராததற்குமுன்னே நான்
சங்கரிக்கப்படாமலும், இருளை அவர் எனக்கு
மறைக்காமலும் போனதினாலேதானே.

## ௨௪. அதிகாரம்.

க. துன்மார்க்கத்திற்கு அநேகமுறை ஆக்கினையில்லாதது. ௰௭. துன்மார்க்கருக்கு மறைவான நியாயத்தீர்ப்பு இருக்கின்றது.

சர்வத்துக்கும் வல்லவரை அறிந்திருக்கிறவர்கள் ௧
அவர் கட்டளையிடுகிற துன்நாள்களைக் காணாத
படிக்கு, அப்படிக்கொத்த காலங்கள் அவரால்
அடக்கப்படாதேபோனதென்ன?—எல்லைகளை ௨
ஒற்றி, மந்தைகளைப் பறித்துக்கொண்டு மேய்த்
து,—தாய் தகப்பன் இல்லாதவர்களின் கழுதை ௩
யை ஓட்டிக்கொண்டுபோய், விதவையின் எரு
தை அடகாக வாங்கி,—தேசத்தில் சிறுமையா ௪
னவர்கள் ஏகமாய் ஒளித்துக்கொள்ளத்தக்கவித
மாக, எளியவர்களை வழியைவிட்டு விலக்குகி
றார்கள்.—ஆகையால் இதோ இவர்கள் காட்டுக் ௫
கழுதைகளைப்போல, இரைதேட அதிகாலமே
தங்கள் வேலைக்குப் புறப்படுகிறார்கள்; அந்தர
வெளியானது அவர்களுக்கு அவர்கள் பிள்ளைக
ளுக்காக ஆகாரம் கொடுக்கவேண்டும். — வய ௬
லில் இவர்கள் அவனுக்கு அவனுடைய பயிரை
அறுத்து, துன்மார்க்கனுக்கு அவன் திராட்சத்
தோட்டத்தின் பழங்களைச் சேர்த்து,— குளிரி ௭
லே மூடிக்கொள்ளுகிறதற்கு இல்லாததினால்,
உடுப்பு அற்ற அம்மணமாய் இராத்தங்கி,—மலை ௮
களிலிருந்து ஓடிவருகிற தண்ணீரிலே நனைந்து
ஒதுக்கில்லாததினால் கல்மலையை அணைத்துக்
கொள்ளுகிறார்கள்.

அவர்களோ தகப்பனில்லாத பிள்ளையை மு ௯
லையைவிட்டுப் பறித்து, தரித்திரன் போர்த்துக்
கொண்டிருக்கிறதை அடகுவாங்குகிறார்கள் —
அவனை உடுப்பில்லாத அம்மணமாக நடக்கவும், ௰
பட்டினியாக அரிக்கட்டுகளைச் சுமக்கவும்,—
தங்கள் மதில்களுக்குள்ளே செக்காடவும், தாகத் ௰௧
தவனமாய் ஆலையாடவும்பண்ணுகிறார்கள். —
ஊரில் மனுஷர் தவித்து, குற்றுயிருள்ளவர்க ௰௨
ளின் ஆத்துமம் கூப்பிடும் என்றாலும், பராபரன்
அதை அடாதகாரியமாக அவர்கள்மேல் சுமத்து
கிறதில்லை.

அவர்கள் வெளிச்சத்துக்கு விரோதம்பண்ணு ௰௩
கிறவர்களின் கூட்டத்தார், அவர்கள் அவரு
டைய வழிகளை அறியாமலும், அவருடைய பா
தைகளில் தரிக்காமலும் இருக்கிறார்கள்.-கொலை ௰௪
பாதகன் பொழுதுவிடிகிறபோது எழுந்து, சிறு
மையும் எளிமையுமானவனைக் கொன்று, இராக்
காலத்திலே திருடனைப்போலிருக்கிறான்.-விப ௰௫
சாரனுடைய கண் மாலைமயங்குகிற வேளைக்குக்
காத்திருந்து,ஒரு கண்ணாலும் என்னைப் பார்ப்
பதில்லையென்று முக்காடு போட்டுக்கொள்ளுகி
றான்.—அவர்கள் பகலில் அடையாளம் பார்த்த ௰௬
வீடுகளை இருட்டிலே கன்னமிட்டு, வெளிச்சத்
தை அறியாதிருக்கிறார்கள்.-ஏனெனில் விடியும் ௰௭
காலம்கூட அவர்களுக்கு மரணநிழலாயிருக்கி
றது; அதேனென்றால் அப்படிப்பட்டவன் மர

௰௮ ணஇழலின் பயங்கரத்தை உணருகிறான்.—நீரோ
ட்டத்தைப்போல, தீவிரமாகப் போவான்; தே
சத்தில் அவன் பங்கு சபிக்கப்பட்டுப் போகிறதி
னால், அவன் திராட்சத்தோட்டங்களின் வழிக்
கு இனி முகம் திருப்பமாட்டாதிருப்பான்.

௰௯ வரட்சியும் உஷ்ணமும் உறைந்தமழையின்
தண்ணீரையும், பாதாளமானது பாவிகளையும்
௨௰ அற்றுப்போகப்பண்ணுகின்றன. — அவனைப்
பெற்ற கர்ப்பம் அவனை மறக்கும், புழுப்புழுப்
பாகிறது அவனுக்கு இன்பமாகும்; அவன் அப்
புறம் நினைக்கப்படுவதில்லை; அக்கிரமமானது
சொத்தைமரத்தைப்போல முறிந்துவிழும்.

௨௧ பிள்ளைபெறாத மலடியின் ஆஸ்தியை மேய்ந்
துவிட்டு, விதவைக்கு நன்மைசெய்யாதே போ
௨௨ னான்.—தன் பெலத்தினாலே வல்லவர்களைத் தன்
பாரிசமாக்கி எழும்பியும், பிராணன் அவனுக்கு
௨௩ நிசமல்ல. — பராபரன் அவனுக்குச் சுகசீனைக்
கட்டளையிட்டால், அதின்மேலே கெட்டியாய்
நம்பிக்கைவைக்கிறான்; ஆனால் அவருடைய
கண்கள் அப்படிப்பட்டவர்களின் வழிகளுக்கு
௨௪ விரோதமாயிருக்கின்றன. — அவர்கள் கொஞ்ச
காலம் உயர்ந்திருந்து,காணாமல்போய், தாழ்த்தப்
பட்டு, மற்ற எல்லாரைப்போலும் அடக்கப்படு
கிறார்கள்; கதிர்களின் முனையைப்போல அறுக்
௨௫ கப்படுகிறார்கள்.-அப்படியில்லையோ? என்னைப்
பொய்க்காரனாக்கி, என் வார்த்தைகளை ஒன்று
மில்லாததாக்கப் போக்குகிறவன் யாரென்றான்.

## ௨௫. அதிகாரம்.

௧. பில்தாத் மனுஷன் பராபரனுக்குமுன்பாக நீதிமானாயிருக்கக்கூடாதென்றது.

௧ அப்போது சூகியனான பில்தாத் பிரதியுத்தர
௨ மாகச் சொன்னதாவது:—ஆளுகையும் பயங்கர
மும் அவரிடத்தில் இருக்கின்றன, அவர் தமது
உன்னதமான ஸ்தலங்களில் சமாதானம் உண்
௩ டாக்குகிறார்.—அவருடைய இராணுவங்களுக்
குத் தொகையுண்டோ? அவருடைய வெளிச்
௪ சம் யார்மேலே உதிக்காதிருக்கிறது?—இப்படியி
ருக்கையில், மனுஷன் பராபரனுக்குமுன்பாக
நீதிமானாயிருப்பது எப்படி? ஸ்திரியினிடத்தில்
௫ பிறந்தவன் சுத்தமாயிருப்பது எப்படி? — சந்தி
ரனை அண்ணாந்துபாரும், அதுவும் பிரகாசமற்
றது,நட்சத்திரங்களும் அவர் பார்வைக்குச் சுத்த
௬ மற்றவைகள். — புழுவாயிருக்கிற மனிதனும்,
பூச்சியாயிருக்கிற மனுப்புத்திரனும் எத்தனை
அதிகமென்றான்.

## ௨௬. அதிகாரம்.

௧. யோபு பில்தாத்தின் இரக்கமில்லாத குணத்தைக் கண்டித்தது. ௫. பராபரனுடைய வல்லமை எல்லைக்கு அடங்காததும் ஆராயக்கூடாததுமென்று ஒப்புக்கொண்டது.

௧ யோபோவென்றால் மறுமொழி கொடுத்துச்
௨ சொன்னதாவது: — திடனில்லாதவனுக்கு எப்
படி ஒத்தாசைபண்ணினாய்? பெலனற்ற கைப்
௩ பட்டையை எப்படி ஆதரித்தாய்?—நீ ஞான
மில்லாதவனுக்கு எப்படி உசாவுதுணையாயிருந்
து, மெய்ஞ்ஞானத்தைப் பரிபூரணமாய் அறிவித்
தாய்?—யாருக்கு அறிவு சொன்னாய்? உன்னிலி ௪
ருந்து புறப்பட்ட ஆவி யாருடையது?

சலத்தின்கீழ் மடிந்த இராட்சதருக்கும், அவர் ௫
களிடத்திலேகூடத் தங்குகிறவர்களுக்கும் தத்த
ளிப்புண்டு.-அவருக்குமுன்பாகப் பாதாளம் வெ ௬
ளியாய்த் திறந்ததும் நரகம் மூடப்படாததுமாயி
ருக்கின்றன.—அவர் வடக்கை வெறுமையின் ௭
மேலே விரித்து, பூமியை அந்தரத்திலே தொங்க
வைக்கிறார். — அவர் தண்ணீர்களைத் தம்மு ௮
டைய மேகங்களிலே கட்டிவைக்கிறார், அவைக
ளின்கீழ் மேகம் கிழிகிறதுமில்லை.—அவர் தம் ௯
முடைய ஆசனம் நிற்கிற ஆகாசத்தைக் கெட்டி
யாயிருக்கப்பண்ணி, அதின்மேலே தம்முடைய
மேகத்தை விரிக்கிறார்.—அவர் தண்ணீர்கள்மே ௰
லெல்லாம் சக்கரவட்டம் தீர்ந்தார்; வெளிச்ச
மும் இருளும் முடியும்மட்டும், அப்படியிருக்கத்
தானே.-அவருடைய உதம்புதலினால் வானத்தின் ௰௧
தூண்கள் அதிர்ந்து தத்தளிக்கும்.—தம்முடைய ௰௨
வல்லமையினாலே சமுத்திரத்தைப் பிளந்து,
தம்முடைய உணர்வினால் அதின் மூர்க்கத்தை
நொறுக்குகிறார். — தம்முடைய ஆவியினாலே ௰௩
வானத்தை அலங்கரித்தார்; அவருடைய கரம்
நீளமான சர்ப்பத்தை உருவாக்கிற்று.—இதோ இ ௰௪
வைகள் அவருடையவழிகளின் கடைநுனிகள்,
நாங்கள் அவரைக்குறித்துக் கேட்ட வார்த்தை
எத்தனை போதாததாயிருக்கின்றது; அவருடைய
வல்லமையின் இடிமுழக்கம் இன்னதென்று
அறிந்தவன் யாரென்றான்.

## ௨௭. அதிகாரம்.

௧. யோபு தன் மனத்தூய்மையை வற்புறுத்தினதும், ௮. மாயமுள்ளவனுக்கு நம்பிக்கை இராதென்றதும், ௰௧. துன்மார்க்கர் அனுபவிக்கின்ற சுகசெல்வங்கள் சாபமாக மாறுகின்றதென்பதும்.

யோபு பின்னையும் தன் வாக்கியங்களை எடுத் ௧
துப் பேசிச் சொன்னதாவது: — என்னுடைய ௨
சுவாசம் என்னிலும் பராபரனுடைய ஆவி என்
மூக்கிலும் இருக்கும்மட்டும், — என் உதடுகள் ௩
அக்கிரமம் சொல்வதுமில்லை, என் நாக்கு கபட்
டை உரைப்பதுமில்லையென்று,—என்னுடைய ௪
நியாயத்தை விலக்குகிற பராபரனும் என் ஆத்து
மத்தைக் கசப்பாக்குகிற சர்வவல்லவருமானவ
ருடைய சீவனைக்கொண்டு சொல்லுகிறேன்.—
நீங்கள் பேசுகிறது நீதியென்று நான் ஒத்துக் ௫
கொள்வது எனக்குத் தூரமாயிருப்பதாக; என்
ஆவி பிரியும்மட்டும் என் உத்தமத்தை என்னை
விட்டு விலக்கேன். — என் நீதியைக் கெட்டி ௬
யாய்ப் பிடிக்கிறேன்; அதை நான் விட்டுவி
டேன்; என் நாள்களைக்குறித்து என் இருதயம்
என்னை நிந்திக்காது.—என் பகைஞன் ஆகாதவ ௭
னைப்போலும், எனக்கு விரோதமாய் எழும்புகிற
வன் அக்கிரமக்காரனைப்போலும் இருப்பானாக.

ஏனெனில் மாயக்காரன் பொருளைத் தேடி ௮
வைத்திருந்தாலும், பராபரன் அவன் ஆத்துமத்
தைப் பறிக்கும்போது, அவனுடைய நம்பிக்கை

௯ யென்ன?—நிர்ப்பந்தம் அவன்மேல் வரும்போது,
பராபரன் அவன் கூப்பிடுதலைக் கேட்பாரோ?—
௰ அவன் சர்வத்துக்கும் வல்லவர்மேலே மனமகிழ்
ச்சியாயிருப்பானோ? அவன் சகல காலத்திலும்
பராபரனைத் தொழுதுகொண்டிருப்பானோ?
௰௧ பராபரனுடைய கரத்தைக்குறித்து உங்களை
உபதேசிப்பேன்; சர்வத்துக்கும் வல்லவரிடத்
௰௨ தில் இருக்கிறதை நான் மறைப்பதில்லை.-இதோ
நீங்களெல்லாரும் அதைக் கண்டிருந்தும் நீங்கள்
இத்தனை வீண்நினைவாயிருக்கிறதென்ன? —
௰௩ பொல்லாத மனுஷனுக்குப் பராபரனிடத்திலி
ருந்து வருகிற பங்கும், கொடூரக்காரர் சர்வத்துக்
கும் வல்லவரால் அடைகிற சுதந்தரமும் என்ன
௰௪ வெனில்,—அவனுடைய குமாரர் பெருகினால்
பட்டையத்துக்கு இரையாகத்தானே, அவன்
கர்ப்பத்தின் பிறப்புகள் அப்பத்தினாலே திருப்
௰௫ தியாவதில்லை. — அவனுக்கு மீதியானவர்கள்
செத்துப் புதைக்கப்படுவார்கள்; அவனுடைய
௰௬ விதவைகள் புலம்புவதுமில்லை.—அவன் மண்
ணத்தனை வெள்ளியைக் குவித்துக்கொண்டா
லும், களிமண்ணத்தனை வஸ்திரங்களைச் சவதரித்
௰௭ தாலும்,—அவன் அதைச் சவதரித்தான், ஆனால்
நீதிமான் அவைகளை உடுத்திக்கொண்டு, குற்ற
மில்லாதவன் வெள்ளியைப் பங்கிடுவான். —
௰௮ அவனுடைய வீடு செல்லுக்கட்டினதுபோலும்,
காவல்காக்கிறவன் போட்ட குடிசையைப்போ
௰௯ லுமாகும்.—அவன் ஐசுவரியவானாய்த் தூங்கிக்
கிடந்து, ஒன்றும் பறிகொடாதேபோனாலும்,
அவன் தன் கண்களைத் திறக்கும்போது ஒன்று
௨௰ மில்லாதிருக்கும். — திகில்கள் வெள்ளத்தைப்
பால அவனைப் பிடிக்கும், இராக்காலத்திலே
பெருங்காற்று அவனை வாரிக்கொண்டுபோ
௨௧ கும்.—கொண்டல்காற்று அவனைத் தூக்கிக்கொள்
ளுகையால் போய்விடுவான்;அது அவனை அவன்
லத்திலிருந்து தள்ளிக்கொண்டுபோகும். —
௨௨ அவர் இவைகளை அவன்மேல் வரப்பண்ணி,
அவனைத் தப்பவிடாதிருப்பார்; அவர் கைக்குத்
௨௩ தப்ப ஓடிப்போவான். — அவன்மேல் கைகொ
ட்டி, அவனை அவன் தலத்தை விட்டு உசுப்பு
வார்கள்.

## ௨௮. அதிகாரம்.

௧. காட்சிப்பொருள்களை அறிகிற அறிவு உண்டென்றும், ௰௨. ஞானம் பராபரனிலிருந்து உண்டாகிற மேலான வரமாயிருக்கின்றதென்றும் சொன்னது.

௧ வெள்ளிக்குப் பிறப்புண்டே, பொன்னுக்குப்
௨ புடமிடும் தலமுமுண்டு.—இரும்பு மண்ணிலி
ருந்து எடுக்கப்படும்; வெண்கலம் கல்லுகளால்
௩ உருக்கி எடுக்கப்படும். — காரிருளிலும் மரண
நிழலிலும் இருக்கிற கல்லுகளைக் கடையாந்தர
இடங்களிலெல்லாம் ஆராய்ந்து தேட, இரு
௪ ளுக்கு அங்கே முடிவுண்டாக்கப்படும்.—பாட்
டாளியண்டையில் அவன் தாண்டமாட்டாத
நிலையாத ஆறு எழும்பினாலும், அது வற்றப்ப
ண்ண மனுஷரால் எடுத்துவிடப்பட்டுப்போ
௫ கும்.—பூமியிலோவென்றால் ஆகாரம் விளையும்;
அதின் கீழ் இடங்களிலிருக்கிறவைகள், அக்கி
னியாலாகுவதுபோல மாறப்பட்டுப்போகின்
றன.—அதின் கல்லுகள் நீலக்கல்லுகளின் இடமா ௬
யிருக்கும்; அதற்குப் பொன்பொடிகளும் உண்
டாயிருக்கும். — ஒரு பட்சியும் அறியாததும், ௭
வல்லூறுவின் கண் காணாததும், — துஷ்டமிரு ௮
கக்குட்டிகள் மிதிக்காததும், சிங்கம் கடவாதது
மான வழி அதற்கு இருக்கிறது.—தங்கள் கைக ௯
ளைக் கல்பாறையின்மேல் நீட்டி, மலைகளை
வேரோடே புரட்டுகிறார்கள். — கல்மலைகளைப் ௰
பிளந்து, நீர்க்கால்களைப் புறப்படப்பண்ணுகி
றார்கள்; அவர்கள் கண் விலையுயர்ந்ததெல்லாவற்
றையும் பார்க்கிறது.—ஒரு துளியும் புறப்படா ௰௧
தபடிக்கு ஆறுகளை அடைக்கிறார்கள்; ஒளிப்பி
டத்திலிருக்கிறதை வெளிச்சத்திலே கொண்டு
வருகிறார்கள்.
ஆனால் ஞானம் கண்டெடுக்கப்படுவதெங் ௰௨
கே? உணர்வுகிடைக்கிற ஸ்தலம் எது?—அதின் ௰௩
விலையை மனுஷன் அறியான்; அது சீவனுள்
ளோருடைய பூமியிலே அகப்படுகிறதில்லை.—
ஆழமானது, அது என்னிலில்லையென்கிறது, ௰௪
சமுத்திரமானது, அது என்னோடில்லையென்கி
றது.—அதற்கு ஈடாக அபரஞ்சியைக் கொடுக் ௰௫
கவும், அதற்குக் கிரயமாக வெள்ளியை நிறுக்க
வும்கூடாது. — ஒப்பீரின் தங்கமும், விலையே ௰௬
றப்பெற்ற கோமேதகமும், பச்சையும் அதற்கு
ஈடல்ல.—பொன்னும் பளிங்கும் அதற்கு ஒப் ௰௭
பல்ல; சுத்தப் பொன்னாபரணங்களுக்கு அதை
மாற்றக்கூடாது.—பவளத்தையும் முத்துகளையும் ௰௮
நினைக்கப்படாது; ஏனெனில் முத்துகளைப்பார்க்
கிலும் ஞானத்தின் விலை அதிகமானது.—எத்தி ௰௯
யோப்பியாவின் புஷ்பராகம் அதற்கு ஒப்பல்ல;
அபரஞ்சிப் பொன்னும் அதற்குச் சரிவிலை
அல்ல.
இப்படியிருக்கையில் ஞானம் எங்கே இருந் ௨௰
துவரும்; உணர்வு தங்கும் இடம் எது.—ஏனெ ௨௧
னில் அது சீவனுள்ளோர் எல்லாருடைய கண்க
ளுக்கும் ஒளித்ததும்,ஆகாசத்துப் பறவைகளுக்கு
மறைந்ததுமாயிருக்கின்றது. — அழிவும் மரண ௨௨
மும், நாங்கள் எங்கள் காதுகளினாலேமாத்திரம்
அதின் கீர்த்தியைக் கேட்டோமென்கின்றன.
அதின் வழியைப் பராபரன் அறிவார்; அதின் ௨௩
ஸ்தலம் அவருக்கே தெரியும்.—ஏனெனில் அவர் ௨௪
பூமியின் கடையாந்தரங்களைப் பார்த்து, எல்லா
வானங்களின்கீழும் இருக்கிறதைக் கண்டு, —
காற்றுக்குத்தக்க நிறையை உண்டாக்கி, தண் ௨௫
ணீர்களுக்கு அளவுப்பிரமாணமிட்டு,—மழைக் ௨௬
குத் திட்டத்தையும், இடிமுழக்கங்களோடே
கூடிய மின்னலுக்கு வழியையும், உண்டாக்கு
கையில், — அப்போது அவர் அதைப்பார்த்து ௨௭
விவரித்து, அதை ஆயத்தப்படுத்தி, ஆய்ந்தோய்ந்
துபார்த்து,—மனுஷனுடனே, இதோ ஆண்ட ௨௮
வருக்குப் பயப்படுகிறதே ஞானம், பொல்லாப்
பைவிட்டு விலகுகிறதே உணர்வென்றாரென்று
சொன்னான்.

## ௨௯. அதிகாரம்.

௧. யோபு தனக்கு முன்னிருந்த சுக செல்வங்களையும் கனத்தையும் நினைத்துப் பிரலாபித்தது.

௧ பின்னையும் யோபு தன் வாக்கியத்தை உரைத்
௨ துச் சொன்னதாவது: — பராபரனுடைய தீபம்
என் சிரசின்மேல் பிரகாசிக்கிறதினால், நான்
அவர் வெளிச்சத்தினால் இருளைத் தாண்டிவந்த
௩ பூர்வமாதங்களிலும்,—அவர் என்னைக் காப்பாற்
றிவந்த நாள்களிலும், எனக்கிருந்த சீரை எனக்
௪ குக் கொடுப்பவன் யார்?—பராபரனுடைய இர
கசியச்செயல் என் கூடாரத்தின்மேல் உண்
௫ டாகி,—சர்வத்துக்கும் வல்லவர் இன்னம் என்
னோடிருந்ததும், என் பணிவிடைக்காரர் என்
௬ னைச் சூழ்ந்திருந்ததும்,—என் அடிகளை நான்
நெய்யினால் கழுவி, எனக்கடுத்த கல்மலைகளிலி
ருந்து எண்ணெய் நதிகள் ஓடிவந்ததும்,
௭ நான் பட்டணவீதியால் வாசலுக்குப் புறப்
பட்டுப் போய், வீதியில் என் ஆசனத்தைப் போ
டுவித்ததுமான என் செல்வத்தின் நாள்களில்
எனக்கிருந்த சீரை எனக்குக் கொடுப்பவன்
௮ யார்? — அப்போது வாலிபர் என்னைக்கண்டு
ஒளித்துக்கொண்டார்கள், விருத்தாப்பியர் எழு
௯ ந்திருந்து நின்றார்கள்.—பிரபுக்கள் பேசாதிருந்
து,கையினால் தங்கள் வாயைப் பொத்திக்கொண்
௰ டார்கள்.—பெரியமனுஷரின் சத்தம் அடங்கி,
அவர்கள் நாக்கு அவர்கள்மேல்வாயில் ஒட்டிக்
௧௧ கொண்டது.—என்னைக் கேட்டகாது என்னைப்
பாக்கியவானென்றது; என்னைக் கண்ட கண்
௧௨ எனக்குச் சாட்சியிட்டது.—ஏனெனில் கூப்பி
டுகிற சிறுமையானவனையும், திக்கும் ஒத்தாசை
௧௩ யும் இல்லாதவனையும் விடுவித்தேன்.-கெட்டுப்
போகப்போகிறவனுடைய ஆசீர்வாதம் என்
மேல் வந்தது; விதவையின் இருதயத்தைக் கெம்
௧௪ பீரிக்கப்பண்ணினேன். — நீதியைத் தரித்துக்
கொண்டேன்; அது என்னுடைய உடுப்பா
யிற்று; என்னுடைய நியாயம் எனக்குச் சால்
௧௫ வையும் பாகையுமாயிற்று.—நான் குருடனுக்
குக் கண்களும், சப்பாணிக்குக் கால்களுமாயி
௧௬ ருந்தேன்.—நான் எளியவர்களுக்குத் தகப்பனா
யிருந்து,நான் அறியாத வழக்கை ஆராய்ந்தேன்.-
௧௭ நான் அநியாயக்காரருடைய கடைவாய்ப்பல்லு
களை உடைத்து, அவர்கள் பறித்ததை அவர்கள்
௧௮ பல்லுகளிலிருந்து பிடுங்கினேன்.—என் கூட்
டோடே நான் சீவிப்பேன், என் நாள்களை
மணல் அத்தனையாய்ப் பெருகப்பண்ணுவே
௧௯ னென்றேன். — என்னுடைய வேர் தண்ணீர்க
ளின் ஓரமாய்ப் படர்ந்தது; பனி என் பயிரின்
௨௰ மேலே இராத்தங்கியிருந்தது. — என் மகிமை
என்னில் புதிதாகி, என் கையிலுள்ள என் வில்
நவமாய்ப் பலத்துக்கொண்டது.
௨௧ எனக்குச்செவிகொடுத்துக் காத்திருந்தார்கள்;
என் ஆலோசனையைக் கேட்டு, மவுனமாயிருந்
௨௨ தார்கள். – என் பேச்சுக்கு இரட்டிக்காதிருந்தார்
கள்; என் வசனம் அவர்கள்மேல் துளிதுளியாய்
௨௩ விழுந்தது.—ஏனென்றால் மழைக்குக் காத்திருக்
கிறதுபோல, எனக்குக் காத்திருந்து, பின்மா
ரிக்கு ஆசையுள்ளவர்கள்போலத் தங்கள் வாயை
ஆவென்று திறந்தார்கள். — நான் அவர்களைப் ௨௪
பார்த்து நகைக்கும்போது, அவர்கள் நம்பாம
லும், என் முகத்தின் பிரகாசத்தை அற்றுப்போ
கப்பண்ணாமலும் இருந்தார்கள். — அவர்கள் ௨௫
வழிக்குப்போக எனக்குச் சித்தமாகும்போது,
நான் தலைவனாய் உளுக்கார்ந்து, இராணுவத்துக்
குள் இராசாவைப்போலும் துக்கித்தவர்களைத்
தேற்றரவுபண்ணுகிறவனைப்போலுமிருந்தேன்.

## ௩௰. அதிகாரம்.

௧. யோபுடைய கனம் மதிப்பற்றுப்போனது. ௰௫. அவனுடைய வாழ்வு தாழ்வானது.

இப்போதோவெனில் என்னிலும் இளவயதா ௧
னவர்கள் என்னை நகைக்கிறார்கள்; இப்படிப்
பட்டவர்களுடைய பிதாக்களை நான் என்
மந்தையிலிருக்கிற நாய்களண்டையில் வைக்க
அசட்டைபண்ணினேன். — விருத்தாப்பியத்தி ௨
னாலே கெட்டுப்போன அவர்கள் கைகளின் பெ
லனும் எனக்கு என்ன உதவியாயிருக்கும்.—
குறைச்சலினாலும் பசியினாலும் அவர்கள் தனித் ௩
துவிடப்பட்டு, வெகுநாளாய்ப் பாழும் வெறு
மையுமான அந்தரவெளிக்கு ஓடிப்போய்,—செ ௪
டிகளுக்குள்ளிருக்கிற தழைகளைப் பிடுங்குவார்
கள்; காட்டுப்பூண்டுகளின் கிழங்குகள் அவர்
களுக்கு ஆகாரமாயிருக்கும்.— அவர்கள் மனுஷ ௫
ரின் நடுவிலிருந்து துரத்தப்படுவார்கள்; கள்ளன்
பிறகே கூப்பிடுமாப்போல, அவர்கள் பிறகே
கூப்பிடப்படும்.-பள்ளத்தாக்குகளின் வெடிப் ௬
புகளிலும், பூமியின் கெபிகளிலும், கல்மலைக
ளிலும் குடியிருக்கிறார்கள்.—செடிகளுக்குள்ளி ௭
ருந்து கதறி, காஞ்சொறிகளின்கீழ்க் கூடுவார்
கள்.— அவர்கள் மூடரின் பிள்ளைகளும், அப ௮
கீர்த்திக்காரரும், தேசத்திலிருந்து துரத்தப்படுகிற
வர்களுமாயிருக்கிறார்கள்.—ஆனால் இப்போது ௯
நான் அவர்கள் பாட்டும் பழமொழியுமானேன்.-
என்னை அருவருத்து, எனக்குத் தூரமாகி, என் ௰
முகத்துக்குமுன்பாகத் துப்பக் கூசாதிருக்கிறார்
கள்.-ஏனெனில் அவர் என் கயிற்றை அவிழ்த்து, ௧௧
என்னைச் சிறுமைப்படுத்தினபடியினாலே, இவர்
கள் கடிவாளத்தை என் முகத்துக்குமுன்பாக
உதறிவிட்டார்கள்.—வலதுபாரிசத்தில் வாலிபர் ௧௨
எழும்பி, என் கால்களை வாரிப்போட்டு, தங்
கள் கேடான வழிகளை எனக்கு நேராக ஆயத்
தப்படுத்துகிறார்கள்.—என் பாதையைத் தகர்த்து, ௧௩
எனக்கு ஆபத்துநடத்துகிறார்கள்; அதற்கு அவர்
களுக்கு ஒத்தாசைபண்ணுகிற பெலன் தேவை
யில்லை.—பெரிதான திறப்புண்டாக்கிக் கிட்டி, ௧௪
தாங்கள் தகர்த்தவழியால் உட்புகுந்து வருகிறார்
கள்.-பயங்கரங்கள் என்மேல் திரும்புகின்றன; ௧௫
அவைகள் காற்றைப்போல, என் ஆத்துமத்தைப்
பின்தொடர்கின்றன; என் சுகவாழ்வு ஒரு மே
கத்தைப்போலக் கடந்துபோயிற்று.
ஆகையால் இப்போது என் ஆத்துமம் என் ௧௬
னில் சிந்துண்டுபோயிற்று;உபத்திரவத்தின் நாள்

௰௭ கள் என்னைப் பிடித்தன. — இராக்காலத்திலே
என் எலும்புகள் என்னில் துளைக்கப்பட்டு, என்
நரம்புகளுக்கு இளைப்பாறுதல் இல்லாதிருக்கிற
௰௮ து.—நோயின் உக்கிரத்தினால் என் உடுப்பு வே
றுபட்டுப்போயிற்று; அது என் அங்கியின் கழுத்
துப்பட்டையைப்போல, என்னைச் சுற்றிக்கொ
௰௯ ண்டது.—சேற்றிலே தள்ளப்பட்டேன்; தூளுக்
௨௰ கும் சாம்பலுக்கும் ஒத்துப்போனேன். — உம்
மைநோக்கிக் கூப்பிடுகிறேன்; ஆனால் தேவரீர்
எனக்கு மறுவுத்தரவுகொடீர்; கெஞ்சி நிற்கி
றேன், ஆனால் என்மேல் பராமுகமாயிருக்கி
௨௧ றீர்.—என்மேலே கொடூரமுள்ளவராக மாறினீர்;
உம்முடைய கரத்தின் வல்லமையால் எனக்கு
௨௨ விரோதிக்கிறீர்.—தேவரீர் என்னைத் தூக்கி, என்
னைக் காற்றிலே பறக்கவிட்டு, என் இருப்பை
௨௩ உருகிப்போகப்பண்ணுகிறீர். — ஏனென்றால்
சகல சீவாத்துமாக்களுக்கும் குறிக்கப்பட்ட
தாவரமாகிய மரணத்துக்கு என்னை ஒப்புக்கொ
௨௪ டுப்பீரென்று அறிவேன்.—ஆனால் நான் ஒருவ
னைத் தமது ஆபத்திலே தவிக்கப்பண்ணினதும்,-
௨௫ துன்னாளை அநுபவிக்கிறவனுக்காக நான் அழா
திருந்ததும், எளியவனுக்காக என் ஆத்துமம்
வியாகுலப்படாதேபோனதும் உண்டானால், அ
வர் என் மனுவுக்கு இடம்கொடாமல், எனக்கு
விரோதமாய்த் தம்முடைய கையை நீட்டுவா
௨௬ ராக.—ஆனால் நன்மைக்குக் காத்திருந்த எனக்
குத் தீமை வந்தது; வெளிச்சத்தை வரப்பார்த்
துக்கொண்ட எனக்கு இருள் வந்தது.

௨௭ என் குடல்கள் பொங்கி, அமராதிருக்கின்றன;
௨௮ உபத்திரவநாள்கள் என்மேல் வந்தன. — வெய்
யில்படாதிருந்தும், நான் கரிகறுத்துத் திரிகி
றேன்; நான் சபையிலிருந்து எழுந்திருக்கும்
௨௯ போது அலறுகிறேன். — நான் மலைப்பாம்புக
ளுக்குச் சகோதரனும், கோட்டான் பட்சிகளுக்
௩௰ குத் தோழனும் ஆனேன். — என்னைச் சூழ்ந்திருக்
கிற என் தோல் கறுத்துப்போயிற்று;என் எலும்பு
௩௧ கள் உஷ்ணத்தினால் காய்கின்றன. — என் சுர
மண்டலம் புலம்பலாகவும், என் கின்னரம்
அழுகிறவர்களின் சத்தமாகவும் மாறின.

## ௩௧. அதிகாரம்.

௧. யோபு பலபல கடமைகளிலும் தான் உத்தமனாய் நடந்ததை உறுதியாய்ச் சொன்னது.

௧ என் கண்களோடே உடம்படிக்கைபண்ணின
நான் ஒரு கன்னியாஸ்திரியின்மேல் நினைப்பாயி
௨ ருப்பதேது?—ஏனெனில் அப்போது உன்னதங்
களிலிருந்து பராபரன் இறங்கப்பண்ணும் பங்
கும், உன்னதத்திலிருந்து சர்வத்துக்கும் வல்ல
வர் கொடுக்கும் சுதந்தரமும், என்னவாயிருக்
௩ கும்.—மாறுபாடானவனுக்கு ஆபத்தும், அக்கிர
மச் செய்கைக்காரருக்குத் தள்ளப்படுதலுமல்ல
௪ வோ உண்டாயிருக்கும்.-அவர் என் வழிகளைப்
பார்த்து, என் நடைகளையெல்லாம் எண்ணுகிறா
௫ ரல்லவோ?—நான் மாயையிலே நடந்தேனோ,
என் கால் கபடுநடத்தத் தீவிரித்ததோவென்று,—
சுமுத்திரையான தராசிலே பராபரன் என்னை ௬
நிறுப்பாராக, அப்போது என் உத்தமத்தை அறி
வார்.—என் நடைகள் வழியைவிட்டு விலகின ௭
தும், என் இருதயம் என் கண்களைப் பின்தொ
டர்ந்ததும், ஏதாகிலும் என் கைகளில் ஒட்டிக்
கொண்டதும் உண்டானால்,—அப்போது நான் ௮
விதைத்ததை வேறொருவன் புசித்து, என் பயிர்
கள் வேரற்றுப்போகக்கடவன.—என் இருதயம் ௯
யாதொரு ஸ்திரியின்மேல் மயங்கி, எனக்கடுத்
தவனுடைய வாசலை நான் எட்டிப்பார்த்ததுண்
டானால்,—அப்போது என் பெண்சாதி வேறொ ௰
ருவனுக்கு மாவரைப்பாளாக; வேற்று மனிதர்
அவள்மேலே சாய்வார்களாக. — ஏனென்றால் ௰௧
அது தோஷம்,அது நியாயாதிபதிகளால் விசாரிக்
கப்படும் அக்கிரமம்.—ஏனெனில் அது பாதாளப ௰௨
ரியந்தம் பட்சிக்கும் அக்கினியாய் என் வரத்
தையெல்லாம் வேரற்றுப்போகப்பண்ணுகிறதா
யிருக்கும்.

என் வேலைக்காரனாகிலும், என் வேலைக்காரி ௰௩
யென்கிலும், என்னோடு வழக்காடும்போது, அ
வர்கள் நியாயத்தை நான் அசட்டைபண்ணியி
ருந்தால்,— பராபரன் எழும்பும்போது, நான் ௰௪
செய்வதென்ன? அவர் விசாரிக்கும்போது, நான்
அவருக்கு என்ன மறுவுத்தரவுசொல்லுவேன்.—
தாயின் கர்ப்பத்தில் என்னை உண்டுபண்ணின ௰௫
வர் அவனையும் உண்டுபண்ணி, ஒரேவிதமான
கர்ப்பத்தில் எங்களைச் செப்பனிட்டதில்லை
யோ?

எளியவர்கள் வாஞ்சித்ததை நான் கொடாதி ௰௬
ருந்து, விதவையின் கண்களைப் பூத்துப்போகப்
பண்ணி,—தாய்தகப்பனில்லாத பிள்ளை என் து ௰௭
ணுக்கையிலே சாப்பிடாமல், நான் ஒருவனாய்ச்
சாப்பிட்டேனோ, — என் சிறுவயதுதுவக்கி அ ௰௮
வன் தகப்பனைப்போலான என்னோடே வளர்ந்
தானே; நான் என் தாயின் கர்ப்பத்திலே பிறந்
ததுமுதல் அப்படிப்பட்டவர்களைக் கைலாகு
கொடுத்து நடத்தினேன்.-ஒருவன் உடுப்பில்லா ௰௯
ததினால் மடிந்துபோகிறதையும், ஏழைக்கு மூட
இல்லாதிருக்கிறதையும், நான் பார்த்தபோது,—
அவன் என் ஆடுகளின் மயிரினாலே அடைந்த ௨௰
அனலினால், அவன் இடை என்னை ஆசீர்வதிக்
காதிருந்ததும்,—ஒலிமுகவாசலில் எனக்கு உப ௨௧
பலம் உண்டென்று நான் கண்டு, திக்கற்றவன்
மேல் என் கையை நீட்டினதும் உண்டானால்,—
என் கைப்பட்டை தோளிலிருந்து சரிந்து, என் ௨௨
புயத்து எலும்பு முறிந்துபோவதாக.—ஏனென் ௨௩
றால் பராபரன் ஆக்கினையிடுவாரென்றும், அவரு
டைய மகத்துவத்தை உத்தரிக்கமாட்டேனென்
றும், எனக்குப் பயங்கரமாயிருந்தது.

நான் பொன்னின்மேல் என் நம்பிக்கையை ௨௪
வைத்து, அபரஞ்சியைப்பார்த்து, நீ என் ஆதர
வென்று நான் சொன்னதும்,—என் ஆஸ்தி பெரி ௨௫
யதென்றும், என் கைக்கு மிகுதியும் கிடைத்த
தென்றும், நான் மகிழ்ந்ததும்,—சூரியன் பிரகா ௨௬
சிக்கிறபோதும்,அல்லது சந்திரன் மகிமையாய்ப்

புறப்படுகிறபோதும், நான் அதை நோக்கி,—
௨௭ என்னுடைய வாய் என் கையை முத்திசெய்ய,
என் இருதயம் இரகசியமாய் மயக்கப்பட்டதும்
௨௮ உண்டானால்,— அதுவும் நியாயாதிபதிகளால்
விசாரிக்கப்படத்தக்க அக்கிரமமாயிருக்கும்; ஏ
னெனில் அப்போது உயரவிருக்கிற பராபரனை
௨௯ மறுதலிப்பேனே.—என் பகைஞனுடைய ஆபத்
துக்கு நான் மகிழ்ந்து, பொல்லாப்பு அவனைப் பி
டித்ததென்று களிகூர்ந்துகொண்டிருந்தேனோ?—
௩௰ அவன் சீவனுக்குச் சாபத்தைக் கேட்கும் பாவத்
தைச்செய்ய, என் தொண்டைக்கு நான் இடம்
௩௧ கொடுத்ததில்லை.—அவன் மாம்சமானவர்களில்
திருப்தியாகாதவனைக் காண்பிப்பவன் யாரென்
று என் கூடாரத்தின் மனுஷர் சொல்லார்களோ?-
௩௨ பரதேசி வீதியிலே இராத்தங்கினதில்லை; வழிப்
போக்கனுக்கு என் வாசல்களைத் திறந்தேன்.—
௩௩ நான் ஆதாமைப்போல என் மீறுதல்களை மூடி,
என் அக்கிரமத்தை என் மடியிலே ஒளித்துவைத்
௩௪ தேனோ? — திரள்கூட்டத்துக்கு நான் பயந்ததி
னாலும், அல்லது இனத்தார் சனத்தார் பண்ணும்
இகழ்ச்சி என்னைத் திடுக்கிடப்பண்ணினதினா
லும்,நான் பேசாதிருந்து, வாசற்படியைவிட்டுப்
புறப்படாதிருந்தேனோ?

௩௫ ஆ, என் வழக்கைக் கேட்கிறவன் எனக்குக்
கொடுக்கப்பட்டால் தாவிளை; இதோ சர்வத்துக்
கும் வல்லவர் எனக்கு உத்தரவு அருளிச்செய்ய
வும், என் வழக்காளி தன் வழக்கை எழுதிக்கொ
௩௬ டுக்கவும் எனக்கு ஆசையுண்டு. — அதை நான்
என் தோளின்மேல் வைத்துக்கொண்டு, எனக்
௩௭ குக் கிரீடமாகத் தரித்துக்கொள்வேனே.—அவ
னுக்கு நான் என் நடைகளை இலக்கம் இலக்க
மாய்க் காண்பித்து, அவனை வழிகாட்டியாகச்
சேர்த்துக்கொள்ளுவேன்.

௩௮ எனக்கு விரோதமாக என் காணி பூமி கூப்பி
டுகிறதும், அதின் படைச்சால்கள் கூட அழுகி
௩௯ றதும்,—கூலிகொடாமல் நான் அதின் பலனைப்
புசித்து, பயிரிட்டவர்களின் ஆத்துமத்தை உபத்
௪௰ திரவப்படுத்தினதும் உண்டானால், — அதில்
கோதுமைக்குப் பதிலாக முள்ளும், வால்கோது
மைக்குப்பதிலாகக் களையும் முளைக்கக்கடவன
என்றான்; யோபின் வார்த்தைகள் முடிந்தன.

## ௩௨. அதிகாரம்.

*௧. எலிகு யோபின்மேலும், அவனுடைய மூன்று சிநேகிதர்மேலும் கோபித்தது. ௬. ஞானம் முதிர்வயதினால்மாத்திரம் வராதபடியால், அவன் தன் வாலிபத்தின் தணிவை மன்னிக்க, நியாயம் சொன்னது. ௰௧. அந்த சிநேகிதர் யோபைத் திருப்திபண்ணாததற்காக, எலிகு அவர்களைக் கண்டித்தது. ௰௬. அவன் பேச வைராக்கியம் கொண்டது.*

௧ அப்போது அந்த மூன்று மனுஷர் யோபு தன்
பார்வைக்கு நீதிமானாயிருந்தபடியினாலே, அவ
னுக்குப் பிரதியுத்தாரம்சொல்லி ஓய்ந்தார்கள்.—
௨ ஆனால் இராமுடைய வம்சத்தானாகிய பரூகே
யேலின் குமாரன் எலீகு என்ற பூசியனுக்குக்
கோபம்மூண்டது; யோபு பராபரனைப்பார்க்கி
லும் தன்னைத்தான் நீதிமானாக்கினநிமித்தம் அவ
௩ னுக்கு அவன்மேலும் கோபம்மூண்டது.—கொ
டுக்கத்தக்க மறுமொழி யோபின் மூன்று சிநேகி
தருக்கு அகப்படாதிருந்தும், அவர்கள் அவனை
ஆகாதவனென்று தீர்த்ததின்நிமித்தம் அவர்கள்
மேலும் அவனுக்குக் கோபம்மூண்டது.—அவர் ௪
கள் தன்னைப்பார்க்கிலும் வயது சென்றவர்களா
னபடியினாலே, எலீகு யோபின் வார்த்தைகள்
முடிந்து தீருமட்டும் காத்திருந்தான்.—ஆனால் ௫
அந்த மூன்று மனுஷரின் வாயிலே மறு உத்தரவு
பிறக்கவில்லையென்று எலீகு கண்டபோது அவ
னுக்குக் கோபம்மூண்டது.

ஆனதுகொண்டு பரூகேயேலின் குமாரன் ௬
எலீகு என்ற பூசியன் பிரதியுத்தாரம் கொடுத்துச்
சொன்னதாவது: நான் கொஞ்சவயதானவன்;
நீங்களோவென்றால் விருத்தாப்பியர்; ஆகையால்
நான் அஞ்சி, என்னுடைய நினைப்பை உங்களுக்
குமுன்பாக வெளிப்படுத்தப் பயந்திருந்தேன்.—
நாள்சென்றவர்கள் பேசி, வயது மிகுதியானவர் ௭
கள் ஞானத்தை அறிவிக்கட்டுமென்றேன்.—ஆ ௮
னால் மனுஷரில் ஆவியிருந்தாலும், சர்வத்துக்
கும் வல்லவருடைய சுவாசமே அவர்களை உணர்
வுள்ளவர்களாக்கும்.—மற்றப்படி பெரியவர்கள் ௯
ஞானமுள்ளவர்களுமல்ல, முதிர்வயதானவர்கள்
நியாயத்தை உணர்ந்தவர்களுமல்ல.—ஆகையால் ௰
எனக்குக் கேள்விகொடுங்கள்; நானும் என்னு
டைய நினைப்பை வெளிப்படுத்துவேன் என்
கிறேன்.

இதோ உங்கள் வசனங்கள் முடியும்மட்டும் ௰௧
காத்திருந்தேன்; நீங்கள் சொல்லத்தக்கதை ஆ
ராய்ந்து தேடும்மட்டும், உங்கள் உணர்வின் நியா
யங்களுக்குச் செவிகொடுத்தேன்.—இப்படி உங் ௰௨
கள் சொல்லைக் கவனித்தேன்; ஆனால் இதோ உங்
களில் யோபுக்கு நியாயத்தைத் தெரியக்காட்டி,
அவருடைய வசனங்களுக்கு ஏற்ற பிரதியுத்தா
ரத்தைச் சொல்லுகிறவனில்லை.—மனுஷனல்ல, ௰௩
பராபரன் அவனை விழத்தள்ளினார் என்கிறதினால்
ஞானத்தைப் பிடித்தோம் என்று சொல்லாதிருங்
கள்.—அவர் என்னைப்பார்த்துப் பேசினதில்லை; ௰௪
நீங்களோ சொன்ன வார்த்தைகளினால் நான்
அவருக்குப் பிரதியுத்தாரம் சொல்வதில்லை.

அவர்கள் கலங்கி, அப்புறம் பிரதியுத்தாரம் ௰௫
சொல்லாதிருக்கிறார்கள்; அவர்களுக்குப் பேச்சு
கள் அற்றுப்போயின.—அவர்கள் பேசார்களோ ௰௬
வென்று காத்திருந்தேன்; ஆனால் அவர்கள் அப்பு
றம் மறுமொழி கொடாமலிருக்கிறபடியினாலே,-
நானும் பிரதியுத்தாரமாக எனக்குத் தோன்றிய ௰௭
மாத்திரத்தைச் சொல்லுவேன்; நானும் என்
நினைப்பை வெளிப்படுத்துவேன்.—ஏனெனில் ௰௮
வார்த்தைகள் எனக்குள் நிறைந்திருக்கின்றன;
என் உள்ளத்தின் ஆவி என்னை நெருக்குகிறது.—
இதோ என்னுடைய உள்ளம் திறந்திராததும், ௰௯
புதுத்துருத்திகளை முதலாய்ப் பீறப்பண்ணுகிறது
மான புது இரசத்தைப்போலிருக்கிறது.—எனக்கு ௨௰
நெருச்சுவாசம் பறியும்படிக்குப் பேசுவேன்;
என் உதடுகளைத் திறந்து பிரதியுத்தாரம் சொல்லு
வேன்.—நான் ஒருவனுடைய முகத்தைப் பாரா ௨௧

மலும், ஒரு மனுஷனுக்கு இச்சகம் பேசாமலும்
௨௨ இருப்பேனாக.—ஏனெனில் இச்சகம்பேச அறி
யேன், மற்றப்படி என்னை உண்டாக்கினவர்
சீக்கிரத்துக்குள்ளே என்னை எடுத்துக்கொள்ளு
வார்.

## ௩௩. அதிகாரம்.

௧. எலீகு உண்மையோடும், சாந்தத்தோடும் யோபினிடத்தில் நியாயம் பேசப் பராபரனுக்குப் பதிலாகத்தானே உடன்பட்டது. ௮. அவன் மகிமையுள்ள பராபரன் தம்முடைய செய்கைகளை மனுஷனுக்குச் சொல்லாததைக்குறித்து நியாயம்சொன்னது. ௰௪. பராபரன் தரிசனங்களினாலும், ௰௬. உபத்திரவங்களினாலும், ௨௩. உபதேசத்தினாலும், மனிதனை மனந்திருப்புதலுக்கு அழைத்ததைச் சொன்னது, ௩௧. யோபைக் கவனமாயிருக்கத் தூண்டிவிட்டது.

௧ இப்போதும் யோபே என் நியாயங்களைக் கே
ளும்; என் வார்த்தைகளுக்கெல்லாம் செவிகொ
௨ டும்.—இதோ என் வாயை இப்போது திறந்தேன்;
என் வாயிலிருக்கிற என்னுடைய நாவானது
௩ பேசும்.—என் வார்த்தைகள் என் இருதயத்தின்
உண்மைக்கு ஒத்திருக்கும்;நான் அறிந்ததை என்
௪ உதடுகள் சுத்தமாய் வசனிக்கும். — பராபரனு
டைய ஆவியானவர் என்னை உண்டாக்கினார்;
சர்வத்துக்கும் வல்லவருடைய சுவாசம் எனக்கு
௫ உயிர்கொடுத்தது —உமக்குக் கூடுமானால் எனக்
கு மறுமொழிகொடும்; எனக்கெதிராக நீர் ஆயத்
௬ தப்பட்டு நின்றிரும்.—இதோ நான் உம்மைப்
போலப் பராபரனால் உண்டானவன்; நானும்
௭ களிமண்ணினால் எடுக்கப்பட்டவன்.—இதோ
நீர் பயப்பட்டுக் கலங்கத்தேவையில்லை; என்
னுடைய கை உம்முடையமேல் பாரமாயிருப்
பதில்லை.
௮ நான் காதாரக்கேட்க நீர் சொன்னதும், எனக்
குக் கேள்வியான உம்முடைய வார்த்தைகளின்
௯ சத்தமும் என்னவென்றால்,—நான் மீறுதல் இல்
லாத சுத்தன்; நான் துப்புரவானவன்; என்னில்
௰ அக்கிரமமில்லை. — இதோ என்னில் அவர், யா
தொரு காரியத்தைக் குற்றமாய்ப் பிடித்து, என்
னைத் தமக்குச் சத்துருவாக எண்ணிக்கொள்ளு
௰௧ கிறார்.—அவர் என் கால்களைத் தொழுவிலே மாட்
டி, என் நடைகளை எல்லாம் காவல்படுத்துகிறா
௰௨ ரென்றீர்.—இதோ இதிலே நீர் நீதியுள்ளவர் அல்
லவென்று உமக்குப் பிரதியுத்தாரமாகச் சொல்
லுகிறேன்; ஏனெனில் மனுஷனைப்பார்க்கிலும்,
பராபரன் பெரியவராய் இருக்கிறார்.
௰௩ அவர் தம்முடைய நடத்தைகள் எல்லாவற்றை
யுங்குறித்து உற்ற வயணம் சொல்லவில்லையென்
௰௪ று நீர் அவரோடே வழக்காடுவானேன்.—ஏனென்
றால் பராபரன் ஒருவிசை சொல்லியிருக்கிற கா
ரியத்தை இரண்டாம்விசை பார்த்துத் திருத்துகிற
௰௫ வரல்ல.—கனநித்திரை மனுஷர்மேல் இறங்கி,
அவர்கள் படுக்கையின்மேல் அயர்ந்துபோகை
௰௬ யில்,—அப்போது அவர் இராக்காலத்துத் தரிச
னையான சொப்பனத்திலே மனுஷருடைய
செவிக்குத் தாம்செய்யும் காரியத்தை வெளிப்ப
டுத்தி, அதை அவர்களுக்கு வரும் தண்டனையி
௰௭ னாலே முத்திரைபோடுகிறதுண்டு. — மனுஷனு
டைய செய்கையை நீக்கவும், பெருமைச் சிந்
தையை மனுஷனில் அடங்கப்பண்ணவும், —
இப்படியே அவன் ஆத்துமத்தை அழிவுக்கும், ௰௮
அவன் சீவனைப் பட்டயம் வெட்டுக்கும் தப்ப
விடவும் அப்படிச் செய்கிறார்.
ஆகையால் இவன் தன் படுக்கையிலே வாதை ௰௯
யினாலும் தன்னுடைய சகல எலும்புகளில் அ
கோரமான நோவினாலும், தண்டிக்கப்படுகி
றான். — அவனுடைய சீவன் அப்பத்தையும், ௨௰
அவன் ஆத்துமம் ருசிகரமான போசனத்தையும்,
அரோசிக்கும்.—அவனுடைய மாம்சம் காணப் ௨௧
படாதபடிக்கு அழிந்து, காணப்படாதிருந்த
அவன் எலும்புகள் பிதுங்குகின்றன. — அவ ௨௨
னுடைய ஆத்துமம் அழிவுக்கும், அவனுடைய
பிராணன் சாவுக்கும் சமீபிக்கின்றது.—ஆயிரத் ௨௩
தில் ஒருவராகிய சாமாதித் தூதனானவர் மனுஷ
னுக்குத் தம்முடைய நிதானத்தை அறிவிக்கும்
படிக்கு, அவனுக்கு அநுசாரியாயிருந்தாரேயா
கில்,—அவர் அவனுக்கு இரங்கி, அவன் அழி ௨௪
வில் இறங்காதபடிக்கு, நீர் அவனை இரட்சியும்,
மீட்கும்பொருளை நாம் கண்டுபிடித்தோமென்
பார்.—அப்போது அவன் மாம்சம் வாலிபத்தில் ௨௫
இருந்ததைப் பார்க்கிலும், ஆரோக்கியமடையும்;
தன் வாலவயது நாள்களுக்குத் திரும்புவான்.—
அவன் பராபரனைநோக்கி விண்ணப்பம்பண் ௨௬
ணினபின், அவன் அவருடைய சமுகத்தைக்
கெம்பீரத்தோடே பார்க்கத்தக்கவிதமாய் அவர்
அவன்மேல் பிரியமாகி, அந்த மனுஷனுக்கு
அவனுடைய நீதியின் பலனைக் கொடுப்பார்.—
அவன் மனுஷரை நோக்கிப்பார்த்துச் சொல்வ ௨௭
தாவது: நான் பாவம்செய்து செம்மையானதைப்
புரட்டினேன்; அது எனக்குப் பிரயோசனமா
யிருந்ததில்லை.—ஆனால் என் ஆத்துமம் அழிவுக்கு ௨௮
ஏகாதபடிக்கு, அவர் அதை இரட்சித்தார்; ஆகை
யால் என் பிராணன் வெளிச்சத்தைக் காணு
மென்பான்.
இதோ பராபரன் மனுஷனுடைய ஆத்துமத் ௨௯
தை அழிவுக்கு விலக்குகிறதற்கும், அவனைச்
சீவனுள்ளோரின் வெளிச்சத்தினாலே பிரகாசிப்
பிக்கிறதற்கும்,—அவர் இவையெல்லாம் அவனி ௩௰
டத்திலே இரண்டுமூன்றுதரம் நடப்பிக்கிறார்.
யோபே, நீர் கவனித்து என் சொல்லைக்கே ௩௧
ளும்; நான் பேசும்படிக்கு, நீர் மவுனமாயிரும்.—
சொல்லத்தக்க நியாயங்கள் இருந்ததேயானால், ௩௨
எனக்கு மறுஉத்தரவு கொடும்; பேசும்; ஏனெ
னில் உம்மை நீதிமானாகத்தீர்க்க எனக்கு ஆசை
யுண்டு.—ஒன்றும் இல்லாதிருந்ததேயாகில், நீர் ௩௩
என் சொல்லைக்கேளும்; மவுனமாயிரும்; நான்
உமக்கு ஞானத்தை உபதேசிப்பேனென்றான்.

## ௩௪. அதிகாரம்.

௧. யோபு பராபரனை அநீதியுள்ளவரென்றதை எலீகு குற்றம்சாற்றினதும், ௰. சர்வவல்லமையுள்ள பராபரனிடத்தில் அநீதி இல்லையென்றதும், ௧௧. மனுஷன் பராபரனுக்குமுன் பணியவேண்டுமென்றதும், ௩௪. எலீகு யோபைக் கண்டித்ததும்.

பின்னையும் எலீகு மறுஉத்தரவு கொடுத்துச் ௧
சொன்னதாவது:—ஞானிகளே, என் வார்த்தை ௨

களைக் கேளுங்கள்; அறிவாளிகளே, எனக்குச்
௩ செவிகொடுங்கள்.-ஏனெனில் வாயானது போ
சனத்தை ருசிபார்க்கிறதுபோல, செவியானது
௪ வார்த்தைகளைச் சோதித்துப்பார்க்கும். — நமக்
காக நியாயமானதைத் தெரிந்துகொள்வோமாக;
நன்மை ஏதென்று நமக்குள்ளே அறிந்துகொள்
௫ வோமாக.—ஏனெனில், நான் நீதிமான்; பரா
பரன் என் நியாயத்தை தள்ளிவிட்டாரென்றும்,—
௬ நியாயம் என்னிடத்தில் இருந்தும் நான் பொய்ய
னென்று எண்ணப்படுகிறேன்; மீறுதல் இல்லா
திருந்தும், என் அம்புக்காயம் ஆறாததாயிருக்கிற
௭ தென்றும், — பரியாசம்பண்ணுதலைத் தண்ணீ
௮ ரைப்போலக் குடித்து,—அக்கிரமக்காரரோடே
ஏகமார்க்கத்தானாகவும், ஆகாத மனுஷரோடே
நடக்கிறவனாகவும், எண்ணப்பட்ட யோபைப்
போல இருக்கிற மனுஷன் யாரென்றும் யோபு
௯ சொன்னார்.—பின்னையும், மனுஷன் பராபரன்
மேலே பிரியம்வைக்கிறது அவனுக்குப் பிர
யோசனம் அல்லவென்றாரே.
௰ ஆகையினாலே புத்தியுள்ள மனுஷரே. என்
னைக் கேளுங்கள்; ஆகாமியம் பராபரனுக்கும்,
நீதிக்கேடு சர்வவல்லவருக்கும் தூரமாயிருக்
௰௧ கின்றன. — அதேதென்றால் மனுஷனுடைய
செய்கைக்குத்தக்கதை அவனுக்குச் சரிக்கட்டி,
அவனவன் மார்க்கத்துக்குத்தக்கதாக அவனுக்
௰௨ குக் கிடைக்கப்பண்ணுகிறார். — பராபரன் ஆ
காமியம் செய்யாமலும், சர்வத்துக்கும் வல்லவர்
நீதியைப் புரட்டாமலும் இருக்கிறது மெய்யா
௰௩ மே.—பூமியின்மேல் மனுஷனுக்கு அதிகாரம்
கொடுத்தவர் யார்? பூச்சக்கரத்தை எல்லாம்
௰௪ திட்டப்படுத்தினவன் யார்?—அவர் தம்முடைய
இருதயத்தை அவனுக்கு விரோதமாகத் திருப்பி
னாராகில் அவனுடைய ஆவியையும், அவனு
டைய சுவாசத்தையும் தம்மண்டைக்கு இழுத்து
௰௫ க்கொள்ளுவார்.—அப்படியே மாம்சமெல்லாம்
ஏகமாய்ச் சீவித்துப்போய், மனுஷன் தூளுக்குத்
திரும்புவான்.
௰௬ உமக்கு உணர்விருந்தால் இதைக்கேளும், என்
வார்த்தைகளின் சத்தத்துக்குச் செவிகொடும்.—
௰௭ நீதியைப் பகைக்கிற ஒருவன் ஆளக்கூடுமோ?
மகா நீதிபரனை ஆகாதவரென்று தீர்ப்பீரோ?—
௰௮ ஒரு இராசாவைப்பார்த்துப் பேலியாளே என்
றும், அதிபதிகளில் ஒருவனைப்பார்த்து ஆகாத
௰௯ வனே என்றும் சொல்லத்தகுமோ? — பிரபுக்க
ளின் முகத்தைப் பாராமலும் ஏழையைப்பார்க்
கிலும் ஐசுவரியவானை எண்ணாமலும் இருக்கிற
வரைநோக்கி அப்படிச் சொல்வதெப்படி? அதே
தெனில் இவர்களெல்லாரும் அவர் கரங்களின்
௨௰ செய்கையாயிருக்கிறார்கள். — இப்படிப்பட்ட
வர்கள் அசுப்பாய்ச் சாகிறதும், சனங்கள் பாதிச்
சாமத்தில் கலங்கி அப்பாலே போகிறதும், கைக்
கொண்டல்லாமல் பலவந்தர் எடுத்துப்போடப்
௨௧ படுகிறதுமுண்டு. — ஏனென்றால் அவருடைய
கண்கள் அவரவர் வழிகளை நோக்கியிருக்கின்
றன; அவர் அவர்களுடைய நடைகளை எல்லாம்
பார்க்கிறார்.— அக்கிரமக்காரர் ஒளித்துக்கொள் ௨௨
ளத்தக்க இருளுமில்லை, மரணநிழலுமில்லை.—
அதேதென்றால் பராபரனுக்குமுன்பாக வந்து ௨௩
வழக்குக்கு நிற்க, அவர் ஒருவனுக்கும் இன்னம்
வெகுவாய் இடங்கொடார்.—ஆராய்ந்து முடி ௨௪
யாத நியாயமாய் அவர் வல்லமையுள்ளவர்களை
முறித்து, வேறே மனுஷரை அவர்கள் ஸ்தலத்
திலே நிறுத்துகிறார். — அவர்கள் வேலைகளை ௨௫
அவர் அறிந்தபடியினாலே, அவர்கள் நசுங்கிப்
போகத்தக்கவிதமாய் இராத்திரிகாலத்திலே அவர்
களைக் கவிழ்த்துப்போடுகிறார்.—அவர்கள் அவ ௨௬
ரைவிட்டுப் பின்வாங்கி, அவருடைய எல்லா
வழிகளையும் உணர்ந்துகொள்ளாமல் போனபடி
யினாலே,—அவர் எளியவனுடைய கூக்குரலை ௨௭
அவர்கள்மேல் சுமத்தி, எல்லாரும் பார்க்கும்
இடத்தில் அவர்களைப் பொல்லாதவர்களென்று
அடிக்கிறார்.—ஏனெனில் அவர் சிறுமையான ௨௮
வர்களின் கூக்குரலைக் கேட்கிறார். — அவர் ௨௯
தண்டிக்காமல் அமரிக்கையாயிருந்தாரானால்,
ஆகாதவர்களைத் தண்டிப்பவர் யார்? அவர் பாரா
தபடிக்குத் தம்முடைய முகத்தை மறைத்தால்,
அப்போது சாதியின்மேலும் ஒவ்வொரு மனு
ஷன்மேலும் நோக்கமாயிருப்பவர் யார்?—அப் ௩௰
போது மாயம்பண்ணுகிற மனுஷன் ஆளாதபடிக்
கும், சனம் சிக்கிக்கொள்ளப்படாதபடிக்கும்
பார்ப்பவர் யார்?
ஆனால் நாம் மன்னித்தோம்; நாம் அழிப்ப ௩௧
தில்லை என்று சொல்லப் பராபரன் அதிகாரியு
மாயிருக்கிறார்.—நான் காணாத காரியத்தை நீர் ௩௨
எனக்குப் போதியும், நான் அநியாயம்பண்ணி
னேனானால் நான் இனி அப்படிச் செய்வதில்
லை.—நீர் அப்படிச் செய்யமாட்டோமென்கிற ௩௩
படியினாலே, உம்மோடிருக்கிறவர்களில் ஒரு
வன் உமக்குப்பதிலாக அதைச் செய்யச்சொல்
லுவீரோ? ஏனெனில் நானல்ல, நீரே தெரிந்து
கொள்ளவேண்டும்; அல்லவென்று நீர் அறிந்தி
ருக்கிறதைச் சொல்லும்.—யோபு அறிவோடே ௩௪
பேசினதில்லை; அவர் வார்த்தைகள் உணர்வுள்
ளவைகளல்லவென்று, — புத்தியுள்ள மனுஷர் ௩௫
என் பாரிசமாய்ப் பேசுவார்கள்; ஞானமுள்ள
மனுஷன் எனக்குக் கேள்விகொடுப்பான். —
என் பிதாவே, யோபு அக்கிரமமனுஷரின் சொல் ௩௬
லாய்ச் சொன்ன மறுஉத்தரவுகளின்நிமித்தம்
அவர் என்றைக்கும் சோதிக்கப்பட நியாய
மாம்.—ஏனெனில் தம்முடைய பாவத்தோடே ௩௭
மீறுதலைக் கூட்டினார்; அவர் எங்களுக்குள்ளே
கைகொட்டிப் பராபரனுக்கு விரோதமாகத்
தம்முடைய வார்த்தைகளை மிகுதியாக்கினா
ரென்றான்.

## ௩௫. அதிகாரம்.

௧. நம்முடைய நன்மையும் தீமையும் பராபரனிடத்திற்கு எட்டாதிருக்கிறபடியால், அவருக்கு ஒப்பில்லையென்றதும், ௯. உபத்திரவங்களில் கதறுகின்ற அநேகருக்கு அவிசுவாசத்தினால் உத்தரவில்லையென்றதும்.

பின்னையும் எலீகு மறுஉத்தரவுகொடுத்துச் சொ ௧
ன்னதாவது:-என்னுடைய நீதி பராபரனுடைய ௨

தைப்பார்க்கிலும் பெரியதென்று நீர் சொன்னது
௩ நியாயமென்றெண்ணுகிறீரோ?—அதேதெனில்
நான் பாவியாயிராததினால் எனக்குப் பிரயோச
௪ னமென்ன? லாபமும் என்ன என்றீர்.–உமக்கும்
உம்மோடேகூட இருக்கிற உம்முடைய சிநே
கிதருக்கும்கூட நான் பிரதியுத்தாரம் சொல்
லுவேன்.
௫ நீர் வானத்தை அண்ணாந்துபார்த்து, உம்மைப்
பார்க்கிலும் உயரமாய் இருக்கிற ஆகாசமண்ட
௬ லங்களைக் கண்ணோக்கும்.—நீர் பாவம்செய்தால்
அதினாலே அவருக்கு எந்த நஷ்டத்தை நடப்
பிப்பீர்? உம்முடைய மீறுதல்கள் மிகுதியானா
லும், அதினாலே அவருக்கு எந்தச் சேதத்தை
௭ உண்டாக்குவீர்?—நீர் நீதிமானானால், அதினாலே
அவருக்கு என்னத்தைக் கொடுப்பீர்? அல்லது
அதினால் அவர் உம்முடைய கையில் எந்த லா
௮ பத்தை அடைவார்?—உம்முடைய ஆகாமியம்
உம்மைப்போலொத்த மனுஷனுக்கும், உம்மு
டைய நீதி மனுப்புத்திரனுக்கும் யாதொன்றைச்
௯ செய்யலாமோ?—அநேகருடைய பலவந்தத்தை
அநுபவிக்கிறதினால் ஒடுக்கப்பட்டவர்கள் கூப்
பிட்டு, வல்லவர்களுடைய புயத்தின் நிமித்தம்
௰ அலறுகிறார்கள். — ஆனால் ஒருவரும் என்னை
உண்டாக்கினவரும், இரவிலே கீதங்களைக் கட்
௰௧ டளையிடுகிறவரும், — பூமியின் மிருகங்களைப்
பார்க்கிலும் எங்களைக் கல்விமான்களும், ஆகா
சத்துப் பறவைகளைப்பார்க்கிலும் எங்களை ஞான
முள்ளவர்களுமாக்குகிறவருமான பராபரன் எங்
௰௨ கே என்று சொல்லுகிறதில்லை.—அங்கே அவர்
கள் பொல்லாதவர்களின் பெருமையின்நிமித்தம்
கூப்பிடுகிறார்கள்; ஆனால் அவர் மறுஉத்தரவு
கொடார்.
௰௩ பராபரன் மாயைக்குச் செவிகொடாரே, சர்வத்
௰௪ துக்கும் வல்லவர் அதைப் பாரார்.–அவருடைய
தரிசனம் உமக்குக் கிடைக்கிறதில்லை என்று
நீர் சொல்லிக்கொள்ளுகிறீரே, ஆனால் நியாயத்
தீர்ப்பு அவருக்குமுன்பாக இருக்கின்றது; ஆகை
௰௫ யால் அவருக்குக் காத்துக்கொண்டிரும்.—இப்
போதோவென்றால் அவருடைய கோபமானது
நியாயத்தை இன்னம் விசாரியாது; அவர் இன்
௰௬ னம் ஒன்றையும் குறையற்றபடியாய்த் தீரார்.—
ஆகையால் யோபு வீணாய்த் தம்முடைய வாயைத்
திறந்து, அறிவில்லாமல் வார்த்தைகளை மிச்சமாக்
கினாரென்றான்.

## ௩௬. அதிகாரம்.

*௧. எலீகு பராபரன் தம்முடைய நெறிகளில் நீதியுள்ளவரென்றதும், ௰௬. யோபுடைய பாவங்கள் பராபரனுடைய ஆசீர்வாதத்திற்குத் தடையென்றதும், ௨௪. பராபரனுடைய கிரியைகள் உன்னதமாயிருக்கின்றனவென்றதும்.*

௧ எலீகு அப்புறம் பேசிச் சொன்னதாவது:—
௨ நான் பேசும்மட்டும் சற்றே பொறும்; ஏனென்
றால் இன்னம் பராபரனுக்காகச் சொல்லவேண்
டிய நியாயங்களை உமக்குக் காண்பிப்பேன்.—
௩ நான் என் அறிவைத் தூரத்திலிருந்து கொண்டு
வந்து, என்னை உண்டாக்கினவருடைய நீதியை
விளங்கப்பண்ணுவேன்.–அதேதென்றால் மெய் ௪
யாகவே என் வார்த்தைகள் பொய்யற்றிருக்கும்,
உம்மோடே பேசுகிறவன் அறிவில் உத்தமன்.
இதோ பராபரன் மகத்துவமுள்ளவராயிருந் ௫
தாலும் ஒருவனையும் புறக்கணியார்; மன உருக்
கத்தினாலும் அவர் மகத்துவமுள்ளவர். — அவர் ௬
துன்மார்க்கனைப் பிழைக்க ஒட்டாதிருக்கிறார்;
ஆனால் சிறுமையானவர்களின் நியாயத்தை விசா
ரிக்கிறார். — அவர் நீதிமான்களைவிட்டுத் தம்மு ௭
டைய கண்களை விலக்காமல் அவர்களை இராசாக்
களோடேகூட ஆசனத்தில் ஏறவும், உயர்ந்த
ஸ்தலத்தில் என்றைக்கும் உளுக்காந்திருக்கவும்
பண்ணுகிறார்.—சிலர் விலங்குகள் போடப்பட் ௮
டு, உபத்திரவத்தின் கயிறுகளால் கட்டப்பட்டி
ருந்தால்,—அவர் இவர்கள் கிரியையையும், மிஞ் ௯
சிப்போன இவர்களுடைய மீறுதல்களையும் இ
வர்களுக்குத் தெரியப்பண்ணி,–இவர்கள் செவி ௰
யைக் கடிந்துகொள்ளுதலுக்குத் திறந்து, அக்கிர
மத்தைவிட்டுத் திரும்பச்சொல்லுவார்.–இவர்கள் ௰௧
கேட்டு அவருக்கு ஊழியம்செய்தால், தங்கள்
நாள்களை நன்மையாகவும், தங்கள் வருஷங்க
ளைச் செல்வப்பாக்கியமாகவும் போக்கிவிடுவார்
கள். — கேளார்களேயாகில் பட்டையத்துக்கு ௰௨
இரையாகி, அறிவு அடையாததினால் மாண்டு
போவார்கள்.
மாயமான இருதயத்தார் மூக்கை நெறிக்கிறார் ௰௩
கள்; அவர் அவர்களைக் கட்டிவைத்தாலும் கெஞ்
சிக் கூப்பிடார்கள்.—அவர்கள் சீவன் கொஞ்ச ௰௪
வயதிலே மாளும்; புணர்ச்சிக்காரருக்குள்ளே
அவர்கள் பிராணன் முடியும்.–ஆனால் சிறுமைப் ௰௫
பட்டவர்களை அவர் அவர்கள் சிறுமைக்கு நீங்க
லாக்கி, அவர்கள்ஒடுக்கப்பட்டிருக்கையில்அவர்
கள் செவியைத் திறக்கிறார். — அப்படி அவர் ௰௬
உம்மையும் நெருக்கத்தின் வாய்க்கு விலக்கி ஒடு
க்கமில்லாத விசாலத்திலே வைப்பார்; உம்மு
டைய பந்தியில் பரிமாறப்படுவது நிறைந்த
கொழுப்புள்ளதாயிருக்கும். — ஆனால் ஆகாத ௰௭
வன்மேல் வரும் நியாயத்தீர்ப்பை நிரந்தரமாகப்
பார்ப்பீர்; நியாயமும், நீதியும் உம்மை ஆதரிக்
கும்.—உக்கிரமுண்டாகிறதினால் அவர் உம்மை ௰௮
ஒரு அடியினால் • எடுத்துப்போடாதபடிக்குப்
பாரும்; அப்போது மிகுதியான மீட்கும்பொரு
ளானது உம்மை அதற்கு நீங்கலாக்கமாட்
டாது. — அப்போது மன இடுக்கத்தில் உம்மு ௰௯
டைய அலறுதலாகிலும், பலத்தினுடைய எந்தச்
சத்துவங்களாகிலும் எண்ணப்படுமோ? — சன ௨௰
சதளங்கள் தங்கள் இடத்தைவிட்டுவாரிக்கொள்
ளப்படப்போகிற இரவை வாஞ்சிக்காதிரும்.—
அக்கிரமத்துக்குத் திரும்பாதபடிக்கு எச்சரிக் ௨௧
கையாயிரும்; ஏனெனில் உபத்திரவத்தினாலே
அதைத்தான் தெரிந்துகொண்டீர்.
இதோ பராபரன் தம்முடைய வல்லமையில் உ ௨௨
யர்ந்திருக்கிறார்; அவரைப்போலொத்த சாஸ்திரி
யார்?—அவருடைய வழியின் நியாயத்தை விசா ௨௩
ரிக்கத்தக்கவன் யார்? அல்லது அநியாயம்செய்

௨௪ நீர் என்று சொல்லத்தக்கவன் யார்? — மனுஷர்
நோக்கிப்பார்க்கிற அவருடைய கிரியையை நீர்
௨௫ மகிமைப்படுத்த நினைவுகூரும். — எல்லா மனு
ஷரும் அதைக் காண்கிறார்களே; தூரத்திலிருந்து
௨௬ அது மனுஷனுக்கு வெளிப்படுகின்றது.—இதோ
பராபரன் நாம் அறிய முடியாத மகத்துவமுள்ள
வர்; அவருடைய வருஷங்களின் இலக்கம் ஆரா
௨௭ ய்ந்து முடியாதது.—அதேதென்றால் அவர் தண்
ணீரின் துளிகளை அணுவைப்போல ஏறப்பண்
ணுகிறதினால், அவைகள் அவருடைய மூடுபனி
மேகத்திலிருந்து மழையாகச் சொரிகின்றது.—
௨௮ அதை மேகங்கள் பெய்யப்பண்ணி, திரள் மனு
௨௯ ஷர்மேல் தூறுகின்றன.—மேகங்களின் விரிவு
களையும், அவருடைய கூடாரத்தின் குமுறல்க
௩௰ ளையும் உணர முடியுமோ?- இதோ அவைகளின்
மேல் தம்முடைய மின்னலின் வெளிச்சத்தை
விரித்துச் சமுத்திரத்தின் ஆழங்களை மூடுகிறார்.-
௩௧ அதேதென்றால் அவைகளால் சனசதளங்களை
நியாயம்விசாரிக்கிறவருமாயிருக்கிறார்; ஆகாரத்
தைப் பரிபூரணமாய்க் கட்டளையிடுகிறவருமாயி
௩௨ ருக்கிறார்.—அவர் மின்னலின் வெளிச்சத்தைக்
கைகளினால் மூடி, நடுவே யாதொன்று அதை ம
௩௩ றிக்கக் கற்பனை கொடுக்கிறார்.—அதினால் அவர்
செய்ய நினைக்கிறதையும், மந்தாரம் எழும்பப்
போகிறதையும் ஆடுமாடுகள் அறியப்படுத்தும்.

## ௩௭. அதிகாரம்.

௧. பராபரன் உன்னதமாகிய கிரியைகளினால் பயப்படத்தக்கவரென்றதும், ௰௪. கிரியைகளில் காட்டின ஞானம் ஆராயப்படாததென்றதும்.

௧ என் இருதயமும் இதினாலே தத்தளித்துத் தன்
௨ னிடத்தைவிட்டுத் தெறிக்கின்றது.-அவருடைய
சத்தத்தினால் உண்டாகிற அதிர்த்தலையும், அவர்
வாயிலிருந்து புறப்படுகிற முழக்கத்தையும் கேட்
௩ கவே கேளுங்கள். — அவர் வானத்தின்கீழெங்
கும் அதையும், பூமியின் கடையாந்தரங்கள்மேல்
௪ அதின் மின்னலையும் போகவிடுகிறார். — இதன்
பிறகு அவர் சத்தமாய் முழங்கித் தம்முடைய மக
த்துவத்தின் சத்தத்தைக் குமுறப்பண்ணுகிறார்;
அவருடைய சத்தம் கேட்கப்படுகையில் அது
௫ தவிர்க்கப்படாது.—பராபரன் தம்முடைய சத்
தத்தை ஆச்சரியமானவிதமாய்க் குமுறப்பண்ணு
கிறார்; நாம் கிரகிக்கக்கூடாத பெரியகாரியங்க
௬ ளைச் செய்கிறார்.—அதேதெனில் அவர் உறைந்த
மழையையும், கன்மழையையும், தம்முடைய
வல்லமையின் பெருமழைகளையும் பார்த்து, பூமி
யின்மேல் உண்டாயிருங்களென்று சொல்லுகி
௭ றார்.—தம்முடைய செய்கிரியையாயிருக்கிற சக
லமனுஷரும் தம்மை உணர, அவர் அதினாலே
சகல மனுஷருடைய கையையும் முத்திரித்துப்
௮ போடுகிறார்.—அப்போது காட்டுமிருகங்கள் தங்
கள் ஒளிப்பிடங்களில் புகுந்து, தங்கள் கெபிக
ளில் தாவரித்துக்கொள்ளும்.
௯ தெற்கேயிருந்து சூறாவளிக்காற்றும், வடக்கி
௰ லிருந்து குளிரும் வரும்.—தம்முடைய சுவாசத்
தினால் பராபரன் குளிரைக் கொடுக்கிறார்; அப்
போது தண்ணீர்களின் விசாலம் உறைந்து
போம்.—அவர் காந்தியினாலே மேகங்களை நெ ௰௧
ருக்கி, தம்முடைய வெளிச்சத்தினாலே மந்தாரத்
தைச் சிதறப்பண்ணுகிறார்.—அவர் அவைகளுக் ௰௨
குக் கற்பிக்கிற எல்லாவற்றையும், அவைகள்
பூலோகச் சக்கரத்திலே நடப்பிக்கும்படிக்கு அ
வர் அவைகளைத் தம்முடைய ஞான ஆலோசனை
களின்படியே சுற்றித் திரியப்பண்ணுகிறார்.—
ஒன்றில் மிலாறாகவும், ஒன்றில் தம்முடைய ௰௩
பூமிக்கு லாபமாகவும், ஒன்றில் கிருபையாகவும்
அவைகளை வரப்பண்ணுகிறார்.

யோபே, இவைகளுக்குச் செவிகொடும்; தரி ௰௪
த்து நின்று, பராபரனுடைய ஆச்சரியங்களைத்
தியானித்துக்கொள்ளும். — பராபரன் அவைக ௰௫
ளைத் திட்டம்பண்ணி, தம்முடைய மேகத்தின்
மின்னலைப் பிரகாசிக்கப்பண்ணும்விதத்தை அறி
வீரோ?-மேகங்களுக்கு வைக்கும் நிறையையும், ௰௬
குறையற்ற அறிவுள்ளவரின் அற்புதங்களையும்,-
தென்றலினால் அவர் பூமியை அமைதலாயிருக் ௰௭
கப்பண்ணுகிறபோது, உம்முடைய வஸ்திரங்
கள் அனல் உண்டாக்குகிற விதத்தையும் அறிவீ
ரோ?—வார்க்கப்பட்ட கண்ணாடியைப்போலக் ௰௮
கெட்டியான ஆகாயமண்டலங்களை நீர் அவரோ
டேகூட இருந்து விரித்தீரோ?—அவருக்கு நாம் ௰௯
சொல்லத்தக்கதை எங்களுக்குப் போதியும்; ஏ
னெனில் அந்தகாரத்தினிமித்தம் வரிசைதப்பிப்
பேசுகிறோம். — நான் சொல்லப்போனால் அது ௨௰
அவருக்குமுன்பாக விவரிக்கப்படத்தக்கதாக
இருக்குமோ? எவனொருவன் சொல்லக்கூடுமோ
அவன் விழுங்கப்படுவானே.

இப்போதும் காற்றுவீசி ஆகாயமண்டலங்க ௨௧
ளையும் மப்பு நீங்கப்பண்ணி இருக்கிறபோதும்,
வடக்கேயிருந்து பொன்னுக்கொத்த காந்தி வரு
கிறபோதும், — ஆகாயமண்டலத்திலே பிரகா ௨௨
சிக்கிற சூரியனைமுதலாய் ஒருவரும் நோக்கிப்
பார்க்கக்கூடாதே; பராபரனிடத்திலேவென்
றால் பயங்கரமான மகத்துவமுண்டு. — சர்வத் ௨௩
துக்கும் வல்லவரை நாம் கண்டுபிடிக்கக்கூடா
து; அவர் வல்லமையாலே பெருத்தவர்; அவர்
நியாயத்தையும், மகா நீதியையும் அமுக்கிப்போ
டார்.—ஆகையால் மனுஷர் அவருக்குப் பயப்ப ௨௪
டவேண்டும்; தங்கள் எண்ணத்தில் ஞானிகளா
கிய எவர்களையும் அவர் பாராரென்றான்.

## ௩௮. அதிகாரம்.

௧. பராபரன் யோபை மாறுத்தரவு சொல்லச்சொன்னதும், ௪. அவர் தம்முடைய வல்லமையுள்ள கிரியைகளினாலே யோபு தன் பேதைமையையும், ௩௧. பலவீனத்தையும் உணரச்செய்ததும்.

அப்போது கர்த்தர் பெருங்காற்றிலிருந்து யோக ௧
புக்கு உத்தரவுகொடுத்து விளம்பினதாவது: —
அறிவில்லாத வார்த்தைகளினால் ஆலோசனையை ௨
அந்தகாரப்படுத்துகிற இவன் யார்?—இப்போதும் ௩
புருஷனைப்போல உன் இடையைக் கட்டிக்
கொள்; நாம் உன்னைக் கேட்போம்; நீ நம்மைப்
போதி.

௪ நாம் பூமியை அஸ்திபாரப்படுத்துகிறபோது நீ
எங்கேயிருந்தாய்? நீ அறிவாளியானால் அதை
௫ அறிவி.-அதற்கு அதின் அளவை வைத்தவர் யார்?
அல்லது அதின்மேல் நூல்போட்டவர் யார் என்
௬ கிறதை நீ அறிந்தால் சொல். — அதினுடைய
௭ நிலைகள் எதின்மேலே பாவப்பட்டன.—அல்
லது விடியற்காலத்து நட்சத்திரங்கள் ஏகமாய்ப்
பாடிப் பராபரனுடைய பிள்ளைகளெல்லாம்
கெம்பீரிக்கையில் அதின் கோடிக்கல்லை வைத்
தவர் யார்?
௮ சமுத்திரம் கர்ப்பத்திலிருந்து புரண்டு புறப்
படுகிறபோது, அதைக் கதவுகளால் அடைத்தவர்
௯ யார்? — நாம் மேகங்களை அதற்கு வஸ்திரமாக
வும், இருளை அதற்குப் புடவையாகவும் போட்ட
௰ போதும்,—நாம் அதின்மேல் நம்முடைய திட்ட
த்தைப் பரவவிடுகிறதினால், அதற்குத் தாழ்ப்பாள்
௰௧ களையும் கதவுகளையும் போட்டு, — இம்மட்டும்
வருவாய், மிஞ்சி வாராய், இங்கே உன் அலைக
ளின் பெருமை அடங்கக்கடவதென்று நாம்
சொல்லுகிறபோதும் நீ எங்கேயிருந்தாய்?
௰௨ உன்னுடைய நாள்களிலேயிலே நீ விடியற்
காலத்துக்குக் கற்பனை தந்து, கிழக்கு வெளுக்
குதலுக்கு அதின் இடத்தைக் காண்பித்ததுண்
௰௩ டோ? — ஆகாதவர்கள் பூமியிலிருந்து உதறிப்
போடப்படும்படிக்கு, அதின் கடையாந்தரங்
௰௪ களைப் பிடிக்கவும், — களிமண்ணிலே முத்தி
ரை போடுகிறதினால் வேறே ரூபம் உண்டா
கிறதுபோல, அவைகளை வஸ்திரத்தைப்போலக்
௰௫ காணப்படப்பண்ணவும், — ஆகாதவர்களின்
வெளிச்சம் அவர்களை விட்டு விலகி மேட்டிமை
யான புயம் முறிந்துபோகப்பண்ணவும் தெரியு
மோ?
௰௬ நீ சமுத்திரத்தின் அடித்தலங்கள்மட்டும் புகு
ந்து, ஆழத்தின் அடியில் உலாவினதுண்டோ?-
௰௭ மரணத்தின் வாசல்கள் உனக்குத் திறந்ததுண்
டோ? மரணநிழலின் வாசல்களை நீ பார்த்ததுண்
௰௮ டோ? — நீ பூமியின் விசாலங்களை ஆராய்ந்து
அறிந்ததுண்டோ? இவைகளை எல்லாம் நீ அறிந்
திருந்தால் அறிவி.
௰௯ வெளிச்சம் வாசமாயிருக்கும் இடத்துக்கு
வழியெங்கே? இருளினுடைய ஸ்தலமெங்கே?—
௨௰ அதின் எல்லை இன்னதென்று அது உனக்குப்
பிடிபடுமோ? அதின் வீட்டுக்குப் போகிற பாதை
௨௧ களை அறிந்திருக்கிறாயோ?—நீ அப்போது பிறந்
ததினாலும், உன் நாள்களின் இலக்கம் பெரிதா
னதினாலும் அதை அறிவாயோ?
௨௨ உறைந்த மழையின் பண்டகசாலைகளுக்குள்
௨௩ பிரவேசித்தாயோ? — நாம் நெருக்கம் வருத்து
விக்கிற காலத்துக்கும் கலகம் யுத்தமென்றவை
களின் நாளுக்கும் வைத்துவைத்த உறைந்த
மழையிருக்கிற பண்டகசாலைகளிலே பார்த்தா
யோ?
௨௪ மின்னல் பகிரப்படுகிறதற்கும், கீழ்காற்றுப்
பூமியின்மேலே சிதறுகிறதற்குமான வழியெங்
௨௫ கே? — குடியில்லாத பூமியின்மேலும், மனுஷ
னில்லாத வனாந்தரத்தின்மேலும் வருஷிக்கப்
பண்ணவும்,—பாழும் அந்தரவெளியுமானதைத் ௨௬
திருப்தியாக்கவும் பூண்டுகளின் முளைகளை முளை
ப்பிக்கவும், — பெருமழைக்குச் சலதாரைகளை ௨௭
யும், இடிமுழக்கங்களின் மின்னலுக்கு வழிக
ளையும் பகுத்தவன் யார்?
மழைக்கு ஒரு தகப்பனுண்டோ? அல்லது பனி ௨௮
யின் துளிகளைச் செனிப்பித்தவன் யார்?—கல் ௨௯
லைப்போலிருக்கிறதின்கீழ்த் தண்ணீர்கள் மறை
க்கப்பட்டுக் கெட்டிப்படுகிற ஆழத்தின்மேல்,—
உறைந்த தண்ணீர் யார் வயிற்றிலிருந்து புறப்ப ௩௰
டுகிறது? ஆகாயத்தினுடைய உறைந்த பனியைப்
பெற்றவன் யார்?
சத்த நட்சத்திரத்தின் இன்பமான இணைப்பை ௩௧
இணைப்பாயோ? அல்லது யாதொரு நட்சத்திர
ராசியின் கட்டுகளை அவிழ்ப்பாயோ?—கிரகங்க ௩௨
ளை அதினதின் காலத்திலே புறப்படப்பண்ணு
வாயோ? கரடியும், அதின் குட்டிகளும் என்னப்
பட்ட நட்சத்திரங்களை வழிநடத்துவாயோ?—
நீ வானத்தின் ஒழுங்குகளை அறிவாயோ? அது ௩௩
பூமியையாளும் ஆளுகையை நீ திட்டம்பண்ணு
வாயோ? — ஏராளமான தண்ணீர் உன்மேலே ௩௪
சொரியவேணும் என்று உன் சத்தத்தை மேகங்
கள்பரியந்தம் உயர்த்துவாயோ? — நீ மின்னல் ௩௫
களை அழைத்தனுப்பி, அவைகள் புறப்பட்டு
வந்து, இதோ இங்கேயிருக்கிறோம் என்று உன்
னோடே சொல்லப்பண்ணுவாயோ?—உள்ளிந் ௩௬
திரியங்களில் ஞானத்தை வைத்தவன் யார்? அல்
லது புத்திக்கு உணர்வைக் கொடுத்தவன் யார்?—
ஞானத்தினாலே கொடிமாசிகளை எண்ணுபவன் ௩௭
யார்?—தூளானது ஏகபாளமாகவும், மண்கட்டி ௩௮
கள் ஒன்றுக்கொன்று ஒட்டிக்கொள்ளவும், ஆகா
யத்தின் தண்ணீர்த்துருத்திகளைப் பொழியப்
பண்ணுபவன் யார்?

## ௩௯. அதிகாரம்.

௧. சிங்கத்தையும், மலையாடுகளையும், மான்களையும், ௮. காட்டுக்கழுதையையும், ௰௨. காண்டாமிருகத்தையும், ௰௩. மயிலையும், கொக்கையும், தீக்குருவியையும், ௨௨. குதிரையையும், ௨௬. டேகையையும், ௩௰. கழுகையும்குறித்தது. ௩௭. யோபு பராபரனுக்குமுன்பாகத் தன்னைத் தாழ்த்தினது.

நீ சிங்கத்துக்கு இரையை வேட்டையாடி,— ௧
சிங்கக்குட்டிகள் தாங்கள் தங்குமிடங்களிலே ௨
கிடந்து கெபியிலே பதிவிருக்கிறபோது அவை
களின் ஆசையைத் தீர்ப்பாயோ? — காக்கைக் ௩
குஞ்சுகள் பராபரனைநோக்கிக் கூப்பிட்டு, ஆகா
ரமில்லாமல் பறந்து அலைகிறபோது அவைக
ளுக்கு அவைகள் இரையைச் சவதரிக்கிறவன்
யார்?
மலையாடுகள் ஈனும் காலத்தை அறிவாயோ? ௪
மான்கள் குட்டிபோடுதலைக் கவனித்தாயோ?—
அவைகள் சினைப்பட்டிருந்து வருகிற மாதங் ௫
களை நீ எண்ணி, அவைகள் ஈனும்காலத்தை அறி
வாயோ?—அவைகள் குனிந்து நொந்து தங்கள் ௬
குட்டிகளைப் போட்டு, தங்கள் வாதைகளை நீங்
கப்பண்ணும்.-அவைகளின் குட்டிகள் பலத்துப் ௭

பயிரிலே வளர்ந்து புறப்பட்டுபோய்த் திரும்ப
அவைகளண்டைக்கு வராதிருக்கும்.
௮ காட்டுக்கழுதையைத் தன் இச்சையாய்த் திரி
ய விட்டவன் யார்? அந்தக் காட்டுக்கழுதையின்
௯ கட்டுகளை அவிழ்த்தவன் யார்?-அதற்கு நாம் வனா
ந்தரத்தை வீடாகவும், உப்புத்தரையை வாசஸ்
௰ தலங்களாகவும் கொடுத்தோம்? — அது பட்ட
ணத்தினுடைய இரைச்சலை நகைத்து, ஆளோட்
டியின் கூக்குரல்களைக் கேளாதிருக்கின்றது.—
௰௧ அது மலைகளிலே தன் மேய்ச்சலைப் பராமரித்துச்
சகலவித பச்சைப் பூண்டுகளைத் தேடித் திரி
கின்றது.
௰௨ காட்டெருமை உன்னைச் சேவிக்க விரும்பு
மோ? அது உன் முன்னணைக்கு முன்பாக இராத்
௰௩ தங்குமோ?—படைச்சால்களை உழ நீ காட்டெ
ருமையைக் கயிறுபோட்டு ஏரிலே பிணைப்பா
யோ? அது உனக்குப் பின்னாகப் பள்ளங்களை
௰௪ கிரவுமோ?—அதின் பெலன் பெரியதென்று நீ
அதை நம்பிக்கொண்டு, உன் வேலையை அதற்கு
௰௫ ஒப்புவிப்பாயோ?—உன் விதைகளின் பலனை
அது திரும்பக் கொண்டுவந்து, உன் களஞ்சியத்
தில் சேர்க்கும் என்று நீ அதை நம்புவாயோ?
௰௬ தீக்குருவிகள் தங்கள் செட்டைகளை அசை
வாட்டி ஒடுகின்றனவு; கொக்கு தன் செட்டை
களாலும், இறகுகளாலும் பறக்கிறதற்குச் சரி
௰௭ யல்லவோ?—அது தன் முட்டைகளைத் தரையி
லேயிட்டு, அவைகளைத் தூளிலே அனலுறைக்
௰௮ கப் பின்வைத்துவிட்டுப் போய்,—ஒருவர் கால்
அவைகளிலே படுமென்கிறதையும், காட்டுமிரு
கங்கள் அவைகளை மிதித்துவிடும் என்கிறதை
௰௯ யும் மறந்துவிடும்.—அது தன் குஞ்சுகள் தன்
னுடையதல்லாததுபோல அவைகளைக் காக்
காத கடின குணமாயிருக்கும்; அவைகளுக்காக
அது ஐயமற்றிருக்கிறபடியினாலே அது பட்ட
௨௰ வருத்தம் அபத்தமாம். — ஏனெனில் பராபரன்
அதற்கு ஞானத்தை விலக்கிவைத்து, அதற்குச்
சற்றாகிலும் உணர்வைக் கொடாதிருக்கிறார்.—
௨௰௧ அது உயர எழும்பும் வேளையிலே குதிரையை
யும், அதின்மேல் ஏறியிருக்கிறவனையும் நகைக்
கின்றது.
௨௰௨ குதிரைக்கு நீ வீரியத்தைக் கொடுப்பாயோ?
அதின் கழுத்துக்கு நீ கனைக்குதலை உடுத்துவிப்
௨௰௩ பாயோ?—ஒரு வெட்டுக்கிளியை மிரட்டுகிறது
போல அதை மிரட்டுவாயோ? அதினுடைய நா
௨௰௪ சியின் முக்கியம் பயங்கரமாயிருக்கின்றது.-பா
ளயம் இறங்குகையில் அது வீரியமாய்க் களித்து
ஆயுதங்களைத் தரித்தவருக்கு எதிராகப் புறப்ப
௨௰௫ டும்.—அது கலங்காமலும், பட்டையத்துக்குப்
பின்வாங்காமலும் பயப்படுதலை நகைக்கும்.—
௨௰௬ அப்புறாத்தூணியும், மின்னுகிற ஈட்டியும், அம்
௨௰௭ பும், அதற்கு எதிராக இரைகிறபோது,—அது
உதறிப் படபடென்று தரையைக் குழிபறித்து,
எக்காளத்தின் தொனியை எண்ணாதேபோகும்.-
௨௰௮ எக்காளத்தொனிக்கு அது கிகியென்று கனைக்
கின்றது; யுத்தத்தையும், சேர்வைக்காரரின் ஆர
வாரத்தையும், ஆர்ப்பரிப்பையும் தூர இருந்து
மோப்பம் பிடிக்கின்றது.

உன்னுடைய உணர்வினாலே கழுகு பறந்து ௨௰௯
தெற்குக்கு எதிராகத் தன் செட்டைகளை விரிக்
கிறதோ?-உன்னுடைய கற்பனையினாலே கழுகு ௩௰
உயரப்பறந்து உயரத்திலே தன் கூட்டைக் கட்
டுமோ? — அது கன்மலையிலும், கன்மலையின் ௩௰௧
நுனியிலும், அரணான தலத்திலும் வாசம்பண்ணி
இராத்தங்கும்.—அங்கேயிருந்து இரையை வேவு ௩௰௨
பார்க்கின்றது; அதின் கண்கள் தூர இருந்து
அதை நோக்குகின்றன.—அதின் குஞ்சுகள் இரத் ௩௰௩
தத்தை உறிஞ்சும்; பிணங்கள் எங்கேயோ அங்
கே அது சேருமென்றார்.

பின்னையும் கர்த்தர் யோபுக்கு உத்தரவுகொ ௩௰௪
டுத்துச் சொன்னதாவது:—சர்வத்துக்கும் வல்ல ௩௰௫
வரோடே நீ வழக்காடினதற்குப் புத்திவந்ததோ?
பராபரனைக் குற்றம்பிடிக்கிறவன் இவைகளுக்கு
உத்தரவு சொல்லக்கடவானென்றார்.

அப்போது யோபு கர்த்தருக்குப் பிரதியுத்தார ௩௰௬
மாகச் சொன்னதாவது: — இதோ நான் அற்ப ௩௰௭
னடைவாய்ப் பேசினேன்; நான் உமக்கு என்ன
மறுஉத்தரவு சொல்லுவேன்; என் கையினால்
என் வாயைப் பொத்திக்கொள்ளுகிறேன்.—நான் ௩௰௮
ஒருதரம் இரண்டுதரம் பேசினேன், இனி நான்
பிரதியுத்தாரம் கொடுக்காமலும் பேசாமலும் இரு
ப்பேனென்றான்.

## ௪௰. அதிகாரம்.

௧. பராபரன் தமது நீதியையும், வல்லமையையும் ஞானத்தையும், யோபுக்கு உணர்த்தினது. ௰. கடல்குதிரையையும், ௨௰. முதலையையும் குறித்தது.

அப்போது கர்த்தர் பெருங்காற்றில் இருந்து ௧
யோபுக்கு உத்தரவு கொடுத்துச் சொன்னதாவது:

இப்போதும் புருஷனைப்போல நீ உன் அரை ௨
யைக் கட்டிக்கொள்; நாம் உன்னைக் கேட்போம்,
நீ நமக்கு அறிவி.-நீ நம்முடைய நியாயத்தையும் ௩
அபத்தமாக்குவாயோ? நீ உன்னை நீதிமானாக்கிக்
கொள்ளும்படிக்கு நம்மை ஆகாதவர் என்று தீர்ப்
பாயோ? — பராபரனுடைய புயத்தைப்போல ௪
உனக்குப் புயமுண்டோ? அவரைப்போலச் சத்
தமாய் இடியை முழங்கப்பண்ணுவாயோ?-இப் ௫
போதும் நீ முக்கியத்தாலும், மகத்துவத்தாலும்
உன்னை அலங்கரித்து, மகிமையையும் கனத்தை
யும் தரித்துக்கொள்.—நீ உன் கோபத்தின் மூர்க் ௬
கங்களை இறைத்து, அகந்தையுள்ளவனையெல்
லாம் பார்த்து அவனைத் தாழ்த்து,-பெருமையுள் ௭
ளவனையெல்லாம் நோக்கி, அவனைப் பணியப்
பண்ணி, துன்மார்க்கரை அவர்களிருக்கிற ஸ்த
லத்திலே நிர்மூலமாக்கு.-நீ அவர்களை ஏகமாய்ப் ௮
புழுதியிலே புதைத்து, அவர்கள் முகங்களை அந்
தரத்திலே கட்டிப்போடு. — அப்போது உன்
வலதுகை உனக்கு இரட்சிப்புண்டுபண்ணும் ௯
என்று நாமும் உன்னைப் புகழுவோம்.

இப்போதும் கடல் குதிரையை நீ நோக்கிப்பார்; ௰
உன்னைப்போல அதையும் உண்டாக்கினோம்;

அது மாட்டைப்போலப் புல்லைத் தின்னும்.—
௰௧ அதோ அதினுடைய பெலன் அதின் இடுப்பி
லும், அதின் வீரியம் அதினுடைய வயிற்றின்
௰௨ நரம்புகளிலுமிருக்கின்றன.—அது தன் வாலைக்
கேதுருமரத்தைப்போல நீட்டுகின்றது; அதினு
டைய இடுப்பின் நரம்புகள் பின்னிக்கொண்டி
௰௩ ருக்கின்றன.—அதின் எலும்புகள் கெட்டியான
வெண்கலத்தைப்போலும், அதின் அஸ்திகள்
இரும்புக் கம்பிகளைப்போலும் இருக்கின்றன.-
௰௪ பராபரன் நடத்தின கிரியைகளில் அது பிர
தான ஒரு கிரியை, அதை உண்டாக்கினவர்
அதற்கு அதின் பட்டையத்தைக்கூடக் கட்டி
௰௫ வைத்தார்.-மேடுகள் அதற்கு மேய்ச்சலை முளைக்
கப்பண்ணுகையால், சகலவித காட்டுமிருகங்
களும் அங்கே விளையாடிக்கொண்டிருக்கும்.—
௰௬ அது நிழலுள்ள செடிகளின்கீழும், நாணலின்
மறைவிலும், உளையிலும் படுத்துக்கொள்ளும்.—
௰௭ தழைகளின் நிழல் அதைக் கவிந்து, நதியின்
௰௮ அலரிகள் அதைச் சூழ்ந்துகொள்ளும். — இதோ
நதி புரண்டாலும் அது தீவிரிக்காது; யோர்தான்
நதியத்தனை தண்ணீர் அதின் வாயளவு வந்தாலும்
௰௯ அது நம்பிக்கையாயிருக்கும்.—அதின் கண்கள்
பார்த்திருக்க அதைப் பிடிப்பார்களோ? மூக்க
ணாங்கயிறுகளை அதின் மூக்கில் குத்தலாமோ?

௨௰ முதலையைத் தூண்டிலினாலே அல்லது அதின்
நாக்கை நீ தாழவிடுகிற கயிற்றினாலே பிடித்தி
௨௧ ருப்பாயோ?—அதின் மூக்கை நார்க்கயிறுபோட்
டுக் கட்டுவாயோ? குறட்டினால் அதின் தாடை
௨௨ யை உருவக்குத்துவாயோ?—அது உனக்கு அ
நேக விண்ணப்பங்களைப் பண்ணி, உன்னைப்
பார்த்து இச்சகவார்த்தைகளைச் சொல்லுமோ?-
௨௩ அது உன்னோடே உடம்படிக்கை பண்ணுமோ?
அதைச் சதாகாலம் அடிமைகொள்ளுவாயோ?-
௨௪ ஒரு குருவியோடே விளையாடுகிறதுபோல நீ
அதனோடே விளையாடி, அதை நீ உன் பெண்
பிள்ளைகளண்டையிலே கட்டிவைப்பாயோ?—
௨௫ கூட்டாளிகள் அதைப் பிடிக்கப் பிரயத்தனப்
பட்டு, அதை வியாபாரிகளுக்குப் பங்கிடுவார்க
௨௬ ளோ?-நீ அதின் தோலிலே அநேக அம்புகளையும்,
அதின் தலையிலே அநேகம் மண்டாக்களையும்
௨௭ எறிவாயோ?—அதின்மேல் உன் கையைப்போடு,
யுத்தத்தை நினை, இனி அப்படிச் செய்யாய்.—
௨௮ இதோ அதைப் பிடிக்கலாம் என்று நம்பினவன்
மோசம்போய் அதைப் பார்த்தவுடனே விழுவா
னல்லவோ?

## சக. அதிகாரம்.

௧. முதலையிலே காணப்படுகிற பராபரனுடைய பெரிய வல்லமை.

௧ அதை எழுப்பத்தக்க தயிரியவானில்லாதிருக்
கையில் நமக்குமுன்பாக நிலைநிற்பவன் யார்?—
௨ தனக்குப் பதில் கொடுக்கப்பட முந்தி நமக்குக்
கொடுத்தவன் யார்? எல்லா வானங்களின் கீழி
ருக்கிறது நம்முடையது.
௩ அதின் கனுக்களும், அதின் வீரியமும், அதின்
உடல் இசைவின் நேர்த்தியும் இன்னதென்று
நாம் சொல்லாதிருப்பதில்லை.—அது மூடியிருக் ௪
கிற அதின் உடுப்பைக் கிளப்புபவன் யார்? அதின்
இரண்டு தாடைகளின் நடுவே கடிவாளம் போ
டத்தக்கவன் யார்? — அதினுடைய முகத்தின் ௫
கதவைத் திறப்பவன் யார்? சுற்றுமிருக்கிற அதி
னுடைய பல்லுகள் பயங்கரமானவைகள். —
முத்திரைப்பதிப்பாய் அழுத்தமாய் அடர்த்தி ௬
யான அதின் பரிசைகளின் அரணிப்பு மகா
முக்கியமுள்ளது.—அவைகள் நடுவே காற்றும் ௭
புகமாட்டாத நெருக்கமாய் அவைகள் ஒன்றோ
டொன்று இணைக்கப்பட்டிருக்கின்றன.-அவை ௮
கள் ஒன்றோடொன்று ஒட்டிக்கொண்டு இணை
பிரியாமல் பிடித்துக்கொண்டிருக்கின்றன. —
அதின் தும்மல்கள் வெளிச்சத்தைப் பிரகாசிக் ௯
கப்பண்ணுகின்றன; அதின் கண்கள் விடியத்
தாரத்தின் புருவங்களைப்போலிருக்கின்றன.—
அதின் வாயிலிருந்து எரிகிற பந்தங்கள் புறப் ௰
பட்டு, அக்கினிப் பொறிகள் தெறிக்கப்படும்.—
கொதிக்கிற சட்டியிலும், கொப்பரையிலும் ௰௧
இருந்து புறப்படுகிறதுபோல, அதின் நாசிக
ளிலிருந்து புகை புறப்படுகின்றது. — அதின் ௰௨
சுவாசம் கரிகளைக் கொளுத்திவிடும்; அதின் வா
யிலிருந்து சுவாலை புறப்படும்.—அதின் கழுத் ௰௩
திலே பெலன் வாசமாயிருக்கின்றது; சஞ்சலப்
படுத்துதல் அதற்குக் களிப்பாயிருக்கும். — அ ௰௪
தின் உடல்கூறுகள் அசையாத கெட்டியாய்
ஒன்றோடொன்று ஒட்டிக்கொண்டிருக்கின்
றன. — அதின் இருதயம் கல்போலவும், ஏந்தி ௰௫
ரத்தின் அடிக்கல்லைப்போலவும் கெட்டியாயி
ருக்கிறது.
அது எழும்பும்போது பலசாலிகள் பயந்து, ௰௬
அது நொறுக்கிவிடுமென்று பாவநிவிர்த்தியைத்
தேடுகிறார்கள். — யாவனொருவன் அதின் அண் ௰௭
டையில் சேர்ந்தால், அவனுடைய பட்டைய
மாகிலும், ஈட்டி வல்லையம் நேரிசமென்கிலும்
அதற்கு நிற்காது.—அது இரும்பை வைக்கோ ௰௮
லாகவும், வெண்கலத்தை உளுத்த மரமாகவும்
எண்ணுகிறது.-அம்பு அதைத் துரத்தாது; கவண் ௰௯
கல்லுகள் அதற்குத் துரும்பாகும்.—அது பெருங் ௨௰
கல்லுகளைத் தாளடிகளாக எண்ணி, ஈட்டியின்
அசைக்குதலை நகைக்கும்.
அதின்கீழாகக் கூர்மையான கல்லுகள் கிடந் ௨௧
தாலும், அது சேற்றின்மேல் ஓடுகிறதுபோலக்
கருக்கானதின்மேல் ஓடும்.—அது ஆழத்தைக் கா ௨௨
ய்கிற பானையைப்போலப் பொங்கப்பண்ணிக்
கடலைத் தயிலத்தைப்போலக் கலக்குகிறது.—
அது தனக்குப் பின்னாக இருக்கிற வழியை வி ௨௩
ளங்கப்பண்ணுகிறதினால், ஆழமானது வெளுப்
பான நரையைப்போலக் காண்பிக்கும்.—தரை ௨௪
யின்மேல் வளருகிறதொன்றும் அதற்குஒப்பல்ல;
அது பயமற்றிருக்க உண்டுபண்ணப்பட்டது.—
அது மேட்டிமையானதையெல்லாம் கொஞ்சமா ௨௫
கப் பார்க்கிறது; அது பெருமையான சீவன்க
ளுக்கெல்லாம் இராசாவாயிருக்கிறதென்றார்.

## ௪உ. அதிகாரம்.

க. யோபு பராபரனுக்குத் தன்னைத் தாழ்த்தினதும், எ. பராபரன் அவன்மேல் பட்சம்வைத்து, சிநேகிதர்களை அவனுக்கு அமையப்பண்ணி அவனை ஏற்றுக்கொண்டதும், ௰. அவர் அவனை உயர்த்தி ஆசீர்வதித்ததும், ௰௬. யோபுடைய வயதும் மரணமும்.

க அப்போது யோபு கர்த்தருக்குப் பிரதியுத்தார
உ மாகச் சொன்னதாவது:—தேவரீர் சகலத்தையும்
செய்ய வல்லவர்; தேவரீர் செய்ய நினைத்தது
தடைபடக்கூடாதென்கிறதை அறிந்திருக்கி
௩ றேன். — தான் அறியாத ஆலோசனையை மூடி
வைக்கத்தக்கவன் யார்? ஆகையால் நான் உணரா
ததையும், என் புத்திக்கு மிஞ்சினதையும், நான்
அறியாததையும் அலப்பினேனென்கிறேன்.—
௪ இப்போதும் நீர் கேள்விகொடும், அப்போது
நான் பேசுவேன்; உம்மைக் கேட்பேன், நீர் என்
ரு னைப்போதியும்.—என் செவியினால் உம்முடைய
சொல்கேட்டேன்; இப்போது என் கண்ணும்
௬ உம்மைப் பார்க்கிறது.—ஆகையால் நான் என்னை
அருவருத்து, தூளிலும் சாம்பலிலுமிருந்து மனஸ்
தாபப்படுகிறேனென்றான்.

எ கர்த்தர் இந்த வார்த்தைகளை யோபோடே பே
சினபின் சம்பவித்ததேதெனில், கர்த்தர் தேமா
னியனான எலிப்பாசைப் பார்த்துச் சொன்ன
தாவது: உன்மேலும் உன்னுடைய இரண்டு
சிநேகிதர்மேலும் நமக்குக் கோபமூண்டது;
ஏனெனில் நம்முடைய தாசனாகிய யோபு பே
சினதுபோல, நீங்கள் நம்மைக்குறித்து நிதான
அ மாய்ப் பேசினதில்லை. — இப்போதும் நீங்கள்
ஏழு எருதுகளையும் ஏழு ஆட்டுக்கடாக்களையும்
பிடித்துக்கொண்டு, நம்முடைய தாசனாகிய யோ
பின் அண்டைக்குப்போய், உங்களுக்காகச்
சர்வாங்கதகனங்களைப் பலியிடுங்கள்; நம்மு
டைய தாசனாகிய யோபும் உங்களுக்காக வேண்
டுதலைச் செய்யக்கடவான்; ஏனென்றால் நாம்
உங்களை உங்கள் மூடத்தனத்துக்குத் தக்கதாக
நடத்தாதபடிக்கு, அவன் முகத்தையே பார்ப்
போம்; ஏனெனில் நம்முடைய தாசனாகிய
யோபு பேசினதுபோல, நீங்கள் நம்மைக்குறித்து
நிதானமாய்ப் பேசினதில்லையென்றார்.

அப்போது தேமானியனான எலிப்பாசும் சூகி கூ
யனான பில்தாதும் நாகமாத்தியனான சோப்பா
ரும் போய், கர்த்தர் தங்களுக்குச் சொன்னபடி
செய்தார்கள்; அப்போது கர்த்தர் யோபின் முகத்
தைப் பார்த்தார்.

யோபு தன் சிநேகிதருக்காக வேண்டிக்கொள் ௰
ளுகையில், கர்த்தர் அவன் சிறையிருப்பை மாற்
றினார்; யோபுக்கு முன்னிருந்தவையெல்லாவற்
றையும்பார்க்கிலும் இரண்டத்தனையாய்க் கர்த்தர்
அவனுக்கு வரப்பண்ணினார். — அப்போது ௰க
அவனுடைய எல்லாச் சகோதரரும் சகோதரி
களும் முன் அவனுக்கு அறிமுகமான அனைவ
ரும் அவனண்டைக்கு வந்து, அவனுடனே,
அவன் வீட்டிலே அப்பம்புசித்து, கர்த்தர் அவன்
மேல் வரவிட்டிருந்த சகல தீங்கின்நிமித்தம்
அவனுக்காக அங்கலாய்த்து, அவனுக்கு ஆறுதல்
சொல்லி, அவரவர் அவனுக்கு ஒவ்வொரு தங்
கக்காசையும், அவரவர் ஒவ்வொரு பொன் ஆப
ரணத்தையும் அவனுக்குக் கொடுத்தார்கள்.

யோபின் முன்னிருப்பைப்பார்க்கிலும் கர்த் ௰உ
தர் அவன் பின்னிருப்பை ஆசீர்வதித்ததினால்
அவனுக்குப் பதினாலாயிரம் ஆடுகளும், ஆறா
யிரம் ஒட்டகங்களும், ஆயிரம் ஏர்க்குண்டைக
ளும், ஆயிரம் கழுதைகளும் உண்டாயின.—ஏழு ௰௩
குமாரரும், மூன்று குமாரத்திகளும் அவனுக்குப்
பிறந்தார்கள். — மூத்தவளுக்கு எமிமாளென்ற ௰௪
பேரும், இரண்டாவதுக்குக் கெத்சீயாளென்ற
பேரும், மூன்றாவதுக்குக் கேரேனாப்பூக் என்ற
பேரும் இட்டான்.—தேசத்திலெங்கும் யோபின் ௰ரு
குமாரத்திகளைப்போலச் சவுந்தரியமான பெண்
பிள்ளைகள் காணப்பட்டதில்லை; அவர்களுக்கு
அவர்கள் தகப்பன் அவர்கள் சகோதரரின் நடு
விலே சுதந்தரம்கொடுத்தான்.

இதற்குப்பிறகு யோபு நூற்றுநாற்பதுவரு ௰௬
ஷம் உயிரோடிருந்து, நாலு தலைமுறையாகத்
தன் பிள்ளைகளையும் தன் பிள்ளைகளுடைய பிள்
ளைகளையும் கண்டான்.—பிற்பாடு யோபு முதிர்ந் ௰எ
தவனும் பரிபூரணவயதுள்ளவனுமாய் மரித்
தான்.

PSALMS.

# ஞானசங்கீத புத்தகம்.

## ௧. சங்கீதம்.

*௧. தேவபத்தியுள்ளவர்களின் ஆனந்தமும், ௪. அது இல்லாதவர்களின் துக்கமும்.*

௧ ஆகாதவர்களுடைய ஆலோசனையில் நடவா
மலும், பாவிகளுடைய வழியில் நில்லாமலும்,
சரசக்காரர் உளுக்காந்திருக்கிற இடத்தில் உ
௨ ளுக்காராமலும்,[1] — கர்த்தருடைய வேதத்தின்
மேல் பிரியமாயிருந்து, அவருடைய வேதத்தில்
இரவும்பகலும் தியானிப்பாயிருக்கிற மனுஷன்
௩ பாக்கியவான்.[2] — அவன் நீர்வாய்க்கால்களின்
ஓரமாய் நடப்பட்டு, தன் காலத்திலே தன் கனி
யைத் தந்து, இலை உதிராதிருக்கிற மரத்தைப்
போல இருப்பான்; அவன் செய்வதெல்லாம்
வாய்க்கும்.[3]
௪ ஆகாதவர்கள் அப்படியிராமல் காற்றுப் பறக்
௫ கடிக்கும் பதரைப்போல இருக்கிறார்கள்.[4]—ஆ
கையால் ஆகாதவர்கள் நியாயத்தீர்ப்பிலும், பாவி
கள் நீதிமான்களின் சபையிலும் நிலைநிற்பதில்
௬ லை.—ஏனென்றால் கர்த்தர் நீதிமான்களின் வழி
யை அறிந்திருக்கிறார்; ஆகாதவர்களின் வழி
யோ அழியும்.

## ௨. சங்கீதம்.

*௧. கிறிஸ்துவின் இராச்சியமும், ௰. அதை அடையும்படி இராசாக்கள் ஏவப்பட்டதும்.*

௧ சாதிகள் கொந்தளித்து, சனசதளங்கள் விருதா
௨ காரியத்தைச் சிந்திப்பானேன்?[5]—கர்த்தருக்கு
விரோதமாகவும், அவர் அபிஷேகம்பண்ணின
வருக்கு விரோதமாகவும், பூமியின் இராசாக்கள்
எழும்பிக்கொண்டு, தலைவர் ஏகமாய் ஆலோ
௩ சனைபண்ணி, — அவர்கள் கட்டுகளை அறுத்து,
அவர்கள் கயிறுகளை நம்மைவிட்டு எறிந்துபோடு
வோமென்கிறார்கள்.[6]
௪ பரமண்டலங்களில் வாசமாயிருக்கிறவர்
நகைப்பார்; ஆண்டவர் அவர்களைப் பரியாசம்
௫ பண்ணுவார்.[7]—அப்போது தம்முடைய கோ
பத்திலே அவர்களோடே பேசி, தம்முடைய
உக்கிரத்திலே அவர்களைக் கலங்கப்பண்ணு
௬ வார்.—நாம் நம்முடைய பரிசுத்த பர்வதமாகிய
சீயோன்மீதில் நம்முடைய இராசாவை அபி
ஷேகம்பண்ணினோம்.
௭ தீர்மானத்தின் விபரம் சொல்லுவேன்: கர்த்தர்
என்னுடனே, நீர் நம்முடைய குமாரன்; இன்று
நாம் உம்மைச் செனிப்பித்தோமென்றும்,[8]
நம்மைக் கேளும், அப்போது சாதிகளை உமக் ௮
குச் சுதந்தரமாகவும், பூமியின் எல்லைகளை உமக்
குச் சொந்தமாகவும் கொடுப்போம்.[9] — இருப் ௯
புக்கோலால் அவர்களை நொறுக்கி, குயக்கலத்
தைப்போல அவர்களைச் சிதறடிப்பீரென்றும்
சொன்னார்.[10]
இப்போதும் இராசாக்களே, உணர்வடையுங் ௰
கள்; பூமியின் நியாயாதிபதிகளே, புத்திமான்க
ளாய் நடந்துகொள்ளுங்கள். — பயத்துடனே ௰௧
கர்த்தருக்கு ஊழியம்செய்யுங்கள்; நடுக்கத்து
டனே களிகூருங்கள்.[11]—குமாரன் கோபமடை ௰௨
யாமலும் நீங்கள் வழியில் அழியாமலுமிருக்கும்
படிக்கு அவரை முத்திசெய்யுங்கள்; ஏனென்
றால் கொஞ்சக்காலத்திலே அவருடைய கோபம்
பற்றியெரியும்; அவரை அண்டிக்கொள்ளுகிற
யாவரும் பாக்கியவான்கள்.[12]

## ௩. சங்கீதம்.

*௧. பராபரனுடைய பாதுகாத்தல்.*

---

*(தாவீது தன் குமாரன் அப்சலோமுக்குத் தப்பி ஓடிப்போகையிலே பாடின சங்கீதம்.)*

கர்த்தாவே என் சத்துருக்கள் எத்தனையாய்ப் பெ ௧
ருகினார்கள்; எனக்கு விரோதமாய் எழும்புகிற
வர்கள் அநேகர்.[13]—அவனுக்குப் பராபரனிடத் ௨
திலே இரட்சிப்பில்லை என்று என் ஆத்துமா
வைக்குறித்துச் சொல்லுகிறவர்கள் அநேகராயி
ருக்கிறார்கள்; சேலா.[14]
ஆனால் கர்த்தாவே, தேவரீர் எனக்கான கேட ௩
யமும், என் மகிமையும், என் தலையை உயர்த்து
கிறவருமாயிருக்கிறீர்.[15]—என் சத்தத்தினாலே கர் ௪
த்தரைநோக்கிக் கூப்பிட்டேன்; அப்போது
தமது பரிசுத்த பர்வதத்திலிருந்து என் விண்
ணப்பத்தைக் கேட்டார்; சேலா.—நான் படுத் ௫
துக்கொண்டு நித்திரைபண்ணினேன், விழித்
துக்கொண்டேன், ஏனெனில் கர்த்தர் என்னைத்
தாங்குகிறார்.[16]—சுற்றிலும் எனக்கு விரோதமா ௬
கப் பாளயமிறங்குகிற பதினாயிரம்பேருக்குப்
பயப்படேன்.[17]—கர்த்தாவே, எழுந்திரும்; என் ௭
பராபரனே என்னை இரட்சியும்; ஏனெனில்
நீர் என் பகைஞரெல்லாரையும் தாடையிலே அ
டித்து, ஆகாதவர்களுடைய பல்லுகளைத் தகர்த்து
விடுகிறீர்.—இரட்சிப்பு கர்த்தருடையதே; தேவ ௮

---

1 சங். ௨௬. ௪. ௨ கொரி. ௬. ௰௪-௰௭. எபே. ௫. ௰௧. ௧ கொரி. ௰௫. ௩௩. — 2 சங். ௱௰௯. ௧. ௭. ௫ மோ. ௬. ௧, ௬. கொலோ. ௩. ௰௬. — 3 சங். ௯௨. ௰௩-௰௭. எரே. ௰௭ ௮. யோசு. ௧. ௮. — 4 மத். ௩. ௰௨. — 5 அப். ௪. ௨௫. ௨௮. — 6 எரே. ௨. ௨௰. — 7 சங். ௫௯. ௮. வாக். ௧. ௨௬, ௨௭. — 8 அப். ௰௩. ௩௩. எபி. ௧. ௫: ௫. ௫. — 9 சங். ௨௨. ௨௮, ௨௯: ௭௨. ௮, ௰௧. — 10 அறி. ௨. ௨௬, ௨௭: ௰௨. ௫: ௰௯. ௰௫. — 11 பிலி. ௨. ௰௨. — 12 அறி. ௬. ௰௬, ௰௭. சங். ௩௪. ௮. — 13 சங். ௨௫. ௰௯. — 14 ௨ சாமு. ௰௬. ௭, ௮. — 15 சங். ௭. ௰௧. ௧ மோ. ௰௫. ௧. — 16 சங். ௪. ௮. வாக். ௩. ௨௪. — 17 சங். ௨௭. ௩.

ரீருடைய ஆசீர்வாதம் உம்முடைய சனத்தின் மேலிருப்பதாக; சேலா.[1]

## ௪. சங்கீதம்.

௧. தாவீது தன் விண்ணப்பத்தைக் கேட்க மன்றாடினதும், ௨. தன் சத்துருக்களைக் கண்டித்து எச்சரித்ததும், ௬. மனுஷனுடைய சவுக்கியம் பராபரனுடைய தயையினால் உண்டானதென்பதும்.

(கின்னாரங்களில் வாசிக்க இராகத்தலைவனுக்கு ஒப்புவிக்கப்பட்ட தாவீதின் சங்கீதம்.)

௧ என் நீதியின் பராபரனே, நான் கூப்பிடுகை
யில் என்னைக் கேளும்; நெருக்கத்தில் இருக்
கிற எனக்கு விசாலமுண்டாக்கினீர்; என்மேல்
இரங்கி என் விண்ணப்பத்தைக் கேளும்.[2]
௨ மனுப்புத்திரரே, எந்தமட்டும் என் கீர்த்தி
யை அவமானமாக்கி, அவத்தத்தைச் சிநேகித்து,
௩ பொய்யைத் தேடுவீர்கள்; சேலா.—கர்த்தர் தம்
முடைய சன்மார்க்கனை அதிசயமாய் நடத்துகி
றாரென்று அறியுங்கள்; நான் கர்த்தரைநோக்
௪ கிக் கூப்பிடுகையில் அவர் கேட்பார்.—நீங்கள்
சினம் அடைந்தால் பாவம்செய்யாதிருங்கள்;
உங்கள் படுக்கையில் உங்கள் இருதயத்திலே
௫ பேசி அமர்ந்திருங்கள்; சேலா.[3]—நீதியின் பலி
களைச் செலுத்தி, கர்த்தரின்மேல் நம்பிக்கையா
யிருங்கள்.[4]
௬ நமக்கு நன்மை காண்பிப்பவன் யாரென்று
சொல்லுகிறவர்கள் அநேகர்; உம்முடைய முகத்
தின் வெளிச்சத்தை எங்கள்மேல் ஏறெடும் கர்த்
௭ தாவே.[5] — அவர்களுக்குத் தானியமும் திராட்
சப்பழஇரசமும் பெருகியிருக்கிற காலத்தினு
டைய சந்தோஷத்திலும், அதிக சந்தோஷத்தை
௮ என் இருதயத்திலே தந்தீர்.—சமாதானத்திலே சய
னித்துக்கொண்டும், நித்திரைபண்ணியுமிருப்
பேன்; ஏனெனில் கர்த்தாவே, தேவரீர் ஒருவரே
என்னைச் சுகமாய்த் தங்கப்பண்ணுகிறீர்.[6]

## ௫. சங்கீதம்.

௧. தாவீது மன்றாடித் தன் செபத்தியானத்தை வெளிவிட்டதும், ௪. பராபரன் பொல்லாதவர்கள்மேல் தயை செய்யாரென்பதும், ௭. தாவீது தன் விசுவாசத்தை வெளிப்படுத்தி, தன்னை நடத்தவும், ௰. சத்துருக்களை அழிக்கவும், ௰௧. தேவபத்தியுள்ளவர்களைக் காக்கவும் பராபரனை மன்றாடினதும்.

(நெகிலோத்தில் வாசிக்க இராகத்தலைவனுக்கு ஒப்புவிக்கப்பட்ட தாவீதின் சங்கீதம்.)

௧ கர்த்தாவே, என் வார்த்தைகளுக்குச் செவிகொ
டும்; என் தியானத்தை உணர்ந்துகொள்ளும்.[7]—
௨ என் இராசாவே, என் பராபரனே, என் கூப்பி
டுதலின் சத்தத்தைக் கவனியும், ஏனெனில் உம்
௩ மைநோக்கி விண்ணப்பம்செய்வேன். — கர்த்
தாவே, காலமே என் சத்தத்தைக் கேட்பீராக;
காலமே உமக்கு நேரே வந்து ஆயத்தமாகிக் காத்
௪ திருப்பேன்.[8]—ஏனென்றால் தேவரீர் ஆகாமியத்
தை விரும்புகிற தேவனல்ல, பொல்லாதவன்
௫ உம்மிடத்திலே தரிகொள்ளமாட்டான்.[9]— வீம்
புக்காரர் உம்முடைய கண்களுக்குமுன்பாக
நிலைநிற்பதில்லை; எல்லா அக்கிரமக்காரரையும்
பகைக்கிறீர்.[10]—பொய்பேசுகிறவர்களை அழிப் ௬
பீர்; இரத்தப்பிரியனையும், சூதுள்ள மனுஷனை
யும் கர்த்தர் அருவருக்கிறார். — நானோ உம்மு ௭
டைய மிகுந்த கிருபையினாலே உமது வீட்டுக்
குள்ப் பிரவேசித்து, உம்முடைய பரிசுத்த தேவா
லயச் சந்நிதியில் உமக்குப் பயந்து பணிந்து
கொள்ளுவேன்.
கர்த்தாவே, என் சத்துருக்களின்நிமித்தம் என் ௮
னை உம்முடைய நீதியிலே நடத்தி, எனக்குமுன்
பாக உம்முடைய வழியைச் செம்மைப்படுத்
தும்.[11]—ஏனெனில் அவர்கள் வாயிலே நிசமில் ௯
லை; அவர்கள் உள்ளம் கேடுபாடுகள்; அவர்கள்
தொண்டை திறக்கப்பட்ட பிரேதக்குழியாயி
ருக்கின்றது; தங்கள் நாவினால் இச்சகம் பேசுகி
றார்கள்.[12]—பராபரனே, அவர்கள் தங்கள் ஆலோ ௰
சனைகளை விட்டுவிடும்படிக்கு, அவர்களைக் குற்
றவாளிகளாக்கும்; அவர்கள் துரோகங்களினு
டைய திரட்சியின்நிமித்தம் அவர்களைத் தள்ளி
விடும்; ஏனென்றால் தேவரீருக்கு விரோதமாய்க்
கலகம்பண்ணினார்கள்.
ஆனால் உம்மை அண்டிக்கொள்ளுகிறவர்கள் ௰௧
எல்லாரும் சந்தோஷித்து, என்றென்றைக்கும்
கெம்பீரிப்பார்களாக; ஏனெனில் அவர்களைக்
காப்பாற்றுகிறீர்; உம்முடைய நாமத்தைச் சிநே
கிக்கிறவர்கள் உம்மிலே களிகூருவார்கள்.[13]—
ஏனென்றால் கர்த்தாவே, தேவரீர் நீதிமானை ஆசீர் ௰௨
வதித்து, அவனைத் தயையென்ற கேடயத்தினா
லே சூழ்ந்துகொள்வீர்.

## ௬. சங்கீதம்.

௧. தாவீது தன் வியாதியில் முறையிட்டதும், ௮. விசுவாசத்தினால் சத்துருக்களைச் செயித்ததும்.

(எண்ணரம்புக் கின்னாரங்களில் வாசிக்க இராகத்தலைவனுக்கு ஒப்புவிக்கப்பட்ட தாவீதின் சங்கீதம்.)

கர்த்தாவே, உம்முடைய கோபத்தில் என்னைக் ௧
கடிந்துகொள்ளாதிரும், உம்முடைய உக்கிரத்
தில் என்னைத் தண்டியாதிரும்.[14]—என்மேல் இர ௨
ங்கும் கர்த்தாவே, ஏனெனில் நான் பெலனற்றி
ருக்கிறேன், என்னைக் குணமாக்கும் கர்த்தாவே,
ஏனெனில் என் எலும்புகள் கலங்கியிருக்கின்
றன.—என் ஆத்துமா மிகவும் கலங்கியிருக்கின் ௩
றது; கர்த்தாவே, நீர் எந்தமட்டும் இரங்காதிருப்
பீர்.[15]—திரும்பும் கர்த்தாவே, என் ஆத்துமாவை ௪
விடுவியும், உம்முடைய கிருபையின்நிமித்தம்
என்னை இரட்சியும்.—ஏனென்றால் மரணத்தில் ௫
உம்மை நினைவுகூருவதில்லை; பாதாளத்தில் உம்
மைத் துதிப்பவன் யார்.-என் பெருமூச்சுக்களால் ௬
இளைத்தேன்; இராமுழுதும் என் மெத்தையை
மிகவும் ஈரிக்கப்பண்ணி, என் கண்ணீரால் என்

1 எரே. ௧,௨௧. அதி எ.௰: ௰௯.௧. 2 சங். ௯. ௰: ௨௭ ௭.—3 எபே. ௪. ௨௬.—4 சங். ௫௧. ௰௯. ௰. 5 சங் ௩௧. ௰௭. ௪ மோ.௬.௨௬. 6 சங். ௩. ௩.—7 சங். ௪ ௨: ௯௭.௧. 8 சங்.௮௮. ௰௪.

9 சங். ௯௪. ௰௭.—10 மத். ௭.௨௩. 11 சங்.௨௭.௰௧.—12 உரோ. ௩.௰௩. 13 சங். ௬௬, ௪. 14 சங். ௩௮. ௨. எரே. ௰.௨௪. 15 சங். ௭௬. ௯.

௭ கட்டிலை நனைக்கிறேன்.—என் கண்கள் சலிப்பி
னால் குழிவிழுந்துபோயின; என் சத்துருக்கள்
அனைவர்நிமித்தம் திரைந்துபோயிற்று.[1]
௮ அக்கிரமக்காரராகிய நீங்களெல்லாரும் என்
னைவிட்டு அகன்றுபோங்கள்; ஏனென்றால் கர்த்
தர் என் அழுகையின் சத்தத்தைக் கேட்டார்.—
௯ கர்த்தர் என் விண்ணப்பத்தைக் கேட்டார்; கர்த்
௰ தர் என் ஜெபத்தை ஏற்றுக்கொள்ளுகிறார்.[2]–என்
பகைஞரெல்லாரும் வெட்கி, மிகவும் கலங்கிப்
போவார்கள்; அவர்கள் பின்னாகத் திரும்பி,அசுப்
பிலே வெட்கப்படுவார்கள்.[3]

## ௭. சங்கீதம்.

௧ தாவீது சத்துருக்களின் பொருமை தன்னைவிட்டு நீங்க, மன்றாடித் தன் மனத்தூய்மையை வெளியிட்டதும், ௰ தான் காப்பாற்றப்பட்டதையும், சத்துருக்களின் அழிவையும் விசுவாசத்தினால் கண்டதும்.

(எமினியின் குமாரனாகிய கூஷியினுடைய வார்த்தை
கள்நிமித்தம் தாவீது கர்த்தரைநோக்கிப் பாடின
துயரகீதம்.)

௧ என் பராபரனாகிய கர்த்தாவே, உம்மை நம்பி
யிருக்கிறேன்; என்னைப் பின்தொடருகிறவர்க
ளெல்லாருக்கும் தேவரீர் என்னை விலக்கி இரட்
௨ சித்து, — சத்துரு சிங்கம்போல என் ஆத்துமா
வைப் பிடித்துப்போய், விடுவிக்கிறவன் இல்லா
மையால் பீறுதபடிக்கு என்னைத் தப்பப்பண்
ணும்.[4]
௩ என் பராபரனாகிய கர்த்தாவே, நான் இதைச்
செய்ததும், என் கைகளில் நியாயக்கேடிருக்கிற
௪ தும்,[5]—எனக்கு முகாந்தரமில்லாமல் இடுக்கண்
செய்தவனைத் தப்பவேபண்ணின நான் என்
னோடே சமாதானமாயிருந்தவனுக்குத் தீமை
௫ செய்ததும் உண்டானால்,—பகைஞன் என் ஆத்
துமாவைத் தொடர்ந்துபிடித்து,என் பிராணனைத்
தரையிலே தள்ளி மிதித்து, என் கனத்தைத் தூளி
லே தாழ்ந்திப்போடக்கடவான்; சேலா.
௬ கர்த்தாவே,நீர் உம்முடைய கோபத்தில் எழுந்தி
ருந்து எனக்கு இடுக்கண்செய்கிறவர்களுடைய
மூர்க்கங்களின்நிமித்தம் உயர்ந்து, எனக்காக
விழித்துக்கொள்ளும்; ஏனெனில் நியாயத்தீர்ப்
௭ பைக் கற்பித்தீரே.–அப்போது சனங்களுடைய
கூட்டம் உம்மைச் சூழும்; அவர்களுக்காக உய
௮ ரத்துக்குத் திரும்பும்.[6] — கர்த்தர் சனங்களுக்கு
நியாயம்செய்வார்; கர்த்தாவே, என் நீதியின்ப
டியும் என்னிலுள்ள உண்மையின்படியும் எனக்
௯ கு நியாயம்செய்யும்.— ஆகாதவர்களின் பொல்
லாங்கை ஒழியப்பண்ணுமே; நீதிமானை நிலைநி
றுத்துவீராக; ஏனெனில் நீதியுள்ள பராபரனாகிய
தேவரீர் இருதயங்களையும், உள்ளிந்திரியங்களை
யும் சோதித்தறிகிறவர்.[7]
௰ என் கேடயம் செம்மை இருதயத்தாரை இ
௰௧ ரட்சிக்கிற பராபரனிடத்தில் இருக்கிறது.—பரா
பரன் நீதியுள்ள நியாயாதிபதியும், நாள்தோறும்
சினத்திருக்கிற தேவனுமானவர்.[8]—மனந்திருப் ௰௨
பாதிருந்தால், தம்முடைய பட்டையத்தைக்
கருக்காக்குவார்; அவர் தம்முடைய வில்லை நா
ணேற்றி அதை முஸ்திப்பாக்கி,—அவனுக்குச் ௰௩
சாவுக்கினமான ஆயுதங்களை ஆயத்தம்பண்ணி
னார்; தம்முடைய அம்புகளை அக்கினி அம்புக
ளாக்குவார்.
இதோ அக்கிரமத்தைப் பெறக் கர்ப்பவேத ௰௪
னையாயிருக்கிறான்; தீவினையைக் கர்ப்பம்
தரித்தான்; ஆனால் அவத்தத்தைப் பெறுவான்.[9]—
குழியை வெட்டி அதைப் பள்ளமாக்கினான்; ௰௫
தான் பறித்த குழியிலே விழுவான்.[10]—அவன் ௰௬
தீவினை அவன் சிரசின்மேலே திரும்பி, அவன்
கொடுமை அவன் உச்சந்தலையின்மேல் இறங்
கும்.[11]–நான் கர்த்தரை அவருடைய நீதியின்படி ௰௭
துதித்து உன்னதமான கர்த்தருடைய நாமத்தைக்
கீர்த்தனம்பண்ணுவேன்.

## ௮. சங்கீதம்.

௧. பராபரனுடைய மகத்துவம் தம்முடைய கிரியைகளினாலும், மனுஷர்மேல் வைத்த அன்பினாலும் பிரபலப்பட்டிருக்கிறதென்பது.

(கீதத்திலே வாசிக்க இராகத்தலைவனுக்கு ஒப்புவிக்கப
பட்ட தாவீதின் சங்கீதம்.)

எங்கள் ஆண்டவராகிய கர்த்தாவே, தேவரீரு ௧
டைய நாமம் பூமியெங்கும் எத்தனை பிரபலமா
யிருக்கின்றது; உம்முடைய மகத்துவத்தை வா
னங்களுக்கு மேல்வட்டமாக்கினீர். — பகைஞ ௨
னையும், பழிகாரனையும் ஒயப்பண்ண, தேவரீர்
உம்முடைய சத்துருக்களின் நிமித்தம் குழந்தை
கள் பாலகர் வாயினாலே பெலன் உண்டுபண்
ணினீர்.
நான் உம்முடைய விரல்களின் கிரியையாகிய ௩
உம்முடைய வானங்களையும் நீர் ஆயத்தப்படுத்
தின சந்திரனையும் நட்சத்திரங்களையும் பார்க்கும்
போது,[13]—மனுஷன், நீர் அவனை நினைக்கிறதற் ௪
கும்,மனுஷனுடைய குமாரன், நீர் அவனை நோக்
கிப்பார்க்கிறதற்கும் எம்மாத்திரம் என்கிறேன்.[14]-
நீர் அவரைக் கொஞ்சத்தியாலம் தேவதூதரிலும் ௫
சிறியவராக்கினீர்; ஆனால் மகிமையினாலும்,கனத்
தினாலும் அவரை முடிசூட்டினீர்.[15]— நீர் அவரு ௬
க்கு உம்முடைய கைகளுடைய கிரியைகளின்
மேல் ஆளுகை தந்து, சருவத்தையும்,[16]–ஆடுமாடு ௭
முதலானவைகள் எல்லாவற்றையும், அதனோ
டேகூட வெளியின் மிருகங்களையும்,[17]—ஆகா ௮
சத்துப் பட்சிகளையும், சமுத்திரத்து மச்சங்களை
யும், கடல்களின் பாதைகளில் நடமாடுகிறதை
யும் அவர் பாதங்களுக்குக் கீழ்ப்படுத்தினீர்.—
எங்கள் ஆண்டவராகிய கர்த்தாவே, தேவரீரு ௯
டைய நாமம் பூமியெங்கும் எத்தனை பிரபலமாயி
ருத்கின்றது.

---

1 சங். ௩௧. ௯.–2 சங். ௰. ௰௭.–3 சங். ௩௫. ௪: ௪௰. ௰௫, ௰௪. ௨ சாமு. ௰௯. ௭, ௮, ௰௧.—4 சங். ௰. ௯. 5 யோபு. ௩௧. ௭. ௫.
6 சங். ௯௪. ௮.—7 எரே. ௰௧. ௨௰: ௰௭. ௰. அதி. ௨. ௨.—8 சங். ௯. ௫. 9 யோபு. ௰௫. ௩௫.—10 சங். ௯. ௰௫. வாக். ௨௬. ௨௭.
11 வாக். ௫. ௨௨.—12 மத். ௨௧. ௰௬. சங். ௨௯. ௧.—13 சங். ௯௨. ௨௯. 14 எபி. ௨. ௬. சங். ௱௪௪. ௩. யோபு. ௭. ௰௭.
15 எபி. ௨. ௭, ௯. 16 ௧ கொரி. ௰௫. ௨௭. 17 ௧ மோ. ௧. ௨௮: ௯. ௨.

## ௯. சங்கீதம்.

*௧. பராபரன் நீதிசெலுத்தலைக்குறித்துத் தாவீது அவரைத் துதித்ததும், ௰௧. மற்றவர்களும் அவரைத் துதிக்கத் தூண்டிவிட்டதும், ௰௩. அவரைத் துதிக்கத் தனக்கு ஏதுவுண்டாக மன்றாடினதும்.*

*(முதலாபேனியிலே வாசிக்க இராகத்தலைவனுக்கு ஒப்புவிக்கப்பட்ட தாவீதின் சங்கீதம்.)*

௧ என் முழு இருதயத்தாலும் கர்த்தரைத் துதிப்
பேன்; உம்முடைய அதிசயங்களை எல்லாம்
௨ விவரிப்பேன்.— உமக்குள் மகிழ்ந்து களிகூரு
வேன்; உன்னதமானவரே, உம்முடைய நாமத்
தைக் கீர்த்தனம்பண்ணுவேன்.[1]
௩ ஏனென்றால் என் சத்துருக்கள் பின்னாகத்
திரும்பி, உம்முடைய முகத்துக்குமுன்பாக இல்
௪ லாதபடிக்கு இடறுண்டழிந்தார்கள்.[2] — அதே
தெனில் நீர் என் நியாயத்தையும் என் வழக்கை
யும்தீர்த்து, நீதியுள்ள நியாயாதிபதியாய் இரா
௫ சாசனத்தின்மேல் உளுக்காந்தீர்.[3] — சாதிகளை
உதம்பி, ஆகாதவனை அழித்து, அவர்கள் நாமத்
தை என்றென்றைக்குமுள்ள சதாகாலங்களுக்
கும் கொலைத்துப்போட்டீர்.
௬ சத்துரு பண்ணின பாழ்க்கடிப்புகள் என்
றென்றைக்கும் முடிவடைந்தன; ஏனென்றால்
அவர்கள் பட்டணங்களை நிர்மூலம் பண்ணினீர்;
அவர்கள் பேர் அவர்களோடும்கூட அழிந்தது.—
௭ கர்த்தரோவெனில் என்றென்றைக்குமிருப்பார்;
தம்முடைய ஆசனத்தை நியாயத்தீர்ப்புக்கு ஆயத்
௮ தம்பண்ணினார்.[4]—அவர் பூச்சக்கரத்தை நீதியாய்
நியாயந்தீர்த்து, சனசதளங்களுக்குச் செம்மை
௯ யாய் நீதஞ்செய்வார்.[5] — சிறுமைப்பட்டவனுக்
குக் கர்த்தர் உயர்ந்த அடைக்கலமாயிருப்பார்;
நெருக்கப்படுகிற காலங்களில் அவர் உயர்ந்த
௰ அடைக்கலம்தானே.[6]—ஆகையால் உமது நாமத்
தை அறிந்தவர்கள் உம்மை நம்பியிருப்பார்கள்;
ஏனெனில் கர்த்தாவே, உம்மைத் தேடுகிறவர்க
ளைத் தேவரீர் கைவிடுகிறதில்லை.[7]
௰௧ சீயோனில் வாசமான கர்த்தரைக் கீர்த்தனம்
பண்ணி, அவர் செய்கைகளைச் சனசதளங்களுக்
௰௨ குள்ளே அறிவியுங்கள்.—ஏனென்றால் சிந்துண்ட
இரத்தப்பழிகளை அவர் கேட்டு அவைகளை நினை
க்கிறார்; சிறுமையானவர்களுடைய கூப்பிடுதலை
மறவார்.[8]
௰௩ என்னை மரணவாசல்களிலிருந்து உயரப்பண்
ணுகிற கர்த்தாவே, நான் உம்முடைய துதிகளை
எல்லாம் சீயோன் குமாரத்தியின் வாசல்களில்
விவரித்து, உம்முடைய இரட்சிப்பினாலே களி
௰௪ கூரும்படிக்கு, — தேவரீர் என்மேல் இரங்கி,
என்னைப் பகைக்கிறவர்களால் எனக்கு வரும்
சிறுமையைப் பாரும்.
௰௫ சாதிகள் தாங்கள் வெட்டின பள்ளத்திலே
அமிழ்ந்தினார்கள்; அவர்கள் மறைவாய் வைத்த
வலையிலே அவர்கள் கால் அகப்பட்டுக்கொண்
டது.[9] — கர்த்தர் தாம் செய்த நியாயத்தினால் ௰௬
அறியப்பட்டார்; ஆகாதவன் தன் கைகளுடைய
செய்கையிலே சிக்கப்பட்டான்; இது தியானிக்
கப்படத்தக்கது; சேலா.—ஆகாதவர்களும் பரா ௰௭
பரனை மறக்கிற எல்லாச் சாதிகளும் நரகத்துக்
குத் திரும்புவார்கள். — ஏனெனில் எளியவன் ௰௮
என்றைக்கும் மறக்கப்படுவதில்லை; சிறுமைப்
பட்டவர்களுடைய காத்துக்கொள்ளுதல் நித்தி
யகாலமாய்க் கெட்டுப்போயிருப்பதுமில்லை.—
மனுஷன் பெலன்கொள்ளாதபடிக்கு எழுந்தி ௰௯
ரும் கர்த்தாவே; சாதிகள் உம்முடைய முகத்
துக்குமுன்பாக நியாயந்தீர்க்கப்படக்கடவர்
கள்.—சாதிகள் தாங்கள் மனுஷரென்று அறியும் ௨௰
படிக்கு, அவைகளுக்குப் பயமுண்டாக்கும் கர்
த்தாவே.

## ௰. சங்கீதம்.

*௧. தாவீது பொல்லாதவனுடைய கொடுமையைக்குறித்துப் பராபரனிடத்தில் முறையிட்டதும், ௰௨. அதற்கு நிவிர்த்திகிடைக்க மன்றாடினதும், ௰௬ தன் நம்பிக்கையை வெளியிட்டதும்.*

கர்த்தாவே, ஏன் தூரத்திலே நிற்கிறீர்? நெருக் ௧
கப்படுகிற காலங்களில் ஏன் உம்மை மறைக்கி
றீர்?—ஆகாதவன் தன் பெருமையினாலே சிறு ௨
மையானவனைக் கொடூரமாய்த் துன்பப்படுத்து
கிறான்; ஆனால் அவர்கள் சதிநினைத்த தீவினைக
ளிலே பிடிக்கப்படக்கடவர்கள்.[10]—ஏனெனில் ௩
ஆகாதவன் தன் ஆத்துமாவின் ஆசையைத் தொட்
டுப் பெருமைபாராட்டுகிறான்; பொருளாசைக்
காரன் தன்னை ஆசீர்வதித்துக் கர்த்தரை அசட்
டைபண்ணுகிறான்.[11]—ஆகாதவன் தன் முகநெ ௪
றிப்பினால் ஒன்றுக்கும் விசாரப்படாதே போகி
றான்; அவன் நினைவுகளெல்லாம் பராபரன் இல்
லை என்பதே.[12]—அவன் வழிகள் எப்போதும் ௫
வாதை உண்டாக்குகிறவைகள்; உம்முடைய
நியாயத்தீர்ப்புகளோ அவன் பார்வைக்கு மகா
உயர்ந்த தூரமாயிருக்கின்றன; தன் எதிராளிகளை
எல்லாம் சீறுகிறான்.—தன் இருதயத்திலே நான் ௬
அசைக்கப்படாமலும், தலைமுறை தலைமுறை
யாகத் தீங்கடையாமலும் இருப்பேனென்கி
றான்.[13] — அவன் வாய் சர்ப்பனையினாலும், கப ௭
டங்களினாலும், தந்திரத்தினாலும் நிறைந்திருக்
கிறது; அவன் நாவின்கீழ்த் தீவினையும் அக்கிரம
மும் இருக்கின்றன.[14]—கிராமங்களிலே பதிவி ௮
ருந்து, ஒளிப்பிடங்களிலே குற்றமில்லாதவ
னைக் கொல்லுகிறான்; அவன் கண்கள் ஏழை
யைச் சூட்டாய்ப் பார்க்கின்றன.—தன் கெபி ௯
யிலிருக்கிற சிங்கத்தைப்போலே மறைவிலே
பதிவிருக்கிறான்; சிறுமையானவனைப் பிடிக்கப்
பதிவிருந்து, சிறுமையானவனைத் தன் வலைக்
குள் இழுத்துப் பிடிக்கிறான்.[15] — ஏழைகளின் ௰
கூட்டம் அலைச்சல்பட்டு ஒடுங்குண்டு, அவன்
வல்லமையில் விழுகிறது. — பராபரன் அதை ௰௧
மறந்தாரென்றும், அவர் தம்முடைய முகத்தை

---

1 சங். கக. அ: கூஉ. உ.
2 சங். உ௦. க.—3 சங். எ. ௰உ.
4 சங். கூக. ௰க: கூஅ. க.
5 சங். கூக. ௰க: கூஅ. க.
6 சங்.கஎ.கக.—7 சங். கச. இ. க.
8 இ மோ. கஉ. சக.
9 சங். எ. ௰க.—10 சங். ௫எ. எ.
11 இ மோ. உக. ௰அ, உ௦.
12 சங். ௰ச. க.—13 அதி. ௰அ. எ.
14 உரோ. க. ௰ச.
15 சங். கஎ. கஉ.

மறைத்து, அதை என்றைக்கும் பாராதிருப்பா
ரென்றும் தன் இருதயத்திலே சொல்லுகிறான்.[1]
௰௨ பராபரனாகிய கர்த்தாவே, எழுந்திருந்து உம்மு
டைய கையை உயர்த்தும்; சிறுமையானவர்களை
௰௩ மறவாதிரும்.—அவர் அதைக் கேட்டு விசாரிப்ப
தில்லையென்று ஆகாதவன் தன் இருதயத்திலே
சொல்லி, பராபரனை அசட்டைபண்ணுவா
௰௪ னேன்?—அதைப் பார்த்திருக்கிறீரே, ஏனெனில்
தேவரீர் அவர்களுக்குப் பதில்செய்ய அவர்கள்
தீவினையையும் அலட்டுண்டாக்குதலையும் நோக்
கியிருக்கிறீர்; அது உம்முடைய கையிலிருக்கி
றது; உமக்கு ஏழை தன்னை ஒப்புவிக்கிறான்;
திக்கற்றவனுக்குத் தேவரீர் சகாயராயிருக்கி
௰௫ றீர்.[2]—நீர் ஆகாதவனுடைய புயத்தை முறித்து,
பொல்லாதவனுடைய ஆகாமியம் காணாதேபோ
கும்மட்டும் அதைத் தேடி விசாரியும்.
௰௬ கர்த்தர் என்றென்றைக்குமுள்ள சதாகாலங்க
ளுக்கும் இராசாவாயிருக்கிறார்; புறச்சாதியார்
அவருடைய தேசத்திலிருந்து அழிந்துபோவார்
௰௭ கள்.[3]-கர்த்தாவே, சிறுமைப்பட்டவர்களுடைய
வேண்டுதலைக் கேட்டிருக்கிறீர்; அவர்கள் இருத
௰௮ யத்தைத் திடப்படுத்துவீர்.—மண்ணான மனுஷன்
அப்புறம் பெலவந்தம்செய்யத் தொடராதப
டிக்குத் தேவரீர் திக்கற்றவனுக்கும் ஒடுக்கப்பட்
டவனுக்கும் நீதிசெய்ய, உம்முடைய செவிக
ளைச் சாய்த்துக் கவனிப்பீர்.[4]

## ௰௧. சங்கீதம்.

௧ தாவீது தன் சத்துருக்களுக்கு அஞ்சாதபடி, பராபரனால் தன்னைத் தைரியப்படுத்தினதும், ௪. பராபரனுடைய பராமரிப்பும் நீதியும்.

(இராகத்தலைவனுக்கு ஒப்புவிக்கப்பட்ட தாவீதின் சங்கீதம்.)

௧ கர்த்தரை நம்பியிருக்கிறேனே, பின்னை எப்படி
நீங்கள் என் ஆத்துமாவுடனே பட்சியைப்போல
உங்கள் மலையிலே பறந்தலையுங்கள் என்கிறீர்
௨ கள்.—ஏனெனில் இதோ ஆகாதவர்கள் வில்லை
வளைத்து, செம்மை இருதயத்தாரின்மேல் அந்த
காரத்தில் எய்ய, தங்கள் அம்புகளை நாணின்
௩ மேலே தொடுக்கிறார்கள்.[5]—அஸ்திபாரங்கள்தா
னும் நிர்மூலமாகிறதே, நீதிமான் என்னசெய்
வான்?
௪ கர்த்தர் தம்முடைய பரிசுத்த அரமனையிலிருக்
கிறார்; கர்த்தருடைய ஆசனம் பரமண்டலங்க
ளில் இருக்கிறது; அவருடைய கண்கள் பார்க்
கின்றன; அவருடைய இமைகள் மனுப்புத்திர
௫ ரைச் சோதித்தறிகின்றன.[6]—கர்த்தர் நீதிமானைச்
சோதித்தறிகிறார்; ஆனால் ஆகாதவனையும் கொடு
மையைச் சிநேகிக்கிறவனையும் அவருடைய
௬ ஆத்துமா பகைக்கின்றது.[7] — ஆகாதவர்கள்மே
லே சிதைவுகளையும், அக்கினியையும், கெந்த
கத்தையும் வருஷிக்கப்பண்ணுவார்; கடுங்கோ
டைக்கொந்தளிப்பு அவர்கள் குடிக்கும் பாத்தி
௭ ரத்தின் பங்கு.[8]—ஏனெனில் கர்த்தர் நீதிபரனும்,
நீதிகளைச் சிநேகிக்கிறவருமாயிருக்கிறார்; அவரு
டைய முகம் செம்மையானவனை நோக்கியிருக்
கிறது.

## ௰௨. சங்கீதம்.

௧. தாவீது மனிதரால் ஆறுதலற்றவனாய்ப் பராபரனுடைய உதவியை மன்றாடினதும், ௩. அவன் பொல்லாதவர்கள்மேல் வரும் அவருடைய நியாயத்தீர்ப்புகளினாலும், சோதிக்கப்பட்ட வாக்குத்தத்தத்தின் நம்பிக்கையினாலும் ஆறுதலடைந்ததும்.

(எண்ணரம்புக் கின்னரங்களில் வாசிக்க இராகத்தலைவனுக்கு ஒப்புவிக்கப்பட்ட தாவீதின் சங்கீதம்.)

இரட்சியும் கர்த்தாவே, ஏனெனில் சன்மார்க்கர் ௧
அற்றுப்போய், உண்மையுள்ளவர்கள் மனுப்
புத்திரரில் குறைந்திருக்கிறார்கள். — அவரவர் ௨
தங்களுக்கடுத்தவரோடே இச்சக உதடுகளால்
அபத்தம் பேசுகிறார்கள்; இருமனதாலே பேசுகி
றார்கள்.—கர்த்தர் எல்லா இச்சக உதடுகளையும், ௩
பெருமைகளைப் பேசிக்கொண்டிருக்கிற நாவை
யும் அறுப்பாராக.—அவர்கள் எங்கள் நாவுகளால் ௪
மேல்வட்டமாயிருப்போம்; எங்கள் உதடுகள்
எங்களோடிருக்கின்றனவென்றும், யார் எங்க
ளுக்கு ஆண்டவனென்றும் சொல்லுகிறார்கள்.
சிறுமைப்பட்டவர்களுடைய பாழாக்குதலின் ௫
நிமித்தமும், எளியவர்களுடைய பெருமூச்சின்
நிமித்தமும், இப்போது நாம் எழுந்திருந்து,
அவனால் சீறுண்டவனைச் சுகபத்திரமாயிருக்கப்
பண்ணுவோமென்று கர்த்தர் சொல்லுகிறார்.—
கர்த்தருடைய வார்த்தைகள் மண்குகையிலே ௬
எழுதரம் உருக்கிப் புடமிடப்பட்ட வெள்ளிக்
கொப்பான சுத்தச் சொற்களாயிருக்கின்றன.[9]—
கர்த்தாவே, தேவரீர் அவர்களைக் காப்பாற்றி, அவ ௭
னவனை என்றைக்கும் இந்தச் சந்ததிக்கு விலக்
கிக் காப்பீராக.—மனுப்புத்திரரில் சண்டாளர் ௮
உயர்ந்திருக்கும்போது, ஆகாதவர்கள் எங்கும்
சுற்றித்திரிகிறார்கள்.[10]

## ௰௩. சங்கீதம்.

௧. தாவீது தேவ உதவி தாமதப்பட்டதின்மேல் முறையிட்டதும், ௩. தடுக்கப்பட்ட தேவ கிருபைக்காக மன்றாடினதும், ௫. தேவ இரக்கத்தைக் குறித்துப் பெருமைபாராட்டினதும்.

(இராகத்தலைவனுக்கு ஒப்புவிக்கப்பட்ட தாவீதின் சங்கீதம்.)

கர்த்தாவே, எந்தமட்டும் என்னை மறந்துகொண் ௧
டே இருப்பீர்? எந்தமட்டும் உம்முடைய முகத்
தை எனக்கு மறைப்பீர்.—எந்தமட்டும் என் ஆத் ௨
துமாவிலே யோசனைகளையும், என் இருதயத்தி
லே சஞ்சலத்தையும், நித்தம் நித்தம் வைப்பேன்?
எந்தமட்டும் என் சத்துரு என்மேல் உயரு
வான்? — என் பராபரனாகிய கர்த்தாவே, நீர் ௩
நோக்கிப்பார்த்து என் செபத்தைக் கேட்டரு
ளும்.—அவனை மேற்கொண்டேனென்று என் ௪
பகைஞன் சொல்லாமலும் நான் தள்ளம்பாறுகி

1 சங். ௯௪. ௧, ௭.—2 சங். ௬௮. ௫. ௰௫. சங். ௯. ௰௮.—4 ௫ மோ.
3 சங். ௨௯. ௰: ௧௪௬. ௰. அறி. ௰௧. ௰. ௰௮.—5 சங். ௩௭. ௫.

6 எரே. ௧௧. ௨.—7 சங். ௫. ௫. 9 வாக். ௩௦. ௫.
8 ௧ மோ. ௰௯. ௨௪. சங். ௭௫. ௮. 10 வாக். ௨௮. ௰௨.

றதினால் என் சத்துருக்கள் களிகூராமலும் இருப்பதற்காக, தேவரீர் என் கண்களை நான் மரணநித்திரை அடையாதபடிக்கு வெளிச்சமாக்கும்.[1]
௫ நானோ உம்முடைய கிருபையின்மேலே நம்பிக்கையுற்றிருக்கிறேன்; உம்முடைய இரட்சிப்பினால் என் இருதயம் களிகூரும்; கர்த்தர் எனக்கு நன்மைசெய்தாரென்று அவரைப் பாடுவேன்.

## ௰௪. சங்கீதம்.

௧. தாவீது மனுஷனுடைய சுபாவக்கேட்டை விவரித்ததும், ௪. பொல்லாதவர்களின் மனச்சாட்சியின் வெளிச்சத்தினாலே அவர்களை உணர்த்தினதும், ௭. பராபரனுடைய இரட்சிப்பை மகிமைப்படுத்தினதும்.

(இராகத்தலைவனுக்கு ஒப்புவிக்கப்பட்ட தாவீதின் சங்கீதம்.)

௧ பராபரன் இல்லையென்று பைத்தியக்காரன் தன் இருதயத்தில் சொல்லுகிறான்; தங்களைக் கெடுத்துக் கிரியைகளில் தங்களை அருவருப்பாக்கினார்
௨ கள்; நன்று செய்கிறவனில்லை.[2]—பராபரனைத் தேடுகிற உணர்வுள்ளவன் உண்டோவென்று பார்க்க, கர்த்தர் பரமண்டலங்களிலிருந்து மனுப்புத்
௩ திரரைக் கண்ணோக்கினார்.—எல்லாரும் வழிவிலகி ஏகமாய்க் கெட்டுப்போனார்கள்; நன்றுசெய்கிறவனில்லை; அப்படிப்பட்ட ஒருவனாகிலுமில்லை.[3]
௪ அப்பத்தைப் பட்சிக்கிறதுபோலே நம்முடைய சனத்தைப் பட்சிக்கிற சகல அக்கிரமக்காரருக்கும் அறிவுதானும் இல்லையோ? கர்த்த
௫ ரைத் தொழுதுகொள்ளார்கள்.[4]—அங்கே மெத்தவும் அருக்களித்தார்கள்; ஏனெனில் பராபரன் நீதிமானுடைய சந்ததியோடே இருக்கிறார்.—
௬ கர்த்தர் சிறுமையானவனுடைய நம்பிக்கை என்று நீங்கள் அவனுடைய ஆலோசனையை வெட்
௭ கப்படுத்தினீர்கள்.—ஆ சீயோனிலிருந்து இஸ்ரவேலுடைய இரட்சிப்பு வந்தால் தாவிளை; கர்த்தர் தம்முடைய சனத்தின் சிறையிருப்பைத் திருப்பும்போது, யாக்கோபுக்குக் களிப்பும் இஸ்ரவேலுக்கு மகிழ்ச்சியும் உண்டாம்.[5]

## ௰௫. சங்கீதம்.

௧. தாவீது சீயோன் பட்டணத்தாரைக்குறித்துச் சொன்னது.

(தாவீதின் சங்கீதம்.)

௧ கர்த்தாவே, யார் உம்முடைய கூடாரத்திலே தங்குவான்? யார் உம்முடைய பரிசுத்த பர்வதத்திலே வாசமாயிருப்பான்.[6]
௨ உண்மையாய் நடந்து நீதியை நடப்பித்து, மனதாரச் சத்தியத்தைப் பேசுகிறவன்தானே.[7]—
௩ தன் நாவினாலே பின்புறணி பேசாமலும், தனக்கடுத்தவனுக்குத் தீங்குசெய்யாமலும், தன்னைச் சேர்ந்தவன்மேல் நிந்தனையான பேச்சை எடுக்
௪ காமலுமிருக்கிறான்.—ஆகாதவன் அவன் பார்வைக்கு இழிவானவன்; கர்த்தருக்குப் பயந்தவர்களையோ கனம்பண்ணுகிறான்; தன் நஷ்டத்துக்கு ஆணையிட்டும் தவறாதிருக்கிறான்.—தன் ௫
பணத்தை அடுத்திக்குக் கொடாமலும், குற்றமில்லாதவனுக்கு விரோதமாகப் பரிதானம் வாங்காமலும் இருக்கிறான்; இப்படிச்செய்கிறவன் என்றென்றைக்கும் அசைக்கப்படுவதில்லை.[8]

## ௰௬. சங்கீதம்.

௧. தாவீது தன்னுடைய நன்மையை நம்பாமல் விக்கிரக ஆராதனையைப் பகைத்து, தன்னைக் காத்துக்கொள்ளப் பராபரனிடத்திற்கு ஓடினது. ௯. தான் அழைக்கப்படுதலையும், உயிர்த்தெழுதலையும், நித்தியசீவனையும் குறித்த நம்பிக்கையைக் காட்டினது.

(தாவீதின் பொற்பணதிக் கீதம்.)

பராபரனே, என்னைக் காப்பாற்றும்; ஏனெனில் ௧
உம்மை நம்பியிருக்கிறேன். — கர்த்தருடனே, ௨
தேவரீர் என் ஆண்டவராயிருக்கிறீரெனறும்,—
பூமியிலுள்ள பரிசுத்தவான்களுக்காகவும், நான் ௩
என்னுடைய எல்லாப் பிரியத்தையும் வைத்திருக்கிற மகாத்துமாக்களுக்காகவும், என் நன்மை உம்மிடத்தில் எனக்கில்லாதே போமென்றும்
சொன்னேன்.—வேறொருவரண்டைக்குத் தீவி ௪
ரிக்கிறவர்களின் வேதனைகள் பெருகும்; அவர்கள் பட்சிக்கிற இரத்தமான ஊற்றுதல்களை நான் செலுத்தாமலும், அவர்கள் நாமங்களை என் உதடுகளில் ஏற்றுக்கொள்ளாமலும் இருப்பேன்.[9] —
கர்த்தர் என் பங்குவீதமும் என் பாத்திரத்தின் ௫
பங்குமானவர்; தேவரீர் எனக்கு வரும் வீதத்
தைக் காப்பாற்றுகிறீர்.—நேர்த்தியான இடங்க ௬
ளிலே வீதம் எனக்குக் கிடைத்தது; ஆம், வடிவமான சுதந்தரம் எனக்குண்டாயிற்று.
எனக்கு ஆலோசனையான கர்த்தரைத் துதிப் ௭
பேன்; அதற்கு இராக்காலங்களிலும் என் உள்
ளிந்திரியங்கள் என்னை ஏவும். — கர்த்தரை எப் ௮
போதும் எனக்குமுன்பாக வைத்துக்கொள்ளுகிறேன்; அவர் என் வலதுபாரிசத்திலிருக்கிறபடி
யால் அசைக்கப்படாதிருப்பேன்.[10]—ஆகையி ௯
னாலே என் இருதயம் பூரித்து, என் மகிமை களிகூர்ந்திருக்கிறது; என் மாம்சமும் பத்திரமாய்த்
தாபரித்திருக்கும்.—ஏனெனில் என் ஆத்துமா ௰
வைப் பாதாளத்திலே விடீர்; உம்முடைய பரி
சுத்தவானை அழிவைக் காணவொட்டீர்.[11]—சீவ ௰௧
னுடைய வழியை எனக்குத் தெரியப்படுத்துவீர்; உம்முடைய சமுகத்திலே சந்தோஷங்களின் பரிபூரணமும், உம்முடைய வலதுபாரிசத்திலே செல்வபாக்கியங்களும் என்றென்றைக்கும் இருக்கும்.

## ௰௭. சங்கீதம்.

௧. தாவீது தன் உத்தமத்தை நம்பி, சத்துருக்கள் அடங்க, பராபரன் காப்பாற்றுதலை மன்றாடினது. ௮. அவர்கள் அகங்காரத்தையும் தந்திரத்தையும், பேராசையையும் காட்டினது. ௰௩. தனக்கிருந்த நம்பிக்கை உறுதியினால் அவர்கள் நீங்க வேண்டிக்கொண்டது.

(தாவீதின் விண்ணப்பம்.)

கர்த்தாவே, நீர் நீதியைக் கேட்டருளி, என் கூப் ௧
பிடுதலைக் கவனித்து, கபட உதடுகளால் வராத

1 சங். ௰௯. ௨.—2 சங். ௯௪.௨.௩. 5 சங். ௯௪. ௭.—6 சங். ௫.
3 ௨ரோ.௩.௰-௰௨.—4 ஓசெ.௭ ௰௪. 7 எசா. ௩௩.௰௫.—8 ௨ பே. ௨௨.
௨௫. லூக். ௭. ௨௩
9 எசா. ௧. ௰௩, ௰௫
10 அப். ௨. ௨௫-௨௮.—11 அப். ௨. ௨௧-௩௩; ௰௩. ௩௫-௩௭.

௨ என் விண்ணப்பத்துக்குச் செவிகொடும்.—[1]உம்
முடைய சந்நிதியிலிருந்து என் நியாயம் வெளிப்
படவும், உம்முடைய கண்கள் நிதானங்களைப்
௩ பார்க்கவும்கடவது.—நீர் என் இருதயத்தைச்சோ
தித்து, அதை இராக்காலத்தில் விசாரித்து, என்
னைப் புடமிட்டுப்பார்த்து, ஒன்றும்கண்டுபிடியா
திருக்கிறீர்; என் வாய் மீறுதபடிக்குத் தீர்மானம்
௪ பண்ணினேன்.—மனுஷன் செய்காரியங்களுக்
கோவென்றால், நான் என்னை உம்முடைய உத
டுகளின் சொற்படி துஷ்டனுடைய பாதைக
௫ ளுக்கு இடைஞ்சலாய்க் காக்கிறேன்.—என் கா
லடிகள் பிசகாதபடிக்கு, என் நடைகளையும்
உம்முடைய வழிகளுக்குள்ளே திடப்படுத்தும்.
௬ பராபரனே, நான் உம்மைநோக்கிக் கூப்பிடு
கிறேன்; ஏனெனில் எனக்குக் கேள்விகொடுக்
கிறீர்; என்னண்டைக்கு உம்முடைய செவி
யைச் சாய்த்து, என் வார்த்தையைக் கேட்டரு
௭ ளும்.—உம்மை நம்புகிறவர்களை உம்முடைய வல
துகரத்துக்கு விரோதித்தெழும்புகிறவர்களின்
கைக்குத் தப்புவித்து இரட்சிக்கிறவரே, உம்மு
டைய கிருபைகளை அதிசயமானவைகளாக்
௮ கும்.—என்னைக் கண்ணின் கறுப்புவிழியைப்
௯ போலே தற்காரும்.[2]—என்னைப் பாழ்க்கடிக்கிற
துன்மார்க்கருக்கும், என்னைச் சூழ்ந்துகொள்ளு
கிற என் பிராணப் பகைஞருக்கும், மறைவாக
என்னை உம்முடைய செட்டைகளின் நிழலிலே
௰ காப்பாற்றும்.[3] — நிணம்துன்னியிருக்கிறார்கள்;
தங்கள் வாயினாலே பெருமையாய்ப் பேசுகிறார்
௰௧ கள்.—எங்கள் நடைகளில் இப்போது எங்களை
வளைந்துகொண்டார்கள்; அவர்கள் கண்கள் எங்
களைத் தரையிலேவிழப்பண்ண நோக்கிக்கொண்
௰௨ டிருக்கின்றன.—பீறுகிறதற்கு ஆசையான சிங்
கத்துக்கும், மறைவுகளிலே பதிவிருக்கிற சிங்கக்
௰௩ குட்டிக்கும் ஒப்பாயிருக்கிறான்.[4]—கர்த்தாவே,
நீர் எழுந்திருந்து அவனுக்கு முந்திக்கொண்டு
அவனை மடங்கப்பண்ணும்; கர்த்தாவே, என்
ஆத்துமாவை உம்முடைய பட்டையத்தினால் ஆ
காதவன் கைக்கும், உம்முடைய கரத்தினாலே
லோக மனுஷராகிய சனங்களின் கைக்கும் தப்
௰௪ புவியும்.—அவர்கள் பங்கு இச்சீவனில் இருக்கி
றது; அவர்கள் வயிற்றை உமது பொக்கிஷ
வைப்பினால் நிரப்புகிறீர்; அவர்கள் பிள்ளைகள்
திருப்தியாகி, தங்கள் மீதியைத் தங்கள் குழந்
தைகளுக்குப் பின்வைக்கிறார்கள்.[5]
௰௫ நானோவெனில் நீதியில் உம்முடைய சமுகத்
தைத் தரிசிப்பேன்; நான் விழிக்கும்போது உம
து சாயலால்த் திருப்தியாவேன்.[6]

## ௰௮. சங்கீதம்.

௧. தாவீது பராபரனுடைய பலபல அதிசயமான ஆசீர்வாதங்களைக்குறித்து அவரைத் துதித்தது.

(இராகத்தலைவனுக்கு ஒப்புவிக்கப்பட்ட கர்த்தருடைய தாசனாகிய தாவீதின் சங்கீதம். அவன் இந்தப் பாட்டின் வார்த்தைகளைக் கர்த்தர் தன்னைத் தன்னுடைய எல்லாச் சத்துருக்களின் கைகளுக்கும், சவுலின் கைக்கும், நீங்கலாக்கி விடுவித்தநாளிலே கர்த்தரைநோக்கிச் சொல்லி,[7] உரைத்ததாவது:)

என் பெலனாகிய கர்த்தாவே, உம்மை உட்க ௧
ருத்தாய்ச் சிநேகிப்பேன்.—கர்த்தர் என் கன்மலை ௨
யும், என் கோட்டையும், என்னை விடுவிக்கிற
வரும், என் பராபரனும், நான் நம்பியிருக்கிற
என்னுடைய குன்றும், என் கேடயமும், என்
இரட்சிப்பின் கொம்பும், என் உயர்ந்த அடைக்
கலமுமாயிருக்கிறார்.[8] — தோத்திரிக்கப்பட்ட ௩
கர்த்தரை நோக்கிக் கூப்பிட்டேன்; அப்போது
என் சத்துருக்களுக்கு நீங்கலாகி இரட்சிக்கப்
பட்டேன்.—மரணத்தின் கட்டுகள் என்னைச் ௪
சுற்றிப்பிடித்தன; பேலியாளின் வாய்க்கால்கள்
என்னை அருக்கப்பண்ணிற்று.[9] — நரகத்தின் ௫
கட்டுகள்என்னைச்சூழ்ந்துகொண்டு, மரணத்தின்
கண்ணிகள் எனக்கு நேரிட்டன.—எனக்குண் ௬
டான நெருக்கத்திலே கர்த்தரைத் தொழுகொ
ண்டு, என் பராபரனை நோக்கிக் கூப்பிட்டேன்;
தமது அரமனையிலிருந்து என் சத்தத்தைக் கேட்
டார்; என் கூப்பிடுதல் அவருக்குமுன்பாக அவர்
செவிகளில் ஏறிற்று.[10]

அப்போது பூமி அசைந்து அதிர்ந்து பர்வ ௭
தங்களின் அஸ்திவாரங்கள் குலுங்கி அசைந்தன;
ஏனெனில் எரிச்சலானார்.—புகை அவர் நாசி ௮
யாலும், பட்சிக்கிற அக்கினி அவர் வாயாலும்
எழும்பி, அவரால் நெருப்பு நெருப்புத்தழலாய்
எரிந்தது.[11] — வானங்களைத் தாழ்த்தி இறங்கி ௯
னார்; அவர் பாதங்களின் கீழே இருளிருந்தது.—
கேருபீன்மேல் ஏறிப்பறந்து, காற்றின் செட்டை ௰
கள்மீதிலே பறந்தார். — இருளைத் தம்முடைய ௰௧
ஒளிப்பிடமாக்கினார்; அவரைச் சூழ்ந்த அவரு
டைய கூடாரம் தண்ணீர்களின் இருட்டும், ஆ
காசத்துக்கார்மேகங்களுமானது.—அவர் முகதா ௰௨
வின் பிரகாசத்தினால் அவருடைய மேகங்கள்
பறிந்து விலகி, கல்மழையும் நெருப்புத்தழல்க
ளும் விழுந்தன.—கர்த்தர் வானங்களிலே குமுறி ௰௩
உன்னதமானவர் தமது சத்தத்தைக் காட்டினார்;
கல்மழையும், நெருப்புத்தழல்களும் விழுந்த
ன.[12]—தம்முடைய அம்புகளை அனுப்பி, அவர்க ௰௪
ளைச் சிதறவடித்து, மின்னல்களைத் திரளாக்கி,
அவர்களைக் கலங்கப்பண்ணினார்.—அப்போது ௰௫
கர்த்தாவே, உம்முடைய உதம்புதலாலும், உம்மு
டைய நாசியின் சுவாசக்காற்றினாலும், தண்ணீர்
களின் பள்ளங்கள் காணப்பட்டுப் பூதலத்தின்
அஸ்திபாரங்கள் திறவுண்டன.

உயரத்திலிருந்து கைநீட்டி, என்னைப்பிடித்து, ௰௬
திரள் தண்ணீர்களிலிருக்கிற என்னைத் தூக்கி
விட்டார்.—என் வலு சத்துருவுக்கும், என்னைப் ௰௭
பகைக்கிறவர்களுக்கும் என்னை விலக்கி விடு

1 சங். ௪.௨: ௭.௬.—2 சகரி. ௨. ௮. 3 சங். ௬௬. ௮.—4 சங். ௰. ௯. 5 லூக். ௰௬. ௨௫.—6 மத். ௫. ௮. 7 ௨ சாமு. ௨௨. ௨.

8 சங். ௬௬. ௪. எபி. ௨. ௰௩. 9 சங். ௱௬. ௩. 10 எசா. ௨௧. ௰௯.—11 எபி. ௰௨. ௨௧.—12 சங். ௬௬. ௧.

வித்தார்; ஏனெனில் என்னிலும் பெலத்திருந்
௰௮ தார்கள்.—என் ஆபத்தின் நாளில் எனக்கு எதி
ரிட்டு மறித்தார்கள்; ஆனால் கர்த்தர் எனக்காதர
௰௯ வாயிருந்து,-என்னை எடுத்து விசாலத்திலே வைத்
து, என்னைத் தப்புவித்தார்; ஏனெனில் என்மே
௨௰ லே பிரியமாயிருந்தார். — கர்த்தர் என் நீதிக்குத்
தக்கதாக எனக்குப் பதில் அளித்தார்; என் கைக
ளுடையை சுத்தத்துக்குத்தக்கதாக எனக்குச் சரிக்
௨௧ கட்டினார்.—அதேதென்றால் கர்த்தருடைய வழி
களைக் கைக்கொண்டுவந்தேன்; நான் என் பரா
௨௨ பரனைவிட்டு ஆகாமியம் செய்ததில்லை.—[1]ஏனெ
னில் அவருடைய நியாயங்களையெல்லாம் எனக்
குமுன்பாக நிறுத்தினேன்; நான் அவருடைய
பிரமாணங்களை என்னைவிட்டு அகற்றாமல், —
௨௩ அவர்முன்பாக மனவுண்மையாயிருந்து, என்
துர்க்குணத்துக்கு என்னை விலக்கிக் காத்தேன்.—
௨௪ ஆகையால் கர்த்தர் என் நீதிக்குத்தக்கதாகவும்,
தம்முடைய கண்களுக்கு முன்னிருக்கிற என்
கைகளின் சுத்தத்துக்குத்தக்கதாகவும் எனக்குச்
சரிக்கட்டினார்.

௨௫ சன்மார்க்கனுக்கு உம்மைச் சன்மார்க்கமாக
வும், மனஉண்மையான மனுஷனுக்கு உம்மை
௨௬ மனஉண்மையாகவும், — சுத்தனுக்கு உம்மைச்
சுத்தமாகவும், மாறுபாடானவனுக்கு உம்மைக்
௨௭ கோணலாகவும் காண்பிக்கிறீர். — ஏனெனில்
தேவரீர் சிறுமைப்பட்ட சனத்தை இரட்சித்து,
மேட்டிமையான கண்களைத் தாழ்த்துகிறீர். —
௨௮ அதேதெனில் தேவரீர் என் விளக்கை வெளிச்ச
மாக்குகிறீர்; என் பராபரனாகிய கர்த்தர் என் இரு
௨௯ ளைப் பிரகாசிப்பிக்கிறார்.[2] — உம்மோடே ஒரு
பரிவாரத்துக்குள் பாய்ந்துபோவேன்; என் பரா
௩௰ பரனோடே ஒரு மதிலைத் தாண்டுவேன்.—பரா
பரனுடைய வழி உத்தமமானது; கர்த்தருடைய
வசனம் புடமிடப்பட்டதாயிருக்கின்றது; தம்
மை நம்புகிற அனைவருக்கும் அவர் கேடயமா
௩௧ யிருக்கிறார்.—ஏனென்றால் கர்த்தரையல்லாமல்
தேவன் யார்? நம்முடைய பராபரனைத்தவிரக்
கல்மலையும் யார்?

௩௨ என்னைப் பெலத்தால் அரைகட்டி, என் வழி
௩௩ யை உத்தமமாக்குகிறவர் பராபரன்.—என் கால்க
ளை மான்களுடைய கால்களைப்போலாக்கி, என்
னுடைய உயர்தலங்களில் என்னை நிறுத்துகி
௩௪ றார். — வெண்கல வில்லும் என் புயங்களால்
வளைய, என் கைகளை யுத்தத்துக்குப் பழக்குவிக்
௩௫ கிறார்.[3]—உம்முடைய இரட்சிப்பின் கேடயத்
தையும் எனக்குத் தந்தீர்; உம்முடைய வலதுகரம்
என்னைத் தாங்குகின்றது; நீர் என்னைச் சிறுமைப்
௩௬ படுத்துகிறது என்னைப் பெரியவனாக்கும்.[4]—என்
கணைக்கால்கள் தள்ளாடாதபடிக்கு நான் நடக்கி
௩௭ றவழியை அகலமாக்கினீர். — என் சத்துருக்க
ளைப் பின்தொடர்ந்து, அவர்களைப் பிடிப்பேன்;
அவர்களை நிர்மூலமாக்குந்தனையும் திரும்பேன்.-
௩௮ அவர்கள் எழுந்திருக்கமாட்டாமல், என் பாதங்
களின்கீழ் விழத்தக்கவிதமாய் அவர்களை வெட்டு
வேன்.[5]—ஏனெனில் யுத்தத்துக்கு நீர் என்னைப் ௩௯
பெலத்தால் இடைகட்டி, என்மேல் எழும்பின
வர்களை என்கீழ் மடங்கப்பண்ணி,—நான் என் ௪௰
பகைஞரைச் சங்கரிக்கும்படியாக என் சத்துருக்
களின் பிடரியை எனக்கு ஒப்புக்கொடுத்தீர்.—
கூப்பிடுகிறார்கள், ஆனால் இரட்சிக்கிறவர் இல் ௪௧
லை; கர்த்தரைநோக்கிக் கூப்பிடுகிறார்கள்;ஆனால்
அவர்களுக்கு அவர் உத்தரவு கொடுக்கவில்லை.—
[6]அவர்களைக் காற்றுமுகத்திலே தூளாக நருக்கித் ௪௨
தெருக்களின் சேற்றைப்போல அவர்களை ஒழித்
துப்போடுவேன். — நீர் சனத்தின் சண்டைக ௪௩
ளுக்கு என்னைத் தப்பவிட்டு, என்னைச் சாதிக
ளுக்குத் தலைவனாக்குகிறீர்; நான் அறியாத சனம்
என்னைச் சேவிக்கின்றன.—அவர்கள் என் சத் ௪௪
தத்தைக் கேட்டவுடனே, எனக்குக் கீழ்ப்படிகி
றார்கள்; அந்நியரும் எனக்கு இச்சகம்பேசி அட
ங்குகிறார்கள்.—அந்நியர் முனைவிழுந்துபோய்த் ௪௫
தங்கள் அடைப்புகளிலிருந்து தத்தளிப்பாய்ப்
புறப்படுகிறார்கள்.

கர்த்தர் சீவனுள்ளவரும் என் கல்மலையானவர் ௪௬
தோத்திரிக்கப்பட்டவருமாயிருக்கிறார். — என் ௪௭
இரட்சிப்பின் பராபரனும் பழிக்குப் பழிவாங்
கும் செயங்களை எனக்களித்துச் சனங்களை
எனக்குக் கீழ்ப்படுத்தி, என் சத்துருக்களுக்கு
என்னை விலக்கிவிடுவிக்கிற பராபரனுமானவர்
உயர்ந்தவர்.[7]—என்னை எனக்கு விரோதமாய் எழு ௪௮
ம்புகிறவர்கள்மேலும் உயர்த்துகிறீர்; கொடுமை
யான மனுஷனுக்கு என்னைத் தப்புவிக்கிறீர்.[8]—
இதின்நிமித்தம் கர்த்தாவே, சாதிகளுக்குள்ளே ௪௯
உம்மை அறிக்கைபண்ணி, உம்முடைய நாமத்
துக்குச் சங்கீதம்பாடுவேன்.[9]—தாம் வைத்த இரா ௫௰
சாவுடைய இரட்சிப்புகளை அவர் பெரியவைக
ளாக்கி, தாம் அபிஷேகம்பண்ணின தாவீதுக்கும்
அவன் வித்துக்கும் என்றென்றைக்கும் கிருபை
செய்கிறார்.

## ௰௯. சங்கீதம்.

௧. சிருஷ்டிப்புகள் பராபரனுடைய மகத்துவத்தை காட்டுகிறதென்பது. ௭. அவருடைய கிருபையின் வார்த்தை. ௰௨. தாவீது தேவகிருபைக்காக மன்றாடினது.

(இராகத்தலைவனுக்கு ஒப்புவிக்கப்பட்ட தாவீதின் சங்கீதம்.)

வானங்கள் பராபரனுடைய மகிமையைச் சொ ௧
ல்லுகின்றது; ஆகாசவிரிவு அவருடைய கரங்க
ளின் கிரியையை அறிவிக்கின்றது.[10]—ஒரு பகல் ௨
மறுபகலுக்கு வார்த்தைகளைப் பொழிகின்றது;
ஒரு இரா மறு இராவுக்கு அறிவைத் தெரிவிக்
கின்றது.—அவைகளின் சத்தம் கேள்விப்படாத ௩
பாஷையுமில்லை, பேச்சுகளுமில்லை.—அவைக ௪
ளின் நூல் பூமியெங்கும், அவைகளின் வசனங்
கள் பூச்சக்கரத்துக் கடைசிமட்டும் புறப்பட்டுப்
போகின்றன; சூரியனுக்கு அவைகளில் ஒரு

1 அப். ௨௩. ௧. —2 சங். ௯௭. ௰௧: ௱௨ ௪. —3 சங். ௱௪௪. ௧.
4 சங். ௭௧. ௨௰, ௨௧. —5 சங். ௨. ௯.
6 சங். ௰௯. ௭.
7 சங். ௨௪. ௬.
8 சங். ௨௭. ௧.
9 ௨ரோ. ௰௫. ௯.
10 சங். ௯௭. ௧.

௫ கூடாரத்தைப் போட்டார்.[1]-அது தன் மணவறை
யிலிருந்து புறப்படுகிற மணவாளனைப்போலி
ருந்து பராக்கிரமசாலியைப்போலத் தன் பாதை
௬ யிலோட மகிழ்ச்சியாயிருக்கின்றது. — அது
வானங்களின் இம்முனையிலிருந்து புறப்பட்டு,
அவைகளின் அம்முனைகளுக்குச் சுற்றி ஓடு
கின்றது; அதின் காந்திக்கு மறைவானதொன்று
மில்லை.
௭ கர்த்தருடைய வேதம் குறையற்றதும், ஆத்து
மாவை உயிர்ப்பிக்கிறதுமாயிருக்கின்றது; கர்த்த
ருடைய சாட்சி சத்தியமும், பேதையை ஞானி
௮ யாக்குகிறதுமாயிருக்கின்றது.[2] — கர்த்தருடைய
கட்டளைகள் செம்மையும், இருதயத்தைச் சந்
தோஷிப்பிக்கிறவைகளுமாயிருக்கின்றன; கர்த்
தருடைய கற்பனை தூய்மையும், கண்களை வெ
௯ ளிச்சமாக்குகிறதுமாயிருக்கின்றது.[3]—கர்த்தருக்
குப் பயப்படுதல் சுத்தமும், என்றென்றைக்கும்
நிற்கிறதுமாயிருக்கின்றது; கர்த்தருடைய நியா
யங்கள் உண்மையும், அவைகள் அனைத்தும் நீதி
௰ யுமாயிருக்கின்றன.—அவைகள் பொன்னைப்பார்
க்கிலும், அநேகம் அபரஞ்சியைப்பார்க்கிலும்,
இச்சிக்கப்படத்தக்கவைகளும் தேனிலும் தேன்
கூண்டொழுகலிலும் மதுரமுமாயிருக்கின்றன.-
௰௧ [4]உம்முடைய ஊழியக்காரனும் அவைகளால்
எச்சரிக்கப்படுகிறான்; அவைகளைக் கைக்கொள்
ளுகிறதினாலே திரளான பலன் இருக்கின்றது.
௰௨ [5]பிழைகளை யுணருகிறவன் யார்? மறைவான
௰௩ வைகளுக்கு என்னை நீங்கலாக்கி அருளும்.-அகந்
தைக்காரர் என்னை ஆண்டுகொள்ளாதபடிக்கு
அடியேனை அவர்களுக்கு விலக்கிக்காரும்; அப்
போது மன உண்மையும் மகா துரோகத்துக்கு
௰௪ நீங்கலுமாயிருப்பேன். — என் கல்மலையும் என்
மீட்பருமாகிய கர்த்தாவே, உமக்குமுன்பாக
என் வாயின் வார்த்தைகளும், என் இருதயத்தின்
தியானமும் பிரீதியாயிருக்கக்கடவது.

## ௨௰. சங்கீதம்.

௧. இராயனுடைய பராக்கிரமச் செய்கையில் சபை அவனை ஆசீர்வதிப்பது. ௭. சபை பராபரனுடைய உதவியை நம்பினது.

---

(இராகத்தலைவனுக்கு ஒப்புவிக்கப்பட்ட தாவீதின் சங்கீதம்.)

௧ நெருக்கப்படுகிற நாளிலே கர்த்தர் உமது செபத்
தைக் கேட்கக்கடவர்; யாக்கோபுடைய பரா
பரனின் நாமம் உமக்கு உயர்ந்த அடைக்கலமாவ
௨ தாக.—அவர் பரிசுத்தஸ்தலத்திலிருந்து உமக்கு
ஒத்தாசையை அனுப்பி, சீயோனிலிருந்து உம்
௩ மை ஆதரிக்கக்கடவார்.-நீர் செலுத்தும் காணிக்
கைகளை எல்லாம் அவர் நினைத்து, உம்முடைய
சர்வாங்கதகனபலியைப் பிரியமாக ஏற்றுக்
௪ கொள்ளக்கடவார்; சேலா.—அவர் உம்முடைய
இருதயத்தினுடைய ஆசையின்படி உமக்குக்
கொடுத்து, உம்முடைய ஆலோசனையை எல்
௫ லாம் நிறைவேற்றக்கடவார்.[7] — நாங்கள் உமது
இரட்சிப்பினாலே கெம்பீரித்து, எங்கள் பராபர
னுடைய நாமத்திலே கொடியேற்றுவோம்; உம்
முடைய வேண்டுதல்களை எல்லாம் கர்த்தர் நிறை
வேற்றக்கடவார்.
கர்த்தர் தாம் அபிஷேகம்பண்ணினவரை ௬
இரட்சிக்கிறார் என்கிறதை இப்போது அறிந்தி
ருக்கிறேன்; தம்முடைய வலதுகரத்தினுடைய
இரட்சிப்பின் வல்லமைகளைக் காண்பித்து, அவ
ரைத் தமது பரிசுத்தவானங்களிலிருந்து அவரு
டைய செபத்தைக் கேட்பார்.—அவர்கள் இரதங் ௭
கள்மேலும், இவர்கள் குதிரைகள்மேலும், நம்
பிக்கையாயிருக்கிறார்கள்; நாங்களோவென்றால்
எங்கள் பராபரனாகிய கர்த்தருடைய நாமத்தை
நினைத்திருப்போம்.[9]—அவர்கள் முறிந்துவிழுந் ௮
தார்கள்; நாங்களோவென்றால் எழுந்து நிற்கி
றோம்.—கர்த்தாவே இரட்சியும்; நாங்கள் கூப்பிடு ௯
கிற நாளிலே இராசா எங்கள் செபத்தைக் கேட்
கக்கடவார்.[10]

## ௨௧. சங்கீதம்.

௧. வெற்றிக்குரிய தோத்திரப்பாடல். ௭. வெற்றி சித்திக்குமென்ற நம்பிக்கை.

---

(இராகத்தலைவனுக்கு ஒப்புவிக்கப்பட்ட தாவீதின் சங்கீதம்.)

கர்த்தாவே, உம்முடைய வல்லமையிலே இராசா ௧
மகிழ்ச்சியாயிருந்து, உம்முடைய இரட்சிப்பினா
லே எத்தனையாய்க் களிகூருகிறார். — அவரு ௨
டைய இருதயத்தின் ஆசையின்படி நீர் அவருக்
குக் கொடுத்து, அவருடைய உதடுகளின் விண்
ணப்பத்தைத் தள்ளாதிருக்கிறீர்; சேலா.[11]—ஏனெ ௩
னில் நன்மையின் ஆசீர்வாதங்களால் அவருக்கு
நேரிட்டு, அவர் சிரசில் அபரஞ்சிக்கிரீடம் தரிப்
பிக்கிறீர்.[12]—உம்மைச் சீவனைக் கேட்டார்; அவ ௪
ருக்கு என்றென்றைக்குமுள்ள சதாகாலங்களா
ன நாள் நீடிப்பை அளித்தீர்.[13]—உமது இரட்சிப் ௫
பினால் அவருடைய கனம் பெரியதாயிருக்கிறது;
மகிமையையும் மகத்துவத்தையும் அவர்மேல்
வைக்கிறீர்.—ஏனெனில் அவரை என்றென்றை ௬
க்கும் ஆசீர்வாதங்களாக வைக்கிறீர்; அவரை உம்
முடைய சமுகத்திலே மகிழ்ச்சியாலே பூரிப்பாக்
குகிறீர்.[14]—அதேதென்றால் இராசா கர்த்தரின் ௭
மேல் நம்பிக்கையாயிருக்கிறார்; ஆகையால் உன்
னதமானவருடைய தயையினாலே அசைக்கப்ப
டாதிருப்பார்.
உம்முடைய கை உம்முடைய சத்துருக்களை ௮
எல்லாம் கண்டுபிடிக்கும்; உம்முடைய வலதுக
ரம் உம்மைப் பகைக்கிறவர்களைக் கண்டுபிடிக்
கும்.—உமது கோபத்தின் காலத்திலே அவர்களை ௯
அக்கினிச்சூளையாக்கிவிடுவீர்; கர்த்தர் தம்முடை
ய கோபத்திலே அவர்களை விழுங்குவார்; அக்
கினி அவர்களைப் பட்சிக்கும்.—அவர்கள் கனி ௰
யைப் பூமியில் இல்லாமலும், அவர்கள் வித்தை
மனுப்புத்திரரில் இல்லாமலும் போகத்தக்கவித

---

1 உரோ. ௰. ௰௮.—2 சங். ௱௰௯. ௱௩௰. ௱௨௭. வாக். ௮. ௰, ௰௩. சங். ௱௰௯.
3 சங். ௱௰௯. ௱௫.-4 சங். ௱௰௯. ௭௨, ௱௧.-5 சங். ௱௧. ௧.-6 வாக். ௰௮. ௰.

7 சங். ௨௧. ௧.-8 சங். ௰௧. ௯.-9 சங். ௪௪ ௭ -10 சங். ௰௨. ௨.-11 சங் ௨௰. ௫.-12 சங். ௱௩௨. ௰௮.-13 சங். ௰௧. ௰.-14 ௧ மோ. ௰௨. ௧ : ௰௧. ௰௧.

௰௧ மாக அழிப்பீர்.[1]—ஏனெனில் உமக்கு விரோத
மாகப் பொல்லாப்பை நினைத்தார்கள்; தீவினை
யை எத்தனம்பண்ணினார்கள்; ஆனால் மேற்கொ
௰௨ ள்ளாதே போனார்கள். — அவர்களை இலக்காக
வைத்து, அவர்கள் முகத்துக்கு நேரே உம்மு
௰௩ டைய அம்புகளை நாணேற்றிவிடுவீர்.—கர்த்தா
வே, உம்முடைய பெலத்திலே உயரும்; அப்
போது உம்முடைய வல்லமையைப் பாடிக்
கீர்த்தனம்பண்ணுவோம்.

## ௨௨. சங்கீதம்.

௧. தாவீது மிகுந்த அதயிசிபத்தினால் முறையிட்டது. ௯. அதிக நம்பத்தினால் மன்றாடினது. ௨௨. பராபரனைத் துதித்தது.

(அதிகாலமே வேட்டையாடப்பட்ட பெண்மானின் பேரிலே பாடி, இராகத்தலைவனுக்கு ஒப்புவிக்கப்பட்ட தாவீதின் சங்கீதம்.)

௧ என் பராபரனே, என் பராபரனே, நீர் என்
னைக் கைவிட்டதேது; என் இரட்சிப்புக்கும்
என் கதறுதலின் வார்த்தைகளுக்கும் என்தூரமா
௨ யிருக்கிறீர்.[2]—என் பராபரனே, நான் பகலிலே
கூப்பிட்டும் உத்தரவு கொடீர்; இரவிலே கூப்
பிட்டும் எனக்கு அமைதலில்லை
௩ இஸ்ரவேலின் துதிகளுக்குள்ளே வாசமாகிய
௪ தேவரீரோவென்றால் பரிசுத்தர்.—உம்முடைய
மேல் எங்கள் பிதாக்கள் நம்பிக்கையாயிருந்தார்
௫ கள்; நம்பின அவர்களை விடுவித்தீர்.—உம்மை
நோக்கி, கூப்பிட்டுத் தப்பினார்கள்; உம்மை
நம்பி வெட்கப்பட்டுப் போகாதிருந்தார்கள்.—
௬ நானோ மனுஷனல்லாத பூச்சியும், மனுஷனு
டைய நிந்தனையும்,சனத்தால் அசங்கிக்கப்பட்ட
௭ வனுமாயிருக்கிறேன்.—என்னைப் பார்க்கிறவர்க
ளெல்லாரும் என்னைப் பரியாசம்பண்ணி, உதட்
௮ டைப் பிதுக்கித் தலையைத் துலுக்கி,[3]—கர்த்தர்
மேல் நம்பிக்கையாய் இருந்தானே,அவர் அவனை
விடுவிக்கட்டும்; அவன்மேலே பிரியமாயிருக்கி
றாரே, இப்போது அவனை மீட்டுவிடட்டுமென்
௯ கிறார்கள்.[4] — தேவரீரோவெனில், என்னைக்
கர்ப்பத்திலிருந்து இழுத்தவர்; என் தாயின்
முலைகளில் என்னை உம்முடையமேல் நம்பிக்
௰ கையாயிருக்கப்பண்ணினீர் [5]—கர்ப்பத்திலிருந்
து உம்முடைய சார்பில் விழுந்தேன்; நான் என்
தாயின் வயிற்றிலே பிறந்ததுமுதல் தேவரீர் என்
பராபரன்.
௰௧ என்னைவிட்டுத் தூரமாகாதிரும்; ஏனெனில்
நெருக்கம் கிட்டியிருக்கிறது, சகாயருமில்லை.—
௰௨ அநேகம் காளைகள் என்னைச் சூழ்ந்து, பாசான்
தேசத்து வலுவான எருதுகள் என்னை வளைத்துக்
௰௩ கொண்டன.—பீறிக் கெர்ச்சிக்கிற சிங்கத்தைப்
போல, என்மேலே தங்கள் வாயைத் திறக்கிறார்
௰௪ கள். — தண்ணீரைப்போல ஊற்றுண்டேன்;
என் எலும்புகளெல்லாம் கட்டுவிட்டன; என்
இருதயம் மெழுகுபோலாகி, என் குடல்களின்
நடுவே உருகிற்று. — என் பெலன் ஓட்டைப் ௰௫
போலக் காய்ந்துபோய், என் நாவு என்மேல்வா
யோடே ஒட்டிக்கொண்டது; என்னை மரணத்
தூளிலே போடுகிறீர்.—ஏனெனில் நாய்கள் என் ௰௬
னைச் சூழ்ந்து, பொல்லாதவர்களின் கூட்டம்
என்னைச் சுற்றிக்கொண்டது; என் கைகளையும்
என் கால்களையும் உருவக்குத்தினார்கள்.[6] —
என் எலும்புகளையெல்லாம் நான் எண்ணலாம்; ௰௭
அவர்கள் என்னை நோக்கியிருந்து, என்னிலே
தங்கள் ஆசையைப் பார்க்கிறார்கள்.—என் வஸ் ௰௮
திரங்களைத் தங்களுக்குள்ளே பங்கிட்டு, என்
உடையின்மேல் சீட்டுப்போடுகிறார்கள்.[7]
ஆனால் கர்த்தாவே, தேவரீர் தூரமாகாதிரும்; ௰௯
என் பெலனே, எனக்குச் சகாயம்பண்ணத் தீவி
ரித்துக்கொள்ளும்.[8]—என் ஆத்துமாவைப் பட் ௨௰
டையத்துக்கும், என் தனிமையை நாய்களின்
துஷ்டத்தனத்துக்கும் தப்புவியும். — என்னைச் ௨௧
சிங்கத்தின் வாய்க்கும், காண்டாமிருகங்களின்
கொம்புகளுக்கும் விலக்கி இரட்சித்து, என்
விண்ணப்பத்தைக் கேட்டருளும்.
உம்முடைய நாமத்தை என் சகோதரருக்கு அறி ௨௨
வித்து, நடுச்சபையில் உம்மைத் துதிப்பேன்.-[9]கர் ௨௩
த்தருக்குப் பயப்படுகிறவர்களே அவரைத் துதி
யுங்கள்; யாக்கோபின் வித்தாகிய நீங்களெல்லா
ரும் அவரைக் கனம்பண்ணுங்கள்;இஸ்ரவேலின்
வித்தாகிய நீங்களெல்லாரும் அவருக்கு அஞ்சிக்
கையாயிருங்கள்.[10]—ஏனெனில் சிறுமையானவ ௨௪
னுடைய சிறுமையை அவர் அசங்கதியாமலும்,
அருவருக்காமலும், தம்முடைய முகத்தை அவ
னைவிட்டு மறைத்திராமலும், அவன் தம்மைநோ
க்கிக் கூப்பிடுகையில் அவனைக் கேட்டார்.—உம் ௨௫
மைக்குறித்துத் திரளான சபையிலே நான் துதி
சொல்லுவேன்; அவருக்குப் பயப்படுகிறவர்க
ளுக்குமுன்பாக என் பொருத்தனைகளைச் செ
லுத்துவேன்.
சிறுமையானவர்கள் புசித்துத் திருப்தியடை ௨௬
வார்கள்; கர்த்தரைத் தேடுகிறவர்கள் அவரைத்
துதிப்பார்கள்; உங்கள் இருதயம் என்றென்றைக்
கும் வாழும்.[11] — பூமியின் எல்லைகளெல்லாம் ௨௭
இதை நினைத்துக் கர்த்தரண்டைக்குத் திரும்பி,
சாதிகளுடைய சந்ததிகளெல்லாம் உமக்குமுன்
பாகப் பணியக்கடவது.[12]—ஏனெனில் இராச் ௨௮
சியம் கர்த்தருடையது; அவர் சாதிகளை ஆளுகி
றவர். — பூமியிலே தாளித்தவர்கள் அனைவரும் ௨௯
புசித்துப் பணிந்துகொள்வார்களாக; தூளில்
இறங்கித் தங்கள் சீவனைப் பிழைப்பூட்டமாட்
டாதவர்கள் அனைவரும் அவருக்குமுன்பாகக்
குனிவார்களாக.—அவருக்கு ஆராதனைசெய்யும் ௩௰
வித்துத் தலைமுறை தலைமுறையாக ஆண்டவரு
டையதென்று எண்ணப்படும்.[13]—இவைகளைச் ௩௧
செய்தார் என்று பிறக்கப்போகிற சனத்துக்கு
அவருடைய நீதியை வந்து அறிவிப்பார்கள்.

1 சங். ௨௯. ௰௧.—2 மத். ௨௭. ௪௬. மாற். ௰௫. ௩௪. எபி. ௫. ௭. 3 மத். ௨௭. ௩௯.—4 மத். ௨௭. ௪௩. 5 சங். ௭௧. ௬, ௯.—6 லூக். ௨௩. ௩௩.—7 மத். ௨௭. ௩௫. யோவா. ௰௯. ௨௩, ௨௪.

8 சங். ௬௯. ௰௮.—9 எபி. ௨. ௰௨, 12 சங். ௨. ௮: ௭௨. ௰௧: ௮௬. ௯. ௰௨.—10 சங். ௩௨. ௰௧. 13 ஏசா. ௫௩. ௰. 11 ஏசா. ௬௫. ௰௩, ௰௪.

## உ௩. சங்கீதம்.

௧. பராபரனுடைய கிருபையின்மேல் வைத்த தாவீதின் நம்பிக்கை.

(தாவீதின் சங்கீதம்.)

௧ கர்த்தர் என் மேய்ப்பராயிருக்கிறார்; நான் தாழ்ச்
௨ சியடையேன்.[1] — அவர் என்னைப் புல்லுள்ள
தலங்களில் மேய்த்து, என்னை அமர்ந்த தண்ணீர்
களண்டைக்குக் கொண்டுபோய் விடுகிறார்.—
௩ அவர் என் ஆத்துமாவைக் குளிரப்பண்ணி, என்
னைத் தம்முடைய நாமத்தின் நிமித்தமாக நீதியின்
௪ பாதைகளில் நடத்துகிறார்.[2]-நான் மரணநிழலின்
பள்ளத்தாக்கிலே நடந்தாலும் பொல்லாப்புக்
குப் பயப்படேன்; ஏனெனில் தேவரீர் என்னோ
டேகூட இருக்கிறீர்; உம்முடைய கோலும், உம்
முடைய தடியும் என்னைத் தேற்றுகின்றன.[3]—
௫ என் சத்துருக்களுக்கு எதிரே நீர் எனக்குமுன்
பாக ஒரு பந்தியை ஆயத்தப்படுத்தி, என் தலையை
எண்ணெயால் அபிஷேகம்பண்ணுகிறீர்; என்
௬ பாத்திரம் நிரம்பியிருக்கிறது.—என் சீவனுள்ள
நாளெல்லாம் நன்மையும் கிருபையும் என்னைத்
தொடரும்; நான் கர்த்தருடைய வீட்டிலே
நீடித்தநாள்களாய் நிலைத்திருப்பேன்.[4]

## உ௪. சங்கீதம்.

௧. உலகத்திலுண்டாகிய பராபரனுடைய ஆளுகையையும், ௩. அவருடைய பரலோக இராச்சியத்தில் சேரும் பக்குவர்களையும், ௭. அ. அவரைப் பற்றிக்கொள்வதற்கான புத்தியையும் குறித்தது.

(தாவீதின் சங்கீதம்.)

௧ பூமியும், அதின் நிறைவும், பூச்சக்கரமும், அதி
௨ லுள்ள குடிகளும் கர்த்தருடையது.[5] — ஏனெ
னில் அவரே அதைக் கடல்களிலும் உயரமாக
அஸ்திபாரப்படுத்தி, அதை நதிகளிலும் உயர
மாகத் திடப்படுத்தினார்.

௩ யார் கர்த்தருடைய பர்வதத்தில் ஏறி, யார் அவ
ருடைய பரிசுத்தஸ்தலத்திலே நிலைத்திருப்பான்.[6]

௪ கைகளிலே குற்றமில்லாதவனும் இருதயத்
திலே சுத்தனுமாயிருந்து, தன் ஆத்துமாவை மா
யைக்கு ஒப்புக்கொடாமலும், கபடாய் ஆணை
௫ யிடாமலுமிருக்கிறானே, — அவன் கர்த்தரால்
ஆசீர்வாதத்தையும், தன் இரட்சிப்பினுடைய
பராபரனால் நீதியையும் பெறுவான்.

௬ இதுவே அவருக்காகக் கேட்டு விசாரித்து,
அவருடைய சமுகத்தைத் தேடுகிற யாக்கோ
பென்ற சந்ததி; சேலா.

௭ வாசல்களே, மகிமையின் இராசா உள்ப்பிர
வேசிப்பதற்கு உங்கள் தலைகளை உயர்த்துங்கள்;
அநாதிவாசல்களே உயருங்கள்.[7]

௮ யார் இந்த மகிமையின் இராசா? அவர் வல்ல
மையும் பராக்கிரமமுமான கர்த்தர், அவர் யுத்தத்
௯ திலே பராக்கிரமமான கர்த்தர்தானே. — வாசல்
களே, மகிமையின் இராசா உள்ப்பிரவேசிப்ப
தற்கு உங்கள் தலைகளை உயர்த்துங்கள்; அநாதி
வாசல்களே உயருங்கள்.

யார் இந்த மகிமையின் இராசா? அவர் சேனை ௰
களுடைய கர்த்தரானவர்; அவரே மகிமையின்
இராசா; சேலா.

## உ௫. சங்கீதம்.

௧. தாவீதுக்குச் செபத்திலுண்டாகிய நம்பிக்கையைக் குறித்தது. ௭. பாவங்களின் மன்னிப்புக்காகவும், ௰௬. சிறுமையில் உதவிக்காகவும் வேண்டிக்கொண்டது.

(தாவீதின் சங்கீதம்.)

கர்த்தாவே, உம்மண்டைக்கு என் ஆத்துமாவை ௧
உயர்த்துகிறேன். — என் பராபரனே, உம்மை ௨
நம்பியிருக்கிறேன்; என் சத்துருக்கள் என்மே
லே களிகூராதபடிக்கு, நான் வெட்கப்பட்டுப்
போகாதிருப்பேனாக.[8]—உமக்குக் காத்திருக்கிற ௩
ஒருவராகிலும் வெட்கப்பட்டுப்போகாமல் மு
காந்தரமில்லாமல் துரோகம்பண்ணுகிறவர்களே
வெட்கப்பட்டுப்போவார்கள்.[9] — கர்த்தாவே, ௪
உம்முடைய வழிகளை எனக்குத் தெரிவியும்;
உம்முடைய பாதைகளை எனக்குப் போதிப்பி
யும்.[10]—என்னை உம்முடைய சத்தியத்திலே வழி ௫
நடத்தி, என்னைப் போதிப்பியும்; ஏனெனில்
தேவரீர் என் இரட்சிப்பின் பராபரன்; தேவரீ
ருக்கு நித்தம் காத்திருக்கிறேன்.[11]—கர்த்தாவே, ௬
உம்முடைய இரக்கங்களையும், உம்முடைய கிரு
பைகளையும் நினைத்திரும்; ஏனெனில் அவைகள்
அநாதிகாலந்துவக்கி இருக்கின்றன.[12] — என் ௭
இளவயதின் பாவங்களையும், என் மீறுதல்களை
யும் நினையாதிரும்; கர்த்தாவே தேவரீர் உம்மு
டைய தயையின்நிமித்தம் என்னை உம்முடைய
கிருபையின்படியே நினைத்தருளும்.[13]

கர்த்தர் நல்லவரும் உத்தமருமாயிருக்கிறார்; ௮
ஆகையால் பாவிகளைவழியிலேபோதிக்கிறார்.[14]—
சிறுமையானவர்களை நியாயத்திலே நடத்தி, சிறு ௯
மையானவர்களுக்குத் தம்முடைய வழியைப்
போதிப்பிக்கிறார்.—கர்த்தருடைய உடம்படிக் ௰
கையையும் அவருடைய சாட்சிகளையும் கைக்
கொள்ளுகிறவர்களுக்கு, அவருடைய பாதைக
ளெல்லாம் கிருபையும் உண்மையுமானவை
கள்.—கர்த்தாவே, உம்முடைய நாமத்தின்நிமித் ௧௧
தம் என் அக்கிரமத்தை மன்னியும்; ஏனெனில்
இது பெரியது.[15]-கர்த்தருக்குப் பயப்படுகிற மனு ௧௨
ஷன் யார்? அவன் தெரிந்துகொள்ளவேண்டிய
வழியை அவனுக்குப் போதிப்பிப்பார்.[16] —
அவன் ஆத்துமா நன்மையிலே தங்கி, அவன் ௧௩
வித்துப் பூமியைச் சுதந்தரித்துக்கொள்ளும்.-கர்த் ௧௪
தருடைய இரகசியம் அவருக்குப் பயந்தவர்களு
க்குள்ளிருக்கிறது; அவர்களுக்குத் தம்முடைய
உடம்படிக்கையைத் தெரியப்படுத்துவார்.[17]

1 யோவா. ௰. ௰௧ எசா. ௪௰ ௰௧: ௧௪. ௰௧.——2 எரே. ௩௩. உ௫. மத். ௰௧. உ௮.—3 சங். ௧.௧, ௭: ௩௰௮. ௬.—4 சங். உ௭. ௪. 5 சங். ௫௦. ௰௨. ௧ கொரி. ௰. உ௬, உ௮.—6 சங். ௫௦. ௧. ௰. ௭௪. ௧௧.௰௪,௰௭.—7 ௧ கொரி. உ௮. 8 சங். ௩௧. உ: ௧௪. ௬. 9 எசா.உ௮.௰௬: ௪௯. உ௩. உரோ. ௰. ௰௧.—10 சங். உ௭. ௰௧: அ௬. ௰௧: ௧௧௯. உ௪: ௧௪௩. அ. 11 சங்.உ௪.௫.—12 சங். ௩௩. ௰௭. 13 யோபு. ௰௩.உ௬.-14 ௫ மோ.௩௨. ௪.—15 சங்.௩.௩.—16 சங்.௩௨.அ. 17 வாக். ௩. ௩௨.

௰௫ என் கண்கள் எப்போதும் கர்த்தரின்மேல்
வைக்கப்பட்டிருக்கின்றன; ஏனெனில் அவரே
என் கால்களை வலைக்கு நீங்கலாக்கிவிடுவார்.[1]—
௰௬ என்மேலே நோக்கமாகி எனக்கிரங்கும்; ஏனெ
னில் நான் தனித்தவனும் சிறுமைப்பட்டவனு
௰௭ மாயிருக்கிறேன். — என் இருதயத்தின் வியாகு
லங்கள் பெருகியிருக்கின்றன; என்னை என் இ
௰௮ டுக்கண்களுக்கு நீங்கலாக்கிவிடும். — என் சிறு
மையையும் என் வருத்தத்தையும் பார்த்து, என்
௰௯ பாவங்களையெல்லாம் நீக்கிவிடும்.—என் சத்து
ருக்களைப் பாரும்; ஏனெனில் அவர்கள் பெருகி
யிருந்து, அக்கிரமப்பகையாய் என்னைப் பகைக்
௨௰ கிறார்கள்.[2] — என் ஆத்துமாவைக் காப்பாற்றி,
நான் வெட்கப்பட்டுப்போகாதபடிக்கு என்னை
விடுவியும்; ஏனெனில் உம்மை நம்பியிருக்கி
௨௧ றேன்.—உத்தமமும் நிதானமும் என்னைக் காக்
கக்கடவது; ஏனெனில் உமக்குக் காத்திருக்கி
௨௨ றேன்.—பராபரனே, இஸ்ரவேலை அதின் எல்லா
இக்கட்டுகளுக்கும் நீங்கலாக்கி மீட்டுவிடும்.[3]

## ௨௬. சங்கீதம்.

*௧. தாவீது தன் உண்மையை அறிந்து, நம்பிக்கையுடனே பராபரனைத் தேடினது.*

(தாவீதின் சங்கீதம்.)

௧ கர்த்தாவே, என்னை நியாயம் விசாரியும்; ஏனெ
னில் நான் என் உண்மையிலே நடக்கிறேன்;
நான் கர்த்தரை நம்பியிருக்கிறேன், ஆகையால்
௨ நான் தள்ளாடுவதில்லை[4].—கர்த்தாவே, என்னை
ஆராய்ந்து என்னைச் சோதியும், என் உள்ளிந்
திரியங்களையும் என் இருதயத்தையும் புடமிட்
டுப்பாரும்.
௩ ஏனெனில் உம்முடைய கிருபை என் கண்க
ளுக்குமுன்பாக இருக்கிறது; உம்முடைய சத்
௪ தியத்திலே நடந்துகொள்ளுகிறேன். — வீண்
மனுஷரோடே உளுக்காரேன்; பதிவிருக்கிறவர்
௫ களிடத்திலே சேரேன்.[5]—பொல்லாதவர்களின்
கூட்டத்தைப் பகைக்கிறேன்; ஆகாதவர்களோ
௬ டே உளுக்காரேன்.—நான் என் கைகளைக் குற்
௭ றமில்லாமையிலே கழுவி,— இப்படியே கர்த்
தாவே நான் துதியின் சத்தத்தைத் தொனிக்கப்
பண்ணி, உம்முடைய அதிசயங்களையெல்லாம்
விவரிப்பதற்காக, உம்முடைய பீடத்தைச் சுற்
௮ றிவருகிறேன். — கர்த்தாவே, உமது வீட்டின்
வாசஸ்தலத்தையும், உமது மகிமையின் கூடார
௯ ஸ்தலத்தையும் சிநேகிக்கிறேன்.[6] — என் ஆத்து
மாவைப் பாவிகளோடும், என் சீவனை இரத்தப்
பிரியரோடுங்கூட வாரிக்கொள்ளாதிரும்.[7] —
௰ அவர்கள் கையிலே தீவினை இருக்கிறது; அவர்
கள் வலதுகை பரிதானங்களால் நிறைந்திருக்கி
௰௧ றது.—நானோ என் உண்மையிலே நடக்கிறேன்;
என்னை மீட்டுக்கொண்டு என்மேல் இரங்கும்.—
என் கால் செம்மையான வழியிலே நிலைநிற்கும், ௰௨
சபைகளிலே கர்த்தரைத் துதிப்பேன்.

## ௨௭. சங்கீதம்.

*௧. தாவீது பராபரனுடைய வல்லமையை நினைப்பதினாலும், ௪. அவருக்கு ஊழியஞ்செய்வதில் தனக்கிருந்த அன்பினாலும், ௯. ஜெபத்தினாலும் தன் விசுவாசத்தில் திடன்கொண்டது.*

(தாவீதின் சங்கீதம்.)

கர்த்தர் என் வெளிச்சமும் என் இரட்சிப்புமா ௧
னவர்; யாருக்குப் பயப்படுவேன்? கர்த்தர் என்
சீவனின் பெலனானவர்; யாருக்கு அருக்களிப்
பேன்?[8] — எனக்கிருக்கிற என் சத்துருக்களும் ௨
என் பகைஞருமாகிய பொல்லாதவர்கள் என்
மாம்சத்தைப் பட்சிக்க என்னண்டையில் சேரு
கையில் அவர்களே இடறிவிழுவார்கள்.[9] —
எனக்கு விரோதமாக ஒரு பாளயமிறங்கினாலும் ௩
என் இருதயம் பயப்படாது; என்மேல் யுத்தம்
எழும்பினாலும் இதிலே நான் நம்பிக்கையாயிருக்
கிறேன்.[10] — ஒன்றை நான் கர்த்தரிடத்திலே ௪
கேட்டேன், அதையே தேடுவேன்; நான் கர்த்
தருடைய இன்பத்தைப் பார்த்து, அவருடைய
தேவாலயத்தில் ஆராயும்படிக்கு, நான் என் சீவ
னுள்ள நாளெல்லாம் கர்த்தருடைய வீட்டிலே
தங்குவதைத்தானே.[11]—ஏனெனில் தீங்கு நாளில் ௫
என்னைத் தம்முடைய கூடாரத்தில் ஒளித்து,
என்னைத் தம்முடைய கூடாரமறைவிலே மறை
த்து, என்னைக் கல்மலையின்மேல் உயர்த்துகி
றார்.[12]—இப்போதும் என்னைச் சுற்றிலுமிருக்கிற ௬
என் சத்துருக்களின்மேல் என் தலை உயர்த்தப்
படும்; அதின்நிமித்தம் அவருடைய கூடாரத்
திலே நான் கெம்பீரப் பலிகளை இட்டுக் கர்த்த
ரைப் பாடி அவரைக் கீர்த்தனம்பண்ணுவேன்.
கர்த்தாவே, நான் கூப்பிடுகிற என் சத்தத்தை ௭
நீர் கேட்டு எனக்கு இரங்கி, எனக்கு உத்தரவு
அருளிச்செய்யும்.—நம்முடைய முகத்தைத் தே ௮
டுங்களென்றீரே என்று என் இருதயம் உமக்குச்
சொல்லுகின்றது; உம்முடைய முகத்தைத் தேடு
கின்றேன் கர்த்தாவே.—எனக்கு உம்முடைய ௯
முகத்தை மறைக்காதிரும்; உம்முடைய அடியா
னைக் கோபமாய் விலக்காதிரும், நீரே என் சகா
யரானவர்; என் இரட்சிப்பின் பராபரனே என்
னை நெகிழாமலும், என்னைக் கைவிடாமலும்
இரும்.[13]—ஏனெனில் என் தகப்பனும், என் தா ௰
யும் என்னைக் கைவிட்டார்கள்; ஆனால் கர்த்தர்
என்னைச் சேர்க்கிறார்.—கர்த்தாவே, என் எதிராளி ௰௧
களின்நிமித்தம் நீர் உம்முடைய வழியை எனக்
குப் போதிப்பித்து, செம்மையான பாதையில்
என்னை நடத்தும்.[14]—என் சத்துருக்களின்மன ௰௨
துக்கு என்னை ஒப்புக்கொடாதிரும்; ஏனெனில்
பொய்ச்சாட்சிகளும், ஆக்கிரமித்துச் சீறுகிறவர்
களும் எனக்கு விரோதமாக எழும்பினார்கள்.

---

1 சங். ௧௨௧. ௧, ௨.—2 சங். ௩. ௨ கொரி. ௬. ௪, ௰௫.
௨.—3 சங். ௧௩௦. ௮.—4 சங். 6 சங். ௨௭. ௪—7 சங். ௨௮. ௩.
௭. ௯.—5 சங். ௧. ௧. வாக். ௧.௦. 8 மீகா. ௭. ௮. யோவா. ௮. ௰௨.
சங். ௩௫அ. ௬.—9 எரே. ௨௦. 12 சங். ௧௧. ௨௧.—13 சங். ௰௧. ௨.
௰௧.—10 சங். ௩. ௭. எபி. ௰௧. ௬.—14 சங். ௨௫. ௪.
11 சங். ௪௨. ௩: ௰௨. ௦.

யங நானேனென்றால் ஜீவனுள்ளோரின் தேசத்
திலே கர்த்தருடைய நன்மைகளைப் பார்ப்பே
யச னென்று விசுவாசிக்கிறேன். — கர்த்தருக்குக்
காத்திரு;பெலத்துக்கொண்டு திடமனதாயிருந்து
கர்த்தருக்குக் காத்திரு.[1]

## உஅ. சங்கீதம்.

க. தாவீது தன் சத்துருக்களொழியக் கருத்தாய் வேண்டிக்கொண்டதும், சா. கர்த்தரைத் தோத்திரித்ததும், கூ. சனத்துக்காக வேண்டிக்கொண்டதும்.

(தாவீதின் சங்கீதம்.)

க என் கல்மலையாகிய கர்த்தாவே, உம்மைநோக்
கிக் கூப்பிடுகிறேன்; நீர் எனக்கு உத்தரவு கொ
டாததினால், நான் குழியில் இறங்குகிறவர்க
ளுக்கு ஒப்பாகாதபடிக்கு, எனக்கு மவுனமாயி
உ ராதிரும்.[2]—நான் உம்மைநோக்கிச் சத்தமிட்டு,
என் கைகளை உம்முடைய பரிசுத்த சந்நிதிக்கு
நேராக எடுக்கையில் என் விண்ணப்பங்களின்
ங சத்தத்தைக் கேளும்.—தங்களுக்கடுத்தவர்களோ
டே சமாதானமென்று சொல்லியும், பொல்லாப்
பைத் தங்கள் இருதயங்களில் வைத்திருக்கிற
ஆகாதவர்களோடும், அக்கிரமக்காரரோடும் என்
ச னை இழுக்காதிரும்[3]—அவர்கள் கிரியைகளுக்
கும், அவர்கள் நடத்தைகளின் பொல்லாங்குக்
கும்தக்கதாக அவர்களுக்குக் கொடும்; அவர்கள்
கைகளின் செய்கைக்குத்தக்கதாக அவர்களுக்கு
அளியும்; அவர்களுக்குச் சரிக்குச்சரிக்கட்டும்.—
ரு ஏனெனில் கர்த்தருடைய கிரியைகளையும், அவர்
கரங்களின் செய்கையையும் கவனியார்கள்;
அவர்களை நிர்மூலமாக்குவார், அவர்களைக் குடி
யேற்றார்.[4]
சா கர்த்தர் தோத்திரிக்கப்பட்டவர்; ஏனென்றால்
என் விண்ணப்பங்களின் சத்தத்தைக் கேட்
எ டார்.—கர்த்தர் என் பெலனும் என் கேடயமு
மாயிருக்கிறார்; அவரை என் இருதயம் நம்பியி
ருந்தது; அப்போது சகாயம்பெற்றேன்; ஆகை
யால் என் இருதயம் களிகூருகின்றது; என் பாட்
அ டினால் அவரைத் துதிப்பேன்.—கர்த்தர் அவர்க
ளுடைய பெலன், அவரே தாம் அபிஷேகம்
பண்ணுவித்தவரை இரட்சிக்கிற பெலன். —
கூ தேவரீர் உமது சனத்தை இரட்சித்து, உமது சுதந்
தரத்தை ஆசீர்வதித்து, அவர்களை மேய்த்து, அவர்
களை என்றென்றைக்கும் உயர்த்தும்.

## உகூ. சங்கீதம்.

க. பராபரனுக்கு மகிமை செலுத்தத் தாவீது பராக்கிரமசாலிகளைத் தூண்டி விடும்படி, ங. அவருடைய வல்லமையையும், யக. அவருடைய சனத்தின் பராமரிப்பையுங்குறித்துச் சொன்னது.

(தாவீதின் சங்கீதம்.)

க பெலவான்களின் புத்திரரே, கர்த்தருக்கு மகி
மையையும் பெலனையும் செலுத்துங்கள்; கர்த்த
உ ருக்கு அதைச் செலுத்துங்கள்.[5]—கர்த்தருக்கு அ
வர் நாமத்தின் மகிமையைச் செலுத்துங்கள்; பரி
சுத்த அலங்காரத்துடனே கர்த்தரைப் பணிந்து
கொள்ளுங்கள்.[6]
கர்த்தருடைய சத்தம் தண்ணீர்களின்மேலே ங
கேட்கப்படும்; மகிமையின் பராபரனாகிய கர்த்தர்
திரளான தண்ணீர்களின்மேலே குமுறுகிறார்.—
கர்த்தருடைய சத்தம் வல்லமையும், கர்த்தரு ச
டைய சத்தம் மகத்துவமுமாய் முழங்குகிறது.—
கர்த்தருடைய சத்தம் கேதுருக்களை உடைக்கும்; ரு
கர்த்தர் லீபனோனின் கேதுருக்களை உடைத்து,[7]—
அவைகளைக் கன்றுக்குட்டிகளைப்போலவும்,லீப சா
னோனையும் சீரியோனையும் காண்டாமிருகக்
குட்டிகளைப்போலவும் சிமாளிக்கப்பண்ணுகி
றார்.[8] — கர்த்தருடைய சத்தம் அக்கினிச்சுவா எ
லைகளைப்போல வெட்டுகிறது.—கர்த்தருடைய அ
சத்தம் வனாந்தரத்தை அதிரப்பண்ணுகிறது; கர்த்
தர் காதேஸ் வனாந்தரத்தை அதிரப்பண்ணுகி
றார் — கர்த்தருடைய சத்தம் பெண்மான்களை கூ
ஈனப்பண்ணிக் காடுகளைத் திறப்பாக்கும்; ஆனால்
அவருடைய தேவாலயத்தில் ஒவ்வொருவன்
அவருக்கு மகிமைசெலுத்துகிறான். — கர்த்தர் ய
சலப்பிரளயம் வரப்பண்ண உளுக்காந்தார்; கர்த்
தர் என்றென்றைக்கும் இராசாவாய் உளுக்காந்தி
ருக்கிறார்.[9]—கர்த்தர் தமது சனத்துக்குப் பெலன் யக
கொடுப்பார்; கர்த்தர் தம்முடைய சனத்தைச்
சமாதானம் தந்து ஆசீர்வதிப்பார்.

## ஙய. சங்கீதம்.

க. தாவீது தன் விடுதலைக்காகப் பராபரனைத் துதித்து, ச. அவர் தனக்கு நன்மைசெய்த அடையாளத்தைக் கண்டு, அவரைத் துதிக்க மற்றவர்களை ஏவினது.

(வீட்டுப்பிரதிஷ்டையின் பாட்டாகிய தாவீதின் சங்கீதம்.)

கர்த்தாவே, நீர் என் சத்துருக்களை என்மேற் க
சந்தோஷப்படவொட்டாமல் என்னைக் கை
தூக்கி எடுத்தபடியினாலே உம்மை உயர்த்து
வேன்.—என் பராபரனாகிய கர்த்தாவே, உம்மை உ
நோக்கிக் கூப்பிட்டேன், அப்போது என்னைக்
குணமாக்கினீர்.—கர்த்தாவே, நீர் என் ஆத்துமா ங
வைப் பாதாளத்திலிருந்து ஏறப்பண்ணி, நான்
குழியில் இறங்காதபடிக்கு என்னை உயிரோடே
காத்தீர்.[10]
கர்த்தருடைய பரிசுத்தவான்களே அவரைக் ச
கீர்த்தனம்பண்ணி, அவருடைய பரிசுத்தத்தின்
நினைவுகூருதலைக் கொண்டாடுங்கள்.[11]—ஏனெ ரு
னில் அவருடைய கோபம் ஒரு நிமிஷமும்,
அவருடைய தயவு நீடிய வாழ்வுமாம்; சாயங்
காலத்தில் அழுகை தங்கும், காலமே கெம்பீர
முண்டு.[12]
என்றைக்கும் அசைக்கப்படேனென்று நான் சா
என் சுகத்திலே சொன்னேன்.—ஏனெனில் கர்த் எ
தாவே, உமது தயையினாலே என் பர்வதத்தைத்
திடமாய் நிற்கப்பண்ணியிருந்தீர்; ஆனால் உமது
முகத்தை நீர் மறைத்துக்கொண்டபொழுது கலங்

1 ஆப. உ.க. சங். கக. உரு. 4 ஏசா. ருயஉ.— 5 சங். கூக. எ,கூ.
2 சங். ஈசரு. எ.—3 எரே. கூ அ. 6 சங். சய. க.

7 ஏசா. உ. யக.—8 ஓ மோ.க,க. சயரு. க,ச.—11 சங். கஎ. யஉ.
9 க இமோ.க.யஎ.–10 சங்.அக. யங: 12 ஏசா. ருச. எ.

௮ கினவனுனேன். — நான் குழியில் இறங்குகை
யில், என் இரத்தத்தால் என்ன ஆதாயமுண்டு?
தூள் உம்மைத் துதித்து, உம்முடைய சத்தியத்தை
௯ அறிவிக்குமோவென்றும்,[1]—கர்த்தாவே, நீர் கேட்
டு என்மேலிரங்கும்; கர்த்தாவே, எனக்கு அநுகூ
௰ லராய் இருமென்றும் சொல்லி,—கர்த்தாவே, உம்
மைநோக்கிக் கூப்பிட்டேன்; கர்த்தனைநோக்கிக்
௰௧ கெஞ்சினேன்.—என் புலம்பலை எனக்கு ஆநந்
தக்களிப்பாக மாறப்பண்ணினீர்; என் மகிமை
அமர்ந்திராமல் உம்மைக் கீர்த்தனம்பண்ணும்
பொருட்டாக என் இரட்டை எடுத்துப்போட்டு,
௰௨ என்னை மகிழ்ச்சியால் இடைகட்டினீர்.[2]—என்
பராபரனுகிய கர்த்தாவே, உம்மை என்றென்
றைக்கும் துதிப்பேன்.

## ௩௰௧. சங்கீதம்.

*௧. தாவீது தான் பராபரனில் வைத்த நம்பிக்கையைக் காட்டி, அவருடைய உதவியை மன்றுடினது. ௭. அவருடைய இரக்கத்தில் களிப்புற்றது. ௯. தனது சஞ்சலத்தில வேண்டிக்கொண்டது. ௰௯. பராபரனுடைய நன்மைக்காக அவரைத் துதித்தது.*

---

(இராகத்தலைவனுக்கு ஒப்புவிக்கப்பட்ட தாவீதின் சங்கீதம்.)

௧ கர்த்தாவே, உம்மை நம்பியிருக்கிறேன்; நான்
என்றைக்கும் வெட்கப்பட்டுப்போகாதிருக்கட்
டும்; உமது நீதியின்நிமித்தம் என்னை விடுவி
௨ யும்.[3]—என்னண்டைக்கு உமது செவியைச் சாய்
த்து, சீக்கிரமாய் என்னைத் தப்புவியும்; என்னை
இரட்சிக்கும்படிக்கு, எனக்குப் பெலத்த கல்ம
௩ லையும் அரமனையுமாயிரும் — ஏனெனில் தேவ
ரீர் என் கல்மலையும் என் கோட்டையுந்தானே;
உமது நாமத்தின்நிமித்தம் என்னை வழிநடத்
௪ தும். — அவர்கள் எனக்கு மறைவாய் வைத்த
வலைக்கு என்னை நீங்கலாக்கிவிடும்; ஏனெனில்
௫ தேவரீர் என்னுடைய பெலன்.—உமது கையில்
என் ஆவியை ஒப்புவிக்கிறேன்; சத்திய பரனு
௬ கிய கர்த்தாவே, என்னை மீட்டுவிட்டீர்.[4]—வீண்
மாயைகளைக் கைக்கொள்ளுகிறவர்களை நான்
௭ பகைத்துக் கர்த்தனை நம்பியிருக்கிறேன்.—உமது
கிருபையிலே களிகூர்ந்து மகிழுவேன்; ஏனென்
றால் நீர் என் சிறுமையைப்பார்த்து நெருக்கங்
களில் என் ஆத்துமாவை அறிந்துகொண்டு,—
௮ என்னைச் சத்துருவின் கையில் ஒப்புக்கொடுத்து
விடாமல், என் பாதங்களை விசாலத்திலே நிறுத்
தினீர்.[5]

௯ எனக்கு இரங்கும் கர்த்தாவே, ஏனெனில்
நெருக்கப்படுகிறேன்; சலிப்பினால் என் கண்
ணும், என் ஆத்துமாவும், என் வயிறுங்கூடக்
௰ கருகிப்போயின.—ஏனெனில் என் பிராணன்
சஞ்சலத்தாலும் என் வருஷங்கள் தவிப்பினு
லும் கழிந்துபோயின, என் அக்கிரமத்தினாலே
என் பெலன் விழுந்து என் எலும்புகள் உலர்ந்
௰௧ துபோயின. — என்னுடைய எல்லாச் சத்து
ருக்களின்நிமித்தம் நான் என் அயலகத்தாருக்கு
மகா நிந்தையும், எனக்கு அறிமுகமானவர்க
ளுக்குத் திகிலுமானேன்; வீதியிலே என்னைக்
காணுகிறவர்கள் என்னைவிட்டு ஓடிப்போகிறார்
கள்.[6] — செத்தவனைப்போல எல்லாராலும் மன ௰௨
தார மறக்கப்பட்டேன்; கெட்ட பாத்திரத்தைப்
போலானேன். — ஏனெனில் அநேகருடைய ௰௩
அவதூறுகளைக் கேட்டேன்; அவர்கள் ஏகமாய்
எனக்கு விரோதமாக ஆலோசனைபண்ணுகிறதி
னாலே திகில் என்னைச் சூழ்ந்துகொண்டது; என்
பிராணனை வாங்க நினைக்கிறார்கள்.

நானோவெனில் கர்த்தாவே, உம்மை நம்பியிரு ௰௪
க்கிறேன்; தேவரீர் என் பராபரன் என்கிறேன்.—
என் காலங்கள் உம்முடைய கரத்திலிருக்கின் ௰௫
றன; என் சத்துருக்களின் கைக்கும், என்னைப்
பின்தொடருகிறவர்களின் கைக்கும் என்னைத்
தப்புவியும். — நீர் உம்முடைய முகத்தை உம் ௰௬
முடைய ஊழியக்காரன்மேலே பிரகாசிக்கப்
பண்ணி, உமது கிருபையினாலே என்னை இரட்
சியும்[7]. — கர்த்தாவே, நான் வெட்கப்பட்டுப் ௰௭
போகாதிருக்கட்டும்; ஏனெனில் உம்மைநோக்
கிக் கூப்பிடுகிறேன்; ஆகாதவர்கள் வெட்கப்
பட்டு, பாதாளத்தில் மவுனமாய்ப் போகட்டும்.—
நீதிமான்மேல் பெருமையோடும், அசங்கதத்தோ ௰௮
டும், கடினமாய்ப் பேசுகிற பொய் உதடுகள் கட்
டுப்படுவதாக.

உமக்குப் பயந்தவர்களுக்கு நீர் வைத்துவைத் ௰௯
ததும், உம்மை நம்புகிறவர்களுக்கு நீர் மனுபுத்
திரருக்கு எதிரே உண்டுபண்ணினதுமான உம்
முடைய நன்மை எத்தனை திரள்.[8]—அவர்களை ௨௰
உமது முகத்தின் மறைவினாலே மனுஷரின்
இடும்புகளுக்கு இடைஞ்சலாய்க் காப்பாற்றி,
அவர்களை உமது கூடாரத்திலே நாவுகளின் சண்
டைக்கு ஒளிக்கிறீர். — கர்த்தர் தோத்திரிக்கப் ௨௰௧
பட்டவர்; ஏனெனில் என்னை அரணிப்பான
பட்டணத்தில் வைக்கிறதற்குச் சரியாக என்
மேலே தம்முடைய கிருபையை அதிசயமான
தாக்கினார்.[9] — உம்முடைய கண்களுக்குமுன் ௨௰௨
பாக இராதபடிக்கு, வெட்டுண்டேனென்று
நான் என் மனக்கலக்கத்திலே சொன்னேன்; ஆ
னால் நான் உம்மை நோக்கிக் கூப்பிடுகையில்,
என் விண்ணப்பங்களின் சத்தத்தைக் கேட்டீர்.
கர்த்தருடைய பரிசுத்தவான்களாகிய நீங்க ௨௰௩
ளெல்லாரும் அவரைச் சிநேகியுங்கள்; உண்மை
யானவர்களைக் கர்த்தர் தற்காத்துப் பெருமை செ
ய்கிறவனுக்குப் பரிபூரணமாய்ப் பதில்செலுத்
துகிறார். — கர்த்தருக்குக் காத்திருக்கிற நீங்கள் ௨௰௪
அனைவரும் பெலத்துக்கொண்டு திடமனதாயி
ருங்கள்.[10]

## ௩௰௨. சங்கீதம்.

*௧. பாவமன்னிப்பினால் மனப்பாக்கியமும், ௩. பாவ அறிக்கையினால் மன துக்கு இலேசும், ௮. பராபரனுடைய வாக்குத்தத்தத்தினால் மனமகிழ்ச்சியும் உண்டாவதைக் குறித்தது.*

---

1 சங். ௯. ௯. —2 சங். ௱௯. ௭, ௮: ௫௯. ௬.—3 சங். ௭௧. ௧, ௨.
4 லூக். ௨௩. ௪௬.
5 சங். ௰௮. ௧௯.
6 சங். ௩௮. ௰௨.
7 சங். ௬௨. ௭.
8 ஏசா. ௬௪. ௪.— 9 சங். ௰௭. ௭.
10 சங். ௨௭. ௪.

௧ எவனுடைய மீறுதல் மன்னிக்கப்பட்டு, எவ
னுடைய பாவம் மூடப்பட்டதோ அவன் பாக்
௨ கியவான்.[1]—எவன்மேல் கர்த்தர் அவன் அக்கிர
மத்தைச் சுமத்தாதிருக்கிறாரோ, எவனுடைய
ஆவியில் கபடமில்லாதிருக்கிறதோ அந்த மனு
ஷன் பாக்கியவான்.
௩ நான் அடக்கிவைத்தமட்டும் நித்தம் என் கத
றுதலினாலே என் எலும்புகள் உலர்ந்துபோயி
௪ ன.—ஏனெனில் இரவும் பகலும் என்மேல் உம்
முடைய கை பாரமாயிருந்ததினாலே, என் சாரம்
உஷ்ணகால வரட்சிகளைப்போல வரண்டுபோ
௫ யிற்று; சேலா.—நான் என் அக்கிரமத்தை மறைக்
காமல், என் பாவத்தை உமக்கு அறிவித்தேன்;
என் மீறுதல்களைக் கர்த்தருக்கு அறிக்கையிடு
வேனென்றேன்; அப்போது தேவரீர் என் பா
வத்தின் அக்கிரமத்தை மன்னித்தீர்; சேலா.[2]—
௬ இதற்காகச் சகாயம் கிடைக்கும் காலத்திலே
சகல சன்மார்க்கனும் உம்மைநோக்கி விண்ணப்
பஞ்செய்வான்; அப்போது வெகு தண்ணீர்க
ளுடைய வெள்ளம் வந்தும், அவனைச் சேராது.[3]—
௭ தேவரீர் எனக்கு மறைவிடமாயிருந்து, இக்கட்
டுக்கு என்னை விலக்கிக் காத்து விடுவித்தலின்
கெம்பீரங்களால் என்னைச் சூழ்ந்துகொள்ளுகி
றீர்; சேலா.[4]
௮ உனக்கு நாம் புத்தி படிப்பித்து, நீ நடக்க
வேண்டிய வழியில் உன்னைப் போதிப்பித்து,
உன்மேல் வைத்த கண்ணினால் உனக்கு ஆலோ
௯ சனை கொடுப்போம்.[5] — உன் கிட்டச் சேரா
விட்டால், வாராலும் கடிவாளத்தினாலும் வாய்
கட்டப்படவேண்டிய குதிரையைப்போலவும்,
உணர்வற்ற கோவேறு கழுதையைப்போலவும்
௰ இராதிருங்கள்.—ஆகாதவனுக்கு அநேகம் வேத
னைகளுண்டாம்; ஆனால் கர்த்தரை நம்பியிருக்கி
௰௧ றவனைக் கிருபை சூழ்ந்துகொள்ளும்.[6]—நீதிமா
ன்களே, கர்த்தருக்குள் மகிழ்ந்து களிகூருங்கள்;
செம்மை இருதயத்தாரே நீங்கள் அனைவரும்
கெம்பீரியுங்கள்.[7]

## ௩௩. சங்கீதம்.

௧. பாரபரன் தமது நன்மைக்காகவும், ௬. சவுரியத்துக்காகவும், ௰௨. பாரமரிப்புக்காகவும் துதிக்கப்படவேண்டியது. ௨௰. அவரில் நம்பிக்கை வைக்கவேண்டியது.

௧ நீதிமான்களே, கர்த்தருக்குள் கெம்பீரியுங்கள்;
துதிக்கிறது செம்மையானவர்களுக்கு அடுக்
௨ கும்.[8]—கர்த்தரைச் சுரமண்டலத்தினாலே துதித்
து, அவரைத் தம்புருவினாலும், பத்து நரம்பு
௩ வீணையினாலும் கீர்த்தனம்பண்ணுங்கள்.—அவ
ரைப் புதுப்பாட்டாய்ப் பாடி, கெம்பீரத்துடனே
நேர்த்தியாய்க் கொட்டுங்கள்.[9]
௪ ஏனெனில் கர்த்தருடைய வார்த்தை செம்மை
யும் அவருடைய செய்கைகளெல்லாம் சத்திய
௫ முமாயிருக்கின்றன.[10]—நீதியையும் நியாயத்தை
யும் சிநேகிக்கிறார்; பூமி கர்த்தரின் கிருபையால்
நிறைந்திருக்கின்றது.[11]-கர்த்தரின் வார்த்தையினா ௬
லே பரமண்டலங்களும், அவருடைய வாயின்
ஆவியினாலே அவைகளின் எல்லாச் சேனையும்
உண்டாக்கப்பட்டன.—அவர் சமுத்திர சலங் ௭
களைக் குவியலாகக் கூட்டி, ஆழங்களைப் பொக்
கிஷவைப்பாக வைத்தார்.[12]—பூமியெல்லாம் கர்த் ௮
தருக்குப் பயப்பட்டு, பூச்சக்கரக்குடிகளெல்
லாம் அவருக்கு அஞ்சி இருப்பதாக. — ஏனெ ௯
னில் அவர் சொல்ல ஆகும், அவர் கட்டளையிட
நிற்கும்.[13]—கர்த்தர் சாதிகளின் ஆலோசனையை ௰
அவத்தமாக்கி, சனங்களுடைய நினைவுகளைத்
தவிர்க்கிறார்.[14]—கர்த்தருடைய ஆலோசனையோ ௰௧
நித்திய காலமாகவும், அவர் இருதயத்தின் நினை
வுகள் தலைமுறை தலைமுறையாகவும் நிற்கும்.[15]
கர்த்தர் தெய்வமாயிருக்கப்பட்ட சாதியும், ௰௨
அவர் தமக்குச் சுதந்தரமாகத் தெரிந்துகொண்ட
சனமும் பாக்கியமானது.[16]—வானங்களிலிருந்து ௰௩
கர்த்தர் நோக்கிப்பார்த்து, எல்லா மனுப்புத்திர
ரையும் காண்கிறார்.—தாம் வாசமாயிருக்கிற தா ௰௪
னத்திலிருந்து பூமியின் குடிகள் எல்லார்மேலும்
கண்ணோக்கமாயிருக்கிறார்.—அவர் இவர்களனை ௰௫
வருடைய இருதயத்தையும் உருவேற்படுத்தி,
அவர்கள் செய்கைகளை எல்லாம் கவனித்திருக்
கிறார்.—இராசா இராணுவத்திரளால் இரட்சிக்கப் ௰௬
படான்; சவுரியவான் பெலத்தின் மிகுதியாலே
தப்பான். — இரட்சிக்கப்படுவதற்குக் குதிரை ௰௭
விருதா, அது தன் பெரிய வீரியத்தாலே தப்புவி
யாது.[17]
இதோ, தமக்குப் பயந்து தமது கிருபைக்குக் ௰௮
காத்திருக்கிறவர்களின் ஆத்துமாக்களை மரணத்
துக்கு விலக்கி விடுவிக்கவும்,[18]—அவர்களைப் பஞ் ௰௯
சத்தில் உயிரோடே காக்கவும், கர்த்தருடைய
கண் அவர்கள்மேலே வைக்கப்பட்டிருக்கின்
றது.—நம்முடைய ஆத்துமா கர்த்தருக்குக் காத் ௨௰
திருக்கிறது; அவர் நம்முடைய ஒத்தாசையும்
நம்முடைய கேடயமுமானவர். — ஏனெனில் ௨௰௧
அவருடைய பரிசுத்த நாமத்தை நாம் நம்பியி
ருக்கிறபடியால், நம்முடைய இருதயம் அவருக்
குள் சந்தோஷமாயிருக்கும்.—கர்த்தரே நாங்கள் ௨௰௨
உம்மை நம்பினபடி, உமது கிருபை எங்கள்
மேல் இருக்கக்கடவது.

## ௩௪. சங்கீதம்.

௧. தாவீது பாரபரனைத் துதித்துத் தன்னுடைய அநுபவத்தைக்கொண்டு மற்றவர்களையும் துதிக்கத் தூண்டினது. ௮. அவரில் நம்பிக்கை வைப்பவர்கள் பாக்கியவான்களென்பது. ௰௧. அவருக்குப் பயப்பட எச்சரித்தது. ௰௫. நீதிமான்களுக்கு வரும் சுதந்தரத்தைக்குறித்துச் சொன்னது.

(தாவீது தன் முகநாடியை அபிமேலேகுக்கு முன்பாக
வேறுபடுத்தினதினாலே, அவனாலே துரத்தி
விடப்பட்டுப் போகையில் பாடின
சங்கீதம்.)

1 உரோ. ௪. ௬, ௮.
2 வாக். ௨௮. ௰௩. ௧ யோ. ௧. ௯.
3 ஏசா. ௪௩. ௨.—4 சங். ௨௭. ௫: ௩௧. ௨௧.—5 சங். ௨௫. ௰௨.
6 சங். ௰௬. ௪.—7 சங். ௬௪. ௰.
8 சங். ௩௨. ௰௧: ௱௪௭. ௧.—9 சங். ௯௬. ௪.—10 சங். ௰௯. ௮.
11 சங். ௩௬. ௫: ௱௰௯. ௬௪.
12 யோபு. ௩௮. ௮.
13 ௧ மோ. ௧. ௧. ௩.
14 யோபு. ௯. ௰௨. வாக். ௨௧. ௩௰.
15 வாக். ௰௯. ௨௧.
16 சங். ௬௫. ௪: ௱௪௪. ௰௫.
17 சங். ௱௪௭. ௰.—18 சங். ௩௪. ௰௫.

௧ கர்த்தரை எல்லாக் காலத்திலும் தோத்திரிப்
பேன்; அவர் துதி எப்போதும் என் வாயிலிருக்
௨ கும்.[1]—கர்த்தருக்குள் என் ஆத்துமா மேன்மை
பாராட்டும்; சிறுமையானவர்கள் அதைக்கேட்டு
௩ மகிழுவார்கள்.[2]—என்னோடேகூடக் கர்த்தரை
மகிமைப்படுத்துங்கள்; நாம் ஒருமித்து அவர்
நாமத்தை உயர்த்துவோம்.
௪ நான் கர்த்தரைத் தேடினபோது, அவர் எனக்கு
மறுஉத்தரவு கொடுத்து, என்னை என்னுடைய
எல்லாத் திகில்களுக்கும் நீங்கலாக்கிவிட்டார்.[3]–
௫ அவரைநோக்கி அவரண்டை ஓடிவருகிறவர்க
௬ ளின் முகங்கள் வெட்கத்துக்குள்ளாகாது.—இந்
தச் சிறுமையானவன் கூப்பிட்டான்; அப்போது
கர்த்தர் கேட்டு, அவனை அவன் நெருக்கங்களுக்
௭ கெல்லாம் நீங்கலாக்கி இரட்சித்தார்.—கர்த்தரு
டைய தூதர் அவருக்குப் பயந்தவர்களைச் சுற்றி
லும் பாளயம்போட்டு, அவர்களை விடுவிக்கி
௮ றார்.[4]—கர்த்தர் நல்லவரென்றதை உருசித்துப்பா
ருங்கள்; அவர்மேல் நம்பிக்கையாயிருக்கிற மனு
௯ ஷன் பாக்கியவான்.[5]—கர்த்தருடைய பரிசுத்த
வான்களே, அவருக்குப் பயந்திருங்கள்; ஏனெ
னில் அவருக்குப் பயந்தவர்களுக்குக் குறை
௰ வில்லை.[6]—சிங்கக்குட்டிகள் தாழ்ச்சி அடைந்து
பட்டினியாயிருக்கும்; கர்த்தரைத் தேடுகிறவர்க
ளுக்கோவென்றால், ஒரு நன்மையும் குறைப
டாது.
௰௧ பிள்ளைகளே, வந்து என்னைக் கேளுங்கள்;
கர்த்தருக்குப் பயப்படுதலை உங்களுக்குக் கற்று
௰௨ க்கொடுப்பேன்.—சீவனை விரும்பி, நன்மைகா
ணும் நாள்களைச் சிநேகிக்கிற மனுஷன் யார்?[7]–
௰௩ உன் நாவைப் பொல்லாப்புக்கும், உன் உதடுக
ளைக் கபடவசனிப்புக்கும் விலக்கலாய்க் காத்
௰௪ துக்கொள்.—பொல்லாப்பை விட்டு விலகி நன்
மைசெய்; சமாதானத்தைத் தேடி அதைப் பின்
தொடர்.[8]
௰௫ கர்த்தருடைய கண்கள் நீதிமான்கள்மேல்
வைக்கப்பட்டு, அவருடைய செவிகள் அவர்கள்
௰௬ கூப்பிடுதலைக் கவனிக்கின்றன.[9]—பொல்லாங்
கு செய்கிறவர்கள்பேரைப் பூமியில் இராமல்
அற்றுப்போகப்பண்ண கர்த்தருடைய முகம்
௰௭ அவர்களுக்கு விரோதமாயிருக்கின்றது.— நீதி
மான்கள் கூப்பிடும்போது, கர்த்தர் அவர்களைக்
கேட்டு, அவர்களை அவர்களுடைய எல்லா நெ
௰௮ ருக்கங்களுக்கும் நீங்கலாக்கிவிடுகிறார்.—இரு
தயம் நொறுங்குண்டவர்களுக்குக் கர்த்தர் சமீப
மாயிருந்து ஆவி நொறுங்குண்டவர்களை இரட்
௰௯ சிக்கிறார்.[10] —நீதிமானுக்கு வருகிற தீங்குகள்
அநேகமாயிருக்கின்றன; ஆனால் கர்த்தர் அவைக
ளெல்லாவற்றிற்கும் அவனை நீங்கலாக்கிவிடுகி
௨௰ றார்.[11]—அவன் எலும்புகளை எல்லாம் காப்பாற்
றுகிறார்; இவைகளில் ஒன்றும் முறிக்கப்படுகிற
௨௧ தில்லை.–தீங்கு ஆகாதவனைக் கொல்லும்; நீதிமா
னைப் பகைக்கிறவர்களே நேரஸ்தராவார்கள்.—
கர்த்தர் தமது ஊழியக்காரரின் ஆத்துமாவை மீட் ௨௨
டுவிடுகிறார்; அவரை அண்டிக்கொள்ளுகிறவர்க
ளெல்லாரும் குற்றம் சுமக்காதிருப்பார்கள்.[12]

## ௩௫. சங்கீதம்.

௧. தாவீது தான் தப்பித்துக்கொள்வதற்கும், தன் சத்துருக்கள் கலக்கமடைவதற்கும் வேண்டிக்கொண்டது. ௰௧. அவர்களுடைய கொடி தவறுதலைக்குறித்து முறையிட்டது. ௨௨. அதனால் அவர்களுக்கு விரோதமுண்டாகப் பாரபரனை வேண்டினது.

---

(தாவீதின் சங்கீதம்.)

கர்த்தாவே, நீர் என் வழக்காளிகளோடே வழக் ௧
காடி, என்னோடு யுத்தம்பண்ணுகிறவர்களோடு
யுத்தம்பண்ணும்.—நீர் கேடயத்தையும் பரிசை ௨
யையும் பிடித்து, எனக்கு ஒத்தாசையாக எழு
ம்பி,— என்னைப் பின்தொடருகிறவர்களோடு ௩
எதிர்த்துநிற்க ஈட்டியை ஓங்கி, அவர்களை
மறித்து, என் ஆத்துமாவுடனே, நாம் உன் இரட்
சிப்பென்று சொல்லும்.—என் பிராணனை வாங் ௪
கத்தேடுகிறவர்கள் வெட்கி இலச்சையடைந்து
பின்னிட்டுத் திரும்பவும், எனக்குப் பொல்லாப்
பை நினைக்கிறவர்கள் நாணமடையவும்,[13]—அ ௫
வர்கள் காற்றுமுகத்திலே பதரைப்போலாகவும்
வேண்டும், கர்த்தருடைய தூதன் அவர்களைத்
தள்ளுவானாக.[14]—அவர்கள் வழி இருளும் சறுக் ௬
கலுமாகக்கடவது; கர்த்தருடைய தூதன் அவர்
களைத் தொடருவானாக.—ஏனெனில் முகாந்தர ௭
மில்லாமல் குழிக்குள்ப்படுத்த, தங்கள் வலையை
எனக்கு ஒளித்துவைத்தார்கள்; முகாந்தரமில்லா
மல் என் ஆத்துமாவுக்குக் குழி வெட்டினார்கள்.
அவன் அறியாமல் பாழ்க்கடிப்பு அவனுக்கு ௮
வந்து, அவன் மறைவாய் வைத்த அவன் வலை
அவனையே பிடிக்க, அவனே பாழ்க்கடிப்பாய்
அதிலேதான் விழவேண்டும்.[15]–அப்படியே என் ௯
ஆத்துமா கர்த்தருக்குள் களிகூர்ந்து, அவருடைய
இரட்சிப்பிலே மகிழ்ந்திருக்கும். — சிறுமையா ௰
னவனை அவனிலும் பெலவானுடைய கைக்கும்,
சிறுமையானவனையும் எளியவனையும் அவனைக்
கொள்ளையாடுகிறவனுடைய கைக்கும் தப்புவிக்
கிற உம்மைப்போலே யார்? கர்த்தாவே என்று
என் எலும்புகளெல்லாம் சொல்லும்.
கொடுமையான சாட்சிகள் எழும்பி, நான் அறி ௰௧
யாததை என்னைக் கேட்கிறார்கள். — எனக்கு ௰௨
நன்மைக்குத் தீமை சரிக்கட்டி, என் ஆத்துமா
முதல் அற்றுப்போகப் பார்க்கிறார்கள்.[16]—அவர் ௰௩
கள் வியாதியாயிருந்தபோதோவெனில், இரட்டு
என் உடுப்பாயிருந்தது; நான் உபவாசத்தால் என்
ஆத்துமாவை உபத்திரவப்படுத்தினேன்; என்
செபமும் என் மடியிலே இரட்டித்தது.—எனக் ௰௪
குச் சிநேகிதனாகவும், எனக்குச் சகோதரனாகவும்
பாவித்து நடந்துகொண்டேன்; தாய்க்காகத் துக்
கிக்கிறவனைப்போலத் துக்கவஸ்திரந்தரித்துத்

---

1 சங். ௭௪. ௧௧.—2 எரே.௯. ௨௪. ௰௨: ௪௰. ௫.—6 சங் ௯௭. ௰௯.
3 ஏசா. ௬௫. ௨௪.—4 சங். ௯௧.௰௧. 7 ௧ பே.௩. ௰, ௰௨.—8 சங். ௯௭.
௨ இரா ௧. ௰௧, ௰௭.—5 சங்.௨. ௭௭. ஏசா. ௧. ௰௯, ௰௭.—9 சங்.
௧௧. ௰௮, ௰௯.
10 சங். ௭௪௫. ௰௮, ௰௯.
11 ௨ தீமோ.௩ ௰௧.-12 சங். ௯௭.௯௯.
13 சங். ௪௰.௰௪: ௰௭. ௧.
14 சங். ௯. ௪: ௮௧. ௰௪.
15 சங்.௭.௰௯,௰௭.—19சங். ௯௮.௨௧.

௰௫ தலைகவிழ்ந்து நடந்தேன்.—ஆனால் நான் ஆபத்
துப்படுகையில் சந்தோஷப்பட்டுக் கூட்டம்
கூடுகிறார்கள்; நொண்டிகளும், நான் அறியாத
வர்களும், எனக்கு விரோதமாகக் கூட்டம்கூடி,
௰௬ என்னைப் பீறி அமராதிருக்கிறார்கள்.[1]—அப்பத்
துக்காக மாயமும், பரியாசமும் பண்ணுகிறவர்
களுக்குள் இருந்துகொண்டு என்மேலே பல்க்க
டிக்கிறார்கள்.

௰௭ ஆண்டவரே, எந்தமட்டும் அதைப் பாராதி
ருப்பீர்; என் ஆத்துமாவை அவர்கள் பாழ்க்க
டிப்புகளுக்கும், என் தனிமையைச் சிங்கக்குட்
௰௮ டிகளுக்கும் தப்புவித்துத் திருப்பும்.—உம்மைப்
பெரிய சபையிலே துதிப்பேன்; திரளான சனத்
௰௯ துக்குள்ளே உம்மைப் புகழுவேன்.[2]—வீணாய்
எனக்குச் சத்துருக்களானவர்கள் என்னிமித்தம்
சந்தோஷியாமலும், முகாந்தரமில்லாமல் என்
னைப் பகைக்கிறவர்கள் கண் சிமிட்டாமலும்
௨௰ இருப்பார்களாக.—ஏனெனில் அவர்கள் சமா
தானமாய்ப் பேசாமல், தேசத்திலே அமர்ந்திருக்
கிறவர்களுக்கு விரோதமாய்க் கபடமான காரி
௨௧ யங்களைத் தியானித்து,—எனக்கு விரோதமாகத்
தங்கள் வாயை விரிவாய்த் திறந்து, ஆகா, ஆகா,
எங்கள் கண் கண்டது என்கிறார்கள்.[3]

௨௨ கர்த்தாவே, நீர் அதைக் கண்டீர்; மவுனமாயி
ராதிரும், ஆண்டவரே, என்னைவிட்டுத் தூரமா
௨௩ காதிரும்.—என் பராபரனே, என் ஆண்டவரே,
என் நியாயத்துக்கும் என் வழக்குக்கும் விழித்
௨௪ தெழும்பும்.[4]—என் பராபரனாகிய கர்த்தாவே,
அவர்கள் என்னிமித்தம் சந்தோஷியாதபடிக்கு,
உம்முடைய நீதியின்படி என்னை நியாயம் விசா
௨௫ ரியும்.[5]—அவர்கள் தங்கள் இருதயத்திலே, எங்
கள் ஆத்துமாவே, ஆகா என்றும், அவனை விழுங்
௨௬ கினோம் என்றும் சொல்லாதிருப்பார்களாக.—என்
தீங்குக்காகச் சந்தோஷிக்கிறவர்கள் ஏகமாய்
வெட்கி நாணி, எனக்கு விரோதமாய்ப் பெருமை
ப்படுகிறவர்கள் வெட்கத்தாலும், இலச்சையா
௨௭ லும் உடுத்தப்படக்கடவார்கள்.[6]—என் நீதியை
விரும்புகிறவர்கள் கெம்பீரித்து மகிழ்ந்து தம்மு
டைய ஊழியக்காரனுடைய சமாதானத்தை வி
ரும்புகிற கர்த்தர் மகிமைப்படக்கடவார் என்று
௨௮ எப்போதும் சொல்லுவார்களாக.[7]—என் நாவு
உமது நீதியையும், சகல நாளிலும் உமது துதி
யையும் சொல்லுகிறதாயிருக்கும்.

## ௩௬. சங்கீதம்.

௧. துன்மார்க்கரின் நிர்ப்பந்த நிலைமை. ௫. பராபரனுடைய இரக்கத்தின் மேன்மை. ௰. அவர் தம்முடைய புத்திரர்மேல் தயைசெய்யத் தாவீது வேண்டிக்கொண்டது.

---

(இராகத்தலைவனுக்கு ஒப்புவிக்கப்பட்ட கர்த்தரு
டைய தாசனாகிய தாவீதின் சங்கீதம்.)

௧ ஆகாதவனுடைய துரோகப்பேச்சு என் இரு
தயத்தின் உள்ளத்துக்குத் தெரியும்; அவன் கண்
களுக்குமுன்பாகத் தெய்வப்பயப்படுதலில்லை.—
ஏனென்றால் தன் துர்க்குணத்தை நிறைவேற்ற ௨
வும், வர்மம் வைக்கவும், தனக்குத்தானே தன்
பார்வைக்கு ஏற்றபடி இச்சகம்பேசுகிறான்.—
அவன் வாயின் வார்த்தைகள் அக்கிரமமும் கப ௩
டமுமாய் இருக்கின்றன; நன்மைசெய்வதற்
கான புத்தியைக் காக்காமல் விட்டுவிட்டான்.[8]—
அவன் தன் படுக்கையின்மேல் அக்கிரமத்தைச் ௪
சிந்தித்துக்கொண்டு, நல்லதல்லாத வழியிலே
நிலைத்து, பொல்லாப்பை வெறுக்காதிருக்கிறான்.

கர்த்தாவே, உமது கிருபை வானங்களில் இரு ௫
க்கிறது; உமது சத்தியம் ஆகாசமண்டலங்கள்
பரியந்தமும் எட்டுகிறது.[9]—உமது நீதி வலிய ௬
பர்வதங்களைப்போலவும், உமது நியாயங்கள்
மகா ஆழமாகவும் இருக்கின்றன; கர்த்தாவே,
மனுஷரையும் மிருகங்களையும் காப்பாற்றுகி
றீர்.[10]—பராபரனே, உம்முடைய கிருபை எத்தனை ௭
அருமையாயிருக்கிறது; அதினாலே மனுப்புத்தி
ரர் உம்முடைய செட்டைகளின் நிழலிலே இட
ன்கொண்டு தங்குகிறார்கள்.[11]—உமது வீட்டினு ௮
டைய சம்பூரணத்தால் மஸ்தாகுகிறார்கள்; உம்
முடைய செல்வங்களின் ஆற்றினால் அவர்களைத்
தாகம்தீர்க்கிறீர்.—ஏனெனில் உம்மிடத்திலே ௯
சீவனுடைய ஊற்றிருக்கின்றது; உம்முடைய
வெளிச்சத்தில் வெளிச்சத்தைக் காண்கிறோம்.[12]

உம்மை அறிந்தவர்கள்மேல் உமது கிருபை ௰
யையும், செம்மை இருதயத்தார்மேல் உமது நீதி
யையும் நீட்டும்.—பெருமைக்காரரின் கால் ௰௧
என்மேல் வராமலும், ஆகாதவர்களுடைய கை
என்னைப் பறக்கடியாமலும் இருப்பதாக.

அங்கே அக்கிரமக்காரர் விழுந்து, எழுந்திருக் ௰௨
கமாட்டாமலே தள்ளுண்டுபோகிறார்கள்.

## ௩௭. சங்கீதம்.

௧. தாவீது நல்லவர்களுக்கும் பொல்லாதவர்களுக்கும் உண்டான வித்தியாசத்தைக் காட்டி, பராபரனை நம்பிப் பொறுமையாயிருக்கப் புத்தி சொன்னது.

---

(தாவீதின் சங்கீதம்.)

பொல்லாதவர்கள்மேல் எரிச்சலாகாதிரு; நியா ௧
யக்கேடு செய்கிறவர்கள்மேல் பொறாமையாகா
திரு.[13]—ஏனென்றால் புல்லைப்போலச் சீக்கிர ௨
மாய் அறுப்புண்டு, பச்சையான பூண்டைப்
போல உலருவார்கள்.—கர்த்தரை நம்பியிருந்து ௩
நன்மைசெய்; தேசத்தில் குடியிருந்து சத்தியத்
தை மேய்ந்துகொள்.—கர்த்தர்மேலே மனமகிழ்ச் ௪
சியாய் இரு; அவர் உன் இருதயத்தின் வேண்டு
தல்களை உனக்குக் கொடுப்பார்.[14]—உன் வழி ௫
யைக் கர்த்தருக்குச் சாட்டிவிடு; அவர்மேல் நம்
பிக்கையாய் இரு; அவரே காரியத்தை நடப்
பித்து,[15]—உன் நீதியை வெளிச்சத்தைப்போ ௬
லவும் உன் நியாயத்தைப் பட்டப்பகலைப்போல
வும் வெளிப்படப்பண்ணுவார்.

---

1 யோபு. ௩௰. ௧-௰௧.—2 சங். ௬௰. ௰: ௭௰௧. ௧.—3 சங். ௬௰ ௰௬: ௭௰. ௪.—4 சங். ௪௪. ௨௪. 5 சங். ௪௯. ௧.—6 சங். ௬.௰௧: ௬௰. ௰௫. ௰௬.—7 சங். ௬௰. ௰௭. 8 சங். ௫௬. ௰௬.

9 சங். ௫௭. ௰௧.—10 உரோ. ௰௧. ௩௩. 11 சங். ௰௭. ௮: ௫௭. ௨. 12 யோவா. ௧. ௪.—13 சங். ௭௩. ௩. ௪௯. ௰௬. ௰௭. ௧. யாக். ௨௪. ௰௫.—14 சங். ௨௰. ௫.—15 ௫௫. ௨௨.

௭ கர்த்தரைநோக்கி அமர்ந்து, அவருக்குக் காத்
துக்கொண்டிரு; தன்வழி வாய்க்கிறவன்மே
லும், தீவினைகளைச் செய்கிற மனுஷன்மேலும்
௮ எரிச்சலாகாதிரு.—கோபத்தை நெகிழ்ந்து உக்
கிரத்தை விட்டுவிடு; பொல்லாப்புச் செய்யவே
இனமாகிற எரிச்சல் உனக்கு வேண்டாம்.[1]—
௯ ஏனெனில் பொல்லாதவர்கள் வேர் அறுப்புண்டு
போவார்கள்; ஆனால் கர்த்தருக்குக் காத்திருக்கி
றவர்கள் பூமியைச் சுதந்தரித்துக்கொள்ளுவார்
௰ கள்.—இன்னம் கொஞ்சநேரம்தான்; அப்போது
ஆகாதவன் இரான், அவன் தானத்தை யுற்று
௰௧ விசாரித்தாயானால் அவன் இல்லை.—மெத்தனவுள்
ளவர்களோவென்றால், பூமியைச் சுதந்தரித்துக்
கொண்டு, மகா சமாதானத்தினாலே மனமகிழ்ச்
சியாயிருப்பார்கள்.[2]

௰௨ ஆகாதவன் நீதிமானுக்குத் தீவினை நினைத்து
௰௩ அவன்மேலே பற்கடிக்கிறான். — ஆண்டவர்
அவனை நகைக்கிறார்; ஏனெனில், அவன் நாள்
௰௪ வருகிறதென்று காண்கிறார்.[3]—சிறுமையும் எளி
மையுமானவனை மடிவிக்கவும், செம்மைமார்க்
கத்தாரை விழப்பண்ணவும், ஆகாதவர்கள் பட்
டையத்தை உருவி, தங்கள் வில்லை நாணேற்று
௰௫ கிறார்கள்.—ஆனால் அவர்கள் பட்டையம் அவர்
களுடைய இருதயத்துக்குள் போய் அவர்கள்
வில்லுகள் முறியும்.[4]

௰௬ அநேக ஆகாதவர்களுக்குள்ள திரட்சியைப்
பார்க்கிலும், நீதிமானுக்குள்ள கொஞ்சமானது
௰௭ நல்லது.[5] — ஏனெனில், ஆகாதவர்களுடைய
புயங்கள் முறியும்; ஆனால் நீதிமான்களைக் கர்த்தர்
தாங்குகிறார்.

௰௮ மன உண்மையானவர்களின் நாள்களைக் கர்த்
தர் அறிந்திருக்கிறார்; அவர்கள் சுதந்தரம் என்
௰௯ றென்றைக்குமிருக்கும்.—தூர்க்காலத்திலே வெ
ட்கப்பட்டுப் போகாதிருந்து பஞ்சகாலத்திலே
௨௰ திருப்தியடைவார்கள்.[6]-ஆகாதவர்களோவென்
றால் அழிவார்கள்; கர்த்தருடைய சத்துருக்கள்
புல்லுள்ள தலங்களின் வடிப்பத்தைப்போல
ஒழிந்துபோவார்கள்;புகையில் ஒழிந்துபோவார்
௨௧ கள்.—ஆகாதவன் கடன்வாங்கிச் செலுத்தாதே
போகிறான்; நீதிமானோவெனில், இரங்கிக்கொ
௨௨ டுக்கிறான். — ஏனெனில் அவரால் ஆசீர்வதிக்
கப்பட்டவர்கள் பூமியைச் சுதந்தரித்துக்கொள்
ளுவார்கள்; அவரால் சபிக்கப்பட்டவர்களோ
வென்றால் வேரறுப்புண்டுபோவார்கள்.

௨௩ நல்ல மனுஷனுடைய நடைகள் கர்த்தரால்
உறுதிப்படும்; அவனுடைய வழியின்மேல் அ
௨௪ வர் பிரியமாயிருக்கிறார்.—அவன் விழுந்தால் தள்
ளப்படுகிறதில்லை; ஏனென்றால் கர்த்தர் அவன்
௨௫ கையைத் தாங்குகிறார்.[7]—நான் இளைஞனாயிருந்
தேன், முதிர்வயதும் ஆனேன்; ஆனால் நீதிமான்
கைவிடப்பட்டதையும், அல்லது அவன் வித்து
அப்பம் தேடுகிறதையும் கண்டேனில்லை. —

1 பாக். ௧. ௨௰. — 2 மத். ௫. ௫. 3 சங். ௨. ௪. — 4 சங். ௭. ௰௭. 5 வாக். ௰௫. ௰௬. — 6 சங். ௩௩. ௰௮, ௰௯. — 7 சங். ௯௪. ௰௮.

நித்தம் இரங்கிக் கடன்கொடுக்கிறான்; அவன் ௨௬
வித்து ஆசீர்வாதமாயிருக்கும்.
பொல்லாப்பைவிட்டு விலகி, நன்மைசெய்து ௨௭
என்றென்றைக்கும் நிலைத்திரு.[8] — ஏனெனில் ௨௮
கர்த்தர் நியாயத்தைச் சிநேகிக்கிறவர், அவர் தம்
முடைய சன்மார்க்கரைக் கைவிடுவதில்லை;
அவர்கள் என்றைக்கும் தற்காக்கப்படுவார்கள்;
ஆனால் ஆகாதவர்களுடைய வித்து வேரறுப்புண்
டுபோம்.—நீதிமான்கள் பூமியைச் சுதந்தரித்துக் ௨௯
கொண்டு, என்றைக்கும் அதிலே வாசமாயிருப்
பார்கள்.
நீதிமானுடைய வாய் ஞானத்தை உரைத்து, அ ௩௰
வனுடைய நாவும் நியாயத்தைப் பேசும்.—அவனு ௩௧
டைய பராபரனின் வேதம் அவன் இருதயத்தில்
இருக்கிறது; அவன் நடைகள் தள்ளாடுவதில்
லை.[10]—நீதிமானை ஆகாதவன் வேவுபார்த்து, அவ ௩௨
னைக் கொலைசெய்ய வகைதேடுகிறான்.[11]—கர்த்த ௩௩
ரோவென்றால் அவனை இவன் கையிலேவிடுவது
மில்லை; அவன் நியாயம் விசாரிக்கப்படுகையில்
அவனை ஆகாதவனாகத் தீர்ப்பதுமில்லை.—நீ கர்த்த ௩௪
ருக்குக் காத்திருந்து அவருடைய வழியைக்
கைக்கொள்; அப்போது நீ பூமியைச் சுதந்தரித்
துக்கொள்வதற்கு உன்னை உயர்த்துவார்; ஆகாத
வர்கள் வேரறுப்புண்டுபோவதைப் பார்ப்பாய்.
பெலவந்தனுமாய், முளைத்த நிலத்தில் நிற்கிற ௩௫
பச்சை மரத்தைப்போலத் தழைத்தவனுமாய் இ
ருக்கிற ஒரு ஆகாதவனைக் கண்டேன்.—ஆனால் ௩௬
ஒழிந்துபோனான்; இதோ அவனில்லை; அவனைத்
தேடினேன்; ஆனால் அவன் காணப்பட்டதில்
லை. — நீ உத்தமனைநோக்கிச் செம்மையானவ ௩௭
னைப் பார்த்திரு; ஏனெனில் அம்மனுஷனுடைய
பின்காரியம் சமாதானம்.—துரோகிகளோ, ஏக ௩௮
மாய் அழிக்கப்படுவார்கள்;ஆகாதவர்களின் பின்
காரியம் வேரறுப்புண்குதல்.[12] — ஆனால் நீதி ௩௯
மான்களுடைய இரட்சிப்பும், இக்கட்டுக்காலத்
திலே அவர்கள் பெலனும் கர்த்தரால் வரும்.—
கர்த்தர் அவர்களுக்கு ஒத்தாசைபண்ணி அவர்க ௪௰
ளை விடுவிப்பார்; அவர்களை ஆகாதவர்களுடைய
கைக்குத் தப்புவித்து இரட்சிப்பார்; ஏனெனில்
அவரை நம்பியிருக்கிறார்கள்.

## ௩௰௮. சங்கீதம்.

௧. தன் பாதாபரிலையைக்குறித்துப் பராபரன் இரங்கும்படி தாவீது வேண்டிக்கொண்டது.

(நினைப்பூட்டுதலாகப் பாடின தாவீதின்
சங்கீதம்.)

கர்த்தாவே, உம்முடைய கடுமையில் என்னைக் ௧
கடிந்துகொள்ளாதிரும்; உம்முடைய உக்கிரத்
தில் என்னைத் தண்டியாதிரும்.[13] — ஏனெனில் ௨
உம்முடைய அம்புகள் எனக்குள்பட்டன;
உம்முடைய கை என்மேல் இறங்கிற்று.[14]
உமது சினத்தால் என் மாம்சத்திலே ஆரோக் ௩
கியம் இல்லை; என் பாவத்தினால் என் எலும்பு

8 சங். ௩௪. ௰௩. - 9 வாக். ௨. ௨௧, ௨௨. 10 ஏசா. ௫௧. ௭. — 11 சங். ௰. ௯. 12 சங். ௭௧. ௰௩. - 13 சங். ௬. ௧. எரே. ௰. ௨௪. — 14 யோபு. ௬. ௪.

௪ களில் சமாதானமில்லை.—ஏனெனில் என் அக்
கிரமங்கள் என் தலையின்மேல் ஏறி, பாரச்சுமை
யைப்போல எனக்கு மிஞ்சின பாரமாயிற்று.[1]—
௫ என் பயித்தியத்தினால் என் புண்கள் நாற்றமெ
௬ டுத்து அழுகிப்போயின.-மிகுதியாகவும் மடங்கி
ஒடுங்கினேன்; நாள்தோறும் கரிகறுத்துத் திரிகி
௭ றேன்.—ஏனெனில் என் குடல்கள் வெட்டை
யால் நிறைந்திருக்கின்றன; என் மாம்சத்திலே
௮ ஆரோக்கியம் இல்லை.-மிகுதியாகவும் பெலனற்
றுப்போய் அலைச்சல்பட்டேன்; என் இருதயத்
தின் கொந்தளிப்பினால் கதறுகிறேன்.
௯ ஆண்டவரே, உமக்குமுன்பாக என் ஏங்கல்
எல்லாமிருக்கின்றது; என தவிப்பு உமக்கு
௰ மறைக்கப்பட்டதல்ல.—என் இருதயம் குழம்பி
அலைகிறது; என் பெலன் என்னைவிட்டு, என்
கண்களுடைய வெளிச்சந்தானும் என்னில் இல்
௰௧ லாதேபோயிற்று.—என் சிநேகிதரும் என் தோ
ழமாரும் என் வாதைக்கு எதிரே நின்றிருந்து,
என்னைச் சேர்ந்தவர்கள் தூரமாய் நிற்கிறார்கள்.[2]-
௰௨ என் பிராணனை வாங்கப்பார்க்கிறவர்கள் எனக்
குக் கண்ணிகளை வைக்கிறார்கள்; எனக்குப்
பொல்லாப்பைத் தேடுகிறவர்கள் கேடுபாடுக
ளைப் பேசி, நித்தம் கபடங்களைச் சிந்திக்கிறார்
௰௩ கள்.-நானோவெனில் செவிடனைப்போலக் கே
ளாதவனாகவும், தன் வாயைத் திறவாத ஊமைய
௰௪ னைப்போலவும் இருக்கிறேன்.—கேளாமலும்,
தன் வாயில் எதிர் உத்தரவுகள் இல்லாமலுமிருக்
கிற மனுஷனைப்போலானேன்.
௰௫ அதேனென்றால் கர்த்தாவே, உமக்குக் காத்தி
ருக்கிறேன்; என் பராபரனாகிய ஆண்டவரே,
௰௬ தேவரீர் மறுஉத்தரவு கொடுப்பீர்—ஏனெனில்
என்நிமித்தம் சந்தோஷப்படாதிருப்பார்களாக
என்றேன்; என் கால் தள்ளாடும்போது என்மேல்
௰௭ பெருமைப்படுவார்களே.—ஏனெனில் நான் தள்
ளம்பாற இனமானவன்; என் நோவு எப்போதும்
௰௮ எனக்குமுன்பாக இருக்கிறது.— ஏனென்றால்
என் அக்கிரமத்தை அறிக்கையிட்டு, என் பாவத்
௰௯ தின்நிமித்தம் விசாரப்பட்டிருக்கிறேன்.[3] — ஆ
னால் என் சத்துருக்கள் வாழ்ந்து பெலத்திருக்கி
றார்கள்; முகாந்தரமில்லாமல் என்னைப் பகைக்
௨௰ கிறவர்கள் பெருத்திருக்கிறார்கள்.-நன்மைக்குத்
தீமை சரிக்கட்டுகிறவர்கள், நான் நன்மையைப்
பின்பற்றுகிறபடியால் என்னை விரோதிக்கிறார்
௨௧ கள்.— கர்த்தாவே, என்னைக் கைவிடாதிரும்;
என் பராபரனே, எனக்குத் தூரமாயிராதிரும்.—
௨௨ என் இரட்சிப்பாகிய ஆண்டவரே, எனக்குச் சகா
யம்பண்ணத் தீவிரித்துக்கொள்ளும்.

## ௩௯. சங்கீதம்.

௧. தாவீது தன் சிந்தனைகளைக் கவனித்ததென்பது. ௪. ஆயுசு குறுகுதலையும், மாயையையும் நினைக்கின்ற நினைவும், ௭. பராபரனுடைய நியாயத்தீர்ப்புகளுக்குப் பணிவும், ௰. செபமும் தன் பொறுமையில்லாமையை அடக்குதல்.

(எதித்தூன் என்ற இராகத்தலைவனுக்கு ஒப்புவிக்கப்பட்ட தாவீதின் சங்கீதம்.)

நான் என் நாவினாலே பாவம்செய்யாதபடிக்கு, ௧
நான் என் வழிகளைக் காத்து, ஆகாதவன் எனக்கு
முன்பாக இருக்கும்மட்டும் என் வாயைக் கடி
வாளத்தால் பத்திரப்படுத்துவேன் என்றேன்.[4]—
நான் மவுனப்பட்டு ஊமையனாயிருந்து, நலமா ௨
னதைப் பேசாமல் அமர்ந்தேன்; ஆனால் என்
நோவு அதிக தூரிசாயிற்று.[5] — என் இருதயம் ௩
எனக்குள் எரிந்ததினால் என் தியானத்தினால்
நெருப்பு வேகிறதாயிருந்தது; அப்போது என்
நாவினால் விண்ணப்பம்செய்தேன்.
கர்த்தாவே, நான் எத்தனையாய் நிலையற்றவ ௪
னென்று நான் உணர, என் முடிவையும் என்
நாள்களின் அளவு எம்மாத்திரம் என்கிறதையும்
எனக்குத் தெரிவியும்.[6]-இதோ நாலுவிரல்கடை ௫
களாய் என் நாள்களை அளவிட்டீர்; என் ஆயுசு
உமக்குமுன்பாக ஒன்றும் இல்லாததுபோல
இருக்கிறது; ஆம், எந்த மனுஷனும் மாயையே
என்கிறது நிசம்; சேலா.[7]—வேஷமாகவே மனு ௬
ஷன் திரிகிறான்; மாயையாகவே அமளிபண்ணு
கிறார்கள்; ஆஸ்தியைச் சேர்க்கிறான்; ஆனால் யார்
அவைகளைவாரிக்கொள்ளுவாரென்று அறியான்.
இப்போதும் ஆண்டவரே, எதுக்கு எதிர் ௭
பார்ப்பேன்; என் நம்பிக்கை உம்முடையமேல்
இருக்கிறது.[8]—என்னை என் மீறுதல்களுக்கெல் ௮
லாம் நீங்கலாக்கும்; என்னைப் பயித்தியக்கார
னுடைய நிந்தனையாக வைக்காதிரும்.[9] — என் ௯
வாயைத் திறவாமல் மவுனமாயிருக்கிறேன்;
ஏனெனில் தேவரீர் அதைச் செய்தீர். — உம்மு ௰
டைய வாதையை என்னிலிருந்து எடுத்துப்போ
டும்; உமது கரத்தின் அடிகளால் நான் தொய்ந்து
போனேன்.—நீர் அக்கிரமத்தின்நிமித்தம் மனுஷ ௰௧
னைக் கடிந்துகொண்டு தண்டிக்கிறபோது, அவன்
வடிவைப் பொட்டரிப்பாய் அழியப்பண்ணு
கிறீர்; மெய்யாக எந்த மனுஷனும் மாயை; சேலா.
கர்த்தாவே, என் செபத்தைக் கேட்டு, என் ௰௨
கூப்பிடுதலுக்குச் செவிகொடும்; என் கண்ணீ
ருக்கு மவுனமாயிராதிரும்; ஏனெனில் உமக்கு
முன்பாக நான் என்னுடைய எல்லாப் பிதாக்க
ளைப்போல, அரதேசியும் பரதேசியுமாயிருக்கி
றேன்.[10]—நான் இனி இராமல்போகுமுன்னே, ௰௩
இலகுவடைவதற்காக என்னைவிட்டு விலகும்.[11]

## ௪௰. சங்கீதம்.

௧. பராபரனில் நம்பிக்கைவைப்பதினால் வரும் பிரயோசனம். ௬. கீழ்ப்படிதல் தகுந்த பலியாயிருக்கிறதென்பது. ௰௧. தாவீதின் உபத்திரவங்கள் அவனைச் செபம்பண்ணத் தூண்டிவிட்டது.

(இராகத்தலைவனுக்கு ஒப்புவிக்கப்பட்ட தாவீதின் சங்கீதம்.)

கர்த்தருக்குக் காக்கவே காத்திருந்தேன்; அப் ௧
போது அவர் என்னண்டைக்குச் சாய்ந்து, என்
கூப்பிடுதலைக் கேட்டு,—என்னைப் பயங்கரமான ௨
குழியிலும், உளையான சேற்றிலுமிருந்து ஏறப்
பண்ணி, என் கால்களைக் கல்மலையின்மேல்

1 புல.௧.௰௪.—2 யோபு. ௰௯.௰௪. 5 சங். ௧௮.௰௪.—6 சங்.௯௰.௰௨.
3 சங்.௩௨.௫.-4 சங்.௰௭.௧: ௩௪௧.௩. 7 சங்.௬௨.௰: ௩௪௪.௪.—8 சங்.

௨௫.௨.—9 சங்.௭௧.௯.-10 சங். ௨௫.௨௧. ௧ நாளா. ௨௯. ௰௫. எபி.
௩௰௯.௰௯. ௧ பே.௨.௰௨. ௧ மோ. ௪௭.௰௧.—11 யோபு. ௰.௨௰.௨௧.

௩ நிறுத்தி, என் அடிகளை உறுதிப்படுத்தி,[1]—எங்
கள் பராபரனைத் துதிக்கும் புதுப்பாட்டை என்
வாயிலே கொடுத்தார்; அநேகர் அதைக் கண்டு
௪ பயந்து, கர்த்தரை நம்புவார்கள்.[2]—அகந்தைக்கா
ரரையும் பொய்க்குச் சாய்கிறவர்களையும் நோக்
காமல், கர்த்தரைத் தன் நம்பிக்கையாக வைக்கிற
மனுஷன் பாக்கியவான்.[3]
௫ என் பராபரனாகிய கர்த்தாவே, தேவரீர் எங்
கள்மேல் உம்முடைய அதிசயங்களையும், உம்மு
டைய யோசனைகளையும் பெருகப்பண்ணினீர்;
தேவரீருக்கு ஒப்பிடுதல் இல்லை; நான் அவை
களை அறிவித்துச் சொல்லியும் அவைகள் எண்
௬ ணிக்கைக்கு மேலானவைகள்.[4]—பலியையும் கா
ணிக்கையையும் நீர் விரும்பாமல், செவிகளை
எனக்கு ஆயத்தம்பண்ணினீர்; சர்வாங்கதகன
பலியையும், பாவம்போக்கும் பலியையும் நீர்
௭ கேட்டதில்லை.[5]—இதோ வருகிறேனென்று அப்
போது சொன்னேன்; புஸ்தகச்சுருளில் என்
௮ னைக்குறித்து எழுதியிருக்கிறது.[6]—என் பராபர
னே, உமக்குப் பிரியமானதைச் செய்ய விரும்பு
கிறேன்; உமது நியாயப்பிரமாணம் என் உள்ளத்
௯ துக்குள்ளிருக்கிறது.[7] — திரளான சபையிலே
நீதியைப் பிரசங்கிக்கிறேன்; இதோ கர்த்தாவே,
என் உதடுகளை மூடேனென்கிறதை நீர் அறி
௰ வீர்.[8]—உம்முடைய நீதியை என் இருதயத்துக்
குள் மறையேன்; உமது சத்தியத்தையும், உமது
இரட்சிப்பையும் சொல்லுகிறேன்; உமது கிரு
பையையும், உமது உண்மையையும் திரளான
சபைக்கு அறிவியாதபடிக்கு ஒளியேன்.
௰௧ கர்த்தாவே, தேவரீர் உம்முடைய இரக்கங்
களை எனக்குக் கிடையாமல் போகப்பண்ணாதி
ரும், உமது கிருபையும், உமது உண்மையும்
எப்போதும் என்னைக் காப்பாற்றக்கடவன.—
௰௨ ஏனெனில் எண்ணிக்கைக்கு அடங்காத பொல்
லாப்புகள் என்னைச் சூழ்ந்து, என் பார்வைக்கு
அடங்காத என்னுடைய அக்கிரமங்கள் என்
னைத் தொடர்ந்து பிடித்தன; அவைகள் என்
தலையின் மயிர்களிலும் அதிகமாயிருக்கிறதினால்,
என் இருதயம் என்னைவிட்டுப் போயிற்று.[9]—
௰௩ கர்த்தாவே, என்னை விடுவித்தருளும்; கர்த்தாவே,
எனக்குச் சகாயம்பண்ணத் தீவிரித்துக்கொள்
௰௪ ளும்.[10] — என் ஆத்துமாவை அழிக்கத் தேடுகிற
வர்கள் ஏகமாய் வெட்கி நாணி, என் தீங்கை
விரும்புகிறவர்கள் பின்னிட்டு இலச்சையடை
௰௫ யக்கடவார்கள்.[11]—என்மேல் ஆகா, ஆகா, என்
கிறவர்கள் தாங்கள் அடையும் வெட்கமான பல
௰௬ னாலே திடுக்கிடக்கடவார்கள்.[12]—உம்மைத் தே
டுகிற அனைவரும் உமக்குள் மகிழ்ந்து சந்தோ
ஷப்படுவார்களாக; உம்முடைய இரட்சிப்பைச்
சிநேகிக்கிறவர்கள் எப்போதும், கர்த்தர் மகி
௰௭ மைப்படக்கடவார் என்பார்களாக.—நான் சிறு
மையும் எளிமையுமானவன்; கர்த்தரோவெனில்
எனக்காக நினைவாயிருப்பார்; தேவரீரே என்
துணையும் என்னை விடுவிக்கிறவருமாயிருக்கிறீர்;
என் பராபரனே தாமதியாதிரும்.[13]

## ௪௧. சங்கீதம்.

௧. ஏழைகளைப் பராபரன் பாதுகாத்தல். ௪. தாவீது தன் சத்துருக்களின் சர்ப்பனையைக்குறித்து முறையிட்டது. ௰. அடைக்கலம்புகப் பராபரனிடத்திற்கு ஓடினது.

---

(இராகத்தலைவனுக்கு ஒப்புவிக்கப்பட்ட
தாவீதின் சங்கீதம்.)

சிறுமைப்பட்டவன்மேலே கவனிப்பான சிந்த
தையுள்ளவன் பாக்கியவான்; கர்த்தர் அவனைத்
தீங்குநாளிலே விடுவிப்பார்.[14]—கர்த்தர் அவனைத் ௨
தற்காத்து, அவனை உயிரோடே வைப்பார்; பூமி
யின்மேல் பாக்கியவானாயிருப்பான்; அவனை அ
வன் சத்துருக்களின் மனதுக்கு ஒப்புக்கொடீர்.—
கட்டிலின்மேல் பிணியாய்க்கிடக்கிற அவனைக் ௩
கர்த்தர் தாங்குவார்; அவனுடைய வியாதியிலே
அவன் படுக்கையை எல்லாம் மாறப்பண்ணுவீர்.
கர்த்தாவே, என்மேல் இரங்கும்; என் ஆத்து ௪
மாவைக் குணமாக்கும்; ஏனெனில் உமக்கு
விரோதமாகப் பாவம்செய்தேனென்று நான்
சொன்னேன்.[15]—எப்போது சாவான், எப்போது ௫
அவன்பேர் அழியுமென்று என் சத்துருக்கள்
எனக்குப் பொல்லாப்பாய்ச் சொல்லுகிறார்
கள்—என்னை ஒருவன் பார்க்கவந்தால், அவத் ௬
தம் பேசுகிறான்; அவன் இருதயம் அக்கிரமத்
தைப் பொறுக்கிக்கொண்டு வெளியேபோய்
அதைச் சொல்லுகிறான். — என்மேல் ஏகமாய் ௭
முணுமுணுக்கிறார்கள்; என் பகைஞர் எல்லா
ரும் எனக்கு விரோதமாயிருந்து, எனக்குப்
பொல்லாப்பை நினைத்து,—பேலியாளின் கர் ௮
மம் அவனை ஒட்டிக்கொண்டிருக்கிறது; கிடக்
கிற அவன் இனி எழுந்திருப்பதில்லை என்கிறார்
கள்.—என்னோடே சமாதானமாயிருந்தவனும், ௯
நான் நம்பினவனும், என்னுடைய அப்பத்தைப்
புசித்தவனுமாகிய மனுஷனும் என்மேலே தன்
குதிகாலை மிகுதியும் எடுத்தான்.[16]
ஆனால் கர்த்தாவே, தேவரீர் எனக்கு இரங்கி, ௰
நான் அவர்களுக்குச் சரிக்கட்ட என்னை எழுந்
திருக்கப்பண்ணும். — என் சத்துரு என்மேல் ௰௧
கெம்பீரிக்காமல் போவதினாலே என்மேலே பிரி
யமாயிருக்கிறீர் என்கிறதை அறிவேன்.—நான் ௰௨
மன உண்மையாயிருக்கிறதினால் நீர் என்னைத்
தாங்கி, என்னை என்றென்றைக்கும் உம்முடைய
முகத்துக்குமுன்பாக நிலைநிறுத்துவீர்.—இஸ்ர ௰௩
வேலின் பராபரனாகிய கர்த்தர் அநாதியாய் என்
றென்றைக்குமுள்ள சதாகாலங்களிலும் தோத்
திரிக்கப்பட்டவர்; ஆமன், ஆமன்.[17]

## ௪௨. சங்கீதம்.

௧. ஆலயத்தில் பராபரனுக்கு ஊழியஞ்செய்யத் தாவீதுக்குண்டான வைராக்கியம். ௫. அவரில் நம்பிக்கைவைக்கத் தன் ஆத்துமாவைத் தயிரியப்படுத்தினது.

---

1 சங். ௯௬. ௧. —2 சங். ௯௧. ௧. 6 யோவா. ௫. ௩௯, ௪௬.
3 சங். ௩௪. ௮.—4 சங். ௮௬. ௭. 7 மத். ௨௬.௩௯. யோவா. ௪. ௩௪, ௪.
5 எபி. ௰. ௫, ௰. எசா. ௫௰. ௫,௬. 8 சங். ௩௫. ௰௮.—9 சங். ௯௬. ௫, ௧.

10 சங். ௨௨. ௨௰.—11 சங். ௭௰. ௩. ௪. 15 சங். ௬. ௩: ௫௧. ௬.—16 யோவா. ௰௩. ௰௮.
12 சங். ௩௫. ௨௧. ௪.—13 சங். ௯௬. ௰௩. ௰௮.—17 சங் ௭௨. ௰௮, ௰௯:
௩௰: ௩௬. ௨௨.—14 வாக். ௰௪. ௨௧. ௮௬. ௫: ௩௬. ௪௮.

(கோராகின் புத்திரரிலுள்ள இராகத்தலைவனுக்கு ஒப்புவிக்கப்பட்ட போதக சங்கிதம்.)

௧ **மா**ன் தண்ணீர் நதிகளின்மேல் வாஞ்சை
யாய்க் கதறுமாப்போல, என் ஆத்துமா உம்மு
டையமேல் வாஞ்சையாய்க் கதறுகிறது பாரபர
௨ னே.—என் ஆத்துமா சீவனுள்ள தெய்வமாகிய
பராபரன்மேலே தாகமாயிருக்கிறது; நான் எப்
போது பிரவேசித்து, பராபரனுடைய சந்நிதியி
௩ லே காணப்படலாம்.[1]—உன் பராபரன் எங்கே
என்று என்னுடனே நாள்தோறும் சொல்லப்படு
கையால், இரவும்பகலும் என் கண்ணீர் எனக்கு
௪ அப்பமாயிற்று.[2] — இவைகளை நான் நினைத்துக்
கொண்டு எனக்குள்ளிருக்கும் என் ஆத்துமாவை
ஊற்றிவிடுகிறேன்; ஏனெனில் முந்தி நான்
கும்புக்குள்ளே நடந்துவந்து, பண்டிகையை
ஆசரிக்கிற கூட்டத்தினுடைய கெம்பீரமும்
துதியுமான சத்தத்துடனே பராபரனுடைய வீடு
மட்டும் ஏகமாய் ஏகுவேனே.
௫ என் ஆத்துமாவே, ஏன் முறிந்துபோய் என்
னிலே கொந்தளிக்கிறாய்; பராபரனுக்குக் காத்
துக்கொண்டிரு; ஏனெனில் இன்னம் அவரை
அவர் சமுகத்தினுடைய இரட்சிப்புகளின்
௬ நிமித்தம் துதிப்பேன்.[3]—என் பராபரனே, என்
னில் என் ஆத்துமா முறிந்துகொண்டிருக்கின்
றது; ஆகையால் யோர்தான் தேசத்திலும், எர்
மோன் மலைகளிலும், சிறு மலையிலுமிருந்து உம்
௭ மை நினைக்கிறேன்.—உம்முடைய மதகுகளின்
இரைச்சலால் ஆழத்தை ஆழம் கூப்பிடுகின்றது;
உம்முடைய வெள்ளங்களும் உம்முடைய அலை
களுமெல்லாம் என்மேலே புரளுகின்றன.—
௮ ஆனால் பகல்காலத்திலே கர்த்தர் தமது கிருபை
யைக் கட்டளையிடுகிறார்; இராக்காலத்தில் என்
சீவனுடைய பராபரனை விண்ணப்பம்செய்
யும், அவருடைய பாட்டு என்னோடிருக்கும்.—
௯ நான் என் கல்மலையாகிய பராபரனோடே ஏன்
என்னை மறக்கிறீர், சத்துரு என்னை ஒடுக்குகிற
தினால், நான் என் கரிகறுத்துத் திரியவேண்டு
௰ மென்கிறேன்.[4]—உன் பராபரன் எங்கே என்று
என் சத்துருக்கள் நாள்தோறும் என்னோடே
சொல்லி என்னை நிந்திக்கிறது, என் எலும்புகளை
உருவும் வாதையாய் எனக்கு இருக்கிறது.
௰௧ என் ஆத்துமாவே, ஏன் முறிந்துகொண்டி
ருக்கிறாய்? ஏன் என்னில் கொந்தளிக்கிறாய்?
பராபரனுக்குக் காத்துக்கொண்டிரு; ஏனெனில்
இன்னம் அவரை என் முகத்தின் குறையற்ற
இரட்சிப்பென்றும், என் பராபரனென்றும் து
திப்பேன்.

## ௪௩. சங்கீதம்.

௧. தாவீது முறைபடியும் தான் தேவாலயத்திற் சேர்க்கப்பட மன்றாடிச் சந்தோஷமாய்ப் பராபரனுக்கு ஊழியம்செய்ய வாக்குத்தத்தம்பண்ணினது. ௫. அவரில் நம்பிக்கைவைக்கத் தன் ஆத்துமாவைத் தயிரியப்படுத்தினது.

௧ **ப**ராபரனே, நீர் என்னை நியாயம் விசாரித்து,
சன்மார்க்கமில்லாத சாதி என்னை விலக, என்
வழக்கை வழக்காடி, சூதும் அநியாயமுமான
மனுஷனுக்கு என்னைத் தப்புவியும்.[6] — ஏனெ ௨
னில் தேவரீர் என் பெலனாகிய பராபரன்; ஏன்
என்னைத் தள்ளிவிடுகிறீர்? சத்துரு என்னை ஒடுக்
குகிறதினால், நான் ஏன் கரிகறுத்துத் திரியவேண்
டும்.[7]—உம்முடைய வெளிச்சத்தையும், உமது ௩
சத்தியத்தையும் அனுப்பும்; அவைகள் என்னை
நடத்தி, என்னை உமது பரிசுத்த பர்வதத்துக்கும்,
உம்முடைய வாசஸ்தலங்களுக்கும் கொண்டு
போகவும்,[8]—நான் பராபரனுடைய பீடத்தண் ௪
டைக்கும் என் களிகூருதலான மகிழ்ச்சியின்
பராபரனண்டைக்கும் பிரவேசித்து, என் தெய்
வமாகிய பராபரனே, உம்மைச் சுரமண்டலத்தா
லே துதிக்கவும்தானே.
என் ஆத்துமாவே, ஏன் முறிந்துகொண்டிருக் ௫
கிறாய்? ஏன் என்னில் கொந்தளிக்கிறாய்; பரா
பரனை நம்பு; ஏனெனில் இன்னம் அவரை என்
முகத்தின் குறையற்ற இரட்சிப்பென்றும், என்
பராபரனென்றும் துதிப்பேன்.[9]

## ௪௪. சங்கீதம்.

௧. திருச்சபை தமக்கு முன்கிடைத்த தயையை நினைவுகூர்ந்து, ௭. தற்காலத்திலுள்ள தம்தம் பொல்லாங்குகளைக்குறித்து முறையிட்டு, ௰௭. தமது நன்னெறியை வெளிப்படுத்தி, ௨௪. உதவிக்காகக் கருத்தாய் வேண்டிக்கொண்டது.

(கோராகின் புத்திரரில் இராகத்தலைவனுக்கு ஒப்புவிக்கப்பட்ட போதக சங்கீதம்.)

**ப**ராபரனே, பூருவ நாள்களாகிய தங்கள் நாள்க ௧
ளில் நீர் நடப்பித்த கிரியையை எங்கள் பிதாக்கள்
எங்களுக்கு விவரித்தார்கள்; அதை எங்கள் காது
களாலே கேட்டோம்.-தேவரீர் உம்முடைய கை ௨
யினாலே சாதிகளைத் துரத்தி, இவர்களை நாட்டிச்
சனசதளங்களைத் துன்பப்படுத்தி, அவைகளைத்
தள்ளிவிட்டீர்.-ஏனெனில் அவர்கள் தங்கள் பட் ௩
டையத்தாலே தேசத்தைக் கட்டிக்கொண்டதில்
லை; அவர்கள் புயமுமல்ல, உம்முடைய வலதுக
ரமும், உம்முடைய புயமும், உம்முடைய மு
கத்தின் வெளிச்சமும் அவர்களை இரட்சித்தன;
ஏனெனில் அவர்கள்மேலே பிரியமாயிருந்தீர்.
பராபரனே, தேவரீரே என் இராசாவானவர்; ௪
யாக்கோபின் குறையற்ற இரட்சிப்பைக் கட்ட
ளையிடும். — உம்மாலே எங்கள் சத்துருக்களை ௫
முட்டுவோம்; எங்கள்மேல் விழுகிறவர்களை உம்
முடைய நாமத்தினாலே மிதிப்போம்.[10]—ஏனெ ௬
னில் என் வில்லை நம்பேன்; என் பட்டையம்
என்னை இரட்சிப்பதுமில்லை. — நீரோவெனில் ௭
எங்கள் சத்துருக்களுக்கு எங்களை நீங்கலாக்கி இ
ரட்சித்து, எங்களைப் பகைக்கிறவர்களை வெட்
கப்படுத்தினீர்.—பராபரனுக்குள் நித்தம் மேன் ௮
மைபாராட்டுகிறோம்; உம்முடைய நாமத்தை
என்றென்றைக்கும் துதிப்போம்; சேலா.
இப்போதோவெனில் நீர் எங்கள் சேனைகளு ௯
டனே புறப்படாமல், எங்களைத் தள்ளிவிட்டு நா
ணப்பண்ணுகிறீர்.[11] — எங்களைச் சத்துருவுக் ௰

1 சங். ௬௩. ௨: ௱௪௩. ௬. 2 சங். ௮௦. ௫.—3 சங். ௪௩. ௫. 4 சங். ௪௩. ௨. —5 ௯. ௰௪ சங். ௪௩. ௫.—6 சங். ௨௬. ௧.

7 சங். ௪௨. ௯.—8 சங். ௰௫. ௧. 9 சங். ௪௨. ௫, ௰௧. 10 சங். ௬௰. ௰௨: ௱௮. ௰௩. 11 சங். ௭௪. ௰௨.

கிடைந்து பின்னிட்டுத் திரும்பப்பண்ணுகிறீர்;
எங்கள் பகைஞர் தங்களுக்கென்று கொள்ளையா
௰௧ டுகிறார்கள்.—நீர் எங்களை ஆடுகளைப்போலஇரை
யாக ஒப்புக்கொடுத்து, சாதிகளுக்குள்ளே எங்க
௰௨ ளைச் சிதறடிக்கிறீர்.—உம்முடைய சனத்தை இல
வசமாக விற்கிறீர்; அவர்களைக் கிரயப்படுத்துகிற
௰௩ தினாலே வரப்படாதே போகிறீர்.—எங்களை எங்
கள் அயலாருக்கு நிந்தையும், எங்கள் சுற்றுப்பு
றத்தாருக்குப் பரியாசமும்,சக்கந்தமுமாக வைக்
௰௪ கிறீர்.[1]—எங்களைச் சாதிகளுக்குள்ளே பழமொழி
யாகவும், சனசதளங்களுக்குள்ளே தலைதுலுக்கு
௰௫ தலாகவும் வைக்கிறீர்.—சத்துருவையும் குரோதம்
தீர்த்துக்கொள்ளுகிறவனையும்தொட்டு நிந்தித்து,
௰௬ தூஷணிக்கிறவனுடைய சத்தத்தினாலே,—நித்தம்
என் இலச்சை எனக்குமுன்பாக இருக்கிறது;
என் முகத்தின் வெட்கம் என்னை மூடுகிறது.
௰௭ இவையெல்லாம் எங்களுக்கு வந்திருந்தும்
உம்மை நாங்கள் மறந்ததுமில்லை; உம்முடைய
உடம்படிக்கைக்குத் துரோகம்பண்ணினதுமில்
௰௮ லை.— நீர் எங்களை வலுசர்ப்பங்களுள்ள தலத்
திலே நசுக்கி, மரணநிழலினாலே எங்களை மூடியி
௰௯ ருந்தும்,—எங்கள் இருதயம் பின்வாங்கினதும்,
எங்கள் காலடி உம்முடைய பாதையை விட்டு
௨௰ விலகினதுமில்லை.— நாங்கள் எங்கள் பராபரனு
டைய நாமத்தை மறந்து,எங்கள் உள்ளங்கைகளை
அந்நியதேவருக்கு விரித்திருந்தோமானால், —
௨௧ பராபரன் அதை ஆராய்ந்து விசாரியாதிருப்
பாரோ? ஏனெனில் அவர் இருதயத்தின் அந்தரங்
௨௨ கங்களை அறிந்திருக்கிறார்.—ஆனால் உம்முடைய
நிமித்தம் நாங்கள் நாள்தோறும் கொலைசெய்யப்
பட்டு, அடிக்கப்படும் ஆடுகளைப்போலே எண்
ணப்பட்டிருக்கிறோம்.
௨௩ [2]ஆண்டவரே, விழித்துக்கொள்ளும்; ஏன் நித்
திரைபண்ணுகிறீர்; எங்களை என்றைக்கும் தள்ளி
௨௪ விடாமல் எழுப்பும்.[3]—ஏன் உம்முடைய முகத்
தை மறைத்து, எங்கள் சிறுமையையும் எங்கள் ஒ
௨௫ டுங்குதலையும் மறப்பீர்.—ஏனெனில் எங்கள் ஆத்
துமா புழுதிமட்டாகக் குனியப்பட்டு, எங்கள்
௨௬ வயிறு தரையோடு ஒட்டியிருக்கிறது.—எங்களு
க்கு ஒத்தாசையாக எழுந்திருந்து, உம்முடைய
கிருபையின்நிமித்தம் எங்களை மீட்டுவிடும்.

## ௪௫. சங்கீதம்.

க. கிறிஸ்துவினுடைய இராச்சியத்தின் மகத்துவமும் கிருபையும், ௰. சபை யின் கடமையும், அதனால் வரும் பிரயோசனங்களும் சொல்லப்பட்டது.

(ஆறுநரம்புக் கின்னரத்திலே வாசிக்கக் கோராகின்
புத்திரரிலுள்ள இராகத்தலைவனுக்கு ஒப்பு
விக்கப்பட்ட சிநேகப்பாட்டாகிய
போதக சங்கீதம்.)

௧ என் இருதயம் நல்ல விசேஷத்தை ஊற்றிவிடும்;
நான் கவிகட்டுகிறது இராசாவின்மேலேதான்
என்கிறேன்; என் நாவு தேறின கணக்கனுடைய
எழுத்தாணி.[4]—எல்லா மனுப்புத்திரரிலும் மகா ௨
அழகாயிருக்கிறீர்; கிருபை உம்முடைய உதடுக
ளில் ஊற்றியிருக்கிறது; ஆகையால் பராபரன்
உம்மை என்றென்றைக்கும் ஆசீர்வதிக்கிறார்.
[5]சவுரியவானே, உமது மகிமையும் உமது மகத் ௩
துவமுமாகிய உம்முடைய பட்டையத்தை நீர்
உம்முடைய அரையிலே கட்டிக்கொண்டு, —
சத்தியத்தின்நிமித்தமாகவும், நீதியான சாந்தத் ௪
தின்நிமித்தமாகவும் உமது மகத்துவத்திலே செய
மாய் ஏறிவாரும்; உமது வலதுகரம் பயங்கரமா
னவைகளை உமக்குப் படிப்பிக்கும்.[6]—உம்மு ௫
டைய அம்புகள் கூர்மையாயிருக்கின்றன; சன
சதளங்கள் உமக்குக் கீழ்விழுவார்கள்; அவைகள்
இராசாவுடைய சத்துருக்களின் இருதயத்துக்
குள்ப்படும்.[7]
பராபரனே, உம்முடைய இராசாசனம் என் ௬
றென்றைக்குமுள்ள சதாகாலங்களாக நிற்கும்;
உமது இராச்சியத்தின்செங்கோல்செம்மையான
செங்கோலாயிருக்கிறது.[8]—நீதியைச் சிநேகித்து, ௭
ஆகாமியத்தைப் பகைத்திருக்கிறீர்; ஆகையினா
லே பராபரனே, உம்முடைய பராபரன், உம்மு
டைய தோழரைப்பார்க்கிலும் உம்மை மகிழ்ச்சி
யின் எண்ணெயினாலே அபிஷேகம்பண்ணி
னார்.[9]
நீர் மகிழ்ச்சிபொருந்திய தந்த அரமனைகளிலி ௮
ருந்து புறப்படுகையில், உம்முடைய வஸ்திரங்க
ளெல்லாம் வெள்ளைப்போளம் சந்தனம் காசியா
வுமான வாசனையாயிருக்கிறது. — உம்முடைய ௯
நாயகிகளுக்குள்ளே அரசரின் குமாரத்திகளுண்
டு; இராசஸ்திரி உம்முடைய வலதுபாரிசத்திலே
ஓப்பீரின் தங்கம் அணிந்தவளாய் நிற்கிறாள்.[10]—
குமாரத்தியே, நீ கேட்டுப்பார்த்து, உன் செவி ௰
யைச் சாய்த்து, உன் சனத்தையும் உன் தகப்பன்
வீட்டையும் மறந்துபோ.[11]—அப்போது இராசா ௰௧
உன் அழகுக்கு விருப்பமாவார்; ஏனென்றால்
அவர் உன் ஆண்டவராயிருக்கிறார்; ஆகையால்
அவரைப் பணிந்துகொள்.[12] — அப்போது தீறு ௰௨
குமாரத்தியும் சனத்தின் ஐசுவரியவான்களும்
வெகுமானம் கொண்டுவந்து, உன் முகத்துக்கு
முன்பாக வருந்துவார்கள்.[13]
இராசாவின் குமாரத்தி உள்ளாக முற்றிலும் ௰௩
மகிமையானவள்; அவள் உடுப்பு பொன்சரி
கை அலங்காரமானது.[14]—சித்திரத்தையல் ஆடை ௰௪
களுடனே இராசாவண்டைக்குக் கொண்டுவரப்
படுவாள்;அவள் தோழிகளாகிய கன்னியாஸ்திரி
கள் அவர்கள் பிறகாலே வருவார்கள்; அவர்கள்
உன்னண்டைக்குக் கூட்டிக்கொள்ளப்படுவார்
கள். — மகிழ்ச்சிகளோடும் களிகூருதலோடும் ௰௫
கொண்டுவரப்பட்டு,இராசாவின் அரமனைக்குள்
பிரவேசிப்பார்கள். — உன் பிதாக்களுக்குப்பதி ௰௬
லாக உன் பிள்ளைகள் இருப்பார்கள்;அவர்களைப்

1 சங். ௭௯. ௪.—2 உரோ. ௮. ௩௬. ௨௨.—6 அறி. ௰௯. ௰௧. ௰௭.
3 ஈத். அ. ௨௪, ௨௫.—4 கொலோ. 7 சங். ௩௰. ௧.—8 தானி. ௭. ௰௪.
௧. ௰௯.—5 உன். ௫. ௰. லூக். ௪. எபி. ௧. ௮, ௯.
9 யோவா. ௧. ௩௪, ௩௫. அப். ௰. ௩௮. 12 உன். ௪. ௧. ௭.—13 சங். ௭௨. ௰.
10 உன். ௯. ௭, ௮. அறி. ௰௯. ௭, ௮: அறி. ௨௧. ௨௪.—14 ௧ பே. ௩.
௨௧. ௨.—11 லூக். ௰௪. ௨௬. ௩, ௪.

௰எ பூமியெங்கும் பிரபுக்களாக வைப்பாய்.—உம்
முடைய நாமத்தை எல்லாத் தலைமுறைகளிலும்
பிரஸ்தாபப்படுத்துவேன்; இவைகள் நிமித்தமா
கச் சனசதளங்கள் உம்மை என்றென்றைக்கு
முள்ள சதாகாலங்களிலும் துதிப்பார்கள்.

## சகூ. சங்கீதம்.

க. திருச்சபை பராபரனில் வைத்த நம்பிக்கை. அ. அதைக் கவனிப்பதற்கு எச்சரிப்பு.

---

(ஆல்மோத்தில் வாசிக்கக் கோராகின் புத்திரரிலுள்ள இராகத்தலைவனுக்கு ஒப்புவிக்கப்பட்ட பாட்டு.)

க பராபரன் நமக்கு அடைக்கலமும், பெலனும்,
நெருக்கங்களில் பரிபூரணமாய்க் கிடைக்கிற
உ அநுகூலமுமானவர்.[1]—ஆகையால் பூமி நிலைமா
றினாலும், மலைகள் நடுச்சமுத்திரங்களிலே சாய்ந்
ஙு தாலும்,— அவைகளின் சலங்கள் கொந்தளித்
துப்பொங்கி, அவைகள் பெருகுகிறதினாலே பர்
வதங்கள் அதிர்ந்தாலும் பயப்படோம்;சேலா.[2]—
௪ ஆறும் அதின் நீர்க்கால்களும் பராபரனுடைய
பட்டணத்தையும், உன்னதமானவருடைய கூ
டாரங்களின் பரிசுத்தஸ்தலத்தையும் சந்தோஷி
ரு ப்பிக்கும்.[3]—பராபரன் அதின் நடுவில் இருக்கி
ருர்; அது அசையாது; விடியற்காலம் வருகை
யில் பராபரன் அதற்குச் சகாயம்பண்ணுவார்.—
சு சாதிகள் கொந்தளித்து, இராச்சியங்கள் அசைந்
தன; அவர் தமது முழக்கத்தால் சத்தமிடுகையில்
எ பூமி உருகும்.-சேனைகளுடைய கர்த்தர் நம்மோ
டுகூட இருக்கிருர்; யாக்கோபுடைய பராபரன்
நமக்கு உயர்ந்த அடைக்கலமானவர்; சேலா.[4]
அ பூமியிலே பாழ்க்கடிக்குதலை நடப்பிக்கிற
கர்த்தருடைய செயல்களை வந்து பாருங்கள்.[5]—
கூ அவர் பூமியின் கடைமுனைமட்டும் யுத்தங்களை
ஓயப்பண்ணுகிறவர்;வில்லை ஒடித்து, ஈட்டியை
முறிக்கிருர்; இரதங்களை நெருப்பினாலே சுட்
௰ டெரிக்கிருர்.[6]—நீங்கள் ஓய்ந்திருந்து நாம் பரா
பரனென்று அறியுங்கள்; சாதிகளுக்குள் உயர்ந்
திருப்போம், பூமியிலே உயர்ந்திருப்போம்.—
௰க சேனைகளுடைய கர்த்தர் நம்முடனேகூட இ
ருக்கிருர்; யாக்கோபுடைய பராபரன் நமக்கு
உயர்ந்த அடைக்கலமானவர்; சேலா.

## சஎ. சங்கீதம்.

க. தேசஸ்தர்கள் கிறிஸ்துவின் இராச்சியத்தில் களிப்புடனே சேரத் தூண்டப்பட்டது.

---

(கோராகின் புத்திரரிலுள்ள இராகத்தலைவனுக்கு ஒப்புவிக்கப்பட்ட சங்கீதம்.)

க சகல சனசதளங்களே, கைகொட்டி, பராபர
னுக்குக் கெம்பீர சத்தமாய் ஆர்ப்பரியுங்கள்.—
உ ஏனெனில் உன்னதமானவராகிய கர்த்தர், பயங்
கரமானவரும் பூமியின்மீதெங்கும் பெரிய இரா
ஙு சாவுமாயிருக்கிருர்.[7]—நமக்குச் சனசதளங்களை
யும், நம்முடைய கால்களுக்குச் சாதிகளையும்
கீழ்ப்படுத்துவார்.—நமக்குத் தாம் சிநேகித்த யாக் ௪
கோபின் முக்கியமாகிய நம்முடைய சுதந்தரத்
தைத் தெரிந்துகொடுப்பார்; சேலா.
பராபரன் ஆர்ப்பரிப்போடும், கர்த்தர் எக்காளச் ரு
சத்தத்தோடும் ஏறுகிருர். — பராபரனைக் கீர்த்த சு
னத்தின்மேல் கீர்த்தனம்பண்ணுங்கள்; நம்மு
டைய இராசாவைக் கீர்த்தனத்தின்மேல் கீர்த்த
னம்பண்ணுங்கள்.[8]—ஏனெனில் பராபரன் பூமி எ
யனைத்துக்கும் இராசா; போதகசங்கீதத்தால்,அவ
ரைக் கீர்த்தனம்பண்ணுங்கள்.—பராபரன் சாதி அ
கள்மேல் இராசரிகம்பண்ணுகிருர்; பராபரன்
தம்முடைய பரிசுத்த ஆசனத்தின்மீதில் உளுக்
காருகிருர்.—சனசதளங்களின் பிரபுக்கள் ஆபிர கூ
காமுடைய பராபரனின் சனமாய்ச் சேர்க்கப்ப
டுகிருர்கள்; ஏனெனில் பூமியின் கேடயங்கள்
பராபரனுடையது;அவர் மிகுதியும் உயர்ந்தவர்.[9]

## சஅ. சங்கீதம்.

க. திருச்சபையின் அலங்காரமும், சதந்தரமும் குறிக்கப்பட்டது.

---

(கோராகின் புத்திரருக்கு ஒப்புவிக்கப்பட்ட சங்கீதப்பாட்டு.)

நம்முடைய பராபரனுடைய பட்டணத்திலும், க
நம்முடைய பரிசுத்த பர்வதத்திலும், கர்த்தர் பெ
ரியவரும் மிகுதியாய்த் தோத்திரிக்கப்பட்டவரு
மாயிருக்கிருர்.[10]—சீயோன் பர்வதமும், வடபு உ
றங்களிலுள்ள மகா இராசாவின் பட்டணமும்,
வடிப்பமான நிலையும், சர்வபூமியின் மகிழ்ச்
சியுமாயிருக்கின்றன.[11]—அதின் அரமனைகளில் ஙு
பராபரன் உயர்ந்த அடைக்கலமாக அறியப்பட்
டிருக்கிருர்.
ஏனெனில் இதோ இராசாக்கள் கூடிக்கொண் ௪
டு ஏகமாய்க் கடந்துவந்தார்கள்.—ஆனால் அவர் ரு
கள் அதைப் பார்க்குமளவில் பிரமித்துக் கலங்கி,
தீவிரமாய்த் தெறித்துப்போனார்கள்.—நடுக்கமும், சு
கர்ப்பவதியின் வேதனைக்குச் சரியான வேத
னையும் அங்கே அவர்களைப் பிடித்தன.—கீழ்க்காற் எ
றினால் தர்சீசின் கப்பல்களை உடைக்கிறீர்.[12]—
நாம் கேட்டிருக்கிறதற்குச் சரியாய்ச் சேனைக அ
ளுடைய கர்த்தரின் பட்டணத்திலே கண்
டோம்; நம்முடைய பராபரனுடைய பட்ட
ணத்திலேதானே பராபரன் அதை என்றென்
றைக்கும் உறுதிப்படுத்துவார்; சேலா.
பராபரனே, உம்முடைய தேவாலயத்தின் கூ
நடுவிலே உமது கிருபையைச் சிந்தித்துக்கொண்
டிருக்கிறோம்.—பராபரனே, உமது நாமம் எப்ப ௰
டியிருக்கின்றதோ, அப்படி உமது புகழ்ச்சியும்
பூமியினுடைய கடையாந்தரங்கள்பரியந்தம் இ
ருக்கின்றது; உமது வலதுகரம் நீதியால் நிறைந்
திருக்கிறது. — உம்முடைய நியாயத்தீர்ப்புக ௰க
ளின்நிமித்தம் சீயோன்பர்வதம் மகிழ்ந்து, யூதா
வின் குமாரத்திகள் களிகூருவார்கள்.
சீயோனைச் சுற்றி, அதை வளைந்துவாருங்கள்; ௰உ
அதின் கொம்மைகளை எண்ணுங்கள்.—நீங்கள் ௰ஙு

1 சங். சுக. க, உ. வாக். ௰அ. ௰. உஎ. க.—3 சகரி. ௰௪. அ.
2 லூக் உக. உ௫. உசு. சங். கள: 4 உரோ. அ. கக.

5 சங். கக. ௫.—6 சங். எக. ௪. 9 சங்.அஉ.அ.—10 சங்.ஈச௫.க.
7 சங்.எசு.அ.—8 சா.௰உ.௫, சு. 11 மத்.௫.க௫.-12 சா.உ. ௰உ,௰எ.

பின்சந்ததிக்கு விவரிப்பதற்காக, அதின் அலங்
கத்தின்மேல் உங்கள் மனதை வைத்து, அதின்
அரமனைகளை ஒவ்வொன்றாய்க் கவனியுங்கள்.—
௰௪ ஏனெனில் இந்தப் பராபரன் என்றென்றைக்கு
முள்ள சதாகாலங்களிலும் நம்முடைய பராபர
னாயிருக்கிறார்; அவர் நம்மை மரணத்தைக் கடக்க
அழைத்துக்கொண்டு போவார்.

## ௪௯. சங்கீதம்.

௧. உயிர்த்தெழுதலின் விசுவாசத்தை லௌகீக அதிகாரத்தின்மேலல்ல, பராபரன்மேல் வைக்கும்படிக்கு உறுதியாய்ப் போதித்தது. ௰௬. லோகச் செல்வங்கள் ஆச்சரியப்படத்தக்கவைகளல்லவென்பது.

(கோராகின் புத்திரரிலுள்ள இராகத்தலைவனுக்கு ஒப்பு
விக்கப்பட்ட சங்கீதம்.)

௧ சனசதளங்களாகிய நீங்களெல்லாரும் இதைக்
௨ கேளுங்கள்.—சிறியோரும், பெரியோரும், ஐசுவ
ரியவான்களும், எளியவர்களுமாகிய உலகக்குடி
களே, எல்லாரும் ஏகமாய்ச் செவிகொடுங்கள்.—
௩ என் வாய் ஞானங்களைப்பேசும்; என் இருதயத்
௪ தின் தியானம் புத்தியுள்ளதாயிருக்கும். — என்
செவியை உவமை மொழிக்குச் சாய்த்து, என்
புதைபொருளைச் சுரமண்டலத்தால் வெளிப்ப
டுத்துவேன்.[1]
௫ தங்கள் ஆஸ்தியை நம்பித் தங்கள் திரளான ஐ
௬ சுவரியத்தினாலே பெருமைபாராட்டி,—என்னை
ஒடுக்குகிறவர்களுடைய அக்கிரமம் என்னைச்
சூழ்ந்துகொள்ளுகிற தீங்குநாள்களில் ஏன் பய
௭ ப்படுவேன்? — இனி என்றைக்கும் அழிவைக்
௮ காணமல் உயிரோடிருக்கும்படிக்கு, — அவர்க
ளில் யாரும் தன்சகோதரனை மீட்கவே மீட்கவும்,
அவனை மீட்கும்பொருளைப் பராபரனுக்குக்
௯ கொடுக்கவும்மாட்டான்.—ஏனெனில் அவர்கள்
ஆத்தும மீட்பு என்றென்றைக்கும் நடவாதபடிக்
கு விலை உயர்த்தியாயிருக்கின்றது.[2]
௰ ஏனென்றால் ஞானிகளும் மரித்து நிர்மூடனும்
மிருககுணமுள்ளவனும் ஏகமாய் அழிந்து, தங்
கள் ஆஸ்தியை வேறே மனுஷருக்குப் பின்வைத்
௰௧ துப்போகிறதைக் காண்பான்.—தங்கள் வீடுகள்
நித்தியகாலமாகவும், தங்கள் வாசஸ்தலங்கள் தலை
முறை தலைமுறையாகவும் இருக்கவேண்டுமென்
பது அவர்கள் உள்ளத்தின் ஆசையாயிருக்கிறது;
அவர்கள் தங்கள் நாமங்களைப் பூமிகளுக்குத் தரி
௰௨ க்கிறார்கள்.—ஆகிலும் அந்த முக்கியத்தோடிருக்
கிற மனுஷன் அதிலே தங்கித்தரியாமல் அழிந்து
போகிற மிருகங்களுக்குச் சமானமாயிருக்கி
௰௩ றான்.—அவர்களுடைய இந்த வழி அவர்களு
டைய பயித்தியமாயிருக்கிறது; அவர்கள் பின்ன
டியாரும் அவர்கள் வாய்ப்பிறப்புக்குப் பிரீதிப்
௰௪ படுகிறார்கள்; சேலா.—ஆடுகளைப்போல நரகத்
திலே கிடத்தப்படுகிறார்கள், மரணம் அவர்களை
மேயும்; ஆனால் செம்மையானவர்கள் விடியற்கா
லத்திலே அவர்களை ஆண்டுகொள்ளுவார்கள்;
அவர்கள் தங்கள் வாசஸ்தலத்திலிருந்து நிலைத்தி
ருக்கக்கூடாத அவர்களுடைய உருவைப் பாதா
ளம் அழிக்கும்.[3] — ஆனால் என் ஆத்துமாவைப் ௰௫
பராபரன் நரகத்தின் வலுமைக்குத் தப்புவித்து
மீட்பார்; ஏனெனில் என்னை அவர் சேர்த்துக்
கொள்ளுவார்; சேலா.[4]
ஒருவன் ஐசுவரியவானாகி, அவன் வீட்டின் ௰௬
மகிமை பெருகும்போது பயப்படாதிரு.—ஏனெ ௰௭
னில் அவன் தன் மரணத்தில் ஒன்றும் எடுத்துப்
போவதில்லை; அவன் மகிமை அவனைப் பின்
சென்று இறங்குவதில்லை.—அவன் உயிரோடி ௰௮
ருக்கையிலே தன் ஆத்துமாவை ஆசீர்வதித்தா
லும், உனக்கு நீ நன்மைசெய்கிறாயென்று மனு
ஷர் அவனைப் புகழ்ந்தாலும்,[5]—அது என்றென் ௰௯
றைக்கும் வெளிச்சத்தைக் காணாத தன் பிதாக்க
ளின் சந்ததியைச்சேரும்.—முக்கியமுற்றும் புத் ௨௰
தியற்றும் இருக்கிற மனுஷன் அழிந்துபோகும்
மிருகங்களுக்குச் சமானமாயிருக்கிறான்.

## ௫௰. சங்கீதம்.

௧. திருச்சபையில் விளங்கும் பராபரனுடைய மகத்துவம், ௫. பரிசுத்தர் களைச்சேர்க்க அவரிட்ட கட்டளையும். ௭. அவருடைய இஷ்டம் சடங்கு களிலல்ல, ௰௪. உண்மையான கீழ்ப்படிதலிலுண்டென்பது.

(ஆசாவின் சங்கீதம்.)

வல்லமையுள்ள பராபரனாகிய கர்த்தர் வசனித் ௧
து, சூரியனுதிக்கும் திசைதுவக்கி அது அஸ்த
மிக்கும் திசைமட்டுமுள்ள பூமியைக் கூப்பிடு
கிறார். — பூரண வடிவுள்ள சீயோனிலிருந்து ௨
பராபரன் பிரகாசிக்கிறார். — நம்முடைய பரா ௩
பரன் மவுனமாயிராமல் வருவார்; அவருக்குமுன்
னாலே அக்கினி எரிக்கும்; அவரைச் சுற்றிலும்
மகா புசல் கொந்தளிப்பாயிருக்கும்.[6]—அவர் தம் ௪
முடைய சனத்தை நியாயந்தீர்க்க உயரவிருக்கும்
வானங்களையும், பூமியையும் கூப்பிடுவார். —
பலியின்மேல் பண்ணப்பட்ட நம்முடைய உ ௫
டம்படிக்கைக்குள்ளாயிருக்கிற நம்முடைய பரி
சுத்தவான்களை நமக்குக் கூட்டுங்களென்பார்.—
அப்போது வானங்கள் அவருடைய நீதியை ௬
அறிவிக்கும்; ஏனெனில் பராபரனே நியாயாதி
பதி; சேலா.
நம்முடைய சனமே கேள், நாம் பேசுவோம்; ௭
இஸ்ரவேலே நாம் உனக்குள்ளே சாட்சிவிளங்
கப்பண்ணுவோம்; உன் தேவனாகிய பராபரன்
நாமே.[7] — உன் பலிகளின்நிமித்தம் உன்னைக் ௮
கடிந்துகொள்ளோம், ஏனெனில் உன்னுடைய
சர்வாங்கதகனங்கள் எப்போதும் நமக்குமுன்
பாக இருக்கின்றன.—நாம் உன் வீட்டிலிருந்து ௯
காளைகளையும், உன் தொழுவங்களிலிருந்து ஆட்
டுக்கடாக்களையும் வாங்கிக்கொள்வதில்லை. —
ஏனெனில் சகல காட்டுச்சீவன்களும், பர்வதங் ௰
களில் ஆயிரங்களாய்த் திரிகிற மிருகங்களும் நம்
முடையவைகளே. — மலைகளிலுள்ள பறவை ௰௧
யனைத்தையும் அறிவோம்; வெளியில் நடமாடு
கிறவைகள் நம்முடைய வசமாமே.—பசியாயிருந் ௰௨
தோமானால் உனக்குச் சொல்லோம்; ஏனெனில்
பூச்சக்கரமும் அதின் நிறைவும் நம்முடையவை

1 சங்.௭௮.௨.—2 மத்.௰௬.௨௬.—3 மாற்.௯.௪௪. மல்.௪.௧-௩.

4 சங்.௭௩.௨௪.—5 லூக்.௰௨.௰௯.—6 சங் ௯௬.௰௩.—7 சங்.௮௧.௰,௰௧.

௰௩ களே.[1]—எருதுகளின் மாம்சம் புசித்து, ஆட்டுக்
௰௪ கடாக்களின் இரத்தம் குடிப்போமோ?—நீ பரா
பரனுக்குத் தோத்திரத்தைப் பலியிட்டு, உன்னத
மானவருக்கு உன் பொருத்தனைகளைச் செலுத்
௰௫ தி,[2]—நெருக்கப்படுகிற நாளிலே நம்மைநோக்கிக்
கூப்பிடு, அப்போது உன்னை விடுவிப்போம்;
அதற்காக நீ நம்மை மகிமைப்படுத்தக்கடவாய்.
௰௬ ஆனால் ஆகாதவனுக்குப் பராபரன் சொல்லு
கிறதாவது: நீ நம்முடைய பிரமாணங்களைச்
சொல்லவும், நமது உடம்படிக்கையை உன் வா
யில் வைக்கவும் உனக்கு என்ன நியாயம் இருக்கி
௰௭ றது.—கடிந்துகொள்ளுதலை நீ பகைத்து, நம்மு
டைய வார்த்தைகளை உனக்குப் பின்னாக எறிந்
௰௮ துவிடுகிறாயே.—நீ திருடனைக் கண்டால் அவ
னோடு ஒருமித்துப்போகிறாய்; விபசாரரோடும் உ
௰௯ னக்குப் பங்கிருக்கின்றது.—உன் வாயைப் பொ
ல்லாப்புக்குத் திறந்துவிடுகிறாய்; உன் நாவு சர்ப்
௨௰ பனையைப் பிணைக்கும்.—நீ உளுக்காந்து உன்
சகோதரனுக்கு விரோதமாய்ப் பேசி, உன்னுடை
ய தாயின் மகனுக்கு அவதூறுண்டாக்குகிறாய்.
௨௧ இவைகளை நீ செய்யும்போது, மவுனமாயிருந்
தோம்; உன்னைப்போல இருக்கவே இருப்போ
மென்று நினைவுகொண்டாய்; ஆனால் நாம் உனக்
குத் தூண்டிக்காட்டி, உன் கண்களுக்குமுன்
௨௨ பாக ஒவ்வொன்றாக நிறுத்துவோம்.—பராபரனை
மறக்கிறவர்களே, விடுவிக்கின்றவன் இல்லாமல்
நாம் பீறிப்போடாதபடிக்கு இதை உணர்ந்து
கொள்ளுங்கள்
௨௩ தோத்திரத்தைப் பலியிடுகிறவன் நம்மை மகி
மைப்படுத்துகிறான்; இப்படி வழியை ஆயத்தப்
படுத்துகிறவனுக்குப் பராபரனுடைய இரட்சிப்
பைக் காண்பிப்போம்.

## ௫௧. சங்கீதம்.

௧. தாவீது தன் பாவத்தைத் தாழ்மையோடே அறிக்கையிட்டுப் பாவமன்னிப்பைக் கேட்டது. ௯. பரிசுத்தத்தை விரும்பி மன்றாடினது. ௰௬. பராபரன் பலியின்மேலல்ல, நொறுங்குண்ட மனதின்மேல் திருப்தியாயிருப்பதைக்குறித்தது. ௰௮. திருச்சபைக்காக வேண்டிக்கொண்டது.

(இராகத்தலைவனுக்கு ஒப்புவிக்கப்பட்ட
தாவீதின் சங்கீதம்.)

௧ பத்சேபாளிடத்தில் பிரவேசித்திருந்த அவனண்
டைக்கு நாத்தான் தீர்க்கதரிசி வந்தபோது,
௨ அவன் பாடினது.[3]—பராபரனே, உம்முடைய
கிருபையின்படி எனக்கு இரங்கி, உம்முடைய
மிகுந்த இரக்கங்களின்படியே என் மீறுதல்கள்
நீங்க என்னைச் சுத்திகரியும்.
௩ என் அக்கிரமம் நீங்க என்னை மிகவும் கழுவி,
௪ என் பாவமற என்னைச் சுத்திகரியும்.—ஏனெ
னில் என் மீறுதல்களை நான் அறிந்திருக்கிறேன்;
என் பாவம் எப்போதும் எனக்குமுன்பாக நிற்
௫ கிறது.—தேவரீர் ஒருவருக்கு விரோதமாக நான்
பாவத்தை நடப்பித்து, உம்முடைய கண்க
ளுக்குமுன்பாகப் பொல்லாப்பானதைச் செய்
தேனென்கிறதை நீர் உம்முடைய வசனங்களில்
நீதிவிளங்கவும், உமது நியாயத்தீர்ப்பில் சுத்தம்
விளங்கவும் அறிக்கையிடுகிறேன்.[4]
இதோ துர்க்குணத்தில் உருவானேன்; என் ௬
தாய் என்னைப் பாவத்திலே கர்ப்பம்தரித்
தாள்.[5] — இதோ உள்ளத்தில் உண்மையிருக்க, ௭
நீர் விரும்புகிறீர்; இரகசியத்திலே ஞானத்தை
எனக்குத் தெரியப்படுத்துவீராக.— நான் சுத்தமா ௮
வதற்கு நீர் ஈசோப்பால் என்னைப் பாவமறப்
பண்ணி, நான் உறைந்த மழையிலும் வெண்மை
யாவதற்கு என்னைக் கழுவுவீராக.[6] — எனக்குச் ௯
சந்தோஷமும், மகிழ்ச்சியும் கேட்கப்பண்ணும்;
அப்போது நீர் நொறுக்கின எலும்புகள் களிகூ
ரும்.–என் பாவங்களைப் பாராதபடிக்கு, நீர் உமது ௰
முகத்தை மறைத்து, என் மீறுதல்களை எல்லாம்
நீக்கும்.—சுத்த இருதயத்தை எனக்குள் சிருஷ்ழ ௰௧
டியும், பராபரனே, நிலைவரமான ஆவியை என்
உள்ளத்திலே புதிதாய் உண்டாக்கும். — உம்மு ௰௨
டைய முகத்தைவிட்டு என்னைத் தள்ளாமலும்,
உமது பரிசுத்தஆவியை என்னிடத்திலிருந்து
எடுத்துக்கொள்ளாமலுமிரும்.—உம்முடைய இ ௰௩
ரட்சிப்பின் சந்தோஷத்தை எனக்குத் திரும்பக்
கட்டளையிடும்; உச்சாகமான ஆவி என்னைத்
தாங்கட்டும்.
அப்போது பாதகருக்கு உம்முடைய வழிகளை ௰௪
உபதேசிப்பேன்; பாவிகள் உம்மண்டைக்குத்
திரும்புவார்கள்.—என் இரட்சிப்பின் தேவனாகிய ௰௫
பராபரனே, இரத்தப்பழிகளுக்கு என்னை நீங்க
லாக்கி விடுவியும்; அப்போது என் நாவு உம்மு
டைய நீதியைக் கெம்பீரித்துப் பாடும்.[7]—ஆண் ௰௬
டவரே, என் உதடுகளைத் திறவும்; அப்போது
என் வாய் உம்முடைய துதியை அறிவிக்கும்.—
ஏனெனில் பலியை விரும்பீர், மற்றப்படி ௰௭
அதைச் செலுத்துவேன்; சர்வாங்க தகனபலி உ
மக்குப் பிரியமானதல்ல.[8]–பராபரனுக்கு ஏற்கும் ௰௮
பலிகள் நொறுங்குண்ட ஆவிதான்; பராபரனே,
நொறுங்குண்டதும் நருங்குண்டதுமான இருத
யத்தைப் புறக்கணியீர்.[9]
சீயோனுக்கு உமது பிரியத்தின்படி நன்மை ௰௯
செய்யும்; எருசலேமின் மதில்களைக்கட்டுவீராக.-
அப்போது சர்வாங்கதகனமும், முழுத்தகனமு ௨௰
மான நீதியின்பலிகளுக்குப் பிரியப்படுவீர்; அப்
போது உம்முடைய பீடத்தின்மேலே காளையெ
ருதுகளைப் பலியிடுவார்கள்.

## ௫௨. சங்கீதம்.

௧. தாவீது தோவேக்கின் பொல்லாப்பைக் கண்டித்து, அவனுடைய அழிவைத் தீர்க்கதரிசனமாக அறிவித்தது. ௬. நீதிபுள்ளவர்கள் அதிலே களிப்படைவார்களென்பது. ௮. தாவீது தேவ இரக்கத்தின்மேல் நம்பிக்கை வைத்து தோத்திரஞ்செலுத்தினது.

(இராகத்தலைவனுக்கு ஒப்புவிக்கப்பட்ட
தாவீதின் போதக சங்கீதம்.)

பெலவானே, பொல்லாப்பைச் செய்து என் ௩
பெருமைபாராட்டுகிறாய்? பராபரனுடைய கிரு

1 சங். ௨௪. ௧.-2 ஏசா. ௧. ௰௧: ௰௬. ௰௭. 3 ௨ சாமு. ௰௨. ௧, ௰௪. 4 உரோ. ௩. ௪ —5 வாக். ௨௰. ௬. யோவா. ௩. ௬.

6 ௩ மோ. ௰௪. ௨, ௭. 7 ௨ சாமு. ௰௨. ௯. 8 சங். ௪௰. ௭. 9 ஏசா. ௫௭. ௰௫.

௨ பை நாள்தோறுமுள்ளது.[1]—கூர்மையாக்கப்பட்
டுச் கபடுசெய்கிற சவரகன் கத்தியைப்போலே
உன் நாக்கு கேடுபாடுகளை எத்தனம்பண்ணுகி
௩ றது.[2]—நன்மையைப்பார்க்கிலும் தீமையையும்,
நிதானம் பேசுகிறதைப்பார்க்கிலும் பொய்யை
௪ யும் சிநேகிக்கிறாய்; சேலா.—விழுங்குகிறதற்
கான சகல வார்த்தைகளையும், கபட்டு நாக்கை
யும் சிநேகிக்கிறாய்.
௫ பராபரன் உன்னையும் என்றென்றைக்கும் நிர்
மூலமாக்குவார்; அவர் உன்னைப் பிடித்து, உன்
னைக் கூடாரத்திலிருந்து பிடுங்கி, உன்னைச் சீவ
னுள்ளோருடைய பூமியில் இராதபடிக்கு வே
௬ ரற்றுப்போகப்பண்ணுவார்; சேலா.—அதை நீ
திமான்கள் கண்டு பயந்து அவனை நகைத்து,—
௭ இதோ பராபரனைத் தன் பெலனாக வைக்காமல்,
தன் ஐசுவரியத் திரட்சியை நம்பி, தன் தீவினை
யிலே பெலத்துக்கொண்ட மனுஷனென்பார்
கள்.[3]
௮ நானோவெனில் பராபரனுடைய வீட்டிலே
பச்சையான ஒலிவமரத்தைப்போலிருப்பேன்;
பராபரனுடைய கிருபையை எப்போதும் என்
௯ றென்றைக்கும் நம்பியிருக்கிறேன்.[4]—நீர் அதைச்
செய்தீரென்று உம்மை நான் என்றென்றைக்
கும் துதித்து, உம்முடைய பரிசுத்தவான்களுக்கு
முன்பாக உமது நாமத்துக்குக் காத்திருப்பேன்;
ஏனெனில் அது நலமானது.[5]

## ௫௩. சங்கீதம்.

௧. தாவீது மனிதனுடைய சுபாவ துர்க்குணத்தை எடுத்துக்காட்டினது. ௪. துன்மார்க்கருடைய மன வெளிச்சத்தைக்கொண்டு அவர்களை உணர்த்தினது. ௬. பராபரனுடைய இரட்சிப்பின் மகிமையை வெளிப்படுத்தினது.

(இராகத்தலைவனுக்கு ஒப்புவிக்கப்பட்ட தாவீதின் போதக சங்கீதம்.)

௧ பராபரன் இல்லை என்று பயித்தியக்காரன் தன்
இருதயத்தில் சொல்லுகிறான்; தங்களைக் கெடுத்
து நியாயக்கேட்டினால் அருவருப்பாக்கினார்கள்;
௨ நன்றுசெய்கிறவனில்லை.—பராபரனைத் தேடுகிற
உணர்வுள்ளவன் உண்டோ என்று பார்க்கப் பரா
பரன் பரமண்டலங்களிலிருந்து மனுப்புத்திர
௩ ரைக் கண்ணோக்கினார்.—அவர்களெல்லாரும்
வழிவிலகி, ஏகமாய்க் கெட்டுப்போனார்கள்; நன்
றுசெய்கிறவன் ஒருவனாகிலுமில்லை.
௪ அப்பத்தைப் பட்சிக்கிறதுபோல, நம்முடைய
சனத்தைப் பட்சிக்கிற அக்கிரமக்காரருக்கும்
அறிவுதானும் இல்லையோ? பராபரனை நோக்கிக்
௫ கூப்பிடார்கள்.—திகிலில்லாத அவ்விடத்திலே
மெத்தவும் திகில் அடைந்தார்கள்; ஏனெனில்
உனக்கு விரோதமாய்ப் பாளயம் இறங்கினவனு
டைய எலும்புகளைப் பராபரன் சிதற அடித்தார்;
அவர்களை வெட்கப்படுத்தினாய்; ஏனெனில் பரா
௬ பரன் அவர்களை வெறுத்துவிட்டார்.—ஆ சீயோ
னிலிருந்து இஸ்ரவேலுடைய இரட்சிப்புகள்
வந்தால் தாவீளை; பராபரன் தம்முடைய சனத்
தின் சிறையிருப்பைத் திருப்பும்போது, யாக்
கோபுக்குக் களிப்பும் இஸ்ரவேலுக்கு மகிழ்ச்சி
யுமுண்டாம்.

## ௫௪. சங்கீதம்.

௧. தாவீது சிப்பூரார்மேல் முறையிட்டு, இரட்சிப்புக்காக வேண்டிக்கொண்டது. ௪. பராபரனுடைய உதவியின்மேல் நம்பிக்கைவைத்துப் பலிசெலுத்த வாக்குத்தத்தம் பண்ணினது.

(கின்னாரங்களில் வாசிக்க இராகத்தலைவனுக்கு ஒப்புவிக்கப்பட்ட தாவீதின் போதகசங்கீதம்; தாவீது எங்களிடத்தில் ஒளித்துக்கொண்டிருக்கிறானே என்று சிப்பூரார் வந்து சவுலுக்குச் சொன்னபோது பாடினது.)

பராபரனே, நீர் உம்முடைய நாமத்தின்நிமித்த ௧
மாக என்னை இரட்சித்து, உம்முடைய வல்லமை
யினாலே எனக்கு நியாயஞ்செய்யும்.—பராபர ௨
னே, என் செபத்தைக் கேளும்; என் வாயின்
வார்த்தைகளுக்குச் செவிகொடும்.[6]—ஏனெனில் ௩
அந்நியர் எனக்கு விரோதமாக எழும்பி, பெல
வான்கள் என் பிராணனை வாங்கத்தேடுகிறார்
கள்; பராபரனைத் தங்களுக்குமுன்பாக நிறுத்தி
நோக்கார்கள்; சேலா.[7]
இதோ பராபரன் எனக்குச் சகாயர்; ஆண்ட ௪
வர் என் ஆத்துமாவை ஆதரிக்கிறவர்களுக்குள்
இருக்கிறார்.—அவர் என் சத்துருக்களுக்குத் தீமை ௫
யைச் சரிக்கட்டுவார்; உமது சத்தியத்தின்நிமித்த
மாக அவர்களைச் சங்கரியும்.—உச்சாகமாய் உமக் ௬
குப் பலிசெலுத்துவேன்; கர்த்தாவே உமது நாமத்
தைத்துதிப்பேன்; ஏனெனில் அது நலமானது.—
ஏனென்றால் எல்லா நெருக்கத்தையும் நீக்கி என் ௭
னை விடுவிப்பார்; என் கண் என்னுடைய சத்து
ருக்களில் நீதி சரிக்கட்டுதலைக் காணும்.

## ௫௫. சங்கீதம்.

௧. தாவீது பயங்கரமான நிலைமைக்குறித்துச் செபத்திலே முறையிட்டது. ௯. சத்துருக்களுடைய துன்மார்க்கத்தையும் துரோகத்தையுங்குறித்து முறையிட்டு, அவர்களுக்கு விரோதமாக வேண்டிக்கொண்டது. ௰௬. சத்துருக்களின் அமளியிலும், பராபரன் தன்னைக் காப்பாற்றிக்கொண்டு வருவதிலும் ஆறுதலடைந்தது.

(கின்னாரங்களில் வாசிக்க இராகத்தலைவனுக்கு ஒப்புவிக்கப்பட்ட தாவீதின் போதக சங்கீதம்.)

பராபரனே, நீர் என் விண்ணப்பத்துக்கு மறை ௧
ந்திராமல், என் செபத்துக்குச் செவிகொடும்.—
என்னைக் கவனித்திருந்து, எனக்கு உத்தரவு அரு ௨
ளிச்செய்யும்; நான் சத்துருவினுடைய கூக்குர
லின்நிமித்தமும், ஆகாதவன் செய்யும் இடுக்
கணின்நிமித்தமும் என் செபத்தியானத்திலே
புலம்பிக் கதறுகிறேன்.—ஏனெனில் என்மேல் ௩
அக்கிரமத்தைச் சார்த்தி, குரோதத்தினால் என்
னைப் பகைக்கிறார்கள்.
என் இருதயம் எனக்குள் வேதனைப்பட்டி ௪
ருக்கிறது; மரணத்திகில்கள் என்மேல் விழுந்
தன.—பயமும் நடுக்கமும் எனக்கு வந்து, அருக் ௫
களிப்பு என்னை மூடிற்று.—ஆ எனக்குப் புறா ௬

1 ௧ சாமு. ௨௧. ௭.
2 சங். ௫௭. ௪. யாக். ௩. ௮.
3 எரே. ௰௭. ௫, ௬. சங். ௪௯. ௬, ௭.
4 சங். ௯௨. ௰௨, ௰௪.
5 சங். ௩௭. ௫, ௬.
6 சங். ௫. ௨, ௩.
7 சங். ௮௬. ௰௪.

வைப்போலே செட்டைகளிருந்தால் தாவிளை
என்றேன்; அப்போது. பறந்துபோய் எங்கே
௭ யாகிலும் தரித்திருப்பேன்.— இதோ தூரமாய்
அகன்று வனாந்தரத்திலே தங்குவேன்; சேலா.—
௮ பெருங்காற்றுக்கும், புசலுக்கும் தப்பத் தீவி
ரித்துக்கொள்ளுவேன்.
௯ ஆண்டவரே, அவர்களை விழுங்கும், அவர்
கள் நாவைப் பிரிந்துபோகப்பண்ணும்; ஏனெ
னில் கொடுமையும் சண்டையும் ஊரிலே காண்
௰ கிறேன்.—அவைகள் இரவும்பகலும் அதின் மதி
ல்களில் அதைச் சுற்றுகின்றன; அக்கிரமமும்,
௰௧ வாதிப்பும் அதின் நடுவிலிருக்கின்றன.—கேடு
பாடுகள் அதின் நடுவிலிருக்கின்றன; தந்திர
மும்,கபடமும் அதின் வீதியைவிட்டு விலகாது.
௰௨ ஏனெனில் என்னை நிந்தைப்படுத்துகிறவன்
சத்துருவாய் இருந்தவனல்ல, மற்றப்படி அதைச்
சகிப்பேன்; எனக்கு விரோதமாய்ப் பெருமை
யாகிறவன் என்னைப் பகைத்தவனல்ல; மற்றப்
௰௩ படி அவனுக்கு மறைந்திருப்பேன். — எனக்கு
இராசியான மனுஷனும் என் வழிகாட்டியும்,
எனக்கு அறிமுகமானவனுமாகிய நீயே அவ
௰௪ ன்.[1]—நாம் ஒருமித்து, இன்பமும் இரகசியமு
மாய் யோசித்து, பராபரனுடைய வீட்டுக்கு ஏக
௰௫ மாய்ப் போனோமே. — மரணம் அவர்கள்மேல்
தண்டல்காரனாய் விழுவதாக; உயிரோடே பா
தாளத்துக்கு இறங்கக்கடவார்கள்; ஏனெனில்
அவர்கள் சஞ்சரிப்பிலும், அவர்கள் உள்ளத்தி
லும் பொல்லாப்புகள் இருக்கின்றன.
௰௬ நானோ பராபரனைநோக்கிக் கூப்பிடுவேன்;
௰௭ கர்த்தர் என்னை இரட்சிப்பார்.—அந்தி, சந்தி,
மத்தியானத்திலும் கெஞ்சிக் கதறுவேன்; என்
௰௮ சத்தத்தைக் கேட்பார்.[2]—எனக்கு வந்த போரை
நீக்கி, என் ஆத்துமாவைச் சமாதானமாக மீட்டு
விடுகிறார்; ஏனெனில் திரளான கூட்டமாய்
௰௯ என்னோடு எதிர்த்திருக்கிறார்கள்.[3] — பராபரன்
கேட்டு, அவர்களைத் தாழ்த்துவார்; ஆதிமுதலாய்
நியாயத்துக்கு உளுக்காந்திருக்கிறார்; சேலா.
ஏனெனில் அவர்களிடத்திலே குணமாறுதலில்
லை, பராபரனுக்குப் பயப்படார்கள்.
௨௰ தன்னோடே சமாதானமாயிருந்தவர்கள்மீதில்
தன் கைகளைப் போட்டு, தன் உடம்படிக்கை
௨௧ யைக்கொலைத்துப்போடுகிறான்.-அவன் வாயின்
சொற்கள் வெண்ணெயைப்போல மெதுவான
வைகள்; அவன் இருதயமோ யுத்தம்; அவன் வார்
த்தைகள் எண்ணெயிலும் மிருதுவானவைகள்;
ஆனால் அவைகளே உருவின பட்டயங்கள்.[4]
௨௨ கர்த்தர்மேல் உன் பாரத்தைப் போடு; அவர்
உன்னைப் பராமரிப்பார்; நீதிமானை என்றென்
௨௩ றைக்கும் தள்ளாடவொட்டார்.[5]—பராபரனே,
தேவரீர் அவர்களை அழிவின் குழியில் இறங்கப்
பண்ணுவீர்; இரத்தப்பிரியரும், சூதான மனுஷ
ரும், தங்கள் ஆயுசின் நாள்களுக்கு வந்து சேருவ
தில்லை; நானோவென்றால் உம்மை நம்புவேன்.[6]

1 சங். ௪௧. ௯.
2 தானி. ௬. ௰.
3 சங். ௧. ௨.
4 சங். ௫௭. ௫.

## ௫௬. சங்கீதம்.

௧. தாவீது பராபரனுடைய வார்த்தையை நம்பி அவரை வேண்டிக்கொண்டு, சத்துருக்களைக்குறித்து முறையிட்டது. ௨. பராபரனுடைய வார்த்தையில் தனக்கிருக்கும் நம்பிக்கையை வெளியிட்டு, அவரைத் துதிக்க வாக்குத்தத்தம்பண்ணினது.

(பெலிஸ்தியர் தாவீதைக் காத்தூரிலே பிடிக்கையில், அவன் தூரமாயிருக்கிறவர்களுக்குள்ளே ஊமையாயிருக்கிற புறாவின்பேரிலே பாடினதும் இராகத்தலைவனுக்கு ஒப்புவிக்கப்பட்டதுமான பொற்பணதிக்கீதம்.)

பராபரனே, எனக்கு இரங்கும்; ஏனெனில் மனு ௧
ஷன் என்னை விழுங்கப்பார்க்கிறான்; நாள்தோ
றும் போர்செய்து என்னை ஒடுக்குகிறான்.—நாள் ௨
தோறும் என் சத்துருக்கள் என்னை விழுங்கப்
பார்க்கிறார்கள்; ஏனெனில் உயரத்திலிருந்து
எனக்கு விரோதமாய்ப் போர்செய்கிறவர்கள்
அநேகர்.
நான் பயப்படுகிற நாளிலே உம்மை நம்பு ௩
வேன்.—பராபரனை அவருடைய வார்த்தையின் ௪
நிமித்தம் துதிப்பேன்; பராபரனை நம்பியிருக்கி
றேன்; நான் பயப்படேன்; மாம்சம் எனக்கு
என்னசெய்யும்.
நித்தம் என் வார்த்தைகளைப் புரட்டுகிறார்கள்; ௫
அவர்கள் நினைவுகளெல்லாம் எனக்கு விரோத
மாய் எனக்குப் பொல்லாப்புச் செய்வதற்கு இரு
க்கின்றன.—கூடிச்சேர்ந்து பதிவிருக்கிறார்கள்; ௬
அவர்கள் என் பிராணனை வாங்க ஆசையாய் என்
அடியைப் பிடித்துவருகிறார்கள்.—தங்கள் அக்கி ௭
ரமத்திலே தப்புவார்களோ; பராபரனே, உம்மு
டைய கோபத்திலே சனசதளங்களைக் கீழே தள்
ளும்.—என் அலைதலைத் தேவரீர் எண்ணியிருக் ௮
கிறீர்; என் கண்ணீரை உம்முடைய துருத்தியி
லே வையும்; அவைகள் உம்முடைய கணக்கில்
அல்லவோ இருக்கின்றன.
நான் உம்மைநோக்கிக் கூப்பிடும் நாளில் ௯
என் சத்துருக்கள் பின்னிட்டுத் திரும்புவார்கள்;
பராபரன் எனக்காக இருக்கிறாரென்கிறதை அறி
வேன்.— பராபரனை அவருடைய வார்த்தையின் ௰
நிமித்தம் துதிப்பேன்; கர்த்தரை அவருடைய
வார்த்தையின்நிமித்தம் துதிப்பேன்.—பராபரனை ௰௧
நம்பியிருக்கிறேன்; நான் பயப்படேன்; மனு
ஷன் எனக்கு என்னசெய்வான்.[7]—பராபரனே, ௰௨
உமக்குச் சொன்ன பொருத்தனைகள் என்மேல்
இருக்கின்றன; தோத்திரங்களை நான் உமக்குச்
செலுத்துவேன்.[8] — ஏனெனில் பராபரனுக்கு ௰௩
முன்பாக நான் சீவனுள்ளோருடைய வெளிச்
சத்திலே நடக்கும்படிக்கு, என் ஆத்துமாவை மர
ணத்துக்கும், என் கால்களை இடறலுக்குமல்ல
வோ தப்புவித்தீர்.[9]

## ௫௭. சங்கீதம்.

௧. தாவீது செபத்தில் பராபரனிடத்தில் சேர்ந்து ஆபத்தைக்குறித்து முறையிட்டது. ௭. பராபரனைத் துதிக்கத் தன்னைத் தயிரியப்படுத்தினது.

5 சங். ௩௭. ௫.—7 சங். ௫. ௭.
6 சங். ௫௫. ௧. எபி. ௰௩. ௬.
8 சங். ௬௬. ௰௩.—9 ௧ மோ. ௰௭. ௧.
சங். ௱௧௬. ௮.

(தாவீது சவுலுக்குத்தப்பி ஓடி, கெபியில் ஒதுங்குகையில் தான் கெட்டுப்போகாதபடிக்குப் பாடினதும் இராகத்தலைவனுக்கு ஒப்புவிக்கப்பட்டதுமான பொற்பணதிக்கிதம்.)

௧ எனக்கு இரங்கும் பராபரனே, எனக்கு இரங்
கும்; ஏனெனில் உம்மை என் ஆத்துமா அண்
டிக்கொள்ளுகிறது; விக்கினங்கள் கடந்துபோ
கும்மட்டும் உம்முடைய செட்டைகளின் நிழ
௨ லிலே வந்தடைவேன்.[1]—எனக்காக யாவையும்
செய்து முடிக்கப்போகிற தேவனாகிய உன்னத
மான பராபரனை நோக்கிக் கூப்பிடுவேன். —
௩ என்னை விழுங்கப்பார்க்கிறவன் என்னை நிந்திக்
கையில், அவர் பரமண்டலங்களிலிருந்து ஒத்
தாசை அனுப்பி என்னை இரட்சிப்பார்; சேலா.
பராபரன் தமது கிருபையையும், தமது சத்தியத்
தையும் அனுப்புவார்.
௪ என் ஆத்துமா சிங்கங்களின் நடுவில் இருக்கி
றது; தீயை இறைக்கிற மனுப்புத்திரருக்குள்ளே
கிடக்கிறேன்; அவர்கள் பல்லுகள் ஈட்டியும்,
அம்புகளும், அவர்கள் நாக்கு கருக்கான பட்
டையமுமாயிருக்கின்றன.
௫ பராபரனே, வானங்களின்மேல் உயரும், உம்
முடைய மகிமை பூமி அனைத்தின்மேலும் உயர்
௬ வதாக.[2]—என் காலடிகளுக்கு வலையை முஸ்திப்
புப்பண்ணினார்கள்; என் ஆத்துமாவை மடங்க
டித்தான்; எனக்குமுன்பாகக் குழியை வெட்டி,
௭ அதின் நடுவிலே விழுந்தார்கள்; சேலா.[3]—என்
இருதயம் ஆயத்தமாயிருக்கிறது; பராபரனே,
என் இருதயம் ஆயத்தமாயிருக்கிறது;நான் பாடிக்
௮ கீர்த்தனம்பண்ணுவேன்.—என் மகிமையே விழி,
தம்புருவே, சுரமண்டலமே விழி, அதிகாலமே
௯ விழிப்பேன்.—[4]ஆண்டவரே, உம்மைச் சனசதள
ங்களுக்குள்ளே துதிப்பேன்; சாதிகளுக்குள்ளே
௰ உம்மைக் கீர்த்தனம்பண்ணுவேன். — ஏனெ
னில் உமது கிருபை வானங்கள் பரியந்தமும்,
உமது சத்தியம் ஆகாயமண்டலங்கள் பரியந்த
௰௧ மும் பெரிதாயிருக்கிறது.[5]—பராபரனே,வானங்
களின்மேல் உயரும்;உம்முடைய மகிமை பூமிய
னைத்தின்மேல் உயர்வதாக.

## ௫௮. சங்கீதம்.

௧. தாவீது அநீதியுள்ள நியாயாதிபதிகளைக் கண்டித்தது. ௩. துன்மார்க்கருடைய சுபாவத்தை எடுத்துக்காட்டினது. ௬. பராபரனுடைய நியாயத்தீர்ப்புகளுக்கு அவர்களை ஒப்புக்கொடுத்தது. ௰. அதிலே நீதிமான்கள் மகிழ்வார்களென்பது.

(தான் கெட்டுப்போகாதபடிக்குத் தாவீது பாடினதும் இராகத்தலைவனுக்கு ஒப்புவிக்கப்பட்டதுமான பொற்பணதிக்கிதம்.)

௧ மனுப்புத்திரரே, நீங்கள் ஊமையாயிருக்கை
யில் மெய்யாய் நீதியைச் சொல்லுவீர்களோ?
௨ நிதானமாய் நியாயந்தீர்ப்பீர்களோ?—மனதாரத்
தானே நியாயக்கேடுகளைச் செய்கிறீர்கள்; பூமி
யிலே உங்கள் கைகளின் கொடுமையை நிறுத்
௩ துக்கொடுக்கிறீர்கள். — ஆகாதவர்கள் கர்ப்ப
மாய் உற்பவித்தது முதல்கொண்டு பேதலிக்கி
றார்கள்; பொய்பேசுகிறவர்கள் தாயின் வயிற்
றில் பிறந்தது முதல்கொண்டு வழிதப்புகிறார்
கள்.—சர்ப்பவிஷத்துக்கு ஒப்பான விஷம் அவர் ௪
களில் இருக்கிறது.[6]—முணுமுணுக்கிறவர்களும் ௫
விந்தையுள்ள தம்பனக்காரனும் இடுகிற சத்தத்
தைக் கேளாதபடிக்கு, தன் காதை அடைக்கிற
செவிடான விரியன் பாம்பைப்போல இருக்கி
றார்கள்.
பராபரனே, அவர்கள் வாயிலிருக்கிற அவர் ௬
கள் பல்லுகளைத் தகர்த்துவிடும்; கர்த்தாவே, சிங்
கக்குட்டிகளின் கடைவாய்ப் பல்லுகளை நொ
றுக்கிவிடும்.[7]—தானாய்க் கடந்தோடுகிற தண்ணீ ௭
ரைப்போல அவர்கள் கழிந்துபோகட்டும், தங்
கள் அம்புகளை அவர்கள் நாணேற்றினால், அவை
கள் தறிப்புண்டவைகளாகக்கடவது.—கரைந்து ௮
போகிற நத்தையைப்போலப் போகக்கடவர்கள்;
கர்ப்பம் விழுந்துபோகிற ஸ்திரியின் முதிராப்
பிண்டத்தைப்போல சூரியனைக் காணாதிருப்பார்
களாக.—உணருகிறதற்குமுன் உங்கள் முட்கள் ௯
முக்காடாயின; அதைப் பச்சையோடேதானே
உக்கிரமான புசலினாலே அடித்துக்கொண்டுபோ
வார்.
நீதியைச் சரிக்கட்டுதலை நீதிமான் காணும் ௰
போது மகிழ்வான்; தன் பாதங்களை ஆகாதவனு
டைய இரத்தத்திலே கழுவுவான். — அப்போது ௰௧
மனுஷன் மெய்யாய் நீதிமானுக்குப் பலனுண்
டென்றும், மெய்யாய்ப் பூமியில் நியாயஞ்செய்
கிற பராபரன் உண்டென்றும் சொல்லுவான்.

## ௫௯. சங்கீதம்.

௧. தாவீது சத்துருக்கள் கையிலிருந்து தான் விடுதலையாக வேண்டிக்கொண்டது. ௬. அவர்களின் கொடுமையைக்குறித்து முறையிட்டு, ௮. பராபரனை நம்பி, ௰௧. அவர்களுக்கு விரோதமாக வேண்டிக்கொண்டது. ௰௬. பராபரனைத் துதித்தது.

(தாவீதைக் கொல்வதற்காகச் சவுல் அவன் வீட்டைக் காவல்காப்பவர்களை அனுப்புகையில், அவன் தான் கெட்டுப்போகாதபடிக்குப் பாடினதும் இராகத்தலைவனுக்கு ஒப்புவிக்கப்பட்டதுமான பொற்பணதிக்கிதம்.)

என் பராபரனே, என் சத்துருக்களுக்கு என் ௧
னைத் தப்புவியும்; என்மேல் எழும்புகிறவர்களு
க்கு என்னை விலக்கி, உயர்ந்த அடைக்கலத்தி
லே வையும்.—அக்கிரமக்காரருக்கு என்னைத் தப் ௨
புவித்து, இரத்தப்பிரியரான மனுஷருக்கு என்
னை விலக்கி இரட்சியும்.
ஏனெனில் இதோ, என் பிராணனுக்குப் பதி ௩
விருக்கிறார்கள்; கர்த்தாவே, என்னிடத்தில் மீறு
தலும் பாவமும் இல்லாதிருந்தும், பெலவான்
கள் எனக்கு விரோதமாய்க் கூட்டம்கூடுகிறார்
கள். — என்னிடத்தில் அக்கிரமம் இல்லாதிருந் ௪
தும் ஓடித்திரிந்து ஆயத்தமாகிறார்கள்; எனக்கு
நேராக விழித்துப்பாரும்.[8]—சேனைகளின் பரா ௫
பரனாகிய கர்த்தாவே, இஸ்ரவேலின் பராபரனே,

1 சங். ௰௭. ௮.—2 சங். ௱௮. ௫.—3 சங். ௭. ௰௫.—4 சங். ௱௮. ௨-௪.

5 சங். ௧௯. ௯.—6 சங். ௱௪௰. ௩.—7 சங். ௩. ௭.—8 சங். ௩௫. ௨௩.

தேவரீர் சகல சாதிகளையும் விசாரிக்க எழும்பும்;
அகங்காரமாய்த் துரோகம்செய்கிற யாருக்கும்
௬ இரங்காதிரும்; சேலா.— அவர்கள் சாயங்காலத்
திலே திரும்பிவந்து, நாய்களைப்போலக் குலைத்
து, ஊரைச்சுற்றி ஓடுகிருர்கள்.
௭ இதோ, தங்கள் வாயினுலே வாதாடுகிருர்கள்;
அவர்கள் உதடுகளில் பட்டையங்களுண்டு; எ
னெனில், அதைக் கேட்கிறவன் யார் என்றுர்
௮ கள்.[1] — ஆனல் கர்த்தாவே, தேவரீர் அவர்களை
நகைப்பீர்; சகல சாதிகளையும் பரியாசம்பண்ணு
௯ வீர்.[2] — அவன் வல்லமையைக் கண்டு, உமக்
குக் காத்திருப்பேன்; ஏனெனில் பராபரன்
௰ எனக்கு உயர்ந்த அடைக்கலம்.—கிருபையுள்ள
என் பராபரன் எனக்கு நேரிட்டுவருவார்; பரா
பரன் என்னை என் சத்துருக்களில் நீதி சரிக்கட்
டுதலைக் காணப்பண்ணுவார்.
௰௧ எங்கள் கேடயமாகிய ஆண்டவரே, என்
சனம் அதை மறவாதபடிக்கு அவர்களை நீர் கொ
ன்றுவிடாமல், அவர்களை உமது பெலத்தினுலே
௰௨ அலையப்பண்ணித் தாழ்த்தும்,—அவர்கள் உதடு
களின் பேச்செல்லாம் அவர்கள் வாயில் பாவ
மாயிருக்கின்றன; ஆகையால் தங்கள் பெருமை
யிலும், தாங்கள் சொல்லுகிற சர்ப்பனையின்நிமி
த்தமும், பொய்யின்நிமித்தமும் அவர்கள் பிடிப
௰௩ டட்டும். — பராபரன் யாக்கோபிலே பூமியின்
எல்லைகள்பரியந்தமும் ஆளுகிறவரென்று அவர்
கள் அறிவதற்கு, அவர்களை உம்முடைய உக்கி
ரத்திலே நிர்மூலமாக்கும்; இனியில்லாதபடிக்கு
௰௪ அவர்களை நிர்மூலமாக்கும்; சேலா.—அவர்கள்
சாயங்காலத்திலே திரும்பிவந்து நாய்களைப்போ
லக் குலைத்து, ஊரைச்சுற்றி ஓடக்கடவர்கள்.—
௰௫ அவர்கள் திருப்தியாகாதேபோனுல் சாப்பிடுகிற
தற்கு அலைந்து திரிந்து மொறுமொறுக்கக்கட
வர்கள்.
௰௬ நானேவெனில் உம்முடைய வல்லமையைப்
பாடி, காலமே உம்முடைய கிருபையைக் கெம்
பீரமாய்ப் புகழுவேன்; ஏனெனில் எனக்கு நெ
ருக்கமுண்டானநாளிலே எனக்கு உயர்ந்த அ
௰௭ டைக்கலமும் ஒதுக்குமானீர்.[3]—என் பலனே,
உம்மைக் கீர்த்தனம்பண்ணுவேன்; ஏனெனில்
பராபரன் எனக்கு உயர்ந்த அடைக்கலமும் என்
கிருபையுள்ள பராபரனுமாயிருக்கிருர்.

## ௬௰. சங்கீதம்.

௧ தாவீது முந்தின தீப்பைக்குறித்து முறையிட்டது. ௨. நல்ல நம்பிக்கையுடனே விடுதலைக்காக வேண்டிக்கொண்டது. ௩. பராபரனுடைய வாக்குத்தத்தத்தின்மேல் தன்னைத் தேற்றித் தான் நம்பின உதவியை மன்றுடினது.

(தாவீது மெசொபொத்தாமியா தேசத்துச் சூரியரோடும், சோபா தேசத்துச் சூரியரோடும் யுத்தம்பண்ணினபோதும், யோவாப் திரும்பி உப்புப்பள்ளத்தாக்கிலே ஏதோமியரில் பன்னீராயிரம்பேரை வெட்டினபோதும் அவன் சாட்சியை விளக்குவிக்கும் ஆறுகரம்புக் கின்னரத்திலே போதிப்புக்காகப் பாடினதும், இராகத்தலைவனுக்கு ஒப்புவித்ததுமான பொற்பணதிக்கீதம்.)

பராபரனே, எங்களை ஒழித்துவிட்டு, எங்களைத் ௧
தகர்த்துவிட்டுக் கோபமாயிருந்தீர்; திரும்ப எங்
கள் புறமாய்த் திரும்பும்.[4] — பூமியை அதிரப் ௨
பண்ணி, அதை வெடிப்பாக்கினீர்; அதின் வெ
டிப்புகளைக் கட்டும்; ஏனெனில் அசைகிறது.—
உம்முடைய சனத்துக்குக் கடினமான காரியத் ௩
தைக் காணப்பண்ணினீர்; தத்தளிப்பின் மதுபா
னத்தை எங்களுக்குக் குடிக்கக்கொடுத்தீர்.[5]—ஆ ௪
னுல் உம்முடைய பிரியர் விடுவிக்கப்படும்ப
டிக்கு ஏற்றும் கொடியை உமக்குப் பயந்தவர்க
ளுக்குச் சத்தியத்தின் நிமித்தமாகத் தந்தீர்; சே
லா.—உமது வலதுகரத்திலே இரட்சித்து எங்கள் ௫
செபத்தைக் கேளும்.[6]
பராபரன் தமது பரிசுத்தஸ்தலத்திலே விளம்பி ௬
னதைப்பற்றிக் களிகூருவேன்; சீகேமைப் பங்
கிட்டு, சுக்கோத்தின் பள்ளத்தாக்கை அளந்து
கொள்ளுவேன். — கிலேயாத் என்னுடையது; ௭
மனுசேயும் என்னுடையது; எப்பிராயீம் என்
தலையின் பெலன்; யூதா என் நியாயநெறியா
னுன்.—மோவாப் நான் கழுவுகிற பாத்திரமாயி ௮
ருக்கும்; ஏதோமின்மேலே என் பாதஇரட்சை
யை நீட்டுவேன்; பெலிஸ்தேயாவே, என்னைப்
பார்த்துக் கெம்பீரி.
என்னை அரணான பட்டணத்துக்குள் வழிவி ௯
டுபவர் யார்? என்னை ஏதோம்மட்டும் கொண்டு
போகுபவர் யார்?—பராபரனே எங்கள் சேனை ௰
களோடே புறப்படாமல், எங்களை ஒழித்துவிட்
டிருந்த பராபரனனவர் தேவரீர் அல்லவோ?—
இக்கட்டுக்குத் தப்ப எங்களுக்குச் சகாயம் கட் ௰௧
டளையிடும்; ஏனெனில் மனுஷ இரட்சிப்பு அ
வத்தம்.
பராபரனுலே பெலன் செய்வோம்; அவரே ௰௨
எங்கள் சத்துருக்களை மிதித்துப்போடுவார்.[7]

## ௬௧. சங்கீதம்.

௧. தாவீது தன் பூர்வப்பயிற்சியின்படி பராபரனிடத்திற்கு ஓடினது. ௨. தான் முன்செய்த வாக்குத்தத்தத்தின்படி அவருக்கு நித்திய ஊழியம் செய்ய உறுதிபண்ணிக்கொண்டது.

(கின்னரங்களில் வாசிக்க இராகத்தலைவனுக்கு ஒப்புவிக்கப்பட்ட தாவீதின் சங்கீதம்.)

பராபரனே, என் கூப்பிடுதலைக் கேட்டு, என் ௧
விண்ணப்பத்துக்குக் கவனியும்.-என் இருதயம் ௨
தொய்யும்போது, பூமியின் கடையாந்தரத்திலி
ருந்து உம்மைநோக்கிக் கூப்பிடுகிறேன்; நான்
நிற்கிறதிலும் உயரமான கல்மலையில் என்னைக்
கொண்டுபோய்விடும்.-ஏனெனில் சத்துருவுக்கு ௩
எதிரே எனக்கு அடைக்கலமும் பெலத்த துர்க்
கமுமானீர். — சதாகாலங்களாக உம்முடைய ௪
கூடாரத்திலே தங்குவேன்; உம்முடைய செட்
டைகளின் மறைவிலே வந்தடைவேன்;சேலா.[8]
ஏனெனில் பராபரனே, தேவரீர் என் பொ ௫
ருத்தனைகளைக் கேட்டீர்; உம்முடைய நாமத்துக்

1 சங்.௫௭.௯: ௭௰௧: ௯௪.௭.—2 சங்.௨.௪.-3 சங்.௯௨.௪.-4 சங்.௪௪.௨௩.
5 ஏசா.௫௧.௰௭,௨௨.-6 சங்.௩௯.௭.-7 சங்.௰௮.௩௰: ௪௪.௫.-8 சங்.௫௭.௨.

குப் பயந்தவர்களின் சுதந்தரத்தை எனக்குத்
௬ தந்தீர். —இராசாவுடைய நாள்களோடே நாள்
களைக் கூட்டுவீர்; அவன் வருஷங்கள் தலைமு
௭ றை தலைமுறையாக இருக்கும்.—பராபரனுக்கு
முன்பாக என்றென்றைக்கும் நிலைத்திருப்பான்;
அவனைத் தற்காக்கக் கிருபையையும் உண்மை
௮ யையும் கட்டளையிடும்.—இப்படியே தினமும்
என் பொருத்தனைகளை நான் செலுத்தும்படியாய்,
உமது நாமத்தை என்றைக்கும் கீர்த்தனம்பண்
ணுவேன்.

## ௬௨. சங்கீதம்.

*௧. தாவீது பராபரனிலிருக்கும் தன் நம்பிக்கையை வெளியிட்டு, சத்துருக்களை அதபிரியப்படுத்தினது. ௫. அந்த நம்பிக்கையிலே தேவபக்தியுள்ளவர்களைத் தயிரியப்படுத்தினது. ௯. லோககாரியங்களில் நம்பிக்கை வைக்கலாகாதென்பது. ௰௧. வல்லமையும், இரக்கமும் பராபரனுக்கு உரியதென்பது.*

---

*(எதித்தூனென்ற இராகத்தலைவனுக்கு ஒப்புவிக்கப்பட்ட தாவீதின் சங்கீதம்.)*

௧ பராபரனையே நோக்கி என் ஆத்துமா அமர்ந்தி
ருக்கிறது, அவரால் என் இரட்சிப்பு வரும்.—
௨ அவரே என் கல்மலையும், என் இரட்சிப்பும்,
என் உயர்ந்த அடைக்கலமுமாயிருக்கிறார்; நான்
௩ மெத்தவும் அசைக்கப்படுவதில்லை.[1]— எந்தமட்
டும் ஒரே மனுஷனுக்குப் பொல்லாப்புண்டாக்
கப் பார்ப்பீர்கள்; நீங்கள் அனைவரும் கொலை
யுண்ணப்பட்டு,சாய்ந்த மதிலுக்கும் இடிந்த சுவ
௪ ருக்கும் சரியாவீர்கள்.—ஆகிலும் அவர்கள் அ
வனை அவன் மேன்மையிலிருந்து விழத்தள்ள
ஆலோசனைபண்ணி, அபத்தம் பேச விரும்புகி
றார்கள்; தங்கள் வாயினாலே ஆசீர்வதித்து, தங்
கள் உள்ளத்திலே சபிக்கிறார்கள்; சேலா.[2]
௫ ஆனால் என் ஆத்துமாவே, பராபரனைநோக்கி
அமர்ந்திரு, ஏனெனில் நான் நம்புகிறது அவ
௬ ராலே வரும்.[3]—அவரே என் கல்மலையும், என்
இரட்சிப்பும், என் உயர்ந்த அடைக்கலமுமாயி
௭ ருக்கிறார்; நான் அசைக்கப்படுவதில்லை.—பரா
பரனிடத்தில் என் இரட்சிப்பும் என் மகிமையும்
இருக்கிறது; என் பெலனான கல்மலையும் என்
அடைக்கலமும் பராபரனுக்குள் இருக்கிறது.[4]—
௮ சனமே, எந்தக்காலத்திலும் அவரை நம்பி, அவ
ருக்குமுன்பாக உங்கள் இருதயத்தை ஊற்றிவி
டுங்கள்; பராபரன் நமக்கு அடைக்கலமாயிருக்
கிறார்; சேலா.
௯ ஆனால் மனுப்புத்திரர் மாயையும், துரைமக்
கள் பொய்யும்தானே; தராசிலே அவர்கள் ஏக
மாய் மாயையிலும் இலேசாய் ஏறுகிறதற்கானவர்
௰ கள்.[5]—கொடுமையையும் கொள்ளையையும் நம்
பாமலும்,வீணாய் உப்பாமலும் இருங்கள்; ஆஸ்தி
வளர்ந்தால் இருதயத்தை அதின்மேல் வைக்கா
௰௧ திருங்கள்.[6]—பராபரன் ஒன்று சொன்னார்;அதை
இரண்டொருதரம் கேட்டேன்; வல்லமை பரா
௰௨ பரனுடையதென்பதுதானே.—கிருபையும் உம்
முடையது, ஆண்டவரே, ஏனெனில் தேவரீர்
அவனவனுக்கும் அவனவன் செய்கைக்குத்தக்க
தாகச் செலுத்துவீர்.

## ௬௩. சங்கீதம்.

*௧. தாவீது பராபரனைத் தரிசிக்க ஆவல்கொண்டது. ௪. அவன் பராபரனைத் துதிக்கு முறைமை. ௯. சத்துருக்கள் அழிவதையும், தான் தப்புவிதலைக் கொள்வதையும்குறித்து அவனுக்குண்டான நம்பிக்கை.*

---

*(தாவீது யூதாவின் வனாந்தரத்தில் இருக்கையில் பாடின சங்கீதம்.)*

பராபரனே, தேவரீர் என்னுடைய பராபரன், ௧
அதிகாலையில் உம்மைத் தேடுகிறேன்; வரண்ட
தும் விடாய்த்ததும் தண்ணீர் அற்றதுமான பூமி
யில் என் ஆத்துமா உம்முடையமேலே தாகமா
யிருக்கிறது; என் மாம்சம் உம்மை வாஞ்சிக்கிற
து.[7]–உமது வல்லமையையும் உமது மகிமையை ௨
யும் காணும்படிக்கு, நான் பரிசுத்தஸ்தலத்தில்
உம்மைப்பார்க்க எத்தனை ஆசையுண்டு.[8]–ஏனெ ௩
ன்றால் சீவனைப்பார்க்கிலும் உமது கிருபை நல்
லது, என் உதடுகள் உம்மைத் துதித்துக்கொண்
டிருக்கும். — இப்படியே நான் சீவனுள்ளமட் ௪
டும் உம்மைத் தோத்திரித்து, உமது நாமத்தில்
என் கைகளை ஏறெடுப்பேன்.[9]—நிணத்தையும் ௫
கொழுப்பையும் உண்டதுபோல, என் ஆத்துமா
திருப்தியாகும்; நான் என் மெத்தையின்மேலே
உம்மை நினைக்கிறபோது,என் வாய் கெம்பீரிப்
பான உதடுகளால் உம்மைப் போற்றும்.[10]
சாமங்களில் உம்மைத் தியானிக்கிறேன. — ௬
ஏனெனில் நீர் எனக்குத் துணையாயிருந்ததினால், ௭
உம்முடைய செட்டைகளின் நிழலிலே கெம்பீ
ரிப்பாயிருக்கிறேன். — என் ஆத்துமா உம்மை ௮
ஒட்டிக்கொண்டு தொடருகிறது; என்னை உமது
வலதுகரம் தாங்குகிறது.[11]—ஆனால் என் ஆத்து ௯
மாவைப் பாழாக்கத் தேடுகிறவர்கள் பூமியின்
பாதாளங்களில் போவார்கள்.–அவர்களைப் பட் ௰
டையத்தால் போக்கிவிடுவார்கள்; நரிகளின் பங்
காவார்கள்.—இராசாவோவெனில் பராபரனுக் ௰௧
குள் மகிழ்வான்; அவர்மேல் சத்தியம்பண்ணுகி
றவனெல்லாம் மேன்மைபாராட்டுவான்; ஏனெ
னில் பொய்பேசுகிறவர்களின் வாய் அடைக்
கப்படும்.

## ௬௪. சங்கீதம்.

*௧. தாவீது விடுதலைக்காக வேண்டிக்கொண்டு, தன் சத்துருக்களுக்கு விரோதமாக முறையிட்டது. ௭. அவன் நீதிமான்கள் களிப்படையும்படி தன் சத்துருக்களுக்கு வரும் நாசத்தைக்குறித்துச் சொன்னது.*

---

*(இராகத்தலைவனுக்கு ஒப்புவிக்கப்பட்ட தாவீதின் சங்கீதம்.)*

பராபரனே, என் கெஞ்சுதலிலே என் சத்தத் ௧
தைக் கேளும்; சத்துருவால் வரும் திகிலை நீக்கி,
என் பிராணனைக் காப்பாற்றும். — என்னைப் ௨
பொல்லாதவர்களின் இரகசிய ஆலோசனைக்
கும், அக்கிரமக்காரருடைய அமளிக்கும் இடை
ஞ்சலாக மறையும்.

---

1 சங். ௰௮. ௧.—2 சங். ௫௫. ௨௨. 5 சங்.௩௯.௬-௰௨.—6 மாற்.௰.௨௪.
3 ஏசா. ௩௦. ௰௫.—4 சங். ௩௩. ௪. லூக். ௰௨. ௰௯-௨௧. ௧ தீமோ.௬.
௰௭-௰௯.–7 சங்.௪௨.௨௧: ௧௪௩.௬. 10 சங். ௩௯. ௯: ௩௫. ௫.
8 சங். ௨௭. ௪.—9 சங். ௱௪. ௩௩. 11 ௧ கொரி. ௯. ௰௭.

௩ அவர்கள் தங்கள் நாவைப் பட்டயத்தைப்
௪ போல கூர்மையாக்குகிறார்கள்.[1]—மறைவுகளில்
உத்தமனை எய்யக் கசப்பான வார்த்தைகளைத் தங்
கள் அம்புகளாக்கி நாணேற்றுகிறார்கள்; அவனை
அசுப்பிலே எய்து பயப்படாதிருக்கிறார்கள்.[2]—
௫ அவர்கள் பொல்லா விசேஷத்தை உறுதிபண்
ணிக்கொண்டு, கண்ணிகளை மறைவாய் வைப்
பதைப் பேசி, அவைகளை யார் காண்பானென்
௬ கிறார்கள்.—நியாயக்கேடுகளைத் தேடி எத்தனம்
பண்ணுகிறார்கள்; ஆய்ந்து தேட எத்தனம்பண்
ணுகிறார்கள்; அதுவே அவனவனுடைய உள்
ளம்; அவர்கள் இருதயம் ஆழமுமாயிருக்கிறது.
௭ ஆனால் பராபரன் அவர்களை எய்வார்; தீவிர
மாய் அம்புபட்டதுபோல, அவர்கள் வாதைகள்
௮ இருக்கும்.—அவர்கள் நாவுகள் அவர்களைத்தா
னே விழப்பண்ணும்; அவர்களில் நீதியைச்
சரிக்கட்டுதலைப் பார்க்கிற யாவரும் ஓடிப்போ
௯ வார்கள்.—எல்லா மனுஷரும் பயந்து, பராபர
னுடைய கிரியையை அறிவித்து அவர் செயலை
௰ உணருவார்கள்.—நீதிமான் கர்த்தருக்குள் மகிழ்ந்
து அவரை நம்புவான்; செம்மை இருதயத்தார்
அனைவரும் மேன்மைபாராட்டுவார்கள்.

## ௬௫. சங்கீதம்.

௧. தாவீது பராபரனுடைய கிருபைக்காக அவரைத் துதித்தது. ௪. அவரால் தெரிந்துகொள்ளப்பட்டவர்களுடைய பாக்கியத்தினால் வரும் பிரயோசனத்தைக்குறித்தது.

---

(இராகத்தலைவனுக்கு ஒப்புவிக்கப்பட்ட தாவீதின் கீதமாகிய பாட்டு.)

௧ பராபரனே, சீயோனில் உம்மைநோக்கி அமை
ந்திருந்து துதிக்கிறார்கள்; உமக்குப் பொருத்
௨ தனை செலுத்தப்படும்.[3]—செபத்தைக் கேட்கிற
வரே, உம்மண்டைக்குச் சகல மாம்சமும் வரு
௩ வதாக.—அக்கிரமங்களின் விசேஷங்கள் என்மே
ல் மிஞ்சி வல்லமைகொண்டன; ஆனால் எங்கள்
மீறுதல்களைத் தேவரீர் நிவிர்த்தியாக்குகிறீர். —
௪ உம்முடைய பிரகாரங்களில் வாசமாயிருக்க
நீர் தெரிந்துகொண்டு சேர்க்கிறவன் பாக்கிய
வான்; உம்முடைய பரிசுத்த தேவாலயமாகிய உ
மது வீட்டின் நன்மையால் திருப்தியாவோம்.[4]—
௫ பூமியின் கடையாந்தரங்களும், தூரத்திலுள்ள க
டற்கரைகளும், எல்லாம் நம்பும் நம்பிக்கையா
கிய எங்கள் இரட்சிப்பின் பராபரனே, நீர் பயங்
கரமான காரியங்களைச் செய்கிறதினால் எங்க
ளுக்கு நீதியுள்ள மறுவுத்தரவை அருளுகிறீர்.
௬ உம்முடைய பெலத்தினாலே பர்வதங்களை
உறுதிப்படுத்தி, வல்லமையை இடைகட்டிக்
௭ கொண்டிருந்து,—சமுத்திரங்களின் உக்கிரத்தை
யும், அவைகளுடைய அலைகளின் உக்கிரத்தை
யும், சனசதளங்களின் அமளியையும் அமர்த்து
௮ கிறவராயிருக்கிறீர்.—கடையாந்தர இடங்களில்
குடியிருக்கிறவர்களும் உம்முடைய அடையா
ளங்களின்நிமித்தம் பயப்படுகிறார்கள்; விடியற்
காலத்திலும், சாயங்காலத்திலும் புறப்படுகிற

வைகளைக் கெம்பீரிக்கப்பண்ணுகிறீர்.—தேவரீர் ௯
பூமியை விசாரித்துப்பார்த்து, அதற்குத் தவனமு
ண்டாக்கினபின் அதை மிகவும் சம்பூரணப்படுத்
துகிறீர்; பராபரனுடைய வாய்க்கால் தண்ணீர்
நிரம்பியிருக்கிறது; நீர் இப்படி அதைத் திருத்தி
னபின் அவர்களுக்குத் தானியத்தை விளைவிக்கி
றீர். — அதின் வரப்புகள் தணியத்தக்கவிதமாய் ௰
அதின் படைச்சால்களுக்குத் தண்ணீர் இறைத்
து, அதை மழைகளால் கரையப்படுத்தி, அதின்
பயிரை ஆசீர்வதிக்கிறீர்.—வருஷத்தை உம்மு ௰௧
டைய நன்மையால் முடிசூட்டுகிறீர்; உம்முடை
ய பாதைகள் நெய்யாய்ப் பொழிகின்றன.—வனா ௰௨
ந்தர தாவரங்கள்மீதில் பொழிகிறது; மேடுகள்
சுற்றிலும் பூரிப்பாயிருக்கின்றன.—மேய்ச்சல் ௰௩
வெளிகள் ஆடுகளைப் பூண்டிருக்கின்றன; பள்
ளத்தாக்குகள் தானியத்தால் மூடியிருக்கின்றன;
அதின்நிமித்தம் கெம்பீரித்துப் பாடுகிறார்கள்.

## ௬௬. சங்கீதம்.

௧. தாவீது பராபரனைத் துதிக்கவும், ௫. அவருடைய மேன்மையுள்ள செய்கைகளை உணரவும், ௮. அவருடைய கிருபையுள்ள நன்மைகளுக்காக அவரை வாழ்த்தவும் தூண்டிவிட்டது. ௰௨. பராபரனுக்கு வாழ்வு முடிக்கப் பிரமாணிக்கம்பண்ணினது. ௰௬. பராபரனாலே தனக்கு உண்டாகிய விசேஷித்த நன்மைகளை வெளிப்படுத்தினது.

---

(இராகத்தலைவனுக்கு ஒப்புவிக்கப்பட்ட சங்கீதமாகிய பாட்டு.)

பூமியின் குடிகளே, எல்லாரும் பராபரன்முன் ௧
பாக கெம்பீரியுங்கள்.[5]—அவர் நாமத்தின் மகி ௨
மையைக் கீர்த்தனம்பண்ணி, அவர் துதியைக்
கனமானதாக்குங்கள். — பராபரனுடனே, உம் ௩
முடைய கிரியைகளில் எத்தனை பயங்கரமாயி
ருக்கிறீர் என்று சொல்லுங்கள்; உமது வல்லமை
யினுடைய திரட்சியின்நிமித்தமாக உம்முடைய
சத்துருக்கள் உமக்கு வணக்கமாய்ப் பேசுவார்
கள்.—பூமியனைத்தும் உம்மைப் பணிந்துகொண் ௪
டு உம்மைக் கீர்த்தனம்பண்ணக்கடவது; அவர்
கள் உம்முடைய நாமத்தைக் கீர்த்தனம்பண்ணக்
கடவார்கள்; சேலா.
வந்து பராபரனுடைய செய்கைகளைப் பாருங் ௫
கள்; அவர் மனுப்புத்திரரிடத்தில் நடப்பிக்கும்
கிரியையில் பயங்கரமானவர்.—கடலை வெட் ௬
டாந்தரையாக மாற்றினார்; ஆற்றைக் கால்நடை
யாய்க் கடந்தார்கள்; அங்கே அவரால் மகிழ்ச்சி
யடைந்தோம்.[6]—அவர் தம்முடைய வல்லமையி ௭
னால் என்றென்றைக்கும் ஆளுகிறவர்; அவரு
டைய கண்கள் சாதிகள்மேல் நோக்கமாயிருக்
கின்றன; முரட்டாட்டக்காரர் தங்களை உயர்த்
தாதிருப்பார்களாக; சேலா.
சனசதளங்களே, நம்முடைய பராபரனைத் ௮
தோத்திரித்து, அவர் துதியின் சத்தத்தைக் கேட்
கப்பண்ணுங்கள்.—அவர் நம்முடைய கால்களைத் ௯
தள்ளாடவொட்டாமல், நம்முடைய ஆத்துமா
வை உயிரோடே வைக்கிறார். — ஏனென்றால் ௰
பராபரனே, எங்களைச் சோதித்தீர்; வெள்ளியைப்

1 சங். ௫௯. ௭.—2 சங். ௰௧. ௨.—3 சங். ௬௨. ௨.—4 சங். ௮௪. ௪.

5 சங். ௯. ௧.—6 ௨ மோ. ௰௪. ௨௧. யோசு. ௩. ௰௪. ௱.

புடமிடுகிறதுபோலே எங்களைப் புடமிட்டீர்.—
௰௧ எங்களை வலைக்குள்ப்படுத்தி, எங்கள் இடுப்புக
ளின்மேல் வருத்தமான பாரத்தைப் போட்டீர்.—
௰௨ மனிதரை எங்கள் தலையின்மேல் ஏறிப்போகப்
பண்ணினீர்; தீக்கும் தண்ணீருக்கும் உள்ளா
னோம்; ஆனால் சம்பூரணம் அடைய எங்களை
அதற்கு நீங்கலாக்கிப் புறப்படப்பண்ணினீர்.[1]
௰௩ சர்வாங்கதகனங்களோடே உமது வீட்டுக்
௰௪ குள்ப்பிரவேசிப்பேன்.—என் இக்கட்டில் என்
உதடுகள் திறவுண்டு என் வாய் சொன்ன என்னு
டைய பொருத்தனைகளை உமக்குச் செலுத்து
௰௫ வேன்.—உமக்குக் கொழுப்பான தகனபலிகளை
யிட்டு, ஆட்டுக்கடாக்களின் நிணப்புகையை
யும் காட்டுவேன்; மாடுகளையும் கடாக்களை
யும் படைப்பேன்; சேலா.
௰௬ பராபரனுக்குப் பயந்தவர்கள் எல்லாரும் வந்து
கேளுங்கள்; அவர் என் ஆத்துமத்துக்குச் செய்த
௰௭ தைச் சொல்லுவேன்.—அவரைநோக்கி என் வா
யினாலே கூப்பிட்டேன்; என் நாவினால் உயர்த்
௰௮ தப்பட்டார்.—என் இருதயத்தில் அக்கிரமநோக்
கமாயிருந்தேனானால், ஆண்டவர் என்னைக் கே
௰௯ ளார்.[2]—மெய்யாய்ப் பராபரன் என்னைக் கேட்டு.
என் செபத்தின் சத்தத்துக்குக் கவனித்தார். —
௨௰ என் செபத்தை அல்லத்தட்டாமலும், தமது கிரு
பையை என்னைவிட்டு விலக்காமலுமிருந்த பரா
பரன் தோத்திரிக்கப்பட்டவர்.

## ௬௰௭. சங்கீதம்.

௧. சனங்களின் மகிழ்ச்சிக்கும், ௬ பராபரனுடையஆசீர்வாதங்களின் விருத்திக்கும், அவருடைய இராச்சியம் பரம்புதற்கும் செபம்.

(கின்னரங்களில் வாசிக்க இராகத்தலைவனுக் குஒப்பு
விக்கப்பட்ட பாட்டாகிய சங்கீதம்.)

௧ பூமியில் உம்முடைய வழியும், எல்லாச் சாதி
களிலும் உம்முடைய இரட்சிப்பும் அறியப்
௨ பட,—பராபரன் எங்களுக்கு இரங்கி, எங்களை
ஆசீர்வதித்து, தம்முடைய முகத்தை எங்கள்மேல்
௩ பிரகாசிக்கப்பண்ணக்கடவார்.[3] — பராபரனே,
சனசதளங்கள் உம்மைத் துதிப்பதாக; எல்
லாச் சனசதளங்களும் உம்மைத் துதிப்பதாக.—
௪ சாதிகள் மகிழ்ந்து கெம்பீரிப்பதாக; ஏனெனில்
சனசதளங்களை நிதானமாய் நியாயந்தீர்த்து, பூமி
௫ யிலுள்ள சாதிகளை நடத்துவீர்; சேலா.—பரா
பரனே, சனசதளங்கள் உம்மைத் துதிப்பதாக;
எல்லாச் சனசதளங்களும் உம்மைத் துதிப்ப
௬ தாக.—பூமி தன் பலனைத் தரக்கடவது; எங்கள்
தேவனாகிய பராபரன் எங்களை ஆசீர்வதிக்கக்
௭ கடவார்.—பராபரன் எங்களை ஆசீர்வதிக்கக்கட
வார், பூமியின் எல்லைகளெல்லாம் அவருக்குப்
பயந்திருப்பதாக.

## ௬௰௮. சங்கீதம்.

௧ நியாயப்பிரமாணத்தின் பெட்டி பெயர்க்கப்பட்ட காலத்தின் செபம். ௪ பராபரனுடைய இரக்கத்திற்காகவும், சபையின்மேலிருக்கும் அவருடைய விசாரணைக்காகவும், ௰௬. அவருடைய மேன்மையுள்ள செய்கைகளுக்காகவும் அவரைத் துதிக்கத் தூண்டுதல்.

(இராகத்தலைவனுக்கு ஒப்புவிக்கப்பட்ட தாவீதின்
பாட்டாகிய சங்கீதம்.)

பராபரன் எழுந்திருப்பார்; அவருடைய சத்துக
ருக்கள் சிதறுண்டு, அவரைப் பகைக்கிறவர்கள்
அவருக்குமுன்பாக ஓடிப்போவார்கள்.[4]—புகை ௨
காற்றினாலே தள்ளப்படுமாப்போல, அவர்களைத்
தள்ளுவீர்; நெருப்பின்முன் மெழுகு உருகுமாப்
போல, ஆகாதவர்கள் பராபரனுடைய சந்நிதி
யால் அழிவார்கள்.—ஆனால் நீதிமான்கள் பரா ௩
பரனுக்குமுன்பாக மகிழ்ந்து களிகூர்ந்து சந்
தோஷமாய்க் களிப்பார்கள்.

பராபரனைப் பாடி அவருடைய நாமத்தைக் ௪
கீர்த்தனம்பண்ணுங்கள்; வனாந்தரங்களில் ஏறி
வருகிறவருக்கு வழியைச் சமனாக்குங்கள்; அவ
ருடைய நாமம் கர்த்தர், அவருக்குமுன்பாகக்
களிகூருங்கள்.[5] — அவர் திக்கற்றவர்களுக்குப் ௫
பிதாவும் விதவைகளுக்கு நியாயம்விசாரிக்கிற
வருமாய்த் தம்முடைய பரிசுத்த வாசஸ்தலத்தில்
இருக்கிற பராபரன்.—அவர் தனிமையானவர் ௬
களை வீட்டிலே வாசமாயிருக்கப்பண்ணி, கட்
டுண்டவர்களைச் சரியான வேளைகளில் நீக்கிவி
டுவிக்கிற பராபரன்; முரட்டாட்டக்காரரோ
வெனில் வரண்ட தலத்திலே தங்குவார்கள்.[6]

பராபரனே, நீர் உம்முடைய சனத்தின்முன் ௭
னாலே புறப்பட்டு, அவாந்தரவெளியிலே நடந்
துவருகையில், சேலா,—பூமி அதிர்ந்தது, வான ௮
ங்களும் பராபரனுக்குமுன்பாகப் பொழிந்தன;
இந்தச் சீனாய் இஸ்ரவேலின் தேவனாகிய பரா
பரனுக்குமுன்பாக இப்படியாயிற்று.[7]—பராபர ௯
னே, சம்பூரண மழையைப் பெய்யப்பண்ணு
வீர்; இளைத்ததாகிய உமது சுதந்தரத்தைத் தேவ
ரீர் திடப்படுத்துவீர்.[8]

அதிலே உம்முடைய மந்தை தங்கியிருக்கி ௰
றது; பராபரனே, சிறுமையானவனுக்கு அதை
உம்முடைய தயையினால் பக்குவமாக்குவீர்.—
ஆண்டவர் வசனந்தருவார்; சுவிசேஷகரின் திர ௰௧
ளான சேனையுண்டாயிருக்கும்.—சேனைகளின் ௰௨
இராசாக்கள் சுற்றிச்சுற்றித் திரிவார்கள்; வீட்டி
லே வாசமாயிருக்கிறவளோ கொள்ளையைப் பங்
கிடுவாள். — நீங்கள் இருபுறப் படைவகுப்புக ௰௩
ளுக்குள் இருக்கையில், வெள்ளியாலே மூடப்
பட்டபுறாச்செட்டைகளின் சாயலாகவும், தங்
கநிறமாகிய அதின் இறகுகளின் சாயலாகவும்
காணுகிறது. — சர்வத்துக்கும் வல்லவர் அதின் ௰௪
இராசாக்களை இங்குமங்கும் வைத்தால் காரிருளி
லே வெளிச்சமாம்.—பராபரனுடைய பர்வதம் ௰௫
பாசான் பர்வதத்தைப்போல இருக்கிறது; அது
பாசான் பர்வதத்தைப்போல மேடுகளுள்ளது.—
பர்வதங்களே, மேடுகளே, ஏன் விம்மியிருக்கி ௰௬
றீர்கள்? இந்தப் பர்வதத்திலே வாசமாயிருக்கப்

1 ஏசா. ௪௮. ௨.
2 யோவா. ௯. ௩௧.
3 ௪ மோ. ௬. ௨௪, ௨௫.
4 ௪ மோ. ௰. ௩௫
5 ஏசா. ௪௰. ௩.
6 சங். ௱௧௩.௯. ஏசா. ௫௪. ௧, ௩.
7 ௨ மோ. ௰௯. ௰௬, ௰௮
8 ஏசே. ௩௪. ௨௬.

பராபரன் விரும்பினார்; ஆம் கர்த்தர் அதிலே
என்றென்றைக்கும் வாசமாயிருப்பார்.
௰௭ பராபரனுடைய இரதங்கள் பதினாயிரங்க
ளும், ஆயிரத்தாயிரங்களுமானவை; ஆண்டவர்
பரிசுத்தஸ்தலமான சீனாயில் இருந்தவண்ண
௰௮ மாய் அவர்களுக்குள் இருக்கிறார்.[1] — தேவரீர்
உன்னதத்துக்கேறிச் சிறையாக்குதலைச் சிறை
யாக்கிப்போட்டு, வரங்களை மனிதருக்குள்ளும்
முரட்டாட்டம் செய்தவர்களுக்குள்ளும்கூடப்
பங்கிடுவதற்கும், இப்படியே பராபரனாகிய கர்த்
தர் அவர்களுக்குள் வாசமாயிருப்பதற்குமாக
வாங்கிக்கொண்டீர்.[2]
௰௯ ஆண்டவர் எந்நாளும் தோத்திரிக்கப்பட்
டவர்; நம்முடையமேல் பாரம் சுமத்துகிறார்;
ஆனால் அவரே நம்முடைய இரட்சிப்பான பரா
௨௰ பரன்; சேலா.[3]—பராபரன் நமக்கு இரட்சிப்
புகளையருளுகிற பராபரனாயிருக்கிறார்; ஆண்ட
வராகிய கர்த்தரால் மரணத்துக்கு நீங்கும் போக்
௨௧ குகளுண்டு. — மெய்யாகவே பராபரன் தம்மு
டைய சத்துருக்களின் சிரசையும், தன் தோஷங்
களில் நடந்துகொண்டிருக்கிறவனுடைய மயி
௨௨ ருள்ள உச்சியையும் உடைப்பார்.[4]—சத்துருக்க
ளில் அவனவனுடைய இரத்தத்தில் உம்முடைய
கால் பதியும்படியாகவும், உம்முடைய நாய்க
௨௩ ளின் நாக்கு அதை நக்கும்படியாகவும்,—ஆண்
டவர் பாசானிலிருந்து நம்முடைய சனத்தைத்
திரும்ப அழைத்துவருவோமென்றும், அதைச்
சமுத்திர ஆழங்களிலிருந்து திரும்ப அழைத்து
வருவோமென்றும் சொன்னார்.
௨௪ பராபரனே, உம்முடைய நடைகளைக் காண்
பார்கள்; என் பராபரனும் என் இராசாவும், பரி
சுத்தஸ்தலத்திலே நடந்துவருகிற நடைகளைத்தா
௨௫ னே. — முன்னாகப் பாடுவாரும், பின்னாக மே
ளம் சேவிக்கிற கன்னியாஸ்திரிகளுக்குள்ளே
கின்னரங்களை வாசிப்பாரும் நடப்பார்கள்.[5]—
௨௬ ஆண்டவராகிய பராபரன் இஸ்ரவேலினுடைய
ஊற்றின்நிமித்தமாகச் சபைகளில் தோத்திரியுங்
௨௭ கள் என்பார்கள்.[6]—அங்கே அவர்களை ஆளுகிற
சின்ன பென்யமீனும், யூதாவின் பிரபுக்களும்,
அவர்கள் கூட்டமும், சேபுலோனின் பிரபுக்
களும், நவுதலியின் பிரபுக்களுமுண்டு.[7]
௨௮ உம்முடைய பராபரன் உமது பெலத்தைக்
கட்டளையிட்டார்; பராபரனே, நீர் எங்களுக்கு
௨௯ உண்டுபண்ணினதைத் திடப்படுத்தும்.[8]—எருச
லேமிலுள்ள உம்முடைய தேவாலயத்திற்காக
இராசாக்கள் உமக்குக் காணிக்கைகளைக் கொண்
௩௰ டுவருவார்கள்.[9]—நாணலிலே தங்கும் மிருகத்தை
யும், வெள்ளித் துண்டுகளின்நிமித்தம் மிதித்துப்
போட்டு, சனசதளங்களென்ற கன்றுக்குட்டி
களுக்குள் இருக்கிற வலுவான எருதுகளின்
கூட்டத்தையும் உதம்பும்; யுத்தங்களை விரும்பு
௩௧ கிற சனசதளங்களைச் சிதறடிப்பார்.—பிரபுக்கள்
எகிப்திலிருந்து வருவார்கள்; எத்தியோப்பியா
தன் கைகளைப் பராபரனண்டைக்கு எடுக்கத்
தீவிரிக்கும்.
பூமியின் இராச்சியங்களே, பராபரனைப் பாடி ௩௨
ஆண்டவரைக் கீர்த்தனம்பண்ணுங்கள்; சேலா.—
ஆதிவானங்களுடைய வானங்களின்மேல் ஏறி ௩௩
யிருக்கிறவரைப் பாடுங்கள்; இதோ தமது சத்தத்
தால் வலுமுழக்கத்தைக் கேட்கப்பண்ணுகி
றார்.[10]—பராபரனுக்கு வல்லமையைச் செலுத் ௩௪
துங்கள்; அவருடைய மகிமை இஸ்ரவேலின்
மீதிலும், அவருடைய வல்லமை ஆகாயமண்ட
லங்களிலுமுள்ளது.[11]—பராபரனே, உமது பரி ௩௫
சுத்தஸ்தலங்களிலிருந்து பயங்கரமாய் விளங்கு
கிறீர்; சனத்துக்குப் பெலனையும், சத்துவங்களை
யும் கொடுக்கிறவர் இஸ்ரவேலின் பராபரன்தா
னே, பராபரன் தோத்திரிக்கப்பட்டவர்.

## ௬௯. சங்கீதம்.

௧. தாவீது துன்பத்தில் முறையிட்டது. ௰௩. விடுதலைக்காக வேண்டிக் கொண்டது. ௨௨. சத்துருக்களை அழிவுக்கு ஒப்புக்கொடுத்தது. ௩௰. நன்றியறிந்து பராபரனைத் துதித்தது.

(ஆறு நரம்புக் கின்னரத்திலே வாசிக்க இராகத்தலை
வனுக்கு ஒப்புவிக்கப்பட்ட தாவீதின்
சங்கீதம்.)

பராபரனே, என்னை இரட்சியும், ஏனெனில் ௧
தண்ணீர்கள் ஆத்துமாமட்டும் வருகின்றன.—
நிலையாத ஆழத்தின் உளையில் அமிழ்ந்து, தண் ௨
ணீர்களின் பாதாளங்களுக்கு உள்ளானேன்;
நீரோட்டங்கள் என்மேல் புரண்டுபோகின்
றன.[12]—நான் கூப்பிடுகிறதினாலே இளைத்தேன்; ௩
என் தொண்டை கம்மிப்போயிற்று; என் பரா
பரனுக்கு நான் காத்திருக்கையால் என் கண்கள்
பூத்துப்போயின.[13]—முகாந்தரமில்லாமல் என் ௪
னைப் பகைக்கிறவர்கள் என் தலையின் மயிர்களி
லும் அதிகமாயிருக்கிறார்கள்; எனக்கு வீண்சத்
துருக்களாய் என்னைச் சங்கரிக்கிறவர்கள் பெ
லத்திருக்கிறார்கள்; அது நான் கொள்ளையிடாத
தைத் திரும்பக் கொடுக்குங்காலம்.[14]
பராபரனே, நீர் என் பயித்தியத்தை அறிந்திரு ௫
க்கிறீர், என் குற்றங்கள் உமக்கு ஒளித்திராது.[15]—
சேனைகளின் கர்த்தராகிய ஆண்டவரே, உம்மை ௬
நம்புகிறவர்கள் என்னாலே வெட்கப்பட்டுப்
போகாமலும் இஸ்ரவேலின் பராபரனே, உம்
மைத் தேடுகிறவர்கள் என்னாலே நாணம் அடை
யாமலுமிருப்பார்களாக. — ஏனெனில் உம்மு ௭
டைய நிமித்தம் நிந்தையை உத்தரிக்கிறேன், இ
லச்சை என் முகத்தை மூடுகிறது.[16]—என் சகோ ௮
தரருக்கு வேற்றுமனுஷனும், என் தாயின் பிள்
ளைகளுக்கு அந்நியனுமானேன்.—ஏனென்றால் ௯
உம்முடைய வீட்டுக்காக இருக்கிற பத்திவை
ராக்கியம் என்னைப் பட்சித்தது; உம்மை நிந்திக்
கிறவர்களுடைய நிந்தனைகள் என்மீதில் விழுந்

1 ௨ இரா. ௬.௰௭. தானி. ௭. ௰. 4 சங். ௱௰. ௬, ௬.—5 ௨ மோ.௰௫. 2 எபே ௪.௮. யோவா.௩.௰௩. அப். ௨௩.—6 சகரி.௰௩.௧. யோவா. ௭. ௨. ௩௩.—3 ௨ கொரி. ௧. ௰. ௩௭.-7 பிலி.௩. ௬. ௧ கொரி.௰௫.

௯.௰. அப்.௧.௰௩.௰௪.-8 மத். ௨௧. 13 சங்.௨௨.௨, ௩.-14 யோவா.௰௫. ௪௨.-9 சங்.௭௨.௰-10 சங்.௨௯.௪. ௨௫.-15 சங்.௪௰.௰௩. ௨ கொரி. 11 சங்.௨௯.௧ —12 சங்.௪௰.௩. ௫. ௨௧.—16 ஏசா. ௫௰. ௬.

௰ தனை.[1]—என் ஆத்துமாவின் உபவாசத்திலே அழு
தேன்; ஆனால் அது எனக்கு நிந்தனைகளாயிற்
௰௧ று.[2]—இரட்டை என் உடுப்பாக்கினேன்; ஆனால்
௰௨ அவர்களுக்குப் பழமொழியானேன்.—வாசலில்
உளுக்காந்திருக்கிறவர்கள் என்னைக்குறித்துப்
பேசுகிறார்கள்; மதுபானம்பண்ணுகிறவர்களின்
பாடலானேன்.
௰௩ நானோவென்றால் கர்த்தாவே, பிரியமான
காலத்திலே உம்மைநோக்கி, என் விண்ணப்பத்
தைச் செய்கிறேன்; பராபரனே, உமது மிகுந்த
கிருபையினாலும், உமது இரட்சிப்பின் சத்தியத்
தினாலும் என் விண்ணப்பத்தைக் கேட்டரு
௰௪ ளும். — நான் அமிழ்ந்துபோகாதபடிக்கு என்
னைச் சேற்றுக்கு நீங்கலாக்கிவிடும், நான் என்
னைப் பகைக்கிறவர்களையும் தண்ணீர்களின் ஆ
௰௫ ழங்களையும்விட்டு நீங்கட்டும்.—நீரோட்டங்கள்
என்மேல் புரளாமலும், ஆழம் என்னை விழுங்கா
மலும், துரவு என்மேலே தன் வாயை அடைக்கா
௰௬ மலுமிருப்பதாக. — கர்த்தாவே, என் விண்ணப்
பத்தைக் கேட்டருளும்; ஏனெனில் உம்முடைய
கிருபை நலமாயிருக்கிறது; உம்முடைய மிகுந்த
இரக்கங்களின்படியே என்னை நோக்கிப்பா
௰௭ ரும்.—உமது முகத்தை உம்முடைய ஊழியக்
காரனுக்கு மறைக்காதிரும்; ஏனெனில் எனக்கு
நெருக்கமுண்டு, தீவிரமாய் என் விண்ணப்பத்
௰௮ தைக் கேட்டருளும்.—நீர் என் ஆத்துமாவைக்
கிட்டி அதை விடுவித்துக்கொள்ளும்; என் சத்து
ருக்களினிமித்தம் என்னை மீட்டுவிடும்.
௰௯ தேவரீர் என் நிந்தையையும், என் வெட்கத்
தையும், என் அவமானத்தையும் அறிந்திருக்கி
றீர்; என் சத்துருக்கள் அனைவரும் உமக்கு எதி
௨௰ ரே இருக்கிறார்கள்.—நிந்தை என் இருதயத்தை
முறிக்கிறது; மிகவும் பெலக்கேடானேன்; யாவ
னொருவன் பரிதாபப்படுவானோவென்று காத்தி
ருந்தேன், ஒருவனுமில்லை; தேற்றரவுபண்ணு
கிறவர்களுக்குக் காத்திருந்தேன்; யாரையும் கா
௨௧ ணேன்.—எனக்குப் பிச்சுண்ணத்தந்து என் தா
கத்தில் எனக்குக் காடிகுடிக்கக் கொடுக்கிறார்
௨௨ கள்.[3]—அவர்களுடைய பந்தி அவர்களுக்குமுன்
பாகச் சுருக்கும், சரிக்கட்டுதலான கண்ணியு
௨௩ மாகக்கடவது.[4]—அவர்களுடைய கண்கள் கா
ணாதபடிக்கு அந்தகாரப்படக்கடவன; அவர்
கள் இடுப்புகளை எப்போதும் தள்ளாடப்பண்
௨௪ ணும்.—உம்முடைய சினத்தை அவர்கள்மேல்
ஊற்றும், உம்முடைய கோபத்தின் உக்கிரம் அ
௨௫ வர்களைத் தொடர்ந்துபிடிப்பதாக. — அவர்கள்
வீடுவாசல் பாழாகக்கடவது; அவர்களுடைய
கூடாரங்களில் குடியில்லாமல் போவதாக.[5] —
௨௬ ஏனெனில் தேவரீர் அடித்தவனை அவர்கள் துன்
பப்படுத்தி, தேவரீரால் காயப்பட்டவர்களை நோ
௨௭ கப்பேசுகிறார்கள். — அவர்கள் உமது நீதிக்கு
வராதபடிக்கு, அவர்களுடைய அக்கிரமத்தின்
மேல் அக்கிரமம் சேரட்டும்.—அவர்கள் நீதிமான் ௨௮
களோடே எழுதப்படாமல் ஜீவபுஸ்தகத்தில்
கிறுக்கப்படக்கடவார்கள்.[6]
நானோவெனில் சிறுமையும் நோவுமுள்ள ௨௯
வன்; பராபரனே, உம்முடைய இரட்சிப்பு எ
னக்கு உயர்ந்த அடைக்கலமாவதாக.[7]—பராபர ௩௰
னுடைய நாமத்தைப் பாட்டினாலே துதித்து,
அவரைத் தோத்திரத்தினாலே மகிமைப்படுத்து
வேன்.—கொம்பும் விரிகுளம்புமுள்ள மாட்டை ௩௧
யும், காளையையும், எருதையும்பார்க்கிலும் அது
வே கர்த்தருக்குப் பிரியமாயிருக்கும்.[8]—சிறுமை ௩௨
யானவர்கள் அதைக் கண்டு, சந்தோஷப்படுவார்
கள்; பராபரனைத் தேடுகிறவர்களே உங்கள் இரு
தயம் வாழும்.[9]—ஏனெனில் கர்த்தர் எளியவர் ௩௩
களைக் கேட்கிறவர், கட்டுண்ட தம்முடையவர்
களை அவர் புறக்கணியார்.—வானங்களும், பூமி ௩௪
யும், சமுத்திரங்களும், அவைகளில் அசைவாடு
கிற யாவும் அவரைத் துதிக்கக்கடவது.[10] — ஏ ௩௫
னெனில் பராபரன் சீயோனை இரட்சித்து, யூதா
வின் பட்டணங்களைக் கட்டுவார்; அப்போது
அங்கே குடியிருந்து அதைச் சுதந்தரித்துக்கொள்
ளுவார்கள்.—அவருடைய ஊழியக்காரரின் வித் ௩௬
தார் அதைச் சுதந்தரித்துக்கொள்ளுவார்கள்; அவ
ருடைய நாமத்தைச் சிநேகிக்கிறவர்கள் அதிலே
வாசமாயிருப்பார்கள்.[11]

## ௭௰. சங்கீதம்.

௧. துன்மார்க்கரைச் சீக்கிரம் அழிப்பதற்கும், தேவபத்தியுள்ளவர்களைக் காப்பதற்கும் தாவீது பராபரனை வேண்டிக்கொண்டது.

(நினைப்பூட்டுதலாகப் பாடி இராகத்தலைவனுக்கு ஒப்பு
விக்கப்பட்ட தாவீதின் சங்கீதம்.)

பராபரனே, என்னைத் தப்புவிக்கவும், கர்த்தா ௧
வே, எனக்குச் சகாயம்செய்யவும் தீவிரியும்.[12]—
என் பிராணனை வாங்கத் தேடுகிறவர்கள் வெட்கி ௨
நாணுவார்கள், என் தீங்கை விரும்புகிறவர்கள்
பின்னிட்டுத் திரும்பி இலச்சையடைவார்க
ளாக.[13]—ஆகா, ஆகா, என்கிறவர்கள் தாங்கள் அ ௩
டையும் வெட்கமான பலனாலே பின்னிடைந்து
போகக்கடவார்கள்.—உம்மைத் தேடுகிற அனை ௪
வரும் உமக்குள் மகிழ்ந்து சந்தோஷப்படுவார்க
ளாக; உம்முடைய இரட்சிப்பைச் சிநேகிக்கிற
வர்கள் எப்போதும் பராபரன் மகிமைப்படக்க
டவார் என்பார்களாக. — நானோவெனில் சிறு ௫
மையும் எளிமையுமாயிருக்கிறேன், பராபரனே
எனக்குச் சகாயம்பண்ணத் தீவிரியும், என் து
ணையும் என்னை விடுவிக்கிறவரும் தேவரீர்; கர்த்
தாவே, தாமதியாதிரும்.

## ௭௧. சங்கீதம்.

௧. தாவீது விசுவாசத்தின் உறுதியினாலும், பராபரனுடைய தயையின் அப்பியாசத்தினாலும் தனக்காகவும், தன் ஆத்தும சத்துருக்களுக்கு விரோதமாகவும் வேண்டிக்கொண்டது. ௰௪. நிலைபெற்ற வாக்குத்தத்தம் பண்ணி, ௰௭. உறுதிக்காக வேண்டிக்கொண்டு, ௰௯. மனமகிழ்ச்சியோடு அதைச் செய்யப் பராபரனைத் துதித்தது.

1 யோவா. ௨. ௰௭. ௨ரோ. ௰௫. ௩. யோவா. ௰௯. ௨௮, ௨௯.
2 லூக். ௰௯. ௪௧. சங். ௭௯. ௨௪, ௨௫. 4 ௨ரோ. ௰௧. ௯, ௰.—5 அப். ௧. ௨௰.
3 மத். ௨௭. ௩௪, ௪௮. மாற். ௰௫. ௨௩. 6 பிலி. ௪. ௩.

7 சங். ௭௧. ௨௨.—8 சங். ௫௰. ௭. 12 சங். ௭௧. ௰௨, ௰௩.
9 சங். ௨௨. ௨௭.—10 சங். [illegible]. 13 சங். ௩௫. ௪: சங். ௪௰. ௰௪, ௰௫.—11 சங். ௭௨. ௨௧.

௧ கர்த்தாவே, உம்மை நம்பியிருக்கிறேன்; நான்
என்றைக்கும் வெட்கப்பட்டுப்போகாதிருக்க
௨ ட்டும்.—உம்முடைய நீதியின்நிமித்தமாக என்
னைத் தப்புவித்து விடுவிப்பீராக; என்னண்டை
க்கு உம்முடைய செவியைச் சாய்த்து என்னை
௩ இரட்சியும்.[1]—எனக்கு நான் எப்போதும் வந்த
டையும் கல்மலையாக இரும்; என்னை இரட்சிப்
பதற்குக் கட்டளையிட்டீரே; ஏனெனில் தேவரீர்
என் கல்மலையும் என் கோட்டையும்தானே.[2]—
௪ என் பராபரனே, என்னை ஆகாதவனுடைய கைக்
கும், நியாயக்கேடும் துஷ்டாட்டமுமுள்ளவ
௫ னுடைய கைக்கும் தப்புவியும். — ஏனெனில்
கர்த்தராகிய ஆண்டவரே, தேவரீர் என்னுடைய
நோக்கமும், என் சிறுவயதுதுவக்கி என் நம்பிக்
௬ கையுமாயிருக்கிறீர்.[3]—நான் கர்ப்பத்திலிருந்தது
முதல் உம்முடையமேல் சார்ந்துகொண்டேன்;
தேவரீர் என்னை என் தாயின் குடல்களிலிருந்து
இழுத்தவர், உம்முடையமேல் எப்போதும் துதி
சொல்லுவேன்.[4]

௭ அநேகருக்கு ஒரு அற்புதம்போலானேன்;
தேவரீரோவென்றால் எனக்குப் பெலத்த அடை
௮ க்கலம்.—என் வாய் உமது துதியினாலும், நாள்
தோறும் உமது மகத்துவத்தினாலும் நிறைவ
௯ தாக.—முதிர்ந்த வயதிலே என்னைத் தள்ளிவிடா
மலும், என் பெலன் ஒடுங்கும்போது என்னைக்
௰ கைவிடாமலுமிருப்பீராக. — ஏனெனில் என்
சத்துருக்கள் எனக்கு விரோதமாய்ப் பேசி, என்
ஆத்துமாவுக்குக் காவலிருக்கிறவர்கள் ஏகமாய்
௰௧ ஆலோசனைபண்ணி,—பராபரன் அவனைக் கை
விட்டார்; அவனைத் தொடர்ந்துபிடியுங்கள்;
ஏனெனில் விடுவிப்பாரில்லை என்கிறார்கள்.—
௰௨ பராபரனே, எனக்குத் தூரமாக இராதேயும்; என்
பராபரனே, எனக்குச் சகாயம்பண்ணத் தீவிரி
௰௩ யும்.[5]—என் ஆத்துமாவை விரோதிக்கிறவர்கள்
வெட்கி அழியவும், எனக்குப் பொல்லாப்பைத்
தேடுகிறவர்கள் நிந்தையாலும் இலச்சையாலும்
மூடப்படவுங்கடவார்கள்.

௰௪ நானோ எப்போதும் நம்பி, உம்முடைய எல்
லாத் துதியின்மேலும் துதியைக் கூட்டுவேன்.—
௰௫ என் வாய் உமது நீதியையும், நாள்தோறும் உமது
இரட்சிப்பையும் சொல்லும்; ஏனெனில் அவை
௰௬ களின் தொகையை அறியேன். — கர்த்தராகிய
ஆண்டவருடைய வல்லமைகளில் உள்ப்பிரவே
சிப்பேன்; உம்முடைய நீதியைமாத்திரமே
௰௭ நினைப்பேன்.—பராபரனே, என் சிறுவயதுது
வக்கி என்னைப் போதித்துவந்தீர்; இந்நேரமட்
டுக்கும் உம்முடைய அதிசயங்களை அறிவிக்கி
௰௮ றேன்.—இப்போதும் பராபரனே, நான் உமது
புயத்தை இச்சந்ததிக்கும், உமது வல்லமையை
வரப்போகிற யாவருக்கும் அறிவிக்குமளவும்
முதிர்ந்த வயதும் நரையும்மட்டாக என்னைக்
௰௯ கைவிடீராக.—பெரிதானவைகளைச் செய்த பரா
பரனே, உம்முடைய நீதி உயரமட்டும் சேருகி
றது; பராபரனே உம்மைப்போலே யார்?
அநேக இடுக்கண்களையும், கொடிதானவைக உம ௨௰
ளையும், என்னைப் பார்க்கப்பண்ணின நீர் திரும்ப
என்னை உயிர்ப்பித்து, திரும்ப என்னைப் பூமியின்
பாதாளங்களிலிருந்து ஏறப்பண்ணுவீராக.[6]—
என் முக்கியத்தைப் பெருகப்பண்ணி, என்னை ௨௧
மறுபடியும் தேற்றுவீராக. — என் பராபரனே, ௨௨
நானும் தம்புருவினாலே உம்மையும், உம்மு
டைய சத்தியத்தையும் துதிப்பேன்; இஸ்ரவே
லினுடைய பரிசுத்தரே, உம்மைச் சுரமண்ட
லத்தால் கீர்த்தனம்பண்ணுவேன்.—என் உதடு ௨௩
களும், நீர் மீட்டுவிட்ட என் ஆத்துமாவும் கெம்
பீரிக்கும்; ஏனெனில் உம்மைக் கீர்த்தனம்பண்
ணுவேன்.—என் நாவும் நாள்தோறும் உமது நீதி ௨௪
யைக் கொண்டாடும்; ஏனென்றால் எனக்குப்
பொல்லாப்பைத் தேடுகிறவர்கள் வெட்கி இலச்
சைப்பட்டுப்போனார்கள்.

## ௭௨. சங்கீதம்.

௧. தாவீது சாலோமோனுக்காக வேண்டிக்கொண்டு, கிறிஸ்துவின் இராச்சி யத்திற்கு உண்மையான அடையாளமாக அவனுடைய நன்மையையும் மகிமையையும் காட்டினது. ௰௮. பராபரனைத் துதித்தது.

(சாலோமோனுடையது.)

பராபரனே, இராசாவுக்கு உம்முடைய நியாயத் ௧
தீர்ப்புகளையும், இராசாவின் குமாரனுக்கு உம்மு
டைய நீதியையும் கட்டளையிடும்.
அவர் உம்முடைய சனத்தை நீதியும், உம்மு ௨
டைய சிறுமையானவர்களை நிதானமுமாய் நியா
யம் விசாரிப்பார்.[7]—பர்வதங்கள் சனத்துக்குச் ௩
சமாதானத்தைத் தரும்; மேடுகள் நீதியின் விளை
வோடிருக்கும்.—அவர் சனத்தில் சிறுமையான ௪
வர்களை நியாயம் விசாரித்து, எளியவன் பிள்ளை
களை இரட்சித்து, இடுக்கண் செய்கிறவனை நசுக்
குவார். — சூரியனும் சந்திரனுமுள்ளமட்டும் ௫
உமக்குத் தலைமுறை தலைமுறையாகப் பயந்
திருப்பார்கள்.[8] — புல்லறுப்புண்ட வெளியின் ௬
மேல் இறங்குகிற மழையைப்போலவும், பூமி
யை நனைக்கிற தூற்றல்களைப்போலவும் இறங்கு
வார்.—அவருடைய நாள்களில் நீதிமான் செ ௭
ழிப்பான், சந்திரனில்லாமல் போகும்மட்டும்
மிகுதியான சமாதானமிருக்கும்.—ஒரு சமுத்தி ௮
ரம்துவக்கி மற்றச் சமுத்திரம்மட்டாகவும், ஆறு
துவக்கிப் பூமியின் எல்லைகள்மட்டாகவும் ஆளு
வார்.[9] — அவருக்குமுன்பாக வனாந்தரத்தார் ௯
குனிவார்கள்; அவருடைய சத்துருக்கள் மண்
ணை நக்குவார்கள். — தர்சீசின் இராசாக்களும், ௰
தீவுகளின் இராசாக்களும் காணிக்கைகளைச் செ
லுத்த வருவார்கள்; சபேயா, செபா என்ற
தேசங்களின் இராசாக்கள் வெகுமானங்களைக்
கொண்டுவருவார்கள்.[10]—சகல இராசாக்களும் ௰௧
அவரைப் பணிந்துகொள்வார்கள்; சகல சாதிக
ளும் அவரைச் சேவிப்பார்கள்.[11]—ஏனெனில் ௰௨

1 தானி. கூ.மக.—2 சங். மஅ உ,க. 5 சங்.எம.உ,க.—6 க சாமு.உ.கூ.
3 சங்.சக.உ.—4 சங். உஉ.ம,மக. 7 ஏசா. மக. க-இ

8 சங். அகூ.கஎ, கஅ. 10 சங். கூஅ. கம. ஏசா. கம. கூ.
9 சங். அகூ.உக. சகரி.கூ.ம. 11 வெளி. மக. மடு.

கூப்பிடுகிற எளியவனையும், சிறுமையானவனை
௰௩ யும், உதவியற்றவனையும் விடுவிப்பார்.—தரித்
திரமும் எளிமையுமானவனைத் தப்புவித்து, எளி
௰௪ யவர்களின் ஆத்துமாக்களை இரட்சிப்பார்.—அ
வர்கள் ஆத்துமாக்களைத் தந்திரத்துக்கும் கொடு
மைக்கும் தப்ப விடுவித்துக்கொள்ளுவார்; அவர்
கள் இரத்தம் அவருடைய பார்வைக்கு அருமை
௰௫ யானது.—அவர் பிழைப்பார், அவருக்குச் சபே
யாவின் பொன்னில் கொடுக்கப்படும்; எப்போ
தும் அவரை வேண்டிச் செபம்பண்ணப்படும்;
௰௬ எந்நாளும் தோத்திரிக்கப்படுவார்.[1] — பூமியில்
பர்வதங்களின் கொடுமுடியிலே விதைக்கப்
பட்ட ஒரு பிடி தானியம்போலிருக்கும்; அதின்
விளைச்சல் லீபனோனைப்போலே அசையும்;
நிலத்தினுடைய பூண்டுகளைப்போலே பட்ட
௰௭ ணத்திலிருந்து பூப்பார்கள். — அவருடைய
நாமம் என்றென்றைக்கும் இருக்கும்; சூரியனுள்
ளமட்டும் அவருடைய நாமம் சந்தான பரம்ப
ரையாயிருக்கும்; எல்லாச் சாதிகளும் அவருக்
குள் ஆசீர்வதித்துக்கொண்டு அவரைப் பாக்கிய
முடையவர் என்பார்கள்.[2]
௰௮ ஒருவராய் அதிசயங்களைச் செய்கிற இஸ்ர
வேலின் தம்பிரானாயிருக்கிற பராபரனாகிய கர்த்
௰௯ தர் தோத்திரிக்கப்பட்டவரும், — அவருடைய
மகிமையான நாமம் என்றென்றைக்கும் தோத்தி
ரிக்கப்பட்டதுமாமே; அவருடைய மகிமையால்
பூமியனைத்தும் நிறையப்படுவதாக; ஆமென்,
ஆமென்.[3]
௨௰ ஈசாயின் குமாரனாகிய தாவீதின் செபங்கள்
முடிந்தன.

## ௭௩. சங்கீதம்.

*௧. நீர்க்கதரிசி சோதனையைச் செயித்தபோது, ௨. அதனால் துன்மார்க்கருடைய வாழ்வின் காரணத்தையும், ௰௩. அவநம்பிக்கையான கஷ்டத்தையும் காட்டி, ௰௭. துன்மார்க்கர் அழிவதையும், நீதிமான்கள் ஆதரிக்கப்படுவதையும்குறித்த பராபரனுடைய நியமத்தை அறியுமறிவு அதினைச் செயித்ததென்றது.*

---

(ஆசாபின் சங்கீதம்.)

௧ இஸ்ரவேலுக்கு, அதாவது: இருதயத்திலே சுத்த
மானவர்களுக்குப் பராபரன் நல்லவர்தானே.[4]—
௨ என்னுடைய கால்களோவென்றால் சாயவும்,
என் அடிகள் சறுக்கவும் சற்றுத்தப்பிற்று. —
௩ ஏனெனில் ஆகாதவர்களின் சாங்கோபாங்கத்
தை நான் காண்கையில், வீம்புக்காரர்மேல் பொ
றாமையானேன்.[5]
௪ அதேனென்றால் தங்கள் மரணமட்டும்
அவர்களுக்கு இடுக்கண்களில்லாமல் அவர்களு
௫ டைய பெலன் புஷ்டியாயிருக்கிறது.—நரசீவ
வருத்தத்தில் அகப்பட்டிரார்கள்; வேறே மனுஷ
௬ ரோடே உபாதி அடையார்கள்.-ஆகையால் பெ
ருமை அவர்களை ஒரு சரப்பணியைப்போலே
பூணும், அவர்கள் கொடுமை அவர்களை ஆடை
௭ ஆபரணத்தைப்போலே மூடும்.—அவர்கள் கண்
கள் நிணத்திலிருந்து பார்க்கின்றன; அவர்கள்
மனவேகங்கள் நடந்தேறுகின்றன. — பிறரைத் ௮
தொய்யப்பண்ணி, அகங்காரமாய் இடுக்கண்
செய்வதைப் பேசுகிறார்கள்; உயரத்திலிருந்து
பேசுகிறார்கள். — தங்கள் வாயை வானத்திலே ௯
வைக்கிறார்கள்; அவர்கள் நாவின்படியே பூமி
யிலே நடக்கும்.—ஆனபடியால் அவர்களுடைய ௰
சனம் இந்த வழியாகவே திரும்பும்; தண்ணீர்
கள் அவர்களுக்குப் பரிபூரணமாகச் சுரந்துவ
ரும்.—அவர்கள், பராபரன் அதை எப்படி அறி ௰௧
வார்; உன்னதமானவரில் அதின் அறிவுண்டோ
என்கிறார்கள்.[6]—இதோ இவர்கள் ஆகாதவர்களா ௰௨
மே; ஆகிலும் என்றும் சுகசீவிகளாயிருந்து ஆஸ்
தியைப் பெருகப்பண்ணுகிறார்கள்.

நான் விருதாவாகவே என் இருதயத்தைச் சுத் ௰௩
தம்பண்ணி, என் கைகளைக் குற்றமில்லாமையி
லே கழுவினேன்.[7]—நான் நித்தம் வாதிக்கப்படு ௰௪
கிறவனுமே; என் தண்டனைகள் காலைமாறு திரும்
புமே.—இப்படிச் சொல்வேன் என்றேனேயா ௰௫
கில், இதோ உம்முடைய பிள்ளைகளின் சந்ததிக்
குத் துரோகியாவேன்.—இதை அறியும்படிக்கு ௰௬
யோசித்தேன்.—ஆனால் நான் பராபரனுடைய ௰௭
பரிசுத்தஸ்தலங்களுக்குள்ப்பிரவேசித்து, அவர்
கள் கடைசிக்காரியத்தைக் கவனித்து உணரும
ளவும் அது என் பார்வைக்கு விதனமாயிருந்தது.
சறுக்கல்களிலே அவர்களை நிறுத்தி, அவர்க ௰௮
ளைப் பாழ்க்கடிப்புகளில் விழப்பண்ணுகிறீர்.—
ஒரு நிமிஷத்தில் எத்தனையாய்ப் பாழாவார்கள்; ௰௯
பயங்கரங்களாலே அழிந்து நிர்மூலமாவார்கள்.[8]-
ஆண்டவரே நித்திரை தெளிந்தவுடனே, சொப் ௨௰
பனம் ஒழியுமாப்போல, அவர்கள் வேஷத்தைப்
பட்டணத்தில் ஈனமாய்ப் போகப்பண்ணுவீர்.
என் நெஞ்சு வர்மித்து, நான் என் உள்ளிந்தி ௨௧
ரியங்களில் குத்துருவப்படுகிறவனாயிருக்கையி
ல்,-நான் காரியத்தை அறியாத மூடனும்,உமக்கு ௨௨
முன்பாக மிருககுணமுமாயிருந்தேன்.—ஆகை ௨௩
யால் நான் எப்போதும் உம்மண்டையிலே தரிப்
பேன்; என் வலதுகையைப் பிடித்துத் தாங்கு
வீர்.—உம்முடைய யோசனையின்படி என்னை ௨௪
நடத்தி,கடைசியில் என்னை மகிமையில் ஏற்றுக்
கொள்வீராக.—பின்னை யார் எனக்குப் பரமண்ட ௨௫
லங்களில் இருக்கிறார்; உம்மோடே நான் இருக்
கையில் பூமியில் எனக்கு வேறே விருப்பமில்
லை.—என் மாம்சமும் என் இருதயமும் மாளும் ௨௬
போது,பராபரன் என்றென்றைக்கும் என்இருத
யத்தின் கன்மலையும் என் பங்குமாயிருக்கிறார்.
ஏனெனில் இதோ உம்மைவிட்டுத் தூரமாகிற ௨௭
வர்கள் அழிவார்கள்; உம்மைவிட்டுச் சோரம்
போகிற அனைவரையும் சங்கரிப்பீர். — எனக் ௨௮
கோ பராபரனை அண்டிக்கொண்டிருக்கிறதே
நல்லது; நான் உமது கிரியைகளையெல்லாம்
சொல்லிவரும்படிக்கு, கர்த்தராகிய ஆண்டவர்
மேல் என் நம்பிக்கையை வைத்திருப்பேன்.

1 வெளி. ௧. ௰௮. ௭௪. ௬௰.௧. மத். ௨. ௰௧.—2 ௧ மோ. ௰௨. ௩.
3 ௭௪. ௯. ௩.
4 மத். ௫. ௮.
5 யோபு. ௨௧. ௭, ௨௧. ௭௨. ௰௨. ௧.௩.—6 சங். ௰. ௰௧: ௯௪. ௭.
7 மல்கி. ௩. ௰௩. ௰௪.
8 சங். ௧௭. ௧௮.

## ௭௪. சங்கீதம்.

௧. தீர்க்கதரிசி பரிசுத்த ஆலயம் பாழாய்ப்போனதைக்குறித்து முறையிட்டு, ௰. பராபரனுடைய திராணியைச் சொல்லி, ௰௮. தன் சத்துருக்களுக்காகவும், தன் பிள்ளைகளுக்காகவும், அவர் கொடுத்த உடம்படிக்கைக்காகவும் இரங்கும்படி அவரை வேண்டிக்கொண்டது.

(ஆசாபின் போதக சங்கீதம்.)

௧ பராபரனே, ஏன் எங்களை என்றைக்கும் தள்ளி
விடுகிறீர்? ஏன் உமது கோபம் உம்முடைய மேய்
௨ ச்சலின் ஆடுகள்மேல் புகைகிறது?[1]—நீர் பூர்வ
காலம்துவக்கிச் சம்பாதித்துக்கொண்ட உமது
சபையையும், நீர் மீட்டுக்கொண்ட உம்முடைய
சுதந்தரமான கோத்திரத்தையும், நீர் வாசமா
யிருந்த சீயோன் பர்வதத்தையும் நினைவுகூ
௩ ரும். — நித்திய பாழ்க்கடிப்புகளுக்கும் உம்மு
டைய பாதங்களை எழுந்தருளப்பண்ணும்; சத்
துரு பரிசுத்தஸ்தலத்தில் அனைத்தையும் கெடுத்து
விட்டான்.
௪ உம்முடைய சத்துருக்கள் உம்முடைய ஆல
யங்களின் உள்ப்புறத்திலே கர்ச்சித்து, தங்கள்
அடையாளங்களை அடையாளங்களாக வைத்
௫ தார்கள்.—மரங்களுடைய அடர்த்தியில் வெட்ட
கோடரிகளை ஓங்கி எடுக்கிறவனென்று அவ
௬ வன் பேர்போனான்.—இப்போதும் அதின் சித்
திரவேலைகளை ஏகமாய் வாச்சியாலும், சுத்திக
௭ ளாலும் தகர்த்தார்கள்.—உம்முடைய பரிசுத்த
ஸ்தலத்தை அக்கினிக்கு இரையாக்கி, உம்மு
டைய நாமத்தின் வாசஸ்தலத்தைத் தரையாக்கி
பரிசுத்தத்தைக் குலைத்துப்போட்டார்கள். —
௮ அவர்களை ஏகமாய் நிர்த்தூளியாக்குவோமென்று
தங்கள் இருதயத்தில் சொல்லி, தேசத்திலுள்ள
பராபரனுடைய ஆலயத்தை எல்லாம் சுட்டெ
௯ ரித்தார்கள். — எங்கள் அடையாளங்களைக் கா
ணோம்; தீர்க்கதரிசி அப்புறமில்லை; எந்தமட்டும்
என்றறிகிறவன் எங்களிடத்திலுமில்லை.
௰ பராபரனே, எந்தமட்டும் சத்துரு நிந்திப்பான்;
பகைஞன் என்றைக்கும் உம்முடைய நாமத்
௰௧ தைத் தூஷணிப்பானோ?—ஏன் உமது கையை
யும், உமது வலதுகரத்தையும் முடக்கிக்கொள்ளு
கிறீர்; அதை உமது மடியிலிருந்து எடுத்து நீட்டிக்
௰௨ கொண்டிரும்.—ஏனெனில் பூமியின் நடுவிலே
இரட்சிப்புகளைச் செய்கிற பராபரன் ஆதிகால
௰௩ முதலாய் என்னுடைய இராசா.[2]—தேவரீர் உம்மு
டைய வல்லமையால் சமுத்திரத்தை இரண்டா
கப் பிளந்து, தண்ணீர்களில் வலுசர்ப்பங்களின்
௰௪ தலைகளை உடைத்தீர்.—தேவரீர் முதலைகளின்தலை
களை நருக்கிப்போட்டு, அதை வனாந்தரத்தாரா
கிய சனத்துக்குப் போசனமாகக் கொடுத்தீர்.—
௰௫ தேவரீர் ஊற்றையும் ஆற்றையும் பிளந்து பிறக்
கப்பண்ணினீர்; தேவரீர் வலுநதிகளையும் வற்றிப்
௰௬ போகப்பண்ணினீர்.—பகலும் உம்முடையது;
இரவும் உம்முடையது; தேவரீர் வெளிச்சத்தை
௰௭ யும் சூரியனையும் படைத்தீர்.—தேவரீர் பூமியின்
எல்லைகளை எல்லாம் திட்டம்பண்ணினீர்; கோ
டைகாலத்தையும், மாரிகாலத்தையும் தேவரீர்
உண்டாக்கினீர்.
சத்துரு கர்த்தராகிய தேவரீரை நிந்திக்கிறதை ௰௮
யும், பயித்தியங்கொண்ட சனம் உம்முடைய
நாமத்தைத் தூஷணிக்கிறதையும் நினைத்திரும்.[3]—
உம்முடைய காட்டுப்புறாவின் ஆத்துமாவை ௰௯
மிருகத்துக்கு ஒப்புக்கொடாதிரும்; உம்முடைய
சிறுமையானவர்களின் பிராணனை என்றைக்
கும் மறந்திராதேயும்.—உம்முடைய உடம்படிக் ௨௰
கையை நினைத்தருளும்; ஏனெனில் பூமியில்
இருளான இடங்கள் கொடுமைக் குடியிருப்பு
களால் நிறைந்திருக்கின்றன.—ஒடுங்குண்ட ௨௧
வன் நாணத்தோடே திரும்பாமல், சிறுமையான
வனும் எளிமையானவனும் உம்முடைய நாமத்
தைத் துதிப்பார்களாக.—பராபரனே, நீர் எழும்பி ௨௨
உம்முடைய வழக்கை வழக்காடும்; பயித்தியக்
காரனாலே நாள்தோறும் உமக்கு வரும் நிந்தை
யை நினையும். — உம்முடைய சத்துருக்களின் ௨௩
கூக்குரலை மறவாதிரும்; உமக்கு விரோதமாய்
எழும்புகிறவர்களின் அமளி எப்போதும் அதிக
ரிக்கிறது.

## ௭௫. சங்கீதம்.

௧. தீர்க்கதரிசி பராபரனைத் துதித்தது. ௨. சரியாய் நியாயந்தீர்க்க வாக்குத்தத்தம்பண்ணினது. ௪. பராபரனுடைய பராமரிப்பை நினைத்துச் செருக்குள்ளவர்களைக் கண்டித்தது. ௯. அவரைத் துதித்து நீதியை நிறைவேற்ற வாக்குத்தத்தம்பண்ணினது.

(தான் கெட்டுப்போகாதபடிக்குப் பாடினதும், இராகத்தலைவனுக்கு ஒப்புவிக்கப்பட்டதுமான ஆசாபின் சங்கீதமாகிய பாட்டு.)

உம்மைத் துதிக்கிறோம்; பராபரனே, உம்மைத் ௧
துதிக்கிறோம்; உம்முடைய நாமம் சமீபமாயிருக்
கிறது; உம்முடைய அதிசயங்களைச் சொல்லிவ
ருகிறார்கள்.—நியமிக்கப்பட்டதை நான் அடை ௨
யும்போது, நான் உத்தம நிதானமாய் நியாயம்
தீர்ப்பேன்.—பூமியும், அதின் எல்லாக் குடிக ௩
ளும் இளகிப்போனாற்போலே ஆயிற்று; நான்
அதின் தூண்களை நிலைநிறுத்துவேன்; சேலா.
வீம்புக்காரருடனே வீம்பு சொல்லாதிருங்க ௪
ளென்றும், ஆகாதவர்களுடனே கொம்புகளை
எடுக்காதிருங்களென்றும் சொன்னேன். —
உங்கள் கொம்புகளை உயரமாயெடுக்காதிருங் ௫
கள்; பெருமைக் கழுத்தினால் கடினமாய்ப் பேசா
திருங்கள்.[4]—ஏனெனில் கிழக்கிலாகிலும், மேற் ௬
கிலாகிலும், மலைகளின் வனாந்தரத்திசையிலா
கிலுமிருந்து உங்களுக்குச் செயம்வராதென்
றேன்.—ஏனென்றால் பராபரனே நியாயாதிபதி; ௭
இவனைத் தாழ்த்தி அவனை உயர்த்துகிறார்.[5] —
ஏனெனில் மிகுதியும் கலங்கிப் பொங்குகிற ௮
மதுபானத்தினாலே நிறைந்த பாத்திரம் கர்த்தரு
டைய கையில் இருக்கிறது; அதிலிருந்து வார்க்
கிறார்; ஆனால் பூமியிலுள்ள ஆகாதவர்கள் அனை
வரும் அதின் வண்டல்களை உறிஞ்சிக் குடிப்
பார்கள்.

1 சங். சச. உச. உகூ.—2 சங். சுஅ. உக.—3 ஏசா. கஎ. மஎ.
4 சங். கக. மகூ.—5 க சாமு. உ. எ. அ.—6 சங். கல். இ.

கூ நானோவெனில் என்றைக்கும் இதை அறிவித்
து, யாக்கோபுடைய பராபரனைக் கீர்த்தனம்பண்
௰ ணி, — ஆகாதவர்களின் கொம்புகளை எல்லாம்
வெட்டுவேன்; நீதிமானுடைய கொம்புகளோ
உயர்த்தப்படும்.

## எகூ. சங்கீதம்.

க. திருச்சபையில் பராபரனுடைய மகிமை விளங்குமென்றது. ௰க. வணக்கத்தோடே அவரைச் சேவிப்பதற்கு எச்சரிப்பு.

(கின்னாரங்களில் வாசிக்க இராகத்தலைவனுக்கு ஒப்புவிக்கப்பட்ட ஆசாபின் சங்கீதமாகிய பாட்டு.)

க யூதாவில் பராபரன் அறியப்பட்டவர்; இஸ்ர
உ வேலில் அவருடைய நாமம் பெரியது.—சாலே
மில் அவருடைய கூடாரமும், சீயோனில் அவ
௩ ருடைய வாசஸ்தலமும் இருக்கிறது.—அங்கே
யிருந்து வில்லின் அம்புகளையும், கேடயத்தை
யும், பட்டையத்தையும், யுத்தத்தையும் முறிக்கி
ருர்; சேலா.
ச மகத்துவமானவரே, கொள்ளையிடுகிற மலைக
ளைப்பார்க்கிலும் தேவரீர் பிரகாசமுள்ளவர்.—
ரு வீரிய நெஞ்சுள்ளவர்கள் கொள்ளையாய்ப்போ
ஞர்கள்; தங்கள் நித்திரையை அடைந்து அயர்ந்
தார்கள்; வல்லமையுள்ள எல்லா மனிதருடைய
கைகளும் அவர்களுக்குக் கவ்வைக்கு வராதே
௬ போயின.—யாக்கோபின் பராபரனே, உம்மு
டைய உதமபுதலால், இரதங்களும் குதிரைகளும்
எ உறங்கிவிழுந்தன.—நீர், நீரே பயங்கரமானவர்;
உமது கோபம் பற்றி எரிகிறதுமுதல் யார் உமக்கு
அ முன்பாக நிற்பான் -வானங்களிலிருந்து நியாயத்
கூ தீர்ப்பைக் கேட்கப்பண்ணினீர்.—பூமியிலுள்ள
எல்லாச் சிறுமையானவர்களையும் இரட்சிக்க,
பராபரன் நியாயம்விசாரிப்பதற்கு எழும்புகை
யில் பூமி பயந்து அமர்ந்தது; சேலா.
௰ என்னெனில் மனிதனுடைய உக்கிரம் உமது
மகிமையை விளங்கப்பண்ணும்; இன்னம் அதிக
உக்கிரங்களால் இடைகட்டிக்கொள்ளுவீர். —
௰க உங்கள் பராபரனுகிய கர்த்தருக்குப் பொருத்த
னைகளைச் சொல்லிச் செலுத்துங்கள்; அவரைச்
சூழ்ந்திருக்கிற அனைவரும் பயங்கரமானவருக்
குக் காணிக்கைகளைக் கொண்டுவரக்கடவார்
௰உ கள்.—பிரபுக்களின் ஆவியைத்தறிக்கிருர்; பூமி
யின் இராசாக்களுக்கு அவர் பயங்கரமானவர்.

## எஎ. சங்கீதம்.

க. சங்கீதக்காரன் அவநம்பிக்கையோடே தனக்கிருந்த அகோரப் போராட்டத்தையும், ௰. பராபரனுடைய கிருபையுள்ள பெரிய கிரியைகளைக்குறித்த சிந்தனையினால் தானடைந்த செயத்தையும் காட்டினது.

(எதித்தூனென்ற இராகத்தலைவனுக்கு ஒப்புவிக்கப்பட்ட ஆசாபின் சங்கீதம்.)

க நான் பராபரனுக்கு நேராக என் சத்தத்தை உ
யர்த்திக் கூப்பிடுகிறேன்; என் சத்தத்தைப் பரா
பரனண்டைக்கு உயர்த்துகிறேன்; அவர் எனக்
உ குச் செவிகொடுக்கிருர்.-என் நெருக்கத்தின் நா
ளிலே ஆண்டவரைத் தேடினேன்; என் கை இ
ராக்காலத்திலே ஒழிந்திராமல் விரிக்கப்பட்டி
ருந்தது; என் ஆத்துமா ஆறுதலடைந்துகொள்
ளாதேபோயிற்று.[1]—நான் பராபரனை நினைக்கும் ௩
போது அலறினேன்; நான் யோசிக்கும்போது
என் ஆவி தொய்ந்துபோயிற்று; சேலா. — என் ச
கண்களின் இமைகளைப் பிடித்திருந்தீர்; நான்
பேசமாட்டாதபடிக்கு மனமுறிதலாயிருந்தேன்.
பூர்வநாள்களையும் ஆதிகாலத்து வருஷங்களை ரு
யும் சிந்தித்தேன்.[2]—நான் இராக்காலத்தில் என் ௬
கின்னாரங்களை நினைத்து, என் இருதயத்தோடே
சம்பாஷித்துக்கொண்டேன்; என் ஆவி ஆராய்ந்
ததாவது: — ஆண்டவர் இனி அப்புறம் தயை எ
செய்யாமல், நித்தியகாலங்களாக ஒழித்துவிடு
வாரோ?—அவருடைய கிருபை என்றென்றைக் அ
கும் அற்று, வாக்குத்தத்தமானது தலைமுறைதலை
முறைக்கும் ஒழிந்துபோயிற்றோ?—பராபரன் கூ
இரங்க மறந்தாரோ? தம்முடைய இரக்கங்களைக்
கோபத்தினுல் அடைத்துப்போட்டாரோ என்
றேன்; சேலா.
ஆனுல் இது பெலஈனப்படும் வகை; காரி ௰
யத்தின் மாறுதல் உன்னதமானவருடைய வலது
கரத்திலிருக்கிறதென்று சொல்லி,-கர்த்தருடை ௰க
ய செயல்களை நினைவுகூர்ந்தேன்; உம்முடைய
பூர்வகாலத்து அதிசயங்களைத்தானே நான் நினை
வுகூர்ந்து, — உம்முடைய எல்லாக் கிரியைக ௰உ
ளையும் தியானித்து, உம்முடைய செயல்களை
யோசித்தேன்.
பராபரனே, உமது வழி பரிசுத்த ஸ்தலத்தி ௰௩
லுள்ளது; பராபரனைப்போலப் பெரிய தேவன்
யார்?—அதிசயங்களைச் செய்கிற பராபரன் தே ௰ச
வரீரே, சனசதளங்களுக்குள்ளே உம்முடைய
வல்லமையைத் தெரியப்பண்ணினீர்.-யாக்கோ ௰ரு
பு யோசேப் என்றவர்களின் புத்திரராகிய உம்
முடைய சனத்தை உமது புயத்தினுலே மீட்டுக்
கொண்டீர்; சேலா.—சலங்கள் உம்மைக் கண் ௰௬
டன; பராபரனே, சலங்கள் உம்மைக் கண்டு
தத்தளித்தன; ஆழங்களும் குலுங்கின.—மேகங் ௰எ
கள் சலங்களைப் பொழிந்துவிட்டன; ஆகாய
மண்டலங்கள் முழக்கமிட்டன; உம்முடைய
அம்புகளும் தெறிப்புண்டு பறந்தன.[3] — உம்மு ௰அ
டைய குமுறலின் சத்தம் வட்டமிட்டு முழங்
கிற்று; மின்னல்கள் பூச்சக்கரத்தைப் பிரகாசிப்
பித்தன; பூமி குலுங்கி அதிர்ந்தது.—உம்முடை ௰கூ
ய வழி கடலிலும், உமது பாதைகள் வலுதண்
ணீர்களிலும் இருந்தன; உம்முடைய காலடிகள்
தெரியப்படாதேபோயின. — மோசே ஆரோன் உ௰
என்றவர்களின் கையால், உமது சனத்தை ஒரு
ஆட்டுமந்தையைப்போலே வழிநடத்தினீர்.

## எஅ. சங்கீதம்.

க. பராபரனுடைய நியாயப்பிரமாணத்தைப் படிக்கவும், பிரசங்கிக்கவுமான ஏவுதல். கூ அவநம்பிக்கையுள்ளவர்களுக்கும், கீழ்ப்படியாதவர்களுக்கும் வந்த தேவகோபத்தின் சரித்திரம். சஎ. இஸ்ரவேலரைத் தள்ளிப் பராபரன் யூதாவையும் சீயோனையும் தாவீதையும் தெரிந்துகொண்டது.

1 சங். ரு௰. ௬ரு.—2 சங்.௱௪௩. ரு.—3 சங். ௯அ. ௰உ-௰௪.

(ஆசாபின் போதக சங்கீதம்.)

க என் சனமே, என் உபதேசத்திற்குக் கேள்வி
கொடுத்து, என் வாயின் வசனங்களுக்கு உங்கள்
௨ செவிகளைச் சாயுங்கள்.—என் வாயை உவமைக
ளால் திறப்பேன்; பூர்வகாலமுதல் புதைபொரு
௩ ளானவைகளை வெளிப்படுத்துவேன்.[1] — நாங்
கள் கேட்டதும், அறிந்ததும், எங்கள் பிதாக்கள்
எங்களுக்குச் சொல்லிவந்ததுமான விசேஷங்க
௪ ளை,—நாங்கள் அவர்களுடைய பிள்ளைகளுக்கு
மறைக்காமல், கர்த்தரின் துதிகளையும், அவரு
டைய பெலத்தையும், அவர் செய்த அவருடைய
அதிசயங்களையும் பின்சந்ததிக்கு விவரிப்போம்.
௫ ஏனெனில் அவர் யாக்கோபிலே சாட்சியை
ஏற்படுத்தி, இஸ்ரவேலிலே வேதத்தை ஸ்தாபித்
து, அதைத் தங்கள் பிள்ளைகளுக்கு அறிவிக்க
௬ நம்முடைய பிதாக்களுக்குக் கற்பித்தார்.—பிறக்
கப்போகிற பிள்ளைகளாகிய பின்சந்ததி அதை
அறிந்துகொண்டு எழும்பி, தங்கள் பிள்ளைகளுக்
௭ கும் சொல்லவும், — பராபரன்மேலே தங்கள்
நம்பிக்கையை வைத்து, பராபரனுடைய செயல்
களை மறவாமல், அவர் கற்பனைகளைக் கைக்
௮ கொள்ளவும்,—முரட்டாட்டமும் கலகமுமுள்ள
சந்ததியாகிய தங்கள் பிதாக்களுக்கு ஒப்பாகா
திருக்கவும்தானே; அவர்கள் தங்கள் இருதயத்
தைச் செம்மைப்படுத்தாதசந்ததியாயிருந்தார்கள்;
அவர்களுடைய ஆவி பராபரனுடனே உண்
மையாயிருந்ததில்லை.[2]
௯ ஆயுதம் அணிந்த வில்காரரான எப்பிராயீம் புத்
திரர் யுத்தநாளிலே முதுகைக் காட்டினார்கள்.—
௰ பராபரனுடைய உடம்படிக்கையைக் கைக்
கொள்ளாமல், அவர் நியாயப்பிரமாணத்திலே
௰௧ நடக்கமாட்டோமென்று,— அவர் செயல்களை
யும், அவர் தங்களுக்குக் காண்பித்த அவருடைய
௰௨ அதிசயங்களையும் மறந்தார்கள். — அவர்களு
டைய பிதாக்களின்முன்பாக எகிப்துதேசத்துச்
சோகான் பட்டணவெளியிலே அதிசயங்க
௰௩ ளைச் செய்தார்.—கடலைப் பிளந்து, அவர்களைக்
கடக்கப்பண்ணி, சலங்களைக் குவியலாக நிறுத்
௰௪ தி,—அவர்களைப் பகல்காலத்திலே மேகத்தாலும்
இராமுழுவதும் அக்கினி வெளிச்சத்தாலும் வ
௰௫ ழிகாட்டி அழைத்தார்.—வனாந்தரத்தில் கல்மலை
களைப் பிளந்து, அவர்களுக்கு மகா ஆழங்களுக்
குச் சரியான தண்ணீர்களால் தாகம்தீர்த்து,—
௰௬ கல்மலையிலிருந்து நதிகளைப்புறப்படப்பண்ணி,
தண்ணீர்களை ஆறுகளாய் இறங்கி ஓடவிட்டார்.
௰௭ ஆனால் அவர்கள் அப்புறம் அவருக்கு விரோ
தமாய்ப் பாவம்செய்யவும், உன்னதமானவருக்கு
வரண்டவெளியிலே கோபமூட்டவும் தொடர்ந்
௰௮ து,—தங்கள் மனதுக்கேற்கும் போசனத்தைக்
கேட்கிறதினால் பராபரனைத் தங்கள் இருதயங்க
௰௯ ளில் பரிட்சைபார்த்து,[3]—பராபரன் வனாந்தரத்
திலே பந்தியை ஆயத்தப்படுத்தமாட்டுவாரோ
௨௰ என்றும்,—இதோ அவர் கல்மலையை அடித்ததி
னால் தண்ணீர்கள் புறப்பட்டு நதிகளாய்ப் புரண்
டுவந்தன; அப்பத்தையும் கொடுக்கமாட்டுவா
ரோ? தம்முடைய சனத்துக்கு மாம்சத்தையும்
ஆயத்தப்படுத்துவாரோ என்றும் பராபரனுக்கு
விரோதமாய்ப் பேசினார்கள்.

ஆகையால் கர்த்தர் கேட்டு உக்கிரமானார்; ௨௧
யாக்கோபுக்கு விரோதமாய் அக்கினி பற்றி எரிந்
தது. — அவர்கள் பராபரன்மேல் விசுவாசியாம ௨௨
லும் அவர் இரட்சிப்பை நம்பாமலும் போனதி
னாலே, இஸ்ரவேலுக்கு விரோதமாகக் கோபம்
எழும்பிற்று.—அவர் உயரவிருக்கும் ஆகாய மே ௨௩
கங்களுக்குக் கற்பித்து, வானங்களின் கதவுகளை
த்திறந்து,—அவர்கள்மேல் மன்னாவை ஆகாரமாக ௨௪
வருஷிக்கப்பண்ணி, வானதானியத்தை அவர்க
ளுக்குக் கொடுத்தார்.—வல்லவர்களின் அப்பத் ௨௫
தை அவனவன் சாப்பிட்டான்; அவர்களுக்குப்
பரிபூரண ஆகாரத்தை அனுப்பினார்.

ஆகாயத்திலே கீழ்க்காற்றை வரப்பண்ணி, ௨௬
தம்முடைய வல்லமையினாலே தென்றலையும்
எடுத்துவந்து,—அவர்கள்மீதில் மாம்சத்தைத் தூ ௨௭
ளத்தனையும், செட்டையுள்ள பட்சிகளைக் கடல்
கரை மணலத்தனையுமாய் வருஷிக்கப்பண்ணி,—
அவைகளை அவர்கள் நடுப்பாளயத்திலே அவர் ௨௮
கள் கூடாரங்களைச் சுற்றிலும் இறங்கப்பண்ணி
னார். — அவர்கள் புசித்து மிகவும் திருப்தியா ௨௯
னார்கள்; அவர்களுடைய இச்சையை அவர்க
ளுக்கு நிறைவேற்றினார்.

அவர்கள் தங்கள் இச்சையை வெறுக்காதிருந் ௩௰
தார்கள்; அவர்களுடைய போசனம் இன்னம்
அவர்கள் வாயில் இருக்கையில், — பராபரனு ௩௧
டைய கோபம் அவர்கள்மேல் எழும்பி, அவர்க
ளில் கொழுத்தவர்களுக்குள்ளே அவர் சங்காரம்
செய்து, இஸ்ரவேலில் தெரிந்துகொள்ளப்பட்
டவர்களை மடியப்பண்ணினார்.[4]

இப்படியெல்லாம் இருந்தும் அவர்கள் இன் ௩௨
னம் அவருடைய அதிசயங்களை நம்பாமல் பா
வம்செய்தார்கள். — ஆனதுகொண்டு அவர்கள் ௩௩
நாள்களை மாயையிலும், அவர்கள் வருஷங்க
ளைப் பயங்கரத்திலும் கழியப்பண்ணினார்.

தங்களை அவர் கொல்லும்போது, அவர்கள் ௩௪
அவருக்காக விசாரித்து, திரும்பிக்கொண்டு பரா
பரனைக் காலமே தேடி, — பராபரன் தங்கள் ௩௫
கல்மலை என்றும், உன்னதமான பராபரன் தங்
கள் மீட்பரென்றும் நினைவுகூர்ந்து, — தங்கள் ௩௬
வாயினாலே அவருக்கு இச்சகம்பேசி, தங்கள்
நாவுகளினாலே பொய் சொன்னார்கள்.—ஏனெ ௩௭
னில் அவர்கள் இருதயம் அவரோடே நிலைவர
மாயிருந்ததில்லை; அவருடைய உடம்படிக்கை
யில் அவர்கள் உண்மையாயிருக்கவில்லை.

அவரோ இரக்கமாயிருந்து, அவர்களை அழிக் ௩௮
காதபடிக்கு, அவர்கள் அக்கிரமத்தை மூடி, தம்
முடைய எல்லா உக்கிரத்தையும் எழுப்பாமல்
அநேகந்தரம் தமது கோபத்தை விலக்கி,—இவர் ௩௯

1 சங். ௪௯. ௫. மத். ௰௩. ௩௫.—2 ௫ மோ. ௩௨. ௫,௬.

3 ௪ மோ. ௰௧. ௪-௧—4 ௪ மோ. ௰௧. ௩௩.

கள் மாம்சமும், திரும்பிவராமல் அகலுகிற காற்
றுமாயிருக்கிறார்களென்று நினைவுகூர்ந்தார்.
௪௰ எத்தனைவிசை அவருக்கு வனாந்தரத்திலே
கோபமூட்டி, அவாந்தர வெளியிலே அவருக்கு
௪௧ நோகநடந்தார்கள்.—அடிக்கடி பராபரனைப் பரி
ட்சைபார்த்து, இஸ்ரவேலின் பரிசுத்தரை மட்
௪௨ டுத்திட்டப்படுத்தினார்கள்.— அவருடைய கரத்
தையும், அவர் எகிப்தில் தம்முடைய அடையா
ளங்களையும்,சோகான் பட்டணவெளியிலே தம்
௪௩ முடைய அற்புதங்களையும் செய்து,—தங்களைச்
சத்துருவுக்கு விலக்கி மீட்டநாளையும் இவர்கள்
௪௪ நினையாதேபோனார்கள்.— அவர்களுடைய நதி
களையும், அவர்களுடைய ஆறுகளையும், அவர்
கள் அவைகளில் குடிக்கக்கிடையாதபடிக்கு இ
௪௫ ரத்தமாக மாற்றினார்.—அவர்களைத் தின்னும் வண்
டுச்சாதிகளையும், அவர்களைக் கெடுக்கும் தவளை
௪௬ களையும் அவர்களுக்குள் அனுப்பி,— அவர்கள்
பலனைப் பச்சைப் புழுக்களுக்கும், அவர்கள்
பிரயாசத்தை வெட்டுக்கிளிகளுக்கும் கொடுத்
௪௭ தார்.—அவர்களுடைய கொடிமுந்திரிகைச் செ
டிகளைக் கல்மழைகளினாலும், அவர்கள் முசுக்
கட்டைமரங்களை ஆலாங்கட்டியினாலும் அழி
௪௮ த்து,—அவர்கள் மிருகசீவன்களைக் கல்மழைக்
கும், அவர்கள் ஆடுமாடுகளை இடிகளுக்கும் ஒப்
௪௯ புக்கொடுத்தார். — தமது கோபத்தின் உக்கிரத்
தையும், மூர்க்கத்தையும், சினத்தையும், நெருக்
கத்தையும், தீங்குசெய்ய விடப்பட்ட தூதர்களை
௫௰ யும் அவர்களுக்குள் அனுப்பினார்.—தம்முடைய
கோபத்துக்கு வழியைச் சரிப்பிடித்தார்; அவர்
கள் ஆத்துமாவை அவர் மரணத்திற்கு விலக்கிக்
காக்காமல், அவர்கள் சீவனை அவர் பெருவாரிக்
௫௧ காய்ச்சலுக்கு ஒப்புக்கொடுத்து,—காமின் கூடா
ரங்களாகிய எகிப்திலே தலைச்சன்களாயிருந்த
௫௨ முதல்பேறு யாவையும் அழித்து,—தம்முடைய
சனத்தை ஆடுகளைப்போலே புறப்படப்பண்ணி,
அவர்களை வனாந்தரத்திலே மந்தையைப்போல
௫௩ கூட்டிக்கொண்டுவந்து, — அவர்களைப் பத்திர
மாய்ப் பயப்படாதபடிக்கு நடத்தினார்; ஆனால்
அவர்கள் சத்துருக்களைக் கடல் மூடிப்போட்
௫௪ டது.—அவர்களைத் தம்முடைய பரிசுத்த எல்லை
மட்டுக்கும், தம்முடைய வலதுகரம் சம்பாதித்த
இந்தப் பர்வதம்மட்டுக்கும் அழைத்துவந்து, —
௫௫ அவர்கள் முகத்துக்குமுன்பாகச் சாதிகளைத் துர
த்திவிட்டு, இவர்கள் தேசத்தைச் சீட்டுப்போட்
டுப் பங்கிடுவித்து இஸ்ரவேலின் கோத்திரங்
களை இவர்களுடைய கூடாரங்களில் குடியேற்
றினார்.
௫௬ ஆகிலும் அவர்கள் உன்னதமான பராபரனைப்
பரிட்சைபார்த்து, அவருக்குக் கோபமூட்டி,
அவருடைய சாட்சிகளைக் கைக்கொள்ளாமல்
௫௭ போய்,—தங்கள் பிதாக்களைப்போல வழிவில
கித் துரோகம்பண்ணி மோசம்போக்கும் வில்
௫௮ லைப்போலத் துவண்டு,[1] — அவருக்குத் தங்கள்
மேடைகளாலே கோபத்தையும், தங்கள் சுரூபங்
களாலே எரிச்சலையும் உண்டாக்கினார்கள்.
பராபரன் அதைக்கேட்டு உக்கிரமாகி, இஸ் ௫௯
ரவேலை மிகவும் வெறுத்து,—தாம் மனுஷருக்குள் ௬௰
ளே போட்ட கூடாரமாகிய சீலோவிலுள்ள வா
சஸ்தலத்தை நெகிழ்ந்து,[2]—அவர்கள் பெலத்தைச் ௬௧
சிறையிருப்பிலும், அவர்கள் மகிமையைச் சத்து
ருவின் கையிலும்ஒப்புக்கொடுத்து,[3]—தம்முடைய ௬௨
சனத்தைப் பட்டையத்திற்கு இரையாக்கிவிட்டு,
தமது சுதந்தரத்திற்கு விரோதமாய் உக்கிரமா
னார்.—அவர்கள் இளைஞரை அக்கினி பட்சித்தது; ௬௩
அவர்கள் கன்னியாஸ்திரிகள் வாழ்க்கைப்படா
திருந்தார்கள்.—அவர்கள் ஆசாரியர்கள் பட்டை ௬௪
யத்தால் விழுந்தார்கள்; அவர்கள் விதவைகள்
அழுததில்லை.
அப்போது ஆண்டவர் நித்திரை தெளிந்தவ ௬௫
னைப்போலவும், மதுபானத்தால் கெம்பீரிக்கிற
பராக்கிரமசாலியைப்போலவும் விழித்து,—தம் ௬௬
முடைய சத்துருக்களைப் பின்புறமாக அடிப்ப
டுத்தி, அவர்களுக்கு நித்திய நிந்தையை வரப்பண்
ணினார்.[4]
ஆனால் அவர் யோசேப்பின் கூடாரத்தைப் ௬௭
புறக்கணித்து எப்பிராயீம் கோத்திரத்தைத் தெ
ரிந்துகொள்ளாமல், — தாம் சிநேகித்த சீயோன் ௬௮
பர்வதமிருக்கிற யூதா கோத்திரத்தைத் தெரிந்து
கொண்டு, — தம்முடைய பரிசுத்தஸ்தலத்தை ௬௯
உயர்ந்த மேடுகளாகவும், என்றைக்கும் நிற்கத்
தாம் அஸ்திவாரப்படுத்தின பூமியைப்போலாக
வும் கட்டி,—தம்முடைய தாசனாகிய தாவீதைத் ௭௰
தெரிந்து, அவனை ஆட்டுத்தொழுவங்களிலிருந்து
எடுத்துக்கொண்டார்.[5]—கறவல் ஆடுகளின் பிற ௭௧
காலே நடந்த அவனைத் தம்முடைய சனமாகிய
யாக்கோபையும், தம்முடைய சுதந்தரமாகிய
இஸ்ரவேலையும் மேய்ப்பதற்காக அழைத்துக்
கொண்டுவந்தார்.—இவன் அவர்களைத் தன் இரு ௭௨
தயத்தினுடைய உண்மையின்படியே மேய்த்து,
அவர்களைத் தன் கைகளுடைய விவேகத்தினால் நடத்
தினான்.

## ௭௯. சங்கீதம்.

௧. சங்கீதக்காரன் எருசலேம்பட்டணம் பாழாய்ப்போனதைக்குறித்து முறையிட்டது. ௫. விடுதலைக்காக வேண்டிக்கொண்டது. ௰௩. நன்றியறிந்த தோத்திரஞ்செலுத்த வாக்குத்தத்தம்பண்ணினது.

(ஆசாபின் சங்கீதம்.)

பராபரனே, புறச்சாதியார் உம்முடைய சுதந் ௧
தரத்தில் வந்து, உமது பரிசுத்த தேவாலயத்தைத்
தீட்டுப்படுத்தி, எருசலேமை மண்மேடுகளாக்கி
விட்டார்கள். — உம்முடைய ஊழியக்காரரின் ௨
பிரேதங்களை ஆகாயத்துப் பறவைகளுக்கும்,
உம்முடைய பரிசுத்தவான்களின் மாம்சத்தைப்
பூமியின் மிருகங்களுக்கும் இரையாகக் கொடுத்
தார்கள்.—எருசலேமைச் சுற்றிலும் தண்ணீரைப் ௩
போல அவர்களுடைய இரத்தத்தைச் சிந்திவிட்
டார்கள்; அடக்கம்பண்ணுவாருமில்லை. — எங் ௪

1 ஓசே. ௭. ௰௬.—2 ௧ சாமு. ௪. ௪-௰௧.

3 ௧ சாமு. ௫. ௧,௨.—4 ௧ சாமு. ௫. ௬.—5 ௧ சாமு. ௰௬, ௧-௰௩.

கள் அயலாருக்கு நிந்தையும், எங்கள் சுற்றுப்பு
றத்தாருக்குப் பரியாசமும் சக்கந்தமுமானோம்.[1]
௫ எந்தமட்டும் கர்த்தாவே, என்றென்றைக்கும்
கோபமாயிருப்பீரோ? எந்தமட்டும் உம்முடைய
௬ எரிச்சல் அக்கினியைப்போல எரியும்?[2]—உம்
மை அறியாத சாதிகள்மேலும், உமது நாமத்தைத்
தொழுதுகொள்ளாத இராச்சியங்கள்மேலும் உம்
௭ முடைய உக்கிரத்தை ஊற்றிவிடும்.[3] — ஏனெ
னில், யாக்கோபைப் பட்சித்து, அவன் குடி
யிருப்பைப் பாழாக்கினார்கள்.
௮ எங்கள் முந்தின அக்கிரமங்களை நினையாதி
ரும்; தீவிரமாய் உம்முடைய இரக்கங்கள் எங்க
ளுக்கு நேரிட்டுவரக்கடவன; ஏனெனில், மெத்
௯ தவும் குறுகிப்போனோம்.[4]—எங்கள் இரட்சிப்
பின் பராபரனே, நீர் உமது நாமத்தினுடைய
மகிமையின்நிமித்தமாக எங்களுக்கு ஒத்தாசை
செய்து, எங்களைத் தப்புவித்து, உமது நாமத்தின்
நிமித்தமாக எங்கள் பாவங்களை நிவிர்த்தியாக்
௰ கும்.—அவர்களுடைய பராபரன் எங்கேயென்று
புறச்சாதிகள் சொல்லுவானேன்? உம்முடைய
ஊழியக்காரருடைய சிந்துண்ட இரத்தத்தின்
பழிவாங்குதல் சாதிகளுக்குள்ளே எங்கள் கண்
களுக்குமுன்பாகத் தெரியப்படக்கடவது.[5]
௰௧ கட்டுண்டவனுடைய பெருமூச்சு உமக்கு
முன்பாக வரட்டும்; கொலைக்கு நியமிக்கப்பட்
டவர்களை நீர் உமது புயபெலத்தினுடைய பெ
ருக்கத்தின்படியே உயிரோடே காப்பாற்றும்.—
௰௨ ஆண்டவரே, எங்கள் அயலார் உம்மை நிந்தித்த
நிந்தையை அவர்களுக்கு ஏழத்தனையாக அவர்
௰௩ கள் மடியிலே திரும்பப்பண்ணும்.—அப்படியே
உம்முடைய சனமும் உம்முடைய மேய்ச்சலின்
ஆடுகளுமாகிய நாங்கள் உம்மை என்றென்றைக்
கும் புகழுவோம்; தலைமுறைதலைமுறையாக
உமது துதியைச் சொல்லிவருவோம்.

## ௮௰. சங்கீதம்.

௧. சங்கீதக்காரன் திருச்சபையின் சிறுமையையும், ௮. பராபரனுடைய பூர்வ தயவுகள் நியாயத்தீர்ப்புகளாக மாறினதையுங்குறித்துத் தன் செபத்தில் முறையிட்டது. ௰௪. விடுதலைக்காக வேண்டிக்கொண்டது.

---

(சாட்சியை விளங்குவிக்கும் ஆறுசரம்பிலேபாடி இராகத்தலைவனுக்கு ஒப்புவிக்கப்பட்ட ஆசாபின் சங்கீதம்.)

௧ இஸ்ரவேலின் மேய்ப்பரே, செவிகொடும்;யோ
சேப்பை ஆட்டுமந்தையைப்போலே நடத்துகிற
வரே, கேருபீன்களின்மேல் வாசம்பண்ணுகிற
௨ வரே, பிரகாசியும்.[6]—எப்பிராயீமுக்கும், பென்
யமீனுக்கும், மனாசேயுக்கும்முன்பாக நீர் உமது
வல்லமையை எழுப்பி, எங்களுக்கு இரட்சிப்
௩ பாக வாரும்.[7] — பராபரனே, எங்களைத் திருப்
பிக்கொண்டுவந்து, உம்முடைய முகத்தைப் பிர
காசிக்கப்பண்ணும்; அப்போது இரட்சிக்கப்ப
டுவோம்.[8]
௪ சேனைகளின் பராபரனாகிய கர்த்தாவே, எந்த
மட்டும் உமது சனத்தினுடைய செபத்துக்கு வி
ரோதமாய்ப் புகைவீர்.—கண்ணீரின் அப்பத்தை ௫
அவர்களுக்குப் புசிக்கவும், கண்ணீரை மகா பெ
ரிய அளவாக அவர்களுக்குக் குடிக்கவும்கொ
டுத்தீர்.[9] — எங்களை எங்கள் அயலாருக்கு வழக் ௬
காக வைக்கிறீர்; எங்கள் சத்துருக்கள் தங்களுக்
குள்ளே பரியாசம்பண்ணுகிறார்கள். — சேனை ௭
களின் பராபரனே, எங்களைத் திருப்பிக்கொண்
டுவந்து உம்முடைய முகத்தைப் பிரகாசிக்கப்
பண்ணும்; அப்போது இரட்சிக்கப்படுவோம்.
ஒரு கொடிமுந்திரிகையை எகிப்திலிருந்து ௮
எடுத்துவந்தீர்; சாதிகளைத் துரத்திவிட்டு அதை
நாட்டினீர்.-அதற்குமுன்பாக இடமாக்கி, அதை ௯
வேர்தரிக்கப்பண்ணினீர்; அது தேசத்தைச் சூழ்ந்
துகொண்டது. — அதின் நிழலால் பர்வதங்கள் ௰
மூடப்பட்டன; அதின் கொம்புகள் பராபரனு
டைய கேதுருக்களைப்போலாயின.—தன் கொடி ௰௧
களைச் சமுத்திரம்மட்டாகவும், தன் கிளைகளை
நதிமட்டாகவும் விட்டது.—இப்போதும் வழிந ௰௨
டக்கிற யாவரும் அதை ஒடிக்க அதின் அடைப்
புகளை ஏன் தகர்த்துவிட்டார்.—[10]காட்டுப்பன்றி ௰௩
அதை உழுதுபோட்டு, வெளியின் மிருகங்கள்
அதைப் பட்டிமேய்ந்தது.
சேனைகளின் பராபரனே, திரும்பிவாரும்; நீர் ௰௪
வானங்களிலிருந்து கண்ணோக்கிப்பார்த்து, இந்
தக் கொடிமுந்திரிகைச் செடியையும்,—உம்மு ௰௫
டைய வலதுகரம் நாட்டின கிளையையும் உமக்கு
நீர் திடப்படுத்தின குமாரனின் நிமித்தமாக விசா
ரியும்.[11] — அக்கினியால் சுடப்பட்டும், வெட் ௰௬
டுண்டும் போயிற்று; உம்முடைய முகத்தின்
உதம்புதலால் அழிந்துபோகிறார்கள்.—உமதுக ௰௭
ரம் உமது வலதுபாரிசத்துப் புருஷன்மீதிலும்,
உமக்கு நீர் திடப்படுத்தின மனுஷகுமாரன்மீதி
லும் இருப்பதாக.
அப்போது உம்மை விட்டுவிலகோம்;எங்களை ௰௮
உயிர்ப்பியும், அப்போது உமது நாமத்தைத்
தொழுதுகொள்ளுவோம். — சேனைகளின் பரா ௰௯
பரனாகிய கர்த்தாவே, எங்களைத் திருப்பிக்கொ
ண்டுவாரும், உமது முகத்தைப் பிரகாசிக்கப்
பண்ணும்; அப்போது இரட்சிக்கப்படுவோம்.

## ௮௧. சங்கீதம்.

௧. பராபரனுக்கு நிறைதிசெலுத்தத் தூண்டினது; அக்கடமையைப் பராபரன் தம்முடைய உபகாரங்களின் நிமித்தமாகக் கேட்டது. ௮. அவர் சனங்களுக்குத் துன்பத்தைக்கொடுக்கும் கீழ்ப்படியாமையைக் கண்டித்து, கீழ்ப்படிதலைத் தூண்டிக்காட்டினது.

---

(கீதத்தில் வாசிக்க இராகத்தலைவனுக்கு ஒப்புவிக்கப்பட்ட ஆசாபின் சங்கீதம்.)

நம்முடைய பெலனாகிய பராபரனைக் கெம்பீ ௧
ரித்துப் பாடி, யாக்கோபின் பராபரனுக்கென்று
ஆர்ப்பரியுங்கள். — கீதமெடுத்து, மேளத்தையும், ௨
இன்ப ஓசையான சுரமண்டலத்தையும், தம்புரு
வோடுங்கூடத் தாருங்கள்.—மாதப்பிறப்பிலும், ௩

---

1 சங். சச. மச: அம. எ.-2 சங். அகூ. கூ: அகூ. சஎ.—3 எரே. ம. உரு. 4 ஏசா. கச. கூ.—5 சங். சுஅ. உ: யோபு. உ. மஎ.—6 உபா. மக. உக: உரு. உஉ.—7 ச மோ. உ. கூஎ. க.—9 சங். சஉ. ம.—10 சங். மஎ-உச: ம. உக-உச.—8 சங். அகூ. சஉ.-11 உசமு. எ. மஉ-மக.

நம்முடைய திட்டமான பண்டிகை நாளிலும்
எக்காளம் ஊதுங்கள்.[1]
௪ ஏனெனில் அவை இஸ்ரவேலுக்குப் பிரமா
ணமும், யாக்கோபுடைய பராபரனின் நியாய
௫ முமாயிருக்கின்றன. — நாம் அறியாத பாஷை
யைக் கேட்ட எகிப்துதேசத்துக்கு விரோதமாக
அவர் எழும்பிப் புறப்படுகையில், யோசேப்பி
லே அதைச் சாட்சியாக ஏற்படுத்தினார்.
௬ அவன் தோளைச் சுமைக்கு விலக்கினேம்;
அவன் கைகள் கூடைக்கு நீங்கலாய்ப் போயி
௭ ன.—நெருக்கத்திலே கூப்பிட்டாய், அப்போது
உன்னைத் தப்புவித்தோம்; குமுறலின் மந்தாரத்
திலிருந்து உனக்கு மறுவுத்தரவை அருளிச்செய்
தோம்; மெரிபாவின் தண்ணீர்களிடத்தில் உன்
௮ னைச் சோதித்தறிந்தோம்; சேலா.—நம்முடைய
சனமே கேள், உனக்குள் சாட்சியிடுவோம்; இஸ்
ரவேலே, நீ நம்முடைய சொல்கேட்டால் தா
௯ வி்ளை —உனக்குள் வேற்றுத் தேவன் உண்டா
யிருக்கவேண்டாம்; நீ அந்நியதேவனை நமஸ்க
௰ ரிக்கவும்வேண்டாம்.—உன்னை எகிப்துதேசத்தி
லிருந்து ஏறப்பண்ணின உன் பராபரனுகிய கர்த்
தர் நாமே, உன் வாயை விரிவாய்த் திற, நாம்
௰௧ அதை நிரப்புவோம் என்றேம்.[2]—ஆனால் நம்மு
டைய சனம் நம்முடைய சத்தத்தைக் கேட்ட
தில்லை; இஸ்ரவேல் நம்மை விரும்பினதில்லை.—
௰௨ ஆகையால் அவர்களை அவர்கள் இருதயத்தின்
கடினத்துக்கு விட்டோம்; தங்கள் யோசனைக
ளிலே நடந்தார்கள்.
௰௩ ஆ நமது சனம் நம்முடைய சொல்கேட்டு,
இஸ்ரவேல் நம்முடைய வழிகளில் நடந்தால் தா
௰௪ வி்ளை. — நாம் கொஞ்சக்காலத்திலே அவர்கள்
எதிராளிகளைத் தாழ்த்தி, நம்முடைய கையை அ
வர்கள் சத்துருக்களுக்கு விரோதமாகத் திருப்பு
௰௫ வோமே.—அப்போது கர்த்தரைப் பகைக்கிறவர்
கள் அவர்களுக்கு இச்சம்பேசி அடங்குவார்கள்;
அவர்கள் காலம் என்றென்றைக்கும் இருக்கும்.—
௰௬ கோதுமையின் புஷ்டியால் அவர்களைப் போஷிப்
பார்; கல்மலையின் தேனினாலே உன்னைத் திருப்
தியாக்குவோம்.[3]

## அ௨. சங்கீதம்.

௧ சங்கீதக்காரன் நியாயாதிபதிகளை எச்சரித்தது. ௫. அவர்களின் அசட்டைடையைக் கண்டித்தது. ௮. நியாயந்தீர்க்கப் பராபரனை வேண்டிக்கொண்டது.

(ஆசாபின் சங்கீதம்.)

௧ பராபரன் தேவசபையிலே நின்றிருக்கிறார்; தே
வர்களின் நடுவிலே அவர் விசாரிக்கிற நியாயமா
௨ வது: — எந்தமட்டும் நீதிகேடாய் நியாயந்தீர்த்
து, ஆகாதவர்களின் முகமாட்டம் பார்ப்பீர்கள்;
௩ சேலா. — தரித்திரனுக்கும், திக்கற்றவனுக்கும்
நியாயம்பண்ணி, சிறுமையானவனுக்கும் ஏழை
௪ க்கும் நீதிசெய்யுங்கள்.[4]—தரித்திரனையும் எளிய
வனையும் விடுவித்து, அவர்களை ஆகாதவர்களின்
கைக்குத் தப்புவியுங்கள்.
அறியாமலும் உணராமலும் இருக்கிறார்கள்; ௫
அந்தகாரத்திலே நடக்கிறார்கள்; தேசத்தின் அஸ்
திவாரங்களெல்லாம் அசைகின்றன.[5]—நீங்கள் ௬
தேவர்களென்றும், நீங்களனைவரும் உன்னதமா
னவரின் மக்களென்றும் நாம் சொன்னேம்.[6]—
ஆகிலும் நீங்கள் மனுஷரைப்போலே செத்து, ௭
லோகப் பிரபுக்களில் ஒவ்வொருவனைப்போலே
விழுந்துபோவீர்களென்றார்.
பராபரனே, எழுந்திருந்து பூமியை நியாயந் ௮
தீரும்; ஏனெனில் தேவரீர் எல்லாச் சாதிகளையும்
சுதந்தரமாக ஆண்டிருப்பவர்.[7]

## அ௩. சங்கீதம்.

௧. சத்துருக்களின் சர்ப்பனையான யோசனைகளைக்குறித்துப் பராபரனேடு பண்ணின முறைப்பாடு. ௯. சபையைத் துன்பப்படுத்துகிறவர்களுக்கு விரோதமாகப் பண்ணின செபம்.

(ஆசாபின் சங்கீதமாகிய பாட்டு.)

பராபரனே, சும்மா இராதேயும்; பராபரனே, ௧
மவுனமும் அமரிக்கையுமாயிராதேயும்.[8]
ஏனெனில் இதோ உம்முடைய சத்துருக்கள் ௨
கொந்தளித்து, உம்முடைய பகைஞர் தலையெ
டுக்கிறார்கள்.—அவர்கள் உமது சனத்துக்கு விரோ ௩
தமாகச் சர்ப்பனையோசனையாயிருந்து, உமது
மறைவிலிருக்கிறவர்களுக்கு விரோதமாக ஆ
லோசனை பண்ணுகிறார்கள். — நாம் அவர்களை ௪
அவர்கள் ஒரு சாதியாயிராமலும், இஸ்ரவேலின்
பேர் இனி நினைக்கப்படாமலும் போவதற்காக
அதம்பண்ணுவோம் வாருங்களென்கிறார்கள்.—
அதேதெனில் ஏதோமின் கூடாரத்தாரும், இஸ் ௬
மவேலரும், மோவாபும், ஆகாரியரும்,—கேபா ௭
லும், அம்மோனும், ஆம்லேக்கும், தீருவின் குடி
களோடேகூடப் பெலிஸ்தியரும், — ஏகமான ௫
நிருணயமாய் ஆலோசனைபண்ணி, உமக்கு வி
ரோதமாக ஒப்பந்தம்பண்ணினார்கள்.—அசூரிய ௮
ரும் அவர்களோடேகூடக் கலந்து, லோத்தின்
புத்திரருக்குப் புயபலமானார்கள்; சேலா.
மீதியானியருக்கும் சிசேரொனென்ற ஆற்றண் ௯
டை. எந்தோரிலே அழிக்கப்பட்டு,[9]—பூமிக்கு ௰
எருவாய்ப்போன சிசேராவுக்கும் யாபீனுக்கும்
செய்ததுபோல அவர்களுக்கும் செய்யும்.[10]—
அவர்களையும், அவர்கள் அதிபதிகளையும், ஓரே ௰௧
புக்கும் சேபுக்கும், அவர்கள் பிரபுக்களை எல்
லாம் சேபாகுக்கும் சல்முனாவுக்கும் சரியாக்
கும்.[11]—ஏனெனில் பராபரனுடைய வாசஸ்தல ௰௨
ங்களை நாம் எங்களுக்குச் சுதந்தரமாகக் கட்டிக்
கொள்ளுவோமென்றார்கள்.—என் பராபரனே, ௰௩
அவர்களைச் சுழல்காற்றின் புழுதிக்கும், காற்றுக்
கொண்டுபோகும் துரும்புக்கும் சரியாக்கும்.—
காட்டை நெருப்புச் சுடுகிறதுபோலேயும், மலை ௰௪
வனங்களை அக்கினிச்சுவாலை எரித்துவிடுகிறது
போலேயும்,—நீர் அவர்களை உமது புசலினாலே ௰௫

1 ௪ மோ. ௨௩. ௨௪.—2 ௨ மோ. ௨௰. ௨.—3 சங். ௱௪௭. ௰௪. 4 ஏசா. ௧. ௰௭.—5 சங். ௨. ௰. 6 ௨ மோ. ௨௧. ௬, ௨௨, ௨௮.

போவா. ௰. ௩௪.—7 சங். ௨. ௮. 10 நியா. ௪. ௰௫.—11 நியா. ௭. ௨௫: ௮. ௰௨-௨௧. 8 சங். ௨௮. ௧.—9 நியா ௭. ௨௨.

தொடர்ந்து, உமது பெருங்காற்றினாலே அவர்க
௰௫ ளைக் கலங்கப்பண்ணும்.—கர்த்தாவே, அவர்கள்
உமது நாமத்தைத் தேடும்படிக்கு, அவர்கள் முக
௰௬ ங்களைக் கனஈனத்தாலே மூடும்.—தேவரீர் ஒரு
வர் உமமுடைய நாமத்தின்படியே, கர்த்தரும்,
பூமியனைத்தின்மேல் உன்னதமானவரும் என்கி
௰௭ றதை அவர்கள் உணர,—அவர்கள் என்றைக்
கும் வெட்கிக் கலங்கவும் நாணவும் அழியவும்
கடவர்கள்.

## ௮௪. சங்கீதம்.

௧. திருச்சபையின் பரிசுத்த ஆலயத்தில் ஆராதனையைச் செய்ய விரும்பினது. ௪. அங்கே தரித்திருப்பவர்கள் பாக்கியவான்களென்று காட்டினது. ௮. அதற்கு மறுபடியும் தன்னை ஸ்தாபிக்க வேண்டிக்கொண்டது.

(கீதத்தில் வாசிக்கக் கோராகின் புத்திரரிலுள்ள இராகத்தலைவனுக்கு ஒப்புவிக்கப்பட்ட சங்கீதம்.)

௧ சேனைகளுடைய கர்த்தாவே, உம்முடைய வா
சஸ்தலங்கள் எத்தனை இன்பமானவைகள்? —
௨ என் ஆத்துமா கர்த்தருடைய பிரகாரங்களின்
மேல், வாஞ்சையும் தவனமுமாயிருக்கிறது; என்
இருதயமும், என் மாம்சமும் சீவனுள்ள பரா
௩ பரனை நோக்கிக் கெம்பீர சத்தமிடுகின்றன.[1]—அ
டைக்கலான் குருவிக்கு முதலாய் வீடும், தகை
விலான் குருவிக்குத் தன் குஞ்சுகளை வைக்கும்
கூடும் கிடைக்கும்; என் இராசாவும் என் பரா
பரனுமாகிய சேனைகளுடைய கர்த்தாவே, உம்
முடைய பீடங்களையே வாஞ்சித்திருக்கிறேன்.
௪ உம்முடைய வீட்டிலே வாசமாயிருந்து, எப்
போதும் உம்மைத் துதிக்கிறவர்கள் பாக்கிய
௫ வான்கள்; சேலா. — உம்மிலே பெலன்கொள்
ளுகிற மனுஷனும், தங்கள் இருதயங்களில் வழி
களைச் செவ்வையாக்கினவர்களும் பாக்கியவா
௬ ன்கள்.—அழுகையின் பள்ளத்தாக்கை உருவ
நடந்து, அவளை நீரூற்றாக்கிக்கொள்ளுகிறார்
கள்; போதகனும் ஆசீர்வாதங்களால் மூடப்படு
௭ கிறான்.—பராபரனுக்கு முன்பாகச் சீயோனி
லே வந்து காணப்படுமட்டும், பெலத்திலிருந்
து பெலத்துப்போகிறார்கள்.
௮ சேனைகளின் பராபரனாகிய கர்த்தாவே, என்
விண்ணப்பத்தைக் கேளும்; யாக்கோபின் பரா
௯ பரனே செவிகொடும்; சேலா.—எங்கள் கேட
யமாகிய பராபரனே, கண்ணோக்கமாயிரும்; நீர்
அபிஷேகம்பண்ணினவரின் முகத்தைப்பா
௰ ரும். — எனெனில் ஆயிரம் நாளைப்பார்க்கிலும்
உம்முடைய பிரகாரங்களில் ஒரே நாள் நல்லது;
ஆகாமியக் கூடாரங்களில் வாசமாயிருப்பதைப்
பார்க்கிலும், என் பராபரனுடைய வீட்டின் வா
சற்படியில் காப்பதையே தெரிந்துகொள்ளு
௰௧ வேன்.—அதேதென்றால் பராபரனாகிய கர்த்தர்,
சூரியனும் கேடயமுமானவர்; கர்த்தர் கிருபை
யையும் மகிமையையும் அளிப்பார்; மன உண்
மையாய் நடக்கிறவர்களுக்கு நன்மையை வழங்
காதிரார்.—சேனைகளுடைய கர்த்தாவே, உம் ௰௨
மை நம்பியிருக்கிற மனுஷன் பாக்கியவான்.[2]

## ௮௫. சங்கீதம்.

௧. சங்கீதக்காரன் முன்னே தான் அடைந்த இரக்கத்தில் என்றும் நிலைபெற்றிருக்க வேண்டிக்கொண்டது. ௮. பராபரனுடைய நன்மையை நம்பி அதில் ஊன்றிநிற்க வாக்குத்தத்தம்பண்ணினது.

(கோராகின் புத்திரரிலுள்ள இராகத்தலைவனுக்கு ஒப்புவிக்கப்பட்ட சங்கீதம்.)

கர்த்தாவே, உமது தேசத்தின்மேல் பிரியம்வை ௧
த்து, யாக்கோபின் சிறையிருப்பைத் திருப்பி
னீர். — உம்முடைய சனத்தின் அக்கிரமத்தை ௨
மன்னித்து, அவர்கள் பாவத்தை எல்லாம் மூடி
னீர்; சேலா.-உம்முடைய உக்கிரத்தை எல்லாம் ௩
வாங்கிக்கொண்டு, உம்முடைய கோபத்தின்
எரிச்சலைவிட்டுத் திரும்பினீர்.
எங்கள் இரட்சிப்பின் பராபரனே, நீர் எங்க ௪
ளைத் திருப்பிக்கொண்டுவந்து, எங்கள்மேலுள்ள
உமது தாங்கலை ஆறப்பண்ணும். -- என்றென் ௫
றைக்கும் எங்கள்மேல் கோபமாயிருப்பீரோ?
தலைமுறைதலைமுறையாகவும் உமது கோபத்தை
நீடித்திருக்கப்பண்ணுவீரோ?[3] — உம்முடைய ௬
சனம் உம்மில் மகிழ்ந்திருப்பதற்குத் தேவரீர் எங்
களைத் திரும்ப உயிர்ப்பிப்பதில்லையோ?—கர்த் ௭
தாவே, உம்முடைய கிருபையை எங்களுக்குக்
காண்பித்து, உம்முடைய இரட்சிப்பை எங்க
ளுக்குக் கட்டளையிடும்.
கர்த்தராகிய பராபரன் என்ன விளம்புகிறா ௮
ரென்று கேட்பேன்; எனெனில் அவருடைய
சனமும் அவருடைய சன்மார்க்கரும் மதிகேட்
டுக்குத் திரும்பாதபடிக்கு, அவர்களுக்குச் சமா
தானம் தருவார். — ஆம், மகிமை நம்முடைய ௯
தேசத்தில் வாசமாயிருக்கும்படிக்கு அவருடைய
இரட்சிப்பு அவருக்குப் பயந்தவர்களுக்குச் சமீ
பமாயிருக்கிறது.[4] — கிருபையும், உண்மையும் ௰
ஒன்றுக்கொன்று சந்திக்கும்; நீதியும் சமாதான
மும் ஒன்றுக்கொன்று முத்திசெய்யும்.—உண் ௰௧
மை பூமியிலிருந்து முளைக்கும்; நீதி வானங்களி
லிருந்து தாழப்பார்க்கும்.—கர்த்தர் நன்மையும் ௰௨
கொடுப்பார்; எங்கள் தேசம் தன் பலனையும்
தரும். — நீதி அவருக்கு முன்னாலே போம்; ௰௩
தமது அடிகளை வழியிலே வைப்பார்.

## ௮௬. சங்கீதம்.

௧. தாவீது தேவத்தின்மேல் வைத்த தன் மனப்பற்றுதலினாலும், ௫. பராபரனுடைய நன்மையினாலும், வல்லமையினாலும் தன் ஜெபத்தை உறுதிபண்ணினது. ௰௧. முந்தின கிருபை நடக்கவும் விரும்பினது. ௰௪. செருக்குள்ளவர்களைக்குறித்து முறையிட்டுப் பராபரனுடைய நன்மையின் அடையாளத்தைக் கேட்டது.

(தாவீதின் விண்ணப்பம்.)

கர்த்தாவே, உம்முடைய செவியைச் சாய்த்து ௧
என் விண்ணப்பத்தைக் கேளும்; எனெனில்
நான் சிறுமையும் எளிமையுமானவன். — என் ௨
ஆத்துமாவைத் தற்காத்தருளும், எனெனில் நான்

1 சங். ௨௬. ௮: ௨௭. ௪: ௪௨. ௧.—2 சங். ௨. ௯.

3 சங். ௭௭. ௮–௰: ௭௯. ௫.—4 சங். ௩௪. ௰௮, ௰௯.

பரிசுத்தன்; என் பராபரனே, உம்மை நம்பியி
ருக்கிற உம்முடைய அடியானைத் தேவரீர் இ
௩ ரட்சியும். — ஆண்டவரே, எனக்கு இரங்கும்;
ஏனெனில் நாள்தோறும் உம்மைநோக்கிக் கூப்
௪ பிடுகிறேன்.—உம்முடைய அடியானுடைய ஆத்
துமாவை மகிழ்ச்சியாக்கும்; ஏனெனில் ஆண்
டவரே, உம்மண்டைக்கு என் ஆத்துமாவை
௫ ஏறப்பண்ணுகிறேன். — ஏனெனில் ஆண்டவ
ரே, தேவரீர் நல்லவரும், மன்னிக்கிறவரும், உம்
மைநோக்கிக் கூப்பிடுகிற யாவர்மேலும் கிருபை
௬ மிகுந்தவருமாயிருக்கிறீர்.—கர்த்தாவே, என் செ
பத்துக்குச் செவிகொடுத்து, என் விண்ணப்பங்
௭ களின் சத்தத்தைக் கவனியும் —நான் நெருக்கப்
படுகிற நாளிலே உம்மைநோக்கிக் கூப்பிடுகி
றேன்; ஏனெனில் எனக்கு மறுமொழி கொ
டுக்கிறீர்.[1]
௮ ஆண்டவரே, தேவர்களுக்குள்ளே உமக்கு
நிகருமில்லை; உம்முடைய கிரியைகளுக்கு ஒப்
௯ புமில்லை.[2] — ஆண்டவரே, நீர் உண்டாக்கின
எல்லாச் சாதிகளும் வந்து, உமக்குமுன்பாகப்
பணிந்து,உமது நாமத்துக்கு மகிமைசெலுத்துவார்
௰ கள்.-ஏனெனில் தேவரீர் பெரியவரும் அதிசயங்
களைச் செய்கிறவருந்தானே; தேவரீர் ஒருவரே
௰௧ தேவன்.-கர்த்தாவே, நான் உமது சத்தியத்திலே
நடப்பதற்கு, உமது வழியை எனக்குப் போதி
யும்; உமது நாமத்திற்குப் பயந்திருப்பதற்கு என்
௰௨ இருதயத்தை ஒருமுகமாக்கும். — என் பராபர
னாகிய ஆண்டவரே, உம்மை என் முழு இருதயத்
தினாலும் துதித்து, உமது நாமத்தை என்றென்
௰௩ றைக்கும் மகிமைப்படுத்துவேன். — ஏனெனில்
உம்முடைய கிருபை என்மேல் பெரியது; என்
ஆத்துமாவை நரகபாதாளத்திற்குத் தப்புவித்தீர்.
௰௪ பராபரனே, அகந்தைக்காரர் எனக்கு விரோத
மாய் எழும்பி, பெலவந்தருடைய கூட்டம் என்
பிராணனை வாங்கத்தேடி, உம்மைத் தங்களுக்கு
முன்பாக நிறுத்தி நோக்காதிருக்கிறார்கள்.[3]—
௰௫ ஆனால் ஆண்டவரே, தேவரீர் மன உருக்கமும்
இரக்கமும், நீண்ட சாந்தமும், கிருபையிலும்,
உண்மையிலும் பெருக்கமுமான தேவன்.[4]—
௰௬ என்மேல் நோக்கமாகி எனக்கிரங்கும்; உமது
பெலனை உம்முடைய அடியானுக்குக் கட்டளை
யிட்டு, உம்முடைய அடியாளின் குமாரனை
௰௭ இரட்சியும்.[5]—கர்த்தாவே, தேவரீர் எனக்கு ஒத்
தாசைசெய்து, என்னைத் தேற்றரவுபண்ணுகிறீர்
என்று என் பகைஞர் கண்டு வெட்கும்படியாக,
என்னிடத்தில் எனக்கு நலமாக ஒரு அடையா
ளஞ்செய்யும்.

## ௮௭. சங்கீதம்.

௧. திருச்சபையினியல்பும், மகிமையும், ௪. அதைச் சேர்ந்தவர்களுடைய விர்த்தியும், கனமும், ஆதரவும்.

(கோராகின் புத்திரருக்கு ஒப்புவிக்கப்பட்ட பாட்டாகிய சங்கீதம்.)

அவர் அஸ்திபாரம் பரிசுத்த பர்வதங்களில் ௧
இருக்கிறது.—கர்த்தர் யாக்கோபுடைய வாசஸ் ௨
தலங்களை எல்லாம்பார்க்கிலும், சீயோனின் வா
சஸ்தலங்களைச் சிநேகிக்கிறார்.-பராபரனுடைய ௩
பட்டணமே, மகிமையான விசேஷங்கள் உன்
னில் வசனிக்கப்படும்; சேலா.
நம்மை அறிந்தவர்களுக்குள்ளே இராகாபை ௪
யும், பாபேலையும் நினைக்கப்படப்பண்ணு
வோம்; இதோ பெலிஸ்தியரிலும் தீரியரிலும் எத்
தியோப்பியரிலும்கூட இன்னான் அங்கே பிறந்
தானென்றும்,—இவன், அவன், அதிலே பிறந்தா ௫
னென்றும் சீயோனைக்குறித்துச் சொல்லப்ப
டும்; உன்னதமானவர் தாமே அதைத் திடப்படுத்
துவார். — கர்த்தர் சனங்களை எழுதும்போது, ௬
இன்னார் அதிலே பிறந்தார்களென்று அவர்களை
எண்ணுவார்; சேலா. — பாடுவார்கள் துள்ளிக் ௭
களிகூருகிறவர்களைப்போல இருப்பார்கள்; நம்
முடைய ஊற்றுகளெல்லாம் உன்னிலிருக்கும்.

## ௮௮. சங்கீதம்.

௧. துக்கத்துக்கேற்ற முறைப்பாட்டாகிய செபம்.

(நோயாயிருக்கிற பலவீனத்தின்பேரிலே பாடி, கோராகின் புத்திரரிலுள்ள இராகத்தலைவனுக்கு ஒப்புவிக்கப்பட்ட எஸ்ராகியனான ஏமானின் போதக சங்கீதம்.)

என் இரட்சிப்பின் பராபரனாகிய கர்த்தாவே, ௧
பகல்காலத்திலும் இராக்காலத்திலும் உமக்கு
முன்பாகக் கூப்பிடுகிறேன்.—என் விண்ணப்பம் ௨
உம்முடையமுகத்துக்குமுன்பாக வரட்டும்;என்
கூப்பிடுதலுக்கு உம்முடைய செவியைச்சாயும்.
ஏனெனில் என் ஆத்துமா தீங்குகளால் நிறை ௩
யப்பட்டது; என் சீவன் பாதாளத்துக்குச் சமீப
மாய்ச் சேர்ந்தது. — நான் குழியில் இறங்குகிற ௪
வர்களோடு எண்ணப்பட்டு, திடனற்ற புருஷ
னைப்போலானேன்.—மரித்தவர்களில் ஒருவனை ௫
ப்போலிருக்கிறேன்; நீர் அப்புறம் நினையாமல்,
உமது கையால் அறுப்புண்டுபோனவர்களும்,
பிரேதக்குழிகளிலே கிடக்கிறவர்களுமாகிய
வெட்டுண்டவர்களைப்போலே நெகிழப்பட்டிரு
க்கிறேன்.—என்னைப் பாதாளக்குழியிலும், இரு ௬
ளிலும், ஆழங்களிலும் வைத்தீர்.—உம்முடைய ௭
உக்கிரம் என்னை இருத்துகிறது, உம்முடைய
வெள்ளங்களாலெல்லாம் என்னை இடுக்கண்ப
டுத்துகிறீர்; சேலா.—எனக்கு அறிமுகமானவர் ௮
களை எனக்குத் தூரமாக விலக்கி, என்னை அவர்
களுக்கு அருவருப்பாக்கினீர்; நான் புறப்படக்
கூடாததாய் அடைபட்டிருக்கிறேன்[6]—நோயி ௯
னால் என் கண் தொய்ந்துபோயிற்று; கர்த்தாவே,
அநுதினமும் நான் உம்மைநோக்கிக் கூப்பிட்டு,
உமக்கு நேராக என் கைகளை விரிக்கிறேன்.
மரித்தவர்களில் அதிசயங்களைச் செய்வீரோ? ௰
செத்த இராட்சதர் எழுந்து உம்மைத் துதிப்பார்
களோ? சேலா.—பிரேதக்குழியில் உமது இரு ௰௧

1 சங். ௫௰. ௰௫: ௭௭. ௧.
2 சங் ௭௧. ௰௯. உ மோ. ௰௫. ௰௧.
3 சங். ௫௪. ௩.
4 உ மோ. ௩௪. ௬.
5 சங். ௱௰௬. ௰௬.
6 சங். ௩௧. ௰௨: ௩௮. ௰௨.
யோபு. ௰௯. ௰௩-௰௯.

பையும், அழிவில் உமது உண்மையும், விவரிக்
௰௨ கப்படுமோ?[1]—இருளில் உமது அதிசயங்களும்,
மறதியின் பூமியில உமது நீதியும் அறியப்படு
௰௩ மோ?—கர்த்தாவே, நான் உம்மைநோக்கிக் கூப்
பிடுகிறேன்; காலமே என் விண்ணப்பம் உமக்
கு நேரிடும்.
௰௪ கர்த்தாவே, என் என் ஆத்துமாவை ஒழித்து
விட்டு, உம்முடைய முகத்தை எனக்கு மறைக்
௰௫ கிறீர்.[2]—சிறுவயதுதுவக்கி நான் சிறுமையானவ
னும், மாண்டுபோகிறவனுமாயிருக்கிறேன்; உம்
மால் வரும் திகில்களைச் சுமந்து, அஞ்சிக்கையா
௰௬ யிருக்கிறேன்.—உம்முடைய எரிச்சல்கள் என்
மேல் கடக்கின்றன; உம்முடைய பயங்கரங்கள்
௰௭ என்னைச் சங்கரிக்கின்றன.—அவைகள் என்னை
நாள்தோறும் தண்ணீர்களைப்போலச் சூழ்ந்து,
ஏகமாய் என்னை வளைந்துகொள்ளுகின்றன.—
௰௮ சிநேகிதனையும், தோழனையும் எனக்குத் தூரமாக
விலக்கினீர்; எனக்கு அறிமுகமானவர்கள் அந்த
ரங்கமானார்கள்.

## அ௯. சங்கீதம்.

௧. சங்கீதக்காரன் பராபரனுடைய உடம்படிக்கைக்காகவும், ௫ அவருடைய அதிசயமுள்ள வல்லமைக்காகவும், ௰௫. அவருடைய சபையின் பாக்கியத்துக்காகவும், ௰௯. தாவீதின் இராச்சியத்தின்மேல் அவருக்கிருக்கின்ற தயைக்காகவும் அவரைத் துதித்தது. ௩௮. விரோதமுள்ள சங்கதிகளைக் குறித்து முறையிட்டு, ௪௬ பராபரனோடே வாதாடினது. அவரை வேண்டிக்கொண்டது; துதித்தது.

---

(எஸ்ராகியனான ஏத்தானின் போதக சங்கீதம்.)

௧ கர்த்தரின் கிருபைகளை என்றென்றைக்கும் பாடு
வேன்; உம்முடைய உண்மையைத் தலைமுறை
தலைமுறையாக என் வாயினால் அறிவிப்பேன்.[3]—
௨ ஏனெனில் என்றென்றைக்கும் உன் வித்தை
நிலைப்படுத்தி, தலைமுறை தலைமுறையாக உன்
௩ இராசாசனத்தைக் கட்டுவோமென்று,[4]-நாம் நம்
மால் தெரிந்துகொள்ளப்பட்டவனுக்கு உடம்ப
டிக்கைபண்ணி, நம்முடைய தாசனாகிய தாவீது
௪ க்கு ஆணையிட்டோமென்றீர்; சேலா.—இந்தக் கி
ருபை என்றென்றைக்கும் திடமாக்கப்பட்டிருக்
கும்; வானங்களிலேதானும் உமது உண்மையை
உறுதியாக்கிக்கொண்டிருக்கிறீரென்பேன்.
௫ இதினிமித்தம் கர்த்தாவே, வானங்கள் உம்
முடைய அதிசயத்தைத் துதிக்கும்; பரிசுத்த
வான்களின் சபையில் உம்முடைய உண்மை
௬ யும் விளங்கும்.—ஏனெனில் ஆகாயமண்டலத்
தில் கர்த்தருக்கு நிகரானவர் யார்? பெலவான்க
ளுடைய குமாரர்களில் கர்த்தருக்கு ஒப்பானவர்
௭ யார்?[5]—பராபரன் பரிசுத்தருடைய பெரிய ஆ
லோசனைச் சங்கத்திலே பயங்கரமானவரும் தம்
மைச் சுற்றிலுமிருக்கிற அனைவர்மேலும் பயப்
௮ படத்தக்கவரும்தானே.—சேனைகளின் பராபர
னாகிய கர்த்தாவே, கர்த்தராயிருக்கிற உம்மைப்
போல வல்லமையுள்ளவர் யார்? உம்முடைய
௯ உண்மை உம்மைச் சுற்றியிருக்கிறது.—தேவரீர்
சமுத்திரத்துப் பெருமையின்மேல் ஆளுகையா
யிருக்கிறவர்; அதின் அலைகள் எழும்பினால் தேவ
ரீர் அவைகளை அடக்குகிறீர்.—தேவரீர் இராகா ௰
பை வெட்டுண்டவனைப்போலே நசுக்கி, உமது
வல்லமையான புயத்தினால் உம்முடைய சத்து
ருக்களைச் சிதறவடித்தீர்[6]—வானங்கள் உம்மு ௰௧
டையது; பூமியும் உம்முடையது; பூச்சக்கரமும்
அதின் நிறைவும்தானே; தேவரீர் அவைகளை அஸ்
திபாரப்படுத்தினீர்.—தேவரீர் வடக்கையும் தெற் ௰௨
கையும் சிருஷ்டித்தீர்; தாபோரும் எர்மோனும்
உம்முடைய நாமம் விளங்கக் கெம்பீரிக்கும்.—
உமக்கு வல்லமையுள்ள புயமிருக்கிறது; உம்மு ௰௩
டைய கை பலத்ததும், உம்முடைய வலதுகரம்
உயர்ந்ததுமானது.—நீதியும் நியாயமும் உம்மு ௰௪
டைய ஆசனத்தின் அஸ்திபாரமாய் இருக்கின்
றன; கிருபையும் உண்மையும் உம்முடைய
முகத்துக்கு முன்னாக நடக்கின்றன.[7]
செம்பீரத்தை அறிந்த சனம் பாக்கியமுள்ள ௰௫
து; கர்த்தாவே, உம்முடைய முகத்தின் வெளிச்
சத்திலே நடப்பார்கள்.—அவர்கள் உம்முடைய ௰௬
நாமத்தின்மேலே நாள்தோறும் களிகூர்ந்து,
உம்முடைய நீதியால் உயருவார்கள். — ஏனெ ௰௭
னில் அவர்கள் பெலத்தினுடைய மகிமை தேவ
ரீர்தானே; உம்முடைய தயையினாலே எங்கள்
கொம்பு உயரும்—ஏனென்றால் கர்த்தரால் எங் ௰௮
களுடைய கேடயமும், இஸ்ரவேலின் பரிசுத்த
ரால் எங்களுடைய இராசாவுமுண்டு.
அப்போது நீர் தரிசனத்திலே உம்முடைய ௰௯
பரிசுத்தவானைக்குறித்து விளம்பினதாவது: ஒரு
சவுரியவான்மேலே சகாயம்பண்ணும் சத்தியை
வைத்தோம்; சனத்தில் தெரிந்துகொள்ளப்பட்ட
வனை உயர்த்தினோம்.[8]-நம்முடைய தாசனாகிய ௨௰
தாவீதைக் கண்டுபிடித்தோம்; நம்முடைய பரி
சுத்த எண்ணெயினால் அவனை அபிஷேகம்பண்
ணினோம்.[9]—அவனோடே நம்முடைய கை உறு ௨௰௧
தியாயிருக்கும்; நம்முடைய புயம் அவனைத்
திடப்படுத்தும்.—சத்துரு அவனை எத்துவதில்லை, ௨௰௨
நியாயக்கேட்டின் மகன் அவனை ஒடுக்குவதில்
லை.—அவன் சத்துருக்களை அவனுக்குமுன்பாக ௨௰௩
நருக்கி, அவன் பகைஞரை வெட்டுவோம்.—
நம்முடைய உண்மையும், நம்முடைய கிருபை ௨௰௪
யும் அவனோடிருக்கும்; நம்முடைய நாமத்திலே
அவன் கொம்பு உயரும்.— அவன் கையைச் ௨௰௫
சமுத்திரத்தையும், அவன் வலதுகரத்தை ஆறுக
ளையும் ஆளவைப்போம்[10]—அவன் நம்மைத் தே ௨௰௬
வரீர் என் பிதாவும், என் பராபரனும், என் இரட்
சிப்பின் கல்மலையும் என்றழைப்பான்.[11]—நாமும் ௨௰௭
அவனை முதல்பேறானவனும், பூமியின் இரா
சாக்களைப் பார்க்கிலும் உன்னதமானவனுமாக
வைப்போம்.[12]—என்றென்றைக்கும் நமது கிரு ௨௰௮
பையை அவனுக்குக் காப்போம்; நமது உடம்
படிக்கை அவனுக்குக் கெட்டியாயிருக்கும்.—

---

1 சங். ௬ ௫.—2 சங். ௪௪. ௨௪.—3 ஏசா. ௫௯. ௨௧.—4 ௨ சாமு. ௭. ௰௨, ௰௩. 5 சங். ௭௧. ௧௯. ௨ மோ. ௰௫. ௰௧. 6 ஏசா. ௫௧. ௯. ௨ மோ. ௰௪. ௨௮. 7 சங். ௬௭. ௨.—8 ௧ சாமு. ௰௬. ௧. 9 ௧ சாமு. ௰௬. ௰௨, ௰௩. 10 சங். ௭௨. ௮.—11 ௨ சாமு. ௭. ௰௪. 12 எபி. ௧. ௫. கொலோ. ௧. ௰௫.

௨௯ அவன் வித்தை என்றென்றைக்கும், அவன் இரா
சாசனத்தை வானங்களுள்ளமட்டும் நிலைப்படுத்
துவோம்.
௩௰ அவன் குமாரர் நம்முடைய நியாயங்களில் நட
௩௧ வாமல், நமது வேதத்தைவிட்டு,[1]—நம்முடைய
கற்பனைகளைக் கைக்கொள்ளாமல் நம்முடைய
௩௨ பிரமாணங்களைக் கொலைத்துப்போட்டால்,—அ
வர்கள் மீறுதல்களை மிலாறுகளாலும், அவர்கள்
அக்கிரமத்தை வாதைகளாலும் விசாரிப்போம்.—
௩௩ ஆனால் நம்முடைய கிருபையை அவனைவிட்டு
விலக்காமலும், நம்முடைய உண்மையிலே பிச
௩௪ காமலும் இருப்போம்.[2] — நம்முடைய உடம்
படிக்கையைக் கொலைத்துப்போடாமலும், நம்
முடைய உதடுகள் விளம்பினதை மாற்றாமலும்
௩௫ இருப்போம். — தாவீதுக்குப் பொய்சொல்லோ
மென்று ஒருவிசை நம்முடைய பரிசுத்தத்தின்
௩௬ மேலே ஆணையிட்டோம்.—அவன் வித்து என்
றென்றைக்கும் இருக்கும்; அவன் இராசாசனம்
சூரியனைப்போல நமக்குமுன்பாக நிற்கும்.[3] —
௩௭ அது சந்திரனைப்போலே என்றென்றைக்கும்
உறுதியும், ஆகாயமண்டலத்துச் சாட்சியைப்
போலே உண்மையுமாயிருக்குமென்றீர்; சேலா.[4]
௩௮ ஆனால் தேவரீர் எங்களை ஒழித்துவிட்டு வெறு
த்தீர்; நீர் அபிஷேகம்பண்ணுவித்தவன்மேல் உ
௩௯ க்கிரமானீர்.—உம்முடைய தாசனுக்குப் பண்
ணின உடம்படிக்கையை அருவருத்து, அவன்
கிரீடத்தைத் தரையிலே தள்ளி, பரிசுத்தக்கொ
௪௰ லைச்சலாக்கினீர். — அவன் மதில்களை எல்லாம்
தகர்த்துவிட்டு, அவன் அரணிப்புகளை இடிந்த
௪௧ வாக்கினீர் —வழிநடக்கிற அனைவரும் அவனைக்
கொள்ளையிட்டார்கள்; தன் அயலாருக்கு நிந்தை
௪௨ யானான்.[5] — அவன் சத்துருக்களின் வலதுகை
யை உயர்த்தி, அவன் விரோதக்காரர் அனைவருக்
௪௩ கும் சந்தோஷமுண்டாக்கினீர்.—அவனை யுத்தத்
திலே தரிகொள்ளப்பண்ணாமல், அவன் பட்டை
௪௪ யத்தின் கருக்கையும் மழுக்கிவிட்டீர்.—அவன்
துப்புரவை அற்றுப்போகப்பண்ணி, அவன் இரா
௪௫ சாசனத்தைத் தரையிலே தள்ளினீர்.—அவன்
வாலவயதின் நாள்களைக் குறுக்கி, அவனை வெட்
கத்தால் மூடினீர்; சேலா.
௪௬ கர்த்தாவே, எந்தமட்டும்? என்றென்றைக்கும்
மறைந்திருப்பீரோ? எந்தமட்டும் உமது மூர்க்கம்
௪௭ அக்கினியைப்போல எரியும்?[6] — என் ஜீவன்
எத்தனை நிலையற்றதென்கிறதை நினைத்தருளும்;
என் சகலமான மனுப்புத்திரரையும் விருதாவா
௪௮ ய்ச் சிருஷ்டித்திருப்பீர்?-எந்த மனுஷன் மரணத்
தைக் காணாமல் உயிரோடிருந்து, தன் ஆத்துமா
வைப் பாதாள வல்லடிக்கு விலக்கி விடுவிப்
௪௯ பான்? சேலா. — ஆண்டவரே, நீர் தாவீதுக்கு
உம்முடைய உண்மையைக்கொண்டு சத்தியம்
பண்ணின உம்முடைய முந்தின கிருபைகள்
௫௰ எங்கே?—ஆண்டவரே,உம்முடைய சத்துருக்கள்
உம்முடைய ஊழியக்காரனையும், நீர் அபிஷே
கம்பண்ணினவனின் காலடிகளையும் நிந்திக்கி
றதும்,—நான் மகா சனசதளங்களை எல்லாம் ௫௧
என் மடியில் சுமக்கிறதினால் உண்டானதுமான
என் நிந்தையை நினையும் கர்த்தாவே. — கர்த்தர் ௫௨
என்றென்றைக்கும் தோத்திரிக்கப்பட்டவர்;
ஆமென், ஆமென்.

## ௯௰. சங்கீதம்.

*௧. மோசே பராபரனுடைய பராமரிப்பை வெளிப்படுத்தி, ௩. மனிதருடைய சுபாவத்தின் பலவீனத்தையும், ௭. தேவதண்டனைகளையும், ௰. ஆயுசின் குறுமையுங்குறித்து முறையிட்டது. ௧௨. பராபரனுடைய நல்ல பராமரிப்பின் அநுபவத்தை அறிந்து உணர்வதற்காக அவரை வேண்டிக்கொண்டது.*

---

*(பராபரனுடைய மனுஷனாகிய மோசேயின் செபம்.)*

ஆண்டவரே, தேவரீர் தலைமுறைதலைமுறை ௧
யாக எங்களுக்கு அடைக்கலமானவர். — பர் ௨
வதங்கள் தோன்றுமுன்னும், நீர் பூமியையும் பூச்
சக்கரத்தையும் உருவாக்குமுன்னும், தேவரீர்
அநாதியாய் என்றென்றைக்கும் பராபரனாயிருக்
கிறீர்.[7]—நீர் மனிதனை நிர்த்தூளியாக்கி, மனுப் ௩
புத்திரரே, திரும்பிவாருங்களென்கிறீர்,—ஏனெ ௪
ன்றால் ஆயிரம் வருஷம் உமது பார்வைக்கு
நேற்றுக்கழிந்த நாளும், இராச்சாமமும்போல
இருக்கிறது.[8]—அவர்களைப் பெருவெள்ளமாய் ௫
அடித்துக்கொண்டுபோகிறீர்; நித்திரைக்கு ஒத்தி
ருக்கிறார்கள்; காலமே அவர்கள் உருவுமாறிய
புல்லுக்கு ஒப்பானவர்கள்.[9] — அது காலமே ௬
பூத்து உருவுமாறி, சாயங்காலத்தில் அறுப்புண்டு
உலரும்.[10] — ஏனெனில் உமது கோபத்தால் ௭
அழிந்து, உம்முடைய உக்கிரத்தால் கலங்கிப்
போனோம்.[11]—எங்கள் அக்கிரமங்களை உமக்கு ௮
முன்பாகவும், எங்கள் அந்தரங்கமானதை உம்மு
டைய முகத்தின் வெளிச்சத்திலும் நிறுத்தினீர்.—
ஆகையால் எங்கள் நாள்களெல்லாம் உம்மு ௯
டைய சினத்தால் போய்விட்டன; எங்கள் வரு
ஷங்களை ஒரு கதையைப்போலக் கழித்துவிட்
டோம்.—எங்கள் ஆயுசுநாள்களில் எழுபதுவரு ௰
ஷமும், மெதுவாய்ப் பெலத்திருந்தால், எண்
பது வருஷமுமுண்டு; அவைகளின் மேன்மை
யானதோவென்றால் பிரயாசமும் வீணுந்தானே;
ஏனெனில் கடுக அறுப்புண்டு பறந்துபோகி
றோம்.—உமது கோபத்தின் பெலனையும், உமது ௧௧
சினத்தையும், உமக்குப் பயப்படத்தக்க பயமாய்
அறிந்துகொள்ளுகிறவனார்? — நாங்கள் ஞான ௧௨
முள்ள இருதயத்தைத் தரித்துக்கொள்ளும்படி
யாக எங்கள் நாள்களை எண்ணும் அறிவை எங்
களுக்குக் கட்டளையிடும்.
கர்த்தாவே, திரும்பிவாரும்; எந்தமட்டும் கோ ௧௩
பமாயிருப்பீர்? உம்முடைய அடியாருக்காகப்
பரிதபியும். — நாங்கள் எங்கள் நாள்களிலெல் ௧௪
லாம் கெம்பீரித்து மகிழ,காலமே எங்களை உமது
கிருபையாலே திருப்தியாக்கும்.—தேவரீர் எங் ௧௫

1 ௨ சாமு. ௭. ௧௪, ௧௫.—2 ரோ. ௩. ௩.—3 சங். ௭௨. ௫௭. 4 ௧ மோ. ௯. ௧௩, ௧௪. 5 சங். ௮௰. ௧௬.—6 சங். ௭௯. ௫.

7 யாக். ௪. ௨௪. 8 ௨ பேது. ௩. ௮. 9 ஏசா. ௪௰. ௬, ௭.—10 சங். ௩௭. ௨௰, ௧௬.—11 ௧ கொரி. ௰. ௫.

களைச் சிறுமைப்படுத்தின நாள்களுக்கும், நாங்கள் தீங்கைக் கண்ட வருஷங்களுக்கும் ஈடாக
௰௬ எங்களை மகிழ்ச்சியாக்கும்.—உம்முடைய கிரியை உம்முடைய ஊழியக்காரருக்கும், உம்முடைய மகிமை அவர்கள் பிள்ளைகளுக்கும், கா
௰௭ ணப்படுவதாக.—எங்கள் பராபரனுகிய ஆண்டவரின் இன்பம் எங்கள்மேல் இருக்கக்கடவது; எங்கள் கைகளின் கிரியையை எங்களிடத்தில் உறுதிப்படுத்தும்; ஆம், எங்கள் கைகளின் கிரியையை எங்களிடத்தில் உறுதிப்படுத்தும்.

## ௯௧. சங்கீதம்.

*௧. தேவபத்தியுள்ளவர்களுடைய ஸ்திதியும், ௩. காப்பும், ௯ வாசஸ்தலமும், ௰௧. ஊழியக்காரர்களும், ௰௪ சிநேகிதனும், அவர்களுக்குண்டாகிய மற்ற யாவும்.*

௧ உன்னதமானவரின் மறைவிலிருக்கிறவன் சர்வவல்லவருடைய நிழலில் இராத்தங்குவான்.[1]—
௨ கர்த்தரை என்னடைக்கலமும், என் கோட்டையும், நான் நம்பியிருக்கிற என் பராபரனும் என்
௩ கிறேன்.—ஏனெனில் அவர் உன்னைக் குருவிபிடிக்கிறவனுடைய கண்ணிக்கும், விக்கினமான பெருவாரிக்காய்ச்சலுக்கும் தப்புவிப்பார்.[2] —
௪ தம்முடைய சிறகுகளாலே உன்னை மூடுவார்; அவர் செட்டைகளின்கீழே திடன்கொண்டு தங்குவாய்; அவருடைய உண்மை பரிசையும்
௫ கேடயமுமாம்.[3]-இராவின் அருக்களிப்புக்கும்,
௬ பகலில் பறக்கும் அம்புக்கும்,[4]—இருளில் நடமாடும் பெருவாரிக்காய்ச்சலுக்கும், மத்தியானத்தில் பாழ்க்கடிக்கும் சங்காரத்திற்கும், பயப்ப
௭ டாதிருப்பாய்.-உன் பக்கத்தில் ஆயிரம்பேரும், உன் வலதுபுறத்தில் பதினுயிரம்பேரும்விழுந்தா
௮ லும், அது உன்னண்டைக்குச் சேராது.—உன் கண்களால்மாத்திரம் அதைப் பார்த்து, ஆகாதவர்களுக்கு வரும் சரிக்கட்டுதலைக் காண்பாய்.
௯ ஏனெனில் கர்த்தாவே, தேவரீர் என் அடைக்கலமாயிருக்கிறீர்; உன்னதமானவரை உனக்குத்
௰ தாபரமாக வைத்தாய். — பொல்லாப்பு உனக்கு வராமலும், வாதை உன் கூடாரத்தை அணுகாம
௰௧ லும் இருக்கும்.—உனக்காகத் தம்முடைய தூதர்களுக்குக் கற்பிப்பார்; ஏனெனில் உன் வழிகளி
௰௨ லெல்லாம் உன்னைக் காக்கும்படிக்கு,[5] — உன் பாதம் கல்லில் இடறுதபடிக்கு கைகளில் உன்
௰௩ னை ஏந்திக்கொண்டு போவார்கள்.—சிங்கத்தின் மீதிலும் விரியன்பாம்பின் மீதிலும் நடந்து, சிங்கக்குட்டியையும், வலுசர்ப்பத்தையும் மிதித்துவிடுவாய்.[6]
௰௪ நம்முடையமேல் அவன் வாஞ்சையாய் இருக்கிறபடியினுலே, அவனை விடுவிப்போம்; நமது நாமத்தை அவன் அறிந்திருக்கிறபடியினுலே, அவனை உயர்ந்த அடைக்கலத்திலே வைப்போம்.-
௰௫ நம்மைநோக்கிக் கூப்பிடுவான்; நாம் அவனுக்கு மறுவுத்தரவு அருளிச்செய்வோம்; நெருக்கத்தில் நாம் அவனேடிருந்து, அவனைத் தப்புவித்து,
௰௬ அவனை மகிமைப்படுத்துவோம்.—நீடித்த நாள்களால் அவனைத் திருப்தியாக்கி, நமது இரட்சிப்பை அவனுக்குக் காண்பிப்போம்.

## ௯௨. சங்கீதம்.

*௧. பராபரனுடைய உன்னதமான கிரியைகளுக்காகவும், ௬. துன்மார்க்கர் மேலிறங்கும் அவருடைய நியாயத்தீர்ப்புகளுக்காகவும், ௰. தேவபத்தியுள்ளவர்களுக்குண்டாகும் அவருடைய நன்மைக்காகவும், ஆவலாகத் துதிக்கத் தீர்க்கதரிசி தூண்டினது.*

(ஓய்வுநாளின் பாட்டாகிய சங்கீதம்.)

பத்துநரம்பு வீணையாலும், தம்புருவாலும் சுரமண் ௧
டலத்தில் வாசிக்கும் தியானத்தாலும்,—கர்த் ௨
தரைத் துதிக்கிறதும், உன்னதமானவரே, உமது
நாமத்தைக் கீர்த்தனம்பண்ணுகிறதும்,[7]-காலமே ௩
உம்முடைய கிருபையையும் இராத்திரியில் உம்முடைய உண்மையையும், அறிவிக்கிறதும் நல
மாயிருக்கும். — ஏனெனில் கர்த்தாவே, உமது ௪
செய்கைகளால் என்னைமகிழ்ச்சியாக்கினீர்; உம்முடைய கரங்களின் கிரியைகளின்நிமித்தம் கெம்பீரிக்கிறேன்.
கர்த்தாவே, உம்முடைய கிரியைகள் எத்தனைப் ௫
பெரியவைகள்; உம்முடைய சிந்தனைகள் மகா
ஆழமானவைகள்.[8]-மிருககுண மனுஷன் இதை ௬
அறியான்; மூடன் இதை உணரான்.—ஆகாதவர் ௭
கள் புல்லைப்போலே செழித்து, சகல அக்கிரமக்காரரும் பூக்கும்போது, அவை அவர்களை என்
றென்றைக்கும் அழிப்பதற்கு ஆகின்றன.—ஆ ௮
னுல் கர்த்தாவே, என்றென்றைக்கும் உயர்ந்தவர்.
ஏனெனில் இதோ கர்த்தாவே, உம்முடைய ௯
சத்துருக்கள், இதோ உம்முடைய சத்துருக்கள் அழிவார்கள்; சகல அக்கிரமக்காரரும் சிதறுண்
டுபோவார்கள்.-ஆனுல் என் கொம்பைக் காண் ௰
டாமிருகத்தினுடையதைப்போல உயர்த்துவீர்; புது எண்ணெயால் அபிஷேகம்பண்ணப்படுகி
றேன்.[9]-என் சத்துருக்களிலும், என்மேல் எழும் ௰௧
புகிற பொல்லாதவர்களிலும், நடக்கும் சரிக்கட்டுதலை என் கண் கண்டு, என் காதுகள் கேட்கும்.
நீதிமான் பனையைப்போலே செழித்து, ௰௨
லீபனேனிலுள்ள கேதுருவைப்போல வளரு
வான்.[10]—கர்த்தருடைய வீட்டிலே நாட்டப் ௰௩
பட்டவர்கள் எங்கள் பராபரனுடைய முற்றங்க
ளில் செழித்திருப்பார்கள்.-என் கன்மலையாகிய ௰௪
கர்த்தர் உத்தமரென்றும், அவரில் அநியாயப்பிசகில்லையென்றும் அறிவிப்பதற்காக,[11]-அவர்கள் ௰௫
நரைவயதில் இன்னம் கனிதந்து, புஷ்டியும் பச்சையுமாயிருப்பார்கள்.[12]

## ௯௩. சங்கீதம்.

*௧. கிறிஸ்துவின் இராச்சியத்தின் மகத்துவமும், திறமும், தூய்மையும்.*

கர்த்தர் இராசரிகம்பண்ணி, மகத்துவத்தை அ ௧
ணிந்துகொண்டார்; கர்த்தர் அதை அணிந்து பெலத்தினுலே அரைகட்டிக்கொண்டார்; ஆனது
கொண்டு பூச்சக்கரம் அசையாதபடிக்கு உறுதிப்
படும்.[13]—உம்முடைய இராசாசனம் அப்போது உ ௨
முதலாய் உறுதியானது; தேவரீர் அநாதியாக

1 சங். ௭௬:௧௧.௮.-2 சங். ௯௨௪. 4 வாக். ௧.௨௪,௨௫.—5 சங். ௩௪.௮. ௭.-3 சங். ௫௨. ௨. மத். ௨௩. ௩௭. 6 லூக். ௰. ௰௯.—7 சங். ௯௪௭. ௧

8 சங். ௯௪. ௨௬: ௩௬. ௰௭. 10 சங். ௫௨. ௮.-11 ரோ. ௩௨.௪. ௨ ரோ. ௰௧.௩௩.—9 சங். ௮௬.௰௮. 12 சங்.௧.௩.-13 சங். ௬௭.௧: ௯௬.௧.

௩ இருக்கிறீர்.—நதிகள் எழும்பும் கர்த்தாவே,
நதிகள் தங்கள் இரைச்சலை எழும்பும்; நதிகள்
௪ தங்கள் அலைகளை எழும்பும்.—திரளான தண்
ணீரின் இரைச்சலைப்பார்க்கிலும், சமுத்திரத்
தின் வீரியமான அலைகளைப்பார்க்கிலும், கர்த்தர்
௫ உன்னதத்திலே வீரியமானவர்.—[1]உம்முடைய
சாட்சிகள் மகா உண்மையானவைகள்; கர்த்
தாவே, பரிசுத்தம் நித்தியநாளாக உம்முடைய
வீட்டின் அலங்காரமாயிருக்கிறது.[2]

## ௯௪. சங்கீதம்.

௧. நிர்க்கதரின் நீதியைக் கேட்டுக் கொடூரத்தையும், அகந்தையையுங்கு
றித்து முறையிட்டது. ௮. தேவபராமரிப்பை அறிவித்தது. ௰௨. துன்பத்
திலுண்டாகும் நன்மையையும், ௰௬. பராபரன் துன்பப்படுகிறவர்களைக்
காப்பதையுங் காட்டினது.

௧ நீதியைச் சரிக்கட்டுகிற பராபரனாகிய கர்த்தா
வே, நீதியைச் சரிக்கட்டுகிற பராபரனே, பிரகா
௨ சியும்.[3]–பூமியின் நியாயாதிபதியே, நீர் உயர்ந்து
பெருமைக்காரருக்குப் பதிலைச் சரிக்கட்டும்.
௩ கர்த்தாவே, ஆகாதவர்கள் எந்தமட்டும் களி
கூர்ந்து, ஆகாதவர்கள்தானே எந்தமட்டும் களி
௪ கூர்ந்திருப்பார்கள்?—சகல அக்கிரமக்காரரும்,
வாயாடிக் கடினமாய்ப்பேசிப் பெருமைபாராட்
௫ டுகிறார்கள்.—கர்த்தாவே, அவர்கள் உமது சனத்
தை நொறுக்கி, உம்முடைய சுதந்தரத்தை ஒடுக்
௬ கி,— விதவையையும் பரதேசியையும் கொன்று,
௭ திக்கில்லாதவர்களைக் கொலைப்படுத்தி,[4]—கர்த்தர்
பாரா ரென்றும், யாக்கோபின் பராபரன் உணரா
ரென்றும் சொல்லுகிறார்கள்.
௮ சனத்தில் மிருககுணத்தாரே, உணர்வடையுங்
கள்; பயித்தியக்காரரே, எப்போது புத்திமான்க
௯ ளாவீர்கள்? — காதை நாட்டுகிறவர் கேளாரோ?
௰ கண்ணை உருவாக்குகிறவர் காணாரோ?—சாதிக
ளைத் தண்டிக்கிறவர் கடிந்துகொள்ளாரோ? மனு
ஷனுக்கு அறிவைப் போதிக்கிறவர் அறியா
௰௧ ரோ? — கர்த்தர் மனுஷனுடைய நினைவுகளை
அவைகள் மாயையென்று அறிவார்.[5]
௰௨ கர்த்தாவே, ஆகாதவனுக்குக் குழிவெட்டப்
படும்மட்டுக்கும், நீர் தீங்குநாள்களில் அமர்ந்தி
௰௩ ருக்கப்பண்ணிப் புத்திசொல்லி,—உம்முடைய
வேதத்தால் போதிக்கிற மனுஷன் பாக்கிய
௰௪ வான்.—ஏனெனில் கர்த்தர் தம்முடைய சனத்
தை நெகிழாமலும், தம்முடைய சுதந்தரத்தைக்
௰௫ கைவிடாமலும் இருப்பார். — அதேனென்றால்
நியாயம் நீதியாகத் திரும்பும்; செம்மை இருதயத்
தார் அனைவரும் அதைப் பின்செல்லுவார்கள்.
௰௬ என்னோடேகூடப் பொல்லாதவர்களுக்கு
எதிராய் எழும்புபவன் யார்? என்னோடேகூட
அக்கிரமக்காரருக்கு எதிராய் நிற்பவன் யார்?—
௰௭ கர்த்தர் எனக்குத் துணையாய் இராதிருந்தாராகில்,
என் ஆத்துமா மவுனத்தில் வாசமாவதற்குக்
௰௮ கொஞ்சம் தப்புவதாயிருக்கும்.—என் கால் தள்
ளாடுமென்று நான் சொன்னபோதோவெனில்,
கர்த்தாவே, உமது கிருபை என்னைத் தாங்கிற்
று.— என் உள்ளத்தில் என்னுடைய விசாரங்கள் ௰௯
பெருகுகையில், உம்முடைய தேற்றுதல்கள்
என் ஆத்துமாவைத் துளிர்க்கப்பண்ணின.—பிர ௨௰
மாணத்திற்கு மிஞ்சின பாரத்தை உண்டுபண்
ணுகிற கேடுபாடான ஆசனம் உமக்கு ஒத்துவரு
மோ?[6]–அவர்கள் நீதிமானுடைய ஆத்துமாவுக்கு ௨௧
விரோதமாகக் கும்புகூடிக் குற்றமில்லாத இரத்
தத்தைக் குற்றப்படுத்துகிறார்கள்.–ஆனால் கர்த்தர் ௨௨
எனக்கு உயர்ந்த அடைக்கலமும், என் பராபரன்
நான் நம்பிய கல்மலையுமாயிருக்கிறார்.—இவர் அ ௨௩
வர்கள் அக்கிரமத்தை அவர்கள்மேலே திருப்பி,
அவர்கள் பொல்லாப்பின்நிமித்தம் அவர்களைச்
சங்கரிப்பார்; நம்முடைய பராபரனாகிய கர்த்தர்
அவர்களைச் சங்கரிப்பார்.

## ௯௫. சங்கீதம்.

௧. பராபரனுடைய பெருமைக்காகவும், ௬. நன்மைக்காகவும், அவரைத்
துதிக்கவும், ௮. அவரை எய்க்காதபடிக்கும் எச்சரிப்பு.

கர்த்தரைக் கெம்பீரித்துப் பாடி, நம்முடைய ௧
இரட்சிப்பின் கல்மலையைச் சங்கீர்த்தனம்பண்
ணக்கடவோம் வாருங்கள்.—துதியோடே அவர் ௨
சந்நிதிக்குமுன்பாக வந்து, சங்கீதங்களால் அவ
ரை ஆர்ப்பரித்துப் பாடக்கடவோம்.[7] — ஏனெ ௩
னில் கர்த்தர் பெரிய தேவனும், எல்லாத் தேவர்
களின்மேலும் பெரிய இராசாவுமாயிருக்கிறார்.[8]–
அவர் கையில் பூமியின் அந்தரங்கங்கள் இருக் ௪
கின்றன; பர்வதங்களின் உயரங்களும் அவரு
டையவைகள். — சமுத்திரம் அவருடையது; ௫
அவரே அவைகளை உண்டாக்கினார்; வெட்டாந்
தரையை அவருடைய கரங்கள் உருவாக்கின.
நாம் பணிந்து குனிந்து, நம்மை உண்டாக்கின ௬
கர்த்தருக்குமுன்பாக முழங்கால்படியிடக்கட
வோம் வாருங்கள். — ஏனெனில் அவர் நம்மு ௭
டைய பராபரனும், நாம் அவருடைய மேய்ச்
சலின் சனமும், அவருடைய கரத்தின் ஆடுகளு
மாமே; இன்று அவருடைய சத்தத்தைக் கேட்
டீர்களாகில்,[9]—வனாந்தரத்திலே சண்டைமூட் ௮
டுதலிலும், சோதனையின்நாளிலும் நடந்தது
போல, உங்கள் இருதயத்தைக் கடினப்படுத்தா
திருங்கள்.[10]–அங்கே உங்கள் பிதாக்கள் நம்மைச் ௯
சோதித்து, நம்மைப் பரிட்சைபார்த்து, நம்மு
டைய கிரியையையும் கண்டார்கள்.—நாற்பது ௰
வருஷமாக நாம் அந்தச் சந்ததியை அரோசித்து,
அவர்கள் மனந்தப்பி நடக்கிற சனமென்றும்,
அவர்கள் நம்முடைய வழிகளை அறியாதேபோ
கிறவர்களென்றும் சொல்லி,—அவர்கள் நம்மு ௰௧
டைய ஓய்வுக்குள் பிரவேசிப்பதில்லையென்று
நம்முடைய கோபத்திலே ஆணையிட்டோம்.[11]

## ௯௬. சங்கீதம்.

௧. பராபரனுடைய பெருமைக்காகவும், ௮. அவருடைய ஆளுகைக்காகவும்,
௰௩. அவருடைய பொதுத் தீர்ப்புக்காகவும், அவரைத் துதிக்கத் தூண்
டுதல்.

1 சங். ௪௬. ௧: ௬௫. ௮.
2 யோவா. ௰௭. ௭.
3 ௫ மோ. ௩௨. ௩௫. சங். ௬௰. ௨.
4 ஏசே. ௨௨. ௭.—5 ௧ கொரி. ௩. ௨௰.—6 வெளி. ௨. ௰௩: ௰௩. ௨. ௨ கொரி. ௬. ௰௪, ௰௫.
7 சங். ௯. ௨.
8 சங். ௯௬. ௪.
9 எபி. ௩. ௭, ௰௧. சங். ௯. ௬.
10 ௨ மோ. ௰௭. ௭. ௪ மோ. ௨௰. ௰௩.
11 ௪ மோ. ௰௪. ௨௧—௩௰.

௧ கர்த்தரைப் புதுப்பாட்டாய்ப் பாடுங்கள்; பூமி
யின் குடிகளே எல்லாரும் கர்த்தரைப் பாடுங்
௨ கள்.[1]—கர்த்தரைப் பாடி, அவருடைய நாமத்தைத்
தோத்திரித்து, நாளுக்குநாள் அவருடைய இரட்
௩ சிப்பைச் சுவிசேஷமாய் அறிவியுங்கள்.—சாதி
களுக்குள் அவருடைய மகிமையையும், எல்
லாச் சனசதளங்களுக்குள்ளும் அவருடைய
௪ அதிசயங்களையும் விவரியுங்கள். — ஏனெனில்
கர்த்தர் பெரியவரும் மிகுதியாய்த் தோத்திரிக்கப்
பட்டவருமானவர்; அவர் எல்லாத் தேவர்களின்
௫ மீதிலும் பயங்கரமாய் இருக்கிறார்.—ஏனென்
றால் எல்லாச் சனசதளங்களுடைய தேவர்களும்
விக்கிரகங்கள்தானே; கர்த்தரோ வானங்களை
௬ உண்டாக்கினார்.[2] — மகிமையும் கனமும் அவ
ருக்குமுன்பாகவும், வல்லமையும் மகத்துவமும்
அவர் பரிசுத்தஸ்தலத்திலும் இருக்கின்றன.
௭ சனசதளங்களின் வம்சங்களே, கர்த்தருக்கு
மகிமையையும், பெலனையும் செலுத்துங்கள்;
௮ கர்த்தருக்கு அவைகளைச் செலுத்துங்கள்.[3]—கர்த்
தருக்கு அவருடைய நாமத்தின் மகிமையைச்
செலுத்தி, காணிக்கைகளைக் கொண்டுவந்து,
அவருடைய பிரகாரங்களுக்குள் பிரவேசியுங்
௯ கள்.—கர்த்தரைப் பரிசுத்த அலங்காரத்துடனே
பணியுங்கள்; பூமியின் குடிகளே, எல்லாரும்
௰ அவருக்குமுன்பாக நடுங்குங்கள். — கர்த்தர் இ
ராசரிகம்பண்ணுகிறார்; ஆனதுகொண்டு பூச்சக்
கரம் அசையாதபடிக்கு உறுதிப்படுமென்றும்,
சனசதளங்களை நிதானமாய் நியாயந்தீர்ப்பா
ரென்றும், சாதிகளுக்குள்ளே சொல்லுங்கள்.[4]—
௰௧ வானங்கள் மகிழ்ந்து பூமி பூரிப்பாகி, சமுத்திர
௰௨ மும் அதின் நிறைவும் முழங்குவதாக.[5]—நாடும்
அதிலுள்ள அனைத்தும் களிகூருவதாக; அப்போ
து கர்த்தருக்குமுன்பாக எல்லாக் காட்டுவிருட்
௰௩ சங்களும் கெம்பீரிக்கும். — ஏனெனில் அவர்
வருகிறார்; அவர் பூமியை நியாயந்தீர்க்க வருகி
றார்; பூச்சக்கரத்தை நீதியாகவும், சனசதளங்களை
உண்மையாகவும் நியாயந்தீர்ப்பார்.

## ௯௰௭. சங்கீதம்.

௧. பராபரனுடைய இராசரிகத்தின் மகத்துவத்தையும், ௭. விக்கிரகாராதனைக்காரர்மேல் வரும் தேவ கோபாக்கினையைக் குறித்த திருச்சபையின் மகிழ்ச்சியையுஞ் சொன்னது. ௰. தேவபத்தியும், மனமகிழ்ச்சியுமுள்ளவர்களாயிருக்கத் தூண்டினது.

௧ கர்த்தர் இராசரிகம்பண்ணுகிறார்; பூமி பூரிப்
பாகி, திரளான தீவுகள் மகிழக்கடவது.[6]
௨ மேகமும் மந்தாரமும் அவரைச் சுற்றியிருக்
கின்றன; நீதியும் நியாயமும் அவருடைய இரா
௩ சாசனத்தின் மூலமானது.[7] — அக்கினி அவர்
முன்னாலே நடந்து, சுற்றிலும் இருக்கிற அவரு
௪ டைய சத்துருக்களைச் சுட்டெரிக்கிறது.[8]—அவ
ருடைய மின்னல்கள் பூச்சக்கரத்தைப் பிரகா
சிப்பிக்கின்றன; பூமி அவைகளைக் கண்டு அதி
ரும்.—கர்த்தரின் பிரசன்னத்தினாலே பர்வதங் ௫
கள் மெழுகைப்போல உருகும்; சர்வ பூமியினு
டைய ஆண்டவரின் பிரசன்னத்தினாலேதா
னே.—வானங்கள் அவருடைய நீதியை அறி ௬
விக்கும்; எல்லாச் சனசதளங்களும் அவருடைய
மகிமையைக் காண்பார்கள்.[9] — சுரூபங்களை ௭
வணங்கி, விக்கிரகங்கள்மேலே பெருமைபாரா
ட்டுகிற யாவரும் வெட்கக்கடவார்கள்; எல்லாத்
தேவர்களே அவரைப் பணியுங்கள்.[10]
சீயோன் கேட்டு மகிழும்; கர்த்தாவே, உம்மு ௮
டைய நியாயத்தீர்ப்புகளாலே யூதாவின் குமாரத்
திகள் களிகூருவார்கள்.—ஏனென்றால் கர்த்தா ௯
வே, தேவரீர் சர்வ பூமியின்மீதிலும் உன்னதமா
னவர்; எல்லாத் தேவர்கள்மீதிலும் மிகுதியும்
உயர்ந்திருக்கிறீர்.
கர்த்தரைச் சிநேகிக்கிறவர்களே, பொல்லாப ௰
யைப் பகையுங்கள்; அவர் தம்முடைய பரிசுத்
தவான்களின் ஆத்துமாக்களைக் காப்பாற்றி, அ
வர்களை ஆகாதவர்களின் கைக்குத் தப்புவிக்கி
றார்.[11]—நீதிமானுக்கு வெளிச்சமும், செம்மை ௰௧
இருதயத்தாருக்கு மகிழ்ச்சியும் விதைக்கப்பட்
டிருக்கின்றன.[12]—நீதிமான்களே, கர்த்தருக்குள் ௰௨
மகிழ்ந்து அவருடைய பரிசுத்தம் பிரஸ்தாபமா
கும்படியாகத் துதியுங்கள்.[13]

## ௯௰௮. சங்கீதம்.

௧. சங்கீதக்காரன் யூதர்களையும், ௪. புறச்சாதியாரையும், ௭. மற்றச் சிருஷ்டிகள் யாவையும் பராபரனைத் துதிக்கத் தூண்டினது.

(சங்கீதம்.)

கர்த்தரைப் புதுப்பாட்டாய்ப்பாடுங்கள்; ஏனெ ௧
னில் அதிசயங்களைச் செய்கிறார்; அவருடைய
வலதுகரமும், அவருடைய பரிசுத்த புயமும்
அவருக்கு இரட்சிப்புண்டாக்குகின்றன.[14]
கர்த்தர் தம்முடைய இரட்சிப்பைப் பிரஸ்தா ௨
பமாக்கி, தமது நீதியைச் சாதிகளுடைய கண்க
ளுக்குமுன்பாக விளங்கப்பண்ணுகிறார்.—அவர் ௩
இஸ்ரவேல் வீட்டுக்காகத் தமது கிருபையையும்,
தமது உண்மையையும் நினைக்கிறார்; பூமியின்
எல்லைகளெல்லாம் நமது பராபரனுடைய இரட்
சிப்பைக் காணுகிறது.
பூமியின் குடிகளே, எல்லாரும் கர்த்தருக் ௪
கென்று ஆர்ப்பரியுங்கள்; முழங்கிக் கெம்பீரித்
துப் பாடுங்கள்.[15]—கர்த்தரைச் சுரமண்டலத்தால் ௫
கீர்த்தனம்பண்ணுங்கள்; சுரமண்டலத்தாலும்,
கீதசத்தத்தாலுந்தானே.[16]—கர்த்தராகிய இராசா ௬
வுக்குமுன்பாகப் பூரிகைகளாலும் எக்காள சத்
தத்தாலும் கெம்பீரியுங்கள்.—சமுத்திரமும், அ ௭
தின் நிறைவும், பூச்சக்கரமும், அதில் குடியிருக்
கிறவர்களும் முழங்குவதாக.[17]—கர்த்தருக்குமுன் ௮
பாக ஆறுகள் கைகொட்டவும், பர்வதங்கள்
ஏகமாய்க் கெம்பீரிக்கவும் கடவன.—ஏனெனில் ௯

1 சங். ௯௮. ௧. அபி. ௫. ௯: ௪. ௧. ௧௪. ௰௧.—2 எசா. ௪௰. ௧௨.—3 சங். ௨௯. ௧, ௨. 4 சங். ௯௩. ௧. வெளி. ௰௧. ௰௫.
5 சங். ௯௮. ௭. ௯. 6 சங். ௯௬. ௧: ௯௯. ௧. 7 சங். ௮௯. ௰௪. 8 சங். ௫௦. ௩. மல்கி. ௪. ௧.
9 சங். ௫௦. ௬. வெளி. ௧. ௭. 10 எபி. ௧. ௬.—11 ஆமோ. ௫. ௧௫, ௬௯. ௨௦. ௰௨.—12. சங். ௧௧௨. ௪.—13. சங். ௩௨. ௧௧: ௩௩. ௧.
14 சங். ௯௯. ௧. 15 சங். ௯௬. ௧.—16 சங். ௯௨. ௩. 17 சங். ௯௬. ௰௧.

அவர் பூமியை நியாயந்தீர்க்க வருகிறார்; பூச்சக்
கரத்தை நீதியோடும், சனசதளங்களை மகா நிதா
னத்தோடும் நியாயந்தீர்ப்பார்.[1]

## கூகூ. சங்கீதம்.

க. தீர்க்கதரிசி சீயோனிலிருக்கிற பராபரனுடைய இராசரியத்தைக் காட்டி, ௬. முன்னோர்களின் மாதிரிப்படி பரிசுத்தபர்வதத்திலே அவரை வணங்கத் தூண்டினது.

க கர்த்தர் இராசரிகம்பண்ணுகிறார்; சனசதளங்
கள் தத்தளிக்கக்கடவன; கேருபீன்கள்மேல் வா
சமாயிருக்கிறவர் இராசரிகம்பண்ணுகிறார்; பூமி
உ அசைவதாக.[2] — கர்த்தர் சீயோனிலே பெரிய
வர்; அவர் எல்லாச் சனசதளங்கள்மேலும் உயர்ந்
ங தவர்.—உம்முடைய மகத்துவமும் பயங்கரமு
மான நாமத்தைத் துதிப்பார்கள்; ஏனெனில் அ
ச வை பரிசுத்தமானவை.—நியாயத்தைச் சிநேகிக்
கிற இராசாவின் பெலத்தையும் துதிப்பார்களாக;
தேவரீர் நிதானங்களை நிலைநிறுத்துகிறீர்; தேவரீர்
யாக்கோபிலே நியாயமும் நீதியும் செய்கிறீர்.—
ரு நம்முடைய பராபரனாகிய கர்த்தரை உயர்த்தி,
அவர் பாதப்படியிலே பணியுங்கள்; ஏனெனில்
பரிசுத்தராயிருக்கிறார்.
சு அவருடைய தாசருக்குள்ளே மோசேயும், ஆ
ரோனும், அவர் நாமத்தைநோக்கிக் கூப்பிடுகிற
வர்களுக்குள்ளே சாமுவேலும் செய்ததுபோ
லத்தானே; கர்த்தரைநோக்கிக் கூப்பிட்டார்
கள், அப்பொழுது அவர்களுக்கு மறு உத்தரவு
எ அருளிச்செய்தார்.—மேகத்தூணில் அவர்களோ
டே பேசினார்; அவருடைய சாட்சிகளையும்,
அவர் தங்களுக்குக் கொடுத்த பிரமாணத்தையும்,
அ கைக்கொண்டார்கள். — எங்கள் பராபரனாகிய
கர்த்தாவே, தேவரீர் அவர்களுக்கு உத்தரவு அரு
ளிச்செய்தீர்; அவர்களுக்கு மன்னிக்கிறவரும்,
அவர்கள் செய்கைகளுக்கு நீதியைச் சரிக்கட்டு
கூ கிறவருமான தேவனாயிருந்தீர். — நம்முடைய
பராபரனாகிய கர்த்தரை உயர்த்தி, அவருடைய
பரிசுத்த பர்வதத்திற்கு நேராகப் பணியுங்கள்;
ஏனெனில் நம்முடைய பராபரனாகிய கர்த்தர்
பரிசுத்தராயிருக்கிறார்.

## ௱. சங்கீதம்.

க. பராபரனுடைய பெருமைக்காகவும், ௩. அவருடைய வல்லமைக்காகவும், அவரைக் களிப்புடனே துதிக்கத் தூண்டுதல்

(துதி சங்கீதம்.)

க பூமியின் குடிகளே, எல்லாரும் கர்த்தரை ஆர்ப்
உ பரியுங்கள்.[3] — கர்த்தருக்கு மகிழ்ச்சியோடே
ஆராதனைசெய்து, கெம்பீர சத்தத்தோடே அவர்
ங முன்பாக வாருங்கள்.—கர்த்தரே பராபரனென்
று அறியுங்கள்; நாமல்ல, அவரே நம்மைத் தமக்
குச் சனமும் தம்முடைய மேய்ச்சலின் ஆடுகளு
ச மாக்கினார்.[4]—அவர் வாசல்களிலே துதியோடும்
அவர் பிரகாரங்களில் புகழ்ச்சியோடும் பிரவே
சித்து, அவரைத் துதித்து, அவருடைய நாமத்
ரு தைத் தோத்திரியுங்கள்.—ஏனெனில் கர்த்தர் நல்
லவர்; அவருடைய கிருபை என்றென்றைக்கும்,
அவருடைய உண்மை தலைமுறைதலைமுறையா
கவுமுள்ளது.[5]

## ௱க. சங்கீதம்.

க. தேவபத்திக்குத் தாவீதின் பிரார்த்தனையும், அறிக்கையிடுதலும்.

(தாவீதின் சங்கீதம்.)

கிருபையையும், நியாயத்தீர்ப்பையுங்குறித்துப் க
பாடுவேன்; கர்த்தாவே, உம்மைக் கீர்த்தனம்
பண்ணுவேன் —உத்தமமான வழியிலே விவேகி உ
யாயிருப்பேன்; எப்பொழுது என்னண்டைக்கு
வருவீர்? என் மன உண்மையாய் என் வீட்டுக்
குள் நடந்துகொள்வேன்.—நான் பேலியாளின் ங
விசேஷத்தை என் கண்களுக்குமுன்பாக வைப்
பதில்லை; வழிவிலகுகிறவர்களின் செய்கை
யைப் பகைக்கிறேன்; அவை என்னோடு ஒட்
டிக்கொள்ளாது.—மாறுபாடான இருதயம் என் ச
னைவிட்டு அகலவேண்டும்; பொல்லாதவனை
நான் அறிவதில்லை.—தனக்கடுத்தவனை அந்தரங் ரு
கத்திலே அவதூறுபண்ணுகிறவனைச் சங்கரிப்
பேன்; மேட்டிமைக் கண்ணனையும், பெருமை
நெஞ்சுள்ளவனையும் பொறுக்கமாட்டேன்.[6] —
என்னோடே வாசம்பண்ண என் கண்கள் தேசத் சு
தில் உண்மையானவர்களைப் பார்க்கும்; உத்தம
மான வழியில் நடக்கிறவனே என்னைச் சேவிப்
பான்.—கபடம்செய்கிறவன் என் வீட்டுக்குள் எ
இருப்பதில்லை; பொய்களைச் சொல்லுகிறவன்
என் கண்களுக்குமுன்பாக நிலைப்பதில்லை.—
எல்லா அக்கிரமக்காரரையும் கர்த்தருடைய பட் அ
டணத்தில் இராதபடிக்கு, வேரறுக்கத் தேசத்தில்
ஆகாதவர்களை எல்லாம் அதிகாலமே சங்கரிப்
பேன்.

## ௱உ. சங்கீதம்.

க. தீர்க்கதரிசி தன் செபத்திலே துக்கித்து முறையிட்டது. ௰உ. பராபரனுடைய நித்தியத்திலும், இரக்கத்திலும் ஆறுதலடைந்தது ௰அ. அவருடைய இரக்கங்கள் எழுதப்படவேண்டியதென்பது. உக அவருடைய மாறாத தன்மையால் தன் பெலஈனத்தைத் தாங்கினது.

(சிறுமையானவன் தொய்ந்து, கர்த்தருக்குமுன்பாகத் தன் கெஞ்சுதலை ஊற்றிச் செய்யும் விண்ணப்பம்.)

கர்த்தரே, என் விண்ணப்பத்தைக் கேளும்; என் க
கூப்பிடுதல் உம்மண்டைக்குச் சேர்வதாக. —
எனக்கு நெருக்கம் உண்டாகியநாளிலே உமது உ
முகத்தை எனக்கு மறைக்காதிரும்; உமது செவி
யை என்னண்டைக்குச் சாயும்; நான் கூப்பிடு
கிறநாளிலே எனக்குத் தீவிரமாய் உத்தரவு அரு
ளிச்செய்யும்.
ஏனெனில் என் நாள்கள் புகையைப்போலே ங
பறிந்தன; என் எலும்புகள் ஒரு கொள்ளியைப்
போல எரியுண்டன.—என் இருதயம் ஒரு பூண் ச
டைப்போல வெட்டுண்டு உலர்ந்தது;ஆகையால்
என் அப்பத்தைப் புசிக்க மறக்கிறேன்.—என் ரு
பெருமூச்சின் சத்தத்தினாலே என் எலும்புகள்
என் மாம்சத்தோடு ஒட்டிக்கொள்ளுகின்றன.—

1 சங். கூ. கூ: கூக. ௰க.—2 சங். கூக. க: கூஎ. க.—3 சங். கூஅ. ச.
4 சங். கூ௬. எ.—5 சங். ௱௰எ. உ.—6 சங். ௰௬. க.

௬ வனாந்தர நாரைக்கு ஒப்பானேன்; பாழ்ந்தலங்
களில் தங்கிய ஆந்தையைப்போலானேன். —
௭ நான் நித்திரையில்லாமல் வீட்டின்மேல் தனித்தி
ருக்கும் குருவியைப்போல இருக்கிறேன். —
௮ நாள்தோறும் என் சத்துருக்கள் என்னை நிந்திக்கி
றார்கள்; எனக்கு விரோதமாய்ப் பெருமைபாரா
ட்டுகிறவர்கள் என்மேல் ஆணையிடுகிறார்கள்.[1]—
௯ ஏனெனில் உமது சினத்தாலும், உமது கடுங்கோ
பத்தாலும், நான் சாம்பலை அப்பமாகப் புசித்து,
என் பானங்களை அழுகையோடே கலக்குகி
௰ றேன்.—ஏனெனில் என்னைத் தூக்கித் தாழத்
தள்ளினீர்.
௰௧ என் நாள்கள் சாய்ந்துபோகிற நிழலைப்போ
லாயின; நான் ஒரு பூண்டைப்போல உலருகி
௰௨ றேன்.[2]—ஆனால் கர்த்தாவே, தேவரீர் என்றென்
றைக்கும் இருக்கிறீர்; உம்முடைய பேர்ப்பிரஸ்
௰௩ தாபம் தலைமுறை தலைமுறையாக நிற்கும்.—தே
வரீர் எழுந்தருளி, சீயோனுக்கு இரங்குவீராக;
ஏனெனில் அதின்மேல் தயையாகிறதற்குக் கால
மாம்; அதேனென்றால் அதற்காகக் குறித்தநே
௰௪ ரம் வந்தது.—ஏனெனில் உம்முடைய ஊழியக்
காரர் அதின் கற்கள்மேல் ஆசைவைத்து, அதின்
மண்ணுக்குப் பரிதபிக்கிறார்கள்.
௰௫ கர்த்தர் சீயோனைக் கட்டி, தமது மகிமையில்
வெளிப்பட்டு,
௰௬ சகாயமற்றவனுடைய விண்ணப்பத்தை அசட்
டைபண்ணாமல், அவர்கள் செபத்தைநோக்கிப்
௰௭ பார்க்கும்போது,—சாதிகள் கர்த்தருடைய நாமத்
துக்கும், பூமியிலுள்ள இராசாக்களெல்லாம் உம்
முடைய மகிமைக்கும் பயப்படுவார்கள். —
௰௮, ௰௯ இது பின் சந்ததிக்கு எழுதப்படும்.—கர்த்
தர் கட்டுண்டவர்களின் பெருமூச்சைக் கேட்க
வும், கொலைக்கு நியமிக்கப்பட்டவர்களை விடுத
௨௰ லையாக்கவும், — தம்முடைய பரிசுத்த உயரத்தி
லிருந்து பார்த்து, வானங்களிலிருந்து பூமியின்
மேலே கண்ணோக்கினார் என்கிறதின்நிமித்தம்
சிருஷ்டிக்கப்படப்போகிற சனம் கர்த்தனைத்
௨௧ துதிக்கும்.—கர்த்தருக்கு ஆராதனைசெய்ய, சன
சதளங்களும் இராச்சியங்களும் ஏகமாய்க் கூடிக்
௨௨ கொள்ளுகையில்,—சீயோனிலே கர்த்தருடைய
நாமத்தையும், எருசலேமிலே அவருடைய துதி
யையும் விவரிப்பார்கள்.
௨௩ என் பெலனையோ வழியிலே ஒடுக்கி, என்
௨௪ நாள்களைக் குறுக்குகிறார். — என் பராபரனே,
என்னை என் ஆயுசின் பாதியில் எடுத்துக்கொள்
ளாதிரும் என்கிறேன்; உம்முடைய வருஷங்கள்
௨௫ தலைமுறை தலைமுறைகளாக இருக்கும்.—பூர்வத்
திலே பூமியை அஸ்திபாரப்படுத்தினீர்; வானங்
கள் உம்முடைய கைகளின் கிரியையாயிருக்
௨௬ கின்றன.[3] — அவைகள் அழிந்துபோம்; நீரோ
நிலைநிற்பீர்; அவைகளெல்லாம் வஸ்திரம்போ
லப் பழையவைகளாய்ப்போம்; அவைகளை ஒரு
சால்வையைப்போல மாற்றுவீர்; அவைகள் மாறி
ப்போகும்.—நீரோவென்றால் இருக்கிறபிரகார ௨௭
மாக இருக்கிறீர்; உம்முடைய வருஷங்கள் மு
டிந்துபோவதில்லை.—உம்முடைய அடியாரின் ௨௮
பிள்ளைகள் நிலைகொண்டிருப்பார்கள்; அவர்கள்
வித்து உமக்குமுன்பாக உறுதிப்படும்.[4]

## ௱௩. சங்கீதம்.

௧ பராபரனுடைய இரக்கத்திற்காகவும், ௰௫. அதிலே நிலைபெற்றிருப்பதற்காகவும், அவரைப் புகழத் தூண்டுதல்.

(தாவீதின் சங்கீதம்.)

என் ஆத்துமாவே, கர்த்தனையும், என் முழு ௧
உள்ளமே, அவருடைய பரிசுத்தநாமத்தையும்
தோத்திரி.—என் ஆத்துமாவே, கர்த்தனைத் தோத் ௨
திரி, அவர் செய்த சகல உபகாரங்களையும் மற
வாதிரு.

அவர் உன் அக்கிரமங்களை எல்லாம் மன்னித் ௩
து, உன் நோக்காட்டையெல்லாம் குணமாக்
கி,—உன் பிராணனை அழிவுக்கு விலக்கி மீட்டு, ௪
உன்னைக் கிருபையாலும் இரக்கங்களாலும் முடி
சூட்டி,[5]—உன் வாயை நன்மையால் திருப்தி ௫
யாக்குகிறதினாலே, கழுகுக்குச் சமானமாய் உன்
வயது திரும்ப வாலவயதுபோலாகிறது.

ஒடுக்கப்பட்ட யாவருக்கும் கர்த்தர் நீதியும் ௬
நியாயமும் செய்கிறார்.—அவர் தம்முடைய வழி ௭
களை மோசேக்கும், தம்முடைய கிரியைகளை
இஸ்ரவேல் புத்திரருக்கும் தெரியப்பண்ணி
னார்.—கர்த்தர் மன உருக்கமும், இரக்கமும், நீண் ௮
டசாந்தமும், மிகுந்த கிருபையுமுள்ளவர்.[6]—
நித்தியகாலமாக வழக்காடார்; என்றைக்கும் ௯
கோபம்வைக்கார்.[7]—அவர் நம்முடைய பாவங் ௰
களுக்குத்தக்கதாக நமக்குச் செய்யாமலும், நம்
முடைய அக்கிரமங்களுக்குத்தக்கதாக நமக்குச்
சரிக்கட்டாமலும் இருக்கிறார். — ஏனெனில் ௰௧
பூமியின்மேல் வானமிருக்கும் உயரம்போல அ
வருடைய கிருபை அவருக்குப் பயந்தவர்கள்
மேல் வல்லபமாயிருக்கிறது.—மேற்குக்கும் கிழ ௰௨
க்குக்குமிருக்கும் தூரமாக நம்முடைய மீறுதல்
களை நம்மைவிட்டு விலக்குகிறார். — தகப்பன் ௰௩
பிள்ளைகளுக்கு இரங்குவதுபோல, கர்த்தர் தமக்
குப் பயந்தவர்களுக்கு இரங்குகிறார்.

ஏனென்றால் நாம் என்ன உருவென்று அவர் ௰௪
அறிவார்; நாம் மண்ணென்று நினைவுகூருகி
றார்.—மனுஷன் தன் நாள்களில் புல்லுக்கு ஒப் ௰௫
பாயிருக்கிறான்; வெளியின் புஷ்பத்தைப்போல
பூக்கிறான்.[8] — ஏனெனில் காற்று அதின்மேல் ௰௬
வீசிக் கடந்தவுடனே அது போயிற்று; அதின்
தலம் அப்புறம் அதை அறிந்திராது. — ஆனால் ௰௭
கர்த்தருடைய கிருபை அவருக்குப் பயந்தவர்
கள்மேலும், அவருடைய நீதி அவர்கள் பிள்ளை
களுடைய பிள்ளைகளின்மேலும் அநாதியாய்
என்றென்றைக்கும் உள்ளது.[9] — அவருடைய ௰௮

1 புலம். ௨. ௰௫, ௰௬.
2 சங். ௱௰. ௫, ௧ யோபு. ௰௪ ௨.
3 எபி. ௧. ௰௨.
4 சங். ௧௬. ௧௭.-5 யோபு.௩௩.௨௪, ௨௫, ௨௮.—6 சங். ௮௬. ௰௫: ௱௪௫. ௮. உ மோ. ௩௪. ௬.
7 எசா. ௫௭. ௰௬.
8 சங். ௯௰. ௫, ௬. யோபு. ௰௪.
௧, ௨. எசா. ௪௰. ௬, அ. ௲
9 சங். ௬௰௭. ௨.

உடம்படிக்கையைக் கைக்கொண்டு, அவரு
டைய கட்டளைகளை அவைகளின்படி செய்யும்
படியாக நினைக்கிறவர்களின்மேலேதானே.[1]
௰௯ கர்த்தர் வானங்களில் தம்முடைய ஆசனத்தை
உறுதிப்படுத்தினார்; அவருடைய இராசரீகம் சக
௨௰ லத்தையும் ஆளுகிறது.—கர்த்தருடைய சொற்
படி கேட்டு, அவருடைய வசனத்தின்படி செய்
கிற பெலத்த சவுரியவான்களாகிய அவருடைய
௨௧ தூதர்களே, அவரைத் தோத்திரியுங்கள்.[2]—கர்த்த
ருக்குப் பிரியமானதைச் செய்து, அவர் வேலை
யாள்களாயிருக்கிற அவருடைய எல்லாச் சேனை
௨௨ களே, அவரைத் தோத்திரியுங்கள்.—கர்த்தர் ஆளு
கிற எவ்விடங்களிலுமுள்ள அவருடைய எல்
லாக் கிரியைகளே, அவரைத் தோத்திரியுங்கள்;
என் ஆத்துமாவே கர்த்தரைத் தோத்திரி.

## ௱௪. சங்கீதம்.

௧. பராபரனுடைய வல்லமைபொருந்திய பராக்கிரமத்தையும், ௭. அதிசயமுறும் பராமரிப்பையுங்குறித்த தியானம். ௩௧. அவருடைய மகிமை என்றுமுள்ளதென்பது. ௩௩. தீர்க்கதரிசி தான் பராபரனை என்றும் துதிக்கப் பிரார்த்தனைபண்ணிக்கொண்டது.

௧ என் ஆத்துமாவே, கர்த்தரைத் தோத்திரி; என்
பராபரனாகிய கர்த்தாவே, மிகவும் பெரியவராயி
ருக்கிறீர்; மகிமையையும் கனத்தையும் அணிந்து
௨ கொண்டிருக்கிறீர்.[3]—வெளிச்சத்தை வஸ்திரம்
போல உடுத்து, வானங்களைத் திரையைப்போல
௩ விரித்திருக்கிறார்.[4]—தம்முடைய மேல்வீடுகளைத்
தண்ணீர்களால் மச்சுப்பாவி, மேகங்களைத் தமது
இரதமாக்கி, காற்றினுடைய செட்டைகளின்
௪ மேலே நடக்கிறார்.[5]—தம்முடைய தூதரை ஆவி
களும், தம்முடைய வேலைக்காரரை அக்கினிக்
கொழுந்துகளும் ஆக்குகிறார்[6]
௫ பூமியை அதின் மூலங்களின்மேல் அது நித்த
காலமும் என்றைக்கும் அசையாதபடிக்கு அஸ்
௬ திபாரப்படுத்தினார்.—அதை உடுப்பினால் மூடுவ
துபோல ஆழத்தால் மூடினீர்; பர்வதங்களின்
௭ மேலே தண்ணீர்கள் நின்றன.—அவைகள் உம்
முடைய உதம்புதலால் விலகியோடி, உமது குமு
௮ றலின் சத்தத்தால் முறிந்துபோயின.—மலைகள்
வளர்ந்து, பள்ளத்தாக்குகள் நீர் அவைகளுக்கு
அஸ்திபாரப்படுத்தின இடமாய்த் தாழ்ந்தன.—
௯ அவைகள் பூமியை மூடத்திரும்பாதபடிக்கு அ
வைகள் கடவாதிருக்கும் எல்லையை வைத்தீர்.[7]
௰ மலைக்கு நடுவாய் ஓட பள்ளத்தாக்குகளில்
௰௧ ஊற்றுகளை வரவிடுகிறீர். — அவைகள் வெளி
யின் சீவன்களுக்கெல்லாம் தண்ணீர் காட்டும்;
அங்கே காட்டுக்கழுதைகள் தங்கள் தாகத்தைத்
௰௨ தீர்க்கும்.—அவைகளின் ஓரமாய் ஆகாயத்துப்
பறவைகள் சஞ்சரித்து கிளைகளுக்குள்ளிருந்து
௰௩ சத்தம்காட்டும்.—பர்வதங்களுக்குத் தம்முடைய
மேல்வீடுகளிலிருந்து தண்ணீர் இறைக்கிறார்;
உம்முடைய கிரியைகளின் பலனாலே பூமி
திருப்தியாகும்.

மிருகங்களுக்குப் புல்லையும், மனிதருக்கு ௰௪
ஆகாரமாகப் பயிர்வகைகளையும் முளைப்பித்து,
பூமியிலிருந்து அப்பத்தையும் வரப்பண்ணுகி
றார்.—கொடிமுந்திரிகைப்பழஇரசம் மனிதனு ௰௫
டைய இருதயத்தை முகக்களை எண்ணெயாய்
விளங்க மகிழ்ச்சியாக்கும்; அப்பம் மனிதனு
டைய இருதயத்தை ஆதரிக்கும்.—கர்த்தருடைய ௰௬
விருட்சங்களும், அவர் நாட்டின லீபனோனின்
கேதுருக்களும் ரசனை நிரம்பிப்போம்.—அங்கே ௰௭
குருவிகள் கூடுகட்டும், பாய்மரவிருட்சங்கள்
கொக்குகளின் குடியிருப்பு.—உயர்ந்த பர்வதங் ௰௮
கள் காட்டாடுகளுக்காயின; கல்மலைகள் குழி
முசல்களுக்கு அடைக்கலம்

சந்திரனைக் காலக்குறிப்புகளுக்காகப் படைத் ௰௯
தார்; சூரியன் தன் அஸ்தமிப்பை அறியும்.—
இராத்திரியாகும்படிக்கு இருளைக் கட்டளையி ௨௰
டுகிறீர்; அதிலே சகல காட்டுச்சீவன்களும் நட
மாடும்.—சிங்கக்குட்டிகள் இரைக்கும், பராபர ௨௧
னால் தங்கள் ஆகாரத்தைத் தேடுகிறதற்கும் கெர்ச்
சிக்கும். — சூரியன் உதிக்கையில் அவைகள் ௨௨
ஒதுங்கி, தங்கள் தாபரங்களில் படுத்துக்கொள்
ளும்.—அப்போது மனிதன் தன் வேலைக்கும், ௨௩
தன் பண்ணைக்கும் சாயங்காலமட்டாகப் புறப்
படுகிறான்.

கர்த்தாவே, உம்முடைய கிரியைகள் எத்தனை ௨௪
திரள்; அவைகளை எல்லாம் ஞானமாய்ப் படைத்
தீர்; பூமி உம்முடைய பொருள்களால் நிறைந்
திருக்கிறது. — இந்தப் பெரியதும் விஸ்தாரமு ௨௫
மான சமுத்திரமுந்தானே; அங்கே சிறியவைக
ளும் பெரியவைகளுமாய் அசைவாடுகிற எண்
ணிக்கைக்குள் அடங்காத சீவன்களுண்டு. —
அங்கே கப்பல்களும், அதில் விளையாட நீர் உரு ௨௬
வாக்கின திமிங்கலங்களும் நடமாடும்,—தங்களு ௨௭
டைய ஆகாரத்தை ஏற்றவேளையிலே தர அவை
களெல்லாம் உம்மை நம்பியிருக்கும்.[8]—அவை ௨௮
களுக்கு நீர் கொடுக்க வாங்கிக்கொள்ளும்; நீர்
உம்முடைய கையைத் திறக்க நன்மையால் திரு
ப்தியாகும்.—நீர் உமது முகத்தை மறைக்கத் ௨௯
திகைக்கும்; நீர் அவைகளின் சுவாசத்தை வாங்
கிக்கொள்ள அவைகள் மாண்டு, தங்கள் தூளுக்
குத் திரும்பும்.–நீர் உம்முடைய ஆவியை அனுப் ௩௰
பும்போது சிருஷ்டிக்கப்படும்; பூமியின் உரு
வையும் புதிதாக்குகிறீர்.

கர்த்தருடைய மகிமை என்றென்றைக்கும் ௩௧
இருப்பதாக; கர்த்தர் தம்முடைய கிரியைகளால்
மகிழுவாராக.[9]—அவர் பூமியை நோக்கிப்பார்க் ௩௨
கிறபோது அதிரும்; அவர் பர்வதங்களைத் தீண்
டுகிறபோது புகையும். — நான் உயிரோடிருக் ௩௩
கையில் என் கர்த்தாவைப் பாடுவேன்; நான் இ
ருக்கும்மட்டுக்கும் என் பராபரனைக் கீர்த்தனம்
பண்ணுவேன்.[10] — அவர்மேல் இருக்கிற என் ௩௪
தியானம் இனிதாயிருக்கும்; நான் கர்த்தருக்குள்

1 ௫ மோ. ௭.௯.—2 தானி. ௭. ௰. ௯. எசா. ௬௰. ௨௨: ௪௪. ௨௪.
3 சங். ௯௰௩. ௧.—4 ௧ பேர். ௧. 5 சங். ௰௮. ௰௧.—6 எபி. ௧. ௭.
7 ௧ மோ. ௧. ௯. யோபு. ௩௮. ௰, ௰௧. வாக். ௮. ௨௯.—8 சங். ௱௪௫. ௰௫. 9 ௧ மோ. ௧ ௩௧. 10 சங். ௱௪௬. ௨.

௩௫ மகிழுவேன்.—பாவிகள் பூமியிலிருந்து நிர்மூல
மாகி, ஆகாதவர்கள் இனியிராமல்போகக்கட
வார்கள்; என் ஆத்துமாவே, கர்த்தரைத் தோத்
திரி; அல்லேலூயா.

## ௱௫. சங்கீதம்.

௧. பராபரனைத் துதிப்பதற்கும், அவருடைய கிரியைகளை ஆராய்வதற்கும் தூண்டுதல். ௭. ஆபிரகாமையும், ௰௬. எகிப்திலே யோசேப்பையும், யாக்கோபையும், காப்பாற்றினதற்கும், ௨௬. மோசே இஸ்ரவேலரை விடுதலைபண்ணினதற்கும். ௩௭. அவர்களை எகிப்திலிருந்து வெளியே கொண்டுவந்து வனாந்தரத்தில் போஷித்து, கானான்தேசத்தில் நிலைக்கச்செய்ததற்கும், தேவவிசாரணையின் திருஷ்டாந்தம்.

௧ கர்த்தரைத் துதித்து, அவருடைய நாமத்தைப்
பிரஸ்தாபமாக்குங்கள்; அவருடைய செய்கைக
ளைச் சனசதளங்களுக்குள்ளே அறிவியுங்கள்.—
௨ அவரைப் பாடி, அவரைக் கீர்த்தனம்பண்ணி,
அவருடைய அதிசயங்களை எல்லாம் தியானித்
௩ துப் பேசுங்கள்.—அவருடைய பரிசுத்த நாமத்
திற்காக மேன்மைபாராட்டுங்கள்; கர்த்தரைத்
௪ தேடுகிறவர்களின் இருதயம் மகிழ்வதாக.—கர்த்
தருக்காகவும் அவர் வல்லமைக்காகவும் விசாரித்
துக்கேட்டு, நித்தம் அவர் சமுகத்தைத் தேடுங்
௫ கள். — அவருடைய தாசனாகிய ஆபிரகாமின்
வித்தே, அவரால் தெரிந்துகொள்ளப்பட்டவர்க
௬ ளாகிய யாக்கோபின் புத்திரரே,—அவர் செய்த
அவருடைய அதிசயங்களையும், அவருடைய
அற்புதங்களையும் அவர் வாக்கின் நியாயத்தீர்ப்
புகளையும் நினையுங்கள்.
௭ அவரே நம்முடைய பராபரனாகிய கர்த்தர்;
பூமியெங்கும் அவருடைய நியாயத்தீர்ப்புகள்
௮ விளங்கும்.—அவர் ஆயிரந்தலைமுறைக்குக் கட்
டளையிட்ட வார்த்தையாக ஆபிரகாமோடே
௯ பண்ணின தமது உடம்படிக்கையையும்,—ஈசாக்
குக்கு இட்ட தமது ஆணையையும் என்றென்
௰ றைக்கும் நினைக்கிறார்.—இதை யாக்கோபுக்குத்
தீர்மானமாகவும், இஸ்ரவேலுக்கு நித்திய உடம்
௰௧ படிக்கையாகவும் உறுதிப்படுத்தி,—உனக்கு உங்
கள் சுதந்தரத்தின் வீதமாகிய கானான் சீமையைக்
கொடுப்போமென்று,
௰௨ அவர்கள் அதிலே கொஞ்சத்தொகைக்குள்ப்
பட்டபேரும் பரதேசிகளுமாயிருக்கையில் சொ
௰௩ ன்னார்.—அவர்கள் ஒரு சாதியைவிட்டு மறுசாதி
யண்டைக்கும், ஒரு இராச்சியத்தைவிட்டு மறுச
௰௪ னத்தண்டைக்கும் நடந்துபோனார்கள். — ஒரு
வரும் அவர்களை ஒடுக்கவொட்டாதிருந்தார்.—
௰௫ நாம் அபிஷேகம்பண்ணினவர்களை நீங்கள் தொ
டாமலும், நம்முடைய தீர்க்கதரிசிகளுக்குத் தீங்
குசெய்யாமலும் இருங்களென்று அவர்கள் நிமி
௰௬ த்தமாக இராசாக்களைக் கடிந்துகொண்டார்.[2]—அ
வர்தேசத்தின்மேல் பஞ்சத்தை வரவழைத்து, அப்
பமென்ற ஆதரவுகோலையெல்லாம் முறித்தார்.
௰௭ அவர்களுக்கு முன்னாலே ஒரு புருஷனை
அனுப்பினார்; யோசேப்பு சிறையாக விற்றுப்
௰௮ போடப்பட்டான் —அவர் சொன்னது: வருங்
காலமட்டாக அவன் கால்களை விலங்குபோட்டு
ஒடுக்கினார்கள்; அவன் பிராணன் இரும்பில்
அடைபட்டது.—கர்த்தருடைய வசனம் அவ ௰௯
னைப் புடமிட்டது.—இராசா அனுப்பி அவனைக் ௨௰
கட்டவிழ்க்கச்சொன்னான்; சனசதளங்களின்
அதிபதி அவனை விடுதலைபண்ணினான்.—தன் ௨௧
பிரபுக்களை அவன் மனதின்படி கட்டவும், தன்
மூப்பர்களை ஞானிகளாக்கவும்,—அவனைத் தன் ௨௨
வீட்டுக்கு ஆண்டவனும், தன் ஆஸ்திக்கெல்
லாம் அதிபதியுமாக்கினான்.
அப்போது இஸ்ரவேல் எகிப்திலே வந்தான்; ௨௩
யாக்கோபு காம்தேசத்தில் பரதேசியாயிருந்
தான்.—தம்முடைய சனத்தை மெத்தவும் பலுக ௨௪
வும், அதின் சத்துருக்களைப்பார்க்கிலும் அதைப்
பெலக்கவும்பண்ணினார்.—அவர்கள் இருதயம் ௨௫
அவருடைய சனத்தைப் பகைக்கவும், அவரு
டைய ஊழியக்காரரைச் சர்ப்பனைசெய்யவும்
மாறிப்போயிற்று.—தம்முடைய தாசனாகிய மோ ௨௬
சேயையும், தாம் தெரிந்துகொண்ட ஆரோனை
யும் அனுப்பினார்.
இவர்கள் அவர்களுக்குள் காம்தேசத்திலே ௨௭
அவர் சொன்ன அடையாளங்களையும், அற்புதங்
களையும் செய்தார்கள்.—இருளை அனுப்பி அந்த ௨௮
காரமுண்டாக்கினார்; அவருடைய வார்த்தைக
ளுக்கு எதிர்ப்பாரில்லை.—அவர்களுடைய தண் ௨௯
ணீர்களை இரத்தமாக மாற்றி, அவர்கள் மச்சங்க
ளைச் சாகப்பண்ணினார்.—அவர்கள் தேசம் தவ ௩௰
ளைகளைத் திரளாய்ப் பிறப்பித்தது, அவர்களு
டைய இராசாக்களின் அறைவீடுகளிலும் உண்
டாகத்தானே.—அவர் விளம்பினபோது அவர்கள் ௩௧
எல்லைகளிலெங்கும் வண்டுச்சாதிகளும் பேன்
களும் வந்தன.—அவர்கள் மழைகளைக் கல்மழை ௩௨
யாக்கி, அவர்கள் தேசத்திலே சுவாலைவிட்டு எரி
யும் அக்கினியைக் கட்டளையிட்டு,—அவர்களு ௩௩
டைய கொடிமுந்திரிகைச் செடிகளையும் அவர்
கள் அத்திமரங்களையும் அழித்து, அவர்கள் எல்
லைகளிலுள்ள மரங்களை முறித்தார்.—அவர் விளம் ௩௪
பினபோது எண்ணிமுடியாத வெட்டுக்கிளிக
ளும், பச்சைக்கிளிகளும் வந்து,—அவர்கள் தே ௩௫
சத்திலுள்ள சகல பூண்டையும் அரித்து, அவர்
கள் நிலத்தின் கனியைத் தின்றுவிட்டன.—அ ௩௬
வர்கள் தேசத்திலே அவர் முதல்பேறனைத்தை
யும், அவர்களுடைய பெலத்திலெல்லாம் தலை
மையானவர்களையும் சங்கரித்தார்.—அப்போது ௩௭
இவர்களை வெள்ளியோடும், பொன்னோடும் புற
ப்படப்பண்ணினார்; இவர்கள் கோத்திரங்களில்
இடறினவனுமில்லை. — இவர்கள் புறப்படுகை ௩௮
யிலே எகிப்து மகிழ்ந்தது; ஏனெனில் இவர்கள்
பயம் அவர்கள்மேலே விழுந்தது.—மறைவிட ௩௯
மாக ஒரு மேகத்தையும், இரவை வெளிச்சமாக்
குகிறதற்காக அக்கினியையும் விரித்தார்.—கே ௪௰
ட்டார்கள்; அப்போது காடைகளை வரப்பண்
ணினார்; வான அப்பத்தாலும் அவர்களைத் திருப்
தியாக்கினார். — கல்மலையைத் திறந்தார்; அப் ௪௧

1 ௧ நாளா. ௰௬. ௮, ௨௨.

2 ௧ மோ. ௨௰. ௩, ௭.

போது தண்ணீர்கள் புறப்பட்டு, வரண்ட வெ
ளிகளில் ஆருய் ஓடின.
௪௨ ஏனெனில் அவர் தம்முடைய பரிசுத்த வார்த்
தையையும் தம்முடைய தாசனுகிய ஆபிரகாமை
௪௩ யும் நினைத்து,[1]—தம்முடைய சனத்தைக் களிப்
போடும், தாம் தெரிந்துகொண்டவர்களைக் கெம்
௪௪ பீரத்தோடும் புறப்படப்பண்ணி, — அவர்கள்
தம்முடைய பிரமாணங்களைக் காத்து நடப்பதற்
கும், தம்முடைய நியாயநெறிகளைக் கைக்கொள்
௪௫ வதற்குமென்று, — அவர்களுக்குச் சாதிகளின்
தேசங்களைக் கொடுத்தார்; சனசதளங்களின் பிர
யாசத்தைச் சுதந்தரித்துக்கொண்டார்கள்; அல்
லேலூயா.

## ௱௬. சங்கீதம்.

*௧. சங்கீதக்காரன் பராபரனைத் துதிக்கத் தூண்டினது. ௪. அவர் பிதாக்க ளுக்குச் செய்ததுபோலத் தனக்கும் பாவமன்னிப்பைச்செய்ய வேண் டிக்கொண்டது. ௭. சனங்களின் கலகத்தையும் பராபரனுடைய இரக் கத்தையும் காட்டி, ௪௭. முடிவிலே செபத்தையும், துதியையும் செலுத் தினது.*

௧ அல்லேலூயா, கர்த்தரைத் துதியுங்கள்; ஏனெ
னில் அவர் நல்லவர், அவர் கிருபை என்றுமுள்
௨ ளது.—[2]கர்த்தருடைய வல்லமைகளைச் சொல்லி,
அவருடைய துதியை எல்லாம் பிரஸ்தாபமாக்
௩ கத்தக்கவன் யார்?—எல்லாக்காலத்திலும் நியா
யத்தைக் கைக்கொண்டு நீதியைச் செய்கிறவர்
கள் பாக்கியவான்கள்.
௪ கர்த்தாவே, நான் உம்மாலே தெரிந்துகொள்
ளப்பட்டவர்களின் நன்மையைக் கண்டு, உம்
முடைய சாதியின் மகிழ்ச்சியால் மகிழ்ந்து, உம்
முடைய சுதந்தரத்தோடும்கூட மேன்மைபா
௫ ராட்டும்படிக்கு, — நீர் உம்முடைய சனத்தின்
மேலுள்ள கிருபையின்படி என்னை நினைத்து,
உமது இரட்சிப்பினுல் என்னைச் சந்தித்தருளும்.
௬ எங்கள் பிதாக்களோடும்கூட நாங்கள் பாவம்
செய்து, அக்கிரமம் நடப்பித்து, ஆகாமியம்பண்
௭ ணினேம்.[3]—எங்கள் பிதாக்கள் எகிப்திலே உம்
முடைய அதிசயங்களை உணராமலும், உம்மு
டைய கிருபைகளின் திரட்சியை நினையாமலும்
போய், நாணற்கடலாகிய சமுத்திரத்தோரத்தில்
௮ கலகம்பண்ணினுர்கள்.[4] — ஆனுல் அவர் தமது
வல்லமையை அறியப்பண்ணும்படிக்கு, அவர்
களைத் தம்முடைய நாமத்தின் நிமித்தமாக இரட்
௯ சித்து,—நாணற்கடலை உதம்பினுர்; அது வரண்
டுபோயிற்று; அப்போது அவர் வெட்டாந்தரை
யைப்போலான ஆழங்களில் அவர்களை நடக்
௰ கப்பண்ணி,—அவர்களைப் பகைஞன் கைக்கு
விலக்கி இரட்சித்து, சத்துருவின் கைக்கு அவர்
௰௧ களை விலக்கி மீட்டார்.—ஆனுல் அவர்கள் சத்
துருக்களைத் தண்ணீர்கள் மூடின; அவர்களில்
௰௨ ஒருவனும் மீந்ததில்லை. — அப்போது அவரு
டைய வார்த்தைகளின்மேலே விசுவாசித்து,
௰௩ அவருடை துதியைப் பாடினுர்கள்.[5]—ஆனுல்
சீக்கிரமாய் அவருடைய கிரியைகளை மறந்தார்
கள்; அவர்கள் அவருடைய ஆலோசனைக்குக்
காத்திராமல்,—வனாந்தரத்தில் இச்சையுள்ளவர் ௰௪
களாகிப் பராபரனை அவாந்தர வெளியிலே பரி
ட்சைபார்த்தார்கள்.—அப்போது அவர்கள் கேட் ௰௫
டதை அவர்களுக்குக் கொடுத்தார்; ஆனுல் அவர்
கள் ஆத்துமாக்களில் இளைப்பை அனுப்பினுர்.
அவர்கள் மோசேயின்மேலும், கர்த்தருடைய ௰௬
பரிசுத்தனுகிய ஆரோனின்மேலும் பாளயத்தில்
பொருமையானுர்கள். — பூமி திறவுண்டு, தாத் ௰௭
தானை விழுங்கி, அபிராமின் கும்பை மூடிப்
போட்டது.—அவர்கள் கும்பிலே அக்கினி பற்றி ௰௮
யெரிந்தது, அக்கினிச்சுவாலை ஆகாதவர்களைச்
சுட்டுப்போட்டது.
அவர்கள் ஒரேப்பிலே ஒரு கன்றுக்குட்டியை ௰௯
உண்டாக்கி, வார்க்கப்பட்ட விக்கிரகத்தைப்
பணிந்துகொண்டு,—தங்கள் மகிமையைப் புல் ௨௰
லைத் தின்னும் மாட்டின் சாயலாக மாற்றினுர்
கள்.—காம்தேசமாகிய எகிப்திலே பெரிய கிரி ௨௧
யைகளையும், அதிசயங்களையும், நாணற்கடலண்
டையிலே பயங்கரங்களையும் செய்தவராகிய,—
தங்கள் இரட்சிப்பின் பராபரனை மறந்தார்கள்.— ௨௨
ஆனபடியினுலே அவரால் தெரிந்துகொள்ளப் ௨௩
பட்ட மோசே, அவருடைய உக்கிரத்தை அவர்
களை அழிக்காதபடிக்குத் திருப்ப, அவருக்கு
முன்பாக இடிதலிலே நில்லாதிருந்தானுகில்
அவர்களை நாசம்பண்ணுவோமென்ருர்.
அவருடைய வார்த்தையை விசுவாசியாமல், ௨௪
இச்சிக்கப்படத்தக்க தேசத்தை அசட்டைபண்
ணினுர்கள்.—கர்த்தருடைய சத்தத்திற்குச் செவி ௨௫
கொடாமல் தங்கள் கூடாரங்களில் முறுமுறுத்
தார்கள்.—ஆகையினுலே அவர்களை வனாந்தரத் ௨௬
திலே மடியவைக்கவும், அவர்கள் வித்தைச் சாதி
களுக்குள்ளே மடியவைக்கவும், அவர்களைத் தே
சங்களில் சிதறடிக்கவும்,—தம்முடைய கையை ௨௭
அவர்களுக்கு விரோதமாக எடுத்தார்.
அவர்கள் பேயோர்பாகாலுக்கு உடந்தையா ௨௮
கி, சீவனில்லாதவைகளுக்கு இட்ட பலிகளைப்
புசித்து,— தங்கள் கிரியைகளால் அவருக்குக் ௨௯
கோபம் உண்டாக்கினுர்கள்; ஆகையால் சங்கா
ரம் அவர்களுக்குள் புகுந்தது. — அப்போது ௩௰
பினேகாஸ் எழுந்து நின்று நியாயஞ்செய்தான்;
அதனுல் சங்காரம் நிறுத்தப்பட்டது. — அவை ௩௧
அவனுக்கு என்றுமுள்ள தலைமுறைதலைமுறைக்
கும் நீதியாக எண்ணப்பட்டது.
மெரிபாவின் தண்ணீர்களிடத்திலும் அவருக் ௩௨
குக் கடுங்கோபம் உண்டாக்கினுர்கள்; அவர்கள்
நிமித்தமாக மோசேக்கும் பொல்லாப்பு வந்த
து.[6]—ஏனெனில் அவர்கள் அவன் ஆவிக்குக் ௩௩
கோபமூட்டினதினுலே தன் உதடுகளால் பதறிப்
பேசினுன்.
கர்த்தர் தங்களுக்குச் சொன்னபடி அவர்கள் ௩௪
சனசதளங்களை அழிக்காமல்,—சாதிகளுடனே ௩௫
கலந்து, இவர்கள் கிரியைகளைக் கற்று,—இவர் ௩௬
களுடைய விக்கிரகங்களுக்கு ஆராதனைசெய்

1 ௧ மோ. ௰௫. ௧௩, ௰௪. — 2 சங். ௱௭. ௧: ௱௩௬. ௧.–3 தானி. ௯. ௫.
4 ௨ மோ. ௰௪. ௰௧, ௰௨.—5 ௨ மோ. ௰௫. ௧.—6 ௪ மோ. ௨௰. ௰௨.

தார்கள்; இப்படியே அவர்களுக்கு இவர்கள்
௩௭ சுருக்கானார்கள்.—அவர்கள் தங்கள் குமாரரை
யும், தங்கள் குமாரத்திகளையும் பசாசுகளுக்குப்
௩௮ பலியிட்டு,—குற்றமில்லாத இரத்தத்தைச் சிந்தி
னார்கள்; தாங்கள் கானானின் விக்கிரகங்களுக்
குப் பலியிட்ட தங்கள் குமாரர் குமாரத்திகளு
டைய இரத்தத்தைத்தானே சிந்தின இரத்தங்க
௩௯ ளால் அவர்கள் தேசம் தீட்டுப்பட்டது.—அவர்
கள் தங்கள் கிரியைகளால் அழுக்காகி, தங்கள்
செய்கைகளால் சோரம்போனார்கள்.

௪௰ ஆகையால் கர்த்தருடைய கோபம் அவரு
டைய சனத்தின்மேல் மூண்டது; அவர் தமது
௪௧ சுதந்தரத்தை அருவருத்து,— அவர்களைச் சாதிக
ளுடைய கையில் ஒப்புக்கொடுத்தார்;அப்போது
௪௨ அவர்கள் பகைஞர் அவர்களை ஆண்டு,—அவர்
கள் சத்துருக்கள் அவர்களை ஒடுக்கினார்கள்; இவர்
௪௩ கள் கையின்கீழ்த் தாழ்த்தப்பட்டார்கள்.—அநே
கந்தரம் அவர்களை விடுவித்தார்; அவர்களோ தங்
கள் யோசனையால் அவருக்கு விரோதமாய்க் கல
கம்பண்ணி, தங்களுடைய அக்கிரமத்தால் சிறு
௪௪ மைப்படுத்தப்பட்டார்கள்.—அவர்கள் கூப்பிடு
தலை அவர் கேட்கும்போதோவெனில், அவர்க
ளுக்கு உண்டான இடுக்கத்தை அவர் கண்
௪௫ ணோக்கி,—அவர்களுக்காகத் தம்முடைய உடம்
படிக்கையை நினைத்து, தம்முடைய மிகுந்த கிரு
௪௬ பையின்படி மனஸ்தாபப்பட்டு, — அவர்களைச்
சிறைபிடித்த யாவருக்குமுன்பாகவும் அவர்க
ளுக்கு இரக்கங்களைக் கிடைக்கப்பண்ணினார்.

௪௭ எங்கள் பராபரனாகிய கர்த்தாவே,நாங்கள் உம்
முடைய பரிசுத்த நாமத்தைப் போற்றி, உமது
துதிக்காக மேன்மைபாராட்டும்படிக்கு எங்களை
இரட்சித்து,எங்களைச் சாதிகளிலிருந்துசேரும்.-
௪௮ இஸ்ரவேலின் பராபரனாகிய கர்த்தர் அநாதியாய்
என்றென்றைக்கும் தோத்திரிக்கப்பட்டவர்;
சனமெல்லாம் ஆமன், அல்லேலூயா என்பதாக.

## ௱௭. சங்கீதம்.

*௧. சங்கீதக்காரன் பிரயாணக்காரர்மேலும், ௰. சிறையில் அடைபட்டிருப்பவர்மேலும், ௰௭. வியாதிஸ்தர்மேலும், ௨௩. கப்பல்காரர்மேலும், ௩௩. சிவனின் பற்பல கோட்பாடுள்ளவர்கள்மேலும், பராபரனுடைய பராமரிப்பை மீட்கப்பட்டவர்கள் கண்டு அவரைத் துதிக்க அவர்களைத் தூண்டினது.*

௧ கர்த்தரைத் துதியுங்கள்; ஏனெனில் அவர் நல்ல
௨ வர், அவர் கிருபை என்றுமுள்ளது.[1]—கர்த்தர்
௩ சத்துருவின் கைக்கு நீங்கலாக்கி மீட்டு,—பல
தேசங்களாகிய கிழக்கிலும், மேற்கிலும், வடக்
கிலும், தெற்கிலுமிருந்து சேர்ந்தவர்கள் அப்ப
டிச் சொல்லக்கடவர்கள்.

௪ தாபரிக்க ஊரைக்காணாமல் வனாந்தரத்தில்
௫ அவாந்தரவழியாய்,—பசியாகவும், தாகமாகவும்,
௬ ஆத்துமா தொய்ந்ததாகவும் அலைந்துதிரிந்து,-தங்
கள் ஆபத்திலே கர்த்தரைநோக்கிக் கூப்பிடுகை
யில்,இவர் தங்கள் இக்கட்டுகளுக்கு நீங்கலாக்கித்
௭ தங்களை விடுவித்து,—தாபரிக்கும் ஊருக்குப்போ
ய்ச்சேர செம்மையான வழியிலே நடத்தினாரே.

1 சங். ௱௬. ௧: ௱௧௮. ௧.

அவர்கள் தவனமான ஆத்துமாவைக் கர்த்தர் ௮
திருப்தியாக்கி, பசியான ஆத்துமாவை நன்மை
யால் நிரப்பினாரென்று,—அவரை மனுஷருக்கு ௯
முன்பாக அவருடைய கிருபையின் நிமித்த
மும், அவருடைய அதிசயங்கள் நிமித்தமும்
துதிக்கக்கடவர்கள்.[2]

பராபரனுடைய வார்த்தைகளுக்கு விரோத ௰
மாய்க் கலகம்பண்ணி, உன்னதமானவருடைய
ஆலோசனையை அசட்டைபண்ணினபடியினா
லே,—இருளிலும், மரணநிழலிலும் வைக்கப் ௰௧
பட்டிருந்து, ஒடுக்கத்திலும் இரும்பிலும் கட்
டுண்டு கிடந்து, — இப்படியே அவர் தங்கள் ௰௨
இருதயத்தை வருத்தத்தாலே தாழ்த்தினதினாலே
சகாயர் இல்லாமல் விழுந்திருந்து, — தங்கள் ௰௩
ஆபத்திலே கர்த்தரைநோக்கிக் கூப்பிடுகையில்,
இவர் தங்கள் இக்கட்டுகளுக்குத் தங்களை நீங்க
லாக்கி இரட்சித்து,[3]—இருளிலும், மரணநிழலி ௰௪
லுமிருந்து தங்களை வெளிப்படப்பண்ணி, தங்
கள் கட்டுகளை அறுத்தாரே.

அவர்கள் கர்த்தர் வெண்கலக் கதவுகளை உ ௰௫
டைத்து, இருப்புத்தாழ்ப்பாள்களை முறித்தாரெ
ன்று,—அவரை மனுஷருக்குமுன்பாக அவரு ௰௬
டைய கிருபையின் நிமித்தமும், அவருடைய அ
திசயங்களின் நிமித்தமும் துதிக்கக்கடவர்கள்.

நிர்மூடராயிருந்து, தங்கள் பாதகமார்க்கத்தா ௰௭
லும், தங்கள் அக்கிரமங்களாலும் நோய்கொண்டு
ஒடுங்கி,—சகல போசனத்தையும் மனவெறுப் ௰௮
பாய் அரோசித்து, மரணவாசல்கள் பரியந்தம்
சமீபித்தவர்களாகி,-தங்கள் ஆபத்திலே கர்த்தரை ௰௯
நோக்கிக் கூப்பிடுகையில், இவர் தங்கள் இக்க
ட்டுகளுக்குத் தங்களை நீங்கலாக்கி இரட்சித்து,—
தம்முடைய வசனத்தை அனுப்பி, தங்களைக் ௨௰
குணமாக்கி,தங்கள் அழிவுக்குத் தப்புவித்தாரே.

அவர்கள் கர்த்தரை மனுஷருக்குமுன்பாக அ ௨௧
வருடைய கிருபையின்நிமித்தமும்,அவருடைய
அதிசயங்களின் நிமித்தமும் துதித்து, — தோத் ௨௨
திரப்பலிகளைச் செலுத்தி, அவருடைய கிரியை
களைக் கெம்பீரத்தோடே விவரிக்கக்கடவர்கள்.

சமுத்திரத்திற்கு இறங்கிப்போய்க் கப்பலேறி, ௨௩
பெருந்தண்ணீர்களிலே தொழில்பண்ணுகிறார்
களே. — அவர்கள் கர்த்தருடைய கிரியைகளை ௨௪
யும், ஆழத்திலே அவருடைய அதிசயங்களையும்
காண்கிறார்கள். — தாம் சொல்ல அதின் அலை ௨௫
களை உயரப்பண்ணும் பெருங்காற்றை எழுப்பு
வார்.—ஆகாயத்திற்கு ஏறித்தாழ்வுகளுக்கு இறங் ௨௬
குவார்கள்; அவர்கள் ஆத்துமா விக்கினத்தினா
லே கரைந்துபோம். — வெறித்தவனைப்போல ௨௭
அலைந்து தளம்புவார்கள்; அவர்களுடைய ஞா
னமெல்லாம் முழுகிப்போம்.—ஆனால் தங்கள் ௨௮
ஆபத்திலே அவர்கள் கர்த்தரைநோக்கிக் கூப்பி
டுகையில், இவர் அவர்களைத் தங்கள் இக்கட்டுக
ளுக்கு நீங்கலாக்கி இரட்சித்து,—கொந்தளிப் ௨௯
பை அமர்ந்து நிற்கப்பண்ணுவார்; அவைகளின்

2 சங். ௯௰. ௰௯.—3 ௨ நாளா. ௧௧. ௰௪, ௰௫.

௩௰ அலைகள் மவுனமடையும்.—அப்போது அவை
கள் தணிந்துபோயினவென்றும்,தாங்கள் நாடின
குடாக்கடலுக்கு அவர்களைக் கொண்டுவருகிறா
ரென்றும் சந்தோஷப்படுவார்கள்.
௩௧ ஆகையால் அவர்கள் கர்த்தரை மனுஷருக்கு
முன்பாக அவருடைய கிருபையின்நிமித்தமும்,
அவருடைய அதிசயங்களின்நிமித்தமும் துதித்
௩௨ து,— சனத்தின் சபையிலே அவரை உயர்த்தி
முதிர்ந்தவர்கள் உளுக்காந்திருக்கும் இடத்திலே
அவரைப் போற்றக்கடவர்கள்.
௩௩ அவர் ஆறுகளை வெட்டாந்தரையாகவும், நீர்
௩௪ ஊற்றுகளை வரண்ட தலமாகவும், — செழித்த
தேசத்தை அதின் குடிகளுடைய பொல்லாப்
பின்நிமித்தம் உவர்நிலமாகவும் மாற்றுகிறார்.—
௩௫ அவர் வெட்டாந்தரையைத் தண்ணீர்த்தடாகங்
களாகவும், வரண்ட நிலத்தை நீரூற்றுகளாகவும்
௩௬ மாற்றி,—பசித்தவர்களை அங்கே குடியேற்றுகி
றார்; அவர்கள் குடியிருக்கும் ஊரைக்கட்டி,—
௩௭ வயல்களை உண்டாக்கி விதைத்து, கொடிமுந்தி
ரிகைத் தோட்டங்களை நாட்டுகிறார்கள்; அவை
௩௮ கள் வரத்துள்ள பலனைத்தரும்.—அவர்களை ஆசீர்
வதிக்கிறார்; மிகுதியும் பெருகுகிறார்கள்; அவர்
களுடைய மிருகசீவன்களைக் குறுகப்பண்ணுகி
௩௯ றுக்கிறார்.—திரும்பவும் கொஞ்சமாகித் தீங்கினு
டைய முற்றிக்கையாலும், சஞ்சலத்தாலும் தாழ்
௪௰ கிறார்கள்.—அவர் பிரபுக்களின்மேல் அசட்டை
யைச் சொரிந்து, அவர்களை வழியில்லாத அவாந்
௪௧ தரத்திலே திரியப்பண்ணி, — எளியவனையோ
சிறுமையைவிட்டு எடுத்து, உயர்ந்த அடைக்க
லத்திலே வைத்து, அவன் வம்சங்களை மந்தை
௪௨ யைப்போல ஆக்குகிறார்.—செம்மையானவர்கள்
அதைக் கண்டு மகிழுகிறார்கள்; ஆனால் நியாயக்
௪௩ கேடெல்லாம் தன் வாயை மூடும்.—எவன் ஞான
முள்ளவனோ அவன் இவைகளைக் கவனித்திருக்
கக்கடவான்; அப்படிக்கொத்தவர்கள் கர்த்தரு
டைய கிருபைகளை உணர்ந்துகொள்ளுவார்கள்.

## ௱௮. சங்கீதம்.

௧. தாவீது பராபரனைத் துதிக்கத் தன்னைத் திடப்படுத்தினது. ௫ பராபரனுடைய வாக்குத்தத்தத்தின்படி அவருடைய உதவிக்காக வேண்டினது. ௰௧. அவருடைய உதவியின்மேல் நம்பிக்கைவைத்தது.

(தாவீதின் சங்கீதமாகிய பாட்டு.)

௧ பராபரனே, என் இருதயம் ஆயத்தமாயிருக்கி
றது; நான் பாடிக் கீர்த்தனம்பண்ணுவேன்; என்
௨ மகிமையும்கூடத்தானே.[1]—தம்புருவே, சுரமண்
௩ டலமே விழி; அதிகாலமே விழிப்பேன்.—கர்த்
தாவே, உம்மைச் சனசதளங்களுக்குள்ளே துதிப்
பேன்; சாதிகளுக்குள்ளே உம்மைக் கீர்த்தனம்
௪ பண்ணுவேன்.—ஏனெனில் உமது கிருபை வா
னங்களுக்கு மேலாகவும்,உமது சத்தியம் ஆகாய
மண்டலங்கள்பரியந்தமும் பெருகியிருக்கின்
௫ றன.[2] — பராபரனே, வானங்களின்மேல் உய
ரும்; உம்முடைய மகிமை பூமியனைத்தின்மே
௬ லும் உயர்வதாக.—உம்முடைய பிரியர் விடுவிக்
கப்படும்படிக்கு, நீர் உம்முடைய வலதுகரத்தி
னாலே இரட்சித்து,எங்கள் செபத்தைக் கேளும்.[3]
பராபரன் தம்முடைய பரிசுத்ததலத்தில் ௭
சொன்ன உத்தரவிலே களிகூருவேன்; சீகே
மைப் பங்கிட்டு, சுக்கோத்தின் பள்ளத்தாக்கை
அளந்துகொள்ளுவேன். — கிலேயாத் என்னு ௮
டையது; மனாசேயும் என்னுடையது; எப்பிரா
யீம் என் தலையின் பெலன்; யூதா என் நியாயநெ
றியாளன்.—மோவாப் நான் கழுவுகிற பாத்திர ௯
மாயிருக்கும்; ஏதோமின்மேல் என் பாதஇரட்
சையை நீட்டுவேன்; பெலிஸ்தேயாவின்மேல்
ஆர்ப்பரிப்பேன்.
என்னை அரணான பட்டணத்திற்குள் வழிவி ௰
டுபவர்யார்? என்னை ஏதோம்மட்டும் அழைத்துப்
போகுபவர் யார்?—பராபரனே, எங்கள் சேனைக ௰௧
ளோடே புறப்படாமல், எங்களைத் தள்ளிவிட்
டிருந்த பராபரன் தேவரீர் அல்லவோ?—இக் ௰௨
கட்டுக்குத்தப்ப எங்களுக்குச் சகாயம் கட்டளை
யிடும்; ஏனெனில் மனித இரட்சிப்பு அவத்
தம்.—பராபரனால் பெலன்செய்வோம்; அவரே ௰௩
எங்கள் சத்துருக்களை மிதித்துப்போடுவார்.

## ௱௯. சங்கீதம்.

௧. தாவீது புறங்கூறுகிற சத்துருக்களை யூதாஸாக நினைத்து முறையிட்டது. ௰௬. அவர்களுடைய பாவத்தைக் காட்டினது. ௨௧. தன் சிறுமையைக் குறித்து முறையிட்டு உதவிக்காக வேண்டினது. ௩௰. நன்றியுள்ள தோத்திரஞ்செலுத்த வாக்குத்தத்தம்பண்ணினது.

(இராகத்தலைவனுக்கு ஒப்புவிக்கப்பட்ட தாவீதின் சங்கீதம்.)

என் துதியின் பராபரனே, மவுனமாயிராதே ௧
யும்.—ஏனெனில் ஆகாதவனுடைய வாயும், கப ௨
டவாயும் எனக்கு விரோதமாய்த் திறந்திருக்கின்
றன; கள்ளநாவினால் என்னோடே பேசுகிறார்
கள். — பகையான வார்த்தைகளால் என்னைச் ௩
சூழ்ந்துகொண்டு,முகாந்தரமில்லாமல் என்மேல்
போரிடுகிறார்கள். — என் சிநேகத்திற்குப்பதி ௪
லாக என்னை விரோதிக்கிறார்கள்; நானோவென்
றால் செபம்பண்ணிக்கொண்டிருக்கிறேன். —
நன்மைக்குப் பதிலாகத் தீமையையும்,என் சிநே ௫
கத்திற்குப் பதிலாகப் பகையையும் எனக்குக்
காண்பிக்கிறார்கள்.[4]
ஆகாதவனை அவன்மேல் நிறுத்தும்; சாத்தான் ௬
அவன் வலதுபக்கத்தில் நிற்பதாக. — அவன் ௭
நியாயம்தீர்க்கப்படுகையில், அவன் ஆகாதவ
னாய்ப் புறப்படவும், அவன் செபம் பாவமாக
வும்கடவது.[5] — அவன் நாள்கள் கொஞ்சமாவ ௮
தாக; அவன் உத்தியோகத்தை வேறொருவன்
பெறக்கடவான்.[6]—அவன் பிள்ளைகள் திக்கற்ற ௯
வைகளும், அவன் பெண்சாதி விதவையுமாவா
ளாக. — அவன் பிள்ளைகள் அலைந்து பிச்சை ௰
எடுத்து, தங்கள் பாழ்க்கடிப்புகளின் நிமித்தம்
இரக்கவேணும்.-கடன்கொடுத்தவன் அவனுக்கு ௰௧
உண்டானவை எல்லாவற்றையும் சிக்கிக்கொள்
ளுவானாக;அந்நியர் அவன் பிரயாசத்தைப் பறிப்

1 சங். ௫௭. ௮. ௯.—2 சங். ௩௬. ௫.—3 சங். ௬௰. ௭. ௯.

4 சங். ௩௫. ௰௨.—5 வாக். ௧. ௨௮, ௧௧.—6 அப். ௧. ௨௰.

௰௨ பார்களாக.—அவன்மேல் தயையை நீட்டுகிற
வனும் இல்லாமல், அவனுடைய திக்கற்ற பிள்
ளைகளுக்கு இரங்குகிறவனும் இல்லாமற்போவ
௰௩ தாக.—அவனுக்குப் பின்னானவர்கள் வேரறுப்
புண்ணக்கடவார்கள்; இரண்டாம் தலைமுறை
௰௪ யில் அவர்கள் நாமம் கொலைந்துபோவதாக.—அ
வன் பிதாக்களின் அக்கிரமம் கர்த்தருக்குமுன்
பாக நினைக்கப்படவும், அவன் தாயின் பாவம்
௰௫ நீங்காமல்,—நித்தம் கர்த்தருக்கு எதிரே இருக்க
வுங்கடவது; அவர்கள் பேர் பூமியில் இராமல்
வேரறுப்புண்ணக்கடவது.
௰௬ ஏனென்றால் அவன் தயைசெய்ய நினைவு
கொள்ளாமல் சிறுமையும் எளிமையும் மன
நோவுமுள்ளவனைக் கொலைப்படுத்தும்படிக்குத்
௰௭ தொடர்ந்து,—சாபத்தைச் சிநேகித்தபடியினாலே
அது அவனுக்கு வரும்; அவன் ஆசீர்வாதத்தை
விரும்பாதேபோனபடியினாலே அது அவனுக்
௰௮ குத் தூரமாம்.—அவன் சாபத்தைத் தன் அங்
கியாக உடுத்துக்கொண்டபடியினாலே, அது
தண்ணீரைப்போலே அவன் உள்ளத்திலும்,
எண்ணெயைப்போலே அவன் எலும்புகளி
௰௯ லும் பாயும்.—அவை அவனுக்கு மூடுவஸ்திர
மாகவும், நித்தம் கட்டும் கச்சையாகவும் இருப்
௨௰ பதாக.—இது என்னை விரோதிக்கிறவர்களுக்
கும் என் ஆத்துமாவுக்கு விரோதமாய்த் தீங்கு
பேசுகிறவர்களுக்கும் கர்த்தராலே வருங்கூலி.
௨௧ ஆனால் ஆண்டவராகிய கர்த்தாவே, தேவரீர்
உமது நாமத்தின்நிமித்தமாக என்னை ஆதரித்து,
உம்முடைய கிருபை நலமானபடியினாலே
௨௨ என்னை விடுவியும்.—ஏனெனில் நான் சிறுமை
யும் எளிமையுமானவன்; என் இருதயம் எனக்
௨௩ குள்ளே குத்துண்டிருக்கிறது.[1]—சாயும் நிழலைப்
போலப் போக்கப்பட்டேன்; ஒரு வெட்டுக்கி
ளியைப்போலப் பறக்கடிக்கப்படுகிறேன்.—
௨௪ உபவாசத்தினால் என் முழங்கால்கள் தடுமாறு
கின்றன; என் மாம்சம் புஷ்டியற உலருகிறது.—
௨௫ நான் அவர்களுக்கு நிந்தனையானேன்; அவர்கள்
என்னைப் பார்க்கும்போது தங்கள் தலையைத்
துலுக்குகிறார்கள்.[2]
௨௬ என் பராபரனாகிய கர்த்தாவே, எனக்குச் சகா
யம்பண்ணும்; உமது கிருபையின்படி என்னை
௨௭ இரட்சியும்.—இது உமது கரம் என்றும், கர்த்தா
வே, தேவரீர் இதைச் செய்தீரென்றும் அவர்கள்
௨௮ அறிவார்களாக.—அவர்கள் சபித்தாலும், நீர் ஆ
சீர்வதியும்; அவர்கள் எழும்பினாலும், வெட்கப்
பட்டுப்போவார்களாக; உம்முடைய அடியா
௨௯ னோவெனில் மகிழுவானாக.—என்னை விரோ
திக்கிறவர்கள் இலச்சையால் உடுத்தப்பட்டுச்
சால்வையைப்போலத் தங்கள் வெட்கத்தால் மூ
௩௰ டப்படக்கடவர்கள்.[3]—கர்த்தரை நான் மிகுதி
யும் என் வாயினாலே துதித்து, அநேகர் நடுவிலே
௩௧ அவரைப் புகழுவேன்.[4]—ஏனெனில் அவர் எளி
யவனுடைய வலதுபாரிசத்திலே அவன் ஆத்து
மாவை ஆக்கினைக்குள்ளாகத் தீர்க்கிறவர்களின்
கைக்கு விலக்கி இரட்சிப்பதற்காக நிற்கிறார்.[5]

## ௱௰. சங்கீதம்.

௧. கிறிஸ்துவின் இராச்சியமும், ௪. ஆசாரியப்பட்டமும், ௫. செயமும், ௭. பட்டபாடுகளும்.

(தாவீதின் சங்கீதம்.)

கர்த்தர் என் ஆண்டவருடனே, நாம் உம்முடை ௧
ய சத்துருக்களை உம்முடைய பாதங்களுக்குப்
படியாகப் போடுமட்டும், நம்முடைய வலது
பாரிசத்தில் உளுக்காருமென்றார்.[6]—உமது வல் ௨
லமையின் செங்கோலைக் கர்த்தர் சீயோனிலி
ருந்து அனுப்பி, உம்முடைய சத்துருக்களின்
நடுவே ஆளுமென்பார்.—உமது பராக்கிரமத்தின் ௩
நாளிலே உம்முடைய சனம் மகா மனப்பூருவ
மும் பரிசுத்த அலங்காரமுமாயிருக்கும்; அதிகால
இருட்டின் கர்ப்பத்தில் பிறக்கும் பனிக்குச்
சமானமாய் உம்முடைய இளந்தைச்சனம் உமக்
குப் பிறக்கும்.—நீர் என்றென்றைக்கும் மெல்கி ௪
சேதேக்கின் வண்ணமான ஆசாரியரென்று கர்த்
தர் ஆணையிட்டார்; மனஸ்தாபப்படாமலும் இ
ருப்பார்.[7]—தேவரீருடைய வலதுபாரிசத்தில் ௫
இருக்கிற ஆண்டவர் தமது கோபத்தின் நாளில்
இராசாக்களை வெட்டுவார்.—அவர் சாதிகளில் ௬
நியாயந்தீர்த்து, எல்லாவற்றையும் பிரேதங்க
ளால் நிரப்பி, விஸ்தாரமான தேசத்தின்மேலே
தலைவனாயிருக்கிறவனை நொறுக்கிவிடுவார்.[3]—
வழியிலே நதியில் குடிப்பார்; ஆகையாலே ௭
தலையை எடுப்பார்.

## ௱௰௧. சங்கீதம்.

௧. சங்கீதக்காரன் தன் மாதிரிப்படி பராபரனுடைய மகிமையும், ௫. கிருபையுமுள்ள கிரியைகளுக்காக அவரைத் துதிக்க மற்றவர்களை ஏவினது. ௰. தேவபயம் உண்மையான ஞானத்தைப் பிறப்பிப்பதென்பது.

அல்லேலூயா, செம்மையானவர்களின் சங்கத் ௧
திலும் சபையிலும் கர்த்தரை முழு இருதயத்தா
லும் துதிப்பேன்.—கர்த்தரின் செய்கைகள் பெ ௨
ரியவைகளும், அவர்களுடைய விருப்பங்களுக்
கெல்லாம் சரியாய்த் தெரிந்துகொள்ளப்பட்ட
வைகளுமாயிருக்கின்றன.—அவர் செய்கிறது ௩
மகிமையும் கனமுமானது; அவருடைய நீதி என்
றென்றைக்கும் நிற்கும்.—தம்முடைய அதிச ௪
யங்களின் நினைவுகூருதலை உண்டுபண்ணினார்;
கர்த்தர் இரக்கமும் மனவுருக்கமுமானவர்.—
தமக்குப் பயந்தவர்களுக்கு ஆகாரங்கொடுத்தார்; ௫
தமது உடம்படிக்கையை என்றென்றைக்கும்
நினைக்கிறார்.—சாதிகளின் சுதந்தரத்தைத் தம்மு ௬
டைய சனத்திற்குக் கொடுத்ததினாலே, தம்மு
டைய செய்கைகளின் பெலத்தை அதற்குத் தெ
ரியப்பண்ணினார்.—அவருடைய கரங்களின் ௭
செய்கைகள் சத்தியமும் நியாயமும், அவரு
டைய கட்டளைகளெல்லாம் உண்மையுமாயிருக்
கின்றன.—அவைகள் என்றென்றைக்குமுள்ள ௮
சதாகாலங்களுக்கும் உறுதியானவைகளும், உண்
மையும், செம்மையுமாய்ச் செய்யப்பட்டவைக

1 சங்.௪௰.௰௮ —2 சங்.௨௨.௭,௮: ௯. ௰௧.—3 சங். ௩௫. ௨௬. 4 சங். ௨௨. ௨௩. 5 சங். ௰௬. ௮.

6 மத். ௨௨. ௪௪.—7 எபி. ௫. ௬: ௬. ௨௰: ௭. ௰௭. ௨௧. 8 வெளி. ௰௯. ௰௧. ௨௧. சங். ௬௮. ௨௧.

௯ ளுமாயிருக்கின்றன.—அவர் தம்முடைய சனத்
திற்கு மீட்பை அனுப்பி, தமது உடன்படிக்கை
யை நித்திய உடம்படிக்கையாகக் கட்டளையிட்
டார்; அவருடைய நாமம் பரிசுத்தமும் பயங்கர
௰ முமானது.—கர்த்தருக்குப் பயப்படுதலே ஞான
த்திற்குத் துவக்கம்; அவைகளின்படி செய்கிற
யாவருக்கும் நற்புத்தியுண்டு; அப்படிக்கொத்த
வன் புகழ்ச்சி என்றைக்கும் நிற்கும்.[1]

## ௱௰௨. சங்கீதம்.

௧. தேவபத்திக்கும், இம்மைக்கும், ௪. மறுமைக்கும் அடுத்த வாக்குத்தத்த முண்டாயிருப்பதும், ௰. தேவபத்தியுள்ளவர்களுடைய பாக்கியம் துன் மார்க்கருக்குக் கண்ணோயாயிருப்பதுமென்பது.

௧ அல்லேலூயா, கர்த்தருக்குப்பயந்து அவர் கற்ப
ளைகளின்மேல் மிகவும் பிரியமாயிருக்கிற மனி
௨ தன் பாக்கியவான்.[2] — அவன் வித்து பூமியில்
வல்லபமாயிருக்கும்; செம்மையானவர்களின்
௩ சந்ததி ஆசீர்வதிக்கப்படும்.[3]—ஆஸ்தியும் ஐசுவரி
யமும் அவன் வீட்டிலிருக்கும்; அவன் நீதி என்
௪ றென்றைக்கும் நிற்கும்.[4] — செம்மையானவர்க
ளுக்கு இருளிலே வெளிச்சம் உதிக்கும்; இரக்க
மும், மனவுருக்கமும், நீதியுமுள்ளவராயிருக்கி
௫ றார்.[5]—இரங்கிக் கடன்கொடுத்துத் தன் காரியங்
களை நியாயமானபடி நடப்பிக்கிற மனுஷன்
௬ பாக்கியமுள்ளவன். — ஏனெனில் என்றென்
றைக்கும் அசைக்கப்படாதிருப்பான்; நீதிமான்
௭ நித்திய கீர்த்தியுள்ளவன். — துர்ச்செய்தியைச்
கேட்கிறதினாலே பயப்படான்; அவன் இருத
௮ யம் கர்த்தரை நம்பித் திடனாயிருக்கும்.—அவன்
இருதயம் உறுதியாய் இருக்கும்; அவன் தன் சத்
துருக்களில் சரிக்கட்டுதலைக் காணும்மட்டும்
௯ பயப்படாதிருப்பான்.—வாரி இறைத்து ஏழை
களுக்குக் கொடுக்கிறான்; அவன் நீதி என்றென்
றைக்கும் நிற்கும்; அவன் கொம்பு மகிமையாக
௰ உயரும்.[6]—ஆகாதவன் அதைக்கண்டு மனமடி
வாகி, தன் பற்களைக் கடித்து, கரைந்துபோ
வான்; ஆகாதவர்களுடைய ஆசை அழியும்.

## ௱௰௩. சங்கீதம்.

௧. பராபரனுடைய மேன்மைக்காகவும், ௬. அவருடைய இரக்கத்திற்காக வும் அவரைத் துதிக்கத் தூண்டுதல்.

௧ அல்லேலூயா, கர்த்தருடைய ஊழியக்காரரே,
துதியுங்கள்; கர்த்தருடைய நாமத்தைத் துதியுங்
௨ கள்.[7]—கர்த்தருடைய நாமம் இதுமுதற்கொண்டு
என்றென்றைக்கும் தோத்திரிக்கப்பட்டிருக்கக்
௩ கடவது.[8]—சூரியன் உதிக்கும் திசைதுவக்கி அது
அஸ்தமிக்கும் திசைமட்டும் கர்த்தருடைய நாமம்
௪ துதிக்கப்படக்கடவது.—கர்த்தர் எல்லாச் சாதி
கள்மீதிலும் உயர்ந்தவர்; அவருடைய மகிமை
வானங்களிலும் மேல்வட்டமாயிருக்கிறது.
௫,௬ உன்னதங்களில் வாசம்பண்ணி,[9]—வானங்க
ளிலும் பூமியிலுமுள்ளவைகளைக் கண்ணோக்கத்
௭ தாழ்ந்துகொண்டு,—பிரபுக்களோடும், தமது சனத்
தின் தலைவர்களோடும் உளுக்காரப்பண்ணும்ப
டிக்கு,[10]—சிறியவனை மண்ணிலிருந்து எடுக்கிற ௮
வரும்; எளியவனைக் குப்பைக்காட்டிலிருந்து
உயர்த்துகிறவரும், — மலடியை வீட்டிலே சந் ௯
தோஷமான பிள்ளைத்தாய்ச்சியாய்க் குடியிருக்
கப்பண்ணுகிறவருமான நம்முடைய பராபரனு
கிய கர்த்தருக்குச் சமானமானவர் யார்? அல்லே
லூயா.[11]

## ௱௰௪. சங்கீதம்.

௧. ஊமைச் சிருஷ்டிகளைப்போலப் பராபரனுக்கு அவருடைய சபையில் பயப்படத் தூண்டுதல்.

இஸ்ரவேல் எகிப்திலும், யாக்கோபின் வீட் ௧
டார் அந்நிய பாஷையுள்ள சனத்திலுமிருந்து
புறப்படுகையில்,—யூதா அவருடைய பரிசுத்த ௨
சாதியும் இஸ்ரவேல் அவருடைய ஆளுகையுமா
யின.—கடல் கண்டு விலகியோடிற்று; யோர் ௩
தான் பின்னிட்டுத் திரும்பிற்று.[12]—பர்வதங்கள் ௪
ஆட்டுக்கடாக்களைப்போலவும், மேடுகள் ஆட்
டுக்குட்டிகளைப்போலவும் துள்ளின.[13]
கடலே, நீ விலகி ஓடுகிறதற்கும், யோர்தானே, ௫
நீ பின்னிட்டுத் திரும்புகிறதற்கும், — பர்வதங் ௬
களே, நீங்கள் ஆட்டுக்கடாக்களைப்போலவும்,
மேடுகளே, நீங்கள் ஆட்டுக்குட்டிகளைப்போல
வும் துள்ளுகிறதற்கும் உங்களுக்கு என்னவந்
தது?—பூமியே, நீ ஆண்டவருக்குமுன்பாகவும், ௭
யாக்கோபுடைய பராபரனுக்குமுன்பாகவும் அ
திரு.—அவர் கல்மலையைத் தண்ணீர்த்தடாகமா ௮
கவும், கல்ப்பாறையை நீரூற்றுகளாகவும் மாற்று
கிறவர்.[14]

## ௱௰௫. சங்கீதம்.

௧. பராபரன் சத்தியபராக்கிரமையுள்ளவராயிருக்கையாலும், ௪. விக்கிரகங்கள் மாயமுள்ளவைகளாயிருக்கையாலும், ௯. சபைக்காரர் பராபரனில் நம் பிக்கைவைக்கத் தூண்டினது. ௰௨. பராபரன் தம்முடைய நன்மைகளுக் காகத் துதிக்கப்படவேண்டியதென்பது.

எங்களுக்கல்ல கர்த்தாவே, எங்களுக்கல்ல, உம் ௧
முடைய நாமத்துக்கே தேவரீர் உமது கிருபை
யின்நிமித்தமும், உமது சத்தியத்தின்நிமித்த
மும் மகிமை வரப்பண்ணும்.—அவர்களுடைய ௨
பராபரன் இப்போது எங்கே என்று புறச்சாதி
கள் சொல்லுவானேன்?[15]—நம்முடைய பராபர ௩
னோ பரமண்டலங்களில் இருக்கிறார்; அவர்
தமக்குச் சித்தமாயிருக்கிறவை எல்லாவற்றையும்
செய்கிறார்.[16]
அவர்களுடைய விக்கிரகங்கள் மனுஷரு ௪
டைய கைகளின் வேலையாகிய வெள்ளியும்
பொன்னும்தானே.[17]— அவைகளுக்கு வாயிருந் ௫
தும் பேசாது; அவைகளுக்குக் கண்களிருந்தும்
காணாது.[18] — அவைகளுக்குக் காதுகளிருந்தும் ௬
கேளாது, அவைகளுக்கு மூக்கிருந்தும் மோவா
து.—அவைகளுக்குக் கைகளிருந்தும் தடவாது; ௭
அவைகளுக்குக் கால்களிருந்தும் நடவாது; தங்
கள் தொண்டையால் சத்தமும்காட்டாது. —
அவைகளைப் பண்ணுகிறவர்களும், அவைகளை ௮

1 வாக். ௧. ௭: ௯. ௰. 7 சங் ௱௩௫. ௧.——8 தானி. ௨. ௨௰.—9 சங். ௱௩௮. ௬. ௫௪௭. ௫௭. ௰௫.—10 ௧ சாமு. ௨. ௮.
2 சங். ௧. ௧, ௨: ௱௨௮. ௧: ௱௰௯. ௧. 11 சங். ௮௯. ௮. ௨ மோ. ௰௫. ௰௧.
3 வாக். ௨௰. ௭.—4 சங். ௱௪. ௰.
5 சங். ௯௭. ௰௧.—6 ௨ கொரி ௯. ௯.
12 ௨ மோ. ௰௪. ௨௧, ௨௨. யோசு. ௩. ௰௬.—13 ௨ மோ. ௰௯. ௰௮. 17 சங். ௱௩௫. ௰௫. ௯.
14 ௪ மோ. ௨௰. ௰௧. 18 ௫ மோ. ௪. ௨௮.
15 சங். ௪௨. ௩.—16 சங். ௱௩௫. ௬.

நம்புகிற எவனும் அவைகளைப்போல இருக்கி
றார்கள்.
௯ இஸ்ரவேலே கர்த்தரை நம்பு; அவரே அவர்
கள் ஒத்தாசையும், அவர்கள் கேடயமுமாயிருக்
௰ கிறார்.—ஆரோனின் வீட்டாரே, கர்த்தரை நம்
புங்கள்; அவரே அவர்கள் ஒத்தாசையும், அவர்
௰௧ கள் கேடயமுமாயிருக்கிறார். — கர்த்தருக்குப்
பயந்தவர்களே, கர்த்தரை நம்புங்கள்; அவரே
அவர்கள் ஒத்தாசையும், அவர்கள் கேடயமுமா
யிருக்கிறார்.
௰௨ கர்த்தர் நம்மை நினைத்திருக்கிறார்; அவர் ஆசீர்
வதிப்பார்; இஸ்ரவேல் வீட்டாரை ஆசீர்வதிப்
பார்; அவர் ஆரோனின் வீட்டாரை ஆசீர்வதிப்
௰௩ பார்.—கர்த்தருக்குப் பயந்தவர்களாகிய பெரியோ
ரோடுங்கூடச் சிறியோரையும் ஆசீர்வதிப்பார்.—
௰௪ கர்த்தர் உங்களையும், உங்கள் பிள்ளைகளையும்
௰௫ வர்த்திக்கப்பண்ணுவார். — பரமண்டலங்களை
யும் பூமியையும் படைத்த கர்த்தராலே நீங்கள்
ஆசீர்வதிக்கப்பட்டவர்கள்.
௰௬ பரமண்டலங்களோ கர்த்தருடையது; பூமி
௰௭ யையோ மனுப்புத்திரருக்குக் கொடுத்தார்.—செத்
தவர்களும், மவுனத்தில் இறங்குகிற அனைவரும்
௰௮ கர்த்தரைத் துதியார்கள். — நாமோ இதுமுதற்
கொண்டு என்றென்றைக்கும் கர்த்தரைத் தோத்
திரிப்போம்; அல்லேலூயா.

## ௱௰௬. சங்கீதம்.

௧. சங்கீதக்காரன் தான் பாதுகாக்கப்படுவதற்காக அன்பையும், கடமையையும், பராபரனுக்குச் செலுத்தினது ௰௨. நன்றியுள்ளவனாயிருக்கச் சிந்தித்துக்கொண்டது.

௧ கர்த்தர் என் சத்தத்தையும், என் விண்ணப்பங்க
௨ ளையும் கேட்டது எனக்குப் பிரியம்.—ஏனென்
றால் அவர் தமது செவியை என்னண்டையில்
சாய்த்தார்; ஆகையால் என் நாள்கள் உள்ளமட்
௩ டும் அவரைநோக்கிக் கூப்பிடுவேன்.—மரணத்தின்
கட்டுகள் என்னைச் சுற்றிக்கொண்டு நரகத்தின்
இடுக்கண்கள் என்னைப் பிடித்தன; இக்கட்டை
௪ யும், சஞ்சலத்தையும் அடைந்தேன்.[1]—ஆனால் ஆ
கர்த்தாவே, என் ஆத்துமாவை விடுவியும் என்று
கர்த்தருடைய நாமத்தைப்பற்றிக்கூப்பிட்டேன்.
௫ கர்த்தர் இரக்கமும் நீதியுமுள்ளவர்; நம்மு
௬ டைய பராபரன் மனவுருக்கமானவர்.—கர்த்தர்
பேதைகளைக் காக்கிறார்; நான் மெலிந்துபோ
௭ னேன்; ஆனால் என்னை இரட்சித்தார்.—என் ஆத்
துமாவே, உன் இளைப்பாறுதலுக்குத் திரும்பு;
ஏனெனில் கர்த்தர் உனக்கு நன்மைசெய்தார்.—
௮ அதேனென்றால் என் ஆத்துமாவை மரணத்துக்
கும், என் கண்ணைக் கண்ணீருக்கும், என் காலை
௯ இடறுதலுக்கும் தப்புவித்தீர்.[2]—கர்த்தருக்குமுன்
பாகச் சீவனுள்ளோருடைய தேசத்திலே நடப்
௰ பேன்.—விசுவாசித்தேன்; ஆகையாலே பேசுகி
றேன்;நான் மிகுதியும் ஒடுக்கப்பட்டிருந்தேன்.[3]—
௰௧ எந்த மனுஷனும் பொய்யனென்று நான் என்
துன்பத்தின் துரிதத்திலே சொன்னேன்.[4]

கர்த்தர் எனக்குச் செய்த எல்லா உபகாரங்க ௰௨
ளுக்காகவும் அவருக்கு என்ன ஈட்டைச் செ
லுத்துவேன்.—இரட்சிப்புகளின் பாத்திரத்தை ௰௩
வாங்கி, கர்த்தருடைய நாமத்தைப்பற்றிக் கூப்
பிடுவேன். — கர்த்தருக்கு என் பொருத்தனைக ௰௪
ளைச் செலுத்துவேன்; ஆம் அவருடைய எல்லாச்
சனத்துக்கும்முன்பாகத்தானே.[5]
கர்த்தருடைய பரிசுத்தவான்களின் மரணம் ௰௫
அவர் பார்வைக்கு அருமையானது.—ஆ கர்த் ௰௬
தாவே, நான் உம்முடைய ஊழியக்காரன்; நான்
உம்முடைய அடியாளின் பிள்ளையாகிய உம்
முடைய ஊழியக்காரன்; என் கட்டுகளை அவிழ்
த்தீர்.—உமது துதியின் பலியைப் பலியிட்டு, கர்த் ௰௭
தருடைய நாமத்தைப்பற்றிக் கூப்பிடுவேன்.—
கர்த்தருடைய வீட்டின் பிரகாரங்களிலும், எருச ௰௮
லேமே, உன் நடுவிலும்,—நான் கர்த்தருக்கு என் ௰௯
பொருத்தனைகளைச் செலுத்துவேன்; ஆம் அவரு
டைய எல்லாச் சனத்துக்கும்முன்பாகத்தானே;
அல்லேலூயா[6]

## ௱௰௭. சங்கீதம்.

௧. பராபரனுடைய உண்மைக்காகவும் இரக்கத்துக்காகவும், அவரைத் துதிக்கத் தூண்டினது.

எல்லாச் சாதிகளே, கர்த்தரைத் துதியுங்கள்; எல் ௧
லாச் சனசதளங்களே, அவரைப் புகழுங்கள்.[7]—
ஏனெனில் அவருடைய கிருபை நம்முடைய ௨
மேல் வல்லபமாயிருக்கிறது; கர்த்தரின் உண்
மையும் என்றென்றைக்கும் நிற்கும்; அல்லே
லூயா.

## ௱௰௮. சங்கீதம்.

௧. பராபரனுடைய இரக்கத்துக்காக அவரைத் துதிக்க எச்சரித்தது. ௫. சங்கீதக்காரன் தன் அநுபவத்தினால் பராபரனில் நம்பிக்கை வைக்கிறது நன்மை என்று சொன்னது. ௰௯. கிறிஸ்துநாதர் தாம் தமது இராச்சியத்தில் வருவதை அடையாளத்தினால் விளக்கினது.

கர்த்தரைத் துதியுங்கள்; ஏனெனில் அவர் நல்ல ௧
வர்; அவர் கிருபை என்றுமுள்ளது.[8]—அவர் கிரு ௨
பை என்றும் உள்ளதென்று இஸ்ரவேல் சொல்
லுவதாக.[9]—அவர் கிருபை என்றும் உள்ளதென்று ௩
ஆரோனின் வீட்டார் சொல்லுவார்களாக.—அ ௪
வர் கிருபை என்றும் உள்ளதென்று கர்த்தருக்குப்
பயந்தவர்கள் சொல்லுவார்களாக.
நெருக்கத்திலிருந்து கர்த்தரைநோக்கிக் கூப் ௫
பிட்டேன்; கர்த்தர் என்னைக் கேட்டருளி விசா
லத்திலே வைத்தார்.—கர்த்தர் எனக்கு இருக்கி ௬
றார்; பயப்படேன், மனுஷன் எனக்கு என்ன
செய்வான்?[10]—எனக்கு அநுகூலம்பண்ணுகிற ௭
வர்கள் நடுவிலே கர்த்தர் எனக்கு இருக்கிறார்;
ஆகையால் என் பகைஞரில் சரிக்கட்டுதலைக்
காண்பேன்.—மனுஷனை நம்புவதைப்பார்க்கி ௮
லும் கர்த்தர்மீதில் பற்றுதலாயிருக்கிறதே நலம்.—
பிரபுக்களை நம்புவதைப்பார்க்கிலும் கர்த்தர்மீ ௯
தில் பற்றுதலாயிருக்கிறதே நலம்.—எல்லாச் சாதி ௰
யாரும் என்னை வளைந்துகொள்ளுகிறார்கள்; ஆ
னால் கர்த்தரின் நாமத்தினாலே அவர்களை வெட்

1 சங். ௰௮. ௫, ௬.—2 சங். ௫௬. ௰௩. 5 சங். ௨௨. ௨௫.—6 சங். ௯௬. ௰௪.
3 ௨ கொரி. ௪. ௰௩.—4 உரோ. ௩. ௪. 7 உரோ. ௰௫. ௰௧.
8 சங். ௱௭. ௧; ௱௩௬. ௧. 10 உரோ. ௮. ௩௧. எபி. ௰௩. ௬.
9 சங். ௱௰௫. ௰௨, ௰௩.

௰௧ டுவேன்.—என்னைச் சுற்றி வளைந்துகொள்ளு
கிறார்கள்; கர்த்தரின் நாமத்தினாலே அவர்களை
௰௨ வெட்டுவேன்.—தேன் ஈக்களைப்போல என்னை
வளைந்துகொள்ளுகிறார்கள்; ஆனால் முள்செடி
களின் நெருப்பைப்போல அணைத்துப்போடப்
படுவார்கள்; கர்த்தரின் நாமத்தினாலே அவர்களை
௰௩ வெட்டுவேன்.—நான் விழ என்னைத் தள்ளவே
தள்ளினாய்; ஆனால் கர்த்தர் எனக்கு ஒத்தாசை
பண்ணுகிறார்.
௰௪ கர்த்தர் என் பெலனும் என் கீதமுமானவர்;
௰௫ அவர் எனக்கு இரட்சிப்பாக இருக்கிறார்.—[1]நீதி
மான்களின் கூடாரங்களில் இரட்சிப்பின் கெம்
பீரசத்தம் இருக்கும்; கர்த்தரின் வலதுகரம் பராக்
௰௬ கிரமம்செய்யும்.—கர்த்தரின் வலதுகரம் உயர்ந்து,
கர்த்தரின் வலதுகரம் பராக்கிரமம்செய்யும்.—
௰௭ நான் சாவதில்லை, நான் பிழைத்திருந்து கர்த்தரு
௰௮ டைய செய்கைகளை விவரிப்பேன்.— கர்த்தர்
என்னைத் தெண்டிக்கவே தெண்டித்தும், என்
னைச் சாவுக்கு ஒப்புக்கொடார்.
௰௯ எனக்கு நீதியின் வாசல்களைத் திறவுங்கள், அ
வைகளுக்குள்ப் பிரவேசித்து, கர்த்தரைத் துதிப்
௨௰ பேன்.[2]—அது கர்த்தரின் வாசல், நீதிமான்கள்
௨௧ அதற்குள்ப்பிரவேசிப்பார்கள்.— நீர் என்னைக்
கேட்டருளி, எனக்கு இரட்சிப்பாக இருந்தப
௨௨ டியினாலே உம்மைத் துதிப்பேன்.—வீடுகட்டுகி
றவர்கள் ஆகாதென்று தள்ளின கல்லே கோடிக்
௨௩ குத் தலையான கல்லாயிற்று.[3]—அது கர்த்தராலா
யிற்று; அது நம்முடைய கண்களுக்கு ஆச்சரிய
௨௪ மாயிருக்கிறது.—இது கர்த்தர் உண்டுபண்ணின
நாள்; இதிலே களிகூர்ந்து மகிழக்கடவோம்.—
௨௫ ஆ கர்த்தாவே, இரட்சியுமே; ஆ கர்த்தாவே, காரி
௨௬ யத்தை வாய்க்கப்பண்ணுமே.[4]—கர்த்தருடைய
நாமத்தினாலே வருகிறவர் தோத்திரிக்கப்பட்ட
வர்; கர்த்தரின் வீட்டாரே, உங்களை ஆசீர்வதிக்
கிறோம்.
௨௭ கர்த்தர் நம்மைப் பிரகாசிப்பிக்கிற பராபரனா
யிருக்கிறார்; பண்டிகைப் பலியைப் பலிபீடத்
தின் கொம்புகள்மட்டும் கொண்டுபோகக் கயிறு
௨௮ களால் கட்டுங்கள்.—தேவரீர் என் பராபரன், உம்
மைத் துதிப்பேன்; என் பராபரனே, உம்மை உய
௨௯ ர்த்துவேன்.—கர்த்தரைத் துதியுங்கள்; ஏனெனில்
அவர் நல்லவர், அவர் கிருபை என்றுமுள்ளது.

## ௱௰௯. சங்கீதம்.

௧. பலவகைப் பிரார்த்தனைகளும், துதிகளும், கீழ்ப்படிதலினுடன்பிறிதலும் சொல்லப்பட்டது.

௧ கர்த்தருடைய வேதத்தின்படியே நடக்கிற உத்
௨ தமமார்க்கத்தார் பாக்கியவான்கள்.[5] — அவரு
டைய சாட்சிகளைக் கைக்கொண்டு, அவரை
முழு இருதயத்தாலும் தேடுகிறவர்கள் பாக்கிய
௩ வான்கள்.-அவர்கள் அநியாயம் செய்வதுமில்லை,
௪ அவருடைய வழிகளிலே நடப்பார்கள்.— உம்
முடைய கட்டளைகளைக் கருத்தாய்க் காக்கத்
௫ தேவரீர் கற்பித்தீர்.—ஆ உம்முடைய பிரமாணங்
களைக் காக்க என் வழிகள் நிலைவரப்பட்டால்
தாவிளை.—நான் உம்முடைய கற்பனைகளை எல் ௬
லாம் கண்ணோக்கும்போது வெட்கப்பட்டுப்
போவதில்லை.—உம்முடைய நீதியின் நியாயங் ௭
களை நான் கற்றுக்கொள்ளுகையால் உம்மைச்
செம்மை இருதயத்தாலே துதிப்பேன்.—உம்மு ௮
டைய பிரமாணங்களைக் காப்பேன்; என்னைக்
கைவிடாமலே இரும்.
எதினால் வாலிபன் தன் பாதையைச் சுத்தம் ௯
பண்ணுவான்; உமது வசனத்தின்படி தன்னைக்
காப்பதினாலேதானே. — என் முழு இருதயத் ௰
தாலும் உம்மைத் தேடுகிறேன்; என்னை உம்மு
டைய கற்பனைகளைவிட்டு வழிதப்பவொட்டாதி
ரும்.—நான் உமக்கு விரோதமாய்ப் பாவம்செய் ௰௧
யாதபடிக்கு, உம்முடைய வார்த்தைகளை என்
இருதயத்திலே வைத்துவைத்தேன்.—கர்த்தாவே, ௰௨
தேவரீர் தோத்திரிக்கப்பட்டவர்; உம்முடைய
பிரமாணங்களை எனக்குக் கற்றுக்கொடும்.—உம்
முடைய வாக்கின் நியாயங்களை எல்லாம் என் ௰௩
உதடுகளால் விவரிப்பேன்—உம்முடைய சாட் ௰௪
சிகளின் வழியை நான் சகல ஆஸ்தியாகவும் பா
வித்து, அதனால் களிப்பாயிருக்கிறேன்.—உம்மு ௰௫
டைய கட்டளைகளை யோசித்து, உம்முடைய
பாதைகளைக் கண்ணோக்குகிறேன். — உம்மு ௰௬
டைய பிரமாணங்களினாலே மனமகிழ்ச்சியாயி
ருக்கிறேன்; உம்முடைய வசனத்தை மறவேன்.
நான் பிழைத்து, உம்முடைய வசனத்தைக் ௰௭
காக்க உம்முடைய அடியானுக்குத் தயைசெய்
யும்.—உமது வேதத்திலுள்ள அதிசயங்களை நான் ௰௮
பார்க்கிறதற்காக என் கண்களைத் திறவும்.—பூமி ௰௯
யிலே நான் பரதேசி; உம்முடைய கற்பனைகளை
எனக்கு மறைக்காதிரும்.[6] — எக்காலமும் என் ௨௰
ஆத்துமா உம்முடைய நியாயங்களின்மேல் இ
ருக்கிற வாஞ்சையினாலே நருக்குண்டிருக்கிற
து.—உம்முடைய கற்பனைகளைவிட்டு வழிவில ௨௧
குகிற சபிக்கப்பட்ட அகந்தைக்காரரை உதம்
புகிறீர்.—நிந்தையையும், அசட்டையையும் என் ௨௨
னைவிட்டு அகற்றும்; ஏனெனில் உம்முடைய
சாட்சிகளைக் கைக்கொள்ளுகிறேன்.—பிரபுக்க ௨௩
ளும் உளுக்காந்திருந்து எனக்கு விரோதமாய்ப்
பேசிக்கொள்ளுகிறார்கள்; உம்முடைய அடியா
ன் உம்முடைய பிரமாணங்களை யோசிக்கிறா
ன்.—உம்முடைய சாட்சிகள் என் செல்வங்களு ௨௪
ம், என் ஆலோசனைக்காரருமாய் இருக்கின்றன.
என் ஆத்துமா மண்ணோடு ஒட்டியிருக்கிறது; ௨௫
உமது வார்த்தையின்படி என்னை உயிர்ப்பியும்.—
என் வழிகளை நான் விவரித்துக் காட்டினதற்கு ௨௬
எனக்கு உத்தரவு அருளிச்செய்தீரே; உம்மு
டைய பிரமாணங்களை எனக்குப் போதியும்.—
நான் உம்முடைய அதிசயங்களை யோசித்துக் ௨௭
கொள்வதற்காக என்னை உம்முடைய சாட்சிக
ளின் வழியை உணரப்பண்ணும். — சஞ்சலத் ௨௮
தால் ஆத்துமா கரைகிறது; உம்முடைய வசனத்

1 ௨ மோ. ௰௫. ௨. ஏசா. ௰௨. ௨.
2 ஏசா. ௨௬. ௨.
3 மத். ௨௧. ௪௨. மாற். ௰௨. ௰, ௰௧. அப். ௪. ௰௧.
4 மத். ௨௧. ௯. யோவா. ௰௨. ௰௩.
5 சங். ௧. ௧, ௨: ௱௰௨. ௧.
6 சங். ௩௯. ௰௨. ௧ பே. ௨. ௰௧.

௨௯ தின்படி என்னை எடுத்து நிமிர்த்தும்.-கள்ளமார்க்
கத்தை என்னைவிட்டு விலக்கி, உம்முடைய வே
௩௰ தத்தை எனக்குத் தயவுபண்ணும்.—சத்தியத்தின்
வழியை நான் தெரிந்துகொண்டு, உம்முடைய
நியாயங்களை எனக்குமுன்பாக நிறுத்தினேன்.—
௩௧ உம்முடைய சாட்சிகளோடு ஒட்டிக்கொள்ளுகி
றேன்; கர்த்தாவே, என்னை வெட்கத்திற்கு உள்ப்
௩௨ படப்பண்ணாதிரும். — உம்முடைய கற்பனைக
ளின் வழியிலே ஓடுவேன்; ஏனெனில் என் இரு
தயத்தை விரிவாக்குகிறீர்.

௩௩ கர்த்தாவே, நான் உம்முடைய பிரமாணங்க
ளின் வழியை முடியக் கைக்கொள்வதற்காக அ
௩௪ தை எனக்குப் போதியும்.—எனக்கு உணர்வைக்
கட்டளையிடும்; அப்போது நான் உமது வேதத்
தைக் கைக்கொண்டு அதை முழு இருதயத்தா
௩௫ லும் காப்பேன்.—உம்முடைய கற்பனைகளின்
பாதையில் என்னை நடத்தும், ஏனெனில் அதின்
௩௬ மேல் பிரியமாயிருக்கிறேன்.-பொருளாசைக்கு
அல்ல, உம்முடைய சாட்சிகளுக்கே என் இருத
௩௭ யத்தைச் சாந்திருக்கப் பண்ணும்.[1]—நீர் என்
கண்களை மாயையைப் பாராதபடிக்கு விலக்கி,
உம்முடைய வழிகளில் என்னை உயிர்ப்பியும்.—
௩௮ உமக்குப் பயப்படுகிறதற்கான உமது வசனத்தை
உம்முடைய அடியானுக்கு நிலைப்படுத்தும்.—
௩௯ நான் அஞ்சுகிற என் நிந்தையை விலக்கும்;
ஏனெனில் உம்முடைய நியாயத்தீர்ப்புகள் நல்
௪௰ லவைகள்.—இதோ உம்முடைய கட்டளைகள்
மேல் வாஞ்சையாயிருக்கிறேன்; உமது நீதியால்
என்னை உயிர்ப்பியும்.

௪௧ கர்த்தாவே, உம்முடைய வார்த்தையின்படி
உம்முடைய தயவுகளும், உமது இரட்சிப்பும்
௪௨ எனக்கு வருவதாக.— அப்போது என்னை நிந்
திக்கிறவனுக்கு மறு உத்தரவு சொல்லுவேன்;
ஏனெனில் உம்முடைய வசனத்தை நம்புகி
௪௩ றேன்.—சத்தியத்தின் வசனத்தைமாத்திரம் என்
வாயைவிட்டுப் பிரியவொட்டாதிரும்; ஏனெ
னில் உம்முடைய நியாயத்தீர்ப்புகளுக்குக் காத்
௪௪ திருக்கிறேன்.[2]-எப்போதும் என்றைக்குமுள்ள
நித்தியகாலமும் உமது வேதத்தைக் காப்பேன்.-
௪௫ விசாலத்திலே நடப்பேன்; ஏனெனில் உம்மு
௪௬ டைய கட்டளைகளைத் தேடுகிறேன்.—நான் உம்
முடைய சாட்சிகளைக்குறித்து இராசாக்களுக்
௪௭ குமுன்பாகவும் வெட்காமல் பேசி,[3] — நான்
சிநேகித்திருக்கிற உம்முடைய கற்பனைகளின்
௪௮ மேலே மனமகிழ்ச்சியாயிருந்து,— நான் சிநே
கித்திருக்கிற உம்முடைய கற்பனைகளுக்கு நே
ராக என் கைகளை ஏறெடுத்து, உம்முடைய பிர
மாணங்களை யோசிப்பேன்.

௪௯ நீர் என்னை நம்பப்பண்ணின வசனத்தை
உம்முடைய அடியானுக்காக நினைத்தருளும்.—
௫௰ அதுவே என் சிறுமையில் என்னுடைய ஆறுதல்;
ஏனெனில் உம்முடைய வார்த்தை என்னை உ
௫௧ யிர்ப்பிக்கிறது.[4]—அகந்தைக்காரர் மிகவும் என்
னைப் பரியாசம்பண்ணியும் உம்முடைய வேதத்
தைவிட்டு விலகேன். — கர்த்தாவே, ஆதிமுத ௫௨
லான உம்முடைய நியாயத்தீர்ப்புகளை நினைத்து
என்னைத் தேற்றுகிறேன்.—உம்முடைய வேதத் ௫௩
தை விட்டுவிடுகிற ஆகாதவர்கள்நிமித்தமாய்
எரிச்சல் என்னைப் பிடித்தது.—நான் பரதேசி ௫௪
யாய்த் தங்கும் வீட்டிலே உம்முடைய பிரமா
ணங்கள் எனக்குக் கீதங்களாயிருக்கின்றன.—
கர்த்தாவே, இராக்காலத்தில் உம்முடைய நாமத் ௫௫
தை நினைத்து, உம்முடைய வேதத்தைக் கைக்
கொள்ளுகிறேன்.[5]—நான் உம்முடைய கட்ட ௫௬
ளைகளைக் கைக்கொள்ளுகிறபடியினாலே இப்
படி எனக்கு உண்டாயிற்று.

கர்த்தர் என் பங்கு; உம்முடைய வசனங்க ௫௭
ளைக் காப்பேனென்றேன்.—நான் முழு இருதயத் ௫௮
தாலும் உம்முடைய முகத்தைநோக்கிக் கெஞ்சு
கிறேன்; உமது வார்த்தையின்படி எனக்கு இரங்
கும்.—என் வழிகளைச் சிந்தித்துக்கொண்டு, என் ௫௯
கால்களை உம்முடைய சாட்சிகளுக்கு நேராகத்
திருப்புகிறேன். — உம்முடைய கற்பனைகளைக் ௬௰
காத்துநடக்க நான் தாமதியாமலே தீவிரிக்கி
றேன். — ஆகாதவர்களின் கும்புகள் என்னைக் ௬௧
கொள்ளையிட்டும் உம்முடைய வேதத்தை மற
வேன்.—உம்முடைய நீதியினுடைய நியாயத் ௬௨
தீர்ப்புகளின்நிமித்தம் உம்மைத் துதிக்கப் பாதி
இராத்திரியில் எழுந்திருக்கிறேன். — உமக்குப் ௬௩
பயந்து, உம்முடைய கட்டளைகளைக் கைக்கொ
ள்ளுகிற அனைவருக்கும் நான் தோழன்.—கர்த் ௬௪
தாவே, பூமி உமது கிருபையினாலே நிறைந்தி
ருக்கிறது; உம்முடைய பிரமாணங்களை எனக்
குக் கற்றுக்கொடும்.[6]

கர்த்தாவே, உமது வார்த்தையின்படி உம்மு ௬௫
டைய அடியானை நன்றாய் நடத்தினீர்.—நல்ல ௬௬
நிதானிப்பையும் அறிவையும் எனக்குக் கொடும்;
ஏனெனில் உம்முடைய கற்பனைகளின்மேல்
விசுவாசமாயிருக்கிறேன். — நான் தாழ்த்தப்ப ௬௭
டாததற்குமுன் நான் வழிதப்பினவன்; இப்போ
தோவெனில் உம்முடைய வார்த்தையைக் காத்
துநடக்கிறேன்.—தேவரீர் நல்லவரும் நன்மை ௬௮
செய்கிறவருமாயிருக்கிறீர்; உம்முடைய பிரமா
ணங்களை எனக்குக் கற்றுக்கொடும். — அகந் ௬௯
தைக்காரர் என்மேல் பொய்களைப் பிணைக்கிறார்
கள்; நானோ முழு இருதயத்தாலும் உம்முடைய
கட்டளைகளைக் கைக்கொள்ளுகிறேன்.—அவர் ௭௰
கள் இருதயம் நிணந்துற்றாற்போலக் கொழுத்தி
ருக்கிறது; நானோ உம்முடைய வேதத்தின்
மேலே மனமகிழ்ச்சியாயிருக்கிறேன். — நான் ௭௧
உம்முடைய பிரமாணங்களைக் கற்றுக்கொள்
ளும்படிக்கு, நான் சிறுமையாக்கப்பட்டது
எனக்கு நல்லது.—அநேகம் ஆயிரமான பொன் ௭௨
வெள்ளியைப்பார்க்கிலும், உமது வாக்கினுடைய
வேதமே எனக்கு நலம்.[7]

உம்முடைய கரங்கள் என்னை உண்டாக்கி, ௭௩

1 ௧ தீமோ. ௬.௰,௧௧.—2 எரே. ௰௫.௰௬.—3 ௨ ரோ. ௧௰௧.

4 சங். ௯௪.௮ ௰௯.—5 சங். ௯௧ எ: ௪௨.௬.—6 சங். ௩௩.௫.—7 சங். ௰௯.௰௧.

என்னை உருவாக்கின; உம்முடைய கற்பனைக
ளைக் காக்க என்னை உணர்வுள்ளவனாக்கும்.—
எச நான் உம்முடைய வசனத்திற்குக் காத்திருக்கை
யால், உமக்குப் பயந்தவர்கள் என்னைக் கண்டு
எரு சந்தோஷப்படுகிறார்கள். — கர்த்தாவே, உம்மு
டைய நியாயத்தீர்ப்புகள் நீதியென்றும், உண்
மையால் என்னைச் சிறுமைப்படுத்தினீரென்றும்
எசு அறிவேன்.—நீர் உம்முடைய அடியானுக்குக்
கொடுத்த உமது வார்த்தையின்படி, உமது கிரு
எஎ பை எனக்குத் தேற்றரவாயிருப்பதாக.—நான்
பிழைக்கும்படிக்கு உமது இரக்கங்கள் என்மேல்
வரக்கடவன; ஏனெனில் உம்முடைய வேதம்
எஅ என் மனமகிழ்ச்சி.—அகந்தைக்காரர் என்னைப்
பொய்களால் அமுக்கினதின்நிமித்தம் வெட்கக்
கடவார்கள்; நானோ உம்முடைய கட்டளைகளை
எகூ யோசித்திருப்பேன்.—உமக்குப் பயந்து, உம்மு
டைய சாட்சிகளை அறிந்திருக்கிறவர்கள் என்
அ௰ னண்டைக்குத் திரும்புவார்களாக.—நான் வெட்
கத்திற்குள்ளாகாதபடிக்கு, என் இருதயம் உம்
முடைய பிரமாணங்களில் உத்தமமாய் இருக்
கக்கடவது.

அக உம்முடைய இரட்சிப்புக்கு என் ஆத்துமா
தவனமாய்த் தொய்ந்திருக்கிறது; உம்முடைய
அஉ வசனத்திற்குக் காத்திருக்கிறேன்.[1]—எப்போது
என்னைத் தேற்றரவுபண்ணுவீரென்று உம்மு
டைய வார்த்தையின்மேல் நோக்கமாய் என்
அ௩ கண்கள் பூத்துப்போகின்றன. — ஏனென்றால்
புகையில் துருத்தியைப்போலானேன்; உம்மு
அச டைய பிரமாணங்களையோ மறவேன்.—உம்மு
டைய அடியானுடைய நாள்கள் எம்மாத்திரம்,
என்னைத் துன்பப்படுத்துகிறவர்களை எப்போது
அரு விசாரித்து நியாயஞ்செய்வீர்.—அகந்தைக்காரர்
உம்முடைய நியாயப்பிரமாணத்திற்கு ஏலாத
அசு தாய் எனக்குக் குழிகளை வெட்டினார்கள்.—உம்
முடைய கற்பனைகளெல்லாம் உண்மை; பொய்
களால் என்னைத் துன்பப்படுத்துகிறார்கள்; எனக்
அஎ குச் சகாயம்பண்ணும்.—அவர்கள் என்னைப்
பூமியிலிராமல்பண்ண மெத்தச் சமீபமாயிற்று;
ஆனால் நான் உம்முடைய கட்டளைகளை விட்
அஅ டதில்லை.—உமது கிருபையின்படியே என்னை
உயிர்ப்பியும்; அப்போது உம்முடைய வாக்கின்
சாட்சியைக் காத்துநடப்பேன்.

அகூ கர்த்தாவே, என்றென்றைக்கும் உம்முடைய
கூ௰ வசனம் மண்டலங்களில் நிலைநிற்கும்.[2]—தலை
முறைதலைமுறையாக உம்முடைய சத்தியம் இ
ருக்கும்; பூமியை உறுதிப்படுத்தினீர்; அதினால்
கூக அது நிற்கும்.—இன்றையத்தினம்மட்டும் அவை
கள் உம்முடைய நியாயத்தீர்ப்புகளை நிறைவேற்
றும்படிக்கு நிற்கின்றன; ஏனெனில் சர்வமும்
கூஉ உமக்குப் பணிசெய்யும்.—உமது வேதம் என்
மனமகிழ்ச்சியாய் இராதிருந்ததானால் அப்போ
கூ௩ து என் சிறுமையிலே அழிவேன்.[3]—என்றென்
றைக்கும் உம்முடைய கட்டளைகளை மறவாதி
ருப்பேன்; ஏனெனில் அவைகளால் என்னை
உயிர்ப்பித்தீர்.—நான் உம்முடையவன், என் கூச
னை இரட்சியுமே; ஏனெனில் உம்முடைய கட்
டளைகளைத் தேடுகிறேன்.—ஆகாதவர்கள் என் கூரு
னை அழிக்க என்னைக் காத்திருக்கிறார்கள்; நா
னோ உம்முடைய சாட்சிகளைச் சிந்தித்துக்
கொண்டிருக்கிறேன்.[4] — சகல சம்பூரணத்துற் கூசு
கும் எல்லையைக் கண்டேன்; உம்முடைய கற்
பனையோவென்றால் மகா விஸ்தாரம்.

உமது வேதத்தை எத்தனையாய்ச் சிநேகிக்கி கூஎ
றேன்; அதுவே நாள்தோறும் என்னுடைய
யோசிப்பு.[5]—உம்முடைய கற்பனைகளே என் கூஅ
னை என் சத்துருக்களிலும் அதிக ஞானமுள்ள
வனாக்குகின்றன; ஏனெனில் என்றைக்கும் அ
வைகள் என்னுடனே இருக்கின்றன. — என் கூகூ
னை உபதேசித்த எல்லாரைப்பார்க்கிலும் புத்தி
யுள்ளவனாயிருக்கிறேன், ஏனெனில் உம்மு
டைய சாட்சிகள் என்னுடைய யோசிப்பு.—
முதிர்ந்த வயதுள்ளவர்களைப்பார்க்கிலும் உணர் ௱
வுள்ளவனாயிருக்கிறேன்; ஏனெனில் உம்மு
டைய கட்டளைகளைக் கைக்கொண்டிருக்கிறே
ன்.—நான் உம்முடைய வசனத்தைக் காத்துந ௱க
டக்கும்படிக்கு, சகல பொல்லாத பாதைக்கும்
என் கால்களை விலக்குகிறேன்.—உம்முடைய ௱உ
நியாயங்களை விட்டு விலகேன்; ஏனெனில் தே
வரீர் என்னைப் போதிப்பித்தீர்.—உம்முடைய ௱௩
வார்த்தைகள் என் உருசிக்கு எத்தனை தித்திப்
பானவைகள்? என் வாய்க்கு அவைகள் தேனி
லும் மதுரமாயிருக்கும்.[6]—உம்முடைய கட்ட ௱ச
ளைகளால் உணர்வடைந்தேன்; ஆனபடியால்
எல்லாக் கள்ளவழியையும் பகைக்கிறேன்.

உம்முடைய வசனம் என் கால்களுக்குத் தீப ௱ரு
மும், என் பாதைக்கு வெளிச்சமுமானது.[7]—
உம்முடைய நீதிநியாயங்களைக் காத்துநடப்பே ௱சு
னென்று ஆணையிட்டேன்; அதை நிருவாகமும்
பண்ணுவேன்.—மிகுதியும் ஒடுங்குண்டேன்; ௱எ
கர்த்தாவே, உம்முடைய வசனத்தின்படியே
என்னை உயிர்ப்பியும்.—கர்த்தாவே, என் வாயின் ௱அ
உற்சாக பலிகளை நீர் அங்கீகரித்தருளி, உம்மு
டைய நியாயங்களை எனக்குக் கற்றுக்கொ
டும்.[8]—என் ஆத்துமா எப்போதும் என் கையில் ௱கூ
இருக்கிறது; ஆனால் உம்முடைய வேதத்தை
மறவேன்.—ஆகாதவர்கள் எனக்குக் கண்ணி ௱௰
வைக்கிறார்கள்; ஆனால் உம்முடைய கட்டளை
களை நான் விட்டு வழிதப்பேன்.—உம்முடைய ௱௰க
சாட்சிகளை நித்திய சுதந்தரமாக்கிக்கொண்டிருக்
கிறேன்; ஏனெனில் அவைகள் என் இருதயத்
தின் சந்தோஷம்.—உம்முடைய பிரமாணங்க ௱௰உ
ளின்படி என்றென்றைக்கும் முடியவும் செய்
வதற்கு என் இருதயத்தைச் சாய்த்தேன்.

வீண் சிந்தனைகளை நான் பகைத்து, உமது ௱௰௩
வேதத்தைச் சிநேகிக்கிறேன்.—என் மறைவும் ௱௰ச
என் கேடயமும் தேவரீர், உம்முடைய வசனத்

1 உரோ ௭௯. ௰அ.
2 எசா. ௪௰ அ.
3 ௰. ௯ச.
4 சங். ௯எ. ௯உ.
5 சங் க. உ.
6 சங். ௰௯. ௰க.
7 சங். ௰௯. ௯. உ பே க. ௰௯.
8 சங். ௰௯. ௰௭. எபி. ௰க. ௰௫.

௱௰௫ திற்குக் காத்திருக்கிறேன். — பொல்லாதவர்க
ளே, என்னைவிட்டு அகன்றுபோங்கள்; ஏனெ
னில் என் பராபரனுடைய கற்பனைகளைக்
௱௰௬ கைக்கொள்ளுவேன். — நான் பிழைக்கும்ப
டிக்கு என்னை உமது வார்த்தையின்படி ஆதரி
யும்; என் நம்பிக்கை விருதாவாக என்னை
௱௰௭ வெட்கத்திற்கு உட்படுத்தாதிரும்.[1] — நான்
இரட்சிக்கப்பட்டு எக்காலமும் உம்முடைய
பிரமாணங்களின்மேலே மனமகிழ்ச்சியாயிருக்
௱௰௮ கும்படிக்கு என்னை ஆதரியும்.—உம்முடைய
பிரமாணங்களைவிட்டு வழிவிலகுகிற யாவரை
யும் மிதித்துப்போடுகிறீர்; ஏனெனில் அவர்க
௱௰௯ ளுடைய கபடம் வெறும் பொய். — பூமியி
லுள்ள ஆகாதவர்களை எல்லாம் களிம்புகளைப்
போல அகற்றிவிடுகிறீர்; ஆகையால் உம்மு
௱௨௰ டைய சாட்சிகளைச் சிநேகிக்கிறேன்.—உம்
மால் அடையும் திகிலால் என் உடம்பு சிலிர்க்
கிறது; உம்முடைய நியாயத்தீர்ப்புகளுக்குப்
பயமாயிருக்கிறேன்.

௱௨௧ நியாயமும் நீதியும்செய்கிறேன்; என்னை
ஒடுக்குகிறவர்களுக்கு ஒப்புக்கொடாதிரும்.—
௱௨௨ உம்முடைய அடியானுக்கு நன்மையாக மேற்
போட்டுக்கொள்ளும்; அகந்தைக்காரர் என்னை
௱௨௩ ஒடுக்கவொட்டாதிரும்.—உமது இரட்சிப்புக்
கும், உமது நீதியின் வார்த்தைக்கும் காத்திருக்
கிறதினால் என் கண்கள் பூத்துப்போகின்றன.—
௱௨௪ உம்முடைய அடியானை உமது கிருபையின்ப
டியே நடத்தி, உம்முடைய பிரமாணங்களை
௱௨௫ எனக்குக் கற்றுக்கொடும்.—நான் உமது அடி
மை; உம்முடைய சாட்சிகளை நான் அறியும்
௱௨௬ படிக்கு என்னை உணர்வுள்ளவனாக்கும்.—நீதி
யைச்செய்யக் கர்த்தருக்கு வேளையாம்; அவர்
கள் உம்முடைய நியாயப்பிரமாணத்தை முறித்
௱௨௭ தார்கள்.—அதைக் கண்டு, நான் பொன்னையும்
அபரஞ்சியையும்பார்க்கிலும் உம்முடைய கற்
௱௨௮ பனைகளைச் சிநேகிக்கிறேன்.[2]—நான் உம்மு
டைய கட்டளைகளை எல்லாம் முற்றிலும் செம்
மையென்று எண்ணி, சகல கள்ளவழியையும்
பகைக்கிறேன்.

௱௨௯ உம்முடைய சாட்சிகள் அதிசயமானவை
கள்; ஆகையால் அவைகளை என் ஆத்துமா
௱௩௰ கைக்கொள்ளும். — உம்முடைய வார்த்தைக
ளின் சிறப்பு வெளிச்சம்தந்து, பேதைகளை
௱௩௧ உணர்வுள்ளவர்களாக்கும்.[3]—உம்முடைய கற்
பனைகளை நான் வாஞ்சிக்கிறபடியினாலே, என்
வாயை ஆவென்று திறந்து அவைகளுக்கு ஏங்
௱௩௨ குகிறேன்.—உம்முடைய நாமத்தைச் சிநேகிக்
கிறவர்களுக்கு வழங்கும் நியாயத்தின்படியே
என்னை நோக்கிப்பார்த்து எனக்கு இரங்கும்.—
௱௩௩ நீர் என் காலடிகளை உம்முடைய வார்த்தை
யிலே நிலைப்படுத்தி ஒரு அநியாயமும் என்னை
௱௩௪ ஆளவொட்டாதிரும். — உம்முடைய கட்ட
ளைகளை நான் காப்பதற்காக என்னை மனுஷரின்
இடுக்கணுக்கு விலக்கி விடுவித்துக்கொள்
ளும். — உம்முடைய அடியான்மேல் உமது ௱௩௫
முகத்தைப் பிரகாசிக்கப்பண்ணி, உம்முடைய
பிரமாணங்களை எனக்குக் கற்றுக்கொடும்.—
உம்முடைய வேதத்தைக் காத்து நடவார்க ௱௩௬
ளென்று என் கண்களிலிருந்து நீர்க்கால்கள்
இறங்குகின்றன.

கர்த்தாவே, தேவரீர் நீதிபரன்; உம்முடை ௱௩௭
ய நியாயத்தீர்ப்புகள் செம்மையுமாயிருக்கின்
றன.—உம்முடைய சாட்சிகளுடைய நீதியின் ௱௩௮
படியேயும், உண்மையின்படியேயும் நடக்க
மிகவும் கற்பித்தீர்.—என் சத்துருக்கள் உம்மு ௱௩௯
டைய வார்த்தைகளை மறந்தார்களென்று என்
பத்திவயிராக்கியம் என்னை அறுக்கிறது.[4] —
உமது வசனம் மெத்தவும் புடமிடப்பட்டது; ௱௪௰
உம்முடைய அடியான் அதைச் சிநேகிக்கி
றான்.[5] — நான் சிறியவனும் அசட்டைபண் ௱௪௧
ணப்பட்டவனுமாயிருக்கிறேன்; ஆனால் உம்
முடைய கட்டளைகளை மறவேன். — உம்மு ௱௪௨
டைய நீதி நித்திய நீதி; உமது வேதம் சத்தி
யம்.[6] — இடுக்கணும், நெருக்கமும் என்னைப் ௱௪௩
பிடித்தது; ஆனால் உம்முடைய கற்பனைகள்
என் மனமகிழ்ச்சி.—உம்முடைய சாட்சிகளின் ௱௪௪
நீதி என்றென்றைக்கும் நிற்கும்; நான் பிழைக்
கும்படிக்கு என்னை உணர்வுள்ளவனாக்கும்.

முழு இருதயத்தாலும் கூப்பிடுகிறேன்;கர்த் ௱௪௫
தாவே, என் செபத்தைக்கேளும்; உம்முடைய
பிரமாணங்களைக் கைக்கொள்ளுவேன்.—உம் ௱௪௬
மைநோக்கிக் கூப்பிடுகிறேன்; உம்முடைய
சாட்சிகளை நான் காக்கும்படிக்கு என்னை
இரட்சியும். — அதிகாலமே வந்து சத்தமிடுகி ௱௪௭
றேன்; உம்முடைய வார்த்தைக்குக் காத்திருக்
கிறேன். — உமது வசனத்தை யோசிப்பதற்கு ௱௪௮
என் கண்கள் சாமங்களுக்குமுன்னே விழிக்
கும். — உம்முடைய கிருபையின்படி என் ௱௪௯
சத்தத்தைக் கேளும்; கர்த்தாவே உம்முடைய
நியாயத்தின்படி என்னை உயிர்ப்பியும்.—தீவி ௱௫௰
னையைப் பின்பற்றுகிறவர்கள் சமீபமாயிருக்கி
றார்கள்; உம்முடைய வேதத்துக்குத் தூரமா
னார்கள். — கர்த்தாவே, தேவரீர் சமீபமாயிருக் ௱௫௧
கிறீர்; உம்முடைய கற்பனைகளெல்லாம் உண்
மை.—தேவரீர் உம்முடைய சாட்சிகளை என் ௱௫௨
றென்றைக்கும் நிற்க அஸ்திபாரப்படுத்தினீர்
என்கிறதை நான் பூர்வகாலம் முதலாய் அவை
களால் அறிந்திருக்கிறேன்.

என் சிறுமையைப்பார்த்து என்னை விடுவி ௱௫௩
யும்; ஏனெனில் உமது வேதத்தை மறவேன்.—
என் வழக்கை நீர் வழக்காடி என்னை மீட்டுக் ௱௫௪
கொள்ளும்; உம்முடைய வார்த்தையின்படியே
என்னை உயிர்ப்பியும்.—இரட்சிப்பு ஆகாதவர்க ௱௫௫
ளுக்குத் தூரமாயிருக்கிறது; ஏனெனில் உம்மு
டைய பிரமாணங்களைத் தேடார்கள்.—கர்த்தா ௱௫௬
வே, உம்முடைய இரக்கங்கள் மிகுதியுமாயிரு
க்கின்றன; உம்முடைய நியாயங்களின்படி
என்னை உயிர்ப்பியும்.-என்னைத் துன்பப்படுத்து ௱௫௭

1 சங். ௨௫. ௨, ௩.—2 சங். ௰௯. ௰௧.—3 சங். ௰௯. ௮, ௯. ௨ தீமோ. ௩. ௰௫.

4 சங். ௬௯. ௰.—5 சங். ௰௨. ௭.—6 யோவா. ௰௭. ௰௭.

கிறவர்களும், எனக்கு நெருக்கம்செய்கிறவர்க
ளும் அநேகர், ஆனால் உம்முடைய சாட்சிகளை
௱௫௮ விட்டுவிலகேன்.[1]—உமது வசனத்தைக் காக்கா
த துரோகிகளை நான் காணும்போது அவர்களை
௱௫௯ அரோசிக்கிறேன். — இதோ உம்முடைய கட்
டளைகளைச் சிநேகிக்கிறேன்; கர்த்தாவே, உமது
௱௬௰ கிருபையின்படி என்னை உயிர்ப்பியும்.—உம்மு
டைய வசனம் சமூலமும் சத்தியம், உமது நீதி
யின் நியாயமெல்லாம் என்றைக்கும் நிற்கும்.[2]
௱௬௧ பிரபுக்கள் முகாந்தரமில்லாமல் என்னைத்
துன்பப்படுத்துகிறார்கள்; ஆனால் உமது வசனத்
௱௬௨ துக்கே என் இருதயம் பயப்படுகிறது.—வெகு
கொள்ளையுடைமையைக் கண்டுபிடிக்கிறவ
னைப்போல, நான் உமது வார்த்தையின்மேலே
௱௬௩ களிப்பாயிருக்கிறேன்.-பொய்யைப் பகைத்து
அருவருத்து, உம்முடைய வேதத்தைச் சிநேகிக்
௱௬௪ கிறேன்.—உமது நீதியினுடைய நியாயங்களின்
நிமித்தம் ஒரு நாளிலே ஏழுதரம் உம்மைத்துதிக்
௱௬௫ கிறேன்.—உம்முடைய வேதத்தைச் சிநேகிக்கி
றவர்களுக்கு மிகுந்த சமாதானமுண்டு; அவர்
௱௬௬ களுக்கு இடறலில்லை.— கர்த்தாவே, உம்மு
டைய இரட்சிப்புக்கு நான் காத்திருந்து, உம்மு
௱௬௭ டைய கற்பனைகளின்படி செய்கிறேன்.—என்
ஆத்துமா உம்முடைய சாட்சிகளைக் காக்கும்;
௱௬௮ அவைகளை மிகவும் சிநேகிக்கிறேன்.—உம்மு
டைய கட்டளைகளையும், உம்முடைய சாட்சிக
ளையும்காத்துநடக்கிறேன்; ஏனெனில் என்வழி
களெல்லாம் உமக்குமுன்பாக இருக்கின்றன.
௱௬௯ கர்த்தாவே, என் கூப்பிடுதல் உமக்குமுன்
பாகச் சேரக்கடவது; உமது வசனத்தின்படி
௱௭௰ யே என்னை உணர்வுள்ளவனாக்கும்.—என் வி
ண்ணப்பம் உமக்குமுன்பாக வரச்செய்யும்;
உமது வார்த்தையின்படியே என்னை விடுவி
௱௭௧ யும்.—உம்முடைய பிரமாணங்களை நீர் எனக்
குக் கற்றுக்கொடுக்கும்போது என் உதடுகள்
௱௭௨ உமது துதியை வெளிப்படுத்தும்.—என் நாவு
உம்முடைய வசனத்தைப் பகர்ந்துபேசும்; ஏ
னெனில் உம்முடைய கற்பனைகளெல்லாம்
௱௭௩ நீதி.—உமது கரம் எனக்குச் சகாயம்செய்ய இ
ருக்கக்கடவது; ஏனெனில் உம்முடைய கட்
௱௭௪ டளைகளைத் தெரிந்துகொண்டேன். — கர்த்தா
வே, உம்முடைய இரட்சிப்பின்மேல் ஆசை
யாயிருக்கிறேன்; உம்முடைய வேதம் என் மன
௱௭௫ மகிழ்ச்சி.—என் ஆத்துமா பிழைத்து, உம்மைத்
துதிக்கக்கடவது; உம்முடைய நியாயத்தீர்ப்பு
௱௭௬ கள் எனக்கு ஒத்தாசையாயிருப்பதாக.—காணா
மற்போன ஆட்டைப்போல வழிதப்பினேன்;
உம்முடைய அடியானைத்தேடும்; ஏனெனில்
உம்முடைய கற்பனைகளை மறவேன்.[3]

## ௱௨௰. சங்கீதம்.

௧. தாவீது தோவேக்கில்நின்று தன்னை நீக்கப் பராபரனை மன்றாடி, ௨. தான் அவன் நாவைக் கடிந்துகொண்டது. ௫ துன்மார்க்கரோடு சம்பாஷணை பண்ணுதலின் அவசரத்தைக்குறித்து முறையிட்டது.

(படிகளின்மேல் நின்று பாடினது.)

என் நெருக்கத்திலே கர்த்தரைநோக்கிக் கூப் ௧
பிட்டேன்; என்னைக் கேட்டருளினார்.[4]—கர்த் ௨
தாவே, கள்ள உதட்டுக்கும் கபட்டுநாவுக்கும்
என் ஆத்துமாவைத் தப்புவியும்.
கபட்டுநாவு உனக்குச் செய்தவதென்ன? உன ௩
க்கு அப்புறம் உண்டாக்குவதுமென்ன?—அது ௪
பலவானுடைய கூர்மையான அம்புகளைப்போ
லவும், சூரைச்செடிகளை எரிக்கும் தழலைப்போ
லவுமிருக்கிறது.[5]
நான் மேசேக்கிலே குடியிருந்தது போதும், ௫
கேதாரின் கூடாரங்களண்டையிலே குடியிருக்
கையால் எனக்கு ஐயோ,—சமாதானத்தைப் ப ௬
கைக்கிறவர்களிடத்தில் என் ஆத்துமா குடியிருந்
தது போதும்.—நான் சமாதானமாயிருக்கிறேன்; ௭
நான் பேசும்போதோவெனில், அவர்கள் யுத்தத்
திற்கு எத்தனமாயிருக்கிறார்கள்.

## ௱௨௧. சங்கீதம்.

௧. பராபரனுடைய பராமரிப்பின்மேல் நம்பிக்கைவைக்கிற தேவபத்தியுள்ளவர்களுக்கு உண்டாகிய பாதுகாப்பு.

(படிகளின்மேல் நின்று பாடுவது.)

எனக்கு ஒத்தாசைவரும், பர்வதங்களுக்கு நே ௧
ராக என் கண்களை ஏறெடுக்கிறேன்.—வானத் ௨
தையும் பூமியையும் உண்டாக்கின கர்த்தரிடத்தி
லிருந்து எனக்கு ஒத்தாசைவரும்.—உன் காலைத் ௩
தள்ளாடவொட்டார்; உன்னைக் காக்கிறவர் உற
ங்கார்.—இதோ இஸ்ரவேலைக் காக்கிறவர் உறங் ௪
குகிறதுமில்லை; தூங்குகிறதுமில்லை. — கர்த்தர் ௫
உன்னைக் காக்கிறவர்; கர்த்தர் உன் வலதுபக்கத்
திலே உனக்கு நிழலாயிருக்கிறார். — பகலில் ௬
வெயிலாகிலும், இரவில் நிலவென்கிலும் உன்
னைச் சேதப்படுத்துவதுமில்லை.—கர்த்தர் உன்னை ௭
எல்லாத் தீங்குக்கும் விலக்கமாய்க் காப்பார்;
அவர் உன் ஆத்துமாவைக் காப்பார்.[6]—கர்த்தர் ௮
உன் போக்கையும், உன் வரத்தையும் இதுமுதற்
கொண்டு என்றைக்கும் காப்பார்.

## ௱௨௨. சங்கீதம்.

௧. தாவீது சபையைக்குறித்துத் தனக்குண்டாகிய சந்தோஷத்தை வெளியிட்டது. ௬. அதினுடைய சமாதானத்துக்காக மன்றாடினது.

(படிகளின்மேல் நின்று பாடப்பட்ட தாவீதின் பாட்டு.)

கர்த்தருடைய வீட்டிற்குப் போவோமென்று ௧
எனக்குச் சொல்லுகிறவர்களால் மகிழ்ச்சியாயி
ருக்கிறேன்.—எருசலேமே, உன் வாசல்களில் ௨
எங்கள் கால்கள் நிற்கலாயின.—எருசலேமே, ௩
இசைவிணைப்பான பட்டணமாகக் கட்டப்பட்
டிருக்கிறது.—அங்கே இஸ்ரவேலுக்குச் சாட்சி ௪
யாகக் கர்த்தருடைய கோத்திரங்களாகிற கோத்
திரங்கள் கர்த்தரின் நாமத்தைத் தோத்திரிப்பதற்
குப் போயேறும்.—ஏனெனில் அங்கே நியாயா ௫
சனங்கள் வைக்கப்பட்டிருக்கின்றன; தாவீது
டைய வீட்டாரின் ஆசனங்கள்தானே.

1 சங். ௧ ௨.—2 ௱௪௨. ௯௪.—3 லூக். ௰௫. ௪.

4 சங். ௱௨௰. ௰௫.—5 யாக். ௰௨. ௰௮.—6 சங். ௯௪. ௬.

௬ எருசலேமின் சமாதானத்திற்காக வேண்டுங்
கள்; உன்னைச் சிநேகிக்கிறவர்கள் சுகித்திருப்
௭ பார்களாக.—உன் அலங்கத்திற்குள்ளே சமாதா
னமும், உன் அரமனைகளில் சுகமும் இருப்ப
௮ தாக.—என் சகோதரருக்காகவும், என் சிநேகிதரு
க்காகவும் உன்னில் சமாதானம் இருப்பதாக என்
௯ பேன்.—எங்கள்பராபரனாகிய கர்த்தரின் வீட்டுக்
காக உனக்கு நலமாயிருக்கிறதைத் தேடுவேன்.

## ௱௨௩. சங்கீதம்.

௧. தேவபத்தியுள்ளவர்கள் பராபரனில் தங்களுக்குண்டாகிய நம்பிக்கையை வெளிப்பட்டது. ௩. அவர்கள் இகழ்ச்சியைவிட்டு நீங்க மன்றாடினது.

(படிகளின்மேல் நின்று பாடினபாட்டு.)

௧ பரமண்டலங்களில் வாசமாயிருக்கிற தேவரீ
ரண்டைக்கு என் கண்களை ஏறெடுக்கிறேன்.[1]—
௨ இதோ வேலைக்காரரின் கண்கள் தங்கள் எசமா
னர்களின் கையையும், வேலைக்காரியின் கண்
கள் தன் எசமானி கையையும் நோக்கியிருக்கு
மாப்போலே, எங்கள் கண்கள் எங்கள் பராபரனா
கிய கர்த்தர் அவர் எங்கள்மேல் இரக்கமாகும்மட்
௩ டும் நோக்கியிருக்கின்றன.—எங்களுக்கு இரங்
கும் கர்த்தாவே, எங்களுக்கு இரங்கும்; ஏனெ
னில் அசங்கதத்தாலே மிகவும் நிரப்பப்பட்
௪ டோம்.—எங்கள் ஆத்துமா நிர்விசாரரின் சக்கந்
தத்தாலும், அகந்தைக்காரரின் அசங்கதத்தாலும்
மிகவும் நிரப்பப்பட்டிருக்கிறது.

## ௱௨௪. சங்கீதம்.

௧. அதிசயமான ஆதரவுக்காகத் திருச்சபை பராபரனைத் தோத்திரித்தது.

(படிகளின்மேல் நின்று பாடப்பட்ட
தாவீதின் பாட்டு.)

௧,௨ கர்த்தர் நமக்கிராதிருந்தாராஞல்,—மனிதர் நமக்
கு விரோதமாய் எழும்பினபோது, கர்த்தரே நமக்
௩ கிராதிருந்தாராஞல்,—அப்போது அவாகள் தங்
கள் கோபம் நம்முடையமேல் எரிகையில், நம்
௪ மை உயிரோடே விழுங்கியிருப்பார்கள்.—அப்
போது தண்ணீர்கள் நம்முடையமேல் புரண்டு,
நீரோட்டம் நம்முடைய ஆத்துமாவின்மேல்
௫ கடந்து,—உயர்ந்த தண்ணீர்களே நம்முடைய
ஆத்துமாவின்மேல் கடக்குமென்று இஸ்ரவேல்
இப்போது சொல்வதாக.
௬ நம்மை அவர்கள் பற்களுக்கு இரையாக ஒப்
புக்கொடாதிருக்கிற கர்த்தர் தோத்திரிக்கப்பட்
௭ டவர்.—நம்முடைய ஆத்துமா ஒரு குருவியைப்
போல வேட்டைக்காரரின் கண்ணிக்குத் தப்
பிப்போயிற்று; கண்ணி தெறித்தது, நாம் தப்பி
௮ ஞேம். — நம்முடைய சகாயம் வானத்தையும்
பூமியையும் உண்டாக்கின கர்த்தருடைய நாமத்
தில் உள்ளது.[2]

## ௱௨௫. சங்கீதம்.

௧. பராபரன்மேல் நம்பிக்கை வைக்கிறவர்களுக்குண்டாகிய ஆதரவு ௪. தேவபத்தியுள்ளவர்களுக்காக மன்றாடித் துன்மார்க்கர்களைத் தண்டிக்கக் கேட்டது.

(படிகளின்மேல் நின்று பாடினது.)

கர்த்தரை நம்புகிறவர்கள் அசையாதபடிக்கு என் ௧
றும் நிலைத்திருக்கும் சீயோன் பர்வதத்தைப்போ
ல இருப்பார்கள்.[3]—எருசலேமைச் சுற்றிலும் பர் ௨
வதங்கள் இருக்குமாப்போலே, கர்த்தர் இதுமுத
லாய் என்றென்றைக்கும் தம்முடைய சனத்
தைச் சுற்றிலும் இருக்கிரூர்.—ஏனெனில் நீதிமா ௩
ன்கள் தங்கள் கைகளை அநியாயத்திற்கு நீட்டாத
படிக்கு, ஆகாமியத்தின் செங்கோல் நீதிமான்க
ளுடைய வித்தின்மேலே நிலைக்காதேபோம்.
கர்த்தாவே, நல்லவர்களுக்கும், தங்கள் இருத ௪
யங்களில் செம்மையானவர்களுக்கும் நன்மை
செய்யும்.—ஆஞலோ தங்கள் கோணலான வழி ௫
களுக்குச் சாய்கிறவர்களைக் கர்த்தர் அக்கிரமக்கா
ரரோடே போகப்பண்ணுவார்; இஸ்ரவேலின்
மேல் சமாதானம்.[4]

## ௱௨௬. சங்கீதம்.

௧. திருச்சபை அடிமைத்தனத்தில்நின்று அருமையான மீட்குதலைக்குறித்துக்கொண்டாடி, ௪. நற்செயத்தைக்குறித்துத் தீர்க்கதரிசனமாகச் சொல்லி மன்றாடினது.

(படிகளின்மேல் நின்று பாடினபாட்டு.)

சீயோனின் சிறையிருப்பைக் கர்த்தர் திருப்பும் ௧
போது, சொப்பனம் காண்கிறவர்களைப்போல
இருப்போம்.[5] — அப்போது நம்முடைய வாய் ௨
நகைப்பிஞலும், நம்முடைய நாவு கெம்பீரத்தி
ஞலும் நிறைந்திருக்கும்; அப்போது கர்த்தர் இ
வர்களிடத்திலே பெரியவைகளைச் செய்தாரென்
று புறச்சாதிகளுக்குள்ளே சொல்லிக்கொள்வார்
கள்.—கர்த்தர் நம்மிடத்திலே பெரியவைகளைச் ௩
செய்தார், இதினிமித்தம் மகிழ்ந்திருக்கிறோ
மென்போம்.
கர்த்தாவே, தெற்கத்து வெள்ளங்களைப்போ ௪
லே எங்கள் சிறையிருப்பைத் திருப்பும்.—கண் ௫
ணீரோடே விதைக்கிறவர்கள் கெம்பீரத்தோடே
அறுப்பார்கள்.[6] — அள்ளித்தூவும் விதையைச் ௬
சுமக்கிறவன் அழுது நடந்துகொண்டிருக்கிறான்;
ஆஞல் தான் அறுத்த அரிகளைச் சுமந்து கெம்பீ
ரத்தோடே வரவே வருவான்.

## ௱௨௭. சங்கீதம்.

௧. பராபரனுடைய ஆசீர்வாதத்தின் சகித்தமும், ௩. நல்ல புத்திரர்கள் அவருடைய வரப்பிரசாதமென்பதும்.

(படிகளின்மேல் நின்று பாடப்பட்ட
சாலோமோனின் பாட்டு.)

கர்த்தர் வீட்டைக் கட்டாராகில் அதைக் கட்டு ௧
கிறவர்கள் விருதாவாய் அதில் உழைக்கிறூர்கள்;
கர்த்தர் பட்டணத்தைக் காக்காராகில் சாமக்கா
ரன் விருதாவாய் விழித்திருக்கிறான்.—நீங்கள் ௨
இருட்டோடு எழுந்து, நேரப்பட வேலையிலே
தரித்து, வருத்தங்களுள்ள அப்பத்தைச் சாப்பிடு
கிறது விருதா; தமக்குப் பிரியமானவனுக்கு
நித்திரையை அளிக்கிறூர்.[7]
இதோ பிள்ளைகள் கர்த்தர் அளிக்கிற சுதந்தர ௩
மும் கர்ப்பத்தின் கனி அவரால் வரும் பலனு

1 சங். ௱௨௧. ௧,௨.—2 சங். ௱௨௧. ௨.—3 சங். ௨௫.௧.

4 கலா. ௬.௧௬.—5 சங். ௱௪.௭.—6 மத். ௫.௪.—7 மத். ௬.௩௩.௩௪.

௪ மாயிருக்கிறது.—வாலவயதுள்ள குமாரர் பெல
வானுடைய கையிலுள்ள அம்புகளுக்குச் சரி.—
௫ தன் அம்பறாத்தூணியை அவைகளால் நிரப்பின
புருஷன் பாக்கியவான்; கூச்சமில்லாமல் சத்து
ருக்களோடே ஒலிமுகவாசலிலே பேசுவார்கள்.

## ௱௨௮. சங்கீதம்.

௧. பராபரனிடம் பயப்படுகிறவர்களுக்கு வரும் பலவகையான ஆசீர்வாதங்களைக் குறித்தது

(படிகளின்மேல் நின்று பாடின பாட்டு.)

௧ கர்த்தருக்குப் பயந்து, அவர் வழிகளில் நடக்கி
௨ றவனெல்லாம் பாக்கியவான்.—உன் கைகளின்
பிரயாசத்தை நீ சாப்பிடுகையில் உனக்குப் பாக்
௩ கியமும் நன்மையுமிருக்கும்.—உன் பெண்சாதி
உன் வீட்டோரங்களில் கனிதரும் கொடிமுந்தி
ரிகைபோலவும், உன் பிள்ளைகள் உன் பந்தி
யைச் சுற்றிலும் ஒலிவமரக் கன்றுகளைப்போல
வும் இருப்பார்கள்.
௪ இதோ கர்த்தருக்குப் பயந்த மனுஷன் இப்படி
௫ ஆசீர்வதிக்கப்படுவான். — கர்த்தர் சீயோனிலி
ருந்து உன்னை ஆசீர்வதிப்பார்; நீ ஜீவனுள்ள நா
ளெல்லாம் எருசலேமின் நன்மையைக் காண்பா
௬ யாக.[1]—நீ உன் பிள்ளைகளின் பிள்ளைகளையும்,
இஸ்ரவேலின்மேல் சமாதானமிருக்கிறதையும்
காண்பாயாக.

## ௱௨௯. சங்கீதம்.

௧. இஸ்ரவேலரைத் தங்களுடைய மிகுந்த துன்பத்திலிருந்து காப்பாற்றினதற்காகப் பராபரனைத் துதிக்கத் தூண்டினது. ௫. சபையைப் பகைக்கிறவர்கள் சபிக்கப்பட்டவர்களென்பது.

(படிகளின்மேல் நின்று பாடின பாட்டு.)

௧ என் சிறுவயதுதுவக்கி அநேகம்விசை என்னை
௨ நெருக்கப்படுத்தினார்கள். — என் சிறுவயதுது
வக்கி அநேகம்விசை என்னை நெருக்கப்படுத்தி
யும் என்னை மேற்கொள்ளாதேபோனார்கள்.—
௩ உழுகிறவர்கள் என் முதுகின்மேல் உழுது, தங்
௪ கள் படைச்சால்களை நீளமாக்கினார்கள்.—கர்த்த
ரோ நீதிபரன், ஆகாதவர்களின் கயிறுகளை அறுத்
தாரென்று இஸ்ரவேல் இப்போது சொல்வதாக.
௫ சீயோனைப் பகைக்கிற அனைவரும் வெட்கிப்
௬ பின்னிட்டுத் திரும்பக்கடவார்கள்.—பிடுங்கப்
படுமுன் உலருகிற மேல்க்கூரைகளின் புல்லைப்
௭ போல இருப்பார்களாக. — அதனால் அறுக்கிற
வன் தன் கையையும், அரிகளைக் கூட்டுகிறவன்
௮ தன் மடியையும் நிரப்பான்.—அதற்கு வழிநடக்
கிறவர்கள் கர்த்தருடைய ஆசீர்வாதம் உங்கள்
மீது இருப்பதாக; உங்களைக் கர்த்தரின் நாமத்தி
லே ஆசீர்வதிக்கிறோமென்று சொல்வதுமில்லை.

## ௱௩௰. சங்கீதம்.

௧. சங்கீதக்காரன் ஜெபத்திலுண்டாகிய தன் நம்பிக்கையையும், ௫. நம்பிக்கையிலாகிய தன் பொறுமையையும் குறித்து அறிவித்தது. ௭. பராபரனில் நம்பிக்கைவைக்கிறதற்கு இஸ்ரவேலரைத் தூண்டினது.

(படிகளின்மேல் நின்று பாடினது.)

௧ கர்த்தாவே, தாழ்வுகளிலிருந்து உம்மைநோக்கிக்
௨ கூப்பிடுகிறேன். — ஆண்டவரே, என் சத்தத்
தைக் கேளும், உம்முடைய செவிகள் என் விண்
ணப்பங்களின் சத்தத்திற்குக் கவனித்திருக்கக்க
டவன்.—கர்த்தாவே, அக்கிரமங்களை நோக்கிக் ௩
கொண்டிருந்தீரானால், யார் நிலைநிற்பான் ஆண்
டவரே,[2]—ஆனால் உமக்குப் பயப்படும்படிக்கு ௪
மன்னிப்புத் தேவரீரிடத்தில் இருக்கிறது.
கர்த்தருக்குக் காத்திருக்கிறேன்; என் ஆத்து ௫
மா காத்திருக்கிறது; அவருடைய வார்த்தையை
நம்பியிருக்கிறேன்.—எப்போது விடியுமென்று ௬
விடியுங்காலத்திற்குக் காத்திருக்கிற சாமக்கார
ரைப்பார்க்கிலும் என் ஆத்துமா ஆண்டவருக்குக்
காத்திருக்கிறது.
இஸ்ரவேல் கர்த்தரை நம்பக்கடவது; ஏனெ ௭
னில் கர்த்தரிடத்திலே கிருபையும் அவரிடத்
திலே திரளான மீட்புமிருக்கிறது.—அவர் இஸ் ௮
ரவேலை அதின் அக்கிரமங்களுக்கெல்லாம் நீங்க
லாக்கி மீட்பார்.

## ௱௩௧. சங்கீதம்.

௧. தாவீது தன் மனத்தாழ்மையை அறிவித்து, ௩. பராபரனில் நம்பிக்கையாயிருக்க இஸ்ரவேலரைத் தூண்டினது.

(படிகளின்மேல் நின்று பாடப்பட்ட தாவீதின் பாட்டு.)

கர்த்தாவே, என் இருதயம் உப்பினதாயிருக்கிற ௧
தில்லை; என் கண்கள் மேட்டிமையாயிருக்கிறது
மில்லை; நான் பெருங்காரியங்களிலும், எனக்கு
மிஞ்சின கருமங்களிலும் நடக்கிறதுமில்லை.—
நான் என் ஆத்துமாவைப் பொசுங்கவும் அமர ௨
வும் பண்ணியிருந்தேனாகில், என் ஆத்துமா தன்
தாயினிடத்திலே முலைமறக்கப்பண்ணப்பட்டி
ருக்கிற குழந்தையைப்போல என்னிடத்தில்
இருக்கும்.-இஸ்ரவேல் இதுமுதற்கொண்டு என் ௩
றென்றைக்கும் கர்த்தரை நம்பி இருக்கக்கடவது.

## ௱௩௨. சங்கீதம்.

௧. தாவீது நியாயப்பிரமாணப் பெட்டியைக்குறித்துத் தனக்கிருந்த பயபத்தியான கவலையை ஜெபத்திலே பராபரனுடனே சொன்னது. ௮. பெட்டி பெயர்க்கப்பட்டபோது, அவன் பண்ணின பிரார்த்தனை. ௧௧. பராபரன் மறுபடியும் சொன்ன வாக்குத்தத்தத்தைக்குறித்தது.

(படிகளின்மேல் நின்று பாடினது.)

கர்த்தாவே, தாவீதையும் அவனுடைய சகல உ ௧
பத்திரவத்தையும் நினையும்.—அவன் தான் கர்த் ௨
தருக்கு ஒரிடத்தையும், யாக்கோபுடைய வல்ல
வருக்கு வாசஸ்தலங்களையும் காணும்மட்டும்,[3]—
தன் வீட்டின் கூடாரத்திலே பிரவேசியாமலும், ௩
தன் படுக்கையினுடைய கட்டிலின்மேல் ஏறாம
லும்,—தன் கண்களுக்கு நித்திரையையும், தன் ௪
இமைகளுக்கு உறக்கத்தையும் கொடாமலும்
இருப்பானென்று, — கர்த்தருக்கு ஆணையிட்டு, ௫
யாக்கோபுடைய வல்லவருக்குப் பொருத்தனை
பண்ணினான் —இதோ நாம் எப்பிராத்தாவிலே ௬
அதின் செய்தியைக் கேட்டு, வயாரின் வெளிக
ளில் அதைக் கண்டோம்.—அவருடைய வாசஸ் ௭
தலங்களுக்குள்ப்பிரவேசித்து, அவர் பாதபடி
யிலே பணிவோம்.[4]

1 சங். ௱௩௪. ௩.—2 சங். ௱௪௩. ௨.

3 ௨ சாமு. ௭. ௨. அப். ௭. ௪௬.—4 சங். ௯௯. ௫.

௮ கர்த்தாவே, உம்முடைய தாபரவிடத்திற்குள்
ளே தேவரீரும் உமது வல்லமையின் பெட்டியு
௯ மாய் எழுந்தருளும். — உம்முடைய ஆசாரியர்
கள் நீதியை உடுத்திக்கொண்டு, உம்முடைய
௰ பரிசுத்தவான்கள் கெம்பீரிப்பார்களாக.—நீர் அ
பிஷேகம்பண்ணுவித்தவன் முகத்தை உம்மு
டைய தாசனாகிய தாவீதின்நிமித்தமாகப் புறக்
கணியாதிரும்.
௰௧ உன் கர்ப்பத்தின் கனியை உன் இராசா
௰௨ சனத்தின்மேல் வைப்போமென்றும்,[1]—உன் கு
மாரர் நம்முடைய உடம்படிக்கையையும், நாம்
அவர்களுக்குக் கற்றுக்கொடுக்கப்போகிற நம்
முடைய சாட்சியையும் காத்துநடந்தால், அவர்
கள் குமாரரும் என்றென்றைக்கும் உன் இராசா
சனத்தில் உளுக்காருவார்களென்றும் கர்த்தர் தா
வீதுக்கு உண்மையாய் ஆணையிட்டார்; அதை
௰௩ விட்டு அவர் பிசகுவதில்லை.—ஏனெனில் கர்த்
தர் சீயோனைத் தெரிந்துகொண்டு தமக்கு வாச
௰௪ ஸ்தலமாக விரும்பினார்.—இது என்றென்றைக்
கும் நாம் தங்குமிடம்; அங்கே வாசம்பண்ணு
௰௫ வோம்;ஏனெனில் அதை விரும்பினோம் -அதின்
ஆகாரத்தை நாம் ஆசீர்வதித்துவருவோம்; அதின்
ஏழைகளை நாம் அப்பத்தாலே திருப்தியாக்கி.—
௰௬ அதின் ஆசாரியர்களுக்கு இரட்சிப்பை உடுத்து
வோம்; அதின் பரிசுத்தவான்கள் மிகவும் கெம்பீ
௰௭ ரிப்பார்கள்.–அங்கே தாவீதுக்குக் கொம்பை மு
ளைப்பிப்போம்; நாம் அபிஷேகம்பண்ணுவித்த
தாவீதுக்கு விளக்கை ஆயத்தம்பண்ணினோம்.[2]–
௰௮ அவன் சத்துருக்களுக்கு வெட்கத்தை உடுத்து
வோம்; அவன் மீதிலோவென்றால், அவனுடைய
கிரீடம் பூக்குமென்றார்.

## ௱௩௩. சங்கீதம்.

பரிசுத்தவான்களுடைய அந்நியோந்நியத்தின் பிரயோசனம்.

(படிகளின்மேல் நின்று பாடப்பட்ட தாவீதின்
பாட்டு.)

௧ இதோ, சகோதரர் ஒருமித்து வாசம்பண்ணுகி
றது எத்தனை நன்றும் எத்தனை இன்பமுமானது —
௨ அது ஆரோனுடைய சிரசின்மேல் ஊற்றப்பட்டு,
அவனுடைய தாடியிலே வடிகிறதும், அவ
னுடைய அங்கிகளின்மேல் இறங்குகிறதுமான
௩ நல்ல தயிலத்துக்கும்,—எர்மோனின் பனிக்கும்,
சீயோனின் பர்வதங்களின்மேல் இறங்கும்
பனிக்கும் ஒப்பாயிருக்கிறது; ஏனெனில் அங்
கே கர்த்தர் என்றென்றைக்கும் ஆசீர்வாதத்தை
யும் சீவனையும் கட்டளையிடுகிறார்.

## ௱௩௪. சங்கீதம்.

பராபரனைத் துதிக்கத் தூண்டினது.

(படிகளின்மேல் நின்று பாடினது.)

௧ இதோ, இராக்காலங்களில் கர்த்தருடைய வீட்
டிலே நிற்கிற கர்த்தரின் ஊழியக்காரரே, எல்லா
௨ ரும் கர்த்தரைத் தோத்திரியுங்கள்.—உங்கள் கை
களைப் பரிசுத்தஸ்தலத்திற்கு நேராக எடுத்துக்
கர்த்தரைத் தோத்திரியுங்கள். — வானத்தையும் ௩
பூமியையும் உண்டாக்கின கர்த்தர் உன்னைச்
சீயோனிலிருந்து ஆசீர்வதிக்கக்கடவர்.

## ௱௩௫. சங்கீதம்.

௧. பராபரனுடைய இரக்கத்திற்காகவும், ௫. வல்லமைக்காகவும், நியாயத்தீர்ப்புகளுக்காகவும் அவனைத் துதிக்கத் தூண்டினது. ௰௫. விக்கிரகங்களின் மாயையைக்குறித்தது. ௰௯. பராபரனை வாழ்த்தத் தூண்டினது.

அல்லேலூயா, கர்த்தருடைய நாமத்தைத் துதி ௧
யுங்கள்.–கர்த்தருடைய வீட்டிலும், நம்முடைய ௨
பராபரனுடைய வீட்டின் பிரகாரங்களிலும்
நிற்கிற கர்த்தரின் ஊழியக்காரரே, துதியுங்கள்.—
கர்த்தரைத் துதியுங்கள்; ஏனெனில் கர்த்தர் நல் ௩
லவர்; அவருடைய நாமத்தைக் கீர்த்தனம்பண்
ணுங்கள், ஏனெனில் அது இன்பமானது.
ஏனென்றால் கர்த்தர் யாக்கோபைத் தமக்கெ ௪
ன்றும், இஸ்ரவேலைத் தமக்குச் சொந்தமென்றும்
தெரிந்துகொண்டார்.–ஏனெனில் கர்த்தர் பெரி ௫
யவரென்றும், நம்முடைய ஆண்டவர் எல்லாத்
தேவர்களுக்கும் மேலானவரென்றும் நான் அறி
வேன்.[3]–வானத்திலும், பூமியிலும், சமுத்திரங்க ௬
ளிலும், எல்லா ஆழங்களிலும், கர்த்தர் தமக்குச்
சித்தமானவைகளை எல்லாம் செய்கிறார்.[4]–அவர் ௭
பூமியின் கடையாந்தரங்களிலிருந்து மேகங்களை
எழும்பப்பண்ணி, மழையுடன் மின்னல்களை
உண்டாக்கி, காற்றைத் தம்முடைய பண்டகசா
லைகளிலிருந்து புறப்படப் பண்ணுகிறவர்.[5] —
அவர் எகிப்தின் தலைச்சன்களை மனுஷனைத்து ௮
வக்கி மிருகம்மட்டும் அடித்தவர்.–எகிப்துதேச ௯
மே, உன் நடுவே அடையாளங்களையும், அற்பு
தங்களையும் பார்வோன்மேலும், அவனுடைய
எல்லா ஊழியக்காரர்மேலும் அனுப்பினார். —
அவர் அநேகம் சாதிகளை அடித்து, பெலத்த இரா ௰
சாக்களைக் கொன்றுவிட்டு.–எமோரியரின் இரா ௰௧
சாவாகிய சீகோனையும், பாசானின் இராசாவா
கிய ஓகையும், கானானின் சகல இராச்சியங்களை
யும் அழித்து, — அவர்கள் தேசத்தைச் சுதந்தர ௰௨
மாகக் கொடுத்தார்; தம்முடைய சனமாகிய இஸ்
ரவேலுக்குச் சுதந்தரமாகத்தானே.
கர்த்தாவே, உம்முடைய நாமம் என்றைக்கும், ௰௩
கர்த்தாவே, உம்முடைய கீர்த்தி தலைமுறை தலை
முறைக்கும் இருக்கும்.[6]—ஏனெனில் கர்த்தர் தம் ௰௪
முடைய சனத்தின் நியாயத்தை விசாரித்து, தம்
முடைய ஊழியக்காரர்மேல் பரிதாபமாவார்.—
அஞ்ஞானிகளுடைய விக்கிரகங்கள் மனுஷரு ௰௫
டைய கைகளின் வேலையாகிய வெள்ளியும்
பொன்னுந்தானே.[7]—அவைகளுக்கு வாயிருந் ௰௬
தும் பேசாது; அவைகளுக்குக் கண்களிருந்தும்
காணாது.–அவைகளுக்குக் காதுகளிருந்தும் கே ௰௭
ளாது; அவைகள் வாயிலே சுவாசமுமில்லை.—
அவைகளைப் பண்ணுகிறவர்களும், அவைகளை ௰௮
நம்புகிற அனைவரும் அவைகளைப்போல இருக்
கிறார்கள்.
இஸ்ரவேல் வீட்டாரே, கர்த்தரைத் தோத்திரி ௰௯
யுங்கள்; ஆரோனின் வீட்டாரே, கர்த்தரைத்தோத்

1 ௨ சாமு. ௭. ௰௨-௰௬.—2 லூக். ௧. ௬௯, ௭௮, ௭௯.—3 சங். ௮௯. ௮.
4 சங். ௱௰௫. ௩.—5 எரே. ௰. ௰௩.—6 சங். ௱௨. ௰௨.—7 சங். ௱௰௫. ௪-௮.

௨௰ திரியுங்கள்.—லேவிவீட்டாரே, கர்த்தரைத் தோத்
திரியுங்கள்; கர்த்தருக்குப் பயந்தவர்களே, கர்த்
௨௧ தரைத் தோத்திரியுங்கள்.—எருசலேமில் வாசம்
பண்ணுகிற கர்த்தர் சீயோனிலிருந்து தோத்தி
ரிக்கப்படக்கடவார்; அல்லேலூயா.

## ௱௩௰௬. சங்கீதம்.

*பராபரனுடைய விசேஷித்த இரக்கங்களுக்காக அவருக்குத் தோத்திரம் செலுத்தத் தூண்டினது.*

௧ கர்த்தரைத் துதியுங்கள்; ஏனெனில் அவர் நல்ல
௨ வர்; அவர் கிருபை என்றுமுள்ளது.[1]—தேவாதி
தேவனைத் துதியுங்கள்; ஏனெனில் அவர் கிருபை
௩ என்றுமுள்ளது.—கர்த்தாதி கர்த்தரைத் துதியுங்
கள்; ஏனெனில் அவர் கிருபை என்றுமுள்ளது.
௪ ஒருவராய்ப் பெரிய அதிசயங்களைச் செய்கி
றவராயே; ஏனெனில் அவர் கிருபை என்று
௫ முள்ளது.[2]—வானங்களை ஞானமாய் உண்டாக்
கினவராயே; ஏனெனில் அவர் கிருபை என்
௬ றுமுள்ளது.—பூமியைத் தண்ணீர்களுக்கு உயர
மாக விரித்தவராயே; ஏனெனில் அவர் கிருபை
௭ என்றுமுள்ளது.—பெரிய வெளிச்சங்களை உண்
டாக்கினவராயே; ஏனெனில் அவர் கிருபை
௮ என்றுமுள்ளது. — பகலில் ஆளச் சூரியனைப்
படைத்தவராயே; ஏனெனில் அவர் கிருபை
௯ என்றுமுள்ளது.—இரவில் ஆளச் சந்திரனையும்,
நட்சத்திரங்களையும் படைத்தவராயே; ஏனெ
னில் அவர் கிருபை என்றுமுள்ளது.
௰ எகிப்தியருடைய தலைச்சன்களை அடித்தவ
ராயே; ஏனெனில் அவர் கிருபை என்றுமுள்
௰௧ ளது. — இஸ்ரவேலை அவர்கள் நடுவிலிருந்து
புறப்படப்பண்ணினவராயே; ஏனெனில் அ
௰௨ வர் கிருபை என்றுமுள்ளது.—பெலத்த கையி
னாலும், நீட்டின புயத்தினாலும் அதைச் செய்த
வராயே; ஏனெனில் அவர் கிருபை என்றுமுள்
௰௩ ளது.—நாணற்கடலை இரண்டாகப் பகிர்ந்தவ
ராயே; ஏனெனில் அவர் கிருபை என்றுமுள்
௰௪ ளது.—இஸ்ரவேலை அதை நடுவழியாகக் கடக்
கப்பண்ணினவராயே; ஏனெனில் அவர் கிரு
௰௫ பை என்றுமுள்ளது.—பார்வோனையும், அவன்
இராணுவப்பெலனையும் நாணற்கடலில் விழத்
தள்ளினவராயே; ஏனெனில் அவர் கிருபை
௰௬ என்றுமுள்ளது.—தம்முடைய சனத்தை வனாந்
தரத்தில் நடத்தினவராயே; ஏனெனில் அவர்
கிருபை என்றுமுள்ளது.
௰௭ பெரிய இராசாக்களை அடித்தவராயே; ஏனெ
௰௮ னில் அவர் கிருபை என்றுமுள்ளது. — வல்ல
௰௯ மையுள்ள இராசாக்களைக் கொன்றுபோட்டவ
ராயே; ஏனெனில் அவர் கிருபை என்றுமுள்
௰௯ ளது.—எமோரியரின் இராசாவான சீகோனைக்
கொன்றவராயே; ஏனெனில் அவர் கிருபை
௨௰ என்றுமுள்ளது.—பாசானின் இராசாவான ஓகை
யும் கொன்றவராயே; ஏனெனில் அவர் கிரு
௨௧ பை என்றுமுள்ளது. — அவர்கள் தேசத்தைச்
சுதந்தரமாகத் தந்தவராயே; ஏனெனில் அவர்
௨௨ கிருபை என்றுமுள்ளது.—அதைத் தம்முடைய
பணிவிடைச் சனமாகிய இஸ்ரவேலுக்குச் சுதந்
தரமாகத் தந்தவராயே; ஏனெனில் அவர் கிரு
பை என்றுமுள்ளது.
நம்முடைய தாழ்மையிலே நம்மை நினைத்த ௨௩
வராயே; ஏனெனில் அவர் கிருபை என்றுமுள்
ளது.—நம்மை நம்முடைய சத்துருக்களின் கை ௨௪
யிலிருந்து பறித்துக்கொண்டவராயே; ஏனெ
னில் அவர் கிருபை என்றுமுள்ளது.—எல்லா ௨௫
மாம்சத்துக்கும் ஆகாரம் கொடுக்கிறவராயே;
ஏனெனில் அவர் கிருபை என்றுமுள்ளது.—
வானங்களுடைய பராபரனையே துதியுங்கள்; ௨௬
ஏனெனில் அவர் கிருபை என்றுமுள்ளது.

## ௱௩௰௭. சங்கீதம்.

*௧. அடிமைத்தனத்தில் யூதருக்கிருந்த மனவுறுதியைச் சொன்னது. ௭. தீர்க்கதரிசி ஏதோமையும் பாபேலையும் சபித்தது.*

பாபேலின் ஆறுகளண்டையிலே நாங்கள் உட்கா ௧
ர்ந்திருந்து, அங்கே சீயோனை நினைத்து அழு
துகொண்டோம்.—அதின் நடுவிலிருக்கும் அல ௨
ரிச்செடிகளின்மேல் எங்கள் சுரமண்டலங்களைத்
தூக்கிவிட்டோம். — ஏனெனில் எங்களுக்குச் ௩
சீயோனின் பாட்டுகளிலே சிலவற்றைப் பாடுங்
களென்று அங்கே எங்களைச் சிறைபிடித்தவர்
கள் எங்கள் பாட்டு வசனங்களையும், எங்களை
மண்மேடுகளாக்கினவர்கள் சந்தோஷம் பாராட்
டலையும் கேட்டார்கள்.
கர்த்தரின் பாட்டை நாங்கள் அந்நியதேசத் ௪
திலே பாடுவது எப்படி?—எருசலேமே, நான் ௫
உன்னை மறந்தால் என் வலதுகை என்னை மறப்
பதாக.[3]—நான் உன்னை நினையாமலும் நான் எரு ௬
சலேமை என்னுடைய அதிக மகிழ்ச்சிக்கு மேன்
மையாக உயர்த்தாமலும்போனால் என் நாவு என்
மேல்வாயோடு ஒட்டிக்கொள்வதாக.
அதைத் திறப்பாக்கிவிடுங்கள்; அதை அ ௭
தின் அஸ்திவாரங்கள்மட்டும் திறப்பாக்கிவிடுங்
களென்று சொல்லியிருக்கிற ஏதோம் புத்திரரை
எருசலேமின் நாளிலே நினையும் கர்த்தாவே.[4]—
பாழாகும் பாபேல் குமாரத்தியே, நீ எங்களுக்குச் ௮
செலுத்தினபடி, உன் பதிலை உனக்குச் செலுத்
துபவன் பாக்கியவான்.[5]—உன் குழந்தைகளைப் ௯
பிடித்துக் கல்லோடே மோதியடிக்கிறவன் பாக்
கியவான்.[6]

## ௱௩௰௮. சங்கீதம்.

*௧ தாவீது பராபரனுடைய திருவாசகத்தின் உண்மையைக்குறித்து அவரைத் துதித்தது. ௪. பூலோகத்தின் இராசாக்கள் அவரைத் துதிப்பார்களென்று தீர்க்கதரிசனம் சொன்னது. ௭. அவரில் தனக்கிருக்கும் நம்பிக்கையை அறிவித்தது.*

(தாவீதின் சங்கீதம்.)

உம்மை என் முழு இருதயத்தினாலும் துதிப் ௧
பேன்; தேவர்களுக்குமுன்பாக உம்மைக் கீர்த்
தனம்பண்ணுவேன்.—நான் உமது பரிசுத்த தே ௨
வாலயத்துக்கு நேராய்ப்பணிந்து, உம்முடைய
கிருபையின்நிமித்தமும், உம்முடைய உண்மை
யின்நிமித்தமும் உமது நாமத்தைத் துதிப்பேன்;
ஏனெனில் உம்முடைய சகல கீர்த்தியைப்பார்க்

1 சங். ௱௬. ௧: ௱௭. ௧: ௱௩௰௮. ௧.-2 சங். ௭௨. ௰௮.-3 எரே. ௫௧. ௫௰ -4 ஒப. ௰. ௰௪. 5 எரே. ௫௰. ௰௫-௨௯: ௫௧. ௨௪. வெளி. ௰௮. ௬.-6 ஏசா. ௰௩. ௰௬. வெளி. ௨. ௨௩.

கிலும் உம்முடைய வார்த்தையை மகிமைப்படுத்
௩ தினீர்.—நான் கூப்பிட்ட நாளிலே எனக்கு மறு
உத்தரவு அருளிச்செய்தீர்; என் ஆத்துமாவிலே
௪ பெலன்தந்து என்னைத் தயிரியப்படுத்தினீர்.-கர்த்
தாவே,பூமியின் இராசாக்களெல்லாம் உமது வாக்
கின் வார்த்தைகளைக் கேட்கும்போது உம்மைத்
௫ துதிப்பார்கள்.[1]-கர்த்தாவின் வழிகளைப்பாடுவார்
கள்; ஏனெனில் கர்த்தரின் மகிமை பெரியது.
௬ ஏனென்றால் கர்த்தர் உயர்ந்தவராயிருந்தும்
தாழ்மையானவனை நோக்கிப்பார்க்கிறார்; மேட்
டிமையானவனையோ தூரத்திலிருந்து அறிகி
௭ றார்.[2]—நான் நெருக்கத்தின் நடுவிலே நடந்தால்
நீர் என்னை உயிர்ப்பிக்கிறீர்; உம்முடைய கை
யை என் சத்துருக்களின் கோபத்திற்கு விரோ
தமாக நீட்டுகிறீர்; உமது வலதுகரம் என்னை
௮ இரட்சிக்கிறது.—கர்த்தர் எனக்காக யாவையும்
செய்துமுடிப்பார்; கர்த்தாவே, உமது கிருபை
என்றென்றைக்கும் உள்ளது; உம்முடைய கை
களின் கிரியைகளை நெகிழீராக.

## ௱௩௰௯. சங்கீதம்.

௧. தாவீது பராபரனுடைய சர்வஞ்ஞத்துவமுள்ள பராமரிப்புக்காகவும், ௭. அவருடைய அளவற்ற இரக்கங்களுக்காகவும் அவரைத் துதித்தது. ௰௯. துன்மார்க்கரை வெறுத்து, உண்மையுள்ளவர்களுக்காக மன்றாடினது.

(இராகத்தலைவனுக்கு ஒப்புவிக்கப்பட்ட
தாவீதின் சங்கீதம்.)

௧ கர்த்தாவே, என்னை ஆராய்ந்து அறிந்திருக்கி
௨ றீர்.—என் உளுக்காருதலையும், என் எழுந்திருக்
குதலையும் தேவரீர் அறிந்திருக்கிறீர்; என் நினை
௩ வுகளைத் தூரத்திலிருந்து உணருகிறீர்.[3]—நான்
நடந்தாலும், படுத்திருந்தாலும் என்னைச் சூழ்ந்
திருக்கிறீர்; என் வழிகளெல்லாம் உமக்குப் பழக்
௪ கமாயிருக்கின்றன. — ஏனெனில் என் நாவில்
சொல்பிறவாததற்குமுன்னே இதோ கர்த்தாவே,
௫ அவைகளை எல்லாம் அறிந்திருக்கிறீர்.—பின்புற
த்திலும் முன்புறத்திலும், நீர் என்னை நெருக்கி,
என்மேலே உம்முடைய கரத்தை வைக்கிறீர்.
௬ இவ்வறிவு எனக்கு மிஞ்சின ஆச்சரியமும்,
௭ எனக்கு எட்டாத உயரமுமாயிருக்கின்றது.—உம்
முடைய ஆவிக்கு மறைவாக எங்கே போவேன்?
உம்முடைய முகத்திற்கு மறைவாக எங்கே ஓடு
௮ வேன்?—நான் வானத்திற்கு ஏறினாலும் அங்கே
தேவரீர் இருக்கிறீர்; நான் பாதாளத்திலே படுக்
கைபோட்டாலும் இதோ தேவரீர் இருக்கிறீர்.[4]—
௯ நான் விடியற்காலத்தின் செட்டைகளை எடுத்து,
கடலின் ஈறு கடைசியிலேபோய்த் தங்கினா
௰ லும்,—அங்கேயும் உம்முடைய கை என்னை ந
டத்தி, உம்முடைய வலதுகரம் என்னைப்பிடிக்
௰௧ கும்.—இருளாகிலும் என்னை மூடிவிடுமென்றா
லும், இராவும் என்னைச் சுற்றிலும் வெளிச்சந்தா
௰௨ னே.—உமக்கு மறைவாக இருளும் அந்தகாரப்ப
டுத்தாமல், இராக்காலம் பகலைப்போல வெளிச்
சமாயிருக்கும்; இருளும் வெளிச்சமும் சரி.—
௰௩ ஏனெனில் தேவரீர் என் உள்ளிந்திரியங்களைக்
கைக்கொண்டிருக்கிறீர்; என் தாயின் கர்ப்பத்
தில் என்னைக் காப்பாற்றினீர்.—பிரமிக்கத்தக்க ௰௪
அதிசயமாய் உண்டானேன் என்கிறதின்நிமித்
தம் உம்மைத் துதிக்கிறேன்; உம்முடைய கிரி
யைகள் அதிசயமானவைகளென்பது என் ஆத்து
மாவுக்கு நன்றாய்த் தெரியும்.[5]—நான் ஒளிப்பிடத் ௰௫
திலே உண்டாக்கப்பட்டுப் பூமியின் தாழ்விடங்
களில் சித்திர விநோதமாய் உருவெடுத்தபோது,
என் எலும்புகள் உமக்கு மறைவாயிருந்தது
ல்லை.—என் கருவை உம்முடைய கண்கள் கண் ௰௬
டன; இவைகளில் ஒன்றுமில்லாதபோதே இவை
களனைத்தும் இவைகள் உருவேற்படும் நாள்க
ளும், உம்முடைய புஸ்தகத்தில் எழுதியிருந்தது.
ஆனதுகொண்டு பராபரனே, உம்முடைய ௰௭
நினைவுகள் எனக்கு எத்தனை அருமையானவை
கள்? அவைகளின் தொகைகள் எத்தனை திரட்
சி?[6]—அவைகளை நான் எண்ணப்போனால் மண ௰௮
லைப்பார்க்கிலும் அதிகமாம்; நான் விழிக்கையில்
இன்னம் உம்மண்டையில் இருக்கிறேன்.
பராபரனே, ஆகாதவனைக் கொன்றீரானால் ௰௯
தாவீளை; இரத்தப்பிரியரான மனுஷரே, நீங்கள்
என்னைவிட்டு அகன்றுபோங்கள். — அவர்கள் ௨௰
துர்க்குணப்பேச்சாய் உம்மைக்குறித்துப் பேசு
கிறார்கள்; உம்முடைய சத்துருக்கள் வீணாக உப்
பியிருக்கிறார்கள்.—கர்த்தாவே, உம்மைப் பகைக் ௨௧
கிறவர்களை நான் பகையாமலும், உமக்கு விரோ
தமாய் எழும்புகிறவர்களை அரோசியாமலும் இரு
ப்பேனோ?-முழுப்பகையாய் அவர்களைப்பகைக் ௨௨
கிறேன், எனக்குப் பகைஞரானார்கள்.—பராபர ௨௩
னே, என்னை ஆராய்ந்து என் இருதயத்தை அறிந்
துகொள்ளும்; நீர் என்னைச் சோதித்து, என் சிந்
தனைகளை அறிந்துகொண்டு,[7]—என்னில் வேத ௨௪
னையுண்டாக்கும்வழி உண்டோ என்று பார்த்து,
என்னை நித்தியவழியிலே நடத்தும்.

## ௱௪௰. சங்கீதம்.

௧. தாவீது சவுலுக்கும், தோவேகுக்கும் தப்பித்துக்கொள்ள வேண்டினது ௮. அவர்கள் செய்யும் தீமைக்குத் தான் விலக மன்றாடினது. ௰௨. பராபரனில் நம்பிக்கை வைத்ததினாலே தன்னைத் தேற்றிக்கொண்டது.

(இராகத்தலைவனுக்கு ஒப்புவிக்கப்பட்ட தாவீ
தின் சங்கீதம்.)

கர்த்தாவே, பொல்லாத மனுஷனுக்கு என்னைத் ௧
தப்புவியும்; கொடுமைக்காரனுக்குஎன்னை விலக்
கிக்காரும்.[8]—இருதயத்திலே அவர்கள் பொல்லா ௨
ப்புகளைச் சிந்தித்து, நாள்தோறும் யுத்தங்களுக்
கென்று கூட்டங்கூடுகிறார்கள்.—சர்ப்பத்தைப் ௩
போலே தங்கள் நாவைக் கூர்மையாக்குகிறார்
கள்; அவர்கள் உதடுகளின்கீழே விரியன்பாம்பு
களின் விஷமிருக்கிறது; சேலா.[9]—கர்த்தாவே, ௪
என்னை ஆகாதவன் கைகளுக்கு நீங்கலாகவும்,
கொடுமைக்காரனுக்கு விலக்கமாகவும் காரும்;
அவர்கள் என் காலடிகளைத் தள்ளாடப்பண்ண
நினைக்கிறார்கள். — அகந்தைக்காரர் எனக்குக் ௫
கண்ணியையும், கயிறுகளையும் மறைவாய் வைக்

1 சங். ௬௮.௧௧:௭௨.௰௧.—2 சங். ௱௰௧. 4 ஆமோ. ௯. ௨,௪.—5 சங். ௱௰௯. ௬. ௭.—3 எரே. ௰௭. ௰. ௭௧. யோபு.௰.அ.௰௨. பிர.௧௨ ௬.

6 சங். ௯௨. ௫. 7 சங். ௨௪. ௨. 8 சங். ௪௧ ௧.—9 சங். ௬௬. ௨௨. உரோ. ௩. ௰௩.

கிறார்கள்; வழியோரத்திலே வலையை விரித்து
எனக்குச் சுருக்குகளை வைக்கிறார்கள்; சேலா.
௬ நான் கர்த்தருடனே தேவரீர் என் பராபர
னென்கிறேன்; கர்த்தாவே, என் விண்ணப்பங்க
௭ ளின் சத்தத்திற்குச் செவிகொடும்.—ஆண்டவரா
கிய கர்த்தாவே, என் இரட்சிப்பின் பலனே, ப
டைநாளிலே என் தலையை மூடிக்கொண்டிருக்
௮ கிறீர்.-கர்த்தாவே, ஆகாதவனுடைய ஆசைகளைக்
கட்டளையிடாமலும், அவன் தன்னை உயர்த்துகி
றதற்கு இடமான அவனுடைய வினையத்தை
நடந்தேறப்பண்ணாமலும் இருப்பீராக; சேலா.
௯ என்னை வளைந்துகொள்ளுகிறவர்களுடைய
நஞ்சென்கிற அவர்கள் உதடுகளின் தீவினை அவர்
௰ களை மூடுவதாக.—நெருப்புத்தழல் அவர்கள்மேல்
விழுவதாக; அக்கினியிலும், தாங்கள் எழுந்தி
ருக்கமாட்டாத பள்ளங்களிலும் அவர்களை வி
௰௧ ழப்பண்ணுவாராக.[1]—பொல்லாத நாவுள்ளவன்
பூமியிலே நிலைப்படுவதில்லை; கொடுமையான
மனுஷனைப் பறக்கடிக்கப் பொல்லாப்பு அவனை
௰௨ வேட்டையாடும்.—சிறுமையானவனுடைய வ
ழக்கையும், எளியவர்களின் நியாயத்தையும்
௰௩ கர்த்தர் விசாரிப்பாரென்று அறிவேன். — ஆம்,
நீதிமான்கள் உம்முடைய நாமத்தைத் துதிப்
பார்கள்; செம்மையானவர்கள் உமக்குமுன்பா
கத் தரித்திருப்பார்கள்.

## ௱௪௧ சங்கீதம்.

௧. தாவீது தன் விண்ணப்பம் ஏற்றுக்கொள்ளப்படவும், ௩. தன் மனம் உண்மையாயிருக்கவும், ௭. தன் ஜீவன் கண்ணியில்நின்று காக்கப்படவும் மன்றாடினது.

(தாவீதின் சங்கீதம்.)

௧ கர்த்தாவே, உம்மைநோக்கிக் கூப்பிடுகிறேன்;
என்னண்டைக்குத் தீவிரியும்; நான் உம்மை
நோக்கிக் கூப்பிடுகையில் என் சத்தத்திற்குச்
௨ செவிகொடும். — என் விண்ணப்பம் உமக்கு
முன்பாகத் தூபமாகவும், என் கையேற்பு அந்
திப்பலிக் காணிக்கையாகவும் ஒப்பிடப்படக்
௩ கடவது. — கர்த்தாவே, என் வாய்க்குக் காவல்
வையும், என் உதடுகளின் வாசலைக் காவல்பண்
௪ ணும்.[2] — அக்கிரமஞ்செய்கிற மனுஷரோடே
ஆகாமியக் கிரியைகளை நடப்பிக்கும் துர்க்கரு
மத்திற்கு என் இருதயத்தை இணங்க ஒட்டாதி
ரும்; இவர்கள் பதார்த்தங்களில் சாப்பிடாமல்
௫ இருப்பேனாக. — நீதிமான் என்னைத் தயவாய்க்
குட்டி என்னைக் கடிந்துகொள்ளக்கடவான்;
அது தலைக்கு எண்ணெயைப்போல இருக்கும்,
என் தலை அதைத் தட்டுதல்பண்ணுவதில்லை;
ஏனெனில் இன்னம் என் செபம் அவர்கள் இக்
கட்டுகளுக்கு எதிரானதாமே.[3]
௬ அவர்களுடைய நியாயாதிபதிகள் கல்மலைச்
சார்வுகளிலிருந்து தள்ளுண்ணக்கடவார்கள்;
என் வார்த்தைகளையோ இன்பமானவைகளென்
௭ றுகேட்பார்களாக.—பூமியில் எங்களை ஒருவன்
வெட்டிப் பிளக்குமாப்போலே, எங்கள் எலும்பு
கள் பாதாளவாய்க்கு நேராகச் சிதறடிக்கப்பட்
டன.—ஆனால் ஆண்டவராகிய கர்த்தாவே, உம் ௮
மை என் கண்கள் நோக்குகின்றன; உம்மை நம்
பியிருக்கிறேன், என் ஆத்துமாவை வெறுமை
யாக விடாதிரும். — எனக்கு அவர்கள் வைத்த ௯
கண்ணியின் சிக்குகளுக்கும், அக்கிரமக்கார
ரின் சுருக்குகளுக்கும் என்னை விலக்கிக் கா
ரும்.[4]—நான் கடந்துபோகுமளவும் தங்கள் தங் ௰
கள் வலைகளில் ஆகாதவர்கள்தானே ஏகமாய்
விழுவார்களாக.

## ௱௪௨. சங்கீதம்.

௧. தாவீது தன் நிர்ப்பந்த வருத்தத்திலே தனக்கிருந்த ஆறுதல் பராபரனை நோக்கிச் செபம்பண்ணினதினாலே உண்டானதென்று காட்டினது.

(தாவீது கெபியிலிருக்கும்போது பண்ணின
விண்ணப்பமாகிய போதக சங்கீதம்.)

கர்த்தரைநோக்கி, என் சத்தத்தினாலே கூப்பி ௧
டுகிறேன்; கர்த்தரைநோக்கி, என் சத்தத்தினாலே
கெஞ்சுகிறேன்.—அவருக்குமுன்பாக என் கெஞ் ௨
சுதலை ஊற்றி, அவருக்குமுன்பாக என் நெருக்
கத்தை அறிக்கையிடுகிறேன். — என் ஆவி என் ௩
னில் தியங்கும்போது தேவரீர் என் பாதையை
அறிந்திருக்கிறீர்; நான் நடக்கிற வழியிலே எனக்
குக் கண்ணியை மறைவாய் வைத்தார்கள்.[5]—நீர் ௪
வலதுபுறமாகக் கண்ணோக்கி என்னை அறிகிற
வன் எனக்கில்லையென்று பாரும்; ஒதுக்கு எனக்
கில்லாதேபோயிற்று; என் ஆத்துமாவுக்காக விசா
ரிக்கிறவனில்லை.—கர்த்தாவே, உம்மைநோக்கிக் ௫
கூப்பிடுகிறேன்; தேவரீர் என் அடைக்கலமும்
ஜீவனுள்ளோருடைய பூமியில் என் பங்குமாயி
ருக்கிறீரென்கிறேன்.[6] — என் கூக்குரலுக்குக் ௬
கவனியும்; ஏனெனில் மெத்தவும் குறுகினேன்;
என்னைத் தொடருகிறவர்களுக்கு என்னைத் தப்
புவியும்; ஏனெனில் எனக்கு மிஞ்சின பலமாக
இருக்கிறார்கள்.[7]—உம்முடைய நாமத்தை நான் ௭
துதிக்கும்படிக்கு என் ஆத்துமாவைக் காவலுக்கு
நீங்கலாக்கிவிடும், எனக்குத் தயவுபண்ணினீரா
னால் நீதிமான்கள் என்னைச் சூழ்வார்கள்.[8]

## ௱௪௩. சங்கீதம்.

௧. தாவீது நியாயத்தீர்ப்பிலே தனக்குத் தயைகிடைக்கும்படி வேண்டிக்கொண்டது. ௩. தன் துக்கத்தைக்குறித்து முறையிட்டது. ௫. தியானத்தினாலும், செபத்தினாலும், தன் விசுவாசத்தை உறுதிப்படுத்தினது. ௭. கிருபைக்காகவும், ௯. விடுதலைக்காகவும், ௰. தூய்மைக்காகவும், ௰௨. தன் சத்துருக்கள் அழிவதற்காகவும் மன்றாடினது.

(தாவீதின் சங்கீதம்.)

கர்த்தாவே, என் செபத்தைக்கேளும்; என் விண் ௧
ணப்பங்களுக்குச் செவிகொடும்; நீர் உம்முடை
ய உண்மையின்படியும், உம்முடைய நீதியின்ப
டியும் எனக்கு மறு உத்தரவு அருளிச்செய்து,[9]—
உம்முடைய அடியானோடே நியாயத்தீர்ப்புக் ௨
குள்ப் பிரவேசியாதிரும்; ஏனெனில் ஜீவனுள்ள
ஒருவனும் உமக்குமுன்பாக நீதிமானல்ல.
ஏனென்றால் சத்துரு என் ஆத்துமாவைத் தொ ௩
டர்ந்து, என் பிராணனைத் தரையோடே நசுக்கி
விட்டு, என்னைச் சதாகாலமாய் மரித்துக்கிடக்கி

1 சங். ௰௧.௬.-2 சங். ௧௧.௨.- 3 வாக். ௰௨.௧.-4 சங். ௱௪௰.௫.-5 சங். ௱௪௧ ௪.
6 சங். ௧௧.௧, ௨.-7 சங். ௭.௨.-8 சங். ௱௪௧. ௯.—9 சங். இ. ௨: ௨௭. ௭.

றவர்கள் இருக்கிறதுபோல இருளில் இருக்கப்
௪ பண்ணுகிறான்.—ஆகையால் என் ஆவி என்னில்
தியங்கும்; என் இருதயம் எனக்குள்ளே திடுக்
௫ கிடும். — பூர்வநாள்களை நினைக்கிறேன்; உம்மு
டைய செய்கைகளை எல்லாம் தியானிக்கிறேன்;
உம்முடைய கரங்களின் கிரியைகளை யோசிக்
௬ கிறேன்.[1]—என் கைகளை உமக்கு நேராய் விரிக்கி
றேன்; என் ஆத்துமா வரண்ட நிலத்தைப்போல
உம்முடையமேலே தாகமாயிருக்கிறது; சேலா.[2]
௭ கர்த்தாவே, சீக்கிரமாய் என் செபத்தைக் கே
ளும், என் ஆவி தொய்ந்துபோம், நான் குழியில்
இறங்குகிறவர்களுக்கு ஒத்துப்போகாதபடிக்கு
உம்முடைய முகத்தை எனக்கு மறைக்காதி
௮ ரும். — காலமே உமது கிருபையை என்னைக்
கேட்கப்பண்ணும்; ஏனெனில் உம்மை நம்பி
யிருக்கிறேன்; நான் நடக்கவேண்டிய வழியை
எனக்கு அறிவியும்; ஏனெனில் உம்மண்டைக்கு
௯ என் ஆத்துமாவை உயர்த்துகிறேன்.[3] — கர்த்தா
வே, என் சத்துருக்களுக்கு என்னைத் தப்புவியும்;
௰ உம்மிடத்தில் ஒதுங்குகிறேன்.—உமக்குப் பிரிய
மானதைச் செய்ய எனக்குப் படிப்பியும்; ஏனெ
னில் தேவரீர் என் பராபரன்; உம்முடைய
நல்ல ஆவி என்னைச் செம்மையான வழியிலே
௰௧ நடத்துவாராக.—கர்த்தாவே, உம்முடைய நாமத்
தின்நிமித்தமாக என்னை உயிர்ப்பியும்; நீர் உம்
முடைய நீதியின்படி என் ஆத்துமாவை இடுக்
௰௨ கணுக்கு நீங்கலாக்கிவிட்டு,—உம்முடைய கிரு
பையின்படி என் சத்துருக்களைச் சங்கரித்து,
என் ஆத்துமாவை இடுக்கண்படுத்துகிற யாவரை
யும் அழியும்; ஏனெனில் நான் உம்முடைய
அடியான்.

## ௱௪௪. சங்கீதம்.

௧. தாவீது தனக்கும் மற்ற மனிதருக்கும் பராபரன் செய்த இரக்கத்திற்காக அவரை வாழ்த்தினது. ௫. அவர் தன் சத்துருக்கள் கையிலிருந்து தன்னை விடுதலைபண்ணத் தான் மன்றாடினது. ௯. பராபரனைத் துதிக்க வாக்குத் தத்தம்பண்ணினது. ௰௧. இராச்சியத்தின் சுபஸ்திதிக்காகச் செபம்பண்ணினது.

(தாவீதின் சங்கீதம்.)

௧ என் கைகளைப் போருக்கும், என் விரல்களை
யுத்தத்துக்கும், படிப்பிக்கிற என் கல்மலையாகிய
௨ கர்த்தர் தோத்திரிக்கப்பட்டவர்.[4] — அவர் என்
தயையும், என் கோட்டையும், என் உயர்ந்த அ
டைக்கலமும், என்னை விடுவிக்கிறவரும், என்
கேடயமும், நான் நம்பினவரும், என் சனத்தை
எனக்குக் கீழ்ப்படுத்துகிறவருமாமே.[5]
௩ கர்த்தாவே, மனுஷன் நீர் அவனை அறிகிறதற்
கும், மனுப்புத்திரன் நீர் அவனை எண்ணுகிறதற்
௪ கும், அவன் எம்மாத்திரம்?[6]—மனுஷன் மாயைக்
கும் அவனுடைய நாள்கள் கடந்துபோகிற நிழ
லுக்கும் சாயலாயிருக்கும்.[7]
௫ கர்த்தாவே, நீர் உம்முடைய வானங்களைத் தா
ழ்த்தி இறங்கி, பர்வதங்களை அவைகள் புகையும்
௬ படிக்குத் தீண்டும்.—மின்னல்களைவிட்டு அவர்
களைச் சிதற அடித்து, உம்முடைய அம்புகளை
அனுப்பி அவர்களைக் கலங்கடியும். — உமது ௭
கரத்தை உயரத்திலிருந்து நீட்டி என்னை விடுதலை
பண்ணி, என்னைத் திரளான தண்ணீர்களுக்கும்,
அந்நிய புத்திரரின் கைக்குந்தப்புவியும்.—அவர் ௮
கள் வாய் மாயையைப் பேசும்; அவர்கள் வலது
கை கள்ளக்கையாயிருக்கிறது.
பராபரனே, இராசாக்களுக்குச் செயத்தைத் ௯
தந்து, உம்முடைய அடியானாகிய தாவீதைப்
பொல்லாத பட்டையத்துக்குத் தப்புவிக்கிறவ
ரே,—உம்மை நான் புதுப்பாட்டாய்ப் பாடி, உம் ௰
மைத் தம்புருவாலும் பத்துநரம்பு வீணையாலும்
கீர்த்தனம்பண்ணுவேன்.[8]-என்னை அந்நியபுத்திர ௰௧
ரின் கைக்கு விலக்கி என்னைத் தப்பப்பண்ணும்;
அவர்கள்வாய் மாயையைப்பேசும்; அவர்கள்வல
துகை கள்ளக்கையாயிருக்கிறது.—எங்கள்குமா ௰௨
ரர் தங்கள் இளமையில் பயிராக்கப்பட்ட விருட்
சக்கன்றுகளைப்போலவும், எங்கள் குமாரத்திகள்
சித்திரந்தீர்ந்த அரமனைக் கோணங்களைப்போல
வும் இருக்கவும்,—எங்கள்பண்டகசாலைகள் சகல ௰௩
வகை வஸ்துக்களைத் தரத்தக்கவிதமாய் நிறைந்த
வைகளாயிருக்கவும், எங்கள் ஆடுகள் எங்கள் கிரா
மங்களில் ஆயிரங்களும் பதினாயிரங்களுமாய் இ
ருக்கவும்,-எங்கள் எருதுகள் பெலத்திருக்கவும், ௰௪
பொல்லாங்கு உள்புகுதலில்லாமலும், வலசை
வாங்குதலில்லாமலும், எங்கள் வீதிகளில் கூக்கு
ரலுண்டாகாமலும் இருக்கவும் கடவதென்பார்
கள்.—இப்படிச் சம்பவிக்குஞ்சனம் பாக்கியமுள் ௰௫
ளது; கர்த்தாவைத் தெய்வமாய்க்கொண்டிருக்
கிற சனம் பாக்கியமுள்ளதுதானே.[9]

## ௱௪௫. சங்கீதம்.

௧ தாவீது பராபரனுடைய கீர்த்திக்காகவும், ௮. நன்மைக்காகவும், ௰௩. ஆளுகைக்காகவும், ௰௪. பராமரிப்புக்காகவும், ௰௭. இரட்சிப்பின் இரக்கத்துக்காகவும் அவரைத் துதித்தது.

(தாவீது பாடின துதி.)

இராசாவாகிய என் பராபரனே, உம்மை உயர் ௧
த்தி, உம்முடைய நாமத்தை எப்போதும் என்
றென்றைக்கும் தோத்திரிப்பேன்.—சகல நாளி ௨
லும் உம்மைத் தோத்திரித்து எப்போதும் என்
றென்றைக்கும் உம்முடைய நாமத்தைத் துதிப்
பேன்.—கர்த்தர் பெரியவரும் மிகவும் புகழப்ப ௩
டத்தக்கவருமாயிருக்கிறார்; அவர் மகத்துவத்துக்
கு ஆராய்தலில்லை.—தலைமுறை தலைமுறையாய் ௪
உம்முடைய கிரியைகளின் புகழ்ச்சியைச்
சொல்லி, உம்முடைய வல்லமைகளை அறிவிப்
பார்கள். — உம்முடைய கனமான மகிமையின் ௫
பிரஸ்தாபத்தையும், உம்முடைய அதிசயமான
கிரியைகளையுங்குறித்துப் பேசுவேன்.—உம்மு ௬
டைய பயங்கரங்களின் பெலத்தைச் சொல்லு
வார்கள்; உம்முடைய மகத்துவத்தை விவரிப்
பேன்.—உமது தயையின் கீர்த்தியை நினைத்து ௭
வெளிப்படுத்தி, உமது நீதியைக் கெம்பீரித்துச்
சொல்லுவார்கள்.

1 சங். ௭௭. ௫: ௱௨. ௰௧.
2 சங். ௪௨. ௧: ௬௩. ௨.
3 சங். ௨௫. ௧.—4 சங். ௰௮. ௩௪, ௩௫.—5 சங். ௰௮. ௨, ௩.
6 யோபு. ௭. ௰௭.
7 யோபு. ௰௪. ௨.
8 சங். ௩௩. ௨, ௩.
9 சங். ௩௩. ௰௨.

௮ .கர்த்தர் இரக்கமும், மன உருக்கமும், நீடிய
௯ சாந்தமும், மிகுந்த கிருபையுமுள்ளவர்.[1]—கர்த்
தர் எல்லார்மேலும் தயையுள்ளவர்; அவர் இரக்
கங்கள் அவருடைய எல்லாக் கிரியைகளின்
௰ மேலும் உள்ளது. — கர்த்தாவே, உம்முடைய
எல்லாக் கிரியைகளும் உம்மைத் துதிக்கும்; உம்
முடைய பரிசுத்தவான்கள் உம்மைத் தோத்தி
௰௧ ரித்து,—தாங்கள் மனுப்புத்திரருக்கு உம்முடைய
வல்லமையையும், உம்முடைய இராச்சியத்தின்
கனமான மகிமையையும் அறிவிக்கும்படிக்கு,—
௰௨ உமது இராச்சியத்தின் மகிமையைச் சொல்லி,
௰௩ உமது வல்லமையை விவரிப்பார்கள். — உம்
முடைய இராச்சியம் எல்லாச் சதாகாலங்களின்
இராச்சியமாகவும்; உம்முடைய ஆளுகை எல்
லாத் தலைமுறை தலைமுறையாகவும் இருக்கும்.[2]
௰௪ கர்த்தர் விழுகிற யாவரையும் தாங்கி, மடங்க
டிக்கப்பட்ட யாவரையும் தூக்கி எடுக்கிறவர்.[3]—
௰௫ எல்லாச் சீவன்களின் கண்களும் உம்மை நோக்
கிக்கொண்டிருக்கின்றன; தேவரீர் ஏற்றவே
ளையிலே அவைகளின் போசனத்தை அவைக
௰௬ ளுக்குக் கொடுக்கிறீர்.[4]—உம்முடைய கையைத்
திறந்து, சீவனுள்ள எல்லாவற்றையும் இரம்மிய
௰௭ மாய்த் திருப்தியடையப்பண்ணுகிறீர்.[5] — கர்த்
தர் தம்முடைய வழிகளிலெல்லாம் நீதியுள்ள
வரும், தம்முடைய கிரியைகளிலெல்லாம் கிரு
பையுள்ளவருமாயிருக்கிறார்.
௰௮ தம்மைநோக்கிக் கூப்பிடுகிற யாவருக்கும்,
உண்மையாய்த் தம்மைநோக்கிக் கூப்பிடுகிற
யாவருக்கும் கர்த்தர் சமீபமாய் இருக்கிறார்.—
௰௯ அவர் தமக்குப் பயந்தவர்களுடைய விருப்பத்
தின்படி செய்து, அவர்கள் கூப்பிடுதலைக்கேட்
௨௰ டு, அவர்களை இரட்சிக்கிறார்.[6]—கர்த்தர் தம்மைச்
சிநேகிக்கிற யாவரையும் காப்பாற்றி, ஆகாதவர்
௨௰௧ கள் எல்லாரையும் அழிப்பார்.—என் வாய் கர்த்
தரின் துதியைச் சொல்வதாக; எல்லா மாம்சமும்
அவர் பரிசுத்த நாமத்தை எப்போதும் என்றென்
றைக்கும் தோத்திரிக்கக்கடவது.

## ௱௪௬. சங்கீதம்.

௧. சங்கீதக்காரன் பராபரனுக்கு இடைவிடாமல் ஸ்தோத்திரஞ்செலுத்தும்படி பிரார்த்தனைசெய்துகொண்டது. ௩. மனிதனில் நம்பிக்கைவைக்காதிருக்க எச்சரிக்கிறது ௫. பராபரனுடைய வல்லமை, நீதி, இரக்கம், இராச்சியம் களுக்காக அவர்மாத்திரம் நம்பப்படத்தக்கவரென்பது

௧ அல்லேலூயா, என் ஆத்துமாவே, கர்த்தரைத்
௨ துதி.[7]—நான் சீவனுள்ளமட்டும் கர்த்தரைத் துதிப்
பேன்; நான் இருக்குமளவும் என் பராபரனைக்
௩ கீர்த்தனம்பண்ணுவேன்.[8] — பிரபுக்களையும், இ
ரட்சிப்பில்லா மனுப்புத்திரனையும் நம்பாதிருங்
௪ கள்.[9]—அவனுடைய ஆவி புறப்படும், தன் மண்
ணுக்குத் திரும்புகிறான்; அந்நாளிலே அவன்
யோசனைகள் அழியும்.
௫ யாக்கோபின் பராபரனைத் தன் துணையாகக்
கொண்டிருந்து, வானத்தையும், பூமியையும்,
சமுத்திரத்தையும், அவைகளிலுள்ளவை எல்லா
வற்றையும் உண்டாக்கின தன் பராபரனாகிய
கர்த்தரின்மேல் தன் நம்பிக்கையை வைக்கிற
வன் பாக்கியவான்.[10]—அவர் என்றென்றைக் ௬
கும் உண்மையைக் காக்கிறார்.—ஒடுக்கப்பட்ட ௭
வர்களுக்கு நியாயஞ்செய்கிறார், பசியாயிருக்கிற
வர்களுக்கு ஆகாரங்கொடுக்கிறார்; கட்டுண்ட
வர்களைக் கர்த்தர் விடுதலையாக்குகிறார்.
குருடரின் கண்களைக் கர்த்தர் திறக்கிறார்; ௮
மடங்கடிக்கப்பட்டவர்களைக் கர்த்தர் தூக்கி
எடுக்கிறார்; நீதிமான்களைக் கர்த்தர் சிநேகிக்கி
றார்.[11]—கர்த்தர் பரதேசிகளைக் காப்பாற்றித் திக் ௯
கற்றவனையும், விதவையையும் ஆதரிக்கிறார்;
ஆனால் ஆகாதவர்களின் வழியைக் கவிழ்க்கி
றார்.—கர்த்தர் சதாகாலமாகவும் சீயோனே, உன் ௰
பராபரன் தலைமுறைதலைமுறையாகவும் இரா
சரிகம்பண்ணுகிறார்; அல்லேலூயா.

## ௱௪௭. சங்கீதம்.

௧. நீர்க்கதரிசி திருச்சபையின்மேல் இருக்கும் பராபரனுடைய விசாரணைக்காகவும். ௪. வல்லமைக்காகவும், ௬. இரக்கத்திறதாகவும், ௭ பராமரிப்புக்காகவும், ௰௨. இராச்சியத்திற்குச்செய்த நன்மைக்காகவும், ௰௫. விண்வீழ்மீனின்மேல் இருக்கும் வல்லமைக்காகவும், ௰௯. திருச்சபையின் ஒழுங்குப் பிரமாணங்களுக்காகவும் அவரைத் துதிக்கத் தூண்டினது.

துதியே இன்பமும் ஏற்றதுமாய் இருக்கிறது; ௧
கர்த்தரைத் துதியுங்கள்; ஏனெனில் நம்முடைய
பராபரனைக் கீர்த்தனம்பண்ணுகிறது நல்லது.[12]-
கர்த்தர் எருசலேமைக் கட்டித் துரத்துண்ட இஸ் ௨
ரவேலரைக் கூட்டிச் சேர்க்கிறார்.—இருதயம் ௩
நொறுங்குண்டவர்களைச் சுகமாக்கி, அவர்கள்
நோவுள்ள காயங்களைக் கட்டுகிறார்.[13]-நட்சத்தி ௪
ரங்களின் இலக்கத்தை எண்ணி, அவைகளை எல்
லாம் பேர்பேராக அழைக்கிறார்.[14]-நம்முடைய ௫
ஆண்டவர் பெரியவரும், மகா பெலனுள்ளவரு
மாயிருக்கிறார்; அவருடைய உணர்வு எண்ணி
முடியாது.[15]—கர்த்தர் சாந்தகுணமுள்ளவர்களை ௬
உயர்த்தி, ஆகாதவர்களைத் தரைமட்டும் தாழ்த்து
கிறார்.[16]
கர்த்தரைத் துதியோடே பாடிக்கொண்டிருந் ௭
து, நம்முடைய பராபரனைச் சுரமண்டலத்தால்
கீர்த்தனம்பண்ணுங்கள்.—அவர் வானத்தை மே ௮
கங்களால் மூடி, பூமிக்கு மழையை ஆயத்தப்
படுத்தி, மலைகளில் புல்லை முளைப்பித்து,—மிரு ௯
கஜீவனுக்கும், கூப்பிடுகிற காக்கைக் குஞ்சுக
ளுக்கும் அவைகளின் ஆகாரத்தைக் கொடுக்கி
றார்.—குதிரைப் பெலத்தின்மேல் விருப்பமாய் ௰
இரார், புருஷனுடைய தொடைகளின்மேல் பிரி
யமாயிரார்.—தமக்குப் பயந்து தம்முடைய கிரு ௰௧
பைக்குக் காத்திருக்கிறவர்களின்மேல் கர்த்தர்
பிரியமாயிருக்கிறார்.
எருசலேமே, கர்த்தரைத் தோத்திரி; சீயோனே ௰௨
உன் பராபரனைத் துதி.[17]—ஏனெனில் உன் வாசல் ௰௩

1 சங். ௮௬. ௮.—2 சங். ௱௪௬. ௰. 3 சங். ௱௪௬. ௮.—4 சங். ௱௪. ௨௭.—5 சங். ௱௩௬. ௨௫. 6 சங். ௩௭. ௪. லூக். ௰. ௨௪. 7 சங். ௱௩.௧:௱௪.௧.-8 சங்.௱௪.௧௧. 9 சங். ௱௰௮. ௮, ௯. ஏரே.௰௭ ௫

10 சங். ௪௰. ௫: ௮௪. ௰௨. 11 சங். ௱௪௫.௰௪.-12 சங்.௯௨.௧,௪. 13 ஏசா.௬௧.௧-௩.-14 ஏசா.௪௰.௨௬. 15 சங். ௱௩௬. ௫: ௱௪௫. ௩. 16 சங். ௱௪௬. ௮, ௯. 17 சங். ௱௪௬. ௰.

களின் தாழ்ப்பாள்களைக் கெட்டியாக்கி, உன்னி
௰௪ லுள்ள உன் பிள்ளைகளை ஆசீர்வதிக்கிறார்.—அவர்
உன் எல்லைகளைச் சமாதானமுள்ளவைகளாக்கி,
கோதுமையின் புஷ்டியால் உன்னைத் திருப்தி
௰௫ யாக்குகிறார்.[1]—தம்முடைய வார்த்தையைப் பூமி
யின்மேல் அனுப்புகிறார்; அவருடைய சொல்
௰௬ மகா தீவிரமாய் ஓடும்.[2]—பஞ்சடைவாக உறைந்த
மழையைத் தந்து, சாம்பலடைவாக உறைந்த
௰௭ பனியைத் தூவுகிறார்.—அவர் தம்முடைய கல்ம
ழையைத் துணிக்கைகளாக அனுப்புகிறார்; அவ
ருடைய குளிருக்குமுன்பாக நிற்பவன் யார்?—
௰௮ தமது வார்த்தையை அனுப்பி, அவைகளை உருக்
குகிறார்; தமது காற்றை வீசப்பண்ணுகிறார்; அப்
௰௯ போது தண்ணீர்களாய் ஓடும்.—யாக்கோபுக்குத்
தம்முடைய வசனங்களையும், இஸ்ரவேலுக்குத்
தம்முடைய பிரமாணங்களையும், தம்முடைய
௨௰ நியாயங்களையும் அறிவிக்கிறார்.—இப்படி அவர்
எந்தச்சாதிக்கும் செய்ததில்லை; அவருடைய
நியாயங்களை அறியாதேபோகிறார்கள்; அல்லே
லூயா.

## ௱௪௮. சங்கீதம்.

௧ சங்கீதக்காரன் வானோர்களையும், ௭. பூலோகத்தாரையும், ௰௧. மற்றும் அறிவுள்ள சிருஷ்டிகளையும், பராபரனைத் துதிக்கத் தூண்டினது.

௧ அல்லேலூயா, பரமண்டலங்களிலுள்ளவைக
ளே, கர்த்தரைத் துதியுங்கள்; உயரங்களில் அவ
௨ ரைத் துதியுங்கள்.[4]—அவருடைய எல்லாத் தூதர்
களே, அவரைத் துதியுங்கள்; அவருடைய எல்
௩ லாச் சேனைகளே, அவரைத் துதியுங்கள்,—[5]சூரி
யசந்திரரே, அவரைத் துதியுங்கள்; வெளிச்ச
முள்ள எல்லா நட்சத்திரங்களே, அவரைத் துதி
௪ யுங்கள்.—வானங்களுடைய வானங்களே, ஆகா
யமண்டலத்தின்மீதுள்ள தண்ணீர்களே, அவ
௫ ரைத் துதியுங்கள்—அவைகள் கர்த்தரின் நாமத்
தைத் துதிக்கக்கடவன; ஏனெனில் அவர் கட்ட
௬ ளையிடச் சிருஷ்டிக்கப்பட்டன.—அவர் அவை
களை என்றைக்குமுள்ள சதாகாலங்களாய் உறு
திப்படுத்தி, அவைகள் மாறாத பிரமாணத்தை
அவைகளுக்குக் கட்டளையிட்டார்.

௭ பூமியிலுள்ளவைகளே, கர்த்தரைத்துதியுங்கள்;
௮ திமிங்கிலங்களும், சகல ஆழங்களும்,—அக்கி
னியும், கல்மாரியும், உறைந்த மழையும், மூடுப
னியும், அவர் சொற்படி செய்யும் பெருங்காற்
௯ றும்,—பர்வதங்களும், சகல மேடுகளும், கனி
௰ மரங்களும், சகல கேதுருக்களும், — காட்டுச்
சீவன்களும், சகல மிருகங்களும், ஊர்வனங்க
௰௧ ளும், இறகுள்ள பறவைகளும்,—பூமியின் இரா
சாக்களும், எல்லாச் சனசதளங்களும், பிரபுக்க
ளும், பூமியிலுள்ள சகல நியாயாதிபதிகளும்,—
௰௨ வாலிபரும், கன்னிகைகளும், முதிர்ந்தவயதும்
௰௩ இளவயதுமுள்ளவர்களும், — கர்த்தரின் நாமத்
தைத் துதிக்கவும்; ஏனெனில் அவருடைய நா
மம்மாத்திரமே உயர்ந்தது, அவருடைய மகிமை
பூமிக்கும் வானத்துக்கும் மேலாயிருக்கிறது.—
அவர் தம்முடைய எல்லாப் பரிசுத்தருக்கும் தம் ௰௪
மைச்சேர்ந்த சனமாகிய இஸ்ரவேல் புத்திரருக்
குமே கொண்டாட்டமாகத் தம்முடைய சனத்
திற்கு ஒரு கொம்பை உயர்த்தினார்; அல்லே
லூயா.[6]

## ௱௪௯. சங்கீதம்.

௧. தீர்க்கதரிசி திருச்சபையின்மேலிருக்கும் பராபரனுடைய அன்புக்காகவும், ௫. பரிசுத்தவான்களுக்குக் கொடுக்கப்பட்ட வல்லமைக்காகவும் அவரைத் துதிக்கத் தூண்டினது.

அல்லேலூயா, கர்த்தரைப் புதுப்பாட்டாய்ப்பா ௧
டுங்கள்; சன்மார்க்கரின் சபையில் அவருடைய
துதி நடப்பதாக.[7]—இஸ்ரவேல் தன்னை உண் ௨
டாக்கினவருக்குள் மகிழ்ந்து, சீயோனின் குமா
ரர் தங்கள் இராசாவுக்குள் களிகூர்ந்து,—அவரு ௩
டைய நாமத்தைக் கீதவாத்தியத்தால் துதித்து,
அவரை மேளத்தாலும் சுரமண்டலத்தாலும் கீர்த்
தனம்பண்ணக்கடவார்கள். — ஏனெனில் கர்த் ௪
தர் தம்முடைய சனத்தின்மேல் பிரியம் வைக்கி
றார்; சிறுமையானவர்களை இரட்சிப்பினாலே சிங்
காரிப்பார்.[8]

சன்மார்க்கர் மகிமையாய்க் களிகூர்ந்து, தங் ௫
கள் படுக்கைகளின்மேலே கெம்பீரிப்பார்கள்.—
அவர்கள் வாயில் கர்த்தரை உயர்த்தும் கீர்த்தனங்
களும், அவர்கள் கையில் இருபுறமும் கருக்
குள்ள பட்டையமும் இருக்கும்.—சாதிகளில் ௭
பழிவாங்குதலும், சனசதளங்களில் தண்டனை
களும் செய்வதற்கும்,[9]—அவர்களுடைய இரா ௮
சாக்களைச் சங்கிலிகளாலும், அவர்களுடைய
மேன்மக்களை இருப்பு விலங்குகளாலுங் கட்டி,—
எழுதியிருக்கிற நியாயத்தை அவர்களில் செய் ௯
வதற்குமாகத்தானே; இந்தக் கனம் அவருடைய
சன்மார்க்கர் அனைவர்களுக்கும் உண்டாம்; அல்
லேலூயா.

## ௱௫௰. சங்கீதம்.

௧ பராபரனைப் புகழ்ந்து, ௩. எல்லாவகைக் கருவிகளோடும் கொண்டாடத் தூண்டுதல்.

அல்லேலூயா, தம்முடைய பரிசுத்தஸ்தலத்தி ௧
லிருக்கிற பராபரனைத் துதியுங்கள்; அவருடைய
பலம் விளங்குகிற ஆகாய விரிவைப்பார்த்து
அவரைத் துதியுங்கள்.— அவருடைய வல்லமைக ௨
ளுக்காக அவரைத் துதியுங்கள்; அவருடைய
திரளான மகத்துவத்திற்காக அவரைத் துதியுங்
கள்.—அவரை எக்காளத் தொனியினாலே துதியுங் ௩
கள்; அவரைத் தம்புருவாலும், சுரமண்டலத்தா
லும் துதியுங்கள்.—அவரை மேளத்தாலும், கீத ௪
வாத்தியத்தாலும் துதியுங்கள்; அவரை வீணையா
லும், கின்னரத்தாலும் துதியுங்கள்.—அவரை ௫
ஓசையான கைத்தாளங்களாலும் துதியுங்கள்;
அவரைக் கெம்பீரமான கைத்தாளங்களாலும்
துதியுங்கள்.—சுவாசமுள்ளவை எல்லாம் கர்த் ௬
தரைத் துதிப்பதாக; அல்லேலூயா.[10]

1 சங். ௮௧ ௰௭.—2 சங். ௧௧. ௯. ௯௯. ௧௬.—5 லூக். ௨. ௰௪, ௰௪.
3 ௫ மோ. ௪. ௭, ௮.—4 சங். சங். ௧௧. ௯.—6 லூக். ௧. ௯௯ : ௨. ௩௰,
௯௧.—7 சங். ௯௯. ௧ : ௯௮. ௧. 9 வெளி. ௨. ௨௬, ௨௭.
8 லூக். ௨. ௰௪. 10 வெளி. ௫. ௰௩.

PROVERBS.

# சாலோமோனின் வாக்கியங்கள்.

## ௧. அதிகாரம்.

*௧. இந்த வாக்கியங்களின் பிரயோசனம். ௭. பராபரனுக்குப் பயப்படவும், அவருடைய வார்த்தையை நம்பவும், ௰ பாவிகளின் உபாயத்திற்கு விலகிப்போகவும் எச்சரிப்பு. ௨௰. ஞானம் தன்னை அசட்டைபண்ணுவதைக் குறித்து முறையிட்டது. ௨௪. தன்னை அசட்டைபண்ணுகிறவர்களை உறுக்கினது.*

௧ ஞானத்தையும் கல்வியையும் அறிந்து புத்தியின்
௨ வார்த்தைகளை உணர்ந்து,-விவேகம், நீதி, [1]நியா
யம், நிதானம் என்றவைகளின் கல்வியை ஏற்
௩ றுக்கொள்வதற்கும்,—பேதைகளுக்கு வினவை
யும், வாலிபருக்கு அறிவையும், நினைவையும்
௪ உண்டாக்குவதற்கும், — தாவீதின் குமாரனும்,
இஸ்ரவேலின் இராசாவுமாகிய சாலோமோன்
௫ எழுதின வாக்கியங்கள். — ஞானமுள்ளவன்
௬ கேட்டு, உபதேசத்தில் அதிகப்படுவான். — உ
ணர்வுள்ளவன் வாக்கியத்தையும், அதின் அருத்
தத்தையும்; ஞானிகளின் சொற்களையும், அவை
களின் புதைபொருள்களையும் உணரத் திறமை
யை அடைவான்.
௭ [2]கர்த்தருக்குப் பயப்படுதல் அறிவின் துவக்கம்;
நின்மூடர் ஞானத்தையும், கல்வியையும் அசட்
௮ டைபண்ணுகிறார்கள்.[3]-என் மகனே, உன் தகப்
பன் புத்தியை நீ கேட்டு, உன் தாயின் போத
௯ கத்தை நெகிழாதிரு. — ஏனெனில் [4]அவைகள்
உன் தலைக்கு நேர்த்தியான முடியும், உன் கழுத்
துக்குச் சரப்பணிகளுமாயிருக்கும்.
௰ என் மகனே, [5]பாவிகள் உனக்கு ஆசைபதம்
௰௧ காண்பித்தால் இச்சியாதிரு — எங்களோடே
கூட வா, நாம் இரத்தத்திற்குப் பதிவிருந்து, குற்
றமற்றவர்களை முகாந்தரமில்லாமல் தாப்புக்
௰௨ கொண்டு,—அவர்களைப் பாதாளத்தைப்போல
உயிரோடும், குழியில் இறங்குகிறவர்கள் விழுங்
கப்படுகிறதுபோல முழுமையும் விழுங்குவோ
௰௩ மாக.—விலையேறப்பெற்ற சகலவித ஆஸ்தியை
யும் கண்டுபிடிப்போம்; நம்முடைய வீடுகளைக்
௰௪ கொள்ளையால் நிரப்புவோம். — எங்களோடே
ஏகபங்காளியாயிருப்பாய்; நமக்கெல்லாம் ஒரே
பை இருக்குமென்று அவர்கள் சொன்னால்,—
௰௫ என் மகனே, நீ அவர்களோடே வழிநடவாமல்,
உன் காலை அவர்கள் பாதைக்கு விலக்கமாய்க்
௰௬ கா. —ஏனெனில் [6]அவர்கள் கால்கள் பொல்லாப்
புக்கு ஓடி, இரத்தம் சிந்துகிறதற்குத் தீவிரிக்கின்
௰௭ றன —எந்தச் சாதியுமான பறவையின் கண்க
ளுக்குமுன்பாகவோ வலை விருதாவாய் விரிக்
௰௮ கப்படும்.—இவர்களோ தங்களுடைய இரத்தத்
திற்குப் பதிவும், தங்களுடைய ஆத்துமாவுக்கு
ஒளிவுமாயிருக்கிறார்கள்.—பொருளாசை வைக் ௰௯
கிற எவனுடைய வழிகளும் அப்படியிருக்கும்;
அது தன் எசமானன்களின் ஆத்துமாவைச் சிக்கிக்
கொள்ளும்.

[7]உன்னத ஞானம் வெளியிலே கூப்பிட்டு, ௨௰
வீதிகளிலே தன் சத்தத்தைக் காட்டி,—சந்தடி ௨௰௧
யுள்ள தெருக்களின் முனையிலும் ஒலிமுகவா
சல்களிலும் கூப்பிட்டு, பட்டணத்தில் தன் வச
னங்களைச் சொல்லி உரைக்கிறதாவது:-பேதைக ௨௰௨
ளே, நீங்கள் பேதைமையைச் சிநேகிப்பதும், சக்
கந்தக்காரர் சக்கந்தத்தை விரும்புவதும், மதிகே
டர் அறிவைப் பகைப்பதும் எந்தமட்டும் இருக்
கும். — நம்முடைய கடிந்துகொள்ளுதலுக்குத் ௨௰௩
திரும்புங்கள்; இதோ நமது ஆவியை உங்களுக்கு
ஊற்றி, நம்முடைய வார்த்தைகளை உங்களுக்கு
அறிவிப்போம்.

ஆனால் [8]நாம் கூப்பிட்டும் நீங்கள் கேட்கமாட் ௨௰௪
டோம் என்கிறபடியினாலும், நமது கையை நாம்
நீட்டியும் கவனிக்கிறவனில்லாமல்போய், —
நீங்கள் நம்முடைய ஆலோசனையை எல்லாம் ௨௰௫
தள்ளி, நம்முடைய கடிந்துகொள்ளுதலை விரும்
பாமல்போகிறபடியினாலும்,—[9]நாமும் உங்கள் ௨௰௬
ஆபத்திலே நகைத்து, நீங்கள் பயப்படும் காரியம்
வரும்போது ஆகடியம்பண்ணுவோம்.—நீங்கள் ௨௰௭
பயப்படும் காரியம் கொந்தளிப்பைப்போலே
வந்து, உங்கள் ஆபத்துப் பெருங்காற்றைப்போல
அணுகி, உங்கள்மீதில் நெருக்கமும் இடுக்கணும்
நேரிடும்போதுதானே.—[10]அப்போது அவர்கள் ௨௰௮
நம்மைநோக்கிக் கூப்பிட்டும் மறுஉத்தரவு கொ
டாதிருப்போம்; காலமே நம்மைத் தேடியும்
நம்மைக் காணாதிருப்பார்கள். — அவர்கள் அறி ௨௰௯
வைப் பகைத்து, கர்த்தருக்குப் பயப்படுதலைத்
தெரிந்துகொள்ளாமல்போனதற்குப் பதிலாகத்
தானே. — நம்முடைய ஆலோசனையை விரும் ௩௰
பாமல், நம்முடைய கடிந்துகொள்ளுதலையெல்
லாம் அசட்டைபண்ணினார்கள். — ஆகையால் ௩௰௧
தங்களுடைய மார்க்கத்தின் பலனைத் தின்று,
தங்கள் ஆலோசனைகளினாலே திருப்தியாவார்
கள்.-ஏனெனில் பேதைகளின் மாறுபாடு அவர் ௩௰௨
களைக் கொன்று, நின்மூடரின் நிர்விசாரம் அவர்
களை அழிக்கும்.—நம்முடைய [11]சொல்கேட்கி ௩௰௩
றவனோ பயமற்றுத் தாபரித்து, தீங்குடைய திகி
லில்லாமல் சுகமாயிருப்பானென்கிறது.

1 சங். ௨௫. ௨௧.—2 சங். ௯. ௰. 4 வாக். ௪. ௯.—5 வாக். ௪. ௰௪, ௰௫. சங். ௱௰௧. ௰.—3 வாக். ௯. ௨௰. 6 ஏசா. ௫௯. ௭. உரோ. ௩. ௰௫.

7 வாக். அ. ௧-௩.—8 ஏசா. ௬௫. ௰௨: ௨அ. ௬௩.—10 ஏசா. ௫௯. ௨. ௬௬ ௪. எரே. ௭. ௰௩.—9 ௫ மோ. 11 ஏசா. ௩. ௰௧.

## உ. அதிகாரம்.

க. ஞானம் தன் மக்களுக்குத் தேவபத்தியைக் கொடுக்கவும், ய துஷ்டர்களை விட்டு அவர்களை விலக்கவும், உய. நல்ல வழிகளைக் காட்டவும் வாக்குத் தத்தம்பண்ணினது.

க என் மகனே, நீ உன் செவிகளை ஞானத்தைக்
கவனிக்கப்பண்ணி, உன் இருதயத்தை உணர்
உ வுக்குச் சாய்க்கும்படியாய்,—என் வார்த்தைகளை
ஏற்றுக்கொண்டு, என் கற்பனைகளை உன்னிடத்
ங திலே பத்திரப்படுத்தி,—புத்தியை வாவென்று
கூப்பிட்டு, உணர்வை [1]அழைக்க உன் சத்தத்தை
ச உயர்த்தி,—அதை வெள்ளியைப்போலே தேடி,
[2]அதைப் புதையல்களைப்போலே ஆராய்ந்தாயா
ரு ஞல்,—அப்போது கர்த்தருக்குப் பயப்படுதலை
உணர்ந்து, பராபரனை அறியும் உணர்வைக் கண்
டடைவாய்.
சு ஏனெனில் கர்த்தர் ஞானத்தைத் தருகிருர்;
அவர் வாக்கிஞல் அறிவும், உணர்வும் வரும்.—
எ அவர் செம்மையானவர்களுக்கென்று மெய்ஞ்
ஞானத்தை வைத்துவைத்து, உத்தமமாய் நடக்கி
றவர்கள் நியாயத்தின் பாதைகளைக் காக்க அவர்
அ களுக்குக் கேடயமாயிருந்து,—தம்முடைய பரி
சுத்தவான்களுடைய வழியைக் காக்கிருர்.—
கூ அப்போது நீதியையும், நியாயத்தையும், நேர் நிதா
னங்களையும், சகல நல்வழியையும் உணர்வாய்.
ய ஞானம் உன் இருதயத்திலே வந்து, அறிவு
யக உன் ஆத்துமாவுக்கு இன்பமாகும்போது,—நல்
யோசனை உன்னைப் பத்திரம்பண்ணி, புத்தி உன்
யஉ னைத் தற்காக்கும். — உன்னை ஆகாதவழிக்கும்,
யங மாறுபாடுகளைப் பேசுகிற மனுஷனுக்கும்,—இரு
ளான வழிகளில் நடக்கச் செம்மையான பாதை
யச களைவிட்டு, — தீங்குசெய்ய மகிழ்ந்து, பொல்
லாத மாறுபாடுகளின்மேல் களிகூருகிறவர்களுக்
யரு கும்,—கோணலான வழிகளில் நடந்து, தங்கள்
பாதைகளில் நேர்வழியை விலகுகிறவர்களுக்
யசு கும் உன்னைத் தப்புவிக்கவும்,—தன் வார்த்தைக
யஎ ளால் இச்சகம்பேசுகிறவளும், — தன் இளவய
தின் அதிபதியைவிட்டுத் தன் பாரபரனுடைய
உடம்படிக்கையை மறக்கிறவளுமான [3]வேற்
றுப் பெண்சாதிக்கும், பரஸ்திரிக்கும் உன்னைத்
யஅ தப்புவிக்கவும்தானே.—[4]ஏனெனில் அவள் வீடு
சாவுக்கும், அவள் பாதைகள் மரித்தவர்களுக்கும்
யகூ நேராகச் சாய்கிறது.—அவளண்டைக்குப் பிரவே
சிக்கிற யாவரும் திரும்பாமலும், சீவனுடைய
பாதைகளில் வந்தேருமலும் போகிருர்கள்.—
உய ஆகையாலே நீ நல்லவர்களின் வழியிலே நடந்
து, நீதிமான்களின் பாதைகளைப் பிடித்திருப்பா
உக யாக.—ஏனென்ருல் [5]செம்மையானவர்கள் பூமி
யிலே வாசம்பண்ணி, உத்தமர் அதில் வைக்கப்
உஉ படுவார்கள்.—ஆகாதவர்களோ பூமியிலிராதபடி
வேரறுப்புண்டு, துரோகிகள் அதில் இராதபடிக்
குப் பிடுங்கப்படுவார்கள்.

## ங. அதிகாரம்.

க. கீழ்ப்படிதலுக்கும், ரு. விசுவாசத்துக்கும், எ. இச்சையடக்கத்துக்கும், கூ. தேவபத்திக்கும், யக. பொறுமைக்கும் தூண்டுதல். யங. ஞானத்தின் நல்ல சம்பாத்தியமும், யகூ. அதின் வல்லபமும், உக. அதினுல் வரும் சுகிர்தங்களும் சொல்லப்பட்டது. உஎ. தர்மத்துக்கும், உய. சமாதானத்துக்கும், சக. மனஇரம்மியத்திற்கும் ஏவுதல் ங. துன்மார்க்கருடைய சபிக்கப்பட்ட நிலைமையைக்குறித்தது.

என் மகனே, என் உபதேசத்தை மறவாயாக; க
என் கற்பனைகளை உன் இருதயம் காக்கக்கட
வது.—ஏனெனில் அவைகள் உனக்கு நீடித்த உ
நாட்களையும், சீவனின் வருஷங்களையும், சமா
தானத்தையும் பெருகப்பண்ணும். — கிருபை ங
யும் உண்மையும் உன்னை விடாதிருப்பதாக; நீ
அவைகளை உன் கழுத்திலே கட்டி, அவைகளை
உன் இருதயத்தின் பலகையில் எழுதிக்கொள்.—
அப்படியே பராபரன் கண்களிலும், மனுஷர் ச
கண்களிலும் இரக்கத்தையும் நற்புத்தியையும்
கண்டடைவாய்.
உன் புத்தியின்மேல் நீ சாராமல் கர்த்தரையே ரு
உன் முழு இருதயத்தாலும் நம்பு.—உன் வழிக சு
ளிலெல்லாம் அவரை அறிந்துகொள்; அப்போ
து அவர் உன் பாதைகளைச் செம்மைப்படுத்து
வார்.—[6]உன் பார்வைக்கு நீ ஞானியாயிராதிரு; எ
கர்த்தருக்குப் பயந்து பொல்லாப்பை விட்டுவி
லகு. — அது உன் தொப்புளுக்கு ஆரோக்கிய அ
மும், உன் எலும்புகளுக்கு ஊனுமாயிருக்கும்.
[7]உன் ஆஸ்தியாலும், உன்னுடைய எல்லாவ கூ
ரத்தின் முதல் விளைவாலும் கர்த்தரைக் கனம்
பண்ணு.—அப்போது உன் களஞ்சியங்கள் பரி ய
பூரணத்தால் நிரப்பப்பட்டு, உன் ஆலைகள் இர
சம் புரண்டிருக்கும்.
[8]என் மகனே, நீ கர்த்தருடைய தண்டனையை யக
அற்பமாய் எண்ணுதிரு; அவர் அதட்டுதலை வெ
றுத்திராதே.—ஏனெனில், [9]தாம் சிநேகிக்கிறவ யஉ
னைக் கர்த்தர் கடிந்துகொண்டு, மகன்மேலே
தகப்பனைப்போலே பிரியமாயிருக்கிருர்.
ஞானத்தைக் கண்டுபிடிக்கிற மனுஷனும், யங
உணர்வைப் பெறுகிற மனுஷனும் பாக்கியவான்
கள்.—ஏனெனில்[10]வெள்ளியின் வியாபாரத்தைப் யச
பார்க்கிலும் அதின் வியாபாரமும், அபரஞ்சி
யைப்பார்க்கிலும் அதின் வரத்தும் நல்லது.—
முத்துக்களைப்பார்க்கிலும் அது விலையேறப்பெ யரு
ற்றது; நீ இச்சிக்கத்தக்கவைகள் எல்லாம் அ
தற்கு நிகரல்ல.—அதின் வலதுகையில் நீடித்த யசு
ஆயுசும், அதின் இடதுகையில் ஐசுவரியமும்,
கனமுமுண்டு.—அதின் வழிகள் இனிமையான யஎ
வழிகளும், அதின் பாதைகளெல்லாம் சமாதான
முந்தானே.—அதைப் பிடிக்கிறவர்களுக்கு அது யஅ
சீவவிருட்சமாம்; அதைப் பற்றியிருக்கிறவர்கள்
பாக்கியவான்கள். — கர்த்தர் ஞானத்திஞலே யகூ
பூமியை அஸ்திவாரப்படுத்தி, புத்தியிஞலே
வானங்களைப் படைத்தார்.—அவருடைய அறிவி உய
ஞலே ஆழங்கள் பிரிந்தன; அதஞலே ஆகாயம்
பனியைத் தூற்றுகிறது.
என் மகனே, இவைகள் உன் கண்களைவிட்டுப் உக
பிரியவேண்டாம்; மெய்ஞ்ஞானத்தையும் நல்
நினைவையும் கா.—அப்போது அவைகள் உன் உஉ

---

1 யாக். க. ரு.—2 மத். யங. சச. 3 வாக். ரு. உக, உச. 4 வாக். ஏ. ஏ.—5 சங். கஎ.கூ-யக மத். ரு. ரு.

6 எசா. ரு. உக. உரோ. யஉ. யசு. 9 வெளி. ங. யகூ. 7 மல்கி.ங. ய.—8 எபி. யஉ. ரு.சு. 10 வாக். அ. ய. யக.

ஆத்துமாவுக்குச் சீவனும், உன் கழுத்துக்கு அந்
௨௩ தமுமாம்.—அப்போது [1]உன் கால் இடறாமல்
௨௪ சுகமாய் உன் வழியில் நடப்பாய்.—நீ படுத்துக்
கொண்டால் அருக்களியாமல் இருப்பாய்; உன்
௨௫ நித்திரை இன்பமாயிருக்கும்.[2]—அசுப்பான திகி
லும், ஆகாதவர்களின் பாழ்க்கடிப்பும் வரும்
௨௬ போது அதற்குப் பயப்படாயாக.—எனெனில்
கர்த்தர் உன் நம்பிக்கையாயிருந்து உன் காலைப்
பிடிபடாதபடிக்குக் காப்பார்.
௨௭ நன்மைசெய்ய உன் கையில் அவகாசமிருக்
கையில், அதற்குத் தக்கவர்களுக்கு அதை வழங்
௨௮ காதிராதே. — உனக்கிருந்தும் உனக்கடுத்தவனு
டனே நீ போய்த் திரும்ப வா; நாளைக்குத் தரு
௨௯ கிறேன் என்னுதிரு. — உனக்கடுத்தவன்மேல்
பொல்லாப்பைப் பிணைக்காதிரு; உன்னேடே
நம்பிக்கையாய்க் குடியிருக்கிறானே.
௩௰ ஒரு மனுஷன் உனக்குத் தீங்குசெய்யாதிருக்
கையில் அவனேடே வீணாய் வழக்காடாதிரு.
௩௧ கொடுமையான மனுஷன்மேல் பொறாமை
யாயிராதே; அவனுடைய வழிகளில் ஒன்றை
௩௨ யும் தெரிந்துகொள்ளாதிரு.-எனெனில் மார்க்கம்
தப்பினவன் கர்த்தருக்கு அருவருப்பானவன்;
ஆனால் செம்மையானவர்களோடே [3]அவரு
௩௩ டைய இரகசியமிருக்கிறது.—ஆகாதவனுடைய
வீட்டில் கர்த்தருடைய சாபமிருக்கும்;ஆனால் நீ
திமான்களின் வாசஸ்தலத்தை ஆசீர்வதிப்பார்.—
௩௪ சக்கந்தக்காரரை அவர் சக்கந்தம்பண்ணி, சிறு
மையானவர்களுக்கோ கிருபையை அளிப்பார்.-
௩௫ ஞானமுள்ளவர்கள் கனத்தைச் சுதந்தரிப்பார்
கள்; மதிகேடரோ கனஈனத்தை எடுப்பார்கள்.

## ௪. அதிகாரம்.

௧. சாலோமோன் கீழ்ப்படிதலைப் போதித்து, ௫ ஞானத்தைக் கற்கவும், ௰௪. துன்மார்க்கருடைய பாதைக்கு விலகவும், தன் தந்தைதாய் சொன்ன புத்திகளைக் காட்டினது. ௨௰. விசுவாசத்தையும், ௨௩. தூய்மையையும் கைக்கொள்ளத் தூண்டுதல்.

௧ பிள்ளைகளே, நீங்கள் உணர்வை அறிவதற்குத்
தகப்பன் புத்தியைக்கேட்டுக் கவனியுங்கள்.—
௨ எனெனில் நற்போதகத்தை உங்களுக்குக் கொ
டுக்கிறேன்; என் உபதேசத்தை விடாதிருங்கள்.—
௩ எனென்றால் நான் என் தகப்பனுக்கு இளம்பி
ராயமும், என் தாய்க்குமுன்பாக ஒரே அருமை
௪ யுமான பிள்ளையாயிருக்கையில், — அவர் இப்
படி என்னை உபதேசித்து எனக்குச் சொன்னார்;
என் வார்த்தைகளை உன் இருதயம் பிடித்திருப்
பதாக; என் கற்பனைகளைக் கைக்கொள்; அப்
போது பிழைப்பாய்.
௫ ஞானத்தையே சம்பாதி; உணர்வையே சம்
பாதி; என் வாயின் சொற்களை மறவாமலும்,
௬ விட்டுவிலகாமலுமிரு.—அதை விடாயாக; அப்
போது அது உன்னைத் தற்காக்கும். அதைச் சிநே
கிப்பாயாக; அப்போது அது உன்னைக் காப்பாற்
௭ றும். — [4]நீ ஞானத்தைச் சம்பாதிப்பதும், உன்
னுடைய எல்லா ஆஸ்தியாலும் உணர்வைச் சம்
பாதித்துக்கொள்வதும், ஞானத்தின் துவக்கம்.—
அதை உயர்த்திவை; அப்போது அது உன்னை ௮
உயர்த்தும்; நீ அதை அணைத்துக்கொண்டால்
அது உன்னைக் கனமுள்ளவனுக்கும். — [5]அது ௯
உன் தலைக்கு நேற்றியான முடியைக் கொடுக்
கும்; அது அலங்கார கிரீடத்தை உனக்களிக்
கும்.—என் மகனே, என் வார்த்தைகளைக் கேட்டு ௰
ஏற்றுக்கொள்; அப்போது உன் ஆயுசின் வருஷ
ங்கள் அதிகமாம் -ஞானத்தின் வழியிலே உனக் ௰௧
குப் போதிக்கிறேன்; செம்மைப்பாதைகளிலே
உன்னை நடத்துகிறேன்.—நீ அவைகளில் நடக் ௰௨
கிறபோது உன் நடைகளுக்கு இடுக்கண் உண்
டாகுவதில்லை; நீ அவைகளில் ஓடினால் நீ இட
றுவதுமில்லை.—கல்வியைப் பிடித்திரு, அதை ௰௩
விடாதிரு, அதைக் கா; எனெனில் அதுவே உ
னக்குச் சீவன்.
நீ ஆகாதவர்களின் பாதையில் பிரவேசியாம ௰௪
லும், பொல்லாதவர்களுடைய வழியில் நடவா
மலும் இருப்பாயாக.—அதை வெறு; அதிலே ௰௫
போகாதிரு; அதை விட்டுவிலகிக் கடந்துபோ.—
எனெனில் அவர்கள் பொல்லாப்புச் செய்தா ௰௬
லொழிய அவர்களுக்கு நித்திரை வராது; அவர்
கள் இடறல் உண்டாக்காதிருந்தால் அவர்கள்
தூக்கம் கலைந்துபோம்.—எனெனில் ஆகாமியத் ௰௭
தின் அப்பத்தைப் புசித்து, கொடுமைகளின் இர
சத்தைக் குடிக்கிறார்கள்.—நீதிமான்களின் பா ௰௮
தையோவெனில் பட்டப்பகல்மட்டும் அதிகம
திகமாய் ஒளியாகிற பிரகாசமுள்ள வெளிச்சத்
தைப்போலிருக்கிறது.—ஆகாதவர்களின் வழி ௰௯
இருளைப்போலே இருக்கிறது; எதிலே இடறு
வார்களென்றறியார்கள். — என் மகனே, என் ௨௰
வார்த்தைகளைக் கவனி, என் வசனங்களுக்கு
உன் செவியைச் சாய்.—அவைகள் உன் கண்களை ௨௧
விட்டுப் பிரியாதிருப்பதாக; அவைகளை உன் இ
ருதயத்துக்குள்ளே காத்துக்கொள்.—எனெனில் ௨௨
அவைகளைக் கண்டுபிடிக்கிறவர்களுக்கு அவை
கள் சீவனும், அவர்கள் சதைக்கெல்லாம் ஔஷ
தமுமாய் இருக்கிறது.—எல்லாக் காவலைப்பார்க் ௨௩
கிலும் உன் இருதயத்தைக் கா; எனெனில், அதி
லிருந்து சீவன் பரவும்.—வாயின் தாறுமாறுகளை ௨௪
உன்னைவிட்டு அகற்றி, உதடுகளின் வழுவுதலை
உனக்குத் தூரப்படுத்து.—உன் கண்கள் நேராய் ௨௫
நோக்கி, உன் இமைகள் உனக்குமுன்னே செம்
மையாய் இருப்பதாக.—உன் கால்களின் நடை ௨௬
யைச் சீர்தூக்கிப்பார்; உன் வழிகளெல்லாம்
நிலைவரமாய் இருப்பதாக.—வலதுபுறமாகிலும், ௨௭
இடதுபுறமாகிலும் சாயாயாக; உன் காலைப்
பொல்லாப்புக்கு விலக்கு.

## ௫. அதிகாரம்.

௧. சாலோமோன் ஞானத்தைக் கற்கத் தூண்டினது. ௩. வேசிமார்க்கத்தாலும், அமளியினாலும் வரும் தீங்கைக் காட்டினது. ௰௫. மன இரம்மியத்திற்கும், உதாரத்துவத்திற்கும், கற்புக்கும் ஏவினது. ௨௨. துன்மார்க்கரின் பாவம் அவர்களைத் தொடர்வதைக் குறித்தது.

என் மகனே, நல் நினைவுகளை நீ வைத்திருக்கிற ௧
தற்கும், உன்னுதடுகள் அறிவைக் கற்கிறதற்கு

1 சங் ௯௧.௰௧.௰௨.—2 ௩ மோ. ௨௬. ௬. சங். ௩.௩:௪ ௬.—3 சங் ௨௫.௰௪.
4 வாக். ௨௩. ௨௩.—5 வாக். ௧. ௯.—6 ௫ மோ. ௯. ௯௨.

௨ மாக,—என் ஞானத்தைக் கவனித்து, என் புத்திக்கு உன் செவியைச் சாய்.
௩ ஏனெனில் பரஸ்திரியின் உதடுகள் தேன்கூடொழுகலாகவும், அவள் வாய் எண்ணெயைப் பார்க்கிலும் மிருதுவாகவுமிருக்கின்றன. —
௪ ஆனால் அவள் கடைசிக்காரியம் எட்டிமரத்தைப் போலே கசப்பும், இருபுறமும் கருக்குள்ள பட்
டையம்போலக் கூர்மையுமாயிருக்கிறது. —
௫ [1]அவள் காலடிகள் சாவுக்கு இறங்கி, அவள் கா
௬ லடிகள் நரகத்தைப் பற்றிப்போம்.—நீ சீவனின் பாதையைச் சிந்தியாதபடிக்கு அவள் நடைகள் மாறிமாறி உனக்குத் தெரியாதவைகளாயிருக்
௭ கின்றன.—இப்போதும் பிள்ளைகளே எனக்குச் செவிகொடுத்து, என் வாயின் வசனங்களை விட்
௮ டுப் பிரியாதிருங்கள். — நீ உன் முக்கியத்தை வேற்றுமையானவர்களுக்கும், உன் ஆயுசின் வருஷங்களைக் கொடூரருக்கும் கொடாதபடிக்
௯ கும்,—அந்நியர் உன் ஆஸ்தியால் திருப்தியாக உன் பிரயாசங்கள் பிறத்தியானுடைய வீட்டுக்
௰ குள் விழாதபடிக்கும், — நீ உன் பிற்காலத்தில் உன் மாம்சமும், உன் சதையும் உருவழிந்திருக்
௰௧ கும்போது,—நான் என் போதகரின் சொல் கேளாமலும், என்னை உபதேசித்தவர்களுக்கு என்
௰௨ செவியைச் சாய்க்காமலும், — எத்தனையாய்ப் புத்தியைப் பகைத்தேன்; எத்தனையாய் என் இருதயம் கடிந்துகொள்ளுதலை அசட்டைபண்
௰௩ ணிற்றென்றும்,—சபைக்குள்ளேயும், சங்கத்துக்குள்ளேயும், நான் கொஞ்சங்குறைய எல்லாப் பொல்லாப்புக்கும் உள்ளானேனென்றும் அல
௰௪ றுதபடிக்கும், — உன் வழியை அவளுக்குத் தூரப்படுத்து; அவள் வீட்டின் வாசலைக் கிட்டாதிரு.
௰௫ உன்னுடைய கிணற்றின் தண்ணீரையும், உன்னுடைய தூரவிலிருந்து சுரக்கிற சலங்களையும் கு
௰௬ டி —உன்னுடைய ஊற்றுகள் வெளியிலும் உன்
௰௭ வாய்க்கால்கள் வீதிகளிலும் பாய்வதாக.—அவைகள் உன்னோடேகூட அந்நியருடையதுமாயிராமல், உன்னுடையதாய்மாத்திரம் இருப்பதாக.—
௰௮ உன்னுடைய ஊற்றுக்கண் ஆசீர்வதிக்கப்பட்டிருக்கக்கடவது; உன்னுடைய இளவயதின்
௰௯ பெண்சாதியால் மகிழ்ந்துகொள்.—அவளே நேசிக்கப்படத்தக்க பெண்மானும், அழகான காட்டாடுமானவள்; அவளுடைய நேசம் உன்னைச் சகல காலமும் ஆற்றுவதாக; அவளுடைய சிநேகத்தால் எப்போதும் மயங்கியிருப்பாயாக. —
௨௰ என் மகனே, நீ பரஸ்திரியின்மேல் மயங்கித்திரிந்து, வேற்றுப்பெண்ணின் மடியைத் தழுவியி
௨௧ ருப்பானேன்? — ஏனெனில் மனுஷனுடைய வழிகள் கர்த்தருடைய கண்களுக்குமுன்பாக இருக்கின்றன; அவன் பாதைகளை எல்லாம் அ
௨௨ வர் சீர்தூக்கிப்பார்க்கிறார்.—[2]ஆகாதவனை அவனுடைய அக்கிரமங்கள் பிடித்துக்கொள்ளும்; தன் பாவத்தின் கண்ணிகளில் சிக்கப்படுவான்.-
அவன் புத்தி கேளாததினாலே மடிந்து, தன் திர ௨௩
ளான பயித்தியத்தினாலே வழிபிசகிப்போவான்.

## ௬. அதிகாரம்.

௧. பிணைப்படுதலுக்கும், ௬. சோம்பற் குணத்திற்கும், ௰௨. துர்ச்செய்கைக்கும் எச்சரிப்பு. ௰௬. ஏழுகாரியம் பராபரன் பகைக்கத்தக்கவைகளென்பது. ௨௰. கீழ்ப்படிதலின் நன்மைகளும், ௨௫. வேசிமார்க்கத்தின் தீங்கும் சொல்லப்பட்டது.

என் மகனே,[3]நீ உன் சிநேகிதனுக்காகப் பிணைப் ௧
பட்டு, அந்நியனுக்கு உன் கையைக் கொடுத்து,-
உன் வாயின் சொற்களால் சிக்குண்டு, உன் வா ௨
யின் சொற்களால் பிடிபட்டிருந்தால், — இப் ௩
போது ஒன்றுசெய்; என் மகனே, உன்னைத் தப்
புவித்துக்கொள்; ஏனெனில் உனக்கடுத்தவன்
கையிலே அகப்பட்டாய்; போய் உன் சிநேகித
னை வருந்தித் துருசுபண்ணு.—உன் கண்களுக்கு ௪
நித்திரையையும், உன் இமைகளுக்கு உறக்கத்
தையும் கொடாதிரு.—வெளிமானும் குருவியும் ௫
வேட்டைக்காரர் கைக்குத் தப்புவித்துக்கொள்
வதுபோல உன்னைத் தப்புவித்துக்கொள்.
சோம்பேறியே, எறும்பண்டைக்குப் போய், ௬
அதின் வழிகளைப்பார்த்து ஞானமடை.—அதற் ௭
குப் பிரபுவும் தலைவனும் அதிகாரியும் இல்லா
திருந்தாலும்,—[4]உஷ்ணகாலத்திலே தன் ஆகா ௮
ரத்தைச் சம்பாதித்து, அறுப்பிலே தன் போச
னத்தைச் சேர்க்கும்.—சோம்பேறியே, எந்தமட் ௯
டும் சயனிப்பாய்? எப்போது உன் தூக்கத்தை
விட்டெழுந்திருப்பாய்?—[5]இன்னம் கொஞ்சம் ௰
தூக்கங்களும், இன்னம் கொஞ்சம் உறக்கங்க
ளும், சயனிப்புக்கு இன்னம் கொஞ்சம் கைகட்
டிக்கொள்ளுதலும் உண்டானால்,—அப்போது ௰௧
உன் தரித்திரம் வழிப்போக்கனைப்போலவும்,
உன் குறைச்சல் ஆயுதம் அணிந்தவனைப்போ
லவும் வரும்.
பேலியாளின் மனுஷனும் அக்கிரமக்காரனு ௰௨
மானவன் வாய்ப்புரட்டனாய் நடந்து, — தன் ௰௩
கண்களால் சைகைகாட்டி, தன் கால்களால்
பேசி, தன் விரல்களால் போதிக்கிறான். — அ ௰௪
வன் இருதயத்திலே திரியாவரங்கள் இருக்கின்
றன; எந்தக்காலத்திலும் பொல்லாப்பைப் பி
ணைத்து, வழக்குகளை உண்டுபண்ணுகிறான்.—
ஆகையால், அசுப்பாய் அவன் ஆபத்துவரும்; ௰௫
சடுதியிலே குணமாக்குதலுக்கு இடமில்லாமல்
நொறுக்கப்படுவான்.
ஆறு காரியங்களைக் கர்த்தர் பகைக்கிறார்; ௰௬
ஏழும் அவருடைய ஆத்துமாவுக்கு அருவருப்
பானவைகள்; அவையாவன:-[6]மேட்டிமையான ௰௭
கண்களும், பொய்நாக்கும், குற்றமில்லாத இரத்
தத்தைச் சிந்தும் கைகளும்,-அக்கிரம யோசனைக ௰௮
ளைப் பிணைக்கும் இருதயமும்,பொல்லாப்பைச்
செய்யத் தீவிரமாய் ஓடும் கால்களும்,—பொய் ௰௯
களை ஊதுகிற கள்ளச் சாட்சியும், சகோதரருக்
குள்ளே வழக்குகளை உண்டுபண்ணுகிறவனும்
தானே.
[7]என் மகனே, நீ உன் தகப்பனுடைய கற்ப ௨௰

1 வாக். ௨. ௰௮.
2 வாக். ௨. ௮.
3 வாக். ௰௧. ௰௫, ௰௭, ௰௮.
4 வாக். ௩௰. ௨௫.
5 வாக். ௨௰. ௰௩: ௨௪. ௩௩, ௩௪.
6 வாக். ௨௧. ௪.
7 வாக். ௧. ௮.

லையைக் கைக்கொண்டு உன் தாயின் போதகத்
௨௧ தை நெகிழாதிரு.—[1]அவைகளை எப்போதும் உன்
இருதயத்தின்மேல் கட்டு, அவைகளை உன் கழுத்
௨௨ திலே பூணு. — [2]நீ நடந்துகொண்டிருக்கையில்
அது உன்னை நடத்தும்; நீ படுத்துக்கொண்டி
ருக்கையில் அது உன்னைக் காப்பாற்றும், நீ வி
ழிக்கையில் அது உன்னோடே சம்பாஷிக்கும்.—
௨௩ ஏனெனில் [3]உன்னைப் பொல்லாத ஸ்திரிக்கும்,
வேற்றுநாவின் இச்சகங்களுக்கும் விலக்கிக்காப்
௨௪ பதற்கு, — கற்பனையே விளக்கும், போதகமே
வெளிச்சமும், புத்திசொல்லும் கடிந்துகொள்ளு
௨௫ தல்களே சீவவழியுமாம். — உன் இருதயத்திலே
அவள் அழகை இச்சியாதிரு; அவள் தன் கண்
இமைகளால் உன்னைப் பிடிக்கவொட்டாதிரு.—
௨௬ ஏனெனில் வேசிஸ்திரியின் முகாந்தரத்தினாலே
ஒரு அப்பத்துணிக்கையை இரக்கிறதற்கு வரும்;
விபசாரி விலையேறப்பெற்ற ஆத்துமாவை வேட்
௨௭ டையாடுகிறாள்.—யாவன் ஒருவன் தன் வஸ்தி
ரங்கள் வேகாமல், தன் மடியிலே நெருப்பை
௨௮ வைத்துக்கொள்ளுவானோ? — யாவன் ஒருவன்
தன் கால்கள் சுடாமல் தழலின்மேல் நடப்பா
௨௯ னோ? — தனக்கு அடுத்தவனுடைய பெண்சாதி
யினிடத்தில் பிரவேசிக்கிறவன் அப்படியிருக்கி
றான்; அவளைத் தொடுகிற ஒருவனும் ஆக்கினைக்
௩௰ குத் தப்பான்.—திருடன் தன் ஆத்துமாவை நிரப்
பப் பசியினாலே திருடினதினிமித்தம் அவனை
௩௧ இகழ்ச்சிபண்ணார்கள்.—அவன் கண்டுபிடிக்கப்
பட்டால் ஏழத்தனை செலுத்துவான்; தன் வீட்
டின் அவகாசத்தை எல்லாம் கொடுப்பான். —
௩௨ ஒரு ஸ்திரியோடே விபசாரம்பண்ணுகிறவனோ
மதிகெட்டவன்; அப்படிச் செய்கிறவன் தன்
௩௩ ஆத்துமாவைக் கெடுக்கிறவன். — வாதையும்
இலச்சையும் அடைகிறான்; அவன் நிந்தை குலை
௩௪ யாது —ஏனெனில் புருஷனுடைய மூர்க்கம்
வயிராக்கியமாயிருக்கின்றது; அவன் குரோதத்
௩௫ தைத் தீர்க்கும் நாளிலே தப்பவிடான்.—எந்த
மீட்பையும் பாரான், நீ காணிக்கையைப் பெ
ருக்கினாலும் சம்மதியான்.

## ௭. அதிகாரம்.

௧. சாலொமோன் உண்மையோடும், அன்போடும் ஞானத்தை வழக்கப்படுத்தப் போதித்தது. ௬. தன் அநுபவத்தின் திருஷ்டாந்தத்தினால், ௰ வேசியின் தந்திரத்தையும், ௨௨. முழுப்பேதையாகிய ஒரு வாலிப துர்த்தனையுமெடுத்துக் காட்டினது. ௨௪. அப்படிப்பட்ட துன்மார்க்கத்தை விட்டு விலகப் புத்திசொன்னது.

௧ என் மகனே, நீ என் வார்த்தைகளைக் காத்து, என்
கற்பனைகளை உன்னிடத்திலே பத்திரப்படுத்து.—
௨ என் கற்பனைகளையும், என் போதகத்தையும் உன்
கண்களின் கறுப்புவிழியைப்போலே கா; அப்
௩ போது பிழைப்பாய்.—[4]அவைகளை உன் விரல்
களில் கட்டு; அவைகளை உன் இருதயத்தின் பல
௪ கையில் எழுது. — [5]உன்னை இச்சகவார்த்தை
களுள்ள அந்நியளாயிருக்கிற பரஸ்திரிக்கு விலக்
௫ கிக் காப்பதற்காக, — ஞானத்துடனே, நீ என்
சகோதரியென்று சொல்லி, உணர்வை இனத்தா
ளென்று அழை.

ஏனெனில் நான் என் வீட்டின் பலகணியில் ௬
நின்று என் கிராதிகளின்வழியாய், — நான் ௭
பேதைகளைப் பார்த்துக்கொண்டு, குமாரருக்குள்
ஒரு வாலிபனைக் கவனித்தேன்.—அவன் மாலை ௮
மயங்குகிற அஸ்தமான நேரத்திலே இராவின்
அந்தகாரத்திலும் இருட்டிலும்,—அவளிருக்கும் ௯
சந்துக்கடுத்த வீதியேபோய், அவள் வீட்டுவழி
யாய் உலாவினான். — அப்போது இதோ வேசி ௰
யின் ஆடையாபரணம் தரித்த மனத்தந்திரமான
ஒரு ஸ்திரி அவனைச் சந்தித்தாள். — அவள் அ ௰௧
மளிக்காரியும், அடங்காதவளுமானவள்; அவள்
கால்கள் அவளுடைய வீட்டிலே தரிக்கிறதில்
லை.—இப்போது வெளியிலும், சற்றுநேரத்திலே ௰௨
வீதிகளிலுமிருந்து எல்லாச் சந்திலும் பதிவிருக்
கிறாள்.—அவள் இவனைப் பிடித்து, இவனை முத் ௰௩
தமிட்டு, முகம் நாணாமல் இவனோடே சொன்
னதாவது: — தோத்திரப்பலிகள் என்மேலிருந் ௰௪
தன; இன்று என் பொருத்தனைகளைச் செலுத்தி
னேன்.—ஆனபடியினாலே உன்னைச் சந்திக்கப் ௰௫
புறப்பட்டு, உன் முகத்தைக் கருத்தாய்த் தேடி
னேன், உன்னைக் கண்டும்பிடித்தேன். — என் ௰௬
கட்டிலைச் சமுக்காளங்களாலும், எகிப்துதேசத்
துச் சித்திரந்தீர்ந்த புடைவைகளாலும் சிங்காரி
த்தேன்.—என் படுக்கையை வெள்ளைப்போளத் ௰௭
தாலும், சந்தனத்தாலும், கருவாப்பட்டையாலும்
வாசனை கட்டினேன். — விடியற்காலம்மட்டும் ௰௮
சம்போகமாயிருப்போம்; சிநேகங்களால் பூரிப்
பாவோம் வா.—ஏனென்றால் புருஷன் வீட்டிலே ௰௯
இல்லை; தூரபயணம் போனான். — பணமுடிப் ௨௰
பைத் தன் கையிலே கொண்டுபோனான்; திட்
டம்பண்ணின நாளிலே வீட்டுக்கு வருவானெ
ன்றுசொல்லி,—தன் திரளான போதனையாலே ௨௧
அவனை இணக்கிக்கொண்டு, தன் உதடுகளின்
இச்சகத்தாலே அவனை ஏவினாள். — உடனே ௨௨
அவன் ஒரு மாடு அடிக்கப்படும் தலத்திற்கும்,
ஒரு பயித்தியக்காரன் விலங்குண்ணப்பட்டவ
னாய்த் தண்டனைக்கும் போகிறதுபோலவும்,—
ஒரு குருவி தன் சீவனுக்கு வருகிறதென்றறியா ௨௩
மல் கண்ணிக்குத் தீவிரிக்கிறதுபோலவும், அ
வள் பிறகாலே அம்பு அவன் ஈரலைப் பிளக்கும்
மட்டும் போனான்.

இப்போதும் பிள்ளைகளே, என்னைக் கேட்டு, ௨௪
என் வாயின் வார்த்தைகளைக் கவனியுங்கள்.—
உன் இருதயம் அவள் வழிகளுக்குச் சாயவேண் ௨௫
டாம்; அவள் பாதைகளில் மோசம்போகா
யாக. — ஏனெனில் அநேகரைக் காயப்படுத்தி ௨௬
விழப்பண்ணினாள்; அவளால் கொல்லப்பட்ட
யாவரும் திரளான கூட்டம்.—[6]அவள் வீடு மரண ௨௭
அறைகளுக்கு இறங்குகிற நரகவழிகளாயிருக்
கிறது.

## ௮. அதிகாரம்.

௧. ஞானத்தின் கீர்த்தியும், ௬. திருஷ்டாந்தமும், ௰. மேன்மையும், ௰௨. சுபாவமும், ௰௫. பெலமும், ௰௮. ஐசுவரியமும், ௨௨ அழியாமையும் சொல்லப்பட்டது, ௩௨. சவுக்கியத்தைக் கொடுக்கிறதற்காக ஞானத்தை விரும்பவேண்டியதென்பது.

---

1 வாக். ௩. ௩.—2 வாக். ௩. ௨௩, ௨௪.—3 வாக். ௨. ௰௬, ௰௭.

4 வாக். ௩ ௨௩.—5 வாக். ௨. ௰௬, ௰௭: ௬. ௨௪.—6 வாக். ௯. ௰௮.

௧ ஞானம் [1]கூப்பிடாதோ? உணர்வு தன் சத்தத்
௨ தைக் காட்டாதோ?—அது வழிக்கு அருகான
மேடைகளின் முனையிலும், நாற்சந்திகளிலும்
௩ நிற்கிறது.—அது ஊர்வாசல்களின் ஓரத்திலும்,
பட்டண ஒலிமுகத்திலும், உள்ப்பிரவேசிக்கிற
வாசல் நடைகளிலும் சத்தமிட்டுச் சொல்லுகிற
௪ தாவது:—மனுஷரே, உங்களை நோக்கிக் கூப்பி
டுகிறேன்; என் சத்தம் மனுப்புத்திரருக்குத் தொ
௫ னிக்கும்.—பேதைகளே, விஞவிலே உணர்வா
குங்கள்; மூடரே, மனதிலே உணர்வாகுங்கள்.—
௬ கேளுங்கள், ஏனென்றால் மேம்பாடான காரி
யங்களைப் பேசுவேன்; நிதானங்களைப் பகர
௭ என் உதடுகளைத் திறப்பேன்.—ஏனெனில் என்
வாய் சத்தியத்தை விளம்பும்; ஆகாமியம் என்
௮ உதடுகளுக்கு அருவருப்பானது.—என் வாக்கு
வசனங்களெல்லாம் நீதியானவைகள்; [2]அவைக
௯ ளில் புரட்டும், திரியாவரமும் இல்லை.—அவைக
ளெல்லாம் உணருகிறவனுக்கு நேரும் கண்ட
டைகிறவனுக்குச் செம்மையுமானவைகள். —
௰ [3]வெள்ளியையல்ல, நான் சொல்லுகிற புத்தியை
யும், தெரிந்துகொள்ளப்பட்ட பொன்னைப்பார்க்
கிலும் அறிவையும் ஏற்றுக்கொள்ளுங்கள். —
௰௧ ஏனெனில் முத்துக்களைப்பார்க்கிலும் ஞானமே
நல்லது; இச்சிக்கப்படத்தக்கவைகளெல்லாம்
அதற்கு நிகரல்ல.

௰௨ ஞானமாகிய நான் விவேகத்தோடே வாசம்
பண்ணி, நற்சிந்தனைகளுள்ள அறிவைக் கண்ட
௰௩ டைந்திருக்கிறேன்.—பொல்லாப்பைப் பகைக்
கிறது கர்த்தருக்குப் பயப்படுதல்; பெருமையை
யும், அகந்தையையும், பொல்லாத வழியையும்,
புரட்டுகளுள்ள வாயையும் பகைக்கிறேன். —
௰௪ ஆலோசனையும், மெய்ஞ்ஞானமும் என்னுடை
யது; நானே உணர்வு; வல்லமை என்னுடை
௰௫ யது.—என்னாலே இராசாக்கள் அரசாண்டு, தலை
௰௬ வர் நீதியைத் திட்டப்படுத்துகிறார்கள். — என்
னாலே அதிகாரிகளும், பிரபுக்களும், பூமியினு
டைய எல்லா நியாயாதிபதிகளும் அதிகாரம்
௰௭ பண்ணுகிறார்கள். — [4]என்னைச் சிநேகிக்கிறவர்
களை நான் சிநேகிக்கிறேன்; காலமே என்னைத்
தேடுகிறவர்கள் என்னைக் கண்டுபிடிப்பார்கள் —
௰௮ ஐசுவரியமும், கனமும், நிலைநிற்கிற ஆஸ்தியும்,
௰௯ நீதியும் என்னிடத்தில் இருக்கின்றன.—[5]பொன்
னையும் அபரஞ்சியையும்பார்க்கிலும் என்னு
டைய பலனும், தெரிந்துகொள்ளப்பட்ட வெள்
ளியைப்பார்க்கிலும் என்னுடைய வரத்தும் நல்
௨௰ லது. — என்னைச் சிநேகிக்கிறவர்களை மெய்ப்
பொருளைச் சுதந்தரிக்கப்பண்ணுவதற்கும், அவர்
௨௧ கள் பொக்கிஷங்களை நிரப்புவதற்கும்,—நீதியின்
வழியிலும், நியாயபாதைகளுக்குள்ளும் நடத்து
கிறேன்.

௨௨ கர்த்தர் அப்போதே தம்முடைய கிரியைகளுக்
குமுன் என்னைத் தமது வழியின் [6]ஆதியாகக்
௨௩ கொண்டிருந்தார்.—பூமிக்கு முன்னான ஆதிமு
தலும், அநாதியுமாய் அபிஷேகம்பண்ணப்பட்
டேன். — ஆழங்களும் தண்ணீர்கள் புரளுகிற ௨௪
ஊற்றுகளும் உண்டாகாததற்குமுன்னே செனி
ப்பிக்கப்பட்டேன். — பர்வதங்கள் நாட்டப்ப ௨௫
டாததற்குமுன்னும், குன்றுகளுக்குமுன்னும்,—
அவர் பூமியையும், அதின் வெளிகளையும், பூச் ௨௬
சக்கர மண்களின் முதலையும் உண்டாக்காதத
குமுன்னும் செனிப்பிக்கப்பட்டேன்.—அவர் ௨௭
வானங்களைப் படைக்கையில் நான் அங்கே
இருந்தேன், அவர் ஆழத்தின் மேற்புறத்தை வட்
டணிக்கையிலும், — அவர் உயர மேகங்களை ௨௮
உறுதிப்படுத்துகையிலும், ஆழத்தின் ஊற்றுக
ளைப் பலப்படுத்துகையிலும், — [7]தண்ணீர்கள் ௨௯
தமது வாக்கை மீறாதபடிக்கு, அவர் சமுத்திரத்
திற்கு அதின் எல்லைப்பிரமாணத்தை வைக்கை
யிலும், அவர் பூமியின் அஸ்திபாரங்களைத் திட்
டப்படுத்துகையிலும், — நான் அவரண்டையி ௩௰
லே [8]செல்வனுமாய், நித்தம் அவருடைய மனம
கிழ்ச்சியுமாயிருந்து, எப்போதும் அவருக்குமு
ன்பாகச் சிமாளித்து,—அவருடைய பூச்சக்கரத் ௩௧
திலே சந்தோஷித்துக்கொண்டிருந்தேன்; [9]என்
மனமகிழ்ச்சி மனுப்புத்திரரோடு இருக்கிறது.
இப்போதும் பிள்ளைகளே, என்னைக் கேளுங் ௩௨
கள்; என் வழிகளைக் காத்துநடக்கிறவர்கள் பாக்
கியவான்கள்.—புத்தியைத் தள்ளிவிடாமல், அ ௩௩
தைக் கேட்டு ஞானமடையுங்கள்.—என் வாசல்ப் ௩௪
படிகளில் நித்தம் காத்து, என் கதவுநிலையின் நிலைக
ளருகே காவல்பண்ணத்தக்கவிதமாய் எனக்குச்
செவிகொடுக்கிற மனுஷன் பாக்கியவான். —
ஏனெனில் [10]என்னைக் கண்டுபிடிக்கிறவன் ஜீவ ௩௫
னைக் கண்டுபிடித்து, கர்த்தரிடத்தில் பிரியம் பெ
றுவான்.—ஆனால் எனக்கு விரோதமாய்ப் பா ௩௬
வம்செய்கிறவன் தன் ஆத்துமாவைச் சேதப்ப
டுத்துகிறான்; என்னைப் பகைக்கிற யாவரும் மர
ணத்தைச் சிநேகிக்கிறார்கள் என்கிறது.

## ௯. அதிகாரம்.

௧. ஞானத்தின் ஒழுக்கமும், ௪. உபதேசமும் சொல்லப்பட்டது. ௰௩. பயித்தியத்தின் பழக்கத்தையும், ௰௩. மடமையின் மதிகேட்டையும் குறித்தது.

உன்னத ஞானம் தன் வீட்டைக் கட்டி, தன் ௧
ஏழு தூண்களைச் சித்திரங்கொத்தி,—தன் கொ ௨
ழுத்த செந்துக்களை அடித்து, தன் திராட்சப்பழ
இரசத்தை வார்த்துவைத்து, தன் பந்தியை ஆயத்த
மும்பண்ணி,—தன் பணிவிடைக்காரிகளை அ ௩
னுப்பி, எவன் பேதையோ அவன் இவ்விடத்திற்
குத் திரும்புவானாகவென்று சொல்லச்சொல்லி,-
பட்டணத்துப் பிரதான மேடைகளின்மேல் நின் ௪
று கூப்பிட்டு, மதியில்லாதவர்களுடனே சொல்
லுகிறதாவது:—நீங்கள் வந்து, என் அப்பத்திலே ௫
புசித்து, நான் வார்த்துவைத்த திராட்சப்பழஇர
சத்திலே குடியுங்கள். — நீங்கள் பிழைக்கும்ப ௬
டிக்குப் பேதைமைகளை விட்டு, உணர்வின் வழி
யிலே நடவுங்கள்.-சரசக்காரனை அதட்டுகிறவன் ௭
தனக்குக் கனஈனத்தைத் தேடிக்கொள்ளுகிறான்;

1 வாக். க. ௨௰, ௨௧. ௰௫ —4 யோவா. ௰௪. ௨௧.
2 எசா. ௫௧. ௯.—3 வாக். ௩. ௰௪, 5 வாக். ௩ ௰௪.
6 வெளி. ௩. ௰௪.—7 யோபு. ௩௮. ௰, ௰௧. சங். ௱௪. ௯. 8 யோவா. ௧ ௰௮ - 9 ௫ சோ. ௩௧. ௧.—10 ௧ யோ. ௫. ௰௨

ஆகாதவனைக் கடிந்துகொள்ளுகிறவன் தன்னைக்
௮ கறைப்படுத்துகிறான்.—சரசக்காரன் உன்னைப்ப
கையாதபடிக்கு அவனைக் கடிந்துகொள்ளாதிரு;
ஞானமுள்ளவனைக் கடிந்துகொள், அவன் உன்
௯ னைச் சிநேகிப்பான்.—ஞானமுள்ளவனுக்குப்
புத்தியை வழங்கு; அதிக ஞானமடைவான்; நீதி
மானுக்கு அறிவுசொல்; உபதேசத்தில் அதிகப்
௰ படுவான்.—[1]கர்த்தருக்குப் பயப்படுதல் ஞானத்
தின் துவக்கம், பரிசுத்தரின் அறிவு உணர்வுள்
௰௧ ளது.—ஏனெனில் என்னாலே உன் நாள்கள்
நீடித்து, உனக்கு ஆயுசின் வருஷங்கள் வர்த்திக்
௰௨ கும்.—நீ ஞானியாயிருந்தால் உனக்காக ஞானி
யாயிருப்பாய்; நீ சரசக்காரனேயானால் நீயே
அதைச் சுமப்பாயென்கிறது.
௰௩ பயித்திய ஸ்திரி [2]அமளிக்காரியும், ஒன்றும்
௰௪ அறியாத நின்மூடியுமாயிருக்கிறாள்.—தங்கள் பா
தைகளில் செம்மையாய் நடக்கிற வழிப்போக்
௰௫ கரை அழைக்க,—அவள் பட்டணத்தின் மேடை
களிலுள்ள தன் வீட்டுவாசற்படியில் ஒரு ஆச
௰௬ னத்தின்மேல் உளுக்காந்து,—எவன் பேதை
யோ, அவன் இவ்விடத்திற்குத் திரும்புவானாக
வென்று சொல்லி, மதியில்லாதவனுடனே,—
௰௭ திருட்டுத் தண்ணீர்கள் தித்திப்பும், அந்தரங்க
மான அப்பம் இன்பமுமாயிருக்கிறதென்கி
௰௮ றாள்.—ஆனால் [4]அவ்விடத்திலே மரித்தவர்களுண்
டென்றும், அவளால் அழைக்கப்பட்டுப்போன
வர்கள் நரக பாதாளங்களில் கிடக்கிறார்களென்
றும் அறியான்.

## ௰. அதிகாரம்.

இந்த அதிகாரம்முதல் இருபத்தைந்து அதிகாரம்வரைக்கும் பலவகையான நல்லொழுக்கங்களையும், அவற்றிற்கு விரோதமான அக்கிரமங்களையும் குறித்தது.

௧ சாலோமோனின் வாக்கியங்கள்; [5]ஞானமுள்ள
மகன் தகப்பனைச் சந்தோஷிப்பிக்கிறான்;[6]பயித்
தியமுள்ள மகனோ தன் தாய்க்குச் சஞ்சலமாயி
ருக்கிறான்.
௨ ஆகாமியப் பொக்கிஷங்கள் உதவாது;நீதியோ
மரணத்திற்குத் தப்புவிக்கும்.
௩ நீதிமானின் ஆத்துமாவைக் கர்த்தர் பட்டினி
யாய் வையார்;ஆகாதவர்களின் தீவினையையோ
அகற்றிவிடுவார்.
௪ வஞ்சனைக்கையால் வேலைசெய்கிறவன் ஏழை
யாகிறான், சுறுசுறுப்புள்ளவர்களின் கையோ
ஐசுவரியமாக்குகிறது.
௫ வசந்தகாலத்திலே சேர்க்கிறவன் புத்தியுள்ள
மகன்; அறுப்பிலே தூங்குகிறவன் இலச்சை
யுண்டாக்குகிற மகன்.
௬ நீதிமானின் சிரசுக்கு ஆசீர்வாதங்கள் உண்
டாம்; ஆனால் ஆகாதவர்களின் வாயைக் கொ
டுமை மூடும்.
௭ நீதிமானின் பேர் ஆசீர்வாதமாக இருக்கும்;
ஆனால் ஆகாதவர்களின்பேர் அழுகிப்போம்.
௮ மனதில் ஞானமுள்ளவன் கற்பனைகளை ஏற்
றுக்கொள்ளுகிறான்; ஆனால் பயித்திய உதடன்
சிக்கிக்கொள்ளுகிறான்.
உத்தமமாய் நடக்கிறவன் பத்திரமாய் நடக் ௯
கிறான்; தன் வழிகளைக் கோணலாக்குகிறவனோ
அறியப்படுவான்.
[7]கண்சாடைகாட்டுகிறவன் நோவு உண்டாக் ௰
குகிறான்; பயித்திய உதடன் சிக்கிக்கொள்ளு
வான்.
[8]நீதிமானின் வாய் சீவ ஊற்றாயிருக்கிறது: ௰௧
ஆனால் ஆகாதவர்களின் வாயைக் கொடுமை
மூடும்.
பகை வழக்குகளை எழுப்பும்; [9]சிநேகமோ ௰௨
சகல மீறுதல்களையும் மூடும்.
உணர்வுள்ளவனுடைய உதடுகளில் காணப் ௰௩
படுகிறது ஞானம்; மதிகெட்டவனுடைய முது
குக்கு ஏற்றது மிலாறு.
ஞானிகள் அறிவை அடக்குகிறார்கள்; ஆனால் ௰௪
பயித்தியக்காரனுடைய வாய்க்குக் கலங்கல் சமீ
பித்திருக்கும்.
ஐசுவரியவானின் அரணான பட்டணம் அ ௰௫
வன் ஆஸ்தி; ஏழைகளுடைய கலங்கல் அவர்கள்
தரித்திரம்.
நீதிமானுடைய செய்கை சீவனுக்கும், ஆகாத ௰௬
வனுடைய வரத்து பாவத்திற்குமாம்.
கல்வியைக் காத்துநடக்கிறவன் சீவனுக்குப் ௰௭
போம் வழியிலுள்ளவன்; அதட்டுதலை விட்டுவி
லகுகிறவனோ மோசம்போக்குகிறவன்.
பகையை மறைக்கிறவன் பொய் உதடன்; ௰௮
அவதூறு உண்டாக்குகிறவன் மதிகேடன்.
வார்த்தைகளின் திரட்சியில் மீறுதலற்றிராது; ௰௯
தன் உதடுகளை அடக்குகிறவனோ புத்திமான்.
நீதிமானின் நாவு தெரிந்துகொள்ளப்பட்ட ௨௰
வெள்ளி; ஆகாதவர்களின் நெஞ்சு அற்பவிலை
யானது.
நீதிமானின் உதடுகள் அநேகரை மேய்க்கும்; ௨௧
பயித்தியக்காரரோ மதியில்லாமையினால் மாளு
வார்கள்.
கர்த்தரின் ஆசீர்வாதமே ஐசுவரியம் அடையப் ௨௨
பண்ணும்; அதனோடே வேதனையையும் கூட்
டார்.
தீவினைசெய்கிறது பயித்தியக்காரனுக்கு ஒரு ௨௩
விளையாட்டு; உணர்வுள்ள மனிதனுக்கோ ஞான
முண்டு.
ஆகாதவன் பயப்படுகிறதே அவனுக்கு வரும்; ௨௪
நீதிமான்கள் விரும்புகிறதே அவர்களுக்குக்
கொடுக்கப்படும்.
புசல் கடந்துபோகிறதுபோல ஆகாதவன் ௨௫
இல்லாதேபோகிறான்; நீதிமானோ நித்திய அஸ்தி
பாரமுள்ளவன்.
காடி பல்லுகளுக்கும் புகை கண்களுக்கும் ௨௬
எப்படியிருக்கிறதோ, அப்படிச் சோம்பேறி தன்
னை அனுப்புகிறவர்களுக்கு இருக்கிறான்.

1 வாக். ௧. ௭. சங். ௱௧௧. ௰.
2 வாக். ௭. ௰௧.
3 வாக். ௨௰. ௰௭.
4 வாக். ௭. ௨௧, ௨௭.
5 வாக். ௰௫. ௨௰.
6 வாக். ௰௭. ௨௫.
7 வாக். ௬. ௰௩.—8 சங். ௩௭. ௩௰.
9 ௧ பே. ௪. ௮.

௨௭ கர்த்தருக்குப் பயப்படுதல் ஆயுசின் நாள்களைப் பெருகப்பண்ணும்; [1]ஆகாதவர்களின் வயதுகளோ குறுகப்படும்.
௨௮ நீதிமான்களின் நம்பிக்கை மகிழ்ச்சியாகும்; ஆகாதவர்களின் பார்த்திருக்குதலோ அழியும்.
௨௯ கர்த்தரின் வழி உத்தமனுக்கு அரண்; அக்கிரமக்காரருக்கோ கலக்கம்.
௩௰ நீதிமான் என்றென்றைக்கும் அசைக்கப்படுவதில்லை; ஆகாதவர்களோ பூமியில் வாசமாயிருப்பதில்லை.
௩௧ நீதிமானின் வாய் ஞானத்தை வெளிப்படுத்தும்; மாறுபாடுகளுள்ள நாவோ அறுப்புண்டுபோம்.
௩௨ நீதிமானின் உதடுகள் பிரியமானதைப் பேச அறியும்; ஆகாதவர்களின் வாயோ மாறுபாடுகளுள்ளது.

## ௰௧. அதிகாரம்.

௧ [2]கள்ளத்தராசு கர்த்தருக்கு அருவருப்பாயிருக்கிறது; சுமுத்திரையான படிக்கல்லோ அவருக்குப் பிரியம்.
௨ அகந்தை வந்தால் இலச்சையும் வரும்; ஆனால் தாழ்மையானவர்களோடே ஞானமிருக்கும்.
௩ செம்மையானவர்களின் உத்தமம் அவர்களை நடத்தும்; துரோகிகளின் தாறுமாறோ அவர்களைப் பாழ்க்கடிக்கும்.
௪ [3]கோபாக்கினையின் நாளிலே ஆஸ்தி உதவாது; நீதியோ மரணத்திற்குத் தப்புவிக்கும்.
௫ உத்தமனின் நீதி அவன் வழியைச் செம்மையாக்கும்; ஆகாதவனோ தன் ஆகாமியத்தாலே விழுவான்.
௬ செம்மையானவர்களின் நீதி அவர்களைத் தப்புவிக்கும்; துரோகிகளோ தங்கள் தீவினையிலே பிடிபடுவார்கள்.
௭ ஆகாத மனிதன் சாகையில் அவன் பார்த்திருக்கொள்ளுதல் அழியும்; [4]அக்கிரமக்காரரின் நம்பிக்கை கெட்டுப்போம்.
௮ நீதிமான் இக்கட்டுக்கு நீங்கலாக்கப்படுகிறான்; [5]அவன் தலத்திலே ஆகாதவன் வருகிறான்.
௯ மாயக்காரன் தனக்கு அடுத்தவனை வாயினாலே கெடுக்கிறான்; நீதிமானோ அறிவினாலே தப்புகிறான்.
௰ நீதிமான்கள் நன்றாயிருந்தால் பட்டணம் களிகூரும்; ஆகாதவர்கள் அழிந்தால் கெம்பீரமுண்டு.
௰௧ செம்மையானவர்களின் ஆசீர்வாதத்தினால் பட்டணம் உயரும்; ஆகாதவர்களின் வாயினால் அது இடியும்.
௰௨ மதிகெட்டவன் தனக்கடுத்தவனை இலச்சைபண்ணுகிறான்; உணர்வுள்ள மனிதனோ பேசாதிருக்கிறான்.
௰௩ [6]அவதூறுபண்ணித்திரிகிறவன் இரகசியத்தை வெளியாக்குகிறான்; ஆவியில் உண்மையுள்ளவனோ காரியத்தை அடக்குகிறான்.
௰௪ [7]நல்ல யோசனைகளில்லாததினால் சனம் தாழ்ந்துவிழும்; அநேகம் ஆலோசனைக்காரரிருக்கிறதினாலோ சுகமுண்டு.
அந்நியனுக்காகப் பிணைப்படுகிறவன் நன்றாய் நொறுங்குண்பான்; கைபோட்டுக்கொள்ளுதலைப் பகைக்கிறவனோ சுகமாயிருப்பான். ௰௫
பலவந்தர் ஐசுவரியத்தைப் பத்திரமாய்க் காப்பதுபோல, இலக்கணப்பெண்சாதி மானியம் காக்கிறாள். ௰௬
தயையுள்ள மனிதன் தன் ஆத்துமாவுக்கு நன்மைசெய்கிறான்; கடூரனோ தன் மாம்சத்தை அலைக்கழிக்கிறான். ௰௭
ஆகாதவன் விருதா வேலையைச் செய்கிறான்; நீதியை விதைக்கிறவனோ உத்தமபலனை அடைவான். ௰௮
நீதி சீவனுக்கு உள்ப்படுத்துவதுபோல பொல்லாப்பைப் பின்தொடருகிறவன் தன் மரணத்திற்கு ஏகுகிறான். ௰௯
திரியாவரமான இருதயத்தார் கர்த்தருக்கு அருவருப்பானவர்கள்; உத்தமமார்க்கத்தாரோ அவருக்குப் பிரியமானவர்கள். ௨௰
பொல்லாதவன் கையோடே கைகோத்தாலும் ஆக்கினைக்குத் தப்பான்; நீதிமான்களின் வித்தோ விடுவிக்கப்படும். ௨௧
மதிகெட்டு நடக்கிற ஸ்திரியின் அழகு பன்றியின் மூக்கிலுள்ள பொன் மூக்குத்திக்குச் சமானம். ௨௨
நீதிமான்களின் ஆசை நன்மையே; ஆகாதவர்களின் காத்திருக்குதல் கோபத்தோடிருக்கும். ௨௩
வாரியிறைத்தும் அதிகமுண்டாயிருக்கிறவர்களுமுண்டு; நிதானம் தப்பிப் பிசினித்தனம் பண்ணியும் தாழ்ச்சியையே அடைகிறவர்களுமுண்டு. ௨௪
ஆசீர்வதிக்கிற ஆத்துமா கொழுத்துப்போம்; எவன் தண்ணீர் பாய்ச்சுகிறானோ அவனுக்குத் தண்ணீர் பாய்ச்சப்படும். ௨௫
தானியத்தைக் கட்டிவைக்கிறவனைச் சனம் சபிக்கும்; விற்கிறவனுடைய தலைக்கு ஆசீர்வாதமுண்டாம். ௨௬
நன்மையைக் கருத்தாய்த் தேடுகிறவன் பிரியம் தேடிக்கொள்ளுகிறான்; [8]தீமையைத் தேடுகிறவனுக்கோ அதுவே வரும். ௨௭
தன் ஐசுவரியத்தை நம்புகிறவன் விழுவான்; [9]நீதிமான்களோ துளிரைப்போலச் செழிப்பார்கள். ௨௮
தன் வீட்டைக் கலைக்கிறவன் காற்றைச் சுதந்தரிப்பான்; பயித்தியக்காரன் ஞானமனமுள்ளவனுக்கு அடிமையாயிருப்பான். ௨௯
நீதிமானின் பலன் சீவவிருட்சம்; ஆத்துமங்களை ஆதாயப்படுத்திக்கொள்ளுகிறவன் ஞானமுள்ளவன். ௩௰
இதோ [10]நீதிமானுக்குப் பூமியில் சரிக்கட்டப்படுமே; ஆகாதவனுக்கும், பாவிக்கும் எத்தனை அதிகம். ௩௧

1 வாக். ௩. ௨: ௯. ௰௧.-2 வாக். ௰௬. ௰௧: ௨௰. ௰-௨௩. 3 வாக். ௰. ௨.—4 வாக். ௰. ௨௮. 5 வாக். ௨௧. ௰௮.—6 வாக். ௨௰. ௰௯.
7 வாக். ௰௫. ௨௨. 8 சங். ௭. ௰௬. 9 சங். ௯௨. ௰. 10 ௧ பே. ௪. ௰௭, ௰௮.

## ௰௨. அதிகாரம்.

௧ [1]தண்டனையைச் சிநேகிக்கிறவன் அறிவைச்
சிநேகிக்கிறவன்; கடிந்துகொள்ளுதலைப் பகைக்
கிறவனோ மிருகத்தைப்போலிருப்பான்.
௨ நல்லவன் கர்த்தரிடத்திலே பிரியம் பெறு
வான்; ஆனால் தீவினைகளுள்ள மனிதனை அவர்
ஆகாதவனாகத் தீர்ப்பார்.
௩ ஆகாமியத்தாலே மனுஷன் நிலைவரப்படான்;
நீதிமான்களின் வேரோ அசையாதிருக்கும்.
௪ [2]திறமையுள்ள ஸ்திரி தன் புருஷனுக்குக்
கிரீடமாயிருக்கிறாள்; இலச்சைக்காரியோ அவ
னுக்கு எலும்புருக்கியைப்போலிருக்கிறாள்.
௫ நீதிமான்களின் நினைவுகள் நியாயம்; ஆகாத
வர்களின் யோசனைகள் சூது.
௬ ஆகாதவர்களின் வார்த்தைகள் [3]இரத்தஞ்சிந்
தப் பதிவிருப்பதற்கிருக்கும்; ஆனால் செம்மை
யானவர்களை அவர்கள் வாய் தப்புவிக்கும்.
௭ ஆகாதவர்கள் கவிழ்ந்து இல்லாதேபோவார்
கள்; ஆனால் நீதிமான்களின் வீடு நிற்கும்.
௮ தன் புத்திக்குத்தக்கதாய் மனுஷன் புகழப்ப
டுவான்; ஆனால் அக்கிரம நெஞ்சன் இகழ்ச்சிக்
குள்ளாவான்.
௯ தன்னைத்தான் கனம்பண்ணி அப்பத்தாழ்ச்சி
யாயிருக்கிறவனைப்பார்க்கிலும், பணிவிடைக்
காரருள்ளவனாகிய கனமற்றவன் வாசி.
௰ நீதிமான் தன் மிருகஜீவனை விசாரிக்கிறான்;
ஆனால் ஆகாதவர்களின் இருதயம் கடூரமானது.
௰௧ [4]தன் நிலத்தைப் பயிரிடுகிறவன் அப்பத்தால்
திருப்தியாவான்; வீணரைப் பின்பற்றுகிறவ
னோ மதியற்றவன்.
௰௨ ஆகாதவன் தீதுக்குள்ப்படுத்தும் வலையை நாட்
டுகிறான்; ஆனால் நீதிமான்களின் வேர் கனி
கொடுக்கும்.
௰௩ உதடுகளின் துரோகத்தில் பொல்லாக்கண்ணி
இருக்கும்; நீதிமானோ நெருக்கத்துக்கு வெளி
யாவான்.
௰௪ [5]தன்தன் வாயின் நற்கனியினால் அவனவன்
நன்மையாய்த் திருப்தியாவான்; அவனவன் கை
களின் உபகாரமும் அவனவனுக்குத் திரும்பும்.
௰௫ பயித்தியக்காரன் வழி அவனுடைய பார்வைக்
குச் செம்மை; ஆனால் ஆலோசனையைக் கேட்கி
றவன் ஞானமுள்ளவன்.
௰௬ பயித்தியக்காரனுடைய தாங்கல் அந்நாளிலே
தானே அறியப்படும்; இகழ்ச்சியை மூடுகிறவ
னோ விவேகி.
௰௭ சத்தியவாசகன் நீதியாய் அறிவிப்பான்: பொ
ய்ச்சாட்சிக்காரனோ தந்திரமாய் அறிவிப்பான்.
௰௮ பட்டையக் குத்துகள்போலப் பேசுகிறவர்க
ளுமுண்டு; ஞானமுள்ளவர்களின் நாவோ ஒள
ஷதம்.
௰௯ சத்திய உதடு என்றென்றைக்கும், பொய்நா
வோ ஒரு நிமிஷம்மாத்திரமும் நிற்கும்.

தீங்கைப் பிணைக்கிறவர்களின் இருதயத்தில் ௨௰
இருக்கிறது கபடம்; சமாதானத்துக்கு உசாவு
கிறவர்களுக்குண்டாகிறதோ மகிழ்ச்சி.
[6]நீதிமானுக்கு ஒரு அவகேடும் வராது; ஆகாத ௨௧
வர்களோ பொல்லாப்பால் நிறையப்படுவார்கள்.
[7]கள்ளவுதடுகள் கர்த்தருக்கு அருவருப்பான ௨௨
வைகள்; உண்மையை நடப்பிக்கிறவர்களோ
அவருக்குப் பிரியம்.
விவேகமுள்ள மனுஷன் அறிவை அடக்குகி ௨௩
றான்; [8]நின்மூடரின் நெஞ்சோ பயித்தியத்தைப்
பிரசங்கிக்கும்.
[9]சாக்கிரதையுள்ளவர்களின் கை ஆளும்; வஞ் ௨௪
சனைக் கையோ அடிமைப்படும்
மனுஷன் இருதயத்தில் இருக்கும் கவலை ௨௫
அதை ஒடுக்கும்; நல்ல வார்த்தையோ அதை
மகிழ்ச்சியாக்கும்.
நீதிமான் தனக்கு அடுத்தவனிலும் மேன்மை ௨௬
யாயிருக்கிறான்; ஆனால் ஆகாதவர்களை அவர்க
ளுடைய வழி மோசம்போக்கும்.
அசடன் தான் வேட்டையாடினதைப் பொ ௨௭
ரிப்பதில்லை; சாக்கிரதையுள்ளவனுக்கோ விலை
யேறப்பெற்ற ஆஸ்தி அகப்படும்.
நீதியின் பாதையில் ஜீவன் உண்டு; மார்க்க ௨௮
மான வழியில் சாவில்லை.

## ௰௩. அதிகாரம்.

ஞானமுள்ள மகன் தகப்பன் புத்தியைக் கேட் ௧
கிறான்; சரசக்காரனோ அதட்டுதலைக் கேளான்.
[10]தன்தன் வாயின் நற்கனியினாலே அவனவ ௨
வன் நன்மையைப் புசிப்பான்; துரோகிகளின்
ஆத்துமாவோ கொடுமையைப் புசிக்கும்.
தன் வாயைப் பத்திரம்பண்ணுகிறவன் தன் ௩
ஆத்துமாவைத் தற்காக்கிறான்; [11]தன் உதடுகளை
அகன்றதாக்குகிறவனுக்கோ கலங்கல் வரும்.
சோம்பேறியின் ஆத்துமா இச்சித்தாலும் ஒன் ௪
றும் வராது; [12]சாக்கிரதையுள்ளவர்களின் ஆத்து
மாவோ புஷ்டியாகும்.
[13]நீதிமான் பொய்ப்பேச்சைப் பகைக்கிறான்; ௫
ஆகாதவனோ வெட்கமும் இலச்சையும் உண்
டாக்குகிறான்.
நீதி உத்தமமார்க்கத்தானைத் தற்காக்கும்; ஆகா ௬
மியமோ பாவியைக் கவிழ்த்துவிடும்.
ஒன்றுமில்லாமல் தங்களை ஐசுவரியவான்க ௭
ளாய்ப் பாராட்டுகிறவர்களுமுண்டு; திரளான
ஆஸ்தி இருந்தும் தங்களைத் தரித்திரராய்ப் பா
ராட்டுகிறவர்களுமுண்டு.
மனுஷனுடைய ஐசுவரியம் அவன் பிராண ௮
னை மீட்கிறதுண்டு; ஆகிலும் தரித்திரன் ஜிறுமா
றானதைக் கேளாதிருக்கிறான்.
நீதிமான்களின் வெளிச்சம் சந்தோஷிப்பிக் ௯
கும்; [14]ஆகாதவர்களின் தீபமோ அணைந்துபோ
கும்.

1 வாக். ௰௫. ௰௮. —2 வாக். ௧௧. ௰. 5 வாக். ௰௩. ௨. —6 சங். ௧௨. ௰.
3 வாக். ௧. ௰௧. —4 வாக். ௨௮. ௰௯. 7 வாக். ௬. ௰௬, ௰௭. —8 வாக். ௰௩. ௰௬.
9 வாக். ௰. ௪. —10 வாக். ௰௮. ௨௰. 13 சங். ௱௰௯. ௱௬௩.
11 வாக். ௰௮. ௭. —12 வாக். ௨௰. ௰௩. 14 வாக். ௨௪. ௨௰.

௰ அகந்தையாலேமாத்திரம் வாது பிறக்கும்; யோசனை கேட்கிறவர்களிடத்திலோ ஞானமுண்டு.

௰௧ மாயையாலே தேடின ஆஸ்தி குறைந்துபோம்; கைப்பாடாய்ச் சேர்க்கிறவனோ அதைப் பெருகப்பண்ணுவான்.

௰௨ நெடுங்காலமாய்க் காத்திருக்குதல் இருதயத்தை இளைக்கப்பண்ணும்; விரும்பினது வந்தபோதோ சீவவிருட்சம்போலிருக்கும்.

௰௩ வசனத்தை அசட்டைபண்ணுகிறவன் தன்னாலே கெட்டுப்போகிறான்; கற்பனைக்குப்பயப்படுகிறவனோ பலன் அடைவான்.

௰௪ ஞானியின் போதகம் [1]மரணக்கண்ணிகளை விலக்குவதற்கான சீவ ஊற்றாயிருக்கிறது.

௰௫ நற்புத்தி தயை உண்டாக்கும்; துரோகிகளின் வழியோ கரடுமுரடுமானது.

௰௬ விவேகியாயிருக்கிறவனெல்லாம் அறிவோடே செய்கிறான்; மூடனோ தன் பயித்தியத்தை விரித்துக் காண்பிக்கிறான்.

௰௭ ஆகாத தூதன் தீதிலே விழுவான்; உண்மையுள்ள தானாபதியோ ஔஷதம்.

௰௮ புத்தியைத் தள்ளிப்போடுகிறவனுக்குத் தரித்திரமும் கனஈனமும் வரும்; கடிந்துகொள்ளுதலைக் கவனித்து நடக்கிறவனோ கனமடைவான்.

௰௯ வாஞ்சை நிறைவேறுதல் ஆத்துமாவுக்கு இனிதாயிருக்கும்; பொல்லாப்பை விலகுதல் மூடருக்கு அருவருப்பாயிருக்கும்.

௨௰ ஞானிகளோடே சஞ்சரிக்கிறவன் ஞானமடைவான்; மூடனுக்குத் தோழனாயிருக்கிறவனோ நொறுங்குண்பான்.

௨௧ பாவிகளைத் தீமை தொடரும்; நீதிமான்களுக்கோ நன்மை பலனாக வரும்.

௨௨ நல்லவன் தன் பிள்ளைகளின் பிள்ளைகளைச் சுதந்தரமடையப்பண்ணுகிறான்; பாவியின் ஆஸ்தியோ [2]நீதிமானுக்கு வைக்கப்படும்.

௨௩ ஏழைகளின் வயல் மிகுந்த ஆகாரத்தை விளைவிக்கும், ஆனால் நியாயமில்லாமையால் அழிகிறவர்களுமுண்டு.

௨௪ தன் மிலாறைக் கையாடாதவன் தன் மகனைப் பகைக்கிறான்; அவனைச் சிநேகிக்கிறவனோ அவனை ஏற்கனவே தண்டிப்பான்.

௨௫ நீதிமான் தன் ஆத்துமா திருப்தியாகச் சாப்பிடுவான்; ஆகாதவர்களின் வயிறோ தாழ்ச்சி அடையும்.

## ௰௪. அதிகாரம்.

௧ ஞானமுள்ள எந்தப் பெண்சாதியும் தன் வீட்டைக் கட்டுகிறாள்; பயித்தியமுள்ளவளோ அதைத் தன் கைகளால் இடிக்கிறாள்.

௨ தன் நிதானத்திலே நடக்கிறவன் கர்த்தருக்குப் பயப்படுகிறான்; தன் வழிகளில் தாறுமாறானவனோ அவனை அசட்டைபண்ணுகிறான்.

௩ அகந்தைக்கான மிலாறு மூடன் வாயிலேதான் இருக்கிறது; ஞானமுள்ளவர்களையோ அவர்களுடைய உதடுகள் காப்பாற்றும்.

எருதுகளில்லாமையால் களஞ்சியம் வெறு ௪
மையாயிருக்கும்; காளைகளின் பெலத்தினாலோ மிகுந்த வரத்துண்டு.

உண்மையுள்ள சாட்சிக்காரன் பொய்சொல் ௫
லான்; கள்ளச்சாட்சிக்காரனோ பொய்களை ஊதுகிறவன்.

சரசக்காரன் ஞானத்தைத் தேடியும் கண்டுபி ௬
டியான்; உணர்வுள்ளவனுக்கோ அறிவு இலேசாய் வரும்.

பயித்தியக்காரனுடைய முகத்துக்கு இடைந் ௭
துபோ; ஏனெனில் அறிவுள்ள உதடுகளை அங்கே காணாய்.

தன் வழியைச் சிந்தித்துக்கொண்டிருக்கிறது ௮
விவேகியினுடைய ஞானம்; திரியாவரமோ மூடருடைய பயித்தியம்.

குற்றத்துக்குப் பயித்தியக்காரர் ஆகடியம் ௯
பண்ணுகிறார்கள்; செம்மையானவர்களுக்குள்ளேயோ தயை இருக்கிறது.

அவனவனுடைய ஆத்துமாவின் சஞ்சலத்தை ௰
அவனவனுடைய இருதயம் அறியும்; அவனவன் மகிழ்ச்சிக்கும் அந்நியன் உடந்தையல்ல.

ஆகாதவர்களின் வீடு அழியும்; செம்மையான ௰௧
வர்களின் கூடாரமோ செழிக்கும்.

[3]சில மனுஷருடைய பார்வைக்கு அவர்களு ௰௨
டைய வழி செம்மையாய்க் கண்டும், அதின் முடிவு மரணத்துக்குப்போகிற வழிகளாய் இருக்கும்.

நகைப்பிலும் மனதுக்கு நோவுண்டாகும்; அ ௰௩
தின்பிறகு சந்தோஷம் சஞ்சலமாகும்.

பின்வாங்கும் இருதயமுள்ளவன் தன்னுடைய ௰௪
வைகளாலும், நல்லமனுஷன் தன் மார்க்கத்தாலும் திருப்தியாவான்.

பேதை சகல வார்த்தையையும் நம்புகிறான்; ௰௫
விவேகியோ தன் நடையின்மேல் கவனமாயிருக்கிறான்.

ஞானமுள்ளவன் பயந்து தீங்குக்கு விலகு ௰௬
கிறான்; மூடனோ சினந்துகொண்டு துடாரிக்கமாயிருக்கிறான்.

[4]முன்கோபி மதிகேட்டைச் செய்வான்; தீவி ௰௭
னைகளுள்ள மனுஷன் பகைக்கப்படுவான்.

பேதைகள் பயித்தியத்தைச் சுதந்தரித்துக் ௰௮
கொள்ளுகிறார்கள்; விவேகிகளோ அறிவின் கிரீடத்தைத் தரித்துக்கொள்ளுகிறார்கள்.

பொல்லாதவர்கள் நல்லவர்களுக்குமுன்பாக ௰௯
வும், ஆகாதவர்கள் நீதிமானுடைய வாசற்படியிலும் குனிவதுண்டு.

[5]தரித்திரன் தனக்கடுத்தவனாலும் பகைக்கப்ப ௨௰
டுகிறான்; ஐசுவரியமுள்ளவர்களின் சிநேகிதரோ அநேகர்.

தனக்கடுத்தவனை அசட்டைபண்ணுகிறவன் ௨௧

1 வாக். ௫௪. ௨௭.—2 யோபு. ௨௭. ௰௬, ௰௭.—3 வாக். ௰௬. ௨௫.

4 வாக். ௰௨. ௰௬.—5 வாக். ௰௯. ௪-௭.

பாவம்செய்கிறான்; [1]சிறுமையானவர்களுக்கு இ
ரங்குகிறவனே பாக்கியம் அடைவான்.
௨௨ தீமைக்கு எத்தனம்பண்ணுகிறவர்கள் தப்பி
தம் செய்கிறார்களல்லவோ? நன்மைக்கு எத்த
னம்பண்ணுகிறவர்களுக்கோ கிருபையும் உண்
மையுமுண்டு.
௨௩ சகல [2]பிரயாசத்திலும் பிரயோசனமுண்டு;
உதடுகளின் வசனிப்பால் குறைச்சல் வருகி
றது.
௨௪ ஞானமுள்ளவர்களின் ஐசுவரியம் அவர்க
ளுக்குக் கிரீடம்; மூடரின் பயித்தியம் பயித்தி
யமே.
௨௫ உண்மையுள்ள சாட்சிக்காரன் ஆத்துமாவை
விடுவிக்கிறான்; கபடச்சாட்சிக்காரனோ பொய்
களை ஊதிவிடுகிறான்.
௨௬ கர்த்தருக்குப் பயப்படுகிறதினாலே [3]பெலத்த
திடன் உண்டு; அவர் பிள்ளைகளுக்கும் அடைக்
கலமிருக்கும்.
௨௭ கர்த்தருக்குப் பயப்படுதல் மரணக்கண்ணி
களைவிட்டு விலகுவதற்காகச் சீவ ஊற்றாயிருக்
கிறது.
௨௮ சனத்திரட்சி இராசாவின் மகத்துவம்; சனக்
குறைவு தலைவரின் முறிவு.
௨௯ [4]நீண்ட சாந்தமுள்ளவன் மகா புத்திமான்;
முன்கோபியோ பயித்தியத்தைத் தெரியக்காண்
பிக்கிறான்.
௩௰ சொஸ்த மனம் உடலின் சீவன்; பொறாமை
யோ எலும்புருக்கி.
௩௧ [5]தரித்திரனை ஒடுக்குகிறவன் அவனை உண்டா
க்கினவரை நிந்தைசெய்கிறான்; எளியவனுக்கு
இரங்குகிறவனோ அவரைக் கனம்பண்ணுகி
றான்.
௩௨ ஆகாதவன் தன் பொல்லாப்பினாலே தள்ளுண்
பான்; நீதிமானோ தன் மரணத்திலே திடனாயி
ருக்கிறான்.
௩௩ உணர்வுள்ளவனுடைய இருதயத்தில் ஞானம்
தங்கியிருந்து, மூடரின் நடுவே விளங்கும்.
௩௪ நீதி சாதியை உயர்த்தும்; பாவமோ சனசதளங்
களின் இகழ்ச்சி.
௩௫ விவேகமுள்ள ஊழியக்காரன்மேல் இராசா
வின் பிரியமும், இலச்சை உண்டாக்குகிறவன்
மேல் அவன் மூர்க்கமும் இருக்கும்.

## ௰௫. அதிகாரம்.

௧ மெதுவானபிரதியுத்தாரம் உக்கிரத்தைத் திருப்
பும்; நோகப்பண்ணும் வார்த்தையோ கோபத்
தைக் கிளப்பும்.
௨ ஞானிகள் நாவு அறிவை நன்றாய்க் காண்பிக்
கும்; மூடரின் வாயோ [6]பயித்தியத்தை ஊற்றும்.
௩ எவ்விடத்திலும் கர்த்தருடைய கண்களிருந்து
பொல்லாதவர்களையும், நல்லவர்களையும் நோக்
கிப் பார்க்கின்றன.
[7]நாவின் ஆரோக்கியம் சீவவிருட்சம்; அதி ௪
லுள்ள தாறுமாறோ ஆவிக்கு நொறுங்குதல்.
பயித்தியக்காரன் தன் தகப்பன் புத்தியை அ ௫
சட்டைபண்ணுகிறான்; கடிந்துகொள்ளுதலைக்
கவனித்து நடக்கிறவனோ விவேகியானவன்.
[8]நீதிமானின் வீட்டிலே வெகு சத்துவமி ௬
ருக்கும்; ஆகாதவர்களின் வரத்திலோ கலக்க
முண்டு.
ஞானமுள்ளவர்களின் உதடுகள் அறிவை இ ௭
றைக்கும்; மூடரின் இருதயம் அப்படி அல்ல.
[9]ஆகாதவர்களின் பலி கர்த்தருக்கு அருவ ௮
ருப்பு; செம்மையானவர்களின் செபமோ அவ
ருக்குப் பிரியம்.
ஆகாதவனுடைய வழி கர்த்தருக்கு அருவ ௯
ருப்பு; நீதியைப் பின்தொடருகிறவனையோ
அவர் சிநேகிக்கிறார்.
பாதையை விட்டுப்போகிறவனுக்குப் புத்தி ௰
மதி விதனமாயிருக்கும்; கடிந்துகொள்ளுதலைப்
பகைக்கிறவன் சாவான்.
[10]பாதாளமும், நரகமும் கர்த்தரின்முன்பாக ௰௧
இருக்கின்றனவே; மனுப்புத்திரன் இருதயங்கள்
எத்தனை அதிகம்.
சரசக்காரன் தன்னைக் கடிந்துகொள்ளுகிறவ ௰௨
னைச் சிநேகியான்; ஞானிகளண்டைக்கு அவன்
போகான்.
[11]மகிழ்ச்சியுள்ள இருதயம் முகத்தைச் செழிப் ௰௩
பாக்கும்; இருதயத்தின் நோவினாலே ஆவி முறிந்
துபோகும்.
உணர்வுள்ளவனுடைய இருதயம் அறிவைத் ௰௪
தேடும்; மூடரின் வாயோ பயித்தியத்தை மேயும்.
சிறுமைப்பட்டவனுடைய நாள்களெல்லாம் ௰௫
தீங்குள்ளவைகள்; [12]மன இரம்மியமோ நித்திய
விருந்து.
அமளியோடிருக்கும்பெரும்பொக்கிஷத்தைப் ௰௬
பார்க்கிலும் கர்த்தருக்குப் பயப்படுதலோடிருக்
கும் கொஞ்சமானது வாசி.
[13]பகையோடிருக்கும் கொழுத்த எருதின் கறி ௰௭
யைப்பார்க்கிலும் சிநேகத்தோடிருக்கும் இலைக்
கறி வாசி.
உக்கிரமுள்ள மனுஷன் சண்டை கொளுவு ௰௮
கிறான்; நீண்ட சாந்தமுள்ளவனோ சண்டையை
அமர்த்துகிறான்.
[14]சோம்பேறியின் வழி முள்வேலியாய் இருக் ௰௯
கிறது; செம்மையானவர்களின் பாதையோ நிர
வப்பட்டதாயிருக்கிறது.
[15]ஞானமுள்ள மகன் தகப்பனைப் பூரிப்பாக்கு ௨௰
கிறான்; பயித்திய மனுஷனோ தன் தாயை அசட்
டைபண்ணுகிறான்.
பயித்தியம் மதியற்றவனுக்குச் சந்தோஷம்; ௨௧
உணர்வுள்ள மனுஷனோ தன் நடக்கையைச்
செம்மைப்படுத்துகிறான்.
[16]யோசனை இல்லாமையால் நினைவுகள் இசை ௨௨

1 சங். ௪௧ ௨.—2 வாக். ௰.௪.௰௨. ௨௪ —3 வாக். ௰௮. ௰. 6 வாக். ௰௬. ௰௪.—7 வாக். ௰௨. ௰௮.—8 வாக். ௧ ௧௧.
4 வாக். ௰௬. ௰௮.—5 வாக். ௰௭. ௫ 9 வாக். ௨௧ ௨௭.

10 யோபு. ௨௬. ௬.—11 வாக். ௰௭. ௰. ௨௨.—15 வாக். ௰.௧: ௰௭.௨௫.
௨௨.—12 ௧ தீமோ. ௬. ௬. 16 வாக். ௰௧. ௰௪,
13 வாக். ௰௭. ௧.—14 வாக். ௨௪. ௩:

கேடாம்; ஆனால் அநேகம் ஆலோசனைக்காரரால் உறுதியுண்டாம்.
௨௩ மனுஷனுக்குத் தன் வாய்மொழியினாலே மகிழ்ச்சியுண்டாம்; [1]ஏற்றகாலத்திலே சொன்ன வார்த்தை எத்தனை நலமாயிருக்கும்.
௨௪ தாழவிருக்கும் நரகத்தைவிட்டு விலகும்படிக்கு, விவேகிக்குச் சீவவழி உயரப்போகும்.
௨௫ [2]அகந்தைக்காரரின் வீட்டைக் கர்த்தர் பிடுங்கி, விதவையின் எல்லையை நிலைப்படுத்துவார்.
௨௬ பொல்லாதவனுடைய நினைவுகள் கர்த்தருக்கு அருவருப்பாய் இருக்கின்றன; சுத்தவான்களின் வார்த்தைகளோ இன்பமானவைகள்.
௨௭ பொருளாசைக்காரன் தன் வீட்டைக் கலைக்கிறான்; பரிதானங்களைப் பகைக்கிறவனோ பிழைத்திருக்கிறான்.
௨௮ நீதிமானின் இருதயம் பிரதியுத்தாரஞ்சொல்ல யோசிக்கும்; ஆகாதவர்களின் வாயோ பொல்லாவிசேஷங்களைப் பொழியும்.
௨௯ ஆகாதவர்களுக்குக் கர்த்தர் தூரமாயிருக்கிறார்; நீதிமான்களின் செபத்தையோ கேட்கிறார்.
௩௰ கண்களின் வெளிச்சம் இருதயத்தைப் பூரிப்பாக்கும்; நல்ல செய்தி எலும்புகளைப் புஷ்டியாக்கும்
௩௧ சீவனின் கடிந்துகொள்ளுதலைக் கேட்கும் காது ஞானமுள்ளவர்களுக்குள் தாபரிக்கும்.
௩௨ புத்தியைத் தள்ளிவிடுகிறவன் தன் ஆத்துமாவை வெறுக்கிறான்; கடிந்துகொள்ளுதலைக் கேட்கிறவனோ ஞானமடைவான்.
௩௩ கர்த்தருக்குப் பயப்படுதல் ஞானத்தைப் போதிக்கும், [3]மகிமைக்கு முன் தாழ்மையுண்டு.

## ௰௬. அதிகாரம்.

௧ மனதின் யோசனைகள் மனுஷனுடையது; [4]நாவின் பிரதியுத்தாரம் கர்த்தராலிருக்கும்.
௨ [5]மனுஷனுடைய வழிகளெல்லாம் அவன் பார்வைக்குச் சுத்தமாயிருக்கின்றன; ஆனால் கர்த்தர் ஆவிகளை நிறுக்கிறார்.
௩ உன்செய்கைகளைக் கர்த்தருக்குச் சாட்டிவிடு; அப்போது உன் யோசனைகள் நிலைவரப்படும்.
௪ கர்த்தர் அதினதின் இலக்குக்குச் சகலத்தையும், தீங்குநாளுக்குப் பொல்லாதவனையுங்கூட உண்டாக்கினார்.
௫ [6]மனமேட்டிமையானவனெல்லாம் கர்த்தருக்கு அருவருப்பானவனாயிருக்கிறான்; அவன் கையோடே கை கோர்த்தாலும் ஆக்கினைக்குத் தப்பான்.
௬ கிருபையினாலும், உண்மையினாலும் அக்கிரமம் மூடப்படும்; ஆனால் கர்த்தருக்குப் பயப்படுகிறதினால் பொல்லாப்பைவிட்டு விலகவேண்டும்.
௭ ஒரு மனுஷனுடைய வழிகளின்மேல் கர்த்தர் பிரியமாய் இருந்தால், அவர் அவன் சத்துருக்களையும் அவனோடே சமாதானமாக்குவார்.
[7]நியாயமில்லாத திரளான வரத்துகளைப்பார்க்கிலும் நீதியோடிருக்கும் கொஞ்ச வரத்துவாசி. ௮
மனுஷனுடைய இருதயம் தன் வழியை யோசிக்கும்; ஆனால் கர்த்தரே அவன் நடையை உறுதியாக்குகிறவர். ௯
இராசாவுடைய உதடுகளிலே ஞானதிருஷ்டியுண்டு; அவன் வாய் நியாயத்திலே நீதி தப்பிச் சொல்லாது. ௰
[8]சுமுத்திரையான சயிற்றுக்கோலும், தராசும் கர்த்தருடையது; பையிலுள்ள படிக்கற்களெல்லாம் அவருடைய செய்கை. ௰௧
ஆகாமியம் செய்கிறது இராசாக்களுக்கு அருவருப்பாயிருக்கும்; ஏனெனில் நீதியால் இராசாசனம் உறுதிப்படுத்தப்படும். ௰௨
நீதியுள்ள உதடுகள் இராசாக்களுக்குப் பிரியம்; நிதானமாய்ப் பேசுகிறவனை இராசா சிநேகிப்பான். ௰௩
இராசாவின் உக்கிரம் மரண தூதர்களைப் போல இருக்கும்; ஆனால் ஞானமுள்ள மனுஷன் அதை ஆற்றுவான். ௰௪
இராசாவினுடைய முகக்களை உயிர்ப்பிக்கும்; அவன் தயை பின்மாரி பெய்கிற மேகத்தைப் போலிருக்கும். ௰௫
[9]அபரஞ்சியைப்பார்க்கிலும் ஞானத்தைச் சம்பாதிக்கிறது எத்தனை நலமும், வெள்ளியைப் பார்க்கிலும் உணர்வைச் சம்பாதிக்கிறது எத்தனை மேன்மையுமாயிருக்கிறது. ௰௬
பொல்லாப்பைவிட்டு விலகுதலே செம்மையானவர்களின் சமனான பாதை; தன் வழியைக் கவனித்திருக்கிறவன் தன் ஆத்துமாவைத் தற்காக்கிறான். ௰௭
நொறுங்குதலுக்கு முன்னானது அகந்தை; விழுதலுக்கு முன்னானது மனமேட்டிமை. ௰௮
[10]அகந்தைக்காரரோடே கொள்ளையைப் பங்கிட்டுக்கொள்வதைப்பார்க்கிலும், சிறுமையானவர்களோடே மனத்தாழ்மையாயிருக்கிறது நலம். ௰௯
வசனத்தின்மேல் சிந்தனையை வைக்கிறவன் நன்மையைக் கண்டடைவான்; கர்த்தரை நம்புகிறவன் பாக்கியவான். ௨௰
இருதயத்தில் ஞானமுள்ளவன் புத்திமான் என்னப்படுவான்; உதடுகளின் இன்பம் உபதேசத்தைப் பெருகப்பண்ணும். ௨௧
புத்தி தன்னை உடையவர்களுக்குச் சீவ ஊற்றாய் இருக்கிறது; பயித்தியக்காரரின் கல்வியோ பயித்தியம். ௨௨
ஞானியின் இருதயம் அவன் வாயைப் புத்தியுள்ளதாக்கி, அவன் உதடுகளில் உபதேசத்தைப் பெருகப்பண்ணும். ௨௩
இன்பமான வார்த்தைகள் தேன்கூடும், ஆத்துமாவுக்கு மதுரமும், எலும்புகளுக்கு ஒளஷதமுமாயிருக்கின்றன. ௨௪

1 வாக். ௨௫. ௰௧.—2 சங். ௱௪௬. 4 எரே ௰. ௨௩.—5 வாக். ௨௧. ௨. ௯.—3 வாக். ௰௮. ௰௨. 6 லூக். ௰௬. ௰௫.
7 சங். ௩௭. ௰௬.—8 வாக். ௰௧ ௧. ௰௧.—10 வாக். ௰௮. ௰௨. 9 வாக். ௮. ௰௪: ௮.௰,௰௯. சங். ௰௯.

௨௫ [1]மனுஷனுடைய பார்வைக்குச் செம்மை
யாய்க் கண்டும், முடிவிலே மரணத்திற்குக்
கொண்டுபோகிறதாகிய வழியுண்டு.
௨௬ உழைக்கிற ஆத்துமா தனக்கு உழைக்கிறான்,
ஏனெனில் அவன் வாய் அவனைத் தீவிரிக்கும்.
௨௭ [2]பேலியாளின் மனுஷன் தீங்கை எத்தனம்
பண்ணுகிறான்; அவன் உதடுகளிலிருக்கிறது
எரிக்கும் அக்கினியைப்போலிருக்கும்.
௨௮ மாறுபாடுகளுள்ள மனுஷன் வழக்கை உண்டு
பண்ணுகிறான்; கோள்க்காரன் பிரதான சிநேகி
தனையும் பிரியப்பண்ணுவான்.
௨௯ கொடுமையான மனுஷன் தனக்கடுத்தவனுக்
கு ஆசைபதம் காட்டி, அவனை நலமல்லாத வழி
யில் நடக்கப்பண்ணுகிறான்.
௩௰ திரியாவரங்களை யோசிக்கத் தன் கண்களை
மூடுகிறான்; தன் உதடுகளை அவன் அசைக்கும்
போது பொல்லாப்பைச் செய்யத் தீர்ந்தது.
௩௧ [3]நரைமயிர் அலங்காரமான கிரீடம்; நீதியின்
வழியில் அது கிடைக்கும்.
௩௨ பெலவானைப்பார்க்கிலும் நீண்ட சாந்தமுள்
ளவனும், ஒரு பட்டணத்தைப் பிடிக்கிறவனைப்
பார்க்கிலும் தன் ஆவியை ஆண்டுகொள்ளுகிற
வனும் வாசி.
௩௩ சீலி மடியில் போடப்படும்; ஆனால் அதின்
நியாயமெல்லாம் கர்த்தரால் வரும்.

## ௰௭. அதிகாரம்.

௧ சண்டையோடே [4]கூடிய கொழுத்த ஆகாரங்
கள் வீடுநிறைய இருந்தாலும், அவைகளைப்பார்க்
கிலும் அமரிக்கையோடே சாப்பிடும் கறியில்
லாத துணிக்கை தாவிளை.
௨ புத்தியுள்ள வேலைக்காரன் இலச்சை உண்
டாக்குகிற குமாரனை ஆண்டு, சகோதரர் நடுவில்
சுதந்தரப்பங்கை அடைவான்.
௩ வெள்ளிக்குப் புடமும், பொன்னுக்குக் குகை
யும்; இருதயங்களைச் சோதிக்கிறவரோ கர்த்தர்.
௪ பொல்லாதவன் அக்கிரம உதட்டைக் கவ
னிக்கிறான்; கள்ளன் கேடுபாடுள்ள நாவுக்குச்
செவிகொடுக்கிறான்.
௫ [5]ஏழையைப் பரியாசம்பண்ணுகிறவன் அவ
னை உண்டாக்கினவரை நிந்தைப்படுத்துகிறான்:
ஆபத்துக்கு அக்களிக்கிறவன் ஆக்கினைக்குத் தப்
பான்.
௬ பிள்ளைகளின் பிள்ளைகள் முதிர்ந்த வயதுள்ள
வர்களின் கிரீடம்; பிள்ளைகளின் சிங்காரமோ
அவர்களின் பிதாக்கள்.
௭ மேன்மையானவைகளைப் பேசும் உதடு பயித்
தியக்காரனுக்கு அடுத்ததல்ல; பிரபுக்கோ பொய்
உதடு எப்படி அடுக்கும்.
௮ பரிதானம் அதை வாங்குகிறவர்களின்பார்வை
க்கு நேர்த்தியான இரத்தினமாயிருக்கிறது; [6]அது
நோக்கும் திசையெல்லாம் காரியம் வாய்க்கும்.

மீறுதலை மூடிப்போடுகிறவன் சிநேகத்தை நா ௯
டுகிறான்; காரியத்தைக் கிண்டிக் கிளப்புகிறவ
னோ பிரதான சிநேகிதனையும் பிரியப்பண்ணு
வான்.
மூடனை நூறடி அடிப்பதைப்பார்க்கிலும், ௰
உணர்வுள்ளவனுக்கு அதட்டுதலே அதிகமாய்
உறைக்கும்.
பொல்லாதவன் கலகத்தையே தேடுகிறான்; ௰௧
ஆனால் கொடூர தூதன் அவனுக்கு விரோதமாக
அனுப்பப்படுவான்.
தன் பயித்தியத்தோடிருக்கிற மூடனுக்கு ௰௨
அல்ல; குட்டிகளைப் பறிகொடுத்த கரடிக்கே
மனுஷன் எதிர்ப்படட்டும்.
நன்மைக்குத் தீமையைச் சரிக்கட்டுகிறவனு ௰௩
டைய வீட்டைத் தீமைவிட்டுப் பிரியாது.
சண்டைக்குக் காரணமாயிருக்கிறவன் தண் ௰௪
ணீர் மதகைத் திறக்கிறவனுக்குச் சரி; ஆகையா
லே போர் கலவாததற்குமுன் வாதாட்டத்தை
நெகிழ்.
[7]ஆகாதவனை நீதிமானாகவும், நீதிமானை ஆகாத ௰௫
வனாகவும் தீர்க்கிற இருவரும் கர்த்தருக்கு அரு
வருப்பானவர்கள்.
மூடன் மதியில்லாதவனாயிருக்கையில், ஞா ௰௬
னத்தைக்கொள்ள அவன் கையிலே ரொக்கம்
என்னத்திற்கு?
சிநேகிதன் எல்லாக்காலத்திலும் சிநேகிப் ௰௭
பான்; இடுக்கணுக்கு உதவுகிற சகோதரனோ
இன்னம் பிறக்கவேண்டும்.
தனக்கடுத்தவன் முன்பாகப் [8]பிணைப்பட்டுக் ௰௮
கைபோடுகிறவன்புத்தித்தாழ்ச்சியானமனுஷன்.
வாதுப்பிரியன், பாதகப்பிரியன்; தன் வா ௰௯
சலை உயர்த்துகிறவன் இடிதலைத் தேடுகிறான்.
திரியாவர இருதயத்தான் நன்மையைக் கண் ௨௰
டடைவதில்லை; புரட்டுநாவுள்ளவன் தீமையி
லே விழுவான்.
மூடனைப் பெறுகிறவன் தனக்குச் சஞ்சல ௨௧
மாக அவனைப் பெறுகிறான்; பயித்தியக்காரனு
டைய தகப்பன் மகிழான்.
[9]மகிழ்ச்சியுள்ள இருதயம் ஔஷதம்போலா ௨௨
கும்; முறிந்த ஆவியோ எலும்புகளை உலரப்பண்
ணும்.
ஆகாதவன் நியாயவழியைப் புரட்ட மடியி ௨௩
லுள்ள பரிதானத்தை வாங்குகிறான்.
ஞானம் உணர்வுள்ளவனுடைய முகத்தின் ௨௪
முன் இருக்கிறது; மூடனுடைய கண்களோ பூ
மியின் கடையாந்தரங்களில் திரிகின்றன.
[10]மூடனான குமாரன் தன் தகப்பனுக்குச் சலி ௨௫
ப்பும், தன்னைப் பெற்றவளுக்குக் கசப்புமான
வன்
நீதிமானைக்கூடத் தெண்டம்பிடிக்கிறதும், பிர ௨௬
புக்கள் நிதானத்தைச் செய்கிறவனை அடிக்கிற
தும் நல்லதல்ல.

1 வாக். ௰௪. ௰௨. 2 வாக். ௬. ௰௨, ௰௪. 3 வாக். ௨௰. ௨௯.—4 வாக். ௰௫ ௰௭. 5 வாக். ௰௪. ௩௧.
6 வாக். ௰௮. ௰௬.—7 ஏசா. ௫. ௨௩.—8 வாக். ௰௧. ௰௫. 9 வாக். ௰௫ ௰௩, ௰௫.—10 வாக். ௰௫. ௨௰.

௨௭ [1]அறிவாளி தன் வார்த்தைகளை அடக்குகி
றான்; உணர்வுள்ள மனுஷன் குளிர்ந்த குண
முள்ளவன்.
௨௮ பயித்தியக்காரனும் மவுனமாயிருந்தால் ஞான
முள்ளவனென்றும், தன் உதடுகளை மூடுகிறவன்
புத்திமானென்றும் எண்ணப்படுவான்.

## ௰௮. அதிகாரம்.

௧ பிரிந்துபோகிறவன் தன் இச்சையின்படி செய்
யப்பார்க்கிறான்; எல்லா மெய்ஞ்ஞானத்தோடும்
கைகலக்கிறான்.
௨ மூடன் உணர்வையல்ல தன் இருதயம் திறந்
துகிடக்குதலை விரும்புகிறான்.
௩ ஆகாதவன் வருகையில், அசங்கதமும் கனஈ
னத்தோடேகூடிய நிந்தையும் வரும்.
௪ மனுஷனுடைய வாயின் வசனங்கள் [2]ஆழமா
னதண்ணீர்களாயிருக்கும்; ஞானத்தின் ஊற்றே
பாய்கிற ஆறும்.
௫ நீதிமானை [3]நியாயத்திலே தோற்கடிக்க ஆகாத
வனுடைய முகமாட்டத்தைப் பார்க்கிறது நல்ல
தல்ல.
௬ மூடனுடைய உதடுகள் சண்டைக்குட்படும்;
அவன் வாய் அடிகளை வரவழைக்கும்.
௭ மூடனுடைய வாய் அவனுக்குக் கேடு; அவன்
உதடுகள் அவன் ஆத்துமாவுக்குக் கண்ணி.
௮ [4]முணுமுணுப்புக்காரரின் வார்த்தைகள் பரி
யாச வார்த்தைகளைப்போல இருக்கும்; ஆனால்
அவைகள் வயிற்றுக்குள் இறங்கும்.
௯ தன் வேலையில் அசதியானவன் அழிம்பனு
டைய சகோதரன்.
௰ [5]கர்த்தரின் நாமம் அரணான துருக்கம்; அதி
லே நீதிமான் ஓடிப் பத்திரமாயிருக்கிறான்.
௰௧ [6]ஐசுவரியவானுடைய ஆஸ்தி அவனுக்கு அ
வன் தோற்றலின்படி அரணான பட்டணமும்,
உயர்ந்த மதிலுமாயிருக்கும்.
௰௨ [7]நொறுங்குதலுக்குமுன் மனுஷனுடைய இ
ருதயம் மேட்டிமையாகும்; மகிமைக்குமுன்
காண்கிறதோ தாழ்மை
௰௩ ஒருவன் கேளாததற்குமுன் பிரதியுத்தாரம்
சொன்னால் அவனுக்கு அது பயித்தியமும் வெட்
கமுமாயிருக்கும்.
௰௪ [8]மனுஷனுடைய ஆவி அவன் வியாதியைத்
தாங்கும்; முறிந்த ஆவியையோ யார் தாங்கு
வான்.
௰௫ உணர்வுள்ளவனுடைய இருதயம் அறிவைச்
சம்பாதிக்கும்; ஞானமுள்ளவர்களின் செவி
அறிவையே தேடும்.
௰௬ மனுஷனுடைய காணிக்கை அவனுக்கு வழி
யுண்டாக்கி, அவனைப் பெரியோர்களுக்குமுன்
பாக வரப்பண்ணும்.
௰௭ நீதிமான் முதல் தன்னுடேே வழக்காடுகிறான்;
பிறகு அவனுக்கடுத்தவன் வந்தால் அவனையும்
விசாரித்து ஆராய்கிறான்.

சீலிபோடுதல் வழக்குகளை ஒயப்பண்ணி, ௰௮
பலவான்களின் நடுவே சிக்கறுக்கும்.
அரணான பட்டணத்தைப்பார்க்கிலும் அநி ௰௯
யாயம் அநுபவித்த சகோதரன் கெட்டியாயிருக்
கிறான்; அப்படிப்பட்ட வழக்குகள் கோட்
டைத்தாழ்ப்பாளுக்குச் சரி.
தன் தன் வாயின் கனியால் அவனவனுடைய ௨௰
வயிறு நிரப்பப்படும்; தன் தன் உதடுகளின் வரத்
தினாலே அவனவன் திருப்தியாவான்.
மரணமும், சீவனும் [9]நாவின் அதிகாரத்திலி ௨௧
ருக்கும்; அதைச் சிநேகிக்கிறவன் அதின் கனி
யைப் புசிப்பான்.
[10]பெண்சாதியைக் கண்டடைகிறவன் நற்கா ௨௨
ரியத்தைக் கண்டடைந்தான்; கர்த்தரால் ஒரு
தயையை வரப்பற்றிக்கொண்டான்.
தரித்திரன் கெஞ்சிப் பேசுகிறான்; ஐசுவரிய ௨௩
வான் கடுமி மறு உத்தரவுகொடுக்கிறான்.
சிநேகிதருக்கு உண்மையான மனுஷன் உறவு ௨௪
கட்டப்படத்தக்கவன்; [11]சகோதரனிலும் அதிக
தொந்தமாய்ச் சிநேகிப்பவருண்டு.

## ௰௯. அதிகாரம்.

மூடனாகிய [12]திரியாவர உதடனைப்பார்க்கிலும், ௧
தன் உத்தமத்தில் நடக்கிற தரித்திரனே வாசி.
அறிவில்லாத ஆத்துமா நல்லதல்ல, கால் துரி ௨
தக்காரன் தப்பிநடக்கிறான்.
மனுஷனுடைய பயித்தியம் அவன் வழியைத் ௩
தாறுமாறாக்கும்; பிறகு கர்த்தருக்கு விரோதமாய்
அவன் இருதயம் தாங்கலாயிருக்கும்.
[13]ஆஸ்தி அநேகம் சிநேகிதரைச் சேர்க்கும்; ௪
தரித்திரனோ தன் சிநேகிதனால் நெகிழப்படு
வான்.
[14]கள்ளச்சாட்சி ஆக்கினையில்லாதிருப்பதில் ௫
லை, பொய்களை ஊதுகிறவன் தப்பான்.
உதாரனுடைய முகத்திற்குமுன்பாக அநே ௬
கர் வருந்துகிறார்கள்; கொடைகொடுக்கிறவனுக்
கு எவனும் சிநேகிதன்.
தரித்திரனுடைய சகோதரரெல்லாரும் அவ ௭
னைப் பகைக்கிறார்களே; எத்தனை அதிகமாய் அ
வன் சிநேகிதர் அவனுக்குத் தூரமாவார்கள்; அ
வர்கள் கொடுத்த வார்த்தைகளைத் தொடருகி
றான், ஆனால் அவைகள் வெறுமை.
ஞானத்தைத் தேடிக்கொள்ளுகிறவன் தன் ஆத் ௮
துமாவைச் சிநேகிக்கிறான்; உணர்வைக் காக்கி
றவனுக்கு நன்மை கிடைக்கும்.
[15]கள்ளச்சாட்சிக்காரன் ஆக்கினைக்குத் தப் ௯
பான்; பொய்களை ஊதுகிறவன் அழிவான்.
மூடனுக்குச் செல்வம் அடாது; பின்னை ௰
அடிமை பிரபுக்களை ஆளுவது எப்படி அடுக்
கும்.
மனுஷனுடைய புத்தி அவனைச் சாந்தனாக் ௰௧
கும்; மீறுதலைப் பாராமல்போகிறது அவனுக்கு
மகிமை.

1 யாக். ௧. ௰௯.—2 வாக். ௨௰. ௫. ௧௧. ௪.—6 வாக். ௰. ௰௫.
3 ௫ மோ. ௧. ௰௭.—4 வாக். ௨௰. 7 வாக். ௰௬. ௰௮. மத். ௨௩. ௰௨.
௨௨.—5 வாக். ௰௪. ௨௬. சங். 8 வாக். ௰௫. ௰௩.—9 வாக். ௰௩. ௩.

10 வாக். ௰௯. ௰௪: ௩௧. ௰.
11 வாக். ௨௭. ௰.
12 வாக். ௨௮. ௬.
13 வாக். ௰௪. ௨௰.
14 ௫ மோ. ௰௯. ௰௮-௨௰.
15 வாக். ௨௧. ௨௮.

௰௨ [1]இராசாவின் சினம் சிங்கத்தின் கெர்ச்சிப்புக்கும், அவன் தயை பூண்டுகள்மேல் பெய்யும் பனிக்கும் சமானம்.
௰௩ மூடனாகிய மகன் தன் தகப்பனுக்குச் சாலத் துக்கமாயிருக்கிறான்; [2]பெண்சாதியின் சண்டைகள் ஓயாத ஒழுக்கு.
௰௪ வீடும், ஆஸ்தியும் பிதாக்கள் வைக்கும் சுதந்தரம்; [3]புத்தியுள்ள பெண்சாதியோ கர்த்தரால் கொடுக்கப்படுகிறாள்.
௰௫ சோம்பல் தூங்கிவிழப்பண்ணும்; [4]அசதியான ஆத்துமா பட்டினியாயிருக்கும்.
௰௬ கற்பனையைக் காக்கிறவன் தன் ஆத்துமாவைக் காக்கிறான்; அதின் வழிகளுக்கு அசட்டையாய் இருக்கிறவனோ சாவான்.
௰௭ [5]ஏழைக்கு இரங்குகிறவன் கர்த்தருக்குக் கடன்கொடுக்கிறான்; அவனுடைய உபகாரத்தை இவர் அவனுக்குப் பதில்கொடுப்பார்.
௰௮ நம்பிக்கை இருக்கும்மட்டும் [6]உன் மகனைத் தண்டி; ஆனால் அவனைக் கொல்ல உன் ஆத்துமாவை எழும்பவொட்டாதே.
௰௯ மகா உக்கிரமன் ஆக்கினை அடைவான்; நீ அவனைத் தப்பவிட்டாலோ இனி அப்புறம் அவனைத் தண்டிக்கலாம்.
௨௰ உன் கடைசி நாள்களில் நீ ஞானமுள்ளவனாயிருப்பதற்கு ஆலோசனையைக் கேட்டுப் போதகத்தை ஏற்றுக்கொள்.
௨௧ வெகு நினைவுகள் மனுஷனுடைய இருதயத்திலிருக்கும்; ஆனால் [7]கர்த்தரின் யோசனையே நிற்கும்.
௨௨ நன்மைசெய்ய மனுஷனுக்கிருக்கும் ஆசையே தயை; பொய்யுள்ள மனுஷனைப்பார்க்கிலும் தரித்திரன் வாசி.
௨௩ கர்த்தருக்குப் பயப்படுதல் மனுஷனைச் சீவனுக்குள்ளாக்கும், அவன் திருப்தி அடைந்தவனாய் இராத்தங்குவான்; பொல்லாப்பு அவனை அணுகாது.
௨௪ [8]சோம்பேறி தன் கையைக் கலத்திலே போட்டுவிட்டு, அதைத் தன் வாயண்டைக்குத் திரும்ப எடுக்காதிருக்கிறான்.
௨௫ [9]சக்கந்தக்காரனை அடி, அப்போது பேதை விவேகமுள்ளவனாவான்; உணர்வுள்ளவனைக் கடிந்துகொள், அறிவை உணர்வான்.
௨௬ வெட்கமும் இலச்சையும் உண்டாக்குகிற மகன் தகப்பனைப் பாழ்க்கடிக்கிறவனும், தாயைப் பறக்கடிக்கிறவனுமாயிருக்கிறான்.
௨௭ என் மகனே, புத்தியைக் கேளாமல் விட்டுவிட்டாயாகில், அறிவின் வசனங்களை விட்டு வழிதப்பத்தான் அப்படிச் செய்வாய்.
௨௮ பேலியாளின் மனுஷனாகிய சாட்சிக்காரன் நியாயத்தை நிஸ்காரம் பண்ணுகிறான்; ஆகாதவர்களின் வாய் அக்கிரமத்தை விழுங்கும்.
௨௯ சக்கந்தக்காரருக்கு நியாயத்தீர்ப்புகளும், மூடரின் முதுகுக்கு அடிகளும் ஆயத்தமாயிருக்கின்றன.

## ௨௰. அதிகாரம்.

மதுபானம் சக்கந்தமுள்ளதும், வெறி அமளியுள்ளதுமாயிருக்கின்றன; அதிலே மயங்குகிற எவனும் ஞானியாவதில்லை. ௧
இராசாவின் உறுக்குதல் சிங்கக்குட்டியின் கெர்ச்சிப்புக்குச் சரி; அவனுக்குக் கோபமுண்டாக்குகிறவன் தன் சீவனுக்குத் துரோகஞ்செய்கிறான். ௨
வழக்கை விலகியிருக்கிறது மனுஷனுக்குக் கனம்; ஆனால் பயித்தியக்காரன் எவனும் அதிலே கலந்துபோகிறான். ௩
சோம்பேறி குளிருகிறதென்று உழாதிருக்கிறான்; அறுப்பிலே வேண்டுமென்பான், அப்போது ஒன்றுமில்லை. ௪
மனுஷனுடைய இருதயத்திலிருக்கும் யோசனை ஆழமான தண்ணீர்கள்; உணர்வுள்ள மனுஷனோ அதை மொண்டெடுப்பான். ௫
மனுஷரின் ஏராளத்தில் அவனவன் தன் தயையைக் கூறுகிறான்; ஆனால் நல்லுண்மையான மனுஷனைக் கண்டுபிடிப்பவன் யார்? ௬
நீதிமான் தன் உத்தமத்திலே நடக்கிறான்; அவனுக்குப்பிறகு [10]அவன் பிள்ளைகள் பாக்கியவான்கள். ௭
நியாயாசனத்தில் உளுக்காந்திருக்கிற இராசா தன் கண்களினால் சகல பொல்லாப்பையும் சிதறப்பண்ணுகிறான். ௮
[11]என் இருதயத்தை நான் சுத்தமாக்கித் தீர்ந்தது; என் பாவமறத் துப்புரவானேனென்று சொல்பவன் யார்? ௯
[12]விதம்விதமான படிக்கல்லும், விதம்விதமான மரக்காலும் இரண்டும் கர்த்தருக்கு அருவருப்பாயிருக்கும். ௰
ஒருபிள்ளையின் செய்கை சுத்தமும், செம்மையுமாயிருக்குமோவென்று அதின் கிரியைகளாலும் அறியப்படும். ௰௧
கேட்கிற காதும், காண்கிற கண்ணுமான இவ்விரண்டையும் கர்த்தர் உண்டாக்கினார். ௰௨
நீ ஏழையாகாதபடிக்குத் [13]தூக்கத்தைச் சிநேகியாதிரு; உன் கண்களைத்திற, அப்போது அப்பத்தால் திருப்தியாவாய். ௰௩
கொள்ளுகிறவன் ஆகாது ஆகாதென்கிறான்; கொண்டுபோனபின் மெய்ச்சிக்கொள்ளுகிறான். ௰௪
பொன்னும், திரளான முத்துகளுமுண்டு; அறிவுள்ள உதடுகளோ விலையேறப்பெற்ற ஆபரணம். ௰௫
[14]அந்நியனுக்காகப் பிணைப்பட்டவனுடைய வஸ்திரத்தை எடுத்துக்கொள்; பிறத்தியாளுக்காக அவன் கையில் அடகுவாங்கு. ௰௬
வஞ்சனை அப்பம் மனுஷனுக்கு இன்பம்; ௰௭

1 வாக். ௨௰. ௨.
2 வாக். ௨௭. ௰௫.
3 வாக். ௰௮. ௨௨.
4 வாக். ௰. ௪.—5 மத். ௰. ௪௨: ௨௫. ௪௰. லூக். ௬. ௩௮.
6 எபே. ௬. ௪.
7 வாக். ௨௧. ௩௰.—8 வாக். ௨௬. ௰௫.—9 வாக். ௨௧. ௰௧.
10 சங். ௱௰௨. ௨.—11 ௨ரோ. ௭.
12 ௫ மோ. ௨௫. ௰௩, ௰௪.
13 வாக். ௬. ௯, ௰.—14 வாக். ௨௭. ௰௩.

பிற்பாடோவெனில், அவன் வாய் பருக்கைக் கல்லுகளால் நிறையப்படும்.

௰௮ நினைவுகள் யோசனைகளால் திடப்பட்டுப் போகும்; [1]நல்விவேகமாய் யுத்தம்பண்ணு.

௰௯ [2]தூற்றிக்கொண்டு திரிகிறவன் இரகசியத்தை வெளியாக்குவான்; புத்தியில்லாத உதடனோடே கலவாதிரு.

௨௰ [3]தன் தகப்பனையும், தாயையும் தூஷணிக்கிறவனுடைய தீபம் காரிருட்டிலே அவிந்து போகும்.

௨௧ துவக்கத்திலே தீவிரமாய்ப் பிடித்த சுதந்தரம் பிற்காலத்திலே ஆசீர்வாதமற்றிருக்கும்.

௨௨ [4]தீமைக்குச் சரிக்கட்டுவேனென்னாதே, கர்த்தருக்குக் காத்திரு; அவர் உனக்கு இரட்சிப்புண்டாக்குவார்.

௨௩ [5]விதம்விதமான படிக்கல் கர்த்தருக்கு அருவருப்பாயிருக்கும்; கள்ளத்தராசு நல்லதல்ல.

௨௪ கர்த்தராலே மனுஷனுடைய நடைகள் வாய்க்கும்; மனுஷன் தானே தன் வழியை உணர்வதெப்படி?

௨௫ பரிசுத்தமானதை விழுங்கி, நியமங்களைப் பண்ணினபின் சிந்தித்துப்பார்க்கிறது மனுஷனுக்குக் கண்ணியாயிருக்கும்.

௨௬ ஞானமுள்ள இராசா ஆகாதவர்களைச் சிதறடித்து, அவர்கள்மேல் உருளையை உருளப்பண்ணுவான்.

௨௭ மனுஷனுடைய ஆத்துமா கர்த்தர் தந்த தீபமாயிருந்து, வயிற்றின் உள்ளுக்குள்ளானவைகளை எல்லாம் ஆராயும்.

௨௮ தயையும், உண்மையும் இராசாவைத் தற்காக்கும்; [6]தயையினாலே தன் ஆசனத்தை நிற்கப்பண்ணுவான்.

௨௯ வாலிபரின் அலங்காரம் அவர்கள் வீரியம்; [7]முதிர்ந்த வயதானவர்களின் கனம் அவர்கள் நரை.

௩௰ காயமான தழும்புகளும், உள்வயிறுமட்டும் உறைக்கும் அடிகளும் பொல்லாதவனை அழுக்கறத்துடைக்கும்.

## ௨௧. அதிகாரம்.

௧ இராசாவின் இருதயம் கர்த்தரின் கையிலே நீர்க்கால்களைப்போலிருக்கிறது; தமக்குச் சித்தமானவை எல்லாவற்றிற்கும் நேராக அவைகளைப்பார்.

௨ [8]மனுஷனுடைய வழி எல்லாம் அவன் பார்வைக்குச் செம்மையானது; ஆனால் கர்த்தர் இருதயங்களை நிறுக்கிறார்.

௩ பலியைப்பார்க்கிலும், நீதி நியாயஞ்செய்தலே கர்த்தருக்குப் பிரியம்.

௪ கண்களின்மேட்டிமையும், இருதய உப்புதலுமென்ற பொல்லாருடைய விளக்குப் பாவமே.

௫ சாக்கிரதையுள்ளவனுடைய நினைவுகள் பிரயோசனத்துக்கே? பதறுகிறவனெல்லாம் குறைச்சலுக்கே.

கள்ளநாவினாலே பொக்கிஷங்களைச் சம்பாதிக்குதல் சாவைத் தேடுகிறவர்களுடைய பறக்கடிக்கப்படுகிற மாயை. ௬

ஆகாதவர்களின் பாழ்க்கடிப்பு அவர்களைத் திடுக்கிடப்பண்ணப்போம்; ஏனெனில் நியாயம் செய்ய மனதில்லாதிருக்கிறார்கள். ௭

அப்படிக்கொத்த மனுஷனுடைய வழி மகா மாறுபாடும் வேற்றுமையுமாயிருக்கிறது; சுத்தவானுடைய கிரியையோ செம்மையாய் இருக்கிறது. ௮

சண்டைக்காரியாகிய பெண்சாதியோடே ஒரு வீட்டிலே கூடிக்கலந்திருப்பதைப்பார்க்கிலும் ஒரு வீட்டின்மீதில் ஒரு மூலையிலே தங்கியிருக்கிறதே தாவிளை. ௯

ஆகாதவனுடைய ஆத்துமா பொல்லாப்பை இச்சிக்கும்; அவன் கண்களில் அவனுக்கடுத்தவனுக்கு இரக்கம்கிடையாது. ௰

[9]சக்கந்தக்காரனைத் தண்டிக்கும்போது பேதை ஞானமடைவான்; ஞானமுள்ளவனைப் போதித்தால் அறிவைக் கற்றடைவான். ௰௧

ஆகாதவர்களைப் பராபரன் நீங்கிற் கவிழப்பண்ணுகையில், நீதிமான் ஆகாதவனுடைய வீட்டைச் சிந்தனையோடே பார்க்கிறான். ௰௨

தன் செவியை ஏழையின் கூக்குரலுக்கு விலக அடைத்துக்கொள்ளுகிறவன்தானும் கேட்கப்படாமல் கூப்பிடுவான். ௰௩

அந்தரங்கமான காணிக்கை கோபத்தையும், மடியிலுள்ள பரிதானம் வலு உக்கிரத்தையும் அமர்த்தும். ௰௪

நியாயஞ்செய்வது நீதிமானுக்குச் சந்தோஷமும், அக்கிரமக்காரருக்கோ கலக்கமுமாயிருக்கிறது. ௰௫

புத்தியின் வழியைத் தப்பிநடக்கிற மனுஷன் செத்தவர்களின் கூட்டத்திலே தாபரிப்பான். ௰௬

[10]சந்தோஷத்தைச் சிநேகிக்கிறவன் தாழ்ச்சியை அடையப்போகிற மனுஷன்; மதுபானத்தையும், தயிலத்தையும் சிநேகிக்கிறவன் ஐசுவரியவானாவதில்லை. ௰௭

[11]நீதிமானுக்கு மீட்பாக ஆகாதவனும், செம்மையானவனுக்குப்பதிலாகத் துரோகியும் இருப்பான். ௰௮

[12]சண்டைக்காரியும், கோபக்காரியுமான பெண்சாதியோடே குடியிருப்பதைப்பார்க்கிலும் வனாந்தரத்திலே குடியிருப்பது நலம். ௰௯

வேண்டுமென்ற பொக்கிஷமும், கொழுப்பும் ஞானமுள்ளவனுடைய வாசஸ்தலத்திலுண்டு; பயித்தியக்காரனோ அதை விழுங்கிவிடுகிறான். ௨௰

நீதியையும், தயையையும் பின்தொடருகிறவன் சீவனையும், நீதியையும், மகிமையையும் கண்டடைவான். ௨௧

வீரியவான்களின் பட்டணத்தை ஞானமுள்ளவன் ஏறிப்பிடித்து, அது நம்பியிருந்த அரணை இடிக்கிறான். ௨௨

1 வாக். ௨௪. ௬.—2 வாக். ௰௧ ௰௩. ௨௬. ௨ரோ. ௰௨ ௰௯.—5 ௰. ௨௪.
3 உ மோ. ௨௧ ௰௭.—4 வாக். ௨௪. 6 வாக். ௰௬. ௰௨.
7 வாக். ௰௬. ௩௧.—8 வாக். ௰௬. ௨. ௰௯, ௰௪.—11 வாக். ௧௧. ௮.
9 வாக். ௰௯. ௨௫.—10 லூக். ௰௬. 12 வாக். ௨௫. ௨௪.

உ௩ தன் வாயையும், தன் நாவையும் காக்கிறவன்
தன் ஆத்துமாவை இடுக்கண்களுக்கு விலக்க
மாய்க் காக்கிறான்.
உ௪ அகந்தையான சினத்தோடே எல்லாஞ்செய்
கிற இடும்புள்ள அகந்தைக்காரரின் பேர் ஆகா
மியர்.
உ௫ சோம்பேறியின் இச்சை அவனைச் சாகப்
பண்ணும்; ஏனெனில் அவன் கைகள் வேலை
செய்யமாட்டோமென்கின்றன.
உ௬ அவன் நாள்தோறும் இச்சித்துக்கொண்டே
இருக்கிறான்; நீதிமானோ பிசினித்தனம்பண்ணா
மல் கொடுப்பான்.
உ௭ [1]ஆகாதவர்களின் பலி அருவருப்பானது, அ
வன் அதைத் தீவினையோடே செலுத்தினாலோ
எத்தனை அதிகம்?
உ௮ பொய்ச்சாட்சிக்காரன் கெட்டுப்போவான்;
செவிகொடுக்கிற மனுஷனோ என்றைக்கும் பே
சத்தக்கவன்.
உ௯ ஆகாத மனுஷன் தன் முகத்தை அழுத்தமாக்
குகிறான்; செம்மையானவனோ தன் வழியை
உறுதிபண்ணுகிறான்.
௩௰ கர்த்தருக்கு எதுகையாக ஞானமுமில்லை, உ
ணர்வுமில்லை, ஆலோசனையுமில்லை.
௩௧ குதிரை யுத்தநாளுக்கு ஆயத்தம்பண்ணப்ப
டும்; ஆனால் இரட்சித்தல் கர்த்தருடையது.

## உஉ. அதிகாரம்.

௧ திரளான ஐசுவரியத்தைப்பார்க்கிலும், [2]நற்கீர்த்
தியே தெரிந்துகொள்ளப்படத்தக்கது; வெள்ளி
யையும் பொன்னையும் பார்க்கிலும் தயையே
நலம்.
உ [3]ஐசுவரியவானும் தரித்திரனும், ஒருவருக்கொ
ருவர் எதிர்ப்படுகிறார்கள்; அவர்களனைவரையும்
உண்டாக்கினவர் கர்த்தர்.
௩ [4]விவேகமுள்ளவன் தீங்கைக்கண்டு மறைகிறான்;
பேதைகளோ நெடுகப்போய்ச் சேதமடைகிறார்
கள்.
௪ தாழ்மைக்கும், கர்த்தருக்குப் பயப்படுதலுக்
கும் வரும்பலன் ஐசுவரியமும், மகிமையும், ஜீவ
னும்தானே.
௫ திரியாவரனுடைய வழியில் முள்ளுகளும்,
கண்ணிகளும் இருக்கும்; தன் ஆத்துமாவைக்
காக்கிறவன் அவைகளுக்குத் தூரமாய் விலகிப்
போவான்.
௬ வாலிபன் நடக்கவேண்டிய வழியிலே அவ
னை உட்படுத்து; அப்போது அவன் கிழவனாயும்
அதை விடாதிருப்பான்.
௭ ஐசுவரியவான் தரித்திரரை ஆளுகிறான்; கட
ன்வாங்கினவன் கடன்கொடுத்த மனுஷனுக்கு
அடிமை.
௮ அநியாயத்தை விதைக்கிறவன் வருத்தத்தை
அறுப்பான்; அவனுடைய உக்கிரத்தின் மிலாறு
ஒழியும்.

நற்கண்ணனே ஆசீர்வதிக்கப்படுவான்; ஏனெ ௯
னில் தன்அப்பத்தில் ஏழைக்குக் கொடுக்கிறான்.
சக்கந்தக்காரனைத் துரத்திவிடு; அப்போது ௰
வாது நீங்கி, வழக்கும் கனஈனமும் ஓய்ந்து
போம்.
[5]சுத்த இருதயத்தைச் சிநேகிக்கிறவனுடைய ௰௧
உதடுகள் இன்பமானவைகள்; இராசா அவன்
சிநேகிதன்.
கர்த்தருடைய கண்கள் அறிவைத் தற்காக் ௰௨
கும்; துரோகிகளின் வார்த்தைகளையோ அவர்
தடுமாற்றமாக்குகிறார்.
[6]வெளியிலே சிங்கமிருக்குமென்றும், வீதிக ௰௩
ளில் கொலையுண்பேனென்றும் சோம்பேறி
சொல்லுகிறான்.
[7]பரஸ்திரிகளின் வாய் ஆழமான படுகுழி; கர்த் ௰௪
தருடைய சினத்துக்கு எதுவானவன் அதிலே
விழுகிறான்.
பயித்தியம் வாலிபன் நெஞ்சுடனே ஒட்டியி ௰௫
ருக்கும்; அதைத் தண்டிப்பின் மிலாறு அவனை
விட்டு அகற்றும்.
தனக்கு அதிகம் உண்டாகத் தரித்திரனை ஒடுக் ௰௬
குகிறவன் குறைச்சலுண்டாகவே ஐசுவரியவா
னுக்குக் கொடுப்பான்.
உன் செவியைச் சாய்த்து, ஞானிகளின் வார்த் ௰௭
தைகளைக் கேட்டு, உன் இருதயத்தை என் அறி
வின்மேல் வை.—ஏனெனில் நீ அவைகளை உன் ௰௮
உள்ளத்திலே காத்தால் இன்பமாயிருக்கும்; அ
வைகள் உன் உதடுகளின்மேல் ஏகமாய் நிலைத்
திருக்கும். — உன் நம்பிக்கை கர்த்தரின்மேல் ௰௯
இருப்பதற்காக உனக்கு ஆம், உனக்குத்தானே
இன்றைத்தினம் அவைகளைத் தெரியப்படுத்து
கிறேன். — உனக்குச் சத்தியவார்த்தைகளின் உ௰
நிதானத்தைத் தெரியக்காட்டவும், நீ உன்னை
அனுப்பினவர்களுக்குச் சத்தியவார்த்தைகளைக்
கொண்டுபோய் மறுமொழி சொல்லவுமாக, —
உனக்கு நான் ஆலோசனைகளிலும், அறிவிலும் உ௧
மகா பிரதானமானவைகளை எழுதினதில்லை
யோ?
ஏழையை அவன் ஏழையானபடியினாலே கொ உஉ
ள்ளையிடாதே; சிறுமையானவனை வாசலில் நொ
றுக்காதே.—[8]ஏனெனில் கர்த்தர் அவர்கள் வழக் உ௩
கை வழக்காடி, அவர்களைக் கொள்ளையிடுகிறவர்
களின் ஆத்துமாவைக் கொள்ளையிடுவார்.
கோபக்காரனுக்குத் தோழனாகாதே; உக்கிர உ௪
முள்ள மனுஷனோடே நடவாதே —நீ அவன் உ௫
வழிகளைப் படிக்காமலும், உன் ஆத்துமாவுக்குக்
கண்ணியை வருவிக்காமலும் இருக்கத்தானே.
[9]கைபோட்டுக் கடன்களுக்காகப் பிணைப்படு உ௬
கிறவர்களில் ஒருவனாயிராதே.—செலுத்த உனக் உ௭
கில்லாதிருந்தால், உன்கீழிருக்கும் உன் மெத்
தையை அவர்கள் ஏன் எடுத்துக்கொள்ளவேண்
டும்.—[10]உன் பிதாக்கள் உண்டுபண்ணின பூருவ உ௮
எல்லையை ஒத்திக்கட்டாதே.

1 ஏசா. ௬. ௰௩.—2 பிர. ௭. ௧.
3 வாக்.உ௭.௰௨.—4 வாக்.௨௯.௰௩.
5 சங். ௯௩. ௬.—6 வாக். உ௬. ௰௩.
7 வாக். உ.௩. உ௭.
8 உ மோ. உஉ. உஉ, உ௩.
9 வாக். ௰௧. ௰௫: ௰௭. ௰௮.
10 வாக். உ௩. ௰. ௫ மோ. ௰௭. ௰௭.

௨௯ தன் கிரியையில் சுறுசுறுப்புள்ளவனைக் கண்டாயோ? அவன் நீசருக்கு முன்பாக நில்லாமல் இராசாக்களுக்குமுன்பாக நிற்பான்.

## ௨௩. அதிகாரம்.

௧ நீ ஒரு துரையோடே அசனம்பண்ண உளுக்காந்தால், உனக்குமுன்பாக இருக்கிறவன் யா
௨ ரென்று நற்சிந்தையாயிரு.—நீ போசனப்பிரியனாயிருந்தால், உன் தொண்டையில் கத்தியை
௩ வைத்திரு.–அவனுடைய உருசிவர்க்கங்களை இச்சியாதே; ஏனெனில் அது கள்ளப்போசனம்.
௪ [1]ஐசுவரியவானாகவேண்டுமென்று உழைக்காதே; அதற்கான உன்னுடைய விநயத்தை விட்டு
௫ விடு. — உன் கண்களை அதின்மேல் பறக்கவிடுவாயோ? அது இல்லாதேபோகிறதே, ஏனெனில் அது தனக்குக் கழுகைப்போல செட்டைகளை உண்டுபண்ணவே பண்ணி ஆகாயமாய்ப் பறந்
௬ துபோம். — வன்கண்ணனுடைய அப்பத்தைப் புசியாமலும், அவன் உருசிவர்க்கங்களை இச்சி
௭ யாமலும் இரு. — ஏனெனில் தன் மனதில் எப்படிக்கொத்த சிந்தையாயிருக்கிறானோ அப்படிக் கொத்தவனாய் அவன் உன்னுடனே புசித்துக் குடி என்பான்; அவன் இருதயமோ உன்னோடி
௮ ராது.—நீ சாப்பிட்ட உன் துணிக்கையை வாந்திபண்ணி, உன் இன்ப வார்த்தைகளை இழந்து போவாய்.
௯ மூடனுடைய செவிகள் கேட்கப் பேசாதே; ஏனெனில் உன் வசனங்களின் புத்தியை அசட்டைபண்ணுவான்.
௰ [2]பூருவ எல்லையை ஒத்திக்கட்டாமலும், திக்கற்றவர்களின் நிலங்களில் உட்படாமலுமிரு.–
௰௧ ஏனெனில் அவர்களை மீட்பவர் வல்லவர்; இவர் அவர்கள் வழக்கை உன்னோடே வழக்காடுவார்.
௰௨ உன் இருதயத்தைக் கடிந்துகொள்ளுதலுக்கும், உன் செவிகளை அறிவின் வார்த்தைகளுக்கும் உள்ளாக்கு.
௰௩ [3]வாலிபனைத் தண்டியாமலே இராதே; ஏனெனில் நீ மிலாற்றினால் அவனை அடிக்கிறதினா
௰௪ லே சாகான்.—நீ மிலாற்றினாலே அவனை அடிக்கையால் அவன் ஆத்துமாவை நரகத்திற்குத் தப்புவிப்பாய்.
௰௫ [4]என் மகனே, உன் இருதயம் ஞானமடைந்தால், என்னிலே என் இருதயமும் மகிழும்.—
௰௬ உன் உதடுகள் நிதானங்களைப் பேசினால் என் உள்ளிந்திரியங்களும் களிகூரும்.
௰௭ உன் இருதயம் பாவிகள்மேல் பொறாமை அடையாதிருப்பதாக; அதைவிட நாள்தோறும்
௰௮ கர்த்தருக்குப் பயப்படுதலிலே இரு.–ஏனெனில் பிற்காலம் வரும்; உன் பார்த்துக்கொள்ளுதல் அவத்தமாவதில்லை.
௰௯ என் மகனே, நீ கேட்டு ஞானமடைந்து, உன்
௨௰ இருதயத்தை வழிக்குள்ளாக்கிவிடு.–[5]மதுக் குடியரிலும், மாம்சப் பெருந்தீனிக்காரரிலும் ஒருவனாயிராதே. — ஏனெனில் குடியனும், பெருந்தீ ௨௧
னிக்காரனுமானவன் தரித்திரனாவான்; தூங்கல் கந்தைகளைத் தரிப்பிக்கும்.
நீ உன்னைப்பெற்ற உன் தகப்பன் சொல் ௨௨
கேட்டு, முதுமையாகிய உன் தாயை அசட்டை பண்ணாதிரு. — சத்தியத்தையும், ஞானம் புத்தி ௨௩
உணர்வையும் கொள்; அவைகளை விற்காதே.—
நீதிமானுடைய தகப்பன் மிகவும் களிகூருவான்; ௨௪
ஞானியைப் பெற்றவன் அவனாலே மகிழ்வான் -
உன் தகப்பனும் உன் தாயும் மகிழக்கடவார் ௨௫
கள்; உன்னைப் பெற்றவள் களிகூருவாளாக.
என் மகனே, உன் இருதயத்தை எனக்குத்தா; ௨௬
உன் கண்கள் என் வழிகளின்மேல் பிரியமாவ
தாக.–ஏனெனில் வேசி [6]ஆழமான படுகுழியும், ௨௭
அந்நிய ஸ்திரி இடுக்குத்துரவுமாய் இருக்கிறாள்.–
அவளும் கொள்ளைக்காரனைப்போலப் பதிவிரு ௨௮
ந்து, மனுஷரில் பாதகரை அதிகமாக்குகிறாள்.
யாருக்கு ஐயோ? யாருக்கு ஐயோ? யாருக்குச் ௨௯
சண்டைகள்? யாருக்கு விசாரம்? யாருக்குமுகாந்தரமில்லாத காயங்கள்? யாருக்கு இரத்தங்கலந்த
கண்களுமுண்டாயிருக்கும்?–மது இருக்கும் இ ௩௰
டத்திலே தங்கித்தரிக்கிறவர்களுக்கும், லொட்
டியைத் தேடப்போகிறவர்களுக்கும்தானே. —நீ ௩௧
மது நல்வர்ணமென்றும், பாத்திரத்திலே தன் உருவைக் காண்பிக்குமென்றும், மெதுவாய் இறங்கு
மென்றும் பாராதே. — அதின் பிறகு அது பாம் ௩௨
பைப்போலக் கடித்து, கட்டுவிரியனைப்போலத்
தீண்டும்.—உன் கண்கள் பரஸ்திரிகளை நோக்கி, ௩௩
உன் இருதயம் மாறுபாடுகளைப்பேசும்.—நீ நடுக் ௩௪
கடலிலே சயனித்திருக்கிறவனைப்போலும், பாய்மரத்தட்டிலே படுத்திருக்கிறவனைப்போலும்
இருப்பாய். — என்னை அடித்தார்கள்; எனக்கு ௩௫
நோவவில்லை; என்னைக் குட்டினார்கள்; எனக்குச் சுரணையில்லை; [7]நான் அதை அப்புறம் தொடர்ந்து தேட எப்போது விழிப்பேனென்பாய்.

## ௨௪. அதிகாரம்.

பொல்லாத[8] மனுஷர்மேல் பொறாமையாகா ௧
தே; அவர்களோடிருக்க ஆசையுமாய் இராதே.—
ஏனெனில், அவர்கள் இருதயம் பாழ்க்கடிப்பை ௨
யோசித்து, [9]அவர்கள் உதடுகள் தீவினையைப்
பேசும்.–வீடு ஞானத்தால் கட்டப்பட்டு, விவே ௩
கத்தால் நிலைநிறுத்தப்படும். — அறிவினாலே அ ௪
றைகள் சகலவித அருமையும் விருப்பமுமான ஆஸ்தியால் நிரப்பப்படும்.
ஞானமுள்ள மனுஷன் பெலனுள்ளவன்; அறி ௫
வுள்ள மனுஷன் தன் திராணியை உரமாக்கிக்
கொள்ளுகிறான். — ஏனெனில் நல்விவேகத்தா ௬
லே நீ உனக்கு வாய்க்க யுத்தம்பண்ணுவாயாக; அநேகம் ஆலோசனைக்காரரால் செயமாகும்.
[10]மூடனுக்கு ஞானமெல்லாம் எட்டாத உயர்ச் ௭
சியாய் இருக்கிறது; வாசலில் தன் வாயைத் திறவான்.

---

1 ௧ தீமோ. ௬. ௯. 2 வாக். ௨௨. ௨௮. 3 வாக். ௨௩. ௰௩.—4 வாக். ௨௭. ௰௧. 5 லூக். ௨௧. ௩௪. உரோ. ௰௩. ௰௩.

6 வாக். ௨௨. ௰௪. 7 எசா. ௫௬. ௰௨. 8 வாக். ௨௩. ௰௭.—9 சங். ௰. ௭. 10 வாக். ௰௪. ௰௪: ௨௰. ௰௮.

அ தீங்குசெய்ய நினைக்கிறவனைத் தீவினைக்காரன்
என்பார்கள்.
கூ பயித்தியச்செயல் பாவம்தான்; சரசக்காரனே
மனுஷருக்கு அருவருப்பானவன்.
ய நெருக்கத்தின் நாளில் இளக்கரித்துப்போனா
யானால் உன் திராணி கொஞ்சமாயிருக்கும்.
யக [1]மரணத்திற்கு இழுப்புண்கிறவர்களையும், கொ
லைக்குக் கொண்டுபோகப்படுகிறவர்களையும் அ
தற்கு விலக்க உன்னாலே கூடுமானால் அவர்க
யஉ ளைவிடுவி.—இதோ அவனை அறியோமென்றா
யாகில், [2]இருதயங்களை நிறுக்கிறவர் அதை உண
ராரோ? உன் ஆத்துமாவைக் கவனிக்கிறவர்
அதை அறியாரோ? அவர் மனுஷனுக்கு அவன்
செய்கைக்குத்தக்கதாய்ச் சரிக்கட்டாரோ?
யங என் மகனே[6] தேனைச் சாப்பிடு; ஏனெனில்
அது நல்லது; தேன்கூட்டொழுகல் உன் வாய்க்
யச கு இன்பருசியாய் இருக்கும்.—அப்படியே [3]ஞா
னத்தை உன் ஆத்துமாவுக்கானதென்று அறிந்
துகொள்; அதைக் கண்டுபிடித்தால் அது பிற்
காலத்தில் உதவும்; உன் பார்த்துக்கொள்ளுதல்
அவத்தமாவதுமில்லை.
யரு நீ ஆகாதவனாய் நீதிமானின் வாசஸ்தலத்திற்
குப் பதிவிராதே; அவன் படுக்கையைப் பாழ்க்
யசு கடிக்காதே. — ஏனெனில் [4]நீதிமான் எழுதரம்
விழுந்தும் எழுந்திருப்பான்: ஆகாதவர்களோ
யஎ தீங்கிலே இடறுண்டு கிடப்பார்கள்.—[5]உன் சத்
துரு விழுகிறபோது சந்தோஷியாதே; அவன்
இடறுண்டு போகிறபோது உன் இருதயம் களி
யஅ கூராதிருப்பதாக. — கர்த்தர் கண்டு, அது அவர்
பார்வைக்குப் பொல்லாப்பாயிருக்கையால், அ
வர் தமது கோபத்தை அவனைவிட்டுத் திருப்பி
யகூ விடாதபடிக்குத்தானே. — [6]பொல்லாதவர்கள்
மேல் எரிச்சலாகாதிரு; ஆகாதவர்கள்மேல் பொ
உய றாமையாகாதிரு.—ஏனெனில் பொல்லாதவனுக்
கு நல் முடிவில்லை; [7]ஆகாதவர்களின் விளக்கு
அவியும்.
உக என் மகனே, [8]கர்த்தருக்கும் இராசாவுக்கும்
பயந்து நட; பின்னபேதகரோடே கலவாதிரு.—
உஉ ஏனெனில் அசுப்பிலே இவர்களுடைய ஆபத்து
எழும்பும்; இவர்கள் இருவரின் சங்காரத்தை அ
றிந்தவன் யார்?
உங பின்னையும் ஞானமுள்ளவர்களுக்குப் புத்தி
மதிகள் என்னவெனில், நியாயத்திலே முகதாட்
உச சிணியம் நல்லதல்ல. — ஆகாதவனுக்கு நீதிமா
னென்று சொல்லுகிறவனைச் சனங்கள் சபிப்
பார்கள்; சனசதளங்கள் அவனை வெறுப்பார்
உரு கள்.—அவனைக் கடிந்துகொள்ளுகிறவர்களின்
மேல் பிரியமுண்டாம்; இவர்கள்மேல் நன்மை
யின் ஆசீர்வாதம் வரும்.
உசு செம்மையான மறுஉத்தரவு சொல்லுகிறவன்
உதடுகளை முத்தஞ்செய்கிறவனுக்குச் சரி.
உஎ நீ வெளியிலுள்ள உன் வேலையைச் சேகர
மாக்கி, வயலிலுள்ள அதை உனக்குப் பணிக்
காய் வை; பிறகு உன் வீட்டைக் கட்டு
வீணாய் நீ உனக்கடுத்தவனுக்கு விரோதமாகச் உஅ
சாட்சியாகாதிரு; உன் உதடுகளால் நீ பயிற்று
விக்காமலும் இரு. — [9]எனக்கு எப்படிச் செய் உகூ
தானோ அப்படி அவனுக்குச் செய்வேன், அவ
னவனுக்கு அவன் கிரியைக்குத்தக்கதாய்ச் சரிக்
கட்டுவேனென்னாதே.
நான் சோம்பற்காரன் வயலையும், மதியில்லா ஙய
மனுஷனுடைய திராட்சத்தோட்டத்தையும் கட
ந்துவந்தேன்.-இதோ அவை எல்லாம் முட்காடு ஙக
மாய் அதின் தரை காஞ்சொறிகளால் மூடப்பட்
டு, அதின் கற்சுவர் இடிந்ததுமாய்க் கிடந்தன. —
நான் அதைக் கண்டு, என் சிந்தனையை அதின் ஙஉ
மேல் வைத்து, அதைப்பார்த்துப் புத்தியைக் கற்
றுக்கொண்டேன்.—[10]இன்னம் கொஞ்சம் தூக்க ஙங
ங்களும் இன்னம் கொஞ்சம் உறக்கங்களும், சய
னிப்புக்கு இன்னம் கொஞ்சம் கைகட்டிக்கொ
ள்ளுதலுமோ?—அப்படியானால் உன் தரித்திரம் ஙச
வழிப்போக்கனைப்போலவும், உன் குறைச்சல்
கள் ஆயுதமணிந்தவனைப்போலவும் வரும்.

## உரு. அதிகாரம்.

க. இராசாக்களைக்குறித்தது. அ. சண்டைகளையும், அவற்றின் காரணங்களையும் விலகும்படி சொல்லியது.

இவைகளும் சாலோமோனின் வாக்கியங்கள்; க
இவைகளை யூதாவின் இராசாவாகிய எசேக்கியா
வின் மனுஷர் பேர்த்தெழுதிச் சேர்த்தார்கள்.
காரியத்தைப் புதைபொருளாக்குதல் பராபர உ
னுடைய மேன்மை: காரியத்தை ஆராய்தல் இரா
சாக்களுடைய மேன்மை.
வானத்தின் உயரத்திற்கும், பூமியின் ஆழத்திற் ங
கும், இராசாக்களின் இருதயங்களுக்கும் ஆராய்
தலில்லை.
வெள்ளியில் இருக்கிற மஷ்டுகளை நீக்கிவிடு, ச
அப்போது தட்டானாலே நல்ல உடைமை பிற
க்கும்.
இராசாவுக்கு முன்பாக இருக்கிற ஆகாதவனை ரு
நீக்கிவிடு; அப்போது அவன் ஆசனம் [11]நீதியா
லே நிலைக்கும்.
இராசாவுக்குமுன்பாகச் சிலாக்கியம்பண்ணா சு
தே; பெரியோர்களின் இடத்திலும் நில்லாதே.—
[12]ஏனெனில் உன் கண்கள் பார்த்துக்கொண்டி எ
ருந்த பிரபுக்குமுன்பாக அவர் உன்னைத் தாழ்த்து
வதைப்பார்க்கிலும், இங்கே ஏறிவா என்று உன்
னோடே சொல்வதே நல்லது.
கடைசியில் உனக்கு அடுத்தவன் உன்னை அ
வெட்கப்படுத்தும்போது, நீ என்ன செய்யலா
மென்று திகையாதபடிக்கு வழக்காடத் தீவிர
மாய்ப் புறப்படாதிரு.— நீ உனக்கு அடுத்தவ கூ
னோடே உன் வழக்கை வழக்காடியும் மற்றவ
னுடைய இரகசியத்தை வெளியாக்காதே —
கேட்கிறவன் உன்னை, உன் அவதூறு திரும்பாத ய
படியாய் நிந்திக்காமலிருக்கத்தானே.

1 சங். அஉ ச.—2 எரே. யஎ. ய. சங். கச. உய.—5 யோபு. கக. 3 சங். யக. யக.—4 யோபு. இ.யகூ. உக.—6 சங். கஎ. க.

7 வாக். யக. கூ.—8 க பே உ.யஎ. 11 வாக். யக. யஉ.—12 லூக் யச. 9 வாக். உய. உஉ.—10 வாக். சு. ய, யக அ யக.

யக தன்தன் சமயத்திலே [1]சொல்லப்பட்ட வார்த்
தை வெள்ளித்தட்டுகளில் வைக்கப்பட்ட பொ
ன்னிறக் கொஞ்சிப்பழங்களுக்கு ஒப்பானது.
யஉ கேட்கிற செவிக்கு ஞானமாய்க் கடிந்துகொ
ண்டு சொல்லுகிறவன் பொற்கடுக்கனுக்கும், அ
பரஞ்சிப் பூஷணத்திற்கும் சரி.
யங கோடை நாளிலே உறைந்த மழையின் குளிர்
ச்சி எப்படியிருக்கிறதோ, அப்படி உண்மை
யுள்ள தானாபதி தன்னை அனுப்பினவர்களுக்கி
ருந்து தன் எசமானன்களின் ஆத்துமாவைக் குளி
ரப்பண்ணுகிறான்.
யச கள்ள வாக்குத்தத்தங்களைப் பண்ணிப் பெரு
மைபாராட்டுகிற மனுஷன் மழையில்லாத மே
கங்களுக்கும் காற்றுக்கும் சரி.
யரு நீண்ட சாந்தத்தினால் பிரபு சம்மதமாக்கப்படு
வான்; [2]மெத்தனவான நாவு எலும்பை நொ
றுக்கும்.
யசு தேனைக் கண்டுபிடித்தாயானால், நீ அதினாலே
திருப்தியாகி, அதை வாந்திபண்ணாதபடிக்கு
உனக்குப் போந்தமட்டாய்ச் சாப்பிடு.
யஎ உனக்கடுத்தவன் உன்மேல் வெறுப்பாகி,உன்
னைப் பகையாதபடிக்கு, உன் காலை அவன் வீட்
டில் மிச்சமாய்ப் போகவொட்டாதிரு.
யஅ தனக்கடுத்தவன்மேல் பொய்ச்சாட்சி சொல்
லுகிற மனுஷன் சுத்தியலுக்கும், பட்டையத்துக்
கும், கூர்மையான அம்புக்கும் சரி.
யகூ இடுக்கணின் நாளிலே துரோகியை நம்புதல்
உடைந்த பல்லுக்கும், தள்ளாடுகிற காலுக்கும்
சரி.
உய துக்கனுபவிக்கிற இருதயத்திற்குப் பாட்டுக
ளைப் பாடுகிறவன் குளிர்நாளிலே வஸ்திரத்தைக்
களைகிறவனைப்போலவும், வெடியுப்பின்மேல்
வார்த்த காடியைப்போலவும் இருக்கிறான்.
உக உன்[3] பகைஞனுக்குப் பசியிருந்தால் அவனுக்
கு அப்பம் சாப்பிடக்கொடு; அவனுக்குத் தாகமி
ருந்தால் அவனுக்குத் தண்ணீர் குடிக்கக்கொடு.
உஉ ஏனெனில் அப்படி அவன் தலையின்மீதில் நீ
எரிகிற கரிகளைக் குவிப்பாய்; கர்த்தரும் உனக்கு
ஈடளிப்பார்.
உங வாடைக்காற்று மழையையும் புறணிநாவு கோ
பமுகத்தையும் பிறப்பிக்கும்.
உச [4]சண்டைக்காரியோடே கூட ஓர் வீட்டிலே
குடியிருப்பதைப்பார்க்கிலும், வீட்டின்மீதில்
ஒரு மூலையில் தங்குகிறதே நலம்.
உரு தூரதேசத்திலிருந்து வருகிற நற்செய்தி வி
டாய்த்த ஆத்துமாவிற்குக் கிடைக்கும் குளிர்ந்த
தண்ணீருக்குச் சரி.
உசு ஆகாதவனுக்கு முன்பாகத் தள்ளாடுகிற நீதி
மான் கலங்கின ஊற்றுக்கும், கெட்டுப்போன
சுனைக்கும் சரி.
உஎ மிச்சமாய்த் தேனைச் சாப்பிடுகிறது நல்லதல்ல;
ஞானகாரியங்களின் மகிமையை ஆராய்கிறதோ
மகிமை.

1 வாக். யரு. உங. 2 வாக். யரு. க. 3 மத். ரு. சச. உரோ. யஉ. உய,உக. 4 வாக். உக. கூ.

தன் ஆவியை அடக்காத மனுஷன் மதிலில் உஅ
லாத இடிதல் பட்டணத்துக்குச் சரி.

## உசு. அதிகாரம்.

க. மூடரையும். யங. சோம்பேறிகளையும், யஎ. போராட்டக்காரரையும் குறித்துச் சொல்லியது.

வசந்தகாலத்திலே உறைந்த மழையும், அறுப் க
பிலே மாரியும் ஒவ்வாததுபோல மூடனுக்கு மகி
மையும் ஒவ்வாதிருக்கும்.
குருவி அலைந்து, காட்டுப்புறா பறந்துபோ உ
கிறதுபோலே முகாந்தரமில்லாமல் இட்ட சா
பம் வராதேபோகிறது.
குதிரைக்குச் சவுக்கும், கழுதைக்குக் கடிவா ங
ளமும், மூடரின் முதுகுக்கு மிலாறும் ஆனது.
[5]நீயும் மூடனுக்கு ஒப்பாகாதபடிக்கு, அவன் ச
பயித்தியத்தின்படி அவனுக்கு மறு உத்தரவு
சொல்லாதிரு.
மூடன் தன் பார்வைக்கு ஞானியாயிராதப ரு
டிக்கு, அவன் பயித்தியத்தின்படி அவனுக்கு
மறு உத்தரவு சொல்லாதிரு.
மூடன் கையிலே செய்தி அனுப்புகிறவன் சு
தன் கால்களைத் தறித்து நஷ்டத்தைக் குடிக்கி
றான்.
நொண்டியின் கால்கள் குந்திக்குந்தி நடக்கு எ
மாப்போலே மூடரின் வாயிலுள்ள உவமைச்
சொல்லும் குந்தும்.
மூடனுக்குக் கனம்கொடுக்கிறவன் கவணிலே அ
கல்லை வைக்கிறவனைப்போல இருக்கிறான்.
மூடர் வாயிலுள்ள பழமொழி வெறியன் கை கூ
யிலே அகப்பட்ட முள்.
பெலத்தவன் அனைவரையும் நோகப்பண்ணி, ய
மூடனையும் வேலைகொள்ளுகிறான்; மீறிநடக்
கிறவர்களையும் வேலைகொள்ளுகிறான்.
[6]தன் பயித்தியத்திலே மறுபடியும் உள்ளாகிற யக
மூடன் தான் கக்கினதற்குத் திரும்புகிற நாயை
ப்போல இருக்கிறவன்.
[7]தன் பார்வைக்கு ஞானியாகிய மனுஷனைக் யஉ
கண்டாயே, அவனைப்பார்க்கிலும் மூடன்மே
லே அதிக நம்பிக்கையிருக்கலாம்.
வழியிலே துஷ்ட சிங்கம் இருக்குமென்றும், யங
நடுவீதிகளிலே சிங்கம் இருக்குமென்றும் சோம்
பேறி சொல்லுவான். — [8]கதவு தன் முளையிலே யச
ஆடுமாப்போலே, சோம்பேறி தன் படுக்கையி
லிருக்கிறான். [9]–சோம்பேறி தன் கையைக் கலத் யரு
திலே போட்டுவிட்டு, அதைத் தன் வாய்க்குத் தி
ரும்ப எடுக்க விடாய்க்கிறான்.–புத்தியுள்ள மறு யசு
உத்தரவு சொல்லுகிற ஏழுபேரைப்பார்க்கிலும்
சோம்பேறி தன் பார்வைக்கு ஞானமுள்ளவன்.
வழிநடந்து தனக்கு அடாதவழக்குக்கு உள்ப் யஎ
பட்டு, உக்கிரமாகிறவன் ஒரு நாயின் காதுகளைப்
பிடிக்கிறவனைப்போல இருக்கிறான்.—விளையா யஅ
டுகிறவனைப்போலே காண்பித்து, நெருப்புகளை
யும், அம்புகளையும், சாவுக்கினமானவைகளையும்
எறிகிறவன் எப்படியிருக்கிறானோ, — அப்படி யகூ

5 வாக். ய. யச. 6 உ பே. உ. உஉ. 7 உரோ. யஉ. யசு.—8 வாக். உஉ. யங.—9 வாக். யகூ. உச.

யே தனக்கடுத்தவனை வஞ்சித்து, நான் பரியாச
மல்லவோ பண்ணினேனென்று சொல்லுகிற
மனுஷனும் இருக்கிறான்.
௨௰ விறகில்லாமல் நெருப்பு அவியும்; பின்புற
ணிக்காரன் இல்லாமல் சண்டை அடங்கும். —
௨௧ கரிகள் தழலுக்கும், விறகு நெருப்புக்கும் இன
மானதுபோல, வழக்குக்காரன் சண்டையை மூ
௨௨ ட்டுகிறதற்கு இனமானவன்.—[1]பின்புறணிக்கா
ரன் வார்த்தைகள் பரியாசச்சொற்களைப்போலி
ருக்கும்; ஆனால் அவர்கள் வயிற்றுக்குள்ளிறங்
கும்.
௨௩ இருதயம் பொல்லாததாகியும், நேச அனலைக்
காண்பிக்கிற உதடுகள் கலப்பிடமான வெள்
௨௪ ளிப்பூச்சு மூடிய ஓட்டுக்குச் சரி.—பகைஞன்
தன் உதடுகளாலே வேறே காண்பித்தும் தன்
௨௫ உள்ளத்திலே கபடம்வைக்கிறான்.-அவன் தன்
சத்தத்தைத் தயையாக்கினாலும் அவனை நம்பா
திரு; ஏனெனில் ஏழு அருவருப்புகள் அவன்
இருதயத்திலிருக்கும்.
௨௬ அவன் பகை கபடமாய் மறைக்கப்பட்டிருக்
கிறது; ஆனால் சபையிலே அவன் பொல்லாங்கு
௨௭ வெளிப்படும்.—[2]படுகுழி வெட்டுகிறவன் அதி
லே விழுவான்; கல்லைப் புரட்டுகிறவன்மேலே
௨௮ தானே அது திரும்பும். — கள்ளநா தன்னாலே
உபத்திரவப்படுகிறவர்களைப் பகைக்கும்; இச்ச
கவாய் இடறுதலை உண்டுபண்ணும்.

## ௨௭. அதிகாரம்.

௧. தற்சிநேகத்தையும், ௫. உண்மையான அன்பையும், பொல்லாங்குக
ளுக்கு விலகுதலின் எச்சரிப்பையும், ௨௩. குடும்ப விசாரணையையும்
குறித்துச் சொல்லியது.

௧ **நா**ளைத்தினத்தைத்தொட்டுப் [3]பெருமைபாராட்
டாதே; ஏனெனில் ஒருநாள் பிறப்பிப்பதை
அறியாய்.
௨ உன் வாயல்ல பிறத்தியானும், உன் உதடுக
ளல்ல அந்நியனுமே உன்னைப் புகழட்டும்.
௩ கல் கனமும், மணல் பாரமுமாமே; பயித்தி
யக்காரனுடைய சினமோ, அவ்விரண்டிலும்
பாரமாயிருக்கிறது.
௪ உக்கிரம் கடூரமும், கோபம் பிரளயமுமாயி
ருக்கிறது; ஆனால் எரிச்சலின்முன் நிற்பவன்
யார்?
௫ மாயமான சிநேகத்தைப்பார்க்கிலும், வெளி
யரங்கமான அதட்டுதல் நாவிளை.
௬ [4]சிநேகிதனுடைய அடிகள் உண்மையுள்ள
வைகள்; ஆனால் பகைஞனுடைய முத்திகள்
வேண்டாமென்னப்படத்தக்கவைகள்.
௭ திருப்தியான ஆத்துமா தேன் கூட்டையும்
மிதிக்கும்; பசியுள்ள ஆத்துமாவுக்கோ கசப்
பெல்லாம் தித்திப்பாயிருக்கும்.
௮ தன் கூட்டைவிட்டு அலையும் குருவி எப்படி
யிருக்கிறதோ, அப்படித் தன் தானத்தைவிட்டு
அலைகிற மனுஷன் இருக்கிறான்.
௯ பரிமளதயிலமும், சுகந்த புகையும் இருத
யத்தைச் சந்தோஷிப்பிக்கிறதுபோல, ஒருவனு
டைய சிநேகிதனது இன்பம் உட்கருத்தான
யோசனையினால், அவனைச் சந்தோஷப்பிக்கும்.
உன் சிநேகிதனையும், உன் தகப்பனுடைய ௰
சிநேகிதனையும் விடாதே; [4]உன் ஆபத்தின் நா
ளில் உன் சகோதரன் வீட்டிலே போகாமலும்
இரு; தூரமான சகோதரனைப்பார்க்கிலும் சமீப
மான அயலான் வாசி.
என் மகனே, என்னை நிந்திக்கிறவனுக்குச் ௰௧
சொல்லத்தக்க மறுஉத்தரவு எனக்குண்டாக, நீ
ஞானம் அடைந்து, [6]என் இருதயத்தைச் சந்தோ
ஷப்படுத்து.
[7]விவேகமுள்ளவன் தீங்கைக்கண்டு மறைகிறான்; ௰௨
பேதைகளோ நெடுகப்போய்ச் சேதமடைகிறார்
கள்.
[8]அந்நியனுக்காகப் பிணைப்பட்டவனுடைய ௰௩
வஸ்திரத்தை எடுத்துக்கொள்; பிறத்தியாளுக்காக
அவன் கையில் அடகுவாங்கு.
காலமே எழுந்து மகா சத்தத்தோடே தனக்க ௰௪
டுத்தவனை ஆசீர்வதிக்கிறவனுக்கு அது சபிக்கு
தலாக எண்ணப்படும்.
[9]அடைமழைநாளில் ஓயாத ஒழுக்கும், சண் ௰௫
டைக்காரியான ஸ்திரியும் ஒன்றுக்கொன்று
சரி.—அவளை ஒளிக்கிறவன் காற்றை அடக்கி, ௰௬
தன் வலதுகையிலே எண்ணெயைப் பிடிப்
பான்.
இரும்பை இரும்பு கருக்கிடும்; அப்படியே ௰௭
மனுஷன் தனக்கடுத்தவனுடைய முகத்தைக்
கருக்கிடுகிறான்
அத்திமரத்தைக் காக்கிறவன் அதின் கனி ௰௮
யைப் புசிப்பான்; தன் எசமானனைக் காக்கிற
வன் கனம் அடைவான்.
தண்ணீரில் முகங்களுக்கு முகங்கள் ஒத்தி ௰௯
ருக்குமாப்போலே, மனுஷனுக்கு மனுஷன் இரு
தயம் ஒத்திருக்கும்
பாதாளமும், அழிவும் திருப்தியாகிறதில்லை; ௨௰
[10]மனுஷனுடைய கண்கள் திருப்தியாகிறதும்
இல்லை.
வெள்ளிக்குப் புடமும், பொன்னுக்குக் கு ௨௧
கையும், மனுஷனுக்கு அவனுக்குண்டாம் பு
கழ்ச்சியும் சோதனை.
நீ உலக்கையாலே பயித்தியக்காரனை உரலில் ௨௨
நொய்க்குள்ளே நொய்யாகக் குத்தினாலும் அ
வன் பயித்தியம் அவனைவிட்டுப் பிரியாது.
உன் ஆடுகளின் இருப்பை நன்றாய் அறிந்து ௨௩
கொள், மந்தைகளின்மேல் உன் கவனத்தை
வை.—ஏனெனில் ஆஸ்தி என்றைக்கும் நிற்கா ௨௪
து; கிரீடம் தலைமுறைதலைமுறையாக இருக்கு
மோ? — புல்முளைத்துப் பச்சைகள் காணப்ப ௨௫
டும்போது, மலைகளின் பூண்டுகள் சேர்க்கப்பட
லாமே.—ஆட்டுக்குட்டிகள் உனக்கு உடுப்பை ௨௬
யும், கடாக்கள் வயலைச் சம்பாதிக்கும் விலையை
யும் கொடுக்கும்.—வெள்ளாடுகளுடைய பால் ௨௭

1 வாக். ௰௮. ௮.
2 சங். ௭. ௰௫. பிர. ௰. ௮.
3 யாக். ௪. ௰௩. ௰௪.—4 சங். ௱௪௧. ௫.
5 வாக். ௰௭. ௰௭: ௰௮. ௨௪.
6 வாக். ௨௩. ௰௫.
7 வாக். ௨௨. ௩.
8 வாக். ௨௰. ௰௬.—9 வாக். ௰௯. ௰௩.
10 பிர. ௧. ௮.

உன் ஆகாரத்துக்கும், உன் வீட்டாரின் ஆகாரத்துக்கும், உன் வேலைக்காரிகளின் பிழைப்புக்கும் போதும்.

## ௨௮. அதிகாரம்.

அவபத்தியையும், பத்தியையும் குறித்துச்சொல்லியது.

௧ ஆகாதவர்கள் தொடருவார் ஒருவரும் இல்லாமல் [1]ஓடிப்போகிறார்கள்; நீதிமான்களோ சிங்கத்தைப்போலே திடனாயிருக்கிறார்கள்.

௨ தேசத்தின் மீறுதலினாலே அதின் அதிகாரிகள் அநேகராயிருக்கிறார்கள்; உணர்வும், அறிவுமுள்ள மனுஷனாலோ நற்சீர் நீடிக்கும்.

௩ ஏழைகளை ஒடுக்குகிற தரித்திரன் ஆகாரம் விளையாதபடிக்கு வெள்ளம் அடிக்கப்பண்ணுகிற மழைக்குச் சமானம்.

௪ நியாயப்பிரமாணத்தை விடுகிறவர்கள் ஆகாதவனைப் புகழ்கிறார்கள்; நியாயப்பிரமாணத்தைக் காக்கிறவர்களோ அவர்களோடே போராடுகிறார்கள்.

௫ பொல்லாத மனுஷர் நியாயத்தை உணரார்கள்; கர்த்தரைத் தேடுகிறவர்களோ சகலத்தையும் உணருகிறார்கள்.

௬ [2]இருவழித் திரியாவரக்காரனாகிய ஐசுவரியவானைப்பார்க்கிலும், தன் உத்தமத்திலே நடக்கிற தரித்திரனே வாசி.

௭ நியாயப்பிரமாணத்தைக் கைக்கொள்ளுகிறவன் உணர்வுள்ள மகன்; பெருந்தீனிக்காரருக்குத் தோழனானவனோ தன் தகப்பனை அவமானப்படுத்துகிறான்.

௮ அநியாய வட்டியினாலும், ஆதாயத்தினாலும் தன் ஆஸ்தியைப் பெருகப்பண்ணுகிறவன் தரித்திரருக்கு இரங்குகிறவனுக்கு அதைச் சேர்க்கிறான்.

௯ வேதத்தைக் கேளாதபடிக்குத் தன் செவியை விலக்குகிறவனுடைய செபமும் அருவருப்பு.

௰ செம்மையானவர்களைப் பொல்லாத வழிக்கு உள்ளாக்கி மோசம்போக்குகிறவன் தன் படுகுழியிலேதானே விழுவான்; உத்தமரோ நன்மையைச் சுதந்தரிப்பார்கள்.

௰௧. ஐசுவரியமுள்ள மனுஷன் தன் பார்வைக்கு ஞானமுள்ளவன்; உணர்வுள்ள தரித்திரனோ அவனை ஆராய்ந்துகொள்ளுவான்.

௰௨ [3]நீதிமான்கள் களிகூரும்போது மகா சிங்காரமாயிருக்கும்; ஆகாதவர்கள் எழும்பும்போதோ மனுஷன் தென்படுகிறது அரிது.

௰௩ [4]தன் மீறுதல்களை மறைக்கிறவன் சீர்படுகிறதில்லை; அவைகளை அறிக்கையிட்டு விட்டுவிடுகிறவனோ இரக்கம்பெறுவான்.

௰௪ எப்போதும் பயந்திருக்கிறவன் பாக்கியவான்; தன் நெஞ்சைக் கடினப்படுத்துகிறவனோ தீங்கிலே விழுவான்.

௰௫ ஏழைச்சனத்தை ஆளுகிற ஆகாத துரை கெர்ச்சிக்கிற சிங்கத்துக்கும், சுற்றித்திரிகிற கரடிக்கும் சமானம்.

தலைவன் உணர்வுத்தாழ்ச்சியாயிருந்தால், இடுக்கண்களைச் செய்வது மிகுதி; பொருளாசையைப் பகைக்கிறவன் நீடித்தநாள் இருப்பான். ௰௬

ஒரு ஆத்துமாவின் இரத்தப் பழிக்காக ஒடுக்கப்படுகிற மனுஷன் குழியில் ஒதுங்க ஓடிவந்தால் அவனை ஆதரிக்கவேண்டாம். ௰௭

உத்தமமாய் நடக்கிறவன் இரட்சிக்கப்படுவான்; இருவழித்திரியாவரனோ ஒன்றிலே விழுவான். ௰௮

[5]தன் நிலத்தைப் பயிரிடுகிறவன் அப்பத்தாலே திருப்தியாவான்; வீணரைப் பின்பற்றுகிறவனோ தரித்திரத்தைத் திருப்தியாய் அடைவான். ௰௯

நல் உண்மையுள்ள மனுஷன் பரிபூரண ஆசீர்வாதங்களோடே இருப்பான்; [6]ஐசுவரியவானாகிறதற்குத் தீவிரிக்கிறவனோ ஆக்கினைக்குத் தப்பான். ௨௰

முகதாட்சிணியம் நல்லதல்ல; ஒரு அப்பத்துணிக்கையின்நிமித்தமும் அப்படிக்கொத்த மனுஷன் அநியாயஞ்செய்வான். ௨௧

வன்கண்ணன் ஆஸ்தியை அடையப் பதறிக் குறைச்சல் தனக்கு வருமென்று அறியாதிருக்கிறான். ௨௨

நாவினால் இச்சகம் பேசுகிறவனைப்பார்க்கிலும், ஒரு மனுஷனைக் கடிந்துகொள்ளுகிறவனுக்கே பிறகு தயை கிடைக்கும். ௨௩

தன் தகப்பனையும், தன் தாயையும் கொள்ளையிட்டு, அது துரோகமல்லவென்பவன் பாழ்க்கடிக்கிற மனுஷனுக்குத் தோழன். ௨௪

பெருநெஞ்சன் வழக்கைக் கொளுவுகிறான்; கர்த்தரை நம்புகிறவனோ புஷ்டியடைவான். ௨௫

தன் இருதயத்தை நம்புகிறவன் நின்மூடன்; ஞானத்திலே நடக்கிறவனோ தப்புவான். ௨௬

[7]தரித்திரனுக்குக் கொடுக்கிறவனே தாழ்ச்சியடையான்; தன் கண்களை விலக்குகிறவனுக்கோ வெகு சாபங்கள் வரும். ௨௭

ஆகாதவர்கள் எழும்பும்போது மனுஷன் ஒளிக்கிறான்; அவர்கள் அழியும்போதோ நீதிமான்கள் பெருகுகிறார்கள். ௨௮

## ௨௯. அதிகாரம்.

௧. துரைத்தன அதிகாரத்தையும், ௰௫ குடும்பவிசாரணையையும், ௨௨. கோபம், பெருமை, கள்ளம், அச்சம், கெடுதிகளையும் குறித்துச் சொல்லியது

வெகுவாய் அதட்டப்பட்டும் தன் பிடரியைக் கடினப்படுத்துகிற மனுஷன் சடிதியிலும், குணமாகுதல் இல்லாமலும் நொறுங்குண்பான். ௧

[8]நீதிமான்கள் பெருகினால் சனம் மகிழும்; ஆகாதவன் ஆளும்போதோ சனம் தவிக்கும். ௨

ஞானத்தைச் சிநேகிக்கிற மனுஷன் தன் தகப்பனை மகிழப்பண்ணுகிறான்; வேசிகளோடே தொந்திப்பானவனோ ஆஸ்தியை அழிக்கிறான். ௩

நியாயத்தாலே இராசா தேசத்தை நிலைநிறுத்துகிறான்; பரிதானப்பிரியனோ அதைக் கவிழ்க்கிறான். ௪

1 ௩ மோ. ௨௬. ௩௬.—2 வாக். ௰௯. ௧.—3 வாக். ௨௯. ௨.—4 ௪ யோ. ௧. ௮, ௯.—5 வாக். ௰௨. ௰௧.—6 வாக். ௨௰. ௨௧.—7 ௫ மோ ௰௫. ௰.—8 வாக். ௰௧. ௰.

௫ தனக்கடுத்தவனுக்கு இச்சகம்பேசுகிற மனுஷன் அவன் காலடிகளுக்கு வலையை விரிக்கிறவன்.

௬ பொல்லாத மனுஷனுடைய துரோகத்திலே கண்ணியிருக்கிறது; நீதிமானோ கெம்பீரித்து மகிழுகிறான்.

௭ நீதிமான் ஏழைகளின் நியாயத்தை அறிந்துகொள்ளுகிறான்; ஆகாதவன் அறிவை உணரான்.

௮ சரசக்காரராகிய மனுஷர் ஊரை ஊதி எடுத்துவிடுகிறார்கள், ஞானிகளோ கோபத்தை விலக்குகிறார்கள்.

௯ பயித்தியக்காரனோடே வழக்காடுகிற ஞானமுள்ள மனுஷன் சினந்தாலும், சிரித்தாலும் இளைப்பாறுதலில்லை.

௰ இரத்தப்பிரியர் உத்தமனைப் பகைக்கிறார்கள்; செம்மையானவர்களோ அவன் ஆத்துமாவை விசாரிக்கிறார்கள்.

௰௧ மூடன் தன் ஆவியை எல்லாம் வெளிப்படுத்துகிறான்; ஞானியோ அதைப் பின்னுக்கு அடக்குகிறான்.

௰௨ துரை பொய்விசேஷத்தைக் கவனிக்கிறவனானால் அவன் ஊழியக்காரர் எல்லாரும் ஆகாதவர்கள்.

௰௩ தரித்திரனும், தந்திரக்காரனும் ஒருவருக்கொருவர் எதிர்ப்படுகிறார்கள்; இவர்கள் இருவர் கண்களுக்கும் கர்த்தர் வெளிச்சம் கொடுக்கிறார்.

௰௪ ஏழைகளை உண்மையாய் நியாயம்விசாரிக்கிற இராசாவின் ஆசனம் என்றும் திடனாயிருக்கும்.

௰௫ மிலாறும், கடிந்துகொள்ளுதலும் ஞானமடைவிக்கும்; தன் இச்சையாய் விடப்பட்ட வாலிபனோ தாயை வெட்கப்படுத்துகிறான்.

௰௬ ஆகாதவர்கள் பெருகினால் மீறுதல் பெருகும்; ஆனால் நீதிமான்கள் அவர்கள் விழுதலில் சரிக்குச்சரிகட்டுதலைக் காண்பார்கள்.

௰௭ [2]உன் மகனைத் தண்டி; அப்போது அவன் உன்னை முசிப்பாறப்பண்ணி, உன் ஆத்துமாவுக்குப் பரிபூரணச் செல்வத்தை உண்டாக்குவான்.

௰௮ தீர்க்கதரிசனம் இல்லாமையால் சனம் சீர்கெட்டுப்போம்; வேதத்தைக் காக்கிறவனோ பாக்கியவான்.

௰௯ வார்த்தைகளினாலே அடிமை அடங்கான்; ஏனெனில் அவைகளை உணர்ந்தும் மறு உத்தரவு சொல்லான்.

௨௰ [3]தன் வார்த்தைகளில் பதறுகிற மனுஷனைக் கண்டாயே; அவனைப் பார்க்கிலும் மூடன்மேலே அதிக நம்பிக்கை இருக்கலாம்.

௨௰௧ தன் அடிமைக்கு ஒருவன் சிறுவயதுதுவக்கி இளக்காரம்கொடுத்தால், அவன் கடைசியிலே தன்னைக் குமாரனாகப் பாராட்டுவான்.

௨௰௨ கோபக்காரன் வழக்கைக் கொளுவுகிறான்; மூர்க்கன் பெரும்பாதகன்.

௨௰௩ [4]மனுஷன் அகந்தை அவனைத் தாழ்த்தும்; மனத்தாழ்மையானவனோ கனமடைவான்.

திருடனோடே பங்கிட்டுக்கொள்ளுகிறவன் ௨௰௪
தன் ஆத்துமாவைப் பகைக்கிறான்; அவன் சபிக்குதலைக் கேள்விப்பட்டாலும் அறிவிக்காதிருப்பான்.

மனுஷனுக்குப் பயப்படுகிறதினால் கண்ணியை ௨௰௫
உண்டாக்கும்; கர்த்தரை நம்புகிறவனோ உயர்ந்த அடைக்கலத்திலே வைக்கப்படுவான்.

அநேகர் ஆளுகிறவனுடைய முகதரிசனையைத் ௨௰௬
தேடுகிறார்கள்; ஆனால் அவனுடைய நியாயம் கர்த்தராலே தீரும்.

[5]நீதிமான்களுக்கு அநியாயக்காரன் அருவருப் ௨௰௭
பானவன்; ஆகாதவனுக்குச் செம்மைமார்க்கத்தானும் அருவருப்பானவன்.

## ௩௰. அதிகாரம்.

௧ ஆகூர் தன் விசுவாசத்தைக்குறித்து அறிக்கையிடுதல், ௭. அவனுடைய செபத்திலிரண்டு விசேஷமும், ௰. தாழ்ந்தோர்க்கும் அநியாயம்செய்யக்கூடாததும், ௰௧. நான்கு துஷ்ட கோத்திரங்களையும், ௰௫. நாலுகாரியங்களையும் குறித்தது ௰௭. பெற்றாரைப் புறக்கணிக்கக்கூடாதென்பது. ௰௮. நான்கு காரியங்கள் அறிதற்கு அரியவைகளும், ௨௧. நான்கு சகிக்கப்படாதவைகளும், ௨௪. நான்கு அதிக ஞானமாயிருக்கின்றவைகளும், ௨௯. நான்கு மகத்துவமுள்ளவைகளுமென்பது. ௩௨. கோபத்தை அடக்கவேண்டுமென்பது.

யாக்கோபின் குமாரனாகிய ஆகூர் என்ற புரு ௧
ஷன் ஈத்தியேலுக்கு வசனித்து, ஈத்தியேலுக்கும் உக்காலுக்கும் உரைத்த உபதேச வார்த்தைகள்.

நானோ எவனைப்பார்க்கிலும் அவிவேகி, என ௨
க்கு மனுஷரின் புத்தியில்லை. — நான் ஞானத் ௩
தைக் கற்றதுமில்லை, பரிசுத்தவான்களின் அறிவையோ அறியேன். — [6]பரமண்டலங்களுக்கு ௪
ஏறி இறங்குகிறவர் யார்? காற்றைத் தமது கைப்பிடிகளில் அடக்குகிறவர் யார்? தண்ணீர்களை வஸ்திரத்திலே கட்டினவர் யார்? பூமியின் எல்லைகளை எல்லாம் ஸ்தாபித்தவர் யார்? அவருடைய நாமமென்ன? அவருடைய குமாரன் நாமமென்ன? அதை அறிவாயோ? — [7]பராபரனுடைய வசன ௫
மெல்லாம் புடமிடப்பட்டவைகள்; தம்மை அண்டிக்கொள்ளுகிறவர்களுக்கு அவர் கேடயமானவர். — அவர் உன்னை உதம்பாதபடிக்கும், நீ ௬
பொய்யனாய்க் கண்டுபிடிக்கப்படாதபடிக்கும் [8]அவருடைய வசனங்களோடு ஒன்றும் கூட்டாதிரு.

இரண்டு மனு உம்மிடத்திலே கேட்கிறேன்; ௭
நான் சாகும்பரியந்தமும் அவைகளை எனக்கு அல்லத்தட்டீராக. — மாயையையும், பொய்வச ௮
னிப்பையும் எனக்குத் தூரமாக்கும்; தரித்திரத்தையும் ஐசுவரியத்தையும் எனக்குக் கொடீராக.— நான் பரிபூரணம் அடைகிறதினால் மறுதலித்து, ௯
கர்த்தர் யாரென்று சொல்லாதபடிக்கும், தரித்திரப்படுகிறதினாலே திருடி என் பராபரனுடைய நாமத்தை அவமானமாக்காதபடிக்கும் என் படியை எனக்கு அளந்து போஷியும்.

வேலைக்காரன் உன்னைச் சபிக்காதபடிக்கும், ௰

1 வாக். ௨௨. ௨.
2 வாக். ௰௩. ௨௪.
3 யாக். ௧. ௰௯, ௨௰.
4 மத். ௨௩. ௰௨.
5 கலா. ௬. ௰௪.
6 யோவா. ௩. ௰௩.
7 சங். ௰௨. ௭. — 8 உபா. ௪. ௨. வெளி. ௨௨. ௰௮, ௰௯.

நீ நேரஸ்தனாகாதபடிக்கும், அவனை அவன் எசமா
௰௧ னிடத்திலே அவதூறுபண்ணாயாக.—தன் தகப்
பனைச் சபித்து, தன் தாயை ஆசீர்வதிக்காமல்போ
௰௨ கிற சந்ததியுண்டு.—தன்னுள்ளம் அறக்கழுவப்
படாதிருந்தும் தன் பார்வைக்குச் சுத்தமான சந்
௰௩ ததியுண்டு.—ஒரு சந்ததியுண்டு; அதின் கண்கள்
எத்தனை மேட்டிமையும், அதின் இமைகள் எத்
௰௪ தனை நெறிப்புமாயிருக்கின்றன. — தேசத்தில்
சிறுமையானவர்களையும் மனுஷரில் எளியவர்க
ளையும் பட்சிப்பதற்குப் பல்லுகள் பட்டையங்க
ளும், கடைவாய்ப்பற்கள் கத்திகளுமாயிருக்கிற
௰௫ சந்ததியுண்டு. — அட்டைக்கு தா, தா, என்ற
இரண்டு குமாரத்திகளுண்டு; திருப்தியாகாத
மூன்றுண்டு; போதுமென்னாத நாலுமுண்டு.—
௰௬ அவையாவன: பாதாளமும், மலட்டுக்கர்ப்பமும்,
தண்ணீர் போதுமென்றிராத பூமியும்தானே; அக்
கினி போதுமென்கிறதும் இல்லை.

௰௭ தகப்பனைப் பரியாசம்பண்ணித் தாய்க்குக்
கீழ்ப்படிய அசட்டையாயிருக்கிற கண்ணை நதி
யின் காக்கைகள் பிடுங்கிக் கழுகின் குஞ்சுகள்
௰௮ தின்னும்.—எனக்கு மிஞ்சின ஆச்சரியமானவை
கள் மூன்றுண்டு; நான் அறியாதிருக்கிற நாலு
௰௯ முண்டு —அவையாவன: ஆகாயத்திலே கழுகினு
டைய வழியும், கல்மலையின்மேலே பாம்பினு
டைய வழியும், நடுக்கடலிலே கப்பலினுடைய
வழியும், ஒரு கன்னிகையை நாடிய மனுஷனு
௨௰ டைய வழியும்தானே.—அப்படியே விபசாரஸ்
திரியின் வழியுமிருக்கிறது; அவள் தின்று தன்
வாயைத் துடைத்து, நான் அக்கிரமம் செய்த
தில்லை என்பாள்.

௨௧ மூன்றின்நிமித்தம் தேசம் கலக்கமாகிறது;
௨௨ நான்கின்நிமித்தமும் அது தாளமாட்டாது.—அ
ரசாளுகிற அடிமையின்நிமித்தமும், அப்பத்தா
லே திருப்தியான பயித்தியக்காரன்நிமித்தமும்,—
௨௩ பகைக்கப்பட்டிருந்துபுருஷனுக்கு, வாழ்க்கைப்
பட்ட ஸ்திரியின்நிமித்தமும், தன் ஆண்டைச்
சிக்குச் சுதந்தரியுமான அடிமைப்பெண்ணின்
௨௪ நிமித்தமும்தானே. — பூமியில் சிறியவைகளா
யிருந்தும் மகா ஞானமுள்ளவைகளாய் இருக்கி
௨௫ றவைகள் நாலுண்டு.—அவையாவன: [1]பலஈனச்
சாதியாய் இருந்தும், வசந்தகாலத்திலே தங்கள்
௨௬ ஆகாரத்தைச் சம்பாதிக்கிறஎறும்புகளும்,—சத்து
வமற்ற சாதியாயிருந்தும், தங்கள் வீட்டைக்கல்
மலையிலே தோண்டிவைக்கும் குழிமுசல்களும்,
௨௭ இராசா அற்றிருந்தும் ஏகமாய் வரிசையாகப்
௨௮ புறப்படுகிற வெட்டுக்கிளிகளும்,—தன் கைக
ளினாலே பின்னியும், அரசர் அரமனைகளிலிருக்
கிற சிலந்திப்பூச்சியும் தானே.

௨௯ விநோதமாய் அடிவைத்து நடக்கிற மூன்று
௩௰ ண்டு; விநோத நடையுள்ளவைகள் நாலுண்டு.—
அவையாவன: மிருகங்களில் சவுரியமானதும்
ஒன்றுக்கும் பின்னிடையாததுமாகிய சிங்க
௩௧ மும்,-வேகமுஸ்தீதான குதிரையும், வெள்ளாட்
டுக்கடாவும், யாவரும் எதிர்க்கமாட்டாத இரா
சாவும்தானே.

நீ மேட்டிமையானதினால் பயித்தியம் செய்த ௩௨
தும், அதின்மேல் நினைவாயிருக்கிறதுமுண்டா
னால் [2]கையினாலே வாயை மூடியிரு.—ஏனெ ௩௩
னில் பாலைக்கடைதல் வெண்ணெயைப் பிறப்
பிக்கும்; மூக்கைப்பிசைதல் இரத்தத்தைப் பிறப்
பிக்கும்; கோபத்தைக் கிண்டுதல் சண்டையைப்
பிறப்பிக்கும்.

## ௩௧. அதிகாரம்.

௧. லேமுவேலுக்குக் கற்பையும், இச்சை அடக்கத்தையுங்குறித்துச் சொன்னது. ௬. துன்பப்படுகிறவர்களை ஆற்றி, பாதுகாக்கவேண்டுமென்பது. ௰. நன்மனையாளுடைய புகழும் குணமும் சொல்லப்பட்டது.

இராசாவாகியலேமுவேலுக்கடுத்தவசனங்கள்; ௧
அவன் தாய் அவனுக்குப் போதித்த உபதேசம்.

ஆ என் குமாரனே, ஆ என் கர்ப்பத்தின் குமா ௨
ரனே, ஆ என் பொருத்தனைகளின் குமாரனே,—
[3]பெண்சாதிகளுக்கு உன் பலனையும், இராசாக்க ௩
ளைக் கொடுக்கும் காரியங்களுக்கு உன் வழிகளை
யும் கொடாயாக.

இராசாக்களுக்கு மதுபானம் வேண்டாம்; லே ௪
முவேலே, இராசாக்களுக்கு அது வேண்டாம்;
தலைவருக்கு லொட்டிப்பிரியம்வேண்டாம். —
குடித்துப் பிரமாணத்தை மறந்து சிறுமையா ௫
ன யாவருடைய நியாயத்தையும் புரட்டாதபடிக்
குத்தானே.—மடிந்துபோகிறவனுக்கு லொட்டி ௬
யையும் மனம் கசந்தவர்களுக்கு மதுவையும்
கொடுங்கள். — அப்படிக்கொத்தவன் குடித்து, ௭
தன் எளிமையை மறந்து, தன் வருத்தத்தை அப்
புறம் நினையாதிருக்கட்டும்.

ஊமையனுக்காகவும் மடியப்போகிற அனைவ ௮
ரின் நியாயத்துக்காகவும் உன் வாயைத்திற.—உன் ௯
வாயைத் திறந்து, நீதியாய் நியாயந்தீர்த்து, சிறு
மையும் எளிமையுமானவனுக்கு நியாயம்செய்.

[4]குணசாலியான பெண்சாதியைக் கண்டுபி ௰
டிப்பவன் யார்? அவளுடைய விலை முத்துக்களை
ப்பார்க்கிலும் உயர்ந்தது.—அவள் புருஷன் இரு ௰௧
தயம் அவளை நம்பும்; உடைமை உற்பத்தி அவ
னுக்குக் குறைபடாது.—அவள் உயிரோடிருக் ௰௨
கிற எல்லா நாள்களிலும் அவனுக்குத் தீமையை
யல்ல நன்மையையே செய்கிறாள்.—ஆட்டுமயி ௰௩
ரையும் சணலையும் தேடி, விருப்பமான கைக
ளால் வேலைசெய்கிறாள். — அவள் வியாபாரக் ௰௪
கப்பல்களைப்போலிருக்கிறாள்; தூரத்திலிருந்து
தன் பிழைப்பை வரப்பண்ணுகிறாள்;.—இருட் ௰௫
டோடே எழுந்து தன் வீட்டுக்கு ஆகாரமும், தன்
வேலைக்காரிகளுக்குப் படியும்கொடுக்கிறாள்.—
ஒரு வயலை விசாரித்து அதை வாங்குகிறாள்; தன் ௰௬
கைகளின் பலனால் திராட்சத்தோட்டத்தை நாட்
டுகிறாள். — தன்னைப் பலத்தால் இடைக்கட் ௰௭
டிக்கொண்டு, தன் புயங்களை உரமாக்குகிறாள்.—
தன் வியாபாரம் நல்லதென்று உணருகிறாள்; ௰௮

1 வாக். ௬. ௬: ௭. ௮.—2 யோபு. ௩௯. ௩௩—௩௪.

3 இ மோ. ௰௭. ௰௭. —4 வாக். ௰௨. ௪: ௰௯. ௨௨.

௰௯ அவள் விளக்கு இராவில் அணையாது. — தன்
கைகளை இராட்டினத்துக்கு நீட்டுவாள்; அவள்
௨௰ விரல்கள் கதிரைப் பிடிக்கும்.—தன் கையைச்
சிறுமையானவனுக்கு விரித்து, தன் கரங்களை
௨௧ எளியவனண்டைக்கு நீட்டுகிறாள்.—தன் வீட்
டாரின்நிமித்தம் குளிருக்குப் பயப்படாள்;
ஏனெனில் அவள் வீட்டாரனைவருக்கும் இரட்
௨௨ டைப்புரை உடுப்பிருக்கிறது. —சமுக்காளங்க
ளைத் தனக்கு உண்டுபண்ணுகிறாள்; நல்ல புட
வையும், இரத்தாம்பரமும் அவள் உடுப்பு. —
௨௩ அவள் புருஷன் வாசல்களில் தேசத்து மூப்பர்
களோடே உளுக்காந்திருக்கையில் பேர்பெற்ற
௨௪ வனாயிருக்கிறான் -மெல்லிய புடவையை உண்
டுபண்ணி விற்றுப்போட்டு, கச்சைகளை வர்த்த
௨௫ கருக்குக் கொடுத்துவிடுகிறாள்.—அவள் உடை
பலனும் அலங்காரமுமாயிருக்கிறது; வரும் நா
ளுக்கென்று திடனாயிருக்கிறாள்.—தன் வாயை ௨௬
ஞானத்தோடே திறக்கிறாள்; தயையுள்ள போத
கம் அவள் நாவின்மேலிருக்கிறது. —அவள் ௨௭
சோம்பலின் அப்பத்தைப் புசியாமல், தன் வீட்
டுக்காரியம் எப்படி நடக்குமென்று கண்ணோக்
கமாயிருக்கிறாள்.—அவள் பிள்ளைகள் எழும்பி ௨௮
அவளைப் பாக்கியவதி என்கிறார்கள்; அவள் புரு
ஷனும் அவளைப் புகழுகிறான்.—அநேகம் பெண் ௨௯
கள் சாக்கிரதையைக் காண்பிக்கிறார்கள்; நீயோ
அவர்களெல்லாருக்கும்மேற்பட்டவளென்று அ
வளைப் புகழுகிறான்.—இச்சகம் கள்ளத்தனமும், ௩௰
அழகு மாயையுமாய் இருக்கின்றன; கர்த்தருக்
குப் பயப்படுகிற பெண்சாதியே புகழப்படு
வாள்.—அவளுக்கு அவள் கைகளின் பலனைக் ௩௧
கொடுங்கள்; வாசல்களில் அவள் செய்கைக
ளின்நிமித்தம் அவளைப் புகழக்கடவார்கள்.

ECCLESIASTES.

# பிரசங்கியின் புஸ்தகம்.

## ௧. அதிகாரம்.

௧. சிருஷ்டிகள் தங்கள் முயற்சிகளில் இளைப்பின்றி முயலுகின்றபடியாலும், ௯. அவைகள் புதிதாயொன்றும் கொண்டுவராமல் பழமைகளெல்லாம் மறந்துபோயினபடியாலும், ௰௨. ஞானத்தைச் சதுக்கொண்டு அறிந்தபடியினாலும், மனிதருடைய முயற்சி எல்லாம் மாயை என்று பிரசங்கி எடுத்துக்காட்டினது.

௧ **தா**வீதின் குமாரனும் எருசலேமின் இராசாவு
௨ மாகிய பிரசங்கியின் வார்த்தைகள். — ஆ எத்த
னையான மாயை என்று பிரசங்கி சொல்லுகி
றான்; ஆ எத்தனையான மாயை, எல்லாம் மா
யையே.
௩ [1]சூரியன்கீழே வருத்தப்படுகிற தன்னுடைய
எல்லா வருத்தத்தினாலும் மனுஷனுக்கு லாப
௪ மென்ன?—ஒரு சந்ததி போகிறது; வேறொரு
சந்ததி வருகிறது; பூமியோ என்றைக்கும் நிற்கி
௫ றது.—சூரியன் உதிக்கிறதும், சூரியன் அஸ்த
மிக்கிறதும், தான் உதித்த தன்னிடத்துக்கே
௬ திரும்பத் தீவிரிக்கிறதுமாயிருக்கிறது.—காற்றுத்
தெற்கே போய் வடக்கையும் சுற்றிச் சூழ்ந்து
சூழ்ந்துபோகிறது;தான் சுற்றின இடங்களுக்கே
௭ காற்றுத் திரும்பவும் வரும்.—எல்லா ஆறுகளும்
சமுத்திரத்தில் ஓடியும் சமுத்திரம் நிரம்பாது;
முன் தாங்கள் ஓடின இடத்துக்கே ஆறுகள் அங்
௮ கே மறுபடியும் ஓடத்திரும்பும்.—எல்லாக் காரி
யங்களும் யாரும் சொல்லிமுடியாத இளைப்புள்
ளவைகள்; காண்கிறதினாலே கண் திருப்தியா
கிறதில்லை; கேட்கிறதினாலே செவி நிரப்பப்ப
டுகிறதுமில்லை.
௯ முன் இருந்ததே இனியிருப்பது; முன் செய்
யப்பட்டதே இனிச் செய்யப்படுவது; சூரியன்
௰ கீழே நூதனமானதொன்றுமில்லை.-இதைப்பார்;
இது புதுமை என்று சொல்லப்படத்தக்க காரி
யம் ஒன்றுண்டோ? நமக்கு முந்தின பூர்வகா
௰௧ லங்களில்தானும் இருந்ததே. — முந்தினவைக
ளின் ஞாபகம்மாத்திரமில்லை; அப்படியே பிந்
தினவைகளின் ஞாபகமும் இனிமேலிருப்பவர்
களுக்கு இல்லாதிருக்கும்.
௰௨ பிரசங்கியாகிய நான் எருசலேமிலே இஸ்ர
௰௩ வேலின்மேல் இராசாவாயிருந்து,—வானத்தின்
கீழே செய்யப்படுகிறதை எல்லாம் ஞானமாய்
விசாரிக்கிறதற்கும், ஆராய்கிறதற்கும் என் இருத
யத்தைப் பிரயோசம்பண்ணினேன்; இந்த ஆகா
த தொல்லையைப் பராபரன் மனுப்புத்திரருக்கு
அதிலே அடிபடும்படிக்குக் கட்டளையிட்டார்.
சூரியன்கீழே செய்யப்படுகிற எல்லாக் கிரி ௰௪
யைகளையும் பார்த்தேன்; இதோ யாவும் மாயை
யும், ஆவியை அரித்துவிடுகிறதுமாயிருக்கின்
றன.—[2]கோணலானது செம்மையாகமாட்டாது; ௰௫
குறைவானது எண்ணிமுடியாததுமாய் இருக்கி
றது. — இதோ எருசலேமில் எனக்கு முன்னி ௰௬
ருந்த எல்லாரையும்பார்க்கிலும் நான் பெருகி
ஞானத்தில் அதிகப்பட்டவனானேன்; என் இரு
தயம் மிகுந்த ஞானத்தையும், அறிவையும் கண்
டதென்று நான் என் நெஞ்சுடனே சொல்லி,—
என் இருதயத்தை ஞானத்தை அறிகிறதற்கும், ௰௭
பயித்தியத்தையும் மதியீனத்தையும் அறிகிறதற்
கும் பிரயோகம்பண்ணினேன்; ஆனால் இதுவும்
ஆவியை அரிக்கிறதென்றறிந்தேன்.—ஏனெனில் ௰௮
திரளான ஞானத்திலே திரளான சலிப்புண்டு;
அறிவு பெருத்தவன் நோவு பெருத்தவன்.

## ௨. அதிகாரம்.

௧. உல்லாசத்தின் செய்கைகளிலே மனிதனுடைய முயற்சி மாயை என்பதும், ௰௨. மூடனிலும் ஞானி சற்றுத் தாவிலையென்றாலும், இருவருக்கும் ஒரு முடிவென்பதும், ௰௮. வருவதாருக்கென்றறியாமையால் மனிதனுடைய உழைப்பு மாயையென்பதும், ௨௪. உழைப்பில் பராபரனுடைய வரமாகிய சந்தோஷத்தைப்பார்க்கிலும், வேறில்லை என்பதும் சொல்லப்பட்டது.

**நா**ன் என் இருதயத்திலே, [3]இப்போதும் வா, ௧
உன்னைச் சந்தோஷத்தினாலே சோதித்துப்பார்ப்
பேன்; நன்மை அநுபவி என்றேன்; ஆனால்
இதோ அதுவும் மாயையாய் இருந்தது. — நான் ௨
நகைப்பைப்பார்த்து நீ பயித்தியமாயிருக்கிறா
யென்றும், சந்தோஷத்தைப்பார்த்து அது என்ன
செயலென்றும் சொன்னேன்.
வானத்தின்கீழே உயிரோடிருக்கிற நாள்வ ௩
ரையிலே மனுப்புத்திரருடைய எந்தச் செய்கை
அவர்களுக்கு வாசியாயிருக்குமென்று நான் பார்
க்குமளவும் நான் என் மாம்சத்தை மதுபானத்தி
னால் ஆற்றிக்கொண்டிருக்கவும், என் இருதயத்
தை ஞானத்திலேதானே நடத்திவருகிறவனாக
அவமதியையும் பிடிக்கவும் என் நெஞ்சிலே
வகைபார்த்தேன்.—என் கிரியைகளைப் பெரிய ௪
வைகளாக்கினேன்; எனக்கு வீடுகளைக் கட்டி
னேன்; எனக்குத் திராட்சத்தோட்டங்களை நாட்
டினேன். — எனக்குத் தோட்டங்களையும் சிங் ௫
காரவனங்களையும் உண்டாக்கி, அவைகளில்
சகலவகைக் கனிவிருட்சங்களையும் நாட்டி
னேன்.—மரங்கள் பயிராகும் தோப்பை நீர்ப் ௬

1 பிர. ௨. ௨௨.—2 பிர. ௭. ௰௩.

3 லூக். ௰௨. ௰௯.

பாய்ச்சலாக்க எனக்குத் தண்ணீர்க்குளங்களை
௭ உண்டுபண்ணினேன்.—வேலைக்காரரையும் வே
லைக்காரிகளையும் சம்பாதித்தேன்; வீட்டுப்பிள்
ளைகள் எனக்கு இருந்தன; எருசலேமில் எனக்கு
முன்னிருந்த அனைவரைப்பார்க்கிலும் எனக்கு
ஆடுமாடுகளுடைய திரளான ஆஸ்தி இருந்தது.—
௮ எனக்கு வெள்ளியையும், பொன்னையும், இராச
சம்பத்தையும், மாகாணங்களின் சம்பத்தையும்
சேர்த்தேன்; எனக்குக் கீதக்காரரையும், கீதக்கா
ரிகளையும், மனுப்புத்திரரின் செல்வங்களையும்,
வாத்தியத்தையும், வாத்தியமுட்டுகளையும் சம்பா
௯ தித்தேன்.—[1]எனக்குமுன் எருசலேமில் இருந்த
அனைவரைப்பார்க்கிலும் நான் பெருகி அதிகப்
பட்டேன்; என் ஞானமும் என்னோடே தரித்
௰ திருந்தது.—என் கண்கள் எதை ஆசைப்பட்டா
லும் அதை நான் அவைகளுக்குத் தடைபண்ணி
னதில்லை; என் இருதயத்திற்கு ஒரு சந்தோஷத்
தையும் நான் வேண்டாமென்று விலக்கின
தில்லை; ஏனெனில் என்இருதயம் என்னுடைய
எல்லாப் பிரயாசத்தினாலும் சந்தோஷமாயிருந்
தது; இதுவே என்னுடைய எல்லாப் பிரயாசத்
௰௧ தினாலும் எனக்கு வந்த பங்காயிருந்தது.—என்
கைகள் செய்த என்னுடைய எல்லாக் கிரியை
களையும் செய்கிறதற்காக நான் பட்ட எல்லாப்
பிரயாசத்தையும் நான் கண்ணோக்கினேன்; இ
தோ எல்லாம் மாயையும், ஆவியை அரிக்கிறது
மாயிருந்தன; சூரியன்கீழே இலாபமில்லை.

௰௨ நான் ஞானம் என்னவென்றும், பயித்தியமும்
அவமதியும் என்னவென்றும் பார்க்கிறதற்குத் தி
ரும்பினேன்; ஏனெனில் இராசாவுக்குப் பிற்பா
டு வரப்போகிற மனுஷன் என்னசெய்வானோ,
வாடிக்கையாய்ச் செய்யப்படுவதைத்தானே.—
௰௩ இருளைப்பார்க்கிலும் வெளிச்சம் வாசியாயிருக்
கிறதுபோல அவமதியைப்பார்க்கிலும் ஞானம்
வாசியாயிருக்கிறதென்கிறதைத்தான் நான் கண்
௰௪ டேன்.—ஞானியின் கண்கள் அவன் சிரசிலிருக்
கின்றன; மூடனோ இருளிலே நடக்கிறான்;
ஆகிலும் அவர்களெல்லாருக்கும் ஏகவிதமாய்ச்
சம்பவிக்குமென்கிறதையும் நான் அறிந்தேன்.

௰௫ ஆகையால் நான் என் இருதயத்திலே மூட
னுக்குச் சம்பவிக்கிறபிரகாரமாக எனக்கும் சம்
பவிக்குமே; பின்னை ஏன் நான் அப்போது அதிக
ஞானமடைந்தேனென்று சொல்லி என் இருத
௰௬ யத்திலே அதுவும் மாயை என்றேன்.—ஏனெ
னில் மூடனைப்பார்க்கிலும் ஞானியை அதிக
மாய் நினைக்கும் நினைப்பு என்றைக்குமில்லை;
இப்போது இருக்கிறவை எல்லாம் வரும்நாள்க
ளில் மறக்கப்பட்டவையாயிருக்கும்; ஏனெனில்
ஞானி எப்படிச் சாகிறான்? மூடனைப்போலே
௰௭ தானே.—ஆகையால் இப்படிப்பட்ட சீவனைப்
பகைத்தேன்; ஏனெனில் சூரியன்கீழே செய்
யப்படும் கிரியை எனக்கு விசனமாயிற்று; அதே
னென்றால் எல்லாம் மாயையும், ஆவியை அரிக்

கிறதுமாயிருக்கிறது.—சூரியன்கீழே நான் பட்ட ௰௮
என் பிரயாசத்தை எல்லாம் நான் பகைத்தேன்;
ஏனெனில் [2]எனக்குப்பிறகு இருக்கும் மனுஷ
னுக்கு அதை நான் பின்வைத்துப்போகவேண்
டும். — அவன் ஞானமுள்ளவனாயிருப்பானோ ௰௯
அவமதியாயிருப்பானோ என்கிறதை யார் அறி
வார்? ஆகிலும் நான் சூரியன்கீழே பிரயாசப்பட்
டதும், நான் ஞானமாய்ச் செய்துவந்ததுமான
என் வேலைக்கெல்லாம் அதிகாரியாயிருப்பான்;
இதுவும் மாயை.

ஆகையால் என் இருதயம் சூரியன்கீழே நான் ௨௰
பட்ட எல்லாப் பிரயாசத்தின்மேலுள்ள ஆசை
யை விட்டுவிட வகைபார்த்தேன்.—ஏனெனில் ௨௧
ஒரு மனுஷனுமுண்டு; அவனுடைய வேலை ஞா
னமும், அறிவுமுள்ளதும், செம்மையுமாயிருக்கி
றது; ஆகிலும் அதில் பிரயாசப்படாதிருந்த வே
றொருவனுக்கு அவன் அதைச் சொந்தமாகக்
கொடுத்துவிடவேண்டியது; இதுவும் மாயையும்,
மகா தீதுமாயிருக்கிறது.—ஏனெனில் அப்படியே ௨௨
மனுஷன் சூரியன்கீழே படுகிற தன்னுடைய
எல்லாப் பிரயாசத்தினாலும், தன்னுடைய இருத
யத்தின் அரிப்பினாலும் அவனுக்கு என்ன இருக்
கும்?—அவன் நாள்களெல்லாம் நோவுகளோடும் ௨௩
அவன் தொல்லை சலிப்போடுமிருக்கின்றனவே;
இராத்திரியிலும் அவன் மனது இளைப்பாறுகிற
தில்லையே, இதுவும் மாயைதானே.—ஆகையால் ௨௪
மனுஷன் புசித்துக்குடித்து, தன் பிரயாசத்திலே
தன் நெஞ்சுக்கு நன்மைகாட்டுவதல்லவோ அவ
னுக்கு வாசி? இதுவுமோ பராபரனுடைய கரத்தி
லிருந்து வரவேண்டியது என்று நான் கண்
டேன்.—ஏனெனில் என்னைப்பார்க்கிலும் நன் ௨௫
றாய்ச் சாப்பிடுபவன் யாவன்? என்னைப்பார்க்கி
லும் துருசாய்ச் சம்பாதிப்பவனும் யாவன்?—
ஏனெனில் தமக்குமுன்பாக நல்லவனாயிருக்கிற ௨௬
மனுஷனுக்கு அவர் ஞானத்தையும், அறிவையும்,
மகிழ்ச்சியையும் கட்டளையிடுகிறார்; பாவம்செய்
கிறவனுக்கோவென்றால் பராபரனுக்கு முன்
பாக [3]நல்லவனாயிருக்கிறவன் வசமாய் வைத்து
விட்டுப்போகக் கூட்டிச்சேர்க்கும் தொல்லை
யைக் கட்டளையிடுகிறார்; இதுவும் மாயையும்
ஆவியை அரிக்கிறதுமாயிருக்கிறது.

## ௩. அதிகாரம்.

௧. காலம் மாறவேண்டிய இயல்பினால் மனிதனுடைய உழைப்போடேகூட மாயையும் சேர்ந்ததென்பதும், ௰௧. பராபரனுடைய சிருஷ்டிகளிலே உன்னதம் விளங்குகின்றதென்பதும், ௰௬. அவர் மனிதனைக்குறித்து அவன் செய்கைகளை நிதானிப்பார், அவன் மிருகம்போலிருப்பானென்பதும் சொல்லப்பட்டது.

சகலத்துக்கும் ஒரு சொந்தவேளையும், வானத் ௧
தின்கீழிருக்கிற சகல விருப்பத்துக்கும் ஒரு கா
லமுமிருக்கும்.—பிறக்கிற காலமுமுண்டு; இறக் ௨
கிறகாலமுமுண்டு; நாட்டுகிற காலமுமுண்டு; நா
ட்டப்பட்டதைப் பிடுங்குகிற காலமுமுண்டு.—
கொல்லுகிற காலமுமுண்டு. குணமாக்குகிற ௩
காலமுமுண்டு; இடிக்கிற காலமுமுண்டு, கட்டு

1 ௧ இரா. ௰. ௨௩. ழ.—2 சங். ௩௯. ௭.

3 வாக். ௨௮. அ. யோபு. ௨௭. ௰௬, ௰௭.

௪ கிற காலமுமுண்டு.—அழுகிற காலமுமுண்டு,
நகைக்கிற காலமுமுண்டு;புலம்புகிற காலமுமு
௫ ண்டு, துள்ளுகிற காலமுமுண்டு.–கற்களைச் சித
றடிக்கிற காலமுமுண்டு, கற்களைச் சேர்க்கிறகா
லமுமுண்டு; அரவணைக்கிற காலமுமுண்டு,அர
வணைக்காமல் தூரமாக்குகிற காலமுமுண்டு.—
௬ தேடுகிற காலமுமுண்டு, இழக்கிற காலமுமுண்
டு; காக்கிற காலமுமுண்டு, எறிந்துவிடுகிறகால
௭ முமுண்டு.—கிழிக்கிற காலமுமுண்டு, தைக்
கிற காலமுமுண்டு; மவுனமாயிருக்கிற காலமு
௮ முண்டு, பேசுகிற காலமுமுண்டு.—சிநேகிக்
கிற காலமுமுண்டு, பகைக்கிற காலமுமுண்டு;
யுத்தகாலமுமுண்டு, சமாதான காலமுமுண்டு.
௯ [1]வருத்தப்பட்டுச் செய்ததினாலே செய்கிறவ
னுக்கு இலாபமென்ன?
௰ பராபரன் மனுப்புத்திரருக்கு அடிப்படக்கட்
௰௧ டளையிட்ட தொல்லையைக் கண்டேன்.—எல்
லாவற்றையும் அதினதின் காலத்திலே நேற்றி
யாகச் செய்துவருகிறார்; நித்தியத்தின் உணர்
வையும் அவர்கள் இருதயத்திலே கொடுத்தார்;
அது இல்லாவிட்டால் மனுஷன் பராபரன் ஆதி
முதல்கொண்டு முடிவுமட்டாகச் செய்யும் கிரி
௰௨ யையைக் கண்டுபிடியான்.—மகிழ்ச்சியாயிருப்
பதும், தாங்கள் உயிரோடிருக்கையில் நன்று
செய்வதுமேயல்லாமல் வேறொரு நன்மையும்
௰௩ அவைகளால் இல்லையென்றறிந்தேன்.—ஆனால்
மனுஷன் எவனாகிலும் சரி, புசித்துக்குடித்துத்
தன்னுடைய எல்லா வருத்தத்திலும் நன்மையை
௰௪ அநுபவிப்பதும் பராபரனுடைய ஈவு.—பரா
பரன் என்னென்ன செய்கிறாரோ அதுவே என்
றும் நிற்குமென்றறிவேன்; மனுஷர் அதனோடே
கூட்டவும் கூடாது, அதிலே குறைக்கவும் கூ
டாது; அவர்கள் தமக்குமுன்பாகப் பயந்திருக்
கும்படிக்குப் பராபரன் இப்படிச் செய்கிறார்.—
௰௫ இப்போதும் நடக்கிறது முன்னும் நடந்தது;
நடக்கப்போகிறதும் முன்தானே நடந்தது; ஆ
னால் துன்பப்பட்டவனுடைய நியாயத்தைப்
பராபரன் விசாரிப்பார்.
௰௬ பின்னையும் சூரியன்கீழே நான் ஆகாமிய
முள்ள நியாயஸ்தலத்தையும், ஆகாமியமுள்ள
௰௭ நீதிஸ்தலத்தையும் கண்டேன்.—ஆனால் நான்
என் இருதயத்திலே நீதிமானையும் ஆகாதவனை
யும் பராபரன் நியாயந்தீர்ப்பார்; ஏனெனில்
சகல விருப்பத்தையும், சகல செய்கையையும்
நியாயம் தீர்க்கும் காலம் அங்கே என்றேன்.
௰௮ பராபரன் மனுப்புத்திரரை வீம்பறத் துலக்கு
கிறதும், தங்கள் நிலைமைக்குத் தாங்கள் மிருகங்
களைப்போலே இருக்கிறதை அவர்கள் காண்கி
றதும் அவர்கள் காரியத்துக்கு ஒத்ததென்று நான்
௰௯ என் இருதயத்திலே சொன்னேன்.–ஏனெனில்,
மனுப்புத்திரருக்குச் சம்பவிக்கிறதும், மிருகங்க
ளுக்குச் சம்பவிக்கிறதும், அவர்களுக்கும் இவை
களுக்கும் ஏகமாய்ச் சம்பவிக்கிறது; இது சாகிற
துபோல அவனும் சாகிறான்; சீவனுக்கெல்லாம்
ஏக சுவாசமிருக்கிறது; மிருகத்தைப்பார்க்கிலும்
மனுஷனுக்கு மேன்மை இல்லையே; ஏனென்
றால் சகலமும் மாயை.—சகலமும் ஒரே இடத் ௨௰
துக்குப் போகின்றன; சகலமும் மண்ணிலுண்
டாகி, சகலமும் மண்ணுக்குத்திரும்பும்.—உயர ௨௧
ஏறுகிறதாகிய மனுப்புத்திரரின் ஆவியையும், தா
ழத் தரையில் இறங்குகிறவைகளாகிய மிருகங்க
ளின் ஆவியையும் அறிந்துகொண்டிருக்கிறவன்
யாவன்?–இப்போதும் மனுஷன் தன் செய்கைக ௨௨
ளில் மகிழ்ச்சியாயிருக்கும் நன்மையையல்லா
மல் வேறே நன்மை அவைகளால் இல்லை என்று
கண்டேன்; இதுவே அவன் பங்கு; ஏனென்றால்
தனக்குப்பின் இருப்பதைக் காண்பதற்கு அத
னைத் திரும்ப வரப்பண்ணுபவன் யாவன்?

## ௪. அதிகாரம்.

௧. மனிதருடைய ஒடுக்கத்தினாலும், ௪. பொறாமையினாலும், ௫. சோம்ப
லினாலும், ௭. உலோபத்தினாலும், ௯. தனியே வாசஞ்செய்தலினாலும்,
௰௩. மனப்பூர்த்தியினாலும், மாயை விருத்தியாகிறதென்பது.

நான் திரும்பிக்கொண்டு சூரியன்கீழ்ச் செய் ௧
யப்படுகிற ஒடுக்குதல்களை எல்லாம் நோக்கி
னேன்; இதோ, ஒடுக்கப்பட்டவர்களின் கண்
ணீரைக் கண்டேன்; அவர்களைத் தேற்றுவாரு
மில்லை; அவர்களை ஒடுக்குகிறவர்களின் கைபல
வந்தம் செய்துகொண்டேயிருந்தும் அவர்களைத்
தேற்றுவாரில்லை.—ஆனதுகொண்டு இன்னம் ௨
உயிரோடிருந்து பிழைக்கிறவர்களைப் பார்க்கி
லும், முன்தானே காலம்பண்ணி மரித்தவர்களை
யே நான் பாக்கியவான்களென்றேன்.—இவ்வி ௩
ருதிறத்தாரைப்பார்க்கிலும், இன்னம் உண்டா
காதவனும் வாசி; அவன் சூரியன்கீழ்ச் செய்யப்
படும் துர்ச்செய்கையைக் கண்டதில்லை.
எல்லாம் பிரயாசமும் சட்டமானது; எல்லாக் ௪
கிரியையும் மனுஷன்மேல் அவனுக்கடுத்தவனு
டைய பொறாமையை வரப்பண்ணுமென்கிற
தையும் நான் கண்டேன்; இதுவும் மாயையும்,
ஆவியை அரிக்கிறதுமாயிருக்கிறது.—மூடன் ௫
தன் கைகளைக் கட்டிக்கொண்டு தன் சதையைத்
தின்கிறான்.–[2]வருத்தத்தோடும், ஆவியின் அரிப் ௬
போடும் இரண்டு கைப்பிடியும் நிறையக்கொண்
டிருக்குதலைப்பார்க்கிலும் அமைதலோடே ஒரு
கைப்பிடி நிறையக்கொண்டிருக்குதலே வாசி.
நான் திரும்பிக்கொண்டு சூரியன்கீழே வே ௭
றொரு மாயையைக் கண்டேன்.–ஒண்டிக்காரன் ௮
இருக்கிறான், உடனாளி இல்லை; அவனுக்குப்
பிள்ளையும் சகோதரனுமில்லை;என்றாலும் அவன்
பிரயாசத்திற்கு முடிவில்லை; அவன் கண்கள்
ஐசுவரியத்தால் திருப்தியாகிறதுமில்லை; நான்
யாருக்குப் பிரயாசப்பட்டு, என் ஆத்துமாவை
நன்மையில்லாமல் குறைவோடே வைக்கிறே
னென்று அவன் சிந்திக்கிறதுமில்லை; இதுவும்
மாயை, இதுவும் பொல்லாத தொல்லை.–ஒண்டிக் ௯
காரனைப்பார்க்கிலும் ஒரு சோடே வாசி; அவர்

1 பிர. ௧. ௩. 2 வாக். ௰௫. ௰௬.

களுக்கு அவர்கள் வருத்தத்திலே நல்ல பலனுண்
௰ டாம்.—ஏனெனில் ஒருவன் விழுந்தால் அவனை
அவன் உடனாளி எடுத்துவிடுவான்; ஆனால் விழு
கிற ஒண்டிக்காரனுக்கு ஐயோ; ஏனெனில் அவ
௰௧ னை எடுப்பதற்குத் துணைஇல்லை.— இரண்டுபே
ராய்ப் படுத்துக்கொண்டிருந்தால் அவர்களுக்கு
அனலுண்டாம்; ஒருவனுக்கு அனலுண்டாவது
௰௨ எப்படி?—ஒருவன்மேல் யாவனொருவன் மேற்
பலனாய் வந்தால், இரண்டுபேரானவர்கள் அவ
னுக்கு எதிரே நிற்கலாம்; முப்புரிநூல் சீக்கிர
மாய் அறுது.
௰௩ இனிப் புத்திகேட்க அறியாத கிழவனும்,
மூடனுமாகிய இராசாவைப்பார்க்கிலும் ஏழை
௰௪ யும், ஞானியுமாகிய இளைஞனே வாசி.—ஏனெ
னில் அரசாளச் சிறைச்சாலையிலிருந்து புறப்படு
வாருமுண்டு; இராசாங்கத்தில் பிறந்து, ஏழையா
௰௫ வாருமுண்டு.—சூரியன்கீழ்ச் சீவனுள்ள அனை
வரும் இராசாவின் பட்டத்தில் வந்து நிலைக்கப்
போகிற பிள்ளையோடே மனது இணையாதிருக்கி
௰௬ றதைக் கண்டேன். — அவர்களுக்குமுன் அப்
படிச்செய்த சகல சனங்களின் இலக்கத்துக்கு
முடிவில்லை; இனி இருப்பவர்கள் இவன்மேலும்
௰௭ பிரியம் வைக்காதேபோவார்கள். — ஆகையால்
இதுவும் மாயையும், ஆவியை அரிப்பதுமாயி
ருக்கிறது.

## ரு. அதிகாரம்.

௧. அமைமான தேவாராதனையிலும், ௮. ஒடுக்கத்துக்கு முறமுறுப்பதிலும், ௯. ஐசுவரியங்களிலும் மாயையைக்குறித்தது. ௰௮. ஐசுவரியங்களில் சந்துஷ்டியாயிருப்பது பராபரனுடைய வரமென்பது.

௧ நீ பராபரனுடைய வீட்டுக்குப் போகிறபோது,
உன் காலைக் காத்து, மூடரைப்போலப் பலியை
இடுவதைப்பார்க்கிலும் கேட்கிறதற்குச்சேர்; ஏ
னெனில் அவர்கள் பொல்லாப்பைச் செய்வ
௨ தற்காக அறியாதவர்களாய் இருக்கிறார்கள்.—நீ
பராபரனுக்குமுன்பாக வசனத்தை ஊற்ற வாய்
பதறுகிறவனாய் இராதிரு; உன் இருதயம் தீவி
ரித்திருக்கவும்வேண்டாம்; ஏனெனில் பராபரன்
பரமண்டலங்களிலிருக்கிறவர்; நீயோ பூமியி
லிருக்கிறவன்; ஆகையால் உன் வார்த்தைகள்
௩ மட்டாயிருப்பதாக.—ஏனெனில் தொல்லையின்
திரட்சியினாலே சொப்பனம் பிறக்கிறதுபோ
லே வார்த்தைகளின் திரட்சியினாலே மூடனில்
௪ சத்தம் பிறக்கும் —[1]நீ பராபரனுக்குப் பொருத்
தனை சொல்லிக்கொண்டால் அதைச் செலுத்
தத் தாமதியாதிரு; ஏனெனில் மூடரின்மேல்
அவருக்கு விருப்பமில்லை; நீ நேர்ந்துகொண்ட
௫ தைச் செலுத்து.—நீ நேர்ந்துகொண்டும் செலுத்
தாதே போகிறதைப்பார்க்கிலும் நேர்ந்துகொள்
௬ ளாதிருக்கிறது தாவிளை.— உன் மாம்சத்தைப் பா
வத்திற்குள்ளாக்க உன் வாயைக் கொடாதிரு;
அது பத்திப் பிசகாயிருக்கிறதென்று தூதனுக்கு
முன்பாகச் சொல்லாமலுமிரு; பராபரன் உன்
சத்தத்தினாலே கோபமாகி, உன் கைகளின் கிரி
௭ யையை அழிப்பானேன்?—ஏனென்றால் அநேக
[2]சொப்பனங்களில் மாயைகள் உண்டாயிருக்
கும், அநேக வார்த்தைகளிலும் அப்படித்தான்;
ஆகையால் பராபரனுக்குப் பயந்திரு.
ஒரு சீமையில் ஏழைகள் ஒடுக்கப்படுகிறதை ௮
யும், நியாயமும் நீதியும் கொள்ளையாய்ப் போகி
றதையும் கண்டாயானால், அப்படிப்பட்ட செ
யலினாலே பிரமிக்காதிரு; ஏனெனில் உயர்ந்த
வன்மேலே உயர்ந்தவன் காவலாளியாயிருக்கி
றான்; இவர்கள்மேல் உயர்ந்தவருமுண்டு.—எல் ௯
லாவற்றிலும் இவரே பூமியினுடைய இலாபமா
னவர்; இவர் பயிர்நிலத்துக்கும் இராசா.
பணப்பிரியன் பணத்திருப்தியடையான்; ௰
எவன் ஏராளத்தைச் சிநேகிக்கிறானோ அவன்
வரத்தினால் திருப்தியாவதில்லை; இதுவும் மா
யை. — பொருள் பெருகினால் அதைத் தின்கி ௰௧
றவர்களும் பெருகுகிறார்கள்; அதின் எசமான்
கள் அதைத் தங்கள் கண்களினாலே பார்க்கிற
தேயல்லாமல் அவர்களுக்கு அதினால் இருக்கும்
பிரயோசனமென்ன? — வேலைசெய்கிறவன் ௰௨
கொஞ்சம் சாப்பிட்டாலும், நிரம்பச் சாப்பிட்
டாலும் அவன் நித்திரை இன்பமானது; ஐசுவரி
யவானின் திருப்தியோ அவனைத் தூங்கவொட்
டாது.—சூரியன்கீழே நான் கண்ட இளைப்புள்ள ௰௩
வேறொரு தீங்குமுண்டு; ஐசுவரியம் தன் எச
மான்களாலே அவர்களுக்கே தீமையாகக் காக்
கப்படுதல்தானே.—ஏனெனில் அந்த ஐசுவரியம் ௰௪
விக்கினமான தொல்லைகளினாலே அழிகிறதுண்
டு; அப்படியே அவன் புத்திரனைப் பெற்றிருந்
தும் இவன் கையில் ஒன்றுமில்லாதிருக்கும்.—
அவன் எப்படித் தன் தாயின் கர்ப்பத்திலிருந்து ௰௫
புறப்பட்டானோ, அப்படி அவன் வந்தபடி
திரும்ப [3]நிருவாணமாய்ப்போவான்; அவன் தன்
பிரயாசத்தில் ஒன்றையும் தன் கையிலே எடுத்
துப்போவதில்லை. — அவன் வந்தபிரகாரமாகத் ௰௬
தானே போகிறானென்கிறதும் இளைப்புள்ள தீங்
கு; பின்னை அவன் காற்றுக்குப் பிரயாசப்பட்
டதினாலே அவனுக்கு என்ன இலாபம்? — தன் ௰௭
நாள்களிலெல்லாம் இருளிலும் சாப்பிட்டு, மெத்
தவும் சலித்துக்கொண்டு நோயும் கடுமையும்
அடைந்திருக்கிறான்.
[4]இதோ உயிரோடிருக்கத் தனக்குப் பராபரன் ௰௮
கட்டளையிட்ட தன் நாள்வரையிலே மனுஷன்
புசிக்கிறதும், குடிக்கிறதும், தான் சூரியன்கீழ்ப்
பிரயாசப்படுகிற தன் பிரயாசம் அனைத்திலும்
நன்மை அநுபவிக்கிறதும் நேர்த்தியான நல்லகா
ரியம் என்கிறதை நான் கண்டேன்; ஏனெனில்
இது அவன் பங்கு. — எந்த மனுஷனுக்காகி ௰௯
லும் பராபரன் ஐசுவரியத்தையும், சம்பத்தையும்
கொடுத்து, அதிலே சாப்பிடவும், தன் பங்கை
எடுக்கவும், தன் பிரயாசத்திலே மகிழ்ச்சியாயி
ருக்கவும், அவனுக்கு அதிகாரமும் அளித்தால்
அது பராபரனுடைய ஈவு. — ஏனெனில் பரா ௨௰
பரன் அவன் இருதயத்தின் மகிழ்ச்சியால் அவ

1 ௪ மோ. ௩௰. ௨ உ மோ. ௨௩. ௨௧. ௨௩.—2 வாக். ௰. ௰௪.

3 யோபு. ௧. ௨௧ சங். ௪௯. ௰௭. ௧ தீமோ. ௬. ௭.—4 பிர. ௩. ௨௨.

னுக்கு மறு உத்தரவு அருளிச்செய்கிறபடியினு லே, அவன் தன் சீவனுடைய நாள்களை அத்த னையாய் நினையான்.

## சா. அதிகாரம்.

க. வழங்காத செல்வத்திலும், ௩. பிள்ளைகளிலும், சு. செல்வமில்லாத விருத் தாப்பியத்திலும், கூ. பார்வையிலும், அலைந்த ஆசைகளிலும் மாயையுண் டென்பது. ௰௧. மாயையின் முடிவு சொல்லப்பட்டது.

க சூரியன்கீழ் நான் கண்ட ஒரு தீங்கிருக்கிறது;
அது மனுஷரிடத்தில் வெகுவாய்க் காணப்படு
உ கிறது.—அதாவது: மனுஷனிருக்கிறான்; அவ
னுக்குப் பராபரன் ஐசுவரியமும் ஆஸ்தியும் கன
மும் கொடுத்தார்; அவன் என்ன இச்சித்தாலும்
அவை எல்லாம் அவன் ஆத்துமாவுக்குத் தாழ்ச்
சியில்லாமலிருக்கின்றன; என்றாலும், அவைக
ளிலே சாப்பிடுகிறதற்குப் பராபரன் அவனுக்கு
அதிகாரத்தைக் கட்டளையிட்டதில்லை; அந்நிய
மனுஷனே அதைச் சாப்பிடுகிறான்; இதுவும் மா
ங யையும் பொல்லாத நோயுமாமே.—ஒரு மனுஷன்
நூறுபிள்ளைகளைப் பெற்றாலும், அநேகம் வரு
ஷம் உயிரோடிருந்தாலும், அவன் ஆயுசின் நாள்
கள் பெருகிப்போனாலும், அவன் ஆத்துமா நன்
மையால் திருப்தியடையாமலும், அவனுக்குப்
பிரேதக்கல்லறைமுதலாயில்லாமலும் போயிற்
றேயாகில், அவனைப்பார்க்கிலும் கர்ப்பம் விழுந்
ச துபோகிற பிண்டம் வாசி என்பேன்.—ஏனெ
னில் இது பாழிலே வந்து இருளிலே போகிறது;
ரு இதின்பேர் இருளால் மூடப்படும்.—இது சூரிய
னைக் கண்டதுமில்லை, அறிந்ததுமில்லை; அவ
னைப்பார்க்கிலும் இதற்கு ஓய்வு இருக்கிறது.—
சா அவன் நன்மை காணாமல் ஈராயிரம் வருஷம் பி
ழைத்திருந்தும், எல்லாரும் ஒரே இடத்திற்குப்
போகிறதில்லையோ?
எ மனுஷனுடைய பிரயாசமெல்லாம் அவன்
வாய்க்குத்தானே; ஆனால் அவன் மனது நிரம்
அ பாது.—மற்றப்படி மூடனைப்பார்க்கிலும் ஞா
னிக்கும், சீவனுள்ளோருக்கும்முன்பாக நடக்க
அறிந்த ஏழைக்கும் உண்டான மேன்மையென்
கூ ன?—ஆசை அலைந்து தேடுகிறதைப்பார்க்கிலும்
கண்கள் பார்த்திருக்கிறதே வாசி; அதுவும் மாயை
யும் ஆவியை அரிக்கிறதுமாயிருக்கிறது.
௰ ஒருவன் எப்படிக்கொத்தவனானாலும் முதல்
தானே அவன்பேர் இன்னதென்று சொல்லப்
பட்டது; அவன் மனுஷனென்று தெரிந்திருக்
கும்; அவன் தன்னிலும் பலத்தவரோடே வழக்
௰க காடமாட்டான்.—மாயையைப் பெருகப்பண்
ணுகிற திரளான வர்த்தமானங்கள் உண்டாயிருக்
௰உ கையால் மனுஷனுக்கு என்ன இலாபம்?—ஏனெ
னில், மனுஷன் உயிரோடிருந்து [1]நிழலைப்போ
லே போகிற தன் மாயையினுடைய நாள்வரை
யாகிய இச்சீவனிலே அவனுக்கு எது நலமாயிரு
க்கிறதென்று அறிந்தவன் யாவன்? ஏனென்றால்
தனக்குப்பின்பு சூரியன்கீழ்ச் சம்பவிப்பதே
தென்று மனுஷனுக்கு அறிவிப்பவன் யாவன்?

1 சங். ௱௪. எ.—2 வாக். உஉ, க.—3 மத். ௫. ௪.

## எ. அதிகாரம்.

க. மாயை விலகுவதற்கு நற்கீர்த்தியும், உ. தன்னை ஒடுக்குதலும், எ. பொ றுமையும், ௰க. ஞானமும் காரணமென்பது. உக. ஞானத்தின் அருமை சொல்லப்பட்டது.

நல்ல தயிலத்தைப்பார்க்கிலும் [2]நற்கீர்த்தியும், க
ஒருவனுடைய செனனநாளைப்பார்க்கிலும் மர
ணநாளும் வாசி.
விருந்துவீட்டுக்குப் போகிறதைப்பார்க்கிலும் உ
துக்கவீட்டுக்குப் போவதே வாசி; ஏனென்றால்,
இதிலே எல்லா மனுஷரின் முடிவு காணப்படு
கிறபடியினாலே இதை உயிரோடிருக்கிறவன்
தன் மனதிலே வைக்கலாம்.
நகைப்பைப்பார்க்கிலும் [3]சலிப்பு நல்லது; ங
ஏனெனில் முகத்தின் துக்கத்திலே இருதயம்
குணப்படும்.—ஞானிகளின் இருதயம் துக்கவீட் ச
டிலும், மூடரின் இருதயம் சந்தோஷவீட்டிலும்
இருக்கிறது.
ஒருவன் மூடரின் பாட்டைக் கேட்பதைப் ரு
பார்க்கிலும், ஞானியின் அதட்டுதலைக் கேட்ப
தே நலம்.—ஏனெனில் பானையின்கீழ் எரிகிற சா
முள்ளுக்களின் படபடப்பு எப்படிப்பட்ட
தோ அப்படியே மூடனுடைய நகைப்பிருக்
கிறது; இதுவும் மாயை.
இடுக்கண் செய்தல் ஞானியைப் பயித்தியப் எ
படுத்தும்; பரிதானம் இருதயத்தைக் கெடுக்கும்.
ஒரு காரியத்தின் துவக்கத்தைப்பார்க்கிலும் அ
அதின் முடிவு வாசி; மனமேட்டிமையானவ
னைப்பார்க்கிலும் மனது சாந்தமானவன் வாசி.
[4]சினமடைய உன் ஆவியிலே தீவிரிக்காதிரு; கூ
ஏனெனில் சினம் மூடரின் மார்பிலே தங்கும்.
இந்நாள்களைப்பார்க்கிலும் முன்நாள்கள் வா ௰
சியாயிருந்தது என்னவென்று சொல்லாதிரு;
ஏனெனில் நீ இப்படிக் கேட்பது ஞானத்தோ
டே கூடியதல்ல.
சுதந்தரத்தோடே ஞானமே நல்லது; சூரிய ௰க
னைக் காண்கிறவர்களுக்கு இதினாலே பிரயோ
சனமுண்டு. — ஏனெனில் ஞானத்தின் நிழலி ௰உ
லிருக்கிறது திரவியத்தின் நிழலிலிருக்கிறதற்குச்
சரி; ஞானம் தன்னுடையவர்களை உயிர்ப்பிக்
கிறது அறிவினுடைய மேன்மையாயிருக்கிறது.
பராபரனுடைய செயலையே நோக்கு; ஏனெ ௰ங
னில் அவர் கோணலாக்குகிறதை யார் செம்மை
யாக்கலாம்?—நீ நல்ல நாளிலே நன்மை அநுப ௰ச
வித்திரு; ஆனால் தீங்குநாளையும் நோக்கிப்பார்;
தனக்குப்பிற்பாடு இருப்பதொன்றையும் மனு
ஷன் கண்டுபிடியாதபடிக்கு அதனோடே இதை
யும் பராபரன் உண்டாக்கினார்.
இவை எல்லாவற்றையும் என் மாயையின்நாள் ௰ரு
களிலே கண்டேன்; [5]தன் நீதியிலே கெட்டுப்
போகிற நீதிமானுமுண்டு; தன் பொல்லாப்பி
லே நீடித்திருக்கிற ஆகாதவனுமுண்டு.—மிஞ் ௰சா
சின நீதிமானாயிராதே; உன்னை அதிகமான ஞா
னியுமாக்காதே; உன்னை நீ என் பாழ்க்கடிக்க
வேண்டும்? — மெத்த ஆகாதவனும் பயித்தியக் ௰எ

4 யாக். க ௰௯.—5 பிர. அ. ௰௪.

காரனுமாயிராதே; உன் காலத்திற்குமுன்னே நீ
௰௮ என் சாகவேண்டும். — நீ இதைப் பிடித்திருப்
பதும், நீ இதைக் கைவிடாதிருப்பதும் நல்லது;
ஏனெனில் பராபரனுக்குப் பயப்படுகிறவன்
அவைகளுக்கெல்லாம் நீங்கிப்போவான்.
௰௯ ஞானம் ஞானியைப் பட்டணத்திலிருக்கிற
௨௰ பத்து அதிபதிகளிலும்பலவானாக்கும்.–[1]ஏனென்
றால் ஒரு பாவமும் செய்யாமல் நன்மையையே
செய்யத்தக்க நீதிமான் பூமியிலில்லை.
௨௧ சொல்லப்படுகிற எல்லா வார்த்தைகள்மேலும்
உன் இருதயத்தை வைக்காதே; உன் வேலைக்
காரன் உன்னைச் சபித்தாலும் அதை நீ கேளா
௨௨ திருக்கும்படிக்குத்தானே.–ஏனெனில் அநேகந்
தரம் நீயும் பிறரைச் சபித்தாயென்று உன் மனது
௨௩ போந்தபிரகாரமாக அறிந்திருக்கும். — இவை
யெல்லாம் நியாயமாய்ச் சோதித்துப்பார்த்தேன்;
ஞானமடைவேனென்று நான் சொல்லியும் அது
௨௪ எனக்குத் தூரமாயிருந்தது.—தூரமும், மகா ஆழ
முமாயிருக்கிறதைக் கண்டுபிடிப்பவன் யாவன்?
௨௫ ஞானத்தையும் திட்டமான நிதானத்தையும்
அறியவும், ஆராயவும், தேடவும், [2]மதிகேட்டின்
ஆகாமியத்தையும் புத்திமயக்கங்களின் பயித்தி
யத்தையும் அறியவும் நான் என் இருதயத்தாலே
௨௬ சுற்றித்திரிந்தேன்.—நெஞ்சு கண்ணிகளும் வலை
களும், கைகள் கட்டுகளுமாயிருக்கிற ஸ்திரி
[3]சாவிலும் கசப்பென்று கண்டேன்; பராபரனுக்
குமுன்பாகச் சற்குணனாயிருக்கிறவன் அவளுக்
குத் தப்புவான், [4]பாவியோ அவளால் பிடிபடு
௨௭ வான்.—இதோ இதைக் கண்டுபிடித்தேனென்று
பிரசங்கி சொல்லுகிறான்; திட்டமான நிதானத்
தைக் கண்டுபிடிப்பதற்கு ஒவ்வொன்றாய்ப் பார்த்
௨௮ தேன்.—அதை என் ஆத்துமா இன்னம் தேடுகி
றது; அதை நான் இன்னம் கண்டுபிடித்ததில்லை;
ஆயிரம்பேரில் ஒரு மனுஷனைக் கண்டேன்; ஆ
னால் இவர்களெல்லாரிலும் ஒரு ஸ்திரியை நான்
௨௯ கண்டதில்லை.—இதோ பராபரன் மனுஷனைச்
செம்மையானவனாக உண்டாக்கினார் என்கிற
தைமாத்திரம் கண்டுபிடித்தேன்; இவர்களோ
அநேகம் உபாயதந்திரங்களைத் தேடினார்கள்.

## ௮. அதிகாரம்.

௧. இராசாக்களை வந்திக்கவும், ௯. தேவச்செயலை நினைக்கவும்வேண்டு மென்பது. ௰௨. செல்வத்திலே துஷ்டனைப்பார்க்கிலும் சிறுமையிலே தேவபத்தியுள்ளவனுக்கு நயமுண்டென்பதும், ௰௪. பராபரனுடைய செய்கை ஆராயப்படாததென்பதும்.

௧ ஞானிக்கு ஒத்தவன் யாவன்? காரியத்தின் வி
யார்த்தியை அறிந்தவனுக்கு ஒத்தவன் யாவன்?
மனுஷனுடைய ஞானம் அவன் முகத்தை வெ
ளிச்சமாக்கும்; அதினால் அவன் முகத்தின் துஷ்
டம் மாறும்.
௨ [5]இராசாவின் கட்டளையைக் கவனித்து நட
வென்று நான் உன்னை எச்சரிக்கிறேன்; இதை நீ
௩ பராபரனுக்கிட்ட ஆணையின்படியே செய்.—நீ
அவன் முகப்பார்வையால் கலங்காதபடிக்கு
நட; பொல்லாத காரியத்திலே நில்லாதே; ஏனெ
னில் தனக்குச் சித்தமாயிருக்கிறவை எல்லாவற்
றையும் செய்வான்.–இராசாவின் வார்த்தை எல் ௪
லாம் அதிகாரமுள்ளது; என்னசெய்கிறீர் என்று
அவனோடே யாவன் சொல்லுவான்?
[6]கற்பனையைக் கைக்கொள்ளுகிறவன் துர்க் ௫
காரியத்தைக் கண்டறிவதில்லை; ஞானியின் இரு
தயம் காலத்தையும் நியாயத்தையும் அறியும். —
[7]ஏனெனில் எல்லா விருப்பத்துக்கும் காலமும் ௬
நியாயமுமுண்டு; ஏனென்றால் மனுஷன்மேலி
ருக்கிற அவனுடைய தீங்கு திரளானது. —
என்ன சம்பவிக்குமென்று அறியானே; சம்ப ௭
விக்கும் காலத்தையோ அவனுக்கு அறிவிப்ப
வன் யாவன்?
ஆவியை விடாதிருக்கத் தன் ஆவியின்மேலே ௮
மனுஷன் அதிபதியல்ல; மரணநாளின்மேல் அ
வனுக்கு ஆளுகையுமில்லை; அந்தப் போருக்கு
நீங்குதலுமில்லை; ஆகாமியம் தன்னுடையவர்
களை விடுவிப்பதுமில்லை.
சூரியன்கீழ்ச் செய்யப்படும் எல்லாக் கிரியை ௯
யின்மேலும் நான் என் இருதயத்தை வைத்து, இ
வையெல்லாம் கண்டேன்; மனுஷனை மனுஷன்
தனக்குத் தீமையாக ஆளுகிற காலமுமுண்டு.—
அந்தப்படி ஆகாதவர்கள் அடக்கம்பண்ணப்ப ௰
டுகிறதையும் கண்டேன்; அதற்குச் சனங்கள்
வந்தார்கள்; அதற்குப் பரிசுத்த ஸ்தலத்திலிருந்து
நடந்துபோகிறவர்களும் உண்டாயிருந்தார்கள்;
நீதஞ்செய்கிறவர்களோ ஊரிலே மறக்கப்பட்
டார்கள்; இதுவும் மாயை.
துர்க்கிரியைக்குத்தக்க நியாயத்தீர்ப்புச் சீக்கி ௰௧
ரம் நடவாதபடியால், மனுப்புத்திரரின் இருதயம்
அவர்களுக்குள்ளே பொல்லாப்பைச் செய்ய
நிறையப்படும். — பாவி நூறுதரம் பொல்லாப் ௰௨
பைச்செய்து நீடித்திருந்தாலும் [8]பராபரனுக்குப்
பயந்து, அவருடைய முகத்துக்குமுன்பாக அஞ்
சுதலாயிருக்கிறவர்களே நன்றாயிருப்பார்களெ
ன்று நான் அறிவேன்.—ஆனால் ஆகாதவன் நன் ௰௩
றாயிருப்பதில்லை; அவன் நாள் நீடித்திருப்பது
மில்லை; ஒரு நிழலைப்போலிருப்பான்; ஏனெ
னில் அவன் பராபரனுக்குமுன்பாக அஞ்சுத
லில்லாதிருக்கிறான்.
பூமியின்மேல் நடக்கிற வேறொரு மாயையுமு ௰௪
ண்டு; அதாவது: நீதிமான்களுண்டு; ஆகாதவர்க
ளின் செய்கைக்கு வருவதுபோல அவர்களுக்கு
வரும்; ஆகாதவர்களுமுண்டு; நீதிமான்களின்
செய்கைக்கு வருவதுபோல அவர்களுக்கு வரும்;
இதுவும் மாயை என்கிறேன்.—ஆகையால் நான் ௰௫
மகிழ்ச்சியைப் புகழ்ந்திருக்கிறேன்; ஏனெனில்
[9]புசிப்பதும், குடிப்பதும், மகிழ்வதுமேயல்லா
மல் வேறொரு நன்மையும் சூரியன்கீழே இருக்
கிறவைகளால் மனுஷனுக்கில்லை; பராபரன் அ
வனுக்குச் சூரியன்கீழ்க் கட்டளையிட்ட அவன்
சீவனின் நாள்களில் அவனுக்கு அவன் பிரயா
சத்தினால் சேருகிறது அதுவே.

1 ௧ இரா. ௮. ௪௬. வாக். ௨௰. ௯.
2 பிர. ௧. ௰௭.—3 வாக். ௫. ௩, ௪.
4 வாக். ௨௨. ௰௪.
5 வாக். ௨௪. ௨௧.
6 உரோ. ௰௩. ௫.
7 பிர. ௩ ௧.
8 சங். ௩௭. ௯. ௰௯.
9 பிர. ௨. ௨௪ : ௩. ௰௨, ௨௨.

௰௬ நான் ஞானத்தை அறிகிறதின்மேலும், மனு
ஷன் இரவும்பகலும் தன் கண்களில் நித்திரையும்
காணாதிருக்கத்தக்க விதமாய்ப் பூமியிலுண்டாயி
ருக்கிற தொல்லையைப்பார்க்கிறதின்மேலும் என்
௰௭ இருதயத்தை வைத்தபோது, — சூரியன்கீழ்ச்
செய்யப்படும் செய்கையை மனுஷன் கண்டுபி
டிக்கமாட்டானென்கிறதைப் பராபரனுடைய
செயலை எல்லாம் நோக்குகையில் கண்டேன்;
அதைத் தேட மனுஷன் எத்தனை பிரயாசப்பட்
டாலும் கண்டுபிடியான்; தனக்கும் அறியப்படு
மென்று ஞானி சொல்லியும் அவனும் அதைக்
கண்டுபிடிக்கமாட்டான்.

## ௯. அதிகாரம்.

௧. நல்லோர்க்கும், தீயோர்க்கும், சமமாய் நேரிடுமென்பது. ௪. மனிதருக்கு மரணம் நிச்சயமென்பது. ௭. இம்மையிலே அவர்களுடைய பங்கு ஆறுதல்தானென்பது. ௰௧. எல்லார்மேலும் தேவ ஆளுகையுண்டென்பது. ௰௩. பலத்தைப்பார்க்கிலும் ஞானமே நன்மையென்பது.

௧ அதேனென்றால் இவைகளை எல்லாம் நான் என்
மனதிலே வைத்து, இவைகளை எல்லாம் வகை
யறுக்கப் பார்த்தேனே; என்னவெனில் நீதிமான்
களும், ஞானிகளும், அவர்கள் கிரியைகளும்
பராபரனுடைய கையிலிருந்தாலும், அவர்களுக்
கு முன்பாக இருக்கிறவை எல்லாவற்றிலும் சிநே
கமாகிலும் பகையென்கிலும் மனுஷனுக்குத் தெ
௨ ரியாதென்பதைத்தானே.—சம்பவிக்கிற யாவும்
எல்லாருக்கும் ஏகவிதமாய்ச் சம்பவிக்கும்; நீதி
மானுக்கும் ஆகாதவனுக்கும், நற்குணமும் சுத்த
முமாயிருக்கிறவனுக்கும் அசுத்தமாயிருக்கிறவ
னுக்கும், பலியிடுகிறவனுக்கும் பலியிடாதவனு
க்கும், நல்லவனுக்கும் பாவிக்கும், ஆணையிடுகிற
வனுக்கும் ஆணைக்குப் பயப்படுகிறவனுக்கும்
௩ ஏகவிதமாய்ச் சம்பவிக்கிறது. — எல்லாருக்கும்
ஏகவிதமாய்ச் சம்பவிக்கிறதும், மனுப்புத்திரரின்
இருதயம் பொல்லாப்பினாலும் நிறைந்திருக்கிற
தும், அவர்கள் உயிரோடிருக்கிற நாள்களில் அ
வர்கள் இருதயத்தில் பயித்தியங்களிருக்கிறதும்,
பிற்பாடு அவர்கள் செத்தவர்களண்டைக்குப்
போகிறதும், சூரியன்கீழ் நடக்கிற எல்லாவற்றி
௪ லும் விசேஷித்த தீங்குதானே. — ஏனெனில்
இதற்கு நீங்கலாய்ப் பிரிக்கப்படுகிறவன் யா
வன்? உயிரோடிருக்கிற அனைவரிடத்திலுமோ
இன்னம் நம்பிக்கையுண்டு; ஏனென்றால் செத்த
சிங்கத்தைப்பார்க்கிலும் உயிரோடிருக்கிற நாய்
௫ வாசி.—உயிரோடிருக்கிறவர்கள் தாங்கள் மரிப்
பதை அறிவார்களே; மரித்தவர்கள் ஒன்றுமறியார்
கள்; அப்புறம் அவர்களுக்கு இலாபமுமில்லை;
ஏனென்றால் அவர்கள்பேர் மறக்கப்பட்டிருக்கி
௬ றது.—அவர்கள் சிநேகமும், அவர்கள் பகையும்,
அவர்கள் வயிராக்கியமும் அழிந்துதீர்ந்தன; சூரி
யன்கீழே செய்யப்படுகிறதொன்றிலும் அவர்க
ளுக்கு இனி என்றைக்கும் பங்கில்லை.
௭ நீ போய் [1]உன் அப்பத்தை மகிழ்ச்சியுடனே
புசித்து, உன் திராட்சப்பழ இரசத்தை நற்குண
இருதயத்துடனே குடி; ஏனெனில் பராபரன்
உன் கிரியைகளுக்குப் பிரியப்பட்டிருக்கிறார்.—
எல்லாக்காலத்திலும் உன் வஸ்திரங்கள் வெளுத் ௮
தவைகளும், உன் தலையின்மேல் எண்ணெய்
குறைபடாததுமாயிருக்கட்டும். — பராபரன் ௯
னக்குச் சூரியன்கீழ் உன் மாயையின் நாள்களுக்
கெல்லாம் கட்டளையிட்டு, நீ சிநேகித்துமிருக்
கிற [2]உன் பெண்சாதியோடே உன் மாயையான
சீவனின் நாள்களிலெல்லாம் சீவனை அநுபவி;
ஏனெனில் இச்சீவனிலும் நீ சூரியன்கீழ்ப்படு
கிற உன் வருத்தத்திலும் அதுவே உன் பங்கு.—
செய்ய உன் கைக்கு நேரிடுகிறவை எல்லாவற் ௰
றையும் உன் பலத்தோடே செய்; ஏனெனில் நீ
போகப்போகிற பாதாளத்திலே செய்கையும்,
வித்தையும், அறிவும், ஞானமுமில்லை.
நான் திரும்பிக்கொண்டு சூரியன்கீழ்க் கண்ட ௰௧
தேதெனில், ஓடுகிறதற்கு வேகமுள்ளவர்களின்
வேகமும், யுத்தத்திற்குச் சவுரியவான்களின் சவு
ரியமும் போதாது; பிழைப்புக்கு ஞானமுள்ள
வர்களின் ஞானமும் போதாது; ஐசுவரியமும்
அடைகிறதற்குப் புத்திமான்களின் புத்தியும்
போதாது; கிருபை அடைகிறதற்கு அறிவாளி
களின் அறிவும் போதாது; அவர்களெல்லாருக்
கும் வேளையும், தேவச்செயலும் நேரிடவேண்டு
மென்பதுதானே.—தன் காலத்தையும் மனுஷன் ௰௨
அறியானே; மச்சங்கள் பொல்லாத வலையில்
அகப்படுகிறதுபோலவும், குருவிகள் கண்ணி
யில் பிடிபடுகிறதுபோலவும் மனுப்புத்திரர் பொ
ல்லாத காலத்திலே கண்ணி அசுப்பாய் அவர்
கள்மேலே விழும்போது அவைகளைப்போலே
சிக்கப்படுகிறார்கள்.
சூரியன்கீழ் ஞானமுண்டென்கிறதையும் கண் ௰௩
டேன்; அதுவே என் பார்வைக்குப் பெரியது.—
ஒரு சிறிய பட்டணமிருந்தது; அதிலுள்ள மனு ௰௪
ஷர் கொஞ்சம்; அதின்மேல் ஒரு பெரிய இராசா
வந்து, அதை வளைந்துகொண்டு அதற்கு எதிரா
கப் பெரிய கொத்தளங்களைக் கட்டினான். —
ஆனால் ஞானமுள்ள ஒரு ஏழைமனுஷன் அதில் ௰௫
காணப்பட்டான்; அவன் அந்தப் பட்டணத்
தைத் தன் ஞானத்தினாலே விடுவித்தான்; ஒருவ
னும் அந்த ஏழைமனுஷனை நினைத்திருந்ததில்
லை.—ஆகையால் ஏழையின் ஞானம் அசட்டை ௰௬
பண்ணப்பட்டு, அவன் வார்த்தைகள் கேட்கப்
படாமற்போனாலும் [3]வீரியத்தைப்பார்க்கிலும்
ஞானமே நலமென்றேன்.
மூடருடைய அதிபதியின் கூக்குரலைப்பார்க் ௰௭
கிலும், ஞானிகளுடைய வார்த்தைகளே அமரிக்
கையோடே கேட்கப்படத்தக்கவைகள்.
யுத்த ஆயுதங்களைப்பார்க்கிலும் ஞானமே நலம்; ௰௮
ஒரே பாவியோவென்றால் திரளான நன்மை
யைக் கெடுப்பான்.

## ௰. அதிகாரம்.

௧. ஞானத்தையும் அறியாமையையும், ௰௬. அமளியையும், ௰௮ அசதியையும், ௰௯. பணத்தையுங்குறித்தது. ௨௰. இராசாக்களை மனிதர் வணக்கமாய் நினைக்கவேண்டுமென்பது.

1 பிர. ௨. ௨௪.—2 வாக். ௩. ௰௮.

3 பிர. ௭. ௨௰. வாக். ௨௧. ௨௨: ௨௪. ௩.

௧ செத்த ஈக்கள் தயிலக்காரனுடைய பரிமளதயி
லத்தை நாறவும் கெட்டுப்போகவும்பண்ணும்;
கொஞ்சம் பயித்தியம் ஞானத்திலும் கனத்திலும்
பிரபலமானவனை அப்படியே செய்யும்.
௨ ஞானியின் இருதயம் அவன் வலதுபக்கத்தி
லும், மூடனுடைய இருதயமோ அவன் இடது
பக்கத்திலும் இருக்கின்றன.
௩ மூடன், வழியிலே நடந்தாலும் மதிகெட்டவ
னாயிருக்கிறான்; தான் பயித்தியக்காரனாய் இருக்
கிறதை எல்லாருக்கும் சொல்லுகிறான்.
௪ துரையின் கோபம் உன்மேல் எழும்பினால்
உன் தானத்தைவிட்டு விலகாதே; ஏனெனில்
தாழ்தல் பெரிய குற்றங்களை அமர்த்திவிடும்.—
௫ அதிபதியினிடத்திலிருந்து உண்டாகும் தப்பித
மாகிய ஒரு தீங்கிருக்கிறது; அதைச் சூரியன்
௬ கீழ்க் கண்டேன்.—பயித்தியக்காரன் மகா உய
ரங்களில் வைக்கப்படுகிறான்; சீமான்களோ
௭ தாழ உளுக்காந்திருக்கிறார்கள்.— வேலைக்காரர்
குதிரைகள்மேல் இருக்கிறதையும், பிரபுக்கள்
வேலைக்காரரைப்போலத் தரையிலே நடக்கிற
தையும் கண்டேன்.
௮ [1]படுகுழியை வெட்டுகிறவன் அதிலே விழு
வான்; அடைப்பைப் பிடுங்குகிறவனைப் பாம்பு
கடிக்கும்.
௯ கல்லுகளைப் பேர்த்து எடுக்கிறவன் அவைக
ளால் நோயடைகிறான்; மரங்களைப் பிடுங்கு
கிறவன் அவைகளால் மோசப்படுகிறான்.
௰ ஒருவன் இருப்பு ஆயுதத்தை மழுக்கிவிட்ட
போது அதின் கருக்கைத் தீட்டாதேபோனால்
அதிக பெலனாய் உழைக்கவேண்டியது; ஆகை
யால், ஒரு காரியத்தைச் செவ்வையாய்ச் செய்
கிறதற்கு ஞானமே பிரதானம்.
௰௧ தடைகட்டப்படாமல் பாம்பு கடித்தால் வா
௰௨ ய்ச்சாலகனாலே பிரயோசனம் இல்லை.—ஞானி
யினுடைய வாய்விசேஷங்கள் இன்பமாய் இருக்
கின்றன; மூடனுடைய உதடுகளோ அவனைத்
௰௩ தானே விழுங்கும். — அவன் வாய்விசேஷங்க
ளின் துவக்கம் அவமதியும், அவன் வாக்கின் மு
௰௪ டிவு பொல்லாத பயித்தியமும்தானே.—மூடன்
மிகுதியாய்ப் பேசுகிறான்; ஆகிலும் நடப்பது
ஏதென்கிறதை மனுஷன் அறியான்; தனக்குப்
பிற்பாடு நடப்பதை அவனுக்கு அறிவிப்பவன்
௰௫ யாவன்?—ஊருக்குப்போக வழியை அறியாதசி
னாலே மூடரின் பிரயாசம் அவர்களை இளைக்கப்
பண்ணும்.
௰௬ [2]இராசா இளைஞனுமாய்ப் பிரபுக்கள் அதிகா
லமே உண்கிறவர்களுமாயிருக்கப்பட்ட தேச
௰௭ மே, உனக்கையோ!—இராசா தலைவர் புத்திரனு
மாய், பிரபுக்கள் வெறி எடுக்கவல்ல, பெலன்
கொள்ள ஏற்றவேளையில் உண்கிறவர்களுமாய்
இருக்கப்பட்ட தேசமே, நீ பாக்கியமுள்ளது!
௰௮ மகாசோம்பலினாலே மேல்மச்சு ஒழுக்காகும்;
கைகளின் நெகிழ்வினாலே வீடு ஒழுக்காகும்.
௰௯ விளையாட்டுக்கு விருந்துகளைப் பண்ணுகிறார்
கள்; மதுபானம் சீவனைச் சந்தோஷமாக்கும்;
பணமே அதற்கு எல்லாம் நிருவாகம்பண்ணும்.
உன் மனதிலும் [3]இராசாவைச் சபிக்காதே; ௨௰
உன் சயன அறையிலும் ஐசுவரியவானைச் சபிக்
காதே; ஏனெனில் ஆகாயத்துப் பறவைகள் அந்
தச் சத்தத்தைக்கொண்டுபோம்; செட்டைகளுள்
ளவைகள் செய்தியைப்போய் அறிவிக்கும்.

## ௰௧. அதிகாரம்.

௧. தர்மமார்க்கத்தைச் சொல்லியது. ௭. வாழ்வில் மரணத்தையும், ௯. வாலி
பகாலத்தில் நியாயத்தீர்ப்பின்நாளையும் நினைக்கவேண்டுமென்பது.

உன் ஆகாரத்தைத் தண்ணீர்கள்மேல் போக ௧
விடு; ஏனெனில் வெகுநாளுக்குப்பிறகு அதின்
பலனைக் காண்பாய்.—[4]ஏழுபேருக்கும், எட்டுப் ௨
பேருக்குங்கூடப் பங்குகொடு; ஏனெனில்
பூமியின்மேல் என்ன தீங்கு வருமோ என்றறி
யாய். — மேகங்கள் நிறைந்திருந்தால் மழை ௩
யைப் பூமியின்மேல் பொழியும்; மரம் அப்போது
தென்திசையாய் விழுந்தாலும், வடதிசையாய் வி
ழுந்தாலும், விழுந்த இடத்திலே மரமிருக்கும்.—
காற்றைக் கவனிக்கிறவன் [5]விதைப்பதில்லை, மே ௪
கங்களை நோக்குகிறவன் அறுப்பதுமில்லை.—[6]காற் ௫
றின்வழி ஏதென்றும், கர்ப்பவதியின் வயிற்றில்
[7]எலும்புகள் உருவாகும் விதம் ஏதென்றும், நீ அறி
யாதிருக்கிறதுபோல, எல்லாவற்றையும் செய்
கிற பராபரனுடைய செயலையும் அறியாய்.—கா ௬
லமே உன் விதையை விதை, அந்திநேரத்திலும்
உன் கையை நெகிழவொட்டாதே; ஏனெனில்
எது வாய்க்கும்? அது வாய்க்குமோ? இது வாய்க்
குமோ? இரண்டும் சரிநயமாய் வருமோ? என்
கிறதை அறியாய்.
வெளிச்சம் இன்பமும் சூரியனைக் காண்கிறது ௭
கண்களுக்குப் பிரியமுமாமே. — ஆனால் மனு ௮
ஷன் வெகுவருஷம் உயிரோடிருந்து, அவைக
ளிலெல்லாம் மகிழ்ச்சியாயிருந்தாலும், இருளின்
நாள்களையும் நினைக்கவேண்டும், ஏனெனில் அ
வைகள் அநேகமாயிருக்கும்; வந்து சம்பவித்த
வையெல்லாம் மாயை.
வாலிபனே, உன் இளமையிலே சந்தோஷப் ௯
படு; உன் வாலிப நாள்களிலே உன் இருதயம்
உன்னைப் பூரிப்பாக்கட்டும்; உன் நெஞ்சின் வழி
களிலும், உன் கண்களின் தோற்றுதல்களிலும்
நட; ஆனால் [8]இவைகள் எல்லாவற்றின்நிமித்த
மும் பராபரன் உன்னை நியாயத்திலே கொண்டு
வந்து நிறுத்துவாரென்றறி.—நீ ஆகாத குணத்தை ௰
உன் இருதயத்தைவிட்டு அகற்றிப் பொல்லாப்
பை உன் மாம்சத்தைவிட்டு நீங்கப்பண்ணு;
ஏனெனில் இளவயதும் வாலிபமும் மாயை.

## ௰௨. அதிகாரம்.

௧. தகுதியான காலத்திலே சிருஷ்டிகரை நினைக்கவேண்டுமென்பது. ௮.
நற்போதனையைச் செய்யப் பிரசங்கியின் கவலை சொல்லப்பட்டது. ௰௩.
பராபரனுக்குப் பயப்படுதல்; மாயை விஷம் நீக்கும் ஔஷதமென்பது.

தீங்குநாள்கள் வராததற்குமுன்னும், எனக்குப் ௧
பிரியமானவைகளல்லவென்று நீ சொல்லும்வரு
ஷங்கள் சேராததற்குமுன்னும், — சூரியனும், ௨

1 வாக். ௨௬.௨௭.—2 ஏசா. ௩.௪.—3 உ மோ. ௨௨.௨௮.—4 லூக். ௰௬.௯.
5 உ கொரி. ௯.௬.—6 யோபு. ௩.௮.—7 சங். ௧௩௯.௰௪-௰௬.—8 பிர. ௰௨.௰௪.

வெளிச்சமும், சந்திரனும், நட்சத்திரங்களும்
அந்தகாரப்படாததற்குமுன்னும், மேகங்கள் ம
ழைக்குப்பிறகு திரும்பத்திரும்ப வராததற்கு
முன்னும், நீ உன் சிருஷ்டிகரை உன் வாலிபத்
௩ தின் நாள்களில் நினை.—ஏனெனில் அப்போது
வீட்டுக் காவலாளிகள் தள்ளாடிப் பெலசாலிகள்
கூனிப்போய், எந்திரக்கற்கள் கொஞ்சமான
தினால் ஓய்ந்து, பலகணிகளால் பார்க்கிறவைகள்
௪ இருண்டு,—எந்திரச்சத்தம் தாழ்ந்ததினால் தெரு
வாசலின் கதவுகள் அடைபட்டு, குருவியின்
கூவுதலுக்கு எழுந்திருக்கிறதுண்டாய், கீதவாத்
தியத்திற்கு ஆனவைகளெல்லாம் அடங்கிப்
௫ போம்.—மேட்டுக்காகப் பயமுண்டாகி, வழியி
லே திகில்கள் காணும்; வாதுமைமரம் பூப்பூக்
கும்; வெட்டுக்கிளி சுமை சுமத்தப்பட்டிருக்
கும், பசித்தீபனமும் அற்றுப்போம்; ஏனெனில்
மனுஷன் தன்னுடைய நித்திய வளவுக்குப் போ
கிறான்; அவன் நிமித்தமாய்ப் புலம்புகிறவர்கள்
௬ வீதியிலே திரிவார்கள்.—ஆகையால் வெள்ளிக்
கயிறு விட்டுப்போய், பொற்கிண்ணி நசுங்கி,
ஊற்றின்மேல் சால் உடைந்து, துரவண்டையில்
௭ உருளை நொறுங்குண்டு,—இந்தப்படி [1]மண்ணா
னது பூமிக்குத் திரும்பி, ஆவி தன்னைத்தந்த பரா
பரன் அண்டைக்கு மறுபடியும், போகாததற்கு
முன்னே அவரை உன் வாலிபத்திலே நினை.

ஆ எத்தனையான மாயையென்று பிரசங்கி ௮
சொல்லுகிறான்; எல்லாம் மாயையே.—பிரசங்கி ௯
ஞானியாயிருந்ததுமல்லாமல், அவன் சனத்துக்
கும் அறிவைப் போதித்து, கவனமாய்க் கேட்டு
ஆராய்ந்து, [2]அநேகம் வாக்கியங்களை வரைந்து
சேர்த்தான்.—இதமான வார்த்தைகளைக் கண்டு ௰
பிடிக்கப் பிரசங்கி வகைதேடினான்; எழுதினது
செம்மையும், சத்திய வசனங்களுமாயிருக்கின்
றன. — ஞானிகளின் வசனங்கள் கூட்டங்க ௰௧
ளின் முதலாளிகளால் தைக்க அடிக்கப்பட்ட
கூர்களாகவும், ஆணிகளாகவுமிருக்கின்றன; [3]ஒ
ரே மேய்ப்பராலே அவைகள் அளிக்கப்பட்
டன.—[4]என் மகனே, இப்படிக்கொத்தவைக ௰௨
ளுக்கு மிஞ்சினதற்கு எச்சரிக்கையாயிரு; அநே
கம் புஸ்தகங்களை உண்டுபண்ணுகிறதற்கு முடி
வில்லை; திரளான படிப்பு மாம்சத்திற்குப் பிர
யாசம்.

வசனத்தின் கடைத்தொகையையெல்லாம் ௰௩
கேட்போமாக; [5]பராபரனுக்குப் பயந்து, அவர்
கற்பனைகளைக் கைக்கொள்; ஏனெனில் இதுவே
எல்லா மனுஷர்மேலும் விழுந்த கடன்.—அதே ௰௪
னென்றால் [6]சகல கிரியையையும், அந்தரங்கமா
னவை எல்லாவற்றையுங்கூட அது நன்மையா
னாலும், தீமையானாலும் பராபரன் நியாயத்தி
லே கொண்டுவருவார்.

1 ௧ மோ. ௩. ௰௯.
2 ௧ இரா ௪. ௩௨, ௩௩.
3 சங். ௨௩. ௧. எசே. ௩௪. ௨௩.
4 ௨ தீமோ. ௩. ௪, ௰௧.
5 ௫ மோ. ௰. ௰௨, ௰௪. ௨ கொரி. ௫. ௰.
6 பிர. ௰௧. ௯. ௧ கொரி. ௪. ௫.

# THE SONG OF SOLOMON.

# சாலொமோனின் உன்னதப்பாட்டு.

## ௧. அதிகாரம்.

௧. கிறிஸ்துவின்மேல் திருச்சபைக்கு உண்டான அன்பைக்குறித்தது. ௫. தன் குறையை அறிக்கையிட்டு, ௭. அவருடைய மந்தைக்குத் தன்னை நடத்தும்படிக்கு வேண்டிக்கொண்டது. ௮. கிறிஸ்து இடையர் கூடாரங்களுக்கு அதை நடத்தி, ௯. தமது அன்பை அதற்குக் காட்டி, ௰௧. கிருபையுள்ள வாக்குத்தத்தத்தை அதற்குக் கொடுத்தது. ௰௨. திருச்சபையும், கிறிஸ்துவும், ஒருவரையொருவர் வாழ்த்திக்கொண்டது.

௧ சாலொமோன் பாடின உன்னதமான பாட்டு.
௨ தமது வாயின் முத்தங்களில் ஒன்றால் என்னை
முத்தமிடக்கடவார்; ஏனெனில் திராட்சப்பழ
இரசத்தைப்பார்க்கிலும் உம்முடைய நேசங்கள்
௩ இன்பமாயிருக்கும்.—உம்முடைய பரிமளதயில
ங்கள் வாசனைக்கு இன்பமானவைகள்; உம்மு
டைய நாமம் ஊற்றுண்ட பரிமளதயிலமாயிருக்
கிறது; ஆனதுகொண்டு கன்னிகைகள் உம்மைச்
௪ சிநேகிக்கிறார்கள்.—[1]என்னை இழும், உமக்குப்
பின்னாலே ஓடிவோம்; இராசா என்னைத் தம்மு
டைய அறைகளில் அழைத்துப்போனாராகில்
[2]உமக்குள் களிகூர்ந்து சந்தோஷப்படுவோம்;
திராட்சப்பழ இரசத்தைப்பார்க்கிலும், உம்மு
டைய நேசங்களையே நினைப்போம்; செம்மை
யானவர்கள் உம்மைச் சிநேகிக்கிறார்கள்.
௫ எருசலேமின் குமாரத்திகளே, நான் கேதாரி
யரின் கூடாரங்களைப்போலவும், சாலொமோ
னின் சமுக்காளங்களைப்போலவும், கறுப்பும்
௬ அழகுமாயிருக்கிறேன். — நான் கறுப்பென்று
என்னைப் பாராதிருங்கள்; ஏனெனில் வெய்யில்
என்மேல் பட்டது; என் தாயின் பிள்ளைகள் என்
மேல் கோபமாயிருந்து, என்னைத் திராட்சத்
தோட்டங்களின் காவற்காரியாக வைத்தார்கள்;
எனக்கு இருக்கிற [3]என்னுடைய திராட்சத்
தோட்டத்தைக் காவாதேபோனேன்.
௭ என் ஆத்துமா சிநேகிக்கிறவரே, எங்கே மந்
தையை மேய்த்து, எங்கே அதை மத்தியானத்தில்
மடக்குகிறீரென்று எனக்கு அறிவியும்; நான்
உம்முடைய தோழரின் மந்தைகளிடத்தில் ஒது
க்கைத் தேடுகிறவளைப்போல இருக்கவேண்டி
யதென்ன?
௮ ஸ்திரிகளில் ரூபவதியே, அதை அறியாயா
கில், நீ புறப்பட்டு மந்தையின் அடிகளைத் தொ
டர்ந்துபோய், மேய்ப்பர்களின் கூடாரங்களண்
௯ டையில் உன் ஆட்டுக்குட்டிகளை மேய்.—[4]என்
சிநேகிதியே, பார்வோனுடைய இரதங்களில்
பூண்டிருக்கிற பரிகள் பவிஞ்சுக்கு உன்னை ஒப்
பிடுகிறேன்.—[5]ஆபரணதிகள் பூண்ட உன் கன் ௰
னங்களும், ஆரங்கள் பூண்டிருக்கிற உன் கழுத்
தும் அழகாயிருக்கின்றன. — வெள்ளிப்பொட் ௰௧
டுகளுள்ள பொன் ஆபரணங்களை உனக்குப்
பண்ணுவோம்.
[6]இராசா தமது பந்தியிலிருக்கும்தனிலும் என் ௰௨
னுடைய நர்துத்தயிலம் தன் வாசனையை வீசும் —
என் நேசர் எனக்கு என் ஸ்தனங்களின் நடுவே ௰௩
[7]தரிக்கிற வெள்ளைப்போளச் செடியின் செண்
டானவர்.—என் நேசர் எனக்கு எங்கேதியூர்த் ௰௪
திராட்சத்தோட்டங்களில் முளைக்கும் கொப்
பேர் செடியின் குலையானவர்.
இதோ என் சிநேகிதியே, நீ ரூபவதி; இதோ ௰௫
நீ ரூபவதி; உன் கண்கள் [8]புறாக்களின் கண்க
ளானவை.
இதோ என் நேசரே, நீர் ரூபமுள்ளவர்; நீர் ௰௬
உச்சிதமுமானவர்; நம்முடைய மஞ்சம் துளிர்க்
கிறதுமாயிருக்கிறது. — நம்முடைய வீடுகளின் ௰௭
உத்திரங்கள் கேதுருக்கள்; நம்முடைய நடை
தேவதாரி மரங்கள்.

## ௨. அதிகாரம்.

௧. கிறிஸ்துவுக்கும் தமது திருச்சபைக்கும் அந்நியோந்நியமும், அ நம்பிக்கையும், ௮. திருச்சபையை அழைத்தலும், ௰௪. திருச்சபையின்மேலுள்ள கிறிஸ்துவின் விசாரணையும், ௰௬. திருச்சபை அறிவிக்கிற தன் விசுவாசமும், நம்பிக்கையும் சொல்லப்பட்டது.

நான் சாரோன் வெளியின் பூவும், பள்ளத்தாக் ௧
குகளின் லீலியாளுமானவள்.
முள்ளுகளுக்குள்ளே லிலீயா புஷ்பம் எப்ப ௨
டி இருக்கிறதோ, அப்படிக் குமாரத்திகளுக்குள்
ளே என் சிநேகிதியிருக்கிறாள்.
காட்டுமரங்களுக்குள்ளே கொஞ்சிமரம் எப் ௩
படியிருக்கிறதோ, அப்படிக் குமாரருக்குள்ளே
என் நேசரிருக்கிறார்; அதின் நிழலிலே வாஞ்
சையாய் உளுக்காருகிறேன்; அதன் கனி என்
ருசிக்கு [9]மதுரமாயிருக்கிறது. — என்னைத் [10]தி ௪
ராட்சப்பழ இரசத்தின் வீட்டிலே அழைத்துப்
போகிறார்; என்மேல் பறக்கிற அவருடைய
கொடி [11]சிநேகம். — திராட்சப்பழஇரசமுள்ள ௫
பாத்திரங்களால் என்னை ஆதரித்துக் கொஞ்
சிப்பழங்களால் என்னை ஆற்றுங்கள், ஏனெனில்
[12]சிநேகத்தால் வியாதியாயிருக்கிறேன்.—[13] அவர் ௬

1 எரே. ௩௧. ௩. யோவா. ௬௨. ௪௨. 4 யோவா. ௰௫. ௰௪. ௰௫.
2 ௧ பே. ௧. ௮, ௯. வெளி. ௰௯. ௭. 5 சங். ௪௫. ௰.
3 ஓசே. ௨. ௰௪, ௰௫. 6 வெளி. ௩. ௨௰.

7 ௨ தீமோ. ௨. ௮. — 8 மத். ௰. ௰௬. 11 உரோ. ௮. ௩௮. ௩௯.
9 சங். ௩௪. ௯: ௧௧௯. ௰௩. 12 உன். ௫ அ பிலி. ௧. ௨௩.
10 வாக். ௧. ௩-௫. 13 உன். ௮. ௩.

இடதுகரம் என் தலையின்கீழ் இருப்பதாக; அவர்
வலதுகரம் என்னை அணைப்பதாக.
௭ [1]எருசலேமின் குமாரத்திகளே, சிநேகிதிக்கு
மனதாகும்மட்டும் நீங்கள் அவளை விழிக்கப்
பண்ணாமலும் எழுப்பாமலும் இருக்க உங்களை
வெளிமான்கள்மேலும் வெளியின் மரைகள்
மேலும் ஆணையிடுகிறேன்.
௮ [2]இது என் நேசருடைய சத்தம்; இதோ அவர்
மலைகளின்மேல் குதித்தும், மேடுகளின்மேலே
துள்ளியும் வருகிறார்.
௯ என் நேசர் [3]வெளிமானுக்கு, அல்லது மரை
களின் குட்டிக்கு ஒப்பாயிருக்கிறார்; இதோ,
அவர் எங்கள் சுவருக்குப் புறம்பே நின்று பலக
ணிகளால் பார்த்து, கிராதிகளால் செழித்தமுகம்
௰ காண்பிக்கிறார். — என் நேசர் மறு உத்தரவு வி
ளம்பி, எனக்குச் சொல்லுகிறதாவது: [4]என் சிநே
கிதியே, என் ரூபவதியே, எழுந்திருந்து வா.—
௰௧ ஏனெனில் இதோ, மாரிகாலம் சென்று மழை
௰௨ விட்டுத் தீர்ந்துபோயிற்று. — புஷ்பங்கள் பூமி
யில் காணப்படுகின்றன; குருவிகள் கூவுங்கா
லம்சேர்ந்து, காட்டுப்புறாவின் சத்தம் நமது தே
௰௩ சத்தில் கேட்கப்படுகிறது.—[5]அத்திமரம் தன் கா
ய்களைக்காய்த்து. திராட்சச்செடிகள் பூப்பூத்து,
வாசனை பரிமளிக்கிறது; என் சிநேகிதியே எழு
௰௪ ந்துவா; என் ரூபவதியே வா. — கல்மலையின்
வெடிப்புகளிலும், செங்குத்தின் ஒதுக்கிலும் தங்
குகிற என் புறாவே, உன் உருவை எனக்குக்
காண்பி; [6]உன் சத்தத்தை எனக்குக் கேட்கப்
பண்ணு; ஏனெனில் உன் சத்தம் இன்பமும்,
உன் உருவம் அழகுமாயிருக்கிறது.
௰௫ [7]திராட்சத்தோட்டங்களைக் கெடுக்கிற ஓரிக
ளையும், நுழைநரிகளையும், நமக்குப் பிடியுங்கள்;
ஏனெனில் நம்முடைய திராட்சத்தோட்டங்கள்
பூவும் பிஞ்சுமுள்ளவைகளென்கிறார்.
௰௬ [8]லீலியா புஷ்பங்களில் மேய்கிற என் நேசர்
என்னுடையவர், நான் [9]அவருடையவளுமாயி
ருக்கிறேன்.
௰௭ என் நேசரே, பகல் குளிர்ச்சியாகி நிழல்கள்
அற்றுப்போயிருக்குமளவும் நீர் திரும்பி, குன்
றும் பிளப்புமான கல்மலைகளில் குதித்துவாரும்,
[10]கலைமானுக்கு அல்லது மரைகளின் குட்டிக்
குச் சமானமாயிரும்.

## ௩. அதிகாரம்.

௧. சோதனையிலே திருச்சபையின் சண்டையும், செயமும். ௬. திருச்சபை கிறிஸ்துவில் மகிமைகொண்டாடியது.

௧ என் ஆத்துமா சிநேகிக்கிறவரை இராத்திரி கா
லங்களில் என் படுக்கையிலே தேடினேன்; அவ
ரைத் தேடினேன்; [11]ஆனால் அவரைக் காணாதே
௨ போனேன். — ஆகையால் எழுந்து பட்டணத்
திலே தெருக்களிலும், வீதிகளிலும் திரிந்து, என்
ஆத்துமா சிநேகிக்கிறவரைத் தேடுவேனென்
றேன்; அவரைத் தேடினேன்; ஆனால் அவரைக்
காணாதேபோனேன்.—பட்டணத்திலே திரிகிற ௩
காவற்காரர் என்னைக் கண்டார்கள்; என் ஆத்
துமா சிநேகிக்கிறவரைக் கண்டீர்களோ என்
றேன்.—கொஞ்சம்தூரம் அவர்களைவிட்டுக் கடந் ௪
தபோதே என் ஆத்துமா சிநேகிக்கிறவரை நான்
கண்டேன்; அவரை நான் என் தாயின் வீட்டி
லும், என்னைப் பெற்றவளின் அறையிலும்
கொண்டுவந்து விடும்மட்டும், [12]விடாமல் பற்றிக்
கொள்வேன்.
எருசலேமின் [13]குமாரத்திகளே, சிநேகிதிக்கு ௫
மனதாகுமளவும் நீங்கள் அவளை விழிக்கப்பண்
ணாமலும் எழுப்பாமலுமிருக்க, உங்களை வெளி
மான்களின்மேலும், வெளியின் மரைகள்மேலும்
ஆணையிடுகிறேன்.
வெள்ளைப்போளமும், தூபமும், கடைக்கார ௬
னுடைய சகலவித தூளுமான வாசனையை வீசிப்
[14]புகையின் தூண்களைப்போலே [15]வனாந்தரத்தி
லிருந்து எழும்புகிற இவர்யார்?—இதோ சாலோ ௭
மோனுடைய மஞ்சம்; இஸ்ரவேலின் சவுரியவா
ன்களின் அறுபது சவுரியவான்கள் அதைச் சுற்றி
லும் நிற்கிறார்கள்.—இவர்களெல்லாரும் பட்டை ௮
யம்பிடித்து யுத்தத்திற்குப் பழகினவர்களாயிருக்
கிறார்கள்; இராக்காலங்களுடைய பயத்தின்நிமித்
தம் அவனவனுடைய பட்டையம் அவனவன் அ
ரையிலிருக்கிறது.—சாலோமோன் இராசா தமக் ௯
கு லீபனோனுடைய மரங்களால் ஒரு இரதத்தை
ப்பண்ணுவித்தார்.—அதின் தூண்களை வெள்ளி ௰
யாலும், அதின் ஆதாரத்தைப் பொன்னினாலும்,
அதின் ஆசனத்தை இரத்தாம்பரத்தாலும் பண்ணு
வித்தார்; அதின் உட்புறம் எருசலேமுடைய
குமாரத்திகளின்நிமித்தம் சிநேகமென்ற தளவரி
சைப்படுத்தியிருக்கிறது. — சீயோன் குமாரத்தி ௰௧
களே, நீங்கள் புறப்பட்டு இராசாவாகிய சாலோ
மோனின் கலியாண நாளிலும், அவர் மன
மகிழ்ச்சியின் நாளிலும், அவருடைய தாயார் அ
வருக்குச் சூட்டின முடியோடிருக்கிற அவரை
நோக்கிப்பாருங்கள்.

## ௪. அதிகாரம்.

௧. கிறிஸ்து திருச்சபையின் அலங்காரத்தை வெளிப்படுத்தினது. ௮. அதன் மேல் வைத்த தமது அன்பைக் காட்டியது. ௰௬. திருச்சபை அவருடைய சமுகத்தில் வருதற்கு எத்தனிக்க அவரை மன்றாடினது.

இதோ [16]என் சிநேகிதியே, நீ ரூபவதி; இதோ நீ ௧
ரூபவதி; உன் கூந்தலின்நடுவே உன் கண்கள்
புறாக்களின் கண்களாயிருக்கின்றன; உன் தலை
மயிர் கிலேயாத் பர்வதத்தில் தழைமேயும் வெள்
ளாடுகளின் மந்தையைப்போலிருக்கிறது.—
[17]உன் பற்கள் மயிர் கத்தரிக்கப்பட்டபின் குளி ௨
ப்பாட்டப்பட்டு, கறையேறுகிறவைகளும்,
ஒன்றானாலும் மலடாயிராமல் எல்லாம் இரட்
டைக் குட்டியுள்ளவைகளுமான ஆடுகளின் மந்
தையைப்போலிருக்கின்றன. — உன் உதடுகள் ௩
சிவப்புநூலுக்குச் சமானமும், உன் வசனிப்பு

1 உன். ௧ ௫. — 2 பேரவ. ௰௧, ௪: ௰௪. ௰௮. — 3 உன். ௮. ௰௪. 4 உன். ௧. ௰௫: ௪. ௧. 5 மத். ௨௪. ௩௨. — 6 சங். ௫௰ ௰௪, ௰௫: ௩௪௭. ௧. — 7 மத். ௭. ௰௫. ௨ பே. ௨. ௧, ௨. ௧ யோ. ௪. ௧.

8 உன். ௬. ௨ — 9 உரோ. ௰௪. ௮. ௭: ௮. ௪. — 14 வெளி. ௮. ௪. 10 உன். ௮. ௰௪. — 11 உன். ௫. ௬. 15 உன். ௮ ௫. — 16 உன். ௧ ௰௫. 12 ௧ மோ. ௩௨ ௨௬. — 13 உன். ௨. 17 உன். ௬. ௫.

இன்பமுமாயிருக்கின்றன; [1]உன் கூந்தலின் நடு
வே உன் கன்னங்கள் மாதளங்கனி வெடிப்புப்
௪ போலாயின.—[2]உன் கழுத்து ஆயுதவீடாகக் கட்
டப்பட்ட தாவீதின் துருக்கத்தைப்போலிருக்கி
றது; ஆயிரம் பரிசைகள் அதிலே தூக்கியிருக்
கின்றன; அவைகளெல்லாம் பராக்கிரமசாலிக
௫ ளின் கேடகங்கள்.—[3]உன் இரண்டு ஸ்தனங்கள்
லீலியா புஷ்பங்களில் மேய்கிற வெளிமானின்
இரண்டு இரட்டைக்குட்டிகளுக்குச் சமானமா
௬ யிருக்கின்றன.—பகல் குளிர்ச்சியாகி நிழல்கள்
அற்றுப்போயிருக்குமளவும், நான் [4]வெள்ளைப்
போள மலையிலும், குங்கிலியத்தின் மேட்டிலும்
௭ போயிருப்பேன்.—என் சிநேகிதியே, நீ முழு
வதும் சவுந்தரியமாயிருக்கிறாய்; [5]உன்னில் கறை
யில்லை.

௮ என்னோடே லீபனோனிலிருந்து வா; மனை
வியே, என்னோடே லீபனோனிலிருந்து வரு
வாயாக; சிங்கங்களின் தாபரங்களும், சிவிங்கி
களின் பர்வதங்களுமாகிய அமானாவின் கொடு
முடியிலும், சேனீர், எர்மோன் என்ற மலைக
ளின் கொடுமுடியிலுமிருந்து கண்ணோக்கி [6]வ
௯ ருவாயாக.—என் இருதயத்தைக் கட்டிக்கொண்
டாய்; என் சகோதரியே, மனைவியே, உன் கண்
களில் ஒன்றாலும், உன் கழுத்திலுள்ள ஒரு சரப்
பணியினாலும் என் இருதயத்தைக் கட்டிக்
௰ கொண்டாய்.—உன் நேசங்கள் எத்தனை நேற்றி
யாய் இருக்கின்றன! என் சகோதரியே, மனை
வியே, திராட்சப்பழ இரசத்தைப்பார்க்கிலும்
உன் நேசங்களும் சகல கந்தவர்க்கங்களைப்பார்க்
கிலும் உன் பரிமளதயிலங்களின் வாசனையும்
௰௧ எத்தனை இன்பமாயிருக்கும்!—மனைவியே, உன்
உதடுகள் தேன்கூட்டொழுகலாயிருக்கின்றன;
தேனும் பாலும் உன் நாவின்கீழிருக்கின்றன;
உன் வஸ்திரங்களின் வாசனை லீபனோனின் வா
௰௨ சனைக்குச்சமானம்.—என் சகோதரியே, மனை
வியே, நீ அடைக்கப்பட்ட தோட்டமும்,
மறைவு கட்டப்பட்ட நீரூற்றும், முத்திரிக்கப்
௰௩ பட்ட கிணறுமாயிருக்கிறாய்.—உன் தோட்டம்
மாதளஞ்செடிகளும், அருமையான கனிமரங்க
ளும், கோப்பேர் செடிகளும், நர்துச்செடிக
௰௪ ளும்,—நர்தும், குங்குமமும், வசம்பும், கருவாம
ரமும், குங்கிலியத்தின் சகலவித மரங்களும்,
வெள்ளைப்போளச் செடிகளும், சந்தனவிருட்
சங்களும், கந்தவர்க்கச் செடிகளின் சகலவிதங்
௰௫ களுமுள்ள சிங்கார வனமாயிருக்கிறது.—தோட்
டங்களுக்கு நீரூற்றும், சீவனுள்ள தண்ணீரின்
துரவும், லீபனோனிலிருந்து ஓடிவருகிற வாய்க்
கால்களும் உண்டாயிருக்கின்றன.

௰௬ வாடையே, நீ எழும்பித் தென்றலே, நீ வந்து
கந்தப்பிசின்கள் வடிய என் தோட்டத்திலே
வீசு; என் நேசர் தம்முடைய தோட்டத்துக்கு
வந்து, தமது அருமையான கனிகளில் [7]புசிப்பா
ராக.

# ௫. அதிகாரம்.

௧. கிறிஸ்து திருச்சபையை அழைத்தெழுப்பினது. ௨. திருச்சபை கிறிஸ்துவின் அன்பை உருகிபார்த்து அதிக அன்புகூர்ந்தது. ௯. கிறிஸ்துவை அறியும்படி அவருடைய இலட்சணங்களைச் சொன்னது.

என் சகோதரியே, மனைவியே, என் தோட்டத் ௧
துக்கு [8]வந்தேன்; என் வெள்ளைப்போளத்தை
என் கந்தவர்க்கத்தோடுங்கூட அறுத்தேன்; என்
தேன்கூட்டை என் தேனோடுங்கூடப் புசித்
தேன்; என் திராட்சப்பழஇரசத்தை என் பாலோ
டுகூடக் குடித்தேன்; சிநேகிதரே, புசியுங்கள்;
பிரியமானவர்களே, குடித்து மஸ்தாகுங்கள்.

நான் நித்திரைபண்ணினேன்; என் நெஞ்சோ ௨
விழித்திருந்து, [9]கதவுதட்டுகிற என் நேசரின் சத்
தத்தைக் கேட்டேன்; என் சகோதரியே, என்
சிநேகிதியே, என் புறாவே, என் உத்தமியே,
எனக்குத் திற; ஏனெனில் என் சிரசு பனியினா
லும், என் மயிர்கள் இராவிற்பெய்யும் துளிகளி
னாலும் நிறைந்திருக்கின்றன என்றார்.—என் ௩
அங்கியைக் கழற்றினேன்; எப்படி அதைத்
திரும்ப உடுப்பேன்? என் கால்களைக் கழுவி
னேன், எப்படி அவைகளைத் திரும்ப அழுக்காக்
குவேன் என்றேன்.—என் நேசர் தமது கரத் ௪
தைக் கதவின் துவாரத்திலே நீட்டினார்; அப்
போது என் குடல்கள் அவர்நிமித்தம் அசைந்
தன.—என் நேசருக்குத் திறப்பதற்கு நான் எழுந் ௫
தேன்; என் கைகள் வெள்ளைப்போளமும், பூட்
டின் கைப்பிடிகள்மேல் என் விரல்கள் மேல்தர
வெள்ளைப்போளமுமாய் வடிந்தன.—நான் என் ௬
நேசருக்குத் திறந்தேன்; ஆனால் என் நேசர் வில
கிப்போயிருந்தார்; அவர் வசனித்ததின்நிமித்தம்
என் ஆத்துமா என்னைவிட்டுப் போயிற்று; [10]அ
வரைத் தேடினேன், ஆனால் அவரைக் காணாதி
ருந்தேன்; அவரைக் கூப்பிட்டேன், ஆனால்
அவர் எனக்கு மறுஉத்தரவு கொடுத்ததில்லை.—
பட்டணத்தில் திரிகிற காவலாளர் என்னைக் ௭
கண்டு என்னை அடித்து, என்னைக் காயப்படுத்தி
னார்கள்; அலங்கத்தின் காவற்காரர் என்மேலி
ருந்த என் முக்காட்டுச் சீலையை எடுத்துப்போ
னார்கள்.—எருசலேமின் குமாரத்திகளே, என் ௮
நேசரைக் கண்டீர்களானால், [11]நான் சிநேகத்தால்
வியாதியாயிருக்கிறேன் என்று அவருக்கு அறி
விக்க உங்களை ஆணையிடுகிறேன்.

வேறே நேசரைப்பார்க்கிலும், உன் நேசர் ௯
எப்படிக்கொத்தவர்? ஸ்திரிகளில் ரூபவதியே, நீ
இப்படி எங்களை ஆணையிடுகிறதற்கு வேறே நே
சரைப்பார்க்கிலும், உன் நேசர் எப்படிக்கொத்
தவர்?

என் நேசர் வெண்மையும், சிவப்புமானவர்; ௰
பதினாயிரம்பேர்களில் கொடியைப்போலிருக்கி
றார்.—அவருடையசிரம் அபரஞ்சியான தங்கம்; ௰௧
அவர் மயிர்கள் சுருள் சுருளாகவும், காகத்தைப்
போலக் கறுப்பாகவுமிருக்கின்றன.—அவரு ௰௨
டைய கண்கள் தண்ணீர் நதிகளின் ஓரத்திலே

1 உன். ௬. ௧.—2 உன். ௭. ௪. 5 எபே. ௫. ௨௭.—6 சங். ௪௫. ௰௧.
3 உன். ௭. ௩.—4 உன். ௨. ௰௭. ௰௨.—7 வெளி. ௩. ௨௰.

8 பேரவா. ௭௪. ௨௩.—9 வெளி. ௩. 11 உன். ௨. ௫.
௨௰.—10 உன். ௩. ௧, ௨.

தங்கும் புருக்களின் கண்களுக்கு ஒத்தவைக
ளும், பாலில் கழுவப்பட்டவைகளும், நேர்த்தி
௰௩ யாய்ப் பதிந்தவைகளுமாயிருக்கின்றன.—அவ
ருடைய கன்னங்கள் சம்பாரப்பாத்திகளைப்
போலவும், கந்தவகைச் செடிகளின் சிகரங்க
ளைப்போலவும் இருக்கின்றன; [1]அவருடைய உ
தடுகள் லீலியாபுஷ்பங்களைப்போலவும் இருந்து,
மேன்தர வெள்ளைப்போளம் வடிகிறதுமாயிருக்
௰௪ கின்றன.—அவருடைய கரங்கள் தர்சீஸ் இரத்
தினங்கள் பொருந்தின பொன் வளையல்களைப்
போலவும், அவருடைய அங்கம் நீலக்கற்கள்
இழைத்திருக்கிற சுத்தாங்கமான தந்தத்தைப்
௰௫ போலவும் இருக்கின்றன.—அவருடைய தொ
டைகள் அபரஞ்சியாதாரங்களின்மேல் நிற்கிற
வெண்கற்றூண்களைப்போல இருக்கின்றன;
அவர் உருவம் லீபனோனின் சாயலும், கேதுருக்
களைப்போலத் தெரிந்துகொள்ளப்பட்டதுமாயி
௰௬ ருக்கின்றது.—அவருடைய வாக்குச் சுத்த மது
ரமும், அவரில் உள்ளவையெல்லாம் இச்சிக்கப்
படத்தக்கவையுமாயிருக்கின்றன; இவ்வண்ண
மாக என் நேசரிருக்கிறார்; எருசலேமின் குமா
ரத்திகளே, இவ்வண்ணமாக என் சிநேகிதரிருக்
கிறார்.

## ௬. அதிகாரம்.

௧. திருச்சபை கிறிஸ்துவில் தனக்கிருக்கும் விசுவாசத்தை வெளியிட்டது. ௪. கிறிஸ்து திருச்சபையின் அலங்காரத்தையும், ௰. அதன்மேல் தமக்கிருக்கும் அன்பையும் காட்டியது.

௧ உன் நேசர் எங்கே போனார்; ஸ்திரிகளில் ரூப
வதியே, உன் நேசர் எவ்விடத்திற்குத் திரும்பி
னார்? உன்னோடேகூட நாங்களும் அவரைத்
தேடுவோம்.
௨ தோட்டங்களில் மேயவும், லீலியா புஷ்பங்
களை அறுக்கவும், என் நேசர் தமது தோட்டத்
திற்கும், சம்பாரப் பாத்திகளுக்கும் இறங்கிப்
௩ போனார்.—[2]நான் என் நேசருடையவள்; லீலி
யா புஷ்பங்களில் மேய்கிற என் நேசர் என்னு
டையவர்.
௪ என் சிநேகிதியே, நீ திற்சாபட்டணத்தைப்
போல [3]அதிக ரூபமும், எருசலேமைப்போல
வடிவமும், கொடிகள் பறக்கும் படைப்பவிஞ்சு
௫ களைப்போலக் கெடியுமானவள்.—உன் கண்களை
என்னைவிட்டுத் திருப்பு; ஏனெனில் என்னைப்
பலத்துப்பிடிக்கும்; [4]உன் அளகபாரம் கீலே
யாத்துப் பர்வதத்திலே தழைமேயும் வெள்ளாடுக
௬ ளின் மந்தையைப்போலிருக்கிறது.— உன் பற்
கள் குளிப்பாட்டப்பட்டுக் கரையேறுகிறவை
களும், ஒன்றாகிலும் மலடாயிராமல் இரட்டைக்
குட்டி உள்ளவைகளுமான ஆடுகளின் மந்தை
௭ யைப்போலிருக்கின்றன.—உன் கூந்தலின் நடு
வே உன் கன்னங்கள் மாதளங்கனி வெடிப்பைப்
போலாயின.
௮ [5]இராசஸ்திரிகள் அறுபதும், வைப்பாட்டிகள்
எண்பதுமுண்டு; குமரிகளுக்கு இலக்கமுமில்
லை.—ஒருத்தியோ என் புறாவும், என் உத்தமியு ௯
மாயிருக்கிறாள்; இவள் தன் தாய்க்கு ஒருத்தியா
னவள்; இவள் தன்னைப் பெற்றவளுக்குத் தெரி
ந்துகொள்ளப்பட்டவள்; குமாரத்திகள் அவளைப்
பார்த்து, அவளைப் பாக்கியவதி என்கிறார்கள்;
இராசஸ்திரிகளும் பலஸ்திரிகளும் அவளைப்பார்
த்துப் புகழ்ந்தார்கள்.—விடியற்கால வெளுப்பை ௰
ப்போல எட்டிப்பார்த்து, சந்திரனைப்போல அழ
கும், சூரியனைப்போலத் துலக்கமும், கொடிகள்
பறக்கும் படைப்பவிஞ்சுகளைப்போலக் கெடியு
மாகிய இவள் யாவள்?

பள்ளத்தாக்கிலே முளைத்தவைகளைப்பார்க்கி ௰௧
றதற்கும், திராட்சச்செடி துளிர்விட்டு, மாத
ளஞ்செடிகள் பூப்பூக்குமோ என்று பார்க்கிறதற்
கும் நொகெயிர்ச்செடித் தோட்டத்திற்கு இறங்
கிவந்தேன்.—நான் நினையாததற்குமுன் என் ௰௨
ஆத்துமா என்னை [6]என் மனப்பூர்வமான சனத்
தின் இரதங்களுக்கு ஒப்பாக்கிற்று.

திரும்பு, திரும்பு, சூலமித்தியே, உன்னை நாங் ௰௩
கள் பார்க்கும்படிக்குத் திரும்பு, திரும்பு; சூல
மித்தியில் என்னத்தைப் பார்க்கிறீர்கள்? அவள்
இருபுறப் பாளயப்பவிஞ்சுக்குச் சமானம்.

## ௭. அதிகாரம்.

௧. திருச்சபையின் அலங்காரத்தை விசேஷமாய்ச் சொன்னது. ௰. திருச்சபை தன் விசுவாசத்தையும, விருப்பத்தையும் வெளியிட்டது.

பிரபு [7]குமாரத்தியே, பாதஇரட்சைகளில் உன் ௧
நடைகள் எத்தனை அந்தமாயிருக்கின்றன? உன்
இடைகளின் நெளிவுகள் சூத்திரக்காரரின் கை
வேலையாகிய பூஷணங்களைப்போல இருக்கின்
றன.—உன் தொப்புள் பானங்குறையாத உருண் ௨
டைக் கலசம்போலவும், உன் வயிறு லீலியா
புஷ்பங்களால் சூழப்பட்ட கோதுமை அம்பா
ரம்போலவும் இருக்கிறது.—[8]உன் இரண்டு ஸ்த ௩
னங்கள் வெளிமானின் இரண்டு இரட்டைக்
குட்டிகளுக்குச் சாமானமாயிருக்கின்றன.—உன் ௪
கழுத்து [9]தந்தத் துருக்கத்தைப்போலவும், உன்
கண்கள் எஸ்போன் ஊரிலே பதராபிம் வாச
லண்டையில் இருக்கிற குளங்களைப்போலவும்,
உன் மூக்கு தமஸ்குவின் திசையை நோக்கியி
ருக்கிறது.—உன்மீதிலுள்ள உன் சிரம் கர்மேலு
லைப்போலவும், உன் சிரத்தின் மெல்லிய மயிர்
இரத்தாம்பரப் பட்டைப்போலவும் இருக்கிறது;
இராசா நடைகாவனங்களில் கட்டுண்டவரைப்
போலத் தரித்துநின்று பார்க்கிறார்—மனமகிழ்ச் ௬
சிகளை உண்டாக்குகிற சிநேகிதியே, நீ எத்தனை
ரூபமும், எத்தனை உச்சிதமுமாயிருக்கிறாய்! —
இந்த உன்னுடைய வளர்ச்சி பனைமரத்துக்கும், ௭
உன் ஸ்தனங்கள் திராட்சக்குலைகளுக்கும் ஒத்தி
ருக்கின்றன.—பனைமரத்தில் ஏறி அதின் மட் ௮
டைகளைப் பிடிப்பேன் என்றேன்; இப்போ
தும் உன் ஸ்தனங்கள் திராட்சச்செடியின் குலை

1 சங். ௪௫. ௯. 3 உன். ௧. ௫. ௪. ௫. சங். ௪௮. ௨.
2 உன். ௨. ௧௬. 4 உன். ௪. ௧—௩. மத். ௨௫. ௧.
5 சங். ௪௫. ௯. 7 சங். ௪௫. ௧௩.—8 உன். ௪. ௫.
6 சங். ௧௰. ௩. 9 உன். ௪. ௪.

களைப்போலவும், உன் நாசியின் வாசனை கொள
௯ ஞ்சிப்பழங்களைப்போலவும்,—உன் தொண்டை
உன் நேசருக்குள் மெதுவாய் இறங்குகிறதும்,
உறங்குகிறவர்களின் உதடுகளைப் பேசப்பண்
ணுகிறதுமான நல்ல திராட்சப்பழஇரசத்தைப்
போலவும் இருக்கட்டுமே.
௰ [1]நான் என் நேசருடையவள், அவர் விருப்
௰௧ பம் என்மேலும் இருக்கிறது. — வாரும் என்
நேசரே, வெளியிலே போய்க் கிராமங்களில்
௰௨ இராத்தங்குவோமாக.—நாம் காலமே திராட்சத்
தோட்டங்களுக்குப் போய், திராட்சச்செடி
துளிர்த்து அதின் பூ மலருமோ என்றும், மாத
ளஞ்செடிகள் பூப்பூக்குமோ என்றும் பார்ப்போ
மாக; அங்கே என் நேச உச்சிதங்களை உமக்குத்
௰௩ தருவேன்.–துதாயிம் வாசனைதரும், நம்முடைய
வாசல்களண்டையிலே சகலவித அருமையான
புதிய பழைய கனிகளும் உண்டு; என் நேசரே,
உமக்கு அவைகளை வைத்தேன்.

## ௮. அதிகாரம்.

௧. கிறிஸ்துவின்மேல் திருச்சபைக்கு உண்டாகிய அன்பு. ௬. அன்பின் பெருக்கம். ௮. அந்நிய மதஸ்தரை அழைத்தல். ௰௪. திருச்சபை கிறிஸ்து வருவதற்காக மன்றாடினது.

௧ ஆ நீர் எனக்கு என் தாயின் முலைகளை உண்ட
சகோதரனைப்போல இருந்தால் தாவிளை; அப்
போது உம்மை நான் வெளியிலே சந்தித்து முத்
திகொடுப்பேன்; என்னை நிந்திக்கவுமாட்டார்
௨ கள். — நீர் எனக்குப் போதிக்கும்படிக்கு உம்
மை நான் கூட்டிக்கொண்டு, [2]என் தாயின் வீட்
டுக்கு அழைத்துப்போவேன்; சம்பாரமிட்ட
திராட்சப்பழ இரசத்தையும், என் மாதளம்பழங்
களின் இரசத்தையும் உமக்குக் குடிக்கக்கொடுப்
பேன்.
௩ [3]அவர் இடதுகரம் என் தலையின்கீழ் இருப்ப
தாக; அவர் வலதுகரம் என்னை அணைப்பதாக.
௪ [4]எருசலேமின் குமாரத்திகளே, சிநேகிதிக்கு
மனதாகுமளவும், நீங்கள் அவளை விழிக்கப்பண்
ணாமலும், எழுப்பாமலுமிருக்க உங்களை ஆணை
யிடுகிறேன்.
௫ வனாந்தரத்திலிருந்து எழும்பி, தன் நேசனைச்
சார்ந்துகொள்ளுகிற இவள் யாவள்? கொளஞ்சி
மரத்தின்கீழே உம்மை எழுப்பினேன்; அங்கே
உம்முடைய தாய் உம்மைப் பெற வாதைப்பட்
டாள், அங்கே பெற வாதைப்பட்டு உம்மைப்
பெற்றாள்.–என்னை முத்திரையைப்போல உமது ௬
இருதயத்தின்மேலும், முத்திரையைப்போல உம
து புயத்தின்மேலும் வையும்;ஏனெனில் சிநேகம்
மரணத்தைப்போல வல்லபமும் நேச வயிராக்
கியம் பாதாளத்தைப்போலக் கெட்டியுமாய் இ
ருக்கின்றன; அதின் தழல் அக்கினித் தழலும்,
கர்த்தரின் சுவாலையுமாய் இருக்கிறது.—[5]அநே ௭
கம் தண்ணீர்கள் இந்தச் சிநேகத்தை அவிக்க
மாட்டாது; நதிகள் அதைத் தணிப்பதுமில்லை,
ஒருவன் தன் வீட்டின் ஆஸ்தியை எல்லாம் இந்
தச் சிநேகத்திற்குப் பதிலாகக் கொடுத்தாலும்
அவனை மிகவும் அசட்டைபண்ணுவார்கள்.
நமக்குச் சிறிய சகோதரி இருக்கிறாள்; அவ ௮
ளுக்கு ஸ்தனங்கள் இல்லை; நம்முடைய சகோத
ரிக்காகப் பேசப்படும்நாளிலே அவளுக்கு என்
னசெய்வோம்?—அவள் மதிலானால் அவள்மேல் ௯
[6]வெள்ளிக்கோட்டையைக் கட்டுவோம்; அவள்
கதவானால் கேதுருபலகைகளை அதற்கு இணைப்
போம்.
நான் மதிலும், என் ஸ்தனங்கள் கொம்மைக ௰
ளுமாகையால், அவர் பார்வைக்குச் சமாதானம்
பெற்றவளைப்போலானேன். — பாகால் ஆமோ ௰௧
னிலே சாலோமோனுக்குத் திராட்சத்தோட்டம்
உண்டாயிருந்தது; அந்தத் தோட்டத்தைக் காவ
லாளிகள் வசத்திலே அவனவன் ஆயிரம் வெள்
ளிக்காசை அதின் பலனாகக் கொண்டுவரும்ப
டிக்குக் கொடுத்தார். — என்னுடைய திராட் ௰௨
சத்தோட்டம் எனக்குமுன்பாக இருக்கும்; சா
லோமோனே, உமக்கு அந்த ஆயிரமும், அதின்
கனியைக் காக்கிறவர்களுக்கு இருநூறும் உண்
டாம்.
தோட்டங்களில்வாசமாயிருக்கிறவளே, தோ ௰௩
ழர் உன் சத்தத்தைக் கவனிக்கிறார்கள்; அதை
நான் கேட்கட்டும்.
என் நேசரே, [7]நீர் தீவிரித்துக்கொண்டு, கந்த ௰௪
வர்க்கங்களின் மலைகள்மேல் வெளிமானுக்கு
அல்லது மரைகளின் குட்டிக்கு ஒப்பாகும்.

1 உன். ௨. ௰௬: ௬. ௩.
2 உன். ௩. ௪.
3 உன் ௨. ௬.
4 உன். ௨. ௭: ௩. ௫.
5 உரோ. ௮. ௩௫. ௩௯.
6 ௧ கொரி. ௩. ௰௨, ௰௩.
7 உன். ௨. ௰௭. வெளி. ௨௨. ௨௰.

# ISAIAH.

# ஏசாயாவின் தீர்க்கதரிசனம்.

## க. அதிகாரம்.

*க. ஏசாயா யூதாவின் கலகத்தைக்குறித்து அதன்மேல் முறையிட்டது. ௫. அதன்மேல் வந்த நியாயத்தீர்ப்பைக்குறித்துப் புலம்பினது. ௰. அது செய்யும் ஊழியம் முழுமையையும் கடிந்துகொண்டது. ௰௬. வாக்குத்தத்தங்களோடும், பயமுறுத்துதல்களோடும் குணப்படுதலுக்குத் தூண்டினது. ௨௧. அதினுடைய துன்மார்க்கங்களைக்குறித்து விசனமுற்றுப் பராபரனுடைய நியாயத்தீர்ப்புகளை அவன் குற்றப்படுத்தினது. ௨௫. கிருபை கிடைக்குமென்று வாக்குத்தத்தம்பண்ணினது. ௨௮. துன்மார்க்கருக்கு அழிவு வருமென்று பயமுறுத்தினது.*

க ஆமோத்சின் குமாரனாகிய ஏசாயா யூதாவின்
இராசாக்களாகிய உசியா, யோத்தாம், ஆகாஸ்,
எசேக்கியா என்றவர்களின் நாள்களில் யூதாவின்
மேலும், எருசலேமின்மேலும் கண்ட தரிசனம்.
உ [1]வானங்களே, கேளுங்கள்; பூமியே, செவி
கொடு; ஏனெனில் கர்த்தர் பேசுகிறார்; பிள்ளை
களை வளர்த்து உயர்த்தினேன்; ஆனால் அவர்கள்
௩ நம்மைவிட்டு மருளவிழுந்தார்கள்.—மாடு தன்
எசமானனையும், கழுதை தன் ஆண்டவனின்
முன்னணையையும் அறியும்; ஆனால் இஸ்ரவேல்
அறிவில்லாமலும், நம்முடைய சனம் உணர்வி
ல்லாமலும் இருக்கிறதென்கிறார்.
௪ ஐயோ பாவச்சாதியும், அக்கிரமத்தால் பாரம்
சுமந்த சனமும், பொல்லாதவர்களின் வித்தும்,
கேடு உண்டாக்குகிற புத்திரருமாயிருக்கிறார்
கள்; கர்த்தரைவிட்டு இஸ்ரவேலின் பரிசுத்தருக்
குக் கோபமுண்டாக்கிப் பின்வாங்கிப்போனார்
௫ கள்.—இனி ஏன் அடிக்கப்படுவீர்கள்; பின்னை
யும் அதிகமாய் விலகிப்போகிறீர்கள்; தலையெல்
லாம் வியாதியும், இருதயமெல்லாம் பலட்சய
௬ முமாய் இருக்கிறது.—உள்ளங்கால்துவக்கித் தலை
மட்டுக்கும் அவனில் சீழ்பிதுக்கப்படாமலும்,
கட்டப்படாமலும், எண்ணெயால் ஆற்றப்படா
மலும் இருக்கிற காயமும், வீக்கமும், நொதிக்
கிற இரணமுமேயல்லாமல் ஒரு ஆரோக்கியமும்
௭ இல்லை. — [2]உங்கள் தேசம் பாழாயிருக்கிறது;
உங்கள் பட்டணங்கள் அக்கினியால் சுட்டுப்
போடப்பட்டன; உங்கள் சீமையை மறுசாதி
யார் உங்கள் முகத்துக்குமுன்பாக அநுபவிக்கி
றார்கள்; அது மறுசாதியாரால் கவிழ்க்கப்பட்
௮ டாற்போலப் பாழாய் இருக்கிறது. — சீயோன்
குமாரத்தி திராட்சத்தோட்டத்திலுள்ள ஒரு குச்
சைப்போலவும், வெள்ளரித்தோட்டத்திலுள்ள
ஒரு குடிசையைப்போலவும் முற்றிக்கைபோ
டப்பட்ட பட்டணத்தைப்போலவும் மீந்திருக்
கிறாள்.—[3]சேனைகளின் கர்த்தர் நமக்குக் கொஞ் ௯
சம் மீதியை வைக்காதிருந்தாரானால், நாம் [4]சோ
தோமைப்போலாகி, கொமோராவுக்கு ஒத்திருப்
போம்.
சோதோமின் தலைவர்களே, கர்த்தருடைய ௰
வார்த்தையைக் கேளுங்கள்; கொமோராவின் ச
னமே, நமது பராபரனுடைய வேதத்துக்குச்
செவிகொடுங்கள்.—[5]உங்கள் பலிகளின் திரள் ௰க
நமக்கு என்னத்துக்கென்று கர்த்தர் சொல்லுகி
றார்; ஆட்டுக்கடாக்களின் தகனங்களும், கொழு
த்த மிருகங்களின் நெய்யும் நமக்கு அரோசிக
மாயிருக்கின்றன; காளைகள் ஆட்டுக்குட்டிகள்
கடாக்களுடைய இரத்தத்தின்மேல் நமக்குப் பி
ரியமில்லை.—நீங்கள் நமது சந்நிதியிலே காணப் ௰உ
பட வரும்போது, நம்முடைய பிரகாரங்களை
இப்படி மிதிக்கவேண்டுமென்று உங்கள் கைக
ளில் கேட்கிறவர் யார்.—வீண் காணிக்கை இ ௰௩
னிக் கொண்டுவராதிருங்கள், தூபங்காட்டுதல்
நமக்கு அருவருப்பாயிருக்கிறது; சபைகூடிவர
வழைக்கப்படுகிற மாதப்பிறப்பிலும், ஓய்வுநாளி
லும் அக்கிரமத்தோடே கூடிய ஆசரிப்பை இ
னிச் சகிக்கமாட்டோம்.—உங்கள் மாதப்பிறப் ௰௪
புகளையும், உங்கள் பண்டிகைகளையும் நம்மு
டைய ஆத்துமா பகைக்கிறது; அவை நமக்கு வ
ருத்தமாயிருக்கின்றன; அவைகளைச் சுமக்க வே
சாறியிருக்கிறோம்.—நீங்கள் [6]உங்கள் கைகளை ௰௫
விரித்தாலும், நம்முடைய கண்களை உங்களை
விட்டு மறைக்கிறோம்; நீங்கள் மிகுதியாய்ச் செ
பம்பண்ணினாலும் கேளோம்; ஏனெனில் உங்
கள் கைகள் இரத்தத்தாலே நிறைந்திருக்கின்ற
ன.—உங்களைக் கழுவிச் சுத்திகரியுங்கள்; [7]உங் ௰௬
கள் கிரியைகளின் பொல்லாப்பை நம்முடைய
கண்களுக்கு மறைவாக அகற்றிவிட்டு, தீங்கு
செய்தலைவிட்டு ஓயுங்கள்.—[8]நன்மைசெய்யப் ௰௭
படியுங்கள்; நியாயத்தைத் தேடுங்கள்; [9]ஒடுக்கப்
பட்டவனைச் சீர்ப்படுத்தி, திக்கற்றவன் நியாயத்
தையும், விதவையின் வழக்கையும் விசாரியுங்
கள்.
அப்போது வழக்காடுவோம்வாருங்கள்; [10]உங் ௰௮
கள் பாவங்கள் சிவேரென்றிருந்தாலும் உறைந்த
மழையைப்போல வெண்மையாகும்; அவைகள்
இரத்தாம்பரச் சிவப்பாயிருந்தாலும் பஞ்சைப்
போலாகுமென்று கர்த்தர் சொல்லுகிறார்.—நீங் ௰௯

1 ரு மோ. ௩௨. க. சங். ௫0. ௧-௪. ௨௪, ௨௫.—5 ஏசா ௬௬. ௩. வாக்.
2 ரு மோ. ௨௮. ௫௧, ௫௨. ௨௧.௨௭. எரே. ௬. ௨0: ௰௪. ௰௨,
3 உரோ. ௯.௨௯.—4 க மோ.0௯. ஆமோ. ௫. ௨௧—௨௨.

6 எரே. ௰௧. ௰௧.—7 சங். ௩௪.௰௫. 10 ஏசா. ௪௩. ௨௫: ௪௪. ௨௨. ௪௰.
எசே. ௰௮. ௩௧.—8 எரே. ௭. ௩. ௫௧. ௯.
9 சங். அ௨. ௩.

கள் மனம்பொருந்திக் கேள்விகொடுத்தால், தே
௨௰ சத்தின் நன்மையைப் புசிப்பீர்கள்.—மாட்டோ
மென்று எதிர்த்துநின்றீர்களையாகில் பட்டையத்
துக்கு இரையாவீர்கள்; ஏனெனில் கர்த்தரின்
வாய் இதைச் சொல்லிற்று.
௨௧ உண்மையுள்ளபட்டணம் எப்படி வேசியாய்ப்
போயிற்று! நியாயத்தால் நிறைந்திருந்தது; நீதி
அதிலே வாசமாயிருந்தது; இப்போதோவெனில்
௨௨ அதின் குடிகள் [1]கொலைபாதகர்.—[2]உன் வெள்ளி
களிம்பாயிற்று; உன் திராட்சப்பழஇரசம் தண்
௨௩ ணீர்க் கலப்பானது.—உன் பிரபுக்கள் முரடரும்
திருடரின் தோழருமாய் இருக்கிறார்கள்; அவர்
களில் எவனும் பரிதானத்தைச் சிநேகித்து, கைக்
கூலிகளை நாடித் தொடருகிறான்; [3]திக்கற்றவனு
டைய நியாயத்தை விசாரியார்கள்; விதவையின்
வழக்கு அவர்களிடத்தில் ஏறுகிறதுமில்லை.
௨௪ ஆகையால் சேனைகளின் கர்த்தரும், இஸ்ர
வேலின் வல்லவருமாகிய ஆண்டவர் சொல்லு
கிறதாவது: ஓகோ, நாம் நம்முடைய சத்துருக்க
ளில் [4]கோபம்ஆறி, நம்முடைய பகைஞருக்கு
௨௫ நீதியைச் சரிக்கட்டுவோம்.—நாம் உனக்கு விரோ
தமாக நம்முடைய கையைத் திருப்பி, உன்
களிம்பைச் சுத்தமாய்ப் புடமிட்டு, உன் ஈயத்
௨௬ தையெல்லாம் நீக்கி,—இப்படியே உன் நீதிக்கா
ரரை முன் இருந்ததுபோலவும், உன் ஆலோச
னைக்காரரை ஆதியில் இருந்தது போலவும் திரும்
பக் கட்டளையிடுவோம்; அதின்பிறகு நீ நீதி
யின் ஊரும், உண்மையுள்ள பட்டணமும் என்
௨௭ னப்படுவாய்.—சீயோன் நியாயத்தாலும், அதிலே
திரும்புகிறவர்கள் நீதியாலும் மீட்கப்படவேண்
௨௮ டும்.—ஆனால் பாதகரும் பாவிகளும் ஏகமாய்
நொறுங்குண்டு, கர்த்தரைவிட்டு அவர்கள் நிர்மூ
௨௯ லமாவார்கள்.—ஏனெனில் நீங்கள் விரும்பின
கர்வாலியுமரங்களின்நிமித்தம் [5]வெட்கப்படுவீர்
கள், நீங்கள் தெரிந்துகொண்ட தோப்புகளின்நி
௩௰ மித்தம் நாணமடைவீர்கள்.—ஏனென்றால் இலை
உதிர்ந்த கர்வாலியுமரத்தைப்போலும், தண்ணீர்
இல்லாத தோப்பைப்போலும் இருப்பீர்கள். —
௩௧ பராக்கிரமனுன் சணற்கூளமும், அவன் கிரியை
அக்கினிப்பொறியுமாகி, அவனும் இதுவும் ஏக
மாய் அவிப்பாரில்லாமல் வெந்துபோவதுண்டு.

## உ. அதிகாரம்.

க. எசாயா கிறிஸ்துவின் இராச்சியம் வருவதைக்குறித்துத் தீர்க்கதரிசனம் சொன்னது. சு. துன்மார்க்கம் பராபரன் கைவிடுவதற்குக் காரணமென்றது. ௰. பராபரனுடைய சத்துவம்பொருந்திய மகா உன்னத பிரபலத்துக்கு அஞ்சத் தூண்டினது.

௧ ஆமோத்சின் குமாரனாகிய எசாயா யூதாவின்
மேலும், எருசலேமின்மேலும் வரக்கண்ட வர்த்
தமானம்.
௨ [7]கடைசி நாள்களில் சம்பவிப்பதேதெனில்,
கர்த்தருடைய வீட்டின் பர்வதம் பர்வதங்க
ளின் கொடுமுடியாய்த் திடப்பட்டு மேடுகளி
லும் உயரும்; எல்லாச் சாதிகளும் அதற்கு ஓடி,—
திரளான சனசதளங்கள் நடந்துவந்து, கர்த்தரின் ௩
பர்வதத்துக்கும் யாக்கோபின் பராபரனுடைய
வீட்டுக்கும் நாம் போய், அவர் தம்முடைய வழி
களை நமக்குப் போதிக்கவும், நாம் போய் அவர்
பாதைகளில் நடக்கவும் ஏறுவோம் வாருங்கள்
என்பார்கள்; ஏனெனில் [8]வேதம் சீயோனிலும்,
கர்த்தரின் வசனம் எருசலேமிலுமிருந்து புறப்
படும். — அவர் சாதிகளுக்குள் நியாயந்தீர்த்து, ௪
திரளான சனசதளங்களைக்கடிந்துகொள்ளுவார்;
அப்பொழுது தங்கள் பட்டையங்களை மண்வெ
ட்டிகளாகவும், தங்கள் ஈட்டிகளை அரிவாள்க
ளாகவும் அடிப்பார்கள்; சாதிக்கு விரோதமாய்ச்
சாதி பட்டையம் எடுப்பதில்லை, இனி யுத்தத்
தைக் காப்பதுமில்லை.
யாக்கோபின் வீட்டாரே, கர்த்தரின் வெளிச் ௫
சத்திலே நடப்போம் வாருங்கள்.—ஆனால் யாக் ௬
கோபின் வீட்டாராகிய உம்முடைய சனத்தைக்
கைநெகிழ்ந்தீர்; ஏனெனில் கிழக்குத்திசையா
ரின் போதகத்தால் நிறைந்து, பெலிஸ்தியரைப்
போல நாட்பார்க்கிறவர்களாயிருந்து, அந்நிய
ரின் புத்திரர்மேலே பிரியப்படுகிறார்கள்.—அவர் ௭
கள் தேசம் வெள்ளியினாலும், பொன்னினாலும்
நிறைந்தது; அவர்கள் பொக்கிஷங்களுக்கு முடி
வில்லை; அவர்கள்தேசம் குதிரைகளாலும் நிறை
ந்தது; அவர்கள் இரதங்களுக்கு முடிவுமில்லை.—
அவர்கள் தேசம் விக்கிரகங்களாலும் நிறைந்தி ௮
ருக்கிறது; தங்கள் கைகளின் கிரியையையும்,
தங்கள் விரல்கள் உண்டுபண்ணினதையும் பணி
ந்துகொள்ளுகிறார்கள். — சிறியவனும் குனிகி ௯
றான், பெரியவனும் பணிகிறான்; ஆகையால்
அவர்களுக்கு மன்னியாதிருப்பீர்.
கர்த்தரின் பயங்கரத்தினாலும், அவர் முக்கியத் ௰
தின் மகத்துவத்தினாலும், நீ கல்மலையில் ஒதுங்கி
மண்ணில் ஒளித்துக்கொள்.—நரரின் மேட்டி ௰௧
மையான கண்கள் தாழ்ந்து, மனுஷரின் வீறாப்
பும் தணியும்; ஆனால் கர்த்தர் ஒருவரே அந்நாளி
லே உயர்ந்திருப்பார்—ஏனெனில் தாழ்மையுண் ௰௨
டாகச் சேனைகளுடைய கர்த்தரின் நாள் பெரு
மையும், மேட்டிமையுமானவை எல்லாவற்றின்
மேலும், உயர்ந்தவை எல்லாவற்றின்மேலும்,—
லீபனோனிலுள்ள உயரமும் ஓங்கலுமான எல் ௰௩
லாக்கேதுருக்களின்மேலும், பாசானிலுள்ள எல்
லாக் கர்வாலியுமரங்களின்மேலும்,—உயரமான ௰௪
எல்லாப் பர்வதங்களின்மேலும், மேட்டிமையா
ன எல்லாக் குன்றுகளின்மேலும்,—உயர்ந்த எல் ௰௫
லாக் கோபுரத்தின்மேலும், அரணான எல்லா மதி
லின்மேலும்,—தர்சீசின் கப்பல்கள் எல்லாவற் ௰௬
றின்மேலும், அருமையான எல்லாச் சித்திரங்க
ளின்மேலும் வரும்.—அப்போது நரரின் மேட் ௰௭
டிமை தாழ்ந்து, மனுஷரின் வீறாப்பு தணியும்;
ஆனால் கர்த்தர் ஒருவரே அந்நாளில் உயர்ந்திருப்
பார்.—விக்கிரகங்களோவெனில் கட்டோடே ௰௮

1 மத். உ௩. ௩எ. 3 எரே. ௯. உ௮.—4 உபா. உ௮. ௬௩.—5 மல். ௪. ௨, ௩
2 எசே. உ௨. ௰அ.
6 எசா. ௫உ. ௰எ. 8 சங். ௱௰. உ. லூக். உ௪. ௪எ.
7 எரே. ௩. ௰எ. மீகா. ௪. ௧, ௨. 9 எசா. ௯. ௰௯.

௰௯ ஒழிந்துபோம்.-பூமியைத் தத்தளிக்கப்பண்ணக்
கர்த்தர் எழும்பும்போது, [1]அவர் பயங்கரத்தினு
லும், அவர் முக்கியத்தின் மகத்துவத்தினுலும்,
கல்மலைகளின் கெபிகளிலும், மண்ணின் குகை
௨௰ களிலும் புகுந்துகொள்ளுவார்கள். — பூமியைத்
தத்தளிக்கப்பண்ணக் கர்த்தர் எழும்பும் அந்நா
ளிலே அவர் பயங்கரத்தினுலும், அவர் முக்கி
யத்தின் மகத்துவத்தினுலும், கல்மலைகளின் வெ
டிப்புகளிலும் குன்றுகளின் சந்துகளிலும் புகுந்
௨௧ துகொள்ளும்படிக்கு,-மனுஷன்பணிந்துகொள்
ளத் தனக்கு உண்டாக்கியிருந்த [2]தன் வெள்ளி
விக்கிரகங்களையும், தன் பொன் விக்கிரகங்களை
யும், மூஞ்சூறுகளுக்கும், துரிஞ்சில்களுக்கும்
௨௨ எறிந்துவிடுவான்.-மூக்கிலே சுவாசமுள்ள மனு
ஷனை நம்புவதை விட்டோயுங்கள்; ஏனென்
ருல் அவன் எம்மாத்திரமென்று எண்ணப்ப
டலாம்.

## ௩. அதிகாரம்.

௧. பாவத்தினுலே வருகிறபெரிய கலக்கமும், ௯. மனிதரின்குணங்கெட்ட தன்மையும், ௰௨. நியாயாதிபதிகளுடைய பேராசையும், கொடுமையும், ௰௬. ஸ்திரிகளுடைய கர்வத்தைக்குறித்திருக்கும் நியாயத்தீர்ப்பும் சொல்லப்பட்டது.

௧ ஏனெனில் இதோ சேனைகளின் கர்த்தராகிய
ஆண்டவர் ஆதரவுகோலையும், தடியையும், [3]அப்
பமென்ற எல்லா ஆதரவுகோலையும், தண்ணீ
௨ ரென்ற எல்லா ஆதரவுகோலையும்,—பராக்கிரம
சாலியையும், யுத்த ஆளையும், நியாயாதிபதியை
யும், தீர்க்கதரிசியையும், சாஸ்திரியையும், மூப்
௩ பனையும்,—ஐம்பதுக்குச் சேர்வைக்காரனையும்,
கனமுகமானவனையும், ஆலோசனைசொல்லுகிற
வனையும், தொழிலாளிகளில் ஞானமுள்ளவனை
யும், சாதுரியக்காரனையும், எருசலேமிலும் யூதா
௪ விலுமிருந்து விலக்குவார்.-அவர்களுக்கு இளை
ஞரைப் பிரபுக்களாகத் தருவோம் என்கிருர்;
௫ [4]பிள்ளைகள் அவர்களை ஆளுவார்கள். — சனம்
ஒடுக்கப்படும்; ஒருவருக்கொருவரும், அடுத்தவ
ருக்கு அடுத்தவரும் விரோதமாய் இருப்பார்கள்;
கிழவனுக்கு இளைஞனும், கனமுடையவனுக்
௬ குக் கனஈனனும் இடும்புசெய்வான்.—உனக்கு
வஸ்திரம் இருக்கிறது, எங்கள் தலைவனுயிரு;
கேட்டுக்கு இனமான இந்தக்காரியம் உன் கை
யின்கீழாவதாகவென்று அப்போது ஒருவன் தன்
தகப்பன் வீட்டாளுகிய தன் சகோதரனைப்பிடித்
௭ தால், — இவன் அந்நாளிலே கையை உயர
எடுத்து, நான் இரணவயித்தியனுக இருக்கமாட்
டேன்; என் வீட்டிலே அப்பமுமில்லை, வஸ்
திரமுமில்லை; என்னைச் சனத்தின் தலைவனுக
௮ வைக்காதிருங்கள் என்பான்.-ஏனெனில் எருச
லேம் இடறி, யூதா விழுந்துபோம்; அதேனென்
ருல் அவர்கள் நாவும், அவர்கள் கிரியைகளும்,
கர்த்தருடைய மகிமையின் கண்களுக்கு எரிச்
சல் உண்டாக்கத்தக்கவைகளாய் அவருக்கு
விரோதமாயிருக்கின்றன.
௯ அவர்கள் முகங்களின் ஒட்டாரம் அவர்களு
க்கு விரோதமாய்ச் சாட்சியிடும்; அவர்கள் சோ
தோம் ஊராரைப்போலே, தங்கள் பாவத்தை
மறைக்காமல் கூறுகிருர்கள்; அவர்கள் ஆத்துமா
வுக்கு ஐயோ! ஏனெனில் [5]தங்களுக்குத் தீமை
யைக்கட்டிக்கொள்ளுகிருர்கள்.—[6]நன்றாயிருப் ௰
பீர்களென்று நீதிமான்களுக்குச் சொல்லுங்கள்;
ஏனெனில் தங்கள் கிரியைகளின் கனியைப்
புசிப்பார்கள்.-பொல்லாத ஆகாமியக்காரனுக்கு ௰௧
ஐயோ! ஏனெனில் அவன் கைகளின் பலன்
அவனுக்கு உண்டாகும்.
பிள்ளைகள் நமது சனத்தின் வாதைக்காரராய் ௰௨
இருக்கிருர்கள்; ஸ்திரிகள் அதை ஆளுகிருர்கள்;
நமது சனமே உன்னை நடத்துகிறவர்கள் உன்னை
மோசம்போக்கி, நீ நடக்கவேண்டின வழியை
விழுங்குகிருர்கள். — கர்த்தர் வழக்காட எழுந் ௰௩
திருந்து, [7]சனசதளங்களை நியாயந்தீர்க்க நிற்கி
ருர். — கர்த்தர் தமது சனத்தின் மூப்பரோடும், ௰௪
அதின் பிரபுக்களோடும் நியாயத்துக்குட் பிரவே
சிப்பார்; ஏனெனில் நீங்களே இந்தத் திராட்சத்
தோட்டத்தை மேய்ந்துவிட்டீர்கள்; சிறுமையா
னவனுடைய கொள்ளை உங்கள் வீடுகளில் இருக்
கிறது.—நீங்கள் நமது சனத்தை நொறுக்கிச் சிறு ௰௫
மையானவர்களின் முகத்தை நெறித்துவிடுகிறது
என்னவென்று சேனைகளின் கர்த்தராகிய ஆண்
டவர் உரைக்கிருர்.
பின்னையும் கர்த்தர் சொல்லுகிறதாவது: சீயோ ௰௬
னுடைய குமாரத்திகள் அகந்தையாயிருந்து, கழு
த்தை நெறித்து நடந்து, கண்களால் மருட்டிப்
பார்த்து, தத்தித்தத்தி நடந்து, தங்கள் கால்களில்
பாடகங்களைப் போட்டுத் திரிகிறபடியினுலே,-
ஆண்டவர் சீயோன் குமாரத்திகளின் உச்சந்த ௰௭
லையை மொட்டையாக்குவார்; கர்த்தர் அவர்கள்
மானத்தை அம்மணமாக்குவார். — அந்நாளிலே ௰௮
ஆண்டவர் பாடகங்களின் சிங்காரத்தையும்,
சுட்டிகளையும், பிறைச்சிந்தாக்குகளையும், — ஆ ௰௯
ரங்களையும், சரிகளையும், மினுக்குவஸ்திரங்களை
யும்,—தலையின் ஆபரணுதிகளையும், அஸ்தகடை ௨௰
யங்களையும், சரடுகளையும், மார்க்கச்சைகளையும்,
உருவல்களையும். — மோதிரங்களையும், மூக்குத் ௨௧
திகளையும்,—மாற்றுடைகளையும், சால்வைகளை ௨௨
யும், போர்வைகளையும், குப்பிகளையும், — கண் ௨௩
ணுடிகளையும், மெல்லிய புடவைகளையும், குல்
லாக்களையும், முக்காட்டுச் சல்லாக்களையும், வி
லக்குவார். — சம்பவிப்பது ஏதென்ருல், சுகந்த ௨௪
வர்க்கத்துக்குப்பதிலாகத்துர்க்கந்தமும், கச்சைக்
குப்பதிலாகப் பீறலும், மயிர்ச்சுருளுக்குப்பதி
லாக மொட்டையும், தளதளப்பான வஸ்திரங்க
ளுக்குப்பதிலாக இரட்டு உடுக்குதலும், அழகுக்
குப்பதிலாகக் கருகிப்போகுதலுமிருக்கும்.—
உன் மனுஷர் யுத்தவெட்டினுலும், உன் பெல ௨௫
சாலிகள் படையிலும் விழுவார்கள். — அவளு ௨௬
டைய வாசல்கள் சஞ்சலமும், துக்கமுமாயிருக்
கும்; அவள் வெறுமையாய்த் தரையில் உளுக்கா
ருவாள் என்கிருர்.

1 லூக். ௨௩. ௩௰.—2 ஏசா. ௩௰. ௨௨: ௩௧. ௭.—3 எசே. ௪. ௰௬, ௰௭.
4 பிர. ௰. ௰௬.—5 ஓசே. ௰௩. ௯.—6 சங். ௧௭. ௧௭.—7 சங். ௯. அ. ௯.

## ச. அதிகாரம்.

*க. மிகுந்த உபத்திரவத்திலே கிறிஸ்துவின் இராச்சியம் அடைக்கலஸ்தானமாயிருக்கின்றது.*

க **ஏழு ஸ்திரிகள் ஒரே புருஷனை அந்நாளில் பிடித்**
து, நாங்கள் எங்கள் அப்பத்தையே புசித்து, எங்
கள் வஸ்திரங்களையே உடுப்போம்; எங்கள் நிந்
தையை நீக்க உன் பேர்மாத்திரம் எங்கள்மேல்
உ விளங்கட்டும் என்பார்கள்.—இஸ்ரவேலில் தப்
பினவர்களுக்கு அக்காலத்திலே கர்த்தருடைய
[1]முளை சிங்காரமும், மகிமையும், பூமியின் கனி
முக்கியமும், அலங்காரமுமாய் இருக்கும். —
ங அப்போது சம்பவிப்பது ஏதெனில், ஆண்டவர்
நியாயத்தின் ஆவியினாலும், சுத்திகரிப்பின் ஆவி
யினாலும்,சீயோன்குமாரத்திகளின்ஊத்தையைக்
கழுவி, எருசலேமின் இரத்தப்பழிகளை அதின்
ச நடுவிலிருந்து நீக்கிவிட்டபோது,—சீயோனில்
மீந்து எருசலேமில் பின்வைக்கப்பட்டிருக்கிற
வன் பரிசுத்தனென்று அழைக்கப்படுவான்;
எருசலேமில் சீவனுக்கென்று எழுதப்பட்டவ
ரு னெல்லாந்தானே.—அப்போது கர்த்தர் சீயோன்
பர்வதத்தினுடைய எல்லா வாசஸ்தலத்தின்
மேலும், அதினுடைய சபைகளின்மேலும், பக
லில் இருக்கும் மேகத்தையும், புகையையும், இர
விலே கொழுந்துவிட்டு எரியும் அக்கினியின்
பிரகாசத்தையும் சிருட்டிப்பார்; ஏனெனில்
மகிமையானவைகளின்மேலெல்லாம் மறைவு
சு உண்டாயிருக்கும். — [2]பகலிலே வெயிலுக்கு
நிழலாகவும், பெருவெள்ளத்துக்கும் மழைக்கும்
அடைக்கலமாகவும், மறைவிடமாகவும் ஒரு கூ
டாரம் உண்டாயிருக்கும்.

## ரு. அதிகாரம்.

*க. திராட்சத்தோட்டத்தின் உவமையைக்கொண்டு, பராபரன் தமது கொடிய நியாயத்தீர்ப்பை அறிவித்தது. அ. பொருளாசையின்மேலும், ௰க. காமத்தின்மேலும், ௰அ. அவபத்தியின்மேலும், உ௰. அநியாயத்தின்மேலும் உண்டாகிய பராபரனுடைய நியாயத்தீர்ப்புகளையும், உக. அவைகளை நிறைவேற்றுகிறவர்களையும் குறித்தது.*

க **என்** நேசருடைய திராட்சத்தோட்டத்தின்மே
லே எனக்குப் பிரியமாயிருக்கிற அவருக்காக அ
வருடைய பாட்டைப் பாடுவேனாக; என் பிரிய
ருக்கு மகா செழிப்பான மேட்டிலே [3]ஒரு திராட்
உ சத்தோட்டம் இருக்கிறது.—அவர் அதை வேலி
அடைத்து, அதைக் கல்பொறுக்கி, அதிலே நற்
குல திராட்சச்செடிகளை நட்டு, அதின் நடுவில்
ஒரு கோபுரத்தைக் கட்டி, அதிலே ஆலையையும்
நாட்டி, அது நல்ல திராட்சப்பழங்களைத் தரு
மென்று காத்திருந்தார்; ஆனால், அது கசப்பான
ங பழங்களைத் தந்தது.-இப்போதும் எருசலேமின்
குடிகளே, யூதாவின் மனுஷரே, நமக்கும் நமது
திராட்சத்தோட்டத்துக்கும் நியாயந்தீருங்கள்.—
ச நாம் நமது திராட்சத்தோட்டத்திற்காகச் செய்
யாத எந்த வேலையை அதற்கு இனிச் செய்யலாம்;
பின்னை நல்ல திராட்சப்பழங்களைத் தருமென்று
நாம் காத்திருக்கும்போது, அது கசப்பான பழங்
ரு களைத் தந்தது என்ன?—இப்போதும் நாம் நமது தி
ராட்சத்தோட்டத்துக்குச் செய்வதை உங்களுக்
கு அறிவிப்போமே; அது மேய்ந்துபோடப்படுவ
தற்காக அதின் வேலியை வாங்கிப்போடுவோம்;
அது மிதியுண்பதற்காக அதின் அடைப்பைத்
தகர்ப்போம்.—அதைப் பாழாக்கிவிடுவோம்; அ சு
தின் கிளை நறுக்கப்படாமலும்,களைகொத்தி எடுக்
கப்படாமலும் போவதினால் முள்ளுச்செடியும்,
நெரிஞ்சிலும் முளைக்கும்; அதின்மேல் மழையை
வருஷிக்கப்பண்ணாதபடிக்கு மேகங்களுக்குங்
கற்பிப்போமென்கிறார். — ஆனால் சேனைகளு எ
டைய கர்த்தரின் திராட்சத்தோட்டம் இஸ்ரவே
லின் வீடும், அவர் மனமகிழ்ச்சியின் நாற்று யூதா
வின் மனுஷருந்தானே; அவர் நியாயத்திற்குக்
காத்திருந்தார்; ஆனால் இதோ சீர்கேடு; நீதிக்குக்
காத்திருந்தார்; ஆனால் இதோ அலறுதல்.

[4]நீங்கள்மாத்திரம் தேசத்தின்நடுவில் வாசமா அ
யிருக்கும்படிக்கு இனி இடமில்லாமற்போகு
மட்டும் வீட்டோடே வீட்டைச்சேர்த்து, வய
லோடே வயலைச்சேரப்பண்ணுகிற உங்களுக்கு
ஐயோ!—அது சேனைகளின் கர்த்தராயிருக்கிற கூ
நம்முடைய செவிகளுக்குட்பட்டது; மெய்யா
கவே அந்தத் திரளான வீடுகள் பாழாகி, பெரிய
வைகளும் நேத்தியானவைகளும் குடியில்லாமல்
இருக்கும்.—பத்தேர் நிலமாகிய திராட்சத்தோட் ௰
டம் ஒரே குருணிதரும்; ஒரு கலவிதை ஒரு
குருணிதரும்.

[5]கர்த்தரின் கிரியையை நோக்காமலும், அவர் ௰க
கரங்களின் செய்கையைப் பாராமலும், லொட்
டியை நத்த அதிகாலமே எழுந்து, இருட்டிப்
போகுமளவும் மதுபானம் தங்களைச் சூடாக்கும்
படியாய்த் தரித்திருந்து,—தங்கள் விருந்துகளில் ௰உ
சுரமண்டலத்தையும், தம்புருவையும், மேளத்தை
யும், நாகசுரத்தையும், மதுபானத்தையும் வைத்
திருக்கிறவர்களுக்கு ஐயோ!

ஆனதுகொண்டு நமது சனம் அறிவில்லாமை ௰ங
யினாலே சிறைப்பட்டுப்போகும்; அதில் கன
முள்ளவர்கள் பட்டினியினாலே தொய்வார்கள்;
அதின் திரளான கும்பு தவனத்தால் நாவரண்டு
போகும்.-ஆனதுகொண்டு அவர்கள் மகிமையும், ௰ச
அவர்கள் திரளும், அவர்கள் சந்தடியும், அவர்க
ளிற் களிகூருகிறவர்களும் பாதாளத்தில் இறங்
கிப்போக, அது தன் நெஞ்சை விரிவாக்கி, தன்
வாயை ஆவென்று மட்டில்லாமல் திறந்தது.—
அப்படியே சிறியவனும் குனியப்பண்ணப்பட் ௰ரு
டு,பெரியவனும் தாழ்ந்துபோவான்; மேட்டிமை
யானவர்களின் கண்கள் தாழும்.—ஆனால் சேனை ௰சு
களின் கர்த்தர் நியாயத்தீர்ப்பினால் உயர்ந்து, பரி
சுத்த பராபரன் நீதியினாலே பரிசுத்தமுள்ளவ
ராய் விளங்குவார். — அப்போது ஆட்டுக்குட் ௰எ
டிகள் தங்கள் வாடிக்கையாய்த் தொழுவத்தி
லே மேயும்; கொழுப்பானவர்களுக்கு இருந்து,
பாழாய்ப்போனவைகளைப் பரதேசிகள் அநுப
விப்பார்கள்.

1 சக. ௰க. க. எரே. உங. ரு.—2 சக. உரு. ச.

3 மத். உக. ௩௩-௪௪.—4 மீகா. உ. உ.—5 ஆமோ. சு. ரு-எ.

௰௮ மாயையின் கயிறுகளால் அக்கிரமத்தையும்,
வண்டில் வடங்களாலே பாவத்தையும் இழுத்து
௰௯ வந்து,—அவர் தீவிரித்துச் சீக்கிரமாய் நாம் பார்க்
கத் தமது கிரியையை நடப்பிக்கட்டுமென்றும்,
இஸ்ரவேலுடைய பரிசுத்தரின் ஆலோசனையை
நாம் அறியும்படிக்குச் சேர்ந்துவரட்டுமென்றும்
௨௰ சொல்லுகிறவர்களுக்கு ஐயோ!—தீமையை நன்
மையென்றும், நன்மையைத்தீமையென்றும் சொ
ல்லி, இருளை வெளிச்சமும், வெளிச்சத்தை இரு
ளுமாக்கி, கசப்பைத் தித்திப்பும், தித்திப்பைக்
௨௧ கசப்புமாக்குகிறவர்களுக்கு ஐயோ!—[1]தங்கள்
பார்வைக்கு ஞானிகளும், தங்கள் எண்ணத்துக்
குப் புத்திமான்களுமாய் இருக்கிறவர்களுக்கு ஐ
௨௨ யோ! — மதுவைக் குடிக்கப் பராக்கிரமரும்,
லொட்டியைக் கலந்துவைக்கப் பெலசாலிகளு
௨௩ மாயிருந்து,—[2]குற்றவாளியைப் பரிதானத்தின்
நிமித்தம்குற்றமற்றவனுக்கி, நீதிமான்களின்நியா
யத்தை அவர்களைவிட்டு விலக்குகிறவர்களுக்கு
ஐயோ!

௨௪ இதின்நிமித்தமாக அக்கினிச்சுவாலை வைக்
கோலைப் பட்சிக்குமாப்போலும், செத்தை நெ
ருப்புக்கு இரையாகித் தணியுமாப்போலும், அவர்
கள் வேர் வாடி, அவர்கள் துளிர் தூசியைப்போ
லப் பறந்துபோம்; ஏனெனில் சேனைகளுடைய
கர்த்தரின் வேதத்தை வெறுத்து, இஸ்ரவேலுடை
ய பரிசுத்தரின்வசனத்தைஅசட்டைபண்ணினூர்
௨௫ கள். — ஆகையால் கர்த்தருடைய கோபம் தமது
சனத்துக்கு விரோதமாய் மூண்டது; அவர் தமது
கையை அதற்கு விரோதமாக நீட்டி, பர்வதங்கள்
அதிரத்தக்கவிதமாகவும், அவர்கள் பிணங்கள் நடு
வீதிகளில் குப்பைபோலாகத்தக்கவிதமாகவும்
அதை அடித்துப்போட்டார்; [3]இதிலே எல்லாம்
அவருடைய கோபம் ஆறுமல் அவருடைய கை
இன்னம் நீட்டினதாயிருக்கிறது.

௨௬ அவர் தூரத்திலுள்ள சாதியாருக்கு ஒரு கொ
டியை ஏற்றி, அவர்களைப் பூமியின் கடையாந்
தரங்களில் இருந்து அவர் பயில் காட்டி அழைப்
பார்; அப்போது இதோ தீவிரமும் வேகமுமாய்
௨௭ வருவார்கள்.—அவர்களில் விடாய்த்தவனும் இ
டறுகிறவனுமில்லை; தூங்குகிறவனும் உறங்குகி
றவனுமில்லை; அவர்களில் ஒருவனுடைய் இடுப்
பின் கச்சை அவிழ்வதும், பாதஇரட்சைகளின்
௨௮ வார் அறுந்துபோவதும் இல்லை.—அவர்கள் அம்
புகள் கூர்மையும், அவர்கள் வில்லுகளெல்லாம்
நாணேற்றினவைகளும், அவர்கள் குதிரைகளின்
குளம்புகள் கற்பாறையாக எண்ணப்பட்டவை
களும், அவர்கள் உருளைகள் புசலுக்கு ஒத்தவை
௨௯ களுமாயிருக்கும்.—அவர்கள் கர்ச்சிப்பு துஷ்ட
சிங்கத்தினுடையது; சிங்கக்குட்டிகளைப்போ
லக் கர்ச்சித்து, உறுமி, இரையைப் பிடித்து,
அதைத் தப்புவிக்கிறவன் இல்லாமல் எடுத்துப்
௩௰ போய்விடுவார்கள். — அவர்கள் அந்நாளிலே
சமுத்திர இரைச்சலுக்குச் சரியாய் அதின்மேல்
இரைவார்கள்; அப்போது தேசத்தைப்பார்த்தால்,
இதோ [4]அந்தகாரமும், வியாகுலமும் உண்டு;
அதின் பாழ்க்கடிப்பின்மேல் வெளிச்சம் இருண்
டிருக்கும்.

## ௬. அதிகாரம்.

௧. ஏசாயா தரிசனத்தில் மகிமையையுடைய கர்த்தரைக் கண்டு, ௫. நடுங்கித் தன் சமாசாரத்தை அறிவிக்க ஸ்திரப்பட்டது. ௯. அழிவுவரைக்கும் சனங்களின் மனக்கடினத்தைக் காட்டினது. ௰௩. மீதியானவர்கள் இரட்சிக்கப்படுவார்கள் என்பது.

உசியா இராசா மரணம்அடைந்த வருஷத்திலே, ௧
[5]ஆண்டவர் உயரமும், உன்னதமுமான ஆசனத்
தின்மேல் உளுக்காந்து இருக்கக்கண்டேன்; அவ
ருடைய வஸ்திரத்தொங்கல்கள் தேவாலயத்தை
நிரப்பின.—சேராபீன்கள் அவருக்கு மேலாக ௨
நின்றூர்கள்; அவர்களில் ஒவ்வொருவனுக்கு அவ்
வாறு செட்டைகளிருந்தன; அவனவன் இரண்
டு செட்டைகளால் தன்தன் முகத்தை மூடி, இ
ரண்டு செட்டைகளால் தங்கள் கால்களை மூடி,
இரண்டு செட்டைகளால் பறந்து,

சேனைகளுடைய கர்த்தர் [6]பரிசுத்தர், பரிசுத் ௩
தர், பரிசுத்தர், [7]பூமி அனைத்தும் அவர் மகிமை
யால் நிறைந்திருக்கிறதென்று ஒருவரோடே ஒரு
வர் கூப்பிட்டுச் சொன்னூர்கள்.

வாசல்களின் நிலைகள் கூப்பிடுகிறவர்களின் ௪
சத்தத்தால் அசைந்து, [8]வீடு புகையினுல் நிறைந்
தது.—அப்போது நான், எனக்கு ஐயோ! என்னெனு ௫
றால் நான் அசுத்த உதடுகளுள்ள மனுஷனும்,
அசுத்த உதடுகளுள்ள சனத்தின் நடுவில் வாசமா
யிருக்கிறவனுமாகையால் அதமாவேனே; ஏனெ
னில் சேனைகளுடைய கர்த்தராகிய இராசாவை
என் கண்கள் கண்டனவென்றேன்.—ஆனால் ௬
சேராபீன்களில் ஒருவன் பலிபீடத்தில் குறட்
டால் எடுத்த ஒரு கட்டைநெருப்பைத் தன் கை
யிலே பிடித்திருந்து, என்னண்டைக்குப் பறந்
துவந்து, — அதினுல் என் வாயைத் தொட்டு, ௭
இதோ, இது உன் உதடுகளைத் தொட்டதினுல்
உன் அக்கிரமம் நீங்கி, உன் பாவம் நிவிர்த்தியா
னதென்றூன்.

அதின்பிறகு, யாரை அனுப்புவோம்? யார் ௮
எங்கள் காரியமாய்ப் போவார் என்று உரைக்
கிற ஆண்டவருடைய சத்தத்தைக் கேட்டேன்;
அதற்கு நான், இதோ, அடியேன் இருக்கிறேன்;
என்னை அனுப்புமென்றேன்.

அப்போது அவர் சொன்னதாவது: நீ போய், ௯
இந்தச் சனத்துக்கு [9]நீங்கள் காதாரக்கேட்டும்
உணராமலும், கண்ணுரக்கண்டும் அறியாமலும்
இருங்களென்று சொல்.—இந்தச் சனம் தங்கள் ௰
கண்களினுலே காணுமலும், தங்கள் காதுகளினு
லே கேளாமலும், தங்கள் இருதயத்தினுல் உண
ர்ந்து மனந்திரும்பாமலும், நாம் அதை ஆரோக்
கியமாக்காமலுமிருக்க, நீ [10]அதின் இருதயத்தை
நிணத்ததாக்கி, அதின் காதுகளை மந்தப்படுத்தி,

1 யாக். ௧. ௭. உரோ. ௰௨. ௰௬. 2 யாத். ௰௭. ௰டு.—3 ஏசா. ௯. ௰௨: ௰௭.௨௧: ௰.௪.—4 ஏசா. அ.௨௨. 5 உ ராஜா. ௨௯. ௨௧. உ மோ. ௨௪. ௰.—6 வெளி. ௪. அ. 7 சங். ௭௨. ௰௯.

8 ஏசே. ௰. ௪.—9 மத். ௰௩. ௰௪. ௰டு. மாற். ௪. ௰௨. லூக். அ. ௰. அப். உஅ. உடு. உ௭. 10 ஏசா. ௨௯. ௰-௰௨. இ மோ. ௨௯. ௨௯. யோவா. ௰௨. ௪௰. உரோ. ௰௯. அ.

௰க அதின் கண்களை மூடிப்போடு என்றார். — அப்
போது, ஆண்டவரே, எந்தமட்டும்? என்றேன்;
அவர் சொன்னதாவது: பட்டணங்கள் குடியில்
லாமலும், வீடுகள் மனுஷசஞ்சாரமில்லாமலும்
பாழாகி, பூமி அவாந்தர வெளியாகுமட்டுந்தா
௰௨ னே.—ஏனெனில் கர்த்தர் மனுஷரைத் தூரமாக
விலக்குவதினாலே, தேசத்தின் நடுமையம் மகா
வெறுமையாக்கிவிடப்படும்.
௰௩ ஆகிலும் அதிலே இன்னம் பத்தில் ஒரு பங்
கிருந்தும் அது திரும்ப நிர்மூலமாக்கப்படும்; கர்
வாலிமரமும் இச்சிலமரமும் இலையற்றுப்போ
னபிற்பாடு அதின் அடிமரம் இருக்கிறதுபோ
லே, அவைகளின் அடிமரமும் இருந்து பரிசுத்த
வித்தாயிருக்கும் என்றார்.

## எ. அதிகாரம்.

க. ஆகாச ரேத்சீனும், பேக்காவினும் கலங்கினின்றபோது ஏசாயாவினாலே ஆறுதல் அடைந்தது. ௰. அவன் ஒரு அடையாளத்தைத் தெரிந்துகொள்ள இடம்பெற்றும், அதை விலகித் திரிந்து வருகையின் வாக்குத்தத்தத்தை அடையாளமாகப் பெற்றுக்கொண்டது. ௰எ. அவனுக்கு அசூரியாவைக்கொண்டு நியாயத்தீர்ப்பு வருமென்று தீர்க்கதரிசனம் சொல்லப்பட்டது.

க உசியாவினுடைய குமாரனாகிய யோத்தாமின்
குமாரன் ஆகாசென்ற யூதாவுடைய இராசாவின்
நாள்களிலே சம்பவித்தது ஏதென்றால், [1]ரேத்
சீன் என்ற சூரியாவின் இராசாவும், ரெம்லியா
வின் குமாரனாகிய பேக்காவென்ற இஸ்ரவேலு
டைய இராசாவும் எருசலேமின்மேல் யுத்தம்
பண்ணவந்தேறி, அதைப் பிடிக்கமாட்டாதே
௨ போனார்கள்.—சூரியர் எப்பிராயீமைச் சார்ந்து
இருக்கிறார்களென்று தாவீதின் வீட்டுக்கு அறி
விக்கப்பட்டபோது, அவன் இருதயமும் அவன்
சனத்தின் இருதயமும் காட்டிலே மரங்கள் காற்
றினாலே தத்தளிக்குமாப்போலே தத்தளித்தன.—
௩ அப்போது கர்த்தர் ஏசாயாவுடனே சொன்னதா
வது: இப்போது நீயும் உன் மகன் சேயார்யாசூபு
மாய் வண்ணான்துறைவழியிலுள்ள மேற்குளத்து
மதகின் கடைசிமட்டும் ஆகாசுக்கு எதிர்கொண்
௪ டுபோய்,—நீ அவனுடனே சொல்லவேண்டியது
ஏதெனில், நாம் யூதாவுக்கு விரோதமாய்ப் போ
யேறி, அதை இறுகப்பிடித்து, அதை நமக்குள்ளே
பங்கிட்டுக்கொண்டு, தபேயாலின் குமாரனை அ
தில் இராசாவாக்கி அரசாளப்பண்ணுவோமென்
௫ று,— சூரியர் எப்பிராயீமோடும், ரெம்லியாவின்
மகனோடுங்கூட உனக்கு விரோதமாய்ப் பொல்
லாதஆலோசனையைப் பண்ணினதின்நிமித்தம்,-
௬ நீ பயப்படாமல் அமர்ந்திருக்கப் பார்; புகைகிற
இந்த இரண்டு அடிக்கொள்ளிகளாகிய சூரிய
ரோடே வந்த ரேத்சீனும் ரெம்லியாவின் மக
னும், எரிகிற கோபத்தின்நிமித்தம் உன் இரு
௭ தயம் துவளவேண்டாம்.—அது நிலைநிற்பதுமில்
லை; அது அப்படியாவதுமில்லை என்று கர்த்தரா
௮ கிய ஆண்டவர் சொல்லுகிறார். — ஏனென்றால்
சூரியாவின் தலைப்பட்டணம் தமஸ்குவும், தம
ஸ்குவின் தலைவன் ரேத்சீனுந்தானே; இன்னம்
அறுபத்தைந்து வருஷங்களிலே எப்பிராயீம்
சனமாயிராதபடிக்கு நொறுக்கப்படும். — இப் ௯
போதோ எப்பிராயீமின் தலைப்பட்டணம் சமா
ரியாவும், சமாரியாவின் தலைவன் ரெம்லியாவின்
மகனுந்தானே; நீங்கள் விசுவாசியாதேபோனால்
நிலைப்படமாட்டீர்களென்று சொல்லென்றார்.
அப்புறம் கர்த்தர் ஆகாசைப்பார்த்துப் பேசி,— ௰
உன் பராபரனாகிய கர்த்தரிடத்தில் ஒரு அடை ௰க
யாளத்தை உனக்குக் கேள்; அதைப் பாதாளத்தி
லேயானாலும், உயர உன்னதத்திலேயானாலுமி
ருந்து உண்டாகக் கேளென்று சொன்னார்.—ஆகா ௰௨
சோவென்றால் அதை நான் கேளேன்; நான் கர்த்
தரைப் பரிட்சைபாராதிருப்பேனென்றான். —
அப்போது ஏசாயா சொன்னதாவது: இப்போ ௰௩
தும் தாவீதின் வீட்டாரே, கேளுங்கள்; மனுஷ
ரை விதனப்படுத்துகிறது உங்களுக்குக் கொஞ்ச
க்காரியமாய்க் காண்கிறதென்று என் பராபரனை
யும் விதனப்படுத்துகிறீர்களோ?—ஆனதுகொண்டு ௰௪
ஆண்டவர் தாமாய் உங்களுக்கு ஒரு அடையா
ளத்தைக் கொடுப்பார்; [2]இதோ, ஒரு கன்னியாஸ்
திரி கர்ப்பவதியாகி ஒரு குமாரனைப்பெறுவாள்;
அவருக்கு இம்மானுவேலென்று பேரிடுவாள்.—
தீமையை வெறுத்து நன்மையைத்தெரிந்துகொள் ௰௫
ள அறியும் வயதுமட்டாக அவர் வெண்ணெயும்
தேனும் சாப்பிடுவார்.—இந்த இளைஞனேவெ ௰௬
ணில் தீமையை வெறுக்கவும், நன்மையைத் தெ
ரிந்துகொள்ளவும் அறிகிறதற்குமுன்னே நீர்
அருவருக்கிற தேசம் அதின் இரண்டு இராசாக்
களால் விடப்பட்டதாயிருக்கும்.
ஆனால் எப்பிராயீம் யூதாவைவிட்டுப் பிரிந்த ௰௭
நாள்துவக்கி வராதிருக்கிற நாள்களைக் கர்த்தர்
உம்முடையமேலும், உம்முடைய சனத்தின்மே
லும், உம்முடைய பிதாவுடைய வீட்டின்மே
லும், அசூரியாவின் இராசாவினாலே வரப்பண்
ணுவார்.—பின்னையும் சம்பவிப்பதாவது: கர்த்தர் ௰௮
எகிப்தினுடைய நதிகளின் கடையாந்தரத்தில்
ஈக்களையும், அசூரியா தேசத்திலிருக்கும் தேன்
பூச்சிகளையும் பயில்போட்டு அழைப்பார்.—
அவைகள் வந்து ஏகமாய் வனாந்தரங்களின் பள் ௰௯
ளத்தாக்குகளிலும், கல்மலைகளின் வெடிப்புகளி
லும், எல்லா முள்ளுக்காடுகளிலும், எல்லாச் சா
லைகளிலும் தங்கும். — அக்காலத்திலே ஆண்ட ௨௰
வர் [3]கூலிக்கு வாங்கின சவரகன் கத்தியாகிய
நதிக்கு அக்கரையான அசூரியாவின் இராசாவி
னாலே சிரசையும், கால்களின் மயிரையும் சிரைப்
பித்து, தாடியையும் வாங்கிப்போடுவிப்பார்.—
அக்காலத்தில் ஒருவன் ஒரு கிடாரியையும், ௨க
இரண்டு ஆடுகளையும் வளர்த்தால்,—அவன் அவை ௨௨
கள் பரிபூரணமாய்ப் பால்கறக்கிறபடியினாலே
வெண்ணெயைச் சாப்பிடுவதுண்டு; தேசத்தின்
நடுவில் மீதியாயிருப்பவனெல்லாம் வெண்ணெ
யையும் தேனையுமே சாப்பிடுவான். — பின்னை ௨௩
யும் சம்பவிப்பது ஏதெனில், ஆயிரம் வெள்ளிக்

1 ௨ இரா. ௰௬. ௫.—2 மத். க. ௨௩. லூக். க. ௩௧.

3 எசா. ௰. ௫.

காசு பெறும் ஆயிரம் திராட்சச்செடியிருந்த நில
மெல்லாம் முள்ளுச்செடியும் நெரிஞ்சிலுமாம்.—
௨௪ அம்புகளையும், வில்லையும் பிடித்து அங்கே போ
கவேண்டியதாயிருக்கும்; ஏனெனில் தேசம் அ
னைத்தும் முள்ளுச்செடியும் நெரிஞ்சிலுமாயிருக்
௨௫ கும்.—குந்தாலியாலே கொத்தப்படுகிற எல்லா
மலைகளும் உண்டே; அங்கே முள்ளுச்செடிக
ளுக்கும்,நெரிஞ்சில்களுக்கும் பயப்படுவதினால்
போகக்கூடாதபடியினாலே, அது மாடுகளை ஓட்
டிவிடுவதற்கும், ஆடுகள் மிதிப்பதற்குமான இட
மாயிருக்குமென்றான்.

## ௮. அதிகாரம்.

௧. கொள்ளைக்குக் கடுகிச் சூறைக்குத் தீவிரிப்பானென்ற கருத்தின்படி, சீரியாவும், இஸ்ரவேலும் அசூரியாராலே ஜெயங்கொள்ளப்படுவதை ஏசாயா தீர்க்கதரிசனமாகச் சொன்னது. ௫. அவன் அவபத்தியினாலே நியாயத்தீர்ப்பு வருமென்றது. ௯. பராபரனுடைய நியாயத்தீர்ப்புகள் எதிர்க்கப்படாதவைகளென்றும், ௰௩. அவருக்குப் பயப்படுகிறவர்கள் ஆறுதல் அடைவார்களென்றும், ௰௯. விக்கிரகஆராதனைக்காரருக்கு உபத்திரவங்கள் வருமென்றும் சொல்லியது.

௧ பின்னையும் கர்த்தர் என்னுடனே ஒரு பெரிய
கடிதாசிச் சுருளை எடுத்துக்கொண்டு, மனுஷன்
எழுதுகிறபிரகாரமாய் அதிலே கொள்ளைக்குக்
கடுகி,சூறைக்குத் தீவிரிப்பான் என்று எழுதென்
௨ றார்.—அப்போது நான் உண்மையுள்ள சாட்சி
மனுஷராயிருக்கிற ஆசாரியனாகிய உரியாவை
யும் எபெரெகியாவின் குமாரனாகிய சகரியா
வையும் அதற்குச் சாட்சியாக வைத்துக்கொண்
௩ டேன்.—நான் தீர்க்கதரிசியானவளண்டைக்குச்
சேர்ந்தபோது, அவள் கர்ப்பவதியாகி ஒருகுமார
னைப் பெற்றாள்; அப்போது கர்த்தர் என்னு
டனே, கொள்ளைக்குக் கடுகி, சூறைக்குத் தீவி
௪ ரிப்பான் என்றபேரை அவனுக்கு இடு.—ஏனெ
னில் இந்தப்பாலகன், என் அப்பா, என் அம்மா
என்று கூப்பிட அறிகிறதற்குமுன்னே, தமஸ்
குவின் ஆஸ்தியும், சமாரியாவின் கொள்ளையும்,
அசூரியாவின் இராசாவுக்குமுன்பாகக் கொண்
டுபோகப்படுமென்றார்.
௫ கர்த்தர் அப்புறம் என்னோடே பேசத்தொடர்
௬ ந்து சொன்னதாவது:—இந்தச் சனம் மெதுவாய்
ஓடுகிற சீலோவாவின் தண்ணீர்களை அசட்டை
பண்ணி, ரேத்சீனையும் ரெமலியாவின் குமாரனை
௭ யுங்குறித்துச் சந்தோஷிக்கிறபடியினாலே,—இ
தோ ஆண்டவர் அசூரியாவின் இராசாவும் அவ
னுடையசகலஆடம்பரமுமாகிய ஆற்றினுடைய
வலுவும் திரளுமான தண்ணீர்களை அவர்கள்மே
லே புரளப்பண்ணுவார்; அது அவர்களுடைய
ஓடைகளெல்லாவற்றின்மேலும் புரண்டு, அவர்
களுடைய எல்லாக் கரைகள்மேலும் போய், —
௮ யூதாவுக்குட்புகுந்து புரண்டு கடந்து, கழுத்து
மட்டும் வருமென்றார்; [1]இம்மானுவேலே, அவன்
செட்டைகளின் விரிவு உமது தேசத்தின் அக
லத்தை நிரப்பும்.
௯ சனசதளங்களே, ஏகக்கூட்டமாகி [2]முறியுங்
கள்; சகல தூரதேசத்தாரே, செவிகொடுங்கள்;
இடைகட்டிக்கொண்டு முறியுங்கள்; இடைகட்
டிக்கொண்டு முறியுங்கள்.—யோசனையை யோ ௰
சியுங்கள், அது அவத்தமாகும்; வார்த்தையை
வசனியுங்கள், அது நிற்காது; ஏனெனில் எங்க
ளுடனே பராபரன் இருக்கிறார். — ஏனெனில் ௰௧
கர்த்தர் என்னுடனே பேசி,என் கையைத் திடப்
படுத்தி, நான் இந்தச் சனத்தின் வழியிலே நட
வாதபடிக்கு எனக்குப் புத்திசொல்லி விளம்பின
தாவது:—இந்தச் சனம் ஒப்பந்தமென்று சொல் ௰௨
லுகிறதை எல்லாம் நீங்கள் ஒப்பந்தமென்று சொ
ல்லாமலும், அது பயப்படுகிற பயமாய் நீங்கள்
பயப்படாமலும், தத்தளியாமலும், — சேனைக ௰௩
ளின் கர்த்தரையே பரிசுத்தம்பண்ணுங்கள்; அ
வரே உங்கள் பயமும், அவரே உங்கள் தத்தளிப்
புமாயிருப்பாராக.— அவர் உங்களுக்குப் பரி ௰௪
சுத்தஸ்தலமும், இஸ்ரவேலின் இரண்டு வீடுக
ளுக்கோ [3]தடுக்கலின் கல்லும், இடறுதலின் கல்
மலையும், எருசலேமின் குடிகளுக்குச் சுருக்கும்,
கண்ணியுமாக இருப்பார்.-அவர்களில் அநேகர் ௰௫
இடறிவிழுந்து நொருங்கிச் சிக்குண்டு பிடிபடு
வார்கள்.—சாட்சியைக் கட்டிப்போடு; நம்மு ௰௬
டைய சீஷருக்குள் இருக்கிற வேதத்தை முத்
திரியென்றார்.
யாக்கோபின் வீட்டுக்குத் தமது முகத்தை ௰௭
மறைக்கிற கர்த்தருக்கு நான் காத்து, அவருக்கு
எதிர்பார்த்திருப்பேன். — [4]இதோ, நானும், கர்த் ௰௮
தர் எனக்குக் கொடுத்த பிள்ளைகளும், சீயோன்
பர்வதத்தில் வாசமான சேனைகளுடைய கர்த்
தராலே இஸ்ரவேலில் அடையாளங்களாகவும்,
அற்புதங்களாகவும் இருக்கிறோம்.
ஆனால் அவர்கள் உங்களுடனே அஞ்சனம் ௰௯
பார்க்கிறவர்களையும், முணுமுணென்று சத்த
மிடுகிற குறிகாரரையும் கேளுங்களென்பார்
கள்; சனம் தன் பராபரனைக் கேட்கவேண்டா
மோ? உயிருள்ளவர்களுக்காகச் செத்தவர்களைக்
கேட்கலாமோ?—வேதத்தையும் சாட்சியையும் ௨௰
கவனிக்கவேண்டும், இந்த வார்த்தையின்படியே
அவர்கள் சொல்லாவிட்டால், அவர்களுக்கு
விடியற்கால வெளுப்பில்லை. — இடுக்கண் அ ௨௧
டைந்தவர்களும் பட்டினியுமாய்த் தேசத்தைத்
தாண்டுவார்கள்; அவர்கள் பட்டினியாயிருக்கும்
போது, மூர்க்கவெறியாகி, தங்கள் இராசாவை
யும் தங்கள் பராபரனையும் தூஷணிக்கிறவர்க
ளாய் அண்ணாருவார்கள்.—தேசத்தை நோக்கிப் ௨௨
பார்ப்பார்கள்; ஆனால் இதோ இக்கட்டும் இருட்
டுமாம்; இடுக்கத்தால் இருளடைந்து, அந்தகாரத்
திலே தள்ளுண்டு அலைவார்கள்.

## ௯. அதிகாரம்.

௧. கிறிஸ்துவின் பிறப்பினாலும், இராசசிபத்தினாலும், உபத்திரவங்களுக்கு நடுவே அதிக சந்தோஷம் வருமென்றும், ௮. இஸ்ரவேலுடையமேட்டிமைக்காகவும், ௰௩. மாயத்துக்காகவும். ௰௮. மனம் உருகாமைக்காகவும் அவர்கள்மேல் நியாயத்தீர்ப்பு வருமென்றும் சொல்லியது.

ஆகிலும் அவர் சேபுலோன் தேசத்தையும், ௧
நவுதலி தேசத்தையும், ஈனப்படுத்தின முந்தின

1 ஏசா. ௭. ௰௪.—2 ௨ இரா. ௰௬. ௨௧

3 ஏசா. ௨௮. ௰௬. ௨ரோ. ௯. ௩௩.—4 எபி. ௨. ௰௩.

காலத்து இடுக்கமாய் அது இருண்டிருப்பதில்லை;
ஏனென்றால் அவர் [1]கடற்கரைவழியும், யோர்
தான் நதியோரமுமான புறச்சாதியாருடைய க
லிலேயாவாகிய அத்தேசத்தைப் பிற்காலத்திலே
மகிமைப்படுத்துவார்.
௨ [2]இருளில் நடக்கிற சனம் பெரிய வெளிச்
சத்தைக் காணும்; மரணநிழலின் தேசத்தில் குடி
யிருக்கிறவர்களின்மேல் வெளிச்சம் பிரகாசிக்
௩ கும்.— அந்தச் சாதியைத் திரளாக்கி, அதற்கு
மகிழ்ச்சியைப் பெருகப்பண்ணுவீர்; அறுப்பில்
மகிழ்கிறதுபோலவும், [3]கொள்ளையைப் பங்கிட்
டுக்கொள்ளுகையில் களிகூருகிறதுபோலவும்
௪ உமக்குமுன்பாக மகிழ்வார்கள். — ஏனெனில்
அவர்கள் சுமையான நுகத்தடியையும், அவர்கள்
தோளின் மிலாறையும், அவர்கள் ஆளோட்டி
யின் கோலையும், [4]மீதியானரின் நாள் நடபடிக்
௫ குச் சரியாய் முறித்துப்போட்டீர்.—அதேனென்
றால் அமளியாய் யுத்தம்பண்ணுகிற எல்லாப்
படைமுஸ்தீதும் இரத்தங்களிலே புரண்ட உடுப்
பும் சுட்டெரிக்கப்பட அக்கினிக்கு இரையா
கும்.
௬ ஏனெனில் [5]நமக்கு ஒரு பாலகன் பிறந்தார்;
நமக்கு ஒரு குமாரன் கொடுக்கப்பட்டார்; கர்த்
தத்துவம் அவர் தோளின்மேலிருக்கும்; அவர்
நாமம் அதிசயமானவர், ஆலோசனைக்காரர், வல்
லமையுள்ள பராபரன், நித்திய பிதா, சமாதானப்
௭ பிரபு என்னப்படும்.—[6]தாவீதின் ஆசனத்தையும்
அவனுடைய இராச்சியத்தையும் அவர் திடப்ப
டுத்தி, அதை இதுமுதற்கொண்டு என்றென்றைக்
கும் நியாயத்தினாலும் நீதியினாலும் நிலைப்படுத்
தும்படிக்கு, அதை அவர் ஆளும் கர்த்தத்துவத்
தின் பெருக்கத்துக்கும், அதின்மேலுள்ள சமா
தானத்துக்கும் முடிவில்லை; [7]சேனைகளுடைய
கர்த்தரின் வயிராக்கியம் அதைச் செய்யும்.
௮ ஆண்டவர் யாக்கோபிலே ஒரு வார்த்தையை
அனுப்பினார்; அது இஸ்ரவேலின்மேல் இறங்கு
கிறதாயிருக்கிறது.
௯ செங்கற்கள் இடிந்துபோயின; வெட்டின
கற்களாலே திரும்பக் கட்டுவோம்; காட்டத்தி
மரங்கள் வெட்டிப்போடப்பட்டன; கேதுரு
மரங்களை அவைகளுக்கு மாற்றிவைப்போ
௰ மென்று,—அகந்தையும், மனப்பெருமையுமாய்ச்
சொல்லுகிற எப்பிராயீமரும், சமாரியாவின் கு
டிகளுமாகிய எல்லாச் சனத்துக்கும் அது தெரிய
௰௧ வரும்.—என்னவெனில் கர்த்தர் ரேத்சீனுடைய
சத்துருக்களை அவர்கள்மேல் உயர்த்தி, அவர்க
ளுடைய மற்றச் சத்துருக்களை அவர்களோடே
௰௨ கூட்டிக்கலப்பார். — சூரியர் முன்புறத்திலும்,
பெலிஸ்தியர் பின்புறத்திலுமிருந்து வந்து இஸ்ர
வேலை முழு வாயாலும் பட்சிப்பார்கள்; [8]இதில்
எல்லாம் அவருடைய கோபம் ஆறாமல் அவரு
டைய கை இன்னம் நீட்டினதாயிருக்கிறது.

ஏனெனில் இந்தச் சனம் தன்னை அடிக்கிற ௰௩
வரண்டைக்குத் திரும்பாது; சேனைகளுடைய
கர்த்தரைத்தேடாதேபோகிறார்கள்.— ஆகையால் ௰௪
கர்த்தர் இஸ்ரவேலிலே தலையையும், வாலையும்,
கிளையையும், நாணலையும், ஒரேநாளிலே அறுப்
பார்.—[9]மூப்பனும், கனமுகமானவனும் தலை; ௰௫
பொய்ப்போதகம்பண்ணுகிற தீர்க்கதரிசி வால்.-
ஏனென்றால் [10]இந்தச் சனத்தை நடத்துகிற ௰௬
வர்கள் எத்தரும், அவர்களால் நடத்தப்படுகிற
வர்கள் விழுங்கப்படுகிறவர்களுமாய் இருக்கி
றார்கள்.—ஆனபடியால், ஆண்டவர் அதின் இ ௰௭
ளைஞர்மேல் பிரியமாயிருப்பதுமில்லை; அதிலி
ருக்கிற தாய்தகப்பனில்லாதவர்கள்மேலும், வித
வைகள்மேலும் இரங்குவதுமில்லை; ஏனெனில்
அவர்கள் அனைவரும் மாயக்காரரும் பொல்லாத
வர்களுமாயிருக்கிறார்கள்; எல்லா வாயும் பயித்
தியம்பேசும்; [11]இதிலெல்லாம் அவருடைய கோ
பம் ஆறாமல், அவருடைய கை இன்னம் நீட்டி
னதாயிருக்கிறது
ஆகாமியமானது அக்கினியைப்போல எரிகி ௰௮
றபடியினாலே, அது முள்ளுச்செடியையும் நெ
ரிஞ்சிலையும் பட்சித்து, சன்னபின்னலானகாட்
டைப் புகைதிரண்டெழும்பத்தக்கதாகக் கொ
ளுத்தும்.—சேனைகளுடைய கர்த்தரின் சினத் ௰௯
தால் தேசம் மந்தாரப்பட்டு, சனம் அக்கினி
க்குஇரையாய்ப்போம்; ஒருவனும் தன் சகோதர
னைத் தப்பவிடான்.—வலதுபுறத்தில் அறுத்தாலும் ௨௰
பசித்திருப்பார்கள்; இடதுபுறத்திலேதின்றாலும்
திருப்தியாவதில்லை; தன் தன் புயத்தின் மாம்சத்
தை அவனவன் தின்பான்.—எப்பிராயீமை மனா ௨௧
சேயும், மனாசேயை எப்பிராயீமுந்தானே; இவர்
கள் ஏகமாய் யூதாவுக்கும் விரோதமாயிருப்பார்
கள்; [12]இதிலெல்லாம் அவருடைய கோபம் ஆறா
மல் அவருடைய கை இன்னம் நீட்டினதாயிருக்
கும்.

## ௰. அதிகாரம்.

௧. கொடியருக்குத் தண்டனை வருமென்றும், அமார்க்கரை அடிக்கும் கோலாகிய அசூரியர் முறிவார்களென்றும், ௨௰. இஸ்ரவேலரில் மீதியான வர்கள் இரட்சிக்கப்படுவார்களென்றும் சொல்லியது. ௨௪. இஸ்ரவேலர் அசூரியரிடத்தில் இருந்து விடுதலையாவார்களென்று ஆறுதலான வாக்குத்தத்தம் பெற்றது.

ஏழைகளை வழக்கிலே தோற்கப்பண்ணவும், நம் ௧
முடைய சனத்தில் சிறுமையானவர்களின் நியா
யத்தைப் பறிக்கவும், விதவைகளைச் சூறையிட
வும், திக்கற்றவர்களைத் தாங்கள் கொள்ளையிடவு
மாக,—அக்கிரமப் பிரமாணங்களைத் தீர்மானிக் ௨
கிறவர்களுக்கும், பாரமானவைகளை எழுதுகிற
வேதபாரகருக்கும் ஐயோ!—விசாரிப்பின் நாளி ௩
லும், தூரத்திலிருந்து வருகிற பாழ்க்கடிப்பின்
நாளிலும் நீங்கள் என்னசெய்வீர்கள்? யாரண்
டையிலே ஒத்தாசைதேட ஓடுவீர்கள்? உங்கள்
மகிமை கட்டுண்டவர்களின்கீழ் முடங்கிவி
ழாதபடிக்கு அதை எங்கே வைத்துப்போவீர்

1 மத். ௪. ௰௫, ௰௬.
2 லூக். ௧. ௭௮, ௭௯.
3 சங். ௱௰௯. ௧௬௨.
4 நியா. ௭. ௨௨.—5 லூக். ௨. ௭—௰௧. யோவா. ௧. ௰௪.
6 லூக். ௧. ௩௨, ௩௩.
7 ஏசா. ௧௭. ௧௨. ௨ இரா. ௰௯. ௩௩.
8 ஏசா. ௯. ௨௯: ௰. ௪.
9 ௨ இரா. ௰௭. ௧-௨௪.
10 ஏசா. ௩. ௰௨.—லூக். ௬. ௩௯.
11 ௰௨. ௨௪.—12 ஏசா. ௰௨. ௰௭.

௪ கள்?—கொலைசெய்யப்பட்டவர்களுக்குள்ளும்
விழுவார்கள்; இதிலெல்லாம் அவருடைய கோ
பம் ஆறுமல், அவருடைய கை இன்னம் நீட்டி
னதாயிருக்கும்.
௫ நம்முடைய கோபத்தின் கோலாகிய [1]அசூரிய
ருக்கு ஐயோ! அவர் கையிலிருக்கிறது நம்மு
௬ டைய சினத்தின் மிலாறு.—நாம் அமார்க்கமான
சாதிக்கு விரோதமாய் அவனை அனுப்பி, நம்மு
டைய கோபம்மூண்டிருக்கிற சனத்தின்மேல் அ
தைக் கொள்ளையிடவும், சூறையாடவும், அதை
வீதிகளின் சேற்றைப்போல மிதித்துப்போடவு
௭ ம் அவனுக்குக் கட்டளைகொடுப்போம்.— அவ
னேவெனில் அப்படிக்கொத்த எண்ணமும் அ
வன் இருதயம் அப்படிக்கொத்த நினைவுமாயிரா
மல், கொஞ்சமாயிராத சாதிகளை அழிக்கவும், சங்
கரிக்கவும் தன் மனதிலே நினைவாயிருக்கிறான்.
௮ ஏனெனில் [2]என் பிரபுக்கள் அனைவரும் இரா
௯ சாக்களல்லவோ? — கலனேபட்டணம் கரகே
மிசைப்போலானதில்லையோ? ஆமாத்து அற்பாத்
தைப்போலுமானதில்லையோ? சமாரியா தமஸ்கு
௰ வைப்போலானதில்லையோவென்றும், — எருச
லேமையும், சமாரியாவையும்பார்க்கிலும் விசே
ஷித்த சொரூபங்களுள்ள விக்கிரக இராச்சியங்
௰௧ களை என் கை கண்டுபிடித்ததுபோலவும்,—நான்
சமாரியாவுக்கும், அதின் விக்கிரகங்களுக்கும்
செய்ததுபோலவும் எருசலேமுக்கும், அதின்
விக்கிரகங்களுக்கும் செய்யேனோவென்றும்
௰௨ சொல்லுகிறான்.—ஆனால் சம்பவிப்பதேதெனில்,
ஆண்டவர் சீயோன்பர்வதத்திலும், எருசலேமி
லும் தமது செயலை எல்லாம் முடித்திருக்கும்
போது [3]அசூரிய இராசாவினுடைய பெருமை
யான நெஞ்சின் கனியையும், அவன் மேட்டி
மையான கண்களின் சிறப்பையும் நாம் விசா
ரிப்போம் என்கிறார்.
௰௩ ஏனென்றால், அவன் சொல்லுகிறது: என்
கையின் பெலனாலும், என் ஞானத்தினாலும் இ
தைச்செய்தேன்; ஏனெனில், உணர்வுள்ளவனாய்
இருக்கிறேன்; அதினாலே நான் சனசதளங்களின்
எல்லைகளை வாங்கிவிட்டு, அவர்கள் உக்கிரா
ணங்களைக் கொள்ளையிட்டு வல்லவனைப்போ
௰௪ லக் குடியானவர்களைத் தாழ்த்தினேன்.—என்
கை சனசதளங்களின் ஆஸ்தியை ஒரு குருவிக்
கூட்டைப்போலக் கண்டுபிடித்தது; தனித்துவி
டப்பட்ட முட்டைகள் வாரிக்கொள்ளப்படுவ
துபோலே பூமியை எல்லாம் நான் வாரிக்கொண்
டேன்; செட்டையை அசைத்தவர்களும், வா
யைத் திறந்தவர்களும், குசுகுசென்று சீறினவர்
௰௫ களுமில்லை என்கிறான். — கோடாரி தன்னால்
வெட்டுகிறவனுக்கு விரோதமாய் மேன்மைபா
ராட்டலாமோ? அல்லது வாள் தன்னை இழுக்கி
றவனுக்கு விரோதமாய்ப் பெருமைபாராட்ட
லாமோ? தடி தன்னை எடுக்கிறவர்களை அசைப்
பதுபோலவும், மிலாறு, நான் மரம் அல்ல
௰௬ வென்று எழும்புமாப்போலவுந்தானே.—ஆகை
யால் சேனைகளுடைய ஆண்டவராகிய கர்த்தர்
அவனுடைய கொழுத்தவர்களில் இளைப்பை அ
னுப்பி, வேகிற அக்கினிக்கொத்த நெருப்பை
அவன் மகிமையின்கீழ்க் கொளுத்துவார்.—இஸ் ௰௭
ரவேலின் வெளிச்சமானவர் அக்கினியும், அ
தின் பரிசுத்தர் அக்கினிச்சுவாலையுமாகி எரிந்து,
ஒரேநாளிலே அவனுடைய முள்ளுச்செடிகளை
யும், நெரிஞ்சில்களையும் பட்சித்து, — அவனு ௰௮
டைய காட்டின் மகிமையையும், அவனுடைய
பயிர்நிலத்தின் மகிமையையும், ஆத்துமாத்துவக்
கிச் சதைபரியந்தமும் அழியப்பண்ணுவார்;
கொடிபிடிக்கிறவன் களைத்து விழுந்தவண்ண
மாய் அது இருக்கும்.—அவனுடைய காட்டின் ௰௯
மீதியான மரங்கள் மட்டாயிருக்கும், ஒரு பயல்
அவைகளை எண்ணி எழுதலாம்.
அக்காலத்திலே சம்பவிப்பதேதெனில், இஸ் ௨௰
ரவேலில் மீதியானவர்களும், யாக்கோபுடைய
வீட்டிலே தப்பினவர்களும் தங்களை அடித்த
வனை இனிச் சார்ந்துகொள்ளாமல், இஸ்ரவே
லின் பரிசுத்தராகிய கர்த்தரை உண்மையாகச்
சார்ந்துகொள்ளுவார்கள்.-மீதியாயிருப்பவர்கள், ௨௰௧
யாக்கோபிலே மீதியாயிருப்பவர்களே, வல்ல
மையுள்ள பராபரனண்டைக்குத் திரும்புவார்
கள்.—ஏனெனில் [4]இஸ்ரவேலே, உன்னுடைய ௨௰௨
சனம் சமுத்திரத்தின் மணலத்தனையாய் இருந்
தாலும் அதில் மீதியாயிருப்பவர்களே திரும்பு
வார்கள்; அழிக்குதல் அறுதியாய்த் தீர்ந்திருக்கும்
போது நீதி புரண்டுவரும்.-ஏனென்றால் சேனைக ௨௰௩
ளுடைய கர்த்தராகிய ஆண்டவர் தேசத்துக்குள்
எங்கும் அறுதியான அழிக்குதலைச் செய்வார்.
ஆகையால் சீயோனிலே வாசமாகிய நமது ௨௰௪
சனமே, உன்னைக் கோலாலடித்து, தன் தடி
யை எகிப்தியனைப்போல உன்மேல் ஓங்குகிற
அசூரியனுக்குப் பயப்படாதிரு.—ஏனெனில், ௨௰௫
இன்னம் மெத்தக் கொஞ்சப்போதிலே சினம்
தீர்ந்திருக்கும்; அப்போது நம்முடைய கோபம்
அவர்களைச் சங்கரிக்கப்போகிறதென்று சேனை
களுடைய கர்த்தராகிய ஆண்டவர் விளம்புகி
றார்.—[5]ஓரேப் கல்மலையண்டையிலே மீதியா ௨௰௬
னியர் வெட்டுண்டவண்ணமாய்ச் சேனைகளு
டைய கர்த்தர் அவன்மேல் ஒரு சவுக்கை எழுப்
பித் தமது கோலை எகிப்திலே கடலின்மேல்
ஓங்கினதுபோலே ஓங்குவார். — அந்நாளிலே ௨௰௭
அவன் சுமை உன் தோளிலும், அவன் நுகத்தடி
உன் கழுத்திலுமிருந்து நீங்கும்; தயிலத்தால் நு
கத்தடி கெட்டுப்போம்.
அவன் ஆயாத்துக்கு வந்து, மிக்ரோனைக் கட ௨௰௮
ந்து மிக்மாசிலே தன் படைமுஸ்தீதுகளை வைத்
துவைப்பான்.—கணவாயைத் தாண்டிக் கேபா ௨௰௯
விலே பாளயம் இறங்குகிறார்கள்; ராமா அதிர்
கிறது; சவுலின் ஊராகிய கிபேயா ஓடிப்போகி
றது.—கல்லீம் குமாரத்தியே, உரத்துக்கூப்பிடு; ௩௰
சிறுமையான ஆனதோத்தே, லாயசூர்ப்புறமாக
உன் சத்தத்தை நீட்டிக் கூப்பிடு.—மத்மேனா வல ௩௰௧

1 ஏசா. ௧௪.௧. ௨ இரா.௰௮.௰௧.—2 ஏசா. ௧௧. ௪, ௨௰.—3 ஏசா.௩௭.௩௬. ௨ இரா ௰௯. ௩௫.—4 உரோ. ௯. ௨௭, ௨௮.—5 நியா. ௭. ௨௫.

சைவாங்கும், கேபிமின் குடிகள், தப்பி ஓடக்
௩௨ கூட்டங்கூடுகிறார்கள்.-இன்னம் ஒருநாள் நோ
விலே நிற்கிறதற்கிருந்து, தன் கையைச் சீயோன்
குமாரத்தியின் பர்வதத்துக்கும், எருசலேமின்
மேட்டுக்கும் விரோதமாய் அசைப்பான்.
௩௩ ஆனால் இதோ, சேனைகளின் கர்த்தராகிய ஆ
ண்டவர் [1]தோப்புகளை வலுமையாய்த் தறிப்பார்;
ஓங்கி வளர்ந்தவைகள் வெட்டுண்டு, மேட்டிமை
௩௪ யானவைகள் தாழ்த்தப்படும்.—அவர் காட்டின்
அடர்த்தியைக் கோடரியினாலே துணிப்பார்;
மகத்துவமானவராலே அந்த லீபனோன் விழும்.

## ௰௧. அதிகாரம்.

௧. ஈசாயின் வேர்களிலிருந்தெழும்பும் ஒரு கிளையின் சமாதானமுள்ள இராச்சியமும், ௰. இஸ்ரவேலர் செயத்தோடே எழும்புவதும், அந்நிய மதஸ்தர் அழைக்கப்படுவதும் சொல்லப்பட்டது.

௧ வெட்டப்பட்ட ஈசாயின் [2]அடிமரத்திலிருந்து
ஒரு துளிர் புறப்பட்டு, அவன் வேர்களிலிருந்து
௨ ஒரு கிளையெழும்பிக் கனிதரும்.—இவர்மேலே
கர்த்தருடைய ஆவியாகிய ஞானம் உணர்வென்
றவைகளின் ஆவியும், ஆலோசனை பெலனென்
றவைகளின் ஆவியும், அறிவு கர்த்தருக்குப்
பயப்படுதல் என்றவைகளின் ஆவியுமானவர்
௩ தங்கியிருப்பார்.—அவர் முகந்துணருதல் கர்த்த
ருக்குப் பயப்படுதலோடே இருக்கும்; [3]அவர்
தம்முடைய கண்களுடைய பார்வையின்படி
நியாயந்தீர்க்காமலும், தம்முடைய காதுகளுடை
ய கேள்வியின்படி கடிந்துகொள்ளாமலும், —
௪ ஏழைகளை நீதியாய் நியாயம்விசாரித்துப் பூமி
யில் சிறுமையானவர்களைச் செம்மையாய்க் கடிந்
துகொண்டு, பூமியைத் [4]தமது வாக்கின் கோ
லால் அடித்து, தம்முடைய உதடுகளின் ஆவி
௫ யால் ஆகாதவனைக் கொல்லுவார். — நீதி அவர்
அரையின் கட்டும், சத்தியம் அவர் இடுப்பின்
கச்சையுமாயிருக்கும்.
௬ அப்போது [5]ஓநாய் ஆட்டுக்குட்டியோடே தங்
கி, சிவிங்கி வெள்ளாட்டுக்குட்டியோடே படுத்
துக்கொள்ளும்; கன்றுக்குட்டியும், பாலசிங்க
மும், காளையும் ஒரு சிறிய பயல் அவைகளை ஓட்
௭ டத்தக்கவிதமாய் ஒருமித்திருக்கும்.—பசுமாடும்,
கரடியும் கூடமேய்ந்து, அவைகளின் குட்டிகள்
ஒருமித்துப் படுத்திருக்கும்; சிங்கம் மாட்டைப்
௮ போலே வைக்கோலைத் தின்னும்.—முலைகுடிக்
கிற குழந்தை விரியன்பாம்பு வளையின்மேல் வி
ளையாடி, பாலகன் கட்டுவிரியன் புற்றிலே தன்
௯ கையைப் பாய்ச்சும். — நமது பரிசுத்த பர்வத
மெங்கும் தீமைபண்ணுவாருமில்லை; கேடுசெய்
வாருமில்லை; ஏனெனில் தண்ணீர்கள் கடலாழத்தை மூடுவதுபோலப் பூமி கர்த்தரை அறிகிற
௰ அறிவினால் நிறைந்திருக்கும்.—அக்காலத்திலே
சம்பவிப்பதேதெனில், [6]சனசதளங்களுக்குக்
கொடியாக நிற்கிற ஈசாயின் வேருக்காகச் சாதி
கள் விசாரித்துக் கேட்பார்கள்; அவருடைய தா
௰௧ பரஸ்தலம் மகிமையாயிருக்கும்.— அக்காலத்தி
லே சம்பவிப்பதேதெனில், ஆண்டவர் அசூரி
யாவிலும், எகிப்திலும், பத்ரோசிலும், எத்தியோ
ப்பியாவிலும், பெர்சியாவிலும், சீனேயாரிலும்,
ஆமாத்திலும், சமுத்திரத்தின் தீவுகளிலும் தம்மு
டைய சனத்தின் மீதியானவர்களை வசப்படுத்
திக்கொள்ளத் திரும்ப இரண்டாம்விசை தமது
கரத்தை நீட்டி,—சாதிகளுக்குக் கொடியேற்றி, ௰௨
இஸ்ரவேலிலே துரத்துண்டவர்களைச் சேர்த்து,
யூதாவில் சிதறஅடிக்கப்பட்டவர்களைப் பூமியின்
நாலுதிசைகளிலுமிருந்து கூட்டுவார்.—எப்பிரா ௰௩
யீமின் பொறாமையும் நீங்கும்; யூதாவின் சத்து
ருக்களோவென்றால் சங்கரிக்கப்படுவார்கள்;
எப்பிராயீம் யூதாவின்மேல் பொறாமையாயிராம
லும், யூதா எப்பிராயீமை இறுகப்பிடியாமலும்,—
அவர்கள் மேற்கேயிருக்கிற பெலிஸ்தியருடைய ௰௪
தோளின்மேலே பாய்ந்து, இருவரும் ஏகமாய்க்
கிழக்குத்திசையாரையும் கொள்ளையிட்டு, தங்
கள் கைகளை ஏதோமின்மேலும், மோவாபின்
மேலும் போடுவார்கள்; அம்மோன் புத்திரரும்
அவர்களுக்குக் கீழ்ப்படிவார்கள். — எகிப்தின் ௰௫
சமுத்திரமுனையையும் கர்த்தர் சாபமிட்டு, நதியி
ன்மேலே தமது கையைத் தம்முடைய கரத்தின்
சத்துவத்தினாலே அசைத்து, அதைப் பாதஇரட்
சைகள் நனையாமல் கடக்கப்பண்ணத்தக்கவித
மாய் ஏழாறுகளாக அடிப்பார்.—அப்படியே இஸ் ௰௬
ரவேலர் எகிப்துதேசத்திலிருந்து வந்தேறுகிற நா
ளில் அவர்களுக்குச் சம்பவித்ததுபோலே, அவ
ருடைய சனத்தில் அசூரியாவிலே மீதியானவர்
களுக்கு நடக்கத்தக்க வழியுண்டாயிருக்கும்.

## ௰௨. அதிகாரம்.

பராபரனுடைய இரக்கத்திற்காக விசுவாசிகள் செலுத்தும் களிப்புள்ள நன்றியறிந்த தோத்திரம்.

அக்காலத்திலே நீ சொல்வதாவது: கர்த்தாவே ௧
என்மேலே கோபமாயிருந்தீர்; ஆனால் உம்மு
டைய கோபம் திரும்பிற்று; என்னைத் தேற்றரவு
பண்ணுகிறீர் என்கிறதின்நிமித்தம், தேவரீரைத்
துதிக்கிறேன்.—இதோ, [7]என் இரட்சிப்பின் பரா ௨
பரன்; நான் அவரை நம்பிப் பயப்படாதிருப்
பேன்; ஏனெனில் என் பெலனும், என் கீதமும்
கர்த்தராகிய பராபரன்; அவர் எனக்கு இரட்சிப்
பானவரென்பாய். — நீங்கள் மகிழ்ச்சியோடே ௩
இரட்சிப்பின் ஊற்றுகளில் [8]தண்ணீர்களை மொ
ண்டு, — அக்காலத்திலே சொல்வதாவது: கர்த் ௪
தரைத் துதியுங்கள்; அவர் நாமத்தைத் தொழுது
கொள்ளுங்கள்; சனசதளங்களுக்குள்ளே அவர்
செய்கைகளை அறிவியுங்கள்;அவருடைய நாமம்
உயர்ந்ததென்று பிரஸ்தாபம்பண்ணுங்கள். —
[9]கர்த்தரைக் கீர்த்தனம்பண்ணுங்கள்; ஏனெனில் ௫
மகத்துவமானதைச் செய்தார்; இது பூமி எங்கும்
அறியப்படக்கடவதென்பீர்கள். — சீயோனில் ௬
வாசமாயிருக்கிறவளே, நீ சத்தமிட்டுக் கெம்பீரி;
ஏனெனில் இஸ்ரவேலின் பரிசுத்தர் உன் நடுவி
லே பெரியவராயிருக்கிறார்.

1 ஏசா. ௧௭. ௧௧.—2 ஏசா. ௪ ௨. எரே. ௨௩. ௫. லூக். ௨. ௩-௩௪.
3 யோபு. ௭. ௨௪.—4 ஏசா. ௪௯. ௨. ௨ தெச. ௨. ௮. வெளி. ௰௯. ௰௫.
5 ஏசா. ௬௫. ௨௫. ஓசே. ௨. ௰௮.
6 உரோ. ௰௫. ௰௨ —7 உமோ. ௰௫. ௨
8 யோவா. ௭. ௩௭, ௩௮.
9 சங். ௪௭. ௭.

## ௰௩. அதிகாரம்.

௧. பராபரன் தம்முடைய உக்கிரகோபத்தின் சேனைகளைக் கூட்டினது. ௬. மேதியரைக்கொண்டு பாபிலோனை அழிப்பேமென்று பயமுறுத்தினது. ௰௯. பாபிலோனின் அழிவு சொல்லப்பட்டது.

௧ ஆமோத்சின் குமாரனாகிய ஏசாயா [1]பாபே
லின்மேல் இறங்கக்கண்ட பாரம்.
௨ ஒங்கியிருக்கிற பர்வதத்தின்மேல் கொடியே
ற்றுங்கள்; சனங்கள் வர உரத்த சத்தமிடுங்கள்;
அவர்கள் பிரபுக்களின் வாசல்களுக்குட் பிரவே
௩ சிப்பதற்குச் சாடைகாட்டுங்கள். — நாம் பரி
சுத்தமாக்கினவர்களுக்கு நாம் கட்டளைகொடுத்
தோம்; நமது கோபத்தை நிறைவேற்ற நம்முடை
ய பராக்கிரமசாலிகளை அழைத்துமிருக்கிறோம்;
அவர்கள் நமது மகத்துவத்தினாலே களிகூருகிற
௪ வர்களென்கிறார்.—வெகு சனத்தின் சத்தத்துக்
கொத்த திரளானவர்களின் இரைச்சலும், கூட்
டப்பட்ட சாதிகளுடைய இராச்சியங்களின் அ
மளியான இரைச்சலும் மலைகளில் கேட்கப்படு
கிறது; சேனைகளின் கர்த்தர் யுத்த இராணுவத்
௫ தை இலக்கம்பார்க்கிறார்.—தேசத்தையெல்லாம்
அழிக்க வானத்தின் அடியிலுள்ள தூரதேசத்திலி
ருந்து வருகிறார்கள்; கர்த்தரும் அவருடைய
சினத்தின் பணிமுட்டுகளுந்தானே.
௬ அலறுங்கள்; ஏனெனில் கர்த்தரின் நாள் சமீ
பமாயிருக்கிறது; சர்வவல்லமையுள்ளவராலே
௭ அது பாழ்க்கடிப்பாய் வரும்.—ஆனதினால் எல்
லாக் கைகளும் நெகிழ்ந்து, எல்லா மனுஷரின்
௮ இருதயமும் கரைந்துபோம்.—திகிலாயிருப்பார்
கள்; வேதனைகளும், வாதைகளும் அவர்களைப்
பிடிக்கும்; [2]பெறுகிறவளைப்போல வேதனைப்ப
டுவார்கள்; ஒருவரையொருவர் பிரமித்துப் பார்ப்
பார்கள்; அவர்கள் முகங்கள் நெருப்பான முகங்
௯ களாயிருக்கும்.—இதோ தேசத்தைப் பாழ்க்கடித்
துவிட்டு, அதின் பாவிகளை அதிலிருந்து அழிப்
பதற்காகக் கர்த்தருடைய நாள் கடூரமும், மூர்க்
௰ கமும், கோப உக்கிரமுமாய் வருகிறது.—ஏனெ
னில் வானங்களின் நட்சத்திரங்களும், அவைக
ளின் கிரகங்களும் தங்கள் ஒளியை விளங்கப்
பண்ணாதிருக்கும்; [3]சூரியன் தன் உதயத்தில்
இருண்டதும், சந்திரன் தன் ஒளியைக் காட்டா
௰௧ததுமாயிருக்கும்.—நாம் பூச்சக்கரத்திலே அதின்
பொல்லாப்பையும், ஆகாதவர்களிடத்திலே அ
வர்கள் அக்கிரமத்தையும் விசாரித்து, அகந்தைக்
காரரின் பெருமையை ஓயப்பண்ணி; பெலவந்
௰௨ தரின் இடும்பைத் தாழ்த்தி,-புருஷனை அபரஞ்சி
யிலும், மனுஷனை ஓப்பீரின் தங்கத்திலும் அபூ
௰௩ ருவமாக்குவோம்.-ஆகையால் சேனைகளுடைய
கர்த்தரின் மூர்க்கத்தினால் அவருடைய கோப
உக்கிரத்தின்நாளிலே பூமி தன்னிடத்தைவிட்டு
அசையும்படிக்கு வானத்தை அதிரப்பண்ணு
௰௪ வோம். — துரத்தப்பட்ட வெளிமானைப்போ
லும், யாரும் சேர்க்காத ஆட்டைப்போலும் இ
ருப்பார்கள்; அவரவர் தங்கள் சனத்தண்டைக்
குப்போக முகத்தைத் திருப்பி, அவரவர் தங்
கள் தேசத்துக்கு ஓடிப்போவார்கள்.—அகப்பட் ௰௫
டவன் எல்லாம் குத்துண்டு, சேர்ந்திருந்தவன்
எல்லாம் பட்டையத்தால் விழுவான். — அவர் ௰௬
கள் குழந்தைகள் அவர்கள் கண்களுக்குமுன்
பாகச் சிதைக்கப்படும்; அவர்கள் வீடுகள் கொள்
ளையாய்ப்போம்; அவர்கள் பெண்சாதிகள் அவ
மானப்படுவார்கள்.
இதோ, நாம் அவர்கள்மேல் மேதியரை எழுப் ௰௭
புவோம்; அவர்கள் வெள்ளியை எண்ணாமலும்,
பொன்னின்மேல் பிரியம்வைக்காமலும்,—வில் ௰௮
லுகளால் இளைஞரைச் சதைத்துவிடுவார்கள்;
அவர்கள் கர்ப்பக்கனியின்மேல் இரங்குவது
மில்லை; அவர்கள் கண் பிள்ளைகளைத் தப்பவிடு
வதுமில்லை. — அப்படியே இராச்சியங்களின் ௰௯
அலங்காரமும், கல்தேயருடைய பெருமையின்
முக்கியமுமாகிய பாபேல், பராபரன் [4]சோதோ
மையும், கொமோராவையும் கவிழ்த்ததுபோலே
கவிழ்ந்துகிடக்கும். — என்றென்றைக்கும் அதி ௨௰
லே தங்கித்தரிப்பாருமில்லை; அங்கே அராபியன்
கூடாரம் போடுவதுமில்லை; அங்கே மேய்ப்பர்
மந்தையை மறிப்பதுமில்லை.—[5]வனாந்தர சீவன் ௨௰௧
கள் அங்கே தங்கி, அவர்கள் வீடுகளை ஊளையிடு
தல்களாலே நிரப்பும்; கோட்டான்கள் அங்கே
தாபரிக்கும்; பேய்கள் அங்கே துள்ளும்.—அவர் ௨௰௨
கள் பாழான மாளிகைகளில் ஓரிகள் ஒன்றுக்
கொன்று மறுஉத்தரவு கொடுக்கும்; வலுசர்ப்பங்
கள் அவர்கள் செல்விக்கையான அரமனைகளில்
கூடும்; அதின் காலம் சமீபித்துவரும்; அதின்
நாள்கள் நீடித்திராதென்கிறார்.

## ௰௪. அதிகாரம்.

௧. பராபரன் இஸ்ரவேலரை முந்நீருக்குக் கொண்டுவர இரக்கமுற்றது. ௪. அவர்கள் பாபிலோனைச் செயிக்கும்போது செய்யும் நிந்தனை. ௨௪. பராபரன் அசூரியாவுக்கு விரோதமான நியமம்பண்ணினது. ௨௯. பெலிஸ்தேயா பயமுறுத்தப்பட்டது.

ஏனெனில் கர்த்தர் யாக்கோபுக்கு இரங்கி, இஸ் ௧
ரவேலை இன்னம் தெரிந்துகொண்டு, அவர்களை
அவர்கள் தேசத்திலே தாபரிக்கப்பண்ணுவார்;
மறுதேசத்தாரும் அவர்களுக்குச் சேர்க்கையாகி,
யாக்கோபின் வீட்டோடே கூடிக்கொள்ளுவார்
கள். — சனசதளங்கள் அவர்களைச் சேர்த்துக் ௨
கொண்டு, அவர்களை அவர்கள் தானத்துக்கு
அழைத்துவருவார்கள்; இஸ்ரவேல் வீட்டார்
அவர்களைக் கர்த்தருடைய தேசத்திலே வேலைக்
காரரும் வேலைக்காரிகளுமாகச் சுதந்தரித்துக்
கொண்டு, தங்களைச் சிறையாக்கினவர்களைச் சி
றையாக்கி, தங்களை ஒடுக்கினவர்களை ஆளுவார்
கள். — கர்த்தர் உன் வாதையையும், உன் தத்த ௩
ளிப்பையும், நீ அடிமையாக்கப்பட்டிருந்த கடி
ன அடிமைத்தனத்தையும் நீக்கி, உன்னை இளைப்
பாறப்பண்ணும் அக்காலத்திலே சம்பவிப்பதே
தென்றால்,

1 எசா. ௰௪. ௪. மீகா. ௨௧. ௧, ௰. எரே. ௫௰: ௧. ௫௧. ௧. 2 எசா. ௨௧. ௩.—3 எசே. ௩௨. ௭, ௮. யோவே. ௩. ௪, ௨௰. மத். ௨௪. ௨௯. மாற். ௰௩. ௨௪, ௨௫. லூக். ௨௧. ௨௫. வெளி. ௬. ௰௨, ௰௩.—4 எரே. ௪௯. ௰௮. ௫௰: ௩௯. ௪௰.—5 வெளி. ௰௮. ௨.

௪ நீ பாபேலுடைய இராசாவின்மேலே ஏற்றிச்
சொல்லும்வாக்கியமொழியாவது: ஒடுக்கினவன்
என்னமாய் ஓய்ந்தான்? பொன்கோல் என்னமாய்
௫ ஒழிந்துபோனது?—கர்த்தர் ஆகாதவர்களின் மி
லாறையும், ஆண்டிருந்தவர்களின் செங்கோலை
௬ யும் முறித்துவிட்டார்.—ஓயாத அடியாய்ச் சனச
தளங்களை உக்கிரமாய் அடித்து, சாதிகளைக் கோப
மாய் ஆண்டிருந்தவன் தடுப்பாரில்லாமல் துன்
௭ பப்படுத்தப்படுகிறான்.—பூமியனைத்தும் இளைப்
பாறி அமர்ந்திருக்கிறது; கெம்பீரமாய் முழங்கு
௮ கிறார்கள்.—பாய்மர விருட்சங்கள்தானும், லீப
னோனின் கேதுருக்களும், உன்நிமித்தம் சந்
தோஷமாயிருந்து, நீ விழுந்துகிடக்கிறது முதற்
கொண்டு எங்களை வெட்டி ஏறிவருவார் ஒருவ
ரும் இல்லை என்கிறது.

௯ தாழ இருக்கிற நரகம் உன்நிமித்தம் அசைந்து,
நீ வருமளவில் எதிர்கொண்டு, இராட்சதரையும்
பூமியிலிருந்த எல்லாக் கடாக்களையும் உன்நிமித்
தம் எழுப்பி, சாதிகளுடைய எல்லா இராசாக்க
ளையும் தங்கள் ஆசனங்களிலிருந்து எழுந்திருக்
கப்பண்ணும்.

௰ இவர்களெல்லாரும் பிரதியுத்தாரமாக, நீயும் எங்
களைப்போலப் பலட்சயமாகி, எங்களைப்போல
ஆனாயோவென்று உன்னுடனே சொல்லுவார்
௰௧ கள்.—உன் முக்கியமும், உன் தம்புருக்களின்
முழக்கமும் நரகத்திலே தள்ளுண்டுபோயின;
புழுக்கள் உன் கீழ்ப்போடப்பட்ட படுக்கை
யும், பூச்சிகள் உன் மூடலுமாயிருக்கின்றன.—
௰௨ அதிகாலத்தின் மகனாகிய விடிவெள்ளியே, நீ
எப்படி வானத்திலிருந்து விழுந்தாய்? சாதிகளைப்
பலஈனப்படுத்தினவனே, எப்படித் தரையிலே
௰௩ விழ வெட்டப்பட்டாய்?—[1]நான் வானத்துக்கு
ஏறி, என் ஆசனத்தைப் பராபரனுடைய நட்சத்
திரங்களின்மேலாக உயர்த்தி, [2]வடபுறங்களி
லுள்ள ஆராதனைக்கூட்டத்தின் பர்வதத்திலே
௰௪ உளுக்காருவேன் என்றும்,—மேகங்களுடைய
உயர்ந்த தலங்களின்மேலேறி, உன்னதமான
வருக்கு ஒப்பாவேன் என்றும் நீ உன் இருதயத்
௰௫ தில் சொன்னாய்.— ஆனால் பாதாளப்புறங்களா
௰௬ கிய நரகத்திலே தள்ளுண்டாயே.— உன்னைக்
காண்கிறவர்கள் உன்னைக் கண்ணோக்கி, உன்
மேல் நிந்தனைவைத்து பூமியைத் தத்தளிக்கவும்,
இராச்சியங்களை அதிரவும்பண்ணினவனும்,—
௰௭ பூச்சக்கரத்தை வனாந்தரமாக்கி, அதின் பட்ட
ணங்களை அழித்துவிட்டு, தான் கட்டிவைத்தவர்
களை ஊருக்குப்போக விடுதலையாக்காதேபோன
வனுமாகிய புருஷன் இவனோ என்பார்கள்.—
௰௮ சாதிகளுடைய சகல இராசாக்களோவென்றால்,
அனைவரும் கனத்தோடே அவரவர் தங்கள் வீட்
௰௯ டிலே கிடக்கிறார்கள். —நீயோ அருவருப்பான
கிளையைப்போலவும், பட்டையக்குத்தாய்க்கொ
லையுண்டவர்களின் உடுப்பைப்போலவும், ஒரு
குழியின் கல்குவியலோடே கிடக்க இறைக்கப்
பட்டவர்களைப்போலவும், மிதித்துவிடப்பட்ட
பிணத்தைப்போலவும் உன் கல்லறைக்குப் புறம்
பாய் எறிந்துவிடப்பட்டாய்.—நீ அவர்களோ ௨௰
டொத்து அடக்கம்பண்ணப்படாய்; ஏனெனில்
உன் தேசத்தைக் கெடுத்து உன் சனத்தைக்கொன்
றுபோட்டாய்; பொல்லாதவருடைய வித்து என்
றென்றைக்கும்பேர்கொள்ளுவதில்லை.—அவன் ௨௧
பிள்ளைகள் எழும்பித் தேசத்தைச் சுதந்தரித்துக்
கொண்டு, பூச்சக்கரத்தைப் பட்டணங்களால்
நிரப்பாதபடிக்கு அவர்களுக்கு அவர்கள் பிதாக்க
ளுடைய அக்கிரமத்தின்நிமித்தம் வதையை ஆயத்
தம்பண்ணுங்கள்.—ஏனெனில் சேனைகளுடைய ௨௨
கர்த்தர் விளம்புகிறதாவது: நாம் அவர்கள்மேல்
எழும்பி, பாபேலுடையபேரையும், மீந்ததையும்,
குமாரனையும், பேரனையும் சங்கரிப்போமென்று
கர்த்தர் சொல்லுகிறார்.—நாம் அதை முள்ளம்பன் ௨௩
றிகளுடைய சுதந்தரமும் தண்ணீர்த்தடாகங்களு
மாக்கி, அதை அழிப்பின் துடைப்பத்தினாலே
பெருக்கிவிடுவோமென்று சேனைகளுடைய கர்த்
தர் விளம்புகிறார்.

நாம் நினைத்திருக்கிறபடியே நடக்கும்; நாம் ௨௪
நிருணயித்துக்கொண்டதே நிறைவேறி நிற்கு
மென்று சேனைகளுடைய கர்த்தர் ஆணைசத்தியம்
பண்ணினார்.—என்னவெனில், நாம் அசூரியனை ௨௫
நமது தேசத்திலே முறித்து, நம்முடைய பர்வ
தங்களின்மேல் அவனை மிதித்துப்போடுவோம்;
அப்போதவனுடைய நுகத்தடி அவர்கள்மேலி
ருந்து விலகி அவன் சுமை அவர்கள் தோளிலி
ருந்து நீங்கும். — இது தேசமனைத்தின்மேலும் ௨௬
நிருணயிக்கப்பட்ட யோசனையும், இது சகல சா
திகள்மேலும் நீட்டப்பட்டிருக்கிற கையுமாயி
ருக்கிறதென்றார்.—ஏனெனில் சேனைகளுடைய ௨௭
கர்த்தர் இப்படி நிருணயித்துக்கொண்டார்; அ
தை அவத்தமாக்குபவன் யாவன்? அவருடைய
கை நீட்டப்பட்டிருக்கிறது; அதைத் திருப்புப
வன் யாவன்?

[3]ஆகாஸ் இராசா மரணம் அடைந்த வருஷத் ௨௮
திலே உண்டான பாரமான காட்சியாவது:
முழுப்பெலிஸ்தியாவே, உன்னை அடித்தகோல் ௨௯
உடைந்ததென்று அக்களிப்பாயிராதே; ஏனெ
னில் பாம்பின் வேரிலிருந்து கட்டுவிரியன் புறப்
படும்; அதின் கனி பறக்கிற நெருப்புப் பாம்பா
யிருக்கும்.—ஆனதுகொண்டு தரித்திரரின் தலைச் ௩௰
சன்கள் மேய்ந்து, எளியவர்கள் சுகமாய்ப் படுத்
திருப்பார்கள்; ஏனெனில் பஞ்சத்தினாலே உன்
வேரைச் சாகப்பண்ணுவோம், உன்னில் மீதியா
னவர்களையோ அவன் கொன்றுபோடுவான்.—
வாசலே அலறு; பட்டணமே கதறு; பெலிஸ்தியா ௩௧
வே நீ முழுதும் கரைந்துபோகிறாய்; ஏனெனில்,
வடக்கே இருந்து புகைக்காடாய் வருகிறான்;
அவன் கூட்டங்களில் தனித்தவனில்லை.—இப் ௩௨
போதும் இந்தச் சாதியின் தானாபதிகளுக்கு
என்ன மறுஉத்தரவு சொல்லப்படும்? [4]கர்த்தர்

1 ௨ தெச. ௨. ௪. 2 சங். ௪௮. ௨.
3 ௨ இரா. ௰௬. ௨௰. 4 சங். ௮௭. ௧.

சீயோனை அஸ்திபாரப்படுத்தினார், அவருடைய சனத்தில் சிறுமையானவர்கள் அதிலே திடன்கொண்டு தங்குவார்கள் என்பதுதானே.

## ௰௫. அதிகாரம்.

மோவாபின் புலம்பத்தக்க ஸ்திதி.

௧ மோவாபின்மேல் இறங்கும் பாரம்; [1]இரவிலே
மோவாபின் ஆர்பட்டணம் பாழாக்கப்பட்டது;
அது சங்காரமானது, இராவிலே மோவாபின் கிர்
பட்டணம் பாழாக்கப்பட்டது, அது சங்காரமா
௨ னது. — ஆனபடியால், அழும்படிக்குப் பாயித்
துக்கும், தீபோனுக்கும், பாமோத்துக்கும் போய்
ஏறுகிறார்கள்; நேபோவின்நிமித்தமும், மேதேபா
வின்நிமித்தமும், மோவாபு அலறுகிறது; [2]அவர்க
ளுடைய எல்லாத் தலைகளும் மொட்டையிட்டி
ருக்கும்; எல்லாத் தாடிகளும் கத்தரித்திருக்கும்.-
௩ அதின் வீதிகளில் இரட்டைக் கட்டிக்கொண்டு,
அதின் வீடுகளின்மேலும், அதின் தெருக்களிலும்
எல்லாரும் அலறி, அழுகையில் இறங்கி இருக்கி
௪ றார்கள்.-எஸ்போன் ஊராரும் எலெயாலே ஊரா
ரும் கூக்குரலிடுகிறார்கள்; அவர்கள் சத்தம் யா
காஸ்மட்டும் கேட்கப்படுகிறது; ஆனபடியால்
மோவாபின் ஆயுதப்பாடானவர்கள் கதறுகிறார்
கள்; அவனவனுடைய ஆத்துமா அவனவனில்
௫ தீங்குபடுகிறதாயிருக்கிறது. — என் [3]இருதயம்
மோவாபின்நிமித்தம் கூவுகிறது; அதிலிருந்தோ
டிவருகிறவர்கள் மூன்றுவயதின் கிடாரியைப்
போல அலைகிறார்கள்; லூகித்துக்கு ஏறுகிற வழி
யிலே அழுகையோடே ஏறுகிறார்களே; ஒரோனா
யீமின் வழியிலும் குளறுட்டமான கூக்குரல்
௬ இடுகிறார்களே. — எனெனில் நிமிரீமின் நீர்ப்
பாய்ச்சல்கள் பாழாய்க்கிடக்கின்றன; அதினால்
புல் உலர்ந்து, முளை அழிந்து, பச்சையில்லாமல்
௭ போகிறது. — ஆனபடியால் மீதியாகச் சேர்த்த
தையும், அவர்கள் வைத்துவைத்ததையும் [4]அலரி
களின் ஆற்றுக்கப்பாலே எடுத்துப்போவார்கள்.—
௮ எனெனில் கூக்குரல் மோவாபின் எல்லையைச்
சுற்றும்; எக்லாயிம்மட்டும் அதின் அலறுதலும்,
பெயேரேலிம்மட்டும் அதின் அலறுதலும் எட்
௯ டும்.—அதேதெனில், தீமோனின் தண்ணீர்கள்
இரத்தத்தால் நிறைந்திருக்கும்; எனென்றால், நாம்
தீமோனின்மேல் அதிக கேடுகளைக் கட்டளை
யிட்டு மோவாபிலே தப்பினவர்கள்மேலும், தே
சத்தில் மீதியானவர்கள்மேலும் சிங்கத்தை வரப்
பண்ணுவோம்.

## ௰௬. அதிகாரம்.

௧. மோவாப் கிறிஸ்துவின் இராச்சியத்துக்குக் கீழ்ப்படிய ஏவப்பட்டது. ௬. அது தன் செல்வச்செருக்கைக்குறித்துப் பயமுறுத்தப்பட்டது. ௯. தீர்க்கதரிசி அதைக்குறித்துப் புலம்பினது ௰௨. மோவாபுக்கு வரும் நியாயத்தீர்ப்புச் சொல்லப்பட்டது.

௧ தேசாதிபதிக்குச் செலுத்தும் ஆட்டுக்குட்டிக
ளை நீங்கள் சேலாப்பட்டணந்துவக்கி வனாந்தர
மட்டும் சேர்த்துச் சீயோன் குமாரத்தியின் பர்
வதத்துக்கு அனுப்புங்கள். — இல்லாவிட்டால் ௨
மோவாபின் குமாரத்திகள், கூட்டைவிட்டுத்
துரத்தப்பட்டு அலைகிற குருவியைப்போலே
அர்னோன் நதியின் துறைகளண்டையிலிருப்
பார்கள்.

நீ ஆலோசனைபண்ணி, நியாயஞ்செய்து, மத் ௩
தியான உருமத்திலே உன் நிழலை இரவைப்போ
லாக்கி, துரத்துண்டவர்களை மறைத்து, ஓடிவரு
கிறவர்களைக் காட்டிக்கொடாதிரு.—மோவாபே, ௪
துரத்துண்ட நம்முடையவர்கள் உன்னிலே தங்
கட்டும்; சங்கரிக்கிறவனுக்குத் தப்ப அவர்களு
க்கு அடைக்கலமாயிரு; எனெனில், இறுகப்பி
டிக்கிறவன் இல்லாதேபோவான்; சங்சரிப்பு
ஒழிந்துபோம்; மிதிக்கிறவர்கள் தேசத்தில் இரா
தபடிக்கு அழிந்துபோவார்கள். — எனெனில், ௫
இராசாசனம் கிருபையோடே உறுதிபண்ணப்
படும்; தாவீதின் கூடாரத்திலே நியாயாதிபதியா
யிருந்து நியாயம் விசாரித்து நீதிக்குத் தீவிரிக்கிற
[5]ஒருவர் அதின்மேல் உண்மையோடே உளுக்கா
ருவார்.

[6]மிகவும் ஒய்யாரமான மோவாபின் பெருமை ௬
யையும், அதின் மேட்டிமையையும், அதின் அ
கந்தையையும், அதின் உக்கிரத்தையும் கேட்கி
றோம்; அதின் வீம்பு அது அப்படியல்லவென்
கிறது.

ஆகையால், மோவாபியர் ஒருவரையொருவர் ௭
பார்த்து அலறி எல்லாரும் ஏகமாய் அலறுவார்
கள்; கிராரேசேத்தூரின் அஸ்திபாரங்கள் தகர்க்
கப்பட்டனவே என்று அவைகளுக்காகப் பெரு
மூச்சு விடுவார்கள். — எனெனில் எஸ்போன் ௮
ஊர் வயல்கள் சத்தியற்றுப்போயின; சீப்மா
ஊர்த் திராட்சப்பயிருக்கோவென்றால், சாதிக
ளின் அதிபதிகள் அதின நற்சாதிச்செடிகளை
நறுக்கிப்போட்டு, யாசேர்மட்டும் சேர்ந்துவந்து,
வனாந்தரத்தில் சுற்றித்திரிகிறார்கள்; அதின் நாற்
றுகள் சிதறப்பட்டுக் கடலுக்கப்பாலே எறியுண்
டுபோம்.-ஆகையால் யாசேருக்காகவும், சிப்மா ௯
ஊர்த் திராட்சப்பயிருக்காகவும் மிகவும் அழுகி
றேன்; எஸ்போன் எலெயாலேயே, உனக்கு
என்கண்ணீரைப் பாய்ச்சுகிறேன்; நீ உன் வசந்த
காலத்துக்காகவும், உன் அறுப்புக்காகவும் கொக்
கரிக்கிற சந்தோஷ சத்தம் விழுந்துபோனது.—
[7]சந்தோஷமும், களிப்பும் பயிர்வெளியிலிருந்து ௰
வாங்கிப்போனது; திராட்சத்தோட்டங்களில்
கெம்பீரிப்புமில்லை, ஆர்ப்பரிப்புமில்லை; மிதிக்
கிறவன் ஆலைகளில் இரசத்தை மிதிப்பதில்லை;
கொக்கரிப்பை ஒயப்பண்ணினேம். — [8]ஆகை ௰௧
யால் என் குடல்கள் மோவாபின் நிமித்தமும்
என் உள்ளம் கிராரேசின் நிமித்தமும் சுரமண்ட
லத்தைப்போல முழங்குகிறது.—சம்பவிப்பதே ௰௨
தெனில் மோவாபியர் மேடைகளின்மேல் இளை
ப்படைந்தார்களென்று காணப்படும்போது தங்

1 எரே. ௪௮. ௧. ௲. ௭௪. ௨௪. 2 எரே. ௪௮. ௩௭.—3 எரே. ௪௮. ௩௬. செப். ௨. ௮, ௯. ௩௪, ௩௬.

4 சங். ௩௯ ௨.—5 ௭௪. ௯.௯.௭. செப். ௨. ௮.—7 எரே.௪௮.௩௩. லூக். ௩௩.—6 எரே. ௪௮. ௨௯. 8 ௭௪ ௬௩. ௯. எரே.௪௮. ௩௬.

கள் பரிசுத்தஸ்தலத்திலே பணியப் பிரவேசிப்
பார்கள்; ஆனால் ஒன்றும் அடையமாட்டார்கள்.
௰௩ இதுவே கர்த்தர் அக்காலமுதல் மோவாபின்
௰௪ மேல் சொன்ன வார்த்தை.—இப்போதும் கர்த்தர்
உரைக்கிறதாவது: ஒரு கூலிக்காரனுடைய வரு
ஷங்களைப்போலொத்த மூன்று வருஷங்களிலே
மோவாபின் மகிமை அந்த எல்லாப் பெரிய திர
ளோடுங்கூடச் சிறுத்துப்போம்; அதில் மீதியா
யிருப்பதோ பெலத்திராமல் கொஞ்சமும் மட்டு
மாயிருக்கும் என்கிறார்.

## ௰௭. அதிகாரம்.

௧. சூரியாவையும், இஸ்ரவேலரையும் பயமுறுத்தினது. ௬. மீதியானவர்கள் விக்கிரக ஆராதனையை விடுவார்களென்பது. ௯. மற்றவர்கள் தங்கள் அவபத்தியினிமித்தம் உபாதிக்கப்படுவார்களென்பது. ௰௨. இஸ்ரவேலருடைய சத்துருக்களின்மேல் வரும் வேதனை சொல்லப்பட்டது.

௧ தமஸ்குவினுடைய பாரம்; இதோ, [1]தமஸ்குபட்
டணமாய் இராதபடிக்குத் தள்ளப்பட்டு, இடிந்த
௨ மண்மேடாயிருக்கும். — ஆரோவேரின் பட்ட
ணங்கள் பாழாய்விடப்பட்டு, மந்தைகளின் வெ
ளியாயிருக்கும்; அவைகள் அங்கே மிரட்டுவா
௩ ரில்லாமலே படுக்கும். — அரண் எப்பிராயீமை
யும், இராசாங்கம் தமஸ்குவையும் விட்டொழி
யும்; சூரியாவில் மீதியாயிருப்பவர்கள் இஸ்ர
வேல் புத்திரருடைய மகிமையின் சாயலாயிருப்
பார்களென்று சேனைகளுடைய கர்த்தர் சொல்
௪ லுகிறார்.—அக்காலத்திலே சம்பவிப்பது ஏதெ
னில், யாக்கோபின் மகிமை குறுகி, அவன் மாம்
௫ சத்தின் கொழுப்புக் கரைந்துபோம்.—ஒருவன்
ஓங்கின பயிரை அரிந்துகொண்டு, தன் புயத்தி
னால் கதிர்களை அறுத்து, ரெப்பாயீம் பள்ளத்தாக்
கிலே கதிர்களைச் சேர்க்குமாப்போலிருக்கும்.—
௬ ஆனால் ஒலிவமரத்தை உலுப்பினபோது நுனிக்
கொம்பிலே இரண்டுமூன்று காய்களும், காய்க்
கிற அதின் கிளைகளில் நாலைந்து காய்களும்
மீதியாயிருக்குமாப்போலே, அதிலே பின் அறு
ப்பு கொஞ்சம் மீதியாய் இருக்குமென்று இஸ்ர
வேலின் பராபரனாகிய கர்த்தர் சொல்லுகிறார்
௭ அக்காலத்திலே மனுஷன் தன் கைகளின் கிரி
யையாகிய பீடங்களை நோக்காமலும், தன் விரல்
கள் உண்டுபண்ணினதையும், தோப்புகளையும்,
௮ சிலைகளையும் நோக்காமலும்,—தன்னை உண்டாக்
கினவரை நோக்குவான்; அவன் கண்கள் இஸ்
ரவேலின் பரிசுத்தரை நோக்கிக்கொண்டிருக்
௯ கும்.—அக்காலத்திலே அவர்களுடைய பெல
னான பட்டணங்கள் இஸ்ரவேல் புத்திரருக்குப்
பின் வைக்கப்பட்டுப்போன தழையின் மீதி
யைப்போலவும், நுனிக்கொம்பின் மீதியைப்
௰ போலவும்இருந்து, பாழாய்க்கிடக்கும்.—ஏனெ
னில் உன் பலனின் கன்மலையை நீ நினையாமல்
உன் இரட்சிப்பின் பராபரனை மறந்தாய்; ஆன
படியால் நீ நேர்த்தியான நாற்றுகளை நட்டும், அந்
௰௧ நியதேசத்துக் கன்றுகளை வைத்தும், — பகல்கா
லத்திலே உன் நாற்றை வளரவும், காலமே உன்
விதையை முளைக்கவும்பண்ணியும், பலனைக்
கைவசமாக்கிக்கொள்ளும் நாளிலே அறுப்பு ஒரு
போரும், நோயான வேதனையுமாயிருக்கும்.
ஐயோ! கடல்கள் கொந்தளிக்குமாப்போலே ௰௨
கொந்தளிக்கிற அநேகம் சனசதளங்களின் திர
ளும், பலத்த தண்ணீர்கள் இரைவதுபோலே இ
ரைகிற சனக்கூட்டங்களின் அமளியுமுண்டு.-
சனக்கூட்டங்கள் திரளான தண்ணீர்கள் இரை ௰௩
யுமாப்போலே இரையும்; ஆனால் [2]அவனை அதட்
டுவார்; அப்போது பர்வதங்களிலே காற்றுக்
கொண்டுபோம்; பதரைப்போலவும், பெருங்கா
ற்றில் அகப்பட்ட துரும்பைப்போலவும் தூரத்
திலே ஓடி, துரத்தப்படுவான்.—சாயங்காலத்திலே ௰௪
இதோ கலக்கமுண்டு; ஆனால் விடியற்காலம்
ஆகாததற்குமுன்னே அவனில்லை. இது நம்மைக்
கொள்ளையாடுகிறவர்களின் பங்கும், நம்மைச்
சூறையாடுகிறவர்களின் விதமுமாயிருக்கும்.

## ௰௮. அதிகாரம்.

௧. பராபரன் தமது சனத்தைக் காக்கும்பொருட்டு எத்தியோப்பியரை அழிப்பாரென்பது. ௭. அதனால் சபை பெருகுமென்பது

எத்தியோப்பியாவின் ஆறுகளுக்கு அக்கரையி ௧
லே நிழல் இருபுறமாகத் திரும்புகிறதும்,—கட ௨
லிலே தானாபதிகளை அனுப்பி, தண்ணீர்களின்
மேல் மூங்கில் தோணிகளிலேபோகிறதுமாகிய
தேசத்தின் சனத்துக்கு ஐயோ! வேகமான தூதர்
களே, நீண்ட ஓரமாய்க் குடியிருக்கிறதும், மயிர்
சிரைக்கப்பட்டதுமாகிய சாதியண்டைக்கும்,
உண்டானதுமுதற்கொண்டு இதுவரைக்கும் கெ
டியாயிருந்ததும். அளவிடப்படுவதும், மிதிக்கப்
படுவதும், ஆறுகள் புரண்டு தேசத்தைப் பாழ்க்
கடிப்பதுமான சாதியாகிய சனத்தண்டைக்கும்
போங்கள்.—பூச்சக்கரத்தில்வாசமாயிருக்கிறவர் ௩
களும், தேசத்துக் குடிகளுமாகிய நீங்களெல்லா
ரும் பர்வதங்களில் கொடியேற்றப்படும்போது
பார்த்து, எக்காளம் ஊதப்படும்போது கேட்பீர்
கள்.—ஏனெனில், நாம் அமர்ந்திருந்து வெளிச் ௪
சத்தின்மேலே காணும் காந்தியுள்ள காங்கையை
ப்போலவும், அறுப்புக்காலத்தின் வெயிலிலே
பனி மேகத்தைப்போலவும் நமது வாசஸ்தலத்தி
லிருந்து கண்ணோக்குவோமென்கிறதாய்க் கர்த்
தர் என்னுடனே சொன்னார்.—ஏனெனில், அறுப் ௫
புக்குமுன்னே பூப்பூத்துத் தீர்ந்து காய்க்கிற திரா
ட்சக்காய்கள் பிஞ்சாயிருக்கும்போதே, அவர்
அரிவாள்களினாலே கப்புக்கவர்களை அறுத்துக்
கொடிகளையரிந்து வாங்கிப்போடுவார்.—அவை ௬
கள் ஏகமாய்ப் பர்வதங்களின் பட்சிகளுக்கும்,
பூமியின் மிருகங்களுக்கும் விடப்படும்; பட்சி
கள் அதின்மேல் கோடைகாலத்துக்கும், பூமி
யின் மிருகங்களெல்லாம் அதின்மேல் மாரிகா
லத்துக்கும் தங்கும். — அக்காலத்திலே நீண்ட ௭
கரையோரமாய்க் குடியிருக்கிறதும்,மயிர் சிரைக்
கப்பட்டதும்,உண்டானதுமுதற்கொண்டுகெடி
யாயிருந்ததுமான சனமும்,அளவிடப்பட்டதும்,

1 எரே. ௪௯. ௨௩-௨௭. ஆமோ. ௧.௩-௫.

2 சங். ௭௬. ௧௬. ஓ.

மிதிக்கப்பட்டதும்,ஆறுகள் புரண்டு தேசத்தைப்
பாழ்க்கடித்ததுமான சாதியும், சேனைகளுடைய
கர்த்தரின் நாமம் தங்கும் தலமாகிய சீயோன் பர்
வதத்தண்டையில், [1]சேனைகளுடைய கர்த்தருக்
குக் காணிக்கையாகக் கொண்டுவரப்படும்.

## ௰௯. அதிகாரம்.

௧. எகிப்தின் கலக்கமும், ௰௧. அவர்களுடைய அரசரின் மூடத்தனமும், ௰௮. எகிப்தைச் சபையில் சேர அழைத்தலும், ௨௩. எகிப்து, அசூரியா, இஸ்ரவேல்களின் உடன்படிக்கையும் சொல்லப்பட்டது.

௧ எகிப்தினுடைய பாரம்; [2]இதோ, கர்த்தர் வேக
மான மேகத்தின்மேல் ஏறி எகிப்துக்கு வருவார்;
அப்போது எகிப்தின் [3]விக்கிரகங்கள் அவருக்கு
முன்பாக அசைந்து, எகிப்தின் இருதயம் அவர்
௨ கள் உள்ளத்திலே கரைந்துபோம். — சகோதர
னோடே சகோதரனும், சிநேகிதனோடே சிநேகி
தனும், பட்டணத்தோடே பட்டணமும், இராச்
சியத்தோடே இராச்சியமும் யுத்தம்பண்ணும்ப
டியாய், எகிப்தியரை எகிப்தியரோடே போர்க
௩ லக்கப்பண்ணுவோம். — அதினால் எகிப்தியரு
டைய ஆவி அவர்களுக்குள் வெறுமையாகும்;
அவர்கள் ஆலோசனையை முழுகிப்போகப்பண்
ணுவோம்; அப்போது விக்கிரகங்களையும், மந்
திரவாதிகளையும், சன்னதக்காரர்களையும், குறி
௪ சொல்லுகிறவர்களையும் தேடுவார்கள்.—ஆனால்
எகிப்தியரைக் கடினமான அதிபதிகளின் கைக்
குள் அடைப்போம்; கடூர இராசா அவர்களை ஆ
ளுவானென்று சேனைகளின் கர்த்தராகிய ஆண்
௫ டவர் சொல்லுகிறார்.—அப்போது கடலின் தண்
ணீர்கள் குறைந்து, நதிவற்றி, வரண்டுபோம்.—
௬ ஆறுகளை விட்டுவிடுவார்கள்; அரணிப்பான அ
கழிகள் குறுகி வற்றிப்போம்; கொறுக்கையும்
௭ நாணலும் வாடும்.—நதியண்டையிலும், நதியோ
ரத்திலும் இருக்கிற மடலுள்ள செடிகளும், நதிய
ருகே விதைக்கப்பட்ட யாவும் உலர்ந்துபோம்;
அது பறக்கடிக்கப்பட்டு இல்லாதேபோம். —
௮ மீன்பிடிக்கிறவர்கள் பெருமூச்சுவிட்டு, நதியி
லே தூண்டில்போடுகிற யாவரும்துக்கித்து, தண்
ணீர்களின்மேல் வலைகளை வீசுகிறவர்கள் சலித்
௯ துப்போவார்கள்.-மெல்லிய சணல்வேலைகளைச்
செய்து சல்லாக்களை நெய்கிறவர்கள் நாணுவார்
௰ கள்.—மீன் வளர்க்கிற குளங்களைக் கூலிக்குக்
கட்டுகிற அனைவருடைய அணைக்கட்டுகளும்
நசுங்குண்டுபோம்.
௰௧ சோகான்பட்டணத்தின் பிரபுக்கள் பயித்தி
யக்காரர்தானே; பார்வோனுடைய ஞானமுள்ள
ஆலோசனைக்காரரின் ஆலோசனை மதியற்றுப்
போனது; நான் ஞானிகளின் பிள்ளை, நான்
பூருவ இராசாக்களின் புத்திரனென்று பார்வோ
௰௨ னுடனே எப்படிச் சொல்லுகிறீர்கள்?-இப்போ
தும் உன்னுடைய ஞானிகள் எங்கே? சேனைக
ளின் கர்த்தர் எகிப்தின்மேலே பண்ணின யோச
னையை அவர்களுனக்கு அறிவிக்கட்டுமே; அல்
௰௩ லது தாங்கள் அறிந்துகொள்ளட்டும்.—சோகான்
ஊர்ப்பிரபுக்கள் பயித்தியக்காரரானார்கள்; நோப்
பூர்ப் பிரபுக்கள் மோசம்போய், எகிப்தையும், அ
தின் கோத்திரங்களுடைய தலைவனையும் வழிதப்
பப்பண்ணுகிறார்கள்.—[4]கர்த்தர் அதின் நடுவில் ௰௪
தாறுமாறுகளின் ஆவியை ஊற்றினார்; ஆனது
கொண்டு வெறித்தவன் வாந்திபண்ணுகையில்
திசைகெட்டுத்திரிகிறதுபோலே அவர்கள் எகிப்
தை அதின் எல்லாச் செய்கையிலும் திசைகெட்
டுத் திரியப்பண்ணுகிறார்கள்.—[5]தலையும், வாலும், ௰௫
கிளையும், நாணலும் என்றவர்கள் செய்யும் வே
லை எகிப்துக்கு உதவாத வேலையாயிருக்கும்.—
அக்காலத்திலே எகிப்தியர் பெண்சாதிகளைப் ௰௬
போலிருந்து, சேனைகளின் கர்த்தர் தங்கள்மேல்
அசைக்கும் கையசைவினாலே தத்தளித்து, அருக்
களிப்பார்கள்.-யூதாவின் தேசம்எகிப்தியருக்குத் ௰௭
தத்தளிப்பு உண்டாக்குகிறதாயிருக்கும்; தனக்
குள் அதைநினைக்கிறவனெல்லாம், சேனைகளின்
கர்த்தர் தங்களுக்கு விரோதமாக நிருணயித்துக்
கொண்ட ஆலோசனையினிமித்தம் திடுக்கிடு
வான்.—அக்காலத்திலே கானான் பாஷையைப் ௰௮
பேசி, சேனைகளின் கர்த்தருக்கு ஆணையிடுகிற
ஐந்து பட்டணங்கள் எகிப்துதேசத்திலிருக்கும்;
ஒன்று நிர்மூலமான பட்டணம் என்னப்படும்.—
அக்காலத்திலே எகிப்துதேசத்தின் நடுவிலே கர்த் ௰௯
தருக்கு ஒரு பீடமும், அதின் எல்லையருகே
கர்த்தருக்கொரு தூணும் உண்டாயிருக்கும்.—
அது எகிப்துதேசத்திலே சேனைகளின் கர்த்தருக் ௨௰
கு அடையாளமும் சாட்சியுமாயிருக்கும்; ஏனெ
னில், ஒடுக்குகிறவர்களினிமித்தம் அவர்கள்
கர்த்தரைநோக்கிக் கூப்பிடுவார்கள்; அப்போது
அவர்களுக்கு ஒரு இரட்சகனையும்,ஒரு பெலவா
னையும் அனுப்பி அவர்களை விடுவிப்பார்.—அப் ௨௧
போது கர்த்தர் எகிப்தியருக்கு அறியப்படுவார்;
எகிப்தியர் கர்த்தரை அக்காலத்திலே அறிந்து [6]அ
வருக்குப் பலிகளோடும், காணிக்கைகளோடும்
ஆராதனைசெய்து கர்த்தருக்குப் பொருத்தனைக
ளைப்பண்ணி அவைகளைச் செலுத்துவார்கள்.—
கர்த்தர் எகிப்தியரை வாதையினாலே அடிப்பார்; ௨௨
அதை அடித்தும் குணமாக்குவார்; அவர்கள் கர்த்
தரண்டைக்கு மனந்திருப்புவார்கள்; அப்போது
அவர்கள் விண்ணப்பத்தைக்கேட்டு அவர்களைக்
குணமாக்குவார். — அக்காலத்திலே எகிப்திலி ௨௩
ருந்து அசூரியாவுக்குப் போகிற பாதை உண்டா
யிருக்கும்; அசூரியர் எகிப்திலும், எகிப்தியர் அ
சூரியாவிலும் வந்து, எகிப்தியர் அசூரியரோடுங்
கூடத் தேவாராதனை செய்வார்கள்.—அக்காலத் ௨௪
திலே பூமியின் நடுவிலிருக்கும் ஆசீர்வாதத்தினா
லே இஸ்ரவேல் எகிப்தோடும் அசூரியாவோடும்
மூன்றாவதாய் இருக்கும்.—அவர்களைச் சேனைக ௨௫
ளுடைய கர்த்தர் ஆசீர்வதித்து, எகிப்தியராகிய
நமது சனமும் அசூரியராகிய நம்முடைய கரங்க
ளின் கிரியையும், இஸ்ரவேலராகிய நமது சுதந்
தரமும் ஆசீர்வதிக்கப்பட்டது என்பார்.

---

1 சங். ௬௮. ௩௨.-2 எரே. ௪௬. ௨. மு. எசே. ௨௯. ௧. மு: ௩௰. ௧. மு.

3 ௨ மோ. ௰௨. ௰௨.-4 ௧ இரா. ௨௨. ௨௩.-5 ஏசா. ௯. ௰௪, ௰௫.-6 மல். ௧. ௰௧.

## ௨௰. அதிகாரம்.

*எகிப்து எத்தியோப்பியாவின் நாணமற்ற அடிமைத்தனத்தின் அடையாளம் சொல்லப்பட்டது.*

௧ தர்த்தான் அசூரியாவின் [1]இராசாவாகிய சர்கோ
னாலே அனுப்பப்பட்டு, அஸ்தோத்துக்கு வந்து,
அஸ்தோத்தின்மேல் யுத்தம்பண்ணி, அதைப்பி
௨ டித்த வருஷமாகிற அக்காலத்திலே, — கர்த்தர்
ஆமோத்சின் குமாரனாகிய ஏசாயாவைக்கொண்
டு பேசி, நீ போய் உன் அரையின்மேலிருக்கிற
இரட்டை அவிழ்த்து, உன் கால்களிலிருக்கிற
பாதஇரட்சைகளைக் கழற்று என்றார்; அப்படி
யே அவன் செய்து, அம்மணமும், வெறுங்காலு
௩ மாய் நடந்தான்.—அப்போது கர்த்தர் உரைத்ததா
வது: எகிப்தின்மேலும் எத்தியோப்பியாவின்மே
லும் வரும் மூன்று வருஷத்துக் காரியங்களுக்கு
அடையாளமும், அற்புதமுமாக நம்முடைய
ஊழியக்காரனாகிய ஏசாயா அம்மணமும், வெ
௪ றுங்காலுமாய் நடக்கிறதுபோலே, — அசூரியா
வின் இராசா தான் சிறைபிடிக்கப்போகிற எகிப்
தியரையும், தான் குடிவிலக்கப்போகிற எத்தி
யோப்பியரையும், இளைஞரையும், கிழவரையும்
அம்மணமாகவும், வெறுங்காலாகவும், எகிப்திய
ரின் வெட்கத்துக்குத் திறந்த இருப்பிடமாகவும்
௫ கொண்டுபோவான்.—அப்போது இந்தக் கரைது
றைக்குடிகள் தாங்கள் நம்பியிருந்த எத்தியோப்
பியாவைத்தொட்டும், தாங்கள் பெருமைபாராட்
டின எகிப்தைத்தொட்டும் கலங்கி வெட்கி,—
௬ இதோ அசூரிய இராசாவின் முகத்துக்குத் தப்
பும்படிக்கு நாங்கள் நம்பி, சகாயத்துக்கென்று
ஓடிவந்து அண்டினவன் இப்படியானானே;
நாங்கள் எப்படி விடுவிக்கப்படுவோம் என்று
அக்காலத்திலே சொல்லுவார்கள் என்றார்.

## ௨௰௧. அதிகாரம்

*௧. தீர்க்கதரிசி தன் சனத்தின் அடிமைத்தனத்தைக்குறித்து விதனமுற்று மேதியராலும் பெர்சியராலும் பாபிலோன் விழுதலை ஒரு தரிசனத்திலே கண்டது. ௰௧. தீர்க்கதரிசியைத்தூஷித்த ஏதோம் குணப்படுதலுக்கு எச்சரிக்கப்பட்டது. ௰௩. அராபியாவுக்கு வரும் துன்பகாலத்தின் குறிப்புச் சொல்லப்பட்டது.*

௧ கடற்புறமான வனாந்தரத்தினுடைய பாரம்; சுழ
ல்காற்றுகள் தெற்குத்தேசத்திலெழும்பிக் கடந்
துவருமாப்போலே, பயங்கரமான தேசமாகிய
௨ வனாந்தரத்திலிருந்து வருகிறான்.—கடின தரிச
னம் எனக்கு அறிவிக்கப்பட்டது; துரோகி
துரோகம்பண்ணி, பாழ்க்கடிக்கிறவன் பாழ்க்க
டித்துக்கொண்டே இருக்கிறான்; பெர்சியனே
எழும்பு;மேதியனே முற்றிக்கைபோடு; அதினால்
உண்டான தவிப்பை எல்லாம் ஒயப்பண்ணுகி
௩ றேம்.—ஆகையால், என் இடுப்பு மகா வேதனை
யால் நிறைந்திருக்கிறது; பிள்ளைப்பெறுகிறவ
ளின் வாதைகளுக்கு ஒத்த வாதைகள் என்னைப்
பிடித்தன; கேட்கிறதினாலே மடங்கி, காண்கிற
௪ தினாலே கலங்குகிறேன்.—என் இருதயம் திகைக்
கிறது; திகில் என்னைத் திடுக்கிடப்பண்ணுகி
றது; [2]அது எனக்கு விருப்பமான இரா இருளை
எனக்கு நடுக்கமுள்ளதாக்கிற்று.—பந்தியை ஆ ௫
யத்தம்பண்ணுதலும், சாமங்காக்குதலும், புசித்
துக்குடிக்குதலும் உண்டு; பிரபுக்களே, எழுந்து
பரிசைகளைப்பூசுங்கள்.—ஏனெனில் ஆண்டவர் ௬
என்னுடனே, நீ போய்,காண்பதை அறிவிக்கும்
சாமக்காரனை வை என்றார்.—அவன் ஒரு இரதத் ௭
தையும், சோடுசோடான குதிரைவீரரையும்,
சோடுசோடாகக் கழுதைகளின்மேலும் ஒட்ட
கங்களின்மேலும் ஏறிவருகிறவர்களையும் கண்டு
மிகுந்த கவனமாய்க் கவனித்துக்கொண்டே இ
ருந்து, — ஆண்டவரே, நான் என் காவலிலே ௮
பகலில் எப்போதும் நின்று, நான் இராக்காலங்
கள் முழுதும் என் சாமத்திலே தரித்திருக்கிறேன்
என்று சிங்கச்சத்தமாய்க் கூப்பிடுகிறான்.—இப் ௯
போதும் இதோ, ஒரு சோடு குதிரைபூண்ட இர
தத்தின்மேல் ஏறி இருக்கிற ஒரு மனுஷன் வந்து,
[3]பாபேல் விழுந்தது, விழுந்தது; அதின் விக்கிரக
தேவர்களை எல்லாம் தரையோடே மோதி உடை
த்தார் என்று பிரதிஉத்தரமாகச் சொல்லுகிறான்.—
என் போரடித்தானியமே, என் களத்தின் கோது ௰
மையே, இஸ்ரவேலின் பராபரனாகிய சேனைக
ளுடைய கர்த்தராலே நான் கேள்வியானதை
உங்களுக்கு அறிவித்தேன்.

தூமாவினுடைய பாரம்; சேயீரிலிருந்து என் ௰௧
னைநோக்கி, சாமங்காக்கிறவனே, இராத்திரியி
லே நடந்த செய்தி என்ன? சாமங்காக்கிறவனே
இரவுபோகிற செய்தி என்ன? என்று கூப்பிடுகி
றார்கள்.—விடியற்காலம் வந்திருந்தும் இராவாய் ௰௨
இருக்கிறது; நீங்கள் கேட்கமனதானால் திரும்
பிவந்து கேளுங்கள் என்று சாமங்காக்கிறவன்
சொல்லுகிறான்.

அராபியாவின்மேல் சுமரும் பாரம்; தெதானி ௰௩
யராகிய பயணக்கூட்டங்களே, அராபியாவில்
இராத்தங்குவீர்கள்.—தேமத்தேசத்தின் குடிகளே, ௰௪
நீங்கள் தாகமாய் இருக்கிறவர்களுக்குத் தண்ணீ
ரை எதிராகக் கொண்டுபோய், வலசை வருகிற
வர்களுக்கு அவர்களுடைய அப்பத்தைக் கொ
டுக்க நேரிட்டுப்போங்கள்.—ஏனென்றால் பட் ௰௫
டையங்களுக்கும்,உருவின பட்டையத்துக்கும்,
நான் எற்றின வில்லுக்கும், கனயுத்தத்துக்கும்
தப்ப வலசைவருகிறார்கள்.—ஏனெனில் [4]ஆண் ௰௬
டவர் என்னுடனே சொன்னதாவது; ஒரு கூலிக்
காரனுடைய வருஷங்களைப்போல ஒத்த ஒரே
வருஷத்திலே கேதாருடைய மகிமை எல்லாம்
அற்றுப்போய்,—கேதார் புத்திரருடைய பலத்த ௰௭
வில்க்காரரின் தொகையில் மீதியானவர்கள்
கொஞ்சப்பேராய் இருப்பார்கள் என்றார்; இதை
இஸ்ரவேலின் பராபரனாகிய கர்த்தர் உரைத்தார்.

## ௨௰௨. அதிகாரம்.

*௧. பெர்சியனாலே எருசலேம் பிடிபடுவதைக்குறித்துத் தீர்க்கதரிசி புலம்பினது. ௮. அவர்களுக்கு உண்டாகிய மனித ஞானத்தையும், லோக சந்தோஷத்தையும் கண்டித்தது. ௰௫. செப்னா தள்ளுண்டுபோவதைத் தீர்க்கதரிசனமாய் அறிவித்தது. ௨௰. அவனுக்குப்பதிலாக எலி*

1 ௨ இரா. ௰௮.௰௭.—2 தானி. ௫.௧, ௬.

3 எரே. ௫௧. ௮. வெளி. ௰௪. ௮: ௰௮.௨.—4 ஏசா. ௰௬. ௰௪.

யாக்கீம் கிறிஸ்துவின் இராச்சியத்துக்கு இருப்பதை அடையாளமாகக் குறிக்கப்பட்டது.

க தரிசனப்பள்ளத்தாக்கின் பாரம்; உன்னில் உள்
ளவர்கள் எல்லாரும் வீடுகளின்மேல் ஏறுவதற்கு
உ உனக்கு இப்போது வந்தது என்ன?—களிகூர்ந்
திருந்த பட்டணமே, நீ அமளிகளால் நிறைந்து
கலங்கின ஊராளுய், உன்னில் கொலையுண்ட
வர்கள் பட்டையத்தால் கொலையுண்டதில்லை;
ங யுத்தத்தில் செத்ததும் இல்லை.—உன் அதிபதிகள்
எல்லாரும் ஏகமாய் ஓடி அலைந்து வில்க்காரரால்
கட்டுண்கிருர்கள்; உன்னில் அகப்பட்ட யாவ
ரும் தூரத்துக்கு ஓடியும் ஏகமாய்க் கட்டுண்கிருர்
ச கள்.—ஆகையால், என்னைவிட்டுக் கண்ணைத்தி
ருப்புங்கள்; [1]மனங்கசந்து அழுவேன்; என் சன
மாகிய குமாரத்தியினுடைய பாழாகுதலின்நிமித்
தம் எனக்கு ஆறுதலைச்சொல்ல நெருங்காதிருங்
ரு கள் என்கிறேன். — ஏனென்ருல் சேனைகளின்
கர்த்தராகிய ஆண்டவராலேதரிசனப்பள்ளத்தாக்
கிலே அமளியும், மிதியுண்குதலும், கலக்கமு
மான நாளாய் இருக்கிறது; அலங்கத்தைத் தகர்த்
து, பர்வதத்துக்கு நேரே ஆர்ப்பரிக்கும் நாள்தா
சு னே.—பெர்சியின் அப்பருத்தூணியை எடுத்து,
இரதங்களோடும் மனுஷரோடும் இராவுத்தரோ
டும் வருகிருன்; அலங்கம் கேடகங்கள் அற்
எ றுப்போம். — மகா வடிவான உன் பள்ளத்தாக்
குகள் இரதங்களால் நிறையப்படுவது உண்டு;
குதிரைக்காரரை வாசல்கள்மட்டும் நிறுத்துவார்
அ கள். — அவன் யூதாவின் மறைவை வாங்கிப்
போடுவான்; அந்நாளிலே காட்டுமர வீட்டின்
கூ ஆயுதச்சாலையை நோக்குவாய். — நீங்கள் தாவீ
துடைய பட்டணத்தின் இடிதல்களை மிகுதியா
னவைகள் என்று கண்டு, கீழ்க்குளத்தண்ணீர்க
௰ ளைச் சேர்த்து,–எருசலேமின் வீடுகளை எண்ணி,
அலங்கத்தை அரணிப்பாக்கும்படிக்கு வீடுகளை
௰க இடித்து,—இரண்டு மதில்களுக்கு நடுவே பழை
யகுளத் தண்ணீர்களுக்கு ஒரு அகழை உண்டு
பண்ணுவீர்கள்; ஆனுல் அதைச் செய்கிறவரை
நீங்கள் நோக்காமலும், அதை ஏற்படுத்தித் தூரத்
திலிருந்து வரப்பண்ணுகிறவரைக் கவனிக்காம
௰உ லும் போகிறீர்கள்.—சேனைகளுடைய கர்த்தரா
கிய ஆண்டவர் அக்காலத்திலே அழுகையையும்,
புலம்பலையும், மொட்டையிடுதலையும், இரட்டு
௰ங உடுக்குதலையும் வரவழைப்பார்.—இப்போதோ
வெனில் [2]இதோ சந்தோஷமும் களிப்பும், மாடு
களைக் கொல்லுகிறதும், ஆடுகளை அடிக்கிறதும்,
இறைச்சியைச் சாப்பிடுகிறதும், மதுவைக்குடிக்
கிறதும், புசித்துக்குடிப்போம்; ஏனெனில், நா
ளைச்சாவோம் என்று சொல்லுகிறதும் உண்டு.—
௰ச அது சேனைகளின் கர்த்தராகிய நம்முடைய செ
விகளுக்கு வெளியரங்கமாய் இருக்கிறது; மெய்
யாகவே நீங்கள் சாகுமட்டும் இந்த அக்கிரமம்
உங்களுக்கு நிவிர்த்தியாவதில்லை என்று சேனை
களின் கர்த்தராகிய ஆண்டவர் சொல்லுகிருர்.

சேனைகளுடைய கர்த்தராகிய ஆண்டவர் உ ௰ரு
ரைத்ததாவது: நீ வீட்டு விசாரிப்புள்ள இந்தப்
பொக்கிஷக்காரனுகிய செப்னு அண்டைக்குப்
போய்ச் சொல்லவேண்டியது ஏதெனில்,—தன் ௰சு
கல்லறையை உயர்ந்த தலத்திலே வெட்டி, கல்
மலையிலே தனக்கு வாசஸ்தலத்தைத் தோண்டுகி
றவனைப்போலே நீ உனக்கு இங்கே கல்லறை
யை வெட்டும்படிக்கு உனக்கு இங்கே இருப்
பது என்ன? அல்லது உனக்கு இங்கே இருப்ப
வர்கள் யார்?—இதோ, பலவான் ஒருவனைத் து ௰எ
ரத்துகிற வண்ணமாகக் கர்த்தர் உன்னைத் துரத்தி
விட்டு உன்னை மூடவே மூடுவார். — ஒருவன் ௰அ
ஒரு உண்டையை உருட்டுமாப்போலே உன்னை
அகலமும், விசாலமுமான தேசத்திலே உருட்ட
வே உருட்டுவார்; அங்கே சாவாய்; அங்கே
உன் மகிமையின் இரதங்கள் உன் ஆண்டவனு
டைய வீட்டுக்கு இகழ்ச்சியாக இருக்கும்.—
உன்னை உன் நிலையைவிட்டுப் பறக்கடிப்போம்; ௰கூ
உன் தானத்திலிருந்து உன்னைப் பிடுங்கிப்போ
டுவான்.–அந்நாளிலே சம்பவிப்பதாவது: [3]இல்க் உ௰
கியாவின் குமாரனுகிய எலியாக்கீம் என்ற நம்
முடைய ஊழியக்காரனை நாம் அழைத்து,–உன் உக
வஸ்திரத்தை அவனுக்கு உடுத்து, உன் கச்சை
யால் அவனைத் திடனுகக் கட்டி, உன் அதிகா
ரத்தை அவன் கையிலே கொடுப்போம்; அவன்
எருசலேமின் குடிகளுக்கும், யூதாவின் வீட்டுக்
கும் தகப்பனுய் இருப்பான்.–தாவீதுடைய வீட் உஉ
டின் திறவுகோலை அவன் தோளின்மேல் வைப்
போம்; அவன் [4]யாரும் பூட்டக்கூடாதபடிக்குத்
திறந்து, யாரும் திறக்கக்கூடாதபடிக்குப் பூட்டு
வான்.—அவனை உறுதியான இடத்திலே ஆணி உங
யாகக் கடாவுவோம்; அவன் தன் தகப்பன் வீட்
டுக்குக் கனமான ஆசனமாக இருப்பான்.—
அதின்மேல் அவன் தகப்பன் வீட்டாராகிய பிள் உச
ளைகள் பேரன்மார்களுடைய மகிமை அனைத்தை
யும், குடிக்கிற பாத்திரங்கள் முதல்க்கொண்டு
சகல தம்புரு முட்டுகள்மட்டும் இருக்கிற சகல
சிறுபாத்திரங்களையும் தூக்கிப்போடுவார்கள்.—
உறுதியான இடத்தில் கடாவப்பட்டு இருந்த உரு
ஆணி அந்நாளிலே பிடுங்கப்பட்டு, வெட்டுண்டு
விழும்; அப்போது அதின்மேல் இருந்த சுமை
அறுந்துபோகும் என்று சேனைகளின் கர்த்தர்
உரைக்கிருர்; இதைக் கர்த்தரே உரைக்கிருர்
என்று சொல் என்ருர்.

## உங. அதிகாரம்.

க. தீருபட்டணத்தின் பாழ்க்கடிப்பும், ௰எ. அப்பட்டணத்தார் சிறமைப் பட்டுத் திரும்புதலும் சொல்லப்பட்டது.

தீருவினுடைய பாரம்; தர்சீஸ் கப்பல்களின் க
மனுஷரே, அலறுங்கள்; அது வீடு இல்லாதப
டிக்கும், வருவார் இல்லாதபடிக்கும் [5]பாழாக்
கப்பட்டது; கித்தீம் தேசத்திலிருந்து இந்தச்
செய்தி வந்து அவருக்கு வெளிப்படுகிறது.—
தீவுக்குடிகளே, மவுனமாகுங்கள்; சீதோனின் உ

1 எரே. க.கூ.—2 க கொரி.௰ரு.ங௨.—3 ஏசா. ங௬.ங.—4 வெளி. ங. எ.

5 எரே.சஎ.உ.ஓ: சஅ.உ ஓ: உஎ.க.ஓ: உஅ.க.ஓ. சகரி.கூ.உ–ச.

வர்த்தகர் சமுத்திரத்திலே யாத்திரைபண்ணி
௩ உன்னை நிரப்பினார்கள்.—சீகோர் நதியின் மிகுந்த
நீர்ப்பாய்ச்சல்களால் விளையும் பயிர்வகைகளும்,
ஆற்றங்கரையின் அறுப்பும் உன் வரத்தாய் இருந்
தன; நீ சாதிகளின் சந்தையாய் இருந்தாய்.—
௪ சீதோனே, வெட்கப்படு; ஏனெனில், நான் இ
னிக் கர்ப்பவேதனைப்படுகிறதும் இல்லை; பெறு
கிறதும் இல்லை; இளைஞரை ஆளாக்குகிறதும்
இல்லை; கன்னியாஸ்திரிகளை வளர்க்கிறதும்
இல்லை என்று சமுத்திரக்கோட்டையான கடல்
௫ துறை சொல்லுகிறது.—எகிப்தின் செய்தி கேட்
கப்பட்டதினால் நோய் உண்டானதுபோலே,
தீருவின் செய்தி கேட்கப்படுவதினாலும் உண்
௬ டாம்.—கரைதுறைக் குடிகளே, நீங்கள் தர்சீஸ்
௭ மட்டும் புறப்பட்டுப்போய் அலறுங்கள்.—பூருவ
நாள்கள்முதல் துவக்கங்கொண்டு களிகூர்ந்தி
ருந்த உங்கள் பட்டணம் இதுவோ? பரதேசம்
போக இதின் குடிகளுடைய கால்கள் இவர்க
௮ ளைத் தூரமாய்க் கொண்டுபோம்.—கிரீடம் தரித்
துக்கொண்டிருக்கிற தீருவுக்கு விரோதமாக
இதைச் சோதித்துத் தீர்த்தவர் யார்? அதின் வர்த்
தகர் பிரபுக்களும், அதின் வியாபாரிகள் தேசத்
௯ தில் கனமுள்ளவர்களும் ஆமே.—எல்லாச் சிறப்
பின் அகந்தையையும் குலைத்து, தேசத்திலே
கனமுள்ள யாவரையும் கனஈனமாக்குவதற்கா
கச் சேனைகளின் கர்த்தரே இதை யோசித்துத்தீர்த்
௰ தார்.—தர்சீசின் குமாரத்தியே, ஒரு ஆற்றைக்
கடக்குமாப்போலே உன் தேசத்தைக் கடந்து
௰௧ போ, கட்டும் கச்சை இனி இல்லை.—தமது கை
யைச் சமுத்திரத்தின்மேல் நீட்டி, இராச்சியங்க
ளைக் குலுங்கப்பண்ணுகிறார்; கானானின் அரண்
களை அழிக்கக் கர்த்தர் அதற்கு விரோதமாகக்
௰௨ கட்டளைகொடுத்து,—ஒடுங்குண்ட கன்னியா
கிய சீதோன் குமாரத்தியே, இனிக் களிகூர்ந்து
கொண்டு இராய்; எழுந்திருந்து கித்தீமுக்குப்
புறப்பட்டுப் போ; அங்கேயும் உனக்கு இளைப்
௰௩ பாறுதல் இல்லையென்றார்.—அதோ கல்தேயரு
டைய தேசம்; அந்தச் சனம் முன்னிருந்ததில்
லை; அசூர் என்றவன் வனாந்தரத்தாருக்காக அ
தின் அஸ்திபாரத்தை ஏற்படுத்தினான்; இப்படித்
தங்கள் துருக்கங்களை எடுப்பித்து, தங்கள் அர
மனைகளைக் கட்டினார்கள்; அழிவுசெய்ய அதை
௰௪ யே குறித்தார்.—தர்சீஸ் கப்பல்களின் மனுஷ
ரே, அலறுங்கள்; ஏனெனில், உங்கள் அரண்
பாழாக்கப்பட்டது.

௰௫ அக்காலத்திலே சம்பவிப்பது ஏதென்றால்,
தீரு ஒரு இராசாவுடைய நாள்களின்படி எழுபது
வருஷம் மறக்கப்பட்டிருக்கும்; ஆனால் எழு
பது வருஷங்களின் முடிவிலே தீருவின் சம்மதி
ஒரு வேசியின் பாடலுக்குச் சமானமாய் இருக்
௰௬ கும்.—மறக்கப்பட்ட வேசியே, சுரமண்டலத்
தை எடுத்து ஊரிலே சுற்றித்திரி; நீ நினைக்கப்ப
டும்படிக்கு அதை நன்றாய் வாசித்து மெத்தவும்
பாடு.—ஏனெனில் சம்பவிப்பது ஏதென்றால் ௰௭
எழுபது வருஷங்களின் முடிவிலே கர்த்தர் தீரு
வைச் சந்திப்பார்; அப்போது அது தன் பணை
யத்துக்குத் திரும்பிவந்து, பூச்சக்கரத்தின்மேல்
உள்ள பூமியின் இராச்சியங்களோடு எல்லாம்
வேசித்தனம்பண்ணும்.—அதின் வியாபாரமும், ௰௮
அதின் பணையமும் கர்த்தருக்குப் பரிசுத்தமாய்
இருக்கும்; அது பொக்கிஷமாய்ச் சேர்க்கப்படு
வதும் இல்லை; அடைத்துவைக்கப்படுவதும்
இல்லை; கர்த்தருக்குமுன்பாக வாசமாயிருக்கிற
வர்கள் திருப்தியாகச் சாப்பிடத்தக்கதாகவும் அ
வர்களுக்கு உரப்பான வஸ்திரத் தரிப்புண்டாக
வும் அதின் வியாபாரம் அவர்களைச் சேரும்.

## ௨௪. அதிகாரம்.

*௧. தேசத்தின்மேல் வரும் பாரபாலனுடைய தண்டனைக்கு ஏதுவாகிய நியாயத்தீர்ப்புகளும், ௰௩. மீதியானவர்கள் அவரைக் களிப்புடனே புகழ்வார்கள் என்பதும், ௰௬. பாரபோன் தமது நியாயத்தீர்ப்புகளினால் தமது இராச்சியத்தை நடப்பித்தலும் சொல்லப்பட்டது.*

இதோ கர்த்தர் தேசத்தை வெறுமையும், பாழு ௧
மாக்கி அதின் உருவை மாறுபாடாக்கிப்போட்டு
அதின் குடிகளைச் சிதற அடிப்பார்.—அப்போது ௨
[1]சனத்துக்கும் ஆசாரியனுக்கும், வேலைக்கார
னுக்கும் அவன் எசமானனுக்கும், வேலைக்காரிக்
கும் அவள் நாச்சியாருக்கும், [2]கொண்டவனுக்
கும் விற்றவனுக்கும், கடன்கொடுத்தவனுக்கும்
கடன்வாங்கினவனுக்கும், வட்டி வாங்கினவ
னுக்கும் வட்டிகொடுத்தவனுக்கும் சரியாக நடக்
கும்.—தேசம் முழுதும் வெறுமையாகி, முழு ௩
தும் கொள்ளையாகும்; ஏனெனில், கர்த்தர் இந்த
வார்த்தையைச் சொன்னார்.—தேசம் புலம்பிவா ௪
டும்; பூமி சத்துவமற்று வாடிப்போகும்; தேசத்
துச்சனத்திலே உயர்ந்தவர்கள் பெலஈனர் ஆவார்
கள்.—பூமி தன் குடிகளின்கீழ்த் தீட்டுப்பட்டு இ ௫
ருக்கிறது; ஏனெனில், நியாயப்பிரமாணங்களை
மீறி, சட்டளையை மாறுபாடாக்கி, நித்திய உடம்
படிக்கையை முறித்தார்கள்.—இதின் நிமித்தமே ௬
தேசத்தின் குடிகள் பாழ்க்கடிக்கப்படத்தக்கவித
மாய்ச் சாபம் தேசத்தைப் பட்சிக்கும்; இதின்
நிமித்தமே கொஞ்சப்பேர் மீதியாகத்தக்கவித
மாய்த் [3]தேசத்தின் குடிகள் வெந்துபோவார்
கள்.—திராட்சப்பழ இரசம் துக்கங்கொண்டாடும்; ௭
திராட்சச்செடி வாடும்; மனக்களிப்பாய் இருந்த
வர்கள் எல்லாரும் பெருமூச்சு விடுவார்கள்.—
[4]மேளங்களின் சந்தோஷம் ஓய்ந்து, களிகூருகி ௮
றவர்களின் சந்தடி தீர்ந்து, சுரமண்டலக்களிப்பு
நின்றுபோம்.—பாடலோடே திராட்சப்பழ இர ௯
சம் குடியார்கள்; மது தன்னைக் குடிக்கிறவர்களு
க்குக் கசக்கும்.—வெறுமையாய்ப்போன பட் ௰
டணம் தகர்ந்து, உள்ளே பிரவேசிக்கக்கூடாத
படிக்கு எல்லா வீடுகளும் அடைபட்டுக்கிடக்
கும்.—சொடிமுந்திரிகை இரசத்துக்கென்று வீதிக ௰௧
ளிலே கூக்குரல் உண்டு; எல்லாச் சந்தோஷமும்
இருண்டு, தேசத்தின் மகிழ்ச்சி போய்விடும்.—

1 ஓசே. ௪. ௯.—2 எசே. ௭. ௰௨, ௰௩.

3 ஏசா. ௯. ௰௯: ௰. ௰௬.—4 எரே. ௭. ௩௪: ௰௬. ௯: ௨௫. ௰.

௰௨ பட்டணத்தில் மீதியாயிருப்பது அழிவு; வாசல்
௰௩ கள் பாழாய்க்கிடக்க இடிக்கப்படும்.—ஆனால் ஒ
லீவமரத்தை உலுக்கி, கொடிமுந்திரிகைப்பழங்
களை அறுத்துத் தீர்ந்தபோது, பின்னறுப்புக் கொ
ஞ்சம் இருக்குமாப்போலே தேசத்துக்குள்ளும்,
இந்தச் சனசதளங்களின் நடுவிலும் இருக்கும்.—
௰௪ இவர்கள் தங்கள் சத்தத்தை உயர்த்திக் கெம்பீரிப்
பார்கள்; சமுத்திரத்திலிருந்து கர்த்தருடைய
முக்கியத்தின்நிமித்தம் ஆர்ப்பரிப்பார்கள். —
௰௫ ஆகையால் கர்த்தரைக் கெபிகளிலும், இஸ்ரவே
லுடைய பராபரனாகிய கர்த்தரின் நாமத்தைச்
சமுத்திரத்தீவுகளிலும் மகிமைப்படுத்துங்கள்.
௰௬ நீதிபரனுக்கு மகிமை என்று பூமியின் கடை
யாந்தரத்திலிருந்து பாடும் கீதங்களைக் கேட்கி
றோம்; நானோவெனில் இளைத்திருக்கிறேன், இ
ளைத்திருக்கிறேன்; எனக்கு ஐயோ! துரோகிகள்
துரோகம்பண்ணுகிறார்கள்; துரோகிகள் மிகுதி
யாய்த் துரோகம்பண்ணுகிறார்கள் என்கிறேன்.—
௰௭ தேசக்குடிகளே, [1]திகிலும், படுகுழியும், கண்ணி
௰௮ யும் உங்களுக்கு வரும்.—சம்பவிப்பது ஏதென
றால், திகிலின் சத்தத்தை விலக ஓடுகிறவன் [2]படு
குழியிலே விழுவான்; படுகுழியிலிருந்து ஏறுகி
றவனோ கண்ணியிலே பிடிபடுவான்; ஏனெ
னில், உயர இருக்கும் மதகுகள் திறவுண்டு பூமி
௰௯ யின் அஸ்திபாரங்கள் குலுங்கும்.—தேசம் நொ
றுங்கவே நொறுங்கும்; தேசம் கிழியவே கிழி
௨௰ யும்; தேசம் அசையவே அசையும்.—வெறித்த
வனைப்போலத் தேசம் தளம்பவே தளம்பி, ஒரு
குடிசையைப்போலே பேர்த்துப்போடப்படும்;
அதின் பாதகம் அதின்மேலே பாரமாய் இருக்
கையால், அது அப்புறம் எழுந்திருக்காமல் விழுந்
௨௧ துபோம்.— அக்காலத்தில் சம்பவிப்பது ஏதெ
னில், கர்த்தர் உயர இருக்கிற உயரமான சேனை
யையும், பூமியின்மேல் இருக்கிற பூமியின் இரா
௨௨ சாக்களையும் விசாரிப்பார்.—அவர்கள் கெபியில்
ஏகமாய்க் கட்டுண்டவர்களாகச் சேர்ந்து, காவ
லில் அடைக்கப்பட்டு, அநேகநாள் சென்றபிற்
௨௩ பாடு விசாரிக்கப்படுவார்கள்.—அப்போது சே
னைகளின் கர்த்தர் சீயோன் பர்வதத்திலும், எரு
சலேமிலும் ஆளுகையால், [3]சந்திரன் நாணிச் சூரி
யன் கூச்சம் அடையும்; அவருடைய மூப்பர்க
ளுக்குமுன்பாக மகிமை உண்டாயிருக்கும்.

## ௨௫. அதிகாரம்.

௧. தீர்க்கதரிசி பராபரனுடைய நியாயத்தீர்ப்புகளுக்காகவும், ௬. அவருடைய குறைவற்ற உபகாரங்களுக்காகவும், ௯. அவருடைய செயம்பொருந்திய இரட்சணியத்திற்காகவும் அவரைத் துதித்தது.

௧ கர்த்தாவே, தேவரீர் என் பராபரனாய் இருக்கி
றீர்; உம்மை உயர்த்தி, உமது நாமத்தைத் துதிப்
பேன்; ஏனெனில் அதிசயங்களைச் செய்தீர்; உம்
முடைய தூரத்து யோசனைகள் சத்தியமும் உறு
௨ தியும் ஆனவைகள்.—ஏனெனில் [4]பட்டணத்தை
மண்மேடும், அரணான புரியை இடிந்துகிடக்கிற
அழிவும், அந்நியரின் அரமனையை ஊர் அல்லா
ததும், என்றைக்கும் கட்டப்படாததுமான தல
மும் ஆக்கிப்போட்டீர்.—ஆகையால் பலத்தசனம் ௩
உம்மை மகிமைப்படுத்திப் பலவந்தரான சாதிக
ளின் பட்டணங்கள் உமக்குப் பயப்படும்.—
ஏனெனில் பலவந்தரின் சீறல் மதிலை மோதி ௪
அடிக்கிற பெருவெள்ளத்தைப்போல இருக்கை
யில், நீர் நீசனுக்குப் பலனும், நெருக்கப்படுகிற
எளியவனுக்குத் திடனும், [5]பெருவெள்ளத்துக்
குத் தப்பும் அடைக்கலமும், வெயிலுக்கு ஒதுங்
கும் நிழலும் ஆனீர். — அந்நியரின் உக்கிரம், ௫
வரட்சியான இடத்தின் காங்கையைப்போல
இருக்கையில் அதைத் தணியப்பண்ணுகிறீர்;
மேகத்தின் நிழலினால் வெயில் தாழுமாப்போ
லே பலவந்தரின் கூவுதல் தாழ்த்தப்படும்.—எல் ௬
லாச் சனசதளங்களுக்கும் சேனைகளையுடைய கர்
த்தர் இந்தப் பர்வதத்திலே ஊன்களுடைய கொ
ழுப்புகளாகிய [6]கொழுப்புகளின் விருந்தையும்,
தெளிவாக்கப்பட்ட திராட்சப்பழஇரசங்களின்
விருந்தையும்பண்ணி,—எல்லாச் சனசதளங்கள் ௭
மேலும் உள்ள முகமுக்காட்டையும், எல்லாச்
சாதிகளையும் மூடி இருக்கிற மூடலையும், இந்தப்
பர்வதத்திலே விழுங்குவார்.—[7]அவர் மரணத் ௮
தைச் செயமாக விழுங்குவார், கர்த்தராகிய பரா
பரன் [8]எல்லா முகங்களிலும் உள்ள கண்ணீரை
அறத்துடைத்துத் தமது சனத்தின் நிந்தையைப்
பூமி எங்கும் இராதபடிக்கு நீக்கிவிடுவார்; ஏனெ
னில், கர்த்தர் இதைச் சொன்னார்.
இதோ, நம்முடைய பராபரன் இவர்தானே; ௯
இவருக்காகக் காத்திருந்தோம், இவர் நம்மை
இரட்சிக்கிறார்; இவரே நாம் காத்திருந்த கர்த்தர்;
அவருடைய இரட்சிப்பினாலே களிகூர்ந்து மகி
ழுவோமாக என்று அக்காலத்திலே சொல்லப்
படும்.—ஏனெனில் கர்த்தருடைய கரம் இந்தப் ௰
பர்வதத்திலே தங்கிக்கொண்டிருக்கும்; மோ
வாப்போவெனில், வைக்கோலின் கூளம்; எரு
நிலத்திலே மசிக்கப்படுமாப்போலே அவர்கீழே
மசிக்கப்படும். — நீந்துகிறவன் நீந்துவதற்காகக் ௰௧
கைகளை விரிக்குமாப்போலே அவர் தம்முடைய
கைகளை அவர்கள் நடுவிலே விரித்து, அவர்கள்
பெருமையையும், அவர்கள் கைகளின் சதிசர்ப்
பனைகளையுங்கூடத் தாழ்த்திவிட்டு,—உன் மதில்க ௰௨
ளுடைய உயர்ந்த அரணைப் பணிவாக்கித் தாழ்த்
தித் தரையிலே தூளாக அழிப்பார்.

## ௨௬. அதிகாரம்.

௧. பராபரனில் நம்பிக்கை வைப்பதற்காகவும், ௫. அவருடைய நியாயத்தீர்ப்புகளுக்காகவும், ௰௨. தமது சனத்தின்மேல் அவருக்கு இருக்கும் தயைக்காகவும் தூண்டிவிடும் பாட்டு. ௨௰. பராபரனுக்காகக் காத்துக்கொண்டிருக்கத் தூண்டுதல்.

அக்காலத்திலே யூததேசத்தில் பாடப்படும் பா ௧
ட்டாவது: [9]பலனான பட்டணம் நமக்கு இருக்கி
றது; இரட்சிப்பையே மதில்களும், அரணும்
ஆக்கினார். — உண்மையைக் கைக்கொண்டு ௨

1 எரே. ௪௮. ௪௩, ௪௪.
2 ஆமோ. ௫. ௰௯.—3 ஏசா. ௰௩. ௰. யோவே ௩. ௪, ௫. லூக். ௨௧. ௨௫.
4 ஏசா. ௨௧. ௯: ௨௩. ௰௩. வெளி. ௰௮. ௨: ௰௮. ௨.—5 ஏசா. ௪. ௬.
6 மத். ௨௨. ௪. லூக். ௰௪. ௰௬, ௰௭.
7 ௧ கொரி. ௰௫. ௫௪, ௫௫. ௨ தீமோ. லூக். ௰௮. ௰. மத். ௯. ௰௮. ௧. ௰.—8 வெளி. ௭. ௰௭.
9 சங். ௪௬. ௫, ௬: ௪௭. ௧: ௪௨. ௫. ௨.

வருகிற நீதியுள்ள சாதி உள்ளே பிரவேசிப்பதற்
௩ காக [1]வாசல்களைத் திறவுங்கள்.—சமாதானத்தை,
சமாதானத்தையே காப்பீரென்கிறது ஊன்றப்
பட்ட நினைவாய் இருக்கிறது; ஏனெனில் உம்
௪ மை நம்பிக்கொண்டு இருக்கிறார்கள்.—என்
றென்றைக்கும் கர்த்தரை நம்புங்கள்; ஏனெனில்
கர்த்தராகிய பராபரனுக்குள்ளே நித்திய கன்ம
௫ லையின் உறுதி இருக்கும்.—ஏனென்றால், அவர்
[2]உயரத்திலே வாசமாய் இருக்கிறவர்களையும், உ
யர்ந்த பட்டணத்தையும் பணிவாக்கி, அதைத்
தாழ்த்துவார்; அவர் அதைத் தரைமட்டாகத்
தாழ்த்தி, அது மண்ணுகுமட்டும் இடியப்பண்
௬ ணுவார்.—கால்கள் அதை மிதிக்கும்; சிறுமை
யானவர்களின் கால்களும், நீசரின் அடிகளும்
௭ தானே.—நீதிமானுடைய பாதை மகா செம்மை
யாய் இருக்கிறது; நீதிமானுடைய நடையைச்
௮ செம்மையாக நிறுக்கிறீர்.—கர்த்தாவே, உம்மு
டைய நியாயத்தீர்ப்புகளின் பாதையிலே உமக்
குக் காத்திருக்கிறோம்; உமது நாமமும், உமது
நினைப்பும் ஆத்துமாவின் வாஞ்சையாய் இருக்கி
௯ றது.—என் ஆத்துமா இராவிலே உம்மை வாஞ்
சிக்கிறது; எனக்குள் இருக்கிற என் ஆவியால்
அதிகாலத்திலும் உம்மைத் தேடுகிறேன்; ஏனெ
னில், உம்முடைய நியாயத்தீர்ப்புகள் தேசத்தில்
நடக்கும்போது பூச்சக்கரக்குடிகள் நீதியைப்
௰ படிக்கிறார்கள்.—ஆகாதவனுக்குக் கிருபைசெய்
யப்பட்டாலும் நீதியைப் படியான்; நல்ல நிதான
மான தேசத்தில் முதலாய் அநியாயம்செய்து கர்த்
தருடைய மகத்துவத்தைக் கவனியாதேபோகி
௰௧ றான்.—கர்த்தாவே, உமது கரம் உயர்ந்து இருந்
தாலும் அதைக் காணாதிருக்கிறார்கள்; ஆனால்
சனத்துக்காக உமக்கு இருக்கும் பட்சவயிராக்
கியத்தைக் கண்டு வெட்குவார்கள்; அக்கினி
௰௨ உம்முடைய சத்துருக்களைப் பட்சிக்கும்.—கர்த்
தாவே, எங்களுக்குச் சமாதானத்தைக் கட்டளை
யிடுவீர்; ஏனெனில் எங்கள் எல்லா வேலைகளை
௰௩ யும் எங்களுக்காக நடத்திவருகிறீரே.—எங்கள்
பராபரனாகிய கர்த்தாவே, உம்மை அல்லாத
வேறே ஆண்டவன்மார் எங்களை ஆண்டார்கள்;
ஆனால் உம்மைமாத்திரம் சார்ந்து உம்முடைய
௰௪ நாமத்தை நினைத்துக்கொண்டிருக்கிறோம்.—செத்
தவர்கள் உயிருக்குத் திரும்பார்கள்; மாண்ட
இராட்சதர் திரும்ப எழுந்திரார்கள்; அப்படி நீர்
அவர்களை விசாரித்துச் சங்கரித்து, அவர்கள்
௰௫ பேரை எல்லாம் அழியப்பண்ணினீர்.—இந்தச்
சாதியோடே கூட்டினீர்; கர்த்தாவே, இந்தச்
சாதியோடே கூட்டி மகிமைப்பட்டீர்; பூமியின்
எல்லாக் கடையாந்தரங்கள்மட்டும் வந்து எட்
௰௬ டினீரே.—கர்த்தாவே, [3]நெருக்கத்தில் உம்மைத்
தேடுகிறார்கள்; உம்முடைய தண்டனை அவர்கள்
மேலிருக்கையில் அந்தரங்க வேண்டுதலை ஊற்று
௰௭ கிறார்கள்.—கர்த்தாவே, பேறுகாலம் சமீபித்
திருக்கையில் [4]வேதனைப்பட்டு, தன் வாதைக
ளிலேகூப்பிடுகிற கர்ப்பவதியைப்போலே உமக்
குமுன்பாக இருக்கிறோம்.—[5]நாங்கள் கர்ப்பமா ௰௮
யிருந்து வாதைப்பட்டு, காற்றைப் பெற்றவர்
களைப்போலே இருக்கிறோம்; தேசத்துக்கு இரட்
சிப்புச் செய்யமாட்டாதிருக்கிறோம்; பூச்சக்கரக்
குடிகள் விழுகிறதுமில்லை.—மரித்த உம்முடைய ௰௯
வர்கள் என் சவத்தோடுங்கூடப் பிழைத்து எழுந்
திருப்பார்கள்; [6]மண்ணிலே தங்கி இருக்கிறவர்
களே, விழித்துக் கெம்பீரியுங்கள்; ஏனெனில்
உம்முடைய பனி பூண்டுகளின் பனியைப்போ
ல இருக்கும்; ஆனால் இராட்சதரைப் பூமி தள்ளி
விடும்.—என் சனமே, நீ போய் உன் அறைக ௨௰
ளுக்குள்ளே பிரவேசித்து, [7]உனக்குப் பின்னாக
உன் கதவுகளைப் பூட்டிச் சினம் கடந்துபோகு
மட்டும் கொஞ்சநிமிஷம் ஒளித்துக்கொள்.—
ஏனெனில் இதோ, பூமியினுடைய குடிகளின் ௨௧
அக்கிரமத்தின்நிமித்தம் அவர்களை விசாரிக்கும்
படிக்குக் [8]கர்த்தர் தம்முடைய தானத்திலிருந்து
புறப்படுவார்; அப்போது பூமி தன் இரத்தப்பழி
களைத் திறந்து காண்பித்து, தன்னிலே கொலை
செய்யப்பட்டவர்களை இனி மூடாதிருக்கும்.

## ௨௭. அதிகாரம்.

௧. பராபரன் தமது திராட்சத்தோட்டத்தின்மேல் வைக்கும் கவலையும், ௭. அவருடைய தண்டனைக்கும், நியாயத்தீர்ப்புகளுக்குமுள்ள பேதமும், ௰௨. யூதருக்கும், அந்நிய மதஸ்தருக்கும் உண்டாகும் சபையும் சொல்லப்பட்டது.

அக்காலத்திலே கர்த்தர் [9]நீண்ட பாம்பாகிய ௧
துஷ்டமிருகத்தையும், கோணலான பாம்பாகிய
துஷ்டமிருகத்தையும் கடிதும், பெரிதும், பலத்
ததுமான தமது பட்டையத்தால் விசாரித்து,
சமுத்திரத்தில் இருக்கிற வலுசர்ப்பத்தைக் கொ
ன்றுபோடுவார்.—அக்காலத்திலே நல்ல திராட் ௨
சப்பழஇரசத்தைத் தரும் திராட்சத்தோட்டம்
உண்டாயிருக்கும்; அதின்மேலே ஒருவர்க்கு
ஒருவர் பாடுங்கள்.—கர்த்தராகிய நாம் அதைக் ௩
காத்து, அதற்கு அடிக்கடி தண்ணீர்ப்பாய்ச்சி,
யாரும் அதைச் சேதப்படுத்தாதபடிக்கு அதை
இரவும்பகலும் காப்பாற்றுவோம்.—உக்கிரம் ௪
நமக்கு இல்லை; யாவனாகிலும் முள்ளுச்செடியும்,
நெரிஞ்சிலுமாய் நம்மோடே யுத்தத்துக்குட்பட்
டானேயானால், நாம் அதின்மேல் வந்து அதை
ஏகமாய்க் கொளுத்திவிடுவோம்.—அல்ல என் ௫
றால், அவன் நம்முடைய பெலனைப் பற்றிக்கொ
ண்டு நம்மோடே ஒப்புரவாகவே வேண்டும்;
நம்மோடே ஒப்புரவாகவே வேண்டும்.
யாக்கோபு வேர்பற்றி, இஸ்ரவேல் [10]பூத்துக் ௬
காய்த்துப் பூச்சக்கரத்தைப் பலனால் நிரப்பும்
நாள்கள் வரும்.—அவர் அவனை அடிக்கும் அடி ௭
யாய் இவனை அடிக்கிறாரோ? அவர்கள் கொல்
லப்படும் கொலையாய் இவன் கொல்லப்படு
கிறானோ?—தேவரீர் சனத்தைத் துரத்திவிடுகை ௮
யில் [11]மட்டாய் அதனோடே வழக்காடுகிறீர்;
கொண்டல்காற்றடிக்கிற நாளிலே, தம்முடைய

1 சங். ௱௧௮ ௰௯, ௨௰.—2 ஏசா. ௨௫. ௨.—3 சங். ௱௪. ௭: ௭௭, ௪. 4 யோவா. ௰௬. ௨௧.—5 மீகா. ௫. ௨, ௩: ௰௨. ௧, ௨.—6 வெளி. ௨௰ ௪—௬.—7 ௧ மோ. ௭. ௰௬. ௨ மோ. ௰௨. ௨௨, ௨௩.—8 மீகா. ௧. ௩—௫. 9 வெளி. ௰௨. ௯: ௰௯. ௨௰, ௨௧. 10 சங். ௭௨. ௰௬.—11 எரே. ௪௰. ௰௭.

பலத்த கரத்தினால் அதை விலக்கிவிடுகிறார்.—
௯ ஆகையால், அதனாலே யாக்கோபின் அக்கிர
மம் நிக்கிரகம்பண்ணப்படும்; தோப்புகளும்,
சிலைகளும் இனி நிற்காதபடிக்கு அவர்கள் பலி
பீடங்களின் கல்லுகளை எல்லாம் சிதற அடிக்
கப்பட்ட சுண்ணாம்பு கல்லுகளாக்கிவிடும்போ
து அவர்களுடைய பாவத்தை அவர் அகற்று
வாரென்பதே அதினால் எல்லாம் உண்டாகும்ப
௰ லன்.—அது எதெனில், [1]அரணான பட்டணம்
அவாந்தரையாகும்; அந்த வாசஸ்தலம் தள்
ளுண்டு வனாந்தரத்தைப்போல விட்டுவிடப்பட்
டதாய் இருக்கும்; கன்றுக்குட்டிகள் அங்கே
மேய்ந்து, அங்கே படுத்துக்கொண்டு, அதின்
௰௧ தழைகளைப் பட்சிக்கும்.—அதின் கொப்புகள்
உலர்ந்திருக்கும்போது ஒடிந்துபோம்; ஸ்திரி
கள் வந்து அவைகளைக் கொளுத்திவிடுவார்கள்;
ஏனெனில், அது உணர்வுள்ள சனமல்ல; ஆனப
டியால், அதை உண்டாக்கினவர் அதற்கு இரங்
காமலும், அதை உருவாக்கினவர் அதற்குக் கிரு
௰௨ பைசெய்யாமலும் இருப்பார்.—அக்காலத்திலே
சம்பவிப்பது எதெனில், கர்த்தர் ஆற்றங்கரை
யின் விளைவுதுவக்கி எகிப்தின் நதிமட்டும் போ
ரடிப்பார்; ஆனால் இஸ்ரவேல் புத்திரரே, நீங்கள்
ஒருவர் ஒருவராய்ச் சேர்த்துக்கொள்ளப்படுவீர்
௰௩ கள்.—அக்காலத்திலே சம்பவிப்பது எதென்றால்
பெரிய எக்காளத்தொனி உண்டாம்; அப்போது
அசூரியதேசத்திலே சிதற அடிக்கப்பட்டவர்க
ளும், எகிப்துதேசத்திலே துரத்திவிடப்பட்ட
வர்களும் வந்து எருசலேமில் உள்ள பரிசுத்த
பர்வதத்திலே கர்த்தரைப் பணிந்துகொள்ளு
வார்கள்.

## ௨௮. அதிகாரம்.

க. தீர்க்கதரிசி ஆங்காரத்துக்காகவும், மதுபானத்திற்காகவும் எப்பிராயீமைப் பயமுறுத்தினது. ௫. மீதியானவர்கள் கிறிஸ்துவின் இராச்சியம்சேர்வார்கள் என்பது. எ. அவர்களுடைய தப்பிதத்தையும், கூ. கற்பதற்கு மனதில்லாமையையும், ௰௪. அகங்காரத்தையையும் கண்டித்தது. ௰௬. கிறிஸ்து அஸ்திபாரமாக வாக்குத்தத்தம்பண்ணப்பட்டது. ௰௮. அவர்களுடைய ஆதரவு சோதிக்கப்படும் என்பது. ௨௩. பராபரனுடைய ஞானமுள்ள பராமரிப்பை யோசிப்பதற்கு அவர்களைத் தூண்டினது.

௧ எப்பிராயீமுடைய வெறியரின் பெருமையான
கிரீடத்துக்கும், மதுபான லாகிரியாய் இருக்கிற
வர்களுடைய செழிப்பான பள்ளத்தாக்குடைய
கொடுமுடியின்மேலுள்ள அலங்கார சோடிப்
௨ பான வாடிய பூவுக்கும் ஐயோ!—இதோ, பெல
னும் வல்லமையுமான ஒருவன் ஆண்டவருக்கு
இருக்கிறான்; அவன் கல்மழை வெள்ளமாகவும்,
சங்காரப் புசலாகவும், புரண்டுவருகிற கன தண்
ணீர்களின் வெள்ளமாகவும் வந்து, கையினாலே
௩ அதைத் தரையிலே தள்ளிவிடுவான்.—எப்பிராயீ
முடைய வெறியரின் முக்கியகிரீடம் கால்களால்
௪ மிதித்துப்போடப்படும்.—செழிப்பான பள்ளத்
தாக்குடைய கொடுமுடியின்மேலுள்ள அலங்
கார சோடிப்பின் வாடிய பூ பருவகாலத்துக்கு
முன் பழுத்ததும், காண்கிறவன் பார்த்து, அது
இன்னம் தன் கையில் இருக்கையில் விழுங்கு
கிறதுமான முதல் கனியைப்போல இருக்கும்.
அக்காலத்திலே சேனைகளின் கர்த்தர் தமது ௫
சனத்தில் மீதியானவர்களுக்கு மகிமையான கிரீ
டமாகவும், அலங்கார முடியாகவும்,—நியாயம் ௬
விசாரிக்கிறதற்கு உளுக்காருகிறவனுக்கு நியா
யத்தின் ஆவியாகவும், யுத்தத்தை அதின் வாசல்
மட்டும் திருப்புகிறவர்களின் பராக்கிரமமாகவும்
இருப்பார்.—ஆனால் இவர்கள் மதுபானத்தால் ௭
திசைகெட்டு, லொட்டியினால் வழிதப்பிப்போ
கிறார்கள்; ஆசாரியனும் தீர்க்கதரிசியும் லொட்டி
யினால் திசைகெட்டு, மதுபானத்தால் அமிழ்ந்து,
லொட்டியினால் வழிதப்பித் தீர்க்கதரிசனத்தில்
மோசம்போய் நியாயம் தீர்க்கிறதிலே இடறு
கிறார்கள்.—ஏனெனில், எல்லாப் பந்திகளும் அ ௮
சுத்த இடமில்லாதபடிக்கு வாந்தியினாலும், தீழ்ப்
பழுக்கினாலும் நிறைந்திருக்கின்றன.
இனி யாருக்கு அறிவைப் போதிப்பார்? கேட் ௯
டதை யாருக்குத் தெளிவிப்பார்? [2]பால் மறந்த
வர்களுக்கும் முலைமறக்கப்பண்ணப்பட்டவர்
களுக்குமே.—ஏனெனில் கற்பனையின்மேல் கற் ௰
பனையும், கற்பனையின்மேல் கற்பனையும், பிர
மாணத்தின்மேல் பிரமாணமும், பிரமாணத்தின்
மேல் பிரமாணமும், இங்கே கொஞ்சமும்,
அங்கே கொஞ்சமும் என்கிறார்கள்.—ஆகையால் ௰௧
பரியாச உதட்டினாலும், [3]வேற்றுப்பாஷையினா
லும் இந்தச் சனத்தோடே பேசுவார்.—[4]இதுவே ௰௨
நீங்கள் இளைத்தவனை இளைப்பாறப்பண்ணத்தக்க
இளைப்பாறுதல்; இதுவே சாங்கோபாங்கம்அடை
தலென்று அவர்களோடே அவர் சொன்னாலும்
கேட்கமாட்டோமென்கிறார்கள்.—ஆனதுகொ ௰௩
ண்டு அவர்கள் போய், [5]பின்னிட்டுவிழுந்து நொ
றுங்கும்படிக்கும், சிக்குண்டுபிடிபடும்படிக்கும்,
கர்த்தருடைய வார்த்தை அவர்களுக்குக் கற்பனை
யின்மேல் கற்பனையும், கற்பனையின்மேல் கற்ப
னையும், பிரமாணத்தின்மேல் பிரமாணமும், பிர
மாணத்தின்மேல் பிரமாணமும், இங்கே கொஞ்
சமும், அங்கே கொஞ்சமும் என்கிறதாக இருக்
கும்.
ஆகையால், எருசலேமில் இருக்கிற இந்தச் ச ௰௪
னத்தை ஆளுகிற சக்கந்தக்காரரே, கர்த்தருடைய
வார்த்தையைக் கேளுங்கள்.—நாங்கள் மரணத் ௰௫
தோடே உடம்படிக்கையையும்; நரகத்தோடே
ஒப்பந்தத்தையும் பண்ணினோம்; வாதை பெரு
வெள்ளமாய்ப் புரண்டுவந்தாலும் எங்களை அணு
காது; ஏனெனில், நாங்கள் பொய்யை எங்களு
க்கு அடைக்கலமாக்கி, மாயையின் மறைவிலே
வந்து அடைந்தோம் என்கிறீர்களே.—ஆகையினா ௰௬
லே கர்த்தராகிய ஆண்டவர் உரைக்கிறதாவது:
[6]இதோ உத்தமம் விளங்கினதும், விலையேறப்
பெற்றதும் திட அஸ்திவாரப்பட்டதுமான சோ
டிக்கல்லாகிய கல்லை நாம் சீயோனிலே வைக்
கிறோம்; விசுவாசிக்கிறவன் பதறான்.—நாம் நியா ௰௭

1 எரே ௪௯. ௩௭.—2 மத். ௰௧ ௨௫.—3 ௧ கொரி. ௰௪. ௨௧.

4 மத். ௰௧. ௨௮, ௨௯.—5 எசா. ௧. ௬.—6 ௧ பே. ௨. ௬. ௮.

யத்தை நூலும், நீதியைத் தூக்கும் ஆக்குவோம்;
ஆனால் பொய் என்ற அடைக்கலத்தைக் கல்ம
ழை பறக்கடித்து, அந்த மறைவைத் தண்ணீர்
௰௮ வெள்ளம் அடித்துக்கொண்டுபோகும்.— அப்ப
டியே உங்களுக்கு மரணத்தோடு இருக்கிற உ
டம்படிக்கை விருதாவாகி, உங்களுக்கு நரகத்
தோடு இருக்கிற ஒப்பந்தம் நிற்காதேபோம்;
வாதை பெருவெள்ளமாய்ப் புரண்டுவரும்போது
௰௯ அதின்கீழ் அகப்பட்டுக் கசங்குவீர்கள்.—அது
புரண்டுவந்ததுமுதல் உங்களை அடித்துக்கொ
ண்டுபோம்; ஏனெனில், அது காலைமாறும் இர
விலும் பகலிலும் புரண்டுவரும், கேட்டதின்
உணர்வை உண்டாக்கும்படிக்கு அலைச்சலே
௨௰ உண்டாயிருக்கும்.-ஏனெனில் படுக்கை நீட்டிக்
கொள்ளக்கூடாத குறுகலும், மூடுசீலை மூடிக்
கொள்ளக்கூடாத அகலக்கட்டையுமாய் இருக்
௨௧ கும்.—ஏனெனில், தமது அந்நிய கிரியையாகிய
தமது கிரியையைச் செய்யவும், தமது வேற்றுவே
லையாகிய தமது வேலையை நடப்பிக்கவும், கர்த்
தர் [1]பெராத்சீம் மலையிலே செய்ததுபோல எழு
ம்பி, [2]கிபேயோனின் பள்ளத்தாக்கில் இருந்தது
௨௨ போலே சினத்திருப்பார்.—இப்போதும் உங்கள்
கட்டுகள் பலத்துப்போகாதபடிக்குப் பரிகாசம்
பண்ணாதிருங்கள்; ஏனெனில், தேசம் அனைத்
தின்மேலும் நிருணயம் பண்ணப்பட்டிருக்கிற
சங்காரத்தின்செய்தியைச் சேனைகளின் கர்த்தரா
கிய ஆண்டவராலே கேள்விப்பட்டிருக்கிறேன்.
௨௩ செவிகொடுத்து என் சத்தத்தைக் கேளுங்கள்;
நான் சொல்வதைக் கவனித்துக் கேளுங்கள்.—
௨௪ உழுகிறவன் நாள்தோறும் உழுது, விதைக்கிறதற்
காகத் தன் நிலத்தைக் கொத்திப் பரம்படிக்கிறது
௨௫ உண்டோ?—அவன் அதை மேலே நிரவினபிற்
பாடு அதின் அதின் எல்லையில் உளுந்தைத் தெ
ளித்துச் சீரகத்தைத் தூவி மேல்தரமான கோது
மையையும் நியமிக்கப்பட்ட வால்கோதுமை
யையும், கம்பையும் விதைத்துப்போடுகிறான்
௨௬ அல்லவோ?—அப்படி அவர்களுடைய பராபரன்
அவர்களை நியாயமட்டாய்த் தண்டித்து அவர்
௨௭ களை உபதேசிப்பார்.-ஏனெனில், உளுந்து தால
த்தாலே போரடிக்கப்படுகிறதில்லை; சீரகத்தின்
மேல் வண்டிலின் உருளை சுற்றவிடப்படுகிறது
மில்லை; உளுந்து கோலினாலும், சீரகம் மிலா
௨௮ றினாலும் அடிக்கப்படும். — போசனம் ஆகும்
படியாக அது மசிக்கப்படும்; ஆகையால், எப்
போதும் அவன் அதைப் போரடிக்கிறதும் இல்
லை; அவன் தன் வண்டிலின் உருளையால் அதை
நசுக்குகிறதும், அல்லது தன் குதிரைகளால்
௨௯ அதை நொறுக்குகிறதும் இல்லை.—இதுவும் சே
னைகளுடைய கர்த்தராலே புறப்பட்ட விசே
ஷம்; அவர் [3]ஆச்சரியமான ஆலோசனையும்,
பெருத்த ஞானத்தின் செயலும் உள்ளவர்.

## ௨௯. அதிகாரம்.

௧. எருசலேமின்மேல் வரும் பாரமான நியாயத்தீர்ப்பும், ௭. அதன் சத்துருக்களுடைய திருப்தியில்லாமையும், ௯. புத்தியில்லாமையும், ௰௩. பூதருடைய கொடிய மாயமும் சொல்லப்பட்டது. ௰௮. தேவபத்தியுள்ளவர்களுக்குப் பரிசுத்தம் உண்டாகும் என்ற வாக்குத்தத்தம்.

தாவீது பாளயம் இறங்கின பட்டணமாகிய ௧
வலுசிங்கமே, வலுசிங்கமே, உனக்கு ஐயோ!
வருஷத்துக்கு வருஷம் பண்டிகையின் பலிகள்
பலியிடப்பட்டாலும்,—வலுசிங்கத்துக்கு இடுக் ௨
கம் உண்டாக்குவோம்; அப்போது துக்கிப்பும்
சலிப்பும் உண்டாகி,இந்தப்பட்டணம் நமக்குச்
சிங்கத்தைப்போலத்தான் இருக்கும். — ஏனெ ௩
னில், [4]உன்னைச் சூழப் பாளயம் இறங்கி, உன்
னைத் தெற்றிகளால் முற்றிக்கைபோட்டு, உன
க்கு விரோதமாகக் கொத்தளங்களை எழுப்பு
வோம்.—அப்போது நீ தாழ்ந்துபோய்த் தரையி ௪
லிருந்து பேசுவாய்; உன் பேச்சுப் பணிந்ததாய்
மண்ணிலிருந்து புறப்பட்டு, உன் சத்தம் அஞ்
சனம் பார்க்கிறவனுடைய சத்தத்தைப்போலத்
தரையிலிருந்து முணுமுணுத்து, உன் பேச்சு
மண்ணிலிருந்து கசுகுசென்றதாக இருக்கும்.—
உன்மேல் வருகிற அந்நியரின் திரள் பொடித் ௫
தூளத்தனையாகவும், பலவந்தரின் திரள் பறந்து
வரும் பதர்களத்தனையாகவும் இருக்கும்; அது
[5]அசுப்பும் தீவிரமுமாய்ச் சம்பவிக்கும்.-இடிகளி ௬
னாலும், பூமி அதிர்தலினாலும், மகா இரைச்சலி
னாலும், பெருங்காற்றினாலும், புசலினாலும், பட்
சிக்கிற அக்கினிச் சுவாலையினாலும் சேனைக
ளின் கர்த்தராலே விசாரிக்கப்படுவாய்.—ஆனா ௭
லும் வலுசிங்கத்தின்மேல் யுத்தம்பண்ணுகிற
சகல சாதிகளுடைய திரளும், அதின்மேலும் அ
தின் அரணின்மேலும் யுத்தம்பண்ணி, அதை இடுக்
கண்செய்கிற அனைவரும் இராத்தரிசனையாகிய
சொப்பனத்தைக் காண்கிறவர்க்கு ஒப்பாயிருப்
பார்கள்.—பசியாயிருக்கிறவன் இதோ புசிக்கி ௮
றேன் என்று சொப்பனம் காண்கிறதற்கு அது
ஒத்ததாய் இருக்கும்;அவன் விழிக்கையில் அவன்
ஆத்துமா வெறுமையே இருக்கும்; அல்லது தாக
மாயிருக்கிறவன், இதோ குடிக்கிறேன் என்று
சொப்பனம் காண்கிறதற்கு ஒத்ததுமாய் இருக்
கும்; அவன் விழிக்கையில், இதோ அவன் விடா
ய்த்தே இருக்கிறான்;அவன் ஆத்துமா தவனத்தோ
டேதானே இருக்கும்; அப்படியே சீயோன் பர்
வதத்துக்கு விரோதமாக யுத்தம்பண்ணுகிற சகல
சாதிகளுடைய திரளுக்கும் இருக்கும்.

தரித்துநின்று திகையுங்கள்; பிரமித்துக் கூப் ௯
பிடுங்கள்; வெறித்து இருக்கிறார்கள், ஆனால் மது
பானத்தால் அல்ல, தள்ளம்பாறுகிறார்கள், ஆ
னால் லொட்டியினால் அல்ல.—ஏனெனில் [6]கர்த் ௰
தர் உங்கள்மேலே கன நித்திரையின் ஆவியை
ஊற்றி, உங்கள் கண்களை அடைத்து, தீர்க்கதரி
சிகளையும், உங்கள் தலைவரையும், ஞானதிருஷ்
டிக்காரரையும் முக்காடு போட்டார். — ஆனது ௰௧
கொண்டு தரிசனம் எல்லாம் உங்களுக்கு முத்தி
ரிக்கப்பட்ட புஸ்தகத்தின் வசனங்களைப்போல
இருக்கும்; அதை வாசிக்க அறிந்திருக்கிற ஒரு
வனுக்கு அதைக் கொடுத்து, நீ இதை வாசி என்

1 ௨ சாமு. ௫. ௨௰.—2 யோசு. ௰. ௰௨.—3 எரே. ௩௨. ௰௯.

4 லூக். ௰௯. ௪௩,௪௪: ௨௧. ௨௰.—5 மத். ௨௪. ௨௭.—6 ௨ ரோ. ௰௧ ௮

றால், அவன், இது எனக்குக் கூடாது, ஏனென்
றால் அது முத்திரித்து இருக்கிறது என்பான்.—
௰௨ அல்லது வாசிக்க அறியாதவனுக்குப் புஸ்தகத்
தைக் கொடுத்து, நீ இதை வாசி என்கிறதைப்
போலும் இருக்கும்; அவன் எனக்கு வாசிக்கத்
தெரியாது என்பான்.
௰௩ [1]இந்தச் சனம் தங்கள் வாயினால் நம்மண்டை
க்குச் சேர்ந்து, தங்கள் உதடுகளினாலே நம்மைக்
கனம்பண்ணியும், அவர்கள் இருதயம் நமக்குத்
தூரமாய் விலகி இருக்கிறபடியினாலும், அவர்
கள் நமக்குப் பயந்திருக்குதல் மனுஷருடைய
கற்பனையின் உபதேசிக்குதலாய் இருக்கிறபடி
௰௪ யினாலும்,—இதோ [2]அவர்கள் ஞானிகளின் ஞா
னம் கெட்டு, அவர்கள் விவேகிகளின் உணர்வு
மறைந்துபோகத்தக்க மகா அதிசயமும் ஆச்சரிய
முமான பிரகாரமாக நாம் இந்தச் சனத்தை நடப்
பித்துக்கொண்டே இருப்போம் என்று ஆண்ட
வர் சொல்லுகிறார்.
௰௫ தங்கள் ஆலோசனையைக் கர்த்தருக்கு மறை
வாக்கும்படிக்கு ஆழமாய் ஒளித்து, தங்கள் கிரி
யைகளை அந்தகாரத்தில் நடப்பித்து, [3]எங்களைக்
காண்கிறவர் யார்? எங்களை அறிகிறவர் யார்? என்
௰௬ கிறவர்களுக்கு ஐயோ!—எத்தனை மாறுபாடாய்
இருக்கிறீர்கள்? குயவன் களிமண்ணுக்குச் சரி
யாக எண்ணப்படுவானோ? உண்டாக்கப்பட்ட
து தன்னை உண்டாக்கினவரைக்குறித்து அவர்
என்னை உண்டாக்கினதில்லை என்றும், உருவாக்
கப்பட்டது தன்னை உருவாக்கினவரைக்குறித்து
அவர் உணரார் என்றும் சொல்லத்தகுமோ?
௰௭ இன்னம் கொஞ்சப்பொழுதிலே லீபனோன்
[4]வயல்வெளியாக மாறுவதும், வயல்வெளி கா
௰௮ டாக எண்ணப்படுவதும் இல்லையோ?—அக்கா
லத்திலே [5]செவிடர் புஸ்தகத்தின் வசனங்களைக்
கேட்பார்கள்; குருடரின் கண்கள் இருளுக்
கும், அந்தகாரத்துக்கும் நீங்கலாகிப் பார்வை
௰௯ அடையும்.—சிறுமையானவர்கள் கர்த்தருக்குள்
மகிழ்ந்துகொண்டேயிருந்து மனுஷரில் ஏழை
கள் இஸ்ரவேலின் பரிசுத்தருக்குள்ளே களிகூ
௨௰ ருவார்கள்.—ஏனெனில், பலவந்தன் அற்று, சக்
௨௧ கந்தக்காரன் இல்லாதேபோவான். — வசனத்தி
லே மனுஷனைப் பாவியாக்கி, [6]வாசலிலே தங்க
ளைக் கடிந்துகொள்ளுகிறவனுக்குக் கண்ணியை
வைத்து, நீதிமானை அந்தரத்திலே துரத்துகிற அக்
கிரமச் செய்கையின் சுறுசுறுப்புக்காரர் அனைவ
ரும் சங்கரிக்கப்படுவார்கள்.

௨௨ ஆகையால், ஆபிரகாமை மீட்டுக்கொண்ட
கர்த்தர் யாக்கோபின் வீட்டாருக்குச் சொல்லு
கிறதாவது: இனி யாக்கோபு வெட்கப்படுவ
தில்லை; இனி அவன் முகம் செத்துப்போவது
௨௩ மில்லை —ஏனெனில் நம்முடைய கரங்களின்
செயலாகிய தன் பிள்ளைகளை அவன் தன் நடுவி
லே காணும்பொழுது, நம்முடைய நாமத்தைப்
பரிசுத்தமாக்குவார்கள்; யாக்கோபின் பரிசுத்
தரை அவர்கள் பரிசுத்தம் ஆக்கி இஸ்ரவேலின்
பராபரனுக்குப் பயப்படுவார்கள்.—மோசமான ௨௪
ஆவியாய் இருந்தவர்கள் உணர்வுள்ள அறிவை
அடைந்து, முறுமுறுப்புக்காரர் உபதேசம் கற்
றுக்கொள்ளுவார்கள்.

## ௩௰. அதிகாரம்.

௧. சனம் எகிப்தின்மேல் நம்பிக்கை வைத்ததற்காகவும், ௮. பராபரனுடைய வார்த்தையை அலட்சியம்பண்ணினதற்காகவும், தீர்க்கதரிசி அவர்களைப் பயமுறுத்தினது. ௰௮. தமது சபையின்மேல் இருக்கும் பராபரனுடைய இரக்கங்களும், ௨௭. அவருடைய சினத்தினால் அசூரியாவுக்கு வந்த அழிவுக்குச் சனத்தின் களிப்பும் சொல்லப்பட்டது.

பாவத்தின்மேலே பாவத்தைக் கூட்டும்படிக்கு ௧
நம்மை அல்லாமல் ஆலோசனைபண்ணி, நமது
ஆவியை அல்லாமலே தங்களை மூடிக்கொள்ளப்
பார்க்கிறவர்களும், — பார்வோனின் பலத்தினா ௨
லே பலக்கவும், எகிப்தினுடைய நிழலில் ஒதுங்
கவும் வேண்டும் என்று நம்முடைய வாக்கைக்
கேளாமல் எகிப்தில் இறங்கிப்போகிறவர்களு
மாகிய [7]முரட்டாட்டமான பிள்ளைகளுக்கு
ஐயோ! என்று கர்த்தர் சொல்லுகிறார். — ஏனெ ௩
னில், உங்களுக்குப் பார்வோனுடைய பெலன்
வெட்கமாகவும், எகிப்தினுடைய நிழலொதுக்கு
இலச்சையாகவும் இருக்கும். — அவர்கள் பிர ௪
புக்கள் சோவானிலே போய், அவர்கள் தானாபதி
கள் ஆனேஸ்மட்டும் சேருகிறார்கள்.—ஆனால் ௫
தங்களுக்குச் சகாயத்துக்கும் பிரயோசனத்துக்
கும் அல்ல, வெட்கத்துக்கும் நிந்தைக்குமே உத
வும் சனத்தினாலே அனைவரும் வெட்கப்படுவார்
கள்.—தெற்கே போகிற மிருகசீவன்களின் நிமித் ௬
தம் சுமரும் பாரமாவது: துஷ்டசிங்கமும், கிழச்
சிங்கமும், பறக்கிற காலகோடி விஷமும் வருகி
றதும், நெருக்கமும் இடுக்கமும் அடைவிக்கிற
துமான தேசத்துக்கு, அவர்கள் கழுதை மறிகளு
டைய முதுகின்மேல் தங்கள் ஆஸ்திகளையும், ஒட்
டகங்களுடைய முதுகின்மேலே தங்கள் பொக்
கிஷங்களையும், தங்களுக்கு உதவாத சனத்தண்
டைக்கு ஏற்றிக்கொண்டுபோகிறார்கள்.—ஏனெ ௭
னில், எகிப்தியர் சகாயம்பண்ணுவது மாயையும்
வீணுமாய் இருக்கும்; ஆகையால், [8]இராகாப்பு
டைய மனுஷர் சும்மா இருப்பார்களென்று அத
ற்காகக் கூறுகிறோம்.
இப்போதும், இது பிற்காலத்துக்கும் என்றென் ௮
றைக்கும் இருக்கும்படிக்கு, நீ போய், இதை அவர்
களுக்குமுன்பாக ஒரு பலகையில் எழுதி, ஒரு
புஸ்தகத்திலே வரை. — ஏனெனில், இவர்கள் ௯
கலகமுள்ள சனமும், புளுகுகிற பிள்ளைகளும்,
கர்த்தருடைய வேதத்தைக்கேட்க மனதில்லாத
புத்திரருமாய் இருக்கிறார்கள்.—அவர்கள் பார்க்கி ௰
றவர்களுடனே, நீங்கள் பார்க்கவேண்டாம் என்
றும், ஞானதிருஷ்டியுள்ளவர்களுடனே, நீங்கள்
எங்களுக்கு நிதானமான தரிசனமாய்த் தரிசனம்
சொல்லாமல், எங்களுக்கு இதமான சொற்களை

1 மத். ௰௫. ௭-௯. மாற். ௭. ௬, ௭. 3 சங். ௯௪. ௭.
2 ௧ கொரி. ௧. ௰௯, ௨௰. 4 ஏசா. ௩௨. ௰௫.—5 மத். ௰௧. ௫.
6 ஆமோ. ௫. ௰. 8 சங். ௮௭ ௪: ௮௯. ௰.
7 ஏசா. ௧. ௨.

உரைத்து, எத்துவாதத்தமாய்த் திஷ்டியுங்கள்
௰௧ என்றும்,—நீங்கள் வழியைவிட்டு, பாதையை
விலகி, இஸ்ரவேலின் பரிசுத்தரை எங்கள்முன்
பாக இராமல் ஓயப்பண்ணுங்கள் என்றும் சொல்
௰௨ லுகிருர்கள். — ஆனதுகொண்டு நீங்கள் இந்த
வார்த்தையை வெறுத்து, இடுக்கமும் தாறுமாறும்
செய்கிறதை நம்பி, அதைச் சார்ந்துகொள்ளுகிற
௰௩ படியினலே,—இந்த அக்கிரமம் உங்களுக்கு,
உயர்ந்த சுவரில் விழப் பிதுங்குகிறதும், அசுப்
பாய் ஒரு நிமிஷத்தில் இடியப்போகிறதுமான
வெடிப்பைப்போல இருக்கும் என்று இஸ்ரவே
௰௪ லின் பரிசுத்தர் சொல்லுகிருர்.—அவர்களைத் தப்
பவிடாமல், நொறுக்கப்பட்ட குயவர் பாண்
டத்தினுடைய உடைதலுக்குச்சரியாய் அவர்
களை உடைப்பார்; நொறுங்கின துண்டுகளில்,
அடுப்பிலே நெருப்பு எடுக்கிறதற்கு, அல்லது
ஒரு பள்ளத்திலே தண்ணீர் மொள்ளுகிறதற்கு
௰௫ ஒரு ஓடாகிலும் அகப்படாதேபோம்.—ஏனெ
னில் மனம்திரும்பி அமர்ந்து இருந்தீர்களானல்
இரட்சிக்கப்படுவீர்கள்; அமரிக்கையிலும், நம்
பிக்கையிலும் [1]உங்கள் பெலன் இருக்கும் என்று
இஸ்ரவேலின் பரிசுத்தராய் இருக்கிற கர்த்தரான
பராபரன் சொன்னர்; [2]ஆனல் நீங்கள் அப்ப
௰௬ டிச்செய்ய மனதாய் இராமல்,—அப்படி அல்ல,
குதிரைகளின்மேல் ஏறி ஓடிப்போவோம் என்கி
றீர்கள்; ஆனதுகொண்டு ஓடிப்போவீர்கள்; வே
கமான வாகனங்களின்மேல் ஏறிப்போவோம்
என்கிறீர்கள்; ஆனதுகொண்டு உங்களைத் துரத்து
௰௭ கிறவர்கள் வேகமாய் இருப்பார்கள்.—[3]நீங்கள்
உச்சிமலையின்மேல் ஒரு பாய்மரத்தைப்போல
வும், மேட்டின்மேல் ஒரு கொடியைப்போலவும்
மீந்து இருக்குமட்டாக [4]ஒருவனுடைய உதம்பு
தலினல் ஆயிரம்பேரும், ஐந்துபேருடைய உறு
௰௮ முதலினல் அனைவரும் ஓடிப்போவீர்கள்.—ஆ
னல் உங்களுக்கு இரங்குவதற்காகத்தானே, கர்த்
தர் காத்திருந்து உங்கள்மேல் மனது உருகுவதற்
காகத்தானே உயருவார்; ஏனெனில் கர்த்தர் நியா
யத்தின் பராபரனய் இருக்கிருர்; [5]அவருக்குக்
காத்திருக்கிற அனைவரும் பாக்கியவான்கள்.

௰௯ ஏனெனில், சீயோனிலும் எருசலேமிலும்
சனம் வாசமாய் இருப்பதுண்டு; அழுதுகொண்
டே இராய்; உன் கூப்பிடுதலின் சத்தத்திற்கு அ
வர் உன்மேல் இரங்கவே இரங்கி, அதைக் கேட்
டவுடனே உனக்கு மறுஉத்தரவு கொடுப்பார்.—
௨௰ ஏனெனில், ஆண்டவர் உங்களுக்கு நெருக்கத்
தின் அப்பத்தையும், ஒடுங்குதலின் தண்ணீரை
யும் கொடுத்திருக்கிருர்; ஆனல் இனி உன் போ
தகர்கள் பறந்துபோவதில்லை; உன் கண்கள் உன்
போதகர்களைக் காண்கிறவைகளாய் இருக்கும்.
௨௧ நீங்கள் வலதுபுறமாக, அல்லது இடதுபுற
மாக விலகும்போது, வழி இதுவே, இதிலே நட
வுங்கள் என்று உனக்குப் பிறகாலே சொல்லும்
௨௨ வார்த்தையை உன் காதுகள் கேட்கும்.—உன்
வெள்ளிச்சுரூபங்களின் பூச்சையும்,உன்பொன்
வார்ப்பான உன் ஆடை ஆபரணத்தையும் தீட்
டாக எண்ணி, அவைகளைத் தீட்டமானதைப்
போலச் சிதற எறிந்து, அதைச் சீ! போ என்
பாய்.—அப்போது நீ நிலத்தில் விதைக்கும் உன் ௨௩
விதைக்கு அவர் மழையையும், நிலத்தின் பலனு
கிய ஆகாரத்தையும் கொடுப்பார்; அது கொழுப்
பும் புஷ்டியுமாய் இருக்கும்; அக்காலத்திலே
உன் ஆடுமாடுகள் விஸ்தாரமான மேய்ச்சலுள்ள
தலத்திலே மேய்ந்து,—நிலத்தை உழுகிற எருது ௨௪
களும் கழுதை மறிகளும், முறத்தாலும் தூற்றுக்
கூடையாலும் புடைக்கப்பட்ட உருசியுள்ள கப்
பிகளைத் தின்னும்.—கோபுரங்கள் விழும் பெரிய ௨௫
கொலையின் நாளிலே,உயரமான சகல மலையின்
மேலும், உயர்ச்சியான சகல மேட்டின்மேலும்
ஆறுகளும், வாய்க்கால்களும் உண்டாய்,—கர்த் ௨௬
தர் தமது சனத்தின் நொரியலைக் கட்டி, அதின்
அடிக்காயத்தைக் குணமாக்கும் நாளிலே, சந்திர
னுடைய வெளிச்சம் சூரியனுடைய வெளிச்சத்
தைப்போலவும், சூரியனுடைய வெளிச்சம் ஏ
ழத்தனையாய் ஏழு பகல்களின் வெளிச்சத்தைப்
போலவும் இருக்கும்.

இதோ கர்த்தருடைய நாமம் தூரத்திலிருந்து ௨௭
வரும்; அவருடைய கோபம் எரிகிறதும், பாரம்
கனக்கிறதுமாய் இருக்கும்; அவருடைய உதடு
கள் சினத்தால் நிறைந்தவைகள்; அவருடைய
நாவு பட்சிக்கிற அக்கினியைப்போல இருக்
கும்.—மாயைக்கான சல்லடையிலே சாதிகளை ௨௮
அரிக்கும்படிக்கு அவர் ஊதும் சுவாசம் கழுத்து
மட்டும் எட்டுகிற ஆற்றின் வெள்ளத்தைப்போ
லவும், சனசதளங்களுடைய தாடைகளிலே
போட்டு, அவைகளை அலைக்கழிக்கிற கடிவாளத்
தைப்போலவும் இருக்கும். — பண்டிகை ஆச ௨௯
ரிக்கப்படுகிற இராத்திரியிலே பாடுகிறதற்குச்
சரியான பாட்டும், கர்த்தருடைய பர்வதமாகிய
இஸ்ரவேலின் கன்மலையண்டைக்குப்போக நாக
சுரத்தோடே நடந்துவருகிறதற்குச் சரியான
மனமகிழ்ச்சியும் உங்களுக்கு இருக்கும்.—கர்த் ௩௰
தர் [6]தமது சத்தத்தின் பிரஸ்தாபத்தைக் கேட்கப்
பண்ணி, கோபத்தின் சினத்தினலும், பட்சிக்
கிற அக்கினிச்சுவாலையினலும், இடி, பெரு
வெள்ளம், கல்மழையினலும் தமது புயத்தின் இ
றங்குதலைத் தெரிவிப்பார்.—ஏனெனில், மிலா ௩௧
றினல் அடித்த அசூர் கர்த்தருடைய சத்தத்தின
லே நொறுங்குண்பான்.—சம்பவிப்பது ஏதென ௩௨
ருல், உறுதிப்பெலனை கோலுக்கு விரோதமாக
வலிய யுத்தங்களால் யுத்தம்பண்ணப்பட்ட பிற்
பாடு, அது கடந்துவந்த இடங்களில் எல்லாம் கர்
த்தர் அவைகளுக்கு இளைப்பாறுதல் கொடுத்தப
டியினலே, மேளங்களாலும், சுரமண்டலங்களா
லும் கொண்டாடப்படும்.—ஏனெனில், அக்கி ௩௩
னிப்பள்ளம் நேற்றே ஆயத்தமாய் இருக்கிறது;
இராசாவுக்கும் அது சேகரமாய் இருக்கிறது;

1 சங். ௩௭. ௭. ௨ கொரி. ௰௨. ௯, ௰.—2 மத். ௨௩. ௩௭.—3 சங். ௰௭. ௯.

4 ௫ மோ. ௩௨. ௩௰.—5 எரே. ௰௭. ௭.—6 சங். ௨௯. ௩: ௭௬. ௯-௰௧.

அதை ஆழமும் அகலமுமாக்கினார்; அதின் வேகுதலுக்கு அக்கினியும், விறகுகளும் மிகுதியாய் இருக்கின்றன; கர்த்தரின் சுவாசம் கந்தகத்தீயைப்போல அதைக் கொளுத்தும்.

## ௩௰௧. அதிகாரம்.

௧. பாபரானவிட்டு எகிப்தியரை நம்பிச் சபிக்கப்பட்ட மடமையைத் தீர்க்கதரிசி காட்டினது. ௬. மனந்திரும்பத் தூண்டினது ௮. அசூரியர் விழுவதைக் காட்டினது.

௧ சகாயம் அடைய இஸ்ரவேலுடைய பரிசுத்தரைச் சார்ந்துகொள்ளாமலும், கர்த்தரைத் தேடாமலும், எகிப்துக்கு இறங்கிப்போய், குதிரைகளைச்சார்ந்து, இரதங்களை அவைகள் திரளானவை என்றும், இராவுத்தரை அவர்கள் மகா பலசாலிகள் என்றும் நம்பி இருக்கிறவர்களுக்கு ஐயோ!—
௨ அவருமோ என்றால் ஞானமுள்ளவர்; அவர் தம்முடைய வார்த்தைகளை மறுக்காமல், தீங்கை வரப்பண்ணி, தீமைசெய்கிறவர்களின் வீட்டுக்கும், அக்கிரமக்காரரின் சகாயத்துக்கும் விரோத
௩ மாக எழும்புவார்.—ஏனெனில், எகிப்தியர் தெய்வம் அல்ல, மனுஷர்தானே; அவர்களுடைய குதிரைகள் ஆவி அல்ல, மாம்சம்தானே; கர்த்தர் தமது கரத்தை நீட்டுவார்; அப்போது சகாயம் செய்கிறவனும் இடறி, சகாயம்செய்விந்துக்கொள்ளுகிறவனும் விழுந்து, அனைவரும் ஏகமாய்
௪ அழிந்துபோவார்கள். — ஏனென்றால், கர்த்தர் என்னுடனே சொன்னதாவது: சிங்கமும் சிங்கக்குட்டியும் தங்கள் இரையின்மேலே கர்ச்சித்து, தங்களுக்கு விரோதமாய்க் கூப்பிடுகிற திரளான மேய்ப்பரின் சத்தத்தினாலே கலங்காமலும், அவர்கள் அமளியினாலே தாழாமலும் இருக்கிறதுபோலே, [1]சேனைகளின் கர்த்தர் சீயோனின் பர்வதத்துக்காகவும், அதின் மேட்டுக்காகவும் யுத்
௫ தம்பண்ண இறங்குவார்.—பறந்து காக்கிற பட்சிகளைப்போலே சேனைகளின் கர்த்தர் எருசலேமின்மேல் ஆதரவாக இருப்பார்; [2]அவர் அதைக் காப்பாற்றித் தப்பப்பண்ணுவார்; அவர் கடந்து வந்து அதை விடுவிப்பார்.

௬ இஸ்ரவேலின் புத்திரர் தீரப்புரண்டு விட்டுவிட்ட அவரண்டைக்கு நீங்கள் திரும்புங்கள்.—
௭ ஏனெனில் பாவமாக உங்கள் கைகள் உங்களுக்குச் செய்திருந்த தம்தம் வெள்ளி விக்கிரகங்களையும், தம்தம் பொன் விக்கிரகங்களையும் அவரவர்
௮ அக்காலத்திலே [3]வெறுப்பார்கள்.—வீரனுடைய பட்டையம் அல்லாத பட்டையத்தாலே அசூர் விழுவான்; நீசனுடைய பட்டையம் அல்லாத பட்டையமே அவனைப் பட்சிக்கும்; அவன் பட்டையத்துக்குத் தப்ப ஓடுவான்; அவன் வாலிபர்
௯ கலந்துபோவார்கள்.—அவர்களுடைய கல்மலையத்தினால் ஒழிந்துபோம்; அவர்களுடைய பிரபுக்கள் கொடியைக் கண்டு கலங்குவார்கள் என்கிறதை, சீயோனில் நெருப்பையும் எருசலேமில் அடுப்பையுமுடைய கர்த்தர் சொல்லுகிறார்.

## ௩௰௨. அதிகாரம்.

௧. கிறிஸ்துவின் இராச்சியத்தால் வரும் ஆசீர்வாதம். ௯. பாழ்க்கடிப்பை முன்னுறத் தெரிவித்தது. ௰௫. அதின் மீட்சி வாக்குத்தத்தம்பண்ணப்பட்டது.

இதோ, [4]நீதியாக ஒரு இராசா அரசாளுவார்; ௧
பிரபுக்களும் நியாயமாகத் துரைத்தனம்பண்ணு
வார்கள்.—அவர் [5]காற்றுக்கு ஒதுக்காகவும், பெ ௨
ருவெள்ளத்துக்கு மறைவிடமாகவும், வறண்ட
நிலத்துக்கு வாய்க்கால்களாகவும், விடாய்த்த பூ
மிக்குப் பெருங்கல்மலையின் நிழலாகவும் இருப்
பார்.—அப்போது காண்கிறவர்களின் கண்கள் ௩
திரும்பிப்பார்ப்பதில்லை; கேட்கிறவர்களின் செ
விகள் கவனித்தே இருக்கும்.— பதறுகிறவர்க ௪
ளின் இருதயம் அறிவு உண்டாக உணர்ந்து, தெற
றுவாயருடைய நாக்கு மகா தெளிவாய்ப் பேசத்
தீவிரித்திருக்கும். — இனி மூடன் சற்குணன் ௫
என்னப்படுவதுமில்லை; பிசினித்தனக்காரன் உ
தாரன் என்று சொல்லப்படுவதுமில்லை.—ஏனெ ௬
ன்றால் மூடன் மாயம்பண்ணுவதற்கும், கர்த்த
ருக்கு விரோதமாய்த் தப்பிதம் பேசுவதற்கும்,
பசியுள்ள ஆத்துமாவை வெறுமையாக வைத்து,
தாகமுள்ளவனுக்குத் தாகம் அடங்காதேபோகப்
பண்ணுவதற்குமாகப் [6]பயித்தியத்தைப் பேசுகி
றான்; அவன் இருதயம் அநியாயத்தை நடப்பிக்
கும்.—பிசினித்தனக்காரனுடைய எத்தனங்களும் ௭
பொல்லாதவைகள்; தரித்திரன் நியாயமாய்ப்
பேசும்போது அவன் கள்ள வார்த்தைகளாலே
சிறுமையானவர்களைக் கெடுப்பதற்காகத் தீவினை
களை யோசிக்கிறான்.—சற்குணனோ சற்குணமா ௮
னவைகளை யோசிக்கிறான்; சற்குணமானவைக
ளிலே நிலைத்தும் இருக்கிறான்.

சுகஜீவியாயிருக்கிற ஸ்திரிகளே, எழுந்திருந்து ௯
என் சத்தத்தைக் கேளுங்கள்; நிர்விசாரமான
குமாரத்திகளே, என் வசனத்துக்குச் செவிகொ
டுங்கள்.—நிர்விசாரிகளே, வருஷத்துக்கு அதிக ௰
மான நாள்களாய்த் தத்தளிப்பீர்கள்; ஏனெனில்
திராட்சம்பலன் அற்றுப்போய், அறுப்பு வராதே
போம். — சுகஜீவிகளே, நடுங்குங்கள்; நிர்விசா ௰௧
ரிகளே, தத்தளியுங்கள்; உடையைக் களைந்து
உரிந்துபோட்டு அரையில் இரட்டைக் கட்டிக்
கொள்ளுங்கள்.-விருப்பமான வயல்களின்நிமித் ௰௨
தமும், கனிதந்திருந்த திராட்சச்செடிகளின்நிமி
த்தமும் மார்படித்துப் புலம்புவார்கள்.-என் சன ௰௩
த்தினுடைய பூமியின்மேலும், களிகூர்ந்திருந்த
பட்டணத்தினுடைய எல்லாச் சந்தோஷ வீடுக
ளின்மேலும்கூட, முள்ளுச்செடியும் முள்ளுக்
காடும் முளைக்கும்.-ஏனெனில் அரமனை பாழாய் ௰௪
விடப்பட்டு, ஊரின் சந்தடி விட்டுப்போய்,
மேடும், துருக்கமும், என்றைக்கும் காட்டுக்கழு
தைகளின் சந்தோஷமும், மந்தைகளின் மேய்ச்
சலுமான குகைகளாய் இருக்கும்.—[7]நம்முடை ௰௫
யமேல் உன்னதத்திலிருந்து ஆவி ஊற்றப்படு
மட்டுந்தானே; அப்போது [8]வனாந்தரம் பயிர்

1 ௨ இரா. ௰௯. ௩௰.
2 ௰ மோ. ௩௰. ௨-௰௩.
3 ஏசா. ௨. ௨௰ : ௩௰. ௨௨
4 சங். ௪௰. ௭, அ. எரே. ௨௰
௰, ௩ : ௩௩. ௰௰.௰௩.௪௪ரி.௩.௩.
5 ஏசா.௨௰.௪.—6 லூக்.௰௰.௨.
7 ஏசே. ௩௩. ௨௩.
8 யோவா. ௩. ௩.

நிலமாகி, பயிர்நிலம் காடாக எண்ணப்படும்.—
௰௬ வனாந்தரத்திலே நியாயம் வாசமாய் இருந்து, பயிர்
௰௭ நிலத்திலே நீதி தங்கித்தரிக்கும்.—நீதியின் செய்
கை சமாதானமும், நீதியின் பலன் நித்தியகால
மாய் அமரிக்கையும் சுகமுமாய் இருக்கும்.—
௰௮ என் சனம் சமாதான தாபரத்திலும், பதனவாசஸ்
தலங்களிலும், சாங்கோபாங்கமாய்த் தங்கும் இ
டங்களிலும் குடியிருக்கும். — ஆனால் காட்டி
டங்களிலே கல்மழை பெய்யும் அந்தப்பட்ட
ணம் மகா தாழ்வாய்த் தாழ்ந்துபோம்.—தண்ணீர்
களுடைய ஓரங்களில் எங்கும் மாடுகளையும்,
கழுதைகளையும் போகவிட்டு விதைவிதைக்கிற
நீங்கள் பாக்கியவான்கள்

## ௩௩. அதிகாரம்.

௧. பாரபாதுடைய திருச்சபையின் சத்துருக்களுக்கு விரோதமாக வரும் அவருடைய நியாயத்தீர்ப்புகள். ௰௩. தேவபத்தியுள்ளவர்களுடைய சதந்தரங்கள்.

௧ பாழ்க்கடிக்கப்படாதிருந்தும் பாழ்க்கடிக்கிற
வனும், உனக்குத் துரோகம்பண்ணாதிருக்கிறவர்
களுக்குத் துரோகம்பண்ணுகிறவனுமாகிய உன
க்கு ஐயோ! நீ பாழ்க்கடித்து முடிந்தபின்பு
[1]பாழ்க்கடிக்கப்படுவாய்; நீ துரோகம்பண்ணித்
தீர்ந்தபின்பு [2]உனக்குத் துரோகம்பண்ணுவார்
கள்.

௨ கர்த்தாவே, எங்களுக்கு இரங்கும்; உமக்குக்
காத்திருக்கிறோம்; தேவரீர் காலையில் அவர்கள்
புயமும், இக்கட்டுக்காலத்தில் எங்கள் இரட்சிப்
௩ புமாய் இரும்.—அமளியின் சத்தத்தினாலே சன
சதளங்கள் அலைந்தோடி, [3]நீர் உயருகிறதினாலே
சாதிகள் சிதற அடிக்கப்படுகிறார்கள்.

௪ பச்சைக்கிளிகள் சேர்க்குமாப்போலே உங்கள்
கொள்ளை சேர்க்கப்படும்; வெட்டுக்கிளிகள் குதி
த்துத்திரியுமாப்போலே அதின்மேலே குதித்துத்
௫ திரிவதுண்டு.—கர்த்தர் உயர்ந்தவர்; ஏனெனில்,
உன்னதத்தில் வாசமாய் இருக்கிறார்; சீயோனை
நியாயத்தினாலும், நீதியினாலும் நிரப்புகிறார்.—
௬ பலத்த இரட்சிப்புகளும், ஞானமும், அறிவும்,
உன் காலங்களுடைய உறுதியாய் இருக்கும்; கர்
த்தருக்குப் பயப்படுதலே அதின் பொக்கிஷம்.

௭ இதோ அவர்கள் தானாபதிகள் வெளியிலே
அலறுகிறார்கள்; சமாதானத்துக்கு அனுப்பப்பட்
௮ டவர்கள் மனங்கசந்து அழுகிறார்கள்.—பாதை
கள் பாழாயின; வழிகளில் நடப்பு ஓய்ந்தது;
உடம்படிக்கையை அவத்தமாக்குகிறான்; ஊர்
களை இகழ்ச்சிபண்ணுகிறான்; மனுஷனை எண்
௯ ணாதேபோகிறான்.—பூமி துக்கித்து விடாய்த்தி
ருக்கிறது; லீபனோன் வெட்கி வாடுகிறது; சா
ரோன் வனாந்தரத்துக்கு ஒப்பாகிறது; பாசா
னும், கர்மேலும் பாழ்க்கடிக்கப்படுகிறது.

௰ இப்போது எழுந்திருப்போம்; இப்போது உயர்
வோம்; இப்போது உயர எழும்புவோம் என்று
௰௧ கர்த்தர் சொல்லுகிறார்.—[4]செத்தையைக் கர்ப்பந்
தரித்துத் தாளடியைப் பெறுவீர்கள்; உங்கள் ஆவி
அக்கினியைப்போல உங்களையே பட்சிக்கும்.—
உன் சனசதளங்கள் சுண்ணாம்பு சுடப்படுகிற ௰௨
தற்கு ஒப்பாகி, வெட்டுண்ட முள்ளுச்செடிக
ளைப்போலே தீயில் எரிக்கப்படுவார்கள்.

தூரத்தாரே, நாம் செய்கிறதைக் கேளுங்கள்; ௰௩
சமீபத்தாரே, நமது பராக்கிரமத்தை அறியுங்கள்
என்கிறார்.—சீயோனில் இருக்கிற பாவிகள் திகை ௰௪
க்கிறார்கள்; மாயக்காரரை நடுக்கம்பிடிக்கிறது,
நம்மில் பட்சிக்கும் அக்கினிக்குமுன்பாகத்தரித்
திருப்பவன் யாவன்? நம்மில் நித்திய தழலுக்கு
முன்பாகத் தாபரிப்பவன் யாவன் என்கிறார்கள்.

[5]நீதியாய் நடந்து, செம்மையானவைகளைப் ௰௫
பேசி, இடுக்கண்செய்தலின் ஆதாயத்தை வெ
றுத்து, பரிதானங்களைப் பிடிக்காதபடிக்குத் தன்
கைகளை உதறி, இரத்தயோசனைகளைக் கேளாதப
டிக்குத் தன் செவியை அடைத்து, பொல்லாப்
பைக் காணாதபடிக்குத் தன் கண்களை மூடுகிறா
னே.—அவன் உயரங்களில் வாசம்பண்ணுவான்; ௰௬
கன்மலைகளின் அரண்கள் அவனுடைய உயர்ந்த
அடைக்கலம்; அவன் அப்பம் அவனுக்குக் கொ
டுக்கப்படும்; அவன் தண்ணீர் அவனுக்கு நிச
மாய் இருக்கும்.—உன் கண்கள் இராசாவை [6]அ ௰௭
வருடைய சவுந்தரியத்திலே கண்டு, தேசத்தைத்
தூர எல்லைகளுள்ளது என்று பார்க்கும்.

வேதபாரகன் எங்கே? [7]நிறுத்துப்பார்த்தவன் ௰௮
எங்கே? கோபுரங்களை எண்ணினவன் எங்கே?
என்று உன் இருதயம் திகைப்புடன் தியானிக்
கும். — கேட்கக்கூடாதபடிக்கு அடக்கமான ௰௯
உதடும், உணரக்கூடாதபடிக்கு ஒருவிதமான
நாவுமுள்ள ஒட்டாரமான சனத்தை இனிக்கா
ணாய்.—[8]நம்முடைய ஆசரிப்பின் பட்டணமா ௨௰
கிய சீயோனை நோக்கிப்பார்; உன் கண்கள்
எருசலேமை அமரிக்கையான தாபரமாகவும்,
பேர்க்கப்படாத கூடாரமாகவும் காணும்; இனி
அதின் கூர்ச்சுகள் என்றைக்கும் பிடுங்கப்படுவ
தும் இல்லை; அதின் கயிறுகளில் ஒன்றும் அறுந்
துபோவதும் இல்லை. — ஏனென்றால் அங்கே ௨௧
கர்த்தர் நமக்கு மகிமையுள்ளவராய் இருப்பார்;
அது மகா அகலமான நதிகளும், ஆறுகளுமுள்ள
தலமாய் இருக்கும்; வலிக்கிற படவு அங்கே
ஓடுவதும் இல்லை; பெரிய கப்பல் அங்கே கடந்
துவருவதும் இல்லை.—ஏனெனில் [9]கர்த்தர் நம் ௨௨
முடைய நியாயாதிபதியும், கர்த்தர் நம்முடைய
நியாயநெறியாளனும், கர்த்தர் நம்முடைய இரா
சாவுமானவர்; அவர் நம்மை இரட்சிப்பார்.

உன் கயிறுகள் தளர்ந்துபோம்; அப்படியே அ ௨௩
வைகள் தங்கள் பாய்மரத்தைக் கெட்டிப்படுத்த
வும், பாயை விரிக்கவுமாட்டாது; அப்போது திர
ளான கொள்ளை உடைமை பங்கிடப்படும்; சப்
பாணிகள் முதலாய்க் கொள்ளையாடுவார்கள்.—
வியாதிப்பட்டு இருக்கிறேன் என்று குடியான ௨௪

1 ஏசா. ௨௧. ௨.
2 ஏசா. ௨௪. ௧௬.
3 சங். ௪௮. ௨.—4 சங். ௭. ௰௪.
5 சங். ௰௫. ௨. மீ: ௨௪ ௪, ௫ மத்.
௫. ௫—௮.—6 சங். ௪௫. ௧, ௪. ௧—௭. வெளி. ௨௧. ௧.—9 ௨ரோ.
7 ௧ கொரி. ௧. ௨௰.—8 சங். ௭௨. ௨. ௮. ௧௧, ௧௪.

வன் ஒருவனும் சொல்வதில்லை; அதில் வாச
மாய் இருக்கிற சனத்தின் அக்கிரமம் மன்னிக்
கப்பட்டிருக்கும்.

## ௩௪. அதிகாரம்.

க. தமது திருச்சபையின் பழிவாங்குதலைச் செலுத்தும் பராபரனுடைய நியாயத்தீர்ப்புகள். ௰க. அதன் சத்துருக்களின் பாழ்க்கடித்தல். ௰சு. தீர்க்கதரிசனம் தவறாது என்பது.

க சாதிகளே, கேட்கிறதற்குக் கிட்டிவாருங்கள்;
சனசதளங்களே, கவனியுங்கள்; பூமியும் அதின்
நிறைவும், பூச்சக்கரமும் அதினுடைய எல்லாப்
உ பிறப்பும் கேட்கக்கடவன.—ஏனெனில் கர்த்த
ருக்கு எல்லாச் சாதிகளின்மேலும் [1]கடுங்கோப
மும், அவைகளுடைய [2]எல்லாச் சேனையின்மே
லும் உக்கிரமும் இருக்கின்றது; அவைகளைச்
சங்காரத்துக்கு நியமித்து, கொலைக்கு ஒப்புக்
௩ கொடுக்கிறார். — அவர்களிலே கொலைசெய்யப்
பட்டவர்கள் எறியுண்டு கிடப்பார்கள்; அவர்
கள் பிரேதங்களுடைய நாற்றம் கிளம்பிப்போம்;
அவர்கள் [3]இரத்தத்தினாலே மலைகள் கரையும்.—
௪ [4]வானத்தின் சேனையெல்லாம் வாடி, வானங்
கள் புஸ்தகச்சுருளைப்போலச் சுருட்டப்பட்டு,
அவைகளின் சேனையெல்லாம் இலைகள் திராட்
சச்செடியிலிருந்து உதிருமாப்போலவும், அத்தி
மரத்தின் காய்கள் உதிருமாப்போலவும் உதிர்ந்து
௫ விழும்.—ஏனெனில், வானங்களில் நம்முடைய
பட்டையம் வெறித்தது; இதோ, [5]ஏதோமின்
மேலும், நாம் சங்காரத்துக்கு நியமித்த சனத்தின்
௬ மேலும், அது நியாயஞ்செய்ய இறங்கும்.—கர்த்
தருடைய பட்டையம் இரத்தத்தால் நிறைந்த
தும், ஆட்டுக்குட்டிகள் கடாக்களுடைய இரத்
தத்தின் கொழுப்பினாலும், ஆட்டுக்கடாக்களு
டைய குண்டிக்காய்களின் கொழுப்பினாலும்
நிணத்ததுமாம்; ஏனெனில், போத்ஸ்ராவிலே
கர்த்தருக்குப் பலியிடுதலும், ஏதோம்தேசத்திலே
௭ பெரிய சங்காரம்செய்தலும் உண்டு.—அப்போது
அவைகளோடேகூடக் காண்டாமிருகங்களும்,
வலுவான எருதுகளோடேகூடக் காளைகளும்
இறங்கி மடியும்; அவர்கள் தேசம் இரத்தப்பாய்ச்
சலாகி, அவர்கள் மண் நிணத்தினாலே கொழுக்
௮ கும்.—ஏனெனில், சீயோனுடைய வழக்கின்
நிமித்தம் அது கர்த்தர் [6]நீதியைச் சரிக்கட்டுகிற
நாளும், பதிலுக்குக் கொடுக்கிற வருஷமுமாய்
௯ இருக்கும்.—[7]அதின் ஆறுகள் பிசினாகவும், அதின்
மண் கந்தகமாகவும் மாறி, அதின் நிலம் எரிகிற
௰ கிலாய்ப்போம்.—இரவும்பகலும் அது அவியா
து;[8]அதின் புகை என்றென்றைக்கும் எழும்பும்;
தலைமுறைதலைமுறையாக அது பாழாய் இருக்
கும்; சதாகாலம் சதாகாலமாக அதையாரும்கடந்
௰க துபோவதில்லை.—[9]நாரையும் முள்ளம்பன்றியும்
அதைச் சுதந்தரிக்கும்; ஆந்தையும் காக்கையும்
அதிலே குடியிருக்கும்; அதின்மேல் வெட்டவெ
ளியின் நூலையும், வெறுமையின் தூக்கையும்
பிடிப்பார்.—அதின் மேற்குலத்தாரை இராச்சிய ௰உ
பாரத்துக்கு அழைத்தால், அங்கே அவர்களில்
யாரும் இல்லை; அதின் பிரபுக்கள் அனைவரும்
ஒன்றும் இல்லை.—அதின் அரமனைகளில் முள் ௰௩
ளுச்செடிகளும், அதின் கோட்டைகளிலே கா
ஞ்சொறிகளும், முள்ளுப்பூண்டுகளும் முளைக்
கும்; அது வலுசர்ப்பங்களின் தாபரமும், கோட்
டான்களின் கொல்லையுமாய் இருக்கும்.—அங் ௰௪
கே வனாந்தர சீவன்களும் ஓரிகளும் ஒன்றுக்கு
ஒன்று சந்தித்து, பேயைப் பேய் கூப்பிடும்; அங்
கே இராக்குருவிகளும் தங்கி, தங்கள் தாவைக்
கண்டடையும்.—அங்கே வல்லூறு கூடுகட்டி, ௰௫
முட்டையிட்டு, குஞ்சுபொரித்து, தன் நிழலி
லே கூட்டிக்கொள்ளும்; அங்கே கூளிகளும்
சோடுசோடாகச் சேரும்.

கர்த்தருடைய புஸ்தகத்திலே தேடி வாசி ௰௬
யுங்கள்; இவைகளில் ஒன்றும் குறையாதிருப்ப
தில்லை; இதுவும் அதுவும் காணாதிருப்பதில்லை;
ஏனெனில், அவர் தமது வாயினாலே அதைக் கற்
பித்தார்; அவருடைய ஆவியே அவைகளைச்
சேர்க்கும்.—அவரே அவைகளுக்குப் சீலிபோ ௰௭
டுகிறார்; அவருடைய கையே அதை அவைக
ளுக்கு அளவுநூலாய்ப் பகிர்ந்துகொடுக்கும்;
அவைகள் என்றைக்கும் அதைச் சுதந்தரித்துத்
தலைமுறைதலைமுறையாக அதிலே சஞ்சரித்து
இருக்கும்.

## ௩௫. அதிகாரம்.

க. கிறிஸ்துவினுடைய இராச்சியத்தின் மகிழ்ச்சியான செழிப்பு. ௭. பலட்சபமுள்ளவர்கள் சுவிசேஷத்தின் நல் ஒழுகத்தினாலும், சுதந்தரங்களினாலும் திடனாக்கப்பட்டது.

வனாந்தரமும் வறண்ட பூமியும் மகிழ்ந்து, கடு க
வெளி களித்து, புஷ்பத்தைப்போலே செழிக்
கும்.—அது செழிக்கவே செழிப்பதுமல்லாமல் உ
பூரிப்பும், கெம்பீரமுமாய்க் களிக்கும்; [10]லீப
னோனின் மகிமையும், கர்மேல், சாரோன் என்ற
வைகளின் அலங்காரமும் அதற்குக் கொடுக்கப்
படும்; அவர்கள் கர்த்தருடைய மகிமையையும்,
நமது பராபரனுடைய முக்கியத்தையும் காண்
பார்கள்.—[11]நெகிழ்ந்த கைகளைத் திடப்படுத்தி, ௩
தள்ளாடுகிற முழங்கால்களைப் பலப்படுத்துங்
கள். — மனங்கலங்கினவர்களுடனே: நீங்கள் ௪
பயப்படாதிருங்கள்; திடன்கொள்ளுங்கள்; இ
தோ, உங்கள் பராபரன் நீதியைச் சரிக்கட்டவும்,
பராபரன் பதிலுக்குக் கொடுக்கவும் வருவார்;
அவர் வந்து உங்களை இரட்சிப்பார் என்று சொல்
லுங்கள். — அப்போது [12]குருடரின் கண்கள் ௫
திறக்கப்பட்டு, செவிடரின் செவிகள் திறவுண்
டுபோகும். — அப்போது சப்பாணி மானைப் ௬
போலக் குதிப்பான்; ஊமையன் நாவும் கெம்பீ
ரிக்கும்; ஏனெனில், வனாந்தரத்திலே [13]தண்ணீர்
களும், கடுவெளியிலே ஆறுகளும் பிரிந்து ஓடும்.—
வெட்டாந்தரை தண்ணீர்த்தடாகமும், வறண்ட ௭

1 வெளி. க.௰எ.–2 வெளி.௰கூ.௰க. 3 வெளி. ௰ச. உ௰.—4 வெளி. க ௰க. ௲.—5 எசா. கக. க. ௲. 6 எசா.சுக.உ.சங்.ககஎ.எ.௲.எரே. இக. க.–7 எசா. ௰க. ௰கூ. 8 வெளி. ௰ச. ௰க: ௰கூ. க.

9 எசா. ௰௩. உக,உஉ. செப். உ.௰ச, ௰உ.–12 எசா.உ௫.எ:உ.க.௰அ: ௰௫. வெளி. ௰அ. உ.-10 எசா. கக. கஉ. க; சஉ. க, எ. மத்.௰க.௫ ௰எ. யோவா. க.௰ச.-11 எபி.௰உ. 13 யோவா. எ. கஅ. கக.

தலம் நீரூற்றுகளுமாகும்; வலியசர்ப்பங்கள் தாப
ரித்துக் கிடந்த இடங்களிலே புல்லும், கொறுக்
௮ கைகளும், நாணலும் உண்டாயிருக்கும்.—அங்
கே [1]உயர்ந்த பாதையும் வழியும் இருக்கும்;அது
பரிசுத்தவழி என்னப்படும்; தீட்டுள்ளவன் அதி
லேநடந்துவருவதில்லை; யார் அந்த வழிகளிலே
நடக்கிறார்களோ அவர்கள் புத்தியீனராய் இருந்
௯ தாலும் திசைகெட்டுப்போவதில்லை. — அங்கே
சிங்கம் இல்லை; துஷ்டமிருகம் அதில் ஏறுவதும்
இல்லை; அங்கே காணப்படுவதும் இல்லை; மீட்
௰ கப்பட்டவர்களே அங்கே நடப்பார்கள்.—[2]கர்த்
தரால் மீட்கப்பட்டவர்கள் திரும்பிக் கெம்பீரத்
தோடே சீயோனுக்கு வருவார்கள்; நித்திய
மகிழ்ச்சி அவர்கள் தலையின்மேல் இருக்கும்;[3]சந்
தோஷமும் மகிழ்ச்சியும் அவர்களைத் தொடர்ந்
துபிடிக்கும்; சஞ்சலமும் தவிப்பும் ஓடிப்போம்.

## ௩௬. அதிகாரம்.

*௧. சன்கேரிப்பின் சேனை யூதாவை முற்றிக்கைபோட்டது. ௪. அவனால் அனுப்பப்பட்ட இரப்சாக்கே தூஷணப்போதிப்பினால் கலகம்பண்ணச் சனத்தைத் தூண்டினது. ௨௨. அவனுடைய வார்த்தைகள் எசேக்கியாவுக்கு அறிவிக்கப்பட்டது.*

௧ எசேக்கியா இராசாவின் பதினாலாம் வருஷத்தி
லே சம்பவித்தது ஏதென்றால், [4]அசூரியாவின்
இராசாவாகிய சன்கேரிப் யூதாவில் இருக்கிற
அரணான சகல பட்டணங்களுக்கும் விரோத
௨ மாய் வந்தேறி, அவைகளைப் பிடித்தான்.—அப்
போது அசூரியாவின் இராசா இலாகீசிலிருந்து
இரப்சாக்கேயைக் கன இராணுவத்தோடே எரு
சலேமுக்கு எசேக்கியா இராசாவண்டைக்கு
அனுப்பினான்; அவன் வண்ணார்துறையின்வழி
யிலுள்ள மேல்க்குளத்து மதகு அண்டையிலே
௩ நின்றான்.—அப்போது [5]இல்க்கியாவின் குமாரனா
கிய எலியாக்கீம் என்ற அரமனை விசாரிப்புக்கா
ரனும், செப்னா என்ற சம்பிரதியும், ஆசாப்பின்
குமாரனாகிய யோவாகென்ற கணக்கனும் அ
வன் அண்டையிலே புறப்பட்டுப்போனார்கள்.
௪ இரப்சாக்கே அவர்களோடே சொன்னதா
வது: அசூரியாவின் இராசாவாகிய பெரிய அரச
னானவர் உரைக்கிறதும், நீங்கள் எசேக்கியாவுக்
குச் சொல்லவேண்டியதும் ஏதெனில், நீ நம்பி
௫ யிருக்கிற இந்த நம்பிக்கை எது?—இது உதடுக
ளின் வசனிப்புமாத்திரந்தான் என்கிறேன்; யுத்
தத்துக்கு யோசனையும் பெலனும் வேண்டுமே;
இப்போதும் என்னைவிட்டுப் புரண்டுவிழுந்த
௬ தற்கு நீ யாரை நம்பியிருக்கிறாய்? — இதோ,
எகிப்தென்கிற அந்த முறிக்கப்பட்ட நாணல்
கோலை நம்புகிறாய்; அதின் மேல் ஒருவன் சாய்ந்
தால், அது அவன் உள்ளங்கையிலே பட்டு உரு
விப்போம்; அப்படி எகிப்தின் இராசாவாகிய
பார்வோன் தன்னை நம்புகிற யாவருக்கும் இருக்
௭ கிறான்.—நீ என்னுடனே, எங்கள் பராபரனாகிய
கர்த்தரை நம்புகிறோம் என்றாயேயாகில், அவரு
டைய மேடைகளையும், அவருடைய பலிபீடங்
களையும் அல்லவோ எசேக்கியா தள்ளிவிட்டு,
யூதாவோடேயும், எருசலேமியரோடேயும் இந்
தப் பலிபீடத்தின்முன் பணியுங்கள் என்றா
னே. — இப்போதும் உனக்கு இரண்டாயிரம் ௮
குதிரைகளைக் கொடுப்பேன்; நீ அவைகள்மேல்
ஏறத்தக்கவர்களை உனக்குச் சம்பாதிக்கமாட்டு
வாயோ என்று அசூரியாவின் இராசாவாகிய
என் ஆண்டவனோடே நீ சபதம்கூறு.—பின்னை ௯
எப்படி நீ என் ஆண்டவனுடைய ஊழியக்கா
ரரில் ஒரே ஒரு தலைவனுடைய முகத்தைத் திருப்
புவாய்? இரதங்களும், குதிரைக்காரரும் வரு
வார்கள் என்று எகிப்தியனையோ நம்பிக்கொள்
ளுகிறாய்? — இப்போதும் கர்த்தரை அல்லாமல் ௰
இந்தத் தேசத்தின்மேலே அதை அழிக்கவந்து
ஏறினேனோ? இந்தத் தேசத்தின்மேலே போ
யேறி, அதை அழி என்று கர்த்தர் என்னோடே
சொன்னார் என்று சொன்னான்.
அப்போது எலியாக்கீமும், செப்னாவும், யோ ௰௧
வாக்கும், இரப்சாக்கேயுடனே, உம்முடைய
ஊழியக்காரரோடே சூரியபாஷையிலே பேசு
மே; அதை நாங்கள் அறிந்தவர்கள்; அலங்கத்
தில் இருக்கிற சனத்தின் செவிகளிலேபட எங்
களோடே யூதபாஷையிலே பேசீராக என்றார்
கள்.—இரப்சாக்கேயோ என்றால், உங்களோடுங் ௰௨
கூடத் தங்கள் கஷ்டத்தைத் தின்னவும், தங்கள்
நீரைக் குடிக்கவும், அலங்கத்திலே தங்கி இருக்
கிற புருஷரண்டைக்கே அல்லாமல் உன் ஆண்
டவன் அண்டைக்கும், உன் அண்டைக்கும்,
என் ஆண்டவன் என்னை இந்த வார்த்தைகளைப்
பேச அனுப்பினாரோ என்று சொல்லி,
இரப்சாக்கே நின்றுகொண்டு, யூதபாஷையி ௰௩
லே மகா சத்தமாய்க் கூப்பிட்டுச் சொன்னதா
வது: அசூரியாவின் இராசாவாகிய பெரிய அர
சனுடைய வார்த்தைகளைக் கேளுங்கள்.—எசேக் ௰௪
கியா உங்களை எத்தவொட்டாதிருங்கள்; ஏனெ
னில், உங்களைத் தப்புவிக்கமாட்டான்.—கர்த்தர் ௰௫
நம்மைத் தப்பவே தப்பப்பண்ணுவார்; இந்தப்
பட்டணம் அசூரியா இராசாவின் கையில் ஒப்
புக்கொடுக்கப்படுவதில்லை என்று எசேக்கியா
உங்களைக் கர்த்தரை நம்பப்பண்ண ஒட்டாதி
ருங்கள் என்று இராசா சொல்லுகிறார்.
எசேக்கியாவின் சொல்லைக் கேளாதிருங்கள்; ௰௬
ஏனெனில், அசூரியாவின் இராசா உரைக்கிற
தாவது: நீங்கள் நம்மோடே இராசியாகி,நம்மண்
டையிலே புறப்பட்டு,— நாம் வந்து, உங்களை ௰௭
உங்கள்தேசத்தைப்போல இருக்கிறதானியமும்,
திராட்சப்பழ இரசமுமுள்ள தேசமும், அப்ப
மும் திராட்சத்தோட்டங்களுமுள்ள தேசமுமா
கிய சீமையிலே அழைத்துக்கொண்டுபோகுமள
வும், அவர் அவர் தம் திராட்சச்செடியின் கனி
யையும், தம் அத்திமரத்தின் கனியையும் புசித்து,
அவர்அவர் தம் கிணற்றின் தண்ணீரைக் குடியுங்
கள்.—கர்த்தர் நம்மைத்தப்புவிப்பார் என்று எசேக் ௰௮
கியா உங்களை மோசம்போக்கவேண்டாம்; [6]சா

1 யோவா.௰௪.௬.-2 ஏசா.௫௧.௰௧:௬௨.௰௨.-3 ஏசா.௬௧.௰௧. வெளி.௨௧.௪.
4 ௨ இரா.௰௮.௰௩.௱.-5 ஏசா.௨௨.௨௰.௨௧.-6 ஏசா.௰.௮: ௰௧.௧௭:௰௨.௰௩.

திகளுடைய தேவர்களில் அவர் அவர் தங்கள்
தேசத்தை அசூரியா இராசாவின் கைக்குத் தப்பு
௰௯ வித்தது உண்டோ? — அமாத், அர்பாத் பட்ட
ணங்களின் தேவர்கள்எங்கே? செப்பர்வாயீமின்
தேவர்கள் எங்கே? சமாரியாவை நமது கைக்குத்
௨௰ தப்புவிப்பார் உண்டாயிருந்தார்களோ? — கர்த்
தர் எருசலேமை நம்முடைய கைக்குத் தப்பு
விப்பார் என்னத்தக்கதாக, இந்தத் தேசங்களு
டைய எல்லாத் தேவர்களிலும் தங்கள் தேசத்தை
நம்முடைய கைக்குத் தப்புவித்தவர் யார் என்கி
௨௧ றானென்று சொன்னான். — ஆனால் அவர்கள் அவ
னுக்கு ஒரு வார்த்தையையும் பிரதியுத்தாரமாகச்
சொல்லாமல் மவுனமாய் இருந்தார்கள்; ஏனெ
னில் மறுஉத்தரவு சொல்லாதிருங்கள் என்பது
இராசாவின் கட்டளையாய் இருந்தது.
௨௨ அப்போது இல்க்கியாவின் குமாரனாகிய எலி
யாக்கீம் என்ற அரமனை விசாரிப்புக்காரனும்,
செப்னா என்ற சம்பிரதியும், ஆசாப்பின் குமார
னாகிய யோவாவென்ற கணக்கனும், வஸ்திரங்
களைக் கிழித்துக்கொண்டவர்களாய் எசேக்கியா
அண்டைக்கு வந்து, அவனுக்கு மறுஉத்தரவாக
இரப்சாக்கேயின் வார்த்தைகளை அறிவித்தார்கள்.

## ௩௭. அதிகாரம்.

௧. எசேக்கியா புலம்பி மன்றாடும்படி ஏசாயாவைக் கேட்டது. ௬. ஏசாயா ஆறுதல் பேசினது. ௮. சனகேரிப் திராக்காவோடு யுத்தஞ்செய்யப் புறப்பட்டு எசேக்கியாவுக்குத் தூஷண காகிதத்தை அனுப்பினது. ௰௪. எசேக்கியாவின் செபம். ௨௧. சனகேரிப்பின் செருக்கையும், அழிவையும், சீயோனின் நன்மையையுங்குறித்து ஏசாயா சொன்ன தீர்க்கதரிசனம். ௩௬. ஒரு தேவதூதன் அசூரியரை மடித்தது. ௩௭. சனகேரிப் தன் குமாரர்களாலே நினிவேயிலே கொல்லப்பட்டது.

௧ இராசாவாகிய [1]எசேக்கியா இதைக் கேட்ட
போது சம்பவித்தது ஏதென்றால், அவன் தன்
வஸ்திரங்களைக் கிழித்து, இரட்டு உடுத்துக்கொ
ண்டு, கர்த்தருடைய வீட்டுக்குள்ளே பிரவே
சித்து,
௨ அரமனை விசாரிப்புக்காரனாகிய எலியாக்கீமை
யும், சம்பிரதியாகிய செப்னாவையும், ஆசாரியர்
களுடைய மூப்பர்களையும் ஆமோத்சின் குமார
னாகிய ஏசாயா என்ற தீர்க்கதரிசி அண்டைக்கு
௩ இரட்டு உடுத்தவர்களாக அனுப்பினான்.—அவர்
கள் அவனுடனே: இந்த நாள் நெருக்கமும், சீறு
மாறும், தூஷணமும் அநுபவிக்கிற நாளாமே;
ஏனெனில், பிள்ளைகள் பேறுகாலக்கச் சமீபித்
௪ தன; ஆனால் பெறப்பெலன் இல்லை.—சீவனுள்ள
பராபரனை நிந்திக்கவும், உன் பராபரனாகிய கர்த்
தர் கேட்டிருக்கிற வார்த்தைகளாலே சீறுமாறு
பண்ணவும், அசூரியாவின் இராசாவாகிய தன்
ஆண்டவனால் அனுப்பப்பட்ட இரப்சாக்கே
சொன்ன வார்த்தைகளை உன் பராபரனாகிய
கர்த்தர் கேட்பாராக்கும்; ஆகையால், இன்னம்
மீதியாய் வைக்கப்பட்டவர்களுக்காக விண்
ணப்பம் செய்வாயாக என்று எசேக்கியா சொல்
லச்சொன்னார் என்று,
௫ எசேக்கியா இராசாவின் ஊழியக்காரர் ஏசா
௬ யா அண்டையிலே வந்து சொன்னார்கள்.—அப்
போது ஏசாயா அவர்களுடனே, அசூரியாவு
டைய இராசாவின் ஊழியக்காரர் நம்மைத் தூஷ
ணித்ததும் நீ கேட்டதுமான வார்த்தைகளினாலே
பயப்படாதே.—இதோ, அவன் ஒரு செய்தியைச் ௭
கேட்டு, தன் தேசத்துக்குத் திரும்புவதற்கான
ஆவியை நாம் அவனுக்குள்ளே கொடுத்து, அவ
னை அவனுடைய தேசத்திலே பட்டையத்தால்
விழுந்துபோகப்பண்ணுவோம் என்று கர்த்தர்
உரைக்கிறார் என்கிறதை உங்கள் ஆண்டவனோ
டே சொல்லுங்கள் என்றான்.
இரப்சாக்கே திரும்பிப்போய், அசூரியாவின் ௮
இராசா இலாகீசைவிட்டுப்புறப்பட்டான்என்று
கேட்டு, அவன் லிப்னாவுக்கு விரோதமாக யுத்
தம்பண்ணக்கண்டான். — ஆனால் எத்தியோப் ௯
பியாவின் இராசாவாகிய தீராக்கா உம்மோடு யுத்
தம்பண்ணப் புறப்பட்டான் என்று செய்தியைக்
கேட்டான்; அதைக் கேட்டபோது அவன்
எசேக்கியா அண்டைக்குத் தானுபதிகளை அனுப்
பிச் சொன்னதாவது: — நீங்கள் யூதாவின் இரா ௰
சாவாகிய எசேக்கியாவுக்குச் சொல்லவேண்டி
யது ஏதெனில், எருசலேம் அசூரியாவுடைய
இராசாவின் கையில் ஒப்புக்கொடுக்கப்படுவதில்
லை என்று நீ நம்பியிருக்கிற உன் தேவன் உன்னை
எத்தவொட்டாதே.—இதோ, அசூரியாவின் இ ௰௧
ராசாக்கள் எல்லாத் தேசங்களுக்கும், அவைக
ளைச் சங்கரிக்கும்படிக்குச் செய்ததை நீ கேட்
டாயே; நீ தப்புவாயோ?—என் பிதாக்கள் அழித் ௰௨
துவிட்ட கோசானும், ஆரானும், ரேத்சேப்பும்,
தேலாசாரில் இருந்த ஏதேனின் புத்திரருமென்ற
சாதிகளை அவர்களுடைய தேவர்கள் தப்புவித்த
துண்டோ? — ஆமாத்தின் இராசாவும், அர்பாத் ௰௩
தின் இராசாவும், செப்பர்வாயீம், ஏனா, ஈவா
பட்டணங்களின் இராசாவும் எங்கே என்று
சொல்லுங்கள் என்றான்.
எசேக்கியா தானுபதிகளின் கையிலே நிரு ௰௪
பங்களை வாங்கி அவைகளை வாசித்தான்; பிற்
பாடு எசேக்கியா கர்த்தருடைய வீட்டுக்குப்போ
யேறி அவைகளைக் கர்த்தருக்குமுன்பாக விரித்
து,— கர்த்தரைநோக்கிப் பண்ணின விண்ணப் ௰௫
பமாவது:—சேனைகளின் கர்த்தாவே, கேருபீன் ௰௬
களின்மேல் வாசம்பண்ணுகிற இஸ்ரவேலின்
பராபரனே, தேவரீர் ஒருவரே பூமியின் இராச்சி
யங்களுக்கு எல்லாம் தெய்வமானவர்; தேவரீர்
வானத்தையும் பூமியையும் உண்டாக்கினீர்.—
கர்த்தாவே, உமது செவியைச் சாய்த்துக்கேளும்; ௰௭
கர்த்தாவே, நீர் உம்முடைய கண்களைத் திறந்து
பார்த்து, சன்கேரிப் சீவனுள்ள பராபரனை நிந்
திக்கும்படிக்கு அனுப்பின எல்லா வார்த்தைக
ளையும் கேளும். — மெய்தான், கர்த்தாவே, அசூ ௰௮
ரியாவின் இராசாக்கள் எல்லாத் தேசங்களையும்,
அவைகளின் நாட்டையும் பாழ்க்கடித்து,—அ ௰௯
வைகளின் தேவர்களை நெருப்பிலே போட்டார்
கள்; ஏனெனில், அவைகள்தேவர்களாய் இராமல்

[1] ௨ இரா. ௰௯. ௧. ழ

மனுஷர்கைகளின் வேலையாகிய மரமும் கல்லு
மாய் இருந்தன; ஆகையால் அவைகளை நிர்த்மூ
உ௰ ளியாக்கினார்கள்.—இப்போதும் எங்கள் பராபர
ஞகிய கர்த்தாவே, தேவரீர் ஒருவரே கர்த்தர்
என்று பூமியின் இராச்சியங்கள் எல்லாம் அறியும்
படிக்கு, தேவரீர் எங்களை அவன் கைக்கு நீங்க
லாக்கி இரட்சியும் என்று எசேக்கியா விண்ணப்
பம்பண்ணினன்.
உக அப்போது ஆமோத்சின் குமாரனாகிய எசாயா,
எசேக்கியாவுக்குச் சொல்லி அனுப்பினதாவது:
இஸ்ரவேலின் பராபரனாகிய கர்த்தர் உரைக்கிறது
என்னெனில், நீ அசூரியாவின் இராசாவாகிய சன்
கேரிப்பின்நிமித்தம் நம்மைநோக்கி விண்ணப்
பம்பண்ணினையே.
உஉ அவனைக்குறித்துக் கர்த்தர் உரைக்கிற வசனமா
வது: சீயோன் குமாரத்தியாகிய கன்னியாஸ்திரி
உன்னை இகழ்ந்து, உன்னை ஆகடியம்பண்ணுகி
றாள்; எருசலேம் குமாரத்தி உன் பின்னாலே தலை
உங யைத் துலுக்குகிறாள்.—யாரை நிந்தித்துத் தூஷ
ணித்தாய்? யாருக்கு விரோதமாய்ச் சத்தத்தை உய
ர்த்தினாய்? நீ இஸ்ரவேலின் பரிசுத்தருக்கு விரோ
தமாக அல்லவோ உன் கண்களை மேட்டிமையா
உச ய் நெறித்தாய்.—உன் ஊழியக்காரரைக்கொண்டு
நீ ஆண்டவரை நிந்தித்து, என் இரதங்களின் திர
ளினாலே நான் லீபனோனின் பக்கங்களாகிய ம
லைகளின் உயரத்தில் ஏறினேன்; அதின் ஓங்கலா
ன கேதுருக்களையும், தெரிந்துகொள்ளப்பட்ட
பாய்மரவிருட்சங்களையும் நான் வெட்டி, அதின்
கடைசி உயரமாகிய அதின் செழுமையான கா
உரு டுமட்டும் வருவேன் என்றும்,-நான் ஊற்றுகளை
வெட்டித் தண்ணீர்களைக் குடித்தேன்; என் உள்
ளங்கால்களின் அடியினாலே எகிப்தின் ஆறுகளை
எல்லாம் வறளவும்பண்ணினேன் என்றும் சொ
உசு ன்னாய்.—நாம் வெகுகாலத்துக்குமுன் அதைச்
செப்பனிட்டுப் பூருவ நாள்கள்முதற்கொண்டு
அதைச்செய்ய யோசித்து இருக்கிறோம் என்று நீ
கேட்டதில்லையோ? இப்போது நீ அரணான பட்
டணங்களைப் பாழான மண்மேடுகள் ஆக்குகிற
உஎ வனாயிருக்க அதை வரப்பண்ணினேம்.—அதினா
லே அவைகளின் குடிகள் கையிளைத்தவர்களா
கிக் கலங்கி வெட்கப்பட்டு, வெளியின் பூண்டுக்
கும், பச்சையான மூளைக்கும், வீடுகளின்மேல்
முளைத்த புல்லுக்கும், ஓங்கிவளராததற்குமுன்
உஅ தீந்துபோன பயிருக்கும் சமானமானார்கள்.—ஆ
னால் உன் இருப்பையும், உன் புறப்படுதலையும்,
உன் வருகையையும், நீ நமக்கு விரோதமாய்க்
உகூ கொந்தளிக்கிறதையும் அறிவோம்.— ஆனதுகொ
ண்டு நீ நமக்கு விரோதமாய்க் கொந்தளித்து, உன்
ஆங்காரம் நம்முடைய செவிகளில் ஏறினபடியி
னாலே, நாம் நம்முடைய துறட்டை உன் மூக்கி
லும், நம்முடைய கடிவாளத்தை உன் உதடுகளி
லும் போட்டு, நீ வந்த வழியே உன்னைத் திருப்
பிக்கொண்டுபோவோம் என்பதுதானே.

உனக்கோவெனில் அடையாளமாய் இருப்ப ங௰
தாவது: இந்த வருஷத்திலே தப்பிப் பயிராகிற
தையும் இரண்டாம் வருஷத்திலே அதினால்
விளைகிறதையும் சாப்பிடு; மூன்றாம் வருஷத்தி
லோ விதைத்து, அறுத்து, திராட்சத்தோட்டங்
களை நாட்டி, அவைகளின் கனிகளைச் சாப்பி
டுங்கள்.—யூதாவின் வீட்டாரிலே தப்பி மீதியா ஙக
னவர்கள் அப்புறம் தாழ வேர்பற்றி உயரக் கனி
கொடுப்பார்கள்.—என்னெனில், மீதியானவர்கள் ஙஉ
எருசலேமிலும், தப்பினவர்கள் சீயோன் பர்வ
தத்திலுமிருந்து புறப்படுவார்கள்; [1]சேனைகளு
டைய கர்த்தரின் வயிராக்கியம் அதைச் செய்யும்.
ஆகையாலே கர்த்தர் அசூரியாவின் இராசா ஙங
வைக்குறித்து உரைக்கிறதாவது: அவன் இந்தப்
பட்டணமட்டும் வருவதும் இல்லை; அதிலே அம்
பை எய்வதும் இல்லை; அதற்குமுன் கேடகத்
தோடே வருவதும் இல்லை; அதற்கு விரோத
மாய்க் கொத்தளம்போடுவதும் இல்லை.—அவன் ஙச
இந்தப் பட்டணத்துக்குள் பிரவேசியாமல்,
தான் வந்தவழியே திரும்பிப்போவான்.—என்னெ ஙரு
னில் நம்முடையநிமித்தமாகவும், நம்முடைய
தாசனாகிய தாவீதின்நிமித்தமாகவும், நாம் இந்தப்
பட்டணத்தை இரட்சிக்கும்படிக்கு அதற்கு ஆத
ரவாய் இருப்போம் என்கிறதைக் கர்த்தர் உரைக்
கிறார் என்று சொல்லிஅனுப்பினான்.
அப்போது [2]கர்த்தருடைய தூதன் புறப்பட்டு, ஙசு
அசூரியரின் பாளயத்தில் நூற்றெண்பத்தையாயி
ரம்பேரைச் சங்கரித்தான்; அவர்கள் அதிகாலமே
எழுந்திருக்கும்போது, இதோ, எல்லாரும் செத்த
சவங்களாய்க் கிடந்தார்கள்.—அப்போது அசூ ஙஎ
ரியாவின் இராசாவாகிய சன்கேரிப் பயணப்
பட்டுத் திரும்பிக்கொண்டுபோய், நினிவேயில்
இருந்துவிட்டான்.—பிறகு சம்பவித்தது என்னெ ஙஅ
னில், அவன் தன் தேவனாகிய நிஸ்ரோகின்
வீட்டில் பணிந்துகொள்ளுகிறபோது அவன்
குமாரராகிய அதிரமேலேகும் சரேத்சேரும் அவ
னைப் பட்டயத்தாலே வெட்டிப்போட்டு,
ஆரராத் தேசத்துக்குத் தப்பி ஓடிப்போனார்கள்;
அவன் குமாரனாகிய எசர்காதோன் அவன் பட்
டத்துக்கு வந்து அரசாண்டான்.

## ஙஅ. அதிகாரம்.

க. எசேக்கியா தன் மரணச்செய்தியைக் கேட்டுச் செபத்தினாலே தான் ஆயுசு விருத்தி அடைந்தது. ௬. அதற்கு அடையாளமாகச் சூரியகடிகாரத்தில் நிழல் பத்துவரி பின்னிட்டுப்போனது. ௯. நன்றி அறிதற்கு எசேக்கியா பாடின பாட்டு.

அந்நாள்களில் [3]எசேக்கியா சாகத்தக்கதான வி க
யாதிப்பட்டிருந்தான், அப்போது ஆமோத்சின்
குமாரனாகிய எசாயா என்ற தீர்க்கதரிசி அவனண்
டைக்கு வந்து, அவனுடனே: உன் வீட்டுக்குப்
பண்ணவேண்டிய திட்டங்களைக் கட்டளைபண்
ணு; என்னெனில், நீ பிழைக்காமல் மரிப்பாய்
என்று கர்த்தர் சொல்லுகிறார் என்றான். — அப் உ
போது எசேக்கியா தன் முகத்தைச் சுவர்ப்புற

1 ஏசா. கூ. எ.—2 ஏசா. ௰௪. ௨௫. உ இரா. ௰கூ. ௩௫.—3 உ இரா. உ௰. க. ஆ.

மாகத் திருப்பி, கர்த்தரைநோக்கி விண்ணப்பம்
௩ பண்ணி:—ஆ கர்த்தாவே, நான் உமக்குமுன்
பாக உண்மையும் மனஉத்தமமுமாய் நடந்துகொ
ண்டு, உமது பார்வைக்கு நலமானதைச் செய்
தேன் என்கிறதை நினையுமே என்று, எசேக்கியா
௪ மகா அழுகையாய் மிகுதியும் அழுதான்.—அப்
போது ஏசாயாவுக்கு உண்டான கர்த்தருடைய
௫ வார்த்தையாவது: — நீ போய் எசேக்கியாவுட
னே சொல்லவேண்டியது: உன் தகப்பனாகிய
தாவீதின் பராபரனாய் இருக்கிற கர்த்தர் சொல்
லுகிறது ஏதெனில், உன் விண்ணப்பத்தைக்
கேட்டோம்; உன் கண்ணீரைக் கண்டோம்;
இதோ, நாம் உன் நாள்களோடே பதினைந்து வரு
௬ ஷங்களைக் கூட்டி, — அசூரியா இராசாவின்
கைக்கு உன்னையும், இந்தப் பட்டணத்தையும்
தப்புவித்து, இந்தப் பட்டணத்துக்கு ஆதரவாக
௭ இருப்போம்.—இதோ, நாம் ஆகாசுடைய சூரிய
கடிகாரத்தில் வரிக்குவரி இறங்கின நிழலைப்
பத்துவரி பின்னிட்டுத் திருப்புவோம் என்றார்.—
௮ தாம் சொன்ன இந்த வார்த்தையின்படி கர்த்தர்
செய்வார் என்கிறதற்கு இது கர்த்தரால் உனக்கு
அடையாளமாய் இருக்குமென்று சொல் என்
றார்; அப்படியே கடிகாரத்தில் இறங்கியிருந்த
சூரியநிழல் பத்துவரி திரும்பிற்று.
௯ யூதாவின் இராசாவாகிய எசேக்கியா வியாதி
யாகித் தன் வியாதியும் நீங்கிச் சொஸ்தமான
போது எழுதிவைத்ததாவது:
௰ என் குறையாயுசின் வருஷங்களுக்குச் சே
ராமல் பாதாள வாசல்களுக்குட்படுவேன் என்று
நான் என் நாள்கள் அறுப்புண்கிறபோது சொன்
௰௧ னேன். — கர்த்தரை, கர்த்தரையே நான் இனி
உயிரோடிருக்கிறவர்களின் தேசத்திலே தரிசிப்
பதில்லை; நான் இனிப் பூலோகக் குடிகளோடு
௰௨ இருந்து மனுஷரைக் காண்பதில்லை. — என்
ஆயுசு மேய்ப்பனுடைய கூடாரத்தைப்போல
என்னைவிட்டுப் பேர்ந்துபோகிறது; நெய்கிற
வன் பாவை அறுக்கிறதுபோல என் சீவனை
அறுக்கக் கொடுக்கிறேன்; என்னை நூற்பாவிலி
ருந்து அறுத்துவிடுகிறார்; இன்று இரவிற்குள்ளே
௰௩ என்னை முடிவு அடையப்பண்ணுவீர். — விடி
யற்காலத்தோடு என் எண்ணம் சரியாயிற்று; சிங்
கத்தைப்போல என் எலும்புகளை எல்லாம் நொறு
க்குவார்; இன்று இரவுக்குள்ளே என்னை முடிவு
௰௪ அடையப்பண்ணுவீர் என்று சொல்லி,—நமுட்
டைப்போலும், தகைவில்லான் குருவியைப்
போலும் கீச்சென்று கூவினேன்; [1]புறாவைப்
போலப் புலம்பினேன்; என் கண்கள் உயரப்
பார்க்கிறதினாலே பூத்துப்போயின; கர்த்தாவே,
ஒடுங்கிப்போகிறேன்; எனக்காக மேற்போட்
டுக்கொள்ளும் என்றேன்.
௰௫ நான் என்ன சொல்லுவேன்? அவர் எனக்கு
உத்தரவுகொடுத்தார்; அந்தப்பிரகாரமும் செய்
தார்; என் ஆத்துமாவின் கசப்பை என் ஆயுசின்
வருஷங்களிலெல்லாம் நினைத்து நடந்துகொள்
ளுவேன். — ஆண்டவரே, அதினால் பிழைக்கி ௰௬
றார்கள்; அதில் முழுதும் என் ஆவியின் சீவன்
இருக்கிறது; என்னைச் சொஸ்தப்படவும் பிழைக்
கவும்பண்ணினீர்.—இதோ, சமாதானத்துக்குப் ௰௭
பதிலாக எனக்கு மகா கசப்புவந்திருந்தது; தே
வரீரோ என் ஆத்துமாவை அழிவின் குழிக்கு
விலக்கி அரவணைத்தீர்; ஏனெனில் என் பாவங்
களை எல்லாம் உமது முதுகுக்குப்பின்னாக எறிந்
துவிட்டீர்.—ஏனென்றால், பாதாளம் உம்மைத் ௰௮
துதிப்பதும், மரணம் உம்மைப் போற்றுவதும்
இல்லை; குழியில் இறங்குகிறவர்கள் உம்முடைய
சத்தியத்தைத் தியானிக்கிறதில்லை. — உயிரோ ௰௯
டிருக்கிறவன், உயிரோடிருக்கிறவனே, உம்மை
நான் இன்று செய்கிறதுபோலே துதிப்பான்;
தகப்பன் பிள்ளைகளுக்கு உமது சத்தியத்தை அறி
விப்பான்.—கர்த்தர் என்னை இரட்சிக்கவந்தார்; ௨௰
ஆகையால் எங்கள் சீவனுடைய எல்லா நாள்க
ளிலும் கர்த்தருடைய வீட்டிலே என் கீதவாத்தி
யங்களை வாசிப்போமென்று எழுதிவைத்தான்.
அத்திப்பழக் குழம்பை எடுத்துவந்து, எரிபந் ௨௧
தப் பருவின்மேலே பற்றுப்போடுங்கள்; அப்
போது பிழைப்பார் என்று ஏசாயா சொல்லியி
ருந்தான்.—அப்போது எசேக்கியா: நான் கர்த்த ௨௨
ருடைய வீட்டுக்குப் போயேறுவதற்கு அடை
யாளம் என்ன என்று கேட்டிருந்தான்.

## ௩௯. அதிகாரம்.

*௧. எசேக்கியாவை வினவும்படி மேரோதாகினால் அனுப்பப்பட்ட ஆள்கள் அவனுடைய பொக்கிஷத்தைப் பார்வையிட்டது. ௫. ஏசாயா அதை அறிந்து பாபிலோன் சிறையிருப்பை முன்னே தெரிவித்தது.*

அக்காலத்திலே [2]பாலாதானுடைய குமாரனா ௧
கிய மேரோதாக் பாலாதான் என்ற பாபேலின்
இராசா, எசேக்கியா வியாதிப்பட்டு ஆரோக்கிய
மானதைக் கேட்டு, அவனண்டைக்குக் காகிதங்
களையும் வெகுமானத்தையும் அனுப்பினான்.—
அவர்கள்மேலே எசேக்கியா சந்தோஷப்பட்டு, ௨
அவர்களுக்குத் தன் பொக்கிஷசாலையையும்,
வெள்ளியையும், பொன்னையும், கந்தவர்க்கங்க
ளையும், நல்ல பரிமளதயிலத்தையும், தன் ஆயுத
சாலை அனைத்தையும், தன் பொக்கிஷங்களில்
உள்ளவை எல்லாவற்றையும் காண்பித்தான்;
தன் வீட்டிலும், தன்னுடைய எல்லா இராச்சியத்
திலும், எசேக்கியா அவர்களுக்குக் காண்பியாத
பொருள் இல்லை.
அப்போது ஏசாயா தீர்க்கதரிசி எசேக்கியா ௩
இராசா அண்டைக்கு வந்து அவனுடனே: அந்த
மனுஷர் என்ன சொன்னார்கள்? எங்கேயிருந்து
உம்மண்டைக்கு வந்தார்கள் என்றான்; அதற்கு
எசேக்கியா: பாபேல் என்கிற தூரதேசத்திலி
ருந்து என்னண்டைக்கு வந்தார்கள் என்றான்.—
அப்போது அவன், உம்முடைய வீட்டிலே ௪
என்னத்தைக் கண்டார்கள் என்றான். அதற்கு
எசேக்கியா: என் வீட்டில் உள்ளவை எல்லாவற்

1 எசா. ௫௯. ௰௧.

2 ௨ இரா. ௨௰. ௰௨.

றையும் கண்டார்கள்; என் பொக்கிஷங்களில்
நான் அவர்களுக்குக் காண்பியாத பொருள்
௫ இல்லை என்றான்.—அப்போது ஏசாயா எசேக்கி
யாவுடனே சொன்னதாவது: சேனைகளுடைய
௬ கர்த்தரின் வார்த்தையைக் கேளும். — இதோ,
நாள்கள் வரும்; அப்போது உன் வீட்டில் உள்ள
திலும், உன் பிதாக்கள் இந்நாள்வரைக்கும் சேர்த்
ததிலும் ஒன்றும் மீதியாய் வைக்கப்படாமல்
எல்லாம் பாபேலுக்குக் கொண்டுபோகப்படும்.—
௭ நீ பெறப்போகிற உன் சந்தானமாகிய உன் குமா
ரரிலும் சிலரைப் பாபேலுடைய இராசாவின்
அரமனையிலே பிரதானிகளாய் இருக்க எடுப்
பார்கள் என்று கர்த்தர் சொல்லுகிறார் என்றான்.—
௮ அப்போது எசேக்கியா ஏசாயாவுடனே: நீ சொ
ன்ன கர்த்தருடைய வார்த்தை நல்லதே என்று
சொல்லி, என் நாள்களிலாகிலும் சமாதானமும்
உண்மையும் இருக்குமே என்றான்.

## ௪௰. அதிகாரம்.

௧ சுவிசேஷத்தின் பிரசித்தம். ௩. யோவான்ஸ்நானனுடைய பிரசங்கம். ௯. அப்போஸ்தலர்களுடைய பிரசங்கம். ௰௨. தீர்க்கதரிசி பராபரனுடைய சர்வவல்லமையினாலும், ௰௮. அவருடைய ஒப்பின்மையினாலும், ௨௧. சனத்தைத் தேற்றினது.

௧ நீங்கள் நமது சனத்தை ஆற்றுங்கள், தேற்றுங்
௨ கள்.—நீங்கள் எருசலேமுடனே பட்சமாய்ப்
பேசி, அதின் போர் முடிந்தது என்றும், அதின்
அக்கிரமம் நிவிர்த்தியாக்கப்பட்டது என்றும்,
அது தன்னுடைய எல்லாப் பாவங்களின் நிமித்
தம் கர்த்தரின் கையில் இரட்டிப்பாய் அடைந்து
தீர்ந்தது என்றும், அதற்குக் கூறுங்கள் என்றும்
௩ உங்கள் பராபரன் சொல்லுகிறார்.—[1]வனாந்தரத்
திலே கர்த்தருடைய வழியை ஆயத்தப்படுத்துங்
கள், நம்முடைய பராபரனுக்கு அந்தரவெளி
யிலே பாதையைச் செவ்வைபண்ணுங்கள் என்
௪ றும்,—பள்ளம் எல்லாம் உயர்த்தப்பட்டு, சகல
மலையும் குன்றும் தாழ்த்தப்பட்டு, கோணலானது
செவ்வையாகி, கரடுமுரடானவைகள் சமனாகக்
௫ கடவன என்றும்,—கர்த்தரின் மகிமை வெளிய
ரங்கமாகும்; அதை எல்லா மாம்சமும் ஏகமாய்க்
காணும்; ஏனெனில் கர்த்தரின் வாக்கு அதை
உரைத்தது என்றும், கூப்பிடுகிற சத்தம் உண்டா
௬ யிற்று.—கூப்பிடு என்று ஒரு சத்தம் உண்டா
யிற்று; என்னத்தைக் கூப்பிட்டுச் சொல்லுவேன்
என்கிறான்;[2]எல்லா மாம்சமும் புல்லைப்போலும்,
அதின் மேன்மை எல்லாம் வெளியின் பூவைப்
௭ போலும் இருக்கின்றன.—கர்த்தரின் ஆவி அதின்
மேல் ஊதும்போது, புல் உலர்ந்து, பூ உதிரும்;
௮ சனமே புல்.—புல் உலர்ந்து பூ உதிரும்; [3]நம்மு
டைய பராபரனுடைய வசனமோ என்றென்
றைக்கும் நிற்கும் என்பதையே என்று உரைக்
கும்.
௯ சீயோன் என்ற சுவிசேஷகியே, நீ உயர்ந்த
பர்வதத்தில் ஏறு; எருசலேம் என்ற சுவிசேஷ
கியே, உன் சத்தத்தைப் பலத்தோடே உயர்த்து;
பயப்படாமல் அதை உயர்த்தி, யூதாவின் பட்ட
ணங்களுடனே, இதோ, உங்கள் பராபரன்
என்று சொல்.—இதோ, கர்த்தராகிய ஆண்டவர் ௰
பெலவானுக்கு விரோதமாய் வருகிறார்; அவர்
கைப்புயம் அவனை ஆண்டுகொள்ளும்; இதோ,
[4]அவருடைய பலன் அவரோடுங்கூட வருகி
றது; அவருடைய பலபாகம் அவருடைய முகத்
துக்குமுன்பாகப் போகிறது.—[5]மேய்ப்பனைப் ௰௧
போலத் தமது மந்தையை மேய்ப்பார்; ஆட்டுக்
குட்டிகளைத் தமது புயத்திலே சேர்த்து, தமது
மடியிலே சுமந்து, கறவல் ஆடுகளை [6]மெதுவாய்
நடத்துவார்.—தண்ணீர்களைத் தன் கைப்பிடி ௰௨
யால் அளந்து, வானங்களைச் சாண் அளவாகத்
திட்டம்பார்த்து, பூமியின் மண்ணை மரக்காலால்
அளந்து, பர்வதங்களைக் கயிற்றுக்கோலாலும்,
மேடுகளைத் தராசாலும் நிறுத்தவன் யாவன்?—
[7]கர்த்தருடைய ஆவியைத் திட்டப்படுத்தி, அவ ௰௩
ருக்கு ஆலோசனைக்காரனாய், அவருக்கு அறிவு
உண்டாக்கினவன் யாவன்?—தமக்கு உணர்வு ௰௪
உண்டாக்கவும், தம்மை நியாயவழியிலே உபதே
சிக்கவும், தமக்கு அறிவைக் கற்றுக்கொடுக்கவும்,
தமக்கு விவேகங்களின் வழியை அறிவிக்கவும்,
அவர் யாரோடே ஆலோசனை பண்ணிக்கொண்
டார்?—இதோ, சாதிகள் ஏற்றச்சாலிலே தொங் ௰௫
கும் துளியாகவும், தராசிலே படிந்த தூசியாக
வும் எண்ணப்பட்டிருக்கிறார்கள்; இதோ, தீவு
களை ஒரு அணுவைப்போலே தூக்குகிறார்.—
லீபனோன் நெருப்புக்கும் போதாது, அதின் மிரு ௰௬
கசீவன்கள் தகனபலிக்கும் போதாது.—சகல ௰௭
சாதிகளும் அவருக்குமுன்பாக [8]ஒன்றும் இல்லா
ததுபோல இருந்து, எதுமற்றதிலும் கடையாக
வும் வெறுமையாகவும் அவரால் எண்ணப்படுகி
றார்கள்.
இப்படி இருக்கையில், பராபரனை [9]யாருக்குச் ௰௮
சாயலாக்குவீர்கள்? அல்லது எந்தச் சாயலை அவ
ருக்கு ஒப்பிடுவீர்கள்?—[10]கன்னான் ஒரு சுரூபத் ௰௯
தை வார்க்கிறான், தட்டான் பொன் தகட்டால்
அதை மூடி அதற்கு வெள்ளிச்சங்கிலிகளைப்
பொருதவைக்கிறான்.—அதற்குக் கொடுக்க வகை ௨௰
யில்லாதவன் உளுத்துப்போகாத மரத்தைத் தெ
ரிந்துகொண்டு, அசையாத ஒரு சுரூபத்தைச்
செப்பனிட விவேகமுள்ள ஒரு தச்சனைத் தனக்
குத் தேடுகிறான்.—நீங்கள் அறிந்ததில்லையோ? ௨௧
நீங்கள் கேட்டதில்லையோ? உங்களுக்கு ஆதிமு
தலாய் அறிவிக்கப்பட்டதில்லையோ? பூமி அஸ்
திபாரப்பட்டதை உணராதிருக்கிறீர்களோ?—
அவர் பூமியினுடைய உண்டையின்மீதில் உளு ௨௨
க்காந்திருக்கிறவர்; அதின் குடிகள் வெட்டுக்கி
ளிகளைப்போல இருக்கிறார்கள்; அவர் [11]வானங்
களை மெல்லிய பாவாடையைப்போலப் பரப்பி,
குடியிருக்கிறவர்களுக்கு அவைகளைக் கூடாரத்

1 மத். ௩. ௩. மாற். ௧. ௩. லூக். ௩. ௪-௬. யோவா. ௧.௨௩.-2 யோபு. ௰௪. ௨. சங். ௱௨. ௰௧. யாக். ௧. ௰௧. ௧ பேது. ௧. ௨௪, ௨௫.—3 லூக். ௰௬. ௧௭.—4 ஏசா. ௬௨. ௰௧. 5 சங். ௨௩. ௧. எசே. ௩௪. ௨௩. யோவா. ௰. ௰௧.—6 ஏசா. ௬௩. ௰௩.—7 உரோ. ௰௧. ௩௪. ௧ கொரி. ௨. ௰௬.—8 ஏசா ௩௬. ௬.—9 ஏசா. ௬௬. ௯.—10 ஏசா. ௪௪. ௰௨, ௰௩.—11 ஏசா. ௪௰. ௨௨. சங். ௱௪. ௨.

௨௩ தைப்போல விரிக்கிறவர்.—அவர் தலைவர்களை
மாயையாக்கிவிட்டு, பூமியின் நியாயாதிபதிகளை
௨௪ அவாந்தரமாக்குகிறவர்.–அவர்கள் திரும்ப நாட்
டப்படுவதும் இல்லை; விதைக்கப்படுவதுமில்லை;
வெட்டப்பட்ட அவர்களுடைய அடிமரம்
திரும்பத் தரையிலே வேர்விடுவதும் இல்லை;
அவர்கள்மேல் அவர் ஊதவே பட்டுப்போவார்
கள்; பெருங்காற்று அவர்களை ஒரு துரும்பைப்
போல அடித்துக்கொண்டுபோகும்.
௨௫ பின்னை நம்மை யாருக்கு ஒப்பான சாயலாக்
௨௬ குவீர்கள் என்று பரிசுத்தர் சொல்லுகிறார்?—உங்
கள் கண்களை உயர எடுத்துப்பாருங்கள்; இவை
களைச் சிருஷ்டித்தவர் யார்? அவர் அவைகளின்
சேனையை இலக்கத்திட்டமாகப் புறப்படப்
பண்ணி, அவைகளை எல்லாம் பேர்பேராக
அழைக்கிறவராமே; [1]அவருடைய வலிய சத்து
வங்களாலும், அவர் வல்லமையிலே பெலத்தவ
ராய் இருக்கிறதினாலும் அவைகளில் ஒன்றும்
குறையாதேபோகும்.
௨௭ யாக்கோபே, இஸ்ரவேலே, என் வழி கர்த்த
ருக்கு மறைவாயிற்று என்றும், என் நியாயம் என்
பராபரனைச் சேராமல்போகிறது என்றும்,நீ சொ
௨௮ ல்லுவானேன்.–[2]பூமியின் கடையாந்தரங்களைச்
சிருஷ்டித்த கர்த்தராகிய நித்திய பராபரன், இ
ளைக்காமலும் விடாய்க்காமலும் இருக்கிறார் என்
று நீ அறியாயோ? நீ கேட்டதுமில்லையோ? அவ
௨௯ ருடைய உணர்வுக்கு ஆராய்தல் இல்லை.–இளைத்
தவனுக்கு அவர் பெலன்கொடுத்து, சத்துவமற்ற
வனுக்குப் பெலனைப் பெருகப்பண்ணுகிறார்.—
௩௰ இளைஞர் இளைத்து விடாய்க்கிறார்கள், வாலிப
௩௧ ரும் இடறிவிழுவார்கள்.—கர்த்தருக்குக் காத்தி
ருக்கிறவர்களோ புதுப்பெலன் அடைந்து கழு
குகளைப்போலச் செட்டைகளை அடித்து எழும்
புவார்கள்; அவர்கள் ஓடியும் விடாய்க்கார்கள்;
நடந்தும் இளைக்கார்கள்.

## ௪௧. அதிகாரம்.

௧. பராபரன் சபையின்மேல் தம்முடைய இரக்கங்களையும், ௰. வாக்குத்தத்தங்களையும், ௨௧. விக்கிரகத்தின் மாயையையும் குறித்து தமது சனத்தோடே விவாதம்செய்தது.

௧ தீவுகளே, நமக்குமுன்பாக மவுனமாகுங்கள்;
சனசதளங்கள் தங்கள் பெலனைப் புதிதாக்கிக்
கொண்டு, சமீபித்துவந்து, பிற்பாடு பேசக்கட
வார்கள்; ஒருமிக்க நியாயத்திலே சேருவோம்.
௨ நீதியாய்த்தமது காலடியிலே வர,கிழக்கிலிருந்
து ஒருவனை எழுப்பி அழைத்தவர் யார்?[3]அவனுக்
குமுன்பாகச் சாதிகளை ஒப்புக்கொடுத்து, அவ
னை இராசாக்களுக்கு ஆண்டவனாக்கி,இவர்களை
அவன் பட்டையத்துக்குத் தூசியும், அவன் வில்
லுக்குச் சிதறஅடிக்கப்பட்ட தாளடியுமாக்கி,—
௩ அவன் இவர்களைத் துரத்தவும், தன் கால்கள் வரா
திருந்த பாதையிலே சமாதானத்தோடே கடக்க
௪ வும்பண்ணுகிறவர் யார்?—அதை நடப்பித்துச்
செய்து, ஆதிமுதல்கொண்டு தலைமுறைகளை வர
வழைத்துக்கொண்டிருக்கிறவர் யார்? [4]முந்தின
வராய் இருக்கிற கர்த்தராகிய நாம்தாமே; பிந்தி
னவர்களோடும் இருப்பவராகிய நாம்தாமே.
தீவுகள் அதைக் கண்டு பயப்படும், பூமியின் ௫
கடையாந்தரங்கள் நடுங்கும்; அவர்கள் சேர்ந்து
வந்து,—ஒருவனுக்கு ஒருவன் ஒத்தாசைசெய்து ௬
சகோதரனோடே சகோதரன் பலப்படுவேன்
என்று சொல்லுகிறான்.–சூத்திரக்காரன் தட்டா ௭
னையும், சுத்தியலாலே மெல்லிசாய்த் தட்டுகிற
வன் அடையலின்மேல் அடிக்கிறவனையும் தயி
ரியப்படுத்தி, இசைவு நல்லதென்று சொல்லி,
அதை அசையாதபடிக்கு ஆணிகளாலே கெட்டி
யாக்குகிறான்.
ஆனால் [5]நம்முடைய தாசனாகிய இஸ்ரவேலே, ௮
நாம் தெரிந்துகொண்ட யாக்கோபே,நம்முடைய
[6]சிநேகிதனான ஆபிரகாமின் வித்தே,—நாம்பூமி ௯
யின் கடையாந்தரங்களிலிருந்து, உன்னை எடுத்
து, அதின் எல்லைகளிலிருந்து அழைத்துவந்து: நீ
நம்முடைய தாசன், உன்னை நாம் வெறுக்காமல்
உன்னைத் தெரிந்துகொண்டோம் என்று நாம்
சொன்னோமே.— [7]நீ பயப்படாதிரு; ஏனெ ௰
னில், நாம் உன்னுடனே இருக்கிறோம்; திகை
யாதிரு; ஏனெனில், நாம் உன் பராபரன்; நாம்
உன்னைப் பலப்படுத்தி உனக்குச் சகாயம்பண்
ணுகிறவரும், உன்னை நமது நீதியின் வலதுகரத்
தினாலே தாங்குகிறவருமாய் இருக்கிறோம்.—
இதோ, உன்மேல் எரிச்சலாய் இருக்கிற யாவ ௰௧
ரும் வெட்கி இலச்சை அடைவார்கள்; உன்னோ
டே வழக்காடுகிற மனுஷர் மாயையாகி அழி
வார்கள். — உன்னோடே போராடினவர்களைத் ௰௨
தேடிக் [8]காணாதிருப்பாய்; உன்னோடு யுத்தம்
பண்ணின மனுஷர் ஒன்றுமில்லாததும், மாயை
யும் ஆவார்கள்.—ஏனெனில், உன் பராபரனாய் ௰௩
இருக்கிற கர்த்தராகிய நாம் உன் வலதுகையைப்
பிடித்து, உன்னுடனே: பயப்படாதே, நாம்
உனக்கு ஒத்தாசைசெய்கிறோம் என்கிறோம்.—
யாக்கோபென்ற பூச்சியே,இஸ்ரவேலின் [9]சிறிய ௰௪
கூட்டமே, பயப்படாதே, நாம் உனக்கு ஒத்
தாசைசெய்கிறோம் என்று கர்த்தரும் இஸ்ரவே
லின் பரிசுத்தருமாகிய [10]உன் மீட்பரானவர்
உரைக்கிறார். — இதோ, போர் அடிக்கிறதற்கு ௰௫
நாம் உன்னைப் புதிதும் கூர்மையுமான பற்க
ளுள்ள தளவாடங்கள் ஆக்குகிறோம்; நீ பர்வ
தங்களை மிதித்து நொறுக்கி, மேடுகளைப் பத
ருக்கு ஒப்பாக்கிவிடுவாய்.—அவைகளைத் தூற் ௰௬
றுவாய்; அப்போது காற்று அவைகளைக் கொண்
டுபோய், புசல் அவைகளைப் பறக்கடிக்கும்;
நீயோவெனில் கர்த்தருக்குள்ளே களிகூர்ந்து,
இஸ்ரவேலின் பரிசுத்தருக்குள் மேன்மைபா
ராட்டிக்கொண்டிருப்பாய்.
சிறுமையானவர்களும் ஏழைகளும் தண்ணீ ௰௭
ரைத் தேடுகிறார்கள், ஆனால் இல்லாதிருக்கும்;

1 சங். ௱௪௭. ௪௫.—2 ஏசா. ௪௨. 4 ஏசா. ௪௪. ௬: ௪௮. ௰௨. வெளி. ௧. ௯: ௨௨ ௰௩.—3 எஸ்றா ௧. ௨. ௰௭: ௨௨. ௰௯.

5 லூக். ௧. ௫௪.—6 ௨ நாளா. ௨௰. ௭. 8 சங். ௩௭. ௩௬.—9 லூக் ௰௨. ௩௨. யாக். ௨. ௨௩.—7 ஏசா. ௪௩. ௧. 10 ஏசா ௪௩. ௧.

அவர்கள் நாவு தாகத்தால் வறளும்; கர்த்தராகிய
நாம் அவர்களுக்குக் கேள்விகொடுத்து, இஸ்ரவே
லின் பராபரனாகிய நாம் அவர்களைக் கைவிடாதி
௰௮ ருப்போம்.—[1]நாம் உயர்ந்த நிலங்களில் ஆறுகளை
யும் பள்ளத்தாக்குகளின் நடுவே ஊற்றுகளையும்
திறந்து, வனாந்தரத்தைத் தண்ணீர்த்தடாகமும்,
வறண்ட பூமியைத் தண்ணீர்க்கேணிகளும் ஆக்
௰௯ கி,—வனாந்தரத்திலே கேதுருமரங்களையும், சீத்
தீம்மரங்களையும், மிருதுச்செடிகளையும், ஒலீவம
ரங்களையும், கட்டளையிட்டு, அவாந்தரவெளியி
லே தேவதாரிவிருட்சங்களையும், பிசின் மரங்க
ளையும், புன்னைமரங்களையுங்கூட உண்டுபண்
௨௰ ணுவோம்.—கர்த்தருடைய கரம் அதைச் செய்
தது என்றும், இஸ்ரவேலின் பரிசுத்தர் அதைப்
படைத்தார் என்றும் யாவரும் கண்டு, அறிந்து,
தியானித்து, உணரும்படியாகத்தானே.

௨௧ உங்கள் வழக்கைக்கொண்டுவாருங்கள் என்று
கர்த்தர் சொல்லுகிறார்; உங்கள் பெலப்படியான
நியாயங்களைச் சேரப்பண்ணுங்கள் என்று யாக்
௨௨ கோபின் இராசா சொல்லுகிறார்.—அவர்கள் அ
வைகளைச் சேரப்பண்ணி, சம்பவிக்கப்போகிற
வைகளை நமக்கு அறிவிக்கட்டும்; அவைகள்
முதற் சம்பவிப்பவைகள் ஏதென்று சொல்லி,
நாம் நம்முடைய மனதை அவைகளின்மேல்
வைத்து; அவைகளின் முடிவையும் அறியும்ப
டிக்கு நமக்கு அறிவிக்கட்டும்; அல்லது வருங்
காரியங்களை நமக்குக் கேட்கப்பண்ணட்டும்.—
௨௩ பின்வரும் காரியங்களை நமக்கு அறிவியுங்கள்;
அப்போது நீங்கள் தேவர்கள் என்று அறிவோம்;
அல்லவென்று நன்மைதீமை ஏதாகிலும் செய்
யுங்கள்; அப்போது நாம் திகைத்து ஏகமாய்க்கூடி
௨௪ அதைப் பார்ப்போம்.—இதோ, நீங்கள் ஒன்றுமில்
லாததிலும் கடையாய் இருக்கிறீர்கள்; உங்கள்
செயல் ஏதுமற்றதற்கும் தாழ்ச்சியானது; உங்
களைத் தெரிந்துகொள்ளுகிறவன் அருவருப்பா
னவன்.

௨௫ ஒருவனை வடக்கேயிருந்து எழும்பப்பண்ணு
கிறோம்; அவன் சூரியோதயத்திலிருந்து வரு
வான்; அவன் நமது நாமத்தைப் பிரஸ்தாபமாக்
குவான்; அவன் வந்து அதிகாரிகளைச் சேற்றைப்
போலவும், குயவன் களிமண்ணை மிதியிடுகிறது
௨௬ போலவும் மிதிப்பான். — ஆதிமுதற்கொண்டு,
அல்லது முற்காலமுதற்கொண்டு, அதை நாம் அ
றியும்படியாகவும், நாம் அவனை நீதிமான் என்று
சொல்லத்தக்கவிதமாகவும் அறிவித்தவன் யா
வன்? அறிவிக்கிறவன் ஒருவனும் இல்லையே;
கேட்கப்பண்ணுகிறவனும் இல்லை; உங்கள்
வார்த்தைகளைக் கேள்விப்படுகிறவனும் இல்லை
௨௭ யே.—நாமே முதல்முதல்; இதோ, இதோ, என்
று சீயோனுக்குச் சொல்லி, எருசலேமுக்குச் சுவி
௨௮ சேஷகனைக் கொடுக்கிறோம்.—நாம் பார்த்தோம்;
ஆனால் அவர்களில் அறிவிக்கிறவன் ஒருவனு
மில்லை; அவர்களிலே நாம் கேட்குங்காரியத்துக்
குப பிரதியுத்தாரம் கொடுக்கத்தக்க ஒரு ஆலோ
சனைக்காரனும் இல்லை.—இதோ, அவர்கள் எல் ௨௯
லாரும் மாயை; அவர்கள் கிரியைகள் ஒன்று
மில்லை; வார்க்கப்பட்ட அவர்களுடைய சுரூ
பங்கள் [2]காற்றும் வெறுமையுந்தானே.

## ௪௨. அதிகாரம்.

௧. கிறிஸ்துவினுடைய தொழில் சாந்தத்தினாலும், உறுதியினாலும் அலங்கரிக்கப்பட்டு இருக்கிறது. ௫. அவருக்குண்டாகிய பராபரனுடைய வாக்குத்தத்தம். ௰. சுவிசேஷத்துக்காக அவரைத் துதிக்கத் தூண்டினது. ௰௭. அவநம்பிக்கையைக்குறித்துக் கண்டித்தது.

இதோ, நாம் தெரிந்துகொண்டவரும், [3]நமது ௧
ஆத்துமா பிரியமாய் இருக்கிறவரும், நாம் ஆத
ரிக்கிறவருமாகிய [4]நம்முடைய பணிவிடைக்கா
ரன்; [5]நம்முடைய ஆவியை அவர்மேல் வைக்கி
றோம்; அவர் சாதிகளுக்கு நியாயத்தை வெளிப்
படுத்துவார்.—அவர் கூப்பிடாமலும், சத்தத்தை ௨
உயர்த்தாமலும், தம்முடைய சத்தத்தை வீதியி
லே கேட்கப்பண்ணாமலும் இருப்பார்.—அவர் ௩
நெரிந்த நாணலை முறிக்காமலும், மங்கி எரிகிற
திரியை அவிக்காமலும், நியாயத்தை உண்மை
யாக வெளிப்படுத்துவார்.—அவர் நியாயத்தைப் ௪
பூமியிலே நிலைப்படுத்துமட்டும், இளக்கரிப்ப
தில்லை; பதறுவதும் இல்லை; அவருடைய உபதே
சத்துக்குத் தீவுகள் காத்திருக்கும்.

வானங்களைச் சிருஷ்டித்து, அவைகளை விரித் ௫
து, பூமியையும் அதிலே பிறக்கிறவைகளையும்
பரப்பினவரும், அதில் இருக்கிற சனத்துக்குச்
சுவாசத்தையும், அதிலே நடமாடுகிறவர்களுக்கு
ஆவியையும் கொடுக்கிறவருமான கர்த்தராகிய
பராபரன் சொல்லுகிறதாவது:—நீர் குருட்டுக் ௬
கண்களைத் திறக்கவும், கட்டுண்டவர்களைக் கா
வலிலும், இருளில் உளுக்காந்திருக்கிறவர்களைச்
சிறைச்சாலையிலுமிருந்து புறப்படப்பண்ண
வும்,—கர்த்தராகிய நாம் உம்மை நீதியாய் அழைத் ௭
து, உம்முடைய கையைப் பிடித்துக்கொண்டு,
உம்மைத் தற்காத்து, உம்மைச் சனத்தின் உடம்
படிக்கையாகவும், [6]சாதிகளின் வெளிச்சமாக
வும் வைக்கிறோம்.—நாம் கர்த்தர், இது நமது ௮
நாமம்; [7]நாம் நமது மகிமையை வேறொருவனுக்
கும், நமது துதியை விக்கிரகங்களுக்கும் கொ
டோம்.—முந்தின காரியங்கள் இதோ, வந்தன ௯
வே, புதியவைகளையும் நாமே அறிவிக்கிறவர்;
அவைகள் தோன்றாததற்குமுன்னே, அவை
களை உங்களுக்குக் கேட்கப்பண்ணுகிறோம்.

[8]கர்த்தரைப் புதுப்பாட்டாய்ப் பாடுங்கள்; ச ௰
முத்திரத்துக்கு இறங்கிப்போகிறவர்களும், அதி
லுள்ளவை அனைத்தும், தீவுகளும், அவைகளின்
குடிகளும், பூமியின் கடையாந்தரத்திலிருந்து
அவருடைய துதியைப் பாடுவதாக. — வனாந் ௰௧
தரமும், அதின் ஊர்களும், கேதாரியர் குடியிருக்
கிற கிராமங்களும் சத்தத்தை உயர்த்தக்கடவன;

1 ஏசா ௩௫. ௭: ௪௪. ௩.
2 சங். ௯௯. ௫. எரே. ௰. ௩—௰௫.
3 மத். ௩. ௰௭: ௰௭. ௫. எபே. ௧. ௬.
4 மத். ௰௨. ௰௮—௨௧.
5 ஏசா. ௰௧. ௨.—6 ஏசா. ௪௯. ௬. லூக். ௨. ௩௨, ௩௩.—7 ஏசா. ௪௮. ௰௧.—8 சங். ௩௩. ௩.

கல்மலைகளிலே குடியிருக்கிறவர்கள் கெம்பீரித்
து, பர்வதங்களின் கொடுமுடியிலிருந்து ஆர்ப்
௰௨ பரிப்பார்களாக. — கர்த்தருக்கு மகிமையைச்
செலுத்தி, அவர் துதியைத் தீவுகளில் அறிவிப்
௰௩ பார்களாக.—[1]கர்த்தர் பராக்கிரமசாலியைப்போ
லப் புறப்பட்டு, யுத்த சேவகனைப்போல எரிச்
சலை எழும்பப்பண்ணி, தொனித்துக் கர்ச்சித்
து, தம்முடைய சத்துருக்களை மேற்கொள்ளு
௰௪ வார்.—வெகுகாலமாய் மவுனமாய் இருந்தோம்;
சும்மா இருந்து நமக்குள்ளே அடக்கிக்கொண்
டோம்; இப்போது நாம் பிள்ளைபெறுகிறவளை
ப்போலக் கூப்பிட்டு, அவர்களைப் பாழாக்கவும்
௰௫ விழுங்கவும் போகிறோம்.—நாம் பர்வதங்களை
யும் மேடுகளையும் பாழாக்கி, அவைகளின் பயிர்
வகையை எல்லாம் வாடப்பண்ணி, ஆறுகளைத்
திட்டுகள் ஆக்கி, ஏரிகளை வற்றிப்போகப்பண்
௰௬ ணி,—குருடரை அவர்கள் அறியாத வழியிலே
நடத்தி, அவர்களுக்குத் தெரியாத பாதைகளிலே
அவர்களை அழைத்துக்கொண்டுவந்து, அவர்க
ளுக்குமுன்பாக இருளை வெளிச்சமும், கோ
ணல்களைச் செம்மையும் ஆக்குவோம்; இந்தக்
காரியங்களை நாம் அவர்களுக்குச் செய்து, அவர்
௰௭ களைக் கைவிடாதிருப்போம்.—ஆனால் விக்கிர
கங்களை நம்பி, வார்க்கப்பட்ட சுரூபங்களுட
னே, நீங்கள் எங்கள் தேவர்கள் என்று சொல்
லுகிறவர்கள் [2]பின்னிடைந்து, மிகவும் வெட்கப்
படுவார்கள்.

௰௮ [3]செவிடரே, கேளுங்கள்; [4]குருடரே, நீங்கள்
௰௯ காணும்படிக்கு நோக்கிப்பாருங்கள். — [5]நம்மு
டைய தாசனையே அல்லாமல் யார் அத்தனை குரு
டனும், நாம் அனுப்புகிற தூதனையே அல்லாமல்
யார் அத்தனை செவிடனுமாய் இருக்கிறான்? உத்
தமனைப்போலக் குருடனானவன் யாவன்? கர்த்த
ருடைய ஊழியக்காரனைப்போல அந்தகனான
௨௰ வன் யாவன்?—நீ அநேகங்களைக் கண்டும் கைக்
கொள்ளாய், அவனுக்குச் செவிகளைத் திறந்தா
௨௧ லும் கேளாதேபோகிறான்.—கர்த்தர் தமது நீதி
யின்நிமித்தமாக அவன்மேல் பிரியம்வைத்திருந்
தார்; அவனை வேதத்தினாலே பெரியவனாக்கி,
௨௨ முக்கியப்படுத்தினார்.—அவனோவெனில் கொள்
ளையும், சூறையுமாய்ப்போகிற சனம்; அவர்கள்
அனைவரும் கெபிகளிலே சிக்குண்டு, காவல்
அறைகளில் அடைக்கப்படுவார்கள்; தப்புவிப்
பார் இல்லாமலே கொள்ளையாகி, திரும்ப விட்டு
விடு என்பார் இல்லாமல் சூறையாவார்கள்.

௨௩ [6]உங்களில் இதற்குச் செவிகொடுத்துப் பின்வ
ருகிறதைக் கவனித்துக் கேட்கிறவன் யாவன்?-
௨௪ யாக்கோபைச் சூறையிட்டு இஸ்ரவேலைக் கொள்
ளைக்காரருக்கு ஒப்புக்கொடுக்கிறவன் யாவன்?
நாம் பாவஞ்செய்து விரோதித்த கர்த்தர் அல்
லவோ? ஏனெனில், அவருடைய வழிகளில்
நடக்க மனதாய் இராமலும், அவருடைய வேதத்
௨௫ துக்குச் செவிகொடாமலும் போனார்கள்.-அவர்
இவர்கள்மேலே தமது கோபத்தின் உக்கிரத்தை
யும், யுத்தத்தின் வலிமையையும் ஊற்றி, அவர்க
ளைச் சூழ அக்கினிச்சுவாலைகளைக் கொளுத்தியி
ருந்தாலும், அறிவு இல்லாதேபோனார்கள்; அவர்
இவர்களை வேகப்பண்ணியிருந்தாலும், அதை
மனதிலே வைக்காதேபோனார்கள்.

## ௪௩. அதிகாரம்.

௧. கர்த்தர் வாக்குத்தத்தத்தினாலே சபையைத் தேற்றினது. ௮. தம்முடைய சர்வவல்லமையை நோக்கும்படி சனத்தைக் கேட்டுக்கொண்டது. ௰௪. பாபிலோனின் அழிவை அவர்களுக்கு விளக்கினது. ௰௮. தமது சனத்தை அதிசயமுள்ளவிதமாய் விடுதலையாக்கினது. ௨௨. நியாயஞ்சொல்ல இடமில்லாத சனத்தைக் கண்டித்தது.

இப்போதும் யாக்கோபே, உன்னைச் சிருஷ் ௧
டித்தவரும், இஸ்ரவேலே, உன்னை உருவாக்கி
னவருமாகிய கர்த்தர் சொல்லுகிறதாவது: [7]பயப்
படாதிரு; ஏனெனில், உன்னை மீட்டுக்கொண்
டோம்; உன்னைப் பேர்சொல்லி அழைத்தோம்;
நீ நம்முடையவன்.—[8]நீ தண்ணீர்களைக் கடக் ௨
கும்போது நாம் உன்னோடே இருக்கிறோம்; நீ
ஆறுகளைக் கடக்கும்போது அவைகள் உன்மேல்
புரளுவதில்லை; நீ அக்கினியைக் கடக்கும்போது
வேகாதிருப்பாய்; அக்கினிச்சுவாலை உன்னைக்
கொளுத்துவதில்லை.—ஏனெனில், நாம் இஸ்ர ௩
வேலின் பரிசுத்தரும் உன் இரட்சகருமாய் இ
ருக்கிற உன் பராபரனாகிய கர்த்தர்; உன்னை மீட்
கும்பொருளாக எகிப்தையும், உனக்குப் பதி
லாக எத்தியோப்பியாவையும் சேபாவையும் ஒப்
புக்கொடுத்தோம்.—நீ நம்முடைய பார்வைக்கு ௪
அருமையானபடியினாலே கனம்பெற்றாய்; நாம்
உன்னைச் சிநேகித்தபடியினாலே உனக்குப்பதி
லாக மனுஷர்களையும், உன் ஆத்துமாவுக்குப்ப
திலாகச் சனசதளங்களையும் ஒப்புக்கொடுப்
போம்.—பயப்படாதிரு; ஏனென்றால், நாம் உன் ௫
னோடே இருக்கிறோம்; நாம் உன் வித்தைக் கிழக்
கிலிருந்து வரப்பண்ணி, உன்னை மேற்கிலும்
இருந்து கூட்டிச்சேர்ப்போம்.—நாம் வடக்கு ௬
டனே தா என்றும், தெற்குடனே வைத்திராதே
என்றும் சொல்லி, தூரத்திலிருந்து நம்முடைய
குமாரரையும், பூமியின் கடையாந்தரத்திலிருந்து
நம்முடைய குமாரத்திகளையும்,— நமது நாமந் ௭
தரிக்கப்பட்டு, நாம் நம்முடைய மகிமைக்கென்
று சிருஷ்டித்து, உருவாக்கி, படைத்த யாவை
யும் கொண்டுவாவென்போம்.

கண்களிருந்தும் காணாதிருக்கிற சனத்தையும், ௮
காதுகளிருந்தும் செவிடரானவர்களையும் புறப்
பட்டு வரப்பண்ணுங்கள்.—சகல சாதிகளும் ஏக ௯
மாய்ச் சேர்ந்துகொண்டு, சகல சனசதளங்களும்
கூடி வரட்டும்; [9]இதை அறிவித்து, முதற்சம்ப
விக்கும் காரியங்களை நமக்குக் கேட்கப்பண்
ணத்தக்கவன் யாவன்? கேட்டு மெய்யென்று
சொல்லப்படக் கூடும்படிக்கு, அவர்கள் தங்கள்
சாட்சிகளைக் கொண்டுவந்து நிதானக்காரராய்
விளங்கட்டும்.

1 சங். ௨௪. ௮: ௪௫. ௪.
2 சங். ௯.௰௬.—3 யோவா. ௮.௪௭.
4 யோவா. ௯.௪௰. ௨ கொரி.௪.௪.
5 மத. ௰௫ ௰௪: ௨௩.௰௬: ௰௯.௨௪.
6 லூக். ௰௯. ௪௨.—7 ஏசா. ௪௧.௰: ௪௪. ௨.—8 சங். ௬௬. ௰௨.
9 ஏசா. ௪௧. ௨௧.

௰ நாமே அவரென்று நீங்கள் அறிந்து, நம்மை
விசுவாசித்து உணர்ந்துகொள்ளும்படிக்கு, நீங்க
ளும் [1]நாம் தெரிந்துகொண்ட நம்முடைய தாச
ருமாய் இருக்கிறீர்கள் என்று கர்த்தர் சொல்லுகி
றார்; [2]நமக்குமுன் ஏற்பட்ட தேவனில்லை; நமக்
௰௧ குப்பின் இருப்பதுமில்லை.—நாம், [3]நாமே கர்த்
௰௨ தர்; நம்மையல்லாமல் இரட்சகரில்லை.—நாமே
அறிவித்து, இரட்சித்து, அதைக்கேட்கப்பண்ணு
கிறோம்; உங்களில் அப்படிச் செய்யத்தக்க அந்
நியதேவனில்லை; நாமே பராபரன் என்கிறதற்கு
நீங்கள் நம்முடைய சாட்சிகளென்று கர்த்தர்
௰௩ சொல்லுகிறார்.—[4]நாள் உண்டாகாததற்குமுன்
னும் நாமே இருக்கிறோம்; நம்முடைய கைக்
குத் தப்புவிக்கத்தக்கவனில்லை; [5]நாம் நடப்பிப்
பதைத் திருப்புபவன் யாவன்?
௰௪ உங்களுக்காக நாம் தாழ்ப்பாள் அரண்களை
யெல்லாம் இடிந்து விழப்பண்ணவும், கல்தேய
ரைப் படவுகளில் உள்ப்பட்டு அலறப்பண்ண
வுந்தக்கவர்களைப் பாபேலுக்கு அனுப்பினோ
மென்று, உங்கள் மீட்பரும், இஸ்ரவேலின் பரி
௰௫ சுத்தருமாகிய கர்த்தர் சொல்லுகிறார்.— நாமே
உங்கள் பரிசுத்தராகிய கர்த்தரும், இஸ்ரவேலின்
சிருஷ்டிகரும், உங்கள் இராசாவுமானவர்.
௰௬ சமுத்திரத்திலே [6]வழியையும், வல்லமையான
தண்ணீர்களிலே பாதையையும் கட்டளையிட்டு,—
௰௭ இரதங்களையும், குதிரைகளையும், இராணுவத்தை
யும், பெலனையும் வரவிட்டு, அவைகள் எழுந்
திராதபடிக்கு ஒருமித்து விழுந்துகிடக்கவும்,
ஒரு திரி அவியுமாப்போல அவை அணைந்துபோ
கவும்பண்ணின கர்த்தர் சொல்லுகிறதாவது:—
௰௮ முந்தினவைகளை நினையாதிருங்கள்; பூருவமா
௰௯ னவைகளைச் சிந்தியாதிருங்கள் —இதோ, [7]நாம்
புதுக்காரியத்தைச் செய்வோம்; இனி அது
தோன்றும்; நீங்கள் அதை அறியப்போவதில்லை
யோ? நாம் வனாந்தரத்திலே வழியையும் அவாந்த
ரவெளியிலே ஆறுகளையும் உண்டாக்குவோம்.—
௨௰ நாம் தெரிந்துகொண்ட நமது சனத்தின் தாகத்
துக்கு [8]வனாந்தரத்திலே தண்ணீர்களையும் அவாந்
தரவெளியிலே ஆறுகளையும் உண்டாக்குவதி
னால், வெளியின் மிருகங்களும், வல்லமையுள்ள
பாம்புகளும், கோட்டான் குஞ்சுகளும் நம்மைக்
௨௧ கனம்பண்ணும்.—இந்தச் சனத்தை நமக்கென்று
ஏற்படுத்தினோம்; இவர்கள் நமது துதியைச்
சொல்லிவருவார்கள்.
௨௨ ஆனால், யாக்கோபே, நீ நம்மைநோக்கிக் கூப்
பிட்டதில்லை; இஸ்ரவேலே, அதைவிட நீ நம்
௨௩ மை விதனப்படுத்தினாய்.—நீ நமக்கு உன் ஆடுக
ளின் தகனபலிகளைச் செலுத்தினதில்லை; நீ நம்
மை உன் பலிகளாலே கனம்பண்ணினதுமில்
லை; காணிக்கைகளைச் செலுத்த நாம் உன்னைப்
பிரயாசப்படுத்தாமலும், தூபங்காட்ட உன்னை
௨௪ வருத்தப்படுத்தாமலும் இருந்தோம்.— நீ நமக்
குப் பணங்களால் சுகந்தபட்டையைக் கொள்
ளாமலும், உன் பலிகளின் கொழுப்பினாலே நம்
மை நிரப்பாமலும், உன் பாவங்களினாலே நம்
மைப் பிரயாசப்படுத்தி, உன் அக்கிரமங்களினா
லே நம்மை வருத்தப்படுத்தினாய்.—[9]நாம், நாமே ௨௫
உன் மீறுதல்களை நம்முடையநிமித்தமாகக் கொ
லைக்கிறோம்; உன் பாவங்களை நினையாமலும்
இருப்போம்.— நாம் ஒருவர்க்கு ஒருவர் வழக் ௨௬
காடும்படியாக நமக்கு நினைப்பூட்டு; நீ நீதிவி
ளங்கும்படியாக விவரித்துச்சொல்.— உன் ஆதி ௨௭
தகப்பன் பாவஞ்செய்தான்; உனக்கு முன்னின்
று பேசுகிறவர்களும் நமக்கு விரோதமாய்த் து
ரோகம்பண்ணினார்கள்.—ஆகையால், நாம் பரி ௨௮
சுத்தஸ்தலத்தின் தலைவர்களைப் பரிசுத்தக் கொ
லைச்சலாக்கி, யாக்கோபைச் சங்காரத்துக்கும்,
இஸ்ரவேலைத் தூஷணங்களுக்கும் ஒப்புக்கொ
டுப்போம்.

## ௪௪. அதிகாரம்.

௧. பராபரன் வாக்குத்தத்தங்களினாலே சபையைத் தேற்றினது. ௭. விக்கிர
கங்களுடைய மாயை. ௯. விக்கிரகத்தைப் பண்ணுகிறவர்களுடைய
மடமை. ௨௧. மீட்சிக்காகவும், வல்லபத்துக்காகவும் பராபரனைத் துதிக்கத்
தூண்டினது.

இப்போதும், [10]நம்முடைய தாசனாகிய யாக் ௧
கோபே, நாம் தெரிந்துகொண்ட இஸ்ரவேலே,
கேள்.— [11]உன்னை உண்டாக்கினவரும், உன் ௨
னைத் தாயின் கர்ப்பந்துவக்கி உருவாக்கினவரும்,
உனக்கு ஒத்தாசை செய்கிறவருமாகிய கர்த்தர்
சொல்லுகிறதாவது: நம்முடைய தாசனாகிய
யாக்கோபே, நாம் தெரிந்துகொண்ட உத்தம
னே, [12]பயப்படாதிரு.—ஏனெனில், [13]தாகமுள் ௩
ளவன்மேல் தண்ணீரையும், வறண்ட நிலத்தின்
மேல் ஆறுகளையும் ஊற்றுவோம்; நம்முடைய
ஆவியை உன் வித்தின்மேலும், நம்முடைய ஆசீர்
வாதத்தை உன் சந்தானத்தின்மேலும் ஊற்று
வோம்.— அதினாலே புல்லின் நடுவே [14]நீர்க் ௪
கால்களின் ஓரத்திலுள்ள அலரிச்செடிகளைப்
போலே வளருவார்கள்.—இவனும், நான் கர்த்த ௫
ருடையவன் என்பான்; அவனும், யாக்கோபின்
பேராய் அழைக்கப்படுவான்; அவனும் தான்
கர்த்தருடையவனென்று தன் கையெழுத்துப்
போட்டு, இஸ்ரவேலின் நாமத்தைத் தரித்துக்
கொள்ளுவான்.
[15]நாம் முந்தினவரும், நாம் பிந்தினவரும்தா ௬
னே; நம்மைத்தவிரத் தேவன் இல்லையென்று
இஸ்ரவேலின் இராசாவாகிய கர்த்தரும், சேனைக
ளின் கர்த்தராகிய அவனுடைய மீட்பரும் சொல்
லுகிறார்.— நித்திய சனத்தை நாம் தாபித்ததுமு ௭
தற்கொண்டு, நம்மைப்போல எதையாகிலும் வர
வழைத்து, இன்னின்னதை முன் அறிவித்து, நம
க்குமுன்னே வரிசையாக நிறுத்தத்தக்கவன் யா
வன்? [16]பின்னடிச் செய்திகளையும் வருங்காரியங்
களையும் தங்களுக்கு அவர்கள் அறிவிக்கட்டும்.—

1 ஏசா. ௪௧. ௮.—2 ஏசா. ௪௪. ௮. ௨௧. ௩.—7 எரே. ௩௧. ௩௧.
3 ஏசே. ௰௧. ௪.—4 சங். ௯௦. ௨. 8 ஏசா ௪௧. ௰௮.—9 ஏசா. ௪௪. ௨௨.
5 ஏசா. ௰௪. ௨௭.—6 உ. இரா. ௰௪. ஏசே. ௩௧. ௨௨.

10 ஏசா. ௪௧. ௮: ௪௩. ௰.—11 இ மோ. ௩௨. ௯.—12 ஏசா. ௪௩. ௰௪: ௪௧. ௰௨. வெளி. ௧. ௮: ௨௨. ௰௩. 13 யோவா ௭. ௩௮: ௭. ௩௮. 14 சங். ௧. ௩.—15 ஏசா. ௪௧. ௪: ௪௮. ௰. ௧௨. 16 ஏசா. ௪௧. ௨௨, ௨௩.

௮ நீங்கள் கலங்காமலும், ஐயப்படாமலும் இருங்
கள்; நாம் அதுமுதற்கொண்டு அதை உனக்குக்
கேட்கப்பண்ணினதும், முன்னறிவித்ததும் இல்
லையோ என்பதற்கு நீங்கள் நம்முடைய சாட்
சிகள்? [1]நம்மைத்தவிர ஒரு தேவனுண்டோ?
வேறொரு கன்மலையுமில்லையே; ஒருவனையும் அ
௯ றியோம்.—சுரூபங்களை உருவாக்குகிற யாவரும்
மாயைதானே; அவர்களால் இச்சிக்கப்பட்ட
காரியங்கள் ஒன்றுக்கும் உதவாது; தங்களுக்கு
வெட்கமாக அவர்கள்தானே, அவைகள் ஒன்றும்
காணாமலும், ஒன்றும் அறியாமலும் இருக்கு
மென்று அவைகளுக்குச் சாட்சிகளாயிருக்கிறார்
௰ கள்.—ஒன்றுக்கும் உதவாத தேவனை உருவாக்
கிச் சுரூபத்தை வார்க்கிறவன் எப்படிக்கொத்த
௰௧ வன்?—இதோ, அவனுடைய கூட்டாளிகளெல்
லாம் வெட்குவார்கள்; ஏனெனில், தொழிலா
ளிகள் நரசீவன்கள்தானே; அவர்கள் எல்லாரும்
கூடிக்கொண்டு நிற்கட்டும்; அவர்கள் ஏகமாய்த்
திகைத்து வெட்கப்படுவார்கள்.

௰௨ [2]கொல்லன் இரும்பைக் குறட்டால் இடுக்கி,
தழலிலே வேகவைத்து, சுத்தியல்களால் அதை
உருவேற்படுத்தி, தன் புயத்தின் பலத்தினாலே
அதைச் செப்பனிடுகிறான்; பெலனற்றுப்போகு
மட்டும் பட்டினியுமாயிருக்கிறான்; இளைத்துப்
போகுமட்டும் தண்ணீர் குடியாமலும் இருக்கி
௰௩ றான்.—தச்சன் நூல்பிடித்து, மட்டப்பலகையால்
மரத்துக்குக் குறிபோட்டு, அதைக் கோணங்
கோணமாகப் பிடித்து, கவராசத்தால் அதை
ஊன்றி, அது வீட்டிலே வாசமாயிருப்பதற்காக
அதை ஒரு புருஷனுடைய சாயலும், ஒரு மனு
௰௪ ஷனுடைய உருவமும் ஆக்குகிறான்.—அவன்
தனக்குக் கேதுருக்களை வெட்டப்போகிறபோ
து, ஒரு புங்கமரத்தை, அல்லது ஒரு கர்வாலியு
மரத்தைத் தெரிந்துகொண்டு, காட்டுமரங்களிலே
பலக்க அதைத் தனக்கு வளர்க்கிறான்; அல்லது
அசோகமரத்தை, மழை அதைப் பயிராக்கும்ப
௰௫ டிக்கு நாட்டுகிறான்.—மனுஷனுக்கு அவைகள்
அடுப்புக்காகும்போது, அவன் அவைகளில் எடு
த்துக் குளிர்காய்ந்துகொள்ளுகிறான்; நெருப்பை
மூட்டி அப்பமும் சுடுகிறான்; என்றாலும், ஒரு
தேவனையும் உண்டுபண்ணி, அதைப் பணிந்து,
ஒரு சுரூபத்தை அதினாலே செப்பனிட்டு,அதை
௰௬ வணங்குகிறான்.—அதில் ஒரு பங்கை அடுப்பில்
எரிக்கிறான்; ஒரு பங்கினால் இறைச்சியைச்
சமைத்து, புசித்து,பொரியலைப்பொரித்து, திருத்
தியாகி, குளிருங்காய்ந்துகொண்டு: ஆகா, அன
லானேன்;நெருப்பைக் கண்டேனென்று சொல்
௰௭ லி,—அதின் மீதியான பங்கைத் தேவனாகவும்,
தனக்குச் சுரூபமாகவும் செப்பனிட்டு, அதற்கு
முன் விழுந்து, அதை வணங்கி: என்னை விடுவி;
ஏனெனில், நீ என் தேவனென்று அதைநோக்கி
௰௮ விண்ணப்பஞ்செய்கிறான்.—அறியாமலும் உண
ராமலும் இருக்கிறார்கள்; ஏனென்றால் காணாதப
டிக்கு அவர்கள் கண்களும், உணராதபடிக்கு
அவர்கள் இருதயமும், பூச்சுப்பூசப்பட்டு இருக்
கின்றன.—அதிலே பாதியை அடுப்பில் எரித் ௰௯
தேன்; அதினுடைய தழலின்மேல் அப்பத்தை
யும் சுட்டு, இறைச்சியையும் பொரித்துப் புசித்
தேன்; அதின் மீதியான பங்கை நான் அருவருப்
பாக்குவேனோ? ஒரு மரத்தின் துண்டை வணங்
குவேனோ என்று சொல்ல, அவன் தன் மன
துக்குள்ளே தோன்றவில்லை; அம்மாத்திரம் அறி
வும் சொரணையுமில்லை. — அவன் சாம்பலிலே ௨௰
மேய்கிறான்; அவனுடைய இருதயம் அவனைப்
புரட்டிவிட்டது; அவன் தன் ஆத்துமாவைத்
தப்புவிக்காமலும், என் வலதுகையிலே மோச
மல்லவோ இருக்கிறதென்று சொல்லாமலுமி
ருக்கிறான்.

யாக்கோபே, இஸ்ரவேலே, இவைகளை நினை; ௨௧
ஏனெனில், [3]நீ நம்முடைய தாசன்; உன்னை
உருவாக்கினோம்; நீ நம்முடைய தாசன்; இஸ்ர
வேலே, நீ நம்மால் மறக்கப்படுவதில்லை.—உன் ௨௨
மீறுதல்களை [4]மந்தாரத்தைப்போலவும், உன் பா
வங்களை மேகத்தைப்போலவும் நிக்கிரகம்பண்
ணுகிறோம்; நம்மண்டைக்குத் திரும்பு; ஏனெ
னில், உன்னை மீட்டுக்கொண்டோம்.

[5]வானங்களே, கெம்பீரியுங்கள்; ஏனெனில், ௨௩
கர்த்தர் அதைச்செய்தார்; பூதலமான தாழ்விடங்
களே, ஆர்ப்பரியுங்கள்; பர்வதங்களே, காடே,
காட்டிலுள்ள சகல மரங்களே, கெம்பீரமாய்
முழங்குங்கள்; ஏனெனில், கர்த்தர் யாக்கோபை
மீட்டு, இஸ்ரவேலில் மகிமைப்படுகிறார்.

உன் மீட்பரும் உன்னைத் தாயின் கர்ப்பந்து ௨௪
வக்கி உருவாக்கினவருமான கர்த்தர் சொல்லுகிற
தாவது: நாமே எல்லாவற்றையும் செய்கிற கர்த்
தர்; நாம் ஒருவராய் வானங்களை விரித்து, நா
மாய்ப் பூமியைப் பரப்பினவர்.—நாம் கட்டுக் ௨௫
கதைக்காரரின் குறிகளை அவத்தமாக்கி, குறி
சொல்லுகிறவர்களை நின்மூடராக்கி, ஞானிக
ளைப் பின்னிடத்திருப்பி, அவர்கள் அறிவைப்
பயித்தியமாகப்பண்ணுகிறவர். — நாம் நம்மு ௨௬
டைய ஊழியக்காரரின் வார்த்தையை நிலைப்ப
டுத்தி, நம்முடைய தானாபதிகளின் ஆலோசனை
யை நிறைவேற்றி, குடியேறுவாயென்று எருச
லேமுக்கும், கட்டப்படுவீர்களென்று யூதாவின்
பட்டணங்களுக்கும் சொல்லி, அவைகளின்
பாழான தலங்களை எடுப்பிப்பவர்.—நாம் ஆழத் ௨௭
துடனே, வற்றிப்போ; உன் நதிகளை வெட்
டாந்தரை ஆக்குவோமென்று சொல்லுகிறவர்.—
கோரேசைக்குறித்து, அவன் நம்முடைய மே ௨௮
ய்ப்பன்; அவன் எருசலேமுக்குக் கட்டப்படு
என்றும் தேவாலயத்துக்கு அஸ்திபாரப்படு என்
றும் சொல்லி, நமக்குப் பிரியமானதையெல்
லாம் நிறைவேற்றுவானென்று நாம் சொல்லு
கிறவர்.

1 ௫ மோ. ௪. ௩௫.—2. ஏசா. ௪௰. ௧௯: ௪௧. ௬. எரே. ௰. ௩-௫.

3 ௨ வச.—4 ஏசா. ௧. ௰௮; ௪௩. ௨௫.—5 ஏசா. ௪௯. ௰௩. சங். ௬௯. ௩, ௨.

## ௪௫. அதிகாரம்.

*௧. பராபரன் தமது சபைக்குநிமித்தம் கோரேசை அழைத்து, ௫. தமது வல்லமையினாலே கீழ்ப்படுதலைக் கட்டளையிட்டது. ௨௰. இரட்சிப்புக்கு ஏதுவாகிய தமது வல்லமையினாலே விக்கிரகத்தின் மாயையை உணர்த்தினது.*

௧ கர்த்தராகிய நாம் அபிஷேகம்பண்ணுவித்த
[1]கோரேசுக்குமுன்பாகச் சாதிகளைக் கீழ்ப்படுத்
தி, இராசாக்களின் இடைகளைக் கட்டவிழ்க்கும்
படிக்கும், அவனுக்குமுன்பாக வாசல்கள் பூட்
டப்படாதிருக்க, கதவுகளைத் திறந்துவைக்கும்
படிக்கும், அவனை அவன் வலதுகையைப் பிடித்
துக்கொண்டு, அவனுக்குச் சொல்லுகிறதாவது:—
௨ நாம் உனக்குமுன்பாக நடந்து, கோணலானவை
௩ களைச் செவ்வையாக்குவோம்.—உன்னைப் பேர்
சொல்லி அழைக்கிற இஸ்ரவேலின் பராபரனா
கிய நாமே கர்த்தரென்று நீ அறியும்படிக்கு, நாம்
நம்முடைய தாசனாகிய யாக்கோபின் நிமித்த
மும், நாம் தெரிந்துகொண்ட இஸ்ரவேலின் நிமி
த்தமும், வெண்கலக்கதவுகளை உடைத்து, இருப்
புத் தாழ்ப்பாள்களை முறித்து, அந்தகாரத்தில் இ
ருக்கிற பொக்கிஷங்களையும் ஒளிக்கப்பட்டிருக்
கிற புதையல்களையும் உனக்குக் கொடுப்போம்.—
௪ அதற்காக நாம் உன்னைப் பேர்சொல்லி அழைத்
து, நீ நம்மை அறியாதிருக்கையில் உனக்கு நாமம்
௫ தரித்தோம்.—[2]நாமே கர்த்தர், வேறொருவர் இல்
௬ லே; நம்மைத்தவிரத் தேவனில்லை.—நம்மைத்த
விர ஒருவருமில்லையென்பது சூரியன் உதிக்கிற
திசையும், அது அஸ்தமிக்கிற திசையும்துவக்கி
அறியப்படும்படிக்கு நாம் உன்னை, நீ நம்மை அ
றியாதிருக்கையில் இடைக்கட்டினோம்; நாமே
௭ கர்த்தர், வேறொருவரில்லை.—வெளிச்சத்தையும்
உருவேற்படுத்தி, இருளையும் சிருஷ்டித்து, சுக
வாழ்வையும் உண்டுபண்ணி, [3]துன்பத்தையும்
படைப்பிக்கிறவர் நாமே; கர்த்தராகிய நாமே
இவைகளையெல்லாம் செய்கிறவர்.
௮ வானங்களே, உயர இருந்து சொரியுங்கள்;
ஆகாயமண்டலங்கள் [4]நீதியைப் பொழியக்கட
வன; பூமி திறவுண்டு, இரட்சிப்பின் கனியைத்
தந்து, நீதியுங்கூட விளைவதாக; கர்த்தராகிய நாம்
இவைகளைச் சிருஷ்டிக்கிறோம்.
௯ மண்ணோடுகளோடொத்த ஓடாயிருந்தும்,
தன்னை உருவாக்கினவரோடே வழக்காடுகிறவ
னுக்கு ஐயோ! [5]களிமண் தன்னை உருவாக்கின
வனுடனே என்னசெய்கிறாயென்று உன் கிரி
யைக்கான கைகள் இல்லையென்று சொல்லு
௰ மோ?—தகப்பனோடே என் சனிப்பித்தாயென்
றும், தாயோடே, என் பெற்றாயென்றும் சொல்
லுகிறவனுக்கு ஐயோ!
௧௧ இஸ்ரவேலின் பரிசுத்தராகிய கர்த்தரும் அதை
உருவாக்கினவரும் சொல்லுகிறதாவது: வருங்
காரியங்களைக்குறித்து நம்மைக் கேட்கிறீர்கள்;
நம்முடைய பிள்ளைகளுக்காகவும், நம்முடைய
கரங்களின் கிரியைக்காகவும் நமக்குத் திட்டம்
கற்பிப்பீர்களோ?—[6]நாம் பூமியை உண்டுபண் ௧௨
ணி, நாமே அதின்மேல் இருக்கிற மனுஷனைச்
சிருஷ்டித்தோம்; நம்முடைய கரங்கள் வானங்
களை விரித்தன; அவைகளின் சேனைக்கெல்லாம்
நாம் கற்பித்தோம்.—நாம் நீதியாக அவனை எழுப் ௧௩
புகிறோம்; அவன் வழிகளையெல்லாம் செவ்வை
யாக்குவோம்; [7]அவன் நம்முடைய பட்டணத்
தைக் கட்டி, சிறைப்பட்டுப்போனு நம்முடை
யவர்களைக் கிரயமில்லாமலும், பரிதானமில்லா
மலும் விடுதலையாக்குவானென்று சேனைகளு
டைய கர்த்தர் சொல்லுகிறார்.
எகிப்தின் பிரயாசமும், எத்தியோப்பியரின் ௧௪
வர்த்தக இலாபமும், நெடிய ஆள்களாகிய சபே
யரின் வர்த்தக இலாபமும் உன்னண்டைக்குத்
தாண்டிவந்து, உன்னுடையதாகும்; அவர்கள்
உன்பிறகே சென்று, விலங்குகளில் நடந்துவந்
து, உனக்குள்ளேதானே பராபரன் இருக்கிறார்,
அவரையல்லாமல் வேறே தேவன் இல்லையென்
று, உன்னைப் பணிந்துகொண்டு, உன்னைநோக்கி
விண்ணப்பம்பண்ணுவார்களென்று கர்த்தர்
சொல்லுகிறார்.—இஸ்ரவேலின் பராபரனும் இ ௧௫
ரட்சகருமாகிய தேவரீர் மெய்யாகவே [8]மறை
வான பராபரனாயிருக்கிறீர்.—சுரூபங்களை உண் ௧௬
டுபண்ணுகிற அனைவரும் நாணி, இலச்சையும்
அடைந்து, ஏகமாய் வெட்கப்பட்டுப்போவார்
கள்.—இஸ்ரவேலோவெனில், கர்த்தராலே நித் ௧௭
திய இரட்சிப்பாக இரட்சிக்கப்படும்; நீங்கள்
என்றென்றைக்குமுள்ள சதாகாலங்களிலும் நா
ணாமலும், வெட்கப்படாமலும் இருப்பீர்கள்.
ஏனெனில், வானங்களைச் சிருஷ்டித்து, பூமி ௧௮
யையும் வெறுமையாயிருக்கச் சிருஷ்டியாமல்
அதைக் குடியிருப்பாகச் செப்பனிட்டுப் படை
த்து, அதை உருவேற்படுத்தின பராபரனாகிய கர்த்
தர் சொல்லுகிறதாவது: [9]நாமே கர்த்தர், வேறொ
ருவரில்லை.—நாம் அந்தரங்கத்திலும், பூமியின் ௧௯
அந்தகாரமான இடத்திலும் பேசினதில்லை; நாம்
யாக்கோபின் வித்துக்கு விருதாவாக நம்மைத்தே
டுங்களென்று சொன்னதுமில்லை; நாம் நீதியைப்
பேசி, நிதானங்களை அறிவிக்கிற கர்த்தர்.—சாதி ௨௰
களிலே தப்பினவர்களே, [10]கூடிக்கொண்டு வா
ருங்கள், ஏகமாய்ச் சேருங்கள்; தங்கள் சுரூபங்
களின் மரத்தைச் சுமந்து, இரட்சிக்கமாட்டாத
தேவனைத் தொழுதுகொள்ளுகிறவர்கள் அறிவில்
லாதிருக்கிறார்கள்.— நீங்கள் அறிவிக்கும்படிக் ௨௧
குச் சேர்ந்து, ஏகமாய் யோசனையும்பண்ணுங்
கள்; இதைப் பூருவகாலமுதற்கொண்டு கேட்
கப்பண்ணி, அப்போதுதுவக்கி அதை அறிவித்த
வர் யார்? கர்த்தராகிய நாமல்லவோ? நீதிபரனும்,
இரட்சகருமாகிய நம்மையல்லாமல் வேறே தே
வனே இல்லை; நம்மைத்தவிர வேறொருவருமில்
லை.—[11]பூமியின் எல்லா எல்லைகளே, நம்மை நே ௨௨
ரிட்டுநோக்குங்கள்; அப்போது இரட்சிக்கப்படு

1 எசா. ௪௪.௨௮.—2 இ மோ. ௧௨. 4 ஓசே. ௰ ௧௨.—5 உரோ ௯.௨௰ ௧௧.—3 ஆமோ. ௩. ௬. 6 எசா. ௪௰.௨௮.—7 ௧.வசா. ௨. ௯௱௭. ௧௬. ௨௨. எஸ். ௧. ௩. ௪. 9 இ. வச.—10 எசா. ௪௯. ௬. 8 சங். ௪௪.௨௪. உரோ. ௰௬.௨௫,௨௬. 11 ௧ தீமோ. ௨. ௩, ௪.

வீர்கள்; ஏனென்றால், நாமே பராபரன், வேறொ
உங ருவருமில்லை. — [1]நமக்கு முழங்கால் யாவும்
முடங்கி, கர்த்தருக்குள்மாத்திரம் எனக்கு நீதிக
ளும் பெலனும் உண்டென்று, நாவு யாவும் சத்தி
யம்பண்ணவேண்டுமென்று, நம்மைக்கொண்டு
நாம் ஆணையிட்டோம்; இந்த நீதியான வார்த்தை
நமது வாயிலிருந்து புறப்பட்டது, அது மாறு
உச வதும் இல்லையென்கிறார். — அப்படிக்கொத்த
வர்கள் அவரண்டைக்குவந்து சேருவார்கள்;
ஆனால், அவருக்கு விரோதமாய் எரிகிற யாவரும்
உரு வெட்கப்படுவார்கள்.—இஸ்ரவேலின் வித்தாகிய
யாவரும் கர்த்தருக்குள் நீதிமான்களாகி மேன்
மைபாராட்டுவார்கள்.

## சகூ. அதிகாரம்.

க. பாபிலோனின் விக்கிரகங்கள் தங்களைத்தாமே இரட்சித்துக்கொள்ளக் கூடாதென்பது. ங. பராபரன் தமது சனத்தை முடிவுமட்டும் காப்பாற்றுவாரென்பது. கி. விக்கிரகங்கள் வல்லமையிலும், ௰உ. தற்கால இரட்சணியத்திலும் பராபரனுக்கு இணையல்லவென்பது.

க பேல் குனிந்து, நேபோ மடங்கிப்போம்; அவர்
களுடைய விக்கிரகங்கள் சீவன்களுக்கும், மிரு
கங்களுக்கும் சுமையாகும்; மூட்டைகளாகிய
உங்கள் சுமைகள் இளைப்பான சீவன்களுக்குப்
உ பாரமாம்.—ஏகமாய் மடங்கிக் குனியும்; மூட்
டையாகாதபடிக்கு அவைகள் தப்பமாட்டாது;
அவைகள்தாமே சிறைப்பட்டுப்போம்.
ங தாயின் வயிற்றிலேதுவக்கி நம்மாலே ஏந்தப்
பட்டு, தாயின் கர்ப்பத்திலேதுவக்கிச் சுமக்கப்
பட்டவர்களாகிய யாக்கோபின் வீட்டாரே, இஸ்
ரவேலின் வீட்டில் மீதியாகிய சகல சனங்களே,
ச நம்மைக் கேளுங்கள்.—[2]உங்கள் முதிர்ந்த வயது
மட்டுக்கும் நாம் அவரே; நரைமட்டுக்கும் நாம்
சுமப்போம்; நாம் அப்படிச் செய்துவந்தோம்,
இனிமேலும் நாம் எடுப்போம், நாம் சுமப்போம்,
தப்பவிடுவிப்போம்.
ரு யாருக்கு [3]நம்மைச் சாயலும் சமானமுமாக்கி,
யாருக்கு நாம் சாயலாகும்படிக்கு நம்மை ஒப்பி
சு டுவீர்கள்?—[4]பையிலிருக்கிற பொன்னைச் செல
வழித்து, வெள்ளியைத் தராசில் நிறுத்துத் தட்டா
னுடனே கூலிபொருந்திக்கொள்ளுகிறார்கள்;
அவன் அதைத் தேவனாக்குகிறான்; அதை வணங்
எ கிப் பணிந்துகொள்ளுகிறார்கள்.—அதைத் தோ
ளின்மேல் எடுத்து, அதைச் சுமந்து, அதை அதின்
தானத்திலே வைக்கிறார்கள்; அங்கே நிற்கும்
தன் இடத்தைவிட்டு அசையாது; ஒருவன் அதை
நோக்கிக் கூப்பிட்டால், அது மறுஉத்தரவு கொ
டுக்கிறதுமில்லை; அவன் இக்கட்டை நீக்கி, அவ
னை இரட்சிக்கிறதுமில்லை.
அ இதை நினைத்து உங்களைத் திடப்படுத்திக்
கொள்ளுங்கள், பாதகரே, இதை மனதிலே வை
கூ யுங்கள்.—முந்திப் பூருவகாலம்துவக்கி நடந்த
வைகளை நினையுங்கள்; ஏனெனில் [5]நாமே பரா
பரன், வேறொரு தேவனில்லை; நமக்கு ஒத்தது
ம ஒன்றுமில்லை.—நாம் பிற்காரியத்தை ஆதிமுதற்
கொண்டும், இன்னம் செய்யப்படாதவைகளைப்
பூருவகாலமுதற்கொண்டும் அறிவித்து, [6]நம்மு
டைய ஆலோசனை நிற்குமென்றும், நமக்குச் சித்
தமானவைகளையெல்லாம் செய்வோமென்றும்
சொல்லி,—உராஞ்சுகிற ஒரு பட்சியைக் கிழக்கி மக
லும், நம்முடைய ஆலோசனையின் மனுஷனைத்
தூரதேசத்திலுமிருந்து வரவழைக்கிறவராய் இரு
க்கிறோம்; அதைச் சொன்னோம், அதை வரவும்
பண்ணுவோம்; அதைத் திட்டம்பண்ணினோம்,
அதைச் செய்துமிருப்போம்.
முரட்டிருதயத்தாரே, நீதிக்குத் தூரமானவர் மஉ
களே, நம்மைக் கேளுங்கள்.—நம்முடைய நீதி மங
யைச் சமீபிக்கப்பண்ணுகிறோம், அது தூரமா
யிருப்பதில்லை; நமது இரட்சிப்புத் தாமதிப்பது
மில்லை; நாம் சீயோனிலே இரட்சிப்பையும்,
இஸ்ரவேலுக்கு நமது மகிமையையும் கட்டளை
யிடுவோம்.

## சஎ. அதிகாரம்.

க. பாபிலோன்மேலும், கல்தேயாவின்மேலும், சு. அவர்களுடைய இரக்கமில்லாமைக்காகவும், எ. மேட்டிமைக்காகவும், அ. இறுமாப்புக்காகவும், ௰க. விலக்கப்படாத நியாயத்தீர்ப்புச் சொல்லப்பட்டது.

பாபேல் குமாரத்தியாகிய கன்னியாஸ்திரியே, க
நீ இறங்கி [7]மண்ணிலேஉளுக்காரு; கல்தேயரின்
குமாரத்தியே, தரையிலே உளுக்காரு; இனி இரா
சாசனமில்லை, ஏனெனில் நீ அப்புறம் செருக்
குக்காரியும், சுகசெல்வியுமென்று அழைக்கப்
படுவதில்லை. — எந்திரத்தை வாங்கி மாவரை; உ
உன் கூந்தலை விரித்துவிடு; வெறுங்காலும் அம்
மணத்தொடையுமாய் ஆறுகளைக் கடந்துபோ.—
[8]உன் நிருவாணம் திறக்கப்படும்; உன் இலச்சை ங
காணப்பட்டுப்போம்; ஒருவனையும் பாராமல்
நீதியைச் சரிக்கட்டுவோம்.
எங்கள் மீட்பருடைய நாமம் இஸ்ரவேலின் ச
பரிசுத்தராகிய சேனைகளுடைய கர்த்தரென்
பது.—கல்தேயரின் குமாரத்தியே, நீ மவுனமாய் ரு
உளுக்காந்து, இருளுக்குள்ப்பிரவேசி; ஏனெ
னில், இனி இராச்சியங்களுடைய நாச்சியா
ரென்று அழைக்கப்படாய்.-நாம் நமது சனத்தின் சு
மேல் கடுங்கோபமடைந்து, நமது சுதந்தரத்தைப்
பரிசுத்தக்குலைச்சலாக்கி, அவர்களை உன் கை
யில் ஒப்புக்கொடுத்தோம்; நீயோவெனில், அவர்
களுக்காக இரக்கம்வைக்காமல் முதிர்ந்தவயதுள்
ளவர்களின்மேல் உன் நுகத்தடியை மகா பார
மாக்கி, — [9]என்றென்றைக்கும் நாச்சியாராய் எ
இருப்பேனென்று சொல்லி, இந்தக்காரியங்களை
இதுவரைக்கும் உன் மனதிலே வைக்காமலும்,
அதின் முடிவை நினையாமலும்போனாய்.—இப் அ
போதும் சுகமாயிருந்து, நான்தானே என்னைத்த
விர யாருமில்லை; நான் விதவையாய் உளுக்கா
ராமலும், சந்தான சேதத்தை அறியாமலும் இருப்
பேனென்று உன் இருதயத்திலே சொல்லுகிற
செல்வியே, நாம் சொல்வதைக்கேள்.—சந்தா கூ
னசேதமும், விதவையிருப்பும், இவ்விரண்டும்
உனக்கு அசுப்பிலே [10]ஒரேநாளிலே வரும்; உன்

1 பிலி. உ. ௰, ௰க.
2 சங். எக. ௰அ.
3 சங். சம். ௰.—4 எசா. சக. எ; சச. ௯-உ௰.—5 எசா. சடு. கி.
6 சங். ௬௩. ௰க. வாக். ௰௬. உக: உக. ௬.கி.—7 எசா உ௬.௫—8 நாகூ. ௰௪.—9 வெளி. ௰அ. எ.
10 வெளி. ௰அ. அ.

திரளான சூனியங்களினிமித்தமும், உன் தம்ப
னங்களின் மகா வெகுத்துவத்தினிமித்தமும்
ம அவைகள் நிறைவாய் உன்மேலேவரும்.—ஏனெ
னில், உன் பொல்லாப்பிலே நீ திடநம்பிக்கை
யாயிருந்து, என்னைப்பார்க்கிறவர் இல்லையென்
ருய்; உன் ஞானமும் உன் அறிவுமே உன்னைப்
புரட்டின; ஆகையால் உன் இருதயத்திலே நான்
தானே, என்னைத்தவிர யாருமில்லையென்ருய்.—
மக ஆனபடியால் எங்கேயிருந்து உதித்ததென்று நீ
அறியாத ஒரு பொல்லாப்பு உன்மேல் வந்து, நீ
நிவிர்த்தியாக்கமாட்டாத ஒரு விக்கினம் உன்
மேல் விழுந்து, நீ அறியாதபடிக்கு அசுப்பிலே
உண்டாகும் பாழ்க்கடிப்பு உன்மேல் வரும்.—
மஉ இப்போதும் இலாபம் அடையமாட்டுவாயோ
வென்றும், உன்னைப் பலப்படுத்துவாயோவென்
றும், நீ உன் சிறுவயதுதுவக்கிப் பிரயாசப்பட்ட
உன் தம்பனங்களிலும், உன் திரளான சூனியங்
மங களிலும் நீ நில். — உன் திரளான யோசனைக
ளிலே வேசாறினையே; இப்போதும் [1]வானத்தை
க் கவனித்து, நட்சத்திரங்களைநோக்கி, அமாவா
சைகளைப் பார்த்துக் கணிக்கிறவர்கள் எழும்பி,
உன்மேல் வருகிறவைகளுக்கு உன்னை விலக்கி
மச இரட்சிக்கட்டும்.—இதோ, தாளடிகளைப்போல
இருப்பார்கள்; நெருப்பு அவர்களைச் சுட்டெரிக்
கும்; தங்கள் பிராணனையே அவர்கள் அக்கினிச்
சுவாலையின் கைக்குத் தப்புவிப்பதில்லை; அது
குளிர்காயும் தழல்அல்ல, அது எதிரே உளுக்கா
மரு ரத்தக்க அடுப்புமல்ல.—அப்படி உன் சிறுவயது
துவக்கி நீ பிரயாசப்பட்ட உன் வியாபாரிகள்
உனக்கு இருப்பார்கள்; அவரவர் தங்கள் போக்
கிலே போய் அலைவார்கள்; உன்னை இரட்சிப்
பாரில்லை.

## சஅ. அதிகாரம்.

க பராபரன் சனத்திலுடைய பிரசித்தமான முரட்டுத்தனத்தை அவர்களுக்குத் தெரிவிக்குந் திர்க்கதரிசனங்களை வெளியிட்டது. கூ. தமது நிமித்தமாக அவர்களைக் காப்பாற்றினது. மஉ. தமது வல்லமைக்காகவும், பாமரிப்புக்காகவும் அவர்களை மீட்படுதலுக்குத் தூண்டினது. மசு. அவர்களுடைய உணர்வற்ற தன்மைக்காக அவர்களைக்குறித்துப் புலம்பினது. உய. பாபிலோனைவிட்டுத் தமது சனத்தை வல்லமையுள்ளவிதமாய் விடுதலையாக்குவாரென்பது.

க இஸ்ரவேலென்றபேராய் அழைக்கப்பட்டு, யூ
தாவின் நீரூற்றிலிருந்து சுரந்தவர்களும், கர்த்தரு
டைய நாமத்தின்மேல் ஆணையிட்டு, இஸ்ரவேலு
டைய பராபரனை நினைத்தும், அதை உண்மையும்
உ நீதியுமாய்ச் செய்யாதவர்களும்,—பரிசுத்த பட்
டணத்தாரின்பேரைத் தரித்துக்கொண்டு, சேனை
களின் கர்த்தரென்ற நாமமுள்ள இஸ்ரவேலுடை
ய பராபரன்மேல் ஊன்றிக்கொள்ளுகிறவர்களு
மாகிய யாக்கோபின் வீட்டாரே, கேளுங்கள்.—
ங முன்நடந்தவைகளை அதற்குமுன் அறிவித்தோம்;
நமது வாயிலிருந்து பிறந்தது; அவைகளைக் கேட்
கவும்பண்ணினேம்; அப்படியே அசுப்பிலே
ச செய்தோம்; அப்படி வந்ததே.—[2]நீ கடினமுள்ள
வனென்றும், உன் பிடரி இருப்பு நரம்பும், உன்
நெற்றி வெண்கலமுமென்றும் அறிந்திருக்கி
றேம்.—ஆகையால், என் விக்கிரகம் அவைகளைச் டு
செய்ததென்றும், என் சுரூபமும் நான் வார்ப்பித்
ததும் அவைகளைக் கட்டளையிட்டனவென்றும்
நீ சொல்லாதபடிக்கு, நாம் அதற்குமுன் அவைக
ளை உனக்கு முன்னறிவித்து, அவைகள் வராததற்
குமுன்னே உனக்குக் கேட்கப்பண்ணினேம்.—
அவைகளைக் கேட்டாயே, அவைகளையெல்லாம் சு
பார்; இப்போது நீங்களுமல்லவோ அவைகளை
அறிவிக்கத்தகும்; இதுமுதல் புதியவைகளான
வைகளையும் நீ அறிந்திராமல், வைத்துவைக்கப்
பட்டவைகளையும் உனக்குக் கேட்கப்பண்ணு
கிறேம்.—அவைகள் ஆதிமுதற்கொண்டு அல்ல, எ
இப்போது சிருஷ்டிக்கப்பட்டன; இதோ, அ
வைகளை அறிவேனென்று நீ சொல்லாதபடிக்கு,
இந்நாள்களுக்குமுன்னே நீ அவைகளைக் கேட்
டிருந்ததில்லை —நீ கேட்டதுமில்லை, அறிந்தது அ
மில்லை; அதுமுதல் உன் செவி திறந்துபோனது
மில்லை; ஏனெனில் நீ துரோகம்பண்ணுவதை
யும், நீ தாயின் கர்ப்பந்துவக்கி மீறுகிறவனென்று
அழைக்கப்பட்டதையும் அறிந்திருந்தோம். —
நமது நாமத்தினிமித்தம் நம்முடைய கோபத் கூ
தைத் தாமதிக்கப்பண்ணினேம்; உன்னைச் சங்க
ரிக்காதபடிக்கு நாம் நமது புகழ்ச்சியினிமித்தம்
உனக்காகப் பொறுத்தும் இருப்போம்.—இதோ, ம
உன்னைப் புடமிடுகிறேம்;ஆனல் வெள்ளியைப்
போலல்ல; சிறுமையின் குகையிலே உன்னைத்
தெரிந்துகொள்ளப்பட்டவனுக்குகிறேம். —
நம்முடைய நிமித்தம், நம்முடைய நிமித்தமே அ மக
தைச் செய்வோம்; ஏனெனில்,எப்படி நமது நாம
த்தின் பரிசுத்தம் கொலைக்கப்படலாம்; [3]நமது
மகிமையை வேறொருத்தனுக்குக் கொடோம்.

யாக்கோபே, நாம் அழைத்திருக்கிற இஸ்ரவே மஉ
லே, நமக்குச் செவிகொடு, நாம் அவரே; [4]நாம்
முந்தினவரும், நாம் பிந்தினவருந்தானே.—நம் மங
முடைய கரமே பூமியை அஸ்திபாரப்படுத்தி,
நம்முடைய வலதுகை வானங்களை அளவிட்
டது; நாம் அவைகளைக் கூப்பிட, அனைத்தும் நிற்
கும்.—நீங்கள் எல்லாரும் கூடிவந்து கேளுங்கள்; மச
[5]கர்த்தர் சிநேகித்திருக்கிறவன் அவருக்குச் சித்த
மானதைப் பாபேலிலே செய்வான்; அவன் புயம்
கல்தேயரின்மேல் இருக்கும் என்பவைகளை இ
வர்களில் அறிவித்தவன் யாவன்?—நாம், நாமே மரு
அதைச் சொன்னேம்; நாம் அவனை அழைக்கிற
வருமாய் இருக்கிறேம்; அவனை வரப்பண்ணு
வோம்; அவன் வழி வாய்க்கிறதுமாயிருக்கும்.
நம்மண்டையில் சேர்ந்து, நாம் சொல்வதைக் மசு
கேளுங்கள்; நாம் ஆதிமுதற்கொண்டு அந்தரங்
கத்திலே பேசினதில்லை; அது உண்டாகும் காலந்
துவக்கி அங்கே நாம் இருந்தோம்; இப்போதோ
வெனில், கர்த்தராகிய ஆண்டவரும், அவரு
டைய ஆவியும் நம்மை அனுப்புகிறார்.—இஸ்ர மஎ
வேலின் பரிசுத்தராயிருக்கிற உன் மீட்பரான

1 தானி. உ உ.—2 எரே. இ. க. ஏசே. உ. ச.

3 ஏசா. சஅ. அ.—4 ஏசா. சக. ச: சச. சு.—5 ஏசா. சச. உஅ.

கர்த்தர் சொல்லுகிறதாவது: நாம் பிரயோசனமா
யிருக்கிறதை உனக்குப் போதித்து, [1]நீ நடக்க
வேண்டிய வழியில் உன்னை நடத்துகிற உன்
௰௮ பராபரனாகிய கர்த்தர்.—[2]ஆ நம்முடைய கற்பனை
களைக் கவனித்தாயானால் தாவிளே; அப்போது
உன் சமாதானம் நதியத்தனையும், உன் நீதி சமுத்
திரத்தின் அலைகளத்தனையுமாய் இருக்கும்.—
௰௯ அப்போது உன் வித்து மணலத்தனையும், உன்
கர்ப்பப்பிறப்புகள் அதின் பொடிக்கல்லுகளத்
தனையுமாய் இருக்கும்; அப்போது அதின்பேர்
நம்மைவிட்டு அறுப்புண்ணாமலும், அழிக்கப்ப
டாமலும் இருக்கும்.
௨௰ [3]பாபேலிலிருந்து புறப்படுங்கள்; கல்தேயரை
விட்டுக் கெம்பீர சத்தமாய் ஓடிவாருங்கள்; இதை
அறிவித்துக் கேட்கப்பண்ணுங்கள்; இதைப் பூமி
யின் கடையாந்தமட்டும் வெளிப்படுத்துங்கள்;
கர்த்தர் தம்முடைய அடியானாகிய யாக்கோபை
மீட்டுக்கொண்டாரென்று சொல்லுங்கள் என்கி
௨௧ றார்.—[4]அவர் இவர்களை வனாந்தரங்களில் நடத்
தும்போது, இவர்களுக்குத் தாகதவனமாயிராது;
தண்ணீர்களைக் கல்மலையிலிருந்து இவர்களுக்
குச் சுரக்கப்பண்ணி, தண்ணீர்கள் ஓடிவரக்
௨௨ கல்மலையைப் பிளப்பார்.—[5]ஆகாதவர்களுக்கோ
சமாதானமில்லையென்று கர்த்தர் சொல்லுகிறார்.

## ௪௰௯. அதிகாரம்.

௧. கிறிஸ்து யூதரிடத்திற்கு அனுப்பப்பட்டிருந்து, அவர்கள்மேல் முறையிடுவாரென்பது. ௫. அவர் கிருபையுள்ள வாக்குத்தத்தத்தோடே பிறமதஸ்தரிடத்தில் அனுப்பப்படுவாரென்பது. ௰௩. பரமபரனுடைய அன்பு தமது சபைமேல் என்றுமுள்ளதென்பது. ௰௮. திருச்சபை முந்தின சீருக்குக் குறைவில்லாமல் கொண்டுவரப்படுமென்பது. ௨௪. சிறையிருப்பிலிருந்து வல்லமையுள்ளவிதமாய் விடுதலை கிடைக்குமென்பது.

௧ தீவுகளே, நமக்குக் கேள்விகொடுங்கள்; தூரத்
திலிருக்கிற சனசதளங்களே, கவனியுங்கள்;
கர்த்தர் நம்மைத் தாயின் கர்ப்பத்திலேதுவக்கி
அழைத்து,நான் என் தாயின் குடல்களில் இருக்
கையில் என் நாமத்தைப் பிரஸ்தாபப்படுத்தி
௨ னார்.—[6]அவர் என் வாயைக் கூர்மையான பட்
டையமாக்கி, தம்முடைய கரத்தின் நிழலினால்
என்னை மறைத்து, என்னைத் துலக்கமான அம்
பாக்கி, என்னைத் தம்முடைய அப்பறாத்தூணி
௩ யிலே மூடிவைத்தார்.—நம்முடனே: நீரே [7]நம்
முடைய ஊழியக்காரன்; இஸ்ரவேல் நாம் மகி
௪ மைப்படும் சாதியென்றார்.—நானோவென்றால்
சொன்னதாவது: விருதாவாய் உழைக்கிறேம்,
வீணும் அவத்தமுமாய் நம்முடைய பெலனைச்
செலவழிக்கிறேம்; ஆகிலும் நம்முடைய நியா
யம் கர்த்தரிடத்திலும், நம்முடைய பலன் நம்
முடைய பராபரனிடத்திலும் இருக்கிறதென்
௫ றேம்.—இப்போதும் நம்மைத் தாயின் கர்ப்பத்தி
லேதுவக்கித் தமக்கு ஊழியக்காரனாக உருவேற்
படுத்தின கர்த்தர், யாக்கோபைத் தம்மண்டைக்
குத் திருப்பச்சொல்லுகிறார்; ஆனால் இஸ்ரவேல்
சேராதேபோகிறது; ஆகிலும் கர்த்தருடைய பார்
வையில் கனம் அடைவோம்; நம்முடைய பரா
பரன் நம்முடைய பெலனாயிருப்பார். — யாக் ௬
கோபின் கோத்திரங்களை நிமிர்த்தவும், இஸ்ரவே
லில் மீர்த்துவைக்கப்பட்டவர்களைத் திருப்பவும்,
நீர் நமக்கு ஊழியக்காரனாயிருக்கிறதுகொஞ்சக்
காரியமாயிருக்கிறது; நீர் பூமியின் கடைசிபரி
யந்தமும் நமது இரட்சிப்பாயிருக்க, உம்மைச்
[8]சாதிகளின் வெளிச்சமாகவும் வைத்தோமென்
கிறார்.
சத்தியமுள்ள கர்த்தரின்நிமித்தமும், உம்மைத் ௭
தெரிந்துகொண்ட இஸ்ரவேலுடைய பரிசுத்த
ரின்நிமித்தமும், இராசாக்கள் கண்டு எழுந்தி
ருந்து, பிரபுக்கள் பணிந்துகொள்ளுவார்களெ
ன்று, இஸ்ரவேலின் மீட்பரும் அதின் பரிசுத்தரு
மாகிய கர்த்தர், சாதியால் அருவருக்கப்பட்டவ
ரும் அதிகாரிகளின் பணிவிடைக்காரனுமான
அசட்டைபண்ணப்பட்ட ஆத்துமாவுக்குச் சொ
ல்லுகிறார்.—கர்த்தர் சொல்லுகிறதாவது: [9]பிரிய ௮
மான காலத்தில் உம்முடைய வேண்டுதலைக்
கேட்டு, இரட்சிப்பின்நாளிலே உமக்கு ஒத்தா
சைபண்ணுகிறேம்; நீர் பூமியை நிமிர்த்தி, பாழா
ய்க்கிடக்கிற சுதந்தரங்களைச் சுதந்தரிக்கப்பண்
ணவும்,—கட்டுண்டவர்களுடனே, புறப்படுங் ௯
களென்றும், இருளில் இருக்கிறவர்களுடனே
வெளிப்படுங்களென்றும் சொல்லவும், நாம் உம்
மைக் காப்பாற்றி உம்மைச் சனத்தின் உடம்ப
டிக்கையாகக் கட்டளையிடுவோம்; அவர்கள் வழி
களோரமாய் மேய்வார்கள்; சகல மேடுகளிலும்
அவர்களுக்கு மேய்ச்சல் உண்டாயிருக்கும். —
[10]அவர்கள் பசியாயிருப்பதுமில்லை; தாகமாயிருப் ௰
பதுமில்லை; உஷ்ணமாகிலும், வெயிலாகிலும்
அவர்கள்மேல் படுவதுமில்லை; ஏனெனில் அவர்
களுக்கு இரங்குகிறவர் அவர்களை நடத்தி, அவர்
களை நீரூற்றுகளண்டைக்குக் கொண்டுபோய்
விடுவார்.—[11]நம்முடைய பர்வதங்களை எல்லாம் ௰௧
வழிகளாக்குவோம்; நம்முடைய பாதைகள்
உயர்த்தப்பட்டவைகளுமாயிருக்கும்.—இதோ, ௰௨
இவர்கள் தூரத்திலும், அதோ, அவர்கள் வடக்
கிலும், மேற்கிலும், அவர்கள் சீனீம்தேசத்திலு
மிருந்து வருவார்களென்கிறார்.
[12]வானங்களே, கெம்பீரியுங்கள்; பூமியே, களி ௰௩
கூரு; பர்வதங்களே, கெம்பீரமாய் முழங்குங்
கள்; ஏனெனில் கர்த்தர் தம்முடைய சனத்தைத்
தேற்றரவுபண்ணினார்; சிறுமைப்பட்டிருக்கிற
தம்முடையவர்கள்மேல் இரக்கமாயிருப்பார்.
சீயோனோவென்றால், கர்த்தர் என்னைக் கை ௰௪
விட்டார், ஆண்டவர் [13]என்னை மறந்தாரென்
கிறது. — ஒரு ஸ்திரி தன் கர்ப்பத்தின் பிள் ௰௫
ளைக்கு இரங்காதபடிக்கு, தன் பாலகனை மறப்
பாளோ? அப்படிப்பட்டவள் அவைகளை மறந்
தாலும் நாம் உன்னை மறப்பதில்லை.—இதோ, ௰௬
உள்ளங்கைகளில் உன்னைப் பதித்தோம்; [14]உன்

1 சங். ௧௨. ௮ —2 சங். ௮௧. ௰௪. ௯. ௨௧.—6 வெளி. ௧. ௰௬.
3 எரே. ௫௰. ௮. வெளி. ௰௮. ௪. 7 ஏசா. ௪௨. ௧.—8 ஏசா. ௪௨. ௬,
4 உ மோ. ௰௭. ௬.—5 ஏசா. ௫௭. எ. லூக். ௨. ௩௰, ௩௨. அப். ௰௩. ௪௭.—9 ௨ கொரி. ௬. ௨. 12 ஏசா. ௪௪. ௨௩.—13 ஏசா. ௫௪.
10 சங். ௨௩. ௧. ௨. ஏசா. ௩௩. ௯. வெளி. ௬-௮.—14 சங். ௫௧. ௨௰.
௭, ௰௬: ௰௬. ௰௭.—11 ஏசா. ௪௰. ௪.

மதில்கள்நிமித்தம் நமக்குமுன்பாக இருக்கின்
௰௭ றன. — உன் குமாரர் தீவிரித்து வருவார்கள்;
உன்னை நிர்மூலமாக்கினவர்களும், உன்னைப்
பாழ்க்கடித்தவர்களும் உன்னைவிட்டுப் புறப்
௰௮ பட்டுப்போவார்கள்.—[1]உன் கண்களை ஏறெடுத்
துச் சுற்றிலும் பார்; இவர்கள் எல்லாரும் கூட்
டப்பட்டு உன்னண்டைக்கு வருகிறார்கள்; நீ இ
வர்களை எல்லாம் ஆபரணமாகத் தரித்து,ஒருமணே
வியைப்போலே, இவர்களை உடையாகக்கட்டிக்
கொள்ளுவாயென்கிறதை,நம்முடைய சீவனைக்
கொண்டு சொல்லுகிறோமென்று கர்த்தர் உரைக்
௰௯ கிறார்.—ஏனெனில், உன்னுடைய வனாந்தரங்
களும், பாழான உன்னுடைய தானங்களும், நிர்
மூலமான உன்னுடைய தேசமுமே இனிக் குடி
களின் திரளினாலே உனக்கு நெருக்கமாயிருக்
கும்; உன்னை விழுங்கினவர்களோவெனில் தூர
௨௰ மாவார்கள்.—இடம் எனக்கு நெருக்கமாயிருக்கி
றது; நான் குடியிருக்கும்படிக்கு ஒற்றியிருவெ
ன்று,உனக்கு உண்டாயிருக்கப்போகிற பிள்ளை
களற்றிருந்த உன் காதுகள் கேட்கச் சொல்வ
௨௧ தூண்டு. — நீ உன் இருதயத்திலே: இவர்களை
எனக்குப் பிறப்பித்தவர் யார்? நான் பிள்ளைகளற்
றும், தனித்தும்,சிறைப்பட்டும்,நிலையற்றும் இரு
ந்தேனே; இவர்களை எனக்கு வளர்த்தவர் யார்?
இதோ, நான் ஒண்டியாய் விடப்பட்டிருந்தே
னே; இவர்கள் எங்கேயிருந்தவர்கள் என்பாய்.
௨௨ இதோ, சாதிகளுக்கு நேராக நமது கரத்தை
உயர்த்தி, சனசதளங்களுக்கு நேராக நமது கொ
டியை ஏற்றுவோம்; அப்போது உன் குமாரரைக்
கொடுங்கைகளில் ஏந்திக்கொண்டுவருவார்கள்;
உன் குமாரத்திகள் தோள்களின்மேல் எடுத்து
வரப்படுவார்களென்று கர்த்தராகிய ஆண்டவர்
௨௩ சொல்லுகிறார். —[2]இராசாக்கள் உன்னை வளர்க்
கிறவர்களும்,அவர்கள் நாயகிகள் உன் தாதிகளு
மாயிருப்பார்கள்; [3]தரையிலே முகங்குப்புற
விழுந்து, உன்னைப் பணிந்து, உன் கால்களின்
தூளை நக்குவார்கள்; நாம் கர்த்தர், நமக்குக் காத்
திருக்கிறவர்கள் வெட்கிப்போவதில்லை என்கி
றதை அப்போது அறிந்துகொள்ளுவாய்.
௨௪ பராக்கிரமன் கையிலே கொள்ளையுடைமை
பறிக்கப்படக்கூடுமோ? அல்லது நீதியாய்ச் சி
றைப்பட்டுப்போனவர்கள் விடுவிக்கப்படக்கூ
௨௫ டுமோ? — இப்போதும் இதோ, [4]பராக்கிரமன்
சிறைப்படுத்தினவர்களும் பறிக்கப்படுவார்கள்;
பலவந்தன் கொள்ளையிட்டதும் விடுவிக்கப்ப
டும்;உன்னோடு வழக்காடுகிறவர்களோடே [5]நாம்
வழக்காடி, உன் பிள்ளைகளை நாம் இரட்சித்துக்
௨௬ கொண்டு, — [6]உன்னை ஒடுக்கினவர்களுடைய
மாம்சத்தை அவர்களுக்கே தின்னக்கொடுப்
போம்; மதுபானத்தால் வெறியாகுமாப்போலே
தங்களுடைய இரத்தத்தினாலே வெறியாவார்கள்;
கர்த்தரும் யாக்கோபிலே வல்லவருமாகிய நாம்
உன் இரட்சகரும் உன் மீட்பருமாயிருக்கிறதை
மாம்சமெல்லாம் அறிந்துகொள்ளுமென்று கர்த்
தர் சொல்லுகிறார்.

1 ஏசா. ௬௰. ௪.
2 ஏசா. ௬௰. ௰௬.
3 சங். ௨௫. ௯.—4 லூக். ௰௧. ௨௨.
5 சங். ௩௫. ௧.—6 வெளி. ௰௬. ௬.

## ௫௰. அதிகாரம்.

௧. யூதர்கள் கைவிடப்பட்டும் கிறிஸ்து தமது இரட்சிக்கும் வல்லமையினாலும், ௫. அக்கிரியையை முடிக்கும் தமது பணிதலினாலும், ௭. தேவ உதவியில் தமது நம்பிக்கையினாலும், தம்மேல் பழிசுமராதென்று காட்டினது. ௰. தம்மை நம்பாமல் பராபரனில் நம்பிக்கைவைக்கத் தூண்டினது.

கர்த்தர் சொல்லுகிறதாவது: நாம் உங்கள் தா ௧
யை அனுப்பிவிட்டோமென்று அவளுக்குக்
கொடுத்த தள்ளுதலின்சீட்டு எங்கே? அல்லது
நாம் கடன்பட்ட எவனுக்கு உங்களை விற்றுப்
போட்டோம்? [7]இதோ, உங்கள் அக்கிரமங்க
ளின் நிமித்தம் விற்றுப்போடப்பட்டீர்கள், உங்
கள் பாதகங்களின் நிமித்தம் உங்கள் தாய் அனுப்
பிவிடப்பட்டாள்.—நாம் வந்தபோது ஒருவனு ௨
மில்லாமலும், நாம் கூப்பிட்டபோது மறுஉத்
தரவு கொடுக்கிற ஒருவனும் இல்லாமலும் போ
னதேது? [8]மீட்கக்கூடாதபடிக்கு நம்முடைய
கை குறுகிற்றோ? விடுவிக்கிறதற்கு நம்மிலே
பெலன் இல்லாமல் போயிற்றோ? இதோ, நமது
உதம்புதலினாலே நாம் கடலை வறளப்பண்ணி,
நதிகளை வெட்டாந்தரையாக்கிப்போடுகிறோம்;
அவைகளின் மீன், தண்ணீரில்லாமல் தாகத்தால்
செத்து நாற்றமெடுக்கும்படியாகத்தானே.—நாம் ௩
வானங்களுக்குக் காரிருளை உடுத்தி, இரட்டை
அவைகளின் மூடுசீலையாக்குகிறோம்.
இளைப்பானவனோடே நாம் சமயத்திலே வார்த் ௪
தைசொல்ல அறியும்படிக்கு, கர்த்தராகிய ஆண்
டவர் நமக்குக் கல்விமான்களின் நாவைத் தந்
தார்; [9]காலைமாறு நம்மை எழுப்புகிறார்; கற்றுக்
கொள்ளுகிறவர்களைப்போலே கேட்கும்படிக்கு
நமக்குச் செவியை எழுப்புகிறார்.—கர்த்தராகிய ௫
ஆண்டவர் நமக்குச் செவியைத் திறந்தார்; நாம்
முண்டுத்தனம்பண்ணுகிறவரும் அல்ல; நாம்
பின்வாங்கி விலகோம்.–[10]நம்முடைய முதுகை ௬
அடிக்கிறவர்களுக்கும், நம்முடைய தாடைகளை
மயிரைப் பிடுங்குகிறவர்களுக்கும் ஒப்புக்கொ
டுத்தோம்; நம்முடைய முகத்தை அவமானங்க
ளுக்கும், உமிழ்நீருக்கும் மறையோம்.—ஏனெ ௭
னில் கர்த்தராகிய ஆண்டவர் நமக்குத் துணை
செய்கிறார்; ஆகையால் நாம் வெட்கப்படோம்;
ஆனதுகொண்டு நம்முடைய முகத்தைக் சற்பா
றையாக வைத்தோம்; ஏனெனில், நாம் வெட்
கிப்போவதில்லை என்று அறிவோம். — நம்மை ௮
நீதிவிளங்கப்பண்ணுகிறவர் சமீபமாய் இருக்
கிறார்; யார் நம்மோடே வழக்காடுவார்? கூடிக்
கொண்டு நிற்போம், யார் நம்முடைய எதிராளி?
அவன் நம்மண்டை சேரட்டும்.—இதோ, கர்த்த ௯
ராகிய ஆண்டவர் நமக்குத் துணைசெய்கிறார்;
நம்முடையமேலே குற்றம்சுமத்துபவர் யார்?
இதோ, அவர்கள் எல்லாரும் ஒரு வஸ்திரத்தைப்
போலப் பழசாவார்கள்; பொட்டு அவர்களை
அழிக்கும்.

7 மத். ௰௬. ௭.—8 ஏசா. ௫௯. ௧. ௨௧.—10 மத். ௨௬. ௬௭, ௬௮.
௪ மோ. ௰௧. ௨௩.—9 மத். ௰௧. ௨௮, யோவா. ௰௬. ௧.

௰ உங்களில் எவன் கர்த்தருக்குப் பயந்து, அவரு
டைய ஊழியக்காரனுடைய சொல்லைக்கேட்டு,
தனக்கு வெளிச்சமில்லாததினால் இருட்டிலே
நடக்கிறானோ, அவன் கர்த்தருடைய நாமத்தை
நம்பி, தன் பராபரனைச் சார்ந்துகொள்ளக்கட
௰௧ வன்.—இதோ, நெருப்பைக்கொளுத்தி, அக்கினி
ப்பொறிகளால் அரைக்கட்டிக்கொண்டிருக்கிற
நீங்கள் அனைவரும், உங்கள் நெருப்பின்தீயிலும்
நீங்கள் மூட்டின அக்கினிச்சுவாலைகளிலும் நட
வுங்கள்; நம்முடைய கரத்தினாலே இது உங்களு
க்கு உண்டாகும்; வேதனையிலே கிடப்பீர்கள்.

## ௫௧. அதிகாரம்.

௧. ஆபிரகாமைப்போல, ௩. கிறிஸ்துவின் தேறுதலுள்ள வாக்குத்தத்தங்களினாலும், ௪. நீதியுள்ள இரட்சிப்பினாலும், ௭. மனிதனுடைய சாவுக்குரிய தன்மையினாலும், அவரில் நம்பிக்கைவைக்கத் தூண்டினது. ௯. கிறிஸ்து தமது பரிசுத்த கரத்தினாலே மனிதருக்குப்பயப்படாமல் தமது சனத்தைக் காப்பாரென்பது. ௰௭ அவர் எருசலேமின் துனபத்தைக்குறித்துத் துக்கித்து, ௨௧. விடுதலையை வாக்குத்தத்தம்பண்ணினது.

௧ நீதியைத் தொடர்ந்து, கர்த்தரைத் தேடுகிற நீங்
கள் நம்முடைய சொல்லைக்கேளுங்கள்; [1]நீங்கள்
வெட்டி எடுக்கப்பட்ட கல்மலையையும், [2]நீங்
கள் தோண்டி எடுக்கப்பட்ட துரவின் குழியை
௨ யும் நோக்கிப்பாருங்கள்.—உங்கள் தகப்பனாகிய
ஆபிரகாமையும், உங்களைப் பெற்ற சாராளையும்
நோக்கிப்பாருங்கள்; ஏனென்றால், அவன் ஒருத்
தனாய் இருக்கையில் [3]நாம் அவனை அழைத்து,
அவனை ஆசீர்வதித்து, அவனைப் பெருகப்பண்
௩ ணினோம்.—அதேதெனில், கர்த்தர் சீயோனைத்
தேற்றரவுபண்ணுவார்; அவர் அதின் பாழ்ந்தலங்
களை எல்லாம் தேற்றரவுபண்ணி, அதின் வனாந்த
ரத்தை ஏதேனைப்போலவும், அதின் அந்தர வெ
ளியைக் கர்த்தரின் தோட்டத்தைப்போலவும்
ஆக்குவார்; சந்தோஷமும், மகிழ்ச்சியும், துதி
யும், கீதசத்தமும் அதில் உண்டாயிருக்கும்.
௪ நம்முடைய சனமே, நம்மைக் கவனியுங்கள்;
நம்முடைய சனசதளமே, நமக்குச் செவிகொ
டுங்கள்; ஏனெனில், வேதம் நம்மிலிருந்து வெ
ளிப்படும்; நம்முடைய நியாயத்தைச் சனசதளங்
களின் வெளிச்சமாக வீசப்பண்ணுவோம்.—
௫ நமது நீதி சமீபித்திருக்கிறது; நமது இரட்சிப்பு
வெளிப்படும்; நம்முடைய புயங்கள் சனசதளங்
களை நியாயந்தீர்க்கும்; தீவுகள் நமக்குக் காத்தி
ருந்து, நம்முடைய புயத்தின்மேல் நம்பிக்கை
௬ யாய் இருக்கும்.—உங்கள் கண்களை வானத்துக்கு
ஏறெடுத்து, தாழ இருக்கிற பூமியையும் நோக்கிப்
பாருங்கள்; ஏனெனில், [4]வானம் புகையைப்
போல உருவழிந்து, பூமி வஸ்திரத்தைப்போலப்
பழசாய்ப்போம்; அதின் குடிகளும் அப்படியே
சாவார்கள்; நம்முடைய இரட்சிப்போவென்
றால், என்றென்றைக்கும் இருக்கும்; நம்முடைய
நீதி முறிந்துபோவதில்லை.
௭ நீதியை அறிந்தவர்களே, [5]நமது சொல்லைக்
கேளுங்கள்; நம்முடைய வேதத்தை இருதயத்
திலே தரித்திருக்கிற சனமே, [6]மனுஷரின் நிந்
தனைக்குப் பயப்படாமலும், அவர்கள் தூஷணங்
களாலே கலங்காமலும் இருங்கள்.—ஏனென் ௮
றால், பொட்டு அவர்களை வஸ்திரங்களைப்போலே
அரித்து, பூச்சி அவர்களை ஆட்டுமயிரைப்போ
லே சதைத்துப்போடும்; நம்முடைய நீதியோ
வென்றால் என்றென்றைக்கும், நம்முடைய
இரட்சிப்பு தலைமுறை தலைமுறைகளாகவும் இ
ருக்கும்.

எழும்பு, எழும்பு, பெலன்கொள்; கர்த்தரின் ௯
புயமே, முந்தின நாள்களுக்கும் பூருவதலைமு
றைகளுக்கும் ஒத்தபடி எழும்பு; [7]இராகாப்பைத்
துண்டித்ததும் [8]முதலையை வதைத்ததும் நீதானல்
லவோ? — மகா ஆழத்தின் தண்ணீர்களாகிய ௰
சமுத்திரத்தை வறண்டுபோகப்பண்ணினதும்,
மீட்கப்பட்டவர்கள் கடந்துபோகக் கடலின்
பள்ளங்களை வழியாக்கினதும் நீதானல்லவோ?—
அப்படியே [9]கர்த்தரால் மீட்கப்பட்டவர்கள் ௰௧
திரும்பிக் கெம்பீரத்தோடே சீயோனுக்கு வரு
வார்கள்; நித்திய மகிழ்ச்சி அவர்கள் தலையின்
மேல் இருக்கும்; சந்தோஷமும் மகிழ்ச்சியும்
அவர்களைப் பிடிக்கும்; சஞ்சலமும் தவிப்பும்
ஓடிப்போம்.—நாம், நாமே உங்களைத் தேற்றரவு ௰௨
பண்ணுகிறவர்; [10]சாகப்போகிற மனுஷனுக்
கும், புல்லுக்கொப்பாகிற மனுஷபுத்திரனுக்கும்
பயப்படுகிறதற்கும், — வானங்களை விரித்துப் ௰௩
பூமியை அஸ்திபாரப்படுத்தி, உன்னை உண்டாக்
கின கர்த்தரை மறக்கிறதற்கும் நீ யார்? இடுக்
கண்செய்கிறவன் அழிக்க ஆயத்தமாகிறபோது,
நீ அவனுடைய உக்கிரத்துக்கு நித்தம் எந்நாளி
லும் அருக்களிப்பானேன்? இடுக்கண் செய்பவ
னுடைய உக்கிரம் எங்கே?—பரதேசியாய்ப்போ ௰௪
கிறவன் தீவிரமாய் விடுதலையாவான்; அவன்
கெபியிலே சாவதுமில்லை; அவனுடைய அப்
பம் அவனுக்குக் குறைபடுவதுமில்லை.—ஏனெ ௰௫
னில், நாமே சமுத்திரத்தை அதின் அலைகள்
கொந்தளிக்கத்தக்கவிதமாகக்குலுக்குகிற சேனை
களுடைய கர்த்தரென்ற நாமமுள்ள உன் பராபர
னாகிய கர்த்தர்.—நாம் வானத்தை நாட்டி, பூமி ௰௬
யை அஸ்திபாரப்படுத்தி, சீயோனுடனே, நீ நம்
முடைய சனமென்று சொல்வதற்காக, நாம் நம்
முடைய வார்த்தையை உன் வாயிலேகொடுத்து,
நம்முடையகரத்தின் நிழலினால் உன்னை மறைக்
கிறோம்.

எழும்பு, எழும்பு, கர்த்தருடைய உக்கிரத்தின் ௰௭
பாத்திரத்தை அவர் கையில் வாங்கிக் குடித்தி
ருக்கிற எருசலேமே, எழும்பு, [11]தத்தளிப்பினு
டைய பாத்திரத்தின் வண்டல்களைக் குடித்து
உறிஞ்சினாய்.—அவள் பெற்ற எல்லாக் குமார ௰௮
ரிலும் அவளை மெதுவாய் நடத்துவாருமில்லை;
அவள் வளர்த்த எல்லாக் குமாரரிலும் அவளைக்
கைகொடுத்து அழைப்பாரும் இல்லை.—இவ்வி ௰௯

1 ௨ ரோ. ௪. ௰௬-௨௧.—2 எபி. ௰௧. ௰௨.—3 ௧ மோ. ௰௨. ௧, ௩. 4 சங். ௱௨. ௨௭. லூக். ௨௧, ௩௩. 5 சங். ௩௭. ௩௧.

6 மத். ௰. ௨௮.—7 ௨ மோ. ௰௪. ௨௯. 8 எசே. ௨௯. ௩.—9 ஏசா. ௩௫. ௰. 10 சங். ௱௩. ௧௫. மத். ௬. ௨௮. 11 சங். ௭௫. ௮.

ரண்டும் உனக்குச் சம்பவித்தன; உனக்குப் பரித
பிக்கத்தக்கவன் யாவன்? பாழ்க்கடிப்பும், நொ
றுக்குதலும், பஞ்சமும், பட்டயமும் வந்தன;
யாரைக்கொண்டு உன்னைத் தேற்றரவுபண்ணு
வோம்?
௨௰ உன் குமாரர் மூர்ச்சித்து விழுந்தார்கள்; அவர்
கள், வலையிலே சிக்குண்ட கலைமானைப்போலே,
எல்லா வீதிகளின் முனையிலும் கர்த்தருடைய உக்
கிரத்தினாலும், உன் பராபரனுடைய உதம்புதலி
னாலும் நிறைந்தவர்களாய்க் கிடக்கிறார்கள்.—
௨௧ ஆனதுகொண்டு சிறுமைப்பட்டவளே, மதுபா
னம் இல்லாமல் வெறிகொண்டவளே, நீ கேள்.—
௨௨ கர்த்தராகிய உன் ஆண்டவரும் தம்முடைய சன
த்துக்காக வழக்காடப்போகிற உன் பராபரனுமா
னவர் சொல்லுகிறதாவது: இதோ, தத்தளிப்பின்
பாத்திரத்தை உன் கையிலே வாங்கிப்போடுகி
றோம்; இனி நம்முடைய உக்கிரத்தினுடைய
பாத்திரத்தின் வண்டல்களை நீ குடிப்பதில்லை.—
௨௩ [1]கடந்துபோகிறவர்களுக்கு நீ உன் முதுகைத்
தரையும், தெருவும் ஆக்கும்படியாக, உன் ஆத்து
மாவுடனே: நாங்கள் கடந்துபோகும்படிக்குக்
குனியென்று சொல்லி, உன்னைச் கஞ்சலப்படுத்
தினவர்களின் கையிலே அதைக் கொடுப்போம்
என்கிறார்.

## ௫௨. அதிகாரம்.

௧. கிறிஸ்து தமது இலவசமான மீட்பை நம்பவும், ௭. அதின் போதகனை ஏற்றுக்கொள்ளவும், ௯. அதின் வல்லமையைக் கொண்டாடவும், ௰௧. அடிமைத்தனத்தில் நின்று நீங்கவும் சபைக்குப் போதிப்பது. ௰௩. கிறிஸ்துவின் இராச்சியம் மேன்மைப்படுமென்பது.

௧ எழும்பு, எழும்பு, சீயோனே, உன் பெலனைத்
தரித்துக்கொள்; பரிசுத்த பட்டணமாகிய எருச
லேமே, உன் அலங்கார வஸ்திரங்களைத் தரித்துக்
கொள்; ஏனெனில், சுன்னத்தில்லாதவனும் அசு
௨ த்தனும் இனி உனக்குள் வருவதில்லை.—தூளை
உதறிப்போட்டு எழுந்திரு; எருசலேமே, உளுக்
காரு; சிறைப்பட்டுப்போன சீயோன் குமாரத்
தியே, உன் கழுத்தின் கட்டுகளை அவிழ்த்துவிடு.
௩ ஏனெனில், கர்த்தர் சொல்லுகிறதாவது: இல
வசமாய் விற்கப்பட்டீர்கள், பணங்கொடாமலும்
௪ மீட்கப்படுவீர்கள்.—ஏனென்றால் முந்தி நம்மு
டைய சனம் பரதேசியாய்த் தங்க எகிப்துக்கு
இறங்கிப்போயிருந்தது; அசூரியனும் முகாந்தர
மில்லாமல் அதை ஒடுக்கிப்போட்டானென்று
௫ கர்த்தராகிய ஆண்டவர் சொல்லுகிறார்.—இப்போ
தும், நமக்கு இங்கே என்ன இருக்கிறதென்று
கர்த்தர் சொல்லுகிறார்; ஏனெனில், நம்முடைய
சனம் சும்மா கொண்டுபோகப்பட்டது; அதை
ஆளுகிறவர்கள் அதை அலறப்பண்ணுகிறார்
கள்; நித்தம் எந்நாளும் [2]நம்முடைய நாமம் தூஷ
௬ ணிக்கப்படுகிறது. — இதின்நிமித்தம், இதின்நி
மித்தமே, நம்முடைய சனம் அக்காலத்திலே
நம்முடைய நாமத்தை அறியும்; ஏனெனில்,
இதைச் சொல்லுகிறவர் நாமே; இதோ, இங்
கே இருக்கிறோமென்று கர்த்தர் விளம்புகிறார்.
[3]சமாதானத்தைக் கூறி, நற்காரியத்தைச் சுவி ௭
சேஷமாய் அறிவித்து, இரட்சிப்பைக் கூறி,
சீயோனுடனே: உன் பராபரன் இராசரிகம்
பண்ணுகிறாரென்று சொல்லுகிற சுவிசேஷகனு
டைய கால்கள் மலைகளின்மேல் எத்தனை அந்த
மானவைகள்.—உன் சாமக்காரருடைய சத்தம் ௮
கேட்கப்படும்; அவர்கள் சத்தத்தை உயர்த்தி
ஏகமாய்க் கெம்பீரிக்கிறார்கள்; ஏனென்றால், கர்த்
தர் சீயோனைத் திரும்பி வரப்பண்ணும்போது,
அதைக் கண்ணாரக் காண்பார்கள். — எருசலே ௯
மின் பாழ்ந்தலங்களே, முழங்கி ஏகமாய்க் கெம்
பீரியுங்கள்; ஏனெனில், கர்த்தர் தம்முடைய
சனத்தைத் தேற்றரவுபண்ணி, எருசலேமை மீட்
டார்.—எல்லாச் சாதிகளின் கண்களுக்குமுன் ௰
பாகவும் கர்த்தர் தம்முடைய பரிசுத்த புயத்தை
வெளிப்படுத்துவார்; [4]பூமியின் எல்லைகளெல்
லாம் நமது பராபரனுடைய இரட்சிப்பைக்
காணும்.
அகன்று, அகன்று, [5]அவ்விடம்விட்டுப் புறப் ௰௧
படுங்கள்; அசுத்தமானதைத் தொடாதிருங்கள்;
கர்த்தருடைய பாண்டங்களைச் சுமக்கிறவர்க
ளே, அதின் நடுவிலிருந்து புறப்பட்டு உங்களைச்
சுத்திகரியுங்கள்.—ஏனெனில், நீங்கள் தீவிரித் ௰௨
துப் புறப்படுவதில்லை; நீங்கள் ஓடிப்போகிற
வர்களாய் நடப்பதுமில்லை; ஏனென்றால் கர்த்
தர் உங்கள்முன் நடப்பார்; இஸ்ரவேலின் பரா
பரன் உங்கள் பின்புறத்தையும் காப்பார்.
இதோ, நம்முடைய ஊழியக்காரன் ஞான ௰௩
மாய் நடந்துகொண்டு, [6]உயர்த்தப்பட்டு, மேன்
மையும் மகா உன்னதமுமாய் இருப்பார்.—மனு ௰௪
ஷனைப்பார்க்கிலும் அவருடைய முகப்பார்வை
யும், மனுப்புத்திரரைப்பார்க்கிலும் அவருடைய
ரூபமும், [7]இத்தனை அந்தக்கேடு அடைந்தபடி
யினாலே, அநேகர் உம்முடையபேரில் எப்படிப்
பிரமிப்பானார்களோ,—அப்படி அநேகம் சாதி ௰௫
கள்மேலும் [8]அவர் தெளிப்பார்; அவருக்காக
இராசாக்கள் தங்கள் வாயை மூடுவார்கள்; ஏனெ
னில், [9]எவர்களுக்கு விவரிக்கப்படாதிருந்ததோ
அவர்கள் காண்பார்கள்; எவர்களுக்குக்கேள்விப்
படாதிருந்ததோ அவர்கள் உணர்வார்கள்.

## ௫௩. அதிகாரம்.

௧. தீர்க்கதரிசி அவநம்பிக்கையின்மேல் முறையிட்டு, ௪. கிறிஸ்துவினுடைய பாடுகளின் பயனையும், ௰. அது வாய்ப்பதினாலும், சிலுவையின் அவமானத்தை நீக்கினது.

எங்களாலே கேள்விப்பட்டதை விசுவாசித்த ௧
வன் யாவன்? [10]கர்த்தருடைய புயம் யாருக்கு வெ
ளிப்பட்டது?—கிளையைப்போலவும், வறண்ட ௨
பூமியிலிருந்து துளிர்க்கிற வேரைப்போலவும் அ
வனுக்குமுன்பாக எழும்புகிறார்; அவருக்கு உரு
வமுமில்லை; மகத்துவமுமில்லை; நாம் அவரைப்

1 சங். ௱௨௯. ௩.—2 எசே. ௩௬. ௨௰. உரோ. ௨. ௨௪.
3 நாகூ. ௧. ௧௫. உரோ. ௰. ௰௫.
4 சங். ௯௮. ௩,௪.—5 ௨ கொரி. ௬. ௰௭. வெளி. ௰௮ ௪.—6 பிலி. ௨. ௯-௰௧.
7 ஏசா. ௪௯. ௭.—8 எபி. ௯. ௰௩,௰௪: ௰௨. ௨௪. ௧ பே. ௧. ௨.
9 ஏசா ௫௫. ௫. உரோ. ௰௫. ௨௧.
10 யோவா. ௰௨. ௩௮. உரோ. ௰. ௰௬.

பார்த்தபோது நாம் அவரை இச்சிக்கத்தக்க உரு
௩ வம் அவருக்கு இல்லாதிருந்தது.—[1]அவர் அசட்
டைபண்ணப்பட்டவரும், மனுஷரில் ஈனமா
னவரும், வேதனைகளுள்ளவரும், பலஈனத்தை
அறிந்தவருமாய் இருந்தார்; அவரைவிட்டு முகங்
களை மறைத்துக்கொள்ளலாயிற்று; அவர் அசட்
டைபண்ணப்பட்டிருந்தார்; அவரை எண்ணாதே
௪ போனோம்.—மெய்யாகவே [2]நம்முடைய பலஈ
னங்களை அவர் எடுத்துக்கொண்டு, நம்முடைய
நோவுகளைச் சுமந்தார்; நாமோவெனில், அவர்
பராபரனால் அடிபட்டு ஒடுங்குண்டவராய் வா
௫ திக்கப்பட்டாரென்று எண்ணினோம்.—ஆனால்
அவர் [3]நம்முடைய மீறுதல்களின்நிமித்தம் கா
யப்பட்டு, நம்முடைய அக்கிரமங்களின்நிமித்
தம் நொறுக்கப்பட்டார்; நமக்குச் சமாதானத்
தை உண்டுபண்ணும் ஆக்கினை அவர்மேலிறங்
கிற்று; [4]அவருடைய தழும்புகளாலே குணமாகி
௬ றோம்.—நாம் எல்லாரும் [5]ஆடுகளைப்போல வழி
தப்பித்திரிந்து, அவரவர் பாட்டிலே தம்தம் வழி
யை நோக்கிப்போனோம்; கர்த்தரோவென்றால்,
[6]நம்மெல்லாருடைய அக்கிரமத்தையும் அவர்
௭ மேல் விழப்பண்ணினார்.—கடன் கேட்கப்பட்
டபோது அவரே ஒடுக்கப்பட்டார்; ஆனால்,
[7]தம்முடைய வாயை அவர் திறந்ததில்லை; [8]அவர்
ஒரு ஆட்டுக்குட்டியைப்போல அடிக்கப்படக்
கொண்டுபோகப்பட்டு, தன்னை மயிர்கத்திரிக்
கிறவனுக்குமுன்பாகச் சத்தமற்றிருக்கிற ஆட்
டைப்போலே தம்முடைய வாயைத் திறவாதி
௮ ருந்தார்.—[9]அவர் இடுக்கணிலும் நியாயத்தீர்ப்
பிலுமிருந்து எடுக்கப்பட்டார்; அவருடைய
ஆயுசை எண்ணுபவன் யாவன்? ஏனெனில், சீவ
னுள்ளோருடைய தேசத்திலிருந்து வெட்டிப்
போடப்பட்டார்; என் சனத்தினுடைய மீறுதலி
னாலே அவருக்கு அந்த வாதை உண்டாயிற்று.—
௯ ஆகாதவர்களோடே அவருடைய பிரேதக்குழி
யை நியமித்தார்கள்; ஆனால் ஐசுவரியவானோ
டே தம்முடைய மரணத்தில் இருந்தார்; ஏனென்
றால், அவர் கொடுமைசெய்ததில்லை; [10]அவர் வா
௰ யிலே வஞ்சனை இருந்ததுமில்லை.—கர்த்தரோ
வென்றால், அவரை நொறுக்கவிருப்பமாயிருந்து,
அவரைப் பலட்சயமாக்கினார்; அவருடைய ஆத்
துமா தன்னைக் குற்றம்போக்கும்பலியாக ஒப்புக்
கொடுத்தபின், அவர் [11]வித்தைக் கண்டு, நீடியநா
ளாயிருப்பார்; கர்த்தருக்கு விருப்பமானது அவர்
௰௧ கையால் வாய்க்கும்.—தமது ஆத்தும வருத்தத்
தின் பலனை அவர் கண்டு திருத்தியாவார்; நம்மு
டைய ஊழியக்காரனாகிய நீதிபரர் அநேகரைத்
தமது அறிவினாலே நீதிமான்களாக்குவார்; ஏனெ
னில், அவர்களுடைய அக்கிரமங்களை அவர்
௰௨ சுமந்துகொள்ளுகிறார்.—ஆனபடியினாலே அவர்
தம்முடைய ஆத்துமாவை மரணத்திலூற்றி, [12]பா
தகரில் ஒருவராக எண்ணப்பட்டு, அநேகரான
வர்களின் பாவத்தைத்தாமே சுமந்து, [13]பாதகருக்
காகவேண்டிக்கொண்டதற்கு ஈடாக அநேகரை
அவருக்குப் பங்காகக் கொடுப்போம்; பலவான்
களை அவர் தமக்குக் கொள்ளையாகப் பங்கிட்டுக்
கொள்ளுவார்.

## ௫௪. அதிகாரம்.

௧. தீர்க்கதரிசி பாமதஸ்தருக்கு ஆறுதலாக அவர்களுக்கு விஸ்தாரமான சபை உண்டாகுமென்று தீர்க்கதரிசனம் உரைத்தது. ௪. அவர்களுடைய தஞ்சம், ௬. துன்பத்தில் நின்று உண்டாகும் அவர்களுடைய விடுதலை. ௰௧ அவர்களுடைய காணயமான ஏற்கட்டேதல். ௰௫. அவர்களுடைய நிச்சயமான பாதுகாத்தல்.

பிள்ளைப்பெறாத மலடியே, கெம்பீரித்துப்பாடு; ௧
கர்ப்பவேதனைப்படாதவளே, கெம்பீரமாய் மு
ழங்கிச் சந்தோஷசத்தமிடு; [14]ஏனெனில் வாழ்க்
கைப்பட்டவளுடைய பிள்ளைகளைப்பார்க்கி
லும், [15]அவாந்தரமானவளுடைய பிள்ளைகள் அதி
கமென்று கர்த்தர் சொல்லுகிறார்.—உன் கூடா ௨
ரத்தின் இடத்தை விசாலமாக்கு; உன் வாசஸ்த
லங்களின் திரைகள் விரிவாகட்டும்; தடைசெய்
யாதிரு; உன் கயிறுகளை நீளமாக்கி, உன் கூர்ச்சு
களை உறுதிப்படுத்து.—ஏனெனில், வலது இட ௩
துபுறமாகவும் இடங்கொண்டு பெருகுவாய்;
உன் வித்தானவர்கள் சாதிகளைச் சுதந்தரித்துக்
கொண்டு, பாழாய்க்கிடந்த பட்டணங்களைக்
குடியேற்றுவிப்பார்கள்.—பயப்படாதிரு; ஏனெ ௪
னில், நீ வெட்கிப்போவதில்லை; நாணாதிரு;
ஏனெனில், நீ இலச்சை அடைவதில்லை; உன்
வாலிபத்தின் வெட்கத்தை நீ மறந்து, உன் வித
வையிருப்பின் நிந்தையை இனி நினையாதிருப்
பாய்.—ஏனெனில், உன்னை உண்டாக்கின சே ௫
னைகளுடைய கர்த்தரென்ற நாமமுள்ளவர் [16]உன்
பத்தாவும், சர்வபூமியினுடைய பராபரன் என்
னப்படப்போகிற இஸ்ரவேலின் பரிசுத்தர் உன்
மீட்பருமாயிருக்கிறார்.—அதேதெனில், தள்ளிவி ௬
டப்பட்டவளும் மனம்நொந்தவளுமான ஸ்திரி
யைப்போல இருக்கிற உன்னைக் கர்த்தர் அழைத்
தார்; நீ புறக்கணிக்கப்பட்டிருந்தும், இளவயது
ஸ்திரியாய் இருக்கிறாயென்று உன் பராபரன்
சொல்லுகிறார்.—கொஞ்சம் நிமிஷம் உன்னைக் ௭
கைவிட்டோம்; [17]ஆனால் மகா உருக்க இரக்கங்
களால் உன்னைச் சேர்ப்போம்.—கொஞ்சப்போ ௮
தான கோபத்தீயிலே நம்முடைய முகத்தை ஒரு
நிமிஷம் உனக்கு மறைத்தோம்; ஆனால் நித்திய
கிருபையாய் உனக்கு இரங்குவோமென்று கர்த்
தராகிய உன் மீட்பர் சொல்லுகிறார்.—ஏனெ ௯
னில் இது நமக்கு நோவாவின் சலங்களைப்போ
லிருக்கும்; நோவாவின் சலங்கள் இனிப் பூமி
யின்மேலே புரளுவதில்லை என்று நாம் [18]ஆணை
யிட்டதுபோலே, உன்மேல் நாம் கோபமாவதில்
லையென்றும், உன்னை நாம் உதம்புவதில்லை

1 சங். ௪௬. ௭: ௯௨. ௰௪. சக். ௰௨. ௭, அ. யோவா. ௭. ௪௮.—2 மத். அ. ௰௭.—3 உரோ. ௪. ௨௫.—4 ௧ பே. ௨. ௨௪.—5 ௧ பே. ௨. ௨௫.—6 யோவா. ௧. ௨௯. ௨ கொரி. ௫. ௨௧.—7 மத். ௨௬. ௬௩, ௬௭: ௨௭. ௰௨, ௰௪.—8 அப். அ. ௩௨, ௩௩.—9 மத். அ. ௧.—10 மத். ௨௭. ௫௭-௬௦. ௧ பே. ௨. ௨௨.—11 சங். ௨௨. ௩௧, ௩௨.—12 மாற். ௰௫. ௨௮.—13 லூக். ௨௩. ௩௪. ௧௫. ௩௭: ௨௩. ௩௪.—14 கலா. ௪. ௨௭.—15 யோவா. ௩. ௰௧-௰௩.—16 ஓசே. ௨. ௰௯.—17 சங். ௩௦. ௫.—18 ௧ மோ. ௯. ௰௧. எபி. ௬. ௰௭.

௰ யென்றும் ஆணையிட்டோம்.—ஏனெனில் பர்வ
தங்கள் விலகி, குன்றுகள் சாய்ந்தாலும் [1]நம்மு
டைய கிருபை உன்னைவிட்டு விலகாமலும், நம்
முடைய சமாதானத்தின் உடம்படிக்கை சாயா
மலும் இருக்குமென்று உன்மேல் மனதுருகுகிற
கர்த்தர் சொல்லுகிறார்.
௰௧ சிறுமையானவளே, புசல்களில் அடிபட்டவ
ளே, தேற்றரவற்றவளே, இதோ, [2]நாம் உன் கல்
லுகளை மினுக்காக வைத்து, நீலக்கல்லுகளை உன்
௰௨ அஸ்திபாரமாக்கி,—உன் பலகணிகளைப் பளிங்
கும், உன் வாசல்களை மாணிக்கக்கல்லுகளும்,
உன் எல்லைகளையெல்லாம் உச்சிதமான கல்லுக
௰௩ ளுமாக்குவோம்.—[3]உன் பிள்ளைகளெல்லாம் கர்த்
தராலே போதிக்கப்பட்டிருப்பார்கள்; உன் பிள்
ளைகளுடைய [4]சமாதானம் பெருத்திருக்கும்.—
௰௪ நீதியினாலே திடப்படுவாய்; இடுக்கணுக்கு நீங்
கித் தூரமாகு; ஏனெனில், பயப்படாதிருப்பாய்;
கலங்கலுக்குத் தூரமாகு; ஏனெனில், அது
௰௫ உன்னை அணுகுவதில்லை.—இதோ, உன்மேலே
கூட்டங்கூடினால் அது நம்மாலே கூடுகிற கூட்
டமல்ல; எவர்கள் உனக்கு விரோதமாய்க் கூடுகி
றார்களோ, அவர்கள் உன்நிமித்தமாக விழுவார்
௰௬ கள்.—இதோ, கரிநெருப்பை ஊதி, தன் கிரியைக்
கான ஆயுதத்தை உண்டுபண்ணுகிற கொல்லனை
யும் நாம் சிருஷ்டித்தோம்; அதைக் கெடுத்து நிக்கி
ரகமாக்குகிறவனையும் நாம் சிருஷ்டித்தோம்.—
௰௭ உனக்கு விரோதமாய் உருவாக்கப்படும் ஆயுத
மெல்லாம் வாய்க்காதேபோம்; உனக்கு விரோத
மாய் நியாயத்தில் எழும்பும் எந்தநாவையும் நீ குற்
றப்படுத்துவாய்; இது கர்த்தருடைய ஊழியக்கா
ரரின் சுதந்தரமும், நம்மாலுண்டான அவர்களு
டைய நீதியுமாய் இருக்கிறதென்று கர்த்தர் சொல்
லுகிறார்.

## ௫௫. அதிகாரம்.

௧. தீர்க்கதரிசி கிறிஸ்துவினுடைய வாக்குத்தத்தத்தினாலே விசுவாசத்துக்கும், ௬. மனஸ்தாபத்துக்கும் அழைத்தது. ௮. விசுவாசிப்பவர்களுடைய சந்தோஷம்.

௧ ஓய், [5]தாகமாயிருக்கிற நீங்கள் எல்லாரும் தண்
ணீர்களண்டைக்கு வாருங்கள்; பணமில்லாத
வர்களே, நீங்கள் வந்து, கொண்டு சாப்பிடுங்கள்;
நீங்கள் வந்து, பணமுமின்றி விலையுமின்றித்
திராட்சப்பழஇரசமும் பாலும் கொள்ளுங்கள்.—
௨ நீங்கள் அப்பமல்லாததிலே பணத்தையும், திருத்
தியாக்காததிலே உங்கள் பிரயாசத்தையும் செல
வழிப்பானேன்? நீங்கள் நமக்குச் செவிகொடுக்
கவே கொடுத்து, நலமானதைச் சாப்பிடுங்கள்;
அப்போது [6]உங்கள் ஆத்துமா கொழுப்பானதி
௩ னாலே மகிழ்ச்சியாயிருக்கும்.—உங்கள் செவி
யைச்சாய்த்து, நம்மண்டைக்கு வாருங்கள்; கே
ளுங்கள், அப்போது உங்கள் ஆத்துமா பிழைக்
கும்; ஏனெனில், [7]தாவீதின் நிச்சயமான கிரு
பைகளை உங்களுக்கு நித்திய உடம்படிக்கை
௪ யாய் உடம்படிக்கைபண்ணுவோம்.—இதோ,
அவரைச் சனக்கூட்டங்களுக்குச் சாட்சியாக
வும், சனசதளங்களுக்குத் தலைவராகவும், அதிகா
ரியாகவும் கொடுத்தோம்.—இதோ, நீ அறியாதி ௫
ருந்த சாதியை வரவழைப்பாய்; உன்னை அறி
யாதிருந்த சாதி உன் பராபரனாகிய கர்த்தரின்
நிமித்தமும், இஸ்ரவேலருடைய பரிசுத்தரின்
நிமித்தமும் உன்னண்டைக்கு ஓடிவரும்; ஏனெ
னில், உன்னை மேன்மைப்படுத்தினார்.
கர்த்தர் கண்டுபிடிக்கப்படுகையில் அவரைத் ௬
தேடுங்கள்; அவர் சமீபமாய் இருக்கையில் அவ
ரைநோக்கிக் கூப்பிடுங்கள்.—[8]ஆகாதவன் தன் ௭
வழியையும், அக்கிரமக்காரன் தன் நினைவுகளை
யும் விட்டு, கர்த்தரண்டைக்கு மனந்திரும்பக்
கடவன்; அப்போது அவன்மேல் மனதுருகு
வார்; நம்முடைய பராபரனண்டைக்கே மனந்
திரும்பக்கடவன்; ஏனெனில், [9]அவர் மன்னிக்
கிறதற்குத் தயை பெருத்திருக்கிறார்.—ஏனெ ௮
னில், நம்முடைய நினைவுகள் உங்கள் நினைவு
கள் அல்ல; உங்கள் வழிகள் நம்முடைய வழிக
ளும் அல்லவென்று கர்த்தர் சொல்லுகிறார்.—
ஏனென்றால், பூமியைப்பார்க்க வானங்கள் எப் ௯
படி உயர்ந்திருக்கின்றனவோ, அப்படி உங்கள்
வழிகளைப்பார்க்க நம்முடைய வழிகளும், உங்
கள் நினைவுகளைப்பார்க்க நம்முடைய நினைவு
களும் உயர்ந்திருக்கும்.—அதேனென்றால், மாரி ௰
யும் உறைந்தமழையும் வானத்திலிருந்து இறங்கி,
அவ்விடத்துக்குத் திரும்பாமல் பூமியையே
நனைத்து, அதை முளைகிளம்பவும் விளையவும்
பண்ணி, விதைக்கிறவனுக்கு விதையையும்,
சாப்பிடுகிறவனுக்கு ஆகாரத்தையும் எப்படிக்
கொடுக்கிறதோ,—அப்படி நம்முடைய வாயி ௰௧
லிருந்து புறப்படும் வசனமும் இருக்கும்; அது
வெறுமையாய் நம்மண்டைக்குத் திரும்பாமல்,
அது நாம் விரும்புகிறதைச் செய்து, நாம் அதை
அனுப்பின காரியம் ஆகும்படியாக வாய்க்கும்.—
அதேனெனில், நீங்கள் மகிழ்ச்சியாய்ப் புறப்பட் ௰௨
டு, சமாதானமாய்க் கொண்டுபோகப்படுவீர்கள்;
பர்வதங்களும் மேடுகளும் உங்களுக்குமுன்பா
கக் கெம்பீரமாய் முழங்கி, வெளியின் மரங்க
ளெல்லாம் கைகொட்டும்.—முட்செடிக்குப் ௰௩
பதிலாகத் தேவதாரிவிருட்சம் முளைக்கும்; காஞ்
சொறிக்குப்பதிலாக மிருதுச்செடி எழும்பும்;
அது கர்த்தருக்குக் கீர்த்தியாகவும், நிர்மூலமாகாத
நித்திய அடையாளமாகவும் இருக்கும்.

## ௫௬. அதிகாரம்.

௧. தீர்க்கதரிசி பரிசுத்தமாயிருக்கத் தூண்டினது. ௬. இது பேதமில்லாமல் மனிதர் யாவர்க்கும் பொதுவாய் வழங்குமென்று வாக்குத்தத்தம்பண்ணினது. ௯. குருட்டுச் சாமக்காரரைக் கண்டித்தது.

கர்த்தர் சொல்லுகிறதாவது: நீங்கள் நியாயத்தை ௧
க் கைக்கொண்டு நீதியைச் செய்யுங்கள்; ஏனெ
னில் நம்முடைய இரட்சிப்பு வரவும், நம்முடை
ய நீதி வெளிப்படவும் சமீபித்திருக்கிறது.—இப் ௨
படிச்செய்கிற மனுஷனும், இதைப்பற்றிக்கொ

1 சங். ௮௯. ௩௩, ௩௪.—2 வெளி. ௨௧. ௧௯.—3 யோவா. ௬. ௪௫. 4 உரோ. ௫. ௧.—5 யோவா. ௭. ௩௭, ௩௮. வெளி. ௨௨. ௧௭.

6 மல்கி. ௪. ௨.—7 ௨ சாமு ௭. ௰௨. 8 எசே. ௰௮. ௩௰, ௩௧: ௩௩. ௰௧.—9 சங். ௧௩௦. ௪. சங். ௮௬. ௫, கி. அப். ௰௩. ௩௪.

ண்டிருந்து, ஓய்வுநாளைப் பரிசுத்தக்கொலைச்சல் ஆக்காதபடிக்குக் காத்து, ஒருபொல்லாப்பையும் செய்யாதபடிக்குத் தன் கையைக் காத்துக்கொண்டிருக்கிற மனுப்புத்திரனும் பாக்கியவான்.

௩ கர்த்தரைச்சேர்ந்த அந்நியபுத்திரனும், கர்த்தர் என்னைத் தம்முடைய சனத்தைவிட்டுப் பிரிக்கவே பிரித்துப்போடுவாரென்று சொல்லானாக; அண்ணகனும், இதோ, நான் பட்டமரமென்று
௪ சொல்லானாக.—ஏனெனில், நம்முடைய ஓய்வு நாள்களைக் காத்து, நமக்கு இதமியமாயிருக்கிறதைத் தெரிந்துகொண்டு, நம்முடைய உடம்படிக்கையைப் பிடித்திருக்கிற அண்ணகர்களைக்கு
௫ றித்துக் கர்த்தர் சொல்லுகிறதாவது:-நாம் குமாரனைப்பார்க்கிலும், குமாரத்திகளைப்பார்க்கிலும், அவர்களுக்கு நம்முடைய வீட்டிலும் நம்முடைய மதில்களுக்குள்ளும் நல்ல இடத்தையும் கீர்த்தியையும் கட்டளையிடுவோம்; அழிந்துபோகாதிருக்கும் நித்தியகீர்த்தியை அப்படிக்கொத்த
௬ வனுக்குக் கட்டளையிடுவோம்.—கர்த்தரைச் சேவிக்கவும், கர்த்தருடைய நாமத்தைச் சிநேகிக்கவும், அவருக்கு ஊழியக்காரராய் இருக்கவும், அவரைச்சேர்ந்து ஓய்வுநாளைப் பரிசுத்தக்கொலைச்சல் ஆக்காதபடிக்குக் காத்து, நம்முடைய உடம்படிக்கையைப் பிடித்திருக்கிற அந்நிய புத்திரர்
௭ அனைவரையும்,-நாம் [1]நம்முடைய பரிசுத்த பர்வதத்துக்குக் கொண்டுவந்து, அவர்களை நம்முடைய செபவீட்டிலே மகிழப்பண்ணுவோம்; அவர்களுடைய சர்வாங்கதகனங்களும், அவர்களுடைய பலிகளும், நம்முடைய பலிபீடத்தின் மேல் அங்கிகரிக்கப்பட்டிருக்கும்; ஏனெனில், [2]நம்முடைய வீடு சகல சனசதளங்களுக்குமான
௮ செபத்தின் வீடு என்னப்படும். — இஸ்ரவேல் சனத்தில் தள்ளுண்டவர்களைச் சேர்க்கிற கர்த்தராகிய ஆண்டவர், அதிலே சேர்க்கப்பட்டவர்களையல்லாமல் இன்னம் நாம் அதனோடே சேர்ப்போமென்கிறார்.

௯ காட்டிலே இருக்கிற சகல மிருகங்களே, சகல காட்டுமிருகங்களே, பட்சிப்பதற்கு வாருங்
௰ கள்.—அதின் சாமக்காரர் எல்லாரும் ஒன்றும் அறியாத குருடர்; அவர்களெல்லாரும் குரைக்கமாட்டாத ஊமையான நாய்கள்; அவர்கள் தூக்கக்கலக்கமாகி, பேசிச் சயனித்திருந்து, உறக்
௰௧ கத்தைச் சிநேகிக்கிறவர்கள்.—அவர்கள் திருப்தியடைய அறியாத வலுஆசையுள்ள நாய்களும், அவர்கள் உணர அறியாத மேய்ப்பருந்தானே; அவர்கள் அனைவரும் தங்கள்தங்கள் வழியையும், அவரவர் தம்தம் மூலையிலிருந்து [3]தம்தம் பொழி
௰௨ வையும் நோக்கிக்கொண்டிருக்கிறார்கள். — வாருங்கள், மதுபானத்தைக் கொண்டுவருவேன்; லொட்டி குடிப்போம், [4]நாளைத்தினம் இன்றைத் தினம்போலவும், இன்னம் மகா அதிகமாகவும் இருக்கும் என்பார்கள்.

1 எபி. ௰௨. ௨௨, ௨௪.
2 ௧ இரா. அ. ௪௧, ௪௩. மத். ௨௧. ௰௩. மார்க். ௰௧. ௰௭. லூக். ௰௯. ௪௬.

# ௫௭. அதிகாரம்.

௧. நீதிமான்களுடைய நல்ல மரணம். ௩. பராபரன் யூதருடைய விபசார விக்கிரக ஆராதனைக்காக அவர்களைக் கண்டித்தது. ௰௫. குணப்பட்டவனுக்குச் சவிசேஷ வாக்குத்தத்தத்தைக் கொடுத்தது.

நீதிமான் மடிந்துபோகிறான்; [5]ஆனால் ஒருவரும் ௧
அதை மனதிலே வைக்கிறதில்லை; சன்மார்க்கர் எடுத்துக்கொள்ளப்படுகிறார்கள்; ஆனால் தீங்குவராததற்குமுன்னே நீதிமான் எடுத்துக்கொள்ளப்படுகிறான் என்பதைச் சிந்திப்பார் இல்லை.—நேராய் ௨
நடந்தவர்கள் சமாதானத்துக்குட் பிரவேசித்து, தங்கள் படுக்கைகளில் இளைப்பாறுகிறார்கள்.

ஆனால் நாள்பார்க்கிறவளின் பிள்ளைகளே, ௩
விபசாரனுக்கும் வேசிக்கும் வித்தானவர்களே, நீங்கள் இங்கே கிட்டிவாருங்கள்.—யார்மேலே ௪
சிமாளிக்கிறீர்கள்? யார்மேல் வாயை விஸ்தாரமாய்த் திறந்து, நாக்கை அளாவுகிறீர்கள்? நீங்கள் துரோகப்பிள்ளைகளும், கள்ளத்தன வித்தாருமல்லவோ? — நீங்கள் [6]பச்சையான சகல மரத்தின் ௫
கீழும், விக்கிரக தேவர்களோடே மோக அக்கினியாய் வெந்து, பள்ளத்தாக்குகளிலே பிள்ளைகளைக் கல்மலை வெடிப்புகளின்கீழ்க் கொன்றுபோடுகிறவர்கள்.-பள்ளத்தாக்குகளிலுள்ள மெ ௬
ருகான சிலைகளிடத்தில் உன்பங்கு இருக்கிறது; அவைகள், அவைகளே உன்னுடைய வீதம்; அவைகளுக்கு நீ ஊற்றுதலையும் ஊற்றி, காணிக்கையையும் செலுத்துகிறாய்; இவைகளின்மேல் பிரியப்படுவோமோ?—நீ மேட்டிமையும் உயர ௭
மூமான பர்வதங்களின்மேல் உன் மஞ்சத்தை வைக்கிறாய்; அங்கேயும் பலியிட ஏறுகிறாய்.—கதவுகளுக்கும் நிலைகளுக்கும் பின்னாக உன் ௮
நினைப்படையாளங்களை வைக்கிறாய்; ஏனெனில் நீ நம்மைவிட்டு வேறேபேர்களுக்குத்திறப்பாக்கி, ஏற உன் மஞ்சத்தை அகலமாக்கி, அவர்களோடே உடம்படிக்கையாகிறாய்; அவர்களுடைய மஞ்சத்தைக் காண்கிற எல்லா இடத்திலும் அதைச் சிநேகிக்கிறாய்.—நீ இராசாவுக்குக் ௯
காணிக்கையாக எண்ணெயைக் கொண்டுபோகிறாய்; உன் பரிமளதயிலங்களைத் திரளாக்கி, உன் தானாபதிகளைத் தூரத்துக்கு அனுப்பி, உன்னைப் பாதாளமட்டும் தாழ்த்துகிறாய். — உன் ௰
மார்க்கத்தின் விஸ்தாரத்தில் உழன்றறுக்கிறாய்; அது விருதாவென்று நீ சொல்லுகிறதில்லை; உன் கைக்கான பிழைப்பைக் கண்டுபிடித்தாய்; ஆகையால்நீவேசாறல்படுகிறதில்லை.—நீ யாருக்கு ௰௧
ஐயமும் பயமுமாயிருக்கிறாய்; நீ புளுகுகிறாயே; நீ நம்மை நினையாமலும், உன் மனதிலே வைக்காமலும் போகிறாயே; நாம் வெகுகாலமாய் மவுனமாயிருந்தோமல்லவோ? ஆகையால் நமக்குப் பயப்படாதேபோகிறாய். — உனக்கு உதவாதி ௰௨
ருக்கும் உன் நீதியையும் உன் கிரியைகளையும் நாம் அறியப்படுத்துவோம்.-நீ கூப்பிடும்போது ௰௩
உன் கூட்டங்கள் உன்னைத் தப்புவிக்கட்டும்; ஆனால் காற்று அவைகளை எல்லாம் பறக்கடித்து,

3 எரே. ௩. ௯, ௰௪.
4 வாக். ௨௧. ௧௫.
5 மீகா. ௨. ௨.—6 எரே. ௨. ௨௦: ௩. ௬.

மாயை அவைகளைக் கொண்டுபோம்; நம்மை
நம்பியிருக்கிறவனோ தேசத்தைச் சுதந்தரித்து,
நமது பரிசுத்தபர்வதத்திலே காணியாட்சிக்கார
௰௪ னாயிருப்பான்.—[1]வழியை உயர்த்தி, உயர்த்தி,
அதைச் செம்மைப்படுத்தி, இடறல்களை நம்மு
டைய சனத்தின் வழியிலிருந்து எடுத்துப்போ
௰௫ டுங்கள் என்னப்படும். — ஏனெனில், [2]நித்திய
வாசகரும் பரிசுத்தர் என்ற நாமமுள்ளவருமாகிய
[3]உயரமும், உன்னதமுமானவர் சொல்லுகிறதா
வது: பணிந்தவர்களின் ஆவியை உயிர்ப்பிக்க
வும், நருங்குண்டவர்களின் இருதயத்தை உயிர்
ப்பிக்கவும் நாமே உன்னதத்திலும், பரிசுத்தஸ்த
லத்திலும், நருங்குண்ட பணிந்த ஆவியுள்ளவர்
௰௬ களிடத்திலும் வாசம்பண்ணுகிறோம். — ஏனெ
ன்றால், [4]நாம் சதாகாலமாய் வழக்காடுவதில்லை;
நாம் என்றென்றைக்கும் கோபமாயிருப்பதுமில்
லை; அதேனெனில், ஆவியும், நாம் உண்டுபண்
ணின ஆத்துமாக்களும், நம்முடைய முகத்துக்கு
௰௭ முன்பாகத் தொய்ந்துபோவதாயிருக்கும்.—நாம்
அவர்கள் [5]பொருளாசையினுடைய அக்கிரமத்
தின்நிமித்தம் கடுங்கோபமாகி அவர்களை அடித்
தோம்; நாம் மறைந்து,கடுங்கோபமாயிருந்தோம்;
ஆனால் தங்கள் மனம்போகிற போக்கிலே மாறு
௰௮ பாடாய் நடந்தார்கள்.—அவர்கள் வழிகளை நாம்
பார்த்து, அவர்களைக் குணமாக்குவோம்; அவர்
களை நடத்தி, அவர்களுக்குத் திரும்ப ஆறுதல்
களை அளிப்போம்; அவர்களிலே துக்கப்படுகிற
௰௯ வர்களுக்குத்தானே. —[6]சமாதானம், சமாதானம்
என்று தூரமாயிருக்கிறவர்களுக்கும் சமீபமாயி
ருக்கிறவர்களுக்கும் கூறும் உதடுகளின் பலனைச்
சிருஷ்டிக்கிறோம்; அவர்களைக் குணமாக்குவோ
மென்று கர்த்தர் சொல்லுகிறார்.
௨௰ ஆகாதவர்களோ கொந்தளிப்பான கடலைப்
போல இருக்கிறார்கள்;ஏனென்றால், அது அமர்ந்
திருக்கக்கூடாமல், அதின் சலங்கள் சேற்றை
யும் அழுக்கையும் கரையில் ஒதுக்குகின்றன.—
௨௧ [7]ஆகாதவர்களுக்குச் சமாதானம் இல்லையென்று
என் பராபரன் சொல்லுகிறார்.

## ருஅ. அதிகாரம்.

*௧ தீர்க்கதரிசி மாயத்தைக் கண்டிக்க அனுப்பப்பட்டு, ௩. மாறுபாடான உபவா சத்தையும் சத்திய உபவாசத்தையும் சொல்லி, ௮. தேவபத்திக்கும், ௰௩. ஓய்வுநாளை ஆசரிப்பதற்கும் வேண்டிய வாக்குத்தத்தத்தை வெளியிட்டது.*

௧ அடக்கிக்கொள்ளாமல் சத்தமாய்க் கூப்பிடு; நீ
உன் சத்தத்தை எக்காளத்தைப்போல உயர்த்தி,
நம்முடைய சனத்துக்கு அவர்கள் மீறுதல்களை
யும் யாக்கோபின் வீட்டாருக்கு அவர்கள் பா
௨ வங்களையும் அறிவி. —அவர்களோவென்றால்,
நீதியைச் செய்துவருகிறதும், தங்கள் பராபரனு
டைய நியாயத்தை விடாததுமான சாதியைப்
போல நம்மைத் தினந்தினம் தேடி, நம்முடைய
வழிகளை அறிய விரும்பி, நாங்கள் உபவாசம்
பண்ணுகையில் நீர் அதைப் பாராமலும், நாங்
கள் எங்கள் ஆத்துமாக்களை ஒடுக்குகையில், நீர்
அதை அறியாமலும்போகிறதேதென்று நம்மிடத்
திலே நீதி நியாயத்தைக்கேட்டு, பராபரன் கிட்
டிச்சேரவேண்டுமென்று விரும்புகிறார்கள்.
இதோ, நீங்கள் உபவாசிக்கும்நாளிலே இச் ௩
சைக்கானதைக் கண்டுபிடித்து, உங்கள் கடன்
களை எல்லாம் தண்டுகிறீர்கள்.—இதோ, வழக் ௪
குக்கும் வாதுக்கும் ஆகாமியமான குட்டுதலுக்
குமாக உபவாசிக்கிறீர்கள்; நீங்கள் உங்கள் கூக்
குரலை உயரத்திலே கேட்கப்பண்ணும்படியாய்,
இந்நாளில் உபவாசிக்குமாப்போலே உபவாசி
யாதிருப்பீர்களாக. — மனுஷன் ஒருநாள் தன் ௫
ஆத்துமாவை ஒடுக்குகிறதும், [8]தன் தலையை நா
ணலைப்போலே மடக்கி,இரட்டையும் சாம்பலை
யும் கீழே போட்டுக்கொள்ளுகிறதும் [9]நாம் தெ
ரிந்துகொள்ளும் உபவாசமாயிருக்குமோ? அதை
த்தான் உபவாசமும் கர்த்தருக்குப் பொருந்திய
நாளும் என்பாயோ?—நீ ஆகாமியத்தின் கட்டு ௬
களை அவிழ்த்து, நுகத்தடியின் பிணையல்களைநெ
கிழ்த்து,நெரியலாயிருக்கிறவர்களை விடுதலையாக
அனுப்பி, சகல நுகத்தடியையும் உடைத்துப்
போட்டு, — [10]பசியுள்ளவனுக்கு உன் அப்பத் ௭
தைப் பிட்டுக்கொடுத்து, துரத்துண்ட சிறுமை
யானவர்களை வீட்டிலே சேர்த்துக்கொண்டு,அம்
மணமானவனைக் கண்டாயானால் அவனுக்கு
வஸ்திரங்கொடுத்து, உன் மாம்சமானவனுக்கு
உன்னை ஒளிக்காமலிருந்தால், அது அல்லவோ
நாம் தெரிந்துகொள்ளுகிற உபவாசம்.
அப்போது உன் வெளிச்சம் விடியற்கால வெ ௮
ளுப்பைப்போலெழும்பி, உன் குணமாகுதல்
சீக்கிரமாய்த் துளிர்த்து, உன் நீதி உன் முன்ந
டக்கும்; கர்த்தருடைய மகிமை உன் பின்புறத்
தைக் காக்கும்.—அப்போது கூப்பிடுவாய், கர்த் ௯
தர் மறுஉத்தரவு கொடுப்பார்; சத்தமிடுவாய்; இ
தோ, நாம் இருக்கிறோமென்றும் சொல்லுவார்;
நீ நுகத்தடியையும் விரல் நீட்டுதலையும் நிபச்
சொல்லையும் உன் நடுவிலிருந்து அகற்றி.—பசி ௰
யுள்ளவனண்டைக்கு உன் ஆத்துமாவைச் சாய்த்
துச் சிறுமைப்பட்ட ஆத்துமாவைத் திருத்தியாக்
கினால், அப்போது [11]உன் வெளிச்சம் இருளில்
உதித்து, உன் அந்தகாரம் மத்தியானத்தைப்போ
லாகும். — அப்போது கர்த்தர் உன்னை நித்தம் ௰௧
நடத்தி,மகா வறட்சியான காலங்களில் உன் ஆத்
துமாவைத் திருத்தியாக்கி, உன் எலும்புகளைப்
புஷ்டியாக்குவார்; நீ நீர்ப்பாய்ச்சலான தோட்
டத்தைப்போலேயும்,சலங்கள் வற்றாத நீரூற்றை
ப்போலேயுமிருப்பாய். — [12]சதாகாலமாய்ப் பா ௰௨
ழாய்க்கிடந்த தலங்களை உன்னைத்தொட்டுக் கட்
டுவார்கள்; தலைமுறைதலைமுறையாக இருக்கும்
அஸ்திபாரங்களைப் போட்டு எழுப்புவாய்; திறப்
பானதை அடைக்கிறவனென்றும், குடியிருக்
கும்படியாகப் பாதைகளைத் திருத்துகிறவனென்
றும் நீ அழைக்கப்படுவாய்.
நீ நம்முடைய பரிசுத்தநாளிலே உனக்கு இச் ௰௩

1 ஏசா. ௬௨. ௰௧.—2 ஏசா. ௬௧. 4 சங். ௱௩. ௯.—5 ஏசா. ௫௬. ௨௧, ௨.—3 சங். ௱௰௩. ௫. ௬. 6 ஏசா. ௫௨. ௭.

7 ஏசா. ௪௮. ௨௨.—8 மத். ௬. ௰௬. மத். ௨௫. ௩௫.—11 சங். ௱௰௨. ௪. 9 சகரி. ௭. ௫.—10 எசே. ௰௮. ௭. 12 ஏசா. ௬௧. ௪.

சையானதைச் செய்யாதபடிக்கு, உன் காலை
ஓய்வுநாளுக்கு இடைஞ்சலாய் விலக்கி, ஓய்வு
நாளை மனமகிழ்ச்சியென்றும், கர்த்தருடைய பரி
சுத்தநாளை மகிமையுள்ள நாளென்றும் சொல்லி,
உன் வழிகளின்படி செய்யாமலும், உனக்கு இச்
சையானதைக் கண்டுபிடிக்காமலும், உன் பேச்
சைப்பேசாமலும், அதை மகிமையாக எண்ணி
௰௪ னாயானால்,—அப்போது கர்த்தரின்மேலே மன
மகிழ்ச்சியாயிருப்பாய்; நாம் பூமியினுடைய
உயரங்களின்மேல் உன்னை ஏறிப்போகவும்
பண்ணி, உன் தகப்பனாகிய யாக்கோபுடைய
சுதந்தரத்தால் உன்னைப் போஷிப்போம்; ஏனெ
னில், கர்த்தருடைய வாய் அதைச் சொல்லிற்று.

## ௫௯. அதிகாரம்.

௧. பாவத்தினுடைய அகோரக்கொடுமை. ௩. யூதர்களுடைய பாவங்கள். ௯. பாவத்தினால் வரும் நிர்ப்பாக்கியம். ௰௬. இரட்சண்ணியம் பராபரனுடையதே ௨௰. மீட்பருடைய உடம்படிக்கை.

௧ இதோ, [1]இரட்சிக்கக்கூடாதபடிக்குக் கர்த்தரு
டைய கை குறுகிப்போனதில்லை; கேட்கக்கூ
டாதபடிக்கு அவருடைய செவி மந்தமானது
௨ மில்லை.—உங்கள் அக்கிரமங்களே உங்களுக்
கும் உங்கள் பராபரனுக்கும் நடுவாகப் பிரிவினை
உண்டாக்குகின்றன; உங்களைக் கேளாதபடிக்கு
உங்கள் பாவங்களே [2]அவருடைய முகத்தை
௩ உங்களுக்கு மறைக்கின்றன. — ஏனென்றால்,
[3]உங்கள் கைகள் இரத்தத்தாலும், உங்கள் விரல்
கள் அக்கிரமத்தாலும் கறைப்பட்டிருக்கின்றன;
உங்கள் உதடுகள் பொய்யைப்பேசி, உங்கள் நாவு
நியாயக்கேட்டை வசனிக்கிறது.

௪ நீதிக்காகக் கூப்பிடுகிறவனுமில்லை; சத்தியத்து
க்காக நியாயம்சொல்லுகிறவனுமில்லை; மாயை
யை நம்பி, அவத்தமானதைப் பேசுகிறார்கள்;
[4]தீவினையைக் கர்ப்பந்தரித்து, அக்கிரமத்தைப்
௫ பெறுகிறார்கள்.-கட்டுவிரியனின் முட்டைகளை
அடைகாத்து, சிலந்தியின் நெசவுகளை நெய்கி
றார்கள்; அவர்களுடைய முட்டைகளைச் சாப்பி
டுகிறவன் சாவான்; அவைகள் நெருக்கப்பட்ட
௬ தேயானால் விரியன் புறப்படும்.-அவர்கள் நெச
வுகள் உடுப்புக்கானவைகள் அல்ல; தங்கள் கிரி
யைகளாலே தங்களை மூடமாட்டார்கள்; அவர்
கள் கிரியைகள் அக்கிரமக்கிரியைகளானவை
கள்; கொடுமையின் செய்கை அவர்கள் கைகளி
௭ லிருக்கிறது.—அவர்கள் [5]கால்கள் பொல்லாப்
புக்கு ஓடி, குற்றமில்லாத இரத்தத்தைச் சிந்தத்
தீவிரிக்கின்றன; அவர்கள் நினைவுகள் அக்கிரம
நினைவுகளானவைகள்; பாழ்க்கடிப்பும் அழிவும்
௮ அவர்கள் வழிகளிலிருக்கின்றன.—சமாதானத்
தின் வழியை அறியார்கள்; அவர்கள் நடைக
ளில் நியாயமில்லை; தங்கள் பாதைகளைத் தங்க
ளுக்குக் கோணலாக்கினார்கள்; அவைகளில்
நடக்கிற ஒருவனும் சமாதானத்தை அறியான்.

௯ ஆனபடியால், நியாயம் எங்களுக்குத் தூரமா
யிருக்கிறது; நீதி எங்களைத் தொடர்ந்துபிடிக்கா
து; வெளிச்சத்துக்குக் காத்திருந்தோம்; ஆனால்
இதோ, இருள்; பிரகாசத்துக்குக் காத்திருந்
தோம்; ஆனால் அந்தகாரத்திலே நடக்கிறோம்.—
[6]நாங்கள் குருடரைப்போலே சுவரைப்பிடித்து, ௰
கண்ணில்லாதவர்களைப்போலே தடவுகிறோம்;
இராவிருளில் இடறுகிறதுபோலே மத்தியானத்
திலே இடறுகிறோம்; செத்தவர்களைப்போலே
பாழ்ந்தலங்களில் இருக்கிறோம். — நாங்கள் ௰௧
அனைவரும் கரடிகளைப்போலே உறுமி, [7]புறாக்
களைப்போலே கூவிக்கொண்டேயிருக்கிறோம்;
நியாயத்துக்குக் காத்திருந்தோம், அதைக் கா
ணோம்; இரட்சிப்புக்குக் காத்திருந்தோம், அது
எங்களுக்குத் தூரமாயிற்று.

ஏனெனில், எங்கள் மீறுதல்கள் உமக்குமுன் ௰௨
பாக மிகுதியாயிருந்து, எங்கள் பாவங்கள் எங்
களுக்கு விரோதமாக உத்தரவு சொல்லுகின்றன;
ஏனெனில், எங்கள் மீறுதல்கள் எங்களுடனே
இருக்கின்றன; எங்கள் அக்கிரமங்களை அறிந்தி
ருக்கிறோம்.—கர்த்தருக்கு விரோதமாய்த் துரோ ௰௩
கம்பண்ணுகிறதும், பொய்சொல்லுகிறதும், எங்கள் பரா
பரனைவிட்டுப் பின்வாங்குகிறதும், ஒடுக்குதலா
கவும் கலகமாகவும் பேசுகிறதும், கள்ளவார்த்தை
களைக் கர்ப்பந்தரித்து இருதயத்திலிருந்து புறப்
படப்பண்ணுகிறதுமுண்டே. — நியாயம் பின் ௰௪
னிட்டு, அகன்றது; நீதி தூரமாக நிற்கிறது; ஏனெ
னில், சத்தியம் வீதியிலே இடறி, நிதானம் வந்து
சேரமாட்டாதே போகிறது.

சத்தியம் தள்ளுபடியாயிற்று; பொல்லாப்பை ௰௫
விட்டு விலகுகிறவன் சூறையாகிறான்; இதைக்
கர்த்தர் பார்த்து நியாயமில்லையென்று விசனப்
பார்வையாகி,—ஒருவருமில்லையென்று கண்டு, ௰௬
விண்ணப்பம்பண்ணுகிறவன் இல்லையென்று
ஆச்சரியப்படுகிறார்; ஆனதுகொண்டு [8]அவரு
டைய புயமே அவருக்கு இரட்சிப்பாகி, அவ
ருடைய நீதியே அவரைத் தாங்கும்.—அவர் நீதி ௰௭
யை மார்க்கவசமாக அணிந்து, இரட்சிப்பின்
தலைச்சோட்டைத் தமது சிரசில் வைத்து, நீதி
சரிக்கட்டுதலின் வஸ்திரங்களை உடுப்பாக உடுத்
து, எரிச்சலைச் சால்வையாகப் போர்த்துக்கொள்
ளுகிறார். — கிரியைகளுக்கு எப்படித்தகுமோ, ௰௮
அப்படியே அவர் தம்முடைய சத்துருக்களுக்கு
உக்கிரத்தைச் சரிக்கட்டி, தம்முடைய பகை
ஞருக்குத் தக்கதையும், தீவுகளுக்குத்தக்கதையும்
சரிக்கட்டுவார். — அப்போது அஸ்தமிக்குந் தி ௰௯
சைதுவக்கிக் கர்த்தரின் நாமத்துக்கும், சூரிய
னுதிக்கும் திசைதுவக்கி அவருடைய மகிமைக்
கும் பயப்படுவார்கள்; வெள்ளப்பிரளயமாய்ச்
சத்துரு வரும்போது கர்த்தருடைய ஆவியானவர்
அவனுக்கு விரோதமாகக் கொடியை ஏற்றுவார்.

[9]சீயோனுக்கும், யாக்கோபிலே தங்கள் மீறுத ௨௰
லைவிட்டுத் திரும்புகிறவர்களுக்கும் மீட்கிறவர்
வருவாரென்று கர்த்தர் சொல்லுகிறார்.—உம்மு ௨௰௧
டையமேலிருக்கிற நம்முடைய ஆவியும், நாம்

1 ஏசா ௫௰. ௨. ௪ மோ. ௰௧. ௨௩.—2 மீகா. ௩. ௪. 3 ஏசா. ௧. ௰௫. 4 சங். ௭. ௰௪.
உரோ. ௩. ௰௫.—5 ௫ மோ. ௰௪. ஏசே. ௭. ௰௬.—8 ஏசா. 6 உபா. ௨௮. ௨௯.—7 ஏசா. ௩௮ ௰௪. ௫.—9 உரோ. ௰௧ ௨௬.

உமது வாயிலே வைத்த நம்முடைய வார்த்தைக
ளும், இதுமுதலாய் என்றென்றைக்கும் உமது
வாயையும், உமது வித்தின் வாயையும், உமது வி
த்தினுடைய வித்தின் வாயையும் விட்டுப் பிரிவ
தில்லையென்று கர்த்தர் சொல்லுகிறார்; இது நம
க்கு அவர்களோடிருக்கும் நம்முடைய உடம்
படிக்கையென்று கர்த்தர் சொல்லுகிறார்.

## சுய. அதிகாரம்.

க. பரமதஸ்தர் விஸ்தாரமாய்ச் சேர்வதினாலே சபைக்கு உண்டாகும் மகி
மை ௰ரு. சிலகாலம் துன்பத்தைச் சகித்தபின்பு உண்டாகும் ஆசீர்வாதம்.

க நீ [1]எழும்பி வெளிச்சமாகு; ஏனெனில், உன்
வெளிச்சம் வருகிறது; கர்த்தருடைய மகிமை
உ உன்மேலே உதிக்கிறது.—ஏனெனில், இதோ,
இருள் பூமியையும், அந்தகாரம் சனசதளங்களை
யும் மூடும்; ஆனால் உன்மேலே கர்த்தர் உதிக்கி
றார்; உன்மேலே அவருடைய மகிமை காணப்
ங படும்.—உன் வெளிச்சத்தண்டைக்குச் [2]சாதிக
ளும், உனக்கு உதிக்கிற ஒளியண்டைக்கு இரா
சாக்களும் நடந்துவருவார்கள்.
ச சுற்றிலும் [3]உன் கண்களை ஏறெடுத்துப்பார்; இ
வர்கள் எல்லாரும் கூட்டப்பட்டு வருகிறார்கள்;
உன் குமாரர் தூரத்திலிருந்துவந்து, உன் குமாரத்
திகள் உன் பக்கத்திலே வளர்க்கப்படுவார்கள்.—
ரு அப்போது நீ அதைக்கண்டு ஓடிவருவாய்; உன்
இருதயம் அதிசயப்பட்டு விரிவாகும்; ஏனெ
னில், கடற்கரையின் திரளான கும்பு உன் வச
மாகத் திரும்பி, சாதிகளின் பலத்த சேனை உன்
சு னண்டைக்குவரும்.—ஒட்டகங்களின் ஏராள
மும் மீதியான் ஏப்பாத்தேசங்களின் வேகமான
ஒட்டைகளும் உன்னை மூடும்; [4]சேபாவிலிருந்து
அனைவரும் வந்து, பொன்னையும் தூபவர்க்கத்தை
யும் கொண்டுவந்து, கர்த்தரின் துதிகளைச் சுவிசே
எ ஷமாய்ச் சொல்லுவார்கள்.—[5]கேதாரின் ஆடுகளெ
ல்லாம் உன்னைச் சேர்ந்துகொண்டு, நெபயோத்
தின் கடாக்கள் உன்னைச் சேவித்து, விருப்பமாக
நமது பலிபீடத்தின்மேல் ஏறும்; நம்முடைய
மகிமையின் வீட்டை மகிமையாக்குவோம்.
அ மேகங்களைப்போலவும், தங்கள் பலகணித்து
வாரங்களுக்குத் தீவிரிக்கிற புறாக்களைப்போல
கூ வும் பறந்துவருகிற இவர்கள் யார்?—ஏனெனில்,
தீவுகள் நமக்குக் காத்திருக்கும்; அவர் உன்னை
மகிமைப்படுத்தினாரென்று உன் பிள்ளைகளையும்,
அவர்களோடேகூட அவர்கள் பொன்னையும், அ
வர்கள் வெள்ளியையும் உன் பராபரனாகிய கர்த்
தரின் நாமத்துக்கென்றும், இஸ்ரவேலுடைய பரி
சுத்தருக்கென்றும் தூரத்திலிருந்து கொண்டுவர
முதலாகத் தர்சீசின் கப்பல்களும் நமக்குக் காத்
௰ திருக்கும்.—அந்நியரின் புத்திரர் உன் மதில்களைக்
கட்டி, அவர்களுடைய இராசாக்கள் [6]உன்னைச்
சேவிப்பார்கள்; ஏனெனில், [7]நம்முடைய கடுங்
கோபத்தில் உன்னை அடித்தோம்; ஆனால் நம்மு
டைய கிருபையினால் உனக்கு இரங்குகிறோம்.—
௰க உன்னண்டைக்குச் சாதிகளின் பலத்த சேனை
யைக் கொண்டுவரும்படிக்கும், அவர்களுடைய
இராசாக்கள் அழைத்து வரப்படும்படிக்கும்,
[8]உன் வாசல்கள் இராவும்பகலும் பூட்டப்படாம
ல், நித்தம் திறந்திருக்கும்.—ஏனெனில், உன்னைச் ௰உ
சேவிக்காத சாதியும் இராச்சியமும் அழியும்;
அப்படிக்கொத்த சாதிகள் பாழாகவே பாழாகும்.
நம்முடைய பரிசுத்தஸ்தலத்தின் தானத்தைச் ௰ங
சிங்காரிக்கும்படிக்கு, [9]லீபனோனின் மகிமை
யும், தேவதாரிவிருட்சங்களும், பிசின்மரங்க
ளும், புன்னைமரங்களுங்கூட உன்னண்டைக்
குவரும்; அப்படி நம்முடைய பாதங்களின் தா
னத்தை மகிமைப்படுத்துவோம்.
உன்னை ஒடுக்கினவர்களின் பிள்ளைகளும், ௰ச
உன்னண்டைக்குக் குனிந்துவந்து, உன்னை அ
சட்டைபண்ணின யாவரும் உன் உள்ளங்கால்க
ளின் அருகே பணிந்து, உன்னைக் கர்த்தருடைய
பட்டணமென்றும், இஸ்ரவேலுடைய பரிசுத்
தரின் சீயோனென்றும் அழைப்பார்கள்.—[10]நீ ௰ரு
நெகிழப்பட்டதும், பகைக்கப்பட்டதும், ஒரு
வரும் கடந்து நடவாததுமாய் இருந்ததற்குப்பதி
லாக, உன்னை நித்தியமுக்கியமாகவும், தலைமு
றைதலைமுறையாக இருக்கும் மகிழ்ச்சியாகவும்
வைப்போம்.
நீ சாதிகளின் பாலையும் உண்டு, [11]இராசாக்க ௰சு
ளின் முலைப்பாலையும் உண்டு, கர்த்தரும் யாக்
கோபிலே வல்லவருமாகிய நாம் உன் இரட்சக
ரும், உன் மீட்பருமாயிருக்கிறதை அறிந்துகொ
ள்வாய் — நாம் வெண்கலத்துக்குப்பதிலாகப் ௰எ
பொன்னை வரப்பண்ணி, இரும்புக்குப் பதிலாக
வெள்ளியையும், மரங்களுக்குப்பதிலாக வெண்
கலத்தையும், கல்லுகளுக்குப்பதிலாக இரும்பை
யும் வரப்பண்ணி, உன் கண்காணிகளைச் சமா
தானமும், உன் தண்டற்காரரை நீதியுமுள்ள
வர்களாக்குவோம்.—இனிக் கொடுமை உன் தே ௰அ
சத்திலும், அழிப்பும் நொறுக்குதலும் உன் எல்
லைகளிலும் கேட்கப்படாது; [12]உன் மதில்களை
இரட்சிப்பும், உன் வாசல்களைத் துதியுமென்று
அழைப்பாய்.—[13]இனிச் சூரியன் உனக்குப் பக ௰கூ
லிலே வெளிச்சமாயிராமலும், சந்திரன் தன் வெ
ளிச்சத்தால் உனக்குப் பிரகாசியாமலும், கர்த்
தரே உனக்கு நித்திய வெளிச்சமும், உன் பரா
பரனே உன்னுடைய அலங்காரமுமாய் இருப்
பார்.—உன் சூரியன் இனி அஸ்தமிப்பதுமில்லை; உ௰
உன் சந்திரன் மறைவதுமில்லை; ஏனெனில்,
கர்த்தரே உனக்கு நித்திய வெளிச்சமாயிருப்
பார்; உன் துக்கநாள்கள் முடிந்திருக்கும்.—உன் உக
சனமெல்லாம் நீதிமான்களும், என்றைக்கும் [14]பூ
மியின் சுதந்தரக்குடிகளும், [15]நாம் நட்ட கிளைக
ளும், நாம் மகிமைப்படும்படிக்கு நம்முடைய
கரங்களின் கிரியையுமாயிருப்பார்கள்.—சின்ன உஉ
வன் ஆயிரமும், சிறியவன் பலத்தசாதியும் ஆ
வான்; கர்த்தராகிய நாம் அதை அதின் காலத்தி
லே தீவிரமாக நடப்பிப்போம்.

1 ஏசா. ௫௨. க.—2 ஏசா. சகூ. ௯. 4 சங். எ௨. ௰.—5 ஏசா. ௫௨. ௰க.
வெளி ௨க. ௨௪.-3 ஏசா. சகூ. ௰அ. 6 ஏசா. சகூ. ௨௩.-7 ஏசா ௫௪. எ, அ.

8 வெளி. ௨க. ௨௫.-9 ஏசா. ௩௫. ௨. 12 ஏசா. ௨௬. க.—13 வெளி ௨க. ௨௩.
10 ஏசா. சகூ. ௰ங.—11 ஏசா. சகூ. ௨௩. 14 மத் ௫ ௫.—15 மத். ௰௫ ௰௩.

## ௬௧. அதிகாரம்.

௧. கிறிஸ்துவின் உத்தியோகம். ௪. விசுவாசிகளுடைய சுறுசுறுப்பும், ௯. ஆசீர்வாதங்களும்.

௧ கர்த்தராகிய [1]பராபரனுடைய ஆவியானவர் என்
மேல் இருக்கிறார்; ஏனெனில், [2]சிறுமையான
வர்களுக்குச் சுவிசேஷத்தை அறிவிக்கக் கர்த்தர்
என்னை அபிஷேகம்பண்ணினார்; இருதயம் நரு
ங்குண்டவர்களைக் காயங்கட்டவும், சிறைப்பட்
டவர்களுக்கு விடுதலையையும், கட்டுண்டவர்க
௨ ளுக்குக் காவல் நீங்குதலையும் கூறவும்,—கர்த்த
ருடைய பிரியத்தின் வருஷத்தையும், நம்மு
டைய பராபரன் நீதியைச் சரிக்கட்டும் நாளை
யும் கூறவும், துயரப்பட்ட அனைவரையும் தேற்
றரவுபண்ணவும், சீயோனிலே துயரப்பட்டவர்
களைச் சீர்ப்படுத்தவும், அவர் என்னை அனுப்பி
௩ னார்.—அவர்களுக்குச் சாம்பலுக்குப்பதிலாகச்
சிங்காரத்தையும், துயரத்துக்குப்பதிலாகச் சந்
தோஷத்தின் எண்ணெயையும், ஒடுங்கின ஆவிக்
குப்பதிலாகத் துதியின் உடையையும் கொடுப்
பதற்கும், அவர்கள் கர்த்தர் தம்முடைய மகிமைக்
கென்று நாட்டின நீதியின் விருட்சங்களென்
னப்படுவதற்குமாகத்தானே.
௪ [3]அவர்கள் சதாகாலமாய்ப் பாழாய்க்கிடந்த
வைகளைக் கட்டி, முந்தி நிர்மூலமானவைகளை
எடுப்பித்து, தலைமுறைதலைமுறையாய் இடிந்து
கிடந்த பாழான பட்டணங்களைப் புதியவைக
௫ ளாய்க் கட்டுவார்கள். — மறுசாதியார் நின்று
கொண்டு உங்கள் மந்தைகளை மேய்த்து, அந்நிய
புத்திரர் உங்கள் பண்ணையாள்களும், உங்கள்
திராட்சத்தோட்டக்காரருமாய் இருப்பார்கள்.—
௬ நீங்களோ [4]கர்த்தரின் ஆசாரியரென்று அழைக்
கப்படுவீர்கள்; உங்களை நமது பராபரனுடைய
ஊழியக்காரரென்பார்கள்; நீங்கள் சாதிகளின்
ஆஸ்தியைப் புசித்து, அவர்கள் மகிமையாலே
௭ மேன்மைபாராட்டுவீர்கள். — உங்கள் வெட்கத்
துக்குப்பதிலாக இரண்டத்தனையாய் வரும்;இல
ச்சைக்குப்பதிலாகத் தங்கள் வீதத்திலே கெம்பீ
ரிப்பார்கள்; அதின்நிமித்தம் தங்கள் தேசத்தில்
இரட்டிப்பாகச் சுதந்தரிப்பார்கள்; நித்தியம
௮ கிழ்ச்சி அவர்களுக்கு உண்டாம்.—ஏனெனில்,
[5]கர்த்தராகிய நாம் நியாயத்தைச் சிநேகித்து,
தகனபலியிலே கொள்ளையைப் பகைக்கிறவர்;
நாம் அவர்கள் கிரியையை உண்மையாக்கி,அவர்
களோடே நித்திய உடம்படிக்கையைப்பண்ணு
௯ வோம்.—அவர்கள் வித்து சாதிகளிலும், அவர்
கள் சந்தானங்கள் சனசதளங்களின் நடுவிலும்
அறியப்பட்டிருக்கும்; அவர்களைப் பார்க்கிற
யாவரும் அவர்களைக் கர்த்தர் ஆசீர்வதித்த வித்
தென்று அறிந்துகொள்வார்கள்.
௰ கர்த்தருக்குள் பூரிப்பாய் மகிழுகிறேன்; என்
பராபரனுக்குள் என் ஆத்துமா களிகூர்ந்திருக்
கிறது; ஏனெனில், மணவாளன் ஆசாரியனடை
வாய்ச் சிங்காரித்துக்கொள்ளுகிறதற்கும், மண
வாட்டி தன் ஆபரணங்களால் அலங்கரித்துக்
கொள்ளுகிறதற்கும் ஒப்பாக, அவர் [6]இரட்சிப்
பின் வஸ்திரங்களை எனக்கு உடுத்தி,நீதியின் சால்
வையை எனக்குத் தரித்தார்.—ஏனெனில், பூமி ௰௧
தன் முளைகளைப் புறப்படப்பண்ணுமாப்போல
வும், தோட்டம் தன்னில் விதைக்கப்பட்டவை
களை முளைப்பிக்குமாப்போலவும். கர்த்தராகிய
ஆண்டவர் எல்லாச்சாதிகளுக்கும்முன்பாக நீதி
யையும் துதியையும் முளைக்கப்பண்ணுவார்.

## ௬௨. அதிகாரம்.

௧. பராபரனுடைய வாக்குத்தத்தங்களிலே சபையை நிறுத்தத் தீர்க்கதரிசிக் குண்டாகிய அனலான ஆசை. ௯. சுவிசேஷத்தைப் பிரசங்கிப்பதற்கும், ௰. அதற்குச் சனத்தை ஆயத்தப்படுத்துவதற்கும் அழைக்கப்படுகிற போதகர்களின் தொழில்.

சீயோனின் நிமித்தமும் எருசலேமின் நிமித்த ௧
மும் நாம் மவுனப்படாமலும், அதின் நீதி பிரகா
சத்தைப்போலும், அதின் இரட்சிப்பு எரிகிற தீவ
ட்டியைப்போலும் வெளிப்படுமட்டாக அமரா
மலுமிருப்போம்.—சாதிகள் உன் நீதியையும், ௨
சகல இராசாக்களும் உன் மகிமையையும் காண்
பார்கள்; கர்த்தருடைய வாய் சொல்லும் [7]புது
நாமமாய் அழைக்கப்படுவாய்.—நீ கர்த்தருடைய ௩
கையில் அலங்காரமான கிரீடமும், உன் பராபர
னுடைய கரத்தில் இராசமுடியுமாயிருப்பாய்.—
[8]நீ இனிநெகிழப்பட்டவள் என்னப்படாமலும், ௪
உன் தேசம் இனிப் பாழானதென்னப்படாம
லும், இனி நாம் பிரியம்வைத்தவளென்றும், உன்
தேசம் வாழ்க்கைப்பட்டதென்றும் அழைக்கப்ப
டுவதுண்டு; ஏனெனில், கர்த்தர் உன்மேலே பிரி
யம்வைக்கிறார்; உன் தேசம் வாழ்க்கைப்படும்.
ஏனெனில், வாலிபன் கன்னியாஸ்திரியை ௫
விவாகம்பண்ணுகிறதுபோல, உன் குமாரர் உன்
னை விவாகம்பண்ணுவார்கள்; மணவாளன் மண
வாட்டியின்மேல் மகிழ்ச்சியாயிருக்கிறதுபோல
[9]உன் பராபரன் உன்மேல் மகிழ்ச்சியாயிருப்பார்.
எருசலேமே, உன் மதில்களின்மேலே பகல் ௬
முழுதும் இராமுழுதும் ஒருக்காலும் [10]மவுனமா
யிராத சாமக்காரரைக் கட்டளையிடுகிறோம்; கர்த்
தரைப் பிரஸ்தாபம்பண்ணுகிறவர்களே, உங்க
ளில் அமரிக்கையில்லாதிருப்பதாக.—அவர் எரு ௭
சலேமைத் திடப்படுத்தி, பூமியிலே [11]புகழ்ச்சி
யாய் வைக்குமட்டாக அவரை அமர்ந்திருக்க
வொட்டாதிருங்கள்.—[12]இனி நாம் உன் சத்து ௮
ருக்களுக்கு உன் தானியத்தை ஆகாரமாகக் கொ
டோம்; நீ பிரயாசப்பட்ட உன் கொடிமுந்திரி
கைப்பழஇரசத்தை அந்நிய புத்திரர் குடிப்பதுமி
ல்லையென்றுகர்த்தர் தமது வலதுகரத்தின்மேலும்,
தமது வல்லமையினுடைய புயத்தின்மேலும் ஆ
ணையிட்டார்.—அதைச் சேர்த்தவர்கள்தானே அ ௯
தைப் புசித்துக் கர்த்தரைத் துதிப்பார்கள்; அதைக்
கூட்டிவைத்தவர்கள்தானே அதை நமது பரிசு
த்தஸ்தலத்தின் பிராகாரங்களிலே குடிப்பார்கள்.
[13]வாசல்களால் பிரவேசியுங்கள், பிரவேசியுங் ௰

1 லூக். ௪ ௰௮–௨௰.—2 மத். ௧௧. ௫. வெளி.௧.௬: ௫.௰.–5 எசா. ௫௬. ௰: ௧௫.௰௬.–8 எசா.௫௰.௰௬.–9 செப். ௩.௰௭.—12 எசா.௬௫.௨௧,௨௨
3 எசா.௫௮. ௰௨.—4 ௧ பே. ௨.௯ ௯௯. ௬.—6 சங். ௪௯.௰.—7 எசா. ௬.௰.—10 எசா.௫௨ அ.–11 எசா. 13 எசா. ௫௭.௰௪. மத்.௨௮. ௰௯.

கள்; சனத்துக்கு வழியைச் செவ்வைப்படுத்துங்
கள்; பாதையை உயரமாய் உயர்த்துங்கள்; அதைக்
கல்பொறுக்கி, சனசதளங்களுக்குக் கொடி
௰௧ யேற்றுங்கள்.—[1]இதோ, உன் இரட்சிப்பு வருகி
றது; இதோ, அவருடைய பலன் அவரோடும்,
அவருடைய கூலி அவர்முன்பாகவும் வருகிற
தென்று நீங்கள் சீயோன் குமாரத்திக்குச் சொல்
லுங்கள் என்பதை, இதோ, கர்த்தர் பூமியின்
௰௨ கடையாந்தரமட்டாகக் கூறுகிறார்.—அவர்களைப்
பரிசுத்த சனமென்றும் கர்த்தரால் மீட்கப்பட்ட
வர்களென்றும் அழைப்பார்கள்; நீயோவெனில்,
தேடிக்கொள்ளப்பட்டதென்றும், [2]நெகிழப்ப
டாத பட்டணமென்றும் அழைக்கப்படுவாய்.

## ௬௩. அதிகாரம்.

௧. இரிங்து நாம் யாரென்றும், ௨. தம்முடைய சத்துருக்களைச் செயித்த செயம் இன்னதென்றும், ௭. சபையின்மேல்வைத்த இரக்கம் இன்னதென்றும் காட்டினது. ௰. நீதியான கோபத்திலே இலவசமான இரக்கத்தை நினைவுகூர்ந்தது. ௰௫. சபையார் செபத்திலும், ௰௭. முறைப்பாட்டிலும் தங்கள் விசுவாசத்தை வெளியிட்டது.

௧ ஏதோமிலும் [3]அதிலுள்ள போஸ்றாப்பட்டணத்
திலுமிருந்து [4]சாயந்தீரப்பட்ட வஸ்திரங்களு
டையவராகவும், மகத்துவமாய் உடுத்திருக்கிறவ
ராகவும், தமது மகா சத்துவத்திலே நடந்தேறுகி
றவராகவும், வருகிற இவர் யார்? நீதியாய்ப்பேசி
இரட்சிக்க வல்லவராகிய நாம்தாமே.
௨ உம்முடைய உடுப்புச் சிவப்பாகவும், உம்மு
டைய வஸ்திரங்கள் ஆலையை மிதிக்கிறவன் வஸ்
௩ திரங்களடைவாகவும் இருக்கிறதேது?—[5]நாம்ஒரு
வராய் ஆலையை மிதித்தோம்; சனசதளங்களில்
ஒருவரும் நம்மோடிருந்ததில்லை; நாம் நம்மு
டைய கோபத்திலே அவர்களை மிதித்து, நம்மு
டைய உக்கிரத்திலே அவர்களை நசுக்கிப்போட்
டோம்; ஆனதுகொண்டு அவர்கள் இரத்தம் நமது
வஸ்திரங்களின்மேலே தெறித்தது; நமது உடுப்
பை எல்லாம் கறைப்படுத்திக்கொண்டோம்.—
௪ [6]ஏனெனில், நீதியைச் சரிக்கட்டும் நாள் நம்மு
டைய மனதிலிருந்தது; நம்முடையவர்களை மீட்
௫ கும் வருஷம் வந்திருந்தது.—[7]நாம் பார்த்தோம்;
ஆனால் ஒத்தாசைசெய்கிறவன் இல்லை; தாங்குகி
றவன் இல்லையென்று ஆச்சரியப்பட்டோம்; ஆன
துகொண்டு நமது புயமே நமக்கு இரட்சிப்பாகி,
நம்முடைய உக்கிரமே நம்மைத் தாங்கிற்று.—
௬ நாம் நமது கோபத்திலே சனசதளங்களை மிதித்
துப்போட்டு, நம்முடைய உக்கிரத்தில் அவர்
களை வெறியாக்கி, அவர்கள் சாரத்தைத் தரையில்
இறங்கப்பண்ணினோம்.
௭ கர்த்தர் எங்களுக்குச் செய்தருளின எல்லா
வற்றுக்கும் தக்கவிதமாகவும், அவர் தம்முடைய
இரக்கங்களின்படியேயும், தம்முடைய திரளான
தயவுகளின்படியேயும், இஸ்ரவேல் வீட்டாருக்
குச்செய்த மகா நன்மைக்குத்தக்கவிதமாகவும்,
கர்த்தருடைய கிரியைகளையும், கர்த்தருடைய
துதிகளையும் பிரஸ்தாபம்பண்ணுவேன்.
௮ ஏனெனில் அவர்கள் நம்முடைய சனந்தானெ
ன்றும், அவர்கள் கபடஞ்செய்யாதிருக்கப்போ
கிற பிள்ளைகளென்றுஞ்சொல்லி, அவர்களுக்கு
இரட்சகரானார்.—அவர்களுடைய எல்லா நெ ௯
ருக்கத்திலும் அவர் நெருக்கப்பட்டார்; ஆனது
கொண்டு அவருடைய முகத்தின் தூதனானவர்
அவர்களை இரட்சித்தார்; அவர் [8]தமது அன்பின்
நிமித்தமும், தமது பரிதாபத்தின்நிமித்தமும் அ
வர்களை மீட்டு, பூருவநாள்களிலெல்லாம் அவர்
களைத் தூக்கிச் சுமந்துவந்தார். — அவர்களோ ௰
கலகம்பண்ணி, அவருடைய பரிசுத்த ஆவிக்கு
நோக நடந்தார்கள்; ஆகையால் அவர்களுக்குச்
சத்துருவாய் மாறி, அவரே அவர்களுக்கு விரோ
தமாய் யுத்தம்பண்ணினார்.
ஆகிலும் பூருவநாள்களையும், மோசேயையும், ௰௧
தம்முடைய சனத்தையும் நினைவுகூர்ந்தாரே;
ஆனால் அவர்களையும், தமது மந்தையின் மேய்ப்
பனையும் சமுத்திரத்திலிருந்து ஏறப்பண்ணின
வர் இப்போது எங்கே?—அவர்கள் நடுவிலே ௰௨
தம்முடைய பரிசுத்தஆவியை இருக்கக் கட்ட
ளையிட்டு, அவர்களை மோசேயின் வலதுபக்கத்தி
லுள்ள தமது மகிமையின் புயத்தினாலே நடத்தி,
தமக்கு நித்தியகீர்த்தியை உண்டாக்க அவர்க
ளுக்குமுன்பாகத் தண்ணீர்களைப் பிளந்து,—
ஒரு குதிரை வனாந்தரவெளியிலே நடக்குமாப் ௰௩
போல அவர்களை ஆழங்களில் இடறாதபடிக்கு
நடக்கப்பண்ணினவர் எங்கே?—கர்த்தருடைய ௰௪
ஆவியானவர் அவர்களைப் பள்ளத்தாக்கிலே
போய் இறங்குகிற மிருகசீவன்களைப்போல
இளைப்பாறப்பண்ணினார்; அப்படியே தேவரீர்
உமக்கு மகிமையுள்ள கீர்த்தியை உண்டாக்க
உம்முடைய சனத்தை நடத்தினீரே.
[9]தேவரீர் பரமண்டலங்களிலிருந்து கண்ணோ ௰௫
க்கி, உம்முடைய பரிசுத்தமும் உமது மகிமையு
மான வாசஸ்தலத்திலிருந்து பாரும்; உம்முடை
ய வயிராக்கியமும், உம்முடைய வல்லமைக
ளும் எங்கே? உம்முடைய குடல்களின் இரைத
லும், உம்முடைய மன உருக்கமும் எனக்கு
முன்பாகத் தன்னை அடக்கிக்கொள்ளுகிறதா?—
தேவரீர் எங்கள் பிதாவாமே; ஏனெனில், ஆபிர ௰௬
காம் எங்களை அறியான், இஸ்ரவேலுக்குக்கூட
நாங்கள் அறியப்பட்டவர்களுமல்ல; கர்த்தாவே
தேவரீர் எங்கள் பிதாவும், எங்கள் மீட்பருந்தா
னே; இது பூருவகாலமுதல் உம்முடைய நாமம்.—
கர்த்தாவே தேவரீர் எங்களை உம்முடைய வழி ௰௭
களைத் தப்பிப்போகவிட்டு, எங்கள் இருதயத்
தை உமக்குப் பயப்படாதபடிக்குக் கடினப்ப
டுத்துவானேன்? உம்முடைய ஊழியக்காரரின்
நிமித்தமும், உம்முடைய சுதந்தரமான கோத்தி
ரங்களின்நிமித்தமும் திரும்பும்.—உம்முடைய ௰௮
பரிசுத்த சனத்தைக் கொஞ்சங்குறையச் சுதந்த
ரமாக வசப்படுத்திக்கொண்டிருக்கிறார்கள்; எங்
கள் சத்துருக்கள் உம்முடைய பரிசுத்தஸ்தலத்
தை [10]மிதித்துவிட்டார்கள்.—ஒருக்காலும் தேவ ௰௯

1 ஏசா. ௪௦. ௰. வெளி. ௨௨. ௰௨. 4 ஏசா ௩௪. ௬, ௧—5 வெளி. ௰௪
2 ௧ பே. ௨ ௯.—3 வெளி. ௰௯.௰௩. ௰௯, ௨௰.—6 ஏசா. ௩௪. ௮.
7 ஏசா. ௫௯. ௰௬, ௰௭. 9 ௫ மோ. ௨௬. ௰௫.
8 ௫ மோ. ௭. ௭-௮. 10 ஏசா. ௬௪. ௰௧. சங். ௭௯. ௧.

நீர் ஆண்டுகொள்ளாதவர்களைப்போலும், உமது நாமம் விளங்காதவர்களைப்போலுமானோம்.

## ௬௪. அதிகாரம்.

௧. திருச்சபை பராபரனுடைய வல்லமை விளங்குவதற்காக மன்றாடினது. ௫ அது அவருடைய இரக்கத்தைப் புகழ்ந்து தன் சுபாவக்கேடுகளை வெளிப்பிட்டது. ௯. தன் துனபத்தைக்குறித்து முறையிட்டது.

௧ ஆ உமது நாமத்தைச் சத்துருக்களுக்கு அறியப் பண்ணுவதற்கும், சாதிகள் உம்முடைய சந்நி
௨ திக்குமுன் தத்தளிப்பதற்குமாக,—தேவரீர் வானங்களைக் கிழித்திறங்கி, உருக்குகிற அக்கினி எரியுமாப்போலவும், அக்கினி தண்ணீரைப் பொங்கப்பண்ணுமாப்போலவும், பர்வதங்கள் உமக்கு
௩ முன்பாகக் கரைந்தால் தாவிளை.—நாங்கள் வரப்பார்த்திராத பயங்கரமான காரியங்களைத் தேவரீர் செய்து இறங்குகிறபோது, உமக்குமுன்பாகப் பர்வதங்கள் கரைந்ததுபோலேதானே.
௪ பராபரனே, [1]உமக்குக் காத்திருக்கிறவர்களுக்கு நீர் செய்பவைகளைத் தேவரீரே அல்லாமல், உலகத்தோற்றம்முதற்கொண்டு ஒருவரும் கேட்டதுமில்லை; செவியால் உணர்ந்ததுமில்லை;
௫ அவைகளைக் கண்டதுமில்லை.—மகிழ்ச்சியாய் நீதியைச்செய்கிறவர்களையும், உம்முடைய வழிகளில் உம்மை நினைக்கிறவர்களையும் சந்தித்தீர்; நாங்களோவென்றால், இதோ, அவைகளுக்கு விரோதமாகச் சதாகாலமும் பாவம்செய்தபடியினாலே, தேவரீர் கடுங்கோபம் அடைந்தீர்; இன்னம் தப்பியுமிருக்கிறோம்.
௬ ஆனால் நாங்கள் அனைவரும் தீட்டானவனைப் போல இருக்கிறோம்; எங்களுடைய நீதிகள் எல்லாம் தீட்டான வஸ்திரத்தைப்போலவும் இருக்கின்றன; நாங்கள் அனைவரும் [2]இலைகளைப் போல உதிருகிறோம்; எங்கள் அக்கிரமங்கள் காற்றைப்போல எங்களை அடித்துக்கொண்டு
௭ போம்.—உமது நாமத்தைநோக்கிக் கூப்பிடுகிறவனும் [3]உம்மைப் பற்றிக்கொள்ளும்படிக்கு விழித்துக்கொள்ளுகிறவனுமில்லை; ஏனெனில் தேவரீர் உம்முடைய முகத்தை எங்களைவிட்டு மறைத்து, எங்களை எங்கள் அக்கிரமங்களின் நிமித்தம் கரையப்பண்ணுகிறீர்.
௮ இப்போதும் கர்த்தாவே, தேவரீர் எங்களுடைய பிதா; நாங்கள் களிமண், தேவரீர் எங்களை உருவாக்குகிறவர்; நாங்கள் அனைவரும் உமது
௯ கரத்தின் கிரியைதானே.—கர்த்தாவே, இத்தனையாய்க் கடுங்கோபம் வைத்துக்கொண்டிராமலும், [4]என்றைக்கும் அக்கிரமத்தை நினைத்துக்கொள்ளாமலும் இருப்பீராக; இதோ, நாங்கள் அனைவரும், உம்முடைய சனமென்று பாருமே.—
௰ உமது பரிசுத்த பட்டணங்கள் வனாந்தரமாயின; சீயோன் வனாந்தரமாயிற்று; எருசலேம் பாழாய்க்
௰௧ கிடக்கிறது.—எங்கள் பிதாக்கள் உம்மைத் துதித்த எங்களுடைய பரிசுத்தமும், எங்கள் மகிமையுமான வீடு அக்கினிக்கு இரையாகி, இச்சிக்கப்படத்தக்க எங்களுடைய தானங்களெல்லாம் பாழாயின.—கர்த்தாவே, இவைகள் இப்படியிருந்தும் ௰௨
அடக்கிக்கொண்டிருப்பீரோ? மவுனமாயிருந்து, இத்தனையாய் எங்களைச் சிறுமைப்படுத்துவீரோ?

## ௬௫. அதிகாரம்.

௧. பரமதஸ்தரை அழைத்தல். ௨. யூதர்கள் நம்பிக்கையின்மையினாலும், விக்கிரகபத்தியினாலும், மாயத்தினாலும் தள்ளப்படுவார்களென்பது. ௮. மீதியானவர்கள் இரட்சிக்கப்படுவார்களென்பது. ௰௧. தீயோர்மேல் வரும் நியாயத்தீர்ப்புகளையும, நல்லோர்மேல் வரும் பாக்கியங்களையும், ௰௭. புதிய எருசலேமின் பாக்கியமுள்ள ஸ்திதியையுங்குறித்தது.

நமக்காக விசாரித்துக் கேளாதிருந்தவர்களாலே ௧
தேடப்பட்டோம்; நம்மைத் தேடாதிருந்தவர்களாலே கண்டுபிடிக்கப்பட்டோம்; [5]நம்முடைய நாமம் விளங்காதிருந்த சாதியுடனே, [6]இதோ, இங்கே இருக்கிறோமென்கிறோம்.—[7]நலமல்லாத ௨
வழியிலே தங்கள் நினைவுகளைப் பின்பற்றிநடக்கிற முரட்டாட்டமான சனத்தண்டைக்கு நாள் முழுதும் [8]நம்முடைய கைகளை நீட்டினோம்.—
நம்முடைய சந்நிதியிலே நித்தம் நமக்குக் கோப ௩
முண்டாக்கி, தோப்புகளிலே பலியிட்டு, செங்கல்லுகளின்மேலே தூபங்காட்டி,—பிரேதக்குழி ௪
களண்டையில் உளுக்காந்து, பாழ்ந்தலங்களில் இராத்தங்கி, [9]பன்றியிறைச்சியைத் தின்று, தங்கள் பாத்திரங்களில் அருவருப்பான சீவன்களின் ஆணத்தை வைத்திருந்து,—நீ உன்மட்டி ௫
லிரு, என்னண்டைக்குச் சேராதிரு, உன்னைப் பார்க்கிலும் பரிசுத்தனாயிருக்கிறேன் என்கிற சனத்தண்டைக்குத்தானே; இவர்கள் நம்முடைய கோபத்திலே புகையும், நாளெல்லாம் எரிகிற அக்கினியுமாய் இருப்பார்கள்.—இதோ, அது நமக்கு ௬
முன்பாக எழுதிஇருக்கிறது; நாம் மவுனமாயிராமல் சரிக்குச் சரிக்கட்டுவோம்; அவர்கள் மடியிலே சரிக்கட்டுவோம்.—உங்கள் அக்கிரமங்களுக் ௭
கும், மலைகளிலே தூபங்காட்டி, மேடைகளிலே நம்மை நிந்தித்த உங்கள் பிதாக்களுடைய அக்கிரமங்களுக்குங்கூடத்தானே; நாம் அவர்கள் முந்தின செய்கையின் பலனை அவர்கள் [10]மடியிலே அளப்போமென்று கர்த்தர் சொல்லுகிறார்.
கர்த்தர் சொல்லுகிறதாவது: ஒரு திராட்சக்கு ௮
லையில் இரசம் காணப்படும்போது, அதை அழிக்காதிரு; ஏனெனில், அதிலே ஆசீர்வாதம் உண்டென்று சொல்லப்படுகிறபடி, நாம் நமது ஊழியக்காரரின்நிமித்தமாக அனைத்தையும் அழிக்காதபடிக்குச் செய்து,—யாக்கோபிலிருந்து ஒரு ௯
வித்தையும், யூதாவிலிருந்து நம்முடைய பர்வதங்களைச் சுதந்தரிப்பவனையும் எழும்பப்பண்ணுவோம்; நாம் தெரிந்துகொண்டவர்கள் அதைச் சுதந்தரித்துக்கொண்டு, நம்முடைய ஊழியக்காரர் அங்கே வாசம்பண்ணுவார்கள்.— நம்மைத் ௰
தேடுகிற நமது சனத்துக்குச் சாரோன், ஆட்டுத் தொழுவமாகவும், [11]ஆகோரின் பள்ளத்தாக்கு, மாட்டுக்கிடையாகவும் இருக்கும்.
ஆனால் கர்த்தரைவிட்டு, நமது பரிசுத்த பர்வ ௰௧
தத்தை மறந்து, காத்தென்றதற்குப் பந்தியை

1 ௧ கொரி. ௨. ௯.—2 சங். ௯௰. ௫, ௬. 5 எசா. ௬௩. ௧௯. உரோ. ௰. ௨௰.
3 சங். ௭௩. ௨௮.—4 சங். ௭௯. ௮. 6 எசா. ௬௨. ௧.—7 எரே. ௭. ௨௪.

8 உரோ. ௰. ௨௧. 10 கலா. ௬. ௭.
9 எசா. ௬௬. ௰௭. 11 யோசு. ௭. ௨௬.

ஆயத்தம்பண்ணி, மேனி என்றதற்கு ஊற்றுதலை
௰௨ நிறைய வார்க்கிறவர்களே,—உங்களை நாம் பட்
டையத்துக்கு எண்ணிக்கொடுப்போம்; நீங்கள்
அனைவரும் கொலைப்படக் குனிவீர்கள்; ஏனெ
ன்றால், [1]நாம் கூப்பிட்டும் நீங்கள் மறு உத்தரவு
சொல்லாமலும், நாம் பேசியும் நீங்கள் கேளாம
லுமிருந்து, நம்முடைய பார்வைக்குப் பொல்
லாப்பானதைச் செய்து, நமக்குப் பிரியமாயிராத
௰௩ தைத் தெரிந்துகொண்டீர்கள்.—ஆனபடியினா
லே கர்த்தராகிய ஆண்டவர் சொல்லுகிறதாவது:
இதோ, [2]நம்முடைய ஊழியக்காரர் புசிப்பார்
கள்; நீங்களோ பசியாயிருப்பீர்கள்; இதோ, நம்
முடைய ஊழியக்காரர் குடிப்பார்கள்; நீங்க
ளோ தாகமாயிருப்பீர்கள்; இதோ, நம்முடைய
ஊழியக்காரர் சந்தோஷப்படுவார்கள்; நீங்க
௰௪ ளோ வெட்கப்படுவீர்கள்.—இதோ,நம்முடைய
ஊழியக்காரர் மனத்திடனாலே கெம்பீரிப்பார்
கள்; நீங்களோ மனநோவினாலே கூப்பிட்டு, ஆ
௰௫ வியின் முறிவினாலே அலறுவீர்கள்.-நாம் தெரிந்
துகொண்டவர்களுக்கு நீங்கள் உங்கள் நாமத்
தைச் சாபப்பிரமாணமாகப் பின்வைத்துப்போ
வீர்கள்; ஏனெனில், கர்த்தராகிய ஆண்டவர் உன்
னைக் கொன்றுபோட்டு, தம்முடைய ஊழியக்
௰௬ காரருக்கு [3]வேறே நாமத்தைத் தரிப்பார்.-ஆனது
கொண்டு பூமியிலே தன்னை ஆசீர்வதிக்கிறவன்
சத்திய பராபரனுக்குள்ளே தன்னை ஆசீர்வதிப்
பான்; பூமியிலே ஆணையிடுகிறவன் [4]சத்தியபரா
பரன்மேலே ஆணையிடுவான்; ஏனெனில், முந்
தின இடுக்கண்கள் மறக்கப்பட்டு. அவைகள் நம்
முடைய கண்களுக்கு மறைந்துபோய்விட்டன.

௰௭ ஏனெனில், இதோ, [5]நாம் புது வானத்தையும்,
புதுப்பூமியையும் சிருஷ்டிக்கிறோம்; முந்தின
வைகள் இனி நினைக்கப்படுவதுமில்லை; மனதி
௰௮ லே எழும்புவதுமில்லை.—நாம் சிருஷ்டிக்கிறதி
னாலே நீங்கள் என்றென்றைக்கும் மகிழ்ந்து களி
கூர்ந்திருங்கள்; ஏனெனில், இதோ, எருசலே
மைக் களிகூருதலுண்டாகவும்.அதின் சனத்தை
மகிழ்ச்சியுண்டாகவும் சிருஷ்டிக்கிறோம்.—
௰௯ நாம் எருசலேமின்மேல் களிகூர்ந்து,நமது சனத்
தின்மேல் மகிழ்ச்சியாயிருப்போம்;அழுகையின்
சத்தமும், கூக்குரலின் சத்தமும் அதில் இனிக்
௨௰ கேட்கப்படுவதில்லை.—அங்கே இனிக் கொஞ்
சநாள்மட்டிருக்கும் பாலகனும், தன் நாள்களை
நிறைவேற்றாத கிழவனும் உண்டாயிராமல், சா
கிற வாலிபன் நூறுவயதுள்ளவனாயிருப்பான்;
நூறுவயதுள்ளவனாகிய பாவியோ சபிக்கப்படு
௨௧ வான்.—வீடுகளைக் கட்டி, அவைகளில் குடியி
ருப்பார்கள்; [6]திராட்சத்தோட்டங்களை நாட்டி,
௨௨ அவைகளின் கனியையும் புசிப்பார்கள்.—[7]அ
வர்கள் கட்டுகிறதும், வேறொருவர் குடியிருக்
கிறதும், அவர்கள் நாட்டுகிறதும், வேறொருவர்
கனி புசிக்கிறதுமாயிருப்பதில்லை; ஏனெனில்,
விருட்சத்தின் நாள்களைப்போலே நமது சனத்
தின் நாள்களிருக்கும்; நாம் தெரிந்துகொண்ட
வர்கள் தங்கள் கைகளின் கிரியைகளை, அவை
கள் பழசாய்ப்போகுந்தனிலும் அநுபவிப்பார்
கள்.—அவர்கள் விருதாவாக உழைப்பதில்லை; ௨௩
அவர்கள் கலங்கலாகப் பிள்ளைகளைப் பெறுவது
மில்லை; ஏனெனில், அவர்களும், அவர்களோ
டேகூட அவர்கள் சந்தானமும் கர்த்தராலே
தெரிந்துகொள்ளப்பட்ட வித்தாயிருப்பார்கள்.-
சம்பவிப்பது ஏதெனில் [8]அவர்கள் கூப்பிடுகிற ௨௪
தற்கு முன்னே நாம் மறுஉத்தரவு கொடுப்போம்;
அவர்கள் இன்னம் பேசுகையில் நாம் கேட்
போம்.—[9]ஓநாயும் ஆட்டுக்குட்டியும் ஒருமித்து ௨௫
மேயும்; சிங்கம் மாட்டைப்போலே வைக்கோ
லைத் தின்னும்; [10]தூள், சர்ப்பத்தினுடைய போச
னமாயிருக்கும்; நம்முடைய பரிசுத்தபர்வதமெ
ங்கும் தீங்குசெய்வதும் இல்லை, கேடுண்டாக்
குவதும் இல்லையென்று கர்த்தர் சொல்லுகிறார்.

## ௬௬. அதிகாரம்.

௧. மகிமையுள்ள பராபரன் உண்மையான வணக்கத்தோடு புகழப்படுவாரென்பது. ௫. அவர் தாழ்மையுள்ளவர்களை அதிசயமான செனிப்பிப்பினாலும். ௰. சபைக்குக் கிடைக்கும் கிருபையுள்ள நன்மைகளினாலும் ஆறுதல் செய்வது. ௰௫. துன்மார்க்கருக்கு விரோதமாக வரும் பராபரனுடைய கொடிய நியாயத்தீர்ப்புகள். ௰௯. பரமதஸ்தர் தங்களுக்குப் பரிசுத்த சபை உண்டாயிருந்து, ௨௪. துன்மார்க்கருடைய நரகவேதனையைப் பார்ப்பார்களென்பது.

கர்த்தர் சொல்லுகிறதாவது: [11]பரமண்டலங்கள் ௧
நம்முடைய ஆசனமும், பூமி நம்முடைய பாத
படியுமாயிருக்கையில் நீங்கள் நமக்குக் கட்டும்
வீடு எப்படிக்கொத்ததும், நாம் தாவரிக்கும் இ
டம் எப்படிக்கொத்ததுமாய் இருக்கும்?—நம்மு ௨
டையகரம்இவைகளையெல்லாம்படைத்ததினால்
இவைகள் எல்லாம் உண்டாயினவேயென்று
கர்த்தர் சொல்லுகிறார்; ஆனால் [12]சிறுமைப்பட்டு
ஆவியில் நொறுங்குண்டு, நமது வசனத்துக்கு
நடுங்குகிறவனையே நோக்கிப்பார்ப்போம்.

[13]மாட்டைக் குரல்வளை அறுக்கிறவன் மனு ௩
ஷனை வெட்டுகிறவனாகவும், ஆட்டைப் பலியி
டுகிறவன் நாயைக் கழுத்தறுக்கிறவனாகவும், கா
ணிக்கையைப் படைக்கிறவன் பன்றி இரத்தத்
தைப் படைக்கிறவனாகவும், நினைப்புண்டாகத்
தூபங்காட்டுகிறவன் விக்கிரகத்தைத் தோத்திரிக்
கிறவனாகவும் இருக்கிறான்; இவர்களும் தங்க
ளுடைய வழிகளைத் தெரிந்துகொள்ளுகிறார்கள்;
இவர்களுடைய ஆத்துமா தங்கள் அருவருப்புக
ளின்மேலே விருப்பமுமாயிருக்கிறது.—நாமும் ௪
அவர்கள் பரியாசங்களுக்குத்தக்கதைத் தெரிந்து
கொண்டு, அவர்களுக்குத்தக்க திகில்களை அவர்க
ள்மேல் வரப்பண்ணுவோம்; [14]நாம் கூப்பிட்டா
லும், மறுஉத்தரவு கொடுக்கிறவனில்லாமலும்,
நாம் பேசினாலும் அவர்கள் கேளாமலும், அவர்
கள் நமது பார்வைக்குப் பொல்லாப்பானதைச்

1 ஏசா. ௬௬. ௪. வாக். ௧. ௨௪. ௩௰. 2 சங். ௨௨. ௨௭. மத். ௫. ௬ -3 ஏசா. ௬௨. ௨. வெளி. ௨. ௰௭. —4 எரே. ௪. ௨ : ௰௨. ௰௬. —5 ஏசா. ௬௬. ௨௨. ௨ பே. ௩. ௰௩. வெளி. ௨௧. ௧. 6 ஏசா. ௬௨ அ, ௯. —7 உபா. ௨௮. ௩௰. — 8 ஏசா. ௩௰ ௰௯ : தானி. ௯. ௨௰. ௨௧. மத். ௬. ௮. —9 ஏசா. ௰௧. ௬, ௯. — 10 ஆதி. ௩. ௰௪. 11 ௧ இரா அ. ௨௭. ௨ நாளா. ௬. ௰௮. மத். ௫ ௩௪. ௩௫. அப். ௭. ௪௮, ௪௯ : ௰௭. ௨௪. —12 ஏசா. ௫௭. ௰௫. சங். ௩௪. ௰௮ : ௫௧. ௰௭. —13 எரே. ௬. ௨௰. —14 ஏசா. ௬௫. ௰௨. வாக். ௧. ௨௪. எரே. ௭. ௰௩, ௰௪.

செய்து, நாம் விரும்பாததைத் தெரிந்துகொண்
டதின்நிமித்தமாகத்தானே.
ரு கர்த்தருடைய வசனத்துக்கு நடுங்குகிறவர்க
ளே,அவருடையவார்த்தையைக்கேளுங்கள்;[1] உ
ங்களைப் பகைத்து, நம்முடைய நாமத்தின்நிமித்
தம் உங்களைத் தூரப்படுத்துகிற உங்கள் சகோ
தரர்: கர்த்தர்மகிமைப்படுவாராக என்கிறார்களே;
ஆனால் அவர் உங்கள் சந்தோஷத்துக்காகக் காண
ப்படுவார்; அவர்களோ வெட்கப்படுவார்கள்.
சு பட்டணத்திலிருந்து அமளியின் இரைச்சலும்,
தேவாலயத்திலிருந்து சத்தமும் கேட்கப்படும்;
தம்முடைய சத்துருக்களுக்குச் சரிக்குச்சரிக்
எ கட்டுகிற கர்த்தருடைய சத்தந்தானே.— அம்
பாயப்படாததற்குமுன் பெற்றாள்; அவளுக்கு
வேதனை வராததற்குமுன் அவள் ஆண்பிள்ளை
அ யைப் பெற்றாள்.—இப்படிக்கொத்ததைக் கேட்
டது யார்? இப்படிக்கொத்ததைக் கண்டது யார்?
ஒரே நாளிலே ஒரு தேசத்துக்குப் பிள்ளைப்பேறு
வருமோ?ஒருமிக்க ஒரு சாதிபிறக்குமோ? சீயோ
னோவெனில், ஒருமிக்க வேதனைப்பட்டும், தன்
கூ குமாரரைப் பெற்றுமிருக்கிறது.—பெறப்பண்
ணுகிறவராகிய நாம் பெறுவியாமல் இருப்போ
மோவென்று கர்த்தர் சொல்லுகிறார்; பிறக்கப்
பண்ணுகிறவராகிய நாம் அடைபட்டிருப்போ
மோவென்று உன் பராபரன் சொல்லுகிறார்.
ய எருசலேமைச் சிநேகிக்கிற நீங்களெல்லாரும்
அதனோடேகூடச் சந்தோஷப்பட்டு,அதினாலே
களிகூருங்கள்; அதினுடையநிமித்தம் துக்கித்
திருந்த நீங்கள் எல்லாரும் அதனோடேகூட மிக
யக வும் மகிழுங்கள்.—நீங்கள் அதினுடைய ஆறுதல்
களில் முலைப்பாலை உண்டு திருத்தியாகவும், நீங்
கள் சூப்பிக்குடித்து, அதினுடைய மகிமையின்
மினுக்கினால் மனமகிழ்ச்சியாகவுந்தானே.
யஉ ஏனெனில், கர்த்தர் சொல்லுகிறதாவது: இ
தோ, நாம் சமாதானத்தை ஒரு நதியைப்போல
வும், சாதிகளின் மகிமையைப் புரண்டு ஓடுகிற
ஆற்றைப்போலவும், அதினிடமாகப் பாய்ச்சு
கிறோம்; [2]அப்பொழுது முலையுண்பீர்கள்; நீங்
கள் கக்கத்திலே சுமக்கப்படுவீர்கள்; முழங்கால்
களில் வைக்கப்பட்டு மனமகிழ்ச்சியாக்கப்படு
யங வீர்கள்.—ஒருவனை அவன் தாய் தேற்றரவுபண்
ணுமாப்போலே நாம் உங்களைத் தேற்றரவுபண்
ணுவோம்; நீங்கள் எருசலேமைத்தொட்டுத் தேற்
யச றப்படுவீர்கள்.—நீங்கள் அதைக் காண்பீர்கள்;
[3]உங்கள் இருதயம் மகிழ்ந்து, உங்கள் எலும்புகள்
பச்சைமுளையைப்போலச் செழிக்கும்; அப்
பொழுது கர்த்தருடைய ஊழியக்காரரிடத்தில்
அவருடைய கரமும், அவருடைய சத்துருக்களி
டத்தில் அவருடைய சினமும் அறியப்படும்.
யரு ஏனெனில், இதோ, தம்முடைய கோபத்தை
உக்கிரமாகவும், தம்முடைய உதம்புதலை [4]அக்
கினிச்சுவாலைகளாகவும் மாறப்பண்ணக் கர்த்தர்
அக்கினியோடே வருவார்; அவருடைய இரதங்
கள் பெருங்காற்றைப்போலவரும்.—ஏனெனில், யசு
கர்த்தர் அக்கினியாலும், [5]தமது பட்டையத்தா
லும் எல்லா மாம்சத்தோடும் நியாயத்துக்குள்பி
ரவேசிப்பார்; கர்த்தரால் கொலையுண்டவர்கள்
அநேகராயிருப்பார்கள்.
தங்களைத்தானே பரிசுத்தமாக்குகிறவர்களும், யஎ
[6]தோப்புகளின்நடுவிலே தங்களைத்தானே ஒருவர்
பிறகாலே ஒருவராய்ச் சுத்திகரிக்கிறவர்களும்,
பன்றியிறைச்சியையும் அருவருப்பானதையும்
எலிகளையும் சாப்பிடுகிறவர்களும், ஏகமாய்ச்
சங்கரிக்கப்படுவார்களென்று கர்த்தர் சொல்லு
கிறார்.—நாம் அவர்கள் கிரியைகளையும், அவர் யஅ
கள் நினைவுகளையும் அறிவோம்; நாம் சகல சாதி
யாரையும், பாஷைக்காரரையுங் கூட்டிச்சேர்க்
கும் காலம்வரும்; இவர்கள் வந்து நம்முடைய
மகிமையைக் காண்பார்கள்—நாம் அவர்களில் யகூ
ஒரு அடையாளத்தைக் கட்டளையிட்டு, அவர்க
ளிலே தப்பினவர்களை நம்முடைய கீர்த்தியைக்
கேளாமலும், நம்முடைய மகிமையைக் காணாம
லுமிருக்கிற சாதிகளின் தேசங்களாகிய தர்சீசுக்
கும், வில்லுக்காரர் இருக்கிற பூலுக்கும், லூதுக்
கும், தூபாலுக்கும், யாவானுக்கும்; தூரத்திலுள்ள
தீவுகளுக்கும் அனுப்புவோம்; அவர்கள் நமது
மகிமையைச் சாதிகளுக்குள்ளே அறிவித்து,—
உங்களுடைய எல்லாச் சகோதரரையும், சகல உய
சாதிகளிடத்திலுமிருந்து குதிரைகளின்மேலும்,
இரதங்களின்மேலும், குலாரி வண்டில்களின்
மேலும், கோவேறுகழுதைகளின்மேலும், வேக
மான ஒட்டகங்களின்மேலும், எருசலேமி
லுள்ள நம்முடைய பரிசுத்த பர்வதத்துக்குக்
[7]கர்த்தருக்குக் காணிக்கையாகக் கொண்டுவரு
வார்கள்; இஸ்ரவேல் புத்திரர் காணிக்கையைச்
சுத்தமான பாத்திரங்களில் கர்த்தருடைய வீட்
டுக்குக் கொண்டுவருகிறதற்குச் சமானமாகத்தா
னே என்று கர்த்தர் சொல்லுகிறார்.—அவர்களி உக
லும் சிலரை [8]ஆசாரியர்களாகவும், லேவியராக
வும், எடுப்போமென்று கர்த்தர் சொல்லுகிறார்.
ஏனெனில் நாம் படைக்கப்போகிற [9]புது வா உஉ
னமும், புதுப்பூமியும் நமக்குமுன்பாக எப்படி
நிற்கிறவைகளாயிருக்குமோ, அப்படி உங்கள்
வித்தும், உங்கள் நாமமும் நிற்குமென்று கர்த்தர்
சொல்லுகிறார்.—சம்பவிப்பது ஏதெனில், மாதத் உங
துக்கு மாதமும், ஓய்வுநாளுக்கு ஓய்வுநாளும்.
எல்லா மாம்சமும் நமக்குமுன்பாகப் பணிய
வருமென்று கர்த்தர் சொல்லுகிறார்.—அவர்கள் உச
வெளியேபோய், நமக்கு விரோதமாய்ப்பாதகஞ்
செய்த மனுஷனுடைய பிரேதங்களைப் பார்ப்
பார்கள்; ஏனெனில், [10]அவர்களுடைய பூச்சி சா
காமலும், அவர்களுடைய அக்கினி அவியாம
லும் இருக்கும்; அவர்கள் எல்லா மாம்சத்துக்கும்
அரோசிகமாய் இருப்பார்கள்.

1 லூக். சு. உஉ.—2 ஏசா. சகூ க, சங். இய. க. உ தெச. க. சு, அ. ச: சகூ. உஉ: சுய ச: கி. யசு. வெளி. யஅ. அ.
3 ஏசா. கஙி. ய —4 ஏசா. கய.சய. 5 வெளி. யசு. உக.
6 ஏசா. சுரு. க, ங.
7 உரோ. யரு. யசு.
8 ஏசா சுக. சு. க பே. உ. ரு.
9 ஏசா. சுரு. யஎ.
10 மாற். கூ. சச, சசு, சஅ.

JEREMIAH.

# எரேமியாவின் தீர்க்கதரிசனம்.

## ௧. அதிகாரம்.

௧. எரேமியாவின் காலமும், ௫. அழைப்பும், ௰௧. அவன் வாதுமைமரத்தின் கிளையையும் பொங்குகிற பானையையும் தரிசனையில் கண்டது. ௰௫. யூதாவுக்கு விரோதமாகச் சொல்லிய கனமான சமாசாரம். ௰௭. பாரமான உத்தியோகத்துக்கு அடுத்த வாக்குத்தத்தத்தினால் அவனைத் தயிரியப்படுத்தினது.

௧ பென்யமீன்தேசத்து ஆனதோத்தூரில் உள்ள
ஆசாரியர்களில் ஒருவனான இல்க்கியாவின் குமா
ரனாகிய எரேமியாவினுடைய வசனங்கள்:—
௨ ஆமோனுடைய குமாரனாகிய [1]யோசியாவென்ற
யூதாவுடைய இராசாவின் நாள்களிலும், அவன்
அரசாண்ட பதின்மூன்றாம் வருஷத்திலும் இவ
னுக்குக் கர்த்தருடைய வார்த்தை உண்டாயிற்
௩ று.—அப்புறம் யோசியாவின் குமாரனாகிய [2]யோ
யாக்கீம் என்ற யூதாவுடைய இராசாவின் நாள்க
ளிலும், யோசியாவின் குமாரனாகிய [3]சிதேக்கியா
வென்ற யூதாவுடைய இராசாவின் பதினோராம்
வருஷத்து முடிவுமட்டாகவும், [4]எருசலேம்
ஊரார் ஐந்தாம்மாதத்தில் சிறைப்பட்டுப் போகு
மட்டாகவும் அப்படி அவனுக்குண்டாயிற்று.
௪ கர்த்தருடைய வார்த்தை எனக்குண்டாய்
௫ அவர் சொன்னதாவது:—[5]நாம் உன்னைத் தாயின்
வயிற்றில் உருவாக்காததற்குமுன்னே உன்னை
அறிந்தோம்; நீ கர்ப்பத்திலிருந்து வெளியாகாத
தற்குமுன்னே நாம் உன்னைப் பரிசுத்தம்பண்ணி,
உன்னைச் சாதிகளுக்குத் தீர்க்கதரிசியாகக் கட்
டளையிட்டோம் என்றார்.
௬ அப்போது நான்: ஆ கர்த்தராகிய ஆண்டவரே,
[6]இதோ, பேச அறியேன்; ஏனெனில், நான் இ
௭ ளந்தை என்றேன்.—[7]ஆனால் கர்த்தர் என்னுட
னே சொன்னதாவது: நான் இளந்தை என்று நீ
சொல்லாமல், நாம் உன்னை அனுப்பப்போகிற
எல்லாரிடத்திலும் நீ போய், நாம் உனக்குக் கற்
௮ பிப்பவைகளையெல்லாம் நீ பேசுவாயாக.—[8]நீ
அவர்களுக்குப் பயப்படாயாக; ஏனெனில் உன்
னை விடுவிக்கும்படிக்கு நாம் உன்னுடனே இருக்
௯ கிறோமென்று கர்த்தர் சொல்லி,—கர்த்தர் தமது
கரத்தை நீட்டி, [9]என் வாயைத்தொட்டு: இதோ,
[10]நம்முடைய வார்த்தைகளை உன் வாயிலே வைக்
கிறோமென்றும்,
௰ பார், பிடுங்கவும், நிர்மூலமாக்கவும், அழிக்க
வும், இடிக்கவும், கட்டவும், நாட்டவுமாக உன்
னை நாம் இன்றைத்தினம் சாதிகளின்மேலும்,
இராச்சியங்களின்மேலும் நிறுத்துகிறோம் என்
றும் கர்த்தர் என்னுடனே சொன்னார்.
பின்னையும் கர்த்தருடைய வார்த்தை எனக்கு ௰௧
உண்டாகி, அவர்: எரேமியாவே, நீ என்ன
காண்கிறாய் என்றார்; தீவிரித்துக் காய்க்கிற மரத்
தின் கிளையைக் காண்கிறேன் என்றேன்.—
அப்போது கர்த்தர் என்னுடனே: நன்றாய்க் கண் ௰௨
டாய்; ஏனெனில், நாம் நம்முடைய வார்த்தை
யின்மேலே அதை நிறைவேற்றும்படிக்குத் தீவி
ரித்திருப்போம் என்றார்.—கர்த்தருடைய வார்த் ௰௩
தை இரண்டாம்விசை எனக்கு உண்டாகி, அவர்,
நீ என்ன காண்கிறாய் என்றார்; பொங்குகிற பா
னையை நான் காண்கிறேன்; அதின் வாய் வடக்
கேயிருந்து நோக்குகிறதென்றேன்.
அப்போது கர்த்தர் என்னுடனே சொன்னதா ௰௪
வது: [11]வடக்கேயிருந்து தீங்கு தேசத்தினுடைய
குடிகளெல்லாரின்மேலும் பாயும்.—ஏனெனில் ௰௫
இதோ, நாம் [12]வடதிசை இராச்சியங்களின் வம்
சங்களை எல்லாம் கூப்பிடுவோமென்று கர்த்தர்
சொல்லுகிறார்; இவர்கள் வந்து அவனவன் தன்
னுடைய ஆசனத்தை [13]எருசலேமின் ஒலிமுக
வாசல்களிலும், அதினுடைய சுற்றுமதில்கள்
எல்லாவற்றுக்கும் விரோதமாகவும், யூதாவினு
டைய எல்லாப் பட்டணங்களுக்கும் விரோதமா
கவும் வைப்பார்கள்.—அவர்கள் நம்மைவிட்டு ௰௬
வேற்றுத்தேவர்களுக்குத் தூபங்காட்டி, தங்கள்
கைகளின் கிரியையைப் பணிந்துகொண்ட
அவர்களுடைய எல்லாப் பொல்லாப்பினிமித்
தம் நாம் நம்முடைய நியாயத்தீர்ப்புகளை அவர்க
ளுக்கு விரோதமாகக் கூறுவோம்.
ஆகையால் [14]நீ உன் அரையைக் கட்டிக்கொண் ௰௭
டு நின்று, நாம் உனக்குக் கற்பிப்பவைகளை எல்
லாம் அவர்களுடனே சொல்; நாம் உன்னை அவர்
களுக்குமுன்பாகக் கலங்கப்பண்ணாதபடிக்கு நீ
அவர்கள் முகப்பார்வையாலே கலங்காதிரு.—
ஏனெனில், இதோ, தேசமனைத்துக்கும், யூதா ௰௮
வின் இராசாக்களுக்கும், அதின் பிரபுக்களுக்
கும், அதின் ஆசாரியர்களுக்கும், தேசத்தின்
சனத்துக்கும், எதிராக நாம் உன்னை இன்றைத்
தினம் [15]அரணிப்பான பட்டணமும், இருப்புத்
தூணும், வெண்கல அலங்கமும் ஆக்குகிறோம்.—
அவர்கள் உனக்கு விரோதமாய் யுத்தம்பண்ணு ௰௯

1 ௨ இரா. ௨௨. ௧ முதல் ௨ நாளா. ௩௪. ௧. ழ.—2 ௨ இரா. ௨௩. ௩௪. ௨ நாளா. ௩௬. ௪.-3 ௨ இரா. ௨௪. ௰௭. ௨ நாளா. ௩௬. ௰.-4 ௨ இரா. ௨௫. ௮.—5 கலா. ௧. ௰௫. 6 ௨ மோ. ௪. ௰. ௰௨: ௧. ௩௰.-7 எசே. ௩. ௰௭.—8 எரே. ௰௫. ௨௰. எசா. ௪௩. ௨.—9 எசா. ௬. ௬, ௭.

10 எசா. ௫௧. ௬-௰: ௫௯. ௨௧. 11 எரே. ௪. ௬. 12 எரே. ௫. ௰௫: ௬. ௨௨: ௰. ௨௨. 13 எரே. ௫௨. ௪, ௫. 14 லூக். ௰௨. ௩௫. ௧ பே. ௧. ௰௩. 15 எரே. ௬. ௨௭: ௰௫. ௨௰. எசே. ௩. ௮, ௯.

வார்கள்; ஆனால் உன்னை மேற்கொள்ளாதிருப்
பார்கள்; ஏனெனில் உன்னை விடுவிக்கும்படிக்கு
நாம் உன்னுடனே இருக்கிறோமென்று கர்த்தர்
சொல்லுகிறாரென்றார்.

## ௨. அதிகாரம்.

*௧. பராபரன் தமது பூர்வ தயையைக் காட்டி, ௯. யூதர்கள் காரணமில்லாமல் முன்னெப்போதும் செய்யாதவிதமாய்க் கலகம்பண்ணினதைக் குறித்து அவர்களோடு வாதாடினது. ௰௪. அவர்களுக்கு உண்டாகிய துன்பங்களுக்கு அவர்களே காரணமாயிருக்கிறார்களென்பது. ௨௰. யூதாவின் பாவங்கள். ௩௬. அதன் நம்பிக்கை ஒழிந்தது.*

௧ கர்த்தருடைய வார்த்தை எனக்கு உண்டாகி,
௨ அவர் சொன்னதாவது:-நீ போய், எருசலேமின்
செவிகளில் படக்கூப்பிட்டுச் சொல்லவேண்டி
யது: விதைக்கப்படாத தேசமாகிய வனாந்தரத்தி
லே நீ நம்முடைய பிறகாலே நடந்துவந்த உன்
இளவயதின் பத்தியையும், உன் மனைவியிருப்
பின் நேசத்தையும், நினைத்திருக்கிறோமென்று
௩ கர்த்தர் சொல்லுகிறார்.—இஸ்ரவேல் கர்த்தருக்
குப் பரிசுத்தமும், அவருடைய வரத்தின் முதற்
கனியுமாயிருந்தது; அதைப் பட்சித்த யாவரும்
நேரஸ்தர் ஆனார்கள்; பொல்லாப்பு இவர்கள்
மேல் வந்ததென்று கர்த்தர் சொல்லுகிறார்.
௪ யாக்கோபின்வீட்டாரே, இஸ்ரவேல் வீட்டினு
டைய எல்லா வம்சங்களே, கர்த்தருடைய வார்த்
௫ தையைக் கேளுங்கள்.—கர்த்தர் சொல்லுகிறதா
வது: எங்களை எகிப்துதேசத்திலிருந்து ஏறப்
பண்ணினவரும், அந்தரவெளியும், பள்ளங்களு
மான தேசமும், வறட்சியும், மரணநிழலுமான
தேசமும், ஒருவனும் கடவாமலும் ஒரு மனுஷ
னும் குடியிராமலும் இருக்கிற தேசமுமான வனாந்
தரத்தில் எங்களை நடத்தினவருமாகிய கர்த்தர்
எங்கேயென்று உங்கள் பிதாக்கள் கேளாமல்,—
௬ நம்மைவிட்டுத் தூரப்பட்டு, மாயையின் [1]பிறகா
லே நடந்து, வீணராய்ப் போகிறதற்கு நம்மில்
என்ன அநியாயத்தைக் கண்டுபிடித்தார்கள்?—
௭ நாம் உங்களைப் பயிர்நிலமாகிய தேசத்துக்கு,
அதின் கனியையும் நன்மையையும் சாப்பிடும்ப
டிக்கு அழைத்துக்கொண்டுவந்தோம்; ஆனால் நீங்
கள் அதற்குள்ப்பிரவேசித்து, நம்முடைய தேசத்
தைத் தீட்டுப்படுத்தி, நம்முடைய சுதந்தரத்தை
௮ அருவருப்பாக்கிப்போட்டீர்கள். — ஆசாரியர்
கள்: கர்த்தர் எங்கேயென்று சொல்லாமலும்,
[2]வேதத்தைப் படித்தவர்கள் நம்மை அறியாமலும்
போய், மேய்ப்பர் நமக்கு விரோதமாய்த் துரோ
கம்பண்ணினார்கள்; தீர்க்கதரிசிகள் பாகாலைக்
கொண்டு தீர்க்கதரிசனஞ்சொல்லி உதவாதவை
களின் பிறகாலே நடந்தார்கள்.
௯ ஆனதுகொண்டு இன்னம் உங்களோடே வழக்
காடுவோம்; உங்கள் பிள்ளைகளின் பிள்ளைகளோ
டும் வழக்காடுவோமென்று கர்த்தர் சொல்லுகி
௰ றார்.—ஏனெனில், நீங்கள் கித்தீமின் தீவுகளைக்
கடந்துபோய்ப் பார்த்து, கேதாருக்கு அனுப்பி
நன்றாய்க் கவனித்துக்கொண்டு, இப்படிக்கொத்
தகாரியம் உண்டோவென்றும்,—ஒரு சாதியானது ௰௧
தேவர்களல்லாதவைகளாகிய தங்கள் தேவர்களை
மாற்றினது உண்டோவென்றும் பாருங்கள்; நம்
முடைய சனமோ தன் மகிமையை உதவாததாக
மாற்றிவிட்டது. — [3]வானங்களே, இதினாலே ௰௨
பிரமித்துக் கொந்தளித்து, மிகவும் திடுக்கிடுங்க
ளென்று கர்த்தர் சொல்லுகிறார். — ஏனெனில், ௰௩
நம்முடைய சனம் இரண்டு பொல்லாப்புகளைச்
செய்தது; [4]சீவனுள்ள தண்ணீரின் ஊற்றாகிய நம்
மை விட்டார்கள்; தண்ணீரைக் காவாத வெடிப்
புள்ள சலத்தொட்டிகளாகிய பள்ளங்களைத் தங்
களுக்கு வெட்டத்தானே.
இஸ்ரவேல் அடிமையோ? அவன் வீட்டுப் ௰௪
பிள்ளையோ? ஏன் கொள்ளையானான்?—சிங்கக் ௰௫
குட்டிகள் அவன்மேல் கர்ச்சித்து, தங்கள் சத்தத்
தைக்காட்டி, அவன் தேசத்தைப் பாழாக்கிவிட்
டன; அவனுடைய பட்டணங்கள் குடியிராம
லே சுட்டு எரிக்கப்பட்டன. — நோப், தகபா ௰௬
னேஸ் என்ற பட்டணங்களின் புத்திரரும், உன்
உச்சந்தலையை மேய்ந்துகொண்டார்கள்.—உன் ௰௭
பராபரனாகிய கர்த்தர் உன்னை வழியிலே நடக்
கப்பண்ணும் நேரத்திலே நீ அவரைவிட்டுப்
போகிறதினாலே அல்லவோ இதை உனக்கு
உண்டுபண்ணுகிறாய்?
இப்போதும் சீகோரின் தண்ணீரைக்குடிக்க ௰௮
எகிப்துக்குப் பயணம்போகிறது உனக்கு என்ன
பிரயோசனம்? ஐப்பிராத்து நதியின் தண்ணீ
ரைக்குடிக்க அசூரியாவுக்குப் பயணம்போகிற
தும் உனக்கு என்ன பிரயோசனம்?-[5]உன் பொ ௰௯
ல்லாப்பு உன்னைத் தண்டித்து, உன் மாறுபாடுகள்
உன்னைக் குற்றம்பிடிக்கின்றன; நீ உன் பராபர
னாகிய கர்த்தரை விடுகிறதும், நமக்குப் பயப்படு
தல் உன்னிடத்தில் இல்லாமல் இருக்கிறதும்,
எத்தனை பொல்லாப்பும் கசப்புமானது என்கிற
தை அறிந்துபார் என்று சேனைகளின் கர்த்தராகிய
ஆண்டவர் சொல்லுகிறார்.
ஏனெனில், பூருவகாலந்துவக்கி நாம் உன் ௨௰
நுகத்தடியை உடைத்து, உன் கட்டுகளை அறுத்
தோமே; நான் அடிமைப்படுவதில்லையென்று
நீயும் சொன்னாயே; ஆகிலும், மேட்டிமையான
எல்லா மேடையின்மேலும், பச்சையான எல்லா
மரத்தின்கீழும் நீ வேசியாய்த் திரிகிறாய்.—நாம் ௨௧
உன்னை [6]நற்குல திராட்சச்செடியாகவும், முழு
உண்மையான விதையாகவும் நாட்டினோமே; நீ
நமக்கு வேற்றுத் திராட்சச்செடியின் ஆகாத கொ
டிகளாய் மாறிப்போனது எப்படி?—நீ உன்னை ௨௨
வெள்ளுப்பினாலே கழுவி, உனக்காகச் சவுக்கா
ரத்தை நிரம்பக் கூட்டினாலும், உன் அக்கிரமத்
தின் கறைகள் நமக்குமுன்பாக இருக்குமென்
று கர்த்தராகிய ஆண்டவர் சொல்லுகிறார்.
நான் அழுக்கானதில்லை, நான் பாகால்களைப் ௨௩
பின்தொடர்ந்ததில்லை என்று எப்படிச் சொல்
லுகிறாய்? பள்ளத்தாக்கிலே நீ நடக்கிற மார்க்கத்

1 மீகா. ௬. ௩.—2 உரோ. ௨. ௨௰. ௨௧.—3 ஏசா ௧ ௨.—4 சங். ௩௬. ௯,

5 எரே. ௪. ௰௮. ஏசா. ௩. ௯.—6 சங். ௮௰. ௯: அப். ௬. ஏசா. ௫. ௧, ௨.

தைப்பார்; நீ செய்ததை அறிந்துகொள்; தன்வழி
களைத் தாறுமாருக்குகிற வேகமான பெண்ணொ
௨௪ ட்டகம் நீ. — வனாந்தரத்துக்குப் பழக்கினதும்,
தன் இச்சையின் ஆவலிலே காற்றை உள்ளே
கொள்ளுகிறதுமான காட்டுக்கழுதை நீ; அதின்
ஓட்டத்தை நிறுத்தித் திருப்புபவன் யாவன்?
அதைத் தேடுகிறவர்களெல்லாரும் தேடி விடாய்
த்துப்போவதில்லை; அதின் மாசத்தில் அவைகள்
௨௫ அதைக் கண்டுபிடிக்கும்.—உன் காலை வெறுங்
கால் ஆகாதபடிக்கும், உன் தொண்டையைத்
தவனம் அடையாதபடிக்கும், அடக்கிக்கொள்
ளென்ருல், நீ: அது விருதா; நான் அப்படிச்
செய்கிறதில்லை; ஏனெனில், அந்நியரைச் சிநே
கிக்கிறேன்; அவர்களைப் பின்தொடருவேன்
௨௬ என்கிருய். — திருடன் கண்டுபிடிக்கப்படுகிற
போது, எப்படி வெட்கப்படுகிருனோ, அப்படி
இஸ்ரவேல் வீட்டார் வெட்கப்படுவார்கள்; மரத்
துக்கு நீ என் தகப்பனென்றும், கல்லுக்கு நீ என்
னைப் பெற்ருயென்றும் சொல்லுகிற அவர்க
ளும், அவர்கள் இராசாக்களும், அவர்கள்பிரபுக்
களும், அவர்கள் ஆசாரியர்களும், அவர்கள்
௨௭ தீர்க்கதரிசிகளுந்தானே. — ஏனெனில், முகத்
தையல்ல, [1]பிடரியை அவர்கள் நமக்குக் காட்டி,
தங்கள் தீங்குகாலத்திலோ: எழும்பி எங்களை
௨௮ இரட்சியும் என்கிருர்கள்.—[2]நீ உனக்கு உண்டு
பண்ணின தேவர்களோவென்ருல் எங்கே? உன்
தீங்குகாலத்தில் உன்னை இரட்சிக்குமோவெ
ன்று அவைகள் எழும்பட்டும்; ஏனெனில், [3]யூதா
வே, உன் பட்டணங்களின் இலக்கமும், உன்
௨௯ தேவர்களின் இலக்கமும் சரி. — நம்மோடே
நீங்கள் வழக்காடுவானேன்; நீங்கள் அனைவரும்
நமக்கு விரோதமாய்த் துரோகம்பண்ணினீர்க
௩௰ ளென்று கர்த்தர் சொல்லுகிருர்.—நாம் உங்கள்
பிள்ளைகளை [4]அடித்தது விருதா; தண்டனையை
ஏற்றுக்கொள்ளாதேபோனுர்கள்; அழிக்கிற சிங்
கத்தைப்போலே உங்கள் பட்டையம் உங்கள்
தீர்க்கதரிசிகளைப் பட்சிக்கிறது.

௩௧ சந்ததியே, நீங்கள் கர்த்தருடைய வார்த்தை
யைச் சிந்தித்துப்பாருங்கள்; நாம் இஸ்ரவேலுக்கு
வனாந்தரமும், காரிருளான பூமியுமாக இருந்தோ
மோ? பின்னை ஏன் நம்முடைய சனம்: நாங்கள்
ஆளுகிறோமென்றும், இனி உம்மண்டைக்கு
நாங்கள் வருவதில்லையென்றும் சொல்லுகிருர்
௩௨ கள்?—ஒரு கன்னியாஸ்திரி தன் ஆபரணத்தை
யும், ஒரு மணவாட்டி தன் சரிகைகளையும் மறப்
பாளோ? நமது சனமோவென்ருல். எண்ணிமு
டியாத நாள்களாய் நம்மை மறந்திருக்கிருர்கள்.

௩௩ சிநேகத்தைத் தேடும்படிக்கு [5]நீ உன் மார்க்
கத்தை நயமாக்குகிறதென்ன? இப்படியாய் நீ
பொல்லாத ஸ்திரிகளுக்கும் உன் வழிகளைக் கற்
௩௪ றுக்கொடுத்தாய்.—உன் வஸ்திரத்து ஓரங்களிலும்,
குற்றமில்லாத ஏழை ஆத்துமாக்களின் இரத்தம்
கண்டுபிடிக்கப்பட்டது; அதைத் தோண்டித்
தேடுகிறதினுல் அல்ல, அது எல்லாவற்றின்
மேலும் வெளியாயிருக்கிறதினுலே அதைக் கண்
டுபிடித்தோம்.—ஆகிலும்: குற்றமில்லாதிருக்கி ௩௫
றேன் என்றும், அவருடைய கோபம் என்னை
விட்டுத் திரும்பிற்று என்றும் சொல்லுகிருய்;
இதோ, நான் பாவஞ்செய்ததில்லையென்று நீ
சொல்லுகிறதின் நிமித்தம் நாம் உன்னோடே
நியாயத்துக்குட் பிரவேசிப்போம்.

நீ உன் வழியை மாற்றிக்கொள்ளும்படிக்கு ௩௬
இத்தனையாய் விலகிப்போகிறது என்ன? நீ அசூ
ரியாவினுல் வெட்கிப்போனதுபோலே[6] எகிப்
தினுலும் வெட்கிப்போவாய்.—இதிலுமிருந்து நீ ௩௭
உன் கைகள் உன் தலையின்மேல் வைக்கப்பட்
டவைகளாய்ப் புறப்படுவாய்; ஏனெனில், உன்
நம்பிக்கைகளைக் கர்த்தர் வெறுத்திருக்கிருர்; அ
வைகளால் உனக்கு வாய்க்கப்போகிறதில்லை.

## ௩. அதிகாரம்.

௧. கொடிய வேசித்தனஞ்செய்த யூதர்கள்மேல் பராபரனுக்கு உண்டாகிய பெரிய இரக்கம். ௬. இஸ்ரவேலைவிட யூதா அதிக சேதமுற்றிருந்தது. ௰௨. குணப்படுகிறவர்களுக்கு உண்டாகிய சவிசேஷத்தின் வாக்குத்தத்தங்கள். ௨௰. இஸ்ரவேல் பராபரனாலே கண்டிக்கப்பட்டு அழைக்கப்பட்டுத் தங்கள் பாவங்களை உண்மையாய் வெளியிட்டது.

அவர் சொல்லுகிறதாவது: இதோ, [7]ஒரு புரு ௧
ஷன் தன் பெண்சாதியைத் தள்ளிவிட்டு, இவள்
அவனிடத்திலிருந்து புறப்பட்டு, அந்நியபுரு
ஷனுக்குப் பெண்சாதியானுல், அவன் அவளி
டத்திலே இனித் திரும்பப்போவானோ? அந்தத்
தேசம் மிகவும் தீட்டுப்படுமல்லவோ? நீயோவெ
ன்ருல் அநேகம் சிநேகிதரோடே வேசித்தனம்
பண்ணினுய்; ஆகிலும் நம்மண்டைக்குத் திரும்
ப வாவென்று கர்த்தர் சொல்லுகிருர்.— நீ மேடு ௨
களின்மேல் உன் கண்களை ஏறெடுத்து, நீ எவ்
விடத்திலே புணர்ச்சியாகாதேபோனுயென்று
பார்? வனாந்தரத்திலே அருபியன் செய்கிறது
போல நீ வழிஓரங்களில் அவர்களுக்காக உளுக்
காந்து, உன் வேசித்தனங்களாலும், உன் பொல்
லாப்பினுலும் தேசத்தைத் தீட்டுப்படுத்தினுய்.—
ஆனதுகொண்டு மழைகள் வருஷிக்காமலும், ௩
பின்மாரியில்லாமலும் போயின; உனக்கோவெ
னில், சோரஸ்திரியின் நெற்றியிருக்கிறது; நாண
மாட்டோம் என்கிருய்.—நீ இப்போது முதலாய் ௪
நம்மைநோக்கி: என் பிதாவே, தேவரீர் என் இள
வயதின் அதிபதியென்று கூப்பிட்டு.—சதாகால ௫
மாகக் கோபத்தை வைப்பாரோ? அதை என்றெ
ன்றைக்கும் காப்பாரோ என்கிருய் அல்லவோ?
இதோ, இப்படி நீ சொல்லியும் பொல்லாப்புக
ளைச்செய்து, மிஞ்சிப்போகிருய் என்கிருர்.

யோசியா இராசாவின் நாள்களிலே கர்த்தர் என் ௬
னுடனே சொன்னதாவது: மாறுபாடான இஸ்ர
வேல் என்பவள் செய்ததைக் கண்டாயோ? அ
வள் [8]உயரமான சகல பர்வதத்தின்மேலும், பச்
சையான சகல மரத்தின்கீழும்போய், அங்கே

1 எசே. ௨௩. ௧௰. 2 நியா. ௰. ௰௪. 3 எரே. ௰௧. ௰௩.—4 எரே. ௫. ௩. ஏசா. ௧. ௰௫.
5 ௨ இரா. ௰௭. ௯. 6 ஏசா. ௩௧. ௧. 7 ௫ மோ. ௨௪. ௧-௪. 8 எரே. ௨. ௨௰.

௭ வேசித்தனம்பண்ணினாள்.—அவள் இப்படியெல்
லாம் செய்ததற்குப்பிற்பாடு, நம்மண்டைக்குத்
திரும்பென்று நாம் சொன்னோம்; ஆனால் திரும்
பாமற்போனாள்; இதை யூதா என்ற அவளுடைய
௮ சகோதரியாகிய துரோகி பார்த்தாள். — ஆனால்
[1]மாறுபாடான இஸ்ரவேலென்பவள் விபசாரம்
பண்ணின எல்லா வகைகளினிமித்தமும் நாம்
அவளை அனுப்பிவிட்டு, அவளுடைய தள்ளுத
லின் சீட்டை அவளுக்குக் கொடுத்தபோதும்,
அவளுடைய சகோதரியாகிய யூதா என்றதுரோ
கி பயப்படாமல், இவளும் போய் வேசித்தனம்
௯ பண்ணினாள் என்று கண்டோம்.—சம்பவித்தது
ஏதெனில், அவளுடைய வேசித்தனத்தின் பிர
சித்தத்தினாலே தேசம் தீட்டுப்பட்டுப்போயிற்று;
ஏனெனில் கல்லோடும் மரத்தோடும் விபசாரம்
௰ பண்ணிக்கொண்டிருந்தாள். — ஆனால் இவைக
ளையெல்லாம் கண்டும், யூதாவென்ற அவளுடை
ய சகோதரியாகிய துரோகி, பொய்யாய் அல்லா
மல் முழு இருதயத்தாலே நம்மண்டைக்குத்
திரும்பினதில்லை என்று கர்த்தர் சொன்னார்.
௰௧ பின்னையும் கர்த்தர் என்னுடனே சொன்ன
தாவது: யூதா என்ற துரோகியைப்பார்க்கிலும்,
மாறுபாடான இஸ்ரவேலென்பவள் தன் ஆத்து
௰௨ மாவை நீதியாக்கினாள்.—நீ போய் வடதிசையை
நோக்கிக் கூறவேண்டிய வார்த்தைகளாவன:
மாறுபாடான இஸ்ரவேலே, [2]திரும்பு என்று
கர்த்தர் சொல்லுகிறார்; அப்போது நாம் உங்கள்
மேல் நம்முடைய கோபத்தை இறங்கப்பண்ணு
வதில்லை; ஏனெனில், [3]நாம் கிருபை உள்ளவ
ரென்று கர்த்தர் சொல்லுகிறார், என்றைக்கும்
௰௩ கோபம்வையோம்.—நீயோவெனில், உன் பரா
பரனாகிய கர்த்தருக்கு விரோதமாய்த் துரோகம்
பண்ணி, பச்சையான சகல மரத்தின்கீழும்
உன் வழிகளை அந்நியர்பிறகாலே சிதறப்பண்
ணினாய் என்ற உன்னுடைய அக்கிரமத்தையும்,
நம்முடைய சத்தத்தைக் கேளாதேபோனீர்கள்
என்கிறதையும் அறிந்துகொள் என்று கர்த்தர்
௰௪ சொல்லுகிறார். — [4]மாறுபாடான பிள்ளைகளே,
திரும்புங்களென்று கர்த்தர் சொல்லுகிறார்; ஏனெ
னில், நாம் உங்கள் பர்த்தாவாயிருக்கிறோம்;
நாம் உங்களை ஊரில் ஒருவனையும், வம்சத்தில்
இரண்டுபேரையும் எடுத்து, உங்களைச் சீயோ
௰௫ னுக்கு அழைத்துக்கொண்டுவந்து, — உங்களு
க்கு நம்முடைய இருதயத்துக்கு ஏற்ற [5]மேய்ப்ப
ரைக் கொடுப்போம்; அவர்கள் உங்களை அறி
வும், புத்தியுமாய் மேய்ப்பார்கள்.
௰௬ நீங்கள் தேசத்திலே பெருகிப் பலுகுகிற அந்
நாள்களிலே சம்பவிப்பது ஏதென்றால், அவர்
கள் இனிக் கர்த்தருடைய உடம்படிக்கையின்
பெட்டியென்று சொல்வதில்லை; அது அவர்கள்
மனதில் ஏறுவதும் இல்லை; அவர்கள் அதை
நினைப்பதும் இல்லை; சிந்திப்பதும் இல்லை; அது
இனிச் செப்பனிடப்படுவதும் இல்லை என்று
கர்த்தர் சொல்லுகிறார்.—அக்காலத்திலே [6]எருச ௰௭
லேமைக் கர்த்தருடைய இராசாசனமென்பார்
கள்; சகல சாதியாரும் எருசலேமில் விளங்கிய
கர்த்தருடைய நாமத்தினிமித்தம் அதினிடமா
கச் சேர்வார்கள்; அவர்கள் இனித் தங்கள்
பொல்லாத இருதயத்தின் கடினத்தைப் பின்
பற்றி நடப்பதில்லை.
அந்நாள்களிலே யூதா வீட்டார் இஸ்ரவேல் ௰௮
வீட்டாரிடத்திலே போய், அவர்கள் ஏகமாய்
வடதேசத்திலிருந்து புறப்பட்டு, நாம் தங்கள்
பிதாக்களுக்குச் சுதந்தரமாகக் கொடுத்த தேசத்
திற்கு வருவார்கள்.—நாம் உன்னைப் பிள்ளைக ௰௯
ளுக்குள்ளே வைத்து, இச்சிக்கப்படத்தக்க தே
சத்தையும், சாதிகளுடைய சேனைகளின் அலங்
காரமான சுதந்தரத்தையும் உனக்குக் கொடுப்
பது எப்படியென்று சொன்னோம்; ஆனால் நீ
நம்மை, என் பிதாவே என்று அழைப்பாய்; நீ
நம்மைவிட்டு விலகுவதில்லை என்று திரும்பவும்
சொன்னோம்.—ஒரு பெண்சாதி தன் புருஷனுக் ௨௰
குத் துரோகிஆகிறதுபோலே, இஸ்ரவேல் வீட்
டார்களாகிய நீங்கள் நமக்குத்துரோகிகள்ஆனது
மெய்யாமே என்று கர்த்தர் சொல்லுகிறார்.
ஆனால் தங்கள் வழியைத் தாங்கள் மாறுபா ௨௧
டாக்கி, தங்கள் பராபரனாகிய கர்த்தரை மறந்து,
அதினிமித்தம் இஸ்ரவேல் புத்திரர் அழுது
கொண்டு விண்ணப்பஞ்செய்யும் சத்தம் உயர்
நிலங்களிலே கேட்கப்படும். — மாறுபாடான ௨௨
பிள்ளைகளே, திரும்புங்கள், உங்கள் மாறுபாடுக
ளைக் குணமாக்குவோம் என்று சொல்லென்றார்;
இதோ, உம்மண்டைக்கு வருகிறோம்; ஏனெனில்
தேவரீரே எங்கள் பராபரனாகிய கர்த்தர்.—மேடு ௨௩
களையும், திரளான பர்வதங்களையும் நம்புகிறது
விருதாவாயிருக்கிறது மெய்யாமே; இஸ்ரவே
லின் இரட்சிப்பு எங்கள் பராபரனாகிய கர்த்தருக்
குள் இருக்கிறது மெய்யாமே.—ஏனெனில், இலச் ௨௪
சையானது எங்கள் சிறுவயதுதுவக்கி எங்கள்
பிதாக்களுடைய பிரயாசத்தையும், அவர்கள் ஆடு
களையும், மாடுகளையும், அவர்கள் குமாரரையும்,
குமாரத்திகளையும் பட்சித்துவிட்டது.—எங்கள் ௨௫
இலச்சையிலே கிடக்கிறோம்; எங்கள் இகழ்ச்சி
எங்களை மூடியிருக்கிறது; ஏனெனில், நாங்க
ளும், எங்கள் பிதாக்களும் எங்கள் சிறுவயதுது
வக்கி இந்நாள்வரைக்கும் எங்கள் பராபரனாகிய
கர்த்தருக்கு விரோதமாகப் பாவஞ்செய்தோம்;
எங்கள் பராபரனாகிய கர்த்தருடைய சொல்லைக்
கேளாமலும்போனோம்.

## ௪. அதிகாரம்.

௧. பராபரன் தமது வாக்குத்தத்தத்தினாலே இஸ்ரவேலை அழைத்தது. ௩. பயங்கரமுள்ள நியாயத்தீர்ப்புகளினாலே குணப்படுதலுக்கு யூதாவைத் தூண்டினது. ௰௯. யூதாவினுடைய சிறுமைகளைக்குறித்துப் புலம்புகிற புலம்பல்.

இஸ்ரவேலே, நீ திரும்ப மனதானால் நம்மண் ௧
டைக்குத் திரும்பென்று கர்த்தர் சொல்லுகிறார்;

1 ௨ இரா. ௰௭. ௰௮, ௰௯.
2 எசே. ௰௮. ௩௰—௩௨.
3 சங். ௱௩. ௯.
4 ஓசே. ௨. ௰௯, ௨௰.
5 எரே. ௨௩. ௪. எபே. ௪. ௰௧.—6 ஏசா. ௨. ௨, ௩. மீகா ௪. ௧, ௨.

நீ உன் அருவருப்புகளை நமது முகத்தைவிட்டு
அகற்றினால், நீ இனி அலைந்து திரிவதில்லை. —
௨ [1]கர்த்தருடைய சீவன்மேலே உண்மையும், நியா
யமும், நீதியுமாய்ச் சத்தியம்பண்ணுவாய்; புறச்
சாதிகளும் அவருக்குள் [2]தங்களை ஆசீர்வதித்துக்
கொண்டு, அவருக்குள் மேன்மைபாராட்டுவார்
கள்.
௩ ஆனால் யூதாமனுஷரோடும், எருசலேமியரோ
டும் கர்த்தர் சொல்லுகிறதாவது: [3]நீங்கள் முள்ளு
களுக்குள்ளே விதையாமல், பயிர்நிலத்தை உங்க
௪ ளுக்குப் புதிதாய்ப் பண்படுத்துங்கள்.—யூதா ம
னுஷரே, எருசலேமின் குடிகளே, உங்கள் கிரி
யைகளுடைய பொல்லாப்பினிமித்தம் நம்மு
டைய உக்கிரம் அக்கினியைப்போலே புறப்
பட்டு, அவிக்கிறவன் இல்லாமல் எரியாதப
டிக்கு [4]நீங்கள் கர்த்தருக்கு உங்களைச் சுன்னத்
துப்பண்ணி,உங்கள் இருதயத்தின் நுனித்தோல்
களை நீக்கிப்போடுங்கள்.
௫ தேசத்தில் எக்காளம் ஊதுங்கள் என்று சொ
ல்லி, யூதாவில் அறிவித்து, எருசலேமிலே கேட்
கப்பண்ணுங்கள்; நாம் அரணான பட்டணங்க
ளுக்கு உட்படும்படிக்குச் சேருங்களென்று சொ
௬ ல்லி, நீண்டசத்தமாய்க் கூப்பிடுங்கள். — சீ
யோன்திசையாய்க் கொடியேற்றுங்கள்; கூடுங்
கள், நிற்காதிருங்கள்; ஏனெனில், நாம் [5]வடக்
கேயிருந்து பொல்லாப்பையும், மகா நொறுக்கு
௭ தலையும் வரப்பண்ணுகிறோம்.—உன் தேசத்தைப்
பாழாக்கிவிடும்படிக்குச் சிங்கம் தன் புதரிலி
ருந்து எழும்பி, சாதிகளின் சங்காரன் தன் தா
னத்திலிருந்து பயணப்பட்டு வருகிறான்; உன்
பட்டணங்கள் குடியிராதபடியாய் அழிக்கப்ப
௮ டுமென்கிறார். — இதினிமித்தம் இரட்டுகளைக்
கட்டிக்கொள்ளுங்கள்; புலம்பி அலறுங்கள்;
ஏனெனில், கர்த்தருடைய கோபத்தின் உக்கி
௯ ரம் நம்மைவிட்டுத் திரும்பாது.—அந்நாளிலே
சம்பவிப்பது ஏதென்றால், இராசாவின் இருதய
மும், பிரபுக்களின் இருதயமும் மடிந்து, ஆசாரி
யர்கள் திடுக்கிட்டு, தீர்க்கதரிசிகள் திகைப்பார்
கள் என்று கர்த்தர் சொல்லுகிறார்.
௰ ஆ கர்த்தராகிய ஆண்டவரே, உங்களுக்குச்
சமாதானமிருக்கும் என்று சொன்னதினால் மெ
ய்யாகவே இந்தச் சனத்துக்கும், எருசலேமுக்
கும் மிகுதியான மோசத்தை வரப்பண்ணினீர்;
பட்டையம் ஆத்துமாமட்டும் எட்டுகிறதே என்
றேன்.
௰௧ வனாந்தரத்திலுள்ள உயர்நிலங்களில் இருந்து,
ஒரு உஷ்ணக்காற்று நமது சனமாகிய குமா
ரத்திக்கு நேராகும் வழியில் அடிக்குமென்று
அக்காலத்திலே இந்தச் சனத்தோடும், எருசலே
மோடும் சொல்லப்படும்; ஆனால் தூற்றவல்ல, சுத்
௰௨ திகரிக்கவுமல்ல,—இவைகளைப்பார்க்கிலும் உர
மான காற்று நம்முடைய காரியமாய் வரும்; இப்
போது நாமும் அவர்களோடே நியாயங்களைப்
பேசுவோம்.—இதோ, மேகங்களைப்போல எழும் ௰௩
பிவருகிறான்; அவனுடைய இரதங்கள் பெருங்
காற்றைப்போலிருக்கின்றன; அவன் குதிரை
கள் கழுகுகளிலும் வேகமானவைகள்; நமக்கு
ஐயோ! ஏனெனில்,பாழ்க்கடிக்கப்படுகிறோம்.—
எருசலேமே, நீ இரட்சிக்கப்படும்படிக்கு [6]உன் ௰௪
இருதயத்தைப் பொல்லாப்பறக் கழுவு; எந்த
மட்டும் அக்கிரம நினைவுகள் உன் உள்ளத்திலே
தங்கும்.— ஏனெனில் ஒரு சத்தம் தாணிலிருந்து ௰௫
வந்து, செய்தியை அறிவிக்கிறதும், எப்பிராயீ
மின் பர்வதத்திலிருந்து வந்து, தீங்கைக் கேட்
கப்பண்ணுகிறதுமாயிருக்கிறது.—சாதிகளுக்கு ௰௬
அதைப் பிரஸ்தாபம்பண்ணுங்கள்; இதோ, காவ
ல்க்காரர் தூரதேசத்திலிருந்துவந்து, யூதாவுடைய
பட்டணங்களுக்கு விரோதமாய்த் தங்கள் சத்தத்
தைக் காட்டுவார்களென்று எருசலேமுக்குக்
கூறுங்கள். — அதற்கு விரோதமாய் அவர்கள் ௰௭
வயல்வெளிகளின் காவல்க்காரரைப்போலே
சுற்றிலுமிருப்பார்கள்; ஏனென்றால் அது நமக்கு
விரோதமாய் எழும்பிற்றென்று கர்த்தர் சொல்
லுகிறார். — [7]உன் மார்க்கமும், உன் கிரியைக ௰௮
ளும் இவைகளை உனக்கு உண்டுபண்ணின;
இது இத்தனை கசப்பாயிருந்து, உன் இருதய
மட்டும் எட்டுகிறது உன்னுடைய பொல்லாப்
புத்தானே.
என் குடல்கள்,என் குடல்களே எனக்கு நோ ௰௯
கிறது; என் இருதயத்தின் ஆணவம் அற்றது;
என் இருதயம் என்னில் கதறுகிறது; அமர்ந்தி
ருக்கமாட்டேன்; ஏனெனில், என் ஆத்துமா
எக்காளத்தின் சத்தத்தையும், யுத்தத்தின் ஆர்ப்ப
ரிப்பையும் கேட்டது.—நொறுக்குதலின்மேல் ௨௰
நொறுக்குதல் கூறப்படுகிறது; ஏனெனில், தேச
மெல்லாம் பாழாகும்; அசுப்பிலே என் கூடா
ரங்களும் ஒரு நிமிஷத்தில் என் திரைகளும் பா
ழ்க்கடிக்கப்படும். — எந்தமட்டும் நான் கொடி ௨௧
யைக்கண்டு, எக்காளத்தின் சத்தத்தைக் கேட்
பேன்.
என் சனமோவென்றால், [8]மதியற்றிருக்கிறது, ௨௨
என்னை அவர்கள் அறியார்கள்; அவர்கள் பயித்
தியமுள்ள பிள்ளைகள், அவர்கள் உணர்வுள்ளவர்
களல்ல; [9]பொல்லாப்புக்கு அவர்கள் ஞானமுள்
ளவர்கள், நன்மைசெய்கிறதற்கோ அறிவற்றி
ருக்கிறார்கள்.
தேசத்தைப்பார்த்தேன்; இதோ, அது உருவம் ௨௩
அற்றதும் வெறுமையும் ஆயிற்று; வானங்களைப்
பார்த்தேன்; அவைகளின் வெளிச்சம் அவைக
ளுக்கு இல்லை.—பர்வதங்களைப்பார்த்தேன்; இ ௨௪
தோ, அவைகள் அதிர்ந்து, எல்லா மேடுகளும்,
அசைந்தன.—அப்புறம் நான் பார்க்கும்போது, ௨௫
இதோ மனுஷனில்லை; [10]ஆகாசத்துப் பறவைக
ளும் எல்லாம் பறந்துபோயின.—அப்புறம் நான் ௨௬
பார்க்கும்போது, இதோ, கர்த்தராலும், அவரு
டைய கோபத்தின் உக்கிரத்தாலும் பயிர்நிலம்

1 ஏசா. ௪௫. ௨௩, ௨௪. 2 ௧ மோ. ௨௨. ௰௮. 3 ஓசே. ௰. ௰௨, ௰௩. மத். ௰௩. ௭. எபி. ௬. ௮.
4 ௫ மோ. ௰. ௰௬. — 5 எரே. ௧. ௰௪. 6 ஏசா. ௧. ௰௬. — 7 எரே. ௨. ௰௯. 8 ௫ மோ. ௩௨. ௨௮. — 9 ரோ. ௰௬. ௰௯. — 10 எரே. ௯. ௰.

வனாந்தரமும், அதின் பட்டணங்களெல்லாம்
இடிபட்டவைகளுமாயிருந்தன.
௨௭ ஏனெனில், தேசமெல்லாம் பாழாம்; ஆகிலும்
[1]சர்வசங்காரம் செய்யோமென்று கர்த்தர் சொல்
௨௮ லுகிறார்.—இதின் நிமித்தம் தேசம் புலம்பி, உயர
இருக்கிற வானங்கள் கறுத்துப்போம்; ஏனென்
றால், அதைச் சொன்னோம், அதை நிருணயம்ப
ண்ணினோம்; நாம்மனஸ்தாபப்படுவதும் இல்லை;
நாம் அதை விட்டுத் திரும்பிக்கொள்வதும்
௨௯ இல்லை.—இராவுத்தரும், அம்பு எய்கிறவர்களும்
காட்டும் சத்தத்தினாலே சகல ஊராரும் ஓடி,
அடர்த்தியான வனங்களுக்கு உட்பட்டு, கல்ம
லைகளிலும் ஏறுவார்கள்; எல்லா ஊர்களும், ஒரு
மனுஷனும் அவைகளிலே குடியிராதபடியாய்
௩௰ விடப்பட்டிருக்கும்.—இப்போதும் பாழான நீ
என்னசெய்வாய்? நீ இரத்தாம்பரம் உடுத்தாலும்,
பொன்னாபரணங்களால் உன்னைச் சிங்காரித்தா
லும், உன் கண்களில் மையிட்டுக்கொண்டு இரு
ந்தாலும், வீணாய் உன்னை அழகாக்குவாய்; சொ
குசுக்காரர் உன்னை அசட்டைபண்ணி, உன்
பிராணனை வாங்கத்தேடுவார்கள்.
௩௧ ஏனெனில், [2]கர்ப்பவேதனைப்படுகிறவளின்
சத்தமாகவும், முதல்விசை பெறுகிறவளின் வி
யாகுலமாகவும், சீயோன் குமாரத்தியின் சத்தத்
தைக் கேட்கிறேன்; அவள் பெருமூச்சுவிட்டு,
தன் கைகளை விரித்து, ஆ எனக்கு ஐயோ! ஏனெ
னில், கொன்றுபோடுகிறவர்களினாலே என் ஆத்
துமா விடாய்த்திருக்கிறதென்கிறாள்.

## ௫. அதிகாரம்.

௧. யூதருடைய மாறுபாடுகளினிமித்தம், ௭. அவர்களுடைய வேசித்தனத்தினாலும், ௰. தேவபத்தி இன்மையினாலும், ௰௯. பராபரனை அலட்சியம பண்ணுவதினாலும், ௨௫. துரைத்தனஸ்திதியிலும், ௩௰. வேதவொழுக்கத்திலும், உண்டாகும் பெரிய கெடுதியினாலும் அவர்கள்மேல் வரும பராபரனுடைய நியாயத்தீர்ப்புகள்.

௧ நியாயஞ்செய்கிற மனுஷனைக் கண்டுபிடிப்பீர்
களோவென்றும், விசுவாசத்தைத் தேடுகிறவன்
உண்டோவென்றும், எருசலேமின் தெருக்களி
லே திரிந்து, பார்த்து, விசாரித்துக்கொண்டு, அ
தின் வீதிகளிலே தேடுங்கள்; அப்போது அதற்கு
௨ மன்னிப்போம்.—அவர்கள், கர்த்தருடைய சீவ
னைக்கொண்டு சொல்லுகிறோம் என்றாலும்,
௩ பொய் ஆணை இடுகிறார்களே.-கர்த்தாவே, உம்மு
டைய கண்கள் விசுவாசத்தை அல்லவோ நோக்
குகின்றன; அவர்களை அடிக்கிறீர்; ஆனால் அவர்
களுக்கு நோகாது; அவர்களை நிர்மூலம் ஆக்கு
கிறீர்; ஆனால் புத்தியை ஏற்றுக்கொள்ளமாட்
டோம் என்கிறார்கள், [3]தங்கள் முகங்களைக் கல்ம
லையிலும் கெட்டியாக்கி, திரும்பமாட்டோம்
௪ என்கிறார்கள்.—நானோவெனில்: இவர்கள் நீச
ராமே; இவர்கள் புத்தியீனர்; ஏனெனில், கர்த்த
ருடைய வழியையும், தங்கள் பராபரனுடைய
நியாயத்தையும் அறியாதிருக்கிறார்கள் என்றும்,-
௫ நான் பெரியவர்கள் அண்டையிலே போய், அ
வர்களோடே பேசுவேன்; ஏனெனில், அவர்
கள் கர்த்தருடைய வழியையும், தங்கள் பரா
பரனுடைய நியாயத்தையும் அறிவார்கள் என்
றும் சொன்னேன்; ஆனால், அவர்கள் ஏகமாய்
[4]நுகத்தடியை ஒடித்து, கட்டுகளை அறுத்துவிட்
டார்கள்.
ஆனபடியால் [5]காட்டிலிருந்து வரும் சிங்கம் ௬
அவர்களைக் கொன்று, வனாந்தரங்களுடைய
ஓனாய்கள் அவர்களைப் பாழாக்கி, சிவிங்கி அவர்
கள் பட்டணங்களின்மேலே காவல்பண்ணிக்
கொண்டிருக்கும்; அவைகளிலிருந்து புறப்படுகி
றவன் எல்லாம் பீறப்படுவான்; ஏனெனில், அவர்
கள் மீறுதல்கள் பெருகி, அவர்கள் மாறுபாடுகள்
பலத்துப்போயின.—இவைகளை நாம் உனக்கு ௭
மன்னிப்பது எப்படி? உன் பிள்ளைகள் நம்மை
விட்டார்கள்; அவர்கள் தெய்வம் அல்லாதவை
கள்மேலே ஆணையிடுகிறார்கள்; நாம் திருத்தியாக்
கின அவர்கள் விபசாரம்பண்ணி, வேசி வீட்டி
லே கூட்டங்கூடுகிறார்கள்.— அவர்கள் கொ ௮
ழுத்த குதிரைகளைப்போலக் காலமே எழும்பி,
அவனவன் தனக்கு அடுத்தவனுடைய பெண்சா
தியின் பின்னாலே கனைக்கிறான்—[6]இவைகளை ௯
விசாரியாதிருப்போமோ? இப்படிக்கொத்த சா
திக்கு நம்முடைய ஆத்துமா நீதியைச்சரிக்கட்
டாதிருக்குமோ என்று கர்த்தர் சொல்லுகிறார்.
அதின் மதில்கள்மேலேறி, அழித்துப்போடு ௰
ங்கள்; [7]ஆனால் சர்வசங்காரம் செய்யாதிருங்
கள்; அதின் கொத்தளங்களை வாங்கிவிடுங்கள்;
ஏனெனில், அவர்கள் கர்த்தருடையவர்களல்ல.—
ஏனெனில், இஸ்ரவேல் வீட்டாரும், யூதா வீட் ௰௧
டாரும் நமக்கு விரோதமாய் மிகுதியும் துரோ
கம்பண்ணினார்களென்று கர்த்தர் சொல்லுகி
றார்.—அவர் அப்படிக்கொத்தவர் அல்லவென் ௰௨
றும், பொல்லாப்பு நம்முடையமேல் வராது;
நாம் பட்டையத்தையாகிலும், பஞ்சத்தையாகி
லும் காண்பதில்லையென்றும்,—தீர்க்கதரிசிகள் ௰௩
காற்றாய்ப்போவார்கள்; வசனமானது அவர்க
ளில் இல்லை; அவர்களுக்கே அப்படி ஆகக்கட
வதென்றும், அவர்கள் சொல்லிக் கர்த்தரை மறு
தலித்தார்கள்.
ஆகையாலே சேனைகளின் பராபரனாகிய கர்த் ௰௪
தர் சொல்லுகிறதாவது: நீங்கள் இந்த வார்த்தை
யைச் சொன்னபடியினாலே, இதோ, நாம் [8]உன்
வாயில் உள்ள நம்முடைய வார்த்தைகளை அக்கி
னியும், இந்தச் சனத்தை விறகும் ஆக்குவோம்;
அது இவர்களைப் பட்சிக்கும்.—இஸ்ரவேல்வீட் ௰௫
டாரே, இதோ, தூரத்திலிருந்து நாம் உங்கள்
மேல் [9]ஒரு சாதியைக் கொண்டுவருவோமென்று
கர்த்தர் சொல்லுகிறார்; அது வலுவான சாதி,
அது பூருவத்துச்சாதி, அது நீ அறியாத பாஷை
யுள்ள சாதி, அது பேசுகிறது இன்னதென்று கே
ட்டு உணராதிருப்பாய்.—அதின் அம்பறாத்தூ ௰௬
ணிகள் திறந்த பிரேதக்குழிகளைப்போலே இருக்
கும்; அவர்கள் அனைவரும் பராக்கிரமசாலிகள்.—

1 எரே. ௯. ௰, ௰௮: ௩௰. ௰௧: ௪௬. ௨௮.—2 எரே. ௬. ௨௪: ௰௯. ௨௧.—3 ஏசா. ௪௮. ௪: ௨. ௪.

4 எரே. ௨. ௨௰.—5 எரே. ௪. ௭. 6 ௨௧. ௰௪: ௬. ௬.—7 எரே. ௪. ௨௭. 8 எரே. ௧. ௯.—9 எரே. ௧. ௰௫: ௬. ௨௨.

௧௭ [1]அவர்கள் உன் குமாரரும், உன் குமாரத்திகளும்
சாப்பிடவேண்டிய உன் விளைச்சலையும், உன்
அப்பத்தையும் சாப்பிட்டு, உன் ஆடுகளையும்,
உன் மாடுகளையும் பட்சித்து, உன் திராட்சப்ப
லனையும், உன் அத்திமரப்பலனையும் சாப்பிட்டு,
நீ நம்பின உன்னுடைய அரணான பட்டணங்
களைப் பட்டையத்தாலே வெறுமையாக்குவார்
௧௮ கள்.—ஆகிலும் நாம் அந்நாள்களிலும் [2]உங்க
ளைச் சர்வசங்காரம் செய்யாதிருப்போம் என்று
கர்த்தர் சொல்லுகிறார்.
௧௯ [3]எங்கள் பராபரனாகிய கர்த்தர் எங்களுக்கு
இவைகளை எல்லாம் எதற்குப்பதிலாகச் செய்தார்
என்று நீங்கள் கேட்பதுண்டானால், அப்போது
நீங்கள் நம்மைவிட்டு, உங்களுடைய தேசத்தி
லே வேற்றுத்தேவர்களைச் சேவித்ததுபோலே,
உங்களுடையதல்லாத தேசத்திலே அந்நியர்க
ளைச் சேவிப்பீர்களென்று நீ அவர்களோடே
சொல்வாயாக.
௨௰ நீங்கள் யாக்கோபின் வீட்டிலே அறிவித்து,
யூதாவிலே சொல்லிக் கூறவேண்டியது ஏதெ
௨௧ னில்,—[4]கண்கள் இருந்தாலும் காணாததும், கா
துகள் இருந்தாலும் கேளாததுமாகிய இருதய
௨௨ மற்ற பயித்தியசனமே, கேளுங்கள்.—[5]நமக்குப்
பயப்படாதிருப்பீர்களோவென்று கர்த்தர் சொ
ல்லுகிறார்; [6]சமுத்திரத்துக்குக் கடவாத நித்திய
பிரமாணமாக மணலை எல்லையாய் வைத்திருக்
கிறவராகிய நமக்கு முன்பாக அதிராதிருப்பீர்
களோ? அதின் அலைகள் மோதி அடித்தாலும்
மேற்கொள்ளாது; அவைகள் இரைந்தாலும் அ
௨௩ தைக் கடவாது.— இந்தச் சனமோவென்றால்,
முரட்டாட்டமும், கலகமுமான இருதயமுள்
ளது; முரட்டாட்டம்பண்ணிப் போய்விடுகிறார்
௨௪ கள்.—அதின் அதின் காலத்திலே [7]எங்களுக்கு
மழையையும், முன்மாரியையும், பின்மாரியை
யுங்கொடுத்து, அறுப்புக்குத் திட்டமான வாரங்
களை எங்களுக்குத் தற்காக்கிற எங்கள் பராபர
னாகிய கர்த்தருக்குப் பயந்திருப்போம் என்று
அவர்கள் தங்கள் இருதயத்திலே சொல்லுகிற
௨௫ தில்லை —[8]உங்கள் அக்கிரமங்கள் இவைகளை
விலக்கி, உங்கள் பாவங்கள் உங்களுக்கு நன்
௨௬ மையை வர ஒட்டாதிருக்கின்றன.—ஏனெனில்,
குருவிபிடிக்கிறவர்கள் பதுங்குகிறதுபோலே
பதுங்கி, மனுஷரைப் பிடிக்கக் கேடுள்ள கண்
ணிகளைவைக்கிற துன்மார்க்கர் நமது சனத்தில்
௨௭ அகப்படுகிறார்கள்.— கூண்டு குருவிகளால் நி
றைந்திருக்கிற வண்ணமாக, அவர்கள் வீடுகள்
கபடங்களால் நிறைந்திருக்கின்றன; ஆனபடியி
னாலே, பெருகி ஐசுவரியவான்களாகிறார்கள்.—
௨௮ [9]கொழுத்து, சளுக்குப்பண்ணுகிறார்கள்; பொல்
லாதவனுடைய செயல்களைக் கண்டிக்காதே
போகிறார்கள்; [10]நீதியையும், திக்கற்றவனுடைய
நீதியையுமே விசாரியாமல், தாங்கள்மாத்திரம்
வாழுகிறார்கள்; எளியவர்களின் நியாயத்தைத்
தீரார்கள்.—[11]இவைகளை விசாரியாதிருப்போ ௨௯
மோ? இப்படிக்கொத்த சாதிக்கு நம்முடைய
ஆத்துமா நீதியைச் சரிக்கட்டாதிருக்குமோ
என்று கர்த்தர் சொல்லுகிறார்.
திகைத்துத் திடுக்கிடப்படத்தக்க காரியம் ௩௰
தேசத்திலே நடபடியாயிருக்கிறது.— தீர்க்கத ௩௧
ரிசிகள் [12]பொய்த்தீர்க்கதரிசனம் சொல்லுகிறார்
கள்; ஆசாரியர்கள் இவர்கள் கைகளால் ஆளுகி
றார்கள்; இப்படியிருக்கிறது நமது சனத்துக்குப்
பிரியமுமாயிருக்கிறது; ஆனால் அதற்குப் பிற்
பாடு கடைசியில் என்ன செய்வீர்கள்?

## ௬. அதிகாரம்.

௧. யூதாவுக்கு விரோதமாக அனுப்பப்பட்ட சத்துருக்கள், ௪. தங்களைத் தை ரியப்படுத்தினது. ௬. யூதாவின் பாவங்களுக்காகப் பராபரன் அந்தச் சத் துருக்களுக்கு இடங்கொடுத்தது. ௯. யூதாவின் பாவங்களினிமித்தம் வந்த பராபரனுடைய நியாயத்தீர்ப்புகளைக்குறித்துத் தீர்க்கதரிசி புலம்பி னது. ௰அ. பராபரனுடைய சினத்தைப் பிரசித்தமாய்த் தெரிவித்தது. ௨௧. பாவத்தினால் சனத்தின்மேல் வரும் நியாயத்தீர்ப்பைக்குறித்துத் தக்கிப்பதற்கு அவர்களை அழைத்தது.

பென்யமீன் புத்திரரே, நீங்கள் எருசலேமின் ௧
நடுவிலிருந்து கூடியோடி, தெக்கோவாவில் எக்
காளம் ஊதி, பேத்தக்கெரேமின்மேல் உயர்ந்த
அடையாளத்தை நிறுத்துங்கள்; ஏனெனில், ஒரு
தீங்கும், பெரிய நொருக்குதலும் [13]வடக்கேயி
ருந்து நோக்குகிறதாயிருக்கிறது.— உருவமும் ௨
செல்வமுமான சீயோன் குமாரத்தியைப் பாழ்க்
கடிப்போம்.—அவளிடத்துக்கு மேய்ப்பர் தங் ௩
கள் மந்தைகளோடே வருவார்கள்; அவர்கள்
அவளுக்கு விரோதமாகச் [14]சுற்றிலும் கூடாரங்
களைப்போட்டு, தன்தன் தலத்தில் அவனவன்
மேய்த்து,—அவளுக்கு விரோதமாய் யுத்தத்தை ௪
ஆயத்தம்பண்ணுங்களென்றும்,மத்தியானத்திலே
தானே நாம் போயேறும்படிக்கு எழுந்திருங்கள்;
நமக்கு ஐயோ! ஏனெனில், பொழுது சாய்ந்து,
அந்திநிழல்கள் நீண்டுபோகின்றனவே;—எழுந் ௫
திருங்கள், நாம் இராக்காலத்திலாகிலும் போ
யேறி, அவளுடைய அரமனைகளை அழிப்போ
மாகவென்றும் சொல்லுவார்கள்.
ஏனெனில்,சேனைகளையுடைய கர்த்தர் சொல் ௬
லுகிறதாவது: மரங்களை வெட்டி, எருசலேமுக்கு
விரோதமாய்க் கொத்தளம்போடுங்கள்; இதுவே
விசாரிக்கப்படவேண்டிய பட்டணம்; [15]அதின்
உட்புறமெல்லாம் கொடுமை.—ஊற்றானது, தன் ௭
தண்ணீரைச் சுரக்கப்பண்ணுமாப்போலே, அது
தன் பொல்லாப்பைச் சுரக்கப்பண்ணுகிறது; நம்
முடைய முகத்துக்குமுன்பாக நித்தம் அதிலே
கொடுமையும், அழிம்பும், நோயும், அடியும்
கேட்கப்படுகின்றன.
எருசலேமே, நம்முடைய ஆத்துமா உன்னை ௮
விட்டுப் பிரியாதபடிக்கும், நாம் உன்னைப் பா
ழும், குடியற்ற தேசமும் ஆக்காதபடிக்கும் புத்தி
கேள்.

1 ஓ மோ. ௨௮. ௧௧, ௧௨.
2 எரே ௪. ௨௭.—3 எரே. ௰௬.௰.
4 ஏசா. ௬. ௯, ௰.—5 எரே. ௰, ௭.
6 யோபு. ௩௮. ௰, ௰௧ சங். ௧௯. ௭: ௧௪. ௯.—7 ஓ மோ ௰௧.௰௪.அப். ௰௪. ௰௭.
8 ஏசா. ௫௯. ௨.—9 ஓ மோ. ௩௨. ௰௫ –10 ஏசா. ௧. ௨௩. சகரி. ௭.௰.
11 ௯. வச: ௯. ௯.
12 எரே.௨௩.௨௫,௨௬. ஏசா.௰௯.௧.
13 எரே.௧௰௩,௰௪.—14 எரே.௪.௭.
15 எரே. ௫. ௧.

௯ திராட்சக்குலைகளை அறுக்கிறவனைப்போலே
உன் கையைத் திரும்பக் கூடைகளின்மேலே
போடென்று சொல்லி, அவர்கள் இஸ்ரவேலில்
மீதியாயிருந்த கனியைத் திராட்சச்செடியின் க
னியைப்போலே நன்றாய்ப் பொறுக்கிக்கொண்
டுபோவார்களென்று சேனைகளையுடைய கர்த்தர்
௰ சொல்லுகிறார்.—கேட்பாருண்டாக யாரோடே
நான் பேசிச் சாட்சிபகருவேன்? இதோ,[1] அவர்
களுடைய செவி சுன்னத்தில்லாதது; அவர்கள்
கவனிக்கமாட்டார்கள்; இதோ, கர்த்தருடைய
வசனம் அவர்களுக்கு நிந்தையாயிருக்கிறது;
அதின்மேல் அவர்களுக்கு விருப்பமில்லை.
௰௧ ஆகையாலே கர்த்தருடைய உக்கிரத்தால்
நிறைந்திருக்கிறேன்; அதை அடக்கிக்கொண்டு
இளைத்தேன்; வீதிகளிலுள்ள பிள்ளைகள்மேலும்,
ஆளான மனுஷருடைய கூட்டத்தின்மேலும்
ஏகமாய் ஊற்றிவிடுவேன்; ஏனெனில், புருஷ
ரும், பெண்சாதிகளும், கிழவரும், முதிர்ந்தவய
௰௨ துள்ளவர்களுங்கூடப் பிடிபடுவார்கள்.—[2]அவர்
களுடைய வீடுகளும், அவர்களுடைய காணி
பூமிகளும், பெண்சாதிகளும், ஏகமாய் வேறே
மனுஷருக்காம்; ஏனெனில், நம்முடைய கை
யை இந்தத்தேசத்தின் குடிகளுக்கு விரோதமாக
நீட்டுவோமென்று கர்த்தர் சொல்லுகிறார்.
௰௩ ஏனெனில், அவர்களிலே சிறியோர்துவக்கிப்
பெரியோர்மட்டும், அவரவர் [3]பொருளாசைக்
காரராய் இருக்கிறார்கள்; இதுவுமல்லாமல் தீர்க்க
தரிசிகள்துவக்கி ஆசாரியர்கள்மட்டும் அவரவர்
௰௪ பொய்க்காரராயிருந்து,—[4]சமாதானமில்லாதிருந்
தும்: சமாதானம் சமாதானமென்று சொல்லி, நம
து சனத்தின் நொறுங்குதலைத் தேலிக்கையாய்க்
௰௫ குணமாக்குகிறார்கள்.— தாங்கள் அருவருப்பா
னதைச் செய்ததின்நிமித்தம் வெட்குகிறார்க
ளோ? பரிச்சேதம் வெட்கார்கள்; நாணவும் அறி
யார்கள்; ஆனபடியால் விழுகிறவர்களுக்குள்
ளே விழுவார்கள்; நாம் அவர்களை விசாரிக்கும்
காலத்திலே இடறுண்டுபோவார்களென்று கர்த்
தர் சொல்லுகிறார்.
௰௬ வழிகளிலே நின்று, பூருவபாதைகளைக்கேட்டு
விசாரித்து, நல்லவழி எதென்றுபார்த்து, அதிலே
நடவுங்கள்; [5]அப்போது உங்கள் ஆத்துமாவுக்
குச் சாங்கோபாங்கம் கிடைக்குமென்று கர்த்தர்
சொல்லுகிறார்; ஆனால் [6]நாங்கள் அதிலே நடப்
௰௭ பதில்லையென்கிறார்கள். — நாம் உங்கள்மேலே
காவல்க்காரரையும் வைத்து, எக்காள சத்தத்தைக்
கவனியுங்களென்றோம்; ஆனால் நாங்கள் கவ
னிப்பதில்லையென்கிறார்கள்.
௰௮ ஆகையாலே சாதிகளே, கேளுங்கள்;சபையே,
அவர்களுக்குள் நடக்கிறதை அறிந்துகொள்.—
௰௯ [7]பூமியே, கேள்; இந்தச் சனத்தின்மேலே நாம் அ
வர்கள் நினைவுகளின் கனியாகிய தீங்கை வரப்
பண்ணுவோம்; ஏனெனில், அவர்கள் நம்மு
டைய வார்த்தைகளையும், நம்முடைய நியாயப்
பிரமாணத்தையும் கவனியாமல் அதை வெறுத்
துவிடுகிறார்கள். — [8]சேபாவிலிருந்து வருகிற ௨௰
தூபவர்க்கமும், தூரதேசத்தினுடைய சுகந்தப்
பட்டையும் நமக்கு என்னத்துக்கு? உங்கள்
சர்வாங்கதகனங்கள் நமக்கு விருப்பமல்ல; உங்
கள் பலிகள் நமக்கு இன்பமாயிராது.—ஆகை ௨௧
யால் இதோ, நாம் இந்தச் சனத்துக்கு இடறுகளை
வைப்போம்; அவைகளில் பிதாக்களும், பிள்ளை
களும், குடியானவனும், அவனுக்கடுத்தவனும்,
ஏகமாய் இடறுண்டு அழிவார்களென்கிறதாய்க்
கர்த்தர் சொல்லுகிறார்.
[9]இதோ, வடதேசத்திலிருந்து ஒரு சனசதளம் ௨௨
வந்து, பூமியின் பக்கங்களிலிருந்து ஒரு பெரிய
சாதி எழும்பும்.—அவர்கள் வில்லுகளையும், ஈட் ௨௩
டிகளையும் பிடித்துவருவார்கள்; அவர்கள் இரங்
காமல் கடூரராயிருக்கிறார்கள்; அவர்கள் சத்தம்
சமுத்திர இரைச்சலுக்குச் சமானமாயிருக்கும்;
சீயோன் குமாரத்தியே, அவர்கள் உனக்கு விரோ
தமாக யுத்தத்துக்கு ஆயத்தப்பட்ட ஆள்களாய்க்
குதிரைகளின்மேலேறிவருவார்களென்று கர்த்
தர் சொல்லுகிறார்.
அவர்கள் வருகிற செய்தியைக் கேட்கிறோம்; ௨௪
நம்முடைய கைகள் தளரும்; இடுக்கணும்,
[10]பிள்ளைபெறுகிறவளைப்போலே வாதையும்
நம்மைப்பிடிக்கும்.—வயல்வெளியிலே புறப்ப ௨௫
டாதிருங்கள்; வழியிலும் நடவாதிருங்கள்;
ஏனெனில், சுற்றிலும் சத்துருவின் பட்டைய
மும், பயங்கரமுமுண்டு.—என் சனமாகிய குமா ௨௬
ரத்தியே, [11]நீ இரட்டைக் கட்டிக்கொண்டு, சாம்
பலிலே புரண்டு, ஒன்றான குமாரனுக்காகத்
துக்கிக்கிறதுபோலே மகா கசப்பாய்ப் புலம்பு;
ஏனெனில் பாழக்கடிக்கிறவன் அசுப்பிலே நம்
மேலே வருவான்.
நீ நம்முடைய சனத்தின் வழியை அறிந்து ௨௭
கொள்ளவும், சோதித்துப்பார்க்கவும் நாம் உன்
னை அவர்களுக்குள்ளே வேவுபார்க்கிற துருக்க
மாகவும், அரணாகவும் வைத்தோம். — அவர்க ௨௮
ளெல்லாரும் முரட்டாட்டமான ஆங்காரிகளும்,
தூற்றித்திரிகிறவர்களும், வெண்கலமும், இரும்
புமாயிருக்கிறார்கள்; அவர்களெல்லாரும் கேடா
னவர்கள்.—துருத்தி வெந்தது; ஈயம் நெருப்பி ௨௯
னால் அழிந்துபோயிற்று; புடமிடுகிற பிரயாசம்
விருதா; பொல்லாப்புகள் அற்றுப்போனதில்
லை.—அவர்கள் தள்ளுபடியான வெள்ளியென் ௩௰
னப்படுவார்களாக, ஏனெனில் [12]கர்த்தர் அவர்
களைத் தள்ளிவிட்டார்.

## எ. அதிகாரம்.

௧. யூதர்களுடைய அடிமைத்தனத்தை விலக்கும் மெய்யான குணப்படுதலுக்கழைக்க எரேமியா அனுப்பப்பட்டது. ௮. அவர்களுடைய வீண் நம்பிக்கையை, ௰௨. சீலோவாவில் நடந்ததைக்கொண்டு விலக்கினது. ௰௭. அவர்களுடைய விக்கிரகபத்திக்காக அவர்களைப் பயமுறுத்தினது ௨௧. கீழ்ப்படியாதவர்களுடைய பலிகளை விலக்கினது. ௨௧. தோப்

1 எரே ௬.௨௧.—2 ௫ மோ. ௨௮. ௩௰.—3 எரே.௮.௰: ஏசா. ௫௬. ௰௧.—4 எரே. ௰௪. ௰. 5 மத். ௰௧. ௨௯.—6 எரே. ௪௪. ௰௬. மத். ௨௧.௩௭.—7 ௫ மோ ௩௨.௧. ஏசா. ௧. ௨.

8 ஏசா. ௧. ௰௧. ஆமோ. ௫. ௨௨. மீகா. ௬. ௬.—9 எரே. ௫. ௰௫: ௫௰. ௪௧-௪௩.—10 எரே.௪.௩௧: ௨௨. ௨௩.—11 எரே. ௪.௮. 12 எரே ௭ ௨௯.

*பேத்திலே அவர்களுடைய அருவருப்பைக்குறித்தும், ௩௨. அதற்காகச் சம்பவிக்கும் நியாயத்தீர்ப்புகளைக்குறித்தும் துக்கிப்பதற்கு அவர்களைத் தூண்டினது.*

௧ கர்த்தரால் எரேமியாவுக்கு உண்டான வசன
மாவது:
௨ நீ கர்த்தருடைய வீட்டின் வாசலிலே நின்று,
அங்கே கூறிச் சொல்லவேண்டிய வசனமாவது:
கர்த்தரைப் பணிந்துகொள்ள இந்த வாசல்களுக்
குள்ளே பிரவேசிக்கிற யூதசனமாகிய நீங்களெல்
லாரும் கர்த்தருடைய வார்த்தையைக் கேளுங்
௩ கள்.—இஸ்ரவேலின் பராபரனுகிய சேனைகளை
யுடைய கர்த்தர் சொல்லுகிறதாவது: [1]உங்கள்
வழிகளையும் உங்கள் கிரியைகளையும் சீர்ப்படுத்
துங்கள்; அப்போது உங்களை இந்தத் தலத்திலே
௪ குடியிருக்கப்பண்ணுவோம்.— இது கர்த்தரின்
தேவாலயம், இது கர்த்தரின் தேவாலயம், இது
கர்த்தரின் தேவாலயம் என்று சொல்லி, பொய்
வார்த்தைகளை நம்பிக்கொள்ளாதிருங்கள்.
௫ நீங்கள் உங்கள் வழிகளையும் உங்கள் கிரியை
களையும் சீர்ப்படுத்தவே சீர்ப்படுத்தி,நீங்கள் மனு
ஷனுக்கும் அவனுக்கடுத்தவனுக்கும் நியாயம்
௬ தீர்க்கவே தீர்த்து,—[2]பரதேசியையும், திக்கற்ற
வனையும், விதவையையும் ஒடுக்காமலும், குற்ற
மில்லாத இரத்தத்தை இந்தத் தலத்திலே சிந்திப்
போடாமலும், உங்களுக்கே தீங்காக [3]அந்நிய
தேவர்களைப் பின்தொடராமலும் இருந்தீர்களே
௭ யாகில்,—அப்போது நாம் உங்கள் பிதாக்களுக்
குக் கொடுத்த தேசமாகிய இந்தத் தலத்திலே உங்
களை எப்போதும் என்றைக்கும் குடியிருக்கப்
பண்ணுவோம்.

௮ [8]இதோ, ஒன்றுக்கும் உதவாத பொய்வார்த்தை
௯ களை நீங்கள் நம்புகிறவர்கள்.—நீங்கள் திருடி,
கொலைசெய்து, விபசாரம்பண்ணி, பொய்யா
ணையிட்டு, பாகாலுக்குத் தூபங்காட்டி, அறியாத
௰ வேற்றுத் தேவர்களைப் பின்தொடர்ந்து, — பிற்
பாடு வந்து, நம்முடைய நாமம் தரிக்கப்பட்ட
இந்த வீட்டிலே நமக்குமுன்பாக நின்று: இந்த
எல்லா அருவருப்புகளையும் செய்வதற்காக விடு
௰௧ தலையானேமென்று சொல்வீர்களோ?—[4]நம்மு
டைய நாமம் தரிக்கப்பட்ட இந்த வீடு உங்கள்
பார்வைக்குக் [5]கள்ளர் கெபியாயிற்றே? இதோ,
நாமும் அப்படியென்று கண்டோமென்று கர்த்
௰௨ தர் சொல்லுகிறார்.—[6]ஆனால், நாம் முந்தி நம்
முடைய நாமத்தை வாசமாயிருக்கப்பண்ணின
சீலோவிலுள்ள நமது தலத்துக்கு நீங்கள் போய்,
நாம் அதற்கு இஸ்ரவேல் சனத்தினுடைய பொல்
லாப்பின்நிமித்தமாகச் செய்ததைப் பாருங்கள்.
௰௩ இப்போதும் நீங்கள் இந்தக் கிரியைகளை எல்
லாம் செய்து, நாம் உங்களுடனே ஏற்கெனவே
சொல்லிவந்திருந்தும், நீங்கள் கேளாமலும், நாம்
உங்களைக் கூப்பிட்டும், நீங்கள் உத்தரவுகொடா
௰௪ மலும் போனபடியினாலே,—நாம் நம்முடைய
நாமம் தரிக்கப்பட்டதும், நீங்கள் நம்பிக்கை
கொண்டிருக்கிறதுமான வீட்டுக்கும், உங்களுக்
கும், உங்கள் பிதாக்களுக்கும் நாம் கொடுத்த தலத்
துக்கும், [9]சீலோவுக்குச் செய்ததுபோலே செய்
து,—நாம் உங்களுடைய எல்லாச் சகோதரராகிய ௰௫
எப்பிராயீம் வித்து அனைத்தையும் தள்ளிப்போ
ட்டதுபோலே, உங்களை நமது முகத்தைவிட்டுத்
தள்ளிப்போடுவோமென்று கர்த்தர் உரைக்கிறார்
என்று சொல்.
நீயோவென்றால், [10]இந்தச் சனத்துக்காக விண் ௰௬
ணப்பஞ்செய்யாமலும், அவர்களுக்காகக் கூப்பி
டுதலையும், கெஞ்சுதலையும் எடுக்காமலும், நம்மை
வேண்டிக்கொள்ளாமலும் இருப்பாயாக; ஏனெ
னில், நாம் உன்னைக் கேளோம். — யூதாவின் ௰௭
பட்டணங்களிலும் எருசலேமின் வீதிகளிலும்
அவர்கள் செய்கிறதை நீ காணுயோ?—நம்மை ௰௮
மனமடிவாக்கும்படியாக அவர்கள் [11]வான இரா
சஸ்திரிக்குப் பணியாரங்களைச் சுடவும், அந்நிய
தேவர்களுக்கு ஊற்றுதலையும் ஊற்றவும், பிள்ளை
கள் விறகுகளைப் பொறுக்கி, பிதாக்கள் நெருப்
பைக் கொளுத்தி, ஸ்திரிகள் மாவைப் பிசைகி
றார்கள்.—அவர்கள் நம்மை மனமடிவாக்குகிறார்க ௰௯
ளோ? தங்கள் முகங்களின் வெட்கத்துக்கு அவர்
கள் தங்களையே அல்லவோ மனமடிவாக்குகிற
வர்கள் என்று கர்த்தர் சொல்லுகிறார்.
ஆனதுகொண்டு, இதோ, [12]நம்முடைய கோப ௨௰
மும், நம்முடைய உக்கிரமும், இந்தத் தலத்தின்
மேல் ஊற்றப்படும்; மனுஷர்மேலும், மிருகங்
கள்மேலும், வெளியின் மரங்கள்மேலும், பூமி
யின் கனிகள்மேலுந்தானே; அது அவிக்கப்ப
டாதபடியாய் எரியுமென்று கர்த்தராகிய ஆண்ட
வர் சொல்லுகிறார்.
இஸ்ரவேலின் பராபரனுகிய சேனைகளுடைய ௨௧
கர்த்தர் சொல்லுகிறதாவது: உங்கள் தகனபலிக
ளை உங்கள் மற்றப்பலிகளோடுங்கூட்டி, இறைச்
சியைச் சாப்பிடுங்கள்.—ஏனெனில், நாம் உங்கள் ௨௨
பிதாக்களை எகிப்துதேசத்திலிருந்து அழைக்கும்
நாளிலே, நாம் தகனத்தையும் பலியையுங்குறித்
து அவர்களோடே சொன்னதும் அவர்களுக்குக்
கற்பித்ததுமில்லை.—நம்முடைய சத்தத்தைக் கே ௨௩
ளுங்கள்; அப்போது, நாம் உங்களுக்குப் பராபர
னுயிருப்போம்; [13]நீங்கள் நமக்குச் சனமாயிருப்
பீர்கள்; நாம் உங்களுக்குக் கற்பிக்கும் எல்லா
வழியிலும், நீங்கள் உங்களுக்கு நன்றாயிருக்கும்
படிக்கு நடவுங்களென்கிற விசேஷத்தையே
அவர்களுக்குச் சொல்லிக் கற்பித்தோம்.—[14]ஆ ௨௪
னால் அவர்கள் கேளாமலும், தங்கள் செவியைச்
சாய்க்காமலும்போய், தங்கள் பொல்லாத இருத
யத்தினுடைய யோசனைகளிலும் கடினத்திலும்
நடந்து, முன்னிட்டல்ல பின்னிட்டுப்போனார்
கள். — உங்கள் பிதாக்கள் எகிப்துதேசத்திலி ௨௫
ருந்து புறப்பட்ட நாள்துவக்கி, இந்நாள்மட்டும்

1 எரே. ௨௬. ௰௩. ஏசா ௧. ௰௬. ௯. ௫ மோ. அ. ௰௯, ௨௰: ௰௧. ௨௮.
2 ௨ மோ. ௨௨. ௨௨, ௨௩: ௯. ௯. 4 ஏசா. ௫௬. ௭.—5 மத். ௨௧. ௰௩. மாற்.
௧ மோ. ௪௯. ௧௧.—3 எரே. ௨௫. ௰௧. ௭. லூக். ௰௯. ௪௬.—6 யோசு.
௰௮. ௧.—7 ௧ சாமு. ௪. ௩, ௰௯. சங். ௭௮. ௬௰-௬௪—8 லூக். ௧. ௨௪ ழு. 9 எரே. ௨௬. ௬.—10 எரே. ௰௧. ௰௪.
௰௪. ௰௧.—11 எரே. ௪௪ ௰௯. 12 எரே. ௪. ௪: ௨௧ ௰௨. 13 எரே. ௰௧. ௪, ௪.—14 எரே. ௰௧. ௮.

நாம் தீர்க்கதரிசிகளாகிய நம்முடைய ஊழியக்
காரரை எல்லாம் தினம் உங்களண்டைக்கு ஏற்
கனவே அனுப்பிக்கொண்டேயிருந்தோம். —
௨௬ ஆனால், நம்முடைய சொல்லைக் கேளாமலும்,
தங்கள் செவியைச் சாய்க்காமலும்போய், தங்
கள் பிடரியைக் கெட்டியாக்கி, [1]தங்கள் பிதாக்
களைப்பார்க்கிலும் பொல்லாப்புச்செய்தார்கள்.
௨௭ நீ இந்த வார்த்தைகளை எல்லாம் அவர்களுக்குச்
சொன்னாலும் அவர்கள் உன்னைக் கேட்பதில்லை;
நீ அவர்களைநோக்கிக் கூப்பிட்டாலும், அவர்
௨௮ கள் உனக்கு மறுவுத்தரவு கொடுப்பதில்லை.—ஆ
கையாலே, தங்கள் பராபரனாகிய கர்த்தருடைய
சத்தத்தைக் கேளாமலும், புத்தியை ஏற்றுக்கொள்
ளாமலுமிருக்கிற சாதி இதுதானே என்றும், விசு
வாசம் அழிந்து, அவர்கள் வாயில் வேர்அற்றுப்
போனதென்றும் அவர்களுக்குச் சொல்லுவா
யாக.
௨௯ நீ உன் தலைமயிரைச் சிரைத்து,எறிந்துபோட்டு,
உயர்தலங்களிலே புலம்பிக்கொண்டிரு; ஏனெ
னில், கர்த்தர் தமது சினத்துக்கு ஏதுவான சந்த
௩௰ தியை வெறுத்து நெகிழ்ந்தார்.—ஏனென்றால்,
யூதா புத்திரர் நமது பார்வைக்குப் பொல்லாப்பா
னதைச் செய்தார்களென்று கர்த்தர் சொல்லுகி
றார்; நம்முடைய நாமம் தரித்திருக்கிற வீட்
டைத் தீட்டுப்படுத்தத் தங்கள் அருவருப்புகளை
௩௧ அதிலே வைத்தார்கள்.—[2]தங்கள் குமாரரையும்,
தங்கள் குமாரத்திகளையும் அக்கினியாலே சுட்
டெரிப்பதற்காக, அவர்கள் இன்னோமினுடைய
குமாரரின் பள்ளத்தாக்கிலுள்ள தோப்பேத்தின்
மேடைகளைக் கட்டினார்கள்; அதை நாம் கற்பித்
ததுமில்லை; அது நம்முடைய மனதிலே தோன்
௩௨ றினதுமில்லை.—ஆனதுகொண்டு, இதோ, நாள்
கள் வருமென்று கர்த்தர் சொல்லுகிறார்; அப்
போது அது அப்புறம் தோப்பேத்தென்றும்,
இன்னோமுடைய குமாரனின் பள்ளத்தாக்கென்
றும் சொல்லப்படாமல், கொலையின் பள்ளத்
தாக்கென்று சொல்லப்படும்; இடமில்லாமை
யால் தோப்பேத்திலே சவங்களை அடக்கம்பண்
௩௩ ணுவார்கள்.—[3]இந்தச் சனத்தின் பிணங்கள் ஆகா
யத்தின் பறவைகளுக்கும், பூமியின் மிருகங்க
ளுக்கும் ஆகாரமாயிருக்கும்; அவைகளை வெருட்
௩௪ டுவாரும் இல்லாதிருப்பார்கள்.—நாம் யூதாவின்
பட்டணங்களிலும் எருசலேமின் வீதிகளிலும்
களிப்பின் சத்தத்தையும், மகிழ்ச்சியின் சத்தத்
தையும், மணவாளனின் சத்தத்தையும், மண
வாட்டியின் சத்தத்தையும் ஓயப்பண்ணுவோம்;
ஏனெனில் தேசம் பாழாம்.

## ௮. அதிகாரம்.

௧. யூதர்களில் மரித்தோருக்கும், உயிரோடிருப்பவர்களுக்கும் உண்டாகிய சிறுமை. ௪. அவர்களுடைய குணப்படாமையின் பயித்தியத்தையும், வெட்கக்கேட்டையும் கண்டிக்கிறது. ௰௩. அவர்களுக்கு வரும் துன்பமுள்ள நியாயத்தீர்ப்பைக் காட்டி, ௰௮. அவர்களுடைய நம்பிக்கையற்ற ஸ்திதியைக்குறித்துத் துக்கிக்கிறது.

1 எரே. ௰௧. ௰௨.—2 ௪ ரா. ௰௮. ௨௧.

அக்காலத்திலே யூதாவினுடைய இராசாக்க ௧
ளின் எலும்புகளையும், அவர்களுடைய பிரபுக்க
ளின் எலும்புகளையும், ஆசாரியர்களின் எலும்பு
களையும், தீர்க்கதரிசிகளின் எலும்புகளையும், எரு
சலேமுடைய குடிகளின் எலும்புகளையும், அவர்
களுடைய பிரேதக்குழிகளைவிட்டு எடுத்து, —
அவர்கள் சிநேகித்ததும், சேவித்ததும் பின்தொ ௨
டர்ந்ததும், நாடினதும், பணிந்துகொண்டதுமா
யிருந்த சூரியனுக்கும், சந்திரனுக்கும், வானத்தி
னுடைய எல்லாச் சேனைக்கும்முன்பாக அவை
களைப் பரப்பிவைப்பார்கள் என்று கர்த்தர் சொல்
லுகிறார்; அவைகள் வாரி அடக்கம்பண்ணப்ப
டாமல் பூமியின்மேல் எருவாகும்.-இந்தப்பொல் ௩
லாத வம்சத்தில் மீதியாய் வைக்கப்பட்ட குறை
ப்பேர் அனைவருக்கும், மீந்திருந்த தங்களை நாம்
துரத்திவிட்ட எல்லா இடங்களிலும், சீவனைப்
பார்க்கிலும் சாவே விருப்பமாயிருக்குமென்று
சேனைகளுடைய கர்த்தர் சொல்லுகிறார்.
நீ அவர்களுக்குச் சொல்லவேண்டியதாவது: ௪
கர்த்தர் உரைக்கிறது ஏதெனில், விழுந்தவர்கள்
எழுந்திருக்கிறதில்லையோ? வழிதப்பிப்போன
வர்கள் திரும்புகிறதில்லையோ?—ஆனால் எருச ௫
லேமியராகிய இந்தச்சனம்என்றைக்கும்வழிதப்
பிப்போகிறதேது? கபடத்தைப் பிடித்திருக்கி
றார்கள்; திரும்பமாட்டோம் என்கிறார்கள்.—நிச ௬
மானதைப் பேசார்களென்கிறதைக் கவனித்துக்
கேட்டோம்;என்னசெய்தேனென்றுதன் பொல்
லாப்பின்நிமித்தம் மனஸ்தாபப்படுகிறவன் ஒரு
வனுமில்லை; யுத்தத்துக்குள் பாய்கிற குதிரை
யைப்போலே அவரவர் தங்கள் ஓட்டமாய்த்
திரும்புகிறார்கள்.—ஆகாயத்திலுள்ள செங்கால் ௭
நாரைமுதலாய்த் தன் வேளையை அறியும்; காட்
டுப்புறாவும், நமுடும், தகைவிலான் குருவியும்
தாங்கள் வரத்தக்க காலத்தைக் கவனிக்கும்;நமது
சனமோ கர்த்தரின் நியாயத்தை அறியார்கள்.
நாங்கள் ஞானிகளென்றும், கர்த்தருடைய வே ௮
தம் எங்களோடிருக்கிறதென்றும் நீங்கள் சொல்
லுகிறதெப்படி? மெய்யாகவே இதோ, வேதபா
ரகரின் கள்ள எழுத்தாணி அதை அவத்தமாக்கு
கிறது.—ஞானிகள் வெட்கி, கலங்கிப் பிடிபடு ௯
வார்கள்; இதோ, கர்த்தருடைய சொல்லை வெறுத்
துப்போட்டார்கள்;அவர்களுக்கு ஞானமேது?—
ஆகையினாலே அவர்களுடைய பெண்சாதிகளை ௰
அந்நியருக்கும், அவர்களுடைய வயல்களை அ
வைகளைக் கட்டிக்கொள்பவர்களுக்கும்கொடுப்
போம்; ஏனெனில், [4]அவர்களிலே சிறியோர்
துவக்கிப்பெரியோர்மட்டும் அவரவர் பொருளா
சைக்காரராய் இருக்கிறார்கள்; தீர்க்கதரிசிகள்
துவக்கி ஆசாரியர்கள்மட்டும் அவரவர் பொய்ய
ராயிருந்து,—சமாதானமில்லாதிருந்தும், சமாதா ௰௧
னம் சமாதானமென்று சொல்லி, நமது சனமா
கிய குமாரத்தியின் நொறுங்குதலைத் தேலிக்கை
யாய்க் குணமாக்குகிறார்கள்.-தாங்கள் அருவருப் ௰௨

3 எரே. ௯. ௨௨ : ௰௬. ௭.—4 எரே. ௬. ௰௩-௰௫.

பானதைச் செய்ததின்நிமித்தம் வெட்குகிறார்க
ளோ? பரிச்சேதம் வெட்கார்கள்; நாணவும்
அறியார்கள்; ஆனபடியால் விழுகிறவர்களுக்
குள்ளே விழுவார்கள்; நாம் அவர்களை விசாரிக்
கும் காலத்திலே இடறுண்டுபோவார்களென்று
௰௩ கர்த்தர் சொல்லுகிறார்.—அவர்களை வாரவே வா
ருவோமென்று கர்த்தர் சொல்லுகிறார்; திராட்சச்
செடியிலே குலைகள் இராது; அத்திமரத்திலே
பழங்கள் இராது; இலையும் உதிரும்; நாம் அவர்
களுக்குக் கொடுத்தது அவர்களைவிட்டுத் தாண்
டிப்போமென்று சொல்.
௰௪ என்னத்தைப்பற்றி நாம் தரித்திருப்போம்?
கூடிக்கொள்ளுங்கள்; [1]நாம் அரணான பட்டண
ங்களுக்குள்ப்பிரவேசித்து, அங்கே சங்காரமா
வோம்; ஏனெனில், நாம் கர்த்தருக்கு விரோத
மாய்ப் பாவஞ்செய்தபடியினாலே, நம்முடைய
பராபரனாகிய கர்த்தர் நம்மைச் சங்காரம்பண்ணி,
[2]நமக்குப் பிச்சுத்தண்ணீரைக் குடிக்கக் கொடுக்
௰௫ கிறார்.—சமாதானத்துக்குக் காத்திருந்தோம், ஆ
னால் நலமில்லை; ஆரோக்கியகாலத்துக்குக் காத்
திருந்தோம், ஆனால் இதோ கெடி.
௰௬ [3]தாணிலிருந்து அவர்களுடைய குதிரைகளின்
சீறுதல் கேட்கப்படுகிறது; அவர்களுடைய வலு
புரவிகள் கனைக்கிற சத்தத்தினாலே தேசமெல்
லாம் அதிர்கிறது; அவர்கள் வந்து தேசத்தையும்,
அதின் நிறைவையும், பட்டணத்தையும், அதின்
௰௭ குடிகளையும் பட்சிப்பார்கள்.-மெய்யாய், இதோ,
தடைகட்டப்படாத சர்ப்பங்களையும், கட்டுவிரி
யன்களையும் உங்களுக்குள் அனுப்புகிறோம்;
அவைகள் உங்களைக் கடிக்குமென்று கர்த்தர்
சொல்லுகிறார்.
௰௮ நான் சஞ்சலத்தில் முசிப்பாறப்பார்த்தும்,
என்னிலே என் இருதயம் பலட்சயமாயிருக்கி
௰௯ றது.—இதோ, சீயோனிலே கர்த்தர் இருப்பதில்
லையோ? அதில் இராசா உண்டாயிருப்பதில்லை
யோ? என்று, நமது சனமாகிய குமாரத்தி தூர
தேசத்திலிருந்து கூப்பிடும் சத்தமுண்டாம்; ஆ
னால், அவர்கள் தங்கள் சுரூபங்களினாலும் அந்
நியரின் மாயைகளினாலும் நமக்குக் கோபமூண்
௨௰ டாக்கினதென்னவென்கிறார். – அறுப்புக்காலம்
சென்றது; கோடைகாலமும் முடிந்தது; நாம்
௨௧ இரட்சிக்கப்பட்டதுமில்லை.—என் சனமாகிய
குமாரத்தியின் நொறுங்குதலினால் நொறுங்குண்
டேன்; கரிகறுத்திருக்கிறேன்; திகைப்பு என்
௨௨ னைப் பிடித்தது.—[4]கீலேயாத்திலே பிசின்தயில
மில்லையோ? இரணவயித்தியனும் அங்கேயில்
லையோ? பின்னை என் என் சனமாகிய குமாரத்தி
யின் குணமாகுதல் நடந்தேறாமலே போயிற்று.

## ௯. அதிகாரம்.

*க. யூதர்களுடைய பலவிதமான பாவங்களைக்குறித்தும், அ. அவர்களுக்கு வந்த நியாயத்தீர்ப்பைக்குறித்தும் எரேமியா புலம்பினது. ௰௩. கீழ்ப்படியாமை அவர்களுடைய கைப்பான துன்பத்துக்குக் காரணமென்பது. ௰௬. அவர்களுடைய அழிவைக்குறித்து அவர்கள் துக்கிப்பதற்கும், ௨௨. தங்களை நம்பாமல் பராபரனில் நம்பிக்கையை வைப்பதற்கும் அவர்களைத் தூண்டினது. ௨௪. யூதர்களையும், புறச்சாதியாரையும் பயமுறுத்தினது.*

ஆ, குமாரத்தியாகிய என்னுடைய சனத்திலே ௧
கொலையுண்டவர்கள்நிமித்தம் நாம் இரவும்பக
லும் அழும்படியாக [5]என் தலை தண்ணீரும், என்
கண்கள் கண்ணீரூற்றுமானால் தாவிளை.
ஆ, வனாந்தரத்தில் எனக்கு வழிப்பயணக்கா ௨
ரரின் தாபரமிருந்தால் தாவிளை; அப்போது நான்
என் சனத்தைவிட்டு, அவர்களிடத்தில் இராத
படிக்குப் போய்விடுவேன்; ஏனெனில், அவர்க
ளெல்லாரும் விபசாரரும் துரோகிகளின் கூட்
டமுமாயிருக்கிறார்கள்.—[6]தங்களுக்கு வில்லாயி ௩
ருக்கிற தங்கள் நாக்கைப் பொய்களை எய்ய நா
ணேற்றுகிறார்கள்; அவர்கள் இந்தத் தேசத்திலே
பெலத்துக்கொள்வது சத்தியத்துக்காக அல்ல;
ஏனெனில், [7]பொல்லாப்பிலிருந்து பொல்லாப்
புக்கு நடந்தேறுகிறார்கள்; நம்மையோவென்
றால், அறியார்களென்று கர்த்தர் சொல்லுகிறார்.—
[8]நீங்கள் அவனவன் தன்தன் சிநேகிதனுக்கு எச் ௪
சரிக்கையாயிருங்கள்; எந்தச் சகோதரனையும் நம்
பாதிருங்கள்; ஏனெனில், எந்தச் சகோதரனும்
கவிழ்க்கவே கவிழ்க்கிறான்; எந்தச் சிநேகிதனும்
தூற்றித்திரிகிறான். — அவர்கள் மெய்யைப்பே ௫
சாமல் ஒவ்வொருவரும் தமக்கடுத்தவனை ஏய்க்கி
றார்கள்; பொய்யைப்பேசத் தங்கள் நாவைப்
படிப்பிக்கிறார்கள்; அக்கிரமஞ்செய்ய உழைக்கி
றார்கள்.—கபடத்தின் நடுவிலே குடியிருக்கிறாய்; ௬
கபடத்தின் நிமித்தம் நம்மை அறியமாட்டோ
மென்கிறார்களென்று கர்த்தர் சொல்லுகிறார்.
ஆகையால் சேனைகளையுடைய கர்த்தர் சொல் ௭
லுகிறதாவது: இதோ, நாம் அவர்களை ஒடுக்கி,
அவர்களைப் புடமிடுவோம்; ஏனெனில், நமது
சனமாகிய குமாரத்தியை வேறெந்தப்பிரகார
மாக நடத்துவோம்? — அவர்கள் நாவு கூர்மை ௮
யாக்கப்பட்ட அம்பாயிருந்து, கபடம் பேசுகிற
து; [9]தனக்கடுத்தவனோடே அவனவன் தன் வா
யினாலே சமாதானமாய்ப் பேசுகிறான்; ஆனால்
தன் உள்ளத்திலே அவனுக்குப் பதிவிடை வைக்
கிறான்.—[10]இவைகளின்நிமித்தம் அவர்களை விசா ௯
ரியாதிருப்போமோ? இப்படிக்கொத்த சாதிக்கு
நம்முடைய ஆத்துமா நீதியைச் சரிக்கட்டாதி
ருக்குமோ என்று கர்த்தர் சொல்லுகிறார்.
மலைகளின்மேல் அழுகையையும், துக்கங் ௰
கொண்டாடுதலையும், வனாந்தரத் தாபரங்களின்
மேல் புலம்பலையும், எடுப்பேன்; ஏனெனில்,
ஒருவனும் அவைகளைக்கடந்துபோகாதவண்ண
மாய் அவைகள் பாழ்க்கடிக்கப்பட்டுக் கிடக்
கின்றன; [11]ஆடுமாடுகளின் சத்தம் கேட்கப்படுகி
றதுமில்லை; ஆகாசத்தின் பறவைமுதற்கொண்டு
மிருகங்கள்மட்டும் யாவும் தெறித்துப்போயி
ன.—[12]நாம் எருசலேமை மண்மேடுகளும் வலு ௰௧
சர்ப்பங்களின் தாபரமுமாக்கி, யூதாவின் பட்ட

1 எரே. ௪. ௫.—2 எரே. ௯. ௰௫: ௨௩. ௰௫.—3 எரே. ௪. ௰௫. 4 எரே. ௪௬. ௰௧. ௧ மோ. ௩௭. ௨௫. 5 எரே. ௰௩. ௰௭: ௰௪ ௰௭. ௪௮. ௨௨. ௪.—6 சங். ௬௨. ௪. 7 எரே. ௯. ௭. 8 மீகா. ௭.௭: ௫. ௬.—9 சங். ௨௮. ௩: ௫௫. ௨௨: ௬௨. ௫. 10 எரே. ௫. ௯—௨௯. 11 எரே. ௰௨. ௪.—12 மீகா. ௩.௰௨. சங். ௭௯. ௧.

ணங்களைக் குடியில்லாதபடியாய்ப் பாழ்த்துப்
போகப்பண்ணுவோம்.
௰உ இதை உணரத்தக்க ஞானமுள்ள மனுஷன்
யாவன்? தேசம் அழிந்து,ஒருவனும் கடவாதபடி
யாய்ப் பாழ்க்கடிக்கப்படுகிற முகாந்தரமென்ன
வென்று கர்த்தருடைய வாய் தன்னுடனே சொ
ல்லுகிறதைக் கேட்டு அறிவிக்கத்தக்கவன் யா
௰௩ வன்?—கர்த்தர் சொல்லுகிறதாவது: நாம் அவர
வருக்குமுன்பாகக் கட்டளையிட்ட நம்முடைய
நியாயப்பிரமாணத்தை அவர்கள் விட்டு, நம்மு
டைய சொல்லைக் கேளாமலும், அதின்படியே
௰௪ நடவாமலும், —[2]தங்களுடைய இருதயத்தின்
கடினத்தையும், தங்கள் பிதாக்கள் தங்களுக்குக்
கற்றுக்கொடுத்தபடி பாகால்களையும் பின்தொ
௰௫ டர்ந்தபடியினாலே,—இதோ, [3]நாம் இந்தச் சனத்
துக்கு எட்டியைப் புசிக்கவும், பிச்சுத்தண்ணீ
௰௬ ரைக் குடிக்கவும் கொடுத்து,—அவர்களும், அவர்
கள் பிதாக்களும் அறியாத புறச்சாதிகளுக்குள்
ளே அவர்களைச் சிதறவடித்து, பட்டயத்தை
அவர்களுக்குப் பின்னாக அவர்களை நிர்மூலமாக்
குமட்டும் அனுப்புவோமென்று இஸ்ரவேலின்
பராபரனாகிய சேனைகளையுடைய கர்த்தர் சொல்
லுகிறார்.
௰எ நீங்கள் சிந்தனையாகி, புலம்பல்காரிகளை வரவ
ழைத்து அதற்காக ஞானமுள்ள ஸ்திரிகளை அ
ழைத்தனுப்புங்களென்று சேனைகளையுடைய கர்
௰அ த்தர் சொல்லுகிறார்.—அவர்கள் சீக்கிரமாய் வந்து,
நம்முடைய கண்கள் கண்ணீராய்ச் சொரியத்
தக்கவிதமாகவும்,நம்முடைய இமைகள் தண்ணீ
ராய் ஓடத்தக்கவிதமாகவும், நம்மேல் புலம்பும்
௰௯ படிக்குத்தானே.—ஏனென்றால், எத்தனையாய்ப்
பாழ்க்கடிக்கப்பட்டோமென்றும், நாங்கள் தே
சத்தை விட்டுப்போகிறதினாலும் எங்கள் வாசஸ்
தலங்களைக் கவிழ்த்தார்களென்கிறதினாலும் மிக
வும் வெட்கப்பட்டோமென்றும், சீயோனிலி
ருந்து உண்டாகிற புலம்பலின் சத்தம் கேட்
உ௰ கப்படும்.—ஆனதுகொண்டு ஸ்திரிகளே, கர்த்த
ருடைய வார்த்தையைக் கேளுங்கள்; உங்கள்
செவி அவருடைய வாயின் வசனத்தை ஏற்றுக்
கொள்ளட்டும்; நீங்கள் உங்கள் குமாரத்திகளுக்
குத் துக்கங்கொண்டாடுதலையும், அவளவள்
தன் தோழிக்குப் புலம்பலையும் கற்றுக்கொடுங்
உக கள்.—ஏனெனில், வீதியிலிருக்கிற குழந்தைக
ளையும், தெருக்களிலிருக்கிற இளைஞரையும் சங்
காரம்பண்ணச் சாவு நம்முடைய பலகணிகளி
லேறி, நம்முடைய அரமனைகளிலே பிரவேசிக்
உஉ கும்.—[4]மனுஷரின் சவங்கள் வயல்வெளியின்
மேல் எருவைப்போலவும் அறுக்கிறவனுக்குப்
பின்னாலே ஒருவனும் வாரிக்கொள்ளாதிருக்கிற
அரியைப்போலவும் கிடக்குமென்று கர்த்தர்
உரைத்தாரென்று சொல்.
உ௩ கர்த்தர் சொல்லுகிறதாவது: ஞானி தன் ஞான
த்தைத்தொட்டு மேன்மைபாராட்டவேண்டாம்;
பராக்கிரமன் தன் பராக்கிரமத்தைத்தொட்டு
மேன்மைபாராட்டவும் வேண்டாம்; ஐசுவரிய
வான் தன் ஐசுவரியத்தைத்தொட்டு மேன்மை
பாராட்டவும்வேண்டாம்.—[5]மேன்மைபாராட்டு உ௪
பவன் நாம் பூமியிலே கிருபையையும், நியாயத்
தையும், நீதியையும் செய்கிற கர்த்தரென்று, நம்
மை உணர்ந்து அறிந்திருக்கிறதையே தொட்டு
மேன்மைபாராட்டக்கடவான்; ஏனெனில், இ
வைகளின்மேலே பிரியமாயிருக்கிறோமென்று
கர்த்தர் சொல்லுகிறார்.
இதோ, நாள்கள் வரும்; அப்போது சுன்னத் உ௫
தில்லாதவர்களோடுங்கூடச் சுன்னத்துள்ள யாவ
ரையும்,—எகிப்தையும், யூதாவையும், ஏதோமை உ௬
யும், அம்மோன் புத்திரரையும், மோவாபையும்,
கடைசி மூலைகளிலுள்ள வனாந்தரக்குடிகளான
யாவரையும் விசாரிப்போம்; ஏனெனில், புறச்
சாதியார் அனைவரும் சுன்னத்தில்லாதவர்கள்;
ஆனால், இஸ்ரவேல் வீட்டார் அனைவரும் [6]இரு
தய சுன்னத்தில்லாதவர்களென்று கர்த்தர் சொல்
லுகிறார்.

## ௰. அதிகாரம்.

க. பராபரனுக்கும் விக்கிரகங்களுக்கும் ஒப்பில்லாமை. ௰எ. வருகிற பொல்லாங்குக்கு விலகிப்போகத் தீர்க்கதரிசி தூண்டினது. ௰௯. புத்தியற்ற மேய்ப்பர்களாலே கூடாரத்தின் பாழ்க்கடிப்பைக்குறித்துப் புலம்பினது. உ௩. தாழ்மையாய் விண்ணப்பம்பண்ணினது.

இஸ்ரவேல் வீட்டாரே, கர்த்தர் உங்களுடனே க
சொல்லுகிற வசனத்தைக் கேளுங்கள்.
கர்த்தர் சொல்லுகிறதாவது: புறச்சாதிகளு உ
டைய மார்க்கத்தைக் கற்றுக்கொள்ளாதிருங்கள்;
வானத்தின் அடையாளங்களாலே புறச்சாதிகள்
கலங்குகிறார்களே என்று சொல்லி, நீங்கள் அ
வைகளாலே கலங்காதிருங்கள். — ஏனெனில் ௩
சனசதளங்களின் பிரமாணங்கள் மாயையாயி
ருக்கின்றன; அதேனென்றால், [7]காட்டில் ஒரு
மரத்தை வெட்டுகிறார்கள்; அதிலே தச்சன் கைக
ளிலிருக்கிற வாச்சியால் வேலைசெய்யப்படும்.—
வெள்ளியினாலும் பொன்னினாலும் அதை நேர்த் ௪
தியாக்கி, அது ஆடாதபடிக்கு அதை ஆணிகளா
லும் சுத்தியல்களாலும் உரமாக்குகிறார்கள்.—
அவைகள் பனைமரத்தைப்போலக் கெட்டியாயி ௫
ருக்கின்றன; [8]அவைகள் பேசமாட்டாதவை
கள்; அவைகள் நடக்கமாட்டாததினாலே சுமக்
கப்படவேண்டும்; அவைகளுக்குப் பயப்படா
திருங்கள்; ஏனெனில், தீமைசெய்யமாட்டாத
வைகள்; நன்மை செய்வதும் அவைகளில் இல்
லையென்கிறார்.
கர்த்தாவே,[9] உமக்கு ஒப்பானவன் இல்லையே; ௬
தேவரீரே பெரியவர்; உமது நாமமே வல்லமை
யில் பெரியது.—சாதிகளின் கர்த்தாவே, [10]உமக் எ
குப் பயப்படாதிருப்பவன் யாவன்?தேவரீருக்கு
த்தான் பயப்படவேண்டியது; அதேனென்றால்,
சாதிகளுடைய எல்லா ஞானிகளிலும், அவர்க
ளுடைய எல்லா இராச்சியத்திலும் உமக்கு ஒப்

1 ௫ மோ. ௩௨. உ௯.—2 எரே. எ. உ௪.-உ௭.—3 எரே. உ௩. ௰௫. 4 எரே. எ. ௩௩.—5 ௧ கொரி. ௧. ௩௧. ௨ கொரி. ௰. ௰எ.-6 ௩ மோ. உ௬.

௪௧ அப். எ. ௫௧. உரோ. உ. உ௮, உ௯.-7 ஏசா. ௪௪. ௰௪-உ௰. 8 சங். ௱௰௫. ௫, எ.-9 சங். ௮௬. ௮, ௯. 10 சங். ௯௯. ௮ வெளி. ௰௫. ௪

அ பானவன் இல்லை.—அவர்கள் ஏகமாய் [1]மிருக
குணமும் பயித்தியமுமாயிருக்கிறார்கள்; அந்த
கூ மரம் மகா மாயையான போதகந்தானே.—தகடாக்
கப்பட்ட வெள்ளி தர்சீசிலும், பொன் ஊப்பா
சியிலுமிருந்து கொண்டுவரப்பட்டு, தொழிலா
ளியினாலும், தட்டான் கைகளினாலும் செப்ப
னிடப்படுகின்றன; இளநீலமும், இரத்தாம்பர
மும் அவைகளின் உடுப்பு; அவையெல்லாம்
௰ ஞானிகளின் செய்கையாயிருக்கின்றன.—கர்த்
தரோவெனில் மெய்யான தெய்வம்; அவர் சீவ
னுள்ள பராபரனும் நித்திய இராசாவுந்தானே; அ
வருடைய கடுமையினாலே பூமி அதிரும்; அவரு
டைய சினத்தைச் சாதிகள் சகிக்கமாட்டார்கள்.

௰க வானத்தையும் பூமியையும் உண்டாக்காத தே
வர்கள், பூமியிலும் இந்த வானத்தின்கீழும் இரா
தபடிக்கு அழிவார்கள் என்றதாய் அவர்களுக்
௰உ குச் சொல்லுவீர்களாக.—அவரே பூமியைத் தம்
முடைய பெலத்தினால் உண்டாக்கி, பூச்சக்க
ரத்தைத் தம்முடைய ஞானத்தினாலே படைத்து,
வானத்தைத் தம்முடைய உணர்வினாலே விரித்
௰௩ தார்.—[3]அவர் சத்தமிடுகையில் திரளான தண்
ணீர் வானத்தில் உண்டாகிறது; அவர் பூமியின்
துலையிலிருந்து மேகங்களை எழும்பப்பண்ணி,
மழையுடனே மின்னல்களை உண்டாக்கி, காற்
றைத் தமது பண்டகசாலைகளிலிருந்து ஏவிவிடு
௰௪ கிறார்.—[4]மனுஷர் அனைவரும் அறிவில்லாமல்
மிருககுணமானார்கள்; தட்டார் அனைவரும் சு
ரூபங்களாலே வெட்கிப்போகிறார்கள்; ஏனெ
னில், அவர்கள் வார்ப்பித்தது பொய்யே, அவை
௰௫ களில் ஆவி இல்லை.—அவைகள் மாயையும், மகா
எத்துக்களான கிரியையுமாய் இருக்கின்றன; அ
வைகள் விசாரிக்கப்படும் நாளிலே அழியும்.—
௰௬ யாக்கோபின் பங்காயிருக்கிறவர் அவைகளைப்
போலே அல்ல; ஏனெனில், அவர் சருவத்தை
யும் உருவாக்கினவர்; இஸ்ரவேல் அவருடைய
சுதந்தரமான கோத்திரம்; சேனைகளையுடைய
கர்த்தர் என்பது அவருடைய நாமம்.

௰எ அரணான இல் குடியிருக்கிறவளே, தேசத்திலி
ருந்து உன் வியாபாரத்தைச் சேர்த்துக்கொள்.—
௰அ ஏனெனில், இதோ நாம் இந்தவிசை தேசத்தின்
குடிகளைக் கவண் எறிந்து, அவர்கள் கண்டு உண
ரும்படிக்கு அவர்களுக்கு நெருக்கமுண்டாக்கு
வோம் என்று கர்த்தர் சொல்லுகிறார்.

௰௯ என் நொறுங்குதலின் நிமித்தம் எனக்கு ஐயோ!
என் காயம் கேவலமாயிருக்கிறது; [5]ஆனால் இது
நான் சுமக்கவேண்டிய என்னுடைய நோயென்று
உ௰ நான் சொல்லுவேன்.—என்னுடைய கூடாரம்
பாழ்க்கடிக்கப்பட்டு, என் கயிறுகளெல்லாம் அ
றுப்புண்டன; என் பிள்ளைகள் புறப்பட்டுப்போ
னார்கள்; அவர்களில் ஒருவனுமில்லை; இனி என்
கூடாரத்தை விரித்து, என் திரைகளைத் தூக்கிக்
உக கட்டுவாரில்லை.—ஏனென்றால், மேய்ப்பர் மிருக
குணமாகி, கர்த்தரைத் தேடாதேபோனார்கள்;
ஆகையால், அவர்கள் காரியம் வாய்க்காமல்,
அவர்கள் மந்தையெல்லாம் சிதறவடிக்கப்பட்ட
ன.—இதோ, யூதாவின் பட்டணங்களைப் பாழும் உஉ
வலுசர்ப்பங்களின் தாவுமாக்கிப்போடும் செய்
தியின் சத்தமும், [6]வடதேசத்திலிருந்து பெரிய
கொந்தளிப்பும் வருகின்றன.

கர்த்தாவே, [7]மனுஷனுடைய வழி அவனாலே உ௩
ஆகிறதல்லவென்றும், தன் நடைகளை நடத்து
வது நடக்கிறவனாலே ஆகிறதல்லவென்றும் அறி
வேன்.—கர்த்தாவே, [8]என்னைத் தண்டியும்; ஆனால் உ௪
என்னை மாயையாக்காதபடிக்கு [9]உம்முடைய
கோபத்தினாலே அல்ல, [10]நியாயமட்டாய்த் தண்
டியும்.—[11]உம்மை அறியாத சாதிகளின்மேலும், உ௫
உமது நாமத்தைத் தொழுதுகொள்ளாத வம்சங்க
ளின்மேலும், உம்முடைய உக்கிரத்தை ஊற்றிவி
டும்; ஏனெனில், அவர்கள் யாக்கோப்பைப் பட்
சித்து, அவனை விழுங்கி, அவனை நிர்மூலமாக்கி,
அவன் வாசஸ்தலத்தைப் பாழ்க்கடித்தார்கள்.

## ௰க. அதிகாரம்

க. எரேமியா பராபரனுடைய உடம்படிக்கையைப் பிரசித்தம்பண்ணினது. அ. அதற்குக் கீழ்ப்படியாத யூதரைக் கண்டித்தது. ௰க. அவர்கள்மேலும், ௰அ. தன்னைக் கொல்ல யோசனைபண்ணினதற்காக ஆனதோத்தின் மனுஷர்கள்மேலும் வரும் தீங்கைத் தீர்க்கதரிசனமாய் உரைத்தது.

க கர்த்தராலே எரேமியாவுக்கு உண்டான வசன
னம்; அவர் சொன்னதாவது:
நீங்கள் கேட்டு யூதாவின் மனுஷருக்கும் எருச உ
லேமின் குடிகளுக்கும் சொல்லிக்காட்டவேண்
டிய உடம்படிக்கையின் வார்த்தைகளாவன:—
[12]நமது சத்தத்தைக் கேட்டு, நாம் உங்களுக்குக் ௩
கற்பிக்கிற எல்லாக்காரியங்களிலும் அதின்படி
செய்யுங்கள்; அப்போது நீங்கள் நமக்குச் சன
மாய் இருப்பீர்கள், நாம் உங்களுக்குப் பராபர
னாய் இருப்போம் என்று சொல்லி,—நாம் உங் ௪
கள் பிதாக்களை இருப்புக் குகையாகிய எகிப்து
தேசத்திலிருந்து புறப்படப்பண்ணின நாளிலே
அவர்களுக்குக் கற்பித்த இந்த உடம்படிக்கை
யின் வார்த்தைகளைக் கேளாத மனுஷன் [13]சபிக்க
ப்பட்டவனென்று, இஸ்ரவேலின் பராபரனா
கிய கர்த்தர் உரைக்கிறாரென்று அவர்களுக்குச்
சொல்.—இன்றைத்தினம் இருக்கிறபடி, பாலு ௫
லும் தேனும் ஓடுகிற தேசத்தை உங்கள் பிதாக்க
ளுக்குக் கொடுப்போமென்று நாம் அவர்களுக்கு
இட்ட ஆணையை நாம் திடப்படுத்தும்படியா
கத்தானே என்றார்; அதற்கு நான் பிரதியுத்தார
மாக, ஆம் கர்த்தாவே என்றேன்.

அப்போது கர்த்தர் என்னுடனே சொன்ன ௬
தாவது: நீ யூதாவின் பட்டணங்களிலும் எரு
சலேமின் வீதிகளிலும் இந்த வார்த்தைகளை
எல்லாம் கூறிச்சொல்லவேண்டியது ஏதெனில்,
இந்த உடம்படிக்கையின் வார்த்தைகளை நீங்கள்
கேட்டு, அவைகளின்படியே செய்யுங்கள்.—
ஏனென்றால், நாம் உங்கள் பிதாக்களை எகிப்து எ

1 உபா. க. உஉ, உக. 2 பேரபு. க அ. சங். கச. உ. எசா. சம். உஉ.—3 சங். கஃ௫.எ. பேரபு. க௩. உ௫–உ௯. 4 எரே. ௫. ௰எ: ௰௮. ௰க. 5 சங். எஎ. ௰க.

6 எரே. க. ௰௪: ௪. க. 7 நீதி. உ௰. உ௪. பிர. ௯. ௰க. 8 சங். க. உ.—9 எரே. க௯. உ. 10 எரே. சக. உ௯.-11 சங். எக. க. 12 எரே. எ. உ௩. 13 கலா. உ௭. உ௩.

தேசத்திலிருந்து ஏறப்பண்ணின நாளிலும், இந்
நாள்மட்டாகவும் நாம் அவர்களுக்குத் திடச்
சாட்சியாய் நம்முடைய சத்தத்தைக் கேளுங்க
ளென்று ஏற்கெனவே சாட்சி விளங்கத்தக்கவித
௮ மாய்ச் சொல்லிவந்தோம்.—ஆனால் அவர்கள்
கேளாமலும், தங்கள் செவியைச் சாய்க்காமலும்
போய், அவரவர் தங்கள் பொல்லாத இருதயத்
தினுடைய கடினத்தின்படி நடந்தார்கள்; ஆன
துகொண்டு நாம் அவர்களுக்குச் செய்யக்கற்பித்
ததும், அவர்கள் செய்யாமல்போனதுமான இந்த
உடம்படிக்கையின் வார்த்தைகளை எல்லாம் அ
வர்கள்மேல் வரப்பண்ணுவோம் என்று சொல்
லென்றார்.

௯ பின்னையும் கர்த்தர் என்னுடனே சொன்ன
தாவது: யூதாவின் மனுஷருக்குள்ளும் எருசலே
மின் குடிகளுக்குள்ளும் ஒரு ஒப்பந்தம் காணப்
௰ படுகிறது.—அவர்கள் நம்முடைய வார்த்தைக
ளைக் கேட்கமாட்டோமென்றவர்களும், அந்நிய
தேவர்களைச் சேவிக்கப் பின்சென்றவர்களுமா
கிய தங்களுடைய முந்தின பிதாக்களின் அக்
கிரமங்களுக்குத் திரும்பினார்கள்; நாம் தங்கள்
பிதாக்களோடே பண்ணின உடம்படிக்கையை
இஸ்ரவேல் வீட்டாரும் யூதாவின் வீட்டாரும்
முறித்துப்போட்டார்கள்.

௰௧ ஆகையினாலே கர்த்தர் சொல்லுகிறதாவது:
இதோ, அவர்கள் நீங்கிப்போகமாட்டாத தீங்கை
அவர்கள்மேல் வரப்பண்ணுவோம்; [1]அப்போது
நம்மைநோக்கிக் கூப்பிடுவார்கள்; ஆனால் அவர்
௰௨ களைக் கேளாதிருப்போம்.—அப்போது யூதாவு
டைய பட்டணங்களின் மனுஷரும், எருசலே
மின் குடிகளும் போய்த் தாங்கள் தூபங்காட்
டியிருந்த தேவர்களைநோக்கிக் கூப்பிட்டும்,
[2]அவைகள் அவர்களை அவர்கள் தீங்குகாலத்தில்
௰௩ இரட்சிப்பதே இல்லை.—ஏனெனில், யூதாவே,
உன் பட்டணங்களின் இலக்கமும் [3]உன் தே
வர்களின் இலக்கமும் சரி; எருசலேமுடைய
வீதிகளின் இலக்கமும், நீங்கள் பாகாலுக்குத்
தூபங்காட்டுவதற்காக இலச்சைக்கு ஸ்தாபித்த
௰௪ பீடங்களின் இலக்கமும்சரி.—ஆனதுகொண்டு
நீ இந்தச் சனத்துக்காக விண்ணப்பம்பண்ணா
மலும், அவர்களுக்காகக் கூப்பிடுதலும் கெஞ்சு
தலும் செய்யாமலும் இருப்பாயாக; ஏனெனில்,
அவர்கள் தங்கள் தீங்கின்நிமித்தமாய் நம்மை
நோக்கிக் கூப்பிடுங்காலத்திலே நாம் அவர்களைக்
கேளாதிருப்போம்.

௰௫ வல்லவர்களால் மகா தீவினைசெய்யப்படுகை
யில், நம்முடைய நேசருக்கு நமது வீட்டில்
என்ன இருக்கிறது? பரிசுத்தமாம்சத்தை உன்னை
விட்டுத் தாண்டப்பண்ணுவார்கள்; உன் பொல்
லாப்பு நடக்கும்போது நீ களிகூருகிறாயே.—
௰௬ அலங்காரக்கனி உண்டாயிருக்கிற நேர்த்தியும்
பச்சையுமான ஒலிவமரமென்கிறபேரைக் கர்த்
தர் உனக்கிட்டார்; ஆனால் மகா அமளியின் சத்
தமாய் அதைச் சுற்றிலும் நெருப்பைக் கொளுத்
துகிறாய், அதின் கொம்புகள் முறிக்கப்படும்.—
ஏனென்றால், பாகாலுக்குத் தூபங்காட்டுகிறதி ௰௭
னாலே நமக்குக் கோபமுண்டாக்க இஸ்ரவேல்
வீட்டாரும், யூதாவின்வீட்டாரும் தங்களுக்குக்
கேடாகச்செய்த பொல்லாப்பின்நிமித்தம் உன்
மேலே தீங்கை வரப்பண்ணுவோமென்று உன்
னை நாட்டின சேனைகளையுடைய கர்த்தர் சொல்
லுகிறார்.

அதைக் கர்த்தர் எனக்கு அறிவித்ததினாலே ௰௮
அறிந்தேன்; அவர்களுடைய செய்கைகளை அப்
போது எனக்குத் தெரியக்காட்டினீர்.—என்ன ௰௯
வெனில், நான் அடிக்கப்படுவதற்குக் கொண்டு
போகப்படும் சாதுள்ள ஆட்டைப்போல இருக்
கிறவன்; மரத்தை அதின் கனிகளோடுங்கூட அ
ழிக்கக்கடவோமென்றும், அவன் சீவனுள்ளோ
ருடைய தேசத்திலிராமலும், அவன்பேர் இனி
நினைக்கப்படாமலும்போக, அவனைச் சங்கரிக்
கக்கடவோமென்றும், எனக்கு விரோதமாய்
யோசனைகளை யோசித்தார்கள் என்கிறதை அறி
யாதிருந்தேன்.—ஆனால் சேனைகளின் கர்த்தா ௨௰
வே, [5]உள்ளிந்திரியங்களையும் இருதயத்தையும்
சோதித்தறிகிற நீதியுள்ள நியாயாதிபதியே, நீர்
அவர்களுக்கு நீதியைச் சரிக்கட்டுகிறதைப் பார்
ப்பேனாக; ஏனெனில் என் வழக்கை உமக்கு
வெளிப்படுத்திவிட்டேன் என்றேன்.

ஆனதுகொண்டு நீ எங்கள் கையினாலே சாகா ௨௧
தபடிக்குக் கர்த்தருடைய நாமத்தினாலே தீர்க்க
தரிசனம் சொல்லாதிருவென்று சொல்லி, உன்
பிராணனை வாங்கத்தேடுகிற ஆனதோத்தின் மனு
ஷரைக்குறித்துக் கர்த்தர் சொல்லுகிறதாவது:—
இதோ, இதுநிமித்தமாய் உங்களை விசாரிப்போம்; ௨௨
இளவயதுள்ள மனுஷர் பட்டையத்தாலே சா
வார்கள்; அவர்கள் குமாரரும் அவர்கள் குமாரத்
திகளும் பஞ்சத்தாலே சாவார்கள்.—அவர்களில் ௨௩
மீதியாய் இருப்பவர்களில்லை; ஏனெனில், நாம்
ஆனதோத்தின் மனுஷரை விசாரிக்கும் வருஷத்
திலே அவர்கள்மேலே தீங்கை வரப்பண்ணுவோ
மென்று சேனைகளின் கர்த்தர் சொல்லுகிறார்.

## ௰௨. அதிகாரம்.

௧ எரேமியா துன்மார்க்கருடைய சுகசெல்வத்தைக்குறித்து முறையிட்டு விசுவாசமாய் அவர்களுடைய நாசத்தைப் பார்த்தது. ௫. பாரபரன் அவனுக்கு விரோதமாக வஞ்சனைசெய்த அவனுடைய சகோதரரைக்குறித்து எச்சரித்ததும், ௭. தமது சுதந்தரத்தைக்குறித்து மனஸ்தாபப்பட்டதும், ௰௪. குணப்பட்டவர்களுக்குச் சிறையிருப்பு நீங்க வாக்குத்தத்தம்பண்ணினது.

கர்த்தாவே, உம்மோடே நான் வழக்காடப்போ ௧
னால் தேவரீர் நீதியுள்ளவராமே; ஆகிலும் நியா
யங்களைக்குறித்து உம்மோடே நான் பேசிக்
கொள்ளட்டும்; [6]ஆகாதவர்களின் வழி வாய்த்து,
துரோகஞ்செய்துவருகிற அனைவரும் சுகிக்கிற
தென்ன?—அவர்களை நாட்டினீர், வேரும்பற்றித் ௨
தேறிப்போனார்கள்; கனியும் கொடுக்கிறார்கள்;
அவர்கள் வாயிலே நீர் சமீபமும், அவர்கள் உள்

1 லூக். ௧௩. ௨௫-௨௭. ஏசா. ௧. ௰௫.—2 எரே. ௨. ௨௮. ஓசே. ௰௨. ௧௭,௧௮.—3 ஓசே. ௰.௧: ௰௨. ௰௨.—4 எரே. ௭. ௰௬: ௰௪. ௰௧.—5 சங். ௭. ௯.
6 யோபு. ௨௧. ௭, ௰௯. சங். ௭௩. ௩, ௰௨.

ளிந்திரியங்களுக்கோ நீர் தூரமுமானவர். —
௩ ஆனால் கர்த்தாவே, தேவரீர் என்னை அறிந்திருக்
கிறீர்; என்னைக் காண்கிறீர்; என் இருதயம் உமக்
குமுன்பாக எப்படிக்கொத்ததென்று சோதித்து
அறிகிறீர்; அவர்களை அடிக்கப்படும் ஆடுகளைப்
போலே பிடுங்கிப்போட்டு, கொலைநாளுக்கு
௪ நியமியும்.—எந்தமட்டும் தேசம் புலம்பி, எல்லா
வெளியின் புல்லும் வாடி, அதின் குடிகளு
டைய பொல்லாப்பின் நிமித்தம் மிருகங்களும்
பறவைகளும் அழியவேண்டும்; ஏனெனில், எங்
கள் கடைசி முடிவை அவன் காண்பதில்லை
யென்கிறார்கள்.

௫ நீ காலாள்களோடே ஓடுகையில் உன்னை
இளைக்கப்பண்ணினார்களானால், குதிரைகளோ
டே எப்படிக் கலந்து ஓடுவாய்? சமாதானம் இரு
க்கிற தேசத்திலே நீ அடைக்கலம் தேடினால்,
யோர்தான் எழும்புகிற மேட்டிமையில் என்ன
௬ மாயிருப்பாய்?—ஏனெனில், உன் சகோதரரும்,
உன் தகப்பன் வீட்டாரும் முதலாய் உனக்குத்
துரோகம்பண்ணி, அவர்களுங்கூட உனக்குப்
பின்னாக மிகவும் கூப்பிடுகிறார்கள்; அவர்கள்
உன்னோடே நல்ல விசேஷங்களாய்ப் பேசும்
௭ போது அவர்களை நம்பாயாக.—நமது வீட்டை
விட்டுவிடுகிறோம்; நம்முடைய சுதந்தரத்தை
நெகிழுகிறோம்; நம்முடைய ஆத்துமா நேசித்
ததை அதினுடைய சத்துருவின் கையிலே கொ
௮ டுக்கிறோம்.-நமது சுதந்தரம் நமக்குக் காட்டின்
சிங்கத்துக்குச் சரியானது; அது நமக்கு விரோத
மாய்த் தன் சத்தத்தைக் காட்டுகிறது; ஆனபடி
௯ யினால் அதைப் பகைத்திருக்கிறோம். — நமது
சுதந்தரம் நமக்குப் பலவருணமான உராஞ்சுகிற
பட்சி; ஆகையால், உராஞ்சுகிற பட்சிகள் அ
தைச்சுற்றிலும் வருவதாக; வெளியினுடைய
சகல சீவன்களே, அதைப் பட்சிக்கக் கூடிவா
௰ ருங்கள்.—[1]அநேக மேய்ப்பர்கள் நமது திராட்சத்
தோட்டத்தை அழித்து, நமது வீதத்தை மிதித்து,
நம்முடைய விருப்பமான வீதத்தைப் பாழான
௰௧ வனாந்தரமாக்கினார்கள்.—அதைப் பாழாக்கிவிட்
டார்கள்; பாழாய்க்கிடக்கிற அது நம்மைநோக்
கித் துக்கிக்கிறது; தேசமெல்லாம் பாழாம்; ஏனெ
னில், ஒருவனும் இதை மனதிலே வைக்கிற
௰௨ தில்லை.—வனாந்தரத்திலுள்ள எல்லா உயர்நிலங்
களின்மேலும் பாழ்க்கடிக்கிறவர்கள் வருகிறார்
கள்; ஏனெனில்,கர்த்தருடைய பட்டையம் ஒரு
தேசமுனைதுவக்கி மறுதேசமுனைமட்டும்பட்சித்
துக்கொண்டிருக்கும்; ஒரு மாம்சத்துக்கும் சமா
௰௩ தானமில்லை. —[2]கோதுமையை விதைத்தார்கள்;
முள்ளுக்களை அறுப்பார்கள்; ஒன்றுக்கும் உதவா
மல் உழன்று அறுக்கிறார்கள்; ஆகையாலே கர்த்த
ருடையகோபத்தின் உக்கிரத்தினால் உங்களுக்கு
வரும் வரத்துக்காக வெட்கப்படுங்கள்.

௰௪ இதோ, நாம் நமது சனமாகிய இஸ்ரவேலுக்
குக் காணியாட்சியாகக் கொடுத்த நம்முடைய
சுதந்தரத்தைத் தொடுகிற நம்முடையபொல்லாத
அயலார் அனைவரையும் தங்கள் தேசத்தில் இராத
படிக்குப் பிடுங்கிப்போடுவோமென்று, கர்த்தர்
அவர்களைக்குறித்துச் சொல்லுகிறார்; யூதா வீட்
டாரையும் அவர்கள் நடுவில் இராதபடிக்குப்
பிடுங்கிப்போடுவோம்.—அவர்களை நாம் பிடுங்கி ௰௫
ப்போட்டபிற்பாடு சம்பவிப்பது ஏதென்றால்,
நாம் திரும்ப அவர்கள்மேல் இரங்கி,அவர்களைத்
தங்கள் தங்கள் சுதந்தரத்துக்கும் தங்கள் தங்கள்
தேசத்துக்கும் திரும்பப்பண்ணுவோம். — அப் ௰௬
புறம் சம்பவிப்பதாவது: அவர்கள் நம்முடைய
சனத்துக்குப் பாகாலின்மேலே ஆணையிடக் கற்
றுக்கொடுத்ததுபோலே கர்த்தருடைய சீவனைக்
கொண்டு என்று [3]நம்முடைய, நாமத்தின்மேலே
ஆணையிடும்படியாக நம்முடைய சனத்தின்
வழிகளை நன்றாய்க் கற்றுக்கொண்டால், அவர்
கள் நம்முடைய சனத்தின் நடுவிலே ஊன்றக்
கட்டப்படுவார்கள்.—கேளார்களேயாகில், நாம் ௰௭
அப்படிக்கொத்த சாதியைப் பிடுங்கவே பிடுங்
கிப்போட்டு அழிப்போமென்று கர்த்தர் சொல்
லுகிறார்.

## ௰௩. அதிகாரம்.

௧. ஐப்பிராத்து நதியிலே ஒளித்துவைத்த சணல்க்கச்சையின் அடையாளத்தினாலே பராபரன் தமது சனத்தின் அழிவைக் காட்டினது. ௰௨. திராட்ச இரசத்தினால் நிரப்பப்பட்ட புட்டிகளின் உவமையினாலே அவர்கள் சிறுமையில் வெறிகொள்வதை முன்னடி உரைத்தது. ௰௫. அவர்கள்மேல் இனிவரும் நியாயத்தீர்ப்புகளை விலக்கிக்கொள்வதற்குத் தூண்டினது. ௨௨. அவற்றிற்கு அவர்களுடைய அருவருப்பே காரணமென்று காட்டினது.

கர்த்தர் என்னுடனே சொன்னதாவது: நீபோய், ௧
உனக்கு ஒரு சணலின் கச்சையைக்கொண்டு,
அதை உன் அரையிலே கட்டிக்கொள்; ஆனால்
அதைத் தண்ணீரிலே படவொட்டாதேயென்
றார். — அப்போது நான் கர்த்தருடைய வார்த் ௨
தையின்படியே கச்சையைக்கொண்டு, அதை
என் அரையிலே கட்டிக்கொண்டேன்.—இரண் ௩
டாம்விசை கர்த்தருடைய வார்த்தை எனக்கு
உண்டாகி, அவர் சொன்னதாவது:—நீ கொண் ௪
டதும் உன் அரையிலிருக்கிறதுமான கச்சை
யை நீ எடுத்துக்கொண்டு, எழுந்து ஐப்பிராத்து
நதிமட்டும் போய், அதை அங்கே ஒரு கல்மலை
வெடிப்பிலே ஒளித்துவை என்றார்.- அப்போது ௫
நான் போய், கர்த்தர் எனக்குக் கற்பித்தபடியே
அதை ஐப்பிராத்து நதியின் ஓரத்தில் ஒளித்து
வைத்தேன்.—அப்புறம் சம்பவித்ததேதெனில், ௬
அநேகநாள் சென்றபிற்பாடு கர்த்தர் என்னு
டனே சொன்னதாவது: நீ எழுந்து ஐப்பிராத்துக்
கரைக்குப்போய், நீ அங்கே ஒளித்துவைக்க நாம்
உனக்குக் கற்பித்த கச்சையை அவ்விடத்தில்
எடுத்துக்கொள் என்றார்.—அப்போது நான் ஐப் ௭
பிராத்துக் கரைக்குப்போய், நான் கச்சையை
ஒளித்துவைத்த இடத்திலே தோண்டி அதை எடு
த்துக்கொண்டேன்; ஆனால் இதோ, அந்தக் கச்
சை கெட்டு ஒன்றுக்கும் ஆகாதேபோயிற்று.—

1 எரே. ௧. ௩.—2 ஓசே. ௮.௭

3 எரே. ௪. ௨. ௫ மோ. ௬. ௰௩.

௮ அப்போது கர்த்தருடைய வார்த்தை எனக்கு
உண்டாகி, அவர் சொன்னதாவது:
௯ இப்படியே யூதாவுடைய பெருமையையும்,
எருசலேமுடைய மிகுபெருமையையும் கெட்
டுப்போகப்பண்ணுவோமென்று கர்த்தர் சொல்
௰ லுகிறார்.—நம்முடைய வார்த்தைகளைக் கேட்க
மாட்டோம் என்கிறதும், [1]தங்கள் இருதயத்தின்
கடினத்தில் நடக்கிறதும், வேற்றுத் தேவர்களைச்
சேவிக்கவும் பணிந்துகொள்ளவும் பின்தொடரு
கிறதுமான இந்தப் பொல்லாத சனம், ஒன்றுக்கு
மாகாதேபோன இந்தக் கச்சையைப்போலா
௰௧ கும். — ஏனென்றால், கச்சை மனுஷனுடைய
அரைக்குச் சேர்க்கையாய் இருக்கிறதுபோலே
நாம் இஸ்ரவேல் வீடு அனைத்தையும் யூதாவின்
வீடு அனைத்தையும், நமக்குச் சனமாகவும், கீர்த்
தியாகவும், துதியாகவும், சிங்காரமாகவும் நமக்
குச் சேர்க்கையாக்கிக்கொண்டோம்; ஆனால்
அவர்கள் கேளாதேபோனார்களென்று கர்த்தர்
சொல்லுகிறார்.
௰௨ சகல சாடிகளும் மதுவினாலே நிரப்பப்படு
மென்று, இஸ்ரவேலின் பராபரனாகிய கர்த்தர்
உரைக்கிறார் என்கிற வார்த்தையை அவர்களுட
னே சொல்; அதற்கு அவர்கள்: சகல சாடிக
ளும் மதுவினாலே நிரப்பப்படுவதை அறியவே
அறியோமோவென்று உன்னுடனே சொல்லு
௰௩ வார்கள்.—அப்போது நீ அவர்களுக்குச் சொல்
லவேண்டியதாவது: கர்த்தர் உரைக்கிறது ஏதெ
னில், இதோ, இந்தத் தேசத்தின் குடிகளெல்லா
ரையும், தாவீதினுடைய ஆசனத்தின்மேல் உளுக்
காந்திருக்கிற இராசாக்களையும்; ஆசாரியர்களை
யும், தீர்க்கதரிசிகளையும், எருசலேமின் குடிகள்
எல்லாரையும் நாம் வெறியினாலே நிரப்பி, —
௰௪ அவர்களைச் சகோதரனோடே சகோதரனையும்,
பிதாக்கள் பிள்ளைகளை ஏகமாகவும் நொறுங்க
டிப்போமென்று கர்த்தர் சொல்லுகிறார்; நாம் அ
வர்களை அழிக்காதபடிக்கு மன்னிப்பதுமில்லை,
தப்பவிடுவதுமில்லை, இரங்குவதுமில்லையென்று
சொல்லென்றார்.
௰௫ நீங்கள் கேட்டு, செவிகொடுங்கள்; மேட்டி
மையாய் இராதிருங்கள்; ஏனென்றால், கர்த்தர்
௰௬ இதைச்சொன்னார்.—அவர் அந்தகாரத்தை வரப்
பண்ணுகிறதற்குமுன்னும், இருளுள்ள மலைகளில்
உங்கள் கால்கள் இடறுகிறதற்குமுன்னும்; உங்
கள் பராபரனாகிய கர்த்தருக்கு மகிமையைச் செ
லுத்துங்கள்; மற்றப்படிக்கு [2]வெளிச்சத்துக்குக்
காத்திருப்பீர்கள்; ஆனால் அவர் அதை மரண
௰௭ நிழலாக்கி அந்தகாரப்படுத்திவிடுவார்.—நீங்கள்
இதைக் கேளாமல்போனீர்களேயாகில், என் ஆத்
துமா ஒளிப்பிடங்களில் உங்கள் பெருமையின்
நிமித்தம் அழுதுகொண்டு, கர்த்தருடைய மந்தை
சிறைப்பட்டுப்போனதென்று [3]என் கண் மிக
வும் கண்ணீர்விட்டுக் கண்ணீராய் ஓடும்.
௰௮ தாழ உளுக்காருங்கள்; ஏனெனில், [4]உங்கள்
தலைகளின் சிங்காரமாகிய உங்கள் மகிமையின்
கிரீடம் விழுந்ததென்று இராசாவுக்கும், இராசாத்
திக்கும் சொல். — தெற்குத்திசைப் பட்டணங் ௰௯
கள் அடைக்கப்பட்டன; அவைகளைத் திறப்பார்
இல்லை; யூதா அனைத்தும் குடிவிலக்கப்பட்டுப்
போம்; அது சமூலமாய் எடுபட்டுப்போம்.—
உங்கள் கண்களை ஏறெடுத்து, வடக்கேயிருந்து ௨௰
வருகிறவர்களைப் பாருங்கள்; உனக்குக் கொடுக்
கப்பட்டிருந்த மந்தையும், உன் மகிமையான
ஆட்டுக்கிடையும் எங்கே?—அவர் உன்னை விசா ௨௧
ரிக்கும்போது என்ன சொல்லுவாய்? அவர்கள்
உன்மேல் ஆதிக்கரும் தலைவருமாயிருக்க, நீ அ
வர்களைப் பழக்குவித்தாயே; [5]பிள்ளைபெறுகிற
வளைப்போலே உன்னை வேதனைகள் பிடிப்ப
தில்லையோ?—இவைகள் என்மேல் நேரிட்டது ௨௨
ஏதென்று நீ உன் இருதயத்திலே சொன்னாயே
யாகில், உன்னுடைய திரளான அக்கிரமத்தின்
நிமித்தமே உன் வஸ்திரத்து ஓரங்கள் விலக்கப்
பட்டு, உன் குதிகால்கள் பலவந்தஞ்செய்யப்படு
கின்றன.
[6]எத்தியோப்பியன் தன் தோலையும், சிவிங்கி ௨௩
தன் புள்ளிகளையும் மாற்றிவிடக்கூடுமோ? கூடு
மானால், பொல்லாப்புக்குப் பழகின நீங்களும்
நன்மைசெய்யக்கூடும்.—ஆனதுகொண்டு [7]வனாந் ௨௪
தரக்காற்றால் அடிபட்டுப் பறக்கிற துரும்பைப்
போலே அவர்களைச் சிதறஅடிப்போம்.—நீ நம்மை ௨௫
மறந்து, பொய்யை நம்பினபடியினாலே, இது உ
ன்னுடைய வீதமும், நம்மால் உனக்கு அளக்கப்
படும் உன்னுடைய பங்குமாய் இருக்குமென்று
கர்த்தர் சொல்லுகிறார்.—நாமும் உன் வஸ்திரத்து ௨௬
ஓரங்களை உன் முகத்தின்மேல் விழத்தக்கவித
மாய் எடுத்துப்போடுவோம். — அப்போது உன் ௨௭
விபசாரங்களும், உன் கனைக்குதல்களும், வெளி
யிலே மேடுகளின்மேல் நீ பண்ணின வேசித்த
னத்தின் தோஷமுமென்கிற உன்னுடைய அபி
மானம் காணப்படும், உன் அருவருப்புகளை நாம்
கண்டோம்; எருசலேமே, உனக்கு ஐயோ! நீ
சுத்திகரித்துக்கொள்வதில்லையோ? இது இன்
னம் எத்தனைகாலத்துக்குப்பிற்பாடு ஆகுமென்
கிறார்.

## ௰௪. அதிகாரம்.

௧. துன்பத்துக்கு ஏதுவாகிய பஞ்சத்தின்நிமித்தம், ௭. எரேமியா மன்றாடினது. ௰. சனத்துக்காக வேண்டுதலைக் கர்த்தர் விரும்பார் என்பது. ௰௩. கள்ளத்தீர்க்கதரிசிகளால் மோசம்போன சனத்திற்குப் போகவில்லையென்பது. ௰௭. எரேமியா அவர்களுக்காக முறையிட வைப்பட்டது.

வற்பகாலத்தைக்குறித்து எரேமியாவுக்கு உண் ௧
டான கர்த்தருடைய வசனம்.
யூதா துக்கித்து, அதின் வாசல்கள் பெலன் அற் ௨
றுக்கிடக்கின்றன; தரைமட்டும் குனிந்து, கரிக
றுத்துத் திரிகிறார்கள்; எருசலேமின் கூக்குரல்
எழும்புகிறது.—அவர்களில் பிரபலமானவர்கள் ௩
தங்கள் சிறியவர்களைத் தண்ணீருக்கு அனுப்புகி
றார்கள் இவர்கள் பள்ளங்களுக்கு வந்து, தண்
ணீரைக் காணாமல் தங்கள் வெறும்பாத்திரங்க

1 எரே. ௰௧. ௰௨.—2 ஏசா. ௫௯. ௯.—3 எரே. ௮. ௨௧ : ௰௪. ௰௭.—4 புல. ௫. ௰௬.—5 எரே ௬. ௨௪: ௨௨. ௨௩.—6 சங். ௫௫. ௨௨.—7 சங். ௧. ௪

ளோடே திரும்பி வருகிறார்கள்; வெட்கி, நாணி,
தங்கள் தலையை மூடிக்கொள்ளுகிறார்கள். —
௪ ஏனெனில், தேசத்தின்மேல் மழை இல்லாததி
னாலே தரை வெடித்திருக்கிறது; பயிர்செய்கிற
வர்கள் வெட்கி, தங்கள் தலையை மூடிக்கொள்
௫ ளுகிறார்கள்.—ஏனென்றால், வெளியின் பெண்
மானும் குட்டிபோட்டு, புல் முளைக்காததினா
௬ லே அவைகளை விட்டுப்போகும்.—காட்டுக்கழு
தைகள் உயர்ந்த நிலங்களில் நின்று, முதலைகளை
ப்போலே காற்றை உட்கொள்ளுகின்றன; புல்
இல்லாததினாலே அவைகளுடைய கண்கள் பூத்
துப்போகின்றனவென்றார்.

௭ கர்த்தாவே, [1]எங்கள் அக்கிரமங்கள் எங்க
ளுக்கு விரோதமாக உத்தரவுசொன்னாலும், உம்
முடைய நாமத்தின்நிமித்தம் கிருபைசெய்யும்;
ஏனெனில் எங்கள் மாறுபாடுகள் திரளாயிருக்
கின்றன; உமக்கு விரோதமாய்ப் பாவம்செய்
௮ தோம்.—இஸ்ரவேலின் நம்பிக்கையே, இக்கட்
டின் காலத்தில் அதின் இரட்சகரே, நீர் தேசத்
தில் பரதேசியைப்போலவும், இராத்தங்க இறங்
குகிற வழிப்போக்கனைப்போலவும் இருப்பா
௯ னேன்?—நீர் விடாய்த்துப்போன புருஷனைப்
போலவும் இரட்சிக்கமாட்டாத பராக்கிரமனைப்
போலவும் இருப்பானேன்? கர்த்தாவே, தேவரீர்
எங்கள் நடுவிலிருக்கிறவராமே; [2]உம்முடைய
நாமம் எங்களுக்குத் தரிக்கப்பட்டுமிருக்கிறதே;
எங்களை விட்டுப்போகாதிரும்.

௰ அவர்கள் தங்கள் கால்களை அடக்கிக்கொள்
ளாமல், அலைய விரும்புகிறார்களென்று கர்த்தர்
இந்தச் சனத்தைக்குறித்துச் சொல்லுகிறார்; ஆ
கையால், கர்த்தர் அவர்கள்மேலே பிரியமாயிரா
மல், இப்போது அவர்கள் அக்கிரமத்தை நினைத்
௰௧ து, அவர்கள் பாவங்களை விசாரிப்பார்.—கர்த்தர்
என்னுடனே சொன்னதாவது: நீ [3]இந்தச் சனத்
துக்காக நன்மைக்கென்று விண்ணப்பம்பண்
௰௨ ணாயாக.—[4]அவர்கள் உபவாசித்தாலும் நாம்
அவர்கள் கூப்பிடுதலைக் கேட்பதில்லை; [5]அவர்
கள் தகனபலிகளையும் காணிக்கைகளையும் செ
லுத்தினாலும், நாம் அவர்கள்மேலே பிரியமாயி
ருப்பதில்லை; பட்டையத்தாலும், பஞ்சத்தாலும்,
பெருவாரிக்காய்ச்சலாலும் நாம் அவர்களை நிர்
மூலமாக்குவோமென்றார்.

௰௩ அப்போது நான், ஆ கர்த்தராகிய ஆண்டவ
ரே, இதோ, நீங்கள் பட்டையத்தைக் காண்ப
தில்லை;. உங்களுக்குப் பஞ்சம் வருவதில்லை;
[6]உறுதியான சமாதானத்தையே இவ்விடத்தில்
உங்களுக்குத் தருவோமென்றார் என்று தீர்க்க
தரிசிகள் அவர்களுக்குச் சொல்லுகிறார்கள் என்
௰௪ றேன்.—அப்போது கர்த்தர் என்னுடனே சொ
ன்னதாவது: தீர்க்கதரிசிகள் [7]நம்முடைய நாமத்
தைக்கொண்டு, பொய்யாய்த் தீர்க்கதரிசனம்
சொல்லுகிறார்கள்; நாம் அவர்களை அனுப்பினது
மில்லை; அவர்களுக்குக் கற்பித்ததுமில்லை; அ
வர்களோடே பேசினதுமில்லை; அவர்கள் கள்
ளத்தரிசனத்தையும், நிமித்தத்தையும், இல்லா
விசேஷத்தையும், தங்கள் இருதயத்தின் கபடத்
தையுமே, உங்களுக்குத் தீர்க்கதரிசனமாகச் சொ
ல்லுகிறார்கள்.—ஆனதுகொண்டு, நாம் அனுப் ௰௫
பாதிருந்தும், நமது நாமத்தைக்கொண்டு தீர்க்கத
ரிசனஞ் சொல்லி, இந்தத் தேசத்திலே பட்டை
யமும் பஞ்சமும் வருவதில்லையென்கிற தீர்க்க
தரிசிகளைக்குறித்துக் கர்த்தர் உரைக்கிறதாவது:
பட்டையத்தாலும், பஞ்சத்தாலும் இப்படிக்கொ
த்த தீர்க்கதரிசிகள் சாவார்கள்.—அவர்கள் தீர்க் ௰௬
கதரிசனம் சொல்லுகிற சனமோவெனில், எருச
லேமின் வீதிகளிலே பட்டையத்தாலும், பஞ்சத்
தாலும் அழிந்து, அவர்களும் அவர்கள் பெண்
சாதிகளும், அவர்கள் குமாரரும், அவர்கள் குமா
ரத்திகளும் அடக்கம்பண்ணுவாரில்லாமல் கிடப்
பார்கள்; அவர்களுடைய பொல்லாப்பை அவர்
கள்மேல் ஊற்றிவிடுவோம்.—இந்தவார்த்தையை ௰௭
அவர்களுக்குச் சொல்லுவாயாகவென்றார்; [8]என்
கண்கள் ஓயாமல், இரவும்பகலும் கண்ணீராய்
ஓடிக்கொண்டிருக்கும்; ஏனெனில். என் சன
மென்ற குமாரத்தியாகிய கன்னியாஸ்திரி பெரிய
நொறுங்குதலாலும், மகா வேதனையுள்ள அடியி
னாலும் நொறுக்கப்பட்டிருக்கிறாள்.—வெளியே ௰௮
போனேனாகில், இதோ, பட்டையத்தால் கொன்
றுவிடப்பட்டவர்கள்; பட்டணத்தில் வந்தேனே
யாகில், இதோ, பஞ்சத்தாலே தொய்ந்தவர்கள்;
அதேனென்றால், தீர்க்கதரிசிகளும், ஆசாரியர்க
ளும் ஒன்றும் அறியாமலே தேசத்தில் அலைகி
றார்கள்.

யூதாவை வெறுக்கவே வெறுத்தீரோ? சீயோன் ௰௯
உம்முடைய ஆத்துமாவுக்கு அரோசிகமாயிற்
றோ? நாங்கள் ஆரோக்கியம் அடையக்கூடாதப
டியாய் எங்களை ஏன் அடித்தீர்? சமாதானத்துக்குக்
காத்திருந்தோம், ஆனால் நலமில்லை; ஆரோக்கிய
காலத்துக்குக் காத்திருந்தோம், ஆனால் இதோ
கெடி.—கர்த்தாவே, [9]எங்கள் ஆகாமியத்தையும் ௨௰
எங்கள் பிதாக்களின் அக்கிரமத்தையும் அறிந்தி
ருக்கிறோம்; ஏனெனில், உமக்கு விரோதமாய்ப்
பாவஞ்செய்தோம்.— உம்முடைய நாமத்தின் ௨௧
நிமித்தமாய் எங்களை அருவருக்காதிருப்பீராக;
உமது மகிமையின் ஆசனத்தை ஈனப்படுத்தீராக;
எங்களோடே உமக்கு இருக்கிற உடம்படிக்கை
யை அவத்தமாக்காதபடியாய் நினைத்தருளும்.—
புறச்சாதிகளுடைய வீண் தேவர்களில் வருஷிக் ௨௨
கப்பண்ணத்தக்கவர்கள் உண்டோ? அல்லது, வா
னங்கள் தானாய் மழைகளைக் கொடுக்குமோ? எங்
கள் பராபரனாகிய கர்த்தராயிருக்கிற தேவரீரல்ல
வோ அதைச் செய்கிறவர்; ஆகையால், உமக்குக்
காத்திருக்கிறோம்; ஏனெனில், [10]தேவரீர் இவை
களை எல்லாம் உண்டுபண்ணினீர்.

1 எரே. ௨. ௰௯.
2 எரே. ௰௫. ௰௬.
3 எரே. ௭. ௰௬: ௰௧. ௰௪.
4 ஏசா. ௫௮. ௩.
5 எரே. ௬. ௨௰. ஏசா. ௧. ௰௧.
6 எரே. ௮. ௰௧, ௰௪.
7 எரே. ௨௩. ௨௧: ௨௭. ௰௫: ௨௯. ௨௧. தானி ௯. ௮.—10 எரே. ௫. ௨௪: ௰.
௮, ௯. மத். ௭. ௰௫.—8 எரே. ௯. ௰௧. சங். ௱௪௫. ௭: ௱௪௭. ௮.
௨௧: ௰௩. ௰௭.—9 சங். ௱௬. ௬.

## ௰௫. அதிகாரம்.

*௧. யூதரை முற்றும் நீக்கலும், அபரிமிதமான நியாயத்தீர்ப்புகளும், ௰. எரேமியா அவர்களைக்குறித்து முறையிட்டுத் தனக்காக வாக்குத்தத்தத்தையும், ௰௨. அவர்களுக்காகப் பயமுறுத்தலையும் பெற்றது. ௰௫. அவன் செபம் பண்ணி, ௰௯. கிருபையுள்ள வாக்குத்தத்தத்தைப் பெற்றுக்கொண்டது.*

௧ கர்த்தர் என்னுடனே சொன்னதாவது: [1]மோசே
யும் சாமுவேலும் நம்முடைய முகத்துக்குமுன்
பாக நின்றாலும், நம்முடைய ஆத்துமா இந்தச் ச
னத்தை நோக்குவதில்லை; இவர்கள் நம்முடைய
முகத்தைவிட்டுப் புறப்பட்டுப் போகும்படிக்கு
௨ இவர்களைத் துரத்திவிடு.—எங்கே புறப்பட்டுப்
போவோமென்று அவர்கள் உன்னைக் கேட்பது
ண்டானால், நீ அவர்களுடனே: [2]சாவுக்கு ஏது
வானவர்கள் சாவுக்கும், பட்டையத்துக்கு ஏது
வானவர்கள் பட்டையத்துக்கும், பஞ்சத்துக்கு
ஏதுவானவர்கள் பஞ்சத்துக்கும், சிறையிருப்
புக்கு ஏதுவானவர்கள் சிறையிருப்புக்கும் நேரா
சத்தானே என்று கர்த்தர் உரைக்கிறாரென்று
௩ சொல்வாயாக. — கொன்றுபோடும் பட்டைய
மும், பிடித்துஇழுக்கும் நாய்களும், பட்சிப்பதும்
அழிப்பதுமான ஆகாயத்துப் பறவைகளும், பூமி
யின் மிருகங்களுமென்கிற நான்குவிதமான தீங்
குகளை நாம் அவர்கள்மேலே கட்டளையிடுவோ
௪ மென்று கர்த்தர் சொல்லுகிறார்.—எசேக்கியாவின்
குமாரனும், யூதாவின் இராசாவுமாகிய [3]மனாசே
எருசலேமிலே செய்ததின்நிமித்தமாக அவர்
களைப் பூமியிலுள்ள எல்லா இராச்சியங்களிலும்
அலையப்பண்ணுவோம்.

௫ ஏனெனில், எருசலேமே, யார் உன்மேல் இரங்
கலாம்? யார் உன்மேலே பரிதபிக்கலாம்? யார்
உன்னண்டைக்குத் திரும்பி, உன் சுகத்துக்காக
௬ விசாரிக்கலாம்?—நீ நம்மைவிட்டுப் பின்வாங்
கிப்போனாய்; ஆகையால், நமது கையை உனக்கு
விரோதமாய் நீட்டி, உன்னை அழிப்போம்; தயை
செய்ய விதனப்பட்டோமென்று கர்த்தர் சொல்
௭ லுகிறார்.—தேசத்தின் வாசல்களில் அவர்களைத்
[4]தூற்றுக்கூடையாலே தூற்றிப்போடுவோம்; நம்
முடைய சனங்கள் வழிகளைவிட்டுத் திரும்பாத
படியினாலே நாம் அவர்களைப் பிள்ளைகள் அற்ற
௮ வர்களாக்கி அழிப்போம்.-கடற்கரை மணலைப்
பார்க்கிலும் அதிக விதவைகள் நமக்கு அவர்க
ளில் உண்டாவார்கள்; பட்டப்பகலிலே பாழ்க்
கடிக்கிறவனை, அவர்கள்மேலே, வாலிபருடைய
தாயின்மேலுந்தானே வரப்பண்ணுவோம்; அவ
ள்மேலே பட்டணத்தின் கலகத்தையும், பயங்
௯ கரங்களையும் விழப்பண்ணுவோம்.—[5] ஏழு பிள்
ளைகளைப் பெற்றவள் களைத்துப்போகிறாள்;
அவள் ஆத்துமா போய்விடும்; இன்னம் பகலாயி
ருக்கையில் அவர்களுடைய சூரியன் அஸ்தமித்
துப்போகிறது; வெட்கமும் இலச்சையும் அடை
கிறாள்; அவர்களில் மீதியாகிறவர்களையோ அவர்
களுடைய சத்துருக்களுக்குமுன்பாகப் பட்டை
யத்துக்கு ஒப்புக்கொடுப்போமென்று கர்த்தர்
சொல்லுகிறார்.

[6]என் தாயாரே, தேசத்துக்கெல்லாம் வழக் ௰
குக்கும் வாதுக்கும் வைக்கப்பட்ட என்னை
நீர் பெற்றதினால் எனக்கு ஐயோ! நான் வட்
டிக்குக் கொடுத்ததுமில்லை; அவர்கள் எனக்கு
வட்டிக்குக் கொடுத்ததுமில்லை; என்றாலும்,
எல்லாரும் என்னைச் சபிக்கிறார்கள்.—கர்த்தர் ௰௧
சொன்னதாவது: உன்னில் மீதியாயிருப்பவர்
கள் நன்மைக்கு வைக்கப்படுவார்கள்; தீங்கின்
காலத்திலும் நெருக்கத்தின் காலத்திலும் உனக்
காக நாம் சத்துருவுக்கு எதிர்ப்பட்டு, உனக்குச்
சகாயம்பண்ணுவோமென்று மெய்யாகவே சொ
ல்லுகிறோம். — வடக்கேயிருந்து வரும் இரும் ௰௨
பையும் வெண்கலத்தையும் இரும்பு நொறுக்
குமோ? — உன்னுடைய எல்லாப் பாவங்க ௰௩
ளின்நிமித்தமும், நாம் உன்னுடைய எல்லா
எல்லைகளிலும், உன் ஆஸ்தியையும், உன் பொ
க்கிஷங்களையும் கிரயமில்லாமல் [7]சூறையிடு
வோம். — நாம் உன்னை நீ அறியாத தேசத்தில் ௰௪
உன் சத்துருக்கள் வசமாகத் தாண்டிப்போகப்
பண்ணுவோம்; ஏனெனில் உங்கள்மேல் எரியப்
போகிற அக்கினி [8]நமது கோபத்தினாலே மூண்
டதென்றார்.

கர்த்தாவே, தேவரீர் அதை அறிவீர்; தேவரீர் ௰௫
என்னை நினைத்து, எனக்கு நேரிட்டு, என்னைத்
துன்பப்படுத்துகிறவர்களுக்கு என் நிமித்தம் நீதி
யைச் சரிக்கட்டும்; உம்முடைய நீடிய கோபத்
தில் என்னை வாரிக்கொள்ளாதிரும்; நான் உம்மு
டையநிமித்தம் நிந்தையைச் சுமக்கிறேன் என்று
அறியும். — உம்முடைய வார்த்தைகள் கிடை ௰௬
த்தவுடனே அவைகளை உட்கொண்டேன்; [9]உம்
முடைய வார்த்தைகள் எனக்குச் சந்தோஷ
மும், என் இருதயத்துக்கு மகிழ்ச்சியுமானவை;
ஏனெனில், சேனைகளின் பராபரனாகிய கர்த்
தாவே, உம்முடைய நாமம் எனக்குத் தரிப்பிக்
கப்பட்டதே. — [10]நான் பரியாசக்காரருடைய ௰௭
ஆலோசனையில் உளுக்காந்து களிகூர்ந்ததில்லை;
உம்முடைய கையின்நிமித்தம் தனித்து உளுக்
காந்தேன்; ஏனெனில், சினத்தால் என்னை நிரப்
பினீர்.—என் நோவு நித்தியகாலமாகவும், என்னு ௰௮
டைய காயம் ஆறாத கேவலமாகவும் இருப்பா
னேன்? எனக்கு நீர் பிசகுள்ளவனைப்போலவும்,
நிசமில்லாத தண்ணீரைப்போலவும் இருப்
பீரோ?

இதின்நிமித்தம் கர்த்தர் சொல்லுகிறதாவது: நீ ௰௯
திரும்பினால் நாம் உன்னைத் திரும்பச் சீர்ப்படுத்
துவோம்; நமது முகத்துக்குமுன்பாக நிலைத்துமி
ருப்பாய்; நீ விலையேறப்பெற்றதைத் தீழ்ப்பா
னதை விட்டுப்பிரித்தால், நம்முடைய வாயைப்
போலிருப்பாய்; நீ அவர்களண்டைக்குத் திரும்
பாமல், அவர்கள் உன்னண்டைக்குத் திரும்பு

1 சங். ௯௯. ௬.
2 சகரி. ௰௧. ௯.
3 ௨ இரா. ௨௧. ௰௧: ௨௩ ௨௬. ௨ நாளா. ௩௩. ௯.
4 மத். ௩. ௰௨. —5 ஆமோ ௮. ௯.
6 எரே. ௨௰ ௭. ௧௪. —7 எரே. ௰௭. ௩.
8 ௫ மோ. ௩௨. ௨௨. —9 சங். ௰௯. அ: ௩௰௯. ௭௩. —10 சங். ௧ ௧.

௨௰ வார்களாக.—ஏனெனில், உன்னை இந்தச் சனத்
துக்கு எதிரே [1]அரணான வெண்கல அலங்கமாக்
குகிறோம்; அவர்கள் உனக்கு விரோதமாய் யுத்
தம்பண்ணுவார்கள்; ஆனால் உன்னை மேற்கொள்
ளாதே இருப்பார்கள்; ஏனெனில், உன்னை இர
ட்சிப்பதற்காகவும், உன்னைத் தப்புவிப்பதற்காக
வும், நாம் உன்னுடனே இருக்கிறோமென்று கர்த்
௨௧ தர் சொல்லுகிறார்.—நாம் உன்னைப் பொல்லாத
வர்களின் கைக்குத் தப்புவித்து, உன்னைப் பல
வந்தரின் கைப்பிடிக்கு நீங்கலாக்கி விடுவிப்
போமென்றார்.

## ௰௬. அதிகாரம்.

௧. நிர்க்கதரிசி விவாகத்தையும், துக்கிப்பும் விருந்துமுள்ள வீடுகளையும் விலக்குவதின் அடையாளங்களினாலே, ௰. யூதர்கள் தங்கள் பிதாக்களைவிட அதிக கெடுதியுள்ளவர்களாயிருந்தமையால், அவர்கள் முற்றும் நாசம் அடைவதைக் காட்டினது. ௰௪. அவர்கள் சிறையிருப்பிலிருந்து திரும்பி வருவது எகிப்திலிருந்து விடுதலையாக்கப்பட்டதைவிட அதிக வியப்பாயிருக்குமென்பது. ௰௬. பராபரன் அவர்களுடைய விக்கிரக ஆராதனையைக்குறித்து இரட்டிப்பான பதிலளிப்பதைச் சொன்னது.

௧ கர்த்தருடைய வார்த்தை எனக்கு உண்டாகி,
௨ அவர் சொன்னதாவது:—நீ ஒரு பெண்ணை விவா
கம்பண்ணவேண்டாம்; இவ்விடத்தில் உனக்
குக் குமாரரும் குமாரத்திகளும் வேண்டாம்.—
௩ ஏனெனில் இவ்விடத்திலே பிறக்கிற குமாரரை
யும் குமாரத்திகளையும், அவர்களைப் பெறுகிற
தாய்களையும், இந்தத் தேசத்தில் அவர்களைப் பெ
றுகிற பிதாக்களையுங்குறித்துக் கர்த்தர் சொல்லு
௪ கிறது ஏதெனில்,—மகா நோயுள்ள சாவுகளால்
சாவார்கள்; புலம்பப்படாமலும், [2]அடக்கம்பண்
ணப்படாமலும், நிலத்தின்மேல் எரு ஆவார்கள்;
பட்டயத்தாலும் பஞ்சத்தாலும் மடிந்துபோ
வார்கள்; அவர்களுடைய பிரேதம் ஆகாசத்துப்
பறவைகளுக்கும் பூமியின் மிருகங்களுக்கும் இ
௫ ரையாகும்.—ஆகையால் கர்த்தர் சொல்லுகிறதா
வது: நீ துக்கவீட்டில் பிரவேசியாமலும், புலம்
பப்போகாமலும், அவர்களுக்குப் பரிதவிக்காம
லும் இருப்பாயாக; ஏனெனில் நம்முடைய சமா
தானத்தையும், கிருபையையும், இரக்கத்தையும்,
இந்தச் சனத்தைவிட்டு எடுத்துப்போட்டோ
௬ மென்று கர்த்தர் சொல்லுகிறார்.—[3]பெரியோரும்
சிறியோரும் இந்தத் தேசத்திலே அடக்கம்பண்
ணுவார் இல்லாமல் சாவார்கள்; ஒருவரும் அவர்
கள்மேல் புலம்புவதுமில்லை; அவர்கள்நிமித்தம்
கீறிக்கொண்டு, மொட்டையிடுவதுமில்லை.—
௭ செத்தவன்மேல் துக்கம்ஆற்ற அவர்களுக்கு ஒன்
றும் பங்கிடப்படுவதுமில்லை; ஒருவனுடைய தக
ப்பன்மேலாகிலும், ஒருவனுடைய தாயின்மே
லாகிலும், அவர்களுக்குத் தேற்றரவின் பாத்திரம்
குடிக்கக் கொடுக்கப்படுவதுமில்லை.
௮ நீ அவர்களோடே புசித்துக்குடிக்க உளுக்
காருகிறதற்கு [4]விருந்துவீட்டிலும் பிரவேசியா
௯ யாக.—ஏனெனில், இதோ, இவ்விடத்திலே
நாம் உங்கள் கண்களுக்குமுன்பாகவும், உங்க
ளுடைய நாள்களிலுமே, [5]சந்தோஷத்தின் சத்
தத்தையும், மகிழ்ச்சியின் சத்தத்தையும், மணவா
ளனின் சத்தத்தையும், மணவாட்டியின் சத்தத்
தையும், ஓயப்பண்ணுவோமென்று இஸ்ரவே
லின் பராபரனாகிய சேனைகளையுடைய கர்த்தர்
சொல்லுகிறார்.
நீ இந்த வார்த்தைகளையெல்லாம் இந்தச் சனத் ௰
துக்கு அறிவிக்கும்போது, அவர்கள் உன்னுட
னே: [6]கர்த்தர் எங்கள்மேல் இத்தனை பெரிய தீங்
காகச் சொல்லுவானேனென்றும், எங்கள் அக்
கிரமம் என்ன? நாங்கள் எங்கள் பராபரனாகிய
கர்த்தருக்கு விரோதமாகச்செய்த எங்கள் பாவம்
என்னவென்றும் சொல்வதுண்டானால்,
நீ அவர்களுடனே சொல்லவேண்டியதாவது: ௰௧
உங்கள் பிதாக்கள் நம்மைவிட்டு அந்நியதேவர்
களைப் பின்சென்று, அவர்களைச் சேவித்து, அவர்
களைப் பணிந்துகொண்டு, நம்மைவிட்டு, நம்மு
டைய நியாயப்பிரமாணத்தைக் கைக்கொள்ளா
தேபோனார்களே.—[7]நீங்கள் உங்கள் பிதாக்களைப் ௰௨
பார்க்கிலும் அதிக கேடாகவும் நடந்ீர்களே;
இதோ, நீங்கள் அவரவர் நம்முடைய சொல்லைக்
கேளாதபடிக்கு, [8]உங்கள் பொல்லாத இருதயத்
தின் கடினத்தைப் பின்செல்லுகிறவர்களாமே.—
ஆனபடியினாலே உங்களை இந்தத் தேசத்திலிரு ௰௩
ந்து நீங்களும் உங்கள் பிதாக்களும் அறியாத தே
சத்திலே துரத்திவிடுவோம்; அங்கே இரவும் பக
லும் அந்நியதேவர்களைச் சேவிப்பீர்கள்; அங்கே
நாம் உங்களுக்குத் தயையைக் கட்டளையிடுவது
மில்லை.
ஆனதுகொண்டு, இதோ, நாள்கள் வருமென்று ௰௪
கர்த்தர் சொல்லுகிறார்; [9]அப்போது அப்புறம் இஸ்
ரவேல் புத்திரரை எகிப்துதேசத்திலிருந்து ஏறப்
பண்ணின கர்த்தருடைய சீவனைக்கொண்டு சத்
தியம்பண்ணப்படாமல்,—இஸ்ரவேல் புத்திரரை ௰௫
வடதேசத்திலும், தாம் அவர்களைத் துரத்தியிருந்த
எல்லாத் தேசங்களிலுமிருந்து ஏறப்பண்ணின
கர்த்தருடைய சீவனைக்கொண்டு சத்தியம்பண்
ணப்படும்; ஏனென்றால், நாம் அவர்கள் பிதாக்
களுக்குக்கொடுத்த அவர்களுடைய தேசத்துக்கு
அவர்களைத் திரும்பப்பண்ணுவோம்.
இதோ, நாம் மீன்பிடிக்கிற அநேகரை அழைத் ௰௬
தனுப்புவோமென்று கர்த்தர் சொல்லுகிறார்; இ
வர்கள் அவர்களைப் பிடிப்பார்கள்; அதற்குப்பி
றகு வேட்டைக்காரராகிய அநேகரை அழைத்த
னுப்புவோம்; இவர்கள் அவர்களை எல்லா மலைக
ளிலும், எல்லாக் குன்றுகளிலும், கல்மலைகளின்
வெடிப்புகளிலும் வேட்டையாடிவருவார்கள்.—
ஏனென்றால், [10]நம்முடைய கண்கள் அவர்களு ௰௭
டைய எல்லா வழிகளின்மேலும், நோக்கமாயி
ருக்கின்றன; அவைகள் நம்முடைய முகத்துக்
குமுன்பாக ஒளித்திருக்கிறதில்லை; அவர்களு
டைய அக்கிரமம் நம்முடைய கண்களுக்குமுன்
பாக மறைவாய் இருக்கிறதுமில்லை.—நாம் முதல் ௰௮

1 எரே. ௧. ௰௮.
2 எரே. ௰௪. ௰௬
3 ௩ மோ. ௰௯. ௨௮.
4 பிர. ௭. ௨.
5 எரே. ௭. ௩௪.—6 எரே. ௫. ௰௯.
7 எரே. ௭. ௨௬.—8 எரே. ௰௩. ௰.
9 எரே. ௨௩. ௭, ௮.—10 எரே. ௨௩. ௨௪.

இரட்டிப்பாய் அவர்களுடைய அக்கிரமத்துக்கும், அவர்களுடைய பாவத்துக்கும் நீதியைச் சரிக்கட்டுவோம்; ஏனென்றால், அவர்கள் நம்முடைய தேசத்தின் பரிசுத்தத்தைக் கொலைத்து, நம்முடைய சுதந்தரத்தைச் சீயென்னப்படத்தக்கதும், அருவருக்கப்படத்தக்கதுமான தங்கள் காரியங்களின் நாற்றத்தினாலே நிரப்பினார்கள் என்றார்.

௰௯ என் பெலனும், என் கோட்டையும், நெருக்
கப்படுகிற நாளில் என் அடைக்கலமுமாகிய
கர்த்தாவே, உம்மண்டைக்குச் சாதிகள் பூமியின்
கடையாந்தரங்களிலிருந்துவந்து, மெய்யாகவே,
எங்கள் பிதாக்கள் பிரயோசனமில்லாத பொய்
யையும் மாயையையும் கைக்கொண்டார்கள்
௨௰ என்பார்கள்.—மனுஷன் தனக்குத் தேவர்களை
உண்டுபண்ணுவானோ? அவைகள் தேவர்கள் அ
௨௧ ல்லவே.—ஆனதுகொண்டு, இதோ, இந்தவிசை
நாம் அவர்களுக்குத் தெரியப்பண்ணுவோம்;
நம்முடைய கரத்தையும் நம்முடைய பெலத்தை
யுமே அவர்களுக்குத் தெரியப்பண்ணுவோம்;
அப்போது நம்முடைய நாமம் கர்த்தர் என்று
அறிந்துகொள்ளுவார்கள்.

## ௰௭. அதிகாரம்.

க. யூதாவின் பாவத்துக்காக உண்டாகும் சிறையிருப்பு. ரு. மனிதனை நம்புவது சாபமும், பராபரனை நம்புவது பாக்கியமுமென்பது. ௯. தந்திரமுள்ள இருதயத்தினால் பராபரனை வஞ்சிக்கக்கூடாதென்பது. ௰௨. பராபரனுடைய இரட்சண்ணியம். ௰௫. தீர்க்கதரிசி தன் தீர்க்கதரிசனத்தைப் பரிகாசம்பண்ணுகிறவர்களைக்குறித்து முறையிட்டது. ௰௯. சனங்கள் ஓய்வுநாளை ஆசரிப்பதற்கும், உடம்படிக்கையைப் புதுப்பிக்கிறதற்கும் அவன் அனுப்பப்பட்டது.

௧ யூதாவின் பாவம் இரும்பெழுத்தாணியினாலும்,
வைரத்தின் நுனியினாலும் எழுதப்பட்டு, அவர்
களுடைய இருதயத்தின் பலகையிலும் [1]உங்கள்
பலிபீடங்களுடையகொம்புகளிலும்பதித்திருக்
௨ கிறது.—உயர்ந்த மேடுகளின்மேல் பச்சையான
மரங்களண்டையில் இருந்தஅவர்களுடைய பலி
பீடங்களையும் அவர்களுடைய தோப்புகளையும்
அவர்கள் பிள்ளைகள் நினைக்கும்படியாகத்தா
௩ னே.—நீ உன் எல்லைகளிலெல்லாம்செய்த பாவத்
தின்நிமித்தமாக நாம் வயல்நிலத்திலுள்ள நமது
பர்வதத்தையும், [2]உன் ஆஸ்தியையும், உன்னு
டைய எல்லாப் பொக்கிஷங்களையும், உன் மே
௪ டைகளையுங்கூடச் சூறையிடுவோம்.—அப்படி
யே நாம் உனக்குக் கொடுத்த சுதந்தரத்தை நீ உன்
னாலேதானே தளரவிட்டுப்போவாய்; நீ அறியா
ததேசத்தில் உன்னை உன் சத்துருக்களுக்கு அடி
மையுமாக்குவோம்; ஏனெனில், [3]நம்முடைய
கோபத்திலே என்றென்றைக்கும் எரியும் அக்கி
னியைக் கொளுத்தினீர்கள்.
௫ [4]மனுஷன்மேல் நம்பிக்கையை வைத்து, சதை
யைத் தன் புயமாக்கிக்கொண்டு, கர்த்தரைவிட்டு
மனம் விலகுகிற மனுஷன் சபிக்கப்பட்டவன்
௬ என்று கர்த்தர் சொல்லுகிறார்.—அவன் அந்தர
வெளியின் இளப்பமான செடியைப்போலிருந்
து, நன்மைவருகிறதைக் காணாமல், வனாந்தரத்
தின் வறட்சிகளிலும், குடியில்லாத உவர்நிலத்தி
லும் தங்குவான்.—[5]கர்த்தர்மேலே நம்பிக்கையை ௭
வைத்து, கர்த்தரைத்தன் நம்பிக்கையாகக்கொண்
டிருக்கிற மனுஷன் ஆசீர்வதிக்கப்பட்டவன்.—
[6]அவன் தண்ணீரண்டையிலே நாட்டப்பட்ட ௮
தும், கால்வாய் ஓரமாகத் தன் வேர்களை விடுகிற
தும், உஷ்ணம் வருகிறதை உணராமல் இலைபச்
சையாயிருக்கிறதும், வறபவருஷத்திலே ஐயப்ப
டாமல் பிசகின்றிக் கனிகொடுக்கிறதுமான மரத்
தைப்போலிருப்பான்.
எல்லாவற்றைப்பார்க்கிலும் இருதயமே திருக் ௯
குள்ளதும் மகா கேடுள்ளதுமாயிருக்கிறது; அதை
அறிபவன் யாவன்?—கர்த்தராகிய நாம் [7]அவனவ ௰
னுக்கு, அவன் வழிகளுக்கும் அவன் செய்கைக
ளின் கனிகளுக்கும் தக்கதைக் கொடுக்கும்ப
டிக்கு, [8]இருதயத்தை ஆராய்கிறவரும் உள்ளிந்தி
ரியங்களைச் சோதித்தறிகிறவருமாயிருக்கிறோம்.
நியாயமில்லாமல் [9]ஐசுவரியத்தைச் சம்பாதிக் ௰௧
கிறவன் முட்டையிட்டுக் கூட்டியும், குஞ்சு
பொரிக்காதேபோகிற கவுதாரிக்குச் சமானமா
னவன்; அவன் தன் பாதிவயதிலே அதைவிட்டு,
தன் முடிவிலே பயித்தியக்காரனாயிருப்பான்.
எங்கள் பரிசுத்தஸ்தலத்தினுடைய தானம் ஆ ௰௨
திகாலமுதற்கொண்டு உயர்ந்த மகிமையின் ஆச
னமாயிருக்கிறது.—இஸ்ரவேலின் நம்பிக்கையா ௰௩
கிய கர்த்தாவே, உம்மை விடுகிற யாவரும் வெட்
கப்படுவார்கள்; நம்மைவிட்டு அகன்றுபோகிற
வர்கள் நிலத்தில் எழுதப்படுவார்கள்; ஏனெனில்,
[10]ஜீவனுள்ள தண்ணீரின் ஊற்றாகிய கர்த்தரை வி
டுகிறார்கள்.
[11]கர்த்தாவே, என்னைக் குணமாக்கும், அப் ௰௪
போது குணமாவேன்; என்னை இரட்சியும், அப்
போது இரட்சிக்கப்படுவேன்; ஏனெனில் தே
வரீர் என் துதி.—[12]இதோ, இவர்கள் என்னுடனே ௰௫
கர்த்தருடைய வார்த்தை எங்கே? அது வரட்டு
மே என்கிறார்கள்.—நானோவெனில், உம்மைப் ௰௬
பின்பற்றுகிற மேய்ப்பனாயிருக்கிறதைவிட்டு,
மிஞ்சிப்போனதுமில்லை; சேவலமான நாளை
இச்சித்ததுமில்லையென்று நீர் அறிவீர்; என் உத
டுகளிலிருந்து புறப்பட்டது உம்முடைய முகத்
துக்குமுன்பாக இருந்தது.—எனக்குக் கலங்க ௰௭
லாக இராதிரும்; [13]தீங்குநாளிலே தேவரீரே என்
அடைக்கலம்.—நான் வெட்கப்படாமல் என் ௰௮
னைத் துன்பப்படுத்துகிறவர்கள் வெட்கப்படு
வார்களாக; நான் கலங்காமல் அவர்கள் கலங்கு
வார்களாக; தேவரீர் தீங்குநாளை அவர்கள்மேலே
வரப்பண்ணி, இரட்டிப்பான நொறுக்குதலால்
அவர்களை நொறுக்கும்.
கர்த்தர் என்னுடனே சொன்னதாவது: நீ போய் ௰௯
யூதாவின் இராசாக்கள் வரத்தும்போக்குமாயிருக்
கிற இந்தச் சனங்களின் புத்திரருடைய வாசலி

1 எரே. ௰௬.௰௮.—2 எரே. ௰௫. ௰௩. 3 எரே. ௰௫.௰௪.—4 சங். ௱௪௬.௩: ௱௪௬.௫.-5 சங். ௨.௰௨: ௱௪௬.௫. ஏசா. ௩௰.௰௮.-6 சங். ௧.௩.-7 எரே. ௨௰.௰௨. சங். ௭.௯.-8 எரே. ௧௨.௰௬. ௧௯.௭.-10 எரே. ௨.௰௩.-11 சங். ௱௯.௧. மத். ௰௬.௨௭. ௧ கொரி. ௩.௮.-9 சங். 12 எரே. ௫.௰௬.-13 எரே. ௰௬. ௰௯.

லும் எருசலேமுடைய எல்லா வாசல்களிலும்
௨௰ நின்றுகொண்டு, — அவர்களுடனே சொல்ல
வேண்டியது ஏதெனில்: இந்த வாசல்களில் பிர
வேசிக்கிற யூதாவின் இராசாக்களும், எல்லா யூத
ரும், எருசலேமுடைய எல்லாக் குடிகளுமாகிய
நீங்கள் கர்த்தருடைய வார்த்தையைக் கேளுங்
௨௧ கள்.—கர்த்தர் சொல்லுகிறதாவது: நீங்கள் ஒய்
வுநாளிலே சுமைகளை எடுத்து, அவைகளை எருச
லேமின் வாசல்களுக்குள் கொண்டுவராதபடிக்
௨௨ கும், — ஓய்வுநாளில் உங்கள் வீடுகளிலிருந்து
சுமையை வெளியே கொண்டுபோகாதபடிக்
கும், ஒரு வேலையையும் செய்யாதபடிக்கும் உங்
கள் ஆத்துமாக்களுக்காக எச்சரிக்கையாயிருந்து,
நாம் உங்கள் பிதாக்களுக்குக் கற்பித்தபடி [1]ஒய்
௨௩ வுநாளைப் பரிசுத்தமாக்குவீர்களாக.—அவர்களோ
கேளாமலும் தங்கள் செவிகளைச் சாய்க்காமலும்
போய், கேளாதபடிக்கும் புத்தியை ஏற்றுக்கொள்
ளாதபடிக்கும் தங்கள் பிடரியைக் கடினப்படுத்
தினார்கள்.
௨௪ நீங்களோவெனில், ஓய்வுநாளில் இந்தப் பட்
டணத்தின் வாசல்களுக்குள்ளே சுமையைக்
கொண்டுவராதபடிக்கும், ஓய்வுநாளில் ஒரு வே
லையையும் செய்யாமல்[2] அதைப் பரிசுத்தமாக்கும்
படிக்கும் நம்முடைய சொல்லைக் கேட்கவே
௨௫ கேட்டால்,—அப்போது [3]தாவீதின் ஆசனத்தில்
உளுக்காந்திருக்கிறவர்களும், இரதங்களின்மே
லும் குதிரைகளின்மேலும் ஏறுகிறவர்களுமாகிய
இராசாக்களும், இராசகுமாரரும், அவர்களும்,
அவர்கள் பிரபுக்களும், யூதாவின் மனுஷரும், எரு
சலேமின் குடிகளும் இந்தப் பட்டணத்தின் வா
சல்களுக்குள்ப் பிரவேசிப்பதுண்டு; இந்தப் பட்
டணம் என்றைக்கும் குடியேறினதுமாயிருக்
௨௬ கும்.—யூதாவின் பட்டணங்களிலும், எருசலே
மின் சுற்றுப்புறமான ஊர்களிலும், பென்யமீன்
தேசத்திலும், பள்ளத்தாக்கான சீமையிலும், மலைச்
சீமையிலும், தெற்கிலுமிருந்து சனங்கள் சர்வாங்
கதகனங்களையும், பலிகளையும், காணிக்கைகளை
யும், தூபத்தையும் கொண்டுவந்து, தோத்திரப்ப
லிகளையும் கர்த்தருடைய வீட்டுக்குக் கொண்டு
வருவார்கள்.
௨௭ நீங்கள் ஓய்வுநாளைப் பரிசுத்தமாக்கும்படிக்
கும் ஓய்வுநாளிலே சுமையை எருசலேமின் வா
சல்களுக்குள் எடுத்துவராதிருக்கும்படிக்கும், நம்
முடைய சொல்லைக் கேளாதேபோனீர்களேயா
கில், நாம் அதின் வாசல்களில் அக்கினியைக்
கொளுத்துவோம்; அது எருசலேமின் அரமனைக
ளைப் பட்சித்து, அவிந்துபோகாதிருக்குமென்று
உரைத்தாரென்று சொல்லென்றார்.

## ௰௮. அதிகாரம்.

க. குயவனுடைய அடையாளத்தைக்கொண்டு சாதிகளைக் கிரமப்படுத்தின பராபரனுடைய சுயவல்லமையைக் காட்டினது. ௰௧ யூதாவின் நூதன கலகத்தைக்குறித்து நியாயத்தீர்ப்பு வருமென்று பயமுறுத்தினது. ௰௮. எரேமியா தனக்கு விரோதமாக யோசிக்கிறவர்களைக்குறித்து மன்றாடினது.

கர்த்தரால் எரேமியாவுக்கு உண்டான வசன ௧
மாவது:—நீ எழுந்து, குயவன் வீட்டில் இறங்கி ௨
ப்போ; அங்கே நம்முடைய வார்த்தைகளை உன
க்குக் கேட்கப்பண்ணுவோமென்றார்.— அப்ப ௩
டியே குயவன்வீட்டில் இறங்கிப்போனேன்;
இதோ, அவன் திரிகையின்மேல் வேலைசெய்து
கொண்டிருந்தான்.—ஆனால் குயவன் பண்ணிக் ௪
கொண்டிருக்கிற களிமண்ணாகிய பாண்டம் அ
வன் கையிலே கெட்டுப்போயிற்று; அப்போது
அதைத்திருத்திச்செய்யும்படிக்கு, தன் பார்வைக்
குச் சரியாய்க் கண்டபிரகாரமாய்க் குயவன் அ
தைத்திரும்ப வேறே பாண்டமாக்கினான்.—அப் ௫
போது கர்த்தருடைய வசனம் எனக்கு உண்டாகி
அவர் சொன்னதாவது:
இஸ்ரவேல் வீட்டாரே, இந்தக் குயவனைப் ௬
போலே நாம் உங்களுக்குச் செய்யக்கூடாதோ
வென்று கர்த்தர் சொல்லுகிறார்; இதோ, [4]களி
மண் குயவன்கையில் இருக்கிறதுபோல இஸ்ர
வேல் வீட்டாரே, நீங்கள் நமது கையில் இருக்கி
றீர்கள்.—பிடுங்குவோம், [5]நிர்மூலமாக்குவோம், ௭
அழிப்போமென்று நாம் அசுப்பிலே ஒரு சாதிக்
கு விரோதமாகவும், ஒரு இராச்சியத்துக்கு விரோ
தமாகவும் பேசுகிறதுண்டு.—நாம் விரோதமாய்ப் ௮
பேசின அந்தச் சாதி தன் பொல்லாப்பைவிட்
டுத் திரும்பிற்றேயாகில், நாமும் அதற்குச் செய்ய
நினைத்த தீங்கைச் செய்யாதபடிக்கு மனஸ்தா
பப்படுவோம்.—கட்டுவோம், நாட்டுவோமென் ௯
றும், நாம் அசுப்பிலே ஒரு சாதியையும் ஒரு
இராச்சியத்தையும்குறித்துச் சொல்லுகிறதுமு
ண்டு.—அது நம்முடைய சத்தத்தைக் கேளாத ௰
படிக்கு, நமது பார்வைக்குப் பொல்லாப்பான
தைச் செய்ததேயாகில், நாமும் அதற்கு அருளிச்
செய்வோமென்று சொன்ன நன்மையைச் செய்
யாதபடிக்கு மனஸ்தாபப்படுவோம்.
இப்போதும், நீ யூதாவின் மனுஷரோடும் எரு ௰௧
சலேமின் குடிகளோடும் சொல்லவேண்டியதா
வது: கர்த்தர் உரைக்கிறது ஏதெனில், இதோ,
நாம் உங்களுக்கு விரோதமாக ஒரு தீங்கை உருப்
படுத்தி, உங்களுக்கு விரோதமாக ஒரு நினைவை
நினைக்கிறோம்; இப்போதும், [6]நீங்கள் அவனவன்
தன் பொல்லாத வழியைவிட்டுத் திரும்பி, உங்
கள் வழிகளையும், உங்கள் கிரியைகளையும் சீர்ப்
படுத்துங்களென்கிறாரென்று சொல்.— ஆனால் ௰௨
அவர்கள்: [7]அது விருதா, நாங்கள் எங்கள் நினை
வுகளைப் பின்சென்று, அவரவர் தங்கள் பொல்
லாத இருதயத்தினுடைய கடினத்தின்படியே
செய்வோம் என்கிறார்கள்.
ஆகையால் கர்த்தர் சொல்லுகிறதாவது: இப்ப ௰௩
டிக்கொத்தவைகளைக் கேள்விப்பட்டவன் யாவ
னென்று [8]புறச்சாதிகளுக்குள்ளே கேட்டு விசா
ரியுங்கள்; மிகவும் திடுக்கிடப்படத்தக்க காரியத்
தை இஸ்ரவேலென்ற கன்னியாஸ்திரி செய்கி
றாள்.—[9]நமது சனம் நம்மை மறந்துவிடுகிற அத் ௰௪

1 ௨ மோ. ௨௰. அ: ௩௧. ௰௨.—2 ஏசா. ௫௮. ௰௩, ௰௪.—3 எரே. ௨௨. ௪. 4 ஏசா. ௬௪. அ.—5 சங். ௭. ௰௨-௰௪. 6 எரே. ௭. ௩: ௨௫. ௫: ௨௬. ௰௩: ௩௫. ௰௫. யோனா. ௩. அ.—7 எரே. ௨. ௨௫, ௰௩.—9 எரே. ௨. ௩௨. ௨. ௨௫. ஏசா. ௬௫. ௨.—8 எரே.

தனை சீக்கிரமாய் லீபனோனின் உறைந்த மழை
நம்முடைய வயல்வெளியின் கல்மலையிலிருந்து
அற்றுப்போகிறதுண்டோ? ஓடிவருகிற அந்நிய
தேசத்துக் குளிர்ந்த தண்ணீர்கள் அத்தனை சீக்கி
௰௫ ரமாய்ப் புரண்டு பெருகுகிறதுமுண்டோ?—மா
யையானவைகளுக்குத் தூபங்காட்டுகிறார்கள்;
செப்பனிடப்பட்டிராத பாதைகளிலும் வழியி
லும் அவர்கள் நடக்கும்படிக்கு அவைகள் அவர்
களைப் பூர்வகாலத்துப் பாதைகளாகிய அவர்களு
௰௬ டைய வழிகளில் இடறப்பண்ணின.—[1]நாம் அ
வர்களுடைய தேசத்தைப் பாழாகவும், என்றென்
றைக்கும் பயில்போடுகிற நிந்தையாகவும் வைக்
கத்தானே; அதைக் கடந்துபோகிறவனெல்லாம்
௰௭ திகைத்து, தன் தலையைத் துலுக்குவான்.—அவர்
களை அவர்கள் சத்துருக்களுக்குமுன்பாகக் கொ
ண்டல்காற்றடிப்பாகப் பறக்கடிப்போம்; [2]அவர்
களுடைய ஆபத்தின் நாளிலே முகத்தையல்ல,
பிடரியை அவர்களுக்குக் காட்டுவோமென்று
ரென்று சொல்லென்றார்.

௰௮ அவர்கள் சொன்னதாவது: எரேமியாவுக்கு
விரோதமாக யோசனைகளை யோசிப்போம் வாரு
ங்கள்; ஏனென்றால் ஆசாரியரிடத்திலே வேத
மும், ஞானிகளிடத்திலே ஆலோசனையும், தீர்க்
கதரிசிகளிடத்திலே வசனமும் அழிவதில்லை;
இவன் வார்த்தைகளை நாம் கவனியாமல், இவனை
நாவினாலே வெட்டிப்போடுவோம் வாருங்கள்
என்றார்கள்.

௰௯ கர்த்தாவே, நீர் என்னைக் கவனித்து, என்
னோடே வழக்காடுகிறவர்களின் சத்தத்தைக் கே
௨௰ ளும். — [3]நன்மைக்குத் தீமை சரிக்கட்டப்பட
லாமோ? அதேனென்றால், [4]என் ஆத்துமாவுக்குப்
படுகுழியை வெட்டுகிறார்களே; உம்முடைய
உக்கிரத்தை அவர்களைவிட்டுத் திருப்பும்படிக்கு
நான் அவர்களுக்காக நன்மையைப்பேச உமக்கு
௨௧ முன்பாக நின்றதை நினையும். — ஆகையால்,
அவர்களுடைய பிள்ளைகளைப் பஞ்சத்துக்கு
ஒப்புக்கொடுத்து, அவர்களைப் பட்டையத்துக்கு
இரையாக்கிவிடும்; அவர்கள் பெண்சாதிகள் பிள்
ளைகள் அற்றவர்களும் விதவைகளுமாகி, அவர்
கள் புருஷர் கொலையால் செத்து, அவர்கள் வாலி
பர் யுத்தத்திலே பட்டைய வெட்டாலே மடியக்
௨௨ கடவர்கள்.—நீர் அசுப்பிலே அவர்கள்மேல் இரா
ணுவத்தை வரப்பண்ணுகையால், கூக்குரல் அ
வர்கள் வீடுகளிலிருந்து கேட்கப்படக்கடவது;
ஏனெனில், என்னைப் பிடிக்கப் படுகுழியை
வெட்டி, என் கால்களுக்குக் கண்ணிகளை வைத்
௨௩ தார்கள்.—ஆனால் கர்த்தாவே, அவர்கள் எனக்கு
விரோதமாய்ப் பண்ணுகிற சாவுக்கு இனமான
யோசனையையெல்லாம் தேவரீர் அறிவீர்; அவர்
களுடைய அக்கிரமத்தை உமது கண்ணுக்கு
மறைவாக மூடாமலும், அவர்கள் பாவத்தைக்
கொலைக்காமலும் இருப்பீராக; அவர்கள் உமக்
குமுன்பாக இடறுண்ணக்கடவர்கள்; உமது
கோபத்தின் காலத்திலே இப்படி அவர்களுக்குச்
செய்யும்.

## ௰௯. அதிகாரம்.

௧. குயக்கலம் உடைந்த அடையாளத்தைக்கொண்டு, பாவங்களின்நிமித்தம் யூதர் அழிவைக் காட்டினது.

கர்த்தர் சொன்னதாவது: நீ போய்க் குயவன்வே ௧
லையான ஒரு கரகத்தைக்கொண்டு, சனத்தின்
மூப்பரிலும் ஆசாரியர்களின் மூப்பரிலும் சில
ரைக் கூட்டிக்கொண்டு, — கிழக்குவாசலுக்கு ௨
எதிரான இன்னோமுடைய குமாரனின் பள்ளத்
தாக்கிலே புறப்பட்டுப்போய், நாம் உன்னோடே
சொல்லும் வார்த்தைகளை அங்கே பிரசங்கி.—நீ ௩
சொல்லவேண்டியது: யூதாவின் இராசாக்களே,
எருசலேமின் குடிகளே, கர்த்தருடைய வார்த்
தைகளைக் கேளுங்கள்; இஸ்ரவேலின் பராபரனா
கிய சேனைகளையுடைய கர்த்தர் சொல்லுகிறதா
வது: இதோ, [5]கேட்கப்போகிற யாவருடைய
செவிகளும் குறுகுறென்னத்தக்கதான பொல்
லாப்பை நாம் இந்த ஸ்தலத்தின்மேல் வரப்பண்
ணுவோம்.—அவர்கள் நம்மைவிட்டு, இந்த ஸ்த ௪
லத்தை அந்நிய ஸ்தலமாக்கி, தாங்களும், தங்கள்
பிதாக்களும், யூதாவின் இராசாக்களும், அறியா
திருந்த வேற்றுத்தேவர்களுக்கு அதிலே தூபங்
காட்டி, இந்த ஸ்தலத்தைக் குற்றமில்லாதவர்க
ளின் இரத்தத்தினாலே நிரப்பினபடியினாலும்,—
[6]பாகாலுக்குத் தங்கள் பிள்ளைகளைத் தகனபலிக ௫
ளாகச் சுட்டெரிக்கும்படிக்குப் பாகாலின் மே
டைகளைக் கட்டினபடியினாலுந்தானே; இதை
நாம் கற்பித்ததுமில்லையே, சொன்னதுமில்லை
யே; இது நமது இருதயத்திலே தோன்றினது
மில்லையே.

ஆகையால், இதோ, நாள்கள் வருமென்று கர்த் ௬
தர் சொல்லுகிறார்; அப்போது இந்த ஸ்தலம், அப்
புறம் தோப்பேத்தென்றும் இன்னோமுடைய
குமாரனின் பள்ளத்தாக்கென்றும் சொல்லப்ப
டாமல், கொலைப்பள்ளத்தாக்கென்று சொல்லப்
படும்.—அப்போது நாம் யூதாவுக்கும் எருசலே ௭
முக்கும் இந்த ஸ்தலத்திலிருந்த யோசனையை
வெறுமையாக்கி, அவர்களை அவர்கள் சத்துருக்
களுக்குமுன்பாகப் பட்டையத்தினாலும், அவர்
கள் பிராணனை வாங்கத்தேடுகிறவர்களின் கை
யினாலும் விழப்பண்ணி, [7]அவர்கள் பிரேதங்களை
ஆகாசத்துப் பறவைகளுக்கும், பூமியின் மிரு
கங்களுக்கும் இரையாகக் கொடுத்து,—[8]இந்தப் ௮
பட்டணத்தைப் பாழாகவும், பயில்போடுகிற நிந்
தையாகவும் வைப்போம்; அதைக் கடந்துபோகி
றவனெல்லாம் திகைத்து, அதின் எல்லா வாதைக
ளையுந்தொட்டுப் பயில்போடுவான். — [9]அவர்க ௯
ளுடைய சத்துருக்களும், அவர்கள் பிராணனை
வாங்கத் தேடுகிறவர்களும் அவர்களை இறுகப்பி
டிக்கப்போகிற முற்றிக்கையிலும் இடுக்கத்திலும்,
நாம் அவர்களைத் தங்கள் குமாரரின் மாம்சத்தை

1 எரே. ௰௯. ௮ ௨ நாளா. ௨௯. ௮. ௨௯. ௮.—3 சங். ௧௦௯. ௰௨. புல. ௰. ௨: ௰௯. ௰௯.—2 வாக. ௧. 4 சங். ௩௫. ௭: ௫௭. ௬.

5 ௧ சாமு. ௩. ௰௧. ௨ இரா. ௨௧. ௰௨. 8 எரே. ௰௮ ௰௬. ௩ மோ. ௨௬. ௩௨. 6 எரே. ௭. ௩௧-௩௩.—7 எரே. ௭. ௩௩. 9 ௫ மோ. ௨௮. ௫௩.

யும் தங்கள் குமாரத்திகளின் மாம்சத்தையும் தின்
னப்பண்ணுவோம்; அவனவன் தனக்கு அடுத்த
வனுடைய மாம்சத்தைத் தின்பான் என்றாரென்
று நீ சொல்லி,
௰ உன்னோடே கூடவந்த மனுஷருடைய கண்
களுக்குமுன்பாக அந்தக் கரகத்தை உடைத்துப்
௰௧ போட்டு,—அவர்களோடே சொல்லவேண்டிய
தாவது: சேனைகளுடைய கர்த்தர் உரைக்கிறதே
தெனில், திரும்பச் செப்பனிடப்படக்கூடாத
குயவனுடைய பாண்டத்தை உடைத்துப்போட்
டவண்ணமாக நாம் இந்தச் சனத்தையும் இந்தப்
பட்டணத்தையும் உடைத்துப்போடுவோம்; [1]பு
தைக்கிறதற்கு இடமில்லாததினாலே தோப்பேத்
௰௨ திலே சவங்களைப் புதைப்பார்கள்.—இந்தப்பிர
காரமாக நாம் இந்த ஸ்தலத்துக்கும் அதின் குடி
களுக்கும்செய்து, இந்தப் பட்டணத்தைத் தோப்
பேத்துக்குச் சரியாக்குவோமென்று கர்த்தர் சொ
௰௩ ல்லுகிறார்.—எந்த வீடுகளின்மேல் வானங்களு
டைய சேனைக்கெல்லாம் தூபங்காட்டி, அந்நிய
தேவர்களுக்கு ஊற்றுதல்களை ஊற்றினார்களோ,
அந்தச் சகல வீடுகளாகிய எருசலேமின் வீடுக
ளும் யூதாவுடைய இராசாவின் வீடுகளும் தோப்
பேத்தென்ற ஸ்தலத்தைப்போலே தீட்டுப்பட்
டவைகளாய் இருக்குமென்று உரைத்தாரென்று
சொல்லென்றார்.
௰௪ பிற்பாடு எரேமியா, கர்த்தர் தன்னைத் தீர்க்கதரி
சனஞ்சொல்ல அனுப்பின தோப்பேத்திலிருந்து
வந்து, கர்த்தருடைய வீட்டின் முற்றத்திலே நின்
றுகொண்டு, எல்லாச் சனத்தோடும் சொன்னதா
௰௫ வது:—இஸ்ரவேலின் பராபரனாகிய சேனைகளை
யுடைய கர்த்தர் சொல்லுகிறதேதெனில், இதோ,
நீங்கள் நம்முடைய வார்த்தைகளைக் கேளாதப
டிக்கு உங்கள் பிடரியைக் கடினப்படுத்தினப
டியினாலே, நாம் இந்தப் பட்டணத்துக்கு விரோத
மாகச்சொன்ன எல்லாத் தீங்கையும் அதின்மே
லும் அதற்கடுத்த பட்டணங்களின்மேலும் வரப்
பண்ணுவோமென்று சொல்லுகிறாரென்றான்.

## ௨௰. அதிகாரம்.

௧. பஸ்கூர் எரேமியாவை அடித்துப் புதுப்பெயரையும் பயங்கரமுள்ள தீர்ப்பையும் பெற்றுக்கொண்டது. ௭. எரேமியா தன் இழிவையும், ௰. வரும் மோசத்தையும், ௰௪ தன் பிறப்பையுங்குறித்து முறையிட்டது.

௧ எரேமியா இந்த வார்த்தைகளைத் தீர்க்கதரிசன
மாகச் சொல்லுகிறதை ஆசாரியனான இம்மேரு
டைய குமாரனும் கர்த்தருடைய வீட்டில் பிர
தான விசாரிப்புக்காரனுமாகிய பஸ்கூர் கேட்ட
௨ போது,—[2]பஸ்கூர் எரேமியா தீர்க்கதரிசியை
அடித்து, அவனைக் கர்த்தருடைய வீட்டிலே
பென்யமீன் கோத்திரத்தாரைச்சேர்ந்த மேல்வா
சலில் இருக்கும் காவலறையிலே போட்டான்.—
௩ மறுநாளிலே சம்பவித்ததேதெனில், பஸ்கூர்
எரேமியாவைக் காவலறையிலிருந்து வெளியே
போகவிட்டான்; அப்போது எரேமியா அவனு
டனே சொன்னது: கர்த்தர் உன்னைப் பஸ்கூ
ரென்று அல்ல, பயஞ்சூழ்ந்தோன் என்று அ
ழைக்கிறார்.—ஏனெனில் கர்த்தர் சொல்லுகிறதா ௪
வது: இதோ நாம் உன்னையும், உன்னுடைய எல்
லாச் சிநேகிதரையும் பயத்துக்கு ஒப்புக்கொடுக்
கிறோம்; இவர்கள் உன் கண்கள் பார்க்கத் தங்கள்
சத்துருக்களின் பட்டையத்தால் விழுவார்கள்;
யூதா அனைத்தையும் நாம் பாபேலுடைய இராசா
வின்கையில் ஒப்புக்கொடுப்போம்; இவன் அவர்
களைச் சிறைபிடித்து, சிலரைப் பாபேலுக்குக்
கொண்டுபோய், சிலரைப் பட்டையத்தால் வெ
ட்டிப்போடுவான்.—இந்தப் பட்டணத்தின் எல் ௫
லாச் சத்துவத்தையும், அதின் எல்லாப் பிரயாசத்
தையும், அதின் அருமையான எல்லாவற்றையும்,
[3]யூதாவுடைய இராசாக்களின் எல்லாப் பொக்கி
ஷங்களையும், நாம் அவர்கள் சத்துருக்கள் கை
யில் ஒப்புக்கொடுப்போம்; இவர்கள் அவைக
ளைக் கொள்ளையிட்டு, பாபேலுக்குக் கொண்டு
போவார்கள்.—ஆனால் பஸ்கூரே, நீயும் உன் ௬
வீட்டில் வாசமாயிருக்கிற யாவரும் சிறைப்பட்
டுப்போவீர்கள்; நீயும் கள்ளத்தீர்க்கதரிசனம்
சொல்லுகிற உன் சிநேகிதர் அனைவரும் பாபே
லுக்கு வந்து, அங்கே மரித்து, அங்கே அடக்கம்
பண்ணப்படுவீர்களென்று சொல்லுகிறார் என்
றான்.

கர்த்தாவே என்னை, இணக்கிக்கொண்டீர், ௭
நான் இணங்கினேன்; என்னிலும் பலத்தவராயி
ருந்து, என்னை மேற்கொண்டீர்; நாள்தோறும்
நகைக்கப்படுகிறேன்; அனைவரும் என்னைப்
பரியாசம்பண்ணுகிறார்கள்.—ஏனெனில் நான் ௮
பேசினதுமுதற்கொண்டு கதறுகிறேன்; கொடு
மையென்றும் பாழ்க்கடிப்பென்றும் கூப்பிடுகி
றேன்; ஏனென்றால், கர்த்தருடைய வார்த்தை
நாள்தோறும் எனக்கு நிந்தையும், சக்கந்தமுமா
யிற்று.—ஆனதுகொண்டு நான் அவரைப் பிரஸ் ௯
தாபம்பண்ணாமலும் இனிக் கர்த்தருடைய நாமத்
திலேபேசாமலும் இருப்பேனென்றேன்; ஆனால்
அது என் எலும்புகளில் அடைபட்டு எரிகிற
அக்கினியைப்போலே என் இருதயத்தில் இருந்
தது; அதைச் சகித்து இளைத்தேன்; எனக்குக்
கூடாதேபோயிற்று.— அதேதெனில் பயஞ் ௰
சூழ்ந்தோனென்றதின்நிமித்தம் அநேகருடைய
அவதூறைக் கேட்டேன்; அறிவியுங்கள், அப்
போது நாங்கள் அதை அறிவிப்போமென்கிறார்
கள்; என்னோடே சமாதானமாயிருந்த அனைவ
ரும் நான் தள்ளம்பாறுவதற்குக் காத்திருந்து:
ஒருவேளை இணங்குவான், அப்போது அவ
னை மேற்கொண்டு, அவனில் குரோதந்தீர்த்துக்
கொள்ளுவோம் என்கிறார்கள்.

கர்த்தரோவெனில் பயங்கரமான பராக்கிரம ௰௧
சாலியாய் [4]என்னோடு இருக்கிறார்; ஆகையால்
என்னைப் பின்றொடருகிறவர்கள் மேற்கொள்
ளாமல் இடறுவார்கள்; தங்கள் காரியம் வாய்க்
காதபடியால் மிகவும் வெட்கப்படுவார்கள்; மறக்

1 எரே. ௭. ௩௨. 2 ௧ இரா. ௨௨. ௨௪. அப் ௨௩. ௨.

3 ஏசா. ௩௯. ௬. 4 எரே. ௧. ௮; ௰௫. ௰௯-௨௰. ஏசா. ௪௨. ௰.

கப்படாத நித்திய இலச்சை அவர்களுக்கு உண்
௰௨ டாகும். — ஆனால் நீதிமானைச் சோதித்தறிந்து,
[1]உள்ளிந்திரியங்களையும் இருதயத்தையும் பார்க்
கிற சேனைகளுடைய கர்த்தாவே, நீர் அவர்க
ளுக்கு நீதியைச் சரிக்கட்டுகிறதைக் காண்பே
னாக; ஏனெனில் என் வழக்கை உமக்குச் சாட்
௰௩ டிவிட்டேன்.—கர்த்தரைப் பாடுங்கள்; கர்த்தரைத்
துதியுங்கள்; ஏனென்றால், எளியவனுடைய ஆத்
துமாவைப் பொல்லாதவர்களின் கைக்குத் தப்
புவிக்கிறார்.
௰௪ [2]நான் பிறந்தநாள் சபிக்கப்பட்டது; என் தா
யார் என்னைப் பெற்றநாள் ஆசீர்வதிக்கப்படாத
௰௫ தாக.—உமக்கு ஒரு ஆண்பிள்ளை பிறந்ததென்று
என் தகப்பனுக்கு நற்செய்தியாக அறிவித்து,
அவனை மிகவும் சந்தோஷப்படுத்தின மனுஷன்
௰௬ சபிக்கப்பட்டவன்.—[3]அந்த மனுஷன் கர்த்தர்
மனஸ்தாபப்படாமல் கவிழ்த்துப்போட்ட பட்
டணங்களைப்போலிருந்து, காலமே அலறுதலை
யும் மத்தியானவேளையிலே ஆர்ப்பரிப்பையும்
௰௭ கேட்கக்கடவன்.—என் தாயார் எனக்குப் பிரே
தக்குழியும், என்றைக்கும் பெறாத சூலுமாய்
இருக்கத்தக்கவிதமாகக் கர்ப்பத்திலே நான் கொ
௰௮ லைசெய்யப்படாதே போனதென்ன? — நான்
வருத்தத்தையும் சஞ்சலத்தையும் கண்டு, என்
நாள்கள் வெட்கமாய்க் கழியும்படிக்கு நான்
கர்ப்பத்திலிருந்து வெளிப்பட்டதென்ன?

## உ௧. அதிகாரம்.

௧. சிதேக்கியா நேபுகாத்நேச்சார்பண்ணும் சண்டையின் சங்கதியை விசாரிப்பதற்கு எரேமியாவிடத்தில் ஆள்களை அனுப்பினது. ௩. எரேமியா கடினமான முற்றிக்கையையும் இழிவான அடிமைத்தனத்தையும் முன் அறிவித்தது. ௮. கல்தேயரிடத்தில் போகச் சனங்களுக்கு யோசனை சொல்லி, ௰௧. இராசகுடும்பத்தைக் கண்டித்தது.

௧ சிதேக்கியா மல்கியாவின், குமாரனாகிய பஸ்கூ
ரையும் ஆசாரியனான மாசேயாவின் குமாரனா
கிய செப்பனியாவையும் எரேமியாவண்டைக்
௨ கு அனுப்பி: — நீ எங்களுக்காகக் கர்த்தரைக்
கேள்; அதேனெனில் பாபேலின் இராசாவாகிய
நேபுகாத்நேச்சார் எங்களுக்கு விரோதமாய் யுத்
தஞ்செய்கிறான்; ஒருவேளை கர்த்தர் தம்முடைய
எல்லா அற்புதங்களின்படியேயும் எங்களிடத்
திலே செய்து, அவனை எங்களைவிட்டு அப்பா
லே போகப்பண்ணுவாரென்று சொல்லி அனுப்
புகையில்,
௩ எரேமியாவுக்குக் கர்த்தரால் உண்டானதும்
அவன் இவர்களுடனே சொன்னதுமான வசன
மாவது: நீங்கள் சிதேக்கியாவுக்குச் சொல்ல
௪ வேண்டியது: — இஸ்ரவேலின் பராபரனாகிய
கர்த்தர் உரைக்கிறதேதெனில், இதோ, உங்களை
அலங்கத்துக்கு வெளியே முற்றிக்கைபோட்ட
பாபேலின் இராசாவோடும் கல்தேயரோடும் நீங்
கள் யுத்தம்பண்ணிப் பிடிக்கிறதும் உங்கள் கை
களில் இருக்கிறதுமான யுத்த ஆயுதங்களை நாம்
திருப்பி, அவைகளை இந்தப்பட்டணத்தின் நடு
௫ விலே சேர்த்து,—நாம் உங்களோடே நீட்டின
கையினாலும் பலத்த புயத்தினாலும் கோபமும்
உக்கிரமும் மகாகடுமையுமாக யுத்தம்பண்ணி,—
இந்தப்பட்டணத்தின் குடிகளையும், மனுஷரை ௬
யும், மிருகங்களையும் வெட்டிப்போடுவோம்;
மகா பெருவாரிக்காய்ச்சலால் சாவார்கள்.—அதன ௭
ற்குப்பிறகு நாம் யூதாவின் இராசாவாகிய சிதேக்
கியாவையும், அவன் ஊழியக்காரரையும், சனத்
தையும் இந்தப் பட்டணத்திலே பெருவாரிக்
காய்ச்சலுக்கும் பட்டையத்துக்கும் பஞ்சத்துக்
கும் தப்பி மீதியானவர்களையும் பாபேலின் இரா
சாவாகிய நேபுகாத்நேச்சாருடைய கையிலும்,
அவர்கள் சத்துருக்களின் கையிலும், அவர்கள்
பிராணனை வாங்கத்தேடுகிறவர்களின்கையிலும்
ஒப்புக்கொடுப்போம்; அவன் அவர்களைப் பட்
டையக் கூர்மையினாலே வெட்டுவான்; அவன்
அவர்களைத் தப்பவிடுவதுமில்லை, அவன் மன்
னிப்பதுமில்லை, இரங்குவதுமில்லையென்று கர்த்
தர் உரைக்கிறார் என்றான்.
பின்னையும் அவர் சொன்னதாவது: இந்தச் ௮
சனத்துக்கு நீ சொல்லவேண்டியது ஏதெனில்,
இதோ, நாம் உங்கள் முன்னே சீவனின் வழி
யையும் சாவின்வழியையும் வைக்கிறோமென்று
கர்த்தர் சொல்லுகிறார்.—[4]இந்தப் பட்டணத்திலே ௯
தரிப்பவன் பட்டையத்தாலும், பஞ்சத்தாலும்,
பெருவாரிக்காய்ச்சலாலும் சாவான்; உங்களை
முற்றிக்கைபோட்ட கல்தேயர்வசமாய்ப் புறப்
பட்டுப்போய் விடுபவனோ உயிரோடிருப்பான்;
அவன் பிராணன் அவனுக்குக் கிடைத்த கொள்
ளையுடைமையைப்போல இருக்கும்.—ஏனென் ௰
றால், நமது முகத்தை இந்தப்பட்டணத்துக்கு
விரோதமாய் நன்மைக்கு அல்ல, தீமைக்குத்தா
னே வைத்தோமென்று கர்த்தர் சொல்லுகிறார்;
அது பாபேலுடைய இராசாவின்கையில் ஒப்புக்
கொடுக்கப்படும்; அக்கினியால் அதைச் சுட்டெ
ரிப்பானென்று சொல்.
யூதாவுடைய இராசாவின் வீட்டாருக்கும் நீ ௰௧
சொல்லவேண்டியது: கர்த்தருடைய வார்த்தை
யைக் கேளுங்கள்.—தாவீதின் வீட்டாரே, கர்த் ௰௨
தர் சொல்லுகிறதாவது: உங்கள் செய்கைகளு
டைய பொல்லாப்பின்நிமித்தம் நம்முடைய
உக்கிரம் அக்கினியைப்போலப் புறப்பட்டு, அ
விக்கிறவன் இல்லாமல் எரியாதபடிக்கு, [5]நீங்கள்
காலமே நியாயங்கேட்டு, பறிகொடுத்தவனை
ஒடுக்கினவனுடைய கைக்குத் தப்புவியுங்கள்.—
இதோ, பள்ளத்தாக்கில் வாசமானவளே, சம ௰௩
னானஇடத்தில் கல்மலையாய் இருக்கிறவளே, எங்
களுக்கு விரோதமாய் இறங்கிவருபவன் யாவ
னென்றும் எங்கள் வாசஸ்தலங்களுக்குள் வருப
வன் யாவனென்றும் சொல்லுகிற உனக்கு நாம்
எதிராளியாயிருக்கிறோமென்று கர்த்தர் சொல்லு
கிறார்.—நாம் உங்கள் கிரியைகளுடைய பலனின் ௰௪
படியே உங்களை விசாரிப்போம்; நாம் அதின்
காட்டிலே நெருப்பைக் கொளுத்துவோம்; அது

1 எரே. ௧௭. ௰.—2 எரே. ௰௫. ௰. யோபு. ௩. ௩. ழு: ௰. ௰௮.
3 ௧ மோ. ௰௯. ௨௪, ௨௫.—4 எரே. ௩௮. ௨.—5 எரே. ௨௨. ௩.

அதைச்சுற்றிலும் இருக்கிறதை எல்லாம் பட்சிக்குமென்று கர்த்தர் உரைக்கிறாரென்கிறதைச் சொல்லென்றார்.

## ௨௨. அதிகாரம்.

௧. அவன் வாக்குத்தத்தங்களேயும், பயமுறுத்துதல்களேயும், குணப்படுதலுக்குத் தூண்டினது. ௰. சல்லூமின்மேலும், ௰௩. யோயாக்கீமின்மேலும், ௨௰. கோனியாவின்மேலும் வரும் நியாயத்தீர்ப்பு

௧ கர்த்தர் சொன்னது: நீ யூதாவுடைய இராசா
வின் வீட்டுக்கு இறங்கிப்போய், அங்கே சொல்
லவேண்டிய வசனமாவது:
௨ [1]தாவீதுடைய ஆசனத்தின்மேல் உளுக்காந்தி
ருக்கிற யூதாவின் இராசாவே,நீரும் உம்முடைய
ஊழியக்காரரும் இந்த வாசல்களுக்குப் பிரவே
சிக்கிற உம்முடைய சனமும் கர்த்தருடைய
௩ வார்த்தையைக் கேளுங்கள்.—கர்த்தர் சொல்லுகிற
தேதெனில், [2]நீங்கள் நியாயமும் நீதியுஞ்செய்து,
பறிகொடுத்தவனை ஒடுக்குகிறவனுடைய கைக்
குத் தப்புவியுங்கள்; [3]நீங்கள் பரதேசியையும் திக்
கற்றவனையும் விதவையையும் ஒடுக்காமலும்,
கொடுமைசெய்யாமலும், இவ்விடத்தில் குற்ற
மில்லாத இரத்தத்தைச் சிந்தாமலும் இருங்கள்.—
௪ ஏனெனில் இந்த வார்த்தையின்படியே நீங்கள்
செய்யவே செய்தால், [4]அப்போது தாவீதுடைய
ஆசனத்தின்மேல் உளுக்காந்திருக்கிற இராசாக்
கள் இரதங்களிலும் குதிரைகளிலும் ஏறினவர்க
ளாய் இந்த வீட்டின் வாசல்களால் உட்பிரவே
சிப்பார்கள்; அவனும் அவன் ஊழியக்காரரும்
௫ அவன் சனமுந்தானே.—நீங்கள் இந்த வார்த்தை
களைக் கேளாமல்போனீர்களேயாகில் இந்த வீடு
பாழாமென்று நம்முடையபேரில் ஆணையிட்
டோமென்று கர்த்தர் சொல்லுகிறார்.
௬ ஏனெனில், யூதாவுடைய இராசாவின் வீட்
டைக்குறித்துக் கர்த்தர் சொல்லுகிறதாவது: நீ
நமக்குக் கீலியாத்தைப்போலவும் லீபனோனின்
கொடுமுடியைப்போலவும் இருக்கிறாய்; ஆனால்
மெய்யாகவே உன்னை வனாந்தரத்தைப்போலும்,
குடியில்லாத பட்டணங்களைப்போலும் ஆக்கி
௭ விடுவோம்.—அழிக்கிறவர்களை அவரவர் ஆயு
தங்களோடேங்கூட நாம் உனக்கு விரோதமாகக்
குறிப்போம்; அவர்கள் தெரிந்துகொள்ளப்பட்ட
உன்னுடைய கேதுருக்களை வெட்டி, அக்கினி
௮ யிலே போடுவார்கள்.—அநேகஞ்சாதிகள் இந்தப்
பட்டணத்தைக் கடந்துவந்து, அவனவன் தனக்
கடுத்தவனுடனே: [5]இந்தப் பெரிய பட்டணத்
துக்குக் கர்த்தர் இப்படிச் செய்தது ஏதென்பார்
௯ கள்.—அதற்குப் பிரதியுத்தாரமாக, அவர்கள் தங்
கள் பராபரனாகிய கர்த்தரின் உடம்படிக்கையை
விட்டு, வேறே தேவர்களைப் பணிந்துகொண்டு,
அவைகளுக்கு ஆராதனை செய்தபடியினாலேதா
னே என்பார்கள்.
௰ மரணம் அடைந்தவனுக்காக நீங்கள் அழாம
லும், அவனுக்காகப் பரதவிக்காமலும், போய்
விடுகிறவனுக்காக அழவே அழுங்கள்; ஏனென்
றால், அவன் இனித்திரும்பிவருவதும் தன் சென
னபூமியைக் காண்பதுமில்லை.—அதேதெனனில், ௰௧
தன் தகப்பனாகிய யோசியாவின் பட்டத்துக்
குவந்து, அரசாண்டு, இவ்விடத்திலிருந்து புறப்
பட்டுப்போன யூதாவின் இராசாவாயிருந்த யோ
சியாவின் குமாரனாகிய சல்லூமைக்குறித்துக்
கர்த்தர் சொல்லுகிறதேதெனில், அவன் இனி
இங்கே திரும்ப வராமல்,—தான் கொண்டுபோ ௰௨
கப்பட்ட தலத்திலே மரிப்பான்; இந்தத் தேசத்
தை அவன் இனிக் காண்பதில்லை என்கிறார்.
தனக்கு விஸ்தாரமான வீட்டையும், காற்று ௰௩
வர விலாசமான மேல் அறைகளையும் கட்டுவே
னென்று சொல்லி, பலகணிகளைத் தனக்குத்
திறந்து, கேதுருமரக்கூடுகளை வைத்து, சாதிலிங்
கவருணம் பூசி,—தன் வீட்டை நீதியின்றியும், ௰௪
தன் மேலறைகளை நியாயமின்றியும் கட்டி, [6]தன
க்கடுத்தவனுக்கு அவனுடைய கூலியைக் கொ
டாமல், அவனைச் சும்மா வேலைகொள்ளுகிற
வனுக்கு ஐயோ!—நீ கேதுரு மரமானவைகளில் ௰௫
உலாவுகிறபடியினாலே இராசாவாய் இருப்பா
யோ? உன் தகப்பன் புசித்துக் குடித்து, நியா
யமும் நீதியுஞ்செய்து, அப்போது சுகவாழ்வுமா
யிருந்ததில்லையோ? — சிறுமையும் எளிமையுமா ௰௬
னவனுடைய நியாயத்தை விசாரித்தானே; அப்
போது சுகவாழ்வுமாயிருந்தான்; அது அல்ல
வோ நம்மை அறிகிற அறிவாயிருந்ததென்று கர்த்
தர் சொல்லுகிறார். — உன்னுடைய கண்களும் ௰௭
உன்னுடைய மனதுமோவென்றால் உன் பொ
ழிவின்மேலும், குற்றமில்லாத இரத்தத்தைச் சிந்
துவதின்மேலுங், இடுக்கமும் நொறுக்குதலும்
செய்வதின்மேலுமே அல்லாமல், வேறொன்றின்
மேலும் வைக்கப்பட்டதில்லை.
ஆகையினாலே கர்த்தர் யோசியாவின் குமார ௰௮
னாகிய யோயாக்கீமென்ற யூதாவின் இராசாவை
க்குறித்துச் சொல்லுகிறதாவது: அவனுக்காக,
ஐயோ! என் சகோதரனே, ஐயோ! சகோதரியே,
என்று புலம்புவதில்லை; அவனுக்காக, ஐயோ! ஆ
ண்டவனே, ஐயோ! அவருடைய மகத்துவமே,
என்று புலம்புவதில்லை. — ஒரு கழுதை புதைக் ௰௯
கப்படுகிறவண்ணமாய் அவன் [7]எருசலேமின்
வாசல்களுக்குத் தூரமாய் இழுத்தெறிந்து புதைக்
கப்படுவான்.
லீபனோனின்மேலேறிக் கூப்பிட்டு, பாசா ௨௰
னில் உன் சத்தத்தைக் காட்டி, ஆபரீமிலிருந்து
கூப்பிட்டுக்கொண்டிரு; ஏனெனில், உன் சிநே
கிதர் அனைவரும் முறிந்தார்கள்.—நீ சுகவாழ்வா ௨௧
யிருக்கையில் உன்னுடனே சொன்னோம்; [8]கே
ளேனென்றாய்; நீ நமது சத்தத்தைக் கேளாதே
போகிற இதுவே உன் சிறுவயதுதுவக்கி உன்
னுடைய மார்க்கமாயிருக்கிறது.—உன் மேய்ப் ௨௨
பர் எல்லாரையும் காற்று மேய்க்கும்; உன் சிநே
கிதர் சிறையிருப்பிலே போவார்கள்; அப்போ
தல்லவோ உன்னுடைய எல்லாப் பொல்லாப்

1 எரே. ௰எ. ௨௰. ௲.
2 எரே. ௨௧. ௰௨.
3 ௨ மோ. ௨௨. ௨௧, ௩ மோ. ௰௯. ௩௩. ௫ மோ. ௰௪. ௰௯.
4 எரே. ௰எ. ௨௫.
5 ௫ இரா. ௯. ௮.
6 ௩ மோ. ௰௯ ௰௩.–7 எரே. ௩௬. ௩௰.
8 எரே. ௰௮. ௰௨.

பின்நிமித்தமும் வெட்கி இலச்சைப்படுவாய்.—
௨௩ லீபனோனில் வாசமாயிருந்து, கேதுருக்களில்
கூடுகட்டிக்கொண்டிருக்கிறவளே, [1]வேதனைக
ளும் பிள்ளைப்பெறுகிறவளுக்கொத்த வாதையும்
உனக்கு வருகையில், நீ எப்படிக் கிருபைபெற்
றவளாயிருப்பாய்?
௨௪ யூதாவின் இராசாவாகிய யோயாக்கீமின் கு
மாரன் [2]கோனியா, நம்முடைய வலதுகரத்தில்
முத்திரை மோதிரமாயிருந்தாலும், அங்கேயிருந்
து உன்னைப் பிடுங்குவோமென்று நமது சீவனைக்
கொண்டு சொல்லுகிறோமென்று கர்த்தர் உரைக்
௨௫ கிறார்.—உன் பிராணனை வாங்கத்தேடுகிறவர்க
ளின் கையிலும், நீ பயப்படுகிறவர்களின் கையி
லும் உன்னை ஒப்புக்கொடுப்போம்; பாபேலின்
இராசாவாகிய நேபுகாத்நேச்சாரின் கையிலும்
௨௬ கல்தேயரின் கையிலுந்தானே.—உன்னையும்,
[3]உன்னைப்பெற்ற தாயையும், உங்கள் செனனபூ
மி அல்லாத அந்நியதேசத்திலே துரத்திவிடுவோ
௨௭ ம்; அங்கே சாவீர்கள்.—திரும்புவதற்குத் தங்கள்
ஆத்துமா வாஞ்சித்திருக்கும் தேசத்துக்கு அவர்
௨௮ கள் திரும்பிவருவதில்லை.—இந்தக் கோனியா
என்கிற புருஷன் சிதறவடிக்கப்பட்ட இகழ்ச்
சியான சிலைதானோ? அவன் விரும்பப்படாத
பாத்திரந்தானோ? அவனும் அவன் வித்தும் தள்
ளுண்டதும், தாங்கள் அறியாத தேசத்திலே து
ரத்திவிடப்பட்டதும் எது?
௨௯ தேசமே, தேசமே, தேசமே, கர்த்தருடைய
௩௰ வார்த்தையைக்கேள்.—இந்தப் புருஷனைச் சந்
தானமற்றவனாகவும், தன் நாள்களில் சீர்ப்படாத
மனுஷனாகவும் எழுதுங்கள்; ஏனெனில், தாவீ
தின் ஆசனத்தில் உளுக்காரவும் இனி யூதாவில்
ஆளவும் அவன் வித்தில் ஒருவனுக்கும் வாய்ப்ப
தில்லை என்று கர்த்தர் உரைக்கிறாரென்று சொல்
லென்றார்.

## ௨௩. அதிகாரம்.

௧. சிதறுண்ட மந்தை ஒன்றாய்க் கூடுமென்றும், ௫. கிறிஸ்து அவர்களை ஆண்டு இரட்சிப்பாரென்றும் அறிவித்தது, ௯. கள்ளத்தீர்க்கதரிசிகளுக்கும், ௩௩. மெய்யான தீர்க்கதரிசிகளைப் பரிகாசம்பண்ணுகிறவர்களுக்கும் விரோதமாகத் தீர்க்கதரிசனம் சொன்னது.

௧ நம்முடைய [4]மேய்ப்பின் ஆடுகளைக் கெடுத்துச்
சிதறவடிக்கிற மேய்ப்பருக்கு ஐயோ! என்று கர்த்
௨ தர் சொல்லுகிறார்.—ஆனதுகொண்டு இஸ்ரவே
லின் பராபரனாகிய கர்த்தர் தமது சனத்தை மேய்
க்கிற மேய்ப்பருக்கு விரோதமாகச் சொல்லுகி
றது ஏதெனில், நீங்கள் நம்முடைய ஆடுகளைப்
பராமரியாமல், அவைகளைச் சிதறடித்து அவை
களைத் துரத்தினீர்கள்; இதோ, நாம் உங்கள்பேரி
லே உங்கள் செய்கைகளின் பொல்லாப்பைப்
பிடித்து, விசாரிப்போமென்று கர்த்தர் சொல்லு
௩ கிறார்.—நாம் நம்முடைய ஆடுகளில் மீதியாயி
ருப்பவைகளைத் துரத்தியிருந்த எல்லாத் தேசங்
களிலுமிருந்து சேர்த்து, அவைகளைத் திரும்ப
அவைகளின் தொழுவங்களுக்குக் கொண்டுவ
ருவோம்; அப்போது அவைகள் பலுகிப்பெரு
கும்.—அவைகள்மேலே மேய்ப்பராயிருப்பவர் ௪
களையும் எழுப்புவோம்; அவர்கள் அவைகளை
மேய்ப்பார்கள்; இனி அவைகள் பயப்படுவது
மில்லை; கலங்குவதுமில்லை; காணாதேபோவது
மில்லையென்று கர்த்தர் சொல்லுகிறார்.—இதோ, ௫
நாள்கள் வருமென்று கர்த்தர் சொல்லுகிறார்;
[5]அப்போது தாவீதுக்கு நீதியுள்ள முளையை எழு
ப்புவோம்; அவர் இராசாவாயிருந்து, ஞானமாய்
இராசரிகம்பண்ணி, பூமியிலே நியாயத்தையும்
நீதியையும் நடப்பிப்பார்.—[6]அவர் நாள்களில் ௬
யூதா இரட்சிக்கப்பட்டு, இஸ்ரவேல் சுகமாய்த்
தங்கும்; அவர் அழைக்கப்படும் நாமம் [7]எங்கள்
நீதியாயிருக்கிற கர்த்தர் என்பதுதானே.—ஆன ௭
துகொண்டு, இதோ, நாள்கள் வரும்; அப்போது
[8]இஸ்ரவேல் புத்திரரை எகிப்துதேசத்திலிருந்து
ஏறப்பண்ணின கர்த்தருடைய சீவனைக்கொண்
டு சத்தியம்பண்ணாமல்,— இஸ்ரவேல் வீட்டின் ௮
வித்தாரைத் தங்கள் தேசத்தில் குடியிருக்கும்ப
டிக்கு வடதேசத்திலும், நாம் அவர்களைத் துரத்
தியிருந்த எல்லாத் தேசங்களிலுமிருந்து ஏறப்
பண்ணினவரும், அழைத்துவந்தவருமான கர்த்
தருடைய சீவனைக்கொண்டு சத்தியம்பண்ணு
வார்களென்கிறதைக் கர்த்தர் உரைக்கிறார்.
தீர்க்கதரிசிகளைத்தொட்டு என் இருதயம் என் ௯
உள்ளத்திலே நொறுங்கியிருக்கிறது; என் எலும்
புகளெல்லாம் அதிர்கின்றன; பராபரன்நிமித்த
மும், அவர் பரிசுத்தத்தினுடைய வார்த்தைகளின்
நிமித்தமும் நான் வெறித்திருக்கிற மனுஷனைப்
போலவும் மதுபான இலாகிரி மேற்கொண்ட
புருஷனைப்போலவும் இருக்கிறேன்.—ஏனெ ௰
னில், [9]தேசம் விபசாரரால் நிறைந்திருந்து, சாபத்
தினாலே தேசம் துக்கித்து, வனாந்தரத்தின் மேய்ச்
சல்கள் வாடுகின்றன; ஏனென்றால் அவர்கள்
ஓட்டம் பொல்லாதது; அவர்கள் பெலன் செவ்
வையானதல்ல.—ஏனெனில் தீர்க்கதரிசியும் ஆசா ௰௧
ரியனும் [10]மாயக்கள்ளராய் இருக்கிறார்கள்; நமது
வீட்டிலும் அவர்களுடைய பொல்லாப்பைக்
கண்டுபிடித்தோமென்று கர்த்தர் சொல்லுகிறார்.—
[11]ஆனபடியால், அவர்கள் வழி அவர்களுக்கு ௰௨
இருட்டிலே சறுக்கலான வழிகளைப்போல இ
ருக்கும்; துரத்துண்டு அதிலே விழுவார்கள்;
ஏனென்றால், அவர்கள் விசாரிக்கப்படும் வரு
ஷத்திலே அவர்கள்மேல் பொல்லாப்பை வரப்
பண்ணுவோமென்று கர்த்தர் சொல்லுகிறார்.
சமாரியாவின் தீர்க்கதரிசிகளிலோ, மதியில் ௰௩
லாமையைக் கண்டோம்; பாகாலைக்கொண்டு
தீர்க்கதரிசனஞ்சொல்லி, இஸ்ரவேலென்ற நம்
முடைய சனத்தைமோசம்போக்கினார்கள்.—எரு ௰௪
சலேமின் தீர்க்கதரிசிகளிலோவென்றால் திடுக்
கிடப்படத்தக்க காரியத்தைக் காண்கிறோம்; வி
பசாரம்பண்ணி, கபடத்திலே நடந்துகொண்டு,
ஒருவனும் தன் பொல்லாப்பைவிட்டுத் திரும்

1 எரே.௪.௩௧.—2 உ நாளா.௩௬.௯. ௨, மு: ௩௪.௨, மு.—5 எரே. ௩௩.
3 ௨ இரா.௨௪.அ.மு.—4 எசே. ௰௪. ௰௪-௰௬. ஏசா. ௪. ௨. லூக். ௧.௩௨,
௩௩.—6 ஏசா.௪௫.௰௭.—7 எரே. ௩௩. ௰௬.—8 எரே.௰௬.௰௪,௰௫. 9 எரே. ௯. ௨.—10 எரே. ௬. ௰௩. 11 சங். ௩௫. ௬: ௭௩. ௰௮.

பாதபடிக்கு [1]பொல்லாதவர்களின் கைகளைத்
திடப்படுத்துகிறார்கள்; அவர்கள் எல்லாரும் நமக்
குச் சோதோமைப்போலும், அதின் குடிகள்
கொமோறாவைப்போலும் இருக்கிறார்கள்.
௰௫ ஆனதுகொண்டு சேனைகளையுடைய கர்த்தர்
தீர்க்கதரிசிகளைக்குறித்துச் சொல்லுகிறதாவது:
இதோ, [2]நாம் அவர்களுக்கு எட்டியைப் புசிக்
கவும் பிச்சுத்தண்ணீரைக் குடிக்கவும் கொடுப்
போம்; ஏனெனில், எருசலேமின் தீர்க்கதரிசிக
ளிலிருந்து மாயம் தேசம் எங்கும் பரம்பிற்று
என்கிறார்.
௰௬ சேனைகளையுடைய கர்த்தர் சொல்லுகிறதாவ
து: உங்களுக்குத் தீர்க்கதரிசனம் சொல்லுகிற
தீர்க்கதரிசிகளின் வார்த்தைகளைக் கேளாதிருங்
கள்; அவர்கள் உங்களை வீணாய் உப்பப்பண்ணு
கிறார்கள்; கர்த்தருடைய வாக்கை அல்ல, [3]தங்கள்
இருதயத்தின் தரிசனத்தைச் சொல்லுகிறார்கள்.—
௰௭ அவர்கள் நம்மை அசட்டைபண்ணுகிறவர்களு
டனே: [4]உங்களுக்குச் சமாதானம் இருக்குமென்
பதைக் கர்த்தர் சொன்னாரென்று சொல்லிக்கொ
ண்டேயிருந்து, [5]தங்கள் இருதயத்தின் கடினத்
திலே நடக்கிற யாவருடனேயும்: உங்கள்மேல்
௰௮ பொல்லாப்பு வராது.—ஏனெனில், கர்த்தருடைய
ஆலோசனையில் கூடநின்று, அவருடைய வார்த்
தையைக் கண்டு கேட்டவன் யாவன்? அவரு
டைய வார்த்தையைக் கவனித்துக் கேட்டவன்
௰௯ யாவனென்கிறார்கள்.—[6]இதோ, கர்த்தருடைய
பெருங்காற்றும் கொடியபுசலும் புறப்பட்டது;
அது ஆகாதவர்களுடைய தலையின்மேல் உக்கிர
௨௰ மாய்ப் பாயும்.— தம்முடைய இருதயத்தின்
நினைவுகளைக் கர்த்தர் நிருவாகம்பண்ணுமட்டா
கவும், நிறைவேற்றுமட்டாகவும், அவருடைய
கோபம் திரும்பாது; கடைசிநாள்களில் அதை
உணர்ச்சியாய் உணருவீர்கள்.
௨௧ தீர்க்கதரிசிகளை [7]நாம் அனுப்பாதிருந்தும் அ
வர்கள் ஓடினார்கள்; அவர்களோடே நாம் பேசா
திருந்தும் அவர்கள் தீர்க்கதரிசனம் சொன்னார்
௨௨ கள்.—அவர்கள் நம்முடைய ஆலோசனையிலே
நிலைத்திருந்தார்களேயாகில், அப்போது அவர்
கள் [8]நம்முடைய வார்த்தைகளைச் சனத்துக்குக்
கேட்கப்பண்ணி, இவர்களைத் தங்கள் பொல்
லாத வழிகளையும் தங்கள் செய்கைகளின் பொல்
லாப்பையும்விடத் திருப்புவார்கள்.
௨௩ நாம் தூரத்திலிருந்து பார்க்கிற பராபரனையிரா
மல், சமீபத்திலிருந்து பார்க்கிற பராபரன்தானோ
௨௪ வென்று கர்த்தர் சொல்லுகிறார்.—தன்னை நாம்
காணாதிருக்கத்தக்க [9]ஒளிப்பிடங்களில் யாவ
னொருவன் ஒளித்துக்கொள்ளக்கூடுமோவென்று
கர்த்தர் சொல்லுகிறார்; பரமண்டலங்களையும்
பூலோகத்தையும் அல்லவோ, நாம் நிரப்புகிறவ
ரென்று கர்த்தர் சொல்லுகிறார்.
௨௫ சொப்பனங்கண்டேன், சொப்பனங்கண்டே
னென்று, நம்முடைய நாமத்தைச் சொல்லிப்
பொய்யாய்த் தீர்க்கதரிசனம் உரைக்கிற தீர்க்க
தரிசிகள் சொல்லுகிறதைக் கேட்டோம்.—எந் ௨௬
தமட்டும் இப்படிஇருக்கும்? பொய்த்தீர்க்கதரிச
னம் சொல்லுகிற தீர்க்கதரிசிகளின் இருதயத்
தில் ஏதாகிலுமுண்டோ? இவர்கள் தங்கள் இரு
தயத்தின் கபடத்தைத் தீர்க்கதரிசனமாகச் சொல்
லுகிறவர்கள்.—நமது சனத்தின் பிதாக்கள் பா ௨௭
காலைத்தொட்டு நம்முடைய நாமத்தை மறந்த
துபோலே, இவர்கள் அவரவர் தமக்கடுத்தவ
னுக்கு விவரிக்கிற தங்களுடைய சொப்பனங்
களைத்தொட்டு, அவர்களை நம்முடைய நாமத்தை
மறக்கப்பண்ண நினைக்கிறார்கள். — சொப்பன ௨௮
முள்ள தீர்க்கதரிசி சொப்பனத்தை விவரிப்பா
னாக; நம்முடைய வார்த்தையுள்ளவனோ, நம்மு
டைய வார்த்தையை உண்மையாகச் சொல்வா
னாக; வைக்கோல் கூளத்தோடே கோதுமைக்கு
ஒவ்வுதல் ஏதென்று கர்த்தர் சொல்லுகிறார்.—
[10]நம்முடைய வார்த்தை அக்கினியைப்போலும், ௨௯
கல்மலையைநொறுக்கும்சம்மட்டியைப்போலும்
இருக்கவில்லையோ என்று கர்த்தர்சொல்லுகிறார்.
ஆகையால், இதோ, ஒவ்வொருவராய்த் தங்க ௩௰
ளுக்கு அடுத்தவரிடத்தில் நம்முடைய வார்த்தை
யைத் திருட்டுத்தனமாய் எடுக்கிற தீர்க்கதரிசிக
ளுக்கு நாம் விரோதமானவரென்று கர்த்தர் சொ
ல்லுகிறார்.—இதோ, தங்கள் நாவின் சொல்லையே ௩௧
வழங்கி: அவர் அதை உரைத்தாரென்று சொல்
லுகிற தீர்க்கதரிசிகளுக்கு நாம் விரோதமானவ
ரென்று கர்த்தர் சொல்லுகிறார்.—இதோ, பொய்ச் ௩௨
சொப்பனங்களைத் தீர்க்கதரிசனமாகச் சொல்லி,
அவைகளை விவரித்து, நமது சனத்தைத் தங்கள்
பொய்களினாலும், [11]தங்கள் கேளிக்கைகளினா
லும், மோசம்போக்குகிறவர்களுக்கு நாம் விரோ
தமானவரென்று கர்த்தர் சொல்லுகிறார்; நாம் அ
வர்களை அனுப்பினதுமில்லை; அவர்களுக்குக்
கற்பித்ததுமில்லை; அவர்கள் இந்தச் சனத்துக்கு
ஒரு பிரயோசனமாய் இருக்கிறதுமில்லையென்று
கர்த்தர் சொல்லுகிறார்.
ஆனதுகொண்டு, கர்த்தராலே சுமரும் பாரம் ௩௩
என்னவென்று இந்தச் சனமாகிலும் ஒரு தீர்க்க
தரிசியாகிலும் ஒரு ஆசாரியனாகிலும் உன்னைக்
கேட்டால், நீ அவர்களுடனே சொல்லவேண்டி
யதாவது: பாரமென்னவென்றால், உங்களைத் தள
ரவிடுவோமென்றும்,—கர்த்தரால் சுமரும் பார ௩௪
மென்கிறதாய்ச் சொல்லுகிற தீர்க்கதரிசியாகிலும்
ஆசாரியனாகிலும் சனமாகிலும் சரி, அப்படிச்
சொல்லுகிற மனுஷனுக்கும் அவன் வீட்டுக்கும்
விரோதமான விசாரிப்பாய் இருப்போமென்றும்
கர்த்தர் சொல்லுகிறார்.—கர்த்தர் என்ன மறுஉத் ௩௫
தரவு கொடுத்தார்? அல்லது, கர்த்தர் என்னசொன்
னார் என்கிறதாய் நீங்கள் அவரவர் தங்களுக்கு
அடுத்தவனையும் அவரவர் தங்கள் சகோதரனையும்
கேட்பீர்களாக.—ஆனால் கர்த்தரால் சுமரும்பார ௩௬
மென்ற சொல்லை இனி எடுக்காதிருப்பீர்களாக;

1 ஏசே. ௧௩. ௨௨. எசா. ௧. ௯. 4 எரே. ௬. ௰௪ : அ. ௰௩. ௭௪. ௰௩. ௬.
2 எரே. ௯. ௰௫.—3 எரே. ௰௪. ௰௪. 5 எரே. ௭. ௨௪.
6 எரே. ௩௰. ௨௩, ௨௪.—7 எரே. ௰௪. 9 சங். ௱௩௯. ௭–௰. –10 எபி. ௪. ௰௨.
௰௪.—8 ௧ பே. ௪. ௰௧. 11 செப். ௩. ௪.

ஏனெனில் அவனவன் வார்த்தை அவனவனுக்
குப் பாரமாயிருப்பது; அதேனென்றால், நம்மு
டைய பராபரனாகிய சேனைகளையுடைய கர்த்த
ரென்ற சீவனுள்ள பராபரனுடைய வார்த்தை
௩௭ களைப் புரட்டுகிறார்கள்.—கர்த்தர் உனக்கென்ன
மறுஉத்தரவு கொடுத்தார்? அல்லது, கர்த்தர் என்
ன சொன்னார்? என்கிறதாய் நீ தீர்க்கதரிசியைக்
௩௮ கேட்பாயாக.— நீங்களோவெனில், கர்த்தரால்
சுமரும் பாரமென்று சொல்லுகிறபடியினாலே
கர்த்தர் உரைக்கிறதாவது: கர்த்தரின் பாரம் என்
னாதிருங்களென்று நாம் உங்களுக்குச் சொல்லி
அனுப்பியும், நீங்கள் இந்த வார்த்தையைக் கர்த்
௩௯ தரின் பாரமென்று சொல்லுகிறீர்களே.—ஆனது
கொண்டு, இதோ, நாம் உங்களை மறக்கவே மற
ந்து, உங்களையும், நாம் உங்களுக்கும் உங்கள்
பிதாக்களுக்கும் கொடுத்த பட்டணத்தையும்,
நமக்குமுன்பாக இராதபடிக்குக் கைவிட்டு,—
௪௰ [1]மறக்கப்படாத நித்திய நிந்தையையும், நித்திய
இலச்சையையும் உங்கள்மேல் வரப்பண்ணு
வோமென்பதுதானென்று சொல்லென்றார்.

## ௨௪. அதிகாரம்.

க. அத்திப்பழ நற்கனிகள் துர்க்கனிகளின் அடையாளத்தைக்கொண்டு, ௪. அடிமைத்தனத்திலிருப்பவர்களுடைய விடுதலையையும், ௮. சிதேக்கியாவும் மற்றவர்களும் அழிவதையும் முன்னே காட்டினது.

க பாபேலின் இராசாவாகிய நேபுகாத்நேச்சார்,
[2]யோயாக்கீமின் குமாரனாகிய எகொனியாவெ
ன்ற யூதாவின் இராசாவையும், யூதாவின் பிரபுக்
களையும், எருசலேமிலுள்ள தச்சரையும், கொல்
லரையும் சிறைபிடித்து, பாபேலுக்குக் கொண்டு
போனபிற்பாடு, கர்த்தர் என்னைக் காணப்பண்
ணினதாவது: இதோ, அத்திப்பழங்களுள்ள இ
ரண்டு கூடைகள் கர்த்தருடைய ஆலயத்தின்
௨ முன் வைக்கப்பட்டிருந்தன.—ஒரு கூடையிலே
முதல் கந்தாயத்து அத்திப்பழங்களுக்குச் சமான
மான மெத்த நல்ல அத்திப்பழங்களும், மற்றக்
கூடையிலோவென்றால், ஆகாதவகையானதினா
லே புசிக்கப்படக்கூடாத மெத்த ஆகாத அத்திப்
௩ பழங்களும் இருந்தன.—கர்த்தர் என்னுடனே:
எரேமியாவே, நீ என்னத்தைக் காண்கிறாயென்
றார்; அதற்கு நான், அத்திப்பழங்களைக் காண்கி
றேன்; நல்லவைகளான அத்திப்பழங்கள் மெத்த
நல்லவைகளும். ஆகாதவைகளோ ஆகாதவகை
யானதினாலே புசிக்கக்கூடாதபடிக்கு மெத்த
ஆகாதவகைகளுமாய் இருக்கின்றன என்றேன்.
௪ அப்போது கர்த்தருடைய வார்த்தை எனக்
௫ குண்டாகி, அவர் சொன்னதாவது:—இஸ்ரவே
லின் பராபரனாகிய கர்த்தர் சொல்லுகிறது ஏதெ
னில்: நாம் இவ்விடத்திலிருந்து, கல்தேயர் தே
சத்துக்குச் சிறைபோகவிட்ட யூதரை நாம் இந்த
நல்ல அத்திப்பழங்களுக்கு ஒப்பிட்டு, அவர்களை
௬ நன்மையாக அறிந்துகொண்டு,— [3]நம்முடைய
கண்களை அவர்கள்மேலே நன்மையாக வைத்து,
அவர்களை இந்தத் தேசத்துக்குத் திரும்பிவரப்
பண்ணி, அவர்களை இடிக்காமல் அவர்களைக்
கட்டி, அவர்களைப் பிடுங்காமல் அவர்களை நாட்
டி,— [4]நாம் கர்த்தரென்று அறியும் இருதயத்தை ௭
அவர்களுக்குக் கொடுப்போம்; [5]அவர்கள் நமக்
குச் சனமாயிருப்பார்கள்; நாம் அவர்களுக்குப்
பராபரனாகவும் இருப்போம்; ஏனென்றால்,
தங்கள் முழு இருதயத்தாலும் நம்மண்டைக்குத்
திரும்புவார்கள்.
ஆனால் [6]ஆகாதவகையானதினால் புசிக்கப்படக் ௮
கூடாத ஆகாத அத்திப்பழங்களுக்கு ஒப்பாக,
நாம் சிதேக்கியாவென்ற யூதாவின் இராசாவை
யும், அவனுடைய பிரபுக்களையும், இந்தத் தே
சத்திலே மீதியான எருசலேமின் குடிகளையும்,
எகிப்துதேசத்தில் குடியிருக்கிறவர்களையும் தள்
ளிவிட்டு,—தீமைக்கென்று அவர்களைப் பூமியி ௯
லுள்ள எல்லா இராச்சியங்களிலும் அலைதலாக
வும், நாம் அவர்களைத் துரத்திவிட்ட எல்லா
இடங்களிலும் நிந்தையாகவும், பழமொழியாக
வும், மெல்லுதலாகவும், சாபமாகவும் வைத்து,—
அவர்களுக்கும் அவர்கள் பிதாக்களுக்கும் நாம் ௰
கொடுத்த தேசத்தில் அவர்கள் இராதபடிக்கு நிர்
மூலமாகுமட்டும் [7]அவர்களுக்குள்ளே பட்டை
யத்தையும், பஞ்சத்தையும், பெருவாரிக்காய்ச்
சலையும் அனுப்புவோமென்று கர்த்தர் சொல்லு
கிறார் என்றார்.

## ௨௫. அதிகாரம்.

க. எரேமியா தீர்க்கதரிசிகளுக்கு யூதர் கீழ்ப்படியாமலிருப்பதைக் கண்டித்து, ௮. எழுபதுவருஷத்தின் சிறையிருப்பையும், ௰௨. அதற்குப்பின்பு பாபிலோனின் அழிவையும் முன் அறிவித்தது. ௰௫. திராட்சரச பாத்திரத்தின் அடையாளத்தைக்கொண்டு சகல சாதிகளும் அழிந்துபோவதையும், ௩௪. மேய்ப்பர்களுடைய கூக்குரலையும் முன்னே காட்டினது.

யோசியாவின் குமாரனாகிய யோயாக்கீமென்ற க
யூதாவுடைய இராசாவின் நாலாம் வருஷத்திலே
யூதாவின் சனம் அனைத்தையுங்குறித்து எரேமி
யாவுக்குண்டான வார்த்தை; அது நேபுகாத்
நேச்சார் என்ற பாபேலுடைய இராசாவின் மு
தலாம் வருஷமானது.—அதைத் தீர்க்கதரிசியாகிய ௨
எரேமியா யூதாவின் சனம் அனைத்துக்கும், எருச
லேமின் குடிகள் எல்லாருக்கும் சொல்லி உரைத்
ததாவது:
ஆமோனின் குமாரனாகிய யோசியாவின் பதி ௩
ன்மூன்றாம் வருஷம்துவக்கி இந்நாள்மட்டும்
சென்ற இந்த இருபத்துமூன்று வருஷங்களிலே
கர்த்தருடைய வார்த்தை எனக்கு உண்டாயிற்று;
அதை நான் உங்களுக்கு ஏற்கெனவே சொல்லிக்
கொண்டேயிருந்தும் நீங்கள் கேளாதேபோனீர்
கள்.—கர்த்தர் உங்களண்டைக்குத் தீர்க்கதரிசிக ௪
ளாகிய தம்முடைய சகல ஊழியக்காரரையும்
ஏற்கெனவே அனுப்பிக்கொண்டேயிருந்தும்,
நீங்கள் கேளாமலும், உங்கள் செவிகளைக் கேட்
கும்படிக்குச் சாய்க்காமலும் போனீர்கள்.—அவர் ௫
களைக்கொண்டு அவர் சொல்லியனுப்பினதாவ
து: [8]நீங்கள் அவனவன் தன் பொல்லாத வழி

1 எரே. ௨௰. ௰௧.—2 ௨ இரா. ௨௪: ௰௨.—3 ௧ இரா. ௮. ௨௯.—௯௰. 4 உபா. ௩௰. ௬. எரே. ௩௰௧. ௩௩: ௩௨. ௩௯, ௪௰. 5 எரே. ௩௰. ௨௨: ௩௧. ௩௩: ௩௨. ௩௮. 6 எரே. ௨௯. ௰௭, ௰௮. 7 எசே. ௫. ௰௨.—8 எரே. ௰௮. ௰௧: ௩௫. ௰௫.

யையும் உங்கள் கிரியைகளின் பொல்லாப்பை
யும் விட்டுத் திரும்பி, அப்படியே கர்த்தர் உங்க
ளுக்கும் உங்கள் பிதாக்களுக்கும் கொடுத்த தேச
த்தில் சதாகாலம் சதாகாலமாகக் குடியிருந்து,—
௬ [1]வேற்றுத்தேவர்களே, அவைகளுக்கு ஆராதனை
செய்யவும், அவைகளைப் பணியவும், பின்பற்று
மலும், நாம் உங்களுக்குத்தீங்குசெய்யாதபடிக்கு
உங்கள் கைகளின் செய்கைகளால் நமக்குக்
கோபம் உண்டாக்காமலும் இருங்களென்பது
௭ தானே.—நீங்களோவென்றால், உங்களுக்குத் தீங்
காக உங்கள் கைகளின் செய்கைகளாலே நமக்
குக் கோபம் உண்டாக்கும்படிக்கு, நம்முடைய
சொல்லைக் கேளாதேபோனீர்களென்று கர்த்தர்
சொல்லுகிறார்.
௮ ஆனதுகொண்டு சேனைகளின் கர்த்தர் உரைக்
கிறதாவது: நீங்கள் நம்முடைய வார்த்தைகளைக்
௯ கேளாதேபோனபடியினாலே,—இதோ, நாம் வட
க்கேயிருக்கிற சகல வம்சங்களையும், நம்முடைய
வேலைக்காரனாகிய நேபுகாத்நேச்சாரென்ற பா
பேலின் இராசாவையும் அழைத்தனுப்பி, இவர்
களை இந்தத் தேசத்துக்கு விரோதமாகவும், அதின்
குடிகளுக்கு விரோதமாகவும், சுற்றிலுமிருக்கிற
இந்த எல்லாச் சாதிகளுக்கும் விரோதமாகவும்
வரப்பண்ணி, அவைகளைச் சங்காரத்துக்கு ஒப்
புக்கொடுத்து, [2]அவைகளைப் பாழாகவும் பயில்
போடுதலாகவும் நித்திய வனாந்தரங்களாகவும்
௰ வைத்துவிட்டு, — [3]மகிழ்ச்சியின் சத்தத்தையும்,
சந்தோஷத்தின் சத்தத்தையும், மணவாளனின்
சத்தத்தையும், மணவாட்டியின் சத்தத்தையும், ஏ
ந்திரத்தின் சத்தத்தையும், விளக்கின் வெளிச்சத்
தையும் அவர்களிலிருந்து அழியப்பண்ணுவோ
௰௧ மென்று கர்த்தர் சொல்லுகிறார். — இந்தத் தேச
மெல்லாம் வனாந்தரமும் பாழுமாம்; இந்தச் சாதி
களோவென்றால், [4]எழுபதுவருஷமாகப் பாபே
௰௨ லின் இராசாவைச் சேவிக்கும்.—எழுபதுவரு
ஷம் நிறைவேறும்போதோவெனில், சம்பவிப்ப
தேதென்றால், நாம் பாபேலுடைய இராசாவினி
டத்திலும், அந்தச் சாதியினிடத்திலும் கல்தே
யருடைய தேசத்தினிடத்திலும் அவர்களுடைய
அக்கிரமத்தை விசாரித்து, அதை நித்திய பாழ்க்
௰௩ கடிப்புகளாக்கி,—நாம் அந்தத் தேசத்துக்கு விரோ
தமாய் உரைத்த நம்முடைய எல்லா வார்த்தைக
ளையும், எரேமியா எல்லாச் சாதிகளுக்கும் விரோ
தமாகத் தீர்க்கதரிசனமாய்ச் சொன்னதும் இந்தப்
புஸ்தகத்தில் எழுதியிருக்கிறதுமான யாவையுமே
அதின்மேல் வரப்பண்ணுவோமென்று கர்த்தர்
௰௪ சொல்லுகிறார். — ஏனென்னில், அவர்களையும் அ
நேகம் சாதிகளும் பெரிய இராசாக்களும் அடி
மைக்கொள்ளுவார்கள்; அப்படி நாம் அவர்க
ளுக்கு அவர்கள் கிரியைகளுக்குத்தக்கதாகவும்,
அவர்கள் கைகளின் செய்கைகளுக்குத்தக்கதாக
வும் பதில் அளிப்போமென்றார்.
௰௫ ஏனெனில், இஸ்ரவேலின் பராபரனாகிய கர்த்
தர் என்னோடே சொன்னதாவது: நாம் உன்னை
அனுப்புகிற சாதிகள் குடித்து, நாம் தங்களுக்குள்
அனுப்பும் பட்டையத்தால் அவர்கள் தள்ளம்
பாறி, புத்திகெட்டுப்போகும்படிக்கு,- இந்த உக் ௰௬
கிரமாகிய மதுபானத்தின் பாத்திரத்தை நீ நமது
கரத்தில் வாங்கி, அவர்கள் எல்லாரும் அதிலே
குடிக்கக் கொடுவென்றார்.
அப்போது நான் அந்தப் பாத்திரத்தைக் கர்த்த ௰௭
ருடைய கரத்தில் வாங்கி, கர்த்தர் என்னை அனுப்
பின எல்லாச் சாதிகளுக்கும் குடிக்கக்கொடுத்
தேன்.—எருசலேமுக்கும், யூதாவின் பட்டணங் ௰௮
களுக்கும், அதின் இராசாக்களுக்கும், அதின் பிர
புக்களுக்கும், அவர்களை இந்நாளிலிருக்கிறபடி
வனாந்தரமும் பாழும் பயில்போடுதலும் சாப
முமாக்கிப்போடக் குடிக்கக்கொடுத்தேன். —
எகிப்தின் இராசாவாகிய பார்வோனுக்கும், அ ௰௯
வன் ஊழியக்காரருக்கும், அவன் பிரபுக்களுக்
கும், அவனுடைய எல்லாச் சனத்துக்கும், —
கலந்து குடியிருக்கிற அனைவருக்கும், ஊத்ஸதே ௨௰
சத்தினுடைய எல்லா இராசாக்களுக்கும், பெலி
ஸ்தியருடைய தேசத்தில் இருக்கிற எல்லா இரா
சாக்களுக்கும், அஸ்கலோனுக்கும், காசாவுக்
கும், எக்கிரோனுக்கும், அஸ்தோத்தில் மீதியான
வர்களுக்கும்,—ஏதோமுக்கும், மோவாபுக்கும், ௨௧
அம்மோன் புத்திரருக்கும், — தீருவினுடைய ௨௨
எல்லா இராசாக்களுக்கும், சீதோனுடைய எல்
லா இராசாக்களுக்கும், சமுத்திரத்துக்கு அக்க
ரையான் தீவுகளின் இராசாக்களுக்கும்,—தேதா ௨௩
னுக்கும், தேமாவுக்கும், பூசுக்கும், கடைசி
மூலைகளிலுள்ள அனைவருக்கும், — அரபியி ௨௪
லுள்ள எல்லா இராசாக்களுக்கும், வனாந்தரத்தில்
கலந்து குடியிருக்கிறவர்களுடைய எல்லா இரா
சாக்களுக்கும்,—சிம்ரியினுடைய எல்லா இரா ௨௫
சாக்களுக்கும், ஏலாமினுடைய எல்லா இராசா
க்களுக்கும், மேதியாவினுடைய எல்லா இரா
சாக்களுக்கும்,—வடக்கேயிருக்கிற எல்லா இரா ௨௬
சாக்களுக்கும், சமீபமானவர்களும் தூரமானவர்
களுமாகிய அவரவர்களுக்கும், பூமியின்மீதி
லுள்ள சகல தேசத்து இராச்சியங்களுக்குந்தா
னே; சேசாக்கென்ற இராசாவும் அவர்களுக்குப்
பிற்பாடு குடிப்பானென்றார்.
[5]நீங்கள் குடித்து, வெறித்து, வாந்திபண்ணி, ௨௭
நாம் உங்களுக்குள் அனுப்பும் பட்டையத்தாலே
எழுந்திராதபடிக்கு விழுங்களென்கிறதாய் இஸ்
ரவேலின் பராபரனாகிய சேனைகளுடைய கர்த்
தர் உரைக்கிறாரென்று அவர்களுடனே சொல்
லுவாயாக.
அவர்கள் குடிக்கிறதற்கு அந்தப் பாத்திரத்தை ௨௮
உன் கையில் வாங்கமாட்டோமென்று சொல்லு
கிறதுண்டேயாகில், நீ அவர்களோடே சொல்ல
வேண்டியதாவது: குடிக்கவே குடிப்பீர்களென்
று சேனைகளையுடைய கர்த்தர் சொல்லுகிறார்.—
ஏனெனில், இதோ தீங்கைக் கட்டளையிட [6]நாம் ௨௯
நம்முடைய நாமம் தரிப்பிக்கப்பட்ட பட்ட
ணத்திலே துவக்குகையில் நீங்கள் குற்றமற்று

1 எரே. ௭. ௬.—2 எரே. ௰௮. ௰௬: ௯௧. ௮.—3 எரே. ௭. ௩௪: ௰௬. ௯.

4 எரே. ௨௯. ௰.—5 ஆப். ௨. ௰௬.—6 ௧ பே. ௪. ௰௭.

நீங்கலாயிருப்பீர்களோ? நீங்கள் நீங்கலாயிருப்ப
தில்லை; ஏனென்றால், நாம் பூமியினுடைய எல்
லாக்குடிகளின்மேலும் பட்டயத்தை வரவ
ழைக்கிறேமென்று சேனைகளையுடைய கர்த்தர்
சொல்லுகிறார் என்பதுதானே.
௩௰ ஆனதுகொண்டு நீ அவர்களுக்கு விரோதமாக
இந்த வார்த்தைகளையெல்லாம் தீர்க்கதரிசனமாக
உரைத்து, அவர்களோடே சொல்லவேண்டியதா
வது: [1]கர்த்தர் உயரத்திலிருந்து கர்ச்சித்து, தமது
பரிசுத்த வாசஸ்தலத்திலிருந்து தம்முடைய சத்த
த்தைக்காட்டி, தம்முடைய தாபரத்துக்கு விரோ
தமாகக் கர்ச்சிக்கவே கர்ச்சித்து, ஆலையை மிதிக்
கிறவர்களைப்போலே பூமியினுடைய எல்லாக்
குடிகளுக்கும் விரோதமாக ஆர்ப்பரிப்பார். —
௩௧ அமளி பூமியின் கடையாந்தரமட்டும் சேரும்;
ஏனெனில், சாதிகளோடே கர்த்தருக்கு வழக்கு
இருக்கிறது; சகல மாம்சத்தோடும் அவர் நியாயத்
துக்குள்ப் பிரவேசிப்பார்; ஆகாதவர்களைப் பட்
டையத்துக்கு ஒப்புக்கொடுப்பாரென்று கர்த்தர்
சொல்லுகிறார்.
௩௨ சேனைகளின் கர்த்தர் சொல்லுகிறதாவது: இ
தோ, சாதிசாதிக்குத் தீங்கு பரம்பிப்போய், பூமி
யின் பக்கங்களிலிருந்து மகா புசல் எழும்பும்.—
௩௩ அக்காலத்திலே பூமியின் ஒருமுனைதுவக்கி பூமி
யின் மறுமுனைமட்டும் கர்த்தரால் கொலையுண்ட
வர்கள் கிடப்பார்கள்; புலம்பப்படாமலும் சேர்
க்கப்படாமலும் அடக்கம்பண்ணப்படாமலும்
௩௪ பூமியின்மேல் எருவாவார்கள். — மேய்ப்பரே,
அலறுங்கள்; மந்தையில் பிரஸ்தாபமானவர்களே,
கூப்பிட்டுச் சாம்பலில் புரளுங்கள்; ஏனெனில்,
நீங்கள் வெட்டப்படவும் சிதறவடிக்கப்படவும்
உங்கள் நாள்கள் நிறைவேறின; உச்சிதமான
௩௫ பாத்திரத்தைப்போலே விழுவீர்கள்.—மேய்ப்பர்
ஓடிப்போகிறதற்கும், மந்தையில் பிரஸ்தாபமா
னவர்கள் தப்புவித்துக்கொள்ளுகிறதற்கும் இட
௩௬ மில்லை. — தங்கள் மேய்ப்பைக் கர்த்தர் பாழ்க்க
டித்ததின்நிமித்தம் மேய்ப்பர் கூப்பிடுகிறதும்
மந்தையில் பிரஸ்தாபமானவர்கள் அலறுகிறது
௩௭ மான சத்தமுண்டாம். — ஏனெனில் அவர்கள்
சுகித்திருந்த தாபரங்கள் கர்த்தருடைய கோபத்
௩௮ தின் எரிச்சலாலே சங்காரமாம்.—அவர் இளஞ்
சிங்கத்தைப்போலத் தமது கூடாரத்தை விட்டு
விட்டார்; ஏனெனில், ஒடுக்குகிறவனுடைய
எரிச்சலினாலும், அவனுடைய கோபத்தின் எரிச்
சலினாலும் அவர்கள் தேசம் பாழாயிற்றென்றும்
சொல்லென்றார்.

## உகா. அதிகாரம்.

க. எரேமியா வாக்குத்தத்தங்களினாலும், பயமுறுத்துதல்களினாலும் குணப்படுதலுக்குத் தூண்டினது. அ. அவன் பிடிபட்டு, ௰. குற்றஞ்சாற்றப்பட்டு, ௰௨. தன்னை நீதிமானென்று உரைத்தது. ௰௬. மீகா, உரியா இவர்கள் மாதிரியின்படி, உச. அகிக்காமின் காத்தலினால் நியாயத்திற்பிலே அவன் விடப்பட்டது.

௧ யோசியாவின் குமாரனும் யூதாவின் இராசா
வுமாகிய யோயாக்கீமுடைய இராச்சியபாரத்
தின் துவக்கத்திலே கர்த்தரால் உண்டான வார்த்
தை.
கர்த்தர் சொன்னதாவது: நீ கர்த்தருடைய வீட் ௨
டின் பிராகாரத்திலே நின்றுகொண்டு, கர்த்தரு
டைய வீட்டிலே பணியவருகிற யூதாவுடைய
பட்டணங்களின் குடிகள் அனைவரோடும் நீ
சொல்லத்தக்கதாக நாம் உனக்குக் கற்பித்த எல்
லா வார்த்தைகளையும் அவர்களுக்குச் சொல்;
ஒரு வார்த்தையையும் குறைக்காதிரு.—[2]அவர் ௩
கள் செய்கைகளுடைய பொல்லாப்பின்நிமித்
தம் நாம் அவர்களுக்குச் செய்ய நினைக்கிற தீங்
குக்கு நாம் மனஸ்தாபப்படத்தக்கவிதமாக ஒரு
வேளை அவர்கள் கேட்டு, அவரவர் தங்கள் பொல்
லாத வழியைவிட்டுத் திரும்புவார்கள்.—அவர்க ௪
ளுடனே நீ சொல்லவேண்டியதாவது: கர்த்தர்
உரைக்கிறதேதெனில், நாம் உங்களண்டைக்கு
ஏற்கெனவே அனுப்பிக்கொண்டிருந்தும், நீங்
கள் கேளாமற்போன நம்முடைய ஊழியக்கார
ராகிய தீர்க்கதரிசிகளின் வார்த்தைகளை நீங்கள்
கேட்கும்படிக்கும், — நாம் உங்கள் முன்னே ௫
வைத்த நமது நியாயப்பிரமாணத்திலே நீங்கள்
நடக்கும்படிக்கும், நீங்கள் நம்முடைய சொல்
லைக் கேளாதேபோனால்,—நாம் இந்த வீட்டைச் ௬
[3]சீலோவுக்குச் சரியாக்கி, இந்தப் பட்டணத்
தைப் பூமியிலுள்ள எல்லாச் சாதிகளுக்குமுன்
பாகவும் சாபமாக்கிப்போடுவோமென்று உரைத்
தாரென்று சொல்லென்றார். — ஆசாரியர்களும், ௭
தீர்க்கதரிசிகளும், சனம் அனைத்தும், எரேமியா
இந்த வார்த்தைகளையெல்லாம் கர்த்தருடைய
வீட்டிலே சொல்லக்கேட்டார்கள்.–அப்போது ௮
சம்பவித்ததேதென்றால், எல்லாச் சனத்துக்கும்
சொல்லக் கர்த்தர் தனக்குக் கற்பித்தவைகளை
யெல்லாம் எரேமியா சொல்லிமுடித்தபோது,
ஆசாரியர்களும் தீர்க்கதரிசிகளும் சனமனைத்தும்
அவனைப் பிடித்து: நீ சாகவே சாகவேண்டும்.—
இந்த வீடு சீலோவைப்போலாகி, இந்தப் பட்ட ௯
ணம் குடியில்லாமல்போகப் பாழ்க்கடிக்கப்படு
மென்று, நீ கர்த்தருடைய நாமத்திலே தீர்க்கதரி
சனம் சொல்லுவானேன் என்று சொல்லி, சன
மெல்லாம் கர்த்தருடைய வீட்டிலே எரேமியா
வுக்கு விரோதமாய்க்கூடின.
இந்த வர்த்தமானங்களை யூதாவின் பிரபுக்கள் ௰
கேட்டு, இராசாவின் வீட்டிலிருந்து கர்த்தருடை
ய வீட்டுக்குப்போயேறி, கர்த்தருடைய புதிய
வாசலின் ஒலிமுகத்தில் உளுக்காந்தார்கள்.–அப் ௰௧
போது ஆசாரியர்களும், தீர்க்கதரிசிகளும் பிரபுக்
களோடும் எல்லாச் சனத்தோடும்: [4]இந்த மனுஷ
னுக்கு மரண ஆக்கினை தகும்; ஏனெனில், உங்
கள் செவிகளாலே நீங்கள் கேட்டபடி, இந்தப்
பட்டணத்துக்கு விரோதமாகத் தீர்க்கதரிசனம்
சொன்னானென்றார்கள்.
அப்போது எரேமியா எல்லாப் பிரபுக்களோ ௰௨
டும், எல்லாச் சனத்தோடும் சொன்னதாவது: நீங்

1 யோவே. ௩ உக. ஆமோ. க. உ.—2 எரே கசு. க.

3 எரே எ. ௰௪.—4 அப். க. ௰௧

கள் கேட்ட எல்லா வார்த்தைகளையும் இந்த வீட்
டுக்கும் இந்தப் பட்டணத்துக்கும் விரோதமாகத்
தீர்க்கதரிசனமாய்ச் சொல்லக் கர்த்தர் என்னை
௰௩ அனுப்பினார்.—இப்போதும் [1]நீங்கள் உங்கள் வழி
களையும், உங்கள் கிரியைகளையும் சீர்ப்படுத்தி,
உங்கள் பராபரனாகிய கர்த்தருடைய சத்தத்தைக்
கேளுங்கள்; அப்போது கர்த்தர் [2]உங்களுக்கு வி
ரோதமாய்ச் சொன்ன தீங்குக்கு மனஸ்தாபப்படு
௰௪ வார்.—நானோவெனில், இதோ, உங்கள் கைக
ளில் இருக்கிறேன்; உங்கள் பார்வைக்கு நன்
றும் நிதானமுமாயிருக்கிறதை எனக்குச் செய்
௰௫ யுங்கள்.—ஆகிலும் நீங்கள் என்னைக் கொன்று
போட்டால், நீங்கள் குற்றமில்லாத இரத்தத்தை
உங்கள்மேலும் இந்தப் பட்டணத்தின்மேலும்
அதின் குடிகளின்மேலும் சுமத்திக்கொள்வீர்க
ளென்கிறதை அறியவே அறியுங்கள்; ஏனெ
னில், இந்த எல்லா வார்த்தைகளையும் உங்கள்
செவிகளிலே சொல்லக் கர்த்தர் மெய்யாகவே
என்னை உங்களண்டைக்கு அனுப்பினார் என்று
சொன்னான்.

௰௬ அப்போது பிரபுக்களும், சனமனைத்தும், ஆ
சாரியர்களோடும் தீர்க்கதரிசிகளோடும்: இந்த
மனுஷனுக்கு மரணஆக்கினை தகாது; ஏனெ
னில் நம்முடைய பராபரனாகிய கர்த்தரின் நா
மத்திலே நம்முடனே பேசினானென்றார்கள்.—
௰௭ தேசத்திலே மூப்பானவர்களிலும் சிலர் எழும்பி,
சனத்தினுடைய சபையனைத்தோடும் சொன்ன
௰௮ தாவது:—[3]யூதாவின் இராசாவாகிய எசேக்கியா
வின் நாள்களில் மரேசா ஊரானாகிய மீகா தீர்க்
கதரிசனஞ் சொல்லி, யூதாவின் சனமனைத்தோ
டும்: சீயோன் வயல்வெளியாய் உழப்பட்டு,எரு
சலேம் மண்மேடுகளும் இந்த வீட்டின் பர்வதம்
காட்டுமேடுகளுமாமென்பதை சேனைகளின் கர்
௰௯ த்தர் உரைத்தாரென்று சொன்னான். — அவனை
யூதாவின் இராசாவாகிய எசேக்கியாவும் யூதாவ
னைத்தும் கொல்லவே கொன்றார்களோ? இவர்
கர்த்தருக்குப் பயந்து, கர்த்தரின் முகத்தைநோக்
கிக் கெஞ்சினாரல்லவோ? அப்போது கர்த்தர்
அவர்களுக்கு விரோதமாகச் சொல்லியிருந்த தீங்
குக்கு மனஸ்தாபப்பட்டார்; இப்போதும், நாம்
நம்முடைய ஆத்துமாவுக்கு விரோதமாக மகா
பொல்லாப்பைச் செய்கிறவர்கள்.

௨௰ அதேனெனில், கீரியாத்யாரீம் ஊரானாகிய
சேமாயாவின் குமாரன் உரியா என்னப்பட்ட
ஒரு மனுஷனும் கர்த்தருடைய நாமத்திலே தீர்க்
கதரிசனம் சொல்லுகிறவனாயிருந்தான்; அவன்
எரேமியாவின் வார்த்தைகளுக்குச் சரியாக இந்
தப் பட்டணத்துக்கும் இந்தத் தேசத்துக்கும்
விரோதமாகத் தீர்க்கதரிசனம் சொல்லுவான்.—
௨௧ ஆனால் யோயாக்கீம் இராசாவும் அவருடைய
எல்லாப் பலவான்களும் எல்லாப் பிரபுக்களும்
அவன் வார்த்தைகளைக் கேட்டபோது, இராசா
அவனைக் கொன்றுபோட வகைபார்த்தான்; அ
தை உரியா கேட்டு, பயந்து, ஓடிப்போய், எகிப்
திலே சேர்ந்தான். — அப்போது யோயாக்கீம் ௨௨
இராசா அக்போரின் குமாரனாகிய எல்நாத்தானை
யும் அவனோடேகூட வேறே சிலரையும் எகிப்
துக்கு முதலாய் அனுப்பினார்.—இவர்கள் உரியா ௨௩
வை எகிப்திலிருந்து அழைத்துக்கொண்டுவந்து,
அவனை யோயாக்கீம் இராசாவண்டையில் விட்
டார்கள்; அப்போது அவர் அவனைப் பட்டை
யத்தாலே வெட்டி, அவன் உடலை நீசச்சனங்க
ளின் பிரேதக்குழிகளிடத்திலே போடுவித்தா
ரென்றார்கள்.—ஆகில் எரேமியாவைக் கொல்லச் ௨௪
சனத்தின் கையில் ஒப்புக்கொடுக்காதபடிக்கு,
சாப்பானுடைய குமாரனாகிய அகிக்காமின் கை
அவனோடு இருந்தது.

## ௨௭. அதிகாரம்.

௧. வடக்கயிறும் நுகத்தடியும் ஆகிய அடையாளத்தைக்கொண்டு, அடுத்த இராசாக்கள் நேபுகாத்நேச்சாருக்கு அமைந்துபோவதைத் தீர்க்கதரிசனமாகக் காட்டினது. ௮. கள்ளத்தீர்க்கதரிசிகளை நம்பாமல் அவர்களைக் கீழ்ப்படியச் சொன்னது. ௰௨. அதுபோலச் சிதேக்கியாவுக்கும் சொன்னது. ௰௯. மீதியான பாத்திரங்கள் பாபிலோனுக்குக் கொண்டுபோகப்பட்டு நினைவுகூர்தலின்வரைக்கும் அங்கேயிருக்குமென்பது.

யோசியாவின் குமாரனும் யூதாவின் இராசாவு ௧
மாகிய யோயாக்கீமுடைய இராச்சியபாரத்தின்
துவக்கத்திலே கர்த்தரால் எரேமியாவுக்குண்
டான வார்த்தை.

கர்த்தர் என்னுடனே சொன்னதாவது: நீ உ ௨
னக்கு வடக்கயிறுகளையும் நுகத்தடிகளையும் உண்
டுபண்ணி, அவைகளை உன் கழுத்திலே பூட்டிக்
கொண்டு,—அவைகளை எருசலேமுக்குச் சிதேக் ௩
கியா இராசாவண்டையில் வரும் தானாபதிகள்
கையிலே எதோமின் இராசாவுக்கும், மோவா
பின் இராசாவுக்கும், அம்மோன் புத்திரரின் இரா
சாவுக்கும், தீருவின் இராசாவுக்கும், சீதோனின்
இராசாவுக்கும் அனுப்பி,—அவர்கள் தங்கள் ஆண் ௪
டவன்மாருக்குச் சொல்ல அவர்களுக்குக் கற்பிக்
கவேண்டியதாவது: இஸ்ரவேலின்பராபரனாகிய
சேனைகளையுடைய கர்த்தர் உரைக்கிறது ஏதெ
னில்,—நாம் பூமியையும் மனுஷனையும் பூமி ௫
யின்மேலுள்ள மிருகசீவன்களையும் நமது பெரிய
பலத்தினாலும் நீட்டப்பட்ட நமது புயத்தினா
லும் உண்டாக்கினோம்; [5]நமது பார்வைக்குச் சரி
யாயிருக்கிறவனுக்கு அதைக் கொடுக்கிறோம்.—
இப்போதும் நாம் [6]இந்தத் தேசங்களையெல்லாம் ௬
நம்முடைய வேலைக்காரனாகிய நேபுகாத்நேச்சா
ரென்ற பாபேலுடைய இராசாவின் கையிலே
கொடுத்தோம்; அவனுக்கு ஊழியஞ்செய்ய வெ
ளியின் மிருகசீவன்களையும் அவனுக்குக் கொ
டுத்தோம்.—சகல சாதிகளும் அவனையும் அவ ௭
னுடைய குமாரனையும் அவன் குமாரனின் குமா
ரனையும் சேவிப்பார்கள்; [7]அவனுடைய தேசத்து
க்குக் காலம்வருமட்டாகத்தானே; அப்போது அ
நேகம் சாதிகளும் பெரிய இராசாக்களும் அவ
னை அடிமைக்கொள்ளுவார்கள்.—சம்பவிப்பதே ௮

1 எரே. ௭ ௩.—2 எரே. ௰௮.௮.—3 மீகா. ௩. ௧௨.—4 மீகா. ௩.௰௨.

5 தானி. ௪. ௰௪.—6 எரே.௨௫. ௯: ௨௮. ௰௪.—7 எரே. ௨௫. ௰௨.

தெனில், எந்தச்சாதி, எந்த இராச்சியம்பாபேலின் இராசாவாகிய நேபுகாத்நேச்சாரென்பவனைச் சேவிக்காமலும், தன் கழுத்தைப் பாபேலுடைய இராசாவின் நுகத்தடிக்குக் கீழ்ப்படுத்தாமலும் போகிறதோ, அந்தச் சாதியை நாம் அவன் கையாலே நிர்மூலமாக்குமளவும், பட்டையத்தாலும் பஞ்சத்தாலும் பெருவாரிக்காய்ச்சலாலும் விசாரிப்போமென்று கர்த்தர் சொல்லுகிறார்.

௯ பாபேலின் இராசாவை நீங்கள் சேவிப்பதில்லையென்று உங்களுடனே சொல்லுகிற உங்கள் தீர்க்கதரிசிகளுக்கும், உங்கள் குறிகாரருக்கும், உங்கள் சொப்பனக்காரருக்கும், உங்கள் நாட்பார்வைக்காரருக்கும், உங்கள் சூனியக்காரருக்கும் நீங்கள் கேள்விகொடாதிருப்பீர்களாக.—
௰ ஏனென்றால் நாம் உங்களை உங்கள் தேசத்துக்குத் தூரப்படுத்துகிறதற்கும், உங்களைத் துரத்திவிடுகிறதற்கும், நீங்கள் அழிகிறதற்குமாக அவர்கள் உங்களுக்குப் பொய்யான தீர்க்கதரிசனம்
௰௧ சொல்லுகிறார்கள். — ஆனால் எந்தச் சாதி தன் கழுத்தைப் பாபேலுடைய இராசாவின் நுகத்தடிக்குக் கீழ்ப்படுத்தி, அவனைச் சேவிக்குமோ, அதை நாம், தன் தேசத்தைப் பயிரிட்டு, அதிலே குடியிருக்கும்படிக்கு அதிலே தாபரிக்கப்பண்ணுவோமென்று கர்த்தர் சொல்லுகிறார் என்பது தானேயென்றார்.

௰௨ இந்த எல்லா வார்த்தைகளின்படியே நான் யூதாவின் இராசாவாகிய சிதேக்கியாவோடேயும் பேசிச் சொன்னதாவது: உங்கள் கழுத்துகளைப் பாபேலுடைய இராசாவின் நுகத்தடிக்குக் கீழ்ப்படுத்தி, அவனையும் அவன் சனத்தையும்
௰௩ சேவியுங்கள்; அப்போது பிழைப்பீர்கள்.—பாபேலுடைய இராசாவைச் சேவிக்காதேபோகிற சாதிக்கு விரோதமாகக் கர்த்தர் சொன்னதின்படியே, நீரும் உமது சனமும் [1]பட்டையத்தாலும் பஞ்சத்தாலும் பெருவாரிக்காய்ச்சலாலும் சாவா
௰௪ னேன்.—நீங்கள் பாபேலுடைய இராசாவைச் சேவிப்பதில்லையென்று உங்களுடனே சொல்லுகிற தீர்க்கதரிசிகளின் வார்த்தைகளைக் கேளாதிருப்பீர்களாக; ஏனெனில் [2]அவர்கள் உங்களுக்குப் பொய்த்தீர்க்கதரிசனம் சொல்லுகிறார்கள்.—
௰௫ ஏனென்றால், நாம் அவர்களை அனுப்பினதில்லை; நாம் உங்களைத் துரத்திவிடுகிறதற்கும், நீங்களும் உங்களுக்குத் தீர்க்கதரிசனம் சொல்லுகிற தீர்க்கதரிசிகளும் அழிகிறதற்குமாக, இவர்கள் நமது நாமத்தைச் சொல்லி, பொய்த்தீர்க்கதரிசனம் உரைக்கிறார்களென்று கர்த்தர் சொல்லுகிறாரென்றேன்.

௰௬ தீர்க்கதரிசிகளோடும் இந்த எல்லாச் சனத்தோடும் நான் பேசிச் சொன்னதாவது: கர்த்தர் உரைக்கிறதேதெனில், இதோ [3]கர்த்தருடைய வீட்டின் பண்டம்பாடிகள் இப்போது சீக்கிரத்திலே பாபேலிலிருந்து திரும்பிக் கொண்டுவரப்படுமென்று, உங்களுக்குத் தீர்க்கதரிசனம் சொல்லுகிற உங்களுடைய தீர்க்கதரிசிகளின் வார்த்தைகளைக் கேளாதிருப்பீர்களாக; ஏனெனில், அவர்கள் உங்களுக்குப் பொய்த்தீர்க்கதரிசனம் சொல்
லுகிறார்கள்.—அவர்களுக்குக் கேள்விகொடாதி ௰௭
ருப்பீர்களாக; பாபேலுடைய இராசாவைச் சேவியுங்கள்; அப்போது பிழைப்பீர்கள்; இந்தப்
பட்டணம் பாழாவானேன்?—அல்லவென்று இ ௰௮
வர்கள் தீர்க்கதரிசிகளாயிருந்து, இவர்களிடத்திலே கர்த்தருடைய வார்த்தையிருந்தால், கர்த்தருடைய வீட்டிலும், யூதாவினுடைய இராசாவின் வீட்டிலும், எருசலேமிலும் மீதியான பண்டம்பாடிகள் பாபேலுக்குப் போகாதபடிக்கு இவர்கள் சேனைகளையுடைய கர்த்தரை நோக்கி மன்றாடட்டுமே.

ஏனென்றால் பாபேலின் இராசாவாகிய நே ௰௯
புகாத்நேச்சார் [4]யோயாக்கீமின் குமாரனாகிய எகோனியாவென்ற யூதாவின் இராசாவையும், யூதாவிலும் எருசலேமிலுமிருந்த மேல்குலத்தார் அனைவரையும் எருசலேமிலிருந்து பாபேலுக்குச் சிறைபிடித்துக்கொண்டுபோகையில்,—
எடுக்காமல்போன [5]தூண்களையும், கடல்தொட் ௨௰
டியையும், ஆதாரங்களையும், இந்தப் பட்டணத்தில் மீதியான குறைப்பண்டம்பாடிகளையுங்குறித்துச் சேனைகளையுடைய கர்த்தர் சொல்லுகிற
தாவது:—கர்த்தருடைய வீட்டிலும், யூதாவினு ௨௰௧
டைய இராசாவின் வீட்டிலும், எருசலேமிலும் மீதியான அந்தப் பண்டம்பாடிகள் பாபேலுக்குக் கொண்டுபோகப்படுமென்று இஸ்ரவேலின் பராபரனாகிய சேனைகளையுடைய கர்த்தர் சொல்
லுகிறார்.—நாம் அவைகளை விசாரிக்கப்போகிற ௨௰௨
நாள்மட்டுக்கும் அவைகள் அங்கே இருக்கும்; [6]பிற்பாடு அவைகளைத் திரும்ப இந்தத் தலத்திற்கு வந்தேறப்பண்ணுவோமென்று கர்த்தர் சொல்லுகிறாரென்றேன்.

## ௨௮. அதிகாரம்.

௧. கானனியா பாத்திரங்களும் எகோனியாவும் திரும்பிவருவதைக்குறித்துக் கள்ளத்தீர்க்கதரிசனம் சொன்னது. ௬. எரேமியா அது மெய்யென்று விருப்பமுற்று, உண்மையான தீர்க்கதரிசி இன்னானென்று சம்பவிப்பதினால் வெளிப்படுமென்று சொன்னது. ௰. கானனியா எரேமியாவின நுகத்தடியை உடைத்தது. ௰௨. எரேமியா இரும்பு நுகத்தடியையும், ௰௫. கானனியாவின் மரணத்தையும் முன்னறிவித்தது.

ஆனால் யூதாவுடைய இராசாவாகிய சிதேக்கியா ௧
அரசாளத் துவக்கின நாலாம்வருஷமான அந்த வருஷத்திலேதானே ஐந்தாம்மாதத்திலே சம்பவித்தது ஏதென்றால், அசூரின் குமாரனாகிய கானனியா என்னப்பட்ட கிபேயோன் ஊரானாகிய தீர்க்கதரிசி கர்த்தருடைய வீட்டிலே ஆசாரியர்களும் சகல சனமும் பார்த்திருக்க என்னுடனே
சொன்னதாவது: — இஸ்ரவேலுடைய பராபர ௨
னாகிய சேனைகளின் கர்த்தர் உரைக்கிறதேதெனில், பாபேலுடைய இராசாவின் நுகத்தடியை
உடைத்தோம்.—[7]பாபேலுடைய இராசாவாகிய ௩
நேபுகாத்நேச்சார் இவ்விடத்திலிருந்து எடுத்துப் பாபேலுக்குக் கொண்டுபோன கர்த்தருடைய

1 அ. ௨௪.—2 எரே. ௰௪. ௰௪: ௰௪, ௪. ௯.—3 எரே. ௨௮. ௩. ௨௧: ௰௯. ௰௭: ௨௯. அ. ௧ யோ. 4 ௨ இரா. ௨௪. ௰௨–௰௬.

5 எரே. ௫௨. ௰௭. ௨ இரா ௨௫. ௰௩. 7 எரே. ௨௭. ௰௬–௰௭.—6 எஸ். ௧. ௭. ௮.

வீட்டின் பண்டம்பாடிகளையெல்லாம் நாம் இர
ண்டுவருஷகாலத்திலே இவ்விடத்துக்குத் திரும்
௪ ப வரப்பண்ணுவோம்.—யோயாக்கீமின் குமார
னாகிய எகோனியாவென்கிற யூதாவுடைய இரா
சாவையும் பாபேலுக்குச் சிறைபோன யூதர் அ
னைவரையும் நாம் இவ்விடத்துக்குத் திரும்ப
வரப்பண்ணுவோம்; ஏனெனில் பாபேலுடைய
இராசாவின் நுகத்தடியை உடைப்போமென்று
ரென்று சொன்னான்.
௫ அப்போது எரேமியா தீர்க்கதரிசி ஆசாரியர்கள்
பார்த்திருக்கவும், கர்த்தருடைய வீட்டில் நின்றி
ருந்த சனமெல்லாம் பார்த்திருக்கவும் கானனியா
௬ தீர்க்கதரிசியுடனே சொன்னதாவது: — ஆமன்,
கர்த்தர் அப்படிச் செய்வாராக; கர்த்தருடைய
வீட்டின் பண்டம்பாடிகளையும் சிறைபட்டுப்
போன அனைவரையும் பாபேலிலிருந்து திரும்ப
வரப்பண்ணுவாரென்று நீ தீர்க்கதரிசனமாய்ச்
சொன்ன உன்னுடைய வார்த்தைகளைக் கர்த்தர்
௭ திடப்படுத்துவாராக. — இப்போதோவெனில்,
உன்னுடைய செவிகளும் சகல சனத்தினுடைய
செவிகளும் கேட்க நான் சொல்லும் வார்த்தை
௮ யைக்கேள்.—பூருவகாலந்துவக்கி எனக்குமுன்
னும் உனக்குமுன்னும் இருந்த தீர்க்கதரிசிகள்
அநேகந்தேசங்களுக்கு விரோதமாகவும், பெரிய
இராச்சியங்களுக்கு விரோதமாகவும், யுத்தத்தை
யும் பஞ்சத்தையும் பெருவாரிக்காய்ச்சலையுங்கு
௯ றித்துத் தீர்க்கதரிசனம் சொன்னார்கள். — சமா
தானம் வருமென்று தீர்க்கதரிசனம் சொல்லுகிற
தீர்க்கதரிசி இருக்கிறானே, அந்தத் தீர்க்கதரிசியி
னுடைய வார்த்தையின்படி வந்தால், அப்போது
அவன் கர்த்தர் மெய்யாய் அனுப்பின தீர்க்கதரி
சியாக அறியப்படுவானென்று எரேமியா தீர்க்க
தரிசி சொன்னான்.
௰ அப்போது கானனியா என்கிற தீர்க்கதரிசி
[1]எரேமியா தீர்க்கதரிசியின் கழுத்திலிருந்த நுகத்
தடியை வாங்கி, அதை உடைத்துவிட்டான்.—
௰௧ பிறகு கானனியா சகல சனமும் பார்த்திருக்கச்
சொன்னதாவது: இந்தப்பிரகாரமாக இரண்டுவ
ருஷகாலத்திலே பாபேலினுடைய இராசாவாகி
ய நேபுகாத்நேச்சாருடைய நுகத்தடியைச் சகல
சாதிகளின் கழுத்தையம் விலக உடைத்துப்போ
டுவோமென்று கர்த்தர் சொன்னாரென்றான்; அப்
போது எரேமியா தீர்க்கதரிசி தன் வழியேபோய்
விட்டான்.
௰௨ கானனியாவென்கிற தீர்க்கதரிசி எரேமியா
தீர்க்கதரிசியின் கழுத்திலிருந்த நுகத்தடியை
உடைத்துவிட்டபிற்பாடோவெனில், கர்த்தரு
டைய வார்த்தை எரேமியாவுக்குண்டாகி, அவர்
௰௩ சொன்னதாவது:-நீ போய், கானனியாவுடனே
சொல்லவேண்டியதேதெனில், நீ மரநுகத்தடி
யை உடைத்தாய்; ஆனால் அதற்குப் பதிலாக
இருப்பு நுகத்தடியை உண்டுபண்ணென்று கர்த்
௰௪ தர் சொன்னார். — ஏனெனில் பாபேலுடைய
இராசாவாகிய நேபுகாத்நேச்சாரைச் சேவிக்கும்
படிக்கு இருப்பு நுகத்தடியை இந்த எல்லாச்
சாதிகளுடைய கழுத்தின்மேலும் போட்டோம்;
அவர்கள் அவனைச் சேவிக்கவேண்டும்; வெளி
யின் மிருகசீவன்களையும் அவனுக்கு ஒப்புக்கொ
டுத்தோமென்று இஸ்ரவேலின் பராபரனாகிய
சேனைகளையுடைய கர்த்தர் உரைக்கிறாரென்று
சொல்லென்றார்.
பிற்பாடு எரேமியா தீர்க்கதரிசி கானனியா ௰௫
வென்ற தீர்க்கதரிசியுடனே சொன்னதாவது:
இப்போதும் கானனியாவே கேள்; கர்த்தர் உன்
னை அனுப்பினதில்லை; நீயோ இந்தச் சனத்தைப்
பொய்யை நம்பப்பண்ணினாய். — ஆகையால், ௰௬
இதோ, உன்னைப் பூமியின்மேல் இராதபடிக்குத்
தள்ளிவிடுவோம்; இந்த வருஷத்திலே நீ சாவா
யென்று கர்த்தர் சொல்லுகிறார்; ஏனெனில் [2]கர்த்
தருக்கு விரோதமாய்க் கலகமாகப் பேசினாயென்
றான்.—அப்படியே கானனியா என்ற தீர்க்கத ௰௭
ரிசி அவ்வருஷத்திலேதானே ஏழாம் மாசத்திலே
செத்துப்போனான்.

## ௨௯. அதிகாரம்.

௧. பாபிலோனிலே சிறைப்பட்டிருப்பவர்கள் அங்கே அமரிக்கையாயிருப்ப
தையும், ௮. அவர்களுடைய தீர்க்கதரிசிகளின் கனுக்களை நம்பாமலிருப்
பதையும், ௰. அவர்கள் எழுபதுவருஷம் அடிமைத்தனத்திலிருந்து, தயவு
பெற்றுத் திரும்பிவருவதையுங்குறித்து எரேமியா காகிதம் அனுப்பினது.
௰௫. மற்றவர்கள் கீழ்ப்படியாமையினால் அழிவதை முன்னறிவித்தது. ௨௰.
பொய்சொல்லுகிற இரண்டு தீர்க்கதரிசிகளாகிய ஆகாபுக்கும், சிதேக்கி
யாவுக்கும் வரும் பயங்கரமுள்ள முடிவைக் காட்டினது. ௨௪. செமாயா
எரேமியாவுக்கு விரோதமாக எழுதினது. ௩௰. எரேமியா அவனுடைய
நியாயத்தீர்ப்பைச் சொன்னது.

ஏகோனியாவென்ற [3]இராசாவும், இராசஸ்திரி ௧
யும், பிரதானிகளும், யூதாவிலும் எருசலேமிலு
மிருந்த பிரபுக்களும், தச்சரும், கொல்லரும் எரு
சலேமைவிட்டுப் புறப்பட்டுப் போனபிற்பா
டு,—எரேமியா தீர்க்கதரிசி சிறைப்பட்டுப்போன ௨
மூப்பர்களில் மீதியானவர்களுக்கும், ஆசாரியர்
களுக்கும், தீர்க்கதரிசிகளுக்கும், நேபுகாத்நேச்
சார் சிறைப்படுத்தி எருசலேமிலிருந்து பாபே
லுக்குக் கொண்டுபோன எல்லாச் சனத்துக்கும்
எழுதி,—யூதாவின் இராசாவாகிய சிதேக்கியா பா ௩
பேலுக்குப் பாபேலின் இராசாவாகிய நேபுகாத்
நேச்சாரண்டையிலே அனுப்பின சாப்பானின்
குமாரனாகிய எலேயாசாவின் கையிலும், இலக்
கியாவின் குமாரனாகிய கேமாரியாவின் கையி
லும் எருசலேமிலிருந்து அனுப்பின நிருபத்தின்
வார்த்தைகளாவன:
இஸ்ரவேலின் பராபரனாகிய சேனைகளையு ௪
டைய கர்த்தர், தாம் எருசலேமிலிருந்து பாபே
லுக்குச் சிறைப்பட்டுப்போகப்பண்ணின அனை
வருக்கும்சொல்லுகிறதேதெனில்,-நீங்கள் வீடுக ௫
ளைக் கட்டி, குடியிருந்து, தோட்டங்களை நாட்டி,
அவைகளின் கனியைச் சாப்பிடுங்கள். — நீங் ௬
கள் பெண்சாதிகளை விவாகம்பண்ணி, குமாரரை
யும் குமாரத்திகளையும் பெற்று, உங்கள் குமார

1 எரே. ௨௭. ௨.—2 ௫ மோ. ௰௩. ௫.

3 எரே. ௨௪. ௧. ௨ இரா. ௨௪. ௰௨. ழு.

ருக்குப் பெண்சாதிகளைக் கொண்டு, உங்கள்
குமாரத்திகளைப் புருஷருக்குக் கொடுத்து, இவர்
களும் குமாரரையும் குமாரத்திகளையும் பெறட்
டும்; நீங்கள் அங்கே குறுகிப்போகாமல் பெரு
௭ கிப்போய்,—நாம் உங்களைச் சிறைப்பட்டுப்போ
கப்பண்ணின பட்டணத்தின் சமாதானத்தைத்
தேடி, அதற்காகக் கர்த்தரை விண்ணப்பம்பண்
ணுங்கள்; ஏனெனில், அதற்குச் சமாதானமிருக்
கையில் உங்களுக்கும் சமாதானமிருக்கும்.

௮ ஏனெனில் இஸ்ரவேலின் பராபரனாகிய சே
னைகளையுடைய கர்த்தர் சொல்லுகிறதாவது: உங்
கள் நடுவிலிருக்கிற உங்கள் தீர்க்கதரிசிகளும் உங்
கள் குறிகாரரும் உங்களை மோசம்போக்கவொட்
டாதிருங்கள்; நீங்கள் சொப்பனங்காணப்பண்
ணுகிற உங்கள் சொப்பனக்காரருக்குக் கேள்வி
௯ கொடாமலும் இருங்கள். — ஏனெனில், அவர்
கள் நமது நாமத்தைச் சொல்லி உங்களுக்குப்
பொய்த்தீர்க்கதரிசனம் உரைக்கிறார்கள்; நாம் அ
வர்களை அனுப்பினதில்லையென்று கர்த்தர் சொல்
௰ லுகிறார்.—ஏனென்றால், [1]கர்த்தர் உரைக்கிறதா
வது: பாபேலிலே எழுபதுவருஷம் நிறைவேறு
கையில் நாம் உங்களைச் சந்தித்து, உங்களை இவ்
விடத்துக்குத்திரும்ப வரப்பண்ணும்படிக்கு உங்
கள்மேல் நம்முடைய நல்வார்த்தையை நிருவா
௰௧ கம்பண்ணுவோம்.—ஏனெனில், நீங்கள் காத்தி
ருக்கும் முடிவை உங்களுக்குக் கொடுக்கும்படி
க்கு நாம் உங்கள்பேரிலே நினைத்திருக்கிற நினை
வுகளை நாம் அறிவோமென்று கர்த்தர் சொல்லு
கிறார்; அவைகள் தீமைக்கல்ல, சமாதானத்துக்
௰௨ கடுத்த நினைவுகள்தானே.—அப்போது நீங்கள்
நம்மைத் தொழுதுகொண்டுபோய், [2]நம்மை நோ
க்கி விண்ணப்பம்பண்ணுகையில் உங்களைக்
௰௩ கேட்டருளுவோம்.—[3]நம்மை முழு இருதயத்தா
லும் தேடினீர்களானால், நம்மைத் தேடுகையில்
௰௪ கண்டுபிடிப்பீர்கள்.—நாம் உங்களுக்குத் தென்
படுவோமென்று கர்த்தர் சொல்லுகிறார்; நாம் உங்
கள்சிறையிருப்பைத் திருப்பி, நாம் உங்களைத் து
ரத்திவிட்ட எல்லாச் சாதிகளிலும் எல்லா இடங்
களிலுமிருந்து உங்களைச் சேர்த்து, நாம் உங்களை
விலக்கியிருந்த தலத்துக்கே உங்களைத் திரும்பிவ
ரப்பண்ணுவோமென்று கர்த்தர் சொல்லுகிறார்.

௰௫ ஏனென்றால் கர்த்தர் எங்களுக்குப் பாபேலி
லே தீர்க்கதரிசிகளை எழுப்பினாரென்கிறீர்கள்.—
௰௬ ஆனால் தாவீதின் ஆசனத்தில் உளுக்காந்திருக்
கிற இராசாவைக்குறித்தும், உங்களோடேகூ
டச் சிறையிருப்பிலே புறப்பட்டுப்போகாமல்
இந்தப் பட்டணத்தில் குடியிருக்கிற உங்கள்
சகோதரராகிய எல்லாச் சனத்தைக்குறித்தும் கர்த்
௰௭ தர் சொல்லுகிறதாவது:—[4]இதோ, நாம் பட்டைய
த்தையும், பஞ்சத்தையும், பெருவாரிக்காய்ச்சலை
யும் அவர்களுக்குள் அனுப்பி, ஆகாதவகையான
தினாலே புசிக்கப்படாத ஆகாத அத்திப்பழங்க
ளுக்கு அவர்களை ஒப்பாக்குவோமென்று சேனை
களையுடைய கர்த்தர் சொல்லுகிறார்.—அவர்கள் ௰௮
நம்முடைய வார்த்தைகளைக் கேளாதேபோனப
டியினாலே, நாம் அவர்களைப் பட்டையத்தாலும்,
பஞ்சத்தாலும், பெருவாரிக்காய்ச்சலாலும் பின்
தொடர்ந்து, [5]அவர்களைப் பூமியிலுள்ள எல்லா
இராச்சியங்களிலும் அலைச்சலாகவும், நாம் அவ
ர்களைத் துரத்துகிற எல்லாச் சாதிகளிடத்திலும்
சாபமாகவும், பாழாகவும், பயில்போடுதலாகவும்,
நிந்தையாகவும் வைப்போமென்று கர்த்தர் சொல்
லுகிறார்.—நாம் உங்களண்டைக்குத் தீர்க்கதரி ௰௯
சிகளாகிய நம்முடைய ஊழியக்காரரை ஏற்கெ
னவே அனுப்பிக்கொண்டேயிருந்தும், நீங்கள்
கேளாதேபோனீர்களே என்று கர்த்தர் சொல்லு
கிறார்.

இப்போதும் சிறையிருக்கத்தக்கதாக நாம் எரு ௨௰
சலேமிலிருந்து பாபேலுக்கு அனுப்பிவிட்ட
நீங்களெல்லாரும் கர்த்தருடைய வார்த்தையைக்
கேளுங்கள்.—நமது நாமத்தைச் சொல்லி, உங்க ௨௰௧
ளுக்குப் பொய்த்தீர்க்கதரிசனம் உரைக்கிற கோ
லாயாவின் குமாரனாகிய ஆகாபையும், மாசேயா
வின் குமாரனாகிய சிதேக்கியாவையுங்குறித்து
இஸ்ரவேலின் பராபரனாகிய சேனைகளையுடைய
கர்த்தர் சொல்லுகிறதாவது: இதோ, நாம் அவர்க
ளைப் பாபேலுடைய இராசாவாகிய நேபுகாத்நே
ச்சாரின் கையில் ஒப்புக்கொடுக்கிறோம்; இவன்
அவர்களை உங்கள் கண்களுக்குமுன்பாக வெட்
டுவான்.—பாபேலின் இராசா அக்கினியினால் ௨௰௨
சுட்டுப்போட்ட சிதேக்கியாவுக்கும் ஆகாபுக்
கும் கர்த்தர் உன்னைச் சமானமாக்கக்கடவா
ரென்று, அவர்களைத்தொட்டுப் பாபேலிலே
சிறையிருக்கிற யூதர் அனைவருக்குள்ளும் ஒரு சா
பவார்த்தை உண்டாகும்.—அதேனென்றால், அவ ௨௰௩
ர்கள் இஸ்ரவேலிலே பயித்திய வேலையைச்
செய்து, தங்களுக்கு அடுத்தவர்களுடைய பெ
ண்சாதிகளோடே விபசாரம்பண்ணி, நாம் அ
வர்களுக்குக் கற்பிக்காத பொய்வார்த்தையை
நமது நாமத்தைச் சொல்லி உரைத்தார்கள்; நாம்
அதை அறிந்தவர்; நாம் அதற்குச் சாட்சியுமான
வரென்று கர்த்தர் சொல்லுகிறாரென்றெழுதி
னான்.

பின்னையும் கர்த்தர் சொன்னதேதெனில், நே ௨௰௪
கேலாமியனாகிய சேமாயாவுக்கும் நீ சொல்லி அ
னுப்பவேண்டியதாவது: — நீ எருசலேமிலிருக் ௨௰௫
கிற எல்லாச் சனத்துக்கும், மாசேயாவின் குமா
ரனாகிய செப்பனியாவென்ற ஆசாரியனுக்கும்,
எல்லா ஆசாரியர்களுக்கும் உன் நாமத்திலே நிரு
பத்தை எழுதி அனுப்பினதேதென்று இஸ்ரவே
லின் பராபரனாகிய சேனைகளையுடைய கர்த்தர்
சொல்லுகிறார் என்பதைத்தானென்றார்.—இவ ௨௰௬
னுக்கு அவன் எழுதியிருந்த நிருபமாவது: நீங்
கள் கர்த்தருடைய வீட்டின் விசாரிப்புக்காரராயி
ருக்கும்படிக்கும் பிரமைகொண்டவனும் தீர்க்
கதரிசியுமாகிய எந்த மனுஷனையும் நீர் காவல்

1 எரே. ௨௫. ௰௧.–2 சங். ௫௰. ௰௫.–3 உபா. ௫. ௯. மத். ௭. ௭, ௮.–4 எரே. ௨௪, ௮-௰.—5 எரே. ௰௫. ௪; ௨௪. ௯, ௰. ௫ மோ. ௨௮, ௩௭. எசே. ௫. ௰௫.

அறையிலும் தொழுவிலும் போடும்படிக்கும்,கர்
த்தர் உம்மை ஆசாரியனாயிருந்த யோய்தாவின்
௨எ ஸ்தலத்திலே ஆசாரியனாக வைத்தாரே.—இப்போ
தும் உங்களுக்குத் தீர்க்கதரிசனம் கூறிவருகிற
ஆனதோத்தூரானாகிய எரேமியாவை நீர் அதட்
௨அ டாமல்போனதென்ன?-ஏனெனில் நெடுங்கால
மாக அப்படியிருக்கும்; நீங்கள் வீடுகளைக் கட்டி
அவைகளில் குடியிருந்து, தோட்டங்களை நாட்
டி,அவைகளின் கனிகளைச்சாப்பிடுங்களென்று,
அதினாலே அவன் பாபேலில் இருக்கிற எங்க
ளுக்கு வார்த்தையை அனுப்பினானென்று எழு
௨௯ தியிருந்தான்.—இந்த நிருபத்தைச் செப்பனியா
வென்ற ஆசாரியன் எரேமியா தீர்க்கதரிசியின்
காதுகள்கேட்க வாசித்தான்.
௩௰ ஆனதுகொண்டு கர்த்தருடைய வார்த்தை எரே
௩௧ மியாவுக்கு உண்டாகி, அவர் சொன்னது:—நீ
சிறையிருக்கிற அனைவருக்கும் அனுப்பவேண்
டிய வார்த்தையாவது: நெகேலாமியனாகிய சே
மாயாவைக்குறித்து, கர்த்தர் சொல்லுகிறதேதெ
னில், சேமாயாவை நாம் அனுப்பாதிருந்தும்,
அவன் உங்களுக்குத் தீர்க்கதரிசனஞ்சொல்லி
[1]உங்களைப் பொய்யை நம்பப்பண்ணுகிறபடியி
௩௨ னாலே, — கர்த்தர் சொல்லுகிறதாவது: இதோ,
நாம் நெகேலாமியனாகிய சேமாயாவையும், அ
வன் வித்தையும் விசாரிப்போம்; இந்தச் சனத்
தின் நடுவிலே குடியிருப்பவன் ஒருவனும் அவ
னுக்கு இல்லாதிருப்பான்; நாம் நமது சனத்துக்
குச் செய்யும் நன்மையை அவன் காண்பதுமில்
லை; ஏனெனில் கர்த்தருக்கு விரோதமாகக் கலக
மாய்ப் பேசினானென்று கர்த்தர் சொல்லுகிறார்
என்றதைத்தானென்றார்.

## ௩௰. அதிகாரம்.

௧. பாபபான் யூதர்கள் திரும்பிவருவதைக்குறித்து எரேமியாவுக்குக் காட்டி னது. ௭. அவர்களுடைய துன்பம் முடிந்தபின்பு அவர்களுக்கு விடுதலை கிடைக்குமென்பது. ௰. அவர் யாக்கோபைத் தேற்றினது. ௰௮. அவர்கள் திரும்புதல் கிருபையுள்ளதாயிருக்குமென்பது. ௨௧. துன்மார்க்கர்மேல் தேவகோபம் இறங்குமென்பது.

௧ கர்த்தராலே எரேமியாவுக்கு உண்டான வார்த்
தையாவது:
௨ இஸ்ரவேலின் பராபரனாகிய கர்த்தர் சொல்லு
கிறதேதெனில், நாம் உன்னோடே பேசின எல்
லா வார்த்தைகளையும் ஒரு புஸ்தகத்தில் எழுதிக்
௩ கொள்.-ஏனெனில் இதோ, நாள்கள் வருமென்று
கர்த்தர் சொல்லுகிறார்; [2]அப்போது நாம் இஸ்ர
வேலும் யூதாவுமாகிய நமது சனத்தினுடைய
சிறையிருப்பைத் திருப்பி, நாம் அவர்கள் பிதாக்
களுக்குக் கொடுத்த தேசத்துக்கு அவர்களைத் திரு
ம்பிவரப்பண்ணுவோம்; அதை அவர்கள் சுதந்த
ரித்துக்கொள்ளுவார்களென்று கர்த்தர் சொல்லு
௪ கிறார்.—இவைகள் கர்த்தர் இஸ்ரவேலையும் யூதா
வையுங்குறித்துச் சொன்ன வார்த்தைகள்.
௫ ஏனெனில் கர்த்தர் சொல்லுகிறதாவது: தத்த
ளிப்பின் சத்தத்தைக் கேட்கிறோம்; திகிலுண்டு,
சமாதானமில்லை.—ஆணாய்ப்பிறந்தவன் பெறுகிற ௬
துண்டோவென்று கேட்டுப்பாருங்கள்;எல்லாப்
புருஷரும்[3]பிள்ளைப்பெறுகிறவளைப்போலத் தங்
கள் கைகளைத் தங்கள் இடுப்புகளின்மேல் வைத்
திருக்கிறதையும், எல்லா முகங்களும் வெளுத்து
மாறினதையும் நாம் காண்கிறதெப்படி?-ஐயோ! எ
அந்த நாள் பெரியது;அதைப்போலொத்தநாளில்
லை;அது யாக்கோபுக்கு இக்கட்டுக்காலம்;ஆனால்
அதற்கு நீங்கலாகி இரட்சிக்கப்படுவான்.
அந்நாளில் சம்பவிப்பது ஏதென்றால், நாம் அ
அவன் நுகத்தடியை உன் கழுத்தின்மேல் இராத
படிக்கு உடைத்து, உன் கட்டுகளை அறுப்போ
மென்று சேனைகளையுடைய கர்த்தர் சொல்லுகி
றார்; அந்நியர் இனி அவனை அடிமைக்கொள்வ
தில்லை.—[4]தங்கள் பராபரனாகிய கர்த்தரையும், ௯
நாம் தங்களுக்கு எழுப்பப்போகிற தங்கள் இரா
சாவாகிய தாவீதையுமே சேவிப்பார்கள்.-ஆகை ௰
யால் நம்முடைய தாசனாகிய யாக்கோபே, [5]நீ
பயப்படாயாக; இஸ்ரவேலே, கலங்காயாக
வென்று கர்த்தர் சொல்லுகிறார்; ஏனெனில் இ
தோ, நாம் உன்னைத் தூரத்திலும், உன் வித்தைத்
தங்கள் சிறையிருப்பின் தேசத்திலும் வைக்காதப
டிக்கு இரட்சிப்போம்; யாக்கோபு திரும்பிவந்து
அமர்ந்து சுகித்துமிருப்பான்; அவனைத் தத்தளிக்
கப்பண்ணுபவனில்லை.—ஏனென்றால் உன்னை ௰௧
இரட்சிப்பதற்காக நாம் உன்னுடனேகூட இரு
க்கிறோமென்று கர்த்தர் சொல்லுகிறார்; ஏனெ
னில், நாம் உன்னைச் சிதறவடித்த எல்லாச் சாதி
களையும் நிர்மூலம்பண்ணுவோம்; [6]உன்னையோ
நாம் நிர்மூலம்பண்ணாமல் உன்னை நியாயமட்
டாய்த் தண்டிப்போம்; உன்னைக் குற்றமற்று
நீங்கலாயிருக்கவொட்டோம்.
ஏனெனில் கர்த்தர் சொல்லுகிறதாவது: [7]உன் ௰௨
நொறுங்குதல் கேவலமும் உன் காயம் நோக்கா
டுள்ளதுமாயிருக்கிறது.—ஆற்றுவிக்கும்பொருட் ௰௩
டாக உன் காரியத்தை மேற்போட்டுக்கொள்ளு
கிறவனில்லை; மேலுக்குப் போடும் ஔஷதங்கள்
உனக்கில்லை. — உன்னைச் சிநேகித்த யாவரும் ௰௪
உன்னை மறந்தார்கள்; அவர்கள் உன்னைத் தே
டார்கள்; ஏனெனில் உன் அக்கிரமத்தினுடைய
திரளின்நிமித்தமும், உன் பாவங்கள் பலத்துப்
போனதின்நிமித்தமும், [8]நாம் சத்துரு வெட்டும்
வண்ணமாகவும் கடூரன் தண்டிக்கிற வண்ணமா
கவும் உன்னை அடித்தோம்.—உன் நொறுங்குத ௰௫
லினாலும் உன் வேதனை கேவலமாயிருக்கிறதினா
லும் நீ கூப்பிடுவானேன்? உன் அக்கிரமத்தி
னுடைய திரளின்நிமித்தமும் உன் பாவங்கள்
பலத்துப்போனதின்நிமித்தமும் இப்படி உனக்
குச் செய்தோம்.-ஆனதுகொண்டு உன்னைப் பட் ௰௬
சிக்கிறவர்கள் [9]பட்சிக்கப்படுவார்கள்; உன் சத்
துருக்களெல்லாரும் சிறையிருப்புக்குப் போவா
ர்கள்; உன்னைச் சூறையாடுகிறவர்கள் சூறையா
வார்கள்; உன்னைக் கொள்ளையிடுகிற அனைவரை

1 எரே ௨௩.௰௫,௰௬.—2 எரே.௨௯. 4 ஏசே ௩௪. ௨௩, ௨௪ : ௩எ. ௨௪. ௭௪.-3 எரே. ௪. ௩௧: ௬௩. ௬. ஓசே ௩. ௫
5 எரே. ௪௬.௨எ,௨அ.ஏசா.௪௩ ௰௩. 7 எரே. ௰௫.௰௮.—8 எரே.௨.௰௯. 6 எரே ௰. ௨௪,௨௫ ஏசா.௪௩ ௰௪. 9 ௨ மோ. ௨௩. ௨௨.

யஎ யும் கொள்ளையாக ஒப்புக்கொடுப்போம்.-ஏனெ
னில் அவர்கள் உன்னைத் தள்ளுண்டவள் என்ற
ழைத்து, இது ஒருவனும் விசாரிக்காத சீயோ
னென்று சொல்லுகிறபடியினாலே நாம் உனக்கு
ஆரோக்கியம் வரப்பண்ணி, உன் காயங்களை
ஆற்றுவிப்போமென்று கர்த்தர் சொல்லுகிறார்.
யஅ கர்த்தர் உரைக்கிறதாவது: [1]இதோ, நாம் யாக்
கோபுடைய கூடாரங்களின் சிறையிருப்பைத்
திருப்பி, அதின் வாசஸ்தலங்களுக்கு இரங்கு
வோம்;பட்டணம் தன் மண்மேட்டின்மேல் கட்
டப்பட்டு, அரமனை தன் நியாயத்தின்படி நிறுத்
யகூ தப்படும்.-அவைகளிலிருந்து தோத்திரமும் கீத
வாத்தியக்காரரின் சத்தமும் புறப்படும்;அவர்கள்
குறுகிப்போவதில்லை; அவர்களை வர்த்திக்கப்ப
ண்ணுவோம்; அவர்கள் சிறுகிப்போவதில்லை;
அவர்களை மகிமைப்படுத்துவோம்.
உய அதின் பிள்ளைகள் முந்தியதுபோலிருப்பார்
கள்; அதின் சபை நமக்குமுன்பாகத் திடப்பட்
டுப்போகும்; ஆனால் அதை ஒடுக்கின யாவரை
உக யும் விசாரிப்போம்.—[2]அதின் மகத்துவசாலி
அதிலிருந்து உண்டாகி, அதை ஆளுகிறவர்
அதின் நடுவிலிருந்து புறப்படுவார்; அவரைச்
சேர்ந்துவரப்பண்ணுவோம்; அவர் நம்மைக்
கிட்டுவார்; ஏனெனில் அவரைத்தவிர நம்மண்
டைசேரும்படிக்கு, தன் இருதயத்தைப் பிணைப்
படுத்துபவன் யாவனென்று கர்த்தர் சொல்லுகி
உஉ றார்.—[3]நீங்கள் நமக்குச் சனமாயிருப்பீர்கள்; நாம்
உங்களுக்குப் பராபரனாயிருப்போம்.
உங [4]இதோ,கோராவாரிக் காற்றாகிய கர்த்தருடைய
பெருங்காற்று உக்கிரமாயெழும்பி,அடித்து,ஆகா
உச தவர்களுடைய தலையின்மேல் பாயும்.—கர்த்தர் அ
தைச் செய்யுமளவும், தம்முடைய இருதயத்தின்
நினைவுகளை நிருவாகம்பண்ணுமளவும், அவரு
டைய கோபத்தின் உக்கிரம் திரும்பாது; கடை
சிநாள்களில் இதை உணர்ந்துகொள்வீர்கள்.

## ஙக அதிகாரம்.

க. இஸ்ரவேலர் முந்தின சீருக்குக் கொண்டுவரப்படுதல். ய. அதினுடைய பிரசித்தம். யரு. இராகேல் துக்கப்பட்டு ஆறுதலடைந்தது. யஅ. எப்பிராயீம் மனஸ்தாபப்பட்டு, தன் தேசத்திற்குக் கொண்டுவரப்பட்டது. உஉ. கிறிஸ்துவின் வருகை வாக்குத்தத்தம்பண்ணப்பட்டது. உஎ. திருச்சபையின்மேல் அவருக்கு உண்டாகிய கவலை. ஙக. அவருடைய புது உடம்படிக்கை. ஙரு. திருச்சபையின் உறுதியும், ஙஅ. அதன் விரிவும்.

க அக்காலத்திலே இஸ்ரவேலின் வம்சங்களுக்கு
எல்லாம் [5]பராபரனாயிருப்போம்; அவர்கள் நமக்
குச் சனமுமாயிருப்பார்களென்று கர்த்தர் சொல்
உ லுகிறார்.—கர்த்தர் சொல்லுகிறதாவது: பட்டை
யத்திற்குத் தப்பி, மீந்தசனம் வனாந்தரத்தில் இரக்
கம்பெற்றது; இஸ்ரவேலுக்குச் சாங்கோபாங்
ங கத்தைக் கட்டளையிடப்போகிறோம்.—[6]வெகு
காலமுதற்கொண்டு கர்த்தர் எனக்குத் தரிசனை
யானார் என்பாய்; ஆம் அநாதி சிநேகத்தால் உன்
னைச் சிநேகித்தோம்; ஆனபடியால் கிருபையாய்
ச உன்னை இழுத்துக்கொள்ளுகிறோம்.—இஸ்ரவே
லென்ற கன்னியாஸ்திரியே, இன்னம் உன்னைக்
கட்டுவிப்போம்; நீ கட்டப்பட்டிருப்பாய்; நீ
இன்னம் உன் மேளங்களால் அலங்காரமாய்க்
கீதவாத்தியக்காரரின் களிப்புள்ள கூட்டத்தோ
டே புறப்படுவாய்.-இன்னம் சமாரியாவின் மலை ரு
களிலே திராட்சத்தோட்டங்களை நாட்டுவாய்;
நாட்டுகிறவர்கள் அவைகளை நாட்டி, அநுபவ
மும்பண்ணுவார்கள்.—ஏனெனில்: எழுந்திருங் சு
கள்; [7]சீயோனுக்கு நம்முடைய பராபரனாகிய
கர்த்தரண்டையிலே போயேறுவோமாகவென்று
எப்பிராயீமின் கல்மலைகளில் காவல்க்காரர் கூப்
பிடப்போகிற நாள்வரும்.

ஏனென்றால் கர்த்தர் சொல்லுகிறதாவது: யாக் எ
கோபின்மேலே மகிழ்ச்சியாய்க் கெம்பீரித்து,
சாதிகளுடைய தலைவரின்நிமித்தமாக ஆர்ப்பரி
யுங்கள்; சத்தத்தைக் கேட்கப்பண்ணி, துதித்து:
கர்த்தாவே, இஸ்ரவேலில் மீதியான உமது சனத்
தை இரட்சியுமென்று சொல்லுங்கள்.—இதோ, அ
நாம் அவர்களை [8]வடதேசத்திலிருந்து வரப்பண்
ணி, அவர்களைப் பூமியின் பக்கங்களிலிருந்து
கூட்டிவருவோம்; குருடரும், சப்பாணிகளும்,
கர்ப்பவதிகளும், பிள்ளைத்தாய்ச்சிகளுங்கூட அ
வர்களில் இருப்பார்கள்; மகா கூட்டமாக இவ் கூ
விடத்துக்குத் திரும்புவார்கள்.—[9]அழுகையோ
டும் விண்ணப்பங்களோடும் வருவார்கள்; அவர்
களை வழிநடத்துவோம்; அவர்களைத் தண்ணீர்
நதிகளண்டைக்கும், தாங்கள் இடறுண்ணாத செ
ம்மையான வழியிலும் நடக்கப்பண்ணுவோம்;
ஏனெனில் இஸ்ரவேலுக்குத் தகப்பனாயிருக்கி
றோம்; எப்பிராயீம் [10]நம்முடையதலைச்சன் பிள்
ளையுமாயிருக்கிறான்.

சாதிகளே, நீங்கள் கர்த்தருடைய வார்த்தை ய
யைக் கேட்டு, தூரத்திலுள்ள தீவுகளில் அறிவித்
து, இஸ்ரவேலைச் சிதறவடித்தவர் அதைச் சேர்த்
துக்கொண்டு, ஒரு மேய்ப்பன் தன் மந்தையைக்
காக்கும்வண்ணமாக அதைக் காப்பாரென்று
சொல்லுங்கள்.—[11]ஏனென்றால் கர்த்தர் யாக்கோ யக
பை மீட்டு, இவனை அவனிலும் பலத்தவனு
டைய கைக்கு நீங்கலாக்கி விடுவிக்கிறார்.-அவர் யஉ
கள்வந்து, சீயோனின் உயரத்திலே கெம்பீரித்து,
கோதுமை, திராட்சப்பழஇரசம்,எண்ணெய், ஆ
ட்டுக்குட்டிகள், கன்றுக்குட்டிகள் என்றவைக
ளாகிய கர்த்தருடைய நன்மைக்கு ஓடிவருவார்
கள்; அவர்களுடைய ஆத்துமா நீர்ப்பாய்ச்சலான
தோட்டத்தைப்போலாகும்; அவர்கள் இனித்
தொய்ந்துபோவதில்லை.—[12]அப்போது கன்னியா யங
ஸ்திரிகளும்,இளைஞரும், முதிர்ந்த வயதுள்ளவர்
களுங்கூட ஆனந்தக்களிப்பாய் மகிழுவார்கள்;
ஏனெனில் நாம் அவர்கள் துக்கத்தைச் சந்தோஷ
மாக மாற்றி, அவர்களைத் தேற்றரவுபண்ணி, அ
வர்கள் சஞ்சலம் நீங்க அவர்களைச் சந்தோஷப்
படுத்துவோம்.—ஆசாரியர்களின் ஆத்துமாவைக் யச

1 எரே.கக.உக:கஉ.சச:கக.எ,யக. க,கக:கஉ.கஅ.-4 எரே.உக.யகூ.
2 எரே. உரு. ஐ, க. மீகா. ஐ. க. 5 எரே. கய. உஉ.—6 உபா.க.ச.
ரூத்.க.கக.—3 எரே.உச.எ:கக. 7 ஏசா. உ. க. மீகா. ச. எ.

8 எரே. க. யஅ. 11 சங். ககய. அ.
9 எரே. ஐய. ச. 12 சங். கசய. அ: யஉ. யக.
10 உ மோ. ச. உஉ.

[1]கொழுப்பினுல் பூரிப்பாக்குவோம்; நமது சனம்
நம்முடைய நன்மையினுலே திருத்தியாவார்க
ளென்று கர்த்தர் சொல்லுகிருர்.
௰௫ கர்த்தர் சொல்லுகிறதாவது: இராமாவில் [2]புலம்
பலும் கசப்பான அழுகையுமாகிய சத்தம் கேட்
கப்படுகிறது; இராகேல் தன் பிள்ளைகளுக்காக
அழுது, தன் பிள்ளைகள் இல்லாதபடியால் அ
வைகளின்நிமித்தம் ஆறுதல் அடைந்துகொள்ளா
திருக்கிருள் என்கிருர்.
௰௬ கர்த்தர் சொல்லுகிறதாவது: நீ உன் சத்தத்தை
அழாதபடிக்கும், உன் கண்களைக் கண்ணீர்வி
டாதபடிக்கும் அடக்கிக்கொள்; ஏனெனில் உன்
கிரியைக்குப் பலனுண்டென்று கர்த்தர் சொல்
லுகிருர்; அவர்கள் சத்துருவின் தேசத்திலிருந்து
௰௭ திரும்பிவருவார்கள்.—உன் பிற்காரியத்துக்காக
நம்பிக்கையுண்டு; ஏனெனில் உன் பிள்ளைகள்
தங்கள் எல்லைக்குத் திரும்பிவருவார்களென்று
கர்த்தர் சொல்லுகிருர்.
௰௮ என்னைத் தண்டித்தீர்; நான் பழக்கிவைக்கப்ப
டாத கன்றுக்குட்டியைப்போலே தண்டிக்கப்
பட்டேன்; [3]என்னைத்திருப்பும், அப்போது திரு
ப்பப்படுவேன்; ஏனெனில் தேவரீரே என் பரா
௰௯ பரனுகிய கர்த்தர்.—நான் திரும்பினபிற்பாடு தா
னே மனஸ்தாபப்பட்டிருக்கிறேன்; நான் என்
னை அறிந்துகொண்டதற்குப்பிற்பாடு பக்கத்தில்
அடித்துக்கொண்டிருக்கிறேன்; வெட்கி நாணிக்
கொண்டுமிருக்கிறேன்; ஏனெனில் என் இளவ
யதின் நிந்தையைச் சுமந்துவருகிறேன் என்று,
எப்பிராயீம் கெஞ்சிக்கொண்டிருக்கிறதைக் கே
௨௰ ட்கவே கேட்டோம்.—எப்பிராயீம் நமக்கு அரு
மையான குமாரனும் நாம் மனமகிழ்ச்சியுமாயி
ருக்கிற பிள்ளையுமல்லவோ? ஏனெனில் நாம்
அவனுக்கு விரோதமாய்ப் பேசினபிற்பாடு [4]இன்
னம் அவனை நினைக்கவே நினைக்கிருேம்; ஆகை
யால் நம்முடைய குடல்கள் அவனுக்காக இரை
கின்றன; அவனுக்கு இரங்கவே இரங்குவோ
மென்று கர்த்தர் சொல்லுகிருர்.
௨௧ உனக்குக் குறிப்படையாளங்களை நிறுத்து;
உனக்குத் தூண்களை நாட்டு; நீ நடந்தவழியாகிய
பாதையின்மேலே உன் மனதை வை; இஸ்ரவே
லாகிய குமாரத்தியே, திரும்பு; இந்த உன்னு
௨௨ டைய பட்டணங்களுக்கே திரும்பு.—மாறுபா
டாய்ப்போன குமாரத்தியே, எந்தமட்டும் வில
கித்திரிவாய்? ஏனெனில் கர்த்தர் பூமியிலே ஒரு
புதுமையைச் சிருஷ்டிப்பார்; [5]ஸ்திரி புருஷ
னைச் சூழ்ந்துகொள்ளுவாள்.
௨௩ இஸ்ரவேலின் பராபரனுகிய சேனைகளையு
டைய கர்த்தர் சொல்லுகிறதாவது: [6]நாம் அவர்
கள் சிறையிருப்பைத் திருப்பும்போது அவர்கள்
இன்னம் யூதாவின் தேசத்திலும் அதின் பட்ட
ணங்களிலும் நீதியின் வாசஸ்தலமே, பரிசுத்த
பர்வதமே, கர்த்தர் உன்னை ஆசீர்வதிக்கக்கடவா

ரென்ற வார்த்தையைச் சொல்லுவார்கள்.—அதி ௨௪
லே யூதாவும், அதினுடைய எல்லாப் பட்டணங்
களின் மனுஷரும், பயிர்க்குடிகளும், மந்தைகளை
மேய்த்துத் திரிகிறவர்களும் ஏகமாய்க் குடியிருப்
பார்கள்.—ஏனெனில் [7]நாம் விடாய்த்த ஆத்துமா ௨௫
வைச் சம்பூரணம் அடையப்பண்ணி, தொய்ந்த
எல்லா ஆத்துமாவையும் நிரப்புவோம்.—இதற் ௨௬
காக விழித்துப் பார்த்துக்கொண்டிருக்கிருேம்;
நம்முடைய நித்திரை நமக்கு இன்பமாயிருந்தது.
இதோ, நாள்கள் வருமென்று கர்த்தர் சொல்லுகி ௨௭
ருர்; அப்போது இஸ்ரவேலின் வீட்டையும் யூதா
வின் வீட்டையும் மனுஷவித்தினுலும், மிருக
வித்தினுலும் விதைப்பாடாக்குவோம். — அப் ௨௮
போது சம்பவிப்பது ஏதென்ருல், நாம் பிடுங்க
வும் இடிக்கவும் நிர்மூலமாக்கவும் அழிக்கவும் தீங்
குசெய்யவும் அவர்கள்பேரிலே எப்படிச் சாக்கி
ரதைப்பட்டிருந்தோமோ, அப்படிக் கட்டவும்
நாட்டவும் அவர்கள்பேரிலே சாக்கிரதைப்பட்
டிருப்போமென்று கர்த்தர் சொல்லுகிருர்.—[8]பி ௨௯
தாக்கள் திராட்சக்காய்களைத் தின்ருர்கள்; பிள்
ளைகளின் பல்லுகள் கூசிப்போயின என்று அந்
நாள்களில் அப்புறம் சொல்லார்கள். — அவனவ ௩௰
வன் தன்னுடைய அக்கிரமத்தின்நிமித்தமே சா
வான்; எந்த மனுஷன் திராட்சக்காய்களைத் தின்
பானே அவனுடைய பல்லுகளே கூசிப்போ
கும்.
[9]இதோ, நாள்கள் வருமென்று கர்த்தர் சொல் ௩௧
லுகிருர்; அப்போது இஸ்ரவேலின் வீட்டோடும்
யூதாவின் வீட்டோடும் புது உடம்படிக்கைபண்
ணுவோம்.—நாம் அவர்கள் பிதாக்களை எகிப்து ௩௨
தேசத்திலிருந்து அழைத்துவரக் கைப்பிடித்த
நாளிலே, அவர்களோடே பண்ணின உடம்ப
டிக்கையின்படியோ அல்ல; ஏனெனில் அந்த
நம்முடைய உடம்படிக்கையை அவர்கள் முறித்
துப்போட்டார்கள்; நாமும் அவர்களில் நம்மு
டைய அதிகாரத்தைக் காண்பித்தோமென்று கர்த்
தர் சொல்லுகிருர்.—இந்நாள்களுக்குப் பிற்பா ௩௩
டோவெனில், நாம் இஸ்ரவேல் வீட்டோடே
பண்ணப்போகிற உடம்படிக்கையாவது: நாம்
நம்முடைய நியாயப்பிரமாணத்தை [10]அவர்கள்
உள்ளத்திலே கொடுத்து, அதை அவர்கள் இருத
யத்தில் எழுதி, [11]அவர்களுக்குப் பராபரனுயிருப்
போம்; அவர்கள் நமக்குச் சனமுமாயிருப்பார்க
ளென்று கர்த்தர் சொல்லுகிருர்.—இனி ஒருவ ௩௪
னும் தனக்கு அடுத்தவனையும், ஒருவனும் தன்
சகோதரனையும் கர்த்தரை அறியென்று போதிப்
பதுமில்லை; ஏனென்ருல் அவர்களில் சிறியவன்
துவக்கிப் பெரியவன்மட்டும், எல்லாரும் நம்மை
அறிவார்களென்று கர்த்தர் சொல்லுகிருர்; ஏனெ
ன்ருல் [12]நாம் அவர்கள் அக்கிரமத்தை மன்னித்து,
[13]அவர்கள் பாவங்களை அப்புறம் இனி நினையா
திருப்போம்.

1 சங். ௧௯. ௯.—2 மத். ௨. ௰௮. 3 புல. ௫. ௨௧.—4 சங். ௨௫. ௭: ௧௩௯. ௪.—5 வெளி. ௰௨. ௧, ௨. 6 எரே. ௨௩. ௰௪, ௩௰: ௩. ௰௮: ௧௨.
௪௪.—7 மத். ௰௧. ௨௮. 8 புல. ௫. ௭. எசே. ௰௮. ௨. ழ.

9 எபி. ௮. ௮. ழ.—10 ஏசா. ௫௪. ௰௩. ௰. ௩௪.—13 ஏசா. ௪௩. ௨௫. எசே. ௩௩. ௰௬.
11 எரே. ௨௪. ௭: ௩௰. ௨௨.
12 எரே. ௩௩. ௮. மீகா. ௭. ௰௮. அப்.

௩௫ [1]சூரியனைப் பகல்வெளிச்சமாகவும், சந்திர
னும் நட்சத்திரங்களுமென்ற திட்டங்களை இரா
வெளிச்சமாகவும் கட்டளையிட்டவரும், சமுத்
திரத்தை அதின் அலைகள் கொந்தளிக்கத்தக்கவி
தமாய்க் குலுக்குகிறவரும், சேனைகளையுடைய
கர்த்தர் என்றநாமமுள்ளவருமாகிய கர்த்தர்சொல்
௩௬ லுகிறதாவது:—[2]இந்தத் திட்டங்கள் நமக்குமுன்
பாக இல்லாதபடிக்கு விலகிப்போனால், அப்
போது இஸ்ரவேலின் வித்தும், நமக்குமுன்பாக
எல்லா நாள்களிலும் ஒரு சாதியாய் இராதபடிக்கு
௩௭ ஒழிந்துபோமென்று கர்த்தர் சொல்லுகிறார்.—கர்த்
தர் சொல்லுகிறதாவது: உயர இருக்கிற வானங்
கள் அளக்கப்படவும், தாழ இருக்கிற பூமியின்
அஸ்திபாரங்கள் ஆராயப்படவும் கூடுமானால்,
நாமும் இஸ்ரவேலின் வித்தான அனைவரையும்
அவர்கள் செய்த எல்லாவற்றின்நிமித்தமும் வெ
றுத்துப்போடுவோமென்று கர்த்தர் சொல்லுகி
றார்.
௩௮ இதோ, நாள்கள் வருமென்று கர்த்தர் சொல்
லுகிறார்; அப்போது இந்தப்பட்டணம், அனமே
யேலின் கோபுரத்தைத்துவக்கி, கோடிவாசல்மட்
௩௯ டும் கர்த்தருக்குக் கட்டப்படும்.—அப்புறமும்
அளவுநூல் அதற்கு எதிராய்க் காரேப்பென்ற
மேட்டின்மேலே புறப்பட்டு, கோவாத்புறமாகச்
௪௰ சுற்றிப்போம்.—பிரேதங்களைப் புதைக்கிறதும்,
சாம்பலைக் கொட்டுகிறதுமான பள்ளத்தாக்கனைத்
தும், கீதரோன் வாய்க்காலுக்கு இப்பாலே கிழக்
கேயிருக்கிற குதிரைகளுடைய வாசலின் கோடி
மட்டுக்கும் உண்டான சகல நிலங்களும் கர்த்த
ருக்குப் பரிசுத்தமாயிருக்கும்; அப்புறம் அது என்
றென்றைக்கும் பிடுங்கப்படுவதுமில்லை, இடிக்
கப்படுவதுமில்லை என்கிறார்.

## ௩௨. அதிகாரம்.

௧. எரேமியா சொன்ன தீர்க்கதரிசனத்துக்காக, அவன் சிதேக்கியாவாலே சிறைசெய்யப்பட்டு, ௬. கனமேயேலுடைய நிலத்தைக் கொண்டது. ௰௩. பாருக்கு சனம் திரும்பிவருவதற்கு அடையாளமாக, கிரயசாதனத்தை வைத்தது ௰௬. எரேமியா தன் செபத்திலே பராபரனிடத்தில் முறையிட்டது. ௨௬. பராபரன் அவர்களுடைய பாவங்களுக்காக, அவர்கள் சிறையிருப்பை உறுதியாக்கினது. ௩௬. கிருபையுள்ள திரும்புதலைச் சொன்னது.

௧ யூதாவின் [3]இராசாவாகிய சிதேக்கியா அரசாண்
ட பத்தாம்வருஷத்தில், கர்த்தராலே எரேமியா
வுக்கு உண்டான வார்த்தை; இது நேபுகாத்நேச்
சார் அரசாண்ட பதினெட்டாம் வருஷம்.
௨ அப்போது பாபேலினுடைய இராசாவின்
சேனை எருசலேமை முற்றிக்கைபோட்டிருந்
தது; எரேமியா தீர்க்கதரிசியோவென்றால், யூதா
வுடைய இராசாவின் வீட்டிலுள்ள காவல்சாலை
யின் முற்றத்திலே அடைக்கப்பட்டிருந்தான்.—
௩ ஏனென்றால், இதோ, இந்தப் பட்டணத்தைப்
பாபேலுடைய இராசாவின் கையில் ஒப்புக்கொ
டுக்கிறோம்; இவன் அதைப் பிடிப்பானென்கிற
௪ தைக் கர்த்தர் சொல்லுகிறாரென்றும், — யூதா
வின் இராசாவாகிய சிதேக்கியா கல்தேயருடைய
கைக்குத் தப்பிப்போகாமல், [4]பாபேலுடைய
இராசாவின்கையில் ஒப்புக்கொடுக்கவே ஒப்புக்
கொடுக்கப்படுவான்; அவன் வாய் இவன் வா
யோடே பேசி, அவன் கண்கள் இவன் கண்க
ளைப்பார்க்கும்;-இவன் சிதேக்கியாவைப் பாபே ௫
லுக்குக் கொண்டுபோவான்; நாம் அவனைச் சந்
திக்குமட்டும் அங்கே அவனிருப்பான்; நீங்கள்
கல்தேயரோடே யுத்தம்பண்ணினாலும் உங்க
ளுக்கு வாய்ப்பதில்லை என்கிறதைக் கர்த்தர்
சொல்லுகிறாரென்றும், நீ தீர்க்கதரிசனஞ் சொல்
லுவானேனென்று சொல்லி, யூதாவின் இராசா
வாகிய சிதேக்கியா அங்கே அடைத்துப்போடு
வித்தான்.
அங்கே இருக்கையில், எரேமியா சொன்னதா ௬
வது: கர்த்தருடைய வார்த்தை எனக்குண்டாகி,
அவர் உரைத்ததேதெனில்,—இதோ, உன் தகப் ௭
பனோடே கூடப்பிறந்த சல்லூமின் குமாரனா
கிய கனமேயேல் உன்னண்டைக்கு வந்து: ஆனா
தோத்திலிருக்கிற என்னுடைய நிலத்தை நீ வாங்
கிக்கொள்; ஏனென்றால் அதைக் கொள்ள உனக்
கே மீட்கும் நியாயம் அடுத்திருக்கிறதென்பா
னென்று உரைத்தார்.—அப்படியே என் தகப்ப ௮
னோடே கூடப்பிறந்தவனுடைய குமாரனாகிய
கனமேயேல், கர்த்தருடைய வார்த்தைக்குச் சரி
யாய்க் காவல்சாலையின் முற்றத்தில் என்னண்
டைக்கு வந்து: பென்யமீன்தேசத்து ஆனதோத்
தூரிலுள்ள என்னுடைய நிலத்தை நீ வாங்கிக்
கொள்ளே; ஏனெனில், சுதந்தர நியாயம் உனக்
குண்டு; மீட்பு உனக்கு அடுத்தது, அதைக் கொள்
ளென்றான்; அப்போது இது கர்த்தருடைய வார்
த்தை என்றறிந்துகொண்டேன். — ஆகையால் ௯
என் தகப்பனோடே கூடப்பிறந்தவனுடைய
குமாரனாகிய கனமேயேலின் கையில், நான் ஆனா
தோத்திலிருக்கிற அவனுடைய நிலத்தைக்கொ
ண்டு, விலைக்கிரயமாகிய பதினேழு சேக்கலி
டை வெள்ளியை அவனுக்கு நிறுத்துக்கொடுத்
தேன்.—நான் கடுதாசியிலே கையெழுத்தையும், ௰
முத்திரையையும் போட்டு, சாட்சிகளை வைத்து,
வெள்ளியைத் தராசிலே நிறுத்துக்கொடுத்தபிற்
பாடு,—நான் கட்டளைக்கும் திட்டமுறைமைக ௧௧
ளுக்கும் ஒத்தபடி முத்திரைபோடப்பட்ட கிர
யக்கடுதாசியையும் திறந்திருக்கிற பிரதியையும்
எடுத்து,— என் இனத்தானாகிய கனமேயேலு ௧௨
டைய கண்களுக்குமுன்பாகவும், கிரயக்கடு
தாசியில் கையெழுத்துப்போட்ட சாட்சிகளு
டைய கண்களுக்குமுன்பாகவும், காவல்சாலை
யின் முற்றத்தில் உளுக்காந்திருந்த எல்லா யூதரு
டைய கண்களுக்குமுன்பாகவும், அதை மக்சே
யாவின் குமாரனாகிய நேரியாவினுடைய குமா
ரனை பாருக்குக் கொடுத்து,— அவர்களு ௧௩
டைய கண்களுக்குமுன்பாகப் பாருக்குக்குக்
கற்பித்துச் சொன்னதாவது: — இஸ்ரவேலின் ௧௪
பராபரனாகிய சேனைகளையுடைய கர்த்தர் உரைக்
கிறதேதெனில், நீ முத்திரைபோடப்பட்ட இந்
தக் கிரயக்கடுதாசியும், திறந்திருக்கிற இந்தப்

1 ௧ மோ. ௧. ௰௬. சங். ௱௩௰௬. ௮, ௯.—2 எரே. ௩௩. ௨௫.

3 எரே. ௨௫. ௧.—4 எரே. ௩௪. ௩.

பிரதியுமென்ற கடுதாசிகளை வாங்கி, அவைகள்
அநேகநாளிருக்கும்படிக்கு அவைகளை ஒருமண்
௰௫ பாண்டத்திலே வை.—ஏனெனில், இன்னம் இந்
தத் தேசத்திலே வீடுகளும் நிலங்களும் திராட்சத்
தோட்டங்களும் கொள்ளப்படுமென்று, இஸ்ர
வேலின் பராபரனாகிய சேனைகளையுடைய கர்த்
தர் உரைக்கிறாரென்றேன்.
௰௬ நான் கிரயக்கடுதாசியை நேரியாவின் குமார
னாகிய பாருக்குக்குக் கொடுத்தபிற்பாடு, நான்
கர்த்தரை நோக்கிப் பண்ணின விண்ணப்பமா
௰௭ வது: — ஆ கர்த்தராகிய ஆண்டவரே, இதோ,
தேவரீர் உம்முடைய பெரிய பலத்தினாலும், நீட்
டப்பட்ட உம்முடைய புயத்தினாலும், வானங்
களையும் பூமியையும் உண்டாக்கினீர்; [1]உம்மா
லே கூடாத அதிசயமான காரியமொன்றுமில்
௰௮ லை.—[2]ஆயிரங்களானவைகளுக்குக் கிருபைசெய்
கிறவரும், பிதாக்களுடைய அக்கிரமத்தை அவர்
களுக்குப் பின்னிருக்கும் பிள்ளைகளின் மடியி
லே சரிக்கட்டுகிறவருமாகிய சேனைகளையுடைய
கர்த்தர் என்ற நாமமுள்ள மகத்துவமும் சவுரிய
௰௯ முமான பராபரனே,—[3]யோசனையிலே பெரிய
வரும், கிரியையிலே வல்லவருமாயிருக்கிறீர்;
ஏனெனில் [4]அவனவனுக்கு அவனவனுடைய
வழிக்குத்தக்கதாகவும், அவனவனுடைய கிரி
யைகளின் கனிக்குத்தக்கதாகவும் அளிக்கும்ப
டிக்கு, [5]உம்முடைய கண்கள் மனுப்புத்திரரு
டைய எல்லா வழிகளின்மேலும் திறந்தவைக
௨௰ ளாயிருக்கின்றன.— இஸ்ரவேலிலும் மற்ற மனு
ஷருக்குள்ளும் இந்நாள்வரைக்கும் விளங்குகிற
அடையாளங்களையும் அற்புதங்களையும் தேவரீர்
எகிப்துதேசத்திலே செய்து, இந்நாளில் நிற்கும்
௨௧ கீர்த்தியை உமக்குண்டுபண்ணி,—இஸ்ரவேலா
கிய உமது சனத்தை அடையாளங்களினாலும்,
அற்புதங்களினாலும், பலத்த கையினாலும், நீட்
டப்பட்ட புயத்தினாலும், மகா பயங்கரத்தினா
லும் எகிப்துதேசத்திலிருந்து புறப்படப்பண்
௨௨ ணி,— அவர்களுடைய பிதாக்களுக்கு நீர் கொ
டுப்போமென்று ஆணையிட்ட பாலும் தேனும்
ஓடிய தேசமாயிருக்கிற இந்தத் தேசத்தை அவர்
௨௩ களுக்குக் கொடுத்தீர்.—அவர்கள் அதற்குட்பிர
வேசித்து, அதைச் சுதந்தரித்துக்கொண்டார்கள்;
ஆனால், அவர்கள் உமது சத்தத்துக்குக் கீழ்ப்படி
யாமலும், உமது நியாயப்பிரமாணத்தில் நடவா
மலும் நீர் தங்களுக்குச் செய்யக் கற்பித்ததெல்
லாவற்றையும் செய்யாமலும் போனார்கள்; ஆன
துகொண்டு, இந்தத் தீங்கையெல்லாம் அவர்க
௨௪ ளுக்கு நேரிடப்பண்ணினீர். — இதோ, மண்
கொத்தளங்கள் போடப்பட்டிருக்கின்றன; பட்
டணத்தைப்பிடிக்க வருகிறார்கள்; பட்டையத்தி
ன்நிமித்தமும், பஞ்சத்தின்நிமித்தமும், கொள்ளைநோயி
ன்நிமித்தமும், பெருவா
ரிக்காய்ச்சலின்நிமித்தமும் இந்தப் பட்டணம்
அதற்கு விரோதமாய் யுத்தம்பண்ணுகிற கல்தே
யரின் கையிலே கொடுக்கப்படுகிறது;நீர் சொன்
னபடி உண்டாகிறது; இதோ, நீர் அதைப் பார்க்
கிறீர். — கர்த்தராகிய ஆண்டவரே, பட்டணம் ௨௫
கல்தேயரின் கையிலே கொடுக்கப்படுகிறதாயி
ருந்தும், தேவரீர் என்னுடனே: நீ உனக்கு ஒரு
நிலத்தை விலைக்கிரயமாகக் கொண்டு, அதற்
குச் சாட்சிகளை வையென்று சொன்னீரென்
றேன்.
அப்பொழுது கர்த்தருடைய வார்த்தை எரே ௨௬
மியாவுக்குண்டாகி, அவர் உரைத்ததாவது: —
இதோ, நாம் எல்லா மாம்சத்தினுடைய பராபர ௨௭
னாகிய கர்த்தர்; நம்மாலே கூடாத அதிசயமான
காரியம் ஒன்றுண்டோ?—ஆனதுகொண்டு கர்த் ௨௮
தர் சொல்லுகிறதாவது: இதோ, நாம் இந்தப்பட்
டணத்தைக் கல்தேயரின் கையிலும், பாபேலு
டைய இராசாவாகிய நேபுகாத்நேச்சாரின் கை
யிலும் ஒப்புக்கொடுக்கிறோம்; இவன் அதைப்
பிடிப்பான்.—இந்தப் பட்டணத்துக்கு விரோத ௨௯
மாய் யுத்தம்பண்ணுகிற கல்தேயர் உட்பிரவே
சித்து, இந்தப்பட்டணத்தை [6]அக்கினியால் கொ
ளுத்தி, அதைச் சுட்டெரிப்பார்கள்; அவர்கள்
நமக்குக்கோபமுண்டாக்கும்படிக்கு எந்த வீடுக
ளின்மேல் பாகாலுக்குத் தூபங்காட்டி, அந்நிய
தேவர்களுக்கு ஊற்றுதல்களை ஊற்றினார்களோ,
அந்த வீடுகளோடுங்கூடத்தானே.—ஏனெனில், ௩௰
இஸ்ரவேல் புத்திரரும் யூதாபுத்திரரும் தங்கள் சி
றுவயதுதுவக்கி, நமது பார்வைக்குப் பொல்லாப்
பானதையே செய்துவந்தார்கள்; அதேதெனில்,
இஸ்ரவேல் புத்திரர் தங்கள் கைகளின் செய்கை
யினாலே நமக்குக் கோபத்தையே உண்டாக்கி
வந்தார்களென்று கர்த்தர் சொல்லுகிறார்.—ஏனெ ௩௧
ன்றால் அவர்கள் இந்தப் பட்டணத்தைக் கட்டி
னநாள்முதற்கொண்டு, இந்நாள்வரைக்கும் அது
நமக்குக் கோபமுண்டாகவும், நமக்கு உக்கிர
முண்டாகவும், நாம் அதை நமது முகத்தைவிட்டு
அகற்றுகிறதற்கு ஏதுவாகவுமிருந்தது —நமக்குக் ௩௨
கோபமுண்டாகும்படிக்கு இஸ்ரவேல் புத்திர
ரும், யூதாபுத்திரரும், அவர்கள் இராசாக்களும்,
அவர்கள் பிரபுக்களும், அவர்கள் ஆசாரியர்க
ளும், அவர்கள் தீர்க்கதரிசிகளும், யூதாவின் மனு
ஷரும்,எருசலேமின் குடிகளும்செய்த எல்லாப்
பொல்லாப்பின் நிமித்தமுந்தானே.—[7]முகத்தை ௩௩
யல்ல, பிடரியை நமக்குக்காட்டினார்கள்; நாம்
ஏற்கெனவே அவர்களை உபதேசிக்கவே உபதே
சித்தும் அவர்கள் புத்தியை ஏற்றுக்கொள்ளக்
கேளாதேபோனார்கள்.—[8]அவர்கள் நம்முடைய ௩௪
நாமம் தரிப்பிக்கப்பட்ட வீட்டைத் தீட்டுப்ப
டுத்தும்படிக்கும், தங்கள் அருவருப்புகளை அதி
லே வைத்தார்கள். — அவர்கள் [9]மோளோகுக் ௩௫
சென்று தங்கள் குமாரரையும் தங்கள் குமாரத்
திகளையும் தீயைக் கடக்கப்பண்ணும்படிக்கு
[10]இன்னோமுடைய குமாரனின் பள்ளத்தாக்கி
லிருக்கிற பாகாலின் மேடைகளைக் கட்டினார்
கள்; யூதாவைப் பாவஞ்செய்யப்பண்ணுவதற்கு

1 லூக். ௧. ௩௭.-2 உ மோ. ௩௪. ௬,௭. 3 ஏசா உ௮.உ௯.—4 எரே ௰௭.௰. 5 எரே. ௰௬. ௰௭.—6 எரே. ௰௯. ௰௩: உ௧. ௰ -7 எரே ௨ உ௨. ௭சே. உ௩.௩௫.—8 எரே. ௭. ௩௰. ௰௮.உ௩ -10 எரே.௭. ௩௧:௰௯.௫. உ இரா. உ௩ ௪.௫.—9 ௩ மோ.

அவர்கள் இந்த அருவருப்பான காரியத்தைச்
செய்யவேண்டுமென்று நாம் அவர்களுக்குக் கற்
பித்ததுமில்லை, அது நம்முடைய மனதிலே
தோன்றினதுமில்லை.
௩௬ இப்போதும் இப்படியிருக்கையில் பட்டை
யத்தாலும், பஞ்சத்தாலும், பெருவாரிக்காய்ச்சலா
லும், பாபேலுடைய இராசாவின் கையில் ஒப்பு
க்கொடுக்கப்பட்டுப்போமென்று, நீங்கள் சொல்
லுகிற இந்தப் பட்டணத்தைக்குறித்து இஸ்ரவே
லின் பராபரனாகிய கர்த்தர் உரைக்கிறதாவது:—
௩௭ இதோ, நமது கோபத்திலும், நமது உக்கிரத்தி
லும், நமது மகா கடுமையிலும், நாம் அவர்களைத்
துரத்தின எல்லாத் தேசங்களிலுமிருந்து [1]நாம்
அவர்களைச் சேர்த்துக்கொண்டு, அவர்களை இந்த
ஸ்தலத்துக்குத் திரும்பிவரவும் அதிலே சுகமாய்த்
௩௮ தங்கவும்பண்ணுவோம். — அவர்கள் நமக்குச்
சனமாய் இருப்பார்கள்; நாம் அவர்களுக்குப்
௩௯ [2]பராபரனுமாயிருப்போம்.—அவர்கள் தங்களுக்
கும், தங்களுக்குப் பின்னாக இருக்கும் தங்கள்
பிள்ளைகளுக்கும் நன்மையாக நமக்குச் சகல
நாள்களிலும் பயப்படும்படிக்கு, நாம் அவர்க
ளுக்கு ஒரே இருதயத்தையும், ஒரே வழியையும்
௪௰ கட்டளையிட்டு, — நாம் அவர்களுக்கு நன்மை
செய்யும்படிக்கு, அவர்களைவிட்டுப் பின்வாங்
காத [3]நித்திய உடம்படிக்கையை அவர்களோ
டே பண்ணி, அவர்கள் நம்மைவிட்டு அகன்று
போகாதபடிக்கு, நம்முடைய பயத்தை அவர்
௪௧ கள் இருதயத்திலே கொடுத்து,—அவர்களுக்கு
நன்மைசெய்ய அவர்கள்மேலே சந்தோஷமாயி
ருந்து, அவர்களை இந்தத் தேசத்திலே உண்மை
யாய் நம்முடைய முழு இருதயத்தாலும், நம்மு
டைய முழு ஆத்துமாவாலும் நாட்டுவோம்.
௪௨ ஏனெனில், கர்த்தர் சொல்லுகிறதாவது: நாம்
இந்தச் சனத்தின்மேலே, இந்தப் பெரிய தீங்கை
யெல்லாம் வரப்பண்ணினதுபோலே, அவர்க
ளைக்குறித்துச் சொன்ன நன்மையையெல்லாம்
௪௩ நாம் அவர்கள்மேல் வரப்பண்ணுவோம்.—மனு
ஷனும் மிருகமுமில்லாதபடிக்குப் பாழாய்ப்
போயிற்றென்றும், கல்தேயரின் கையிலே ஒப்
புக்கொடுக்கப்பட்டுப்போயிற்றென்றும், நீங்கள்
சொல்லுகிற இந்தத் தேசத்திலே நிலங்கள் கொள்
௪௪ ளப்படும்.—பென்யமீன் தேசத்திலும், எருசலே
மின் சுற்றுப்புறங்களிலும், யூதாவின் பட்ட
ணங்களிலும், மலைச்சீமையின் பட்டணங்க
ளிலும், பள்ளத்தாக்குச் சீமையின் பட்டணங்களி
லும், தெற்குத்திசைப் பட்டணங்களிலும், நிலங்
கள் விலைக்கிரயமாகக் கொள்ளப்படுவதும் கடு
தாசிகளில் கையெழுத்தும் முத்திரையும் போட
ப்படுவதும் அதற்குச் சாட்சி வைக்கப்படுவதும்
உண்டு; ஏனெனில், [4]அவர்கள் சிறையிருப்பைத்
திருப்புவோமென்று கர்த்தர் சொல்லுகிறாரென்
றார்.

## ௩௩. அதிகாரம்.

௧. பராபரன் சிறையிலிருப்பவர்களுக்குக் கிருபையுள்ள திரும்புதலையும், ௬. சந்தோஷமுள்ள ஸ்திதியையும், ௰௫. கிறிஸ்து நீதியின் கிளையெனப்பட்டதையும், ௰௭. இராச்சியமும் குருத்துவமும் நீடித்திருப்பதையும், ௨௰. நிலையான ஆளுகையையும், ௨௬. உறுதியும் பாக்கியமுமானவித்தையும் வாக்குத்தத்தமபண்ணினது.

எரேமியா [5]இன்னம் காவல்சாலையின் முற்றத்தி ௧
லே அடைக்கப்பட்டிருக்கையில் கர்த்தருடைய
வார்த்தை இரண்டாந்தரம் அவனுக்குண்டாகி,
அவர் சொன்னதாவது:
அதைச் செய்கிற கர்த்தருமாய், அதைத் திடப் ௨
படுத்தும்படிக்கு அதை உருவேற்படுத்துகிற கர்த்
தருமாய், கர்த்தரென்ற நாமமுள்ளவருமானவர்
சொல்லுகிறதேதெனில்,—நம்மைநோக்கிக் கூப் ௩
பிடு; அப்போது நாம் உனக்கு மறு உத்தரவுகொ
டுத்து, நீ அறியாத பெரியவைகளும் உனக்கு எட்
டாதவைகளுமாகிய காரியங்களை உனக்கு அறி
விப்போம்.—அதேனெனில், எதிர்க்கொத்தளங் ௪
களாகிறதற்கும் பட்டையத்துக்கு எதிராகிறதற்
கும் [6]இடிக்கப்பட்டவைகளாகிய இந்தப் பட்ட
ணத்தின் வீடுகளையும், யூதாவுடைய இராசாக்க
ளின் வீடுகளையுங்குறித்து இஸ்ரவேலின் பரா
பரனாகிய கர்த்தர் சொல்லுகிறதாவது:—இந்தப் ௫
பட்டணத்தினுடைய எல்லாப் பொல்லாப்பின்
நிமித்தமும் நாம் நம்முடைய முகத்தை மறைத்த
படியினாலே அவர்கள், அவைகளை நாம் நமது
கோபத்திலும் உக்கிரத்திலும் வெட்டுவிக்கிற
மனுஷப் பிரேதங்களினாலே நிரப்பும்படியாகத்
தானே, கல்தேயரோடே யுத்தம்பண்ணப்போகி
றார்கள்.—இதோ, [7]நாம் அவர்களுக்கு ஆரோக்கிய ௬
மும் குணமும் வரப்பண்ணி, அவர்களைக் குண
மாக்கி, அவர்களுக்குப் பரிபூரணமான சமாதா
னத்தையும் உண்மையையும் வெளிப்படுத்து
வோம்.—[8]நாம் யூதாவின் சிறையிருப்பையும், ௭
இஸ்ரவேலின் சிறையிருப்பையும் திருப்பி, முந்
தியதைப்போலே அவர்களைக் கட்டுவித்து, —
[9]அவர்கள் நமக்கு விரோதமாய்க் குற்றஞ்செய்த ௮
அவர்களுடைய எல்லா அக்கிரமங்களுக்கும் அ
வர்களை நீங்கலாக்கிச் சுத்திகரித்து, அவர்கள் நம
க்கு விரோதமாய்க் குற்றஞ்செய்து நமக்கு விரோ
தமாய்த் துரோகம்பண்ணின அவர்களுடைய
எல்லா அக்கிரமங்களையும் மன்னிப்போம். —
நாம் அவர்களுக்குச் செய்யும் நன்மையை எல் ௯
லாம் கேட்கப்போகிற பூமியின் எல்லாச் சாதி
களுக்குமுன்பாக அது நமக்கு மகிழ்ச்சியுள்ள
கீர்த்தியாயும் புகழ்ச்சியாயும் மகிமையாயும் இரு
க்கும்; நாம் அவர்களுக்கு அருளிச்செய்யும் எல்
லா நன்மையின்நிமித்தமும், எல்லாச் சமாதானத்
தின்நிமித்தமும் இவர்கள்திகைத்துத்திரிவார்கள்.
கர்த்தர் சொல்லுகிறதாவது: மனுஷனில்லா ௰
மலும் மிருகமில்லாமலும் அவாந்தரவெளியாய்க்
கிடக்கிறதென்று, நீங்கள் சொல்லுகிற இவ்விட
த்திலும் யூதாவின் பட்டணங்களிலும் ஒரு மனு

1 எரே. உக. க: உக. ௰ச: கக. ௰. — 2 எரே. உச. எ: கல. உஉ: கக. க. — 3 எசே. கக. உஅ — 3 எசா. ஙச. ௰. — 4 எரே. கல. க: கக. எ.
5 எரே. கஉ. உ. — 6 எசா. உஉ. ௰. — 7 எரே. கல. எ. — 8 எரே. உக. ௰ச. — 9 எரே. கக. கச.

ஷனும் ஒரு குடியும் ஒரு மிருகமும் இல்லாதபடி
யாகப் பாழான எருசலேமின் வீதிகளிலும்,—
௰௧ [1]இன்னம் களிப்பின் சத்தமும் மகிழ்ச்சியின்
சத்தமும், மணவாளனின் சத்தமும் மணவாட்டி
யின் சத்தமும், சேனைகளையுடைய கர்த்தரைத்
துதியுங்கள், ஏனெனில் கர்த்தர் நல்லவர், அவ
ருடைய கிருபை என்றுமுள்ளதென்று சொல்ப
வர்களின் சத்தமும், கர்த்தருடைய வீட்டுக்குத்
தோத்திரப்பலிகளைக் கொண்டுவருபவர்களின்
சத்தமும் கேட்கப்படும்; ஏனெனில், அவர்கள்
முந்தியதைப்போலிருக்கும்படிக்குத் தேசத்தின்
சிறையிருப்பைத் திருப்புவேனென்று கர்த்தர்
௰௨ சொல்லுகிறார். — சேனைகளையுடைய கர்த்தர்
சொல்லுகிறதாவது: ஒரு மனுஷனும் ஒரு மிருக
முமில்லாமல் அவாந்தரவெளியாய்க் கிடக்கிற
இவ்விடத்திலும் இதற்கடுத்த பட்டணங்களி
லும், இன்னம் ஆட்டுமந்தையை மேய்த்து, மடக்
குகிற மேய்ப்பரின் தாபரங்கள் உண்டாயிருக்
௰௩ கும்.—மலைச்சீமையான பட்டணங்களிலும், பள்
ளத்தாக்குச்சீமையான பட்டணங்களிலும், தெற்
குத்திசைப்பட்டணங்களிலும், பென்யமீன் தே
சத்திலும், எருசலேமின் சுற்றுப்புறங்களிலும், யூ
தாவின் பட்டணங்களிலும், இன்னம் ஆட்டுமந்
தைகள் எண்ணிக்கொள்ளுகிறவனுடைய கைக
ளைக் கடந்துவருமென்று கர்த்தர் சொல்லுகிறார்.

௰௪ இதோ, நாள்கள் வருமென்று கர்த்தர் சொல்
லுகிறார்; அப்போது நாம் இஸ்ரவேலின் வீட்டுக்
கும் யூதாவின் வீட்டுக்கும் சொன்ன நல்வார்த்
௰௫ தையை நிருவாகம்பண்ணுவோம். — அந்நாள்க
ளிலும், அக்காலத்திலும் [2]தாவீதுக்கு நீதியின் மு
ளையை முளைக்கப்பண்ணுவோம்; அவர் பூமியி
லே நியாயத்தையும் நீதியையும் நடப்பிப்பார்.—
௰௬ அந்நாள்களில் யூதா இரட்சிக்கப்பட்டு, எருச
லேம் சுகமாய்த் தங்கும்; அவர் எங்கள் நீதியாயி
ருக்கிற கர்த்தரென்று அழைக்கப்படுவார். —
௰௭ ஏனென்றால் [3]இஸ்ரவேல் வீட்டினுடைய இரா
சாசனத்தின்மேல் உளுக்காரத்தக்க புருஷன் தா
௰௮ வீதுக்கு இல்லாமல்போவதில்லை. — தகனபலி
யைச் செலுத்தி, காணிக்கையின் புகையைக் கா
ட்டி, நாள்தோறும் பலியிடும் புருஷன் நமக்கு
முன்பாக ஆசாரியர்களுக்கும் இலேவியருக்கும்
இல்லாமல்போவதுமில்லையென்று கர்த்தர் சொல்
லுகிறாரென்றார்.

௰௯ பின்னையும், எரேமியாவுக்குக் கர்த்தருடைய
௨௰ வார்த்தையுண்டாகி, அவர் உரைத்ததாவது:—கர்த்
தர் சொல்லுகிறதேதெனில், குறித்த நேரங்களில்
பகற்காலமும் இராக்காலமும் உண்டாகாதப
டிக்கு, நீங்கள் பகற்காலத்தைக்குறித்து நாம்பண்
ணின திட்டத்தையும், இராக்காலத்தைக்குறித்து
நாம் பண்ணின திட்டத்தையும் அவத்தமாக்கி
௨௧ னால்,—அப்போது நம்முடைய தாசனாகிய தாவீ
தோடே நாம் பண்ணின உடம்படிக்கையும்,
அவன் ஆசனத்தில் அரசாளும் குமாரன் அவனு
க்கில்லாதேபோகும்படியாக அவத்தமாகும்; நம்
முடைய ஊழியக்காரராகிய இலேவியரோடும்
ஆசாரியர்களோடும் நாம் பண்ணின உடம்படிக்
கையும் அப்போது அவத்தமாம்.—வானங்களின் ௨௨
சேனை எண்ணப்படாததும் கடற்கரை மணல்
அளக்கப்படாததுமாயிருக்கிறதுபோலே, நாம்
நம்முடைய தாசனாகிய தாவீதின் வித்தையும்
நமக்கூழியஞ்செய்கிற இலேவியரையும் வர்த்
திக்கப்பண்ணுவோமென்றார்.

பின்னையும் எரேமியாவுக்குக் கர்த்தருடைய ௨௩
வார்த்தையுண்டாகி, அவர் சொன்னதாவது:—கர் ௨௪
த்தர் தெரிந்துகொண்ட இரண்டு வம்சங்களையும்
வெறுத்துப்போட்டாரென்று இந்தச் சனம் சொ
ல்லி, தங்களுக்குமுன்பாக நமது சனம் இனி ஒரு
சாதியல்லவென்கிறதாய் அதைத் தூஷணிக்கி
றார்களென்கிறதை நீ கண்டதில்லையோ? — வா ௨௫
னங்களுக்கும் பூமிக்குமிருக்கிற திட்டங்களை
நாம் வைக்காதபடிக்குப் பகற்காலத்தையும் இ
ராக்காலத்தையுங்குறித்து நாம் பண்ணின உடம்
படிக்கை அற்றுப்போனால்,—அப்போது நாம் ௨௬
யாக்கோபின் வித்தையும் நம்முடைய தாசனா
கிய தாவீதின் வித்தையும், ஆபிரகாம் ஈசாக்கு
யாக்கோபென்றவர்களின்வித்தை ஆளத்தக்கவர்
களை அதில் எடுக்காதபடிக்கு வெறுத்துப்போடு
வோம்; ஏனென்றால், [4]அவர்களுடைய சிறையி
ருப்பை நாம் திருப்பி, அவர்களுக்கு இரங்கு
வோம் என்று கர்த்தர் சொல்லுகிறாரென்றார்.

## ௩௪. அதிகாரம்.

*௧. எரேமியா, சிதேக்கியாவும் பட்டணத்தாரும் சிறைப்பட்டுப்போவதைத் தீர்க்கதரிசனமாய் உரைத்தது. ௮. பிரபுக்களும் குடிகளும் தங்கள் அடிமைகளை நிவிர்த்திசெய்தும் பராபரனுடைய உடம்படிக்கைக்கு விரோதமாக அவர்களை மறுபடியும் சேர்த்துக்கொண்டது. ௰௨. எரேமியா அவர்களுடைய கீழ்ப்படியாமைக்காக அவர்களையும் சிதேக்கியாவையும் சத்துருக்கள் கையிலே ஒப்புக்கொடுப்பது.*

பாபேலின் [5]இராசாவாகிய நேபுகாத்நேச்சா ௧
ரும், அவனுடைய எல்லாச் சேனையும், அவனு
டைய கையின் ஆளுகைக்குக் கீழான பூமியினு
டைய சகல இராச்சியங்களும், சகல சனசதளங்
களும் எருசலேமுக்கும் சகல பட்டணங்களுக்
கும் விரோதமாக யுத்தம்பண்ணுகையில் எரேமி
யாவுக்குக் கர்த்தரால் உண்டான வசனம்.

இஸ்ரவேலின் பராபரனாகிய கர்த்தர் உரைக் ௨
கிறதாவது: நீ போய், யூதாவின் இராசாவாகிய
சிதேக்கியாவுடனே பேசி, அவனுக்குச் சொல்ல
வேண்டியதேதெனில், கர்த்தர் உரைக்கிறதா
வது: இதோ, நாம் இந்தப்பட்டணத்தைப் பாபே
லுடைய இராசாவின் கையில் ஒப்புக்கொடுக்கி
றோம்; அவன் அதை அக்கினியால் சுட்டெரிப்
பான்.—நீ அவன் கைக்குத் தப்பிப்போகாமல், ௩
பிடிபடவே பிடிபட்டு, அவன் கையில் ஒப்புக்
கொடுக்கப்படுவாய்; [6]உன் கண்கள் பாபேலு
டைய இராசாவின் கண்களைப் பார்க்கும்; அவன்

1 எரே. ௭. ௩௪.
2 எரே. ௨௩. ௫, ௬. ஏசா. ௪. ௨: ௧௧. ௧, ௨.
3 ௨ சாமு. ௭. ௰௬.
4 எரே. ௩௨. ௪௪. ஏசே. ௩௯. ௨௫. ஓசே. ௩. ௰௧. யோவா. ௧. ௧.
5 ௨ இரா. ௨௫. ௧, ௨.
6 எரே. ௩௨. ௪.

வாய் உன் வாயோடே பேசும்; நீ பாபேலுக்கும்
போவாய்.
ச ஆகிலும் யூதாவின் இராசாவாகிய சிதேக்கியா
வே, கர்த்தருடைய வார்த்தையைக் கேள்; உன்
னைக்குறித்துக் கர்த்தர் சொல்லுகிறதாவது: நீ பட்
ரு டையத்தாலே சாவதில்லை.—[1]சமாதானத்திலே சா
வாய்; உனக்கு முன்னிருந்த முந்தின இராசாக்
களாகிய உன் பிதாக்களினிமித்தமாக கந்தவர்க்
கங்களைக் கொளுத்தினதுபோலே உன்னிமித்
தமும் கொளுத்தி, ஐயோ! ஆண்டவனே, என்று
உனக்காகப் புலம்புவார்கள்; ஏனெனில், இது
நாம் சொன்ன வார்த்தையென்று கர்த்தர் உரைத்
தாரென்று சொல்லென்றார்.
சு இந்த வார்த்தைகளையெல்லாம் தீர்க்கதரிசியா
கிய எரேமியா எருசலேமிலே யூதாவின் இராசா
எ வாகிய சிதேக்கியாவோடே சொன்னான்.—அப்
போது பாபேலுடைய இராசாவின் சேனை எரு
சலேமுக்கு விரோதமாகவும், யூதாவினுடைய
எல்லாப் பட்டணங்களிலும் மீந்த பட்டணங்
களாகிய லாகீசுக்கு விரோதமாகவும்; அசெக்கா
வுக்கு விரோதமாகவும் யுத்தம்பண்ணிக்கொண்
டிருந்தார்கள்; ஏனென்றால், அரணிப்பான பட்
டணங்களாகிய இவைகளே யூதாவின் பட்ட
ணங்களில் மீந்திருந்தவைகள்.
அ ஒருவனும் யூதசாதியாகிய தன் சகோதரங்களை
அடிமைக்கொள்ளாதபடிக்கு, [2]அவனவன் எபி
ரேயனாகிய தன் வேலைக்காரனையும், எபிரேய
சாதியாகிய தன் வேலைக்காரியையும் தன்னிச்
சைக்காரராக அனுப்பிவிடவேண்டுமென்று அ
கூ வர்களுக்கு விடுதலையைக் கூற, — இராசாவா
கிய சிதேக்கியா எருசலேமில் இருக்கிற எல்
லாச் சனத்தோடும் உடம்படிக்கைபண்ணினபிற்
பாடு, எரேமியாவுக்குக் கர்த்தராலே வார்த்தை
ய உண்டாயிற்று.—ஏனென்றால், அவனவன் தன்
வேலைக்காரனையும் தன் வேலைக்காரியையும்
இனி அடிமைக்கொள்ளாதபடிக்கு, தன்னிச்சை
க்காரராக அனுப்பிவிடவேண்டுமென்ற உடம்ப
டிக்கைக்கு உட்பட்ட எல்லாப் பிரபுக்களும்
எல்லாச் சனமும் செவிகொடுத்தார்கள்; செவி
கொடுத்து, அவர்களை அனுப்பிவிட்டார்கள்.—
யக ஆனால் அதற்குப்பிறகு அவர்கள் மாறாட்டம்
பண்ணி, தாங்கள் தன்னிச்சைக்காரராக அனுப்
பிவிட்ட வேலைக்காரரையும் வேலைக்காரிகளை
யும் திரும்ப அழைத்துவந்து, அவர்களை வேலைக்
காரரும் வேலைக்காரிகளுமாயிருக்கும்படிக்குக்
கீழ்ப்படுத்திக்கொண்டார்கள்.
யஉ ஆனதுகொண்டு, கர்த்தராலே எரேமியாவுக்கு
யங வார்த்தையுண்டாகி, அவர்சொன்னதாவது:-இஸ்
ரவேலின் பராபரனாகிய கர்த்தர் உரைக்கிறதேதெ
னில், [3]ஏழு வருஷங்களின் முடிவிலே நீங்கள்,
அவனவன் தனக்கு விற்கப்பட்ட எபிரேயசாதி
யாகிய தன் சகோதரனை அனுப்பிவிடுவீர்களாக
வென்றும், அவன் உனக்கு ஆறு வருஷம் அடி
மையான பிற்பாடு அவனை உன்னிடத்தில்வைக்
காமல் தன்னிச்சைக்காரனாக அனுப்பிவிடு என்
றும்,—நாம் உங்கள் பிதாக்களைச் சிறைச்சாலை யச
யாகிய எகிப்துதேசத்திலிருந்து புறப்படப்பண்
ணின நாளிலே அவர்களோடே உடம்படிக்கை
பண்ணினோம்; ஆனால், உங்கள் பிதாக்கள் நம்
முடைய சொல்லைக் கேளாமலும் தங்கள் செவி
யைச் சாய்க்காமலும் போனார்கள்.—நீங்களோ யரு
வெனில், இந்நாளிலே மனந்திரும்பி, அவனவன்
தனக்கடுத்தவனுக்கு விடுதலையைக் கூறினதிலே
நம்முடைய பார்வைக்குச் செம்மையாயிருக்கிற
தைச் செய்து, நமது நாமம் தரிப்பிக்கப்பட்ட
வீட்டிலே இதற்காக நம்முடைய முகத்துக்கு
முன்பாக உடம்படிக்கையைப் பண்ணியிருந்
தீர்கள்.—ஆனால் நீங்கள் மாறாட்டம்பண்ணி, நம யசு
து நாமத்தைப்பரிசுத்தக்குலைச்சலாக்கி, நீங்கள்
அவனவன் விடுதலையாகவும் தன்னிச்சைக்கார
ராகவும் அனுப்பிவிட்ட தன் வேலைக்காரனை
யும் தன் வேலைக்காரியையும் திரும்ப அழைத்து
வந்து, அவர்களை உங்களுக்கு வேலைக்காரரும்
வேலைக்காரிகளுமாயிருக்கும்படிக்குக் கீழ்ப்ப
டுத்திக்கொண்டீர்கள்.
ஆகையால் கர்த்தர் சொல்லுகிறதாவது: நீங் யஎ
கள் அவனவன் தன் சகோதரனுக்கும் அவன
வன் தனக்கடுத்தவனுக்கும் விடுதலையைக் கூற,
நம்முடையசொல்லைக் கேளாமல்போனீர்களே;
இதோ, நாம் உங்களைப் பட்டையத்துக்கும், பெ
ருவாரிக்காய்ச்சலுக்கும், பஞ்சத்துக்கும் விடுகிற
விடுதலையை உங்களுக்குக் கூறுகிறோம்; பூமி
யின் இராச்சியங்களிலெல்லாம் அலைகிறதற்கும்
உங்களை ஒப்புக்கொடுப்போமென்று கர்த்தர்
சொல்லுகிறார்.—நமக்குமுன்பாகப் பண்ணின யஅ
உடம்படிக்கையின் வார்த்தைகளை நிறைவாகம்ப
ண்ணாமல், நம்முடைய உடம்படிக்கையை மீறி
ன மனுஷரை நாம், தாங்களிரண்டாக அறுத்து,
[4]துண்டுகளின் நடுவாகக் கடந்துபோன கன்றுக்
குட்டியைப்போல் ஆக்குவோம்.-கன்றுக்குட்டி யகூ
யினுடைய துண்டுகளின் நடுவே கடந்துபோன
யூதாவின் பிரபுக்களையும், எருசலேமின் பிரபுக்
களையும், பிரதானிகளையும், ஆசாரியர்களையும்,
தேசத்தின் சகல சனங்களையுந்தானே.—நாம் அவர் உ0
களை அவர்கள் சத்துருக்களின் கையிலும், அவர்
கள் பிராணனை வாங்கத்தேடுகிறவர்களின் கையி
லும், ஒப்புக்கொடுப்போம்; [5]அவர்களுடைய பி
ரேதம் ஆகாசத்தின் பறவைகளுக்கும் பூமியின்
மிருகங்களுக்கும் இரையாம்.—யூதாவின் இரா உக
சாவாகிய சிதேக்கியாவையும் அவனுடைய பிர
புக்களையும் அவர்கள் சத்துருக்கள் கையிலும்,
அவர்கள் பிராணனை வாங்கத்தேடுகிறவர்களின்
கையிலும், [6]உங்களைவிட்டுப் போர்ந்துபோன
பாபேலின் இராசாவினுடைய சேனையின் கை
யிலும் ஒப்புக்கொடுப்போம்.—இதோ, நாம் சட் உஉ
டளைகொடுத்து, அவர்களை [7]இந்தப் பட்டணத்

1 உ நளா. யசு. யச. கக-சக. இ மோ. யங. யஉ.
2 உ மோ. உக. உ. க மோ. உரு. 3 உ மோ. உக. உ. இ மோ. யரு.
யஉ.—4 க மோ. ய. ய, யஎ. 6 எரே. எஎ. இ.—7 எரே.
5 எரே. எ. கங: க. உஉ. கஎ அ.

துக்குத் திரும்பப்பண்ணுவோம்; அவர்கள் அத
ற்கு விரோதமாக யுத்தம்பண்ணி, அதைப் பி
டித்து, அதை அக்கினியால் சுட்டெரிப்பார்கள்;
யூதாவின் பட்டணங்களையோ, ஒருவரும் அவை
களில் குடியிராதபடியாகப் பாழ்த்துப்போகப்
பண்ணுவோம் என்று கர்த்தர் உரைக்கிறார் என்று
சொல்லென்றார்.

## ௩௫. அதிகாரம்.

*௧. இரேகாபியருடைய கீழ்ப்படிதலினாலே, ௰௨. யூதருடைய கீழ்ப்படியாமையைக்குறித்து எரேமியா கண்டித்தது. ௰௮. பராபரன இரேகாபியருடைய கீழ்ப்படிதலுக்காக அவர்களை ஆசீர்வதித்தது.*

௧ **யோ**சியாவின் குமாரனாகிய யோயாக்கீம் என்ற
யூதாவினுடைய இராசாவின் நாட்களில் எரேமி
யாவுக்குக் கர்த்தரால் உண்டான வார்த்தையா
௨ வது:—நீ இரேகாபியருடைய வீட்டுக்குப்போய்,
அவர்களோடே பேசி, அவர்களைக் கர்த்தருடை
ய வீட்டின் அறைகளில் ஒன்றிலே அழைத்துப்
போய், அவர்களுக்குத் திராட்சப்பழஇரசம் கு
டிக்கக்கொடு என்றார்.
௩ அப்போது நான் கபத்சீனியாவின் குமாரனா
கிய எரேமியாவுக்கு மகனான யாசனியாவையும்,
அவனுடைய சகோதரரையும், அவனுடைய எல்
லாக் குமாரரையும், இரேகாபியருடைய வீட்டா
௪ ரனைவரையும் அழைத்து,—கர்த்தருடைய வீட்
டிலே பிரபுக்களுடைய அறையின் அருகேயும்,
வாசலைக்காக்கிற சல்லூமின் குமாரனாகிய மாசே
யாவினுடைய அறையின்மேலுள்ள இக்தலியா
வின் குமாரனாகிய ஆனானென்ற பராபரனுடைய
மனுஷ புத்திரரின் அறையிலே அவர்களைக் கூட்
௫ டிக்கொண்டுபோய், — திராட்சப்பழ இரசத்தி
னால் நிறையப்பட்ட கரகங்களையும் பாத்திரங்க
ளையும் இரேகாபியருடைய வீட்டுப் புத்திரரின்
முன்னே வைத்து, அவர்களுடனே: திராட்சப்ப
ழஇரசம் குடியுங்களென்றேன்.
௬ ஆனால், அவர்கள் சொன்னதாவது: நாங்கள்
திராட்சப்பழஇரசம் குடிக்கிறதில்லை; ஏனென்
றால், நீங்கள் பரதேசிகளாய்த் தங்குகிற சீமையில்
௭ நீட்டிப்பாயிருக்கும்படிக்கு,—நீங்களும் உங்கள்
பிள்ளைகளும் என்றென்றைக்கும் திராட்சப்பழ
இரசம் குடியாமலும், வீட்டைக் கட்டாமலும்,
விதையை விதைக்காமலும், திராட்சத்தோட்டத்
தை நாட்டாமலும் கையாளாமலும், உங்களுடை
ய எல்லா நாட்களிலும் கூடாரங்களிலே குடியி
ருப்பீர்களாகவென்று, இரேகாபின் குமாரனாகிய
எங்களுடைய தகப்பன் யோனதாப்பு எங்களுக்
௮ குக் கற்பித்தார்.—அப்படியே எங்களுடைய எல்
லா நாட்களிலும் நாங்களும் எங்கள் பெண்சாதி
களும் எங்கள் குமாரரும் எங்கள் குமாரத்திகளும்
௯ திராட்சப்பழஇரசம் குடியாமலும்,—நாங்கள் கு
டியிருக்க வீடுகளைக் கட்டாதபடிக்கு, இரேகா
பின் குமாரனாகிய எங்களுடைய தகப்பன் யோ
னதாப்பின் சத்தத்துக்குக் கீழ்ப்படிந்திருக்கிறோ
ம்; எங்களுக்குத் திராட்சத்தோட்டமும் வயலும்
விதைப்பாடுமில்லை.—நாங்கள் கூடாரங்களில் ௰
குடியிருந்து, எங்கள் தகப்பனாகிய யோனதாப்பு
எங்களுக்குக் கற்பித்தபடியெல்லாம் கீழ்ப்படிந்
து செய்துவந்தோம்.—ஆனால் பாபேலின் இரா ௰௧
சாவாகிய நேபுகாத்நேச்சார் தேசத்திலே வந்தே
றுகையில், நாம் கல்தேயருடைய இராணுவத்
துக்கும் சூரியருடைய இராணுவத்துக்கும் தப்ப
எருசலேமுக்குப் போவோம் வாருங்கள் என்று
சொன்னோம்; அப்படியே எருசலேமிலே தரித்
திருக்கிறோமென்றார்கள்.
அப்போது கர்த்தருடைய வார்த்தை எரேமி ௰௨
யாவுக்குண்டாகி, அவர் சொன்னதாவது:—இஸ் ௰௩
ரவேலின் பராபரனாகிய சேனைகளையுடைய கர்த்
தர் உரைக்கிறதேதெனில், நீ போய், யூதாவின்
மனுஷருக்கும் எருசலேமின் குடிகளுக்கும்
சொல்லவேண்டியதாவது: நீங்கள் நம்முடைய
வார்த்தைகளைக் கேட்கும்படிக்குப் புத்தியை ஏற்
றுக்கொள்வதில்லையோவென்று கர்த்தர் கேட்கி
றார். — திராட்சப்பழஇரசம் குடியாதபடிக்கு, ௰௪
இரேகாபின் குமாரனாகிய யோனதாப்பு தன்
பிள்ளைகளுக்குக் கற்பித்த வார்த்தைகள் நிருவா
கம்பண்ணப்பட்டு வருகின்றன; அவர்கள் இந்
நாள்மட்டுக்கும் அதைக் குடியாமல், தங்கள் தக
ப்பனுடைய கற்பனைக்குக் கீழ்ப்படிகிறார்கள்;
ஆனால், [1]நாம் உங்களுக்கு ஏற்கெனவே சொல்
லிக்கொண்டேயிருந்தும், நமக்குக் கீழ்ப்படியா
தே போனீர்கள். — [2]நீங்கள் அவனவன் தன் ௰௫
பொல்லாத வழியைவிட்டுத் திரும்பி, உங்கள் கி
ரியைகளைச் சீர்ப்படுத்தி, அந்நியதேவர்களைச் சே
விக்கும்படிக்குப் பின்தொடராதிருங்கள்; அப்
போது நாம் உங்களுக்கும் உங்கள் பிதாக்களுக்
கும் கொடுத்த தேசத்திலே குடியிருப்பீர்களென்
று சொல்லி, தீர்க்கதரிசிகளாகிய நம்முடைய ஊ
ழியக்காரரையெல்லாம் நாம் உங்களண்டைக்கு
ஏற்கெனவே அனுப்பிக்கொண்டிருந்தும், [3]நீங்
கள் உங்கள் செவியைச் சாய்க்காமலும் நமக்குக்
கீழ்ப்படியாமலும் போனீர்கள்.—இப்போதும், ௰௬
இரேகாபின் குமாரனாகிய யோனதாப்பின் பிள்
ளைகள் தங்கள் தகப்பன் தங்களுக்குக் கற்பித்த
கற்பனையை நிருவாகம்பண்ணிவந்தபடியினா
லும், இந்தச் சனம் நமக்குக் கீழ்ப்படியாமல்போ
னபடியினாலும்,—இஸ்ரவேலின் பராபரனும் சே ௰௭
னைகளையுடைய பராபரனுமாகிய கர்த்தர் சொல்
லுகிறதாவது: இதோ, [4]நாம் அவர்களுடனே
சொல்லியும் அவர்கள் கேளாமலும், நாம் அவர்க
ளைநோக்கிக் கூப்பிட்டும் அவர்கள் மறுஉத்தரவு
கொடாமலும்போனபடியினாலே யூதாவின்மே
லும் எருசலேமின் குடிகள் எல்லாரின்மேலும்
நாம் அவர்களுக்கு விரோதமாகச் சொன்ன எல்
லாத் தீங்கையும் வரப்பண்ணுவோம் என்று சொ
ல்லென்றார்.
இரேகாபியருடைய வீட்டாருக்கோவென் ௰௮
றால், எரேமியா சொன்னதாவது: இஸ்ரவேலின்

1 எரே. ௨௫. ௩: ௩௨. ௩௩.—2 எரே. ௰௮. ௰௧.

3 எரே. ௭. ௨௬.—4 எரே. ௭. ௰௩, ௰௪. ஏசா. ௬௫. ௰௨: ௬௬. ௪.

பராபரனாகிய சேனைகளையுடைய கர்த்தர் சொல்
லுகிறதேதெனில், நீங்கள் உங்கள் தகப்பனாகிய
யோனதாபின் கற்பனைக்குக் கீழ்ப்படிந்து, அ
வனுடைய கற்பனைகளையெல்லாம் கைக்கொண்
டு, அவன் உங்களுக்குக் கற்பித்தபடியெல்லாம்
௰௯ செய்துவந்தபடியினாலே,—சகல நாள்களிலும்
[1]நமக்குமுன்பாக நிற்கத்தக்க புருஷன் இரேகா
பின் குமாரனாகிய யோனதாப்புக்கு இல்லாமல்
போவதில்லையென்று இஸ்ரவேலின் பராபரனா
கிய சேனைகளையுடைய கர்த்தர் சொல்லுகிறார்
என்றான்.

## ௩௬. அதிகாரம்.

௧. எரேமியா பாருக்கைத் தன் தீர்க்கதரிசனத்தை எழுதவும், ௯. அதைப் பிரசித்தமாய் வாசிக்கவும் செய்தது. ௰௧. பிரபுக்கள் மிகாயாவினாலே அதின் செய்தியையறிந்து, சுருளை எடுத்துக்கொண்டுவரவும், அதை வாசிக்கவும் எகூதியை அனுப்பினது. ௰௯. அவர்கள் பாருக்கையும், எரேமியாவையும் ஒளித்துக்கொள்ளச் சொன்னது ௨௰. இராசாவாகிய யோயாக்கீம் சுருளைக்குறித்தறிந்து, அதிலொரு பாகத்தைக்கேட்டு, அதைக் கொளுத்திப்போட்டது. ௨௭. அவனுக்கு வரும் நியாயத்தீர்ப்பை எரேமியா சொன்னது. ௨௮. பாருக்குச் சுருளைத் திரும்பவெழுதினது.

௧ யோசியாவின் குமாரனாகிய யோயாக்கீம் என்ற
யூதாவுடைய இராசாவின் [2]நாலாம் வருஷத்தில்
சம்பவித்ததேதென்றால், கர்த்தராலே எரேமியா
வுக்குண்டான வார்த்தையாவது:
௨ நீ உனக்கு ஒரு புஸ்தகச்சுருளை வாங்கி, நாம்
யோசியாவின் நாள்களிலே உன்னுடனே பே
சின நாள்முதற்கொண்டு இந்நாள்மட்டும் இஸ்ர
வேலைக்குறித்தும், யூதாவைக்குறித்தும், சகல சா
திகளைக்குறித்தும் உன்னோடேசொன்ன எல்லா
௩ வார்த்தைகளையும் அதிலே எழுது.—[3]ஒருவேளை
யூதாவின் வீட்டார், அவரவர் தங்கள் பொல்லாத
வழியைவிட்டுத் திரும்பும்படியாகவும், நாம் தங்
கள் அக்கிரமத்தையும் தங்கள் பாவத்தையும் மன்
னிக்கும்படியாகவும், தங்களுக்கு நாம் செய்ய
நினைத்திருக்கிற தீங்கையெல்லாம் கேட்பார்க
ளென்றார்.
௪ அப்போது எரேமியா நேரியாவின் குமாரனா
கிய [4]பாருக்கை அழைத்தான்; இந்தப் பாருக்கு
என்கிறவன் கர்த்தர் எரேமியாவுடனே சொல்லி
வந்த எல்லா வார்த்தைகளையும் அவன் வாய் சொ
௫ ல்ல ஒரு புஸ்தகச்சுருளில் எழுதினான்.—பிற்பாடு
எரேமியா பாருக்குக்குக் கற்பித்துச் சொன்ன
தாவது: நான் அடைக்கப்பட்டவன்; நான் கர்த்
தருடைய வீட்டுக்குள்ப் பிரவேசிக்கக்கூடாது.—
௬ நீ உள்ளே பிரவேசித்து, என் வாய் சொல்ல நீ
எழுதின சுருளிலே கர்த்தருடைய வீட்டில் உப
வாசநாளிலே கர்த்தருடைய வார்த்தைகளைச்
சனங்கள் கேட்க வாசி; தங்கள் பட்டணங்களி
லிருந்து வருகிற எல்லா யூதா கோத்திரத்தாரும்
௭ கேட்க அவைகளை வாசிப்பாயாக.—ஒருவேளை
கர்த்தருடைய முகத்துக்குமுன்பாக அவர்கள்
பணிந்து, விண்ணப்பம்பண்ணி, அவரவர் தங்
கள் பொல்லாத வழியைவிட்டுத் திரும்புவார்
கள்; ஏனெனில் கர்த்தர் இந்தச் சனத்துக்கு
விரோதமாகச் சொன்ன கோபமும் உக்கிரமும்
பெரியதென்றான்.
அப்படியே நேரியாவின் குமாரனாகிய பாருக் ௮
கு அந்தப் புஸ்தகத்தில், கர்த்தருடைய வீட்டில்
கர்த்தருடைய வார்த்தைகளை வாசிக்கும்படிக்கு
எரேமியா தீர்க்கதரிசி தனக்குக் கற்பித்தபடியெ
ல்லாம் செய்தான்.—யோசியாவின் குமாரனாகிய ௯
யோயாக்கீம் என்ற யூதாவினுடைய இராசாவின்
ஐந்தாம் வருஷத்து ஒன்பதாம்மாதத்திலே சம்ப
வித்ததேதெனில், எருசலேமிலிருக்கிற எல்லாச்
சனத்துக்கும், யூதாவுடைய பட்டணங்களிலி
ருந்து எருசலேமுக்கு வருகிற எல்லாச் சனத்துக்
கும், கர்த்தருக்குமுன்பாக ஒரு உபவாசத்தைக்
கூறினார்கள்.—அப்பொழுது பாருக்கு கர்த்தரு ௰
டைய வீட்டின் மேல்முற்றத்தில், கர்த்தருடைய
வீட்டுப் புதுவாசலின் நடைக்கருகான சாப்பா
னுடைய குமாரனாகிய கேமலியாவென்ற சம்பி
ரதியின் அறையிலே, அந்தப் புஸ்தகத்தில் எரே
மியாவின் வார்த்தைகளை எல்லாச் சனமும்
கேட்க வாசித்தான்.
சாப்பானுடைய குமாரனாகிய கேமலியாவின் ௰௧
மகன் மிகாயா கர்த்தருடைய வார்த்தைகளை
யெல்லாம் அந்தப் புஸ்தகத்தில் வாசிக்கக் கேட்
கும்போது,—அவன் இராசாவின் வீட்டுக்குச் ௰௨
சம்பிரதியின் அறையில் இறங்கிப்போனான்; இ
தோ, அங்கே எல்லாப் பிரபுக்களும் உளுக்காந்
திருந்தார்கள்; சம்பிரதியாகிய எலிசாமாவும், சே
மாயாவின் குமாரனாகிய தெலாயாவும், அக்போ
ரின் குமாரனாகிய எல்நாத்தானும், சாப்பானின்
குமாரனாகிய கேமலியாவும், அனனியாவின்
குமாரனாகிய சிதேக்கியாவும், மற்ற எல்லாப் பிர
புக்களுந்தானே.—பாருக்கு சனத்தின் செவிக ௰௩
ளில்படப் புஸ்தகத்திலே வாசிக்கையில், தான்
கேட்ட எல்லா வார்த்தைகளையும் மிகாயா அவர்
களுக்கு அறிவித்தான்.
அப்போது எல்லாப் பிரபுக்களும் கூஷியின் ௰௪
குமாரனாகிய செலேமியாவின் மகனான நெத்தா
னியாவினுடைய குமாரனாயிருக்கிற எகூதி
யைப் பாருக்கண்டைக்கனுப்பி, சனம் கேட்க
நீ வாசித்துக்கொண்டிருந்த சுருளை உன் கையில்
எடுத்துக்கொண்டுவாவென்று சொல்லச்சொன்
னார்கள்; ஆகையால், நேரியாவின் குமாரனாகிய
பாருக்கு சுருளைத் தன் கையிலெடுத்துக்கொண்
டு, அவர்களண்டைக்கு வந்தான்.—அவர்கள் அவ ௰௫
னுடனே, நீ உளுக்காந்துகொண்டு, நாங்கள் கே
ட்க வாசியென்றார்கள்; அவர்கள் கேட்க வாசித்
தான்.—அப்போது சம்பவித்ததேதென்றால், அ ௰௬
வர்கள் எல்லா வார்த்தைகளையும் கேட்கையில்
ஒருவரையொருவர் பயமுற்றவர்களாய்ப் பார்த்
து, பாருக்குடனே: இந்த எல்லா வார்த்தைகளை
யும் இராசாவுக்கு அறிவிக்கவே அறிவிப்போம்
என்றார்கள்.—நீ அவர் வாய்சொல்ல, இந்த வார்த் ௰௭
தைகளையெல்லாம் எந்தப்பிரகாரமாய் எழுதினா

1 எரே. ௩௫. ௰௯.—2 எரே. ௨௫. ௧.

3 எரே. ௨௬. ௩.—4 எரே. ௩௨. ௰௨.

யென்கிறதை எங்களுக்கு அறிவி என்று பாரூக்
௰௮ கைக் கேட்டார்கள்.—பாரூக்கு அவர்களு
டனே: தமது வாயினாலே இந்த எல்லா வார்த்
தைகளையும் உரைத்து, என்னுடனே சொன்னார்;
நான் மையினாலே புஸ்தகத்திலெழுதினேன் என்
௰௯ றான்.—அப்போது பிரபுக்கள் பாரூக்குடனே,
நீ போய், ஒளித்துக்கொள்; நீயும் எரேமியாவுந்
தானே; நீங்கள் எங்கே இருக்கிறீர்களென்று ஒரு
வரும் அறியாதிருப்பதாக என்று சொல்லி,
௨௰ சுருளைச் சம்பிரதியாகிய எலிசாமாவின் அறை
யிலே வைத்து, இராசாவண்டைக்கு அரமனை
யிலே போய், இராசாவின் செவிகளுக்கு இந்த
௨௧ வார்த்தைகளை எல்லாம் அறிவித்தார்கள்.—அப்
போது இராசா அந்தச் சுருளை எடுத்துக்கொண்டு
வர எகூதியை அனுப்பினான்; எகூதி அதைச்
சம்பிரதியாகிய எலிசாமாவின் அறையிலிருந்து
எடுத்துக்கொண்டுவந்து, இராசா கேட்கவும், இ
ராசாவண்டையில் நின்ற எல்லாப் பிரபுக்களும்
௨௨ கேட்கவும் வாசித்தான்.—ஒன்பதாம் மாதமாகிய
அப்போது இராசா, குளிர்காலத்துக்கு இருக்கும்
வீட்டில் உளுக்கார்ந்திருந்தான்; அவனுக்குமுன்
௨௩ பாக்க் கணப்பு எரிகிறதாயிருந்தது.—சம்பவித்
ததேதென்றால், எகூதி மூன்று நாலு பத்திகளை
வாசித்தபிற்பாடு அவன் ஒரு கணக்கன் கத்தியி
னால் அதை அறுத்து, சுருளனைத்தும் கணப்பி
லுள்ள அக்கினியினாலே வெந்து தீருமளவும்,
கணப்பிலிருந்த அக்கினியில் எறிந்துபோட்
௨௪ டான்.—இராசாவானாலும், அந்த வார்த்தைகளை
யெல்லாம் கேட்ட அவனுடைய சகல ஊழியக்
காரரானாலும் பயப்பட்டதுமில்லை; தங்கள் வஸ்
௨௫ திரங்களைக் கிழித்ததுமில்லை.—எல்நாத்தானும்,
தேலாயாவும், கேமலியாவுமோவெனில், அந்தச்
சுருளைச் சுட்டெரிக்காதபடிக்கு இராசாவுக்கு
விண்ணப்பம்பண்ணினார்கள்; ஆகிலும், அவர்க
௨௬ ளுக்குக் கேள்விகொடாமல்,—பாரூக்கு என்ற
கணக்கனையும் எரேமியா தீர்க்கதரிசியையும் பி
டிக்கும்படிக்கு, இராசாவும், மேலேகின் குமார
னாகிய எராமேயேலுக்கும், அஸ்ரியேலின் குமா
ரனாகிய செராயாவுக்கும், அப்தேயேலின் குமா
ரனாகிய சேலேமியாவுக்கும் கட்டளைகொடுத்
தான்; ஆனால் கர்த்தர் அவர்களை மறைத்தார்.

௨௭ இராசா அந்தச் சுருளையும், அதிலே பாரூக்கு
எரேமியாவின் வாய்சொல்ல, எழுதியிருந்த வார்
த்தைகளையும் சுட்டெரித்தபிற்பாடு, எரேமியா
வுக்குக் கர்த்தருடைய வார்த்தை உண்டாகி, அ
௨௮ வர் சொன்னதாவது:—நீ திரும்ப வேறொரு
சுருளை உனக்கு வாங்கி, யூதாவின் இராசாவா
கிய யோயாக்கீம் சுட்டெரித்த முதலாம் சுருளி
லிருந்த முந்தின வார்த்தைகளையெல்லாம் அதி
௨௯ லே எழுது.—யூதாவின் இராசாவாகிய யோயாக்
கீமுக்கோ நீ சொல்லவேண்டியதாவது: கர்த்தர்
உரைக்கிறதேதெனில், பாபேலின் இராசா வர
வே வருவானென்கிறதையும், அவன் இந்தத் தே
சத்தை அழித்து, அதிலிருந்து மனுஷரையும் மிரு
கங்களையும் ஒழியப்பண்ணுவான் என்கிறதை
யும் நீ அதில் எழுதினதேதென்று சொல்லி, அந்
தச் சுருளை நீ சுட்டெரித்தாய்.
ஆகையால் யூதாவின் இராசாவாகிய யோயாக் ௩௰
கீமைக்குறித்துக் கர்த்தர் உரைக்கிறதாவது: தாவீ
துடைய இராசாசனத்தின்மேல் உளுக்காருப
வன் அவனுக்கில்லை; [1]அவனுடைய பிரேதமோ
வெனில், பகலின் உஷ்ணத்துக்கும் இராவின்
குளிருக்கும் ஏதுவாக எறிந்துவிடப்பட்டுக் கிட
க்கும்.—நாம் அவனிடத்திலும், அவனுடைய வித் ௩௧
தினிடத்திலும், அவனுடைய பிரபுக்களிடத்தி
லும் அவர்கள் அக்கிரமத்தை விசாரித்து, அவன்
மேலும், எருசலேமுடைய குடிகளின்மேலும்,
யூதாவுடைய மனுஷர்மேலும், நாம் அவர்களுக்
குச் சொன்னதும் அவர்கள் கேளாதேபோனது
மான [2]தீங்கனைத்தையும் வரப்பண்ணுவோம்
என்று உரைத்தாரென்று சொல்லென்றார்.
அப்போது எரேமியா வேறொரு சுருளை வா ௩௨
ங்கி, அதை நேரியாவின் குமாரனாகிய பாரூக்கு
என்ற கணக்கனுக்குக் கொடுத்தான்; இவன்
யூதாவின் இராசாவாகிய யோயாக்கீம் அக்கினி
யால் சுட்டெரித்த புஸ்தகத்தின் வார்த்தைகளை
யெல்லாம். அதிலே எரேமியாவின் வாய்சொல்ல
எழுதினான்; இன்னம் அவைகளுக்கொத்த அநே
கம் வார்த்தைகளும் அவைகளோடே சேர்க்கப்
பட்டன.

## ௩௭. அதிகாரம்.

௧. கல்தேயரை முற்றிக்கைபோட்டதை எகிப்தியர் விலக்கியபோது, சிதேக்கியா இராசா சனத்துக்காக வேண்டிக்கொள்ளும்படி எரேமியாவுக்கு ஆள்களையனுப்பினது. ௯. கல்தேயர் செயம்பெற்றுத் திரும்புவார்களென்று எரேமியா தீர்க்கதரிசனம் சொன்னது. ௰௧. அவன் அடிமையாகப் பிடித்து, அடித்துச் சிறையிருத்தப்பட்டது. ௰௭. அவன் சிதேக்கியா சிறைப்படுவானென்று உறுதியாய்ச் சொன்னது. ௰௮. அவன் விடுதலையாகவேண்டிச் சிறிது தயவை அடைந்தது.

பாபேலின் இராசாவாகிய நேபுகாத்நேச்சார் ௧
யோயாக்கீமுடைய குமாரனாகிய கோனியாவி
ன்பட்டத்தில் யூதாதேசத்தில் இராசாவாக வைத்
த யோசியாவின் குமாரனாகிய சிதேக்கியா அரசா
ண்டான்.—ஆனால் கர்த்தர் எரேமியா தீர்க்கதரி ௨
சியைக்கொண்டு சொன்ன வார்த்தைகளை அவ
னாகிலும், அவனுடைய ஊழியக்காரராகிலும்,
தேசத்தின் சனமாகிலும் கேட்டதில்லை.
[3]சிதேக்கியா இராசாவோவெனில், சேலேமி ௩
யாவின் குமாரனாகிய யூகாலையும், மாசேயாவின்
குமாரனாகிய செப்பானியாவென்ற ஆசாரியனை
யும் எரேமியா தீர்க்கதரிசியண்டைக்கனுப்பி: நீ
நம்முடைய பராபரனாகிய கர்த்தரைநோக்கி,
எங்களுக்காக விண்ணப்பம்பண்ணுமே என்று
சொல்லச்சொன்னான்.—அப்போது எரேமியா ௪
சனத்தின் நடுவே வரத்தும்போக்குமாயிருந்தான்,
அவனை அவர்கள் காவல்வீட்டில் இன்னம்போ
ட்டதில்லை.—பார்வோனின் சேனையோவென் ௫
றால், எகிப்திலிருந்து புறப்பட்டது; எருசலே

1 எரே. ௨௨. ௰௯.—2 எரே. ௩௫. ௰௭.

3 எரே. ௪௨. ௨௰, ௩.

மை முற்றிக்கைபோட்ட கல்தேயர் அவர்களு
டைய செய்தியைக் கேட்டு, எருசலேமைவிட்டு
எழும்பிப்போனார்கள்.
௬ அப்போது எரேமியா தீர்க்கதரிசிக்குக் கர்த்த
ருடைய வார்த்தையுண்டாகி, அவர் சொன்ன
௭ தாவது:—இஸ்ரவேலின் பராபரனாகிய கர்த்தர்
உரைக்கிறதேதெனில், நம்மைக் கேட்கும்ப
டிக்கு உங்களை நம்மண்டைக்கனுப்பின யூதா
வின் இராசாவுக்கு நீங்கள் சொல்லவேண்டியதா
வது: இதோ, உங்களுக்கு ஒத்தாசையாகப் புறப்
பட்ட பார்வோனின் சேனை தன் தேசமாகிய
௮ எகிப்துக்குத் திரும்பிப்போகும்.—கல்தேயரோ
வென்றால், திரும்பிவந்து இந்தப் பட்டணத்துக்
கு விரோதமாய் யுத்தம்பண்ணி, அதைப் பிடித்து,
௯ அதை அக்கினியால் சுட்டெரிப்பார்கள்.—கல்
தேயர் நம்மைவிட்டுப் போகவே போவார்க
ளென்று சொல்லி, உங்கள் ஆத்துமாக்களை மோ
சம்போக்காதிருங்களென்று கர்த்தர் சொல்லுகி
றார்; ஏனென்றால், அவர்கள் போவதில்லை.—
௰ உங்களோடே யுத்தம்பண்ணுகிற கல்தேயரு
டைய சேனையையெல்லாம் நீங்கள் வெட்டி,
குத்துக்காயம்பட்ட மனுஷர்மாத்திரம் அவர்க
ளில் மீதியாயிருந்தாலும், இவர்களில் அவரவர்
தங்கள் கூடாரங்களில் எழும்பி, இந்தப் பட்ட
ணத்தை அக்கினியால் சுட்டெரிப்பார்களென்று
சொல்லுங்கள் என்றார்.

௰௧ பார்வோனின் சேனை வருகிறதென்று கல்தே
யருடைய சேனை எருசலேமைவிட்டு எழும்பிப்
௰௨ போனபோது,—எரேமியா அவ்விடத்தைவிட்டு,
சனத்தின்நடுவிலே சாடையாய் விலகி, பென்ய
மீன் தேசத்துக்குப் போக மனதாய் எருசலேமி
௰௩ லிருந்து புறப்படப்போனான்.—அவன் பென்யமீ
ன்வாசலில் வந்தபோதோவெனில், காவல்சேர்
வையின் அதிபதியாகிய எரியாவென்ற நாமமுள்
ள ஒருவன் அங்கே இருந்தான்; அவன் அனனி
யாவின் குமாரனாகிய சேலேமியாவின் மகன்: அ
வன், நீ கல்தேயர் வசமாகப்போகிறவன் என்று
சொல்லி, எரேமியா தீர்க்கதரிசியைப் பிடித்
௰௪ தான்.—அப்போது எரேமியா இது பொய், நான்
கல்தேயர்வசமாகப் போகிறவனல்லவென்றான்;
ஆனால் எரியா இவனுடைய சொல்லைக்கேளா
மல், எரேமியாவைப் பிடித்து, அவனைப் பிரபுக்
௰௫ களண்டைக்குக் கொண்டுபோனான். — அப்
போது பிரபுக்கள் எரேமியாவின்பேரில் கடுங்
கோபம் அடைந்து, [1]அவனை அடித்து, அவனைச்
சம்பிரதியாகிய யோனத்தானுடைய வீட்டில்
காவல்வைத்தார்கள்; ஏனெனில் அதை அவர்கள்
காவல் வீடாக்கினார்கள்.

௰௬ அப்படியே எரேமியா கெபியாயிருக்கிற வீட்
டிலும் நிலவறைகளிலும் பிரவேசித்தான்; அங்
௰௭ கே எரேமியா அநேகநாள் இருந்தான்.—பிறகு
சிதேக்கியா இராசா அவனை அழைத்தனுப்பி:
கர்த்தராலே ஒரு வார்த்தை உண்டோவென்று
இராசா அவனைத் தன் வீட்டிலே இரகசியமாய்க்
கேட்டான்: அதற்கு எரேமியா: உண்டு; பாபே
லுடைய இராசாவின் கையில் ஒப்புக்கொடுக்
கப்படுவீரென்று சொன்னான்.—பின்னையும் எரே ௰௮
மியா, சிதேக்கியா இராசாவுடனே சொன்னதா
வது: நீங்கள் என்னைக் காவல்வீட்டிலே அடைத்
ததற்கு, நான் உமக்கும் உம்முடைய ஊழியக்
காரருக்கும் இந்தச் சனத்துக்கும் விரோதமாக
என்ன பாவஞ்செய்தேன்?—பாபேலின் இராசா ௰௯
உங்களுக்கும் இந்தத் தேசத்துக்கும் விரோதமாக
வருவதில்லையென்று உங்களுக்குத் தீர்க்கதரிச
னஞ்சொன்ன உங்களுடைய தீர்க்கதரிசிகள் எங்
கே?—இப்போதும் இராசாவாகிய என் ஆண்ட ௨௰
வனே, கேளுமே; நான் சம்பிரதியாகிய யோ
னத்தானுடைய வீட்டிலே சாகாதபடிக்கு, அங்
கே என்னைத் திரும்ப அனுப்பாதிரும் என்கிற
என்னுடைய விண்ணப்பத்துக்கு உமக்கு முன்
பாக இடமுண்டாகக்கடவதென்றான். — அப் ௨௰௧
போது எரேமியாவைக் [2]காவற்சாலையின் முற்
றத்திலே காக்கவும், பட்டணத்திலே அப்பமெல்
லாம் சரிப்போகிறநாள்மட்டும் தினம் அப்பஞ்
சுடுகிறவர்களின் வீதியிலே ஒரு அப்பத்தை அ
வனுக்கு வாங்கிக்கொடுக்கவும் கட்டளையிட்
டான்; அப்படியே எரேமியா காவற்சாலையின்
முற்றத்திலிருந்தான்.

## ௩௮. அதிகாரம்.

௧. தப்பான எண்ணத்தினாலே எரேமியா மல்கியாவின் துரவிலே போடப்பட்டது. ௭. எபெதமேலேக் விண்ணப்பத்தினாலே அவனை விடுதலையாக்கினது. ௰௪. இராசாவின் உயிரைக்காக்க மனம் இணங்கும்படி அவனுக்கு எரேமியா அந்தரங்க ஆலோசனை சொன்னது. ௨௪. இராசாவின் கற்பனைப்படியே அந்த யோசனையைப் பிரபுக்களுக்கு மறைத்தது.

ஆனால்,[3] இந்தப்பட்டணத்திலே தரித்திருக்கி ௧
றவன், பட்டையத்தாலும், பஞ்சத்தாலும், பெ
ருவாரிக்காய்ச்சலாலும் சாவான்; கல்தேயரண்
டைக்குப் புறப்பட்டுப்போகிறவனோ உயிரோ
டிருப்பான்; அவனுடைய பிராணன் அவனுக்
குக் கிடைத்த கொள்ளையுடைமையைப்போலி
ருக்கும்: அவன் பிழைப்பானென்கிறதைக் கர்த்
தர் உரைக்கிறாரென்றும்,
இந்தப்பட்டணம் பாபேலின் இராசாவினு ௨
டைய இராணுவத்தின் கையில் கொடுக்கவே
கொடுக்கப்படும்; அவன் அதைப் பிடிப்பானெ
ன்கிறதைக் கர்த்தர் உரைக்கிறாரென்றும்,—எரே ௩
மியா எல்லாச் சனத்தோடும் சொல்லிக்கொண்
டிருக்கும் வார்த்தைகளை மாத்தானின் குமாரனா
கிய செப்பத்தியாவும், பஸ்கூரின் குமாரனாகிய
கேதலியாவும், சேலேமியாவின் குமாரனாகிய
யூகாலும், மல்கியாவின் குமாரனாகிய பஸ்கூரும்
கேட்டார்கள்.—அப்போது பிரபுக்கள் இராசா ௪
வோடே சொன்னதாவது: இந்த மனுஷன் கொ
ல்லப்படட்டுமே; அதேனென்றால், இந்தப் பட்
டணத்தில் மீதியாயிருக்கிற யுத்தமனுஷரின் கை
களையும் இவன் இப்படிக்கொத்த வார்த்தைகளை

1 ௨௰. ௨.—2 எரே. ௩௨. ௨.

3 எரே. ௨௧. ௯.

அவர்களுடனே சொல்லுகிறதினாலே தளர்ந்து
போகப்பண்ணுகிறான்; ஏனெனில், இந்த மனு
ஷன் இந்தச் சனத்தின் சுகவாழ்வுக்கானதையல்
ல, அதின் பொல்லாப்புக்கானதையே தேடு
௫ கிறானென்றார்கள்.—அப்போது சிதேக்கியா இரா
சா: இதோ, அவன் உங்கள் கைகளில் இருக்கி
றான்; ஏனெனில் உங்களுக்கு விரோதமாய் இரா
௬ சா ஒன்றும் செய்யமாட்டாரென்றான்.-அப்போ
து அவர்கள் எரேமியாவைப் பிடித்து, அவனைக்
காவற்சாலையின் முற்றத்திலிருந்த அம்மேலே
கின் குமாரனாகிய மல்கியாவினுடைய துரவிலே
போட்டார்கள்; அங்கே எரேமியாவைக் கயிறு
களின் எத்தனமாய் இறக்கிவிட்டார்கள்; ஆனால்
துரவிலே [1]தண்ணீர் இராமல் உளையாயிருந்தது;
அந்த உளையிலே எரேமியா அமிழ்ந்தினான்.

௭ ஆனால் அவர்கள் எரேமியாவைத் துரவிலே
போட்டதை இராசாவின் வீட்டில் இருந்த [2]எத்
தியோப்பியனாகிய எபேத்மேலேக்கென்ற ஒரு
பிரதானி கேட்டான்; இராசாவோவென்றால்,
பென்யமீன் வாசலிலே உளுக்காந்திருந்தான்.—
௮ அப்போது எபேத்மேலேக்கு இராசாவின் வீட்
டிலிருந்து புறப்பட்டு, இராசாவுடனே பேசிச்
௯ சொன்னதாவது:—இராசாவாகிய என் ஆண்ட
வனே, இந்தப் புருஷர் எரேமியா தீர்க்கதரிசி
யைத் துரவிலே போட்டு, நடப்பித்தவிதமெல்
லாம் பொல்லாத செயலாயிருக்கிறது; அவன்
இருந்த இடத்திலேதானே பஞ்சத்தினால் சாவா
னே; ஏனெனில், இனிப் பட்டணத்திலே அப்ப
௰ மில்லையென்றான்.—அப்போது இராசா எபேத்
மேலேக்கென்ற எத்தியோப்பியனுக்கு: நீ இவ்
விடத்திலே முப்பது மனுஷரை உன்னுடனே
கூட்டிக்கொண்டுபோய், எரேமியா தீர்க்கதரிசி
சாகாததற்குமுன்னே அவனைத் துரவிலிருந்து
௰௧ தூக்கிவிடு என்று கற்பித்தான்.-அப்போது எபேத்
மேலேக்கு அந்த மனுஷரைத் தன்னுடனே கூட்
டிக்கொண்டு, இராசாவின் வீட்டில் பொக்கிஷ
சாலையின்கீழிருந்த ஸ்தலத்திலே போய், பீய்ந்த
பழம்புடவைகளையும் தேய்ந்த பழம்புடவைகளை
யும் அங்கே எடுத்துக்கொண்டுபோய், அவை
களைக் கயிறுகளில் எரேமியாவண்டைக்குத் துர
௰௨ வில் இறக்கிவிட்டு, — எபேத்மேலேக்கென்ற
எத்தியோப்பியன் எரேமியாவுடனே: பீய்ந்த
தும் தேய்ந்ததுமான இந்தப் பழம்புடவைகளை
உம்முடைய அக்கிள்களில் கயிறுகளுக்குள்ப்பு
றமாகப் போட்டுக்கொள்ளுமேயென்றான்; எரே
௰௩ மியா அந்தப்பிரகாரமாகச் செய்தான். — அப்
போது எரேமியாவைக் கயிறுகளாலே தூக்கி,
அவனைத் துரவிலிருந்து எடுத்துவிட்டார்கள்;
அப்படியே எரேமியா காவற்சாலையின் முற்றத்
தில் இருந்தான்.

௰௪ பிறகு சிதேக்கியா இராசா, எரேமியா தீர்க்க
தரிசியைக் கர்த்தருடைய வீட்டில் இருக்கும்
மூன்றாம் நடையிலே தன்னண்டைக்கு வரவ
ழைப்பித்தான்; அங்கே இராசா, எரேமியாவுட
னே: நான் உன்னை ஒரு காரியத்தைக் கேட்கி
றேன்; நீ எனக்கு ஒன்றும் மறைக்கவேண்டா
மென்றான்.

அப்போது எரேமியா சிதேக்கியாவுடனே: ௰௫
நான் அதை உமக்கு அறிவித்தால் என்னைக் கொ
ல்லவே கொல்லுவீரல்லவோ? நான் உமக்கு ஒரு
ஆலோசனையைச் சொன்னாலும், என் சொல்லைக்
கேளாதிருப்பீரென்றான்.

அப்போது சிதேக்கியா இராசா: நான் உன் ௰௬
னைக் கொல்லாமலும், நான் உன் பிராணனைவாங்
கத்தேடுகிற [3]இந்த மனுஷர் கையில் உன்னை ஒப்
புக்கொடாமலும் இருப்பேன் என்கிறதை, நமக்
கு இந்த ஆத்துமாவை உண்டுபண்ணின கர்த்தரு
டைய சீவனைக்கொண்டு சொல்லுகிறேனென்று
எரேமியாவுக்கு இரகசியமாய் ஆணையிட்டான்.

அப்போது எரேமியா சிதேக்கியாவுடனே ௰௭
சொன்னதாவது: நீர் பாபேலுடைய இராசாவின்
பிரபுக்களண்டைக்குப் புறப்படவே புறப்பட்
டால், உம்முடைய ஆத்துமா உயிரோடிருக்கும்;
இந்தப் பட்டணம் அக்கினியால் சுட்டெரிக்கப்
படுவதுமில்லை; நீரும் உம்முடைய வீட்டாரும்
உயிரோடும் இருப்பீர்கள்.—நீர் பாபேலுடைய ௰௮
இராசாவின் பிரபுக்களண்டைக்குப் புறப்படா
திருந்தீரேயாகில், அப்போது [4]இந்தப் பட்டணம்
கல்தேயர் கையில் கொடுக்கப்படும்; அவர்கள்
அதை அக்கினியாலே சுட்டெரிப்பார்கள்; நீர்
அவர்களுக்குத் தப்பிப்போவதுமில்லை என்கி
றதை இஸ்ரவேலின் பராபரனும் சேனைகளையு
டைய பராபரனுமாகிய கர்த்தர் சொல்லுகிறார்
என்றான்.

அப்போது சிதேக்கியா இராசா எரேமியாவுட ௰௯
னே: கல்தேயர் என்னைத் தங்கள்வசமாய் வந்து
விட்ட யூதரின் கையிலே என்னைப் பரியாசம்
பண்ண ஒப்புக்கொடுப்பார்களோவென்று நான்
ஐயப்பட்டிருக்கிறேன் என்றான்.

எரேமியா சொன்னதாவது: உம்மை ஒப்புக் ௨௰
கொடார்கள்; நான் உம்மோடே பேசுகிற [5]கர்த்
தருடைய சத்தத்துக்குக் கேள்விகொடுமே; அப்
போது உமக்கு நன்றாயிருக்கும்; அப்போது உம்
முடைய ஆத்துமா உயிரோடிருக்கும். — நான் ௨௰௧
புறப்படுகிறதில்லை என்றீரேயாகில், கர்த்தர் என
க்குத் தெரியப்படுத்தின வார்த்தையாவது: —
இதோ, யூதாவுடைய இராசாவின் வீட்டிலே மீதி ௨௰௨
யான எல்லா ஸ்திரிகளும் வெளியே பாபேலு
டைய இராசாவின் பிரபுக்களண்டையில் கொ
ண்டுபோகப்படுவார்கள்; இதோ, அவர்கள்தானே
உமக்கு இராசியான மனுஷர்; உம்மைப் பயிற்
றுவித்து, உம்மை மேற்கொண்டார்கள் என்றும்,
உம்முடைய கால்கள் உளையிலே அமிழ்ந்தின
பிற்பாடு அவர்கள் பின்வாங்கிப்போனார்கள்
என்றும் சொல்லுவார்கள்.—உம்முடைய எல் ௨௰௩
லா ஸ்திரிகளையும், உம்முடைய பிள்ளைகளையும்

1 எரே. ௩௭. ௰௬. ௧ மோ. ௩௭. ௨௪. 2 எரே. ௩௯. ௰௬.

3 எரே. ௪ இ.—4 எரே. ௩௪. ௨௧.—5 ௨ நாளா. ௩௬. ௰௨.

வெளியே கல்தேயரண்டையில் கொண்டுபோ
வார்கள்; நீரும் அவர்கள் கைக்குத் தப்பிப்போ
காமல் [1]பாபேலுடைய இராசாவின் கையினால்
பிடிக்கப்பட்டு, இந்தப் பட்டணம் அக்கினி
யால் சுட்டெரிக்கப்படக் காரணராய் இருப்பீர்
என்பதுதான் என்றான்.
உச அப்போது சிதேக்கியா எரேமியாவுடனே
சொன்னதாவது: இந்த வார்த்தைகளை ஒருவரும்
அறியாதிருக்கக்கடவது; அப்போது நீ சாகப்
உரு போகிறதில்லை.—நான் உன்னோடே பேசினேன்
என்று பிரபுக்கள் கேட்டு, உன்னண்டைக்குவந்
து நீ இராசாவோடே பேசிக்கொண்டதை எங்க
ளுக்கு அறிவி; எங்களுக்கு ஒன்றும் மறைக்காதி
ரு; அப்போது உன்னைக் கொல்லாதிருப்போம்;
இராசா உன்னோடு என்ன பேசினார் என்று
உசு உன்னைக் கேட்டார்களேயாகில்,—[2]நான் யோனா
த்தானுடைய வீட்டிலே சாகாதபடிக்கு, இராசா
என்னை அங்கே திரும்ப அனுப்பவேண்டாம் எ
ன்று, அவர் முகத்துக்கு முன்பாக விண்ணப்பம்
பண்ணினேன் என்று சொல்வாயாக என்றான்.
உஎ பிறகு எல்லாப் பிரபுக்களும், எரேமியாவண்
டைக்கு வந்து, அவனைக் கேட்டார்கள்; அப்
போது அவன், இராசா கற்பித்த இந்த எல்லா
வார்த்தைகளுக்குந்தக்கதாய் அவர்களுக்கு அறி
வித்தான்; ஆனதுகொண்டு, காரியம் கேள்விப்ப
டாதேபோனபடியினாலே அவனைவிட்டுச் சும்
உஅ மா இருந்தார்கள்.—அப்படியே எரேமியா, எரு
சலேம் பிடிபடுகிற நாள்மட்டாக [3]காவற்சாலை
யின் முற்றத்தில் இருந்தான்; எருசலேம் பிடிபட்
டுப்போனபோதும் அங்கேதான் இருந்தான்.

## ஙகூ. அதிகாரம்.

க. எருசலேம் பிடிக்கப்பட்டது. ச. சிதேக்கியா குருடனாகி, பாபேலுக்கு அனுப்பப்பட்டது. அ. பட்டணம் அழிந்தது. கூ. சனம் சிறையாக்கப் பட்டது. யக. எரேமியாவைச் சீராய் நடப்பிக்க, நேபுகாத்நேச்சார் கட்டளைகொடுத்தது. யசு எபேத்மேலேக்குக்கு உண்டாகிய பராபரனுடைய வாக்குத்தத்தம்.

க யூதாவின் இராசாவாகிய சிதேக்கியா அரசாண்ட
[4]ஒன்பதாம் வருஷம் பத்தாம்மாதத்திலே பாபே
லின் இராசாவாகிய நேபுகாத்நேச்சாரும், அவ
னுடைய எல்லா இராணுவமும் எருசலேமுக்கு
விரோதமாய் வந்து, அதை முற்றிக்கை போட்
உ டார்கள்.—சிதேக்கியா அரசாண்ட பதினோராம்
வருஷம் நாலாம்மாதம், ஒன்பதாந்தேதியிலே
ங பட்டணத்து மதில் திறப்பாயிற்று.—அப்போது
பாபேலுடைய இராசாவின் எல்லாப் பிரபுக்க
ளாகிய நேர்கல்சரேத்சேர், சன்கார்நேபு, சர்சே
கிம், ரப்சாரீஸ், நேர்கல்சரேத்சேர், ராப்மாக்கு
என்றவர்களும், பாபேலின் இராசாவினுடைய
மற்ற எல்லாப் பிரபுக்களும் உட்பிரவேசித்து,
நடுமையவாசலிலே தரிகொண்டார்கள்.
ச அப்போது சம்பவித்ததேதெனில், யூதாவின்
இராசாவாகிய சிதேக்கியாவும் சகல யுத்தமனுஷ
ரும் அவர்களைக் கண்டபோது, [5]ஓடி, இராத்திரி
காலத்தில் இராசாவுடைய தோட்டத்துவழியே,
இரண்டு மதில்களுக்கு நடுவான வாசலால் பட்
டணத்திலிருந்து புறப்பட்டுப்போனார்கள்; அ
வன் வயல்வெளியின்வழியேபோய்விட்டான்.-
ஆனால், கல்தேயருடைய இராணுவம் அவர்க ரு
ளைப் பின்தொடர்ந்து, எரிகோவின் வயல்வெளி
களில் சிதேக்கியாவைக் கிட்டி, அவனைப் பிடித்
து, அவனைக் காமாத்தேசத்தின் ஊராகிய ரிப்லா
வுக்கு, பாபேலின் இராசாவாகிய நேபுகாத்நேச்
சாரண்டையிலே போயேறப்பண்ணினார்கள்;இ
வன் அவன்மேல் சுமரும் ஆக்கினைகளை அங்கே
சொன்னான்.—பிறகு பாபேலின் இராசா ரிப் சு
லாவிலே, சிதேக்கியாவின் பிள்ளைகளை அவன்
கண்களுக்குமுன்பாக வெட்டுவித்தான்; யூதா
வில் மேன்குலத்தார் அனைவரையும் பாபேலின்
இராசா வெட்டி,—[6]சிதேக்கியாவின் கண்களைக் எ
குருடாக்கி அவனைப் பாபேலுக்குக் கொண்டு
போக அவனுக்கு இரண்டு வெண்கல விலங்குக
ளைப் போடுவித்தான்.-இராசாவின் வீட்டையும் அ
சனத்தின் வீடுகளையும் கல்தேயர் அக்கினியால்
சுட்டெரித்து, எருசலேமின் மதில்களை இடித்
துப் போட்டார்கள்.
பட்டணத்தில் மீதியான குறைச்சனத்தையும், கூ
தன் வசமாக ஓடிவந்து விட்டவர்களையும், மீதி
யான மற்றச்சனத்தையும், தலையாரிகளின் அதி
பதியாகிய நேபுசாரதான் பாபேலுக்குச் சிறைக
ளாகக் கொண்டுபோனான்.—ஒன்றுமில்லாத நீச ய
மான சனத்திலோவென்றால், தலையாரிகளின்
அதிபதியாகிய நேபுசாரதான் சிலரை யூதேயா
தேசத்திலே வைத்து, அவர்களுக்கு அந்நாளிலே
திராட்சத்தோட்டங்களையும் வயல்களையும் கொ
டுத்தான்.
ஆனால் எரேமியாவைக்குறித்து, பாபேலின் யக
இராசாவாகிய நேபுகாத்நேச்சார் தலையாரிகளின்
அதிபதியாகிய நேபுசாரதானுக்கு:—நீ அவனை யஉ
அழைத்து, உன் கண்களை அவன்மேல் வைத்து
[7]அவனுக்கு ஒரு பொல்லாப்பையும் செய்யாமல்,
அவன் உன்னோடே சொல்லும்படியெல்லாம்
அவனை நடத்தென்று கற்பித்திருந்தான்.—அப்ப யங
டியே தலையாரிகளின் அதிபதியாகிய நேபுசார
தானும், நேபூசஸ்பான், ரப்சாரிஸ், நேர்கல்சரேத்
சேர், ராப்மாக்கு என்றவர்களும், பாபேலுடைய
இராசாவின் எல்லாப் பிரபுக்களும், — எரேமி யச
யாவைக் காவல்ச்சாலையின் முற்றத்திலிருந்து
வரவழைப்பித்து, அவனை வெளியே வீட்டுக்கு
அழைத்துக்கொண்டு போகும்படிக்கு அவனைச்
சாப்பானுடைய குமாரனாகிய அகிக்காமின் மக
னை கேதலியாவுக்கு ஒப்புவித்தார்கள்; அப்ப
டியே அவன் சனத்துக்குள்ளே தங்கியிருந்
தான்.
இதுவுமல்லாமல்,எரேமியா இன்னம் காவல்ச் யரு
சாலையின் முற்றத்திலே அடைக்கப்பட்டிருக்
கையில் அவனுக்கு உண்டான கர்த்தருடைய
வசனமாவது:-நீ போய், [8]எத்தியோப்பியனாகிய யசு

1 எரே. கஉ. ச. 3 எரே. கஎ. உக.
2 எரே. கஎ. உய. 4 எரே. ருஉ. ச.
உ இரா. உரு க. உ நாளா. 6 எசே. யஉ.யங.—7. சங் ருகூ.கூ.
கக. யஎ.—5 எசே. யஉ. யஉ. 8 எரே. கஅ. எ.

எபெத்மெலேகுக்குச் சொல்லவேண்டியதேதெ
னில், இதோ, நம்முடைய வார்த்தைகளை இந்தப்
பட்டணத்தின்மேல் நன்மையாக அல்ல, தீமை
யாகவே வரப்பண்ணுவோம்; அவைகள் அந்நா
ளிலே உன் கண்களுக்குமுன்பாக நிறைவேறும்
என்று இஸ்ரவேலின் பராபரனுகிய சேனைகளை
௰எ யுடைய கர்த்தர் சொல்லுகிருர்.—ஆனுல் அந்நா
ளிலே உன்னைத் தப்புவிப்போமென்று கர்த்தர்
சொல்லுகிருர்; நீ பயப்படுகிற மனுஷரின் கையி
௰அ லே ஒப்புக்கொடுக்கப்படுவதில்லை.—உன்னை வி
டுவிக்கவே விடுவிப்போம்; நீ பட்டையத்துக்கு
எதுவாவதில்லை; நீ நம்மை நம்பினபடியினுலே
உன் பிராணன் உனக்குக் கிடைத்த கொள்ளையு
டைமையைப்போல இருக்குமென்று கர்த்தர்
சொல்லுகிருரென்பதுதானே.

## சய. அதிகாரம்.

க. எரேமியா நேபுசாரதானுலே விடுதலையாகி, கேதலியாவண்டைக்குப் போனது. எ. சிதறுண்ட யூதர்கள் அவனிடத்தில் சேர்ந்தது. ௰௩. அவனுக்கு இஸ்மவேலின் இரகசிய யோசனையை யோகன்னுன் அறிவித்தும் நம்பாமற்போனது.

க தலையாரிகளின் அதிபதியாகிய நேபுசாரதான்
எரேமியாவை அழைப்பித்து, அவனை இராமாவி
லிருந்து விடுதலையாய் அனுப்பினபிற்பாடு இவ
னுக்குக் கர்த்தரால் உண்டான வசனம்; ஏனெ
னில், பாபேலுக்குக் கொண்டுபோகப்பட எரு
சலேமிலும் யூதாவிலும் சிறைகளாய்ப் பிடித்து
வைக்கப்பட்ட அனைவரின் நடுவிலே இவனும்
சங்கிலிகளால் கட்டுண்டிருந்தான்.

உ ஆனுல் தலையாரிகளின் அதிபதி எரேமியா
வை அழைப்பித்து, அவனுடனே சொன்னதா
வது: உன் பராபரனுகிய கர்த்தர் இந்த ஸ்தலத்
துக்கு இந்தத் தீங்குவருமென்று சொல்லியிருந்
௩ தார்.—தாம் சொன்னபடியும் கர்த்தர் வரப்பண்
ணியிருக்கிருர்; ஏனெனில், [1]நீங்கள் கர்த்தருக்கு
விரோதமாய்ப் பாவஞ்செய்து, அவருடைய சத்
தத்துக்குச் செவிகொடாதேபோனீர்கள்; ஆகை
யால் உங்களுக்கு இந்தக்காரியம் வந்தது.—
௪ இப்போதும், இதோ, உன் கைகளில் கட்டியி
ருந்த சங்கிலிகளை இன்று வாங்கிவிட்டேன்;
என்னுடேகூடப் பாபேலுக்கு வர உனக்கு
நன்ருய்க் கண்டால் வா,என் கண்களை உன்மேல்
வைப்பேன்; என்னுடேகூடப் பாபேலுக்கு
வர உனக்கு விதனமாய்க் கண்டதேயாகில், இரு
க்கட்டும்; இதோ, தேசமெல்லாம் உனக்குமுன்
பாக இருக்கிறது; எவ்விடத்துக்குப் போக உ
னக்கு நன்றும் செவ்வையுமாய்க் காண்கிறதோ
ரு அவ்விடத்துக்குப் போ.—அவ்விடம் இன்னம்
சீர்திருந்தாதிருந்ததாகில், நீ பாபேலின் இராசா
யூதாவுடைய பட்டணங்களின்மேல் அதிகாரியா
கவைத்த [2]சாப்பானுடைய குமாரனுகிய அகிக்
காமின் மகனுன கேதலியாவண்டைக்குத் திருப்
பிக்கொண்டு, அவனுடே சனத்தின் நடுவிலே
தங்கியிரு; அல்லவென்று, எவ்விடத்துக்குப்
போக உனக்குச் செம்மையாய்க் காண்கிறதோ,
அவ்விடத்துக்குப் போவென்று சொல்லி, தலை
யாரிகளின் அதிபதி அவனுக்கு வழிச்செலவை
யும் காணிக்கையையும் கொடுத்து அவனை அனுப்
பிவிட்டான்.

அப்படியே எரேமியா மிஸ்பாவுக்கு அகிக் சு
காமின் குமாரனுகிய கேதலியாவண்டையிலே
வந்து, அவனுேடே தேசத்தில் மீதியான சனத்
தின்நடுவில் தங்கியிருந்தான்.

பாபேலின் இராசா அகிக்காமின் குமாரனு எ
கிய கேதலியாவைத் தேசத்தின்மேல் அதிகாரியா
க்கினுன் என்றும், புருஷரையும் ஸ்திரிகளையும்
குழந்தைகளையும் பாபேலுக்குச் சிறைகளாகக்
கொண்டுபோகப்பட்டிராத கீசமான தேசத்தா
ரையும் அவனுடைய விசாரிப்புக்கு ஒப்புவித்
தான் என்றும், வெளியிலிருக்கிற இராணுவச்
சேர்வைக்காரர் அனைவரும் அவர்களுடைய
மனுஷரும் கேட்டபோதோவெனில்,—அவர்கள் அ
மிஸ்பாவுக்கு கேதலியாவண்டையிலே வந்தார்
கள்; யாரெனில், நேத்தானியாவின் குமாரனுகிய
இஸ்மவேலும், கரேயாவின் குமாரனுகிய யோக
ன்னுனும் யோனத்தானும், தன்கூமேத்தின் குமா
ரனுகிய சேராயாவும், நேத்தோபாத்தியனுகிய
எப்பாயின் குமாரரும், மாகாத்தியனுன ஒருவன்
குமாரனுகிய இசனியாவும், அவர்களும் அவர்
கள் மனுஷருந்தானே.

[3]அப்போது சாப்பானுடைய குமாரனுகிய கூ
அகிக்காமின் மகன் கேதலியா அவர்களுக்கும்
அவர்கள் மனுஷருக்கும் ஆணையிட்டுச்சொன்ன
தாவது: நீங்கள் கல்தேயரைச் சேவிக்கப் பயப்ப
டவேண்டாம்; நீங்கள் தேசத்திலிருந்து, பாபே
லின் இராசாவைச் சேவியுங்கள்; அப்போது
உங்களுக்கு நன்ருயிருக்கும்.—நானோவெனில் ௰
இதோ, நம்மண்டையிலே வருகிற கல்தேயருக்
குமுன்பாக முன்னிலையாய் நிற்க மிஸ்பாவிலே
குடியிருக்கிறேன்; நீங்களோவென்ருல் போய்,
திராட்சப்பழ இரசத்தையும் அறுப்பையும் எண்
ணெயையும் சேர்த்து, உங்கள் பாண்டங்களில்
வைத்து, உங்கள் வசமாக்கிக்கொள்ளுகிற ஊர்க
ளில் குடியிருங்களென்ருன்.

மோவாபிலும் அம்மோன் புத்திரரிடத்திலும் ௰க
ஏதோமிலும் சகல தேசங்களிலும் இருக்கிற யூத
ரும், பாபேலின் இராசா யூதேயாவில் சிலர் மீதி
யாயிருக்கக் கட்டளையிட்டானென்றும், சாப்
பானுடைய குமாரனுகிய அகிக்காமின் மகனுன
கேதலியாவை அவர்கள்மேலே அதிகாரியாக்கி
னுனென்றும் கேட்டபோது,—எல்லா யூதரும் ௰உ
தாங்கள் துரத்துண்ட எல்லா இடங்களிலுமி
ருந்து, யூதேயாதேசத்தில் கேதலியாவண்டையி
லே மிஸ்பாவுக்கு வந்து, திராட்சப்பழ இரசத்
தையும் அறுப்பையும் வெகுதிரளாய்ச் சேர்த்து
வைத்தார்கள்.

1 எரே. ௩௰. எ.—2 எரே. ௩க. ௴.

3 உ இரா. உ௫ உச.

௰௩ அப்போது கரேயாவின் குமாரனாகிய யோ
கன்னானும் வெளியிலே இருந்த சகல இராணு
வச்சேர்வைக்காரரும் மிஸ்பாவுக்குக் கேதலியா
௰௪ வண்டையிலே வந்து,—அவனுடனே: உம்மு
டைய சீவனைக் கொன்றுபோடும்படிக்கு, அம்
மோன் புத்திரரின் இராசாவாகிய பாலிஸ், நேத்
தானியாவின் குமாரனாகிய இஸ்மவேலை அனுப்
பினானென்கிறதை நீர் அறியவே அறியவில்லை
யோவென்றார்கள்; ஆனால் அகிக்காமின் குமார
னாகிய கேதலியா அவர்கள் வார்த்தையை நம்பி
௰௫ னதில்லை.—பின்னையும் கரேயாவின் குமாரனா
கிய யோகன்னான் மிஸ்பாவிலே கேதலியாவோ
டே இரகசியமாய்ச் சொன்னதாவது: நான்
போய், ஒருவரும் அறியாமல் நேத்தானியாவின்
குமாரனாகிய இஸ்மவேலை வெட்டிப்போடட்
டுமே; உம்மண்டையில் சேர்ந்த யூதரெல்லா
ரும் சிதறுண்டுபோகவும் யூதாவில் மீந்தவர்கள்
அழியவும் அவன் உம்முடைய சீவனைக் கொன்
௰௬ றுபோடுவானேன் என்றான்.—ஆனால் அகிக்கா
மின் குமாரனாகிய கேதலியா கரேயாவின் குமா
ரனாகிய யோகன்னானுடனே, நீ இந்தக்காரியத்
தைச் செய்யாயாக; ஏனெனில், இஸ்மவேலின்
மேலே நீ பொய்சொல்லுகிறாயென்றான்.

## ௪௧. அதிகாரம்.

௧. இஸ்மவேல் கேதலியாவையும், மற்றும் சிலரையும் கொன்று மீதியான வர்களோடெங்கூட அம்மோன் புத்திரரண்டைக்குப்போக நினைத்தது. ௰௧. யோகன்னான் சிறைப்பட்டவர்களைப் பிடித்துக்கொண்டு, எகிப்துக் கோடிப்போக மனதாயிருந்தது.

௧ ஆனால் ஏழாம்மாதத்தில் சம்பவித்ததேதென்
றால், இராசவித்திலே பிறந்தவனும் எலிசாமா
வின் குமாரனாகிய நேத்தானியாவின் மகனுமான
[1]இஸ்மவேலும், அவனுடனேகூட இராசாவின்
பிரபுக்களான பத்து மனுஷரும் மிஸ்பாவுக்கு
அகிக்காமின் குமாரனாகிய கேதலியாவண்டை
யிலேவந்து, அங்கே மிஸ்பாவிலே ஏகமாய் அப்
௨ பஞ் சாப்பிட்டார்கள்.—அப்போது நேத்தானி
யாவின் குமாரனாகிய இஸ்மவேலும் அவனோடி
ருந்த பத்து மனுஷரும் எழும்பி, பாபேலின்
இராசா தேசத்தின்மேல் அதிகாரியாக வைத்த
சாப்பானின் குமாரனாகிய அகிக்காமின் மக
னை கேதலியாவைப் பட்டையத்தாலே வெட்
௩ டினார்கள். — மிஸ்பாவிலே கேதலியாவினிடத்
திலே இருந்த எல்லா யூதரையும் அங்கே காணப்
பட்ட யுத்தமனுஷராகிய கல்தேயரையும் இஸ்ம
வேல் வெட்டிப்போட்டான்.
௪ அவன் கேதலியாவைக் கொன்றபிற்பாடு இ
ரண்டாம்நாளிலே அதை ஒருவரும் இன்னம்
௫ அறியாதிருக்கையில் சம்பவித்ததாவது:—தாடி
யைச் சிரைத்து, வஸ்திரங்களைக் கிழித்து, தங்க
ளைக் கீறிக்கொண்டிருந்த எண்பது மனுஷர் சீ
கேமிலும் சீலோவிலும் சமாரியாவிலுமிருந்து,
தங்கள் கைகளில் காணிக்கைகளையும், தூபவர்க்
கத்தையும், கர்த்தருடைய வீட்டுக்குக் கொண்டு
போகும்படிக்குச் சுமந்துவந்தார்கள். — அப் ௬
போது நேத்தானியாவின் குமாரனாகிய இஸ்ம
வேல் மிஸ்பாவிலிருந்து புறப்பட்டு, அவர்க
ளுக்கு எதிராக அழுதுகொண்டே நடந்து, அவர்
களைச் சந்திக்கிறபோது அவர்களுடனே: அகிக்
காமின் குமாரனாகிய கேதலியாவண்டைக்கு வா
ருங்கள் என்றான். — ஆனால் அவர்கள் பட்ட ௭
ணத்தின் நடுமையமட்டும் வந்தபோது சம்பவித்
ததேதென்றால், நேத்தானியாவின் குமாரனாகிய
இஸ்மவேலும், அவனோடிருந்த மனுஷரும் அ
வர்களை வெட்டி ஒரு பள்ளத்துக்குள்ளே தள்
ளிப்போட்டார்கள்.—ஆனால் அவர்களில் பத் ௮
துப்பேர் இருந்தார்கள்; அவர்கள் இஸ்மவேலு
டனே: எங்களைக் கொலைசெய்யாதிரும்; ஏனெ
னில், கோதுமையும் வால்கோதுமையும் எண்
ணெயும் தேனுமுள்ள புதையல்கள் எங்களுக்கு
நிலத்தின்கீழ் இருக்கின்றனவென்றார்கள்; அப்
போது அவர்களை அவர்கள் சகோதரரோடுங்
கூடக் கொலைசெய்யாமல் விட்டுவைத்தான்.
இஸ்மவேல் கேதலியாவின்நிமித்தமாக வெட் ௯
டின மனுஷருடைய பிரேதங்களை எல்லாம் தள்
ளிப்போட்ட பள்ளமோவெனில், ஆசாவென்ற
இராசா இஸ்ரவேலின்இராசாவாகிய பாசாவுக்கு
எதிராக உண்டுபண்ணின பள்ளந்தானே; அதை
நேத்தானியாவின் குமாரனாகிய இஸ்மவேல்
வெட்டுண்டவர்களாலே நிரப்பினான்.
பிறகு இஸ்மவேல் மிஸ்பாவில் இருக்கிற மீதி ௰
யான சனத்தை எல்லாம் சிறைப்படுத்திக்கொண்
டுபோனான்; இராசாவின் குமாரத்திகளையும் தலை
யாரிகளின் அதிபதியாகிய நேபுசாரதான் அகிக்
காமின் குமாரனாகிய கேதலியாவின் விசாரிப்
புக்கு ஒப்புவித்துப்போன மிஸ்பாவிலுள்ள மீதி
யான சனம் அனைத்தையும் நேத்தானியாவின் கு
மாரனாகிய இஸ்மவேல் சிறைப்படுத்திக்கொண்டு
போய், அம்மோன் புத்திரரண்டைக்குத் தாண்
டிப்போகப் புறப்பட்டான்.
நேத்தானியாவின் குமாரனாகிய இஸ்மவேல் ௰௧
செய்த பொல்லாப்பை எல்லாம் கரேயாவின்
குமாரனாகிய யோகன்னானும், அவனோடிருந்த
எல்லா இராணுவச் சேர்வைக்காரரும் கேட்ட
போதோவெனில்,—அவர்கள் எல்லாப் புருஷ ௰௨
ரையும் கூட்டிக்கொண்டு, நேத்தானியாவின் கு
மாரனாகிய இஸ்மவேலோடே யுத்தம்பண்ணப்
போய், அவனைக் கிபேயோனிலிருக்கும் பெ
ருங்குளத்துத் தண்ணீரண்டையிலே கண்டார்
கள்.—அப்போது சம்பவித்ததேதென்றால், இஸ் ௰௩
மவேலண்டையில் இருந்த சனமெல்லாம் கரே
யாவின் குமாரனாகிய யோகன்னானையும், அவ
னோடிருந்த எல்லா இராணுவச் சேர்வைக்கார
ரையும் காண்கையில் சந்தோஷப்பட்டு,—
இஸ்மவேல் மிஸ்பாவிலிருந்து சிறைபிடித்துக் ௰௪
கொண்டுபோன சனமெல்லாம் பின்னிட்டுத்
திரும்பி, கரேயாவின் குமாரனாகிய யோகன்னா

1 எரே. ௪௰. ௮.

௰௫ ணண்டையிலே வந்துவிட்டார்கள். — நேத்தா
னியாவின் குமாரனாகிய இஸ்மவேலோவென்
றால், எட்டுப்பேரோடுங்கூட யோகனானின்
கைக்குத்தப்பி, அம்மோன் புத்திரரண்டைக்குப்
புறப்பட்டுப்போனான்.

௰௬ ஆனால் கரேயாவின் குமாரனாகிய யோகனா
னும், அவனோடிருந்த எல்லா இராணுவச் சேர்
வைக்காரரும், அகிக்காமின் குமாரனாகிய கேதலி
யாவை வெட்டிப்போட்ட நேத்தானியாவின்
குமாரனாகிய இஸ்மவேல் கொண்டுபோனதும்,
தாங்கள் கிபேயோனிலே விடுதலையாக்கித்திரும்
பப்பண்ணினதுமான மீதியான சகல சனமுமா
கிய சேவகரான மனுஷரையும், ஸ்திரிகளையும்,
குழந்தைகளையும், அரமனைப் பிரதானிகளையும்
௰௭ சேர்த்துக்கொண்டு,—பாபேலின் இராசா தேசத்
தின்மேல் அதிகாரியாக்கின அகிக்காமின் குமா
ரனாகிய கேதலியாவை நேத்தானியாவின் குமார
னாகிய இஸ்மவேல் வெட்டிப்போட்டதின்நிமி
த்தமாக, கல்தேயருக்குப் பயப்படுகிறபடியினா
௰௮ லே,—[1]போய், தாங்கள் எகிப்துக்குப் புறப்பட்
டுப்போகும்படிக்கு, பெத்லேகேமூருக்கு அரு
கான கிம்காமின் பேட்டையில் இறங்கித் தங்கி
னார்கள்.

## ௪௨. அதிகாரம்.

௧. யோகனான் கீழ்ப்படிவேனென்று சொல்லி, பராபரனுடைய சித்தத்தைத் தனக்கறிவிக்க எரேமியாவைக் கேட்டது. ௭. எரேமியா அவனுக்கு யூதாவிலே அடைக்கலமும், ௰௩. எகிப்திலே நாசமுமென்று அறிவித்தது. ௰௯. அவர்கள் பராபரனுடைய சித்தத்தை அறிவிக்கும்படி, தந்திரமாய்ப் பேசினதைக்குறித்து அவன் அவர்களைக் கண்டித்தது.

௧ அப்போது எல்லா இராணுவச் சேர்வைக்கார
ரும், கரேயாவின் குமாரனாகிய யோகனானும்,
ஓசாயாவின் குமாரனாகிய இசனியாவும், சிறி
யோர்முதற்கொண்டு பெரியோர்மட்டும் உண்
௨ டான எல்லாச்சனமும் சேர்ந்துவந்து,—தீர்க்கத
ரிசியாகிய எரேமியாவுடனே சொன்னதாவது:
உம்முடைய பராபரனாகிய கர்த்தர் நாங்கள் நடக்
கவேண்டிய வழியையும், செய்யவேண்டிய கா
ரியத்தையும், எங்களுக்குத் தெரியப்பண்ணும்ப
டிக்கு, நீர் எங்கள் விண்ணப்பத்துக்கு இடங்கொ
டுத்து, மீதியாயிருக்கிற இந்தச் சகல சனமாகிய
எங்களுக்காக உம்முடைய பராபரனாகிய கர்த்த
௩ ரைநோக்கிச் செபம்பண்ணும். — ஏனெனில்,
உம்முடைய கண்கள் எங்களைக் காண்கிறபடி
யே திரளான சனங்களில் கொஞ்சப்பேராய்
மீந்திருக்கிறோம் என்றார்கள்.

௪ அப்போது எரேமியா தீர்க்கதரிசி அவர்க
ளுடனே: நீங்கள் சொன்னதைக் கேட்டேன்;
இதோ, உங்கள் வார்த்தையின்படியே உங்கள்
பராபரனாகிய கர்த்தரைநோக்கிச் செபம்பண்
ணுவேன்; கர்த்தர் உங்களுக்கு மறுஉத்தாரமாகச்
சொல்லும் எல்லா வார்த்தையையும் நான் உங்
களுக்கு ஒன்றையும் மறைக்காமல் அறிவிப்பே
னென்றான்.

அப்போது அவர்கள் எரேமியாவுடனே சொன் ௫
னதாவது: உம்முடைய பராபரனாகிய கர்த்தர் உம்
மைக்கொண்டு எங்களுக்குச் சொல்லி அனுப்
பும் எல்லா வார்த்தையின்படியேயும் நாங்கள்
செய்யாவிட்டால், கர்த்தர் நமக்குள் சத்தியமும்
உண்மையுமான சாட்சியாய் இருக்கக்கடவர்.—
அது நன்மையானாலும் தீமையானாலும் சரி; எங் ௬
கள் பராபரனாகிய கர்த்தரின் சத்தத்துக்கு நாங்
கள் கீழ்ப்படிவதினால் எங்களுக்கு நன்றாயிருக்
கும்படிக்கு நாங்கள் உம்மை அனுப்புகிற எங்
கள் பராபரனாகிய கர்த்தருடைய சத்தத்துக்குக்
கீழ்ப்படிந்து நடப்போமென்றார்கள்.

பத்துநாள் சென்றபோது, கர்த்தருடைய வார் ௭
த்தை எரேமியாவுக்குண்டாயிற்று.—அப்போது ௮
அவன் கரேயாவின் குமாரனாகிய யோகனானை
யும், அவனோடிருந்த எல்லா இராணுவச் சேர்
வைக்காரரையும், சிறியோர் முதற்கொண்டு பெ
ரியோர்மட்டும் உண்டான சனம் அனைத்தையும்
அழைத்து,—அவர்களுடனே சொன்னதாவது: ௯
உங்களுக்காக விண்ணப்பஞ்செய்யும்படிக்கு
நீங்கள் என்னை அனுப்பின இஸ்ரவேலின் பரா
பரனாகிய கர்த்தர் உரைக்கிறதேதென்றால்,
நீங்கள் இந்தத் தேசத்திலே தரிக்கவே தரித்தி ௰
ருந்தால்,[2]நாம் உங்களை நிர்மூலமாக்காமல் கட்டு
வித்து, உங்களைப் பிடுங்காமல் நாட்டுவோம்; ஏ
னெனில், நாம் உங்களுக்குச் செய்திருக்கிற தீங்
குக்கு மனஸ்தாபப்பட்டோம்.—[3]நீங்கள் பயப் ௰௧
படுகிற பாபேலின் இராசாவுக்குப் பயப்பட
வேண்டாம்; அவனுக்குப் பயப்படாதிருப்பீர்க
ளாக என்று கர்த்தர் சொல்லுகிறார்; ஏனெனில்,
உங்களை இரட்சிக்கும்படிக்கும், உங்களை அவன்
கைக்குத் தப்புவிக்கும்படிக்கும் நாம் உங்களுட
னே இருந்து,—அவன் உங்களுக்கு இரங்குகிற ௰௨
தற்கும், உங்களை உங்கள் தேசத்துக்குத் திரும்பி
வரப்பண்ணுகிறதற்குமாக உங்களுக்கு இரக்கம்
செய்வோம். — நீங்கள் உங்கள் பராபரனாகிய ௰௩
கர்த்தருடைய சத்தத்துக்குச் செவிகொடாமல்,
இந்தத் தேசத்திலே நாங்கள் இருக்கிறதில்லையெ
ன்றும்,—நாங்கள் யுத்தத்தைக் காணாததும், எக்கா ௰௪
ளத்தின் சத்தத்தைக் கேளாததும், அப்பத்தாழ்ச்
சியினால் பட்டினியாய் இராததுமான எகிப்துதே
சத்துக்கே போய், அங்கே தரித்திருப்போமென்
றும் சொன்னீர்களேயாகில்,—இப்போதும் யூதா ௰௫
வில் மீதியானவர்களே, அதைத்தொட்டு உண்
டான கர்த்தருடைய வார்த்தையைக் கேளுங்கள்;
இஸ்ரவேலின் பராபரனாகிய சேனைகளையுடைய
கர்த்தர் சொல்லுகிறதாவது: நீங்கள் எகிப்துக்குப்
போக உங்கள் முகங்களைத் திருப்பவே திருப்பி,
அங்கே தங்கப்போனீர்களானால்,—சம்பவிப்ப ௰௬
தேதெனில், நீங்கள் பயப்படுகிற பட்டையம் அ
ங்கே எகிப்துதேசத்திலே உங்களைப் பிடிக்கும்;
நீங்கள் ஐயப்படுகிற பஞ்சம் அங்கே எகிப்திலே
உங்களைப் பின்பற்றிக்கொண்டிருக்கும்; அங்கே

1 ௨ இரா. ௨௫. ௨௬.—2 எரே. ௨௪. ௬.

3 எரே. ௪௧. ௰௮.

௰௭ சாவீர்கள். — எகிப்திலே தங்கவேண்டுமென்று
அவ்விடத்துக்குத் தங்கள் முகங்களைத் திருப்
பின எல்லா மனுஷருக்கும் என்ன சம்பவிக்கு
மெனில், பட்டையத்தாலும், பஞ்சத்தாலும், பெ
ருவாரிக்காய்ச்சலாலும் சாவார்கள்; நாம் அவர்
கள்மேல் வரப்பண்ணும் தீங்கினாலே அவர்க
ளில் மீதியாவாரும் தப்புவாருமில்லை.
௰௮ ஏனெனில், இஸ்ரவேலின் பராபரனாகிய சே
னைகளையுடைய கர்த்தர் சொல்லுகிறதாவது: நம்
முடைய கோபமும் நம்முடைய உக்கிரமும்
எருசலேமுடைய குடிகளின்மேல் எப்படி ஊற்
றப்பட்டதோ, அப்படி நம்முடைய உக்கிரம்
நீங்கள் எகிப்துக்குப் போகும்போது, உங்கள்
மேல் ஊற்றப்படும்; [1]நீங்கள் சாபமாகவும் பா
ழாகவும் பழிப்பாகவும் நிந்தையாகவும் இருந்
து, இவ்விடத்தை இனிக் காணாதிருப்பீர்கள்
என்கிறார்.
௰௯ யூதாவில் மீதியானவர்களே, எகிப்துக்குப்
போகாதிருப்பீர்களாகவென்று கர்த்தர் உங்களை
க்குறித்துச் சொன்னாரென்பதை இந்நாளில் உங்
களுக்குச் சாட்சியாக அறிவித்தேன் என்பதை
௨௰ அறியவே அறிவீர்களாக.—ஏனெனில், உங்கள்
ஆத்துமாக்களுக்கு விரோதமாய் உங்களை மோ
சம்போக்கினீர்கள்; அதேனென்றால், நீர் எங்கள்
பராபரனாகிய கர்த்தனை எங்களுக்காக விண்ணப்
பம்பண்ணி, எங்கள் பராபரனாகிய கர்த்தர் சொல்
லும்படியெல்லாம் எங்களுக்கு அறிவியும்; அ
தின்படியே செய்வோமென்று நீங்கள் சொல்லி,
என்னை உங்கள் பராபரனாகிய கர்த்தரண்டைக்
௨௧ கு அனுப்பினீர்கள். — நான் இந்நாளில் அதை
உங்களுக்கு அறிவித்தேனே; ஆனால், உங்கள்
பராபரனாகிய கர்த்தரின் சத்தத்துக்கும் அவர் என்
னைக்கொண்டு உங்களுக்குச் சொல்லி அனுப்பி
ன எல்லாவற்றுக்கும் செவிகொடாதேபோனீர்
௨௨ கள்.—இப்போதும் தங்கிஇருப்பதற்கு நீங்கள்
போக விரும்புகிற தலத்திலேதான் பட்டையத்
தாலும், பஞ்சத்தாலும், பெருவாரிக்காய்ச்சலா
லும் சாவீர்களென்று அறியவே அறிவீர்களாக
என்றான்.

## ௪௩. அதிகாரம்.

*௧. யோகனானன் எரேமியாவின் தீர்க்கதரிசனத்தை நம்பாமல் அவனையும், மற்றவர்களையும் எகிப்துக்குக் கொண்டுபோனது. ௮. எரேமியா, எகிப்து பாபிலோனியராலே செயங்கொள்ளப்படுமென்று அடையாளத்தினாலே தீர்க்கதரிசனமுரைத்தது.*

௧ எரேமியா எல்லாச் சனத்துக்கும் அவர்களு
டைய பராபரனாகிய கர்த்தர் தன்னைக்கொண்டு
அவர்களுக்குச் சொல்லியனுப்பின எல்லாவார்த்
தைகளையும்சொன்னானே; அவர்களுடைய பரா
பரனாகிய கர்த்தருடைய இந்த எல்லா வார்த்தை
களையும் அவன் அவர்களுக்குச் சொல்லிமுடித்த
௨ போது சம்பவித்ததேதென்றால், — ஓசாயாவின்
குமாரனாகிய அசரியாவும், கரேயாவின் குமார
னாகிய யோகனானும், அகந்தையான எல்லா
மனுஷரும் எரேமியாவுடனே சொன்னதாவது:
நீ பொய்சொல்லுகிறாய்; எகிப்துக்கு அங்கே தங்
கும்படிக்குப் போகாதிருங்களென்று சொல்ல,
எங்கள் பராபரனாகிய கர்த்தர் உன்னை எங்க
ளண்டைக்கு அனுப்பினதில்லை. — கல்தேயர் ௩
எங்களைக் கொன்றுபோடவும், எங்களைப் பாபே
லுக்குச் சிறைகளாகக் கொண்டுபோகவும், எங்
களை அவர்கள் கையில் ஒப்புக்கொடுக்கும்படிக்
கு, நேரியாவின் குமாரனாகிய பாரூக்குத்தானே
உன்னை எங்களுக்கு விரோதமாகப் பயிற்றுவிக்
கிறான் என்றார்கள். — அப்படியே யூதாவின் ௪
தேசத்திலே தரிக்கவேண்டும் என்ற கர்த்தரு
டைய சத்தத்துக்குக் கரேயாவின் குமாரனாகிய
யோகனானும், சகல இராணுவச்சேர்வைக்கா
ரரும், சகல சனமும் செவிகொடாதேபோனார்
கள்.
யூதேயாதேசத்திலே தங்கியிருப்பதற்கு, தாங் ௫
கள் துரத்துண்டிருந்த சகல சாதிகளிடத்திலுமி
ருந்து திரும்பிவந்த மீதியான யூதரெல்லாரையும்,
புருஷரையும், ஸ்திரிகளையும், குழந்தைகளையும்,
இராசாவின் குமாரத்திகளையும், தலையாரிகளின்
அதிபதியாகிய நேபுசாரதான், சாப்பானின்
குமாரனாகிய அகிக்காமின் மகனான கேதலியா
வண்டையில் வைத்துப்போன சகல ஆத்துமாக்
களையும், தீர்க்கதரிசியாகிய எரேமியாவையும்,
நேரியாவின் குமாரனாகிய பாரூக்கையும், —
கரேயாவின்குமாரனான யோகனானும்சகல இ ௬
ராணுவச்சேர்வைக்காரரும் கூட்டிக்கொண்டு,—
கர்த்தருடைய சத்தத்துக்குச் செவிகொடாதபடி ௭
யினாலே, எகிப்துதேசத்துக்குப் போய், தக்பா
னேஸ்மட்டும் வந்துசேர்ந்தார்கள்.
தக்பானேசிலே கர்த்தருடைய வார்த்தை எரே ௮
மியாவுக்கு உண்டாகி, அவர் சொன்னதாவது:—
நீ உன் கையிலே பெரிய சல்லுகளை எடுத்துக் ௯
கொண்டு, யூதாமனுஷர் பார்க்கையில் அவைக
ளைத் தக்பானேசில் இருக்கிற பார்வோனுடைய
வீட்டின் ஒலிமுகவாசலில் உண்டான சூளையின்
களிமண்ணிலே புதைத்துவைத்து, — அவர்களு ௰
டனே சொல்லவேண்டியதாவது: இஸ்ரவேலின்
பராபரனாகிய சேனைகளையுடைய கர்த்தர் சொல்
லுகிறதேதெனில், இதோ, [2]நம்முடைய வேலைக்
காரனாகிய நேபுகாத்நேச்சாரென்ற பாபேலின்
இராசாவை நாம் அழைத்தனுப்பி, நாம் புதைப்
பித்த இந்தக் கல்லுகளின்மேல் அவனுடைய ஆச
னத்தைவைப்போம்; அவன் தன் இராசகூடாரத்
தை அவைகளின்மேலே விரிப்பான்.—அவன் ௰௧
வந்து, எகிப்துதேசத்தை அழிப்பான்; [3]சாவுக்கு
ஏதுவானவன் சாவுக்கும், சிறையிருப்புக்கு ஏது
வானவன் சிறையிருப்புக்கும், பட்டையத்து
க்கு ஏதுவானவன் பட்டையத்துக்கும் உள்ளா
வான்.—[4]எகிப்தினுடைய தேவர்களின் வீடுக ௰௨
ளில் அக்கினியைக் கொளுத்துவோம்; அவன்
அவைகளைச் சுட்டெரித்து, அவைகளைச் சிறை

1 எரே. ௨௪. ௯: ௨௯. ௰௮, ௰௯.—2 எரே. ௨௫. ௯: ௨௭. ௬.

3 எரே. ௰௫. ௨.—4 எரே. ௪௬. ௨௫.

பிடித்துப்போய், ஒரு மேய்ப்பன் தன் கம்பளி
யைப் போர்த்துக்கொள்ளுமாப்போலே எகிப்து
தேசத்தைப் போர்த்துக்கொண்டு, அவ்விடத்தி
லிருந்து சுகமாய்ப் புறப்பட்டுப்போவான்.—
௰௩ அவன் எகிப்துதேசத்தில் இருக்கிற பேத்ஷேமே
சின் சிலைகளை உடைத்து, எகிப்தினுடைய தே
வர்களின் வீடுகளை அக்கினியால் சுட்டுப்போடு
வானென்கிறார் என்று சொல்லென்றார்.

## ௪௰௪. அதிகாரம்.

*௧. எரேமியா விக்கிரகத் தொழும்புக்காக யூதாவின் பாழ்க்கடிப்பை விவரித்தது ௰௧. விக்கிரகபத்திக்காரர் எகிப்திலே அழிவதை தீர்க்கதரிசனமாய் உரைத்தது. ௰௫. யூதருடைய மனம் கடினப்பட்டது. ௨௰. அதற்காக எரேமியா அவர்களைப் பயமுறுத்தி, ௨௰௯. எகிப்தின் அழிவை அடையாளமாகச் சொன்னது.*

௧ எகிப்துதேசத்தில் குடியேறி, மிக்தோலிலும்,
தக்பானேசிலும், நோப்பிலும், பத்ரோஸ் சீமை
யிலும் வாசமான எல்லா யூதரையுங்குறித்து, எரே
மியாவுக்கு உண்டான வசனம்.
௨ இஸ்ரவேலின் பராபரனாகிய சேனைகளையு
டைய கர்த்தர் சொல்லுகிறதாவது: நாம் எருச
லேமின்மேலும், யூதாவுடைய எல்லாப் பட்ட
ணங்களின்மேலும், வரப்பண்ணின தீங்கை
௩ எல்லாம் நீங்கள் கண்டீர்கள்.—இதோ, அவர்க
ளும் நீங்களும் உங்கள் பிதாக்களும் அறியாத
தேவர்களுக்கு அவர்கள் தூபங்காட்டவும், ஆரா
தனை செய்யவும் போய், நமக்குக் கோபம் உண்
டாக்கும்படிக்குச் செய்த அவர்களுடைய பொ
ல்லாப்பினிமித்தம் அவைகள் இந்நாளில் பா
ழாய்க் கிடக்கின்றன; அவைகளில் குடியில்
௪ லை.—நாம் பகைக்கிற இந்த அருவருப்பான கா
ரியத்தைச் செய்யாதிருங்களென்று, நாம் தீர்க்க
தரிசிகளாகிய நம்முடைய ஊழியக்காரரைக்
கொண்டு உங்களுக்கு ஏற்கெனவே சொல்லி
௫ அனுப்பிக்கொண்டே இருந்தோம்.—அனால் அ
வர்கள் அந்நியதேவர்களுக்குத் தூபங்காட்டாத
படிக்கு, தங்கள் பொல்லாப்பைவிட்டுத் திரும்
புவதற்குக் [1]கேளாமலும், தங்கள் செவிகளைச்
௬ சாய்க்காமலும்போனார்கள்.—ஆகையால் நம்மு
டைய உக்கிரமும் நம்முடைய கோபமும் ஊற்
றப்பட்டு, யூதேயாவின் பட்டணங்களிலும் எரு
சலேமின் வீதிகளிலும் [2]பற்றி எரிந்தது; அவை
கள் இந்நாளில் இருக்கிறபடி வனாந்தரமும் பா
ழுமாய்ப்போயின.
௭ இப்போதும் இஸ்ரவேலின் பராபரனாகிய சே
னைகளையுடைய பராபரனை கர்த்தர் சொல்லு
கிறதாவது: நீங்கள் யூதாவில் ஒருவரையும் உங்
களுக்கு மீதியாகக் காக்காமல், உங்களில் புருஷ
னையும் ஸ்திரியையும் பிள்ளையையும் பாலகனை
யும் முதலற்றுப்போகப்பண்ணும்படிக்கு, உங்
கள்கைகளின் கிரியைகளாலே நமக்குக் கோபம்
உண்டாக்குகிற பெரிய பொல்லாப்பை உங்கள்
௮ ஆத்துமாக்களுக்கு விரோதமாகச் செய்து,—உங்
களைத்தானே வேரற்றுப்போகப்பண்ணுவதற்கா
கவும், பூமியினுடைய சகல சாதிகளுக்குள்ளும்
சாபமும் நிந்தையும் ஆவதற்காகவும், நீங்கள் தங்
கியிருக்க வந்த எகிப்துதேசத்திலே அந்நியதே
வர்களுக்குத் தூபங்காட்டுவானேன்?—யூதாதே ௯
சத்திலும் எருசலேமின் வீதிகளிலும் உங்கள்
பிதாக்கள் செய்த பொல்லாப்புகளையும், யூதா
வின் இராசாக்கள் செய்த பொல்லாப்புகளையும்,
அவர்களுடைய பெண்சாதிகள் செய்த பொல்
லாப்புகளையும், நீங்கள் செய்த பொல்லாப்புக
ளையும், உங்கள் பெண்சாதிகள் செய்த பொல்
லாப்புகளையும், மறந்துபோனீர்களோ?—அவர் ௰
கள் இந்நாள்மட்டுக்கும் மனம் நொறுங்குண்ட
துமில்லை, பயப்படுகிறதுமில்லை; நாம் உங்கள்
முன்னேயும் உங்கள் பிதாக்களின் முன்னே
யும் வைத்த நமது வேதத்தின்படியேயும் நம்மு
டைய கட்டளைகளின்படியேயும் நடக்கிறது
மில்லை.
ஆகையால், இஸ்ரவேலின் பராபரனாகிய ௰௧
சேனைகளையுடைய கர்த்தர் சொல்லுகிறதாவது:
இதோ, நாம் [3]உங்களுக்குத் தீங்காகவும், யூதாவ
னைத்தையும் சங்கரிக்கத்தக்கதாகவும் நமது முகத்
தை உங்களுக்கு விரோதமாகத் திருப்பி,—எகிப் ௰௨
துதேசத்திலே தங்கும்படிக்குவரத் தங்கள் முகங்
களைத் திருப்பின மீதியான யூதரை வாரிக்கொள்
ளுவோம்; அவர்கள் அனைவரும் எகிப்துதேசத்
திலே நிர்மூலமாவார்கள்; அவர்கள் சிறியவன்
துவக்கிப் பெரியவன்மட்டும், [4]பட்டையத்துக்கு
இரையாகி, பஞ்சத்தாலும் நிர்மூலமாவார்கள்;
அவர்கள் பட்டையத்தாலும் பஞ்சத்தாலும் செத்
து, சாபமும் பாழும் பழிப்பும் நிந்தையுமாவார்
கள்.—நாம் எருசலேமை விசாரித்தபடி எகிப்து ௰௩
தேசத்தில் குடியிருக்கிறவர்களையும் பட்டையத்
தாலும், பஞ்சத்தாலும், பெருவாரிக்காய்ச்சலா
லும் விசாரிப்போம்.—எகிப்துதேசத்திலே தங் ௰௪
கவும், மறுபடியும் தங்கள் ஆத்துமா வாஞ்சித்தி
ருக்கிற யூதாதேசத்திலேதானே குடியேறுவதற்கு
அங்கே திரும்பிப்போகவும் வேண்டுமென்று
இங்கே வந்த மீதியான யூதரிலே தப்புவாரும்
மீதியாயிருப்பாருமில்லை; தப்பிப்போபவர்களா
கிய மற்றவர்களையேயொழிய அவர்களில் ஒரு
வரும் அங்கே திரும்புவதில்லையென்றாரென்று
சொன்னான்.
அப்போது தங்கள் பெண்சாதிகள் வேறே தே ௰௫
வர்களுக்குத் தூபங்காட்டுகிறதை அறிந்திருந்த
எல்லாப் புருஷரும், பெரிய கூட்டமாய் நின்
றிருந்த எல்லா ஸ்திரிகளும், எகிப்துதேசத்தில்
பத்ரோசிலே குடியிருந்த சகல சனமும் எரேமி
யாவுக்குப் பிரதியுத்தாரமாகச் சொன்னதாவது:
நீ கர்த்தருடைய நாமத்தில் எங்களுக்குச் சொ ௰௬
ன்ன வார்த்தையின்படியே [5]நாங்கள் உனக்குச்
செவிகொடாமல்,—எங்கள் வாயிலிருந்து புறப் ௰௭
பட்ட எல்லா வார்த்தையின்படியேயும் நாங்கள்
செய்யவே செய்து, [6]வானத்தின் இராசஸ்திரிக்
குத் தூபங்காட்டி அவளுக்கு ஊற்றுதல்களை

1 எரே. ௭. ௨௰௫, ௨௰௬.—2 எரே. ௭. ௨௰.—3 ஆமோ. ௯. ௪.

4 எரே. ௪௰௨. ௰௭, ௰௮.—5 எரே. ௰௮. ௰௨.—6 எரே. ௭. ௰௮.

ஊற்றுவோம்; நாங்களும், எங்கள் பிதாக்களும்,
எங்கள் இராசாக்களும், எங்கள் பிரபுக்களும்,
யூதாபட்டணங்களிலும், எருசலேமின் வீதிகளி
லும் செய்ததுபோலேதானே; அப்போது நாங்
கள் அப்பத்தாலே திருத்தியாகி, வாழ்ந்து, ஒரு
௰௮ பொல்லாப்பையும் காணாதிருந்தோம்.—நாங்கள்
வானத்தின் இராசஸ்திரிக்குத் தூபங்காட்டாம
லும், அவளுக்கு ஊற்றுதல்களை ஊற்றாமலும்
போனது முதற்கொண்டோவெனில், எல்லாம்
எங்களுக்குக் குறைபட்டது; பட்டையத்தாலும்
௰௯ பஞ்சத்தாலும் நிர்மூலமானோம். — அல்லவென்
று, நாங்கள் வானத்தின் இராசஸ்திரிக்குத் தூபங்
காட்டி, அவளுக்கு ஊற்றுதல்களை ஊற்றுகிற
போது, நாங்கள் அவளை நமஸ்கரிக்கவும், அவ
ளுக்கு ஊற்றுதல்களை ஊற்றவும், எங்கள் புருஷ
ரையல்லாமல், [1]அவளுக்கு அச்சுப்பணியாரங்க
ளைச் சுடுகிறோமோ என்றார்கள்.
௨௰ அப்போது எரேமியா எல்லாச் சனத்துக்கும்,
புருஷருக்கும், ஸ்திரிகளுக்கும், தனக்கு இப்
படிக்கொத்த மறுமொழியைக் கொடுத்த சகல
சனத்துக்கும் சொன்னதாவது:
௨௧ யூதாவின் பட்டணங்களிலும், எருசலேமின்
வீதிகளிலும், நீங்களும் உங்கள் பிதாக்களும்,
உங்கள் இராசாக்களும், உங்கள் பிரபுக்களும்,
தேசத்தின் சனமும் தூபங்காட்டின தூபங்களை
அல்லவோ கர்த்தர் நினைத்துத் தம்முடைய மன
௨௨ திலே வைத்துக்கொண்டார்.—உங்கள் கிரியைக
ளின் பொல்லாப்பையும், நீங்கள் செய்த அரு
வருப்புகளையும், கர்த்தர் அப்புறம் பொறுத்திருக்
கக்கூடாதபடியினாலே அல்லவோ, உங்கள் தே
சம் இந்நாளில் இருக்கிறபடி குடியற்ற அந்தர
௨௩ வெளியும் பாழும் சாபமும் ஆயிற்று.—நீங்கள்
தூபங்காட்டி, கர்த்தருக்கு விரோதமாகப் பாவம்
செய்து, கர்த்தருடைய சத்தத்துக்குச் செவிகொ
டாமலும் அவருடைய வேதத்துக்கும், அவரு
டைய கட்டளைகளுக்கும், அவருடைய சாட்சி
களுக்கும், இணங்கி நடவாமலும் போனபடியி
னாலேதானே இந்தத் தீங்கு இந்நாளில் இருக்கி
றபடி உங்களுக்கு நேரிட்டதென்றான்.
௨௪ பின்னையும் எரேமியா எல்லாச் சனத்துக்கும்
எல்லா ஸ்திரிகளுக்கும் சொன்னதாவது: எகிப்
துதேசத்தில் இருக்கிற யூதராகிய நீங்கள் எல்லா
ரும் கர்த்தருடைய வார்த்தையைக் கேளுங்கள்.—
௨௫ இஸ்ரவேலின் பராபரனாகிய சேனைகளையுடைய
கர்த்தர் சொல்லுகிறதாவது: வானத்தின் இராசஸ்
திரிக்குத் தூபங்காட்டவும், அவளுக்கு ஊற்று
தல்களை ஊற்றவும், நாங்கள் நேர்ந்துகொண்ட
பொருத்தனைகளைச் செலுத்தவே செலுத்துவோ
மென்று, நீங்களும் உங்கள் பெண்சாதிகளும்
உங்கள் வாயினாலும் சொல்லி, உங்கள் கைகளி
னாலும் நிறைவேற்றினீர்கள்; நீங்கள் உங்கள்
பொருத்தனைகளைத் திடப்படுத்தவே திடப்படுத்
௨௬ தி, செலுத்தவே செலுத்தினீர்கள்.—ஆகையால்,
எகிப்துதேசத்தில் குடியிருக்கிற யூதராகிய நீங்
கள் எல்லாரும் கர்த்தருடைய வார்த்தையைக்
கேளுங்கள்; இதோ, கர்த்தராகிய ஆண்டவரு
டைய சீவனாணை; எகிப்துதேசமெங்கும் ஒரு யூ
தமனுஷன் வாயினாலும் இனி நம்முடைய நாமம்
அழைக்கப்படுவதில்லையென்று நாம் நமது பெ
ரிய நாமத்தைக்கொண்டு ஆணையிடுகிறோமென்
கிறதைக் கர்த்தர் சொல்லுகிறார்.—இதோ, [2]நாம் ௨௭
அவர்கள்மேலே நன்மைக்கல்ல தீமைக்கே சாக்
கிரதையாயிருப்போம்; எகிப்துதேசத்திலிருக்கிற
யூதமனுஷர் எல்லாரும் ஒழிந்துதீருமளவும் பட்
டையத்தாலும் பஞ்சத்தாலும் சங்காரமாவார்
கள்.—ஆனால் பட்டையத்துக்குத் தப்புபவர்கள் ௨௮
எகிப்துதேசத்திலிருந்துயூததேசத்துக்குக் கொஞ்
சம் பேராய்த் திரும்புவார்கள்; அப்படியே எகிப்
துதேசத்திலே தங்கியிருக்கவந்த மீதியான யூதர்
அனைவரும் யாருடைய வார்த்தை மெய்ப்படும்,
தங்களுடையதோ நம்முடையதோவென்று அறி
வார்கள்.
கர்த்தர் சொல்லுகிறதேதெனில், நாம் இவ்வி ௨௯
டத்தில் உங்களுக்கு விரோதமாய் விசாரிக்கிற
வராயிருப்பதற்கும், நம்முடைய வார்த்தைகளை
உங்கள்மேல் தீமையாக மெய்ப்படுமென்று நீங்
கள் அறிவதற்கும் உங்களுக்கு அடையாளமா
வது:—இதோ, நாம் யூதாவின் இராசாவாகிய ௩௰
சிதேக்கியாவை அவனுடைய சத்துருவும், அவன்
பிராணனை வாங்கத்தேடினவனுமாகிய நேபுகாத்
நேச்சாரென்ற பாபேலுடைய இராசாவின் கை
யில் ஒப்புக்கொடுத்ததுபோலே, நாம் பார்வோன்
ஒப்பிராவென்ற எகிப்துவின் இராசாவையும்
அவனுடைய சத்துருக்களின் கையிலும் அவன்
பிராணனை வாங்கத்தேடுகிறவர்களின் கையிலும்
ஒப்புக்கொடுப்போமென்பதுதானே என்று கர்த்
தர் சொல்லுகிறாரென்றான்.

## ௪௫. அதிகாரம்.

௧. பாரூக்கு கலக்கமுற்றதால், ௪. எரேமியா அவனைப் போதித்துத் தேற்றினது.

யோசியாவின் குமாரனாகிய யோயாக்கீம் என் ௧
ற யூதாவுடைய இராசாவின் நாலாம் வருஷத்தி
லே நேரியாவின் குமாரனாகிய பாரூக் இந்த வச
னங்களை [3]எரேமியாவின் வாய்சொல்ல ஒரு புஸ்
தகத்தில் எழுதுகையில், எரேமியா தீர்க்கதரிசி
அவனுடனே சொன்ன வார்த்தை:—பாரூக்கே, ௨
உன்னைக்குறித்து இஸ்ரவேலின் பராபரனாகிய
கர்த்தர் சொல்லுகிறதாவது: — நீ, ஆ எனக்கு ௩
ஐயோ! ஏனெனில், கர்த்தர் என்னுடைய நோ
வைச் சஞ்சலத்தால் வர்த்திக்கப்பண்ணினாரென்
றும் [4]என் தவிப்பினால் இளைத்தேன், மூசிப்பாறுத
லைக்காணாதேபோனேனென்றும்சொல்லுகிறாய்.
கர்த்தர் உரைக்கிறதேதெனில், இதோ, நாம் ௪
கட்டினதை நாம் இடிக்கிறோம்; நாம் நாட்டின
தை நாம் பிடுங்குகிறோம்: இந்த முழுத்தேசத்தை

1 எரே. ௭ ௰௮.—2 எரே. ௩௧.௨௮.

3 எரே. ௩௬. ௪.—4 சங். ௬. ௬.

௫ யுங்கூடத்தானே. — நீயோவெனில் உனக்குப்
பெரிய காரியங்களைத் தேடுகிறாயோ? தேடா
யாக; ஏனெனில், இதோ, எல்லா மாமிசத்தின்
மேலும் தீங்கை வரப்பண்ணுகிறேனென்று கர்த்
தர் சொல்லுகிறார்; ஆனால் நீ போகும் சகலதலங்
களிலும் [1]உன்னுடைய ஆத்துமாவை உனக்குக்
கிடைக்கும் கொள்ளை உடைமையைப்போலே
தருகிறேனென்கிறதை அவனுடனே சொல்
லென்றாரென்று சொன்னான்.

## ௪௬. அதிகாரம்.

௧. எரேமியா ஐப்பிராத்து நதியண்டையிலே பார்வோன் படை முறியவடிக்கப்பட்டதையும், ௰௩. நேபுகாத்நேச்சாராலே எகிப்து செயம்பண்ணப்பட்டதையும் தீர்க்கதரிசனமாயுரைத்தது. ௨௭. தண்டனையிலே வருத்தப்பட்ட யாக்கோபைத் தேற்றினது.

௧ புறச்சாதிகளுக்கு விரோதமாய் எரேமியா தீர்க்க
தரிசிக்கு உண்டான கர்த்தருடைய வசனம்.—
௨ [2]எகிப்துக்குச் சொல்வது: ஐப்பிராத்து நதியண்
டையில் கர்கெமிசிலே இருந்ததும் பாபேலின்
இராசாவாகிய நேபுகாத்நேச்சார், யோசியாவின்
குமாரனாகிய யோயாக்கீமென்ற யூதாவுடைய
இராசாவின் நாலாம்வருஷத்திலே முறியடித்த
துமான பார்வோன் நேகோவென்னப்பட்ட
எகிப்துவினுடைய இராசாவின் இராணுவத்
தின்பேரிலே அவர் சொன்னதாவது:
௩ கேடயங்களையும் பரிசைகளையும் ஆயத்தம்
௪ பண்ணி, யுத்தத்துக்குச் சேருங்கள்.—குதிரைக்
காரரே, குதிரைகளின்மேல் சேணங்களை வைத்
தேறித் தலைச்சோடுகளைப் போட்டுக்கொண்ட
வர்களாய் உங்களை நிறுத்துங்கள்; ஈட்டிகளைத்
துலக்கி, கவசங்களைத் தரித்துக்கொள்ளுங்கள்.
௫ அவர்கள் கலங்கி, பின்வாங்குகிறார்களென்று
நாம் காண்கிறதெப்படி? அவர்களுடைய பராக்
கிரமசாலிகள் நருக்குண்டு, திரும்பிப்பாராமல்
ஓடவே ஓடுகிறார்கள்; சுற்றிலும் பயங்கரமுண்
௬ டென்று கர்த்தர் சொல்லுகிறார்.-வேகமானவன்
ஓடிப்போகானாக; பராக்கிரமசாலி தப்பிப்போ
கானாக; வடக்கே ஐப்பிராத்நதியண்டையிலே
இடறிவிழுவார்கள்.
௭ நீரோட்டத்தைப்போலேயும் தண்ணீர்கள்
மோதியடிக்கிற ஆறுகளைப்போலேயும் எழும்பி
௮ வருகிறவன் யாவன்?—எகிப்தியன் நீரோட்டத்
தைப்போலேயும் தண்ணீர்கள் மோதியடிக்கிற
ஆறுகளைப்போலேயும் எழும்பிவந்து, நான் போ
யேறி, தேசத்தை மூடி, பட்டணத்தையும் அதில்
குடியிருக்கிறவர்களையும் அழிப்பேனென்றான்.-
௯ குதிரைகளே, போயேறுங்கள்; இரதங்களே,
கடகடென்றோடுங்கள்; பராக்கிரமசாலிகளும்,
கேடகம் பிடிக்கிற எத்தியோப்பியரும், பூத்திய
ரும், வில்லைப்பிடித்து நாணேற்றுகிற லீதியரும்
௰ புறப்படக்கடவர்கள்.—ஆனால் இது சேனைகளு
டைய கர்த்தராகிய ஆண்டவரின் நாளும், அவர்
தம்முடைய சத்துருக்களுக்கு நீதியைச் சரிக்கட்
டுகிற நாளுமாயிருக்கிறது; ஆகையால் பட்டை
யம் பட்சித்து அவர்களுடைய இரத்தத்தால்
திருத்தியாகி வெறித்திருக்கும்; ஏனெனில் வட
தேசத்தில் ஐப்பிராத்து நதியண்டையிலே சேனை
களுடைய கர்த்தராகிய ஆண்டவருக்குப் பலியி
டுதலுண்டு.
எகிப்துக் குமாரத்தியாகிய கன்னியாஸ்திரி ௰௧
யே, [3]நீ கீலேயாத்துக்குப்போயேறி, பிசின்தயி
லம் வாங்கு; விருதாவாகத் திரள் அவிழ்தங்களைக்
கூட்டுகிறாய்; உனக்கு ஆரோக்கியமுண்டாகா
து.—சாதிகள் உன் இலச்சையைக் கேட்கிறார்கள், ௰௨
உன் கூக்குரலால் தேசம் நிறைந்தது; ஏனெனில்,
பராக்கிரமசாலியின்மேல் பராக்கிரமசாலி இட
றி, இருவரும் ஏகமாய் விழுந்தார்களென்றார்.
எகிப்துதேசத்தை அழிக்கப் பாபேலின் இரா ௰௩
சாவாகிய நேபுகாத்நேச்சார் வருவானென்ப
தைக்குறித்து, எரேமியா தீர்க்கதரிசியுடனே கர்த்
தர் சொன்ன வசனமாவது.
உன்னை நிறுத்தி ஆயத்தப்படு; ஏனெனில், பட் ௰௪
டையம் உன்னைச் சுற்றிலும் உண்டானதைப்
பட்சித்துப்போட்டதென்று சொல்லி, எகிப்தி
லே அறிவித்து, மிக்தோலில் கேட்கப்பண்ணி,
நோப்பிலும் தக்பானேசிலும் கேட்கப்பண்ணு
ங்கள்.
உன்னில் வல்லவர்கள் அடித்துக்கொண்டு ௰௫
போகப்படுகிறதெப்படி? நிலைநிற்கமாட்டார்
கள்; ஏனெனில்; கர்த்தர் அவர்களைத் தள்ளினார்.-
அநேகரை இடறப்பண்ணுகிறார்; அவனவனும் ௰௬
தனக்கடுத்தவன்மேல் விழுந்து: எழுந்திரு; கெ
டுக்கிற பட்டையத்துக்குத் தப்ப நமது சனத்தண்
டைக்கும் நாம் பிறந்த தேசத்துக்கும் திரும்பிப்
போவோமென்கிறார்கள்.—எகிப்துவின் இராசா ௰௭
வாகிய பார்வோன் பாழ்க்கடிக்கப்பட்டான்;
அவன் திட்டமான காலத்தைத் தப்பவிட்டா
னென்று அங்கே கூப்பிடுகிறார்கள்.—பர்வதங் ௰௮
களில் தாபோரும், சமுத்திரத்தில் கர்மேலும்
இருக்கிற உயரமாய் வருவானென்று [4]சேனைக
ளின் கர்த்தரென்ற நாமமுள்ள இராசா தம்மு
டைய சீவனைக்கொண்டு சொல்லுகிறார்.—எகிப் ௰௯
துதேசத்துக் குடியாகிய குமாரத்தியே, சிறையி
ருப்புக்குப் போகும் பயணமுட்டுகளை உனக்கு
உண்டாக்கு; ஏனெனில், நோப், பாழாகும்;
அது குடியில்லாமல் சுட்டுப்போடப்பட்டுக்
கிடக்கும்.
எகிப்து மகா நேர்த்தியான கன்றுக்குட்டியா ௨௰
யிருக்கிறது, அடிக்கிறவன் வடக்கேயிருந்து வரு
கிறான்.—அதின் நடுவில் இருக்கிற அதினுடைய ௨௧
கூலிப்படைகள் கொழுத்த கன்றுக்குட்டிகள்
போலிருக்கிறார்கள்; ஆகையால் இவர்களும் நிற்
காமல், திருப்பிக்கொண்டு ஏகமாய் ஓடிப்போ
வார்கள்; ஏனெனில், [5]அவர்கள் விசாரிக்கப்படு
கிற அவர்களுடைய ஆபத்துநாள் அவர்கள்மேல்
வந்தது.—அதினுடைய சத்தம் பாம்பின் சத்த ௨௨
மடை வாய்ப் புறப்படும்; ஏனெனில், இராணுவ
பலத்தோடே நடந்து மரங்களை வெட்டுகிறவர்

1 எரே. ௩௯. ௰௮.—2 ௨ரா. ௨௩. ௨௯. ௨நா. ௩௫. ௨௰.

3 எரே. ௮. ௨௨.—4 சங். ௨௪. ௰.—5 எரே. ௫௰. ௩௧.

களைப்போலக் கோடாலிகளோடு அதின்மேல்
௨௩ வருவார்கள்.—எண்ணப்படாத மரங்களாயிருந்
தாலும் அதின் காட்டை வெட்டுவார்களென்று
கர்த்தர் சொல்லுகிறார்; எனெனில், வெட்டுக்கி
ளிகளைப்பார்க்க அதிகமாயிருக்கிறார்கள்: அவர்
௨௪ களுக்கு இலக்கமில்லை.—எகிப்துக் குமாரத்தி வெ
ட்கப்பட்டிருக்கிறாள்; வடக்குத்திசைச் சனத்
தின்கையில் ஒப்புக்கொடுக்கப்படுகிறாள்.
௨௫ இஸ்ரவேலின் பராபரனாகிய சேனைகளுடைய
கர்த்தர் சொல்லுகிறதாவது: இதோ, நாம் நோப்
பட்டணத்திலுள்ள திரள் சனசதளத்தையும்,
பார்வோனையும், எகிப்துவையும், [1]அதின் தேவர்
களையும், அதின் இராசாக்களையும், பார்வோனை
யும், அவனை நம்பியிருக்கிறவர்களையும் விசாரித்
௨௬ து,—அவர்களை அவர்கள் பிராணனை வாங்கத்தே
டுகிறவர்களின் கையிலும், பாபேலின் இராசா
வாகிய நேபுகாத்நேச்சாரின் கையிலும், அவனு
டைய வேலைக்காரரின் கையிலும், ஒப்புக்கொ
டுப்போம்; அதற்குப்பிற்பாடோவெனில், அது
பூருவநாள்களில் இருந்ததுபோலக் குடியேற்
றப்பட்டுப்போமென்று கர்த்தர் சொல்லுகிறார்.
௨௭ ஆனால் [2]நம்முடைய தாசனாகிய யாக்கோபே,
நீ பயப்படாயாக; இஸ்ரவேலே, நீ கலங்காயாக;
எனெனில், இதோ, நாம் உன்னைத் தூரத்திலும்,
உன் வித்தை அவர்கள் சிறையிருப்பின் தேசத்தி
லுமிருந்து விடுவித்து, இரட்சிப்போம்; அப்
போது யாக்கோபு திரும்பிவந்து, அமைச்சலோ
டும் சாங்கோபாங்கத்தோடும் இருப்பான்; அவ
௨௮ னைத் தத்தளிக்கப்பண்ணுவாரில்லை. — நம்மு
டைய தாசனாகிய யாக்கோபே, நீ பயப்படாயா
கவென்று கர்த்தர் சொல்லுகிறார்; எனெனில்,
நாம் உன்னுடனே இருக்கிறோம்; நாம் உன்னைத்
துரத்திவிட்ட எல்லாச் சாதிகளையும் நிருமூலமா
க்குவோம்; உன்னையோ நாம் நிருமூலமாக்கா
மல், உன்னை [3]நியாயமட்டாய்த் தண்டிப்போம்;
ஆனால் உன்னை நாம் குற்றமில்லாமல் நீங்கலாக
வே விடுவதில்லையென்றார்.

## சஎ. அதிகாரம்.

பெலிஸ்தியருடைய அழிவு சொல்லப்பட்டது

௧ பார்வோன் காத்சாவை அழிக்காததற்குமுன்
னே, [4]பெலிஸ்தியருக்கு விரோதமாகத் தீர்க்கத
ரிசியாகிய எரேமியாவுக்குண்டான கர்த்தரு
டைய வசனம்.
௨ கர்த்தர் சொல்லுகிறதாவது: இதோ, வடக்கே
யிருந்து தண்ணீர்கள் எழும்பி, வெள்ளநதியாகி,
தேசத்தின்மேலும், அதினுடைய நிறைவின்மே
லும்; பட்டணத்தின்மேலும், அதில் குடியிருக்
கிறவர்களின்மேலும், புரண்டு ஓடும்; அப்போது
மனுஷர் கூப்பிட்டு, தேசத்தின் குடிகளெல்லா
௩ ரும் அலறுவார்கள்.—அவர்களுடைய வலுவான
குதிரைகளின் குளம்புகள் இரைகிற சத்தத்தை
யும், அவர்களுடைய இரதங்களின் கடகடப்
பையும், அவர்களுடைய உருளைகளின் இரைச்ச
லையுந்தொட்டுத் தகப்பன்மார் தங்கள் கைகளின்
அயருகையினாலே பிள்ளைகளைநோக்கிப் பாராதி
ருப்பார்கள்.—பெலிஸ்தியரையெல்லாம் பாழ்க் ௪
கடிக்கவும், தீருவுக்கும் சீதோனுக்கும் மீதியான
சகாயரையெல்லாம் சங்காரம்பண்ணவும் வருகி
றநாளிலேதானே; எனென்றால், [5]கப்தோரென்ற
கரைதுறையான தேசத்தாரில் மீதியாகிய பெலி
ஸ்தியரையும் கர்த்தர் பாழ்க்கடிப்பார்.—காத்சா ௫
வுக்கு மொட்டையிடுதல் வருகிறது; அவர்களு
டைய பள்ளத்தாக்கிலே மீதியாகிய அஸ்கலோன்
சங்காரமாகிறது; எந்தமட்டும் உன்னைக் கீறிக்
கொள்ளுகிறாயென்றார்.
ஆ கர்த்தரின் பட்டையமே, எந்தமட்டும் அம ௬
ராதிருப்பாய்? உன் உறையில் திரும்பு, ஓய்ந்து
அமர்ந்திரு.
எப்படி அமர்ந்திருப்பாய்? அஸ்கலோனுக்கு ௭
விரோதமாகவும் குடாக்கடலுக்கு விரோதமாக
வும் கர்த்தர் அதற்குக் கட்டளைகொடுத்து, அவ்வி
டத்துக்கென்று அதைக் குறித்தாரே.

## சஅ. அதிகாரம்.

௧. மோவாபியருடைய மேட்டிமைக்காகவும், ௭. அவர்களுடைய அஞ்சா
மைக்காகவும், ௰௧. மாம்ச நம்பிக்கைக்காகவும், ௰௪. அவர்கள் பராப
ரனையும் அவருடைய சனத்தையும் நிந்தைசெய்ததற்காகவும், அவர்கள்
மேல்வரும நியாயத்தீர்ப்பு. ௪௭. மோவாபியர் முந்தின நிலையடைவது

மோவாபுக்குச் செல்வது: [6]இஸ்ரவேலின் பரா ௧
பரனாகிய சேனைகளுடைய கர்த்தர் சொல்லுகிற
தாவது: நேபோவுக்கு ஐயோ! எனெனில், அது
பாழ்க்கடிக்கப்பட்டது; கீரியத்தாயீம் வெட்கப்
பட்டு, பிடிக்கப்பட்டுப்போயிற்று; மிஸ்காப்
வெட்கப்பட்டு, கலங்கிப்போயிற்று. — எஸ் ௨
போனைத்தொட்டு மோவாபுக்கு இருந்த பெத்த
ரிக்கம் இனி இல்லை; அது சாதியாயிராதபடிக்கு
அதை நிருமூலமாக்குவோம் வாருங்களென்று
அதற்கு விரோதமாகப் பொல்லாப்பை நினைத்தி
ருக்கிறார்கள்; மத்மேனே, நீயும் சங்காரமாவாய்;
பட்டையம் உன்னைத்தொடரும்.—பாழ்க்கடிப்பி ௩
னாலும் பெரிய நொறுக்குதலினாலும் உண்டாகிற
கூப்பிடுதலின் சத்தம் ஓரோனாயிமிலிருந்து கே
ட்கப்படும்.—மோவாப் நொறுங்குண்டது; அதில் ௪
சிறியவர்கள் கூப்பிடுதலைக் கேட்கப்பண்ணி
னார்கள்.—எனெனில், லூகித்துக்கு ஏறுகிற வழி ௫
யிலே அழுகையின்மேல் அழுகை எழும்பும்;
ஓரோனாயிமுக்கு இறங்கிப்போகிற வழியிலே
சத்துருக்கள் நொறுக்குதல் செய்கிறதினால் உண்
டாகிய கூப்பிடுதலைக் கேட்கிறார்கள்.
உங்கள் பிராணனைத் தப்புவிக்க ஓடிப்போங் ௬
கள்; ஆனால் [7]வனாந்தரத்தில் இளப்பமான செடி
யைப்போலிருப்பீர்கள்.—எனெனில், நீ உன் ௭
கிரியைகளையும் உன் பொக்கிஷங்களையும் நம்பு
கிறபடியினாலே நீயும் பிடிக்கப்படுவாய்; அப்
போது [8]காமோஸ்சிறையாக்கப்பட்டுப்போகும்;
அதின் ஆசாரியரும் பிரபுக்களுங்கூடப் போ

1 எரே. கச. ௰௨. எசா. ௰௯. க. 4 எசா. ௰ச. உக. ழு. எசே. உ௫.
2 எரே. ௩௰. ௰.—3 எரே. ௰. உச. ௰௫. ழு. செப். உ. ச, ௫. சகரி.
௯. ௫, க.—5 ஆமோ. ௯. எ. ௰எ. க.—8 க இரா. ௰௧. எ.
6 எசா. ௰௫. க. ழு —7 எரே.

௮ வார்கள்.—பாழ்க்கடிக்கிறவன் எல்லாப் பட்ட
ணங்களின்மேலும் வருவான்; ஒரு பட்டண
மும் தப்பிப்போவதில்லை; பள்ளத்தாக்குகளும்
கெட்டுப்போகும்; சமனான பூமியும் அழிக்கப்ப
௯ டும் என்று கர்த்தர் சொன்னார்.—மோவாபுக்குச்
செட்டைகளைக் கொடுங்கள்; ஏனெனில், அது
பறந்துபோகும்; அதின் பட்டணங்களோ குடி
௰ கள் இல்லாதபடியாய்ப் பாழாகும்.—கர்த்தரு
டைய கிரியையை வஞ்சனையாய்ச் செய்கிறவன்
சபிக்கப்பட்டவன்; இரத்தத்தைச் சிந்தாதபடிக்
குத் தன் பட்டையத்தை அடக்கிக்கொள்ளுகிற
வன் சபிக்கப்பட்டவன்.

௰௧ மோவாபு தன் சிறுவயதுதுவக்கிச் சாங்கோ
பாங்கத்தோடிருந்து, தன் வண்டல்களின்மேல்
அசையாமல் நின்று, ஒரு பாத்திரத்திலிருந்து வே
றொரு பாத்திரத்தில் இறக்கிக்கொள்ளப்படாம
லும் சிறையிருப்பில் போகாமலும் இருந்தது;
ஆனதுகொண்டு அதின் உருசி அதில் நிலைத்தது;
அதின் வாசனை வேறுபட்டுப்போனதில்லை.—
௰௨ ஆகையால், இதோ, நாள்கள் வருமென்று கர்த்தர்
சொல்லுகிறார்; அப்போது இறக்குகிறவர்களை
அதற்கு அனுப்புவோம்; அவர்கள் அதை இறக்கி,
அதின் பாத்திரங்களை வெறுமையாக்கி, அதின்
௰௩ சாடிகளை உடைப்பார்கள்.—அப்போது இஸ்ர
வேலின் வீட்டார் தங்கள் நம்பிக்கையான [1]பெத்
தேலாலே வெட்கப்பட்டதுபோலே, மோவாப்
காமோசாலே வெட்கப்படும்.

௰௪ நாங்கள் பராக்கிரமசாலிகளென்றும் நாங்கள்
யுத்தத்துக்கான பலத்த மனுஷரென்றும் நீங்கள்
௰௫ சொல்லுகிறதெப்படி? —மோவாப் தன் பட்ட
ணங்களுக்கு ஏறிப்போகுமளவில் பாழ்க்கடிக்க
ப்படும்; தெரிந்துகொள்ளப்பட்ட அதினுடைய
வாலிபர் கொலைக்களத்துக்கு இறங்குகிறார்கள்
என்கிறதைச் சேனைகளுடைய கர்த்தரென்ற நா
௰௬ மமுள்ள இராசா சொல்லுகிறார்.—மோவாபின்
ஆபத்துவரச் சமீபமாயிருக்கிறது; அதின் தீங்கு
௰௭ மிகவும் தீவிரித்துக்கொள்ளுகிறது.—அதின் சுற்
றுப்புறத்தாரும் அதின்பேரை அறிந்தவர்களுமா
கிய நீங்கள் எல்லாரும் அதற்காக அங்கலாய்த்துக்
கொள்ளுங்கள்; பெலனான மிலாறும் அலங்கார
மான தடியும் எப்படி உடைந்ததென்று சொல்
௰௮ லுங்கள்.—தீபோனின் குடியாகிய குமாரத்தியே,
நீ மகிமையை விட்டிறங்கி, தவனத்தோடே
உளுக்காரு; ஏனெனில் மோவாபைப் பாழ்க்கடி
க்கிறவன் உனக்கு விரோதமாய் வந்தேறி, உன்
௰௯ அரண்களை அழித்துப்போடுவான்.—ஆரோவே
ரில் குடியிருக்கிறவளே, நீ வழியிலேநின்று, கண்
ணோக்கிக்கொண்டிரு; நடந்ததென்னவென்று
ஓடிவருகிறவனையும் தப்பிவந்தவனையும் கேள்.

௨௰ மோவாப் முறியடிக்கப்பட்டபடியினாலே
வெட்கப்பட்டது; அலறிக் கூப்பிடுங்கள்; மோ
வாபு பாழ்க்கடிக்கப்பட்டதென்று [2]அர்னோ
௨௧ னில் அறிவியுங்கள்.—சமனான பூமியாகிய ஓலோ
னின்மேலும், யாத்சாவின்மேலும், மேப்காத்
தின்மேலும்,—தீபோனின்மேலும், நேபோவின் ௨௨
மேலும், பெத்திப்லாத்தாயிமின்மேலும்,—கீரியத் ௨௩
தாயிமின்மேலும், பேத்கமுலின்மேலும், பெத்
மேயோனின்மேலும்,—கேரியோத்தின்மேலும், ௨௪
பாத்ஸராவின்மேலும், மோவாப் தேசத்திலே
தூரத்திலும் சமீபத்திலும் இருக்கிற எல்லாப்பட்
டணங்களின்மேலும் நியாயத்தீர்ப்பு வரும்.—
மோவாபின் கொம்பு வெட்டுண்டது; அவன் ௨௫
புயம் உடைக்கப்பட்டதென்று கர்த்தர் சொல்
லுகிறார்.

அவனை வெறியாக்குங்கள்; ஏனெனில், கர்த்த ௨௬
ருக்கு விரோதமாய்ப் பெருமையானான்; அப்படி
யே மோவாபு தான் வாந்திபண்ணுகையில் தன்
னை அடித்துக்கொண்டு, தானும் பரியாசமாவா
ன்.—ஏனெனில், இஸ்ரவேல் உனக்குப் பரியாச ௨௭
மாயிருந்ததல்லவோ? அவன் திருடருக்குள் கண்
டுபிடிக்கப்பட்டானோ? நீ அவனைக்குறித்துப்
பேசுகிறபோதெல்லாம், தலையைத் துலுக்குகிறா
யே.—மோவாபுடைய தேசத்தின் குடிகளே, நீங் ௨௮
கள் பட்டணங்களை விட்டுப்போய், கல்மலை
யில் தங்கி, குகையுடைய வாயின் ஓரங்களில்
கூடுகட்டுகிற புறாவுக்கு ஒப்பாகுங்கள்.

மெத்தப் பெருமையாயிருக்கிற மோவாபின் ௨௯
பெருமையையும், அதின் மேட்டிமையையும், அ
தின் அகந்தையையும், அதின் பெத்தரிக்கத்தை
யும், அதினுடைய இருதயத்தின் உயர்த்தலையும்
கேட்டோம்.—அதின் மூர்க்கத்தை நாம் அறி ௩௰
வோமென்று கர்த்தர் சொல்லுகிறார்; ஆனால் அப்
படியாகாது; அதின் வீம்பு அதை அப்படி நடப்
பிப்பதில்லை என்கிறார்.

ஆகையால் மோவாபின்நிமித்தம் நான் அலறி, ௩௧
மோவாபுடைய தேசம் அனைத்தின்நிமித்தமும்
கூக்குரலிடுவேன், கீராரேசுடைய மனுஷரின்நி
மித்தம் பெருமூச்சு விடப்படும்.—சிப்மாவூரின் ௩௨
திராட்சப்பயிரே, யாசேரின்மேல் அழப்பட்ட
துபோல உன்மேல் அழுவேன்; உன் கொடிகள்
கடலைக்கடந்துபோயின; அவைகள் யாசேரு
டைய கடல்மட்டும் வந்துசேர்ந்தன; பாழ்க்
கடிக்கிறவன் உன் விளைச்சலின்மேலும் உன்
திராட்சப்பழ அறுப்பின்மேலும் விழுந்தான்.—
[3]சந்தோஷமும் களிப்பும் பயிர்வெளியிலும் மோ ௩௩
வாபு தேசத்திலுமிருந்து வாங்கிப்போயிற்று;
ஆலைகளில் திராட்சப்பழ இரசத்தின் பொழிதலை
ஓயப்பண்ணினேன்; ஆலையை மிதிக்கிற கொக்
கரிப்பு இல்லை; கொக்கரிப்பு இனி கொக்கரிப்பு
அல்ல.—எஸ்போனைத்துவக்கி எலேயாலேமட் ௩௪
டாகவும் யாகாஸ்மட்டாகவும் உண்டாகும் கூப்
பிடுதலைத்தொட்டு அவர்கள் மூன்று வயதுக்கிடா
ரியைப்போலே, சோவாரைத்துவக்கி ஓரோனா
யீம்மட்டாகவும் தங்கள் சத்தத்தைக் காட்டுவார்
கள்; ஏனெனில், நீம்ரீமின் நீர்ப்பாய்ச்சல்க
ளும் பாழ்த்துப்போய்க் கிடக்கும்.

1 ௧ இரா. ௰௨. ௨௯, ௩௰.—2 ௪ மோ. ௨௧. ௰௩.

3 ஏசா. ௰௬. ௰.

௩௫ மோவாபு தேசத்திலே மேடைகளில் பலியிடு
கிறவனையும் தன் தேவர்களுக்குத் தூபங்காட்டு
கிறவனையும் ஓயப்பண்ணுவோமென்று கர்த்தர்
௩௬ சொல்லுகிறார்.—ஆகையால் மோவாபின்நிமித்
தம் [1]என் இருதயம் நாகசுரங்களைப்போல துயர
மாய்த் தொனிக்கும்; கீராரேசின் மனுஷரின்
நிமித்தமும் என் இருதயம் நாகசுரங்களைப்போ
லே துயரமாய்த் தொனிக்கும்; அவர்கள் மீதியாக
வைத்துவைத்தது அழிந்துபோகிறபடியினாலே
௩௭ தானே.—ஏனெனில், தலைகள் எல்லாம் மொட்
டையிட்டும் தாடிகள் எல்லாம் கத்திரித்தும் இ
ருக்கும்; கைகளில் எல்லாம் கீறுதல்களும் அரை
௩௮ களில் இரட்டுடுப்பும் உண்டு.—மோவாபுடைய
சகல வீடுகளின்மேலும் அதினுடைய தெருக்க
ளிலேயும் ஏகப்புலம்பல் உண்டாம்; ஏனெ
னில், விருப்பமில்லாத பாண்டத்தைப்போலே
மோவாபை உடைத்துப்போட்டோமென்று
௩௯ கர்த்தர் சொல்லுகிறார்.—எத்தனையாய் முறிந்து
போயிற்றென்று அலறுகிறார்கள்; மோவாபு எத்
தனையாய் முதுகைக்காட்டி வெட்கப்படும்? இப்
படி மோவாபு தன் சுற்றுப்புறத்தார் அனைவருக்
கும் பரியாசமும் திகைப்புமாயிருக்கும்.

௪0 ஏனெனில், இதோ, [2]கழுகைப்போலே பறந்
துவந்து, மோவாபின்மேல் தன் செட்டைகளை
௪௧ விரிப்பான். — பட்டணங்கள் வாங்கப்படும்;
கோட்டைகள் பிடிக்கப்படும்; அந்நாளிலே
மோவாபுடைய பராக்கிரமசாலிகளின் இருதயம்
வாதைப்படுகிற ஸ்திரியின் இருதயத்தைப்போல
௪௨ இருக்கும்.—மோவாபு சனமாயிராதபடிக்கு அழி
க்கப்படும்; ஏனெனில், கர்த்தருக்கு விரோதமா
௪௩ கப் பெருமையாய்ப்போயிற்று.—மோவாபுடைய
தேசத்தின் குடியே, [3]திகிலும், படுகுழியும், கண்
ணியும் உன்மேல் வருமென்று கர்த்தர் சொல்லு
௪௪ கிறார்.—திகிலை விலக ஓடுகிறவன் படுகுழியி
லே விழுவான்; படுகுழியிலிருந்து ஏறுகிறவ
னே கண்ணியிலே பிடிபடுவான்; ஏனெனில்,
அவர்கள் விசாரிக்கப்படும் வருஷத்தை அதின்
மேலே, அதாவது, மோவாபின்மேலேதானே
வரப்பண்ணுவோமென்று கர்த்தர் சொல்லுகி
௪௫ றார்.-வல்லமைக்குத் தப்ப ஓடிப்போகிறவர்கள்
எஸ்போனின் நிழலில் தரித்துக்கொள்ளுகிறார்
கள்; ஆனால் [4]நெருப்பு எஸ்போனிலும், அக்
கினிச்சுவாலை சீகோனுடைய ஊரின் நடுவிலு
மிருந்து புறப்பட்டு, மோவாபுதேசத்தின் மூலை
களையும், அமளிக்காரரின் உயர்ந்த தலையையும்
பட்சிக்கும்.

௪௬ மோவாபே, உனக்கு ஐயோ! காமோஷ் விக்கி
ரகத்தின் சனம் அழியும்; ஏனெனில், உன் குமா
ரரும் சிறைபிடிக்கப்பட்டு, உன் குமாரத்திகளும்
௪௭ சிறைபிடிக்கப்பட்டுப் போகிறார்கள்.—ஆனால்
[5]கடைசிநாட்களில் மோவாபின் சிறையிருப்
பைத் திருப்புவோமென்று கர்த்தர் சொல்லுகி
றார்; மோவாபின்மேல் வரும் நியாயத்தீர்ப்பின்
செய்தி இந்தமட்டும் சரி.

## சகூ. அதிகாரம்.

க. அம்மோன் புத்திரருக்கு வரும் நியாயத்தீர்ப்பும், கூ அவர்கள் முந்தின சீருக்கு வருவதும், எ. ஏதோமுக்கும், உக. தமஸ்குவுக்கும், உஅ. கேதாருக்கும், கூ0. காசோருக்கும், ௩௪. ஏலாமுக்கும் வரும் நியாயத்தீர்ப்பும், ௩௯. ஏலாம் முந்தின சீருக்கு வருவதும்.

அம்மோன் புத்திரருக்குச் செல்வது; [6]கர்த்தர் க
சொல்லுகிறதாவது: இஸ்ரவேலுக்குப் பிள்ளை
கள் இல்லையோ? அவனுக்குச் சுதந்தரவாளி இல்
லையோ? மல்காம் காத்தேசத்தைச் சுதந்தரித்துக்
கொண்டு, அதின் சனம் இவன் பட்டணங்களில்
குடியிருப்பானேன்?—ஆகையால், இதோ, நாள் உ
கள் வருமென்று கர்த்தர் சொல்லுகிறார்; அப்
போது அம்மோன் புத்திரரின் பட்டணமாகிய
ரபாவிலே யுத்தத்தின் ஆர்ப்பரிப்பைக் கேட்கப்
பண்ணுவோம்; அது பாழான மண்மேடாகும்;
அதற்கடுத்த ஊர்களும் அக்கினியால் சுட்டெ
ரிக்கப்படும்; ஆனால் இஸ்ரவேல் தன் தேசத்தைச்
சுதந்தரித்துக்கொண்டவர்களின் தேசத்தைச் சுத
ந்தரித்துக்கொள்ளும் என்று கர்த்தர் சொல்லுகி
றார்.—எஸ்போனே, அலறு; ஏனென்றால் ஆயி ௩
பாழ்க்கடிக்கப்பட்டது; ரபாவின் குமாரத்திக
ளே, கூப்பிடுங்கள்; இரட்டை உடுத்திக்கொண்
டு, புலம்பி, வேலிகளில் சுற்றித்திரியுங்கள்; ஏனெ
னில், மல்காம் [7]சிறையிருப்பிலே போகிறது; அ
தின் ஆசாரியர்களும் அதின் பிரபுக்களுங்கூடத்
தானே.

எனக்கு விரோதமாய் வருபவன் யாவனென்று ௪
சொல்லி, உன் பொக்கிஷங்களை நம்பின மாறு
பாடான குமாரத்தியே, நீ பள்ளத்தாக்குகளைப்
பற்றிப் பெருமைபாராட்டுவானேன்? உன்னு
டைய பள்ளத்தாக்கு கரைந்துபோகிறது. — இ ௫
தோ, உன் சுற்றுப்புறத்தாராலே எல்லாம் உன்
மேல் திகிலை வரப்பண்ணுவோம் என்று சேனை
களின் கர்த்தராகிய ஆண்டவர் சொல்லுகிறார்;
நீங்கள் அவரவர் தம்தம் முன் இருக்கும் வழியே
ஓடத் துரத்தப்படுவீர்கள்; வலசைவருகிறவர்க
ளைச்சேர்ப்பாருமில்லை.—[8]அதற்குப் பிற்பாடோ ௬
வென்றால் அம்மோன் புத்திரருடைய சிறையி
ருப்பைத் திருப்புவோமென்று கர்த்தர் சொல்லு
கிறார்.

[9]ஏதோமுக்குச் செல்வது; சேனைகளுடைய எ
கர்த்தர் சொல்லுகிறதாவது: தேமானிலே இனி
ஞானமில்லையோ? ஆலோசனை உணர்வுள்ளவர்க
ளைவிட்டு அழிந்ததோ? அவர்களுடைய ஞானம்
கெட்டுப்போயிற்றோ?—தேதானின் குடிகளே, ஓ அ
டுங்கள்; முதுகைக் காட்டுங்கள்; தங்குகிறதற்காக
ஆழங்களில் பதுங்குங்கள்; ஏனெனில், ஏசாவின்
ஆபத்தையும் அவனை விசாரிக்குங்காலத்தையும்
அவன்மேலே வரப்பண்ணுவோம்.—திராட்சப் ௯
பழங்களை அறுக்கிறவர்கள் உன்னிடத்திலே வந்
தார்களாகில், பின்னறுப்பைக்கொஞ்சம்வையார்

1 ஏசா. ௰௬. ௰௧.—2 எரே. சகூ. உஉ. 4 ௪ மோ. உ௧. உஅ, உ௯.
3 ஏசா. உ௪. ௰எ, ௰அ. 5 எரே. சகூ. ௬௯.

6 எசே. உ௫. க-எ.—7 எரே. சஅ. எ. ௰உ-௰௪. ௬௫. க. ழ. ஓப. க.
8 எரே. சஅ. சஎ.—9 எசே. உ௫. ௰௪. ழ.

களோ? இராத்திரியில் திருடர் வந்தார்களாகில்,
தங்களுக்குப் போதுமென்றமட்டாக அல்லவோ
கேடுசெய்வார்கள்.
௰ நாமோவெனில் ஏசாவைத் திறப்பாக்கி, அவன்
ஒளித்துக்கொள்ளக்கூடாதபடிக்கு அவனுடை
ய மறைவுகளை வெளியாக்கிப்போடுவோம்; அ
வனுடைய வித்தாயிருக்கிறவர்களும் அவனு
டைய சகோதரரும் அவனுடைய அயலாரும்
பாழ்க்கடிக்கப்படுவார்கள்; அவன் இனி இல்
௰௧ லை.–திக்கற்றிருக்கப்போகிற உன் பிள்ளைகளைத்
தளரவிடு, நாம் அவைகளை உயிரோடே காப்
பாற்றுவோம்; உன் விதவைகள் நம்மையே நம்பு
வார்களாக.
௰௨ ஏனெனில்,கர்த்தர் சொல்லுகிறதாவது: இதோ,
[1]பாத்திரத்தில் குடிக்கவேண்டுமென்ற நியாயத்
தீர்ப்புக்கு உள்ளாயிராதவர்கள் அதில் குடிக்கவே
குடித்தார்கள்; நீ குற்றமற்று நீங்கலாயிருப்பவ
னோ? நீ நீங்கலாயிராமல் அதில் குடிக்கவே குடி
௰௩ ப்பாய்.–ஏனெனில், [2]பொத்ஸரா பாழும் நிந்தை
யும் அவாந்தரமும் பழிப்புமாக இருக்குமென்
றும், அதின் பட்டணங்கள் எல்லாம் நித்தியவனா
ந்தரங்களாயிருக்குமென்றும் நம்மைக்கொண்டு
ஆணையிட்டோமென்று கர்த்தர் சொல்லுகிறார்.
௰௪ [3]நீங்கள் கூடிக்கொண்டு, அதற்கு விரோதமாக
வந்து, யுத்தம்பண்ணுகிறதற்கு எழும்புங்களென்
று சொல்ல, சாதிகளண்டைக்குத் தானாபத்தியம்
அனுப்பப்படுகிற செய்தியைக் கர்த்தரிடத்திலே
௰௫ கேள்விப்பட்டேன்.—ஏனெனில், இதோ, உன்
னைச் சாதிகளுக்குள்ளே சிறியதும், மனுஷருக்
குள்ளே அசட்டைபண்ணப்பட்டதுமாக்குகி
௰௬ றேம் எனகிறார்.—கல்மலை வெடிப்புகளில் வா
சம்பண்ணி,மேடுகளின் உயரத்தைப் பிடித்திருக்
கிற உன்னை உன்னுடைய பயங்கரநிலையும் உன்
இருதயத்தின் அகந்தையும் மோசம்போக்கிற்று;
[4]நீ கழுகைப்போலே உயரத்தில் உன் கூட்டைக்
கட்டினாலும் அங்கேயிருந்து உன்னை விழப்பண்
ணுவோமென்று கர்த்தர் சொல்லுகிறார்.
௰௭ அப்படியே ஏதோம் கெடியாக இருக்கும்;
[5]அதைக் கடந்துபோகிறவன் எல்லாம் அதினு
டைய எல்லா வாதைகளின்நிமித்தமும்பிரமித்து
௰௮ ஈசல்போடுவான்.— [6]சோதோமும் கொமோரா
வும் அவைகளின் அயல்ஊர்களும் கவிழ்க்கப்
பட்டதற்குச் சமானமாயிருக்கும் என்று கர்த்தர்
சொல்லுகிறார்; அங்கே ஒருவனும் குடியிருப்ப
தில்லை, அதில் ஒரு மனுஷன் தங்குவதுமில்லை.-
௰௯ [7]இதோ,புரண்டுஓடுகிற யோர்தானிடத்திலிருந்து
சிங்கத்தைப்போலே பலவானுடைய தாபரத்துக்
கு விரோதமாக வருகிறான்; ஏனென்றால் அவனை
அங்கேயிருந்து அசுப்பிலே ஓடிவரப்பண்ணு
வோம்; நாம்அதற்கு விரோதமாகக் கட்டளையிட்
டு அனுப்பத் தெரிந்துகொள்ளப்பட்டவன் யா
வன்? ஏனெனில், நமக்குச் சமானமானவன் யா
வன்? நமக்குத் திட்டஞ்சொல்லுபவன் யாவன்?
நமக்குமுன்பாக நிலைநிற்கப்போகிற மேய்ப்பன்
யாவன்?
ஆகையால் கர்த்தர் ஏதோமுக்கு விரோதமாக ௨௰
யோசித்த ஆலோசனையையும், அவர் தேமானின்
குடிகளுக்கு விரோதமாக நினைத்திருக்கிற நினை
வுகளையும் கேளுங்கள்; மெய்யாகவே மந்தையில்
சிறியவர்கள் அவர்களைப் பிடித்திழுப்பார்கள்;
மெய்யாகவே அவர்கள் இருக்கிற அவர்களுடை
ய தாபரங்களைப் பாழாக்குவார்.— அவைகளு ௨௧
டைய விழுதலின் சத்தத்தினாலே பூமி அதிரும்
கூப்பிடுதலின் சத்தம் நாணற்கடல்மட்டும் கேட்
கப்படும்.—இதோ, ஒரு கழுகைப்போல எழும் ௨௨
பி, பறந்துவந்து, தன் செட்டைகளைப் பொத்ஸ
ராவின்மேல் விரிப்பான்; அந்நாளிலே ஏதோமு
டைய பராக்கிரமசாலிகளின் இருதயம்[8]வாதைப்
படுகிற ஸ்திரியின் இருதயத்தைப்போல இருக்கு
மென்கிறார்.
[9]தமஸ்குவுக்குச் செல்வது; காமாத்தும் அர்ப்பா ௨௩
த்தும் வெட்கப்படுகின்றன; பொல்லாத செய்தி
யை அவர்கள் கேட்டபடியினாலே கரைந்துபோ
கிறார்கள்; சமுத்திரத்தோரமாய் விசாரமுண்டு;
அது அமர்ந்திருக்கக்கூடாது.—தமஸ்கு தளரும்; ௨௪
ஓடிப்போகும்படிக்கு முதுகைக்காட்டும்; திகில்
அதைப் பிடித்தது; பிள்ளைப்பெறுகிறவளைப்போ
ல இடுக்கமும் வேதனைகளும்அதைப்பிடித்தன.-
என்னுடைய சந்தோஷமான ஊராகிய அந்தப் ௨௫
புகழ்ச்சியுள்ள பட்டணம் தப்பவிடப்படாதே
போனதெப்படி?
ஆனதுகொண்டு அதின் வாலிபர் அதின் வீதி ௨௬
களில் விழுந்து, யுத்தமனுஷர் எல்லாரும் அந்
நாளிலே சங்காரமாவார்களென்று சேனைகளு
டைய கர்த்தர் சொல்லுகிறார்.
தமஸ்குவின் மதில்களில் அக்கினியைக் கொ ௨௭
ளுத்துவோம்; அது பென்ஆதாத்தின் அரமனை
களைப் பட்சிக்கும் என்கிறார்.
பாபேலின் இராசாவாகிய நேபுகாத்நேச்சார் ௨௮
முறியடித்த கேதாருக்கும் காத்சோருடைய இ
ராச்சியங்களுக்கும் செல்வது; கர்த்தர் சொல்லு
கிறதாவது: எழும்பி, கேதாருக்கு விரோதமாகப்
போயேறி, கிழக்குத்திசைப் புத்திரரைப் பாழ்க்
கடியுங்கள்.—அவர்களுடைய கூடாரங்களையும் ௨௯
அவர்கள் மந்தைகளையும் வாங்கி,அவர்கள் திரை
களையும் அவர்களுடைய எல்லாத் தட்டுமுட்டுக
ளையும் அவர்களுடைய ஒட்டகங்களையும் தங்க
ளுக்கென்று கொண்டுபோய், பயஞ்சூழ்ந்திருக்
குமென்று சொல்லி, அவர்கள்மேலே ஆர்ப்பரிப்
பார்கள்.—காத்சோரின் குடிகளே, ஓடி, மிகவும் ௩௰
அலையுங்கள்; தங்கும்படிக்கு ஆழங்களில் பதுங்
குங்களென்று கர்த்தர் சொல்லுகிறார்; ஏனெ
னில், பாபேலின் இராசாவாகிய நேபுகாத்நேச்
சார் உங்களுக்கு விரோதமாக ஆலோசனையை
யோசித்து, உங்களுக்கு விரோதமாக நினைவுக
ளை நினைத்திருக்கிறான்.

1 எரே. ௨௫. ௨௯. ௧ பே. ௪. ௰௭. 3 ஒப. ௧. ௰௪.—4 ஒப. ௪. ௰௪.
2 ஏசா. ௩௪. ௯ : ௧௦. ௧. ஏசே. ௩௫. ௯. 5 எரே. ௫௰. ௰௩.
6 எரே. ௫௰. ௪௰. ௧ மோ. ௰௯. ௨௫. 8 எரே. ௫௰. ௪௩.—9 ஏசா. ௰௭. ௧.
7 எரே. ௫௰. ௪௪-௪௬. ஆமோ. ௧. ௩-௫.

௩௰௧ அஞ்சாமல் சாங்கோபாங்கத்தோடே குடியி
ருக்கிற சாதிக்கு விரோதமாக எழும்பிப் போயே
றுங்களென்று கர்த்தர் சொல்லுகிறார்; அதற்கு வா
சல்களுமில்லை; தாழ்ப்பாள்களுமில்லை; அவாந்த
௩௰௨ ரமாய்த் தங்கிக்கொண்டிருக்கிறார்கள். — அவர்
களுடைய ஒட்டகங்கள் கொள்ளையும், அவர்க
ளுடைய ஆடுமாடுகளின் ஏராளம் சூறையுமாய்ப்
போகும்; நாம் அவர்களைச் சகல காற்றுத்திசைக
ளுமான கடையாந்தரமூலைகளில் இருக்கிறவர்க
ளண்டைக்குச்சிதறவடித்துவிட்டு, அதினுடைய
சகல புறங்களிலுமிருந்து அவர்களுடைய ஆபத்
தை வரப்பண்ணுவோமென்று கர்த்தர் சொல்லு
௩௰௩ கிறார். — காத்சோர் வலுவான சர்ப்பங்களின்
தாபரமாகி, என்றென்றைக்கும் பாழாய்க்கிடக்
கும்; ஒருவனும் அங்கே குடியிருப்பதில்லை, ஒரு
மனுப்புத்திரனும் அதிலே தங்குவதுமில்லை
யென்கிறார்.
௩௰௪ யூதாவின் இராசாவாகிய சிதேக்கியாவினு
டைய இராச்சியபாரத்தின் துவக்கத்திலே, ஏலா
முக்கு விரோதமாக எரேமியாவென்ற தீர்க்கதரி
சிக்கு உண்டான கர்த்தருடைய வசனம்.
௩௰௫ சேனைகளுடைய கர்த்தர் சொல்லுகிறதாவது:
இதோ, நாம் ஏலாமுடைய வில்லென்கிற அவர்
களுடைய பிரதான வல்லமையை முறித்துப்
௩௰௬ போட்டு,—வானத்தின் நாலு திசைகளிலுமிருந்
து நாலு காற்றுகளை ஏலாமின்மேல் வரப்பண்ணி,
அவர்களை இந்த எல்லாக் காற்றுத்திசைகளிலும்
சிதறவடிப்போம்; ஏலாமுடைய தேசத்திலிருந்து
துரத்துண்டவர்கள் வராதிருக்கும் சாதியில்லை.—
௩௰௭ நாம் ஏலாமியரை அவர்கள் சத்துருக்களுக்கு
முன்பாகவும் அவர்கள் பிராணனை வாங்கத்தே
டுகிறவர்களுக்குமுன்பாகவும் கலங்கப்பண்ணி,
நமது கோபத்தின் உக்கிரமாகிய தீங்கை அவர்
கள்மேல் வரப்பண்ணுவோமென்று கர்த்தர்
சொல்லுகிறார்; நாம் அவர்களை நிர்மூலமாக்கு
மட்டும் பட்டையத்தைஅவர்களுக்குப் பின்னாக
௩௰௮ அனுப்பி,—நம்முடைய ஆசனத்தை ஏலாமிலே
வைத்து, அங்கேயிருந்து இராசாவையும் பிரபுக்
களையும் அழித்துப்போடுவோமென்று கர்த்தர்
௩௰௯ சொல்லுகிறார். — ஆனால் [1]கடைசிநாள்களிலே
நாம் ஏலாமின் சிறையிருப்பைத் திருப்புவதுண்
டென்று கர்த்தர் சொல்லுகிறார்.

## ௫௰. அதிகாரம்.

௧. ௯. ௨௧. ௩௫ பாபேலின் நியாயத்தீர்ப்பும், ௪. ௩௩. ௩௩. இஸ்ரவேலின் மீட்பும் சொல்லப்பட்டது.

௧ கர்த்தர் தீர்க்கதரிசியாகிய எரேமியாவைக்கொ
ண்டு [2]பாபேலுக்கும் கல்தேயர் தேசத்துக்கும்
விரோதமாக உரைத்த வசனமாவது:
௨ பாபேல் பிடிபட்டது. பேல் வெட்கப்பட்
டது; மேரோதாக் கலங்கிப்போயிற்று; அவர்களு
டைய விக்கிரகங்கள் வெட்கப்பட்டன; அவர்
களுடையநரகலான தேவர்கள்கலங்கிப்போனார்
களென்று சாதிகளுக்குள்ளே அறிவித்துக்கேட்
கப்பண்ணுங்கள்; அதை மறைக்காமல் கொடி
யேற்றிக் கேட்கப்பண்ணுங்கள்.—ஏனென்றால், ௩
அதற்கு விரோதமாய் வடக்கேயிருந்து ஒரு சாதி
போயேறுகிறது; இது அதின் தேசத்தைப் பாழாக்
கிப்போடும், அதிலே குடியிருப்பாரில்லை; மனு
ஷரோடே மிருகங்களும் ஓடிப்போய்விடும்.
அந்நாள்களிலும் அக்காலத்திலும் இஸ்ரவேல் ௪
புத்திரர் வருவார்கள்; அவர்களும் யூதாப்புத்திர
ரும் ஏகமாய் [3]அழுது, நடந்துவந்து, தங்கள் பரா
பரனாகிய கர்த்தரைத் தேடுவார்களென்று கர்த்தர்
சொல்லுகிறார்.—மறக்கப்படாத நித்திய உடம்படி ௫
க்கையாய்க் கர்த்தரைச் சேர்ந்துகொள்ளுவோம்,
வாருங்களென்று இவ்விடத்துக்கு முகங்களைத்
திருப்பினவர்களாக இருந்து, சீயோனுக்குப்போ
கிறவழி ஏதென்று விசாரித்துக் கேட்பார்கள்.
நமது சனம் காணாமற்போன ஆடுகளானவர் ௬
கள்; அவர்களுடைய மேய்ப்பர் அவர்களைச் சித
றப்பண்ணி, பர்வதங்களில் அலையத் திருப்பிவி
ட்டார்கள்; ஒரு பர்வதத்திலிருந்து மற்ற மேட்டி
ன்மேற் போனார்கள்; தங்கள் தொழுவத்தை மறந்
துவிட்டார்கள்.—அவர்களைக் கண்டுபிடித்தவர் ௭
கள் எல்லாரும் அவர்களைப் பட்சித்து, அவர்களு
டைய சத்துருக்கள்: எங்கள்மேல் குற்றமில்லை;
ஏனெனில், அவர்கள் நீதியின் வாசஸ்தலத்திலே
கர்த்தருக்கு விரோதமாய், தங்கள் பிதாக்கள் நம்
பின கர்த்தருக்கு விரோதமாய்த்தானே பாவம்
செய்தார்களென்றார்கள்.
[4]பாபேலின் நடுவிலிருந்தோடி, கல்தேயர்தே ௮
சத்தைவிட்டுப் புறப்பட்டு, மந்தையின் முன்
நடக்கும் கடாக்களைப்போல இருங்கள்.—ஏனெ ௯
னில், இதோ, நாம் பாபேலுக்கு விரோதமாக
வடதேசத்தில் இருக்கும் பெரிய சாதிகளின்
கூட்டத்தை எழுப்பி, அதைப் போயேறப்பண்
ணுவோம்; அவர்கள் அதற்கு விரோதமாய் ஆயத்
தம்பண்ணுவார்கள்; அங்கேயிருந்து வருகிற
வர்களால் அது பிடிக்கப்படும்; அவர்களுடைய
அம்புகள் உணர்வுள்ள பராக்கிரமசாலியின் அம்
புகளைப்போல இருக்கின்றன; அவைகள் பழு
தாய்த் திரும்புவதில்லை.—கல்தேயா கொள்ளை ௰
யாம், அதைக் கொள்ளையிடுகிறவர்கள் எல்லாரு
ம் பரிபூரணமடைவார்களென்று கர்த்தர் சொல்
லுகிறார்.
அதேனென்றால் நமது சுதந்தரத்தைக் கொள் ௰௧
ளையிட்ட நீங்கள் சந்தோஷித்தீர்களே, களிகூர்ந்
தீர்களே, புல்மேய்ந்து கொழுத்திருக்கும் கன்
றுக்குட்டியைப்போலப் பூரித்து, வலுவான புர
விகளைப்போலக் கனைப்பீர்களே.—உங்கள் தாய் ௰௨
மிகவும் வெட்கி, உங்களைப் பெற்றவள் நாணம
டைகிறாள்; இதோ, அவள் சாதிகளுக்குள்ளே
கடைசியானவளும் வனாந்தரமும் வறட்சியும்
அந்தரவெளியுமாவாள்.—கர்த்தரின் கடுமையினா ௰௩
லே அது [5]குடியற்றதும் முழுதும் பாழுமாயிருக்
கும்; பாபேலைக் கடந்துபோகிறவன் எல்லாம்

1 எரே. ௪௮. ௪௭.—2 எரே. ௫௧. ௧. ஏசா. ௰௩. ௧. ௨௧ : ௧௪ ௧.

3 எரே. ௩௧. ௯.—4 எரே. ௫௧. ௬, ௪௫.—5 எரே. ௨௫. ௰௨.

அதினுடைய எல்லா வாதைகளினிமித்தமும்
பிரமித்து, ஈசல்போடுவான்.
௰௪ வில்லை நாணேற்றுகிற நீங்கள் எல்லாரும் பா
பேலுக்கு விரோதமாகச் சுற்றிலும் பவுஞ்சிட்டு,
அதில் எய்யுங்கள்; அதின்மேல் அம்புகளை எய்
யுங்கள்; அம்புச்செலவைக் குறைக்காதேயுங்
கள்; ஏனெனில், கர்த்தருக்கு விரோதமாய்ப் பா
௰௫ வஞ்செய்தது.—அதற்கு விரோதமாகச் சுற்றிலும்
ஆர்ப்பரியுங்கள்; அது தன்னைக் கையளித்தது;
அதின் அஸ்திபாரங்கள் விழுந்தன, அதின் மதில்
கள் இடிக்கப்பட்டன; ஏனெனில், இது கர்த்தர்
நீதியைச் சரிக்கட்டுதலாயிருக்கிறது; அதற்கு நீதி
யைச் சரிக்கட்டுங்கள்; [1]அது செய்ததுபோலே
௰௬ நீங்கள் அதற்குச் செய்யுங்கள்.—விதைவிதைக்
கிறவனையும் அறுப்புக்காலத்தில் அரிவாளைப்
பிடிக்கிறவனையும் பாபேலில் இராதபடிக்குச்
சங்காரம்பண்ணுங்கள்; அழிக்கிற பட்டையத்
துக்குத் தப்ப [2]அவரவர் தங்கள் சனத்தண்டைக்
குத் திரும்பிக்கொண்டு, அவரவர் தங்கள் தேசத்
துக்கு ஓடிப்போவார்கள்.
௰௭ இஸ்ரவேல் சிங்கங்கள் துரத்திச் சிதறுண்ட
ஆடு; முதல் அசூரியாவின் இராசா அதைப் பட்
சித்தான்; இப்போது கடைசியிலே பாபேலின்
இராசாவாகிய நேபுகாத்நேச்சார் அதின் எலும்பு
௰௮ களை முறித்தான். — ஆகையால் இஸ்ரவேலின்
பராபரனாகிய சேனைகளுடைய கர்த்தர் சொல்லு
கிறதாவது: இதோ, நாம் அசூரியாவின் இராசா
வை விசாரித்ததுபோலே பாபேலின் இராசாவை
௰௯ யும் அவன் தேசத்தையும் விசாரித்து,—இஸ்ரவே
லை அதின் வாசஸ்தலத்துக்குத் திரும்பிவரப்பண்
ணுவோம்; அப்போது அது கர்மேலிலும் பாசா
னிலும் மேயும்; எப்பிராயீமின் மலைகளிலும்
கீலேயாத்திலும் அதின் ஆத்துமா திருத்தி அடை
௨௰ யும். — அந்நாள்களிலும் அக்காலத்திலும் இஸ்ர
வேலின் அக்கிரமம் தேடப்பட்டால் அது இல்லா
திருக்கும்; யூதாவின் பாவங்கள் தேடப்பட்டால்
அவைகள் கிடையாதிருக்கும்; ஏனென்றால் நாம்
மீதியாக வைக்கிறவர்களுக்கு மன்னிப்போமெ
ன்று கர்த்தர் சொல்லுகிறார்.
௨௧ கலகங்களுள்ள தேசத்துக்கு விரோதமாகவும்
விசாரிக்கப்படும் குடிகளுக்கு விரோதமாகவும்
போயேறு; நீ அவர்களைத் துரத்துகையில் யாவை
யும் பாழ்க்கடித்துச் சங்காரம்பண்ணி, நாம் உனக்
குக் கற்பித்தபடியெல்லாம் செய்யென்று கர்த்தர்
௨௨ சொல்லுகிறார். — தேசத்திலே யுத்தத்தின் சத்த
௨௩ மும் மகா நொறுக்குதலும் உண்டு.—[3]பூமி அனை
த்தின் சம்மட்டி எத்தனையாய் முறித்து உடைக்
கப்பட்டது! பாபேல், சாதிகளுக்குள்ளே எத்த
௨௪ னையாய்ப் பாழாயிற்று!—பாபேலே, உனக்குக்
கண்ணியை வைத்தோம், நீ அதை அறியாமல்
அதிலே சிக்குண்டும் போனாய்; நீ அகப்பட்டும்
பிடிபட்டும் போனாய், ஏனென்றால் கர்த்தரோ
டே யுத்தங்கலந்தாய்.

கர்த்தர் தம்முடைய ஆயுதசாலையைத் திறந்து, ௨௫
தம்முடைய சினத்தின் பணிமுட்டுகளை எடுத்து
வந்தார்; ஏனெனில், இது கல்தேயர் தேசத்திலே
சேனைகளின் கர்த்தராகிய ஆண்டவர் செய்கிற
கிரியை.—கடையாந்தரத்திலிருந்து அதற்கு வி ௨௬
ரோதமாக வந்து, அதின் களஞ்சியங்களைத் திறந்
து, அதைப் போர்களைப்போலே பரப்பி, அடித்
து, அதில் ஒன்றும் மீதியாகாதபடிக்கு அதைச்
சங்காரம்பண்ணுங்கள்.—அதின் காளையெருது ௨௭
களை எல்லாம் பட்டையத்தால் வெட்டுங்கள்; அ
வைகள் அடிக்கப்பட இறங்கிப்போகக்கடவன,
அவர்களுக்கு ஐயோ! ஏனெனில், அவர்கள் வி
சாரிக்கப்படும் அவர்களுடைய நாள் வந்தது.—
நம்முடைய பராபரன் நீதியைச் சரிக்கட்டின ௨௮
தையும், அவர் தமது தேவாலயத்துக்காக நீதி
யைச் சரிக்கட்டினதையும், சீயோனிலே அறி
விக்கும்படிக்கு, பாபேல்தேசத்திலிருந்து ஓடித்
தப்பிவந்தவர்களின் சத்தம் கேட்கப்படும்.
எய்கிற எல்லா வில்லுக்காரருமாகிய நீங்கள் ௨௯
பாபேலுக்கு விரோதமாகச் சத்தங்கேட்கப்பண்
ணுங்கள்; ஒருவரும் தப்பிப்போகாதபடிக்கு அ
தற்கு விரோதமாகச் சுற்றிலும்பாளயம் இறங்குங்
கள்; அதின் கிரியைக்குத்தக்க பலனை அதற்குச்
சரிக்கட்டுங்கள்; [4]அது செய்ததின்படியெல்லாம்
அதற்குச் செய்யுங்கள்; ஏனென்றால் கர்த்தருக்கு
விரோதமாக இடும்புசெய்தது; இஸ்ரவேலின் பரி
சுத்தருக்கு விரோதமாகத்தானே. — ஆகையால் ௩௰
அதின் வாலிபர் அதின் வீதிகளில் விழுவார்கள்;
அதின் யுத்தமனுஷர் எல்லாரும் அந்நாளிலே சங்
காரமாவார்களென்று கர்த்தர் சொல்லுகிறார்.
இதோ, இடும்புள்ளவனே, நாம் உனக்கு வி ௩௧
ரோதமாக வருகிறோமென்று சேனைகளின் கர்த்
தராகிய ஆண்டவர் சொல்லுகிறார்; ஏனெனில்,
உன்னை விசாரிக்கும் காலமாகிய உன்னுடைய
நாள் வந்தது.—இடும்புள்ளவன் இடறிவிழுவான்; ௩௨
அவனை எடுத்து நிறுத்துவாரில்லை; நாம் அவன்
பட்டணங்களில் அக்கினியைக் கொளுத்து
வோம், அது அவன் சுற்றுப்புறத்தாரை எல்லாம்
பட்சிக்கும்.
சேனைகளுடைய கர்த்தர் சொல்லுகிறதாவது: ௩௩
இஸ்ரவேல் புத்திரரும் யூதா புத்திரரும் ஏகமாய்
ஒடுங்குண்டார்கள்; அவர்களைச் சிறையாக்கின
யாவரும் அவர்களை விடமாட்டோமென்று கெட்
டியாய்ப் பிடித்தார்கள்.—அவர்களுடைய மீட் ௩௪
பரோவெனில் வல்லமையுள்ளவர்; சேனைகளு
டைய கர்த்தர் என்பது அவருடைய நாமம்; தே
சத்தை இளைப்பாறப்பண்ணுவதற்கும் பாபே
லின் குடிகளைத் தத்தளிக்கப்பண்ணுவதற்குமாக
அவர்களுடைய வழக்கை அவர் வழக்காடவே
வழக்காடுவார்.
பட்டையம் கல்தேயரின்மேலும், பாபேலு ௩௫
டைய குடிகளின்மேலும், அதினுடைய பிரபுக்
களின்மேலும், அதினுடைய ஞானிகளின்மே

1 வெளி. ௰௮. ௬.—2 ஏசா. ௰௩. ௰௪.

3 எரே. ௫௧. ௨௰.—4 சங். ௱௩௭. ௮.

௩௬ லும் வருமென்று கர்த்தர் சொல்லுகிறார்.—பட்
டையம் கட்டுக்கதைக்காரர்மேலும் வரும்; அவர்
கள் பயித்தியக்காரர்ஆவார்கள்; பட்டையம் அதி
னுடைய பராக்கிரமசாலிகள்மேல் வரும், அவர்
௩௭ கள் கலங்குவார்கள்.—பட்டையம் அதினுடைய
குதிரைகளின்மேலும், அதினுடைய இரதங்க
ளின்மேலும், அதின் நடுவில் இருக்கிற பலவித
சனக்கலப்பு அனைத்தின்மேலும் வரும்; அவர்
கள் பெண்சாதிகளாவார்கள்; பட்டையம் அதி
னுடைய பொக்கிஷங்களின்மேல் வரும், அவை
௩௮ கள் கொள்ளையாகும். — வறட்சி அதினுடைய
தண்ணீர்களின்மேல் வரும், அவைகள் வறண்டு
போம்; ஏனெனில், அது சுரூபங்களின் தேசம்;
அருக்களிப்பானவைகளின்மேலே பெருமைபா
௩௯ ராட்டுகிறார்கள். — ஆகையால் [1]வனாந்தரசீவன்
களும் ஓரிகளும் அதிலே குடியிருக்கும்; கோட்
டான்கள் அதிலே தங்கும்; இனி என்றென்றைக்
கும் அது குடியேற்றப்படுவதில்லை; தலைமுறை
தலைமுறையாக ஒருவரும் அதில் தாபரிப்பதுமி
௪௰ ல்லை.—[2]பராபரன் சோதோமையும் கொமோரா
வையும் அதின் அயலூர்களையும் கீழதுமேலதாக்
கிப்போட்டதுபோலே இருக்குமென்று கர்த்தர்
சொல்லுகிறார்;ஒருவரும் அதில் குடியிருப்பதில்
லை; ஒருமனுபுத்திரனும் அதில் தங்குவதுமில்லை.
௪௧ இதோ, [3]வடக்கேயிருந்து சனசதளமும் பெ
ரிய சாதியும் வரும்; பூமியின் பக்கங்களிலிருந்து
௪௨ பலத்த இராசாக்கள் எழும்புவார்கள்.—அவர்கள்
வில்லுகளையும் ஈட்டிகளையும் பிடித்துவருவார்
கள்; அவர்கள் இரங்காமல் கொடூரராயிருப்பார்
கள்; அவர்கள் சத்தம் சமுத்திரத்தைப்போல இ
ரையும்; பாபேல் குமாரத்தியே, அவர்கள் உனக்
கு விரோதமாக யுத்தத்துக்கு ஆயத்தப்பட்ட ஆள்
களாய்க் குதிரைகளின்மேல் ஏறிவருவார்கள்.—
௪௩ அவர்கள் வருகிற செய்தியைப் பாபேலின் இரா
சா கேட்கையில் அவன் கைகள் தளரும்; இடுக்
கமும் பிள்ளைப்பெறுகிறவளைப்போல வாதையும்
௪௪ அவனைப் பிடிக்கும்.—[4]இதோ புரண்டு ஓடுகிற
யோர்தானிலிருந்து சிங்கத்தைப்போலே பலவா
னுடைய தாபரத்துக்கு விரோதமாக வருகிறான்;
ஏனென்றால் அவனை அங்கேயிருந்து அசுப்பி
லே ஓடி வரப்பண்ணுவோம்; நாம் அதற்கு வி
ரோதமாகக் கட்டளையிட்டு, அனுப்பத் தெரிந்து
கொள்ளப்பட்டவன் யாவன்? ஏனெனில், நமக்
குச் சமானமானவன் யாவன்? நமக்குத் திட்டஞ்
சொல்பவன் யாவன்? நமக்குமுன்பாக நிற்கப்
போகிற மேய்ப்பன் யாவன்?
௪௫ ஆகையால் கர்த்தர் பாபேலுக்கு விரோதமாக
யோசித்த ஆலோசனையையும், அவர் கல்தேயர்
தேசத்துக்கு விரோதமாக நினைத்திருக்கிற நினை
வுகளையும் கேளுங்கள்; மெய்யாகவே மந்தையில்
சிறியவர்கள் அவர்களைப் பிடித்திழுப்பார்கள்;
மெய்யாகவே அவர்கள்மேல் இருக்கிற தாபரங்
௪௬ களைப் பாழாக்குவார்.—பாபேல் பிடிபட்டதின்
சத்தத்தினால் பூமி அதிரும், அதின் கூப்பிடுதல்
சாதிகளுக்குள்ளே கேட்கப்படும்.

## ௫௧. அதிகாரம்.

௧. இஸ்ரவேலைத் துன்பப்படுத்தினதினால் பழிவாங்கும்படி பராபரன் பாபேலுக்குச் செய்த நியாயத்தீர்ப்பு. ௫௯. பாபேல் எக்காலத்திலும் அழிந்துபோகுமென்ற அடையாளமாக எரேமியா தன் தீர்க்கதரிசன புஸ்தகத்தை ஐப்பிராத்தில் போடும்படிக்கு அதைச் செராயாவுக்கு அளித்தது.

கர்த்தர் சொல்லுகிறதாவது: இதோ, நாம் பா ௧
பேலுக்கு விரோதமாகவும் நமக்கு விரோதமாய்
எழும்புகிறவர்களின் நடுமையத்தில் குடியிருக்
கிறவர்களுக்கு விரோதமாகவும் கேடுள்ள காற்
றை எழும்பப்பண்ணி,—தூற்றுவாரைப் பாபே ௨
லுக்கு அனுப்புவோம்; அவர்கள் அதைத் தூற்றி,
வெறுமையாக்கிப்போடுவார்கள்; ஏனெனில்,
தீங்கின்நாளிலே அதற்கு விரோதமாய்ச் சூழ்ந்து
கொண்டிருப்பார்கள்.—நாணேற்றுகிறவனுக்கு ௩
விரோதமாகவும், தன் சீராவில் மனமேட்டிமை
யானவனுக்கு விரோதமாகவும், வில்லுக்காரன்
தன் வில்லை நாணேற்றக்கடவான்; அதின் வாலி
பரைத் தப்பவிடாமல் அதின் சேனையை எல்லாம்
சங்காரம்பண்ணுங்கள்.—கல்தேயரின் தேசத்தில் ௪
கொலைசெய்யப்பட்டவர்களுமாய் அதின் வீதிக
ளில் குத்திப்போடப்பட்டவர்களுமாய் விழு
வார்கள்.
ஏனெனில், இஸ்ரவேலும் யூதாவும் தங்கள் ௫
தேசம் இஸ்ரவேலின் பரிசுத்தருக்குமுன்பாகக்
குற்றங்களால் நிறைந்தபடியினால், உட்பட்ட
[5]விதவையிருப்பிலே சேனைகளின் கர்த்தராகிய
தங்கள் பராபரனாலே வைக்கப்படுவதில்லை.
[6]நீங்கள் பாபேலின் அக்கிரமத்தில் சங்கார ௬
மாகாதபடிக்கு அதின் நடுவிலிருந்து ஓடி, அவர
வர் தங்கள் ஆத்துமாவைத் தப்புவியுங்கள்; ஏனெ
னில், இது [7]கர்த்தர் அதற்கு நீதியைச் சரிக்கட்
டுகிற காலமாயிருக்கிறது; அவர் அதற்குப் பதில்
செலுத்துவார். — கர்த்தருடைய கையில் பா ௭
பேல், பூமி அனைத்தையும் வெறிக்கப்பண்ணின
பொற்பாத்திரமாயிருந்தது;அதின் மதுபானத்தில்
சாதிகள் குடித்தார்கள்; ஆகையால் சாதிகள் மதி
கெட்டுப்போனார்கள். — [8]அசுப்பிலே பாபேல் ௮
விழுந்து தகர்ந்தது; அதற்காக அலறுங்கள்; அ
தின் நோவை ஆற்றப் பிசின்தயிலத்தை வாங்
குங்கள்; ஒருவேளை குணமாம்.
பாபேல் குணமாகும்படிக்குப் பார்த்தோம், ௯
அது குணமானதில்லை; அதை விட்டுவிடுங்கள்,
நாம் அவரவர் நம்முடைய தேசங்களுக்குப்
போகக்கடவோம்; ஏனெனில், [9]அதின் ஆக்கினை
வானமட்டும் எட்டி, ஆகாசமண்டலங்கள் பரி
யந்தம் ஏறிப்போயிற்று.—கர்த்தர் [10]நம்முடைய ௰
நீதியை வெளிப்படுத்தினார்; நம்முடைய பரா
பரனாகிய கர்த்தரின் செயலைச் சீயோனில் விவ
ரிப்போம், வாருங்கள்.
அம்புகளைத் துலக்குங்கள்; கேடகங்களை நன் ௧௧
றாய்ச் செப்பனிடுங்கள்; கர்த்தர் மேதியாவுடைய

1 ஏசா. ௰௩. ௨௧, ௨௨. வெளி. ௰௮. ௨. 2 எரே. ௪௯. ௰௮. —3 ௯. ௨௪. 4 எரே. ௪௯. ௰௯—௨௧.—5 ஏசா. ௫௪. ௪.

6 எரே. ௫௰. ௮. வெளி. ௰௮. ௪. 7 ஏசா. ௧௪. ௮.—8 வெளி. ௰௮. ௨. 9 வெளி. ௰௮. ௫. —10 சங். ௩௭. ௬.

இராசாக்களின் ஆவியை எழுப்பினார்; ஏனெ
னில், அவருடைய நினைவு பாபேலுக்கு விரோ
தமாய் அதை அழிப்பதற்கு இருக்கிறது; அதே
தென்றால் [1]இது கர்த்தர் சரிக்கட்டுகிற நீதி; இது
தமது தேவாலயத்துக்காக அவர் சரிக்கட்டுகிற
௰௨ நீதிதானே.—பாபேலுடைய மதில்களின்மேல்
கொடியேற்றுங்கள், காவலைப் பலப்படுத்துங்
கள், சாமங்காக்கிறவர்களை நிறுத்துங்கள், பதிவி
ருப்பாரை வையுங்கள்; ஆனால் கர்த்தர் எப்படி
நினைத்தாரோ அப்படியே தாம் பாபேலின் குடிக
ளுக்கு விரோதமாகச் சொன்னதைச் செய்வார்.—
௰௩ [2]திரளான தண்ணீர்களின்மேல் வாசம்பண்ணுகி
றவளே, பொக்கிஷங்கள் பெருத்தவளே, உன்
முடிவும் உன் பொருளாசைக்கு ஒழிவும் வந்த
௰௪ ன.—மெய்யாகவே, பச்சைக்கிளிகளத்தனை மனு
ஷரால் உன்னை நிரம்பப்பண்ணுவோம்; அவர்
கள் உன்மேலே ஆர்ப்பரிப்பாகப் பாடுவார்களெ
ன்று சேனைகளின் கர்த்தர் தம்முடைய ஜீவனைக்
கொண்டு ஆணையிட்டார்.
௰௫ [3]பூமியைத் தமது பலத்தினால் உண்டாக்கி,
பூச்சக்கரத்தைத் தமது ஞானத்தால் படைத்து,
வானத்தைத் தமது உணர்வினால் விரித்த அவர்தா
௰௬ மே.—[4]அவர் சத்தமிடுகையில் திரளான தண்ணீர்
வானத்தில் உண்டாகிறது; அவர் பூமியின் கடை
சிகளிலிருந்து மேகங்களை எழும்பப்பண்ணி,
மழையுடனே மின்னல்களை உண்டாக்கி, காற்
றைத் தமது பண்டகசாலையிலிருந்து ஏவிவிடுகி
௰௭ றார். —[5] மனுஷர் அனைவரும் அறிவில்லாமல்
மிருகக்குணமானார்கள்; தட்டார் அனைவரும்
சுரூபங்களாலே வெட்கிப்போகிறார்கள்; ஏனெ
னில், அவர்கள் வார்ப்பித்தது பொய்யே, அவை
௰௮ களில் ஆவி இல்லை.—அவைகள் மாயையும் மகா
எத்துக்களுமான கிரியையுமாயிருக்கின்றன; அ
௰௯ வைகள் விசாரிக்கப்படும்நாளிலே அழியும்.—[6]யா
க்கோபின் பங்காயிருக்கிறவர் அவைகளைப்போ
ல அல்ல; ஏனெனில், அவர் சர்வத்தையும் உண்
டாக்கினவர்; அவன் அவருடைய சுதந்தரமான
கோத்திரம், சேனைகளுடைய கர்த்தர் என்பது
அவருடைய நாமம்.
௨௰ நீ நமக்குச் [7]சம்மட்டியும் யுத்த ஆயுதமுமான
வன்; நாம் உன்னைக்கொண்டு சாதிகளை நொறுக்
கி, உன்னைக்கொண்டுஇராச்சியங்களை அழித்துப்
௨௧ போட்டு,—உன்னைக்கொண்டு குதிரையையும்
அதின்மேல் ஏறியிருக்கிறவனையும் நொறுக்கி,
உன்னைக்கொண்டு இரதத்தையும் அதின்மேல்
௨௨ ஏறியிருக்கிறவனையும் நொறுக்கி, — உன்னைக்
கொண்டு புருஷனையும் ஸ்திரியையும் நொறுக்கி,
உன்னைக்கொண்டு கிழவனையும் இளைஞனையும்
நொறுக்கி, உன்னைக்கொண்டு வாலிபனையும்
௨௩ கன்னியாஸ்திரியையும் நொறுக்கி, — உன்னைக்
கொண்டு மேய்ப்பனையும் அவனுடைய மந்தை
யையும் நொறுக்கி, உன்னைக்கொண்டு உழுகிறவ
னையும் அவனுடைய ஏர்க்குண்டையையும் தலை
வனையும் அதிகாரியையும் நொறுக்கிப்போடுகி
றோம்.—ஆனால் பாபேலுக்கும் கல்தேயர் தேசத் ௨௪
தினுடைய சகல குடிகளுக்கும், நாம் அவர்கள்
உங்கள் கண்களுக்குமுன்பாகச் [8]சீயோனில்
பண்ணின அவர்களுடைய எல்லாப் பொல்லாப்
பையும் சரிக்குச் சரிக்கட்டுவோமென்று கர்த்தர்
சொல்லுகிறார்.
இதோ, பூமியை எல்லாம் கெடுக்கிற கேடான ௨௫
பர்வதமே, நாம் உனக்கு விரோதமாக வந்து,
நமது கையை உனக்கு விரோதமாக நீட்டி, உன்
னைக் கல்மலைகளிலிருந்து உருட்டி, உன்னை வெ
ந்த பர்வதமாக்கிப்போடுவோமென்று கர்த்தர்
சொல்லுகிறார்.—கோடிக்கல்லையாகிலும் அஸ்தி ௨௬
பாரங்களைப் போடுகிற கல்லையாகிலும் உன்னில்
எடுக்கார்கள்; ஏனெனில், என்றென்றைக்கும்
பாழாய்க்கிடக்கிற தலமாவாயென்று கர்த்தர்
சொல்லுகிறார்.
தேசத்திலே கொடியேற்றுங்கள்; சாதிகளுக் ௨௭
குள் எக்காளம் ஊதுங்கள்; சாதிகளை அதற்கு
விரோதமாகப் பரிசுத்தமாக்குங்கள்; ஆரராத்,
மின்னி, அஸ்கேனாஸ் என்ற இராச்சியங்களை
அதற்கு விரோதமாக வரக்கூப்பிடுங்கள்; தளகர்
த்தனை அதற்கு விரோதமாகப் பட்டங்கட்டுங்
கள்; சிறகடிக்கும் வண்டுக்குச் சாயலாகக் குதி
ரைகளைப் போயேறப்பண்ணுங்கள்.—மேதியா ௨௮
தேசத்தின் இராசாக்களும் அதின் தலைவரும்
அதினுடைய சகல அதிகாரிகளும் அவரவரு
டைய இராச்சியபாரத்துக்குக்கீழான சகல தே
சத்தாருமாகிய சாதிகளை அதற்கு விரோதமாகப்
பரிசுத்தமாக்குங்கள். — அப்போது தேசம் அ ௨௯
திர்ந்து, வாதைப்படும்; ஏனெனில், பாபேலின்
தேசத்தைக் குடியில்லாதபடியாகப் பாழாக்கும்
படிக்குப் பாபேலுக்கு விரோதமாய்க் கர்த்தர்
நினைத்தவைகள் நிலைக்கும்.
பாபேலின் பராக்கிரமசாலிகள் யுத்தம்பண்ணி, ௩௰
ஓய்ந்து, கோட்டைகளில் தரித்திருக்கிறார்கள்;
அவர்கள் பராக்கிரமம் அழிந்து, பெண்டுகளானார்
கள்; அதின் வாசஸ்தலங்களைக் கொளுத்திப்போ
ட்டார்கள்; அதின் தாபரங்கள் உடைக்கப்பட்
டன.—கடையாந்தரமுனைதுவக்கி அவனுடைய ௩௧
பட்டணம் பிடிபட்டதென்றும், துறைவழிகள்
அகப்பட்டுப்போய், நாணல்கள் அக்கினியால்
சுட்டெரிக்கப்பட்டன என்றும், யுத்தமனுஷர்
கலங்கியிருக்கிறார்கள் என்றும் பாபேலின் இரா
சாவுக்கு அறிவிக்க,—ஓட்டக்காரனுக்கு எதிராக ௩௨
ஓட்டக்காரனும், அறிவிக்கிறவனுக்கு எதிராக
அறிவிக்கிறவனும் ஓடுகிறான்.
ஏனெனில், பாபேல் குமாரத்தி மிதிக்கப்படும் ௩௩
களத்துக்கு ஒப்பானது; அதை மிதித்து அடிக்கும்
காலமாயிருக்கிறது; இன்னம் கொஞ்சநாளிலே
அறுப்புக்காலம் அதற்கு வருமென்று இஸ்ரவே
லின் பராபரனாகிய சேனைகளுடைய கர்த்தர்
சொல்லுகிறார்.

1 எரே. ௫௰.௨௮.—2 வெளி. ௧௭. ௧.—3 எரே. ௰. ௰௨.—4 எரே. ௰. ௰௩.

5 எரே. ௰. ௰௪, ௰௫.—6 எரே. ௰. ௰௬.—7 எரே. ௫௰. ௨௩.—8 எரே. ௫௰. ௨௯.

௩௪ பாபேலின் இராசாவாகிய நேபுகாத்நேச்சார்
என்னைப் பட்சித்தான், என்னைக் கலங்கடித்
தான், என்னை வெறும் பாத்திரமாக வைத்துப்
போனான்; முதலையைப்போல என்னை விழுங்கி,
என் செல்விக்கைகளால் தன் வயிற்றை நிரப்பி
௩௫ னான், என்னைத் துரத்தினான்.—எனக்கும் என்
மாம்சத்துக்கும் செய்த கொடுமையின் பழி பா
பேலின்மேல் வரக்கடவதென்று சீயோனில் வா
சமானவளும், என் இரத்தப்பழி கல்தேயர் தே
சத்துக் குடிகளின்மேல் வரக்கடவதென்று எருச
லேமும் சொல்லுகிறது.
௩௬ ஆகையால்கர்த்தர் சொல்லுகிறதாவது: இதோ,
நாம் உன் வழக்கை வழக்காடி, உன் பழிக்குப்
பழிவாங்கி, [1]அதின் கடலை வறளவும் அதின்
௩௭ ஊற்றைச் சுவறவும்பண்ணுவோம்.—அப்போது
பாபேல் [2]குடியில்லா மண்மேடுகளும்,வலுவான
சர்ப்பங்களின் தாபரமும், பாழும், ஈசல்போ
௩௮ டப்படுதலுமாய்ப் போகும்.—ஏகமாய்ச் சிங்கங்
களைப்போலக் கர்ச்சித்து, சிங்கக்குட்டிகளைப்
௩௯ போலச் சத்தமிடுவார்கள்.—அவர்களுடைய கொ
திப்பிலே நாம் அவர்கள் குடிக்கும் பானத்தை
அவர்களுக்குக் குடிக்கக்கொடுத்து, அவர்கள்
துள்ளத்தக்கதாக அவர்களை வெறியாக்குவோம்;
அதினால் அவர்கள் என்றென்றைக்கும் விழிக்
காத நித்திரையை அடைவார்கள் என்று கர்த்தர்
௪௰ சொல்லுகிறார்.—அவர்களை ஆட்டுக்குட்டிகளைப்
போலவும், ஆட்டுக்கடாக்களையும் வெள்ளாட்
டுக்கடாக்களையும்போலவும் அடிக்கப்பட இறங்
கிப்போகப்பண்ணுவோம்.

௪௧ [3]சேசாக்கு பிடிபுண்டு, பூமி அனைத்தின்புகழ்
ச்சி வாங்கப்பட்டதெப்படி? பாபேல் சாதிகளுக்
௪௨ குள்ளே திகைப்பானதெப்படி?—சமுத்திரம் பா
பேலின்மேல் புரண்டுவந்தது; அதினுடைய அ
லைகளின் திரட்சியினால் அது மூடப்பட்டது.—
௪௩ அதின் பட்டணங்கள் பாழுமாய், வறட்சியும்
வனாந்தரமுமான பூமியுமாய், ஒரு மனுஷனும்
குடியிராததும் ஒரு மனுப்புத்திரனும் கடவாதது
௪௪ மான பூமியுமாய்ப் போயிற்று.—நாம் பாபேலில்
இருக்கிற பேலின்மேல் விசாரிப்பாகி,அது விழு
ங்கினதை அதின் வாயிலிருந்து வெளியாகப்
பண்ணுவோம்; சாதிகள் இனி அதினண்டைக்கு
ஓடிவரார்கள், பாபேலின் மதிலும் விழும்.

௪௫ நமது சனமே, [4]அதின் நடுவிலிருந்து புறப்
படுங்கள்; கர்த்தருடைய கோபத்தின் உக்கிரத்
துக்குத்தப்ப, அவனவன் தன் ஆத்துமாவை இர
௪௬ ட்சித்துக்கொள்ளக்கடவன்.—உங்கள் இருதயம்
துவளாமலும், தேசத்தில் கேட்கப்படும் செய்
தியினால் நீங்கள் பயப்படாமலும் இருக்கவுந்தா
னே; ஏனெனில், ஒரு வருஷத்திலே செய்தி
கேட்கப்பட்டு, அதற்குப்பிறகு ஒரு வருஷத்தி
லே செய்திகேட்கப்படும்;தேசத்திலே கொடுமை
உண்டாகும், ஆளுகிறவன்மேல் ஆளுகிறவன்
வருவான்.

ஆகையால், இதோ, நாம் பாபேலுடைய சுரூ ௪௭
பங்களுக்கு விரோதமாய் விசாரிப்பாகும் நாட்
கள் வரும்; அப்போது அதின் தேசம் எல்லாம்
வெட்கப்படும்; அதில் கொலையுண்கிற யாவரும்
அதின் நடுவில் விழுந்துகிடப்பார்கள்.—[5]வானங் ௪௮
களும் பூமியும் அவைகளிலுள்ள யாவும் பாபே
லின்மேல் கெம்பீரிக்கும்; ஏனெனில், பாழ்க்க
டிக்கிறவர்கள் அதற்கு வடக்கேயிருந்து வருவார்
களென்று கர்த்தர் சொல்லுகிறார்.—பாபேல் இஸ் ௪௯
ரவேலில் கொலையுண்டவர்களை விழப்பண்ணி
னதுபோலே, பாபேலிலேயும் தேசமெங்கும்
கொலையுண்கிறவர்கள் விழுவார்கள்.

பட்டையத்துக்குத் தப்பினவர்களே, தங்கித் ௫௰
தரியாமல் நடந்துவாருங்கள்; தூரத்திலே கர்த்த
ரை நினையுங்கள்; எருசலேம் உங்கள் நினைவிலே
ஏறக்கடவது. — நிந்தையைக் கேட்டதினாலே ௫௧
வெட்கப்பட்டோம்; கர்த்தருடைய வீட்டுப் பரி
சுத்தஸ்தலங்களின்மேல் அந்நியர் வந்ததினாலே
நாணம் நம்முடைய முகங்களை மூடிற்று.

ஆகையால் கர்த்தர் சொல்லுகிறதாவது:இதோ, ௫௨
நாம் அதின் சுரூபங்களுக்கு விரோதமாய் விசா
ரிப்பாகும் நாட்கள்வரும்; அப்போது அதின்
தேசமெங்கும் கொலையுண்கிறவர்கள் கத்துவார்
கள்.—பாபேல் [6]வானபரியந்தம் ஏறினாலும் அது ௫௩
தன் பலத்தின் உயர்த்தியை அரணிப்பாக்கினா
லும் நம்மாலே அதற்குப் பாழ்க்கடிக்கிறவர்கள்
வருவார்களென்று கர்த்தர் சொல்லுகிறார்.—பா ௫௪
பேலிலிருந்து கூப்பிடுதலின் சத்தமும் கல்தேயர்
தேசத்திலிருந்து மகா நொறுக்குதலும் கேட்கப்
படும்.—ஏனெனில், கர்த்தர் பாபேலைப் பாழ்க் ௫௫
கடித்து, அதிலுள்ள பெரிய சத்தத்தை ஒழியப்
பண்ணுவார்; அதேனென்றால் அவர்களுடைய
அலைகள் திரளான தண்ணீர்களைப்போல இரை
யும்; அவர்களுடைய சத்தம் அமளியாயிருக்
கும்.—ஏனெனில், அதின்மேல், பாபேலின்மே ௫௬
லேதானே பாழ்க்கடிக்கிறவன் வருகிறான்; அ
தின் பராக்கிரமசாலிகள் பிடிபடுவார்கள்; அவர்
களுடைய வில்லுகள் முறிந்துபோகும்; அதே
னென்றால் சரிக்கட்டுதல்களின் பராபரனாகிய
கர்த்தர் பதில் அளிக்கவே அளிப்பார்.—அதின் ௫௭
பிரபுக்களையும் அதின் ஞானிகளையும் அதின்
தலைவரையும் அதின் அதிகாரிகளையும் அதின்ப
ராக்கிரமசாலிகளையும் வெறியாக்குவோம்; அப்
போது அவர்கள் என்றென்றைக்கும் விழிக்காத
தூக்கமாய்த் தூங்கிவிழுவார்களென்று [7]சேனைக
ளுடைய கர்த்தரென்ற நாமமுள்ள இராசா
சொல்லுகிறார்.

பாபேலின் விஸ்தாரமான மதில்கள் தரையாக் ௫௮
கவே தரையாக்கப்பட்டு, அதினுடைய உயர
மான வாசல்கள் அக்கினியால் சுட்டெரிக்கப்
படும்; அப்படியே சனங்கள் பிரயாசப்பட்டது
விருதாவும் சனசதளங்கள் உழன்றறுத்தது அக்

1 எரே. ௫௦. ௧௫.-2 எரே. ௫௦. ௩௯.-3 எரே. ௨௫ ௨௬.-4 எரே. ௫௦. ௮. வெளி. ௰௮. ௪.—5 வெளி. ௰௮. ௨௦.—6 எரே. ௪௯. ௰௬.—7 சங். ௨௪. ௰.

கினிக்கு இரையும் ஆமென்று சேனைகளின் கர்த்
தர் சொல்லுகிறார்.
௫௯ யூதாவின் இராசாவாகிய சிதேக்கியா இராச்சிய
பாரம்பண்ணும் நாலாம் வருஷத்திலே பாபே
லுக்குப் போகையில் அவனோடே கூடப்போ
கிற மசெயாவின் மகனாகிய நேரியாவின் குமார
னான சேராயாவுக்கு எரேமியா தீர்க்கதரிசி கற்
பித்த வார்த்தை; சேராயாவோவெனில் அமர்ந்த
௬௰ குணமான பிரபுவாயிருந்தான்.— பாபேலின்
மேல் வரும் எல்லாத் தீங்கையும், பாபேலுக்கு
விரோதமாக எழுதப்பட்ட இந்த எல்லா வசனங்
களையும் எரேமியா ஒரு புஸ்தகத்தில் எழுதி
௬௧ னான்.—பிறகு எரேமியா சேராயாவுடனே சொ
ன்னதாவது: நீ பாபேலுக்கு வந்தபிற்பாடு நீ இ
தைப் பார்த்து, இந்த எல்லா வசனங்களையும் வா
௬௨ சித்துச் சொல்லவேண்டியதாவது:—கர்த்தாவே,
இந்த ஸ்தலத்திலே மனுஷனும் மிருகமும்முத
லாய்த் தங்கித்தரிக்காதபடிக்கும், அது என்றென்
றைக்கும் பாழாய்க்கிடக்கும்படிக்கும் அதை
அழித்துப்போடுவோமென்று தேவரீர் அதைக்கு
௬௩ றித்து உரைத்தீர் என்கிறதை நீ சொல்லி,—நீ இந்
தப் புஸ்தகத்தை வாசித்துத் தீர்ந்தபோது, அதிலே
ஒரு கல்லைக்கட்டி, அதை ஐப்பிராத்தின் நடுவில்
௬௪ எறிந்துவிட்டு,—[1]இப்படியே பாபேல் அழிந்து
போகும், நாம் அதின்மேல் வரப்பண்ணும் தீங்
கினாலே எழுந்திருக்கமாட்டாமல் இளைத்து விழு
வார்களென்றார் என்று சொல்லுவாயாகவென்
றான்; எரேமியாவின் வசனங்கள் இந்தமட்டுந்
தானே.

## ௫௨. அதிகாரம்.

௧. சிதேக்கியா கலகம்பண்ணினதும், ௪. எருசலேம் முற்றிக்கைப்போட்டுப் பிடிக்கப்பட்டதும், ௮ சிதேக்கியாவின் குமாரர்கள் கொல்லப்பட்டதும், அவனுடைய கண்கள் பிடுங்கப்பட்டதும், ௰௨. நேபுசாரதான் பட்டணத்தைக் கொளுத்தினதும், கொள்ளையிட்டதும, ௨௪. அவன் பிடிக்கப்பட்ட சனங்களைச் சிறைவைக்கக் கொண்டுபோனதும், ௩௨. எவில்மெரோதாக்கு யோயாக்கீனை உயர்த்தினதும்.

௧ சிதேக்கியாஇராசாவாகிறபோது [2]இருபத்தொரு
வயதாயிருந்தான்; அவன் பதினொருவருஷம் எ
ருசலேமில் இராச்சியபாரம்பண்ணினான்; அவ
னுடைய தாயின்பேர் அமூத்தாள்; இவள் லீப்னா
௨ ஊராளாகிய எரேமியாவின் குமாரத்தி.—யோயா
க்கீம் செய்த எல்லாவற்றிற்கும் சரியாய் அவன்
கர்த்தருடைய பார்வைக்குப் பொல்லாப்பான
௩ தைச் செய்தான். — ஏனென்றால் எருசலேமை
யும் யூதாவையும் கர்த்தர் தம்முடைய சமுகத்தை
விட்டுத் தள்ளித்தீருமளவும், அவைகளில் அவ
ருடைய கோபத்தினாலே சம்பவித்ததேதெனில்,
சிதேக்கியா பாபேலின் இராசாவைவிட்டு [3]மரு
ளவிழுந்தான்.
௪ ஆகையால் [4]அவன் இராச்சியபாரம்பண்ணும்
ஒன்பதாம் வருஷத்துப் பத்தாம்மாதம் பத்தாந்தே
தியிலே சம்பவித்ததேதென்றால், பாபேலின் இ
ராசாவாகிய நேபுகாத்நேச்சாரும், அவனுடைய
எல்லா இராணுவமும் எருசலேமுக்கு விரோத
மாய் வந்து, அதற்கெதிராகப் பாளயம் இறங்கி,
சுற்றிலும் அதற்கு எதிராகக் கொத்தளங்களைக்
கட்டினார்கள்.—அப்படியே பட்டணம் சிதேக் ௫
கியா இராசாவின் பதினோராம் வருஷமட்டும்
முற்றிக்கைபோடப்படலாயிற்று.-நாலாம்மாதம் ௬
ஒன்பதாந்தேதியிலே பஞ்சம் பட்டணத்திலே
மிஞ்சி, தேசத்தின் சனத்துக்கு ஆகாரமில்லாதே
போனபோது,— பட்டணத்தின் மதில் திறப்பாள ௭
யிற்று; அப்போது யுத்தமனுஷர் எல்லாரும் ஓடி,
கல்தேயர் பட்டணத்தைச் சூழ்ந்திருக்கையில்
இராத்திரிகாலத்திலே இராசாவுடைய தோட்டத்
தின் வழியே இரண்டு மதில்களுக்கும் நடுவான
வாசலால் பட்டணத்திலிருந்து புறப்பட்டு, வய
ல்வெளியின் வழியே போய்விட்டார்கள்.— ஆ ௮
னால் கல்தேயருடைய இராணுவம் இராசாவைப்
பின்தொடர்ந்து, எரிகோவின் வயல் வெளிக
ளில்சிதேக்கியாவைக் கிட்டினார்கள்; அப்போது
அவன் இராணுவம் எல்லாம் அவனைவிட்டுச் சித
றிப்போயிருந்தார்கள்.—அவர்கள் இராசாவைப் ௯
பிடித்து, அவனை காமாத் தேசத்தின் ஊராகிய
ரிப்லாவுக்கு [5]பாபேலின் இராசாவாகிய நேபு
காத்நேச்சாரண்டையிலே போயேறப்பண்ணி
னார்கள்; இவன் அவன்பேரிலே சுமரும் ஆக்கி
னைகளைச் சொன்னான்.—பிறகு பாபேலின் இரா ௰
சா சிதேக்கியாவின் பிள்ளைகளை அவன் கண்க
ளுக்குமுன்பாக வெட்டி, யூதாவின் பிரபுக்களை
யும் எல்லாம் ரிப்லாவிலே வெட்டி.—சிதேக்கியா ௰௧
வின் கண்களைக் குருடாக்கி, அவனுக்கு இரண்டு
விலங்குகளைப் போடுவித்தான்; பிற்பாடு பாபே
லின் இராசா அவனைப் பாபேலுக்குக் கொண்
டுபோய், அவன் மரணமடையும் நாள்மட்டும் அ
வனைக் காவல்வீட்டில் இருக்கப்பண்ணினான்.
ஐந்தாம்மாதம் பத்தாந்தேதியிலே, பாபேலின் ௰௨
இராசாவுக்குமுன்பாக நிற்கிறவனாகிய தலையா
ரிகளின் அதிபதியான நேபுசாரதான் எருசலே
முக்கு வந்தான்; அது நேபுகாத்நேச்சாரென்ற
இராசா பாபேலை அரசாளுகிற பத்தொன்பதாம்
வருஷமாயிருந்தது.—அவன் கர்த்தருடைய வீட் ௰௩
டையும் இராசாவின் வீட்டையும் எருசலேமி
லுள்ள எல்லா வீடுகளையும் ஒவ்வொரு பெரியவ
னுடைய வீட்டையும் அக்கினியினால் சுட்டெ
ரித்துப்போட்டான்.—தலையாரிகளின் அதிபதி ௰௪
யோடிருந்த கல்தேயரின் இராணுவம் எல்லாம் எ
ருசலேமைச் சுற்றிலும் இருந்த மதில்கள் அனைத்
தையும் இடித்துப்போட்டார்கள்.
சனத்தில் நீசமானவர்களில் சிலரையும், பட் ௰௫
டணத்தில் மீதியான குறைச்சனத்தையும், பாபே
லுடைய இராசாவின் வசமாக ஓடிவந்துவிட்ட
வர்களையும், குறைச்சனசதளத்தையும் தலையாரி
களின் அதிபதியாகிய நேபுசாரதான் சிறைக
ளாகக் கொண்டுபோனான். — ஆனால் நீசமான ௰௬

---

1 வெளி. ௧௮. ௨௧.
2 எரே ௩௭. ௧. ௨ இரா. ௨௪. ௰௮. ௨ நாளா. ௩௬. ௰, ௰௧.
3 ௨ இரா. ௨௪. ௨௰.
4 எரே. ௩௯. ௧. ழு. ௨ இரா. ௨௫. ௧. ழு.
5 ௪ மோ. ௩௪. ௧௧.

தேசத்தாரில் சிலரைத் தலையாரிகளின் அதிபதி
யாகிய நேபுசாரதான் திராட்சத்தோட்டக்காரரா
கவும் பயிர்க்குடிகளாகவும் விட்டுவைத்தான்.—
௰௭ [1]கர்த்தருடைய வீட்டிலிருந்த வெண்கலத் தூண்
களையும், கர்த்தருடைய வீட்டிலிருந்த ஆதாரங்
களையும், வெண்கலக் கடல்தொட்டியையும் கல்
தேயர் உடைத்துப்போட்டு, அவைகளின் வெ
ண்கலத்தை எல்லாம் பாபேலுக்கு எடுத்துக்கொ
௰௮ ண்டுபோனார்கள்.—செப்புச்சட்டிகளையும், சாம்
பல் எடுக்கும் கரண்டிகளையும் வெட்டுக்கத்திக
ளையும், கலங்களையும் கலையங்களையும், ஆராதனை
செய்யப்பட்ட சகல வெண்கல முட்டுகளை
௰௯ யும் எடுத்துக்கொண்டார்கள்.—சுத்தபொன்னும்
சுத்த வெள்ளியுமான கிண்ணிகளையும், தூபகல
சங்களையும், கலங்களையும், சட்டிகளையும், விளக்
குத்தண்டுகளையும், கலையங்களையும், கரகங்களை
யும் தலையாரிகளின் அதிபதி எடுத்துக்கொண்
௨௰ டான்.—[2]சாலோமோன் இராசா கர்த்தருடைய
வீட்டுக்காகச் செய்வித்துவைத்த இரண்டு தூண்
களும் ஒரு கடல்தொட்டியும் ஆதாரங்களின்
கீழ்நின்ற பன்னிரண்டு வெண்கல மாடுகளும்
இருந்தனவே, இந்தச் சகல முட்டுகளுடைய வெ
ண்கலத்துக்கும் நிறையில்லை.

௨௧ அந்தத் தூண்களோவெனில், ஒவ்வொரு தூண்
பதினெட்டுமுழ உயர்த்தியாயிருந்தது; பன்னிர
ண்டுமுழநூல் அதைச் சுற்றும்; நாலு விரற்கிடை
௨௨ அதின் கனம்; உள்ளே குழாயாயிருந்தது.—அதின்
மீதில் வெண்கலக் குமிழ் உண்டாயிருந்தது;
ஒரு குமிழின் உயர்த்தி ஐந்துமுழமானது, குமி
ழிலே சுற்றிலும் பின்னலும் மாதளம்பழங்களு
மாயிருந்தது; எல்லாம் வெண்கலந்தான்; அதற்
குச்சரியாய் மற்றத் தூணுக்கும் மாதளம்பழங்க
௨௩ ளும் உண்டாயிருந்தன.—தொண்ணூற்றாறு மா
தளம்பழங்கள் காற்றுத்திசைகளுக்கு எதிராக
இருந்தன; குமிழில் சுற்றிலும் இருந்த மாதளம்
பழங்கள் நூறு.

௨௪ தலையாரிகளின் அதிபதி பிரதான ஆசாரியனா
கிய செராயாவையும், இரண்டாம் ஆசாரியனாகிய
செப்பனியாவையும், வாசற்படியின் மூன்று கா
௨௫ வற்காரரையும் பிடித்தான்.—பட்டணத்திலோ
வென்றால் அவன் யுத்தமனுஷரின் விசாரிப்புக்
காரனாகிய பிரதானி ஒருவனையும், இராசாவின்
மந்திரிகளில் பட்டணத்தில் அகப்பட்ட எழு
பேரையும், தேசத்தின் சனத்தைச் சேவகம் எழு
துகிற தலையான சம்பிரதியையும், தேசத்துச்
சனத்திலே பட்டணத்தின் நடுவில் அகப்பட்ட
அறுபதுபேரையும் பிடித்தான். — அவர்களைத் ௨௬
தலையாரிகளின் அதிபதியாகிய நேபுசாரதான்
பிடித்து, அவர்களை ரிப்லாவுக்கு பாபேலுடைய
இராசாவண்டையிலே கொண்டுபோய் விட்
டான்.—அப்போது பாபேலின் இராசா காமாத் ௨௭
தென்ற தேசத்தின் பட்டணமாகிய ரிப்லாவி
லே அவர்களை வெட்டிக் கொன்றுபோட்டான்;
யூதர்கள் தங்கள் தேசத்திலிருந்து சிறைகளாய்க்
கொண்டுபோகப்பட்டார்கள்.

நேபுகாத்நேச்சார் சிறைபிடித்துப்போன சனம் ௨௮
எத்தனையென்றால், ஏழாம்வருஷத்திலே மூவா
யிரத்திருபத்துமூன்று யூதரும், — நேபுகாத்நேச் ௨௯
சாருடைய பதினெட்டாம் வருஷத்தில் எருச
லேமிலிருந்து எண்ணூற்று முப்பத்திரண்டு ஆத்
துமாக்களும் கொண்டுபோகப்பட்டார்கள்.—நே ௩௰
புகாத்நேச்சாருடைய இருபத்துமூன்றாம் வரு
ஷத்தில் தலையாரிகளின் அதிபதியாகிய நேபுசா
ரதான் யூதரில் எழுநூற்று நாற்பத்தைந்து ஆத்து
மாக்களைச் சிறைபிடித்துப்போனான்; ஆக நாலா
யிரத்தறுநூறு ஆத்துமாக்கள்.

[3]யூதாவின் இராசாவாகிய யோயாக்கீனுடைய ௩௧
சிறையிருப்பின் முப்பத்தேழாம் வருஷத்துப்
பன்னிரண்டாம்மாதம் இருபத்தைந்தாந்தேதியி
லே சம்பவித்ததேதென்றால், ஏவில்மேரோதாக்
என்ற பாபேலின் இராசா, தான் இராசாவான
வருஷத்திலே, யூதாவின் இராசாவாகிய யோ
யாக்கீனின் தலையை உயர்த்தி, அவனைக் காவல்
வீட்டிலிருந்து புறப்படப்பண்ணி,—அவனோ ௩௨
டே அன்பாய்ப் பேசி, அவனுடைய ஆசனத்
தைத் தன்னோடே பாபேலில் இருந்த இராசாக்
களுடைய ஆசனங்களுக்கு மேலாக வைத்து,—
அவனுக்குக் காவல்வீட்டில் இருந்த வஸ்திரங் ௩௩
களை மாற்றினான்; அவன் உயிரோடிருந்த சகல
நாளும் அவனுக்குமுன்பாக நித்தம் அப்பஞ்சாப்
பிட்டான். — அவனுடைய செலவுக்கோவெ ௩௪
னில், அவன் உயிரோடிருந்த நாளெல்லாம் அவ
னுடைய மரணநாள்பரியந்தமும் அவனுக்குப்
பாபேலினுடைய இராசாவினாலே அனுதினக்
கட்டளையான திட்டம் எப்போதும் அனுதின
மும் கொடுக்கப்பட்டது.

1 எரே. ௨௭. ௰௯. ஷ.—2 ௧ இரா. ௭. ௰௫. ௨ நாளா. ௩. ௰௫. ஷ.

3 ௨ இரா. ௨௫. ௨௭. ஷ.

LAMENTATIONS.

# எரேமியாவின் புலம்பல்.

## ௧. அதிகாரம்.

௧. எருசலேமின் பாவத்தினிமித்தம் அதனுடைய நிர்ப்பாக்கியமுள்ள ஸ்திதி. ௰௨. தன் சிறுமையைக்குறித்து முறையிட்டது. ௰௮. கர்த்தருடைய நியாயத்தீர்ப்பு நீதியுள்ளதென்று வெளியிட்டது.

௧ சனம்பெருத்திருந்தபட்டணமானவள் எத்தனை
தனிமையாக உளுக்காந்திருக்கிறாள்! விதவைக்
கு ஒப்பானாள்! சாதிகளில் பெரியவளும் சீமை
களில் நாயகியுமாயிருந்தவள் கப்பங்கட்டுகிறவ
௨ ளானாள்! — இராக்காலத்திலே அழவே அழுகி
றாள், அவளுடைய கண்ணீர் அவள் கன்னங்க
ளில் ஓடும்; அவளுடைய எல்லா நேசரிலும்
அவளைத் தேற்றரவுபண்ணுவார் ஒருவரும் அவ
ளுக்கில்லை; அவளுடைய சிநேகிதர் எல்லாரும்
அவளுக்குத் துரோகிகளாகி, அவளுக்குச் சத்து
௩ ருக்களாய்ப்போனார்கள்.— உபத்திரவப்படவும்
அடிமைவேலையை வெகுதரம் செய்யவும் யூதச
னம் எடுபட்டுப்போயிற்று; அவள் புறச்சாதிக
ளுக்குள்ளே தங்குகிறாள், இளைப்பாறுதலை அ
டையாள்; அவளைத் துன்பப்படுத்துகிற யாவரும்
அவளை நெருக்க ஸ்தலங்களின் இடுக்கிலே தொ
௪ டர்ந்துபிடித்தார்கள்.—பண்டிகைக்கு வருவார்
இல்லாததினால், சீயோனின் வழிகள் புலம்புகிற
வைகளாயிருக்கின்றன; அதின் வாசல்கள் எல்
லாம் பாழாய்க்கிடக்கின்றன; அதின் ஆசாரியர்
தவிக்கிறார்கள்; அதின் கன்னியாஸ்திரிகள் சஞ்
சலப்படுகிறார்கள், அதற்குக் கசப்பே உண்டா
௫ யிருக்கிறது.—அதின் சத்துருக்கள் தலையானார்
கள், அதின் பகைஞர் சுகித்திருக்கிறார்கள்;ஏனெ
னில், அதினுடைய திரளான பாதகங்களின்
நிமித்தம் கர்த்தர் அதைச் சஞ்சலப்படுத்தினார்;
அதின் பிள்ளைகள் சத்துருவுக்குமுன்பாகச்சிறை
௬ யிருப்புக்குப் போனார்கள். — சீயோன் குமாரத்
தியின் மகத்துவம் எல்லாம் அதை விட்டுப்போ
யிற்று; அதின் பிரபுக்கள் மேய்ச்சலைக் காணாத
மான்களுக்கு ஒப்பாகி, தொடருகிறவனுக்கு
முன்பாகச் சத்துவமில்லாமல் நடந்துபோனார்
௭ கள்.—தனக்குச் சிறுமையும் தவிப்பும் உண்டா
கிய நாட்களிலே எருசலேம் பூருவநாட்கள் மு
தற்கொண்டு தனக்கு உண்டாயிருந்த இச்சிக்கப்
படத்தக்க நன்மைகளை எல்லாம் நினைக்கிறது;
அதற்கு ஒத்தாசைசெய்வார் இல்லாமல் அதினு
டைய சனம் சத்துருவின் கையிலே விழுகையில்
சத்துருக்கள் அதைப்பார்த்து, அதினுடைய ஓய்
வுநாட்களின்பேரிலே நகைத்தார்கள். — எருச ௮
லேம் என்பவள் பாவஞ்செய்யவே செய்தாள்;
ஆனபடியினாலே தூரஸ்திரியைப் போலானாள்;
அவளைக் கனம்பண்ணினவர்கள் எல்லாரும்
அவளை அசட்டைபண்ணுகிறார்கள்; ஏனென்
றால் அவளுடைய அபிமானத்தைக் கண்டார்
கள்; அவளும் பெருமூச்சுவிட்டுப் பின்னிட்டுத்
திரும்பினாள். — அவளுடைய அசுத்தம் அவள் ௯
வஸ்திர ஓரங்களில் இருந்தது; [1]தனக்கு வரப்
போகிற முடிவை நினையாதிருந்தாள்; ஆகை
யால் அதிசயமாய்த் தாழ்ந்துபோனாள்; தேற்றர
வுபண்ணுவார் அவளுக்கில்லை; கர்த்தாவே, என்
சிறுமையைப் பாரும்; ஏனெனில், பகைஞன்
பெருமை அடைந்தான்.—அவளுடைய இச்சிக் ௰
கப்படத்தக்க நன்மைகளின்மேல் சத்துரு தன்
கையை நீட்டினான்,அதேனெனில் உம்முடைய
சபையிலே வரவொண்ணாதென்று தேவரீர் கற்
பித்த புறச்சாதியார் உமது பரிசுத்தஸ்தலத்துக்
குள் பிரவேசித்ததைக் கண்டாள்.—அவளுடைய ௰௧
சனமெல்லாம் அப்பந்தேடித்தவிக்கிறார்கள்; தங்
கள் பசியை ஆற்றும்படிக்குத் தாங்கள் இச்சிக்
கப்படத்தக்க நன்மைகளை ஆகாரத்துக்கென்று
கொடுத்துவிட்டார்கள்; கர்த்தாவே, நோக்கிப்
பாரும்; ஏனெனில் எண்ணமற்றவளானேன்.—
வழியில் கடந்துபோகிற எல்லாச் சனங்களே, ௰௨
இது உங்களைச் சேராதோ? கர்த்தர் தமது கோபத்
தினுடைய உக்கிரத்தின் நாளிலே என்னைச் சஞ்
சலப்படுத்தினதினால் எனக்கு உண்டுபண்ணப்
பட்ட என்னுடைய நோவுக்குச் சரியான நோவு
உண்டோவென்று நோக்கிப்பாருங்கள்.—உய ௰௩
ரத்திலிருந்து என் எலும்புகளில் அக்கினியை
அனுப்பிவிட்டார்; அது அவைகளைப் பிடித்தது;
என் கால்களுக்கு வலையை வீசினார்; என்னைப்
பின்னிட்டு விழப்பண்ணினார்; என்னைப் பாழ்க்
கடித்தார்; நித்தம் நான் பலட்சயமானவள்.—
என் பாதங்களின் நுகத்தடி அவருடைய கை ௰௪
யால் கட்டியிருக்கிறது; அவைகள் பிணைக்கப்
பட்டு என் கழுத்தின்மேல் ஏறின; என் பெலனை
விழப்பண்ணினார்; ஆண்டவர் என்னை நான்
எழுந்திருக்கக்கூடாதபடிக்கு ஒடுக்குகிறவர்களி
ன் கையில் ஒப்புக்கொடுத்தார்.—என்னிலுள்ள ௰௫
பலசாலிகளாகிய என்னுடையவர்களை எல்லாம்
ஆண்டவர் மிதித்துப்போட்டார்; என் வாலிப

1 ௫ மோ. ௩௨. ௨௯.

னை நொறுக்கும்படிக்கு என்மேல் ஒரு கூட்டத்
தை வரவழைத்தார்; யூதா குமாரத்தியாகிய கன்
னியாஸ்திரியை ஆண்டவர் ஆலையாக மிதித்
௰௬ தார்.—[1]இவைகளின்நிமித்தமாக நான் அழுகி
றேன்; என் கண், என்னுடைய கண்ணே நீரா
கச் சொரிகிறது; ஏனெனில், என் ஆத்துமத்தை
உசிப்பாற்றும் தேற்றரவாளர் என்னைவிட்டுத்
தூரமானார்; பகைஞன் மேற்கொண்டதினால்,
என் பிள்ளைகள் பாழ்க்கடிக்கப்பட்டார்கள்.—
௰௭ சீயோனென்பவள் தன் கைகளை விரிக்கிறாள்;
தேற்றரவுபண்ணுவார் அவளுக்கில்லை; கர்த்தர்
யாக்கோபின் சுற்றுப்புறத்தாரை அவனுக்குச் சத்
துருக்களாகக் கட்டளையிட்டார்; எருசலேமென்
பவள் அவர்களுக்குள்ளே தூரஸ்திரிக்கு ஒப்பா
௰௮ னாள்.—கர்த்தர் நீதிபரர்; அவருடைய வாக்குக்கு
விரோதமாய் நான் எழும்பினேன்; ஆனபடியி
னாலே சனங்களே, நீங்கள் எல்லாரும் இதைக்
கேட்டு என் வேதனையைப் பாருங்களேன்; என்
கன்னியாஸ்திரிகளும் என் வாலிபரும் சிறையி
௰௯ ருப்பிலே போனார்கள்.—என்னைச் சிநேகித்தவர்
களைக் கூப்பிட்டேன்; [2]அவர்களோ என்னை
மோசம்போக்கினார்கள்; என் ஆசாரியர்களும்
என் மூப்பரும் தங்கள் பசியை ஆற்றத் தங்க
ளுக்கு அப்பந்தேடுகையில் பட்டணத்தில் மூச்
௨௰ சொடுங்கி, மாண்டார்கள்.—கர்த்தாவே, பாரும்,
ஏனெனில் நெருக்கப்படுகிறேன்; [3]என் குடல்
கள் பொங்குகின்றன; நான் மிகவும் மருளவி
ழுந்தபடியினாலே என் இருதயம் எனக்குள் துவ
ண்டது; வெளியிலே பட்டயம் என்னைப் பிள்
ளையற்றவளாக்கிற்று; வீட்டுக்குள்ளே மரணச்சா
௨௧ யலாயிருக்கிறது.—நான் தவிக்கிறதை அவர்கள்
கேட்டாலும் தேற்றரவு பண்ணுபவன் எனக்
கில்லை; என் பகைஞர் எல்லாரும் என் தீங்கைக்
கேட்டு, தேவரீர் அதைச் செய்தபடியினாலே சந்
தோஷமாயிருக்கிறார்கள்; நீர் கூறின நாளை வரப்
பண்ணுவீர்; அப்போது என்னைப்போல இருப்
௨௨ பார்கள். — அவர்களுடைய பொல்லாப்பெல்
லாம் உமது முகத்துக்குமுன்பாக வரக்கடவது;
என்னுடைய எல்லாப் பாதகங்களின்நிமித்தமும்
நீர் எனக்குச் செய்ததுபோலே அவர்களுக்குச்
செய்யும்; ஏனென்றால் என் பெருமூச்சுகள் திர
ளானவைகள்; என் இருதயம் பலட்சயமாயிருக்
கிறது.

## ௨. அதிகாரம்.

௧. எரேமியா எருசலேமின் உபத்திரவத்தைக்குறித்துப் புலம்பினது. ௨௰ அதைக்குறித்துப் பராபரனிடத்தில் முறையிட்டது.

௧ சீயோன் குமாரத்தியை ஆண்டவர் தம்முடைய
கோபத்தில் எத்தனை மந்தாரத்தாலே மூடினார்?
தம்முடைய கோபத்தின் நாளிலே அவர் [5]தமது
பாதபடியை நினைக்காமல் இஸ்ரவேலின் மகி
மையை வானத்திலிருந்து தரையிலே விழத்தள்
௨ ளினார். — ஆண்டவர் தப்பவிடாமல் யாக்கோ
பின் வாசஸ்தலங்களை எல்லாம் விழுங்கினார்;
அவர் யூதா குமாரத்தியின் அரண்களை எல்லாம்
தம்முடைய சினத்திலே இடித்து, தரையோடே
தரையாக்கிப்போட்டார்; இராச்சியத்தையும் அ
தின் பிரபுக்களையும் பரிசுத்தமறப்பண்ணினார்.—
தம்முடைய கோபத்தின் உக்கிரத்திலே இஸ்ர ௩
வேலின் கொம்பை எல்லாம் வெட்டிப்போட்
டார்; அவர் பகைஞனுக்குமுன்பாகத் தம்மு
டைய வலதுகையைப் பின்னாகத் திருப்பி, சுற்
றிலும் இருக்கிறதைப் பட்சிக்கிற அக்கினிச்சு
வாலையைப்போலே யாக்கோபுக்கு விரோதமா
கப் பற்றி எரிந்தார்.—பகைஞனைப்போலத் [6]தம் ௪
முடைய வில்லை நாணேற்றினார்; சத்துருவைப்
போலத்தம்முடைய வலதுகையை நீட்டிநின்று,
பார்வைக்கு விருப்பமானதை எல்லாம் கொன்
றுபோட்டார்; சீயோன் குமாரத்தியின் கூடார
த்திலே தம்முடைய உக்கிரத்தை அக்கினியைப்
போலே ஊற்றிவிட்டார்.—ஆண்டவர் பகைஞ ௫
னுக்கு ஒப்பானார்; இஸ்ரவேலை விழுங்கினார்; அ
தின் அரமனைகளை எல்லாம் விழுங்கினார்; அதின்
அரண்களை அழித்து, யூதா குமாரத்திக்குத் திர
ளான துக்கிப்பையும் சலிப்பையும் உண்டாக்கி
னார்.—தோட்டத்தின் வேலியைப்போல இருந்த ௬
தம்முடைய வேலியைப் பலவந்தமாய்ப் பிடுங்
கிப்போட்டார்; சபைகூடுகிற தம்முடைய ஸ்த
லங்களை அழித்தார்; கர்த்தர் சீயோனிலே பண்
டிகையையும் ஓய்வுநாளையும் மறக்கப்பண்ணி,
தமது கோபத்தின் தாங்கலில் இராசாவையும் ஆ
சாரியனையும் புறக்கணித்துவிட்டார்.—ஆண்ட ௭
வர் தமது பலிபீடத்தை ஒழித்துவிட்டார்; தமது
பரிசுத்தஸ்தலத்தை அருவருத்தார்; அதினுடைய
அரமனைகளின் மதில்களைப் பகைஞனின்
கையில் பத்திரப்படுத்திவிட்டார்; பண்டிகைநா
ளுக்கு ஒப்பாகக் கர்த்தரின் வீட்டிலே சத்தமிட்
டார்கள்.—கர்த்தர் சீயோன் குமாரத்தியின் அ ௮
லங்கத்தை நிர்மூலமாக்க நினைத்தார்; நூலைப்
போட்டார்; அழிக்காதபடிக்குத் தம்முடைய
கையை அவர் முடக்கிக்கொண்டதில்லை; அர
ணிப்பையும் அலங்கத்தையும் புலம்பலாக்கி
னார்; அவைகள் ஏகமாய்ப் பெலனற்றுக் கிடக்
கின்றன.—அதின் வாசல்கள் தரையில் அமிழ்ந் ௯
திக் கிடக்கின்றன; அதின் தாழ்ப்பாள்களைக்
கெடுத்து உடைத்துப்போட்டார்; அதின் இரா
சாவும் அதின் பிரபுக்களும் புறச்சாதியாருக்குள்
இருக்கிறார்கள்; வேதமில்லை; அதின் தீர்க்கதரி
சிகளுக்குக் கர்த்தரால் தரிசனம் கிடைக்கிறது
மில்லை.—சீயோன் குமாரத்தியின் மூப்பர் தரை ௰
யில் உளுக்காந்து மௌனமாய் இருக்கிறார்கள்;
தங்கள் தலைகளின்மேல் புழுதியைப் போட்டுக்
கொள்ளுகிறார்கள்; இரட்டு உடுத்தியிருக்கிறார்
கள்; எருசலேமின் கன்னியாஸ்திரிகள் தங்கள்
தலைகளைத் தரையைநோக்கி இறக்கிக்கொண்டி
ருக்கிறார்கள்.—என் சனமாகிய குமாரத்தியினு ௰௧
டைய நொறுங்குதலின்நிமித்தம் என் கண்கள்

1 எரே. ௰௪. ௰௭: ௰௩. ௰௭.—2 எரே. ௩௰. ௰௪.—3 சங். ௨௨. ௰௪.

4 ௫ மோ. ௩௨. ௨௨.—5 சங். ௱௩௨. ௭.—6 சங். ௭. ௰௨.

கண்ணீரா உதிர்க்கிறதினால் பூத்துப்போயிற்று;
என் குடல்கள் பொங்குகின்றன; என் ஈரல்
தரையில் சரிகிறது; ஏனெனில் குழந்தைகளும்
பாலகரும் பட்டணத்தின் வீதிகளில் தொய்ந்து
௰௨ கிடக்கிறார்கள்.—அவைகள் குத்துண்டவர்களைப்
போலப் பட்டணத்தின் வீதிகளில் தொய்யும்
போதும், தங்கள் ஆத்துமாவைத் தங்கள் தாய்க
ளின் மடியில் ஊற்றும்போதும் தங்கள் தாய்க
ளுடனே: கோதுமையும் திராட்சப்பழ இரச
௰௩ மும் எங்கே என்கிறார்கள்? — எருசலேம் குமா
ரத்தியே, என்னத்தை உனக்குச் சாட்சியாகச்
சொல்லுவேன்? என்னத்துக்கு உன்னை ஒப்பிடு
வேன்? சீயோன் குமாரத்தியாகிய கன்னியாஸ்
திரியே, நான் உன்னைத் தேற்றும்படிக்கு என்ன
த்துக்கு உன்னைச் சரியிடுவேன்? உன் நொறுங்
குதல் சமுத்திரத்தைப்போல விஸ்தாரமாயிருக்கி
றதே, உன்னைக் குணமாக்குபவன் யாவன்?—
௰௪ உன் தீர்க்கதரிசிகள் அபத்தமும் மதியில்லாமை
யுமான தரிசனத்தை உனக்குத் தரிசிப்பித்தார்
கள்; அவர்கள் உன் சிறையிருப்பை விலக்கும்ப
டிக்கு உன் அக்கிரமத்தைத் திறந்துவைக்காமல்,
அபத்தகாரியங்களையும் நீ துரத்தப்படுகிறதற்கா
னவைகளையும் உனக்குத் தரிசிப்பித்தார்கள்.—
௰௫ வழிபோகிற யாவரும் உன்பேரில் கைகொட்
டிக்கொள்ளுகிறார்கள்; எருசலேம் குமாரத்தி
யின்பேரில் ஈசற்போட்டு, தங்கள் தலைகளைத்
துலுக்கி, பூரணவடிவும் எல்லாப் பூமியின் மகிழ்
ச்சியுமானதென்னப்பட்ட பட்டணம் இதுவோ
௰௬ என்கிறார்கள்.—உன் பகைஞர் உன்பேரில் தங்
கள் வாயைத் திறக்கிறார்கள்; ஈசற்போட்டுப்
பற்கடிக்கிறார்கள்: அதை விழுங்கினோம், நாம்
காத்திருந்த நாள் இதுவே, இப்போது நமக்குக்
கிடைத்தது, அதைக் கண்டோமென்கிறார்கள்.—
௰௭ [1]கர்த்தர் தாம் நினைத்ததைச் செய்தார்; தாம் பூரு
வநாட்கள் முதற்கொண்டு கட்டளைபண்ணின
தமது வார்த்தையை நிறைவேற்றிப்போட்டார்;
அவர் தப்பவிடாமல் நிர்மூலமாக்கி, உன்னால்
பகைஞனுக்குச் சந்தோஷம் உண்டுபண்ணி
னார்; உன் சத்துருக்களின் கொம்பை உயர்த்தி
௰௮ னார்.—அவர்கள் இருதயம் ஆண்டவரைநோக்
கிக் கூப்பிடுகிறது; சீயோன் குமாரத்தியின் மதி
லே, இரவும் பகலும் [2]நதியத்தனை கண்ணீரா
விடு; உனக்கு ஓய்வைக்கொடாயாக; உன் கண்
௰௯ களின் கறுப்புவிழி சும்மா இராதாக.—எழுந்திரு;
முதற்சாம இராத்திரியிலே கூப்பிடு; ஆண்டவ
ரின் முகத்துக்குமுன்பாக உன் இருதயத்தைத்
தண்ணீரைப்போல ஊற்று; எல்லாத் தெருக்க
ளின் முனையிலும் பசியினால் தொய்கிற உன்
குழந்தைகளின் பிராணனுக்காக உன் கைகளை
௨௰ அவரண்டைக்கு எடு.—கர்த்தாவே, யாருக்கு
இந்தப்பிரகாரமாகச் செய்தீரென்று [3]நோக்கிப்
பாரும்; ஸ்திரிகள் [4]கைக்குழந்தைகளாகிய தங்க
ளுடைய கர்ப்பத்தின் கனியைத் தின்னவேண்
டுமோ? ஆண்டவருடைய பரிசுத்தஸ்தலத்தில்
ஆசாரியரும் தீர்க்கதரிசியும் கொலைசெய்யப்பட
வேண்டுமோ? — தெருக்களில் இளைஞனும் ௨௧
முதிர்ந்தவயதுள்ளவனும் தரையிலே கிடக்கிறார்
கள்; என் கன்னியாஸ்திரிகளும் என் வாலிபரும்
பட்டயத்தால் விழுந்தார்கள்; உமது கோபத்
தின்நாளிலே கொன்று, தப்பவிடாமல் வெட்
டிப்போட்டீர்.—பண்டிகை நாளுக்கு ஒப்பாகச் ௨௨
சுற்றிலுமிருந்து என் திகில்களை வரவழைத்தீர்;
கர்த்தருடைய கோபத்தின் நாளிலே தப்பினவ
னும் மீதியானவனுமில்லை; நான் கைகளில் ஏந்
திக்கொண்டு வளர்த்தவர்களை என் பகைஞன்
நாசம்பண்ணினான்.

## ௩. அதிகாரம்.

௧. விசுவாசிகள் தங்கள் துன்பத்தைக்குறித்துத் துக்கித்தது. ௨௨. அவர்கள் பராபரனுடைய இரக்கங்களை நினைத்துத் தங்கள் நம்பிக்கையை ஸ்திரப்படுத்தினது. ௩௭. அவருடைய நீதியை ஒப்புக்கொண்டது. ௫௫. தங்கள் விடுதலைக்காகவும், ௬௪. தங்கள் சத்துருக்களிடத்தில் பழிவாங்குதலுக்காகவும் வேண்டிக்கொண்டது.

ஆண்டவருடைய சினத்தின் மிலாறினால் ௧
உண்டான சிறுமையைக் கண்டபுருஷன் நான்.—
அவர் என்னை வெளிச்சத்துக்குள் அல்ல, இரு ௨
ளுக்குள்ளே அழைத்து நடத்திவந்தார்.—அவர் ௩
எனக்கு விரோதமாகவே நித்தம் தமது கையைநே
ரிடத் திருப்பினார்.—என் சதையையும் என் தோ ௪
லையும் முத்தலாக்கினார்; என்னெலும்புகளை உ
டைத்தார்.—அவர் எனக்கு விரோதமாகக் கொ ௫
த்தளங்கட்டி, பிச்சினாலும் வருத்தத்தினாலும்
என்னை வளைந்துகொண்டார். — [5]நித்தியகாலம் ௬
செத்துக்கிடக்கிறவர்களைப்போல என்னை இரு
ளான இடங்களில் இருக்கப்பண்ணினார்.—நான் ௭
புறப்படக்கூடாதபடியாய் என்னைச் சூழ வேலி
அடைத்தார்; என் விலங்குகளைப் பாரமாக்கி
னார்.—நான் சத்தமிட்டுக் கூப்பிட்டாலும், என் ௮
செபத்துக்கு வழியை அடைத்துப்போட்டார்.—
வெட்டின கல்சுவராலே என் வழிகளை அடை ௯
த்துப்போட்டார், என் பாதைகளை மாறுபாடாக்
கினார்.—எனக்கு அவர் பதிவிருக்கிற கரடியும், ௰
மறைவிடங்களில் தங்குகிற சிங்கமுமாயிருக்கி
றார்.—என் வழிகளை விலக்கி, என்னைத் துண்டித் ௰௧
துப்போட்டார்; என்னைப் பாழாக்கிவிட்டார்.—
தமது வில்லை நாணேற்றி, என்னை அம்புக்கு இ ௰௨
லக்காக வைத்தார்.—தம்முடைய அப்பறாத்தூ ௰௩
ணியின் அம்புகளை என் உள்ளிந்திரியங்களில்
படப்பண்ணினார்.—நான் என் சனமனைத்தின் ௰௪
பரியாசமும், நித்தம் அவர்கள் கின்னரப்பாட
லுமாயிருந்தேன்.—கசப்புகளால் என்னைத் திருத் ௰௫
தியாக்கி, எட்டியினால் என்னை நிரப்பினார்.—
அவர் பருக்கைக்கல்லுகளால் என் பல்லுகளை ௰௬
நொறுக்கி, என்னைச் சாம்பலில் புரளப்பண்
ணினார்.—என் ஆத்துமாவைச் சமாதானத்துக் ௰௭
குத் தூரமாக்கினார்; நன்மையை மறந்தேன்.—ஆ ௰௮
கையால் என் பெலனும் நான் கர்த்தருக்குக் காத்

1 ௫ மோ. ௨௮. ௰௫. ௫ —2 எரே. ௰௪. ௰௭.—3 புலம். ௧.௨௰: ௪. ௰. 4 ௫ மோ. ௨௮. ௫௩. 5 சங். ௱௪௩. ௩.

திருந்த நம்பிக்கையும் அழிந்தன என்றேன்.—
௰௯ என் சிறுமையையும் என் தவிப்பையும் எட்டி
௨௰ யையும் பிச்சையும் நினைத்துக்கொள்ளும்.—என்
ஆத்துமா எனக்குள் முறிந்துபோகிறதென்கிற
௨௧ தை நினைக்கவே நினைப்பீர்.—இதை என் மனதி
லே வைப்பேன்; இதுநிமித்தமாகக் காத்திருப்
௨௨ பேன்.—[1]நாங்கள் நிர்மூலமாய் அழியாதிருக்கி
றது கர்த்தருடைய கிருபைகள்; ஏனெனில், அவ
ருடைய இரக்கங்கள் முடிவடைந்ததில்லை.—
௨௩ [2]அவைகள் காலைமாறு புதியவைகள்; அவரு
௨௪ டைய உண்மை பெருத்திருக்கிறது.—[3]கர்த்தர்
என்பங்காயிருக்கிறாரென்று என் ஆத்துமாசொல்
லும்; ஆகையால் அவருக்குக் காத்திருப்பேன்.—
௨௫ [4]தமக்குக் காத்திருக்கிறவர்களுக்கும் தம்மைத்
தேடுகிற ஆத்துமாவுக்கும் கர்த்தர் நல்லவர்.—
௨௬ கர்த்தருடைய இரட்சிப்புக்குக் காத்தும் அமர்ந்
௨௭ தும் இருக்கிறது நல்லது. — தன் சிறுவயதிலே
நுகத்தடியைச் சுமக்கிறது புருஷனுக்கு நல்
௨௮ லது.—அவர் அதைத் தன்மேல் வைத்தாரென்று
அவன் தனித்து உளுக்கார்ந்து மௌனமாயிருப்
௨௯ பானாக. — நம்பிக்கை உண்டாயிருக்கிறதாக்கு
மென்று தன் வாயைத் தூளில் நுழுந்துவானாக.—
௩௰ தன்னை அடிக்கிறவனுக்குத் தன் கன்னத்தை ஒப்
புக்கொடுத்து, நிந்தையால் திருத்தியாவானாக.—
௩௧ ஏனென்றால் ஆண்டவர் என்றென்றைக்கும்
௩௨ ஒழித்துவிடாமல்,—[5]தாம் சஞ்சலப்படுத்தின
பிற்பாடு தம்முடைய மிகுந்த கிருபையின்படி
௩௩ இரங்குகிறார்.—ஏனெனில், அவர் மனப்பூருவ
மாய் மனுப்புத்திரரைச் சிறுமையாக்கி, சஞ்சலப்
௩௪ படுத்துகிறதில்லை.—ஒருவன் பூமியிலுள்ள கட்டு
ண்டவர்களை எல்லாம் தன் கால்களின்கீழ் நசுக்
௩௫ குகிறதையும்,—உன்னதமானவரின் முகத்துக்கு
முன்பாக மனுஷருடைய நியாயத்தைப் புரட்டு
௩௬ கிறதையும்,—மனுஷனை அவனுடைய வழக்கி
லே மாறுபாடாக்குகிறதையும் ஆண்டவர் காணா
௩௭ திருப்பாரோ?—[6]ஆண்டவர் கட்டளையிடாத கா
ரியம் சம்பவிக்கும் என்று சொல்பவன் யாவன்?—
௩௮ [7]தீமையும் நன்மையும் உன்னதமானவருடைய
௩௯ வாயிலிருந்து புறப்படாதோ?—நரசீவனான மனு
ஷன் முறையிடுவானேன்? அவனவன் தன் பா
௪௰ வத்தின்பேரில் முறையிடுவானாக.—நாம் நம்மு
டைய வழிகளைச் சோதித்து ஆராய்ந்து, கர்த்தரி
௪௧ டமட்டும் சேரத் திரும்பக்கடவோம்.—நாம் நம்
முடைய இருதயத்தைக் கைகளோடுங்கூடப் பர
மண்டலங்களில் இருக்கிற பராபரனண்டைக்கு
௪௨ ஏறெடுத்து,—நாங்கள் துரோகஞ்செய்து, கலகம்
பண்ணினோம்; ஆகையால் தேவரீர் மன்னிக்
௪௩ காதிருந்தீர்.—தேவரீர் கோபத்தால் மூடிக்கொ
ண்டு, எங்களைத் தப்பவிடாமல் பின்தொடர்ந்து
௪௪ கொன்றீர்.—செபம் உட்பிரவேசிக்கக் கூடாத
படிக்கு உம்மை மேகத்தால் மூடிக்கொண்டீர்.—
௪௫ சனசதளங்களின் நடுவிலே எங்களைக் குப்பை
௪௬ யும் தள்ளுபடியுமாக்கினீர்.—எங்கள் பகைஞர்
எல்லாரும் எங்கள்மேல் தங்கள் வாயைத் திறந்
தார்கள்.—திகிலும் படுகுழியும் பாழ்க்கடிப்பும் ௪௭
நொறுக்குதலும் எங்களுக்கு உண்டாயின என்று
விண்ணப்பம் செய்யக்கடவோம். — என் சன ௪௮
மாகிய குமாரத்தியின்நிமித்தம் [8]நீர்க்கால்கள் என்
கண்களிலிருந்து பாய்கின்றன.—கர்த்தர் பரம ௪௯
ண்டலங்களிலிருந்து நோக்கிப்பார்க்குமட்டுக்
கும்,—என் கண் அமரிக்கையற ஓய்வில்லாமல் ௫௰
சொரிகிறது.—என் பட்டணத்தினுடைய எல் ௫௧
லாக் குமாரத்திகளின்நிமித்தமும், என்னுடைய
கண் என் ஆத்துமாவுக்கு நோவுண்டாக்குகி
றது.—முகாந்தரம் இல்லாமல் என்னைப் பகைக் ௫௨
கிறவர்கள் என்னை ஒரு பட்சியைப்போலவேட்
டையாடவே வேட்டையாடினார்கள். — என் ௫௩
பிராணனைப் பள்ளத்திலே சங்கரித்து, என்
மீதில் கல்லுகளைப் போட்டார்கள்.—தண்ணீர் ௫௪
என் தலையின்மேல் புரண்டது; நாசமானேனெ
ன்றேன்.—மகா ஆழமான பள்ளத்திலிருந்து கர்த் ௫௫
தாவே, உம்முடைய நாமத்தைப்பற்றிக் கூப்பிட்
டேன்.—என் சத்தத்தைக் கேட்டீர்; என் பெரு ௫௬
மூச்சுக்கும் என் கூப்பிடுதலுக்கும் உமது செவி
யை மறைக்காதேயும்.—நான் உம்மைநோக்கிக் ௫௭
கூப்பிட்டநாளிலே தேவரீர் சேர்ந்து, பயப்ப
டாதே என்றீர்.—ஆண்டவரே, என் ஆத்துமா ௫௮
வின் வழக்கை வழக்காடினீர்; என் பிராணனை
மீட்டீர்.—கர்த்தாவே, நான் பட்ட அநியாயத் ௫௯
தைக் கண்டீர், என் நியாயத்தைத் தீரும்.—அவர் ௬௰
களுடைய குரோதந்தீர்த்துக்கொள்ளுதல் எல்
லாவற்றையும், அவர்கள் எனக்கு விரோதமாக நி
னைத்த எல்லாவற்றையும் கண்டீர்.—கர்த்தாவே, ௬௧
அவர்களுடைய நிந்திக்குதலையும், அவர்கள்
எனக்கு விரோதமாய் நினைத்த எல்லாவற்றை
யும்,—எனக்கு விரோதமாய் எழும்பினவர்களின் ௬௨
பேச்சுகளையும், அவர்கள் நித்தம் எனக்கு விரோ
தமாய் யோசிக்கும் வினைகளையும் கேட்டீர்.—
அவர்களுடைய உளுக்காருதலையும் அவர்களு ௬௩
டைய எழுந்திருக்குதலையும் நோக்கிப்பாரும்;
நான் அவர்களுடைய இன்னாரப்பாடலாயி
ருக்கிறேன்.—கர்த்தாவே, அவர்கள் கைகளின் ௬௪
செய்கைக்குத்தக்க பதில்பலனை அவர்களுக்கு
அளிப்பீர்.—அவர்களுக்கு இருதயத்தின் மூனை ௬௫
க்கேட்டைக் கொடுப்பீர், உம்முடைய சாபம்
அவர்கள்மேல் இருக்கும்.—கோபமாய் அவர்க ௬௬
ளைப் பின்தொடர்ந்து, அவர்களைக் கர்த்தருடைய
வானங்களின்கீழ் இராதபடிக்கு அழித்துவிடுவீர்.

## ௪. அதிகாரம்.

௧. சீயோன் தன் பரிதாபமுள்ள ஸ்திதியைக்குறித்துத் துக்கிக்கிறது. ௰௩. தன் பாவங்களை அறிக்கையிட்டது. ௨௧. ஏதோம் பயமுறுத்தப்பட்டது. ௨௨. சீயோன் தேற்றப்பட்டது.

எத்தனையாய்ப் பொன் மங்கி, நல்ல தங்கம் மாறி, ௧
பரிசுத்தஸ்தலத்தின் கல்லுகள் சகல வீதிகளின்
முகனையிலும் கொட்டுண்டுபோயின. — எத்த ௨
னையாய் அபரஞ்சிக்கு ஒப்பிடப்பட்ட விலையே

1 நெகே. ௯. ௩௧. ஏசா. ௧. ௯.
2 சங். ௩௰. ௫.—3 சங். ௭௩. ௨௬.
4 சங். ௪௰. ௨.
5 ஏசா. ௫௪. ௮.
6 ௨ சாமு. ௰௬. ௰.
7 ஏசா. ௪௫. ௭. ஆமோ. ௩. ௬.
8 புலம். ௧. ௰௬: ௨. ௰௮.

றப்பெற்ற சீயோன் குமாரர் குயவனுடைய கை
களின் வேலையான மண்பாண்டங்களுக்குச்
௩ சரியாக எண்ணப்படுகிறார்கள்.—திமிங்கிலங்
கள்முதலாய்க் கொங்கைகளை நீட்டி, தங்கள்
குட்டிகளுக்கு முலைகொடுக்கின்றன; என் சன
மாகிய குமாரத்தியோ வனாந்தரசிவனை தீக்குரு
வியைப்போலக் குரூரமாயிருக்கவேண்டும்.—
௪ பாலகனுடைய நாவு தாகத்தால் அதின் மேல்வா
யோடே ஒட்டிக்கொண்டிருக்கிறது; குழந்தை
கள் அப்பங்கேட்கின்றன;அவைகளுக்குக் கொ
௫ டுப்பாரில்லை.—உருசிவர்க்கங்களைச் சாப்பிட்ட
வர்கள் வீதிகளில் பாழ்த்துக்கிடக்கிறார்கள்; இர
த்தாம்பர உடுப்பில் வளர்க்கப்பட்டவர்கள் குப்
பைமேடுகளை அணைத்துக்கொள்ளுகிறார்கள்.—
௬ [1]கைகளின் பிரயாசம் இல்லாமல் ஒரு கணப்
பொழுதில் ஆகுமாப்போலே கீழதுமேலதாக்கப்
பட்ட சோதோமின் பாவத்தைப்பார்க்கிலும்
என் சனமாகிய குமாரத்தியின் அக்கிரமம் பெரி
௭ தானது.—அவர்களுடைய நசரேயர் உறைந்த
மழையைப்பார்க்கச் சுத்தமும், மகா துப்புரவும்,
முத்துகளைப்பார்க்கச் சுத்தாங்கமும், நீலக்கல்
௮ இழைத்த மேனியுமாயிருந்தார்கள்.—அவர்களு
டைய உருவம் கறுப்பினால் இருண்டுபோயிற்று;
வீதிகளில் அறியப்படமாட்டார்கள்; அவர்கள்
தோல் அவர்கள் எலும்புகளோடு ஒட்டிக்கொ
௯ ண்டு, காய்ந்தமரத்துக்கு ஒப்பாயிற்று. — பட்
டையத்தால் கொலையுண்டவர்கள், பசியினால்
கொலையுண்டவர்களைப்பார்க்க, பாக்கியவான்க
ளாயிருக்கிறார்கள்; ஏனெனில், இவர்கள் வயல்
களுடைய வரத்தில்லாமையால் குத்துண்டு,
௰ கரைந்துபோகிறார்கள். — [2]இரக்கமுள்ள ஸ்திரி
களின் கைகள் தங்கள் பிள்ளைகளைச் சமைத்தன;
என் சனமாகிய குமாரத்தியின் நொறுங்குதலில்
௰௧ அவைகள் அவர்களுக்கு ஆகாரமாயின.—கர்த்தர்
தம்முடைய சினத்தை நிறைவேற்றி, தம்மு
டைய கோபத்தின் உக்கிரத்தை ஊற்றிப்போட்
டு, சீயோனில் அக்கினியைக் கொளுத்தினார்;
அது அதின் அஸ்திபாரங்களைப் பட்சித்துப்போ
௰௨ ட்டது. — சத்துருவும் பகைஞனும் எருசலே
மின் வாசல்களுக்குள் பிரவேசிப்பான் என்கிற
தைப் பூமியின் இராசாக்களும் பூச்சக்கரத்தினு
டைய சகல குடிகளும் நம்பாதேபோனார்கள்.—
௰௩ அதின் நடுவில் நீதிமான்களின் இரத்தத்தைச்
சிந்திப்போட்ட அதினுடைய தீர்க்கதரிசிகளின்
பாவங்களினாலும் அதினுடைய ஆசாரியர்களின்
௰௪ அக்கிரமங்களினாலும் அப்படிவந்தது.—குருடர்
வீதிகளில் அலைந்து, அந்த இரத்தத்தால் கறைப்
பட்டு, ஒத்திப்போகக்கூடாததினால் இவர்கள்
௰௫ வஸ்திரங்களைத் தொட்டார்கள்.—விலகுங்கள்,
தீட்டு உண்டாயிருக்கிறது;தொடாமல் விலகுங்
கள், விலகுங்கள் என்று அவர்களை நோக்கிக்
கூப்பிட்டார்கள்; மெய்யாய்ப் பறந்தும் அலைந்
தும் போனார்கள்; இனித் தங்கித் தரிக்கமாட்டார்
களென்று புறச்சாதிகளுக்குள்ளேதான் சொல்
லப்பட்டது.—கர்த்தருடையமுகம் அவர்களைப் ௰௬
பிரித்துவிட்டது;அவர்களைஇனி நோக்கார்;ஆசா
ரியர்களுடைய முகத்தைப்பாராமலும் முதிர்ந்த
வயதுள்ளவர்களுக்கு இரங்காமலும் போனார்
கள்.—இன்னம் நாங்கள் எங்கள் அபத்தமான ௰௭
சகாயத்துக்குக் காத்திருந்ததினாலே எங்கள் கண்
கள் பூத்துப்போயின; இரட்சிக்கமாட்டாத சா
திக்கு எதிர்ப்பார்க்கவே எதிர்ப்பார்த்தோம்.—
நாங்கள் எங்கள் வீதிகளில் நடக்கக்கூடாதப ௰௮
டிக்கு எங்கள் நடைகளை வேட்டையாடினார்
கள்; எங்கள் முடிவு சேர்ந்தது; எங்கள் நாட்கள்
நிறைவேறிப்போயின; ஏனெனில், எங்கள்
முடிவு வந்தது.—எங்களைப் பின்தொடர்ந்தவர் ௰௯
கள் ஆகாசத்துக் கழுகுகளைப்பார்க்கிலும் வேக
மாயிருந்தார்கள்; பர்வதங்களின்மேல் எங்க
ளைக் கடிதாய்த்தொடர்ந்தார்கள்; வனாந்தரத்தில்
எங்களுக்குப் பதிவிருந்தார்கள்.—எங்கள் நாசி ௨௰
யின் மூச்சாகிய கர்த்தர் அபிஷேகம் பண்ணு
வித்தவனுடைய நிழலிலே சாதிகளுக்குள்ளே
பிழைப்போம் என்றோமே; [3]அவன் இவர்கள்
படுகுழிகளில் பிடிபட்டான்.—ஊத்ஸதேசத்தில் ௨௰௧
குடியிருக்கிற [4]ஏதோம் குமாரத்தியே, சந்தோ
ஷித்து மகிழ்; பாத்திரம் உன்னண்டைக்கும்
தாண்டிவரும்; அப்போது வெறித்துத் திறந்துகி
டப்பாய்.—சீயோன் குமாரத்தியே, [5]உன் அக்கி ௨௰௨
ரமம் தீர்ந்தது; உன்னை அப்புறம் சிறைபோகப்
பண்ணார்; ஏதோம் குமாரத்தியே, உன் அக்கிர
மத்தை விசாரிப்பார், உன் பாவங்களைத் திறந்து
வைப்பார்.

## ௫. அதிகாரம்.

௧. பாபானுக்குச் செலுத்தின செபத்திலே, சீயோனுடைய பரிதாபமுள்ள முறைப்பாடு.

கர்த்தாவே, எங்களுக்கு என்ன வந்ததென்று ௧
நினைத்துக்கொள்ளும்; எங்கள் நிந்தையை நோக்
கிப்பாரும்.

எங்கள் சுதந்தரம் அன்னியர்வசமாகவும் எங் ௨
கள் வீடுகள் புறத்தேசத்தார் வசமாகவும் புரண்
டுபோயின.—திக்கற்றவர்களானோம்; தகப்பன் ௩
இல்லை; எங்கள் தாய்கள் விதவைகளைப்போல
இருக்கிறார்கள்.—எங்கள் தண்ணீரைப் பணத் ௪
துக்கு வாங்கிக் குடிக்கிறோம்; எங்கள் விறகு
விலைக்கிரயமாய் வருகிறது. — எங்கள் கழுத் ௫
துக்குப் பாரமாக ஒட்டப்படுகிறோம், நாங்கள்
உழைத்து, இளைத்தாலும் எங்களுக்கு இளைப்பா
றுதல் இல்லை. — அப்பத்தால் திருத்தியாகும்ப ௬
டிக்கு எகிப்தியருக்கும் அசூரியருக்கும் எங்கள்
கையைக்கொடுத்தோம்.—எங்கள் பிதாக்கள் பா ௭
வஞ்செய்தார்கள்; அவர்கள் இல்லை; [6]நாங்கள்
அவர்களுடைய அக்கிரமங்களைச் சுமக்கிறோம்.—
அடிமைகள் எங்களை ஆளுகிறார்கள்; எங்களை ௮
அவர்கள் கையிலிருந்து பறிப்பாரில்லை.—வனாந் ௯

1 ௧ மோ. ௰௯. ௨௪, ௨௫.—2 புலம். ௨. ௨௰.—3 எரே. ௫௨. ௧.

4 எரே. ௪௯. ௰௨. சங். ௱௩௭. ௭.—5 ஏசா. ௪௰. ௧, ௨.—6 எரே. ௩௧. ௨௯.

தரத்தில் இருக்கிற பட்டையத்தைத்தொட்டு
எங்கள் அப்பத்தைப் பிராணயோக்கியத்தோடே
௰ கொண்டுவருகிறோம்.—பசியின் கடினத்தினால்
எங்கள் தோல் அடுப்பங்கரையைப்போலக் கறுத்
௰௧ துப்போயிற்று.—சீயோனில் இருந்த ஸ்திரிகளை
யும் யூதா பட்டணங்களில் இருந்த கன்னியாஸ்
௰௨ திரிகளையும் அவமானப்படுத்தினார்கள்.—பிரபுக்
கள் அவர்கள் கையினால் தூக்கிப்போடப்பட்
டார்கள்; [1]முதிர்ந்தவயதுள்ளவர்களின் முகங்
௰௩ கள் எண்ணப்பட்டதில்லை.—வாலிபரை எந்தி
ரம் அரைக்கக் கொண்டுபோகிறார்கள்; இளைஞர்
௰௪ விறகு சுமந்து இடறுண்கிறார்கள். — முதிர்ந்த
வயதுள்ளவர்கள் வாசல்களில் உளுக்காருகிற
தும், வாலிபர் கின்னரங்களை வாசிக்கிறதும்
௰௫ ஓய்ந்துபோயிற்று. — எங்கள் இருதயத்தின் சந்
தோஷம் ஒழிந்துபோயிற்று;எங்கள் களிகூருதல்
௰௬ துக்கமாய் மாறிற்று.—[2]எங்கள் தலையின் கிரீடம்
விழுந்தது; ஆ நாங்கள் பாவஞ்செய்ததினால் எங்
களுக்கு ஐயோ!

அதினாலே எங்கள் இருதயம் பலட்சயமாயிற் ௰௭
று; அதினாலே எங்கள் கண்கள் இருண்டுபோ
யின. — பாழாய்க்கிடக்கிற சீயோன் பர்வதத் ௰௮
தின்மேல் நரிகள் ஓடித்திரிகின்றன.

கர்த்தாவே,தேவரீர் என்றென்றைக்கும் இருக் ௰௯
கிறீர்; [3]உம்முடைய ஆசனம் தலைமுறைதலைமு
றையாக நிலைநிற்கும்.—[4]தேவரீர் என்றைக்கும் ௨௰
எங்களை மறந்து, நெடுங்காலமாக எங்களைக் கை
விட்டிருப்பானேன்? — கர்த்தாவே, [5]எங்களை ௨௧
உம்மண்டைக்குத் திருப்பிக்கொள்ளும், அப்
போது திரும்புகிறோம்; பூருவகாலத்துக்குச் சமா
னமாக எங்கள் நாட்களைப் புதியவைகளாக்கும்.–
ஏனெனில், எங்களை வெறுக்கவே வெறுப்பீரோ? ௨௨
மிகுதியாகவும் எங்கள்பேரிலே கடுமையாயிருப்
பீரோ?

1 ௫ மோ. ௨௮. ௪௯, ௫௰.—2 எரே. ௰௩. ௰௮.

3 சங். ௱௨. ௰௨.—4 சங். ௰௩. ௧.—5 எரே. ௩௧. ௰௮.

# EZEKIEL.

# எசேக்கியேலின் தீர்க்கதரிசனம்.

## ௧. அதிகாரம்.

௧. கேபார்நதியண்டையிலே எசேக்கியேலின் தீர்க்கதரிசனத்தின் காலமுதல், ௪. நாலு கேருபீன்களையும், ௰௫. நாலு உருளைகளையும், ௨௬. பராபரனுடைய மகிமையையும் தரிசித்த தரிசனை.

௧ முப்பதாம் வருஷத்து நாலாம்மாதம் ஐந்தாந்தேதி
யிலே நான் [1]கேபார்நதி அண்டையிலே சிறையி
ருப்பானவர்களின் நடுவில் இருக்கும்போது சம்
பவித்ததேதென்றால், வானங்கள்திறவுண்டு, நான்
பராபரனுடைய தரிசனைகளைக் கண்டேன்.—
௨ அப்போது [2]யோயாக்கீனென்ற இராசாவுடைய
௩ சிறையிருப்பின் ஐந்தாம் வருஷம்.—அந்த ஐந்
தாந்தேதியிலே, கல்தேயர் தேசத்திலுள்ள கேபார்
நதியண்டையில் இருந்த பூசியென்ற ஆசாரிய
னின் குமாரனாகிய எசேக்கியேலுக்குக் கர்த்தரு
டைய வார்த்தை உண்டாகவே உண்டாகி, அங்
கே கர்த்தருடைய கை அவன்மேல் வந்தது
௪ இதோ, வடக்கேயிருந்து புசல்காற்றும் பெரிய
மேகமும் அத்தோடே கலந்த அக்கினியும் வந்
தன என்று கண்டேன்; அதைச்சுற்றிலும் பிரகா
சமும் அதின் நடுவில் அக்கினிக்குள்ளிருந்து
விளங்கிய சொகுசாவின் உருவமும் உண்டாயி
௫ ருந்தது.— அதின் நடுவிலிருந்து புறப்படுகிற
நாலு சீவன்களின் உரு காணப்பட்டது; அவை
களின் உருவம் எப்படியெனில், அவைகள் மனு
௬ ஷசாயலாயிருந்தன.—[3]அவைகளில் ஒவ்வொன்
றுக்கு நந்நான்கு முகங்களும், ஒவ்வொன்றுக்கு
௭ நந்நான்கு செட்டைகளும் இருந்தன.—அவைக
ளுடைய கால்கள் செம்மையான கால்களான
வைகள்; அவைகளுடைய உள்ளங்கால்களோ
கன்றுக்குட்டியின் உள்ளங்கால்களுக்கு ஒப்பா
யிருந்தன; துலக்கப்பட்ட வெண்கலத்தின் வரு
௮ ணமாய் மின்னிக்கொண்டிருந்தன.—அவைகளு
டைய செட்டைகளின்கீழ் அவைகளின் நாலு
பக்கங்களிலும் [4]மனுஷகைகள் இருந்தன; நாலுக்
கும் அதினதின் முகங்களும் அதினதின் செட்
௯ டைகளும் உண்டாயிருந்தன.—அவைகள் ஒவ்
வொன்று தன்தன் செட்டைகளை மற்றதின் செட்
டைகளோடே சேர்த்தது; அவைகள் நடக்கை
யில் திரும்பிக்கொள்ளாமல் ஒவ்வொன்று தன்
தன் முகத்துக்கு எதிரான திக்குக்கு நெடுக நடந்
௰ தது.—[5]அவைகளுடைய முகங்களின் சாயலே
தெனில், அவைகளுக்கு மனுஷ முகங்களும், அ
வைகள் நாலுக்கும் வலதுபுறத்திலே [6]சிங்கமுகங்
களும், அவைகள் நாலுக்கும் இடதுபுறத்திலே
எருது முகங்களும், அவைகள் நாலுக்கும் கழுகு
முகங்களும் இருந்தன.—அவைகளுடைய முகங் ௰௧
களும் அவைகளுடைய செட்டைகளும் உயரப்
பிரிந்திருந்தன; ஒன்றோடொன்று சேர்ந்த இர
ண்டிரண்டு செட்டைகள் ஒவ்வொன்றுக்கு இ
ருந்தன; இரண்டிரண்டு செட்டைகளோ அவை
களுடைய சரீரங்களை மூடின.— ஒவ்வொன்று ௰௨
தன்தன் முகத்துக்கு எதிரான திக்குக்கு நெடுக
நடந்தது; ஆவி போகவேண்டுமென்றிருந்த எவ்
விடத்துக்கும் அவைகள் போயின; போகையில்
அவைகள் திரும்பிக்கொண்டதில்லை.—சீவன்க ௰௩
ளுடையசாயல் என்னவாயிருந்ததெனில், அவை
கள் எரிகிற அக்கினியினுடைய தணலின் உருவ
மும் தீவர்த்திகளின் உருவமுமானவைகள்; இந்த
அக்கினி சீவன்களுக்குள்ளே நடமாடிக்கொண்
டு பிரகாசமாயிருந்தது; அக்கினியிலிருந்து மின்
னல் புறப்பட்டது. — சீவன்கள் மின்னலின் ௰௪
உருவமாக ஓடித்திரிந்தன.

நான் இந்தச் சீவன்களைப் பார்த்துக்கொண்டி ௰௫
ருக்கையில், இதோ, பூமியில் சீவன்களண்டை
யிலே ஒரு உருளை தனக்கிருக்கும் நாலுமுகங்க
ளின்படி நின்றது. — [7]உருளைகளின் உருவும் ௰௬
அவைகளின் வேலையும் தர்சீஸ் இரத்தினத்தின்
வருணமாயின; அவைகள் நாலுக்கும் ஒரேவித
சாயல் உண்டாயிருந்தது; அவைகளின் உருவும்
அவைகளின் வேலையும் உருளையின் நடுவில்
உருளை இருக்குமாப்போலே காணப்பட்டன.—
அவைகள் ஓடுகையில் தங்கள் நாலுபக்கங்களி ௰௭
லும் ஓடும், ஓடுகையில் அவைகள் திரும்பிக்
கொண்டதில்லை.—அவைகளின் சக்கரங்களோ ௰௮
வென்றால் பயங்கரமான உயர்த்தியாயிருந்தன;
நாலினுடைய சக்கரங்களும் சுற்றிலும் [8]கண்க
ளால் நிறைந்திருந்தன.

சீவன்கள் நடக்கையில் உருளைகள் அவைக ௰௯
ளருகே ஓடின; சீவன்கள் பூமியிலிருந்து எழும்
புகையில் உருளைகளும் எழும்பின.—ஆவி போ ௨௰
கவேண்டுமென்றிருந்த எவ்விடத்துக்கும் அவை
கள் போயின; அவ்விடத்துக்கு அவைகளின் ஆ
வியும் போகவேண்டுமென்றிருந்தது; உருளைக
ளும் அவைகளருகில் எழும்பின; ஏனென்றால்
சீவனுடைய ஆவி உருளைகளில் இருந்தது.—அ ௨௰௧
வைகள் போகையில் இவைகள் போயின; அவை

1 சங். ௱௩௭. ௧.
2 ௨ இரா. ௨௪. ௰௫.
3 எசே. ௰. ௰௪.
4 எசே. ௰. ௰௮.
5 எசே. ௰. ௰௪. வெளி. ௪. ௭.
6 ௧ இரா. ௭. ௨௯.—7 எசே ௰. ௯,௰.
௧ இரா. ௭. ௩௰.—8 எசே. ௰. ௰௨.

கள் நிற்கையில் இவைகள் நின்றன; அவைகள்
பூமியிலிருந்து எழும்புகையில், உருளைகள் அவை
களருகே எழும்பின; ஏனெனில் ஜீவனுடைய
ஆவி உருளைகளில் இருந்தது.
௨௨ ஜீவனுடைய தலைகளின்மேலோவென்றால்,
பயங்கரமான பளிங்கின் துலக்கமாய் ஒரு மண்
டலம் இருந்தது; அவைகள் உயர அவைகளு
௨௩ டைய தலைகளின்மேல் விரித்திருந்தது.—மண்
டலத்தின்கீழ் அவைகளுடைய செட்டைகள்
ஒன்றுக்கொன்று எதிராக செம்மையாய் விரிந்தி
ருந்தன; தங்கள்தங்கள் சரீரங்களை மூடிக்கொள்
ளுகிற இரண்டிரண்டு செட்டைகள் இந்தண்
டையும் அந்தண்டையும் இருக்கிற ஒவ்வொன்
௨௪ றுக்கும் இருந்தன.-அவைகள் நடக்கையில் நான்
அவைகளுடைய செட்டைகளின் இரைச்சலைத்
திரளான தண்ணீர்களின் இரைச்சலாகவும், சரு
வத்துக்கும் வல்லவருடைய சத்தமாகவும் கேட்
டேன்; ஒரு இராணுவத்தின் இரைச்சலுக்குஒத்த
அரவத்தின் சத்தமாயிருந்தது; அவைகள் நிற்கை
யில் தங்கள் செட்டைகளைத் தளரவிட்டன.—
௨௫ அவைகள் நின்று தங்கள் செட்டைகளைத் தளர
விட்டிருக்கையில் அவைகளுடைய தலைகளுக்
கு மேலான மண்டலத்தின்மீதிலிருந்து சத்தம்
பிறந்தது.
௨௬ அவைகளுடைய தலைகளுக்கு மேலான மண்
டலத்தின்மீதில் நீலக்கல்லின் உருவுக்கு ஒத்த
இராசாசனத்தினுடைய சாயலும், உயரஇராசாச
னத்தினுடைய சாயலின்மேலே மனுஷனுக்கு
௨௭ ஒத்த சுரூபமும் இருந்தது.—அவருடைய இடுப்
பின் உருவந்துவக்கி மேலெல்லாம் உட்புறம்
சுற்றிலும் அக்கினிக்காந்தியான சொகுசாவின்
நிறமாகக் கண்டேன்; அவருடைய இடுப்பின்
உருவந்துவக்கிக் கீழெல்லாம் அக்கினி உருவ
மாகவும், அதைச்சுற்றிலும் பிரகாசமாகவும் கண்
௨௮ டேன்.—மழைநாளில் மேகத்தில் வானவில்
எப்படிக் காணப்படுகிறதோ, அப்படிச் சுற்றிலு
முண்டான அந்தப் பிரகாசம் காணப்பட்டது;
இதுவே கர்த்தருடைய மகிமையின் சாயலின்
தரிசனையாயிருந்தது; [1]அதை நான் பார்த்தபோது
நான் முகங்குப்புற விழுந்து, பேசுகிற ஒருவ
ருடைய சத்தத்தைக் கேட்டேன்.

## ௨. அதிகாரம்.

௧. எசேக்கியேல் அனுப்பப்பட்டது. ௬. அவனுக்குக் கொடுக்கப்பட்ட தைரியம். ௯. அவனுடைய பாரமான தீர்க்கதரிசனத்தின் சுருள்.

௧ அவர் என்னுடனே: மனுபுத்திரனே, [2]உன்
பாதங்களின்மேல் நில்; உன்னுடனே பேசு
௨ வோம் என்றார்.—இப்படி அவர் என்னுடனே
சொல்லுகிறபோது, [3]ஆவி எனக்குள் வந்து, என்
னை என் பாதங்களின்மேல் நிறுத்திற்று; அப்
போது என்னுடனே பேசுகிறவரின் வசனத்
௩ தைக் கேட்டேன்.—அவர் என்னுடனே சொன்
னதாவது: மனுபுத்திரனே, நமக்கு விரோதமாய்
எழும்பின கலகக்காரசாதியாகிய இஸ்ரவேல்
புத்திரரண்டைக்கு நாம் உன்னை அனுப்புகி
றோம்; அவர்களும் அவர்கள் பிதாக்களும் இந்
நாள்வரைக்குமே நமக்கு விரோதமாய்த் துரோ
கஞ்செய்தார்கள்.—[4]அவர்கள் கடினமுகமும் ௪
முரட்டாட்ட இருதயமுமுள்ள புத்திரர்; அவர்
கள் அண்டைக்கு நாம் உன்னை அனுப்புகிறோம்;
கர்த்தராகிய ஆண்டவர் இன்னின்னதை உரைக்
கிறாரென்று அவர்களோடே சொல்வாயாக.—
கலகவீட்டாராகிய அவர்கள் கேட்டாலும் கே ௫
ளாவிட்டாலும் [5]தங்களுக்குள்ளே ஒரு தீர்க்க
தரிசி இருக்கிறதை அவர்கள் அறியவேண்டும்.
மனுபுத்திரனே, [6]நீ அவர்களுக்குப் பயப்ப ௬
டாயாக; அவர்கள் வார்த்தைகளுக்கும் பயப்ப
டாயாக; முரட்டாட்டக்காரரும் முள்ளுகளும்
உன்னிடத்தில் இருந்தாலும், நீ தேள்களிடத்
தில் தங்கியிருந்தாலும், நீ அவர்கள் வார்த்தைக
ளுக்குப் பயப்படாமலும் [7]அவர்கள் முகத்துக்
குக் கலங்காமலுமிருப்பாயாக; ஏனெனில் அ
வர்கள் கலகவீட்டார்.—கலகக்காரராகிய அவர ௭
கள் கேட்டாலும் கேளாவிட்டாலும் நீ நம்மு
டைய வார்த்தைகளை அவர்களோடே சொல்வா
யாக.
மனுபுத்திரனே, நீயோவென்றால் கலகவீட் ௮
டாரைப்போலக் கலகக்குணமாயிராமல், நாம்
உன்னோடே சொல்லுகிறதைக் கேள்; உன் வா
யைத்திறந்து [8]நாம் உனக்குக் கொடுக்கிறதைப்
புசியென்றார்.— அப்போது இதோ, என்னண் ௯
டைக்கு நீட்டப்பட்ட கையைக் கண்டேன்;
இதோ, அதிலே புஸ்தகச்சுருள்.—அவர் அதை ௰
எனக்குமுன்பாக விரித்தார்; அது முற்புறமும்
பிற்புறமும் எழுதப்பட்டதாயிருந்தது; அதிலே
புலம்பல்களும் தவிப்பும் ஐயோ என்பதும் எழு
தியிருந்தது.

## ௩. அதிகாரம்.

௧. எசேக்கியேல் சுருளைப்புசித்தது. ௪. பாரபரன் அவனைத் தயிரியப்படுத்தினது. ௰௫. தீர்க்கதரிசனத்தின் சட்டத்தை அவனுக்குக் காட்டினது. ௨௨. தீர்க்கதரிசியின் வாயை மூடினதும் திறந்ததும்.

பிற்பாடு அவர் என்னுடனே, மனுபுத்திரனே, ௧
[9]நீ காண்கிறதைப் புசி; இந்தச் சுருளை நீ புசித்து,
போய், இஸ்ரவேல் வீட்டாரோடே பேசு என்
றார்.—அப்படியே என் வாயைத்திறந்தேன்; அப் ௨
போது அவர் அந்தச் சுருளை எனக்குப் புசிக்கக்
கொடுத்து,—என்னுடனே, மனுபுத்திரனே, நாம் ௩
உனக்குக்கொடுக்கிற இந்தச்சுருளை நீ உன்வயிற்
றிலே உட்கொண்டு, அதினால் உன் குடல்களை
நிரப்புவாயாகவென்றார்; அப்போது அதைப் பு
சித்தேன்; [10]அது என் வாயிலே தேனைப்போலத்
தித்திப்பாயிருந்தது.—பிறகு அவர் என்னுடனே ௪
சொன்னதாவது: மனுபுத்திரனே, நீ போய், இஸ்
ரவேல் வீட்டாரிடத்திலே சேர்ந்து, நம்மு
டைய வார்த்தைகளைக்கொண்டு அவர்களோடே
பேசு.—ஏனெனில் அடக்கமான உதடும் அறிய ௫
அரிதான பாஷையுமுள்ள சனத்தண்டைக்கல்ல,

1 தானி. ௰. ௯.
2 தானி. ௰. ௰௧
3 எசே. ௩. ௨௪.—4 ஏசா. ௪௮. ௪.
எரே. ௫. ௩.
5 எசே. ௩. ௰௭
6 எரே. ௧. ௮.
7 ௧ பே. ௩. ௰௪.—8 வெளி. ௰. ௯.
9 வெளி. ௰. ௯.—10 வெளி. ௰. ௰.

இஸ்ரவேல் வீட்டாரண்டைக்கே நீ அனுப்பப்
௬ ப • கிறாய். — அடக்கமான உதடும், தாங்கள்
சொல்லும் வார்த்தைகளை நீ உணரமாட்டாத அரி
தான பாஷையுமுள்ள அநேக சனசதளங்களண்
டைக்கு நீ அனுப்பப்படுகிறதுமில்லையே; நாம்
அவர்களண்டைக்கு உன்னை அனுப்பினாலும்,
அவர்கள் உனக்குக் கேள்விகொடாதிருப்பார்க
௭ ளோ?—இஸ்ரவேல் வீட்டாரோவெனில் உனக்
குக் கேள்விகொடுக்கமாட்டோமென்பார்கள்;
ஏனெனில் நமக்குத்தானே கேள்விகொடுக்க
மாட்டோமென்கிறார்கள்; அதேனென்றால் இஸ்
ரவேல் வீட்டார் அனைவரும் [1]முரட்டாட்ட
நெற்றியும் கடின இருதயமும் உள்ளவர்கள்.—
௮ இதோ, [2]உன் முகத்தை அவர்கள் முகத்துக்கெதி
ராகக் கெட்டியும், உன் நெற்றியை அவர்கள்
நெற்றிக்கெதிராகக் கெட்டியுமாக்குகிறோம்.—
௯ உன் நெற்றியை வச்சிரத்தைப்போலவும் கல்ம
லையைப்பார்க்கிலும் கெட்டியுமாக்கினோம்; அ
வர்கள் கலகமுள்ள வீட்டாரென்று நீ அவர்க
ளுக்குப் பயப்படாமலும் அவர்கள் முகங்களுக்
குக் கலங்காமலும் இருப்பாயாகவென்றார்
௰ பின்னையும் அவர் என்னோடே சொன்னதா
வது: மனுபுத்திரனே, நாம் உன்னுடனே சொல்
லும் நம்முடைய வார்த்தைகளை எல்லாம் நீ உன்
இருதயத்துக்குள் ஏற்றுக்கொண்டு, உன் செவிக
௰௧ ளாலே கேட்டு,-நீ போய், சிறையிருப்பான உன்
சனத்தின் புத்திரரிடத்திலே சேர்ந்து, [3]அவர்கள்
கேட்டாலும் கேளாவிட்டாலும் அவர்களுட
னே பேசி, கர்த்தராகிய ஆண்டவர் இன்னின்
னதை உரைக்கிறாரென்று அவர்களோடே சொ
ல்வாயாகவென்றார்.
௰௨ [4]அப்போது ஆவி, என்னை ஏறெடுத்துக்கொண்
டது; தன் தானத்திலிருந்து விளங்கிய கர்த்தரு
டைய மகிமை ஸ்தோத்திரிக்கப்படக்கடவதென்
று எனக்குப் பின்னாகக் கூப்பிட்ட மகா அதிர்த்
௰௩ தலின் சத்தத்தையும்,—ஒன்றோடொன்று சேரு
கிற சீவன்களுடைய செட்டைகளின் இரைச்ச
லையும் அதற்கெதிரே ஓடிய உருளைகளின் இரை
ச்சலையும் மகா அதிர்த்தலின் சத்தத்தையும் கேட்
௰௪ டேன்.—ஆவி என்னை ஏறெடுத்துக்கொண்டது;
நான் என் ஆவியின் உக்கிரத்தினாலே கசப்போ
டே போனேன்; ஆனால் கர்த்தருடைய கை என்
௰௫ மேல் பெலனாக இருந்தது.—கேபார் நதியண்டை
யிலே தெல் அவீபிலே தாபரிக்கிற சிறையிருப்
பானவர்களண்டைக்கு நான் வந்து, அவர்கள் தா
பரிக்கிற ஸ்தலத்திலே தாபரித்து, ஏழுநாள் அ
வர்கள் நடுவிலே பிரமித்தவனாய்த் தங்கினேன்.
௰௬ ஏழுநாளின் முடிவிலே சம்பவித்ததேதென்
றால், கர்த்தருடைய வார்த்தை எனக்கு உண்
௰௭ டாகி, அவர் சொன்னதாவது:—மனுபுத்திரனே,
[5]உன்னை இஸ்ரவேல் வீட்டாருக்குக் காவற்கார
னாகவைத்தோம்; நீ நம்முடைய வாயினாலே வா
ர்த்தையைக்கேட்டு, நம்முடைய நாமத்திலே அ

வர்களை எச்சரிப்பாயாக.-சாகவே சாவாயென்று ௰௮
நாம் ஆகாதவனுக்குச் சொல்லுகையில் நீ அவனை
எச்சரிக்காமலும், நீ ஆகாதவனைத் தன் ஆகாதவ
ழியில் இராதபடிக்கு எச்சரிக்கத்தக்கதாகவும் அ
வனை உயிரோடே காக்கத்தக்கதாகவும் அதை
அவனுக்குச் சொல்லாமலும் இருந்தால், அந்த
ஆகாதவன் தன் அக்கிரமத்திலே சாவான்; ஆனால்
அவன் இரத்தப்பழியை உன் கையிலே கேட்
போம்.—நீ ஆகாதவனை எச்சரித்தும். அவன் தன் ௰௯
ஆகாமியத்தையும் தன் ஆகாதவழியையும் விட்
டுத் திரும்பாதேபோனானேயாகில், அவன் தன்
அக்கிரமத்திலே சாவான்; நீயோவெனில் உன்
ஆத்துமாவைத் தப்பப்பண்ணினாய்.
அப்படியே, [6]நீதிமான் தன் நீதியைவிட்டுத் ௨௰
திரும்பி, நீதிகேடு செய்யும்போதும், நாம் அவன்
முன் இடறை வைக்கும்போதும், அவன் சா
வான்; நீ அவனை எச்சரிக்காதபடியினாலே தன்
பாவத்திலே சாவான்; அவன் செய்த நீதிகள் நி
னைக்கப்படுவதில்லை; அவனுடைய இரத்தப்பழி
யையோ உன் கையிலே கேட்போம்.—நீயோ ௨௧
வென்றால், நீதிமான் பாவஞ்செய்யாதபடிக்கு
நீதிமானை எச்சரித்தபிறகு அவன் பாவஞ்செய்
யாவிட்டால், அவன் பிழைக்கவே பிழைப்
பான்; ஏனெனில் எச்சரிக்கப்பட்டுப்போனான்;
நீயும் உன் ஆத்துமாவைத் தப்பப்பண்ணினா
யென்றார்.
அவ்விடத்திலே [7]கர்த்தருடைய கை என்மே ௨௨
லே வந்து, அவர் என்னுடனே: நீ எழுந்திருந்து
பள்ளத்தாக்குக்குப் புறப்பட்டுப்போ, அங்கே
உன்னுடனே பேசுவோமென்றார்.—அப்படியே ௨௩
எழுந்திருந்து, பள்ளத்தாக்குக்குப் புறப்பட்டுப்
போனேன்; இதோ, [8]நான் கேபார்நதியண்டை
யிலே கண்ட மகிமைக்குச் சரியாக அங்கே கர்த்
தருடைய மகிமை நின்றது; அப்போது நான்
முகங்குப்புற விழுந்தேன்.—ஆனால் [9]ஆவி எனக் ௨௪
குள் வந்து, என்னை என் பாதங்களின்மேல் நிறு
த்திற்று; அப்போது அவர் என்னுடனே பேசி,
எனக்குச் சொன்னதாவது: நீ போய், உன் வீட்
டுக்குள்ளே உன்னை அடைத்துக்கொண்டிரு.—
ஏனெனில், இதோ, மனுபுத்திரனே, உன்மேல் ௨௫
கயிறுகளைப்போட்டு, அவைகளால் உன்னைக்
கட்டப்போகிறார்கள்; ஆகையால் நீ அவர்களுக்
குள் புறப்படாயாக. — நாம் உன் நாவை உன் ௨௬
மேல்வாயோடே ஒட்டிக்கொள்ளப்பண்ணு
வோம்; நீ அவர்களுக்குக் கடிந்துகொள்ளுகிற
மனுஷனாயிராமல் ஊமையாயிருப்பாய்; ஏனென்
றால் அவர்கள் கலகவீட்டார்.—நாம் உன்னோடே ௨௭
சொல்லும்போதோவெனில், உன் வாயைத் திறப்
போம்; அப்போது கர்த்தராகிய ஆண்டவர் இன்
னின்னதை உரைத்தாரென்று அவர்களோடே
சொல்வாயாக; [10]கேட்கிறவன் கேட்பான், கே
ளாதவன் கேளாதிருப்பான்; ஏனென்றால் அவர்
கள் கலகவீட்டார்.

1 எசே. ௨. ௪. 2 எரே. ௫. ௩. 3 எசே. ௨. ௬-௭.—4 எசே. ௮. ௩. 5 எசே. ௩௩. ௭-௯.
6 எசே. ௰௮. ௨௪, ௩௩: ௰௨. ௰௩. 7 எசே. ௧. ௩.—8 எசே. ௧. ௨௮. 9 எசே. ௨. ௨. 10 எசே. ௨. ௫, ௭.

## ௪. அதிகாரம்.

௧. முற்றிக்கையின் அடையாளத்தினாலே எரோபெயாமின் பின்வாங்குதல் முதல் சிறையிருப்புவரைக்குமுண்டாகிய காலத்தைக் காட்டினது. ௯. முற்றிக்கைக்காகச் செய்த எத்தனத்தினாலே பஞ்சத்தின் கொடுமையைக் காட்டினது.

௧ இப்போதும் மனுபுத்திரனே, நீ ஒரு செங்கல்லை
எடுத்துக்கொண்டு, அதை உன்முன்னேவைத்து,
அதின்மேல் எருசலேமென்ற பட்டணத்தைப்
௨ பதித்து, — [1]அதற்கு விரோதமாக முற்றிக்கை
போட்டு, அதற்கு விரோதமாகக் கொத்தளங்க
ளைக்கட்டி, அதற்கு விரோதமாக அணைபோட்டு,
அதற்கு விரோதமாக இராணுவங்களை நிறுத்தி,
சுற்றிலும் அதற்கு விரோதமாக மதிலைமுட்டும்
௩ எத்தனங்களை வை. — நீயோவென்றால், இருப்
புச்சட்டியை வாங்கிக்கொண்டு, இதை உனக்
கும் பட்டணத்துக்கும் நடுவாக இருப்புச்சுவ
ராக்கி, அது முற்றிக்கையாய்க் கிடக்கும்படிக்கு
உன் முகத்தை அதற்கு நேராகத் திருப்பி, அதை
முற்றிக்கைபோட்டுக்கொண்டிரு; அது இஸ்ர
வேல் வீட்டுக்கு அடையாளம்.
௪ நீயோவெனில் உன் இடதுபக்கமாய் ஒருக்க
ளித்து, இஸ்ரவேல் வீட்டாரின் அக்கிரமத்தை
அதின்பேரிலே சுமத்திக்கொள்; நீ அந்தப்பக்க
மாய் ஒருக்களித்திருக்கும் நாள்களின் இலக்கத்
துக்குத்தக்கதாக அவர்களுடைய அக்கிரமத்தைச்
௫ சுமப்பாயாக.—ஏனெனில் அவர்களுடைய அக்
கிரமத்தின் வருஷங்களை நாள்களாக எண்ணும்
கணக்காய் உனக்குக் கட்டளையிட்டோம்; முந்
நூற்றுத்தொண்ணூறு நாள்களாக நீ இஸ்ரவேல்
வீட்டாரின் அக்கிரமத்தைச் சுமக்கவேண்டும்.—
௬ நீ இவைகளை நிறைவேற்றினபிற்பாடு, மறுபடி
யும் உன் வலதுபக்கமாய் ஒருக்களித்து, யூதா
வீட்டாரின் அக்கிரமத்தை நாற்பதுநாளாகச்
சுமக்கவேண்டும்; ஒவ்வொரு வருஷத்துக்கு ஒவ்
வொரு நாளை உனக்குக் கட்டளையிட்டோம்.
௭ நீ எருசலேமின் முற்றிக்கைக்கு நேராகத்
திருப்பிக்கொண்ட முகமாகவும், திறந்த புயமா
கவும் இருந்து, அதற்கு விரோதமாகத் தீர்க்கதரிச
௮ னம் சொல்வாயாக.—இதோ, நீ முற்றிக்கைபோ
டுதலின் நாள்களை நிறைவேற்றுமட்டாக ஒருபக்
கத்திலிருந்து மறுபக்கத்தில் புரளக்கூடாதப
டிக்கு உன்பேரிலே கயிறுகளைப்போடுவோம்.
௯ இப்போதும், நீ கோதுமையையும் வாற்கோது
மையையும் பெரும்பயற்றையும் சிறுபயற்றை
யும் சாமையையும் கம்பையும் வாங்கி, அவைக
ளை ஒரு பாண்டத்திலே போட்டு, அவைகளால்
உனக்கு அப்பஞ்சுடுவாயாக; நீ ஒருக்களித்துப்
படுக்கும் நாள்களுடைய இலக்கத்தின்படியே
முந்நூற்றுத்தொண்ணூறுநாள் அதில் சாப்பிடுவா
௰ யாக.—நீ சாப்பிடும் போசனப்படி, நாள் ஒன்று
க்கு இருபதுசேக்கல் நிறையாயிருப்பது அப்படி
௰௧ நாளுக்குநாள் சாப்பிடுவாயாக.—தண்ணீரையும்
அளவாய் ஈனிலே ஆறிலொருபங்கைக் குடிப்
பாயாக; அப்படி நாளுக்குநாள் குடிக்கக்கட
வாய்.—அதை வாற்கோதுமையினுடைய அடை ௰௨
யின் சாயலாக்கிச் சாப்பிடுவாயாக; அது மனுஷ
னிலிருந்து கழிந்த கஷ்டத்தின் வறட்டிகளால்
அவர்கள் கண்களுக்குமுன்பாகச் சுடப்படுவ
தாக.
அதற்கு ஒத்தபடியே இஸ்ரவேல் புத்திரர், நாம் ௰௩
தங்களைத் துரத்துகிற புறச்சாதிகளுக்குள்ளே தங்
கள் அப்பத்தைத் தீட்டுள்ளதாகச் சாப்பிடுவார்க
ளென்று கர்த்தர் சொன்னார்.—அப்போது நான்: ௰௪
ஆ கர்த்தராகிய ஆண்டவரே, இதோ, என் ஆத்
துமா தீட்டுப்பட்டதில்லை; தானாய்ச் செத்ததை
யாகிலும் பீறுண்டதையாகிலும் நான் என் சிறு
வயதுதுவக்கி இதுவரைக்கும் சாப்பிட்டதில்லை;
அருவருப்பான இறைச்சி என் வாய்க்குட்பட்
டதுமில்லை என்றேன்.
அப்போது அவர் என்னுடனே: பார், மனுஷ ௰௫
கஷ்டத்தின் வறட்டிகளுக்குப்பதிலாக உனக்
கு மாட்டுச்சாணி வறட்டிகளைக் கட்டளையிடுகி
றோம்; அவைகளின்மேல் உன் அப்பத்தைச் சுடு
வாயாகவென்றார்.
பிற்பாடு அவர் உரைத்ததாவது: மனுபுத்திர ௰௬
னே, இதோ, அப்பமும் தண்ணீரும் அவர்களுக்
குக் குறையவும் அவனவன் திடுக்கிடவும் அவர்
கள் தங்கள் அக்கிரமத்திலே வாடிப்போகவும்,—
நாம் எருசலேமிலே [2]அப்பத்தின் ஆதரவுகோ ௰௭
லை உடைக்கிறோம்; அவர்கள் அப்பத்தை நிறை
யின்படியேயும் விசாரத்தோடேயும் சாப்பிட்டு,
தண்ணீரை அளவின்படியேயும் திடுக்கிடுதலோ
டேயும் குடிப்பார்கள்.

## ௫. அதிகாரம்.

௧. தலைமயிரின் அடையாளத்தினாலே, ௫. எருசலேமின் கலகத்துக்காக, ௰௨. பஞ்சத்தினாலும், பட்டயத்தினாலும், சிதறிப்போவதினாலும், அதின்மேல் வரும் நியாயத்தீர்ப்பைக் காட்டினது.

பின்னையும் மனுபுத்திரனே சவரகன் கத்தியா ௧
கிய கருக்கான கத்தியை வாங்கிக்கொள்; அதை
வாங்கி, அதினால் உன் தலையையும் உன் தாடி
யையும் சிரைத்துக்கொண்டு, பிறகு நிறுக்கும்
தராசை வாங்கி, மயிரைப் பங்கிடக்கடவாய்.—
மூன்றத்தொருபங்கை முற்றிக்கைபோடும் நாள் ௨
கள் முடிகிறபோது நீ பட்டணத்தின் நடுவிலே
அக்கினியால் சுட்டெரித்து, மூன்றத்தொருபங்
கை வாங்கி, அதைச் சுற்றிலும் கத்தியாலே
தட்டி, மூன்றத்தொருபங்கைக் காற்றில் தூற்றக்
கடவாய்; அவைகளின்பிறகாலே நாம் பட்டை
யத்தை உருவுவோம்.—இவைகளில் கொஞ்சத் ௩
தைமாத்திரம் எடுத்து, அவைகளை உன் வஸ்தி
ரத்தொங்கல்களில் முடிந்துவைப்பாயாக.—இன் ௪
னம் இவைகளில் சிலவற்றை எடுத்து, அவைக
ளைத் தீயின்நடுவில் எறிந்து, அவைகளை அக்கினி
யால் சுட்டெரிப்பாயாக; இதிலிருந்து இஸ்ர
வேல் வீட்டார் அனைவருக்கும் விரோதமாக அக்
கினி புறப்படும்.

1 ௨ இரா. ௨௫ ௧.

2 எசே. ௰௪: ௰௩. ௰௬. ௩ மோ. ௨௬. ௨௬.

௫ கர்த்தராகிய ஆண்டவர் சொல்லுகிறதாவது:
இது புறச்சாதிகளின் நடுவிலே நாம் வைத்த
தும், சுற்றிலும் தேசங்கள் இருக்கிறதுமான எரு
௬ சலேம்.—அது புறச்சாதிகளைப்பார்க்கிலும் நம்
முடைய நியாயங்களையும், தன்னைச் சுற்றிலும்
இருக்கிற தேசங்களைப்பார்க்கிலும் நம்முடைய
கட்டளைகளையும் ஆகாமியமாக மாற்றிப்போட்
டது; ஏனெனில் நம்முடைய நியாயங்களை வெ
றுத்து, நம்முடைய கட்டளைகளில் நடவாதே
௭ போனார்கள்.—ஆகையால் கர்த்தராகிய ஆண்ட
வர் சொல்லுகிறதாவது: [1]உங்களைச் சுற்றிலும்
இருக்கிற புறச்சாதிகளைப்பார்க்கிலும் அதிகரிக்
கிறவர்களாகிய நீங்கள் நம்முடைய கட்டளைக
ளிலே நடவாமலும், நம்முடைய நியாயங்களைச்
செய்யாமலும், உங்களைச் சுற்றிலும் இருக்கிற
புறச்சாதிகளுடைய நீதிநியாயங்களின்படி முத
௮ லாய்ச் செய்யாமலும் போனபடியினாலே,—கர்த்
தராகிய ஆண்டவர் சொல்லுகிறதாவது: இதோ,
நாம், நாமே உனக்கு விரோதமாக வந்து, புறச்சா
திகளுடைய கண்களுக்குமுன்பாக உன் நடுவி
௯ லே நியாயங்களைச் செய்து,— நாம் செய்யாதி
ருக்கிறதும் இனிச் செய்யாதிருப்பதுமானவித
மாய் உனக்கு உன்னுடைய எல்லா அருவருப்
௰ புகளின்நிமித்தமுமாய்ச் செய்வோம்.— ஆனது
கொண்டு [2]உன் நடுவிலே பிதாக்கள் பிள்ளைக
ளைத் தின்பார்கள்; பிள்ளைகள் பிதாக்களைத் தின்
பார்கள்; நாம் உன்னில் நியாயங்களைச் செய்து,
உன்னில் மீதியாயிருப்பவர்களை எல்லாம் சகல
காற்றுத்திசைகளிலும் சிதறிப்போகப்பண்ணு
வோம்.

௧௧ ஆனதுகொண்டு, நீ என்னப்படத்தக்கதும் அ
ருவருக்கப்படத்தக்கதுமான உன் கிரியைகளா
லே நீ நமது பரிசுத்தஸ்தலத்தைத் தீட்டுப்படுத்
தினபடியினாலே [3]நமது கண் உன்னைத் தப்பவி
டாமல், நாமும் உன்னை வாங்கிப்போடுவோம்;
நாமும்மன்னியோமென்று நம்முடைய சீவனைக்
கொண்டு சொல்லுகிறோமென்று கர்த்தராகிய
௧௨ ஆண்டவர் உரைக்கிறார்.—உன்னிலே மூன்றத்
தொருபங்கு பெருவாரிக்காய்ச்சலால் சாவார்
கள்; பஞ்சத்தாலும் உன் நடுவிலே மடிந்துபோ
வார்கள்; மூன்றத்தொருபங்கு உன்னைச் சுற்றி
லும் இருக்கிற பட்டையத்தால் வெட்டுண்டு வி
ழுவார்கள்; மூன்றத்தொருபங்கை நாம் சகல கா
ற்றுத்திசைகளிலும் சிதறிப்போகப்பண்ணி, அ
வர்கள் பிறகாலே பட்டையத்தை உருவுவோம்.—
௧௩ இப்படி நம்முடைய கோபம் நிறைவேறும்; இப்
படி நாம் நம்முடைய உக்கிரத்தை அவர்கள்பே
ரிலே தங்கப்பண்ணுகிறதினாலே [4]நம்மை ஆற்றிக்
கொள்ளுவோம்; நாம் நம்முடைய உக்கிரத்தை
அவர்களில் நிறைவேற்றுகையில், அப்போது
கர்த்தராகிய நாம் நம்முடைய வைராக்கியத்திலே
இதைப் பேசினோமென்று அறிவார்கள்.
௧௪ கடந்துபோகிற யாவருடைய கண்களுக்கு
முன்பாகவும் நாம் உன்னை உன் சுற்றுப்புறத்தா
ராகிய சாதிகளுக்குள்ளே பாழும் நிந்தையுமாக்
கிப்போடுவோம்.—நாம் கோபத்தாலும் உக்கிரத் ௧௫
தாலும் உக்கிரமான தண்டனைகளினாலும், உன்
னில் நியாயங்களைச் செய்யும்போது [5]அந்த நிந்
தையும் தூர்க்கீர்த்தியும் உன் சுற்றுப்புறத்தா
ராகிய சாதிகளுக்குப் புத்தியாகவும் பிரமிப்பாக
வும் இருக்கும்; கர்த்தராகிய நாம் இதைச் சொன்
னோம்.—உங்களை அழிப்பதற்கு நாம் அனுப்பும் ௧௬
அழிப்புக்கான பஞ்சத்தின் பொல்லாத அம்புக
ளை நாம் அவர்களுக்குள்ளே எய்யும்போது, [6]நாம்
பஞ்சத்தை உங்கள்மேல் அதிகரிக்கப்பண்ணி,
உங்கள் அப்பத்தின் ஆதரவுகோலை உடைப்
போம்.—பஞ்சத்தையும், [7]உன்னைப் பிள்ளைகள் ௧௭
இல்லாமல் போகப்பண்ணும் துஷ்டமிருகங்க
ளையும் உங்களுக்கு விரோதமாக அனுப்புவோம்;
பெருவாரிக்காய்ச்சலும் இரத்தத்தைச் சிந்துதலும்
உன்னில் சுற்றித்திரியும்; பட்டையத்தை நாம்
உன்மேல் வரப்பண்ணுவோம்; கர்த்தராகிய நாம்
இதைச் சொன்னோமென்றார்.

## ௬. அதிகாரம்.

*௧. இஸ்ரவேலின் விக்கிரகத்தொழும்புக்காக வரும் நியாயத்தீர்ப்பு. ௮. மீதி யானவர்களின் சவுக்கியம். ௰௧. அவர்களுடைய துன்பங்களைக்குறித்துப் புலம்ப விசுவாசிகள் தூண்டிவிடப்பட்டது.*

கர்த்தருடைய வார்த்தை எனக்கு உண்டாகி, ௧
அவர் சொன்னதாவது:
மனுபுத்திரனே, [8]நீ இஸ்ரவேலின் பர்வதங்க ௨
ளுக்கு நேராக உன் முகத்தைத் திருப்பி, அவை
களுக்கு விரோதமாகத் தீர்க்கதரிசனம் உரைத்
துச் சொல்லவேண்டியதேதெனில்,—இஸ்ரவே ௩
லின் பர்வதங்களே, கர்த்தராகிய ஆண்டவரின்
வார்த்தையைக் கேளுங்கள்; பர்வதங்களோடும்
குன்றுகளோடும் ஓடைகளோடும் பள்ளத்தாக்கு
களோடும் கர்த்தராகிய ஆண்டவர் சொல்லுகிற
தாவது: இதோ, உங்கள்மேல் நாம், நாமே பட்டை
யத்தை வரப்பண்ணி, உங்கள் மேடைகளை
அழித்துப்போடுவோம்.—உங்கள் பலிபீடங்கள் ௪
பாழ்க்கடிக்கப்பட்டு, உங்கள் சிலைகள் தகர்க்கப்
படும்; உங்களில் கொலையுண்கிறவர்களை உங்
கள் நரகலான தேவர்களின் முகத்துக்குமுன்
பாக விழப்பண்ணுவோம்.—நாம் இஸ்ரவேல் ௫
புத்திரருடைய பிரேதங்களை அவர்களுடைய
நரகலான தேவர்களின் முன்னே கிடக்கப்பண்
ணி, உங்கள் எலும்புகளை உங்கள் பலிபீடங்களைச்
சுற்றிலும் சிதறப்பண்ணுவோம்.—உங்கள் பலி ௬
பீடங்கள் நிர்மூலமும் பாழுமாகும்படிக்கும்,
உங்கள் நரகலான தேவர்கள் தகர்க்கப்பட்டு, ஒய்
ந்து, உங்கள் சிலைகள் வெட்டுண்டு, உங்கள் கிரி
யைகள் கொலைந்துபோகும்படிக்கும், உங்களு
டைய எல்லா வாசஸ்தலங்களிலுமுள்ள பட்ட
ணங்கள் நிர்மூலமும் உங்கள் மேடைகள் பாழு
மாம்.—கொலையுண்கிறவர்கள் உங்கள் நடுவில் ௭

1 எசே. ௰௧. ௰௨.—2 ௫ மோ. ௨௮. ௫௩. புல. ௪: ௰.—4 எசே. ௰௬. ௪௨. ௨௧. ௫.—3 எசே. ௭. ௪. 5 ௫ மோ. ௨௯. ௨௪: ௨௮. ௨௪.

6 எசே. ௪. ௰௬. ௩ மோ. ௨௬. ௨௬. 7 ௩ மோ. ௨௬. ௨௨. எசா. ௧. ௧. 8 எசே. ௩௬. ௧.

விழுவார்கள்; அப்படியே [1]நாம் கர்த்தரென்று
அறிந்துகொள்ளுவீர்கள்.
௮ நீங்கள் தேசங்களில் சிதற அடிக்கப்படும்போ
தோவெனில் புறச்சாதிகளுக்குள்ளே பட்டை
யத்துக்குத் தப்புவாரை உங்களுக்கு மீதியாக
௯ வைப்போம். — நம்மைவிட்டு அகன்ற விப
சார இருதயத்தைத்தொட்டும், தங்கள் நரகலான
தேவர்களைப் பின்பற்றின தங்கள் விபசாரக்க
ண்களைத்தொட்டும் மனமடிவானேனென்று உங்
களில் தப்பிப்போன அவர்கள் தாங்கள் சிறைப்
பட்டிருக்கும் புறச்சாதிகளுக்குள்ளே நம்மை
நினைத்து, தங்களுடைய எல்லா அருவருப்புகளி
னாலும் தாங்கள் செய்த பொல்லாப்புகளின் நிமி
௰ த்தம் தங்களைத்தானே அரோசித்து,-இந்தத் தீங்கு
களை எல்லாம் தங்களுக்குச் செய்வோமென்று
கர்த்தராகிய நாம் விருதாவாய்ச் சொன்னதில்லை
யென்று அறிந்துகொள்ளுவார்களென்றார்.
௰௧ கர்த்தராகிய ஆண்டவர் சொன்னதாவது: நீ
உன் கையில் அடித்து, உன் காலால்தட்டி, இஸ்ர
வேல் வீட்டாருடைய எல்லாப் பொல்லாத
அருவருப்புகளினிமித்தமும் ஐயோ! என்று
சொல்; ஏனென்றால், [2]பட்டையத்தாலும் பஞ்
சத்தாலும் பெருவாரிக்காய்ச்சலாலும் விழுவார்
௰௨ கள்.—தூரமாயிருக்கிறவன் பெருவாரிக்காய்ச்ச
லாலே சாவான்; சமீபமாயிருக்கிறவன் பட்டை
யத்தாலே விழுவான்; மீதியாயிருந்து, முற்றிக்கை
போடப்பட்டவன் பஞ்சத்தினாலே சாவான்;
இப்படி அவர்களில் நம்முடைய உக்கிரத்தைத்
தீர்த்துக்கொள்ளுவோம்.
௰௩ அவர்கள் தங்கள் நரகலான தேவர்களுக்கு எல்
லாம் மதுரவாசனையான தூபத்தைக் காட்டின
ஸ்தலங்களாகிய உயர்ந்த சகல மேட்டிலும், பர்
வதங்களுடைய சகல சிகரங்களிலும், பச்சையா
ன சகல விருட்சத்தின்கீழும், தழைந்திருக்கிற
சகல கர்வாலிமரத்தின்கீழும், அவர்களில் கொலை
யுண்டவர்கள் அவர்களுடைய நரகலான தேவர்
களின் நடுவிலும் அவர்களுடைய பலிபீடங்க
ளைச் சுற்றிலும் கிடக்கையில், அப்போது நாம்
௰௪ கர்த்தரென்று அறிந்துகொள்ளுவார்கள். — நாம்
நம்முடைய கையை அவர்களுக்கு விரோதமாக
நீட்டி, அவர்களுடைய எல்லா வாசஸ்தலங்களு
முள்ள தேசத்தைப் பாழாகப்பண்ணி, அதைத்
திப்லாத்தின் வனாந்தரத்தைப்பார்க்கிலும் பாழா
கவேபண்ணுவோம்; அப்போது நாம் கர்த்தரெ
ன்று அறிந்துகொள்ளுவார்களென்றார்.

## ௭. அதிகாரம்.

௧. இஸ்ரவேலுக்கு முடிவில் வந்த நாசம். ௰௬. தப்பித்துக்கொண்டவர்களின் துயரமுள்ள மனஸ்தாபம். ௨௰. இஸ்ரவேலருடைய அருவருப்பின் நிமித்தம் சத்துருக்கள் பரிசுத்தஸ்தானத்தைத் தீட்டுப்படுத்தினது. ௨௩. சங்கிலியின் அடையாளத்தினாலே அவர்களுடைய உபத்திரவமான சிறையிருப்பைக் காட்டினது.

௧ பின்னையும் கர்த்தருடைய வார்த்தை எனக்கு
உண்டாகி, அவர் சொன்னதாவது:
மனுபுத்திரனே, இஸ்ரவேல் தேசத்தைக்குறித் ௨
துக் கர்த்தராகிய ஆண்டவர் சொல்லுகிறதே
தென்றால், முடிவு வருகிறது; தேசத்தினுடைய
நாலு மூலைகளின்மேலும் முடிவே வருகிறது.—
இப்போது உன்மேல் முடிவு வருகிறது; நாம் ௩
நமது கோபத்தை உன்மேல் போகவிட்டு, உன்
வழிகளுக்குத்தக்கதாக உன்னை நியாயந்தீர்த்து,
உன்னுடைய எல்லா அருவருப்புகளின் பலனை
யும் உன்மேல் வரப்பண்ணுவோம்.—[3]நமது கண் ௪
உன்னைத் தப்பவிடாது; நாம் மன்னியாமல் உன்
வழிகளுக்குத்தக்கதை உன்மேல் வரப்பண்ணு
வோம்; உன் அருவருப்புகளுக்குத்தக்கது உன்
நடுவில் வந்திருக்கும்; அப்படியே நாம் கர்த்த
ரென்று அறிந்துகொள்ளுவீர்கள்.
கர்த்தராகிய ஆண்டவர் சொல்லுகிறதாவது: ௫
தீங்கு வருகிறது, ஏகமான தீங்கு இதோ வருகி
றது.—முடிவு வருகிறது, முடிவு வருகிறது, அது ௬
உனக்கு விரோதமாக விழிக்கிறது, இதோ, வரு
கிறது.—தேசத்தில் குடியிருக்கிறவனே, அந்நா ௭
ளின் விடியற்காலம் வருகிறது, காலம் வருகிறது,
அமளியின் நாள் சமீபித்திருக்கிறது, மலைகளில்
கொக்கரிப்பு இல்லை. — இப்போது கிட்டின ௮
காலத்திலே நம்முடைய உக்கிரத்தை உன்மேல்
ஊற்றி, நம்முடைய கோபத்தை உன்னில் தீர்த்
துக்கொண்டு, உன்னை உன் வழிகளுக்குத்தக்க
தாக நியாயந்தீர்த்து, உன்னுடைய எல்லா அருவ
ருப்புகளின் பலனையும் உன்மேல் வரப்பண்ணு
வோம். — நமது கண் உன்னைத் தப்பவிடாது; ௯
நாம் மன்னியாமல் உன் வழிகளுக்குத்தக்கதை
உன்மேல் வரப்பண்ணுவோம்; உன் அருவருப்
புகளுக்குத்தக்கது உன் நடுவில் வந்திருக்கும்;
அப்படியே அடிக்கிறவராகிய நாம் கர்த்தரென்று
அறிந்துகொள்ளுவீர்கள்.
இதோ, அந்தநாள், இதோ, வருகிறது, அந்நா ௰
ளின் விடியற்காலம் உதிக்கிறது, மிலாறு பூக்கி
றது, அகந்தை செழிக்கிறது.—ஆகாமியத்துக்கு ௰௧
மிலாறாகக் கொடுமை எழும்புகிறது; அவர்களி
லும் அவர்களுடைய திரளான கும்பிலும் அவர்
களுடைய அமளியிலும் ஒன்றும் மீதியாய் இருப்
பதில்லை; அவர்கள்நிமித்தம் புலம்பல் உண்டா
யிருப்பதுமில்லை.—அந்தக்காலம் வருகிறது, அந் ௰௨
தநாள் கிட்டுகிறது; கொள்ளுகிறவன் சந்தோ
ஷப்படாமலும் விற்கிறவன் துக்கப்படாமலும்
இருப்பானாக; ஏனென்றால் அதினுடைய திர
ளான கும்பின்மேல் எல்லாம் உக்கிரம் இறங்
கும்.—ஏனெனில், அவர்கள் சீவனுள்ளோருக் ௰௩
குள்ளே இன்னம் உயிரோடிருந்தாலும், விற்ற
வன் விற்கப்பட்டதற்குத் திரும்பிவருவதில்லை;
அதேனென்றால் அதினுடைய திரளான கும்பின்
மேல் எல்லாம் உண்டான தரிசனம் திரும்பாது;
தன்னுடைய அக்கிரமத்திலே தன் சீவனை அனு
பவிக்கிற ஒருவனும் தன்னைத் திடப்படுத்தமாட்
டான்.—அவர்கள் எக்காளம் ஊதி, எல்லாவற் ௰௪

1 எசே. ௭. ௨௭.—2 எசே. ௫. ௰௭.

3 எசே. ௫. ௰௧; அ. ௰௮.

றையும் ஆயத்தம்பண்ணியும் யுத்தத்துக்குப் போ
கிறவனில்லை; ஏனெனில் நம்முடைய உக்கிரம்
அதினுடைய திரளான கும்பின்மேல் எல்லாம்
௰௫ இறங்குகிறது.—வெளியே பட்டயமும் உள்
ளே பெருவாரிக்காய்ச்சலும் பஞ்சமும் உண்டு;
வயல்வெளியில் இருக்கிறவன் பட்டயத்தால்
சாவான்; பட்டணத்தில் இருக்கிறவனையோ
பஞ்சமும் பெருவாரிக்காய்ச்சலும் பட்சிக்கும்.
௰௬ அவர்களில் தப்புகிறவர்கள் தப்புவார்கள்; ஆ
னால் இவர்கள் அனைவரும் அவனவன் தன்தன்
அக்கிரமத்தினிமித்தம் துக்கித்துக் கூப்பிடுகிற
பள்ளத்தாக்குகளின் [1]புறாக்களைப்போலே பர்
௰௭ வதங்களில் இருப்பார்கள்.—எல்லாக் கைகளும்
சலித்து, எல்லா முழங்கால்களும் தண்ணீரைப்
௰௮ போல அலையுண்கும். — இரட்டை உடுத்திக்
கொள்ளுவார்கள்; தத்தளிப்பு அவர்களை மூடும்;
எல்லா முகங்களையும் வெட்கப்படுத்துதலும் எல்
லாத் தலைகளையும் மொட்டையிடுதலும் இருக்
௰௯ கும்.—தங்கள் வெள்ளியைத் தெருக்களில் எறிந்
துவிடுவார்கள்; அவர்களுடைய பொன் வேண்
டாவெறுப்பாக இருக்கும்; [2]கர்த்தருடைய சினத்
தின் நாளிலே அவர்கள் வெள்ளியும் அவர்கள்
பொன்னும் அவர்களை விடுவிக்கக்கூடாது; அவர்
கள் அதினால் தங்கள் ஆத்துமாவைத் திருப்தியாக்
குவதுமில்லை; தங்கள் குடல்களை நிரப்புவதும்
இல்லை; ஏனென்றால் அது அவர்கள் அக்கிரமத்
௨௰ துக்கான இடறலாயிருந்தது.—அவருடைய சிங்
காரத்தின் மகிமையை அகந்தைக்கென்று வைத்
து, அதிலே அருவருக்கப்படத்தக்கதும் சீ என்
னப்படத்தக்கதுமான காரியங்களின் சுரூபங்க
ளை உண்டுபண்ணினார்கள்; ஆகையால் நாம் அ
வைகளை அவர்களுக்கு வேண்டாவெறுப்பாக்
௨௧ கி,—அதை அன்னியர் கையிலே கொள்ளையாக
வும், பூமியில் ஆகாதவர்களுக்குச் சூறையாகவும்
கொடுப்போம்; இவர்கள் அதின் பரிசுத்தத்தைக்
௨௨ குலைப்பார்கள்.—[3]நம்முடைய முகத்தை அவர்
களைவிட்டுத் திருப்பிப்போடுவோம்; ஆனது
கொண்டு நம்முடைய அந்தரங்கஸ்தலத்தைப்
பரிசுத்தக்குலைச்சலாக்குவார்கள்; பறிகாரர் அ
தற்குள் பிரவேசித்து, அதின் பரிசுத்தத்தைக்
குலைப்பார்கள்.
௨௩ ஒரு சங்கிலியைப் பண்ணிவை; ஏனென்றால்
தேசம் நியாயத்தீர்ப்புக்குள்ளான இரத்தப்பழிக
ளால் நிறைந்திருக்கிறது; பட்டணம் கொடுமை
௨௪ யாலே நிறைந்திருக்கிறது.—ஆகையால் புறச்சாதி
களின் பொல்லாதவர்களை வரப்பண்ணுவோம்;
இவர்கள் அவர்களுடைய வீடுகளைச் சுதந்தரித்
துக்கொள்ளுவார்கள்; பலவான்களின் பெருமை
யை ஓயப்பண்ணுவோம்; அவர்கள் பரிசுத்தமாக்
குகிறவர்களின் பரிசுத்தம் குலைக்கப்படும்.—
௨௫ சங்காரம் வருகிறது; அப்போது சமாதானத்தைத்
௨௬ தேடுவார்கள்; ஆனால் இல்லாதிருக்கும்.—விக்கி
னத்தின்மேல் விக்கினம் வரும்; துர்ச்செய்தியின்
மேல் துர்ச்செய்தி பிறக்கும்; அப்போது தீர்க்க
தரிசியினிடத்திலே தரிசனத்தைத் தேடுவார்கள்;
ஆனால் ஆசாரியனிடத்திலே வேதமும் மூப்பர்க
ளிடத்திலே ஆலோசனையும் இராமல் அழிந்திருக்
கும். — இராசா துக்கித்துக்கொண்டிருப்பான்; ௨௭
பிரபு திகைப்பைத் தரித்துக்கொண்டிருப்பான்;
தேசத்துச் சனத்தின் கைகள் கலங்கியிருக்கும்;
நாம் அவர்கள் வழிகளின்படியே அவர்களுக்குச்
செய்து, அவர்கள் நியாயங்களின்படியே அவர்
களை நியாயந்தீர்ப்போம்; அப்படியே நாம் கர்த்
தர் என்று அறிந்துகொள்ளுவார்களென்றார்.

## ௮. அதிகாரம்.

௧. எருசலேமில் எசேக்கியேலுக்குத் தேவதரிசனத்திலே, ௫. பொறாமையின் விக்கிரகமும், ௭. விக்கிரகங்களெழுதிய அறைகளும், ௰௪. தம்மூசுக்காகத் துக்கங்கொண்டாடுகிறவர்களும், ௰௬. சூரியனை நோக்கித் தொழுது கும்பிடுகிறவர்களும் காணப்பட்டது. ௰௮. விக்கிரகபத்திக்காகப் பராபரனுக்குண்டாகிய கோபம் சொல்லப்பட்டது.

ஆறும்வருஷத்து ஆறும்மாதம் ஐந்தாந்தேதியி ௧
லே சம்பவித்ததேதென்றால், நான் என் வீட்டில்
உளுக்காந்திருக்கிறபோதும், யூதாவின் மூப்பர்
கள் எனக்குமுன்பாக உளுக்காந்திருக்கிறபோ
தும், கர்த்தராகிய ஆண்டவருடைய கை அங்கே
என்மேல் வந்தது.—அப்போது இதோ, அக்கினி ௨
உருபின் சாயலானவரைக் கண்டேன்; அவரு
டைய இடுப்பின் உருபுதுவக்கிக் கீழெல்லாம்
அக்கினியும் அவருடைய இடுப்புதுவக்கி மே
லெல்லாம் சொகுசாவைப்போல ஒத்த மினுக்
கின் உருபுமாயிருந்தது.—அவர் ஒரு கைக்குச் சா ௩
யலானதை நீட்டி, என்னை என் தலையின் மயிர்க
ளைப்பிடித்துத் தூக்கினார்; ஆவியானவர் என்னைப்
பூமிக்கும் வானத்துக்கும் நடுவாகக் கொண்டு
போய், தேவதரிசனைகளில் என்னை எருசலேமி
லே வடதிசைக்கு எதிரான உள்வாசலின் நடை
யிலே விட்டார்; அங்கே எரிச்சலுண்டாக்குகிற
விக்கிரக சுரூபத்தின் இருப்பிடம். — இதோ, ௪
[4]நான் பள்ளத்தாக்கிலே கண்டிருந்த தரிசனைக்கு
ஒப்பாக இஸ்ரவேலுடைய பராபரனின் மகிமை
அங்கே இருந்தது.
அவர் என்னுடனே: மனுபுத்திரனே, உன் ௫
கண்களை ஏறெடுத்து, வடக்கே பார் என்றார்; அப்
போது என் கண்களை ஏறெடுத்து, வடக்கே பார்
த்தேன்; இதோ, பலிபீடத்தின் வாசலுக்கு வடக்
கே பார்த்தேன்; நடையிலே எரிச்சலுண்டாக்கு
கிற அந்தச் சுரூபம் இருந்தது. — அவர் என்னு ௬
டனே சொன்னதாவது: மனுபுத்திரனே, அவர்
கள் என்னசெய்கிறார்கள் என்கிறதை நீ காண்கி
றாயோ? நம்மை நமது பரிசுத்தஸ்தலத்தைவிட்
டுத் தூரமாய்ப் போகப்பண்ண இஸ்ரவேல் வீட்
டார் இங்கே செய்கிற பெரிய அருவருப்புகளை
அல்லவோ காண்கிறாய்? ஆனால் இன்னம் பெ
ரிய அருவருப்புகளைத் திரும்பவும் காண்பா
யென்று சொல்லி,
என்னை முற்றத்தின் வாசலுக்குக் கொண்டு ௭
போனார்; அப்போது இதோ, சுவரில் ஒரு துவாரத்

1 ஏசா. ௫௯. ௰௧.—2 வாக். ௰௧. ௪. ஏசா. ௨. ௨௰. செப். ௧. ௰௮.

3 இமோ. ௧௨. ௨௰. — 4 எசே. ௧. ௨௮.

௮ தைக் கண்டேன்.–அவர் என்னுடனே: மனுபுத்
திரனே, நீ துவாரமிடு என்ருர்; நான் சுவரிலே
துவாரமிடுகிறபோது, இதோ, ஒரு திறப்பாயிற்
௯ று.—அவர் என்னுடனே, நீ உட்பிரவேசித்து,
அவர்கள் இங்கே செய்கிற பொல்லாத அருவ
௰ ருப்புகளைப் பாரென்ருர்.–நான் உட்பிரவேசித்
துப் பார்த்தபோது, இதோ, சகலவித ஊர்வன
வைகளும் அருவருப்பான மிருகங்களும் என்
னப்பட்ட சுரூபங்களும், இஸ்ரவேல் வீட்டா
ருடைய நரகலான எல்லாத் தேவர்களும் சுவரில்
௰௧ சுற்றிலும் சித்திரந்தீரப்பட்டிருந்தன. — இஸ்ர
வேல் வீட்டாரின் மூப்பரில் எழுபதுபேரும்,
அவர்களின் நடுவிலே சாப்பானுடைய குமார
ஞகிய யாசனியாவும் அவனவன் தன்தன் கை
யிலே தன் தூபகலசத்தைப் பிடித்துக்கொண்டு,
அவைகளுக்குமுன்பாக நின்ருர்கள்; தூபவர்க்
கத்திஞல் மிகுந்த புகைக்காடு எழும்பிற்று என்று
௰௨ கண்டேன். — அப்போது அவர் என்னுடனே
சொன்னதாவது: மனுபுத்திரனே, இஸ்ரவேல்
வீட்டாரின் மூப்பர்கள் இருளிலே அவரவர் தங்
கள் சுரூபங்களின் அறைகளில் செய்கிறதைக்
கண்டாயோ? ஏனெனில், கர்த்தர் எங்களைப்
பார்க்கிறதில்லை; [1]கர்த்தர் தேசத்தைக் கைவிட்
டார் என்கிருர்கள்.

௰௩ இன்னம் அவர்கள் செய்கிற பெரிய அருவ
ருப்புகளைத் திரும்பவும் காண்பாயென்று அவர்
௰௪ என்னுடனே சொல்லி,–என்னைக் கர்த்தருடைய
வீட்டின் வடக்கே இருக்கிற வாசலின் நடை
யிலே கொண்டுபோஞர்; இதோ, அங்கே தாமு
சுக்காக அழுதுகொண்டிருக்கிற ஸ்திரிகள் உளு
௰௫ க்காந்திருந்தார்கள்.—அப்போது அவர்: மனுபுத்
திரனே, இதைக் கண்டாயோ? இன்னம் இவை
களிலும் பெரிய அருவருப்புகளைத் திரும்பவும்
காண்பாயென்று என்னுடனே சொல்லி,

௰௬ என்னைக் கர்த்தருடைய வீட்டின் உள்முற்றத்
திலே கொண்டுபோஞர்; இதோ, கர்த்தருடைய
தேவாலயத்தின் வாசல்நடையிலே மண்டபத்
துக்கும் பீடத்துக்கும் நடுவே ஏறக்குறைய இரு
பத்தைந்து புருஷர், [2]தங்கள் பிற்புறங்களைக் கர்த்
தருடைய தேவாலயத்துக்கும் தங்கள் முகங்க
ளைக் கிழக்குக்கும் திருப்பினவர்களாய் இருந்
தார்கள்; அவர்கள் கிழக்கே இருக்கும் சூரிய
௰௭ னைப் பணிந்துகொண்டார்கள். — அப்போது
அவர் என்னுடனே சொன்னதாவது: மனுபுத்தி
ரனே, இதைக் கண்டாயோ? இங்கே தாங்கள்
செய்கிற அருவருப்புகளைச் செய்கிறது யூதா வீட்
டாருக்கு இலேசான காரியமோ? அவர்கள் தேச
த்தைக் கொடுமையிஞலே நிரப்பினபின்பு நம்
மை மனமடிவாகத் திருப்பிக்கொள்ளுகிருர்கள்;
இதோ, அவர்கள் திராட்சக்கொடியைத் தங்கள்
௰௮ நாசியண்டைக்குச் சேர்க்கிருர்கள்.–ஆகையால்
நாமும் உக்கிரத்தோடே காரியத்தை நடத்து
வோம்; நம்முடைய கண் தப்பவிடுவதில்லை;
நாம் மன்னிப்பதுமில்லை; அவர்கள் மகா சத்த
மாய் நம்முடைய செவிகளில் விழக் கூப்பிட்
டாலும் அவர்களை நாம் கேட்பதில்லையென்
ருர்.

## ௯. அதிகாரம்.

௧. சிலர் காப்பாற்றப்படுவதையும், ௫. மற்றவர்கள் அழிக்கப்படுவதையும் காட்டிய தரிசனை. ௮. அவர்களுக்காக வேண்டுதலைப் பராபரன் ஏற்றுக்கொள்ளாரென்பது.

பிற்பாடு அவர் என் காதுகள்கேட்க மகா சத்தத் ௧
தோடே: பட்டணத்தின் விசாரிப்புக்காரர் அவ
ரவர்கெடுக்கிறதற்கான தங்கள் ஆயுதங்களைத் தங்
கள் கைகளில் பிடித்துச் சேரட்டும் என்று கூப்
பிட்டார்.—அப்போது, இதோ, ஆறு புருஷர், ௨
அவரவர் வெட்டுகிறதற்கான தங்கள் ஆயுதங்க
ளைத் தங்கள் கைகளில் பிடித்து, வடக்குக்கெதி
ரான உயர்ந்த வாசலின் வழியிலிருந்து வந்தார்
கள்; அவர்களுக்குள்ளே சணல்நூல் வஸ்திரங்க
ளைத் தரித்து, தன் அரையில் எழுத்தாணிக் கூட்
டைச் சொருகிக்கொண்டிருக்கிற ஒருவன் இ
ருந்தான்; அவர்கள் உட்பிரவேசித்து, வெண்க
லப் பீடத்தண்டையிலே நின்ருர்கள்.

அப்போது இஸ்ரவேலுடைய பராபரனின் ௩
மகிமை கேருபீன்மேலிருந்தெழும்பி, வீட்டின்
வாசற்படியிலே வந்து, சணல்நூல் வஸ்திரங்க
ளைத் தரித்தவனும் தன் அரையிலே கணக்கனின்
எழுத்தாணிக்கூட்டைச் சொருகிக்கொண்டி
ருக்கிறவனுமான புருஷனைக் கூப்பிட்டு,—அவ ௪
னுடனே கர்த்தர் சொன்னதாவது: நீ எருசலே
மின் நடுப்பட்டணத்தை உருவப்போய், அதற்
குள்ளே செய்யப்படுகிற சகல அருவருப்புகளி
ன்நிமித்தமும் பெருமூச்சுவிட்டழுகிற மனுஷ
னின் நெற்றிகளில் [3]அடையாளம் போடு என்
ருர்.—அவர்களோடோவெனில் அவர் என் கா ௫
துகள் கேட்கச் சொன்னதாவது: நீங்கள் இவன்
பிறகாலே பட்டணத்தை உருவப்போய் வெட்
டுங்கள்; [4]உங்கள் கண் தப்பவிடாமலும், நீங்கள்
மன்னியாமலும்,— முதிர்ந்தவயதுள்ளவனையும், ௬
வாலிபனையும், கன்னியாஸ்திரிகளையும், குழந்
தைகளையும், ஸ்திரிகளையும் சங்கரித்துக் கொன்
றுபோட்டு, அடையாளம் போடப்பட்டிருக்கிற
ஒருவனையுமோ கிட்டாதிருந்து, [5]நம்முடைய
பரிசுத்தஸ்தலத்திலே துவக்குங்கள் என்ருர்; அப்
போது அவர்கள் வீட்டின்முன்னே இருந்த மு
திர்ந்தவயதுள்ள மனுஷரிடத்தில் துவக்கம்பண்
ணிஞர்கள்.

அவர் இவர்களுடனே: நீங்கள் வீட்டைத் ௭
தீட்டுப்படுத்தி, முற்றங்களைக் கொலையுண்டவர்
களாலே நிரப்பி, புறப்படுங்களென்ருர்; அவர்
கள் புறப்பட்டுப் பட்டணத்திலே வெட்டிஞர்
கள்.

அப்போது சம்பவித்ததேதென்ருல், அவர்கள் ௮
வெட்டித்திருகையில் நானே மீதியானவன்;
அப்போது நான் [6]முகங்குப்புற விழுந்து: ஆ கர்த்

1 எசே. ௯. ௯.—2 ௨ நாளா. ௨௯. ௬.—3 ௨ மோ. ௰௨. ௰௩. வெளி. ௭. ௨, ௩.
4 எசே. ௮. ௰௮.—5 ௧ பே. ௪. ௰௭.—6 எசே. ௰௧. ௰௩.

தராகிய ஆண்டவரே, தேவரீர் எருசலேமின்
மேல் உமது உக்கிரத்தை ஊற்றுகையில் இஸ்ர
வேலில் மீதியானவர்களை எல்லாம் அழிப்பீரோ
௯ வென்று கூப்பிட்டேன்.—அவர் என்னுடனே
சொன்னதாவது: இஸ்ரவேலும் யூதாவுமாகிய
வீட்டாரின் அக்கிரமம் மிகுதியும் பெரிதானது;
தேசம் இரத்தப்பழிகளினால் நிறைந்திருக்கிறது;
நகரமும் மாறுபாட்டினால் நிரப்பப்பட்டிருக்கி
றது; ஏனெனில் [1]கர்த்தர் தேசத்தைக் கைவிட்
டார்; கர்த்தர் பார்க்கிறதில்லை என்றார்கள். —
௰ ஆகையால் நம்முடைய கண் தப்பவிடுவதுமில்
லை, நாம் மன்னிப்பதுமில்லை; அவர்களுடைய
வழியை அவர்கள் சிரசில் இறங்கப்பண்ணு
வோமென்றார்.
௰௧ இதோ, சணல்நூல் வஸ்திரங்களைத் தரித்து,
தன் அரையில் எழுத்தாணிக்கூட்டைச் சொரு
கிக்கொண்டிருக்கிற புருஷன்: நீர் எனக்குக் கற்
பித்தபடியே செய்தேனென்று மறுசெய்தி
கொண்டுவந்தான்.

## ௰. அதிகாரம்.

௧. பட்டணத்தின்மேல் அக்கினித்தணல் இறைக்கப்படும் தரிசனமும், ௮. கேருபீன்களின் தரிசனமும் சொல்லப்பட்டது.

௧ இதோ, கேருபீன்களுடைய தலையின்மேல்
இருந்த மண்டலத்தில் [2]நீலக்கல்லுக்கொப்பாய்
இராசாசனச் சாயலான உருவம் இருந்ததென்று
கண்டேன்; அது அவைகளின்மேல் காணப்பட்
௨ டது.—அவர் சணல்நூல் வஸ்திரங்களைத் தரித்
துக்கொண்டிருந்த புருஷனோடே சொன்னதா
வது: நீ கேருபீனின்கீழ் இருக்கிற உருளைகளின்
நடுவில் பிரவேசித்து, கேருபீன்களின் நடுவே
இருக்கிற அக்கினித்தணலினால் உன் கைப்பி
டிகளை நிரப்பி, அதைப் பட்டணத்தின்மேல்
இறையென்றார்; அப்படியே என் கண்கள் கா
ண உட்பிரவேசித்தான்.
௩ அந்தப் புருஷன் உட்பிரவேசிக்கையில்,
கேருபீன்கள் வீட்டின் வலதுபுறத்தில் நின்றன;
௪ ஒரு மேகம் உள்முற்றத்தை நிரப்பிற்று.—[3]கர்த்தரு
டைய மகிமை கேருபீனின்மேலிருந்து எழும்பி,
வீட்டின் வாசற்படியிலே வந்தது; [4]வீடு மேகத்
தினாலே நிரம்பிற்று; முற்றமும் கர்த்தருடைய
௫ மகிமையின் பிரகாசத்தினால் நிரம்பிற்று.—கேரு
பீன்களுடைய செட்டைகளின் இரைச்சல் வெ
ளிமுற்றம்மட்டும், சருவத்துக்கும் வல்ல பரா
பரன் பேசுகையில் இருக்கும் சத்தமாகக் கேட்
கப்பட்டது.
௬ சம்பவித்ததேதென்றால், அவர் சணல்நூல் வஸ்
திரங்களைத் தரித்துக்கொண்ட புருஷனுக்கு, நீ
கேருபீன்களுக்குள் இருக்கிற உருளைகளின்
நடுவிலே அக்கினியை வாங்கென்று கற்பிக்கை
யில், அவன் உட்பிரவேசித்து உருளைகளண்டை
௭ யிலே நின்றான். — அப்போது கேருபீன்களுக்
குள்ளே ஒரு கேருபீன் தன் கையைக் கேருபீன்
களின் நடுவில் இருக்கிற அக்கினியண்டைக்கு
நீட்டி எடுத்து, சணல்நூல் வஸ்திரங்களைத் தரித்
துக்கொண்ட புருஷனுடைய கைப்பிடிகளில்
கொடுத்தான்; இவன் அதை வாங்கிப் புறப்பட்
டான்.
கேருபீன்களிலே அவைகளுடைய செட்டை ௮
களின்கீழ் மனுஷர்கையின் சாயலானது காணப்
பட்டது. — இதோ, கேருபீன்களண்டையில் ௯
நாலு உருளைகள் இருக்கிறதைக் கண்டேன்;
ஒவ்வொரு கேருபீன் அண்டையில் ஒவ்வொரு
உருளை இருந்தது; [5]உருளைகளின் உருவம் தர்சீஸ்
இரத்தினத்தின் வருணத்தைப்போலானது. —
அவைகள் நாலுக்கும் ஒரேவித சாயலின் உருவு ௰
இருந்தது; உருளையின் நடுவில் உருளை இருக்கு
மாப்போலே காணப்பட்டது.—அவைகள் ஓடு ௰௧
கையில் தங்கள் நாலுபக்கங்களிலும் ஓடும்; ஓடு
கையில் அவைகள் திரும்பிக்கொண்டதில்லை;
தலைநோக்கும் இடத்துக்கே அவைகள் அதின்
பிறகாலே ஓடின; ஓடுகையில் அவைகள் திரும்
பிக்கொண்டதில்லை. — [6]அவைகளின் சரீரம ௰௨
னைத்தும், அவைகளின் முதுகுகளும், அவைக
ளின் கைகளும், அவைகளின் செட்டைகளும்,
[7]அந்த உருளைகளும் சுற்றிலும் கண்களினாலே
நிறைந்திருந்தன; அவைகள் நாலுக்கும் இருந்த
உருளைகளும் அப்படித்தானே.—அந்த உருளைகள் ௰௩
என் காதுகள்கேட்க, கல்காலென்று அழைக்
கப்பட்டன. — [8]ஒவ்வொன்றுக்கு நாலு முகங் ௰௪
கள் இருந்தன; முதலாம் முகம்கேருபீனின் முக
மும், இரண்டாம் முகம் மனுஷர் முகமும்,
மூன்றாவது சிங்கமுகமும், நாலாவது கழுகு
முகமுமானது.—கேருபீன்கள் ஏற எழும்பின; ௰௫
இது, நான் [9]கேபார்நதியண்டையிலே கண்டி
ருந்த அந்தச் சீவன்தானே.
கேருபீன்கள் நடக்கையில் உருளைகள் அவை ௰௬
கள் அருகே ஓடின; பூமியிலிருந்து எழும்பக்
கேருபீன்கள் தங்கள் செட்டைகளை விரிக்கை
யில்,உருளைகளும் அவைகளைவிட்டுத் திரும்பின
தில்லை.—அவைகள் நிற்கையில் இவைகள் நின் ௰௭
றன; அவைகள் எழும்புகையில் இவைகள் எழு
ம்பின; ஏனென்றால் சீவனுள்ள ஆவி இவைக
ளில் இருந்தது.
கர்த்தருடைய மகிமை வீட்டின் வாசற்படி ௰௮
யைவிட்டுப் புறப்பட்டு, கேருபீன்களின்மேல்
ஏறிநின்றது.—அப்போது கேருபீன்கள் தங்கள் ௰௯
செட்டைகளை விரித்து, என் கண்கள் காணப்
பூமியைவிட்டு எழும்பின; அவைகள் புறப்படு
கையில் உருளைகளும் அவைகளுக்குச் சரியாய்ப்
புறப்பட்டன; கர்த்தருடைய வீட்டின் கிழக்
கான ஒலிமுக வாசலிலே வந்து நின்றது; இஸ்ர
வேலுடைய பராபரனின் மகிமை உயர அவை
களின்மேல் இருந்தது.—இது நான் [10]கேபார்நதி ௨௰
யண்டையிலே இஸ்ரவேலுடைய பராபரனின்
கீழ் இருக்கக்கண்ட அந்தச் சீவன்தானே; அவை
கள் கேருபீன்கள் என்றுஅறிந்துகொண்டேன்.—

1 எசே. ௮. ௰௨. 3 எசே. ௯. ௩.
2 எசே. ௧. ௨௬. 4 ஏசா. ௬. ௪.

5 எசே. ௧. ௰௫.—6 வெளி. ௪. ௮. 9 எசே. ௧. ௧.
7 எசே. ௧. ௰௮.—8 எசே. ௧. ௬. 10 எசே. ௧. ௧.

௨௧ அவைகளில் ஒவ்வொன்றுக்கு நாலு முகமும்,
ஒவ்வொன்றுக்கு நாலுசெட்டைகளும் இருந்
தன; அவைகளுடைய செட்டைகளின்கீழ் மனு
௨௨ ஷன் கைகளின் சாயல் இருந்தது.—அவைகளு
டைய முகங்களின்சாயல் நான் கேபார்நதியண்
டையிலே கண்டிருந்த அந்த முகங்கள்தானே;
ஒவ்வொன்று தன்தன் முகத்துக்கு எதிரான திக்
குக்கு நெடுக நடந்தது.

## ௰௧. அதிகாரம்.

௧. பிரபுக்களின் துணிகரமும், ௪. அவர்களுடைய பாவமும், அவர்களுக்குக் கிடைக்கும் நியாயத்தீர்ப்பும் சொல்லப்பட்டது. ௰௩. எசேக்கியேல் முறையிட, பராபரன் மீதியானவர்களை இரட்சிப்பதிலும், ௨௧. தன் மார்க்கரைத் தண்டிப்பதிலும், தமது கிருபையத்தை அவனுக்குக் காட்டினது. ௨௨. பராபரனுடைய மகிமை பட்டணத்தைவிட்டு நீங்கினது. ௨௪. எசேக்கியேல் சிறையிருப்புக்குத் திரும்பினது.

௧ பிற்பாடு ஆவியானவர் என்னை எறெடுத்து, என்
னைக் கர்த்தருடைய வீட்டில் கிழக்குக்கு எதிரான
கீழ்வாசலுக்குக் கொண்டுபோனார்; இதோ, அந்த
வாசலின் நடையில் இருபத்தைந்து புருஷர் இரு
ந்தார்கள்; அவர்களின் நடுவே சனத்தின் பிரபுக்
களாகிய ஆசூரின் குமாரனாகிய யாசனியாவை
யும், பெனாயாவின் குமாரனாகிய பெலத்தியா
௨ வையும் கண்டேன். — அப்போது அவர் என்
னோடே சொன்னதாவது: மனுபுத்திரனே, இவர்
கள் இந்தப் பட்டணத்திலே அக்கிரம நினைவா
யிருந்து, பொல்லாத யோசனையை யோசிக்கிற
௩ மனுஷர்.—இதின் வீடுகளைக் கட்டினது கொஞ்
சக்காலமல்ல என்றும், இது பானை, நாங்கள் அதி
லுள்ள இறைச்சியென்றும் சொல்லுகிறார்கள்.—
௪ ஆகையால் அவர்களுக்கு விரோதமாய்த் தீர்க்கத
ரிசனம் சொல், மனுபுத்திரனே தீர்க்கதரிசனம்
சொல்லென்றார்.
௫ அப்போது கர்த்தருடைய ஆவி என்மேல் இற
ங்கி, அவர் என்னோடே சொன்னதாவது: நீ
சொல்லவேண்டியதேதெனில், இஸ்ரவேல் வீட்
டாரே, இப்படிப் பேசுகிறீர்கள்; உங்கள் ஆவி
யில் என்னென்ன எழும்புகிறதோ அதை நாம்
௬ அறிவோம்.—இந்தப் பட்டணத்தில் உங்களால்
கொலையுண்டவர்களை அநேகராக்கினீர்கள்; அ
தின் வீதிகளைக் கொலையுண்டவர்களாலே நிரப்
௭ பினீர்களென்று கர்த்தர் சொல்லுகிறார்.—ஆகை
யால் நீங்கள் கொலைசெய்து, அதின் நடுவிலே
போட்டுவிட்டவர்களே இறைச்சியும், அது பா
னையுந்தானே; உங்களையோ அதற்குள் இராத
படிக்குப் புறம்பாக்குவோம் என்று கர்த்தராகிய
௮ ஆண்டவர் சொல்லுகிறார்.—பட்டையத்துக்குப்
பயப்பட்டீர்கள்; பட்டையத்தை உங்கள்மேல்
வரப்பண்ணுவோமென்று கர்த்தராகிய ஆண்ட
௯ வர் சொல்லுகிறார்.—நாம் உங்களை அதற்குள்
இராதபடிக்குப் புறம்பாக்கி, உங்களை அன்னிய
ரின் கையில் ஒப்புக்கொடுத்து, உங்களில் நியா
௰ யத்தீர்ப்புகளைச் செய்வோம்.—பட்டையத்தால் வி
ழுவார்கள்; இஸ்ரவேல் தேசத்தின் எல்லையிலே
[1]உங்களை நியாயந்தீர்ப்போம்; அப்போது நாம்
கர்த்தரென்று அறிந்துகொள்ளுவீர்கள். — இது ௰௧
உங்களுக்குப் பானையாயிருப்பதுமில்லை; நீங்
கள் அதிலுள்ள இறைச்சியாயிருப்பதுமில்லை;
இஸ்ரவேல் தேசத்தின் எல்லையிலே உங்களை
நியாயந்தீர்ப்போம். — அப்போது நாம் கர்த்த ௰௨
ரென்று அறிந்துகொள்ளுவீர்கள்; ஏனெனில் நீங்
கள் நம்முடைய கட்டளைகளில் நடவாமலும்,
நம்முடைய நியாயங்களின்படி செய்யாமலும்,
உங்களைச் சுற்றிலும் இருக்கிற புறச்சாதிகளு
டைய நியாயங்களின்படி செய்தீர்களென்று
சொல்லென்றார்.
சம்பவித்ததேதென்றால், நான் இப்படித் தீர்க் ௰௩
கதரிசனம் சொல்லுகையில் பெனாயாவின் குமா
ரனாகிய பெலத்தியா செத்தான்; அப்போது
நான் முகங்குப்புற விழுந்து மகா சத்தமாய்: [2]ஆ
கர்த்தராகிய ஆண்டவரே, தேவரீர் இஸ்ரவேலில்
மீதியானதைச் சர்வசங்காரம் செய்வீரோவென்
று கூப்பிட்டேன்.—அப்போது கர்த்தருடைய ௰௪
வார்த்தை எனக்கு உண்டாகி, அவர் சொன்னதா
வது: — மனுபுத்திரனே, கர்த்தரைவிட்டுத் தூர ௰௫
மாய்ப் போங்கள், எங்களுக்கு இந்தத் தேசம்
சுதந்தரமாகக் கொடுக்கப்பட்டதென்று எருசலே
மின் குடிகள் குறித்துச் சொல்லுகிறவர்கள் உன்
னுடைய சகோதரர்; உன் சகோதரரையும் உன்
பந்துசனங்களையும் இஸ்ரவேல் வீட்டார் அனை
வரையும் ஏகமாகக் குறித்து அப்படிச் சொல்லு
கிறார்கள்.
ஆகையால் நாம் அவர்களைத் தூரமாகப் புறச் ௰௬
சாதிகளுக்குள்ளே துரத்தியிருந்தாலும், நாம் அ
வர்களைத் தேசங்களிலே சிதறஅடித்திருந்தாலும்,
நாம் கொஞ்சத்துக்குள்ளே [3]அவர்களுக்கு அவர்
கள் போன தேசங்களில் பரிசுத்தஸ்தலமாக இரு
ப்போம் என்கிறதைக் கர்த்தராகிய ஆண்டவர்
உரைக்கிறாரென்று சொல். — ஆனதுகொண்டு ௰௭
நாம் உங்களைச் [4]சனசதளங்களிடத்திலிருந்து
சேர்த்து, உங்களை நீங்கள் சிதற அடிக்கப்பட்ட
தேசங்களிலிருந்து கூட்டிக்கொண்டு, இஸ்ர
வேல் சீமையை உங்களுக்குக் கொடுப்போ
மென்கிறதைக் கர்த்தராகிய ஆண்டவர் உரைக்
கிறாரென்று சொல்.
அவர்கள் அங்கே வந்து, அதில் சீ என்னப்ப ௰௮
டத்தக்கதும் அருவருக்கப்படத்தக்கதுமாயிருக்
கிறதை எல்லாம் அதிலிருந்து அகற்றுவார்கள்.—
அவர்கள் நம்முடைய கட்டளைகளில் நடந்து, ௰௯
நம்முடைய நியாயங்களைக் கைக்கொண்டு, அ
வைகளின்படி செய்யும்படிக்கு நாம் [5]அவர்
களுக்கு ஒருமனப்பட்ட இருதயத்தைத் தந்து,
அவர்கள் உள்ளத்தில் புதிதான ஆவியைக் கொ
டுத்து, கல்லான இருதயத்தை அவர்கள் மாம்சத்தி
லிருந்து எடுத்துப்போட்டு, சதையான இருத
யத்தை அவர்களுக்குக் கொடுப்போம்.—[6]அவர் ௨௰
கள் நமக்குச் சனமாக இருப்பார்கள்; நாம் அவர்
களுக்குப் பராபரனுமாக இருப்போம்.

1 எசே. ௭. ௨௭.—2 எசே. ௯. ௮.—3 எரே. ௨௪. ௫.—4 எரே. ௨௩. ௩.

5 எசே. ௩௬. ௨௬, ௨௭. எரே. ௩௨. ௩௯.—6 எசே. ௩௬. ௨௮. எரே. ௩௨. ௩௮.

உ௧ ஆனால் எவர்களுடைய இருதயம் சீ என்னப்
படத்தக்கதும் அருவருக்கப்படத்தக்கதுமான
தங்கள் காரியங்களின் இச்சையிலே நடக்கு
மோ,[1]அவர்களுடைய வழியை அவர்கள் தலை
களின்மேலே சுமரப்பண்ணுவோமென்று கர்த்த
ராகிய ஆண்டவர் சொல்லுகிறாரென்றார்.
உஉ அப்போது கேருபீன்கள் தங்கள் செட்டை
களை விரித்து எழும்பின; உருளைகளும் அவை
களுக்கு அருகே போயின; [2]இஸ்ரவேலுடைய
பராபரனின் மகிமை உயர அவைகளின்மீதில்
உ௩ இருந்தது.—கர்த்தருடைய மகிமை பட்டணத்
தின் நடுவிலிருந்தெழும்பி, பட்டணத்துக்குக்
கிழக்கேஇருக்கிற மலையின்மேல் வந்து நின்றது.
உ௪ ஆனால் ஆவியானவர் என்னை எறெடுத்து, என்
னைப் பராபரனுடைய ஆவிக்குள்ளான தரிசனை
யிலே கல்தேயாவுக்குச் சிறையிருப்பானவர்கள்
அண்டையிலே கொண்டுவந்துவிட்டார்; அப்
போது நான் கண்ட தரிசனை என்னிலிருந்து
உ௫ எடுபட்டுப்போயிற்று.—கர்த்தர் எனக்குக் காண்
பித்த அவருடைய வர்த்தமானங்களை எல்லாம்
சிறையிருப்பானவர்களுக்குச் சொன்னேன்.

## ௰௨. அதிகாரம்.

௧. எசேக்கியேலின் பிரயாண அடையாளம். ௮. அது சிதேக்கியாவின் சிறையிருப்பைக் காட்டினது. ௰௭. எசேக்கியேலின் நடுக்கம் யூதர் அழிவைக் காட்டினது. ௨௧ யூதர்களுடைய கர்வமுள்ள பழமொழி கண்டிக்கப்பட்டது. ௨௬. தரிசனையின் விரைவு.

௧ கர்த்தருடைய வார்த்தை எனக்கு உண்டாகி,
௨ அவர் சொன்னதாவது:—மனுபுத்திரனே, நீ கலக
வீட்டாரின்நடுவிலேதங்கியிருக்கிறாய், [3]காணும்
படிக்கு அவர்களுக்குக் கண்கள் இருந்தாலும்
காணாதேபோகிறார்கள்; கேட்கும்படிக்கு அவர்
களுக்குக் காதுகள் இருந்தாலும் கேளாதேபோ
கிறார்கள்; ஏனெனில் அவர்கள் கலகவீட்டார்.—
௩ இப்போதும் மனுபுத்திரனே, பரதேசம்போகும்
பயணமுட்டுகளை நீ உனக்கு ஆயத்தமாக்கி,
பகற்காலத்திலே அவர்கள் கண்களுக்குமுன்பா
கப் புறப்படு; உன் தலத்தைவிட்டு வேறே
தலத்துக்கு அவர்களுடைய கண்களுக்குமுன்
புறப்பட்டுப்போவாயாக; தாங்கள் கலகவீட்டா
௪ ரென்று [4]ஒருவேளை கண்டு உணர்வார்கள்.—பர
தேசம்போகும் பயணமுட்டுகளாக உன்னுடை
ய தட்டுமுட்டுகளை நீ பகற்காலத்திலே அவர்கள்
கண்களுக்குமுன்பாக வெளியே வைத்து, நீயோ
வென்றால் சாயங்காலத்திலே அவர்கள் கண்க
ளுக்குமுன்பாகப் பரதேசம்போகிறவனைப்போ
௫ லப் புறப்படுவாயாக.—அவர்களுடைய கண்க
ளுக்குமுன்பாக நீ சுவரிலே துவாரமிட்டு, அதின்
வழியாய் அவைகளை வெளியே கொண்டுபோ
௬ வாயாக.— அவர்களுடைய கண்களுக்குமுன்
பாக அவைகளை உன் தோளின்மேல் எடுத்து,
இருட்டிலே வெளியே கொண்டுபோவாயாக;
நீ தேசத்தைக் காணாதபடியாக உன் முகத்தை
மூடிக்கொள்வாயாக; ஏனெனில், இஸ்ரவேல்
வீட்டாருக்கு உன்னை [5]அற்புத அடையாளமாக்
கினேன் என்றார்.
எனக்குக் கற்பிக்கப்பட்டபடியே நான் செய் ௭
தேன்; பரதேசம்போகும் பயணமுட்டுகளாக
என் தட்டுமுட்டுகளைப் பகற்காலத்திலே வெளி
யே வைத்தேன்; சாயங்காலத்திலோ கையினாலே
சுவரிலே எனக்குத் துவாரமிட்டு, இருட்டிலே
அவைகளை வெளியே கொண்டுபோய், அவர்கள்
கண்களுக்குமுன்பாக அவைகளைத் தோளின்
மேல் எடுத்துக்கொண்டேன்.—விடியற்காலத்தி ௮
லே கர்த்தருடைய வார்த்தை எனக்கு உண்டாகி,
அவர் சொன்னதாவது:—மனுபுத்திரனே, கலக ௯
வீட்டாராகிய இஸ்ரவேல் வீட்டார் உன்னுட
னே: நீ செய்கிறதேதென்று சொல்லவில்லை
யோ?—இது எருசலேமில் இருக்கிற அதிபதி ௰
யின்மேலும் அதின் நடுவில் இருக்கிற இஸ்ரவே
ல்வீட்டார் அனைவரின்மேலும் சுமருகிற தீர்க்க
தரிசனம் என்கிறதாய்க் கர்த்தராகிய ஆண்டவர்
உரைக்கிறாரென்று அவர்களோடே சொல்.
நீ சொல்லவேண்டியதேதெனில், நான் உங் ௰௧
கள் அற்புத அடையாளம்; நான் எப்படிச் செய்
தேனோ அப்படி அவர்களுக்குச் செய்யப்படும்;
பரதேசமாய்ச் சிறையிருப்பிலே போவார்கள்.—
அவர்கள்நடுவில்இருக்கிற அதிபதி [6]இருட்டிலே ௰௨
தோளின்மேல் எடுத்துப் புறப்படுவான்; வெளி
யே கொண்டுபோகச் சுவரிலே துவாரமிடுவார்
கள்; தேசத்தைக் கண்ணினாலே காணாதபடியாக
அவன் தன் முகத்தை மூடிக்கொள்ளுவான்.—
[7]அவன் நம்முடைய வேட்டைக்குள் பிடிபடும் ௰௩
படிக்கு நாம் நமது வலையை அவன்மேல் வீசி,
அவனைக் கல்தேயர் தேசமாகிய பாபேலுக்குக்
கொண்டுபோவோம்; அங்கேதானே சாவான்;
[8]ஆகிலும் அதைக் காணாதிருப்பான்.—அவனுக்கு ௰௪
ஒத்தாசையாக அவனைச் சுற்றிலும் இருக்கிற யா
வரையும் அவனுடைய எல்லா இராணுவங்களை
யும் நாம் சகல காற்றுத்திசைகளிலும் தூற்றி,
அவர்களின் பிறகாலே பட்டயத்தை உருவு
வோம்.—அப்படி நாம் அவர்களைச் சாதிகளுக் ௰௫
குள்ளே தூற்றி, அவர்களைத் தேசங்களிலே சிதற
அடிக்கையில், அப்போது நாம் கர்த்தரென்று
அறிந்துகொள்ளுவார்கள்.
ஆனால் தாங்கள் வந்து சேரும் சாதிகளுக் ௰௬
குள்ளே தங்கள் அருவருப்புகளை எல்லாம் விவ
ரிக்கும்படிக்கு, நாம் அவர்களில் [9]கொஞ்சப்பே
ரைப் பஞ்சத்துக்கும் பட்டயத்துக்கும் பெரு
வாரிக்காய்ச்சலுக்கும் தப்பி மீந்திருக்கப்பண்
ணுவோம்; அப்போது நாம் கர்த்தரென்று அறிந்
துகொள்ளுவார்கள் என்று சொல்லென்றார்.
பின்னையும் கர்த்தருடைய வார்த்தை எனக்கு ௰௭
உண்டாகி, அவர் சொன்னதாவது:—மனுபுத்தி ௰௮
ரனே, நீ உன் அப்பத்தை அதிர்ச்சியோடே புசி
த்து, உன் தண்ணீரைத் தத்தளிப்போடும் விசாரத்
தோடும் குடித்து,—தேசத்திலுள்ள சனத்தோடே ௰௯

1 எசே. ௯. ௰: ௰௬. ௪௩. எரே. ௫. ௨௧.—4 எரே. ௨௬. ௩.
2 எசே. ௰. ௰௯.—3 ஏசா. ௬. ௯,௰. ௩: ௧௯. ௧.
5 எசே. ௨௪. ௨௪.—6 எரே. ௩௯. ௪. 9 எசே. ௬. ௮.
7 எரே. ௩௯. ௫.—8 எரே. ௩௯. ௭.

சொல்லவேண்டியதாவது: இஸ்ரவேல் தேசத்தி
லுள்ள எருசலேமின் குடிகளைக்குறித்துக் கர்த்த
ராகிய ஆண்டவர் சொல்லுகிறதாவது: தங்கள்
அப்பத்தை விசாரத்தோடே புசித்து, தங்கள்
தண்ணீரைத் திகிலோடே குடிப்பார்கள்; ஏனெ
ன்றால் அவர்களுடைய தேசத்துக் குடிகளுடை
ய கொடுமைகளினிமித்தம் அதின் நிறைவு அ
௨௰ ழிந்து, அது பாழாகும்.—குடியேறியிருக்கிற பட்
டணங்கள் வனாந்தரங்களாகி, தேசம பாழாய்ப்
போகும்; அப்படியே நாம் கர்த்தரென்று அறிந்
துகொள்ளுவீர்கள் என்று சொல்லென்றார்.
௨௧ பின்னையும் கர்த்தருடைய வார்த்தை எனக்கு
௨௨ உண்டாகி, அவர் சொன்னதாவது:—மனுபுத்தி
ரனே, [1]நாங்கள் நீடிக்கும், தரிசனம் எல்லாம்
அழியும் என்கிற இஸ்ரவேல் தேசத்திலே உங்க
ளுக்கு இருக்கிற பழமொழி என்ன?
௨௩ ஆகையால் நீ அவர்களோடே சொல்லவேண்
டியதாவது: கர்த்தராகிய ஆண்டவர் உரைக்கிற
தேதெனில், அவர்கள் இனி இஸ்ரவேலிலே
இந்தப் பழமொழியைச் சொல்லிவராதபடிக்கு
நாம் அதை ஓயப்பண்ணுவோம்; நாள்களும் எல்
லாத் தரிசனத்தின் பொருளும் கிட்டியே வந்தன
௨௪ என்று அவர்களோடே சொல்.—ஏனென்றால்,
இஸ்ரவேல்வீட்டாரின் நடுவில் இனிச் சகல கள்
ளத்தரிசனமும் இச்சகமான குறிசொல்லுதலும்
௨௫ இராதேபோகும்.—ஏனெனில், கர்த்தராகிய நாம்
சொல்லுகிறோம்; நாம் சொல்லும் வார்த்தை
நிறைவேறும்; இனித் தாமதிப்பதில்லை; ஏனெ
னில், கலகவீட்டாரே, உங்கள் நாள்களிலே நாம்
வார்த்தையைச் சொல்லுகிறோம்; அதை நிறைவே
றவும்பண்ணுகிறோமென்று கர்த்தராகிய ஆண்ட
வர் உரைக்கிறாரென்றார்.
௨௬ பின்னையும் கர்த்தருடைய வார்த்தை எனக்கு
௨௭ உண்டாகி, அவர் சொன்னதாவது: — மனுபுத்
திரனே, இதோ, இஸ்ரவேல் வீட்டார்: இவன்
காண்கிற தரிசனம் வர அநேகநாள் செல்லும்;
தூரமாயிருக்கிற காலங்களைக்குறித்து இவன் தீர்
க்கதரிசனம் சொல்லுகிறான் என்கிறார்கள்: —
௨௮ ஆகையால் நம்முடைய வார்த்தைகளில் ஒன்றா
கிலும் இனித் தாமதிப்பதில்லையென்று கர்த்தரா
கிய ஆண்டவர் உரைக்கிறார்; நாம் சொன்ன
வார்த்தை நிறைவேறுமென்று கர்த்தராகிய ஆண்
டவர் உரைக்கிறாரென்று அவர்களோடே சொல்
லென்றார்.

## ௰௩. அதிகாரம்.

௧. பொய்யுரைக்கும் தீர்க்கதரிசிகளையும், ௰. அவர்களுடைய சாரமில்லாக் கலவையையும் கண்டித்தல். ௰௭. தீர்க்கதரிசனம் உரைக்கும் பெண்களையும் தலையணைகளையும்குறித்தது.

௧ கர்த்தருடைய வார்த்தை எனக்கு உண்டாகி,
௨ அவர் சொன்னதாவது:—மனுபுத்திரனே, [2]தீர்க்
கதரிசனம் சொல்லுகிற இஸ்ரவேலுடைய தீர்க்
கதரிசிகளுக்கு விரோதமாக நீ தீர்க்கதரிசனம்
உரைத்து, தங்கள் இருதயத்தில் இருக்கிறதை
எடுத்துத் தீர்க்கதரிசனம் சொல்லுகிறவர்களோ
டே நீ சொல்லவேண்டியதாவது: கர்த்தருடைய
வார்த்தையைக் கேளுங்கள்.
கர்த்தராகிய ஆண்டவர் உரைக்கிறதாவது: [3]தங் ௩
களுடைய ஆவியையும் தாங்கள் காணுதலையும்
பின்தொடருகிற மதிகெட்ட [4]தீர்க்கதரிசிகளுக்
கு ஐயோ!—இஸ்ரவேலே, உன் தீர்க்கதரிசிகள் ௪
வனாந்தரங்களில் உள்ள நரிகளுக்கு ஒப்பாயிருக்
கிறார்கள்.—நீங்கள் [5]கர்த்தருடைய நாளிலே, யுத் ௫
தத்தில் நிலைநிற்கும்படிக்கு, திறப்புகளில் ஏறி
னதுமில்லை; இஸ்ரவேல் வீட்டுக்காகச் சுவரை
அடைத்ததுமில்லை.—அவர்கள் அபத்தத்தையும் ௬
[6]பொய்ச்சாஸ்திரத்தையும் தரிசித்து, கர்த்தர் தங்
களை அனுப்பாதிருந்தும், கர்த்தர் உரைத்தாரெ
ன்று சொல்லி, காரியத்தை நிருவாகம்பண்ண நம்
பிக்கையுமாயிருக்கிறார்கள்.-நாம் உரைக்காதிருந் ௭
தும் நீங்கள் கர்த்தர் உரைத்தாரென்று சொல்லும்
போது, அபத்தமான தரிசனையைத் தரிசித்து,
பொய்ச்சாஸ்திரத்தைச் சொல்லுகிறவர்கள் அல்
லவோ?
ஆகையால் கர்த்தராகிய ஆண்டவர் உரைக்கிற ௮
தாவது: நீங்கள் அபத்தமானதைச் சொல்லி,
பொய்யானதைத் தரிசிக்கிறபடியினாலே, இதோ,
நாம் உங்களுக்கு விரோதமானவரென்று கர்த்த
ராகிய ஆண்டவர் சொல்லுகிறார்.—அபத்தமான ௯
தைத் தரிசித்து, பொய்ச்சாஸ்திரத்தைச் சொல்
லுகிற தீர்க்கதரிசிகளுக்கு நம்முடைய கை விரோ
தமாயிருக்கும்; அவர்கள் [7]நமது சனத்தின் சங்கத்
தில் இருப்பதுமில்லை; இஸ்ரவேல் வீட்டாரின்
அட்டவணையில் எழுதப்படுவதுமில்லை; இஸ்ர
வேல் தேசத்துக்குள் பிரவேசிப்பதுமில்லை;
அப்படியே நாம் கர்த்தராகிய ஆண்டவரென்று
அறிந்துகொள்ளுவீர்கள்.—அது என்னத்தினாலே ௰
என்றால் [8]சமாதானம் இல்லாதிருந்தும் அவர்கள்
சமாதானமென்று சொல்லி, நம்முடைய சனத்
தை மோசம்போக்குகிறபடியினாலேதானே; ஒரு
வன் மண்சுவரை எடுக்கிறான்; இதோ, மற்ற
வர்கள் சாரமில்லாத சாந்தை அதற்குப் பூசுகி
றார்கள்.
சாரமில்லாத சாந்தைப் பூசுகிறவர்களோடே, ௰௧
அது இடிந்துவிழுமென்று சொல்; வெள்ளமா
கப் பெருகுகிற மழை உண்டாகும்; பருங்கல்
மழையின் கல்லுகளே, நீங்களும் இறங்குவீர்கள்;
அப்போது மகா புசல்காற்று அதைப் பிளக்
கும்.—இதோ, சுவர் விழும்போது உங்களுட ௰௨
னே, நீங்கள் பூசின சாந்துப்பூச்சு எங்கே என்று
சொல்லார்களோ?—ஆகையால் கர்த்தராகிய ஆண் ௰௩
டவர் சொல்லுகிறதாவது: நம்முடைய உக்கிரத்
திலே மகா புசல்காற்றை எழும்பி அடிக்கப்பண்
ணுவோம்; நம்முடைய கோபத்திலே வெள்ள
மாகப் பெருகுகிற மழையும், நம்முடைய சினத்
திலே நிர்மூலமாக்கத்தக்க பருங்கல்மழையின்
கல்லுகளும் உண்டாகும்.—அப்போது நீங்கள் ௰௪

1 உ பே. ௧. ௯, ௪. 2 ஏசே. ௧௪. உ. ௯. 3 எரே. ௨௩. ௧. 4 எரே. ௨௩. ௨௧

5 ஏசே. ௨௨. ௩௰. ஏசா. ௯௪. ௭. ௩௨.—7 ஏசே. ௰௪. ௯.—8 மீகா. 6 ஏசே ௨௨. ௨௮. எரே. ௨௩. ௩. ௫.

சாரமில்லாத சாந்தைப் பூசினசுவரை நாம் இடித
லாக்கி, அதின் அஸ்திபாரம் திறந்துகிடக்கும்ப
டியாக அதைத் தரையிலே படுக்கப்பண்ணு
வோம்; அப்படியே உள்ளே இருக்கிற நீங்கள்
நிர்மூலமாகும்படிக்கு அது விழும்; அப்போது
நாம் கர்த்தரென்று அறிந்துகொள்வீர்கள்.
௰௫ அப்படி நாம் சுவரிலும் அதற்குச் சாரமில்லாத
சாந்தைப் பூசினவர்களிலும் நம்முடைய உக்கி
ரத்தைத் தீர்த்துக்கொண்டு: சுவருமில்லை, அதற்
குச் சாந்துபூசினவர்களுமில்லையென்று உங்க
௰௬ ளுக்குச் சொல்லுவோம்.—எருசலேமைக்குறித்
துத் தீர்க்கதரிசனம் சொல்லி, சமாதானம் இல்லா
திருந்தும் அதற்குச் சமாதானத்தின் தரிசனை
யைத் தரிசிக்கிற இஸ்ரவேலின் தீர்க்கதரிசிகளே,
இல்லை என்போமென்று கர்த்தராகிய ஆண்டவர்
சொல்லுகிறார்.
௰௭ மனுபுத்திரனே, தங்களுடைய இருதயத்தில்
இருக்கிறதை எடுத்து, தீர்க்கதரிசனம் சொல்லு
கிற உன் சனத்தின் குமாரத்திகளுக்கு எதிராக
உன் முகத்தைத் திருப்பி, அவர்களுக்கு விரோ
தமாகத் தீர்க்கதரிசனம் உரைத்து, சொல்லவேண்
௰௮ டியதாவது:—கர்த்தராகிய ஆண்டவர் உரைக்கி
றதேதெனில், ஆத்துமாக்களை வேட்டையாடும்ப
டிக்குச் சகல அக்கிள்களுக்குக் கைத்தலையணை
களைத் தைத்து, சகலவித வளர்த்தியானவர்களின்
தலைக்கும் மூடுசீலைகளை உண்டுபண்ணுகிறவர்
களுக்கு ஐயோ! நீங்கள் நமது சனத்தின் ஆத்து
மாக்களை வேட்டையாடி, அவைகளை உங்களுக்
௰௯ கு உயிரோடே காப்பாற்றுவீர்களோ?—[1]சாகத்
தகாத ஆத்துமாக்களைக் கொலைசெய்வதற்கும்,
உயிரோடே இருக்கத்தகாத ஆத்துமாக்களை உயி
ரோடே காப்பாற்றுவதற்குமாக நீங்கள் பொய்
யைக் கேட்கிற நமது சனத்துக்குப் பொய்சொல்
லுகிறதினாலே நம்மை நம்முடைய சனத்துக்
குள்ளே சில சிறங்கை வாற்கோதுமைக்காக
வும் அப்பத்துண்டுகளுக்காகவும் பரிசுத்தக்கொ
லைச்சலாக்குவீர்களோ?
௨௰ ஆகையால் கர்த்தராகிய ஆண்டவர் சொல்லு
கிறதேதெனில், இதோ, நீங்கள் ஆத்துமாக்க
ளைப் பறந்துபோகப்பண்ண வேட்டையாடுகிற
உங்கள் கைத்தலையணைகளுக்கு விரோதமாக
நாம் வந்து, அவைகளை உங்கள் புயங்களிலிருந்
து பிடுங்கிக் கிழித்து, நீங்கள் பறந்துபோகப்
பண்ண வேட்டையாடுகிற ஆத்துமாக்களை விடு
௨௧ தலைபண்ணி,—உங்கள் மூடுசீலைகளைக் கிழித்து,
நமது சனத்தை உங்கள் கைகளுக்கு நீங்கலாக்கி
விடுவோம்; அவர்கள் இனி உங்கள் கைகளிலே
வேட்டையாடப்பட இருப்பதில்லை; அப்போ
து நாம் கர்த்தரென்று அறிந்துகொள்ளுவீர்கள்.—
௨௨ நாம் நோவுண்டாக்காத நீதிமானின் இருதயத்
தை நீங்கள் வீணாய் முறியப்பண்ணினபடியினா
லும், [2]ஆகாதவன் தன் பொல்லாத வழியைவிட்
டுத் திரும்பவும் நாம் அவனை உயிரோடே காக்க
வுங்கூடாதபடிக்கு நீங்கள் அவனுடைய கைக
ளைத் திடப்படுத்தினபடியினாலும்,—நீங்கள் இனி ௨௩
அபத்தமானதைத் தரிசிப்பதுமில்லை, சாஸ்திரம்
பார்ப்பதுமில்லை; ஏனெனில் நாம் நம்முடைய
சனத்தை உங்கள் கைகளுக்கு நீங்கலாக்கிவிடு
வோம்; அப்போது நாம் கர்த்தரென்று அறிந்து
கொள்ளுவீர்களென்று சொல்லென்றார்.

## ௰௪. அதிகாரம்.

௧. பராபரன் விக்கிரகத்தொழும்பர்களுடைய வஞ்சக நினைவின்படி அவர்களுக்கு மாறுத்தரவளித்தது. ௬. மோசம்பண்ணுகிற தீர்க்கதரிசிகளினாலே வரும நியாயத்தீர்ப்புக்குப் பயந்து, அவர்கள் குணப்படத் தூண்டிவிடப்பட்டது. ௰௨. பஞ்சத்தையும், ௰௫. துஷ்டமிருகங்களையும், ௰௭. பட்டயத்தையும், ௰௯. பெருவாரிக்காய்ச்சலையுங்குறித்த பராபரனுடைய மாற்றக்கூடாத தீர்மானம். ௨௰. நீதியானவர்கள் மற்றவர்களுக்கு மாதிரியாகக் காப்பாற்றப்படுவது.

இஸ்ரவேலுடைய[3]மூப்பரில் சில மனுஷர் என் ௧
னண்டைக்கு வந்து, எனக்குமுன்பாக உளுக்
காந்தார்கள்.—அப்போது கர்த்தருடைய வார்த் ௨
தை எனக்கு உண்டாகி, அவர் சொன்னதாவது:-
மனுபுத்திரனே, இந்த மனுஷர் தங்கள் நரகலான ௩
தேவர்களைத் தங்கள் இருதயத்தின்மேல் ஏற்றி,
தங்கள் அக்கிரமமான இடறைத் தங்கள் முகத்
துக்கு எதிராக வைத்துக்கொண்டிருக்கிறார்கள்;
நம்மை அவர்கள் கேட்கவே கேட்கிறார்க
ளோ? — ஆகையால் நீ அவர்களோடே பேசி, ௪
அவர்களோடு சொல்லவேண்டியதாவது: கர்த்த
ராகிய ஆண்டவர் உரைக்கிறதேதெனில், இஸ்ர
வேல் வீட்டாரில் தன்னுடைய நரகலான தேவர்
களைத் தன் இருதயத்தின்மேல் ஏற்றி, தன் அக்
கிரமமான இடறைத் தன் முகத்துக்கு எதிராக
வைத்துக்கொண்டிருக்கிற எவனாகிலும் தீர்க்கத
ரிசியண்டைக்கு வந்தால், கர்த்தராகிய நாம்
இஸ்ரவேல் வீட்டாருடைய இருதயத்தில் இருக்
கிறதைப் பிடிக்கும்படியாக நரகலான தன்னு
டைய திரளான தேவர்களோடே வருகிற அப்
படிக்கொத்தவனுக்கு உத்தரவு கொடுப்போம்.—
ஏனெனில், அவர்கள் எல்லாரும் தங்கள் நரக ௫
லான தேவர்களைப்பற்றி நம்மைவிட்டுப் பேத
லித்தார்கள்.
ஆகையால் இஸ்ரவேல் வீட்டாரோடே நீ சொ ௬
ல்லவேண்டியதாவது: கர்த்தராகிய ஆண்டவர்
உரைக்கிறதேதெனில், [4]திரும்புங்கள்; உங்கள்
நரகலான தேவர்களைவிட்டுத் திரும்பிக்கொண்
டு, உங்களுடைய எல்லா அருவருப்புகளையும்
விட்டு, உங்கள் முகங்களைத் திருப்பிக்கொள்
ளுங்கள். — ஏனெனில் இஸ்ரவேல் வீட்டாரி ௭
லும் இஸ்ரவேலில் தங்குகிற பரதேசிகளிலும்
நம்மைப் பின்பற்றாமல் பேதலித்து, தன்னு
டைய நரகலான தேவர்களைத் தன் இருதயத்
தின்மேல் ஏற்றி, தன் அக்கிரமமான இடறைத்
தன் முகத்துக்கெதிராக வைத்துக்கொண்டிருக்
கிற எவனாகிலும் தீர்க்கதரிசியண்டைக்கு அவ
னைக்கொண்டு நம்மைக் கேட்கிறதற்காக வந்
தால், அவனுக்குக் கர்த்தராகிய நாம்தானே நம்

1 லூக். ௰௭. ௩௩.—2 எரே. ௨௩. ௰௪.

3 எசே. ௨௰. ௧—4 ஏசா. ௧௧. ௧.

௮ மாலே உத்தரவு கொடுத்து,—அப்படிக்கொத்த
மனுஷனுக்கு விரோதமாக [1]நம்முடைய முகத்
தைத் திருப்பி, அவனை [2]அடையாளமாகவும்
பழமொழிகளாகவும் வைத்து, அவனை நமது
சனத்தின் நடுவில் இராதபடிக்குச் சங்கரித்துப்
போடுவோம்; அப்போது நாம் கர்த்தரென்று
அறிந்துகொள்ளுவீர்கள்.
௯ ஒரு தீர்க்கதரிசி எத்தப்பட்டு ஒரு விசேஷத்
தைச் சொன்னானேகில், அப்படிக்கொத்த தீர்க்க
தரிசியைக் கர்த்தராகிய நாம் எத்தப்படப்பண்
ணினோம்; [3]நாம் அவனுக்கு விரோதமாக நமது
கையை நீட்டி, அவனை இஸ்ரவேல் சனத்தின்
௰ நடுவில் இராதபடிக்கு அழிப்போம்.—அப்படி
யே தங்கள் தங்கள் அக்கிரமத்தைச் சுமப்பார்
கள்; கேட்கிறவனுடைய அக்கிரமத்தின் சுமை
எப்படி இருக்குமோ அப்படித் தீர்க்கதரிசியினு
௰௧ டைய அக்கிரமத்தின் சுமையும் இருக்கும்.—இஸ்
ரவேல்வீட்டார் இனி நம்மைப் பின்பற்றுதலை
விட்டு வழிதப்பிப்போகாமலும், தங்களுடைய
எல்லா மீறுதல்களாலும் இனி அழுக்குப்படாம
லும் இருக்கும்பொருட்டாகத்தானே;அப்போது
நமக்குச் சனமாக இருப்பார்கள்; நாம் அவர்க
ளுக்குப் பராபரனுமாக இருப்போம் என்று கர்த்
தராகிய ஆண்டவர் உரைக்கிறாரென்று சொல்
லென்றார்.
௰௨ கர்த்தருடைய வார்த்தை எனக்கு உண்டாகி,
௰௩ அவர் சொன்னதாவது: — மனுபுத்திரனே, ஒரு
தேசம் நமக்கு விரோதமாகத் துரோகம்பண்ணிக்
கொண்டேயிருந்து, பாவஞ்செய்தால், நாம் அத
ற்கு விரோதமாக நம்முடைய கையை நீட்டி,
[4]அதில் அப்பமென்ற ஆதரவுகோலை உடைத்து,
அதில் பஞ்சத்தை அனுப்பி, மனுஷரையும் மிரு
கங்களையும் அதில் இராதபடிக்கு நாசம்பண்ணு
௰௪ வோம்.—அப்போது [5]நோவாவும் தானியேலும்
யோபும் என்ற மூன்று புருஷர் அதின் நடுவில்
இருந்தாலும், அவர்கள் தங்களுடைய ஆத்துமா
வையே தங்கள் நீதியினாலே தப்பப்பண்ணு
வார்களென்று கர்த்தராகிய ஆண்டவர் சொல்லு
கிறார்.
௰௫ நாம் [6]துஷ்டமிருகங்களைத் தேசத்தில் போக
விடுகையால் இவைகள் அதைப் பாழாக்கத்தக்
கதாகவும், மிருகங்களின்நிமித்தம் ஒருவரும் அ
தில் நடக்கக்கூடாதிருக்கத்தக்கதாகவும் அதைச்
௰௬ சனச்சேதம்பண்ணக்கொள்ள,—அந்த மூன்று
புருஷர் அதின் நடுவில் இருந்தாலும், அவர்கள்
குமாரரையாகிலும் குமாரத்திகளையாகிலும் தப்
பப்பண்ணாமல், அவர்கள்மாத்திரமே தப்புவார்
கள்; தேசமோ பாழாமென்று நம்முடைய சீவ
னைக்கொண்டு சொல்லுகிறோம் என்பதைக் கர்த்
தராகிய ஆண்டவர் உரைக்கிறார்.
௰௭ அல்லது நாம் அந்தத் தேசத்தின்மேலே பட்
டயத்தை வரப்பண்ணி: பட்டயமே, தேசத்
தை உருவப்போவென்று சொல்லி, மனுஷரை
யும் மிருகங்களையும் அதில் நாசம்பண்ணக்கொ
ள்ள,—அந்த மூன்று புருஷர் அதின் நடுவில் இ ௰௮
ருந்தாலும், அவர்கள் குமாரரையாகிலும் குமாரத்
திகளையாகிலும் தப்பப்பண்ணாமல், அவர்கள்மாத்
திரமே தப்புவார்களென்று நம்முடைய சீவனைக்
கொண்டு சொல்லுகிறோம் என்பதைக் கர்த்தரா
கிய ஆண்டவர் உரைக்கிறார்.
அல்லது நாம் அந்தத் தேசத்துக்குப் பெருவா ௰௯
ரிக்காய்ச்சலை அனுப்பி, அதில் மனுஷரையும்
மிருகங்களையும் நாசம்பண்ணும்படிக்கு அதின்
மேல் நம்முடைய உக்கிரத்தை இரத்தப்பழியாக
ஊற்றக்கொள்ள, — நோவாவும், தானியேலும், ௨௰
யோபும் அதின் நடுவில் இருந்தாலும், அவர்கள்
குமாரனையாகிலும், குமாரத்தியையாகிலும் தப்
பப்பண்ணாமல், அவர்கள் தங்கள் ஆத்துமாவை
யே தங்கள் நீதியினால் தப்பப்பண்ணுவார்களெ
ன்று நம்முடைய சீவனைக்கொண்டு சொல்லுகி
றோமென்பதைக்கர்த்தராகிய ஆண்டவர் உரைக்
கிறார்.
ஆகையால் கர்த்தராகிய ஆண்டவர் சொல்லு ௨௧
கிறதாவது: நாம் எருசலேமிலே மனுஷரையும்
மிருகங்களையும் நாசம்பண்ணும்படிக்கு, அதற்கு
விரோதமாகப் பட்டையம், பஞ்சம், துஷ்டமிரு
கங்கள், பெருவாரிக்காய்ச்சல் என்ற நம்முடைய
[7]நாலு பொல்லாத ஆக்கினைகளையும் அனுப்பி
னால், எத்தனை அதிகம்? — ஆகிலும் இதோ, ௨௨
அதிலே தப்பி மீதியாகிய வெளியே கொண்டுவ
ரப்படுகிற குமாரரும் குமாரத்திகளும் உண்டா
யிருப்பார்கள்; இதோ, அவர்கள் உங்களண்
டைக்குப் புறப்பட்டு வருவார்கள்; அப்போது
நீங்கள் அவர்கள் மார்க்கத்தையும் அவர்கள் கிரி
யைகளையும் கண்டு, நாம் எருசலேமின்மேல்
வரப்பண்ணின தீங்கினாலும் அதின்மேல் நாம்
வரப்பண்ணின எல்லாவற்றினாலும் தேற்றப்படு
வீர்கள்.—நீங்கள் அவர்கள் மார்க்கத்தையும் அவர் ௨௩
கள் கிரியையையும் காண்பதினாலே அவர்கள்
உங்களுக்குத் தேற்றரவாயிருப்பார்கள்; நாம்
அதிலே செய்ததெல்லாவற்றையும் முகாந்தர
மில்லாமல் செய்ததில்லையென்று அப்போது அ
றிந்துகொள்ளுவீர்களென்கிறதைக் கர்த்தராகிய
ஆண்டவர் உரைக்கிறார் என்று சொன்னார்.

## ௰௫. அதிகாரம்.

௧. திராட்சச்செடி யாதொரு வேலைக்குத் தகுதியல்ல என்பதைக்கொண்டு, ௬. எருசலேம் நீக்கிவிடப்பட்டதைக் காட்டியது.

கர்த்தருடைய வார்த்தை எனக்கு உண்டாகி, அ ௧
வர் சொன்னதாவது:—மனுபுத்திரனே, காட்டுச் ௨
செடிக்குள் இருக்கிற மற்ற எல்லாக் கொடி செ
டிகளைப்பார்க்கிலும் திராட்சச்செடியின் மேன்
மை என்ன?—அதிலே வேலைசெய்ய ஒருகட்டை ௩
எடுக்கப்படுமோ? பலவிததட்டுமுட்டுகளைத்தூக்
கிவைக்கும் முளையை அதில் எடுப்பார்களோ?—
இதோ, [8]அது அக்கினிக்கு இரையாக ஒப்புக் ௪
கொடுக்கப்படும்; அதின் இரண்டு முனைகளையும்
அக்கினி எரித்துப்போட்டது; அதின் நடுத்துண்

1 எசே. ௰௫. ௭.—2 எசே. ௫. ௰௫.—3 எசே. ௰௩. ௯.—4 எசே. ௪. ௰௬.

5 எரே. ௰௫. ௧.—6 ௩ மோ. ௨௬. ௨௨.—7 எசே. ௫. ௰௭.—8 யோவா. ௰௫. ௬.

௫ டும் வேகிறது; ஒருவேலைக்கு ஆகுமோ?—இதோ,
அது வேகாதிருக்கிறபோதும் ஒருவேலைக்கு உத
வினதில்லை; அக்கினி அதை எரித்தபிற்பாடும்
அது வெந்தபிற்பாடும் அது இனி ஒரு வேலைக்கு
உதவுவதெப்படி?
௬ ஆனதுகொண்டு கர்த்தராகிய ஆண்டவர் சொ
ல்லுகிறதாவது: திராட்சச்செடி நாம் அக்கினிக்
கு இரையாக ஒப்புக்கொடுத்த காட்டுச் செடிக
ளோடு ஒத்திருக்கிறதுபோலே, நாம் எருசலே
மின் குடிகளை அப்படியே ஒப்புக்கொடுத்து,—
௭ நமது முகத்தை அவர்களுக்கு விரோதமாகத் திரு
ப்புவோம்; அவர்கள் ஒரு அக்கினியிலிருந்து
நீங்கித் தப்பினாலும், வேறே அக்கினி அவர்க
ளைப் பட்சிக்கும்; அப்படியே நாம் நமது முகத்
தை அவர்களுக்கு விரோதமாகத் திருப்புகை
யில், நாம் கர்த்தர் என்று அறிந்துகொள்ளுவீர்
௮ கள்.—அவர்கள் துரோகம்பண்ணிக்கொண்டே
யிருந்தபடியினால், நாம் தேசத்தைப் பாழாய்ப்
போகப்பண்ணுவோமென்று கர்த்தர் சொல்லுகி
றாரென்றார்.

## ௰௬. அதிகாரம்.

*௧. தஞ்ட குழந்தையின் உவமையைக்கொண்டு, எருசலேமின் சுபாவ ஸ்திதியைக் காட்டினது. ௬. அதன்மேலிருந்த பராபரனுடைய வியப்புள்ள அன்பு. ௰௫. அதனுடைய நீச வேசித்தனமும், ௩௫. நியாயமுள்ள நியாயத்தீர்ப்பும், ௪௪. அதன் பாவம் அதன் தாயின் பாவத்திற்குச் சமானமாய், அதன் சகோதரிகளாகிய சோதோம் சமாரியாவின் பாவங்களிலும் அதிகப்பட்டு, நியாயத்தீர்ப்புக்கு ஏதுவாக்கியது. ௬௰. முடிவிலே அதற்கு இரக்கம் வருமென்று வாக்குத்தத்தம் பண்ணப்பட்டது.*

௧ கர்த்தருடைய வார்த்தை எனக்கு உண்டாகி, அ
௨ வர் சொன்னதாவது:—மனுபுத்திரனே, நீ எருச
லேமுக்கு அதின் அருவருப்புகளை அறிவித்து,
௩ சொல்லவேண்டியதாவது: கர்த்தராகிய ஆண்
டவர் எருசலேமுக்குச் சொல்லவேண்டியதே
தெனில், உன் பூர்வோத்தரமும் உன் பிறப்புக
ளும் கானானியர் தேசத்தினுடையது; உன் தகப்
பன் எமோரியனும் உன் தாய் கேத்தித்தியுந்தா
௪ னே.—நீ பிறக்கிறநாளிலே உன் பிறப்பின் சமா
சாரங்கள் என்னவாயிருந்தன என்றால், உன்
தொப்புள் அறுக்கப்பட்டதுமில்லை; நீ நமது
பார்வைக்குப் பிரியப்படத் தண்ணீரினால் கழு
வப்பட்டதுமில்லை; உப்பால் சுத்திகரிக்கப்பட்
டதுமில்லை; புடவைகளில் சுற்றப்பட்டதுமில்
௫ லை.—உனக்குப் பரதபித்து, இவைகளில் ஒன்றை
யாகிலும் உனக்குச் செய்ய ஒரு கண்ணும் உன்
பேரில் இரக்கமாயிருந்ததில்லை; நீ பிறந்தநாளில்
உன் ஆத்துமா அரோசிக்கப்பட்டதினால் வெ
ளியில் எறிந்துவிடப்பட்டாய்.
௬ நாமோவெனில் உனக்கு அருகாய்க் கடந்து
வந்து, நீ உன்னுடைய இரத்தத்திலே மிதிபடுவ
தைக் கண்டு, உன் இரத்தத்தில் கிடக்கிற உன்னு
டனே: பிழை என்று சொல்லி, உன் இரத்தத்தில்
கிடக்கிற உன்னுடனே: பிழை என்றுதான்
௭ சொன்னோம்.— உன்னை வயலின் பயிரைப்
போல அநேகமாயிரமாகும்படிக்கு வைத்தோம்;
நீ வளர்ந்து பெரியவளாகி, மகா சௌந்தரியத்தை
அடைந்தாய்; ஸ்தனங்கள் எழும்பின; உன் மயிர்
வளர்ந்தது; ஆனால் நீ நிருவாணமும் அம்மண
முமாயிருந்தாய்.

நாமோவெனில் உனக்கு அருகாகக் கடந்து, ௮
உன்னைப் பார்த்தோம்; இதோ, உன்னுடைய கா
லம் பருவகாலமாயிருந்தது; அப்போது [1]நம்மு
டைய வஸ்திரத்தை உன்மேலே விரித்து, உன்
நிருவாணத்தை மூடி, உனக்கு ஆணையிட்டுக்
கொடுத்து, உன்னோடு உடம்படிக்கைக்குள்ளா
னோம் என்று கர்த்தராகிய ஆண்டவர் சொல்லு
கிறார்; அப்படியே நம்முடையவளானாய். —
நாம் உன்னைத் தண்ணீரினால் கழுவி, உன்னை ௯
இரத்தமற ஸ்நானம்பண்ணுவித்து, உனக்கு எண்
ணெய்பூசி,—சித்திரத்தையலாடையை உனக்கு ௰
உடுத்தி, சாயந்தீர்ந்த பாதஇரட்சைகளை உனக்
குத் தரிப்பித்து, மெல்லிய புடவையைக் கட்
டவும், பட்டுச்சால்வையை மூடிக்கொள்ளவும்
உனக்குக் கொடுத்து, — உன்னை ஆபரணங்க ௰௧
ளால் அலங்கரித்து, உன் கைகளில் சரிகைகளை
யும், உன் கழுத்தில் சங்கிலியையும் போட்டு,—
உன் நெற்றியில் நெற்றிப்பட்டத்தையும், உன் ௰௨
காதுகளில் கடுக்கனையும், உன் தலையின்மேல்
சிங்காரமான கிரீடத்தையும் போட்டோம்.—
அப்படியே பொன்னினாலும் வெள்ளியினாலும் ௰௩
அலங்கரிக்கப்பட்டாய்; உன் உடுப்பு மெல்லிய
புடவையும் பட்டும் சித்திரத்தையலாடையுமாயி
ருந்தது; நல்ல மாவையும் தேனையும் எண்ணெ
யையும் சாப்பிட்டாய்; நீ மிகுதியும் அழகாகி,
இராச்சியம் அடையும் அனுகூலத்தைப் பெற்
றாய்.—உன் அழகினாலே உன்னுடைய கீர்த்தி ௰௪
புறச்சாதிகளுக்குள்ளே பிரசித்தமாயிற்று; ஏனெ
னில், நாம் உன்மேல் வைத்த நம்முடைய மகிமை
யினாலே அது குறையற்றதாய் இருந்ததென்று
கர்த்தராகிய ஆண்டவர் சொல்லுகிறார்.

நீயோவென்றால் உன் அழகை நம்பி, உன் கீர்த் ௰௫
தியினால் வேசித்தனம்பண்ணி, கடந்துபோகிற
வனுக்கெல்லாம் நேர்ப்பட உன் வேசித்தனங்க
ளைப் புரளப்பண்ணி, — உன் வஸ்திரங்களில் ௰௬
சிலவற்றை எடுத்து, பலவருணச் சோடிப்பான
மேடைகளை உனக்கு உண்டாக்கி, அவைக
ளின்மேல் வேசித்தனம்பண்ணினாய்; அப்படிக்
கொத்த காரியங்கள் ஒருக்காலும் சம்பவித்தது
மில்லை, நடக்கப்போவதுமில்லை.—நாம் உனக் ௰௭
குக் கொடுத்த நம்முடைய பொன்னும் நம்மு
டைய வெள்ளியுமான உன் சிங்கார ஆபரணங்
களை நீ எடுத்து, உனக்கு ஆண் சுரூபங்களை உண்
டாக்கி, அவைகளோடே வேசித்தனம்பண்ணி,—
உன்னுடைய சித்திரத்தையலாடைகளை எடுத்து, ௰௮
அவைகளை மூடி, நம்முடைய எண்ணெயையும்
நம்முடைய தூபவர்க்கத்தையும் அவைகளின்

1 ரூத். ௩. ௯.

௰௯ முன் படைத்து, — நாம் உனக்குக் கொடுத்த
நம்முடைய அப்பத்தையும் உனக்குச் சாப்பி
டக்கொடுத்த நல்ல மாவையும், எண்ணெயை
யும் தேனையும் நீ அவைகளின் முன் ஆற்றுகிற
வாசனையாகப் படைத்தாய்; அப்படி ஆயிற்
றென்று கர்த்தராகிய ஆண்டவர் சொல்லுகிறார்.
௨௰ நீ நமக்குப் பெற்ற உன் குமாரரையும் உன்
குமாரத்திகளையும் எடுத்து, [1]அவர்களை அவைக
ளுக்கு இரையாகப் பலியிட்டாய்; உன் வேசித்த
௨௧ னங்களின் செயல் அற்பகாரியமோ?—நீ நம்மு
டைய பிள்ளைகளை அடித்து, அவர்களை அவைக
ளுக்குத் தீயில் நடக்கப்பண்ண ஒப்புக்கொடுத்
௨௨ தாய். — உன்னுடைய எல்லா அருவருப்புகளி
லும் வேசித்தனங்களிலுமோவென்றால், நீ நிரு
வாணமும் அம்மணமுமாயிருந்ததும், உன் இரத்
தத்திலே மிதிபடக் கிடந்ததுமான உன் சிறுவய
தின் நாட்களை நினையாதேபோனாய்.
௨௩ உனக்கு ஐயோ!ஐயோ! என்று கர்த்தர் சொல்
லுகிறார்; ஏனெனில் நீ செய்த எல்லாப் பொல்
௨௪ லாப்புக்கும் பின்பு சம்பவித்ததேதென்றால்,—நீ
உனக்குக் கோயில்களைக் கட்டி, உனக்குச் சகல
வீதியிலும் உயர்ந்த மேடைகளைச் செப்பனிட்
௨௫ டாய்.—நீ சகல வழிமுகனையிலும் உன்னுடைய
உயர்ந்த மேடைகளைக் கட்டி, உன் அழகை அரு
வருப்பாக்கி, கடந்துவருகிறவனுக்கு எல்லாம்
உன் கால்களை அகற்றி, உன் வேசித்தனங்களைத்
௨௬ திரளாய்ப் பெருகப்பண்ணி, — சதை பெருத்த
உன் அயல் தேசத்தாராகிய எகிப்துவின் புத்திர
ரோடே வேசித்தனம்பண்ணி, நமக்குக் கோபம்
உண்டாக்கும்படிக்கு உன் வேசித்தனங்களைத்
திரளாக்கினாய்.
௨௭ ஆனதுகொண்டு, இதோ, நாம் நமது கையை
உனக்கு விரோதமாக நீட்டி, உனக்குக் குறித்த
கட்டளையைக் குறுக்கி,உன் பகையாளிகளாகிய
[2]பெலிஸ்தியருடைய குமாரத்திகளின் இச்சைக்
கு உன்னை ஒப்புக்கொடுத்தோம்; இவர்கள் உன்
தோஷமான மார்க்கத்துக்கு நாணப்பட்டார்கள்.
௨௮ நீ திருத்தி அடையமாட்டாததினால் ஆசூர்
குமாரரோடும் வேசித்தனம்பண்ணினாய்; அவர்க
ளோடே வேசித்தனம்பண்ணியும் நீ திருத்தி அ
௨௯ டையாதேபோனாய். — கானான் தேசத்திலே
கல்தேயர்மட்டுக்கும் உன் வேசித்தனங்களைத்திர
ளாக்கி, இதிலும் திருத்தி அடையாதேபோனாய்.
௩௰ வலு வேசியான ஸ்திரீயின் கிரியையாகிய
௩௧ இவைகளை எல்லாம் நீ செய்து,—சகல வழிமுக
னையிலும் உன்னுடைய கோயில்களைக் கட்டி,
சகல வீதியிலும் உன் மேடைகளைச் செப்பனிட்
டதினால் உன் இருதயம் எத்தனையாய்க் களைப்
பட்டிருக்கிறதென்று கர்த்தராகிய ஆண்டவர்
சொல்லுகிறார்;நீ பணையத்தை நிஸ்காரம்பண்ணு
௩௨ கிறதினால் நீ வேசியைப்போல இராமல்,—தன்
புருஷனுக்குப்பதிலாக அன்னியரைச் சேர்க்கிற
௩௩ விபசாரஸ்திரியைப்போல இருக்கிறாய்.-எல்லா
வேசிகளுக்கும் பணையங்கொடுக்கிறார்கள்; ஆ
னால் உன் சிநேகிதர் சுற்றுப்புறங்களிலிருந்து,
உன் வேசித்தனங்களுக்காக உன்னண்டைக்கு
வரும்படிக்கு அவர்களுக்கு எல்லாம் நீயே பணை
யங்கொடுத்து, அவர்களுக்குக் காணிக்கைகளைத்
தருகிறாய்.—அப்படியே உன்னுடைய வேசித்த ௩௪
னங்களில் வேறே ஸ்திரிகளைப்பார்க்கிலும் உன்
னில் வித்தியாசமுண்டு; ஏனென்றால் வேசித்த
னம்பண்ண உன்னைப் பின்செல்லார்கள்; பணை
யம் உனக்குக் கொடுக்கப்படாமல் நீயே பணை
யம் கொடுக்கிறபடியினாலே நீ வேறே.
ஆகையினாலே வேசியே,கர்த்தருடைய வார்த் ௩௫
தையைக் கேள்.—கர்த்தராகிய ஆண்டவர் சொல் ௩௬
லுகிறதாவது: உன் வேசித்தனம் அழுக்குப்பாய்ந்
தபடியினாலேயும், நீ உன் காமவிகாரிகளோடும்
அருவருப்பாகிய உன்னுடைய நரகலான தே
வர்களோடும் வேசித்தனம்பண்ணி, இவைகளு
க்கு உன் பிள்ளைகளின் இரத்தத்தைப் படைத்
ததினால் உன்னுடைய நிருவாணம் திறக்கப்பட்
டபடியினாலேயும்,—இதோ, நீ சம்போகம்பண் ௩௭
ணின உன்னுடைய எல்லாக் காமவிகாரிகளை
யும், நீ சிநேகித்த யாவரையும், நீ பகைத்திருக்
கிற அனைவரோடும் நாம் கூட்டி,அவர்களைச் சுற்
றிலுமிருந்து உனக்கு விரோதமாகச் சேர்த்து,
அவர்கள் உன்னுடைய நிருவாணத்தை எல்லாம்
காணும்படிக்கு உன்னுடைய நிருவாணத்தை
[3]அவர்களுக்குமுன்பாகத் திறந்துவைத்து, —
[4]விபசாரிகளையும் இரத்தஞ்சிந்தினவர்களையும் ௩௮
நியாயந்தீர்க்கிறபடியே உன்னை நியாயந்தீர்த்து,
உன்பேரில் உக்கிரமும் வைராக்கியமுமாய்
இரத்தப்பழியைச் சுமத்தி,—உன்னை அவர்கள் ௩௯
கைக்கு ஒப்புக்கொடுப்போம்; அவர்கள் உன்
கோயில்களை இடித்து, உன் மேடைகளைத் தரை
யாக்கிப் போட்டு, உன் வஸ்திரங்களை உரிந்து,
உன் சிங்கார ஆபரணங்களை எடுத்துக்கொண்டு,
உன்னை அம்மணமும் நிருவாணமுமாக வைத்
துப்போய்,-உனக்கு விரோதமாக ஒரு கூட்டத் ௪௰
தை வந்தேறப்பண்ணி, உன்னைக் கல்லெறிந்து,
உன்னைத் தங்கள் பட்டையங்களால் குத்திப்
போட்டு,-[5]உன் வீடுகளை அக்கினியால் சுட்டுப் ௪௧
போட்டு, அநேக ஸ்திரிகளின் கண்களுக்குமுன்
பாக உன்னில் நியாயத்தீர்ப்புகளைச் செய்வார்
கள்;நீவேசியாயிருக்குதலை ஒயப்பண்ணுவோம்;
நீ இனிப்பணையங்கொடுப்பதுமில்லை.
அப்படியே நமது வைராக்கியம் உன்னைவிட் ௪௨
டு நீங்கும்படிக்கு, நாம் நம்முடைய உக்கிரத்தை
உன்னில் ஆறப்பண்ணி, இனி நாம் கோபமாயி
ராமல் அமருவோம்.
நீ உன் இளவயதின் நாள்களை நினையாமல், ௪௩
இவைகளினால் எல்லாம் நமக்குச் சினம் உண்
டாக்கினபடியினாலே, இதோ, நாம் உன் மார்க்
கத்தை [6]உன் தலையின்மேல் சுமரப்பண்ணுவோ
மென்று கர்த்தராகிய ஆண்டவர் சொல்லுகிறார்;

1 எரே.எ, ௩௧.—2 நியா. ௰௩. ௧. ௨ நாளா. ௨௮. ௰௮.-3 எசே. ௨௩. ௨௯. 4 எசே.௨௩.௨௪,௨௫.—5 ௨ இரா.௨௫.௯.—6 எசே.௯.௰:௰௧.௨௨.

அப்படியே உன்னுடைய எல்லா அருவருப்புக
ளின்மேலும் அப்படிக்கொத்த தோஷத்தை இ
௪௪ னிச்செய்யாதே போவாய்.—இதோ, பழமொழி
சொல்லுகிறவர்கள் எல்லாரும்: தாயைப்போல
மகள் என்று உன்னைக்குறித்துப் பழமொழி சொ
௪௫ ல்லுவார்கள்.—நீ தன் புருஷனையும் தன் பிள்ளை
களையும் அரோசித்த உன்னுடைய தாயின் மகள்;
நீ தங்கள் புருஷரையும் தங்கள் பிள்ளைகளையும்
அரோசித்த உன்னுடைய சகோதரிகளின் சகோ
தரி; உங்கள் தாய் கேத்தித்தி; உங்கள் தகப்பன்
௪௬ எமோரியன்.—உன் இடதுபுறத்திலே, தானும்
தன் குமாரத்திகளுமாய்க் குடியிருந்த சமாரியா
[1]உன்னுடைய தமக்கை; உன் வலதுபுறத்திலே,
தானும் தன் குமாரத்திகளுமாய்க்குடியிருந்த சோ
௪௭ தோம் உன்னுடைய தங்கை.—ஆகிலும் நீ அவர்
களுடைய மார்க்கங்களிலே நடவாமலும், அவர்
களுடைய அருவருப்புகளின்படியே செய்யா
மலும், அது மகா அற்பகாரியம் என்கிறதுபோலே
நீ உன்னுடைய எல்லா மார்க்கங்களிலேயும்
[2]அவர்களைப்பார்க்கக் கேடாய்ச் செய்தாய்.
௪௮ நீயும் உன்னுடைய குமாரத்திகளும் செய்தது
போலே, [3]உன் சகோதரியாகிய சோதோமும் அ
வளுடைய குமாரத்திகளும் செய்ததில்லை என்
கிறதை நம்முடைய சீவனைக்கொண்டு சொல்லு
கிறோமென்று கர்த்தராகிய ஆண்டவர் உரைக்கி
௪௯ றார். — இதோ, உன் சகோதரியாகிய சோதோ
முக்கு இருந்த அக்கிரமம் பெருமை என்பது;
அப்பத்தின்பரிபூரணமும் பிரயாசமில்லாத சாங்
கோபாங்கமும் அவளுக்கும் அவள் குமாரத்தி
களுக்கும் இருந்தது; ஆனால் சிறுமையும் எளி
மையுமானவன் கையை அவள் பலப்படுத்தாதே
௫௦ போனாள்.—அவர்கள் தங்களை உயர்த்தி, நம்மு
டைய முகத்துக்குமுன்பாக அருவருப்பான
தைச் செய்தார்கள்; அதை நாம் கண்டபோது,
அவர்களை ஒழித்துவிட்டோம்.
௫௧ சமாரியாவும் உன் பாவங்களில் அரைவாசி
செய்ததில்லை; நீ அவர்களைப்பார்க்கிலும் உன் பா
வங்களைப் பெருகப்பண்ணி, நீ செய்த உன்னு
டைய எல்லா அருவருப்புகளாலும் உன் சகோ
௫௨ தரிகளை நீதிவிளங்கப்பண்ணினாய் — இப்போ
தும் உன் சகோதரிகளைக் குற்றவாளிகள் என்று
தீர்த்த நீ அவர்களைப்பார்க்கிலும் அருவருப்பாகச்
செய்த உன் பாவங்களின்நிமித்தம் உன் இலச்
சையையும் சுமந்திரு; உன்னைப்பார்க்கிலும் நீதி
யாயிருக்கிறார்கள்; இப்போதும் உன் சகோதரி
களை நீதிவிளங்கப்பண்ணின நீ வெட்கமும் அ
௫௩ டைந்து, உன் இலச்சையைச் சுமந்திரு.—ஆனால்
நீ அவர்களுக்கு ஆறுதலாக இருந்து, உன் இலச்
சையைச் சுமந்து, நீ செய்த எல்லாவற்றினாலும்
௫௪ நாணும்படிக்கு. — நாம் சோதோமும் அவளு
டைய குமாரத்திகளும் சிறையிருக்கிற அவர்க
ளுடைய சிறையிருப்பையும், சமாரியாவும் அ
வள் குமாரத்திகளும் சிறையிருக்கிற சிறையிருப்
பையும் திருப்பும்போது அவர்கள் நடுவிலே நீ
சிறையிருக்கிற உன்னுடைய சிறையிருப்பை
யும் திருப்புவோம்.
உன் சகோதரிகளாகிய சோதோமும் அவளு ௫௫
டைய குமாரத்திகளும் தங்கள் முந்தினசீருக்குத்
திரும்புவார்கள்; சமாரியாவும் அவளுடையகுமா
ரத்திகளும் தங்கள் முந்தினசீருக்குத் திரும்புவார்
கள், நீயும் உன் குமாரத்திகளும் உங்கள் முந்தி
னசீருக்குத் திரும்புவீர்கள்.—சூரியாவின் குமா ௫௬
ரத்திகளும் அவளுடைய சகல சுற்றுப்புறத்தாரா
கிய பெலிஸ்தியரின் குமாரத்திகளும் உன்னைச்
சுற்றிலும் இருந்து, கொள்ளையிட்ட நிந்தையின்
காலமுதலான காலங்களிலே உன் பொல்லாப்பு
வெளியாயிற்றே.
அதற்குமுன் உன்னுடைய பெருமையின் ௫௭
நாளிலே உன் சகோதரியாகிய சோதோமின்
பேரும் உன் வாயிலே கேட்கப்பட்டதில்லை.—
உன் தோஷத்தையும் உன் அருவருப்புகளையும் ௫௮
நீ சுமப்பாயென்று கர்த்தர் சொல்லுகிறார்.
ஏனெனில் கர்த்தராகியஆண்டவர் உரைக்கிற ௫௯
தாவது: உடம்படிக்கையை முறித்துப்போடுகிற
தினாலே ஆணையை அசட்டைபண்ணின நீ செ
ய்ததுபோலே உனக்கும் செய்வோம்.—ஆகிலும் ௬௦
உன் இளவயதில் உன்னோடே பண்ணின [4]நம்
முடைய உடம்படிக்கையை நாம் நினைத்து, நித்
திய உடம்படிக்கையை உனக்கு ஏற்படுத்து
வோம்.—அப்போது உன் தமக்கைகளையும் உன் ௬௧
தங்கைகளையும் நீ சேர்த்துக்கொள்ளுகையில்
[5]உன் மார்க்கங்களை நினைத்து நாணுவாய்; அவர்
களை நாம் உனக்குக் குமாரத்திகளாகக் கொடுப்
போம்; உன்னுடைய உடம்படிக்கையைப் பார்
த்து அல்ல.—உன்னோடே நம்முடைய உடம் ௬௨
படிக்கையைப்பண்ணி ஏற்படுத்துவோம்; அப்
போது நாம் கர்த்தரென்று அறிவாய்.—நீ செய்த ௬௩
எல்லாவற்றின் நிவிர்த்தியையும் நாம் உனக்கு
உண்டாக்கும்போது, [6]நீ நினைத்து, வெட்கி, உன்
நாணத்தினாலே உன் வாயை இனித் திறக்கக்
கூடாதபடிக்குத்தானே என்று கர்த்தராகிய ஆண்
டவர் உரைக்கிறார் என்கிறதைச் சொல்லென்
றார்.

## ௧௭. அதிகாரம்.

௧. இரண்டு கழுகுகளும் திராட்சச்செடியுமாகிய இவைகளின் உவமையைக்கொண்டு, ௰௧. பாபேலைவிட்டு எகிப்துக்கு இசைந்ததற்காக எருசலேமினமேல் வரும் பராபரனுடைய நியாயத்தீர்ப்பைக் காட்டினது. ௨௨. பராபரன் சுவிசேஷமெனும் கேதுரு விருட்சத்தை நடவாக்குத் தத்தம்பண்ணினது.

கர்த்தருடைய வார்த்தை எனக்கு உண்டாகி, ௧
அவர் சொன்னதாவது:—மனுபுத்திரனே, நீ இ ௨
ஸ்ரவேல் வீட்டாருக்கு ஒரு விடுகதையையும்
உவமையையும் காண்பித்து,
சொல்லவேண்டியதாவது: கர்த்தராகிய ஆண் ௩
டவர் உரைக்கிறதேதெனில், பெரிய செட்டை
களையும் நீளமான இறகுகளையும் உடையதும்,
பலவருணமாகிய இறகுகளால் நிறைந்ததுமாகிய

1 எசே. ௨௩. ௪.—2 எசே. ௨௩. ௧௧.—3 ௧ மோ. ௧௯. ௧௯.

4 ௧ மோ. ௨௬. ௪௨.—5 எசே. ௨௦. ௪௩.—6 எசே. ௧௬. ௬௧, ௬௨.

பெரிய கழுகு, லீபனோனில் வந்து, ஒரு கே
௪ துருவின் நுனிக்கிளையைப் பிடித்து, — அதினு
டைய கொழுந்துகளின் தலைக்கொப்பைப் பி
டுங்கி, அதை வர்த்தக தேசத்துக்குக் கொண்டு
போய், அதை வர்த்தகருடைய பட்டணத்திலே
௫ வைத்து,—தேசத்தின் விதையிலே ஒன்றை எடு
த்து, அதைப்பயிர்நிலத்திலே போட்டது; அதை
எடுத்து, அநேகம்தண்ணீர்களின் ஓரத்திலே மகா
௬ எச்சரிக்கையோடே நட்டது.—இது துளிர்த்து,
நன்றாய்த் தழைக்கிற தாழ்ந்த அடிமரமுள்ள தி
ராட்சச்செடியாயிற்று; இதின் கொடிகள் அந்தக்
கழுகைநோக்கி, இதின் வேர்கள் அதின் கீழாக
இருந்தன; இப்படியே அது திராட்சச்செடியா
கி, கிளைகளைப் பிறப்பித்துக் கொப்புகளை விட்
டது.
௭ ஆனால் பெரிய செட்டைகளையும் திரளான
இறகுகளையும் உடைய வேறொரு பெரிய கழுகு
இருந்தது; இதோ, அது தன்னுடைய நடுவாகிய
பாத்திகளுக்குத்தக்கதாய்த் தனக்குத் தண்ணீ
ரைப் பாய்ச்சும்படிக்கு இந்தத் திராட்சச்செடி
அதற்கு எதிராகத் தன் வேர்களைச் சேரப்பண்ணி,
௮ தன் கொடிகளை அதற்குநேராக விட்டது.—கொப்
புகளை விடுகிறதற்கும் கனியைத் தருகிறதற்கும்
மகிமையான திராட்சச்செடியாகிறதற்கும் இது
அநேகம் தண்ணீர்களின் ஓரமாகிய நல்லநிலத்
தில் நடப்பட்டிருந்ததே.
௯ இப்படிக்கொத்ததற்கு வாய்க்குமோ? அது பட்
டுப்போகும்படிக்கு அவன் அதின் வேர்களைப்
பிடுங்காமலும், அதின் கனியை வெட்டாமலும்
இருப்பானோ? துளிர்த்த எல்லா இலைகளோடும்
அது பட்டுப்போகும்; அதை வேர்கள்முதலாய்ப்
பேர்த்தெடுக்க அவன் பலத்த புயத்தோடும் திர
ளான சனத்தோடும்வரக் கவ்வையில்லை. —
௰ இதோ நடப்பட்ட அதுசெழிப்பாயிருக்குமோ?
கொண்டற்காற்று அதின்பேரில் படுகையில்
அது உலரவே உலராதோ? அது நடப்பட்ட
பாத்திகளிலே அது உலர்ந்துபோமென்று கர்த்
தராகிய ஆண்டவர் உரைக்கிறார் என்று சொல்
லென்றார்.
௰௧ பிற்பாடு கர்த்தருடைய வார்த்தை எனக்கு
௰௨ உண்டாகி, அவர் உரைத்ததாவது:—இப்போதும்
இவைகளின் அர்த்தத்தை அறியீர்களோவென்று
நீ கலகவீட்டாரைக் கேட்டுச் சொல்லவேண்டி
யதாவது: இதோ, [1]பாபேலின் இராசா எருசலே
முக்கு வந்து, அதின் இராசாவையும் அதின் பிர
புக்களையும் பிடித்து, அவர்களைத் தன்னிடமாகப்
௰௩ பாபேலுக்குக் கொண்டுபோகிறபோது,—அவன்
இராசவித்திலே ஒருவனை எடுத்து, இவனோடே
௰௪ உடம்படிக்கைபண்ணி,—இராச்சியம் தன்னை
உயர்த்தாமல் தாழ்ந்ததாயிருக்கும்படிக்கும், தன்
உடம்படிக்கையை இவன் கைக்கொள்ளுகிறதி
னால் அது நிலைநிற்கும்படிக்கும், இவனை ஆணைப்
பிரமாணத்துக்கு உட்படப்பண்ணி, தேசத்தில்
பலசாலிகளைப் பிடித்துக்கொண்டு போனானே.—
ஆனால், இவன் தனக்குக் குதிரைகளையும் அநே ௰௫
கம் சனத்தையும் தந்தனுப்பவேண்டுமென்று
தன் தானாபதிகளை எகிப்துக்கு அனுப்பினான்;
அவனைவிட்டு மருளவிழுந்த இப்படிக்கொத்த
வனுக்கு வாய்க்குமோ? இப்படிச் செய்கிறவன்
தப்பித்துக்கொள்ளுவானோ? உடம்படிக்கையை
முறித்துப்போட்டிருந்தும் தப்பித்துக்கொள்ளு
வானோ?
எவனுடைய ஆணையை அசட்டைபண்ணி, ௰௬
எவனுடைய உடம்படிக்கையை முறித்துப்போ
ட்டானோ, தன்னை இராசாவாக வைத்த அந்த
இராசாவினுடைய ஸ்தானமாகிய பாபேலின்
நடுவிலே இவன் அவனண்டையில் இருந்து மர
ணம் அடைவானென்கிறதை நமது சீவனைக்
கொண்டு சொல்லுகிறோமென்று கர்த்தராகிய
ஆண்டவர் சொல்லுகிறார். — அவன் அநேகம் ௰௭
ஆத்துமாக்களை நாசம்பண்ணும்படிக்கு அணை
போட்டு, கொத்தளங்களைக் கட்டுகையில் [2]பார்
வோன் பெரிய சேனையோடானாலும் திரளான
கூட்டத்தோடானாலும் இவனுக்காக யுத்தத்தில்
ஒன்றும் செய்வதில்லை.—இதோ, இவன் தன் ௰௮
கையைக் கொடுத்திருந்தும் உடம்படிக்கையை
முறித்துப்போட்டு, ஆணையை அசட்டைபண்
ணினான்; இப்படியெல்லாம் செய்தவன் தப்பித்
துக்கொள்வதில்லை.
அதின்நிமித்தம் கர்த்தராகிய ஆண்டவர் சொல் ௰௯
லுகிறதாவது: அவன் நம்முடைய ஆணையை அ
சட்டைபண்ணினதையும், நமது உடம்படிக்கை
யை முறித்துப்போட்டதையும், [3]நாம் அவனு
டைய தலையின்மேல் வரப்பண்ணுவோமென்று
நம்முடைய சீவனைக்கொண்டு சொல்லுகி
றோம்.—[4]அவன் நம்முடைய வேட்டைக்குள் ௨௰
பிடிபடும்படிக்கு நாம் நமது வலையை அவன்
மேல் வீசி, அவனைப் பாபேலுக்குக் கொண்டு
போய், அவன் நமக்குவிரோதமாய்ப் பண்ணின
துரோகத்தின்நிமித்தம் அங்கே அவனோடே நியா
யத்துக்குள் பிரவேசிப்போம். — அவனோடே ௨௧
கூட ஓடிப்போகிற யாவரும் அவனுடைய எல்
லா இராணுவங்களும் பட்டையத்தால் விழுவார்
கள்; மீதியானவர்களோவென்றால் சகல காற்
றுத்திசைகளிலும் தூற்றிப்போடப்படுவார்கள்;
அப்போது கர்த்தராகிய நாம் இதைச் சொன்னோ
மென்று அறிந்துகொள்வீர்கள்.
கர்த்தராகிய ஆண்டவர் சொல்லுகிறதாவது: ௨௨
நாம் உயர்ந்த கேதுருவின் நுனிக்கிளையில் ஒன்
றை எடுத்து, அதை ஊன்றுவோம்; அதின் கொ
ழுந்துகளின் தலைக்கொப்பிலே [5]இளசாயிருக்கிற
ஒன்றைப் பிடுங்கி, அதை நாம் [6]உயரமும் ஓங்க
லுமான ஒரு பர்வதத்தின்மேல் நாட்டுவோம்.—
இஸ்ரவேலின் உயரமான பர்வதத்திலே அதை ௨௩
நாட்டுவோம்; அதுகொப்புகளைவிட்டு, கனிதந்து,
மகிமையான கேதுருவாகும்; அதின் கீழே சகல
வித செட்டைகளுள்ள எல்லாப் பட்சிசாதிக
ளும் தங்கி, அதினுடைய கிளைகளின் நிழலிலே

1 ௨ இரா. ௨௪. ௰. ழ.—2 எரே. ௩௭. ௭, ௮.—3 எசே. ௯. ௰; ௰௧. ௨௧.
4 எசே. ௰௨. ௰௩, ௰௪.—5 எசா. ௰௧. ௧, ௨.—6 எசா. ௨. ௨, ௩.

உச தாபரிக்கும்.—அப்படியே கர்த்தராகிய நாம் [1]உ
யர்ந்த விருட்சத்தைத் தாழ்த்தி, தாழ்ந்தவிருட்சத்
தை உயரப்பண்ணினேனென்றும், நாம் பச்சை
யான விருட்சத்தை உலரப்பண்ணி, உலர்ந்த
விருட்சத்தைப் பயிராக்கினேனென்றும், வெளி
யின் விருட்சங்களுக்கு எல்லாம் தெரியவரும்;
கர்த்தராகிய நாம் இதைச்சொன்னோம்; இதைநிரு
வாகமும்பண்ணுவோமென்று உரைத்தாரென்று
சொல்லென்றார்.

## ௰அ. அதிகாரம்.

க. பாரபரன் புளிப்புள்ள திராட்சக்காய்களின் அநீதியான உவமையைக் கண்டித்தது. ரு. நீதியுள்ள தகப்பனையும், ௰. நீதியுள்ள தகப்பனுடைய துஷ்ட குமாரனையும், ௰ச. துஷ்ட தகப்பனுடைய நீதியுள்ள குமாரனையும், ௰கூ. மனந்திரும்புகிற துன்மார்க்கனையும், உச. கலகம்பண்ணுகிற நீதிமானையும் தமது செயலைக் காட்டினது. உரு. அவர் தமது நீதியைப் பரிபாலித்தது. ஙக. மனந்திரும்பத் தூண்டினது.

க கர்த்தருடைய வார்த்தை எனக்கு உண்டாகி,
உ அவர் சொன்னதாவது:—[2]பிதாக்கள் திராட்சக்
காய்களைத் தின்றார்கள், பிள்ளைகளின் பல்லுகள்
கூசிப்போயின என்கிற பழமொழியை நீங்கள்
இஸ்ரவேல் தேசத்தில் சொல்ல உங்களுக்கு
என்ன இருக்கிறது?
ங இனி இஸ்ரவேலிலே இந்தப் பழமொழியைச்
சொல்லுகிறதற்கு உங்களுக்கு இல்லை என்கி
றதை நமது சீவனைக்கொண்டு சொல்லுகிறோ
மென்று கர்த்தராகிய ஆண்டவர் உரைக்கிறார்.—
ச இதோ, எல்லா ஆத்துமாக்களும் நம்முடையவை
கள்தானே; தகப்பனின் ஆத்துமா எப்படியோ,
அப்படியே மகனின் ஆத்துமாவும் நம்முடையதா
யிருக்கிறது; பாவஞ்செய்கிற ஆத்துமாவே சா
ரு கும்.—ஒருவன் நீதிமானாயிருந்து, நியாயத்தையும்
சா நீதியையும் செய்து,—[3]மலைகளின்மேல் சாப்பி
டாமலும், இஸ்ரவேல்வீட்டாரின் நரகலான
தேவர்களுக்கு நேராகத் தன் கண்களை ஏறெடுக்
காமலும், தனக்கு அடுத்தவனுடைய பெண்சா
தியைத் தீட்டுப்படுத்தாமலும், [4]தூரஸ்திரீயோ
எ டேசேராமலும்,—[5]ஒருவனையும் ஒடுக்காமலும்,
[6]கடன்வாங்கினவனுக்கு அடைமானத்தைத் தி
ரும்பக் கொடுத்து, கொள்ளையிடாமல், [7]தன்
அப்பத்தைப் பசித்தவனுக்குப் பங்கிட்டு, அம்ம
ணமாயிருக்கிறவனுக்கு வஸ்திரம் தரிப்பித்து,—
அ [8]வட்டிக்குக் கொடாமலும், சொச்சம் வாங்கா
மலும், அநியாயத்துக்குத் தன் கையை விலக்கி,
ஒருவரோடு ஒருவருக்கு உண்டான வழக்கை
கூ உண்மையாய்த் தீர்த்து,—[9]உண்மையாய்ச் சஞ்
சரிக்கும்படிக்கு நம்முடைய கட்டளைகளில்
நடந்து, நம்முடைய நியாயங்களைக் கைக்
கொண்டால்,அப்படிக்கொத்த நீதிமான் பிழைக்
கவே பிழைப்பானென்று கர்த்தராகிய ஆண்ட
௰ வர் சொல்லுகிறார். — ஆனால் அவனுக்கு ஒரு
குமாரன் பிறந்து, இவன் கள்ளனும் இரத்தஞ்
சிந்துகிறவனும்,அந்தக் காரியங்களில் ஒன்றுக்கு
௰க ஒத்ததைச் செய்கிறவனும், — இவைகளையோ
செய்யாதவனுமாயிருந்து, மலைகளின்மேல் சாப்
பிட்டு, தனக்கடுத்தவனுடைய பெண்சாதியைத்
தீட்டுப்படுத்தி, — சிறுமையும் எளிமையுமான ௰உ
வனை ஒடுக்கி, கொள்ளைக்காரனாயிருந்து, அடை
மானத்தைத் திரும்பக்கொடாமல், நரகலான தே
வர்களுக்கு நேராகத் தன் கண்களை ஏறெடுத்து,
அருவருப்பானதைச் செய்து, — [10]வட்டிக்குக் ௰ங
கொடுத்து,சொச்சம்வாங்கினால்,அவன் பிழைப்
பானோ? அவன் பிழைப்பதில்லை; இந்த எல்லா
அருவருப்புகளையும் செய்தானே; அவன் சாக
வே சாவான்; அவன் இரத்தப்பழி அவன்மேல்
இருக்கும்.
பின்னையும், இதோ, அவனுக்கு ஒரு குமாரன் ௰ச
பிறந்து, இவன் தன் தகப்பன் செய்த எல்லாப்
பாவங்களையும் கண்டு, தான் அவைகளின்படி
செய்யாதபடிக்கு எச்சரிக்கையாயிருந்து,—மலை ௰ரு
களின்மேல் சாப்பிடாமலும், இஸ்ரவேல் வீட்
டாரின் நரகலான தேவர்களுக்கு நேராகத் தன்
கண்களை ஏறெடுக்காமலும், தனக்கடுத்தவனு
டைய பெண்சாதியைத் தீட்டுப்படுத்தாமலும்,—
ஒருவனையும் ஒடுக்காமலும், அடைமானத்தை ௰சா
வைத்துக்கொண்டிராமலும், கொள்ளையிடாம
லும், தன் அப்பத்தைப் பசித்தவனுக்குப் பங்கி
ட்டு, அம்மணமாயிருந்தவனுக்கு வஸ்திரந்தரிப்
பித்து, — சிறுமையானவனுக்கு நோவை உண் ௰எ
டாக்காதபடிக்குத் தன் கையை விலக்கி, வட்டி
யும் சொச்சமும் வாங்காமல் நம்முடைய நியா
யங்களைச் செய்து, நம்முடைய கட்டளைகளில்
நடந்தால், அவன்தகப்பனுடைய அக்கிரமத்தின்
நிமித்தம் சாகாமல் பிழைக்கவே பிழைப்பான்.—
அவன் தகப்பனோவென்றால் ஒடுக்குதலைச்செய் ௰அ
து, சகோதரனைக் கொள்ளையிட்டு, நல்லதல்லாத
தைத் தன் சனக்கூட்டங்களின் நடுவிலே செய்
தபடியினாலே, இதோ, அவன் தன் அக்கிரமத்
திலே சாவான்.
குமாரன் தகப்பனுடைய அக்கிரமத்தைச் ௰கூ
சுமக்காதிருப்பானேன் என்று நீங்கள் கேட்
டால், குமாரன் நியாயத்தையும் நீதியையும் செய்
து, நமது கட்டளைகளைக் கைக்கொண்டு, அவை
களின்படி செய்தானே; ஆகையால் அவன்
பிழைக்கவே பிழைப்பான்.—[11]பாவஞ்செய்கிற உ௰
ஆத்துமாவே சாகும்; குமாரன் தகப்பனுடைய அ
க்கிரமத்தைச் சுமப்பதுமில்லை; தகப்பன் குமார
னுடைய அக்கிரமத்தைச் சுமப்பதுமில்லை; நீதி
மானுடைய நீதி அவன்மேலேதானே இருக்கும்;
ஆகாதவனுடைய ஆகாமியமும் அவன்மேலேதா
னே இருக்கும்.
ஆகாதவன் தான் செய்த எல்லாப் பாவங்களை உக
யும்விட்டுத் திரும்பி, நமது கட்டளைகளை எல்
லாம் கைக்கொண்டு, நியாயத்தையும் நீதியையும்
செய்தானேயாகில், அவன் பிழைக்கவே பிழைப்
பான், அவன் சாவதில்லை.—[12]அவன் செய்த உஉ

1 எசே. உக. உசு. மத். உக. ௰உ. 2 எரே. ஙக. உகூ, ங஁. 3 ஏசா. இஎ. எ: சுடு. எ. 4 க மோ. ௰அ.௰கூ.—5 சங். ௰இ.க.ழு. 6 ஐ மோ. உச. ௰.ழு.—7 மத்.உடு. ஙடு. ழு.

8 உ மோ. உஉ. உக. க மோ. உடு. 11 இ மோ. உச ௰சு.—12 ஏசா. சக. சுடு. கக.—9 எசே. கக. உஎ. உடு. எரே. ஙக. ஙச. 10 எசே. உஉ ௰உ. நெகே. டு.எ.ழு.

எல்லா மீறுதல்களும் அவனுக்கு நினைக்கப்படுவ
தில்லை; அவன் செய்த தன்னுடைய நீதியிலே
௨௩ பிழைப்பான்.—[1]ஆகாதவனுடைய மரணத்தை
விரும்பவே விரும்புகிறேனோவென்று கர்த்தரா
கிய ஆண்டவர் சொல்லுகிறார்; அவன் தன் வழி
களைவிட்டுத் திரும்பிப் பிழைப்பதையே அல்ல
வோ விரும்புகிறேன்.

௨௪ [2]நீதிமான் தன்னுடைய நீதியைவிட்டுத் திரும்
பி, நீதிகேடு நடப்பித்து, ஆகாதவன் செய்கிற
சகல அருவருப்புகளின்படி செய்தானேயாகில்,
அவன் பிழைப்பானோ? அவன் செய்த அவனு
டைய எல்லா நீதிகளும் நினைக்கப்படுவதில்லை;
அவன் செய்த தன்னுடைய துரோகத்தினாலே
யும் அவன் செய்த தன்னுடைய பாவத்தினாலே
யும் சாவான்.

௨௫ நீங்களோ, [3]ஆண்டவருடைய வழி செம்மை
யாய் இருக்கவில்லை என்கிறீர்கள்; இஸ்ரவேல்
வீட்டாரே, கேளுங்கள்: நம்முடைய வழி செம்
மையாயிராதோ? உங்கள் வழிகள் அல்லவோ
௨௬ செம்மையல்லாதிருக்கிறது.—நீதிமான் தன் நீதி
யைவிட்டுத்திரும்பி, நீதிகேடுசெய்தால் அதினால்
சாவான்; அவன் செய்த தன்னுடைய நீதிகேட்
௨௭ டினாலே அவன் சாவான்.—ஆகாதவன் தான்
செய்த தன்னுடைய ஆகாமியத்தைவிட்டுத்
திரும்பி, நியாயத்தையும் நீதியையும் செய்தானே
யாகில், அவன் தன் ஆத்துமாவைப் பிழைக்கப்
௨௮ பண்ணுவான்.—அவன் எச்சரிக்கையாகி, தான்
செய்த எல்லா மீறுதல்களையும் விட்டுத் திரும்பு
கிறபடியினாலே அவன் பிழைக்கவே பிழைப்
பான், அவன் சாவதில்லை.

௨௯ இஸ்ரவேல் வீட்டாரோ: ஆண்டவருடைய
வழி செம்மையாய் இருக்கவில்லை என்கிறார்கள்;
இஸ்ரவேல் வீட்டாரே, நம்முடைய வழிகள்
செம்மையாயிராதோ? உங்கள் வழிகள் அல்ல
௩௰ வோ செம்மையல்லாதிருக்கின்றன. — ஆகை
யால் இஸ்ரவேல் வீட்டாரே, நாம் உங்களில்
அவனவனை அவனவன் வழிகளுக்குத்தக்கதாக
நியாயந்தீர்ப்போமென்று கர்த்தராகிய ஆண்ட
வர் சொல்லுகிறார்; [4]நீங்கள் திரும்பி, உங்களு
டைய எல்லா மீறுதல்களையும்விட்டு மனந்திரும்
புங்கள்; அப்போது அக்கிரமம் உங்கள் விழுகு
௩௧ தலுக்குக் காரணமாய் இருப்பதில்லை.—நீங்கள்
துரோகம்பண்ணின உங்களுடைய எல்லாப்
பாதகங்களையும் உங்கள்மேல் இராதபடிக்குத்
தள்ளிவிட்டு, [5]உங்களுக்குப் புது இருதயத்தை
யும் புது ஆவியையும் உண்டுபண்ணிக்கொள்ளு
ங்கள்; இஸ்ரவேல்வீட்டாரே, நீங்கள் ஏன் சாக
௩௨ வேண்டும்.—[6]சாகிறவனுடைய சாவை விரும்
போமே என்று கர்த்தராகிய ஆண்டவர் சொல்லு
கிறார்; ஆகையால் மனந்திரும்புங்கள், அப்போது
பிழைப்பீர்கள்.

## ௰௯. அதிகாரம்.

௧. படுகுழியில் பிடிபட்ட இளஞ்சிங்கங்களின் உவமையைக்கொண்டு, இஸ்ரவேலின் பிரபுக்களுக்காகவும், ௰. காய்ந்துபோன திராட்சச்செடியின் உவமையைக்கொண்டு எருசலேமுக்காகவும் புலம்பின புலம்பல்.

நீயோவென்றால் இஸ்ரவேலுடைய பிரபுக்களி ௧
ன்பேரிலே ஒரு புலம்பலை எடுத்து,—சொல்ல ௨
வேண்டியதாவது: உன் தாய் எப்படிக்கொத்த
வள்? அவள் சிங்கங்களுக்குள்ளே படுத்துக்
கொண்டிருந்த ஒரு பெண்சிங்கந்தானே; அது
தன் குட்டிகளை இளஞ்சிங்கங்களின் நடுவிலே
வளர்த்து,—தன் குட்டிகளில் ஒன்றைப் பெரிய ௩
தாக்கிற்று; இது இளஞ்சிங்கமாகி, இரையெடுக்
கப் பழகி, மனுஷரைப் பாய்ந்து பட்சித்தது.—
புறச்சாதிகள் இதின் செய்தியைக் கேட்டபோ ௪
து, இது அவர்களுடைய படுகுழிகளில் பிடிபட்
டது; இதைத் துறடுகளைப்போட்டு [7]எகிப்துதே
சத்திற்குக் கொண்டுபோனார்கள்.

தான் காத்திருந்து, தன்னுடைய நம்பிக்கை ௫
அபத்தமாய்ப்போயிற்றென்று கண்டு, அது தன்
குட்டிகளில் வேறொன்றை எடுத்துக்கொண்டு,
அதை இளஞ்சிங்கமாக வைத்தது.—இது சிங்கங் ௬
களுக்குள்ளே நடமாடி, இளஞ்சிங்கமாகி, இரை
யெடுக்கப் பழகி, மனுஷரைப் பாய்ந்து பட்சித்
தது.—அவர்களுடைய விதவைகளை அறிந்து, அ ௭
வர்களுடைய பட்டணங்களைப் பாழாக்கிற்று;
இதினுடைய கர்ச்சிப்பின் சத்தத்துக்குத் தேச
மும் அதின் நிறைவும் திகைத்தன.

ஆனால் [8]சுற்றுச் சீமைகளின் சாதிகள் இதற்கு ௮
விரோதமாக எழும்பிவந்து, தங்கள் வலையை அ
தின்மேல் வீசினார்கள்; அப்போது அது அவர்க
ளுடைய படுகுழியிலே பிடிபட்டது.—அவர்கள் ௯
அதைத் துறடுகளைப்போட்டு, ஒரு கூட்டுக்குட்
படுத்தி, [9]அதைப் பாபேலின் இராசாவண்டைக்
குக் கொண்டுபோனார்கள்; இனி அதின் சத்தம்
இஸ்ரவேலுடைய பர்வதங்களின்மேல் கேட்
கப்படாதபடிக்கு அதை அரணான இடங்களுக்
குள் கொண்டுபோனார்கள்.

நீ அமரிக்கையோடு இருக்கையில் உன் தாய் ௰
தண்ணீர்களின் ஓரமாய் நாட்டப்பட்டதும்,
வெகு நீர்ப்பாய்ச்சலால் கனிதருகிறதும் தழைந்
ததுமான [10]திராட்சச்செடியாயிருந்தாள்.—ஆளு ௰௧
கிறவர்களின் செங்கோல்களுக்கான பலத்த மி
லாறுகள் அதற்கு இருந்தன; அதின் வளர்த்தி
அடர்த்தியான கொப்புகளுக்குள்ளே உயர ஓங்
கி, தன் உயர்த்தியினாலே தன்னுடைய திரளான
கொடிகளோடுங்கூடத் தெரியலாயிற்று.

ஆனால் அது உக்கிரமாய்ப் பிடுங்குண்டு தரை ௰௨
யில் படிக்கப்பட்டது; கொண்டற்காற்று அதின்
கனியை உலர்த்திற்று; அதின் பலத்த மிலாறுகள்
முறிந்து, [11]பட்டுப்போயின; அக்கினி அவைக
ளைப் பட்சித்தது.—இப்போது அது வறண்ட ௰௩

1 ௧௨. வச. ௧௧. ௰௧. ௨ பே. ௩. ௯. 2 எசே. ௩. ௨௰: ௧௧. ௰௨. 3 எசே. ௧௧ ௰௭ ௨௰.-4 மத். ௩. ௨. 5 எசே. ௰௧ ௰௯. சங். ௫௧. ௰௨.

6 ௨௧. வச.-7 ௨ இரா. ௨௩. ௩௩. எரே. ௨௨. ௰௧.-8 ௨ இரா. ௨௪. ௨. 9 ௨ நாளா. ௩௬. ௬.—10 சங். ௮௰. ௯. ௧௨.-11 எசே. ௧௭. ௰௪.

தும் தண்ணீர் இல்லாததுமான வனாந்தர பூமியி
௰ச லே நாட்டப்பட்டது.—அதின் கொடிகளிலுள்ள
ஒரு மிலாறிலிருந்து அக்கினி புறப்பட்டு, அ
தின் கனியைப் பட்சித்தது; ஆளுகிற செங்கோ
லுக்கான பலத்த மிலாறு இனி அதில் இல்லை
யென்று சொல்; புலம்பல் இதுதான்; இது புலம்
பலாக இருக்குமென்றார்.

## உ௰. அதிகாரம்.

க. இஸ்ரவேலின் மூப்பர்கள் வேண்டுதலைப் பராபரன் கேளாமலிருந்தது. ரு. எகிப்திலும், ௰. வனாந்தரத்திலும், உஎ. தங்கள் தேசத்திலும் அவர்கள் பண்ணின கலகத்தை அவர் காட்டினது. ௩௩. சவிசேஷத்தினாலே அவர்களை ஒன்றுப்சேர்க்க வாக்குத்தத்தம் பண்ணினது. சரு. வனத்தின் பெயரைக்கொண்டு, எருசலேமின் அழிவைக்காட்டினது.

க ஏழாம்வருஷத்து ஐந்தாம்மாதம் பத்தாந்தேதி
யிலே சம்பவித்ததேதென்றால், [1]இஸ்ரவேலின்
மூப்பரில் சிலர் கர்த்தரைக் கேட்க வந்து, எனக்
உ குமுன்பாக உளுக்காந்தார்கள்.—அப்போது கர்த்
தருடைய வார்த்தை எனக்கு உண்டாகி, அவர்
ங சொன்னதாவது:—மனுபுத்திரனே, நீ இஸ்ரவே
லின் மூப்பரோடே பேசி, அவர்களுடனே சொ
ல்லவேண்டியதாவது: கர்த்தராகிய ஆண்டவர்
உரைக்கிறதேதெனில், நீங்கள் நம்மைக் கேட்க
வருகிறீர்களோ? உங்களால் நாம் கேட்கப்ப
டோம் என்கிறதை நமது ஜீவனைக்கொண்டு
சொல்லுகிறோமென்று கர்த்தராகிய ஆண்டவர்
ச உரைக்கிறாரென்று சொல். — மனுபுத்திரனே,
நீ அவர்கள் நியாயத்தை விசாரிப்பாயோ? விசா
ரிக்க மனதானால், நீ அவர்கள் பிதாக்களின் அரு
வருப்புகளை அவர்களுக்குத் தெரியக்காட்டி,
ரு அவர்களோடே சொல்லவேண்டியதாவது:
கர்த்தராகிய ஆண்டவர் உரைக்கிறதேதெனில்,
நாம் இஸ்ரவேலைத் தெரிந்துகொண்ட நாளிலே
நாம் யாக்கோபு வீட்டாரின் வித்துக்காக நம்மு
டைய கரத்தை ஏறெடுத்து, எகிப்துதேசத்தில்
நம்மை அவர்களுக்கு அறியப்பண்ணி, நாம் உங்
கள் பராபரனாகிய கர்த்தரென்று நம்முடைய
சா கரத்தை அவர்களுக்காக ஏறெடுத்தோம்.—[2]நாம்
அவர்களை எகிப்துதேசத்திலிருந்து அழைப்போ
மென்றும், அவர்களுக்காக நாம் பார்த்துவைத்த
தாகிய பாலும் தேனும் ஓடுகிறதும் எல்லாத் தே
சங்களின் சிங்காரமாயிருக்கிறதுமான தேசத்தி
லே அவர்களைக் கொண்டுவந்து விடுவோமென்
றும், அந்நாளிலே நமது கரத்தை அவர்களுக்
எ காக ஏறெடுத்து,—அவர்களுடனே சொன்னதா
வது: உங்களில் அவரவர் தங்கள் கண்களால்
நோக்கின அருவருப்புகளைத் தள்ளிப்போட்டு,
எகிப்துவின் நரகலான தேவர்களால் உங்களைத்
தீட்டுப்படுத்தாதிருப்பீர்களாக; உங்கள் பராபர
னாகிய கர்த்தர் நாமே என்றோம்.
அ அவர்களோவென்றால், நம்முடைய சொல்
லைக் கேட்க மனதில்லாமல் நமக்கு விரோதமாய்
இரண்டகம்பண்ணினார்கள்; அவரவர் தங்கள்
கண்களால் நோக்கின அருவருப்புகளைத் தள்ளி
ப்போடாமலும், எகிப்துவின் நரகலான தேவர்

களை விடாமலும் இருந்தார்கள்; ஆனதுகொண்டு
எகிப்துதேசத்தின் நடுவிலே நமது கோபத்தை
அவர்களிலே தீர்த்துக்கொள்ளும்படிக்கு நம்மு
டைய உக்கிரத்தை அவர்கள்மேல் ஊற்றுவோ
மென்றோம்.—ஆகிலும் புறச்சாதிகளுடைய கண் கூ
களுக்குமுன்பாக [3]நம்முடைய நாமம் பரிசுத்தக்
குலைச்சலாகாதபடிக்கு, நாம் அதின்நிமித்தம்
கிருபைசெய்தோம்; ஏனெனில் இவர்களுடைய
நடுவில் இருந்தார்கள்; நாம் அவர்களை இவர்கள்
கண்களுக்குமுன்பாக எகிப்துதேசத்திலிருந்து
புறப்படப்பண்ணுவதினால் இவர்களுக்கு அறி
யப்பட்டோம்.
ஆகையால் நாம் அவர்களை எகிப்துதேசத்தி ௰
லிருந்து புறப்படப்பண்ணி, அவர்களை வனாந்
தரத்தில் அழைத்துவந்து,—நமது கட்டளைகளை ௰க
நாம் அவர்களுக்குக் கொடுத்து, நமது நியாயங்
களை அவர்களுக்குத் தெரியப்பண்ணினோம்; [4]அ
வைகளின்படியே மனுஷன் செய்தால் அவைக
ளால் பிழைப்பான் —நாம் தங்களைப் பரிசுத்தம் ௰உ
பண்ணுகிற கர்த்தரென்று அவர்கள் அறியும்ப
டிக்கு, நமக்கும் அவர்களுக்கும் அடையாள
மாய் இருப்பதற்கான [5]நம்முடைய ஓய்வுநாள்
களையும் அவர்களுக்குக் கட்டளையிட்டோம்.
ஆனால் இஸ்ரவேல் வீட்டார் வனாந்தரத்திலே ௰ங
நமக்கு விரோதமாய் இரண்டகம்பண்ணினார்
கள்; நம்முடைய கட்டளைகளின்படியே மனு
ஷன் செய்தால் அவைகளால் பிழைப்பானே;
அவர்களோ அவைகளில் நடவாமல், நம்முடை
ய நியாயங்களை வெறுத்து, நம்முடைய ஓய்வு
நாள்களின் பரிசுத்தத்தை மிகவும் குலைத்துப்
போட்டார்கள்; ஆனதுகொண்டு அவர்களை நிர்
மூலமாக்கும்படிக்கு வனாந்தரத்திலே நம்மு
டைய உக்கிரத்தை அவர்கள்மேல் ஊற்றுவோ
மென்றோம். — ஆகிலும் புறச்சாதிகளுடைய ௰ச
கண்களுக்குமுன்பாக நம்முடைய நாமம் பரி
சுத்தக் குலைச்சலாகாதபடிக்கு, நாம் அதின்
நிமித்தம் கிருபைசெய்தோம்; ஏனெனில் இவர்
களுடைய கண்களுக்குமுன்பாக அவர்களைப்
புறப்படப்பண்ணினோம்.
நாம் வாக்குத்தத்தம்பண்ணினதாகிய, பாலுந் ௰ரு
தேனும் ஓடுகிறதும், எல்லாத் தேசங்களின் சிங்
காரமாயிருக்கிறதுமான தேசத்திலே அவர்களைக்
கொண்டுவந்து விடுவதில்லை என்று, [6]வனாந்தரத்
திலே நமது கரத்தை அவர்களுக்கு விரோதமாக
ஏறெடுத்தோம்.—ஏனென்றால் தங்கள் இருதயம் ௰சா
தங்களுடைய நரகலான தேவர்களைப் பின்பற்றி
னபடியினாலே, அவர்கள் நமது நியாயங்களை
வெறுத்து, நமது கட்டளைகளில் நடவாதே
போய், நமது ஓய்வுநாள்களின் பரிசுத்தத்தைக்
குலைத்துப்போட்டார்கள்.
ஆகிலும் அவர்களை அழிக்காதபடிக்கு, நம்மு ௰எ
டைய கண் அவர்களைத் தப்பவிட்டது; நாம் அ
வர்களை வனாந்தரத்திலே நிர்மூலமாக்காமல்,—

1 எசே. ௰ச. க.—2 உ மோ. சா. ௰க, ௰எ.—3 எசே. ஙசா. உக, உஉ.
4 ங மோ. ௰அ. ரு.—5 உ மோ. உ௰. அ—௰க; ஙக. ௰ங—௰எ.—6 ச மோ. ௰ச. ௰ங, ௰உ.

௰௮ அவர்களுடைய பிள்ளைகளோடே வனாந்தரத்தி
லே சொன்னதாவது: நீங்கள் உங்கள் பிதாக்க
ளின் முறைமைகளில் நடவாமலும், அவர்களு
டைய நியாயங்களைக் கைக்கொள்ளாமலும், அ
வர்களுடைய நரகலான தேவர்களால் உங்களைத்
௰௯ தீட்டுப்படுத்தாமலும் இருங்கள்.—உங்கள் பரா
பரனாகிய கர்த்தர் நாமே; நீங்கள் நம்முடைய
கட்டளைகளில் நடந்து, நம்முடைய நியாயங்க
ளைக் கைக்கொண்டு, அவைகளின்படியே செய்
௨௰ து,—நம்முடைய ஓய்வுநாள்களைப் பரிசுத்தமாக்
குங்கள்; நாம் உங்கள் பராபரனாகிய கர்த்த
ரென்று நீங்கள் அறியும்படிக்கு அவைகள் நமக்
கும் உங்களுக்கும் அடையாளமாய் இருக்கு
மென்றோம்.
௨௧ ஆனால் பிள்ளைகளும் நமக்கு விரோதமாய்
எழும்பினார்கள்; நம்முடைய கட்டளைகளின்ப
டியே மனுஷன் செய்தால் அவைகளால் பிழைப்
பானே; அவர்களோ அவைகளில் நடவாமலும்,
நம்முடைய நியாயங்களை அவைகளின்படி
செய்யும்படிக்குக் கைக்கொள்ளாமலும், நம்மு
டைய ஓய்வுநாள்களின் பரிசுத்தத்தைக் கொ
லைத்துப்போட்டார்கள்; ஆகையால் வனாந்தரத்
திலே நமது கோபத்தை அவர்களில் தீர்த்துக்
கொள்ளும்படிக்கு நம்முடைய உக்கிரத்தை
௨௨ அவர்கள்மேலே ஊற்றுவோமென்றோம்.—ஆகி
லும் நாம் நமது கையைத் திருப்பிக்கொண்டு,
நமது நாமம் புறச்சாதிகளின் கண்களுக்குமுன்
பாகப் பரிசுத்தக்குலைச்சல் ஆகாதபடிக்கு, அ
தின் நிமித்தமாகக் கிருபைசெய்தோம்; ஏனென்
றால் இவர்களுடைய கண்களுக்குமுன்பாக
அவர்களைப் புறப்படப்பண்ணினோம்.
௨௩ நாம் அவர்களைப் புறச்சாதிகளுக்குள்ளே சித
றவடித்து, அவர்களைத் தேசங்களிலே தூற்றிப்
போடுகிறதற்கு நமது கரத்தை வனாந்தரத்திலே
அவர்களுக்கு விரோதமாக ஏறெடுத்தோம். —
௨௪ ஏனென்றால் அவர்கள் நம்முடைய நியாயங்க
ளின்படி செய்யாமல், நம்முடைய கட்டளைகளை
வெறுத்து, நம்முடைய ஓய்வுநாள்களின் பரிசுத்
தத்தைக் கொலைத்துப்போட்டார்கள்; அவர்களு
டைய கண்கள் அவர்கள் பிதாக்களின் நரகலா
னதேவர்களைப் பின்பற்றுகிறவைகளாயிருந்தன.
௨௫ ஆகையால் [1]நல்லதல்லாத கட்டளைகளையும் அ
வர்கள் பிழைக்கக்கூடாத நியாயங்களையும் நாம்
அவர்களுக்கு உண்டாகவும்பண்ணினோம். —
௨௬ கர்ப்பந்திறந்து பிறக்கிறதை எல்லாம் [2]அவர்கள்
தீயைக் கடக்கப்பண்ணினதைத்தொட்டு அவர்
களை அவர்களுடைய காணிக்கைகளால் தீட்டுப்
படப்பண்ணினோம்; நாம் அவர்களைப் பாழ்க்க
டிக்கும்படியாகவும், நாம் கர்த்தரென்று அவர்
கள் அறியும்படியாகவுந்தானே.
௨௭ ஆகையால் மனுபுத்திரனே, நீ இஸ்ரவேல்
வீட்டாரோடே பேசி, அவர்களோடே சொல்
லவேண்டியதாவது: கர்த்தராகிய ஆண்டவர்

உரைக்கிறதேதெனில், உங்கள் பிதாக்கள் அப்பு
றம் நமக்கு விரோதமான துரோகம்பண்ணி, நம்
மைத் தூஷணித்தவிதமாவது:—அவர்களுக்குக் ௨௮
கொடுக்கத்தக்கதாக நாம் நமது கரத்தை ஏறெ
டுத்த தேசத்திலே நாம் அவர்களைப் பிரவேசிக்
கப்பண்ணினபிற்பாடு, அவர்கள் உயர்ந்த ஒரு
மேட்டையும் தாழ்ந்த ஒரு விருட்சத்தையும் எங்
கெங்கே கண்டார்களோ, அங்கே எல்லாம் தங்
கள் பலிகளைப் பலியிட்டு, அங்கே கோபம் உண்
டாக்குதலான தங்கள் காணிக்கைகளைப் படை
த்து, அங்கே ஆற்றுகிற வாசனையாகத் தங்கள்
தூபங்களைக் காட்டி, அங்கே தங்கள் ஊற்றுதல்
களை ஊற்றினார்கள்.—அப்போது நாம் அவர்க ௨௯
ளுடனே: நீங்கள் போகிற அந்த மேடு என்னத்
துக்கு என்று சொன்னோம்; ஆனால் இந்நாள்வ
ரைக்கும் அதின்பேர் மேடு என்னப்படும்.
ஆகையால் இஸ்ரவேல் வீட்டாரோடே நீ ௩௰
சொல்லவேண்டியதாவது: கர்த்தராகிய ஆண்ட
வர் உரைக்கிறதேதெனில், உங்கள் பிதாக்களு
டைய மார்க்கத்தின்படியே அல்லவோ நீங்கள்
தீட்டுப்பட்டவர்கள்; அவர்களுடைய அருவ
ருப்புகளை அல்லவோ நீங்கள் பின்பற்றிச் சோ
ரம்போகிறவர்கள்.—நீங்கள் உங்கள் பிள்ளைக ௩௧
ளைத் [3]தீயைக் கடக்கப்பண்ணுகையில் உங்கள்
காணிக்கைகளைப் படைக்கிறபோது இந்நாள்வ
ரைக்கும் அவர்களுடைய எல்லா நரகலான தே
வர்களாலும் நீங்கள் தீட்டுப்படுகிறீர்களே; நாம்
உங்களால் கேட்கப்படுவோமோ? இஸ்ரவேல்
வீட்டாரே, நாம் உங்களால் கேட்கப்படோம்
என்கிறதை நமது சீவனைக்கொண்டு சொல்லுகி
றோமென்று கர்த்தராகிய ஆண்டவர் உரைக்கி
றார்.—மரத்துக்கும் கல்லுக்கும் ஆராதனைசெய்து ௩௨
புறச்சாதிகளைப்போலேயும் தேசங்களின் வம்
சங்களைப்போலேயும் இருப்போமென்று சொல்
லுகிறீர்களே; இந்த உங்கள் ஆவியில் கிளம்புகிற
நினைவின்படி ஆவதேயில்லை.
பலத்த கையினாலும், நீட்டப்பட்ட புயத்தி ௩௩
னாலும், ஊற்றப்பட்ட உக்கிரத்தினாலும், உங்
களை ஆளுவோமென்கிறதை நம்முடைய சீவ
னைக்கொண்டு சொல்லுகிறோமென்று கர்த்தரா
கிய ஆண்டவர் உரைக்கிறார்.—நீங்கள் சனசத ௩௪
ளங்களுக்குள் இராதபடிக்கு நாம் உங்களைப்
புறப்படப்பண்ணி, நீங்கள் சிதறித்தங்குகிற தே
சங்களில் இராதபடிக்கு நாம் உங்களைப் பலத்த
கையினாலும், நீட்டப்பட்ட புயத்தினாலும், ஊற்
றப்பட்ட உக்கிரத்தினாலும் கூட்டி, — உங்க ௩௫
ளைச் சனசதளங்களின் வனாந்தரத்திலே கொண்
டுபோய், அங்கே உங்களோடே முகமுகமாக
நியாயத்துக்குள் பிரவேசிப்போம்.
[4]நாம் எகிப்துதேசத்தின் வனாந்தரத்தில் உங் ௩௬
கள் பிதாக்களோடு நியாயத்துக்குள் பிரவே
சித்ததுபோலே உங்களோடு நியாயத்துக்குள்
பிரவேசிப்போமென்று கர்த்தராகிய ஆண்டவர்

1 உ தெச. உ. ௰, ௰௧. 2 எசே. ௰௬. உ௰, உ௧. 3 உ இரா. ௰௬. ௩; ௰௭. ௰௭. 4 ௪ மோ. ௰௪. உ௨, உ௩.

௩௭ சொல்லுகிறார்.—நாம் உங்களைக் கோலின்கீழ்க்
கடந்துபோகப்பண்ணி, உங்களை உடம்படிக்
௩௮ கையின் கட்டுக்குட்படுத்தி,—கலகக்காரரையும்
துரோகிகளையும் உங்களைவிட்டுப் பிரித்துப்போ
டுவோம்; அவர்களைத் தாங்கள் தங்கும் தேசத்தி
லிருந்து புறப்படப்பண்ணுவோம்; ஆனால்
அவர்கள் இஸ்ரவேல் சீமைக்குள் பிரவேசிப்ப
தில்லை; அப்படியே நாம் கர்த்தரென்று அறிந்து
கொள்ளுவீர்கள்.
௩௯ இப்போதும் இஸ்ரவேல் வீட்டாரே, நீங்கள்
நம்முடைய சொல்லைக்கேட்க மனதில்லாதிருந்
தால், நீங்கள் போய், அவனவன் தன் தன் நரக
லான தேவர்களை இனிமேலைக்கும் சேவியுங்க
ளே; ஆனால் நம்முடைய பரிசுத்தநாமத்தை உங்
கள் காணிக்கைகளாலும் உங்கள் நரகலான தே
வர்களாலும் இனிப் பரிசுத்தக்குலைச்சலாக்கா
திருப்பீர்களாக என்று கர்த்தராகிய ஆண்டவர்
௪௰ சொல்லுகிறார்.--என்னெனில் இஸ்ரவேலின் [1]உயர
மான பர்வதமாகிய நம்முடைய பரிசுத்த பர்
வதத்திலே இஸ்ரவேலுடைய எல்லா வீட்டாரு
மாகிய தேசத்திலுள்ள அனைவரும் நம்மைச் சே
விப்பார்களென்று கர்த்தராகிய ஆண்டவர் சொல்
லுகிறார்; அங்கே அவர்கள்மேல் பிரியம் வைப்
போம்; அங்கே நீங்கள் பரிசுத்தம்பண்ணுகிற
எல்லாவற்றிலும் உங்கள் செலுத்துதல்களையும்
உங்கள் ஈவுகளின் முதற்பலன்களையும் கேட்
போம்.
௪௧ நாம் உங்களைச் சனசதளங்களிலிருந்து புறப்
படப்பண்ணி, உங்களை நீங்கள் சிதறுண்டிருக்
கிற தேசங்களிலிருந்து கூட்டிக்கொள்ளும்போ
து, ஆற்றுகிற வாசனையின்நிமித்தம் நாம் உங்கள்
பேரில் பிரியமாயிருப்போம்; அப்போது புறச்
சாதிகளின் கண்களுக்குமுன்பாக உங்களால்
௪௨ பரிசுத்தம்பண்ணப்படுவோம்.—உங்கள் பிதாக்
களுக்குக் கொடுப்போமென்று நம்முடைய கரத்
தை ஏறெடுத்த தேசமாகிய இஸ்ரவேல் சீமையி
லே நாம் உங்களைத் திரும்பிவரப்பண்ணின அப்
போது, நாம் கர்த்தரென்று நீங்கள் அறிந்து
௪௩ கொண்டு,—அங்கே உங்களுடைய எல்லா வழி
களையும், நீங்கள் தீட்டுப்பட்ட உங்களுடைய
எல்லாக் கிரியைகளையும் [2]நினைத்து, நீங்கள் செய்
திருந்த உங்களுடைய எல்லாப் பொல்லாப்புக
ளின் நிமித்தமும் உங்களைத்தானே அரோசிப்பீர்
௪௪ கள்.—இஸ்ரவேல் வீட்டாரே, நாம் நம்முடைய
நாமத்தின்நிமித்தம் உங்கள் பொல்லாத வழிக
ளுக்குத்தக்கதாகவும், உங்கள் கெட்ட கிரியைக
ளுக்குத்தக்கதாகவும் உங்களுக்குச் செய்யாமல்
போன அப்போது, நாம் கர்த்தரென்று அறிந்து
கொள்ளுவீர்களென்கிறதைக் கர்த்தராகிய ஆண்
டவர் உரைக்கிறாரென்று சொல்லென்றார்.
௪௫ கர்த்தருடைய வார்த்தை எனக்கு உண்டாகி,
௪௬ அவர் சொன்னதாவது:—மனுபுத்திரனே, நீ உன்
முகத்தைத் தென்திசையாகத் திருப்பி, தெற்குக்
கு விரோதமாக உன் வசனத்தைச் சொரிந்து,
தென்புறமான வயல்வெளியின் காட்டுக்கு
விரோதமாகத் தீர்க்கதரிசனம் உரைத்து,—தெற் ௪௭
குத்திசைக் காட்டைநோக்கிச் சொல்லவேண்
டியதாவது: கர்த்தருடைய வார்த்தையைக் கேள்,
கர்த்தராகிய ஆண்டவர் சொல்லுகிறதேதெனில்,
இதோ, நாம் உன்னில் அக்கினியைக் கொளுத்
துவோம்; அது உன்னில் பச்சையான சகல மரத்
தையும் பட்டிருக்கிற மரத்தையும் பட்சிக்கும்;
சுவாலிக்கிற சுவாலை அவிக்கப்படமாட்டாது;
தெற்குத்துவக்கி வடக்குமட்டுமுள்ள தேசமு
கங்களெல்லாம் அதினால் வெந்துபோகும்.-கர்த் ௪௮
தராகிய நாம் அதைக் கொளுத்தினோம் என்
பதைச் சகல மாம்சமும் காணும்; அது அவிக்
கப்படுவதில்லை என்று சொல்லென்றார்.—அப் ௪௯
போது நான்: ஆ கர்த்தராகிய ஆண்டவரே, இ
வன் உவமைகளை அல்லவோ சொல்லுகிறவன்
என்று அவர்கள் என்னைக்குறித்துச் சொல்லுகி
றார்களென்றேன்.

## ௨௧. அதிகாரம்.

௧. ஏசேக்கியேல் பெருமூச்சின் அடையாளத்தினாலே எருசலேமுக்கு விரோதமாய்த் தீர்க்கதரிசனம் உரைத்தது. ௮. எருசலேமுக்கும், ௨௫. இராச்சியத்திற்கும், ௨௮. அம்மோன் புத்திரருக்கும் விரோதமாக எழும்பும் கூரும் ஒளியுமுள்ள பட்டையம்.

அப்போது கர்த்தருடைய வார்த்தை எனக்கு ௧
உண்டாகி, அவர் சொன்னதாவது:
மனுபுத்திரனே, [3]நீ உன் முகத்தை எருசலே ௨
முக்கு நேராகத் திருப்பி, பரிசுத்தஸ்தலங்களு
க்கு விரோதமாக உன் வசனத்தைச் சொரிந்து,
இஸ்ரவேல் சீமைக்கு விரோதமாகத் தீர்க்கதரிச
னம் உரைத்து,—இஸ்ரவேல் சீமையைநோக்கிச் ௩
சொல்லவேண்டியதாவது: கர்த்தராகிய ஆண்ட
வர் உரைக்கிறதேதெனில், இதோ, நாம் உனக்கு
விரோதமாக வந்து, நம்முடைய பட்டையத்தை
அதின் உறையிலிருந்து உருவி, உன்னில்
நீதிமானையும் ஆகாதவனையும் சங்காரம்பண்ணு
வோம்.-நாம் உன்னில் நீதிமானையும் ஆகாதவனை ௪
யும் சங்காரம்பண்ணப்போகிறபடியினாலே நம்
முடைய பட்டையம் தெற்குத்துவக்கி வடக்கு
மட்டுமுள்ள எல்லா மாம்சத்துக்கும் விரோதமாக
அதின் உறையிலிருந்து புறப்படும்,-அப்போது ௫
கர்த்தராகிய நாம் நம்முடைய பட்டையத்தை
அதின் உறையிலிருந்து உருவினோமென்பதை
எல்லா மாம்சமும் அறியும்; அது இனி அதில்
திரும்புவதில்லை.
நீயோவென்றால் மனுபுத்திரனே, பெருமூச் ௬
சுவிடு; உன் இடுப்புகள் நொறுங்கும்வண்ண
மாகவும் கஸ்தியாகவும் அவர்கள் கண்களுக்கு
முன்பாகப் பெருமூச்சுவிடு. — நீ எதின்நிமித் ௭
தம் பெருமூச்சுவிடுகிறாயென்று அவர்கள் உன்
னைக் கேட்கிறதுண்டானால், நீ சொல்லவேண்
டியதாவது: துர்ச்செய்தி வருகிறதின் நிமித்தந்தா
னே; அதினால் இருதயங்கள் எல்லாம் உருகி

1 ஏசே. ௩௭. ௨௰. ஏசா. ௨. ௨.—2 ஏசே. ௬. ௯, ௧௨.

3 ஏசே. ௨௰. ௪௬.

கைகளெல்லாம் தளர்ந்து, ஆவிகள் எல்லாம் தி
யங்கி, முழங்கால்கள் எல்லாம் தண்ணீராய்ப்
போகும்; இதோ, அதுவந்து சம்பவிக்குமென்று
கர்த்தராகிய ஆண்டவர் உரைக்கிறாரென்று சொ
ல்லென்றார்.

௮ கர்த்தருடைய வார்த்தை எனக்கு உண்டாகி,
௯ அவர் சொன்னதாவது:—மனுபுத்திரனே, நீ தீர்க்
கதரிசனம் உரைத்து, சொல்லவேண்டியதாவது:
கர்த்தர் உரைக்கிறதேதென்றால், பட்டையம்,
பட்டையமே கூர்மையாக்கப்பட்டிருக்கிறது;
௰ துலக்கப்பட்டதுமாயிருக்கிறது.— வெட்டவே
வெட்ட அது கூர்மையாக்கப்பட்டிருக்கிறது;
மின்னத்தக்கதாய் அது துலக்கப்பட்டிருக்கிறது;
சந்தோஷப்படுவோமோ? இது சகல மரங்களை
யும் அசட்டைபண்ணுகிறதாகிய நமது குமார
௰௧ னுடைய கோல்.—அதைக் கையில் பிடிக்கிறதற்
காக அதைத் துலக்கக்கொடுத்தார்; கொல்லுகிற
வன் கையிலே கொடுக்கும்படிக்கு அந்தப் பட்
டையம் கூர்மையாக்கப்பட்டிருக்கிறது; அது
துலக்கப்பட்டதுமாயிருக்கிறது என்கிறாரென்று
சொல்.

௰௨ மனுபுத்திரனே, நீ கூப்பிட்டு அலறு; ஏனெ
னில் அது நம்முடைய சனத்தின்மேல் வரும்;
அது இஸ்ரவேலுடைய பிரபுக்கள் எல்லாரின்
மேலும் வரும்; பட்டையத்தினிமித்தம் நம்மு
டைய சனத்துக்குள்ளே திகில்கள் உண்டாயி
ருக்கும்; ஆகையால் உன் [1]இடுப்பிலே அடித்துக்
௰௩ கொள்.— ஏனெனில் யாவையும் கண்டிக்கிற
கோல் வந்தாலொழிய [2]இனிச் சோதனையினாலே
தீருகிறதென்னவென்று கர்த்தராகிய ஆண்டவர்
௰௪ சொல்லுகிறார். — ஆகையால் மனுபுத்திரனே,
நீ தீர்க்கதரிசனம் சொல்லி, கையோடே கை
கொட்டு; ஏனெனில் பட்டையம் மூன்றுவிசை
இரட்டித்துவரும்; அது கொலையுண்டவர்களின்
பட்டையம்; அது கொலையுண்ணப்போகிற
பெரியவர்களின் உள்ளறைகளில் புகுகிற பட்
௰௫ டையம்.—அவர்களுடைய இருதயம் கரைந்து,
அவர்களுடைய இடறுதல்கள் திரளாகும்ப
டிக்கு, பட்டையத்தின் கூர்மையை அவர்களு
டைய எல்லா வாசல்களுக்கும் நேரிடக் கட்ட
ளையிடுவோம்; ஆ, இது மின்னும்படியாகப் பதப்
பட்டது; வெட்டும்படியாகத் தீட்டிவைக்கப்
௰௬ பட்டது.—ஏகபலமாய் வலதுபுறமாக வெட்டு;
திரும்பி இடதுபுறமாகவும் வெட்டு; உன் முகம்
திருப்பப்படும் திக்குக்கெல்லாம் வெட்டு.—
௰௭ நாமும் கையோடே கைகொட்டி, நம்முடைய
உக்கிரத்தை ஆறப்பண்ணுவோமென்று கர்த்த
ராகிய நாம் சொன்னோமென்றார்.

௰௮ பின்னையும் கர்த்தருடைய வார்த்தை எனக்கு
௰௯ உண்டாகி, அவர் சொன்னதாவது:—மனுபுத்தி
ரனே, பாபேலுடைய இராசாவின் பட்டையம்
வரத்தக்க இரண்டு வழிகளைக் குறித்துக்கொள்;
ஒரே தேசத்திலிருந்து இரண்டும் புறப்பட்டுவரக்
கடவன; ஒரு இடத்தைத் தெரிந்துகொள்; பட்
டணத்துக்குப் போகிற வழியின் முகனையிலே
அது இருக்கிறதாகத் தெரிந்துகொள்.—பட்டை ௨௰
யம் அம்மோன் புத்திரரின் பட்டணமாகிய ரபா
வுக்கு விரோதமாக வரத்தக்க ஒரு வழியையும்,
யூதாவில் இருக்கிற அரணான எருசலேமுக்கு
விரோதமாக வரத்தக்க ஒரு வழியையும் குறித்
துக்கொள்வாயாக.

ஏனென்றால் இரண்டு வழிகளின் முகனையா ௨௧
கிய வழிப்பிரிவிலே பாபேலின் இராசாநிமித்தம்
பார்க்கிறதற்காக நின்றுகொள்வான்; அம்புக
ளைத் தீட்டி, சுரூபங்களை ஆலோசனை கேட்டு,
ஈரலைப்பார்ப்பான்.—தலைவரைக் கட்டளையிடு ௨௨
கிறதற்கும், கொலைசெய்கிறதிலே வாயைத் திறக்
கிறதற்கும், ஆர்ப்பரிப்பாய்ச் சத்தத்தை உயர்த்
துகிறதற்கும், வாசல்களை முட்டும் எத்தனங்களை
வைக்கிறதற்கும், அணைபோடுகிறதற்கும், கொத்
தளங்களைக் கட்டுகிறதற்குமாக, அவனுடைய
வலதுபுறத்திலே எருசலேமைக் குறிக்கும் நிமித்
தம் உண்டாயிருக்கும்.— இது அவர்களுக்குத் ௨௩
தப்பானநிமித்தமாகத் தோற்றும்போது ஆணைசத்
தியங்கள் அவர்களுக்குப் பண்ணப்படும்; செய்
யப்பட்ட அக்கிரமத்தையும் அவன் நினைத்துக்
கொண்டு, அது பிடிக்கப்படலாமென்பான்.

ஆகையால் கர்த்தராகிய ஆண்டவர் சொல்லு ௨௪
கிறதாவது: உங்கள் துரோகங்கள் வெளியரங்க
மாகிறதினாலும் உங்கள் செய்கைகளில் எல்லாம்
உங்கள் பாவங்கள் தெரியவருகிறதினாலும், நீங்
கள் உங்கள் அக்கிரமத்தை நினைக்கப்பண்ணுகி
றீர்களே; நீங்கள் இப்படிக்கொத்தவர்களென்று
நினைக்கப்படுகிறீர்களே; ஆனதுகொண்டு கைப்
பிடியாய்ப் பிடிக்கப்படுவீர்கள்.— இப்போதும் ௨௫
இஸ்ரவேலை ஆளுகிற பரிசுத்தமற்ற ஆகாத அதி
பதியே, அக்கிரமம் நிறைவேறுங்காலத்தில் வரு
கிற உன்னுடைய நாளுக்கு ஏதுவானவனே,—
கர்த்தராகிய ஆண்டவர் சொல்லுகிறதாவது: சரி ௨௬
கைப்பட்டத்தை வாங்கி, கிரீடத்தை எடுத்துப்
போடு; அது இனி அப்படிக்கொத்ததல்ல; [3]தாழ்
மையானவனை உயர்த்தி, உயர்ந்தவனைத் தாழ்த்து
வோம்.—அதைக் கவிழ்த்து, கவிழ்த்து, கவிழ்த் ௨௭
துப்போடுவோம்; நியாயத்துக்குடையவர் வரு
மட்டும் அது இல்லாதிருக்கும்; [4]இவருக்கே
அதைக் கொடுப்போம்.

பின்னையும் மனுபுத்திரனே, நீ தீர்க்கதரிசனம் ௨௮
உரைத்து, சொல்லவேண்டியதாவது: அம்மோன்
புத்திரரையும் அவர்கள் நிந்திக்குதலையும் குறித்
துக் கர்த்தராகிய ஆண்டவர் உரைக்கிறதேதெ
னில், — அக்கிரமம் நிறைவேறின காலத்தில் ௨௯
வந்த தங்களுடைய நாளுக்கு ஏதுவாகி, கொ
லையுண்டுபோனவர்களுடைய பிடரிகளோடே
கூட உன்னைத் துன்மார்க்கரின் கையினால் வி
ழப்பண்ணும்படிக்கு, உனக்கு அபத்தமானது
தரிசிக்கப்படுகிற தறுவாயிலும், உனக்குப் பொய்

1 ஏசே. ௬. ௰௧. 2 ஏசா. ௯. ௰௩, ௰௪. எரே. ௫. ௩.

3 லூக். ௰௪. ௰௧. 4 லூக். ௧. ௩௨, ௩௩.

நிமித்தம் பார்க்கப்படுகிற தறுவாயிலும் பட்டை
யம், பட்டையமே உருவப்பட்டது; வெட்டும்
படிக்கும் சங்கரிக்கும்படிக்கும் அது மின்னத்
தக்கதாய்த் துலக்கப்பட்டிருக்கிறது.
௩௰ உன் பட்டையத்தை நீ திரும்ப அதின் உறை
யிலே போடு; நீ சிருட்டிக்கப்பட்ட தானமாகிய
உன் தொழில்களின் தேசத்திலே நாம் உன்னை
௩௧ நியாயந்தீர்த்து, — நம்முடைய சினத்தை உன்
மேல் ஊற்றுவோம்; நாம் நம்முடைய மூர்க்கத்
தின் அக்கினியை உன்மேலே ஊதி, எரிகிறவர்
களும் கேடு செப்பனிடுகிறவர்களுமாகிய மனு
ஷரின் கையில் உன்னை ஒப்புக்கொடுப்போம்.—
௩௨ அக்கினிக்கு இரையாவாய்; உன் இரத்தம் உன்
தேசத்தின் நடுவில் சிந்திக்கிடக்கும்; நீ இனி
நினைக்கப்படுவதில்லை; ஏனெனில் கர்த்தராகிய
நாம் இதைச் சொன்னோமென்றார்.

## ௨௨. அதிகாரம்.

௧. எருசலேமின் பாவங்களின் அட்டவணை. ௰௩. பாபான் தமது உலை
யின் கல்மஷம்போலே அவர்களைக் கொளுத்துவாரென்பது. ௨௩. தீர்க்க
தரிசிகள், குருக்கள், இராசாக்கள், பிரசைகள், இவர்களின் சாதாரண
மான கெடுதி.

௧ கர்த்தருடைய வார்த்தை எனக்கு உண்டாகி, அ
௨ வர் சொன்னதாவது:—இப்போதும் மனுபுத்திர
னே, இரத்தஞ்சிந்தின பட்டணத்தை நீ நியாயம்
விசாரிப்பாயோ? விசாரிக்க மனதானால், [1]நீ அ
தின் அருவருப்புகளை எல்லாம் அதற்குத் தெரி
௩ யக்காட்டி,—சொல்லவேண்டியதாவது: கர்த்த
ராகிய ஆண்டவர் உரைக்கிறதேதெனில், உன்
காலம் வரத்தக்கதாக [2]உன் நடுவிலே இரத்தஞ்
சிந்துகிறதும், உன்னைத் தீட்டுப்படுத்தத்தக்கதாக
உனக்கு விரோதமாய் நரகலான தேவர்களை உண்
௪ டுபண்ணுகிறதுமான பட்டணமே,—நீ சிந்தின
உன் இரத்தத்தினாலே நீ குற்றஞ்சுமந்ததாகி, நீ
உண்டுபண்ணின உன் நரகலான தேவர்களா
லே நீ தீட்டுப்பட்டு, உன் நாள்களைச் சமீபித்து
வரப்பண்ணி, உன் வருஷங்களின் எல்லைக்கு
வந்தாய்; ஆகையால் நாம் உன்னைப் புறச்சாதி
களுக்கு நிந்தையாகவும்,தேசங்களுக்கு எல்லாம்
௫ சக்கந்தமாகவும் வைப்போம்.—உனக்குச் சமீ
பமும் உனக்குத் தூரமுமான தேசங்களின் மனு
ஷர் உன்னைத் தீழ்ப்பான கீர்த்தியுள்ளதென்றும்
அமளிபெருத்ததென்றும் சக்கந்தம்பண்ணுவார்
கள்.
௬ இதோ, இஸ்ரவேலின் அதிபதிகள் அவனவன்
தன்தன் புயபலத்துக்குத்தக்கதாக, உன்னில் இர
௭ த்தத்தைச் சிந்துகிறதற்கு இருந்தார்கள். — உன்
னில் தாய்தகப்பனை அற்பமாய் எண்ணினார்கள்;
உன் நடுவிலே [3]பரதேசியை இடுக்கண்செய்தார்
கள்; உன்னில் திக்கற்றவனையும் விதவையை
௮ யும் ஒடுக்கினார்கள்.—நம்முடைய பரிசுத்தக்கட்
டளைகளை அசட்டைபண்ணி, நம்முடைய ஓய்
வுநாள்களின் பரிசுத்தத்தைக் கொலைத்தாய்.—
இரத்தஞ்சிந்தும்படிக்கு அபாண்டம்போடுகிற ௯
வர்கள் உன்னில் இருந்தார்கள்; [4]பர்வதங்களின்
மேல் சாப்பிடுகிறவர்களும் உன்னில் இருந்தார்
கள்; உன் நடுவிலே தோஷஞ்செய்தார்கள்.—
உன்னில் தகப்பனுடைய அபிமானத்தைத் திறந் ௰
தார்கள்; [5]உன்னில் தூரஸ்திரியைப் பலவந்தப்
படுத்தினார்கள்.—[6]உன்னில் ஒருவன் தனக்கடுத் ௰௧
தவனுடைய பெண்சாதியோடே அருவருப்பா
னதைச் செய்தான்; வேறொருவன் தோஷமாய்த்
தன் மருமகளைத் தீட்டுப்படுத்தினான்; வேறொரு
வன் தன் தகப்பனுக்குப் பிறந்த தன் சகோதரி
யைக் கைப்பிடித்தான்.—இரத்தஞ்சிந்தும்படிக்கு ௰௨
உன்னில் பரிதானம் வாங்கினார்கள்; [7]நீ வட்டி
யையும் சொச்சத்தையும் வாங்கி, பொருளாசை
யாய் உனக்கு அடுத்தவனை இடுக்கண்செய்து,
நம்மை மறந்துபோனாயென்று கர்த்தராகிய ஆண்
டவர் சொல்லுகிறார்.
இதோ, உன்னில் நடத்தையான உன் பொரு ௰௩
ளாசையின்நிமித்தமும், உன் நடுவில் நீ சிந்தின
இரத்தத்தின்நிமித்தமும் நம்முடைய கையில்
அடித்துக்கொள்ளுகிறோம்.—நாம் உன்னில் நியா ௰௪
யஞ்செய்யும் நாள்களில் உன் இருதயம் தாளு
மோ? அப்போது உன் கைகள் திடப்பட்டிருக்
குமோ? [8]கர்த்தராகிய நாம் இதைச் சொன்னோம்,
இதை நிருவாகமும்பண்ணுவோம்.—நாம் உன் ௰௫
னைப் புறச்சாதிகளுக்குள்ளே சிதறவடித்து, உன்
னைத் தேசங்களிலே தூற்றி, உன் அசுத்தத்தை
உன்னில் முடியப்பண்ணுவோம்.—அப்படியே ௰௬
நீ புறச்சாதிகளின் கண்களுக்குமுன்பாக உன்
னில் பரிசுத்தக் கொலைச்சலாயிருந்து, நாம் கர்த்
தரென்று அறிந்துகொள்ளுவாயென்று சொல்
லென்றார்.
கர்த்தருடைய வார்த்தை எனக்கு உண்டாகி, ௰௭
அவர் சொன்னதாவது:—மனுபுத்திரனே, இஸ்ர ௰௮
வேல்வீட்டார் நமக்கு [9]மஷ்டாய்ப்போனார்கள்;
அவர்கள் எல்லாரும் குகைக்குள் பித்தளையும்
வெள்ளீயமும் இரும்பும் காரீயமுந்தானே; வெ
ள்ளியின் மஷ்டாய்ப் போனார்கள்.
ஆனதுகொண்டு கர்த்தராகிய ஆண்டவர் சொ ௰௯
ல்லுகிறதாவது: நீங்கள் எல்லாரும் மஷ்டாய்ப்
போனபடியினாலே, இதோ, நாம் உங்களை எரு
சலேமுக்குள் கூட்டுவோம்.—வெள்ளியையும், ௨௰
பித்தளையையும் இரும்பையும் காரீயத்தையும்
வெள்ளீயத்தையும் அக்கினியில் ஊதி உருக்குவ
தற்காகக் குகைக்குள் கூட்டுகிறதுபோலே நாம்
நம்முடைய கோபத்தினாலும் நம்முடைய உக்கி
ரத்தினாலும் உங்களைக் கூட்டி, அங்கே உங்களை
வைத்து உருக்குவோம். — நாம் உங்களைக் ௨௧
கூட்டி, நம்முடைய சினத்தின் அக்கினியை
உங்கள்மேல் ஊற்றுவோம், அப்போது அதற்
குள் உருக்கப்படுவீர்கள்.—வெள்ளி குகைக்குள் ௨௨
உருக்கப்படுமாப்போலே நீங்கள் அதற்குள்

1 எசே. ௨௰. ௪. 3 சங். ௯௪. ௬.
2 மத். ௨௩. ௩௭. 4 எசே. ௰௮. ௬.

5 ௩ மோ. ௰௮. ௰௯.—6 எசே. ௩௩. ௨௬. ௭ரே. ௫. ௮.—7 எசே. ௰௮. ௰௩.—8 எசே. ௰௭. ௨௪.
9 ஏசா. ௧. ௨௨.

உருக்கப்பட்டு, கர்த்தராகிய நாம் நம்முடைய
உக்கிரத்தை உங்கள்மேல் ஊற்றிப்போட்டோ
மென்று அறிந்துகொள்ளுவீர்கள் என்றார்.
௨௩ கர்த்தருடைய வார்த்தை எனக்கு உண்டாகி, அ
௨௪ வர் சொன்னதாவது:—மனுபுத்திரனே, நீ சுத்தம்
பண்ணப்படாத தேசம் என்று அதற்குச் சொல்;
சினத்தின்காலத்திலே அதற்கு மழைபெய்யாதி
௨௫ ருக்கும். — அதினுடைய தீர்க்கதரிசிகள் பண்
ணின ஒப்பந்தம் அதின் நடுவில் இருக்கிறது;
கர்ச்சிக்கிற சிங்கம் இரையெடுக்கிறதைப்போல,
அவர்கள் [1]ஆத்துமாக்களைப் பட்சிக்கிறார்கள்;
பொக்கிஷத்தையும் விலையேறப்பெற்றதையும்
வாங்கிக்கொள்ளுகிறார்கள்; அதின் விதவைக
ளின் இலக்கத்தை அதின்நடுவில் பெருகப்பண்
௨௬ ணுகிறார்கள்.—அதின் ஆசாரியர்கள் [2]நம்முடைய
வேதத்துக்கு அநியாயஞ்செய்து, நம்முடையபரி
சுத்த கட்டளைகளைப் பரிசுத்தக்குலைச்சலாக்
குகிறார்கள்; பரிசுத்தமானதற்கும் பரிசுத்தமல்
லாததற்கும் வித்தியாசம்பண்ணாமலும், அசுத்த
மானதற்கும் அசுத்தமல்லாததற்கும் உண்டான
வேற்றுமையைக் காண்பியாமலும் இருந்து, நம்
முடைய ஓய்வுநாள்களைவிட்டுத் தங்கள் கண்
களை விலக்குகிறார்கள்; அப்படியே அவர்கள்
௨௭ நடுவில் கனஈனம்பண்ணப்படுகிறோம்.—அதின்
நடுவில் இருக்கிற [3]அதினுடைய பிரபுக்கள் இரத்
தம் சிந்துகிறதற்கும், நாடும்பொழிவின்நிமித்தம்
ஆத்துமாக்களைக் கெடுக்கிறதற்கும், இரையெடுக்
௨௮ கிற ஓநாய்களைப்போல இருக்கிறார்கள்.—[4]அதின்
தீர்க்கதரிசிகள் அபத்தமானதைத் தரிசித்து,
பொய்ச்சாஸ்திரத்தை அவர்களுக்குச் சொல்லி,
கர்த்தர் உரைக்காதிருந்தும் கர்த்தராகிய ஆண்ட
வர் உரைத்தாரென்று சொல்லி, அவர்களுக்குச்
௨௯ [5]சாரமற்ற சுண்ணாம்பைப்பூசுகிறார்கள்.—தேசத்
தின் சனம் ஒடுக்கவே ஒடுக்கி, பறிக்கவே பறித்
து, சிறுமையும் எளிமையுமானவனை இடுக்கஞ்
செய்து, பரதேசியை நியாயமில்லாமல் ஒடுக்குகி
றார்கள்.
௩௰ [6]சுவரை அடைப்பாக்குபவனும், நாம் தேசத்
தை அழிக்காதபடிக்கு அதற்காக நமது முகத்
துக்குமுன்பாக, [7]திறப்பிலே நிற்பவனுமாகிய
மனுஷனைத் தேடினோம்; ஆனால் காணாதேபோ
௩௧ னோம்.—ஆகையால் நாம் அவர்கள்பேரிலே [8]நம்
முடைய சினத்தை ஊற்றி, நம்முடைய மூர்க்
கத்தின் அக்கினியால் அவர்களை நிர்மூலமாக்கி,
அவர்களுடைய மார்க்கத்தை [9]அவர்கள் தலையின்
மேல் சுமரப்பண்ணுவோமென்று கர்த்தராகிய
ஆண்டவர் உரைக்கிறார் என்றார்.

## ௨௩. அதிகாரம்.

௧. அகோலாள், அகோலிபாள் என்பவர்களுடைய வேசித்தனம். ௨௨. அகோலிபாள் தன் சிநேகிதராலே உபத்திரவப்படுவது. ௩௬. தீர்க்கதரிசி அவர்கள் இருவருடைய வேசித்தனத்தைக் கண்டிக்கிறது. ௪௫. அவர்கள்மேல் வரும் நியாயத்தீர்ப்புகளைக் காட்டினது.

கர்த்தருடைய வார்த்தை எனக்கு உண்டாகி, ௧
அவர் சொன்னதாவது:—மனுபுத்திரனே, ஒரே ௨
தாயின் குமாரத்திகளாகிய இரண்டு ஸ்திரிகள்
இருந்தார்கள்.—அவர்கள் [10]எகிப்திலே வேசித் ௩
தனம்பண்ணினார்கள்; தங்கள் வாலிபத்திலே
தானே வேசித்தனம்பண்ணினார்கள்; அங்கே
அவர்களுடைய தனங்கள் அமுக்கப்பட்டு, அ
வர்களுடைய கன்னிமையின் கொங்கைகள்
தொடப்பட்டன.—அவர்களில் மூத்தவளுக்கு ௪
அகோலாள் என்று பேரும் அவளுடைய தங்
கைக்கு அகோலிபாள் என்று பேரும் இருந்தது;
அவர்கள் நம்முடையவர்களாகி, குமாரரையும்
குமாரத்திகளையும் பெற்றார்கள்; அவர்களுடைய
பேர்கள் என்னவென்றால், சமாரியா அகோ
லாள் என்பவள்; எருசலேம் அகோலிபாள் என்
பவள்.

அகோலாள் நம்முடைய கீழிருந்து சோரம் ௫
போனாள்.—அரைநீலமான உடுப்புள்ள தலைவ ௬
ரும் அதிகாரிகளுமாய், இச்சிக்கப்படத்தக்க வா
லிபருமாய், குதிரைகளின்மேல் ஏறுகிற இராவுத்
தருமாய் இருந்த சமீப தேசத்தாராகிய [11]அசூரிய
ரென்ற தன்னுடைய சிநேகிதரை அவள் மோ
கித்து,—அசூரின் புத்திரரில் தெரிந்துகொள்ளப் ௭
பட்டவர்களான அனைவரோடும், தான் மோகித்த
அனைவரோடும் தன் வேசித்தனங்களை நடப்
பித்து, அவர்களுடைய நரகலான எல்லாத் தே
வர்களாலும் தீட்டுப்பட்டுப்போனாள். — தான் ௮
எகிப்திலே பண்ணின வேசித்தனங்களை அவள்
விட்டதுமில்லை; ஏனெனில் இவர்கள் அவளு
டைய வாலிபத்திலே அவளோடே சயனித்து,
அவளுடைய கன்னிமையின் கொங்கைகளைத்
தொட்டு, அவள்பேரிலே தங்கள் வேசித்தனத்
தை ஊற்றியிருந்தார்கள்.

ஆகையால் அவளை அவளுடைய சிநேகிதரின் ௯
கையில் ஒப்புக்கொடுத்தோம்; அவள் மோகித்தி
ருந்த [12]அசூர்புத்திரரின் கையிலேதானே.—இவர் ௰
கள் அவளுடைய அபிமானத்தைத் திறந்தார்கள்;
அவளுடைய குமாரரையும் அவளுடைய குமா
ரத்திகளையும் பிடித்துக்கொண்டு, அவளையோ
பட்டையத்தினாலே கொன்றுபோட்டார்கள்;
அப்படியே அவளில் ஆக்கினைகளைத் தீர்த்துப்
போட்டபடியினாலே ஸ்திரிகளுக்குள் அவகீர்த்
திப்பட்டவளானாள்.

அவளுடைய தங்கையாகிய அகோலிபாள் ௰௧
இதைக் கண்டும், [13]அவளைப்பார்க்கத் தன் மோ
கவிகாரத்திலும், தன் சகோதரியைப்பார்க்கத்
தன் வேசித்தனங்களிலும் கெட்டவளானாள்.—
மகா அலங்கார உடுப்புள்ள தலைவரும், அதிகாரி ௰௨
களும், குதிரைகளின்மேல் ஏறுகிற இராவுத்தரும்,
அனைவருமாக இச்சிக்கப்படத்தக்க வாலிபரு
மான சமீபதேசத்தாராகிய [14]அசூர்புத்திரரை மோ

1 எசே. ௧௯. ௩-௰.
2 செப். ௩. ௪.
3 மீகா. ௩. ௯௧. செப் ௩. ௩.
4 எரே. ௨௩. ௨௫, ௩௨.
5 எசே. ௰௩. ௰.
6 எசே. ௰௩. ௫.

7 சங். ௱௬. ௨௩.—8 எசே. ௭. ௮.
9 எசே. ௯௰. ௪௩.—10 எசே. ௨௰.
௭-௮.—11 எசே. ௰௬. ௨௮.
12 ௨ இரா. ௰௫. ௰௯, ௨௯. ௬௭. ௩.
13 எசே. ௰௬. ௫௧.-14 ௨ இரா. ௰௯. ௭. ௯.

௰௩ கித்தாள்.—அவள் அசுத்தமானுளென்றும், அவர்
கள் இருவருக்கும் ஒரே மார்க்கம் உண்டெனறும்
௰௪ கண்டோம். — அவள் தன் வேசித்தனங்களில்
அதிகப்பட்டுப்போனுள்; அதேனென்றால் சாதி
லிங்கத்தால் சுவரில் படமாய்த் தீர்க்கப்பட்ட
கல்தேயரின் சுரூபங்களாகிய புருஷரைக் கண்
௰௫ டாள்.-அவர்கள் தாங்கள் பிறந்த தேசமாகிய கல்
தேயாவில் உள்ள பாபேலுடைய புத்திரரின் சா
யலாகத் தங்கள் அரைகளில் கச்சைகட்டினவர்க
ளும், தங்கள் தலைகளில் சாயந்தீர்ந்த பெரிய பா
கைகளைப் போட்டுக்கொண்டவர்களும், பார்
வைக்கு எல்லாரும் ஆதிக்கக்காரருமாய் இருந்
௰௬ தார்கள்.—அவளுடைய கண்கள் அதைப் பார்த்
தவுடனே, அவள் அவர்களை மோகித்து, கல்தே
யாவுக்கு அவர்களண்டையிலே தானுபதிகளை
௰௭ அனுப்பினுள்.—அப்போது பாபேலின் புத்திரர்
அவளண்டையிலே சிநேக சம்போகத்துக்கு வந்
து, தங்கள் வேசித்தனங்களால் அவளைத் தீட்டுப்
படுத்தினுர்கள்; அவள் இவர்களால் தீட்டுப்பட்
டுப்போனபின்பு, [1]அவள் மனது அவர்களைவிட்
௰௮ டுப் பிரிந்தது.—அவள் தன் வேசித்தனங்களை
வெளியாக்கி, தன் அபிமானத்தைத் திறந்துபோ
ட்டபடியினுலே, நம்முடைய ஆத்துமா அவளு
டைய சகோதரியைவிட்டுப் பிரிந்ததுபோல அ
௰௯ வளையும்விட்டுப் பிரிந்தது.—அவள் எகிப்துதே
சத்திலே வேசித்தனம்பண்ணின தன் வாலிபத்
தின் நாள்களை நினைத்து, தன் வேசித்தனங்களில்
௨௰ அதிகப்பட்டுப்போனுள்.-அதேதெனில் அவர்க
ளுடைய வைப்பாட்டிகளைப்பார்க்கிலும் அவள்
அவர்களை மோகித்தாள்; கழுதைகளின் மாம்ச
மான மாம்சமும் குதிரைகளின் காமியமான
௨௧ காமியமும் உள்ள அவர்களைத்தானே.—இப்ப
டியே எகிப்திலே உன் வாலிபத்தினுடைய தன
ங்களின்நிமித்தம் உன் கொங்கைகள் தொடப்
பட்டதாகிய உன் சிறுவயதின் தோஷத்தைத்
திரும்பத் தேடினுய்.

௨௨ ஆகையால் அகோலிபாளே, கர்த்தராகிய ஆண்
டவர் சொல்லுகிறதாவது: இதோ, உன் மனது
விட்டுப்பிரிந்த [2]உன்னுடைய சிநேகிதரை நாம்
உனக்கு விரோதமாக எழுப்பி, அவர்களைச் சுற்றி
லும் உனக்கு விரோதமாக வரப்பண்ணுவோம்.-
௨௩ இச்சிக்கப்படத்தக்க வாலிபரும் எல்லாத் தலை
வரும் அதிகாரிகளும் குதிரைகளை ஏறுகிற ஆதிக்
கக்காரருமாகிய பேர்பெற்ற மனுஷருமாயிருக்
கிற பாபேலின் புத்திரரையும், கல்தேயர் எல்லா
ரையும், பேக்கோத், சோவா, கோவா என்ற
சீமைகளின் மனுஷரையும் அவர்களோடேகூட
௨௪ அசூர்புத்திரர் எல்லாரையுந்தானே.—அவர்கள்
உனக்கு விரோதமாக வண்டில்களோடும் இரதங்
களோடும் உருளைகளோடும் சனசதளங்களின்
கூட்டத்தோடும் வந்து, கேடகங்களும் பரிசை
களும் தலைச்சோடுகளும் உள்ளவர்களாய் உன்
னைச் சுற்றிலும் பாளயம் இறங்குவார்கள்; அவர்
களின்முன்னே நாம் நியாயத்தை வைப்போம்;
அவர்கள் தங்கள் நியாயங்களின்படி உன்னை
நியாயந்தீர்ப்பார்கள்.-உனக்கு விரோதமாக நம் ௨௫
முடைய வைராக்கியத்தைப் போகவிடுவோம்;
அவர்கள் உன்னை உக்கிரமாய் நடப்பித்து, உன்
மூக்கையும் உன் காதுகளையும் வாங்கிப்போடு
வார்கள்; உன்னில் மீதியாயிருப்பதோ பட்டை
யத்தால் வெட்டுண்டுபோகும்; அவர்கள் உன்
குமாரரையும் உன் குமாரத்திகளையும் பிடித்துக்
கொள்ளுவார்கள்; உன்னில் மீதியாயிருப்பதோ
அக்கினிக்கு இரையாகும்.—[3]அவர்கள் உன் வஸ் ௨௬
திரங்களை உரிந்து, உன்னுடைய சிங்காரமான
ஆபரணங்களை வாங்கிக்கொள்ளுவார்கள். —
அப்படியே உன் சந்தோஷத்தையும், நீ எகிப்து ௨௭
தேசத்தில் துவக்கின உன் வேசித்தனத்தையும்
ஓயப்பண்ணுவோம்; நீ இனி அவர்களைநோக்க
உன் கண்களை ஏறெடுக்காமலும், எகிப்துவை
நினைக்காமலும் இருப்பாய்.

ஏனெனில் கர்த்தராகிய ஆண்டவர் சொல்லு ௨௮
கிறதாவது: இதோ, நீ பகைக்கிறவர்களின் கை
யிலும் உன் மனது விட்டுப்பிரிந்தவர்களின் கை
யிலும் நாம் உன்னை ஒப்புக்கொடுப்போம். —
அவர்கள் பகையாய் உன்னை நடப்பித்து, உன் ௨௯
பிரயாசத்தை எல்லாம்எடுத்துக்கொண்டு உன்னை
அம்மணமும் நிருவாணமும் ஆக்கிவிடுவார்கள்;
அப்படியே உன் வேசித்தனத்தின் அபிமான
மும் உன்னுடைய தோஷமும் உன் வேசித்த
னங்களும் திறந்துகிடக்கும்.

நீ புறச்சாதிகளைப் பின்தொடர்ந்து, அவர்களு ௩௰
டைய நரகலான தேவர்களால் உன்னைத் தீட்டுப்
படுத்திக்கொண்ட உன்னுடைய வேசித்தனத்
தின்நிமித்தம் இவைகளை உனக்குச் செய்வார்
கள்.—உன் சகோதரியின் வழியிலே நடந்தாய்; ௩௧
ஆகையால் அவளுடைய பாத்திரத்தை உன் கை
யிலே கொடுப்போம்.—கர்த்தராகிய ஆண்டவர் ௩௨
சொல்லுகிறதாவது: நீ உன் சகோதரியினுடைய
ஆழமும் விஸ்தாரமுமான பாத்திரத்தை வாங்கிக்
குடித்து, அது நிரம்பப் பிடிக்கிறபடியினுலே
நகைப்பும் பரியாசமும் ஆவாய்.—சமாரியாவெ ௩௩
ன்ற உன் சகோதரியினுடைய பாத்திரமாயிருக்
கிற பிரமிப்பும் பாழ்க்கடிப்பும் என்ற பாத்திரத்
தாலே [4]வெறியினுலும் சஞ்சலத்தினுலும் நிறை
யப்படுவாய்.—நீ அதில் இருக்கிறதைக் குடித்து, ௩௪
உறிஞ்சி, அதின் ஓடுகளை உடைத்துப்போட்டு,
உன் தனங்களைப் பிய்த்துப்போடுவாய்; ஏனெ
னில் நாம் அதைச் சொன்னுமென்று கர்த்தரா
கிய ஆண்டவர் உரைக்கிறுர்.—ஆகையால் [5]நீ நம் ௩௫
மை மறந்து, நம்மை உன் முதுகுக்குப்பின்னுக
எறிந்ததின்நிமித்தம் நீயும் உன் தோஷத்தையும்
உன் வேசித்தனங்களையும் சுமந்துகொள்ளென்று
கர்த்தராகிய ஆண்டவர் சொல்லுகிறுர்.

பின்னையும் கர்த்தர் என்னுடனே சொன்னதா ௩௬
வது: மனுபுத்திரனே, நீ அகோலாளையும், அகோ

1 உ இரா. உ௪. ௧, உ.—2 எசே. ௰௬. ௩௭.—3 எசே. ௰௬. ௩௯.

4 சங். ௬௰. ௩: எரே. ௨௫. ௧௫. ௰௬, ௨௨.—5 எரே. ௨. ௩௨: ௩. ௨௧.

விபாளேயும் [1]நியாயம்விசாரிக்க மனதானால், அ
வர்களுடைய அருவருப்புகளை அவர்களுக்குத்
௩௭ தெரியக்காட்டு. — ஏனென்றால் விபசாரம்பண்
ணினார்கள்; அவர்கள் கைகளில் இரத்தமும் இ
ருக்கிறது; அவர்கள் தங்கள் நரகலான தேவர்க
ளோடே விபசாரம்பண்ணி, தாங்கள் நமக்குப்
பெற்ற [2]தங்களுடைய பிள்ளைகளையும் அவைக
ளுக்கு இரையாகத் தீயைக் கடக்கப்பண்ணினார்
௩௮ கள். — அவர்கள் இன்னம் நமக்குச் செய்ததே
தென்றால், [3]நம்முடைய பரிசுத்தஸ்தலத்தை அந்
நாளிலேதானே தீட்டுப்படுத்தி, நம்முடைய ஓய்
வுநாள்களின் பரிசுத்தத்தைக் கொலைத்தார்கள்.—
௩௯ அதேதெனில் தங்கள் பிள்ளைகளைத் தங்கள் நரக
லான தேவர்களுக்கென்று பலியிட்டபிற்பாடு,
அவர்கள் நம்முடைய பரிசுத்தஸ்தலத்தைப் பரி
சுத்தக்கொலைச்சலாக்க அந்நாளில்தானே அதற்
குள் பிரவேசித்தார்கள்; இதோ, இப்படியே நம்
௪௰ முடைய வீட்டின்நடுவிலே செய்தார்கள்.—இது
வுமல்லாமல் தூரத்திலிருந்துவர, புருஷரை அ
ழைத்தனுப்பினார்கள்; இவர்களண்டைக்குத் தா
னுபதி அனுப்பப்பட்டான்; இதோ வந்தார்கள்;
இவர்களுக்கென்று நீ குளித்து உன் கண்களில்
மையிட்டுக்கொண்டு, ஆபரணங்களால் உன்னை
௪௧ அலங்கரித்து,—முக்கியமான மஞ்சத்தின்மேல்
உளுக்காந்துகொண்டாய்; அதின்முன்னே ஒரு
பீடம் ஆயத்தம்பண்ணப்பட்டிருந்தது; நமது
தூபவர்க்கத்தையும் நம்முடைய எண்ணெயை
௪௨ யும் அதின்மேலே வைத்தாய்.—அவளிடத்திலே
அந்தச் சந்தடியின் இரைச்சல் அடங்கினபிற்
பாடு சனத்திரளான புருஷரையும் அழைத்த
னுப்பினார்கள்; சபேயர் வனாந்தரத்திலிருந்து
வரப்பட்டார்கள்; இவர்கள் அவர்களுடைய
கைகளில் சரிகைகளையும் அவர்களுடைய தலை
களில் அலங்காரமான கிரீடங்களையும் போட்
டார்கள்.

௪௩ விபசாரங்களில் கிழவியானவளைக்குறித்து அ
வள் இன்னம் இப்போது தன் வேசித்தனங்களை
௪௪ நடப்பித்துக்கொள்ளுவாளோ என்றோம்? — ஆ
னால் பரஸ்திரியினிடத்திலே பிரவேசிக்குமாப்
போலே அவளிடத்தில் பிரவேசித்தார்கள்; இந்
தப்பிரகாரமாகத் தோஷக்காரிகளாகிய அகோ
லாளிடத்திலும், அகோலிபாளிடத்திலும் பிரவே
சித்தார்கள்.

௪௫ ஆகையால் [4]விபசாரிகளை நியாயந்தீர்க்கிறபிர
காரமாகவும் இரத்தஞ்சிந்தினவர்களை நியாயந்
தீர்க்கிற பிரகாரமாகவும், நீதிக்காரராகிய புரு
ஷர் அவர்களை நியாயந்தீர்ப்பார்கள்; ஏனெனில்
அவர்கள் விபசாரிகள், அவர்களுடைய கைக
ளில் இரத்தம் இருக்கிறது.

௪௬ அதேதெனில் கர்த்தராகிய ஆண்டவர் சொல்
லுகிறதாவது: நாம் அவர்களுக்கு விரோதமாகச்
சபையைப்போயேறப்பண்ணி, அவர்களை அலை
தலுக்கும் கொள்ளையாகுதலுக்கும் ஒப்புக்கொ
டுப்போம்.—அந்தச் சபையார் அவர்களைக் கல் ௪௭
லெறிந்து, தங்கள் பட்டையங்களால் வெட்டிப்
போடுவார்கள்; அவர்களுடைய குமாரரையும்
அவர்களுடைய குமாரத்திகளையும் கொன்று,
அவர்களுடைய வீடுகளை அக்கினியால் சுட்டெ
ரிப்பார்கள்.—அப்படியே எல்லா ஸ்திரிகளும் ௪௮
புத்தியடைந்து, உங்கள் தோஷங்களின்படி செ
ய்யாதிருக்கும்படிக்குத் தோஷத்தைத் தேசத்தை
விட்டு ஓயப்பண்ணுவோம்.—உங்கள் தோஷத் ௪௯
தை உங்கள்மேல் சுமத்துவார்கள்; அப்போது
நீங்கள் உங்கள் நரகலான தேவர்களைச் சேவித்த
பாவங்களைச் சுமந்து, நாம் கர்த்தராகிய ஆண்ட
வர் என்று அறிந்துகொள்ளுவீர்கள்.

## ௨௪. அதிகாரம்.

௧. கொதிக்கிற கொப்பரையின் உவமையினாலே, ௩. எருசலேமின் மாறாத அழிவைக் காட்டினது. ௰௫. எசேக்கியேல் தன் பெண்சாதியின் மரணத்தைக்குறித்துத் துக்கப்படாத அடையாளத்தினாலே, ௰௯. யூதருடைய துயரம விசனத்துக்கு மேலிட்டிருக்குமென்று காட்டினது.

ஒன்பதாம்வருஷத்துப் பத்தாம்மாதத்தின் பத் ௧
தாந்தேதியிலே கர்த்தருடைய வார்த்தை எனக்கு
உண்டாகி, அவர் சொன்னதாவது:—மனுபுத்தி ௨
ரனே, இந்தநாளின் நாமமாகிய இந்தத் தேதியை
யே நீ உனக்கு எழுதிவை; இத்தேதியிலேதானே
பாபேலின் இராசா எருசலேமின் கிட்ட இறங்
கினான்.

இப்போதும் நீ கலகவீட்டாருக்கு ஒரு உவ ௩
மையைக் காண்பித்து, அவர்களுடனே சொல்
லவேண்டியதாவது: கர்த்தராகிய ஆண்டவர் உ
ரைக்கிறதேதெனில், ஒரு கொப்பரையை அடுப்
பிலே வை; அதை அடுப்பிலே வைத்து, அதிலே
தண்ணீரையும் வார்.—சகல நல்ல கண்டங்களா ௪
கிய பின்னந்தொடைகளும் முன்னந்தொடைக
ளும் என்கிற அதின் கண்டங்களை அதிலே சேர்;
தெரிந்துகொள்ளப்பட்ட எலும்புகளால் அதை
நிரப்பு. — ஆட்டுமந்தையில் தெரிந்துகொள்ளப் ௫
பட்டதை அதற்காக வாங்கு; எலும்புகளுக்கான
கட்டைக்குவியலும் அதின்கீழ் எரியவேண்டும்;
அதற்குள் எலும்புகளும் வேகத்தக்கதாக அதைப்
பொங்கப் பொங்கக் காய்ச்சு.

இதற்காகக் கர்த்தராகிய ஆண்டவர் சொல்லு ௬
கிறதாவது: நுரை ஒட்டிக்கொண்டிருக்கிறதும்
நுரை நீங்காததுமாகிய கொப்பரை என்னப்
பட்ட இரத்தஞ்சிந்திய பட்டணத்துக்கு ஐயோ!
அதில் இருக்கிறதைக் கண்டங்கண்டமாக எடுத்
துப்போடு; அதின்பேரிலே சீட்டுப்போடப்ப
டாதிருப்பதாக. — ஏனெனில் அதின் இரத்தம் ௭
அதின் நடுவில் இருக்கிறது; இதை மண்ணினா
லே மூட மண்தரையிலே ஊற்றாமல் வறண்ட
கற்பாறையிலே ஊற்றிப்போட்டார்கள்.—நீதி ௮
யைச் சரிக்கட்டுவதற்காக நாம் அதை உக்கிரத்
தை ஏறப்பண்ணும்படிக்கு வறண்ட கல்மலையி
லே மூடப்படாதிருக்கப்பண்ணினோம்.

1 எசே. ௨௰. ௪; ௨௨. ௨.—2 எசே. ௰௬. ௨௰. எரே. ௭. ௩௧.

3 எசே. ௨௨. ௮.—4 எசே. ௰௬. ௩௮.

௯ ஆனதுகொண்டு கர்த்தராகிய ஆண்டவர் சொல்
லுகிறதாவது: [1]இரத்தஞ்சிந்திய பட்டணத்துக்கு
ஐயோ! நாமும் பெரிதான கட்டைக்குவியலை
௰ எரியப்பண்ணுவோம்.—திரளான விறகுகளைக்
கூட்டு; அக்கினியைக்கொளுத்து; இறைச்சியை
முறுக வேவித்துச் சம்பாரங்களை இடு; எலும்பு
௰௧ கள் சுடப்படக்கடவன.—பிற்பாடு கொப்பரை
காய்ந்து, அதின் களிம்பு வெந்து, அதற்குள் இ
ருக்கிற அதின் அழுக்கு உருகி, அதினுடைய
நுரை நீங்கும்படிக்கு அதை அதினுடைய தண
௰௨ லின்மேலே வெறுமையாக வை.— அது மகா
வருத்தத்தை உண்டாக்கியும், அதின் திரளான
நுரை அதைவிட்டு நீங்கினதில்லை; அதின் நுரை
௰௩ அக்கினிக்கு உள்ளாகவேண்டியது.—உன் அழுக்
கிலே தோஷம் உண்டாயிருக்கிறது; நாம் உன்
னைச் சுத்திகரித்தும், நீ சுத்தமாகாதபடியினாலே
இனி [2]நம்முடைய உக்கிரம் உன்னில் ஆறித்தீ
ருமட்டும் உன் அழுக்குக்கு நீங்கலாய்ச் சுத்தி
கரிக்கப்படமாட்டாய்.
௰௪ [3]கர்த்தராகிய நாம் இதைச் சொன்னோம்; இதுவ
ரும்; இதை நாம் செய்வோம்; நாம் பின்வாங்குவ
தும் தப்பவிடுவதும் மனஸ்தாபப்படுவதும் இல்
லை; உன் வழிகளுக்கும் உன் செய்கைகளுக்குந்
தக்கதாக உன்னை நியாயந்தீர்ப்பார்களென்று கர்த்
௰௫ தராகிய ஆண்டவர் சொல்லுகிறார்.—பின்னையும்
கர்த்தருடைய வார்த்தை எனக்கு உண்டாகி,
௰௬ அவர் சொன்னதாவது:—மனுபுத்திரனே. இதோ,
நாம் உன் கண்களின் விருப்பத்தை ஒரு அடியி
னாலே உன்னைவிட்டு எடுத்துக்கொள்ளுவோம்;
ஆனால் நீ புலம்பாமலும் அழாமலும் கண்ணீர்வி
௰௭ டாமலும் இருப்பாயாக.—அமர்ந்து பெருமூச்சு
விடு; இழவுகொண்டாடாயாக; உன் பாகையை
உன் தலையிலே கட்டி, உன் பாதரட்சைகளை
உன் பாதங்களில் தொடுத்துக்கொண்டு, உன்
தாடியை மூடாமலும் சனத்தாரின் அப்பத்தைப்
புசியாமலும் இருக்கக்கடவாயென்றார்.
௰௮ காலத்தாலே நான் சனத்தோடே பேசினேன்;
அன்று சாயங்காலத்தில் என் பெண்சாதி செத்
துப்போனாள்; ஆகையால் நான் கற்பிக்கப்பட்ட
௰௯ படி விடியற்காலத்திலே செய்தேன்.—அப்போது
சனம் என்னுடனே: நீர் செய்கிறவைகள் எங்
களுக்கு என்ன அடையாளம் என்பதை எங்க
௨௰ ளுக்கு அறிவியீரோ என்றார்கள்.—நான் அவர்க
ளோடே சொன்னேன்; கர்த்தருடைய வார்த்தை
எனக்கு உண்டாகி, அவர் சொன்னதாவது:
௨௧ நீ இஸ்ரவேல் வீட்டாருக்குச் சொல்லவேண்
டியதாவது: கர்த்தராகிய ஆண்டவர் உரைக்கிற
தேதென்றால், இதோ, உங்கள் பலத்தின் முக்கி
யமும் உங்கள் கண்களின் விருப்பமும் உங்கள்
ஆத்துமாவின் ஆசையுமாகிய நம்முடைய பரி
சுத்தஸ்தலத்தை நாம் பரிசுத்தக்குலைச்சலாக்
குகிறோம்; நீங்கள் விட்டுவந்த உங்கள் குமார
ரும் உங்கள் குமாரத்திகளும் பட்டயத்தால்
விழுவார்கள்.—அப்போது நான் செய்ததுபோ ௨௨
லே செய்வீர்கள்; தாடியை மூடாமலும் சனத்தா
ரின் அப்பத்தைப் புசியாமலும் இருப்பீர்கள்.—
உங்கள் பாகைகள் உங்கள்தலைகளிலும், உங்கள் ௨௩
பாதரட்சைகள் உங்கள் கால்களிலும் இருக்கும்;
நீங்கள் புலம்பாமலும் அழாமலும் இருந்து, உங்
கள் அக்கிரமங்களில் வாடிப்போய், ஒருவரை
யொருவர் பார்த்துத் தவிப்பீர்கள்.—அப்படியே ௨௪
ஏசேக்கியேல் உங்களுக்கு [4]அற்புத அடையாள
மாக இருப்பான்; அவன் செய்தபடி எல்லாம்
செய்வீர்கள்; இப்படி வரும்போது நாம் கர்த்தரா
கிய ஆண்டவர் என்று அறிந்துகொள்ளுவீர்க
ளென்று சொல்லென்று உரைத்தாரென்றேன்.
பின்னையும் மனுபுத்திரனே, நாம் எந்தநாளிலே ௨௫
அவர்களுடைய பலத்தையும், அவர்களுடைய
அலங்காரத்தின் மகிழ்ச்சியையும், அவர்களு
டைய கண்களின் விருப்பத்தையும், அவர்களு
டைய ஆத்துமாவின் மேன்மையான வாஞ்சை
யையும், அவர்களுடைய குமாரரையும், அவர்க
ளுடைய குமாரத்திகளையும் அவர்களைவிட்டு எடு
த்துக்கொள்ளுகிறோமோ,— அந்நாளிலேதானே ௨௬
உன் காதுகளுக்குக் கேட்கப்பண்ணும்படிக்குத்
[5]தப்பின ஒருவன் உன்னண்டைக்கு வருவானல்
லவோ?—அந்நாளிலேதானே தப்பிவந்தவனோ ௨௭
டுங்கூட உன்னுடைய வாய் திறக்கப்பட்டிருக்
கும்; இனி ஊமையாய் இராமல் அப்போது பே
சுவாய்; அப்படி அவர்களுக்கு அற்புத அடை
யாளமாக இருப்பாய்; நாம் கர்த்தரென்று அப்
போது அறிந்துகொள்ளுவார்களென்றார்.

## உ௫. அதிகாரம்.

௧. யூதரை நெருக்கின ஆங்காரத்தினால் அம்மோனியர், ௮. மோவாப், சேயீர், ௰௨. எதோம், ௰௫. பெலிஸ்தியராகிய இவர்களிடத்தில் பராபரன் பழிவாங்குதல்.

கர்த்தருடைய வார்த்தை எனக்கு உண்டாகி, ௧
அவர் சொன்னதாவது:—மனுபுத்திரனே, நீ [6]அம் ௨
மோன் புத்திரருக்கு எதிராக உன் முகத்தைத்
திருப்பிக்கொண்டு, அவர்களுக்கு விரோதமாகத்
தீர்க்கதரிசனம் உரைத்து,
அம்மோன் புத்திரருக்குச் சொல்லவேண் ௩
டியதாவது: கர்த்தராகிய ஆண்டவருடைய வார்த்
தையைக் கேளுங்கள்; கர்த்தராகிய ஆண்டவர்
உரைக்கிறதேதெனில், நமது பரிசுத்தஸ்தலம்பரி
சுத்தக்குலைச்சலாக்கப்படுகிறபோதும், இஸ்ர
வேல் தேசம் பாழ்க்கடிக்கப்படுகிறபோதும், யூ
தாவீட்டார் சிறையிருப்பிலே போகிறபோதும்,
நீ அதற்கு [7]ஆகா, என்றபடியினாலே,—இதோ, ௪
நாம் உன்னைக் கிழக்கத்தியாருக்குச் சுதந்தரமாக
ஒப்புக்கொடுப்போம், இவர்கள் உன்னில் தங்
கள் அரமனைகளைக் கட்டி, உன்னில் தங்கள்
கூடாரங்களைப் போடுவார்கள்; இவர்கள் உன்
கனிகளைப் புசித்து, உன் பாலைக்குடிப்பார்கள்.—
நாம் ரபாவை ஒட்டகங்களின் கொட்டகையும், ௫

1 எசே. ௨௨. ௩, ௬.—2 எசே. ௫. ௰௩.—3 எசே. ௨௪. ௰௪.—4 எசே. ௰௨. ௬-௰௧.

5 எசே. ௩௩. ௨௧.—6 எரே. ௪௯. ௧. ழ.—7 எசே. ௨௬. ௨: ௩௬. ௨.

அம்மோன் புத்திரரின் தேசத்தை ஆட்டுக்கிடை
யுமாக்குவோம்; அப்படியே நாம் கர்த்தரென்று
அறிந்துகொள்ளுவீர்கள்.
௬ ஏனெனில் கர்த்தராகிய ஆண்டவர் சொல்லு
கிறதாவது: இஸ்ரவேல் தேசத்துக்கு விரோதமா
கக் கைகொட்டி, உன் காலால் தட்டி, உன்னு
டைய எல்லா நிஸ்காரத்திலும் மனதாரச் சந்தோ
௭ ஷப்பட்டபடியினாலே,-இதோ, உனக்கு விரோ
தமாக நாம் நம்முடைய கையை நீட்டி, உன்
னைச் சாதிகளுக்குக் கொள்ளையாக ஒப்புக்கொ
டுத்து, உன்னைச் சனசதளங்களுக்குள் வேரற்றுப்
போகப்பண்ணி, உன்னைத் தேசங்களுக்குள்ளே
அழித்து, உன்னை நிர்மூலமாக்குவோம்; அப்படி
யே நாம் கர்த்தரென்று அறிந்துகொள்ளுவாய்
என்பதுதானே.
௮ கர்த்தராகிய ஆண்டவர் உரைக்கிறதாவது: இ
தோ, யூதாவீட்டார் எல்லாச் சாதிகளுக்கும் ஒத்த
வர்களென்று [1]மோவாபும் சேயீரும் சொல்லுகிற
௯ படியினாலே,-இதோ, அம்மோன் புத்திரரின்பேர்
சாதிகளுக்குள் இராதபடிக்கு நாம் அம்மோன்
புத்திரரின் தேசத்தைக் கிழக்கத்தியாருக்குத்
திறந்துவைத்து, சுதந்தரமாக ஒப்புக்கொடுக்கிற
௰ வண்ணமாக,-நாம் மோவாப்தேசத்தின் பக்கத்தி
லுள்ள அதினுடைய கடையாந்தர ஊர்களாகிய
பட்டணங்கள்முதற்கொண்டு, உண்டானதேசத்
தின் அலங்காரமாகிய பெத்தியசிமோத்தையும்,
பாகால்மேயோனையும் கீரியாத்தாயீமையும் அவர்
௰௧ களுக்குத் திறந்துவைத்து.—மோவாபிலே நியா
யங்களைச் செய்வோம்; அப்படியே நாம் கர்த்த
ரென்று அறிந்துகொள்ளுவார்களென்கிறார்.
௰௨ கர்த்தராகிய ஆண்டவர் உரைக்கிறதாவது: ஏ
தோம் [2]யூதாவீட்டாரில் குரோதம்தீர்த்துக்கொள்
ளுதலைச் செய்து, பெரிய குற்றத்துக்கு உட்பட்
டு, இவர்களில் குரோதத்தைத் தீர்த்துக்கொண்
௰௩ டபடியினாலே,—கர்த்தராகிய ஆண்டவர் சொல்
லுகிறதாவது: நாம் ஏதோம்தேசத்துக்கு விரோத
மாக நம்முடைய கையை நீட்டி, அதில் மனுஷ
ரையும்மிருகங்களையும் இராதபடிக்குச் சங்காரம்
பண்ணி, அதைத் தேமான் துவக்கித் தேதான்மட்
டும் வனாந்தரமாக்குவோம்; பட்டயத்தாலே
௰௪ விழுவார்கள்.—நாம் இஸ்ரவேலாகிய நமது சனத்
தின் கையினாலே ஏதோமிலே நீதி சரிக்கட்டுத
லைச் செய்வோம்; அவர்கள் நம்முடைய கோ
பத்தின்படியேயும் நம்முடைய உக்கிரத்தின்ப
டியேயும் ஏதோமுக்குச் செய்வார்கள்; அப்படி
யே நம்முடைய நீதி சரிக்கட்டுதலை அறிந்து
கொள்ளுவார்களென்று கர்த்தராகிய ஆண்டவர்
சொல்லுகிறார்.
௰௫ கர்த்தராகிய ஆண்டவர் உரைக்கிறதாவது:
[3]பெலிஸ்தியர் குரோதக்காரராயிருந்து நித்திய
பகையாய்க் கேடுசெய்யவேண்டுமென்று நிஸ்
காரத்தோடே மனதாரக் குரோதத்தைத் தீர்த்துக்
௰௬ கொண்டபடியினாலே,—கர்த்தராகிய ஆண்டவர்
சொல்லுகிறதாவது: இதோ, நாம் பெலிஸ்திய
ருக்கு விரோதமாக நம்முடைய கையை நீட்டி,
கிரேத்தியரைச் சங்கரித்து சமுத்திரக்கரையில்
மீதியானவர்களை அழித்து,—உக்கிரமான தண்ட ௰௭
னைகளினாலே அவர்களில் பெரிய நீதி சரிக்கட்
டுதலைச் செய்வோம்; அப்படியே நாம் அவர்க
ளில் நம்முடைய நீதியைச் சரிக்கட்டுகையில்
நாம் கர்த்தரென்று அறிந்துகொள்ளுவார்கள்.

## ௨௬. அதிகாரம்.

௧. எருசலேமை நிந்தனைசெய்ததினிமித்தம் தீரு பயமுறுத்தப்பட்டது. ௭. அதற்கு விரோதமாக எழும்பும் நேபுகாத்நேச்சாருடைய பலம். ௰௫. அதின் விழுதலினாலே கடல்பிரபுக்கள் துக்கித்ததும் பிரமித்ததும்.

பதினோராம்வருஷத்து முதலாந்தேதியிலே சம் ௧
பவித்ததேதெனில், கர்த்தருடைய வார்த்தை எ
னக்கு உண்டாகி, அவர் சொன்னதாவது:—மனு ௨
புத்திரனே, தீருவானது எருசலேமைக்குறித்து,
ஆகா, சனசதளங்களின் கதவு உடைக்கப்பட்ட
தென்றும், என்னிடமாக எல்லாம் புரண்டுவரும்,
நான் நிரப்பப்படுவேன், அது பாழ்க்கடிக்கப்
பட்டதென்றும் சொல்லுகிறபடியினாலே,—[4]கர்த் ௩
தராகிய ஆண்டவர் சொல்லுகிறதாவது: தீருவே,
இதோ, நாம் உனக்கு விரோதமாக வருகிறோம்;
சமுத்திரம் தன் அலைகளை எழும்பப்பண்ணுகிற
வண்ணமாய் நாம் அநேகம் சாதிகளை உனக்கு
விரோதமாக எழும்பிவரப்பண்ணுவோம்.-அவர் ௪
கள் தீருவின் மதில்களை அழித்து, அதின் கொம்
மைகளை இடித்துப்போடுவார்கள்; நாம் அதின்
மண்ணும் அதில் இராதபடிக்கு விளக்கிப்போட்
டு அதை வெறுங்கற்பாறையாக்கிவிடுவோம்.—
அது சமுத்திரத்தின் நடுவிலே வலைகளைப் பரப் ௫
புகிற ஸ்தலமாயிருக்கும்; ஏனெனில் நாம்
இதைச் சொன்னோமென்று கர்த்தராகிய ஆண்ட
வர் உரைக்கிறார்; அது சாதிகளுக்குச் சூறையா
கும்.—வெளியில் இருக்கிற அதின் குமாரத்திக ௬
ளோ பட்டயத்தால் கொன்றுபோடப்படுவார்
கள்; அப்படியே நாம் கர்த்தரென்று அறிந்து
கொள்ளுவார்கள்.
ஏனெனில் கர்த்தராகிய ஆண்டவர் சொல்லு ௭
கிறதாவது: இதோ, நாம் [5]இராசாக்களுக்கு இரா
சாவாகிய நேபுகாத்நேச்சாரென்ற பாபேலின்
இராசாவை வடக்கேயிருந்து குதிரைகளோடும்
இரதங்களோடும் இராவுத்தரோடும் கூட்டத்தோ
டும் திரளான சனத்தோடும் தீருவுக்கு விரோத
மாக வரப்பண்ணுவோம்.—அவன் வெளியில் ௮
இருக்கிற உன் குமாரத்திகளைப் பட்டயத்தி
னாலே கொன்று, உனக்கு விரோதமாகக் கொத்
தளங்களைக் கட்டி, உனக்கு விரோதமாக அணை
போட்டு, உனக்கு விரோதமாகக் கேடகங்களை
எடுத்து,-உன் மதில்களுக்கு விரோதமாக இடிக் ௯
கிற எத்தனங்களைத் தனக்கு எதிரே வைத்து,
தன்னுடைய கட்டைப்பாரைகளால் உன் கொம்
மைகளை இடித்துப்போடுவான்.—அவனுடைய ௰
குதிரைகளின் ஏராளத்தினாலே அவைகளின்

1 சங். ௮௩. ௪. ௫. எரே. ௪௮. ௧. ௫.—2 எரே. ௪௯. ௭. ௫.

3 எரே. ௪௭. ௧. ௫.—4 சங். ௨௨. ௧. ௫.—5 தானி. ௨. ௩௭.

தூள் உன்னை மூடும்; இடித்துத் திறப்பாக்கப்
பட்ட பட்டணத்தில் பிரவேசிக்கும்வண்ண
மாக அவன் உன் வாசல்களுள் பிரவேசிக்கை
யில், இராவுத்தரும் உருளைகளும் இரதங்களும்
இரைகிற சத்தத்தினாலே உன் மதில் அதிரும்.—
௰௧ தன் குதிரைகளின் குளம்புகளினாலே உன் வீதி
களை எல்லாம் மிதிப்பான்; உன்னுடைய சனத்
தைப் பட்டயத்தினாலே கொன்றுபோடுவான்;
உன்னுடைய பெலனான தூண்கள் தரையிலே
௰௨ விழுந்துபோகும்.—அவர்கள் உன் ஆஸ்தியைக்
கொள்ளையிட்டு, உன் சரக்குகளைச் சூறையாடி,
உன் மதில்களை இடித்து, உன்னுடைய விருப்ப
மான வீடுகளைத் தரையாக்கி, உன் கல்லுகளையும்
உன் மரங்களையும் உன் மண்ணையும் தண்ணீரின்
௰௩ நடுவிலே போட்டுவிடுவார்கள்.—[1]உன் பாட்டு
களின் சந்தடியை ஓயப்பண்ணுவோம்; உன்
சுரமண்டலங்களின் சத்தம் இனி கேட்கப்படு
௰௪ வதில்லை. — உன்னை வெறுங் கற்பாறையாக்கி
விடுவோம்; வலைகளைப் பரப்புகிற ஸ்தலமாயிருப்
பாய்; இனி கட்டப்படாய்; ஏனெனில் கர்த்த
ராகிய நாம் இதைச் சொன்னோமென்று கர்த்தரா
கிய ஆண்டவர் உரைக்கிறார்.

௰௫ தீருவுக்குக் கர்த்தராகிய ஆண்டவர் உரைக்கிற
தாவது: உன் நடுவில் கொலையுண்கிறவர்கள் பெ
ருமூச்சுவிடுகையிலும், மகா கொலைசெய்யப்படு
கையிலும் உன் விழுதலின் சத்தத்தினாலே தீவு
௰௬ கள் அதிராதோ?—கடற்கரைப் பிரபுக்கள் எல்
லாரும் தங்கள் ஆசனங்களைவிட்டு இறங்கி, தங்
கள் சால்வைகளைக் கழற்றி, தங்கள் சித்திரத்தை
யலாடைகளை உரிந்துபோடுவார்கள்; தத்தளிப்
புகளைத் தரித்துக்கொள்ளுவார்கள்; தரையிலே
உளுக்கார்ந்து, ஒவ்வொரு கணப்பொழுதிலே தத்
தளித்து, உன்நிமித்தம் திகைத்திருப்பார்கள்.—
௰௭ அவர்கள் உன்பேரிலே [2]புலம்பலை எடுத்து, உன்
னைக்குறித்துச் சொல்வதாவது: கடற்கரை மனு
ஷர் குடியிருந்ததும் பேர்போனதுமான பட்ட
ணமே, உன்னில் தங்கினவர்களுக்கு எல்லாம்
பயமுண்டாக்கின உன்னுடைய குடிகளோடுங்
கூடச் சமுத்திரத்திலே பலத்திருந்த நீ எத்தனை
௰௮ யாய் அழிந்துபோனாய்!—நீ விழுகிற நாளான
இப்போது தீவுகள் தத்தளிக்கின்றன; நீ அப்புறப்
படுகையால் சமுத்திரத்திலுள்ள தீவுகள் கலங்கு
௰௯ கின்றன என்பார்கள்.—ஏனெனில் கர்த்தராகிய
ஆண்டவர் சொல்லுகிறதாவது: நாம் உன்னைக்
குடியில்லாத பட்டணங்களைப்போலே பாழான
பட்டணமாக்கும்போதும், திரளான தண்ணீர்
கள் உன்னை மூடத்தக்கதாக நாம் உன்மேல் ஆழத்
௨௰ தை எழிவரப்பண்ணும்போதும்,-நாம் உன்னைப்
பூருவத்துச் சனத்தண்டைக்குக் [3]குழியில் இறங்
குகிறவர்களோடே இறங்கப்பண்ணுவோம்; [4]நீ
குடியேறாதிருக்கும்படிக்கு நாம் பூருவகாலமு
தற்கொண்டு பாழாயிருக்கிற பூமியின் பாதாள
ஸ்தலங்களிலே உன்னைக் குழியில் இறங்குகிற
வர்களோடேகூடத் தங்கப்பண்ணுவோம்; சீவ
னுள்ளோருடைய தேசத்திலோ சிங்காரத்தைக்
கட்டளையிடுவோம்.-உன்னை மகா பயங்கரத்துக் ௨௧
காக வைப்போம்; இனி இல்லாதிருப்பாய்; [5]நீ
தேடப்பட்டும் இனி என்றைக்கும் தென்படா
திருப்பாயென்று கர்த்தராகிய ஆண்டவர் சொல்
லுகிறாரென்றார்.

## ௨௭. அதிகாரம்.

௧. தீரபட்டணத்தின் ஐசுவரியமுள்ள வியாபாரம். ௨௬. அதன் மாறுமை
யும், பெரிதாகிய விழுதல்.

கர்த்தருடைய வார்த்தை எனக்கு உண்டாகி, ௧
அவர் சொன்னதாவது:—இப்போதும் மனுபுத் ௨
திரனாகிய நீ தீருவின்பேரிலே புலம்பலை எடுத்து,
சமுத்திரக் கரைதுறையிலே குடியிருக்கிறதும், ௩
அநேகம் தீவுகளின் சனசதளங்களோடே வியா
பாரம்பண்ணுகிறதுமான தீருவுக்கு நீ சொல்ல
வேண்டியதாவது: கர்த்தராகியஆண்டவர்உரைக்
கிறதேதெனில், தீருவே, நீ [6]பூரணவடிவாயிருக்
கிறேனென்கிறாய்.-கடல்களின் நடுமையத்திலே ௪
உன் எல்லைகள் இருக்கின்றன; உன்னைக் கட்
டினவர்கள் உன்னைப் பூரணவடிவாய்க் கட்டி
னார்கள்.—சேனீரிலிருந்து வந்த பாய்மரவிருட் ௫
சங்களால் உனக்குக் கப்பற்பலகைகளை எல்
லாம் அறுத்துக் கட்டினார்கள்; பாய்மரங்களை
உனக்குச் செப்பனிடும்படிக்கு லீபனோனிலி
ருந்து கேதுருமரங்களைக் கொண்டுவந்தார்கள்.—
பாசானின் கர்வாலிமரங்களினாலே உன் தண் ௬
டுக்கோல்களைச் செப்பனிட்டார்கள்; கித்தீமெ
ன்ற தீவுகளிலிருந்து வந்த புன்னைமரங்களில்
பதிக்கப்பட்ட தந்தங்களினால் உன் வாரிகளைச்
செய்தார்கள். — எகிப்திலிருந்து வந்த சித்திரத் ௭
தையலுள்ள மெல்லியபுடவை உனக்கு நீ விரித்
தேற்றின கொடியாயிருந்தது; எலிசா தீவுகளின்
இளநீலமும் இரத்தாம்பரமுமுடைய பந்தல் பர
ப்பாயிருந்தது.

உனக்குச் சீதோன் அர்வாத் என்ற பட்டண ௮
ங்களின் குடிகள் தண்டுவலிக்கிறவர்களாயிருந்
தார்கள்; தீருவே, உன்னில் இருந்த உன்னு
டைய ஞானிகள்தானே உன்னுடைய மாலுமி
களாயிருந்தார்கள்.—கேபாரின் மூப்பரும் உன் ௯
னிலுள்ள உன்னுடைய ஞானிகளும் உன்னில்
கம்பத்துப்பார்க்கிறவர்களாயிருந்தார்கள்; சமுத்
திரத்தினுடைய சகல கப்பல்களும் அவைக
ளின் சனமும் உன்னோடே தொழில்துறை கச்ச
வடம்பண்ணுகிறதற்காக உன்னில் இருந்து,

பெர்சியரும், லூதியரும், பூத்தியரும் உன் இ ௰
ராணுவத்தில் உன் சேவகராயிருந்து, உனக்குள்
கேடகங்களையும் தலைச்சோடுகளையும் தூக்கி
வைத்து, உனக்கு அலங்காரம் உண்டுபண்ணி
னார்கள்.—அர்வாத் புத்திரரும் உன் இராணுவ ௰௧
மனுஷரும் சுற்றிலும் உன்னுடைய மதில்கள்மே
லும்,கம்மாத்தியர் உன் கொம்மைகளிலும் இருந்
தார்கள்; இவர்கள் சுற்றிலும் உன் மதில்களின்

1 வெளி ௧௮ ௨௨.—2 வெளி. ௰௮. ௯. ௰௯.—3 எசே ௩௨. ௧௮.

4 எசே. ௩௩ ௰௪: ௩௨. ௰௭.—5 சங். ௩௭. ௩௬.—6 எசே. ௨௮ ௰௨.

மேலே தங்கள் பரிசைகளைத் தூக்கிவைத்து,
உன் வடிவத்தைப் பூரணமாக்கினார்கள்.

௰௨ தர்சீஸ் சகலவித பொருளுடைய திரளைத்
தொட்டு உன்னோடே வியாபாரம்பண்ணிற்று;
வெள்ளியையும் இரும்பையும் வெள்ளீயத்தை
யும் காரீயத்தையும் உன் சந்தைகளில் விற்கவந்
௰௩ தார்கள். — யாவான், தூபால், மேசேக் என்ற
சாதிகளின் மனுஷர் உன் வியாபாரிகளாயிருந்
து, மனுஷ ஆத்துமாக்களையும் வெண்கல முட்டு
களையும் உன் தொழில்துறைக்குக் கொண்டுவந்
௰௪ தார்கள்.—தோகர்மா வம்சத்தார் குதிரைகளையும்
குதிரைக்காரரையும் கோவேறுகழுதைகளையும்
உன் சந்தைகளுக்குக் கொண்டுவந்தார்கள். —
௰௫ தேதான் புத்திரர் உன் வியாபாரிகளாயிருந்தார்
கள்; அநேகம் தீவுகளின் வர்த்தகம் உன் வசமா
கச் சேர்ந்தது; யானைக்கொம்புகளையும் கருங்கா
லிமரங்களையும் உனக்குக் காணிக்கையாகக்
௰௬ கொண்டுவந்தார்கள்.—சூரியர் உன் வேலைப்பா
டுகளின் திரளைத்தொட்டு உன்னோடே வியா
பாரம்பண்ணி, சிவப்புக்கல்லுகளையும், இரத்
தாம்பரங்களையும், சித்திரத்தையலாடைகளையும்,
உயர்ந்த விலைப்புடவைகளையும், பவளங்களை
யும், பளிங்கையும் உன் சந்தைகளில் விற்கவந்
௰௭ தார்கள்.-யூதரும் இஸ்ரவேல் தேசத்தாரும் உன்
னோடே வியாபாரம்பண்ணி, மின்னித்,பன்னாக்
என்ற ஊர்களின் கோதுமையையும், தேனையும்,
எண்ணெயையும் பிசின்தயிலத்தையும் உன் தொ
௰௮ ழில்துறைக்குக் கொண்டுவந்தார்கள்.—தமஸ்கு
உன் வேலைப்பாடுகளுடைய திரளின்நிமித்த
மும், சகலவித பொருளுடைய திரளின்நிமித்த
மும் உன்னோடே வர்த்தகம்பண்ணி, கெல்போ
னின் திராட்சப்பழஇரசத்தையும் வெண்மை
யான ஆட்டுமயிரையும் உனக்கு விற்றார்கள்.—
௰௯ தாண் சீமையாரும் போக்கும்வரத்துமான யாவா
னரும் உன் சந்தைகளில் கொண்டுவந்த துலக்க
ப்பட்ட இரும்பும் கந்தவர்க்கமும் வசம்பும் உன்
௨௰ தொழில்துறையில் இருந்தன.-இரதங்களுக்குப்
போடுகிற மேன்மையான கவிசனைகளைத் தேதா
னின் மனுஷர் கொண்டுவந்து, உன்னோடே
௨௧ வியாபாரம்பண்ணினார்கள்.—அரபியரும், [1]கே
தாருடைய சகல பிரபுக்களும் உனக்கு வாடிக்
கையான வர்த்தகராகி, ஆட்டுக்குட்டிகளையும்
ஆட்டுக்கடாக்களையும் வெள்ளாட்டுக்கடாக்களை
யும் கொண்டுவந்து. உன்னோடே வியாபாரம்
௨௨ பண்ணினார்கள்.—சேபா, ராகமா பட்டணங்க
ளின் வியாபாரிகள் உன்னோடே வர்த்தகம்பண்
ணி, மேல்தரமான சகலவித சம்பாரங்களையும்
சகலவித இரத்தினக்கல்லுகளையும் பொன்னை
யும் உன் சந்தைகளில் கொண்டுவந்தார்கள்.—
௨௩ காரான், கன்னே, எதென் என்ற பட்டணங்க
ளின் மனுஷரும், சேபாவின் வியாபாரிகளும்,
அசூரியரும், கில்மாத்பட்டணத்தாரும் உன்னோ
௨௪ டே வியாபாரம்பண்ணினார்கள்.— இவர்கள் சக
லவித நற்சரக்குகளையும், அரைநீலப்பட்டுக
ளும், சித்திரத்தையலாடைகளும் போடப்பட்ட
புடவைக் கட்டுகளையும், விலை உயர்ந்தியான
வஸ்திரங்கள் போடப்பட்டு, கயிறுகளால் கட்
டியிருக்கும் கேதுருமரங்களான பெட்டிகளை
யும் கொண்டுவந்து, உன்னோடே வியாபாரம்
பண்ணினார்கள்.-உன்னோடிருக்கும் தொழில்து ௨௫
றையைத்தொட்டு, தர்சீஸ்கப்பல்களின் மனுஷர்
உன்னைப் பாடினார்கள்; நீ சமுத்திரங்களின் நடு
விலே உன்னை நிரப்பி, மிகவும் உன்னை மகி
மைப்படுத்தினாய்.

உன்னில் தண்டுவலிக்கிறவர்கள் உன்னைப் ௨௬
பலத்த தண்ணீர்களில் ஓட்டிக்கொண்டுபோனார்
கள்; நடுச்சமுத்திரத்திலே கொண்டற்காற்று உன்
னை உடைத்துப்போடும். — நீ விழுகிறநாளிலே ௨௭
உன் ஆஸ்தியோடும், உன் சந்தைகளோடும், உன்
தொழில்துறையோடுங்கூட உன் கப்பலாட்க
ளும் உன் மாலுமிகளும் உன்னில் கம்பத்துப்
பார்த்தவர்களும், உன்னோடே தொழில்துறை
பண்ணினவர்களும், உன்னிலுள்ள எல்லா யுத்த
மனுஷரும், உன் நடுவில் இருக்கிற எல்லாக்கூட்
டமும் நடுச்சமுத்திரத்திலே விழுவார்கள்.—உன் ௨௮
மாலுமிகள் கூப்பிடும் சத்தத்தாலேபேட்டைகள்
அதிரும்.—தண்டுவலிக்கிற யாவரும், கப்பலாட் ௨௯
களும், கடலின் மாலுமிகள் அனைவரும், தங்கள்
கப்பல்களை விட்டிறங்கி, கரையில் ஏறி நின்று,—
உன்பேரிலே தங்கள் சத்தத்தைக் கேட்கப்பண் ௩௰
ணி, கஸ்தியாய்க் கூப்பிட்டு, தங்கள் தலைகளின்
மேல் புழுதியைப் போட்டுக்கொண்டு, [2]சாம்ப
லில் புரண்டு,—[3]உனக்காக மொட்டையிட்டு, ௩௧
இரட்டுகளை உடுத்துக்கொண்டு, உனக்காக மன
மடிவுமாய்க் கஸ்தியான புலம்பலுமாய் அழுது
கொள்ளுவார்கள்.—அவர்கள் உனக்காகத் தங் ௩௨
கள் துக்கிப்பிலே புலம்பலை எடுத்து, உன்பேரில்
புலம்பிச் சொல்வதாவது: சமுத்திரத்தின் நடுவி
லே மவுனமாய்ப்போன தீருவுக்குச் சமானமா
யிருந்த பட்டணம் எது?-உன் சந்தைச்சரக்குகள் ௩௩
சமுத்திரங்களிலிருந்து புறப்பட்டுவருகையில்,
அநேக சனசதளங்களைத் திருத்தியாக்கினாய்;உன்
ஆஸ்தியின் திரளினாலும் உன் தொழில்துறை
யினாலும் பூமியின் இராசாக்களை ஐசுவரிய
முள்ளவர்களாக்கினாய். — நீ சமுத்திரங்களால் ௩௪
தண்ணீர்களின் ஆழங்களில் உடைக்கப்பட்ட
காலத்திலோவென்றால், உன் தொழில்துறையும்
உன் நடுவிலுள்ள கூட்டம் அனைத்தும் விழுந்து
போயின என்பார்கள் — தீவுகளின் குடிகள் ௩௫
எல்லாம் உன்நிமித்தம் திகைப்பார்கள்; அவர்க
ளுடைய இராசாக்கள் மிகவும் பிரமித்து,கலங்கி
னமுகமாயிருப்பார்கள்.—சனசதளங்களிலுள்ள ௩௬
வர்த்தகர் உன்பேரில் ஈசல்போடுவார்கள்; [4]மகா
பயங்கரமாய்ப் போவாய், இனி என்றென்றைக்
கும் இல்லாமல்போவாய் என்கிறாரென்று சொல்
லென்றார்.

1 ௧ மோ. ௨௫. ௰௩.—2 வெளி. ௧௮. ௰௯.

3 எரே. ௪௮. ௩௭.—4 எசே. ௨௮. ௰௯.

## ௨௮. அதிகாரம்.

௧ தீருவினுடைய இராசாவின் தெய்வத்துரோகமாகிய பெருமைக்காக அவன்மேல் வரும் பராபரனுடைய நியாயத்தீர்ப்பு. ௰௧. பாவத்தினால் மங்கிப்போன அவனுடைய பெரியமகிமையைக்குறித்த புலம்பல். ௨௰. சீதோன்மேல் வரும் நியாயத்தீர்ப்பையும், ௨௪. இஸ்ரவேல் முந்தின சீருக்கு வருதலையுங்குறித்தது.

௧ கர்த்தருடைய வார்த்தை எனக்கு உண்டாகி,
௨ அவர்சொன்னதாவது:—மனுபுத்திரனே, நீ தீரு
பட்டணத்தின் தலைவனுக்குச் சொல்லவேண்டி
யதாவது: கர்த்தராகிய ஆண்டவர் உரைக்கிறதே
தென்றால், நீ தேவனல்லாத மனுஷனாயிருந்தும்,
உன் இருதயம் மேட்டிமையாய்ப்போய், [1]நான்
தேவன், நான் சமுத்திரங்களின் நடுவே தேவனு
டைய வாசஸ்தலத்தில் உளுக்காந்திருக்கிறே
னென்று நீ சொல்லி, உன் இருதயத்தைத் தேவ
௩ னின் இருதயத்தைப்போல ஆக்குகிறாய்.-இதோ,
தானியேலைப்பார்க்கிலும் நீ ஞானி; இரகசியமா
னதொன்றும் உனக்கு மறைபொருள் அல்ல.—
௪ நீ உன் ஞானத்தினாலும் உன் உணர்வினாலும்
உனக்குப் பெலனையுண்டாக்கி, பொன்னையும்
வெள்ளியையும் உன் பொக்கிஷங்களில் சேர்த்
௫ துக்கொண்டாய்.—உன் வியாபாரத்தில் நீ உன்
மகா ஞானத்தினாலே உன் பெலனைப் பெருகப்
பண்ணினாயென்று உன் இருதயம் உன் பெல
னாலே மேட்டிமையாயிற்று.
௬ ஆகையால் கர்த்தராகிய ஆண்டவர் சொல்லு
கிறதேதெனில், நீ உன் இருதயத்தைத் தேவனின்
இருதயத்தைப்போல ஆக்குகிறபடியினாலே,—
௭ இதோ, சாதிகளில் பலபந்தராகிய மறுதேசத்தா
ரை உன்மேல் வரப்பண்ணுவோம்; அவர்கள்
உன் ஞானத்தினுடைய அழகுக்கு விரோதமாகத்
தங்கள் பட்டையங்களை உருவி, உன் மினுக்
௮ கைக் கொலைச்சலாக்குவார்கள்.—உன்னைக் குழி
யில் இறங்கப்பண்ணுவார்கள்; நீ சமுத்திரங்க
ளின் நடுவே கொலையுண்கிறவர்களின் சாவாகச்
௯ சாவாய்.—உன்னைக் கொன்றுபோடுகிறவனுக்கு
முன்பாக நீ, நான் தேவனென்று சொல்லுவா
யோ? உன்னைக் குத்திப்போடுகிறவன் கையிலே
நீ தேவனல்லாத மனுஷனாய் இருக்கிறாயே.—
௰ மறுதேசத்தாரின் கையிலே நீ சுன்னத்தில்லாத
வர்களின் சாவாகச் சாவாய்; ஏனெனில் நாம் இ
தைச் சொன்னோமென்று கர்த்தராகிய ஆண்ட
வர் உரைக்கிறாரென்று சொல்லென்றார்.
௰௧ பின்னையும் கர்த்தருடைய வார்த்தை எனக்கு
௰௨ உண்டாகி, அவர் சொன்னதாவது:—மனுபுத்தி
ரனே, நீ தீருவினுடைய இராசாவின்பேரிலே
[2]புலம்பலை எடுத்து, அவனுக்குச் சொல்லவேண்
டியதாவது: கர்த்தராகிய ஆண்டவர் உரைக்கிற
தேதெனில், நீ தீர்மானிப்பின் முத்திரையைப்
போடுகிறவன்; நீ ஞானத்தால் நிறைந்தவனும்
௰௩ பூரண அழகுள்ளவனுமானவன்.—நீ பராபரனு
டைய தோட்டமாகிய ஏதேனில் இருக்கிறவன்;
கெம்பு, புஷ்பராகம், வச்சிரம், தார்சீஸ்ரத்தினம்,
கோமேதகம், யஸ்பி, நீலக்கல், சிவப்புக்கல், மர
கதமுதலான சகலவித இரத்தினங்களும் பொன்
னும் உன்னை மூடிக்கொண்டிருக்கின்றன; நீ
பட்டந்தரிப்பிக்கப்படுகிற நாளில் உன் மேள
வாத்தியங்களின் வேலைப்பாடும் உன் நாகசுரங்
களின் வேலைப்பாடும் உன்னிடத்தில் ஆயத்தப்
பட்டிருந்தது.— நீ காப்பாற்றுகிறதற்காக அபி ௰௪
ஷேகம்பண்ணப்பட்ட கேருபு; அப்படியாக
உன்னை வைத்தோம்; பராபரனுடைய பரிசுத்த
பர்வதத்தில் இருந்தாய்; அக்கினிமயமான கல்
லுகளின் நடுவே உலாவினாய்.—நீ பட்டந்தரிப் ௰௫
பிக்கப்பட்ட நாள்துவக்கி உன்னில் அநியாயம்
கண்டுபிடிக்கப்பட்டதுமட்டும், உன் வழிகளில்
குறையற்றிருந்தாய்.—உன் வியாபாரத்தின் திர ௰௬
ளைத்தொட்டு, உன் நடுமையத்தைக் கொடுமையா
லே நிரப்பினார்கள்; நீ பாவஞ்செய்தாய்; ஆகை
யால் நாம் உன்னைப் பராபரனுடைய பர்வதத்தி
லிருந்து ஆகாதவனென்று தள்ளி, காப்பாற்றுகிற
கேருபாய் இருந்த உன்னை அக்கினிமயமானகல்
லுகளின் நடுவே இராதபடிக்கு அழித்துப்போடு
வோம்.—உன் அழகைத்தொட்டு உன் இருதயம் ௰௭
மேட்டிமையாயிற்று; உன் மினுக்கைத்தொட்டு
உன் ஞானத்தைக் கெடுத்துப்போட்டாய்; உன்
னைத் தரையிலே தள்ளிப்போடுவோம்; இராசாக்
கள் உன்னைப் பார்க்கும்படிக்கு உன்னை அவர்க
ளுக்குமுன்பாக வேடிக்கையாக்குவோம்.—உன் ௰௮
அக்கிரமங்களின் ஏராளத்தினாலும் உன் வியாபா
ரத்தின் அநீதத்தினாலும் உன் பரிசுத்தஸ்தலங்க
ளைப் பரிசுத்தக்கொலைச்சலாக்கினாய்;ஆகையால்
நாம் உன்னைப் பட்சிப்பதாகிய ஒரு அக்கினி
யை உன் நடுவிலிருந்து புறப்படப்பண்ணி,உன்
னைப் பார்க்கிற எல்லாருடைய கண்களுக்கு
முன்பாகவும் உன்னைப் பூமியின்மேல் சாம்பலா
க்குவோம்.—சனசதளங்களில் உன்னை அறிந்த ௰௯
அனைவரும் உன்நிமித்தம் திகைப்பார்கள்; [3]மகா
பயங்கரமாய்ப் போவாய்; இனி என்றென்றைக்
கும் இல்லாமலும்போவாய் என்று உரைக்கிறா
ரென்று சொல்லென்றார்.

பின்னையும் கர்த்தருடைய வார்த்தை எனக்கு ௨௰
உண்டாகி, அவர் சொன்னதாவது:—மனுபுத்தி ௨௧
ரனே, நீ உன் முகத்தை [4]சீதோனுக்கு எதிராகத்
திருப்பி, அதற்கு விரோதமாகத் தீர்க்கதரிசனம்
உரைத்து, சொல்லவேண்டியதாவது:—கர்த்தரா ௨௨
கிய பராபரன் சொல்லுகிறதேதெனில், சீதோ
னே, இதோ, நாம் உனக்கு விரோதமாக வந்து,
உன் நடுவிலே [5]மகிமைப்படுவோம்;நாம் அதிலே
நியாயத்தீர்ப்புகளைச் செய்து, அதிலே பரிசுத்த
ரென்று விளங்கும்போது நாம் கர்த்தர் என்று அ
றிந்துகொள்ளுவார்கள்.—நாம் அதிலே பெருவா ௨௩
ரிக்காய்ச்சலையும், அதின் வீதிகளில் இரத்தஞ்
சிந்துதலையும் அனுப்புவோம்; சுற்றிலும் அதற்கு
விரோதமாய் வந்த பட்டையத்தினாலே அதின்
நடுவிலே கொலையுண்டுவிழுவார்கள்;அப்போது
நாம் கர்த்தரென்று அறிந்துகொள்ளுவார்கள்.

1 தானி. ௨. ௨௰. அப். ௰௨. ௨௩.—2 எசே. ௨௭. ௨.

3 எசே. ௨௭. ௩௬.—4 சொ. ௨௩. ௰௨.—5 ௨ மோ. ௰௪. ௰௮.

௨௪ இஸ்ரவேல் வீட்டாரை நிஸ்காரம்பண்ணுகிற
அவர்களுடைய சுற்றுப்புறத்தாராகிய அனைவரி
லும், இனித் தைக்கிற முள்ளும் நோவுண்டாக்கு
கிற நெரிஞ்சிலும் அவர்களுக்கு இராது; அப்ப
டியே நாம் கர்த்தராகிய ஆண்டவரென்று அறிந்
௨௫ துகொள்ளுவார்கள். — கர்த்தராகிய ஆண்டவர்
சொல்லுகிறதேதெனில், நாம் இஸ்ரவேல்வீட்டா
ரை, அவர்கள் சிதறவடிக்கப்பட்டிருக்கிற சனச
தளங்களிடத்திலிருந்து கூட்டிக்கொண்டுவந்து,
அவர்களால் சாதிகளின் கண்களுக்குமுன்பா
கப் பரிசுத்தரென்று விளங்கும்போது, அவர்கள்
நம்முடைய தாசனாகிய யாக்கோபுக்கு நாம் கொ
டுத்த தங்களுடைய தேசத்திலே குடியிருப்பார்
௨௬ கள்.—அவர்களுடைய சுற்றுப்புறத்தாரில் அவர்
களை நிஸ்காரம்பண்ணின அனைவரிலும் நாம்
நியாயத்தீர்ப்புகளைச் செய்யும்போது, அவர்கள்
அதிலே சுகமாய்க் குடியிருந்து, வீடுகளைக் கட்
டித் திராட்சத்தோட்டங்களை நாட்டி, சுகமாய்
வாசம்பண்ணி, நாம் தங்கள் பராபரனாகிய கர்த்
தரென்று அறிந்துகொள்ளுவார்கள் என்கிறாரெ
ன்று சொல்லென்றார்.

## ௨௯. அதிகாரம்.

௧. இஸ்ரவேலை மோசம்பண்ணினதற்காகப் பார்வோன்மேல் வரும் நியாயத்தீர்ப்பு. ௮. எகிப்தின் அழிவு. ௰௩. நாற்பது வருஷத்திற்குப்பின்பு அது முந்தின சீருக்குத் திரும்பினது. ௰௭. நேபுகாத்நேச்சாருக்கு எகிப்து கைமாறாகக் கொடுக்கப்படுவது. ௨௧. இஸ்ரவேல் மறுபடி எழும்புவது.

௧ பத்தாம்வருஷத்துப் பத்தாம்மாதம் பன்னிரண்
டாந்தேதியிலே கர்த்தருடைய வார்த்தை எனக்கு
௨ உண்டாகி, அவர் சொன்னதாவது:—மனுபுத்தி
ரனே, நீ எகிப்தின் இராசாவாகிய பார்வோனுக்
கு எதிராக உன் முகத்தைத் திருப்பி, அவனுக்
கும் [1]எகிப்து அனைத்துக்கும் விரோதமாகத் தீர்க்
௩ கதரிசனம் உரைத்து,—சொல்லி, வசனிக்கவேண்
டியதாவது: கர்த்தராகிய ஆண்டவர் சொல்லுகி
றதேதெனில், எகிப்துவின் இராசாவாகிய பார்
வோனே, உன் ஆறுகளின் நடுவிலே படுத்துக்
கொண்டு: என் ஆறு என்னுடையது; நான் அ
தை எனக்குச் செப்பனிட்டேனென்று சொல்
லுகிற [2]பெரிய முதலையே, இதோ, நாம் உனக்கு
௪ விரோதமாக வந்து,—[3]உன் குறடுகளில் தூண்டி
ல்களை மாட்டி, உன் ஆறுகளின் மச்சங்களை உன்
சிதள்களில் ஒட்டிக்கொள்ளப்பண்ணி, உன்னை
உன் ஆறுகளின் நடுவிலிருந்து தூக்குவோம்;
உன் ஆறுகளின் மச்சங்கள் எல்லாம் உன் சிதள்
௫ களில் ஒட்டிக்கொண்டிருக்கும்.—உன்னை வனா
ந்தரத்திலே போட்டுவிடுவோம்; உன்னையும் உன்
ஆறுகளுடைய எல்லா மச்சங்களையுந்தானே;
வெட்டவெளியிலே விழுவாய்; நீ சேர்த்துக்
கொள்ளப்படுவதுமில்லை; உன்னைப் [4]பூமியின்
மிருகங்களுக்கும் ஆகாசத்தின் பறவைகளுக்கும்
௬ இரையாகக் கொடுப்போம்.—அப்போது எகிப்து
தேசத்தின் குடிகள் எல்லாம் நாம் கர்த்தரென்று
அறிந்துகொள்ளுவார்கள்; ஏனென்றால் அவர்
கள் இஸ்ரவேல் வீட்டாருக்கு [5]நாணற்கோலாயி
ருந்தார்களே. — அவர்கள் உன்னைக் கையிலே ௭
பிடிக்கும்போது, நீ ஒடிந்துபோய், அவர்கள் வி
லாவை எல்லாம் பிளப்பாய்; அவர்கள் உன்மே
லே சாயும்போது, நீ முறிந்து, அவர்கள் இடுப்
பை எல்லாம் மரத்துப்போகப்பண்ணுவாய்.—
ஆகையால் கர்த்தராகிய ஆண்டவர் சொல்லுகிற ௮
தாவது: இதோ, நாம் உன்மேல் பட்டையத்தை
வரப்பண்ணி, உன்னில் மனுஷரையும் மிருகங்
களையும் சங்காரம்பண்ணுவோம். — எகிப்துதே ௯
சம் பாழும் வனாந்தரமுமாம்; அப்படியே நாம்
கர்த்தரென்று அறிந்துகொள்ளுவார்கள்; ஏனென்
றால், ஆறு என்னுடையது; நாம் அதைச் செப்ப
னிட்டேனென்றான்.
ஆனபடியினாலே, இதோ, நாம் உனக்கும் உன் ௰
ஆறுகளுக்கும் விரோதமாகவந்து, எகிப்துதேசத்
தைச் செவேனே துருக்கம் துவக்கி, எத்தியோப்
பியாவின் எல்லைமட்டும் அவாந்தரமும் பாழு
மான வனாந்தரங்களாக்குவோம்.—மனுஷனுடை ௰௧
ய கால் அதைக் கடப்பதுமில்லை; மிருகசீவனு
டைய கால் அதைக் கடப்பதுமில்லை; அது நாற்
பதுவருஷமாய்க் குடியற்றிருக்கும். —எகிப்து ௰௨
தேசத்தைப் பாழ்த்துப்போன தேசங்களின் நடு
விலே பாழ்த்துப்போகப்பண்ணுவோம்; அதின்
பட்டணங்கள் அவாந்தரமாக்கப்பட்ட பட்ட
ணங்களின் நடுவிலே நாற்பதுவருஷம் பாழாய்க்
கிடக்கும்; நாம் எகிப்தியரைச் சாதிகளுக்குள்ளே
சிதறவடித்து, அவர்களைத் தேசங்களுக்குள்ளே
தூற்றிவிடுவோம்.
ஆனால் கர்த்தராகிய ஆண்டவர் சொல்லுகிறதா ௰௩
வது: நாற்பதுவருஷங்கள் முடியும்போது, நாம்
எகிப்தியரை அவர்கள் சிதறுண்டிருக்கிற சன
சதளங்களிடத்திலிருந்து சேர்த்துக்கொண்டு,—
எகிப்தியரின் சிறையிருப்பைத் திருப்பி, அவர் ௰௪
களை அவர்களுடைய வியாபாரச் சீமையாகிய
பத்ரோஸ் தேசத்திலே திரும்ப வரப்பண்ணு
வோம்; அங்கே அவர்கள் தாழ்ந்த இராச்சியமா
யிருப்பார்கள்.—அது இனிச் சாதிகளின்மேல் ௰௫
தன்னை உயர்த்தாமல், வேறே இராச்சியங்களி
லும் தாழ்ந்ததாயிருக்கும்; அவர்கள் சாதிகளை
ஆளாதபடிக்கு அவர்களைக் குறுகப்பண்ணு
வோம்.—அவர்களின் பிறகாலே போய், [6]அவர் ௰௬
களை நோக்கிக்கொண்டிருக்கிறதினாலே இஸ்ர
வேல் வீட்டார் நமக்குத் தங்கள் அக்கிரமத்தை
நினைப்பூட்டாதபடிக்கு இனி அவர்கள் இவர்க
ளுடைய நம்பிக்கையாயிராதேபோவார்கள்; அப்
படியே நாம் கர்த்தராகிய ஆண்டவர் என்று அ
றிந்துகொள்ளுவார்கள் என்கிறாரென்று சொல்
லென்றார்.
இருபத்தேழாம்வருஷத்து முதலாம்மாதம் மு ௰௭
தலாந்தேதியிலே சம்பவித்ததேதென்றால், கர்த்த
ருடைய வார்த்தை எனக்கு உண்டாகி, அவர்
சொன்னதாவது:—மனுபுத்திரனே, பாபேலின் ௰௮

1 எரே. ௪௬. ௧.—2 எசே. ௩௨. ௨.—3 எசே. ௩௮. ௪. ஏசா. ௩௭. ௨௯.

4 எசே. ௩௨. ௪.—5 ஏசா ௩௬. ௬.—6 புலம். ௪. ௰௭.

இராசாவாகிய நேபுகாத்நேச்சார் தீருவின்முன்
னே தன் சேனையைப் பெரிய வேலையைச் செய்
யப்பண்ணினான்; சகல தலைகளும் மொட்டை
யாயின; சகல தோள்ப்பட்டைகளின் தோலும்
உரிந்துபோயிற்று; அவன் தீருவுக்கு விரோதமா
கச் செய்த வேலையினாலே அவனுக்காகிலும் அ
வன் சேனைக்காகிலும் பலனுண்டானதில்லை.—
௧௯ ஆகையால் கர்த்தராகிய ஆண்டவர் சொல்லுகிற
தாவது: இதோ, நாம் பாபேலின் இராசாவாகிய
நேபுகாத்நேச்சாருக்கு எகிப்துதேசத்தைக் கொ
டுக்கிறோம்; அவன் அதின் ஏராளத்தைப் பிடித்
துக்கொண்டு, அதின் ஆஸ்தியைச் சூறையாடி,
அதின் அவகாசத்தைக் கொள்ளையிடுவான்; இது
அவனுடைய சேனைக்குப் பலனாய் இருக்கும்.—
௨௰ எகிப்துதேசத்தை நாம் அவனுக்கு அவன் அதி
லே செய்த வேலையின் வருத்தத்துக்கு ஈடாகக்
கொடுத்தோம்; ஏனெனில் நமக்கு அதைச் செய்
தார்களென்று கர்த்தராகிய ஆண்டவர் சொல்லு
௨௧ கிறார்.—அந்நாளிலே நாம் இஸ்ரவேல் வீட்டா
ரின் கொம்பை முளைத்தெழும்பப்பண்ணி, அவர்
கள் நடுவிலே உனக்குத் திறந்தவாயைக் கட்ட
ளையிடுவோம்; அப்போது நாம் கர்த்தரென்று
அறிந்துகொள்ளுவார்களென்றார்.

## ௩௰. அதிகாரம்.

௧. எகிப்தும் அதற்கு உதவிசெய்கிறவர்களும் பாழ்ப்படுவது. ௨௰. எகிப்தின் புயத்தை முறிப்பதற்குப் பாபேலின் புயம் பலப்படுமென்பது.

௧ கர்த்தருடைய வார்த்தை எனக்கு உண்டாகி,
௨ அவர் சொன்னதாவது:—மனுபுத்திரனே, நீ தீர்க்
கதரிசனம் உரைத்துச் சொல்லவேண்டியதாவ
து: கர்த்தராகிய ஆண்டவர் சொல்லுகிறதேதெ
னில், ஐயோ! அது எந்தநாளென்று அலறுங்
௩ கள். — ஏனெனில் [1]நாள் சமீபமாயிருக்கிறது;
ஆம், கர்த்தருடைய நாள் சமீபமாயிருக்கிறது;
அது மந்தாரமான நாளும் சாதிகளின் காலமுமா
௪ யிருக்கும்.—பட்டையம் எகிப்திலே வரும்; எகிப்
திலே கொலையுண்கிறவர்கள் விழும்போது எத்
தியோப்பியாவிலே மகா வேதனை உண்டாயிருக்
கும்; அதின் ஏராளத்தைப் பிடித்துக்கொண்டு
போவார்கள்; அதின் அஸ்திபாரங்கள் நிர்மூல
௫ மாக்கப்படும்.—எத்தியோப்பியரும், பூத்தியரும்,
லூத்தியரும் கலந்த கூட்டமாகிய அனைவரும்,
கூபியரும், உடம்படிக்கைக்குள்ளான தேசத்
தின் புத்திரரும் அவர்களோடேகூடப் பட்டை
யத்தாலே விழுவார்கள்.

௬ கர்த்தர் சொல்லுகிறதாவது: எகிப்தை ஆதரிக்
கிறவர்களும் விழுவார்கள்; அதினுடைய பலத்
தின் முக்கியமும் தாழ்ந்துபோம்; அதிலே செ
வேனே துருக்கந்துவக்கிப் பட்டையத்தினாலே
விழுவார்களென்று கர்த்தராகிய ஆண்டவர் சொ
௭ ல்லுகிறார்.—பாழ்த்துப்போன தேசங்களின் நடு
விலே பாழ்த்துப்போவார்கள்; அதின் பட்ட
ணங்கள் அவாந்தரையாக்கப்பட்ட பட்டணங்
களின் தொகைக்குள்ளாயிருக்கும்.—நாம் எகிப் ௮
திலே அக்கினியைப் பற்றவைக்கும்போதும்,
உனக்கு ஒத்தாசைபண்ணின யாவரும் முறிக்
கப்படும்போதும், நாம் கர்த்தரென்று அறிந்து
கொள்ளுவார்கள்.—நிர்விசாரமான எத்தியோப் ௯
பியரைத் தத்தளிக்கப்பண்ண அந்நாளிலே நம்
முடைய கட்டளையினாலே தூதாட்கள் கப்பல்
களிலே போவார்கள்; அப்போது எகிப்தின் நா
ளிலே உண்டானதுபோல அவர்களுக்குள்ளே
மகா வேதனை உண்டாயிருக்கும்; ஏனெனில்
இதோ, வரும்.

கர்த்தராகிய ஆண்டவர் சொல்லுகிறதேதெ ௰
னில், பாபேலின் இராசாவாகிய நேபுகாத்நேச்
சாரைக்கொண்டு எகிப்தினுடைய சந்ததியை
ஓயப்பண்ணுவோம். — இவனும் இவனோடே ௧௧
கூடச் சாதிகளில் பலவந்தரான இவனுடைய
சனமும் தேசத்தை அழிப்பதற்காக ஏவப்பட்டு
வந்து, [2]தங்கள் பட்டையங்களை எகிப்துக்கு
விரோதமாக உருவி, தேசத்தைக் கொலையுண்ட
வர்களாலே நிரப்புவார்கள். — அப்போது நாம் ௧௨
ஆறுகளை வற்றிப்போகப்பண்ணி, தேசத்தைப்
பொல்லாதவர்களின் கையிலே விற்று, தேசத்
தையும் அதின் நிறைவையும் மறுதேசத்தாரின்
கையால் பாழாக்கிப்போடுவோம்; கர்த்தராகிய
நாம் இதைச் சொன்னோம்.

கர்த்தராகிய ஆண்டவர் சொல்லுகிறதாவது: ௧௩
நாம் நரகலான தேவர்களை அழித்து, நோப்பின்
விக்கிரகங்களை ஓயப்பண்ணுவோம்; இனி எகி
ப்துதேசத்தில் அதிபதியுமில்லை; நாம் எகிப்து
தேசத்தில் பயமுண்டாக்கி, — பத்ரோசைப் ௧௪
பாழ்க்கடித்து, சோவானிலே அக்கினியைப் பற்
றவைத்து, நோ பட்டணத்தில் ஆக்கினைகளைச்
செய்து,—எகிப்தின் பலனாகிய சீனின்மேல் நம் ௧௫
முடைய உக்கிரத்தை ஊற்றி, நோ பட்டணத்
தின் ஏராளத்தைச் சங்கரிப்போம்.—எகிப்தில் ௧௬
அக்கினியைப் போடுவோம்; சீன் மகா உபாதிய
டையும்; நோ பட்டணம் பிளந்து இடிந்துபோ
கும்; நோப்புக்கு அன்றாடக நெருக்கங்களுண்
டாம்.—ஆவேன், பீபேசெத் என்ற பட்டணங் ௧௭
களின் வேலைக்காரர் பட்டையத்தால் விழுவார்
கள்; அவைகளின் குடிகள் சிறையிருப்பிலே
போவார்கள்.—தகபானேசிலே பகல் இருண்டு ௧௮
போகும்; அங்கே எகிப்தின் நுகத்தடிகளை நாம்
உடைக்கும்போதும், அதினுடைய பலத்தின்
முக்கியம் அதிலே ஓயும்போதும், மந்தாரம் அதை
மூடும்; அதின் குமாரத்திகள் சிறையிருப்பிலே
போவார்கள்.—அப்படி எகிப்திலே நியாயத்தீர்ப் ௧௯
புகளைச் செய்வோம்; அப்போது நாம் கர்த்தரெ
ன்று அறிந்துகொள்ளுவார்கள் என்கிறாரென்று
சொல்லென்றார்.

பதினோராம் வருஷத்து முதலாம்மாதம் ஏழாந் ௨௰
தேதியிலே சம்பவித்ததேதெனில், கர்த்தருடைய

1 யோவே. ௨. ௧. செப். ௧. ௧௪.

2 எரே. ௪௪. ௧௧.

வார்த்தை எனக்கு உண்டாகி, அவர் சொன்ன
௨௧ தாவது:—மனுபுத்திரனே, எகிப்தின் இராசாவா
கிய பார்வோனுடைய புயத்தை முறித்துப்போ
டுவோம்; இதோ, அது குணமாகத்தக்கதாகக் கட்
டப்படுவதில்லை; அது பட்டையத்தைப் பிடிக்
கத்தக்க பெலனை அடையப் பற்றைப்போட்டுக்
௨௨ கட்டப்படுவதுமில்லை.—ஆகையால் கர்த்தராகிய
ஆண்டவர் சொல்லுகிறதாவது: இதோ, நாம் எகி
ப்தின் இராசாவாகிய பார்வோனுக்கு விரோத
மாக வந்து, அவனுடைய புயங்களை முறித்துப்
போடுவோம்;பெலனுள்ளதையும் முறிந்ததையுந்
தானே; அப்படியே நாம் பட்டையத்தை அவன்
௨௩ கையிலிருந்து விழப்பண்ணி,— எகிப்தியரைச்
சாதிகளுக்குள்ளே சிதறவடித்து, அவர்களைத்
தேசங்களில் தூற்றிப்போட்டு,
௨௪ பாபேலுடைய இராசாவின் புயங்களைப் பலப்
படுத்தி, அவன் கையிலே நம்முடைய பட்டை
யத்தைக் கொடுத்து, பார்வோனின் புயங்களை
முறித்துப்போடுவோம்; அப்போது கொலையுண்
கிறவன் தவிக்கிறதுபோலே அவனுக்குமுன்
௨௫ பாகத் தவிப்பான்.—பாபேலுடைய இராசாவின்
புயங்களைப் பலப்படுத்துவோம்; பார்வோனின்
புயங்களோ விழுந்துபோம்; இப்படியே நாம் நம்
முடைய பட்டையத்தைப் பாபேலுடைய இரா
சாவின் கையில் கொடுக்கும்போதும், அவன்
அதை எகிப்துதேசத்தின்மேல் நீட்டும்போதும்,
நாம் கர்த்தரென்று அறிந்துகொள்ளுவார்கள்.—
௨௬ நாம் எகிப்தியரைச் சாதிகளுக்குள்ளே சிதறவ
டித்து, அவர்களைத் தேசங்களில் தூற்றிப்போடு
வோம்; அப்போது நாம் கர்த்தரென்று அறிந்து
கொள்ளுவார்கள்.

## ௩௧. அதிகாரம்.

௧. அசூரியாவின் மகிமையையும், ௰. பெருமைக்காக அதின் விழுதலையும், ௰௮. எகிப்துக்கும் அதைப்போல வரும் அழிவையும், பார்வோனுக்கு அறிவித்த அறிவிப்பு.

௧ பதினோராம்வருஷத்து மூன்றாம்மாதம் முதலாந்
தேதியிலே கர்த்தருடைய வார்த்தை எனக்கு
௨ உண்டாகி, அவர் சொன்னதாவது:—மனுபுத்தி
ரனே, எகிப்தின் இராசாவாகிய பார்வோனோ
டும் அவனுடைய திரளோடும் நீ சொல்லவேண்
டியதாவது: நீ உன் மகத்துவத்திலே யாருக்கு
ஒப்பாயிருக்கிறாய்?
௩ இதோ, அசூர் லீபனோனிலே [1]அலங்காரக்
கொப்புகளோடும், நிழலிடுகிற அடர்த்தியோ
டும், உயர்ந்த வளர்த்தியோடும் இருக்கிற கே
துருவிருட்சமாயிருந்தான்; அதினுடைய கொம்
புகளின் தழைகளுக்குள்ளே அதின் நுனிக்
௪ கிளை இருந்தது. — தண்ணீர்கள் அதைப் பெரி
தும், ஆழம் அதை உயர்த்தியும் ஆக்கின; அதின்
ஆறுகள் அதின் அடிமரத்தைச் சுற்றிலும் ஓடின;
தன் சாலகங்களை வெளியின் விருட்சங்களுக்
௫ கெல்லாம் பாயவிட்டது. — ஆகையால் வெளி
யின் விருட்சங்களை எல்லாம் பார்க்க அதின்
வளர்த்தி உயர்ந்தது; அது துளிர்விடுகையில் திர
ளான தண்ணீரினாலே அதின் கிளைகள் பெருகி,
அதின் கொப்புகள் நீளமாயின.—அதின் கொப் ௬
புகளில் ஆகாசத்தின் பறவைகள் எல்லாம் கூடு
கட்டின; அதின் கொப்புகளின்கீழ் வெளியின்
மிருகங்களெல்லாம் குட்டிகளைப்போட்டன;
பெரிதான சகல சாதிகளும் அதின் நிழலிலே
குடியிருந்தார்கள்.—அப்படியே அது தன் மகத்து ௭
வத்தினாலும் தன் கொப்புகளின் நீளத்தினாலும்
அலங்காரமாயிருந்தது; ஏனெனில் அதின் வேர்
திரளான தண்ணீர்களில் இருந்தது.—பராபரனு ௮
டைய தோட்டத்திலுள்ள கேதுருகள் அதிலும்
அதிகப்பட்டிருந்ததில்லை; பாய்மரவிருட்சங்கள்
அதின் கொப்புகளுக்குச் சமானமாயிருந்ததில்
லை; கஸ்தானியமரங்கள் அதின் கொப்புகளைப்
போலும் இருந்ததில்லை; பராபரனுடைய தோட்
டத்திலுள்ள ஒரு விருட்சமும் அதின் அலங்
காரத்திலே அதற்கு ஒப்பாயிருந்ததில்லை.—அதி ௯
னுடைய கொப்புகளின் திரளினாலே அதை
அலங்காரப்படுத்தினோம்; பராபரனுடைய தோ
ட்டமாகிய ஏதேனின் விருட்சங்களெல்லாம்
அதின்பேரில் பொறாமையாயிருந்தன.
ஆகையால் கர்த்தராகிய ஆண்டவர் சொல்லு ௰
கிறதாவது: அது தன் வளர்த்தியிலே மேட்டிமை
யாகி, கொப்புகளின் தழைகளுக்குள்ளே தன்
நுனிக்கிளையை ஓங்கவிட்டபடியினாலும்,அதின்
இருதயம் தன் மேட்டிமையினாலே உயர்ந்து
போனபடியினாலும்,— நாம் அதைச் சாதிகளில் ௰௧
மகா வல்லமையுள்ளவன் கையிலே,இவன் தனக்
குச் சரிப்போனாற்போலே அதற்குச் செய்யும்
படி ஒப்புக்கொடுத்தோம்; அதினுடைய ஆகாமி
யத்தின்நிமித்தம் அதைத் தள்ளிப்போட்டோம்.—
சாதிகளில் பலவந்தராகிய மறுதேசத்தார் அதை ௰௨
வெட்டிப்போட்டு, விட்டுப்போனார்கள்; அதின்
கொம்புகள் மலைகளின்மேலும் சகல பள்ளத்தாக்
குகளிலும் விழுந்தன; ஆனதுகொண்டு அதின்
நிழலில் இருந்த அதின் கிளைகள் தேசத்தி
னுடைய எல்லாப் பள்ளங்களிலும் நசுங்கடிக்
கப்பட்டன; ஆனதுகொண்டு அதின் நிழலில்
இருந்ததேசத்தின் சனசதளங்களெல்லாம் அதை
விட்டுக் கலைந்துபோனார்கள்.
விழுந்துகிடக்கிற அதின்மேலே ஆகாசத்துப் ௰௩
பறவைகளெல்லாம் தாபரித்தன; அதின் கொம்
புகளின்மேலே வெளியின் மிருகங்களெல்லாம்
தங்கின.—தண்ணீரால் பயிராகிற எந்த விருட் ௰௪
சங்களும் தங்கள் வளர்த்தியினாலே மேட்டிமை
யாகாமலும், தங்கள் கொம்புகளின் தழைக்குள்
ளே தங்கள் நுனிக்கிளையை ஓங்கவிடாமலும்,
தண்ணீரைக் குடிக்கிற எந்த மரங்களும் தங்கள்
உயர்த்தியினாலே தங்கள்மேல் நம்பிக்கைவைக்
காமலும் இருக்கும்பொருட்டாகத்தானே; ஏனெ
ன்றால் மனுபுத்திரரின் நடுவே அவர்கள் எல்லா
ரும் குழியில் இறங்குகிறவர்களோடேகூட மர

1 தானி. ௪. ௭.

ணத்துக்கு ஒப்புக்கொடுக்கப்பட்டு, பூமியின்
பாதாளத்துக்குள் போனார்கள்.
௰௫ கர்த்தராகிய ஆண்டவர் சொல்லுகிறதாவது:
அவன் பாதாளத்தில் இறங்குகிறநாளிலே புலம்
பலை வருவித்தோம்; நாம் அவன்நிமித்தம் ஆழத்
தை மூடிப்போட்டு, திரளான தண்ணீர்கள் ஓடா
தபடிக்கு அதின் ஆறுகளை அடைத்து, அவன்
நிமித்தம் லீபனோனை இருளடையப்பண்ணி
னோம்; வெளியின் விருட்சங்கள் எல்லாம் அவன்
௰௬ நிமித்தம் பட்டுப்போயின. — நாம் அவனைக்
குழியில் இறங்குகிறவர்களோடேகூடப் பாதா
ளத்தில் இறங்கப்பண்ணுகையில் அவன் விழு
கிற சத்தத்தினாலே சாதிகளை அதிரப்பண்ணி
னோம்: அப்போது பூமியின் பாதாளத்தில் ஏதே
னின் விருட்சங்களும், லீபனோனின் தெரிந்து
கொள்ளப்பட்ட மேன்மையாய் இருந்த விருட்
சங்களும், தண்ணீர்குடித்த சகல மரங்களும் ஆறு
௰௭ தல் அடைந்தன.—அவனோடேகூட இவர்களும்,
சாதிகளின் நடுவே அவன் நிழலில் குடியிருந்து
அவனுக்குப் புயமாயிருந்தவர்களும், பட்டையத்
தால் வெட்டுண்டவர்களண்டையிலே பாதாளத்
தில் இறங்கினார்கள்.
௰௮ இப்படிக்கொத்த மகிமையிலும் மகத்துவத்தி
லும் ஏதேனின் விருட்சங்களில் எதுக்கு நீ ஒப்பா
னவன்? ஏதேனின் விருட்சங்களோடேகூட
நீயும் பூமியின் பாதாளத்துக்குள் இறக்கப்பட்டு,
பட்டையத்தாலே வெட்டுண்டவர்களோடேகூ
டச் சுன்னத்தில்லாதவர்களின் நடுவிலே கிடப்
பாய்; இவனே பார்வோன்; இவனுடைய சகல
திரளுங்கூடத்தான் என்று கர்த்தராகிய ஆண்ட
வர் உரைக்கிறார் என்று சொல்லென்றார்.

## ௩௨. அதிகாரம்.

*௧. எகிப்தின் பயங்கரமுள்ள விழுதலைக்குறித்த புலம்பல். ௰௧. பாபேலின் பட்டையம் அதை அழிப்பது. ௰௭. விருத்தசேதனம் இல்லாத மற்றச் சாதியாருக்குள்ளே அதுவும் நரகத்துக்குக் கொண்டுவரப்படுவது.*

௧ பன்னிரண்டாம் வருஷத்துப் பன்னிரண்டாம்
மாதம் முதலாந்தேதியிலே கர்த்தருடைய வார்த்
தை எனக்கு உண்டாகி, அவர் சொன்னதாவது:
௨ மனுபுத்திரனே, நீ எகிப்துவின் இராசாவாகிய
பார்வோனின்பேரிலே புலம்பலெடுத்து, அவ
னோடே சொல்லவேண்டியதேதெனில்: சாதி
களுக்குள்ளே நீ இளஞ்சிங்கத்துக்கு ஒப்பான
வன்; நீ கடல்களில் [1]முதலையைப்போல இரு
ந்து, உன்னுடைய நதிகளில் எழும்பி, உன் கால்
களால் தண்ணீர்களைக் கலக்கி, அவைகளின்
ஆறுகளைக் குழப்பிவிட்டாய்.
௩ ஆகையால் கர்த்தராகிய ஆண்டவர் சொல்லு
கிறதாவது: நாம் அநேகம் சனசதளங்களின்
சபையைக்கொண்டு உன்மேல் நமது [2]வலையை
வீசுவோம்; அவர்கள் நமது வலையில் உன்னை
௪ இழுத்துவருவார்கள்.—உன்னைத் தரையில் போ
ட்டுவிடுவோம்; நாம் உன்னை வெட்டவெளியில்
எறிந்துவிட்டு, ஆகாயத்துப் பறவைகளை எல்லாம்
உன்மேல் நிற்கப்பண்ணி, பூமி அனைத்தின் மிரு
கங்களை உன்னால் திருத்தியாக்கி, — உன் சதை ௫
யைப் பர்வதங்களின்மேல் போடுவித்து, உன்
உயர்த்தியினாலே பள்ளத்தாக்குகளை நிரப்பி,—
நீ நீஞ்சின தேசத்தை உன் இரத்தத்தினாலே பர் ௬
வதங்கள்மட்டும் பாய்ச்சலாக்குவோம்; ஆறுகள்
உன்னாலே நிரம்பும்.
உன்னை அவித்துப்போடுகையில், [3]நாம் வா ௭
னத்தை மூடி, அதின் நட்சத்திரங்களை இருண்டு
போகப்பண்ணுவோம்; சூரியனை மப்பினாலே
மூடுவோம்; சந்திரனும் தன் ஒளியைக் கொடா
திருக்கும். — நாம் வானத்தின் வெளிச்சமான ௮
விளக்குகளை எல்லாம் உனக்காக இருண்டுபோ
கப்பண்ணி, உன் தேசத்தின்மேல் அந்தகாரத்தை
வரப்பண்ணுவோமென்று கர்த்தராகிய ஆண்ட
வர் சொல்லுகிறார்.—நாம் உன் நொறுங்குதலைச் ௯
சாதிகள்மட்டுக்கும் நீ அறியாத தேசங்கள்மட்
டுக்கும் எட்டப்பண்ணுகையில், அநேகம் சன
சதளங்களின் இருதயத்தை விதனமடையப்பண்
ணுவோம். — அநேகம் சனசதளங்களை உன் ௰
நிமித்தம் திகைக்கப்பண்ணுவோம்; அவர்களின்
இராசாக்கள், நாம் தங்கள் முகங்களுக்குமுன்
பாக நமது பட்டையத்தை விசிறுகையில் மிக
வும் சுறுக்கிடுவார்கள்; நீ விழும் நாளில் அவரவர்
தங்கள் பிராணனுக்காக ஒவ்வொரு நிமிஷத்தி
லும் தத்தளிப்பார்கள்.
ஏனெனில் கர்த்தராகிய ஆண்டவர் சொல்லுகி ௰௧
றதாவது: பாபேலுடைய இராசாவின் பட்டை
யம் உன்மேல் வரும்.—பராக்கிரமசாலிகளின் ௰௨
பட்டையங்களால் உன் திரளை விழப்பண்ணு
வோம்; அவர்கள் எல்லாரும் சாதிகளில் பலவந்
தரானவர்கள்; அவர்கள் எகிப்தின் முக்கியத்
தைப் பாழ்க்கடிப்பார்கள்; அதின் ஏராளம் அனை
த்தும் அழிக்கப்படும்.—திரளான தண்ணீர்களின் ௰௩
கரைகளில் நடமாடுகிற அதின் மிருகசீவன்களை
எல்லலாம் அழிப்போம்; இனி மனுஷனுடைய
கால் அவைகளைக் கலக்குவதுமில்லை; மிருகங்க
ளுடைய குளம்புகள் அவைகளைக் குழப்புவது
மில்லை.—அப்போது அவர்களுடைய தண்ணீர்க ௰௪
ளைத் தெளியப்பண்ணி, அவர்கள் ஆறுகளை எண்
ணெயைப்போல ஓடப்பண்ணுவோமென்று
கர்த்தராகிய ஆண்டவர் சொல்லுகிறார். — நாம் ௰௫
எகிப்துதேசத்தைப் பாழாக்கும்போதும், தேசம்
தன் நிறைவை இழந்து வெறுமையாய்க் கிடக்
கும்போதும், நாம் அதில் குடியிருக்கிற யாவரை
யும் சங்கரிக்கும்போதும், நாம் கர்த்தரென்று
அறிந்துகொள்ளுவார்கள்.
இது புலம்பல்; இப்படிப் புலம்புவார்கள்; ௰௬
இப்படிச் சாதிகளின் குமாரத்திகள் புலம்புவார்
கள்; இப்படி எகிப்துக்காகவும், அதினுடைய
எல்லாத் திரளுக்காகவும் புலம்புவார்களென்று
கர்த்தராகிய ஆண்டவர் உரைக்கிறாரென்று சொ
ல்லென்றார்.

1 எசே. ௨௯. ௩.—2 எசே. ௰௨. ௰௩ : ௰௭. ௨௰.

3 ஏசா. ௰௩. ௰.

௰௭ பின்னையும் பன்னிரண்டாம் வருஷமாகிய
அந்த மாதம் பதினைந்தாந்தேதியிலே சம்பவித்த
தேதென்றால், கர்த்தருடைய வார்த்தை எனக்கு
உண்டாகி, அவர் சொன்னதாவது:
௰௮ மனுபுத்திரனே, நீ எகிப்துவினுடைய ஏராளத்
தின்பேரிலே புலம்பி, அவர்களையும் பிரபலிய
மான சாதிகளின் குமாரத்திகளையும் [1]குழியில்
இறங்கினவர்கள் அண்டையிலே பூமியின் பாதா
௰௯ ளத்துக்குள் இறங்கப்பண்ணு.— [2]நீ யாரைப்
பார்க்கிலும் உச்சிதமாயிருக்கிறாய்? நீ இறங்கி,
௨௰ சுன்னத்தில்லாதவர்களிடத்திலே கிட.-பட்டை
யத்தால் வெட்டுண்டவர்களின் நடுவிலே விழு
வார்கள்; பட்டையம் நேரிட்டிருக்கிறது; அவ
னையும் அவனுடைய எல்லா ஏராளத்தையும்
௨௧ பிடித்திழுங்கள்.—பராக்கிரமசாலிகளில் வல்ல
மையானவர்களும், அவனுக்கு ஒத்தாசை செய்
தவர்களுங்கூட, பாதாளத்தின் நடுவிலிருந்து
அவனோடே பேசுவார்கள்; பட்டையத்தால்
வெட்டுண்டு, இறங்கி, அங்கே கிடக்கிற சுன்
னத்தில்லாதவர்கள்தானே.
௨௨ அங்கே அசூரும் அவனுடைய எல்லாக் கூட்
டத்தாரும் கிடக்கிறார்கள்; அவனைச் சுற்றிலும்
இவர்களுடைய பிரேதக்குழிகள் இருக்கின்றன;
அவர்கள் எல்லாரும் பட்டையத்தால் வெட்
௨௩ டுண்டு விழுந்தவர்கள்தானே. — பாதாளத்தின்
பக்கங்களில் அவர்களுடைய பிரேதக்குழிகள்
இருக்கின்றன; அவனுடைய பிரேதக்குழியைச்
சுற்றிலும் அவனுடைய கூட்டம் கிடக்கிறது;
சீவனுள்ளோருடைய தேசத்திலே கெடியுண்
டாக்கின அவர்கள் எல்லாரும் பட்டையத்தால்
வெட்டுண்டு விழுந்தவர்கள்தானே.
௨௪ அங்கே ஏலாமும் அவனுடைய பிரேதக்குழி
யைச்சுற்றிலும் அவனுடைய எல்லா ஏராளமும்
கிடக்கிறார்கள்; அவர்கள் எல்லாரும் பட்டை
யத்தால் வெட்டுண்டுவிழுந்து, சுன்னத்தில்லாத
வர்களாய்ப் பூமியின் பாதாளத்துக்குள் இறங்கி
னார்கள்; சீவனுள்ளோருடைய தேசத்திலே தங்
களால் கெடியுண்டாக்கின அவர்கள், குழியில்
இறங்கினவர்களோடேகூடத் தங்கள் அவமா
௨௫ னத்தைச் சுமந்துகொண்டிருக்கிறார்கள்.—வெட்
டுண்டவர்களின் நடுவே அவனை அவனுடைய
எல்லா ஏராளத்துக்குள்ளும் கிடத்தினார்கள்; அவ
னைச் சுற்றிலும் அவர்களுடைய பிரேதக்குழிகள்
இருக்கின்றன; அவர்கள் எல்லாரும் பட்டை
யத்தால் வெட்டுண்ட சுன்னத்தில்லாதவர்கள்;
சீவனுள்ளோருடைய தேசத்திலே அவர்களால்
கெடியுண்டாக்கப்பட்டபிறகு, அவர்கள் குழி
யில் இறங்கினவர்களோடேகூடத் தங்கள் அவ
மானத்தைச் சுமந்துகொண்டார்கள்; வெட்டுண்
டவர்களின் நடுவே வைக்கப்பட்டிருக்கிறான்.
௨௬ அங்கே மேசேகும் தூபாலும் அவர்களுடைய
எல்லா ஏராளமும் கிடக்கிறார்கள்; அவர்களைச் சு
ற்றிலும் இவர்களுடைய பிரேதக்குழிகள் இருக்
கின்றன, அவர்கள் எல்லாரும் பட்டையத்தால்
வெட்டுண்ட சுன்னத்தில்லாதவர்கள்; சீவனுள்
ளோருடைய தேசத்திலேயென்றால் தங்களால்
கெடியுண்டாக்கினார்கள்.—ஆனால் சுன்னத்தில் ௨௭
லாதவர்களில் விழுந்த பராக்கிரமசாலிகளோடே
இவர்கள் கிடப்பதில்லை; அவர்கள் தங்கள் அக்கி
ரமம் தங்கள் எலும்புகளின்மேலே இருக்கும்
படியாகத் தங்கள் யுத்த ஆயுதங்களோடே பாதா
ளத்திலிருந்து இறங்கி, தங்கள் பட்டையங்க
ளைத் தங்கள் தலைகளின்கீழ் வைத்தார்கள்; ஏனெ
னில் சீவனுள்ளோருடைய தேசத்திலே பராக்கி
ரமசாலிகளுக்குக் கெடியாயிருந்தார்கள்.—நீயோ ௨௮
வெனில் சுன்னத்தில்லாதவர்களின் நடுவே நொ
றுங்குண்டு, பட்டையத்தால் வெட்டுண்டவர்க
ளோடே கிடப்பாய்.
அங்கே ஏதோமும் அதினுடைய இராசாக்க ௨௯
ளும் அதினுடைய எல்லாப் பிரபுக்களும் கிடக்
கிறார்கள்; பட்டையத்தால் வெட்டுண்டவர்களி
டத்தில் இவர்கள் தங்கள் வல்லமையோடுங்கூ
டக் கிடத்தப்பட்டார்கள்; இவர்கள் சுன்னத்தில்
லாதவர்களிடத்திலும் குழியில் இறங்குகிறவர்க
ளிடத்திலும் கிடக்கிறார்கள்.
அங்கே வடக்குத்திசை அதிபதிகள் அனைவ ௩௰
ரும் எல்லாச் சீதோனியரும் கிடக்கிறார்கள்; இ
வர்கள் தங்கள் கெடியினாலும் தங்கள் பராக்கிர
மத்தாலும் வெட்கப்பட்டு, வெட்டுண்டவர்களி
டத்தில் இறங்கி, பட்டையத்தால் வெட்டுண்ட
வர்களோடே சுன்னத்தில்லாதவர்களாய்க் கிட
ந்து, குழியில் இறங்கினவர்களிடத்தில் தங்கள்
அவமானத்தைச் சுமந்துகொண்டிருக்கிறார்கள்.
அவர்களைப் பார்வோன் பார்த்து, தன்னுடைய ௩௧
எல்லா ஏராளத்தின்பேரிலும் [3]ஆறுதல் அடை
வான்; பட்டையத்தால் வெட்டுண்ட பார்வோ
னும் அவனுடைய எல்லா இராணுவமுந்தானே
என்று கர்த்தராகிய ஆண்டவர் சொல்லுகிறார்.—
ஏனெனில் நம்முடைய கெடியைச் சீவனுள் ௩௨
ளோருடைய தேசத்தில் உண்டுபண்ணுகிறோம்;
பார்வோனும் அவனுடைய எல்லா ஏராளமு
மாய்ப் பட்டையத்தால் வெட்டுண்டவர்களிடத்
தில் சுன்னத்தில்லாதவர்களின் நடுவே கிடத்தப்
படுவார்கள் என்கிறதைக் கர்த்தராகிய ஆண்ட
வர் உரைக்கிறாரென்று சொல்லென்றார்.

## ௩௩. அதிகாரம்.

௧. சனத்துக்கு முன்னறிவிக்கின்ற காவற்காரன் கடமையைக்கொண்டு, எசேக்கியேலின் கடமை அவனுக்கறிவிக்கப்பட்டது ௰. குணப்பட்டவர்களைக்குறித்தும், கலகக்காரரைக்குறித்தும் பராபரன் தமது நெறிகளின் நீதியைக் காட்டினது. ௰௭. அவர் தமது நீதியை வெளியிட்டது. ௨௧. தீர்க்கதரிசி எருசலேம் பிடிபட்ட செய்தியைக் கேட்டுத் தேசத்தின் அழிவை முன்னறிவித்தது. ௩௰. தீர்க்கதரிசிகளைப் பரியாசம்பண்ணுகிறவர்கள்மேல் வரும் பராபரனுடைய நியாயத்தீர்ப்பு.

கர்த்தருடைய வார்த்தை எனக்கு உண்டாகி, ௧
அவர் சொன்னதாவது:
மனுபுத்திரனே, நீ உன் சனத்தின் புத்திரரோ ௨
டேபேசி, அவர்களோடே சொல்லவேண்டியதா

1 எசே. ௨௬. ௨௰: ௩௧. ௰௪.—2 எசே. ௩௧. ௨, ௰௮.

3 எசே. ௩௧. ௰௬.

வது: நாம் தேசத்தின்மேல் பட்டையத்தை வரப்
பண்ணுகையில் தேசத்தின் சனம் தங்கள் எல்லை
களிலுள்ள ஒரு புருஷனை அழைத்து, அவனைத்
தங்களுக்குக் காவற்காரனாக வைத்தபிறகு, —
௩ இவன் பட்டையத்தைத் தேசத்தின்மேல் வரக்
கண்டு, எக்காளம் ஊதி, சனத்தை எச்சரிக்கும்
௪ போது,—எக்காளத்தின் சத்தத்தைக் கேட்கிறவன்
அதைக் கேட்டும் எச்சரிக்கை அற்றுப்போகிற
தும், பட்டையம் வந்து அவனை வாரிக்கொள்ளு
கிறதும் உண்டானால், அவனுடைய இரத்தப்ப
௫ ழி அவன் சிரசின்மேலே சுமரும்.—அவன் எக்கா
ளத்தின் சத்தத்தைக் கேட்டும், எச்சரிக்கை அற்
றுப்போனான்; அவனுடைய இரத்தப்பழி அவன்
பேரிலே சுமரும்; எச்சரிக்கையாகிறவனோ
வென்றால் தன் சீவனைத் தப்புவித்துக்கொள்ளு
வான்.
௬ காவற்காரன் பட்டையத்தை வரக்கண்டும்,
அவன் எக்காளம் ஊதாமலும் சனம் எச்சரிக்கப்
படாமல்போகிறதும் பட்டையம் வந்து அவர்க
ளில் யாதொரு ஆத்துமாவை வாரிக்கொள்ளுகிற
தும் உண்டேயானால், இவன் தன் அக்கிரமத்தி
லே வாரிக்கொள்ளப்பட்டான்; ஆனால் அவன்
இரத்தப்பழியைக் காவற்காரன் கையிலே கேட்
போம்.
௭ இப்போதும் மனுபுத்திரனே, [1]நாம் உன்னை
இஸ்ரவேல்வீட்டாருக்குக் காவற்காரனாக வைத்
தோம்; ஆகையால் நீ நம்முடைய வாயினாலே
வார்த்தையைக் கேட்டு, நம்முடைய நாமத்தினா
௮ லே அவர்களை எச்சரிப்பாயாக.—நாம் ஆகாதவ
னுக்கு: ஆகாதவனே, சாகவே சாவாயென்று
சொல்லுகையில், நீ ஆகாதவனைத் தன் ஆகாதவ
ழியில் இராதபடிக்கு எச்சரிக்கத்தக்கதாக அதை
அவனுக்குச் சொல்லாதேபோனால், அந்த ஆகா
தவன் தன் அக்கிரமத்திலே சாவான்; ஆனால் அ
வன் இரத்தப்பழியை உன் கையிலே கேட்
௯ போம்.—ஆகாதவன் தன் வழியைவிட்டுத் திரும்
பும்படிக்கு நீ அவனை அதற்காக எச்சரித்தும், அ
வன் தன் வழியைவிட்டுத் திரும்பாதேபோனா
னேயாகில், இவன் தன் அக்கிரமத்திலே சாவான்;
நீயோவெனில் உன் ஆத்துமாவைத் தப்பப்பண்
ணினாய்.
௰ இப்போதும் மனுபுத்திரனே, இஸ்ரவேல் வீட்
டாரோடே நீ சொல்லவேண்டியதேதெனில்,
எங்கள் துரோகங்களும் எங்கள் பாவங்களும்
எங்கள்மேல் இருக்கையிலும், நாங்கள் அவைக
ளில் வாடிப்போகையிலும், நாங்கள் பிழைப்ப
தெப்படியென்று நீங்கள் சொல்லுகிறீர்கள். —
௰௧ கர்த்தராகிய ஆண்டவர் உரைக்கிறதாவது: [2]நாம்
ஆகாதவனுடைய மரணத்தை விரும்பாமல், ஆகா
தவன் தன் வழியைவிட்டுத் திரும்பிப் பிழைப்ப
தையே விரும்புகிறோம் என்று நம்முடைய சீவ
னைக்கொண்டு சொல்லுகிறோம்; இஸ்ரவேல்
வீட்டாரே, [3]உங்கள் பொல்லாத வழிகளைவிட்
டுத் திரும்புங்கள், திரும்புங்கள்; நீங்கள் ஏன் சா
கவேண்டும் என்கிறாரென்று அவர்களோடே
சொல்.
மனுபுத்திரனே, உன் சனத்தின் புத்திரரோடே ௰௨
நீ சொல்லவேண்டியதாவது: [4]நீதிமான் துரோகம்
பண்ணுகிறநாளிலே அவனுடைய நீதி அவனைத்
தப்புவிப்பதில்லை; [5]ஆகாதவன் தன் ஆகாத்தியத்
தைவிட்டுத் திரும்புகிறநாளிலே அவன் தன்
ஆகாத்தியத்தினால் விழுந்துபோவதுமில்லை; நீதி
மான் பாவஞ்செய்கிறநாளிலே தன் நீதியினால்
பிழைக்கக்கூடுவதுமில்லை.
பிழைக்கவே பிழைப்பாயென்று நாம் நீதிமா ௰௩
னுக்குச் சொன்னபோது, அவன் தன் நீதியை
நம்பி, அநியாயஞ்செய்தால் அவனுடைய நீதியெ
ல்லாம் நினைக்கப்படுவதில்லை; அவன் செய்த தன்
னுடைய அநியாயத்திலே சாவான்.
பின்னையும் சாகவே சாவாயென்று நாம் ஆகா ௰௪
தவனுக்குச் சொன்னபோது, அவன் தன் பாவத்
தைவிட்டுத் திரும்பி, நியாயமும் நீதியுஞ்செய்
து, — ஆகாதவனாயிருந்த அவன் அடைமானத் ௰௫
தைத் திரும்பக்கொடுத்து, [6]கொள்ளையிட்டதைச்
செலுத்தி, அநியாயம் செய்யாதபடியாய்ச் சீவ
னின் கட்டளைகளில் நடந்துகொண்டால் அ
வன் சாகாமல் பிழைக்கவே பிழைப்பான். —
[7]அவன் செய்த அவனுடைய எல்லாப் பாவங்க ௰௬
ளும் அவனுக்கு விரோதமாக நினைக்கப்படுவது
மில்லை; நியாயமும் நீதியும் செய்துவந்தான்;
பிழைக்கவே பிழைப்பானென்று சொல்.
உன் சனத்தின் புத்திரரோ, [8]ஆண்டவருடைய ௰௭
வழி செம்மையாயிருக்கவில்லை என்கிறார்கள்;
ஆனால் அவர்களுடைய வழியே செம்மையாயி
ருக்கவில்லை. — நீதிமான் தன் நீதியைவிட்டுத் ௰௮
திரும்பி, அநியாயஞ்செய்தால் அதில் சாகவே
சாவான்.—ஆகாதவன் தன் ஆகாத்தியத்தைவிட்டு ௰௯
நியாயமும் நீதியும் செய்தால், அவைகளில்
அவன் பிழைப்பான்.—நீங்களோ, ஆண்டவரு ௨௰
டைய வழி செம்மையாயிருக்கவில்லை என்கி
றீர்கள்; இஸ்ரவேல்வீட்டாரே, நாம் உங்களில்
ஒவ்வொருவனை அவனவன் வழிகளின்படியே
நியாயந்தீர்ப்போமென்று சொல்லென்றார்.
எங்கள் சிறையிருப்பின் பன்னிரண்டாம் ௨௧
வருஷத்துப் பத்தாம்மாதம் ஐந்தாந்தேதியிலே
சம்பவித்ததேதென்றால், [9]எருசலேமிலிருந்து தப்
பின ஒருவன் என்னண்டைக்கு வந்து, பட்ட
ணம் அழிக்கப்பட்டதென்றான்.—தப்பினவன் ௨௨
வராததற்கு முன்னாள் சாயங்காலத்திலே கர்த்த
ருடைய கை என்மேல் இருந்து, அவன் காலமே
என்னண்டைக்கு வருமட்டும் என் வாயைத்
திறந்திருக்கப்பண்ணிற்று; நான் அப்புறம் மௌ
னமாயிராதபடிக்கு என்வாய் திறக்கப்பட்டது.—
அப்போது கர்த்தருடைய வார்த்தை எனக்கு ௨௩
உண்டாகி, அவர் சொன்னதாவது:—மனுபுத்தி ௨௪
ரனே, இஸ்ரவேல் தேசத்தின்மேல் வந்த அந்தப்

1 எசே. ௩. ௰௭-௰௯.—2 எசே. ௰௮. 3 ஏசே. ௰௮. ௩௧. ஏசா. ௫௫. ௭. ௰: ௨௧. ௩௨, ௨ பே. ௩. ௯. யோவே. ௨. ௰௨, ௰௩.-4 ஏசே. ௩. ௨௰. ௰௮, ௨௪.-5 ஏசே. ௰௮. ௨௭, ௩௩. ௨௫ எரே ௩௩. ௩௪.-8 எசே. ௰௮. ௨௫.—6 லூக் ௰௯. ௮.—7 ஏசா. ௨௫-௨௯.-9 ஏசே. ௨௪. ௨௬, ௨௭.

பாழ்க்கடிப்புகளின் குடிகள் சொல்லுகிறதேதெ
னில், ஆபிரகாம் ஒருவனாயிருந்து, தேசத்தைச்
சுதந்தரித்துக்கொண்டான்; நாங்கள் அநேகரா
யிருக்கிறோம்; எங்களுக்கு இந்தத் தேசம் சுதந்
தரமாகக் கொடுக்கப்பட்டது என்கிறார்கள்.
௨௫ ஆகையால் நீ அவர்களோடே சொல்லவேண்
டியதாவது: கர்த்தராகிய ஆண்டவர் உரைக்கிற
தேதெனில், நீங்கள் இரத்தத்தோடே கூடியதைத்
தின்று, உங்கள் நரகலான தேவர்களுக்கு நேராக
உங்கள் கண்களை ஏறெடுத்து, இரத்தத்தைச் சிந்
தியும், தேசத்தைச் சுதந்தரித்துக்கொண்டிருப்
௨௬ பீர்களோ?—நீங்கள் உங்கள் பட்டையத்தை நம்
பிநின்றும், நீங்கள் அருவருப்பானதைச்செய்து,
அவனவன் தனக்கு அடுத்தவனுடைய பெண்சா
தியைத் தீட்டுப்படுத்தியும், தேசத்தைச் சுதந்த
ரித்துக்கொண்டிருப்பீர்களோ என்கிறாரென்று
சொல்.
௨௭ நீ அவர்களோடே சொல்லவேண்டியதாவது:
கர்த்தராகிய ஆண்டவர் உரைக்கிறதேதெனில்,
பாழ்க்கடிப்புகளில் இருக்கிறவர்கள் பட்டை
யத்தால் விழுவார்கள்; வெளிகளில் இருக்கிற
வனை மிருகங்களுக்கு இரையாக ஒப்புக்கொ
டுப்போம்; கோட்டைகளிலும் கெபிகளிலும்
இருக்கிறவர்கள் பெருவாரிக்காய்ச்சலால் சா
வார்களென்று நம்முடைய சீவனைக்கொண்டு
௨௮ சொல்லுகிறோம்.—அப்படியே நாம் தேசத்தைப்
பாழும் அவாந்தரமுமாக்குவோம்; அப்போது
அதினுடைய பலத்தின் முக்கியம் ஒய்ந்துபோ
கும்; அப்போது இஸ்ரவேலின் பர்வதங்கள்
கடந்துபோவாரில்லாமல் அவாந்தரமாய்க் கிட
௨௯ க்கும்.—அவர்கள் செய்த அவர்களுடைய எல்
லா அருவருப்புகளின் நிமித்தமும் நாம் தேசத்
தைப் பாழும் அவாந்தரமுமாக்கும்போது, நாம்
கர்த்தரென்று அறிந்துகொள்ளுவார்கள் என்கிறா
ரென்று சொல்.
௩௰ இப்போதும் மனுபுத்திரனே, உன் சனத்தின்
புத்திரர் சுவர்கள் ஓரத்திலும் வாசற்படிகளிலும்
உன்னைக்குறித்துப் பேசி, கர்த்தரிடத்திலிருந்து
புறப்பட்ட வார்த்தை ஏதென்று வந்து கேளுங்க
ளென்று ஒருவரோடொருவரும் சகோதரனோ
௩௧ டே சகோதரனும் சொல்லி,—சனங்கள் வரு
கிறபிரகாரமாக உன்னண்டைக்கு வந்து, உனக்
குமுன்பாக நம்முடைய சனமாய் உளுக்கார்ந்து,
உன் வார்த்தைகளைக் கேட்கிறார்கள்; [1]ஆனால்
அவர்கள் அவைகளின்படி செய்யார்கள்; அவர்
கள் தங்கள் வாயினாலே இன்பமாய்ப் பேசுகி
றார்கள்; அவர்கள் இருதயமோ அவர்களுடைய
பொருளாசையைப் பின்பற்றிப்போகிறது.—
௩௨ இதோ, நீ அவர்களுக்கு நேர்த்தியான சந்தமும்
நல்லவாசிக்குதலுமாகிய இன்பமானபாட்டைப்
போல இருக்கிறாய்; அவர்கள் உன் வார்த்தை
களைக் கேட்கிறார்கள், ஆனால் அவைகளின்படி
௩௩ செய்யாதேபோகிறார்கள்.— ஆனால் இதோவரு
கிறதே, அது வருகையில் அப்போது தங்கள் நடு
விலே ஒரு தீர்க்கதரிசி இருந்தான் என்று அறிந்
துகொள்ளுவார்கள் என்றார்.

## ௩௪. அதிகாரம்.

௧. மேய்ப்பர்களைக் கண்டித்தது. ௭. அவர்கள்மேல் வரும் பராபரனுடைய நியாயதீர்ப்பு. ௰௧. அவருடைய மந்தையின்மேலிருக்கும் தேவ பராமரிப்பு. ௨௩. கிறிஸ்துவின் இராச்சியம்.

கர்த்தருடைய வார்த்தை எனக்கு உண்டாகி, அ ௧
வர் சொன்னதாவது:
மனுபுத்திரனே, இஸ்ரவேலின் மேய்ப்பருக்கு ௨
விரோதமாகத் தீர்க்கதரிசனம் உரை; நீ தீர்க்கதரி
சனம் உரைத்து, அவர்களோடே சொல்லவேண்
டியதாவது: மேய்ப்பருக்குக் கர்த்தராகிய ஆண்
டவர் சொல்லுகிறதேதெனில், [2]தங்களைத்தானே
மேய்க்கிற இஸ்ரவேலின் மேய்ப்பருக்கு ஐயோ!
மந்தையை மேய்ப்பர் மேய்க்கவேண்டாமோ?
நீங்கள் நெய்யைச் சாப்பிட்டு, ஆட்டுமயிரை ௩
உடுப்பாக்கிக்கொள்ளுகிறீர்கள்; கொழுப்பான
தை அடிக்கிறீர்கள்; மந்தையை மேய்க்காதேபோ
கிறீர்கள்.—நீங்கள் பலட்சயமானவைகளைத் திட ௪
ப்படுத்தாமலும், நசல்கொண்டவைகளைக் குண
மாக்காமலும், நசுக்கப்பட்டவைகளைக் காயங்
கட்டாமலும், துரத்துண்டவைகளைத் திரும்ப
வரப்பண்ணாமலும், காணாமல்போனவைகளைத்
தேடாமலும்போய், [3]வலாற்காரமும்கடூரமுமாய்
அவைகளை ஆண்டீர்கள்.—மேய்ப்பன் இல்லா ௫
ததினாலே அவைகள் சிதறுண்டுபோய், வெளி
யின் மிருகத்துக்கு எல்லாம் இரையாகி, சிதறவ
டிக்கப்பட்டன.—நம்முடைய ஆடுகள் சகல பர் ௬
வதங்களிலும் உயர்த்தியான சகல மேடுகளின்
மேலும் அலையுண்டு, பூமியின்மீதெங்கும் நம்மு
டைய ஆடுகள் சிதறித் திரிகின்றன; விசாரிக்கிற
வனுமில்லை, தேடுகிறவனுமில்லை.
ஆகையால் மேய்ப்பரே, கர்த்தருடைய வார்த் ௭
தையைக் கேளுங்கள்.—கர்த்தராகிய ஆண்டவ ௮
ராயிருக்கிற நாம் நமது சீவனைக்கொண்டு சொல்
லுகிறதாவது: மேய்ப்பன் இல்லாததினால் நம்மு
டைய ஆடுகள் சூறையாகி, நம்முடைய ஆடுகள்
வெளியின் மிருகத்துக்கு எல்லாம் இரையாய்ப்
போயினவே; நம்முடைய மேய்ப்பர் நம்மு
டைய ஆடுகளுக்காக விசாரிக்காமல்போய்,
மேய்ப்பர் மந்தையை மேய்க்காமல் தங்களைத்
தானே மேய்த்தார்களே. — ஆகையால் மேய்ப் ௯
பரே, கர்த்தருடைய வார்த்தையைக் கேளுங்
கள்.—கர்த்தராகிய ஆண்டவர் சொல்லுகிறதா ௰
வது: இதோ, நாம் மேய்ப்பருக்கு விரோதமாக
வந்து, நம்முடைய ஆடுகளை அவர்கள் கையிலே
கேட்டு, மேய்ப்பர் இனித் தங்களைத்தானே மேய்
க்காதபடிக்கு அவர்களை மந்தையை மேய்த்தோ
யப்பண்ணி, நம்முடைய ஆடுகள் அவர்களுக்கு
ஆகாரமாயிராதபடிக்கு அவைகளை அவர்கள்
வாய்க்குத் தப்பப்பண்ணுவோமென்று சொல்.
அதேதெனில் கர்த்தராகிய ஆண்டவர் சொல் ௰௧

1 எசே. ௰௪. ௧ ழு: ௨௰. ௧. ழு:—2 எசே ௰௪. ௨, ழு.
எரே. ௨௩ ௧. ழு:—3 ௧ பே. ௫. ௧.

லுகிறதாவது: இதோ, நாம், நாமே நம்முடைய
ஆடுகளுக்காக விசாரித்து, அவைகளைத் தேடிக்
௰௨ கொண்டிருப்போம். — ஒரு மேய்ப்பன் சிதறு
ண்ட தன்னுடைய ஆடுகளின் நடுவே இருக்கிற
நாளிலே தன் மந்தையைத் தேடிக்கொண்டிருக்
கிறதுபோலே [1]நாம் நம்முடைய ஆடுகளைத் தேடி,
அவைகள் மப்பும் மந்தாரமுமான நாளிலே
சிதறுண்டுபோன எல்லா இடங்களிலுமிருந்து
௰௩ அவைகளைத் தப்பிவரப்பண்ணி,—அவைகளைச்
சனசதளங்களிடத்திலிருந்து புறப்படவும் அ
வைகளைத் தேசங்களிலிருந்து சேரவும்பண்ணி,
அவைகளை அவைகளுடைய சீமையிலே கொ
ண்டுவந்து, அவைகளை இஸ்ரவேலுடைய பர்வ
தங்களின்மேலும் ஆறுகள் அண்டையிலும் தேசத்
தின் சகல வாசஸ்தலங்களிலும் மேய்ப்போம்.—
௰௪ அவைகளை [2]நல்ல மேய்ச்சலிலே மேய்ப்போம்;
இஸ்ரவேலுடைய உயர்ந்த பர்வதங்களில் அ
வைகளுடைய தொழுவம் உண்டாயிருக்கும்;
அங்கே அவைகள் நல்ல தொழுவத்தில் படுத்
துக்கொண்டு, இஸ்ரவேலுடைய பர்வதங்களின்
௰௫ மேல் புஷ்டியான மேய்ச்சலை மேயும். — நம்மு
டைய ஆடுகளை நாம் மேய்த்து, அவைகளை நாம்
மடக்குவோமென்று கர்த்தராகிய ஆண்டவர்
௰௬ சொல்லுகிறார். — நாம் காணாமல்போனதைத்
தேடி, துரத்துண்டதைத் திரும்பிவரப்பண்ணி,
நசுக்கப்பட்டதைக் காயங்கட்டி, நசல்கொண்
டதைத் திடப்படுத்தி, கொழுப்பும் வலாற்கார
முமாயிருக்கிறதையோவென்றால் அழிப்போம்;
நியாயமாய் அவைகளை மேய்ப்போம்.
௰௭ அதேதெனில் நம்முடைய மந்தையே, கர்த்
தராகிய ஆண்டவர் சொல்லுகிறதாவது: இதோ,
[3]நாம் ஆட்டுக்கும் ஆட்டுக்கும், ஆட்டுக்கடாக்க
ளுக்கும் வெள்ளாட்டுக்கடாக்களுக்கும் நியாயந்
௰௮ தீர்ப்போம்.—நீங்கள் நல்லமேய்ச்சலை மேய்ந்து,
உங்கள் மேய்ச்சல்களில் மீதியாயிருக்கிறதை
உங்கள் கால்களால் மிதித்துப்போடுகிறதும், தெ
ளிந்திருக்கிற தண்ணீரைக் குடித்து, மீதியாயிருக்
கிறதை உங்கள் கால்களால் குழப்பிப்போடுகிற
௰௯ தும், உங்களுக்குக் கொஞ்சக்காரியமோ?—நம்
முடைய ஆடுகள் உங்கள் கால்களால் மிதிக்கப்
பட்டதை மேயவும் உங்கள் கால்களால் குழப்
பப்பட்டதைக் குடிக்கவும்வேண்டுமோ?
௨௰ ஆகையால் கர்த்தராகிய ஆண்டவர் அவைக
ளோடே சொல்லுகிறதாவது: இதோ, நாம் நா
மே கொழுத்த ஆடுகளுக்கும் இளைத்த ஆடுகளுக்
௨௧ கும் நியாயந்தீர்ப்போம். — நீங்கள் பலவீனமா
யிருக்கிறவைகளை எல்லாம் புறம்பாக்கி, சிதறப்
பண்ணுமட்டுக்கும், அவைகளைப் பக்கத்தினா
லும் முன்னந்தொடையினாலும் தள்ளி உங்கள்
கொம்புகளினாலே முட்டுகிறபடியினாலே, —
௨௨ நாம் நம்முடைய ஆடுகளை இனிச் சூறையாகா
தபடிக்கு இரட்சித்து, ஆடுகளுக்கும் ஆடுகளுக்
கும் நியாயந்தீர்ப்போம்.

[4]அவைகளை மேய்க்கப்போகிற நம்முடைய ௨௩
பணிவிடைக்காரனாகிய தாவீது என்ற ஒரே மே
ய்ப்பனை நாம் அவைகளின்மேல் விசாரிப்பாயி
ருக்க எழுப்புவோம்; இவர் அவைகளை மேய்த்
து, இவரே அவைகளுக்கு மேய்ப்பராக இருப்
பார்.—கர்த்தராகிய நாம் அவர்களுக்குப் பராபர ௨௪
னாக இருப்போம்; நம்முடைய [5]பணிவிடைக்
காரனாகிய [6]தாவீதோவென்றால் அவர்கள் நடு
வில் [7]தலைவனாயிருப்பான்; கர்த்தராகிய நாம் இ
தைச் சொன்னோம்.—நாம் அவர்களோடு [8]சமா ௨௫
தானத்தின் உடம்படிக்கையைப்பண்ணி, பொல்
லாத மிருகங்களைத் தேசத்தில் இராதபடிக்கு
ஒழிப்போம்; அவர்கள் சுகமாய் வனாந்தரத்தில்
தாபரித்து, காடுகளில் நித்திரைபண்ணுவார்
கள். — நாம் அவர்களையும் நம்முடைய மேட் ௨௬
டின் சுற்றுப்புறங்களையும் ஆசீர்வாதமாக வைத்
து, ஏற்றகாலத்திலே மழையைச் சொரியப்பண்
ணுவோம்; அவைகள் [9]ஆசீர்வாதமான மழைக
ளாயிருக்கும்.-வெளியின் விருட்சங்கள் தங்கள் ௨௭
கனியைத் தரும்; பூமி தன் பலனைக் கொடுக்கும்;
அவர்கள் தங்கள் தேசத்தில் சுகமாயிருப்பார்
கள்; நாம் அவர்கள் நுகத்தடிக்கயிறுகளை அறுத்து,
அவர்களை அடிமைக்கொண்டவர்களின் கைக்கு
அவர்களை நீங்கலாக்கி விடுவிக்கும்போது, நாம்
கர்த்தரென்று அறிந்துகொள்ளுவார்கள்.—இனி ௨௮
அவர்கள் புறச்சாதிகளுக்குச் சூறையாவதில்லை;
பூமியின் மிருகங்கள் அவர்களைப் பட்சிப்பது
மில்லை; தத்தளிக்கப்பண்ணுவார் இல்லாமல்
சுகமாய்த் தங்குவார்கள்.—நாம் அவர்களுக்குக் ௨௯
கீர்த்தியான நாற்றை முளைத்து எழும்பப்பண்ணு
வோம்; அவர்கள் இனித் தேசத்திலே பஞ்சத்தால்
வாரிக்கொள்ளப்படுவதுமில்லை; இனிப் புறச்சா
திகளின் இலச்சையைச் சுமப்பதுமில்லை.—தங் ௩௰
கள் பராபரனாகிய கர்த்தராயிருக்கிற நாம் தங்க
ளோடேகூட இருக்கிறதையும், இஸ்ரவேல்
வீட்டாராகிய தாங்கள் நம்முடைய சனமாயிரு
க்கிறதையும், அவர்கள் அறிந்துகொள்ளுவார்க
ளென்று கர்த்தராகிய ஆண்டவர் சொல்லுகிறார்.
நம்முடைய மேய்ப்பின் ஆடுகளாகிய நம்மு ௩௧
டைய மந்தையாயிருக்கிற நீங்களோவெனில்
மனுஷர்; நாமோவெனில் உங்கள் பராபரனெ
ன்று கர்த்தராகிய ஆண்டவர் உரைக்கிறாரென்று
சொல்லென்றார்.

## ௩௫. அதிகாரம்.

௧. இஸ்ரவேலரைப் பகைத்ததற்காகச் சேயீர்பர்வதத்தின்மேல் வரும் நியாயத்தீர்ப்பு.

கர்த்தருடைய வார்த்தை எனக்கு உண்டாகி, அ ௧
வர் சொன்னதாவது:
மனுபுத்திரனே, நீ உன் முகத்தைச் [10]சேயீர்பர் ௨
வதத்துக்கு எதிராகத் திருப்பி அதற்கு விரோத
மாகத் தீர்க்கதரிசனம் உரைத்து, — அதற்குச் ௩
சொல்லவேண்டியதாவது: கர்த்தராகிய ஆண்ட
வர் உரைக்கிறதேதெனில், சேயீர்பர்வதமே,

1 மத். ௰௮ ௧௨, ௰௨. லூக். ௰௫. ௪. 4 சங். ௨௯. ௧. ஏசா. ௪௰ ௧ : ௰. ௰௧. ௰௪.
2 சங். ௨௩. ௨.-3 மத். ௨௫. ௩௨, ௩௩. ௧ பே. ௨. ௨௫.—5 ஏசா. ௪௨. ௧ ;
௫௨. ௰௩ : ௫௩. ௰௧.-6 எரே. ௩௰. ௯. 9 சங். ௬௮. ௯. ஏசா. ௪௪. ௩.-10 எசே.
7 ஏசா. ௫௫. ௪.—8 எசே. ௩௭. ௨௬. ௨௫. ௰௨-௰௪. எரே. ௪௯. ௭.௮.

இதோ, நாம் உனக்கு விரோதமாக வந்து, நமது
கையை உனக்கு விரோதமாக நீட்டி, உன்னைப்
௪ பாழும் அவாந்தரமும் ஆக்குவோம்.—உன் பட்
டணங்களை வனாந்தரமாக்கிப்போடுவோம்; நீ
பாழாய்ப்போவாய்; நாம் கர்த்தரென்று அறிந்து
௫ கொள்ளுவாய்.—நீ நித்திய பகையை வைத்து,
இஸ்ரவேல் புத்திரருடைய அக்கிரமம் நிறைவே
றுகையில் அவர்களுக்கு உண்டான ஆபத்தின்
காலத்திலே அவர்களைப் பட்டையத்தின் கூர்
மையினால் கரையப்பண்ணினபடியினாலே,
௬ நாம் உன்னை இரத்தமாக்குவோம்; இரத்தப்
பழி உன்னைப் பின்தொடருமென்று கர்த்தரா
கிய ஆண்டவராயிருக்கிற நாம் நமது சீவனைக்
கொண்டு சொல்லுகிறோம்; நீ இரத்தஞ்சிந்துத
லைப் பகைக்காதபடியினாலே இரத்தப்பழி உன்
௭ னைப் பின்தொடரும்.—நாம் சேயீர்பர்வதத்தைப்
பாழும் அவாந்தரமுமாக்கி, அதிலே போகிற
வர்களின் சஞ்சாரம் இல்லாதபடிக்குச் சங்காரஞ்
௮ செய்து,—அதின் பர்வதங்களைக் கொலையுண்
டவர்களாலே நிரப்புவோம்; உன் மேடுகளிலும்
உன் பள்ளத்தாக்குகளிலும் உன்னுடைய எல்
லா ஆற்றுக்கால்களிலும் பட்டையத்தால் வெட்
௯ டுண்டவர்கள் விழுவார்கள். — உன்னை நித்திய
அவாந்தரங்களாக்குவோம்; உன் பட்டணங்கள்
குடியேற்றுவிக்கப்படுவதில்லை; அப்படியே நாம்
கர்த்தரென்று அறிந்துகொள்ளுவார்கள்.

௰ இரண்டு சாதிகளும் இரண்டுதேசங்களும் என்
னுடையவைகளாகுமென்றும், [1]கர்த்தர் வசமாயி
ருந்த அவைகளைச் சுதந்தரித்துக்கொள்ளுவோ
௰௧ மென்றும் நீ சொல்லுகிறபடியினாலே,—நீ அவர்
களுக்கு விரோதமான பகையினால் செய்த உன்
னுடைய கோபத்துக்குத்தக்கதாகவும், உன்னு
டைய பொறாமைக்குத்தக்கதாகவும், நாம் செய்
வோமென்று கர்த்தராகிய ஆண்டவராயிருக்கிற
நாம் உன்னை நியாயந்தீர்க்கும்போது, அவர்களுக்
குள் நம்மை அதினால் அறியப்பண்ணுவோம்.—
௰௨ இஸ்ரவேலின் பர்வதங்கள் பாழாக்கிவிட்டு எங்
களுக்கு அனுபவமாகக் கொடுக்கப்பட்டன என்
று, நீ அவைகளுக்கு விரோதமாகச் சொன்ன
உன் நிஷ்டூரங்களை எல்லாம் கர்த்தராகிய நாம்
கேட்டோமென்று அப்போது அறிந்துகொள்
௰௩ வாய்.—நீங்கள் உங்கள் வாயினால் நமக்கு வி
ரோதமாகப் பெருமைபாராட்டி, நமக்கு விரோ
தமாக உங்கள் வார்த்தைகளைப் பெருகப்பண்ணி
னீர்கள்; அதை நாம் கேட்டோம்.

௰௪ தேசமெல்லாம் மகிழ்ந்ததற்கு ஈடாக உன்னைப்
பாழாக்குவோமென்று கர்த்தராகிய ஆண்டவர்
௰௫ சொல்லுகிறார்.—இஸ்ரவேல் வீட்டின் சுதந்தரம்
பாழாய்ப்போனதற்கு எப்படி மகிழ்ந்துகொண்
டாயோ அப்படி உனக்குச் செய்வோம்; சேயீர்
பர்வதமே, ஏதோமே, நீ முழுதும் பாழாவாய்;
அப்படியே நாம் கர்த்தரென்று அறிந்துகொள்
வார்களென்று உரைத்தாரென்று சொல்.

1 சங். ௮௩. ௰௨.—2 ஏசே. ௬. ௨.

## ௩௬. அதிகாரம்.

*௧. இஸ்ரவேல் தேசத்தை அலட்சியமாய் எண்ணி, இழிவுசெய்த அஞ்ஞானி அழிவினாலும், ௮. அதற்குப் பராபரன் பண்ணின வாக்குத்தத்தத்திலும், அத்தேசத்துக்கு ஆறுதலுண்டானது. ௰௬. இஸ்ரவேலர் தங்கள் பாவத்தினிமித்தம் விலக்கப்பட்டு, ௨௧. புண்ணியஞ்செய்யாமல் சேர்க்கப்படுவது. ௨௫. கிறிஸ்துவினுடைய இராச்சியத்தின் ஆசீர்வாதங்கள்.*

இப்போதும் மனுபுத்திரனே, நீ [2]இஸ்ரவேலின் ௧
பர்வதங்களைநோக்கித் தீர்க்கதரிசனம் உரைத்து,
சொல்லவேண்டியதாவது: இஸ்ரவேலின் பர்வ
தங்களே, கர்த்தருடைய வார்த்தையைக் கேளுங்
கள்.—கர்த்தராகிய ஆண்டவர் சொல்லுகிறதாவ ௨
து: பகைஞன் உங்களைக்குறித்து [3]ஆகாவென்றும்,
நித்திய மேடுகள் எங்கள் வசமான சுதந்தரமாயின
என்றும் சொல்லுகிறபடியினாலே,—நீ தீர்க்கதரி ௩
சனம் உரைத்து, சொல்லவேண்டியதாவது: கர்த்
தராகிய ஆண்டவர் உரைக்கிறதேதெனில், நீங்
கள் குறைச்சாதிகளின் வசமான சுதந்தரமாயி
ருக்கும்படிக்கு அவர்கள் உங்களைப் பாழாக்கி,
உங்களைச் சுற்றிலுமிருந்து விழுங்கினபடியினா
லும், நீங்கள் பேசுகிறவர்களுடைய உதடுகளின்
பேச்சும் சனத்தின் அவதூறும் ஆக்கப்பட்டப
டியினாலும், — இஸ்ரவேலின் பர்வதங்களாகிய ௪
நீங்கள் கர்த்தராகிய ஆண்டவருடைய வார்த்தை
யைக் கேளுங்கள்; பர்வதங்களுக்கும், மேடுகளு
க்கும், ஆறுகளுக்கும், பள்ளத்தாக்குகளுக்கும்,
பாழ்க்கடிக்கப்பட்ட அவாந்தரங்களுக்கும், வெ
றுமையாய் விடப்பட்ட பட்டணங்களுக்கும்
கர்த்தராகிய ஆண்டவர் சொல்லுகிறதாவது: சுற்
றிலுமிருக்கிற குறைச்சாதிகளுக்கு நீங்கள் சூ
றையும் பரியாசமுமாய்ப்போனபடியினாலே,—
கர்த்தராகிய ஆண்டவர் சொல்லுகிறதேதெனில், ௫
நம்முடைய தேசத்தைச் சூறையிட வெளியாக்
கும்படிக்கு அதை முழு இருதயத்தின் சந்தோ
ஷத்தோடும் நிஸ்காரமான மனதோடும் தங்களுக்
குச் சுதந்தரமாக நியமித்துக்கொண்ட குறைச்சா
திகளுக்கு விரோதமாகவும் நம்முடைய அக்கினி
யான எரிச்சலாலே பேசினோமென்று சத்திய
மாகச் சொல்லுகிறோம்.—ஆகையால் நீ இஸ்ர ௬
வேல் தேசத்தைக்குறித்துத் தீர்க்கதரிசனம் உரை
த்து, பர்வதங்களுக்கும், மேடுகளுக்கும், ஆறுக
ளுக்கும், பள்ளத்தாக்குகளுக்கும் சொல்லவே
ண்டியதாவது: கர்த்தராகிய ஆண்டவர் உரைக்கி
றதேதென்றால், இதோ, நீங்கள் சாதிகளின் இ
லச்சையைச் சுமந்தபடியினாலே நாம் நம்மு
டைய எரிச்சலினாலும் நம்முடைய உக்கிரத்தி
னாலும் பேசினோம்.—ஆனதுகொண்டு கர்த்தரா ௭
கிய ஆண்டவராயிருக்கிற நாம் [4]நமது கரத்தை
எடுத்துச் சொல்லுகிறதேதென்றால், உங்க
ளைச் சுற்றிலும் இருக்கிற சாதிகளே தங்களு
டைய இலச்சையைச் சுமப்பார்கள்.
இஸ்ரவேலின் பர்வதங்களாகிய நீங்களோ ௮
வென்றால், உங்கள் கொப்புகளைவிட்டு, நமது
சனமாகிய இஸ்ரவேலுக்கு உங்கள் கனிகளைக்

3 ஏசே. ௨௫. ௩.—4 ஏசே. ௨௰. ௫.

கொடுப்பீர்கள்; ஏனெனில் இவர்கள்வரச் சமீப
௯ மாயிருக்கிறார்கள் —ஏனெனில் இதோ,நாம்உங்க
ளுக்காக விசாரிப்பாயிருந்து,உங்களண்டைக்கு
நம்முடைய முகத்தைத் திருப்புவோம்; நீங்கள்
௰ பண்ணையாகி விதைக்கப்படுவீர்கள்.—நாம் உங்
கள்மேல் எல்லாம் இஸ்ரவேலுடைய வீட்டைத்
தின் மனுஷரையும் வர்த்திக்கப்பண்ணுவோம்;
பட்டணங்கள் குடியேற்றப்பட்டு, அவாந்தர
௰௧ மான தலங்கள் கட்டுவிக்கப்படும்.—உங்கள்மே
லே மனுஷரையும் மிருகசீவன்களையும் பெருகிப்
பலுகும்படிக்கு வர்த்திக்கப்பண்ணுவோம்; உங்
கள் பூருவநாட்களில் நீங்கள் இருந்த இருப்
பாக நாம் உங்களை ஸ்தாபித்து, உங்கள் முந்
தின நாள்களைப்பார்க்கிலும் நற்சீர் உண்டாக்
குவோம்; அப்படியே நாம் கர்த்தரென்று அறிந்
௰௨ துகொள்ளுவீர்கள். — நாம் உங்கள்மேலே நம
து சனமாகிய இஸ்ரவேலின் மனுஷரை நடமா
டப்பண்ணுவோம்; அவர்கள் உன்னைக் கை
யாளுவார்கள்; அவர்களுக்குச் சுதந்தரமாயிருப்
பாய்; நீ இனிமேல் அவர்களைச் சாகக்கொடுப்ப
தில்லை.
௰௩ கர்த்தராகிய ஆண்டவர் சொல்லுகிறதாவது:
உங்களை நீ மனுஷரைப் பட்சிக்கிற தேசமென்
றும், நீ உன் சாதிகளைச் சாகக்கொடுக்கிற தேச
மென்றும் மனுஷர் சொல்லுகிறபடியினாலே,—
௰௪ நீ இனிமேல் மனுஷரைப் பட்சிப்பதுமில்லை;
இனிமேல் உன் சாதிகளைச் சாகக்கொடுப்பது
மில்லை என்று கர்த்தராகிய ஆண்டவர் சொல்லுகி
௰௫ றார்.—நாம் இனிமேல் புறச்சாதிகளின் இலச்
சையை உன்னிடத்திலே கேட்கப்பண்ணுவது
மில்லை; நீ சனசதளங்களின் நிந்தையை இனி
மேல் சுமப்பதுமில்லை; நீ இனிமேல் உன் சாதி
களைச் சாகக்கொடுப்பதுமில்லையென்று கர்த்தரா
கிய ஆண்டவர் உரைக்கிறாரென்று சொல்
லென்றார்.
௰௬ பின்னையும் கர்த்தருடைய வார்த்தை எனக்கு
௰௭ உண்டாகி, அவர் சொன்னதாவது:—மனுபுத்திர
னே, இஸ்ரவேல் வீட்டார் தங்கள் சீமையிலே
குடியிருக்கையில் அதைத் தங்கள் மார்க்கத்தினா
லும் தங்கள் செய்கைகளினாலும் தீட்டுப்படுத்தி
னார்கள்; அவர்களுடைய மார்க்கம் நம்முடைய
முகத்துக்குமுன்பாக [1]தூரஸ்திரியின் தீட்டைப்
௰௮ போல இருந்தது. — ஆகையினாலே தேசத்தி
லே அவர்கள் சிந்தின இரத்தத்தின்நிமித்தமும்,
அதை அவர்கள் தங்கள் நரகலான தேவர்களால்
தீட்டுப்படுத்தினதின்நிமித்தமும் நாம் நம்முடை
௰௯ ய உக்கிரத்தை அவர்கள்மேல் ஊற்றி, — அவர்
களைப் புறச்சாதிகளுக்குள் சிதறவடித்தோம்; தே
சங்களில் தூற்றிப்போடப்பட்டார்கள்; அவர்
களுடைய மார்க்கத்தின்படியேயும் அவர்களு
டைய செய்கையின்படியேயும் அவர்களை நியா
௨௰ யந்தீர்த்தோம்.—தாங்கள் போன புறச்சாதிகளிட
த்திலே அவர்கள் வந்தபோது இவர்களோ கர்த்த
ருடைய சனமென்றும், தங்கள் தேசத்திலிருந்து
புறப்பட்டார்கள் என்றும், தங்களுக்குச் சொல்
லப்பட்டதினால் [2]அவர்கள் நம்முடைய பரி
சுத்தநாமத்தைப் பரிசுத்தக்குலைச்சலாக்கினார்
கள்.
ஆகையால் இஸ்ரவேல் வீட்டார் தாங்கள் வந் ௨௧
துசேர்ந்த புறச்சாதிகளிடத்திலே பரிசுத்தக்கொ
லைச்சலாக்கின [3]நம்முடைய பரிசுத்தநாமத்தின்
நிமித்தமாகவே இரங்குகிறோம். — ஆனதுகொ ௨௨
ண்டு நீ இஸ்ரவேல் வீட்டாருக்குச் சொல்ல
வேண்டியதாவது: கர்த்தராகிய ஆண்டவர் உரை
க்கிறதேதெனில், இஸ்ரவேல் வீட்டாரே, உங்
கள்நிமித்தம் அல்ல, நீங்கள் வந்துசேர்ந்த புறச்
சாதிகளிடத்தில் பரிசுத்தக்கொலைச்சலாக்கின
நம்முடைய பரிசுத்த நாமத்தின்நிமித்தமே நாம்
இப்படிச் செய்கிறோம்.—புறச்சாதிகளின் நடுவே ௨௩
நீங்கள் பரிசுத்தக்கொலைச்சலாக்கினதினாலே அ
வர்களுக்குள் பரிசுத்தம் அற்றுப்போன நம்மு
டைய பெரிய நாமத்தை நாம் பரிசுத்தம்பண்ணு
வோம்; அப்போது புறச்சாதிகள் தங்கள் கண்க
ளுக்குமுன்பாக நாம் உங்களுக்குள் பரிசுத்தம்
பண்ணப்படுகையில், நாம் கர்த்தரென்பதை அறி
ந்துகொள்ளுவார்களென்று கர்த்தராகிய ஆண்ட
வர் சொல்லுகிறார்.
நாம் உங்களைப் புறச்சாதிகளிடத்திலிருந்து ௨௪
அழைத்து, உங்களைச் சகல தேசங்களிலுமிருந்து
கூட்டிக்கொண்டு, உங்களை உங்கள் தேசத்திலே
வரப்பண்ணி,—நீங்கள் சுத்தமாகும்படிக்கு [4]உங் ௨௫
கள்பேரிலே சுத்தமான தண்ணீரைத் தெளிப்
போம்; நாம் உங்களுடைய எல்லா அசுத்தங்க
ளையும் உங்களுடைய எல்லா நரகலான தேவர்
களையும் நீக்கி உங்களைச் சுத்தமாக்கி,—[5]உங்க ௨௬
ளுக்கு நவமான இருதயத்தைக் கொடுத்து, உங்
கள் உள்ளத்திலே புதிதான ஆவியைக் கட்டளை
யிட்டு, கல்லான இருதயத்தை உங்கள் மாம்சத்
திலிருந்து எடுத்துப்போட்டு, சதையான இருத
யத்தை உங்களுக்குக் கொடுத்து,—உங்கள் உள் ௨௭
ளத்திலே [6]நம்முடைய ஆவியைத் தந்து, உங்களை
நமது [7]கட்டளைகளில் நடக்கவும் நமது நியாயங்
களைக் கைக்கொள்ளவும் அவைகளின்படி செய்
யவும்பண்ணுவோம். — உங்கள் பிதாக்களுக்கு ௨௮
நாம் கொடுத்த தேசத்திலே நீங்கள் குடியிருந்து.
[8]நமக்குச் சனமாயிருப்பீர்கள்; நாம் உங்களுக்குப்
பராபரனாயிருந்து,—உங்கள் அசுத்தங்களை எல் ௨௯
லாம் நீக்கி, உங்களை இரட்சித்து, உங்கள்பேரி
லே பஞ்சத்தைக் கட்டளையிடாமல் கோதுமை
யை வரவழைத்து, அதை வெகுத்துவமாக்கி,—நீங் ௩௰
கள் இனிமேல் சாதிகளுக்குள்ளே பஞ்சத்தின்
நிந்தையை அடையாதபடிக்கு, விருட்சங்களின்
கனிகளையும் வயலின் பலனையும் வெகுத்துவ
மாக்குவோம்.
[9]அப்போது நீங்கள் உங்கள் பொல்லாத மார்க் ௩௧
கங்களையும் நல்லதல்லாதிருந்த உங்கள் கிரியை

1 ௩ மோ. ௰௫.௰௯. ஷ. எசா. ௬௪.௬. 3 எசே. ௨௰.௰௯. ௪ மோ. ௰௪.௰௪ ஷ.
2 எசா ௫௨. ௫ ௨ரோ ௨.௨௪. 4 எசா. ௪௪. ௩ சகரி. ௰௩. ௧.
5 எசே. ௰௧. ௰௯.—6 நீதி. ௧. ௨௩. ௩௨. ௩௮.—9 எசே. ௰௬. ௬௧ ஷ.
7 எசே. ௬௭ ௨௪.—8 எரே. ௩௧ ௩௩: ௨௰. ௪௩. ஷ.

களையும் நினைத்து, உங்கள் அக்கிரமங்களின்
நிமித்தமும் உங்கள் அருவருப்புகளினிமித்த
௩௨ மும் உங்களைத்தானே அரோசிப்பீர்கள்.—உங்
கள்நிமித்தமாக நாம் அதைச் செய்யோமென்று
கர்த்தராகிய ஆண்டவர்சொல்லுகிறார்; இது உங்
களுக்கும் அறியப்பட்டிருக்கக்கடவது; இஸ்ர
வேல்வீட்டாரே, உங்கள் மார்க்கங்களினிமித்
தம் வெட்கி நாணுங்கள்.
௩௩ கர்த்தராகிய ஆண்டவர் சொல்லுகிறதாவது:
நாம் உங்கள் அக்கிரமங்களை எல்லாம் நீக்கி, உங்
களைச் சுத்தமாக்கும் காலத்திலே பட்டணங்க
ளைக் குடியேற்றுவிப்போம்; அவாந்தரமான தல
௩௪ ங்களும் கட்டுவிக்கப்படும். — பாழ்க்கடிக்கப்
பட்ட தேசம் கடக்கிற யாவருடைய பார்வைக்
கும் பாழாய்க்கிடந்ததற்குப் பதிலாகப் பயிரி
௩௫ டப்படும்.—பாழாய்க்கிடந்த இத்தேசமே ஏதேன்
தோட்டத்தைப்போலாயிற்றென்றும், அவாந்தர
மும் பாழும் நிர்மூலமுமாயிருந்த பட்டணங்கள்
அரணிப்பானவைகளும் குடியேறினவைகளு
மாய் இருக்கின்றன என்றும் சொல்லுவார்கள்.—
௩௬ [1]கர்த்தராகிய நாம் நிர்மூலமானவைகளைக் கட்டு
கிறோமென்றும், பாழானதைப் பயிர்நிலமாக்குகி
றோமென்றும், அப்போது உங்களைச் சுற்றிலும்
மீதியான சாதிகள் அறிந்துகொள்ளுவார்கள்;
[2]கர்த்தராகிய நாம் இதைச் சொன்னோம், இதைச்
செய்கிறவருமாயிருப்போம்.
௩௭ கர்த்தராகிய ஆண்டவர் சொல்லுகிறதாவது:
இன்னம் இஸ்ரவேல்வீட்டார், நாம் தங்களுக்
குக் கட்டளையிட நம்மைக் கேட்கும் விண்ணப்
பத்தை நாம் அங்கிகரித்து, மனுஷர் மந்தையைப்
போல அவர்களைப் பெருகப்பண்ணுவோம்.—
௩௮ பரிசுத்தம்பண்ணப்பட்ட ஆடுகளும் எருசலே
மிலே அதின் பண்டிகைகளில் வருகிற ஆடுக
ளும் எப்படித் திரளாயிருக்கின்றனவோ, அப்
படி அவாந்தரமாயிருந்த பட்டணங்கள் மனுஷ
ரின் மந்தையால் நிரம்பியிருக்கும்; அப்படி நாம்
கர்த்தரென்பதை அறிந்துகொள்ளுவார்களென்று
சொல்லென்றார்.

## ௩௭. அதிகாரம்.

௧. உலர்ந்த எலும்புகள் உயிர்த்தெழுந்ததினால், ௰௧. இஸ்ரவேலின் இறந்த நம்பிக்கை மறுபடியும் உண்டானது. ௰௫. இரண்டு கோல்கள் ஒன்றாய் இசைவதினால், ௰௮. யூதாவும் இஸ்ரவேலும் ஒன்றாய் இசைவதைக் காட்டினது. ௨௰. கிறிஸ்துவின் இராச்சியத்தைக்குறித்த வாக்குத்தத்தங்கள்.

௧ கர்த்தருடைய கை என்மேல் வந்து, கர்த்தர்
என்னை ஆவிக்குள் வெளியே கொண்டுபோய்,
எலும்புகளால் நிறைந்த ஒரு பள்ளத்தாக்கின் நடு
௨ மையத்தில் என்னை நிறுத்தி,—என்னை அவைக
ளின் ஓரமாய்ச் சுற்றிலும் கடக்கப்பண்ணினார்;
இதோ, பள்ளத்தாக்கின் வெட்டவெளியிலே அ
வைகள் மகா திரளாகக் கிடந்தன; இதோ, மெத்
த உலர்ந்ததுமாயிருந்தன.
௩ மனுபுத்திரனே, இந்த எலும்புகள் உயிர்க்கு
மோவென்று அவர் என்னைக் கேட்டார்; அதற்கு
நான், கர்த்தராகிய ஆண்டவரே, தேவரீர் அதை
அறிவீரென்றேன்.—அப்போது அவர் என்னோ ௪
டே சொன்னதாவது: நீ இந்த எலும்புகளைக்கு
றித்துத் தீர்க்கதரிசனம் உரைத்து, அவைகளைப்
பார்த்துச் சொல்லவேண்டியதாவது: உலர்ந்த
எலும்புகளே, கர்த்தருடைய வார்த்தையைக்
கேளுங்கள். — கர்த்தராகிய ஆண்டவர் இந்த ௫
எலும்புகளுக்குச் சொல்லுகிறதாவது: இதோ,
நாம் உங்களில் ஆவியைப் பிரவேசிக்கப்பண்
ணுவோம்; அப்போது உயிர்ப்பீர்கள். — நாம் ௬
உங்கள்பேரிலே நரம்புகளைக் கட்டளையிட்டு,
உங்கள்பேரிலே மாம்சமேற்றி, உங்கள்பேரிலே
தோலைப்போர்த்தி, உங்களில் ஆவியைக் கட்ட
ளையிடுவோம்; அப்போது உயிர்த்து, நாம் கர்த்தர்
என்றறிந்துகொள்ளுவீர்களென்று உரைக்கிறா
ரென்று சொல்லென்றார்.
எனக்குக் கற்பிக்கப்பட்டபடி நான் தீர்க்கதர ௭
ரிசனம் உரைத்தேன்; அப்போது நான் தீர்க்கதரி
சனம் உரைக்கையில் இரைச்சல் உண்டாயிற்று;
இதோ, அசைவுண்டாகி, எலும்புகள் ஒவ்வொன்
றும் தன்தன் எலும்போடே சேர்ந்துகொண்ட
து.—இதோ, அவைகள்பேரிலே நரம்புகளும் மாம ௮
சமும் ஏறின என்றும், அவைகளின்மேரிலே
மேற்புறமெங்கும் தோலைப்போர்த்தினாரென்றும்
கண்டேன்; ஆனால் அவைகளில் ஆவி இல்லா
திருக்கிறது. — அப்போது அவர் என்னோடே ௯
சொன்னதாவது: ஆவியைநோக்கித் தீர்க்கதரிச
னம் உரை; மனுபுத்திரனே, நீ தீர்க்கதரிசனம்
உரைத்து, ஆவியைநோக்கிச் சொல்லவேண்டி
யதாவது: கர்த்தராகிய ஆண்டவர் உரைக்கிறதே
தெனில், ஆவியே, நீ நாலுகாற்றுத்திசைகளிலு
மிருந்து வந்து, கொலையுண்ட இவர்கள் உயிர்க்
கும்படிக்கு இவர்களில் ஊது என்கிறாரென்று
சொல்லென்றார். — எனக்குக் கற்பிக்கப்பட்ட ௰
படி நான் தீர்க்கதரிசனம் உரைத்தேன்; அப்போ
து ஆவி அவர்களுக்குள் பிரவேசித்தது; அவர்கள்
உயிர்த்துத் தங்கள் கால்கள்மேல் நின்றார்கள்;
மகா திரள்சேனையாயிருந்தது.
அப்போது அவர் என்னோடே சொன்னதா ௰௧
வது: மனுபுத்திரனே, இந்த எலும்புகள் இஸ்ர
வேல்வீட்டார் அனைவருந்தானே; இதோ, எங்
கள் எலும்புகள் உலர்ந்தன; எங்கள் நம்பிக்கை
அழிந்தது: நாங்கள் அறுப்புண்டோம் என்கி
றார்கள்.
ஆகையால் நீ தீர்க்கதரிசனம் உரைத்து, அவர் ௰௨
களோடே சொல்லவேண்டியதாவது: கர்த்தரா
கிய ஆண்டவர் உரைக்கிறதேதெனில், இதோ,
நமது சனமே, நாம் உங்கள் பிரேதக்குழிகளைத்
திறந்து, உங்களை உங்கள் பிரேதக்குழிகளிலிரு
ந்து ஏறவும், உங்களை இஸ்ரவேல் சீமைக்கு வர
வும்பண்ணுவோம்.—நமது சனமே, நாம் உங்கள் ௰௩
பிரேதக்குழிகளைத் திறந்து, உங்களை உங்கள்
பிரேதக்குழிகளிலிருந்து ஏறப்பண்ணும்போது

1 ஓசே. ௯. ௧.—2 எசே. ௩௭ ௨௧.

நாம் கர்த்தரென்று அறிந்துகொள்ளுவீர்கள்.—
௰௪ நம்முடைய ஆவியை உங்களுக்குள் கொடுப்
போம், அதினால் உயிர்ப்பீர்கள்; நாம் உங்களை
உங்கள் சீமையிலும் வைப்போம்; அப்போது
நாம் கர்த்தரென்று அறிந்துகொள்ளுவீர்கள்; இ
தைச் சொன்னேம்; இதைச் செய்கிறவருமாய்
இருப்போம் என்று கர்த்தர் உரைக்கிறாரென்று
சொல்லென்றார்.

௰௫ பின்னேயும் கர்த்தருடைய வார்த்தை எனக்கு
௰௬ உண்டாகி, அவர் சொன்னதாவது:-இப்போதும்
மனுபுத்திரனே, நீ ஒரு கோலை வாங்கிக்கொண்
டு, அதிலே, யூதாவுக்கும் அதைச்சேர்ந்த இஸ்ர
வேல் புத்திரருக்கும் அடுத்தது என்று எழுதி,
பின்னொரு கோலை வாங்கிக்கொண்டு, அதிலே,
எப்பிராயீமுக்கும் அதைச் சேர்ந்த இஸ்ரவேல்
வீட்டார் அனைவருக்கும் அடுத்த யோசேப்பின்
௰௭ கோலென்று எழுதி,—அவைகள் உன் கையில்
ஒன்றாகும்படிக்கு அவைகளை உனக்கு ஒரு கோ
லாக ஒன்றோடொன்று இசை.

௰௮ இவைகள் உனக்கு என்ன அர்த்தம்கொள்ளு
மென்பதை எங்களுக்கு அறிவியாயோ என்று
உன் சனத்தின் புத்திரர் உன்னைக் கேட்டால்,—
௰௯ நீ அவர்களோடே சொல்லவேண்டியதாவது:
கர்த்தராகிய ஆண்டவர் உரைக்கிறதேதெனில்,
இதோ, எப்பிராயீமுக்கும் அதைச்சேர்ந்த இஸ்ர
வேல் கோத்திரங்களுக்கும் அடுத்த யோசேப்
பின் கோலை வாங்கி, இவைகளை அதினேடுங்
கூட யூதாவின் கோலோடே சேர்த்து, அவை
களை ஒரே கோலாக்குவோம்; அவைகள் நமது
கையில் ஒன்றாகுமென்கிறாரென்று சொல்.—
௨௰ சொல்லுகையில், நீ எழுதின கோல்கள் அவர்க
ளுடைய கண்களுக்குமுன்பாக உன் கையில்
இருக்கவேண்டும்

௨௧ நீ அவர்களோடே சொல்லவேண்டியதாவது:
கர்த்தராகிய ஆண்டவர் உரைக்கிறதேதெனில்,
இதோ, [1]நாம் இஸ்ரவேல் புத்திரரை அவர்கள்
போய்ச்சேர்ந்த சாதிகளிடத்திலிருந்து அழைத்
து, சுற்றிலுமிருந்து அவர்களைச் சேர்த்து, அவர்
௨௨ களை அவர்கள் சீமையிலே வரப்பண்ணி,-அவர்
களை இஸ்ரவேலின் பர்வதங்களாகிய தேசத்தி
லே [2]ஒரே சாதியாக்குவோம்; ஒரே இராசா அவர்
கள் எல்லாருக்கும் இராசாவாக இருப்பார்; அ
வர்கள் இனி இரண்டுசாதிகளாயிருப்பதில்லை;
அவர்கள் இனிமேலைக்கு இரண்டு இராச்சியங்
௨௩ களாகப் பிரிவதுமில்லை.—அவர்கள் இனித் தங்
கள் நரகலான தேவர்களினாலும் தங்கள் அருவ
ருப்புகளினாலும் தங்களுடைய சகல மீறுதல்க
ளினாலும் தங்களைத் தீட்டுப்படுத்துவதுமில்லை;
அவர்கள் பாவஞ்செய்த அவர்களுடைய சகல
வாசஸ்தலங்களுக்கும் நாம் அவர்களை நீங்க
லாக்கி இரட்சித்து, அவர்களைச் சுத்தம்பண்ணு
வோம், அப்போது [3]நமக்குச் சனமாக இருப்
பார்கள்; நாம் அவர்களுக்குப் பராபரனுமாக
இருப்போம்.

[4]நம்முடைய தாசனாகிய தாவீது அவர்கள்மேல் ௨௪
இராசாவாக இருப்பார்; ஒரே மேய்ப்பர் அவர்
கள் எல்லாருக்கும் இருப்பார்; [5]அப்போது அ
வர்கள் நமது நியாயங்களில் நடந்து, நமது கட்
டளைகளைக் கைக்கொண்டு, அவைகளின்படியே
செய்து,-நாம் நம்முடைய தாசனாகிய யாக்கோ ௨௫
புக்குக் கொடுத்ததும் உங்கள் பிதாக்கள் குடியி
ருந்ததுமான தேசத்திலே குடியிருப்பார்கள்;
அவர்களும் அவர்கள் பிள்ளைகளும் அவர்களு
டைய பிள்ளைகளின் பிள்ளைகளும் அதிலே என்
றென்றைக்கும் குடியிருப்பார்கள்; நம்முடைய
தாசனாகிய தாவீது என்றென்றைக்கும் அவர்க
ளுக்குப் பிரபுவாயிருப்பார்.

[6]நாம் அவர்களோடே சமாதானத்தின் உடம்ப ௨௬
டிக்கையைப்பண்ணுவோம்; அது அவர்களுக்கு
நித்திய உடம்படிக்கையாயிருக்கும்; நாம் அவர்
களை நிலைப்படுத்தி, அவர்களை வர்த்திக்கப்
பண்ணி, அவர்கள் நடுவிலே நம்முடைய பரிசுத்
தஸ்தலத்தை என்றென்றைக்கும் வைத்திருப்
போம்.—[7]நமது கூடாரம் அவர்களிடத்தில் இ ௨௭
ருக்கும், நாம் அவர்களுக்குப் பராபரனாக இருப்
போம்; அவர்கள் நமக்குச் சனமாக இருப்பார்
கள்.—அப்படியே நம்முடைய பரிசுத்தஸ்தலம் ௨௮
அவர்கள் நடுவிலே என்றென்றைக்கும் இருக்
கையில், நாம் இஸ்ரவேலைப் பரிசுத்தம்பண்ணு
கிற கர்த்தரென்று [8]சாதிகள் அறிந்துகொள்ளும்
என்கிறாரென்று சொல்லென்றார்.

## ௩௮. அதிகாரம்.

௧. கோகுவின் சேனையும், ௮. அவனுடைய பொருமையும், ௰௪. அவனுக்கு விரோதமாக வரும் பராபரனுடைய நியாயத்தீர்ப்பும் சொல்லப்பட்டது.

கர்த்தருடைய வார்த்தை எனக்கு உண்டாகி, அ ௧
வர் சொன்னதாவது:-மனுபுத்திரனே, மேசேக் ௨
தூபால் சாதிகளின் தலையான பிரபுவாயிருக்கிற
மாகோகு தேசத்தானாகிய [9]கோகுக்கு எதிராக நீ
உன் முகத்தைத் திருப்பி, அவனுக்கு விரோத
மாகத் தீர்க்கதரிசனம் உரைத்து,—சொல்லவேண் ௩
டியதாவது: கர்த்தராகிய ஆண்டவர் உரைக்கிற
தேதெனில், மேசேக் தூபால் சாதிகளின் தலை
யான பிரபுவாகிய கோகே, இதோ, நாம் உனக்கு
விரோதமாக வருவோம்.-நாம் உன்னைத்திருப்பி, ௪
[10]உன் தாடைகளில் துறடுகளைப் போட்டு, உன்
னையும் உன்னுடைய எல்லாச் சேனையையும்,
குதிரைகளையும், எல்லாருமாய்க் குறையற்ற மூஸ்
திப்பாக உடுத்திருக்கிற குதிரைக்காரரையும்,
பரிசையும் கேடகமுமுள்ள திரளான கூட்டத்
தையும் புறப்படப்பண்ணுவோம்; அவர்கள்
எல்லாரும் பட்டையங்களைப் பிடித்திருப்பவர்
கள்.— அவர்களுடனேகூட பெர்சியரும், எத்தி ௫
யோப்பியரும், பூத்தியரும் இருப்பார்கள்; அவர்
களெல்லாரும் கேடகம் பிடித்து, தலைச்சோடு

1 எசே. ௧௧. ௨௪.—2 ஓசே. ௧. ௰௧. ௨௧, ௨௪. யோவா. ௰. ௰௬.
3 எசே. ௧௧. ௨௮.—4 எசே. ௩௪. 5 எசே. ௧௧. ௨௭.-6 எசே. ௩௪. ௨௫.
7 ௨ கொரி. ௬. ௰௬. வெளி. ௨௧. ௩. வெளி. ௨௰. ௮.-10 எசே. ௨௯. ௪: ௩௯. ௨.
8 எசே. ௩௬. ௨௩.-9 எசே. ௩௯. ௧. ௬.

௬ தரித்துக்கொண்டிருப்பவர்கள்.—கோமேயரும்அ
தினுடைய எல்லா இராணுவங்களும் வடபுறங்
களிலுள்ள தோகர்மாவீட்டாரும் அவர்களுடை
ய எல்லா இராணுவங்களுமாகிய திரளான சன
சதளங்கள் உன்னுடனேகூட இருப்பார்கள்.

௭ நீயும் உன்னுடனேகூடின உன்னுடைய எல்
லாக் கூட்டமுமாய் [1]ஆயத்தப்பட்டு முஸ்திப்
புப்பண்ணிக்கொண்டு, நீ அவர்களுக்குக் கா
௮ வற்காரனுயிரு — அநேக நாளுக்குப் பிற்பாடு
விசாரிக்கப்படுவாய்; பட்டையத்துக்கு நீங்கித்
திரும்பி, அநேக சனசதளங்களிலிருந்து சேர்த்
துக்கொள்ளப்பட்டவர்களின் தேசத்திலே நீ [2]வ
ருஷங்களின் முடிவிலே வருவாய்; எப்போதும்
பாழ்க்கடிப்புக்குள்ளாயிருந்து, பிற்பாடோவெ
ளில் சனசதளங்களிலிருந்து புறப்படப்பண்
ணப்பட்டவர்கள் எல்லாருமாய்ச் சுகத்தோடே
குடியிருக்கும் இஸ்ரவேலுடைய பர்வதங்க
ளுக்கு விரோதமாகத்தானே; அவர்கள் எல்லாரு
௯ மாய் அஞ்சாமல் குடியிருக்கும்போது,—பாழ்க்
கடிக்கிற கொந்தளிப்பைப்போல ஏறிவருவாய்;
தேசத்தை மூட மப்புக்குச் சமானமாயிருப்பாய்;
நீயும் உன்னுடைய எல்லா இராணுவங்களும்
உன்னோடேகூட இருக்கும் திரளான சனசத
ளங்களுந்தானே.

௰ கர்த்தராகிய ஆண்டவர் சொல்லுகிறதாவது:
அந்நாளிலே சம்பவிப்பதேதெனில், பாழாய்க்
கிடந்து திரும்பக் குடியேற்றுவிக்கப்பட்ட ஸ்த
லங்களுக்கு விரோதமாகவும், சாதிகளிடத்திலி
ருந்து சேர்க்கப்பட்டதும், ஆடுகளையும் மாடுக
ளையும் ஆஸ்தியையும் சம்பாதித்து நடுத்தேசத்தில்
குடியிருக்கிறதுமான சனத்துக்கு விரோதமாக
௰௧ வும், நீ உன் கையைத் திருப்பும்படிக்கு,—உன்
இருதயத்தில் யோசனைகள் கிளம்பும்; நீ பொல்
௰௨ லாத நினைவை நினைப்பாய்.—நான் கொள்ளை
யிடவும், சூறையாடவும் கிராமங்களாகிய தேசத்
துக்கு விரோதமாய்ப் போயேறுவேன்; சாங்
கோபாங்கத்தோடே சுகமாய்க் குடியிருக்கிறவர்
களின்மேலே வருவேன்; அவர்கள் எல்லாரும்
அலங்கமில்லாமல் குடியிருக்கிறார்கள்; அவர்
களுக்குத்தாழ்ப்பாளுமில்லை, கதவுகளும் இல்லை
௰௩ யென்பாய்.—சேபா தேசத்தாரும் தேதான் தேசத்
தாரும், தர்ஷீசின் வர்த்தகரும் அதினுடைய இ
ளஞ்சிங்கங்களான அனைவரும் உன்னுடனே: நீ
கொள்ளையிட அல்லவோ வருகிறாயென்றும், நீ
சூறையாடி, வெள்ளியையும் பொன்னையும்
எடுத்துக்கொள்ளுகிறதற்கும், ஆடுகளையும் மாடு
களையும் ஆஸ்தியையும் பிடிக்கிறதற்கும், மெத்த
வும் கொள்ளையிடுகிறதற்கும் அல்லவோ உன்னு
டைய கூட்டத்தைக் கூட்டினாயென்றும் சொல்
லுவார்கள்.

௰௪ ஆகையால் மனுபுத்திரனே, நீ தீர்க்கதரிசனம்
உரைத்து, கோகுக்குச் சொல்லவேண்டியதா
வது: கர்த்தராகிய ஆண்டவர் உரைக்கிறதேதெ
னில், நமது சனமாகிய இஸ்ரவேல் சுகமாய்க்
குடியிருக்கிறஅக்காலத்திலே நீ அல்லவோ அதை
அறிந்து,—வடபுறங்களிலுள்ள உன் தானத்திலி ௰௫
ருந்து வருவாய்; நீயும் உன்னுடனேகூடத் திர
ளான சனசதளங்களுந்தானே; அவர்கள் பெரிய
கூட்டமும் திரளான சேனையுமாயிருந்து, எல்
லாரும் குதிரைகளின்மேல் ஏறுகிறவர்கள்.—நீ ௰௬
தேசத்தைமூட மப்புக்குச் சமானமாய் நமது சன
மாகிய இஸ்ரவேலுக்கு விரோதமாக ஏறிவரு
வாய்; வருஷங்களின் முடிவிலே இது சம்பவிக்
கும்; கோகே, சாதிகளின் கண்களுக்குமுன்பாக
உன்னிடத்தில் நாம் பரிசுத்தம் விளங்கப்படுகி
றதினாலே அவைகள் நம்மை அறியும்படிக்கு
உன்னை நமது தேசத்துக்கு விரோதமாக வரப்
பண்ணுவோம்.

உன்னை அவர்களுக்கு விரோதமாக வரப்பண் ௰௭
ணுவோமென்று பூர்வநாள்களில் வருஷங்களைக்
குறித்துத் தீர்க்கதரிசனம் உரைத்து இஸ்ரவேலின்
தீர்க்கதரிசிகளாகிய நம்முடைய ஊழியக்கார
ரைக்கொண்டு, நாம் அந்நாள்களிலே சொன்ன
வன் நீ அல்லவோ என்று கர்த்தராகிய ஆண்டவர்
சொல்லுகிறார்.—இஸ்ரவேல்தேசத்துக்கு விரோத ௰௮
மாகக் கோகு வரும்நாளாகிய அன்றைக்குச் சம்
பவிப்பதேதெனில், நம்முடைய உக்கிரம் நம்மு
டைய நாசியில் ஏறுமென்று கர்த்தராகிய ஆண்
டவர் சொல்லுகிறார்.—அந்நாளிலே இஸ்ரவேல் ௰௯
தேசத்திலே பெரிய அதிர்தல் உண்டாகி,—நம் ௨௰
முடைய பிரசன்னத்தினால் சமுத்திரத்து மச்சங்
களும், ஆகாசத்துப் பறவைகளும், வெளியின்
மிருகங்களும், தரையில் ஊருகிற சகல ஊர்வன
வைகளும், தேசமெங்கும் உள்ள சகல நரசீவன்
களும் அதிரும்; பர்வதங்கள் இடியும்; செங்குத்
தானவைகள் விழும், எல்லா மதில்களும் தரையி
லே விழுந்துபோமென்று நம்முடைய எரிச்சலி
லும் நம்முடைய சினத்தின் அக்கினியிலும் சத்
தியப்பிரமாணமாய்ச் சொல்லுகிறோம்.—நம்மு ௨௧
டைய எல்லாப் பர்வதங்களிலும் பட்டையத்
தை அவனுக்கு விரோதமாக வரவழைப்போ
மென்று கர்த்தராகிய ஆண்டவர் சொல்லுகிறார்;
அவனவன் பட்டையம் அவனவனுடைய சகோ
தரனுக்கு விரோதமாய் இருக்கும்.—பெருவாரிக் ௨௨
காய்ச்சலும் இரத்தமும் வழங்கும்படியாக நாம்
அவனோடே நியாயத்துக்குள் பிரவேசித்து,
அவன்மேலும் அவன் இராணுவங்களின்மேலும்
அவனோடிருக்கும் திரளான சனசதளங்களின்
மேலும் வெள்ளமாய் அடிக்கும் மழையையும்,
பருங்கல்மழையின் கல்லுகளையும், [3]அக்கினியை
யும் கந்தகத்தையும் வருஷிக்கப்பண்ணுவோம்

அப்படியே நாம் அநேக சாதிகளின் கண்களு ௨௩
க்குமுன்பாக நம்முடைய மகத்துவத்தையும் நம்
முடைய பரிசுத்தத்தையும் விளங்கப்பண்ணி,
அறியப்படுவோம்; அப்போது நாம் கர்த்ரென்று
அறிந்துகொள்ளுவார்கள்.

1 எசா. அ. ௯.—2 வெளி. ௨௰.௭-௯.

3 சங். ௰௧. ௬. வெளி. ௨௰. ௯.

## ௩௯. அதிகாரம்.

௧. கோகுவின்மேல் வரும் பராபரனுடைய நியாயத்தீர்ப்பும், ௮. இஸ்ரவேலின் செயமும், ௰௧. ஆமோன் கோகிலே கோகு புதைக்கப்படுவதும், ௰௭. பறவைகளின் விருந்தும் சொல்லப்பட்டது. ௨௧. இஸ்ரவேலர் தங்கள் பாவங்களுக்காக உபத்திரவப்பட்டு, நித்திய தயவோடே ஒன்றுச் சேர்க்கப்படுவது.

௧ இப்போதும் மனுபுத்திரனே, [1]நீ கோகுக்கு வி
ரோதமாகத் தீர்க்கதரிசனம் உரைத்து, சொல்ல
வேண்டியதாவது: கர்த்தராகிய ஆண்டவர் உரைக்
கிறதேதெனில், மேசேக்தூபால் சாதிகளின் தலை
யான பிரபுவாகிய கோகே, இதோ, நாம் உனக்கு
௨ விரோதமாக வருகிறோம்.—நாம் உன்னைத் திரு
ப்பி உன்னை ஆறு துறடுகளால் இழுத்து, உன்னை
வடபுறங்களிலிருந்து எழும்பவும இஸ்ரவேலு
௩ டைய பர்வதங்களில் வரவும்பண்ணி,— உன்
வில்லை உன் இடதுகையிலிருந்து போக்கடித்து,
உன் அம்புகளை உன் வலதுகையிலிருந்து விழப்
௪ பண்ணுவோம். — இஸ்ரவேலுடைய பர்வதங்
களில் விழுவாய்; நீயும் உன்னுடைய எல்லா
இராணுவங்களும் உன்னோடிருக்கிற சனசதளங்
களுந்தானே; சகலவித செட்டைகளுமுள்ள
உராஞ்சுகிற பட்சிகளுக்கும் வெளியின் மிருகங்
களுக்கும் உன்னை இரையாகக் கொடுப்போம்.—
௫ வெளியின் விசாலத்திலே விழுவாய்; ஏனெனில்
நாம் அதைச் சொன்னோமென்று கர்த்தராகிய
ஆண்டவர் உரைக்கிறார்.
௬ நாம் மாகோகிடத்திலும் தீவுகளில் சுகமாய்க்
குடியிருக்கிறவர்களிடத்திலும் அக்கினியை அ
னுப்புவோம்; அப்போது நாம் கர்த்தரென்று
௭ அறிந்துகொள்ளுவார்கள்.—இப்படி நாம் நமது
சனமாகிய இஸ்ரவேலின் நடுவிலே நம்முடைய
பரிசுத்தநாமத்தை அறியப்பண்ணுவோம்; நம்மு
டைய பரிசுத்தநாமத்தை இனி பரிசுத்தக்கொ
லைச்சலாக்கவொட்டோம்; அப்படியே புறச்சா
திகள் நாம் இஸ்ரவேலில் பரிசுத்தராகிய கர்த்த
௮ ரென்று அறிந்துகொள்ளுவார்கள்.-இதோ, அது
வந்தது; அது சம்பவித்தது என்று கர்த்தராகிய
ஆண்டவர் சொல்லுகிறார்; நாம் சொன்ன நாள்
இதுதானே.
௯ இஸ்ரவேலுடைய பட்டணங்களின் குடிகள்
வெளியே போய், [2]ஆயுதங்களிலும், கேடகங்க
ளிலும், பரிசைகளிலும், வில்லுகளிலும், அம்புக
ளிலும், வளைதடிகளிலும், ஈட்டிகளிலும் எடுத்து
எரிப்பார்கள்; ஏழுவருஷம் அவைகளில் எடுத்து
௰ எரிப்பார்கள்.-அவர்கள் வெளியிலிருந்து விறகு
கொண்டுவராமலும் காடுகளில் வெட்டாமலும்
ஆயுதங்களில் எடுத்தெரிப்பார்கள்; அவர்கள் தங்
களைக் கொள்ளையிட்டவர்களைக் கொள்ளையிட்டு,
தங்களைச் சூறையாடினவர்களைச் சூறையாடு
வார்களென்று கர்த்தராகிய ஆண்டவர் சொல்லு
கிறார்.
௰௧ அந்நாளில் சம்பவிப்பதேதென்றால், அங்கே
இஸ்ரவேல்தேசத்திலே கோகுக்குப் புதைக்கப்ப
டுகிற ஒரு ஸ்தலத்தைக் கொடுப்போம்; சமுத்தி
ரத்துக்குக் கிழக்கே வழிப்போகிறவர்களின் பள்
ளத்தாக்கைத்தானே; அது கடந்துபோகிறவர்க
ளின் மூக்கைப் பொத்திக்கொண்டுபோகப்பண்
ணும்; அங்கே கோகையும் அவனுடைய எல்லாச்
சேனையையும் புதைத்து, அதைக் கோகுடைய
சேனையின் பள்ளத்தாக்கென்பார்கள். — இஸ்ர ௰௨
வேல்வீட்டார், தேசத்தைச் சுத்தம்பண்ணும்ப
டிக்கு அவர்களைப் புதைத்துத்தீர ஏழுமாதம் செல்
லும். — தேசத்தின் சனமெல்லாம் புதைத்துக் ௰௩
கொண்டிருப்பார்கள்; நாம் மகிமைப்படும் அந்
நாளிலே அது அவர்களுக்குக் கீர்த்தியாக இருக்
குமென்று கர்த்தராகிய ஆண்டவர் சொல்லு
கிறார்.-தேசத்தின் விசாலத்தைச் சுத்தம்பண்ணி, ௰௪
அதில் கிடக்கும் குறைப்பிரேதங்களைப் புதைக்
கும்படிக்கு நித்தவேலையாய்த் தேசத்தில் சுற்றித்
திரியும் மனுஷரையும், சுற்றித்திரிகிறவர்களோ
டேகூடப் புதைக்கிறவர்களையும் பிரித்தெடுப்
பார்கள்; ஏழுமாதங்கள் முடிந்தபிற்பாடு இவர்
கள் தேடி விசாரிப்பார்கள்.—தேசத்தில் சுற்றித் ௰௫
திரிகிறவர்கள் திரிவார்கள்; மனுஷனின் எலும்
பை அவர்களில் ஒருவன் காணும்போது புதைக்
கிறவர்கள் அதைக் கோகுடைய சேனையின் பள்
ளத்தாக்கிலே புதைக்குமட்டும் அதினண்டையி
லே ஒரு குறிப்படையாளத்தை நாட்டுவான்.—
அங்கே ஊரின்பேரும் உண்டாகி, அது சேனைப் ௰௬
புரமென்னப்படும்; இப்படியே தேசத்தைச் சுத்
தம்பண்ணுவார்கள்.
இப்போதும் மனுபுத்திரனே, கர்த்தராகிய ௰௭
ஆண்டவர் சொல்லுகிறதாவது: [3]நீ சகலவித இற
குமுள்ள பட்சிகளுக்கும் வெளியில் இருக்கிற
சகல மிருகங்களுக்கும் சொல்லவேண்டியதே
தென்றால், நீங்கள் கூடிக்கொண்டு, இஸ்ரவே
லின் பர்வதங்களில் நாம் உங்களுக்காக அடிக்
கும் பெரிய பலியடிப்பாகிய நம்முடைய பலிய
டிப்புக்குச் சுற்றிலுமிருந்து வந்துசேர்ந்து, மாம்
சம் தின்று இரத்தங்குடியுங்கள்.—நீங்கள் பராக் ௰௮
கிரமசாலிகளின் மாம்சத்தைத் தின்று, பூமியினு
டைய பிரபுக்களின் இரத்தத்தைக் குடிப்பீர்கள்;
அவர்கள் எல்லாரும் பாசானிலே கொழுத்துப்
போன ஆட்டுக்கடாக்களுக்கும், ஆட்டுக்குட்டி
களுக்கும், வெள்ளாட்டுக்கடாக்களுக்கும், காளை
யெருதுகளுக்கும் சமானமானவர்கள்.—நாம் உங் ௰௯
களுக்காக அடிக்கும் நம்முடைய பலியடிப்பினு
லே நீங்கள் திருத்தியாகக் கொழுப்பைத்தின்று,
வெறியாக இரத்தங்குடித்து,—நமது பந்தியிலே ௨௰
குதிரைகளையும், வாகனங்களையும், பராக்கிரம
சாலிகளையும், சகல யுத்த ஆட்களையும் தின்று,
திருத்தியாவீர்களென்று கர்த்தராகிய ஆண்டவர்
உரைக்கிறார் என்பதைச் சொல்.
[4]இப்படி நமது மகிமையைப் புறச்சாதிக ௨௰௧
ளுக்குள்ளே விளங்கப்பண்ணுவோம்; நாம்
செய்த நமது நியாயத்தையும் அவர்கள்மேல் நாம்
போட்ட நமது கையையும் எல்லாச் சாதிகளும்
காணும். — அன்றுமுதற்கொண்டு நாளதுவரை ௨௰௨

1 ஏசே. ௩௮. ௨. ௩.—2 சங். ௪௬. ௰.

3 வெளி. ௰௯. ௰௭, ௰௮.—4 சங். ௪௬. ௧.

யிலே நாம் தங்கள் பராபரனாகிய கர்த்தரென்று
இஸ்ரவேல் வீட்டார் அறிந்துகொள்ளுவார்கள்.—
௨௩ இஸ்ரவேல்வீட்டார் தங்கள் அக்கிரமத்தின்நிமி
த்தமே சிறையிருப்பிலே கொண்டுபோகப்பட்
டார்கள் என்பதை அப்போது புறச்சாதிகள்
அறிந்து கொள்ளும்; ஏனெனில் அவர்கள் நமக்கு
விரோதமாய்த் துரோகம்பண்ணினபடியினாலே,
நாம் நமது முகத்தை அவர்களுக்கு மறைத்து, அ
வர்களை அவர்கள் சத்துருக்களின்கையில் ஒப்
புக்கொடுத்தோம்; அனைவரும் பட்டையத்தா
௨௪ லும் விழுந்தார்கள்.—அவர்களுடைய அசுத்தத்
துக்குத்தக்கதாகவும், அவர்கள் மீறுதல்களுக்குத்
தக்கதாகவும், நாம் அவர்களை நடப்பித்து, நமது
முகத்தை அவர்களுக்கு மறைத்தோம்.
௨௫ ஆனதுகொண்டு கர்த்தராகிய ஆண்டவர் சொல்
௨௬ லுகிறதாவது:—அவர்கள் தங்கள் இலச்சையை
யும், தாங்கள் சுகமாய்ப் பயப்படுத்துவார் இல்லா
மல், தங்கள் சீமையிலே குடியிருக்கையில் நமக்கு
விரோதமாய்ப்பண்ணின தங்களுடைய எல்லாத்
துரோகத்தையும் சுமந்துவந்தபிற்பாடு, நாம் யாக்
கோபின் சிறையிருப்பைத் திருப்பி, [1]இஸ்ரவேல்
வீடனைத்துக்கும் இரங்கி, நமது பரிசுத்தநாமத்
துக்காகப் பத்திவைராக்கியமாய் இருப்போம்.—
௨௭ நாம் அவர்களைச் சனசதளங்களிலிருந்து திரும்பி
வரப்பண்ணி, அவர்களை அவர்களுடைய பகை
ஞரின் தேசங்களிலிருந்து கூட்டிக்கொண்டு
வந்து, திரளான சாதிகளுடைய கண்களுக்கு
முன்பாக அவர்களில் மகிமை விளங்குகை
௨௮ யில்,—அப்போது தங்களைப் புறச்சாதிகளிடத்
தில் சிறையாகக் கொண்டுபோகப்பண்ணின
நாம், தங்களில் ஒருவனையும் அங்கே அப்புறம்
வைக்காமல், தங்களைத் தங்கள் சீமையிலே திரு
ம்பக் கூட்டிக்கொண்டுவந்தோமென்பதினாலே
நாம் தங்கள் பராபரனாகிய கர்த்தரென்று அறிந்
௨௯ துகொள்ளுவார்கள். — [2]நாம் இஸ்ரவேல் வீட்
டாரின்மேல் நம்முடைய ஆவியை ஊற்றின
போது நமது முகத்தை இனி அவர்களுக்கு மறை
யோமென்று கர்த்தராகிய ஆண்டவர் சொல்லு
கிறார் என்றார்.

## ௪௰. அதிகாரம்.

௧. தரிசனையின் காலத்தையும், முறைமையையும், முடிவையும், ௬. கிழக்குவாசலையும், ௨௰. வடக்குவாசலையும், ௨௪. தெற்குவாசலையும், ௩௨. கிழக்குவாசலையும், ௩௫. வடக்குவாசலையும், ௩௯. எட்டுப்பீடங்களையும், ௪௪. அறைகளையும், ௪௮. வீட்டு நடையையுங்குறித்தது.

௧ **நா**ங்கள் சிறையிருப்பிலே கொண்டுவரப்பட்டி
ருந்த இருபத்தைந்தாம் வருஷத்தின் துவக்கமான
முதலாம்மாதம் பத்தாந்தேதியாகிய அன்றே கர்த்
தருடைய கை என்மேல் வந்து, அவர் என்னை
அவ்விடத்துக்குக் கொண்டுபோனார்; [3]பட்ட
ணம் அழிக்கப்பட்டது: அப்போது பதினாலுவ
௨ ருஷமாயின.—தேவதரிசனைகளில் அவர் என்னை
இஸ்ரவேல் தேசத்துக்குக் கொண்டுபோய்,
என்னை மகா உயர்த்தியான ஒரு பர்வதத்தின்
மேல் நிறுத்தினார்; அதின்மேல் தெற்காக ஒரு பட்
டணம் கட்டியிருக்கிறதுபோலக் காணப்பட்
டது.

அவர் என்னை அங்கே கொண்டுபோனார்; ௩
இதோ, அங்கே ஒரு புருஷன் இருந்தார்; அவரு
டைய உருவம் வெண்கல உருவமாக இருந்
தது; அவர்கையில் சணற்கயிறும் ஒரு அளவு
கோலும் இருந்தன; அவர் வாசலிலே நின்றார்.—
அந்தப் புருஷன் என்னோடே சொன்னதாவது: ௪
மனுபுத்திரனே, [4]நீ கண்ணாரப்பார்த்து, காதாரக்
கேட்டு, நாம் உனக்குக் காண்பிப்பதெல்லாவற்
றின்பேரிலும் உன் மனதை வை; ஏனெனில்
உனக்கு அதைக் காண்பிக்கும்படிக்கு இங்கே
கொண்டுவரப்பட்டாய்; நீ காண்பதை எல்லாம்
இஸ்ரவேல் வீட்டாருக்கு அறிவியென்றார். —
இதோ, வீட்டுக்குப் புறம்பே சுற்றிலும் ஒரு மதில் ௫
இருந்தது; அந்தப் புருஷன் கையிலோவென்றால்
ஆறுமுழநீளமான அளவுகோல் இருந்தது; ஒவ்
வொருமுழம் முழத்திலும் நாலுவிரற்கடை அதி
கமானது; அவர் அது கட்டியிருந்த அகலத்தை
ஒரு கோலாகவும் உயர்த்தியை ஒரு கோலாகவும்
அளந்தார்.

பிற்பாடு அவர் கீழ்த்திசைக்கு எதிரான ஒலிமு ௬
கவாசலுக்கு வந்து, அதின் படிகளின்மேல் ஏறி,
வாசற்படியை ஒரு கோல் அகலமாகவும், மறு
வாசற்படியை ஒரு கோல் அகலமாகவும் அளந்
தார். — ஒவ்வொரு அறை ஒரு கோல் நீளமும் ௭
ஒரு கோல் அகலமுமாயிருந்தது; அறைவீடுகளு
க்கு நடுவே ஐவைந்துமுழம் விட்டிருந்தது; வாச
லின் சாலையருகே உள்வாசற்படி ஒரு கோலா
யிருந்தது.—வாசலின் சாலையையும் உள்ளே ஒரு ௮
கோலாக அளந்தார்.—பிறகு வாசலின் சாலையை ௯
எட்டுமுழமாகவும், அதின் தூணாதாரங்களை இர
ண்டுமுழமாகவும் அளந்தார்; வாசலின் உட்சாலை
இதுதானே.—கீழ்த்திசைக்கெதிரான வாசலின் ௰
அறைகள் இந்தண்டை மூன்றும் அந்தண்டை
மூன்றுமாயிருந்தன; அவைகள் மூன்றுக்கும் ஒரு
அளவும் இந்தண்டையும் அந்தண்டையும் இருந்த
தூணாதாரங்களுக்கு ஒரு அளவும்தானே.—பிறகு ௰௧
வாசலுடைய நடையின் அகலத்தைப் பத்துமுழ
மாகவும் வாசலின் நீளத்தைப் பதின்மூன்றுமுழ
மாகவும் அளந்தார். — அறைகளுக்குமுன்னே ௰௨
இந்தண்டை ஒருமுழ எல்லையும் அந்தண்டை
ஒருமுழ எல்லையும் இருந்தன; ஒவ்வொரு அறை
இந்தண்டைக்கு ஆறுமுழமும் அந்தண்டைக்கு
ஆறுமுழமுமாயிருந்தது. — பிற்பாடு வாசலில் ௰௩
இருந்த அறையின் மெத்தைதுவக்கி அந்த அறை
யின் மெத்தைமட்டுக்கும் இருபத்தைந்துமுழ
மாக அளந்தார்; கதவுக்கு எதிரே கதவு இருந்
தது. — தூணாதாரங்களையோ அறுபதுமுழமாக ௰௪
அளவிட்டார்; இந்தத் தூணாதாரங்கள் அருகே
சுற்றிலும் ஒலிமுகவாசலின் முற்றம் இருந்தது.—
உட்பிரவேசிக்கிற ஒலிமுகவாசலின் முகப்புத் ௰௫
துவக்கி, உட்புறமான வாசலுடைய சாலையின்

1 உரோ. ௰௧. ௨௬.—2 ஏசே. ௩௬. ௨௫. யோவே. ௩. ௧.

3 ஏசே. ௩௩. ௨௧.—4 ஏசே. ௪௪. ௫.

முகப்புமட்டுக்கும் ஐம்பதுமுழம் இருந்தது. —
௰௬ வாசலுக்கு உட்புறமாகச் சுற்றிலும் அறைகளுக்
கும் அவைகளின் தூணுதாரங்களுக்கும் ஒடுக்க
மான பலகணிகள் இருந்தன; சாலைகளிலும் அப்
படித்தானே; உட்புறமாய்ச் சுற்றிலும் அந்தப்
பலகணிகளும் தூணுதாரங்களில் பேரீந்துகளும்
இருந்தன.

௰௭ பிற்பாடு என்னை வெளிமுற்றத்துக்கு அழைத்
துப்போனார்; இதோ, அறைவீடுகளும், முற்றத்
திலே சுற்றிலும் படுத்திருக்கிற தளவரிசையும்
இருந்தன; முப்பது அறைவீடுகள் அந்தத் தளவ
௰௮ ரிசையில் இருந்தன.—வாசலுக்குப் பக்கமும் வா
சல்களின் நீளத்துக்கு எதிருமான அந்தத் தளவ
௰௯ ரிசை தாழ்வான தளவரிசையாயிருந்தது.—தாழ்
வானவாசலின் முகப்புத்துவக்கி, உள்முற்றத்
தினுடைய புறமுகப்புமட்டுமுள்ள விசாலத்தை
யோவென்றால் கிழக்கேயும் வடக்கேயும் நூறு
நூறு முழகமாக அளந்தார்.

௨௰ வெளிமுற்றத்துக்கு அடுத்த வடதிசைக்கு எதி
ரான வாசலின் நீளத்தையும் அகலத்தையும் அளந்
௨௧ தார்.—இந்தண்டை மூன்றும் அந்தண்டை மூன்
றுமாகிய அதின் அறைகளும் அதின் தூணுதாரங்
களும் அதின் சாலைகளும் முந்தினவாசலின் அள
வுக்குச் சரியாயிருந்தன; அதின் நீளம் ஐம்பது
முழமும், அகலம் இருபத்தைந்து முழமுமான
௨௨ து.—அதின் பலகணிகளும் அதின் சாலைகளும் அ
தின் பேரீந்துகளும் கீழ்த்திசைக்கு எதிரான வா
சலின் அளவுக்குச் சரியாயிருந்தன; ஏழுபடிக
ளால் அதற்கு ஏறுகிறது; அதின் சாலைகள் அவை
௨௩ களுக்கு முன்னாக இருந்தன. — வடதிசையும்
கீழ்த்திசையுமான ஒவ்வொரு வாசலுக்கு எதி
ராக உள்முற்றத்துக்கும் வாசல்கள் இருந்தன;
ஒரு வாசல்துவக்கி மற்ற வாசல்மட்டும் நூறுமுழ
மாக அளந்தார்.

௨௪ பிறகு என்னைத் தென்திசைக்கு அழைத்துக்
கொண்டுபோனார்; இதோ, தென்திசைக்கு எதி
ரான வாசலும் இருந்தது; இதின் தூணுதாரங்களை
யும், இதின் சாலைகளையும் அந்த அளவுக்குச் சரி
௨௫ யாக அளந்தார்.—அந்தப் பலகணிகளுக்குச் சரி
யாக இதற்கும் இதின் சாலைகளுக்கும் பலகணி
கள் சுற்றிலும் இருந்தன; நீளம் ஐம்பதுமுழமும்
அகலம் இருபத்தைந்துமுழமுமாயிருந்தன. —
௨௬ அதில் ஏறுகிறதற்கு ஏழுபடியும் அதற்கு முன்
னாக அதின் சாலைகளும் இருந்தன; அதின் தூணு
தாரங்களில் அதற்குப் பேரீந்துகளும் ஒன்று இந்
தண்டையும் ஒன்று அந்தண்டையுமாயிருந்
௨௭ தன. — உள்முற்றத்துக்கும் ஒரு வாசல் தென்தி
சைக்கு எதிராக இருந்தது; தென்திசைக்கு ஒரு
வாசல்துவக்கி மற்ற வாசல்மட்டும் நூறுமுழமாக
அளந்தார்.

௨௮ பிறகு அவர் தெற்குவாசலால் என்னை உள்முற்
றத்துக்கு அழைத்துப்போய், தெற்குவாசலை
௨௯ அந்த அளவுக்குச் சரியாக அளந்தார்.—இதின்
அறைகளும் இதின் தூணுதாரங்களும் இதின்
சாலைகளும், அந்த அளவுக்குச் சரியாக இருந்
தன; இதற்கும் இதின் சாலைகளுக்கும் பலகணி
கள் சுற்றிலும் இருந்தன; நீளம் ஐம்பதுமுழமும்
அகலம் இருபத்தைந்துமுழமுமாயிருந்தது. —
இருபத்தைந்துமுழ நீளமும் ஐந்துமுழ அகலமு ௩௰
மான சாலைகள் சுற்றிலும் இருந்தன. — அதின் ௩௧
சாலைகள் வெளிமுற்றத்தில் இருந்தன; அதின்
தூணுதாரங்களில் பேரீந்துகளும் இருந்தன; அ
தில் ஏறுகிற படிகள் எட்டு.

பிற்பாடு அவர் கீழ்த்திசை வழியாலே என்னை ௩௨
உள்முற்றத்துக்கு அழைத்துப்போய், இந்த வாச
லை அந்த அளவுக்குச் சரியாக அளந்தார்.—இதின் ௩௩
அறைகளும் இதின் தூணுதாரங்களும் இதின் சா
லைகளும் அந்த அளவுகளுக்குச் சரியாக இருந்
தன; இதற்கும் இதின் சாலைகளுக்கும் பலகணி
கள் சுற்றிலும் இருந்தன; நீளம் ஐம்பதுமுழமும்
அகலம் இருபத்தைந்துமுழமுமாயிருந்தது,—அ ௩௪
தின் சாலைகள் வெளிமுற்றத்தில் இருந்தன;
அதின் தூணுதாரங்களில் இந்தண்டையும் அந்த
ண்டையும் பேரீந்துகளும் இருந்தன; அதில்
ஏறுகிற படிகள் எட்டு.

பிற்பாடு அவர் என்னை வடக்குவாசலுக்கு அ ௩௫
ழைத்துப்போய், அந்த அளவுக்குச்சரியாய் அளந்
தார்.—இதின் அறைகளும் இதின் தூணுதாரங்க ௩௬
ளும் இதின் சாலைகளும் அப்படித்தான்; இதற்
குப் பலகணிகளும் சுற்றிலும் இருந்தன; நீளம்
ஐம்பதுமுழமும் அகலம் இருபத்தைந்து முழமு
மாயிருந்தது.—அதின் தூணுதாரங்கள் வெளிமுற் ௩௭
றத்தில் இருந்தன; அதின் தூணுதாரங்களில் இந்
தண்டையும் அந்தண்டையும் பேரீந்துகளும்
இருந்தன; அதில் ஏறுகிற படிகள் எட்டு.

அதின் அறைகளும் அதின் கதவுகளும் வாசல் ௩௮
களின் தூணுதாரங்களுக்குள்ளே இருந்தன; அங்
கே தகனபலியைக் கழுவுவார்கள். — வாசலின் ௩௯
சாலையிலோவென்றால் இந்தண்டை இரண்டு
பீடங்களும் அந்தண்டை இரண்டு பீடங்களும்
அவைகளின்மேல் தகனபலியையும் பாவம்
போக்கும்பலியையும் குற்றம்போக்கும் பலியை
யும் அடிப்பதற்காக இருந்தன.—வடக்குவாச ௪௰
லுக்குள் பிரவேசிக்கிறதற்கு ஏறிப்போகிற வெ
ளிப்புறத்திலே இரண்டு பீடங்களும், வாசலின்
சாலையிடத்திலுள்ள மறுபுறத்திலே இரண்டு பீட
ங்களும் இருந்தன.—வாசலின் புறமாய் இந்தண் ௪௧
டை நாலு பீடங்களும் அந்தண்டை நாலுபீட
ங்களும் ஆக எட்டுப்பீடங்கள் இருந்தன; அவை
களின்மேல் பலிகளை அடிப்பார்கள்.—தகனப ௪௨
லிக்கடுத்த நாலு பீடங்கள் வெட்டின கல்லாயி
ருந்தன; ஒன்றரைமுழ நீளமும், ஒன்றரைமுழ
அகலமும், ஒருமுழ உயரமுமாயிருந்தன; அவை
களின்மேல் தகனபலிகளையும் மற்றப்பலிகளை
யும், அடிக்கிற ஆயுதங்களையும் வைப்பார்கள்.—
நாலு விரற்கடையான முளைகள் உள்ளே சுற்றி ௪௩
லும் வரிசையாய் அடிக்கப்பட்டிருந்தன; செ
லுத்தும்பலிகளின் மாம்சமோ பீடங்களின்மேல்
வைக்கப்படும்.

௪௪ உள்முற்றத்திலே உள்வாசலுக்குப் புறம்பா
கப் பாடுவான்களின் அறைவீடுகள் இருந்தன; அ
வைகளில் வடக்குவாசலின் பக்கமாக இருந்த
வைகள் தென்திசைக்கு எதிராகவும், கிழக்குவா
சல்பக்கமாக இருந்த வேறொரு வரிசை வடதி
௪௫ சைக்கு எதிராகவும் இருந்தன.—அவர் என்னோ
டே சொன்னதாவது: தென்திசைக்கு எதிராயி
ருக்கிற இந்த அறைவீட்டின் காவலைக் காக்கிற
௪௬ ஆசாரியர்களுடையது. — வடதிசைக்கு எதிரா
யிருக்கிற அறையோவென்றால், பலிபீடத்தின்
காவலைக்காக்கிற ஆசாரியர்களுடையது; இவர்
கள் லேவியின் புத்திரரில் கர்த்தரண்டையிலே
அவருக்கு ஆராதனைசெய்கிறதற்காகச் சேருகிற
சாதோக்கின் புத்திரர் என்றார்.
௪௭ அவர் முற்றத்தை நூறுமுழ நீளமாகவும் நூறு
முழ அகலமாகவும் அளந்தார்; அது சதுரமானது;
பலிபீடமோவெனில் வீட்டுக்குமுன்னே இருந்
தது.
௪௮ பிற்பாடு அவர் என்னை வீட்டின் சாலைக்குஅ
ழைத்துப்போய், சாலையின் தூணுதாரத்தை இந்
தண்டை ஐந்துமுழமும் அந்தண்டை ஐந்துமுழ
முமாக அளந்தார்; வாசலின் அகலம் இந்தண்
டை மூன்றுமுழமும் அந்தண்டை மூன்றுமுழ
௪௯ முமாயிருந்தது.—சாலையின் நீளம் இருபதுமுழ
மும், அகலம் பதினொருமுழமுமானதே; ஏறிப்
போகிற படிகள் அதற்கு இருந்தன; தூணுதாரங்
களிலே இந்தண்டை ஒரு தூணும் அந்தண்டை
ஒரு தூணும் இருந்தன.

## ௪௧. அதிகாரம்.

௧. தேவாலயத்தின் அளவுகளும் பிரிவுகளும், அறைகளும், ஆபரணங்களும் சொல்லப்பட்டது.

௧ பிற்பாடு அவர் என்னைத் தேவாலயத்திற்கு அ
ழைத்துப்போய், தூணுதாரங்களை இந்தண்டை
ஆறுமுழ அகலமும் அந்தண்டை ஆறுமுழ அக
லமுமாக அளந்தார்; அது கூடாரத்தின் அகலம்.-
௨ வாசல் நடையின் அகலம் பத்துமுழமும் வாசல்
நடையின் பக்கங்கள் இந்தண்டை ஐந்துமுழ
மும் அந்தண்டை ஐந்துமுழமுமாயிருந்தன;
அதின் நீளத்தை நாற்பதுமுழமும் அகலத்தை
இருபதுமுழமுமாக அளந்தார்.
௩ பிற்பாடு அவர் உள்ளுக்குப் போய், வாசல்
நடையின் தூணுதாரங்களை இரண்டுமுழமாகவும்
வாசல் நடையை ஆறுமுழமாகவும் வாசல் நடை
யின் அகலத்தை ஏழுமுழமாகவும் அளந்தார்.—
௪ பிறகு அவர் தேவாலயத்தின் தலையிலே அதின்
நீளத்தை இருபதுமுழமும், அதின் அகலத்தை
இருபதுமுழமுமாக அளந்து, என்னுடனே: இது
பரிசுத்தத்துக்குப் பரிசுத்தஸ்தலம் என்றார்.
௫ பிற்பாடு அவர் வீட்டின் சுவரை ஆறுமுழமா
கவும், வீட்டைச் சுற்றிலும் இருந்த பக்கக்கட்டி
னுடைய அகலத்தை நாலுமுழமாகவும் அளந்
௬ தார்.—இந்தப் பக்கக்கட்டுகளோவென்றால் பக்
கக்கட்டின்மேல் பக்கக்கட்டானவரிசைகளாய்
முப்பத்துமூன்று இருந்தன; அவைகள் வீட்டின்
சுவருக்குள் ஊன்றியிராமல், பக்கக்கட்டுகளுக்
காகச் சுற்றிலும், அவைகள் ஊன்றும்படிக்கு
வீட்டுக்கு அடுத்திருந்த ஒட்டுச்சுவரிலே பாய்ந்
தது.—உயர உயரச் சுற்றிலும் பக்கக்கட்டுகளுக்கு ௭
அகலமுண்டாயிருந்தது; ஏனெனில் வீட்டைச்
சுற்றிலும் உயரஉயர வீட்டினுடைய சுற்று இருந்
தது; ஆனதுகொண்டு உயர அதிக அகலம் உள்
ளே இருந்தது; இப்படியே கீழ்நிலையிலிருந்து
நடுநிலைவழியாய் மேல்நிலைக்கு ஏறுகிறது.—மா ௮
ளிகைக்கு இருந்த உயரத்தையும் சுற்றிலும் பார்த்
தேன்; பக்கக்கட்டுகளின் அஸ்திபாரங்கள் ஆறு
பெரியமுழமாகிற ஒரு முழக்கோலின் உயர்த்தி
யாயிருந்தன.
புறம்பே பக்கக்கட்டுக்கு இருந்த சுவரின் அக ௯
லம் ஐந்துமுழமானது; வீட்டுக்கு இருக்கும் பக்
கக்கட்டுகளின் மாளிகையிலே வெறுமையாய்
விட்டிருந்த இடங்களும் அப்படித்தான். —
வீட்டைச்சுற்றிலும் அறைவீடுகளுக்கு நடுவாக ௰
இருந்த விசாலம் இருபதுமுழமாயிருந்தது. —
பக்கக்கட்டினுடைய வாசல்நடைகள், வெறு ௰௧
மையாய் விட்டிருந்த இடங்களிலிருந்து, ஒருவா
சல்நடை வடக்கேயும் ஒரு வாசல்நடை தெற்
கேயும் இருந்தன; வெறுமையாய் விட்டிருந்த
இடங்களின் விசாலம் சுற்றிலும் ஐந்துமுழங்க
ளாய் இருந்தது.
மேற்றிசைத்திக்கிலே வகுப்பின்முன்னிருந்த ௰௨
மாளிகைமட்டும் அகலம்எழுபதுமுழமும், மாளி
கையினுடைய சுவரின் அகலம் சுற்றிலும் ஐந்து
முழமும், அதினுடைய நீளம் தொண்ணூறுமுழ
முமாயிருந்தது.—அவர் வீட்டை நூறுமுழ நீள ௰௩
மாகவும், வகுப்பையும் மாளிகையையும் அதின்
சுவர்களையும் நூறுமுழ நீளமாகவும் அளந்தார்.—
வீட்டின் முற்புறமும் கிழக்குக்கு எதிரான வகுப் ௰௪
பும் இருந்த அகலம் நூறுமுழமாயிருந்தது.
வகுப்பின் பிற்புறமாக அதற்கு எதிரே இருந்த ௰௫
மாளிகையின் நீளத்தையும், அதற்கு இந்தண்
டையும் அந்தண்டையும் இருந்த நடைக்காவண
ங்களையும் அளந்தார்; உள்ளான தேவாலயமும்
முற்றத்தின் சாலைகளும் உட்பட அது நூறுமு
ழமாயிருந்தது.— வாசற்படிகளும், ஒடுக்கமான ௰௬
பலகணிகளும், மூன்று பக்கங்களில் சுற்றிலும்
வாசல்களுக்கு எதிரான நடைகாவணங்களும்
சுற்றிலும் தளைதுவக்கிப் பலகணிகள்மட்டாகப்
பலகை அடித்திருந்தன; பலகணிகள்மட்டாக
மூடப்பட்டிருந்தன.—வாசலின் மேலேதுவக்கி ௰௭
வீட்டின் உட்புறமும் வெளிப்புறமும் சுற்றி
லும் சுவரின் உட்புறமும் வெளிப்புறமும் எல்
லாம் அளவிட்டிருந்தன.
கேருபீன்களும் பேரீந்துகளும் தீரப்பட்டி ௰௮
ருந்தன; கேருபீனுக்கும் கேருபீனுக்கும் நடுவாக
ஒவ்வொரு பேரீந்தும் [1]ஒவ்வொரு கேருபீனுக்கு
இரண்டுமுகங்களும் இருந்தன.-மனுஷமுகமும் ௰௯

1 ஏசே. ௰. ௰௪.

இந்தண்டை இருந்த பேரீந்துக்கு எதிராகவும்,
சிங்கமுகம் அந்தண்டை இருந்த பேரீந்துக்கு
எதிராகவும் இருந்தது; இப்படியே வீட்டைச்
௨௰ சுற்றிலும் செய்திருந்தது. — [1]தரைதுவக்கி வாச
லின் மேற்புறமட்டாகவும், தேவாலயத்தின் சுவ
ரிலும், கேருபீன்களும் பேரீந்துகளும் தீரப்
௨௧ பட்டிருந்தன.—தேவாலயத்தின் கதவுநிலைகள்
சதுரமும், பரிசுத்தஸ்தலத்தினுடைய முகப்பின்
உருவம் அந்த உருவத்துக்குச் சரியுமாய் இருந்
தன.

௨௨ மரமான பலிபீடத்தின் உயரம் மூன்றுமுழ
மும், அதின் நீளம் இரண்டுமுழமுமாயிருந்தது;
அதற்கு அதின் கோடிகள் இருந்தன; அதின்
நீளமும் அதின் பக்கங்களும் மரமானது; அவர்
என்னுடனே, இது கர்த்தருக்குமுன்பாக நிற்கிற
௨௩ பீடமென்றார். — தேவாலயத்துக்கும் பரிசுத்தஸ்
௨௪ தலத்துக்கும் இரண்டு வாசல்களும், — வாசல்க
ளுக்கு மடக்குக் கதவுகளாகிய இரட்டைக்கதவு
களும் இருந்தன; ஒரு வாசலுக்கு இரண்டு கதவு
களும் மற்ற வாசலுக்கு இரண்டு கதவுகளுந்தா
௨௫ னே. — சுவர்களில் தீரப்பட்டிருந்ததுபோலே
தேவாலயத்தினுடைய அந்தக் கதவுகளில் கேரு
பீன்களும் பேரீந்துகளும் தீரப்பட்டிருந்தன;
புறம்பே சாலையின்முன்பாக உத்திரங்கள் இருந்
௨௬ தன.—சாலையின் பக்கங்களில் இந்தண்டையி
லும் அந்தண்டையிலும், வீட்டினுடைய பக்கக்
கட்டுகளிலும் ஒடுக்கமான பலகணிகளும் பேரீந்
துகளும் உத்திரங்களும் இருந்தன.

## ௪௨. அதிகாரம்.

௧. ஆசாரியர்களின் அறைகளும், ௰௩. அவைகளின் உபயோகமும், ௰௫ வெளிப்பிராகாரத்தின் அளவுகளும் சொல்லப்பட்டன.

௧ பிற்பாடு அவர் என்னை வடதிசையான வழி
யாக வெளிமுற்றத்திலே புறப்படப்பண்ணி,
வகுப்புக்கு எதிராகவும் மாளிகைக்கு எதிராக
வும் வடக்கே இருந்த அறைவீடுகளுக்கு என்னை
௨ அழைத்துப்போனார்.—நூறுமுழ நீளத்துக்குமுன்
னாக வடக்குவாசல் இருந்தது; அவ்விடத்து அக
௩ லம் ஐம்பதுமுழம்.—உள்முற்றத்தில் இருந்த இரு
பதுமுழங்களுக்கு எதிராகவும் வெளிமுற்றத்தில்
இருந்த தளவரிசைக்கு எதிராகவும் ஒன்றுக்
கொன்றெதிரான மூன்று நிலைகளுள்ள நடைக்கா
௪ வணங்கள் இருந்தன. — உட்புறத்திலே அறை
வீடுகளின் முன்பாகப் பத்துமுழ அகலமான
வழியும், ஒருமுழ அடிப்பாடும் இருந்தன; அவை
௫ களின் வாசல்கள் வடக்காயிருந்தன.—உயர இ
ருந்த அறைவீடுகள் அகலக்கட்டையாய் இருந்
தன; ஏனெனில் நடைக்காவணங்கள் கீழேயிருக்
கிற அறைவீடுகளுக்கும் நடுவேயிருக்கிறவைக
ளுக்கும் மிஞ்சின உயர்த்தியான மாளிகையாய்
௬ இருந்தன.—ஏனெனில் அவைகள் மூன்று நிலை
யானவைகள்; அவைகளுக்கு முற்றங்களின்
தூண்களுக்கு ஒத்த தூண்களுமில்லை; ஆகை
யால் தரையிலிருந்து அளக்க, அவைகள் கீழேயும்
நடுவேயும் இருக்கிறவைகளைப்பார்க்க அகலக்
கட்டையாயிருந்தன.

புறம்பே அறைவீடுகளுக்கு எதிரே வெளி ௭
முற்றத்துத் திசையில் அறைவீடுகளுக்குமுன்
பாக இருந்த மதிலின் நீளம் ஐம்பதுமுழம்.—
ஏனெனில் வெளிமுற்றத்திலுள்ள அறைவீடுக ௮
ளின் நீளம் ஐம்பதுமுழந்தானே; ஆனால், இதோ,
தேவாலயத்துக்கு முன்னானது நூறுமுழமாயிருந்
தது.

கிழக்கே வெளிமுற்றத்திலிருந்து அந்த அறை ௯
வீடுகளுக்குள் பிரவேசிக்கிற நடை அவைக
ளின்கீழே இருந்தது.—கீழ்த்திசையான முற்றத்து ௰
மதிலின் அகலத்திலே வகுப்புக்குமுன்பாகவும்
மாளிகைக்குமுன்பாகவும் அறைவீடுகளும் இ
ருந்தன.—அவைகளுக்கு முன்னான வழியிலே ௰௧
அவைகள் தங்கள் நீளத்திலும், தங்கள் அகலத்தி
லும், தங்களுடைய எல்லா வாசற்படிகளிலும்,
தங்கள் திட்டங்களிலும், தங்கள் வாசல்நடைக
ளிலும் வடதிசையான அறைவீடுகளின் சாயலா
யிருந்தன.—தென்திசையான அறைவீடுகளின் ௰௨
வாசல்நடைக்கு ஒப்பாக ஒரு வாசல்நடை வழி
யின் முகப்பில் இருந்தது; கீழ்த்திசையில் அவை
களுக்குப் பிரவேசிக்குமிடத்திலே செம்மை
யான மதிலின்முன்னே இருந்த வழியின் முகப்
பிலேதானே

அவர் என்னோடே சொன்னதாவது: வகுப் ௰௩
புக்கு முன்னிருக்கிற வடபுறமான அறைவீடுக
ளும் தென்புறமான அறைவீடுகளும் பரிசுத்த
அறைவீடுகளாயிருக்கின்றன; கர்த்தரண்டைக்
குச்சேருகிற ஆசாரியர் அங்கே பரிசுத்தத்துக்குப்
பரிசுத்தமானதையும், காணிக்கையையும், பாவம்
போக்கும்பலியையும், குற்றம்போக்கும்பலியை
யும் வைப்பார்கள்; ஏனெனில் அந்த ஸ்தலம்
பரிசுத்தமாயிருக்கிறது.—ஆசாரியர் உட்பிரவே ௰௪
சித்தபோது, அவர்கள் பரிசுத்தஸ்தலத்திலிருந்து
வெளிமுற்றத்துக்குப் புறப்படாததற்கு முன்
னே, அங்கே தாங்கள் ஆராதனைசெய்து, உடுத்தி
யிருந்த வஸ்திரங்களைக் கழற்றிவைப்பார்கள்;
ஏனெனில் அவைகள் பரிசுத்தமானவைகள்;
வேறே வஸ்திரங்களை உடுத்திக்கொண்டு, சனத்
தின் முற்றத்திலே சேருவார்களென்றார்.

அவர் உள்வீட்டை அளந்து தீர்ந்தபிற்பாடு ௰௫
கீழ்த்திசைக்கு எதிரான வாசல்வழியாய் என்னை
வெளியே அழைத்துக்கொண்டுபோய், அதைச்
சுற்றிலும் அளந்தார்.—கீழ்க்காற்றுப்பக்கத்தை அ ௰௬
ளவுகோலாலே அளந்தார்; அது அளவுகோலின்
படியே சுற்றிலும் ஐந்நூறு கோல்களாயிருந்தது.—
வடகாற்றுப்பக்கத்தை அளவுகோலாலே சுற்றி ௰௭
லும் ஐந்நூறுகோல்களாய் அளந்தார். — தென் ௰௮
காற்றுப்பக்கத்தை அளவுகோலாலே ஐந்நூறு
கோல்களாய் அளந்தார்.—மேல்காற்றுப் பக்கத் ௰௯
துக்குத்திரும்பிக்கொண்டு அளவுகோலாலே ஐந்
நூறு கோல்களாய் அளந்தார். — நாலு காற்றுப் ௨௰

1 ௧ இரா. ௬. ௨௯.

பக்கங்களிலும் அதை அளந்தார்; பரிசுத்தமான தற்கும் பரிசுத்தமல்லாததற்கும் வித்தியாசம்பண்ணும்படிக்கு அதற்கு ஐந்நூறு கோல் நீளமும் ஐந்நூறு கோல் அகலமுமான மதில் சுற்றிலும் இருந்தது.

## ௪௩. அதிகாரம்.

௧. பராபரனுடைய மகிமை தேவாலயத்துக்கு மறுபடியும் உண்டாதல். ௭. இஸ்ரவேலருடைய பாவம் பராபரனுடைய சமுகத்தைத் தடுத்தல். ௰. அவர்கள் குணப்படவும் வீட்டினுடைய சட்டத்தை அநுசரிக்கவும் தீர்க்கதரிசி தூண்டினது. ௰௩. பீடத்தின் அளவுகளும், ௰௮. கட்டளைகளும்.

௧ அப்போது அவர் என்னைக் கீழ்த்திசைக்கு
எதிர்வாசலாகிய வாசலுக்கு அழைத்துப்போ
௨ னார்.—இதோ, இஸ்ரவேலுடைய பராபரனின்
மகிமை கீழ்த்திசையிலிருந்து வந்தது; [1]அவரு
டைய சத்தம் திரளான தண்ணீர்களின் இரைச்ச
லைப்போலே இருந்தது; அவருடைய மகிமையி
௩ னாலே பூமி வெளிச்சமாயிற்று.— நான் கண்ட
இந்தத் தரிசனை [2]நான் பட்டண அழிப்புக்கு
வந்தபோது கண்ட தரிசனையின் சாயலாயிருந்
தது; இந்தத் தரிசனைகள் [3]கேபார் நதியண்டை
யிலே நான் கண்டிருந்த தரிசனையைப்போலும்
இருந்தன; நான் முகங்குப்புற விழுந்தேன்.
௪ கர்த்தருடைய மகிமை கீழ்த்திசைக்கு எதிரான
வாசல்வழியாய் வீட்டுக்குள் பிரவேசித்தது.—
௫ அப்போது ஆவி என்னை எடுத்து, என்னை உள்
முற்றத்திலே கொண்டுபோய் விட்டது; இதோ,
[4]கர்த்தருடைய மகிமை வீட்டை நிரப்பிற்று.—
௬ அவர் வீட்டிலிருந்து என்னுடனே பேசுகிற
தைக் கேட்டேன்; புருஷன் என்னண்டையி
லே நின்றிருந்தார்.

௭ அவர் என்னோடே சொன்னதாவது: மனுபுத்
திரனே, இது நாம் என்றென்றைக்கும் இஸ்ர
வேல் புத்திரரின் நடுவே வாசம்பண்ணப்போ
கிற நம்முடைய ஆசனத்தின் தானமும், நம்மு
டைய உள்ளங்கால்களின் தானமுமாயிருக்கி
றது; இனி இஸ்ரவேல் வீட்டாரும் அவர்களு
டைய இராசாக்களும் நமது பரிசுத்தநாமத்தைத்
தங்கள் மேடைகளில் தங்கள் வேசித்தனத்தினா
லும் தங்கள் இராசாக்களின் [5]பிரேதங்களினா
௮ லும் தீட்டுப்படுத்துவதில்லை.—அவர்கள் நமக்கும்
தங்களுக்கும் நடுவே [6]ஒரு சுவரே இருக்கும்படி
யாக, தங்கள் வாசற்படியை நம்முடைய வா
சற்படியண்டையிலும், தங்கள் வாசல்நிலைகளை
நம்முடைய வாசல்நிலைகள் அண்டையிலும்
சேர்த்து, நமது பரிசுத்தநாமத்தைத் தாங்கள்
செய்த அருவருப்புகளினாலே தீட்டுப்படுத்தினார்
கள்; ஆகையால் நம்முடைய கோபத்தினாலே
௯ அவர்களை நாசமாக்கினோம்.—இப்போது அவர்
கள் தங்கள் வேசித்தனத்தையும் தங்கள் இரா
சாக்களின் பிரேதங்களையும் நமக்குத் தூரப்ப
டுத்தக்கடவர்கள்; அப்போது என்றென்றைக்
கும் அவர்கள் நடுவே வாசமாயிருப்போம்.—
௰ மனுபுத்திரனே, இஸ்ரவேல் வீட்டார் [7]தங்கள்
அக்கிரமங்களினிமித்தம் நாணும்படிக்கு, நீ அ
வர்களுக்கு இந்த வீட்டைக் காண்பி; அதின் மா
திரியை அளக்கக்கடவர்கள்.—[8]அவர்கள் செய்த ௰௧
எல்லாவற்றின் நிமித்தமும் நாணிக்கொண்டிருந்
தால், அப்போது இந்த வீட்டின் உருபத்தையும்
அதின் நிலையையும் அதின் வாசற்படிகளையும்
அதின் உள்நடைகளையும் அதினுடைய எல்லா
உருபங்களையும் அதினுடைய எல்லாக் கட்டுக
ளையும் அதினுடைய எல்லா விதங்களையும் அதி
னுடைய எல்லா நியாயங்களையும் அவர்களுக்
குத் தெரியப்படுத்தி, அவர்கள் அதினுடைய
எல்லா விதங்களையும் அதினுடைய எல்லாக் கட்
டுகளையும் கைக்கொண்டு அவைகளின்படி செய்
யும்படிக்கு அதை அவர்கள் கண்களுக்குமுன்
பாக எழுதிவை.
வீட்டினுடைய நியாயமாவது: பர்வதத்தின் ௰௨
சிகரத்திலே அதின் எல்லையெல்லாம் சுற்றிலும்
பரிசுத்தத்திற்குப் பரிசுத்தமாயிருக்கும்; இதோ,
இது வீட்டினுடைய நியாயம்.—முழங்களின்படி ௰௩
அளக்கும் பலிபீடத்தின் அளவுகளாவன: ஒவ்
வொரு முழத்தை முழத்திலும் நாலுவிரற்கடை
நீளமாயிருக்கிறதாகப் பார்த்தால், சுற்றாதாரம்
ஒருமுழ உயரமும் ஒருமுழ அகலமும், அதினு
டைய ஓரத்தில் சுற்றும் அதின் எல்லை ஒரு சாணு
மாயிருக்கும்; இது பலிபீடத்தைச் சுமக்கும்.—
தரையில் இருக்கிற ஆதாரந்துவக்கிக் கீழ்நிலை ௰௪
மட்டும் இரண்டுமுழமும், அகலம் ஒருமுழமும்,
சின்ன நிலைதுவக்கிப் பெரியநிலைமட்டும் நாலு
முழமும், அகலம் ஒரு முழமுமாயிருக்கும்.—தே ௰௫
வபீடத்தின் சிகரம் நாலுமுழ உயரமாயிருப்பது;
தேவபீடத்தின் சிகரத்துக்கு உயர நாலுகொம்பும்
இருக்கும்.—தேவபீடத்தின் சிகரம் பன்னிரண் ௰௬
டுமுழ நீளமும், பன்னிரண்டுமுழ அகலமுமாய்த்
தன்னுடைய நாலுபக்கங்களிலும் நாற்சதுரமாயி
ருக்கும். — அதின் நாலு பக்கங்களிலுள்ள சட் ௰௭
டத்தின் நீளம் பதினாலுமுழமும், அகலம் பதி
னாலுமுழமும், அதைச் சுற்றிலுமிருக்கிற எல்லை
அரைமுழமும், அதற்கு ஆதாரமானது சுற்றிலும்
ஒரு முழமுமாயிருக்கும்; அதின் படிகள் கிழக்
குக்கு எதிராயிருப்பன என்றார்.
அவர் என்னோடே சொன்னதாவது: மனுபுத் ௰௮
திரனே, கர்த்தராகிய ஆண்டவர் உரைக்கிறதே
தெனில், பலிபீடத்தைப் பண்ணினநாளிலே
அதின்மேல் தகனபலியிடுகிறதற்கும் அதின்மேல்
இரத்தந்தெளிக்கிறதற்குமான அதினுடைய கட்
டளைகளாவன:—நமக்கு ஆராதனை செய்கிறதற்கு ௰௯
நம்மண்டை சேருகிற [9]சாதோக்கின் வித்தான
லேவிகோத்திரத்தாராகிய ஆசாரியர்களுக்கு நீ
பாவம்போக்கும்பலியாக ஒரு காளைக்கன்றைக்
கொடுப்பாயாகவென்று கர்த்தராகிய ஆண்டவர்
சொல்லுகிறார். — இதின் இரத்தத்தில் அள்ளி, ௨௰
அதினுடைய நாலு கொம்புகளிலும் சட்டத்தின்
நாலுகோடிகளிலும் சுற்றியிருக்கிற எல்லையிலும்

1 ஏசே. ௧. ௨௪. வெளி. ௧. ௰௫. 2 ஏசே. ௮. ௪.—3 ஏசே. ௧. ௩. 4 ௨ மோ. ௪௰. ௩௪. ௧ இரா. ௮. ௰. ௰௧. ௧௧ : ௧௯. ௧௨. 5 எரே. ௰௬. ௰௮.—6 ஏசே. ௰௧. ௧௧. ௧௧ : ௧௧. ௧௨.—7 ஏசே. ௰௯. ௧௧. 8 ஏசே. ௪௪. ௬. 9 ஏசே. ௪௰. ௪௬.

௨௧ பூசி, அதைப் பாவமற்றதாக்கி,—பிற்பாடு [1]பா
வம்போக்குதலின் காளைக்கன்றை எடுத்து, அதை
வீட்டிலே அதற்குக் குறிக்கப்பட்ட பரிசுத்தஸ்
தலத்துக்குப் புறம்பான இடத்திலே சுட்டெரிக்
௨௨ கட்டும். — இரண்டாம்நாளிலே ஊனமில்லாத
ஒரு வெள்ளாட்டுக்கடாவைப் பாவம்போக்குத
லுக்காகப் பலியிடுவாயாக; அதினாலே பலிபீ
டத்தைக் காளைக்கன்றினாலே செய்ததுபோலே
௨௩ பாவமற்றதாக்கக்கடவார்கள்.—நீ பாவம்போக்
குதலை முடித்துத் தீர்ந்தபிற்பாடு, ஊனமில்லாத
ஒரு காளைக் கன்றையும் ஊனமில்லாத ஒரு ஆட்
௨௪ டுக்கடாவையும் பலியிடுவாயாக.—அவைகளைக்
கர்த்தருக்குமுன்பாகப் பலியிடுவாயாக; ஆசாரி
யர்கள் அவைகளுக்கு உப்புப்போட்டு, அவை
களைக் கர்த்தருக்குத் தகனபலியிடக்கடவர்கள்.—
௨௫ ஏழுநாளாய்த் தினம் பாவம்போக்குதலுக்காக
ஒரு வெள்ளாட்டுக்கடாவைப் படைப்பாயாக;
ஊனமில்லாதவைகளான காளைக்கன்றையும்,மந்
தையிலிருந்து ஆட்டுக்கடாவையும் படைப்பார்
௨௬ களாக. — ஏழுநாள் பலிபீடத்தைப் பாவமற்ற
தாக்கி, அதைச் சுத்திகரித்து, அதின் கைகளை
௨௭ நிரப்பிவரக்கடவர்கள். — அந்நாள்களை முடித்
தபிற்பாடு, எட்டாம் நாளாயிருக்கும்; அதுமுதற்
கொண்டு ஆசாரியர்கள் பலிபீடத்தின்மேல் உங்
கள் தகனபலிகளையும் உங்கள் ஸ்தோத்திரப்பலி
களையும் படைப்பார்களாக; அப்போது உங்கள்
பேரில் பிரியமாயிருப்போமென்று கர்த்தராகிய
ஆண்டவர் சொல்லுகிறார்.

## ௪௪. அதிகாரம்.

௧. கிழக்குவாசல் அதிபதிக்குமாத்திரம் குறிக்கப்பட்டது. ௪. பரிசுத்தஸ்தானத்தைத் தீட்டுப்படுத்தினதற்காக ஆசாரியர்கள் கண்டிக்கப்பட்டது. ௯. ஆசாரியத்தொழிலுக்கு விக்கிரகதொழும்பர்கள் பாத்திரரல்லாதவர்கள் என்பது. ௰௫. அதற்குச் சாதோக்கின் புத்திரர் ஏற்றுக்கொள்ளப்பட்டது. ௰௭. ஆசாரியர்களுக்குக் கட்டளைகள்.

௧ **பி**ற்பாடு அவர் என்னைக் கிழக்குக்கு எதிரே பரி
சுத்தஸ்தலத்துக்கு இருக்கிற புறவாசலின் வழி
யே திரும்பப்பண்ணினார்; அது பூட்டப்பட்டி
௨ ருந்தது.—அப்போது கர்த்தர் என்னோடே சொன்
னதாவது: இந்த வாசல் திறக்கப்படாமல் பூட்
டப்பட்டிருக்கும்; ஒருவரும் அதற்குள் பிரவே
சிப்பதில்லை; ஏனெனில் இஸ்ரவேலின் பராபர
னாகிய கர்த்தர் அதற்குள் பிரவேசித்தார்; ஆகை
௩ யால் அது பூட்டப்பட்டிருக்கும்.—அதிபதி ஒரு
வனே கர்த்தருக்குமுன்பாக அப்பம் புசிக்கிற
தற்காக அதிலே உளுக்காரலாம்; அவன் வாச
லின் சாலைவழியாய்ப் பிரவேசித்து, திரும்ப அது
வழியாய்ப் புறப்படுவானாக என்றார்.
௪ பிற்பாடு அவர் என்னை வடக்குவாசல்வழியாய்
வீட்டின் முகப்பிலே அழைத்துவந்தார்; இதோ,
[2]கர்த்தருடைய மகிமை கர்த்தருடைய வீட்டை
நிரப்பிற்றென்று நான் கண்டு, முகங்குப்புற வி
௫ ழுந்தேன். — அப்போது கர்த்தர் என்னோடே
சொன்னதாவது: மனுபுத்திரனே, கர்த்தருடைய
வீட்டின் கட்டளைகள் எல்லாவற்றையும் அதி
னுடைய நியாயங்கள் எல்லாவற்றையுங்குறித்து
நாம் உன்னோடே சொல்வதையெல்லாம் [3]நீ உன்
மனதிலே கவனித்து, உன் கண்களினாலே நோக்
கி, உன் காதுகளினாலே கேட்டு, பரிசுத்தஸ்தலத்
தினுடைய எல்லா வாசற்படிகளாலும் வீட்டுக்
குள் பிரவேசிக்கிற விதத்தின்பேரிலே உன் மன
தை வைத்து,—இஸ்ரவேல் வீட்டாராகிய கல ௬
கக்காரரோடே சொல்லவேண்டியதாவது: கர்த்த
ராகிய ஆண்டவர் உரைக்கிறதேதெனில், இஸ்ர
வேல் வீட்டாரே, உங்கள் அருவருப்புகள் எல்
லாம் போதும்.—நீங்கள் நம்முடைய போசன ௭
மாகிய கொழுப்பையும் இரத்தத்தையும் செலுத்
துகையில், நமது வீட்டைப் பரிசுத்தக்கொலைச்
லாக்கும்படிக்குச் சுன்னத்தில்லாத இருதயமும்
சுன்னத்தில்லாத மாம்சமுமுள்ள அந்நியபுத்திர
ரை நம்முடைய பரிசுத்தஸ்தலத்துக்குள், அதில்
இருக்கிறதற்காக அழைத்துவந்தீர்கள்; நீங்கள்
செய்த எல்லா அருவருப்புகளையுந்தொட்டு அவர்
கள் நம்முடைய உடம்படிக்கையை வீணாக்கி
னார்கள்.—நீங்கள் நமது பரிசுத்த காரியங்களின் ௮
காவலைக் காக்காமல் உங்களுக்குச் சரிப்போன
வர்களை நமது பரிசுத்தஸ்தலத்திலே நம்முடைய
காவலைக் காக்கிறதற்காக வைத்தீர்கள்.

கர்த்தராகிய ஆண்டவர் சொல்லுகிறதாவது: ௯
இஸ்ரவேல்புத்திரரின் நடுவில் இருக்கிற சகல
அன்னிய புத்திரரிலும், சுன்னத்தில்லாத இருத
யமும் சுன்னத்தில்லாத மாம்சமுமுள்ள அன்னி
யபுத்திரன் ஒருவனும் நம்முடைய பரிசுத்தஸ்த
லத்துக்குள் பிரவேசிப்பதில்லை. — இஸ்ரவேல் ௰
வழிதப்பிப்போகையில், நம்மைவிட்டுத் தூரமா
னவர்களும் நம்மைவிட்டு வழிதப்பித் தங்கள்
நரகலான தேவர்களின் பிறகாலே போனவர்க
ளுமாகிய லேவியர்முதலாய்த் தங்கள் அக்கிரமத்
தைச் சுமப்பார்கள்.—அவர்கள் நமது பரிசுத்தஸ் ௰௧
தலத்திலே வீட்டின்வாசல்களை விசாரிக்கிற வே
லைக்காரராயிருந்து, வீட்டுக்கு ஊழியஞ்செய்
வார்கள்; அவர்கள் தகனபலிகளையும் மற்றப்பலி
களையும் சனத்துக்காக அடித்து, இவர்களுக்கு ஊ
ழியஞ்செய்கிறதற்காக இவர்களுக்குமுன்பாக
நிற்பார்கள்.—அவர்கள் இவர்களுடைய நரகலா ௰௨
ன தேவர்களுக்குமுன்பாக இவர்களுக்கு ஊழிய
ஞ்செய்து,இஸ்ரவேல்வீட்டாருக்கு அக்கிரமத்து
க்கான இடறலாக இருந்தபடியினாலே, அவர்கள்
தங்கள் அக்கிரமத்தைச் சுமக்கும்படிக்கு நம்மு
டைய கையை அவர்களுக்கு விரோதமாக எடு
த்தோமென்று கர்த்தராகிய ஆண்டவர் சொல்
லுகிறார்.—அவர்கள் நமக்கு ஆசாரியராய் ஆரா ௰௩
தனைசெய்கிறதற்கும், நமது பரிசுத்தகாரியங்க
ளில் ஒன்றுக்காகிலும் பரிசுத்தத்துக்குப் பரிசுத்
தமான ஸ்தலத்தைக் கிட்டுகிறதற்கும் நம்மண்
டை சேராமல், தங்கள் இலச்சையையும் தாங்கள்
செய்த அருவருப்புகளையும் சுமக்கக்கடவார்
கள்.-ஆகையால் வீட்டினுடைய எல்லா வேலைக் ௰௪

1 ௧ மோ. ௪௧. ௨௭.—2 ௨ மோ. ௪௰. ௩௪.

3 எசே. ௪௰. ௪.

கும் அதில் செய்யப்படவேண்டியதெல்லாவற்
றிற்கும் நாம் அவர்களை அதிலே காவல்காக்கிற
வர்களாயிருக்கக் கட்டளையிடுவோம்.

௰௫ ஆனால் இஸ்ரவேல் புத்திரர் நம்மைவிட்டுவழி
தப்பிப்போகையில், நமது பரிசுத்தஸ்தலத்தின்
காவலைக் காத்துக்கொண்ட [1]சாதோக்கின் புத்தி
ரராகிய லேவியரென்ற ஆசாரியர்களே நமக்கு
ஆராதனைசெய்ய நம்மண்டை சேர்ந்து, கொழுப்
பையும் இரத்தத்தையும் நமக்குச் செலுத்த நமக்
குமுன்பாக நிற்பார்களென்று கர்த்தராகிய ஆண்
௰௬ டவர் சொல்லுகிறார்.—இவர்கள் நமது பரிசுத்த
ஸ்தலத்துக்குள் பிரவேசிப்பார்கள்; இவர்களே
நமக்கு ஆராதனைசெய்யப் பீடத்தைக் கிட்டி,
௰௭ நமது காவலைக் காப்பார்கள்.—உள்முற்றத்தின்
வாசல்களுக்குள் பிரவேசிக்கிறபோது, சணல்
நூல் வஸ்திரங்களை உடுத்துக்கொள்வார்களாக;
அவர்கள் உள்முற்றத்தின் வாசல்களிலும் உள்ளே
யும் ஆராதனை செய்கையில் ஆட்டுமயிர் உடுப்பு
௰௮ அவர்கள்மேல் ஏறாதிருப்பதாக. — [2]அவர்களு
டைய தலைகளில் சணல்நூல் குல்லாக்களும்,
அவர்களுடைய இடைகளில் சணல்நூல் காற்
சட்டைகளும் இருக்கக்கடவன; வேர்வையிலே
௰௯ அரைக்கட்டார்களாக.—அவர்கள் வெளிப்பிரா
காரமாகிய புறமுற்றத்திலே சனத்தண்டைக்குப்
புறப்பட்டுப்போகிறபோது, அவர்கள் [3]தாங்கள்
ஆராதனைசெய்து, உடுத்திருந்த தங்கள் வஸ்திரங்
களைக் கழற்றி, அவைகளைப் பரிசுத்த அறைவீடு
களில் வைத்து, வேறே வஸ்திரங்களை உடுத்துக்
கொள்ளக்கடவர்கள்; தங்கள் வஸ்திரங்களாலே
௨௰ சனத்தைப் பரிசுத்தம்பண்ணார்களாக. — [4]அவர்
கள் தலைகளைச் சிரைக்காமலும், தங்கள் மயிரை
நீளமாய் வளர்க்காமலும், தங்கள் தலைகளின் மயி
௨௧ ரைக் கத்திரிக்கக்கடவர்கள்.—[5]ஆசாரியர்களில்
ஒருவனும், உள்முற்றத்துக்குள் பிரவேசிக்கும்
௨௨ போது, திராட்சப்பழ இரசம் குடியானாக.—[6]வித
வையையும் தள்ளிவிடப்பட்டவளையும் அவர்
கள் விவாகம்பண்ணாமல், இஸ்ரவேல் வீட்டா
ரின் வித்தாகிய கன்னியாஸ்திரியையாகிலும்
ஒரு ஆசாரியனின் பெண்சாதியாயிருந்த விதவை
யையாகிலும் விவாகம்பண்ணக்கடவர்கள். —
௨௩ [7]அவர்கள் பரிசுத்தமானதற்கும் பரிசுத்தமல்லாத
தற்கும், தீட்டானதற்கும் சுத்தமானதற்கும் இ
ருக்கும் வித்தியாசத்தை நமது சனத்துக்குப் போ
தித்து, அவர்களுக்குத் தெரியப்பண்ணக்கடவர்
௨௪ கள்.—வழக்கிருந்தால் இவர்கள் நியாயந்தீர்க்க
ஆயத்தமாயிருந்து, நம்முடைய நியாயங்களின்
படி அதைத் தீர்த்து, நம்முடைய பண்டிகைக
ளில் எல்லாம் நமது நியாயப்பிரமாணத்தையும்
நமது கட்டளைகளையும் கைக்கொண்டு, நம்மு
டைய ஓய்வுநாள்களைப் பரிசுத்தமாக்கக்கடவர்
௨௫ கள் — தகப்பன், தாய், குமாரன், குமாரத்தி,
சகோதரன், புருஷனுக்கு வாழ்க்கைப்படாத
சகோதரி என்றவர்களுடைய சவத்தினால் அவர்
கள் தீட்டுப்படுவதேயல்லாமல், அவர்களில் ஒரு
வனும் செத்த ஒரு மனுஷனண்டையிலே தீட்
டுப்பட வரானாக.—அவன் சுத்திகரமானபின்பு, ௨௬
அவனுக்கு ஏழுநாள் எண்ணப்படவேண்டும்.—
அவன் பரிசுத்தஸ்தலத்தில் ஆராதனை செய்யும் ௨௭
படிக்கு பரிசுத்தஸ்தலம் இருக்கிற உள்முற்றத்
துக்குள் பிரவேசிக்கிற நாளிலேயென்றால்,
அவன் தனக்காகப் பாவம்போக்கும்பலியைச்
செலுத்தக்கடவனென்று கர்த்தராகிய ஆண்ட
வர் சொல்லுகிறார்.

அவர்களுக்குச் சுதந்தரமாவதேதெனில், [8]நா ௨௮
மே அவர்களுடைய சுதந்தரமாயிருப்போம்; ஆ
கையால் இஸ்ரவேலிலே அவர்களுக்குக் காணி
யாட்சியைக் கொடார்களாக; நாமே அவர்களு
டைய காணியாட்சி.—காணிக்கையையும் பா ௨௯
வம்போக்கும்பலியையும் குற்றம்போக்கும் பலி
யையும் அவர்கள் புசிப்பார்கள்; இஸ்ரவே
லிலே பொருத்தனைபண்ணப்பட்டது எல்லாம்
அவர்களுடையதாய் இருப்பதாக. — சகலவித ௩௰
முதற்கனிகளில் எல்லாம் முந்தின இலாபமும்,
நீங்கள் செலுத்துகிற எந்தவிதமுமான செலுத்து
தல்கள் அனைத்தும் ஆசாரியர்களுடையதாயிருப்
பதாக; உன் வீட்டில் ஆசீர்வாதத்தைத் தங்கப்
பண்ணும்படிக்கு உங்கள் மாப்பிசைதல்களில்
முதல் இலாபத்தையும் ஆசாரியனுக்குக் கொடுக்
கக்கடவீர்கள். — [9]பறவைகளிலும் மிருகங்களி ௩௧
லும் தானாய்ச் செத்ததும் பீறுண்டதுமான ஒன்
றையும் ஆசாரியர்கள் புசியார்களாக.

## ௪௫. அதிகாரம்.

௧. பரிசுத்தஸ்தானத்துக்கும், ௬. பட்டணத்திற்கும், ௭. இராசனுக்கும் விட்ட தேசத்தின் ஒவ்வொரு பங்கு ௯. இராசனுக்குரிய கட்டளைகள்.

நீங்கள் தேசத்தைச் சீட்டுப்போட்டுப் பங்கிடும் ௧
போதோவெனில், தேசத்தில் இருபத்தையாயி
ரங்கோல் நீளமும் பதினாயிரங்கோல் அகலமு
மான பரிசுத்தபங்கைக் கர்த்தருக்குப் படைக்கக்
கடவீர்கள்; இது தன் எல்லையில் எல்லாம் சுற்றி
லும் பரிசுத்தமாயிருப்பது.—இதிலே பரிசுத்தஸ் ௨
தலத்துக்கென்று ஐந்நூறு கோல் நீளமும் ஐந்நூறு
கோல் அகலமுமான நாற்சதுரம் அளக்கப்படக்
கடவது; அதற்கு ஐம்பதுமுழமான வெளியும் சுற்
றிலும் இருக்கவேண்டும்.— இந்த அளவு உட்பட ௩
இருபத்தையாயிரங்கோல் நீளத்தையும் பதினாயி
ரங்கோல் அகலத்தையும் அளப்பாயாக; அதற்
குள் பரிசுத்தஸ்தலமும் பரிசுத்தத்துக்குப் பரிசுத்
தமான ஸ்தலமும் இருப்பது.—தேசத்தில் பரிசுத் ௪
தமான பங்காகிய இது கர்த்தருக்கு ஆராதனை
செய்யச் சேருகிறவர்களும் பரிசுத்தஸ்தலத்தில்
ஆராதனைசெய்கிறவர்களுமான ஆசாரியருடை
யது; இது அவர்களுக்கு வீடுகளுக்கான இடமும்
பரிசுத்தஸ்தலத்துக்கு அடுத்த இடமுமாயிருப்பது.

1 ஏசே. ௪௰. ௪௬: ௪௩. ௰௯. 2 ௨ மோ. ௩௯. ௨௮: ௨௮. ௪௨. 3 ஏசே. ௪௨. ௰௪. 4 ௩ மோ. ௨௧. ௫.
5 ௩ மோ. ௰. ௯.—6 ௩ மோ. ௨௧. ௰௩. ௰௪. 7 ௩ மோ. ௰. ௰.—8 ௪ மோ. ௰௮. ௨௰. ௫ மோ. ௰௮. ௧.—9 ௩ மோ. ௨௨. ௮.

௫ பின்னையும் இருபத்தையாயிரங்கோல்நீளமும்
பதினாயிரங்கோல் அகலமுமானது வீட்டின்
பணிவிடைக்காரராகிய லேவியருடையதாயி
ருக்கும்; அது அவர்களுடைய காணியாட்சி;
அதில் இருபது அறைவீடுகள் இருப்பதாக.
௬ பரிசுத்த பங்காகப் படைக்கப்பட்டதற்கு
எதிரே பட்டணத்தின் காணியாட்சியாக ஐயா
யிரங்கோல் அகலத்தையும் இருபத்தையாயிரங்
கோல் நீளத்தையும் அளந்து கொடுப்பீர்களாக;
அது இஸ்ரவேல் வீட்டார் அனைவருடையதாயி
ருக்கும்.
௭ பரிசுத்தபங்காகப் படைக்கப்பட்டதற்கும்
பட்டணத்தின் காணியாட்சிக்கும் இந்தண்டை
யும் அந்தண்டையும், பரிசுத்த படைப்புக்கு
முன்பாகவும் பட்டணத்தின் காணிக்குமுன்பா
கவும், அதிபதியினுடைய பங்கு மேற்கிலே மேற்
புறமாகவும் கிழக்கிலே கிழ்ப்புறமாகவும் இருப்
பதாக; மேல் எல்லைதுவக்கிக் கிழ் எல்லைமட்டும்
நீளமானது பங்குகளில் ஒவ்வொன்றுக்கு எதிரா
௮ யிருப்பது. — இது அவனுக்கு இஸ்ரவேலிலே
காணிபூமியாக இருக்கக்கடவது; நம்முடைய
அதிபதிகள் இனி நமது சனத்தை ஒடுக்காமல்
தேசத்தை இஸ்ரவேல் வீட்டாருக்கு அவர்களு
டைய கோத்திரங்களுக்குத்தக்கபடியே விட்டு
விடுவார்களாக
௯ கர்த்தராகிய ஆண்டவர் சொல்லுகிறதாவது:
இஸ்ரவேலின் அதிபதிகளே, [1]நீங்கள் செய்தது
போதும்; நீங்கள் கொடுமையையும் கொள்ளையி
டுதலையும் தவிழ்த்து, நியாயத்தையும் நீதியையும்
செய்யுங்கள்; உங்கள் உசதண்டங்களை நம்மு
டைய சனத்தைவிட்டு அகற்றுங்களென்று கர்த்
௰ தராகிய ஆண்டவர் சொல்லுகிறார். — [2]சுமுத்தி
ரையான தராசும், சுமுத்திரையான மரக்காலும்,
சுமுத்திரையான பானையும் உங்களுக்கு இருக்
௰௧ கக்கடவன.—மரக்காலும் பானையும் ஒரே அளவா
யிருந்து, மரக்கால் கலத்திலே பத்தில் ஒருபங்
கும், பானையும் கலத்திலே பத்தில் ஒருபங்கும்
பிடிக்கக்கடவது; கலத்தின்படியே அதின் அளவு
௰௨ நிருணயிக்கப்படுவதாக. — [3]சேக்கலானது இரு
பது கேரா; இருபது சேக்கலும் இருபைத்தைந்து
சேக்கலும் பதினைந்து சேக்கலும் உங்களுக்கு
ஒரு இருத்தலாயிருப்பது.
௰௩ நீங்கள் செலுத்தவேண்டிய காணிக்கையாவ
து: ஒருகலம் கோதுமையிலே ஒரு மரக்காலில்
ஆறிலொருபங்கையும், ஒருகலம் வாற்கோதுமை
யிலே ஒரு மரக்காலில் ஆறிலொருபங்கையும்
௰௪ படைக்கக்கடவீர்கள். — பானையால் அளக்கிற
எண்ணெயின் கட்டளையாவது: பத்துப்பானை
பிடிக்கிற கலத்துக்குச்சரியான ஒரு சாடி எண்
ணெயிலே பத்தில் ஒருபங்கைப் படைப்பீர்க
ளாக; ஏனெனில் பத்துப்பானை ஒரு கலமாகி
௰௫ றது. — இஸ்ரவேல் தேசத்திலே புஷ்டியான
மேய்ச்சலை மேய்கிற மந்தையிலே இருநூறு ஆடு
களில் ஒரு ஆடும், அவர்களுடைய பாவநிவிர்த்
திக்காகக் காணிக்கையாகவும் தகனபலியாகவும்
ஸ்தோத்திரப்பலியாகவும் செலுத்தப்படக்கடவ
தென்று கர்த்தராகிய ஆண்டவர் சொல்லுகிறார்.—
இஸ்ரவேலுடைய அதிபதியின்முன்பாகத் தேசத் ௰௬
தின் சனம் எல்லாம் இந்தக் காணிக்கையைச்
செலுத்தக் கடனாளிகளாயிருக்கிறார்கள்.
ஆனால் இஸ்ரவேல்வீட்டார் கூடிவரக் குறிக் ௰௭
கப்பட்ட சகல பண்டிகைகளிலும் மாதப்பிறப்
புகளிலும் ஓய்வுநாள்களிலும், தகனபலிகளையும்
காணிக்கையையும் ஊற்றுதலையும் செலுத்துவது
அதிபதியின்மேல் சுமந்த கடனாயிருக்கும்; அவன்
இஸ்ரவேல் வீட்டாருக்காகப் பாவநிவாரணம்
பண்ணும்படிக்கு பாவம்போக்கும்பலியையும்
காணிக்கையையும் தகனபலியையும் ஸ்தோத்தி
ரப்பலிகளையும் படைப்பானாக.
கர்த்தராகிய ஆண்டவர் சொல்லுகிறதாவது: ௰௮
முதலாம்மாதம் முதலாந்தேதியிலே நீ ஊனமில்
லாத ஒரு காளைக்கன்றைக் கொண்டுவந்து, பரி
சுத்தஸ்தலத்தைப் பாவமற்றதாக்குவாயாக.—பா ௰௯
வம்போக்குகிற அந்தப்பலியின் இரத்தத்திலே
ஆசாரியன் அள்ளி, வீட்டின் வாசல்நிலைகளிலும்,
பலிபீடத்தினுடைய சட்டத்தின் நாலு கோடிக
ளிலும், உள்முற்றத்தின் வாசல் நிலைகளிலும்
பூசக்கடவன்.—அந்தப்பிரகாரமாக ஏழாந்தேதி ௨௰
யிலும் பிழைசெய்தவனுக்காகவும் பேதைக்காக
வும் செய்வாயாக; இப்படி வீட்டைப் பாவமற்ற
தாக்கக்கடவீர்கள்.
[4]முதலாம்மாதம் பதினாலாந்தேதியிலே புளிப் ௨௧
பில்லாத அப்பங்கள் புசிக்கப்படுகிற ஏழுநாள்
பண்டிகையாகிய பஸ்கா உங்களுக்குத் துவக்க
மாகும்.—அந்நாளிலே அதிபதி தன்நிமித்தமும் ௨௨
தேசத்தினுடைய எல்லாச் சனத்தின்நிமித்தமும்
பாவம்போக்குதலுக்காக ஒரு காளையெருதைப்
படைப்பானாக.—பண்டிகையின் ஏழுநாள்களி ௨௩
லே அவன் அந்த ஏழுநாள் தினமும் கர்த்தருக்
குத் தகனபலியாக ஊனமில்லாத ஏழு காளையெ
ருதுகளையும் ஏழு ஆட்டுக்கடாக்களையும் தினம்
பாவம்போக்கும்பலியாக ஒரு வெள்ளாட்டுக்க
டாவையும் படைப்பானாக.—ஒவ்வொரு காளை ௨௪
யெருதோடே ஒருமரக்காலும் ஒவ்வொருஆட்
டுக்கடாவோடே ஒரு மரக்காலுமான காணிக்கை
யையும், ஒவ்வொரு மரக்காலோடே ஒருபடி எண்
ணெயையும் படைப்பானாக.—ஏழாம்மாதம் பதி ௨௫
னைந்தாந்தேதியில் துவக்கமாகிற பண்டிகையி
லே அவன் அப்படியே ஏழுநாளும் அதற்குச் சரி
யானபிரகாரமாகப் பாவம்போக்கும் பலிகளை
யும் தகனபலிகளையும் காணிக்கையையும் எண்
ணெயையும் படைக்கக்கடவன்.

## ௪௬. அதிகாரம்.

௧. தொழுதுகொள்ளும் கிரமத்தைக்குறித்து இராசனுக்கும் சனத்துக்கும் இடப்பட்ட கட்டளைகள். ௰௬. இராசதத்தாத்தைக்குறித்து விதித்த சட்டம். ௰௯. சமையலுக்கும், அடுவதற்குமுண்டாகிய வீடுகள்.

1 எசே. ௪௪. ௬.—2 ௩ மோ. ௰௯. ௩௫, ௩௬.

3 ௨ மோ. ௩௰. ௰௩.—4 ௩ மோ. ௨௩. ௫.

௧ கர்த்தராகிய ஆண்டவர் சொல்லுகிறதாவது:
கிழக்குக்கு எதிரான உள்முற்றத்தினுடைய வா
சல் வேலைசெய்கிற ஆறுநாளிலும் பூட்டப்பட்
டிருந்து, ஓய்வுநாளிலே திறக்கப்படவும், மாதப்
௨ பிறப்பிலும் திறக்கப்படவுங்கடவது. — அப்
போது அதிபதி வெளியே வாசற்சாலையின் வழி
யாய்ப் பிரவேசித்து, வாசல் நிலையண்டையி
லே நிற்கக்கடவன்; ஆசாரியர்களோவென்றால்
அவனுடைய தகனபலியையும் அவனுடைய
ஸ்தோத்திரப்பலிகளையும் படைக்கக்கடவர்கள்;
அவன் வாசற்படியிலே பணிந்தபிற்பாடு புறப்ப
டுவானாக; அந்த வாசலோவென்றால் சாயங்கால
௩ மட்டும் பூட்டப்படாதிருப்பதாக. — தேசத்தின்
சனமும் ஓய்வுநாள்களிலும் மாதப்பிறப்புகளி
லும் அந்த வாசலின் நடையிலே கர்த்தருக்கு
முன்பாகப் பணியக்கடவர்கள்.
௪ அதிபதி ஓய்வுநாளிலே கர்த்தருக்குப் பலியி
டும் தகனபலி, ஊனமில்லாத ஆறு ஆட்டுக்குட்
டிகளும் ஊனமில்லாத ஒரு ஆட்டுக்கடாவுந்தா
௫ னே.—ஆட்டுக்கடாவோடேகூடக் காணிக்கை
யாக ஒரு மரக்காலையும், ஆட்டுக்குட்டிகளோடே
கூடக் காணிக்கையாகத் தன்னுடைய கைசுய
மாய்த் தருகிற ஈவையும், ஒவ்வொரு மரக்காலோ
டேகூட ஒருபடி எண்ணெயையும் படைக்கக்
௬ கடவன்.-மாதப்பிறப்பானநாளிலோவென்றால்,
அவன் ஊனமில்லாதவைகளில் ஒரு காளைக்கன்
றையும் ஊனமில்லாதிருக்கிற ஆறு ஆட்டுக்குட்
டிகளையும், ஒரு ஆட்டுக்கடாவையும் பலியிட்டு,-
௭ [1]காணிக்கையாகக் காளைக்கன்றோடேகூட ஒரு
மரக்காலையும், ஆட்டுக்கடாவோடேகூட ஒரு
மரக்காலையும், ஆட்டுக்குட்டிகளோடேகூடத்
தன்னுடையகைக்குஉதவுகிறதையும்,ஒவ்வொரு
மரக்காலோடேகூட ஒருபடி எண்ணெயையும்
படைக்கக்கடவன்.
௮ அதிபதி வருகிறபோது வாசலுடைய சாலைவழி
யாய்ப் பிரவேசித்து, அதுவழியாய்த் திரும்பப்
௯ புறப்படக்கடவன். — தேசத்தின் சனம் குறிக்
கப்பட்ட நாள்களில் கர்த்தருக்குமுன்பாகவரும்
போதோவெனில், பணிகிறதற்காக வடவாசல்
வழியாய் உட்பிரவேசித்தவன் தென்வாசல்வழி
யாய்ப் புறப்படவும், தென்வாசல் வழியாய் உட்
பிரவேசித்தவன் வடவாசல் வழியாய்ப் புறப்பட
வும்கடவன்; தான் வந்த வாசல்வழியாய்த் திருப்
பிப்போகாமல் தனக்கு எதிரானவழியாய்ப் புறப்
௰ படுவானாக.-அவர்கள்உட்பிரவேசிக்கும்போது,
அதிபதி அவர்கள் நடுவிலேகூட உட்பிரவேசித்
து, அவர்கள் புறப்படும்போது அவன்கூடப்
புறப்படுவானாக.
௰௧ பண்டிகைகளிலும் குறிக்கப்பட்ட காலங்க
ளிலும் அவன் படைக்கும் காணிக்கையாவது:
காளையெருதோடே ஒரு மரக்காலும் ஆட்டுக்க
டாவோடே ஒரு மரக்காலும், ஆட்டுக்குட்டிக
ளோடே அவன் கை சுயமாய்த் தருகிற ஒரு
ஈவும், ஒவ்வொரு மரக்காலோடே ஒருபடி எண்
ணெயுந்தானே. — அதிபதி உற்சாகமான தகன ௰௨
பலியையாகிலும் ஸ்தோத்திரப்பலிகளையாகிலும்
கர்த்தருக்குஉற்சாகமாகச்செலுத்தவேண்டுமென்
றால், அவனுக்குக் கிழக்குக்கு எதிரான வாசல்
திறக்கப்படுவதாக; அப்போது அவன் ஓய்வுநா
ளில் செய்கிறதுபோலே தன் தகனபலியையும்
தன் ஸ்தோத்திரப்பலியையும் செலுத்தி, திரும்
பப் புறப்படக்கடவன்; அவன் புறப்பட்டபின்
போவென்றால் வாசல் பூட்டப்படவேண்டும்.
[2]தினம் ஒருவயதான ஊனமில்லாத ஒரு ஆட் ௰௩
டுக்குட்டியைக் கர்த்தருக்குத் தகனபலியாகப்
படைக்கக்கடவாய்; காலைமாறு அதைப் படைக்
கக்கடவாய்,-அதினோடேகூடக் காலைமாறு மரக் ௰௪
காலிலே ஆறத்தொரு பங்கையும், மெல்லியமா
வைப் பிசையும்படிக்கு ஒருபடி எண்ணெயிலே
மூன்றத்தொருபங்கையும் காணிக்கையாகப் ப
டைக்கக்கடவாய்; இது அன்றாடகம் கர்த்தருக்
குப் படைக்கவேண்டிய நித்தியகட்டளைகளான
காணிக்கை.—இப்படிக் காலைமாறு அன்றாடக ௰௫
மான தகனபலியாக ஆட்டுக்குட்டியையும் கா
ணிக்கையையும் எண்ணெயையும் செலுத்துவார்
களாக.
கர்த்தராகிய ஆண்டவர் சொல்லுகிறதாவது: ௰௬
அதிபதி தன் குமாரரில் ஒருவனுக்குத் தன் சுதந்
தரத்தில் ஒரு ஈவைக் கொடுத்தால், அது அவன்
குமாரருடையதாயிருக்கும்; அது சுதந்தரமாய்
அவர்களுடைய சொந்தமாம்.—அவன் தன் ஊழி ௰௭
யக்காரரில் ஒருவனுக்குத் தன் சுதந்தரத்தில் ஒரு
ஈவைக் கொடுத்தானேயாகில், அது விடுதலையின்
வருஷமட்டும் அவனுடையதாயிருந்து, பிற்பாடு
திரும்ப அதிபதியின் வசமாய்ச் சேரும்; அதின்
சுதந்தரம் அவன் குமாரருக்கே அடுப்பது, அது
அவர்களுடையதாயிருக்கும். — சனத்தை இடுக் ௰௮
கண்செய்து, அவர்களுடைய சொந்தத்துக்கு அ
வர்களைப் புறம்பாக்கி, அதிபதி அவர்களுடைய
சுதந்தரத்தில் ஒன்றும் எடுக்கானாக; நமது சனத்
தில் ஒருவரும் தங்கள் சொந்தத்துக்குப் புறம்பா
கிச் சிதற அடிக்கப்படாதபடிக்கு அவன் தன்னு
டையசொந்தத்திலே தன் குமாரருக்குச்சுதந்தரம்
கொடுக்கக்கடவானென்றார்.
பிற்பாடு அவர் வாசலின் பக்கத்தில் இருந்த ௰௯
நடைவழியாய் என்னை வடக்குக்கு எதிரான
ஆசாரியர்களுடைய பரிசுத்த அறைவீடுகளுக்கு
அழைத்துப்போனார்; இதோ, அங்கே மேற்கே
இருபுறத்திலேயும் ஒரு இடம் இருந்தது —அவர் ௨௰
என்னோடே சொன்னதாவது: குற்றம்போக்கும்
பலியையும் பாவம்போக்கும்பலியையும் காணி
க்கையையும் ஆசாரியர்கள் வெளியே புறமுற்றத்
திலே சனத்தைப் பரிசுத்தம்பண்ணக் கொண்டு
போகாதபடிக்கு, அவர்கள் அவைகளைச் சமைக்
கிறதும் இதைச் சுடுகிறதுமான ஸ்தலம் இதுவே
என்றார்.—பிறகு அவர் என்னைப் புறமுற்றத்தில் ௨௰௧

1 எசே. ௪௫. ௨௪.

2 ௨ மோ. ௨௯. ௩௮.

அழைத்துக்கொண்டுபோய், என்னை முற்றத்தின்
நாலு மூலைகளையும் கடக்கப்பண்ணினார்; இதோ,
முற்றத்தினுடைய ஒவ்வொரு மூலையிலே தனித்த
௨௨ ஒரு முற்றம் இருந்தது.—முற்றத்தினுடைய நாலு
மூலைகளிலும் புகை எழும்புகிறவைகளான இந்த
முற்றங்கள் நாற்பதுமுழ நீளமும், முப்பதுமுழ
அகலமுமானவைகள்; இந்த நாலு மூலை முற்றங்
௨௩ களுக்கும் ஒரே அளவு இருந்தது.—இந்த நாலுக்
கும் சுற்றிலும் உள்ளாக ஒரு சுற்றுக்கட்டு உண்
டாயிருந்தது; இந்தச் சுற்றுக்கட்டுகளின் சுற்றி
௨௪ லும அடுப்புகள் போடப்பட்டிருந்தன.—அவர்
என்னுடனே: இவைகள் வீட்டின் பணிவிடைக்
காரர் சனத்தின்பலி பணிவிடைகளைச் சமைக்
கிற வீடுகள் என்றார்.

## ௪௭. அதிகாரம்.

௧. பரிசுத்த தீர்த்தங்களின் தரிசனை. ௯. அவற்றின் பலன். ௰௩. தேசத்தின் எல்லைகள். ௨௨. சீட்டுப்போடுவதினால் அதின் பிரிவு.

௧ பிற்பாடு அவர் என்னை வீட்டின் வாசலுக்குத்
திரும்பிவரப்பண்ணினார்; இதோ, தண்ணீர்கள்
வாசற்படியின்கீழிருந்து புறப்பட்டுக் கிழக்கே
ஓடுகிறதாயிருந்தது; ஏனெனில் வீட்டின் முகப்பு
கிழக்குக்கு எதிரானது; அந்தத் தண்ணீர்கள் வீட்
டின் வலதுபுறமாய்ப் பலிபீடத்துக்குத் தெற்கா
௨ கத் தாழ ஓடின.—அவர் என்னை வடக்குவாசல்
வழியாய்ப் புறப்படப்பண்ணி, என்னை வெளியி
லே கீழ்த்திசைக்கு எதிரான புறவாசல்மட்டும்
சுற்றிக்கொண்டுபோனார்; இதோ, தண்ணீர்கள்
வலதுபுறத்திலிருந்து பாய்கிறதாயிருந்தன.

௩ அந்தப் புருஷன் தமது கையில் நூலைப் பிடித்
துக்கொண்டு, கிழக்கே புறப்படுகையில் ஆயிர
முழம் அளந்து, என்னைத் தண்ணீரைக் கடக்கப்
பண்ணினார்; தண்ணீர் கணைக்கால் அளவாயிருந்
௪ தது.—பின்னையும் ஆயிரமுழம் அளந்து, என்னைத்
தண்ணீரைக் கடக்கப்பண்ணினார்; அங்கே தண்
ணீர் முழங்கால் அளவாயிருந்தது; பின்னையும்
ஆயிரமுழம் அளந்து என்னைக் கடக்கப்பண்ணி
னார்; அங்கே தண்ணீர் அரை அளவாயிருந்தது.—
௫ பின்னையும் ஆயிரமுழம் அளந்தார்; அங்கே அது
நான் கடக்கக்கூடாத நதியாயிருந்தது; ஏனெ
னில், தண்ணீர்கள் நீச்சாழமும் கடக்கக்கூடாத
நதியுமாயிருந்தன.

௬ அவர் என்னுடனே: மனுபுத்திரனே, இதைக்
கண்டாயோ என்று சொல்லி, என்னை நதியோர
௭ மாய்த் திரும்பி நடந்துவரப்பண்ணினார்.—நான்
திரும்பிவருகையில், இதோ, [1]நதியோரத்தில் இக்
கரையிலும் அக்கரையிலும் வெகு திரளான
௮ விருட்சங்கள் உண்டாயிருந்தன.—அவர் என்
னோடே சொன்னதாவது: இந்தத் தண்ணீர்கள்
கீழ் எல்லைக்குப் புறப்பட்டுப்போய், வயல்வெ
ளியில் இறங்கி, கடலில் விழும்; இவைகள் கட
லில் பாய்ந்து, விழுந்தபிற்பாடு, அதின் தண்ணீர்
௯ கள் ஆரோக்கியமாம்.—சம்பவிப்பதேதென்றால்,
இந்த நதிகள் எங்கே வந்துசேருமோ அங்கே எல்
லாம் அசைவாடுகிற சீவபிராணிகள் யாவும்
பிழைக்கும்; வெகு ஏராளமான மச்சங்களும், இந்
தத் தண்ணீர் அங்கே வந்தபடியினாலே உண்டா
யிருக்கும்; இந்த நதி எங்கே வந்துசேருமோ, அங்
கே யாவும் ஆரோக்கியப்பட்டுப் பிழைக்கும்.—
அப்போது சம்பவிப்பதேதெனில், என்கேதித ௰
வக்கி எனேகலாயிம்மட்டும் மீன்பிடிக்கிறவர்
கள் அதின் கரையிலே நிற்பார்கள்; அதெல்லாம்
வலைகளைப் பரப்புகிற ஸ்தலங்களாயிருக்கும்; அ
வைகளின் மச்சங்கள் பெரிய சமுத்திரத்தின் மச்
சங்களைப்போலே பலவித சாதியும் மகா ஏராள
முமாயிருக்கும்.—ஆனால் அதினுடைய உளை ௰௧
யான பள்ளங்களும் அதினுடைய மடுக்களும்
ஆரோக்கியமாகாமல், உப்புக்கு ஒப்புக்கொடுக்
கப்படும்.—[2]நதியோரமாய் அதின் இக்கரையிலும் ௰௨
அக்கரையிலும் புசிப்புக்கான சகலவித விருட்
சங்களும் பயிராகும்; அவைகளின் இலைகள்
உதிர்வதுமில்லை, அவைகளின் கனிகள் மாறு
வதுமில்லை; தங்கள்தங்கள் மாதங்களில் புதுக்
கனிகளைக் கொடுத்துக்கொண்டேயிருக்கும்,
ஏனெனில் அவைகளுடைய தண்ணீர்கள் பரி
சுத்தஸ்தலத்திலிருந்து பாயும்; அவைகளின் கனி
கள் போசனத்திற்கும், அவைகளின் இலைகள்
அவிழ்தத்திற்குமானவைகள்.

கர்த்தராகிய ஆண்டவர் சொல்லுகிறதாவது: ௰௩
நீங்கள் தேசத்தை இஸ்ரவேலின் பன்னிரண்டு
கோத்திரங்களுடைய இலக்கத்தின்படியே சுதந்
தரித்துக்கொள்ளவேண்டிய எல்லையாவது: [3]யோ
சேப்புக்கு இரண்டுபங்கு உண்டு.—சகோதரனோ ௰௪
டே சகோதரனுக்குச் சரிபங்கு உண்டாக அதைச்
சுதந்தரித்துக்கொள்ளக்கடவீர்கள்; [4]அதை உங்
கள் பிதாக்களுக்குக் கொடுப்போமென்று நமது
கையை ஏறெடுத்தோமே; ஆகையால் உங்களுக்கு
இந்தத் தேசம் சுதந்தரமாகக் கிடைக்கும்.

தேசத்தின் எல்லையாவது: வடபுறம் பெரிய ௰௫
சமுத்திரந்துவக்கி, செய்தாதுக்குப்போகிற கெத்
லோம் வழியாயிருக்கிற,—காமாத்தும், பேரோத் ௰௬
தாவும், தமஸ்குவின் எல்லைக்கும் காமாத்தின் எல்
லைக்கும் நடுவான சிப்ராயிமும், காப்பிரானின்
எல்லையோடே சேர்ந்த காத்சேர் அத்தீகோனுமா
னது.—அப்படியே சமுத்திரத்திலிருந்துபோகிற ௰௭
எல்லை காத்சேர் ஏனோனும், தமஸ்குவின் எல்லை
யும், வடமூலையான வடக்கும் காமாத்தின் எல்
லையுமானது; இது வடபுறம்.—கீழ்ப்புறத்தை ௰௮
காப்ரானுக்கும் தமஸ்குவுக்கும் நடுவாகவும்,
கீலேயாத்துக்கும் யோர்தானின் ஓரமான இஸ்ர
வேல் தேசத்துக்கும் நடுவாகவும் கீழ்க்கடல்மட்
டும் இருக்கும் எல்லையாய் அளப்பீர்களாக; இது
கீழ்ப்புறம்.—தென்மூலையான தென்புறம் தாமார் ௰௯
துவக்கி, காதேசிலுள்ள சண்டை மூட்டுதலின்
தண்ணீர்கள்மட்டாகவும், ஆறுமட்டாகவும், பெ
ரிய சமுத்திரமட்டாகவும் இருப்பது; இது தென்

1 வெளி. ௨௨. ௨.—2 வெளி. ௨௨. ௨.

3 ௧ மோ. ௪௮. ௫. யோசு. ௰௭. ௭.—4 ௧ மோ. ௰௫. ௰௮.

உ௰ மூலையான தென்புறம்.—மேல்புறம் அந்த எல்லை
துவக்கிக் காமாத்துக்கு எதிராக வந்துசேருமட்
டும் இருக்கிற பெரிய சமுத்திரந்தானே; இது
மேல்புறம்.
உக இந்தத் தேசத்தை நீங்கள் இஸ்ரவேலுடைய
கோத்திரங்களின்படியே உங்களுக்குள்ளே பங்
உஉ கிட்டுக்கொள்ளுவீர்களாக.—உங்களுக்கும், [1]உங்
களுக்குள்ளே தங்கி உங்களுக்குள்ளே பிள்ளைக
ளைப்பெறுகிற பரதேசிகளுக்கும், நீங்கள் அதைச்
சீட்டுகளைப்போட்டுச் சுதந்தரமாக்கிக்கொள்வீர்
களாக; இவர்கள் உங்களுக்கு இஸ்ரவேல் புத்திர
ரில் பிறந்தவர்களைப்போல இருந்து, உங்களோ
டேகூட இஸ்ரவேல் கோத்திரங்களின் நடுவே
உங சுதந்தரத்துக்கு உட்படுவார்களாக. — பரதேசி
எந்தக் கோத்திரத்தோடே தங்கியிருக்கிறானோ,
அதிலே அவனுடைய சுதந்தரத்தை அவனுக்குக்
கொடுக்கக்கடவீர்களென்று கர்த்தராகிய ஆண்
டவர் சொல்லுகிறார்.

## சஅ. அதிகாரம்.

*க. உஅ. பன்னிரண்டு கோத்திரங்களையும், அ. பரிசுத்தஸ்தானத்தையும், ௰ரு. பட்டணத்தையும், வெளிப்பாளயங்களையும், உக. இராசாவையும் குறித்த பங்குகள். ௩௰. பட்டணத்தின் அளவும் வாசல்களும் சொல்லப்பட்டது.*

க கோத்திரங்களின் நாமங்களாவன: வடமுனை
துவக்கி காமாத்துக்குப் போகிற எத்லோன்
வழியின் ஓரத்துக்கும், காத்சார் ஏனானுக்கும், கா
மாத்தண்டையிலே வடக்கேயிருக்கிற தமஸ்கு
வின் எல்லைக்கும் உள்ளாகக் கீழ்த்திசைதுவக்கி
உ மேற்குமட்டும் தாணுக்கு ஒருபங்கும்,-தாணின்
எல்லையண்டையிலே கீழ்த்திசைதுவக்கி மேல்
ங திசைமட்டும் ஆசேருக்கு ஒருபங்கும், — ஆசே
ரின் எல்லையண்டையிலே கீழ்த்திசைதுவக்கி
மேல்திசைமட்டும் நப்தலிக்கு ஒருபங்கும்,—
ச நப்தலியின் எல்லையண்டையிலே கீழ்த்திசைது
வக்கி மேல்திசைமட்டும் மனாசேக்கு ஒருபங்
ரு கும்,—மனாசேயின் எல்லையண்டையிலே கீழ்த்தி
சைதுவக்கி மேல்திசைமட்டும் எப்பிராயீமுக்கு
சு ஒருபங்கும்,—எப்பிராயீமின் எல்லையண்டையி
லே கீழ்த்திசைதுவக்கி மேல்திசைமட்டும் ரூபே
எ னுக்கு ஒருபங்கும்,—ரூபேனின் எல்லையண்டை
யிலே கீழ்த்திசைதுவக்கி மேல்திசைமட்டும் யூதா
வுக்கு ஒருபங்கும் உண்டாவதாக.
அ யூதாவின் எல்லையண்டையிலே கீழ்த்திசைது
வக்கி மேல்திசைமட்டும் நீங்கள் படைக்கவேண்
டிய பங்கு இருக்கும்; என்னவென்றால், [2]இரு
பத்தையாயிரங்கோல் அகலமும், கீழ்த்திசைது
வக்கி மேல்திசைமட்டும் இருக்கிற பங்குகளில்
ஒவ்வொன்றுக்குச் சரியான நீளமுந்தானே; பரி
சுத்தஸ்தலம் அதின் நடுவிலே இருப்பதாக.—
கூ இதிலே கர்த்தருக்கு நீங்கள் படைக்கவேண்டிய
பங்கு இருபத்தையாயிரங்கோல் நீளமும் பதினா
௰ யிரங்கோல் அகலமுமாயிருப்பதாக.—வடக்கே
இருபத்தையாயிரங்கோல் நீளமும், மேற்கே பதி
னாயிரங்கோல் அகலமும், கிழக்கே பதினாயிரங்
கோல் அகலமும், தெற்கே இருபத்தையாயிரங்
கோல் நீளமுமாகிய இந்தப் பரிசுத்த படைப்பு
யாருடையதென்றால், ஆசாரியருடையதாயிருக்
கும்; கர்த்தருடைய பரிசுத்தஸ்தலம் அதின் நடு
விலே இருப்பதாக.—இஸ்ரவேல் புத்திரர் வழி ௰க
தப்பிப்போகையில், லேவியர் வழிதப்பிப்போ
னதுபோலே வழிதப்பிப்போகாமல், நமது காவ
லைக் காத்துக்கொண்ட [3]சாதோக்கின் புத்திரரா
கிய பரிசுத்தமாக்கப்பட்ட ஆசாரியர்களுக்கு
அது அடுத்திருப்பதாக.—அப்படியே தேசத்தில் ௰உ
படைக்கப்படுகிறதிலே பரிசுத்தத்துக்குப் பரி
சுத்தமான பங்கு அவர்களுக்கு லேவியருடைய
எல்லையண்டையிலே இருப்பதாக.
ஆசாரியர்களின் எல்லைக்கு எதிராக லேவியர் ௰ங
அடையும் பங்கு இருபத்தையாயிரங்கோல் நீள
மும் பதினாயிரங்கோல் அகலமுமாயிருப்பது;
நீளமெல்லாம் இருபத்தையாயிரங்கோலும், அக
லம் பதினாயிரங்கோலுமாய் இருப்பதாக.—அ ௰ச
வர்கள் அதில் ஒன்றையும் விற்கவும் தேசத்தின்
முதல்விளைவை மாற்றவும் அப்பாலே கொடுக்க
வும் ஒண்ணாது; ஏனெனில் அது கர்த்தருக்குப்
பரிசுத்தம்.
இருபத்தையாயிரங்கோலுக்கு எதிராக அகலத் ௰ரு
தில் மீதியாயிருக்கும்; ஐயாயிரங்கோலோவென்
றால், பரிசுத்தமாயிராமல், குடியேறும் பட்ட
ணத்துக்கும் வெளிப்பாளயங்களுக்கும் விடப்
படுவது; பட்டணம் அதின் நடுவில் இருப்ப
தாக.—அதின் அளவுகளாவன: வடபுறம் நாலா ௰சு
யிரத்தைந்நூறு கோலும், தென்புறம் நாலாயிரத்
தைந்நூறுகோலும், கீழ்ப்புறம் நாலாயிரத்தைந்நூ
றுகோலும், மேல் புறம் நாலாயிரத்தைந்நூறுகோ
லுந்தானே.—பட்டணத்தின் வெளிப்பாளயங் ௰எ
கள் வடக்கே இருநூற்றைம்பதுகோலும், தெற்
கே இருநூற்றைம்பதுகோலும், கிழக்கே இரு
நூற்றைம்பதுகோலும், மேற்கே இருநூற்றைம்ப
துகோலுமாய் இருப்பதாக.
பரிசுத்த படைப்புக்கு எதிராக நீளத்தில் மீதி ௰அ
யானது கிழக்கே பதினாயிரங்கோலும் மேற்கே
பதினாயிரங்கோலுமாம்; அது பரிசுத்த படைப்
புக்கு எதிராயிருக்கும்; அதின் வரத்து பட்டணத்
துக்கு ஊழியம்செய்கிறவர்களுக்கு ஆகாரமாயி
ருப்பதாக. — இஸ்ரவேலின் சகல கோத்திரங்க ௰கூ
ளிலும் எவர்கள் பட்டணத்துக்கு ஊழியம்செய்
கிறார்களோ, அவர்கள் அதைப் பயிரிடுவார்க
ளாக.
படைப்பனைத்தும் இருபத்தையாயிரங்கோல் உ௰
நீளமும், இருபத்தையாயிரங்கோல் அகலமுமாய்
இருக்கக்கடவது; பட்டணத்தின் காணி உட்
பட இந்தப் பரிசுத்த படைப்பைச் சதுரமாகப்
படைப்பீர்களாக.—ஆனால் பரிசுத்த படைப்புக் உக
கும் பட்டணத்தின் காணிக்கும் இந்தண்டையும்
அந்தண்டையும், படைப்பினுடைய இருபத்
தையாயிரங்கோலின் முன்பாகக் கிழக்கு எல்லை

1 எபே. ௩௯, ௧௨; க. எ.—2 எசே. சரு. க.

3 எசே சசு. ௰ரு.

மட்டுக்கும், மேற்கிலே இருபத்தையாயிரங்கோ
லின்முன்பாக மேற்கு எல்லைமட்டுக்கும் மீதி
யாயிருப்பது அதிபதியினுடையது; பங்குக
ளுக்கு எதிரான அது அதிபதியினுடையதாயி
ருப்பதாக; அதற்கு நடுவாகப் பரிசுத்தபடைப்
௨௨ பும் வீட்டின் பரிசுத்தஸ்தலமும் இருக்கும்.-அதி
பதியினுடையதற்கு நடுவே இருக்கும் லேவிய
ரின் காணிதுவக்கியும் பட்டணத்தின் காணிது
வக்கியும், யூதாவின் எல்லைக்கும் பென்யமீன்
எல்லைக்கும் நடுவேயிருக்கிறது அதிபதியினு
டையது.
௨௩ குறைக்கோத்திரங்களுக்கு உண்டாகும்பங்கு
களாவன: கீழ்த்திசைதுவக்கி மேல்திசைமட்டும்
௨௪ பென்யமீனுக்கு ஒரு பங்கும்,-பென்யமீன் எல்
லையண்டையிலே, கீழ்த்திசைதுவக்கி மேல்தி
௨௫ சைமட்டும் சிமேயோனுக்கு ஒருபங்கும்,-சிமே
யோனின் எல்லையண்டையிலே, கீழ்த்திசைது
வக்கி மேல்திசைமட்டும் ஈசகஷாருக்கு ஒருபங்
௨௬ கும்,-ஈசகஷாரின் எல்லையண்டையிலே, கீழ்த்தி
சைதுவக்கி மேல்திசைமட்டும் சேபுலோனுக்கு
௨௭ ஒருபங்கும்,—சேபுலோனின் எல்லையண்டை
யிலே,கீழ்த்திசைதுவக்கி மேல்திசைமட்டும் காத்
௨௮ துக்கு ஒருபங்கும் உண்டாயிருப்பதாக.—காத்
தின் எல்லையண்டையிலே தென்மூலையாகிய
தென்திசையிலே எல்லை, தாமார்துவக்கி காதேசி
லுள்ள சண்டைமூட்டுதலின் தண்ணீர்கள்மட்
டாகவும் பெரிய சமுத்திரமட்டாகவும் போ
கும்.—இதுவே நீங்கள் இஸ்ரவேல் கோத்திரங்க ௨௯
ளுக்குச் சீட்டுப்போட்டுப் பங்கிடும் தேசமும்,
இவைகளே அவைகளின் பங்குகளுமென்று
கர்த்தராகிய ஆண்டவர் சொல்லுகிறார்.
பட்டணத்தின் புறமுகங்களாவன: வடபுறத் ௩௰
திலே நாலாயிரத்தைந்நூறு கோலாகிய அளவுண்
டாயிருக்கும்.—பட்டணத்தின் வாசல்களோ ௩௧
வென்றால், இஸ்ரவேல் கோத்திரங்களுடைய
நாமங்களின்படியே அழைக்கப்படக்கடவன;
வடக்கே மூன்றுவாசல் இருப்பதாக; ரூபேனின்
வாசல் ஒன்று, யூதாவின் வாசல் ஒன்று, லேவி
யின் வாசல் ஒன்று.—கீழ்ப்புறத்திலும் நாலாயி ௩௨
ரத்தைந்நூறுகோலும், மூன்று வாசலும் இருப்ப
தாக; என்னவென்றால், யோசேப்பின் வாசல்
ஒன்று, பென்யமீனின் வாசல் ஒன்று, தாணின்
வாசல் ஒன்று.-தென்புறத்திலும் நாலாயிரத்தைந் ௩௩
நூறுகோலாகிய அளவும், மூன்றுவாசலும் இருப்
பதாக; சிமேயோனின் வாசல் ஒன்று, ஈசகஷாரின்
வாசல் ஒன்று, சேபுலோனின் வாசல் ஒன்று.—
மேற்புறத்திலே நாலாயிரத்தைந்நூறுகோலும் அ ௩௪
தின் மூன்று வாசலும் இருப்பதாக; காத்தின்
வாசல் ஒன்று, ஆசேரின் வாசல் ஒன்று; நவதலி
யின் வாசல் ஒன்று.—சுற்றிலும் பதினெண்ணாயி ௩௫
ரங்கோலாகிறது; அந்நாள்துவக்கிப் பட்டணத்
தின் நாமம் [1]கர்த்தர் அங்கே என்பதே என்றார்.

1 எசே. ௪௩. ௭. சங். ௬௮. ௰௭. எரே. ௩. ௰௭. வெளி. ௨௧. ௩: ௨௨. ௩, ௪.

# DANIEL.

# தானியேலின் தீர்க்கதரிசனம்.

## க. அதிகாரம்.

க. யோயாக்கீமின் சிறையிருப்பு. ௩. அஸ்பேனஸ், தானியேலையும், அனனியாவையும், மீஷாவேலையும், அசரியாவையும் தெரிந்துகொண்டது. அ. அவர்கள் இராசா அளித்த போசனபானத்தின் பங்கை விலக்கிப் பருப்பையும் தண்ணீரையும் புசித்தது. ௰௭. அவர்களுடைய ஞானத்தின் மேன்மை.

க யூதாவின் இராசாவாகிய யோயாக்கீம் அரசா
ண்ட மூன்றாம்வருஷத்திலே [1]பாபேலின் இரா
சாவாகிய நேபுகாத்நேச்சார் எருசலேமுக்கு
உ வந்து, அதை முற்றிக்கைபோட்டான். — அப்
போது ஆண்டவர் யூதாவின் இராசாவாகிய யோ
யாக்கிமையும் பராபரனுடைய வீட்டின் பண்
டம்பாடிகளில் சிலவற்றையும் அவன் கையில்
ஒப்புக்கொடுத்தார்; அவைகளை அவன் [2]சிநே
யார் தேசத்துக்குத் தன்னுடைய தேவர்களின்
வீட்டிலே கொண்டுபோய், அந்தப் பண்டம்பா
டிகளைத் தன் தேவர்களின் பொக்கிஷவீட்டுக்
குள் வைத்தான்.
௩ அப்போது இஸ்ரவேல் புத்திரருக்குள்ளே
[3]இராசவித்தாயிருக்கிறவர்களிலும் துரைமக்களி
லும் ஒரு மாசும் இல்லாதவர்களும், அழகான
உரூபமுள்ளவர்களும், சகல ஞானத்தில் விவே
கிகளும், அறிவுள்ளவர்களும், கல்விக்கு உணர்
வுள்ளவர்களும், இராசாவின் அரமனையிலே நிற்
கத் திறமையுள்ளவர்களுமாகிய சில இளைஞரைக்
௪ கொண்டுவரவும்,—அவர்களுக்குக் கல்தேயரின்
எழுத்தையும் பாஷையையும் கற்றுக்கொடுக்க
வும் இராசா தன்னுடைய பிரதானிகளின் தலை
௫ வனாகிய அஸ்பேனாசுக்குச் சொன்னான்.—அவர்
களுக்கு இராசா, இராசாவாகிய தன்னுடைய
போசனத்திலேயும் தான் குடிக்கும் திராட்சப்ப
ழஇரசத்திலேயும் அன்றாடகமான திட்டத்தைக்
குறித்து, அவர்களை மூன்றுவருஷம் வளர்க்கும்ப
டிக்கும், இவைகள் சென்றபிற்பாடு அவர்கள்
இராசாவுக்குமுன்பாக நிற்கும்படிக்கும் கட்ட
௬ ளையிட்டான்.-அவர்களுக்குள் யூதாபுத்திரரிலே
தானியேல், அனனியா, மீஷாவேல், அசரியா
௭ என்றவர்கள் இருந்தார்கள். — அவர்களுக்குப்
பிரதானிகளின் தலைவன் நாமங்களைத் தரிப்பித்
து, தானியேலை பெல்தேஷாத்சார் என்றும், அன
னியாவை சாத்ராக்கென்றும், மீஷாவேலை மே
ஷாக்கென்றும், அசரியாவை ஆபேத்நேகோ
வென்றும் அழைத்தான்.

1 உ இரா. உச. க.—2 க மோ. ௰. ௰.

ஆனால் தானியேல் இராசாவின் போசனத் ௮
தினாலும் அவர் குடிக்கிற திராட்சப்பழஇரசத்
தினாலும் தன்னைத் தீட்டாக்கப்படாதென்று,
தன் இருதயத்தில் நிருணயம்பண்ணிக்கொண்டு,
தன்னைத் தீட்டாக்காதபடிக்குப் பிரதானிகளின்
தலைவனை மனுக்கேட்டான்.—பராபரன் தானி ௯
யேலுக்குப் பிரதானிகளின் தலைவனுக்குமுன்
பாக, [4]தயவும் இரக்கமும் கிடைக்கப்பண்ணி
னார். — பிரதானிகளின் தலைவன் தானியேலுக் ௰
குச் சொன்னதாவது: உங்கள் போசனத்தையும்
பானத்தையும் குறித்திருக்கிற இராசாவாகிய
என் ஆண்டவனுக்கு நான் பயப்படுகிறேன்;
இராசாவினிடத்திலே நீங்கள் என் தலைக்கு ஆக்
கினை வரப்பண்ண, அவர் உங்கள் முகங்களை
உங்களோடொத்த இளைஞரின் முகங்களைப்பார்
க்கச் சுண்டிப்போனவைகளாகக் காண்பா
னேன் என்றான்.—அப்போது பிரதானிகளின் ௰௧
தலைவன், தானியேல், அனனியா, மீஷாவேல்,
அசரியா என்றவர்களின்பேரிலே விசாரிப்புக்
காரனாக வைத்த மேல்த்சாரோடே தானியேல்
சொன்னதாவது:-பத்துநாள் உமது அடியாரைச் ௰௨
சோதித்துப்பாரும்; எங்களுக்குப் பருப்புமுத
லானவைகளைப் புசிக்கவும் தண்ணீரைக் குடிக்
கவும் கொடுத்து, — உமக்குமுன்பாக எங்கள் ௰௩
உருவையும் இராசாவின் போசனத்தில் புசிக்கிற
இளைஞருடைய உருவையும் ஒத்துப்பார்க்கட்
டும்; பிறகு நீர் காண்கிறதற்குத்தக்கதாக உமது
அடியாருக்குச் செய்யுமென்றான்.—அவன் இந் ௰௪
தக்காரியத்திலே அவர்களுக்குக் கேள்விகொடு
த்து, பத்துநாள் அவர்களைச் சோதித்துப்பார்த்
தான். — பத்துநாள் சென்றபோதோவெனில், ௰௫
இராசாவின் போசனத்தில் புசித்த எல்லா இளை
ஞரைப் பார்க்கிலும் அவர்கள் நல்ல உருவும்
சதைப் புஷ்டியும் உள்ளவர்களென்று காணப்ப
ட்டது.-ஆகையால் மேல்த்சார் அவர்கள் புசிக்கக் ௰௬
கட்டளையான போசனத்தையும், அவர்கள் குடி
க்கக் கட்டளையான திராட்சப்பழ இரசத்தையும்
நீக்கிவைத்து, அவர்களுக்குப் பருப்புமுதலான
வைகளைக் கொடுத்தான்.
இந்த நாலு இளைஞருக்கோவென்றால் பரா ௰௭
பரன் சகல எழுத்திலும் ஞானத்திலும் அறிவை
யும் புத்தியையும் கொடுத்து, தானியேலைச் சகல

3 உ இரா. உ௦. ௰அ.—4 க மோ. கக. உக.

தரிசனையிலும் சொப்பனத்திலும் உணர்வுள்ள
௰௮ வனுக்கினார்.-இராசா அவர்களைக் கொண்டுவரச்
சொன்ன நாள்கள் நிறைவேறினபோது, பிரதா
னிகளின் தலைவன் அவர்களை நேபுகாத்நேச்சா
ருக்குமுன்பாகக் கொண்டுவந்துவிட்டான். —
௰௯ இராசா அவர்களோடே பேசிக்கொண்டான்,
ஆனால் அவர்கள் எல்லாருக்குள்ளும் தானியேல்,
அனனியா, மீஷாவேல். அசரியா என்றவர்க
ளோடு ஒத்தவன் காணப்பட்டதில்லை; ஆகை
௨௰ யால் இராசாவுக்குமுன்பாக நின்றார்கள்.— ஞா
னத்துக்கும் உணர்வுக்கும் அடுத்த எந்தக்காரியத்
தில் இராசா அவர்களைக் கேட்டு விசாரித்தாலும்,
அவர்களைத் தன்னுடைய இராச்சியம் எங்கும்
உள்ள சகல சாஸ்திரிகளையும் சோதிரிஷக்கார
ரையும்பார்க்கப் பத்தத்தனை சமர்த்தராகக் கண்
௨௧ டான். — [1]கோரேஸ் இராச்சியபாரம்பண்ணும்
முதலாம் வருஷமட்டும் தானியேல் அங்கே
இருந்தான்.

## ௨. அதிகாரம்.

௧. நேபுகாத்நேச்சார் தான் மறந்த கனவை வாக்குத்தத்தங்களினாலும், பயமுறுத்தல்களினாலும், கல்தேயரை அறிவிக்கச்சொன்னது. ௰. அவர்களுக்கு அது கூடாமையால், அவர்களை மரணத்துக்குத் தீர்மானித்தது. ௰௪. தானியேல் தவணைகேட்டுக் கனவைக் கண்டுபிடித்தது. ௰௯. அவன் பராபரனைத் துதித்ததும், ௨௪. இராசாவுக்குமுன் கொண்டுவரப்பட்டதும். ௩௧. கனவையும், ௩௬. அதின் அர்த்தத்தையும் சொல்லி, ௪௬. தானியேல் உயர்த்தப்பட்டது.

௧ நேபுகாத்நேச்சார் இராச்சியபாரம்பண்ணும்
இரண்டாம் வருஷத்திலே நேபுகாத்நேச்சார்
சொப்பனங்களைக் கண்டான்; [2]அதினால் அவ
னுடைய ஆவி கலங்கி, அவனுடைய நித்திரை
௨ அவனிலிருந்து கலைந்தது.—அப்போது தன்னு
டைய சொப்பனங்களைத் தனக்கு அறிவிக்க,
இராசா சாஸ்திரிகளையும் சோதிரிஷக்காரரையும்
சூனியக்காரரையும் கல்தேயரையும் அழைக்கச்
சொன்னான்; அவர்கள் வந்து, இராசாவுக்குமுன்
பாக நின்றார்கள்.
௩ இராசா அவர்களுடனே, ஒரு சொப்பனத்
தைக் கண்டேன்; அந்தச் சொப்பனத்தை அறி
யவேண்டுமென்று என் ஆவி கலங்கியிருக்கிற
௪ தென்றான்.—கல்தேயர் இராசாவுக்குச் சூரியபா
ஷையிலே, இராசாவே, என்றைக்கும் வாழ்க;
சொப்பனத்தை உமது அடியாருக்குச் சொல்
லும், அப்போது அதின் அர்த்தத்தை விடுவிப்
௫ போம் என்றார்கள்.—இராசா கல்தேயருக்குப்
பிரதியுத்தாரமாகச் சொன்னதாவது: என்னிலி
ருந்து பிறக்கிற விசேஷமேதெனில், நீங்கள் சொ
ப்பனத்தையும் அதின் அர்த்தத்தையும் எனக்கு
அறிவிக்காமல்போனால் துண்டித்துப்போடப்
படுவீர்கள்; உங்கள் வீடுகள் எருக்களங்களும்
௬ ஆக்கிப்போடப்படும்.—சொப்பனத்தையும் அ
தின் அர்த்தத்தையும் காண்பித்தீர்களேயாகில்
என்னிடத்தில் காணிக்கைகளையும் நல்ல பலனை
யும் பெரிய வெகுமானத்தையும் பெறுவீர்கள்;
ஆகையால் சொப்பனத்தையும் அதின் அர்த்தத்
தையும் எனக்குக் காண்பியுங்கள் என்றான்.—
அவர்கள் மறுபடியும் பிரதியுத்தரமாக, இராசா ௭
சொப்பனத்தைத் தமது அடியாருக்குச் சொல்வா
ராக; அப்போது அதின் அர்த்தத்தை விடுவிப்
போம் என்றார்கள்.
இராசா பிரதியுத்தாரமாகச் சொன்னதாவது: ௮
என்னிலிருந்து விசேஷம் பிறந்தபடியினாலேதா
னே நீங்கள் காலம்போக்கப் பார்க்கிறீர்களென்
று நான் நிச்சயமாக அறிந்துகொள்ளுகிறேன்.—
நீங்கள் சொப்பனத்தை எனக்கு அறிவிக்காதே ௯
போனால், நீங்கள் எனக்குமுன்பாகப் பொய்
யும் கேடுமான விசேஷத்தை நேரம் மாறு
மட்டும் சொல்ல எத்தனம்பண்ணி இருக்கிறீர்க
ளென்று உங்களைக்குறித்து நிதானிக்கும் ஒரே
நிதானிப்பாயிருக்கிறது; ஆகையால், சொப்பனத்
தை எனக்குச் சொல்லுங்கள்; அப்போது அதின்
அர்த்தத்தை நீங்கள் எனக்குக் காண்பிக்கலா
மென்று அறிவேன் என்றான்.
கல்தேயர் இராசாவுக்குமுன்பாகப் பிரதியுத் ௰
தாரமாகச் சொன்னதாவது: இராசா கேட்கும்
காரியத்தை அறிவிக்கத்தக்க மனுஷன் புவியில்
இல்லை; ஆகையால் மகத்துவமும் வல்லமையுமா
ன எந்த இராசாவும் இப்படிக்கொத்த காரியத்தை
ஒரு சாஸ்திரியினிடத்திலும் சோதிரிஷக்காரனி
டத்திலும் கல்தேயனிடத்திலும் கேட்டதுமில்
லை.—ஏனெனில் இராசா கேட்கிற காரியம் அரி ௰௧
தாயிருக்கிறது; மாம்சமாயிருக்கிறவர்களோடே
வாசம்பண்ணாததேவர்களேயொழிய அதை இரா
சாவுக்குமுன்பாக அறிவிக்கத்தக்க வேறொரு
வரும் இல்லையென்றார்கள்.
இதுநிமித்தமாக இராசா மகா கோபமும் கடு ௰௨
மையும் அடைந்து, பாபேலில் இருக்கிற எல்லா
ஞானிகளையும் அழிக்கச்சொன்னான். — அந்த ௰௩
உத்தரம் வெளிப்பட்டது; ஞானிகள் கொன்
றுபோடப்பட்டார்கள்; தானியேலும் அவன்
தோழரும் கொன்றுபோடப்படத் தேடப்பட்
டார்கள்.
அப்போது தானியேல் பாபேலின் ஞானிக ௰௪
ளைக் கொன்றுபோடப் புறப்பட்ட இராசாவு
டைய தலையாரிகளின் அதிபதிகளாகிய ஆரியோ
கோடே யோசனையும் புத்தியுமாய்ப் பேசி,-இந் ௰௫
தக் கட்டளை இராசாவினாலே இத்தனை சுறுக்கா
யிருக்கிறதென்ன என்று இராசாவின் சேர்வைக்
காரனாகிய ஆரியோகைக்கேட்டான்; அப்போது
ஆரியோகு தானியேலுக்குச் செய்தியைச் சொ
ன்னான்.—தானியேலோவென்றால், உட்பிரவே ௰௬
சித்து, அர்த்தத்தை இராசாவுக்குக் காண்பிக்கும்
படிக்குத் தனக்குத் தவணைகொடுக்க இராசாவி
னிடத்திலே விண்ணப்பம்பண்ணினான்.—பிற் ௰௭
பாடு தானியேல் தன் வீட்டுக்குப்போய், தானும்
தன்னுடைய தோழரும் பாபேலின் மீதியான
ஞானிகளோடேகூட அழியாதபடிக்குப் பர

1 தானி. ௧. ௨௧.—2 ௧ மோ. ௪௧. ௮.

மண்டலத்தினுடைய பராபரனை அந்த இரக
சியத்தின்நிமித்தம் இரக்கம் கேட்கிறதற்காக,—
௰௮ இந்தக்காரியத்தை அனனியா, மீஷாவேல், அச
ரியா என்ற தன்னுடைய தோழருக்கு அறிவித்
தான்.
௰௯ பிற்பாடு இராத்திரியில் தரிசனையிலே தானியே
லுக்கு இரகசியம் வெளியாக்கப்பட்டது; அப்
போது தானியேல் பரமண்டலத்துப் பராபரனை
௨௰ ஸ்தோத்திரித்தான். — தானியேல் வசனித்துச்
சொன்னதாவது: பராபரனுடைய நாமம் சதாகா
லஞ்சதாகாலமாக ஸ்தோத்திரிக்கப்பட்டிருக்கக்
கடவது;ஏனெனில் ஞானமும் பெலனும் அவரு
௨௧ டையவைகளாயிருக்கின்றன. — அவர் காலங்
களையும் வேளைகளையும் மாற்றி, [1]இராசாக்களைத்
தள்ளி, இராசாக்களை வைத்து, ஞானிகளுக்கு
ஞானத்தையும் அறிவாளிகளுக்கு அறிவையும்
௨௨ கொடுக்கிறவர்.—அவரே ஆழமும் ஒளிப்பிடமு
மானதை வெளிப்படுத்துகிறார்; இருளில் இருக்
கிறதை அவர் அறிவார்; வெளிச்சம் அவருடனே
௨௩ தங்கும். — என் பிதாக்களுடைய பராபரனே,
தேவரீர் எனக்கு ஞானமும் பெலனும் கொடுத்து,
நாங்கள் உம்மைக் கேட்டதை இப்போது என
க்கு அறிவித்தபடியினாலே உம்மைத் துதித்துப்
புகழுகிறேன்; ஏனெனில் இராசாவின் காரியத்
தை எங்களுக்கு அறிவித்தீரே என்றான்.
௨௪ ஆனதுகொண்டு தானியேல் பாபேலின்
ஞானிகளை அழிக்க இராசா கட்டளையிட்ட
ஆரியோகண்டைக்கு உட்பிரவேசித்துப்போய்:
பாபேலின் ஞானிகளை அழிக்காதேயும், என்னை
இராசாவின்முன்பாக அழைத்துப்போய்விடும்,
இராசாவுக்கு அர்த்தத்தை அறிவிப்பேனென்று
௨௫ அவனோடே சொன்னான். — அப்போது ஆரி
யோகு தானியேலைத் தீவிரத்தோடே இராசாவின்
முன்பாக அழைத்துப்போய்விட்டு, அவருட
னே: சிறைப்பட்டுவந்த யூதேயாதேசத்தாரில்
இராசாவுக்கு அர்த்தத்தை அறிவிக்கப்போகிற
ஒரு புருஷனைக் கண்டுபிடித்தேன் என்றான்.—
௨௬ இராசா பிரதியுத்தாரங்கொடுத்து, பெல்தேஷாத்
சாரென்று நாமமுள்ள தானியேலுடனே: நான்
கண்ட சொப்பனத்தையும் அதின் அர்த்தத்தை
யும் நீ எனக்கு அறிவிக்கக்கூடுமோ என்றான்.
௨௭ தானியேல் இராசாவுக்குமுன்பாகப் பிரதி
யுத்தாரங்கொடுத்துச் சொன்னதாவது: இராசா
கேட்ட இரகசியத்தை ஞானிகளும் சோதிரிஷக்
காரரும் சாஸ்திரிகளும் குறிசொல்லுகிறவர்க
ளும் இராசாவுக்குத் தெரியப்பண்ணக்கூடாது.—
௨௮ பரமண்டலங்களில் இருக்கிற பராபரனோவென்
றால், இரகசியங்களை வெளிப்படுத்துகிறவர்;
அவர் பின்னாள்களில் சம்பவிப்பதை இராசாவா
கிய நேபுகாத்நேச்சாருக்கு அறிவித்தார்; உம்மு
டைய சொப்பனமும் உமது படுக்கையின்மேல்
உம்முடைய தலையில் உண்டான தரிசனங்களு
௨௯ மாவன:—இராசாவே, உம்முடைய படுக்கையின்
மேல் நீர் படுத்திருக்கையில், இனிமேல் சம்பவிக்
கப்போகிறதென்ன என்கிற நினைவுகள் உமக்
குள் எழும்பின; அப்போது இரகசியங்களை வெ
ளிப்படுத்துகிறவர் சம்பவிக்கப்போகிறதை உம
க்கு அறிவித்தார்.—இப்போதும், [2]உயிரோடிருக் ௩௰
கிற யாவரையும்பார்க்க என்னிலே ஞானம் உண்
டென்கிறதினாலே அல்ல, அர்த்தம் இராசாவுக்
குத் தெரியவரவும், உம்முடைய இருதயத்தின்
நினைவுகளை நீர் அறியவும் இந்த இரகசியம் என
க்கு வெளியாக்கப்பட்டது.
இராசாவே, இதோ, ஒரு பெரிய சிலையை நீர் ௩௧
காண்கிறவராயிருந்தீர்; அந்தச் சிலை பெரியதும்
அதின் மினுக்கு விசேஷித்ததுமாயிருந்தது; அது
உமக்கு எதிரே நின்றது; அதின் உருவம் பயங்
கரமாயிருந்தது. — அந்தச் சிலையின் தலை நல்ல ௩௨
பொன்னும், அதின் மார்பும் அதின் புயங்களும்
வெள்ளியும், அதின் வயிறும் அதின் இடுப்பும்
வெண்கலமும்,—அதின் தொடைகள் இரும்பும், ௩௩
அதின் கால்கள் பாதி இரும்பும் பாதி களிமண்
ணுமாயிருந்தன.—நீர் பார்த்துக்கொண்டேயிருக் ௩௪
கையில் கைகளையல்லாமல் ஒரு கல் பெயர்ந்து,
உருண்டுவந்தது; அது அந்தச் சிலையை இரும்பும்
களிமண்ணுமாகிய அதின் கால்களில் மோதி,
அவைகளை நொறுக்கிப்போட்டது.—அப்போது ௩௫
இரும்பும் களிமண்ணும் வெண்கலமும் வெள்
ளியும் பொன்னும் ஏகமாய் நொறுங்குண்டு, கோ
டை காலத்தில் போரடிக்கிற களத்திலிருந்து
பறந்துபோகிற பதரைப்போல ஆயின; அவைக
ளுக்கு ஒரு இடமும் கிடையாதபடியாய்க் காற்று
அவைகளை அடித்துக்கொண்டுபோயிற்று; சிலை
யை மோதின கல்லோவென்றால், பூமியையெல்
லாம் நிரப்புகிற பெரிய பர்வதமாயிற்று.—சொப் ௩௬
பனம் இதுதான்; அதின் அர்த்தத்தையும் இராசா
வுக்குமுன்பாகச் சொல்லுவோம்.
இராசாவாகிய நீர் [3]இராசாக்களுக்கு இராசா ௩௭
வாய் இருக்கிறீர்; ஏனென்றால் பரமண்டலத்தி
னுடைய பராபரன் உமக்கு இராசரீகத்தையும்
வல்லமையையும் பலத்தையும் முக்கியத்தையும்
கொடுத்தார்.—[4]மனுபுத்திரரும் வெளியின் மிரு ௩௮
கங்களும் ஆகாசத்துப் பட்சிகளும் தங்கித்தரிக்
கிற சகல இடத்திலும் உள்ளதை அவர் உமது
கையில் ஒப்புக்கொடுத்து, உம்மை அவைகளை
எல்லாம் ஆண்டுகொள்ளப்பண்ணினார்; பொன்
னான அந்தத் தலை நீரே.—உமக்குப்பிறகு உமக் ௩௯
குக் கீழ்த்தரமான வேறொரு இராச்சியமும், பூமி
யை எல்லாம் ஆண்டுகொள்ளும் வெண்கலமான
மூன்றாம் இராச்சியமும் எழும்பும்.—நாலாவது ௪௰
இராச்சியம் இரும்பைப்போல உரமாயிருக்கும்;
இரும்பு எல்லாவற்றையும் எப்படி நொறுக்கித்
திடமற்றுப்போகப்பண்ணுகிறதோ, அப்படி
இது அவைகளையெல்லாம் நொறுக்கிப்போடுகிற
இரும்பைப்போல நொறுக்கி, முறித்துப்போ
டும்.—நீர் கால்களையும் கால்விரல்களையும் பாதி ௪௧

1 தானி. ௪. ௰௭, ௨௨: ௯. ௨௧.—2 ஆதி. ௪௧. ௰௬.

3 எசே. ௨௬. ௭.—4 எரே. ௨௭. ௬: ௨௮. ௰௪.

குயவனின் களிமண்ணும் பாதி இரும்புமாயி
ருக்கக்கண்டதேதென்றால், அது பிரிந்த இராச்
சியமாயிருக்கும்; ஆகிலும் களிமண்ணோடே
இரும்பு கலந்திருந்ததென்று நீர் கண்டபடியே
இரும்பினுடைய உறுதியில் சிலது அதிலே
௪௨ இருக்கும்.—கால்களின் விரல்கள் பாதி இரும்
பும் பாதி களிமண்ணுமாய் இருந்ததேதெனில்,
இராச்சியம் ஒருபங்குக்கு உரமும் ஒருபங்குக்கு
௪௩ முறியலுமாயிருக்கும்.—நீர் இரும்பைக் களிமண
ணோடே கலந்ததாகக் கண்டதேதெனில், அவர்
கள் மனுஷவித்தாய்க் கலப்பாவார்கள்; ஆகிலும்
இதோ, களிமண்ணோடே இரும்பு கலவாதது
போல அவர்கள் ஒன்றுக்கொன்று ஒட்டிக்கொள்
௪௪ ளாதிருப்பார்கள்.—இந்த இராசாக்களின் நாள்
களிலேயென்றால், பரமண்டலத்தின் பரா
பரன் [1]என்றென்றைக்கும் அழியாத ஒரு இராச்
சியத்தை எழும்பப்பண்ணுவார்; இந்த இராச்
சியம் வேறே சனத்துக்கு விட்டுவைக்கப்படுவ
தில்லை; ஒரு கல் கைகளையல்லாமல் மலையிலி
ருந்து பேர்ந்து, உருண்டுவந்து, இரும்பையும்
வெண்கலத்தையும் களிமண்ணையும் வெள்ளி
யையும் பொன்னையும் நொறுக்கினதை நீர் எப்ப
டிக் கண்டீரோ, அப்படி இது அந்த இராச்சியங்
களை எல்லாம் நொறுக்கி, இல்லாதேபோகப்பண்
௪௫ ணி, தானோ என்றென்றைக்கும் நிற்கும்.—இனி
மேல் சம்பவிக்கப்போகிறதை மகத்துவமான
பராபரன் இராசாவுக்கு அறிவித்தார்; சொப்ப
னமானது நிச்சயமும் அதின் அர்த்தம் சத்தியமு
மாயிருக்கிறது என்றான்.

௪௬ அப்போது இராசாவாகிய நேபுகாத்நேச்சார்
முகங்குப்புறவிழுந்து, தானியேலைப் பணிந்து
கொண்டு, அவனுக்குக் காணிக்கையைப் படைக்
௪௭ கவும் தூபங்காட்டவும் சொன்னான்.—இராசா
பிரதியுத்தாரங்கொடுத்துத் தானியேலுடனே, நீ
இந்த இரகசியத்தை வெளிப்படுத்தத்தக்கவனா
னபடியினாலே, உங்கள் பராபரனே தேவாதிதே
வனும் இராசாதி ஆண்டவரும் இரகசியங்களை
வெளிப்படுத்துகிறவரும் என்கிறது மெய்யாயி
௪௮ ருக்கிறதென்றான்.—பிறகு இராசா தானியேலைப்
பெரியவனாக்கி, அவனுக்கு வெகுவான பெரிய
காணிக்கைகளைக் கொடுத்து, அவனைப் பாபேலு
டைய சீமையின்மேல் எல்லாம் துரையும் பாபே
லுடைய எல்லா ஞானிகளின்மேலும் தலையான
௪௯ அதிகாரியுமாக்கினான்.—தானியேல் இராசாவை
வேண்டிக்கொண்டதற்கு அவன் சாத்ராகையும்,
மேஷாகையும், ஆபேத்நேகோவையும் பாபேல்
சீமையினுடைய வேலையின் விசாரிப்புக்காரராக
வைத்தான்; தானியேலோவென்றால் இராசா
வின் வாசலிலே இருந்தான்.

## ௩. அதிகாரம்

௧. நேபுகாத்நேச்சார் தூராவிலே ஒரு பொற்சிலையை ஸ்தாபித்தது. அ. சாத்ராகு, மேஷாகு, ஆபேத்நேகோ என்பவர்கள் அந்தச் சிலையைத் தொழுகிறதில்லை என்றதற்காகக் குற்றஞ்சாற்றப்பட்டது. ௰௩. அவர்கள் பயமுறுத்தப்பட்டு, நல்ல அறிக்கையிட்டது. ௰௯. பராபரன் அவர்களை அக்கினிச்சூளையினின்று விடுதலைபண்ணினது. ௨௧. நேபுகாத்நேச்சார் கடந்த புதுமையைக்கண்டு பராபரனைத் துதித்தது.

நேபுகாத்நேச்சார் அறுபதுமுழ உயரமும் ஆறு ௧
முழ அகலமுமான பொற்சிலையைப் பண்ணு
வித்து, பாபேல் சீமையில் இருக்கிற தூரா என்ற
பள்ளத்தாக்கிலே நிறுத்திவைத்தான்.—பிற்பாடு ௨
நேபுகாத்நேச்சாரென்ற இராசா சுபையதார்களை
யும், அதிகாரிகளையும், தலைவரையும், நியாயாதிப
திகளையும், பொக்கிஷக்காரரையும், நீதிசாஸ்திரி
களையும், மணியக்காரரையும், சீமைகளை ஆளுகிற
அனைவரையும் நேபுகாத்நேச்சார் இராசா நிறுத்
தின சிலையின் பிரதிஷ்டைக்குவந்து கூடும்ப
டிக்கு அழைத்தனுப்பினான்.—அப்போது சுபை ௩
யதார்களும், அதிகாரிகளும், தலைவரும், நியாயா
திபதிகளும், பொக்கிஷக்காரரும், நீதிசாஸ்திரி
களும், மணியக்காரரும், சீமைகளை ஆளுகிற அ
னைவரும், நேபுகாத்நேச்சார் இராசா நிறுத்தின
பொற்சிலையின் பிரதிஷ்டைக்குக் கூடிவந்து,
நேபுகாத்நேச்சார் நிறுத்தின சிலைக்கு எதிராக
நின்றார்கள்.

பறைமுறையிடுகிறவன் உரத்த சத்தமாய்க் ௪
கூறினதாவது: எந்தச் சனசதளத்தாரும் சாதியா
ரும், பாஷைக்காரருமாயிருக்கிறவர்களே, உங்க
ளுக்குச் சொல்லப்படுகிறதேதெனில்,—காளம், ௫
நாகசுரம், கின்னரம், வீணை, சுரமண்டலம்,
தம்புருமுதலான சகலவித கீதவாத்தியத்தின் சத்
தத்தை நீங்கள் கேட்கும்போது, நீங்கள் தாழவி
ழுந்து, இராசாவாகிய நேபுகாத்நேச்சார் நிறுத்
தின பொற்சிலையைப் பணிந்துகொள்ளக்கடவீர்
கள்.—எவனாகிலும் தாழவிழுந்து, அதைப் ௬
பணிந்துகொள்ளாதேபோனால், அவன் அந்நே
ரமே எரிகிற அக்கினிச்சூளையின் நடுவிலே போ
டப்படுவான் என்றான்.—ஆகையினாலே சகல ௭
சனசதளங்களும், காளம், நாகசுரம், கின்னரம்,
வீணை, சுரமண்டலம்முதலான சகலவித கீதவாத்
தியத்தின் சத்தத்தைக் கேட்டபோதே, சகல சன
சதளத்தாரும் சாதியாரும் பாஷைக்காரரும் தாழ
விழுந்து, நேபுகாத்நேச்சார் இராசா நிறுத்தின
பொற்சிலையைப் பணிந்துகொண்டார்கள்.

ஆனதுகொண்டு அந்நேரமே கல்தேயபுருஷர் ௮
சிலர் சேர்ந்துவந்து, யூதர்பேரிலே குற்றஞ்சாற்
றிப்பேசி,—இராசாவாகிய நேபுகாத்நேச்சாருக் ௯
குச் சொன்னதாவது: இராசாவே என்றைக்கும்
வாழ்க.—காளம், நாகசுரம், கின்னரம், வீணை, ௰
சுரமண்டலம், தம்புருமுதலான சகலவித கீத
வாத்தியத்தின் சத்தத்தைக்கேட்கிற எந்த மனுஷ
னும் தாழவிழுந்து, பொற்சிலையைப் பணிந்து
கொள்ளவேண்டுமென்றும்,—எவனாகிலும் தாழ ௰௧
விழுந்து பணிந்துகொள்ளாதேபோனால், அவன்
எரிகிற அக்கினிச்சூளையின் நடுவில் போடப்படு
வானென்றும், இராசாவாகிய நீர் தீர்மானம்பண்
ணினீரே.—[2]நீர் பாபேல்சீமையின் வேலைக்கு ௰௨
விசாரிப்புக்காரராக வைத்த சாத்ராக், மேஷாக்,

1 தானி. ௭. ௰௪, ௨௭. மீகா. ௪. ௭. லூக். ௧. ௩௩.

2 தானி. ௨. ௪௯.

ஆபேத்நேகோ என்ற யூதரான புருஷர் இருக்கி
றார்கள்; இந்தப்புருஷர் இராசாவாகிய உம்மைச்
சட்டைபண்ணினதில்லை; இவர்கள் உம்மு
டைய தேவர்களுக்கு ஆராதனைசெய்யாமலும்
நீர் நிறுத்தின பொற்சிலையைப் பணிந்துகொள்
ளாமலும் இருக்கிறார்கள் என்றார்கள்.
௰௩ அப்போது நேபுகாத்நேச்சார் சினமும் உக்கிர
முமாய்ச் சாத்ராகையும், மேஷாகையும், ஆபேத்
நேகோவையும் அழைத்துவரச்சொன்னான்; அந்
தப் புருஷரை அவர்கள் இராசாவின்முன்பாக
௰௪ அழைத்துவந்து விட்டபோது,—நேபுகாத்நேச்
சார் அவர்களோடே சொன்ன உத்தரவாவது:
சாத்ராக், மேஷாக், ஆபேத்நேகோ என்றவர்க
ளே, என்னுடைய தேவர்களுக்கு ஆராதனைசெய்
யாமலும் நான் நிறுத்தின பொற்சிலையைப் பணி
ந்துகொள்ளாமலும்போக நீங்கள் மனதானவர்க
௰௫ ளோ? — இப்போதும் காளம், நாகசுரம், கின்
னரம், வீணை, சுரமண்டலம், தம்புருமுதலான
சகலவித கீதவாத்தியத்தின் சத்தத்தை நீங்கள்
கேட்கும்போது நீங்கள் தாழவிழுந்து, நான்
பண்ணிவைத்த சிலையைப் பணிந்துகொள்ள
ஆயத்தமாயிருந்தால் நல்லது; பணிந்துகொள்ளா
திருந்தீர்களேயாகில், இந்நேரமே எரிகிற அக்கி
னிச்சூளையின் நடுவில் போடப்படுவீர்கள்; உங்
களை என் கைக்குத் தப்புவிக்கப்போகிற தே
வன் யாரென்றான்.

௰௬ சாத்ராக், மேஷாக், ஆபேத்நேகோ என்றவர்
கள் இராசாவுக்குப் பிரதியுத்தாரமாகச் சொன்
னதாவது: நேபுகாத்நேச்சாரே, இந்த வர்த்தமா
னத்தைக்குறித்து உமக்கு உத்தரவுசொல்ல எங்
௰௭ களுக்குத் தேவையில்லை. — இதோ, நாங்கள்
ஆராதனைசெய்கிற எங்கள் பராபரன் எங்களைத்
தப்புவிக்க வல்லவராயிருக்கிறார்; [1]எரிகிற அக்
கினிச்சூளைக்கும் இராசாவாகிய உம்முடைய
௰௮ கைக்கும் நீங்கலாக்கி விடுவிப்பார்.—விடுவிக்கா
தேபோனாலும், நாங்கள் உம்முடைய தேவர்க
ளுக்கு ஆராதனை செய்வதுமில்லை, நீர் நிறுத்தின
பொற்சிலையைப் பணிந்துகொள்வதுமில்லை
என்கிறது இராசாவாகிய உமக்கு அறியப்பட்
டிருக்கக்கடவதென்றார்கள்.

௰௯ அப்போது நேபுகாத்நேச்சாருடைய முகநாடி
சாத்ராக், மேஷாக், ஆபேத்நேகோ என்றவர்க
ளுக்கு விரோதமாய் வேறுபடத்தக்கதாக அவன்
உக்கிரத்தினாலே நிறையப்பட்டான்; சூளையைக்
காங்கையாக்கும் வாடிக்கையைப்பார்க்கிலும்
அதை ஏழத்தனை காங்கையாக்க அவன் உத்தரவு
௨௰ கொடுத்து,—சாத்ராக், மேஷாக், ஆபேத்நேகோ
என்றவர்களை எரிகிற அக்கினியின் சூளையிலே
போடுவதற்காக அவர்களைக் கட்ட, தன் இரா
ணுவத்தில் பலத்த ஆள்களாகிய புருஷருக்குச்
௨௧ சொன்னான்.—அப்போது அந்தப் புருஷர் தங்
கள் சால்வைகளோடும் கிசார்களோடும் பாகை
களோடும் வஸ்திரங்களோடும் கட்டப்பட்டு,
எரிகிற அக்கினிச்சூளையின் நடுவிலே போடப்
பட்டார்கள்.—ஆனால் இராசாவின் வார்த்தை கடி ௨௨
சானபடியினாலும், சூளை மிகுதியும் காங்கையாக்
கப்பட்டபடியினாலும், அக்கினியின் சுவாலை
சாத்ராக், மேஷாக், ஆபேத்நேகோ என்றவர்களை
உயரக் கொண்டுபோன புருஷரைக் கொன்று
போட்டது.—சாத்ராக், மேஷாக், ஆபேத்நேகோ ௨௩
என்ற அந்த மூன்று புருஷரோவெனில், கட்
டுண்டவர்களாய் எரிகிற அக்கினிச்சூளையின்
நடுவிலே விழுந்தார்கள்.

அப்போது நேபுகாத்நேச்சார் என்ற இராசா ௨௪
பிரமித்து, தீவிரமாய் எழுந்திருந்து, தன் சேர்
வைக்காரருடனே: நாம் மூன்று புருஷரை அல்
லவோ கட்டுண்டவர்களாக அக்கினியிலே போ
டுவித்தோமென்று சொன்னான்; இராசாவுக்குப்
பிரதியுத்தாரமாக, ஆம், ஆம் இராசாவே என்றார்
கள்.—அவன் மறுமொழியாக: இதோ, விடுதலை ௨௫
யாய் அக்கினியின் நடுவிலே உலாவுகிற நாலு
பேரைக் காண்கிறேனே; அவர்களில் சேதமு
மில்லை; நாலாம்பேரின் சாயல் தேவர்களின் புத்
திரருக்கு ஒப்பானதென்றான்.—அப்போது நே ௨௬
புகாத்நேச்சார் எரிகிற சூளையினுடைய வாச
லண்டைக்கு வந்து, உன்னதமான பராபரனு
டைய தாசராகிய சாத்ராக், மேஷாக், ஆபேத்
நேகோ என்றவர்களே, புறப்பட்டுவாருங்க
ளென்று சொன்னான்; அப்போது சாத்ராக், மே
ஷாக், ஆபேத்நேகோ என்றவர்கள் அக்கினியி
லிருந்து வெளியே வந்தார்கள். — சுபையதார் ௨௭
களும், அதிகாரிகளும், தலைவரும், இராசாவின்
சேர்வைக்காரரும் கூடிவந்து, [2]அக்கினி அந்தப்
புருஷருடைய சரீரங்களின்மேல் பலஞ்செய்
யாமலும், அவர்களுடைய தலைமயிர் கருகாம
லும், அவர்களுடைய சால்வைகள் வேறுபடா
மலும், அக்கினியின் மணம் அவர்களுக்குள்
பிரவேசியாமலும் போயிற்றென்று அவர்களைப்
பார்த்துக்கொண்டிருந்தார்கள்.

நேபுகாத்நேச்சார் வசனித்துச் சொன்னதா ௨௮
வது: தங்களுடைய பராபரனைத்தவிர வேறொரு
தேவனையும் சேவித்துப் பணியாதபடிக்கு அவ
ரை நம்பினவர்களும், இராசாவின் வார்த்தை
யைத் தள்ளி, தங்கள் சரீரங்களை ஒப்புக்கொடுத்த
வர்களுமாகிய சாத்ராக், மேஷாக், ஆபேத்நேகோ
என்ற தம்முடைய தாசரைத் தமது தூதனை அ
னுப்பி விடுவித்த அவர்களுடைய பராபரன்
ஸ்தோத்திரிக்கப்பட்டவர்.—சாத்ராக், மேஷாக், ௨௯
ஆபேத்நேகோ என்றவர்களுடைய பராபரனுக்
கு விரோதமாகத் தூஷணவார்த்தையைச் சொல்
லுகிற எந்தச் சனமும், சாதியானும், பாஷைக்கார
னும் துண்டித்துப்போடப்படுவார்கள்; அவர்கள்
வீடு எருக்களமுமாக்கிப்போடப்படும் என்று
என்னாலே தீர்மானிக்கப்படுகிறது; ஏனெனில்
இந்த அடைவாகத் தப்பித்துவிடத்தக்க வேறே
தேவனே இல்லையென்றான். — பிறகு இராசா ௩௰

1 ஏசா. ௪௩. ௨

2 எபி. ௧௧. ௩௪.

[1]சாத்ராக், மேஷாக், ஆபேத்நேகோ என்றவர்க
ளைப் பாபேல் தேசத்திலே உயர்த்தினான்.

## ௪. அதிகாரம்.

*௧. நேபுகாத்நேச்சார் பராபரனுடைய ஆளுகையை அறிக்கையிட்டது. ௪ ஜோஸியக்காரர்கள் விடுவிக்ககூடாத தன் சொப்பனங்களைச் சொன்னது. ௮. தானியேல் சொப்பனத்தைக் கேட்டு, ௰௯. அதை விடுவித்தது. ௨௮. அந்தச் சரித்திரவரலாறு*

௧ இராசாவாகிய நேபுகாத்நேச்சார் பூமி எங்கும்
குடியிருக்கிற சகல சனசதளத்தாருக்கும் சாதி
யாருக்கும் பாஷைக்காரருக்கும் எழுதுகிறதா
வது: உங்களுடைய சமாதானம் பெருகக்கட
௨ வது.—உன்னதமான பராபரன் என்னில் செய்த
அடையாளங்களையும் அற்புதங்களையும் பிரசித்
தம்பண்ணுவது எனக்கு நன்றாய்க் கண்டது.—
௩ அவருடைய அடையாளங்கள் எத்தனை மகத்து
வமும் அவருடைய அற்புதங்கள் எத்தனை வல்
லமையுமாயிருக்கின்றன; [2]அவருடைய இராச்சி
யம் நித்திய இராச்சியம்; அவருடைய ஆளுகை
தலைமுறை தலைமுறையாக நிற்கும்.
௪ நேபுகாத்நேச்சாராகிய நான் என் வீட்டிலே
சாங்கோபாங்கமுள்ளவனும் என் அரமனையி
௫ லே செழித்தவனுமாய் இருந்தேன்.—ஆனால் ஒரு
சொப்பனத்தைக் கண்டேன்; அது எனக்குத்
திகிலை உண்டாக்கிற்று; என் படுக்கையின்மேல்
எனக்கு உண்டான நினைவுகளும் என் தலையின்
தரிசனங்களும் என்னைக் கலங்கப்பண்ணின.—
௬ ஆகையால் சொப்பனத்தின் அர்த்தத்தை எனக்கு
அறிவிக்கிறதற்காக, பாபேலின் ஞானிகளை எல்
லாம் எனக்குமுன்பாகப் பிரவேசிக்கப்பண்ண
௭ என்னால் தீர்மானம்பண்ணப்பட்டது. — அப்
போது சாஸ்திரிகளும், சோதிரிஷக்காரரும், கல்
தேயரும், குறிசொல்லுகிறவர்களும் பிரவேசித்
தார்கள்; அவர்களுக்குமுன்பாக நான் சொப்ப
னத்தைச் சொன்னேன்; ஆனால் அதின் அர்த்தத்
௮ தை எனக்கு அறிவிக்காதேபோனார்கள்.—கடை
சியிலே பெல்தேஷாத்சார் என்று என் தேவனு
டைய நாமத்தின்படியே பெயரிடப்பட்ட [3]பரி
சுத்த தேவருடைய ஆவியையுடைய தானியேல்
என் முன்பாகப் பிரவேசித்துவந்தான்; அவனுக்
குமுன்பாக நான் சொப்பனத்தை விவரித்துச்
சொன்னதாவது:

௯ சாஸ்திரிகளின் அதிபதியாகிய பெல்தேஷாத்
சாரே, பரிசுத்த தேவருடைய ஆவி உனக்குள்
இருக்கிறதென்றும், [4]உனக்கு ஒரு இரகசியமும்
அரிதானது அல்லவென்றும் நான் அறிவேன்;
நான் கண்ட என்னுடைய சொப்பனத்தின் தரி
சனங்களை அவைகளுக்கு என்ன அர்த்தம் உண்
௰ டென்று சொல்.—என் படுக்கையின்மேல் என்
தலைக்கு உண்டான தரிசனங்கள் என்னவென்
றால், இதோ, நடுத்தேசத்திலே மகா உயரமாயிருக்
௰௧ கிற ஒரு விருட்சத்தைக் கண்டேன்.—அந்த வி
ருட்சத்தின் உயரம் வானபரியந்தம் எட்டி, அது
தேசத்தின் எல்லா எல்லைபரியந்தமும் தெரியத்
தக்கதாக வளர்ந்து பலத்திருந்தது.—அதின் இலை ௰௨
கள் நேர்த்தியும், அதின் கனி வெகுவாயும் இருந்
தன; எல்லாச் சீவனுக்கும் அதில் ஆகாரம் உண்
டாயிருந்தது; அதின்கீழே வெளியின் மிருகங்
கள் நிழலுக்கு இருந்தன; அதின் கொப்புகளில்
ஆகாசத்தின் பட்சிகள் தாபரித்துச் சகல மாம்ச
மும் அதினால் போஷிக்கப்பட்டது.—என் படுக் ௰௩
கையின்மேல் என் தலைக்கு உண்டான தரிச
னங்களில் நான் இதைக் காண்கையில், இதோ,
பரிசுத்தக்காவலாளி ஒருவன் வானத்திலிருந்து
இறங்கி, — உரக்கக் கூப்பிட்டுச் சொன்னதா ௰௪
வது: அந்த விருட்சத்தை வெட்டி, அதின்கொப்
புகளை அறுத்துப்போடுங்கள்; மிருகங்கள் அதின்
கீழும், பட்சிகள் அதின் கொப்புகளிலுமிருந்து
ஓடிப்போக, அதின் இலைகளைக் கழித்துப்போ
ட்டு, அதின் கனியைச் சிதறவடியுங்கள்.—ஆனால் ௰௫
அதின் வேர்களாகிய அடிமரம் பூமியில் இருக்
கட்டும்; இரும்பும் வெண்கலமுமான விலங்கோ
டே வெளியின் புல்லிலே தங்கி, ஆகாசத்துப்பனி
யினால் நனைவானாக; மிருகங்களோடே பூமியின்
பூண்டிலே அவனுடைய பங்கு இருக்கக்கட
வது.—அவனுடைய இருதயம் மனுஷ இருதய ௰௬
மாய் இராதபடிக்கு மாறி, மிருக இருதயம் அவ
னுக்குக் கொடுக்கப்படும்; இப்படியிருக்கிற அ
வன்மேலே ஏழு காலங்கள் கடந்துபோகவேண்
டும்.—[5]உன்னதமானவர் மனுஷருடைய இராச் ௰௭
சியத்தை ஆண்டு, தாம் சித்தமாயிருக்கிறவனுக்கு
அதைக் கொடுத்து, மனுஷரில் தாழ்ந்தவனையும்
அதின்மேல் அதிகாரியாக்குகிறார் என்று நர
சீவன்கள் அறியும்படிக்குக் காவலாளிகளின்
தீர்ப்பினால் இந்த நியாயமும் பரிசுத்தவான்க
ளின் மொழியினால் இந்த நீதிவிசாரிப்பும் தீர்மா
னிக்கப்பட்டன என்றான்.—இதையே நேபுகாத் ௰௮
நேச்சார் என்ற இராசாவாகிய நான் சொப்ப
னத்திலே கண்டேன்; இப்போதும் பெல்தே
ஷாத்சாராகிய நீ அர்த்தத்தைச் சொல்; ஏனெ
னில் என் இராச்சியத்தின் ஞானிகள் எல்லாரும்
அர்த்தத்தை எனக்கு அறிவிக்கத்தகாதவர்கள்;
நீயோ அதை அறிவிக்கத்தக்கவன்; ஏனென்றால்
பரிசுத்த தேவருடைய ஆவி உனக்குள் இருக்கி
றதே என்றான்.

அப்போது பெல்தேஷாத்சாரென்று பெய ௰௯
ருள்ள தானியேலை அவனுடைய நினைவுகள்
கலங்கப்பண்ணுகிறதினாலே, அவன் ஒரு நாழி
கைமட்டும் திகைத்திருந்தான்; இராசா உத்தரவு
கொடுத்து, பெல்தேஷாத்சாரே, சொப்பனமும்
அதின் அர்த்தமும் உன்னைக் கலங்கப்பண்ண
வேண்டாம் என்றான்; அப்போது பெல்தேஷாத்
சார் பிரதியுத்தாரங்கொடுத்துச் சொன்னதாவது:
என் ஆண்டவனே, அந்தச் சொப்பனம் உம்மு
டைய பகைஞருக்கும், அதின் அர்த்தம் உம்மு
டைய சத்துருக்களுக்கும் செல்வதாக.—உயரம் ௨௰
வானபரியந்தம் எட்டி, தேசமெங்கும் தெரியத்

1 தானி. ௨. ௪௮, ௪௯.—2 தானி. ௬. ௨௬.—3 தானி. ௫ ௰௧, ௰௪.

4 எசே. ௨௮. ௩.—5 தானி. ௨. ௨௧.

தக்கதாகப் பெரியதும் பலத்ததுமானதும்,—
௨௧ இலைகள் நேர்த்தியும் கனிகள் வெகுவானதும்,
எல்லாச் சீவனுக்கும் ஆகாரம் உண்டானதும்,
கீழே வெளியின் மிருகங்கள் தங்கினதும், கொப்
புகளில் ஆகாயத்துப் பட்சிகள் தாபரித்ததுமான
௨௨ விருட்சத்தைக் கண்டீரே.—அது [1]பெரியவரும்
பலத்தவருமாயிருக்கிற இராசாவாகிய நீர்தாமே;
ஏனெனில் உமது மகத்துவம் பெருகி, அது வான
பரியந்தமும், உமது கர்த்தத்துவம் பூமியின்
௨௩ எல்லைபரியந்தமும் எட்டிப்போயிற்று.—அந்த
விருட்சத்தை வெட்டி, அதைக் கெடுத்துப்போ
டுங்கள்; ஆனால் அதின் வேர்களாகிய அடிமரம்
தரையில் இருக்கட்டுமென்றும், இரும்பும் வெண்
கலமுமான விலங்கோடே வெளியின் புல்லிலே
தங்கி, ஆகாயத்துப் பனியினால் நனைவானாக;
ஏழு காலங்கள் அவன்மேலே கடந்து போகுமட்
டுக்கும் மிருகங்களோடே அவனுடைய பங்கு
இருக்கக்கடவதென்றும், வானத்திலிருந்து இ
றங்கிச் சொன்ன பரிசுத்தக் காவலாளியை இரா
௨௪ சாக் கண்டாரே.—இராசாவே, அதின் அர்த்தம்
என்னவெனில், மனுஷரைவிட்டுத் தள்ளுண்
பீர்; வெளியின் மிருகங்களோடே உம்முடைய
தாபரிப்பு இருக்கும்; மாடுகளைப்போலப் புல்லை
மேய்ந்து, ஆகாசத்துப் பனியினால் நனைவீர்.—
௨௫ இப்படியே உன்னதமானவர் மனுஷரின் இராச்
சியத்தை ஆண்டுகொண்டு, தாம் சித்தமாயிருக்
கிறவனுக்கு அதைக் கொடுக்கிறார் என்பதை நீர்
அறிந்துகொள்ளுமட்டும் ஏழுகாலங்கள் உம்மு
டையமேல் கடந்துபோகவேண்டுமென்கிறதே
இராசாவாகிய என் ஆண்டவன்பேரிலே வந்த
௨௬ உன்னதமானவருடைய தீர்மானம். — ஆனால்
விருட்சத்தின் வேர்களாகிய அடிமரம் தரையில்
இருக்கட்டுமென்று சொல்லப்பட்டதென்ன
வென்றால், நீர் பரம அதிகாரத்தை அறிந்தபின்,
௨௭ இராச்சியம் உமக்கு நிலைநிற்கும்.—ஆகையால்
இராசாவே, நீதியைப்பற்றி உமது பாவங்களை
யும், சிறுமையானவர்களுக்கு இரங்கி உமது அக்
கிரமங்களையும் அறுத்துவிடும்; அப்போது ஒரு
வேளை உம்முடைய சாங்கோபாங்கத்துக்கு
நீடிப்பு உண்டாயிருக்கும் என்றான்.

௨௮ இது எல்லாம் இராசாவாகிய நேபுகாத்நேச்சா
௨௯ ரின்மேல் வந்தது.—பன்னிரண்டுமாதம் சென்ற
பின், அவன் பாபேலில் இருக்கிற இராச அர
௩௰ மனையின்மீதில் உலாவிக்கொண்டிருந்து,—[2]இது
என் வல்லமையின் பலத்தினாலும் என் மகத்து
வத்தின் பிரஸ்தாபத்துக்கும் நான் இராச அர
மனையாகக் கட்டின மகா பாபிலோன் அல்ல
௩௧ வோ என்று இராசா சொன்னான்.—இன்னம் இந்த
வார்த்தை இராசாவின் வாயில் இருக்கையில்
வானத்திலிருந்து ஒரு சத்தம் இறங்கிச் சொன்
னதாவது: நேபுகாத்நேச்சார் என்ற இராசாவே,
இராச்சியபாரம் உன்னைவிட்டுப் போயிற்றென்
௩௨ றும்,—மனுஷரைவிட்டுத் தள்ளுண்பாய், வெளி
யின் மிருகங்களோடே உன் தாபரிப்பு இருக்
கும்; மாடுகளைப்போலப் புல்லை மேய்வாய்; இப்
படியே உன்னதமானவர் மனுஷரின் இராச்சி
யத்தை ஆண்டுகொண்டு, தாம் சித்தமாயிருக்கிற
வனுக்கு அதைக் கொடுக்கிறாரென்பதை நீ அறிந்
துகொள்ளுமட்டும் ஏழு காலங்கள் உன்மேல்
கடந்துபோகுமென்றும் உனக்குச் சொல்லப்
படுகிறது என்றது.
அந்நேரமே இந்த வார்த்தை நேபுகாத்நேச்சா ௩௩
ரில் நிறைவேறிற்று; [3]அவன் மனுஷரைவிட்டுத்
தள்ளுண்டு, மாடுகளைப்போலப் புல்லை மேய்ந்
தான்; அவனுடைய மயிர் கழுகுகளுடையதற்
கும், அவனுடைய நகங்கள் பட்சிகளுடைய
நகங்களுக்கும் சமானமாய் வளருமட்டுக்கும்
அவன் சரீரம் ஆகாயத்துப்பனியினால் நனைந்தது.
அந்த நாள்கள் சென்றபோதோவெனில், நே ௩௪
புகாத்நேச்சாராகிய நான் என் கண்களை வானத்
துக்கு ஏறெடுத்தேன்; என் புத்தி எனக்குத் திரும்
பிவந்தது; அப்போது நான் உன்னதமானவரை
ஸ்தோத்திரித்து, என்றென்றைக்கும் பிழைக்கிற
வரைப் புகழ்ந்து, மகிமைப்படுத்தினேன்; அவ
ருடைய கர்த்தத்துவமே நித்திய கர்த்தத்துவமா
னது; அவருடைய இராச்சியமே தலைமுறை
தலைமுறையாக நிற்கும்.—பூமியின் குடிகள் எல் ௩௫
லாம் ஒன்றுமில்லையென்று எண்ணப்படவேண்
டும்; அவர் தமது சித்தத்தின்படியே வானத்தின்
சேனையையும் பூமியின் குடிகளையும் நடப்பிக்
கிறார்; அவருடைய கையைத் தட்டி, அவருட
னே என்ன செய்கிறீரென்று சொல்லத்தக்கவன்
இல்லையென்றேன்.—அவ்வேளையே என் புத்தி ௩௬
எனக்குத் திரும்பிவந்தது; என் இராச்சியபாரத்
தின் மேன்மைக்காக என்னுடைய மகிமையும்
என்னுடைய முகக்களையும் எனக்குத் திரும்பி
வந்தன; என்னை என் சேர்வைக்காரரும் என் பெ
ரியமனுஷரும் தேடினார்கள்; என் இராச்சியத்தி
லே திடப்படுத்திவைக்கப்பட்டேன்; அதிகமகத்
துவமும் எனக்குக் கூட்டப்பட்டது.—ஆகை ௩௭
யால் நேபுகாத்நேச்சாராகிய நான் பரமண்டலங்
களின் இராசாவைப் புகழ்ந்து, உயர்த்தி, மகி
மைப்படுத்துகிறேன்; ஏனென்றால் அவருடைய
கிரியைகள் எல்லாம் சத்தியமும் அவருடைய
வழிகள் நியாயமுமானவைகள்; பெருமையாய்
நடக்கிறவர்களைத் தாழ்த்த அவராலே ஆகும்
என்று எழுதினான்.

## ௫. அதிகாரம்.

௧. பெல்ஷாத்சாரின் அவபத்தியான விருந்து. ௫. சூனியக்காரர்களுக்குத் தெரியாத கைபெழுத்து இராசாவைக் கலங்கச்செய்தது. ௰. இராசஸ்திரீயின் யோசனையினால் தானியேல் கொண்டுவரப்பட்டது. ௰௭. அவன் இராசாவினுடைய மமதையையும், விக்கிரகத்தொழும்பையுங்குறித்து அவனைக் கண்டித்து, ௨௫. எழுத்தை வாசித்து, அதின் அர்த்தத்தை வெளிவிட்டது. ௩௰. இராச்சியத்தின் ஆளுகை மேதியருக்குக் கொடுக்கப்பட்டது.

பெல்ஷாத்சார் என்ற இராசா தன்னுடைய பெ ௧
ரியமனுஷரில் ஆயிரம்பேருக்குப் [4]பெரிய விருந்
துபண்ணுவித்து, அந்த ஆயிரம்பேருக்கு முன்

1 தானி. ௨. ௩௭: ௫. ௰௮.—2 லூக். ௧. ௫௧.

3 தானி. ௫. ௰௮, ௨௧.—4 எஸ். ௧. ௩-௯.

பாகத் திராட்சப்பழ இரசம் குடித்துக்கொண்டி
௨ ருந்தான்.—பெல்ஷாத்சார் திராட்சப்பழஇரசத்
தை உருசிக்கிற உருசியோடே இருக்கையில்,
அவன் தன்தகப்பனாகிய நேபுகாத்நேச்சார் எருச
லேம் தேவாலயத்திலிருந்து எடுத்துக்கொண்ட
பொன்னும் வெள்ளியுமான பாத்திரங்களை, இரா
சாவாகிய தானும் தன்னுடைய பெரிய மனுஷ
ரும் தன் பெண்சாதிகளும் தன் வைப்பாட்டிக
ளும் அவைகளில் குடிக்கிறதற்காகக் கொண்டு
௩ வரச்சொன்னான். — அப்போது எருசலேமில்
இருந்த பராபரனுடைய வீடாகிய தேவாலயத்
திலிருந்து எடுக்கப்பட்ட பொற்பாத்திரங்களைக்
கொண்டுவந்தார்கள்; அவைகளில் இராசாவும்
அவனுடைய பெரியமனுஷரும் அவனுடைய
பெண்சாதிகளும் அவனுடைய வைப்பாட்டிக
௪ ளும் குடித்தார்கள்.—அவர்கள் திராட்சப்பழஇர
சமும் குடித்து, பொன்னும் வெள்ளியும் வெண்
கலமும் இரும்பும் மரமும் கல்லுமாகிய தேவர்க
ளைப் புகழ்ந்தார்கள்.

௫ அந்நேரத்திலே ஒரு மனுஷகையின் விரல்கள்
புறப்பட்டு, விளக்குக்கு எதிராக இராச அரம
னையின் சாந்துபூசப்பட்ட சுவரிலே எழுதிற்று;
எழுதுகிற துண்டுக்கையை இராசா கண்டான்.—
௬ அப்போது இராசா வேற்றுமுகமாகி, அவனு
டைய நினைவுகள் அவனைக் கலங்கப்பண்ணின;
அவனுடைய இடுப்பின் கட்டுகள் தளர்ந்து, அவ
னுடைய முழங்கால்கள் ஒன்றோடொன்று மோ
௭ திக்கொண்டிருந்தன.—[1]சோதிரிஷக்காரரையும்
கல்தேயரையும் குறிசொல்லுகிறவர்களையும் உள்
ளே அழைத்துவந்துவிட, இராசா உரத்த சத்த
மாய்க் கூப்பிட்டான்; இராசா பாபேலின் ஞா
னிகளோடே: இந்த எழுத்தை வாசித்து, அதின்
அர்த்தத்தை எனக்குக் காண்பிக்கப்போகிற எந்
த மனுஷனாலும், இரத்தாம்பரமும் தன் கழுத்
திலே பொற்சரப்பணியும் தரிக்கப்பட்டு, இராச்
சியத்திலே மூன்றும் அதிபதியாய் இருப்பா
௮ னென்று சொன்னான். — அப்போது இராசா
வின் ஞானிகள் எல்லாரும் வந்து சேர்ந்தார்கள்;
ஆனால் அவர்கள் அந்த எழுத்தை வாசிக்கவும்
அதின் அர்த்தத்தை இராசாவுக்கு அறிவிக்கவும்
௯ கூடாதிருந்தது.—அப்போது இராசாவாகிய பெ
ல்ஷாத்சார் மிகவும் கலங்கினான்; அவனில் அ
வனுடைய முகம் வேறுபட்டுப்போயிற்று; அவ
னுடைய பெரிய மனுஷர் திகைத்திருந்தார்கள்.

௰ இராசாவும் அவனுடைய பெரியமனுஷரும்
இப்படி இருந்த வர்த்தமானத்தின்நிமித்தமாக,
இராசாத்தி விருந்துசாலைக்குள் பிரவேசித்தாள்;
இராசாத்தி வசனித்துச் சொன்னதாவது: இரா
சாவே, என்றைக்கும் வாழ்க; உமது நினைவுகள்
உம்மைக் கலங்கப்பண்ணவும் உமது முகம் வே
௰௧ றுபட்டுப்போகவும்ஒட்டாதேயும்.—உம்முடைய
இராச்சியத்திலே ஒரு புருஷன் இருக்கிறான்;[2]அ
வனுக்குள் பரிசுத்த தேவருடைய ஆவி இருக்கி
றது; உம்முடைய பிதாவின் நாள்களில் அவனு
க்குள் வெளிச்சமும் விவேகமும் தேவர்களின்
ஞானத்துக்கு ஒத்த ஞானமும் காணப்பட்டன;
ஆகையால் உம்முடைய பிதாவாகிய நேபுகாத்
நேச்சாரென்ற இராசா செய்ததென்னவென்
றால், உம்முடைய பிதாவாகிய இராசா அவ
னைச் சாஸ்திரிகளுக்கும் சோதிரிஷக்காரருக்கும்
கல்தேயருக்கும் குறிசொல்லுகிறவர்களுக்கும்
அதிபதியாக வைத்தார்.—அதேனெனில், இராசா ௰௨
பெல்தேஷாத்சாரென்று பெயரிட்ட அந்தத் தா
னியேலுக்குள் சொப்பனங்களை வியார்த்திபண்
ணுகிறதும், புதைபொருள்களை வெளிப்படுத்து
கிறதும், கருகலானவைகளைத் தெளிவிக்கிறது
மான அறிவும், புத்தியுள்ள விசேஷித்த ஆவியும்
உண்டென்று காணப்பட்டது; இப்போதும் தா
னியேல் அழைக்கப்படட்டும், அவன் அர்த்தத்
தை வெளிப்படுத்துவான் என்றாள்.

அப்போது தானியேல் உள்ளே இராசாவின் ௰௩
முன் அழைத்துவந்து விடப்பட்டான்; இராசா
தானியேலோடே வசனித்துச் சொன்னதாவது:
நீ என் பிதாவாகிய இராசா யூதாவிலிருந்து சிறை
பிடித்து வந்த யூதரில் ஒருவனாகிய தானியேல்
அல்லவோ?—உனக்குள்ளே தேவர்களின் ஆவி ௰௪
உண்டென்றும், உனக்குள்ளே வெளிச்சமும்
புத்தியும் விசேஷித்த ஞானமும் காணப்பட்டன
என்றும் உன்பேரிலே கேட்டேன்.—இப்போ ௰௫
தும் இந்த எழுத்தை வாசிக்கிறதற்கும் அதின்
அர்த்தத்தை எனக்கு அறிவிக்கிறதற்கும் சாஸ்தி
ரிகளும் சோதிரிஷக்காரரும் எனக்குமுன்பாக
அழைத்துவிடப்பட்டார்கள்; ஆனால் அவர்கள்
இந்த வசனத்தின் அர்த்தத்தை வெளிப்படுத்தக்
கூடாதேபோயிற்று.—நீயோவென்றால் வியார்த் ௰௬
திகளை வெளிப்படுத்தவும், கருகலானவைகளைத்
தெளிவிக்கவும்மாட்டுவாயென்று உன்பேரிலே
நான் கேட்டேன்; இப்போதும் நீ இந்த எழுத்
தை வாசிக்கவும் அதின் அர்த்தத்தை எனக்கு அ
றிவிக்கவும் சாமர்த்தியனாயிருந்தால், நீ இரத்தாம்
பரமும் உன் கழுத்திலே பொற்சரப்பணியும்
தரிக்கப்பட்டு, இராச்சியத்திலே மூன்றும் அதி
பதியாய் இருப்பாயென்றான்.

அப்போது தானியேல் இராசாவுக்குமுன்பா ௰௭
கச் சொன்ன பிரதியுத்தரமாவது: உம்முடைய
காணிக்கைகள் உம்மிடத்தில் இருக்கட்டும்;
உம்முடைய உச்சிதங்களை வேறொருவனுக்குக்
கொடும்; எழுத்தையோவென்றால் நான் இராசா
வுக்கு வாசித்து, அர்த்தத்தை அவருக்கு அறிவிப்
பேன்.—இராசாவே, [3]உன்னதமான பராபரன் ௰௮
உம்முடைய பிதாவாகிய நேபுகாத்நேச்சாருக்கு
இராச்சியத்தையும் மகத்துவத்தையும் கனத்தை
யும் முக்கியத்தையும் கொடுத்தார்.—அவருக்கு ௰௯
அவர் கொடுத்த மகத்துவத்தினாலே சகல சனசத
ளத்தாரும் சாதியாரும் பாஷைக்காரரும் அவருக்
குமுன்பாக நடுங்கிப் பயந்திருந்தார்கள்; ஏனெ

1 தானி. ௨. ௨: ௪. ௬.—2 தானி. ௪. ௮, ௯—௰௮.

3 தானி. ௨. ௩௭.

னில் தமக்குச் சித்தமானவனைக் கொன்றுபோ
டுவார்; தமக்குச் சித்தமானவனை உயிரோடே
வைப்பார்; தமக்குச் சித்தமானவனை உயர்த்து
வார்; தமக்குச் சித்தமானவனைத் தாழ்த்துவார்.—
உ௰ ஆனால் [1]அவருடைய இருதயம் உயர்ந்து, அவரு
டைய ஆவி அகந்தையாயிருக்கக் கடினப்பட்ட
போது, அவர் தமது இராசாசனத்திலிருந்து இ
றக்கப்பட்டார்; அவருடைய மகிமை அவரை
உ௧ விட்டு அகன்றுபோயிற்று.—அவர் மனுஷரை
விட்டுத் தள்ளுண்டார்; அவருடைய இருதயம்
மிருகங்களுடைய சாயலாயிற்று; காட்டுக்கழு
தைகளோடே அவருடைய தாபரிப்பு உண்டா
யிருந்தது; உன்னதமான பராபரன் மனுஷரின்
இராச்சியத்தை ஆண்டுகொண்டு, தமக்குச் சித்த
மானவனை அதின்மேல் அதிகாரியாக்குகிறார்
என்று அவர் அறிந்துகொள்ளுமட்டும், மாடுக
ளைப்போலே புல்லை மேய்ந்தார்; அவருடைய
சரீரம் ஆகாயத்தின் பனியினால் நனைந்தது.—
உ௨ அவருடைய குமாரனாகிய பெல்ஷாத்சார் என்ற
நீரோவென்றால், இதை எல்லாம் அறிந்திருந்தும்,
உ௩ உமது இருதயத்தைத் தாழ்த்தாமல்,—பரமண்ட
லத்தின் ஆண்டவருக்கு விரோதமாக உம்மை
உயர்த்தினீர்; அவருடைய வீட்டின் பாத்திரங்
களை உமக்குமுன்பாகக் கொண்டுவந்தார்கள்;
நீரும் உம்முடைய பெரியமனுஷரும், உம்மு
டைய பெண்சாதிகளும், உம்முடைய வைப்
பாட்டிகளும் அவைகளில் திராட்சப்பழஇரசம்
குடித்தீர்கள்; இதுவுந்தவிர, தம்முடைய கையி
லுள்ள உமது சுவாசத்துக்கும் உமது எல்லா
வழிகளுக்கும் அதிகாரியாகிய பராபரனை நீர்
மகிமைப்படுத்தாமல், [2]காணாமலும் கேளாமலும்
உணராமலும் இருக்கிற வெள்ளியும் பொன்னும்
வெண்கலமும் இரும்பும் மரமும் கல்லுமாகிய
உ௪ தேவர்களைப் புகழ்ந்தீர்.—அப்போது அந்தத் துண்
டுக்கை அவரிடத்திலிருந்து அனுப்பப்பட்டு, அ
தினால் இந்த எழுத்து வரையப்பட்டது.
உ௫ வரையப்பட்ட எழுத்தோவெனில்: மேனே,
மேனே, தெக்கேல், உப்பரேசின் என்பது.—
உ௬ இந்த வசனத்தின் அர்த்தமாவது: மேனே என்
றால், பராபரன் உன் இராச்சியத்தை மட்டிட்டு,
உ௭ அதற்கு முடிவுண்டாக்கினார். — தெக்கேலென்
றால், நீ தராசிலே நிறுக்கப்பட்டு, குறையக் கா
உ௮ ணப்பட்டாய்.—பேரேஸ் என்றால், உன் இராச்
சியம் பகிரப்பட்டு, மேதியருக்கும் பெர்சியருக்
கும் கொடுக்கப்பட்டதென்ற அர்த்தமென்றான்.
உ௯ அப்போது பெல்ஷாத்சார் தானியேலுக்கு
இரத்தாம்பரத்தையும், அவனுடைய கழுத்தில்
பொற்சரப்பணியையும் தரிப்பிக்கவும், [3]இராச்
சியத்திலே அவன் மூன்றாம் அதிகாரியாயிருப்ப
வன் என்று அவனைக்குறித்துப் பறைமுறையி
௩௰ டவும் கட்டளையிட்டான்.—அன்று இராத்திரி
யிலே கல்தேயரின் இராசாவாகிய பெல்ஷாத்
௩௧ சார் கொன்றுபோடப்பட்டான்.—மேதியனான
தரியுவோவென்றால், அறுபத்திரண்டு வயதுள்
ளவனாய் இராச்சியத்தைக் கட்டிக்கொண்டான்.

## ௬. அதிகாரம்.

௧ தானியேல் தலைவர்களுக்குள்ளே முதலாளியாக்கப்பட்டது. ௪. அவர்கள் அவனுக்கு விரோதமாகத் துர்யோசனைசெய்து, விக்கிரகபத்திகரு அடுத்த தீர்மானத்தைப் பெற்றுக்கொண்டது. ௰. தானியேல் அதற்குக் கீழ்ப்படியாததினால் குற்றம் சுமத்தப்பட்டு, சிங்கத்தின் குகையிலே போடப்பட்டது. ௰௮. அவன் காக்கப்பட்டது. உ௪. அவனுடைய சத்துருக்கள் பட்சிக்கப்பட்டது. உ௫. இராசகட்டளையினாலே பராபரனுடைய மகிமை வெளிப்பட்டது.

இராச்சியம் எங்கும் இருக்கிறதற்காக இராச்சி ௧
யத்தின்மேல் நூற்றிருபது சுபையதார்களையும்,—
இராசாவுக்கு நஷ்டம் வராதபடிக்கு அந்தச் ௨
சுபையதார்கள் கணக்கு ஒப்புவிக்கிறதற்காக அ
வர்கள்மீதில் மூன்று துரைகளையும் வைக்க, தரியு
வுக்கு நன்றாகக் கண்டது; இவர்களில் ஒருவன்
தானியேலென்றவன். — இப்படியிருக்கையில் ௩
தானியேலே துரைகளுக்கும் சுபையதார்களுக்
கும் மேற்பட்டவனாய் இருந்தான்; ஏனெனில்
விசேஷித்த ஆவி அவனுக்குள் இருந்தது; ஆகை
யால் அவனை இராச்சியத்துக்கு எல்லாம் அதிகா
ரியாக வைக்க இராசா நினைத்தான்.

அப்போது துரைகளும் சுபையதார்களும் இ ௪
ராச்சியத்தின் விசாரிப்பிலே தானியேலைக் குற்
றப்படுத்தும் சமயத்தைக் கண்டுபிடிக்கப்பார்த்
தார்கள்; ஆனால் அவர்கள் ஒரு சமயத்தையும் குற்
றத்தையும் கண்டுபிடிக்கக் கூடாதிருந்தது;
ஏனெனில் அவன் உண்மையுள்ளவனாயிருந்
தான்; அவன்மேல் சுமத்த ஒரு தப்பும் ஒரு குற்ற
மும் காணப்பட்டதில்லை.—அப்போது அந்தப் ௫
புருஷர்: நாம் இந்தத் தானியேலை அவனுடைய
பராபரனின் வேதகாரியத்திலே குற்றப்படுத்தும்
சமயத்தைக் கண்டுபிடித்தாலொழிய, அவனை
வேறொன்றிலும் குற்றப்படுத்தும் சமயத்தைக்
கண்டுபிடிப்பதில்லை என்றார்கள்.

பிற்பாடு [4]அந்தத் துரைகளும் சுபையதார்க ௬
ளும் ஒரு கூட்டமாய் இராசாவண்டைக்குப்
போய், அவனோடே சொன்னதாவது: தரியு இ
ராசாவே, என்றைக்கும் வாழ்க.—எவனாகிலும் எ
முப்பதுநாள்வரையிலே இராசாவாகிய உம்மை
யேதவிர எந்தத் தேவனையாகிலும் மனுஷனை
யாகிலும் ஒருகாரியத்தைக் கேட்டு விண்ணப்
பம்பண்ணினால், அவன் சிங்கங்களின் கெபியி
லே போடப்பட, இராசா ஒரு கற்பனையைக்
கற்பித்து, உறுதியான தாக்கிதையாக்கவேண்டு
மென்று, இராச்சியத்தினுடைய எல்லாத் துரை
களும் அதிகாரிகளும் சுபையதார்களும் சேர்
வைக்காரரும் தலைவர்மாரும் ஆலோசனைபண்
ணிக்கொண்டிருக்கிறார்கள்.—இப்போதும் இரா ௭
சாவே, மேதியருக்கும் பெர்சியருக்கும் இருக்
கிற பிசகாத நியாயப்பிரமாணத்தின்படியே, அந்
தத் தாக்கிது [5]மாற்றப்படக்கூடாதபடியாக நீர்
அதைக் கற்பித்து, அதை எழுதின கட்டளையாக்

1 தானி. ௪. உ௭. ௩௪.—2 சங். ௱௰௫. ௪: ௱௩௫. ௰௭.—3 ௧ மோ. ௪௧. ௪௧.

4 தானி. ௬. ௯-௰௨.—5 எஸ்த. ௧. ௰௯: ௮. ௮.

௯ குவியும் என்றார்கள். — ஆகையால் இராசாவா
கிய தரியு அந்தத் தாக்கிதை எழுதின கட்டளை
யாக்குவித்தான்.
௰ தானியேலோவென்றால், அது எழுதின கட்
டளையாக்கப்பட்டதென்று அறிந்தபோது தன்
வளவுக்குள்ப் பிரவேசித்தான்; அவனுடைய
மேல்வீட்டிலே [1]எருசலேமுக்கு எதிராகத் திறந்த
பலகணிகள் அவனுக்கு இருந்தன; அங்கே அ
வன் முன்செய்துவந்தபடியே, தினம் மூன்றுவே
ளையிலும் முழங்காற்படியிட்டுச் செபம்பண்ணி,
தன்னுடைய பராபரனுக்குமுன்பாக ஸ்தோத்
திரம் செலுத்தினான்.
௰௧ அப்போது அந்தப் புருஷர் கூட்டமாய் வந்து,
தானியேல் தன்னுடைய பராபரனுக்குமுன்பா
கச் செபம்பண்ணி விண்ணப்பஞ்செய்கிறதைக்
௰௨ கண்டுபிடித்தார்கள்.—பிறகு அவர்கள் சேர்ந்து
வந்து, இராசாவின் தாக்கிதைக்குறித்து இராசா
வுக்கு முன்பாகச் சொன்னதாவது: எந்த மனுஷ
னாகிலும் முப்பதுநாள்வரையிலே இராசாவாகிய
உம்மையேதவிர எந்தத் தேவனையானாலும் மனு
ஷனையானாலும் ஒருகாரியத்தைக் கேட்டு விண்
ணப்பம்பண்ணினால், அவன் சிங்கங்களின் கெ
பியிலே போடப்பட ஒரு தாக்கிதை எழுதின
கட்டளையாக்கினீரல்லவோ என்றார்கள்; இராசா
பிரதியுத்தரமாக, அந்த வார்த்தை மேதியருக்கும்
பெர்சியருக்கும் இருக்கிற பிசகாத நியாயப்பிர
௰௩ மாணத்தின்படி உறுதியாமே என்றான்.—அப்
போது அவர்கள் இராசாவுக்குமுன்பாகச் சொ
ன்ன மறுமொழியாவது: [2]சிறையிருப்பான யூதே
யாதேசத்தின் புத்திரரில் ஒருவனாகிய தானியேல்
உம்மையும் நீர் எழுதிக் கட்டளையாக்கின தாக்கி
தையும் சட்டைபண்ணாமல், தினம் மூன்றுவே
ளையிலும் தன்னுடைய செபத்தைச் செபிக்கி
௰௪ றான் என்றார்கள்.—இராசா இந்த வர்த்தமானத்
தைக் கேட்டபோது, தன்னில் மிகவும் சஞ்சல
மாகி, தானியேலைக் காப்பாற்றும்படிக்கு அவன்
பேரிலே தன் மனதை வைத்து, அவனைத் தப்பப்
பண்ணுகிறதற்காகச் சூரியன் அஸ்தமிக்குமட்
டும் பிரயாசப்பட்டுக்கொண்டிருந்தான்.
௰௫ அப்போது அந்தப் புருஷர் இராசாவண்டையி
லே கூட்டமாய் வந்து, இராசா கட்டளையிட்ட
எந்தத் தாக்கிதும் கற்பனையும் மாற்றப்படக்கூ
டாதென்ற நியாயப்பிரமாணம் மேதியருக்கும்
பெர்சியருக்கும் இருக்கிறதென்று அறிவீராக
௰௬ என்றார்கள்.—அப்போது இராசா தானியேலைக்
கொண்டுவரச்சொன்னான்; அவனைச் சிங்கங்க
ளின் கெபியிலே போட்டார்கள்; இராசா தானி
யேலுடனே: நீ இடைவிடாமல் ஆராதனைசெய்
கிற உன்னுடைய பராபரன் உன்னைத் தப்புவிப்
௰௭ பாராக என்று சொன்னான்.—ஒரு கல் கெபியி
னுடைய வாசலின்மேல் கொண்டுவந்து வைக்
கப்பட்டது; ஆனால் தானியேலின்மேல் தீர்ந்த
நியாயம் மாறாட்டம்பண்ணப்படாதபடிக்கு அ
தை இராசா தன் மோதிரத்தினாலும் தன் பெரிய

1 ௧ இரா. அ. ௪௬—ஐம். ௪௰. ௩௰௭. இ,௬.—2 தானி. இ. ௰௩.

மனுஷரின் மோதிரத்தினாலும் [3]முத்திரைபோட்
டான்.—பிறகு இராசா தன் அரமனைக்குப்போய், ௰௮
இராப்போசனம்பண்ணாமலும், கீதவாத்தியம் மு
தலானவைகளைத் தனக்குமுன்பாக வரவொட்
டாமலும் இருந்தான்; அவனுக்கு நித்திரை வராம
லும் போயிற்று.
காலமே கிழக்கு வெளுக்கிறபோது இராசா ௰௯
எழுந்திருந்து, தீவிரத்தோடே சிங்கங்களின் கெ
பிக்குப் போனான்.—அவன் கெபியின்கிட்ட வந் ௨௰
தபோது, தானியேலைத் துயரசத்தமாய்க் கூப்பிட்
டான்; இராசா தானியேலுடனே: தானியேலே
சீவனுள்ள பராபரனுடைய தாசனே, நீ இடைவி
டாமல் ஆராதனைசெய்கிற உன்னுடைய பரா
பரன் உன்னைச் சிங்கங்களுக்குத் தப்புவிக்கவல்
லவராயிருந்தாரோ என்று கேட்டான்.—அப்போ ௨௧
து தானியேல் இராசாவுடனே சொன்னதாவது:
இராசாவே, என்றைக்கும் வாழ்க.—[4]சிங்கங்கள் ௨௨
எனக்குச் சேதம்பண்ணாதபடிக்குப் பராபரன்
தம்முடைய தூதனை அனுப்பி, அவைகளின் வா
யை அடைத்துப்போட்டார்; அதேனென்றால்
அவருக்குமுன்பாக என்னில் குற்றமில்லாமை
காணப்பட்டது; இராசாவாகிய உமக்குமுன்
பாக நான் நீதிகேடு செய்ததுமில்லை என்றான்.—
அப்போது இராசா தன்னில் மிகவும் சந்தோஷ ௨௩
மாகி, தானியேலைக் கெபியிலிருந்து எடுத்துவி
டச் சொன்னான்; அப்படியே தானியேல் கெபி
யிலிருந்து எடுத்துவிடப்பட்டான்; அவனில்
ஒரு சேதமும் காணப்பட்டதில்லை; ஏனெனில்
தன் பராபரன்பேரிலே விசுவாசித்திருந்தான்.
தானியேலின்மேல் குற்றஞ்சாற்றின அந்தப் ௨௪
புருஷரையோவென்றால் இராசா கொண்டுவரச்
சொன்னான்; அவர்களையும் அவர்கள் குமாரரை
யும் அவர்கள் பெண்சாதிகளையும் சிங்கங்களின்
கெபியிலே போட்டார்கள்; அவர்கள் கெபியின்
தரையிலே வராததற்குமுன்னே சிங்கங்கள் அ
வர்கள்மேல் பாய்ந்து, அவர்கள் எலும்புகளை எல்
லாம் நொறுக்கிப்போட்டன.
பிற்பாடு இராசாவாகிய தரியு தேசமெங்கும் ௨௫
குடியிருக்கிற எல்லாச் சனசதளத்தாருக்கும் சாதி
யாருக்கும் பாஷைக்காரருக்கும் எழுதினதாவது:
உங்களுடைய சமாதானம் பெருகக்கடவது.—
என் இராச்சியத்தினுடைய ஆளுகையின்கீழ் எங் ௨௬
கும் இருக்கிற யாவரும் தானியேலுடைய பரா
பரனுக்குமுன்பாக நடுங்கிப் பயப்பட்டிருக்க
வேண்டுமென்று என்னாலே தீர்மானம்பண்ணப்
படுகிறது; ஏனெனில் அவர் சீவனுள்ளவரும்
என்றென்றைக்கும் நிலைநிற்கிறவருமான பரா
பரனாய் இருக்கிறார்; அவருடைய இராச்சியம்
அழியாதது; அவருடைய கர்த்தத்துவம் முடிவு
பரியந்தமும் இருப்பது. — தானியேலைச் சிங் ௨௭
கங்களின் கைக்குத் தப்புவித்த அவரே தப்புவிக்
கிறவரும் இரட்சிக்கிறவரும், வானத்திலும் பூமி
யிலும் அடையாளங்களையும் அற்புதங்களையும்
செய்கிறவருமாய் இருக்கிறாரென்று எழுதினான்.

3 மத். ௨௭. ௬௬.—4 எபி. ௰௧. ௩௩.

௨௮ இந்தத் தானியேலோவென்றால் தரியுவின் இ
ராச்சியபாரகாலத்திலும் [1]பெர்சியனாகிய கோரே
சுடைய இராச்சியபாரகாலத்திலும் செயமாயி
ருந்தான்.

## ௭. அதிகாரம்.

*௧. தானியேல் நாலு மிருகங்களையும், ௯. பராபரனுடைய இராச்சியத்தை யுங்குறித்துக் கண்ட தேவதரிசனை. ௰௬. அதின் வியாக்கியானம்.*

௧ பாபேலுடைய இராசாவாகிய [2]பெல்ஷாத்சா
ரின் முதலாம் வருஷத்திலே தானியேல் ஒரு
சொப்பனத்தையும் தன் படுக்கையின்மேல் தன்
தலைக்கு உண்டான தரிசனங்களையும் கண்
டான்; பிற்பாடு அந்தச் சொப்பனத்தை எழுதி,
காரியங்களின் தொகையை விவரித்தான்.
௨ தானியேல் வசனித்துச் சொன்னதாவது:
இராத்திரிகாலத்தில் என் தரிசனத்திலே நான்
கண்டதேதெனில், இதோ, வானத்தின் நாலு
காற்றுகளும் பெரிய சமுத்திரத்தில் அடித்தன.—
௩ அப்போது வெவ்வேறே உருவமுள்ள நாலு
பெரிய மிருகங்கள் சமுத்திரத்திலிருந்து எழும்
௪ பின.—முந்தினது சிங்கத்தைப்போல இருந்தது;
அதற்குக் கழுகின் செட்டைகளும் உண்டாயி
ருந்தன; நான் பார்த்துக்கொண்டிருக்கையில் அ
தின் இறகுகள் பிடுங்கப்பட்டன; அது தரை
யிலிருந்து எடுக்கப்பட்டு, மனுஷனைப்போல
இரண்டு காலின்மேல் நிமிர்ந்து நிற்கப்பண்ணப்
பட்டது; மனுஷ இருதயமும் அதற்குக் கொடுக்
௫ கப்பட்டது.—இதோ, கரடிக்கு ஒப்பாகிய வே
றே இரண்டாம் மிருகத்தைக் கண்டேன்; அது
ஒரு புறத்திலே நின்றுகொண்டு, தன் வாயின்
பல்லுகளுக்குள்ளே மூன்று விலாவெலும்புக
ளைப் பிடித்திருந்தது; அதற்கு, எழும்பி வெகு
மாம்சம் தின்னென்று சொல்லப்பட்டது.—
௬ இதற்குப்பிற்பாடு, இதோ, சிவிங்கியைப்போல
இருக்கிற வேறொன்றைக் கண்டேன்; அதற்கு
அதின் முதுகின்மேல் பட்சியின் செட்டைகள்
நாலு இருந்தன; [3]நாலு தலைகளும் அந்த மிருகத்
துக்கு உண்டாயிருந்தன; அதற்கு ஆளுகை அ
௭ ளிக்கப்பட்டது. — இதற்குப்பிற்பாடு, இதோ,
கெடியும் பயங்கரமும் மகா பலத்ததுமான [4]நா
லாம் மிருகத்தை இராத்தரிசனங்களில் கண்
டேன்; அது பெரிய இருப்புப் பல்லுகள் உள்ள
தாயிருந்தது; பட்சித்து, நொறுக்கி, மீதியான
தைத் தன் கால்களால் மிதித்துப்போட்டு, தனக்
குமுன் இருந்த எல்லா மிருகங்களையும்பார்க்க
வேற்று உருவமாயிருந்து, பத்துக்கொம்புள்ளதா
௮ யிருந்தது.—அந்தக் கொம்புகளை நான் கவனித்
திருக்கையில், இதோ, அவைகளுக்குள்ளே வே
றொரு சின்னக்கொம்பு எழும்பிற்று; இதற்கு
முன்பாக முந்தின கொம்புகளில் மூன்று பிடுங்
கப்பட்டன; இதோ, இந்தக் கொம்பிலே மனு
ஷகண்களடைவான கண்களும் [5]பெருமைக
ளைப் பேசும் வாயும் உண்டாயிருந்தன.

நான் பார்த்துக்கொண்டிருக்கையில் ஆசனங் ௯
கள் வைக்கப்பட்டன; [6]நீண்ட ஆயுசாயிருக்
கிறவர் உளுக்காந்தார்; அவருடைய வஸ்திரம்
வெண்மையாகிய உறைந்த மழையைப்போலே
யும்,அவருடைய சிரசின் மயிர் துப்புரவான பஞ்
சைப்போலேயும் இருந்தது; அவருடைய ஆச
னம் அக்கினியின் சுவாலைகளும் அதின் உருளை
கள் எரிகிற நெருப்புமாயிருந்தன. — அக்கினி ௰
யான நதி அவர் சந்நிதியிலிருந்து புறப்பட்டு
ஓடிற்று; [7]ஆயிரத்தாயிரம்பேர் அவரைச் சேவித்
தார்கள்; கோடாகோடிபேர் அவருக்குமுன்
பாக நின்றார்கள்; நியாயசங்கம் உளுக்காந்தது;
[8]புஸ்தகங்கள் திறக்கப்பட்டன. — அப்போது ௰௧
நான் அந்தக் கொம்பு பேசின பெருமையான
பேச்சுகளுடைய சத்தத்தினிமித்தம் பார்த்துக்
கொண்டிருந்தேன்; நான் பார்த்துக்கொண்டிருக்
கையில் மிருகம் கொலையுண்டது; அதின் உடல்
அழிக்கப்பட்டபின் எரிகிற அக்கினிக்கு ஒப்
புக்கொடுக்கப்பட்டது. — மற்ற மிருகங்களு ௰௨
டைய ஆளுகையோவென்றால் அவைகளை விட்
டுப்போயிருந்தும், அவைகளுக்குச் சமயமும்
திட்டமுமான காலமட்டும் உயிரோடே நீடித்தி
ருக்குதல் கட்டளையிடப்பட்டிருந்தது.

என்னுடைய இராத்தரிசனையிலே நான் பார்த் ௰௩
துக்கொண்டிருக்கையில், இதோ, வானத்தின
மேகங்களுடனே மனுஷனுடைய குமாரன் சா
யலாகிய ஒருவர் வருகிறவராயிருந்தார்; அவர்
நீண்ட ஆயுசாயிருக்கிறவரிடமட்டும் வந்து, அ
வருக்குமுன்பாகச் சேர்ந்துவரப்பண்ணப்பட்
டார்.—[9]அவரை எல்லாச் சனசதளத்தாரும் சா ௰௪
தியாரும் பாஷைக்காரரும் சேவிக்கும்படிக்கு,
அவருக்கே கர்த்தத்துவமும் கனமும் இராசரிக்
கமும் கொடுக்கப்பட்டன; [10]அவருடைய கர்த்
தத்துவம் கெடபடாத நித்திய கர்த்தத்துவமும், அவ
ருடைய இராச்சியம் அழியாததுமாயிருக்கும்.

தானியேலாகிய என்னுடைய ஆவி என் உள் ௰௫
ளத்திலே ஒடுங்கிப்போயிற்று; என் தலையின் தரி
சனங்கள் என்னைக் கலங்கப்பண்ணின.—நிற் ௰௬
கிறவர்களில் ஒருவனண்டையிலே நான் சேர்ந்
து, இது எல்லாவற்றின் பொருளைச் சொல்ல
அவனை வேண்டிக்கொண்டேன்; அவன் வர்த்
தமானங்களின் அர்த்தத்தை எனக்கு அறிவித்துச்
சொன்னதாவது:—நாலாயிருக்கிற இந்தப் பெ ௰௭
ரிய மிருகங்கள் பூமியிலிருந்து எழும்புகிற நாலு
விதமான இராசாக்கள்தானே.—ஆனால் உன்ன ௰௮
தமானவருடைய பரிசுத்தவான்கள் இராசரிக்
கத்தைப் பெற்று, சதாகாலமாகவும் சதாகாலங்
களாகிய என்றென்றைக்கும் இராச்சியத்தைச்
சுதந்தரித்துக்கொண்டிருப்பார்கள் என்றான்.

அப்போது மற்றவைகளை எல்லாம் பார்க்க ௰௯
வேற்றுருவம் கெடியுமாயிருந்ததும், பல்லுகள்
இரும்பும் நகங்கள் வெண்கலமுமாயிருந்ததும்,

1 தானி. ௬. ௨௮.—2 தானி. ௫. ௧.
3 தானி. ௮. ௨௨: ௰௧. ௩, ௪.
4 வெளி. ௰௩. ௨: ௭. ௭.
5 வெளி. ௰௩. ௫. ௬.—6 சங். ௯௦. ௨-௪.—7 சங். ௬௮. ௰௭.
8 வெளி. ௨௦. ௰௨.—9 வெளி. ௰௧. ௰௫. வெளி. ௫. ௰௩.
10 தானி. ௨. ௪௪. லூக். ௧. ௩௩.

பட்சித்து, நொறுக்கி, மீதியானதைத் தன் கால்
களால் மிதித்துப்போட்டதுமான நாலாம் மிரு
௨௰ கத்தைக்குறித்தும்,—அதினுடைய தலையின்மே
லுள்ள பத்துக் கொம்பைக்குறித்தும், தனக்கு
முன்பாக மூன்று விழ, எழும்பி, கண்களையும்
பெருமைகளைப் பேசுகிற வாயையுமுடையதா
யிருந்து, மற்றவைகளைப்பார்க்கப் பருமனாயி
ருந்த அந்த வேறே கொம்பைக்குறித்தும், நிச்ச
௨௧ யத்தை அறிய மனதாயிருந்தேன்.—ஏனெனில்
நீண்ட ஆயுசாயிருக்கிறவர் வருமட்டாகவும்
[1]நியாயத்தீர்ப்பு உன்னதமானவருடைய பரிசுத்த
வான்களுக்குக் கொடுக்கப்பட்டு, பரிசுத்தவான்
கள் இராச்சியத்தைச் சுதந்தரித்துக்கொள்ளும்
௨௨ காலம்வருமட்டாகவும்,—இந்தக் கொம்பு பரி
சுத்தவான்களோடே யுத்தம்பண்ணி, அவர்களை
௨௩ மேற்கொண்டதென்று கண்டேன். — அவன்
சொன்னதாவது: நாலாம் மிருகம் பூமியிலே
உண்டாகும் நாலாம் இராச்சியமாயிருக்கும்;
அது எல்லா இராச்சியங்களையும்பார்க்க வேறாயி
ருந்து, பூமியை எல்லாம் பட்சித்து, அதை
௨௪ மிதித்து, அதை நொறுக்கிப்போடும்.—[2]பத்துக்
கொம்புகள் ஏதென்றால், அந்த இராச்சியத்தி
லேதான் பத்து இராசாக்கள் எழும்புவார்கள்;
அவர்களுக்குப் பிற்பாடு வேறொருவன் எழும்
புவான்; அவன் முந்தினவர்களைப்பார்க்க வேறா
யிருந்து, மூன்று இராசாக்களைத் தாழ்த்திப்போ
௨௫ ட்டு,—[3]உன்னதமானவருக்கு எதிராக வார்த்தை
களைப் பேசி, உன்னதமானவருடைய பரிசுத்த
வான்களைப் பாழாக்கி, காலங்களையும் நியாயப்
பிரமாணங்களையும் மாற்ற நினைப்பான்; அவர்
கள் [4]ஒருகாலமும் காலங்களும் அரைக்காலமு
மட்டும் அவன் கையில் ஒப்புக்கொடுக்கப்படு
௨௬ வார்கள்.—ஆனால் நியாயசங்கம் உட்காரும்;
அப்போது அவனை முடிவுபரியந்தமும் சங்கார
மாக்கும்படியாகவும்,அழிக்கும்படியாகவும் அவ
னுடைய ஆளுகையை எடுத்துப்போடுவார்கள்.—
௨௭ எல்லா வானங்களின்கீழும் இருக்கிற இராச்சி
யங்களின் இராசரிக்கமும் ஆளுகையும் மகத்து
வமும் உன்னதமானவருடைய பரிசுத்தவான்
களாகிய சனத்துக்குக் கொடுக்கப்படும்; அவரு
டைய இராச்சியம் நித்திய இராச்சியமானது;
எல்லாக் கர்த்தத்துவங்களும் அவரைச் சேவித்து,
அவருக்குக் கீழ்ப்படிந்திருக்கும் என்றான்.
௨௮ அவன் சொன்னது: இந்தமட்டும் சரி; ஆனால்
தானியேலாகிய என்னுடைய முகக்களை என்
னில் வேறுபடத்தக்கதாக என் நினைவுகள் மிக
வும் என்னைக் கலங்கப்பண்ணின;இந்த வர்த்தமா
னத்தை என் மனதிலே வைத்துக்கொண்டேன்.

## ௮. அதிகாரம்.

௧. தானியேல் ஆட்டுக்கடாவையும், வெள்ளாட்டுக்கடாவையும் கண்ட தரிசனை. ௰௩. இரண்டாயிரத்து முந்நூறு நாட்களின் பலி. ௰௬. காபிரியேல் தானியேலைத் தேற்றித் தரிசனையை விடுவித்தது.

௧ இராசாவாகிய பெல்ஷாத்சாருடைய இராச்
சியபாரத்தின் துவக்கத்திலே [5]தானியேலாகிய
எனக்குக் காண்பிக்கப்பட்ட தரிசனைக்குப்பிற்
பாடு, அதினுடைய மூன்றாம்வருஷத்திலே வே
றொன்று எனக்குக் காண்பிக்கப்பட்டது.—
தரிசனையிலே நான் கண்டதாவது: நான் பார்க் ௨
கையில் நான் ஏலாமென்னும் சீமையில் அரம
னையிருக்கும் சூசான் பட்டணத்திலே இருக்கு
மாப்போலே இருந்தது; அங்கே நான் ஊலாய்
என்ற ஆற்றண்டையில் இருக்கிறதாகத் தரிசனை
யிலே கண்டேன்.—நான் என் கண்களை ஏறெ ௩
டுத்துப்பார்த்தேன்; இதோ, இரண்டு கொம்புள்ள
ஒரு ஆட்டுக்கடா ஆற்றின்முன்பாக நின்றது;
அதின் இரண்டு கொம்புகளும் உயர்ந்தவைகளா
யிருந்தன; ஆகிலும் ஒன்று மற்றதைப்பார்க்க
உயர்ந்திருந்தது; உயர்ந்ததாகிய இது கடைசியில்
ஓங்கிவளர்ந்தது.—அந்த ஆட்டுக்கடா மேற்கே ௪
யும் வடக்கேயும் தெற்கேயும் பாய்ந்துகொண்டி
ருக்கிறதைக்கண்டேன்; ஒரு மிருகமும் அதின்
முன்னே நிற்கக்கூடாதிருந்தது;அதின் கைக்குத்
தப்புவிப்பாருமில்லை; அது தன் மனதின்படியே
செய்து வல்லமையாயிற்று.
நான் அதைக் கவனித்துக்கொண்டிருக்கை ௫
யில், இதோ, மேற்கேயிருந்து ஒரு வெள்ளாட்
டுக்கடா நிலத்திலே கால்பாவாமல் தேசத்தின்
மீதெங்கும் வந்தது; அந்த வெள்ளாட்டுக்கடா
வுக்கு அதின் கண்களுக்கு நடுவே வேடிக்கை
யான ஒரு கொம்பு இருந்தது.—நான் ஆற்றின் ௬
முன்பாக நிற்கக்கண்ட இரண்டு கொம்புள்ள
ஆட்டுக்கடாவினிடமட்டும இதுவந்து,தன் பலத்
தின் உக்கிரத்தோடே அதற்கு எதிராகப் பாய்ந்
தது.—இது ஆட்டுக்கடாவின் கிட்டச் சேரக்கண் ௭
டேன்; இது அதின்மேல் கடுமையாகி, ஆட்டுக்
கடாவை முட்டி, அதின் இரண்டு கொம்புகளை
யும் உடைத்துப்போட்டது; இதின் முன்னே
நிற்க ஆட்டுக்கடாவுக்குப் பலமில்லாமையால்,
இது அதைத் தரையிலே தள்ளி மிதித்துப்போட்
டது; அதின் கைக்கு ஆட்டுக்கடாவைத் தப்பு
விப்பார் இருந்ததில்லை. — வெள்ளாட்டுக்கடா ௮
மிகுதியும் வல்லமையாயிற்று; அது பலத்துப்
போனபிற்பாடோவெனில், அந்தப்பெரிய கொ
ம்பு உடைந்துபோய், அதற்குப்பதிலாக ஆகா
யத்தின் நாலு காற்றுத்திசைகளுக்கு எதிராக வே
டிக்கையான நாலு கொம்புகள் எழும்பின.—
அவைகளில் ஒன்றிலிருந்து சின்னதான ஒரு ௯
கொம்பு புறப்பட்டு, தெற்குக்கு எதிராகவும்,
கிழக்குக்கு எதிராகவும், [6]சிங்காரமான தேசத்
துக்கு எதிராகவும் மிகவும் பெரியதாயிற்று.—அது ௰
வானத்தின் சேனைபரியந்தம் வளர்ந்து, அதின்
சேனையாகிய நட்சத்திரங்களில் சிலவற்றைப்
பூமியிலே விழப்பண்ணி, அவைகளை மிதித்தது.—
அது சேனையினுடைய அதிபதிபரியந்தமும் வல் ௰௧
லமையாயிற்று; அதினாலே [7]அன்றாடகப் பலி
எடுபட்டுப்போய், அவருடைய பரிசுத்தஸ்தலத்

1 ௧ கொரி. ௬. ௨. வெளி. ௨௰. ௪. 3 வெளி. ௰௩. ௬, ௭.
2 வெளி. ௰௩. ௧: ௰௭. ௧, ௰௨. 4 வெளி. ௰௨. ௨: ௰௨. ௬, ௰௪.
5 தானி. ௭. ௧. 7 தானி. ௰௧. ௩௧.
6 தானி. ௰௧. ௰௬: ௪. ௧.

௰௨ தின் ஸ்தானம் தள்ளுண்டது.—சேனையானது
அன்றாடகப் பலியோடுங்கூடப் பாதகத்தினிநி
மித்தம் ஒப்புக்கொடுக்கப்படும்; அது சத்தியத்
தைத் தரையிலே தள்ளும்; அது அப்படிச்செய்
௰௩ யும், அதற்குக் கைகூடியும் வருமென்று.—பரி
சுத்தவானாகிய ஒருவன் சொல்லக்கேட்டேன்;
அப்போது பரிசுத்தவானாகிய வேறொருவன்
அன்றாடகப்பலியையும் பாழ்க்கடிப்பை உண்
டாக்கும் பாதகத்தையும், பரிசுத்தஸ்தலமும் சே
னையும் மிதிபட ஒப்புக்கொடுக்கப்படுவதையும்
குறித்துத் தரிசனையில் காண்பிக்கப்பட்டது எந்
தமட்டும் இருக்குமென்று அதைச் சொன்னவ
௰௪ னைக் கேட்டான்.—அவன் என்னுடனே: இரண்
டாயிரத்து முந்நூறு இராப்பகல்கள் செல்லுமட்
டும் இருக்கும்; பிற்பாடு பரிசுத்தஸ்தலம் நீதியாக்
கப்படும் என்றான்.
௰௫ சம்பவித்ததேதென்றால், தானியேலாகிய நான்
இந்தத் தரிசனையைக் கண்டிருந்து, அதை உணர
வகைதேடுகையில், இதோ, புருஷனின் உருவா
௰௬ கிய ஒருவன் எனக்கு எதிரே நின்றான்.—ஊலா
யின் நடுவாந்தரத்திலே [1]காபிரியேலே, இவனுக்
குத் தரிசனையை உணரப்பண்ணென்று கூப்பிடு
௰௭ கிற ஒரு மனுஷசத்தத்தையும் கேட்டேன்.—அப்
போது நான் நின்ற தலத்துக்குச் சேரவந்தான்;
அவன் வருகையில் நான் திடுக்கிட்டு, [2]முகங்குப்
புற விழுந்தேன்; அவன் என்னுடனே: மனுபுத்
திரனே கவனி; ஏனெனில் இந்தத் தரிசனை முடி
௰௮ வுகாலத்துக்கு அடுத்ததென்றான்.—அவன் என்
னோடே பேசுகையில், நான் தரையில் முகங்
குப்புறக் கிடந்து, அயர்ந்துபோனேன்; அவனோ
வெனில் என்னைத் தொட்டு, நான் நின்றிருந்த
௰௯ நிலையிலே என்னை நிற்கப்பண்ணி,—சொன்ன
தாவது: இதோ, சினத்தினுடைய கடைசிக்காலத்
திலே சம்பவிப்பதை உனக்கு அறிவிப்பேன்;
ஏனெனில் இது முடிவினுடைய குறித்த காலத்
துக்கு அடுத்தது.
௨௰ நீ கண்ட இரண்டு கொம்புள்ள ஆட்டுக்கடா
மேதியர், பெர்சியர் தேசங்களின் இராசாக்க
௨௧ ளும், — மயிருள்ள அந்த வெள்ளாட்டுக்கடா
கிரேக்கதேசத்தின் இராசாவுந்தானே, இதின்
கண்களுக்கு நடுவே இருந்த பெரிய கொம்போ
௨௨ வெனில், முதலாம் இராசாவானவன். — அது
உடைந்துபோய், அதற்குப்பதிலாக நாலு எழும்
பினதேதென்றால், அந்தச்சாதியிலே நாலு இராச்
சியங்கள் எழும்பும்; ஆனால் அவைகள் அவன்
௨௩ இருந்த வல்லமையோடு இராது. — அவர்களு
டைய இராச்சியபாரத்தின் கடைசிக்காலத்தி
லேவென்றால், பாதகர் அளவை நிறைவேற்றின
போது, [3]வலாற்கார முகமும் தந்திரப்பேச்சுக்கு
விவேகமுமான ஒரு இராசா எழும்புவான்.—
௨௪ அவனுடைய வல்லமை பலக்கும்; ஆனால் [4]அவ
னுடைய பலத்தினாலே அல்ல, அவன் அதிசய
மான பிரகாரமாக அழிம்புண்டாக்கி, தனக்குக்

கைகூடிவருகிற கெலிப்பாய் இப்படிச் செய்து
வந்து, பலத்தவர்களையும் பரிசுத்தசனத்தையும்
அழிப்பான்.—அவன் தன் விவேகத்தினாலே கப ௨௫
ட்டைத் தன் கைக்கு வாய்க்கப்பண்ணி, தன் இ
ருதயத்தில் பெருமையாகி, நிர்விசாரத்தோடிருக்
கிற அநேகரை அழித்து, அதிபதிகளுக்கு அதி
பதியாயிருக்கிறவருக்கு விரோதமாய் எழும்பு
வான்; ஆனால் கையல்லாமல் முறித்துப்போ
டப்படுவான்.—சொல்லப்பட்ட இராப்பகல்க ௨௬
ளின் தரிசனை மெய்யாயிருக்கிறது; [5]நீயோவென்
றால் இந்தத் தரிசனத்தைப் புதைபொருளாக
வைத்துவை; ஏனெனில் இன்னம் அநேகநாள்
செல்லுமென்றான்.
தானியேலாகிய நான் பலட்சயமாகி, சிலநாள் ௨௭
வியாதியாயிருந்து, பிறகு எழுந்திருந்து, இராசா
வின் வேலையைச் செய்து, அந்தத் தரிசனையினா
லே திகைத்துக்கொண்டிருந்தேன்; ஆனால் ஒரு
வரும் அதை அறிந்ததில்லை.

## ௯. அதிகாரம்.

௧. தானியேல் சிறையிருப்பின்காலத்தைச் சிந்தித்தது. ௩. பாவங்களை வெளியிட்டு, ௰௬. எருசலேமை முந்தின சீருக்குக் கொண்டுவருவதற்காக மன்றாடினது. ௨௰. காபிரியேல் தானியேலுக்கு எழுபது வாரங்களைக்குறித்து அறிவித்தது.

கல்தேயருடைய இராச்சியத்தின்மேல் இராசா ௧
வாக்கப்பட்ட மேதியரின் வித்தாகிய ஆகஸ்வே
ருவினுடைய குமாரனான [6]தரியு இராச்சியபாரம்
பண்ணுகிற முதலாம்வருஷத்திலே,—தானியே ௨
லாகிய நான் எருசலேமின் பாழ்க்கடிப்புகள்
நிறைவேறித்தீர [7]எழுபதுவருஷம் செல்லுமென்
று கர்த்தர் எரேமியா தீர்க்கதரிசியோடேசொன்
னவருஷங்களின் தொகையைப் புஸ்தகங்களில்
கவனித்து,
உபவாசம்பண்ணி, இரட்டிலும் சாம்பலிலும் ௩
இருந்து, பராபரனாகிய ஆண்டவரைச் செபத்தி
னாலும் விண்ணப்பங்களினாலும்தேட என்முகத்
தை அவருக்கு நேராக்கி,—என் பராபரனாகிய ௪
கர்த்தரைநோக்கிச் செபம்பண்ணி, அறிக்கை
யிட்டுச் சொன்னதாவது: ஆ ஆண்டவரே, உம்
மைச் சிநேகித்து, உம்முடைய கற்பனைகளைக்
கைக்கொள்ளுகிறவர்களுக்கு உடம்படிக்கை
யையும் கிருபையையும் காக்கிற மகத்துவமும்
பயங்கரமுமான பராபரனே,—நாங்கள் பாவஞ் ௫
செய்து, அக்கிரமக்காரராயிருந்து, துன்மார்க்க
மாய் நடந்து, கலகம்பண்ணி, உம்முடைய கற்
பனைகளையும் உம்முடைய நியாயங்களையும்
விட்டு அகன்றுபோய்,—உமது நாமத்தினாலே ௬
எங்கள் இராசாக்களோடும் எங்கள் பிரபுக்க
ளோடும் எங்கள் பிதாக்களோடும் தேசத்தினு
டைய சகல சனத்தோடும் பேசின தீர்க்கதரிசி
களாகிய உம்முடைய ஊழியக்காரருக்குச் செ
விகொடாதேபோனோம்.—ஆண்டவரே, தேவ ௭
ரீர் நீதியுள்ளவராயிருக்கிறீர்; ஆனால் உமக்கு
விரோதமாகப்பண்ணின துரோகத்தின் நிமித்

1 லூக். ௧. ௰௯, ௨௬.
2 தானி. ௰. ௯.
3 தானி. ௰௧. ௩௬, ௩௭.
4 வெளி. ௰௩. ௨.
5 தானி. ௰௨. ௪, ௯.
6 தானி ௫ ௩௧.
7 எரே. ௨௫. ௰௧, ௰௨: ௨௯. ௰.

தம் உம்மாலே சமீபமும் தூரமுமான எல்லாத்
தேசங்களிலும் துரத்தப்பட்டிருக்கிற யூதமனுஷ
ரும் எருசலேமின் குடிகளும் சகல இஸ்ரவேல
ருமாகிய நாங்கள் இந்நாளில் இருக்கிறபடியே
௮ [1]வெட்கமுள்ளவர்கள். — ஆண்டவரே, நாங்க
ளும் [2]எங்கள் இராசாக்களும் எங்கள் பிரபுக்க
ளும் எங்கள் பிதாக்களும் வெட்கமுள்ளவர்கள்;
ஏனெனில் உமக்கு விரோதமாகப் பாவஞ்செய்
௯ தோம்.—எங்கள் பராபரனாகிய ஆண்டவரிடத்
தில் இரக்கங்களும் மன்னிப்புகளும் உண்டு;
ஏனென்றால் அவருக்கு விரோதமாகக் கலகம்
௰ பண்ணினோம்.—அவர் தீர்க்கதரிசிகளாகிய தம்
முடைய ஊழியக்காரரைக்கொண்டு எங்களுக்
குமுன்பாக வைத்த அவருடைய நியாயப்பிரமா
ணங்களில் நடக்க நாங்கள் எங்கள் பராபரனா
கிய கர்த்தரின் சத்தத்துக்குச் செவிகொடாதே
௰௧ போனோம்.—இஸ்ரவேலர் எல்லாரும் உமது நியா
யப்பிரமாணத்தை மீறி, உமது சத்தத்துக்குச் செ
விகொடாதபடிக்கு விலகிப்போனார்கள்; ஆகை
யால் பராபரனுடைய தாசனாகிய [3]மோசேயின்
நியாயப்பிரமாணப் புஸ்தகத்தில் எழுதியிருக்கிற
சாபமும் ஆணையும் எங்கள்மேல் ஊற்றப்பட்
டன; ஏனென்றால் அவருக்கு விரோதமாகப்
௰௨ பாவஞ்செய்தோம்.—எருசலேமில் சம்பவித்தது
போல வானத்தின்கீழ் எங்கும் சம்பவியாதிருக்
கிற பெரிய தீங்கை எங்கள்மேல் வரப்பண்ணின
தினாலே, அவர் எங்களுக்கும் எங்களை நியாயந்
தீர்த்த நியாயாதிபதிகளுக்கும் விரோதமாகச்
சொல்லியிருந்த தம்முடைய வார்த்தைகளை நிறை
௰௩ வேற்றினார். — மோசேயின் நியாயப்பிரமாணப்
புஸ்தகத்தில் எழுதியிருக்கிறதற்குச் சரியாக இந்
தத் தீங்கெல்லாம் எங்கள்மேல் வந்தது; ஆனால்
நாங்கள் எங்கள் அக்கிரமங்களைவிட்டுத் திரும்பு
கிறதற்கும், உம்முடைய சத்தியத்தைக் கவனிக்
கிறதற்கும், எங்கள் பராபரனாகிய கர்த்தரின்
௰௪ முகத்தைநோக்கிக் கெஞ்சினதில்லை. — ஆனது
கொண்டு கர்த்தர் அந்தத் தீங்குக்காகச் சாக்கிர
தையாயிருந்து, அதை எங்கள்மேல் வரப்பண்
ணினார்; ஏனென்றால் எங்கள் பராபரனாகிய கர்த்
தர் தாம் செய்துவருகிற தம்முடைய கிரியைக
ளில் எல்லாம் நீதியுள்ளவர்; ஏனெனில் அவ
ருடைய சத்தத்துக்குச் செவிகொடாதேபோ
௰௫ னோம். — இப்போதும் உமது சனத்தை வல்ல
மையுள்ள கையினாலே எகிப்துதேசத்திலிருந்து
புறப்படப்பண்ணி, இந்நாள்வரைக்கும் இருக்கி
றபடி உமக்குக் கீர்த்தியை உண்டாக்கின எங்
கள் பராபரனாகிய ஆண்டவரே, நாங்கள் பா
வஞ்செய்து, துன்மார்க்கருமாய் நடந்தோம்.—
௰௬ ஆண்டவரே, [4]உம்முடைய எல்லா நீதிகளின்ப
டியே உமது கோபமும் உமது உக்கிரமும் உம்
முடைய பரிசுத்த பர்வதமாகிய எருசலேமென்ற
உம்முடைய பட்டணத்தைவிட்டுத் திரும்பட்
டுமே; அதேனென்றால் எங்கள் பாவங்களினா
லும் எங்கள் பிதாக்களின் அக்கிரமங்களினாலும்
எருசலேமும் உம்முடைய சனமும் எங்கள் சுற்
றுப்புறத்தார் அனைவருக்கும் நிந்தையாயிற்று.—
இப்போதும் எங்கள் பராபரனே, தேவரீர் உமது ௰௭
அடியானுடைய விண்ணப்பத்தையும் அவனு
டைய கெஞ்சுதல்களையும் கேட்டு, [5]ஆண்டவ
ரின்நிமித்தம் உமது முகத்தைப் பாழாக்கப்பட்ட
உம்முடைய பரிசுத்தஸ்தலத்தின்மேல் பிரகாசிக்
கப்பண்ணும்.—என் பராபரனே, உம்முடைய ௰௮
செவியைச் சாய்த்துக் கேட்டருளும்; உம்மு
டைய கண்களைத் திறந்து, எங்கள் பாழ்க்கடிப்
புகளையும் உமது நாமம் தரிப்பிக்கப்பட்ட பட்
டணத்தையும் பார்த்தருளும்; ஏனெனில் எங்
கள் நீதிகளை அல்ல, உம்முடைய மிகுந்த இரக்
கங்களையே நம்பி, நாங்கள் எங்கள் விண்ணப்
பங்களை உமக்குமுன்பாகப் போட்டுவைக்கி
றோம்.—ஆண்டவரே கேளும், ஆண்டவரே மன் ௰௯
னியும், ஆண்டவரே கவனியும், என் பராபர
னே, உம்முடைய நிமித்தமாக அதைத் தாமதியா
மல் செய்யும்; ஏனென்றால் உம்முடைய பட்ட
ணத்துக்கும் உம்முடைய சனத்துக்கும் உம்மு
டைய நாமம் தரிப்பிக்கப்பட்டதே என்றேன்.

இப்படி நான் பேசி, செபம்பண்ணி, என் ௨௰
பாவத்தையும் என் சனமாகிய இஸ்ரவேலின்
பாவத்தையும் அறிக்கையிட்டு, என் பராபரனு
டைய பரிசுத்தபர்வதத்துக்காக என் விண்ணப்
பத்தை என் பராபரனாகிய கர்த்தருக்குமுன்பா
கப் போட்டுவைத்துக்கொண்டிருந்தேன்.—அப் ௨௧
போது [6]என் செபத்திலே நான் இன்னம் பேசிக்
கொண்டிருக்கையில், முதல் தரிசனையிலே நான்
கண்ட புருஷனாகிய [7]காபிரியேல், பறந்துவர
விடப்பட்ட வேகமாய் அந்திக்காணிக்கையின்
நேரமாகிய வேளையிலே என்னண்டை வந்து
சேர்ந்து,—எனக்குத் தெளிவுண்டாக்கி, என்னோ ௨௨
டே பேசி, சொன்னதாவது: தானியேலே, உன்
னை உணர்வடையப்பண்ண இப்போது புறப்ப
ட்டுவந்தேன்.—உன் கெஞ்சுதல்களின் துவக்கத் ௨௩
திலே கட்டளை புறப்பட்டது; நீ மகா பிரியமா
னவனென்று உனக்கு அறிவிக்க நான் வந்தேன்;
இப்போதும் சொல்லும் வார்த்தையை நீ கவனித்
துக்கேட்டு, தரிசனையை உணர்ந்துகொள்.

மீறுதலைத் தவிர்க்கிறதற்கும், பாவங்களைத் ௨௪
துலைக்கிறதற்கும், அக்கிரமத்தை நிவிர்த்திபண்
ணுகிறதற்கும், [8]நித்திய நீதியை வருவிக்கிறதற்
கும், [9]தரிசனையையும் தீர்க்கதரிசனத்தையும் முத்
திரிக்கிறதற்கும், [10]பரிசுத்தத்துக்குப் பரிசுத்தமா
னவரை அபிஷேகம்பண்ணுகிறதற்கும் உன்
சனத்தின்மேலும் உன்னுடைய பரிசுத்த பட்ட
ணத்தின்மேலும் எழுபது வாரங்கள் செல்லக்
குறிக்கப்பட்டிருக்கின்றன.

இப்போதும் நீ அறிந்து, உணர்ந்துகொள்ள ௨௫

1 எஸ்ரா. ௯. ௬. லூக். ௰௮. ௰௩.
2 நெகே. ௯. ௩௪. எசா. ௬௪. ௨௭, ௨௮.—3 ௫ மோ. ௨௮. ௧௫. ழ.
௫ மோ. ௨௮. ௨௭, ௨௮.
4 ௧ யோ. ௧. ௯.
5 சங். ௮௰. ௰௬, ௰௯.
6 ஏசா. ௬௫. ௨௪.
7 தானி. ௮. ௰௬.
8 எபி. ௯. ௰௨.
9 மத். ௰௧. ௰௩.—10 சங். ௪௫. ௮. அப். ௪. ௨௭, ௨௮: ௰. ௩௮, ௪௧.

வேண்டியதேதென்றால், எருசலேமை, [1]தலைவ
ராகிய மேசியா வருமட்டும் இருக்க, திரும்ப
எடுப்பிக்கிறதற்கும் கட்டுகிறதற்குமான கட்
டளை புறப்படுவதுமுதற்கொண்டு எழுவாரமும்
பின்னை அறுபத்திரண்டு வாரமும் உண்டு;அவை
களில் வீதிகளும் அலங்கங்களும் திரும்பக் கட்
டப்பட்டுத்தீரும்; ஆனால் இடுக்கமான காலங்க
ளில்தானே.
௨௬ இந்த அறுபத்திரண்டு வாரங்களுக்குப் பிற்பா
டு [2]மேசியா சங்கரிக்கப்பட்டு, இராதேபோவார்;
ஆனால் வரப்போகிற தலைவனின் சனம் பட்ட
ணத்தையும் பரிசுத்தஸ்தலத்தையும் அழித்துப்
போடும்; அதின் முடிவு பிரளயமாயிருக்கும்;
[3]யுத்தத்தின் முடிவுமட்டுக்கும் பாழ்க்கடிப்புகள்
இருக்க நிருணயிக்கப்பட்டிருக்கிறது.
௨௭ ஆனால் அவர் ஒரு வாரமட்டும் அநேகருக்கு
உடம்படிக்கையைத் திடப்படுத்தி, அந்த வாரம்
பாதிசென்றபோது பலியையும் காணிக்கையை
யும் ஒயப்பண்ணுவார்; [4]அருவருப்பான செட்
டைகளோடே பாழ்க்கடிக்கிறவன் வந்து இறங்
குவான், நிருணயிக்கப்பட்டிருக்கிற நிர்மூலம்
தீருமட்டுக்கும் பாழாக்குகிற சனத்தின்மேல்
சொரியுமென்றான்.

## ௰. அதிகாரம்.

௧. தானியேல் தன்னைத் தாழ்ப்படுத்தித் தரிசனையைக் கண்டது ௰. அவன் பயத்தினாலே கலங்கித் தேவதூதனாலே தேற்றப்பட்டது.

௧ பெர்சியாவின் இராசாவாகிய கோரேஸ் அர
சாண்ட மூன்றாம்வருஷத்திலே பெல்தேஷாத்
சாரென்று பெயரிடப்பட்ட தானியேலுக்கு ஒரு
காரியம் வெளியாக்கப்பட்டது; அந்தக் காரியம்
சத்தியமும் நீடிய யுத்தத்துக்கு அடுத்ததுமாயிருக்
கிறது; அந்தக் காரியத்தை அவன் கவனித்து, தரி
சனையிலுள்ளதை விளங்கிலே வைத்துக்கொண்
௨ டான்.—அந்நாட்களில் தானியேலாகிய நான்
மூன்றுவாரமாகிய நாட்கள்மட்டும் துக்கித்துக்
௩ கொண்டிருந்தேன். — அந்த மூன்றுவாரங்களா
கிய நாட்கள் நிறைவேறுமட்டும் சௌகரியமான
அப்பத்தை நான் புசித்ததுமில்லை; இறைச்சியும்
திராட்சப்பழஇரசமும் என் வாய்க்குள் போன
துமில்லை; நான் பரிமளதயிலம் பூசிக்கொண்ட
துமில்லை.
௪ முதலாம்மாதம் இருபத்துநாலாம்தேதியிலே
நான் [5]இதேக்கல் என்ற பெரிய ஆற்றங்கரையில்
௫ இருந்து,—என் கண்களை ஏறெடுக்கையில், இ
தோ, வெண்புடவை உடைகளைத் தரித்து, தமது
அரையில் ஊப்பாசின் தங்கமான [6]கச்சையைக்
கட்டிக்கொண்டிருக்கிற ஒரு புருஷனைக் கண்
௬ டேன்.—அவருடைய சரீரம் தர்சீஸ் இரத்தினத்
தைப்போலேயும், அவருடைய முகம் மின்ன
லின் உருவைப்போலேயும், அவருடைய கண்
கள் எரிகிற தீவட்டிகளைப்போலேயும், அவரு
டைய புயங்களும் அவருடைய கால்களும் து
லக்கப்பட்ட வெண்கல வருணத்தைப்போலே
யும், அவருடைய வார்த்தைகளின் சத்தம் முழங்
குகிற முழக்கத்தைப்போலேயும் இருந்தன.—
தானியேலாகிய நான் ஒருவன் அந்தத் தரிசனை ௭
யைக் கண்டேன்; என்னோடு இருந்த மனுஷ
ரோவென்றால் அந்தத் தரிசனையைக் காணாதிருந்
தார்கள்; ஆகிலும் மகா பயங்கரம் அவர்கள்மேல்
இறங்கிற்று; அவர்கள் ஓடி ஒளித்துக்கொண்
டார்கள்.—நானே தனித்துவிடப்பட்டு, அந்தப் ௮
பெரிய தரிசனையைக் கண்டேன்; ஆனால் எனக்
குள் ஒரு திடனும் இருந்ததில்லை; என் உரு
வம் என்னில் மாறி, வதங்கிப்போயிற்று; திட
மற்றுப்போனேன். — அவருடைய வார்த்தைக ௯
ளின் சத்தத்தைக் கேட்டேன்; அவருடைய வா
ர்த்தைகளின் சத்தத்தை நான் கேட்கும்போதோ
வென்றால், [7]நான் முகம்சாய்த்து, நித்திரைபோகி
றவனாகி,முகங்குப்புறத்தரையிலே விழுந்தேன்.
ஆனால் இதோ,ஒருவன் கை என்னைத்தொட்டு, ௰
என் முழங்கால்களும் என் உள்ளங்கைகளும்
தரையை ஊன்றியிருக்க என்னை அசைத்தது.—
அவன் என்னுடனே: பிரிய புருஷனாகிய தானி ௰௧
யேலே,நான் உன்னுடனே சொல்லும் வார்த்தை
களின்பேரிலே நீ கவனமாயிருந்து, உன் கால்
களை ஊன்றி நில்; ஏனெனில் இப்போது உன்
னண்டைக்கு அனுப்பப்பட்டு, வந்தேனென்
றான்; இந்த வார்த்தையை அவன் என்னோடே
சொல்லுகையில் நடுக்கத்தோடே எழுந்துநின்
றேன்.—அப்போது அவன் என்னோடே சொன் ௰௨
னதாவது: தானியேலே பயப்படாதே; ஏனென்
றால் நீ உணர்வடைகிறதற்கும் [8]உன்னை உன்னு
டைய பராபரனுக்குமுன்பாகச் சிறுமைப்படுத்
துகிறதற்கும் உன் இருதயத்தைப் பிரயோகம்
பண்ணின முதல்நாள்துவக்கி உன் வார்த்தைகள்
கேட்கப்பட்டன; இந்த உன்னுடைய வார்த்தை
களுக்காக நான் வந்தேன்.—ஏனெனில் [9]பெர்சி ௰௩
யா இராச்சியத்தின் பிரபு இருபத்தொருநாள்மட்
டும் என்னோடு எதிர்த்துநின்றான்; ஆனால் இதோ,
[10]பிரதானபிரபுக்களில் ஒருவனாகிய [11]மிகாவேல்
எனக்கு ஒத்தாசையாக வந்தான்; ஆனதுகொ
ண்டு நான் அங்கே பெர்சியாவின் இராசாக்க
ளண்டையிலே தரித்திருந்தேன்.—இப்போதும் ௰௪
பின்னாட்களில் உன் சனத்துக்குச் சம்பவிப்ப
தை உனக்குத் தெரியப்பண்ணும்படிக்கு வந்
தேன்; ஏனெனில் இந்தத் தரிசனம் நிறைவேற
இன்னம் நாள் செல்லுமென்றான்.—அவன் இந்த ௰௫
வார்த்தைகளை என்னோடே சொல்லுகையில்,
நான் தலைஇறங்கிக்கொண்டு, தரையைநோக்கி,
பேச்சற்றுப்போனேன்.
ஆனால் இதோ, மனுபுத்திரரின் சாயலாகிய ஒ ௰௬
ருவன் என் உதடுகளைத் தொட்டான்; அப்போது
நான் என் வாயைத்திறந்து பேசி, எனக்கு எதிரே
நின்றவனோடே சொன்னதாவது: என் ஆண்டவ
னே, தரிசனையால் என் மூட்டுகள் புரண்டன;
பலமற்றுப்போனேன்.—ஆகையால் இந்த என்னு ௰௭

1 ஏசா. ௫௫. ௪. அப். ௨. ௧௧.—2 ஏசா. ௨௪. ௰௫. மாற். ௰௧. ௰௪.—5 ஆதி. ௨. ௧௪.—3 லூக். ௨௧. ௨௪.—4 மத். ௨௪. ௰௫.—6 வெளி ௧. ௰௩-௰௫.

7 தானி. ௮. ௰௮.—8 ௨. ௧. ௩௪. 9 எபே. ௧. ௰௨.—10 கொலோ. ௧. ௰௬. 11 தானி. ௰௨. ௧. யூதா. ௯. வெளி. ௰௨. ௭.

டைய ஆண்டவனோடே, என் ஆண்டவனுடை
ய இந்தப் பணிவிடைக்காரன் பேசக்கூடுவதெ
ப்படி? இனி என்னில் பெலன் இராது; என்
௰௮ னில் மூச்சு இராது என்றேன்.—அப்போது மனு
ஷ உருபானவன் திரும்ப என்னைத்தொட்டு,
௰௯ என்னைத் திடப்படுத்தி,—பிரியமான புருஷனே,
[1]பயப்படாதே; உனக்குச் சமாதானம்; திடங்
கொள், திடங்கொள் என்றான்; இப்படி அவன்
என்னோடே பேசுகையில் நான் திடங்கொண்
டு, என் ஆண்டவன் பேசுவாராக; ஏனெனில்
என்னைத் திடமடையப்பண்ணினீர் என்றேன்.
௨௰ அப்போது அவன் சொன்னதாவது: உன்
னண்டைக்கு ஏன் வந்தேனென்று அறிவாயோ?
இப்போது [2]பெர்சியாவின் பிரபுவோடே யுத்தம்
பணணத் திரும்பிப்போவேன்; நான் புறப்பட்
டுப்போனபோது, இதோ, கிரேக்கதேசத்தின்
௨௧ பிரபு வருவான்.—ஆனால் சத்திய எழுத்திலே
எழுதியிருக்கிறதை உனக்கு அறிவிப்பேன், [3]உங்
கள் பிரபுவாகிய மிகாவேலைத்தவிர என்னோடே
கூட அவர்களுக்கு விரோதமாய்ப் பலங்கொள்
ளுகிற ஒருவரும் இல்லை; நானும் மேதியனாகிய
தரியு அரசாண்ட முதலாம்வருஷத்திலே அவ
னைத் திடப்படுத்தவும் பலப்படப்பண்ணவும்
துணையாய் நின்றேன்.

## ௰௧. அதிகாரம்.

௧. கிரேக்க இராசா பெர்சிய இராசாவை வெல்வது. ௫. தெற்கு வடக்கின் இராசாக்களுக்கு உண்டாகும் உடம்படிக்கையும், அமராட்டங்களும். ௩௰. உரோமர் படையோடு வந்து பண்ணும் கொடுமை.

௧ இப்போதும் [4]மெய்யான செய்தியை உனக்கு
௨ அறிவிப்பேன்.—இதோ, இன்னம் மூன்று இரா
சாக்கள் பெர்சியாவில் எழும்புவார்கள்; அதின்
பிறகு நாலாம் இராசாவாயிருப்பவன் எல்லாரி
லும் மகா ஐசுவரிய சம்பன்னனாவான்; அவன்
தன் ஐசுவரியத்தில்பலப்பட்டபிற்பாடு, கிரேக்க
இராச்சியத்துக்கு விரோதமாக எல்லாவற்றையும்
எழுப்புவான்.
௩ ஆனால் பராக்கிரமமான ஒரு இராசா எழும்பி,
பெலனுள்ள ஆளுகையாய் ஆண்டு, தனக்குச்
சரிப்போனாற்போலே செய்வான்.
௪ அவன் எழும்பினபிற்பாடோவென்றால், அவ
னுடைய இராச்சியம் உடைந்துபோய், [5]வானத்
தின் நாலு காற்றுத்திசைகளில் பகிரப்படும்; ஆ
னால் அவனுடைய சந்ததியாருக்குஅல்ல; அவன்
ஆண்டிருந்த ஆளுகைப்படியும் இராது; ஏனெ
னில் அவனுடைய இராச்சியம் பிடுங்குண்டு,
அவர்களல்லாத வேறே பேர்களிடமாய்த் தாண்
டிப்போம்.
௫ அவனுடைய பிரபுக்களில் ஒருவனாகிய தென்
றிசை இராசா பலத்துக்கொள்ளுவான்; ஆனால்
அவனைப்பார்க்கிலும் வேறொருவன் பலத்துக்
கொண்டு ஆளுவான்; இவனுடைய ஆளுகை
௬ பெலனுள்ள ஆளுகையாயிருக்கும்.—அவர்கள்
சிலவருஷங்களுக்குப் பிற்பாடு ஒன்றுக்கொன்று
உறவுகட்டுவார்கள்; சரிசமானமாக்கும்படிக்குத்
தென்றிசை இராசாவின் குமாரத்தி வடதிசை
இராசாவண்டைக்கு வருவாள்; ஆனால் புயபலம்
அவளுக்கு இராதேபோம்; அவனும் அவனுடை
ய புயமும் நிலைநிற்பதுமில்லை; அவளும் அவளை
அழைத்துவந்தவர்களும், அவளைப் பெற்றவ
னும், அவளை அக்காலங்களில் பலப்படுத்தினவ
னும் ஒப்புக்கொடுக்கப்படுவார்கள்.
ஆனால் அவளுடைய வேர்களின் கிளையாகிய ௭
ஒருவன் தன் ஸ்தானத்தில் எழும்பி, இராணுவத்
தோடே வந்து, வடதிசை இராசாவின் அரணிப்
புக்குள் பிரவேசித்து, தான் வேண்டியதை அவை
களில் செய்து, பலத்துக்கொண்டு,—அவர்களு ௮
டைய தேவர்களையும்முதலாய், அவர்களுடைய
அதிபதிகளையும், அவர்களுடைய விலையேறப்
பெற்ற வெள்ளியும் பொன்னுமான பண்டம்
பாடிகளையுங்கூடப் பிடித்து, எகிப்துக்குக் கொ
ண்டுபோய், சில வருஷங்கள்மட்டும் வடதிசை
இராசாவைப்பார்க்கிலும் நிலையாய் நிற்பான்.—
இவன் தென்றிசை இராசாவின் இராச்சியத்துக்கு ௯
விரோதமாக வந்தும், தன் சீமைக்குத் திரும்பிப்
போவான்.
ஆனால் இவனுடைய குமாரர் யுத்தங்கலந்து, ௰
பெரிய இராணுவங்களின் சேனையைக் கூட்டு
வார்கள்; இவர்களில் ஒருவன் வரவே வந்து, பிர
ளயமாய்க் கடந்து, இரட்டித்துவந்தும், அவனு
டைய அரணிப்புமட்டும் யுத்தங்கலந்து சேரு
வான்.—அப்போது தென்றிசை இராசா கடுமை ௰௧
யாகி, புறப்பட்டு, வடதிசை இராசாவாகிய இவ
னோடே யுத்தம்பண்ணுவான்; இவன் பெரிய
சேனையைப் படைக்கு நிறுத்தினாலும், இந்தச்
சேனை அவன் கையில் ஒப்புக்கொடுக்கப்படும்.—
இந்தச் சேனை நீக்கப்பட்டபடியினாலே அவ ௰௨
னுடைய இருதயம் உயர்ந்துபோகும்; ஆனால்
அவன் அநேகமாயிரமானபேரை மடியவைத்தி
ருந்தாலும் பலத்துக்கொள்ளாதே போவான்.—
ஏனெனில் வடதிசை இராசா திரும்ப முந்திய ௰௩
திலும் பெரிய சேனையை எடுத்து, சிலவருஷங்
கள் சென்றபோது, மகா இராணுவத்தோடும்
வெகு சம்பத்தோடும் வரவே வருவான்.
அக்காலங்களில் அநேகர் தென்றிசை இராசா ௰௪
வுக்கு விரோதமாக எழும்புவார்கள்; அப்போது
உன் சனத்திலுள்ள துண்டரிக்கக்காரரின் புத்தி
ரர் தரிசனத்தை நிறைவேற்றத் தங்களை உயர்த்தி
விழுவார்கள்.—வடதிசை இராசா வந்து, அணை ௰௫
போட்டு, அரணிப்பான பட்டணங்களைப்பிடிப்
பான்; தென்றிசை இராசாவின் புயபலங்களும்
அவன் தெரிந்துகொண்ட சனமும் நில்லாதே
போம்; நிற்கிறதற்குப் பெலனும் இல்லை.—ஆ ௰௬
கையால் அவனுக்கு விரோதமாக வருகிறவன்
தனக்குச் சரிப்போனாற்போலச் செய்வான்;
இவனுக்கு முன்பாக நிலைநிற்பவன் இல்லை;
இவன் [6]சிங்காரமான தேசத்தில் இறங்கியிருப்

1 சங். ௨௭. ௰௪.—2 ௰௧. வச.—3 ௰௧. வச.

4 தானி. ௮. ௨௬.—5 தானி. ௭. ௨: ௮. ௮.—6 தானி. ௮. ௯.

பான்; எல்லாம் இவன் கைக்குள் அகப்பட்டி
ருக்கும்.
௰௭ தன் இராச்சியத்தின் வல்லமையோடெல்லாம்
தானும் தன்னோடேகூடச் செம்மைமார்க்கத்தா
ரும் வர, இவன் தன் முகத்தைத் திருப்பி, இப்
படியே செய்து, பெண்பிள்ளையாகிய ஒரு குமா
ரத்தியை, இவன்அவளை அழிக்கும்படிக்கு, அவ
னுக்குக் கொடுப்பான்; ஆனால் அவள் இதிலே
நிற்பதுமில்லை; இவனுக்காக அப்படிச் செய்
௰௮ வதுமில்லை.—பிற்பாடு இவன் தன் முகத்தைத்
தீவுகளுக்கு நேராகத் திருப்பி, அநேகங்களைப்
பிடித்துக்கொள்ளுவான்; ஆனால் ஒரு சேனாபதி
இவன் செய்கிற நிந்தையை இவனிடத்தில் ஒயப்
பண்ணுவதுமல்லாமல், இவன் செய்த நிந்தை
யின் நிமித்தம் இவனுக்குச் சரிக்குச்சரியுங்கட்
௰௯ டுவான்.—ஆகையால் தன் முகத்தைத் தன் தேசத்
தின் அரண்களுக்கு நேராகத் திருப்புவான்;அங்
கே இடறிவிழுந்து, காணப்படாதேபோவான்.
௨௰ இவன் பட்டத்துக்கோவென்றால், தண்டற்
காரனைச் செழிப்பான இராச்சியத்தில் திரியப்
பண்ணுகிற ஒருவன் எழும்புவான்; கொஞ்சநா
ளுக்குள்ளும் கோபமில்லாமலும் யுத்தமில்லாம
லும் முறிக்கப்படுவான்.
௨௧ இவன் பட்டத்திலோவென்றால், கொஞ்ச
எண்ணிக்கையாயிருக்கிற ஒருவன் எழும்பு
வான்; இவனுக்கு இராச்சியபாரத்தின் மேன்மை
யைக் கொடாதிருப்பார்கள்; ஆனால் சாங்கோ
பாங்கமாய் வந்து, இச்சகம்பேசி, இராச்சியத்
௨௨ தைக் கட்டிக்கொள்ளுவான்.—பிரளயமாய் வரு
கிற புயபலங்கள் இவனாலே பிரளயமாய் முறிக்
கப்படும்; உடம்படிக்கைபண்ணப்பட்ட தலை
௨௩ வனுங்கூடத்தானே.—ஏனென்றால் அவனோ
டே உறவுகட்டிக்கொண்ட நாள்கள்முதல் இ
வன் கபடுபண்ணிப்போயேறி, கொஞ்சச்சனங்
௨௪ களோடே பலத்துப்போவான்.—சீமை சுகவாழ்
வோடும் சம்பூரணத்தோடும் இருக்கையில், இ
வன் உட்பிரவேசித்து, தன் பிதாக்களும் தன்
பிதாக்களின் பிதாக்களும் செய்யாததைச் செய்
வான்; கொள்ளையிட்டுச் சூறையாடி, நிரம்ப
அவர்களுக்கு இறைத்துப் பங்கிட்டு, அரண்களு
க்கு விரோதமாகத் தனக்குள் நினைவுகளை நினைப்
பான்; அப்படிச் சிலகாலமட்டும் இருக்கும்.—
௨௫ பின்னையும் தென்றிசை இராசாவுக்கு விரோதமா
கப் பெரிய இராணுவத்தோடே போர்செய்யத்
தன் வல்லமையையும் தன் நெஞ்சையும் எழுப்பு
வான்; அப்போது தென்றிசை இராசா மிகவும்
பலத்த பெரிய இராணுவத்தோடே யுத்தங்கலப்
பான்; ஆனால் அவன் நிற்கமாட்டான்; ஏனெ
னில் அவனுக்கு விரோதமாகச் சற்பனைகளை
௨௬ நினைப்பார்கள்.—அவனுடைய போசனங்களைச்
சாப்பிடுகிறவர்கள் அவனை முறியப்பண்ணுவார்
கள்; ஆகையால் இவனுடைய இராணுவம் பிர
ளயமாய் வரும்; அநேகர் கொலையுண்டு விழு
வார்கள்.—இந்த இரண்டு இராசாக்களின் இருத ௨௭
யமும் பொல்லாப்புச்செய்வதற்கு இருக்கும்;
ஒரே பந்தியிலிருந்து பொய்பேசிக்கொள்ளுவார்
கள்; ஆனால் அது வாய்ப்பதில்லை; ஏனெனில்
குறித்தகாலத்துக்கு முடிவு இன்னம் நிறுத்தி
வைக்கப்பட்டிருக்கும்.— இவன் மகா சம்பத் ௨௮
தோடே தன் தேசத்துக்குத் திரும்பி, தன் இருத
யத்தைப் பரிசுத்த உடம்படிக்கைக்கு விரோத
மாக வைத்து, அதற்கானதைச் செய்து, தன் தே
சத்துக்குத் திரும்பிப்போவான்.
குறித்தகாலத்திலே திரும்பித் தெற்கிலே வரு ௨௯
வான்; ஆனால் இவனுடைய பின் நடபடி இவ
னுடைய முன் நடபடியைப்போல இருப்பதில்
லை.—இவனுக்கு விரோதமாகக் கித்திம்தேசத்தின் ௩௰
கப்பல்கள் வரும்; அதினால் இவன் மனநோவ
டைந்து, திரும்பிப்போய், பரிசுத்த உடம்படிக்
கைக்கு விரோதமாக மனமடிவாகி, அதற்கான
தைச் செய்து, பரிசுத்த உடம்படிக்கையை விட்
டவர்களைத் திரும்பக் கவனித்துக்கொண்டிருப்
பான்.— ஆனால் வைக்கப்படும் புயபலங்கள் ௩௧
இறங்கியிருந்து, அரணான பரிசுத்தஸ்தலத்தைப்
பரிசுத்தக்கொலைச்சலாக்கி, [1]அன்றாடகப்பலி
யைத் தள்ளி, பாழ்க்கடிக்கும் அருவருப்பை
அங்கே வைப்பார்கள்.— உடம்படிக்கைக்குத் ௩௨
துரோகிகளாயிருக்கிறவர்களை இச்சகப் பேச்சு
களினாலே கள்ளமார்க்கத்தாராக்குவான்; தங்கள்
பராபரனை அறிந்திருக்கிற சனமோவென்றால்,
திடங்கொண்டு, அதற்கானபடி செய்வார்கள்.—
சனத்தில் புத்தியைக் கற்றுக்கொடுக்கிறவர்கள் ௩௩
அநேகரை உணர்வடையப்பண்ணுவார்கள்; அ
நேகநாள்மட்டும் பட்டையத்தாலும் அக்கினி
யாலும் சிறையிருப்பாலும் கொள்ளையாலும்
விழுவார்கள்.—இப்படி அவர்கள் விழுகையில் ௩௪
கொஞ்ச ஒத்தாசையால் சகாயமடைவார்கள்;
அப்போது அநேகர் இச்சக வார்த்தைகளோடே
அவர்களை ஒட்டிக்கொள்ளுவார்கள்.—புத்திமான் ௩௫
களைப் [2]புடமிடுகிறதற்கும்,சுத்திகரிக்கிறதற்கும்,
வெண்மையாக்குகிறதற்கும் அவர்களில் சிலர்
அது முடியுங்காலமட்டும் விழுவார்கள்; ஏனெ
ன்றால் அதற்குக் குறித்தகாலம் வர இன்னம்
செல்லும்.
இராசா தனக்குச் சரிப்போனபடி செய்து, ௩௬
[3]தன்னை உயர்த்தி, தேவனென்னப்பட்டதெல்
லாவற்றிலும் தன்னைப் பெரியவனாக்கி, [4]தேவா
திதேவனுக்கு விரோதமாக ஆச்சரியமான காரி
யங்களைப்பேசுவான்; சினந்தீருமட்டுக்கும் அவ
னுக்குக் கைகூடியும் வரும்; ஏனென்றால் நிரு
ணயிக்கப்பட்டது நடந்தேறும்.—அவன் தன் ௩௭
பிதாக்களின் தேவர்களைக் கவனிக்காமலும்,ஸ்தி
ரிகளின் சிநேகத்தையாகிலும் எந்தத் தேவனையா
கிலும் கவனிக்காமலும், எல்லாவற்றிற்கும் தன்
னைப் பெரியவனாக்கி,—அரணிப்புகள் என்ற தே ௩௮
வனைத் தன்னுடைய தானத்திலே கனம்பண்ணி,

1 தானி. அ. ௰௧.—2 ௧ பே. ௧. ௬, ௭.

3 ௨ தெச. ௨. ௪.—4 தானி. ௭. அ. ௨௫. வெளி. ௰௩. ௫. ௬.

தன் பிதாக்கள் அறியாத ஒரு தேவனைப் பொன்
னினாலும் வெள்ளியினாலும் இரத்தினங்களினா
லும் உச்சிதமான வஸ்துக்களினாலும் கனம்பண்
௩௯ ணுவான்.—அவன் அரணிப்பான கோட்டைக
ளுக்காகவும், அன்னிய தேவனுக்காகவுங்கூடச்
செய்வதேதெனில், அவைகளை எண்ணிக்கொள்
ளுகிறவர்களுக்கு மகா கனமுண்டாகி, அவர்
களை அநேகரை ஆளப்பண்ணி, அவர்களுக்குச்
சீமையைக் கிரயமாகப் பங்கிடுவான்.

௪௰ முடிவின் காலத்திலோவென்றால், தென்றிசை
இராசா அவனோடேகூட முட்டுக்கு நிற்பான்;
ஆனால் வடதிசை இராசா இரதங்களோடும் குதி
ரைக்காரரோடும் அநேகம் கப்பல்களோடும் அ
வன்மேல் கொந்தளிப்பாய் விழுந்து, தேசங்க
ளுக்குள் பிரவேசித்து, அவைகளைப் பிரளய
௪௧ மாய் மூடிக் கடந்து,—[1]சிங்காரமான தேசத்திலும்
வருவான்; அப்போது அநேகர் விழுவார்கள்;
ஆனால் ஏதோமும், மோவாபும், அம்மோன்புத்தி
ரரில் பிரதான பங்குமானவர்கள் அவன் கைக்
௪௨ குத் தப்பிப்போவார்கள்.—அவன் தன் கைகளைத்
தேசங்களைப் பிடிக்க நீட்டுவான்; எகிப்துதேசம்
௪௩ தப்புவதுமில்லை.—எகிப்தினுடைய பொன்
னும் வெள்ளியுமான ஐசுவரியங்களையும் உச்சி
தமான எல்லா வஸ்துக்களையும் ஆண்டுகொள்ளு
வான்; லீபியரும் எத்தியோப்பியரும் அவனைப்
௪௪ பின்செல்வார்கள்.—ஆனால் கிழக்கிலும் வடக்
கிலுமிருந்து வரும் செய்திகள் அவனைக் கலங்
கப்பண்ணும்; அப்போது அவன் அநேகரை
அழிக்கவும் சங்காரம்பண்ணவும் மகா உக்கிரத்
௪௫ தோடே புறப்பட்டுப்போய்,—தன் அரமனை
யின் கூடாரங்களைச் சமுத்திரங்களுக்கு நடுவே
சிங்காரமான பரிசுத்த பர்வதத்தண்டையிலே
போடுவான்; ஆனால் அவன் தன் முடிவுக்கு
வந்துசேருவான்; அவனுக்கு ஒத்தாசைபண்ணு
வாருமில்லை.

## ௰௨. அதிகாரம்.

௧. மிகாவேல் இஸ்ரவேலரைத் துன்பங்களினின்று விடுதலைசெய்வது. ௫. தானியேல் காலங்களைக்குறித்து அறிவித்தது.

௧ உன் சனத்தின் புத்திரருக்காக நிற்கிற பெரிய
பிரபுவாகிய [2]மிகாவேல் அக்காலத்திலே எழும்பு
வான்; ஏனெனில் ஒருசாதி தோன்றினதுமுதற்
கொண்டு அக்காலமட்டுக்கும் உண்டாயிராத
இடுக்கக்காலமாயிருக்கும்; அக்காலத்திலே உன்
சனம் [3]விடுவிக்கப்படும், புஸ்தகத்தில் எழுதியி
ருக்கிறவர்களாகக் கண்டுபிடிக்கப்படுகிற அனை
௨ வருந்தானே.—பூமியின் தூளிலே நித்திரைபண்
ணுகிறவர்களில் [4]அநேகர், [5]சிலர் நித்தியசீவனுக்
கும் சிலர் நித்தியநிந்தைகளுக்கும் இகழ்ச்சிக்
௩ கும், விழித்து எழுந்திருப்பார்கள்.—[6]புத்தியைக்
கற்றுக்கொடுத்தவர்கள் ஆகாயமண்டலத்தின்
ஒளியைப்போலேயும், அநேகரை நீதிக்குள்ளாக்
கினவர்கள் நட்சத்திரங்களைப்போலேயும் என்
றென்றைக்குமுள்ள சதாகாலங்களாய்ப் பிரகா
சித்திருப்பார்கள்.

தானியேலாகிய நீயோவென்றால், முடிவின் ௪
காலமட்டும் இந்த வார்த்தைகளைப் [7]புதைபொரு
ளாக வைத்துவைத்து, இந்தப் புஸ்தகத்தை முத்
திரைபோடு; அப்போது அநேகர் ஓடிவந்து,
ஆராய்வார்கள்; அறிவும் பெருகிப்போகும் என்
றான்.

அப்போது, இதோ, தானியேலாகிய நான் வே ௫
றே இரண்டுபேரை, ஒருவனை [8]ஆற்றுக்கு இக்க
ரையிலும் ஒருவனை ஆற்றுக்கு அக்கரையிலும்
நிற்கக்கண்டேன்.—இவர் [9]வெள்ளைப்புடவை ௬
உடுப்புகளைத் தரித்தவரும், [10]ஆற்றினுடைய
தண்ணீர்களின்மீதில் நிற்கிறவருமாகிய புரு
ஷனைநோக்கி: இந்தப் புதுமைகளின் முடிவு
வர எந்தமட்டும் செல்லுமென்று கேட்டான்.—
அப்போது வெள்ளைப்புடவை உடுப்புகளைத் தரி ௭
த்தவரும் ஆற்றினுடைய தண்ணீர்களின்மீதில்
நிற்கிறவருமாகிய புருஷனின் உத்தரவைக் கேட்
டேன்; அவர் [11]தம்முடைய வலதுகரத்தையும்
தம்முடைய இடதுகரத்தையும் வானத்துக்கு
ஏறெடுத்து, [12]ஒருகாலமும் காலங்களும் அரைக்
காலமும் போகுமட்டும் செல்லும்; பரிசுத்த
சனத்தின் பெலனைச் சிதறவடிக்குதல் முடிந்தி
ருக்கும்போதே, இவைகள் எல்லாம் நிறைவே
றித் தீருமென்று என்றென்றைக்கும் பிழைத்தி
ருக்கிறவர்பேரிலே ஆணையிட்டார்.

நான் அதைக் கேட்டேன்; உணராமலும் இருந் ௮
தேன்; ஆகையால் என் ஆண்டவனே, இவைக
ளின் முடிவு என்னமாயிருக்கும் என்று கேட்
டேன்.—அவன் சொன்னதாவது: தானியேலே, ௯
போய்விடு; ஏனென்றால் இந்த வார்த்தைகள்
முடிவின் காலமட்டும் [13]புதைபொருளாக வைக்
கப்பட்டும் முத்திரித்தும் இருக்கும்.—அநேகர் ௰
[14]சுத்தமும் வெண்மையும் ஆக்கப்பட்டு, புட
மிடப்படுவார்கள்; ஆகாதவர்களோவென்றால்
துன்மார்க்கமாய் நடப்பார்கள்; [15]ஆகாதவர்கள்
எல்லாரும் அதை உணராதேபோவார்கள்; புத்தி
மான்களோ அதை உணருவார்கள்.—[16]பாழ்க்க ௧௧
டிக்கும் அருவருப்பை வைக்கிறதற்காக அன்றா
டகப்பலி தள்ளப்பட்ட காலமுதற்கொண்டு
ஆயிரத்திருநூற்றுத் தொண்ணூறுநாள் உண்டு.—
ஆயிரத்து முந்நூற்று முப்பத்தைந்துநாள்மட்டும் ௧௨
காத்திருந்து சேர்பவன் பாக்கியவான்.—நீயோ ௧௩
வென்றால் முடிவு வருமட்டும் போயிரு; ஏனெ
னில் நீ இளைப்பாறிக்கொண்டிருந்து, நாள்களின்
முடிவிலே உன் சுதந்தர வீதத்துக்கு எழுந்திருப்
பாய் என்றான்.

---

1 ௰௧. ௰௬. அ. ௯.
2 தானி. ௰. ௰௩. வெளி. ௰௨. ௭.
3 எரே. ௩௰. ௭.—4 வெளி. ௨௰. ௪.
5 யோவா. ௫. ௨௯.—6 மத். ௰௩. ௪௩.
7 தானி. அ. ௨௬. வெளி. ௨௨. ௰.
8 தானி. ௰. ௪.
9 தானி. ௰. ௫.—10 தானி. அ. ௰௬.
11 வெளி. ௰. ௫, ௬: ௭. ௨௫.
12 வெளி. ௰௧. ௨: ௰௨. ௬, ௰௪.
13 ௪ வச.—14 தானி. ௰௧. ௩௫.
15 வெளி. ௨௨. ௰௧.—16 தானி. ௰௧.
௩௧. மத். ௨௪. ௰௫.

# HOSEA.

# ஓசேயாவின் தீர்க்கதரிசனம்.

## க. அதிகாரம்.

க. ஞானசோரமார்க்கத்தைக்குறித்துப் பராபரனுடைய நியாயத்தீர்ப்பைக் காட்டுதற்கு ஓசேயா கோமேரைச் சேர்த்துக்கொண்டு, ௪. அவளாலே எஸ்ரேயேலையும், ௬. இரக்கம்பெறாதவளையும், அ. நமது சனமல்லாதவனையும் பெற்றது. ௰. யூதாவும், இஸ்ரவேலும் முந்தின சீருக்குக் கொண்டுவரப்பட்டது.

க உசியா, யோத்தாம், ஆகாஸ், எசேக்கியா என்ற
யூதாவுடைய இராசாக்களின் நாள்களிலும்,
யோவாசின் குமாரனாகிய [1]எரோபெயாம் என்ற
இஸ்ரவேலுடைய இராசாவின் நாள்களிலும்,
பேயேரியின் குமாரனாகிய ஓசேயாவுக்கு உண்
டான கர்த்தருடைய வசனம்.
உ கர்த்தர் ஓசேயாவைக்கொண்டு உரைக்கத்
துவக்கும்போது, கர்த்தர் ஓசேயாவுடனே: நீ
போய், ஒரு சோரஸ்திரியையும் சோரமார்க்கத்
தில்பிறந்த பிள்ளைகளையும் உன்னிடமாகச் சேர்த்
துக்கொள்; ஏனெனில் தேசம் கர்த்தரைப் பின்
பற்றுகிறதைவிட்டுச் சோரம்போகவே போகிற
தென்றார்.
௩ அவன் போய், திப்லாயிமின் குமாரத்தியாகிய
கோமேரைச் சேர்த்துக்கொண்டான்; அவள்
கர்ப்பந்தரித்து, அவனுக்கு ஒரு குமாரனைப்
௪ பெற்றாள்.— அப்போது [2]கர்த்தர் அவனோடே
சொன்னதாவது: இவனுக்கு எஸ்ரேயேல் என்று
பேரிடு; ஏனெனில் இன்னம் கொஞ்சக்காலத்
திலே நாம் ஏகூவின் வீட்டாரிடத்திலே எஸ்ரே
யேலின்இரத்தப்பழிகளை விசாரித்து,இஸ்ரவேல்
வீட்டாரின் இராச்சியபாரத்தை ஒயப்பண்ணு
ரு வோம்.— அந்நாளில் சம்பவிப்பதேதென்றால்,
எஸ்ரேயேலின் பள்ளத்தாக்கிலே இஸ்ரவேலின்
வில்லை உடைப்போம் என்றார்.
௬ அவள் திரும்பக் கர்ப்பந்தரித்து, ஒரு குமாரத்
தியைப் பெற்றாள்; அப்போது அவர் அவனுக்
குச் சொன்னதாவது: இவளுக்கு இரக்கம்பெறா
தவள் என்று பேரிடு; ஏனெனில் நாம் இனி இஸ்
ரவேல் வீட்டாருக்கு இரங்கப்போகிறதில்லை;
அவர்களுக்கு இருக்கிறதை எல்லாம் எடுக்கவே
எ எடுத்துப்போடுவோம்.—ஆனால் யூதாவின் வீட்
டாருக்கு நாம் இரங்குவோம்; ஆனால் வில், பட்
டையம், யுத்தம், குதிரைகள், குதிரைக்காரர்
என்றவைகளால் நாம் அவர்களை இரட்சிக்காமல்
[3]அவர்களுடைய பராபரனாகிய கர்த்தராலே
அவர்களை இரட்சிப்போம் என்றார்.
அ அவள் இரக்கம்பெறாதவளை முலைமறக்கப்
பண்ணினபிற்பாடு, கர்ப்பந்தரித்து, ஒரு குமார
னைப் பெற்றாள்.—அப்போது அவர் சொன்ன ௯
தாவது: இவனுக்கு நமது சனமல்லாதனென்று
பெயரிடு; ஏனெனில் நீங்கள் நமது சனமல்ல;
நாம் உங்களுக்குப் பராபரனாயிருப்பதுமில்லை.—
என்றாலும்,இஸ்ரவேல் புத்திரரின் இலக்கம் [4]அ ௰
ளக்கப்படவும் எண்ணப்படவுங்கூடாத கடற்
கரை மணலைப்போல இருக்கும்; ஏனெனில் சம்
பவிப்பதேதென்றால், [5]நீங்கள் நம்முடைய சன
மல்லவென்று அவர்களுக்குச் சொல்லப்பட்ட
விடத்திலே அவர்களுக்குச் சீவனுள்ள பராபர
னுடைய பிள்ளைகளே என்று சொல்லப்படும்.—
[6]யூதா புத்திரரும் இஸ்ரவேல் புத்திரரும்ஏகமாய்க் ௧௧
கூட்டிக்கொள்ளப்பட்டு, தங்களுக்கு ஒரே தலை
வனை வைத்து, தேசத்திலிருந்து வந்தேறுவார்
கள்; ஏனெனில் எஸ்ரேயேலின் நாள பெரியதா
யிருக்கும்; நமது சனமே என்று உங்கள் சகோ
தரருக்கும், இரக்கம்பெற்றவளே என்று உங்கள்
சகோதரிகளுக்கும் சொல்லுங்கள்.

## உ. அதிகாரம்.

க. சனத்தின் விக்கிரகத்தொழும்பு. ௬. அவர்களுக்கு விரோதமாக எழும்பும் பராபரனுடைய நியாயத்தீர்ப்புகள். ௧௪. அவர்களோடு ஒப்புரவாகுதலின் அவருடைய வாக்குத்தத்தங்கள்.

உங்கள் தாயோடே வழக்காடுங்கள்; ஏனெனில் க
அவள் நம்முடைய பெண்சாதியாயிருக்கிறதில்
லை, நாம் அவளுடைய புருஷனாயிருக்கிறதுமில்
லை.—அவள் தன் வேசித்தனங்களைத் தன் முகத் உ
திலும், தன் விபசாரங்களைத் தன் தனங்களின்
நடுவிலுமிருந்து விலக்கிப்போடக்கடவாள்.—
மற்றப்படி நாம் அவளை நிருவாணமாக உரிந்து ௩
போட்டு, [7]அவள் பிறந்தநாளில் இருந்த வண்ண
மாக அவளை நிறுத்தி, அவளை அந்தரவெளியைப்
போலாக்கி, அவளை வறண்ட பூமியைப்போல்
வைத்து, அவளைத் தாகத்தால் சாகப்பண்ணி,—அ ௪
வள்பிள்ளைகளுக்கு இரங்காதிருப்போம்; ஏனெ
னில் அவர்கள் வேசிப்பிள்ளைகள்.—அதேனென் ரு
றால் அவர்களுடைய தாய் சோரம்போனாள்; அ
வர்களைக் கர்ப்பந்தரித்தவள் இலச்சையான காரி
யங்களைச் செய்தாள்; ஏனெனில், என் அப்பத்
தையும், என் தண்ணீரையும், என் ஆட்டுமயிரை
யும், என் பஞ்சையும், என் எண்ணெயையும்,
என் பானங்களையும் [8]கொடுத்துவருகிற என்
சிநேகிதரைப் பின்பற்றிப்போவேன் என்றாள்.

1 உ இரா. ௰௪.௨௩.–2 உ இரா.௰௫. ௯௯. ௨௨, ௨௩.—4 க மோ.௰௩.௰௬: ௰-௰௨.–3 எசா.௩௭.௩௩,௨ நாளா. ௨௨. ௰எ.

5 உரோ. க.௨௫,௨௬. க பே. ௨.௰. மீகா ௨.௰௨,௰௩.—7 எசே.௰௬.௪. 6 எசா. ௰௧. ௰–௰௨. எசே. ௩௭. ௨௨. 8 எரே. ௪௪.௰௭.

௬ ஆகையால், இதோ, நாம் உன் வழியை முள்
ளுக்களைப்போட்டு அடைப்போம்; அவள் தன்
பாதைகளைக் கண்டுபிடிக்காதபடிக்கு அவளை
௭ வேலியடைத்து மறிப்போம்.—அவள் தன் சிநே
கிதரைப் பின்தொடர்ந்தும் அவர்களைக் கிட்டா
மலும், அவர்களைத் தேடியும் கண்டுபிடிக்காம
லும்போய்: நான் என் முந்தின புருஷனண்டை
க்குத் திரும்பிப் போவேன்; ஏனெனில் [1]இப்
போது இருக்கிறதைப்பார்க்க அப்போது எனக்
குத் தாவிளையாயிருந்தது என்பாள்.
௮ தனக்கு நாம் தானியத்தையும் திராட்சப்பழ
இரசத்தையும் எண்ணெயையும் கொடுத்தவரென்
றும், தனக்கு நாம் வெள்ளியையும் பொன்னையும்
பெருகப்பண்ணினவரென்றும் அவள் அறியாதே
போனாள்; அதைப் பாகாலுடையதாக்கினார்கள்.—
௯ ஆனபடியினாலே நாம் ஏற்றகாலத்திலே நமது தா
னியத்தையும் ஏற்றவேளையிலே நமது திராட்சப்
பழ இரசத்தையும் திரும்ப எடுத்து, அவளுடைய
நிருவாணத்தை மூடுகிறதற்கு இருந்த நமது ஆட்
டுமயிரையும் நமது பஞ்சையும் திரும்பப் பிடுங்
௰ கிக்கொள்வோம். — இப்போதும் அவளுடைய
சிநேகிதரின்கண்களுக்குமுன்பாக அவளுடைய
பயித்தியத்தைத் திறந்துவைப்போம்; ஒருவரும்
அவளை நம்முடையகைக்கு நீங்கலாக்கி விடுவிப்
௰௧ பதில்லை.—நாம் அவளுடைய எல்லா மகிழ்ச்சி
யையும், அவளுடைய பண்டிகைகளையும், அவ
ளுடைய மாதப்பிறப்புகளையும், அவளுடைய
ஓய்வுநாட்களையும், சபைகூடுகிற அவளுடைய
எல்லா ஆசரிப்புகளையும் ஓயப்பண்ணுவோம்.—
௰௨ என் சிநேகிதர் எனக்குக் கொடுத்த பணையமா
யிருக்கிறதென்று அவள் சொன்ன அவளுடைய
திராட்சச்செடிகளையும் அவளுடைய அத்திமரங்
களையும் நாம் பாழாக்கி, அவைகளைக் காடாய்ப்
போகப்பண்ணுவோம்; வெளியின் சீவன்கள்
௰௩ அவைகளைத் தின்னும்.—அவள் பாகால்களுக்குத்
தூபங்காட்டி, தன் நெற்றிப்பட்டங்களாலும்
தன் ஆபரணங்களாலும் தன்னைச் சிங்காரித்துக்
கொண்டு, தன் சிநேகிதரைப் பின்தொடர்ந்து,
நம்மைமறந்துபோனநாள்களின்நிமித்தம் அவளை
விசாரிப்போமென்று கர்த்தர் சொல்லுகிறார்.
௰௪ ஆனதுகொண்டு, இதோ, நாம் அவளை நயம்
பண்ணி, அவளை வனாந்தரத்திலே அழைத்துப்
௰௫ போய், அவளோடே [2]பட்சமாய்ப் பேசி,—அங்
கேயிருந்து அவளுக்கு அவளுடைய திராட்சத்
தோட்டங்களையும் நம்பிக்கையின் வாசலாக,
ஆகோரின் பள்ளத்தாக்கையும் கொடுப்போம்;
அப்போது அவள் அங்கே, தன் இளவயதின் நாள்
களிலும் [3]தான் எகிப்துதேசத்திலிருந்து வந்தே
றின நாளிலும் செய்ததுபோலே பாடுவாள்.
௰௬ அக்காலத்திலே சம்பவிப்பதேதென்றால், நீ
நம்மை இனி என் பாகாலே என்று சொல்லாமல்,
என் புருஷனே என்று சொல்லுவாயென்று கர்த்
௰௭ தர் உரைக்கிறார்.—பாகால்களுடைய நாமங்களை
அவள் வாயில் அற்றுப்போகப்பண்ணுவோம்;
இனி அவைகளின் பேரைச்சொல்லி, அவைகளை
நினைக்கிற நினைப்பு இல்லாதேபோகும்.—அக் ௰௮
காலத்திலே நாம் அவர்களுக்காக [4]வெளியின்
மிருகங்களோடும், ஆகாயத்துப் பறவைகளோ
டும், பூமியின் ஊர்வனவைகளோடும், ஒரு உடம்
படிக்கையைப்பண்ணி, [5]வில்லையும் பட்டை
யத்தையும் யுத்தத்தையும் தேசத்தில் இராதபடிக்கு
முறித்து, அவர்களைச் சுகமாய்ப் படுத்துக்கொண்
டிருக்கப்பண்ணுவோம்.—[6]நித்திய விவாகத்துக் ௰௯
கென்று உன்னை நமக்கு நியமித்துக்கொள்ளு
வோம்; நீதியும் நியாயமும் கிருபையும் உருக்க
இரக்கமுமாய் உன்னை நமக்கு நியமித்துக்கொள்
ளுவோம். — விசுவாசத்தாலே உன்னை நமக்கு ௨௰
நியமித்துக்கொள்ளுவோம்; [7]நீ கர்த்தரை அறிந்து
கொள்ளுவாய்.
அக்காலத்தில் சம்பவிப்பதேதென்றால், நாம் ௨௧
மறுமொழி கொடுப்போமென்று கர்த்தர் சொல்லு
கிறார்; நாம் வானங்களுக்கு மறுமொழி கொடுப்
போம்; அப்போது அவைகள் பூமிக்கு மறுமொ
ழிகொடுக்கும்.—அப்போது பூமி தானியத்துக் ௨௨
கும் திராட்சப்பழஇரசத்துக்கும் எண்ணெய்க்
கும் மறுமொழிகொடுக்கும்; அப்போது இவை
கள் எஸ்ரேயேலுக்கும் மறுமொழிகொடுக்கும்.—
நாம் அவளை நமக்குப் பூமியிலே விதைப்பாடாக் ௨௩
கி, இரக்கம் பெறாதிருந்தவளுக்கு இரங்கி, [8]நம்
முடைய சனமல்லாதிருந்ததற்கு நீ நம்முடைய
சனமென்று சொல்லுவோம்; அது என் பராபர
னே என்று சொல்லும் என்றார்.

## ௩. அதிகாரம்.

௧. விபசாரியின் குற்றநிவிர்த்தியினாலே, ௪. இஸ்ரவேலர் தாங்கள் முந்தின சீருக்குக் கொண்டுவரப்படுமுன்னமே அவர்களுடைய அழிவைக் காட்டினது.

அன்னிய தேவர்களை நோக்கி, திராட்சப்பழ ௧
இரசமுள்ள பாத்திரங்களைச் சிநேகிக்கிறவர்க
ளான இஸ்ரவேல் புத்திரர்பேரிலே கர்த்தர் வைத்
திருக்கிற சிநேகத்துக்கு ஒப்பனையாக நீ இன்னம்
போய், வேறொருவனால் சிநேகிக்கப்பட்டவ
ளும் விபசாரியுமாய்ப்போன பெண்சாதியைச்
சிநேகித்துக்கொண்டிரு என்று கர்த்தர் என்னோ
டே சொன்னார்.—அப்போது நான் அவளை எனக் ௨
குப் பதினைந்து வெள்ளிக்காசுக்கும் ஒன்றரைக்
கலம் வாற்கோதுமைக்கும் கொண்டு,—அவளு ௩
டனே, நீ வேசித்தனம்பண்ணாமலும், ஒருவனைச்
சேர்ந்திராமலும் அநேகம் நாள் எனக்கு இருப்பா
யாக; உனக்கு நானும் இருப்பேனென்றேன்.
ஏனென்றால் இஸ்ரவேல் புத்திரர் அநேகநாள் ௪
இராசா இல்லாமலும் பிரபு இல்லாமலும் பலி
இல்லாமலும் சிலை இல்லாமலும் ஆசாரியச் சால்
வையும் சுரூபங்களும் இல்லாமலும் இருப்பார்
கள்.—[9]பிற்பாடு இஸ்ரவேல் புத்திரர் திரும்பி, ௫
தங்கள் பராபரனாகிய கர்த்தரையும் [10]தங்கள் இரா

1 லூக். ௰௫. ௰௭, ௰௮.—2 எசா. ௪௰. ௨. 4 எசா. ௰௧. ௬, ௯.—5 சங். ௪௬. ௯. செப். ௩. ௩.—3 உ மோ. ௰௫. ௧, உ௧. 6 சங். ௪௫. ௯. ௰. எபே. ௫. ௨௫, ௨௭.
7 எரே. ௩௧. ௩௩, ௩௪.—8 உ ரோ. ௯. 10 எசே. ௩௪. ௨௩, ௨௪. ௨௫.—9 உ ரோ. ௰௧. ௨௫—௩௨.

சாவாகிய தாவீதையும் தேடி, கர்த்தரண்டைக்
கும் அவருடைய நன்மையண்டைக்கும் கடை
சிநாள்களில் அஞ்சிவருவார்கள்

## ௪. அதிகாரம்.

௧. சனத்தின் பாவங்களுக்கும், ௬. ஆசாரியர்களுக்கும், ௰௨. விக்கிரகத் தொழும்புக்கும் விரோதமாக வரும் பராபரனுடைய நியாயத்தீர்ப்புகள். ௰௫. இஸ்ரவேலருடைய துன்பத்தினாலே யூதா எச்சரிக்கப்பட்டது.

௧ இஸ்ரவேல் புத்திரரே, கர்த்தருடைய வார்த்தை
யைக் கேளுங்கள்; ஏனெனில் தேசத்துக்குடிக
ளோடே கர்த்தருக்கு வழக்கு இருக்கிறது; அதே
னென்றால் தேசத்திலே உண்மையும் இல்லை;
தயவும் இல்லை; பராபரனுடைய அறிவும் இல்லை.-
௨ பொய்யாணையிட்டு, பொய்சொல்லி, கொலை
செய்து, திருடி, விபசாரம்பண்ணி, மிஞ்சிமிஞ்
சிப்போகிறார்கள்; இரத்தப்பழிகளோடே இரத்
௩ தப்பழிகள் சேருகின்றன.-இதின்நிமித்தம் தேசம்
புலம்பும்; அதில் குடியிருக்கிற அனைவரோடுங்
கூட மிருகசீவன்களும் ஆகாயத்துப்பறவைக
ளும் தொய்ந்துபோகும்; கடலின் மச்சங்களும்
௪ வாரிக்கொள்ளப்படும்.—ஆகிலும் ஒருவனும் நியா
யத்தைக் காண்பிக்கவும் ஒருவனும் அவர்களைக்
கடிந்துகொள்ளவும் கூடாது; ஏனெனில் உன்
சனம் ஆசாரியனோடே வழக்காடுகிறவர்களைப்
௫ போல இருக்கிறார்கள். — ஆகையால் பகலிலே
இடறிவிழுவாய்; இரவிலே உன்னோடேகூடத்
தீர்க்கதரிசியும் இடறிவிழுவான்; உன் தாயை
நாம் சங்காரம்பண்ணுவோம்.

௬ நமது சனம் அறிவில்லாமையினாலே சங்கார
மாகிறது; ஏனெனில் நீ அறிவை வெறுத்தாய்;
ஆகையால் நீ நம்முடைய ஆசாரியனாயிராதபடிக்
கு உன்னை நாமும் வெறுப்போம்; நீ உன் பரா
பரனுடைய வேதத்தை மறந்தாய்; ஆகையால்
௭ உன் பிள்ளைகளை நாமும் மறப்போம்.-எத்தனைக்
குப் பெருகினார்களோ, அத்தனைக்கு நமக்கு
விரோதமாய்ப் பாவஞ்செய்கிறார்கள்; அவர்களு
டைய கனத்தை கனஈனமாக மாறப்பண்ணு
௮ வோம்.—நமது சனம் பாவம்போக்கப் பலியிடுகி
றதை அவர்கள் தின்று, இவர்களுடைய அக்கிர
௯ மத்தின்பேரில் பசிதாகமாயிருக்கிறார்கள்.—ஆ
னதுகொண்டு [1]சனமும் ஆசாரியனும் சரி; நாம்
அவர்களை விசாரித்து, அவர்கள் வழிகளையும் அ
வர்கள் கிரியைகளையும் அவர்கள்மேல் திரும்பப்
௰ பண்ணுவோம்.—[2]அவர்கள் தின்று திருத்தியாகா
திருப்பார்கள்; வேசித்தனம்பண்ணி, பலுகாதி
ருப்பார்கள்; ஏனெனில் கர்த்தனை நோக்கிக்
கொள்ளுதலை விட்டுவிட்டார்கள்.
௰௧ வேசித்தனமும் திராட்சப்பழஇரசமும் மது
௰௨ பானமும் இருதயத்தை மயக்கும்.—நமது சனம்
தன் மரத்தினிடத்தில் ஆலோசனை கேட்கிறது;
தன் கட்டை தனக்குச் செய்தியை அறிவிக்கு
மென்றிருக்கிறது; ஏனெனில் வேசித்தன ஆவி
அவர்களை வழிதப்பித்திரியப்பண்ணிற்று; அவர்
கள் தங்கள் பராபரனுக்குக் கீழ்ப்பட்டிராமல்

[1] ஏசா. ௨௪. ௨.—[2] ௩ மோ. ௨௬. ௨௬.

வேசித்தனம்பண்ணுகிறார்கள்.—அவர்கள் பர்வ ௰௩
தங்களின் சிகரங்களில் பலியிட்டு, மேடுகளிலே
கர்வாலியுமரங்களின்கீழும் புன்னைமரங்களின்
கீழும் அரசமரங்களின் கீழும், அவைகளின்நிழல்
நல்லதென்று தூபங்காட்டுகிறார்கள்; ஆனது
கொண்டு உங்கள் குமாரத்திகள் வேசித்தனமும்,
உங்கள் மருமகள்மார் விபசாரமும்பண்ணுகிறார்
கள்.—நாம் உங்கள் குமாரத்திகளை, இவர்கள் வே ௰௪
சித்தனம்பண்ணுகிறதின்நிமித்தமும், உங்கள்
மருமகள்மார்களை அவர்கள் விபசாரம்பண்ணு
கிறதின்நிமித்தமும், விசாரியாதிருப்போமோ?
ஏனென்றால் வேசிகளோடேகூட அவர்கள்
விலகிப்போய், பரஸ்திரிகளோடே கூடப் பலி
யிடுகிறார்கள்; உணர்வில்லாத சனம் அதினால்
சிக்கிக்கொண்டு விழும்.

இஸ்ரவேலாகிய நீ சோரம்போனால், யூதாவா ௰௫
கிலும் அந்தத் தோஷத்துக்குள்ளாகாதிருப்பதாக;
கில்காலுக்கு வராமலும், பெத்தாவேனிலே போ
யேறி, கர்த்தருடைய சீவனானை என்று சொல்லா
மலும் இருப்பீர்களாக.—ஏனெனில் இஸ்ரவேல் ௰௬
சனம் கொடுமையான கிடாரியைப்போலே அ
டங்காதிருக்கிறது; இப்போது கர்த்தர் அவர்களை
விஸ்தாரமான வெளியிலே ஆட்டுக்குட்டியைப்
போலே மேய்ந்து அலையப்பண்ணுவார்.—எப் ௰௭
பிராயீம் சனம் விக்கிரகங்களோடு இணையாய்ப்
போயிற்று; அதைப் போகவிடு. — அவர்களு ௰௮
டைய மதுபான வெறிதெளிந்தும், சோரம்போ
கவே போகிறார்கள்; அவர்களுடைய கேடகங்
களானவர்கள் தாருங்களென்று இலச்சையான
பொழிவைச் சிநேகிக்கிறார்கள்.—காற்று அவர் ௰௯
களை அவர்கள் செட்டைகளில் இறுகப்பிடிக்
கும்; அப்போது தங்கள் பலிகளால் வெட்கப்
படுவார்கள்.

## ௫. அதிகாரம்.

௧. இஸ்ரவேலில் ஆசாரியர்களும், சனமும், பிரபுக்களும், ௰௫. குணப்படுகிறவரையில் அவர்களுடைய பாவங்களுக்காக வரும் பராபரனுடைய நியாயத்தீர்ப்பு.

ஆசாரியர்களே, இதைக் கேளுங்கள்; இஸ்ர ௧
வேல்வீட்டாரே, கவனியுங்கள்; இராசாவின்
வீட்டாரே, செவிகொடுங்கள்; ஏனெனில் இந்த
நியாயவிசாரிப்பு உங்களுக்குச் செல்லும்; அதே
தென்றால் மிஸ்பாவுக்குக் கண்ணியும் தாபோ
ரின்மேல் விரிக்கிறவலையுமானீர்கள்.—தப்பான ௨
பலிகளை அடிக்கிறதிலே ஆழமாய் இறங்கியிருக்
கிறார்கள்; அவர்கள் எல்லாரையும் நாம் தண்
டிக்கிறவராயிருப்போம். — எப்பிராயீமை நாம் ௩
அறிவோம், இஸ்ரவேல் நமக்கு மறைவானதல்ல;
எப்பிராயீமே, இப்போது சோரம்போனாயே;
இஸ்ரவேல் தீட்டுப்பட்டதே.—தங்கள் கிரியை ௪
களைத் தங்கள் பராபரனண்டைக்குத் திருப்புவ
தற்கு நேராகத் திருத்தார்கள்; ஏனெனில் [3]வே
சித்தன ஆவி அவர்கள் உள்ளத்தில் இருக்கிறது;
கர்த்தனை அறியார்கள்.

[3] ஓசே. ௪. ௰௨.

௫ இஸ்ரவேலின் அகந்தை அவர்கள் முகத்துக்கு
முன்பாகச் சாட்சியிடுகிறது; ஆகையால் இஸ்ர
வேலும், எப்பிராயீமும் தங்கள் அக்கிரமத்தி
னுல் இடறுண்டு விழுவார்கள்; அவர்களோ
௬ டேகூட யூதாவும் இடறுண்டு விழும். — அப்
போது அவர்கள் கர்த்தரைத் தேடும்படிக்குத் தங்
கள் ஆடுகளோடும் தங்கள் மாடுகளோடும் வந்
தும் [1]கண்டுபிடியார்கள்; அவர்களைவிட்டு வில
௭ கினுர். — கர்த்தருக்கு விரோதமாகத் துரோகம்
பண்ணினுர்கள்; அதேனெனில் அன்னிய பிள்
ளைகளைப் பெற்ருர்கள்; இப்போது மாதப்பிறப்பு
அவர்களையும் அவர்கள் பங்கு பகிர்ச்சிகளையுங்
கூடப் பட்சிக்கும்.
௮ கிபேயாவிலே எக்காளத்தையும் ராமாவிலே
பூரிகையையும் ஊதுங்கள், பென்யமீன் கோத்தி
ரத்தாரே, உங்களுக்குப் பிற்புறமாகிய பெத்தா
௯ வேனிலே கதறுங்கள்.—தண்டிப்பின் நாளிலே
எப்பிராயீம் பாழாகும்; நிச்சயமாய் வரப்போ
கிறதை இஸ்ரவேலின் கோத்திரங்களுக்குள்ளே
௰ அறிவிக்கிறோம்.—யூதாவின் பிரபுக்கள் [2]எல்லை
களை ஒதுக்குகிறவர்களுக்கு ஒப்பானுர்கள்; அவர்
கள்மேல் நம்முடைய சினத்தைத் தண்ணீரைப்
போல ஊற்றிப்போடுவோம்.
௰௧ எப்பிராயீம் ஒடுங்குண்டு, நியாயமாய் நொறுக்
கப்பட்டுப்போகிறுன்; ஏனெனில் ஆகாத கற்ப
௰௨ னையை மனதாரப் பின்பற்றிப்போனுன்.—நாம்
எப்பிராயீமுக்குப் பொட்டரிப்பாகவும், யூதா
வின் வீட்டுக்குச் சொத்தைபிடிப்பாகவும் இருப்
௰௩ போம்.—எப்பிராயீம் தன் வியாதியையும், யூதா
தன் காயத்தையும் கண்டபோது, எப்பிராயீம்
அசூரண்டைக்குப் போய், யாரேப் இராசாவண்
டைக்கு ஆள் அனுப்பினுன்; அவனேவென்ருல்
உங்களைக் குணமாக்கவும் உங்களில் இருக்கிற
காயத்தை ஆரோக்கியம்பண்ணவும் கூடாது.—
௰௪ ஏனெனில் நாம் எப்பிராயீமுக்குச்சிங்கமாகவும்,
யூதாவின் வீட்டாருக்கு இளஞ்சிங்கமாகவும்
இருப்போம்; நாம் நாமே பீறிவிட்டுப் போய்விடு
வோம்; தப்புவிப்பார் இல்லாமல் எடுத்துக்கொ
௰௫ ண்டுபோவோம்.—அவர்கள் தங்கள் குற்றங்களை
அறிந்து நமது முகத்தைத் தேடுமட்டுக்கும் நாம்
போய், நம்முடைய தானத்துக்குத் திரும்பு
வோம்; [3]தங்களுக்கு இக்கட்டான காலத்திலே
நம்மைக் கருத்தாய்த் தேடுவார்கள்.

## ௬. அதிகாரம்.

௧. மனந்திரும்பத் தூண்டுதல். ௪. அவர்களுடைய ஆகாமியத்தையும் அக்கிரமத்தையுங்குறித்து முறையிடுதல்.

௧ கர்த்தரண்டைக்குத் திரும்புவோம் வாருங்கள்;
ஏனெனில் [4]அவர் நம்மைப் பீறிப்போட்டார்;
அவர் நம்மைக் குணமுமாக்குவார்; அடித்தார்;
நம்முடைய காயங்களைக் கட்டுகிறவருமாய் இ
௨ ருப்பார்.—இரண்டு நாளுக்குப்பிற்பாடு [5]நம்மை
உயிர்ப்பிப்பார்; மூன்றும்நாளிலேநம்மை எழுப்
புவார்; அப்போதுஅவருக்குமுன்பாகப் பிழைப்
போம்.—அப்போது நாம் அறிவடைந்து கர்த் ௩
தரை அறியத் தொடர்ந்துபோவோம்; விடியற்
கால வெளுப்பைப்போலே அவர் வெளிப்பிர
வேசிக்குதல் ஆயத்தப்பட்டிருக்கும்; மழையை
ப்போலே நிலத்தின்மேல் இறங்கின பின்மாரி
யைப்போலேதானே நம்மண்டைக்கு வருவார்.
எப்பிராயீமே, உனக்கு என்னசெய்வோம்? ௪
யூதாவே, உனக்கு என்னசெய்வோம்? உங்கள்
சன்மார்க்கம் விடியற்காலத்தின் மேகத்தைப்
போலேயும், காலமே கண்டு போய்விடுகிற பனி
யைப்போலேயும் இருக்கிறது.-ஆகையால் தீர்க் ௫
கதரிசிகளைக்கொண்டு வெட்டுகிறோம்; நமது
வாயின் வார்த்தைகளைக்கொண்டு அவர்களைக்
கொன்றுபோடுகிறோம்; அதின்பிறகு உன் நியா
யங்கள் வெளிச்சத்தைப்போல உதிக்கும்.
ஏனெனில் [6]பலியை அல்ல, இரக்கத்தையும் ௬
தகனபலிகளைப்பார்க்கப் பராபரனின் அறிவை
யும் விரும்புகிறோம். — அவர்களோவென்ருல் ௭
ஆதாமைப்போல உடம்படிக்கையை மீறி, அங்
கே நமக்கு விரோதமாகத் துரோகம்பண்ணினுர்
கள். — கீலேயாத் அக்கிரமம் செய்பவர்களின் ௮
பட்டணம்; அது இரத்தக் காலடிகளால் மிதிக்
கப்பட்டிருக்கிறது.—பறிகாரரின் கூட்டங்கள் ௯
ஒருவனுக்குக் காத்திருக்குமாப்போலே, சீகே
முக்குப்போகிற வழியிலே கொலைகளைச்செய்
கிற ஆசாரியரின் கூட்டம் இருக்கிறது; தோஷ
மான காரியங்களையே செய்கிருர்கள்.—திடுக்கி ௰
டப்படத்தக்க காரியத்தை இஸ்ரவேல்வீட்டா
ரிலே கண்டோம்; அங்கே எப்பிராயீமின் வே
சித்தனம் உண்டு; இஸ்ரவேல் தீட்டுப்பட்டுப்
போயிற்று.
ஆகிலும் நாம் நமது சனத்தின் சிறையிருப் ௰௧
பைத் திருப்பும்போது, யூதா உனக்கு அறுப்புக்
காலத்துக்குக் காரணமாயிருக்கும்.

## ௭. அதிகாரம்.

௧. அபரிமிதமான பாவங்களைக் கண்டித்தல். ௰௧. அவர்களுடைய மாயத்தைக்குறித்து வரும் பராபரனுடைய உக்கிரம்.

நாம் இஸ்ரவேலைக் குணமாக்க இருக்கையில், ௧
எப்பிராயீமின் அக்கிரமமும் சமாரியாவின் பொ
ல்லாப்புகளும்வெளிப்படுகின்றன: ஏனென்ருல்
வஞ்சனைசெய்கிருர்கள்; உள்ளே திருடன்வருகி
ருன்; வெளியே பறிகாரரின் கூட்டம் கொள்
ளையிடுகிறது.—தங்கள் பொல்லாப்பை எல்லாம் ௨
நினைத்திருக்கிறோமென்று அவர்கள் தங்கள் இரு
தயத்தில் சிந்திக்கிறதில்லை; இப்போதும் அவர்
களுடைய கிரியைகள் அவர்களைச் சூழ்ந்து
கொண்டு, நமது முகத்துக்கு எதிரே இருக்கின்
றன.-இராசாவைத் தங்கள் பொல்லாப்பினுலும் ௩
பிரபுக்களைத் தங்கள் பொய்களினுலும் சந்தோ
ஷப்படுத்துகிருர்கள். — அவர்கள் எல்லாரும் ௪
விபசாரக்கள்ளர்; அப்பஞ்சுடுகிறவனுல் எரியி

1 லூக். ௧. ௨௮.
2 உ மோ. ௰௯. ௰௪: ௨௭. ௰௭.
3 ஏசா. ௨௬. ௰௬.
4 ஓசே. ௫. ௰௪.
5 இ மோ. ௩௨. ௩௯. ஏசே.௩௭.௧. ௰௧: ௰௨. ௭.
6 ௧ சாமு. ௰௫. ௨௨. மத். ௯.

டப்படுகிற அடுப்பைப்போல இருக்கிறார்கள்;
மாவைப்பிசைந்ததுமுதற்கொண்டு அது உப்பி
ப்போகுமட்டுக்கும், அனலை எழுப்பாமல் ஓய்ந்
௫ திருக்கிறான். — நம்முடைய இராசாவின் நா
ளென்று சொல்லி, பிரபுக்கள் அவனைத் திராட்
சப்பழஇரசத் துருத்திகளால் நோஞ்சலாக்குகி
றார்கள்; சரசக்காரரோடேகூட அவன் தன்
௬ கையை நீட்டுகிறான்.—அவர்கள் பதிவிருக்கும்
தறுவாயிலோவென்றால், தங்கள் இருதயத்தை
அடுப்பைப்போல வைக்கிறார்கள்; அவர்களில்
அடுப்பு மூட்டுகிறவன் இராமுழுதும் தூங்குகி
றான்; காலமேயோவென்றால் அது சுவாலையிடு
௭ கிற அக்கினியாய் எரிகிறது.—அவர்கள் எல்லா
ரும் அடுப்பைப்போல அனலாகி, தங்கள் நியா
யாதிபதிகளைப் பட்சிக்கிறார்கள்; அவர்களு
டைய இராசாக்கள் எல்லாரும் விழுகிறார்கள்;
அவர்களில் நம்மைநோக்கிக் கூப்பிடுகிறவன்
இல்லை.

௮ எப்பிராயீம் சனசதளங்களோடே கலந்தான்;
எப்பிராயீம் திருப்பப்படாதேபோன அப்பம்.—
௯ அன்னியர் அவனுடைய பலத்தைத் தின்கிறார்
கள்; அவனோ அதை அறியான்; நரையும் அவ
னில் தெளித்திருக்கிறது; அவனோ அதை அறி
௰ யான்.—இஸ்ரவேலின் அகந்தை அவர்கள் முகத்
துக்குமுன்பாகச் சாட்சியிட்டாலும், அவர்கள்
தங்கள் பராபரனாகிய கர்த்தரண்டைக்குத் திரும்
பாமலும், இதிலெல்லாம் அவரைத் தேடாமலும்
௰௧ போகிறார்கள்.—எப்பிராயீம் பேதையான புறா
வைப்போல இருக்கிறான்; புத்தியில்லை; எகிப்
தியனைக் கூப்பிடுகிறார்கள்; அசூரியனண்டைக்
௰௨ கும் போகிறார்கள்.—அவர்கள் போனால், [1]நமது
வலையை அவர்கள்மேல் வீசுவோம்; அவர்களை
ஆகாசத்துப் பறவைகளைப்போலே கீழே விழப்
பண்ணுவோம்; அவர்களுடைய சபையில் கேட்
கப்பட்டதின்படியேஅவர்களைத்தண்டிப்போம்.
௰௩ அவர்கள் நம்மைவிட்டு அலைந்து திரிகிறபடி
யினாலே அவர்களுக்கு ஐயோ! அவர்களுக்குக்
கேடுவரும்; ஏனெனில் நமக்கு விரோதமாக
இரண்டகம்பண்ணினார்கள்; நாம் அவர்களைமீட்
டிருந்தும், அவர்கள் நமக்கு விரோதமாகப் பொய்
௰௪ களைப் பேசுகிறார்கள்.—அவர்கள் தங்கள் படுக்
கைகளில் அலறுகிறபோது, தங்கள் இருதயத்தி
லே நம்மைநோக்கிக் கூப்பிடுகிறதில்லை; அவர்
கள் தானியத்துக்காகவும் திராட்சப்பழஇரசத்துக்
காகவுங்கூடி, நம்மை வெறுத்து விலகிப்போகி
௰௫ றார்கள்.—நாம் தண்டித்தோம்; அவர்களுடைய
புயங்களைத் திரும்பப் பலக்கவும்பண்ணினோம்;
ஆகிலும் நமக்கு விரோதமாகப் பொல்லாப்பு
௰௬ நினைக்கிறார்கள். — திரும்புகிறார்கள்; ஆனால்
உன்னதமானவரண்டைக்கு அல்ல, [2]கள்ள வில்
லுக்கு ஒப்பாயிருக்கிறார்கள்; அவர்களுடைய
பிரபுக்கள் தங்கள் நாவினுடைய சினத்தின்
நிமித்தம் பட்டயத்தால் விழுவார்கள்; இது
எகிப்துதேசத்தைத்தொட்டு அவர்களுக்கு வரும்
நிந்தை.

## ௮. அதிகாரம்.

௧. ௰௨. அவர்களுடைய அவபத்திக்காகவும், ௫. விக்கிரகத்தொழும்புக்காகவும், அழிவுவருமென்று பயமுறுத்தப்பட்டது.

உன் [3]வாயிலே எக்காளத்தை வைத்துக்கொள்; ௧
யூதாவீட்டார் நம்முடைய உடம்படிக்கையை
மீறி, நம்முடையநியாயப்பிரமாணத்துக்குவிரோ
தமாகத் துரோகம்பண்ணினபடியினாலே, அவர்
கள்மேல் கழுகைப்போலப் பாய்ந்து வருகி
றான்.—எங்கள் பராபரனே, உம்மை அறிந்திருக் ௨
கிறோம் என்று இஸ்ரவேலர் கூப்பிடுவார்கள்.—
ஆனால் இஸ்ரவேலர் நன்மையை ஒழித்துவிட் ௩
டார்கள்; சத்துரு அவர்களைத் தொடருவான்.—
அவர்கள் இராசாக்களை வைத்துக்கொண்டார் ௪
கள்; ஆனால் நம்மாலே அல்ல, பிரபுக்களை வைத்
துக்கொண்டார்கள்; ஆனால் நாம் அறியோம்;
அவர்கள் வேரறுப்புண்டுபோகும்படிக்குத் தங்
கள் வெள்ளியினாலும் தங்கள் பொன்னினாலும்
தங்களுக்கு விக்கிரகங்களைச் செய்வித்தார்கள்.
சமாரியாவே, உன் கன்றுக்குட்டி உன்னை ௫
ஒழித்துவிடுகிறது; நம்முடைய கோபம் அவர்
கள்மேல் மூண்டது; எத்தனைநாள் சுத்தாங்கம்
அடையமாட்டாதிருப்பார்கள்?—ஏனெனில் அ ௬
துதானும் இஸ்ரவேலருடைய செய்கை, தட்
டான் அதைச்செய்தான்; அது தேவன் அல்ல
வே, ஏனென்றால் சமாரியாவின் கன்றுக்குட்டி
துணிக்கைகளாய்ப் போகும்.—ஏனெனில் காற் ௭
றை விதைத்து, பெருங்காற்றை அறுக்கிறார்கள்;
விளைச்சல் அவர்களுக்கு இல்லை; முளையானது
மாவைக் கொடுக்கிறதற்கு வராது; அல்லவென்று
வந்தாலும் அன்னியர் அதை விழுங்குவார்கள்.—
இஸ்ரவேல் விழுங்கப்படுகிறது; இனிப்புறச்சா ௮
திகளுக்குள்ளே [4]விரும்பப்படாத பாத்திரத்தைப்
போல இருப்பார்கள். — ஏனெனில் அவர்கள் ௯
தனித்துத்திரிகிற காட்டுக் கழுதையைப்போல
[5]அசூரியரண்டைக்குப் போய் ஏறினார்கள்; எப்
பிராயீமர் சிநேகிதரைக் கூலிபொருந்திக்கொண்
டார்கள்.—ஆனால் அவர்கள் புறச்சாதியாரைக் ௰
கூலிபொருந்திக்கொண்டாலும், இப்போது நாம்
இவர்களைக் கூட்டுவோம்; பிரபுக்களின் இராசா
சுமத்தும் சுமையினாலே அவர்கள் குறுகிப்போ
கத் துவக்குவார்கள்.
ஏனெனில் எப்பிராயீமர் பாவம்செய்வதற் ௰௧
கான பலிபீடங்களைப் பெருகப்பண்ணினார்கள்;
பலிபீடங்கள் அவர்களுக்குப் பாவஞ்செய்வ
தற்கு ஆயிற்று.—நம்முடைய வேதத்தின் மகத்து ௰௨
வங்களை அவர்களுக்கு எழுதிக்கொடுத்தோம்;
அவைகள் அன்னியகாரியமாக எண்ணப்பட்
டன.—நமக்குச் செலுத்தும் பலிகளின் மாம்சத் ௰௩
தை அவர்கள் பலியிட்டுப்புசிக்கிறார்கள்; கர்த்தர்
அவர்கள்மேல் பிரியமாய் இரார்; இவர் அவர்
களுடைய அக்கிரமத்தை நினைத்து, அவர்கள்

1 ௨ இரா. ௰௭. ௪, ௬.—2 சங். ௭௮. ௫௭.

3 ஏசா. ௫௮. ௧.—4 சங். ௩௧. ௰௨.—5 ஓசே. ௫. ௰௩.

பாவத்தை விசாரிக்கும்போதோவெனில், அவர்
கள் எகிப்துக்குத் திரும்பிக்கொள்ளுகிறார்கள்.—
௰௪ ஏனெனில் இஸ்ரவேல் தன்னையுண்டாக்கினவ
னை மறந்து அரண்மனைகளைக் கட்டுகிறது; யூதா
அரணான பட்டணங்களைப் பெருகப்பண்ணுகி
றது; ஆனால் அதின் பட்டணங்களில் [1]அக்கினி
யை அனுப்புவோம்; அது அவைகளின் அரண்
மனைகளைப் பட்சிக்கும்.

## ௯. அதிகாரம்.

௧. இஸ்ரவேலின் பாவங்களுக்காகவும், விக்கிரகத்தொழும்புக்காகவும், அவர்களுக்கு வரும் சிறுமையும், சிறையிருப்பும்.

௧ இஸ்ரவேலே மகிழ்ச்சியாயிராதே; சனசதளங்
களைப்போலக் களிகூராதே; ஏனென்றால் [2]உன்
பராபரனைவிட்டுச் சோரம்போனாய்; தானியப்
போரடிக்கிற சகல களங்களிலும் பணையத்தைச்
௨ சிநேகிக்கிறாய்.—போர்க்களமும் ஆலையும் அவர்
களைப் பிழைப்பூட்டுவதில்லை; திராட்சப்பழஇர
௩ சம் அவர்களுக்குப் பிசகிப்போகும்.—அவர்கள்
கர்த்தருடைய தேசத்தில் குடியிருப்பதில்லை;
எப்பிராயீமர் திரும்ப எகிப்துக்குப் போவார்கள்;
அசூரியாவிலும் தீட்டுள்ளதைப் புசிப்பார்கள்.—
௪ அவர்கள் கர்த்தருக்குத் திராட்சப்பழஇரசத்தை
ஊற்றுவதுமில்லை; அவருக்கு அங்கிகரிப்பாயி
ருப்பதுமில்லை; அவர்களுடைய பலிகள் அவர்
களுக்குப் புலம்புகிறவர்களின் அப்பத்தைப்
போல இருக்கும்; அதில் புசிக்கிற யாவரும்
தீட்டுப்படுவார்கள்; ஏனெனில் அவர்களுடைய
அப்பம் அவர்கள் ஆத்துமத்துக்காகக் கர்த்தரு
டைய வீட்டில் வருவதில்லை.

௫ ஆசரிப்பின் நாளிலும், கர்த்தருடைய பண்டி
௬ கையின் நாளிலும் என்னசெய்வீர்கள்?—ஏனெ
னில் இதோ, பாழ்க்கடிப்பினால் போய்விடுவார்
கள்; எகிப்து அவர்களைச் சேர்த்துக்கொள்ளும்;
மோப்பட்டணம் அவர்களை அடக்கம்பண்ணும்;
அவர்களுடைய வெள்ளி இருந்த இச்சிக்கப்ப
டத்தக்க இடங்களைக் காஞ்சொறிகள் சுதந்தரித்
துக்கொள்ளும்; அவர்களுடைய தாபரங்களில்
முள்செடிகள் முளைக்கும்.

௭ விசாரிப்பின் நாள்கள் வரும்; நீதிசரிக்கட்டும்
நாள்கள் வரும் என்பதை இஸ்ரவேலர் அறிந்து
கொள்ளுவார்கள்; உன்னுடைய மிகுதியான
அக்கிரமத்திலேயும் மிகுதியான பகையிலேயும்
தீர்க்கதரிசிகள் பயித்தியக்காரரும், ஆவியின்
மனுஷர் பிரமைகொண்டவர்களுமாயிருக்கிறார்
௮ கள்.—எப்பிராயீமின் காவல்க்காரர் என் பராபர
னோடு எதிர்த்துநிற்கிறார்கள்; தீர்க்கதரிசி தன்
வழிகளில் எல்லாம் குருவிபிடிக்கிறவனின்
கண்ணியாகவும், தன் பராபரனின் வீட்டிலே
௯ பகையாளியாகவும் இருக்கிறான். — [3]கிபேயா
வின் நாட்களில் நடந்ததுபோலே, கேட்டிலே
அமிழ்ந்திப்போகிறார்கள்; அவர்களுடைய அக்
கிரமத்தை நினைப்பார்; அவர்களுடைய பாவங்
களை விசாரிப்பார்.

வனாந்தரத்தில் திராட்சக்குலைகளைப்போல ௰
இஸ்ரவேலைக் கண்டுபிடித்தோம்; அத்திமரத்தில்
முந்தினவிசை முளைத்த முதற்கனியைப்போல
உங்கள் பிதாக்களைக் கண்டோம், ஆனால் அவர்
கள் [4]பேயோர்மலைப் பாகால் அண்டைக்குப்
போய் இலச்சைக்கென்று பிரிந்து, தாங்கள்
சிநேகித்தவைகளுக்கு ஒத்த அருவருப்புகளானார்
கள்.—பிறப்பும் உண்டாயிருப்பும் கர்ப்பந்தரிப் ௰௧
பும் இல்லாமல் எப்பிராயீமருடைய மகிமை பற
வையைப்போலே பறந்துபோய்விடும்.—அவர் ௰௨
கள் தங்கள் பிள்ளைகளை வளர்த்தாலும், அவர்க
ளுக்கு மனுஷர் இராதபடிக்கு அவர்களைப் பிள்
ளைகள் அற்றவர்களாக்குவோம்; ஆனால் நாம் அ
வர்களை விட்டுப்போகையில் அவர்களுக்கும்
ஐயோ!—நாம் எப்பிராயீமைத் தீருவின் திசை ௰௩
மட்டும் இருக்கிறபடி பார்க்கிறபோது, அது
நல்ல தாபரமான தலத்திலே நாட்டப்பட்டிருக்
கிறது; ஆனால் எப்பிராயீமர் தங்கள் குமாரரை
வெளியே கொலைசெய்கிறவன் அண்டைக்குக்
கொண்டுபோய் விடுவார்கள்.

கர்த்தாவே, நீர் அவர்களுக்குக்கொடுப்பதைக் ௰௪
கொடும்; அவர்களுக்கு விழுந்துபோகிற கருப்
பத்தையும் பாலற்ற முலைகளையும் கொடும்.—
கில்காலிலே அவர்களுடைய பொல்லாப்பெல் ௰௫
லாம் நடக்கும்; அங்கேதான் நடக்கிற அவர்கள்
கிரியைகளுடைய பொல்லாப்பின்நிமித்தம் அ
வர்களைப் பகைத்திருக்கிறோம்; அவர்களை நமது
முகத்தைவிட்டுத் துரத்துவோம்; இனி அவர்க
ளைச் சிநேகியோம்; அவர்களுடைய பிரபுக்கள்
எல்லாரும் ஆங்காரிகள். — எப்பிராயீம் வெட் ௰௬
டுண்டது; அதின் வேர் உலர்ந்துபோயிற்று; கனி
கொடாதேபோவார்கள்; அவர்கள் பிள்ளைகளைப்
பெற்றாலும், அவர்களுடைய கர்ப்பத்தின் விருப்
பமான கனிகளைக் கொன்றுபோடுவோம்.—என் ௰௭
பராபரன் அவர்களை வெறுத்துப்போடுவார்;
ஏனென்றால் அவருக்குச் செவிகொடாதேபோ
னார்கள்; சாதிகளுக்குள்ளே அலைகிறவர்களாயி
ருப்பார்கள்.

## ௰. அதிகாரம்.

௧. இஸ்ரவேலுடைய அவபத்திக்காகவும், விக்கிரகத்தொழும்புக்காகவும் அவர்கள் கண்டிக்கப்பட்டுப் பயமுறுத்தப்பட்டது.

இஸ்ரவேல் பிரயோசனம் இல்லாத திராட்சச் ௧
செடியானது; கனி அதற்கு ஒத்திருக்கிறது, தன்
கனியின் திரளுக்குச்சரியாகப் பலிபீடங்களைத்
திரளாக்கிற்று; தங்கள் தேசத்தின் நேர்த்திக்குச்
சரியாகச் சிலைகளை நேர்த்தியாக்கினார்கள். —
அவர்கள் இருதயம் அவர்களுக்கு இச்சகம்பேசு ௨
கிறது; இப்போதும் குற்றஞ் சுமத்தப்படுவார்கள்;
இவர் அவர்கள் பலிபீடங்களை மூளியாக்கி, அ
வர்கள் சிலைகளைப் பாழ்க்கடிப்பார்.—ஏனென் ௩
றால் நாம் கர்த்தருக்குப் பயப்படாதேபோனபடி
யினாலே நமக்கு இராசா இல்லை; இராசா இருந்
தாலும் நமக்காக என்னசெய்வானென்று இனிச்
சொல்லுவார்கள்.

1 எரே. ௰௭. ௨௭. ஆமோ. ௨. ௫.—2 சங். ௭௩. ௨௭.

3 நியா. ௰௯. ௰௪. ழ: ௨௰. ௧௩.—4 ௪ மோ. ௨௫. ௩-௫.

௪ பொய்யாணையிடுகிற வார்த்தைகளைச் சொல்லி,
உடம்படிக்கை பண்ணிக்கொண்டார்கள்; ஆகை
யால் வயல்வெளியின் படைச்சால்களில் நஞ்சு
௫ க்கொத்த நியாயத்தீர்ப்பு முளைக்கும்.—சமாரியா
வின் குடிகள் பெத்தாபேனிலுள்ள கன்றுக்குட்
டியின்நிமித்தம் திகில் அடைவார்கள்; ஏனென்
ருல் அதற்காகக் களிகூர்ந்த அதின் சனமும்,
அதின் பூசாரிகளும் அதினுடைய மகிமை அதை
விட்டு நீங்கிப்போயிற்றென்று அதற்காகத் துக்
௬ கங்கொண்டாடுவார்கள். — அதுவும் அசூரியா
விலே யாரேப் இராசாவுக்குக் காணிக்கையாகக்
கொண்டுபோகப்படும்; இலச்சை எப்பிராயீ
மைப் பிடிக்கும்; இஸ்ரவேல் தன் ஆலோசனையி
௭ ஞலே வெட்கப்படும்.—தண்ணீரின்மேல் இருக்
கிற நுரையைப்போலே சமாரியாவின் இராசா
௮ அதம்பண்ணப்படுவான்.—இஸ்ரவேலுடைய பா
வமாகிய ஆபேனின் மேடைகள் அழிக்கப்படும்;
முட்செடிகளும் முட்பூண்டுகளும் அவர்கள்
பலிபீடங்களின்மேல் முளைக்கும்; [1]பர்வதங்க
ளைப்பார்த்து எங்களை மூடுங்களென்றும் குன்று
களைப்பார்த்து எங்கள்மேல் விழுங்களென்றும்
சொல்லுவார்கள்.

௯ இஸ்ரவேலே, [2]கிபேயாவின் நாள்கள்துவக்
கிப் பாவஞ்செய்துவந்தாய்; கிபேயாவிலே அக்
கிரமக்காரர்மேல் வந்த யுத்தம் தங்களைக் கிட்டு
வதில்லையென்று அந்த நிலையிலே நிற்கிருர்கள்.—
௰ சனசதளங்கள் அவர்களுக்கு விரோதமாகக்கூடி,
தங்கள் இரண்டு படைச்சால்களில் போக
அவர்களைப் பிணைக்கும்போது நமக்குச் சித்தமா
கும் வேளையிலே அவர்களைத் தண்டிப்போம்.—
௰௧ எப்பிராயீம் போரடிக்கப் பழகினதும் விரும்பு
கிறதுமான கன்றுக்குட்டி; ஆனல் நாம் அதின்
அந்தமான கழுத்தின்மேல் நுகத்தடியை வைப்
போம்; எப்பிராயீமை ஏர்பூட்டி ஓட்டுவோம்;
யூதா உழுவான், யாக்கோப் அதற்குப் பரம்ப
டிப்பான்.

௰௨ உங்களுக்கு [3]நீதிக்கென்று விதைவிதையுங்
கள்; தயவுக்கொத்ததாய் அறுப்பு அறுங்கள்,
பயிர் நிலத்தை உங்களுக்குப் புதிதாய்ப் பண்ப
டுத்துங்கள்; ஏனென்ருல் கர்த்தர் வந்து உங்க
ளுக்கு [4]நீதியை வருஷிக்கப்பண்ணுமட்டும்,
௰௩ [5]அவரைத் தேடக்காலமாயிருக்கிறது.—ஆகாத்தி
யத்தை உழுதீர்கள்; அநியாயத்தை அறுத்தீர்கள்;
பொய்யின் கனிகளைப் புசித்தீர்கள்; ஏனென்ருல்
உன் வழியையும் உன் பராக்கிரமசாலிகளின்தி
௰௪ ரளையும் நம்பினய்.—ஆகையால் உன் சனசதளங்
களில் அமளி எழும்பும்; பிள்ளைகளின்மேல் தாய்
சதைத்துப் போடப்பட்ட யுத்தநாளிலே சல்
மான், பெத்தார்பேலை அழித்ததுபோலே, உன்
னுடைய எல்லா அரண்களும் அழித்துப்போ
௰௫ டப்படும்.—பேத்தேல் உங்கள் பொல்லாப்பு
டைய தோஷத்தினலே இப்படிக்கொத்ததை
உங்களுக்கு உண்டுபண்ணும்; அதிகாலமே இஸ்
ரவேலின் இராசா சங்கரிக்கப்படவே சங்கரிக்
கப்படுவான்.

## ௰௧. அதிகாரம்.

௧. பராபரனுடைய நன்மையைக்குறித்து இஸ்ரவேலின் நன்றியில்லாமையும், ௫. அவருடைய நியாயத்தீர்ப்பும், ௮. அவர்களுக்குண்டாகிய பராபரனுடைய இரக்கமும் சொல்லப்பட்டது.

இஸ்ரவேல் இளைஞனயிருக்கிறபோது அவனை ௧
நாம் சிநேகித்தோம்; [6]எகிப்திலிருந்து நம்மு
டைய குமாரனை வரவழைத்தோம்.—அவர்கள் ௨
தங்களை அழைக்கிறவர்களின் முகத்தை விலகிப்
போய்விட்டார்கள்; பாகால்களுக்குப் பலியிட்
டு, சுரூபங்களுக்குத் தூபங்காட்டினர்கள்.—நாம் ௩
எப்பிராயீமரை அவர்கள் கைகளைப் பிடித்து மெ
துவாக நடத்தினேம்; ஆனல் நாம் தங்களைக்
குணமாக்குகிறவரென்று அறியாதேபோனர்
கள்.—மனுஷரைக் கட்டி இழுக்கிற அன்பின் கயி ௪
றுகளாலே நாம் அவர்களை இழுத்து, அவர்கள்
கன்னங்களின்மேல் இருந்த நுகத்தடியை எடுத்
துப்போடுகிறவரைப்போலே அவர்களுக்கு இ
ருந்து, அவர்களண்டைக்குச்சாய்ந்து ஆகாரங்
கொடுத்தோம்.

அவன் எகிப்துதேசத்துக்குத் திரும்பிப்போ ௫
வதில்லை; அசூர்தான் அவனுடைய இராசா;
ஏனெனில் மனந்திரும்பமாட்டோமென்கிருர்
கள்.—ஆகையால் அவர்களுடைய ஆலோசனை ௬
களின்நிமித்தமாகப் பட்டையம் அவர்கள் பட்
டணங்களுக்குள்ப் பாய்ந்து அவர்கள் தாழ்ப்
பாள்களை நிருமூலம்பண்ணி அவர்களைப் பட்
சிக்கும்.—நமது சனம் நம்மைவிட்டு விலகுகிற ௭
மாறுபாட்டைப் பற்றிக்கொண்டேயிருக்கிறது;
அதை உன்னதமானவரண்டைக்கு வரவழைத்
தாலும் ஒருவனும் எழும்பான்.

எப்பிராயீமே, நாம் உன்னை என்னசெய்யவே ௮
ண்டும்? இஸ்ரவேலே, உன்னை நாம் ஒப்புக்கொ
டுக்கவேண்டுமோ? நாம் உன்னை [7]அத்மாவைப்
போலாக்கி, உன்னைச் சேபோயீமைப்போல
வைப்பதெப்படி? [8]நம்முடைய இருதயம் நமக்
குள்த் திரும்பிக்கொள்ளுகிறது; நம்முடைய
பரதாபங்கள் ஏகமாய்ப் பொங்குகிறது.—நமது ௯
கோபத்தினுடைய உக்கிரத்தின்படியே செய்யா
திருப்போம்; எப்பிராயீமை அழிக்கத் திருப்பிக்
கொள்ளாதிருப்போம்; ஏனென்ருல் நாம் மனு
ஷனயிராமல் பராபரனயிருக்கிருேம்; நாம் உன்
நடுவில் பரிசுத்தமுள்ளவர்; ஆகையால் அப்ப
டிப் பட்டணத்துக்கு விரோதமாக வரோம்.—
கர்த்தரைப் பின்செல்லுவார்கள்; அவர் சிங்கத் ௰
தைப்போலே கெர்ச்சிப்பார்; அவர் கெர்ச்சிக்
கும்போது மேற்கத்தியார் நடுங்கிவருவார்கள்.—
எகிப்திலிருந்து குருவிகளைப்போலவும், அசூ ௰௧
ரின்தேசத்திலிருந்து புருக்களைப்போலவும் நடுங்
கிவருவார்கள்; அப்போது அவர்களை அவர்கள்
வீடுகளில் குடியிருக்கப்பண்ணுவோமென்று
கர்த்தர் சொல்லுகிருர்.

1 லூக். ௨௩. ௩௰. வெளி. ௬. ௰௬.
2 நியா. ௨௰. ௰௨—௰௪.
3 கலா. ௬. ௭, ௮.
4 எசா. ௪௫. ௮.
5 எசா. ௫௫. ௬.
6 மத். ௨. ௰௫.
7 ௫ மோ. ௨௯. ௨௩.
8 எரே. ௩௧. ௨௰.

## ௰௨. அதிகாரம்.

*௧. எப்பிராயீமையும், யூதாவையும், யாக்கோபையும் கண்டித்தது. ௪. முன்தின தயவினாலே மனந்திருப்புதலுக்குத் தூண்டினது. ௮. எப்பிராயீமின் பாவத்தினால் பராபரனுக்குக் கோபமுண்டானது.*

௧ எப்பிராயீமர் பொய்யாகவும், இஸ்ரவேல்வீட்
டார் கபடாகவும் நம்மைச் சூழ்ந்துகொண்டிருக்
கிறார்கள்; யூதாவோவெனில் இன்னம் பராபர
னோடே ஆண்டு, பரிசுத்தவான்களோடே உண்
௨ மையாயிருக்கிறது.—எப்பிராயீம் காற்றைமேய்ந்
து, கொண்டல்க்காற்றைப் பின்தொடருகிறது;
நாள்தோறும் பொய்யையும் கேட்டையும் வர்த்
திக்கப்பண்ணி, அசூரோடே உடம்படிக்கை
பண்ணுகிறார்கள்; எகிப்துவுக்கும் எண்ணெய்
௩ கொண்டுபோகப்படுகிறது.—யூதாவோடும் கர்த்
தருக்கு வழக்கு இருக்கிறது; அவர் யாக்கோ
பின் வம்சத்தை அதின் வழிகளுக்குத்தக்கதாக
விசாரிக்கப்போகிறார்; அதின் கிரியைகளுக்குத்
தக்கதாக அதற்கு நீதியைச் சரிக்கட்டுவார்.

௪ அவனேவென்றால் [1]தாயின் கர்ப்பத்திலே
தன் சகோதரன் குதிகாலைப் பிடித்ததுமல்லாமல்,
[2]தன் மன இடுக்கத்திலே பராபரனோடே பிரபு
௫ வாய்ப்போராடினான்.—அவன் தூதனானவனோ
டே பிரபுவாய்ப் போராடி மேற்கொண்டான்;
அழுது இவனைநோக்கிக் கெஞ்சினான்; பேத்தே
லிலே இவர் அவனைக் கண்டு சந்தித்து, அவ்வி
௬ டத்திலும் நம்மோடே பேசினார்.—கர்த்தராகிய
அவர் சேனைகளுடைய பராபரன்; [3]கர்த்தர் என்
௭ பது அவருடைய நாமசங்கீர்த்தனம்.—இப்போ
தும் உன் பராபரனண்டைக்குத் திரும்பு; தய
வையும் நியாயத்தையும் கைக்கொண்டு, நித்தம்
உன் பராபரனை நம்பிக்கொண்டிரு.

௮ கானானியனாயிருக்கிறான், கள்ளத்தராசு அவன்
கையில் இருக்கிறது; இடுக்கஞ்செய்ய விரும்பு
௯ கிறான்.—ஆனால் மெய்தான், ஐசுவரியம் அடைந்
தேன்; எனக்கு ஆஸ்தி அகப்பட்டது; ஆனால்
நான் பிரயாசமாய்த் தேடினதில் எல்லாம் பாவ
மாகிய அக்கிரமம் என்னில் கண்டுபிடிக்கப்படுவ
௰ தில்லையென்று எப்பிராயீம் சொல்லுகிறது:—நா
மோவென்றால் உன்னை எகிப்துதேசத்திலிருந்
து அழைத்துவந்தது முதற்கொண்டு உன் பராபர
னாகிய கர்த்தர் சபைக்கூட்டமான நாள்களுக்கு
ஒப்பாக இன்னம் உன்னைக் கூடாரங்களில் தா
௰௧ பரிக்கப்பண்ணுவோம்.—அப்படியே தீர்க்கதரி
சிகளோடே சொன்னோமே; நாம் அநேகம் தரி
சனங்களைக் கட்டளையிட்டு, தீர்க்கதரிசிகளைக்
கொண்டு அதை உவமைகளால் காண்பித்தோ
௰௨ மே.—கீலேயாத் அக்கிரம ஸ்தலமோ? ஆம், அ
பத்தரானார்கள்; கில்காலிலே மாடுகளைப் பலியி
டுகிறார்கள்; அவர்களுடைய பீடங்கள் வயல்க
ளின் தலைகளில் இருக்கிற கல்க்குவியல்கள் அத்
தனையுமாயிருக்கின்றன.

யாக்கோபென்பவன் [4]சூரியர் நாட்டுக்கு ஓடிப் ௰௩
போய் இஸ்ரவேல் [5]ஒருபெண்ணுக்காகப் பணி
விடைசெய்து, ஒரு பெண்ணுக்காக ஆடுமேய்த்
தான்.—பிற்காலத்திலேவென்றால் கர்த்தர் ஒரு ௰௪
தீர்க்கதரிசியைக்கொண்டு இஸ்ரவேலை எகிப்தி
லிருந்து ஏறிவரப்பண்ணினார்; தீர்க்கதரிசியைக்
கொண்டு காக்கப்பட்டார்கள்.—எப்பிராயீமோ ௰௫
வென்றால் அவனை மிகவும் மனமடிவாக்கினதி
னாலே அவருக்குக் கோபமுண்டாக்கிற்று; ஆ
கையால் அதின் ஆண்டவர் அதின் இரத்தப்பழி
களை அதின்மேல் நிறுத்தி, அது செய்த நிந்தையை
அதின்மேல் திருப்புவார்.

## ௰௩. அதிகாரம்.

*௧. விக்கிரகத்தொழும்பினால் எப்பிராயீமின் மகிமை சிதைந்துபோனது. ௫. எப்பிராயீமரின் கொரேத்திறகாக வரும் பராபரனுடைய கோபம். ௯. பராபரன் இரக்கஞ்செய்வோமென்ற வாக்குத்தத்தம். ௰௫. கலகத்தைக் குறித்த நியாயத்தீர்ப்பு.*

எப்பிராயீம் கோத்திரம் திடுக்கிடப்படத்தக்க ௧
விதமாய்ப் பேசினபோது, அதின்மேல் இஸ்ர
வேலிலே நேரஞ்சுமந்தது; அது பாகாலாலும்
குற்றம் சம்பாதித்துக்கொண்டபோது அது மடிந்
தது.—இப்போதும் அவர்கள் பாவஞ்செய்கிறதி ௨
லே தொடர்ந்துபோய், தங்கள் வெள்ளியினால்
வார்ப்பித்த சுரூபங்களையும் தங்கள் புத்திக்கேற்ற
விக்கிரகங்களையும் தங்களுக்கு உண்டுபண்ணி
னார்கள்; இவைகள் எல்லாம் தட்டாருடைய
செய்கை; மனுஷரைப் பலியிடுகிறவர்கள் கன்
றுக்குட்டிகளை முத்திசெய்யலாமென்று அவை
களைக்குறித்துச் சொல்லுகிறார்கள்.—ஆகையால் ௩
அவர்கள் விடியற்காலத்து மப்பைப்போலேயும்,
காலமே இருந்து எடுபட்டுப்போகிற பனியைப்
போலேயும், பெருங்காற்று [6]களத்திலிருந்து பறக்
கடிக்கிற பதரைப்போலேயும், புகைச்சாலகத்
தில் ஏறிப்போகிற புகையைப்போலேயும் இருப்
பார்கள்.—நாமோவெனில் உன்னை எகிப்துதே ௪
சத்திலிருந்து அழைத்துவந்தது முதற்கொண்டு
[7]உன் பராபரனாகிய கர்த்தர் ஆகையால் நீ நம்
மைத்தவிர வேறே தேவனை அறியவொண்ணா
தே; நம்மைத்தவிர இரட்சகர் இல்லையே.

[8]நாம் உன்னை மகா வறட்சியான தேசமாகிய ௫
வனாந்தரத்திலே அறிந்துகொண்டோம்.—[9]தங்க ௬
ளுக்கு இருந்த மேய்ச்சலினாலே திருத்தியானார்
கள்; திருத்தியானபிற்பாடு அவர்கள் இருதயம்
மேட்டிமையாயிற்று; ஆனதுகொண்டு நம்மை
மறந்தார்கள்.—ஆகையால் அவர்களுக்குச் [10]சிங் ௭
கத்தைப்போல இருப்போம்; சிவிங்கியைப்
போல வழியருகே பதிவிருப்போம்.—குட்டிக ௮
ளைப் பறிகொடுத்த கரடியைப்போல நாம் அவர்
களைச் சந்தித்து, அவர்கள் நெஞ்சாங்குலையைக்
கிழித்து, அவர்களை அங்கே ஒரு சிங்கத்தைப்
போலப் பட்சித்துப்போடுவோம்; வெளியின்
மிருகங்கள் அவர்களைப் பீறிப்போடும்.

1 ௧ மோ. ௨௫. ௨௬-2 ௧ மோ. ௩௨, ௨௪, ௨௫.—3 ௨ மோ ௰௫. ௩. 4 ௧ மோ. ௨௮. ௫.—5 ௧ மோ. ௨௯. ௨௰.

6 சங். ௧. ௪.—7 ௨ மோ. ௨௰. ௨. ௰௫, ௰௧.—10 ஓசே. ௫. ௰௪. 8 ௫ மோ. ௩௨ ௰.—9 ௫ மோ. ௩௨.

௯ இஸ்ரவேலே நீ உன் சகாயமாகிய நமக்கு
௰ விரோதமானது உன்னுடைய கேடு.—[1]எனக்கு
இராசாவையும் பிரபுக்களேயும் கட்டளையிடும்
என்றாயே; இப்போதும் உன்னுடைய எல்லாப்
பட்டணங்களிலும் உன்னைக் காப்பாற்றும்
படிக்கு உன் இராசா எங்கே? உன் நியாயாதிப
௰௧ திகள் எங்கே?—நமது கோபத்திலே உனக்கு
இராசாவைக் கொடுத்தோம்; நமது சினத்திலே
அவனை எடுத்தோம்.
௰௨ எப்பிராயீமின் அக்கிரமம் கட்டி அதின் பா
௰௩ வம் வைத்துவைக்கப்பட்டிருக்கிறது.—பிள்ளை
பெறுகிறவர்களின் அம்பாயங்கள் அதற்குவரும்;
இவன் ஞானமில்லாத பிள்ளை; ஏனெனில் பேறு
௰௪ காலமட்டும் அவன் நிற்கவில்லை. — அவர்களை
நரகத்தின் அதிகாரத்துக்கு நீங்கலாக்கி மீட்
போம்; அவர்களை [2]மரணத்துக்கு நீங்கலாக்கி
விடுவிப்போம்; [3]மரணமே, உன் பெருவாரிக்
காய்ச்சல்கள் எங்கே? நரகமே, உன் சங்கரிப்பு
எங்கே? மனஸ்தாபம் நம்முடைய கண்களுக்கு
மறைவானதாயிருக்கும்.
௰௫ இவன் சகோதரருக்குள்ளே துடுக்கனானபடி
யினாலே, கர்த்தருடைய காற்றாகிய கொண்டல்க்
காற்று வனாந்தரத்திலிருந்து எழும்பிவரும்; அத
னால் அவனுடைய ஊற்று வற்றி, அவனுடைய
துரவு சுவறிப்போகும்;அது இச்சிக்கப்படத்தக்க
சகல தட்டுமுட்டுகளுடைய பொக்கிஷத்தை
யும் வாரிக்கொண்டுபோகும்.

## ௰௪. அதிகாரம்.

௧. மனந்திரும்புதலுக்குத்தூண்டல். ௫. பராபரன் ஆசீர்வதிப்பேனென்ற வாக்குத்தத்தம்.

௧ சமாரியா குற்றஞ்சுமந்ததாயிருக்கிறது; ஏனென்
றால் தன் பராபரனுக்கு விரோதமாகக் கலகம்
பண்ணிற்று; பட்டையத்தால் விழுவார்கள்; அ
வர்களுடைய குழந்தைகள் சதைத்துப்போடப்
படும், அவர்களுடைய கர்ப்பவதிகள் பிளக்கப்
௨ பட்டுப்போவார்கள்.—இஸ்ரவேலே, [4]உன் பரா
பரனாகிய கர்த்தரண்டைக்கே திரும்பு; ஏனென்
௩ றால் உன் அக்கிரமத்தினாலே விழுந்தாய்.—இந்த
வார்த்தைகளை உங்கள் மனதிலே வைத்துக்
கொண்டு கர்த்தரண்டைக்குத் திரும்புங்கள்; தே
வரீர் எல்லா அக்கிரமத்தையும் நீக்கியருளி, [5]நன்
மையை எடுத்துத் தாரும்; அப்போது [6]எங்கள்
உதடுகளின் காளையெருதுகளைச் செலுத்துவோ
மென்றும்,—அசூர் எங்களை இரட்சிப்பதில்லை; ௪
நாங்கள் குதிரைகளின்மேல் ஏறாமலும், எங்கள்
கைகளின் கிரியையோடே எங்கள் தேவனே
என்று இனிச் சொல்லாமலும் இருப்போம்; ஏ
னெனில் திக்கற்றவன் உம்மாலே இரக்கம்பெறு
கிறானென்றும் அவருடனே சொல்லுங்கள்.

அவர்கள் மாறுபாட்டைக் குணமாக்குவோம்: ௫
அவர்களை மனப்பூருவமாய்ச் சிநேகிப்போம்;
ஏனென்றால் நம்முடைய கோபம் அவர்களைவி
ட்டுத் திரும்பிற்று.—இஸ்ரவேலுக்குப் பனியைப் ௬
போல இருப்போம்; அது லீலியபுஷ்பத்தைப்
போலப் பூத்து லீபனோனைப்போலத் தன் வேர்
களை ஓடவிடும்.—அதின் கிளைகள் ஓங்கிப்போ ௭
கும்; அதின் அலங்காரம் ஒலீவமரத்தினுடைய
தைப்போலவும், அதற்கு இருக்கும் வாசனை
லீபனோனுடையதைப்போலவும் இருக்கும்.—
அதின் நிழலில் குடியிருப்பார் திரும்பிவருவார் ௮
கள்; தானிய விளைச்சலைப்போலப் பிழைத்து,
திராட்சச்செடிகளைப்போலச் செழிப்பார்கள்;
அதின் கீர்த்தி லீபனோனுடைய திராட்சப்பழ
இரசத்தின் கீர்த்தியைப்போல இருக்கும்.—
இனி எனக்கும் விக்கிரகங்களுக்கும் என்ன? ௯
நான் அவருக்குக் கேள்விகொடுத்து அவரைநோ
க்கியிருப்பேன்; நான் பச்சையான பாய்மரவி
ருட்சத்தைப்போல இருப்பேன்; என்னில் உம்
முடைய கனி கண்டுபிடிக்கப்படுமென்று எப்
பிராயீம் சொல்லும்.

இவைகளை உணர ஞானமுள்ளவனும், இவை ௰
களைக் கிரகிக்கப் புத்தியுள்ளவனும் யாவன்?
ஏனெனில் [7]கர்த்தருடைய வழிகள் செம்மையா
னவைகள்; நீதிமான்கள் அவைகளில் நடக்கி
றார்கள்; [8]பாதகரோவென்றால் அவைகளில் விழு
கிறார்கள்.

1 ௧ சாமு. ௮. ௫, ௬.
2 எபி. ௨. ௰௪, ௰௫.
3 ௧ கொரி. ௰௫. ௫௫.
4 ஓசே. ௰௨. ௭.
5 ஓசே. ௧. ௫.
6 எபி. ௰௩. ௰௫.
7 சங். ௨௫. ௰.
8 ௧ பே. ௨. ௭, ௮.

J O E L.

# யோவேலின் தீர்க்கதரிசனம்.

## ௧. அதிகாரம்.

௧. யோவேல் பராபரனுடைய பலவகையான நியாயத்தீர்ப்புகளை வெளிப்படுத்தி, அவைகளை அநுசரிக்கவும், அவைகளைக்குறித்துத் துக்கிக்கவும் தூண்டினது. ௰௪. புலம்பலுக்காக அவன் உபவாசத்தை ஏற்படுத்தினது.

௧ பேத்துவேலின் குமாரனாகிய யோவேலுக்கு
உண்டான கர்த்தருடைய வசனம்.
௨ பச்சைப்புழு பின்வைத்ததை வெட்டுக்கிளி
தின்னுகிறது; வெட்டுக்கிளி பின்வைத்ததைப்
பச்சைக்கிளி தின்னுகிறது; பச்சைக்கிளி பின்
வைத்ததை முசுக்கட்டைப்பூச்சி தின்னுகிறது.–
௩ முதிர்வயதுள்ளவர்களே, இதைக் கேளுங்கள்;
தேசத்தின் சகல குடிகளே, செவிகொடுங்கள்;
உங்கள் நாள்களிலாணாலும் உங்கள் பிதாக்களின்
நாள்களிலாணாலும் இப்படிக்கொத்தது சம்பவித்
௪ தது உண்டோ?–இதின் செய்தியை உங்கள் பிள்
ளைகளுக்கு விவரியுங்கள்; இதை உங்கள் பிள்ளை
கள் தங்கள் பிள்ளைகளுக்கும், அவர்களுடைய
பிள்ளைகள் வேறே தலைமுறைக்கும் விவரிக்கக்
கடவார்கள்.
௫ வெறியரே, விழித்து அழுங்கள்; திராட்சப்பழ
இரசம் குடிக்கிற சகல சனங்களே, திராட்சக்
கந்தாயத்தின்நிமித்தம் அலறுங்கள்; ஏனெனில்
அது உங்கள் வாயை விலக அறுப்புண்டுபோ
௬ கும்.–அதேனென்றால் எண்ணிமுடியாத பலத்த
சாதி என் தேசத்தில் வந்தேறுகிறது; அதின் பல்
லுகள் சிங்கத்தின்பல்லுகள்; துஷ்ட சிங்கத்தின்
கடைவாய்ப்பல்லுகள் அதற்கு இருக்கிறது.—
௭ அது என் திராட்சச்செடியைப் பாழும், என்
அத்திமரத்தைச் சொத்தையுமாக்கிப்போட்டு, உ
ரிக்சவே உரித்துவிடுகிறது; இவைகளின் கொம்
புகள் வெண்மையாகிறது.
௮ தன் வாலவயதின் புருஷனுக்காக இரட்டை
உடுத்தியிருக்கிற பெண்ணைப்போல அலறு.—
௯ காணிக்கையும் ஊற்றுதலும் கர்த்தருடைய வீட்
டைவிட்டு அற்றுப்போகும்; கர்த்தரின் ஊழியக்
௰ காரராகிய ஆசாரியர்கள் துக்கிப்பார்கள்.–வயல்
வெளி பாழாகிறது; பூமி துக்கங்கொண்டாடும்;
ஏனென்றால் விளைச்சல் அழிக்கப்படுகிறது;
திராட்சக்கந்தாயம் வெட்கமடைகிறது; எண்
ணெய் மாண்டுபோகும்.
௰௧ பயிர்க்குடிகளே, கோதுமையும் வால்க்கோது
மையும் இல்லாததினாலே வெட்கி நில்லுங்கள்;
திராட்சத்தோட்டக்காரரே, அலறுங்கள்; ஏனெ
ன்றால் வயல்வெளியின் அறுப்பு அழிகிறது.—
திராட்சச்செடி வதங்கி, அத்திமரம் சாரமற்றுப் ௰௨
போகும்; மாதளஞ்செடி பேரீச்சு கொளஞ்சி
முதலான வெளியின் விருட்சங்கள் எல்லாம்
வாடிப்போவதினால் சந்தோஷம் மனுபுத்திரனை
விட்டு வாடிப்போகும்.
ஆசாரியர்களே, இரட்டு உடுத்துப் புலம்புங் ௰௩
கள்; பலிபீடத்தின் பணிவிடைக்காரரே, அல
றுங்கள்; என் பராபரனுடைய பணிவிடைக்கா
ரரே, நீங்கள் உள்ப்பிரவேசித்து இரட்டு உடுத்த
வர்களாய் இராத்தங்குங்கள்; ஏனென்றால் கர்த்
தருடைய வீட்டில் காணிக்கையையும் ஊற்றுத
லையும் செலுத்துதல் தவிர்க்கப்பட்டது.—[1]உப ௰௪
வாசம்பண்ணும் பரிசுத்தநாளைக்குறித்து அதின்
ஆசரிப்பைக் கூறுங்கள்; மூப்பரையும் தேசத்
தின் எல்லாக் குடிகளையும் உங்கள் பராபரனா
கிய கர்த்தரின் வீட்டிலே கூட்டிக் கர்த்தரை
நோக்கிக் கூப்பிடுங்கள்.
அந்த நாளின்நிமித்தம் ஐயோ! ஏனெனில் ௰௫
[2]கர்த்தருடைய நாள் சமீபமாயிருந்து சர்வத்துக்
கும் வல்லவராலே பாழ்க்கடிப்பாக வரும்.—
ஆகாரம் நம்முடைய கண்களையும், சந்தோஷ ௰௬
மும் களிகூருதலும் நம்முடைய பராபரனின்
வீட்டையும்விட்டு அறுப்புண்டுபோகவில்லை
யோ?–விதைகள் தங்கள் மண்கட்டிகளின்கீழே ௰௭
செத்துப்போகும்; விளைச்சல் தீஞ்சுபோகிறதி
னாலே பண்டகசாலைகள் பாழாகிக் களஞ்சியங்
கள் இடிந்துபோகும்.—[3]மிருகங்கள் எத்தனை ௰௮
யாய்த்தவிக்கும்; மாட்டுமந்தைகள் தங்களுக்கு
மேய்ச்சல் இல்லாததினால் கலங்கும்; ஆட்டுமந்
தைகளும் பாழாகும்.–கர்த்தாவே, உம்மைநோக் ௰௯
கிக் கூப்பிடுகிறேன்; ஏனெனில் அக்கினி வனாந்
தரத்தின் மேய்ச்சல்களைப் பட்சித்து, சுவாலை
வெளியின் விருட்சங்களை எல்லாம் எரித்துப்
போடும்.—[4]வெளியின் மிருகங்களும் உம்மை ௨௰
நோக்கிக் கதறும்; ஏனெனில் தண்ணீர் நதிகள்
எல்லாம் வற்றிப்போகும்; அக்கினி வனாந்தரத்
தின் மேய்ச்சல்களைப் பட்சித்துப்போடும்.

## ௨. அதிகாரம்.

௧. பராபரனுடைய நியாயத்தீர்ப்பின் நடுக்கத்தைச் சீயோனுக்குக் காட்டினது. ௰௨. மனந்திரும்புதலுக்குத் தூண்டினது. ௰௫. உபவாசத்தை

1 யோவே.௨.௰௫.—2 யோவே.௨. ௧, ௨. ஏசா.௰௩.௬.

3 எரே.௰௪. ௫, ௬.—4 சங்.௪௨.௨: ௪. ௨௭.

ஏற்படுத்தினது. ௰௮. அதற்காக ஆசீர்வாதம் உண்டாமென்ற வாக்குத்தத்தம். ௨௧. இப்போதும் இனிமேலும் வரும் ஆசீர்வாதத்தினால் சீயோனைத் தேற்றினது.

௧ சீயோனிலே எக்காளம் ஊதி, நம்முடைய
பரிசுத்த பர்வதத்திலே சத்தமாய்க் கூப்பிடுங்கள்;
தேசத்தின் குடிகள் எல்லாம் தத்தளிக்கக்கடவார்
கள்; ஏனெனில் [1]கர்த்தருடைய நாள் வருகிறது;
௨ அது சமீபமாயிருக்கிறது.—அது இருளும் அந்த
காரமுமான நாள்; அது மப்பும் மந்தாரமுமான
நாள்; விடியற்கால வெளுப்பு பர்வதங்களின்
மேல் பரவுகிற தீவிரமாக ஏராளமான பலத்த
சாதி வந்து பரவும்; அப்படிக்கொத்தது உலகத்
தோற்றமுதற்கொண்டு உண்டானதுமில்லை; அ
தின்பிறகு இனித் தலைமுறை தலைமுறையாக
வரும் வருஷங்கள்மட்டும் உண்டாவதுமில்லை.—
௩ அக்கினி அதின் முன்னாகப் பட்சிக்கும்;சுவாலை
அதின் பின்னாக எரிக்கும்;அது வருமுன் தேசம்
ஏதேனென்ற தோட்டத்தைப்போல இருந்தது;
அது போனபின் அது பாழான வனாந்தரத்தைப்
போல இருக்கும்; ஏதாகிலும் அதற்குத் தப்பிப்
போவதில்லை.
௪ அவைகளின் உருவு குதிரைகளின் உருவுக்
கொத்தது; அவைகள் இராவுத்தரைப்போலே ஓடு
௫ கிறது.—அவைகள் ஓடுகிற இரதங்களின் இரைச்
சலாகவும், செத்தைகளை எரிக்கிற அக்கினிச்
சுவாலையின் இரைச்சலாகவும்; யுத்தத்துக்கு ஆ
யத்தப்பட்ட பலத்த சனத்தின் இரைச்சலாகவும்
பர்வதங்களுடைய சிகரங்களின்மேல் குதிக்கி
௬ றது.—அவைகளுக்குமுன்பாகச் சனசதளங்கள்
நடுங்கும்; எல்லா முகங்களின் உருவும் சுருங்
௭ கும்.—அவைகள் பலசாலிகளைப்போலே ஓடும்;
அவைகள் யுத்தமனுஷரைப்போலே மதிலேறும்;
அவைகள் வரிசைகள் பிசகாமல் ஒவ்வொன்று
௮ தன் தன் வழியிலே போகும்.—ஒன்றை ஒன்று
நெருக்காது; ஒவ்வொன்று தன் தன் பாதையிலே
போகும்; அவைகள் ஆயுதங்களுக்குள்ப் புகுந்
௯ தும் காயம்படாதேபோகும்.—அவைகள் பட்ட
ணத்தில் சுற்றி ஏகும்; மதிலில் ஓடும்; வீடுகளில்
ஏறும்; திருடனைப்போலப்பலகணிகளால் உள்ப்
௰ பிரவேசிக்கும்.—அவைகளுக்குமுன்பாகப் பூமி
நடுங்கும், வானங்கள் அசையும்; சூரியனும் சந்
திரனும் இருண்டுபோகும்; நட்சத்திரங்கள் தங்
௰௧ கள் ஒளியை மறைத்துக்கொள்ளும்.— கர்த்தர்
தமது இராணுவத்தின்முன்பாகத் தம்முடைய
சத்தத்தைக் காட்டுவார்; ஏனெனில் அவருடைய
சேனை மகா திரளும், அவருடைய வார்த்தையின்
படி செய்கிறதற்கு வல்லமையுமானது; அதே
னென்றால் கர்த்தருடைய நாள் பெரியதும் மகா
பயங்கரமுமாயிருக்கும்; அதைத் தாளுபவன் யா
வன்?
௰௨ இப்போதும் உங்கள் முழுமனதினாலே உப
வாசத்தோடும் அழுகையோடும் புலம்பலோடும்
[2]நம்மண்டைக்கே திரும்புங்களென்று கர்த்தர்
௰௩ சொல்லுகிறார்.—[3]நீங்கள் உங்கள் வஸ்திரங்களை
அல்ல உங்கள் இருதயங்களைக் கிழித்து, உங்கள்
பராபரனாகிய கர்த்தரண்டைக்குத் திரும்புங்கள்;
ஏனெனில் அவர் இரக்கமும் மன உருக்கமும்,
நீடிய சாந்தமும், மிகுந்த கிருபையுமுள்ளவரும்
தீங்குக்கு மனஸ்தாபப் படுகிறவருமாயிருக்கி
றார். — ஒருவேளை அவர் திரும்பிக்கொண்டு ௰௪
மனஸ்தாபப்பட்டு, அந்த உங்கள் பராபரனாகிய
கர்த்தருக்குக் [4]காணிக்கையையும் ஊற்றுதலையும்
செலுத்துகிறதற்கான ஆசீர்வாதத்தை மீதியாகப்
பின்வைத்துப்போவாராக்கும்.
சீயோனிலே எக்காளம் ஊதுங்கள்; உபவாசம் ௰௫
பண்ணும் பரிசுத்தநாளைக்குறித்து அதின் ஆசரிப்
பைக் கூறுங்கள். — சனத்தைக் கூட்டுங்கள்; ௰௬
சபையைப் பரிசுத்தம் பண்ணுங்கள்; முதிர்ந்த
வயதுள்ளவர்களைச் சேருங்கள்; பிள்ளைகளையும்
முலையுண்கிறவர்களையும் கூட்டுங்கள்; மணவா
ளன் தன் அறையையும் மணவாட்டி தன் மறை
வையும் விட்டுப் புறப்படுவார்களாக.-கர்த்தரின் ௰௭
பணிவிடைக்காரராகிய ஆசாரியர்கள் மண்ட
பத்துக்கும் பலிபீடத்துக்கும் நடுவே அழுது
கொண்டு, கர்த்தாவே, தேவரீர் உமது சனத்தைத்
தப்பவிட்டுப் புறச்சாதிகள் அவர்களைப் பழ
மொழியாக்கும் நிந்தைக்கு உமது சுதந்தரத்தை
ஒப்புக்கொடாதிரும்; உங்கள் பராபரன் எங்கே
என்று புறச்சாதிகளுக்குள்ளே சொல்லப்படுவா
னேன் என்பார்களாக.
அப்போது கர்த்தர் தமது தேசத்துக்காக வை ௰௮
ராக்கியமாயிருந்து, தம்முடைய சனத்தைத் தப்
பவிடுவார். — கர்த்தர் மறுமொழி கொடுத்துத் ௰௯
தமது சனத்துக்குச் சொல்வதாவது: இதோ, நாம்
உங்களை இனிப் புறச்சாதிகளுக்குள்ளே நிந்தை
யாக வைக்காமல், உங்களுக்குத் தானியத்தை
யும் திராட்சக்கந்தாயத்தையும் எண்ணெயையும்,
நீங்கள் அதினால் திருத்தியாகும்படிக்குக் கொ
டுத்து, — வடதிசைச் சேனையை உங்களுக்குத் ௨௰
தூரமாக விலக்கி, அதின் முன்தண்டு கீழ்க்கட
லுக்கும் அதின் பின்தண்டு கடைசிக்கடலுக்கும்
நேராகும்படிக்கு அதை வறட்சியும் பாழுமான
தேசத்துக்குத் துரத்திவிடுவோம்; அங்கே அதின்
நாற்றம் எழும்பி அதின் துர்க்கந்தம் வீசும்; ஏனெ
னில் பெரிய காரியங்களைச்செய்தது.—தேசமே ௨௧
பயப்படாதே; களிகூர்ந்து சந்தோஷப்படு;
ஏனெனில் கர்த்தர் பெரிய காரியங்களைச் செய்
வார்.—வெளியின் மிருகங்களே, பயப்படாதே ௨௨
யுங்கள்; ஏனெனில் வனாந்தரத்தின் மேய்ச்சல்
கள் முளைக்கும்; விருட்சங்கள் தங்கள் காய்க
ளைக் காய்க்கும்;அத்திமரமும் திராட்சச்செடியும்
தங்கள் சாரத்தைக் கொடுக்கும்.— சீயோனின் ௨௩
குமாரரே, [5]உங்கள் பராபரனாகிய கர்த்தருக்குள்
களிகூர்ந்து சந்தோஷப்படுங்கள்; ஏனெனில்
அவர் உங்களுக்கு நீதிக்கான போதகனைக்
கொடுத்து, உங்களுக்கு [6]முன்மாரியையும் பின்
மாரியையும் ஏற்கெனவே வருஷிக்கப்பண்ணு

1 யோவே. ௧. ௰௫.—2 எரே. ௩. ௰௨.—3 ௨ மோ. ௩௪. ௬.
4 யோவே. ௧. ௯.—5 பிலி. ௪. ௪.—6 ௫ மோ. ௰௧. ௰௪.

௨௪ வார்.—களங்கள் தானியத்தினால் நிரம்பும்,ஆலை
களில் திராட்சப்பழஇரசமும் எண்ணெயும் வழி
௨௫ ந்தோடும்.— நாம் உங்களுக்குள் அனுப்பின
நம்முடைய பெரிய இராணுவமாகிய வெட்டுக்
கிளிகளும், பச்சைக்கிளிகளும், முசுக்கட்டைப்
பூச்சிகளும், பச்சைப்புழுக்களும் பலனைத்தின்ற
வருஷங்களுக்காக உங்களுக்குப் பதிலை அளிப்
௨௬ போம். — நீங்கள் சம்பூரணமாகச் சாப்பிட்டு,
திருத்தி அடைந்து, உங்களை அதிசயமாய் நடத்
திவந்த [1]உங்கள் பராபரனாகிய கர்த்தருடைய
நாமத்தைத் துதிப்பீர்கள்; நமது சனம் என்றென்
௨௭ றைக்கும் வெட்கப்பட்டுப்போவதில்லை.—நாம்
இஸ்ரவேலின் நடுவில் இருக்கிறவரென்றும்,
நாமே உங்கள் பராபரனாகிய கர்த்தர், வேறொ
ருவர் இல்லையென்றும் அறிந்துகொள்ளுவீர்கள்;
நமது சனம் என்றென்றைக்கும் வெட்கப்பட்
டுப்போவதில்லை.

## ௩. அதிகாரம்.

௧. இனிமேல் வரும் ஆசீர்வாதத்தினால் சீயோனைத் தேற்றினது. ௪. தமது சனத்தின சத்துருக்களுக்கு விரோதமாக வரும் பராபரனுடைய நியாயத்தீர்ப்புகள். ௰௪. பராபரன் தமது நியாயத்தீர்ப்பில் அறியப்படுவாரென்பது. ௨௰. திருச்சபைக்கு உண்டாகும் அவருடைய ஆசீர்வாதம்.

௧ இதற்குப்பிற்பாடு சம்பவிப்பதேதெனில், [2]நாம்
சகல மாம்சத்தின்மேலும் நம்முடைய ஆவியை
ஊற்றுவோம்; அப்போது உங்கள் குமாரரும்
உங்கள் குமாரத்திகளும் தீர்க்கதரிசனம் சொல்
லுவார்கள்; உங்கள் மூப்பரானவர்கள் சொப்ப
னங்களையும், உங்கள் இளைஞர் தரிசனங்களையும்
௨ காண்பார்கள்.—வேலைக்காரரின்மேலும் வேலைக்
காரிகளின்மேலும், அந்நாள்களில் நம்முடைய
௩ ஆவியை ஊற்றுவோம். — வானத்திலும் பூமியி
லும் அதிசயங்களைக் கட்டளையிடுவோம்; இரத்த
மும் அக்கினியும் புகையெழும்புதல்களும் உண்
௪ டாகும்.—கர்த்தருடைய பெரியதும் பயங்கரமு
மான நாள் வருமுன்னே சூரியன் இருளும், சந்
திரன் இரத்தமுமாய் மாறுபடும்.

௫ சம்பவிப்பதேதெனில் [3]கர்த்தருடைய நாமத்
தைத் தொழுதுகொள்பவன் எல்லாம் விடுவிக்
கப்படுவான்; ஏனென்றால் கர்த்தர் சொன்னபடி
சீயோன் பர்வதத்திலும் எருசலேமிலும் கர்த்தர்
வரவழைக்கப்போகிற மற்றவர்களிடத்திலும் வி
௬ டுவிக்குதல் உண்டாயிருக்கும். — ஏனெனில்,
இதோ, யூதாவும் எருசலேமும் இருக்கிற சிறை
யிருப்பை நாம் திருப்பும் அந்நாள்களிலும் அக்
௭ காலத்திலும்,—நாம் எல்லாப் புறச்சாதியாரையும்
கூட்டி,அவர்களை யோசபாத்தென்ற பள்ளத்தாக்
கில் இறங்கிப்போகப்பண்ணி, அவர்கள் நமது
சனத்தையும் இஸ்ரவேலென்ற நம்முடைய சுதந்
தரத்தையும் புறச்சாதிகளுக்குள்ளே சிதறவடித்
து, நம்முடைய தேசத்தைப் பங்கிட்டுக்கொண்
௮ டதின்நிமித்தமும்,—அவர்கள் நமது சனத்தின்பே
ரில் சீட்டுகளைப்போட்டு, ஆண்பிள்ளைகளை வே
சிப்பணையமாகக்கொடுத்து, பெண்பிள்ளைகளை
மதுபானத்துக்கென்று விற்று, லொட்டி குடித்த
தின்நிமித்தமும், அங்கே அவர்களோடே நியா
யத்துக்குள்ப்பிரவேசிப்போம்.—தீருவே, சீதோ ௯
னே, பெலிஸ்தேயாவின் சகல எல்லைகளே, உங்
களுக்கும் நமக்கும் என்ன? இப்படி நமக்குச்
சரிக்கட்டுகிறீர்களோ? இப்படி நமக்குச் சரிக்
கட்டினீர்களாகில், நாம் சீக்கிரமும் தீவிரமுமாய்
நீங்கள் சரிக்கட்டுகிறதை உங்கள் தலையின்மேல்
திருப்பிவிடுவோம்.—நீங்கள் நம்முடைய வெள் ௰
ளியையும் நம்முடைய பொன்னையும் எடுத்து,
நம்முடைய நல்ல கனிக்கிரமானவைகளை உங்
கள் கோவில்களிலே கொண்டுபோய், — யூதா ௰௧
வின் குமாரரையும் எருசலேமின் குமாரரையும்
அவர்களுடைய எல்லைகளுக்கு அவர்களைத் தூர
மாக்கும்படிக்கு, கிரேக்கரின் புத்திரருக்கு விற்
றுப்போட்டீர்கள்.—இதோ, நீங்கள் அவர்களை ௰௨
விற்றுப்போட்ட அவ்விடத்திலிருந்து நாம் அவர்
களை எழும்பிவரப்பண்ணி, நீங்கள் சரிக்கட்டின
தை உங்கள் தலையின்மேல்த் திருப்பிவிட்டு,—
உங்கள் குமாரரையும் உங்கள் குமாரத்திகளையும் ௰௩
யூதா புத்திரரின் கையிலே விற்போம்; இவர்
கள் அவர்களைத் தூரதேசத்தாராகிய சேபாசாதி
யாருக்கு விற்றுப்போடுவார்கள்; ஏனெனில்,
கர்த்தர் இதைச் சொன்னார்.

[4]இதைப் புறச்சாதிகளுக்குள்ளே கூறுங்கள்; ௰௪
யுத்தத்தை ஆயத்தம்பண்ணுங்கள்; பராக்கிரமசா
லிகளை எழுப்புங்கள்; யுத்தமனுஷர் எல்லாரும்
சேர்ந்துவந்து ஏறுவார்களாக. — உங்கள் மண் ௰௫
வெட்டிகளைப் பட்டையங்களாகவும் உங்கள்
அரிவாள்களை ஈட்டிகளாகவும் அடியுங்கள்; பல
ஈனன் தான் பராக்கிரமசாலி என்பானாக.—சகல ௰௬
சாதிகளே, நீங்கள் ஒருமித்துக்கொண்டு, சுற்றி
லுமிருந்து வந்து கூடுங்கள்; கர்த்தாவே, அங்கே
[5]உம்முடைய பராக்கிரமசாலிகளை இறங்கப்பண்
ணும்.—சாதிகள் எழும்பி யோசபாத்தென்ற பள் ௰௭
ளத்தாக்குக்கு ஏகிவருவார்கள்; ஏனெனில் அங்
கே நாம் சுற்றிலுமிருந்து வந்த சாதிகளை நியா
யந்தீர்ப்பதற்காக உளுக்காருவோம்.

[6]அரிவாளை அனுப்புங்கள்; ஏனென்றால் அ ௰௮
றுப்புவிளைந்துவந்தது,வந்திறங்குங்கள்;ஏனென்
றால் ஆலை நிரம்பியிருக்கிறது; ஆலையின் இடங்
கள் வழிந்தோடும்; அதேனெனில் அவர்களு
டைய பொல்லாப்பு மிகுதியானது.—போரடிக் ௰௯
கும் பள்ளத்தாக்கிலே ஏராளமான சதளங்கள்
உண்டாயிருக்கும்; ஏனெனில் போரடிக்கும்
பள்ளத்தாக்கிலே கர்த்தர் நியாயஞ்செய்யும் நாள்
சமீபமாயிருக்கிறது. — [7]சூரியனும் சந்திரனும் ௨௰
இருண்டுபோகும்; நட்சத்திரங்கள் தங்கள் ஒளி
யை மறைத்துக்கொள்ளும்.

[8]கர்த்தர் சீயோனிலிருந்து கர்ச்சித்து, எருசலே ௨௧
மிலிருந்து தமது சத்தத்தைக்காட்டுவார்; அதினால்

1 ௫ மோ. அ. ௰.—2 ஏசா. ௪௪. ௩. ௰௪—௰௭ : ௰. ௪௪. தீத். ௩. ௬—௭. சகரி. ௰௨. ௰. அப். ௨. ௧ : ௨௧. அ, 3 அப். ௨. ௨௧. உரோ. ௰. ௰௩.
4 ஏசே. ௩௮ ௭.—5 சங். ௱௩. ௨௰. ௨௬.—8 ஏசே. ௰௧. ௰. ஆமோ. ௧. ௨.
6 வெளி. ௰௪. ௰௫. ௰௯.—7 லூக். ௨௧.

வானங்களும் பூமியும் அதிரும்; ஆனால் கர்த்தர்
தமது சனத்துக்கு அடைக்கலமும் இஸ்ரவேல்
புத்திரருக்கு அரணான கோட்டையுமாயிருப்
௧௭ பார்.—நமது பரிசுத்தபர்வதமாகிய சீயோனிலே
வாசமாயிருக்கிற நாம் [1]உங்கள் பராபரனாகிய
கர்த்தரென்று அப்போது அறிவீர்கள்; அப்போது
எருசலேம் பரிசுத்தமாயிருக்கும்; அன்னியர்
இனி அதைக் கடந்துபோவதில்லை.
௧௮ அக்காலத்தில் சம்பவிப்பதேதென்றால், [2]பர்
வதங்கள் திராட்சப்பழஇரசமாய் வடியும்; மேடு
கள் பாலாய் ஓடும்; யூதாவின் ஓடைகள் எல்லாம்
தண்ணீராய் ஓடும், [3]ஒரு ஊற்று கர்த்தருடைய
வீட்டிலிருந்து புறப்பட்டுச் சித்தீமென்ற பள்ளத்
தாக்கை நீர்ப்பாய்ச்சலாக்கும்.

யூதாபுத்திரரின் தேசத்திலே குற்றமில்லாத ௧௯
இரத்தத்தைச் சிந்தி அவர்களுக்குச் செய்த கொ
டுமையின்நிமித்தம் எகிப்து பாழுமாய், ஏதோம்
பாழான வனாந்தரமுமாய்ப் போகும்.—ஆனால் ௨௰
யூதா நித்தியகாலமும், எருசலேம் தலைமுறை
தலைமுறையாகவும் குடியேற்றப்பட்டிருக்கும்.—
நாம் தண்டியாமல் விட்டிருந்த [4]அவர்களுடைய ௨௧
இரத்தப்பழியைத் தண்டியாமல் விடோம்; [5]கர்த்
தர் சீயோனிலே வாசமாயிருக்கிறவர்.

1 எசே. ௩௪.௩0. சஎ. க.—3 சகரி. ௰௪. அ. வெளி. உஉ. க.
2 ஆமோ. ௯. ௰௩. எசே.
4 இமோ. ௩உ. ௪௩. வெளி. 5 சங். ௬. ௰உ: எச. உ. ௬. ௰:௰௬. உ

AMOS.

# ஆமோசின் தீர்க்கதரிசனம்.

## க. அதிகாரம்.

க. ஆமோஸ் சூரியர்மேலும், சு. பெலிஸ்தியர்மேலும், கூ. தீருவின்மேலும், ௰௧. ஏதோமியர்மேலும், ௰௩. அம்மோன் புத்திரர்மேலும் வரும் பராபரனுடைய நியாயத்தீர்ப்பைக் காட்டினது.

௧ தெக்கோவா ஊர் மேய்ப்பருக்குள் இருந்த
ஆமோஸ், யூதாவின் இராசாவாகிய உசியாவின்
நாள்களிலும், இஸ்ரவேலின் இராசாவாகிய யோ
வாசுடைய குமாரனுன எரோபெயாமின் நாள்
களிலும், [1]பூமி அதிர்ச்சி உண்டாக இரண்டுவ
ருஷமிருக்கிறபோது, இஸ்ரவேலின்மேல் கண்டு
சொன்ன வர்த்தமானங்கள்.
௨ [2]கர்த்தர் சீயோனிலிருந்து கர்ச்சித்து, எருச
லேமிலிருந்து தம்முடைய சத்தத்தைக் காட்டு
வார்; அதினுல் மேய்ப்பரின் தாபரங்கள் துக்க
மடையும்; கர்மேலின் கொடுமுடியும் காய்ந்து
போகும்.
௩ [3]கர்த்தர் சொல்லுகிறதாவது: தமஸ்குவினு
டைய மூன்று நாலு பாதகங்களின்நிமித்தமும்
அவர்கள் கீலேயாத்தை [4]இருப்புவண்டில்களால்
போரடித்ததின்நிமித்தமும், நாம் அதின் ஆக்கினை
௪ யைத் திருப்பாமல்,—ஆசவேலின் வீட்டிலே அக்
கினியைப் போடுவோம்; அது பெனாதாதின்
௫ அரண்மனைகளைப் பட்சிக்கும். — நாம் தமஸ்கு
வின் தாழ்ப்பாளை உடைத்துக் குடிகளை ஆவே
னென்ற பள்ளத்தாக்கிலும், செங்கோல் ஆளுகிற
வனை பெத்ஏதேனிலும் வைக்காமல் சங்காரம்
பண்ணுவோம்; அப்போது சூரியாவின் சனம்
கீருக்குச் சிறையிருப்பாய்ப் போகுமென்று கர்த்
தர் சொல்லுகிறார்.
௬ கர்த்தர் சொல்லுகிறதாவது: காத்சாவினுடைய
மூன்று நாலு பாதகங்களின்நிமித்தமும் அவர்கள்
சிறையிருப்பானவர்களை ஏதோமியர்கையில் பத்
திரப்படுத்திவிடும்படிக்கு முழுதும் சிறையாக்கி
னதின்நிமித்தமும் நாம் அதின் ஆக்கினையைத்
௭ திருப்பாமல்,—காத்சாவின் மதிலுக்குள் அக்கினி
யைப் போடுவோம்; அது அதினுடைய அரண்
௮ மனைகளைப் பட்சிக்கும்.—நாம் குடிகளை அஸ்
தோத்திலும் செங்கோல் ஆளுகிறவனை அஸ்க
லோனிலும் வைக்காமல் சங்காரம்பண்ணி, பெ
லிஸ்தியரில் மீதியானவர்கள் அழியும்படிக்கு
நமது கையை எக்கிரோனுக்கு விரோதமாகத்
திருப்புவோமென்று கர்த்தராகிய ஆண்டவர் சொ
ல்லுகிறார்.
கர்த்தர் சொல்லுகிறதாவது: தீருவினுடைய ௯
மூன்று நாலு பாதகங்களின்நிமித்தமும், அவர்
கள்சகோதரரின் உடம்படிக்கையை நினையாமல்
சிறையிருப்பானவர்களை முழுதும் ஏதோமியர்
கையில் பத்திரப்படுத்திவிட்டதின்நிமித்தமும்,
நாம் அதின் ஆக்கினையைத் திருப்பாமல்,—தீரு ௰
வின் மதிலுக்குள் அக்கினியைப் போடுவோம்;
அது அதின் அரண்மனைகளைப் பட்சிக்கும் என்
கிறார்.
கர்த்தர் சொல்லுகிறதாவது: ஏதோமினுடைய ௰௧
மூன்று நாலு பாதகங்களின்நிமித்தமும், அவன்
தன் சகோதரனைப் பட்டையத்தோடே தொடர்
ந்து, தன் மனதை இரக்கமற்றதாக்கி, தன் கோ
பத்தினுலே என்றைக்கும் அவனைப் பீறிப்போட்
டுத் தன் மூர்க்கத்தை நித்தியகாலமாக வைத்திருக்
கிறதின்நிமித்தமும், நாம் அவன் ஆக்கினையைத்
திருப்பாமல், — [5]தேமானிலே அக்கினியைப் ௰௨
போடுவோம்; அது பொத்ஸராவின் அரண்மனை
களைப் பட்சிக்குமென்கிறார்.
கர்த்தர் சொல்லுகிறதாவது: அம்மோன் புத்தி ௰௩
ரரின் மூன்று நாலு பாதகங்களின்நிமித்தமும்,
அவர்கள் தங்கள் எல்லைகளை விஸ்தாரமாக்கும்ப
டிக்குக் கீலேயாத் தேசத்தின் கர்ப்பஸ்திரிக
ளைப் பிளந்துபோட்டதின்நிமித்தமும், நாம் அ
வர்கள் ஆக்கினையைத் திருப்பாமல்,—ரபாவின் ௰௪
மதிலுக்குள் அக்கினியைக் கொளுத்துவோம்;
அது யுத்தநாளின் முழக்கமாகவும், பெருங்காற்
றின் புசலாகவும் அதின் அரண்மனைகளைப் பட்
சிக்கும்.—அவர்களுடைய இராசா சிறையிருப் ௰௫
பிலே போவான்; அவனும் அவனுடைய பிர
புக்களுங்கூடத்தானே என்று கர்த்தர் சொல்லு
கிறார்.

## உ. அதிகாரம்.

க. மோவாபியர்மேலும், ச. யூதாவின்மேலும், சு. இஸ்ரவேலர்மேலும்வரும் பராபரனுடைய கோபாக்கினை. கூ. பராபரன் அவர்களுடைய நன்றிகெட்ட தன்மையைக்குறித்து முறையிட்டது.

கர்த்தர் சொல்லுகிறதாவது: [6]மோவாபின் மூன் ௧
று நாலு பாதகங்களின்நிமித்தமும், அவன் ஏதோ
முடைய இராசாவின் எலும்புகளை நீறுகச் சுட்
டுப்போட்டதின்நிமித்தமும், நாம் அவன் ஆக்கி
னையைத் திருப்பாமல்,—மோவாப் தேசத்தில் அக் ௨
கினியைப் போடுவோம்; அது கெரியோத்தின்
அரண்மனைகளைப் பட்சிக்கும்; மோவாபியர்

1 சகரி.௰௪.௫.—2 யோவே.௩.௰௬.—3 எசா. ௭.௧.—4 உ இரா.௰௩. ௭.

5 எரே. ௪௯. ௰௨-௰௪.—6 எரே. ௪௮.௧. ஓ. செப். ௨.௮—௰.

அமளிக்குள்ளும் ஆர்ப்பரிப்புக்குள்ளும் எக்காள
௩ சத்தத்துக்குள்ளும் சாவார்கள்.—நாம் நியாயாதிப
தியை அவர்கள் நடுவில் இராதபடிக்குச் சங்காரம்
பண்ணி, அவனோடேகூட அவர்களுடைய பிர
புக்களை எல்லாம் கொன்றுபோடுவோமென்று
கர்த்தர் சொல்லுகிறார்.

௪ கர்த்தர் சொல்லுகிறதாவது: யூதாவின் மூன்று
நாலு பாதகங்களின்நிமித்தமும், அவர்கள் கர்த்த
ருடைய வேதத்தை வெறுத்து, அவருடைய கட்
டளைகளைக் கைக்கொள்ளாமல், தங்கள் பிதாக்கள்
பின்பற்றின தங்கள் பொய்களின் மோசத்துக்கு
உள்ளானதின்நிமித்தமும் நாம் அவர்கள் ஆக்கி
௫ னையைத் திருப்பாமல், — யூதாவிலே அக்கினி
யைப் போடுவோம்; அது எருசலேமின் அரண்
மனைகளைப் பட்சிக்கும்.

௬ கர்த்தர் சொல்லுகிறதாவது: இஸ்ரவேலின்
மூன்று நாலு பாதகங்களின்நிமித்தமும், அவர்
கள் நீதிமானைப் பணத்துக்கும், [1]எளியவனை ஒரு
சோடு பாதரட்சைக்கும் விற்றுப்போட்டதின்
நிமித்தமும், அவர்களுடைய ஆக்கினையைத் திரு
௭ ப்பாதிருப்போம்.—அவர்கள் தரித்திரரின் தலைக்கு
மோசமாகப் பூமியின் மண்ணைக்கவ்வி, சிறுமை
யானவர்களின் வழியைப் புரட்டுகிறார்கள்; நம்
முடைய பரிசுத்த நாமத்தைக் கொலைச்சலாக்கும்
படிக்கு மகனும் தகப்பனும் ஒரு பெண்ணிடத்
௮ தில் பிரவேசிக்கிறார்கள்.—அவர்கள் சகல பீடங்
களருகே அடைமானமாய் வாங்கின வஸ்திரங்க
ளின்மேல் படுத்துக்கொண்டு, தெண்டம்பிடிக்
கப்பட்டவர்களுடைய மதுபானத்தைத் தங்கள்
தேவர்களின் வீட்டிலே குடிக்கிறார்கள்.

௯ நாமோவெனில் கேதுருக்களின் உயர்த்திக்கு
ஒத்த உயர்த்தியும், கர்வாலியுமரங்களைப்போலே
உரப்புமாயிருந்த அவனுடைய கனியையும்,
[2]எமோரியனை அவர்களுக்குமுன்பாக அழித்து
உயர இருந்த அவனுடைய கனியையும் தாழ
இருந்த அவனுடைய வேர்களையும் அழித்துப்
௰ போட்டு,— நீங்கள் எமோரியனுடைய தேசத்
தைக் கட்டிக்கொள்ளும்படிக்கு உங்களை நாம்
எகிப்துதேசத்திலிருந்து ஏறிவரப்பண்ணி, உங்
களை நாற்பதுவருஷமாக வனாந்தரத்திலே வழி
௰௧ நடத்தி,—உங்கள் குமாரரில் சிலரைத் தீர்க்கதரி
சிகளாகவும், உங்கள் வாலிபரில் சிலரை [3]நசரே
யராகவும் எழும்பப்பண்ணினோம்; இஸ்ரவேல்
புத்திரரே, இப்படி இல்லையோ என்று கர்த்தர்
௰௨ கேட்கிறார். — நீங்களோவென்றால் நசரேயருக்
குத் திராட்சப்பழஇரசம் குடிக்கக்கொடுத்து,
தீர்க்கதரிசிகளுக்கு நீங்கள் தீர்க்கதரிசனம் சொ
ல்லவேண்டாமென்று கற்பித்தீர்கள்.

௰௩ இதோ, கோதுமைக்கட்டுகள் நிறைபாரமாக
ஏற்றப்பட்ட வண்டில் இருத்துகிறதுபோலே,
நாம் உங்களை நீங்கள் இருக்கிற ஸ்தலத்தில் இ
௰௪ ருத்துவோம். — அப்போது வேகமானவனுக்கு
ஓட இடமில்லை; திடனானவன் தன் பலனைப்
பலக்கப்பண்ணுவதுமில்லை; பராக்கிரமன் தன்
பிராணனைத் தப்புவிப்பதுமில்லை.—வில்லைப் பி ௰௫
டிக்கிறவன் நிற்பதுமில்லை; வேகமானவன் தன்
கால்களால் தப்பிப்போவதுமில்லை; குதிரையின்
மேல் இருக்கிறவன் தன் பிராணனைத் தப்புவிப்
பதுமில்லை.—பலசாலிகளுக்குள்ளே தன் நெஞ் ௰௬
சைத் திடப்படுத்துகிறவன், அந்நாளிலே நிரு
வாணமாய் ஓடிப்போவானென்று கர்த்தர் சொல்
லுகிறார்.

## ௩. அதிகாரம்.

௧. இஸ்ரவேலர்மேல் அவசியம் பராபரனுடைய நியாயத்தீர்ப்பு வருமென்பது. ௯. அதின் காரணத்தோடு அதைப் பிரசுரஞ்செய்தல்

இஸ்ரவேல் புத்திரரே, உங்களுக்கு விரோதமா ௧
கவும், தாம் எகிப்துதேசத்திலிருந்து ஏறப்பண்
ணின எல்லா வம்சத்துக்கு விரோதமாகவும், கர்த்
தர் சொன்ன இந்த வசனத்தைக் கேளுங்கள்.

[4]பூமியினுடைய எல்லா வம்சங்களுக்குள்ளும் ௨
உங்களைமாத்திரம் அறிந்துகொண்டோம்; ஆகை
யால் உங்களுடைய எல்லா அக்கிரமங்களின்
நிமித்தமும் உங்களை விசாரிப்போம்.

இரண்டுபேர் ஒருமனப்பட்டிருந்தாலொழிய ௩
ஒருமிக்க நடந்துபோவார்களோ?—தனக்கு இரை ௪
அகப்படாமல் காட்டிலே சிங்கம்கர்ச்சிக்குமோ?
இரையெடுக்காமல் இளஞ்சிங்கம் தன் கெபியி
லிருந்து தன் சத்தத்தைக் காட்டுமோ?—தரையிலே ௫
குருவி தனக்காகச் சுருக்குப்போடப்படாதிருந்
தால், கண்ணியில் சிக்கிக்கொள்ளுமோ? ஒன்றும்
படாதிருக்கையில், கண்ணி தரையிலிருந்து எடுத்
துக்கொள்ளப்படுமோ?—சனம் அமளியாகாமல் ௬
ஊரில் எக்காளம் ஊதப்படுமோ? [5]கர்த்தருடைய
செயல் இல்லாமல் ஊரில் ஒரு தீங்குண்டாகு
மோ?—ஏனெனில கர்த்தராகிய ஆண்டவர் தீர்க் ௭
தரிசிகளாகிய தம்முடைய ஊழியக்காரருக்குத்
தமது இரகசியத்தை வெளிப்படுத்தாமல் ஒரு காரி
யத்தைச் செய்யார். — [6]சிங்கம் கர்ச்சிக்கிறது; ௮
யாவன் பயப்படாதிருக்கலாம்? கர்த்தராகிய
ஆண்டவர் சொல்லுகிறார்; யாவன் தீர்க்கதரிச
னம் சொல்லாதிருக்கலாம்?

நீங்கள் சமாரியாவின் பர்வதங்களில் வந்து ௯
கூடி, அதின் நடுவில் நடக்கிற பெரிய கலகங்
களையும் அதற்குள் செய்யப்படுகிற இடுக்கங்க
ளையும் பாருங்களென்று அஸ்தோத்திலே அரண்
மனைகளின்மேலும், எகிப்துதேசத்திலே அரண்
மனைகளின்மேலும் கூறுங்கள்.—அவர்கள் நிதா ௰
னஞ்செய்ய அறியாமல், தங்கள் அரண்மனைக
ளில் கொடுமையையும் பாழ்க்கடிப்பையும் குவி
த்துக்கொள்ளுகிறார்களென்று கர்த்தர் சொல்லு
கிறார்.—ஆகையால் சத்துரு வந்து தேசத்தைச் ௰௧
சூழ்ந்துகொண்டு உன்னுடைய பெலனை உன்
னிலிருந்து விழப்பண்ணுவான்; அப்போது
உன் அரண்மனைகள் கொள்ளையிடப்படுமென்று

1 ஆமோ. அ. ௬.—2 ௪ மோ. ௨௧. ௨௧. ழ.—3 ௪ மோ. ௬. ௨. ழ.

4 ௫ மோ. ௰௪. ௨.—5 எசா. ௪௫. ௨௪: ௪௬. ௭. புல. ௩. ௩௭-௩௯.—6 வெளி. ௰. ௩.

௰௨ கர்த்தராகிய ஆண்டவர் சொல்லுகிறார்.—கர்த்தர்
உரைக்கிறதாவது: ஒரு மேய்ப்பன் இரண்டு கால்
களை அல்லது ஒரு காதின் துண்டைச் சிங்கத்தின்
வாயிலிருந்து பிடுங்கித் தப்புவிக்குமாப்போலே,
சமாரியாவின் குடிகளாகிய இஸ்ரவேல் புத்திரர்
ஒரு கட்டிலின் மூலையிலும் ஒரு படுக்கையின்
பக்கத்திலும் ஒளித்திருக்கையால் தப்புவிக்கப்
படுவார்கள்.
௰௩ நீங்கள் கேட்டு, யாக்கோபுவீட்டாருக்குள்ளே
சாட்சியாக அறிவிக்கவேண்டியதாவது: சேனை
களின் பராபரனாயிருக்கிற கர்த்தராகிய ஆண்ட
௰௪ வர் சொல்லுகிறதேதெனில்,—நாம் இஸ்ரவேலு
டைய பாதகங்களினிமித்தம் அவனை விசாரிக்
கும்நாளிலே நாம் பேத்தேலின் பலிபீடங்களைப்
பலிபீடத்தின் கொம்புகள் வெட்டுண்டு தரையி
௰௫ லேவிழ விசாரித்து, — மாரிகாலத்துக்கு இருக்
கிற வீட்டையும் கோடைகாலத்துக்கு இருக்கிற
வீட்டையும் அழிப்போம்; அப்போது தந்தவே
லையுள்ள வீடுகள் அழியும்; விஸ்தாரமான வீடுக
ளுக்கும் முடிவுவருமென்பதுதான் என்று கர்த்
தர் சொல்லுகிறார்.

## ௪. அதிகாரம்.

௧. இஸ்ரவேலருடைய கொடுமையையும், ௪. விக்கிரகத்தொழும்பையும், ௬. அவர்களுடைய சீர்ப்படாமையையும் குறித்துக் கண்டித்தது.

௧ தரித்திரரை ஒடுக்கி, எளியவர்களை நொறுக்கி,
அவர்களுடைய எசமான்களோடே, நாங்கள்
குடிக்கத்தக்கதாகக் கொண்டுவாருங்களென்று
சொல்லுகிற சமாரியாவின் பர்வதத்திலுள்ள
பாசானின் மாடுகளே, நீங்கள் கேட்கவேண்டிய
வசனமாவது:
௨ இதோ, கர்த்தராகிய ஆண்டவர் உங்களைக் குற
டுகளாலும், உங்கள் பின்சந்ததியை மீன்பிடிக்
கிற தூறடுகளாலும் இழுத்துப்போட நாள்கள்
உங்கள்மேல் வருமென்று அவர் தம்முடைய பரி
௩ சுத்தத்தைக்கொண்டு ஆணையிட்டார்.—அப்போ
து நீங்கள் ஒவ்வொருவர் தனக்கு எதிரான திக்
குக்கு நேராய்த் திறப்புகளால் புறப்பட்டு அரண்
மனைக்குக் கொண்டுபோகச் சுமந்ததை எறிந்து
போடுவீர்களென்று கர்த்தர் சொல்லுகிறார்.
௪ பேத்தேலுக்குப்போய்த் துரோகம்பண்ணுங்
கள்; கில்காலுக்கும் போய்த் துரோகத்தைப் பெ
ருகப்பண்ணி, காலைமாறு உங்கள் பலிகளையும்
மூன்றாம்வருஷத்திலே உங்கள் தசமபாகங்களை
௫ யும் செலுத்தி,—புளித்தமாவுள்ள ஸ்தோத்திரப்
பலியோடே தூபங்காட்டி, உற்சாகப்பலிகளைக்
கூறிக் கேட்கப்பண்ணுங்கள்; ஏனென்றால் இஸ்
ரவேல் புத்திரரே, இப்படியே விரும்புகிறீர்க
ளென்று கர்த்தராகிய ஆண்டவர் சொல்லுகிறார்.
௬ ஆகையால் நாம் உங்களுக்கு உங்கள் பட்ட
ணங்களில் எல்லாம் பல்லுகளுக்கு ஓய்வையும்,
உங்கள் ஸ்தலங்களில் எல்லாம் அப்பக்குறைச்
சலையும் கட்டளையிட்டிருக்கிறோம்; ஆகிலும்
நம்மண்டைக்குத் திரும்பாதேபோனீர்களென்று
கர்த்தர் சொல்லுகிறார்.

இதுவுமல்லாமல், அறுப்புக்காலம் வர இன்னம் ௭
மூன்றுமாதம் இருக்கும்பொழுதே நாம் மழை
யை உங்களை விட்டுவிலக்கி, ஒரு பட்டணத்தின்
மேல்வருஷிக்கப்பண்ணி மற்றப்பட்டணத்தின்
மேல் வருஷிக்கப்பண்ணாதிருந்தோம்; ஒரு வய
லின்மேல் மழைபெய்தது; மழைபெய்யாத மற்ற
வயல் காய்ந்துபோயிற்று.—இரண்டுமூன்று பட் ௮
டணங்களின் மனுஷர் ஒரே பட்டணத்துக்குத்
தண்ணீர் குடிக்கப்போய் அலைந்து தாகந்தீராதே
போனார்கள்; ஆகிலும் நம்மண்டைக்குத் திரும்
பாதேபோனீர்களென்று கர்த்தர் சொல்லுகிறார்.
கருக்காயினாலும் விஷப்பனியினாலும் உங்க ௯
ளைத் தண்டித்தோம்; உங்கள் சோலைகளிலும்
திராட்சத்தோட்டங்களிலும் அத்திமரங்களிலும்
ஒலீவமரங்களிலும் மிச்சமானதைப் பச்சைப்
புழு அரித்துப்போட்டது; ஆகிலும் நம்மண்
டைக்குத் திரும்பாதேபோனீர்களென்று கர்த்தர்
சொல்லுகிறார்.
எகிப்திலே உண்டானதற்கு ஒத்த பெருவாரிக் ௰
காய்ச்சலை உங்களுக்குள் அனுப்பினோம்; உங்
கள் குதிரைகள் பிடிபடத்தக்கதாய் உங்கள் வாலி
பரைப் பட்டையத்தாலே கொன்றோம்; உங்கள்
பாளயங்களின் நாற்றத்தை உங்கள் நாசிகளிலும்
ஏறப்பண்ணினோம்; ஆகிலும் நம்மண்டைக்குத்
திரும்பாதேபோனீர்களென்று கர்த்தர் சொல்லு
கிறார்.
சோதோமையும்கொமோராவையும் பராபரன் ௰௧
கீழதுமேலதாக்கிப்போட்டதுபோல, உங்களில்
சிலவற்றைக் கீழதுமேலதாக்கிப்போட்டோம்;
நீங்கள் நெருப்புக்குத் தப்புவிக்கப்பட்ட கொள்
ளியைப்போல இருந்தீர்கள்; ஆகிலும் நம்மண்
டைக்குத் திரும்பாதேபோனீர்களென்று கர்த்தர்
சொல்லுகிறார்.
ஆகையால் இஸ்ரவேலே, இந்தப் பிரகாரமாக ௰௨
உனக்குச் செய்வோம்; இஸ்ரவேலே, நாம் இப்
படி உனக்குச் செய்யப்போகிறபடியினாலே,
உன் பராபரனுக்கு எதிர்கொண்டுபோக ஆயத்
தப்படு.—ஏனெனில் இதோ, அவர் பர்வதங்களை ௰௩
உருவாக்கினவரும், காற்றைச் சிருஷ்டிக்கிற
வரும், மனுஷருடைய நினைவு இதென்று அவ
னுக்கு வெளிப்படுத்துகிறவருமாயிருக்கிறார்; அ
வர் விடியற்காலத்தை அந்தகாரமாக்கிப் பூமியி
னுடைய உயரங்களின்மேல் மிதிக்கிறவர்; சே
னைகளின் பராபரனாகிய கர்த்தரென்பது அவரு
டைய நாமம்.

## ௫. அதிகாரம்.

௧. இஸ்ரவேலரைக்குறித்த புலம்பல். ௪. குணப்படுதலுக்குத் தூண்டினது. ௨௧. பராபரன் அவர்களுடைய மாயமுள்ள ஊழியத்தை நீக்கினது.

இஸ்ரவேல் வீட்டாரே, நான் உங்கள்பேரில் ௧
புலம்பலாக எடுக்கும் இந்த வசனத்தைக் கேளுங்
கள்.—இஸ்ரவேல் என்ற கன்னியாஸ்திரி திரும்ப ௨
எழுந்திருக்கமாட்டாமல் விழுந்தாள்; எடுப்பார்
இல்லாமல் தன் தேசத்திலே கைவிடப்பட்டுக்
கிடக்கிறாள்.—ஏனெனில் பட்டணத்திலிருந்து ௩

புறப்பட்ட ஆயிரம்பேரில் நூறும், நூறுபேரில்
பத்தும் இஸ்ரவேல் வீட்டாருக்கு விடப்படுவார்
களென்று கர்த்தராகிய பராபரன் சொல்லுகிறார்.-
௪ ஏனெனில் இஸ்ரவேல் வீட்டாருக்குச் சொல்
லுகிறதாவது: நம்மைத் தேடுங்கள், அப்போது
பிழைப்பீர்கள்.

௫ பேத்தேலைத் தேடாதேயுங்கள்; கில்காலிலும்
சேராதேயுங்கள்; பேர்சேபாவுக்கும் நடந்துபோ
காதேயுங்கள்; ஏனென்றால் கில்கால் சிறையிருப்
பாகவும் பேத்தேல் பாழ்ந்தலமாகவும் போகும்.—
௬ கர்த்தர் பேத்தேலில் இருக்கிற ஒருவரும் அவிக்க
மாட்டாத அக்கினியாய் யோசேப்பின் வீட்
டைக் கொளுத்திப்போட்டு, அதைப் பட்சிக்கா
தபடிக்கு [1]நீங்கள் அவரைத் தேடுங்கள்; அப்
போது பிழைப்பீர்கள்.
௭ [2]நியாயத்தை எட்டியாக மாற்றி, நீதியைத் தரை
யிலே விழப்பண்ணுகிறவர்களே, அவரைத் தே
௮ டுங்கள்.—[3]அவர் சத்தநட்சத்திர ராசியையும் கிர
கங்களையும் உண்டாக்கினவர்; அவர் மரணநிழ
லை விடியற்காலமாக மாற்றிப் பகலை இராத்திரி
யாக அந்தகாரப்படுத்துகிறவர்; அவர் சமுத்திரத்
தின் தண்ணீர்களை வரச்சொல்லி, அவைகளைப்
பூமியினுடைய விசாலத்தின்மேல் ஊற்றுகிறவர்;
௯ கர்த்தர் என்பது அவருடைய நாமம்.—அரணான
தலத்தின்மேல் பாழ்க்கடிப்பு வரத்தக்கதாக அவர்
கொள்ளைகொடுத்தவனைப் பலத்தவனுக்கு விரோ
தமாக இலகுவடையப்பண்ணுகிறவர்.
௰ [4]ஒலிமுகவாசலிலே கடிந்துகொள்ளுகிறவனை
அவர்கள் பகைத்து, உத்தமமாய்ப் பேசுகிறவனை
௰௧ அருவருக்கிறார்கள்.— ஆனதுகொண்டு நீங்கள்
தரித்திரனை மிதித்துப்போட்டு, அவன் கையிலே
தானியச்சுமைகளை வாங்குகிறபடியினாலே, [5]நீங்
கள் வெட்டுக்கல்லான வீடுகளைக் கட்டினீர்கள்;
ஆனால் அவைகளில் நீங்கள் குடியிருப்பதில்லை;
விருப்பமான திராட்சத்தோட்டங்களை நாட்டி
னீர்கள்; ஆனால் அவைகளின் பழஇரசத்தை நீங்
௰௨ கள் குடிப்பதில்லை.—ஏனெனில் உங்கள் மீறு
தல்கள் மிகுதியும், உங்கள் பாவங்கள் பலமுமா
யிருக்கிறதென்று அறிவேன்; நீதிமானை இறுகப்
பிடித்துப் பரிதானம் வாங்கி, ஒலிமுகவாசலில்
ஏழைகளின் நியாயத்தைப் புரட்டுகிறார்கள்.

௰௩ ஆகையால் புத்திமான் இக்காலத்திலே மௌ
னமாயிருக்கவேண்டும்; ஏனெனில் இது தீர்க்
௰௪ காலம்.—நீங்கள் பிழைக்கும்படிக்குத் தின்மை
யை அல்ல, நன்மையைத் தேடுங்கள்; அப்போது
நீங்கள் சொல்லுகிறதின்படியே சேனைகளின்
பராபரனாகிய கர்த்தர் உங்களுடனே இருப்பார்.—
௰௫ [6]நீங்கள் தின்மையைப் பகைத்து நன்மையைச்
சிநேகித்து ஒலிமுகவாசலில் நியாயத்தை நிலைப்
படுத்துங்கள்; ஒருவேளை சேனைகளின் பராபரனா
கிய கர்த்தர் யோசேப்பிலே மீதியானவர்களுக்கு
இரங்குவார்.

1 ஏசா. ௫௫. ௬.—2 ஏசா. ௫. ௨௰. ௨௬. ௨௧.—5 ௫ மோ. ௨௮. ௩௯.
3 யோபு. ௯. ௯, ௰: ௩௮. ௩௧.—4 ஏசா. ௨௯. ௨௧.—செப். ௩. ௰௨.—6 சங். ௩௪. ௰௫.

ஆனதுகொண்டு ஆண்டவரும் சேனைகளின் ௰௬
பராபரனுமாகிய கர்த்தர் சொல்லுகிறதாவது: எல்
லாத் தெருக்களிலும் புலம்பல் உண்டாகி, எல்லா
வீதிகளிலும் ஐயோ! ஐயோ! என்பார்கள்; பயிர்
வேலைக்காரரைத் துக்கிப்புக்கும், அலற அறிந்த
வர்களைப் புலம்பலுக்கும் வரவழைப்பார்கள்.—
எல்லாத் திராட்சத்தோட்டங்களிலும் புலம்பல் ௰௭
உண்டாயிருக்கும்; ஏனெனில் உன் நடுவிலே
கடந்துபோவேனென்று கர்த்தர் சொல்லுகிறார்.

கர்த்தருடைய நாளை விரும்புகிறவர்களுக்கு ௰௮
ஐயோ! கர்த்தருடைய நாள் உங்களுக்கு என்னவே
ண்டும்? [7]அது வெளிச்சமாயிராமல் அந்தகாரமா
யிருக்கும். — ஒருவன் சிங்கத்துக்குத் தப்பின ௰௯
போது கரடி அவனைச் சந்திக்கிறதுபோலேயும்,
அல்லது வீட்டுக்குள்ளே வந்து தன் கையைச்
சுவரின்மேல் போடுகிறபோது பாம்பு அவனைக்
கடிக்கிறதுபோலேயும் இருக்கும்.-கர்த்தருடைய ௨௰
நாள் வெளிச்சமாயிராமல், இருளும் பிரகாசமற்ற
அந்தகாரமுமாய் இராதோ?

உங்கள் பண்டிகைகளைப் பகைத்து வெறுக்கி ௨௧
றேம்; உங்கள் கூட்டங்களை முகரமாட்டோம்.—
[8]நீங்கள் நமக்குத் தகனபலிகளையும் உங்கள் கா ௨௨
ணிக்கைகளையும் படைத்தாலும் நமக்குப் பிரிய
மாயிராது; கொழுப்பான உங்கள் மிருகங்களின்
ஸ்தோத்திரப்பலிகளை நோக்கமாட்டோம். —
உன் பாட்டுகளின் இரைச்சலை நம்மைவிட்டு ௨௩
விலக்கு; உன் தம்புருகளின் ஓசையை நாம் கே
ட்கமாட்டோம்.—நியாயம் தண்ணீர்களைப்போ ௨௪
லேயும், நீதி வலுநதியைப் போலேயும் புரண்டு
வரக்கடவது.—[9]இஸ்ரவேல் வீட்டாரே, நீங்கள் ௨௫
வனாந்தரத்தில் இருந்த நாற்பதுவருஷமாய்ப் பலி
களையும் காணிக்கைகளையும் நமக்குச் செலுத்தி
வந்தீர்களோ?—நீங்கள் உங்களுக்கு உண்டாக் ௨௬
கின உங்கள் மோளோகுடைய சப்பரத்தையும்,
உங்கள் தேவர்களின் நட்சத்திர ராசியாகிய உங்
கள் சுரூபங்களின் பாடையையும் எடுத்துவந்தீர்
களே. — ஆகையால் உங்களைத் தமஸ்குவுக்கு ௨௭
அப்பாலே குடிவிலக்குவோம் என்கிறதைச்
சேனைகளுடைய பராபரன் என்ற நாமமுள்ள
கர்த்தர் சொல்லுகிறார்.

## ௬. அதிகாரம்

௧. காமவிகாரமுள்ள இஸ்ரவேலர். ௭. பாழ்க்கடிப்பினால் உபத்திரவப்படுவார்களென்பது. ௰௨. அவர்களுடைய சீர்ப்படாமை.

சீயோனிலே நிர்விசாரமாயிருக்கிறவர்களும், ச ௧
மாரியாவின் பர்வதத்தை நம்பிக்கொண்டிருக்கிற
வர்களும், சாதிகளின் தலைமையென்னப்பட்டு,
இஸ்ரவேல் வீட்டாரால் சந்திக்கப்படுகிறவர்க
ளுமாகிய பேர்களுக்கு ஐயோ!—நீங்கள், [10]கல் ௨
னேமட்டும் நடந்து, அவ்விடத்திலிருந்து ஆமாத்
தென்ற பெரிய பட்டணத்துக்குப் போய், பெ
லிஸ்தியருடைய காத்பட்டணத்துக்குப் போய்,

7 யோவே. ௨. ௰௧. செப். ௧. ௰௫. 9 அப். ௭. ௪௨. ௪௩.
8 ஏசா. ௧. ௰௧-௰௫. 10 ௧ மோ. ௰. ௰.

இறங்கி, அவைகள் இந்த இராச்சியங்களைப்பார்
க்கிலும் நல்லவைகளோவென்றும், அவைகளின்
எல்லைகள் உங்கள் எல்லைகளைப்பார்க்கிலும்
விஸ்தாரமோவென்றும் பாருங்கள்.
௩ நீங்கள் நாளைத் தூரமென்றெண்ணிக் கொடு
௪ மையின் ஆசனத்தைச் சேரப்பண்ணி, — [1]தந்த
வேலையான கட்டில்களில் படுத்துக்கொண்டு,
தங்கள் மஞ்சங்களின்மேல் செல்வமாய்ச் சய
னித்து, மந்தையில் இருக்கிற ஆட்டுக்குட்டியை
யும், மாட்டுக்கொட்டிலிலே கொழுத்துப்போன
௫ கன்றுக்குட்டிகளையும் தின்று,—தம்புருவை வாசி
த்துப் பாடி, தாவீதைப்போலக் கீதவாத்தியங்க
௬ ளைத் தங்களுக்கு உண்டுபண்ணி.—கலங்களில்
மதுபானத்தைக்குடித்து, மேல்தரமான பரிமள
தைலங்களைப் பூசிக்கொண்டு, யோசேப்புடைய
நொறுங்குதலுக்குக் கவலைப்படாதேபோகிறார்
கள்
௭ ஆகையால் இனிச் சிறையிருப்புக்குப் போ
கிற முதல் தண்டிலே போவார்கள்; இப்படியே
செல்வமாய்ச் சயனித்தவர்களின் விருந்துண்கு
தல் நின்றுபோகும்.
௮ நாம் யாக்கோபுடைய முக்கியத்தை அருவருத்
து, அவனுடைய அரண்மனைகளைப் பகைக்கி
றோம்; நாம் பட்டணத்தையும் அதின் நிறைவை
யும் ஒப்புக்கொடுத்துவிடுவோமென்று கர்த்தரா
கிய ஆண்டவர் தம்முடைய சீவனைக்கொண்டு
ஆணையிட்டாரென்பதைச் சேனைகளின் பராபர
௯ னாகிய கர்த்தர் சொல்லுகிறார். — சம்பவிப்பதே
தென்றால், ஒரு வீட்டிலே பத்துமனுஷர் மீதியா
௰ யிருந்தாலும் அவர்கள் சாவார்கள். — அவர்களு
டைய உறவின்முறையானவது, இழவாளியா
வது, எலும்புகளை வீட்டிலிருந்து வெளியே
கொண்டுபோகும்படிக்கு அவைகளை எடுத்து,
வீட்டின் பக்கங்களுக்குள் இருக்கிறவனை, உன்
கிட்ட இன்னம் உண்டோவென்று கேட்பான்;
அவன் இல்லையென்பான்; அப்போது இவன்,
நீ மௌனமாயிரு; ஏனெனில் கர்த்தருடைய நா
மத்தைப் பிரஸ்தாபம்பண்ண இடமில்லையென்
று சொல்லுவான்.
௰௧ அதேனெனில் இதோ, கர்த்தர் தீர்மானிக்கிற
கட்டளை யென்னவென்றால், பெரியவீட்டைத்
திறப்புகள் உண்டாகவும் சிறியவீட்டை வெ
டிப்புகள் உண்டாகவும் அடிப்பார்.
௰௨ கல்மலையிலே குதிரைகள் ஓடுமோ? அங்கே
ஒருவன் மாடுகளால் உழுவானோ? [2]நியாயத்தைப்
பிச்சாகவும் நீதியின்கனியை எட்டியாகவும் மாற்
௰௩ றினீர்கள்.—நாங்கள் எங்கள் பலத்தினாலே எங்
களுக்குக் கொம்புகளைச் சவதரித்ததில்லையோ
என்று சொல்லி, காரியமில்லாமல் மகிழுகிறார்
௰௪ கள்.--ஏனெனில் இஸ்ரவேல்வீட்டாரே, இதோ,
ஆமாத்துக்குள்ப் பிரவேசிக்கிற வழிதுவக்கிச்
சமனான நாட்டின் ஆறுமட்டாக உங்களை இறு
கப்பிடிக்கும் சாதியை நாம் உங்களுக்கு விரோத
மாக எழுப்புவோமென்று சேனைகளின் பராபர
னாகிய கர்த்தர் சொல்லுகிறார்.

## ௭. அதிகாரம்.

௧. வெட்டுக்கிளிகளினாலும், ௪. அக்கினியினாலும் உண்டாகிய நியாயத்தீர்ப்புகள் ஆமோசின் செபத்தினாலே நீங்கினது. ௭. தூக்குநூற் பிரமாணமாய்க் கட்டப்பட்ட மதிலினால் இஸ்ரவேலர் தள்ளுண்டுபோவதைக் குறித்தது. ௰. அமத்சியா ஆமோசைக்குறித்து முறையிட்டது. ௰௪. ஆமோஸ் தன அழைப்பைக் காட்டினது. ௰௬. அமத்சியாவுக்கு வரும் நியாயத்தீர்ப்பு.

கர்த்தராகிய ஆண்டவர் எனக்குக் காண்பித்ததா ௧
வது: இதோ, இரண்டாம் கந்தாயத்துப் புல்
ஓங்கத்துவக்குகையில் அவர் கிளிகளை உருவாக்
கினார்; இது இராசாவினுடைய புல்லறுப்புக்குப்
பிற்பாடு இரண்டாம் கந்தாயத்துப் புல்லாயிருந்
தது.—அப்போது சம்பவித்ததேதெனில், அவை ௨
கள தேசத்தின் புல்லைத்தின்று தீருகிறபோது,
நான், கர்த்தராகிய ஆண்டவரே, மன்னியுமேன்,
யாக்கோபு திரும்ப எழுந்திருப்பதெப்படி? ஏனெ
னில் அவன் சிறுகிப்போனவன் என்றேன்.—
கர்த்தர் அதற்கு மனஸ்தாபப்பட்டு, [3]அப்படி ௩
ஆவதில்லையென்றார்.
காத்தராகிய ஆண்டவர் எனக்குக் காண்பித்ததா ௪
வது: இதோ, அக்கினியாலே நியாயம் விசாரிப்
போமென்று கர்த்தராகிய ஆண்டவர் கூப்பிட்
டார்; அது பெரிய ஆழத்தைப் பட்சிக்கவந்து,
அதில் ஒருபங்கைப் பட்சித்துத்தீர்ந்தது. — அப் ௫
போது நான், [4]கர்த்தராகிய ஆண்டவரே, நிறுத்
துமேன்; யாக்கோபு திரும்ப எழுந்திருப்பதெப்
படி? ஏனெனில் அவன் சிறுகிப்போனவன் என்
றேன்—கர்த்தர் அதற்கு மனஸ்தாபப்பட்டு, அப் ௬
படியும் ஆவதில்லையென்றார்.
அவர் எனக்குக் காண்பித்ததாவது: இதோ, ௭
தூக்குநூல்ப் பிரமாணமாய்க் கட்டப்பட்ட ஒரு
மதிலின்மேல் நின்றார்; அவர் கையில் தூக்குநூல்
இருந்தது.—கர்த்தர் என்னுடனே, ஆமோசே, நீ ௮
என்ன காண்கிறாயென்றார்; தூக்குநூலையென்
றேன்; அப்போது ஆண்டவர் சொன்னதாவது:
இதோ, இஸ்ரவேலென்ற நமது சனத்தின் நடு
வாகத் தூக்குநூலை விடுவோம்; இனி அவர்களை
மன்னியோம்.—ஈசாக்கின் மேடைகள் பாழும், ௯
இஸ்ரவேலின் சுத்தஸ்தலங்கள் அவாந்தரையு
மாக்கப்படும்; நாம் எரோபேயாம் வீட்டாருக்கு
விரோதமாகப் பட்டையத்தோடே எழும்பிவரு
வோம் என்றார்.
ஆனால் பேத்தேலில் ஆசாரியனான அமத்சியா ௰
இஸ்ரவேலின் இராசாவாகிய எரோபேயாமுக்
குச் சொல்லி அனுப்பினதாவது: ஆமோஸ் இஸ்ர
வேல்வீட்டாரின் நடுவிலே உமக்கு விரோதமாக
ஒப்பந்தம்பண்ணுகிறான்; தேசம் அவன் வார்த்
தைகளை எல்லாம் தாங்கமாட்டாது.—ஏனெனில் ௰௧
எரோபேயாம் பட்டையத்தினாலே சாவானென்
றும், இஸ்ரவேல் தன் சீமையிலிருந்து சிறை
யிருப்பாகக் கொண்டுபோகப்படுமென்றும் ஆ
மோஸ்சொல்லுகிறானென்று சொல்லி அனுப்பி,

1 ஆமோ. ௩. ௰௫.—2 ஆமோ. ௫. ௭.

3 ௨ மோ. ௩௨. ௰௪.—4 ௪ மோ. ௰௪. ௨.

௰௨ பிற்பாடு ஆமோசோடே அமத்சியா சொன்ன
தாவது: தரிசனம்பார்க்கிறவனே, போ; நீ யூதா
தேசத்துக்கு ஓடி, அங்கே அப்பம் தின்று, அங்கே
௰௩ தீர்க்கதரிசனம் சொல்லு.—பேத்தேலிலே இனித்
தீர்க்கதரிசனம் சொல்லாயாக; ஏனெனில் இது
இராசாவின் பரிசுத்தஸ்தலமும் இராச்சியத்தின்
அரண்மனையுமானதென்றான்.

௰௪ ஆமோஸ் அமத்சியாவுக்குப்பிரதியுத்தாரமாகச்
சொன்னதாவது: நான் தீர்க்கதரிசியுமல்ல, நான்
தீர்க்தரிசியின் மகனுமல்ல, நான் மந்தைமேய்க்
கிறவனும், காட்டத்திப்பழங்களைப் பொறுக்கு
௰௫ கிறவனுமாய் இருந்தேன்.—ஆனால் மந்தையின்
பிறகே போகிற என்னைக் கர்த்தர் அழைத்து, கர்த்
தர் என்னுடனே, நீ போய், நமது சனமாகிய இஸ்
ரவேலுக்கு விரோதமாகத் தீர்க்கதரிசனம் சொல்
௰௬ லென்றார். — இப்போதும் கர்த்தருடைய வார்த்
தையைக் கேள்; இஸ்ரவேலுக்கு விரோதமாகத்
தீர்க்கதரிசனம் சொல்லாமலும், ஈசாக்கின் வீட்
டாருக்கு விரோதமாகச் [1]சொரியாமலும் இருப்
௰௭ பாயாகவென்று சொல்லுகிறாயே.—ஆகையால்
கர்த்தர் சொல்லுகிறதாவது: உன் பெண்சாதி
ஊரிலே வேசியாவாள்; உன் குமாரரும் உன்
குமாரத்திகளும் பட்டையத்தால் விழுவார்கள்;
உன் வயல் அளவுநூலால் பங்கிட்டுக்கொள்
ளப்படும்; நீயோவெனில் அசுத்தச் சீமையிலே
செத்துப்போவாய்; இஸ்ரவேலும், தன் சீமையி
லிருந்து சிறையிருப்பிலே கொண்டுபோகப்படு
மென்று சொல்லுகிறார் என்றான்.

## ௮. அதிகாரம்.

௧. கூடையில் நிறைந்த கனியினாலே இஸ்ரவேலருடைய முடிவின் சமீபத்தைக் காட்டினது. ௪. ஒடுக்குதல் கண்டிக்கப்பட்டது. ௰௧. வசனத்தின பஞ்சம் வருமென்று பயமுறுத்தினது.

௧ கர்த்தராகிய ஆண்டவர் எனக்குக் காண்பித்ததா
வது: இதோ, அறுத்த கனிகளுள்ள ஒரு கூண்டு
௨ இருந்தது. — அவர், ஆமோசே, நீ என்ன காண்
கிறாயென்றார்; அறுத்த கனிகளுள்ள ஒரு கூண்
டையென்றேன்; அப்போது கர்த்தர் என்னுட
னே சொன்னதாவது: நம்முடைய சனமாகிய
இஸ்ரவேலின்மேல் முடிவுவருகிறது; [2]இனி
௩ அவர்களை மன்னியோம்.—அந்நாளிலே தெய்வா
லயப்பாட்டுகள் அலறுதலாகும்; எல்லா இடத்தி
லும் திரள் பிரேதங்கள் மௌனமாய் எறிந்துவி
டப்படுமென்று கர்த்தராகிய ஆண்டவர் சொல்
லுகிறார்.

௪ [3]தேசத்தில் சிறுமைப்பட்டவர்களை ஒழியப்
௫ பண்ண, எளியவர்களை விழுங்கி, — நாங்கள்
மரக்காலைக் குறைத்து, சேக்கல் நிறையை அதி
கமாக்கி, கபட்டுத்தராசினால் வஞ்சனைபண்ணி,
தரித்திரரைப் பணத்துக்கும், [4]எளியவர்களை ஒரு
பாதரட்சைச் சோட்டுக்கும் கொள்ளும்படிக்
கும், தானியத்தின் பதரை விற்கும்படிக்கும்,—
௬ மாதப்பிறப்ப நாங்கள் தவசம் விற்கத்தக்கதாக
வும், ஓய்வுநாள் நாங்கள் தானியத்தின் பண்டக
சாலைகளைத் திறக்கத்தக்கதாகவும் எப்போது கழி
ந்துபோமென்று சொல்லுகிறவர்களே, இதைக்
கேளுங்கள்.—அவர்கள் செய்கைகளை எல்லாம் ௭
நாம் என்றென்றைக்கும் மறப்பதில்லையென்று
கர்த்தர் யாக்கோபுடைய மகிமையின்பேரிலே
ஆணையிட்டார்.—இதின்நிமித்தம் தேசம் அதிர ௮
வும், அதின் குடிகள் எல்லாம் துக்கிக்கவும், [5]எங்
கும் நதிகளாய்ப் புரண்டோடவும், எகிப்துவி
னுடைய ஆற்று வெள்ளத்தைப்போல அடித்து
வெள்ளக்காடாகவும் வேண்டாமோ?—அந்நாளி ௯
லே சம்பவிப்பதேதென்றால், [6]நாம் மத்தியானத்
திலே சூரியனை அஸ்தமிக்கப்பண்ணி, பட்டப்
பகலிலே தேசத்தை அந்தகாரப்படுத்தி,—உங்கள் ௰
பண்டிகைகளைத் துக்கிப்பாகவும், உங்கள் பாட்
டுகளை எல்லாம் புலம்பலாகவும் மாறப்பண்ணி,
சகல அரைகளிலும் இரட்டையும், சகல தலைக
ளிலும் மொட்டையையும் வருவித்து, அவர்களு
டைய துக்கிப்பை [7]ஒரே பிள்ளைக்காகத் துக்கிக்
கிறதற்குச் சமானமாக்கி, அவர்களுடைய முடி
வைக் கசப்பான நாளாக்குவோமென்று கர்த்தரா
கிய ஆண்டவர் சொல்லுகிறார்.

இதோ, அப்பத்தின்பேரிலுள்ள பசியை அல்ல, ௰௧
தண்ணீரின்பேரிலுள்ள தாகத்தையும் அல்ல,
[8]கர்த்தருடைய வசனங்களைக் கேட்கப் பசியுண்
டாயிருக்கிற பஞ்சத்தை நாம் தேசத்திலே அனுப்
பும் நாள்கள் வருமென்று கர்த்தராகிய ஆண்டவர்
சொல்லுகிறார்.—அப்போது அவர்கள் கர்த்தரு ௰௨
டைய வசனத்தைத் தேட ஒரு சமுத்திரந்துவக்கி
மற்றச் சமுத்திரமட்டுக்கும், வடக்குத்துவக்கிக்
கிழக்குமட்டுக்கும் அலைந்து திரிந்தும் அதைக்
கண்டுபிடியாதே போவார்கள்.—தாணில் இருக் ௰௩
கிற உன் தேவனின் சீவனைக்கொண்டென்றும்,
பேர்சேபா மார்க்கத்துத் தேவனின் சீவனைக்
கொண்டென்றும் சொல்லி, — சமாரியாவினு ௰௪
டைய தோஷத்தின்பேரிலே ஆணையிடுகிற சௌ
ந்தரியமுள்ள கன்னியாஸ்திரிகளும் வாலிபரும்
அக்காலத்தில் தாகத்தாலே தொய்ந்துபோய்,
இனி, எழுந்திருக்காதபடியாக விழுவார்கள்
என்றார்.

## ௯. அதிகாரம்.

௧. பாழ்க்கடிப்பின் நிச்சயம். ௰௧. தாவீதின் கூடாரத்தைத் திரும்பத் தோப்பது.

ஆண்டவரைப் பலிபீடத்தின்மேல் நிற்கக்கண் ௧
டேன்; அவர் சொன்னதாவது: நீ வாசல்நிலை
கள் அசையும்படிக்குச் சிகரத்தை அடித்து,
அவைகளை அவர்கள் எல்லாருடைய தலையின்
மேலும் விழ உடைத்துப்போடு; அவர்களுக்குப்
பின்னாக மீந்தவர்களையோவென்றால் நாம் பட்
டையத்தாலே கொன்றுபோடுவோம்; அவர்க
ளில் ஓடுகிறவன் ஓடிப்போவதுமில்லை; அவர்க
ளில் தப்புகிறவன் தப்பிப்போவதுமில்லை.—

1 மீகா ௨. ௬.
2 ஆமோ. ௭. ௮.
3 ஆமோ. ௨. ௭.
4 ஆமோ. ௨. ௬.

5 ஆமோ. ௯. ௫.
6 எரே. ௰௫. ௯.
7 எரே. ௬. ௨௬.
8 ௧ சாமு. ௩. ௧.

௨ [1]அவர்கள் பாதாளத்திலே தோண்டிப் பதுங்கிக்
கொண்டாலும், நம்முடைய கை அவ்விடத்திலி
ருந்து அவர்களைப் பிடித்துக்கொண்டுவரும்;
அவர்கள் ஆகாசபரியந்தம் ஏறினாலும், அவ்விடத்
திலிருந்து அவர்களை இறங்கப்பண்ணுவோம்.—
௩ அவர்கள் கர்மேலின் கொடுமுடியிலே ஒளித்துக்
கொண்டாலும், அங்கே அவர்களைத் தேடிப்பி
டிப்போம்; அவர்கள் நம்முடைய கண்களுக்குச்
சமுத்திரத்தின் ஆழத்திலே மறைந்துக்கொண்
டாலும் அங்கே அவர்களைக் கடிக்கப் பாம்புக
௪ ளுக்குக் கற்பிப்போம். — அவர்கள் தங்கள் சத்
துருவுக்குமுன்பாகச் சிறையிருப்பிலே போனா
லும், அங்கே அவர்களைக் கொன்றுபோட நாம்
பட்டயத்துக்குக் கற்பித்து, [2]நமது கண்களை
அவர்கள்மேல் நன்மைக்கல்ல, தின்மைக்கென்
றே வைப்போம்.

௫ சேனைகளின் கர்த்தராகிய ஆண்டவர் தேசத்
தைத் தொடவே உருகிப்போகும்; அப்போது
அதின் குடிகளெல்லாம்துக்கிப்பார்கள்; [3]எங்கும்
நதியாய்ப் புரண்டோடி, எகிப்தினுடைய ஆற்
றின் வெள்ளத்தைப்போல வெள்ளக்காடாகும்.-
௬ அவர் பரமண்டலத்தில் தமது ஆசனப்படிகளைக்
கட்டி, பூமியின்மேல் இருக்கிற தமது கூட்டத்
தை அஸ்திபாரப்படுத்தினவர்; [4]அவர் சமுத்திரத்
தின் தண்ணீர்களை அழைத்து அவைகளைப் பூமி
யினுடைய விசாலத்தின்மேல் ஊற்றுகிறவர்; கர்த்
தரென்பது அவருடைய நாமம்.

௭ இஸ்ரவேல் புத்திரரே, நீங்கள் நமக்கு எத்தி
யோப்பியரின் புத்திரருக்குச் சரியானவர்களல்
லவோ என்று கர்த்தர் சொல்லுகிறார்; நாம் இஸ்ர
வேலை எகிப்துதேசத்திலும், பெலிஸ்தியரை [5]கப்
தோரிலும், சூரியரை கீரிலுமிருந்து ஏறிவரப்
௮ பண்ணினதில்லையோ? — இதோ, கர்த்தராகிய
ஆண்டவரின் கண்கள் பாவ இராச்சியத்துக்கு
விரோதமாக வைக்கப்பட்டிருக்கிறது; அதைப்
பூமியின்மேல் இராதபடிக்கு அழித்துப்போடு
வோம்; ஆகிலும் யாக்கோபின் வீட்டை நாம்
முழுவதும் அழித்துப்போடுவதில்லை என்று கர்த்
தர் சொல்லுகிறார்.—அதேனெனில் [6]இதோ, சல் ௯
லடையினாலே சலித்தரிக்கிறதுபோலே இஸ்ர
வேல் வீட்டாரை எல்லாச் சாதிகளுக்குள்ளும்
சலித்தரிக்கும்படிக்கு நாம் கட்டளையிடுவோம்;
ஆனால் ஒரு கோதுமைமணியும் தரையிலே விழு
வதில்லை.—தீங்கு எங்களைப் பிடிப்பதுமில்லை; ௰
எங்களுக்கு நேரிடுவதுமில்லையென்று நமது
சனத்தில் சொல்லுகிற பாவிகளெல்லாரும் பட்
டையத்தினாலே சாவார்கள்.

ஏதோமில் [7]மீதியானவர்களையும், நம்முடைய ௰௧
நாமம் விளங்கிய சகல சாதிகளையும் வசமாக்கிக்
கொள்ளும்படிக்கு,—அந்நாளிலே நாம் விழுந்த ௰௨
தாகிய தாவீதின் கூடாரத்தைத் திரும்ப எடுத்து,
அவர்களுடைய திறப்புகளை அடைத்து, அதில்
இடிந்துபோனதை எடுப்பித்து, பூர்வநாட்களில்
இருந்ததுபோல அதைக் கட்டுவோமென்று இ
தைச் செய்கிற கர்த்தர் சொல்லுகிறார்.—இதோ, ௰௩
உழுகிறவன் அறுக்கிறவனையும், திராட்சப்பழங்
களைஆலையாடுகிறவன் விதைக்கிறவனையும்சேரு
கிறதும், [8]திராட்சப்பழஇரசமாய்ப் பர்வதங்கள்
வடிகிறதும் மேடுகள் எல்லாம் கரைகிறதுமான
நாட்கள் வருமென்று கர்த்தர் சொல்லுகிறார்.—
அதேனெனில் [9]நமது சனமாகிய இஸ்ரவேலின் ௰௪
சிறையிருப்பைத் திருப்புவோம்; அவர்கள் பா
ழான பட்டணங்களைக் கட்டி அவைகளில் குடி
யிருந்து, [10]திராட்சத்தோட்டங்களை நாட்டி, அ
வைகளுடைய பழங்களின் இரசத்தைக்குடித்து,
தோட்டங்களை உண்டாக்கி, அவைகளின் கனி
களைப் புசிப்பார்கள்.—அவர்களை அவர்கள் சீமை ௰௫
யிலே நாட்டுவோம்; அவர்கள் நாம் தங்களுக்குக்
கொடுத்த தங்கள் சீமையிலிருந்து இனிப் பிடுங்
கப்படுவதில்லையென்று உன் பராபரனாகிய கர்த்
தர் சொல்லுகிறார் என்றார்.

1 சங். ௱௩௯. ௮.—2 எரே. ௪௪. ௰௧. 5 எரே. ௪௭. ௪.—6 லூக். ௨௨. ௩௧.
3 ஆமோ. ௮. ௮.—4 ஆமோ. ௫. ௮. 7 அப். ௰௫. ௰௬, ௰௭.—8 யோவே.
௩. ௰௮.—9 ௫ மோ. ௩௰. ௩. எரே. எசே. ௨௮. ௨௫. சகரி. ௮. ௰௨.
௨௧. ௰௪.—10 ஏசா. ௬௫. ௨௧.

OBADIAH.

# ஒபதியாவின் தீர்க்கதரிசனம்.

௧. ஏதோமியருடைய மேட்டிமைக்காகவும், ௰. அவர்கள் யாக்கோபுக்குச் செய்த பிழைக்காகவும் வரும் அழிவு. ௰௭. யாக்கோபினுடைய இரட்சண்ணியமும், செயமும்.

௧ ஒபதியாவின் தரிசனம்; கர்த்தராகிய ஆண்டவர்
ஏதோமைக்குறித்துச் சொன்னதென்னவென்று
ல், எழும்புங்கள்; அதற்கு விரோதமாக யுத்தம்ப
ண்ண எழும்புவோம் வாருங்களென்று சொல்ல
[1]தானுபதி சாதிகளிடத்தில் அனுப்பப்படும்செய்
௨ தியைக் கர்த்தர் சொல்லக்கேட்டோம்.–இதோ,
உன்னைச் சாதிகளில் சிறுகப்பண்ணுகிறோம்; நீ
மெத்தவும் அசட்டை பண்ணப்பட்டிருப்பாய்.
௩ கல்மலை வெடிப்புகளாகிய உன் உயர்ந்த நிலையி
லே குடியிருந்து, என்னைத் தரையிலே விழத்தள்
ளுபவன் யாரென்று உன் இருதயத்திலே சொல்
லுகிறவனே, உன் இருதயத்தின் அகந்தை உன்
௪ னை மோசம்போக்குகிறது.—[2]நீ கழுகைப்போல
உயர்ந்துபோனாலும், நீ நட்சத்திரங்களுக்குள்
ளே உன் கூட்டைக் கட்டினாலும், அவ்விடத்தி
லிருந்து உன்னை விழத்தள்ளுவேனென்று கர்த்
௫ தர் சொல்லுகிறார்.—எத்தனையாய்ச் சங்காரமா
வாய்? திருடராகிலும் இராத்திரியிலே பாழ்க்க
டிக்கிறவர்களாகிலும் உன்னிடத்திலே வந்தார்க
ளாகில், தங்களுக்குப் போதுமென்றமட்டுமல்
லோ திருடுவார்கள்? திராட்சப்பழங்களை அறுக்
கிறவர்கள் உன்னிடத்திலே வந்தார்களாகில்,
௬ பின்னறுப்பைக் கொஞ்சம் வையார்களோ?—ஏ
சாவினுடையவைகள் எத்தனையாய்த் திறப்பாக்
கப்படும்? அவனுடைய அந்தரங்கப் பொக்கி
ஷங்கள் எத்தனையாய் ஆராய்ந்தெடுக்கப்படும்?–
௭ உன்னோடு உடம்படிக்கையாயிருந்த எல்லா
மனுஷரும் உன்னை எல்லைமட்டும் வழிவிட்ட
னுப்புவார்கள்; உன்னோடே சமாதானமாயி
ருந்த மனுஷர் உன்னை மோசம்போக்குவார்கள்;
உன்னை மேற்கொள்ளுவார்கள்; உன் அப்பத்
தைச்சாப்பிட்டு, நீ சேதப்படக் கீழே எத்தனம்
வைப்பார்கள்; அவனுக்கு உணர்வில்லை.
௮ அந்நாளிலே அல்லோ [3]நாம் ஏதோமிலே ஞா
னிகளையும், ஏசாவின் பர்வதத்திலே உணர்வை
யும் அழிப்போமென்று கர்த்தர் சொல்லுகிறார்.—
௯ தேமானே, ஏசாவின் பர்வதத்தில் மனுஷர் கொ
லையினால் சங்கரிக்கப்படும்படிக்கு உன் பராக்
கிரமசாலிகள் கலங்குவார்கள்.
௰ [4]நீ உன் சகோதரனாகிய யாக்கோபுக்குச் செய்த
கொடுமையின்நிமித்தம் வெட்கம் உன்னை
மூடும்; நீ என்றென்றைக்கும் சங்கரிக்கப்பட்டி
௰௧ ருப்பாய்.–நீ எதிரே நிற்கிற நாளிலும், அன்னியர்
அவன் சேனையைச் சிறைபிடித்துப்போகிற நா
ளிலும், மறுதேசத்தார் அவன் வாசல்களுக்குள்ப்
பிரவேசித்து எருசலேமின்பேரிலே சீட்டுபோ
டுகையில், நீயும் அவர்களில் ஒருவனைப்போல
இருந்தாய்.
நீ, உன் சகோதரன் அன்னியர் வசமான நாளா ௰௨
கிய அவனுடைய நாளைப் பிரியத்தோடே பாரா
மலும், யூதாபுத்திரருடைய அழிவின் நாளிலே
அவர்கள்நிமித்தம் சந்தோஷப்படாமலும், அவர்
கள் நெருக்கப்படுகிறநாளிலே உன் வாயை
விஸ்தாரமாக்காமலும் இருக்கவேண்டியதாயிருந்
தது.—நீ நமது சனத்தின் ஆபத்துநாளிலே அவர் ௰௩
கள் வாசல்களுக்குள்ப் பிரவேசியாமலும், அதின்
ஆபத்து நாளிலே அது அநுபவிக்கிற தீங்கை
நீயும் கூடப் பிரியத்தோடே பாராமலும், அதின்
ஆபத்துநாளிலே அதின் ஆஸ்தியில் கைபோடா
மலும்,—அதில் தப்பினவர்களைச் சங்கரிக்கும் ௰௪
படிக்கு வழிப்பிரிவுகளிலே நிற்காமலும், இக்க
ட்டுநாளிலே அதில் மீதியானவர்களைக் காட்டிக்
கொடாமலும் இருக்கவேண்டியதாயிருந்தது.
ஏனெனில் எல்லாச்சாதிகளுக்கும் விரோதமா ௰௫
ன கர்த்தருடைய நாள் சமீபமாயிருக்கிறது; [5]நீ செ
ய்தபடியே உனக்குச் செய்யப்படும்; உன் செய்
கையின் பலன் உன் தலையின்மேல் திரும்பும்.–
அதேனெனில் நீங்கள் நமது பரிசுத்த பர்வதத்தின் ௰௬
மேல் குடித்தபடியே எல்லாச் சாதிகளும் எப்
போதும் குடிப்பார்கள்; அவர்கள் குடித்து விழுங்
கி, இல்லாதிருந்தவர்களைப்போல இருப்பார்கள்.
ஆனால் சீயோன்பர்வதத்திலே தப்பியிருப்பார் ௰௭
உண்டு; அவர்கள் பரிசுத்தமாயிருப்பார்கள்; யாக்
கோபின் வீட்டார் தங்களுடைய சுதந்தரங்க
ளைச் சுதந்தரித்துக்கொள்ளுவார்கள்.—யாக்கோ ௰௮
பின்வீட்டார் அக்கினியும், யோசேப்பின் வீட்
டார் அக்கினிச்சுவாலையும், ஏசாவின் வீட்டா
ரோ வைக்கோல்த்துரும்புமாயிருப்பார்கள்; அ
வர்கள் இவர்களைக் கொளுத்தி, ஏசாவின் வீட்
டில் மீதிஇராதபடிக்கு இவர்களைப் பட்சிப்பார்
கள்; ஏனெனில் கர்த்தர் இதைச் சொன்னார்.—
தெற்குச்சீமையார் ஏசாவின் பர்வதத்தையும், ௰௯
பள்ளத்தாக்குச் சீமையார் பெலிஸ்தியரின் தேசத்
தையும் சுதந்தரித்துக்கொள்ளுவார்கள்; அவர்கள்
எப்பிராயீமின் நாட்டையும், சமாரியாவின் நாட்
டையும், பென்யமீன் மனுஷரோவெனில் கீலே
யாத்தையும் சுதந்தரித்துக்கொள்ளுவார்கள்.—சர் ௨௰
பாத்மட்டும் கானானியருக்குள்ளே சிறைபட்டுப்
போன இஸ்ரவேல் புத்திரராகிய இந்தச் சேனை
யும், சேப்பாராத்தில் சிறைபட்டுப்போன எருச
லேம்பட்டணத்தாரும் தெற்கத்திப்பட்டணங்
களைச் சுதந்தரித்துக்கொள்ளுவார்கள்.-ஏசாவின் ௨௧
பர்வதத்தை நியாயந்தீர்ப்பதற்காக இரட்சகர்
கள் சீயோன்பர்வதத்தில் வந்தேறுவார்கள்; [6]அப்
போது இராச்சியம் கர்த்தருடையதாயிருக்கும்.

---

1 எரே. ௪௯. ௰௪.–2 எரே. ௪௯. ௰௬–3 எரே. ௪௯. ௭.–4 ஏசே. ௨௫ ௰௨–௰௪.
ஆமோ. ௧. ௰௧, ௰௨.—5 வெளி. ௰௩. ௰.—6 சங் ௨௨. ௨௮. மீகா. ௪. ௭.

# JONAH.

# யோனாவின் தீர்க்கதரிசனம்.

## க. அதிகாரம்.

க. யோனா நினிவேக்கு அனுப்பப்பட்டது. தர்சீசுக்கு ஓடிப்போனது. ௪. அவன் பெருங்காற்றில் அகப்பட்டு, ௰௫. கடலில் எறியுண்டது.

௧ ஆமித்தாயின் குமாரனாகிய [1]யோனாவுக்குக்
கர்த்தருடைய வார்த்தை உண்டாகி, அவர் சொன்
௨ னதாவது:—நீ எழுந்திருந்து பெரியபட்டணமா
கிய நினிவேக்குப்போய், அதற்கு விரோதமாகப்
பிரசங்கி; ஏனென்றால் அவர்களுடைய பொல்
லாப்பு நமக்குமுன்பாக ஏறிவந்தது என்றார்.—
௩ அப்போது யோனா கர்த்தருடைய முகத்துக்கு
விலகி, தர்சீசுக்கு ஓடிப்போகும்படிக்கு எழுந்தி
ருந்து, [2]யோப்பேக்கு இறங்கிப்போய், தர்சீசுக்
குப் போகிற கப்பலைக் கண்டுபிடித்து, தலைக்
கூலி கொடுத்துத் தான் கர்த்தருடைய முகத்
துக்கு விலக, அவர்களோடேகூடத் தர்சீசுக்குப்
போகும்படிக்கு அதில் ஏறினான்.
௪ [3]ஆனால் கர்த்தர் சமுத்திரத்தின்மேல் பெருங்
காற்றை வரவிட்டார்; அதினால் கடலிலே, கப்
பல் உடையுமென்று நினைக்கத்தக்கதான கன
௫ கொந்தளிப்பு உண்டாயிற்று.—அப்போது கப்ப
லாள்கள் பயந்து, அவரவர் தன்தன் தேவனை
நோக்கிக் கூப்பிட்டு, கப்பலில் இருந்த தட்டு
முட்டுகளின் பாரம் அற்றுப்போகிறதினாலே அ
தை இலேசாக்கும்படிக்கு, அவைகளைச் சமுத்தி
ரத்தில் எறிந்துவிட்டார்கள்; யோனாவோவென்
றால், கப்பலின் கீழ்த்தட்டில் இறங்கிப் படுத்துக்
கொண்டு, அசந்த நித்திரைபண்ணியிருந்தான்.
௬ அப்போது பெரிய மாலுமி அவனண்டைக்
குச் சேர்ந்துவந்து அவனுடனே, நீ நித்திரைபண்
ணிக் கிடக்கிறதேது? எழுந்திருந்து உன் தேவனை
நோக்கிக் கூப்பிடு; நாம் கெட்டுப்போகாதபடிக்
குச் சுவாமி ஒருவேளை நம்மைத் தயவாய் நினைப்
௭ பாராக்கும் என்றான்.—அவர்கள் ஒருவரோடொ
ருவர், யார்நிமித்தம் இந்தப் பொல்லாப்பு நமக்கு
வருகிறதென்று நாம் அறியும்படிக்குச் சீட்டுக
ளைப் போடுவோம் வாருங்களென்று சொல்லிக்
கொண்டு சீட்டுகளைப்போட்டார்கள்; அப்போ
து யோனாவின்பேருக்குச் சீட்டு விழுந்தது.
௮ அப்போது அவர்கள் இவனோடே, யார்
நிமித்தம் இந்தப் பொல்லாப்பு நமக்கு வருகிற
தென்று நீ எங்களுக்கு அறிவியேன்; உன் தொ
ழிலென்ன? நீ எங்கேயிருந்து வருகிறாய்? உன்
னுடைய தேசம் எது? நீ எந்தச் சனத்தான் என்று
சொல்லிக்கேட்டார்கள். — அவர்களோடே இ ௯
வன், நான் எபிரேயன்; சமுத்திரத்தையும் பூமி
யையும் உண்டாக்கின பரமண்டலங்களுடைய
பராபரனாகிய கர்த்தருக்கு நான் பயபத்தியான
வன் என்றான். — அப்போது அந்த மனுஷர் ௰
மிகவும் பயந்து அவனுடனே, நீ ஏன் இதைச்
செய்தாய் என்றார்கள்; ஏனெனில் தான் கர்த்தரு
டைய முகத்துக்கு விலகி ஓடிப்போகிறவன்
என்கிறதை அவன் தங்களுக்கு அறிவித்ததினா
லே அந்த மனுஷர் அதை அறிந்தார்கள்.
பின்னையும், சமுத்திரம் நமக்கு அமர்ந்துபோ ௰௧
கும்படிக்கு உனக்கு நாங்கள் செய்யவேண்டிய
தென்ன என்றுஅவனைக்கேட்டார்கள்; ஏனென்
றால் சமுத்திரம் கொந்தளித்துக்கொண்டே இ
ருந்தது. — அப்போது அவன் அவர்களோடே ௰௨
சொன்னதாவது: நீங்கள் என்னை எடுத்துச் சமுத்
திரத்திலே போட்டுவிடுங்கள்; அப்போது சமுத்
திரம் உங்களுக்கு அமர்ந்துபோகும்; ஏனெனில்
என்நிமித்தம் இந்தப் பெரிய கொந்தளிப்பு உங்
கள்மேல் வந்ததென்கிறதை நான் அறிவேன்
என்றான்.
அந்த மனுஷர் கரைக்குத் திரும்பும்படிக்குத் ௰௩
தண்டுவலித்தார்கள்; ஆனால் அவர்களுக்குக் கூ
டாதேபோயிற்று; ஏனெனில் சமுத்திரம் அவர்க
ளுக்கு விரோதமாகக் கொந்தளித்துக்கொண்டே
யிருந்தது.—அப்போது அவர்கள் கர்த்தரை நோக் ௰௪
கிக் கூப்பிட்டுச் சொன்னதாவது: ஆ கர்த்தாவே,
தேவரீர் எங்களை இந்த மனுஷனுடைய சீவனின்
நிமித்தம் கெட்டுப்போகவொட்டாமலும் குற்ற
மில்லாத இரத்தப்பழியை எங்கள்மேல் சுமத்தா
மலும் இருமேன்; ஏனெனில் தேவரீர் கர்த்தர்;
உமக்குச் சித்தமாயிருக்கிறபடியே தேவரீர் செய்
கிறீரென்று சொல்லி, — யோனாவை எடுத்துச் ௰௫
சமுத்திரத்திலே போட்டுவிட்டார்கள்; அப்
போது சமுத்திரம் தன் மும்முரத்தை விட்டு
அமர்ந்தது.— அப்போது அந்த மனுஷர் கர்த்த ௰௬
ருக்கு மிகவும் பயப்பட்டு, கர்த்தருக்குப் பலியி
ட்டுப் பொருத்தனைகளைப்பண்ணினார்கள்.

## உ. அதிகாரம்.

க. யோனா மச்சத்தினால் விழுங்கப்பட்டது. உ. யோனாவின ஜெபம். ௰. மச்சத்துக்குள்ளிருந்து அவன் விடுதலையாக்கப்பட்டது.

ஆனால் யோனாவை விழுங்கப் பெரியமீனைக் ௧
கர்த்தர் கட்டளையிட்டார்; [4]அந்த மீனினுடைய

1 உ இரா. ௰௪.௨௫.—2 அப். ௯. ௩௬.

3 மத். ௮.௨௪.அப். ௨௭.௰௪.—4 மத்.௰௨.௪௰:௰௬.௪. லூக். ௰௧. ௨௯.

வயிற்றிலே யோனா, மூன்றுபகலும் மூன்று இரா
௨ த்திரியும் இருந்தான். — ஆனால் மீனினுடைய
வயிற்றிலிருந்து, யோனா தன் பராபரனாகிய கர்த்
தனைநோக்கி விண்ணப்பம்பண்ணிச் சொன்ன
தாவது:
௩ [1]நான் நெருக்கப்படுகையில் கர்த்தனைநோக்
கிக் கூப்பிட்டேன்; அப்போது எனக்கு உத்த
ரவு அருளிச்செய்தார்; பாதாளத்தின் வயிற்றிலி
ருந்து கூக்குரலிட்டேன்; அப்போது என் சத்
௪ தத்தைக் கேட்டீர். — ஏனெனில் சமுத்திரங்க
ளின் நடுமையமாகிய ஆழத்திலே என்னைத் தள்
ளிவிட்டீர்; நீரோட்டம் என்னைச் சூழ்ந்துகொ
ண்டது; உம்முடைய எல்லா வெள்ளங்களும்
௫ அலைகளும் என்மேல் புரண்டன.—நான் உமது
கண்களுக்கு எதிரே இராதபடிக்குத் தள்ளுண்
டேன்; ஆகிலும் இன்னம் உம்முடைய பரிசுத்த
௬ தேவாலயத்தை நோக்குவேனென்றேன்.—தண்
ணீர்கள் என்னைப் பிராணபரியந்தம் சுற்றிப்பி
டித்தன; ஆழம் என்னைச் சூழ்ந்தது; நாணல் என்
௭ தலையைச் சுற்றிக்கொண்டது.—பர்வதங்களின்
அடிவாரங்கள் பரியந்தமும் இறங்கினேன்; பூமி
யின்தாழ்ப்பாள்கள் என்றென்றைக்கும் என்னை
அடைக்கிறதாயிருந்தது; ஆனால் என் பராபரனா
கிய கர்த்தாவே, என் பிராணனை அழிவுக்குத்
தப்புவித்து ஏறிவரப்பண்ணினீர்.
௮ என் ஆத்துமம் என்னில் தொய்ந்துபோகை
யில் கர்த்தனை நினைத்தேன்; அப்போது என்
விண்ணப்பம் உமது பரிசுத்த தேவாலயத்திலே
௯ உம்மண்டைக்கு வந்து சேர்ந்தது.—பொய்யான
மாயையைக் கைக்கொள்ளுகிறவர்கள் தங்களுக்
கு வரும் கிருபையைப் போக்கடிக்கிறார்கள்.—
௰ [2]நானோவெனில் துதியின் சத்தத்தோடே உமக்
குப் பலியிடுவேன்; நான் பண்ணின பொருத்த
னையைச் செலுத்துவேன்; இரட்சிப்பு கர்த்தரு
௰௧ டையது என்றான்.—ஆனால் கர்த்தர் மீனுக்குச்
சொன்னார்; அப்போது அது யோனாவைக் கரை
யிலே கக்கிப்போட்டது.

## ௩. அதிகாரம்.

௧. யோனா மறுபடியும் அனுப்பப்பட்டு, நினிவேயருக்குப் பிரசங்கித்தது.
௫. அவர்கள் குணப்பட்டபிற்பாடு பராபரன் அவர்கள் ஆக்கினையை
நீக்கினது.

௧ இரண்டாம்விசை கர்த்தருடையவார்த்தையோ
னாவுக்கு உண்டாகி அவர் சொன்னதாவது:—
௨ [3]நீ எழுந்திருந்து பெரிய பட்டணமாகிய நினி
வேக்குப்போய், நாம் உனக்குச் சொல்லும் பிர
சங்கத்தை அதற்கு விரோதமாகப் பிரசங்கி என்
௩ றார்.—அப்போது யோனா எழுந்திருந்து, கர்த்தரு
டைய வார்த்தையின்படியே நினிவேக்குப் போ
னான்; நினிவேயோவென்றால் மூன்றுநாள்ப்
பயண விஸ்தாரமான மிகுதியும் பெரியபட்ட
௪ ணமாயிருந்தது. — யோனா ஒரு நாள்ப்பயணம்
பட்டணத்துக்குள்ப் போகத்துவக்கி; இன்னம்
நாற்பதுநாள் இருக்கிறது, அப்போது நினிவே
புரட்டப்பட்டுப்போம் என்று பிரசங்கித்தான்.
[4]அப்போது நினிவேயின் மனுஷர் பராபரன் ௫
பேரிலே விசுவாசித்து உபவாசத்தைக் கூறி
னார்கள்; பெரியோர்துவக்கிச் சிறியோர்மட்டும்
இரட்டுகளை உடுத்துக்கொண்டார்கள். — இந்த ௬
வர்த்தமானம் நினிவேயின் இராசாவுக்குப்போய்
எட்டினபோது, இவன் தன் இராசாசனத்தை
விட்டு எழுந்திருந்து தான் உடுத்தியிருந்த உடுப்
பை விலக்கிப்போட்டு இரட்டை உடுத்திக்கொ
ண்டு, சாம்பலிலே உளுக்கார்ந்தான்.—இதுவுமல் ௭
லாமல் இராசா, தானும் தன்னுடைய பிரதானி
களும் நிருணயம்பண்ணின கட்டளையாக, நினி
வேயிலே கூறச்சொன்னதாவது: மனுஷரும்
மிருகங்களும் மாடுகளும் ஆடுகளும் ஒன்றும்
உருசிபாராதிருக்கவும், மேயாமலும் தண்ணீர்
குடியாமலும் இருக்கவும், — மனுஷரும் மிரு ௮
கங்களும் இரட்டினால் மூடிக்கொள்ளப்பட்டுப்
பராபரனைநோக்கி வலுவாய்க் கூப்பிடவும்,
அவரவர் தங்கள் பொல்லாத வழியையும் தங்கள்
கைகளிலுள்ள கொடுமையையும்விட்டுத் திரும்
பவுங்கடவது.—நாம் அழிந்துபோகாதபடிக்கு ௯
[5]ஒருவேளை பராபரன் மனஸ்தாபப்பட்டுத் தம்
முடைய கோபத்தின் உக்கிரத்தைவிட்டுத் திரும்
பிக்கொள்ளுவாராக்கும் யாருக்குத் தெரியுமென்
பதைக் கூறச்சொன்னான்.
அவர்கள் தங்கள் பொல்லாத வழியைவிட் ௰
டுத் திரும்பினார்களென்று பராபரன் அவர்களு
டைய கிரியைகளைப்பார்த்து [6]தாம் அவர்களுக்
குச் செய்வோமென்று சொல்லியிருந்த தீங்குக்கு
மனஸ்தாபப்பட்டு, அதைச் செய்யாதிருந்தார்.

## ௪. அதிகாரம்.

௧. யோனா பராபரனுடைய இரக்கத்தைக்குறித்து மனமடிவாகி, ௪. ஆம
ணக்குச்செடியின் அடையாளத்தினாலே தான் கண்டிக்கப்பட்டது.

ஆனால் யோனாவுக்கு இது மிகுதியும் ஆகாத ௧
தாய்க் கண்டது; அவனுக்கு எரிச்சலுண்டாயிற்
று.—அவன் கர்த்தனைநோக்கி விண்ணப்பம்பண் ௨
ணிச் சொன்னதாவது: ஆ கர்த்தாவே, நான் என்
தேசத்தில் இன்னம் இருக்கையில் நான் சொன்
னது இதுதானல்லவோ? ஆகையாலேதானே தர்
சீசுக்கு ஓடிப்போகிறதினால் இதற்கு முந்திக்
கொள்ளப்பார்த்தேன்; ஏனெனில் தேவரீர் [7]இரக்
கமும் மன உருக்கமும் நீடிய சாந்தமும் மிகுந்த
கிருபையுமுள்ளவரும், தீங்குக்கு மனஸ்தாபப்
படுகிறவருமான தேவனென்று அறிவேன். —
[8]இப்போதும் கர்த்தாவே, என் ஆத்துமத்தை என் ௩
னைவிட்டு எடுத்துக்கொள்ளுமேன்; ஏனெனில்
நான் உயிரோடிருக்கிறதைப்பார்க்கிலும் நான்
சாகிறது தாவிளையென்றான்.—அதற்குக் கர்த்தர், ௪
நீ எரிச்சலாயிருக்கிறது நல்லதோ என்றார்.
யோனாவோவென்றால் பட்டணத்திலிருந்து ௫
புறப்பட்டுப் பட்டணத்துக்குக் கிழக்கே உளுக்

1 சங். ௱௨௰. ௧: ௱௪௰௨. ௧.
2 சங். ௫௰. ௰௪: ௱௰௬. ௰௭.
3 யோனா. ௧. ௨.
4 மத். ௰௨. ௪௧.
5 யோவே. ௨. ௰௪. தானி. ௪. ௨௪. ௩௪. ௯.—8 யோபு. ௬. ௯: ௰. ௪.
6 எரே. ௰௮. ௭, ௮.—7 ௨ மோ. எரே. ௨௰. ௰௪.

காந்து, அங்கே தனக்கு ஒரு குடிசையைப்
போட்டு, பட்டணத்துக்குச் சம்பவிக்கப்போ
கிறதைத் தான் பார்க்குமட்டும் அதின்கீழ் நிழ
௬ லிலே உளுக்காந்திருந்தான்.—ஆனால் யோனா
வுடைய தலையின்மேல் நிழலுண்டாயிருக்கவும்,
அவனை அவனுடைய மனமடிவுக்கு நீங்கலாக்க
வும் பராபரனாகிய கர்த்தர் ஒரு ஆமணக்குச்செ
டியை முளைக்கக் கட்டளையிட்டு, அதை அவன்
மேல் ஓங்கிவளரப்பண்ணினார்; அந்த ஆமணக்
கின்பேரிலே யோனா மிகுதியும் சந்தோஷப்பட்
௭ டான்.—ஆனால் மறுநாள் கிழக்கு வெளுக்கும்
நேரத்திலே பராபரன் ஒரு பூச்சியைக் கட்டளை
யிட்டார்; அது ஆமணக்குச்செடியைக் கடித்துப்
போட்டது; அதினாலே காய்ந்துபோயிற்று.—
௮ சூரியன் உதித்தபோது சம்பவித்ததேதென்றால்,
பராபரன் அமைச்சலுள்ள கீழ்க்காற்றைக் கட்
டளையிட்டார்; அப்போது வெய்யில் யோனாவு
டைய தலையில் படுகிறதினால் அவன் தொய்ந்து
போய், [1]தன் சீவனுக்குச் சாவை விரும்பி, நான்
உயிரோடிருக்கிறதைப்பார்க்கிலும் நான் சாகி
றது தாவிளையென்றான்.—அப்போது பராபரன் ௯
யோனாவுடனே, நீ ஆமணக்கின்நிமித்தம் [2]எரிச்
சலாயிருக்கிறது நல்லதோ என்றார்; அதற்கு அ
வன், நான் மரணபரியந்தமும் எரிச்சலாயிருக்
கிறது நல்லதென்றான்.

அப்போது கர்த்தர் சொன்னதாவது: நீ பிரயா ௰
சப்படாததும் பயிராக்காததும் ஒரு இராத்திரியி
லே முளைத்ததும் ஒரு இராத்திரியிலே அழிந்தது
மான ஆமணக்குக்குப் பரதபிக்கிறாயே.—தங் ௰௧
கள் வலதுகைக்கும் தங்கள் இடதுகைக்கும் வித்
தியாசம் அறியாத நூற்றிருபதினாயிரம்பேருக்கு
அதிகமான மனுஷரும் அநேக மிருகசீவன்களும்
இருக்கிற [3]பெரியபட்டணமாகிய நினிவேக்கு
நாம் பரதபிக்காதிருப்போமோ என்றார்.

1 க. வச.—2 ௪. வச.—3 யோனா. ௧. ௨.

MICAH.

# மீகாவின் தீர்க்கதரிசனம்.

## க. அதிகாரம்.

க. மீகா யாக்கோபின் விக்கிரகஆராதனைக்காகப் பராபரனுடைய கோபம் அவன்மேல் வருவதைக் காட்டினது. ௮ துக்கிப்பதற்குத் தூண்டினது.

க யோத்தாம் ஆகாஸ் எசேக்கியா என்ற யூதாவு
டைய இராசாக்களுடைய நாள்களில், [1]மொ
ரேசா ஊரானாகிய மீகாவுக்கு உண்டானதும், அ
வன் சமாரியாவுக்கும் எருசலேமுக்கும் விரோ
தமாய்த் தரிசனமாகக் கண்டதுமான கர்த்தரு
டைய வார்த்தை.
உ [2]சகல சனசதளங்களே, கேளுங்கள்; பூமியே,
அதின் நிறைவே, கவனி; கர்த்தராகிய ஆண்ட
வர் உங்களுக்கு விரோதமாகச் சாட்சிவிளங்கு
வார்; ஆண்டவர் தம்முடைய பரிசுத்ததேவால
௩ யத்திலிருந்துதானே.—ஏனெனில் இதோ, [3]கர்த்
தர் தமது தானத்திலிருந்து புறப்பட்டு இறங்கிப்
௪ பூமியின் உயரங்களை மிதிப்பார்.—அக்கினிக்கு
முன்பாக மெழுகு உருகுகிறதுபோலேயும், மலை
களிலிருந்து பாயுந்தண்ணீர் தரையைக் கிழிக்கி
றதுபோலேயும், [4]அவர்கீழே பர்வதங்கள் உருகி,
பள்ளத்தாக்குகள் கிழிந்துபோகும்.
௫ இது எல்லாம் யாக்கோபுடைய மீறுதலின்
நிமித்தமும், இஸ்ரவேல்வீட்டாருடைய பாவங்
களின்நிமித்தமும் சம்பவிக்கும்; யாக்கோபின்
மீறுதலுக்குக் காரணமேது? சமாரியா அல்ல
வோ? யூதாவின் மேடைகளுக்குக் காரணமேது?
௬ எருசலேம் அல்லவோ?—ஆகையால் நாம் சமா
ரியாவை வெளியான மண்மேடும், திராட்ச நட
வுக்கான நிலமுமாக்கி, அதின் கல்லுகளைப் பள்
ளத்தாக்கிலே புரண்டு விழப்பண்ணி, அதின்
௭ அஸ்திபாரங்களைத் திறந்துவைப்போம்.-அதின்
சுரூபங்கள் எல்லாம் நருக்கப்படும்; அதின்
பணையங்கள் எல்லாம் அக்கினியால் எரித்துப்
போடப்படும்; அதின் விக்கிரகங்களை எல்லாம்
பாழாக்குவோம்; ஏனெனில் வேசிப்பணையத்தி
னால் சேர்க்கப்பட்டது திரும்ப வேசிப்பணைய
முமாய்ப்போகும்.
௮ இதின்நிமித்தம் நான் புலம்பி அலறுவேன்;
பறிகொடுத்தவனாகவும் அம்மணமாகவும் நடப்
பேன்; நான் வலுவான சர்ப்பங்களைப்போலப்
புலம்பலையும், தீவுக்குருவிகளைப்போலத் துக்
௯ கிப்பையும் கேட்கப்பண்ணுவேன்.—ஏனெனில்
அதின் காயம் ஆறாததாயிருக்கிறது; அதேனெ
னில் யூதாமட்டும் வந்தது; என் சனத்தின் வாசல்
மட்டும் எருசலேம்மட்டுமே கிட்டிற்று.-[5]அதைக் ௰
காத்பட்டணத்திலே அறிவியாதேயுங்கள், அழு
வே அழாதேயுங்கள்; உள்ளே புழுதியுள்ள தலத்
திலே போய்ப் புழுதியிலே புரளு.—சாப்பீரில் ௰க
குடியிருக்கிறவளே, வெட்கமான அம்மணமாய்
அப்பாலே போ; சாயனானில் குடியிருக்கிறவள்
வெளியே வருவதில்லை; அயலூரின் புலம்பல்
அதில் உங்களுக்கு இருந்த அடைக்கல நிலைமை
யை எடுத்துப்போட்டது.—மாரோத்தில் குடியி ௰உ
ருக்கிறவள் இழந்த நன்மையின்நிமித்தம் நோஞ்
சலாயிருப்பாள்; ஏனெனில் எருசலேமின் வாச
லுக்கு நேராகத் தீங்கு [6]கர்த்தரிடத்திலிருந்து இ
றங்குகிறது.—லாகீசில் குடியிருக்கிறவளே, வே ௰௩
கமான வாகனங்களை இரதத்திலே பூட்டு; நீதான்
சீயோன் குமாரத்தியின் பாவத்துக்குக் காரணி;
ஏனெனில் உன்னில் இஸ்ரவேலின் பாதகங்கள்
கண்டுபிடிக்கப்பட்டன.—ஆகையால் காத்பட் ௰௪
டணத்தின்கிட்ட உனக்கு இருக்கிறதைக் கொ
டுத்துவிடுவாய்; அக்சீபின் வீடுகள் இஸ்ரவே
லின் இராசாக்களுக்கு அபத்தமாய்ப்போகும்.—
மரேசாவில் குடியிருக்கிறவளே, உனக்கு இன் ௰௫
னம் ஒரு சுதந்தரவாளியை வரப்பண்ணுவோம்;
அவன் அதுல்லாம்மட்டும் இஸ்ரவேலின் மகிமை
யின்தானமட்டும் வருவான்.—உனக்குச் சுனிக் ௰௬
கிரமான உன் பிள்ளைகளின்நிமித்தம் [7]நீ மொட்
டையாகச் சிரைத்துக்கொள்; கழுகைப்போல
முழுமொட்டையாகத்தானே; ஏனெனில் உன்
னைவிட்டுச் சிறையிருப்பிலே போகிறார்கள்.

## உ. அதிகாரம்.

க. இக்கட்டுக்கு விரோதமாகப் பேசினது. ௪. புலம்பினது. ௭. அநீதியையும், விக்கிரகஆராதனையையுங்குறித்துக் கண்டித்தது. ௰உ. யாக்கோபைத் திரும்ப உயர்த்துதலின் வாக்குத்தத்தம்.

அக்கிரமத்தை யோசித்து, தங்கள் படுக்கைக க
ளின்மேல் பொல்லாப்புக்கு எத்தனம்பண்ணிக்
காலமே வெளிச்சமாகிறபோது, அதைத் தங்கள்
கையில் வல்லமை இருக்கிறபடியினாலே நடப்
பித்து, — [8]வயல்களை இச்சித்துப் பறித்துக்கொ உ
ண்டு, வீடுகளை இச்சித்து எடுத்துக்கொண்டு, புரு
ஷனையும் அவன் வீட்டையும், மனுஷனையும்
அவன் சுதந்தரத்தையும் ஒடுக்குகிறவர்களுக்கு
ஐயோ!

1 எரே. உ௬. ௰௮.
2 ௫ மோ: ௩௨. க. ஏசா. க. உ.
3 ஏசா. உ௬. உக.
4 சங். ௯௭. ௫.
5 உ சாமு. க. உ௰.
6 ஏசா. ௪௫. ௭. ஆமோ. ௩. ௬.
7 ஏசா. உஉ. ௰உ.
8 ஏசா. ௫. ௮.

௩ [1]ஆகையால் கர்த்தர் சொல்லுகிறதாவது: இதோ,
நீங்கள் உங்கள் கழுத்துகளை நீங்கலாக்கிவிடக்
கூடாத தீங்கை நாம் இந்த வம்சத்தின்மேல் வரப்
பண்ண நினைக்கிறோம்; அப்போது நீங்கள் மேட்
டிமையாய் நடப்பதில்லை; ஏனென்றால் இது துர்
௪ க்காலம்.—அந்நாளில் உங்கள்பேரிலே ஒரு சொல்
உண்டாகி, துக்கமான புலம்பலாய், பாழாகவே
பாழானோமென்றும், என் சனத்தின் வீதத்தை
மாற்றிப்போட்டாரென்றும், எப்படி அதை என்
னைவிட்டு எடுத்துப்போட்டார்? எங்கள் வயல்
களைப் பிடுங்கிப் பகிர்ந்துகொடுத்தாரென்றும்
௫ புலம்பப்படும்.—மெய்யாகவே, கர்த்தரின் சபை
யில் சுதந்தரவீதங்களை அளந்துகொடுக்கிறவர்கள்
உனக்கு இல்லாதிருப்பார்கள்.
௬ [2]தீர்க்கதரிசனம் சொரியாதிருப்பீர்களாக; சொ
ரிந்தால் நிந்தை நீங்கிப்போகாதிருக்கிற இந்தப்
பிரகாரமாகச் சொரியவேண்டாம் என்கிறார்
கள்.
௭ யாக்கோப் வீட்டாரென்னப்பட்டவர்களே,
கர்த்தரின் ஆவியானவர் குறுகியிருக்கிறாரோ?
அவருடைய கிரியைகள் இவைகள்தானோ?
செம்மையாய் நடக்கிறவனோடே நம்முடைய
௮ வார்த்தைகள் தயவாயிராதோ?—நமது சனமோ
வென்றால் முதலே சத்துருவாக எழும்பிற்று; யுத்
தத்திலிருந்து திரும்பிவந்து அஞ்சாமல் கடந்து
போகிறவர்களுடைய வஸ்திரத்தின்மேல் உடுப்
௯ பை உரிந்துகொண்டீர்கள். — நமது சனத்தின்
ஸ்திரிகளை அவர்களுடைய சௌக்கியமான
வீடுகளிலிருந்து துரத்திவிட்டீர்கள்; அவர்களு
டைய குழந்தைகளுக்கு இருந்த நம்முடைய அ
லங்காரத்தை என்றைக்கும் இல்லாதபடிக்குப்
௰ பறித்துக்கொண்டீர்கள்.—எழுந்திருந்து போங்
கள்; ஏனெனில் இது நீங்கள் இளைப்பாறிக்கொ
ண்டிருக்கத்தக்க தேசம் அல்ல, அதேனென்றால்
தீட்டுப்பட்டது கெட்டுப்போயிற்று; கேடு அ
௰௧ கோரமுமாயிற்று.—மனம்போகிற போக்காய்ப்
போய், அபத்தமானதைப் புளுகுகிற ஒருவன்,
மதுபானத்தையும் லொட்டியையுங்குறித்து நான்
உனக்குப் பிரசங்கிப்பேனென்றால், அவனே
இந்தச் சனத்துக்கு ஏற்ற பிரசங்கியாயிருப்பான்.
௰௨ யாக்கோபின் சனமே, [3]உங்களை எல்லாம் கூட்
டவே கூட்டுவோம்; இஸ்ரவேலில் மீதியானவர்
களைச் சேர்க்கவே சேர்ப்போம்; போத்ஸராவின்
ஆடுகளைப்போலே அவர்களை [4]ஏகக்கூட்டமாக்
குவோம்; தன் தொழுவத்துக்குள்ளே சேர்ந்த மந்
தைக்குச்சமானமாய் மனுத்திரளினாலே இரைச்
௰௩ சல் உண்டாகும்.—தடைகளை நீக்கிப்போடுகிற
வர் அவர்களுக்குமுன்பாக நடந்தேறுவார்;
அவர்கள் தடைகளை நீக்கி, வாசலால் உள்ளும்
புறம்புமாகப் பிரவேசிப்பார்கள்; [5]அவர்கள் இரா
சா அவர்களுக்கு முன்பாகவும், கர்த்தர் அவர்
கள் முன்னணியிலும் நடந்துபோவார்.

1 ௫ மோ. ௫. ௰௧. 3 உரோ. ௰௧. ௨௬.
2 ஆமோ. ௭. ௰௩. 4 யோவா. ௰. ௰௬.—5 மீகா. ௪. ௭.

## ௩. அதிகாரம்.

௧. துரைத்தனத்தாருடைய கொடுமை. ௫. தீர்க்கதரிசிகளின் கள்ளத்தனம். ௮. அவ்விருதிறத்தாரின் பயமின்மை.

நான் சொன்னதாவது: [6]யாக்கோபின் தலைவர்க ௧
ளே, இஸ்ரவேல் வீட்டாரின் அதிபதிகளே, நியா
யம் ஏதென்றறிய உங்களுக்கு அல்லோ அடுக்
கும்?—ஆனால் நன்மையைப் பகைத்துப் பொல் ௨
லாப்பைச் சிநேகித்து, அவர்கள்மேல் இருக்கிற
அவர்களுடைய தோலையும் அவர்கள் எலும்புக
ளின்மேல் இருக்கிற அவர்களுடைய சதையை
யும் பிடுங்கி,—என் சனத்தின் சதையைத் தின்று, ௩
அவர்கள்மேல் இருக்கிற அவர்களுடைய தோலை
உரித்துக்கொண்டு, அவர்கள் எலும்புகளை முறித்
து, பானையிலே போடும்வண்ணமாகவும் இறைச்
சியைக் கொப்பரைக்குள்ளே போடும்வண்ண
மாகவும் அவைகளைத் துண்டிக்கிறார்கள்.—அப் ௪
போது கர்த்தரைநோக்கிக் கூப்பிடுவார்கள்; ஆ
னால் [7]அவர்கள் தங்கள் கிரியைகளில் பொல்லா
தவர்களானபடியினாலே இவர் அவர்களுக்கு மறு
உத்தரவு கொடாமல் தமது முகத்தை அக்காலத்
திலே அவர்களுக்கு மறைப்பார்.
நமது சனத்தை மோசம்போக்குகிற தீர்க்கதரி ௫
சிகளுக்கு விரோதமாகக் கர்த்தர் சொல்லுகிறதா
வது: அவர்கள் தங்கள் பல்லுகளினால் கடிக்கிற
வர்களாயிருந்து, [8]சமாதானமென்று கூப்பிட்டு,
தங்கள் வாய்க்குக்கொடாதவனுக்கு விரோதமாக
யுத்தத்தை ஆயத்தம்பண்ணுகிறார்கள். — ஆகை ௬
யால் நீங்கள் தரிசனம் பார்க்கக்கூடாத இராத்தி
ரியும், குறிசொல்லக்கூடாத அந்தகாரமும் உங்
களுக்கு வரும்; தீர்க்கதரிசிகளின்மேல் சூரியன்
அஸ்தமித்து, அவர்கள்மேல் பகல் காரிருளாய்ப்
போகும். — தரிசனம் பார்க்கிறவர்கள் வெட் ௭
கிக் குறிசொல்லுகிறவர்கள் நாணிப்போய், உத்
தரவு கொடுப்பிக்கிற தேவன் இல்லாததினாலே
அவர்கள் எல்லாரும் தங்கள் தாடியை மூடுவார்
கள்.—நானோவென்றால், [9]யாக்கோபுக்கு அவன் ௮
மீறுதலையும் இஸ்ரவேலுக்கு அவன் பாவத்தை
யும் அறிவிக்கத்தக்கதாக, கர்த்தருடைய ஆவி
யோடேகூடிய பலத்தினாலும், நியாயத்தினா
லும், பராக்கிரமத்தினாலும் நிரப்பப்பட்டிருக்கி
றேன்.
நியாயத்தை அருவருத்து, செம்மையானவைக ௯
ளையெல்லாம் கோணலாக்கி,—சீயோனை இரத்தப் ௰
பழிகளாலும், எருசலேமை அநியாயத்தினாலும்
கட்டுவிக்கிற யாக்கோப்வீட்டாரின் தலைவர்
களே, இஸ்ரவேல்வீட்டாரின் அதிபதிகளே, இ
தைக் கேளுங்களேன்.—[10]அதின் தலைவர்கள் பரி ௰௧
தானத்துக்கு நியாயந்தீர்க்கிறார்கள்; அதின் ஆசா
ரியர்கள் கூலிக்கு உபதேசிக்கிறார்கள்; அதின்
தீர்க்கதரிசிகள் பணத்துக்குக் குறிசொல்லுகிறார்
கள்; ஆகிலும் அவர்கள் கர்த்தரைச் சார்ந்துகொ
ண்டு, கர்த்தர் எங்கள் நடுவில் இல்லையோ, தீங்கு

6 எசா. ௧. ௰. ஓசே. ௫. ௧. 8 எசா. ௰௧. ௰.—9 எசா. ௫௮. ௧.
7 எசா. ௫௯. ௨. 10 செப். ௩. ௩.

௰௨ எங்கள்மேல் வராதென்கிறார்கள்.—ஆகையால்
[1]உங்கள்நிமித்தம் சீயோன் வயலாக உழப்பட்டு,
எருசலேம் மண்மேடுகளும் வீட்டின்பர்வதம்
காட்டுமேடுகளுமாய்ப்போகும்.

## ௪. அதிகாரம்.

௧. திருச்சபையின் மகிமை. ௩. அதின் சமாதானம். ௮. ஆளுகை. ௰௧. செயம்.

௧ ஆனால் [2]கடைசிநாள்களில் சம்பவிப்பதேதெ
னில், கர்த்தருடைய வீட்டின் பர்வதம் பர்வதங்
களின் கொடுமுடியாய்த் திடப்பட்டு, மேடுகளி
லும் அதுவே உயரும்; சனசதளங்கள் அதற்கு
௨ ஓடி,—[3]திரளான சாதியார் நடந்துவந்து, கர்த்த
ரின் பர்வதத்துக்கும் யாக்கோபுடைய பராபர
னின் வீட்டுக்கும், அவர் தமது வழிகளை நமக்
குப் போதிக்கவும், நாம் அவர் பாதைகளில் நடக்
கவும், நாம் போயேறுவோம் வாருங்கள் என்பார்
கள்; ஏனெனில் வேதம் சீயோனிலும், கர்த்த
ரின் வசனம் [4]எருசலேமிலுமிருந்து பரவிப்போ
௩ கும்.—[5]அவர் திரளான சனசதளங்களுக்குள் நியா
யந்தீர்த்து, தூரபரியந்தம் பலத்த சாதிகளைக் கடிந்
துகொள்ளுவார்; அப்போது தங்கள் பட்டை
யங்களை மண்வெட்டிகளாகவும் தங்கள் ஈட்டி
களை அரிவாள்களாகவும் அடிப்பார்கள்; சாதிக்கு
விரோதமாய்ச் சாதி பட்டையம் எடுப்பதில்லை;
௪ இனி யுத்தம் பழகுவதுமில்லை. — [6]அவனவன்
தன் திராட்சச்செடியின்கீழும் தன் அத்திமரத்
தின் கீழும் தத்தளிக்கப்பண்ணுவார் இல்லாமல்
உளுக்காருவான்; ஏனெனில் [7]சேனைகளுடைய
௫ கர்த்தரின் வாய் இதைச் சொல்லிற்று.—அதே
னென்றால் சகல சனசதளங்களும் தங்கள்தங்கள்
பராபரனுடைய நாமத்திலே நடப்பார்கள்; நாங்
களும் எங்கள் பராபரனாகிய கர்த்தருடைய நா
மத்திலே என்றென்றைக்குமுள்ள சதாகாலங்க
ளாக நடப்போம்.
௬ கர்த்தர் சொல்லுகிறதேதெனில், அந்நாளிலே
நாம் நொண்டியானவளைச் சேர்த்து, தள்ளுண்
டவளையும் நாம் தீங்கு அனுபவிக்கப்பண்ணின
௭ வளையும் கூட்டிக்கொண்டு,—[8]நொண்டியான
வளை மீதியான சனமாகவும், தூரமாய்த் தள்ளு
ண்டுபோனவளைப் பலத்த சாதியாகவும் வைப்
போம்; அவர்கள்பேரிலே கர்த்தர் சீயோன்பர்
வதத்திலே [9]இதுமுதலாய் என்றென்றைக்கும்
௮ இராசாவாயிருப்பார்.—மந்தையின் துருக்கமே,
சீயோன் குமாரத்தியின் மேடே, உன்னண்டை
க்கு வரும்; [10]முந்தின ஆளுகையும் எருசலேம்
குமாரத்தியின் இராசரிக்கமுமே வரும்.
௯ இப்போதும் நீ கதறுதலாய்க் கதறுவானேன்?
இராசாவானவர் உனக்குள்ளே இல்லையோ? உன்
ஆலோசனைக்காரர் அழிந்தாரோ? ஏனென்றால்
பிள்ளைபெறுகிறவளுக்கு ஒத்த அம்பாயம் உன்
௰ னைப் பிடித்திருக்கிறதே. — சீயோன் குமாரத்
தியே, பிள்ளைபெறுகிறவளைப்போல அம்பாயப்
பட்டுப் பிரயாசப்படு; ஏனெனில் இப்போது ப
ட்டணத்திலிருந்து புறப்பட்டு, வெளிகளில் தங்
கி, பாபேல்மட்டும் வந்துசேருவாய்; அங்கேவிடு
விக்கப்படுவாய்; அங்கே கர்த்தர் உன்னை உன்
சத்துருக்களின் கைக்கு நீங்கலாக்கி மீட்பார்.
இப்போதும் அவள் தீட்டுப்பட்டவளாகக்கட ௰௧
வளென்றும், சீயோனிலே எங்கள் கண் தனக்கு
ஆசையாயிருக்கிறதைக் காணுமென்றும் அநேகம்
சாதியார் உனக்கு விரோதமாகக் கூடிக்கொள்ளு
வார்கள்.—ஆனால் [11]அவர்கள் கர்த்தருடைய நினை ௰௨
வுகளை அறியாமலும் அவருடைய யோசனையை
உணராமலும் இருக்கிறார்கள்; அதேனெனில்
அரிக்கட்டுகளைப்போல அவர்களைக் களத்திலே
கூட்டுவார்.—சீயோன் குமாரத்தியே, நீ எழுந்தி ௰௩
ருந்து போரடி; ஏனென்றால் நாம் உன் கொம்பு
களை இரும்பும் உன் குளம்புகளை வெண்கலமு
மாக்குவோம்; நீ அநேக சனசதளங்களை நொறுக்
கிப்போடுவாய்; அவர்கள் தேடிச்சேர்த்ததைக்
கர்த்தருக்கும் அவர்களுடைய ஆஸ்தியைப்பூமிக்
கெல்லாம் ஆண்டவராயிருக்கிறவருக்கும் நிய
மிப்போம்.—தண்டு சேனையையுடைய பட்ட ௰௪
ணமே, இப்போது தண்டுதண்டாகக் கூடிக்
கொள்; நமக்கு விரோதமாக முற்றிக்கைபோ
டப்படும்; இஸ்ரவேலுடைய நியாயாதிபதியை
மிலாற்றினாலே தாடையிலே அடிப்பார்கள்.

## ௫. அதிகாரம்.

௧. கிறிஸ்துவின் சனனம். ௩. அவருடைய இராச்சியம். ௭. அவருடைய செயம்.

ஆனால் [12]எப்பிராத்தா என்னப்பட்ட [13]பெத் ௧
லேகேமே, நீ யூதேயாவிலுள்ள ஆயிரங்களுக்குள்
ளே சிறியதாயிருந்தாலும், இஸ்ரவேலை ஆளப்
போகிறவர் உன்னிலேயிருந்து புறப்படுவார்;
அவருடைய புறப்படுதல்கள் [14]அநாதிநாள்களா
கிய பூருவத்தினுடையவைகள்.
ஆகையால் பெறப்போகிறவள் பெறுங்காலம ௨
ட்டும் அவர்களை ஒப்புக்கொடுப்பார்; அப்போது
அவருடைய சகோதரரில் மீதியானவர்கள் இஸ்
ரவேல் புத்திரரோடுங்கூடத் திரும்புவார்கள்.—
அவர் நின்று கர்த்தருடைய பலத்தோடும் தம்மு ௩
டைய பராபரனாகிய கர்த்தருடைய நாமத்தின்
முக்கியத்தோடும் மேய்ப்பார்; ஆகையால் அவர்
கள் தங்கித்தரிப்பார்கள்; ஏனெனில் இனிப் பூமி
யின் எல்லைகள்பரியந்தமும் மகிமைப்படுவார்.
[15]இவரே சமாதானம்; அசூர் நம்முடைய தே ௪
சத்திலே வரும்போதும், நம்முடைய அரண்ம
னைகளை மிதிக்கும்போதும், ஏழு மேய்ப்பரையும்
மனுஷரில் எட்டு அதிபதிகளையும் அவனுக்கு
விரோதமாக நிறுத்துவோம்.—இவர்கள் அசூரின் ௫
தேசத்தையும் நிம்ரோத்தின் தேசத்தையும் அதி
னுடைய வாசல்களுக்கு உள்ப்புறமாகப் பட்

1 எரே. ௨௬. ௰௮: ௨௩. ௰௮.
2 ஏசா. ௨. ௨.—3 ஏசா. ௬௰. ௪, ௫.
4 லூக். ௨௪. ௪௭.—5 ஏசா. ௨. ௪.
6 ௧ இரா. ௪. ௨௫.
7 ஏசா. ௫௮. ௰௪.—8 செப். ௩. ௰௯.
9 லூக். ௧. ௩௩.
10 ஏசா. ௧. ௨௬.—11 எரே. ௨௩. ௰௩.
12 ௧ மோ. ௩௫. ௰௬.
13 மத். ௨. ௬. லூக். ௨. ௧-௭.
14 யோவா. ௧. ௰௪.
15 எபே. ௨. ௰௪.

டையத்தினாலே மேய்ந்துபோடுவார்கள்; அப்படியே அசூர் நம்முடைய தேசத்தில் வரும்போதும், நம்முடைய எல்லைகளை மிதிக்கும்போதும் அவனுக்கு நம்மைத் தப்புவிப்பார்.
௬ யாக்கோபிலே மீதியானவர்கள், அநேகம் சன
சதளங்களின் நடுவிலே [1]கர்த்தராலே வந்த பனியைப்போலேயும், மனுஷனுக்குக் காத்திராமலும், மனுபுத்திரனை நம்பியிராமலும் இருக்கிற பூண்டுகள்மேல் வந்த மழைகளைப்போலேயும், இருப்பார்கள்.
௭ சாதிகளுக்குள் யாக்கோபிலே மீதியானவர்கள், அநேகம் சனசதளங்களின் நடுவிலே சிங்கம் காட்டுமிருகங்களுக்குள்ளே இருக்கிறதற்குச் சமானமாகவும், கடந்துபோய் மிதித்துத் தப்புவிப்பார் இல்லாமல் பீறிப்போடுகிற இளஞ்சிங்கம் ஆட்டுமந்தைக்குள்ளே இருக்கிறதற்குச் சமானமாகவும் இருப்பார்கள்.
௮ உன்னுடைய கை உன் விரோதக்காரரின் மேல் உயரும்; உன் சத்துருக்களெல்லாரும் சங்கரிக்கப்படுவார்கள்.
௯ கர்த்தர் சொல்லுகிறதாவது: அந்நாளிலே சம்பவிப்பதேதெனில், நாம் உன் குதிரைகளை உன்
நடுவில் இராதபடிக்குச் சங்கரித்து, உன் இரதங்
௰ களை அழித்து,—உன் தேசங்களின் பட்டணங்
களைச் சங்கரித்து, உன் அரண்களையெல்லாம்
௰௧ நிர்மூலமாக்கி,—சூனியங்களை உன் கையில் இரா
தபடிக்குச் சங்கரிப்போம்; நாள்பார்வைக்காரர்
௰௨ உனக்கு இல்லாதேபோவார்கள்.—[2]உன் சுரூபங்க
ளையும் உன் சிலைகளையும் உன்நடுவில் இராதபடிக்
குச் சங்கரிப்போம்; உன் கைகளின் கிரியையை
௰௩ இனிப் பணிந்துகொள்ளாய்.—நாம் உன் தோப்
புகளை உன் நடுவில் இராதபடிக்குப் பிடுங்கி,
௰௪ உன் பட்டணங்களை அழித்து, — கேள்விகொ
டாத புறச்சாதிகளிடத்திலே கோபத்தோடும் உக்கிரத்தோடும் நீதியைச் சரிக்கட்டுதலைச்செய்வோமென்றார்.

## ௬. அதிகாரம்.

௧ இரக்கமின்மையையும், ௬. அறியாமையையும், ௰. அநீதியையும், ௰௩. விக்கிரக ஆராதனையையும்குறித்த பராபரனுடைய வழக்கு.

௧ கர்த்தர் சொல்லுகிறதைக் கேளுங்கள்; நீ எழுந்திருந்து, பர்வதங்களோடே வழக்குச்சொல்; மேடுகள் உன் சத்தத்தைக் கேட்கக்கடவது:
௨ பர்வதங்களே, பூமியின் உறுதியான அஸ்திபாரங்களே, கர்த்தருடைய வழக்கைக் கேளுங்கள்; ஏனெனில் [3]கர்த்தருக்கு அவர் சனத்தோடே
வழக்கு இருக்கிறது; இஸ்ரவேலோடே அவர்
௩ நியாயம்பேசுவார்.—நமது சனமே, உனக்கு என்ன
செய்தோம்? அல்லது எதினால் உன்னை விதனப்
படுத்தினோம்? நமக்கு எதிரே உத்தரவுசொல்.—
௪ நாம் உன்னை எகிப்துதேசத்திலிருந்து ஏறிவரப்பண்ணி, அடிமைத்தன வீட்டில் இருந்த உன்னை மீட்டுக்கொண்டு, மோசே ஆரோன் மீரியாம் என்றவர்களை உனக்குமுன்பாக அனுப்பினோம்.—
நமது சனமே, [4]மோவாபின் இராசாவாகிய பாலாக் பண்ணின யோசனை ஏதென்றும் பேயோரின் குமாரனான பீலேயாம் அவனுக்குப்பிரதியுத்தரமாகச் சொன்னதேதென்றும், சித்தீம்துவக்கிக் கில்கால்மட்டும் நடந்ததேதென்றும், நீ கர்த்தருடைய நீதிகளை அறிந்துகொள்ளும்படிக்கு நினைத்துக்கொள்ளேன்.

எதினாலே நான் கர்த்தருக்கு முந்திக்கொண்டு, ௬
உன்னதமான பராபரனுக்குமுன்பாகக் குனி
வேன்? தகனபலிகளினாலும் ஒரு வயதுக் கன்று
க்குட்டிகளாலும் அவருக்கு முந்திக்கொள்வே
னோ?—ஆயிரங்களான ஆட்டுக்கடாக்களின்பே ௭
ரிலும், எண்ணெய் ஓடுகிற பதினாயிரங்களான
ஆறுகளின்பேரிலும், கர்த்தர் பிரியமாயிருப்பா
ரோ? என் துரோகத்தைப்போக்க என் முதற்
பேற்றையும், என் ஆத்துமத்தின் பாவத்தைப்
போக்க என் கர்ப்பக்கனியையும் கொடுப்பே
னோ?—மனுஷனே, நன்மையேதென்று உனக்கு ௮
அறிவித்தார்; நியாயஞ்செய்து இரக்கத்தைச்சிநேகித்து, உன் பராபரனுக்கு மனத்தாழ்மையாய் நடப்பதை அல்லாமல் வேறே என்னத்தைக் கர்த்தர் உன்னில் தேடுகிறார்.

கர்த்தருடைய சத்தம் பட்டணத்துக்கு எதிரா ௯
கக் கூப்பிடுகிறது; ஏனெனில் உம்முடைய நா
மம் உத்தமத்தை நோக்குகிறது; மிலாற்றின் செய்
தியையும் அதை நிருணயம்பண்ணினவர் யா
ரென்கிறதையும் கேளுங்கள்.—ஆகாதவன் வீட்டி ௰
லே ஆகாமியப்பொக்கிஷங்களும் அருவருக்கப்
படத்தக்க குறைந்த மரக்காலும் இன்னம் இருக்
கிறதல்லவோ?—ஆகாத தராசும் கபட்டுப் படிக் ௰௧
கல்லுகளுள்ள பையும் இருக்கக்கொள்ளச் சுத்த
முண்டோ?—அதேனெனில் அவர்களில் ஐசு ௰௨
வரியமுள்ளவர்கள் கொடுமையால் நிறைந்திருக்கிறார்கள்; அவர்களுடைய குடியானவர்கள் பொய்பேசுகிறார்கள்; அவர்கள் வாயிலிருக்கிற அவர்களுடைய நாக்கு கபட்டுநாக்கு.

ஆகையால் நாமும் உன்னை அடிக்கிறதினா ௰௩
லும் உன் பாவங்களின் நிமித்தம் பாழாக்குகிற
தினாலும் உன்னைப் பலட்சயமாக்குவோம்.—நீ ௰௪
புசித்தும் திருத்தியடையாதிருப்பாய்; அது உன்
உள்ளத்திலே உன்னை ஒடுக்கும்; நீ பதனம்பண்
ணியும் தப்புவிப்பதில்லை; நீ தப்புவிப்பதையோ
பட்டையத்துக்கு ஒப்புக்கொடுப்போம். — [5]நீ ௰௫
விதைத்தும் அறுக்காதேபோவாய்; நீ ஒலீவப்பழங்களையும் திராட்சப்பழங்களையும் ஆலையாடியும் எண்ணெய் பூசிக்கொள்வதுமில்லை; இரசம் குடிப்பதுமில்லை.

ஏனென்றால் நாம் உன்னைப் பாழாகவும் உன் ௰௬
குடிகளை ஈசல்போடப்படுதலாகவும் வைக்கத் தக்கதாக, [6]உம்ரீயினுடைய கட்டளைகளும் ஆகாப்வீட்டாருடைய எல்லாச் செய்கையும் கைக்கொள்ளப்பட்டுவருகிறது; அவர்களுடைய

1 சங். ௱௰. ௩.—2 சகரி. ௰௩. ௨.—3 ஏசா. ௧. ௩, ௪.—4 ௪ மோ. ௨௨. ௫, ௬.

5 ௫ மோ. ௨௮. ௩௮. ஆகா. ௧. ௬.—6 ௧ இரா. ௰௬. ௨௫–௩௩.

# MICAH.

# மீகாவின் தீர்க்கதரிசனம்.

## ௧. அதிகாரம்.

௧. மீகா யாக்கோபின் விக்கிரகஆராதனைக்காகப் பராபரனுடைய கோபம் அவன்மேல் வருவதைக் காட்டினது. ௰ துக்கிப்பதற்குத் தூண்டினது.

௧ யோத்தாம் ஆகாஸ் எசேக்கியா என்ற யூதாவு
டைய இராசாக்களுடைய நாள்களில், [1]மொ
ரேசா ஊராளுகிய மீகாவுக்கு உண்டானதும், அ
வன் சமாரியாவுக்கும் எருசலேமுக்கும் விரோ
தமாய்த் தரிசனமாகக் கண்டதுமான கர்த்தரு
டைய வார்த்தை.
௨ [2]சகல சனசதளங்களே, கேளுங்கள்; பூமியே,
அதின் நிறைவே, கவனி; கர்த்தராகிய ஆண்ட
வர் உங்களுக்கு விரோதமாகச் சாட்சிவிளங்கு
வார்; ஆண்டவர் தம்முடைய பரிசுத்ததேவால
௩ யத்திலிருந்துதானே.—ஏனெனில் இதோ, [3]கர்த்
தர் தமது தானத்திலிருந்து புறப்பட்டு இறங்கிப்
௪ பூமியின் உயரங்களை மிதிப்பார்.—அக்கினிக்கு
முன்பாக மெழுகு உருகுகிறதுபோலேயும், மலை
களிலிருந்து பாயுந்தண்ணீர் தரையைக் கிழிக்கி
றதுபோலேயும், [4]அவர்கீழே பர்வதங்கள் உருகி,
பள்ளத்தாக்குகள் கிழிந்துபோகும்.
௫ இது எல்லாம் யாக்கோபுடைய மீறுதலின்
நிமித்தமும், இஸ்ரவேல்வீட்டாருடைய பாவங்
களின்நிமித்தமும் சம்பவிக்கும்; யாக்கோபின்
மீறுதலுக்குக் காரணமேது? சமாரியா அல்ல
வோ? யூதாவின் மேடைகளுக்குக் காரணமேது?
௬ எருசலேம் அல்லவோ?—ஆகையால் நாம் சமா
ரியாவை வெளியான மண்மேடும், திராட்ச நட
வுக்கான நிலமுமாக்கி, அதின் கல்லுகளைப் பள்
ளத்தாக்கிலே புரண்டு விழப்பண்ணி, அதின்
௭ அஸ்திபாரங்களைத் திறந்துவைப்போம்.–அதின்
சுரூபங்கள் எல்லாம் நருக்கப்படும்; அதின்
பணையங்கள் எல்லாம் அக்கினியால் எரித்துப்
போடப்படும்; அதின் விக்கிரகங்களை எல்லாம்
பாழாக்குவோம்; ஏனெனில் வேசிப்பணையத்தி
னால் சேர்க்கப்பட்டது திரும்ப வேசிப்பணைய
முமாய்ப்போகும்.
௮ இதின்நிமித்தம் நான் புலம்பி அலறுவேன்;
பறிகொடுத்தவனாகவும் அம்மணமாகவும் நடப்
பேன்; நான் வலுவான சர்ப்பங்களைப்போலப்
புலம்பலையும், தீவுக்குருவிகளைப்போலத் துக்
௯ கிப்பையும் கேட்கப்பண்ணுவேன்.–ஏனெனில்
அதின் காயம் ஆறாததாயிருக்கிறது; அதேனெ
னில் யூதாமட்டும் வந்தது; என் சனத்தின் வாசல்
மட்டும் எருசலேம்மட்டுமே கிட்டிற்று.–[5]அதைக் ௰
காத்பட்டணத்திலே அறிவியாதேயுங்கள், அழ
வே அழாதேயுங்கள்; உள்ளே புழுதியுள்ள தலத்
திலே போய்ப் புழுதியிலே புரளு.—சாப்பீரில் ௰௧
குடியிருக்கிறவளே, வெட்கமான அம்மணமாய்
அப்பாலே போ; சாயனானில் குடியிருக்கிறவள்
வெளியே வருவதில்லை; அயலூரின் புலம்பல்
அதில் உங்களுக்கு இருந்த அடைக்கல நிலைமை
யை எடுத்துப்போட்டது.—மாரோத்தில் குடியி ௰௨
ருக்கிறவள் இழந்த நன்மையின்நிமித்தம் நொஞ்
சலாயிருப்பாள்; ஏனெனில் எருசலேமின் வாச
லுக்கு நேராகத் தீங்கு [6]கர்த்தரிடத்திலிருந்து இ
றங்குகிறது.—லாகீசில் குடியிருக்கிறவளே, வே ௰௩
கமான வாகனங்களை இரதத்திலே பூட்டு; நீதான்
சீயோன் குமாரத்தியின் பாவத்துக்குக் காரணி;
ஏனெனில் உன்னில் இஸ்ரவேலின் பாதகங்கள்
கண்டுபிடிக்கப்பட்டன.—ஆகையால் காத்பட் ௰௪
டணத்தின்கிட்ட உனக்கு இருக்கிறதைக் கொ
டுத்துவிடுவாய்; அக்சீபின் வீடுகள் இஸ்ரவே
லின் இராசாக்களுக்கு அபத்தமாய்ப்போகும்.—
மரேசாவில் குடியிருக்கிறவளே, உனக்கு இன் ௰௫
னம் ஒரு சுதந்தரவாளியை வரப்பண்ணுவோம்;
அவன் அதுல்லாம்மட்டும் இஸ்ரவேலின் மகிமை
யின்தானமட்டும் வருவான்.—உனக்குக் களிக் ௰௬
கிரமான உன் பிள்ளைகளின்நிமித்தம் [7]நீ மொட்
டையாகச் சிரைத்துக்கொள்; கழுகைப்போல
முழுமொட்டையாகத்தானே; ஏனெனில் உன்
னைவிட்டுச் சிறையிருப்பிலே போகிறார்கள்.

## ௨. அதிகாரம்.

௧. இக்கட்டுக்கு விரோதமாகப் பேசினது. ௪. புலம்பினது. ௭. அநீதியையும், விக்கிரகஆராதனையையுங்குறித்துக் கண்டித்தது. ௰௨. யாக்கோபைத் திரும்ப உயர்த்துதலின் வாக்குத்தத்தம்.

அக்கிரமத்தை யோசித்து, தங்கள் படுக்கைக ௧
ளின்மேல் பொல்லாப்புக்கு எத்தனம்பண்ணிக்
காலமே வெளிச்சமாகிறபோது, அதைத் தங்கள்
கையில் வல்லமை இருக்கிறபடியினாலே நடப்
பித்து, — [8]வயல்களை இச்சித்துப் பறித்துக்கொ ௨
ண்டு, வீடுகளை இச்சித்து எடுத்துக்கொண்டு, புரு
ஷனையும் அவன் வீட்டையும், மனுஷனையும்
அவன் சுதந்தரத்தையும் ஒடுக்குகிறவர்களுக்கு
ஐயோ!

1 எரே. ௨௬. ௰௮.
2 ௫ மோ: ௩௨. ௧. ஏசா. ௧. ௨.
3 ஏசா. ௨௬. ௨௧.
4 சங். ௯௭. ௫.
5 ௨ சாமு. ௧. ௨௰.
6 ஏசா. ௪௫. ௭. ஆமோ. ௩. ௬.
7 ஏசா. ௨௨. ௰௨.
8 ஏசா. ௫. ௮.

௩ [1]ஆகையால் கர்த்தர் சொல்லுகிறதாவது: இதோ,
நீங்கள் உங்கள் கழுத்துகளை நீங்கலாக்கிவிடக்
கூடாத தீங்கை நாம் இந்த வம்சத்தின்மேல் வரப்
பண்ண நினைக்கிறோம்; அப்போது நீங்கள் மேட்
டிமையாய் நடப்பதில்லை; ஏனென்றால் இது துர்
௪ க்காலம்.-அந்நாளில் உங்கள்பேரிலே ஒரு சொல்
உண்டாகி, துக்கமான புலம்பலாய், பாழாகவே
பாழானோமென்றும், என் சனத்தின் வீதத்தை
மாற்றிப்போட்டாரென்றும், எப்படி அதை என்
னைவிட்டு எடுத்துப்போட்டார்? எங்கள் வயல்
களைப் பிடுங்கிப் பகிர்ந்துகொடுத்தாரென்றும்
௫ புலம்பப்படும்.-மெய்யாகவே, கர்த்தரின் சபை
யில் சுதந்தரவீதங்களை அளந்துகொடுக்கிறவர்கள்
உனக்கு இல்லாதிருப்பார்கள்.

௬ [2]தீர்க்கதரிசனம் சொரியாதிருப்பீர்களாக; சொ
ரிந்தால் நிந்தை நீங்கிப்போகாதிருக்கிற இந்தப்
பிரகாரமாகச் சொரியவேண்டாம் என்கிறார்
கள்.

௭ யாக்கோப் வீட்டாரென்னப்பட்டவர்களே,
கர்த்தரின் ஆவியானவர் குறுகியிருக்கிறாரோ?
அவருடைய கிரியைகள் இவைகள்தானோ?
செம்மையாய் நடக்கிறவனோடே நம்முடைய
௮ வார்த்தைகள் தயவாயிராதோ?—நமது சனமோ
வென்றால் முதலே சத்துருவாக எழும்பிற்று; யுத்
தத்திலிருந்து திரும்பிவந்து அஞ்சாமல் கடந்து
போகிறவர்களுடைய வஸ்திரத்தின்மேல் உடுப்
௯ பை உரிந்துகொண்டீர்கள். — நமது சனத்தின்
ஸ்திரிகளை அவர்களுடைய சௌக்கியமான
வீடுகளிலிருந்து துரத்திவிட்டீர்கள்; அவர்களு
டைய குழந்தைகளுக்கு இருந்த நம்முடைய அ
லங்காரத்தை என்றைக்கும் இல்லாதபடிக்குப்
௰ பறித்துக்கொண்டீர்கள்.—எழுந்திருந்து போங்
கள்; ஏனெனில் இது நீங்கள் இளைப்பாறிக்கொ
ண்டிருக்கத்தக்க தேசம் அல்ல, அதேனென்றால்
தீட்டுப்பட்டது கெட்டுப்போயிற்று; கேடு அ
௰௧ கோரமுமாயிற்று.—மனம்போகிற போக்காய்ப்
போய், அபத்தமானதைப் புளுகுகிற ஒருவன்,
மதுபானத்தையும் லொட்டியையுங்குறித்து நான்
உனக்குப் பிரசங்கிப்பேனென்றால், அவனே
இந்தச் சனத்துக்கு ஏற்ற பிரசங்கியாயிருப்பான்.

௰௨ யாக்கோபின் சனமே, [3]உங்களை எல்லாம் கூட்
டவே கூட்டுவோம்; இஸ்ரவேலில் மீதியானவர்
களைச் சேர்க்கவே சேர்ப்போம்; போத்ஸராவின்
ஆடுகளைப்போலே அவர்களை [4]ஏகக்கூட்டமாக்
குவோம்; தன் தொழுவத்துக்குள்ளே சேர்ந்த மந்
தைக்குச்சமானமாய் மனுத்திரளினாலே இரைச்
௰௩ சல் உண்டாகும்.—தடைகளை நீக்கிப்போடுகிற
வர் அவர்களுக்குமுன்பாக நடந்தேறுவார்;
அவர்கள் தடைகளை நீக்கி, வாசலால் உள்ளும்
புறம்புமாகப் பிரவேசிப்பார்கள்; [5]அவர்கள் இரா
சா அவர்களுக்கு முன்பாகவும், கர்த்தர் அவர்
கள் முன்னணியிலும் நடந்துபோவார்.

1 ௫ மோ. ௫. ௰௧. 3 உரோ. ௰௧. ௨௬.
2 ஆமோ. ௭. ௰௩. 4 யோவா. ௰. ௰௬.—5 மீகா. ௪. ௭.

## ௩. அதிகாரம்.

௧. துரைத்தனத்தாருடைய கொடுமை. ௫. தீர்க்கதரிசிகளின் கள்ளத்தனம். ௮. அவ்விருதிறத்தாரின் பயமின்மை.

நான் சொன்னதாவது: [6]யாக்கோபின் தலைவர்க ௧
ளே, இஸ்ரவேல் வீட்டாரின் அதிபதிகளே, நியா
யம் ஏதென்றறிய உங்களுக்கு அல்லோ அடுக்
கும்?—ஆனால் நன்மையைப் பகைத்துப் பொல் ௨
லாப்பைச் சிநேகித்து, அவர்கள்மேல் இருக்கிற
அவர்களுடைய தோலையும் அவர்கள் எலும்புக
ளின்மேல் இருக்கிற அவர்களுடைய சதையை
யும் பிடுங்கி,—என் சனத்தின் சதையைத் தின்று, ௩
அவர்கள்மேல் இருக்கிற அவர்களுடைய தோலை
உரித்துக்கொண்டு, அவர்கள் எலும்புகளை முறித்
து, பானையிலே போடும்வண்ணமாகவும் இறைச்
சியைக் கொப்பரைக்குள்ளே போடும்வண்ண
மாகவும் அவைகளைத் துண்டிக்கிறார்கள்.—அப் ௪
போது கர்த்தரைநோக்கிக் கூப்பிடுவார்கள்; ஆ
னால் [7]அவர்கள் தங்கள் கிரியைகளில் பொல்லா
தவர்களானபடியினாலே இவர் அவர்களுக்கு மறு
உத்தரவு கொடாமல் தமது முகத்தை அக்காலத்
திலே அவர்களுக்கு மறைப்பார்.

நமது சனத்தை மோசம்போக்குகிற தீர்க்கதரி ௫
சிகளுக்கு விரோதமாகக் கர்த்தர் சொல்லுகிறதா
வது: அவர்கள் தங்கள் பல்லுகளினால் கடிக்கிற
வர்களாயிருந்து, [8]சமாதானமென்று கூப்பிட்டு,
தங்கள் வாய்க்குக்கொடாதவனுக்கு விரோதமாக
யுத்தத்தை ஆயத்தம்பண்ணுகிறார்கள். — ஆகை ௬
யால் நீங்கள் தரிசனம் பார்க்கக்கூடாத இராத்தி
ரியும், குறிசொல்லக்கூடாத அந்தகாரமும் உங்
களுக்கு வரும்; தீர்க்கதரிசிகளின்மேல் சூரியன்
அஸ்தமித்து, அவர்கள்மேல் பகல் காரிருளாய்ப்
போகும். — தரிசனம் பார்க்கிறவர்கள் வெட் ௭
கிக் குறிசொல்லுகிறவர்கள் நாணிப்போய், உத்
தரவு கொடுப்பிக்கிற தேவன் இல்லாததினாலே
அவர்கள் எல்லாரும் தங்கள் தாடியை மூடுவார்
கள்.—நானோவென்றால், [9]யாக்கோபுக்கு அவன் ௮
மீறுதலையும் இஸ்ரவேலுக்கு அவன் பாவத்தை
யும் அறிவிக்கத்தக்கதாக, கர்த்தருடைய ஆவி
யோடேகூடிய பலத்தினாலும், நியாயத்தினா
லும், பராக்கிரமத்தினாலும் நிரப்பப்பட்டிருக்கி
றேன்.

நியாயத்தை அருவருத்து, செம்மையானவைக ௯
ளையெல்லாம் கோணலாக்கி,—சீயோனை இரத்தப் ௰
பழிகளாலும், எருசலேமை அநியாயத்தினாலும்
கட்டுவிக்கிற யாக்கோப்வீட்டாரின் தலைவர்
களே, இஸ்ரவேல்வீட்டாரின் அதிபதிகளே, இ
தைக் கேளுங்களேன்.—[10]அதின் தலைவர்கள் பரி ௰௧
தானத்துக்கு நியாயந்தீர்க்கிறார்கள்; அதின் ஆசா
ரியர்கள் கூலிக்கு உபதேசிக்கிறார்கள்; அதின்
தீர்க்கதரிசிகள் பணத்துக்குக் குறிசொல்லுகிறார்
கள்; ஆகிலும் அவர்கள் கர்த்தரைச் சார்ந்துகொ
ண்டு, கர்த்தர் எங்கள் நடுவில் இல்லையோ, தீங்கு

6 எசா. ௧. ௰. ஓசே. ௫. ௧. 8 எசா. ௫௬. ௰.—9 எசா. ௫௮. ௧.
7 எசா. ௫௯. ௨. 10 செப். ௩. ௩.

௰௨ எங்கள்மேல் வராதென்கிறார்கள்.—ஆகையால்
[1]உங்கள்நிமித்தம் சீயோன் வயலாக உழப்பட்டு,
எருசலேம் மண்மேடுகளும் வீட்டின்பர்வதம்
காட்டுமேடுகளுமாய்ப்போகும்.

## ௪. அதிகாரம்.

௧. திருச்சபையின் மகிமை. ௩. அதின் சமாதானம். ௮. ஆளுகை. ௰௧. செயம்.

௧ ஆனால் [2]கடைசிநாள்களில் சம்பவிப்பதேதெ
னில், கர்த்தருடைய வீட்டின் பர்வதம் பர்வதங்
களின் கொடுமுடியாய்த் திடப்பட்டு, மேடுகளி
லும் அதுவே உயரும்; சனசதளங்கள் அதற்கு
௨ ஓடி,—[3]திரளான சாதியார் நடந்துவந்து, கர்த்த
ரின் பர்வதத்துக்கும் யாக்கோபுடைய பராபர
னின் வீட்டுக்கும், அவர் தமது வழிகளை நமக்
குப் போதிக்கவும், நாம் அவர் பாதைகளில் நடக்
கவும், நாம் போயேறுவோம் வாருங்கள் என்பார்
கள்; ஏனெனில் வேதம் சீயோனிலும், கர்த்த
ரின் வசனம் [4]எருசலேமிலுமிருந்து பரவிப்போ
௩ கும்.—[5]அவர் திரளான சனசதளங்களுக்குள் நியா
யந்தீர்த்து, தூரபரியந்தம் பலத்த சாதிகளைக் கடிந்
துகொள்ளுவார்; அப்போது தங்கள் பட்டை
யங்களை மண்வெட்டிகளாகவும் தங்கள் ஈட்டி
களை அரிவாள்களாகவும் அடிப்பார்கள்; சாதிக்கு
விரோதமாய்ச் சாதி பட்டையம் எடுப்பதில்லை;
௪ இனி யுத்தம் பழகுவதுமில்லை. — [6]அவனவன்
தன் திராட்சச்செடியின்கீழும் தன் அத்திமரத்
தின் கீழும் தத்தளிக்கப்பண்ணுவார் இல்லாமல்
உளுக்காருவான்; ஏனெனில் [7]சேனைகளுடைய
௫ கர்த்தரின் வாய் இதைச் சொல்லிற்று.—அதே
னென்றால் சகல சனசதளங்களும் தங்கள்தங்கள்
பராபரனுடைய நாமத்திலே நடப்பார்கள்; நாங்
களும் எங்கள் பராபரனாகிய கர்த்தருடைய நா
மத்திலே என்றென்றைக்குமுள்ள சதாகாலங்க
ளாக நடப்போம்.
௬ கர்த்தர் சொல்லுகிறதேதெனில், அந்நாளிலே
நாம் நொண்டியானவளைச் சேர்த்து, தள்ளுண்
டவளையும் நாம் தீங்கு அனுபவிக்கப்பண்ணின
௭ வளையும் கூட்டிக்கொண்டு,—[8]நொண்டியான
வளை மீதியான சனமாகவும், தூரமாய்த் தள்ளு
ண்டுபோனவளைப் பலத்த சாதியாகவும் வைப்
போம்; அவர்கள்பேரிலே கர்த்தர் சீயோன்பர்
வதத்திலே [9]இதுமுதலாய் என்றென்றைக்கும்
௮ இராசாவாயிருப்பார்.—மந்தையின் துருக்கமே,
சீயோன் குமாரத்தியின் மேடே, உன்னண்டை
க்கு வரும்; [10]முந்தின ஆளுகையும் எருசலேம்
குமாரத்தியின் இராசரிக்கமுமே வரும்.
௯ இப்போதும் நீ கதறுதலாய்க் கதறுவானேன்?
இராசாவானவர் உனக்குள்ளே இல்லையோ? உன்
ஆலோசனைக்காரர் அழிந்தாரோ? ஏனென்றால்
பிள்ளைபெறுகிறவளுக்கு ஒத்த அம்பாயம் உன்
௰ னைப் பிடித்திருக்கிறதே. — சீயோன் குமாரத்
தியே, பிள்ளைபெறுகிறவளைப்போல அம்பாயப்
பட்டுப் பிரயாசப்படு; ஏனெனில் இப்போது ப
ட்டணத்திலிருந்து புறப்பட்டு, வெளிகளில் தங்
கி, பாபேல்மட்டும் வந்துசேருவாய்; அங்கேவிடு
விக்கப்படுவாய்; அங்கே கர்த்தர் உன்னை உன்
சத்துருக்களின் கைக்கு நீங்கலாக்கி மீட்பார்.
இப்போதும் அவள் தீட்டுப்பட்டவளாகக்கட ௰௧
வளென்றும், சீயோனிலே எங்கள் கண் தனக்கு
ஆசையாயிருக்கிறதைக் காணுமென்றும் அநேகம்
சாதியார் உனக்கு விரோதமாகக் கூடிக்கொள்ளு
வார்கள்.—ஆனால் [11]அவர்கள் கர்த்தருடைய நினை ௰௨
வுகளை அறியாமலும் அவருடைய யோசனையை
உணராமலும் இருக்கிறார்கள்; அதேதெனில்
அரிக்கட்டுகளைப்போல அவர்களைக் களத்திலே
கூட்டுவார்.—சீயோன் குமாரத்தியே, நீ எழுந்தி ௰௩
ருந்து போரடி; ஏனென்றால் நாம் உன் கொம்பு
களை இரும்பும் உன் குளம்புகளை வெண்கலமு
மாக்குவோம்; நீ அநேக சனசதளங்களை நொறுக்
கிப்போடுவாய்; அவர்கள் தேடிச்சேர்த்ததைக்
கர்த்தருக்கும் அவர்களுடைய ஆஸ்தியைப்பூமிக்
கெல்லாம் ஆண்டவராயிருக்கிறவருக்கும் நிய
மிப்போம்.—தண்டு சேனையையுடைய பட்ட ௰௪
ணமே, இப்போது தண்டுதண்டாகக் கூடிக்
கொள்; நமக்கு விரோதமாக முற்றிக்கைபோ
டப்படும்; இஸ்ரவேலுடைய நியாயாதிபதியை
மிலாற்றினாலே தாடையிலே அடிப்பார்கள்.

## ௫. அதிகாரம்.

௧. கிறிஸ்துவின் சனனம். ௩. அவருடைய இராச்சியம். ௭. அவருடைய செயம்.

ஆனால் [12]எப்பிராத்தா என்னப்பட்ட [13]பெத் ௧
லேகேமே, நீ யூதேயாவிலுள்ள ஆயிரங்களுக்குள்
ளே சிறியதாயிருந்தாலும், இஸ்ரவேலை ஆளப்
போகிறவர் உன்னிலேயிருந்து புறப்படுவார்;
அவருடைய புறப்படுதல்கள் [14]அநாதிநாள்களா
கிய பூருவத்தினுடையவைகள்.
ஆகையால் பெறப்போகிறவள் பெறுங்காலம ௨
ட்டும் அவர்களை ஒப்புக்கொடுப்பார்; அப்போது
அவருடைய சகோதரரில் மீதியானவர்கள் இஸ்
ரவேல் புத்திரரோடுங்கூடத் திரும்புவார்கள்.—
அவர் நின்று கர்த்தருடைய பலத்தோடும் தம்மு ௩
டைய பராபரனாகிய கர்த்தருடைய நாமத்தின்
முக்கியத்தோடும் மேய்ப்பார்; ஆகையால் அவர்
கள் தங்கித்தரிப்பார்கள்; ஏனெனில் இனிப் பூமி
யின் எல்லைகள்பரியந்தமும் மகிமைப்படுவார்.
[15]இவரே சமாதானம்; அசூர் நம்முடைய தே ௪
சத்திலே வரும்போதும், நம்முடைய அரண்ம
னைகளை மிதிக்கும்போதும், ஏழு மேய்ப்பரையும்
மனுஷரில் எட்டு அதிபதிகளையும் அவனுக்கு
விரோதமாக நிறுத்துவோம்.—இவர்கள் அசூரின் ௫
தேசத்தையும் நிம்ரோத்தின் தேசத்தையும் அதி
னுடைய வாசல்களுக்கு உள்ப்புறமாகப் பட்

1 எரே. ௨௬. ௰௮: ௨௧. ௰௮.
2 ஏசா. ௨. ௨.—3 ஏசா. ௬௰. ௪, ௫.
4 லூக். ௨௪. ௪௭.—5 ஏசா. ௨. ௪.
6 ௧ இரா. ௪. ௨௫.
7 ஏசா. ௫௮. ௰௪.—8 செப். ௩. ௰௯.
9 லூக். ௧ ௩௩.
10 ஏசா. ௧. ௨௬.—11 எரே. ௨௧. ௰௧.
12 ௧ மோ. ௩௫. ௰௯.
13 மத். ௨. ௬. லூக். ௨. ௧–௭.
14 யோவா. ௧. ௰௪.
15 எபே. ௨. ௰௪.

டையத்தினாலே மேய்ந்துபோடுவார்கள்; அப்ப
டியே அசூர் நம்முடைய தேசத்தில் வரும்போ
தும், நம்முடைய எல்லைகளை மிதிக்கும்போதும்
அவனுக்கு நம்மைத் தப்புவிப்பார்.
௬ யாக்கோபிலே மீதியானவர்கள், அநேகம் சன
சதளங்களின் நடுவிலே [1]கர்த்தராலே வந்த பனி
யைப்போலேயும், மனுஷனுக்குக் காத்திராம
லும், மனுபுத்திரரை நம்பியிராமலும் இருக்கிற
பூண்டுகள்மேல் வந்த மழைகளைப்போலேயும்,
இருப்பார்கள்.
௭ சாதிகளுக்குள் யாக்கோபிலே மீதியானவர்கள்,
அநேகம் சனசதளங்களின் நடுவிலே சிங்கம்
காட்டுமிருகங்களுக்குள்ளே இருக்கிறதற்குச்
சமானமாகவும், கடந்துபோய் மிதித்துத் தப்பு
விப்பார் இல்லாமல் பீறிப்போடுகிற இளஞ்சிங்
கம் ஆட்டுமந்தைக்குள்ளே இருக்கிறதற்குச் சமா
னமாகவும் இருப்பார்கள்.
௮ உன்னுடைய கை உன் விரோதக்காரரின்
மேல் உயரும்; உன் சத்துருக்களெல்லாரும் சங்
கரிக்கப்படுவார்கள்.
௯ கர்த்தர் சொல்லுகிறதாவது: அந்நாளிலே சம்
பவிப்பதேதெனில், நாம் உன் குதிரைகளை உன்
நடுவில் இராதபடிக்குச் சங்கரித்து, உன் இரதங்
௰ களை அழித்து,—உன் தேசங்களின் பட்டணங்
களைச் சங்கரித்து, உன் அரண்களையெல்லாம்
௰௧ நிர்மூலமாக்கி,—சூனியங்களை உன் கையில் இரா
தபடிக்குச் சங்கரிப்போம்; நாள்பார்வைக்காரர்
௰௨ உனக்கு இல்லாதேபோவார்கள்.-[2]உன் சுரூபங்க
ளையும் உன் சிலைகளையும் உன் நடுவில் இராதபடிக்
குச் சங்கரிப்போம்; உன் கைகளின் கிரியையை
௰௩ இனிப் பணிந்துகொள்ளாய்.—நாம் உன் தோப்
புகளை உன் நடுவில் இராதபடிக்குப் பிடுங்கி,
௰௪ உன் பட்டணங்களை அழித்து, — கேள்விகொ
டாத புறச்சாதிகளிடத்திலே கோபத்தோடும் உக்
கிரத்தோடும் நீதியைச் சரிக்கட்டுதலைச்செய்வோ
மென்றார்.

## ௬. அதிகாரம்.

௧. இரக்கமின்மையையும், ௯. அநியாயத்தையும், ௰. அநீதியையும், ௰௬. விக்கிரக ஆராதனையையுங்குறித்த பராபரனுடைய வழக்கு.

௧ கர்த்தர் சொல்லுகிறதைக் கேளுங்கள்; நீ எழுந்தி
ருந்து, பர்வதங்களோடே வழக்குச்சொல்; மேடு
கள் உன் சத்தத்தைக் கேட்கக்கடவது:
௨ பர்வதங்களே, பூமியின் உறுதியான அஸ்திபா
ரங்களே, கர்த்தருடைய வழக்கைக் கேளுங்கள்;
ஏனெனில் [3]கர்த்தருக்கு அவர் சனத்தோடே
வழக்கு இருக்கிறது; இஸ்ரவேலோடே அவர்
௩ நியாயம்பேசுவார்.-நமது சனமே, உனக்கு என்ன
செய்தோம்? அல்லது எதினால் உன்னை விதனப்
படுத்தினோம்? நமக்கு எதிரே உத்தரவுசொல்.—
௪ நாம் உன்னை எகிப்துதேசத்திலிருந்து ஏறிவரப்
பண்ணி, அடிமைத்தன வீட்டில் இருந்த உன்னை
மீட்டுக்கொண்டு, மோசே ஆரோன் மிரியாம் என்
றவர்களை உனக்குமுன்பாக அனுப்பினோம்.—
நமது சனமே, [4]மோவாபின் இராசாவாகிய பா ௫
லாக் பண்ணின யோசனை ஏதென்றும் பேயோ
ரின் குமாரனான பிலேயாம் அவனுக்குப்பிரதியுத்
தரமாகச் சொன்னதேதென்றும், சித்தீம்துவக்கிக்
கில்கால்மட்டும் நடந்ததேதென்றும், நீ கர்த்தரு
டைய நீதிகளை அறிந்துகொள்ளும்படிக்கு நினைத்
துக்கொள்ளேன்.

எதினாலே நான் கர்த்தருக்கு முந்திக்கொண்டு, ௬
உன்னதமான பராபரனுக்குமுன்பாகக் குனி
வேன்? தகனபலிகளினாலும் ஒரு வயதுக் கன்று
க்குட்டிகளாலும் அவருக்கு முந்திக்கொள்வே
னோ?—ஆயிரங்களான ஆட்டுக்கடாக்களின்பே ௭
ரிலும், எண்ணெய் ஓடுகிற பதினாயிரங்களான
ஆறுகளின்பேரிலும், கர்த்தர் பிரியமாயிருப்பா
ரோ? என் துரோகத்தைப்போக்க என் முதற்
பேற்றையும், என் ஆத்துமத்தின் பாவத்தைப்
போக்க என் சர்ப்பக்கனியையும் கொடுப்பே
னோ?–மனுஷனே, நன்மையேதென்று உனக்கு ௮
அறிவித்தார்; நியாயஞ்செய்து இரக்கத்தைச்சிநே
கித்து, உன் பராபரனுக்கு மனத்தாழ்மையாய்
நடப்பதை அல்லாமல் வேறே என்னத்தைக்
கர்த்தர் உன்னில் தேடுகிறார்.

கர்த்தருடைய சத்தம் பட்டணத்துக்கு எதிரா ௯
கக் கூப்பிடுகிறது; ஏனெனில் உம்முடைய நா
மம் உத்தமத்தை நோக்குகிறது; மிலாற்றின் செய்
தியையும் அதை நிருணயம்பண்ணினவர் யா
ரென்கிறதையும் கேளுங்கள்.–ஆகாதவன் வீட்டி ௰
லே ஆகாமியப்பொக்கிஷங்களும் அருவருக்கப்
படத்தக்க குறைந்த மரக்காலும் இன்னம் இருக்
கிறதல்லவோ?–ஆகாத தராசும் கபட்டுப் படிக் ௰௧
கல்லுகளுள்ள பையும் இருக்கக்கொள்ளச் சுத்த
முண்டோ?—அதேனெனில் அவர்களில் ஐசு ௰௨
வரியமுள்ளவர்கள் கொடுமையால் நிறைந்திருக்
கிறார்கள்; அவர்களுடைய குடியானவர்கள்
பொய்பேசுகிறார்கள்; அவர்கள் வாயிலிருக்கிற
அவர்களுடைய நாக்கு கபட்டுநாக்கு.

ஆகையால் நாமும் உன்னை அடிக்கிறதினா ௰௩
லும் உன் பாவங்களின் நிமித்தம் பாழாக்குகிற
தினாலும் உன்னைப் பலட்சயமாக்குவோம்.—நீ ௰௪
புசித்தும் திருத்தியடையாதிருப்பாய்; அது உன்
உள்ளத்திலே உன்னை ஒடுக்கும்; நீ பதனம்பண்
ணியும் தப்புவிப்பதில்லை; நீ தப்புவிப்பதையோ
பட்டையத்துக்கு ஒப்புக்கொடுப்போம். — [5]நீ ௰௫
விதைத்தும் அறுக்காதேபோவாய்; நீ ஒலீவப்ப
ழங்களையும் திராட்சப்பழங்களையும் ஆலையாடி
யும் எண்ணெய் பூசிக்கொள்வதுமில்லை; இரசம்
குடிப்பதுமில்லை.

ஏனென்றால் நாம் உன்னைப் பாழாகவும் உன் ௰௬
குடிகளை ஈசல்போடப்படுதலாகவும் வைக்கத்
தக்கதாக, [6]உம்ரீயினுடைய கட்டளைகளும்
ஆகாப்வீட்டாருடைய எல்லாச் செய்கையும்
கைக்கொள்ளப்பட்டுவருகிறது; அவர்களுடைய

1 சங். ௭௨. ௬.—2 சகரி. ௰௩. ௨.—3 ஏசா. ௧.௧௮.—4 ௪ மோ. ௨௨.௫௬.

5 ௫ மோ. ௨௮. ௩௮. ஆகா. ௧. ௬.—6 ௧ இரா. ௰௬. ௨௫-௩௩.

ஆலோசனைகளிலே நடக்கிறீர்கள்; ஆகையால்
நமது சனத்தின் நிந்தையைச் சுமப்பீர்கள்.

## ௭. அதிகாரம்.

௧. திருச்சபை தனது சிறிய தொகையையும், ௨. சாதாரணச் சிதைவையும் குறித்து முறையிட்டு, ௩. தன் நம்பிக்கையை மனிதனில் வைக்காமல் பராபரனில் வைத்தது. ௮. அது தன் சத்துருக்களைச் செயங்கொள்வது. ௰௪. பராபரன் அதை வாக்குத்தத்தங்களினாலும், ௰௬. சத்துருக்கள் கலங்கிப்போவதினாலும், ௰௮. தமது இரக்கங்களினாலும் தேற்றினது.

௧ எனக்கு ஐயோ! ஏனெனில் வசந்தகாலத்துக்
கனிகள் சேர்க்கப்பட்டதற்கும் திராட்சப்பழங்
கள் அறுக்கப்பட்டதற்கும் பிற்பாடு வருகிறவ
னைப்போல இருக்கிறேன்; புசிக்கிறதற்கு ஒரு
திராட்சக்குலையும் என் ஆத்துமம் இச்சித்தமுதல்
௨ அறுப்பின் கனியும் இல்லை.—[1]தேசத்தில் சன்
மார்க்கர் அற்றுப்போனார்கள்; மனுஷரில் செம்
மையானவன் இல்லை; அவர்களெல்லாரும் இரத்
தஞ்சிந்தப் பதிவிருக்கிறார்கள்; அவனவன் தன்
சகோதரனை வலையிலே பிடிக்க வேட்டையாடு
௩ கிறான்.—நன்றாய்ப் பொல்லாப்புச்செய்ய இரண்
டுகைகளும் கூடும்; பிரபு, தாவென்று கேட்கி
றான்; நியாயாதிபதி, கைக்கூலிக்கு நியாயந்தீர்க்
கிறான்; பெரியவன், தன் ஆத்துமத்தின் தீவினை
யைச் சொல்லுகிறான்; பிறகு அதைப் பிரித்துப்
௪ போடுகிறார்கள்.—அவர்களில் நல்லவன் முட்செ
டிக்கொத்தவனும், செம்மையானவன் நெரிஞ்
சிலைப்பார்க்கக் கேடுள்ளவனுமாயிருக்கிறான்;
உன் காவற்காரர் அறிவித்த உன்னுடைய விசா
ரிப்பின் நாள் வருகிறது; இனி அவர்களுடைய
௫ கலக்கம் வரும்.—சிநேகிதனை விசுவாசியாதேயுங்
கள்; வழிகாட்டியை நம்பாதேயுங்கள்; உன் மடி
யிலே படுத்துக்கொண்டிருக்கிறவளுக்கு முன்
பாக உன் வாயைத் திறக்க எச்சரிக்கையாயிரு.—
௬ ஏனெனில் [2]மகன் தகப்பனை ஈனப்படுத்துகி
றான்; மகள் தன் தாய்க்கு விரோதமாகவும், மரு
மகள் தன் மாமிக்கு விரோதமாகவும் எழும்பு
கிறார்கள்; மனுஷனுடைய சத்துருக்கள் அவன்
வீட்டு மனுஷர்தானே.

௭ [3]நானோவென்றால் கர்த்தனை நோக்கிக்கொண்டு
என் இரட்சிப்பின் பராபரனுக்குக் காத்திருப்
பேன்; என் பராபரன் என்னைக் கேட்பார்.
௮ என் பகைஞியே, என்நிமித்தம் சந்தோஷப்
படாயாக; [4]நான விழுந்திருந்தால் எழுந்திருப்
பேன்; நான் இருளிலே உளுக்காந்தால், [5]கர்த்தர்
௯ எனக்கு வெளிச்சமாயிருப்பார்.—கர்த்தர் என்
வழக்கை வழக்காடி என் நியாயத்தை விசாரிக்கு
மட்டும் அவருடைய சினத்தைச் சுமப்பேன்;
ஏனெனில் அவருக்கு விரோதமாகப் பாவஞ்
செய்தேன்; என்னை வெளிச்சத்திலே புறப்ப
டப்பண்ணுவார்; அவருடைய நீதியைமகிழ்ச்சி
யாய்ப்பார்ப்பேன்.—உன் பராபரனாகிய கர்த்தர் ௰
எங்கே என்று என்னோடேசொல்லுகிற என்ப
கைஞி அதைப் பார்க்கும்போது வெட்கம் அ
வளை மூடும்; என் கண்கள் அவளில் நீதியைச்
சரிக்கட்டுதலைக் காணும்; இனி வீதிகளின் சேற்
றைப்போல மிதியுண்டுபோவாள்.

உன் மதில்களை எடுப்பிக்கும் நாள் வருகிறது; ௰௧
அந்நாளிலே பிரமாணம் தூரத்துக்குப் பரவிப்
போம்.—அந்நாளிலே அசூரியாதுவக்கி எகிப் ௰௨
தின் பட்டணங்கள்மட்டுக்கும், எகிப்துதுவக்கி
நதிமட்டுக்கும், ஒரு சமுத்திரம்துவக்கி மற்றச்
சமுத்திரமட்டுக்கும் ஒரு பர்வதந்துவக்கி மற்றப்
பர்வதமட்டுக்கும் இருக்கிற புறங்களிலிருந்து
சனங்கள் உன்னண்டைக்கு வருவார்கள்.—
ஏனெனில் தன் குடிகளின்நிமித்தமும் அவர்கள் ௰௩
கிரியைகளுடைய கனிகளின்நிமித்தமும் தேசம்
பாழாயிருந்தது.

கர்மேலின் நடுவிலே தனித்து வனவாசமாயி ௰௪
ருக்கிற உமது சுதந்தரமான மந்தையாகிய உம்
முடைய சனத்தை உமது கோலினாலே மேயும்;
பூர்வநாள்களைப்போலே அவர்கள் பாசானிலும்
கிலேயாத்திலும் மேய்வார்களாக.

நீ எகிப்துதேசத்திலிருந்து புறப்பட்ட நாள் ௰௫
களைப்போலே உன்னை அதிசயங்களைக் காணப்
பண்ணுவோம்.—புறச்சாதிகள் கண்டு தங்க ௰௬
ளுடைய எல்லாப் பராக்கிரமத்தையும்தொட்டு
வெட்கப்படுவார்கள்; கையை வாயின்மேலே
போட்டுக்கொள்ளுவார்கள்; அவர்கள் காதுகள்
செவிடாய்ப்போகும்.—பாம்பைப்போலே [6]மண் ௰௭
ணை நக்குவார்கள்; பூமியின் ஊர்வனவற்றைப்
போலே தங்கள் அடைப்புகளிலிருந்து தத்த
ளித்துப் புறப்படுவார்கள்; திகிலோடே எங்கள்
பராபரனாகிய கர்த்தரண்டைக்குச் சேர்ந்து. உ
னக்குப் பயப்படுவார்கள்.

[7]அக்கிரமத்தை நீக்கிப்போட்டு, தமது சுதந்த ௰௮
ரத்தில் மீதியானவர்களுக்கு மீறுதலை மன்னித்து
விடுகிற தேவரீரைப்போல ஒத்த தேவன் யார்?
என்றென்றைக்கும் கோபத்தை வையார்; ஏனெ
னில் அவர் கிருபைசெய்ய விரும்புகிறார்.—
திரும்ப எங்கள்பேரில் இரங்குவார்; எங்கள் ௰௯
அக்கிரமங்களை அடக்கி, எங்கள் பாவங்களை
எல்லாம் சமுத்திரத்தின் ஆழங்களில் போட்டுவி
டுவார்.—தேவரீர் பூருவநாள்க்கள் முதற்கொண்டு ௨௰
[8]எங்கள் பிதாக்களுக்கு ஆணையிட்ட சத்தியத்
தை யாக்கோபுக்கும், கிருபையை ஆபிரகாமுக்
கும் கட்டளையிடுவீர்.

1 சங். ௰௨ ௨—2 மத். ௰. ௨௧: ௩௫. ௩௬. லூக். ௰௨. ௫௩.
3 சங். ௪௨. ௫.
4 வாக். ௨௪. ௰௬.
5 சங். ௨௭ ௧.—6 சங். ௭௨. ௯.
சங். ௱௩. ௮—௰௨.
7 ௨ மோ. ௩௪. ௬, ௭.
8 லூக். ௧. ௭௨. ௭௩.

NAHUM.

# நாகூமின் தீர்க்கதரிசனம்.

## ௧. அதிகாரம்.

*௧. பராபரன் தமது சனத்துக்கு நன்மையிலேயும், தமது சத்துருக்களுக்குத் தீமையிலேயும் காட்டும் மகத்துவம்.*

௧ நினிவேயின் சுமை; எல்கோசானாகிய நாகூ
மின் தரிசனப் புஸ்தகம்.
௨ கர்த்தர் [1]எரிச்சலுள்ளவரும் நீதியைச் சரிக்
கட்டுகிறவருமான தேவன்; கர்த்தர் நீதியைச்
சரிக்கட்டுகிறவரும் உக்கிரசாலியுமானவர்; கர்த்
தர் தம்முடைய சத்துருக்களுக்கு நீதியைச் சரிக்
கட்டுகிறவர்; அவர் தம்முடைய பகைஞர்மேல்
௩ கோபம் வைக்கிறவர்.—கர்த்தர் நீடியசாந்தமுள்
ளவரும் பலம் மிகுத்தவருமாயிருக்கிறார்; அவர்
களை ஆக்கினையில்லாமல் நீங்கலாகவிடார்; கர்த்
தருடைய வழி பெருங்காற்றிலும் கொந்தளிப்
பிலும் உள்ளது; மேகங்கள் அவருடைய பாதத்
௪ தூளாயிருக்கிறது.—அவர் சமுத்திரத்தை அதட்
டி, அதை வற்றிப்போகப்பண்ணிச் சகல ஆறு
களையும் வறட்சியாக்குகிறவர்; பாசானும் கர்மே
லும் வதங்கி, லீபனோனின் செழிப்பு வாடிப்
௫ போகும்.—அவரால் பர்வதங்கள் அதிர்ந்து மேடு
கள் கரைந்துபோகும்; அவர் சன்னிதியால் பூமி
எடுபடும்; பூச்சக்கரமும் அதில் குடியிருக்கிற
௬ அனைவரும்தானே. — [2]அவர் சினத்துக்குமுன்
பாக நிற்பவன் யாவன்? அவர் கோபத்தின் உக்
கிரத்திலே தரிப்பவன் யாவன்? அவருடைய
எரிச்சல் அக்கினியைப்போலப் பாய்கிறது; கல்
மலைகள் அவராலே இடியும்.
௭ கர்த்தர் நல்லவரும் இக்கட்டுநாளிலே அர
ணான கோட்டையுமாயிருந்து, தம்மை நம்புகிற
௮ வர்களை [3]அறிந்திருக்கிறார்.—அதின் தானத்தைப்
புரண்டுபோகிற பிரளயத்தினாலே சர்வசங்காரம்
பண்ணுவார்; இருள் அவர் சத்துருக்களைப் பின்
௯ தொடரும்.—நீங்கள் கர்த்தருக்கு விரோதமாகச்
செய்ய நினைக்கிறதென்ன? அவர் சர்வசங்காரம்
பண்ணுவார்; இடுக்கம் மறுபடியும் நிலைகொள்
௰ ளாது.—ஏனெனில் அவர்கள் சன்னபின்னலா
யிருக்கிற முள்செடிகளுக்குத்தானே ஒப்பாயி
ருக்கையிலும், தங்கள் லொட்டிக்குடியின்படி
யே வெறித்திருக்கையிலும், முழுதும் காய்ந்து
போன செத்தையைப்போலே வெந்துபோவார்
௰௧ கள். — கர்த்தருக்கு விரோதமாகப் பொல்லாத
நினைவாயிருக்கிற பேலியாளின் ஆலோசனைக்
௰௨ காரன் உன்னிலிருந்து புறப்பட்டான்.—கர்த்தர்
சொல்லுகிறதாவது: அவர்கள் நிறைவாகரும்
அநேகருமாயிருந்தாலும் ஒழிந்துபோகத்தக்க
தாய் அறுப்புண்டுபோவார்கள்; உன்னை நாம் சிறு
மைப்படுத்தினோம்; இனி உன்னைச் சிறுமைப்ப
௰௩ டுத்தாதிருப்போம். — இப்போதும் நாம் உன்
மேல் இருக்கிற அவன் நுகத்தடியை உடைத்
துப்போட்டு, உன் கட்டுகளை அறுப்போம்.
ஆனால் உனக்கு விரோதமாகக் கர்த்தர் இட்ட ௰௪
கட்டளையாவது: இனி உன்பேருக்கு வித்து
வைக்கப்படுவதில்லை; உன் தேவர்களின் வீட்
டில் இருக்கிற சுரூபத்தையும் வார்க்கப்பட்ட
விக்கிரகத்தையும் நாம் நிர்மூலம்பண்ணுவோம்;
நீ கனஈனனானபோது அதை உனக்குக் கல்ல
றையாக்குவோம்.

## ௨. அதிகாரம்.

*௧. நினிவேக்கு விரோதமாக வரும் பராபரனுடைய பயங்கரமுள்ள செயம் பொருந்திய சேனைகள்.*

இதோ, [4]சமாதானத்தைக் கூறுகிற சுவிசேஷ ௧
னுடைய கால்கள் மலைகளின்மேல் வருகிறது;
யூதாவே, உன் பண்டிகைகளை ஆசரி; [5]உன் பொ
ருத்தனைகளைச் செலுத்து; ஏனெனில் பேலியாள்
இனி அப்புறம் உன்மேல் கடந்துவருவதில்லை;
அவன் முழுதும் சங்கரிக்கப்பட்டான்.
தெறிக்கடிக்கிறவன் உன் முகத்துக்கு முன் ௨
பாக ஏறிவருகிறான்; கொத்தளத்தைக் காரு; வழி
யை நோக்கிக்கொண்டிரு; அரைகளைக் கெட்டி
யாய்க் கட்டிக்கொள்; உன் பெலனை மிகவும்
திடப்படுத்து.—ஏனெனில் கர்த்தர் யாக்கோபின் ௩
முக்கியத்தைத் திரும்பிவரப்பண்ணுவார்; இஸ்ர
வேலின் முக்கியத்தையும் அப்படித்தானே; அ
தேனென்றால் வெறுமையாக்குகிறவர்கள் அவர்
களை வெறுமையாக்கி அவர்களுடைய திராட்
சக்கொடிகளைக் கெடுத்துப்போட்டார்கள்.—அ ௪
வனுடைய பராக்கிரமசாலிகளின் கேடயங்கள்
சிவப்பாயிருக்கும்; அவன் இராணுவமனுஷர்
இரத்தாம்பரம் தரித்துக்கொண்டிருக்கிறார்கள்;
அவன் தன்னை ஆயத்தம்பண்ணும்நாளிலே இர
தங்கள் மின்னிக்கொண்டிருக்கிற அறிவாள்
களின் முஸ்தீதாயிருக்கும்; ஈட்டிகள் குலுங்
கும்.-இரதங்கள் வீதிகளில் கடகடவென்றோடி, ௫
தெருக்களில் திரியும்; அவைகள் தீவட்டிகளின்
உருவாயிருந்து, மின்னல்களைப்போலே ஓடும்.
தன்னுடைய பிரஸ்தாபமனுஷரை நினைவுகூ ௬
ருவான்; இவர்கள் தங்கள் நடைகளில் இடறி,
அலங்கத்துக்குத் தீவிரித்து ஓடுவார்கள்; மறைவி
டம் செப்பனிடப்படும்.-ஆறுகளின் வாசல்கள் ௭
திறக்கப்படும்; அரமனை வெந்து கரையும். —
அவள் சிறையிருப்பாய்க் கொண்டுபோகப்படத் ௮
தீர்மானமாயிற்று; அவளுடைய வேலைக்காரிகள்
புறாக்களைப்போலச் சத்தமிட்டு, தங்கள் மார்பி
லே அடித்துக்கொண்டு கூடப்போவார்கள். —
நினிவே உண்டான நாள்துவக்கி, தண்ணீர்க்கு ௯
ளம்போலே இருந்தது; இப்போதோவெனில் அ
வர்கள் ஓடிப்போகிறார்கள்; நில்லுங்கள் நில்லுங்
கள் என்றாலும், திரும்பிப்பார்க்கிறவன் இல்லை.

1 ௨ மோ. ௨௰. ௫.—2 வெளி. ௬.௰௭.—3 சங். ௧. ௬. ௨ தீமோ. ௨.௰௯.

4 ஏசா. ௫௨. ௭.—5 சங். ௫௰.௰௪.

௰ வெள்ளியைக் கொள்ளையிடுங்கள்; பொன்
னைக் கொள்ளையிடுங்கள்; ஏனென்றால் சம்பத்
துக்கு முடிவில்லை; இச்சிக்கப்படத்தக்க சகல
உடைமைகளின் வெகுத்துவம் இருக்கிறது. —
௰௧ வெறுமையும் வெளியும் ஆகாசமயமும் ஆவாள்;
இருதயம் உருகும்; முழங்கால்கள் தத்தளிக்கும்;
எல்லா இடுப்புகளிலும் மகா வேதனை உண்டா
யிருக்கும்; எல்லாருடைய முகங்களின் உருவும்
சுருங்கும்.
௰௨ கிழச்சிங்கமாகிய சிங்கமும் சிங்கக்குட்டிக
ளும் பயப்படுத்துவாரில்லாமல் நடமாடித் தங்
கின சிங்கத்தாபரமும் இளஞ்சிங்கங்களுக்கு இ
௰௩ ருந்த மேய்விடமும் எங்கே?–சிங்கம் தன் குட்
டிகளுக்குத் தேவையானதைப் பீறி, தன் பெண்
சிங்கங்களுக்கு வேண்டியதைத் தொண்டை
யைப் பிடித்துக் கொன்றுபோட்டு, இரைகளின
லே தன் கெபிகளையும் பீறிப்போட்டவைகளி
னாலே தன் தாபரங்களையும் நிரப்பிற்று.
௰௪ இதோ, நாம் உனக்கு விரோதமாக வந்து இர
தங்களைப் புகையெழும்ப எரித்துப்போடுவோம்;
பட்டயம் உன்னுடைய இளஞ்சிங்கங்களைப்
பட்சிக்கும்; நீ இரைக்குப்பாய்கிற வேலையைத்
தேசத்தில் அற்றுப்போகப்பண்ணுவோம்; உன்
தானாபதிகளின் சத்தம் இனிக் கேட்கப்படுவ
தில்லையென்று சேனைகளுடைய கர்த்தர் சொல்
லுகிறார்.

## ௩. அதிகாரம்

௧. நினிவேயின் நிர்ப்பாக்கியமான அழிவு.

௧ இரத்தப்பழிகளின் பட்டணத்திற்கு ஐயோ!
அது முழுதும் பொய்யினாலும் பறிக்குதலினா
லும் நிறைந்திருக்கிறது; பீறிப்போடுதல் வாங்
௨ காமல் நடக்கிறது.–சவுக்குகளின் இரைச்சலும்,
உருளைகள் அதிருகிறதும், குதிரைகள் தரையைத்
தட்டுகிறதும், இரதங்கள் கடகடவென்றோடுகி
௩ றதுமான இரைச்சலும்,–இராவுத்தர் ஏறிவருகிற
குதிரைகளும், துலங்கிய பட்டயங்களும்,
மின்னுகிற ஈட்டிகளும், வெட்டுண்டவர்களின்
திரளும், பிரேதங்களின் ஏராளமும் உண்டா
கும்; பிணங்களுக்குத் தொகையில்லை; அவர்க
ளுடைய பிணங்களில் இடறுவார்கள்.
௪ [1]தன் வேசித்தனங்களினாலே சாதிகளையும், தன்
சூனியங்களினாலே வம்சங்களையும் விற்கிற மகா
சூனியக்காரியாயிருக்கிற உரூபவதியான வேசி
யினுடைய திரளான வேசித்தனங்களின் நிமித்த
௫ மாகத்தானே.–இதோ, நாம் உனக்கு விரோதமாக
வந்து உன் வஸ்திரத்து ஓரங்களை உன் முகமட்
டும் தூக்கியெடுத்து, சாதிகளுக்கு உன் நிருவா
ணத்தையும் இராச்சியங்களுக்கு உன் அபிமான
௬ த்தையும் தெரியப்பண்ணி,—உன்மேல் சீயெ
ன்னப்படத்தக்கவைகளை எறிந்து, உன்னை ஈனப்
படுத்தி, உன்னை வேடிக்கையாக்கிப்போடுவோ
மென்று சேனைகளுடைய கர்த்தர் சொல்லுகி
௭ றார். — அப்போது சம்பவிப்பதேதெனில், உன்
னைக் காண்கிறவனெல்லாம் உன்னைவிட்டோ
டிப்போய், நினிவே பாழ்க்கடிக்கப்பட்டதென்
றும், அதற்காகத் துக்கங்கொண்டாடுபவன் யா
வன்? ஆறுதல் சொல்லுகிறவர்களை உனக்கு எங்
கே தேடுவேனென்றும் சொல்லுவான.
நதிகளுக்குள்ளே குடியேறியிருந்த நோ, அம் ௮
மோனைப்பார்க்கிலும் நீ நல்லதோ? அதைச் சுற்
றிலும் தண்ணீர் இருந்தது; சமுத்திரம் அதின்
அரணிப்பும் சமுத்திரக்கால் அதின் மதிலுமாயி
ருந்தது. — எத்தியோப்பியாவும் எகிப்தும் தொ ௯
கையில்லாத சனங்களால் அதற்குப் பெலனாக
இருந்தது; பூத்தும் லூபீமும் அதற்குச் சகாயமா
யிருந்தது.— அப்படிக்கொத்ததும் குடிவிலக்கப் ௰
பட்டுச் சிறையிருப்பிலே போயிற்று; அதின்
குழந்தைகள் எல்லா வீதிகளின் முகனைகளிலும்
சதைத்துப் போடப்பட்டது; அதில் கனமுள்ள
வர்கள்பேரிலே சீலிபோட்டார்கள்; அதில் பெ
ரியவர்கள் சங்கிலிகளால் கட்டப்பட்டார்கள்.
நீயும் மயக்கமாகி ஒளித்துக்கொள்ளுவாய்; ௰௧
நீயும் உன் சத்துருவுக்குத் தப்ப அரணான கோட்
டையைத் தேடுவாய்.—உன் அரண்களெல்லாம் ௰௨
முதல்கந்தாயத்துப் பழங்களுள்ள அத்திமரங்க
ளைப்போலே இருக்கும்; அவைகள் குலுக்கப்
பட்டால் தின்கிறவன் வாயிலே விழும்.—இதோ, ௰௩
உன் நடுவில் இருக்கிற சனம் பெண்சாதிகள்;
உன் தேசத்தின் வாசல்கள் உன் சத்துருவுக்குத்
திறக்கவே திறவுண்டுபோகும்; அக்கினி உன்
தாழ்ப்பாள்களைப் பட்சிக்கும்.
உனக்கு முற்றிக்கைக்குத் தண்ணீர் மொண் ௰௪
டுவை; உன் அரண்களைப் பலப்படுத்து; சேற்
றிலே போய்க் களிமண்ணை மிதி; சூளையைக்
கெட்டிப்படுத்து.—அங்கே அக்கினி உன்னைப் ௰௫
பட்சிக்கும்; பட்டயம் உன்னைச் சங்கரிக்கும்;
அது பச்சைக்கிளிகளைப்போல உன்னைப் பட்
சித்துப்போடும்; உன்னை நீ பச்சைக்கிளிகளத்த
னையாக்கிக்கொள்; உன்னை வெட்டுக்கிளிகளத்
தனையாக்கிக்கொள்.—உன் வர்த்தகரை வானத்து ௰௬
நட்சத்திரங்களிலும் அதிகமாக்கினாய்; இந்தப்
பச்சைக்கிளிகள் பரவிப் பறந்துபோகும்.—உன் ௰௭
மகுடவர்த்தனர் வெட்டுக்கிளிகளுக்கும், உன்
தளகர்த்தர் குளிர்நாளில் வேலிகளில் பாளயம்
இறங்குகிற பெருங்கிளிகளுக்கும் சமானமாயிரு
க்கிறார்கள்; சூரியன் உதித்தபிற்பாடு அவைகள்
போகிறது; பிறகு அவைகள் இருந்த அவைகளு
டைய இடம் இன்னதென்று தெரியாது.—அசூ ௰௮
ரியாவின் இராசாவே, உன்னுடைய மேய்ப்பர்
உறங்குவார்கள்; உன்னுடைய பிரபலியமனு
ஷர் படுத்திருப்பார்கள்; உன் சனம் பர்வதங்க
ளின்மேல் சிதறிப்போகும்; அதைக் கூட்டிக்
கொள்பவன் இல்லை.—உன் நொறுங்குதலுக்கு ௰௯
ஆற்றுதல் இல்லை; உன்காயம் கேடாயிருக்கிறது;
உன் செய்தியைக் கேட்கப்போகிற யாவரும்
உன்பேரில் கைகொட்டுவார்கள்; ஏனெனில்
யார்பேரிலே உன் பொல்லாப்பு எந்நேரமும்
பாயாதேபோயிற்று?

1 வெளி. ௰௭. ௧, ௨.

HABAKKUK.

# ஆபகூக்கின் தீர்க்கதரிசனம்.

## க. அதிகாரம்.

க. தேசத்தின் அக்கிரமத்தைக்குறித்து முறையிடும் ஆபகூக்குக்கு, ரு. கல்தேயராலே வரும் பயங்கரமுள்ள பழிவாங்குதலைக் காட்டினது. யஉ. அவன் கல்தேயரைப்பார்க்கிலும், அதிக பொல்லாதவர்களால் பழிவாங்குதல் நிறைவேற்றப்படுமென்று முறையிட்டது.

க ஆபகூக்கென்ற தீர்க்கதரிசி தரிசனமாய்க் கண்
உ டசுமை.—கர்த்தாவே, [1]எந்தமட்டும் நீர் கேளா
மலிருக்க நான் கூப்பிட்டு, நீர் இரட்சிக்காமலி
ருக்க நான் கொடுமையின்நிமித்தம் உம்மைநோக்
ங கிச் சத்தமிடுவேன்?—நீர் என்னை அக்கிரமத்தைக்
காணப்பண்ணி, தீவினையைப் பார்த்துக்கொண்
டிருப்பானேன்? பாழ்க்கடிப்பும் கொடுமையும்
எனக்கு எதிரே நிற்கிறது; வழக்கையும் வாதை
ச யையும் எழுப்புகிறவர்களுண்டு. — ஆகையால்
நியாயப்பிரமாணம் பெலன் அற்றதாகி, நியாயம்
என்றென்றைக்கும் நடந்தேறாமற்போகிறது;
ஏனென்றால் ஆகாதவன் நீதிமானை வளைந்து
கொள்ளுகிறான்; ஆனதுகொண்டு நியாயம் தாறு
மாறாய்ப் புறப்படும்.
ரு நீங்கள் புறச்சாதிகளை நோக்கிப்பார்த்து, ஆச்
சரியப்பட்டுப்பிரமித்துக்கொள்ளுங்கள்; ஏனெ
னில் விவரிக்கப்பட்டால் நீங்கள் விசுவாசியா
திருக்கும் ஒரு கிரியையை உங்கள் நாள்களில்
சு நடப்பிப்போம்.—ஆதேனென்றால் இதோ, நாம்
கல்தேயரென்ற கடிசும் தீவிரமுமான சாதியை
எழுப்புவோம்; அது தன்னுடையதல்லாத வா
சஸ்தலங்களைக் கட்டிக்கொள்ளத் தேசத்தின் விசா
எ லங்களில் நடந்துவரும்.—அது கெடியும் பயங்கர
முமானது; அதின் நியாயமும் அதின் மேன்மை
அ யும் அதினாலேதானே புறப்படும்.—அதின் குதி
ரைகள் சிவிங்கிகளைப்பார்க்க வேகமும், அஸ்த
மானவேளையில் திரிகிற ஓநாய்களைப்பார்க்கச்
சுறுக்குமாயிருக்கிறது; அதின் குதிரைக்காரர்
பரவுவார்கள்; அதின் குதிரைக்காரர் தூரத்திலி
ருந்துவருவார்கள்; [2]இரைக்குத் தீவிரிக்கிற கழு
கூ குகளைப்போலப் பறந்துவருவார்கள்.—அவர்கள்
எல்லாரும் கொடுமைசெய்யவருவார்கள்; கவ்வு
கிற அவர்களுடைய முகங்கள் கிழக்கே நோக்
குகிறது; அவர்கள் மணலத்தனை சனங்களைச்
ய சிறைபிடித்துச் சேர்ப்பார்கள்.—அவன் இராசாக்
களை ஆகடியம்பண்ணுவான்; தலைவர்கள் அவ
னுக்கு நகைப்பாயிருப்பார்கள்; அவன் அரண்
களை எல்லாம் நகைத்து மண்மேடுகளைப்போட்டு,
அவைகளைப் பிடிப்பான்.—அப்போது அவனு யக
டைய ஆவி மாறுகிறதினாலே அவன் மிஞ்சிப்
போய் இந்தத் தன்னுடைய பெலன் தன் தேவ
னாலே உண்டானதென்று சொல்லிக் குற்றவாளி
யாவான்.
தேவரீர் பூருவகாலந்துவக்கி என் பராபரனு யஉ
கிய கர்த்தருமாயிருக்கிறதில்லையோ? [3]எங்களைச்
சாக ஒட்டாதேயும்; கர்த்தாவே, நியாயத்தீர்ப்
புக்காக அவனை வைத்தீர்; கன்மலையே, தண்டிப்
புக்காக அவனை நிறுத்தினீர்.—பொல்லாப்பைப் யங
பார்க்கமாட்டாத சுத்தக்கண்ணனே, தீவினையை
நோக்கிக்கொண்டிருக்கமாட்டீரே; [4]தேவரீர் து
ரோகிகளைநோக்கிக்கொண்டிருக்கிறதேது? தன்
னைப்பார்க்கிலும் நீதியுள்ளவனை ஆகாதவன்
விழுங்குகையில் தேவரீர் மௌனமாயிருந்து,
மனுஷரைச் சமுத்திரத்து மச்சங்களுக்கும் ஆ யச
ளுகிறவன் இல்லாத ஊர்வனவற்றிற்கும் சமான
மாக்குகிறதேது?—அவர்களை எல்லாம் தூண்டி யரு
லால் இழுத்துக்கொள்ளுகிறான்; அவர்களைத் தன்
வலையினால் பிடித்து, தன் பறியிலே சேர்த்துக்
கொள்ளுகிறான்; அதினாலே சந்தோஷப்பட்டுக்
களிகூருகிறான். — ஆகையால் அவைகளாலே யசு
தன் பங்கு கொழுத்ததும் தன் போசனம் நிணத்
ததுமாய்ப்போயிற்று என்று அவன் தன் வலைக்
குப் பலியிட்டுத் தன் பறிக்குத் தூபங்காட்
டுகிறான். — இதற்காக அவன் தன் வலையை யஎ
இழுத்துக் கொட்டிக்கொண்டிருந்து, சாதிகளை
எப்போதும் கொன்றுபோட இரங்காதவனாயிரு
க்கவேண்டுமோ?

## உ. அதிகாரம்.

க. மாறுத்தரவுக்காகக் காத்துக்கொண்டிருக்கும் ஆபகூக்கு விசுவாசத்துடனே காக்கவேண்டுமென்று காட்டினது. ரு. கல்தேயருடைய திருத்தியில்லாமைக்காகவும், கூ. பேராசைக்காகவும், யஉ. கொடுமைக்காகவும், யரு. வெறிக்காகவும், யஅ. விக்கிரகத்தொழும்புக்காகவும் அவர்கள்மேல் வரும் நியாயத்தீர்ப்பு.

நான் என் காவலிலே தரித்து, அரணிப்பிலே க
நிலைகொண்டிருந்து, அவர் எனக்கு என்னசொல்
லுவாரென்றும், என் அங்கலாய்ப்புக்கு நான்
எந்த உத்தரவைக் கொண்டுபோவேனென்றும்
பார்க்கிறதற்காக [5]கவனிப்பேன் என்றேன்.
அப்போது கர்த்தர் எனக்குப் பிரதியுத்தரமாகச் உ
சொன்னதாவது: நீ தரிசனத்தை எழுதி, அதைக்
கடந்தோடுகிறவன் வாசிக்கும்படிக்குப் பலகை

1 சங். யங. உ,க.—2 மத். உச.உஅ.—3 ஏரே. ஸ. உச.

4 யோபு. உக. எ.ழ. ஏரே. யஉ.க—5 சங். ஈஉக. க, உ.

௩ களிலே தீர்க்கமாக வரை. — அதேனெனில்
குறித்தகாலத்துக்குத் தரிசனம் இன்னம் வைத்தி
ருக்கிறது; முடிவிலே உத்தரவு விளங்கப்பண்
ணுவார்; அவர் பொய்சொல்லார்; அவர் தாமதித்
தால் [1]அவருக்குக் காத்திரு; ஏனெனில் [2]வரவே
வருவார்; அவர் பிந்தியிருப்பதில்லை.
௪ [3]இதோ, அசட்டையாயிருக்கிறனே, அவனு
டைய ஆத்துமம் அவனுக்குள் செம்மையான
தல்ல; ஏனெனில் தன் விசுவாசத்தினலே நீதி
௫ மான் பிழைப்பான்.—அந்த மதுபானனும் அமர்ந்
திருக்கமாட்டாத அகந்தையுள்ள புருஷனுமோ
வென்றல், எத்தனை துரோகியாயிருந்தாலும் அ
வன் தன் ஆத்துமத்தைப் பாதாளத்தைப்போல
விரிவாக்கித் திருத்தியாகாமல், மரணத்துக்குச்
சமானமாய்ச் சகல சாதிகளையும் தன் வசமாகச்
சேர்த்து, சகல சனசதளங்களையும் தன்னிடமா
௬ கக் கூட்டிக்கொண்டாலும்,—இவர்கள் எல்லா
ரும் அவன்பேரிலே ஒரு பழமொழியையும் அ
வனுக்கு உரைக்கிற புதைபொருளான சொல்
லையும் உண்டாக்கி, தன்னுடையதல்லாததைப்
பெருக்கிக்கொள்ளுகிறவனுக்கு ஐயோவென்
றும், அது எந்தமட்டும் நிற்குமென்றும், அவன்
தன்மேல் கெட்டியான சேற்றின் பாரத்தையே
சுமத்திக்கொள்ளுகிறனென்றும் சொல்லார்க
௭ ளோ? — உன்னைக் கடிப்பவர்கள் அசுப்பிலே
எழும்புவதும் உன்னை அலைக்கழிப்பவர்கள்
விழிப்பதுமில்லையோ? நீ அவர்களுக்குச் சூறை
௮ யாகாயோ?—நீ அநேகம் சாதிகளைக் கொள்ளை
யிட்டபடியினலே சனசதளங்களில் மீதியான
யாவரும் நீ சிந்தின மனுஷ இரத்தத்தின்நிமித்த
மும் கொடுமையின்நிமித்தமும் உன்னைக் கொள்
ளையிடுவார்கள்.
௯ தின்மையின் வல்லமைக்குத் தப்புவித்துக்
கொள்ளத் தன் கூட்டை உயரத்திலே வைக்கும்
படிக்கு, தன் வீட்டுக்குப் பொல்லாத ஆதாயத்
௰ தைத் தேடுகிறவனுக்கு ஐயோ!—உன் வீட்டுக்
கு வெட்கமுண்டாக ஆலோசனைபண்ணினய்;
அநேக சனசதளங்களை வெட்டிப்போட்டதின
லே உன் ஆத்துமத்துக்கு விரோதமாய்ப் பாவஞ்
௰௧ செய்தாய்.—ஏனெனில் கல்லு சுவரிலிருந்து கூப்
பிடும்; உத்திரம் மச்சிலிருந்து கூவும்.
௰௨ [4]இரத்தப் பழிகளோடே பட்டணத்தைக் கட்
டி, அநியாயத்தோடே நகரியைப் பலப்படுத்துகி
௰௩ றவனுக்கு ஐயோ! — இதோ, சனங்கள் அக்கி
னிக்கு இரையாக உழைத்து, சனசதளங்கள் விரு
தாவாக இளைக்கிறது கர்த்தருடைய செயல் அல்
௰௪ லவோ?—ஏனெனில் [5]தண்ணீர்கள் சமுத்திரத்
தை மூடுமாப்போலே பூமி கர்த்தருடைய மகி
மையின் அறிவினலே நிரப்பப்பட்டுப்போகும்.
௰௫ தன் தோழருக்குக் குடிக்கக் கொடுத்துத் தன்
துருத்தியை அவர்களண்டையிலே வைத்து,
அவர்களுடைய நிருவாணங்களைப் பார்க்கும்
படிக்கு அவர்களை வெறியுமாக்குகிறவனுக்கு
ஐயோ!—கனத்துக்குப்பதிலாகக் கனஈனத்தால் ௰௬
திருத்தியாவாய்; [6]நீயும் குடித்துச் சுன்னத்தில்லா
தவன் என்று விளங்கு; கர்த்தருடைய வலதுகை
யில் இருக்கிற பாத்திரம் உன்னண்டைக்குத்
திரும்பும்; இலச்சையான வாந்திபண்ணுதல்
உன் மகிமையின்மேலே விழும். — ஏனெனில் ௰௭
லீபனேனுக்குச் செய்த கொடுமை உன்னை
மூடும்; சிந்தின மனுஷ இரத்தத்தின்நிமித்தமும்
தேசத்துக்கும் பட்டணத்திற்கும் அதின் குடி
கள் எல்லாருக்கும் செய்த கொடுமையின்நிமித்
தமும் அந்த மிருகங்களை அவைகள் செய்த
பாழ்க்கடிப்புத்தானே கலங்கப்பண்ணும்.
சித்திரக்காரனுக்கு அவன் செப்பனிட்ட சுரூ ௰௮
பமும், ஊமையான தேவர்களை உண்டுபண்ணித்
தான் உருவாக்கின சுரூபத்தை நம்பினவனுக்கு
அந்த வார்க்கப்பட்டதும் பொய்ப்போதகம்
பண்ணுகிறதுமான விக்கிரகமும் என்னத்துக்கு
உதவும்?
மரத்தைப்பார்த்து விழியென்றும், ஊமையான ௰௯
கல்லைப்பார்த்து எழும்பென்றும் சொல்லுகிறவ
னுக்கு ஐயோ! அது போதிக்குமோ? [7]இதோ,
அது பொன்னும் வெள்ளியுமான தகடு அடித்தி
ருக்கிறது; அதின் உள்ளத்திலே ஒரு ஆவியும்
இல்லையே.—கர்த்தரோவென்றல் [8]தமது பரிசுத் ௨௰
ததேவாலயத்தில் இருக்கிறர்; பூமி எல்லாம் அவ
ருக்குமுன்பாக [9]மௌனமாயிருக்கக்கடவது.

## ௩. அதிகாரம்.

௧. ஆபகூக் தன் செபத்திலே பராபரனுடைய மகத்துவத்தைப் பார்த்து
நடுங்கினது. ௰௭. தன் விசுவாசத்தின் உறுதி.

ஆபகூக் தீர்க்கதரிசியினுடைய துயரகீதமா ௧
கிய செபம்.
கர்த்தாவே, நீர் வெளிப்படுத்தினதை நான் ௨
கேட்டேன்; எனக்குப் பயமாயிற்று; கர்த்தாவே,
வருஷங்களின் நடுவிலே உம்முடைய கிரியை
யை உயிர்ப்பியும்; வருஷங்களின் நடுவிலே அ
தைத் தெரியப்பண்ணும்; சினத்திலே இரக்கத்
தை நினைத்துக்கொள்வீராக.
பராபரன் தேமானிலும் பரிசுத்தமுள்ளவர்; ௩
[10]பாரான் பர்வதத்திலுமிருந்து வருவார்; சேலா;
அவருடைய மகிமை வானங்களை மூடிக்கொண்
டது; [11]அவர் புகழ்ச்சியினலே பூமி நிறைந்தது.—
பிரகாசம் வெளிச்சமாயிருந்தது; அவர் கையிலி ௪
ருந்து இருபுறமும் எழும்புகிற சோதிகள் அவ
ருக்கு உண்டாகி, அங்கே அவருடைய பெலன்
ஒளித்திருந்தது.—அவர் முகத்துக்கு முன்பாகப் ௫
பெருவாரிக்காய்ச்சல் நடந்தது; அவர் அடிகளுக்
குமுன்பாக எரிபந்தமான நோக்காடு புறப்பட்
டது.—அவர் நின்று தேசத்தை அளந்தார்; அவர் ௬
பார்த்துப் புறச்சாதிகளைக் கரையப்பண்ணினர்;
பூருவபர்வதங்கள் சிதறவடிக்கப்பட்டது, என்
றும் இருந்த மேடுகள் தாழ்ந்தது; அவருடைய

1 சங். ௨௭. ௰௪ ; ௩௭. ௭.—2 எபி. ௰. ௩௭. ௰. ௩௮.—4 எரே. ௨௨. ௰௩.
3 ரோ. ௧. ௰௭. கலா. ௩. ௰௧. எபி. 5 ஏசா. ௰௧. ௯.
6 சங். ௭௫. ௮. எரே. ௨௫. ௰௫, ௰௬. 9 சங். ௪௬. ௰.—10 ௫ மோ. ௩௩. ௨.
7 சங். ௱௰௫. ௪, ௮.—8 சங். ௰௧. ௪. 11 ௨ மோ. ௰௬. ௰௧.

௭ நடைகள் நித்திய நடைகளானது.—கூஷானின்
கூடாரங்களை அக்கிரமத்தின்கீழ் அகப்பட்டி
ருக்கக்கண்டேன்; மீதியான் தேசத்தின் திரை
௮ கள் அசைந்தது.—கர்த்தர் நதிகளின்மேல் எரிச்ச
லாயிருந்தாரோ? தேவரீர் உம்முடைய குதிரைக
ளின்மேலும் இரட்சிப்புண்டாக்குகிற உம்மு
டைய இரதங்களின்மேலும் ஏறிவருகிறபோது,
உமதுகோபம் [1]நதிகளுக்கும் உமது சினம்[2] சமுத்
௯ திரத்திற்கும் விரோதமாயிருந்ததோ? — கோத்தி
ரங்களுக்கு இடப்பட்ட ஆணைகளுடைய வார்த்
தையின்படியே உம்முடைய வில் நாணேற்றப்
பட்டதாக விழித்தது; சேலா. [3]ஆறுகள் உண்
௰ டாகப் பூமியைப் பிளந்தீர்.—பர்வதங்கள் உம்
மைக்கண்டு திகிலடைந்தது; [4]தண்ணீர்களின்
வெள்ளம் கடந்துபோயிற்று; ஆழம் தன் இரைச்
சலைக் கேட்கப்பண்ணி, உயரம் தன் கைகளை
௰௧ எடுத்தது.—[5]சந்திரசூரியன் தன் மண்டலத்தில்
நின்றது; உமது அம்புகளின் வெளிச்சத்தோடும்,
உமது ஈட்டியினுடைய மின்னலின் பிரகாசத்
௰௨ தோடும் நடந்துவந்தார்கள்.—சினத்தோடே தே
சத்தில் நடந்தேறினீர்;கோபத்தோடே புறச்சாதி
௰௩ களைப் போரடித்தீர்.—உமது சனத்தின் இரட்சிப்
புக்காகவும் நீர் அபிஷேகம்பண்ணுவித்தவனோ
டே இரட்சிப்புக்காகவுமே புறப்பட்டீர்; கழுத்த
ளவாக அஸ்திபாரத்தைத் திறப்பாக்கி, ஆகாதவ
னுடைய வீட்டிலிருந்த தலைவனை வெட்டினீர்;
௰௪ சேலா.—அவனுடைய செங்கோல்களாலே இவ
னுடைய கிராமத்தாரின் தலையை உருவக்குத்தி
னீர்; என்னைச் சிதறவடிப்பதற்குக் கொந்தளிப்
பாய் வந்தார்கள்; சிறுமையானவனை ஒளிப்பி
டத்திலே பட்சிப்பது அவர்களுக்குக் களிகூருத
லாயிருக்கும்.—திரளான தண்ணீர்கள் குவியலா ௰௫
கிய சமுத்திரத்துக்குள் உமது குதிரைகளோடே
ஏகிப்போனீர்.

நான் கேட்கிற செய்தியினாலேயோ என் வயி ௰௬
று அதிர்ந்தது; அந்தச் சத்தத்துக்கு என் உதடுகள்
நடுங்கின; மக்கல் என் எலும்புகளில் உண்டா
யிற்று; என் நிலையிலே அதிர்ந்தேன்; எங்களைப்
பாழாக்கும் சனத்தண்டைக்குப்போயேறும் இக்
கட்டுநாளிலே எப்படி இளைப்பாறுவேன்?

ஏனெனில் அத்திமரம் துளிர்விடாமற்போனா ௰௭
லும், திராட்சச்செடிகளில் பலன் உண்டா
காமற்போனாலும், ஒலிவமரத்தில் செய்தவேலை
பிசகிப்போனாலும், வயல்கள் ஆகாரங்கொடா
திருந்தாலும், தொழுத்தில் ஆடுகள் முதலற்றுப்
போனாலும், மாட்டுக்கொட்டிலிலே மாடும் இல்
லாதேபோனாலும்,—[6]நான் கர்த்தருக்குள் மகிழ்ச் ௰௮
சியாயிருப்பேன்; என் இரட்சிப்பின் பராபர
னுக்குள் களிகூருவேன்.—ஆண்டவராகிய கர்த் ௰௯
தர் என்னுடைய பெலன்; அவர் என் கால்களை
மான்கால்களைப்போலாக்கி, என் உயரமான
தலங்களில் என்னை நடக்கப்பண்ணுவார்; என்
கிண்ணரங்களில் வாசிக்க இராகத்தலைவனுக்கு
ஒப்புவிக்கப்பட்டது.

1 உ மோ. ௭. ௨௰.—2 உ மோ. ௰௪. ௨௧. ௲.—3 உ மோ. ௰௭. ௬.

4 யோசு. ௩. ௰௬.—5 யோசு. ௰. ௰௩.—6 ஏசா. ௬௧. ௰. பிலி. ௪. ௪.

ZEPHANIAH.

# செப்பனியாவின் தீர்க்கதரிசனம்.

## ௧. அதிகாரம்.

௧. பலவகையான பாவங்களுக்காக யூதர்களுக்கு வரும் பராபரனுடைய உக்கிரமுள்ள நியாயத்தீர்ப்பு.

௧ ஆமோனின் குமாரனாகிய யோசியா என்ற
யூதாவினுடைய இராசாவின் நாள்களிலே, எசே
க்கியாவினுடைய குமாரனாயிருக்கிற ஆமரியா
வுக்குக் குமாரனான கேதலியா என்றவனுடைய
மகனாகிய கூஷின் குமாரன் செப்பனியாவுக்கு
உண்டான கர்த்தருடைய வசனம்.
௨ தேசத்தில் உண்டானதை எல்லாம் வாரவே
வாரிக்கொள்ளுவோமென்று கர்த்தர் சொல்லுகி
௩ றார்.–மனுஷரையும் மிருகசீவன்களையும் வாரிக்
கொள்ளுவோம்; நாம் ஆகாசத்துப் பறவைகளை
யும் சமுத்திரத்து மச்சங்களையும், ஆகாதவர்களோ
டேகூட [1]இடறல்களையும் வாரிக்கொண்டு, தே
சத்தில் உண்டான மனுஷரைச் சங்காரம்பண்
௪ ணுவோமென்று கர்த்தர் சொல்லுகிறார்.—நாம்
யூதாவின்மேலும் எருசலேமுடைய எல்லாக் கு
டிகளின்மேலும் நமது கையை நீட்டி, பாகாலில்
மீதியாயிருக்கிறதையும், பூசாரிகளின் பேரை
யும், அவர்களோடேகூட ஆசாரியர்களையும்,—
௫ வீடுகளின்மேல் வானத்துச் சேனையைப் பணிகி
றவர்களையும், கர்த்தர்பேரிலும் ஆணையிட்டுத் தங்
கள் மோளோக்பேரிலும் ஆணையிட்டுப் பணிகி
௬ றவர்களையும்,—கர்த்தரைவிட்டுப பின்வாங்குகி
றவர்களையும், கர்த்தரைத் தேடாமலும் அவருக்
காகக் கேட்டு விசாரியாமலும்போகிறவர்களை
யும், இவ்விடத்தில் இராதபடிக்குச் சங்காரம்
பண்ணுவோம்.
௭ கர்த்தராகிய ஆண்டவருக்குமுன்பாக மௌன
மாயிருங்கள்; ஏனெனில் கர்த்தருடைய நாள்
கிட்டியிருக்கிறது; அதேனென்றால் கர்த்தர் ஒரு
பலியடிக்குதலை ஆயத்தம்பண்ணி, தாம் அதற்கு
அழைத்தவர்களைப் பரிசுத்தம்பண்ணினார்.
௮ கர்த்தருடைய பலியின்நாளில் சம்பவிப்பதே
தென்றால், நாம் பிரபுக்களையும் இராசகுமாரரை
யும் மறுதேசத்து உடைதரிக்கிற யாவரையும்
௯ விசாரிப்போம். — வாசல்ப்படியைத் தாண்டி,
கொடுமையினாலும் கபட்டினாலும் தங்கள் எச
மான்களின் வீட்டை நிரம்பப்பண்ணுகிற யாவ
ரையும் அந்நாளில் விசாரிப்போம்.
௰ அந்நாளிலே மீன்வாசலிலிருந்து கூக்குரலின்
சத்தமும், பட்டணத்தின் இரண்டாம் வகுப்பி
லிருந்து அலறுதலும், மேடுகளிலிருந்து மகா நொ
றுங்குதலின் இரைச்சலும் உண்டாகுமென்று
கர்த்தர் சொல்லுகிறார்.–கிடங்குவீதியின் குடிக ௰௧
ளே அலறுங்கள்; ஏனெனில் வர்த்தகச்சனமெல்
லாம் சங்காரமாயிற்று; காசுக்காரர் எல்லாரும்
வெட்டுண்டுபோனார்கள்.
அக்காலத்திலே சம்பவிப்பதேதெனில், நாம் ௰௨
எருசலேமை விளக்குகளால்ச் சோதித்து, தங்கள்
வண்டிகளின்மேல் குழம்பியிருக்கிறவர்களும்,
கர்த்தர் நன்மைசெய்வதும் இல்லை தின்மை
செய்வதும் இல்லை என்று தங்கள் இருதயத்தில்
சொல்லுகிறவர்களுமான மனுஷரை விசாரிப்
போம்.—அவர்களுடைய ஆஸ்தி சூறையும், அ ௰௩
வர்களுடைய வீடுகள் கொள்ளையுமாகும்; அவர்
கள் [2]வீடுகளைக் கட்டியும், அவைகளில் குடியி
ருப்பதும் இல்லை; அவர்கள் திராட்சத்தோட்டங்
களை நாட்டியும், அவைகளின் பழ இரசத்தைக்
குடிப்பதும் இல்லை.
[3]கர்த்தருடைய பெரியநாள் கிட்டியிருக்கிறது; ௰௪
அது கிட்டிச்சேர்ந்து மிகவும் தீவிரிக்கிறது; கர்த்
தருடைய நாளென்ற சத்தத்துக்குப் பராக்கிரம
சாலிமுதலாய் அங்கே கசப்பாய்க் கதறுவான்.—
[4]அந்தநாள் சினத்தினுடைய நாள்; அது இக்கட் ௰௫
டும் இடுக்கமுமுள்ள நாள்; அது கொந்தளிப்பும்
பாழ்க்கடிப்புமுள்ள நாள்; அது இருளும் அந்த
காரமுமான நாள்; அது மப்பும் மந்தாரமுமான
நாள்.—அது அரணிப்பான பட்டணங்களுக்கு ௰௬
விரோதமாகவும், உயரமான கொத்தளங்களுக்கு
விரோதமாகவும் எக்காளம் ஊதுகிறதும் ஆர்ப்ப
ரிக்கிறதுமான நாள்.—நாம் மனுஷரைக் குருட ௰௭
ரைப்போல நடக்கத்தக்கதாக இறுகப்பிடிப்
போம்; ஏனெனில் கர்த்தருக்கு விரோதமாய்ப்
பாவஞ்செய்தார்கள்; அவர்கள் இரத்தம் புழுதி
யைப்போலவும் அவர்கள் மாம்சம் எருவைப்
போலவும் இறைந்துகிடக்கும்.—கர்த்தருடைய ௰௮
சினத்தின்நாளிலே [5]அவர்கள் வெள்ளியும் அவர்
கள் பொன்னும் அவர்களைத் தப்புவிக்கமாட்
டாது; அவருடைய எரிச்சலின் அக்கினியினா
லே தேசமெல்லாம் அழியும்; அதேனெனில் தே
சத்தின் குடிகளை எல்லாம் அசுப்பாய்த்தானே
நிர்மூலம்பண்ணுவார்.

1 மத். ௧௩. ௪௧.—2 ஆமோ. ௫. ௰௧.—3 யோவே. ௧. ௰௫.

4 யோவே. ௨. ௰௧. ஆமோ. ௫. ௰௮.—5 எசே. ௭. ௰௯.

## ௨. அதிகாரம்.

*௧ குணப்படுதலுக்குத் தூண்டுதல். ௪. பெலிஸ்தியரின்மேலும், ௮. மோவாபின்மேலும், அம்மோன் புத்திரர்மேலும், ௰௨. எத்தியோப்பியர்மேலும், அசூரின்மேலும் வரும் நியாயத்தீர்ப்பு.*

௧ **வா**ஞ்சையில்லாத சாதியே, கட்டளையின்படி
யே முடிந்துதீர, நாள் துரும்பைப்போலப் பறந்
துபோகிறதற்குமுன்னும், கர்த்தருடைய கோபத்
தின் உக்கிரம் உங்கள்மேல் இறங்காததற்குமுன்
னும் கர்த்தருடைய கோபநாள் உங்கள்மேல்
௨ வராததற்குமுன்னும், — [1]நீங்கள் உங்களை உற்
௩ றுராய்ந்து சோதியுங்கள்.—கர்த்தருடைய நியா
யத்தை நடப்பிக்கிற தேசத்திலுள்ள எல்லாச்
சிறுமையானவர்களே, அவரைத் தேடுங்கள்; நீதி
யைத் தேடுங்கள்; மனத்தாழ்மையைத்தேடுங்கள்;
அப்போது ஒருவேளை கர்த்தருடைய கோபத்
தின்நாளிலே மறைக்கப்படுவீர்கள்.

௪ ஏனெனில் காத்சா கைவிடப்பட்டுப்போகும்;
அஸ்கலோன் பாழாகும்; அஸ்தோத்தாரைப் பட்
டப்பகலிலே பறக்கடிப்பார்கள்; எக்கிரோன்
௫ வேரோடே பிடுங்கப்படும்.—சமுத்திரக்கரைக் கு
டிகளாகிய கிரேத்தியரின் சாதிக்கு ஐயோ! [2]பெ
லிஸ்தியரின் தேசத்தாராகிய கானான் சாதியே,
கர்த்தருடைய வார்த்தை உங்களுக்கு விரோதமா
யிருக்கிறது; உன்னில் குடியில்லாதபடிக்கு உன்
௬ னை அழிப்போம்.—சமுத்திரக்கரைத்தேசம் மேய்
ப்பர் வெட்டின கெபிதாபரங்களும் ஆட்டுத்தொ
௭ ழுவங்களும் ஆகிப்போகும்.—அந்தத் தேசம் யூதா
வீட்டாரில் மீதியானவர்களின் வசமாகும்; அவர்
கள் அவ்விடங்களில் மந்தைமேய்ப்பார்கள்; அ
ஸ்கலோனின் வீடுகளிலே சாயங்காலத்திலே
படுத்துக்கொள்வார்கள்; ஏனெனில் அவர்களு
டைய பராபரனாகிய கர்த்தர் அவர்களை விசா
ரித்து, [3]அவர்கள் சிறையிருப்பைத் திருப்பு
வார்.

௮ மோவாபின் நிந்தனையையும், அம்மோன் புத்
திரர் நமது சனத்தை நிந்தித்துத் தங்கள் எல்லை
க்குமிஞ்சிப்பெருமைபண்ணின தூஷணங்களை
௯ யும் கேட்டோம்.—ஆகையால் மோவாப் சோதோ
மைப்போலும் அம்மோன் புத்திரரின் தேசம்கொ
மோராவைப்போலுமாகிக் காஞ்சொறிகளுக்கு
விடப்பட்ட நிலமும் உப்புப்பள்ளமும் சதாகால
மட்டும் பாழுமாயிருக்கும்; நமது சனத்தில் மீந்த
வர்கள் அவர்களைக் கொள்ளையிட்டு, நமது சாதி
யில் மீதியானவர்கள் அவர்களைச் சுதந்தரிப்பார்
கள் என்கிறதை நம்முடைய சீவனைக்கொண்டு
சொல்லுகிறோமென்று இஸ்ரவேலின் பராபரனா
கிய சேனைகளுடைய கர்த்தர் உரைக்கிறார்.—
௰ இது அவர்கள் மேட்டிமைக்கு ஈடாக அவர்களு
க்குவரும்; ஏனென்றால் அவர்கள் நிந்தித்துச் சே
னைகளுடைய கர்த்தரின் சனத்துக்கு விரோதமா
௰௧ கப் பெருமைபண்ணினார்கள்.—கர்த்தர் அவர்கள்
மேல் கெடியுள்ளவராயிருப்பார்; ஏனெனில்பூமி
யின் தேவர்களை எல்லாம் இளைத்துப்போகப்பண்
ணுவார்; அப்போது சாதிகளுடைய சகல தீவுக
ளின் மனுஷரும் அவரவர் தங்கள்தங்கள் தானத்
திலிருந்து அவரைப் பணிந்துகொள்ளுவார்கள்.
எத்தியோப்பியராகிய நீங்களும் நமது பட்டை ௰௨
யத்தால் கொலையுண்பீர்கள்.
தமது கையை வடக்குக்கு விரோதமாக நீட்டி, ௰௩
அசூரை அழித்து, நினிவேயைப் பாழும் வனாந்
தரத்துக்கொத்த வறட்சியான தலமும் ஆக்கிப்
போடுவார்.—அதின்நடுவில் மந்தைகளும் [4]சாதி ௰௪
சாதியான சகல சீவன்களும் படுத்துக்கொள்
ளும்; அதினுடைய சிகரங்களின்மேல் நாரை
யும் கோட்டானும் இராத்தங்கும்; பலகணிகளில்
கூவுகிற சத்தம் பிறக்கும்; வாசல்ப்படிகளில்
பாழ்க்கடிப்பு இருக்கும்; ஏனெனில் கேதுரும
ரங்களின் மச்சைத் திறப்பாக்கிப்போடுவார்.—
சுகமாய்க் குடியிருந்து, நானே, என்னைத்தவிர ௰௫
வேறொருத்தியும் இல்லை என்று தன் இருதயத்
தில் சொன்ன களிகூருதலான பட்டணம் இது
தானே; எப்படி அது பாழும் மிருகசீவன்களின்
தாபரமுமாய்ப்போயிற்று? அதைக் கடந்துபோ
கிறவன் எல்லாம் ஈசல்ப்போட்டுத் தன் கையை
ஆட்டுவான்.

## ௩. அதிகாரம்.

*௧. எருசலேமின் பலவகையான பாவங்களுக்காகக் கொடுமையாய்க் கண்டித்தல். ௮. இஸ்ரவேலர் மூர்த்திகரிக்குக் கொண்டுவரப்படக் காத்துக்கொண்டிருப்பதற்கும், ௰௪. பராபரனாலே உண்டாகும் இரட்சிப்புக்காக மனங்களிப்பதற்கும் தூண்டுதல்.*

**இ**டுக்கண்செய்கிற ஊத்தையும் அழுக்குமான ௧
பட்டணத்துக்கு ஐயோ! — அது சத்தத்துக்குக் ௨
கேள்விகொடுக்கவில்லை; அது கடிந்துகொள்ளு
தலை ஏற்றுக்கொள்ளவில்லை; அது கர்த்தரை நம்
பவில்லை; அது தன் பராபரனண்டைக்குச் சேர
வில்லை.—அதற்குள்ளே இருக்கிற [5]அதின் பிர ௩
புக்கள் கர்ச்சிக்கிற சிங்கங்கள்; அதின் நியாயாதி
பதிகள் சாயங்காலத்தில் புறப்படுகிறதும்விடியற்
காலமட்டும் ஒரு எலும்பை மீதியாக வைக்காத
துமான ஓநாய்கள்.—அதின் தீர்க்கதரிசிகள் மே ௪
லெழுச்சியும் துரோகமுமுள்ள மனுஷர்; அதின்
ஆசாரியர்கள் பரிசுத்தஸ்தலத்தைப் பரிசுத்தக்
கொலைச்சலாக்கி, வேதத்துக்கு அநியாயஞ்செய்
தார்கள்.
அதற்குள் இருக்கிற கர்த்தர் நீதியுள்ளவர்; அ ௫
வர் அநியாயஞ்செய்கிறதில்லை; அவர் குறைவில்
லாமல் காலைமாறு தம்முடைய நியாயத்தை வெ
ளிச்சத்தில் வைக்கிறார்; ஆகிலும் அநியாயக்கா
ரன் வெட்க அறியான்.—சாதிகளைச் சங்கரித் ௬
தோம்; அவர்கள் துரோகங்கள் பாழாயின; அ
வர்களுடைய வீதிகளை ஒருவரும் கடந்துபோகா
தபடிக்குப் பாழ்க்கடித்தோம்; அவர்களுடைய
பட்டணங்கள் மனுஷர் இல்லாதபடிக்கும் குடி
யில்லாதபடிக்கும் அவாந்தரையாயின. — உன் ௭
வாசஸ்தலம் நிர்மூலமாகாதபடிக்கு நீ நமக்குப்
பயந்து, கடிந்துகொள்ளுதலை ஏற்றுக்கொள்ளு
வாயே என்றோம்; ஆனால் நாம் அதை எப்படி

1 ௨ கொரி. ௰௩. ௫.—2 எரே. ௪௭. ௪.—3 எரே. ௨௯. ௰௪ : ௩௰. ௩,௰௮.

4 ஏசா. ௰௩. ௨௧,௨௨ : ௩௪. ௰௧-௰௫.—5 எசே. ௨௨. ௨௭. மீகா. ௩. ௰௧.

விசாரித்தாலும், அவர்கள் [1]தங்கள் கிரியைகளைக்
கேடாகத் தீவிரித்தார்கள்.

௮ ஆகையால் நாம் கொள்ளையாட எழும்பும் நாள்
மட்டும் நமக்குக் காத்திருங்களென்று கர்த்தர்
சொல்லுகிறார்; ஏனென்றால் நமது கோபத்தினு
டைய முழு உக்கிரமான நம்முடைய சினத்தை
அவர்கள்மேல் ஊற்றும்படிக்குச் சாதிகளைச் சேர்
க்கவும் இராச்சியங்களைக் கூட்டவும் நம்மில்
தீர்ந்த நியாயமாயிருக்கிறது; அதேனென்றால்
தேசமெல்லாம் நம்முடைய எரிச்சலின் அக்கி
னியினால் அழியும்.

௯ அப்போது சனசதளங்களெல்லாம் கர்த்தரு
டைய நாமத்தைத் தொழுதுகொண்டு, ஏகக்கருத்
தாய் அவருக்கு ஆராதனைசெய்யும்படிக்கு, நாம்
அவர்கள் உதடுகளைச் சுத்தமுள்ளவைகளாக மா
௰ றப்பண்ணுவோம். — [2]சிதறுண்டிருந்து நம்மை
விண்ணப்பம்பண்ணப்போகிற நமது சபையார்
எத்தியோப்பியாவின் நதிகளுக்கு அக்கரையிலி
ருந்து நம்முடைய காணிக்கையை நமக்குக்
௰௧ கொண்டுவருவார்கள்.—நீ நமக்கு விரோதமாய்த்
துரோகம்பண்ணிச் செய்திருந்த உன்னுடைய
எல்லாக் கிரியைகளினிமித்தமும் அந்நாளிலே
வெட்கப்படாதிருப்பாய்; ஏனெனில் நீ நமது
பரிசுத்த பர்வதத்தினிமித்தம் இனி மேட்டிமை
யாயிராதபடிக்கு, நாம் உன் பெருமையைத்
தொட்டுக் களிகூர்ந்தவர்களை அப்போது உன்
௰௨ நடுவிலிருந்து விலக்கி,—உன் நடுவில் [3]சிறுமை
யும் எளிமையுமான சனத்தை மீதியாக வைப்
போம்; அவர்கள் கர்த்தருடைய நாமத்தின்பே
௰௩ ரில் நம்பிக்கையாயிருப்பார்கள்.—இஸ்ரவேலில்
மீதியானவர்கள் அநியாயஞ்செய்வதில்லை; அவர்
கள் பொய்பேசுவதும் இல்லை; [4]கபட்டுநாவு அ
வர்கள் வாயில் கண்டுபிடிக்கப்படுவதுமில்லை;
அவர்கள் பயப்படுத்துவாரில்லாமல் மேய்ந்து
படுத்துக்கொள்ளுவார்கள்.
[5]சீயோன் குமாரத்தியே கெம்பீரி; இஸ்ரவே ௰௪
லரே ஆர்ப்பரியுங்கள்; எருசலேம் குமாரத்தியே,
நீ முழு இருதயத்தாலும் மகிழ்ந்து களிகூரு.—
கர்த்தர் உன் ஆக்கினைகளை அகற்றி, உன் சத்துருக் ௰௫
களை விலக்கினார்; இஸ்ரவேலின் இராசாவாகிய
கர்த்தர் [6]உன் நடுவிலே இருக்கிறார்; இனி நிர்ப்
பாக்கியத்தைக் காணாதிருப்பாய்.
அந்நாளிலே எருசலேமைப் பார்த்து, பயப் ௰௬
படாதே என்றும் சீயோனைப்பார்த்து, உன் கை
களைத் தளரவொட்டாதே என்றும் சொல்லப்ப
டும்.—உன் பராபரனாகிய கர்த்தர் உன் நடுவில் ௰௭
இருக்கிறார்; [7]அவர் வல்லமையுள்ளவராய் இரட்
சிப்பார்; அவர் உன்பேரில் சந்தோஷமாய்
மகிழ்ந்து, தம்முடைய சிநேகத்தினிமித்தம்
கூப்பிடாதிருப்பார்; அவர் உன்பேரில் கெம்பீர
மாய்க் களிகூருவார்.—உன் சபையின் மனுஷ ௰௮
ராயிருந்து, பண்டிகை ஆசரிப்பில்லாமையால்
உண்டான நிந்தை அதின்மேல் பாரமானதினா
லே சஞ்சலப்பட்டவர்களைக் கூட்டிக்கொள்ளு
வோம்.—இதோ, அக்காலத்திலே உன்னைச் சிறு ௰௯
மைப்படுத்தின யாவருக்கும் வேறேபிரகாரமா
கச் செய்து நொண்டியானவனை இரட்சித்து,
தள்ளுண்டவனைச் சேர்த்துக்கொண்டு அவர்கள்
வெட்கம் அநுபவித்த சகல தேசங்களிலும் அ
வர்களைப் புகழ்ச்சியும் கீர்த்தியுமாக வைப்
போம். — [8]அக்காலத்திலே உங்களைக் கூட்டிக் ௨௰
கொண்டுவருவோம்; அக்காலத்திலே உங்களைச்
சேர்த்துக்கொள்ளுவோம், அதேனென்றால் நீங்
கள் கண்ணாரக்காண நாம் உங்கள் சிறையிருப்
பைத் திருப்பும்போது, நாம் உங்களைக் கீர்த்தி
யும் புகழ்ச்சியுமாக வைப்போமென்று கர்த்தர்
சொல்லுகிறார்.

1 எரே. ௭. ௨௨.
2 மல்கி. ௧. ௰௧.
3 லூக். ௰௨. ௩௨.
4 வெளி. ௰௪. ௫.
5 சகரி. ௯. ௯.
6 மத். ௨௮. ௨௰.
7 ௧ கொரி. ௰௫. ௫௭.
8 எரே. ௨௯. ௰௪.

# HAGGAI.

# ஆகாயின் தீர்க்கதரிசனம்.

## க. அதிகாரம்.

௧. சனம் தேவாலயத்தைக் கட்டாதிருந்ததினால் ஆகாய் அவர்களைக் கண்டித்தது. ௭. அதைக்கட்ட அவர்களைத் தூண்டினது. ௰௨. அதைச் சீக்கிரத்தில் செய்பவர்களுக்குப் பராபரனுடைய உதவியுண்டாகும் என்று சொன்னது.

௧ இராசாவாகிய தரியூ அரசாண்ட இரண்டாம்வ
ருஷம் ஆறும்மாதம் முதலாந்தேதியிலே, கர்த்தரு
டைய வார்த்தை [1]ஆகாய் என்ற தீர்க்கதரிசியைக்
கொண்டு செயல்த்தியேலின் குமாரனாகிய செரு
பாபேலென்ற யூதாவின் தலைவனுக்கும், யோத்ச
தாக்கின் குமாரனாகிய யோசுவா என்ற பிரதான
ஆசாரியனுக்கும் உண்டாகி, அவர் சொன்னதா
௨ வது:—இந்தச் சனம், கர்த்தருடைய வீட்டைக்
கட்டும் சமயமான காலம் இன்னம் வந்ததில்லை
என்கிறார்கள் என்று சேனைகளுடைய கர்த்தர்
௩ சொல்லுகிறார்.—ஆனால் ஆகாய் தீர்க்கதரிசியைக்
கொண்டு கர்த்தருடைய வார்த்தை உண்டாகி,
அவர் சொன்னதாவது:
௪ இந்த வீடு பாழாய்க் கிடக்கையில், நீங்கள்
மச்சுப்பாவப்பட்ட உங்கள் வீடுகளில் குடியி
ருக்கும் காலம் உங்களுக்கு வந்திருக்கிறதோ?
௫ இப்போதும் சேனைகளுடைய கர்த்தர் சொல்
லுகிறதேதெனில், உங்கள் வழிகளின்மேல் உங்
௬ கள் மனதை வையுங்கள்.—[2]நீங்கள் திரளாய்
விதைத்தும் கொஞ்சமாய் அறுத்துக்கொண்டுவரு
கிறீர்கள்; நீங்கள் புசித்தும் திருத்தியாகாமலும்,
குடித்தும் பரிபூரணமடையாமலும் போகிறீர்கள்;
உடுப்புடுத்தும் உடுத்தவனுக்குக் குளிர்விடுவதில்
லை; கூலியைச் சம்பாதிக்கிறவன் பொத்தலான
முடிப்பிலே வைக்கிறவனாய்ச் சம்பாதிக்கிறான்.
௭ உங்கள் வழிகளின்மேல் உங்கள் மனதைவை
யுங்களென்று சேனைகளுடைய கர்த்தர் சொல்லு
௮ கிறார்.—நீங்கள் பர்வதத்தின்மேல் ஏறிப்போய்,
மரங்களை வெட்டிவந்து, வீட்டைக் கட்டுங்
கள்; அப்போது அதின்பேரில் நாம் இதமிய
மாயிருந்து அதினால் கனம் அடைவோம் என்று
௯ கர்த்தர் சொல்லுகிறார்.—அநேகமாய் வருமென்று
நீங்கள் பார்த்துக்கொண்டிருந்தும், இதோ கொஞ்
சமாய்ப்போகிறது; நீங்கள் அறுத்து வீட்டுக்குக்
கொண்டுவந்தும், நாம் அதை ஊதிப்போடுகி
றோம்; எதுநிமித்தமென்றால் நீங்கள் அவரவர்
தன்தன் வீட்டுக்கென்று தீவிரிக்கக்கொள்ள, நம்
முடைய வீடு பாழாய்க்கிடக்கிறதின் நிமித்தமா
கத்தான் என்று சேனைகளுடைய கர்த்தர் சொல்
௰ லுகிறார்.—ஆனதுகொண்டு [3]உங்கள்மேல் இருக்
கிற வானம் பனியைக் கொடாமலும் பூமி பல
௰௧ னைக் கொடாமலும் போயிற்று.—ஏனெனில்
நாம் நாட்டின்மேலும், பர்வதங்களின்மேலும்,
தானியத்தின்மேலும், திராட்சக் கந்தாயத்தின்
மேலும், எண்ணெயின்மேலும், பூமி முளைப்பிக்
கிறதெல்லாவற்றின்மேலும், மனுஷரின்மேலும்,
மிருகங்களின்மேலும், கைகளின்பாடனைத்தின்
மேலும் [4]வறட்சியை வரவழைத்தோம் என்றார்.
அப்போது செயல்த்தியேலின் குமாரனாகிய ௰௨
செருபாபேலும், யோத்சதாக்கின் குமாரனாகிய
யோசுவா என்ற பிரதான ஆசாரியனும் சனத்
தில் மீதியான அனைவரும் தங்கள் பராபரனாகிய
கர்த்தருடைய சத்தத்துக்கும், தங்கள் பராபரனா
கிய கர்த்தர் அனுப்பின ஆகாய் தீர்க்கதரிசியினு
டைய வார்த்தைகளுக்கும் கேள்விகொடுத்தார்
கள்; சனம் கர்த்தருக்குமுன்பாகப் பயந்தது.
அப்போது [5]கர்த்தருடைய தூதனாகிய ஆகாய், ௰௩
கர்த்தர் தூதனுப்பின வார்த்தையாகச் சனத்துக்கு
நாம் உங்களோடே இருப்போமென்று கர்த்தர்
சொல்லுகிறார் என்றான்.—கர்த்தர் செயல்த்தியே ௰௪
லின் குமாரனாகிய செருபாபேலென்ற யூதாவி
னுடைய தலைவனின் ஆவியையும், யோத்சதாக்
கின் குமாரனாகிய யோசுவா என்ற பிரதான
ஆசாரியனின் ஆவியையும், சனத்தில் மீதியான
எல்லாருடைய ஆவியையும் எழுப்பினார்; அவர்
கள் வந்து, தங்கள் பராபரனாகிய சேனைகளு
டைய கர்த்தரின் வீட்டிலே வேலைசெய்தார்
கள்.—தரியூ இராசாவின் இரண்டாம் வருஷம் ௰௫
ஆறும்மாதம் இருபத்துநாலாந்தேதியிலேதானே.

## உ. அதிகாரம்.

௧. முந்தின தேவாலயத்தைப்பார்க்கிலும் பிந்தின தேவாலயம் அதிக மகிமையுள்ளதாயிருக்குமென்று சனத்தை வேலைக்குத் தைரியப்படுத்தினது. ௰. தூய்மையுற்றதும் தூய்மையற்றதுமான பொருள்களின் அடையாளத்தினாலே தங்கள் பாவங்கள் வேலைக்குத் தடைசெய்ததென்று காட்டினது. ௨௰. செருபாபேலுக்கு உண்டான பராபரனுடைய வாக்குத்தத்தம்.

ஏழாம்மாதம் இருபத்தோராந்தேதியிலே ஆகாய் ௧
என்ற தீர்க்கதரிசியைக்கொண்டு, கர்த்தருடைய
வார்த்தை உண்டாயிற்று; அவர் சொன்னதா
வது:—நீ செயல்த்தியேலின் குமாரனாகிய செரு ௨
பாபேலென்ற யூதாவின் தலைவனோடும், யோத்
சதாக்கின் குமாரனாகிய யோசுவாவென்ற பிர
தான ஆசாரியனோடும், சனத்தில் மீதியானவர்க
ளோடும் சொல்லவேண்டியதேதெனில்,
தன் முந்தின மகிமையோடிருந்த இந்த வீட் ௩
டைக் கண்டவர்களில் உங்களுக்குள்ளே மீதி
யாயிருக்கிறவன் யாவன்? இப்போது இது எப்
படியிருக்கிறதென்று காண்கிறீர்கள்; [6]அதற்கு
இது ஒன்றுமில்லையென்று உங்கள்கண்களுக்குக்

1 எஸ்ற. ௫. ௧, ௨.—2 ௫ மோ. ௨௮. ௩௮.—3 ௫ மோ. ௨௮. ௨௩.—4 ஆமோ. ௪. ௯.—5 மல்கி. ௨. ௭.—6 எஸ்ற. ௩. ௰௨.

௪ காணுகிறதல்லவோ?—இப்போதும் சேருபாபே
லே, திடனாயிரு என்று கர்த்தர் சொல்லுகிறார்;
யோத்சதாக்கின் குமாரனாகிய யோசுவாவென்ற
பிரதான ஆசாரியனே, திடனாயிரு; தேசத்தின்
எல்லாச்சனமே, திடனாயிருந்து வேலையை நடத்
துங்கள் என்று கர்த்தர் சொல்லுகிறார்; ஏனெனில்
நாம் உங்களுடனே இருக்கிறோமென்று சேனை
௫ களுடைய கர்த்தர் சொல்லுகிறார்.—நீங்கள் எகிப்
திலிருந்து புறப்படுகிறபோது நாம் உங்களோ
டே உடம்படிக்கைபண்ணின [1]வார்த்தையோ
டும்கூடத்தானே; நம்முடைய ஆவியும் உங்கள்
நடுவில் நிலைகொண்டிருப்பார்; பயப்படாதே
யுங்கள்.
௬ ஏனெனில் சேனைகளுடைய கர்த்தர் சொல்லு
கிறதாவது: [2]இன்னம் ஒருதரம் கொஞ்சப்பொ
ழுதிலேதானே நாம் வானத்தையும் பூமியையும்,
சமுத்திரத்தையும் வெட்டாந்தரையையும் அசை
௭ யப்பண்ணி,—[3]சகல சாதிகளாலும் இச்சிக்கப்
பட்டவரண்டைக்கு வரச் சகல சாதிகளையும்
அசையப்பண்ணி, இந்தவீட்டை மகிமையாலே
நிறையப்பண்ணுவோமென்று சேனைகளுடைய
௮ கர்த்தர் சொல்லுகிறார்.—வெள்ளியும் நம்முடை
யது, பொன்னும் நம்முடையது என்று சேனை
௯ களுடைய கர்த்தர் சொல்லுகிறார்.—இந்தப் பிந்
தின வீட்டின் மகிமை முந்தினதினுடையதைப்
பார்க்கப் [4]பெரியதாயிருக்குமென்று சேனைகளு
டைய கர்த்தர் சொல்லுகிறார்; இவ்விடத்திலே
[5]சமாதானம் கட்டளையிடுவோம் என்கிறதைச்சே
னைகளுடைய கர்த்தர் உரைக்கிறாரென்று சொல்
லென்றார்.
௰ தரியூவின் இரண்டாம்வருஷம் ஒன்பதாம்மா
தம் இருபத்துநாலாந்தேதியிலே, ஆகாய் என்ற
தீர்க்கதரிசியைக்கொண்டு கர்த்தருடைய வார்த்
௰௧ தை உண்டாயிற்று; அவர் சொன்னதாவது:—ஒரு
வன் தன் வஸ்திரத்தின் தொங்கலிலே பரிசுத்த
மாம்சத்தைச் சுமந்து தன் தொங்கலோடே அப்
பத்தையாகிலும், ஒரு பதார்த்தத்தையாகிலும்,
திராட்சப்பழஇரசத்தையாகிலும், எண்ணெயை
யாகிலும், எந்தவகைப் போசனத்தையாகிலும்
தொட்டால் இது பரிசுத்தமாகுமோ என்று நீ ஆ
சாரியர்களை வேத நியாயத்தைக் கேளென்று சே
னைகளுடைய கர்த்தர் சொல்லுகிறார் என்றார்.—
௰௨ ஆசாரியர்கள் பிரதியுத்தரமாக, பரிசுத்தமாகா
௰௩ தென்றார்கள்.—பிணத்தால் தீட்டுப்பட்டவன்
இவைகளில் எதையாகிலும் தொட்டால், இது
தீட்டுப்படுமோ என்று ஆகாய் பின்னையும் கேட்
டான்; ஆசாரியர்கள் பிரதியுத்தரமாகத் [6]தீட்டுப்
௰௪ படும் என்றார்கள்.—அப்போது ஆகாய் உத்தரவு
கொடுத்துச் சொன்னதாவது: இப்படியே இந்தச்
சனமும் இப்படியே இந்தச்சாதியும் நமக்குமுன்
பாக இருக்கிறதென்று கர்த்தர் சொல்லுகிறார்;
இப்படியே அவர்களுடைய கைகளின் கிரியை
யெல்லாம் இருக்கிறது; அவர்கள் அங்கேகொண்
டுவந்து படைக்கிறது [7]தீட்டுப்பட்டிருக்கிறது.—
இப்போதும் கர்த்தருடைய தேவாலயத்தில் கல் ௰௫
லின்மேல் கல் வைக்கப்படாதிருந்த இந்நாளுக்கு
முந்தினகாலத்திலே நடந்ததை உங்கள் மனதி
லே சிந்தித்துக்கொள்ளுங்கள்.—இவைகள் ஆகா ௰௬
ததற்குமுன்னே, [8]ஒருவன் இருபதுமரக்காலாகப்
பார்த்த அம்பாரத்தண்டையிலே வந்தபோது
பத்து இருந்தது; ஒருவன் ஆலையின் தொட்டியில்
ஐம்பது குடம் மொள்ள ஆலையண்டையிலே
வந்தபோது இருபது இருந்தது.—[9]கருக்காயினா ௰௭
லும் விஷப்பனியினாலும் கல்மழையினாலும் உங்
களை உங்கள் கைகளின் வேலையில் எல்லாம் அ
டித்தோம்; ஆனால் மனதை நம்மண்டைக்குத்
திருப்பாதேபோனீர்களென்று கர்த்தர் சொல்லு
கிறார்.
இப்போதும் இந்நாளுக்கு முந்தினகாலத்தில் ௰௮
நடந்ததை உங்கள் மனதிலே சிந்தியுங்கள்; ஒன்
பதாம்மாதம் இருபத்துநாலாந்தேதியாகிய இந்நா
ளுக்கும் கர்த்தருடைய தேவாலயத்தின் அஸ்தி
பாரம் போடப்பட்ட அந்நாளுக்கும் சென்றகா
லத்தில் நடந்ததையே உங்கள் மனதிலே சிந்தி
யுங்கள்.—களஞ்சியத்தில் இன்னம் விதைத்தானி ௰௯
யம் உண்டோ? திராட்சச்செடியும் அத்திமரமும்
மாதளஞ்செடியும் ஒலீவமரமுங்கூடக் கனிகொ
டுக்க இல்லையே; இந்நாள்முதற்கொண்டோ உங்
களை ஆசீர்வதிப்போமென்று சொல்லுகிறார் என்
றான்.
இருபத்துநாலாந்தேதியாகிய அந்நாளிலே கர்த் ௨௰
தருடைய வார்த்தை இரண்டாம்விசை ஆகா
யிக்கு உண்டாகி, அவர் சொன்னதாவது:—நீ யூதா ௨௧
வின் தலைவனாகிய சேருபாபேலோடே சொல்ல
வேண்டியதேதெனில், [10]நாம் வானத்தையும்பூமி
யையும் அசையப்பண்ணி,—இராச்சியங்களின் ௨௨
இராசாசனத்தைக் கவிழ்த்து, சாதிகளுடைய
இராச்சியங்களின் பலத்தை அழித்து, இரதத்தை
யும் அதில் ஏறியிருக்கிறவர்களையும் கவிழ்த்துப்
போடுவோம்; குதிரைகளோடேகூட அவைக
ளில் ஏறியிருக்கிறவர்களும் அவனவன் தன்
சகோதரன் பட்டயத்தாலே விழுவார்கள்.—
சேனைகளுடைய கர்த்தர் சொல்லுகிறதாவது: ௨௩
செயல்த்தியேலின் குமாரனாகிய சேருபாபே
லென்ற நம்முடைய ஊழியக்காரனே, உன்னை
நாம் அந்நாளிலே சேர்த்துக்கொண்டு உன்னை
முத்திரையாக வைப்போமென்று கர்த்தர் சொல்
லுகிறார்; ஏனென்றால் உன்னைத்தெரிந்துகொண்
டோமென்று சேனைகளுடைய கர்த்தர் உரைக்கி
றார் என்கிறதைச் சொல்லென்றார்.

1 உ மோ. கச. ம. யோவா. க. க.
2 எபி. மஉ. உக, உஎ.
3 எசா. உ, உ; க: சகூ. கூ. எரே. க. மஎ. மல்கி. ௩. க. லூக். உ. ம.
4 மல்கி. க. க. சகரி. கூ. ம.
5 யோவா. மச. உஎ.
6 க மோ. ௬. உ: மக. உச. ச. மோ. மகூ. கசு, உஉ.
7 தீத். க. மசு.
8 ஆகா. க. கு.—9 ஆகா. க. மக. ஆமோ. ச. கூ.—10 க. வச.

# ZECHARIAH.

# சகரியாவின் தீர்க்கதரிசனம்.

## ௧. அதிகாரம்.

*௧. சகரியா குணப்படுதலுக்குத் தூண்டினது. ௭. குதிரைகளின் தரிசனே. ௰௨. சம்மனசின் வேண்டுதலினால் ஆறுதலுள்ள வாக்குத்தத்தங்கள் எருசலேமுக்குக் கொடுக்கப்பட்டது. ௰௮. நாலு கொம்புகளும், நாலு தச்சர்களும் தோற்றிய தரிசனே.*

௧ தரியு அரசாண்ட இரண்டாம்வருஷம் எட்டாம்
மாதத்திலே இத்தோவின் மகனான பெரேகியா
வினுடைய குமாரனாகிய சகரியாவுக்குக் கர்த்த
ருடைய வார்த்தை உண்டாகி, அவர் சொன்ன
தாவது:
௨ கர்த்தர் உங்கள் பிதாக்களின்மேல் கடுங்கோ
௩ பமாயிருந்தார்.—ஆகையால் நீ அவர்களோடே
சொல்லவேண்டியதாவது: சேனைகளுடைய
கர்த்தர் உரைக்கிறதேதென்றால், [1]நம்மண்டைக்
குத் திரும்புங்களென்று சேனைகளுடைய கர்த்
தர் சொல்லுகிறார்; அப்போது உங்களண்டைக்
குத் திரும்புவோமென்று சேனைகளுடைய கர்த்
௪ தர் சொல்லுகிறார்.—உங்கள் பொல்லாத வழிக
ளையும் உங்கள் பொல்லாத கிரியைகளையும்விட்
டுத் திரும்புங்கள் என்கிறதைச் சேனைகளுடைய
கர்த்தர் சொல்லுகிறாரென்று முந்தின தீர்க்கதரி
சிகள் உங்கள் பிதாக்களைப்பார்த்துக் கூப்பிட்
டாலும், கேளாமலும் நம்மைக் கவனியாமலும்
போன அவர்களைப்போல இராதேயுங்களென்று
கர்த்தர் சொல்லுகிறார்.
௫ உங்கள் பிதாக்கள் எங்கே? தீர்க்கதரிசிகளோ
வென்றால் என்றென்றைக்கும் உயிரோடிருப்
௬ பார்களோ?—இராவிட்டாலும், தீர்க்கதரிசிகளா
கிய நம்முடைய ஊழியக்காரருக்கு நாம் கட்ட
ளையிட்ட நமது வார்த்தைகளும் நமது தீர்மானங்
களும் உங்கள் பிதாக்களைப் பிடித்ததில்லையோ?
எங்கள் வழிகளின்படியேயும் எங்கள கிரியைக
ளின்படியேயும் சேனைகளுடைய கர்த்தர் எங்க
ளுக்கு எப்படிச்செய்ய நிருணயித்திருந்தாரோ,
அப்படியே எங்களுக்குச் செய்தாரென்று அவர்
கள் திரும்பவந்து சொன்னதில்லையோ என்று
சொல்லென்றார்.
௭ தரியு அரசாண்ட இரண்டாம்வருஷம், சே
பாத்மாதமாகிய பதினோராம்மாதம் இருபத்துநா
லாந்தேதியிலே, கர்த்தருடைய வார்த்தை இத்தோ
வின் மகனான பெரேகியாவினுடைய குமாரன்
சகரியாவென்ற தீர்க்கதரிசிக்கு உண்டாயிற்று;
அவன் சொன்னதாவது:
௮ இதோ, இன்று இராத்திரி சிவப்புக்குதிரை
யின்மேல் ஏறியிருக்கிற ஒரு புருஷனைக் கண்
டேன்; அவர் பள்ளத்தாக்கில் இருக்கிற மிருதுச்
செடிகளுக்குள்ளே தரித்துநின்றார்; அவர் பிறகா
லே சிவப்பும் மங்கினநிறமும் வெண்மையுமான
குதிரைகள் இருந்தன.—என் ஆண்டவரே, இவர் ௯
கள் யாரென்று கேட்டேன்; அப்போது என்னோ
டே பேசுகிற தூதனானவர், இவர்கள் யாரென்று
நாம் உனக்குக் காண்பிப்போமென்று சொன்
னார். — அப்போது மிருதுச்செடிகளுக்குள்ளே ௰
தரித்துநிற்கிற அந்தப் புருஷன் பிரதியுத்தரமாக,
இவர்கள் தேசத்தைச் சுற்றித்திரியக் கர்த்தர் அ
னுப்பினவர்கள் என்றார். — பிற்பாடு இவர்கள் ௰௧
மிருதுச்செடிகளுக்குளளே தரித்துநின்ற கர்த்த
ருடைய தூதனாயிருக்கிறவருக்கு மறுமொழி
யாக, நாங்கள் தேசத்தைச் சுற்றித்திரிந்தோம்;
இதோ, தேசமெல்லாம் தணிவும் அமரிக்கை
யுமாய் இருக்கிறதென்றார்கள்.
அப்போது கர்த்தருடைய தூதனானவர் மறு ௰௨
மொழி உரைத்துச் சொன்னதாவது: சேனைகளு
டைய கர்த்தாவே, நீர் இந்த எழுபதுவருஷ
மாய்ச் சினம்வைத்த எருசலேமின்பேரிலும்
யூதாவினுடைய பட்டணங்களின்பேரிலும் எந்
தமட்டும் இரங்காதிருப்பீர்?—அப்போது கர்த்தர் ௰௩
என்னோடே பேசின தூதருக்கு நல்ல வார்த்தை
களையும் ஆறுதலான வார்த்தைகளையும் பிரதியுத்
தரமாகச் சொன்னார்:
அப்போது என்னோடே பேசின தூதர் என் ௰௪
னோடே சொன்னது: நீ கூறவேண்டியதாவது:
சேனைகளுடைய கர்த்தர் உரைக்கிறதேதென்
றால், [2]நாம் எருசலேமுக்காகவும் சீயோனுக்கா
கவும் மகா வைராக்கியம் அடைந்தோம்.—சுகித் ௰௫
திருக்கிற சாதிகளுக்கு விரோதமாக நாம் மகா
கடுமையுள்ள கோபமாயிருக்கிறோம்; ஏனெனில்
நாம் கொஞ்சக்கடுமை அடைந்தபோது இவர்
கள் கேட்டுக்கு உதவியாயிருந்தார்கள்.—ஆகை ௰௬
யால் [3]மனஉருக்கத்தோடே எருசலேமண்டைக்
குத் திரும்பினேமென்று கர்த்தர் சொல்லுகிறார்;
நம்முடைய வீடு அதிலே கட்டப்படும்; எருச
லேமின் அளவுநூல் பிடிக்கப்படுமென்று சேனை
களுடைய கர்த்தர் சொல்லுகிறாரென்று கூறெ
ன்றார்.—இன்னம் நம்முடைய பட்டணங்கள் ௰௭
நன்மையினாலே பரம்பிப்போகும்; இன்னம்
கர்த்தர் சீயோனைத் தேற்றரவுபண்ணுவார்; இன்
னம் எருசலேமைத் தெரிந்துகொள்ளுவார் என்
கிறதைச் சேனைகளுடைய கர்த்தர் சொல்லுகிறா
ரென்று பின்னையும் கூறென்றார்.
நான் என் கண்களை ஏறெடுக்கும்போது இதோ, ௰௮

1 யாக். ௪. அ.—2 சகரி. அ. ௨.

3 சகரி. அ. ௮.

௰௯ நாலு கொம்புகளைக் கண்டேன். — இவைகள்
என்னவென்று என்னோடே பேசின தூதனைக்
கேட்டேன்; அப்போது அவர் என்னுடனே,
இவைகள் யூதாவையும் இஸ்ரவேலையும் எருச
லேமையும் சிதறவடித்த கொம்புகளென்றார்.—
௨௰ பிற்பாடு கர்த்தர் எனக்கு நாலு கருமான்களைக்
௨௰௧ காண்பித்தார்.—இவர்கள் என்னசெய்கிறதற்கு
வருகிறார்களென்று கேட்டேன்; அப்போது அ
வர் சொன்னதாவது: ஒருவனும் தன் தலையை
ஏறெடுக்கக்கூடாதபடியாய் அந்தக் கொம்புகள்
யூதாவைச் சிதறவடித்ததே அவைகளுக்குப் பய
முறுத்துகிறதற்கும், யூதாவின் தேசத்தைப் பாழ்க்
கடிக்கக் கொம்பெடுத்த சாதிகளுடைய கொம்
புகளை விழத்தள்ளுகிறதற்கும் இவர்கள் வந்தார்
கள் என்றார்.

## ௨. அதிகாரம்.

௧. பாரபரன் எருசலேமைக் காப்பாற்றி அதை அளக்க ஒருவனை அனுப்பினது. ௬. சீயோனின் மீட்பு. ௰. தேவசமுகம் கிடைக்குமென்கிற வாக்குத்தத்தம்.

௧ **நா**ன் என் கண்களை ஏறெடுத்தபோது இதோ,
ஒரு புருஷனைக் கண்டேன்; அவர் கையிலே
௨ அளவுநூல் இருந்தது. — நீர் எவ்விடத்துக்குப்
போகிறீரென்று கேட்டேன்; அவர் என்னுட
னே, எருசலேமின் அகலம் எத்தனையென்றும்
அதின் நீளம் எத்தனையென்றும் தெரிய அதை
௩ அளக்கிறதற்குப் போகிறேன் என்றார். — அப்
போது இதோ, என்னோடேபேசின தூதனானவர்
புறப்பட்டுப்போனார்; வேறொரு தூதன் அவரு
௪ க்கு எதிராகப் புறப்பட்டுவந்தார்.–இவனோடே
அவர் சொன்னதாவது: நீ ஓடி இந்த வாலிபனோ
டே சொல்லவேண்டியதேதெனில், எருசலேம்
தன் நடுவிலே கூடும் மனுஷரின் திரளினாலும்
மிருகசீவன்களின் திரளினாலும் வெளிப் பாள
௫ யங்களாய்க் குடியேறும்.—[1]நாம் அதற்குச் சுற்றி
லும் அக்கினி மதிலாயிருந்து, அதின் நடுவில்
மகிமையுண்டாக இருப்போமென்று கர்த்தர்
சொல்லுகிறார்.
௬ ஓய், நீங்கள் எழும்பி வடதேசத்திலிருந்து ஓடி
வாருங்களென்று கர்த்தர் சொல்லுகிறார்; ஏனெ
னில் கொஞ்சங்குறைய ஆகாசத்து நாலுகாற்றுத்
திசைகளிலும் உங்களை நாம் சிதறப்பண்ணினோ
௭ மே.—[2]ஓய் பாபேல் குமாரத்தியண்டையிலே
குடியிருக்கிற சீயோனே, தப்பித்துக்கொள்.—
௮ ஏனெனில் பிற்பாடு மகிமையுண்டாகுமென்று
சேனைகளுடைய கர்த்தர் சொல்லுகிறார்; உங்க
ளைக் கொள்ளையிட்ட சாதிகளண்டைக்கு நம்
மை அனுப்பினார்; ஏனென்றால் [3]உங்களைத் தொ
டுகிறவன் அவருடைய கண்விழியைத் தொடு
௯ கிறான்.—அதேனெனில் இதோ, நாம் நமது கை
யை அவர்களுக்கு விரோதமாக ஆட்டுகிறோம்;அ
தினால் அவர்கள் தங்களைச் சேவித்தவர்களுக்குக்
கொள்ளையாவார்கள்; அப்போது சேனைகளின்
கர்த்தர் நம்மை அனுப்பினாரென்று அறிவீர்கள்.
௰ சீயோன் குமாரத்தியே, கெம்பீரித்துச் சந்தோ
ஷமாயிரு; ஏனெனில் இதோ, நாம் வந்து உன்
நடுவில் வாசம்பண்ணுவோமென்று கர்த்தர்
சொல்லுகிறார். — அந்நாளிலே [4]அநேகம் சாதி ௰௧
கள் கர்த்தனைச்சேர்ந்து நமக்குச் சனமாவார்கள்;
நாம் உன் நடுவிலே வாசமாயிருப்போம்; சேனை
களின் கர்த்தர் நம்மை உன்னண்டைக்கு அனுப்
பினாரென்று அப்போது அறிவாய். — கர்த்தர் ௰௨
பரிசுத்ததேசத்திலே யூதாவைத் தமது பங்காகச்
சுதந்தரித்து [5]இன்னம் எருசலேமைத் தெரிந்து
கொள்ளுவார்.—எல்லா மாம்சமே, கர்த்தருக்கு ௰௩
முன்பாக மௌனமாயிரு; ஏனெனில் தமது பரி
சுத்த வாசஸ்தலத்திலிருந்து விழிக்கிறாரென்று
சொல்லென்றார்.

## ௩. அதிகாரம்.

௧. யோசுவாவின் அடையாளத்தினாலே சபை திரும்ப உண்டாகுமென்பது. அ. கிளையாகிய கிறிஸ்து வாக்குத்தத்தம்பண்ணப்பட்டது.

**அ**வர் பிரதான ஆசாரியனாகிய யோசுவாவை ௧
எனக்குக் காண்பித்தார்; அவன் கர்த்தருடைய
தூதனுக்குமுன்பாக நின்றான்; சாத்தான் அவ
னுக்கு விரோதிக்கும்படி அவன் வலதுபக்கத்தி
லே நின்றது.
அப்போது கர்த்தர் சாத்தானோடே சொன்ன ௨
தாவது: [6]கர்த்தர் உன்னை உதம்புவாராக; சாத்தா
னே எருசலேமைத் தெரிந்துகொண்ட கர்த்தர்
உன்னை உதம்புவாராக; இவன் அக்கினிக்குத்தப்
புவிக்கப்பட்ட கொள்ளி அல்லவோ என்றார்.—
யோசுவாவோவெனில் அழுக்கு வஸ்திரங்களைத் ௩
தரித்தவனாய்த் தூதனுக்குமுன்பாக நின்றிருந்
தான்.—அவர் மறுமொழிகொடுத்து, இவன்மேல் ௪
இருக்கிற அழுக்குவஸ்திரங்களைக் களைந்துபோ
டுங்களென்று தமக்குமுன்பாக நிற்கிறவர்களோ
டே சொல்லி, இவனோடே சொன்னதாவது:
பார், நாம் உன் அக்கிரமத்தை உன்னிலிருந்து
நீங்கிப்போகப்பண்ணி, [7]உனக்குப் புதுவஸ்தி
ரங்களைத் தரிப்பித்தோம் என்றார்.—அவன் சிர ௫
சின்மேல் சுத்தமான குல்லாவை வைப்பார்க
ளாக என்றான்;அப்போது சுத்தமான குல்லாவை
அவன் சிரசின்மேல் வைத்து, அவனுக்கு வஸ்தி
ரங்களைத் தரிப்பித்தார்கள்; கர்த்தருடைய தூதனா
னவர் அங்கே நின்றார்.—கர்த்தருடைய தூதனா ௬
னவர் யோசுவாவுக்குச் சாட்சியாக அறிவித்துச்
சொன்னதாவது:—சேனைகளுடைய கர்த்தர் உ ௭
ரைக்கிறதேதெனில், நீ நமது வழிகளில் நடந்து
நமது காவலைக் காத்தால், நீ நம்முடைய வீட்
டின் நியாயங்களையும் விசாரிப்பாய்; நம்முடைய
முற்றங்களையும் காவல்காப்பாய்; [8]இங்கே நிற்கி
றவர்களுக்குள்ளே நடமாடுதலை நாம் உனக்குக்
கட்டளையிடுவோம். — இப்போதும், பிரதான ௮
ஆசாரியனாகிய யோசுவாவே, நீ கேள்; உனக்கு
முன்பாக உளுக்காந்திருக்கிற உன் தோழருங்
கூடக் கேட்கக்கடவார்கள்; ஏனெனில் இவர்
கள் அற்புத மனுஷர்; என்னவென்றால் இதோ,
[9]கிளையென்னப்பட்டவராகிய நம்முடைய ஊழி

1 சகரி. ௯.அ.-2 ஏசா ௪அ.௨௰ -3 சங். ௱௭.அ.-4 ௧ மோ. ௪௯ ௰.-5 சகரி. ௧. ௰௭.-6 யூதா.௯ ௨௪.-7 ஏசா.௬௧.௰.—8 சங். ௬௧.௰௬.-9 ஏசா.௪. உ:௰,௧.

௯ யக்காரனை நாம் வரப்பண்ணுகிறோம்.—அதே
னென்றால் இதோ, நாம் யோசுவாவுக்குமுன்பாக
வைத்த [1]கல்; அந்த ஒரே கல்லின்மேல் [2]ஏழு கண்
களும் வைக்கப்பட்டிருக்கின்றன; இதோ, நாம்
அதின் சித்திரவேலையைத் தீர்த்து, இந்தத் தேசத்
தின் அக்கிரமத்தை [3]ஒரேநாளிலே நீக்கிப்போடு
வோமென்று சேனைகளின் கர்த்தர் சொல்லுகி
௰ றார். — அந்நாளிலே நீங்கள் ஒருவரை ஒருவர்
[4]திராட்சச்செடியின்கீழும் அத்திமரத்தின்கீழும்
வரவழைப்பீர்களென்று சேனைகளுடைய கர்த்
தர் சொல்லுகிறார் என்றார்.

## ௪. அதிகாரம்.

௧. பொன் விளக்குத்தண்டினாலே செருபாபேலின் அஸ்திபாரம் திடப்படு வதையும், ௰௧. இரண்டு ஒலிவமரங்களாலே அபிஷேகம்பண்ணப்பட்ட இருவரையும் காட்டினது.

௧ என்னோடே பேசின தூதர் திரும்பிவந்து நித்தி
ரைபண்ணுகிற ஒருவன் எழுப்பப்படுகிறதுபோ
௨ லே என்னை எழுப்பி,—என்னுடனே, நீ காண்
கிறதென்ன என்றார்; நான் சொன்னதாவது: இ
தோ, முழுதும் பொன்னான தூண்டாவிளக்கைக்
காண்கிறேன்; அதின் சிகரத்தின்மேல் அதின்
கிண்ணியும் அதின்மேல் அதின் ஏழு தீபங்க
ளும், அதினுடைய சிகரத்தின்மேல் இருக்கிற
தீபங்களுக்குப் போகிற ஏவ்வேழு குழாய்களும்
௩ இருக்கின்றன. — அதற்கு மேலாக இரண்டு
ஒலிவமரங்கள் ஒன்று கிண்ணிக்கு வலதுபுறமா
கவும் ஒன்று அதற்கு இடதுபுறமாகவும் இருக்கி
றதென்றேன்.
௪ நான் என்னோடே பேசின தூதரோடே பே
சிக்கொண்டு, ஆண்டவரே, இதேதென்று கேட்
௫ டேன்.—அப்போது என்னோடே பேசின தூதர்
மறுமொழியாக என்னோடே, இதேதென்று
உனக்குத் தெரியாதோ என்றார்; ஆண்டவரே
௬ எனக்குத்தெரியாதென்றேன்.—அப்போது அவர்
எனக்குப் பிரதியுத்தரமாகச் சொன்னதாவது:
செருபாபேலுக்குச் சொல்லப்படுகிற கர்த்தரு
டைய வார்த்தை ஏதென்றால், பலத்தினாலும்
அல்ல, வல்லமையினாலும் அல்ல, நம்முடைய
ஆவியினாலே ஆகுமென்று சேனைகளுடைய
௭ கர்த்தர் சொல்லுகிறார்.—செருபாபேலுக்குமுன்
பாக நிற்கிற பெரிய பர்வதமே, நீ எம்மாத்திரம்?
நீ ஒத்ததரையாவாய்; பிரதானமான கல்லை அவன்
பிறப்பிப்பான்; அதற்குக் கிருபையுண்டாக கிரு
பையுண்டாக என்று ஆர்ப்பரிப்பார்கள் என்றார்.
௮ பின்னையும் கர்த்தருடைய வார்த்தை எனக்கு
௯ உண்டாகி, அவர் சொன்னதாவது:—செருபாபே
லின் கைகள் இந்த வீட்டுக்கு அஸ்திபாரம்போட்
டது; அவன் கைகள் அதை முடித்துத்தீர்க்கிறது
மாயிருக்கும்; அப்படியே சேனைகளுடைய கர்த்
தர் நம்மை உங்களண்டைக்கு அனுப்பினாரென்
௰ று அறிவாய்.—ஏனெனில் கொஞ்சமான துவக்
கங்களின் நாளை யார் அசட்டைபண்ணலாம்?
பூமியெங்கும் சுற்றிப்பார்க்கிறவைகளாகிய கர்த்
தருடைய இந்த [5]ஏழு கண்களும் செருபாபே
லின் கையில் இருக்கிற வெள்ளியத் தூக்கைச்
சந்தோஷமாய்ப் பார்க்கிறதென்றார்.
நான் அப்புறம் பேசிக்கொண்டு, தூண்டா ௰௧
விளக்குக்கு வலதுபுறமாகவும் அதற்கு இடதுபுற
மாகவும் இருக்கிற இந்த இரண்டு ஒலிவமரங்கள்
ஏதென்று அவரைக் கேட்டேன்.—மறுபடியும் ௰௨
நான் அவரைக்கேட்டுச் சொன்னதாவது: பொன்
னான இரண்டு குழாய்களண்டையிலே தொங்கி,
பொன்னிறமான எண்ணெயைத்தங்களிலிருந்து
இறங்கப்பண்ணுகிறவைகளாகிய ஒலிவமரங்க
ளின் இரண்டு குலைகள் ஏதென்று கேட்டேன்.—
அவர் என்னோடே, இவைகள் ஏதென்று உனக் ௰௩
குத் தெரியாதோ என்றார்; ஆண்டவரே, எனக்குத்
தெரியாதென்றேன்.—அப்போது அவர் சொன் ௰௪
னதாவது: இவைகள் பூமிக்கெல்லாம் ஆண்டவ
ராயிருக்கிறவரண்டையிலே நிற்கிற [6]இரண்டு
எண்ணெயாள்கள் என்றார்.

## ௫. அதிகாரம்.

௧. பறக்கிற சுருளினாலே திருடர்மேலும், ஆணையிடுகிறவர்கள்மேலும் வரும் சாபத்தையும், ௫. மரக்காலிலே உட்கார்ந்த ஒரு ஸ்திரீயினாலே பாபே லின் கடைசி வேதனையையும், காட்டினது.

நான் திரும்பி என் கண்களை ஏறெடுக்கையில் ௧
இதோ, பறக்கிற ஒரு புஸ்தகச்சுருளைக் கண்
டேன்.—என்னுடனே, நீ காண்கிறதென்ன என் ௨
றார்; பறக்கிற ஒரு புஸ்தகச்சுருளை நான் காண்கி
றேன்; அதின் நீளம் இருபது முழமும் அதின்
அகலம் பத்துமுழமுமானதென்றேன். — அப் ௩
போது அவர் என்னோடே சொன்னதாவது: இது
தேசத்தின்மீதெங்கும் புறப்பட்டுப்போகிற சா
பம்; ஏனெனில் எந்தத்திருடனும் அதில் ஒரு
புறத்திலிருக்கிறதின்படியே குற்றம் சுமக்காதே
போகிறான்; ஆணையிடுகிற எவனும் அதில் மறுபு
றத்தில் இருக்கிறதின்படியே குற்றம் சுமக்காதே
போகிறான்.—அது திருடன் வீட்டிலும் நமது நா ௪
மத்தைக்கொண்டு பொய்யாணையிடுகிறவன் வீட்
டிலும் வந்து, அவன் வீட்டின் நடுவிலேதங்கி, அ
தை அதின் மரங்களோடும் அதின் கல்லுகளோ
டுங்கூட நிர்மூலமாக்குகிறதற்காக அதைப் புறப்
பட்டுப்போகப்பண்ணுவோமென்று சேனைக
ளின் கர்த்தர் சொல்லுகிறார் என்றார்.
பிறகு என்னோடே பேசின தூதர் புறப்பட்டு ௫
என்னோடே சொன்னதாவது: நீ உன் கண்களை
ஏறெடுத்து, புறப்படுகிறதாகிய அது என்னவென்
றுபார் என்றார்.—அது என்னவென்றுகேட்டேன்; ௬
அப்போது அவர் அது புறப்படுகிறதாகிய ஒரு
மரக்கால் என்றார்; அப்புறம் அவர் சொன்னதா
வது: பூமியெங்கும் அதுதான் அவர்களுடைய
கண்ணோக்கம் என்றார்.—இதோ, ஒரு தாலந்து ௭
நிறையான ஈயமூடி தூக்கிவரப்பட்டது; மரக்
காலின் நடுவிலோவென்றால் உளுக்கார்ந்த ஒரு
ஸ்திரீ இருந்தாள். — அப்போது அவர், இவள் ௮
[7]அக்கிரமமானவளென்று சொல்லி, அவளை மரக்

1 ஏசா.உ௮.௰௬.மத்.உ௧.௪௨.—2 சகரி.௪.௰.—3 எபி.௯.௰௨.—4 மீகா.௪.௪.

5 சகரி.௩.௯.வெளி.௫.௬.—6 வெளி.௰௧.௩,௪.—7 ௨ தெச.௨.௭.வெளி.௰௭.௫.

காலுக்குள்ளே தள்ளி ஈயக்கட்டியை அதின் வா
௯ யிலே போட்டார்.—நான் என் கண்களை ஏறெடுக்
கிறபோது இதோ, புறப்படுகிற இரண்டு ஸ்திரிக
ளைக் கண்டேன்; அவர்கள் செட்டைகளில்காற்
றிருந்தது; அதேனெனில் அவர்களுக்குச் செங்
கால்நாரையின் செட்டைகளுக்கொத்த செட்
டைகள் இருந்தன; இவர்கள் மரக்காலைப் பூமிக்
கும் வானத்துக்கும் நடுவாய்த் தூக்கிப்போனார்
௰ கள்.—நான் என்னோடே பேசின தூதனை இவர்
கள் மரக்காலை எங்கே கொண்டுபோகிறார்களெ
௰௧ ன்று கேட்டேன்.—அப்போது அவர் என்னோ
டே சொன்னதாவது: [1]சீனேயார் தேசத்திலே அ
தற்கு ஒரு வீட்டைக் கட்டும்படிக்கு அதைக்
கொண்டுபோகிறார்கள்; அங்கே அது நிலைநிறுத்
தப்பட்டு, தன் நிலையிலே வைக்கப்படும் என்றார்.

## ௬. அதிகாரம்.

௧. நாலு இரதங்களின் தரிசனை. ௯. யோசுவாவின் கிரீடங்களினாலே இனி யாகிய கிறிஸ்துவின் ஆலயத்தையும் இராச்சியத்தையும் காட்டினது.

௧ **நா**ன் திரும்பி என் கண்களை ஏறெடுக்கையில்,
இதோ, இரண்டு பர்வதங்களின் நடுவாகப் புறப்
படுகிற நாலு இரதங்களைக் கண்டேன், அந்தப்
பர்வதங்கள் வெண்கலப் பர்வதங்களாயிருந்
௨ தன.— முதலாம் இரதத்தில் சிவப்புக்குதிரைக
ளும், இரண்டாம் இரதத்தில் கறுப்புக்குதிரைக
௩ ளும்,—மூன்றாம் இரதத்தில் வெள்ளைக்குதிரைக
ளும், நாலாம் இரதத்தில் புள்ளிபுள்ளியான செங்
௪ குதிரைகளும் பூட்டியிருந்தன.—நான் என்னோ
டே பேசின தூதனை என் ஆண்டவரே, இவை
கள் என்னவென்று கேட்டேன்.
௫ அப்போது அந்தத் தூதர் எனக்குப் பிரதியுத்
தரமாக, [2]இவைகள் பூமிக்கெல்லாம் ஆண்டவ
ராயிருக்கிறவருக்குமுன்பாகநின்று புறப்படுகிற
வானத்தினுடைய நாலு காற்றுகள் என்றார்.—
௬ ஒன்றிலே பூட்டப்பட்டிருந்த கறுப்புக்குதிரை
கள் வடதேசத்துக்குப் புறப்பட்டுப்போயின;
வெண்மையானவைகள் அவைகளின் பிறகாலே
புறப்பட்டுப்போயின; புள்ளிபுள்ளியானவை
கள் தென்தேசத்துக்குப் புறப்பட்டுப்போயின.—
௭ சிவப்புக்குதிரைகளோவென்றால் பூமியில் சுற்
றித்திரியப் பார்க்கும்படிக்குப் புறப்பட்டன;
போய்ப் பூமியில் சுற்றித்திரியுங்களென்றார்; அப்
படியே பூமியில் சுற்றித்திரிந்தன.
௮ அவர் என்னைக் கூப்பிட்டு, பார், வடதேசத்துக்
குப் புறப்பட்டுப்போனவைகள், நம்முடைய
கோபத்தை வடதேசத்திலே இறங்கப்பண்ணிற்
றென்று என்னோடே சொன்னார்.
௯ கர்த்தருடைய வார்த்தை எனக்கு உண்டாகி,
௰ அவர் சொன்னதாவது:—சிறையிருப்பின் மனு
ஷராகிய எல்தாயும், தொபியாவும், எதாயாவும்
பாபேலிலிருந்து வந்திருக்கும் அந்நாளிலே நீ
போய், செப்பனியாவின் குமாரனாகிய யோசி
௰௧ யாவின் வீட்டுக்குள்ப் பிரவேசித்து, — அங்கே
அவர்கள் கையிலே வெள்ளியையும் பொன்னை
யும் வாங்கி, கிரீடங்களைச் செப்பனிட்டு, யோத்
சதாக்கின் குமாரனாகிய யோசுவாவென்ற பிர
தான ஆசாரியனின் சிரசிலே வைத்து,— அவ ௰௨
னோடே சொல்லவேண்டியதாவது: சேனைகளு
டைய கர்த்தர் உரைக்கிறதேதெனில், இதோ ஒரு
புருஷன், அவருடைய நாமம் [3]கிளையென்னப்ப
டுகிறது; அவர் தம்முடைய தாழ்விடத்திலிருந்து
முளைத்தெழும்பிக் [4]கர்த்தருடைய தேவாலயத்
தைக் கட்டுவார்.—அவர்தான் கர்த்தருடைய தே ௰௩
வாலயத்தைக் கட்டுவார்; அவர் மகத்துவம் தரித்
துக்கொண்டு, [5]தம்முடைய இராசாசனத்தின்
மேல் உளுக்காந்து ஆண்டு தம்முடைய இராசா
சனத்தின்மேல் ஆசாரியராயிருப்பார்; இவருக்
குள்ளும் சமாதானத்தின் ஆலோசனை இருக்கும்.
இந்தக் கிரீடங்களோவென்றால், கர்த்தருடை ௰௪
ய தேவாலயத்திலே, ஏலேமுக்கும், தொபியாவுக்
கும், எதாயாவுக்கும், செப்பனியாவின் குமாரனா
கிய ஏனுக்கும் நினைப்பூட்டுதலுக்கென்று இருப்
பதாக.—தூரத்தார் வந்து கர்த்தருடைய தேவா ௰௫
லயத்திலே கூடக்கட்டுவார்கள்; அப்போது சே
னைகளின் கர்த்தர் என்னை உங்களண்டைக்கு
அனுப்பினாரென்று அறிவீர்கள்; நீங்கள் உங்கள்
பராபரனாகிய கர்த்தரின் சத்தத்தைக் கேட்கவே
கேட்டீர்களானால் இப்படி யாகுமென்று சொல்
லென்றார்.

## ௭. அதிகாரம்.

௧. சிறையிருப்பில் இருப்பவர்கள் உபவாசத்தைக்குறித்து விசாரித்தது. ௪. அவர்களின் உபவாசத்தைச் சகரியா கண்டித்தது. ௮. அவர்கள் சிறையிருப்புக்குக் காரணம் பாவமென்பது.

**த**ரியூ இராசா அரசாண்ட நாலாம்வருஷம், கிஸ் ௧
லே என்னப்பட்ட ஒன்பதாம்மாதம், நாலாந்தே
தியிலே, சகரியாவுக்குக் கர்த்தருடைய வார்த்தை
உண்டாயிற்று.—ஏனெனில் கர்த்தருடைய சமு ௨
கத்தில் விண்ணப்பம்பண்ணவும், — நாங்கள் ௩
இத்தனை வருஷம்வரையிலே செய்ததுபோலே
ஐந்தாம்மாதத்திலே அழுது தவம்பண்ணவேண்
டுமோவென்று சேனைகளுடைய கர்த்தரின் வீட்
டிலிருந்த ஆசாரியர்களையும் தீர்க்கதரிசிகளையும்
கேட்கவும், சரேத்சேரும் ரேகேம்மேலேகும் அ
வனுடைய மனுஷரும் பராபரனுடைய வீட்
டுக்கு அனுப்பப்பட்டார்கள்.
அப்போது சேனைகளுடைய கர்த்தரின் வார்த் ௪
தை எனக்கு உண்டாகி, அவர் சொன்னதா
வது:—நீ தேசத்தின் எல்லாச் சனத்தோடும் ஆசா ௫
ரியர்களோடும் சொல்லவேண்டியதேதெனில்,
நீங்கள் இந்த எழுபதுவருஷமாக [6]ஐந்தாம்மா
தத்திலும் ஏழாம்மாதத்திலும் [7]உபவாசம்பண்
ணிப் புலம்பினபோது நீங்கள் நமக்கு, நமக்குத்
தானே உபவாசம்பண்ணினீர்களோ?—நீங்கள் ௬
புசிக்கிறபோதும் குடிக்கிறபோதும் நீங்களாய்ப்
புசிக்கிறீர்கள்; நீங்களாய்க் குடிக்கிறீர்களல்ல
வோ?—எருசலேமும் அதைச் சுற்றிலும் அதினு ௭

1 ௧ மோ. ௰௧. ௨.
2 சங். ௯௭. ௫.
3 சகரி. ௩. ௮. ஏசா. ௰௧. ௧.
4 மத. ௰௬. ௰௮. ௨ கொரி. ௬. ௰௬.
5 சங். ௱௰. ௧-௪.
6 சகரி. ௮. ௰௯.
7 ஏசா. ௫௮. ௫.

டைய பட்டணங்களும் குடியேறியிருந்து சுக
மாய் வாழ்கிறதும் தெற்குச்சீமையும் பள்ளத்த
ாச்சீமையும் குடியேறியிருக்கிறதுமான முற்
காலத்தில் இருந்த தீர்க்கதரிசிகளைக்கொண்டு
கர்த்தர் பிரசங்கிப்பித்த வார்த்தைகள் இவைகள்
தான் அல்லவோ என்று சொல்லென்றார்.
அ கர்த்தருடைய வார்த்தை சகரியாவுக்கு உண்
கூ டாகி, அவர் சொன்னதாவது:—சேனைகளுடைய
கர்த்தர் உரைக்கிறதேதெனில், [1]நீங்கள் உண்மை
யாய் நியாயந்தீர்த்து, அவனவன் தன் சகோதர
ம னுக்குத் தயவும் இரக்கமும் செய்து,—[2]விதவை
யையும் திக்கற்றவனையும் பரதேசியையும் சிறு
மையானவனையும் ஒடுக்காமலும், ஒருவனும் தன்
சகோதரனுக்கு விரோதமாய் உங்கள் இருதயத்
தில் பொல்லாப்பை நினையாமலும் இருங்கள்
என்றார்.
மக அவர்களோவெனில் கவனிக்க மனதில்லா
மல், அடங்காத தோளைக்காட்டி, கேளாதபடிக்
மஉ குத் தங்கள் செவிகளை அழுத்தப்படுத்தி,—[3]வே
தத்தையும் சேனைகளுடைய கர்த்தர் முந்தின தீர்க்
கதரிசிகளைக்கொண்டு அனுப்பின தம்முடைய
ஆவியோடேகூடிய வார்த்தைகளையும் கேளாத
படிக்கு வயிரமாக்கினார்கள்; ஆகையால் மகா
கடுங்கோபம் சேனைகளுடைய கர்த்தரிடத்திலி
மங ருந்து உண்டாயிற்று. — ஆனதுகொண்டு நாம்
கூப்பிட்டபோது, அவர்கள் எப்படிக் கேளாதே
போனார்களோ, அப்படி அவர்கள் கூப்பிட்ட
மச போது நாமும் கேளாதேபோய், — அவர்களை
அவர்கள் அறியாத புறச்சாதிகளுக்குள்ளே பறக்
கடித்தோம்; அப்போது அவர்கள் பின்வைத்துப்
போன தேசம் போக்குவரத்தில்லாமல் பாழா
யிற்று; அப்படியே இச்சிக்கப்படத்தக்க தேசத்
தைப் பாழாய்ப்போகப்பண்ணினார்கள் என்றார்.

## ௮. அதிகாரம்.

க. எருசலேமை முந்தினசீருக்குக் கொண்டுவருதல். கூ. தங்கள்மேலி ருக்கும் பராபரனுடைய தயையினாலே அவர்கள் தேவாலயத்தைக் கட் டுகிறதற்குத் தைரியப்படுத்தப்பட்டது. மசு. நற்கிரியைகள் அவர்களி டத்தில் உண்டாகவேண்டுமென்பது. மஅ. சந்தோஷமும், சிறை நீங் குதலும் வாக்குத்தத்தம்பண்ணப்பட்டது.

க சேனைகளுடைய கர்த்தரின் வார்த்தை உண்
உ டாகி, அவர் சொன்னதாவது:—நாம் சீயோனுக்
காக மகா எரிச்சலான வைராக்கியம் அடைந்
தோம்; அதற்காக மகா உக்கிரமான வைராக்கியம்
நமக்கு உண்டாயிற்றென்று சேனைகளின் கர்த்
தர் உரைக்கிறார்.
ங [4]நாம் சீயோன் அண்டைக்குத் திரும்பி, எரு
சலேமின் நடுவிலே வாசம்பண்ணுவோம்; எரு
சலேம் உண்மையின் பட்டணமென்றும், சே
னைகளுடைய கர்த்தரின் பர்வதம் பரிசுத்த பர்வ
தமென்றும் அழைக்கப்படுமென்று கர்த்தர் சொல்
ச லுகிறார். — இன்னம் எருசலேமின் வீதிகளில்
முதிர்ந்த வயதினாலே தன்தன் தடியைத் தங்கள்
கைகளில் பிடித்திருக்கிற கிழவரும் கிழவிகளும்
குடியிருப்பார்கள்.—இன்னம் பட்டணத்தின் தெரு ரு
க்களிலே விளையாடுகிற ஆண்பிள்ளைகளாலும்
பெண்பிள்ளைகளாலும் அதின் வீதிகள் நிறைந்
திருக்குமென்று சேனைகளுடைய கர்த்தர் சொல்
லுகிறார்.
சேனைகளுடைய கர்த்தர் சொல்லுகிறதேதெ சு
னில், அது இந்தச் சனத்தில் மீதியானவர்களின்
பார்வைக்கு இந்நாள்களில் ஆச்சரியமாயிருந்
தால் [5]நமது பார்வைக்கும் ஆச்சரியமாயிருக்கு
மோவென்று சேனைகளுடைய கர்த்தர் சொல்லு
கிறார்.— இதோ, சூரியன் உதிக்கிற திசையான எ
தேசத்திலும் அது அஸ்தமிக்கிற திசையான தே
சத்திலும் இருக்கிற நமது சனத்தை நாம் இரட்
சித்து,—[6]அவர்கள் எருசலேமின் நடுவிலே குடி அ
யிருக்க அவர்களை அழைத்துவருவோம்; உண்
மையும் நீதியுமாய் அவர்கள் நமக்குச் சனமுமா
யிருப்பார்கள்; நாம் அவர்களுக்குப் பராபரனு
மாயிருப்போமென்று சேனைகளுடைய கர்த்தர்
சொல்லுகிறார்.
சேனைகளுடைய கர்த்தரின் வீடாகிய தேவா கூ
லயம் கட்டப்படும்படிக்கு அதின் அஸ்திபாரங்
கள் போடப்பட்ட நாள்முதற்கொண்டிருக்கிற
தீர்க்கதரிசிகளின் வாயினாலே இந்த வார்த்தை
களை இந்நாள்களில் கேட்டுவருகிறவர்களே,
உங்கள் கைகள் திடப்படக்கடவதென்று சேனை
களுடைய கர்த்தர் சொல்லுகிறார்.—ஏனெனில் ம
[7]இந்நாள்களுக்குமுன்னே மனுஷனுடைய வே
லையால் பலனுமில்லை; மிருகசீவனுடைய வே
லையால் பலனுமில்லை; போகிறவனுக்கும் வரு
கிறவனுக்கும் நெருக்கிடையினாலே சமாதான
முமில்லை; எல்லா மனுஷரையும் ஒன்றுக்கொன்
று விரோதமாய்ப் போகவிட்டோம்.—இப்போ மக
தோவெனில் இந்தச் சனத்தில் மீதியானவர்க
ளுக்கு நாம் முந்தின நாள்களில் இருந்ததுபோல
இரோமென்று சேனைகளுடைய கர்த்தர் சொல்
லுகிறார்.—அதேதென்றால் விதைப்பு சமாதான மஉ
முள்ளதாயிருக்கும்; திராட்சச்செடி தன் கனி
யைத் தரும்; பூமி தன் பலனைத் தரும்; வானம் தன்
பனியைத் தரும்; இந்தச் சனத்தில் மீதியானவர்
கள் இதை எல்லாம் சுதந்தரிக்கக் கட்டளையிடு
வோம். — சம்பவிப்பதேதெனில், யூதாவீட்டா மங
ரும் இஸ்ரவேல்வீட்டாருமாகிய நீங்கள் புறச்சா
திகளுக்குள்ளே சாபமாயிருந்ததுபோலே, நாம்
உங்களை நீங்கள் ஆசீர்வாதமாயிருக்கும்படிக்கு
இரட்சிப்போம்; [8]பயப்படாதேயுங்கள், உங்கள்
கைகள் திடப்படக்கடவது.
ஏனெனில் சேனைகளுடைய கர்த்தர் சொல் மச
லுகிறதாவது: உங்கள் பிதாக்கள் நமக்குக் கடுங்
கோபம் உண்டாக்குகையில் நாம் உங்களுக்குப்
பொல்லாப்புச் செய்ய நினைத்து, மனஸ்தாபப்ப
டாமலும் போனதுபோலே,—எருசலேமுக்கும் மரு
யூதாவுக்கும் நன்மைசெய்ய இந்நாள்களில் திரும்
ப நினைத்தோம்; பயப்படாதேயுங்கள்.

1 சகரி. அ. மசு.—2 உ மோ. உஉ. உச. மஎ.—3 எசா. சஅ. ச. உக-உச. உ மோ. மக. கக. கு மோ. 4 சகரி. க மசு: உ. மஉ.—5 எரே. கூ. உ. லூக். உ. க, கஎ. 6 எரே. உச. எ: கக. கக. 7 ஆகா. க. க, ம: உ. மசு, மஎ. 8 எசா. சகு. க.

௰௬ நீங்கள் செய்யவேண்டிய காரியங்கள் ஏதென்
றால், அவனவன் தனக்கடுத்தவனோடே [1]உண்
மையைப் பேசுங்கள்; உங்கள் வாசல்களில்
[2]உண்மையுமாய்ச் சமாதான நியாயமுமாய் நியா
௰௭ யந்தீருங்கள்.—[3]ஒருவனும் தனக்கடுத்தவனுக்கு
விரோதமாய் உங்கள் இருதயத்தில் பொல்லாப்
பை நினையாமலும், பொய்யாணையைச் சிநேகி
யாமலும் இருங்கள்; ஏனெனில் இவைகளெல்
லாம் நாம் பகைக்கிற காரியங்களென்று கர்த்தர்
சொல்லுகிறார்.
௰௮ சேனைகளுடைய கர்த்தரின் வார்த்தை எனக்கு
௰௯ உண்டாகி, அவர் சொன்னதாவது: — [4]நாலாம்
மாதத்தின் உபவாசமும், ஐந்தாம்மாதத்தின் உப
வாசமும், ஏழாம்மாதத்தின் உபவாசமும், பத்
தாம்மாதத்தின் உப்வாசமும், யூதாவீட்டாருக்கு
மகிழ்ச்சியாகவும் சந்தோஷமாகவும் நல்ல பண்
டிகைகளாகவும் மாறிப்போகும்; ஆகையால்
உண்மையையும் சமாதானத்தையும் சிநேகியுங்
களென்று சேனைகளின் கர்த்தர் சொல்லுகிறார்.—
௨௰ இன்னம் சனசதளங்களும் அநேகம் பட்டணங்
களின் குடிகளும் வருவதுண்டென்று சேனைக
௨௧ ளுடைய கர்த்தர் சொல்லுகிறார். — [5]நாம் கர்த்த
ருடைய சமுகத்தில் விண்ணப்பம்பண்ணவும்
சேனைகளின் கர்த்தரைத் தேடவும் தீவிரித்துப்
போவோம் வாருங்கள்; நாங்களும் போவோ
மென்று ஒருபட்டணத்தின் குடிகள் மறுபட்ட
ணத்தின் குடிகளோடே போய்ச் சொல்லுவார்
௨௨ கள்.—அநேக சனசதளங்களும் பலத்த சாதிக
ளும் எருசலேமிலே சேனைகளுடைய கர்த்த
ரைத் தேடவும், கர்த்தருடைய சமுகத்தில் விண்
௨௩ ணப்பம்பண்ணவும் வருவார்கள். — அந்நாள்க
ளில் புறச்சாதிகளான சகலவித பாஷைக்கார
ரில் பத்துமனுஷர் ஒரு யூதமனுஷனுடைய வஸ்
திரத்தொங்கலைப் பிடித்து உங்களோடேகூடப்
போவோம்; ஏனென்றால் பராபரன் உங்களோ
டே இருக்கிறார் என்கிறதைக் கேட்டோமென்று
சொல்லி, அவனைப் பிடிப்பார்களென்று சேனை
களுடைய கர்த்தர் சொல்லுகிறார் என்றார்.

## ௯. அதிகாரம்.

௧. பராபரன் தமது சபையைக் காத்தது. ௯. கிறிஸ்து வருவதற்காகவும், அவருடைய சமாதானமுள்ள இராச்சியத்திற்காகவும் களிகூரும்படிக்குச் சீயோன் தூண்டிவிடப்பட்டது. ௰௨. பராபரனால் செயத்துக்கும் காப்புக்கும் உண்டாகிய வாக்குத்தத்தம்.

௧ ஆதிராக் தேசத்துக்கு விரோதமானதும் தமஸ்கு
வின்மேல் வந்து தங்குவதுமான கர்த்தருடைய
வார்த்தையின் சுமை; ஏனென்றால் மனுஷரின்
மேலும் இஸ்ரவேலுடைய சகல கோத்திரங்க
ளின்மேலும் கர்த்தருக்குக் கண்ணோக்கம் உண்
௨ டாயிருந்தது.—ஆமாத்தும், மிகவும் ஞானமுள்ள
தீருவும் சீதோனுங்கூட அதின் எல்லைக்குள்
௩ ளாயிருக்கும். — தீரு தனக்கு அரணைக்கட்டி,
மண்ணத்தனை வெள்ளியையும், வீதிகளின் சே
றத்தனை பொன்னையும் சேர்த்துவைத்தது.

இதோ, ஆண்டவர் அதை ஏழையாக்கி, சமுத் ௪
திரத்தில் அதின் பலத்தை முறித்துப்போடுவார்;
அதுவோவென்றால் அக்கினிக்கு இரையாகும்.—
அஸ்கலோனும், காத்சாவும் எக்கிரோனுங்கூட ௫
அதைக் கண்டு பயப்பட்டு மிகவும் திகிலடை
யும்; ஏனெனில் அவைகளின் நம்பிக்கை வெட்
கப்பட்டுப்போகும்; காத்சாவில் இராசா அழிந்
துபோவான்; அஸ்கலோன் குடியற்றிருக்கும்.—
அஸ்தோத்தில் வேசிப்பிள்ளைகள் குடியிருப்பார் ௬
கள்; நாம் பெலிஸ்தியரின் முக்கியத்தைச் சங்கா
ரம்பண்ணி, — அவனுடைய இரத்தப்பழிகளை ௭
அவன் வாயிலும், அவனுடைய அருவருப்புகளை
அவன் பல்லுகளின் நடுவிலும் இராதபடிக்கு நீக்
கிப்போடுவோம்; அவனும் தம்முடைய பராபர
னுக்கென்று மீதியாக வைக்கப்பட்டு, யூதாவி
லே பிரபுவைப்போல இருப்பான்; எக்கிரோ
னை எபூசியனைப்போலும் இருப்பான்.—இரா ௮
ணுவத்துக்கும், போகிறவர்களுக்கும், வருகிற
வர்களுக்கும், விலக்கமாய்க் காக்க [6]நமது வீட்
டைச்சுற்றிலும் பாளையம்போடுவோம்; இனி
இறுகப்பபிடிக்கிறவன் அவர்கள்மேல் கடந்து
வருவதில்லை; ஏனெனில் இப்போது அதை நம்
முடைய கண்களினாலே நோக்கியிருக்கிறோம்.

[7]சீயோன் குமாரத்தியே மிகவும் களிகூரு; ௯
எருசலேம் குமாரத்தியே கெம்பீரி; இதோ, உன்
இராசா உனக்கு வருவார்; அவர் நீதியுள்ளவரும்
இரட்சிக்கிறவரும் தாழ்மையானவரும் கழுதை
யின்மேலும் கழுதைக்குட்டியாகிய மறியின்மே
லும் ஏறிவருகிறவருமாயிருக்கிறார்.—ஏனெனில் ௰
எப்பிராயீமில் இரதங்களையும் எருசலேமில் குதி
ரைகளையும் அற்றுப்போகப்பண்ணுவோம்; யுத்
தவில்லும் இல்லாதேபோகும்; [8]அவர் சாதிகளுக்
குச் சமாதானமென்பார்; அவருடைய இராச்சி
யம் ஒரு சமுத்திரம்துவக்கி மறுசமுத்திரபரியந்
தமும், நதிதுவக்கிப் பூமியின் எல்லைகள்பரியந்
தமும் போகும்.

உனக்கு நாம் செய்வதேதெனில், [9]தண்ணீரில் ௰௧
லாத குழியிலே அடைபட்டிருக்கிற உன்னு
டையவர்களை நாம் உன் உடம்படிக்கையின் இ
ரத்தத்தினாலே விடுதலைபண்ணுவோம்.—நம்பிக் ௰௨
கையோடே அடைபட்டவர்களே, அரணுக்குத்
திரும்புங்கள்; இரட்டிப்பான நன்மையையும் அ
றிவிப்பாரை இன்றைக்கு உனக்குக் கொடுக்கப்
போகிறோம்.—அதேதெனில் நாம் யூதாவை நம ௰௩
க்கு நாணேற்றி எப்பிராயீமிலே வில்லை நிரப்பி,
சீயோனே, உன்னுடைய புத்திரரைக் கிரேக்க
தேச புத்திரருக்கு விரோதமாக எழுப்பி உன்
னைப் பராக்கிரமசாலியின் பட்டையத்துக்கு ஒப்
பாக்குவோம்.—அவர்கள்மீதில் கர்த்தர் காணப்ப ௰௪
டுவார்; அவருடைய அம்பு மின்னலைப்போலப்
புறப்படும்; கர்த்தராகிய ஆண்டவர் எக்காளம்
ஊதி, தெற்குத்திசையின் புசல்களோடே நடந்து

1 எபே. ௪. ௨௫.—2 சகரி. ௭. ௯. 3 சகரி. ௭. ௰. 4 சகரி. ௭. ௩. 5 ஏசா. ௨. ௩.—6 சகரி. ௨. ௫.

7 ஏசா. ௬௨. ௰௧. செப். ௩. ௰௪. மத். ௨௧ ௫, ௫. யோவா. ௰௨. ௰௪, ௰௫. 8 சங். ௭௨. ௮: ௭. ௮. 9 கலா. ௩. ௨, ௩

௰௫ வருவார். — சேனைகளுடைய கர்த்தர் அவர்க
ளைக் காப்பாற்றுவார்; அவர்கள் பட்சித்துக் கவ
ண்டுக்கல்லுகளால் கீழ்ப்படுத்திக்கொள்ளுவார்
கள்; அவர்கள் குடித்து மதுபானத்தாலானது
போல இரைந்து, கலங்கலைப்போலேயும் பலி
பீடத்தின் கோடிகளைப்போலேயும் நிறைந்தி
௰௬ ருப்பார்கள்.—தம்முடைய சனமான மந்தையா
கிய அவர்களை அவர்களுடைய பராபரனாகிய
கர்த்தர் அந்நாளில் இரட்சிப்பார்; அதேனெனில்
அவருடைய தேசத்தில் அவர்கள் கொடியாக
ஏற்றப்பட்ட கிரீடக்கல்லுகளாயிருப்பார்கள்.—
௰௭ ஏனெனில் அவருடையதயவு எத்தனைபெரியது?
அவருடைய சௌந்தரியம் எத்தனைபெரியது?
தானியம் வாலிபரையும், திராட்சப்பழஇரசம்
கன்னியாஸ்திரிகளையும் வளரப்பண்ணும்.

## ௰. அதிகாரம்.

௧. விக்கிரகங்களையல்ல, பராபரனைத் தேடவேண்டுமென்பது. ௩. பாவத்தினிமித்தம் அவர் தமது மந்தையைத் தண்டித்ததுபோலே அவர்களை இரட்சித்து முந்தின சீருக்குக் கொண்டுவருவாரென்பது.

௧ பின்மாரிகாலத்து [1]மழையைக் கர்த்தரைக் கே
ளுங்கள்; அப்போது கர்த்தர் மின்னல்மேகங்களை
உண்டாக்கி, வெளியிலே அவரவருக்குப் பயி
ருண்டாக அவர்களுக்கு மழையிறக்கங்களைக்
௨ கட்டளையிடுவார்.—ஏனெனில் சுரூபங்கள் மா
யையைச் சொல்லின; குறிசொல்லுகிறவர்கள்
பொய்யைத் தரிசித்தார்கள்; சொப்பனக்காரர்
வீணானதைச் சொல்லி, மாயையாய்த் தேற்றரவு
பண்ணினார்கள்; ஆகையால் ஆடுகளைப்போலே
தெறித்து [2]மேய்ப்பனில்லாததினாலே சிறுமைப்
௩ பட்டார்கள்.—மேய்ப்பருக்கு விரோதமாக நம்
முடைய கோபம் மூண்டது; கடாக்களுக்கு
விரோதமாக விசாரிப்பாயிருப்போம்; ஏனென்
றால் சேனைகளுடைய கர்த்தர் யூதாவீட்டாராகிய
தமது மந்தையை விசாரித்து, அவர்களை யுத்தத்
திலே தமது மகத்துவமுள்ள குதிரையாக நிறுத்து
௪ வார்.—அவர்களிலிருந்து கோடிக்கல்லும், அவர்
களிலிருந்து கூடாரக்கூச்சும், அவர்களிலிருந்து
யுத்தவில்லும் வரும்; அவர்களிலிருந்து ஆளுகிற
யாவரும் ஏகமாய்ப் புறப்படுவார்கள்.
௫ யுத்தத்திலே அவர்கள் வீதிகளின் சேற்றை
மிதிக்கிற பராக்கிரமசாலிகளைப்போல இருந்து
யுத்தம்பண்ணுவார்கள்; ஏனெனில் கர்த்தர் அவர்
களோடேகூட இருப்பார்; குதிரைகளின்மேல்
ஏறிவருகிறவர்கள் வெட்கப்படுவார்கள்.
௬ நாம் யூதாவீட்டாரைப் பலப்படுத்தி, யோசே
ப்புவீட்டாரை இரட்சித்து, அவர்களைத் திரும்ப
நிலைக்கப்பண்ணுவோம்; ஏனெனில், அவர்க
ளுக்கு இரங்கினோம்; அவர்கள் நம்மால் ஒருக்
காலும் ஒழித்துவிடப்படாதவர்களைப்போல இ
ருப்பார்கள்; ஏனெனில் நாம் அவர்களுடைய
பராபரனாகிய கர்த்தர், நாம் அவர்களைக் கேட்
௭ போம். — எப்பிராயீமர் பராக்கிரமனைப்போல
இருப்பார்கள்; அவர்கள் இருதயம் [3]மதுபானத்
தாலாகுமாப்போல மகிழ்ச்சியாயிருக்கும்; அவர்
களுடைய பிள்ளைகளும் அதைக் கண்டு மகிழ்ச்சி
யாயிருப்பார்கள்; அவர்கள் இருதயம் கர்த்தருக்
குள் களிகூரும். — நாம் அவர்களைப்பார்த்துப் ௮
பயில்போட்டு அவர்களைக் கூட்டிக்கொள்ளு
வோம்; ஏனெனில் அவர்களை மீட்டோம்; அவர்
கள் பெருகியிருந்ததுபோலே பெருகிப்போவார்
கள்.—நாம் அவர்களைச் சனசதளங்களுக்குள்ளே ௯
இறைத்தபின் அவர்கள் தூரதேசங்களிலிருந்து
நம்மை நினைத்துத் தங்கள் பிள்ளைகளோடுங்கூ
டப் பிழைத்துத் திரும்புவார்கள். — நாம் அவர் ௰
களை எகிப்துதேசத்திலிருந்து திரும்பிவரப்பண்
ணி, அவர்களை அசூரியாவிலிருந்து கூட்டிக்
கொண்டு, அவர்களைக் கீலேயாத்தேசத்துக்கும்
லீபனோனுக்கும் வரப்பண்ணுவோம்; அவர்க
ளுக்கு இடம்காணாதேபோகும்.—[4]இடுக்கமென்ற ௰௧
சமுத்திரத்தைக் கடக்கையில் அவர் சமுத்திரத்
தில் அலைகளை அடிப்பார்; அப்போது நதியின்
ஆழங்கள் எல்லாம் வறண்டுபோகும்; அசூரியா
வின் முக்கியம் தாழ்த்தப்படும்; எகிப்தின் கோல்
விலகிப்போகும். — நாம் அவர்களைக் கர்த்தருக் ௰௨
குள் பலப்படுத்துவோம்; அவர்கள் [5]அவருடைய
நாமத்திலே நடந்துகொள்ளுவார்கள் என்று கர்த்
தர் சொல்லுகிறார்.

## ௰௧. அதிகாரம்.

௧. எருசலேமின் அழிவு. ௭. தெரிந்துகொள்ளப்பட்டவர்கள் காக்கப்பட்டிருக்க மற்றவர்கள் தள்ளப்படுவார்கள். ௯. கிறிஸ்தவை விலக்குவதினாலே அழகும், அழிவுமாகிய கோல்கள் முறிக்கப்படும். ௰௫. புத்தியற்ற மேய்ப்பனுடைய அடையாளமும் சாபமும்.

லீபனோனே, அக்கினி உன் கேதுருகளைப் பட் ௧
சிக்கும்படிக்கு உன் கதவுகளைத் திற.—பாய்மர ௨
விருட்சங்களே புலம்புங்கள்; ஏனெனில் கேது
ருமரங்கள் விழுந்தன; பிரபலியமானவைகள்
பாழ்க்கடிக்கப்பட்டன; பாசானின் கர்வாலியு
மரங்களே, புலம்புங்கள்; ஏனெனில் அரணுள்ள
சோலை கீழே தள்ளப்பட்டது — மேய்ப்பர்க ௩
ளின் கூக்குரலாகிய சத்தம் உண்டாயிருக்கிறது;
ஏனெனில் அவர்களுடைய மகிமை கெட்டுப்
போயிற்று; இளஞ்சிங்கங்களின் கர்ச்சிக்குத
லும் உண்டு; ஏனெனில் யோர்தானின் முக்கியம்
பாழ்க்கடிக்கப்பட்டது.
என் பராபரனாகிய கர்த்தர் சொன்னதாவது: ௪
கொலையுண்கிற ஆடுகளைமேயும்.—ஏனெனில் அ ௫
வைகளுக்குடையவர்கள், [6]அவைகளைக் கொன்
றுபோட்டுத் தங்களைக் குற்றமில்லாதவர்களைப்
போலக் காண்பிக்கிறார்கள்; அவைகளை விற்கிற
அவரவர் கர்த்தர் ஸ்தோத்திரிக்கப்பட்டவர்,நான்
ஐசுவரியமுள்ளவனானேன் என்கிறான்; அவை
களை மேய்க்கிறவர்களில் ஒருவனும் அவைகள்
மேல் இரக்கம்வைக்கிறதில்லை.—ஏனெனில் நாம் ௬
இனித் தேசத்தினுடைய குடிகளின்மேல் இரக்
கம்வைக்காமல் மனுஷரில் அவனவனை அவன
வனுக்கடுத்தவன் கையிலும், அவன் இராசாவின்

1 சங். ௭௨. ௬.—2 மத். ௯. ௩௬.—3 சங். ௱௪. ௰௫.

4 ஏசா. ௰௧. ௰௫.—5 மீகா. ௪. ௫.—6 யோவா. ௰. ௮.

கையிலும் அகப்படப்பண்ணுவோம்; இவர்கள்
தேசத்தை நொறுக்கியும் நாம் இவர்கள் கைக்கு
அவர்களைத் தப்புவிப்பதில்லையென்று கர்த்தர்
சொல்லுகிறார்.
௭ மந்தையில் சிறுமைப்பட்டவைகளே, உங்க
ளுக்காக நாம் கொலையுண்கிற ஆடுகளை மேய்த்து,
இரண்டு கோல்களை வைத்துக்கொண்டோம்;
ஒன்றை நயமென்றோம், ஒன்றை அழிக்கிற
தென்றோம், அப்படியே நாம் மந்தையை மேய்த்
௮ து,—மூன்று மேய்ப்பரையும் ஒரே மாதத்திலே
அதம்பண்ணினோம்; நம்முடைய ஆத்துமம் அவர்
களைச் சலித்தது; அவர்கள் ஆத்துமம் நம்மையும்
௯ அரோசித்தது. — இனி நாம் உங்களை மேய்ப்ப
தில்லை; சாகிறது சாகட்டும், அதமாகிறது அதமா
கட்டும்; மீதியானவைகளோவென்றால் ஒவ்
வொன்றும் மற்றதின் மாம்சத்தைத் தின்னக்கட
வதென்று நாம் சொல்லி,
௰ நயமென்னப்பட்ட நம்முடைய கோலை வாங்
கி, நாம் அந்த எல்லாச் சனசதளங்களோடும் பண்
ணியிருந்த நம்முடைய உடம்படிக்கையை அற்
றுப்போகப்பண்ணும்படிக்கு அதை உடைத்துப்
௰௧ போட்டோம்.—அது அந்நாளிலே அற்றுப்போ
யிற்று; அப்படியே மந்தையில் நமக்குக் காத்திருக்
கிற சிறுமைப்பட்டவைகள் அது கர்த்தருடைய
௰௨ வார்த்தையென்று அறிந்துகொண்டது.—உங்கள்
பார்வைக்கு நன்றாய்க் கண்டால் நம்முடைய
கூலியைத் தாருங்கள்; இல்லாவிட்டால் இருக்
கட்டுமென்று அவர்களோடே சொன்னோம்; அப்
போது நம்முடைய கூலியாக [1]முப்பது வெள்
௰௩ ளிக்காசை நிறுத்தார்கள்.—கர்த்தர் நம்முடனே
அதைக் குயவனுக்கு எறிந்துவிடு என்றார்; இது
நாம் அவர்களால் மதிக்கப்பட்ட மேன்மையான
மதிப்பு; நாம் அந்த முப்பது வெள்ளிக்காசை
வாங்கி, [2]அவைகளைக் குயவனுக்கென்று கர்த்த
ருடைய வீட்டிலே எறிந்துவிட்டோம்.
௰௪ நாம் யூதாவுக்கும் இஸ்ரவேலுக்கும் இருக்கிற
சகோதரக்கட்டை அற்றுப்போகப்பண்ணும்ப
டிக்கு, அழிக்கிறதென்ற நம்முடைய இரண்
டாம் கோலையும் உடைத்துப்போட்டோம்.
௰௫ கர்த்தர் என்னோடே சொன்னதாவது: மதியற்ற
ஒரு மேய்ப்பனுடைய ஆயுதங்களை இன்னம்
வைத்துக்கொள்.
௰௬ ஏனெனில் இதோ, [3]அதமாகிறவைகளைப் பரா
மரிக்காமலும், சிதறுண்டதைத் தேடாமலும்,
நொறுங்குண்டதைக் குணமாக்காமலும், இளைத்
திருக்கிறதை ஆதரிக்காமலும் கொழுத்ததின் மாம்
சத்தைத் தின்று, அவைகளுடைய குளம்புகளை
உடைக்கிற மேய்ப்பனை நாம் தேசத்திலே எழும்
பப்பண்ணுகிறோம்.
௰௭ [4]மந்தையைத்தளரவிடுகிற அபத்தமான மேய்ப்
பனுக்கு ஐயோ! பட்டையம் அவன் வலதுபுயத்
தின்மேலும் அவன் வலது கண்ணின்மேலும்
வரும்; அவன் புயம் சூம்பவே சூம்பும்; அவன் வ
லதுகண் இருள் அடையவே அடையுமென்றார்.

## ௰௨. அதிகாரம்.

௧. எருசலேம் தனக்கு நடுக்கத்தின் பாத்திரமாகவும், ௩. தன் சத்துருக்க
ளுக்குப் பளுவான கல்லாகவும் மாற்றப்படுவது. ௭. யூதாவுக்கு வரும்
செயமுள்ள மீட்பு. ௯. எருசலேமின் மனஸ்தாபம்.

இஸ்ரவேலைக்குறித்துக் கர்த்தர் சொன்ன வார்த் ௧
தையின் சுமை; [5]வானங்களை விரித்து, பூமியை
அஸ்திபாரப்படுத்தி, மனுஷனுடைய ஆவியை
அவனுக்குள் உருவாக்குகிற கர்த்தர் சொல்லுகி
றதாவது:—இதோ, சுற்றிலும் இருக்கிற எல்லாச் ௨
சனசதளங்களுக்கும் நாம் எருசலேமைத் [6]தத்த
ளிப்பின் பாத்திரமாக்குகிறோம்; எருசலேமுக்கு
விரோதமாகப் போடப்படும் முற்றிக்கையிலே
யூதாவின்மேலும் சுமையிருக்கும்.
அந்நாளிலே சம்பவிப்பதேதென்றால், நாம் ௩
எருசலேமைச் சகல சனசதளங்களுக்கும் பார
மான கல்லாக்குவோம், அதைக் கிளப்பவேண்டு
மென்ற யாவரும் சதைக்கவே சதைக்கப்படுவார்
கள்; ஏனென்றால் பூமியின் சாதிகளெல்லாம்
[7]அதற்கு விரோதமாகக் கூடிக்கொள்ளும்.—அந் ௪
நாளிலே நாம் குதிரைகளுக்கெல்லாம் திகைப்
பையும் அவைகளில் ஏறியிருக்கிறவர்களுக்கெல்
லாம் புத்திமயக்கத்தையும் வரப்பண்ணி, யூதா
வீட்டாரின்மேல் நமது கண்களைத் திறந்துவைத்
துச் சனசதளங்களுடைய எல்லாக் குதிரைகளுக்
கும் குருட்டாட்டத்தை உண்டுபண்ணுவோ
மென்று கர்த்தர் சொல்லுகிறார்.
எருசலேமின் குடிகள், சேனைகளின் கர்த்தரா ௫
கிய தங்கள் பராபரனுடைய துணையினாலே எங்
களுக்குப் பெலனானவர்கள் என்று அப்போது
யூதாவின் தலைவர் தங்கள் இருதயத்திலே சொல்
லுவார்கள். — அந்நாளிலே யூதாவின் தலைவரை ௬
விறகுகளுக்குள்ளே எரிகிற அக்கினி அடுப்புக்
கும், வைக்கோல் கட்டுகளுக்குள்ளே எரிகிற
தீவட்டிக்கும் ஒப்பாக்குவோம்; அவர்கள் வலது
புறமும் இடதுபுறமுமாகப் புறப்பட்டு, சுற்றி
லும் இருக்கிற எல்லாச் சனசதளங்களையும் பட்
சிப்பார்கள்; எருசலேம் இனி எருசலேமாகிய
தன் தானத்திலேதானே குடியேறினதாயிருக்
கும்.—தாவீதுவீட்டாரின் மகிமையும் எருசலேமு ௭
டைய குடிகளின் மகிமையும் யூதாவின்மேலே
தன்னை உயர்த்தாதபடிக்கு, கர்த்தர் யூதாவின் கூ
டாரங்களை முதல் முதல் இரட்சிப்பார்.—அந்நா ௮
ளிலே எருசலேமின் குடிகளைக் காப்பாற்றுவார்;
அவர்களில் தள்ளாடினவன் அந்நாளிலே தாவீ
தைப்போல இருப்பான்; தாவீதுவீட்டார் அவர்
களுக்கு முன்பாகப் பராபரனைப்போலும் கர்த்த
ருடைய தூதனைப்போலும் இருப்பார்கள்.
அந்நாளிலே சம்பவிப்பதேதெனில் எருசலே ௯
முக்கு விரோதமாய் வருகிற எல்லாச் சாதிகளை
யும் அழிக்கப்பார்ப்போம்.—ஆனால் தாவீதுவீட் ௰

1 மத். ௨௬. ௰௫
2 மத். ௨௭. ௯: ௯. ௰.
3 எரே. ௨௩. ௨. எசே. ௩௪. ௨-௪.
4 யோவா. ௰. ௰௨.
5 ஏசா. ௪௨. ௫.
6 ஏசா. ௫௧. ௨௨.
7 சகரி ௰௪.௨.

டாரின்மேலும் எருசலேமுடைய குடிகளின்
மேலும் கிருபையின் ஆவியையும் விண்ணப்பங்
களின் ஆவியையும் [1]ஊற்றுவோம்; அப்போது
அவர்கள் [2]தாங்கள் குத்தின நம்மை நோக்கிக்
கொண்டு, ஒரேபேறானவனுக்காகப் புலம்புகிற
துபோலே நமக்காகப் புலம்பித் தலைச்சன் பிள்
ளைக்காகத் துக்கிக்கிறதுபோலே நமக்காகக் கசப்
பாய்த் துக்கிப்பார்கள்.
௰௧ [3]மெகிதோன் பட்டணத்தின் பள்ளத்தாக்கின்
ஊராகிய ஆதாத்ரிம்மோனின் புலம்பலைப்போ
லே அந்நாளிலே எருசலேமில் புலம்பல் பெரி
௰௨ தாயிருக்கும்.-தேசம் புலம்பிக்கொண்டிருக்கும்;
ஒவ்வொரு வம்சங்கள் தனித்தனியாகத்தானே;
தாவீதுவீட்டு வம்சத்தார் தனியேயும், அவர்கள்
ஸ்திரிகள் தனியேயும், நாத்தான்வீட்டு வம்சத்
தார் தனியேயும், அவர்கள் ஸ்திரிகள் தனியே
௰௩ யும்,-லேவிவீட்டு வம்சத்தார் தனியேயும், அவர்
கள் ஸ்திரிகள் தனியேயும், சீமேயிவீட்டு வம்சத்
தார் தனியேயும், அவர்கள் ஸ்திரிகள் தனியே
௰௪ யும்,— மற்றுண்டான எல்லா வம்சங்களிலும்
ஒவ்வொரு வம்சங்களின் மனுஷர் தனித்தனி
யேயும் அவர்கள் ஸ்திரிகள் தனித்தனியேயும்
புலம்புவார்கள்.

## ௰௩. அதிகாரம்.

௧. விக்கிரகஆராதனையிலும், ௨. கள்ளத்தீர்க்கதரிசனத்திலும், எருசலேமைச் சுத்தியாக்கும் ஊற்று. ௭. கிறிஸ்துவின் மரணமும், சனத்தில் மூன்றும் பகுதியைப் பாதுகாத்தலும்.

௧ பாவத்தையும் [4]அழுக்கையும் நீக்க, அந்நாளிலே
தாவீதுவீட்டாருக்கும் எருசலேமின் குடிகளுக்
கும் திறக்கப்பட்ட ஊற்று உண்டாயிருக்கும்.
௨ அந்நாளிலே சம்பவிப்பதேதென்றால் விக்கி
ரகங்களின் பேரைத் தேசத்திலிராதபடிக்கு அ
ழிப்போம்; அவைகள் இனி நினைக்கப்படுவதில்
லை; தரிசனம் சொல்லுகிறவர்களையும் அசுத்தத்
தின் ஆவியையும் தேசத்திலிருந்து போய்விட
வும்பண்ணுவோமென்று சேனைகளின் கர்த்தர்
௩ சொல்லுகிறார்.-இனி ஒருவன் தரிசனம் சொன்
னால் சம்பவிப்பதேதெனில், அவனைப் பெற்ற
அவன் தகப்பனும் அவன் தாயும் அவனுடனே,
[5]நீ உயிரோடிருக்கப்படாது; ஏனெனில் நீ கர்த்
தருடைய நாமத்தைச் சொல்லிப் பொய்யைப்
பகருகிறாயென்று அவனைப் பெற்ற அவன் தகப்
பனும் அவன் தாயும் அவன் தரிசனம் சொல்லும்
போது அவனைக் குத்திப்போடுவார்கள்.
௪ சம்பவிப்பதேதென்றால் தரிசனம் சொல்லு
கிற அவனவன் தான் சொன்ன தரிசனத்தினால்
அந்நாளிலே வெட்கப்பட்டு, பொய்சொல்லும்
படிக்கு இனி மயிருள்ள தோல்ச்சால்வையைப்
௫ போர்த்துக்கொள்ளாமல்,-நான் தரிசனம் சொல்
லுகிறவன் அல்ல; நான் நிலத்தைப் பயிரிடுகிற
வன்; ஏனென்றால் என் சிறுபோதே ஒருமனு
ஷன் என்னை வேலைகொண்டான் என்பான்.—
ஆனால் உன் கைகளில் இருக்கிற இந்த வடுக்கள் ௬
ஏதென்று அவனைக் கேட்டால், என் சிநேகி
தரின் வீட்டிலே இப்படி அடிக்கப்பட்டேன்
என்பான்.
பட்டயமே, நம்முடைய மேய்ப்பன்மேலும் ௭
நமக்கடுத்த புருஷன்மேலும் எழும்பென்று சே
னைகளின் கர்த்தர் சொல்லுகிறார்; [6]மேய்ப்பனை
வெட்டு, அப்போது ஆடுகள் சிதறிப்போகும்;
ஆனால் நமதுகரத்தைச் சிறியோர்பேரிலேதிரும்ப
நீட்டுவோம்.—தேசமெங்கும் சம்பவிக்கும் காரி ௮
யம் ஏதென்றால், அதில் இருக்கிற இரண்டுபங்கு
மனிதர் சங்கரிக்கப்பட்டு மாண்டுபோவார்கள்;
மூன்றாம்பங்கோவெனில் அதில் மீதியாயிருக்
கும்.—அந்த மூன்றாம் பங்கை நாம் அக்கினிக் ௯
குள்ப்படப்பண்ணி, அவர்களை வெள்ளியை உ
ருக்குகிறதுபோல உருக்கி, அவர்களைப் பொன்
னைப் புடமிடுகிறதுபோலப் புடமிடுவோம்; அ
வர்கள் நமது நாமத்தைத் தொழுதுகொள்ளுவார்
கள்; அப்போது நாம் அவர்களைக் கேட்டருளு
வோம்; இது நமது சனமென்று நாமும் சொல்லு
வோம்; கர்த்தர் என் பராபரனாயிருக்கிறாரென்று
அதுவும் சொல்லும்.

## ௰௪. அதிகாரம்.

௧. எருசலேமை அழிப்பவரின் அழிவும், ௪. கிறிஸ்துவின் வருகையும் அவருடைய இராச்சியத்தின் மேன்மைகளும், ௰௨. எருசலேமின் சத்துருக்களுடைய வேதனையும், ௰௬. மீதியானவர்கள் கர்த்தரிடத்திற்குத் திரும்புவார்கள். ௨௰. அவர்களுடைய கொள்ளை பரிசுத்தமாவது.

இதோ, உன்னுடைய கொள்ளை உன் நடுவில்ப் ௧
பங்கிடப்படுகிற கர்த்தருடைய நாள் வரும்.—
அதேனெனில் எருசலேமுக்கு விரோதமாக யுத் ௨
தம்பண்ணச் சகல [7]சாதிகளையும் கூட்டுவோம்;
பட்டணம் பிடிக்கப்படும்; வீடுகள் கொள்ளையா
கும்; ஸ்திரிகள் அவமானப்படுவார்கள்; பட்ட
ணத்தாரில் பாதிமனுஷர் சிறைப்பட்டுப்போ
வார்கள்; குறைச்சனமோவென்றால் பட்டணத்
தைவிட்டு அறுப்புண்டுபோவதில்லை.
ஏனெனில் கர்த்தர் புறப்பட்டு, தாம்படையின் ௩
நாளிலே யுத்தம்பண்ணி இருக்கிறதற்கொத்த பிர
காரமாக அந்தச் சாதிகளோடே யுத்தம்பண்ணு
வார்.-அந்நாளிலே அவருடைய பாதங்கள் எரு ௪
சலேமுக்கு எதிரே கிழக்காக இருக்கிற ஒலீவம
லையின்மேல் நிற்கும்; அப்போது மகா பெரிய
பள்ளத்தாக்கு உண்டாக ஒலீவமலை தன் நடுமை
யத்திலே கிழக்குக்கும் மேற்குக்கும் எதிராகப்
பிளந்துபோனபடியினாலே, ஒரு பாதி வடபக்
கத்திலும் ஒரு பாதி தென்பக்கத்திலும் விலகும்.—
அப்போது நமது மலைகளின் பள்ளத்தாக்கு வழி ௫
யாய் ஓடிப்போவீர்கள்; ஏனெனில் மலைகளின்
பள்ளத்தாக்கு ஆத்சால்மட்டும் போகும்; நீங்கள்
யூதாவின் இராசாவாகிய உசியாவின் நாள்களில்
[8]பூமியதிர்தலுக்குத் தப்பி ஓடிப்போனதுபோல

1 யோவே. ௨. ௩. 3 ௨ இரா. ௩௫. ௨௪, ௨௫.
2 யோவா. ௰௯. ௩௪, ௩௭. 4 எபேசி. ௫. ௨௬.
5 உபா. ௰௩. ௫–௯. 7 சகரி. ௰௨. ௩.
6 மத் ௨௬. ௩௧. மாற். ௰௪. ௨௭. 8 ஆமோ. ௧. ௧.

ஓடிப்போவீர்கள்; அப்போது என் பராபரனு
கிய கர்த்தர் வருவார்; [1]தேவரீரோடே எல்லாப்
௬ பரிசுத்தவான்களும்கூடத்தானே. — அந்நாளில்
சம்பவிப்பதேதென்றால், வெளிச்சம் இல்லாமல்,
ஒருவேளை பிரகாசமும் ஒருவேளை மப்புமாயி
ருக்கும்.

௭ ஒருநாள் உண்டு, அது கர்த்தருக்குத் தெரிந்
தது; அது பகலுமல்ல இராவுமல்ல; ஆனால் சம்ப
விப்பதேதெனில் சாயங்காலத்திலே வெளிச்ச
௮ மாம். — அந்நாளிலே சம்பவிப்பதேதென்றால்
[2]சீவனுள்ள தண்ணீர்கள் எருசலேமிலிருந்து
புறப்பட்டு, பாதி கிழக்குச்சமுத்திரத்துக்கும்
பாதி மேற்குச் சமுத்திரத்துக்கும் போய் மாரிகா
லத்துக்கும் கோடைகாலத்துக்கும் இருக்கும்.—
௯ [3]அப்போது கர்த்தர் பூமியின்மீதெல்லாம் இராசா
வாயிருப்பார்; அந்நாளில் கர்த்தர் ஒருத்தராயிருப்
பார்; அவருடைய நாமமும் ஒன்றாயிருக்கும்.—
௰ தேசமெல்லாம் கேபாத்துவக்கி எருசலேமுக்குத்
தெற்கே இருக்கிற ரிம்மோன்மட்டும் ஒத்ததரை
யாகத் திருத்தப்படும்; எருசலேமோவென்றால்
உயர்ந்ததாகி, தன் தானத்திலே பென்யமீன் வா
சல்துவக்கி முதல்வாசலென்ற தலமட்டுக்கும்
கோடிவாசல்மட்டுக்கும், அனனியேல் கோபு
ரம்துவக்கி இராசாவின் ஆலைகள்மட்டுக்கும் குடி
௰௧ யேற்றப்பட்டிருக்கும்.—அதிலே குடியிருப்பார்
கள்; [4]இனிச் சங்கரிப்பில்லாமல் எருசலேம் சுக
மாய்த் தங்கியிருக்கும்.

௰௨ எருசலேமுக்கு விரோதமாய் யுத்தம்பண்ணின
எல்லாச் சனசதளங்களையும் கர்த்தர் வாதிக்கும்
வாதையாவது: அவனவன் சதையை வாடப்பண்
ணுவார்; தங்கள் கால்கள்மேல் அவர்கள் நிற்கை
யில் அவர்கள் கண்கள் தங்கள் கண்மண்டை
களிலே வாடி, அவர்கள் நாக்கு அவர்கள் வாயி
௰௩ லே வறண்டுபோகும்.—அந்நாளிலே சம்பவிப்ப
தேதென்றால், கர்த்தரால் பெரியகலக்கம் அவர்க
ளுக்குள் இருக்கும்; அவனவன் தனக்கடுத்தவ
னின் கையைப் பிடிப்பான்; அவனவனுடைய
கை அவனுக்கடுத்தவனுடைய கைக்கு விரோத
மாக எழும்பும்.—யூதாவும் எருசலேமுக்கு எதி ௰௪
ராக யுத்தம்பண்ணும்; அப்போது சுற்றிலும் இரு
க்கிற சகல சாதிகளுடைய ஆஸ்தியாகிய பொன்
னும் வெள்ளியும் வஸ்திரங்களும் மகா திரளா
கக் கூட்டப்படும்.—அந்தப் பாளயங்களில் இரு ௰௫
க்கும் குதிரைகள் கோவேறுகழுதைகள் ஒட்ட
கங்கள் கழுதைகள்முதலான எல்லா மிருகசீவன்
களின் வாதையும் அந்த வாதையைப்போல இரு
க்கும்.

சம்பவிப்பதேதென்றால், எருசலேமுக்கு வி ௰௬
ரோதமாக வந்திருந்த எல்லாச் சாதிகளிலும் மீதி
யான யாவரும், [5]சேனைகளின் கர்த்தராகிய இரா
சாவைப் பணிந்துகொள்ளும்படிக்கும், கூடா
ரங்களின் பண்டிகையை ஆசரிக்கும்படிக்கும்,
வருஷத்துக்கு வருஷம் வந்தேறுவார்கள்.—அப் ௰௭
போது சம்பவிப்பதேதெனில், பூமியின் வம்சங்
களில் எது சேனைகளின் கர்த்தராகிய இராசா
வைப் பணிந்துகொள்ள எருசலேமுக்கு வந்தே
றாதேபோகுமோ, அதின்மேல் மழை வருஷிப்
பதில்லை. — எகிப்தின் வம்சம் வந்தேறாமலும் ௰௮
சேராமலும்போனால் அவர்கள்மேல் வருஷிக்கா
தேபோவது; கூடாரங்களின் பண்டிகையை
ஆசரிக்கவந்தேறாத சாதிகளைக் கர்த்தர் வாதிக்
கும் அந்த வாதையாய்த் தான் இருக்கும்.—இது ௰௯
எகிப்தியருடைய பாவத்துக்கும் கூடாரங்களின்
பண்டிகையை ஆசரிக்கவந்தேறாத சகல சாதிக
ளுடைய பாவத்துக்கும் வரும் ஆக்கினை.

அந்நாளிலே குதிரைகளின் சலங்கைகளிலே ௨௰
கர்த்தருக்குப் பரிசுத்தமென்ற விலாசம் இருக்
கும்; கர்த்தருடைய வீட்டிலுள்ள பானைகள் பலி
பீடத்துக்குமுன்பாக இருக்கிற கலங்களுக்கு
அப்போது சரியாயிருக்கும்.—அப்போது எருச ௨௰௧
லேமிலும் யூதாவிலும் உள்ள எல்லாப் பானைக
ளும் சேனைகளின் கர்த்தருக்குப் பரிசுத்தமாயி
ருக்கும்; பலியிடுகிற யாவரும் வந்து அவைக
ளில் எவைகளையாகிலும் வாங்கி அவைகளில்
சமைப்பார்கள்; அந்நாள்முதற்கொண்டு சேனை
களுடைய கர்த்தரின் வீட்டிலே ஒரு கானானிய
னும் இருப்பதில்லை.

1 யூதா. ௰௪.—2 எசே. ௪௭. ௧. வெளி. ௨௨. ௧.

3 சங். ௯௯. ௧.—4 வெளி. ௨௨. ௩.—5 ஏசா. ௬௬. ௨௩.

MALACHI.

# மல்கியாவின் தீர்க்கதரிசனம்.

## க. அதிகாரம்.

க. மல்கியா இஸ்ரவேலுடைய இரக்கமில்லாமையையும், ௬. அவபத்தியையும், ௰உ. தேவதூஷணத்தையையுங்குறித்து முறையிட்டது.

௧ மல்கியாவைக்கொண்டு கர்த்தர் இஸ்ரவேலுட
னே சொன்ன வார்த்தையின் சுமை.

௨ உங்களைச் சிநேகித்தோமென்று கர்த்தர் சொல்
லுகிறார்; ஆனால் நீங்கள், எங்களை எதிலே சிநே
கித்தீர் என்கிறீர்கள்; கர்த்தர் சொல்லுகிறதாவது:
ஏசாவு யாக்கோபுக்குச் சகோதரன் அல்லவோ?
ஆகிலும் யாக்கோபை நாம் சிநேகித்தோம். —
௩ ஏசாவையோ நாம் பகைத்து, [1]அவனுடைய பர்
வதங்களைப் பாழும் அவனுடைய சுதந்தரத்தை
வனாந்தரத்திலுள்ள வலுசர்ப்பங்களின் தாவும்
௪ ஆக்கினோம். — எளிமைப்பட்டோம்; ஆனால்
பாழ்த்துப்போனவைகளைத் திரும்பக் கட்டுவோ
மென்று ஏசாவு சொன்னால், கர்த்தர் சொல்லுகி
றதேதெனில், அவர்கள் கட்டுவார்கள்; நாமோ
வென்றால் நிருமூலமாக்குவோம்; அவர்களைத்
துன்மார்க்கத்தின் எல்லையென்றும், கர்த்தர் என்
றைக்கும் சினம்வைக்கிற சனமென்றும் அழைப்
௫ பார்கள் என்கிறார்.—[2]இதை உங்கள் கண்கள்
காணும்; அப்போது நீங்கள் கர்த்தர் இஸ்ரவே
லுடைய எல்லைக்கு அப்பாலே மகிமைப்படு
வார் என்பீர்கள்.

௬ குமாரன் பிதாவையும், ஊழியக்காரன் தன்
ஆண்டவனையும் கனம்பண்ணவேண்டுமே; இப்
போதும் நாம் பிதாவானால் நமது கனம் எங்கே?
நாம் ஆண்டவரானால் நமக்குப் பயப்படும் பயம்
எங்கே என்று சேனைகளுடைய கர்த்தர் தமது
நாமத்தை அசட்டைபண்ணுகிற ஆசாரியர்களா
கிய உங்களைக் கேட்கிறார்; அதற்கு நீங்கள், எதி
னாலே உமது நாமத்தை அசட்டைபண்ணினோம்
௭ என்கிறீர்கள்.—நம்முடைய பீடத்தின்மேல் அ
சுத்தமான அப்பத்தைப் படைக்கிறதினாலேதா
னே; ஆனால் உம்மை எதினாலே அசுத்தப்படுத்தி
னோம் என்கிறீர்கள்; கர்த்தருடைய பந்தி எண்
ணமற்றுப்போயிற்றென்று நீங்கள் சொல்லுகிற
௮ தினாலேதானே.—நீங்கள் [3]கண் ஊனமானதைப்
பலியிடக் கொண்டுவந்தாலும் பொல்லாப்பல்ல;
நீங்கள் கால் ஊனமானதையும் நசல்பிடித்த
தையும் கொண்டுவந்தாலும் பொல்லாப்பல்ல;
அதை நீ உன் அதிபதிக்குச் செலுத்தேன்; அவன்
உன்மேல் பிரியமாயிருப்பானோ? அல்லவென்று
உன் முகமாட்டத்தைப் பார்ப்பானோவென்று
சேனைகளின் கர்த்தர் கேட்கிறார்.

இப்போதும் பராபரனுடைய சமுகத்தை ௯
நோக்கிக் கெஞ்சுங்களேன்; அப்போது நம்மு
டையமேல் இரங்குவார்; இது உங்கள் கையினா
லே வந்த காரியம், உங்கள் முகமாட்டத்தைப்
பார்ப்பாரோவென்று சேனைகளின் கர்த்தர் கேட்
கிறார்.—உங்களில் யாராகிலும் கதவுகளைப் பூட் ௰
டினால் தாவீனை; இப்படி விருதாவாய் நம்மு
டைய பலிபீடத்தில் அக்கினியைக் கொளுத்தீர்
களாக; உங்கள்பேரிலே நமக்குப் பிரியமில்லை
யென்று சேனைகளுடைய கர்த்தர் சொல்லுகி
றார்; உங்கள் கைகளிலுள்ள காணிக்கை நமக்
குப் பொருந்தினதல்ல.—ஏனெனில் சூரியன் ௰௧
உதிக்கிற திசைதுவக்கி அது அஸ்தமிக்கிற திசை
மட்டும், நமது நாமம் சாதிகளுக்குள்ளே பெரி
தாயிருக்கும் எல்லா ஸ்தலத்திலும் நமது நாமத்
துக்குத் தூபமும் சுத்தமான காணிக்கையும் செ
லுத்தப்படும்; ஏனெனில் நமது நாமம் சாதிக
ளுக்குள்ளே பெரிதாயிருக்கும் என்று சேனைக
ளின் கர்த்தர் சொல்லுகிறார்.

நீங்களோவென்றால் கர்த்தருடைய பந்தி அ ௰௨
சுத்தமானதென்றும், அதின் ஆகாரமாகிய அதின்
வரத்து எண்ணம் அற்றுப்போனதென்றும்சொல்
லுகிறதினாலே அதைப் பரிசுத்தக்கொலைச்சலாக்
குகிறீர்கள்.—இதோ எத்தனை வருத்தமென்றும் ௰௩
நீங்கள் சொல்லி, அதைத் திரணமாய்ப்பேசி,
பறிக்கப்பட்டதையும் கால்ஊனமாயிருக்கிறதை
யும் நசல்கொண்டதையும் கொண்டுவந்து கா
ணிக்கையாகச் செலுத்தினீர்களென்று சேனைக
ளின் கர்த்தர் சொல்லுகிறார்; அதை உங்கள் கை
களில் அங்கீகரித்துக்கொள்ளுவோமோவென்று
கர்த்தர் கேட்கிறார்—ஆனால் தன் மந்தையில் த ௰௪
னக்கு ஆண் இருக்கக் கெட்டுப்போனதை ஆண்
டவருக்கு நேர்ந்துகொண்டு பலியிடுகிற கபடஸ்
தன் சபிக்கப்பட்டவன்; ஏனெனில் நாம் பெ
ரிய இராசாவென்று சேனைகளுடைய கர்த்தர்
சொல்லுகிறார்; நமது நாமம் சாதிகளுக்குள்ளே
பயங்கரமாயிருக்கும்.

1 எசே. ௩௫. ௫. ஒ. எரே. ௨௫. ௰௨—௰௪.

2 சங் ௫௨. அ.—3 உ லேவி. ௨௨. ௰௭—௨௫.

## ௨. அதிகாரம்.

௧. உடம்படிக்கையை அசட்டைபண்ணினதற்காக ஆசாரியர்களையும், ௰௧. விக்கிரக ஆராதனைக்காகவும், ௰௪. விபசாரத்திற்காகவும், ௰௭. நம்பிக்கையின்மைக்காகவும் சனத்தையும் கொடுமையாய்க் கண்டித்தது.

௧ இப்போதும் ஆசாரியர்களே, இந்தக் கற்பனை
௨ உங்களுக்குச் செல்லும்.—நீங்கள் கேளாமலும்
நமது நாமத்துக்கு மகிமையைச் செலுத்தும்ப
டிக்கு இதை மனதிலே வைக்காமலும்போனால்,
நாம் உங்களுக்குள்ளே சாபத்தை அனுப்பி, உங்
கள் ஆசீர்வாதங்களைச் சபிப்போமென்று சேனை
களுடைய கர்த்தர் சொல்லுகிறார்; ஆம், நீங்கள்
இதை மனதிலே வைக்காமல்போனால் அவை
௩ களைச் சபிப்போம்.—இதோ, நாம் உங்களுக்கு
இருக்கும் பயிரைக்கெடுத்து, சாணியை உங்கள்
முகங்களில் இறைப்போம்; [1]உங்கள் பண்டி
கைகளின் சாணியைத்தானே; அது உங்களைத்
௪ தன்னோடுங்கூடத் தள்ளுபடியாக்கும்.—லேவி
யோடே பண்ணின நம்முடைய உடம்படிக்
கை இருக்கும்படிக்கு இந்தக் கற்பனையை உங்
களண்டைக்கு அனுப்பினோமென்கிறதை அப்
போது அறிந்துகொள்ளுவீர்களென்று சேனைக
ளுடைய கர்த்தர் சொல்லுகிறார்.
௫ அவனோடிருந்த நம்முடைய உடம்படிக்கை
சீவனும் சமாதானமுமாக இருந்தது; அவன்
நமக்குப் பயப்படும் பயத்தோடே இருக்கவேண்
டுமென்று இவைகளை அவனுக்குக் கட்டளையிட்
டோம்; அப்படியே அவன் நம்முடைய நாமத்
௬ துக்குத் திடுக்கிட்டும் இருந்தான்.—சத்தியவேதம்
அவன் வாயில் இருந்தது; அவனுடைய உதடுக
ளில் நியாயக்கேடு காணப்பட்டதில்லை; அவன்
நம்மோடே சமாதானமும் செம்மைமார்க்கமு
மாய்ச் சஞ்சரித்து, அநேகரை அக்கிரமத்தைவிட்
௭ டுத் திரும்பப்பண்ணினான்.—ஏனெனில் ஆசா
ரியனின் உதடுகள் [2]அறிவைக் காக்கவேண்டும்;
வேதத்தை அவன் வாயிலே தேடுவார்களே;
ஏனென்றால் அவன் சேனைகளுடைய கர்த்த
ரின் தூதன்.
௮ நீங்களோவெனில் வழியைவிட்டு விலகி, அ
நேகரை வேதத்தில் இடறப்பண்ணினீர்கள்; லே
வியின் உடம்படிக்கையைக் கெடுத்துப்போட்
டீர்கள் என்று சேனைகளின் கர்த்தர் சொல்லுகி
௯ றார்.—ஆனதுகொண்டு நீங்கள் நம்முடைய வழி
களைக் கைக்கொள்ளாமல் வேதத்திலே முகமாட்
டம்பார்க்கிறபடியினாலே நாமும் உங்களை எல்
லாச் சனத்துக்கும் எண்ணமற்றவர்களும் தாழ்ந்
தவர்களும் ஆக்கினோம்.
௰ [3]நமக்கெல்லாம் ஒரே பிதா இல்லையோ? ஒரே
பராபரன் நம்மைச் சிருஷ்டித்ததில்லையோ? நாம்
நம்முடைய பிதாக்களின் உடம்படிக்கையைப்
பரிசுத்தக்குலைச்சலாக்க அவனவன் தன்சகோ
தரனுக்குத் துரோகம்பண்ணுவானேன்?
௰௧ யூதசனம் துரோகம்பண்ணிற்று; இஸ்ரவேலி
லும் எருசலேமிலும் அருவருப்பான காரியம்
செய்யப்பட்டது; அதேதென்றால் கர்த்தர் சிநே
கிக்கிற பரிசுத்தத்தை யூதசனம் குலைத்து அன்
னியதேவனின் குமாரத்திகளை விவாகம்பண்
ணினார்கள். — இப்படிச் செய்கிறவனையும், கா ௰௨
வல்காக்கிறவனையும், உத்தரவுகொடுக்கிறவனை
யும், சேனைகளுடைய கர்த்தருக்குக் காணிக்கை
செலுத்துகிறவனையும் யாக்கோபின் கூடாரங்
களில் இராதபடிக்குக் கர்த்தர் சங்கரிப்பார். —
அத்தோடே நீங்கள் இரண்டாவது செய்கிறதே ௰௩
தெனில், நீங்கள் கர்த்தருடைய பீடத்தைக் கண்
ணீரினாலும் அழுகையினாலும் பெருமூச்சினா
லும் மூடப்பண்ணுகிறீர்கள்; ஆகையால் அவர்
இனிக் காணிக்கையைப் பார்க்கவும் அதை உங்
கள் கைகளில் பிரியமாய் ஏற்றுக்கொள்ளவும்
கூடாது.
ஏனென்று கேட்கிறீர்கள்; கர்த்தர் உனக்கும் ௰௪
உன் இளவயதின் பெண்சாதிக்கும் சாட்சியாயி
ருக்கிறபடியினாலும், உன் தோழியும் உன் உடம்
படிக்கையின் பெண்சாதியுமாகிய இவளை நீ து
ரோகம்பண்ணினபடியினாலுந்தானே.— [4]ஒருவ ௰௫
னாயிருந்த அவன் அப்படிச் செய்ததில்லை; ஆவி
அவனுக்குப் பரிபூரணமாயிருந்தது; ஒருவனாயி
ருந்த அவன் என்னசெய்தான்? பராபரன் சொன்
னவித்தைத் தேடினான்; ஆகையால் ஒருவனும்
தன் இளவயதின் பெண்சாதியைத்துரோகம்பண்
ணாதபடிக்கு, உங்கள் ஆவிக்கு எச்சரிக்கையா
யிருங்கள்.—ஏனென்றால் தள்ளிவிடுதலைத் தாம் ௰௬
பகைக்கிறவரென்று இஸ்ரவேலின் பராபரனா
கிய கர்த்தர் சொல்லுகிறார்; அப்படிக்கொத்தவன்
தன் வஸ்திரத்தின்மேல் கொடுமையை உடுத்துக்
கொள்ளுகிறானென்று சேனைகளுடைய கர்த்தர்
சொல்லுகிறார்; ஆகையால் நீங்கள் துரோகம்
பண்ணாமல் உங்கள் ஆவிக்கு எச்சரிக்கையாயி
ருங்கள்.
[5]உங்கள் பேச்சுகளினாலே கர்த்தருக்கு வருத் ௰௭
தமாயிருக்கிறீர்கள்; எதினாலே அவருக்கு வருத்
தமாய் இருக்கிறோம் என்கிறீர்கள்; பொல்லாப்
பைச் செய்கிறவனெல்லாம் கர்த்தரின் பார்வை
க்கு நல்லவன்; இப்படிக்கொத்தவர்கள்பேரிலே
அவர் பிரியம்வைக்கிறாரென்றும், நியாயந்தீர்க்
கிற பராபரன் எங்கேயென்றும் நீங்கள் சொல்லு
கிறதினாலேதானே.

## ௩. அதிகாரம்.

௧. கிறிஸ்துவின் தூதனையும், மகத்துவத்தையும், இருபையையுங்குறித்தது. ௭. பிரசைகளின் கலகத்தையும், ௮. திவ்விய பண்டத்தின் கொள்ளையையும், ௰௩. நம்பிக்கையின்மையையுங்குறித்தது. ௰௬. பராபரனுக்குப் பயப்படுகிறவர்களுக்கு உண்டாகிய வாக்குத்தத்தம்.

இதோ, [6]நாம் நம்முடைய தூதனை அனுப்புகி ௧
றோம்; அவன் நமக்குமுன்பாக வழியை ஆயத்
தம்பண்ணுவான்; அப்போது நீங்கள் தேடுகிற
ஆண்டவரும் நீங்கள் இச்சிக்கிற உடம்படிக்கை
யின் தூதருமானவர் தீவிரமாய்த் தம்முடைய தே
வாலயத்துக்கு வருவார்; இதோ, வருகிறாரென்று

1 ஆமோ. ௫. ௨௧. — 2 நீத். ௨ ௯. ஆகா. ௧.௰௧. கலா. ௪.௰௪. — 3 யாக். ௨.௧. 4 எசா. ௫௧. ௨. — 5 மல்கி. ௩.௰௩–௰௫. 6 மத். ௰௧.௰. மாற். ௧. ௨. லூக். ௭. ௨௭.

சேனைகளுடைய கர்த்தர் சொல்லுகிறார்.—
௨ ஆனால் அவர் வருகையின் நாளைத் தாங்குபவன்
யாவன்? அவர் காணப்படுகையில் நிலைநிற்ப
வன் யாவன்? ஏனெனில் அவர் புடமிடுகிறவ
னுடைய அக்கினியைப்போலேயும் வண்ணாரு
டைய சவுக்காரத்தைப்போலேயும் இருப்பார்.—
௩ [1]அவர் உளுக்காந்து வெள்ளியைப் புடமிட்டுச்
சுத்திகரித்துக்கொண்டிருப்பார்; அவர் லேவி
யின் புத்திரரைச் சுத்திகரித்து, அவர்கள் கர்த்தரு
டையவர்களாய் இருக்கும்படிக்கும் நீதியாய்க்
காணிக்கையைச் செலுத்தும்படிக்கும், அவர்க
ளைப் பொன்னைப்போலேயும் வெள்ளியைப்
போலேயும் உருக்குவார்.

௪ அப்போது பூர்வநாள்களைப்போலேயும் முந்
தினவருஷங்களைப்போலேயும், யூதாவின் காணி
க்கையும் எருசலேமின் காணிக்கையும் கர்த்த
௫ ருக்கு இன்பமாயிருக்கும்.— நாம் உங்களண்
டைக்கு நியாயத்தீர்ப்புக்கென்று சேர்ந்துவந்து,
சூனியக்காரருக்கும் விபசாரருக்கும், பொய்யா
ணையிடுகிறவர்களுக்கும், விதவைகளும் திக்கற்ற
வர்களுமான கூலிக்காரரின் கூலியைத் திருகுப
ண்ணுகிறவர்களுக்கும், நமக்குப் பயப்படாமல்
பரதேசிக்கு அநியாயம் செய்கிறவர்களுக்கும்
விரோதமாகத் தீவிரமான சாட்சியாயிருப்போ
மென்று சேனைகளுடைய கர்த்தர் சொல்லுகி
௬ றார்.—கர்த்தராகிய நாம் மாறாதிருக்கிறபடியினா
லே யாக்கோபின் புத்திரராகிய நீங்கள் நிர்மூல
மானதில்லை.

௭ நீங்கள் உங்கள் பிதாக்களின் நாள்கள்துவக்கி
நமது கட்டளைகளைக் கைக்கொள்ளாமல், அவை
களைவிட்டு விலகிப்போனீர்கள்; [2]நம்மண்டைக்
குத் திரும்புங்கள்; அப்போது உங்களண்டைக்
குத் திரும்புவோமென்று சேனைகளுடைய கர்த்
தர் சொல்லுகிறார்; நாங்கள் எதிலே திரும்ப
வேண்டும் என்கிறீர்கள்.

௮ மனுஷன் பராபரனை வஞ்சனைபண்ணலா
மோ? நீங்களோவென்றால் நம்மை வஞ்சனைபண்
ணுகிறீர்கள்; எதிலே உம்மை வஞ்சனைபண்ணி
னோம் என்கிறீர்கள்; தசமபாகத்திலும் செலுத்து
௯ தல்களிலுந்தானே.—நீங்கள் சாபம்பிடித்தவர்க
ளாயிருக்கிறீர்கள்; ஏனெனில் நீங்கள் சாதி அ
னைத்துமாய் நம்மை வஞ்சனைபண்ணுகிறீர்கள்.

௰ நம்முடைய வீட்டில் ஆகாரம் உண்டாயிருக்
கும்படிக்குத் தசமபாகங்களையெல்லாம் பண்ட
கசாலையிலே கொண்டுவாருங்கள்; அப்போது
நாம் உங்களுக்கு வானத்தின் பலகணிகளைத்தி
றந்து, உங்கள்மேல் ஆசீர்வாதத்தை இடங்கொள்
ளாதே போகுமட்டும் ஊற்றேனோ என்று அதி
னால் நம்மைச் சோதித்துப்பாருங்கள் என்று சே
௰௧ னைகளுடைய கர்த்தர் சொல்லுகிறார்.—பூமியின்
கனியைத் தின்னுகிறவைகள் அதை உங்களுக்
குக் கெடுத்துப்போடாதபடிக்கு நாம் அவைகளை
உங்களுக்காக உதம்புவோம்; நிலத்தின் திராட்
சப்பயிர் பழுதாய்ப்போவதும் இல்லை என்று
சேனைகளுடைய கர்த்தர் சொல்லுகிறார்.—அப் ௰௨
போது எல்லாச் சாதிகளும் உங்களைப் பாக்கிய
வான்கள் என்பார்கள்; ஏனெனில் விருப்பமான
தேசமாயிருப்பீர்களென்று சேனைகளுடைய கர்
த்தர் சொல்லுகிறார்.

[3]உங்கள் பேச்சுகள் நமக்கு விரோதமாகப் ௰௩
பலத்துப்போயிற்றென்று கர்த்தர் சொல்லுகிறார்;
ஆனால் உமக்கு விரோதமாக என்னத்தைச் சொ
ன்னோம் என்கிறீர்கள.—நீங்கள் சொல்வதேதெ ௰௪
னில், கர்த்தருக்கு ஊழியஞ்செய்கிறது விருதா
வாயிருக்கிறது; நாங்கள் அவருடைய கட்டளை
களைக் கைக்கொள்ளுகிறதினாலும், சேனைகளு
டைய கர்த்தருக்குமுன்பாகத் துக்கித்து நடக்கி
றதினாலும் என்ன பிரயோசனம்?—இப்போதும் ௰௫
அகந்தைக்காரரை நாங்கள் பாக்கியவான்கள்
என்கிறோம்; ஆகாத்தியஞ்செய்கிறவர்கள் திடப்
படுகிறார்களே; அவர்கள் பராபரனைப் பரிட்சை
பார்த்தாலும் விடுவிக்கப்படுகிறார்களே என்று
சொல்லுகிறீர்கள்.

ஆனால் கர்த்தருக்குப் பயந்தவர்கள் ஒருவரோ ௰௬
டே ஒருவர் சொல்வதாவது: கர்த்தர் கவனித்தும்
கேட்டுமிருக்கிறார்; கர்த்தருக்குப் பயந்தவர்க
ளுக்காகவும் அவருடைய நாமத்தை நினைக்கிற
வர்களுக்காகவும் நினைப்பூட்டுதலுக்கான புஸ்த
கம் அவருக்குமுன்பாக எழுதப்பட்டிருக்கிறது
என்பார்கள்.—[4]சம்பத்தை நாம் பிரித்துக்கொள் ௰௭
ளும் நாளிலே இவர்கள் நம்முடையவர்களாயி
ருப்பார்கள் என்று சேனைகளுடைய கர்த்தர்
சொல்லுகிறார்; ஒரு மனுஷன் தனக்கு ஊழியஞ்
செய்கிற தன்னுடைய குமாரனைத் தப்பவிடுமாப்
போலே [5]அவர்களைத் தப்பவிடுவோம்.—அப் ௰௮
போது நீங்கள் திரும்பவும் [6]நீதிமானுக்கும், ஆ
காதவனுக்கும், பராபரனுக்கு ஊழியஞ்செய்கிற
வனுக்கும், அவருக்கு ஊழியஞ்செய்யாதவனுக்
கும் இருக்கிற வித்தியாசத்தைக் காண்பீர்கள்.

## ௪. அதிகாரம்.

௧. துன்மார்க்கர்மேல் வரும் பராபரனுடைய நியாயத்தீர்ப்பும், ௨. நல்லோர் மேல் வரும் அவருடைய ஆசீர்வாதமும் சொல்லப்பட்டது. ௪. நியாயப் பிரமாணத்தைக் கற்கத் தூண்டி, ௫. எலியாவின் வருகையையும், தொழிலையும் அறிவித்தது.

ஏனெனில் இதோ, சூளையைப்போல எரிகிற ௧
நாள் வரும்; அப்போது எல்லா அகந்தைக்கார
ரும் ஆகாத்தியஞ்செய்கிற அனைவரும் [7]துரும்
பாயிருப்பார்கள்; அவர்களை வரப்போகிற அந்த
நாள் கொளுத்திவிட்டு, அவர்களில் வேரையும்
கொப்பையும் வைக்காதேபோகுமென்று சேனை
களுடைய கர்த்தர் சொல்லுகிறார்.

ஆனால் நமது நாமத்துக்குப் பயந்திருக்கிற ௨
உங்களுக்கு நீதியினுடைய சூரியன் [8]உதிக்கும்;
அதினுடைய செட்டைகளின்கீழ் ஆரோக்கியம்

1 மத். ௨௧. ௬௬.
2 சகரி. ௧. ௩.
3 மல்கி. ௨. ௰௭.
4 ௧ பே. ௨. ௯.
5 ௧ மோ. ௭. ௨௧: ௰௯. ௰௯.
6 ஏசா. ௬௫. ௰௩, ௰௪.
7 மத். ௩. ௰௨.
8 லூக். ௧. ௭: அ. ௭௯.

கிடைக்கும்; நீங்கள் வெளிப்புறப்பட்டு [1]கொ
ழுக்கும் கன்றுக்குட்டிகளைப்போல வளருவீர்
௩ கள்.—ஆகாதவர்களை மிதிப்பீர்கள்; ஏனெனில்
நாம் இதைச் செய்யும்நாளிலே அவர்கள் உங்கள்
உள்ளங்கால்களின்கீழ்ச் சாம்பலாயிருப்பார்க
ளென்று சேனைகளுடைய கர்த்தர் சொல்லுகி
றார்.
௪ [2]நாம் ஓரேபிலே இஸ்ரவேல் அனைத்துக்கு
மாக நம்முடைய ஊழியக்காரனாகிய மோசேக்
குக் கற்பித்த அவனுடைய நியாயப்பிரமாணமா

1 ஏசா. ௬௰. ௧, ௨.—2 உ. மோ. ௨௰. ௧,௰௭.

கிய கட்டளைகளையும் நியாயங்களையும் நினை
யுங்கள்.
இதோ, கர்த்தருடைய பெரியதும் பயங்கரமு
மானநாள் வருகிறதற்குமுன்னே நாம் உங்க
ளுக்கு [3]எலியா தீர்க்கதரிசியை அனுப்புகி
றேம்.—நாம் வந்து பூமியைச் சங்காரத்தால் அ ௬
டிக்காதபடிக்கு, அவன் [4]பிதாக்களுடைய இரு
தயத்தைப் பிள்ளைகளண்டைக்கும், பிள்ளைகளு
டைய இருதயத்தை அவர்கள் பிதாக்களண்
டைக்கும் திருப்புவான்.

3 மத். ௰௧.௰௪ : ௰௭. ௰௨. மாற். ௯. ௰௧.—4 லூக். ௧. ௰௭.

முற்று.

THE

# NEW TESTAMENT

OF OUR

## LORD AND SAVIOUR JESUS CHRIST,

IN TAMIL:

WITH CONTENTS OF THE CHAPTERS AND CHRONOLOGY,
FROM THE ENGLISH.

உலக இரட்சகராகிய

இயேசுக்கிறிஸ்துநாதர் அருளிச்செய்த

# புதிய ஏற்பாடு.

இஃது

மூலவாக்கியம் இரேனியுசையரால்

கிரேக்கபாஷையிலிருந்து

தமிழிலே திருப்பப்பட்டும்,

சென்னபட்டணத்திலுள்ள

சத்தியவேத சங்கத்தாரால் பரிசோதித்து

இங்கிலிஷ் ஒத்துவாக்கிய பைபிளின்படி

ஏற்படுத்தப்பட்டுமிருக்கிறது.

கி. பி. ௲௮௱௬௰-ஆம்-லே

சென்னபட்டணத்தில் அமெரிக்கன் மிசியோன் அச்சுக்கூடத்தில் பதிப்பிக்கப்பட்டது.

**MADRAS:**

PRINTED AT THE AMERICAN MISSION PRESS,
FOR THE MADRAS AUXILIARY BIBLE SOCIETY,
And sold at their Depository, 155 Popham's Broadway.

1860.

MATTHEW.

# மத்தேயு என்பவர்

## எழுதின சுவிசேஷம்.

### க. அதிகாரம்.

*க. ஆபிரகாம் முதல் யோசேப்புவரைக்குமுள்ள கிறிஸ்துவினுடைய வம்ச வரிசையின் அட்டவணை. ௰அ. கன்னிமரியாள் யோசேப்புக்கு நேமிக்கப்பட்டபோது, கிறிஸ்து பரிசுத்த ஆவியினால் உற்பவித்து அவளிடத்தில் பிறந்தது. ௰கூ. தேவதூதன் யோசேப்பினுடைய தகாத யோசனைகளை நீக்கிக் கிறிஸ்துவின் திருநாமங்களுக்கு அர்த்தம் உரைத்தது.*

க [1]ஆபிரகாமின் சந்ததியாகிய [2]தாவீதின் சந்ததி
யாயிருக்கிற இயேசுக்கிறிஸ்துவினுடைய [3]வம்
உ சவரிசையின் அட்டவணையாவது:—[4]ஆபிரகாம்
ஈசாக்கைப் பெற்றான்; [5]ஈசாக்கு யாக்கோபைப்
பெற்றான்; [6]யாக்கோபு யூதாவையும், அவன்
௩ சகோதரரையும் பெற்றான்.—[7]யூதா தாமார் என்ப
வளைச் சேர்ந்து, பாரேசையும் சாராவையும் பெற்
ச றான்; [8]பாரேசு எசுரோமைப் பெற்றான்.—எசு
ரோம் ஆராமைப் பெற்றான்; ஆராம் அமின்தா
பைப் பெற்றான்; அமின்தாபு நவசோனைப் பெற்
ரு றான்.—நவசோன் சலுமோனைப் பெற்றான்; சலு
மோன் ராகாப்பென்பவளைச் சேர்ந்து, போவோ
சைப் பெற்றான்; போவோசு ரூத்தென்பவளைச்
சேர்ந்து, ஓபேத்தைப் பெற்றான்; ஓபேத்து
சு எசேயைப் பெற்றான்.—[9]எசே இராசனாகிய தா
வீதைப் பெற்றான்; [10]இராசனாகிய தாவீது ஊரீ
யாவுக்கு மனைவியாயிருந்தவளைச் சேர்ந்து, சொ
எ லொமோனைப் பெற்றான்.—[11]சொலொமோன்
உரோபோவாமைப் பெற்றான்; உரோபோவாம்
அபியாவைப் பெற்றான்; அபியா அசாவைப்
அ பெற்றான்.—அசா யோசபாத்தைப் பெற்றான்;
யோசபாத்து யோராமைப் பெற்றான்; யோராம்
கூ ஒசியாவைப் பெற்றான்.—ஒசியா யோத்தாமைப்
பெற்றான்; யோத்தாம் ஆகாசைப் பெற்றான்;
௰ ஆகாசு எசேக்கியாவைப் பெற்றான்.—[12]எசேக்
கியா மனாசேயைப் பெற்றான்; மனாசே அமோ
னைப் பெற்றான்; அமோன் யோசியாவைப் பெற்
௰க றான்.—(யூதர்கள்) [13]பாபிலோன் தேசத்துக்குச்
சிறைப்பட்டுப்போகும் காலத்திலே, [14]*யோ
சியா எகோனியா முதலான குமாரர்களைப்
பெற்றான்.—அவர்கள் பாபிலோன் தேசத்துக் ௰உ
குச் சிறையாகக் கொண்டுபோகப்பட்ட பின்பு,
[15]எகோனியா சாலாத்தியேலைப் பெற்றான்; [16]சா
லாத்தியேல் சொரோபாபேலைப் பெற்றான்.—
சொரோபாபேல் அபியூதைப் பெற்றான்; அபி ௰௩
யூது எலியாக்கீமைப் பெற்றான்; எலியாக்கீம்
அசோரைப் பெற்றான்.—அசோர் சாதோக்கைப் ௰ச
பெற்றான்; சாதோக்கு ஆகீமைப் பெற்றான்;
ஆகீம் எலியூதைப் பெற்றான்.—எலியூது எலே ௰ரு
யாசாரைப் பெற்றான்; எலேயாசார் மத்தானைப்
பெற்றான்; மத்தான் யாக்கோபைப் பெற்றான்.—
யாக்கோபு மரியாளுடைய புருஷனாகிய யோ ௰சு
சேப்பைப் பெற்றான்; அந்த மரியாளிடத்திலே
கிறிஸ்து என்னப்பட்டிருக்கிற இயேசு பிறந்
தார்.—இவ்வண்ணமாய் உண்டான தலைமுறை ௰எ
கள் எல்லாம் ஆபிரகாம்முதல் தாவீதுவரைக்
கும் பதினாலு தலைமுறைகளும், தாவீது முதல்
பாபிலோன் தேசத்துக்கு (யூதர்கள்) சிறைபட்
டுப்போன காலம்வரைக்கும் பதினாலு தலைமு
றைகளும், பாபிலோன் தேசத்துக்குக் கொண்டு
போன காலமுதல் கிறிஸ்துவரைக்கும் பதினாலு
தலைமுறைகளுமேயாம்.
[17]இந்த இயேசுக்கிறிஸ்துவினுடைய உற்பத்தி ௰அ
யின் விவரமாவது: அவருடைய தாயாகிய மரி
யாள் யோசேப்புக்கு (மனைவியாக) நியமிக்கப்
பட்டபின்பு அவர்கள் கூடி வாழ்கிறதற்கு
முன்னமே அவள் [18]பரிசுத்த ஆவியினாலே கருப்
பவதியானாள். — அவளுடைய புருஷனாகிய ௰கூ
யோசேப்பு நீதிமானாகையால், [19]அவளை அவ
தூறுபண்ண மனதில்லாமல் இரகசியமாய் அ
வளை ஒழித்துவிடும்படியாய்ச் சிந்தித்தான்.—
அவன் அப்படி நினைத்திருக்கையில், பராபர உ௰
னுடைய தூதன் சொப்பனத்திலே அவனுக்குக்
காணப்பட்டு, தாவீதின் சந்ததியாகிய யோசேப்
பே, நீ உன் மனைவியாகிய மரியாளைச் சேர்த்துக்

1 லூக். க. உச.—2 சங். ௱௩உ. ௰உ. எசா. ௰க. க. எரே. உ௩. ரு. மத். உஉ. சஉ. யோவா. எ. சஉ. அப். உ. ௩௰: ௰௩. உ௩. உரோ. க. ௩.
3 க மோ. ௰உ. ௩; உஉ. ௰அ. ௩லா. க. ௬௪. —4 க மோ. உக. உ, ௩.
5 க மோ. உரு. உ௬.—6 க மோ. உ௯. ௩ரு.—7 க மோ. ௩அ. உஎ—௩௰.—8 ரூத். ச. ௰அ. ௲ க நாளா. உ. ரு, ௯. ௲.—9 க சாமு. ௰சு. க: ௰எ ௰உ.—10 உ சாமு. ௰உ. உச.
11 க நாளா. ௩. ௰. ௲.
12 உ இரா. உ௰. உக. க நாளா. ௩. ௰௩.
13 உ இரா. உச. ௰ச-௰ரு: உ௬. ௰க. உ நாளா. ௩௬. ௰, உ௰. எரே. உஎ. உக: ௩௬. ௬: ௩உ. ௰க, ௰௬, உ௯, உ௬, ௩௰. தானி. க. க, உ.
14 க நாளா. ௩. ௰௬, ௰௯.
15 க நாளா. ௩. ௰எ.
16 எஸ்ரா. ௩. உ: ௫. உ. நெகே. ௰உ. க. ஆகா. க. க.
17 லூக். க. உஎ.—18 லூக். க. ௩ரு.
19 ரு மோ. உச. க.

* யோசியா யோகீமைப் பெற்றான். யோகீம் எகோனியாவைப் பெற்றானென்று சில பிரதிகளிலுண்டு.

கொள்ள ஐயப்படவேண்டாம்; என்னத்தினு
லென்றால், அவளிடத்தில் *உண்டாயிருக்கிறது
௨௧ [1]பரிசுத்த ஆவியினால் உண்டானது. — அவள்
[2]ஒரு குமாரனைப் பெறுவாள்; அவர் தம்முடைய
சனங்களின் [3]பாவங்களை நீக்கி அவர்களை இரட்
சிப்பார்; ஆகையால் அவருக்கு † இயேசு என்று
௨௨ பேரிடுவாயாக என்றான். — தீர்க்கதரிசியைக்
கொண்டு கர்த்தர் சொன்னது நிறைவேறும்
௨௩ படிக்கு அவையெல்லாம் நடந்தன. — அவர்
சொல்லுவித்ததென்னவென்றால், [4]இதோ ஒரு
கன்னி கருப்பவதியாகி ஒரு குமாரனைப் பெறு
வாள்; ‡ அவருக்கு இம்மானுவேல் என்று பேரிடு
வார்கள் என்பதே; இம்மானுவேல் என்பதற்குப்
பராபரன் நம்முடனே இருக்கிறார் என்று அர்த்
௨௪ தமாம். —யோசேப்பு நித்திரைதெளிந்து எழுந்த
பொழுது, தனக்குக் கர்த்தருடைய தூதன் கட்
டளையிட்டபடி தன் மனைவியைச் சேர்த்துக்
௨௫ கொண்டு,—[5]அவள் முதற்பேறான குமாரனைப்
பெறும்வரைக்கும் அவளை அறியாதிருந்து, (அந்
தக் குமாரன் பிறந்தபின்பு) அவருக்கு [6]இயேசு
என்று பேரிட்டான்.

## ௨. அதிகாரம்.

௧. கிழக்கிலிருந்து சாஸ்திரிகள் நட்சத்திரத்தினால் கிறிஸ்துவினிடத்திற்கு வழி நடத்தப்பட்டது. ௰௧. அவரைப் பணிந்து காணிக்கைகளைச் செலுத்தினது. ௰௪. இயேசுவையும் அவருடைய தாயையும் கூட்டிக்கொண்டு யோசேப்பு எகிப்துக்கு ஓடிப்போனது. ௰௬. ஏரோதே குழந்தைகளைக் கொலைசெய்தது, ௰௯. பின்பு தான் மரணம் அடைந்தது. ௨௰௩. கலிலேயாவிலுள்ள நாசரேத்துக்குக் கிறிஸ்து மறுபடியும் கொண்டுவரப்பட்டது.

௧ ஏரோது என்னும் இராசனுடைய காலத்திலே
யூதேயா தேசத்திலுள்ள பெத்லேகேம் ஊரில்
[7]இயேசுவானவர் பிறந்தபின்பு, [8]கிழக்குத்திசை
யிலிருந்து சாஸ்திரிகள் எருசலேம் நகரத்துக்கு
௨ வந்து,—(இக்காலத்திலே) [9]பிறந்திருக்கிற யூத
ருடைய இராசாவைக்குறித்துத் தோன்றிய [10]நட்
சத்திரத்தைக் கிழக்கிலே நாங்கள் கண்டு, அவ
ரைப் பணிந்துகொள்ள வந்தோம்; அவர் எங்கே
௩ என்றார்கள்.—ஏரோது இராசா அதைக் கேட்
டபொழுது, அவனும் அவனுடனேகூட எருச
லேம் நகரத்தார் அனைவரும் கலங்கினார்கள்.—
௪ அல்லாமலும், அவன் சனங்களில் [11]பிரதான
மான ஆசாரியர் [12]வேதபாரகர் எல்லாரும் கூடி
வரச்செய்து, கிறிஸ்து [13]எங்கே பிறப்பாரென்று
௫ அவர்களிடத்தில் விசாரித்தான்.—அவர்கள் அ
வனை நோக்கி, [14]யூதாவின் ஊராகிய பெத்லே
கேமிலே அவர் பிறப்பார்; என்னத்தினாலென்
றால், யூதேயா தேசத்திலுள்ள பெத்லேகேம்
ஊரே, என்னுடைய சனங்களாகிய [15]இஸ்ரவே
லரை §ஆளும் பிரபு உன்னிடத்திலே தோன்று
வாராகையால் யூதாவிலுள்ள பிரபுக்களில் நீ சிறி
யதல்ல என்று,—தீர்க்கதரிசியினாலே எழுதப்பட் ௬
டிருக்கிறது என்றார்கள்.—அப்பொழுது ஏரோது ௭
அந்தச் சாஸ்திரிகளை இரகசியமாய் அழைத்து,
அந்த நட்சத்திரம் காணப்பட்ட காலத்தைக்
குறித்து அவர்களிடத்திலே திட்டமாய் விசாரித்
துக்கொண்டு,—நீங்கள் போய் அந்தப் பிள்ளை ௮
யைக்குறித்து நன்றாய் ஆராய்ந்து பாருங்கள்;
மேலும் நீங்கள் அதைக் கண்டபின்பு, நானும்
போய் அதைப் பணிந்துகொள்ளும்படிக்கு
எனக்கு அறிவியுங்கள் என்று சொல்லி, அவர்
களைப் பெத்லேகேம் ஊருக்கு அனுப்பிவிட்
டான்.—இராசா சொன்னதை அவர்கள் கேட்டுப் ௯
போனார்கள்; போகையில், கிழக்கிலே அவர்கள்
கண்ட நட்சத்திரம் அந்தப் பிள்ளை இருக்கிற
ஸ்தலத்துக்கு மேலே வந்து நிற்கும்வரைக்கும்
அவர்களுக்கு முன்பாக நடந்தது;—அவர்கள ௰
அந்த நட்சத்திரத்தைக் கண்டு மிகுந்த ஆனந்த
சந்தோஷத்தை அடைந்து,-பின்பு அந்த வீட்டில் ௰௧
பிரவேசித்து, பிள்ளையையும் அதினுடைய தாயா
கிய மரியாளையும் கண்டு, வணக்கமாய் விழுந்து
அதைப் பணிந்துகொண்டு, தங்கள் பொக்கிஷப்
பெட்டிகளைத் திறந்து, [16]பொன்னையும் தூப
வருக்கத்தையும் வெள்ளைப்போளத்தையும் அதற்
குக் காணிக்கையாக ||வைத்தார்கள். — பின்பு ௰௨
ஏரோதினிடத்துக்குத் திரும்பிப்போகாதிருங்க
ளென்று அவர்கள் [17]சொப்பனத்திலே தேவ
உத்தரவு பெற்று, வேறுவழியாய்த் தங்கள் தேசத்
திற்குப் புறப்பட்டுப்போனார்கள். — அவர்கள் ௰௩
புறப்பட்டுப்போனபின்பு கர்த்தருடைய தூதன்
சொப்பனத்திலே யோசேப்புக்குக் காணப்பட்
டு, ஏரோது இந்தப் பிள்ளையைக் கொலைசெய்யத்
தேடுவான்; ஆகையால் நீ எழுந்து பிள்ளையையும்
அதினுடைய தாயையும் கூட்டிக்கொண்டு எ
கிப்து தேசத்திற்கு ஓடிப்போய், நான் உனக்குச்
சொல்லும்வரைக்கும் அவ்விடத்தில் இரு என்
றான்.—உடனே அவன் எழுந்து இராத்திரியிலே ௰௪
பிள்ளையையும் அதினுடைய தாயையும் கூட்டிக்
கொண்டு, எகிப்துக்குப் புறப்பட்டுப்போய் —
ஏரோது மரணம் அடைந்த காலம்வரைக்கும் ௰௫
அவ்விடத்தில் இருந்தான்; [18]எகிப்திலிருந்து என்
னுடைய குமாரனை வரவழைத்தேன் என்று
தீர்க்கதரிசியைக்கொண்டு கர்த்தர் திருவுளம்பற்
றினது நிறைவேறும்படிக்கு அது நடந்தது.
அப்பொழுது ஏரோது தான் சாஸ்திரிகளால் ௰௬
வஞ்சிக்கப்பட்டதைக் கண்டு, மிகுந்த கோபம்
அடைந்து, அந்தச் சாஸ்திரிகளிடத்திலே தான்
கேட்டாராய்ந்த காலத்தின்படி பெத்லேகேம்
ஊரிலும் அதினுடைய எல்லைகள் யாவிலும்
இரண்டுவயதுமுதற்கொண்டு அதற்குத் தாழ்க்

1 லூக். ௧. ௩௫.—2 லூக். ௧. ௩௧
3 அப். ௪. ௰௨: ௫. ௩௧: ௰௩. ௨௩, ௩௮.
4 ஏசா. ௭. ௰௪.—5 ௨ மோ. ௰௩. ௨. லூக். ௨. ௭, ௨௧.
6 லூக். ௨. ௰௧.—7 லூக். ௨. ௪. ௭.
8 ௧ மோ. ௰. ௩௰: ௨௫. ௬. ௧ இரா. ௪. ௩௰.—9 லூக். ௨. ௰௧
10 ௪ மோ. ௨௪. ௰௭. ஏசா. ௬௰. ௩.
11 ௨ நாளா. ௩௬. ௰௪.—12 ௨ நாளா. ௩௪. ௰௩.—13 மல்கி. ௨. ௭.
14 மீகா. ௫. ௨. யோவா. ௭. ௪௨.
15 வெளி. ௨. ௨௭.
16 சங். ௭௨. ௰. ஏசா. ௬௰. ௬.
17 மத். ௧. ௨௰.
18 ஓசே. ௰௧. ௧

* ஜெனிப்பிக்கப்பட்டது, கிரேக்கு.—† இரட்சகர் என்ற எபிரேயமொழி—‡ அல்லது அவருடைய நாமம் இம்மானுவேலென்று சொல்லப்படும்.
§ அல்லது மேய்க்கப்போகிற.—|| அல்லது செலுத்தினார்கள்.

திருந்த வயதுள்ள ஆண்பிள்ளைகள் எல்லாரையும்
௰௭ கொலைசெய்ய ஆள்களை அனுப்பினான். — அப்
பொழுது எரேமியா [1]தீர்க்கதரிசியினால் சொல்
லப்பட்டது நிறைவேறிற்று; அவன் சொன்ன
௰௮ தென்னவென்றால்,–ராமா ஊரிலே புலம்பலும்
அழுகையும் மிகுந்த துக்கிப்புமுள்ள கூக்குரல்
கேட்கப்பட்டது; ராகேல் தன் பிள்ளைகளைக்
குறித்து அழுதுகொண்டு, அந்தப் பிள்ளைகள்
இல்லாதபடியால் ஆறுதல் அடையாதிருக்கிறாள்
என்பதே.
௰௯ எரோது இறந்தபின்பு, சொப்பனத்திலே கர்த்
தருடைய தூதன் எகிப்திலே யோசேப்புக்குக்
௨௰ காணப்பட்டு, — பிள்ளையினுடைய பிராணனை
வாங்கத்தேடினவர்கள் இறந்துபோனார்கள்; ஆ
கையால் நீ எழுந்து பிள்ளையையும் அதினுடைய
தாயையும் கூட்டிக்கொண்டு, இஸ்ரவேல் தேசத்
௨௧ துக்குப் போ என்றான்.—அந்தப்படியே அவன்
எழுந்திருந்து, பிள்ளையையும் அதினுடைய தா
யையும் கூட்டிக்கொண்டு,இஸ்ரவேல் தேசத்திற்
௨௨ குப் புறப்பட்டபொழுது.—அருகேலாவு என்ப
வன் தன் தகப்பனாகிய எரோதினுடைய பட்டத்
துக்கு வந்து, யூதேயாவை ஆளுகிறானென்று
கேள்விப்பட்டு, அங்கே போகப்பயந்தான்; அப்
பொழுது சொப்பனத்திலே அவன் தேவ உத்
தரவுபெற்று, [2]கலிலேயா நாட்டினுடைய திசை
௨௩ களை நோக்கிப் புறப்பட்டுப் போய்.—[3]நாசரே
யன் என்று அழைக்கப்படுவார் என்கிறதாய்த்
தீர்க்கதரிசியால் சொல்லப்பட்டது நிறைவேறும்
படிக்கு [4]நாசரேத்தூரில் வந்து வாசம்பண்ணி
னான்.

## ௩. அதிகாரம்.

௧. யோவான் பிரசங்கித்தது, அவனுடைய ஊழியம், நடக்கை, ஞானஸ்நானம், ௭. அவர் பரிசேயர்களைக் கடிந்துகொண்டது. ௰௩. இயேசு யோர்தானில் ஞானஸ்நானம் கொடுத்தது.

௧ அக்காலத்திலே [5]யோவான்ஸ்நானன் வந்து,—
௨ [6]பரலோக இராசரீகம் சமீபமாயிருக்கின்றது;
ஆகையால் மனந்திருப்புங்கள் என்று யூதேயா
வின் [7]வனாந்தரத்திலே பிரசங்கம்பண்ணினான்.—
௩ அவன் யாவனெனில், [8]கர்த்தருக்காக மார்க்
கத்தை நன்றாகச் செய்யுங்களென்றும், அவரு
டைய பாதைகளைச் செவ்வைபண்ணுங்களென்
றும், வனாந்தரத்திலே ஒருவன் [9]சத்தமிடுவா
னென்று எசாயா என்னும் தீர்க்கதரிசியினால்
௪ சொல்லப்பட்டவனே.—அல்லாமலும் [10]அந்த
யோவான் [11]ஒட்டக மயிர் உடையைத் தரித்து,
தன்னுடைய அரையில் வார்க்கச்சையைக் கட்
டிக்கொண்டிருந்தான்; [12]வெட்டுக்கிளிகளும்
[13]காட்டுத்தேனும் அவனுக்கு ஆகாரமாயிருந்
தன.—[14]அக்காலத்திலே எருசலேம் நகரத்தாரும் ௫
யூதேயா தேசத்தார் அனைவரும் யோர்தான் நதிக்
கடுத்த சுற்றுப்புறத்தார் யாவரும் அவனிடத்திற்
குப் புறப்பட்டுப்போய்,—[15]தங்கள் பாவங்களை ௬
அறிக்கையிட்டு, யோர்தான் நதியில் அவனாலே
ஞானஸ்நானம் பெற்றார்கள்.
அப்படியிருக்கையில், பரிசேயர் சதுசேயர் ௭
என்பவர்களிலும் அநேகர் தன்னாலே ஞானஸ்
நானம் பெறும்படிக்கு வருகிறதை அவன்
கண்டு, அவர்களை நோக்கி, [16]விரியன் பாம்பு
களின் குட்டிகளே, [17]இனிவரும் கோபத்துக்கு
நீங்கள் தப்பித்துக்கொள்ளும்படியாய் உங்க
ளுக்கு வகைகாட்டினவன் *எவன்?—மனந்தி ௮
ருப்புதலுக்குத்தக்க கனிகளைக் கொடுங்கள். —
[18]ஆபிரகாம் எங்களுடைய பிதா என்று சொல்ல, ௯
உங்களுடைய உள்ளத்திலே நினைத்துக்கொள்
ளாதிருங்கள்; ஆபிரகாமுக்குப் பராபரன் இந்தக்
கல்லுகளில் பிள்ளைகளை உண்டுபண்ண வல்ல
வராயிருக்கிறார் என்று உங்களுக்குச் சொல்லுகி
றேன்.–இப்பொழுதே கோடரி மரங்களுடைய ௰
வேரருகே வைத்திருக்கின்றது; ஆகையால்
[19]நல்ல கனிகளைக் கொடாத மரங்கள் எல்லாம்
வெட்டப்பட்டு அக்கினியிலே போடப்படும்.—
நீங்கள் மனந்திருப்பும்படிக்கு, [20]நான் சலத்தி ௰௧
னாலே உங்களுக்கு ஞானஸ்நானம் கொடுக்கி
றேன்; எனக்குப் பின்வருகிறவர் என்னிலும்
அதிக வல்லமையுடையவர்; அவருடைய பாத
ரட்சைகளைச் சுமக்கிறதற்கு நான் பாத்திரவான்
அல்ல; [21]அவரே பரிசுத்த ஆவியினாலும் அக்கி
னியினாலும் உங்களுக்கு ஞானஸ்நானம் கொ
டுப்பார். — [22]அவருடைய கையில் தூற்றுக்கூ ௰௨
டை இருக்கின்றது; அவர் தமது களம் முழுவ
தையும் விளக்கி, தம்முடைய கோதுமையைக்
களஞ்சியத்தில் சேர்ப்பார்: [23]பதரை அவியாத
அக்கினியினால் சுட்டுப்போடுவார் என்றான்.
அப்பொழுது [24]இயேசுவானவர் யோவா ௰௩
னாலே ஞானஸ்நானம் பெறுவதற்கு, கலிலேயா
நாட்டைவிட்டு யோர்தான் அருகே அவனிடத்
திற்குப்போனார்.–யோவான் அவருக்குத் தடை ௰௪
பண்ணி, உம்மாலே நான் ஞானஸ்நானம் பெற
வேண்டுவதாயிருக்க, நீர் என்னிடத்திற்கு வர
லாமா என்றான்? — அதற்கு இயேசுவானவர் ௰௫
அவனைநோக்கி, இவ்விதமாய்ச் சகல நீதியையும்
நிறைவேற்றுகிறது நமக்கு ஏற்றதாயிருக்கின்றது;
ஆகையால் இப்பொழுது சம்மதிப்பாயாக என்
றார்; அப்பொழுது அவன் சம்மதித்தான். —
[25]இயேசுவானவர் ஞானஸ்நானம் பெற்று, சலத் ௰௬
தைவிட்டு ஏறிவந்தவுடனே, இதோ வானம்

1 எரே. ௩௧ ௰௫.—2 மத். ௩ ௰௩ லூக். ௨. ௩௯. 3 யோவா. ௧.௪௫.
4 நியா. ௰௩ ௫. ௧ சாமு. ௧. ௰௧.
5 மாற். ௧. ௪, ௰௪. லூக். ௩. ௨, ௩. யோவா. ௧ ௨௮. —6 தானி. ௨. ௪௪. மத். ௪. ௰௭: ௰.௭.
7 யோசு. ௰௪. ௰.
8 ஏசா. ௪௰. ௩. மாற். ௧.௩. லூக். ௩.௪. யோவா. ௧.௨௩. —9 லூக். ௧. ௭௬.
10 மாற் ௧. ௬.—11 ௨ இரா. ௧ ௮. சகரி ௰௩ ௪.-12 ௩ மோ. ௰௧.௨௨.
13 ௧ சாமு. ௰௪. ௨௫ ௨௬.
14 மாற். ௧. ௫. லூக். ௩. ௭.
15 அப் ௰௯. ௪, ௰௮.
16 மத். ௰௨. ௩௪: ௨௩ ௩௩. லூக் ௩.௭, ௨௧, ௩௩. அப். ௧. ௫: ௰௧ ௰௬: அ, ௯. —17 ௨ரோ. ௫. ௯. ௧ தெச. ௧. ௰. —18 யோவா. அ.௩௩, ௩௯. அப் ௰௩. ௨௬. ௨ரோ. ௪. ௧: ௰௬. ௰௬.
௰௯. ௪.—21 ஏசா. ௪. ௧: ௪௪.௩. மல்கி. ௩. ௨. அப். ௨. ௩, ௪. ௧ கொரி. ௰௨. ௰௩.-22 மல்கி. ௩. ௩.
19 மத். ௭ ௰௯ லூக். ௰௩. ௭, ௯. யோவா. ௰௫. ௬ —20 யோவா. ௧. ௨௬, ௩௩. 23 மல்கி. ௪. ௧. மத். ௰௩. ௩௦. 24 மாற். ௧. ௯. லூக். ௩. ௨௧. மத். ௨. ௨௨.—25 மாற். ௧. ௰.

*அல்லது நடக்கையைச் சீர்ப்படுத்துவதற்குத் தகுந்த.

அவருக்குத் திறக்கப்பட்டது; அல்லாமலும் பரா
பரனுடைய [1]ஆவி புறாவைப்போல் இறங்கி,
௰௭ அவர்மேல் வருகிறதைக் கண்டான்.—[2]மேலும்,
இவர் எனக்கு அன்பாயிருக்கிற என்னுடைய
குமாரன்; இவரில் பிரியமாயிருக்கிறேன் என்று
[3]வானத்திலிருந்து சத்தம் உண்டாயிற்று.

## ௪. அதிகாரம்.

௧. கிறிஸ்து உபவாசித்துச் சோதிக்கப்பட்டது. ௰௧. தேவதூதர்கள் அவருக்குப் பணிவிடை செய்தது. ௰௩. அவர் கப்பர்நாகூமிலே வாசம்பண்ணி, ௰௭. பிரசங்கிக்கத் துவக்கி, ௰௮. பேதுருவையும், அந்திரேயாவையும், ௨௧. யாக்கோபையும், யோவானையும் அழைத்தது, ௨௩. எல்லா வியாதிஸ்தர்களையும் குணமாக்கினது.

௧ அப்பொழுது [4]இயேசுவானவர் பசாசானவனா
லே சோதிக்கப்படுவதற்கு, [5]ஆவியினாலே வனாந்
௨ தரத்தில் கொண்டுபோகப்பட்டார்.—(அங்கே)
அவர் நாற்பதுநாள் இரவும் பகலும் உபவா
சம்பண்ணினபின்பு, அவருக்குப் பசி உண்டா
௩ யிற்று.—அப்பொழுது அந்தச் சோதிக்கிறவன்
அவரிடத்திற்கு வந்து, நீ பராபரனுடைய குமார
னானால் இந்தக் கல்லுகள் அப்பங்களாகும்படி
௪ கட்டளையிடு என்றான்.—அதற்கு அவர் மாறுத்
தரம் சொன்னது: [6]மனிதனானவன் அப்பத்தி
னாலேமாத்திரமல்ல, பராபரனுடைய வாய்மலர்ந்
தருளிச்செய்கிற எந்த வாக்கினாலும் பிழைப்
பான் என்று எழுதியிருக்கின்றதென்றார்.—
௫ அப்பொழுது பசாசானவன் அவரைப் [7]பரிசுத்த
நகரத்துக்குக் கொண்டுபோய், அவரைத் தேவா
௬ லயத்து மேல் உப்பரிகையில் நிறுத்தி,—உன்
னைக்குறித்துத் தம்முடைய [8]தூதர்களுக்குக் கட்
டளையிடுவார் என்றும், உன்னுடைய பாதம் கல்
லில் இடறாதபடிக்கு அவர்கள் உன்னைக் கைக
ளில் ஏந்திக்கொண்டு போவார்கள் என்றும், எழு
தியிருக்கின்றது; ஆகையால் நீ பராபரனுடைய
௭ குமாரனானால் தாழக்குதி என்றான்.—அதற்கு
இயேசுவானவர் சொன்னது: அதுவுமல்லாமல்,
உன்னுடைய தேவனாகிய பராபரனைப் [9]பரிட்
சைபாராதிருப்பாயாக என்றும் எழுதியிருக்கின்
௮ றதென்றார்.—மறுபடியும் பசாசானவன் அவரை
மிகவும் உயர்ந்த மலையின்மேல் கொண்டுபோய்,
உலகத்திலுள்ள இராச்சியங்கள் எல்லாவற்றை
யும் அவைகளின் மகிமையையும் அவருக்குக்
௯ காண்பித்து,—நீ விழுந்து என்னைத் தொழுது
கொண்டால், இவைகள் எல்லாவற்றையும் உனக்
௰ குத்தருவேன் என்று சொன்னான்.—அப்பொழுது
இயேசுவானவர் அவனை நோக்கி, உன்னுடைய
தேவனாகிய [10]பராபரனைத் தொழுதுகொண்டு,
அவர் ஒருவருக்கே ஆராதனைசெய்வாயாக என்று
எழுதியிருக்கின்றது; ஆகையால் சாத்தானே,
அப்புறம் போ என்றார்.—அப்பொழுது பசா ௰௧
சானவன் அவரைவிட்டுப்போனான்; [11]உடனே
தேவதூதர்கள் சேர்ந்துவந்து, அவருக்கு ஊழியம்
செய்தார்கள்.

பின்பு யோவான் காவலில் வைக்கப்பட் ௰௨
டான் *என்று இயேசுவானவர் கேள்விப்பட்டு,
[12]கலிலேயா நாட்டுக்குப் புறப்பட்டுப்போய்,—
நாசரேத்தூரை விட்டு, சேபுலோன் நவுதலி என் ௰௩
னும் நாடுகளின் எல்லைகளில், கடற்கரையருகே
இருக்கின்ற கப்பர்நாகூம் பட்டணத்தில் வந்து
வாசம்பண்ணினார்.—அதினாலே [13]கடற்கரைய ௰௪
ருகிலும், யோர்தான் நதி ஓரத்திலுமுள்ள அஞ்
ஞானிகள் அடங்கியிருக்கிற கலிலேயா தேச
மாகிய சேபுலோன் தேசத்தாரும், நவுதலி தேசத்
தாருமாகிய இருளில் இருக்கின்ற சனங்கள்
மிகுந்த ஒளியைக் கண்டார்கள்.—[14]மரணநிழ ௰௫
லுள்ள திசையில் இருக்கிறவர்களுக்கு ஒளி
தோன்றிற்று என்று,—ஏசாயா தீர்க்கதரிசியினால் ௰௬
சொல்லப்பட்டது நிறைவேறிற்று.

[15]அக்காலத்திலே இயேசுவானவர், பரலோக ௰௭
இராச்சியம் சமீபித்ததாகையால் [16]மனந்திரும்புங்
கள் என்று பிரசங்கிக்கத் தொடங்கினார்.

ஒருகாலத்திலே [17]இயேசுவானவர் கலிலேயா ௰௮
நாட்டின் கடலருகே நடந்துபோகையில், மீன்
பிடிக்கிறவர்களாகிய [18]பேதுரு என்னப்பட்ட
சீமோனும் அவனுடைய சகோதரன் அந்திரே
யாவுமாகிய இருவரும் கடலிலே வலைபோட்டுக்
கொண்டிருக்கிறபொழுது அவர்களைக் கண்டு,—
என் பின்னே வாருங்கள், [19]உங்களை மனிதரைப் ௰௯
பிடிக்கிறவர்கள் ஆக்குவேன் என்று அவர்க
ளுடனே சொன்னார்.—[20]உடனே அவர்கள் ௨௰
வலைகளை விட்டு, அவரைப் பின்பற்றினார்கள்.—
[21]அவர் அவ்விடம்விட்டு அப்புறம்போகை ௨௧
யில், செபேதேயுவினுடைய மகன் யாக்கோ
பும் அவனுடைய சகோதரன் யோவானுமாகிய
இருவரும், தங்கள் தகப்பன் செபேதேயுவுட
னே படவிலிருந்து தங்கள் வலைகளைத் தைத்துக்
கொண்டிருக்கிறபொழுது, அவர்களைக் கண்டு
அவர்களையும் அழைத்தார்.—உடனே அவர்கள் ௨௨
படவையும் தங்கள் தகப்பனையும்விட்டு, அவ
ரைப் பின்பற்றினார்கள்.

பின்பு இயேசுவானவர் [22]கலிலேயா நாடெங் ௨௩
கும் சுற்றி நடந்து, அவர்களுடைய செபஆல
யங்களில் சனங்களுக்கு உபதேசம்செய்து, பர
லோக [23]இராச்சியத்தைக்குறித்துச் சுவிசேஷத்
தைப் பிரசங்கித்து, சனங்களுக்குண்டாயிருந்த

1 ஏசா. ௰௧.௨: ௪௨. ௧. லூக. ௩.௨௨. யோவா. ௧.௩௨,௩௩.—2 சங். ௨.௭. ஏசா ௪௨.௧. மத். ௰௨.௰௮: ௰௭.௫. மாற். ௧.௰௧. லூக். ௯.௩௫. எபே. ௧.௬. கொலோ. ௧.௰௩. ௨ பேது. ௧.௰௭.—3 யோவா. ௰௨.௨௮.
4 மாற். ௧.௰௨. லூக். ௪.௧.
5 ௧ இரா ௰௮.௰௨. எசே. ௩.௰௪: ௮.௩: ௰௧.௧,௨௪: ௪௰.௨: ௪௩.௫. அப். ௮.௩௯.—6 ௫ மோ. ௮.௩.
7 நெகே. ௰௧.௧,௰௮. ஏசா. ௪௮.௨: ௫௨.௧. மத். ௨௭.௫௩. வெளி. ௰௧.௨.—8 சங். ௯௧.௰௧.—9 ௫ மோ. ௬.௰௬.—10 ௫ மோ. ௬.௰௩. ௰.௨௰. யோசு. ௨௪.௰௪. ௧ சாமு. ௭.௩.—11 எபி. ௧.௰௪.—12 மாற். ௧.௰௪. லூக். ௩.௨௰: ௪.௰௪,௩௧. யோவா. ௪.௪௩.—13 ஏசா. ௯.௧.
14 ஏசா. ௪௨.௭. லூக். ௨.௩௨.
15 மாற். ௧.௰௫.—16 மத். ௩.௨: ௰.௭. மாற். ௧.௰௬.—17 மாற். ௧.௰௬. லூக். ௫.௨.—18 மாற். ௧.௰௬. யோவா. ௧.௪௨.—19 மாற். ௧.௰௭. லூக். ௫.௰.—20 மாற். ௰.௨௮. லூக். ௫.௰௧: ௰௮.௨௮.—21 மாற். ௧.௰௯,௨௰: லூக். ௫.௰.—22 மத். ௯.௩௫. மாற். ௧.௨௧, ௩௯. லூக். ௪.௰௫,௪௪.
23 மத். ௨௪.௰௪. மாற். ௧.௰௪.

* அல்லது ஒப்புக்கொடுக்கப்பட்டான்.

சகலவிதமான [1]வியாதிகளையும் சகலவிதமான
நோய்களையும் (நீக்கி, அவர்களைக்) குணமாக்
௨௪ கினார்.—அவருடைய கீர்த்தி சீரியா தேசத்தில்
எங்கும் பிரபலமாயிற்று; பின்பு பலபல வியாதி
களையும் வேதனைகளையும் அடைந்த பிணியாளி
கள் யாவரையும் பசாசுபிடித்தவர்களையும் சந்திர
ரோகிகளையும் திமிர்வாதக்காரரையும் அவரிடத்
திற்குக் கொண்டுவந்தார்கள்; அவர்களைக் குண
௨௫ மாக்கினார்.—[2]கலிலேயாவிலும் தெக்கப்போலி
யிலும் எருசலேமிலும் யூதேயாவிலும் யோர்தான்
நதிக்கு அப்புறத்திலுமிருந்து மிகுந்த சனங்கள்
வந்து அவரைப் பின்சென்றார்கள்.

## ௫. அதிகாரம்.

௧. கிறிஸ்து பர்வதத்தின்மேல் தம்முடைய பிரசங்கத்தைத் தொடங்கினது. ௩. பாக்கியவான்கள் இன்னாரென்பது. ௰௩. பூமியின் உப்பு. ௰௪. லோகத்தின் வெளிச்சம், மலையின்மேல் பட்டணம். ௰௫. விளக்கு என்பவைகளைக்குறித்தது. ௰௭. தாம் நியாயப்பிரமாணத்தை நிறைவேற்ற வந்தாரென்றும், ௨௧. கொலை, ௨௭. விபசாரம், ௩௩. பொய்யாணை இன்னவையென்றும் அறிவித்து, ௩௮. அநியாயத்தைச் சகிக்கவும், ௪௪. சத்துருக்களையும் சிநேகிக்கவும், ௪௮. பூரண சற்குணராயிருக்கப் பிரயாசப்படவும் உபதேசித்தது.

௧ அவர் அந்தச் சனங்களைக் கண்டு, [3]மலையின்
மேல் ஏறி உளுக்காந்தபொழுது, அவருடைய
௨ சிஷர்கள் அவரிடத்தில் வந்தார்கள்.—அப்பொ
ழுது அவர் தமது திருவாயைத் திறந்து, அவர்க
௩ ளுக்கு உபதேசித்துச் சொன்னதாவது:—[4]ஆவி
யில் எளிமையுள்ளவர்கள் பரலோக இராச்சியத்
தை அடைவார்கள், ஆகையால் அவர்கள் பாக்
௪ கியவான்கள்.—[5]துயரப்படுகிறவர்கள் ஆறுதல்
அடைவார்கள், ஆகையால் அவர்கள் பாக்கிய
௫ வான்கள்.—[6]சாந்தகுணமுள்ளவர்கள் [7]பூமி
யைச் சுதந்தரித்துக்கொள்ளுவார்கள், ஆகையால்
௬ அவர்கள் பாக்கியவான்கள்.—நீதியின்மேல்[8]பசி
தாகமுள்ளவர்கள் திருத்தி அடைவார்கள், ஆ
௭ கையால் அவர்கள் பாக்கியவான்கள்.—இரக்க
முள்ளவர்கள் [9]இரக்கத்தைஅடைவார்கள், ஆகை
௮ யால் அவர்கள் பாக்கியவான்கள்.—[10]சுத்தமான
இருதயமுள்ளவர்கள் [11]பராபரனைத் தரிசிப்பார்
கள், ஆகையால் அவர்கள் பாக்கியவான்கள்.—
௯ சமாதானத்தை நடப்பிக்கிறவர்கள் பராபரனு
டைய புத்திரர் என்னப்படுவார்கள், ஆகையால்
௰ அவர்கள் பாக்கியவான்கள்.—[12]நீதியின் நிமித்தம்
துன்பப்படுகிறவர்கள் பரலோக இராச்சியத்தை
அடைவார்கள், ஆகையால் அவர்கள் பாக்கிய
௰௧ வான்கள்.—என்நிமித்தம் உங்களை [13]நிந்தித்துத்
துன்பப்படுத்திப் பலவித [14]தீமையான மொழி
களை உங்கள்மேல் பொய்யாய்ச் சொன்னார்களா
னால், நீங்கள் பாக்கியவான்களாயிருப்பீர்கள்.—
[15]பரலோகத்திலே உங்களுக்கு மிகுந்த பலன் ௰௨
கிடைப்பதினாலே நீங்கள் சந்தோஷப்பட்டு மிக
வும் களிகூருங்கள், [16]உங்களுக்கு முன் இருந்த
தீர்க்கதரிசிகளையும் அப்படியே துன்பப்படுத்தி
னார்கள்.

நீங்கள் பூமிக்கு உப்பாயிருக்கிறீர்கள்; [17]உப் ௰௩
பானது சாரமற்றதேயானால், எதினால் சாரமாக்
கப்படும்? அது வெளியே கொட்டப்படுவதற்
கும் மனிதராலே மிதிக்கப்படுவதற்குமேயன்றி,
வேறொன்றுக்கும் ஆகாது.—[18]நீங்கள் உலகத் ௰௪
திற்கு ஒளியாயிருக்கிறீர்கள்; மலையின்மேல்
இருக்கிற பட்டணம் மறைந்திருக்கமாட்டாது.—
மேலும் [19]விளக்கைக் கொளுத்தி *மரக்காலால் ௰௫
மூடிவையாமல், ஒரு தண்டின்மேலே வைப்
பார்கள், அப்பொழுது அது வீட்டில் இருக்கிற
யாவருக்கும் பிரகாசம் கொடுக்கும்.—அப்ப ௰௬
டியே மனிதரானவர்கள் [20]உங்கள் நற்கிரியைக
ளைக்கண்டு, [21]பரமண்டலங்களில் இருக்கிற உங்
கள் பிதாவின் மகிமை விளங்கப்பண்ணத்தக்க
தாக உங்கள் ஒளி அவர்கள் முன்பாகப் பிரகா
சிக்கக்கடவது.

[22]வேதப்பிரமாணத்தையானாலும் தீர்க்கதரி ௰௭
சனங்களையானாலும் தள்ளிவிடுகிறதற்கு நான்
வந்ததாக நினையாதிருங்கள்; அவைகளைத் தள்ளி
விடுகிறதற்கல்ல, நிறைவேற்றுகிறதற்கு வந்
தேன்.—[23]வானமும் பூமியும் ஒழிந்துபோனா ௰௮
லும், வேதமுழுவதும் நிறைவேறுவதன்றி, அதில்
ஒரு சிறிய எழுத்தாகிலும் ஓர் எழுத்தினுடைய
உறுப்பாகிலும் ஒழிந்துபோவதில்லை என்று
மெய்யாய் உங்களுக்குச் சொல்லுகிறேன்.—
[24]ஆகையால் இந்தக் கற்பனைகளில் மிகவும் சிறிய ௰௯
கற்பனையையாகிலும் தள்ளி, அவ்வண்ணமாய்
மனிதருக்கு உபதேசிக்கிறவன் எவனோ, அவன்
பரலோக இராச்சியத்திலே மிகவும் சிறியவ
னென்று எண்ணப்படுவான்; அவைகளின்படி
செய்து உபதேசிக்கிறவனே, பரலோக இராச்
சியத்திலே பெரியவனென்று எண்ணப்படு
வான்.—ஆதலால் வேதபாரகர்களும் [25]பரிசே ௨௰
யர்களுமானவர்களுடைய நீதியிலும் உங்கள் நீதி
அதிகப்பட்டிராவிட்டால், பரலோக இராச்சி
யத்திற்குள் பிரவேசிக்கமாட்டீர்கள் என்று உங்
களுக்குச் சொல்லுகிறேன்.

[26]கொலைசெய்யாதிருப்பாயாக என்பதும், ௨௧
கொலைசெய்தவன் நியாயத்தீர்ப்புக்கு ஏதுவாயி
ருப்பான் என்பதும் †பூர்வத்தாருக்கு உரைக்கப்
பட்டதென்று கேள்விப்பட்டிருக்கிறீர்கள்.—

1 மாற். ௧. ௩௪.—2 மாற். ௩. ௮. 3 மாற். ௩. ௰௩, ௨௰.—4 லூக். ௬. ௨௰. சங். ௬௧. ௰௮. வாக். ௰௧. ௰௬: ௨௬. ௨௧. ஏசா. ௬௭. ௰௫: ௬௬. ௨. 5 ஏசா. ௬௧. ௨, ௩. லூக். ௬. ௨௧. யோவா. ௰௬. ௨௰. ௨ கொரி. ௧. ௭. வெளி. ௨௧. ௪.—6 சங். ௩௭. ௰௧. 7 உரோ. ௪. ௰௩. 8 ஏசா. ௫௫. ௧: ௬௫. ௰௩. 9 சங். ௪௧. ௨. மத். ௬. ௰௪. மாற். ௰௧. ௨௫. ௨ தீமோ. ௧. ௰௬. எபி. ௬. ௰. யாக். ௨. ௰௩. 10 சங். ௰௫. ௨: ௨௪. ௪. எபி. ௰௨. ௰௪. 11 ௧ கொரி. ௰௩. ௰௨. ௧ யோ. ௩. ௨, ௩. 12 ௨ கொரி. ௪. ௰௭. ௨ தீமோ. ௨. ௰௨. ௧ பே. ௩. ௰௪.—13 லூக். ௬. ௨௨.

14 ௧ பே. ௪. ௰௪.—15 லூக். ௬. ௨௩. அப். ௫. ௪௧. உரோ. ௫. ௩. யாக். ௧. ௨. ௧ பே. ௪. ௰௩.—16 நெகே. ௯. ௨௬. ௨ நாளா. ௩௬. ௰௬. மத். ௨௩. ௩௪, ௩௭. அப். ௭. ௫௨. ௧ தெச. ௨. ௰௫.—17 மாற். ௯. ௫௰. லூக். ௰௪. ௩௪, ௩௫.—18 வாக். ௪. ௰௮. பிலி. ௨. ௰௫.—19 மாற். ௪. ௨௧. லூக். ௮. ௰௬: ௰௧. ௩௩.—20 ௧ பே. ௨. ௰௨.—21 யோவா. ௰௫. ௮. ௧ கொரி. ௰௪. ௨௫.—22 உரோ. ௩. ௩௧: ௰. ௪. கலா. ௩. ௨௪. 23 லூக். ௰௬. ௰௭.—24 யாக். ௨. ௰. 25 உரோ. ௯. ௩௧: ௰. ௩.—26 ௨ மோ. ௨௰. ௰௩. ௫ மோ. ௫. ௰௭.

*மூலத்திலுள்ள வார்த்தை ஏறக்குறைய ஒரு உழக்குக் குறைய பெக் (Peck) என்கிற ஒரு இங்கிலீசு அளவைக் குறிக்கும்.
† அல்லது பூர்வத்தாராலே.

௨௨ அல்லாமலும் நான் உங்களுக்குச் சொல்லுகிற
தாவது: [1]சகோதரனைவீணய்க் கோபித்துக்கொள்
பவன் எவனே, அவன் நியாயத்தீர்ப்புக்கு ஏது
வாயிருப்பான்; சகோதரனை வீணன் என்கிறவன்
எவனே, அவன் பெரிய சங்கத்தீர்ப்புக்கு ஏதுவா
யிருப்பான்; [2]அவனை *மதிகேடன் என்கிறவன்
எவனே, அவன் எரிநரகத்திற்கு ஏதுவாயிருப்
௨௩ பான். — ஆகையால் நீ [3]பலிபீடத்தினிடத்தில்
உன் காணிக்கையைச் செலுத்தவந்து, உன்மேல்
சகோதரனுக்கு விசனம் உண்டென்று அங்கே
௨௪ நினைவுகொள்வாயாகில், — [4]அந்தப் பலிபீடத்
தின் முன் உன் காணிக்கையை வைத்துவிட்டுப்
போய், முன்பு சகோதரனுடனே ஒப்புரவாகிப்
பின்பு வந்து உன் காணிக்கையைச் செலுத்துவா
௨௫ யாக. — [5]உனக்கு எதிராளியானவன் உன்னை
நியாயாதிபதிக்கு ஒப்புவியாமலும், அந்த நியா
யாதிபதி உன்னை ஊழியக்காரனுக்கு ஒப்புவியா
மலும் நீ சிறைச்சாலையில் வைக்கப்படாமலும்
இருக்கும்படிக்கு, [6]சீக்கிரமாய் உன் எதிராளி
யுடனே வழியில் இருக்கும்பொழுதே அவனு
௨௬ டனே நல்மனம் பொருந்துவாயாக.—(பொருந்
தாவிட்டால்) நீ ஒரு காசும் குறைவின்றி முழு
மையும் செலுத்துகிறவரைக்கும், அவ்விடத்தை
விட்டுத் திரும்பி வரமாட்டாய் என்று மெய்யாய்
உனக்குச் சொல்லுகிறேன்.

௨௭ [7]விபசாரம் பண்ணுதிருப்பாயாக என்பது, பூர்
வத்தாருக்கு உரைக்கப்பட்டதென்று கேள்விப்
௨௮ பட்டிருக்கிறீர்கள்.—அல்லாமலும் நான் உங்க
ளுக்குச் சொல்லுகிறதாவது: [8]ஒரு ஸ்திரியை
இச்சிப்போடே பார்க்கிறவன் எவனே, அவன்
தன் இருதயத்தில் அவளோடே விபசாரம்செய்
௨௯ தாயிற்று.—[9]ஆகையால் உன் வலதுகண் உன்
னைக் †கெடுக்கிறதற்கு ஏதுவானல் [10]அதைப்
பிடுங்கி எறிந்துபோடு; உன் சரீரம் முழுமையும்
நரகத்திலே தள்ளப்படாதபடிக்கு, உன் அவய
வங்களில் ஒன்று கெட்டுப்போகிறதே உனக்கு
௩௰ நன்மையாயிருக்குமே. — அன்றியும் உன் வல
துகை உன்னைக் கெடுக்கிறதற்கு ஏதுவானல், அ
தைத் தறித்து எறிந்துபோடு; உன் சரீரம் முழு
மையும் நரகத்திலே தள்ளப்படாதபடிக்கு, உன்
அவயவங்களில் ஒன்று கெட்டுப்போகிறதே
௩௧ உனக்கு நன்மையாயிருக்குமே. – [11]அல்லாமலும்
யாவனுனலும் தன் மனைவியைத் தள்ளிவிட்
டால், தள்ளுதற்சீட்டை அவளுக்குக் கொடுக்
௩௨ கக்கடவனென்று சொல்லப்பட்டது.—அப்படி
யிருந்தும் [12]எவனுகிலும் தன் மனைவி வேசித்
தனம் இல்லாமலிருக்கையில் அவளைத் தள்ளி
விட்டால், அவன் அவளை விபசாரம் செய்யப்
பண்ணுகிறவனுய் இருப்பான் என்றும், எவனு
னலும் தள்ளிவிடப்பட்டவளை விவாகம்பண்
ணினல், விபசாரம் செய்கிறவனுய் இருப்பான்
என்றும் நான் உங்களுக்குச் சொல்லுகிறேன்.
[13]அன்றியும் பொய்யாணை இடாதிருப்பாயாக ௩௩
என்பதும், [14]உன் ஆணைகளைக் கர்த்தருக்குச் செ
லுத்துவாயாக என்பதும் [15]பூர்வத்தாருக்கு உரைக்
கப்பட்டதென்று கேள்விப்பட்டிருக்கிறீர்கள்.—
அல்லாமலும் நான் உங்களுக்குச் சொல்லு ௩௪
கிறதாவது: [16]எவ்விதத்திலும் சத்தியம்பண்ணக்
கூடாது; வானம் [17]தேவாசனமாயிருக்கிறபடி
யால் அதின்மேல் சத்தியம்பண்ணலாகாது; பூமி
பராபரனுடைய பாதபடியாய் இருக்கிறபடி
யால் அதின்மேல் சத்தியம்பண்ணலாகாது.—
எருசலேம் [18]பெரிய இராசனுடைய நகரமாயி ௩௫
ருக்கிறபடியால் அதின்மேல் சத்தியம்பண்ணலா
காது.—உன் சிரசின் ஒரே மயிரையும் நீ வெண் ௩௬
மையும் கறுப்பும் ஆக்கத்தக்க திராணியில்லாத
படியால் அதின்மேல் சத்தியம்பண்ணலாகாது.—
[19]உள்ளதை உள்ளதென்றும் இல்லதை இல்ல ௩௭
தென்றும் சொல்லக்கடவீர்கள்; இவைகளுக்கு
மேற்பட்டது தீமையினல் உண்டாயிருக்கின்
றது.

[20]கண்ணுக்குப் பதிலாகக் கண்ணையும், பல் ௩௮
லுக்குப் பதிலாகப் பல்லையும் (வாங்கவேண்டு
மென்று) சொல்லப்பட்டதைக் கேள்விப்பட்டி
ருக்கிறீர்கள்.—நான் உங்களுக்குச் சொல்லுகிற ௩௯
தாவது: [21]பொல்லாதவனேடே எதிர்த்து நிற்கக்
கூடாது; [22]ஒருவன் உன்னுடைய வலது கன்
னத்தில் அடித்தால், மறு கன்னத்தையும் அவனுக்
குத் திருப்பிக்காட்டு.—உன்னுடனே வழக்காடி, ௪௰
உன்னுடைய மேலங்கியை எடுத்துக்கொள்ள
வேண்டுமென்று இருக்கிறவனுக்கு உன் வஸ்
திரத்தையும் விட்டுவிடு. — [23]ஒருவன் உன்னை ௪௧
ஒரு காதவழி வரும்படியாகப் பலவந்தம்
பண்ணினல், அவனேடே இருகாதவழிமட்டும்
நடந்துபோ.—உன்னை வேண்டிக்கொள்ளுகிற ௪௨
வனுக்குக் கொடு; [24]உன்னிடத்தில் கடன்
வாங்க விரும்புகிறவனுக்கு முகங்கோணுதிருப்
பாயாக.

[25]நீ பிறனில் அன்புவைத்து, [26]உன் சத்துரு ௪௩
வைப் பகைக்கக்கடவாய் என்று சொல்லப்பட்
டதைக் கேள்விப்பட்டிருக்கிறீர்கள்.—நான் உங் ௪௪
களுக்குச் சொல்லுகிறது: பரமண்டலங்களில்

---

1 ௧ யோ. ௩. ௰௫.—2 யாக். ௨. ௨௰. 3 மத். ௮. ௪: ௨௩. ௰௯.—4 யோபு. ௪௨. ௮. மத். ௰௮. ௰௯. ௧ தீமோ. ௨. ௮. ௧ பே. ௩. ௭.—5 சங். ௩௨. ௭. எசா. ௫௫. ௬.—6 லூக். ௰௨. ௫௭, ௫௮.—7 ௨ மோ. ௫. ௰௮. ௨ மோ. ௨௰. ௰௪. 8 யோபு. ௩௧. ௧. லூக். ௯. ௨௫. ௧ மோ. ௩௪. ௨. ௨ சாமு. ௰௧. ௨. 9 மத் ௰௮. ௮, ௯. மாற். ௯. ௪௩-௪௭. 10 மத். ௰௯. ௰௨. ௨ ரோ. ௮. ௰௩. ௧ கொரி. ௯. ௨௭. கொலோ. ௩. ௫. 11 ௫ மோ. ௨௪. ௧. எரே. ௩. ௧. மத். ௰௯. ௭. ௯. மாற். ௰. ௨௯. 12 மத். ௰௯. ௯. லூக். ௰௬. ௰௮. ௨ ரோ. ௭. ௩. ௧ கொரி. ௭. ௰, ௰௧. 13 ௨ மோ. ௨௰. ௭. ௩ மோ. ௰௯. ௰௨. ௪ மோ. ௩௰. ௨. ௫ மோ. ௬. ௰௩.

14 ௫ மோ. ௨௩. ௨௩.—15 மத். ௨௩. ௰௬.—16 மத். ௨௩. ௰௬, ௰௮, ௨௨. யாக் ௫. ௰௨.—17 எசா. ௬௬. ௧. 18 சங். ௪௮. ௨: ௮௭. ௩. 19 கொலோ. ௪. ௬. யாக். ௫. ௰௨. 20 ௨ மோ. ௨௧. ௨௪. ௩ மோ. ௨௪. ௨௰. ௫ மோ. ௰௯. ௨௧. 21 லூக். ௨௰. ௨௨: ௨௪. ௨௯. லூக். ௯. ௨௯. ௨ ரோ. ௰௨. ௰௭, ௰௯. ௧ கொரி. ௬. ௭. ௧ தெச. ௫. ௰௫. ௧ பே ௩. ௯.—22 எசா. ௫௰. ௬. புலம். ௩. ௩௰.—23 மத். ௨௭. ௩௨. மாற் ௰௫. ௨௧.—24 ௫ மோ. ௰௫. ௮, ௰. லூக். ௯. ௩௰, ௩௫. 25 ௩ மோ. ௰௯. ௰௮.—26 ௫ மோ. ௨௩. ௯. சங். ௪௧. ௰.

*ராக்கா என்ற எபிரேய மொழி.—† அல்லது இடறல் செய்தால்.

இருக்கிற [1]உங்கள் பிதா பொல்லாதவர்கள்மே
லும் நல்லவர்கள்மேலும் தமது சூரியனை உதிக்
கவும், நீதியுள்ளவர்கள்மேலும் அநீதியுள்ளவர்
கள்மேலும் மழையைப் பெய்யவும் பண்ணுகி
௪௫ றார்.—அப்படியே நீங்கள் அவருக்குப் புத்திரரா
யிருக்கும்படிக்கு [2]உங்கள் சத்துருக்களில் அன்
புகூர்ந்து, உங்களைச சபிக்கிறவர்களை ஆசீர்வ
தித்து, [3]உங்களைப் பகைக்கிறவர்களுக்கு நன்
மைசெய்து, உங்களை நிந்திக்கிறவர்களுக்காகவும்
உங்களைத் துன்பப்படுத்துகிறவர்களுக்காகவும்
௪௬ செபம்பண்ணுங்கள்.-அல்லாமலும், [4]உங்களில்
அன்புகூருகிறவர்கள்மேலேமாத்திரம் அன்பாயி
ருப்பீர்களானால், உங்களுக்கு என்ன பலன்வ
ரும்? ஆயக்காரரும் அப்படியே செய்கிறார்களல்
௪௭ லவோ?—உங்கள் சகோதரரைமாத்திரம் வாழ்த்
திக்கொள்வீர்களானால், அது பெரிய செய்கை
ஆகுமா? அஞ்ஞானிகளும் அப்படிச்செய்கிறார்
௪௮ கள் அல்லவோ?—ஆகையால் [5]பரமண்டலங்
களில் இருக்கிற உங்கள் பிதா பூரணசற்குணரா
யிருக்கிறதுபோல, [6]நீங்களும் பூரணசற்குணராய்
இருக்கக்கடவீர்கள்.

## ௬. அதிகாரம்.

௧ அப்பாலும் கிறிஸ்து பர்வதத்தில் பிரசங்கம்பண்ணி, தருமத்தையும், ௫. செபத்தையும், ௰௪. தம்முடைய சகோதரர்களை மன்னிப்பதையும், ௰௬. உபவாசத்தையும், ௰௯. தம்முடைய பொக்கிஷத்தைக் கூட்டிவைக்க வேண்டிய இடத்தையும், ௨௪. பராபரனுக்கும் லோகப்பொருளுக்கும் ஊழியம் செய்வதையும் குறித்துச் சொல்லி, ௨௫. உலககாரியங்களுக்காகக் கவலையுள்ளவர்களாயிராமல், ௩௩. பராபரனுடைய இராச்சியத்தைத் தேடும்படிக்கு உபதேசித்தது.

௧ நீங்கள் மனிதர்களாலே காணப்படும்பொருட்
டாய் *உங்கள் தருமத்தை அவர்களுக்கு முன்
பாகச் செய்யாதபடிக்கு எச்சரிக்கையாயிருங்
கள்; செய்தால் பரமண்டலங்களில் இருக்கிற
உங்கள் †பிதாவினிடத்திலே பலன்பெறாதிருப்
௨ பீர்கள்.—ஆகையால் நீ [7]தருமம் செய்கிறபொ
ழுது, மனிதர்களால் புகழப்படுவதற்கு, செப
ஆலயங்களிலும் வீதிகளிலும் செய்கிற வஞ்ச
கரைப்போல, நீ உனக்குமுன்பாகத் ‡தாரையூ
தப்பண்ணக்கூடாது; அவர்கள் தங்கள் பலனை
அடைந்துதீர்ந்ததென்று மெய்யாகவே உங்க
௩ ளுக்குச் சொல்லுகிறேன்.—நீ தருமம் செய்கிற
பொழுது, உன் தருமம் அந்தரங்கமாயிருக்கும்
படிக்கு, உன் வலதுகை செய்கிறதை உன் இட
௪ துகை அறியாதிருக்கக்கடவது.—அப்பொழுது
[8]அந்தரங்கமாயிருக்கிறதை நோக்குகிற உன்
பிதா தாமே வெளியரங்கமாய் உனக்குப் பல
னளிப்பார்.
௫ அன்றியும் நீ செபம்பண்ணுகிறபொழுது, வஞ்
சகரைப்போல் இருக்கக்கூடாது; அவர்கள் மனி
தர்களால் காணப்படும்படிக்கு, செபஆலயங்
களிலேயும் வீதிகளின் சந்திகளிலேயும் நின்
றுகொண்டு செபம்பண்ண விரும்புகிறார்கள்;
அவர்கள் தங்கள் பலனை அடைந்துதீர்ந்ததென்று
மெய்யாகவே உங்களுக்குச் சொல்லுகிறேன்.—
[9]நீ செபம்பண்ணுகிறபொழுது, உன் வீட்டின் ௬
அறைக்குள்ப் பிரவேசித்து, அதின் கதவைப்
பூட்டினபின்பு, அந்தரங்கத்தில் இருக்கிற உன்
பிதாவை நோக்கிச் செபம்பண்ணு; அப்பொ
ழுது அந்தரங்கமாய் இருக்கிறதை நோக்குகிற
உன் பிதா வெளியரங்கமாய் உனக்குப் பலன்
அளிப்பார்.—[10]அல்லாமலும் செபம்பண்ணு ௭
கிறபொழுது, நீங்கள் அஞ்ஞானிகளைப்போல
வீணாய் வசனிக்கக்கூடாது; [11]அவர்கள் தாங்
கள் அதிகமாய் வசனித்தால் கேட்கப்படுவோம்
என்று நினைக்கிறார்கள்.-அவர்களுக்கு ஒப்பாய்ச் ௮
செய்யாதிருங்கள்; நீங்கள் உங்கள் பிதாவை
நோக்கி வேண்டிக்கொள்ளும்முன்னமே, அவர்
உங்களுக்கு வேண்டுவது இன்னதென்று அறிந்
திருக்கிறாரே.-ஆகையால் நீங்கள் செபம்பண்ண ௯
வேண்டுவது எப்படியெனில், [12]பரமண்டலங்
களில் இருக்கிற எங்கள் பிதாவே, உம்முடைய
நாமம் பரிசுத்தமாய் வணங்கப்படுவதாக.—உம் ௰
முடைய இராச்சியம் வருவதாக. [13]உம்முடைய
சித்தம் பரமண்டலத்திலே செய்யப்படுகிறது
போல, [14]பூமியிலேயும் செய்யப்படுவதாக.—
[15]இன்றைக்கு எங்களுக்கு வேண்டிய ஆகாரத் ௰௧
தை எங்களுக்குத் தாரும்.—[16]எங்கள் கடனாளிக ௰௨
ளுக்கு நாங்கள் மன்னிப்பதுபோல, தேவரீர் எங்
கள் கடன்களை மன்னித்தருளும்.—[17]நாங்கள் ௰௩
சோதனையில் பிரவேசியாதபடி செய்து, [18]தீமை
யில் நின்று எங்களை இரட்சித்துக்கொள்ளும்.
[19]இராச்சியமும் வல்லமையும் மகிமையும் உமக்
கே என்றென்றைக்கும் உண்டாயிருக்கின்றன;
ஆமன், என்பதேயாம்—[20]மனிதர்கள் (உங்க ௰௪
ளுக்கு) செய்த தப்பிதங்களை மன்னிப்பீர்களா
னால், உங்கள் பரமபிதா உங்களுக்கும் மன்னிப்
பார்.-[21]மனிதர்கள் (உங்களுக்கு) செய்த தப்பித ௰௫
ங்களை மன்னியாதிருப்பீர்களாகில், உங்கள் பிதா
உங்கள் தப்பிதங்களையும் மன்னியாதிருப்பார்.

[22]மேலும் நீங்கள் உபவாசம்பண்ணும்பொழு ௰௬
து, வஞ்சகரைப்போல முகவாடலாய் இருக்கக்
கூடாது, அவர்கள் உபவாசம்பண்ணுகிறது மனி
தர்களால் காணப்படும் பொருட்டாய், தங்கள்
முகங்களை வாடப்பண்ணுகிறார்கள்; அவர்கள்
தங்கள் பலனை அடைந்துதீர்ந்ததென்று மெய்
யாகவே உங்களுக்குச் சொல்லுகிறேன்.—நீ ௰௭
[23]உபவாசிக்கும்பொழுது, அந்த உபவாசம் மனி

1 லூக். ௬. ௨௭,௩௫. ௨ரோ. ௰௨. ௰௪,௨௰.—2 லூக். ௨௩.௩௪. அப். ௭. ௬௰. ௧கொரி. ௪. ௰௨, ௰௩. ௧பே.௨.௨௩: ௩.௯.—3 யோபு. ௨௫. ௨.—4 லூக். ௬. ௩௨. 5 எபே. ௫.௧.—6 ௧மோ. ௰௭. ௧. ௩மோ. ௰௧. ௪௪: ௰௯. ௨. லூக். ௬. ௩௬. கொலோ. ௧. ௨௮: ௪.௰௨. யாக். ௧. ௪. ௧பே. ௧. ௰௫, ௰௬. 7 ௨ரோ. ௰௨.௮.—8 லூக். ௰௪.௰௪. 9 ௨ இரா. ௪.௩௩.—10 பிர. ௫. ௨. 11 ௧ இரா. ௮.௨௩, ௨௬.—12 லூக். ௰௧. ௨. ௰௩.—13 சங். ௱௩.௨௰.௨௧. 18 யோவா. ௰௭. ௰௫.—19 ௧ நாளா. ௨௯. ௰௧.—20 மாற். ௰௧ ௨௫.௨௬. 14 மத். ௨௬. ௩௯,௪௨. அப். ௨௧. ௰௪. 15 யோபு. ௨௩. ௰௨. லூக். ௩௰. ௮. எபே. ௪. ௩௨. கொலோ. ௩. ௰௩. 16 மத். ௰௮. ௨௩ ழு.—17 மத். ௨௬. 21 மத். ௰௮. ௩௫. யாக். ௨. ௰௩. ௪௧, லூக். ௨௨. ௪௰,௪௬. ௧ கொரி. 22 ஏசா. ௫௮. ௫.—23 ரூத். ௩. ௩. ௰.௰௩. ௨ பே.௨.௯. வெளி. ௩.௰. தானி. ௰. ௩.

* அல்லது நீதியை; ௫ மோ. ௨௪. ௰௩. சங். ௱௰௨. ௯. தானி. ௪. ௨௭. ௨கொரி. ௯.௯,௰.—† அல்லது பிதாவால்.—‡ அல்லது தாரை ஊதாதே.

தர்களுக்குக் காணப்படாமல், அந்தரங்கத்தில்
இருக்கிற உன் பிதாவுக்கே காணப்படும்படிக்கு
உன் சிரசைத் தயிலத்தால் பூசி உன் முகத்தைக்
௰௮ கழுவக்கடவாய்.—அப்பொழுது அந்தரங்கமாய்
இருக்கிறதை நோக்குகிற உன் பிதா வெளியரங்
கமாய் உனக்குப் பலன் அளிப்பார்.

௰௯ [1]பூமியிலே நீங்கள் உங்களுக்காகப் பொக்கி
ஷங்களைக் கூட்டிவையாதிருங்கள்; அவ்விடத்
திலே பூச்சியும் துருவும் அவைகளைக் கெடுக்
கும்; திருடரும் கன்னமிட்டுத் திருடுவார்கள்.—
௨௰ [2]பரலோகத்திலே உங்களுக்காகப் பொக்கிஷங்
களைக் கூட்டிவையுங்கள்; அவ்விடத்திலே பூச்சி
யாவது துருவாவது அவைகளைக் கெடுக்கிறது
மில்லை, அங்கே திருடர் கன்னமிட்டுத் திருடுகிற
௨௧ துமில்லை.—உங்கள் பொக்கிஷம் எங்கேயோ
௨௨ அங்கே உங்கள் இருதயமும் இருக்குமே.—[3]கண்
ணானது சரீரத்தின் விளக்காய் இருக்கின்றது;
ஆகையால் உன் கண் சொஸ்தமாயிருந்தால், உன்
சரீரம் முழுவதும் வெளிச்சம் அடைந்திருக்
௨௩ கும்.—உன் கண் வியாதியாயிருந்தால், உன் சரீ
ரம் முழுவதும் இருளடைந்திருக்கும்; அப்படியி
ருக்க, உன்னிலுள்ள வெளிச்சம் இருளாயிருந்
தால், இருளே மிகவும் மிகுதியாய் இருக்குமல்ல
வோ?

௨௪ [4]ஒருவன் இரண்டு எசமான்களுக்கு ஊழியம்
செய்யமாட்டான்; என்னத்தினாலெனில், ஒரு
வனை அவன் பகைத்து மற்றவனைச் சிநேகிப்
பான்; அல்லது ஒருவனைப் பற்றிக்கொண்டு
மற்றவனை அசட்டைபண்ணுவான்; [5]நீங்கள்
பராபரனுக்கும் உலகப்பொருளுக்கும் ஊழியம்
௨௫ செய்யமாட்டீர்கள்.—[6]ஆகையால் உங்கள் சீவ
னுக்காக என்னத்தைப் போசனம் செய்வோம்,
என்னத்தைப் பானம்பண்ணுவோம் என்றும்
உங்கள் சரீரத்துக்காக என்னத்தை உடுப்போம்
என்றும் கவலைப்படாதிருங்கள் என்று நான் உங்
களுக்குச் சொல்லுகிறேன்; ஆகாரத்திற்குச் சீவ
னும், உடைக்குச் சரீரமும் அதிகமாய் இருக்கி
௨௬ றதல்லவோ?—[7]ஆகாயத்துப்பறவைகளை நோக்
கிப்பாருங்கள்; அவைகள் விதைக்கிறதும் அறுக்
கிறதும் களஞ்சியங்களில் கூட்டிவைக்கிறதும்
இல்லை; அவைகளுக்கும் உங்கள் பரமபிதா
உணவைக் கொடுக்கிறார்; அவைகளிலும் நீங்
௨௭ கள் மேன்மையுள்ளவர்கள் அல்லவா? — அல்
லாமலும் உங்களில் ஒருவன் கவலைப்படுகிறதி
னாலே தன் சரீர அளவுக்கு ஒரே முழத்தையும்
௨௮ கூட்டுவானா? (மாட்டானே.)—பின்னும் உடை
களுக்காக நீங்கள் கவலைப்படுகிறதென்ன? வெ
ளியிலே லீலியென்னும் புஷ்பங்கள் வளருகிற
வகையை உற்றுப்பாருங்கள்; அவைகள் வருந்து
௨௯ கிறதுமில்லை, நூற்கிறதுமில்லை.—அப்படியிருந்
தும், மிகுந்த மகிமையுடைய சாலோமோனும்
அவைகளில் ஒன்றைப்போலாகிலும் (அழகாய்)
உடுக்கவில்லையென்று உங்களுக்குச் சொல்லு
கிறேன்.—அப்படியிருக்க அற்பவிசுவாசிகளே, ௩௰
ஒருநாள் வளருகிறதுமாய் மறுநாள் அடுப்பில்
போடப்படுகிறதுமாயிருக்கிற புல்லுக்குப் பரா
பரன் இவ்விதமாய் உடுத்துவிக்கிறதால், மிகவும்
அதிகமாய் உங்களுக்கு உடுத்துவிப்பார் அல்ல
வோ? — ஆகையால் என்னத்தைப் போசனம் ௩௧
செய்வோம் என்றும், என்னத்தைப் பானம்பண்
ணுவோம் என்றும், என்னத்தை உடுப்போம்
என்றும், நீங்கள் கவலைப்படாதிருங்கள்; அப்
படிப்பட்டவைகளையெல்லாம் அஞ்ஞானிகள்
தேடுவார்கள். — உங்கள் பரமபிதா இவைகள் ௩௨
எல்லாம் உங்களுக்கு வேண்டியவைகள் என்று
அறிந்திருக்கிறீரே. — [8]முதலாவது பராபரனு ௩௩
டைய இராச்சியத்தையும் அவருடைய நீதியை
யும் தேடுங்கள்; அப்பொழுது இவைகள் எல்
லாம் உங்களுக்குக்கூடக் கொடுக்கப்படும். —
ஆகையால் நாளைக்காக கவலைப்படாதிருங்கள்; ௩௪
நாளைக்காக நாளைக்குத்தானே கவலைகள் உண்
டாகும்; ஒவ்வொரு நாளைக்கு அதினதினுடைய
வருத்தம் போதுமே.

## ௭. அதிகாரம்.

௧. கிறிஸ்து, மற்றவர்களைக் குற்றமாக நிருணயிப்பதைக் கண்டித்து, ௬. பரிசுத்தமானவைகளை நாய்களுக்குப் போடக்கூடாதென்று சொல்லி, ௭. செபம்பண்ணவும், ௰௩. இடுக்கமான வாசல்வழியாகப் பிரவேசிக்கவும், ௰௫. கள்ளத்தீர்க்கதரிசிகளுக்கு எச்சரிக்கையாயிருக்கவும், ௨௧. வார்த்தையைக் கேட்கிறவர்களாகமாத்திரமல்ல, அதின்படி செய்கிறவர்களாயிருக்கவும், ௨௪. (அப்படிச்செய்வது) கல்மலையின்மேல் வீடுகட்டுவதுபோல் என்றும், ௨௬. (அப்படிச்செய்யாமலிருப்பது) மணலின்மேல் வீடு கட்டுவதுபோல் என்றும் உபதேசித்து, பர்வதத்தின்மேலே பண்ணின பிரசங்கத்தை முடித்தது.

[9]நீங்கள் (மற்றவர்களை) எண்ணுவது எப்படி ௧
யோ, அப்படி நீங்களும் எண்ணப்படுவீர்கள்.—
[10]அல்லாமலும் நீங்கள் அளக்கிற அளவின்படி ௨
யே உங்களுக்கும் அளப்பார்கள்.—ஆகையால் ௩
நீங்கள் (நியாயமின்றி ஒருவரையும்) குற்றவா
ளிகள் என்று எண்ணாதிருங்கள்; எண்ணினால்
உங்களையும் அப்படியே எண்ணுவார்கள். [11]மே
லும் நீ உன் கண்ணில் இருக்கிற உத்திரத்தைப்
பாராமல், சகோதரனுடைய கண்ணில் இருக்
கிற சிராயைப் பார்க்கிறதென்ன? — உத்திரமே ௪
உன் கண்ணில் இருக்கையில், நீ சகோதரனை
நோக்கி, உன் கண்ணில் இருக்கிற சிராயை
நான் எடுத்துப்போடுகிறேன் இடங்கொடு என்று
நீ சொல்வதென்ன?—வஞ்சகனே, முதலாவது ௫
உன் கண்ணில் இருக்கிற உத்திரத்தை எடுத்
துப்போடு; பின்பு சகோதரனுடைய கண்ணில்
இருக்கிற சிராயை எடுத்துப்போட என்றாய்ப்
பார்ப்பாய்.

1 லூக். ௰௨. ௩௩. ௧ தீமோ. ௬. ௰௭. எபி. ௰௩. ௫. யாக். ௫. ௧.—2 மத். ௰௯. ௨௧. லூக். ௰௨. ௩௩, ௩௪: ௰௮. ௨௨. ௧ தீமோ. ௬. ௰௯. ௧ பே. ௧. ௪.
3 லூக். ௰௧. ௩௪, ௩௫.
4 லூக். ௰௬. ௰௩.—5 கலா. ௧. ௰. ௧ தீமோ. ௬. ௰௭. யாக். ௪. ௪.
6 சங். ௫௫. ௨௨. லூக். ௰௨. ௨௨, ௨௩. பிலி. ௪. ௬. ௧ பே. ௫. ௭.

7 யோபு. ௩௮. ௪௧. சங். ௱௪௭. ௯. லூக். ௰௨. ௨௪.—8 ௧ இரா. ௩. ௰௩. சங். ௩௭. ௨௫. மாற். ௰. ௩௰. லூக். ௰௨. ௩௧. ௧ தீமோ. ௪. ௮.
9 லூக். ௬. ௩௭. ரோ. ௨. ௧: ௰௪. ௧, ௪, ௰. ௰௩. ௧ கொரி. ௪. ௩, ௫. யாக். ௪. ௰௧, ௰௨.—10 மாற். ௪. ௨௪. லூக். ௬. ௩௮.
11 லூக். ௬. ௪௧, ௪௨.

௬ [1]பரிசுத்தமானதை நீங்கள் நாய்களுக்குக் கொ
டுக்கக்கூடாது; அல்லாமலும் உங்கள் முத்துக்
களைப் பன்றிகளுக்குப் போடக்கூடாது; அப்ப
டிச் செய்தால், அவைகள் அந்த முத்துக்களைத்
தங்கள் கால்களால் மிதித்து, பின்பு திரும்பிக்
கொண்டு உங்களைப் பீறும்.
௭ [2]வேண்டிக்கொள்ளுகிற எவனும் வாங்கிக்
கொள்ளுகிறான்; [3]தேடுகிறவன் கண்டடைகி
௮ றான்;-தட்டுகிறவனுக்குத் திறக்கப்படும்; ஆகை
யால் வேண்டிக்கொள்ளுங்கள், அப்பொழுது
உங்களுக்குக் கொடுக்கப்படும்; தேடுங்கள், அப்
பொழுது கண்டடைவீர்கள்; தட்டுங்கள், அப்
௯ பொழுது உங்களுக்குத் திறக்கப்படும்.—[4]உங்க
ளில் எந்த மனிதனாலும் தன்னிடத்தில் அப்
பம் கேட்டுக்கொள்ளுகிற தன் மகனுக்குக் கல்
௰ லைக்கொடுப்பானா? — மீனை அவன் கேட்டுக்
கொண்டால், அவனுக்குப் பாம்பைக் கொடுப்
௰௧ பானா?—[5]ஆதலால் பொல்லாதவர்களாகிய நீங்
கள் உங்கள் பிள்ளைகளுக்கு நல்ல ஈவுகளைச்
செய்யும்படி அறிந்திருக்க, பரமண்டலங்களில்
இருக்கிற உங்கள் பிதா தம்மை வேண்டிக்கொள்
ளுகிறவர்களுக்கு மிகவும் அதிகமாய் நன்மை
௰௨ களைக் கொடாமல் இருப்பாரா? — [6]அன்றியும்
மனிதர்கள் உங்களுக்குச் செய்யும்படி நீங்கள்
விரும்புகிறவைகள் எவைகளோ, அவைகளை
நீங்களும் அவர்களுக்குச் செய்யுங்கள்; [7]இது
வே நியாயப்பிரமாணமும் தீர்க்கதரிசனங்களு
மாம்.
௰௩ கேட்டுக்குக் கொண்டுபோகிற வாசல் விரிவா
யும் வழி விசாலமாயும் இருக்கின்றன; அதின்
வழியாய்ப் பிரவேசிக்கிறவர்கள் அநேகர். —
௰௪ ஜீவனுக்குக் கொண்டுபோகிற வாசல் *மிகவும்
இடுக்கமாயும் வழி நெருக்கமாயும் இருக்கின்
றது; சிலர்மாத்திரம் அதைக் கண்டடைகிறார்
கள். [8]ஆதலால் நீங்கள் இடுக்கமான வாசல்
வழியாய்ப் பிரவேசியுங்கள்.
௰௫ [9]மேலும் ஆட்டைப்போல உருவும், பீறுகிற
[10]ஓநாய்களைப்போல மனதும் உடையவர்களாய்
உங்களிடத்திற்கு வருகிற [11]கள்ளத்தீர்க்கதரிசி
களுக்கு நீங்கள் இடங்கொடாமல் எச்சரிக்
௰௬ கையாயிருங்கள். — அவர்களுடைய கனிகளி
னாலே அவர்களை அறிவீர்கள்; [12]முட்செடிகளில்
திராட்சப்பழங்களையும், [13]முட்பூண்டுகளில் அத்
௰௭ திப்பழங்களையும் பறிக்கிறார்களா?—அப்படியே
[14]நல்லமரங்கள் எல்லாம் நல்ல கனிகளைக் கொ
டுக்கும், கெட்டமரம் பொல்லாத கனிகளைக்
கொடுக்கும்.—நல்லமரம் பொல்லாத கனிகளை ௰௮
யும், கெட்டமரம் நல்ல கனிகளையும் கொடுக்க
மாட்டாது.-[15]நல்ல கனிகளைக் கொடாத மரங் ௰௯
களெல்லாம் வெட்டப்பட்டு அக்கினியிலே
போடப்படும்.—ஆதலால் அவர்களுடைய கனி ௨௰
களினாலே அவர்களை அறிவீர்கள்.

[16]என்னைக் கர்த்தாவே கர்த்தாவே, என்று ௨௧
சொல்லுகிற எவனும் பரலோக இராச்சியத்
தில் பிரவேசிப்பதில்லை; பரமண்டலங்களிலே
இருக்கிற என் பிதாவினுடைய சித்தத்தின்படி
செய்கிறவனே அதில் பிரவேசிப்பான்.—அந் ௨௨
நாளிலே அநேகர் என்னை நோக்கி, ஆ கர்த்தா
வே கர்த்தாவே, உமது நாமத்தினாலே [17]நாங்கள்
தீர்க்கதரிசனம் உரைத்தோம் அல்லவோ? உமது
நாமத்தினாலே பசாசுகளைத் துரத்தினோம் அல்ல
வோ? உமது நாமத்தினாலே அநேக அற்புதங்
களைச் செய்தோம் அல்லவோ என்பார்கள்.—
[18]அப்பொழுது நான் அவர்களை நோக்கி, நான் ௨௩
ஒருக்காலும் உங்களை அறியவில்லை, [19]அக்கிர
மக்காரரே, நீங்கள் என்னை விட்டுப் போங்கள்
என்று அவர்களுக்கு அறிவிப்பேன்.

[20]ஆகையால் நான் சொல்லிய வசனங்களைக் ௨௪
கேட்டு அவைகளின்படி செய்கிறவன் எவனோ,
அவனைத் தன் வீட்டைக் கல்மலையின்மேல் கட்
டின புத்தியுள்ள மனிதனுக்கு ஒப்பிடுவேன்.—
அந்த வீடு கல்மலையின்மேல் அஸ்திபாரம் போட் ௨௫
டிருந்தபடியால், பெருமழை சொரிந்தும், பெரு
வெள்ளம் வந்தும், காற்றுக்கள் அடித்து அந்த
வீட்டின்மேலே மோதியும், அது விழவில்லை.—
நான் சொல்லிய வசனங்களைக் கேட்டும் அவை ௨௬
களின்படி செய்யாதிருக்கிறவன் எவனோ, அ
வன் தன் வீட்டை மணலின்மேல் கட்டின புத்தி
யீனனுக்கு ஒப்பாயிருப்பான். — பெருமழை ௨௭
சொரிந்து, பெருவெள்ளம் வந்து, காற்றுக்களும்
அடித்து, அந்த வீட்டின்மேல் மோதியபொழுது,
அது விழுந்து முழுவதும் இடிந்துபோயிற்று
என்றார்.—பின்பு நடந்ததென்னவெனில், இயே ௨௮
சுவானவர் இந்த வசனங்களைச் சொல்லி முடித்த
பொழுது, அவர் வேதபாரகரைப்போல் அல்ல,—
[21]அதிகாரமுடையவரைப்போலப் போதித்தபடி ௨௯
யினாலே, சனங்கள் அவருடைய [22]உபதேசத்
தைக்குறித்துப் பிரமித்தார்கள்.

## அ. அதிகாரம்.

உ. கிறிஸ்து குஷ்டரோகியைச் சுத்தமாக்கி, ரு. சேர்வைகாரனுடைய வே
லைக்காரனையும், ௰ச. பேதுருவினுடைய மாமியையும், ௰௬. மற்ற அநே

1 லூக். ௬. ௩௭,௩௮: ௨௩. ௬. அப். ௰௩. ௪௫, ௪௬.—2 மத். ௨௧. ௨௨. மாற். ௰௧. ௨௪. லூக். ௰௧ ௯,௰. ௰௮: ௧. யோவா. ௰௪. ௰௩. ௰௪: ௰௫. ௭. ௰௬: ௰௬. ௨௩, ௨௪. யாக் ௧. ௫. ௰௬. ௧ யோ. ௩. ௨௨: ௫. ௰௪, ௰௫. 3 லூக். ௮. ௰௭. எரே. ௨௯. ௰௨, ௰௩. 4 லூக். ௰௧. ௰௧, ௰௨, ௰௩.—5 ௧ மோ. ௬. ௫: ௮. ௨௧.

6 லூக். ௬. ௩௧.—7 ௩ மோ. ௰௯. ௰௮. மத். ௨௨. ௪௰. ௨ ரோ. ௰௩. ௮. ௯, ௰. கலா. ௫. ௰௪. ௧ தீமோ. ௧. ௫.—8 லூக். ௰௩. ௨௪. 9 மீகா ௩. ௫. ௨ தீமோ. ௩. ௫. 10 அப். ௨௰. ௨௯.—11 ௫ மோ. ௰௩. ௩. எரே. ௨௩. ௰௬. மத். ௨௪. ௪, ௫, ௰௧, ௨௪. மாற். ௰௩. ௨௨. ௨ ரோ. ௰௬. ௰௮. எபே. ௫. ௬.

கொலோ. ௨. ௮. ௨ பே. ௨. ௧: ௨. ௧. ௧ யோ. ௪. ௧. 12 உம். ௰௪: ௰௨. ௩௩. 13 லூக். ௬. ௪௩, ௪௪.—14 எரே. ௰௧. ௰௯. மத். ௰௨. ௩௩. 15 ௩. ௰. லூக் ௩ ௯. யோவா. ௰௫. ௨, ௬.—16 ஓசே. ௮. ௨. மத். ௨௫. ௰௧,௰௨. லூக். ௬. ௪௬: ௰௩. ௨௫. அப். ௰௯. ௰௩. ௨ ரோ. ௨. ௰௩.

யாக். ௧. ௨௨.-17 ௪ மோ. ௨௪. ௪. லூக். ௰௩. ௨௭. யோவா. ௰௧. ௫௧. ௧ கொரி. ௰௩. ௨.
18 மத் ௨௫. ௰௨ லூக். ௰௩. ௨௫. ௨௭. ௨ தீமோ. ௨. ௰௯.—19 சங். ௫. ௫: ௬. ௮. மத். ௨௫. ௪௧.
20 லூக். ௬. ௪௭.-21 யோவா. ௭. ௪௬.
22 மத். ௰௩. ௫௪. மாற். ௧. ௨௨: ௬. ௨. லூக். ௪. ௩௨.

* அல்லது எவ்வளவாய்.

*கம் பிணியாளிகளையும் குணமாக்கி, ௰௮. தம்மைப் பின்செல்லவேண்டிய விதரைக் காண்பித்து, ௨௩. கடலிலே கொந்தளிப்பை அமர்த்தி, ௨௮. பசாசுபிடித்த இரண்டுபேர்களை விட்டுப் பசாசுகளைத் துரத்தி, ௩௧. அவைகள் பன்றிகளுக்குள்ப்போக உத்தரம் கொடுத்தது.*

௧ அவர் மலையிலிருந்து இறங்கிவந்தபொழுது,
திரளான சனங்கள் அவரைப் பின்தொடர்ந்தார்
௨ கள்.—[1]அப்பொழுது ஒரு குஷ்டரோகி வந்து
அவருக்கு முன்பாக விழுந்து வணங்கி, ஆண்
டவரே உமக்குச் சித்தமானால், என்னைச் சுத்த
௩ மாக்க உம்மால் ஆகும் என்றான்.—இயேசுவான
வர் தமது கையை நீட்டி அவனைத் தொட்டு,
எனக்குச் சித்தம் உண்டு சுத்தமாகு என்றார்;
உடனே குஷ்டரோகம் நீங்க அவன் சுத்தமா
௪ னான்.—அல்லாமலும் இயேசுவானவர் அவனை
நோக்கி, [2]நீ இதை ஒருவனுக்கும் சொல்லாமலி
ருக்க நினை; அவர்களுக்குச் சாட்சியாகும்ப
டிக்கு நீ போய் ஆசாரியனுக்கு உன்னைக் காண்
பித்து, மோசே [3]கட்டளையிட்ட காணிக்கை
யைச் செலுத்து என்றார்.

௫ [4]இயேசுவானவர் கப்பர்நாகூம் பட்டணத்
தில் பிரவேசித்தபின்பு, நூறுபேருக்குச் சேர்
வைகாரன் ஒருவன் அவரிடத்தில் வந்து அவரை
௬ நோக்கி,-ஆண்டவரே, என் வேலைக்காரன் திமிர்
வாதமுள்ளவனாய் வீட்டிலே கிடந்து, மிகவும்
உபாதிப்படுகிறான் என்று வேண்டிக்கொண்
௭ டான்.—அவனுடனே இயேசுவானவர், நான்
வந்து அவனைக் குணமாக்குவேன் என்றார்.—
௮ அதற்கு அந்தச் சேர்வைகாரன் சொன்னது:
ஆண்டவரே, [5]நீர் என் வீட்டுக்குள் பிரவேசிப்ப
௯ தற்கு நான் பாத்திரன் அல்ல.-அல்லாமலும் நான்
அதிகாரத்துக்குக் கீழ்ப்பட்டவனாயிருந்தும்,
எனக்குட்பட்டிருக்கிற சேவகரில் ஒருவனை,
போவென்னப் போகிறான்; மற்றொருவனை, வா
வென்ன வருகிறான்; எனக்கு அடிமையானவ
னை, இதைச் செய்யென்னச் செய்கிறான்; ஆகை
யால் [6]நீர் ஒரு வார்த்தைமாத்திரம் சொன்னால்,
என் வேலைக்காரன் சொஸ்தம் அடைவான் என்
௰ றான்.—இயேசுவானவர் அதைக் கேட்டு ஆச்
சரியப்பட்டு, தமக்குப் பின்செல்லுகிறவர்களை
நோக்கி, இஸ்ரவேலருக்குள்ளும் நான் இப்ப
டிப்பட்ட விசுவாசத்தைக் காணவில்லை என்று
மெய்யாகவே உங்களுக்குச் சொல்லுகிறேன்.—
௰௧ பின்னும் நான் உங்களுக்குச் சொல்லுகிறதா
வது: [7]அநேகம்பேர் கிழக்கிலும் மேற்கிலுமிருந்
துவந்து, பரலோக இராச்சியத்திலே ஆபிரகாம்
ஈசாக்கு யாக்கோபு என்பவர்களுடனேகூடப்
௰௨ பந்தியில் இருப்பார்கள்.—[8]இராச்சியத்தின் பிள்
ளைகள் காரிருளிலே புறம்பாகத் தள்ளப்படுவார்
கள்; [9]அங்கே அழுகையும் பற்கடிப்பும் உண்
௰௩ டாயிருக்கும் என்று சொன்னபின்பு, — அவர்
அந்தத் தலைவனை நோக்கி, நீ போகலாம், உன்
விசுவாசத்தின்படி உனக்கு ஆகக்கடவதென்
றார்; அந்நாழிகையிலே அவனுடைய வேலைக்
காரன் சொஸ்தம் அடைந்தான்.

[10]இயேசுவானவர் பேதுருவின் வீட்டிலே ௰௪
வந்து, அவனுடைய மாமி சுரமாய்க் கிடக்கிற
தைக் கண்டு,—[11]அவள் கையைத் தொட்டார்; ௰௫
உடனே சுரம் அவளை விட்டு நீங்கிற்று; அவள்
எழுந்திருந்து அவர்களுக்கு ஊழியஞ்செய்தாள்.

[12]அஸ்தமனமானபொழுது, பசாசுபிடித்தி ௰௬
ருந்த அநேகரை அவரிடத்திற்குக் கொண்டுவந்
தார்கள்; [13]அவர் நமது பெலஈனங்களை ஏற்றுக்
கொண்டு, நம்முடைய நோய்களைச் சுமந்தார்
என்று தீர்க்கதரிசியாகிய ஏசாயா சொன்னது
நிறைவேறும்படிக்கு,— அவர் அந்த ஆவிகளை ௰௭
ஒரு வார்த்தையினாலே துரத்தி, பிணியாளிகள்
எல்லாரையும் குணமாக்கினார்.

பின்பு இயேசுவானவர் அநேக சனங்கள் தம் ௰௮
மைச் சூழ்ந்திருக்கக் கண்டு, அக்கரைக்குப் போ
கக் கட்டளையிட்டார். — [14]அப்பொழுது வேத ௰௯
பாரகன் ஒருவன் வந்து அவரை நோக்கி, போத
கரே, நீர் எங்கேபோனாலும் உம்மைப் பின்பற்று
வேன் என்றான்.—அவனுடனே இயேசுவான ௨௰
வர் சொன்னது: நரிகளுக்குக் குழிகளும் ஆகா
யத்துப் பறவைகளுக்குக் கூடுகளும் உண்டு;
மனிதனுடைய குமாரனோ, தலைசாய்க்கிறதற்கு
இடம் இல்லாதவனாய் இருக்கிறான் என்றார்.

[15]பின்னும் அவருடைய சீஷர்களில் ஒருவன் ௨௧
அவரைநோக்கி, ஆண்டவரே, முன்பு நான்
போய் என் தகப்பனை அடக்கம்பண்ணுவதற்கு
உத்தரவுதாரும் என்றான். — [16]அவனுடனே இ ௨௨
யேசுவானவர் சொன்னது: மரித்தோர் தங்களி
டத்தில் மரித்தவர்களை அடக்கம்பண்ணட்டும், நீ
என்னைப் பின்பற்றி வா என்றார்.—பின்பு அவர் ௨௩
படவில் ஏறுகிறபொழுது, சீஷர்கள் அவர் பின்
சென்று ஏறினார்கள். — அப்பொழுது படவு ௨௪
[17]அலைகளினாலே மூடப்படத்தக்கதாய்க் கடலி
லே பெருங்காற்று உண்டாயிற்று; அவரோ நித்தி
ரைபண்ணினார். — அப்பொழுது அவருடைய ௨௫
சீஷர்கள் வந்து அவரை எழுப்பி, ஆண்டவரே,
எங்களை இரட்சிக்கவேண்டும், கெட்டுப்போகி
றோமே என்றார்கள்.—அவர்களை அவர்நோக்கி, ௨௬
ஆ அற்ப விசுவாசிகளே, ஏன் பயப்படுகிறீர்கள்
என்று சொல்லி [18]எழுந்து காற்றுக்களையும் கட
லையும் அதட்டினார்; உடனே மிகுந்த அமைதல்
உண்டாயிற்று. — அவர்கள் மிகவும் ஆச்சரியப் ௨௭
பட்டு, காற்றுக்களும் கடலும் இவருக்குக் கீழ்ப்
படியத்தக்கதாக இவர் எப்படிப்பட்டவரோ
என்று சொன்னார்கள்.

1 மாற். ௧. ௪௰. லூக். ௫. ௰௨.
2 மத். ௯. ௩௰. மாற். ௫. ௪௩.
3 ௩ மோ. ௰௪. ௩, ௪, ௰. லூக். ௫. ௰௪.
4 லூக். ௭. ௧.—5 லூக். ௰௫. ௰௯, ௨௧.—6 சங். ௱௭. ௨௰.
7 ௧ மோ. ௰௨. ௩. ஏசா ௨. ௨. ௩: ௰௧. ௰. மல். ௧. ௰௧. லூக். ௰௩. ௨௯. அப். ௰. ௪௫: ௰௧. ௰௮: ௰௪. ௨௭. ௨ரோ. ௰௫. ௯. ௯. எபே. ௩. ௬.—8 மத். ௨௧. ௪௩.
9 ௰௩. ௪௨. ௫௰: ௨௨. ௰௩: ௨௪. ௫௧: ௨௫. ௩௰. லூக் ௰௩. ௨௮. ௨ பே. ௨. ௰௭. யூதா. ௰௩.
10 மாற். ௧. ௨௯: ௩௰. ௩௧. லூக் ௪. ௩௮, ௩௯.—11 மாற். ௧. ௩௨, ௩௩. லூக். ௪. ௪௰. ௧ கொரி. ௯. ௫.
12 மாற். ௧. ௩௨. லூக். ௪. ௪௰.
13 ஏசா. ௫௩. ௪. ௧ பே. ௨. ௨௪.
14 லூக். ௯. ௫௭, ௫௮.
15 லூக் ௯. ௫௯.—16 லூக் ௯. ௬௰. ௧ இரா. ௰௯. ௨௰.
17 மாற். ௪. ௩௭. லூக். ௮. ௨௩.—18 சங். ௬௫. ௭: ௮௯. ௯: ௱௭. ௨௯.

உ௮ [1]பின்பு அவர் அக்கரையிலே கெர்கேசேனர்
தேசத்திலே சேர்ந்தார்; அவ்வழியாய் மற்றொரு
வரும் நடவாமல் இருக்கத்தக்கதாக மிகுந்த துஷ்
டராய், பசாசுபிடித்த மனிதர்கள் இரண்டுபேர்
பிரேதக்கல்லறைகளிலிருந்து புறப்பட்டு அவ
உ௯ ருக்கு எதிராக வந்து,—ஆ இயேசுவே, பராபர
னுடைய குமாரனே, எங்களுக்கும் உமக்கும்
என்ன? காலம் வருமுன்னமே எங்களை வேத
னைப்படுத்தும்படிக்கு இங்கே வந்தீரோ என்று
௩௰ கூப்பிட்டார்கள்.—அல்லாமலும் அவர்களுக்குச்
சற்றேதூரமாய் அநேகம் பன்றிகள் கூட்டமாய்
௩௧ மேய்ந்துகொண்டிருந்தன.—அப்பொழுது பசா
சுகள், நீர் எங்களைத் துரத்துவீரானால், நாங்கள்
அந்தப் பன்றிக்கூட்டத்தில் பிரவேசிக்கும்ப
டிக்கு உத்தரவு கொடும் என்று அவரை வேண்
௩௨ டிக்கொண்டார்கள்.—போங்கள் என்று அவர்
களுக்குச்சொன்னார்; உடனே அவர்கள் புறப்
பட்டுப் பன்றிக்கூட்டத்தில் பிரவேசித்தார்கள்;
அப்பொழுது பன்றிகள் எல்லாம் உயர்ந்த மேட்
டிலிருந்து கடலில் பாய்ந்து, சலத்திலே மாண்டு
௩௩ போயின.—அவைகளை மேய்த்தவர்களோ ஓடிப்
பட்டணத்தில் சென்று எல்லாவற்றையும், பசா
சுபிடித்திருந்தவர்களுடைய சங்கதியையும் அறி
௩௪ வித்தார்கள்.—அப்பொழுது பட்டணத்தார் எல்
லாரும் இயேசுவுக்கு எதிராகப் புறப்பட்டு அ
வரைக் கண்டு, [2]தங்கள் எல்லைகளை விட்டுப்
போகும்படிக்கு அவரை வேண்டிக்கொண்டார்
கள்.

## ௯. அதிகாரம்.

*௨. கிறிஸ்து திமிர்வாதக்காரன் ஒருவனைச் சொஸ்தமாக்கி. ௯. ஆயத்துறையில் இருந்த மத்தேயுவை அழைத்து. ௰. ஆயக்காரரோடும் பாவிகளோடும் புசித்து, ௰௪. தம்முடைய சீஷர்கள் உபவாசம்பண்ணாததைக்குறித்து நியாயம் சொல்லி. உ௰. பெரும்பாடுள்ள ஒரு ஸ்திரியை ஆரோக்கியமாக்கி, உ௩. யவீருவினுடைய மகளை மரணத்தினின்று எழுப்பி. உ௭. இரண்டு குருடருக்குப் பார்வை கொடுத்து, உ௮. பசாசுபிடித்த ஒரு ஊமையனைக் குணமாக்கி, ௩௬. கும்புகள்மேல் மனதுருகினது.*

௧ [3]அப்பொழுது அவர் படவில் ஏறி இக்கரைப்
௨ பட்டு தமது பட்டணத்தில் வந்தார்.—[4]அங்கே
படுக்கையின்மேல் கிடந்த திமிர்வாதக்காரனை
அவரிடத்திற்குக் கொண்டுவந்தார்கள்; [5]இயே
சுவானவர் அவர்களுடைய விசுவாசத்தைக்
கண்டு, திமிர்வாதக்காரனை நோக்கி, மகனே திட
மாயிரு, உன் பாவங்கள் மன்னிக்கப்பட்டன
௩ என்றார்.—அங்கே இருந்த வேதபாரகரில் சிலர்,
இவன் தேவதூஷணம் சொல்லுகிறான் என்று
௪ எண்ணிக்கொண்டார்கள். — [6]இயேசுவானவர்
அவர்களுடைய நினைவுகளை அறிந்து, நீங்கள்
உங்கள் இருதயங்களில் பொல்லாங்கானவை
௫ களை நினைக்கிறதென்ன?—உன் பாவங்கள் மன்
னிக்கப்பட்டன என்று சொல்லுகிறதோ, எழுந்
திருந்து நடவென்று சொல்லுகிறதோ, எது எளி
து?—மனிதனுடைய குமாரன் பூமியில் பாவங் ௬
களை மன்னிக்கிறதற்கு அதிகாரமுடையவன்
என்பதை நீங்கள் அறியும்படிக்கு, அவர் திமிர்
வாதக்காரனை நோக்கி, நீ எழுந்திருந்து உன்
படுக்கையை எடுத்துக்கொண்டு உன் வீட்டுக்
குப்போ என்றார்.—உடனே அவன் எழுந்து தன் ௭
வீட்டுக்குப்போனான்.—அதைக் கண்ட சனங் ௮
கள் ஆச்சரியப்பட்டு மனிதருக்கு இப்படிப்
பட்ட அதிகாரத்தைக் கொடுத்த பராபரனைப்
புகழ்ந்தார்கள்.

[7]இயேசுவானவர் அவ்விடம்விட்டுப் புறப் ௯
பட்டுப்போகையில், ஆயத்துறையில் உளுக்காந்
திருந்த ஒரு மனிதனைக் கண்டார்; அவனுக்கு
மத்தேயு என்று பேர்; அவனை அவர் நோக்கி,
என்னைப் பின்பற்றிவா என்றார்; அவன் எழுந்
திருந்து அவர் பின்சென்றான்.

[8]பின்பு அவர் வீட்டிலே போசனபந்தி இருக் ௰
கையில், அநேகம் ஆயக்காரரும் பாவிகளும்
வந்து, இயேசுவுடனேயும் அவருடைய சீஷர்
களுடனேயும் கூடப் பந்தியிருந்தார்கள்.—பரி ௰௧
சேயர் அதைக் கண்டு அவருடைய சீஷர்களை
நோக்கி, என்னத்தினாலே உங்கள் போதகர் [9]ஆ
யக்காரரோடும் [10]பாவிகளோடும் போசனம்பண்
ணுகிறார் என்றார்கள்.—இயேசுவானவர் அதைக் ௰௨
கேட்டு அவர்களை நோக்கி, சொஸ்தமுள்ளவர்க
ளுக்கு வயித்தியன் வேண்டுவதில்லை, வியாதி
யுள்ளவர்களுக்கே அவன் வேண்டும்.—[11]மேலும், ௰௩
பலியிலும் இரக்கத்தை விரும்புகிறேன் என்கிற
(வாக்கியத்தின் கருத்தை) நீங்கள் போய்ப் படித்
துக்கொள்ளுங்கள். [12]அந்தப்படி நான் நீதிமான்
களை அல்ல, பாவிகளையே மனந்திருப்புதற்கு
அழைக்கவந்தேன் என்றார்.

[13]அந்நேரத்திலே யோவானுடைய சீஷர்கள் ௰௪
அவரிடத்தில் வந்து, நாங்களும் பரிசேயரும்
அநேகந்தரம் உபவாசம்பண்ணிவருகிறோம்;
உம்முடைய சீஷர்களோ உபவாசம்பண்ணாமல்
இருக்கிறார்கள், அதேன் என்றார்கள். — இயே ௰௫
சுவானவர் அவர்களுக்குச் சொன்னது: [14]கலியா
ணத்துக்கு வந்த மனிதர்கள் மணவாளன் தங்க
ளோடு இருகையில் துயரப்படுவார்களா? மண
வாளன் அவர்களைவிட்டு நீக்கப்படும் காலம்
வரும்; [15]அப்பொழுது அவர்கள் உபவாசம்பண்
ணுவார்கள். — ஒருவனும் கோடித்துண்டைப் ௰௬
பழைய வஸ்திரத்தின்மேல் போட்டு இணைக்க
மாட்டான்; இணைத்தால் அதில் இணைத்ததுண்டு
அவ்வஸ்திரத்தில் எடுபட்டுப்போக அதிக பொத்
தல் உண்டாகும்.—மேலும் திராட்சப்பழங்களின் ௰௭
புதிய இரசத்தைப் பழைய துருத்திகளில் வார்க்
கமாட்டார்கள்; வார்த்தால், துருத்திகள் கிழிந்து

1 மாற். ௫. ௧-௨௰. லூக். ௮. ௨௬-௩௰.
2 உபா. ௫. ௨௫. ௧ இரா. ௰௭. ௰௮. லூக். ௫. ௮. அப். ௰௬. ௩௯.
3 மத். ௪. ௰௩.—4 மாற். ௨. ௩. லூக். ௫. ௰௮.
5 மத். ௮. ௰.—6 சங். ௱௩௯. ௨. மத். ௰௨. ௨௫. மாற். ௰௨. ௰௫. லூக் ௫. ௨௨: ௬. ௮: ௯. ௪௭: ௰௬. ௰௭.—7 மாற். ௨. ௰௪. லூக். ௫. ௨௭.
8 மாற். ௨. ௰௫. லூக். ௫. ௨௯.
9 மத். ௰௧. ௰௯. லூக் ௫. ௩௰.
10 லூக். ௰௫. ௨. கலா. ௨. ௰௫.
11 ஓசே. ௬. ௬. மீகா. ௬. ௬, ௭, ௮. மத். ௰௨. ௭.—12 ௧ தீமோ. ௧. ௰௫.
13 மாற். ௨. ௰௮. லூக். ௫. ௩௩: ௰௮. ௰௨.—14 யோவா. ௩. ௨௯.
15 அப். ௰௩. ௨, ௩: ௰௪. ௨௩. ௧ கொரி. ௭. ௫.

போகும், இரசமும் சிந்திப்போகும், துருத்திக
ளும் கெட்டுப்போகும்; புதிய இரசத்தைப் புதிய
துருத்திகளில் வார்த்துவைத்தால் அப்பொழுது
இரண்டும் பத்திரப்பட்டிருக்கும் என்றார்.

௰௮ [1]அவர் இவைகளை அவர்களோடே பேசுகை
யில், தலைவன் ஒருவன் வந்து வணக்கமாய்
விழுந்து அவரை நோக்கி, இந்நேரத்திலே என்
மகள் இறந்துபோனாள்; அவள் உயிரடையும்
படிக்கு நீர் வந்து அவள்மேல் உமது கையை வை
௰௯ யும், அப்பொழுது பிழைப்பாள் என்றான்.—இ
யேசுவானவர் எழுந்திருந்து, தம்முடைய சீஷர்
களோடுகூட அவன் பின்னே போனார்.

௨௰ [2]அவர் போகையில், பன்னிரண்டு வருஷ
மாகப் பெரும்பாடுள்ள ஒரு ஸ்திரி வந்து,—
௨௧ இவருடைய வஸ்திரத்தைத் தொட்டமாத்திரமே
சொஸ்தம் அடையலாம் என்று தன் உள்ளத்திலே
எண்ணி, அவருக்குப் பின்னாலே போய், அவரு
டைய வஸ்திரத்தின் ஓரத்தைத் தொட்டாள்.—
௨௨ அப்பொழுது இயேசுவானவர் திரும்பி அவளை
நோக்கி, மகளே திடமாயிரு; [3]உன் விசுவாசத்தி
னாலே உனக்குச் சுகம் உண்டாயிற்று என்றார்; அ
ந்நேரமே அந்த ஸ்திரி சொஸ்தம் அடைந்தாள்.-
௨௩ பின்பு [4]இயேசுவானவர் அத்தலைவனுடைய
வீட்டில் சேர்ந்து, [5]தாரை ஊதுகிறவர்களையும்
௨௪ இரைகிற சனங்களையும் கண்டு,— அவர்களை
நோக்கி, வெளியே போங்கள், [6]இந்தப் பெண்
இறந்துபோகவில்லை, நித்திரைபண்ணுகிறாள்
என்றார்; அவர்கள் அவரை நோக்கி நகைத்தார்
௨௫ கள்.-சனங்கள் வெளியே துரத்தப்பட்டபின்பு,
அவர் உள்ளே பிரவேசித்து, அந்தப் பெண்
ணின் கையைப் பிடித்தார்; உடனே அவள் எழுந்
௨௬ திருந்தாள்.—அந்தச் செய்கையினாலே *அவரு
டைய கீர்த்தி அத்தேசத்தில் எங்கும் பிரபல
மாயிற்று.

௨௭ இயேசுவானவர் அவ்விடம்விட்டுப் போகை
யில், [7]குருடர் இருவர் அவர் பின்னே சென்று,
ஆ தாவீதின் குமாரனே, எங்களுக்கு இரங்கும்
௨௮ என்று கூப்பிட்டார்கள்.-அவர் வீட்டிலே வந்த
பின்பு அந்தக் குருடர் அவரிடத்திற்கு வந்தார்
கள்; இயேசுவானவர் அவர்களை நோக்கி, இப்
படிச்செய்ய எனக்கு வல்லமை உண்டென்று
விசுவாசிக்கிறீர்களோ என்றார்; ஆண்டவரே,
௨௯ விசுவாசிக்கிறோம் என்றார்கள்.—அப்பொழுது
அவர் அவர்களுடைய கண்களைத் தொட்டு, உங்
கள் விசுவாசத்தின்படி உங்களுக்கு ஆகக்கட
௩௰ வது என்றார்.—உடனே அவர்களுடைய கண்
கள் திறக்கப்பட்டன; [8]பின்பு இயேசுவானவர்
அவர்களை நோக்கி, நீங்கள் இதை ஒருவனுக்கும்
அறிவிக்கவேண்டாம் என்று கட்டளையிட்டார்.-
அவர்களோ புறப்பட்டு, அத்தேசத்தில் எங்கும் ௩௧
[9]அவருடைய கீர்த்தியைப் பிரசித்தம்பண்ணி
னார்கள்.

[10]அவர்கள் புறப்பட்டுப்போகையில், பசாசு பி ௩௨
டித்திருந்த ஊமையனை அவரிடத்திற்குக் கொண்
டுவந்தார்கள்.—பசாசு துரத்தப்பட்டபின்பு ஊ ௩௩
மையன் பேசினான்; சனங்கள் ஆச்சரியப்பட்டு,
இப்படியாக இஸ்ரவேலருக்குள்ளே ஒருக்காலும்
காணப்பட்டதில்லை என்றார்கள்.—[11]பரிசேயர், ௩௪
இவன் பசாசுகளுடைய தலைவனாலே பசாசுக
ளைத் துரத்துகிறான் என்றார்கள்.

[12]பின்பு இயேசுவானவர் சகல பட்டணங்க ௩௫
ளையும் கிராமங்களையும் சுற்றி நடந்து, [13]செபஆல
யங்களிலே போதகம்பண்ணி, இராச்சியத்தைக்
குறித்துச் சுவிசேஷத்தைப் பிரசங்கித்து, சனங்க
ளுக்கு உண்டான எந்த வியாதியையும் எந்த நோ
யையும் நீக்கி அவர்களைக் குணமாக்கினார்.-[14]அப் ௩௬
பொழுது அவர் மிகுந்த சனங்களைப் பார்த்து,
மேய்ப்பனில்லாத ஆடுகளைப்போல அவர்கள்
†சோர்ந்துபோய்ச் சிதறப்பட்டவர்களாய் இருந்
தபடியால், [15]அவர்களைக்குறித்து மிகவும் மனது
ருகித் தம்முடைய சீஷர்களை நோக்கி, [16]அறுப்பு
மிகுதியாகவே இருக்கின்றது, வேலையாள்கள்
சிலர்மாத்திரம் இருக்கிறார்கள்.— [17]ஆதலால் ௩௭
அறுப்புக்கு எசமான் தமது அறுப்புக்கு வேலை
யாள்களை அனுப்பவேண்டும் என்று அவரை
வேண்டிக்கொள்ளுங்கள் என்றார்.

## ௰. அதிகாரம்.

௧. கிறிஸ்து தம்முடைய பன்னிரண்டு அப்போஸ்தலர்களுக்கும் அற்புதங்களைச் செய்யத்தக்க வல்லமையை அளித்தது, ௫. அவர்களுக்கு அதிகாரம் கொடுத்து அவர்களைப் படிப்பித்தது, ௰௬. அவர்களுக்கு வரப்போகிற துன்பங்களுக்கடுத்த ஆறுதலைச் சொல்லி, ௪௰. அவர்களை ஏற்றுக் கொள்ளுகிறவர்களுக்கு ஆசீர்வாதத்தை வாக்குத்தத்தம்பண்ணி அவர்களை அனுப்பினது.

அப்பொழுது [18]அவர் தம்முடைய பன்னிரண் ௧
டு சீஷர்களையும் தம்மிடத்தில் அழைத்து, அசுத்த
மான ஆவிகளைத்‡துரத்தவும், சகலவிதமான வியா
திகளையும் நோய்களையும் நீக்கவும் அவர்களுக்கு
அதிகாரம் கொடுத்தார்.—அந்தப் பன்னிரண்டு ௨
அப்போஸ்தலர்களின் நாமங்கள் என்னவெ
னில், [19]முந்தினவனாகிய பேதுருஎன்னப்பட்ட
சீமோன், அவனுடைய சகோதரனாகிய அந்தி
ரேயா, செபேதேயுவின் குமாரன் யாக்கோபு,
அவனுடைய சகோதரன் யோவான்,-பிலிப்பு, ௩
பருத்தோலோமேயு, தோமா, ஆயக்காரனான
மத்தேயு, அல்வேயின் குமாரன் யாக்கோபு,
ததேயு என்னும் மறுநாமமுள்ள இலேபேயு,—

1 மாற். ௫. ௨௨. ௴. லூக். ௮. ௪௧. ௴.—2 மாற். ௫.௨௫. லூக். ௮. ௪௩.—3 லூக். ௭. ௫௰: ௮. ௪௮: ௰௭. ௰௯: ௰௮. ௪௨.
4 மாற். ௫. ௩௮. லூக். ௮. ௫௧.
5 ௨ நாளா. ௩௫. ௨௫.
6 அப். ௨௰. ௰.—7 மத். ௰௫. ௨௨: ௨௰. ௩௰, ௩௧. மாற். ௰. ௪௭, ௪௮. லூக். ௰௮. ௩௮, ௩௯.
8 மத். ௮. ௪: ௰௨. ௰௬: ௰௭. ௯. லூக். ௫. ௰௪.—9 மாற். ௭. ௩௬.
10 மத். ௰௨. ௨௨. லூக். ௰௧. ௰௪.
11 மத். ௰௨. ௨௪. மாற். ௩. ௨௨. லூக். ௰௧. ௰௫.—12 மாற். ௬. ௬. லூக். ௰௩. ௨௨.—13 மத். ௪. ௨௩.
14 ௪. மோ. ௨௭. ௰௭. ௧ இரா. ௨௨. ௰௭. எசே. ௩௪. ௫. சகரி. ௰. ௨.
15 மாற். ௬. ௩௪.
16 லூக். ௰. ௨. யோவா. ௪. ௩௫.
17 ௨ தெச. ௩. ௧.
18 மாற். ௩. ௰௩,௰௫: ௬. ௭. லூக். ௯. ௰௩—௰௬: ௯. ௧.
19 யோவா. ௧. ௪௨.

* அல்லது இதைக்குறித்த கீர்த்தி.—† அல்லது தொய்ந்துகிடக்கிறவர்களாக.—‡ மேலாகவும்.

௪ [1]கானானியனாகிய சீமோன், இயேசுவைக் காட்
டிக்கொடுத்தவனான [2]யூதாஸ்காரியோத்து என்
னப்பட்டவர்களே.
௫ இயேசுவானவர் அந்தப் பன்னிருவரையும்
அனுப்பி அவர்களுக்குக்கட்டளையிட்டுச்சொன்
னதாவது: [3]நீங்கள் புறத்தேசத்தாரிடத்திற்குப்
௬ போகாமலும்,—[4]சாமாரியருடைய பட்டணங்க
ளில் பிரவேசியாமலும், காணாமல்போன [5]ஆடுக
ளாயிருக்கிற [6]இஸ்ரவேல் குடும்பத்தாரிடத்திற்
௭ குப் [7]புறப்பட்டுப்போய்,—[8]பரலோக இராச்சி
௮ யம் சமீபமாய் வந்ததென்று கூறி,—வியாதிப்பட்
டவர்களைக் குணமாக்கி, குஷ்டரோகிகளைச் சுத்
தம்பண்ணி, மரித்தோரை எழுப்பி, பசாசுகளைத்
துரத்துங்கள். [9]நீங்கள் இலவசமாய்ப் பெற்றுக்
கொண்டீர்கள்; இலவசமாய்க் கொடுங்கள்.—
௯ [10]நீங்கள் கச்சைகளில் பொன்னையாவது, வெள்
ளியையாவது, செம்பையாவது, வழிக்காகப்
பையையாவது, இரண்டு அங்கிகளையாவது, பாத
ரட்சைகளையாவது, தடியையாவது [11]உங்களுக்
௰ காகத் *தேடிவைக்கவேண்டாம்.—[12]வேலைசெய்
கிறவன் தனக்கு வேண்டிய ஆகாரத்தைப் பெ
றும்படிக்குப் பாத்திரவானாய் இருக்கிறானே.—
௰௧ [13]அல்லாமலும் எந்தப் பட்டணத்திலும் கிராமத்
திலும் நீங்கள் பிரவேசிக்கும்பொழுது, அதிலே
இருக்கிற பாத்திரவான் இன்னான் என்று விசா
ரித்துக்கொண்டு, நீங்கள் புறப்படுமளவும் அவ
௰௨ னிடத்தில் இருங்கள்.—அந்த வீட்டுக்குள் பிரவே
சிக்கிறபொழுது, நீங்கள் அதில் இருக்கிறவர்
௰௩ களை வாழ்த்திக்கொள்ளுங்கள்.—[14]அந்தக் குடும்
பத்தார் [15]பாத்திரவான்களாய் இருந்தால், நீங்கள்
அவர்களுக்குச் சொன்ன சமாதானம் அவர்க
ளைச் சேரக்கடவது; பாத்திரவான்கள் அல்லா
திருந்தால், அந்த வாழ்த்துதல் உங்களிடமாய்த்
௰௪ திரும்பக்கடவது.—[16]எங்கேயாகிலும் அவர்கள்
உங்களை அங்கீகரித்துக்கொள்ளாமலும் உங்கள்
வசனங்களுக்குச் செவிகொடாமலும் இருந்
தால், நீங்கள் அந்த வீட்டையாவது பட்டணத்
தையாவது விட்டுப் புறப்படுகையில், உங்கள்
௰௫ [17]கால்களிலுள்ள தூளை உதறிப்போடுங்கள்.—நி
யாயத்தீர்ப்புநாளிலே சோதோம் கொமொருதே
சத்தைப்பார்க்கிலும் [18]அந்தப் பட்டணத்திற்கு
அதிக தண்டனை கிடைக்கும் என்று மெய்யாக
௰௬ வே உங்களுக்குச் சொல்லுகிறேன்.—[19]பாருங்
கள், ஆடுகளை ஓனாய்களுக்குள்ளே (அனுப்புகிற
துபோல) உங்களை அனுப்புகிறேன்; [20]ஆகை
யால் நீங்கள் பாம்புகளைப்போல் விவேகமுள்ள
வர்களாயும், [21]புறாக்களைப்போல் †கபடமில்லா
தவர்களாயும் இருக்கவேண்டும்.— அப்படியே ௰௭
நீங்கள் மனிதர்களிடத்தில் சாவதானமாயிருங்
கள்; [22]என்னத்தினாலெனில், உங்களைப் பெரிய
சங்கத்தாருக்கு ஒப்புக்கொடுத்து, தங்கள் [23]ஆல
யங்களிலே உங்களை வாரினால் அடிப்பார்கள்.—
[24]என்நிமித்தம் நீங்கள் துரைகளிடத்திற்கும் இரா ௰௮
சாக்களிடத்திற்கும் கொண்டுபோகப்பட்டு, அ
வர்களுக்கும் புறத்தேசத்தாருக்கும் முன்பாகச்
சாட்சிகளாயிருப்பீர்கள்.—[25]அவர்கள் உங்களை ௰௯
ஒப்புக்கொடுக்கும்பொழுது, நீங்கள் பேசவேண்
டுவது அந்நேரத்திலே உங்களுக்கு அருளிச்செய்
யப்படும்; [26]ஆகையால் எப்படி, எதைப் பேசு
வோம் என்று கவலைப்படாதிருங்கள்.—[27]பேசு ௨௰
கிறவர்கள் நீங்களல்ல, உங்கள் பிதாவின் ஆவி
யானவர் உங்களில் இருந்து பேசுகிறவர்.—[28]அ ௨௰௧
ல்லாமலும் சகோதரன் தன் சகோதரனையும்,
தகப்பன் தன் பிள்ளையையும் மரணத்திற்கு ஒப்
புக்கொடுப்பார்கள்; தாய் தகப்பன்மாரைப் பிள்
ளைகள் விரோதித்து, அவர்கள் மரணம் அடையும்
படிக்குச் செய்விப்பார்கள். — [29]என்னுடைய ௨௰௨
நாமத்தின்நிமித்தம் நீங்கள் எல்லாராலும் பகைக்
கப்படுவீர்கள்; [30]ஆகிலும் முடிவுபரியந்தம் நிலை
த்திருக்கிறவனே இரட்சிக்கப்படுவான்.—[31]அல் ௨௰௩
லாமலும் மனிதனுடைய குமாரன் வரும்வரைக்
கும், நீங்கள் இஸ்ரவேலருடைய பட்டணங்
களை எல்லாம் ‡கடந்துபோய் வரமாட்டீர்களெ
ன்று மெய்யாகவே உங்களுக்குச் சொல்லுகிறே
ன்; [32]ஆதலால் ஒரு பட்டணத்திலே உங்களைத்
துன்பப்படுத்தினால், மறுபட்டணத்திற்கு ஓடிப்
போங்கள். — [33]சீஷனானவன் போதகனிலும், ௨௰௪
அடிமைப்பட்டவன் தன் எசமானிலும் மேற்
பட்டவர்கள் அல்ல.—சீஷன் தன் போதகனைப் ௨௰௫
போலவும், அடிமைப்பட்டவன் தன் எசமா
னைப்போலவும் இருக்கிறது அவர்களுக்குப்
போதுமே; [34]வீட்டெசமானைப் பெயேல்செபூல்
என்று அவர்கள் சொல்லுவார்களானால், அவரு
டைய வீட்டாரை அதிகமாய் அப்படிச் சொல்
வார்கள் அல்லவா? ஆதலால் அவர்களுக்குப்
பயப்படாதிருப்பீர்களாக. — [35]வெளியாக்கப்ப ௨௰௬
டாத மறைபொருள் இல்லை; அறியப்படாத
இரகசியமும் இல்லை.—நான் உங்களுக்கு இரு ௨௰௭

1 லூக். ௬. ௰௫. அப். ௧. ௰௩.
2 யோவா. ௰௩. ௨௬.
3 மத். ௪. ௰௫.—4 ௨ இரா. ௰௭. ௨௪. யோவா. ௪. ௯, ௨௰.
5 ஏசா. ௫௩. ௬. எரே. ௫௰. ௬, ௰௭. எசே. ௩௪. ௫, ௬, ௰௬. ௧ பே. ௨. ௨௫.
6 மத். ௰௫. ௨௪. அப். ௰௩. ௪௬.
7 லூக். ௯. ௨.—8 மத். ௩. ௨: ௪. ௰௭. லூக். ௰. ௯.
9 அப். ௮. ௰௮, ௨௰.
10 ௧ சாமு. ௯. ௭. மாற். ௬. ௮. லூக். ௯. ௩: ௰. ௪: ௨௨. ௩௫.
11 மாற். ௬. ௮.—12 லூக். ௰. ௭. ௧ கொரி. ௯. ௭. ௧ தீமோ. ௫. ௰௮.—13 லூக். ௰. ௮.
14 லூக். ௰. ௫.—15 சங். ௩௫. ௰௩.
16 மாற். ௬. ௰௧. லூக். ௯. ௫: ௰. ௰.
17 லூக். ௰. ௰௨. நெகே. ௫. ௰௩. அப். ௰௩. ௫௧: ௰௮. ௬.
18 மத். ௰௧. ௨௨, ௨௪.
19 லூக். ௰. ௩.—20 உரோ. ௰௬. ௰௯. எபே ௫. ௰௫.—21 ௧ கொரி. ௰௪. ௨௰. பிலி. ௨. ௰௫.
22 மத். ௨௪. ௯. மாற். ௰௩. ௯. லூக். ௰௨. ௰௧: ௨௧. ௰௨.
23 அப். ௫. ௪௰.—24 அப். ௰௨. ௧: ௨௪. ௰: ௨௫. ௭, ௨௩. ௨ தீமோ. ௪. ௰௬.—25 ௨ மோ. ௪. ௰௨. எரே. ௧. ௭.—26 மாற். ௰௩. ௰௧. லூக். ௰௨. ௰௧. ௨௧. ௰௪.
27 ௨ சாமு. ௨௩. ௨. லூக். ௨௧. ௰௫. அப். ௪. ௮: ௬. ௰. ௨ தீமோ. ௪. ௰௭.—28 ௩௫, ௬. வச. மீகா. ௭. ௬. லூக். ௨௧. ௰௬.
29 லூக். ௨௧. ௰௭.
30 தானி. ௰௨. ௰௨, ௰௩. மத் ௨௪. ௰௩. மாற். ௰௩. ௰௩.
31 மத். ௰௬. ௨௮.—32 மத். ௨. ௰௩: ௪. ௰௨: ௰௨. ௰௫. அப். ௮. ௧: ௯. ௨௫: ௰௪. ௬.
33 லூக். ௬. ௪௰. யோவா. ௰௩. ௰௬: ௰௫. ௨௰.—34 மத். ௰௨. ௨௪. மாற். ௩. ௨௨. லூக். ௰௧. ௰௫. யோவா. ௮. ௪௮, ௫௨.
35 மாற். ௪. ௨௨. லூக். ௮. ௰௭: ௰௨. ௨, ௩.

* எடுத்துக்கொள்ளவேண்டாம்.—† அல்லது தீங்கற்றவர்களாய்.—‡ அந்தங்களுக்குப்போய்.

ளிலே சொல்லுகிறதை நீங்கள் வெளிச்சத்தில்
சொல்லுங்கள்; நீங்கள் இரகசியமாய்க் கேட்கிற
தை மேடைகளிலிருந்து பிரசித்தம் செய்யுங்
௨௮ கள். — [1]அல்லாமலும் ஆத்துமாவைக் கொலை
செய்யத் திராணியில்லாமல், சரீரத்தைமாத்திரம்
கொலைசெய்கிறவர்களுக்கு நீங்கள் பயப்பட
வேண்டாம்; ஆத்துமாவையும் சரீரத்தையும் நர
கத்திலே கெடுக்க வல்லவருக்குப் பயப்படுங்
௨௯ கள்.—*ஒரு காசுக்கு இரண்டு அடைக்கலான்
குருவிகளை விற்கிறார்கள் அல்லவோ? ஆகிலும்
உங்கள் பிதாவின் உத்தரவில்லாமல்அவைகளில்
௩௰ ஒன்றும் தரையிலே விழாது. — [2]அல்லாமலும்
உங்கள் தலையின மயிரெல்லாம் எண்ணப்பட்
௩௧ டிருக்கின்றன.—ஆதலால் பயப்படாதிருங்கள்,
அநேகம் அடைக்கலான் குருவிகளைப்பார்க்கி
௩௨ லும் நீங்கள் மேன்மையாயிருக்கிறீர்கள்.—[3]அப்
படியிருக்க, மனிதர்களுக்கு முன்பாக என்னை
அறிக்கைபண்ணுகிறவன் எவனோ, அவனை [4]நா
௩௩ னும் பரமண்டலங்களில் இருக்கிற என் பிதா
முன்பாக அறிக்கைபண்ணுவேன். — [5]மனிதர்
முன்பாக என்னை மறுதலிக்கிறவன் எவனோ,
அவனை நானும் பரமண்டலங்களில் இருக்கிற
என் பிதாவுக்கு முன்பாக மறுதலிப்பேன். —
௩௪ [6]பூமியின்மேல் சமாதானத்தை வரப்பண்ண
வந்தேன் என்று எண்ணிக்கொள்ளாதிருங்கள்;
சமாதானத்தை அல்ல, சண்டையை வரப்
௩௫ பண்ண வந்தேன்.—எப்படியெனில், குமாரன்
தன் தகப்பனையும், மகள் தன் தாயையும், மரும
கள் [7]தன் மாமியையும் விட்டுப் பிரிந்து போகப்
௩௬ பண்ணவந்தேன். — [8]அப்படி ஒரு மனிதனு
டைய குடும்பத்தாரே அவனுக்குச் சத்துருக்க
௩௭ ளாயிருப்பார்கள். — [9]என்னிலும் தகப்பனையா
வது தாயையாவது அதிகமாய்ச் சிநேகிக்கிறவன்
எனக்குப் பாத்திரன் அல்ல; என்னிலும் மகனை
யாவது மகளையாவது அதிகமாய்ச் சிநேகிக்கிற
௩௮ வன் எனக்குப் பாத்திரன் அல்ல.—[10]அல்லாம
லும் தன் சிலுவையை எடுத்துக்கொண்டு என்
பின்னே செல்லாதவன் எனக்குப் பாத்திரன்
௩௯ அல்ல.—[11]தன் சீவனைக் காக்கிறவன் அதை இழந்
துபோவான்; என் நிமித்தம் தன் சீவனை இழக்
கிறவன் அதைக் காப்பான்.

௪௰ [12]உங்களைச் சேர்த்துக்கொள்ளுகிறவன் என்
னைச் சேர்த்துக்கொள்ளுகிறான்; என்னைச் சேர்த்
துக்கொள்ளுகிறவன் என்னை அனுப்பினவரைச்
௪௧ சேர்த்துக்கொள்ளுகிறான்.—[13]தீர்க்கதரிசி என்கிற
நாமத்தின் நிமித்தம் ஒரு தீர்க்கதரிசியை ஏற்றுக்
கொள்ளுகிறவன் தீர்க்கதரிசிக்குரிய பலனை
அடைவான்; நீதிமான் என்கிற நாமத்தின் நிமித்
தம் நீதிமானை ஏற்றுக்கொள்ளுகிறவன் நீதிமா
னுக்குரிய பலனை அடைவான்.—[14]இந்தச் சிறிய ௪௨
வர்களில் ஒருவன் சீஷனாயிருக்கிறதின் நிமித்
தம் அவனுக்கு ஒரு கலயம் தண்ணீர்மாத்திரம்
தாகத்துக்குக் கொடுக்கிறவன் தன் பலனை இழந்
துபோகான் என்று மெய்யாய் உங்களுக்குச்
சொல்லுகிறேன் என்றார்.

## ௰௧. அதிகாரம்.

௨. யோவான் தன்னுடைய சீஷர்களைக் கிறிஸ்தவண்டைக்கு அனுப்பி
னது ௭. யோவானைக்குறித்துக் கிறிஸ்து பகர்ந்த சாட்சி. ௰௬. யோவா
னையும் கிறிஸ்துவையுங்குறித்த சனங்களுடைய தாற்பரியம். ௨௰. கோரா
சின், பெத்சாயிதா, கப்பர்நாகூம் என்ற பட்டணங்களுடைய மனந்திரும்பா
மையையும் குணப்படாமையையும் குறித்துக் கிறிஸ்து கண்டித்தது,
௨௫. சுவிசேஷத்தைப் பேதமையுள்ளவர்களுக்கு அறிவிக்கிறதிலே
தோன்றுகிற தம்முடைய பிதாவின் ஞானத்தைப் புகழ்ந்தது, ௨௮. பா
வச்சுமையை உணர்ந்தவர்கள் யாவரையும் தம்மிடத்தில் வரும்படி
அழைத்தது.

இயேசுவானவர் தம்முடைய பன்னிரண்டு ௧
சீஷருக்கும் கட்டளைகொடுத்து முடித்தபின்பு,
அவர்களுடைய பட்டணங்களில் உபதேசம்
பண்ணிப் பிரசங்கிக்கும்படிக்கு அவ்விடம்
விட்டுப் புறப்பட்டார்.

[15]அத்தருணத்திலே காவலில் இருந்த யோ ௨
வான் கிறிஸ்துவின் [16]கிரியைகளைக் கேள்விப்
பட்டு, தன் சீஷரில் இரண்டுபேரை அழைத்து,—
[17]நீங்கள் போய் அவரை நோக்கி, வருகிறவர் ௩
நீர்தாமோ, அல்லது வேறொருவர் வரக்காத்
திருக்கவேண்டுமோ என்று கேளுங்களென்று
சொன்னான்.—அவர்கள் அப்படியே வந்து கேட் ௪
டபொழுது இயேசுவானவர் அவர்களுக்கு மா
றுத்தரமாகச் சொன்னதாவது: நீங்கள் கேட்டும்
கண்டும் இருக்கிறவைகளை யோவானுக்குப்
போய் அறிவியுங்கள்.—என்னவெனில், [18]என் ௫
னாலே குருடர் பார்வை அடைகிறார்கள்; சப்பா
ணிகள் நடக்கிறார்கள்; குஷ்டரோகிகள் சுத்தம்
அடைகிறார்கள்; செவிடர் கேட்கிறார்கள்; மரித்
தோர் எழுந்திருக்கிறார்கள்; [19]எளியவர்களுக்குச்
சுவிசேஷம் பிரசங்கிக்கப்படுகின்றது.—அல்லா ௬
மலும் என்னைக்குறித்து [20]இலச்சை அடையா
திருக்கிறவன் பாக்கியவான் என்று சொல்லி
அவர்களை அனுப்பினார்.

அவர்கள் போனபின்பு இயேசுவானவர் சனங் ௭
களை நோக்கி, [21]யோவானைக்குறித்துச் சொன்ன
தாவது: நீங்கள் வனாந்தரத்திலே எதைப்பார்க்கப்
புறப்பட்டீர்கள்; [22]காற்றினால் அடித்து அசைக்

1 ஏசா. அ. ௰௨, ௰௩. லூக். ௰௨. ௪. ௧ பே. ௩. ௰௪.—2 ௧ சாமு. ௰௪. ௪௫. ௨ சாமு. ௰௪. ௰௧. லூக். ௨௧. ௰௮. அப். ௨௭. ௩௪.
3 லூக். ௰௨. ௮. ௨ ரோ. ௰. ௯, ௰.
4 லூக். ௰௨. ௮. வெளி. ௩. ௫.
5 மாற். ௮. ௩௮. லூக். ௯. ௨௬. ௨ தீமோ. ௨. ௰௨.—6 லூக். ௰௨. ௪௯, ௫௧, ௫௩.
7 மீகா. ௭. ௬.—8 சங். ௪௧. ௯: ௫௫. ௰௨, ௰௩. மீகா. ௭. ௬. யோவா. ௰௩. ௰௮.
9 லூக் ௰௪. ௨௬.—10 மத். ௰௬. ௨௪. மாற். ௮. ௩௪. லூக். ௯. ௨௩: ௰௪. ௨௭.—11 மத். ௰௬. ௨௫. லூக். ௰௭. ௩௩. யோவா. ௰௨. ௨௫.
12 மத். ௰௮. ௫. லூக். ௯. ௪௮: ௰. ௰௬. யோவா. ௰௨. ௪௪: ௰௩. ௨௰. கலா. ௪. ௰௪.—13 ௧ இரா. ௰௭. ௰: ௰௮. ௪. ௨ இரா. ௪. ௮.—14 மத். ௰௮. ௫. ௨௫. ௪௰. மாற். ௯. ௪௧. எபி. ௬. ௰.—15 மத் ௰௪. ௩.
16 லூக். ௭. ௰௮. ௧௯.—17 ஆதி. ௪௯. ௰. ௪ மோ. ௨௪. ௰௭. தானி. ௯. ௨௪. யோவா. ௬. ௰௪.
18 ஏசா. ௨௯. ௰௮: ௩௫. ௫, ௬: ௪௨. ௭. யோவா. ௨. ௨௩: ௩. ௨: ௫. ௩௬: ௰. ௨௫: ௰௪. ௰௧.
19 சங். ௨௨. ௨௬. ஏசா. ௬௧ ௧. லூக். ௪ ௰௮. யாக். ௨. ௫.
20 ஏசா. அ. ௰௪, ௰௫. மத். ௰௩. ௫௭: ௨௪. ௰: ௨௬. ௩௧. ௨ ரோ. ௯. ௩௩. ௧ கொரி. ௧. ௨௩: ௨. ௰௪. கலா. ௫. ௰௧. ௧ பே. ௨. ௮.
21 லூக். ௭. ௨௪.
22 எபே. ௪. ௰௪.

* மூலபாஷையிலே இது உரோமர்களுடைய பணத்தில் பத்தில் ஒரு பங்காகிய மூன்று துட்டும் ஒன்றரைக் காசுமாம்; மத். ௰௮. ௨௮.

௮ தப்படுகிற நாணலையோ? — அல்லது எதைப்
பார்க்கப் புறப்பட்டீர்கள்? மெல்லிய வஸ்தி
ரங்களைத் தரித்திருக்கிற மனிதனையோ? மெல்
லிய வஸ்திரங்களை உடுத்திருக்கிறவர்கள் அரசர்
௯ மாளிகைகளில் இருக்கிறார்கள். — அல்லது
எதைப்பார்க்கப் புறப்பட்டீர்கள்? [1]தீர்க்கதரிசி
யையோ? ஆம், தீர்க்கதரிசியிலும் அதிக மேன்
மையுள்ளவனையே என்று உங்களுக்குச் சொல்
௰ லுகிறேன்.—[2]அதெப்படியெனில், இதோ நான்
என்னுடைய தூதனை உமக்குமுன்பாக அனுப்பு
கிறேன்; அவன் உமக்கு முன்னே உம்முடைய
மார்க்கத்தைச் செம்மைபண்ணுவான் என்று
ஒருவனைக்குறித்து எழுதியிருக்கின்றதே, அவன்
௰௧ இவன்தான். — அல்லாமலும் ஸ்திரிகளிடத்தில்
பிறந்தவர்களில் யோவான்ஸ்நானனிலும் பெரி
யவன் ஒருவனும் எழும்பவில்லை என்று மெய்
யாய் உங்களுக்குச் சொல்லுகிறேன்; ஆகிலும்
பரலோக இராச்சியத்திலே சிறியவனானவன்
௰௨ அவனிலும் பெரியவனாயிருக்கிறான்.—[3]அல்லா
மலும் யோவான்ஸ்நானன் தோன்றின காலம்
முதற்கொண்டு இதுவரைக்கும் பரலோக இராச்
சியம் *பலவந்தப்படுகின்றது; பலவந்தம்பண்
ணுகிறவர்கள் அதைப் பிடித்துக்கொள்ளுகி
௰௩ றார்கள்.—[4]நியாயப்பிரமாணமும் தீர்க்கதரிசிகள்
யாவரும் அதை யோவான்வரைக்கும் தீர்க்க
௰௪ தரிசனமாய் அறிவித்தார்கள்.—[5]நீங்கள் ஒத்துக்
கொள்ள மனதிருந்தால், வருபவனாகிய எலியா
௰௫ இவன்தான். — [6]கேட்கிறதற்குக் காதுள்ளவன்
கேட்கக்கடவன்.

௰௬ [7]இந்தச் சந்ததியை யாருக்கு நிகர்சொல்லு
வேன்? சந்தைகளில் உளுக்காந்து தங்கள் தோ
௰௭ ழரை நோக்கி,—உங்களுக்காக ஊதினோம், நீங்
கள் கூத்தாடவே இல்லை; உங்களுக்காகப் புலம்
பினோம், நீங்கள் மார்பில் அடிக்கவே இல்லை
என்று சொல்லிக் கூப்பிடுகிற பிள்ளைகளுக்கு
௰௮ ஒப்பாயிருக்கிறார்கள்.–எப்படியென்றால், யோ
வான் வந்து போசனபானம்பண்ணாமல் இருந்
தான்; பசாசைக்கொண்டிருக்கிறான் என்றார்
௰௯ கள்.—[8]மனிதனுடைய குமாரன் வந்து போசன
பானம்பண்ணுகிறான்; இதோ, பெருந்தீனிக்கா
ரன் என்றும், குடிக்கிறவன் என்றும், ஆயக்கார
ருக்கும் பாவிகளுக்கும் சிநேகிதன் என்றும்
சொல்லுகிறார்கள்; [9]ஆனாலும் ஞானமானது தன்
பிள்ளைகளாலே நீதியாய் எண்ணப்படும் என்
றார்.

௨௰ [10]அப்பொழுது அவர் தமது பலத்த செய்கை
களில் அநேகங்களைக் கண்ட பட்டணத்தார்
மனந்திரும்பாமல் இருந்தபடியினாலே அவர்க
ளைக் கடிந்துகொள்ளத்தொடங்கிச்சொன்னதாவ
து:—ஐயோ! கோராசின் பட்டணத்தாரே, உங் ௨௧
களுக்கு வேதனைவரும்; ஐயோ! பெத்சாயிதா
பட்டணத்தாரே, உங்களுக்கும் வேதனைவரும்;
உங்களுக்குள்ளே நடந்த பலத்த செய்கைகள்
தீருசீதோன் பட்டணத்தாருக்குள்ளேநடந்திருந்
தால், அவர்கள் சீக்கிரமாய் [11]இரட்டை உடுத்திச்
சாம்பலில் உளுக்காந்து மனந்திரும்பியிருப்
பார்கள். — [12]ஆதலால் நியாயத்தீர்ப்புநாளிலே ௨௨
அவர்களைப்பார்க்கிலும் நீங்களே அதிக தண்டிப்
பை அடைவீர்கள் என்று உங்களுக்குச் சொல்
லுகிறேன். — [13]வானபரியந்தம் உயர்ந்த கப்பர் ௨௩
நாகூம் பட்டணத்தாரே, ஐயோ! பாதாளபரியந்
தம் தாழ்த்தப்படுவீர்கள் உங்களுக்குள்ளே நட
ந்த பலத்த செய்கைகள் சோதோம் பட்டணத்
தாருக்குள்ளே நடந்திருந்தால், அவர்களுடைய
பட்டணம் இந்நாள்வரைக்கும் இருக்குமே.—
[14]ஆதலால் நியாயத்தீர்ப்புநாளிலே அவர்களுக்கு ௨௪
வரும் தண்டிப்பு எளிதாயிருக்கும்; நீங்களே
அதிக தண்டிப்பை அடைவீர்கள் என்று உங்க
ளுக்குச் சொல்லுகிறேன் என்றார்.

அக்காலத்திலே [15]இயேசுவானவர் சொன்ன ௨௫
தாவது: பிதாவே, வானத்தையும் பூமியையும்
ஆளுகிறவரே, [16]நீர் இவைகளை (லோக) ஞானிக
ளுக்கும் கல்விமான்களுக்கும் மறைத்துக் [17]குழந்
தைகளுக்கு வெளிப்படுத்தினபடியினாலே உம்
மைத் துதிக்கிறேன்.—ஆ பிதாவே, இப்படியே ௨௬
உமக்குப் பிரியமாயிருந்தது என்றார். — [18]அல் ௨௭
லாமலும் சகலமும் என் பிதாவினாலே எனக்கு
ஒப்புக்கொடுக்கப்பட்டிருக்கின்றன; பிதாதவிர
மற்றொருவனும் குமாரனை அறியான்; [19]குமா
ரன்தவிர மற்றொருவனும் பிதாவை அறியான்;
மேலும் எவனுக்குக் குமாரன் அவரை வெளிப்ப
டுத்தச் சித்தமாயிருக்கிறாரோ, அவனும் பிதாவை
அறிவான். — வருத்தப்பட்டுப் பாரம் சுமந்து ௨௮
கொள்ளுகிறவர்களாகிய நீங்கள் எல்லாரும் என்
னிடத்தில் வாருங்கள், நான் உங்களுக்கு ஆறு
தல் செய்வேன்.—[20]நான் சாந்தமாயும் மனத்தாழ் ௨௯
மையாயும் இருக்கிறபடியினாலும், [21]நான் வைக்
கிற நுகத்தடி மெதுவாயும், நான் எற்றுகிற சுமை
இலேசாயும் இருக்கிறபடியினாலும், — நீங்கள் ௩௰
[22]என்னுடைய நுகத்தடியை எற்றுக்கொண்டு
என்னிடத்தில் கற்றுக்கொள்ளுங்கள்; அப்பொ
ழுது உங்கள் [23]ஆத்துமாக்களுக்கு ஆறுதல் கிடை
க்கும் என்றார்.

## ௰௨. அதிகாரம்.

௧. ஓய்வுநாளின் மீறுதலைக்குறித்துப் பரிசேயர்களுடைய குற்றச்சாட்டைத், ௩. வேதத்திலும், ௯. நியாயத்திலும், ௰௩. ஒரு அற்புதத்திலும் கிறிஸ்து கடிந்துகொண்டது. ௨௨. அவர் பசாசு பிடித்த

1 மத். ௰௪. ௫: ௨௧. ௨௬. லூக். ௧. ௭௬: ௭. ௨௬.—2 மல்கி. ௩. ௧. மாற். ௧. ௨. லூக். ௧. ௭௬: ௭. ௨௭.
3 லூக் ௰௬. ௰௬.—4 மல்கி. ௪. ௬.
5 மல்கி. ௪. ௫. லூக். ௧. ௰௭. மத். ௰௭. ௰௨.
6 மத். ௰௩. ௯. லூக். ௮. ௮. வெளி. ௨. ௭, ௰௧, ௰௭, ௨௯: ௩. ௬, ௰௩, ௨௨.
7 லூக். ௭. ௩௧.
8 மத். ௯. ௰.—9 லூக். ௭ ௩௫.
10 லூக். ௰. ௰௩. ஷ.—11 யோனா. ௩. ௭. ௮.—12 மத். ௰. ௰௫: ௨௪. ௨௪.
13 ஏசா. ௰௪. ௰௩, ௰௪, ௰௫. புல. ௨. ௧.
14 மத். ௰. ௰௫.—15 லூக் ௰. ௨௧.
16 சங். ௮. ௨. ௧ கொரி. ௧. ௰௯, ௨௭: ௨. ௮. ௨ கொரி. ௩. ௰௪.
17 மத். ௰௬. ௰௭.—18 ௨௮. ௰௮. லூக். ௰. ௨௨. யோவா. ௩. ௩௫: ௰௩. ௩: ௱௭. ௨. ௧ கொரி. ௰௫. ௨௭.
19 யோவா. ௧. ௰௮: ௬. ௪௬: ௰. ௰௫.
20 சகரி. ௯. ௯. பிலி. ௨. ௭, ௮.
21 ௧ யோ. ௫. ௩.—22 யோவா. ௰௩. ௰௫. பிலி. ௨. ௫. ௧ பே. ௨. ௨௧. ௧ யோ. ௨. ௬.—23 எரே. ௬. ௰௬.

*அல்லது பலபந்தத்திலே பெற்றுக்கொள்ளப்படுகிறது.

குருடும் ஊமையுமான ஒரு மனுஷனைக் குணமாக்கினது. ௩௧. பரிசுத்த ஆவிக்கு விரோதமாய்ச் செய்யப்படும் தூஷணம் மன்னிக்கப்படுவதில்லை என்பது. ௩௬. வீண் வார்த்தைகளுக்கும் நியாயத்தீர்ப்பு கேட்கப்படும் என்பது. ௩௮. ஒரு அடையாளத்தைக் கேட்ட அவிசுவாசிகளை அவர் கடிந்துகொண்டு, ௪௬. அவர் தமமுடைய சகோதரனும் சகோதரியும் தாயும் இன்னாரென்று காண்பித்தது.

௧ [1]அக்காலத்தில் ஓய்வுநாளிலே இயேசுவான
வர் பயிர்வழியே போனார்; அப்பொழுது அவ
ருடைய சீஷர் பசியாயிருந்தபடியினாலே கதிர்
களைக் கொய்து சாப்பிடத்தொடங்கினார்கள்.—
௨ அதைக் கண்டபரிசேயர்அவரைநோக்கி,இதோ,
ஓய்வுநாளில் செய்யத்தகாததை உம்முடைய
௩ சீஷர்கள் செய்கிறார்கள் என்றார்கள் — அவர்
களுக்கு அவர் சொன்னதாவது: [2]தாவீதும் அவ
னோடிருந்தவர்களும் பசியாயிருந்தபொழுது,—
௪ அவன் தேவாலயத்தில் பிரவேசித்து, [3]ஆசாரிய
ரேயன்றித் தானும் தன்னோடிருந்தவர்களும் சாப்
பிடத்தகாத [4]தேவசமுகத்தப்பங்களைச் சாப்
பிட்டான் என்று நீங்கள் வாசிக்கவில்லையா?—
௫ [5]அல்லது ஆசாரியரானவர்கள் தேவாலயத்திலே
ஓய்வுநாள்களில் ஓய்ந்திராமல் வேலைசெய்தும்
குற்றமில்லாதிருக்கிறார்கள் என்று நீங்கள் வே
௬ தத்திலே வாசிக்கவில்லையா?—[6]தேவாலயத்திலும்
பெரியவர் இங்கே இருக்கிறார் என்று உங்களுக்
௭ குச் சொல்லுகிறேன்.—[7]மேலும் பலியிலும் இரக்
கத்தை விரும்புகிறேன் என்கிற (வாக்கியத்தின்
கருத்தை) நீங்கள் அறிந்தீர்களானால் குற்றமில்
லாத இவர்களை நீங்கள் குற்றப்படுத்தமாட்டீர்
௮ கள்.—அல்லாமலும் மனிதனுடைய குமாரனான
வர் ஓய்வுநாளைக்குறித்தும் கர்த்தராயிருக்கிறார்
என்றார்.
௯ [8]பின்பு அவர் அவ்விடம்விட்டுப் போய் அவர்
களுடைய செபஆலயத்தில் பிரவேசித்தார். —
௰ [9]அங்கே சூம்பின கையையுடைய மனிதன் ஒரு
வன் இருந்தான்; அப்பொழுது அவர்கள் அவர்
மேல் குற்றஞ்சாற்றும்படிக்கு அவரை நோக்கி,
ஓய்வுநாளில் சுகமாக்குகிறது நியாயமா என்று
௰௧ கேட்டார்கள்.—[10]அவர் சொன்னது: உங்களில்
எவனாலும் தன் ஆடு ஓய்வுநாளில் ஒரு குழியி
லே விழுந்தால் அதைப் பிடித்துத் தூக்கிவிடு
௰௨ வான் அல்லவா?—ஆட்டிலும் மனிதனானவன்
மிகவும்மேன்மையாயிருக்கிறான்; ஆதலால் ஓய்வு
நாளிலே நன்மைசெய்கிறது நியாயந்தான் என்று
சொல்லிப் பின்பு அந்த மனிதனை நோக்கி,—
௰௩ உன் கையை நீட்டு என்றார்; அவன் நீட்டினான்;
உடனே அது மறுகையைப்போலவே சுகமா
௰௪ யிற்று.—[11]அப்பொழுது பரிசேயர் புறப்பட்டுப்
போய், அவரைச் சங்கரிக்கும்படிக்கு யோசனை
பண்ணிக்கொண்டார்கள்.

[12]அதை இயேசுவானவர் அறிந்து, அவ்விடம் ௰௫
விட்டுப் போனார்; [13]அப்பொழுது அநேக சனங்
கள் அவர் பின்னே சென்றார்கள்.—எல்லாரையும் ௰௬
அவர் குணமாக்கிப் [14]பின்பு தம்மைப் பிரசித்தம்
பண்ணாதபடிக்கு அவர்களுக்குக் கட்டளையிட்
டார். — அதினாலே இதோ, [15]நான் தெரிந்து ௰௭
கொண்ட ஊழியக்காரன், எனக்கு அன்பான
வர், [16]என் ஆத்துமாவுக்குப் பிரியமானவர்; இவ
ரிடத்திலே என்னுடைய ஆவி இருக்கச்செய்
வேன்; இவர் நியாயமானதை உலகத்தாருக்கு
அறிவிப்பார்;—சண்டைபண்ணாமலும் கூக்குரல் ௰௮
பண்ணாமலும் இருப்பார்; இவருடைய சத்தம்
வீதிகளில் ஒருவராலும் கேட்கப்படுவதில்லை.—
நியாயமானது செயமாயிருக்கும்படி செய்கிறவ ௰௯
ரைக்கும் இவர் நெரிந்திருக்கிற நாணலை முறியா
மலும், மங்கி எரிகிற திரியை அணையாமலும் இ
ருப்பார்.—இவருடைய நாமத்தின்மேலே புறத் ௨௰
தேசத்தார் நம்பிக்கையாயிருப்பார்கள் என்று,—
எசாயா தீர்க்கதரிசி உரைத்த வசனம் நிறைவே ௨௧
றிற்று.

[17]அப்போது பசாசுபிடித்த குருடும் ஊமையு ௨௨
மான ஒருவன் அவரிடத்தில் கொண்டுவரப்பட்
டான்; குருடும் ஊமையுமானவன் பேசவும்
காணவும்தக்கதாக அவனைக் குணமாக்கினார்.—
சனங்கள் எல்லாரும் பிரமித்து, இவர் தாவீதின் ௨௩
குமாரன் அல்லவா என்றார்கள். — [18]பரிசேயர் ௨௪
அதைக்கேட்டு, இவன் பசாசுகளுடைய தலைவ
னாகிய *பெயேல்செபூலினாலே பசாசுகளைத்
துரத்துகிறானே அன்றி, மற்றப்படியல்ல என்
றார்கள்.—[19]இயேசுவானவர் அவர்களுடைய சிந் ௨௫
தனைகளை அறிந்து அவர்களை நோக்கி, ஒரு இராச்
சியத்தார் தங்களுக்குள்ளேதானே பிரிவினைபண்
ணினால் அழிந்துபோவார்கள்; அல்லாமலும் ஒரு
பட்டணத்தாராலும் குடும்பத்தாராலும் தங்
களுக்குள்ளே பிரிவினைபண்ணினால், நிலைநிற்க
மாட்டார்கள்.—அப்படிப்போலச் சாத்தான் மற் ௨௬
றொரு சாத்தானைத் துரத்தினால் அவர்களுக்குள்
ளேதானே பிரிவினை உண்டாகுமே; அப்படியா
னால் அவனுடைய இராச்சியம் எப்படி நிலைநிற்
கும்?—அல்லாமலும் நான் பெயேல்செபூலினா ௨௭
லே பசாசுகளைத் துரத்துகிறவன் என்றால், உங்
கள் பிள்ளைகள் அவைகளை யாராலே துரத்துகி
றார்கள்; ஆகையால் அவர்களே உங்களுக்கு நியா
யத்தீர்ப்புக் கொடுப்பார்கள்.—[20]நான் பராபரனு ௨௮
டைய ஆவியினாலே பசாசுகளைத் துரத்துகிறபடி
யால், பராபரனுடைய ஆளுகையே உங்களிடத்
தில் வந்திருக்கின்றது.—[21]அல்லது முன்பு பல ௨௯

1 ௫ மோ. ௨௧. ௨௫ மாற். ௨. ௨௩. லூக். ௬. ௧.—2 ௧ சாமு. ௨௧. ௬. 3 ௨ மோ. ௨௯. ௩௨, ௩௩. ௩ மோ. ௮. ௩௧: ௨௪. ௯.—4 ௨ மோ. ௨௫. ௩௰. ௩ மோ. ௨௪. ௫. 5 ௪ மோ. ௨௮. ௯. யோவா. ௭. ௨௨. 6 ௨ நாளா. ௬. ௰௮. மல்கி. ௩. ௧. 7 மத். ௯. ௰௩. ஓசே. ௬. ௬. மீகா. ௬. ௬, ௭, ௮.—8 மாற். ௩. ௧. லூக். ௬. ௬.—9 லூக். ௰௩. ௰௪: ௰௪. ௩. யோவா. ௯. ௰௬.—10 ௨ மோ. ௨௩. ௪, ௫. ௫ மோ. ௨௨. ௪. 11 மத். ௨௭. ௧. மாற் ௩. ௬. லூக். ௬. ௰௧. யோவா. ௫. ௰௮: ௰ ௩௯: ௰௧. ௫௩.

12 மத். ௰. ௨௩. மாற். ௩. ௭. 13 மத். ௰௯. ௨.—14 மத். ௯. ௩௰. 15 எசா. ௪௨. ௧. —16 மத். ௩. ௰௭: ௰௭. ௫.—17 மத். ௯. ௩௨. மாற். ௩. ௰௧. லூக். ௰௧. ௰௪. 18 மத். ௯. ௩௪. மாற். ௩. ௨௨. லூக். ௰௧. ௰௫. 19 மத். ௯. ௪. யோவா. ௨. ௨௫. வெளி. ௨. ௨௩. 20 தானி. ௨. ௪௪: ௭. ௰௪: லூக். ௧. ௩௩: ௰௧. ௨௰: ௰௭. ௨௰, ௨௧. 21 எசா. ௪௯. ௨௪. லூக். ௰௧. ௨௧, ௨௨, ௨௩.

* அல்லது பெயேல்செபுப். அப்படியே ௨௭-வசனத்திலும்.

வானைக் கட்டாவிட்டால் அவனுடைய வாசஸ்
தலத்திலே ஒருவன் எப்படிப் பிரவேசித்து, அவ
னுடைய உடைமைகளைக் கொள்ளையிடுவான்;
(பலவானைக் கட்டினபின்பல்லவா) அவனுடை
௩௰ ய வாசஸ்தலத்தைக் கொள்ளையிடுவான்?—என்
பக்கத்தில் இராதவன் எனக்கு விரோதமாய்இருக்
கிறான்; என்னுடனேகூடச் சேர்த்துக்கொள்ளா
தவன் சிதறஅடிக்கிறான்.

௩௧ ஆதலால் நான் உங்களுக்குச் சொல்லுகிற
தாவது: [1]எந்தப் பாவமும் தூஷணமும் மனி
தர்களுக்கு மன்னிக்கப்படும்; [2]தேவ ஆவியை
(நிந்திக்கும்) தூஷணம்மாத்திரம் மனிதருக்கு
௩௨ மன்னிக்கப்படுவதில்லை.—[3]எவனானாலும் மனி
தனுடைய குமாரனுக்கு விரோதம்பேசினால்
அது அவனுக்கு மன்னிக்கப்படும்; [4]எவனாகி
லும் பரிசுத்த தேவ ஆவிக்கு விரோதம் பேசி
னால் அது அவனுக்கு இம்மையிலும் மறுமை
௩௩ யிலும் மன்னிக்கப்படுவதில்லை.—[5]மேலும் ஒரு
மரத்தின் தன்மையை அதின் கனிகளாலே அ
றியலாம்; ஆகையால் நீங்கள் ஒருமரத்தை நல்
லமரமென்று எண்ணினால், அதின் கனியையும்
நல்லதென்று எண்ணுங்கள்; அல்லது நீங்கள்
ஒருமரத்தைக் கெட்டமரமென்று எண்ணினால்,
அதின் கனியையும் கெட்டதென்று எண்ணுங்
௩௪ கள்.—[6]இருதயத்தின் நிறைவினாலே வாய்பே
சும்; [7]ஆதலால் விரியன் குட்டிகளே, நீங்கள்
பொல்லாதவர்களாயிருக்க நன்மையானவைக
௩௫ ளை எப்படிப் பேசுவீர்கள்?—நல்ல மனிதனா
னவன் தன் இருதயத்திலுள்ள நல்ல பொக்கிஷத்
தில் நல்லவைகளை எடுத்துக் காண்பிக்கிறான்;
பொல்லாத மனிதன் தன் பொல்லாத பொக்
கிஷத்தில் பொல்லாதவைகளை எடுத்துக் காண்
௩௬ பிக்கிறான்.—மனிதர்கள் பேசும் வீணான வார்த்
தைகள் யாவையுங்குறித்து நியாயத்தீர்ப்புநா
ளிலே உத்தரவு கொடுப்பார்களென்று உங்க
௩௭ ளுக்குச் சொல்லுகிறேன் என்றார்.—எப்படியும்
உன் வார்த்தைகளினாலே நீதிமானென்றும், உன்
வார்த்தைகளினாலே குற்றவாளியென்றும் தீர்க்
கப்படுவாய்.

௩௮ [8]அப்பொழுது வேதபாரகரிலும் பரிசேயரி
லும் சிலர் அவரைநோக்கி, போதகரே, உம்
மாலே ஒரு அடையாளத்தைக் காண விரும்புகி
௩௯ றோம் என்றார்கள்.—அதற்கு அவர் சொன்னது:
[9]சோரமார்க்கமாய்ப்போகிற பொல்லாத சந்ததி
யாகிய இவர்கள் ஒரு அடையாளத்தைக் கேட்கி
றார்கள்; யோனா தீர்க்கதரிசியின் அடையாளமே
யன்றி வேறு அடையாளம் இவர்களுக்குக் கொ
௪௰ டுக்கப்படுவதில்லை.-என்னவென்றால், [10]யோனா
என்பவன் இரவும் பகலும் மூன்றுநாள் ஒரு பெ
ரிய மீனினுடைய வயிற்றில் இருந்ததுபோல,
மனிதனுடைய குமாரனும் இரவும் பகலும்
மூன்றுநாள் பூமியின் இருதயத்திலே இருப்பார்
என்பதே.—[11]யோனா என்பவன் பிரசங்கம் பண் ௪௧
ணினபொழுது நினிவே பட்டணத்தார் மனம்
திரும்பினார்கள்; [12]யோனாவிலும் அதிக மேன்
மையானவர் இதோ இங்கே இருக்கிறார்; [13]ஆ
தலால் நியாயத்தீர்ப்புநாளிலே நினிவே பட்
டணத்தார் எழும்பி இவர்களைக் குற்றவாளிக
ளென்று தீர்ப்பார்கள்.—[14]அல்லாமலும் தெற்கு ௪௨
இராசஸ்திரி மிகுந்த தூரமான தேசத்திலிருந்து
சாலோமோனுடைய ஞானத்தைக் கேட்கவந்
தாள்; சாலோமோனிலும் அதிக மேன்மையான
வர் இதோ இங்கே இருக்கிறார். ஆதலால் நியா
யத்தீர்ப்புநாளிலே அந்த இராசஸ்திரி எழும்பி
இவர்களைக் குற்றவாளிகளென்று [15]தீர்ப்பாள்.

அல்லாமலும், அசுத்தமான ஆவி ஒரு மனி ௪௩
தனைவிட்டுப் புறப்பட்டபின்பு [16]தண்ணீர் இல்
லாத இடங்களில் அலைந்து இளைப்பாறுதற்கான
இடத்தைத் தேடியும் அடையாமல் இருக்கும்
பொழுது,—அது நான் விட்டுவந்த என் வீட்டுக் ௪௪
குத் திரும்பிப்போவேன் என்று சொல்லி, (அங்
கே) சென்று, அவ்விடத்தை வெறுமையாயும்,
பெருக்கிச் சோடிக்கப்பட்டதாயும் இருக்கக்க
ண்டு திரும்பிப்போய்,—தன்னிலும் அதிக பொல் ௪௫
லாத வேறு ஏழு ஆவிகளைத் தன்னுடனே கூட்
டிக்கொண்டுவந்து பிரவேசித்து, அங்கே வாசம்
பண்ணும்; [17]இவ்விதமாய் அந்த மனிதனுடைய
முன் நிலைமையிலும் பின் நிலைமை அதிக கேடுள்
ளதாய் இருக்கின்றது, அப்படியே இந்தப் பொல்
லாத சந்ததிக்கும் சம்பவிக்கும் என்றார்.

[18]அவர் இப்படிச் சனங்களுடனே பேசுகை ௪௬
யில், [19]அவருடைய தாயும் சகோதரரும் வந்து
வெளியே நின்று, அவரோடே பேசத்தேடினார்
கள்.—அப்பொழுது ஒருவன் அவரை நோக்கி, ௪௭
இதோ, உம்முடைய தாயாரும் சகோதரரும் வெ
ளியே நின்று, உம்மோடே பேசத்தேடுகிறார்கள்
என்றான்.-அப்படித் தமக்குச் சொன்னவனுக்கு ௪௮
அவர் மாறுத்தரமாக, என்னுடைய தாய் யாவள்?
என் சகோதரர் யார்? என்றுசொல்லி,—தம்மு ௪௯
டைய கையைத் தம்முடைய சீஷர்மேலேநீட்டி,
இதோ, இவர்கள் என் தாயும் என் சகோதரரு
மாய் இருக்கிறார்கள்.—[20]எவனானாலும் பரமண் ௫௰
டலங்களில் இருக்கிற என் பிதாவின் சித்தத்
தின்படி செய்தால், அவனே என் சகோதரனு
மாய்ச் சகோதரியுமாய்த் தாயுமாய் இருக்கிறான்
என்றார்.

1 மாற். ௩ உ௮. லூக். ௰௨. ௰. எபி. ௬. ௪: ௰. உ௬, உ௯. ௧ யோ. ௫. ௰௬.—2 மாற். ௩. உ௯. லூக். ௰௨. ௰. எபி. ௬. ௬: ௰. உ௯, உ௯. அப். ௭. ௫௧.—3 மத். ௰௧. ௰௯: ௰௩. ௫௫. யோவா. ௭. ௰௨, ௫௨. ௧ தீமோ. ௧. ௰௩.
4 ௧ யோ. ௫. ௰௬
5 மத். ௭. ௰௭. லூக். ௬. ௪௩, ௪௪.
6 லூக். ௬. ௪௫.—7 மத். ௩. ௭, உ௩, ௩௩.—8 மத். ௰௬. ௧. மாற். ௮. ௰௧. லூக். ௰௧. ௰௬, உ௯. யோவா. உ. ௰௮. ௧ கொரி. ௧. உ௨.
9 ஏசா. ௫௭. ௩. மத். ௰௬. ௪. மாற். ௮. ௧௮. யோவா. ௪ ௪௮.
10 யோனா. உ. ௧.
11 யோனா. ௩ ௫.—12 எரே ௩. ௰௧. எசே. ௰௬. ௫௧, ௫௨. உரோ. உ. உ௭.—13 லூக் ௰௧. ௩௨.
14 ௧ இரா ௰. ௧. உ நாளா. ௯. ௧. லூக். ௰௧. ௩௧.—15 லூக். ௰௧. உ௪.
16 யோபு. ௧. ௭. ௧ பே. ௫. ௮.
17 எபி. ௬. ௪: ௰. உ௬. உ பே உ. உ௰, உ௧, உ௨.
18 மாற். ௩. ௩௧. லூக். ௮. ௰௯, உ௰, உ௧.—19 மத். ௰௩. ௫௫. மாற். ௬. ௩. யோவா. உ. ௰௨: ௭. ௩, ௫. அப். ௧. ௰௪. ௧ கொரி. ௯. ௫. கலா. ௧. ௰௯.
20 யோவா. ௰௫. ௰௪. கலா. ௫. ௬: ௬. ௰௫. கொலோ. ௩. ௰௧. எபி. உ. ௰௧.

## ௰௩. அதிகாரம்.

௧. விதைக்கிறவனையும் விதையையும் உவமையாகக் காட்டியது. ௰௮. அதின வியாக்கியானம். ௨௪. களைகளையும், ௩௧. கடுகுவிதையையும், ௩௩. புளித்த மாவையும், ௪௪. வயலில் ஒளிக்கப்பட்ட பொக்கிஷத்தையும், ௪௫. முத்தையும், ௪௭. கடலில் போடப்பட்ட வலையையும் உவமையாகக் காட்டியது. ௫௩. கிறிஸ்து தம்முடைய சொந்த ஊராரால் அசட்டைபண்ணப்பட்டது.

௧ [1]அந்நாளிலே இயேசுவானவர் வீட்டிலிருந்து
புறப்பட்டுக் கடலின் அருகே உளுக்காந்தார்.—
௨ [2]அப்பொழுது அநேக சனங்கள் அவரிடத்தில்
கூடிவந்தபடியால், [3]அவர் படவில் ஏறி உளுக்
காந்து, சனங்கள் எல்லாரும் கரையிலே நிற்க,—
௩ அநேக விசேஷங்களை உவமைகளால் அவர்க
ளுக்குச் சொன்னதாவது:

௪ [4]விதைக்கிறவன் ஒருவன் விதைக்கப் புறப்
பட்டான்; அவன் விதைக்கையில் சில (விதை)
வழி அருகே விழுந்தன; அவைகளைப் பறவை
௫ கள் வந்து பட்சித்தன. — வேறுசில (விதை)
மிகுந்த மண்ணில்லாத கற்பாறை இடங்களில்
விழுந்து, ஆழமான மண்ணில்லாததினால் உட
௬ னே முளைத்தன.—வெயில் தோன்றினபொழுது
அவை தீய்ந்துபோய், வேரில்லாததினாலே உ
௭ லர்ந்துபோயின.—வேறுசில (விதை) முள்ளுக்
களுள்ள இடத்திலே விழுந்தன, முள்ளுக்கள்
வளர்ந்து அவைகளை நெருக்கிப்போட்டன.—
௮ [5]வேறுசில (விதை) நல்ல நிலத்தில் விழுந்து, சில
நூறாகவும் சில அறுபதாகவும், சில முப்பதாக
௯ வும் பலன்கொடுத்தன.—[6]கேட்கிறதற்குக் கா
துள்ளவன் கேட்கக்கடவன் என்றார்.

௰ அப்பொழுது சீஷர்கள் அவரிடத்தில் வந்து,
என்னத்தினாலே உவமைகளால் அவர்களோடே
௰௧ பேசுகிறீர் என்றார்கள்.—[7]அதற்கு அவர் சொன்
னது: பரலோக இராச்சியத்தின் இரகசியங்களை
அறியும்படிக்கு உங்களுக்கு அருள் அளிக்கப்
பட்டது; அவர்களுக்கு அப்படி அளிக்கப்பட
௰௨ வில்லை.—[8]எப்படியெனில், எவன் உள்ளவனா
யிருக்கிறானோ அவனுக்குக் கொடுக்கப்படும்,
பரிபூரணமும் அடைவான்; எவன் உள்ளவன்
அல்லாதவனாய் இருக்கிறானோ அவனிடத்தில்
௰௩ உள்ளதும் எடுத்துக்கொள்ளப்படும்.—[9]அவர்கள்
கண்டும் காணாமலும், கேட்டும் கேளாமலும்; சிந்
தித்துக்கொள்ளாமலும் இருக்கிறபடியினாலே,
நான் உவமைகளால் அவர்களுடனே பேசுகி
௰௪ றேன். — [10]இந்தச் சனங்கள் கண்களினாலே
காணாமலும், காதுகளினாலே கேளாமலும், இருத
யத்தினாலே சிந்தித்துக்கொள்ளாமலும், திரும்பா
மலும், என்னால் ஆரோக்கியம் அடையாமலும்
இருக்கும்படிக்கு அவர்கள் கடினமாக்கப்பட்ட
இருதயம் உடையவர்களுமாய், வருத்தத்தோடே
கேட்கிற காதுள்ளவர்களுமாய், மூடிக்கொண்
டிருக்கிற கண்களை உடையவர்களுமாய் இருக்
கிறபடியினாலே,—நீங்கள் உற்றுக் கேட்டாலும் ௰௫
சிந்தித்துக்கொள்ளாமல் இருப்பீர்கள்; உற்றுப்
பார்த்தாலும் அறியாமல் இருப்பீர்களென்று,
ஏசாயா சொன்ன தீர்க்கதரிசனம் அவர்களிடத்
தில் நிறைவேறி வருகின்றது.—[11]உங்கள் கண்க ௰௬
ளோ காணுகிறபடியினாலும், உங்கள் காதுகள்
கேட்கிறபடியினாலும் பாக்கியமுள்ளவைகள்.—
[12]அநேகம் தீர்க்கதரிசிகளும் நீதிமான்களும், நீங் ௰௭
கள் காணுகிறவைகளைக் காணவும், நீங்கள் கேட்
கிறவைகளைக் கேட்கவும் விரும்பியும், காணாம
லும் கேளாமலும் போனார்களென்று மெய்யா
கவே உங்களுக்குச் சொல்லுகிறேன்.

[13]ஆகையால் விதைக்கிறவனுடைய உவமை ௰௮
யைக் கேளுங்கள்.—[14]ஒருவன் பரலோக இராச் ௰௯
சியத்தைக்குறித்து வசனத்தைக் கேட்டும் அ
தைச்சிந்தித்துக்கொள்ளாமல் இருக்கிறபொழுது
பொல்லாங்கன் வந்து, அவனுடைய இருதயத்
தின்மேல் விதைக்கப்பட்டதை எடுக்கிறான்;
அவனே விதைவிழுந்த வழிக்கு ஒப்பானவன்.—
[15]விதை விழுந்த கற்பாறைக்கு ஒப்பானவன் ௨௰
அந்த வசனத்தைக் கேட்டு, உடனே அதைச்
சந்தோஷத்தோடே ஏற்றுக்கொண்டு,— பின்பு ௨௧
அது தனக்குள்ளே வேர்பற்றி இராமல் கொஞ்சக்
காலம்மாத்திரம் அதைப் பற்றிக்கொள்ளுவான்;
[16]அந்த வசனத்தின்நிமித்தம் உபத்திரவமும் துன்
பப்படுதலும் உண்டாகிறபொழுது உடனே
அவன் தவறுவான் என்பதே.—[17]விதை விழுந்த ௨௨
முள்ளுள்ள இடத்துக்கு ஒப்பானவன் [18]அந்த
வசனத்தைக் கேட்கிறபொழுது லவுகீக கவ
லைகளும், ஐசுவரியத்தின் வஞ்சனையும் அவ்வச
னத்தை நெருக்கிப்போடுவதால், கனியற்றவனா
வான் என்பதே.—விதை விழுந்த நல்ல நிலத் ௨௩
துக்கு ஒப்பானவன் அந்த வசனத்தைக் கேட்
டும், சிந்தித்தும், அதின்படி செய்தும், நூறும்
அறுபதும் முப்பதுமாகப் பலனைக் கொடுத்தும்
வருவானென்பதே என்றார்.

பின்பு அவர் வேறொரு உவமையை அவர்க ௨௪
ளுக்குச் சொல்லிக்காட்டினார்; அதாவது: பர
லோக இராச்சியம் ஒரு வயல் நிலத்துக்கு ஒப்பா
யிருக்கின்றது; அந்த நிலத்திலே எசமானானவன்
நல்ல விதையை விதைத்தான்.—பின்பு மனிதர் ௨௫
நித்திரைபண்ணுகையில், அவனுடைய பகை
ஞன் வந்து கோதுமைக்குள்ளே களைகளைவிதைத்
துப்போனான்.—பயிரானது வளர்ந்து கதிர் விட் ௨௬
டபொழுது அந்தக் களைகளும் காணப்பட்டன.—
வேலைக்காரர் எசமானிடத்தில் வந்து, ஆண்ட ௨௭
வனே, நீர் உமது வயல் நிலத்திலே நல்ல விதை
யை விதைக்கவில்லையா? களைகள் அதிலே எப்

1 மாற். ௪. ௧.——2 லூக். ௮. ௪. 3 லூக். ௫. ௩.——4 லூக். ௮. ௫. 5 ௧ மோ. ௨௬. ௰௨.—6 மத். ௰௧. ௰௫. மாற். ௪. ௯.—7 மத். ௰௧. ௨௫: ௰௬. ௰௭. மாற். ௪. ௰௧. ௧ கொரி. ௨. ௰. ௧ யோ. ௨. ௨௭. 8 மத். ௨௫. ௨௯. மாற். ௪. ௨௫. லூக். ௮. ௰௮: ௰௯. ௨௬.—9 ஏசா. ௬. ௯. எசே. ௰௨. ௨. மாற். ௪. ௰௨. லூக். ௮. ௰. யோவா. ௰௨. ௪௰. அப். ௨௮. ௨௬, ௨௭. உரோ. ௰௧. ௮. ௨ கொரி. ௩. ௰௪, ௰௫.

10 எபி. ௫. ௰௧.—11 மத். ௰௬. ௰௭. லூக். ௰. ௨௩, ௨௪. யோவா. ௨௰. ௨௯.—12 எபி. ௰௧. ௰௩. ௧ பே. ௧. ௰, ௰௧.—13 மாற். ௪. ௰௪. லூக். ௮. ௰௧.—14 மத் ௪. ௨௩. 15 ஏசா. ௫௮. ௨. எசே. ௩௩. ௩௧. ௨௰. யோவா. ௫. ௩௫. 16 மத். ௰௧. ௬. ௨ தீமோ. ௧. ௰௫. 17 எரே. ௪. ௩. 18 மத். ௰௯. ௨௩. மாற். ௰. ௨௩. லூக் ௰௮. ௨௪. ௧ தீமோ. ௬. ௯. ௨ தீமோ. ௪. ௰.

உஅ படி உண்டாயின என்றார்கள்.—அதற்கு அவன்,
பகைஞன் அப்படிச் செய்தான் என்றான்; அப்
பொழுது வேலைக்காரர், நாங்கள் போய், அவை
களைப் பிடுங்கிப்போடச் சித்தமாயிருக்கிறீரோ
உகூ என்று கேட்டார்கள்.—அதற்கு அவன் சொன்
னது: வேண்டாம்; களைகளைப் பிடுங்குகிறபொ
ழுது நீங்கள் கோதுமையையுங்கூட வேரோடே
௩௰ பிடுங்காதபடிக்கு,—[1]அவ்விரண்டையும் அறுப்
புக்காலம்வரைக்கும் வளரவிடுங்கள்; அறுப்புக்
காலத்திலே அறுக்கிறவர்கள் முதலாவது களைக
ளைப் பிடுங்கி அவைகளைச் சுட்டெரிக்கிறதற்
குக் கட்டுகளாகக் கட்டவும் கோதுமையை என்
களஞ்சியத்தில் சேர்க்கவும் கட்டளையிடுவேன்
என்று சொன்னான் என்றார்.
௩௧ பின்பு அவர் வேறொரு உவமையை அவர்க
ளுக்குச் சொல்லிக்காட்டினார்; அதாவது: [2]பர
லோக இராச்சியம் கடுகுவிதைக்கு ஒப்பாயிருக்
கின்றது; அதை ஒரு மனிதன் எடுத்துத் தன் நிலத்
௩உ திலே விதைத்தான்.— அது எல்லா விதைகளி
லும் சிறியதாயிருந்தும் வளரும்பொழுது கீரைக
ளிலும் பெரிதாகி ஆகாசத்துப் பறவைகள் அதின்
கிளைகளில் வந்தடையத்தக்கதான செடியாம்
என்றார்.
௩௩ [3]பின்பு அவர் வேறொரு உவமையை அவர்
களுக்குச் சொன்னார்; அதாவது: மூன்று *மரக்
கால் மாமுழுவதும் புளிப்பாகும்வரைக்கும் ஒரு
ஸ்திரீ புளிப்புமாவை எடுத்து அதிலே அடக்
கிவைத்தாள்; பரலோக இராச்சியம் அந்தப்
புளிப்புமாவுக்கு ஒப்பாயிருக்கின்றது என்றார்.
௩ச [4]என் வாயைத் திறந்து உவமைகளாலே பே
சுவேன்; [5]உலகத்தோற்றம் முதற்கொண்டு மறை
பொருளானவைகளை வெளிப்படுத்துவேன் என்
று தீர்க்கதரிசியால் உரைக்கப்பட்டது நிறை
௩ரு வேறத்தக்கதாக,—[6]இயேசுவானவர் இவைகளை
யெல்லாம் உவமைகளாகச் சனங்களுடனே பே
சினார், உவமைகளினாலேயன்றி வேறுவிதமாக
அவர் அவர்களுடனே பேசவில்லை.
௩சு அப்பொழுது இயேசுவானவர் சனங்களை அ
னுப்பிப் பின்பு வீட்டுக்குப்போனார்; அங்கே
அவருடைய சீஷர் அவரிடத்தில் வந்து, நீர் வயல்
நிலத்தின் களைகளைக் குறித்துக் காட்டின உவ
மையை எங்களுக்கு வெளிப்படுத்தவேண்டும்
௩எ என்று கேட்டார்கள்.—அவர்களுடனே அவர்
மறுமொழியாகச் சொன்னதாவது: நல்ல விதை
யை விதைக்கிறவன் மனிதனுடைய குமாரனே;
௩அ வயல்நிலம் உலகமே.—[7]நல்ல விதை இராச்சி
யத்தின் புத்திரரே; [8]களைகள் பொல்லாங்கனு
௩கூ டைய புத்திரரே.–அவைகளை விதைக்கிற பகை
ஞன் பசாசே; [9]அறுப்பு உலகத்தின் முடிவே;
அறுக்கிறவர்கள் தேவதூதர்களே. — ஆதலால் ச௰
களைகள் சேர்க்கப்பட்டு, அக்கினியினால் சுட்
டெரிக்கப்படுகிறதுபோல, இவ்வுலகத்தின் முடி
விலே நடக்கும்.—மனிதனுடைய குமாரன் தன் ச௧
னுடைய தூதரை அனுப்புவான்; [10]அவர்கள்
அவனுடைய இராச்சியத்தில் இருக்கிற சகல
இடறல்களையும் அக்கிரமஞ்செய்கிறவர்களையும்
சேர்த்து,—[11]அழுதலும் பற்கடிப்பும் உண்டாயி சஉ
ருக்கிற [12]அக்கினிச்சூளையிலே போடுவார்கள்.—
[13]அப்பொழுது நீதிமான்கள் தங்கள் பிதாவின் ச௩
இராச்சியத்திலே சூரியனைப்போலப் பிரகாசிப்
பார்கள்; கேட்கிறதற்குக் காதுள்ளவன் [14]கேட்
கக்கடவன்.
[15]அல்லாமலும் பரலோக இராச்சியம் வயல் சச
நிலத்தில் ஒளிக்கப்பட்டிருக்கிற பொக்கிஷத்
துக்கு ஒப்பாயிருக்கின்றது; அதை ஒரு மனி
தன் கண்டு, அதை மறைத்து, அதைக்குறித்து
அடைந்த சந்தோஷத்தினாலே போய்த் தனக்
குள்ள யாவையும் விற்று, அந்த [16]வயல் நிலத்
தையே கொள்ளுகிறான்.
அல்லாமலும் பரலோக இராச்சியம் நல்ல முத் சரு
துகளைத் தேடி,—[17]ஒரு ஆணிமுத்தைக் கண்டு, சசு
போய், தனக்குள்ள யாவையும் விற்று, அதைக்
கொள்ளுகிற வியாபாரி ஒருவனுக்கு ஒப்பாயி
ருக்கின்றது.
[18]அல்லாமலும் பரலோக இராச்சியம் ஒரு சஎ
வலைக்கு ஒப்பாயிருக்கின்றது; வலையானது கட
லிலே போடப்பட்டு எல்லாச் சாதியான மீன்க
ளையும் வாரி நிறைந்தபொழுது,—சனங்கள் அ சஅ
தைக் கரையில் இழுத்து உளுக்காந்து, நல்லவை
களைப் பாத்திரங்களில் சேர்த்துக்கொண்டு, தகா
தவைகளைத் தள்ளிப்போடுகிறார்கள். — இவ்வித சகூ
மாக உலகத்தின் முடிவிலே நடக்கும்; [19]தே
வதூதர் புறப்பட்டு நீதிமான்களிலிருந்து துன்
மார்க்கரைப்பிரித்து,—[20]அழுதலும் பற்கடிப்பும் ரு௰
உண்டாயிருக்கிற அக்கினிச்சூளையிலே போடு
வார்கள் என்று சொல்லி,–பின்பு நீங்கள் இவை ரு௧
களையெல்லாம் அறிந்துகொண்டீர்களா என்று
இயேசுவானவர் சீஷர்களிடத்தில் கேட்ட
தற்கு, ஆண்டவரே, அறிந்துகொண்டோம் என்
றார்கள்.—[21]அவர் பின்னும் அவர்களை நோக்கி, ருஉ
அப்படியிருக்கையால், பரலோக இராச்சியத்
தைக்குறித்துப் போதனையடைந்த வேதபாரகன்
எவனோ, அவன் தன் பொக்கிஷத்தில் புதிய
வைகளையும் பழையவைகளையும் எடுத்துக்காண்
பிக்கிற வீட்டெசமானுக்கு ஒப்பாயிருக்கிறான்
என்றார்.

1 மத். ௩. ௰உ.—2 எசா. உ உ, ௩. மீகா ச. ௧. மாற். ச. ௩௧. லூக் ௰௩. ௰கூ. 3 லூக். ௰௩. உ௧.—4 சங். எஅ. உ. 5 உரோ. ௰சு. உரு. ௧ கொரி. உ. எ. எபே. ௩. கூ.—௰௩. கொலோ. ௧. உ௧.—6 மாற். ச. ௩௩, ௩ச. 7 மத். உச. ௰ச: உஅ. ௰கூ. மாற். ௰கூ. ௰ரு, உ௰. லூக். உச. சஎ. உரோ. ௰. ௰அ. கொலோ. ௧. ௬. 8 ௧ யோ. ௩. ௰ரு. யோவா. அ. சச. அப். ௰௩. ௰. ௧ பே. ௩. அ.

9 யோவே. ௩. ௰௩. வெளி. ௰ச. ௰ரு. 10 மத். ௰அ. எ. உ பே. உ. ௧. 11 மத். அ. ௰உ. இ௰. வச.—12 மத். ௩. ௰உ. வெளி. ௰கூ. உ௰: உ௰. ௰. 13 தானி. ௰உ. ௩. ௧ கொரி. ௰ரு. சஉ, சக, ருஅ.—14 கூ. வச. 15 பிலி. ௩. எ, அ.—16 எசா. ருரு. ௧. வெளி. ௩. ௰அ.—17 லூக். உ. ச: ௩. ௰ச, ௰ரு: அ. ௰, ௰கூ.—18 மத். உஉ. ௰.—19 உரு. ௩உ. 20 சஉ. வச.—21 உன்னத. எ. ௰௩.

* இரேக்குப்பாஷையிலுள்ள வார்த்தை அரைப்படி குறைய ஒன்றரைமரக்கால் அளவைக்குறிக்கும்.

௫௩ இப்படி இயேசுவானவர் இந்த உவமைகளைச்
௫௪ சொல்லி முடித்தபின்பு, — [1]அவர் அவ்விடம்
விட்டுத் தாம் வளர்ந்த ஊரிலே வந்து, செபஆல
யத்திலே சனங்களுக்கு உபதேசம்பண்ணினார்;
அவர்கள் அதைக் கேட்டுப் பிரமித்து, இப்படிப்
பட்ட ஞானமும் வல்லமைகளும் இவனுக்கு
௫௫ எங்கேயிருந்து வந்தன?—[2]இவன் தச்சனுடைய
குமாரன் அல்லவா? [3]இவனுடைய தாய் மரியாள்
என்னப்பட்டிருக்கிறாள் அல்லவா? [4]யாக்கோபு,
யோசே, சீமோன், யூதா என்பவர்கள் இவனு
௫௬ டைய சகோதரர் அல்லவா? — இவனுடைய
சகோதரிகள் எல்லாரும் நமக்குள்ளே இருக்கி
றார்கள் அல்லவா? இப்படியிருக்க, இவையெல்
லாம் இவனுக்கு எங்கேயிருந்து வந்தன என்று
௫௭ சொல்லி,—[5]அவரைக்குறித்து இடறல்பட்டார்
கள்; அப்பொழுது இயேசுவானவர் அவர்களை
நோக்கி, [6]தீர்க்கதரிசி ஒருவன் தன் ஊரிலேயும்
தன் குடும்பத்திலேயுமே அன்றி மற்ற இடங்க
௫௮ ளிலே கனஈனப்படான் என்றார். — [7]மேலும்
அந்தச் சனங்களுடைய அவிசுவாசத்தினாலே
அவர் அவ்விடத்திலே அநேக அற்புதங்களைச்
செய்யவில்லை.

## ௰௪. அதிகாரம்.

௧. கிறிஸ்துவைக்குறித்து ஏரோது நினைத்த நினைவு. ௩. யோவான் சிரச்சேதம் பண்ணப்பட்ட காரணம். ௰௩. இயேசுவானவர் ஓர் வனாந்தரமான இடத்திற்குப் போய், ௰௫. அவ்விடத்தில் ஐந்து அப்பங்களினாலும், இரண்டு மீன்களினாலும், ஐயாயிரம்பேருக்குப் போசனம் கொடுத்தது. ௨௨. அவர் கடலிலே நடந்து சீஷரிடத்தில் வந்து, ௩௪. கெனேசரேத்தினிடத்தில் இறங்கித் தம்முடைய வஸ்திரத்தின் ஓரத்தைத் தொட்ட பிணியாளிகளைக் குணமாக்கினது.

௧ அக்காலத்திலே [8]காற்பங்கு தேசாதிபதியாகிய
ஏரோதே இராசா இயேசுவின் கீர்த்தியைக் கேள்
௨ விப்பட்டு,—தன் ஊழியக்காரரை நோக்கி, அ
வன் யோவான்ஸ்நானன், அவன் மரித்தோரிலி
ருந்து எழுந்திருந்தவன், அதினாலே அவன் அற்
புதங்களைச் * செய்துவருகிறான் என்றான்.
௩ அது எப்படியென்றால், ஏரோதே இராசா
தன் தம்பியாகிய பிலிப்பினுடைய மனைவி
ஏரோதியாளைக் குறித்து, நீர் [9]அவளைச் சேர்த்
௪ துக்கொள்ளக்கூடாதென்று,— யோவான் அவ
னுடனே சொன்னபடியினாலே, [10]ஏரோதே இரா
சா அவனைப் பிடித்துக் கட்டிக் காவலில் வைத்
௫ தான்.—அவனைக் கொலைசெய்யவும் மனதாயி
ருந்தான்; [11]அப்படியிருந்தும் சனங்கள் யோவா
னைத் தீர்க்கதரிசியென்று எண்ணினபடியினாலே
அவன் அவர்களுக்குப் பயந்து (அப்படிச்செய்
௬ யவில்லை).—பின்பு ஏரோதேயினுடைய சென்
மநாள் கொண்டாடப்படுகிற காலத்திலே, ஏரோ
தியாளின் குமாரத்தி ஏரோதே இராசாவுக்கு
மிகுந்த சந்தோஷம் உண்டாகத்தக்கதாக நடனம்
பண்ணினபொழுது,—அவன் அவளை நோக்கி, ௭
நீ எதைக் கேட்டாலும் தருவேன் என்று அவ
ளுக்கு ஆணையிட்டு வார்த்தைகொடுத்தான்.—
உடனே அவள், தன் தாய் தனக்குப் போதித்தி ௮
ருந்தபடியே, நீர் யோவான்ஸ்நானனுடைய சிர
சை ஒரு தாலத்தில் இங்கே எனக்குக் கொடுக்க
வேண்டும் என்று கேட்டாள். — இராசா துக்கம் ௯
அடைந்தான்; அப்படியிருந்தும் தான் கொடுத்த
ஆணையின் நிமித்தமும், பந்தியில் கூட இருந்த
வர்களின் நிமித்தமும் அவன் அதைக் கொடுக்
கக் கட்டளையிட்டான்.—அந்தப்படி இராசாவினா ௰
லே அனுப்பப்பட்டவர்கள் காவல்கூடத்துக்
குப் போய், யோவானைச் சிரச்சேதம்பண்ணி,—
வந்து, அவனுடைய சிரசை ஒரு தாலத்திலே ௰௧
வைத்து, அந்தப் பெண்ணுக்குக் கொடுத்தார்கள்;
அவள் அதைத் தன் தாய்க்குக் கொண்டுபோய்க்
கொடுத்தாள்.—பின்பு அவனுடைய சீஷர்கள் ௰௨
வந்து அவனுடைய உடலை எடுத்து அடக்கம்
பண்ணி, வந்து, இயேசுவுக்கு அந்தச் சங்கதி
யை அறிவித்தார்கள்.

[12]இயேசுவானவர் அதைக்கேட்டு, அவ்விடம் ௰௩
விட்டு, வனாந்தரமான இடத்திலே தனியே
இருக்க ஒரு படவில் ஏறிப்போனார்; சனங்கள்
அதைக்கேள்விப்பட்டுப் பட்டணங்களிலிருந்து
கால்நடையாய் அவர் பின்சென்றார்கள்.
[13]இயேசுவானவர் புறப்பட்டுத் திரளான சனங் ௰௪
களைக் கண்டு, அவர்களுக்கு இரக்கமாய் மனது
ருகி, அவர்களில் வியாதிப்பட்டவர்களைக் குண
மாக்கினார்.

[14]சாயங்காலத்திலே அவருடைய சீஷர் அவரி ௰௫
டத்தில் வந்து, இது வனாந்தரமான இடம், அல்
லாமலும் பகல் போயிற்று; ஆதலால், இந்தச்
சனங்கள் கிராமங்களுக்குப்போய்த் தங்களுக்
காகப் போசனபதார்த்தங்களைக் கொள்ளும்
படிக்கு இவர்களை அனுப்பிவிடும் என்றார்கள்.—
அதற்கு இயேசுவானவர், இவர்கள் போகவேண் ௰௬
டுவதில்லை; நீங்களே இவர்களுக்குச் சாப்பாடு
கொடுங்கள் என்றார்.—அவர்கள் சொன்னது: ௰௭
ஐந்து அப்பமும் இரண்டு மீன்களுமே அல்லா
மல் வேறொன்றும் எங்களிடத்தில் இல்லை என்
றார்கள்.—அவைகளை எனக்கு இங்கே கொண் ௰௮
டுவாருங்கள் என்றார்.—பின்பு சனங்கள் புல் ௰௯
லின்மேல் பந்தியிருக்கும்படிக்கு அவர் கட்
டளையிட்டு, அவ்வைந்து அப்பங்களையும் இரண்
டுமீன்களையும் எடுத்து, [15]வானத்தை அண்ணாந்து
பார்த்து, அவைகளை ஆசீர்வதித்து அப்பங்களைப்
பிட்டுச் சீஷர்களுக்குக் கொடுத்தார்; சீஷர்கள்
அவைகளைச் சனங்களுக்குக் கொடுத்தார்கள்.—

1 மத். ௨. ௨௧. மாற். ௧ ௧. லூக். ௪. ௰௬, ௨௧.
2 ஏசா. ௪௧. ௭. மாற். ௧. ௧. லூக். ௧. ௨௧. யோவா. ௧. ௪௨
3 மத். ௰௨. ௪௬. மாற். ௰௫. ௪௰.
4 மாற். ௧. ௧.—5 மத். ௰௧.௬. மாற். ௧ ௧, ௪.——6 லூக். ௪. ௨௪. யோவா. ௪. ௪௪:
7 மாற். ௬. ௫, ௬.
8 மாற். ௬. ௰௪. லூக். ௯. ௭.
9 மாற். ௬ ௰௭. லூக். ௩. ௰௯.
10 ௩ மோ. ௰௮. ௰௬: ௨௰. ௨௧.
11 மத். ௨௧. ௨௬. லூக். ௨௰. ௬.
12 மத். ௰.௨௩: ௰௨.௰௫. மாற்.௬. ௩௨ லூக்.௬.௰. யோவா.௬.௧.
13 மத். ௯. ௩௬. மாற். ௬ ௩௪.
14 மாற். ௬ ௩௫. லூக். ௯ ௰௨. யோவா. ௬. ௫.
15 மத். ௰௫. ௩௬.

* அல்லது அவனால் செய்யப்படுகிறது.

௨௰ அவர்கள் எல்லாரும் சாப்பிட்டுத் திருத்தி
அடைந்தார்கள்; அதுவுமல்லாமல் சேஷமான
வைகளைப் பன்னிரண்டு கூடைநிறைய எடுத்தார்
௨௧ கள்.—அப்படிச் சாப்பிட்டவர்கள் பெண்களும்
பிள்ளைகளும் தவிர ஏறக்குறைய ஐயாயிரம்பேர்
இருந்தார்கள்.

௨௨ உடனே இயேசுவானவர் சனங்களை அனுப்
பிவிடுகையில், தம்முடைய சீஷர்கள் படவில்
ஏறித் தமக்கு முன்னே அக்கரைக்குப் போகும்
௨௩ படிக்கு அவர்களைத் துரிதப்படுத்தினார்.—[1]சனங்
களை அனுப்பிவிட்ட பின்பு அவர் தனியே செ
பத்தியானம் பண்ணும்படிக்கு ஒரு மலையின்
மேல் ஏறினார்; [2]சாயந்தரமானபொழுது அவர்
௨௪ மாத்திரம் அங்கே இருந்தார்.—அவ்வேளையிலே
படவு கடலின் நடுவே சேர்ந்து, எதிர்காற்றிருந்த
௨௫ தினாலே அலைகளால் அலைவுபட்டது.–அப்படி
இருக்கிறபொழுது, இரவின் நாலாம் சாமத்திலே
இயேசுவானவர் கடலின்மேலே நடந்து, அவர்
௨௬ களிடத்திற்குப் போனார்.—[3]அவர் கடலின்மேல்
நடக்கிறதைச் சீஷர் கண்டு, தத்தளித்து, ஆவே
ஷம் உண்டாயிருக்கிறது என்று புலம்பிப் பயத்
௨௭ தினாலே கூப்பிட்டார்கள்.–உடனே இயேசுவா
னவர், திடன்கொள்ளுங்கள், நான்தான், பயப்
படாதிருங்கள் என்று அவர்களுடனே சொன்
௨௮ னார்.—பேதுரு அவருக்கு, ஆண்டவரே, நீரே
யானால் சலத்தின்மேல் உம்மிடத்தில் வரும்படி
௨௯ எனக்குக் கட்டளையிடும் என்றான். — அதற்கு
அவர், வா என்றார்; அப்பொழுது பேதுரு பட
வைவிட்டு இறங்கி, இயேசுவினிடத்திற்கு வரும்
௩௰ படிக்குச் சலத்தின்மேலே நடந்து, — காற்றுப்
*பலத்திருக்கிறதைக் கண்டு பயம் அடைந்து,
அமிழத்தொடங்கி, ஆண்டவரே, என்னை இரட்
௩௧ சிக்கவேண்டுமென்று கூப்பிட்டான். — உட
னே இயேசுவானவர் கையை நீட்டி, அவனைப்
பிடித்துக்கொண்டு, அற்பவிசுவாசியே, ஏன் சந்
௩௨ தேகப்பட்டாய் என்றார்.—அவர்கள் படவில்
௩௩ ஏறினவுடனே காற்று அமைதலாயிற்று.—[4]அப்
பொழுது படவிலுள்ளவர்கள் வந்து, மெய்யா
கவே நீர் பராபரனுடைய குமாரனாயிருக்கிறீர்
என்று சொல்லி, அவரை வணங்கினார்கள்.

௩௪ [5]பின்பு அவர்கள் அக்கரைக்கு ஓடி கெனே
௩௫ சரேத்து நாட்டில் வந்தார்கள். — அவ்விடத்து
மனிதர் அவரை அறிந்து, அந்தத்திசைகளில் எங்
கும் ஆள்களை அனுப்பிப் பிணியாளிகள் எல்லா
ரையும் அவரிடத்தில் அழைத்துக்கொண்டுவந்
௩௬ து,—அவருடைய வஸ்திரத்தின் ஓரத்தைமாத்
திரம் தொடும்படிக்கு உத்தரவுகேட்க, அதைத்
[6]தொட்ட யாவரும் சொஸ்தம் அடைந்தார்கள்.

## ௰௫. அதிகாரம்.

௧. வேதபாரகரும் பரிசேயரும் தேவகற்பனைகளைத் தங்களுடைய பாரம்பரைகளினாலே மீறினதற்காகக் கிறிஸ்து அவர்களைக் கடிந்துகொண்டு, ௰௧. வாய்க்குள்ளே போகிற பதார்த்தம் மனுஷனைத் தீட்டுப்படுத்தாதென்று போதித்தது. ௨௧. அவர் கானான் தேசத்தாளுடைய மகளையும், ௩௰. மற்ற அநேகம் கும்புகளையும் குணமாக்கி, ௩௨. ஏழு அப்பங்களினாலும், சில சிறுமீன்களினாலும், ஸ்திரிகளும் பிள்ளைகளும் தவிர நாலாயிரம் புருஷர்களுக்குப் போசனம் கொடுத்தது.

அக்காலத்திலே [7]எருசலேமிலிருந்து வந்த வே ௧
தபாரகரும் பரிசேயரும் இயேசுவினிடத்தில்
வந்து,—[8]உம்முடைய சீஷர் தங்கள் கைகளைக் ௨
கழுவாமல்போசனம்பண்ணுகிறார்கள்;[9]அப்படி
அவர்கள் பெரியோர்களுடைய பாரம்பரை நியா
யத்தை ஏன் மீறி நடக்கிறார்கள் என்றார்கள்.—
அதற்கு அவர் சொன்னது: உங்கள் பாரம்பரை ௩
நியாயத்தினாலே நீங்களும் பராபரனுடைய கற்
பனையை ஏன் மீறி நடக்கிறீர்கள்?—[10]எப்படி ௪
யெனில், உன் தகப்பனையும் தாயையும் கனம்
பண்ணவேண்டுமென்றும், [11]தகப்பனையானாலும்
தாயையானாலும் நிந்திப்பவனை மரண ஆக்கினைக்
குட்படுத்தவேண்டுமென்றும் பராபரன் கட்ட
ளையிட்டார்.—[12]அப்படியிருந்தும் நீங்கள், எவ ௫
னாகிலும் தன் தகப்பனுடனே அல்லது தாயுட
னே, உமக்கு என்னாலே உதவுகிறது எதுண்
டோ அதைக் காணிக்கையாகக் கொடுக்கிறேன்
என்று சொன்னால், — அவன் தன் தகப்பனை ௬
அல்லது தாயைக் கனம்பண்ணவேண்டுவதில்லை
என்று போதித்து, இவ்விதமாய்ப் பராபரனுடை
ய கற்பனையை உங்கள் பாரம்பரை நியாத்தினா
லே அவமாக்கிவருகிறீர்கள். — [13]ஆ வஞ்சகரே, ௭
[14]இந்தச் சனங்கள் தங்கள் வாயினாலே என்னைச்
சேர்ந்து, தங்கள் உதடுகளினாலே என்னைக் கனம்
பண்ணியும் தங்கள் இருதயமோ எனக்குத் தூர
மாய் விலகியிருக்கின்றது. — [15]அப்படி இவர் ௮
கள் மனிதர்களுடைய கற்பனைகளாகிய போத
கங்களைப் போதிக்கிறவர்களாயிருந்து எனக்கு
வீணாக ஆராதனை செய்கிறார்கள் என்று, — ஏ ௯
சாயா என்பவன் உங்களைக்குறித்து நன்றாய்த்
தீர்க்கதரிசனம் உரைத்தானென்று சொன்னார்.

[16]பின்பு சனங்களைத் தம்மிடத்தில் வரவ ௰
ழைத்து நீங்கள் கேட்டுச் சிந்தித்துக்கொள்ளுங்
கள்.—[17]வாய்க்குள்ளே போகிற பொருள் ஒரு ௰௧
வனையும் அசுசிப்படுத்தமாட்டாது; வாயிலி
ருந்து புறப்படுகிற பொருளே ஒருவனை அசுசிப்
படுத்துகின்றதென்று அவர்களுடனே சொன்
னார்.

அப்பொழுது அவருடைய சீஷர் அவரிடத் ௰௨
தில் வந்து, பரிசேயர் இந்த வசனத்தைக் கேட்டு
விதனப்பட்டார்கள் என்று அறிந்திருக்கிறீரா

1 மாற். ௬. ௪௬.–2 யோவா. ௬. ௰௬. 3 யோபு ௯. ௮.—4 சங். ௨. ௭. மாற். ௧. ௧. மத். ௰௬. ௰௬: ௨௬. ௨௭. லூக். ௪. ௪௧. யோவா. ௧. ௪௯: ௬ ௬௮: ௰௧. ௨௭. அப். ௮. ௩௭. ௨ரோ. ௧. ௪.

5 மாற். ௬. ௫௩.—6 மத். ௯. ௨௧. மாற். ௫. ௰. லூக். ௬. ௰௯. அப். ௰௯. ௰௨.—7 மாற். ௭. ௧. 8 மாற். ௭. ௫.—9 கொலோ. ௨. ௮.——10 ௨ மோ. ௨௰. ௰௨. ௫ மோ. ௰௬. ௯. ௫ மோ. ௫. ௰௬.

வாக். ௨௩. ௨௨. எபே. ௬. ௨. 11 ௨ மோ. ௨௧. ௰௭. ௩ மோ. ௨௰. ௯. ௫ மோ. ௨௭. ௰௬. வாக். ௨௰. ௨௰: ௩௰. ௰௭.—12 மாற் ௭. ௰௧, ௰௨. 13 மாற். ௭. ௬.—14 ஏசா. ௨௯. ௰௩. ஏசே. ௩௩. ௩௧.

15 ஏசா. ௨௯. ௰௩. கொலோ. ௨. ௰௮–௨௨. தீத். ௧. ௰௪. 16 மாற். ௭. ௰௪.—17 அப். ௰. ௰௫. ௨ரோ. ௰௪. ௰௪, ௰௭, ௨௰. ௧ தீமோ. ௪. ௪. தீத். ௧. ௰௫.

* மோதுகிறதை.

௰௩ என்றார்கள். — அதற்கு அவர், [1]என் பரமபிதா
௰௪ நடாத நாற்றுகள் யாவும் பிடுங்கப்படும்.—அவர்
களை விட்டுவிடுங்கள், [2]குருடருக்கு வழிகாட்டு
கிற குருடராயிருக்கிறார்கள்; ஒரு குருடன் மற்
றொரு குருடனுக்கு வழிகாட்டினால் இருவரும்
௰௫ குழியிலே விழுவார்கள் என்றார்.—[3]அப்பொழு
து பேதுரு அவரைநோக்கி, இந்த உவமையை
எங்களுக்கு வெளிப்படுத்தவேண்டுமென்று கே
௰௬ ட்டான்.—அதற்கு இயேசுவானவர், [4]நீங்களும்
௰௭ இன்னம் புத்தியில்லாதவர்களா? — [5]வாய்க்குள்
ளே போகிறவைகள் யாவும் வயிற்றில் பிர
வேசித்துப் பின்பு ஆசனவழியாய்க் கழிந்துபோ
கின்றன என்பதை நீங்கள் இன்னம் சிந்தித்துக்
௰௮ கொள்ளவில்லையா?—[6]வாயிலிருந்து புறப்படுகிற
வைகள் இருதயத்திலிருந்து புறப்பட்டு வருகின்
றன; அவைகளே மனிதனை அசுசிப்படுத்துகின்
௰௯ றன.—[7]எவையெனில், பொல்லாத சிந்தனைகள்,
கொலைகள், விபசாரங்கள், வேசித்தனங்கள், கள
வுகள், பொய்ச்சாட்சிகள், தூஷணங்களாகிய
இவைகள் இருதயத்திலிருந்து புறப்பட்டு வரு
௨௰ கின்றன.—இவைகள் மனிதனை அசுசிப்படுத்து
கிறவைகள்; கைகழுவாமல் சாப்பிடுகிறது மனி
தனை அசுசிப்படுத்தாது என்றார்.

௨௧ பின்பு இயேசுவானவர் அவ்விடம்விட்டுப்
புறப்பட்டு, தீருசீதோன் பட்டணங்களின்
௨௨ திசைகளுக்குப் போனார்.—[8]அப்பொழுது அவ்
விடங்களின் எல்லைகளிலிருந்து வந்த கானான்
தேசத்தாளாகிய ஒரு ஸ்திரி அவரைநோக்கி, ஆண்
டவரே, தாவீதின் குமாரனே, என் மகள் பசாசினா
லே கடினமாய் வாதிக்கப்படுகிறாள்; எனக்கு இர
ங்கவேண்டுமென்று சொல்லிக் கூப்பிட்டாள்.—
௨௩ அவரோ அவளுக்கு மாறுத்தரமாக ஒரு வார்த்தை
யும் சொல்லவில்லை; அப்பொழுது அவருடைய
சீஷர் வந்து அவரைநோக்கி, இவள் நம்மைப்
பின்தொடர்ந்து கூப்பிடுகிறாளே; ஆதலால் இ
வளை அனுப்பிவிடும் என்று வேண்டிக்கொண்
௨௪ டார்கள்.—[9]அதற்கு அவர், காணாமல்போன ஆடு
களாகிய இஸ்ரவேல் குடும்பத்தாரிடத்துக்கே
அன்றி, (மற்றவர்களிடத்தில்) நான் அனுப்பப்
௨௫ படவில்லையே என்றார்.—அவளோ வந்து, ஆண்
டவரே, எனக்குச் சகாயஞ்செய்ய வேண்டு
௨௬ மென்று அவரை நமஸ்காரம்பண்ணினாள்.—அ
வர் சொன்னது: [10]பிள்ளைகளுடைய அப்பத்தை
எடுத்து நாய்களுக்குப்போடுகிறது நல்லதல்லவே
௨௭ என்றார்.—அதற்கு அவள், ஆண்டவரே, மெய்
தான், ஆகிலும் நாய்கள் தங்கள் எசமான்கள் போ
சனம்செய்கிற பலகைகளிலிருந்து விழுகிற உச்
௨௮ சிட்டங்களைத் தின்னுமே என்றாள்.—அப்பொ
ழுது இயேசுவானவர் அவளைநோக்கி, ஆ ஸ்திரி
யே, உன் விசுவாசம் பெரிதாயிருக்கின்றது; நீ
விரும்பினபடி உனக்கு ஆகக்கடவது என்றார்;
அந்நேரமே அவளுடைய மகள் சுகம் அடைந்
தாள்.

[11]பின்பு இயேசுவானவர் அவ்விடம்விட்டுப் ௨௯
புறப்பட்டு, [12]கலிலேயாக் கடலின் அருகே வந்
து, ஒரு மலையில் ஏறி, அங்கே உட்கார்ந்தார்.—
[13]அப்பொழுது சப்பாணிகள், குருடர், ஊமை ௩௰
யர், முடவர்கள் முதலான அநேகம்பேரைக்
கூட்டிக்கொண்டு வந்த மிகுந்த சனங்கள் இயே
சுவினிடத்தில் வந்து, அவர்களை அவருடைய பா
தத்தினிடத்தில் வைத்தார்கள்; அவர்களை அவர்
குணமாக்கினார். — ஊமையர் பேசுகிறதையும், ௩௧
முடவர்கள் சொஸ்தம் அடைகிறதையும், சப்பா
ணிகள் நடக்கிறதையும், குருடர் காணுகிறதை
யும் சனங்கள் கண்டு ஆச்சரியப்பட்டு, இஸ்ரவே
லின் தேவனைத் துதித்தார்கள்.

[14]பின்பு இயேசுவானவர் தம்முடைய சீஷரைத் ௩௨
தம்மிடத்தில் அழைத்து, சனங்களைக்குறித்து
மனஉருக்கமாய் இருக்கிறேன்; என்னத்தினா
லென்றால், இவர்கள் மூன்றுநாள் என்னிடத்தி
லே தங்கிப் போசனம் இல்லாமல் இருக்கிறார்க
ள்; இவர்கள் வழியிலே சோர்ந்துபோகும்படி
க்குப் பட்டினியாய் இவர்களை அனுப்பிவிடமா
ட்டேன் என்றார் —[15]அதற்கு அவருடைய சீஷர் ௩௩
கள், இவ்வளவு சனங்களுக்குத் திருத்தி உண்டா
கும்படிக்கு வேண்டிய அப்பங்கள் இந்த வனாந்
தரத்திலே நமக்கு எப்படி அகப்படும் என்றார்
கள்.—இயேசுவானவர், உங்களிடத்தில் எவ்வ ௩௪
ளவு அப்பங்கள் உண்டு என்றார்; ஏழு அப்பங்க
ளும் சில சிறுமீன்களும் உண்டு என்று சீஷர்
சொல்ல,—அவர் சனங்களைத் தரையிலே பந்தி ௩௫
யிருக்கச்சொல்லி,—பின்பு அந்த [16]ஏழு அப்பங் ௩௬
களையும் மீன்களையும் எடுத்து, [17]தோத்திரம்செய்
து, அவைகளைப்பிட்டுத் தம்முடைய சீஷர்களு
க்குக் கொடுத்தார்; சீஷர் அவைகளைச் சனங்க
ளுக்குக் கொடுக்க, — எல்லாரும் சாப்பிட்டுத் ௩௭
திருத்தி அடைந்தார்கள்; பின்பு சேஷமானவை
கள் ஏழுகூடை நிறையச் சேகரித்துக்கொள்ளப்
பட்டன.-பெண்களும் பிள்ளைகளும் தவிர, போ ௩௮
சனம்பண்ணின புருஷர் நாலாயிரம்பேர்.—[18]அ ௩௯
வர் சனங்களை அனுப்பிவிட்டு, படவில் ஏறி,
மகதலவூரின் திசைகளில் சேர்ந்தார்.

## ௧௬. அதிகாரம்.

௧. பரிசேயர் ஒரு அடையாளத்தைக் கேட்டது. ௬. இயேசு பரிசேயர் சது சேயர் என்பவர்களுடைய புளித்த மாவுக்குச் சீஷரை எச்சரிக்கையாயிருக்கப் போதித்தது. ௰௩. கிறிஸ்துவைக்குறித்துச் சனங்கள் நினைத்த நினைவு. ௰௬. பேதுரு அவரை அறிக்கைபண்ணினது. ௨௧. இயேசு தம்முடைய மரணத்தை முன்னறிவித்தது, ௨௩. அப்படிச் சம்பவிக்காதபடிக்குப் பேதுரு எவினதற்காக அவனைக் கடிந்துகொண்டு, ௨௪. தம்மைப் பின்பற்றுகிறவர்கள் சிலுவையைச்சுமக்கவேண்டுமென்று புத்தி சொன்னது.

1 யோவா. ௰௫. ௨. ௧ கொரி. ௩. ௰௨. ௱.—2 ஏசா ௯. ௰௬. மல்கி. ௨. ௯. மத். ௨௩. ௰௬. லூக். ௬. ௩௯.
3 மாற். ௭. ௰௭.—4 மத். ௰௬. ௯. மாற். ௭. ௰௮.—5 ௧ கொரி. ௬. ௰௩.
6 யாக். ௩. ௬.—7 ஆதி. ௬. ௫: ௮. ௨௧. யாக். ௪. ௰௪: ௰௩. ௰௯. எரே. ௰௭. ௯. மாற். ௭. ௨௧, ௨௨.—8 மாற். ௭. ௨௪.
9 மத். ௰.௫, ௬. அப். ௩. ௨௫. ௨௬: ௰௩. ௪௬. ௨ ரோ. ௰௫. ௮.—10 மத். ௭. ௬. பிலி. ௩. ௨.
11 மாற். ௭. ௩௧.—12 மத். ௪. ௰௮.
13 ஏசா. ௩௫. ௫, ௬ மத். ௰௧. ௫.
லூக். ௭. ௨௨.—14 மாற். ௮. ௧.
15 ௨ இரா. ௪. ௪௩.—16 மத் ௰௪. ௰௯.
17 ௧ சாமு. ௯. ௰௩. லூக். ௨௨. ௰௯.
18 மாற். ௮. ௰.

௧ [1]அப்பொழுது பரிசேயரும் சதுசேயரும் அ
வரைச் சோதிக்கும்படிக்கு அவரிடத்தில் வந்து,
வானத்திலிருந்து ஒரு அடையாளத்தைத் தங்க
ளுக்குக் காண்பிக்கவேண்டுமென்று கேட்டார்
௨ கள்.—அவர்களுக்கு அவர் சொன்னது: அஸ்த
மனமாகிறபொழுது செவ்வானம் தோன்றிய
௩ படியால் வெளிவாங்கும் என்கிறீர்கள்.—அல்லா
மலும் உதயமாகிறபொழுது வானம் சிவப்பாயும்
மந்தாரமாயும் இருக்கிறபடியால், இன்றைக்குப்
பெருங்காற்றும் மழையும் உண்டாகும் என்கிறீர்
கள். வஞ்சகரே, வானத்தின் தோற்றத்தை வகை
யறுக்க அறிந்திருக்கிறீர்கள்; காலங்களின் அ
டையாளங்களைக் குறித்து வகையறுக்கமாட்டீர்
௪ களா?—[2]சோரமார்க்கமுள்ள பொல்லாத சந்ததி
யாரானவர்கள் அடையாளம் கேட்கிறார்கள்;
யோனா தீர்க்கதரிசியின் அடையாளமே அன்றி,
வேறொரு அடையாளமும் இவர்களுக்குக் கொ
டுக்கப்படுவதில்லையென்று சொல்லி, அவர்களை
விட்டுப்போனார்.

௫ [3]அவருடைய சீஷர்கள் அக்கரைக்குப் போ
னபொழுது அவர்கள் அப்பங்களைக் கூடக் கொ
௬ ண்டுபோக மறந்திருந்தார்கள்.—[4]அப்பொழுது
இயேசுவானவர் அவர்களை நோக்கி, நீங்கள் பரி
சேயர் சதுசேயர் என்பவர்களுடைய புளிப்
புள்ள மாவுக்கு விலகி மிகவும் எச்சரிக்கையா
௭ யிருங்கள் என்றார்.—அவர்கள் நாம் அப்பங்க
ளைக் கூடக் கொண்டுவராததைக்குறித்து (இப்
படிச் சொல்லுகிறாரென்று) தங்களுக்குள்ளே
௮ யோசனைபண்ணிக்கொண்டார்கள்.-இயேசுவா
னவர் அதை அறிந்து அவர்களை நோக்கி, அற்ப
விசுவாசிகளே, நீங்கள் அப்பங்களைக் கூடக்
கொண்டுவராததைக்குறித்து (நான் இப்படிச்
சொன்னதாக) உங்களுக்குள்ளே யோசனைபண்
௯ ணுகிறது என்ன?—[5]இன்னம் உங்களுக்குப்
புத்தி இல்லையோ? ஐயாயிரம்பேருக்குள்ளே
(கொடுத்த) ஐந்து அப்பங்களையும், நீங்கள் அவ்
வளவு கூடை நிறையச் சேகரித்த துண்டங்க
௰ ளையும்,—[6]நாலாயிரம்பேருக்குள்ளே (கொடுத்த)
ஏழு அப்பங்களையும், நீங்கள் அவ்வளவு கூடை
நிறைய எடுத்த துண்டங்களையும் நினைத்துக்
௰௧ கொள்ளுகிறதில்லையா?—பரிசேயர் சதுசேயர்
என்பவர்களுடைய புளிப்புள்ள மாவுக்கு விலகி
எச்சரிக்கையாய் இருக்கவேண்டும் என்று நான்
அப்பத்தைக்குறித்துச் சொல்லவில்லை என்று
நீங்கள் சிந்தித்துக்கொள்ளாமல் இருக்கிறது எப்
௰௨ படியென்றார்.—அப்பொழுது அவர்கள் பரி
சேயர் சதுசேயர் என்பவர்களுடைய அப்பங்க
ளின் புளிப்புள்ள மாவுக்கு அல்ல, அவர்களு
டைய உபதேசத்துக்கே விலகி எச்சரிக்கையாய்
இருக்கச் சொன்னாரென்று அறிந்தார்கள்.
பின்பு இயேசுவானவர் பிலிப்பு கேசாரியா ௰௩
வின் திசைகளில் வந்தபொழுது அவர் தம்மு
டைய சீஷர்களை நோக்கி, [7]மனிதனுடைய குமா
ரனாகிய என்னைச் சனங்கள் ஆரென்று சொல்
லுகிறார்கள் என்று கேட்டார்.—[8]அதற்கு அவர் ௰௪
கள் சொன்னது: சிலர் உம்மை யோவான்ஸ்நா
னன் என்றும், சிலர் எலியா என்றும், சிலர் எரே
மியா அல்லது தீர்க்கதரிசிகளில் ஒருவர் என்
றும் சொல்லுகிறார்கள் என்றார்கள்.—அதற்கு ௰௫
அவர், நீங்கள் என்னை ஆரென்று சொல்லுகிறீர்
கள் என்று கேட்டபொழுது,—அதற்குச் சீமோன் ௰௬
பேதுரு சொன்னது: [9]நீர் சீவனுள்ள பராபரனு
டைய குமாரனாகிய கிறிஸ்து என்றான்.—அவ ௰௭
னுடனே இயேசுவானவர் சொன்னது: யோனா
வின் குமாரனாகிய சீமோனே, [10]மாமிச இரத்தம்
அல்ல, பரமண்டலங்களில் இருக்கிற என் பிதா
[11]இதை உனக்கு வெளிப்படுத்தினார்; ஆதலால் நீ
பாக்கியமுள்ளவன்.—மேலும் [12]நீ பேதுருவாய் ௰௮
இருக்கிறாய், [13]இந்தக் கல்மலையின்மேல் நான்
என்னுடைய சபையைக் கட்டுவேன், [14]பாதா
ளத்தின் வாசல்களும் அதைச் செயிப்பதில்லை
என்று உனக்குச் சொல்லுகிறேன்.—அல்லாம ௰௯
லும் பரலோக இராச்சியத்தின் திறவுகோல்களை
உனக்குக் கொடுப்பேன், பூமியிலே நீ கட்டுவது
ஏதோ, அது பரலோகத்திலே கட்டப்பட்டிருக்
கும்; [15]பூமியிலே நீ கட்டவிழ்ப்பது ஏதோ, அது
பரலோகத்திலே கட்டவிழ்க்கப்பட்டிருக்கும்
என்று சொல்லி,—[16]பின்பு தாம் கிறிஸ்து என்று ௨௰
ஒருவருக்கும் சொல்லாதபடிக்குத் தம்முடைய
சீஷர்களுக்குக் கட்டளையிட்டார்.
[17]அதுமுதல் இயேசுவானவர், தாம் எருசலே ௨௧
முக்குப் போய், பெரியோர்களாலும் பிரதான
ஆசாரியராலும் வேதபாரகராலும் மிகுந்த பாடு
படவும், கொலைசெய்யப்படவும், மூன்றாம் நா
ளிலே எழுந்திருக்கவும் வேண்டுமென்று தம்மு
டைய சீஷருக்குக் காண்பிக்கத் தொடங்கி
னார்.—அப்பொழுது பேதுரு அவரைத் தனியே ௨௨
அழைத்து, ஆண்டவரே, உம்மிடத்தில் இரக்கம்
உண்டாவதாக, அப்படி உமக்கு வாராதிருப்ப
தாக என்று அவருடனே கண்டிப்பாய்ச் சொன்
னான்.—இயேசுவானவர் திரும்பிப் பேதுருவி ௨௩
னிடத்தில், [18]ஆ சாத்தானே, நீ என் முன் இரா
மல் போ, நீ பராபரனுக்குப் பிரியமானவைக
ளைச் சிந்தியாமல், மனிதருக்குப் பிரியமானவை
களைச் சிந்திக்கிறபடியினாலே [19]எனக்குத் துன்
பமாயிருக்கிறாய் என்றுசொல்லி,
[20]பின்பு தம்முடைய சீஷர்களைநோக்கி, என் ௨௪

1 மத். ௰௨. ௩௮. மாற். அ. ௰௧. லூக். ௰௧. ௰௬: ௰௨. ௫௪-௫௬. ௧ கொரி. ௧. ௨௨.—2 மத். ௰௨ ௩௯.
3 மாற். அ. ௰௪.—4 லூக். ௰௨. ௧.
5 மத். ௰௪. ௰௭-௨௰. யோவா. ௬. ௯-௰௩.—6 மத். ௰௫. ௩௪-௩௮.
7 மாற். அ. ௨௭. லூக் ௯. ௰௮.
8 மத் ௰௪. ௨. லூக். ௯. ௭ ௯.
9 மத். ௰௪. ௩௩. மாற். அ. ௨௯. லூக். ௯. ௨௰. யோவா. ௬. ௬௮: ௰௧. ௨௭. அப். அ. ௩௭: ௯. ௨௰. ௧ யோ. ௪ ௰௫: ௫. ௫. எபி. ௧. ௨, ௫.
10 எபே. ௨. அ.
11 ௧ கொரி. ௨. ௰. கலா. ௧ ௰௬.
12 யோவா. ௧. ௪௨.—13 எபே. ௨. ௨௰. வெளி. ௨௧. ௰௪.
14 யோபு. ௩௮. ௰௭. சங். ௯. ௰௩: ௭௭. ௰௮. ஏசா. ௩௮. ௰.
15 மத். ௰௮. ௰௮. யோவா. ௨௰. ௨௩.
16 மத். ௰௭. ௯. மாற். அ. ௩௰ லூக். ௯. ௨௧.—17 மத். ௨௰. ௰௭-௨௰. மாற். அ ௩௧: ௯ ௩௧: ௰. ௩௩. லூக். ௯. ௨௨: ௰௮. ௩௧, ௩௩: ௨௪. ௬,௭.
18 ௨ சாமு. ௰௯. ௨௨.—19 ௧ ரோ. ௰௮. ௭.—20 மத். ௰. ௩௮. மாற். அ. ௩௪. லூக். ௯. ௨௩: ௰௪. ௨௭. அப். ௰௪. ௨௨. ௧ தெச. ௩. ௩. ௨ தீமோ. ௩. ௰௨.

ளைப் பின்பற்றி நடக்க ஒருவன் விரும்பினால்,
தன்னைத்தான் வெறுத்துத் தன் சிலுவையை எடுத்
துக்கொண்டு, என்னைப் பின்பற்றக்கடவன்.—
௨௫ என்னத்தினால் என்றால், [1]தன் சீவனை இரட்
சிக்க விரும்புகிறவன் அதை இழந்துபோவான்;
என்நிமித்தம் தன் சீவனை இழந்துபோகிறவன்
௨௬ அதைக் கண்டடைவான்.—அல்லாமலும் மனி
தனானவன் உலக முழுமையும் சம்பாதித்துக்
கொண்டாலும், தன் சீவனை நஷ்டப்படுத்தினால்
அவனுக்கு என்ன லாபம் உண்டாயிருக்கும்?
[2]அன்றியும், ஒரு மனிதன் தன் சீவனை மீட்கிற
௨௭ தற்கு என்னத்தைக் கொடுப்பான்? — [3]அல்லா
மலும், மனிதனுடைய குமாரன் தம்முடைய
பிதாவின் மகிமையைப் பொருந்தி, [4]தம்மு
டைய தூதரோடும்கூட வருவார்; அப்பொழுது
[5]அவனவனுடைய செய்கையின்படியே அவ
௨௮ னவனுக்குப் பலன் அளிப்பார்.—[6]இங்கே நிற்
கிறவர்களில் சிலர் மனிதனுடைய குமாரன்
தம்முடைய இராச்சியத்தில் வருவதைக் காண்கி
றதற்கு முன்னே மரணத்தை அடைவதில்லையெ
ன்று மெய்யாய் உங்களுக்குச் சொல்லுகிறேன்
என்றார்.

## ௰௭ அதிகாரம்.

௧. கிறிஸ்து மறுரூபப்பட்டது. ௰௪. அவர் சந்திரரோகியைக் குணமாக்கி, ௨௨. தம்முடைய பாடுகளை முன்னறிவித்து, ௨௪. தீர்வையைச் செலுத்தினது.

௧ [7]ஆறுநாளுக்குப் பின்பு இயேசுவானவர் தனித்
திருக்கும்படி, பேதுருவையும் யாக்கோபையும்
அவனுடைய தம்பியாகிய யோவானையும் கூட்
டிக்கொண்டு, உயர்ந்த மலையின்மேல் போய்,—
௨ அங்கே அவர்களுக்கு முன்பாக மறுரூபமானார்;
அவருடைய முகம் சூரியனைப்போல் பிரகாசித்
தது; அவருடைய வஸ்திரங்கள் ஒளியைப்போல்
௩ வெண்மையாயின. — அப்பொழுது மோசே
எலியா என்பவர்கள் அவரோடே பேசிக்கொள்
ளுகிறவர்களாய் அவர்களுக்குக் காணப்பட்
௪ டார்கள். — அப்பொழுது பேதுரு இயேசுவை
நோக்கி, ஆண்டவரே, நாம் இங்கே இருக்
கிறது நல்லது; உமக்குச் சித்தமானால் இங்கே
உமக்கும் மோசேயுக்கும் எலியாவுக்கும் ஒவ்வொரு
குடிலாக மூன்று குடில்களை உண்டாக்குவோம்
௫ என்றான்.—[8]அப்படி அவன் பேசுகையில் நடந்
தது என்னவெனில், ஒளியுள்ள மேகம் அவர்
கள்மேல் நிழலிட்டதுமல்லாமல், [9]இவர் எனக்கு
அன்பாயிருக்கிற என்னுடைய குமாரன், [10]இவ
ரில் பிரியமாயிருக்கிறேன், [11]இவருக்குச் செவி
கொடுங்கள் என்று அந்த மேகத்திலிருந்து சத்தம்
௬ உண்டாயிற்று.—[12]சீஷர் அதைக்கேட்டு, முகங்
௭ குப்புற விழுந்து, மிகவும் பயந்தார்கள்.—[13]அப்
பொழுது இயேசுவானவர் வந்து, அவர்களைத்
தொட்டு, எழுந்திருங்கள் பயப்படாதிருங்கள்
என்று சொன்னார்.—அவர்கள் தங்கள் கண்களை ௮
உயர்த்துகிறபொழுது இயேசுவையே அன்றி மற்
றொருவரையும் காணவில்லை.
பின்பு அவர்கள் மலையிலிருந்து இறங்குகிற ௯
பொழுது, [14]இயேசுவானவர் அவர்களை நோக்கி,
மனிதனுடைய குமாரன் மரித்தோரிலிருந்து
எழுந்திருக்கிறவரைக்கும் நீங்கள் இந்தத் தரி
சனையை ஒருவருக்கும் சொல்லவேண்டாம்
என்று கட்டளையிட்டார்.—அப்பொழுது அவ ௰
ருடைய சீஷர்கள் அவரை நோக்கி, [15]அப்படி
யானால் முதலாவது எலியா வரவேண்டும் என்று
வேதபாரகர் எப்படிச் சொல்லுகிறார்கள் என்
றார்கள்.—[16]அதற்கு இயேசுவானவர் சொன்னது: ௰௧
முன்பு எலியா வந்து எல்லாவற்றையும் சீர்ப்
படுத்தவேண்டும் என்பது மெய்தான்.—[17]அல்லா ௰௨
மலும் எலியா வந்தாயிற்றென்று உங்களுக்குச்
சொல்லுகிறேன்; [18]அவனை அவர்கள் அங்கீகரித்
துக்கொள்ளாமல், அவனுக்குத் தங்கள் இஷ்டப்
படி செய்தார்கள்; [19]அப்படி மனிதனுடைய
குமாரனும் அவர்களால் பாடுபடுவான் என்றார்.
[20]அப்பொழுது அவர் யோவான்ஸ்நானனைக் ௰௩
குறித்துத் தங்களுடனே பேசினாரென்று சீஷர்
அறிந்தார்கள்.
[21]பின்பு அவர்கள் சனக்கூட்டத்தினிடத் ௰௪
தில் சேர்ந்தபொழுது, ஒரு மனிதன் அவரிடத்
தில் வந்து, அவர் முன்பாக முழங்கால்படி
யிட்டு,—ஆண்டவரே, என் மகனுக்கு இரங்கும், ௰௫
அவன் சந்திரரோகியாய்க் கொடிய வேதனைப்
படுகிறான்; எப்படியென்றால், அடிக்கடி தீயி
லேயும் அடிக்கடி சலத்திலேயும் விழுகிறான் —
அவனை உம்முடைய சீஷரிடத்தில் கொண்டு ௰௬
வந்தேன், அவர்களுக்கு அவனைக் குணமாக்கத்
திராணியில்லை என்றான்.—அதற்கு இயேசுவா ௰௭
னவர் சொன்னது: ஆ விசுவாசமில்லாத மாறு
பாடுள்ள சந்ததியாரே, எதுவரைக்கும் உங்க
ளோடு இருப்பேன்? எதுவரைக்கும் உங்களில்
பொறுமையாய் இருப்பேன்? அவனை என்னி
டத்தில் கொண்டுவாருங்கள் என்றார்.—அவனைக் ௰௮
கொண்டுவந்தபொழுது இயேசுவானவர் அவனி
லுள்ள பசாசை அதட்டினார்; உடனே அது அ
வனை விட்டுப்போயிற்று; அந்தப் பிள்ளை அந்
நேரமே சுகம் அடைந்தான். — பின்பு சீஷர் ௰௯
கள்மாத்திரம் இயேசுவினிடத்தில் வந்து, நாங்
கள் அதைத் துரத்தும்படிக்கு, ஏன் எங்களுக்
குத் திராணியில்லை என்றார்கள். — அதற்கு ௨௰
இயேசுவானவர், உங்கள் அவிசுவாசத்தினாலே
(திராணியில்லை). மேலும் [22]ஒரு கடுகுவிதை அவ்

---

1 லூக். ௰௭. ௩௩. யோவா. ௰௨. ௨௫.
2 சங். ௪௯. ௭, ௮
3 மத். ௨௬. ௬௪. மாற். ௮. ௩௮. லூக். ௯. ௨௬.—4 தானி. ௭. ௰. சகரி. ௰௪. ௫. மத். ௨௫. ௩௧. யூதா. ௰௪.
5 யோபு. ௩௪. ௰௧. சங். ௬௨. ௰௨. வாக். ௨௪. ௰௨. எரே. ௰௭. ௰: ௩௨. ௰௯. உரோ. ௨. ௬. ௧ கொரி. ௩. ௮. ௨ கொரி. ௫. ௰. ௧ பே. ௧. ௰௭. வெளி. ௨. ௨௩: ௨௨. ௰௨.
6 மாற். ௯. ௧. லூக். ௯. ௨௭.
7 மாற். ௯. ௨. லூக். ௯. ௨௮.
8 ௨ பே. ௧. ௰௭.—9 மத். ௩. ௰௭. மாற். ௧. ௰௧. லூக். ௩. ௨௨.
10 ஏசா. ௪௨. ௧.—11 ௫ மோ. ௰௮. ௰௫, ௰௯. அப். ௩. ௨௨, ௨௩.
12 ௨ பே. ௧. ௰௮.—13 தானி. ௮. ௰௮: ௯. ௨௧: ௰. ௰: ௰௮. ௰௯.
14 மத். ௰௬. ௨௰. மாற். ௮. ௩௰: ௯. ௯.
15 மல்கி. ௪. ௫. மத். ௰௧. ௰௪. மாற். ௯. ௰௧.—16 மல்கி. ௪. ௬. லூக். ௧. ௰௬, ௰௭. அப். ௩. ௨௧.
17 மத். ௰௧. ௰௪. மாற். ௯. ௰௨, ௰௩.
18 மத். ௰௪. ௩, ௰.—19 மத். ௰௬. ௨௧, ௨௨.—20 மத். ௰௧. ௰௪.
21 மாற். ௯. ௰௪. லூக். ௯. ௩௭.
22 மத். ௨௧. ௨௧. மாற். ௰௧. ௨௩. லூக். ௰௭. ௬. ௧ கொரி. ௰௩. ௨.

வளவு விசுவாசம்மாத்திரம் உங்களுக்கு உண்டா
ஞல், நீங்கள் இந்த மலையை நோக்கி, இவ்விடம்
விட்டு அப்புறம் போ என்று சொல்ல அதுபோம்;
அல்லாமலும் உங்களால் கூடாதகாரியம் ஒன்
றும் இருப்பதில்லை என்று மெய்யாகவே உங்க
௨௧ ளுக்குச் சொல்லுகிறேன்.—ஆகிலும் செபத்தி
ஞலும் உபவாசத்தினலுமே அன்றி, (வேறுவித
மாய்) இந்தச் சாதியைத் துரத்தப்படாது என்
ருர்.
௨௨ [1]அல்லாமலும் அவர்கள் கலிலேயா நாட்டிலே
சஞ்சரித்திருந்த காலத்திலே இயேசுவானவர்
அவர்களை நோக்கி, மனிதனுடைய குமாரன்
மனிதர்களுடைய கையில் ஒப்புக்கொடுக்கப்படு
௨௩ வான்.-அவர்கள் அவனைக் கொலைசெய்வார்கள்;
பின்பு மூன்றும் நாளிலே எழுந்திருப்பான்
என்ருர். அவர்கள் மிகுந்த துக்கம் அடைந்தார்
கள்.
௨௪ [2]அவர்கள் கப்பர்நாகூம் ஊரில் வந்தபொழுது,
வரிப்பணத்தைச் சேர்க்கிறவர்கள் பேதுருவினி
டத்தில் வந்து, உங்கள் போதகர் *வரிப்பணத்
தைக் கொடுக்கிறதில்லையா என்ருர்கள்; கொடுக்
௨௫ கிருர் என்ருன்.-பின்பு அவன் வீட்டிலே வந்த
பொழுது, அவன்(பேசுகிறதற்கு)முன்னே இயே
சுவானவர் அவனை நோக்கி, சீமோனே, பூமியின்
இராசாக்கள் யார் கையிலே தீர்வை அல்லது வரி
வாங்குகிருர்கள்? தங்கள் பிள்ளைகள் கையிலோ,
அந்நியர் கையிலோ, இது உனக்கு எப்படித்
௨௬ தோன்றுகின்றது என்ருர். — அந்நியர் கையில்
வாங்குகிருர்கள் என்று பேதுரு சொன்ஞன்; அ
தற்கு இயேசுவானவர், அப்படியாஞல் பிள்ளை
௨௭ கள் செலுத்தவேண்டுவதில்லையே. — ஆஞலும்
நாம் அவர்களுக்கு விசனம் வரப்பண்ணுதபடிக்
கு நீ கடலிடத்துக்குப்போய், தூண்டிலைப்போ
ட்டு, முதலாவது எழும்புகிற மீனை எடுத்து, அ
தின் வாயைத் திறந்துபார்; அதிலே ஒரு †வெள்
ளிக்காசைக் காண்பாய், அதை எடுத்துவந்து
எனக்காகவும் உனக்காகவும் அவர்களுக்குக்
கொடு என்ருர்.

## ௰௮. அதிகாரம்.

௧. கிறிஸ்து தம்முடைய சீஷர்கள் தாழ்மையுள்ளவர்களாயும், கெடுதி செய்யாதவர்களாயும் இருக்கவும், ௭. இடறல்களை விலக்கிச் சிறியவர்களை அசட்டைபண்ணுமல் இருக்கவும் எச்சரித்து, ௰௫ சகோதரர் நமக்குத் தப்பிதஞ்செய்தால் அவர்களுக்கு இன்னதைச் செய்யவேண்டுமென்றும், ௨௧. இத்தனைதரம் அவர்களை மன்னிக்கவேண்டுமென்றும் போதித்து, ௨௩. ஊழியக்காரரிடத்தில் கணக்கு வாங்கி, ௩௨. தன் தோழன் மேல் இரக்கத்தைப் பாராட்டாதவனுக்குத் தண்டனைசெய்த இராசாவினுடைய உவமையினலே அதை விஸ்தரித்தது.

௧ [3]அக்காலத்திலே சீஷர்கள் இயேசுவினிடத்திற்
கு வந்து, பரலோக இராச்சியத்திலே எவன் பெ
௨ ரியவஞய் இருப்பான் என்ருர்கள். — அப்பொ
ழுது இயேசுவானவர் ஒரு பிள்ளையைத் தம்மிடத்
தில் அழைத்து, அதை அவர்களுக்குள்ளே நிறுத்
திச் சொன்னதாவது:—நீங்கள் மனந்திருப்பிப் ௩
[4]பிள்ளைகளைப்போல் ஆகாவிட்டால், பரலோக
இராச்சியத்தில் பிரவேசிக்கமாட்டீர்கள் என்று
மெய்யாய் உங்களுக்குச் சொல்லுகிறேன்.—[5]ஆ ௪
கையால் இந்தப் பிள்ளையைப்போலத் தன்னைத்
தாழ்த்துகிறவனே, பரலோக இராச்சியத்தில் பெ
ரியவஞய் இருப்பான்.—[6]அல்லாமலும் இப்படிப் ௫
பட்ட ஒரு பிள்ளையை என் நாமத்தினலே ஏற்
றுக்கொள்ளுகிறவன் என்னை ஏற்றுக்கொள்ளுகி
ருன்.—[7]என்மேல் விசுவாசமாயிருக்கிற இந்தச் ௬
சிறியரில் ஒருவன் குற்றம்செய்வதற்குக் காரண
மானவன் எவனே, அவனுடைய கழுத்தில் ஏந்
திரக்கல்லைக் கட்டி, அவனைச் சமுத்திரத்துக்
குள்ளே அமிழ்த்தினல் அவனுக்கு நலமாயிருக்
கும்.
ஐயோ! கெடுத்தலின்நிமித்தம் உலகத்திற்கு வே ௭
தனைவரும்; [8]கெடுத்தல் அவசியமாய் வரவேண்
டும். [9]ஆஞலும் ஐயோ! கெடுத்தலைச் செய்கிறவ
னுக்கு வேதனைவரும்.—[10]ஆதலால் உன் கையா ௮
வது உன் காலாவது உன்னைக் கெடுக்கிறதற்கு
ஏதுவாஞல், அவைகளைத் தறித்து எறிந்துபோடு;
நீ இரண்டுகையை அல்லது இரண்டு காலை உடை
யவஞய் நித்திய அக்கினியிலே தள்ளப்படுவதி
லும், சப்பாணியாய் அல்லது ஊனஞய் (நித்திய)
சீவனுள்ள இடத்தில் பிரவேசிக்கிறதே உனக்கு
நன்மையாயிருக்கும். — மேலும் உன்னுடைய ௯
கண் உன்னைக் கெடுக்கிறதற்கு ஏதுவாஞல், அ
தைப் பிடுங்கி எறிந்துபோடு; நீ இரண்டு கண்ணை
உடையவஞய் எரிநரகத்திலே தள்ளப்படுவதி
லும், ஒற்றைக்கண்ணஞய் (நித்திய) சீவனுள்ள
இடத்தில் பிரவேசிக்கிறதே உனக்கு நன்மையா
யிருக்கும்.
இந்தச் சிறியரில் ஒருவனையும் அசட்டைபண் ௰
ணுதபடிக்குப் பாருங்கள்; என்னத்தினலென்
ருல், [11]அவர்களுக்கு ஏற்ற தேவதூதர்கள் பர
மண்டலங்களிலே [12]என் பரமபிதாவினுடைய
சமுகத்தை எப்பொழுதும் தரிசிக்கிருர்கள் என்று
உங்களுக்குச் சொல்லுகிறேன்.—[13]அல்லாமலும் ௰௧
மனிதனுடைய குமாரன் கெட்டுப்போனதை
இரட்சிக்கவந்தான். — [14]உங்களுக்கு எப்படித் ௰௨
தோன்றுகின்றது? ஒரு மனிதனுக்கு உண்டாயி
ருக்கிற நூறு ஆடுகளில் ஒன்று சிதறிப்போஞல்,
அவன் தொண்ணூற்றென்பது ஆடுகளையும் மலை
களில் விட்டுப்போய், சிதறிப்போனதைத் தேடு
வானல்லவோ? — இது உங்களுக்கு எப்படித் ௰௩
தோன்றுகின்றது? அவன் அதைக் கண்டுபிடித்
தால், சிதறிப்போகாத தொண்ணூற்றென்பதி

1 மத்.௰௬.௨௧: ௨௰௰௭.௰௮. மாற். ௮.௩௧: ௯.௩௰, ௩௧: ௰.௩௩. லூக. ௯.௨௨,௪௪: ௰௮ ௩௧: ௨௪.௬,௭. 2 மாற். ௯.௩௩.—3 மாற். ௯.௩௪. லூக் ௯.௪௬: ௨௨. ௨௪. 4 சங்.௱௩௧.௨. மத்.௰௯.௰௪. மாற். ௰.௰௪. லூக். ௰௮ ௰௬. ௧ கொரி. ௰௪. ௨௰. ௧ பே. ௨. ௧. 5 மத். ௨௰ ௨௭: ௨௩.௰௩ — 6 மத் ௰.௪௨. லூக். ௯. ௪௮ —7 மாற். ௯. ௪௨. லூக். ௰௭. ௨.—8 லூக். ௰௭. ௧. ௧ கொரி. ௰௧. ௰௯. 9 மத். ௨௬. ௨௪.—10 மத்.௫. ௨௯, ௩௰. மாற். ௯. ௪௩. ௪௫.—11 சங். ௩௪. ௭. ௪௯௱. ௰௧.௭. எபி. ௧. ௰௪. 12 எஸ். ௧. ௰௪. லூக். ௧. ௰௯. 13 லூக். ௯. ௫௬: ௰௯. ௯, யோவா. ௩. ௰௭: ௰௨. ௪௭. 14 லூக். ௰௫. ௪.

* மூலத்திலே திதிராகுமா என்ற பேர்பெற்றுப் பத்து அணவிலையுள்ளதாயிருக்கும்; ௨ மோ. ௩௰. ௰௩: ௩௮. ௨௬. காண்க.—† Stater ஒன்றே கால் ரூபாய் பெறத்தக்க வெள்ளி.

லும் அதைக்குறித்து அதிகமாய்ச் சந்தோஷப்படு
வான் என்று மெய்யாகவே உங்களுக்குச் சொல்
௰௪ லுகிறேன்.—அந்தப்படி இந்தச் சிறியரில் ஒரு
வனாகிலும் கெட்டுப்போகும்படிக்குப் பரமண்
டலங்களில் இருக்கிற உங்கள் பிதாவுக்குச் சித்த
மில்லை
௰௫ [1]உன் சகோதரன் உனக்கு விரோதமாய்க் குற்
றம்செய்தால், நீ போய் அவனோடே மாத்திரம் இ
ருந்து, அவனைக் கடிந்துகொள்; [2]அவன் உனக்
குச் செவிகொடுத்தால், ஆதாயமாக அவனைப்
௰௬ பெற்றுக்கொள்வாய்.—[3]அவன் செவிகொடாமல்
இருந்தால், சங்கதிகள் எல்லாம் இரண்டு மூன்று
சாட்சிகளுடைய வாக்கினால் நிலைவரப்படும்ப
டிக்கு, நீ இரண்டொருவரைக் கூட்டிப்போ.—
௰௭ அவன் அவர்களுக்கும் கீழ்ப்படியாதிருந்தால், நீ
அதைச் சபைக்கு அறிவிக்கவேண்டும்; [4]அவன்
சபையையும் அசட்டைபண்ணினால், நீ அவனை
அஞ்ஞானியைப்போலவும் ஆயக்காரனைப்போ
௰௮ லவும் எண்ணுவாயாக.—[5]பூமியிலே நீங்கள் எவை
களைக் கட்டுவீர்களோ, அவைகள் பரலோகத்தி
லே கட்டப்பட்டிருக்கும்; பூமியிலே எவைகளை
அவிழ்ப்பீர்களோ, அவைகள் பரலோகத்திலே
அவிழ்க்கப்பட்டிருக்கும் என்று மெய்யாய் உங்
௰௯ களுக்குச் சொல்லுகிறேன்.—அல்லாமலும் பூமி
யிலே எந்தக்காரியத்தைக்குறித்தும் உங்களில்
[6]இரண்டுபேர் வேண்டிக்கொள்ள ஒருமைப்பட்
டால், அது பரமண்டலங்களில் இருக்கிற [7]என்
பிதாவினால் அவர்களுக்கு உண்டாகும் என்று
௨௰ உங்களுக்குச் சொல்லுகிறேன்.—என்னத்தினால்
என்றால், இரண்டுபேராவது மூன்றுபேராவது
என்னுடைய நாமத்திலே எங்கே கூடிவந்திருக்
கிறார்களோ, அங்கே அவர்களுக்குள்ளே இருக்
கிறேன் என்றார்.
௨௧ அப்பொழுது பேதுரு அவரிடத்தில் வந்து,
ஆண்டவரே, என் சகோதரன் எனக்கு விரோதம்
செய்தால், அவனுக்கு நான் எத்தனைதரம் மன்
னிக்கவேண்டும்; [8]ஏழுதரமட்டுமோ என்றான்.-
௨௨ இயேசுவானவர் அவனுக்குச் சொன்னது: ஏழு
தரமட்டும் அல்ல, [9]ஏழெழுபதுதரம் என்று உனக்
௨௩ குச் சொல்லுகிறேன். — எப்படியெனில், பர
லோக இராச்சியம் தன் ஊழியக்காரருடனே
கணக்குப்பார்க்கச் சித்தமான இராசனுக்கு ஒப்
௨௪ பாய் இருக்கின்றது.—அவன் கணக்குப்பார்க்கத்
தொடங்கினபொழுது, பதினாயிரம் * தாலந்து
கடன்பட்டவனை அவனுக்கு முன்பாகக் கொ
௨௫ ண்டுவந்தார்கள்.—அவன் கடனைத்தீர்க்கத் திரா
ணியில்லாதபடியால், ஆண்டவன் அவனையும்
அவனுடைய மனைவியையும் பிள்ளைகளையும்
அவனுக்கு உண்டான யாவையும் [10]விற்று, கட
னைத் தீர்க்கக் கட்டளையிட்டான்.—அப்பொழு ௨௬
து அந்த ஊழியக்காரன் விழுந்து வணங்கி, ஆண
டவனே, எல்லாவற்றையும் உமக்குக் கொடுத்
துத் தீர்க்கிறேன்; நீர் எனக்கு இரங்கிப் பொறுக்
கவேண்டும் என்று † வேண்டிக்கொண்டான்.—
அந்தப்படி ஆண்டவன் அந்த ஊழியக்காரனுக் ௨௭
கு இரங்கி, அவனை விடுதலைபண்ணி, கடனையும்
அவனுக்கு மன்னித்தான்.—பின்பு அந்த ஊழி ௨௮
யக்காரன் புறப்பட்டுப்போகையில், தன்னோ
டேகூட வேலைசெய்து தனக்கு ‡ நூறு தேனாரி
யபணம் கடன்பட்டிருந்த ஒருவனைக் கண்டு,
அவனைப் பிடித்துத் தொண்டையை நெரித்து, நீ
பட்ட கடனை எனக்குக் கொடுத்துத் தீர் என்
றான்.—உடனே அந்த ஊழியக்காரன் அவனு ௨௯
டைய கால்களின் அருகே விழுந்து, எல்லாவற்
றையும் உனக்குக் கொடுத்துத் தீர்க்கிறேன்; என
க்கு இரங்கிப் பொறுக்கவேண்டும் என்று வேண்
டிக்கொண்டான். — ஆனாலும் அவன் மனதில் ௩௰
லாமல் போய், அவன் பட்ட கடனைத் தீர்க்கும
ளவும் அவனைக் காவலில் போடுவித்தான். —
அந்த நடக்கைகளை மற்ற ஊழியக்காரர் கண்டு, ௩௧
மிகுந்த துக்கமடைந்து, ஆண்டவனிடத்துக்குப்
போய், நடந்த எல்லாவற்றையம் அவனுக்கு
அறிவித்தார்கள்.—அப்பொழுது ஆண்டவன் அ ௩௨
வனை அழைப்பித்து அவனைநோக்கி, பொல்லாத
ஊழியக்காரனே, நீ என்னை வேண்டிக்கொண்
டபடியினாலே. நான் அந்தக் கடன் யாவையும்
உனக்கு மன்னித்தேனே.—நான் உனக்கு இரங் ௩௩
கினதுபோல, நீயும் உன்னோடேகூட ஊழியம்
செய்கிறவனுக்கு இரங்கவேண்டுமல்லவோ என்
றுசொல்லி,—கோபம் அடைந்து, அவன் பட்ட ௩௪
கடன் யாவையும் தனக்குக் கொடுத்துத் தீர்க்கு
மளவும், அவனை உபாதிக்கிறவர்களுக்கு ஒப்புக்
கொடுத்தான். — [11]அவனவன் தன் சகோதரன் ௩௫
செய்த தப்பிதங்களை நீங்கள் மனப்பூருவமாய்
மன்னியாமல்போனால், இப்படிப்போல உங்கள்
பரமபிதா உங்களுக்கும் செய்வார் என்றார்.

## ௰௯. அதிகாரம்.

௨. கிறிஸ்து வியாதிஸ்தரைக் குணமாக்கி, ௩. பெண்சாதியைத் தள்ளிப்போடுவதைக்குறித்துப் பரிசேயருக்கு உத்தரவு சொல்லி, ௰. விவாகம்வேண்டிய காலத்தைக் காண்பித்து, ௰௩. சிறுபிள்ளைகளை ஏற்றுக்கொண்டு, ௰௬. ஒரு வாலிபனுக்கு நித்தியஜீவனை அடையும் வழியையும், ௨௧. உத்தம சற்குணமாயிருக்கும் விதத்தையும் படிப்பித்து, ௨௩. ஐசுவரியவான்கள் பரமனுடைய இராச்சியத்துக்குள் பிரவேசிக்கிறது அரிதென்று சீஷர்களுக்குச் சொல்லி, ௨௭. தம்மைப் பின்பற்றும்படிக்கு எதையும் வெறுக்கிறவர்களுக்குப் பலன் உண்டாகுமென்று வாக்குத்தத்தம் பண்ணினது.

மேற்சொல்லிய உபதேசங்களை [12]இயேசுவான ௧
வர் சொல்லி முடித்தபின்பு, அவர் கலிலேயா
நாட்டைவிட்டு யோர்தானுக்கு அருகே இருக்

1 ௩ மோ. ௰௯ ௰௭. லூக். ௰௭. ௩. ௰. ௨௮.—4 உரோ. ௰௬. ௰௭.
2 யாக். ௫. ௨௰. ௧ பே. ௩. ௨. ௧ கொரி. ௫. ௯. ௨ தெச. ௩.
3 ௫ மோ. ௰௭. ௬; ௰௯. ௰௫. யோவா. ௮. ௰௭. ௨ பே. ௰.
௰௪. ௨ கொரி. ௰௩. ௧. எபி. 5 மத். ௰௬. ௰௯. யோவா. ௨௰. ௨௩.
௧ கொரி. ௫. ௪, ௫.—6 மத். ௫. 10 ௨ இரா. ௪. ௧ நெகே. ௫. ௮.
௨௪.—7 ௧ யோ. ௩. ௨௨: ௫. ௰௪. 11 லூக். ௨௧. ௰௩. மத். ௬. ௰௪. மாற்.
8 லூக். ௰௭. ௪.—9 மத். ௬. ௰௪. மாற். ௰௧. ௨௬. யாக். ௨. ௰௩.
௰௧. ௨௫. கொலோ. ௩. ௰௩. 12 மாற். ௰. ௧. யோவா. ௰. ௪௰.

* ஒரு தாலந்து (௬௰௰) ஔன்ஸ்வெள்ளி; ஒரு ஔன்ஸ் இரண்டரை ரூபாய் விழுக்காடு (௩௲௭௱௫௰) ரூபாயாம்.—† அல்லது பணிந்துகொண்டான்.
‡ உரோமருடைய வெள்ளிக்காசு அரைக்கால் ஔன்ஸாம்; ஒரு ஔன்ஸ் இரண்டரை ரூபாய் விழுக்காடு, ஒரு வெள்ளிக்காசு
ஐந்து அணா இரண்டு பைசாவாகும்; மத். ௨௰. ௨.

கிற யூதேயா நாட்டின் எல்லைகளுக்குப் போ
௨ னார்.—[1]அநேக சனங்கள் அவர் பின்சென்றார்
கள்; அவ்விடத்திலே அவர்களிலுள்ள (பிணியா
ளிகளை) அவர் குணமாக்கினார்.

௩ அப்பொழுது சில பரிசேயர் அவரைச் சோ
திக்கும்படிக்கு அவரிடத்தில் வந்து, புருஷனா
னவன் தன் மனைவியை எந்த நிமித்தமானாலும் தள்
௪ ளிவிடலாமா என்று கேட்டார்கள். — அதற்கு
அவர் சொன்னது: [2]ஆதியிலே சிருஷ்டிகர் மனி
தரை உண்டாக்கினபொழுது, ஒரு ஆணையும்
ஒரு பெண்ணையும் உண்டாக்கினார் என்கிறதை
௫ யும்,—[3]இதின் நிமித்தம் ஒருவன் தகப்பனையும்
தாயையும் விட்டுத் தன் மனைவியுடனே இசைந்
திருப்பான், [4]அவ்விருவரும் ஒரே சரீரத்தைப்
போல் இருப்பார்கள் என்று அவர் சொன்னதை
௬ யும் நீங்கள் வாசிக்கவில்லையோ?—அப்படியிருக்
கிறபடியினாலே அவர்கள் இருவராய் இராமல்,
ஒரே சரீரத்தைப்போல் இருக்கிறார்கள்; ஆதலால்
பராபரன் இணைத்ததை மனிதர் பிரிக்கக்கூடாது
என்றார்.

௭ அவர்கள் சொன்னது: அப்படியானால், [5]தள்
ளுதலின் சீட்டைக் கொடுத்து, அவளைத் தள்ளி
விடும்படிக்கு மோசே என்பவர் ஏன் கட்டளையி
௮ ட்டார் என்றார்கள்.—அதற்கு அவர் சொன்னது:
உங்கள் இருதயம் கடினமானபடியால், நீங்கள்
உங்கள் மனைவிகளைத் தள்ளிவிடும்படிக்கு மோ
சே உங்களுக்கு இடங்கொடுத்தார்; ஆதிமுதலோ
௯ அப்படியிருந்ததில்லை. — [6]ஆகையால் எவனா
னாலும் வேசிமார்க்கமாய் நடவாமலிருக்கிற மனை
வியைத் தள்ளிவிட்டு, வேறொருத்தியை விவா
கம்பண்ணினால், அவன் விபசாரம்பண்ணுகி
றான். தள்ளிவிடப்பட்டவளை விவாகம்பண்ணு
கிறவனும் விபசாரம்பண்ணுகிறான் என்று உங்க
ளுக்குச் சொல்லுகிறேன் என்றார்.

௰ அவருடைய சீஷர்கள் அவருடனே சொன்
னது: [7]விவாகம்பண்ணின புருஷனுடைய காரி
யம் இப்படியானால், விவாகம்பண்ணுகிறது நன்
௰௧ மையல்ல என்றார்கள்.—அதற்கு அவர் சொன்ன
தாவது: [8]திராணி பெற்றவர்களே அன்றி, மற்ற
எவர்களானாலும் (நீங்கள் சொன்ன) வசனத்தின்
௰௨ படி செய்யமாட்டார்கள்.—அண்ணகர்கள் உண்
டு; சிலர் அப்படிப்பட்டவர்களாய்ப் பிறந்தார்
கள், சிலர் மற்ற மனிதர்களாலே அண்ணகர்களாக்
கப்பட்டார்கள், [9]சிலர் பரலோக இராச்சியத்துக்
காகத் தங்களை அண்ணகர்களாக்கினார்கள், அப்
படிப் பற்றிக்கொள்ளத் திராணியுள்ளவன் எவ
னோ, அவன் அப்படிப் பற்றிக்கொள்ளக்கடவன்
என்றார்.

௰௩ [10]அப்பொழுது அவர் பிள்ளைகளின்மேல் கை
களைவைத்து, அவர்களுக்காகச் செபம்பண்ணும்
படிக்கு அவரிடத்தில் கொண்டுவந்தார்கள்; அவர்
களைச் சீஷர் அதட்டினார்கள். — இயேசுவான ௰௪
வர் (அதைக்கண்டு) சொன்னதாவது: பிள்ளைகள்
என்னிடத்திலே வருகிறதற்குத் தடைபண்ணா
மல் இடங்கொடுங்கள்; [11]பரலோக இராச்சியம்
அப்படிப்பட்டவர்களுடைய தாய் இருக்கின்ற
தே என்று சொல்லி,—அவைகள்மேல் கைகளை ௰௫
வைத்து, பின்பு அவ்விடம்விட்டுப் புறப்பட்டுப்
போனார்.

[12]அப்பொழுது ஒருவன் வந்து அவரை நோக் ௰௬
கி, நல்ல போதகரே, [13]நித்திய சீவனை அடையும்
படிக்கு நான் எந்த நன்மையைச் செய்யவேண்
டும் என்றான்.—அவனுடனே அவர் சொன்னது: ௰௭
நீ என்னை நல்லவன் என்று ஏன் சொல்லுகிறாய்?
பராபரனாகிய ஒருவரேதவிர நல்லவன் ஒருவ
னும் இல்லையே; நீ சீவனில் பிரவேசிக்க விரும்
பினால் கற்பனைகளைக் கைக்கொள் என்றார்.—
அவைகள் எவைகளென்று அவன் கேட்டான்; ௰௮
அதற்கு இயேசுவானவர் சொன்னது: [14]கொலை
செய்யாதிருப்பாயாக; விபசாரம்பண்ணாதிருப்
பாயாக; களவுசெய்யாதிருப்பாயாக, பொய்ச்
சாட்சி சொல்லாதிருப்பாயாக;—[15]உன் தகப்ப ௰௯
னையும் தாயையும் கனம்பண்ணுவாயாக; [16]உன்
னைப்போலப் பிறனில் அன்புகூர்வாயாக என்
பவைகளே என்றார். — அந்த வாலிபன் சொன் ௨௰
னது: இவைகளை எல்லாம் நான் சிறுவயது முதல்
கைக்கொண்டிருக்கிறேன்; நான் இன்னம் செய்
யவேண்டுவது என்னவென்றான்.—இயேசுவான ௨௧
வர் சொன்னது: நீ பூரண சற்குணனாயிருக்க
விரும்பினால், நீ போய் [17]உனக்கு உண்டாயிருக்
கிறவைகளை விற்றுப் பரலோகத்திலே உனக்குப்
பொக்கிஷம் உண்டாயிருக்கும்படிக்குத் தரித்
திரருக்குக் கொடுத்து, பின்பு வந்து என்பின்
னே செல்லு என்றார். — வாலிபன் இந்த வச ௨௨
னத்தைக் கேட்டு, மிகுந்த ஆஸ்திகளை உடைய
வனானபடியினாலே, துக்கத்தோடே போய்விட்
டான்.

அப்பொழுது இயேசுவானவர் தம்முடைய ௨௩
சீஷரை நோக்கி, [18]ஐசுவரியமுள்ளவன் பர
லோக இராச்சியத்தில் பிரவேசிக்கிறது அரிதாயி
ருக்கின்றதென்று மெய்யாகவே உங்களுக்குச்
சொல்லுகிறேன்.—அல்லாமலும் ஐசுவரியவான் ௨௪
பராபரனுடைய இராச்சியத்தில் பிரவேசிக்கிற
தைப்பார்க்கிலும், ஓர் ஒட்டகம் ஊசியின் காதி
லே நுழைகிறதே எளிதாயிருக்கின்றதென்று உங்
களுக்குச் சொல்லுகிறேன் என்றார். — அவரு ௨௫
டைய சீஷர்கள் அதைக் கேட்டு, மிகவும் பிர
மித்து, அப்படியானால் இரட்சிக்கப்படுகிறவர்

1 மத். ௪௨. ௰௫.—2 ௧ மோ. ௧. ௨௭: ௫. ௨. மல்கி. ௨. ௰௫.
3 ௧ மோ. ௨. ௨௪. மாற். ௰. ௫-௯. எபே ௫. ௩௧. மாற். ௰. ௭.
4 ௧ கொரி. ௬. ௰௬: ௭. ௨.
5 ௫ மோ. ௨௪. ௧. மத். ௫. ௩௧.
6 மத் ௫. ௩௨. மாற். ௰. ௰௧. லூக். ௰௬. ௰௮. ௧ கொரி. ௭. ௰, ௰௧.
7 வாக். ௨௧ ௰௯.—8 ௧ கொரி. ௭. ௨, ௭, ௯, ௰௭.—9 ௧ கொரி ௭. ௩௨, ௩௪: ௯. ௫, ௰௫.—10 மாற். ௰. ௰௩. லூக். ௰௮. ௰௫.
11 மத். ௰௮. ௩.—12 மாற். ௰. ௰௭. லூக். ௰௮. ௰௮.—13 லூக். ௰. ௨௫
14 ௨ மோ. ௨௰. ௰௩-௰௭. ௫ மோ. ௫. ௰௭-௨௧.—15 மத். ௧௫. ௪.
16 ௩ மோ. ௰௯. ௰௮. மத். ௨௨. ௩௯. ௨ரோ. ௰௩. ௯. கலா. ௫. ௰௪. யாக். ௨. ௮.—17 மத். ௬. ௨௰. லூக். ௰௨. ௩௩: ௰௬. ௯. அப். ௨. ௪௫: ௪. ௩௪, ௩௫. ௧ தீமோ. ௬. ௰௮, ௰௯.
18 மத். ௰௩. ௨௨. மாற். ௰. ௨௪. ௧ கொரி. ௧. ௨௬. ௧ தீமோ. ௬. ௯, ௰

உ௬ கள் யார் என்றார்கள்.—இயேசுவானவர் அவர்க
ளைப்பார்த்துச் சொன்னதாவது: மனிதரால் இது
கூடாதகாரியந்தான், [1]பராபரனாலே எந்தக்காரி
யத்தையும் செய்ய வல்லவர் என்றார்.
உ௭ [2]அப்பொழுது பேதுரு அவருடனே சொன்
னதாவது: [3]இதோ, நாங்கள் எல்லாவற்றையும்
விட்டு உம்மைப் பின்பற்றிவந்தோம், அதற்காக
எங்களுக்கு என்ன பலன் வரும் என்றான்.—
உ௮ இயேசுவானவர் சொன்னது: (சகலமும்) புதி
தாக்கப்படும் காலத்திலே, மனிதனுடைய குமா
ரன் தனது மகிமையுள்ள பத்திராசனத்தில் வீற்
றிருக்கும்பொழுது, என்னைப் பின்பற்றி வந்த
நீங்களும் [4]இஸ்ரவேலராகிய பன்னிரண்டுகோத்
திரங்களுக்கு நியாயத்தீர்ப்பு கொடுக்கிறவர்களா
கப் பன்னிரண்டு பத்திராசனங்களில் இருப்பீர்
களென்று மெய்யாகவே உங்களுக்குச் சொல்லு
உ௯ கிறேன். — [5]அல்லாமலும் என் நாமத்தினிமித்
தம் வீட்டையாகிலும், சகோதரனையாகிலும்,
சகோதரிகளையாகிலும், தகப்பனையாகிலும், தா
யையாகிலும்,மனைவியையாகிலும், பிள்ளைகளை
யாகிலும், நிலங்களையாகிலும் விட்டவன் எவ
னோ, அவன் நூறத்தனையாய்ப் பலன் அடைந்து,
நித்திய சீவனையும் சுதந்தரித்துக்கொள்வான்.—
௩௰ [6]ஆகிலும் முந்தினோராகிய அநேகர் பிந்தினோ
ராய் இருப்பார்கள்; பிந்தினோராகிய (அநேகர்)
முந்தினோராய் இருப்பார்கள்.

## உ௰. அதிகாரம்.

க. கிறிஸ்து திராட்சத்தோட்டத்தில் வேலைசெய்கிறவர்களின் உவமையி
னால் பராபரன் ஒருவனுக்கும் கடனாளியல்ல என்று காண்பித்தது, ௰எ.
தம்முடைய பாடுகளை முன்னறிவித்தது, உ௰. செபெதேயுவின் பிள்ளை
களின் தாயாருக்கு அருளிச்செய்த உத்தரவினால் தம்முடைய சீஷர்கள்
மனத்தாழ்மையாய் இருக்கப் படிப்பித்தது, ௩௰. இரண்டு குருடருக்குப்
பார்வையைக் கொடுத்தது.

க அது எப்படியெனில், பரலோக இராச்சியத்
தின் (ஆளுகை) ஒரு வீட்டெசமானுடைய
(நடக்கைக்கு) ஒப்பாயிருக்கின்றது; அவன்
தன் திராட்சத்தோட்டத்திலே வேலைசெய்யக்
கூலிக்காரரை அழைத்துக்கொண்டுவரும்படிக்
உ கு, — அதிகாலையிலே புறப்பட்டு, சில கூலிக்
காரரைக் கண்டு, நாளொன்றுக்கு ஒரு *பணம்
கூலி தீர்மானம்பண்ணி, அவர்களைத் தன் திராட்
௩ சத்தோட்டத்திற்கு அனுப்பிவந்தான். — மூன்
றாம்மணி வேளையிலேயும் அவன் புறப்பட்டு,
கடைத்தெருவிலே வீணராய் நிற்கிற வேறு சில
௪ ரைக் கண்டு,—நீங்களும் திராட்சத்தோட்டத்தில்
போங்கள், நியாயமானபடி உங்களுக்குக் கூலி
தருவேன் என்று அவர்களுக்குச் சொன்னான்;
௫ அவர்கள் போனார்கள்.—ஆறாம் ஒன்பதாம் மணி
வேளைகளிலே அவன் திரும்பப் புறப்பட்டு,
௬ அப்படிப்போலச் செய்தான்.—பின்பு பதினோ
ராம் மணிவேளையிலே அவன் புறப்பட்டு, வீண
ராய் நிற்கிற வேறே சிலரைக் கண்டு, பகல் முழு
வதும் நீங்கள் இங்கே ஏன் வீணராய் நிற்கிறீர்கள்
என்று கேட்டான்.—அவர்கள் ஒருவரும் எங் ௭
களை வேலைகொள்ளவில்லை என்றார்கள்; அவன்
சொன்னது: நீங்களும் திராட்சத்தோட்டத்திற்
குப் போங்கள், நியாயமானபடி கூலியை வாங்
கிக்கொள்வீர்கள் என்றான். — அஸ்தமனமான ௮
பொழுது, திராட்சத்தோட்டத்திற்கு எசமானான
வன் தன் காரியக்காரனுடனே சொன்னது: நீ
கூலிக்காரரை அழைத்து, பின்பு வந்தவர்களைத்
தொடங்கி முன்பு வந்தவர்கள்வரைக்கும் கூலி
யைக் கொடு என்றான்.—அந்தப்படி பதினோ ௯
ராம்மணி வேளையில் வேலைகொள்ளப்பட்டவர்
கள் வந்து, ஆளுக்கு ஒவ்வொரு பணமாகப்
பணத்தை வாங்கிக்கொண்டார்கள்.—காலையில் ௰
வேலைக்கு வந்தவர்களும் சேர்ந்து, தங்களுக்கு
அதிக கூலி வருமென்று எண்ணினார்கள்; அவர்
களும் ஆளுக்கு ஒவ்வொரு பணமாகப் பணத்
தை வாங்கினார்கள். — அதை வாங்குகிறபொ ௰க
ழுது, அவர்கள் வீட்டெசமானை நோக்கி,—பின் ௰உ
னே வந்த இவர்கள் ஒரு மணிநேரமாத்திரம் வே
லைசெய்தார்கள்; இவர்களைப் பகலின் பாரத்
தையும் வெயிலையும் சுமந்த எங்களுக்குச் சம
னாக்கினீர் என்று மொறுமொறுத்தார்கள். —
அவர்களில் ஒருவனுக்கு மாறுத்தரமாக அவன் ௰௩
சொன்னதாவது: சிநேகிதனே, நான் உனக்கு
அநியாயம் செய்யவில்லை; நீ ஒரு பணம் கூலிக்
காக என்னோடே சம்மதிக்கவில்லையோ? —
உன்னுடையதை நீ வாங்கிக்கொண்டுபோ, நான் ௰௪
உனக்குக் கொடுத்ததுபோல, பின்னே வந்த
இவனுக்கும் கொடுக்க மனதாயிருக்கிறேன்.—
[7]என்னுடையதை நான் என் இஷ்டப்படியே ௰௫
செய்யக்கூடாதா? [8]நான் தயவாயிருக்கிறபடியி
னாலேயோ நீ வன்கண்ணனாயிருக்கிறாய் என்
றான். — [9]இவ்விதமாகப் பிந்தினோர் முந்தி ௰௬
னோராய் இருப்பார்கள்; [10]முந்தினோர் பிந்தி
னோராய் இருப்பார்கள்; மேலும் அழைக்கப்
பட்டவர்கள் அநேகர், தெரிந்துகொள்ளப்பட்
டவர்களோ சிலர்மாத்திரம் இருக்கிறார்கள் என
றார்.
[11]இயேசுவானவர் எருசலேம் பட்டணத்திற் ௰௭
குப் பிரயாணமாய்ப் போகிறபொழுது, வழி
யிலே அவர் பன்னிரண்டு சீஷரைமாத்திரம்
அழைத்து, அவர்களுடனே சொன்னது:—இதோ ௰௮
எருசலேமுக்குப் போகிறோம், [12]அங்கே மனித
னுடைய குமாரன் பிரதான ஆசாரியருக்கும்
வேதபாரகருக்கும் ஒப்புக்கொடுக்கப்படுவான்;
அவர்கள் அவனை மரணத்திற்கு உள்ளாக்கும்

1 க மோ. ௰௮. ௰௪. யோபு. ௪௨. உ. எரே. ௩௨. ௰௭. சகரி. ௮. ௬. லூக். ௧. ௩௭: ௰௮. உ௭. 2 மாற். ௰. ௨௮ லூக் ௰௮. உ௮. 3 இ மோ. ௬௬. ௯. மத். ௪. உ௰. லூக். ௫. ௰௧.—4 மத். உ௫. ௨௧. லூக். உஉ. உ௮—௩௰. க கொரி. ௬. உ, ௩. வெளி. உ. உ௬.

5 மாற். ௰ உ௯, ௩௰. லூக். ௰௮. ௯. வாக். உ௧. க மத். ௧ உ௧. உ௯, ௩௰.—6 மத். உ௰. ௰௬: உ௬. 9 மத். ௰௯. ௩௰.—10 மத் உஉ. ௰௪. ௬௧, ௬௨. மாற். ௰. ௬௬ லூக். ௰௬. ௩௰. 11 மாற். ௰. ௩உ. லூக். ௰௮. ௬௧. 7 உரோ. ௯. உ௧.—8 இ மோ. ௰௫. யோவா. ௰உ. ௰உ.—12 மத். ௰௬. உ௧.

* உரோமருடைய பணம் அரைக்கால் ஔன்ஸாம்; ஒரு ஔன்ஸ் இரண்டரை ரூபாய் விழுக்காடு ஒரு பணம் ஐந்து அணா இரண்டு பைசாவாம்; ௰௮. உ௮. காண்க.

௰௯ படி தீர்ப்புகொடுத்து, — [1]அவனைப் பரியாசம்
பண்ணவும், வாரினால் அடிக்கவும், சிலுவைமரத்
தில் அறையவும், புறத்தேசத்தாருக்கு ஒப்புக்கொ
டுப்பார்கள்; பின்பு மூன்றும் நாளிலே அவன்
உயிரோடே எழுந்திருப்பான் என்றார்.

௨௰ [2] அக்காலத்திலே செபேதேயுவின் குமாரரு
டைய தாய் தன் குமாரரோடுங்கூட அவரி
டத்தில் வந்து, [3]சாஷ்டாங்கமாய் வணங்கி, ஒரு
௨௧ விண்ணப்பம்பண்ண விரும்பினாள். — அவர்,
உனக்கு என்னவேண்டும் என்றார்; அவள் அவ
ருடனே சொன்னதாவது: நீர் இராச்சியபரிபால
னம் [4]செய்யும்பொழுது, என் குமாரராகிய இவ்
விரண்டுபேரில் ஒருவன் உமது வலதுபாரிசமா
கவும் ஒருவன் உம்முடைய இடதுபாரிசமாக
வும் இருக்கும்படி செய்யவேண்டும் என்றாள்.—
௨௨ அதற்கு இயேசுவானவர் சொன்னது: நீங்கள்
கேட்டது உங்களுக்குத்தானே தெரியவில்லை;
[5]நான் குடிக்கும் பாத்திரத்தில் நீங்கள் குடிப்பீர்
களா? [6]நான் பெற்றுக்கொள்ளும் ஸ்நானத்தை
நீங்கள் பெற்றுக்கொள்வீர்களா என்றார்; அவர்
௨௩ கள் அப்படியே செய்வோம் என்றார்கள்.—அப்
பொழுது அவர் சொன்னது: [7]என் பாத்திரத்தில்
குடிப்பீர்கள், நான் பெற்றுக்கொள்ளும் ஸ்நா
னத்தையும் பெற்றுக்கொள்வீர்கள், அது மெய்
தான்; [8]ஆனாலும் என் பிதாவினாலே எவர்கள்
குறிக்கப்பட்டிருக்கிறார்களோ, அவர்களுக்கே
யன்றி (மற்றொருவருக்கும்) என் வலதுபாரிசத்
திலேயும் என் இடதுபாரிசத்திலேயும் உளுக்
காந்திருக்கிற (கனத்தை) நான் கொடுக்கக்கூ
டாது என்றார்.

௨௪ [9]மற்றப் பத்துப்பேரும் (அந்தச் சங்கதியைக்)
கேட்டு, அந்தச் சகோதரர் இருவரைக்குறித்து
௨௫ விசனப்பட்டார்கள். — அப்பொழுது இயேசு
வானவர் அவர்களை அழைத்துச் சொன்னதாவது:
உலகத்தாருக்குள்ளே பிரபுக்கள் குடிகளை (இறு
மாப்பாய்) ஆளுகிறார்கள்; அல்லாமலும் பெரி
யோர்கள் அவர்கள்மேல் (கண்டிப்பான) அதிகா
ரத்தைச் செலுத்துகிறார்கள் என்று நீங்கள் அறிந்
௨௬ திருக்கிறீர்கள். — [10]உங்களுக்குள்ளே அப்படி
இருக்கக்கூடாது; [11]உங்களில் எவனாகிலும் பெ
ரியவனாய் இருக்கவேண்டுமென்று இருந்தால்,
அவன் உங்கள் ஊழியக்காரனாய் இருக்கக்கட
௨௭ வன்.—[12]உங்களில் எவனாகிலும் முதலாளியாய்
இருக்கவேண்டுமென்று இருந்தால், அவன் உங்
கள் பணிவிடைக்காரனாய் இருக்கக்கடவன்.—
௨௮ [13]மனிதனுடைய குமாரனும் ஊழியம் கொள்
ளும்படிக்கு வராமல், [14]ஊழியம் செய்யும்படிக்
கும், [15]அநேகரை மீட்கும்பொருளாகத் [16]தனது
சீவனைத் தரும்படிக்கும் வந்தானே என்றார்.

[17]அவர்கள் எரிகோ பட்டணத்திலிருந்து புறப் ௨௯
பட்டுப்போகையில், அநேக சனங்கள் அவர்
பின்சென்றார்கள்.—அப்பொழுது [18]குருடரான ௩௰
இரண்டுபேர் வழி அருகே உளுக்காந்திருந்து,
இயேசுவானவர் வழியே வருகிறார் என்று கேள்
விப்பட்டு, ஆண்டவரே, தாவீதின் குமாரனே,
எங்களுக்கு இரங்கும் என்று கூப்பிட்டார்கள்.–
சனங்கள் (அதைக்கேட்டு) அவர்கள் பேசாமல் ௩௧
இருக்கும்படிக்கு அவர்களை அதட்டினார்கள்;
அவர்களோ, ஆண்டவரே, தாவீதின் குமாரனே,
எங்களுக்கு இரங்கும் என்று அதிகமாய்க் கூப்
பிட்டார்கள். — அப்பொழுது இயேசுவானவர் ௩௨
நின்று அவர்களை அழைத்து, நான் உங்களுக்கு
என்ன செய்யவேண்டும் என்று இருக்கிறீர்கள்
என்றார். — அவர்கள் சொன்னது: ஆண்டவரே, ௩௩
எங்கள் கண்களைத் திறக்கவேண்டும் என்று இருக்
கிறோம் என்றார்கள்.—இயேசுவானவர் உருக்க ௩௪
மாய் இரங்கி, அவர்களுடைய கண்களைத் தொட்
டார், உடனே அவர்கள் பார்வை அடைந்து,
அவர் பின்னே சென்றார்கள்.

## உ௧. அதிகாரம்.

௧. இயேசுவானவர் ஒரு கழுதையின்மேல் ஏறி எருசலேமில் பிரவேசித்தது. ௰௨. தேவாலயத்தில் இருந்த வியாபாரிகளைத் துரத்தினது. ௰௮. அத்தி மரத்தைச் சபித்தது. ௨௩. தமது அதிகாரத்தைக் குறித்து ஆசாரியர் முதலானவர்களுக்கு உத்தரவு சொன்னது. ௨௮. இரண்டு குமாரரை உவமையாகக் காட்டியது. ௩௩. எசமானுடைய ஊழியக்காரரைக் கொலை செய்த தோட்டக்காரரை உவமையாகக் காட்டியது.

[19]அவர்கள் எருசலேம் பட்டணத்திற்குச் சமீப ௧
மாய் [20]ஒலிவமலையின் அருகே இருக்கிற பெத்
துபாகே ஊருக்கு வந்தபொழுது, இயேசுவான
வர் இரண்டு சீஷரை நோக்கி, — உங்களுக்கு ௨
எதிராயிருக்கிற அந்தக் கிராமத்திலே போங்கள்,
அங்கே நீங்கள் (போன) உடனே கட்டப்பட்
டிருக்கிற ஒரு கழுதையையும் அதனோடேகூட
ஒரு குட்டியையும் காண்பீர்கள் —அவைகளின் ௩
கட்டவிழ்த்து எனக்காகக் கொண்டுவாருங்கள்;
ஒருவன் உங்களுக்கு ஏதாகிலும் சொன்னால்,
ஆண்டவருக்கு இவைகள் வேண்டுமென்று
சொல்லுங்கள். உடனே அவன் அவைகளை அ
னுப்பிவிடுவான் என்று சொல்லி அனுப்பினார்.–
(சீயோன் குமாரத்தியென்னும் எருசலேம் பட் ௪
டணமே,) [21]இதோ உன் இராசா மனத்தாழ்மை
உள்ளவருமாய், நுகத்தடிக்குக் கீழ்ப்பட்ட கழு
தையின் குட்டியாகிய கழுதையின்மேலே ஏறி
யிருக்கிறவருமாய், உன்னிடத்தில் வருகிறார்
என்று சீயோன் குமாரத்தியுடனே சொல்லுங்
கள் என்று, — தீர்க்கதரிசியினாலே சொல்லப்டு
பட்டது நிறைவேறும்படிக்கு அவையெல்லாம்
நடந்தன.—[22]இயேசுவானவர் கட்டளையிட்ட ௬
படியே செய்யச் சீஷர்கள் போய்,-[23]கழுதையை ௭

1 மத். ௨௭.௨. மாற். ௰௫.௧௰௬.௰. லூக். ௨௩. ௧. யோவா. ௰௮. ௨௮. ௰. அப். ௩. ௰௩ — 2 மத். ௪.௨௧. — 3 மாற். ௰.௩௫. — 4 மத். ௰௯. ௨௮. — 5 மத். ௨௬. ௩௯, ௪௨. மாற். ௰௪. ௩௬. லூக். ௨௨. ௪௨. யோவா. ௰௮. ௰௧. 6 லூக். ௰௨. ௫௰. — 7 அப். ௰௨. ௨. ௨ரோ. ௮. ௰௭. ௨ கொரி. ௧. ௭. வெளி. ௧. ௯. — 8 மத். ௨௫. ௩௪. 9 மாற் ௰. ௪௧. லூக். ௨௨. ௨௪. ௨௫. 10 ௧ பே. ௫. ௩. 11 மத். ௨௩. ௰௧ மாற். ௯. ௩௫: ௰. ௪௩. ௪௨. யோவா. ௰௩. ௰௪. 12 மத். ௰௮. ௪. — 13 பிலி. ௨. ௭.

14 லூக். ௨௨. ௨௭. யோவா. ௰௩. ௫, ௰௪. — 15 மத். ௨௬. ௨௮. ௨ரோ. ௫. ௰௫, ௰௯ எபி. ௯. ௨௮. — 16. ஏசா. ௫௩. ௫, ௰௧. தானி. ௯. ௨௪. ௨௬. யோவா. ௰௧. ௫௧, ௫௨. ௧ தீமோ. ௨. ௬ தீத். ௨. ௰௪. ௧ பே. ௧. ௰௯. 17 மாற். ௰. ௪௬. லூக். ௰௮. ௩௫. 18 மத். ௯. ௨௭. — 19 மாற். ௰௧. ௧. — 20 சகரி. ௰௪. ௪. லூக். ௰௯. ௨௯. 21 ஏசா. ௬௨. ௰௧. சகரி. ௯. ௯. யோவா. ௰௨. ௰௫. — 22 மாற். ௰௧. ௪. — 23 ௨ இரா. ௯. ௰௩.

யும் அதின் குட்டியையும் கொண்டுவந்து,பின்பு
தங்கள் வஸ்திரங்களை அவைகளின்மேல் போட்
டு, அவரை அவைகளின்மேல் ஏற்றிப்போனார்
௮ கள்.—[1]திரளான சனங்களோ தங்கள் வஸ்திரங்
களை வழியிலே விரித்தார்கள். வேறு சிலர் மரங்
களின் கிளைகளைத் தறித்து வழியிலே தெளித்தார்
௯ கள்.—மேலும் முன் நடப்பாரும் பின் நடப்பா
ருமாகிய சனங்கள், [2]தாவீதின் குமாரனுக்கு
ஓசன்னா, * [3]பராபரனுடைய நாமத்தினாலே வரு
கிறவர் தோத்திரிக்கப்படத்தக்கவர், உன்னத
மான வானங்களில் ஓசன்னா என்று ஆர்ப்பரித்
தார்கள்.
௰ [4]அப்படி அவர் எருசலேம் பட்டணத்தில் பிர
வேசிக்கையில், பட்டணத்தார் எல்லாரும் கலக்
கம் அடைந்து, இவர் யார் என்று விசாரித்தார்
௰௧ கள்.—சனங்கள் சொன்னது: இவர் கலிலேயா
நாட்டிலுள்ள நாசரேத்தூரிலிருந்து வந்த [5]தீர்க்க
தரிசியாகிய இயேசு என்றார்கள்.
௰௨ [6]இயேசுவானவர் தேவாலயத்தில் பிரவேசித்
து, அதிலே விற்கிறவர்களும் கொள்ளுகிறவர்க
ளுமாகிய யாவரையும் வெளியே துரத்தி, [7]காசுக்
காரருடைய பலகைகளையும் புறாக்களை விற்கி
றவர்களுடைய ஆசனங்களையும் கவிழ்த்துப்
௰௩ போட்டு,—[8]என்னுடைய ஆலயம் செபத்துக்
கான ஆலயம் என்னப்படும் என்று எழுதியிருக்
கின்றது; [9]நீங்களோ அதைக் கள்ளர்குகையாக்
கினீர்கள் என்று அவர்களுடனே சொன்னார்.—
௰௪ அல்லாமலும் குருடரும் சப்பாணிகளும் தேவா
லயத்தில் அவரிடத்திற்கு வந்தபொழுது அவர்க
௰௫ ளைக் குணமாக்கினார்.—அவர் செய்த அதிசயங்
களையும், தாவீதின் குமாரனுக்கு ஓசன்னா என்று
தேவாலயத்தில் கூப்பிடுகிற பிள்ளைகளையும்
பிரதான ஆசாரியரும் வேதபாரகரும் கண்டு,
௰௬ மிகுந்த விசனம் அடைந்து,—அவரை நோக்கி,
இவர்கள் சொல்லுகிறதைக் கேட்கிறீரோ என்
றார்கள்; அதற்கு இயேசுவானவர் சொன்னது:
கேட்கிறேன்; [10]குழந்தைகள் பாலகருடைய
வாயினால் துதியை உண்டுபண்ணினீர் என்கி
றதை நீங்கள் ஒருக்காலும் வாசிக்கவில்லையோ
௰௭ என்று சொல்லி,—அவர்களை விட்டுப் பட்ட
ணத்திலிருந்து புறப்பட்டுப் [11]பெத்தானி ஊருக்
குப்போய், அங்கே இராத்தங்கினார்.
௰௮ காலையிலே அவர் மறுபடியும் பட்டணத்
திற்குப் போகையில், [12]அவருக்குப் பசி உண்
௰௯ டானபொழுது,— [13]வழி அருகே ஒரு அத்தி
மரத்தை அவர் கண்டு, அதினிடத்தில் போய்,
அதிலே இலைகளையே அன்றிக் கனிகளைக் காணா
மல் இருக்கிறபொழுது, அவர் அதை நோக்கி,
இனிமேல் ஒருக்காலும் உன்னில் கனி உண்
டாகாதிருக்கக்கடவது என்று சொன்னார்; [14]உட
னே அத்திமரம் பட்டுப்போயிற்று.—சீஷர்கள் ௨௰
அதைக்கண்டு, ஐயோ! இந்த அத்திமரம் எப்படிச்
சீக்கிரமாய்ப் பட்டுப்போயிற்று என்று ஆச்சரி
யத்தோடே சொன்னார்கள். — இயேசுவானவர் ௨௧
அவர்களுக்குச் சொன்னது: [15]நீங்கள் சந்தேகப்
படாமல் [16]விசுவாசித்தால், இந்த அத்திமரத்தில்
சம்பவித்ததை நீங்கள் செய்வதும் அல்லாமல்
[17] நீங்கள் இந்த மலையை நோக்கி, எழும்பிச் சமு
த்திரத்திலே தள்ளப்படுவாயாக என்று சொன்
னால், உடனே அப்படி யாகுமென்று மெய்யாய்
உங்களுக்குச் சொல்லுகிறேன்.—அல்லாமலும் ௨௨
[18] செபத்திலே நீங்கள் எதைக் கேட்டாலும் விசு
வாசித்தீர்களானால் அதைப் பெறுவீர்கள் என்
றார்.
[19] அவர் தேவாலயத்தில் வந்து உபதேசம் பண் ௨௩
ணுகிறபொழுது, பிரதான ஆசாரியரும் சனங்க
ளின் மூப்பரும் அவரிடத்தில் வந்து, [20]எந்த அதி
காரத்தினாலே நீர் இவைகளைச் செய்கிறீர்? இப்
படிப்பட்ட அதிகாரத்தை உமக்குக் கொடுத்தவர்
யார் என்றார்கள். — அதற்கு இயேசுவானவர் ௨௪
சொன்னது: நானும் உங்களிடத்தில் ஒரு காரி
யத்தைக் கேட்பேன்; அதை நீங்கள் எனக்குச்
சொன்னீர்களானால், நான் இவைகளைச்செய்கிற
அதிகாரம் இன்னதென்று நானும் உங்களுக்குச்
சொல்லுவேன்.–யோவான் கொடுத்த ஞானஸ்நா ௨௫
னம் யாரால் உண்டாயிருந்தது? பராபரனாலோ
மனிதராலோ, அதைச் சொல்லுங்கள் என்றார்.
அவர்களோ, அது பராபரனால் உண்டாயிற்று
என்றோமானால், இவர் ஏன் அவனை விசுவாசிக்
கவில்லை என்பார். — அது மனிதரால் உண்டா ௨௬
யிற்று என்றோமாகில், சனங்கள் எல்லாரும்
[21]யோவானைத் தீர்க்கதரிசியென்று எண்ணுகிற
படியினாலே, அவர்களுக்குப் பயப்படுகிறோம்
என்று தங்களுக்குள்ளே யோசனைபண்ணி,—
பின்பு இயேசுவானவரை நோக்கி, எங்களுக்குத் ௨௭
தெரியாது என்றார்கள். அப்பொழுது அவரும்
அவர்களுடனே சொன்னது: நான் இவைகளைச்
செய்கிற அதிகாரம் இன்னதென்று நானும் உங்
களுக்குச் சொல்லமாட்டேன்.
ஆகிலும் உங்களுக்கு எப்படித் தோன்று ௨௮
கின்றது? ஒரு மனிதனுக்கு இரண்டு குமாரர்
உண்டு; அவர்களில் மூத்தவனிடத்தில் அவன்
வந்து, மகனே, நீ இன்றைக்கு என் திராட்சத்
தோட்டத்தில் போய் வேலைசெய் என்றான்.—
அதற்கு அவன், போகமாட்டேன் என்றான்; ௨௯
பின்பு அவன் மனஸ்தாபப்பட்டுப் போனான்.–
தகப்பன் இளையவனிடத்திலும் வந்து அப்படித் ௩௰
தானே சொன்னான்; அதற்கு அவன், ஐயா

1 ௧மோ. ௪௯. ௰. யோவா. ௰௨. ௰௩. ௪௰:௯. ௰௭. 6 மாற். ௰௧. ௰௫. லூக். ௰௯. ௪௫. யோவா. ௨. ௰௪.
2 சங். ௧௰௮. ௨௫.—3 சங். ௧௰௮. ௨௬. மத். ௨௩. ௩௯.
7 உபா. ௰௪. ௨௫.—8 ஏசா. ௫௬. ௭.
4 மாற். ௰௧. ௰௫. லூக். ௰௯. ௪௫. யோவா. ௨. ௰௪.—5 மத். ௨. ௨௩. லூக். ௭. ௰௬. யோவா. ௬. ௰௪:௭. 9 எரே. ௭. ௰௧. மாற். ௰௧. ௰௭. லூக். ௰௯. ௪௬.
10 சங். ௮. ௨.

11 மாற். ௰௧. ௰௧. யோவா. ௰௧. ௰௮.—௰௯. ௧ யோ. ௩. ௨௨: ௫. ௰௪.
12 மாற். ௰௧. ௰௨.—13 மாற். ௰௧. ௰௩. 19 மாற். ௰௧. ௨௭. லூக். ௨௰. ௧.
14 மாற். ௰௧. ௨௰. 20 ௨ மோ. ௨. ௰௪. அப். ௪. ௭: ௭. ௨௭.—21 மத். ௰௪. ௫. மாற். ௬. ௨௰. லூக். ௨௰. ௬.
15 யாக். ௧. ௬.—16 மத். ௰௭. ௨௰.
17 லூக் ௰௭ ௬.—18 மத். ௭. ௭. மாற். ௰௧. ௨௪. லூக். ௰௧. ௯. யாக். ௫.

* ஓசன்னா என்பதற்கு இப்பொழுது இரட்சணியத்தைச் செய்வீராக என்பது அர்த்தமாம்.

உடனே போகிறேன் என்று சொல்லியும் போக
௩௧ வில்லை.—இவ்விருவரில் எவன் தகப்பனுடைய
சித்தத்தின்படி செய்தான் என்று அவர் கேட்ட
பொழுது, மூத்தவனே செய்தான் என்றார்கள்.
அப்பொழுது இயேசுவானவர் அவர்களுக்குச்
சொன்னதாவது: [1]ஆயக்காரரும் வேசிகளும்
உங்களுக்கு முன்னே பராபரனுடைய இராச்
சியத்திலே பிரவேசிக்கிறார்கள் என்று மெய்யா
௩௨ கவே உங்களுக்குச் சொல்லுகிறேன்.—எப்படி
யென்றால் [2]யோவான் நீதிமார்க்கனாய் உங்களி
டத்தில் வந்தும், நீங்கள் அவனை விசுவாசிக்க
வில்லை; [3]ஆயக்காரரும் வேசிகளுமோ அவனை
விசுவாசித்தார்கள். அதை நீங்கள் கண்டும் பின்பு
அவனை விசுவாசிக்கும்படிக்கு மனஸ்தாபப்
படாமல் இருக்கிறீர்கள்.
௩௩ [4]வேறு உவமையைக் கேளுங்கள்; ஒரு வீட்டு
எசமான் உண்டு; அவன் ஒரு திராட்சத்தோட்
டத்தை உண்டாக்கி, அதைச் சுற்றி வேலி அ
டைத்து, அதில் ஆலையை நாட்டி, கோபுரத்தை
யும் கட்டி. பின்பு அதைத் தோட்டக்காரர்வச
மாய் விட்டு, [5]புறத்தேசத்திற்குப் போனான்.—
௩௪ [6]கனிகாலம் சமீபமானபொழுது, கனிகளைவாங்
கிக்கொண்டு வரும்படிக்கு தன் ஊழியக்கார
ரைத்தோட்டக்காரர் இடத்தில் அனுப்பினான்.—
௩௫ [7]தோட்டக்காரரோ, அவன் ஊழியக்காரரைப்
பிடித்து, ஒருவனை அடித்து, ஒருவனை வெட்டி,
மற்றொருவன்மேல் கல்லெறிந்து கொன்றார்
௩௬ கள்.—மறுபடியும் எசமான் முந்தினவர்களிலும்
அதிகமான வேறு ஊழியக்காரரை அனுப்பி
னான்; அவர்களையும் அப்படியே செய்தார்கள்.—
௩௭ கடைசியிலே அவன், என்னுடைய குமார
னுக்கு அஞ்சுவார்களென்று எண்ணி, தன் குமா
௩௮ ரனை அவர்களிடத்தில் அனுப்பினான்—தோட்
டக்காரரோ குமாரனைக் கண்டபொழுது, [8]இ
வன் சுதந்தரவாளி, [9]இவனைக் கொன்று இவனு
டைய சுதந்தரத்தைக் கட்டிக்கொள்வோம் வா
ருங்கள் என்று தங்களுக்குள்ளே சொல்லிக்
௩௯ கொண்டு,— [10]அவனைப் பிடித்துத் திராட்சத்
தோட்டத்திற்குப் புறம்பே தள்ளிக் கொலை
௪௰ செய்தார்கள்.—ஆகையால் திராட்சத்தோட்டத்
திற்கு எசமான் வரும்பொழுது, அந்தத் தோட்
டக்காரரை என்ன செய்வான் என்று கேட்
௪௧ டார்.—அதற்கு அவர்கள் சொன்னது: [11]அவன்
அந்தப் பொல்லாதவர்களைக் கடினமாய் அழித்து,
[12]தகுதியான காலங்களில் தனக்குக் கனிகளைக்
கொடுக்கும் வேறே தோட்டக்காரர் வசமாய்த்
திராட்சத்தோட்டத்தை விடுவான் என்றார்கள்.—
௪௨ இயேசுவானவர் அவர்களுக்குச் சொன்னதா
வது: [13]வீடுகட்டுகிறவர்கள் ஆகாதென்று தள்
ளின கல்லே மூலைக்குத் தலையான கல்லாயிற்று;
அது பராபரனாலே ஆயிற்று. அது நம்முடைய
கண்களுக்கு ஆச்சரியமாய் இருக்கின்றதென்று
வேதத்திலே நீங்கள் ஒருக்காலும் வாசித்ததில்
லையா? — [14]அப்படியிருக்க, பராபரனுடைய ௪௩
இராச்சியம் உங்களிலிருந்து நீக்கப்பட்டு,அதின்
கனிகளைத் தருகிற சனங்களுக்குக் கொடுக்கப்
படும் என்று உங்களுக்குச் சொல்லுகிறேன்.—
அன்றியும் [15]இந்தக் கல்லின்மேல் விழுகிறவன் ௪௪
நொறுக்கப்படுவான்; [16]இதுவோ எவன்மேல்
விழுமோ அவனை நருங்கடிக்கும் என்றார்.

பிரதான ஆசாரியரும் பரிசேயரும் அவரு ௪௫
டைய உவமைகளைக் கேட்டு, தங்களைக்குறித்
துப் பேசினார் என்று அறிந்து,— அவரைப் ௪௬
பிடிக்க மனதாயிருந்தார்கள்; ஆகிலும், சனங்கள்
அவரைத் [17]தீர்க்கதரிசியென்று எண்ணினபடி
யினாலே அவர்கள் சனங்களுக்குப் பயந்து
(அப்படிச்செய்யாமல் இருந்தார்கள்).

## உ௨. அதிகாரம்.

க. இராசகுமாரனுடைய கலியாண உவமை. கூ. புறச்சாதியார்கள் அழைக்கப்பட்டது ௰௨. கலியாண வஸ்திரம் இல்லாதிருந்தவனுக்கு உண்டான தண்டனை. ௰௫. இராயனுக்கு வரிசெலுத்தவேண்டியதென்பது. உக. கிறிஸ்து மரித்தோர் உயிர்த்தெழுதலைக்குறித்துச் சதுசேயருக்கு நியாயஞ் சொல்லி, ௩௪. பிரதான கற்பனை இன்னதென்று நியாயசாஸ்திரிக்கு உத்தரவுகொடுத்து, ௪௧. மேசியாவைக்குறித்துப் பரிசேயரிடத்தில் விசாரித்தது.

இயேசுவானவர் மறுபடியும் உவமைகளாய் ௧
அவர்களுடனே சொன்னதாவது:—[18]பரலோக ௨
இராச்சியத்தின் (ஆளுகை) தன் குமாரனுக்குக்
கலியாணம்செய்த இராசனுடைய (நடக்கைக்
கு) ஒப்பாயிருக்கின்றது.—அழைக்கப்பட்டவர் ௩
களைக் கலியாணத்திற்கு வரச்சொல்லும்படிக்கு
அவன் தன் ஊழியக்காரரை அனுப்பினான்; அ
வர்களோ, வரமாட்டோம் என்றார்கள்.—மறுபடி ௪
யும் அவன் வேறே ஊழியக்காரரை நோக்கி, அ
ழைக்கப்பட்டவர்களிடத்திற்கு நீங்கள் போய்,
என் விருந்தை எத்தனம்பண்ணினேன், [19]என்
எருதுகளும் கொழுத்த செந்துக்களும் அடிக்கப்
பட்டன, எல்லாம் எத்தனமாய் இருக்கின்றது,
கலியாணத்திற்கு வாருங்கள் என்று சொல்லுங்
கள் என்று அனுப்பினான்.—அவர்களோ அதை ௫
எண்ணாமல், ஒருவன் தன் வயலுக்கும், ஒருவன்
தன் வியாபாரத்திற்கும் போய்விட்டார்கள்.—
மற்றவர்களோ அவனுடைய ஊழியக்காரரைப் ௬
பிடித்து நிந்தித்துக் கொலைசெய்தார்கள்.—[20]இ ௭
ராசா அதைக் கேட்டு கோபம் அடைந்து, தன்
சேனைகளை அனுப்பி, (அவர்களால்) அந்தக்

1 லூக். எ. உகூ, ௩௰.—2 மத். ௩. உ. 3 லூக். ௩. ௰உ.—4 சங். அ௰. அ. உன்னத. அ. ௰க. ஏசா. ௫ க. எரே. உ. உக. மாற். ௰உ. க. லூக். உ௰. கூ. 5 மத். உ௫. ௰௪, ௰௫.—6 உன்னத. அ. ௰க, ௰உ.—7 உ நாளா. உ௪. உக; ௩௬. ௰௬. நெகே. கூ. உகூ. மத். ௫. ௰உ: உ௩. ௩௪, ௩எ. அப். எ. ௫உ. க தெச. உ. ௰௫. எபி. ௰௧. ௩௬, ௩எ.—8 சங். உ. அ. எபி. க. உ.—9 சங். உ. உ, ௩. மத். உ௬. ௩–௫: உஎ. க, உ. யோவா. ௰௧. ௫௩. அப். ௪. உஎ, உஅ. 10 மத். உ௬. ௫௰. மாற். ௰௪. ௪௬. லூக். உஉ. ௫௪. யோவா. ௰அ. ௰உ. அப். உ. உ௩.—11 லூக். உ௰. ௰௬.—12 லூக் உ௧. உ௪. எபி. உ. க அப். ௰௩. ௪௬: ௰௫. எ: ௰அ. எ: உ௮. உ௮. உரோ. கூ. ௰௧. 13 சங். ௩௰அ. உஉ. ஏசா. உ௮. ௰௬. மாற். ௰உ. ௰. லூக். உ௰. ௰எ. அப். ௪. ௰௧. எபே. உ. உ௰. க பே. உ. ௬, எ.—14 மத். அ. ௰உ. 15 ஏசா. அ ௰௪, ௰௫. சகரி. ௰உ. ௩. லூக். உ௰. ௰அ. உரோ. கூ. ௩௩. க பே. உ. அ.—16 ஏசா. ௬௰. ௰உ. 17 தானி. உ. ௪௪. ௰௬ வச. லூக். எ. ௰௬. யோவா. எ. ௪௰. 18 லூக். ௰௪. ௰௬. வெளி. ௰௬. எ, கூ. 19 வாக். கூ. உ. 20 தானி. கூ. உ௬. லூக். ௰௬. உஎ.

கொலைபாதகரை அழித்து; அவர்களுடைய பட்
௮ டணத்தையும் சுட்டெரித்தான்.—அப்பொழுது
அவன் தன் ஊழியக்காரரை நோக்கி: கலியா
ணவிருந்து எத்தனமாய் இருக்கின்றது; [1]அழைக்
கப்பட்டவர்களோ அதற்குப் பாத்திரர் அல்லா
௯ திருந்தார்கள்.—ஆகையால் நீங்கள் வழிச்சந்திக
ளில் போய், அகப்படுகிற யாவரையும் கலியாண
விருந்துக்கு அழைத்துவாருங்கள என்றான்.—
௰ அந்த ஊழியக்காரர் வழிகளில் புறப்பட்டுப்
போய், அகப்பட்ட [2]பொல்லாதவர்களையும் நல்
லவர்களையும் கூட்டிவந்தார்கள்; விருந்து சாலை
௰௧ பந்தியிருக்கிறவர்களால் நிறைந்தது. — பின்பு
பந்தியிருக்கிறவர்களைப் பார்க்கும்படிக்கு இரா
சா பிரவேசித்தபொழுது, [3]கலியாண வஸ்திரத்
தைத் தரித்திராத ஒருவனை அங்கே கண்டு,—
௰௨ சிநேகிதனே, நீ கலியாண வஸ்திரம் இல்லாதவ
னாய் இங்கே எப்படிப் பிரவேசித்தாய் என்று
சொன்னபொழுது, அவன் பேசாமல் இருந்
௰௩ தான்.—அப்பொழுது இராசா ஊழியக்காரரை
நோக்கி, [4]இவனுடைய கால்களையும் கைகளை
யும் கட்டி, இவனை எடுத்துப்போய், அழுகை
யும் பற்கடிப்பும் உண்டாயிருக்கிற மிகுந்த இரு
ளிலே போடுங்கள் என்று கட்டளையிட்டான்—
௰௪ அந்தப்படியே [5]அநேகர் அழைக்கப்பட்டிருக்கி
றார்கள், சிலர்மாத்திரம் தெரிந்துகொள்ளப்பட்
டிருக்கிறார்கள் என்றார்.
௰௫ அப்பொழுது [6]பரிசேயர் போய், வசனங்க
ளில் அவரை அகப்படுத்தும்படிக்கு யோசனை
௰௬ பண்ணி,—தங்கள் சீஷர்களையும் ஏரோதேயின்
மனிதர்களையும் அவரிடத்திற்கு அனுப்பினார்
கள்; (அவர்கள் வந்து) போதகரே, நீர் சத்திய
முள்ளவருமாய், பராபரனுடைய மார்க்கத்தைச்
சத்தியமாய்ப் போதிக்கிறவருமாய், மனிதரு
டைய முகத்தைப் பாராமல் இருக்கிறபடியால்,
ஒருவரையும் குறித்துக் கவையில்லாதவருமாய்
௰௭ இருக்கிறீர் என்று அறிந்திருக்கிறோம்.–ஆதலால்
உமக்கு எப்படித்தோன்றுகின்றது? இராயனுக்கு
வரிகொடுக்கிறது நியாயமாய் இருக்கின்றதோ,
இல்லையோ, அதை எங்களுக்குச் சொல்லவேண்
௰௮ டும் என்றார்கள். — இயேசுவானவர் அவர்களு
டைய துர்க்குணத்தை அறிந்து, வஞ்சகரே,
௰௯ நீங்கள் என்னை என் சோதிக்கிறீர்கள்?—வரிக்
காசை எனக்குக் காண்பியுங்கள் என்றார்; அவர்
கள் ஒரு *தெநாரியபணத்தை அவருக்குக் கொ
௨௰ டுத்தார்கள்.—அப்பொழுது அவர் சொன்னது:
இந்தச் சொரூபமும் மேல் எழுத்தும் யாருடை
யது என்றார்; இது இராயனுடையது என்றார்
௨௧ கள்.—அவர் சொன்னது: அப்படியானால் [7]இரா
யனுடையதை இராயனுக்கும், பராபரனுடைய
தையோ பராபரனுக்கும், செலுத்துங்கள் என்
றார். — அவர்கள் அதைக் கேட்டு ஆச்சரியப் ௨௨
பட்டு அவரை விட்டுப்போனார்கள்.
[8]உயிரோடெழுந்திருக்கும் மறுமை இல்லை ௨௩
என்று சொல்லுகிற சதுசேயர் [9]அந்நாளிலே
அவரிடத்தில் வந்து,—போதகரே, [10]புருஷன் ௨௪
ஒருவன் பிள்ளைகள் இல்லாமல்இறந்துபோனால்,
அவனுடைய சகோதரன் அவனுக்குச் சந்ததி
உண்டாகும்படிக்கு, அவனுடைய மனைவியை
விவாகம்பண்ணவேண்டுமென்று மோசே சொ
ன்னாரே.-அப்படியானால் எங்களிடத்தில் சகோ ௨௫
தரர் ஏழுபேர் இருந்தார்கள்; அவர்களில் மூத்
தவன் விவாகம்பண்ணி, சந்ததி இல்லாமல்
மரித்து, தன் மனைவியைத் தன் சகோதரனுக்கு
விட்டான. — இப்படி இரண்டாம் சகோதரன் ௨௬
முதல் †ஏழாம் சகோதரன்வரைக்கும் (அவளை
யே விவாகம்பண்ணிப் பிள்ளையில்லாமல் மரித்
தார்கள்).–எல்லாருக்கும் பின்பு அந்தப் பெண் ௨௭
ணும் இறந்துபோனாள்.–அப்படி அவ்வேழுபே ௨௮
ரும் அவளை விவாகம்பண்ணினபடியால், உயி
ரோடெழுந்திருக்கும் காலத்திலே அவள் அவர்
களில் எவனுக்கு மனைவியாயிருப்பாள் என்று
கேட்டார்கள்.—இயேசுவானவர் அவர்களுக்கு ௨௯
மாறுத்தரமாகச் சொன்னதாவது: [11]வேத எழுத்
துக்களையும் பராபரனுடைய பலத்தையும் நீங்
கள் அறியாதிருக்கிறபடியால் தப்பாய் நினைத்
திருக்கிறீர்கள். — [12]மறுமையிலே பெண்கொள் ௩௰
வதும் கொடுப்பதும் இராது; அவர்கள் பரலோ
கத்திலே பராபரனுடைய தூதரைப்போல் இருக்
கிறார்கள். — மரித்தோர் உயிரோடெழுந்திருக் ௩௧
குதலைக்குறித்தோவெனில், [13]நான் ஆபிரகாமி
னுடைய தேவனுமாய், ஈசாக்கினுடைய தேவனு
மாய், யாக்கோபினுடைய தேவனுமாய் இருக்
கிறேன் என்று, — பராபரனாலே உங்களுக்கு ௩௨
உரைக்கப்பட்டதை நீங்கள் வாசிக்கவில்லை
யோ? அவர் மரித்தோருடைய தேவனாயிராமல்,
சீவனுள்ளோருடைய தேவனாகவே இருக்கிறார்
என்றார்.–சனங்கள் அவருடைய உபதேசத்தைக் ௩௩
கேட்டு, அதைக்குறித்துப் [14]பிரமித்துக்கொண்
டார்கள்.
[15]அவர் சதுசேயர் பேசாமல் இருக்கும்படி ௩௪
செய்ததைப் பரிசேயர் கேட்டு அவரிடத்தில்
கூடிவந்தார்கள்.—[16]அவர்களில் நியாயசாஸ்திரி ௩௫
ஒருவன் அவரைச் சோதிக்கும்படிக்கு,–போதக ௩௬
ரே,வேதத்திலே எது பிரதானமான கற்பனையாய்
இருக்கின்றது என்று கேட்டான்.–இயேசுவான ௩௭
வர் சொன்னது: [17]உன் தேவனாகிய பராபரனில்
உன் முழு இருதயத்தோடும் உன் முழு ஆத்துமா
வோடும் உன் முழு மனதோடும் அன்புகூர்வா

1 மத். ௰. ௰௧. அப். ௰௩. ௪௬.
2 மத். ௰௩. ௩௮, ௪௭.
3 ௨. கொரி. ௫. ௩. எபே. ௪. ௨௪. கொலோ. ௩. ௯, ௰௨. வெளி. ௩. ௪. ௰௬. ௰௯: ௰௯. ௮.
4 மத். ௮. ௰௨.—5 மத். ௨௰. ௰௬.
6 மாற். ௰௨. ௰௩: லூ. ௨௰. ௨௰.
7 மத். ௰௭. ௨௫. உரோ. ௰௩. ௭.
8 அப். ௨௩. ௭.—9 மாற். ௰௨. ௰௮. லூக். ௨௰. ௨௭.
10 ௫ மோ. ௨௫. ௫.
11 யோவா. ௨௰. ௯.
12 ௧ யோ. ௩. ௨.—13 ௨ மோ. ௩. ௬, ௰௬. மாற். ௰௨. ௨௬. லூக். ௨௰. ௩௭. அப். ௭. ௩௨. எபி. ௰௧. ௰௬.
14 மத். ௭. ௨௮.—15 மாற். ௰௨. ௨௮.
16 லூக். ௰. ௨௫.
17 ௫ மோ. ௬. ௫: ௰. ௰௨: ௩௰. ௬. லூக். ௰. ௨௭.

* மூன்றேமுக்கால் பணம் விலையுள்ளது; ௨௰. ௨. காண்க.—† அல்லது ஏழுபேர்மட்டும்.

௩௮ யாக.—என்பது முதலாவது பிரதானமான கற்ப
௩௯ னையாய் இருக்கின்றது.-அதற்கு ஒப்பாயிருக்கிற
இரண்டாம் கற்பனை என்னவென்றால், [1]பிறனி
டத்தில் உன்னைப்போல அன்புகூர்வாயாக என்
௪௰ பதே. —[2]இவ்விரண்டு கற்பனைகளில் நியாயப்
பிரமாணம் முழுமையும் தீர்க்கதரிசனங்களும்
அடங்கியிருக்கின்றன என்றார்.
௪௧ [3]மேலும் பரிசேயர் கூடியிருக்கையில், இயேசு
௪௨ வானவர் அவர்களை நோக்கி, — கிறிஸ்துவைக்
குறித்து உங்களுக்கு எப்படித் தோன்றுகின்றது?
அவர் யாருடைய குமாரனென்று கேட்டார்; அ
௪௩ வர் தாவீதின் குமாரன் என்றார்கள்.—இயேசுவா
னவர் சொன்னது: [4]அப்படியானால் நான் உம்மு
டைய சத்துருக்களை உமது பாதப்படியாக்கிப்
போடுகிறவரைக்கும், நீர் என்னுடைய வலதுபா
ரிசத்திலே உளுக்காரும் என்று பராபரன் என்
௪௪ கர்த்தருடனே சொன்னார் என்று,—தாவீது (பரி
சுத்த) ஆவியினாலே சொல்லி, (இவ்விதமாய்) அ
வரைக் கர்த்தரென்று சொல்லியிருக்கிறது எப்
௪௫ படி?—தாவீது அவரைக் கர்த்தரென்று சொல்லி
யிருக்க, அவர் எப்படி அவனுடைய குமாரனா
௪௬ யிருப்பார் என்றார்?—[5]அதற்கு மாறுத்தரமாக ஒரு
வனும் ஒரு வார்த்தையையும் சொல்லத் திராணி
யிருந்ததில்லை; [6]அந்நாள்முதற்கொண்டு ஒருவ
ரும் அவரிடத்தில் வினாக்களைக் கேட்கத் துணிந்
ததுமில்லை.

## ௨௩. அதிகாரம்.

௧. கிறிஸ்து வேதபாரகர், பரிசேயருடைய கெட்ட நடக்கைகளைப் பின்பற்றாமல் அவர்களின் நல்ல உபதேசங்களைக் கைக்கொள்ளவேண்டிய தென்று சனங்களுக்குப் போதித்து, ௫. அவர்களுடைய பெருமையைக் குறித்துத் தம்முடைய சீஷர்கள் எச்சரிக்கையாயிருக்கக் கற்பித்தது. ௰௩. அவர்களுடைய மாயத்தையும், குருட்டாட்டத்தையும் குறித்து அவர்களுக்கு எட்டுவகை வேதனைகளைக் கூறி, ௩௪. எருசலேமின் அழிவை முன்னறிவித்தது.

௧ அப்பொழுது இயேசுவானவர் சனங்களுக்கும்
தம்முடைய சீஷருக்கும் சொன்னதாவது: —
௨ [7]வேதபாரகரும் பரிசேயரும் மோசேயினுடைய
௩ ஆசனத்தில் இருக்கிறவர்கள்.-ஆகையால் நீங்கள்
கைக்கொள்ளும்படிக்கு [8]அவர்கள் உங்களுக்
குச்சொல்லுகிற யாவையும் கைக்கொண்டு நடக்
கக்கடவீர்கள்; அவர்களுடைய கிரியைகளின்ப
டியோ செய்யாமல் இருங்கள். என்னத்தினாலெ
னில், அவர்கள் சொல்லியும் செய்யாமல் இருக்
௪ கிறார்கள்.—அல்லாமலும் [9]அவர்கள் பாரமாயும்,
சுமப்பதற்கு அரிதாயும் இருக்கிற சுமைகளைக்
கட்டி, மனிதருடைய தோள்களின்மேல் வைக்
கிறார்கள்; தாங்களோ அவைகளை ஒரு விரலினா
லும் அசைக்க மனமில்லாமல் இருக்கிறார்கள்.—
௫ [10]தங்கள் கிரியைகள் யாவையும் அவர்கள் மனி
தரால் காணப்படும்படிக்குச் செய்கிறார்கள்;
[11]கற்பனைகள் எழுதியிருக்கிற நாடாக்களை அக
லமாக்கி, தங்கள் வஸ்திரங்களின் தொங்கல்களை
விஸ்தாரம்பண்ணி, — [12]விருந்துகளில் முதலி ௬
டத்தில் இருக்கவும், செபஆலயங்களில் முதல்
ஆசனங்களில் இருக்கவும்,—சந்தைகளில் (மற்ற ௭
வர்களால்) வாழ்த்துதல் அடையவும், இரபீ
இரபீ என்று அழைக்கப்படவும் விரும்புகிறார்
கள்.—[13]நீங்களோ இரபீ என்று அழைக்கப்ப ௮
டக்கூடாது; என்னத்தினாலெனில், கிறிஸ்து
என்பவர் ஒருவரே உங்களுக்குக் குருவாய்
இருக்கிறார்; நீங்கள் எல்லாரும் சகோதரராய்
இருக்கிறீர்கள். — மேலும் பரமண்டலத்தில் இ ௯
ருக்கிறவர் ஒருவரே உங்களுக்குப் பிதாவாய்
இருக்கிறார்; [14]ஆகையால் நீங்கள் பூமியிலே ஒரு
வனையும் உங்கள் பிதா என்று அழைக்கக்கூ
டாது.—அல்லாமலும் கிறிஸ்து என்பவர் ஒரு ௰
வரே உங்கள் குருவாய் இருக்கிறார்; ஆகையால்
நீங்கள் உங்களைக் குருக்களென்று அழைக்கப்
படக் கூடாது.—[15]தன்னைத்தான் உயர்த்துகிற ௰௧
வன் தாழ்த்தப்படுவான்; தன்னைத்தான் தாழ்த்து
கிறவன் உயர்த்தப்படுவான் — [16]ஆதலால் உங் ௰௨
களில் பெரியவன் உங்கள் ஊழியக்காரனாய்
இருக்கக்கடவன்.
[17]வஞ்சகராகிய வேதபாரகரே, பரிசேயரே, ௰௩
ஐயோ! உங்களுக்கு வேதனைவரும்; என்னத்தி
னாலெனில், மனிதர் முன்பாக நீங்கள் பரலோக
இராச்சியத்தைப் பூட்டிப்போடுகிறீர்கள்; நீங்க
ளோ அதில் பிரவேசிக்கிறதில்லை; பிரவேசிக்க
மனதாய் இருக்கிறவர்கள் பிரவேசியாதபடிக்கும்
செய்கிறீர்கள். — வஞ்சகராகிய வேதபாரகரே, ௰௪
பரிசேயரே, ஐயோ! உங்களுக்கு வேதனைவரும்;
என்னத்தினாலென்றால், [18]நீங்கள் விஸ்தாரமாய்ச்
செபமந்திரங்களைச் சொல்லுகிறோம் என்று
சொல்லி, கைம்பெண்களுடைய பொருள்க
ளைப் பட்சிக்கிறீர்கள்; அதினிமித்தம் அதிக
ஆக்கினை உங்களுக்குக் கிடைக்கும்.—வஞ்சக ௰௫
ராகிய வேதபாரகரே, பரிசேயரே, ஐயோ! உங்
களுக்கு வேதனைவரும்; என்னத்தினாலெனில்,
ஒருவனை (யூத) மார்க்கத்தான் ஆக்கும்படிக்கு
நீங்கள் சமுத்திரத்தையும் பூமியையும் கடந்து
திரிகிறீர்கள்; அவன் அப்படிப்பட்டவனான
பொழுது, நீங்கள் உங்களைப்பார்க்கிலும் அவனை
இரட்டிப்பாய் நரகத்துக்குரியவனாக்குகிறீர்கள்.
[19]குருடராய் வழிகாட்டுகிறவர்களே, ஐயோ! ௰௬
உங்களுக்கு வேதனைவரும்; [20]ஒருவன் தேவா
லயத்தின்மேல் சத்தியம்பண்ணினால் அது செல்
லாது; ஒருவன் தேவாலயத்திலுள்ள பொன்மேல்
சத்தியம்பண்ணினானாகில் அவன் அந்தப்படியே
செய்யவேண்டும் என்கிறீர்கள். — மதிகேடரே, ௰௭

1 ௩ மோ. ௰௯. ௰௮. மத். ௰௯. ௰௯. மாற். ௰௨. ௩௧. லூக். ௰. ௨௭. உரோ. ௰௩. ௯. கலா. ௫. ௰௪. யாக். ௨. ௮. —2 மத். ௭. ௰௨. ௧ தீமோ. ௧.௫.—3 மாற். ௰௨.௩௫. லூக். ௨௰. ௪௧.—4 சங். ௱௰. ௧. அப். ௨.௩௪. ௧ கொரி.௰௫. ௨௫. எபி.௧. ௰௩: ௰.௰௩.—5 லூக்.௰௪.௬. 6 மாற் ௰௨.௩௪. லூக் ௨௰. ௪௰. 7 நெகே. ௮. ௪, ௮. மல்கி. ௨. ௭. மாற் ௰௨.௩௮. லூக் ௨௰ ௪௬. 8 உரோ. ௨. ௰௯, ௨௰. ௨௧. 9 லூக். ௰௧. ௪௬. அப். ௰௫. ௰. கலா. ௬. ௰௩.—10 மத். ௬. ௧,

௨, ௫. ௰௬.—11 ௪ மோ. ௰௫. ௩௮. ௫ மோ. ௬. ௮: ௨௨. ௰௨. லூக். ௧௧.—12 மாற். ௰௨. ௩௯. லூக். ௰௧.௪௩:௨௰.௪௬. ௩ யோ.௯. 13 யாக். ௩. ௧. ௨ கொரி. ௧. ௨௪. ௧ பே.௫ ௩.—14 மல்கி .௧. ௬. 15 யோபு. ௨௨.௨௯. லூக்.௰௪.௰௧: ௰௮.௰௪. யாக். ௪. ௬. ௧ பே. ௫. ௫. 16 மத். ௨௰. ௨௬, ௨௭.—17 லூக். ௰௧.௫௨.—18 மாற். ௰௨.௪௰. லூக். ௨௰. ௪௭. ௨ தீமோ. ௩. ௬. தீத்து. ௧.௰௧.—19 மத். ௰௫.௰௪. ௨௪. ௨௪. 20 மத். ௫. ௩௩, ௩௪.

குருடரே, எது பெரிது? பொன்னோ பொன்னைப்
௰௮ பரிசுத்தமாக்குகிற [1]தேவாலயமோ?—அன்றியும்
ஒருவன் பீடத்தின்மேல் சத்தியம்பண்ணினால்
அது செல்லாது; ஒருவன் அதிலுள்ள காணிக்
கையின்மேல் சத்தியம்பண்ணினானாகில், அவன்
அதின்படியே செய்யவேண்டும் என்கிறீர்கள்.—
௰௯ மதிகேடரே, குருடரே, எது பெரிது? [2]காணிக்
கையோ காணிக்கையைப் பரிசுத்தமாக்குகிற
௨௰ பீடமோ?—ஆகையால் பீடத்தின்மேல் சத்தியம்
பண்ணுகிறவன் அதின்மேலும் அதில் இருக்கிற
எல்லாப் பொருள்களின்மேலும் சத்தியம்பண்
௨௧ ணுகிறான்.—தேவாலயத்தின்மேல் சத்தியம்பண்
ணுகிறவன் அதின்மேலும் [3]அதில் வாசமாயி
ருக்கிறவர்மேலும் சத்தியம்பண்ணுகிறான். —
௨௨ அல்லாமலும் வானத்தின்மேல் சத்தியம்பண்
ணுகிறவன் [4]பராபரனுடைய பத்திராசனத்தின்
மேலும் அதில் வீற்றிருக்கிறவர்மேலும் சத்தியம்
பண்ணுகிறான்.
௨௩ வஞ்சகராகிய வேதபாரகரே, பரிசேயரே,
ஐயோ! உங்களுக்கு வேதனைவரும்; என்னத்தினா
லெனில், [5]நீங்கள் துளசியிலும் வெந்தயத்திலும்
சீரகத்திலும் பத்தில் ஒரு பாகத்தைக்கொடுத்து,
[6]வேதத்தில் (சொல்லியிருக்கிற) அதிக கனமா
ன காரியங்களாகிய நீதியையும் இரக்கத்தையும்
உண்மையையும் விட்டுவிட்டீர்கள். இவைகளை
யே நீங்கள் நடப்பித்து அவைகளையும் விட்டு
௨௪ விடாமல் இருக்கவேண்டும். — ஆ குருடராய்
வழிகாட்டுகிறவர்களே, கொசுவில்லாதபடிக்
குத் (தண்ணீரை) வடிகட்டி ஒட்டகத்தையோ
௨௫ விழுங்குகிறவர்களாய் இருக்கிறீர்கள்.—வஞ்சக
ராகிய வேதபாரகரே, பரிசேயரே, ஐயோ! உங்
களுக்கு வேதனைவரும்; என்னத்தினாலெனில்,
[7]போசனபான பாத்திரங்களின் வெளிப்புறத்
தை நீங்கள் சுத்தம்செய்கிறீர்கள்; அவைகளின்
உள்ளோ கொள்ளையும் அநீதியும் நிறைந்திருக்
௨௬ கின்றன. — குருடனான பரிசேயனே, முதலா
வது போசனபானபாத்திரங்களின் உள்ளத்தைச்
சுத்தம்பண்ணுவாயாக; அப்பொழுது அவைக
ளின் வெளிப்புறமும் சுத்தமாயிருக்கும்.
௨௭ வஞ்சகராகிய வேதபாரகரே, பரிசேயரே,
ஐயோ! உங்களுக்கு வேதனைவரும்; என்னத்தினா
லெனில், [8]நீங்கள் சாந்துபூசப்பட்ட கல்லறைக
ளுக்கு ஒப்பாயிருக்கிறீர்கள். அவைகள் புறம்
பே அலங்காரமாய் இருக்கின்றன; உள்ளேயோ
மரித்தோருடைய எலும்புகளும் சகலவிதமான
௨௮ அசுத்தமும் நிறைந்திருக்கின்றன. — அப்படிப்
போல நீங்களும் புறம்பே மனிதருக்கு நீதிமான்
களென்று காணப்படுகிறீர்கள்; உங்கள் உள்ளத்
திலோ வஞ்சகமும் அக்கிரமமும் நிறைந்திருக்
௨௯ கின்றன. — [9]வஞ்சகராகிய வேதபாரகரே, பரி
சேயரே, ஐயோ! உங்களுக்கு வேதனைவரும்;
என்னத்தினாலெனில், நீங்கள் தீர்க்கதரிசிகளு
டைய சமாதிகளைக் கட்டி, நீதிமான்களின் கல்
லறைகளைச் சிங்காரித்து,—எங்கள் பிதாக்களு ௩௰
டைய நாள்களில் இருந்தோமானால், அவர்க
ளோடேகூட நாங்கள் தீர்க்கதரிசிகளுடைய
இரத்தத்தைச் சிந்தமாட்டோம் என்கிறீர்கள்.—
ஆகையால் நீங்கள் தீர்க்கதரிசிகளைக் கொலை ௩௧
செய்தவர்களின் [10]புத்திரரென்று உங்களுக்கு
றித்து நீங்கள் தாமே சாட்சிகொடுக்கிறீர்கள்.—
அப்படியிருக்க, [11]நீங்கள் உங்கள் பிதாக்களின் ௩௨
அக்கிரம அளவை நிரப்புங்கள்.—சர்ப்பங்களே, ௩௩
[12]விரியன் பாம்புகளின் (குட்டிகளே) நீங்கள்
நரகஆக்கினைக்கு எப்படித் தப்பிப்போவீர்கள்?
ஆதலால் கேளுங்கள்; [13]நான் தீர்க்கதரிசிகளை ௩௪
யும் ஞானிகளையும் வேதபாரகரையும் உங்களி
டத்திற்கு அனுப்புகிறேன்; [14]அவர்களில் சிலரை
நீங்கள் கொன்று சிலுவைகளிலும் அறைந்து,
[15]சிலரை உங்கள் ஆலயங்களில் வாரினால் அடித்
து, ஊரூருக்கும் துன்பப்படுத்துவீர்கள்.—[16]நீதி ௩௫
மானாகிய ஆபேலின் இரத்தமுதல், [17]நீங்கள் தே
வாலயத்துக்கும் பீடத்துக்கும் நடுவே கொலை
செய்த பரகியாவின் குமாரனான சகரியாவின்
இரத்தம்வரைக்கும், [18]பூமியிலே சிந்தப்பட்ட
நீதியான இரத்தமெல்லாம் உங்கள்மேல் வரும்ப
டிக்கு (அப்படிச்செய்வீர்கள்). — அவையெல் ௩௬
லாம் இந்தச் சந்ததியின்மேலே வருமென்று
மெய்யாய் உங்களுக்குச் சொல்லுகிறேன்.—ஆ ௩௭
[19]எருசலேம் பட்டணத்தாரே, எருசலேம் பட்ட
ணத்தாரே, உங்களிடத்தில் அனுப்பப்பட்டவர்
கள்மேல் [20]கல் எறிந்து தீர்க்கதரிசிகளைக் கொலை
செய்கிறவர்களே, [21]கோழி தன் குஞ்சுகளைச்
சிறகுகளின்கீழே கூட்டிச் சேர்த்துக்கொள்ளும்
விதமாய் அநேகந்தரம் [22]உங்களைக் கூட்டிச்
சேர்த்துக்கொள்ள விரும்பினேன்; நீங்களோ
வரமாட்டோம் என்கிறீர்கள்.—(ஆகையால்) உங் ௩௮
கள் வாசஸ்தலம் பாழாக்கப்படும்.—அல்லாமலும் ௩௯
[23]பராபரனுடைய நாமத்தினாலே வருகிறவர்
தோத்திரிக்கப்படக்கடவரென்று நீங்கள் சொல்
லுமளவும், இதுமுதல் என்னைக்காணாதிருப்பீர்க
ளென்று உங்களுக்குச் சொல்லுகிறேன் என்று
திருவுளம்பற்றினார்.

## ௨௪. அதிகாரம்.

௧. கிறிஸ்து தேவாலயத்தின் அழிவையும், ௩. அந்த அழிவு சம்பவிக்கிறதற்கு முன் உண்டாகும் உபத்திரவங்களையும், ௨௯. தாம் நியாயந்தீர்க்கும்படி வரும்போது உண்டாகும் அடையாளங்களையும் முன்னறிவித்து, ௩௬. அந்தநாளும், நாழிகையும் தெரியாததினால், ௪௨. என்னேரமும் எசமானுடைய வருகையை எதிர்நோக்கி நற்பணிவிடைக்காரர்களைப்போல எச்சரிக்கையாய்க் காத்திருக்கப் போதித்தது.

இயேசுவானவர் தேவாலயத்தை விட்டுப் புறப் ௧
பட்டு வருகிறபொழுது, அவருடைய சீஷர்கள்

1 ௨ மோ. ௩௰ ௨௯.—2 ௨ மோ. ௨௯. ௩௭.—3 ௧ இரா. அ. ௰௩. ௨ நாளா. ௬ ௨. சங் ௨௬. அ: ௧௩௨. ௰௪.—4 மத். ௫. ௩௪. சங். ௰௧. ௪. அப். ௭. ௪௯.—5 லூக் ௰௧. ௪௨.
6 ௧ சாமு. ௰௫. ௨௨. ஓசே. ௬. ௬. மீகா. ௬ அ. மத். ௯. ௰௩: ௰௨. ௭.
7 மாற். ௭. ௪. லூக். ௰௧. ௩௯.
8 லூக். ௰௧. ௪௪. அப். ௨௩. ௩.
9 லூக். ௰௧. ௪௭.—10 அப். ௭. ௫௧, ௫௨. ௧ தெச. ௨. ௰௫.
11 ௧ மோ. ௰௫, ௰௬. ௧ தெச. ௨. ௰௬.
12 மத் ௩. ௭: ௰௨. ௩௪.—13 மத். ௨௧. ௩௪, ௩௫. லூக். ௰௧. ௪௯.
14 அப். ௫. ௪௰: ௭. ௫௯, ௬௰: ௨௨. ௰௯, ௨௰.—15 மத். ௰. ௰௭. ௨ கொரி. ௰௧. ௨௪, ௨௫.—16 ௧ மோ. ௪. அ.
௧ யோ. ௩. ௰௨.—17 ௨ நாளா. ௨௪. ௨௧.—18 வெளி. ௰௮. ௨௪.
19 லூக். ௰௩. ௩௪.—20 ௨ நாளா ௨௪. ௨௧.—21 சங். ௰௭. ௮: ௯௧. ௪.
22 ௫ மோ. ௩௨. ௰௧, ௰௨. சங். ௩௰௮. ௨௧. மத். ௨௩. ௯.—23 மாற். ௰௧. ௯. லூக். ௨௩. ௯.

சேர்ந்து, தேவாலயம் கட்டி இருக்கிற வகைகளை
௨ அவருக்குக் காண்பித்தார்கள்.—இயேசுவானவர்
அவர்களுடனே சொன்னது: இவைகள் எல்லா
வற்றையும் பார்க்கிறீர்களல்லவோ? [1](இவைக
ளில்) ஒரு கல் மற்றொரு கல்லின்மேல் இங்கே
வைக்கப்படுவதில்லை; எல்லாம் இடிக்கப்படு
மென்று மெய்யாய் உங்களுக்குச் சொல்லுகி
றேன் என்றார்.

௩ [2]பின்பு அவர் ஒலிவமலையின்மேல் உளுக்
காந்திருக்கையில், சீஷர்மாத்திரம் அவரிடத்தில்
வந்து, [3]இவை எப்பொழுது சம்பவிக்கும், மே
லும் நீர் வருவதற்கும் உலகத்தின் முடிவுக்கும்
அடையாளம் எது? இவைகளை நீர் எங்களுக்
௪ குச் சொல்லவேண்டும் என்றார்கள். — அவர்க
ளுக்கு மாறுத்தரமாக இயேசுவானவர் சொன்ன
தாவது: [4]அநேகர் வந்து என் நாமத்தை எடுத்து,
தங்களைக் கிறிஸ்து என்று சொல்லி [5]அநேகம்
௫ பேரை வஞ்சிப்பார்கள்.—[6]ஆதலால் ஒருவனும்
௬ உங்களை வஞ்சியாதபடிக்குப் பாருங்கள்.—அல்
லாமலும், யுத்தங்களையும் யுத்தங்களின் நடக்கை
களையும் கேள்விப்படுவீர்கள், அப்பொழுது நீங்
கள் கலங்காதபடிக்குப் பாருங்கள்; அவையெல்
லாம் சம்பவிக்கவேண்டும், ஆனாலும், முடிவு
௭ உடனே வராது.—ஆகையால் [7]ஒரு சனக்கூட்
டம் மற்றொரு சனக்கூட்டத்திற்கும், ஒரு இராச்
சியம் மற்றொரு இராச்சியத்திற்கும் விரோதமாய்
எழும்பும்; பஞ்சங்களும், பெருவாரிக்காய்ச்சல்
களும், பூமி அதிர்தல்களும் அங்கங்கே உண்டா
௮ கும்.—ஆனாலும் அவையெல்லாம் உபாதிகளுக்கு
௯ ஆரம்பமாய் இருக்கும். — [8]அப்பொழுது உபத்
திரவப்படும்படிக்கு உங்களை ஒப்புக்கொடுத்து
உங்களைக் கொலைசெய்வார்கள்; என்னுடைய
நாமத்தின்நிமித்தம் நீங்கள் எல்லா உலகத்தாரா
௰ லும் பகைக்கப்படுவீர்கள்.—அக்காலத்திலே [9]அ
நேகர் இலச்சை அடைந்து, ஒருவரை ஒருவர்
காட்டிக்கொடுத்து, ஒருவரை ஒருவர் பகைப்
௰௧ பார்கள். — [10]அநேகம் கள்ளத்தீர்க்கதரிசிகளும்
எழும்பி, [11]அநேகம்பேரை வஞ்சிப்பார்கள்.—
௰௨ மேலும் அக்கிரமம் மிகுதியாவதினால் அநேக
௰௩ ருடைய அன்பு மாறிப்போம்.—[12]ஆனாலும் மு
டிவுபரியந்தம் நிலைநிற்பவனே இரட்சிக்கப்படு
௰௪ வான். — அல்லாமலும் [13]உலகத்தார் எல்லாருக்
கும் சாட்சியாக இராச்சியத்தின் சுவிசேஷம்
[14]பூமியில் எங்கும் பிரசங்கிக்கப்படும்; அப்பொ
ழுது முடிவு வரும்.

௰௫ அப்படியிருக்க [15]இதை வாசிக்கிறவன், சிந்தித்
துக்கொள்ளக்கடவன்; [16]பாழாக்குகிற அருவரு
ப்பைக்குறித்துத் தானியேல் தீர்க்கதரிசி சொன்
னாரே, [17]அதை நீங்கள் பரிசுத்தஸ்தலத்தில் நிற்
கக் காணும்பொழுது,—யூதேயாவிலுள்ளவர்கள் ௰௬
மலைகளுக்கு ஓடிப்போகக்கடவர்கள். — வீட் ௰௭
டின்மேல் இருப்பவன் தன் வீட்டிலுள்ளவைக
ளை எடுத்துக்கொண்டு போகும்படிக்கு இறங்கா
மல் (போகக்) கடவன்.—அல்லாமலும் வயலில் ௰௮
இருப்பவன் தன் வஸ்திரங்களை எடுத்துக்கொண்
டுபோகும்படிக்குப் பின்னிட்டுத் திரும்பாமல்
(போகக்) கடவன்.—[18]ஐயோ! அந்த நாள்களில் ௰௯
கருப்பவதிகளுக்கும் முலைகொடுக்கிறவர்களுக்
கும் உபத்திரவம் இருக்கும்.—மேலும் உலகம் ௨௰
உண்டானது முதற்கொண்டு இதுவரைக்கும் சம்
பவியாததுமாய், இனிமேலும் சம்பவியாததுமாய்
இருக்கிற [19]மிகுந்த உபத்திரவம் அக்காலத்திலே
உண்டாயிருக்கும். — ஆதலால் நீங்கள் ஓடிப் ௨௧
போவது மாரிகாலத்திலானாலும் ஓய்வுநாளிலா
னாலும் சம்பவியாதபடிக்கு வேண்டுதல்பண்
ணக்கடவீர்கள். — அந்த நாள்கள் குறைக்கப்ப ௨௨
டாதிருந்தால் ஒருவனும் தப்பிப்போவதில்லை;
[20]தெரிந்துகொள்ளப்பட்டவர்களின்நிமித்தமோ
அந்த நாள்கள் குறைக்கப்படும்.—[21]அக்காலத்தி ௨௩
லே கள்ளக்கிறிஸ்துக்களும் கள்ளத் தீர்க்கதரிசிக
ளும் எழும்பி, தெரிந்துகொள்ளப்பட்டவர்களை
(வஞ்சிக்க) கூடுமானால், [22]அவர்களையும் வஞ்
சிக்கத்தக்கதாக மிகுந்த அதிசயங்களையும் அற்பு
தங்களையும் செய்வார்கள். — ஆதலால் அக்கா ௨௪
லத்திலே ஒருவன் உங்களை நோக்கி, [23]இதோ
கிறிஸ்து இங்கே இருக்கிறார், அதோ அங்கே
இருக்கிறார் என்று சொன்னால், நீங்கள் அவனை
நம்பாமல் இருப்பீர்களாக.—அதை நான் உங்க ௨௫
ளுக்கு இப்பொழுது முன்னறிவித்தேன். —
ஆகையால் அதோ வனாந்தரத்தில் இருக்கிறார் ௨௬
என்று சொன்னால், வெளியே புறப்படாதிருங்
கள்.—இதோ வீட்டின் அறைகளுக்குள் இருக்கி ௨௭
றாரென்றால், அதை நம்பாதிருங்கள். [24]மின்னல்
கிழக்கிலிருந்து தோன்றி மேற்குவரைக்கும் (சீக்
கிரமாய்) பிரகாசிக்கிறவிதமாய் மனிதனுடைய
குமாரன் வருவான். — அல்லாமலும் [25]பிணம் ௨௮
எங்கேயோ அங்கே கழுகுகள் கூடிவரும்.

அந்த நாள்களிலுள்ள [26]உபத்திரவத்திற்குப் ௨௯
பின்பு, உடனே [27]சூரியன் இருள் அடையும்,
சந்திரன் பிரகாசம் கொடாமல் இருக்கும், நட்
சத்திரங்கள் வானத்திலிருந்து விழும், வானத்தி
லுள்ள (மற்ற) வல்லமைகளும் அசைக்கப்ப

1 க இரா. ௯.௭. எரே. ௨௬.௰௮. மீகா.௩.௰௨. லூக்.௰௯.௪௪.
2 மாற். ௰௩. ௩.—3 க தெச. ௫.௨.
4 எரே.௰௪.௰௪: ௨௩.௨௧,௨௬.
5 ௰௧. வசனம்.—6 எபே. ௫. ௬. கொலோ.௨.௮,௰௮. ௨ தெச. ௨.௩. க யோ.௪.௧.—7 ௨ நாளா. ௰௫. ௬. ஏசா. ௰௯. ௨. ஆகா. ௨. ௨௨. சகரி. ௰௪. ௰௩.
8 மத். ௰.௰௭ மாற். ௰௩. ௯. லூக். ௨௧. ௰௨. யோவா. ௰௫. ௨௰: ௰௬. ௨. அப். ௪. ௨,௩: ௭. ௫௯: ௰௨.௧. க பே. ௪.௰௬. வெளி. ௨. ௰,௰௩.—9 மத். ௰௧. ௬: ௰௩. ௫௭. ௨ தீமோ. க. ௰௫: ௪. ௰, ௰௬.
10 மத். ௭. ௰௫. அப். ௨௰. ௨௯. ௨ பே. ௨.௧.—11 க தீமோ.௪.௧: ௰௫. ௨௪. வச. மத். ௨௪. ௨௪.
12 மத்.௰. ௨௨. மாற். ௰௩.௰௩. எபி. ௩.௬,௰௪. வெளி. ௨. ௰.—13 மத். ௪. ௨௩: ௯. ௩௫.—14 ௨ரோ. ௰. ௰௮. கொலோ. க. ௬, ௨௩
15 தானி. ௯. ௨௭. ௨௬.—16 மாற். ௰௩. ௰௪. லூக். ௨௧. ௨௰.
17 தானி. ௯. ௨௭: ௰௨. ௰௧.
18 லூக்.௨௩.௨௯—19 தானி.௯.௨௬: ௰௨. க. யோவே. ௨. ௨.
20 ஏசா. ௬௫. ௮.௯. சகரி.௰௪. ௨,௩.
21 ௫. ௰௧. வச. ௫ மோ. ௰௩. க. ௨ தெச. ௨. ௯, ௰, ௰௧. வெளி. ௰௩. ௰௩.—22 யோவா. ௯.௩௭: ௰. ௨௮, ௨௯. ௨ரோ. ௮. ௨௮,௩௰. ௨ தீமோ.௨.௰௯.-23 மாற்.௰௩.௨௧. லூக் ௰௭.௨௩:௨௧.௮.-24லூக்.௰௭. ௨௪.-25 யோபு.௩௯.௩௰.லூக்.௰௭. ௩௭.-26 தானி.௭ ௰௧,௰௨.-27 ஏசா. ௰௩.௰. எசே ௩௨.௭. யோவே.௨. ௰. ஆமோ. ௫. ௰௯: ௮. ௯. மாற். ௰௩. ௨௪. லூக். ௨௧. ௨௫. அப். ௨. ௨௰. வெளி. ௬. ௰௨.

௩௰ டும்.—அப்பொழுது [1]மனிதகுமாரனுடைய அ
டையாளம் வானத்திலே காணப்படும்; அல்லா
மலும் மனிதனுடைய குமாரன் வானத்தின்
மேகங்களின்மேலே [2]மிகுந்த வல்லமையோடும்
மகிமையோடும் வருகிறதைப் பூமியிலுள்ள [3]கோ
த்திரத்தார் எல்லாரும் கண்டு புலம்புவார்கள்.—
௩௧ அல்லாமலும் [4]அவர் தூதனை வலுவாய்த் தொ
னிக்கும் எக்காளத்துடனே அனுப்புவார்; அவர்
கள் வானத்தின எல்லைகளுக்குள்ளே நாலு தி
சைகளிலுமிருந்து அவரால் தெரிந்துகொள்ளப்
பட்டவர்களைச் சேர்த்துக்கொள்வார்கள்.
௩௨ [5]அத்திமரத்தினால் ஒரு உவமையைக் கற்றுக்
கொள்ளுங்கள்; அதின் கிளை தளிராகி, இலைக
ளைக் கொடுக்கிறபொழுது, வசந்தகாலம் சமீப
மாயிருக்கின்றதென்று அறிந்திருக்கிறீர்கள்.—
௩௩ அப்படிப்போல நான் சொன்னவைகள் எல்
லாம் சம்பவிக்கிறதை நீங்கள் காணும்பொழுது,
[6]சமீபமாகவே *இருக்கிறாரென்று அறியக்கட
௩௪ வீர்கள்.—[7]இந்தச் சந்ததி ஒழிந்துபோகும்முன்
னே அவையெல்லாம் சம்பவிக்கும் என்று மெய்
௩௫ யாய் உங்களுக்குச் சொல்லுகிறேன்.—[8]வான
மும் பூமியும் ஒழிந்துபோம்; என் வசனங்களோ
ஒழியாமல் இருக்கும்.
௩௬ [9]அவை சம்பவிக்கும் நாளையும் நாழிகையை
யும் என் பிதா ஒருவரேதவிர [10]மற்றொருவனும்
அறியமாட்டான்; பரமண்டலங்களிலுள்ள தே
௩௭ வதூதர்களும் அதை அறியார்கள்.—நோவாவின்
காலத்திலே நடந்ததுபோல, மனிதனுடைய
௩௮ குமாரன் வரும் காலத்திலேயும் நடக்கும்.—[11]எப்
படியென்றால், சலப்பிரளயத்திற்கு முன்னான
நாள்களிலே நோவா பேழைக்குள் பிரவேசித்த
நாள்வரைக்கும் சனங்கள் போசனபானம்பண்
௩௯ ணி,—பெண்கொண்டு பெண்கொடுத்து (தங்க
ளுக்கு மோசம் வருமென்று) நினையாமல் இருந்
தார்கள்; அப்பொழுதே சலப்பிரளயம் வந்து
அனைவரையும் கொண்டுபோயிற்று; அதுபோல
மனிதனுடைய குமாரன் வரும்பொழுதும் நடக்
௪௰ கும்.—அக்காலத்திலே [12]இரண்டு புருஷர் வய
லில் இருப்பார்கள்; அவர்களில் ஒருவன் பிடித்
துக்கொள்ளப்படுவான், ஒருவன் தப்பிப்போ
௪௧ வான்.—இரண்டு பெண்கள் திரிகை திரித்துக்
கொண்டிருப்பார்கள்; அவர்களில் ஒருத்தி
பிடித்துக்கொள்ளப்படுவாள், ஒருத்தி தப்பிப்
போவாள்.
௪௨ அப்படியிருக்க, [13]உங்கள் எசமான் வரும் நா
ழிகையை நீங்கள் அறியாதபடியினாலே விழித்
௪௩ திருக்கக்கடவீர்கள். — [14]திருடன் வரும் சாமத்
தை வீட்டெசமான் அறிந்தானானால், அவன்
விழித்துக்கொண்டு தன் வீடு கன்னமிடப்படா
தபடிக்குச் செய்திருப்பான் என்று அறிந்திருக்
கிறீர்கள்.—அப்படியிருக்க, [15]நீங்கள் நினையாத ௪௪
நாழிகையிலே மனிதனுடைய குமாரன் வரு
வதால், நீங்களும் எத்தனமாய் இருக்கக்கடவீர்
கள்.—[16]எசமான் தன் வேலைக்காரருக்குத் திட் ௪௫
டமாய்ப் போசனம் கொடுக்கும்படிக்கு, அவர்
கள்மேல் விசாரணைக்காரனாக வைத்த உண்மை
யும் புத்தியுமுள்ள ஊழியக்காரன் யாவன்?—
[17]எசமான் வந்து, எந்த ஊழியக்காரனை அப்படிச் ௪௬
செய்யக் காண்பானோ, அவனே பாக்கியவானாய்
இருப்பான்.—தன் ஆஸ்திகள் எல்லாவற்றின்மே ௪௭
லும் அவனை வைப்பானென்று மெய்யாய் உங்க
ளுக்குச் சொல்லுகிறேன்.—அந்த ஊழியக்கார ௪௮
னோ, பொல்லாதவனாய், என் எசமான் திரும்பி
வரத் தாமதமாய் இருப்பானென்று எண்ணி,—
தன்னோடேகூட ஊழியம் செய்கிறவர்களை ௪௯
அடிக்கத் தொடங்கி, வெறியரோடே புசித்துக்
குடிக்கிறவனானால்,—அந்த ஊழியக்காரன் நினை ௫௰
யாதிருக்கிற நாளிலேயும் அவனுக்குத் தெரியாத
நேரத்திலேயும், அவனுடைய எசமான் வந்து,—
அவனைக் கடினமாய் அடித்து, அழுகையும் பற் ௫௧
கடிப்புமுள்ள இடத்திலே வஞ்சகரோடே அவ
னுடைய பங்கை ஏற்படுத்துவான்.

## ௨௫. அதிகாரம்.

௧. பத்துக் கன்னிகாஸ்திரிகளையும், ௰௪. தாலந்துகளையுங்குறித்த உவமை
கள். ௩௧ கடைசி நியாயத்தீர்ப்பின் விவரங்கள்.

அப்பொழுது பரலோக இராச்சியத்தார், [18]தங் ௧
கள் தீவர்த்திகளைப் பிடித்து மணவாளனுக்கு
எதிர்கொண்டுபோகப் புறப்படுகிற பத்துக் கன்
னிகைகளுக்கு ஒப்பாயிருப்பார்கள்.—அவர்க ௨
ளில் [19]ஐந்துபேர் புத்தியுள்ளவர்களாயும், ஐந்து
பேர் புத்தியீனராயும் இருந்தார்கள்.—புத்தியீன ௩
முள்ளவர்கள் தங்கள் தீவர்த்திகளை எடுத்தபொ
ழுது, எண்ணெயைக்கூடக் கொண்டுபோகவில்
லை. — புத்தியுள்ளவர்களோ தீவர்த்திகளோடுங் ௪
கூடத் தங்கள் பாத்திரங்களில் எண்ணெயை
யும் கொண்டுபோனார்கள்.—மணவாளன் தாமதி ௫
த்தபொழுது, [20]எல்லாரும் நித்திரைமயக்கம்
அடைந்து தூங்கினார்கள். — அப்படியிருக்கும் ௬
காலத்திலே, [21]பாதி இராத்திரியிலே இதோ, மண
வாளன் வருகிறார், அவருக்கு எதிர்கொண்டு
போகப் புறப்படுங்களென்று கூக்குரல் உண்
டாயிற்று.—உடனே அந்தக் கன்னிகள் எல்லா ௭
ரும் எழுந்திருந்து, தங்கள் [22]தீவர்த்திகளை விளக்
கினார்கள். — (அப்பொழுது) புத்தியீனமுள்ள அ ௮
வர்கள் புத்தியுள்ளவர்களை நோக்கி, எங்கள்

1 தானி. ௭. ௰௩.—2 மத். ௰௬. ௨௭. மாற். ௰௩. ௨௬. வெளி. ௧. ௭.
3 சகரி. ௰௨. ௰௨.—4 மத். ௰௩. ௪௧. ௧ கொரி. ௰௫. ௫௨. ௧ தெச. ௪. ௰௬.—5 லூக். ௨௧. ௨௯.
6 யாக். ௫. ௯.—7 மத். ௰௬. ௨௮: ௨௩. ௩௬. மாற். ௯. ௧. லூக். ௨௧. ௩௨.—8 சங். ௱௨. ௨௬. ஏசா. ௫௧. ௬. மத். ௫. ௰௮ மாற். ௰௩. ௩௧. லூக். ௨௧. ௩௩. எபி. ௧. ௰௧.
9 மாற். ௰௩. ௩௨. சகரி. ௰௪. ௭.
10 அப். ௧. ௭. ௧ தெச. ௫. ௨. ௨ பே. ௩. ௰.—11 ௧ மோ. ௬. ௭: ௭. ௬. லூக். ௰௭. ௨௬. ௧ பே. ௩. ௨௰.
12 லூக். ௰௭. ௩௪.—13 மத். ௨௫. ௰௩. மாற். ௰௩. ௩௩. லூக். ௨௧. ௩௬.—14 லூக். ௰௨. ௩௯. ௧ தெச. ௫. ௨. ௨ பே. ௩. ௰. வெளி. ௩. ௩: ௰௬. ௰௫.
15 மத். ௨௫. ௰௩. ௧ தெச. ௫. ௬.
16 லூக். ௰௨. ௪௨. அப். ௨௰. ௨௮. ௧ கொரி. ௪. ௨. எபி ௩. ௫.
17 வெளி ௰௬. ௰௫.—18 எபே. ௫. ௨௬, ௨௰. வெளி ௰௯. ௭: ௨௧. ௯.
19 மத். ௰௩. ௪௭: ௨௨. ௰.—20 ௧ தெச. ௫. ௬.—21 மத். ௨௪. ௩௧. ௧ தெச. ௪. ௰௬.—22 லூக். ௰௨. ௩௫.

* அல்லது வந்திருக்கிறாரென்று.

தீவர்த்திகள் அணைந்துபோகின்றன; ஆகையால்
உங்கள் எண்ணெயில் கொஞ்சம் எங்களுக்குத்
௯ தாருங்கள் என்றார்கள்.—அதற்குப் புத்தியுள்ள
வர்கள் சொன்னது: நாங்கள் கொடுத்தால் எங்க
ளுக்கும் உங்களுக்கும் குறைச்சல் உண்டாகும்;
அப்படியாகாதபடிக்கு நீங்கள் கடைக்காரரி
டத்தில் போய், உங்களுக்காக (எண்ணெயைக்)
௰ கொள்ளுங்கள் என்றார்கள்.—அந்தப்படி அவர்
கள் கொள்ளப்போகிறபொழுது மணவாளன்
வந்தார்; எத்தனமாயிருந்தவர்கள் அவரோடே
கூடக் கலியாணத்திற்குப்போய், (வீட்டில்) பிர
௰௧ வேசித்தார்கள். — [1]உடனே கதவு பூட்டப்பட்
டது; பின்பு மற்றக் கன்னிகளும் வந்து, [2]ஆண்
டவரே, ஆண்டவரே, எங்களுக்குத் திறக்க
௰௨ வேண்டும் என்றார்கள்.—அதற்கு அவர் சொன்
னது: [3]உங்களை அறியமாட்டேன் என்று மெய்
யாகவே உங்களுக்குச் சொல்லுகிறேன் என்
௰௩ றார்.—அப்படியிருக்க, [4]மனிதனுடைய குமாரன்
வரும் நாளையாகிலும் நாழிகையையாகிலும்
நீங்கள் அறியாமல் இருக்கிறபடியினாலே, விழித்
துக்கொண்டிருக்கக்கடவீர்கள்.

௰௪ அன்றியும் (பரலோக இராச்சியம்) [5]புறத்தே
சத்திற்குப் பிரயாணமாய்ப்போக மனதுள்ள
மனிதன், தன் ஊழியக்காரரை அழைத்து, [6]தன்
ஆஸ்திகளை அவர்களுக்கு ஒப்புக்கொடுத்தது
௰௫ போல் இருக்கும்.—[7]அவனுடைய திராணிக்குத்
தக்கதாக ஒருவனுக்கு ஐந்து *தாலந்து †நிறை
பொன்னும், ஒருவனுக்கு இரண்டு தாலந்து நிறை
பொன்னும், பின்னொருவனுக்கு ஒரு தாலந்து
(நிறைபொன்னும்) கொடுத்து, பின்பு உடனே
௰௬ புறத்தேசத்திற்குப் போனான். — ஐந்து தாலந்
தைப் பெற்றவன் போய், அவைகளால் வியா
பாரம்பண்ணி, வேறு ஐந்து தாலந்தைச் சம்பா
௰௭ தித்தான். — அப்படிப்போல இரண்டு தாலந்
தைப் பெற்றவனும் வேறு இரண்டு தாலந்தைச்
௰௮ சம்பாதித்தான்.—ஒரு தாலந்தைப் பெற்றவனோ
போய், நிலத்திலே ஒரு குழியைத் தோண்டி,
தன் எசமானுடைய திரவியத்தை அதிலே புதைத்
௰௯ துவைத்தான்.—அநேக காலமானபின்பு, அந்த
ஊழியக்காரருடைய எசமான் திரும்பிவந்து,
௨௰ அவர்களோடே கணக்குப் பார்த்தான். — அப்
பொழுது ஐந்து தாலந்தைப் பெற்றவன் சேர்ந்து,
வேறு ஐந்து தாலந்தைக் கொண்டுவந்து, ஆண்ட
வனே, ஐந்து தாலந்தை எனக்கு ஒப்புவித்தீரே,
இதோ, அவைகளால் வேறு ஐந்து தாலந்தைச்
௨௧ சம்பாதித்தேன் என்றான்.—அப்பொழுது எசமா
னானவன் அவனை நோக்கி, நல்லது உத்தமமும்
உண்மையுமுள்ள ஊழியக்காரனே, கொஞ்சத்
தில் உண்மையாய் இருந்தாய், [8]அநேகத்தின்
மேல் உன்னை அதிகாரியாக வைப்பேன்; உன்
எசமானுடைய [9]சந்தோஷத்திற்குட்பிரவேசித்
து வா என்றான்.—இரண்டு தாலந்தைப் பெற்ற ௨௨
வனும் சேர்ந்து, ஆண்டவனே, நீர் இரண்டு தா
லந்தை எனக்கு ஒப்புவித்தீரே, இதோ, அவைக
ளால் வேறு இரண்டு தாலந்தைச் சம்பாதித்தேன்
என்றான்.—அவனுடனே எசமான் சொன்னது: ௨௩
நல்லது [10]உத்தமமும் உண்மையுமுள்ள ஊழியக்
காரனே, கொஞ்சத்தில் உண்மையாய் இருந்தாய்;
அநேகத்தின்மேல் உன்னை அதிகாரியாக வைப்
பேன்; உன் எசமானுடைய சந்தோஷத்திற்குட்
பிரவேசித்து வா என்றான்.—பின்பு ஒரு தாலந் ௨௪
தைப் பெற்றவனும் வந்து, ஆண்டவனே, நீர்
விதையாத இடத்திலே அறுக்கிறவருமாய், தெளி
யாத இடத்தில் சேர்க்கிறவருமாயிருக்கிற கடின
மான மனிதனாய் இருக்கிறீரென்று அறிந்தேன்.—
ஆகையால் நான் பயந்துபோய், உமது தாலந்தை ௨௫
நிலத்தில் புதைத்துவைத்தேன்; இதோ, உம்மு
டையதைத் திரும்ப எடுத்துக்கொள்ளும் என்
றான்.—அவனுக்கு மாறுத்தரமாக எசமான் சொன் ௨௬
னதாவது: பொல்லாதவனும் சோம்பனுமான
ஊழியக்காரனே, நான் விதையாத இடத்தில் அ
றுக்கிறவனென்றும், தெளியாத இடத்தில் சேர்க்
கிறவனென்றும் நீ அறிந்தாயா?—அப்படியானால் ௨௭
நீ என் திரவியத்தை வியாபாரிகளிடத்தில் வைக்
கவேண்டியதாய் இருந்தது; அப்பொழுது நான்
வந்து என்னுடையதை வட்டியோடேகூட எடு
த்துக்கொள்வேனே என்று சொல்லி,— பின்பு ௨௮
[11]உள்ளவன் எவனோ அவனுக்குக் கொடுக்கப்
படும், சம்பூரணமும் அவனுக்கு உண்டாகும்;
உள்ளவன் அல்லாதவனிடத்தில் இருக்கிறதும்
எடுத்துக்கொள்ளப்படும். — ஆகையால் இவனு ௨௯
டைய கையிலிருக்கிற தாலந்தை நீங்கள் வாங்கி,
பத்துத் தாலந்தை உடையவனுக்குக் கொடுங்
கள்.—அல்லாமலும் அப்பிரயோசனமான இந்த ௩௰
ஊழியக்காரனை [12]அழுகையும் பற்கடிப்புமுள்ள
மிகவும் புறம்பான இருளிலே தள்ளிப்போடுங்
கள் என்றான்.

அன்றியும் [13]மனிதனுடைய குமாரன் தமது ௩௧
மகிமையோடே தம்முடைய சகல பரிசுத்த தூத
ருடனேயுங்கூட வரும்பொழுது, அவர் தமது
மகிமையுள்ள பத்திராசனத்தின்மேல் வீற்றிருப்
பார்.—அப்பொழுது [14]உலகத்தார் எல்லாரும் அவ ௩௨
ருக்குமுன்பாகக் கூட்டப்படுவார்கள்; [15]மேய்ப்
பனானவன் ஆடுகளையும் கடாக்களையும் பிரிக்கிற
துபோல, அவர் அவர்களை வெவ்வேறாகப் பிரித்
து,—ஆடுகளுக்கு ஒப்பானவர்களைத் தமது வலது ௩௩

1 லூக். ௰௩. ௨௫.—2 மத். ௭. ௨௧, ௨௨.—3 சங். ௧. ௬. ஆப. ௧. ௰௩. யோவா. ௯. ௩௧.
4 மத். ௨௪. ௪௨, ௪௪. மாற். ௰௩. ௩௩, ௩௫, ௩௩. லூக். ௨௧. ௩௬. ௧ கொரி. ௰௬. ௰௩. ௧ தெச. ௫. ௬. ௧ பே. ௫. ௮. வெளி. ௰௬. ௰௫.
5 லூக். ௰௯. ௰௨.—6 மத். ௨௧. ௩௩.
7 மத். ௰௮. ௨௪. ௨ ரோ. ௰௨. ௬. ௧ கொரி. ௰௨. ௭, ௰௧, ௨௯. எபே. ௪. ௰௧.—8 மத். ௨௪. ௪௭: ௩௪. ௪௯. லூக். ௰௨. ௪௪: ௨௨. ௨௯, ௩௰.—9 ௨ தீமோ. ௨. ௰௨. எபி. ௰௨. ௨. ௧ பே. ௧. ௮.
10 ௨௧. வசனம்.—11 மத். ௰௩. ௰௨. மாற். ௪. ௨௫. லூக். ௮. ௰௮: ௰௯. ௨௬: யோவா. ௰௫. ௨.—12 மத். ௮. ௰௨: ௨௪. ௫௧.—13 சகரி. ௰௪. ௫. மத். ௰௬. ௨௭: ௰௯. ௨௮. மாற். ௮. ௩௮. அப். ௧. ௰௧. ௧ தெச. ௪. ௰௬. ௨ தெச. ௧. ௭. யூதா. ௰௪. வெளி. ௧. ௭.—14 ௨ ரோ. ௰௪. ௰. ௨ கொரி. ௫. ௰. வெளி. ௨௰. ௰௨.—15 எசே. ௨௰. ௩௮, ௩௪: ௰௭. ௨௰. மத். ௰௩. ௪௯.

* ஒரு தாலந்து (௬௪௭௫) ரூபாயாம்; ௰௮. ௨௪.—† யூதர்களுக்குள்ளே வழங்கின தாலந்து நிறைபொன் ஒன்றிற்கு ஏறக்குறைய பதின்மூவாயிரத்தறநூற்றெண்பது வராகன் ஒப்பாயிருக்கும்.

பக்கத்திலேயும், கடாக்களுக்கு ஒப்பானவர்க
ளைத் தமது இடதுபக்கத்திலேயும் நிறுத்துவார்.
௩௪ அப்பொழுது இராசாவானவர் தம்முடைய
வலதுபக்கத்திலே நிற்பவர்களை நோக்கி, [1]நான்
பசியாய் இருந்தபொழுது நீங்கள் எனக்குச் சாப்
பாடு கொடுத்தீர்கள்; நான் தாகமாய் இருந்தபொ
ழுது என் தாகத்தைத் தீர்த்தீர்கள்; [2]நான் அந்நிய
னாய் இருந்தபொழுது என்னைச் சேர்த்துக்கொண்
௩௫ டீர்கள்.—[3]எனக்கு வஸ்திரம் இல்லாதபொழுது
எனக்கு வஸ்திரம் கொடுத்தீர்கள்; நான் வியாதி
யாய் இருந்தபொழுது எனக்கு உதவிசெய்யவந்
தீர்கள்; [4]நான் காவலில் இருந்தபொழுது, என்
௩௬ னைப்பார்க்க வந்தீர்கள்.—ஆகையால் என் பிதா
வினால் ஆசீர்வதிக்கப்பட்டவர்களே, [5]உலகம்
உண்டானதுமுதல் உங்களுக்காக எத்தனம்பண்
ணப்பட்டிருக்கிற இராச்சியத்தைச் [6]சுதந்தரித்
௩௭ துக்கொள்ள வாருங்கள் என்பார்.—அப்பொழுது
நீதிமான்கள் அவருக்கு மாறுத்தரமாகச் சொல்
வது: ஆண்டவரே, நாங்கள் உம்மைப் பசியும்
தாகமும் உள்ளவரென்று எப்பொழுது கண்டு
௩௮ உமக்குப் போசனபானம் கொடுத்தோம்.—நாங்
கள் உம்மை அந்நியனென்றும் வஸ்திரம் இல்
லாதவரென்றும் எப்பொழுது கண்டு உம்மைச்
சேர்த்துக்கொண்டு உமக்கு வஸ்திரம் கொடுத்
௩௯ தோம்?—நாங்கள் உம்மை வியாதியுள்ளவரென்
றும் காவலில் இருக்கிறவரென்றும் எப்பொழுது
கண்டு உம்மிடத்தில் வந்தோம் என்பார்கள்.—
௪௰ அதற்கு இராசா சொல்வது: [7]மிகவும் சிறியரான
என் சகோதரராகிய இவர்களில் ஒருவனுக்கு
நீங்கள் எதைச் செய்தீர்களோ, அதை எனக்
கே செய்தீர்களென்று மெய்யாய் உங்களுக்குச்
சொல்லுகிறேன் என்பார்.

௪௧ பின்பு அவர் தமது இடதுபக்கத்தில் நிற்பவர்
களை நோக்கி, நான் பசியாய் இருந்தபொழுது,
நீங்கள் எனக்குச் சாப்பாடு கொடுக்கவில்லை;
நான் தாகமாய் இருந்தபொழுது, நீங்கள் என்
௪௨ தாகத்தைத் தீர்க்கவில்லை.—நான் அந்நியனாய்
இருந்தபொழுது, நீங்கள் என்னைச் சேர்த்துக்
கொள்ளவில்லை, எனக்கு வஸ்திரம் இல்லாத
பொழுது நீங்கள் எனக்கு வஸ்திரம் கொடுக்க
வில்லை; நான் வியாதியுள்ளவனுமாய்க் காவலில்
வைக்கப்பட்டவனுமாய் இருந்தபொழுது, நீங்
௪௩ கள் எனக்கு உதவிசெய்ய வரவில்லை.—ஆகை
யால் [8]சபிக்கப்பட்டவர்களே, நீங்கள் என்னை
விட்டு, [9]சாத்தானுக்காகவும் அவனுடைய தூதர்
களுக்காகவும் எத்தனம்பண்ணப்பட்டிருக்கிற
[10]நித்திய அக்கினிக்குப் போங்கள் என்பார்.—
௪௪ அப்பொழுது அவர்களும் அவருக்கு மாறுத்தர
மாகச் சொல்வது: ஆண்டவரே, உம்மைப் பசி
தாகமுள்ளவர் என்றும், அந்நியன் என்றும், வஸ்
திரமில்லாதவர் என்றும், வியாதியுள்ளவர் என்
றும், காவலில் இருக்கிறவர் என்றும் நாங்கள்
எப்பொழுது கண்டு, உமக்கு ஊழியம் செய்யா
திருந்தோம் என்பார்கள்.—அதற்கு அவர் சொல் ௪௫
வது: [11]மிகவும் சிறியரான இவர்களில் ஒருவனு
க்கு நீங்கள் எதைச் செய்யாதிருந்தீர்களோ, அ
தை எனக்கும் செய்யாதிருந்தீர்கள் என்பார்.—
அப்படியே [12]அவர்கள் நித்தியவேதனையை அ ௪௬
டையவும். நீதிமான்களோ நித்திய சீவனை அடை
யவும் போவார்கள் என்றார்.

## ௨௬. அதிகாரம்.

௧ பிரதானியர்கள் கிறிஸ்துவைக் கொலைசெய்ய யோசனைபண்ணினது. ௬. ஒரு ஸ்திரி அவருடைய சிரசில் எண்ணெயைப் பூசினது. ௰௪. யூதா அவரை விற்றது ௰௭. கிறிஸ்து பஸ்காவைச் சாப்பிட்டு, ௨௬. பரிசுத்த இராப்போசனத்தை ஏற்படுத்தி, ௩௬. தோட்டத்தில் செபம்பண்ணினபின்பு, ௪௭. யூதாவினால் ஒரு முத்தத்தின் வழியாய்க் காட்டிக் கொடுக்கவும், ௫௭. காய்பாவினிடத்தில் கொண்டுபோகவும், ௬௯. பேதுருவினால் மறுதலிக்கவும் உடன்பட்டது.

இந்த வசனங்கள் யாவையும் இயேசுவான ௧
வர் சொல்லி முடித்தபின்பு, அவர் தம்முடைய
சீஷருடனே சொன்னதாவது:—[13]இரண்டு நா ௨
ளைக்குப்பின்பு, பஸ்காப்பண்டிகை வருமென்று
அறிந்திருக்கிறீர்கள்; அப்பொழுது மனிதனு
டைய குமாரன் சிலுவைமரத்திலே அறையப்ப
டுவதற்கு ஒப்புக்கொடுக்கப்படுவான் என்றார்.
[14]அக்காலத்திலே பிரதான ஆசாரியரும் வேத ௩
பாரகரும் சனங்களிலுள்ள மூப்பரும் காயிபா
என்னப்பட்ட பிரதான ஆசாரியனுடைய அரண்
மனையில் கூடிவந்து,—தந்திரமாய் இயேசுவான ௪
வரைப் பிடித்துக் கொலைசெய்யும்படிக்கு யோ
சனை பண்ணியிருக்கிறபொழுது,—பண்டிகை ௫
நாள்களில் அப்படிச்செய்யக்கூடாது, செய்தால்
சனங்களுக்குள்ளே கலகம் உண்டாகுமென்று
(நிறுத்தினார்கள்).
[15]அன்றியும் இயேசுவானவர் பெத்தானியூரில் ௬
குஷ்டரோகியாய் இருந்த சீமோனுடைய வீட்
டில் இருக்கையில்,—[16]ஒரு ஸ்திரி விலையேறப் ௭
பெற்ற தயிலமுள்ள பரணியை எடுத்துக்கொண்
டுவந்து அவர் பந்தியிருக்கிறபொழுது, அதை
அவருடைய சிரசின்மேல் ஊற்றினாள்.—[17]அவரு ௮
டைய சீஷர் அதைக்கண்டு, விசனம் அடைந்து,
இந்தக் கேடு என்னத்திற்கு?—இந்தத் தயிலத்தை ௯
உயர்ந்த கிரயத்துக்கு விற்று, தரித்திரருக்குக்
கொடுத்தால் (இலாபமிருக்குமே) என்றார்கள்.—
இயேசுவானவர் அதை அறிந்து அவர்களுக்குச் ௰
சொன்னது: நீங்கள் இந்த ஸ்திரியை என்
வருத்தப்படுத்துகிறீர்கள்? என்னிடத்தில் நற்கிரி
யையைச் செய்தாளே.—[18]தரித்திரர் எக்காலத் ௰௧
திலும் உங்களுடனே இருக்கிறார்கள்; [19]நானோ

1 எசே. ௩௪. ௭. எசே. ௫௮. ௭. யாக். ௧. ௨௭.—2 எபி. ௰௩. ௨. ௩ யோ. ௫.—3 யாக். ௨. ௰௫, ௰௬.
4 ௨ தீமோ. ௧. ௰௬, ௰௭.—5 மத். ௰௩. ௪௩. மாற். ௰. ௩௰. ௧ கொரி. ௨. ௯. எபி. ௰௧. ௰௬.
6 உரோ. ௮. ௰௭. ௧ பே. ௧. ௪, ௯: ௩. ௯. வெளி. ௨௧. ௭.
7 யாக். ௰௪. ௰௩: ௰௯. ௰௭. மத். ௰. ௪௨. மாற். ௯. ௪௧. எபி. ௬. ௰.
8 சங். ௬. ௮. மத். ௭. ௨௩. லூக். ௰௩. ௨௭.—9 ௨ பே. ௨. ௪. யூதா. ௬.
10 மத். ௰௩. ௪௨, ௫௰.—11 யாக். ௰௪. ௰௩: ௰௭. ௯. சகரி. ௨. ௮. அப். ௯. ௫.—12 தானி. ௰௨. ௨. யோவா. ௫. ௨௯. உரோ. ௨. ௭, ௯.
13 மாற். ௰௪. ௧. லூக். ௨௨. ௧. யோவா. ௰௩. ௧.—14 சங். ௨. ௨. யோவா. ௰௧. ௪௭. அப். ௪. ௨௫. ௨௭.
15 மத். ௨௧. ௰௭.—16 மாற். ௰௪. ௩. யோவா. ௰௧. ௧, ௨: ௰௨. ௩.
17 யோவா. ௰௨. ௪.—18 உபா. ௰௫. ௰௧. யோவா. ௰௨. ௮.
19 மத். ௰௮. ௨௰: ௨௮. ௨௰. யோவா. ௰௩. ௩௩: ௰௪. ௰௯: ௰௬. ௫, ௨௮: ௰௭. ௰௧.

எக்காலத்திலேயும் உங்களோடே இருப்பதில்
௰௨ லை.—இவள் இந்தத் தயிலத்தை என் சரீரத்தின்
மேல் ஊற்றினது என்னை அடக்கம்பண்ணு
வதற்கு எத்தனமான செய்கையாய் இருக்கின்
௰௩ றது. — உலகத்தில் எவ்விடத்திலே இந்தச் சுவி
சேஷம் பிரசங்கிக்கப்படுமோ, அவ்விடத்திலே
இவளை நினைப்பதற்காக இவள் செய்ததும் சொல்
லப்படுமென்று மெய்யாகவே உங்களுக்குச்
சொல்லுகிறேன் என்றார்.

௰௪ அப்பொழுது [1]பன்னிரண்டு சீஷரில் ஒருவ
னாகிய [2]யூதாஸ்காரியோத்து என்னப்பட்டவன்
௰௫ பிரதான ஆசாரியரிடத்திற்குப் போய்,—நான்
அவரை உங்களுக்குக் காட்டிக்கொடுப்பேன்,
[3]நீங்கள் எனக்கு என்ன கொடுக்கிறீர்கள் என்
ருன்; அவர்கள் அவனுக்கு *முப்பது வெள்
௰௬ ளிக்காசை ஏற்படுத்திக் கொடுத்தார்கள்.—அது
முதல் அவன் அவரைக் காட்டிக்கொடுக்கும்
படிக்குத் தகுதியான காலத்தைத் தேடிக்கொண்
டான்.

௰௭ [4]பின்பு அவர்கள் புளியாத அப்பம் சாப்பிடு
கிற நாள்களில் முதல் நாளிலே, சீஷர்கள் இயே
சுவினிடத்திற்கு வந்து, நீர் பஸ்காப் பண்டிகை
யின் இராப்போசனம் பண்ணும்படிக்கு, நாங்
கள் எங்கே எத்தனம்பண்ணச் சித்தமாயிருக்கி
௰௮ றீர் என்று கேட்டார்கள்.—அதற்கு அவர் சொன்
னது: நீங்கள் பட்டணத்திலே ஒருவனிடத்தில்
போய், என் காலம் சமீபமாய் இருக்கின்றது,
உன்னிடத்திலே என் சீஷரோடுங்கூடப் பஸ்
காப் பண்டிகை கொண்டாடுவேன் என்று போ
தகர் சொல்லுகிருர் என்று அவனுடனே சொல்
௰௯ லுங்கள் என்றார்.— இயேசுவானவர் கட்டளை
யிட்டபடியே சீஷர்கள் போய், பஸ்காப்போ
சனத்தை எத்தனம்பண்ணினார்கள்.

௨௰ [5]அஸ்தமனமானபொழுது, அவர் பன்னிருவ
௨௧ ரோடுங்கூடப் பந்தியிருந்தார். — அவர்கள்
போசனம்பண்ணுகையில், அவர், உங்களில்
ஒருவன் என்னைக் காட்டிக்கொடுப்பான் என்று
மெய்யாய் உங்களுக்குச் சொல்லுகிறேன் என்
௨௨ றார்—அப்பொழுது அவர்கள் மிகவும் துக்கப்
பட்டு அவரை நோக்கி, ஆண்டவரே, நானோ
அப்படிச் செய்வேன் என்று ஒவ்வொருவர்
௨௩ சொல்லத்தொடங்கினார்கள். — அதற்கு அவர்
சொன்னது: [6]என்னோடேகூடத் தாலத்திலே
கைதோய்க்கிறவனே என்னைக் காட்டிக்கொடுப்
௨௪ பான். —[7]மனிதனுடைய குமாரன் தன்னைக்
குறித்து எழுதியிருக்கிறவிதமாய்ப் போகிறான்;
அப்படியிருந்தும், [8]ஐயோ! மனிதனுடைய குமா
ரன் எந்த மனிதனாலே காட்டிக்கொடுக்கப்படு
வானோ, அம்மனிதனுக்கு வேதனை வரும்; அம்ம
னிதன் பிறவாதிருந்தானானால் அவனுக்கு நலமா
யிருக்கும் என்றார்.—(பின்னாலே) அவரைக் காட் ௨௫
டிக்கொடுத்த யூதாவும் அவரை நோக்கி, இரபீ,
நானோ அப்படிச் செய்வேன் என்றான்; நீ சொன்
னபடியே இருக்கும் என்றார்.

[9]அன்றியும் அவர்கள் போசனம்பண்ணுகை ௨௬
யில், [10]இயேசுவானவர் அப்பத்தை எடுத்துக்
கொண்டு †ஆசீர்வதித்து, அதைப் பிட்டுச் சீஷர்க
ளுக்குக் கொடுத்து, [11]இது என்னுடைய சரீர
மாய் இருக்கிறது, நீங்கள் எடுத்துப் புசியுங்கள்
என்றார்.—பின்பு அவர் பாத்திரத்தையும் எடுத் ௨௭
துக்கொண்டு தோத்திரம்பண்ணி, அதை அவர்க
ளுக்குக் கொடுத்து, [12]நீங்கள் எல்லாரும் இதில்
பானம்பண்ணுங்கள்.—[13]இது அநேகருக்குப் ௨௮
பாவமன்னிப்பு உண்டாகும்படிக்கு, [14]புதிய
உடம்படிக்கைக்கு ஏற்றதாய்ச் சிந்தப்படுகிற
[15]என் இரத்தமாய் இருக்கின்றது.—[16]இதுமுதற் ௨௯
கொண்டு நான் உங்களோடேகூட என் பிதா
வின் இராச்சியத்திலே நவமாய்ப் பானம்பண்
ணும் நாள்வரைக்கும், [17]இந்தத் திராட்சரசத்தை
நான் பானம்பண்ணுவதில்லை என்று உங்களுக்
குச் சொல்லுகிறேன் என்றார்.

[18]அவர்கள் தோத்திரப்பாட்டைப் பாடின ௩௰
பின்பு, ஒலீவமலைக்குப் புறப்பட்டுப் போனார்
கள்.—அப்பொழுது இயேசுவானவர் அவர்களை ௩௧
நோக்கி, [19]நான் மேய்ப்பனை உபத்திரவப்படுத்
தும்பொழுது, ஆடுகள் சிதறிப்போம் என்று எழு
தியிருக்கிறது; ஆகையால் [20]இந்த இராத்திரியிலே
நீங்கள் எல்லாரும் என்னைக்குறித்துக் [21]கலக்கம்
அடைந்து போவீர்கள்.—[22]நானோ எழுந்திருந்த ௩௨
பின்பு உங்களுக்கு முன்னே கலிலேயா நாட்
டுக்குப் போவேன் என்றார்.—அதற்குப் பேதுரு ௩௩
சொன்னது: எல்லாரும் உம்மைக்குறித்துக் கலக்
கம் அடைந்துபோனாலும், நான் ஒருக்காலும்
கலக்கம் அடைந்துபோகமாட்டேன் என்றான்.—
[23]அவனுடனே இயேசுவானவர் சொன்னது: ௩௪
இந்த இராத்திரியிலே சேவல் கூவுகிறதற்குமுன்
னமே நீ என்னை மூன்றுதரம் மறுதலிப்பாய் என்
று மெய்யாய் உனக்குச் சொல்லுகிறேன் என்
றார். — அதற்குப் பேதுரு சொன்னது: நான் ௩௫
உம்மோடே மரணம் அடையவேண்டியதாய்
இருந்தாலும், உம்மை மறுதலிக்கமாட்டேன்
என்றான்; மற்றச்சீஷர் எல்லாரும் அப்படியே
சொன்னார்கள்.

[24]அப்பொழுது இயேசுவானவர் அவர்களோ ௩௬
டேகூடக் கெதுசேமனே என்னும் இடத்திற்கு
வந்து, சீஷரை நோக்கி, நான் அங்கே போய்ச்

1 மாற். ௰௪ ௰. லூக். ௨௨. ௩. யோவா. ௰௩. ௨, ௩௰.—2 மத். ௰. ௪.
3 சகரி. ௰௧. ௰௨. மத். ௨௭. ௩.
4 ௨ மோ. ௰௨. ௬, ௰௮. மாற். ௰௪. ௰௨. லூக். ௨௨. ௭.
5 மாற். ௰௪. ௰௮. லூக். ௨௨. ௰௪. யோவா. ௰௩. ௰௮.—6 சங். ௪௧ ௯. லூக். ௨௨ ௨௧. யோவா. ௰௩. ௰௮.
7 சங். ௨௨. ஏசா. ௫௩. தானி. ௯. ௨௬. மாற். ௯. ௰௨. லூக். ௨௪. ௨௫, ௪௬. அப். ௧௭ ௨, ௩: ௨௬. ௨௨, ௨௩. ௧ கொரி. ௰௫. ௩, ௪.
8 யோவா. ௰௭. ௰௨.——9 மாற். ௰௪. ௨௨. லூக். ௨௨. ௰௯.
10 ௧ கொரி. ௧௧. ௨௩, ௨௪.
11 ௧ கொரி. ௰. ௰௬.—12 மாற். ௰௪. ௨௩.
13 மத். ௨௰. ௨௮. ரோ. ௫. ௰௫. எபி. ௯. ௨௨.—14 எரே. ௩௧. ௩௧.
15 ௨ மோ. ௨௪ ௮. ௩ மோ. ௰௭. ௰௧.
16 அப். ௰. ௪௧.—17 மாற். ௰௪. ௨௫. லூக். ௨௨. ௰௮.—18 மாற். ௰௪. ௨௬.
19 மாற். ௰௪. ௨௭. யோவா. ௰௬. ௩௨.
20 மத். ௰௧. ௬.—21 சகரி. ௰௩. ௭.
22 மத். ௨௮. ௭, ௰, ௰௭. மாற். ௰௪. ௨௮: ௰௬. ௭.—23 மாற். ௰௪. ௩௰. லூக். ௨௨. ௩௪: யோவா. ௰௩. ௩௮.
24 மாற். ௰௪. ௩௨, ௩௬. லூக். ௨௨. ௩௯. யோவா. ௰௮. ௧.

* யூதர்களுடைய வெள்ளிக்காசு ஒன்றிற்கு ஏறக்குறைய ஒரு ரூபாய் ஒப்பாயிருக்கும்.—† இரேக்குப் பாஷையில் தோத்திரம்பண்ணி, மாற். ௬. ௪௧.

செபம்பண்ணுமளவும் நீங்கள் இவ்விடத்தில்
௩௭ உளுக்காந்திருங்கள் என்று சொல்லி,—பேதுரு
வையும் [1]செபேதேயுவின் குமாரர் இருவரையும்
கூட்டிக்கொண்டுபோய், துக்கம் அடையவும்
௩௮ மிகவும் வியாகுலப்படவும் தொடங்கி,—பின்பு
அவர்களை நோக்கி, [2]என் ஆத்துமா மரணபரியந்
தம் மிகுந்த துக்கப்பட்டிருக்கின்றது; நீங்கள்
இங்கே தரித்திருந்து என்னோடேகூட விழித்தி
௩௯ ருங்கள் என்று சொல்லி,—சற்று அப்புறம் போய்,
[3]சாஷ்டாங்கமாய் விழுந்து, [4]என் பிதாவே,
[5]இந்தப் பாத்திரம் என்னை விட்டு நீங்கக்கூடுமா
னால் அப்படிச் செய்யும்; [6] இல்லாவிட்டால்,
என்னுடைய சித்தத்தின்படி அல்ல, உம்முடைய
சித்தத்தின்படியே ஆகக்கடவது என்று செபம்
௪௰ பண்ணினார்.—பின்பு அவர் சீஷரிடத்தில் வந்து,
அவர்களை நித்திரைபண்ணக் கண்டு, பேதுரு
வை நோக்கி, இப்படி நீங்கள் ஒரு மணிநேரமாகி
லும் என்னோடேகூட விழித்திருக்கத் திராணி
௪௧ இல்லையோ?—[7] நீங்கள் குற்றஞ்செய்வதற்கான
காரணத்தில் பிரவேசியாதபடிக்கு, விழித்திருந்து
செபம்பண்ணுங்கள்; ஆவியானது மனதுள்ளது
தான், சரீரமோ பலவீனமுள்ளது என்று சொல்
௪௨ லி,—இரண்டாந்தரம் போய், என் பிதாவே, இந்
தப் பாத்திரத்தில் உள்ளதை நான் பானம்பண்
ணுவிட்டால், இது என்னை விட்டு நீங்காதா? நீங்
கக்கூடாதிருந்தால், உம்முடைய சித்தத்தின்ப
டியே ஆகக்கடவது என்று செபம்பண்ணினார்.—
௪௩ சீஷர்களோ மிகுந்த நித்திரைமயக்கம் உள்ளவர்
களானபடியால், அவர் திரும்பி வந்தபொழுது
அவர்களை மறுபடியும் நித்திரைபண்ணக் கண்
௪௪ டார்.— அவர் மறுபடியும் அவர்களை விட்டுப்
போய், மூன்றாந்தரம் அந்த விண்ணப்ப வார்த்தை
களைத்தானே செபம்பண்ணி, பின்பு தம்முடைய
௪௫ சீஷரிடத்தில் வந்து,—நீங்கள் பின்னும் நித்தி
ரை பண்ணி இளைப்பாறுவீர்களா? இதோ, மனித
னுடைய குமாரன் பாவிகளுடைய கைகளில்
ஒப்புக்கொடுக்கப்படுகிற நேரம் சமீபித்தது.—
௪௬ அதோ, என்னைக் காட்டிக்கொடுக்கிறவன் சமீப
மாய் வருகிறான், எழுந்திருங்கள் போவோம்
என்றார்

௪௭ [8] அவர் பேசுகையில் பன்னிருவரில் ஒருவ
னாகிய யூதா வந்தான்; அவனோடுங்கூடப் பிர
தான ஆசாரியரும் சனத்தின் மூப்பரும் அனுப்
பின திரளான சனங்களும் கத்திகளையும் தடி
௪௮ களையும் பிடித்து வந்தார்கள்.— அவர்களுக்கு
அந்தத் துரோகியானவன், எவனை நான் முத்தஞ்
செய்வேனோ அவன்தானே இயேசு, அவனைப்
பிடித்துக்கொள்ளுங்கள் என்று அடையாளமா
௪௯ கச் சொல்லியிருந்தான்.— அந்தப்படி அவன்
உடனே இயேசுவினிடத்தில் வந்து, இரபீ, நீர்
வாழ்க என்று [9]அவரை முத்தஞ்செய்தான்.—
இயேசுவானவரோ அவனை நோக்கி, சிநேகி ௫௰
தனே, [10]என்னத்திற்காக வந்திருக்கிறாய் என்
றார்; உடனே மற்றவர்கள் சேர்ந்து, இயேசுவா
னவர்மேல் கைகளை வைத்து, அவரைப் பிடித்
தார்கள்.—அப்பொழுது [11]இயேசுவுடனே இருக் ௫௧
கிறவர்களில் ஒருவன் தன் கத்தியைப் பிடித்து
உருவி, பிரதான ஆசாரியனுடைய வேலைக்
காரனைக் காதற வெட்டினான்.— இயேசுவான ௫௨
வரோ அவனுடனே சொன்னது: [12]கத்தியை
(இப்படி) எடுக்கிறவர்கள் எல்லாரும் கத்தியி
னாலே அழிந்துபோவார்கள்; ஆகையால் உன்
கத்தியைத் திரும்ப அதினிடத்திலே போடு.—
(என்னைக் காப்பாற்றும்படிக்கு) என் பிதா ௫௩
[13]அநேக இலட்சத்திற்கு அதிகமான தூதரை என்
னிடத்தில் அனுப்பவேண்டும் என்று நான் இப்
பொழுதே அவரை வேண்டிக்கொள்ளக்கூடாது
என்று நினைக்கிறாயா?—(நானே அப்படிச் செய் ௫௪
தால்) வேத எழுத்துக்கள் எப்படி நிறைவே
றும்?—[14] இப்படியே சம்பவிக்கவேண்டுமென்று ௫௫
சொல்லி, பின்பு சனக்கூட்டத்தை நோக்கி, நீங்
கள் ஒரு கள்ளனைப்பிடிக்கும்படிக்குப் புறப்படு
கிறதுபோல், கத்திகளோடும் தடிகளோடும் என்
னைப்பிடிக்க வந்தீர்கள்; தினந்தோறும் நான் தே
வாலயத்திலே உங்களுக்குள் இருந்து உபதேசம்
பண்ணினேன்; அப்பொழுது நீங்கள் என்னைப்
பிடிக்கவில்லையே.— [15]தீர்க்கதரிசிகளின் எழுத் ௫௬
துக்கள் நிறைவேறும்படிக்கு இவையெல்லாம்
நடந்துவருகின்றன என்றார்; [16]அப்பொழுது
சீஷர் எல்லாரும் அவரைவிட்டு ஓடிப்போ
னார்கள்.

[17]இயேசுவைப் பிடித்தவர்களோ, அவரைப் ௫௭
பிரதான ஆசாரியனாகிய காயிபாவினிடத்திற்
குக் கொண்டுபோனார்கள்; அங்கே வேதபார
கரும் மூப்பரும் கூடிவந்திருந்தார்கள். — அப் ௫௮
படியிருக்க, பேதுரு தூரத்திலே பிரதான ஆசா
ரியனுடைய அரண்மனைவரைக்கும் அவர் பின்
சென்று, பின்பு அதில் பிரவேசித்து, சங்கதி
யின் முடிவைப் பார்க்கிறதற்குச் சேவகரிடத்
தில் உளுக்காந்தான். — அத்தருணத்திலே பிர ௫௯
தான ஆசாரியரும் மூப்பரும் மற்றப் பெரிய சங்
கத்தார் யாவரும் இயேசுவைக் கொலைசெய்யும்
படிக்கு அவருக்கு விரோதமாய்ப் பொய்ச்சாட்
சியைத் தேடினார்கள், அகப்படவில்லை.—[18]அநே ௬௰
கம்பேர் வந்து பொய்ச்சாட்சிகளைச் சொல்லி
யும் ஒவ்வவில்லை.—[19] பின்பு இரண்டுபேர் வந்து, ௬௧
இவன் [20]தேவாலயத்தை இடித்துப்போடவும்
மூன்று நாளைக்குள்ளே அதைக் கட்டவும் வல்
லமை உள்ளவனாயிருக்கிறேன் என்று சொன்
னான் என்று பொய்ச்சாட்சி சொன்னார்கள்.—

1 மத். ௪. ௨௧.—2 யோவா. ௰௨. ௨௭.—3 மாற். ௰௪: ௩௫. லூக். ௨௨. ௪௨. எபி. ௫. ௭. 4 யோவா. ௰௨. ௨௭. 5 மத். ௨௰. ௨௨.—6 யோவா. ௫. ௩௰: ௬. ௩௮. பிலி. ௨. ௮. 7 மாற். ௰௩. ௩௩: ௰௪. ௩௮. லூக். ௨௨. ௪௰, ௪௬. எபே. ௬. ௰௮. 8 மாற். ௰௪. ௪௩. லூக் ௨௨. ௪௭. யோவா. ௰௮ ௩. அப். ௧. ௰௬. 9 ௨ சாமு. ௨௰. ௯.—10 சங். ௪௧. ௯: ௫௫. ௰௩.—11 யோவா. ௰௮. ௰. 12 ஆதி. ௯. ௬. வெளி ௰. ௰௰. 13 ௨ இரா. ௬. ௰௭. தானி. ௭. ௰. 14 ஏசா. ௫௩ ௭. ௨௪ வசனம். லூக். ௨௪. ௨௫, ௪௪, ௪௭.—15 புலம். ௪. ௨௰. ௫. ௪௩.—16 யோவா ௰௮. ௰௫.—17 மாற். ௰௪. ௫௩. லூக். ௨௨. ௫௪. யோவா. ௰௮. ௰௨, ௰௩.—18 சங். ௨௭. ௰௨: ௩௫. ௰௧. மாற். ௰௪. ௫௫. அப். ௬. ௰௩. 19 உபா. ௰௯. ௰௫.—20 மத். ௨௭. ௪௰. யோவா. ௨. ௰௯.

௬௨ [1]அப்பொழுது பிரதான ஆசாரியன் எழுந்திருந்
து அவரை நோக்கி, இவர்கள் உனக்கு விரோத
மாய்ச் சாட்சி சொன்னதை நீ கேட்டாயா?
இதற்கு மாறுத்தரமாக எதையாகிலும் சொல்லுகி
௬௩ றதில்லையா என்றான்.—[2]இயேசுவானவரோ பே
சாமல் இருந்தார்; அப்பொழுது பிரதான ஆசாரி
யன் அவருடனே சொன்னது: பராபரனுடைய
குமாரனாகிய கிறிஸ்து நீதானோ, அதை நீ எங்க
ளுக்குச் சொல்லவேண்டுமென்று [3]ஜீவனுடைய
தேவன்மேல் உன்னை ஆணையிட்டுக்கேட்கிறேன்
௬௪ என்றான். — இயேசுவானவர் சொன்னது: நீர்
சொன்னபடியே இருக்கின்றது; அல்லாமலும்
இதுமுதற்கொண்டு [4]நீங்கள் மனிதனுடைய குமா
ரனைச் [5]சர்வவல்லமையுள்ளவருடைய வலது பா
ரிசத்திலே வீற்றிருக்கவும், வானத்தின் மேகங்
கள்மேல் வரவும் காண்பீர்களென்று உங்களுக்
௬௫ குச் சொல்லுகிறேன் என்றார்.—பிரதான ஆசா
ரியன் அதைக் கேட்டவுடனே, [6]தன் வஸ்திரங்
களைக் கிழித்துக்கொண்டு, இவன் தேவதூஷணம்
சொன்னான்; இனிச் சாட்சிகள் நமக்கு வேண்
டுவதென்ன? இப்பொழுதே இவன் தூஷணத்
௬௬ தைக் கேட்டீர்களே. — உங்களுக்கு எப்படித்
தோன்றுகின்றது என்றான்; அதற்கு மற்றவர்கள்
சொன்னது: [7]இவன் மரணத்திற்குப் பாத்திரனாய்
௬௭ இருக்கிறான் என்றார்கள்.—[8]அப்பொழுது சிலர்
அவருடைய முகத்திலே துப்பி, சிலர் அவரைக்
கையினால் குட்டி, சிலர் [9]அவருடைய கன்னத்
௬௮ தில் அறைந்து,—கிறிஸ்துவே, [10]உம்மை அடித்த
வன் யாவன்? அதை ஞானதிருஷ்டியாய் எங்க
ளுக்குச் சொல்லும் என்று இழிவாய்ச் சொன்
னார்கள்.
௬௯ [11]அத்தருணத்திலே பேதுரு அரண்மனையின்
பிரகாரத்திலே உளுக்காந்திருந்தான்; அப்பொ
ழுது வேலைக்காரி ஒருத்தி அவனிடத்தில் வந்து,
நீயும் கலிலேயனாகிய இயேசுவுடனே இருந்தாய்
௭௰ என்றாள். — அதற்கு அவன் சொன்னது: நீ பே
சுகிறது எனக்குத் தெரியாதென்று எல்லாருக்கும்
முன்பாக மறுதலித்து, பின்பு மண்டபத்திற்குப்
௭௧ போனான்.—அங்கே வேறொரு பெண் அவனைக்
கண்டு, இவனும் நாசரேத்தூரானாகிய இயேசு
வுடனே இருந்தானென்று அங்கே இருந்தவர்க
௭௨ ளுக்குச் சொன்னாள். — அவனோ சொன்னது:
அம்மனிதனை அறியமாட்டேனென்று மறுபடி
௭௩ யும் ஆணையோடே மறுதலித்தான்.—சற்று நேரத்
திற்குப்பின்பு, அங்கே நின்றவர்கள் பேதுருவி
னிடத்தில் வந்து, [12]மெய்யாய் நீயும் அவர்களில்
ஒருவன், உன் பேச்சு அதை வெளிப்படுத்துகின்
௭௪ றது என்றார்கள்.—அப்பொழுது பேதுரு சொன்
னது: [13]நான் அந்த மனிதனை அறியவேயில்லை
என்று சபித்துக்கொண்டு சத்தியம் பண்ணி
னான். — உடனே சேவல் கூவிற்று; பேதுரு ௭௫
(அதைக்கேட்டு) [14]சேவல் கூவுமுன்னே நீ என்
னை மூன்றுதரம் மறுதலிப்பாய் என்று இயேசுவா
னவர் சொன்ன வசனத்தை நினைத்துக்கொண்டு,
வெளியே போய் மிகவும் அழுதான்.

## ௨௭. அதிகாரம்.

௧. இயேசுவைக் கட்டிப் பிலாத்துவுக்கு ஒப்புக்கொடுத்தது. ௫. யூதா நான்று கொண்டு செத்தது. ௰௯. பிலாத்து தன் மனைவியினாலே எச்சரிக்கப்பட்டது. ௨௪. அவன் தன் கைகளைக்கழுவி, ௨௬. பரபாசை விடுதலையாக்கினது. ௨௯. கிறிஸ்து தமக்கு முள்முடி தரித்து, ௩௫. சிலுவையில் அறையவும், ௫௰. மரிக்கவும், ௫௯. மரித்து அடக்கம்பண்ணவும் உடன்பட்டது. ௬௬. அவருடைய கல்லறை முத்திரித்துக் காவல் பண்ணப்பட்டது.

விடியற்காலமானபொழுது, [15]சகல பிரதான ௧
ஆசாரியரும் சனங்களின் மூப்பரும் இயேசு
வைக் கொலைசெய்யும்படிக்கான வகையைக்
குறித்து யோசனைபண்ணி,—அவரைக் கட்டிக் ௨
கொண்டுபோய், பொந்திபு [16]பிலாத்தென்னும்
துரைக்கு அவரை ஒப்புக்கொடுத்தார்கள்.
[17]அப்பொழுது அவரைக் காட்டிக்கொடுத்த ௩
யூதா என்பவன், அவர் மரணஆக்கினைக்குள்ளா
கத் தீர்க்கப்பட்டதைக் கண்டு, மனஸ்தாபம்
அடைந்து, அந்த முப்பது வெள்ளிக்காசைப்
பிரதான ஆசாரியரிடத்திற்கும் மூப்பரிடத்திற்
கும் திரும்பக் கொண்டுவந்து, குற்றமில்லாத
வரை நான் காட்டிக்கொடுத்ததினால்,—எனக் ௪
குப் பாவம் வந்ததென்றான்; அதற்கு அவர்கள்
சொன்னது: அது எங்களுக்கு என்ன, நீயே பார்
என்றார்கள்.—அப்பொழுது அவன் அந்த வெள் ௫
ளிக்காசைத் தேவாலயத்தில் எறிந்து, [18]புறப்
பட்டுப்போய், நான்றுகொண்டு செத்தான்.—பிர ௬
தான ஆசாரியர் அந்தப் பணத்தை எடுத்து, இது
இரத்தக் கிரயமாகையால், இதைக் காணிக்கைப்
பெட்டியிலே போடக்கூடாதென்று சொல்லி,—
ஆலோசனை பண்ணின பின்பு, அதினாலே அந் ௭
நியரை அடக்கம்பண்ணும்படிக்கு ஒரு குயவ
னுடைய நிலத்தைக் கொண்டார்கள்.—ஆதலால் ௮
இந்நாள்வரைக்கும் அந்த நிலம், [19]இரத்தநிலம்
என்னப்பட்டிருக்கின்றது.—அப்பொழுது இஸ் ௯
ரவேல் சனங்களால் அவர் மதிக்கப்பட்ட [20]கிர
யமாகிய *முப்பது வெள்ளிக்காசை அவர்கள்
எடுத்து,—பராபரன் எனக்குக் கட்டளையிட்ட ௰
படியே அதை ஒரு குயவனுடைய நிலத்திற்கா
கக் கொடுத்தார்கள் என்று எரேமியா தீர்க்கதரிசி
சொன்ன வசனம் நிறைவேறிற்று.
இயேசுவானவர் துரைக்குமுன்பாக நின்ற ௧௧

1 மாற். ௰௪. ௬௰.—2 ஏசா. ௫௩. ௭. மத். ௨௭. ௰௨, ௰௪.—3 ௧ மோ. ௫. ௧. ௧ சாமு. ௰௪. ௨௪, ௨௬.
4 தானி. ௭. ௰௩. மத். ௰௬. ௨௭: ௨௪. ௩௰: ௨௫. ௩௧. லூக். ௨௧. ௨௭. யோவா. ௧. ௫௧. ௨ரோ. ௰௪. ௰. ௧ தெச. ௪. ௰௬. வெளி. ௧. ௭.
5 சங். ௱௰. ௧ அப். ௭. ௫௫.
6 ௨ இரா. ௰௮. ௩௭: ௰௯. ௧.
7 ௩ மோ. ௨௪. ௰௬. யோவா. ௰௯. ௭.
8 ஏசா. ௫௰. ௬: ௫௩. ௩. மத். ௨௭. ௩௰.
9 லூக். ௨௨. ௬௪. யோவா. ௰௯. ௩.
10 மாற். ௰௪. ௬௫. லூக். ௨௨. ௬௪.
11 மாற். ௰௪. ௬௬. லூக். ௨௨. ௫௫. யோவா. ௰௮. ௰௬, ௰௭, ௨௫.
12 லூக். ௨௨. ௫௯.—13 மாற். ௰௪. ௭௧.
14 ௬௪. ௩௪. மாற். ௰௪. ௩௰. லூக். ௨௨. ௬௧, ௬௨. யோவா. ௰௩. ௩௮.
15 சங். ௨. ௨. மாற். ௰௫. ௧. லூக். ௨௨. ௬௬: ௨௩. ௧ யோவா. ௰௮. ௨௮.
16 மத். ௨௰. ௰௯. அப். ௩. ௰௩.
17 மத். ௨௬. ௰௪, ௰௫.—18 ௨ சாமு. ௰௭. ௨௩. அப். ௧. ௰௮.
19 அப். ௧. ௰௯.—20 சகரி. ௧௧. ௰௨, ௰௩.

* அல்லது கொள்ளப்பட்ட.

பொழுது, [1]அந்தத் துரை அவரை நோக்கி, நீ
யூதருடைய இராசாவா என்று கேட்டான்;
அதற்கு இயேசு சொன்னது: [2]நீர் சொல்லுகிறப
௰௨ டியே இருக்கின்றது என்றார்.—பின்பு பிரதான
ஆசாரியரும் மூப்பரும் அவர்மேல் குற்றம்
சாற்றி வருகிறபொழுது, [3]அவர் மாறுத்தரம் ஒன்
௰௩ றும் சொன்னதில்லை.—அப்பொழுது பிலாத்து
அவரை நோக்கி, [4]இவர்கள் உன்னைக் குறித்துச்
சொல்லுகிற குற்றங்களை நீ கேட்கிறதில்லையோ
௰௪ என்றான்.—அவரோ துரைக்கு மிகுந்த ஆச்சரி
யம் உண்டாகத்தக்கதாக, ஒன்றுக்கும் மாறுத்தர
மாக ஒரு வார்த்தையையும் சொல்லாமல் இருந்
தார்.
௰௫ [5]காவல் பண்ணப்பட்டவர்களில் எவனைச்
சனங்கள் கேட்கிறார்களோ, அவனைத் துரை
விடுதலையாக்குகிறது பண்டிகைதோறும் வழக்க
௰௬ மாய் இருந்தது.—அல்லாமலும் அக்காலத்திலே
கீர்த்தி அடைந்த பாதகனாகிய பரபாசென்னப்
பட்ட ஒருவன் காவலில் வைக்கப்பட்டிருந்
௰௭ தான்.—ஆகையால் சனங்கள் கூடியிருக்கையில்,
பிலாத்து அவர்களை நோக்கி, பரபாசென்பவனும்
கிறிஸ்து என்னப்பட்ட இயேசு என்பவனும்
இருக்கிறார்களே, இவர்களில் எவனை நான் உங்
களுக்காக விடுதலையாக்க விரும்புகிறீர்கள் என்று
௰௮ கேட்டான்.—அவர்கள் அவரைப் பொறாமையி
னாலே ஒப்புக்கொடுத்தார்கள் என்று பிலாத்து
அறிந்தபடியினாலே (அவன் அப்படியே கேட்
டான்).
௰௯ அல்லாமலும் அவன் நியாயாசனத்தில் உளுக்
காந்திருக்கையில், அவனுடைய மனைவியினால்
அனுப்பப்பட்ட ஒருவன் வந்து, நான் இன்
றைக்குச் சொப்பனத்திலே இந்த நீதிமானைக்
குறித்து மிகவும் பாடுபட்டேன்; ஆகையால் நீர்
அவரைக்குறித்து ஒன்றும் செய்யாதிருப்பீராக
என்று அம்மாள் அறிவிக்கச் சொன்னாள் என்
றான்.
௨௰ [6]அத்தருணத்திலே பிரதான ஆசாரியரும் மூப்
பரும் பரபாசைக் கேட்கும்படிக்கும் இயேசு
வைக் கொலைசெய்யப் பண்ணும்படிக்கும் சனங்
௨௧ களை (வசனங்களினாலே) ஏவினார்கள்.—ஆதலால்
இவ்விரண்டுபேரில் எவனை நான் உங்களுக்கு
விடுதலை பண்ணவேண்டும் என்று துரை சனங்
களை நோக்கிக் கேட்டபொழுது, அவர்கள் பர
பாசை விடுதலையாக்கவேண்டும் என்று கூப்
௨௨ பிட்டார்கள்.—அதற்குப் பிலாத்து சொன்னது:
அப்படியானால் கிறிஸ்து என்னப்படுகிற இயே
சுவை நான் என்ன செய்யலாம் என்றான்; அவ
னைச் சிலுவைமரத்தில் அறையப்பண்ணவேண்
டும் என்று எல்லாரும் கூப்பிட்டார்கள்.—அதற் ௨௩
குத் துரை சொன்னது: ஏன் எந்தப் பொல்லாங்
கைச் செய்தான் என்றான்; அப்பொழுது அவர்
கள் அவனைச் சிலுவைமரத்தில் அறையப்பண்
ணவேண்டும் என்று அதிகம் அதிகமாய்க் கூப்
பிட்டார்கள்.
பிலாத்து (தன்னுடைய) பிரயாசம் வீணாய் ௨௪
இருக்கிறதென்றும், கலகம் அதிகமாகிறதென்
றும் கண்டு, சனங்களுக்கு முன்பாகத் [7]தண்ணீர்
அள்ளி, கைகளைக் கழுவி, இந்த நீதிமானின் இரத்
தத்தைச் சிந்துகிறதற்கு நான் குற்றமில்லாதவன்,
நீங்களே பாருங்கள் என்றான்.—அதற்குச் சனங் ௨௫
கள் எல்லாரும் சொன்னது: [8]இவனுடைய இரத்
தம் எங்கள்மேலும் எங்கள் பிள்ளைகள்மேலும்
இருப்பதாக என்றார்கள்.—அப்பொழுது அவன் ௨௬
பரபாசை அவர்களுக்காக விடுதலையாக்கி, இ
யேசுவையோ [9]வாரினால் அடிப்பித்து, பின்பு
சிலுவையில் அறையப்படும்படிக்கு ஒப்புக்கொ
டுத்தான்.
பின்பு துரையினுடைய போர்ச்சேவகர் இயே ௨௭
சுவை அதிகாரச் சாலையிலே *கொண்டுபோய்,
போர்ச்சேவகராகிய கூட்டம் எல்லாம் அவர்
மேல் கூடிவரப்பண்ணி,—[10]அவருடைய வஸ் ௨௮
திரங்களைக் களைந்து, [11]சிவப்பான மேலங்கியை
அவருக்கு உடுத்தி,—[12]முள்ளுக்களால் ஒரு முடி ௨௯
யைப் பின்னி, அவருடைய சிரசின்மேல் வைத்
து, அவருடைய வலதுகையில் ஒரு கோலைக்
கொடுத்து, பின்பு அவர் முன்பாக முழங்காற்படி
யிட்டு, யூதரின் இராசாவே, வாழ்க என்று அவ
ரைப் பரியாசம்பண்ணி,—[13]அவர்மேலே துப்பி, ௩௰
அந்தக் கோலை எடுத்து அவருடைய சிரசில் அ
டித்தார்கள்.—அவரைப் பரியாசம் பண்ணின ௩௧
பின்பு, அவர்கள் அவருக்கு உடுத்தின மேல் அங்
கியைக் கழற்றி, அவருடைய வஸ்திரங்களை அவ
ருக்கு உடுத்தி, [14]அவரைச் சிலுவைமரத்தில்
அறையும்படிக்குக் கொண்டுபோனார்கள்.
[15]போகையில் [16]அவர்கள் சிரேனே ஊரானா ௩௨
கிய சீமோன் என்பவனைக் கண்டு, அவன் அவ
ருடைய சிலுவைமரத்தைச் சுமக்கும்படிக்குப்
பலவந்தம் பண்ணினார்கள்.—பின்பு அவர்கள் ௩௩
[17]தலையோட்டிடமென்று அருத்தங்கொள்ளும்
கொல்கதா என்னும் இடத்திற்கு வந்தபொழுது,-
[18]கசப்பான கலந்த காடியை அவருக்குக் ௩௪
குடிக்கக் கொடுத்தார்கள்; அவர் அதை ருசி
பார்த்து, குடிக்க மனதில்லாதிருந்தார்.—[19]அவ ௩௫
ரைச் சிலுவைமரத்தில் அறைந்த பின்பு, அவர்கள்
அவருடைய வஸ்திரங்களைக் குறித்துச் சீட்டுப்
போட்டு, அவைகளைப் பங்கிட்டார்கள்; அதி

1 மாற். ௰௫. ௨. லூக். ௨௩. ௩. யோவா. ௰௮. ௩௩.—2 யோவா. ௰௮. ௩௭, ௧ தீமோ. ௬. ௰௩.
3 மத். ௨௬. ௬௩. யோவா. ௰௯. ௯.
4 மத். ௨௬. ௬௨. யோவா. ௰௯. ௰.
5 மாற். ௰௫. ௬. லூக். ௨௩. ௰௭. யோவா. ௰௮. ௩௯.
6 மாற். ௰௫. ௰௧. லூக். ௨௩. ௰௮. யோவா. ௰௮. ௪௰. அப். ௩. ௰௪.
7 ௫ மோ. ௨௧. ௬.
8 ௫ மோ. ௰௯. ௰. யோசு. ௨. ௰௯. ௧ இரா. ௨. ௩௨. ௨ சாமு. ௧. ௰௬. அப். ௫. ௨௮.—9 ஏசா. ௫௩. ௫. மாற். ௰௫. ௰௫. லூக். ௨௩. ௰௬, ௨௪, ௨௫. யோவா. ௰௯. ௧, ௰௬.
10 மாற். ௰௫. ௰௭. யோவா. ௰௯. ௨.
11 லூக். ௨௩. ௰௧.—12 சங். ௬௯. ௰௯. ஏசா. ௫௩. ௩.—13 ஏசா. ௫௰. ௬. மத். ௨௬. ௬௭.—14 ஏசா. ௫௩. ௭.
15 ௪ மோ. ௰௫. ௩௫. ௧ இரா. ௨௧. ௰௩. அப். ௭. ௫௮. எபி. ௰௩. ௰௨.
16 மாற். ௰௫. ௨௧. லூக். ௨௩. ௨௬.
17 மாற். ௰௫. ௨௨. லூக். ௨௩. ௩௩. யோவா. ௰௯. ௰௭.—18 சங். ௬௯. ௨௧.
19 மாற். ௰௫. ௨௪. லூக். ௨௩. ௩௪. யோவா. ௰௯. ௨௩, ௨௪.

* அல்லது இராசாவின் வீட்டிலே.

னாலே, [1]என் வஸ்திரங்களைத் தங்களுக்குள்ளே
பங்கிட்டு, என் உடையின்மேல் சீட்டுப்போட்
டார்கள் என்று தீர்க்கதரிசியால் உரைக்கப்பட்
௩௬ டது நிறைவேறிற்று.—[2]பின்பு அவர்கள் அங்கே
உளுக்காந்து, அவரைக் காத்துக்கொண்டிருந்
௩௭ தார்கள். — அல்லாமலும் அவருடைய மரண
ஆக்கினையின் காரணத்தை அறிவிக்கும்படிக்கு,
[3]இவன் யூதருடைய இராசாவாகிய இயேசு
என்று எழுதி, அவருடைய சிரசுக்கு மேலி
௩௮ டத்தில் வைத்தார்கள்.—[4]அன்றியும் அவருடைய
வலதுபுறத்தில் ஒரு கள்ளனும் அவருடைய இட
துபுறத்தில் ஒரு கள்ளனுமாக இரண்டு கள்ளரும்
அவருடனே கூடச் சிலுவை மரங்களில் அறை
யப்பட்டார்கள்.

௩௯ அப்படியிருக்க, [5]அவ்வழி நடந்துபோகிற
௪௰ வர்கள் தங்கள் தலைகளை அசைத்து, — ஆ! [6]தே
வாலயத்தை இடித்து மூன்று நாள்களுக்குள்ளே
கட்டுகிறவனே, நீதானே உன்னை இரட்சித்துக்
கொள்; [7]நீ பராபரனுடைய குமாரனானால், சிலு
வைமரத்திலிருந்து இறங்கிவா என்று அவரைத்
௪௧ தூஷணித்தார்கள். — அப்படி பிரதான ஆசாரி
யரும் வேதபாரகரும் மூப்பரும் சொன்னது:—
௪௨ இவன் மற்றவர்களை இரட்சித்தான் தன்னைத்
தானே இரட்சிக்கத் திராணியில்லை; இவன்
இஸ்ரவேலரின் இராசாவானால், இப்பொழுதே
சிலுவையில் இருந்து இறங்கிவரட்டும், அப்
௪௩ பொழுது இவனை விசுவாசிப்போம்.—[8]இவன்
தன்னைப் பராபரனுடைய குமாரன் என்று
சொல்லி, பராபரன்மேல் நம்பிக்கையாய் இருந்
தானே; அவர் இவன்மேல் பிரியமாயிருந்தால்,
இப்பொழுது இவனை மீட்டுவிடட்டும் என்று
௪௪ அவரைப் பரியாசம் பண்ணினார்கள்.—[9]இவ்வித
மாய் அவரோடேகூடச் சிலுவைமரங்களில்
அறையப்பட்ட கள்ளரும் அவரை நிந்தித்தார்
கள்.

௪௫ [10]அன்றியும் ஆறும்மணி நேரம்தொடங்கி
ஒன்பதாம் மணி நேரம்வரைக்கும். அத்தேசம்
௪௬ எங்கும் அந்தகாரம் உண்டாயிற்று.—பின்பு ஒன்
பதாம் மணி நேரத்திலே [11]இயேசுவானவர், ஏலி
ஏலி லாமா சபக்தானி, என்று மிகுந்த சத்தத்
தோடே கூப்பிட்டார்; [12]அதற்கு என் தேவனே,
என் தேவனே, ஏன் என்னைக் கைவிட்டீர் என்று
௪௭ அருத்தமாம். — அவ்விடத்தில் நின்றவர்களில்
சிலர் அதைக்கேட்டு, இவன் எலியாவை அழைக்
௪௮ கிறான் என்றார்கள். — [13]அவர்களில் ஒருவன்
உடனே ஓடிக் கடற்காளானை எடுத்து, காடியால்
நிரப்பி, அதை ஒரு கம்பின்மேல் பூட்டி, அவ
௪௯ ருக்குக் குடிக்கக்கொடுத்தான்.—மற்றவர்களோ
சொன்னது: பொறுத்துக்கொள், எலியா இவனை
இரட்சிக்க வருவானோ, அதைப் பார்ப்போம்
என்றார்கள்.

[14]பின்பு இயேசுவானவர் மறுபடியும் மிகுந்த ௫௰
சத்தமிட்டு ஆவியை விட்டுவிட்டார். — [15]அப் ௫௧
பொழுது சம்பவித்ததென்னவென்றால், தேவா
லயத்திலுள்ள திரைச்சீலை மேலேதொடங்கிக்
கீழேமட்டும் இரண்டாகக் கிழிந்தது; பூமியும்
அதிர்ந்தது. கல்மலைகளும் பிளந்தன; கல்லறை
களும் திறந்தன.—நித்திரை அடைந்திருந்த பரி ௫௨
சுத்தவான்களுடைய அநேகம் சரீரங்கள் அவர்
எழுந்திருந்த பின்பு எழுப்பப்பட்டு,—கல்லறை ௫௩
களை விட்டுப் புறப்பட்டு, பரிசுத்த பட்டணத்
தில் பிரவேசித்து, அநேகருக்குத் தரிசனையானார்
கள்.

[16]போர்ச்சேவகரின் தலைவனும், அவனோடே ௫௪
கூட இயேசுவைக் காத்திருந்தவர்களும், பூமி
அதிர்தலையும் மற்ற நடக்கைகளையும் கண்ட
பொழுது, மிகுந்த பயமடைந்து, மெய்யாய்
இவர் தேவ குமாரனாய் இருந்தார் என்று சொல்
லிக்கொண்டார்கள்.

அல்லாமலும் இயேசுவுக்கு ஊழியம் செய்து ௫௫
[17]கலிலேயாவிலிருந்து அவர் பின்சென்று வந்த
ஸ்திரிகளாகிய மகதலா ஊர் மரியாளும்,—[18]யாக் ௫௬
கோபுக்கும் யோசேயுக்கும் தாயாகிய மரியா
ளும், செபேதேயுவின் குமாரருடைய தாயும்,
மற்ற அப்படிப்பட்ட அநேக ஸ்திரிகளும் அங்
கே தூரத்திலே பார்த்துக்கொண்டிருந்தார்கள்.

[19]அஸ்தமனமானபொழுது, அரிமத்தியா ஊரா ௫௭
னாகிய ஐசுவரியம் உள்ளவனுமாய் இயேசு
வுக்குச் சீஷனுமாயிருந்த யோசேப்பென்பவன்
பிலாத்துவினிடத்தில் போய் இயேசுவின் சரீரத்
தைக் கேட்டான்.—அதை அவனுக்குக் கொடுக் ௫௮
கும்படிக்குப் பிலாத்து கட்டளையிட்டான். —
அந்தப்படி யோசேப்பு அவருடைய சரீரத்தை ௫௯
எடுத்து, துய்யதான மெல்லிய புடவையிலே
சுற்றி,—[20]தான் கல்மலையில் வெட்டுவித்திருந்த ௬௰
தன்னுடைய புதிய கல்லறையில் அதை வைத்து,
அந்தக் கல்லறையின் வாசலில் ஒரு பெரிய கல்
லைப் புரட்டி வைத்துப்போனான்.—அத்தருணத் ௬௧
திலே மகதலா ஊராளாகிய மரியாளும் மற்ற
மரியாளும் கல்லறைக்கு எதிராக உளுக்காந்தி
ருந்தார்கள்.

எத்தனநாளுக்குப் பின்னான மறுநாளிலோ, ௬௨
பிரதான ஆசாரியரும் பரிசேயரும் பிலாத்து
வினிடத்தில் கூடிவந்து சொன்னதாவது: —
துரையே, அந்த எத்தன் உயிரோடிருந்தபொ ௬௩
ழுது, [21]தான் மூன்று நாளைக்குள்ளே எழுந்திருப்
பேன் என்று அவன் சொன்னதை நினைத்திருக்கி
றோம்.—ஆகையால் அவனுடைய சீஷர் இராத் ௬௪

1 சங். ௨௨.௰௮.—2 இச. வசனம். 3 மாற். ௰௫. ௨௬. லூக். ௨௩. ௩௮. யோவா. ௰௯. ௰௯. 4 ஏசா. ௫௩. ௰௨. மாற். ௰௫. ௨௭. லூக். ௨௩. ௩௨, ௩௩. யோவா. ௰௯. ௰௮.—5 சங். ௨௨. ௭; ௱௯. ௨௫. மாற். ௰௫. ௨௯. லூக். ௨௩. ௩௫.
6 மத். ௨௬. ௬௧. யோவா. ௨. ௰௯. 7 மத். ௨௬. ௬௩.—8 சங். ௨௨. ௮. 9 மாற். ௰௫. ௩௨. லூக். ௨௩. ௩௯. 10 ஆமோ. ௮. ௯. மாற். ௰௫. ௩௩. லூக். ௨௩. ௪௪.—11 எபி. ௫. ௭. 12 சங். ௨௨. ௧.—13 சங். ௬௯. ௨௧. மாற். ௰௫. ௩௬. லூக். ௨௩. ௩௬. யோவா. ௰௯. ௨௯.—14 மாற். ௰௫. ௩௭. லூக். ௨௩. ௪௬.
15 ௨ மோ. ௨௬. ௩௧. ௨ நாளா. ௩. ௰௪. மாற். ௰௫. ௩௮. லூக். ௨௩. ௪௫. 16 ௩௬. வசனம். மாற். ௰௫. ௩௯. லூக். ௨௩. ௪௭.—17 லூக் ௮. ௨, ௩. 18 மாற். ௰௫. ௪௰.
19 மாற். ௰௫. ௪௨. லூக். ௨௩. ௫௰. யோவா. ௰௯. ௩௮. 20 ஏசா. ௫௩. ௯.—21 மத். ௰௬. ௨௧; ௰௭. ௨௩; ௨௰. ௰௯; ௨௬. ௬௧; மாற். ௮. ௩௧; ௰. ௩௪. லூக். ௯. ௨௨; ௰௮. ௩௩; ௨௪. ௬, ௭. யோவா. ௨. ௰௯.

திரியிலே வந்து அவனைக் களவாய்க் கொண்டு
போய், பின்பு மரித்தோரிலிருந்து எழுந்தா
னென்று சனங்களுக்குச் சொல்லாதபடிக்கும்
முந்தின வஞ்சனையைப்பார்க்கிலும் பிந்தின
வஞ்சனை கொடிதாகாதபடிக்கும். நீர் மூன்றாம்
நாள்வரைக்கும் கல்லறையைப் பத்திரம்பண்
௬௫ ணக் கட்டளையிடவேண்டும் என்றார்கள்.—அ
தற்குப் பிலாத்து சொன்னது: காவல்பண்ணு
கிற போர்ச்சேவகர் உங்களிடத்தில் உண்டே,
அவர்களாலே நீங்கள் உங்கள் இஷ்டப்படி
போய், கல்லறையைப் பத்திரம்பண்ணுங்கள்
௬௬ என்றான்.—அந்தப்படி அவர்கள் போய், [1]கல்
லில் முத்திரைபோட்டு, காவலுக்காகப் போர்ச்
சேவகரை வைத்து, கல்லறையைப் பத்திரப்ப
டுத்தினார்கள்.

## ௨௮. அதிகாரம்.

௧. கிறிஸ்து உயிர்த்தெழுந்ததை ஒரு தூதன் ஸ்திரிகளுக்கு அறிவித்தது. ௯. அவர் அவர்களுக்குக் காணப்பட்டது. ௰௧. அவருடைய சரீரம் கல்லறையிலின்று திருடப்பட்டதென்று சொல்ல, பிரதான ஆசாரியர் போர்ச்சேவகருக்குப் பணம் கொடுத்தது. ௰௬. கிறிஸ்து தமமுடைய சீஷர்களுக்குக் காட்சியாகி, ௰௯. அவர்கள் சகல சாதிக்கும் ஞானஸ்நானம் கொடுத்துப் போதிக்கும்படி அவர்களை அனுப்பினது.

௧ [2]ஓய்வுநாள் முடிந்து, கிழமையின் முதலாம்நாள்
பிறக்கையில், மகுதலாவூர் மரியாளும் [3]மற்ற
மரியாளும் கல்லறையைப் பார்க்கப் புறப்பட்
௨ டார்கள்.—அப்பொழுது பூமி மிகவும் அதிரத்
தக்கதாக, [4]பராபரனுடைய தூதன் வானத்தி
லிருந்து இறங்கிவந்து, வாசலில் இருந்த கல்
லைப் புரட்டித்தள்ளி, அதின்மேல் உளுக்கார்ந்
௩ தான்.—[5]அவனுடைய முகம் மின்னல்போலவும்
அவனுடைய உடை உறைந்த மழையைப்போல
௪ வெண்மையாகவும் இருந்தது.—காவல்பண்ணு
கிற போர்ச்சேவகர் அவனைக் கண்டு, பயத்தினால்
௫ அதிர்ந்து, செத்தவர்களைப்போல் ஆனார்கள்.—தூ
தனோ அந்த ஸ்திரிகளை நோக்கி, நீங்கள் பயப்ப
டாதிருங்கள்; சிலுவைமரத்தில் அறையப்பட்ட
இயேசுவைத் தேடிவந்தீர்கள் என்று அறிந்திருக்
௬ கிறேன்.—[6]அவர் சொன்னபடியே எழுந்திருக்
கிறார்; ஆகையால் அவர் இங்கே இல்லை. நீங்கள்
வந்து, கர்த்தரை வைக்கப்பட்ட இடத்தைப்
௭ பார்த்து,—பின்பு சீக்கிரமாய்ப் போய், அவர்
மரித்தோரிலிருந்து எழுந்திருக்கிறார், [7]உங்களுக்
கு முன்னே கலிலேயாவுக்குப் போவார், அங்கே
அவரைக் காண்பீர்கள் என்று அவருடைய சீஷ
ருக்கு அறிவியுங்கள்; நான் உங்களுக்குச் சொ
ன்னதை நினைத்துக்கொள்ளுங்கள் என்றான்.—
௮ உடனே அவர்கள் பயத்தோடும் மிகுந்த சந்தோ
ஷத்தோடும் கல்லறையை விட்டு, அவரு
டைய சீஷருக்கு அறிவிக்கும்படிக்கு ஓடிப்
போனார்கள்.

அப்படி அவர்கள் அவருடைய சீஷருக்கு ௯
அறிவிக்கப் போகையில் நடந்தது என்னவென்
றால், [8]இயேசுவானவர் தாமே அவர்களுக்கு
எதிர்ப்பட்டு, நீங்கள் வாழ்க என்றார்; உடனே
அவர்கள் சேர்ந்து சாஷ்டாங்கமாய் அவரை
வணங்கி, அவருடைய பாதங்களைக் கட்டிக்
கொண்டார்கள்.—அப்பொழுது இயேசுவான ௰
வர் அவர்களுடனே சொன்னதாவது: [9]பயப்
படாதிருங்கள்; என் சகோதரர் கலிலேயா நாட்
டிலே என்னைக் காண்பார்கள்; ஆகையால் அவர்
கள் அவ்விடத்திற்குப் போகும்படிக்கு நீங்கள்
போய்ச் சொல்லுங்கள் என்றார்.

அவர்கள் போகையில், காவல்பண்ணின ௰௧
சேவகரில் சிலர் பட்டணத்திலே வந்து, எல்லா
நடக்கைகளையும் பிரதான ஆசாரியருக்கு அறி
வித்தார்கள்.—அப்பொழுது அவர்களும் மூப் ௰௨
பர்களும் கூடிவந்து யோசனைபண்ணினபின்பு,
அவர்கள் அந்தப் போர்ச்சேவகருக்கு மிகுந்த
பணத்தைக் கொடுத்து,—நீங்கள் எப்படிச் சொல் ௰௩
லவேண்டும் என்றால், நாங்கள் நித்திரைபண்
ணுகையில் அவனுடைய சீஷர்கள் அவனைக்
களவாய்க் கொண்டுபோனார்கள் என்று சொல்
லுங்கள்.—துரை இதைக் கேள்விப்பட்டால் ௰௪
நாங்கள் அவரைச் சமாதானப்படுத்தி, உங்களுக்
குக் கஸ்தி வராதபடிக்குச் செய்வோம் என்
றார்கள்.

போர்ச்சேவகர் அந்தப் பணத்தை எடுத்துக் ௰௫
கொண்டு, தாங்கள் அடைந்த போதிப்பின்படி
யே செய்தார்கள்; அப்படி இந்தச் சங்கதி யூதருக்
குள்ளே இந்நாள்வரைக்கும் பிரசித்தமாய் இருக்
கின்றது.

[10]பதினொரு சீஷர்கள் கலிலேயா நாட்டில் ௰௬
இயேசுவானவர் தங்களுக்குக் குறித்திருந்த
மலையின்மேல் போனார்கள்.—அங்கே அவர்கள் ௰௭
அவரைக் கண்டு சாஷ்டாங்கமாய் வணங்கி
னார்கள்; சிலரோ சந்தேகப்பட்டார்கள்.—அப் ௰௮
பொழுது இயேசுவானவர் சேர்ந்து, அவர்களு
டனே திருவுளம்பற்றினதாவது: [11]பரமண்ட
லத்திற்கும் பூமண்டலத்திற்கும் சகல அதிகார
மும் எனக்குக் கொடுக்கப்பட்டிருக்கின்றது.—
ஆகையால் [12]நீங்கள் புறப்பட்டு, [13]உலகத்தார் ௰௯
எல்லாரையும் சீஷராக்கி, பிதாகுமாரன் பரிசுத்த
ஆவியின் நாமத்தினாலே அவர்களுக்கு ஞானஸ்
நானம் கொடுத்து,—[14]நான் உங்களுக்குக் கட் ௨௰
டளையிட்ட யாவையும் அவர்கள் கைக்கொள்
ளும்படி அவர்களுக்கு உபதேசம்பண்ணுங்கள்;
கேளுங்கள், இம்மையின்முடிவுவரைக்கும் நான்
எப்பொழுதும் உங்களுடனேகூட இருக்கி
றேன் என்றார்.—ஆமென்.

1 தானி. ௬. ௰௭.—2 மாற். ௰௬. ௧. லூக். ௨௪. ௧. யோவா. ௨௰. ௧.
3 மத். ௨௭. ௫௬.—4 மாற். ௰௬. ௫. லூக். ௨௪. ௪. யோவா. ௨௰. ௰௨.
5 தானி. ௰. ௬.—6 மத். ௰௨. ௪௰: ௰௬. ௨௧: ௰௭. ௨௩: ௨௰ ௰௯.
7 மத். ௨௬. ௩௨. மாற். ௰௬. ௭.
8 மாற். ௰௬. ௯. யோவா. ௨௰ ௰௪.
9 யோவா. ௨௰. ௰௭. ௨ரோ. ௮. ௨௯. எபி. ௨. ௰௧.—10 மத். ௨௬. ௩௨. ௭. வசனம்.
11 தானி. ௭ ௰௩, ௰௪. மத் ௰௧. ௨௭: ௰௬. ௨௮. லூக். ௧. ௩௨: ௰. ௨௨. யோவா. ௩ ௩௫: ௫. ௨௨: ௰௩. ௩: ௰௭. ௨. அப். ௨. ௩௬. ௨ரோ. ௰௪. ௯. ௧ கொரி. ௰௫. ௨௭. எபே. ௧. ௰, ௨௧. பிலி. ௨. ௯, ௰. எபி ௧. ௨: ௨. ௮. ௧ பேது. ௩. ௨௨. வெளி. ௰௭ ௰௪.
12 மாற். ௰௬. ௰௫.
13 ஏசா. ௫௨. ௰. லூக். ௨௪. ௪௭. அப் ௨. ௩௮, ௩௯. ௨ரோ ௬. ௩-௫. கொலோ. ௨. ௧௨.
14 அப். ௨. ௪௨.

MARK.

# மாற்கு என்பவர்

## எழுதின சுவிசேஷம்.

### க. அதிகாரம்

க. யோவான்ஸ்நானனுடைய உத்தியோகம். கூ. இயேசு ஞானஸ்நானம் பெற்று, ௰உ. சோதிக்கப்பட்டு, ௰ச. பிரசங்கம் பண்ணினது. ௰சு. அவர் பேதுருவையும், அந்திரேயாவையும், யாக்கோபையும், யோவானையும் அழைத்தது, உங. பசாசுபிடித்திருந்த ஒருவனையும், உகூ. பேதுருவினுடைய மாமியையும், ஙஉ. மற்ற அநேகம் பிணியாளிகளையும் குணமாக்கினது, சக. ஒரு குஷ்டரோகியைச் சுத்தமாக்கினது.

க [1]பராபரனுடையகுமாரனாகியஇயேசுக்கிறிஸ்து
உ வைக்குறித்த சுவிசேஷத்தின் ஆரம்பம்.—இதோ,
[2]நான் என்னுடைய தூதனை உமக்கு முன்பாக
அனுப்புகிறேன்; அவன் உமக்கு முன்னே
(போய்) உம்முடைய மார்க்கத்தை எத்தனம்
பண்ணுவான் என்றும்,பராபரனுடைய மார்க்கத்
ங தை ஆயத்தப்படுத்தி,—அவருடைய பாதைகளைச்
செவ்வைபண்ணுங்கள் என்று வனாந்தரத்திலே
ஒருவன் கூப்பிடுவான் என்றும், தீர்க்கதரிசிகள்
ச எழுதினபடியே,—[4]யோவான் என்பவன் வனாந்
தரத்திலே ஞானஸ்நானம் கொடுத்து, பாவமன்
னிப்பை அடையும்படிக்கு மனந்திரும்புகிற
தற்கு ஏற்ற ஞானஸ்நானத்தைப் பிரசங்கம்பண்
ரு ணிக்கொண்டுவந்தான்.—[5]அப்பொழுது யூதேயா
தேசத்தார் அனைவரும் எருசலேம் பட்டணத்தார்
எல்லாரும் புறப்பட்டு, அவனிடத்தில் போய்,
தங்கள் பாவங்களை அறிக்கையிட்டு, அவனாலே
யோர்தான் நதியிலே ஞானஸ்நானம் பெற்றார்
சு கள்.—அந்த யோவான் [6]ஒட்டகமயிர் உடையைத்
தரித்து, தன்னுடைய அரையில் வார்க்கச்சைக்
கட்டிக்கொண்டவனுமாய், [7]வெட்டுக்கிளிகளை
யும் காட்டுத்தேனையும் புசிக்கிறவனுமாய் இருந்
எ தான்.—அக்காலத்திலே அவன் பிரசங்கம் பண்
ணினதாவது: [8]என்னிலும் அதிக வல்லமையு
டையவர் எனக்குப் பின்வருகிறார்; அவருடைய
பாதஇரட்சைகளின் வாரைக் குனிந்து அவிழ்க்
அ கிறதற்கு நான் பாத்திரவானல்ல.—நான் [9]ஜலத்தி
னால் உங்களுக்கு ஞானஸ்நானம் கொடுத்தேன்;
அவர் [10]பரிசுத்த ஆவியினாலே உங்களுக்கு ஞா
னஸ்நானம் கொடுப்பார் என்பதே.

[11]அந்த நாள்களில் இயேசுவானவர் கலிலே கூ
யா நாட்டிலுள்ள நாசரேத்தூரிலிருந்து வந்து,
யோர்தான் நதியிலே யோவானாலே ஞானஸ்நா
னம் பெற்று,—[12]ஜலத்தினின்று ஏறினவுடனே ௰
வானம் பிரிந்ததையும் ஆவியானவர் புறாவைப்
போலத் தம்மேல் இறங்கினதையும் கண்டார்.—
[13]அப்பொழுது, நீர் எனக்கு அன்பாயிருக்கிற ௰க
என் குமாரன், உம்மில் பிரியமாய் இருக்கிறேன்
என்று பரமண்டலங்களிலிருந்து சத்தம் உண்
டாயிற்று.

[14]அதின் பின்பு ஆவியானவர் அவரை வனாந் ௰உ
தரத்திற்குப் போகப்பண்ணினார்.—அந்த வனாந் ௰ங
தரத்திலே அவர் நாற்பது நாள் இருந்து, சாத்தா
னாலே சோதிக்கப்பட்டு, காட்டு மிருகங்களுக்
குள்ளே இருந்தார்; [15]பின்பு தேவதூதர்கள் அவ
ருக்கு ஊழியஞ்செய்தார்கள்.

[16]யோவான் காவலில் வைக்கப்பட்டபின்பு, ௰ச
இயேசுவானவர் கலிலேயா நாட்டிலே வந்து,—
[17]காலம் நிறைவேறியிருக்கின்றது; [18]பராபரனு ௰ரு
டைய இராசரீகம் சமீபமாய் வந்தது, நீங்கள்
மனந்திரும்பிச் சுவிசேஷத்தை விசுவாசித்துக்
கொள்ளுங்கள் என்று [19]பராபரனுடைய இராச்
சியத்தைக்குறித்துச் சுவிசேஷத்தைப் பிரசங்கம்
பண்ணினார்.

[20]அல்லாமலும், இயேசுவானவர் கலிலேயா ௰சு
நாட்டின் கடல் அருகே நடக்கையில், மீன்
பிடிக்கிறவர்களாகிய சீமோனும், அவனுடைய
சகோதரன் அந்திரேயாவும் கடலில் வலைவீசி
யிருக்கிறபொழுது,—அவர்களைக் கண்டு, எனக் ௰எ
குப் பின்சென்று வாருங்கள், உங்களை நான்
மனிதரைப் பிடிக்கிறவர்களாக்குவேன் என்
றார்.—[21]உடனே அவர்கள் தங்கள் வலைகளை ௰அ
விட்டு அவரைப் பின்பற்றினார்கள்.—[22]அவர் ௰கூ
அவ்விடம்விட்டு சற்றே தூரம் போன பின்பு,
செபேதேயுவின் குமாரன் யாக்கோபும், அவனு
டைய சகோதரன் யோவானும், படவிலே வலை

1 மத். ௰ச. கக. லூக். க. கஅ. 2 யோவா. க. கச. மல்கி. ங.க. மத். ௰க. ௰. லூக். எ. உஎ. 3 எசா.௪௰.ங. மத.ங.ங. லூக். ங.ச. யோவா.க.௨௩;உங.—4 மத் ங. க, உ, லூக். ங.ங. யோவா. ங.உங. 5 மத். ங. ரு.—6 மத் ங. ச. 7 ங லேவி. ௰க உஉ.—8 மத். ங.௰க. யோவா. க. உஎ. அப். ௰ங. உரு. 9 அப். க. ரு: ௰க. ௰சு. ௰கூ ச. 10 எசா.சச. ங. யோவே. உ. உஅ. அப். உ. ச: ௰. சரு: ௰க ௰ரு, ௰சு. ங கொரி.௰உ.௰ங.—11 மத்.ங.௰ங. கலா. ச. ச. எபே. ங. ௰. லூக். ங. உக.—12 மத். ங. ௰சு. யோவா. ங. ஙஉ.—13 சங். உ.எ. மத். ங. ௰எ. மாற். கூ. எ. 14 மத்.ச.க.லூக்.ச.க.-15மத்.ச.௰க. 16 மத். ச.௰உ.—17 தானி. கூ. உரு. 18 மத். ங.உ:ச.௰எ.—19 மத்.ச.உங. 20 மத். ச. ௰அ. லூக். ரு. ச. 21 மத். ௰கூ. உஎ. லூக். ரு. ௰க. 22 மத். ச. உக.

களை முடிந்துகொண்டு இருக்கையில், அவர்க
ளைக் கண்டு உடனே அவர்களையும் அழைத்தார்.-
௨௰ அப்பொழுது கூலியாள்களுடனேகூடப் பட
வில் இருக்கிற தங்கள் தகப்பனாகிய செபேதே
யுவை விட்டு அவருக்குப் பின்சென்றார்கள்.
௨௧ [1]பின்பு கப்பர்நாகூம் ஊரில் பிரவேசித்தார்
கள்; ஓய்வுநாளிலே அவர் தாமதியாமல் செப
ஆலயத்திற்குப் போய், போதகம்பண்ணினார்.—
௨௨ [2]அவர் வேதபாரகரைப்போல் அல்ல, அதிகாரம்
உடையவரைப்போலப் போதகம்பண்ணின
படியினாலே, சனங்கள் அவருடைய உபதேசத்
௨௩ தைக்குறித்துப் பிரமித்தார்கள். — [3]அவர்களு
டைய செபஆலயத்திலே அசுத்த ஆவியுள்ள ஒரு
௨௪ மனிதன் இருந்தான்.-[4]அவன், நாசரேத்து ஊரா
னாகிய இயேசுவே, எங்களுக்கும் உமக்கும் என்
ன? எங்களைக் கெடுக்கவா வந்தீர்? உம்மை அ
றிந்திருக்கிறேன், நீரே பராபரனுடைய பரிசுத்
௨௫ தரென்று கூப்பிட்டான். — [5]இயேசுவானவர்
சொன்னது: நீ பேசாமல் இவனைவிட்டுப் புறப்
பட்டுப்போ என்று அவனிலுள்ள (ஆவியை)
௨௬ அதட்டினார்.-[6]அப்பொழுது அந்த அசுத்த ஆவி
அவனை அலைக்கழித்து, மிகுந்த சத்தமாய்க் கூப்
௨௭ பிட்டுப் புறப்பட்டுப் போயிற்று. — (அதைக்
கண்ட) எல்லாரும் பிரமிப்படைந்து ஒருவரை
ஒருவர் பார்த்து, இவர் அதிகாரத்தோடே அசுத்த
ஆவிகளுக்கும் கட்டளையிடுகிறார், உடனே
அவைகள் இவருக்குக் கீழ்ப்படிகின்றன; இ
தென்ன, இது எப்படிப்பட்ட புதிய உபதேசம்
௨௮ என்று சொல்லிக்கொண்டார்கள். — அதுமுதல்
அவருடைய கீர்த்தி கலிலேயா நாட்டின் திசை
களில் எங்கும் பிரசித்தமாயிற்று.

௨௯ [7]உடனே அவர்கள் செபஆலயத்தைவிட்டுப்
புறப்பட்டு, யாக்கோபோடும் யோவானோடும்
கூடச் சீமோன் அந்திரேயா என்பவர்களுடைய
வீட்டில் வந்தார்கள்; அங்கே சீமோனுடைய
௩௰ மாமி சுரமாய்க் கிடந்தாள்.—உடனே அவர்கள்
அவளைக்குறித்து அவருக்குச் சொன்னார்கள்.—
௩௧ அவர் போய், அவளுடைய கையைப் பிடித்து,
அவளைத் தூக்கிவிட்டார்; உடனே சுரம் அவளை
விட்டு நீங்கிற்று; அவள் அவர்களுக்குப் பணி
விடைசெய்தாள்.

௩௨ [8]சூரியன் அஸ்தமிக்கும் மாலைக்காலத்திலே
சகலவிதமான பிணியாளிகளையும் பசாசுபிடித்
தவர்களையும் அவரிடத்தில் கொண்டுவந்தார்
௩௩ கள்.—அல்லாமலும் பட்டணத்தார் எல்லாரும்
(அவர் இருந்த) வீட்டுவாசலுக்குமுன்பாகக்
௩௪ கூடிவந்தார்கள்.— அப்பொழுது அவர் பல
வியாதிகளால் உபத்திரவப்படுகிற அநேகரைக்
குணமாக்கி, அநேகம் பசாசுகளையும் துரத்தி
னார்; [9]தம்மை அந்தப் பசாசுகள் அறிந்தபடி
யால், அவைகள் *பேசுகிறதற்கு அவர் இடம்
கொடுக்கவில்லை.

[10]அதிகாலையிலே இருட்டோடே அவர் ௩௫
எழுந்திருந்து புறப்பட்டு, வனாந்தரமான ஓர்
இடத்திற்குப் போய், அங்கே செபம் பண்ணி
னார்.—சீமோனும் அவனோடிருந்தவர்களும் அவ ௩௬
ருக்குப் பின்னேபோய், அவரைக் கண்டபொ
ழுது,—சனங்கள் எல்லாரும் உம்மைத் தேடுகி ௩௭
றார்கள் என்று சொன்னார்கள்.—அவர்களுடனே ௩௮
அவர் சொன்னது: [11]பிரசங்கம்பண்ணும்படிக்
குப் புறப்பட்டேனே, [12]ஆகையால் இங்கே சுற்
றியிருக்கிற கிராமங்களுக்கும் போவோம் வா
ருங்கள் என்று சொல்லி,—(புறப்பட்டு,) [13]கலி ௩௯
லேயா நாட்டிலெங்கும் (போய்,) சனங்களு
டைய செபஆலயங்களில் பிரசங்கம்பண்ணி,
பசாசுகளைத் துரத்தினார்.

அப்படியிருக்கையில், [14]ஒரு குஷ்டரோகி ௪௰
அவரிடத்தில் வந்து முழங்காற்படியிட்டு, உமக்
குச் சித்தமானால் என்னைச் சுத்தமாக்க உம்மால்
ஆகுமென்று அவரை வேண்டிக்கொண்டான்.—
இயேசுவானவர் மனதுருகி, கையை நீட்டி, அவ ௪௧
னைத் தொட்டு, எனக்குச் சித்தமுண்டு, சுத்த
மாகு என்றார்.-இப்படி அவர் சொல்லுகையில், ௪௨
உடனே குஷ்டரோகம் அவனைவிட்டு நீங்க,
அவன் சுத்தமானான்.—பின்பு அவர் அவனை ௪௩
நோக்கி, நீ இதை ஒருவருக்கும் சொல்லவேண்
டாம்; அல்லாமலும் நீ போய், உன்னை ஆசாரி
யனுக்குக் காண்பித்து, உனக்கு உண்டான
சுத்தத்தைக் குறித்து அவர்களுக்குச் சாட்சியா
கும்படிக்கு [15]மோசே கட்டளையிட்டவைகளைப்
பலியிடு என்று கண்டிப்பாய்ச் சொல்லி,—உட ௪௪
னே அவனை அனுப்பிவிட்டார். — [16]அப்படி ௪௫
யிருந்தும், அவன் புறப்பட்டுப் போய், இச்சங்
கதியை மிகவும் பிரசங்கிக்கவும் அறிவிக்கவும்
தொடங்கினான்; [17]ஆதலால் அவர் வெளியரங்க
மாய்ப் பட்டணத்தில் பிரவேசிக்கமாட்டாமல்,
வெளியாகிய வனாந்தரமான இடங்களிலே தங்கி
வந்தார்; அங்கேயும் எல்லாத் திசைகளில் இருந்
தும் அவரிடத்திற்கு வந்தார்கள்.

## ௨. அதிகாரம்.

௧. கிறிஸ்து ஒரு திமிர்வாதக்காரனைக் குணமாக்கி, ௧௪. ஆயத்துறையில் இருந்த மத்தேயுவை அழைத்து, ௧௫. ஆயக்காரரோடும், பாவிகளோடும் சாப்பிட்டு, ௧௮. தம்முடைய சீஷர்கள் உபவாசம் பண்ணாதிருக்கிறதைக் குறித்தும், ௨௩. ஓய்வுநாளில் கதிர்களைக் கொய்ததைக்குறித்தும் உத்தரவு சொன்னது.

[18]சில நாளுக்குப் பின்பு அவர் மறுபடியும் கப் ௧
பர்நாகூம் ஊருக்குப்போனார்; அவர் வீட்டிலே
இருக்கிறார் என்று சனங்கள் கேள்விப்பட்ட
பொழுது, — உடனே வாசற்படிக்கு வெளியி ௨
லேயும் இடமில்லாதிருக்கத்தக்கதாக அநேகர்

1 மத். ௪. ௰௩. லூக் ௪. ௩௧.—2 மத். ௭. ௨௯.
3 லூக். ௪. ௩௩.—4 மத். ௮. ௨௯.
5 ௧௪. வசனம்.—6 மாற். ௯. ௨௰.
7 மத். ௮. ௰௪. லூக். ௪. ௩௮.
8 மத். ௮. ௰௬. லூக். ௪. ௪௰.
9 மாற். ௩. ௰௨. லூக். ௪. ௪௧. அப். ௰௬. ௰௭, ௰௮.—10 லூக். ௪. ௪௨.
11 ஏசா. ௬௧. ௧. யோவா. ௰௬. ௨௮: ௰௭. ௪.—12 லூக். ௪. ௪௩.
13 மத். ௪. ௨௩. லூக். ௪. ௪௪.
14 மத். ௮. ௨. லூக். ௫. ௰௨.
15 ௩ மோ. ௰௪. ௩,௪௰. லூக். ௫. ௰௪.
16 லூக். ௫. ௰௫.—17 மாற். ௨. ௧௩.
18 மத். ௯. ௧. லூக். ௫. ௰௮.

* அல்லது தன்னை அறிந்திருக்கிறதென்று சொல்லவொட்டாதிருந்தார்.

கூடிவந்தார்கள்; அவர்களுக்கு (சுவிசேஷ) வச
௩ னத்தைப் போதித்தார்.—அப்பொழுது நாலுபேர்
ஒரு திமிர்வாதக்காரனைச் சுமந்துகொண்டு அவ
௪ ரிடத்திற்கு வந்தார்கள்.—சனங்கள் மிகுதியான
படியினலே அவர்கள் அவருக்குச் சமீபமாய்ச்
சேர இடம்பெருமல், அவர் இருந்த வீட்டின்
மேற்கூரையைப பிரித்து வழியுண்டாக்கி. திமிர்
வாதக்காரன் கிடக்கிற படுக்கையை இறக்கினுர்
௫ கள்.—இயேசுவானவர் அவர்களுடைய விசுவா
சத்தைக் கண்டு திமிர்வாதக்காரனை நோக்கி, மக
னே, உன் பாவங்கள் மன்னிக்கப்பட்டன என்
௬ றூர்.—அங்கே உளுக்காந்திருந்த வேதபாரகரில்
௭ சிலர் (அதைக் கேட்டு),—இப்படித் தேவதூஷ
ணங்களாக இவன் சொல்லுகிறதென்ன? [1]பரா
பரன் ஒருவருக்கேயன்றி மற்றொருவனுக்கும்
பாவங்களை மன்னிக்க வல்லமை உண்டா என்
று தங்கள் இருதயங்களிலே சிந்தித்துக்கொண்
௮ டார்கள்.—[2]அவர்கள் அப்படித் தங்களுக்குள்
ளே சிந்தித்திருக்கிறூர்கள் என்று இயேசுவான
வர் தம்முடைய ஆவியினலே அறிந்து, உடனே
அவர்களை நோக்கி, நீங்கள் உங்கள் இருதயங்க
௯ ளில் இப்படி ஏன் சிந்திக்கிறீர்கள்?—[3]இந்தத்
திமிர்வாதக்காரனுடனே, உன் பாவங்கள் மன்
னிக்கப்பட்டன என்று சொல்லுகிறதோ, எழுந்
திருந்து உன் படுக்கையை எடுத்துக்கொண்டு
நடவென்று சொல்லுகிறதோ, எது எளிது?—
௰ மனிதனுடைய குமாரன் பூமியிலே பாவங்களை
மன்னிக்கிறதற்கு அதிகாரம் உடையவனுய் இ
௰௧ ருக்கிறதை—நீங்கள் அறியும்படிக்குப் (பாருங்
களென்று) திமிர்வாதக்காரனை நோக்கி, நீ எழுந்
திருந்து, உன் படுக்கையை எடுத்துக்கொண்டு
உன் வீட்டிற்குப் போவென்று உனக்குக் கட்ட
௰௨ ளையிடுகிறேன் என்றூர்.—உடனே அவன் எல்
லாருக்கும் முன்பாக எழுந்திருந்து தன் படுக்
கையை எடுத்துக்கொண்டு போனுன்; அப்பொ
ழுது யாவரும் பிரமித்து, நாம் ஒருக்காலும் இப்
படிக் காணவில்லையே என்று சொல்லி, பராபர
னைப் புகழ்ந்தார்கள்.

௰௩ [4]பின்பு அவர் புறப்பட்டு மறுபடியும் கடலின்
அருகே போனபொழுது, சனங்கள் எல்லாரும்
அவரிடத்தில் வந்தார்கள்; அவர்களுக்கு உப
௰௪ தேசம் பண்ணினுர்.—[5]அவர் கடந்துபோகை
யில், ஆயத்துறையில் உளுக்காந்திருக்கிற அல்
பேயுவின் குமாரனுகிய லேவி என்பவனைக்
கண்டு, நீ எனக்குப் பின்சென்றுவா என்றூர்;
அவன் எழுந்து அவருக்குப் பின்சென்றுன்.—
௰௫ [6]அல்லாமலும் அவனுடைய வீட்டிலே அவர்
போசனபந்தி இருக்கையில், அநேகம் ஆயக்கா
ரரும் பாவிகளும் அவருக்குப் பின்சென்று வந்
தபடியால், அவர்களும் இயேசுவானவருடனே
யும் அவருடைய சீஷருடனேயும் கூடப் பந்தி
யில் இருந்தார்கள்.—அப்படி அவர் ஆயக்கார ௰௬
ரோடும் பாவிகளோடும் போசனம்பண்ணுகிற
தை வேதபாரகரும் பரிசேயரும் கண்டு, அவரு
டைய சீஷரை நோக்கி, அவர் ஆயக்காரரோடும்
பாவிகளோடும் போசனம்பண்ணலாமா என்றூர் ௰௭
கள்.—இயேசுவானவர் அதைக் கேட்டு அவர்களை
நோக்கி, [7]சொஸ்தமுள்ளவர்களுக்கு வயித்தியன்
வேண்டுவதில்லை, வியாதியுள்ளவர்களுக்கே அ
வன் வேண்டும்; நான் நீதிமான்களை அல்ல, பா
விகளையே மனந்திருப்புதலுக்கு அழைக்கவந்
தேன் என்றூர்.

[8]அன்றியும் யோவானுடைய சீஷரும் பரி ௰௮
சேயருடைய சீஷரும் உபவாசம் பண்ணி
வந்தார்கள்; அப்பொழுது சிலர் அவரிடத்தில்
வந்து, யோவானுடைய சீஷரும் பரிசேயருடை
ய சீஷரும் உபவாசம் பண்ணுகிறூர்கள், உம்மு
டைய சீஷர்மாத்திரம் ஏன் உபவாசம் பண்ண
வில்லை என்றூர்கள்.—அதற்கு இயேசுவானவர் ௰௯
சொன்னது: கலியாணத்திற்கு வந்த மனிதர்,
தங்களுடனே மணவாளன் இருக்கையில் உப
வாசம் பண்ணுவார்களா? தங்களுடனே மண
வாளன் இருக்கிற காலத்திலே உபவாசம் பண்
ணமாட்டார்களே.—மணவாளன் அவர்களை ௨௰
விட்டு நீக்கப்படும் காலம் வருகின்றது, அக்கா
லத்திலே அவர்கள் உபவாசம் பண்ணுவார்கள்.—
ஒருவனும் கோடித்துண்டைப் பழைய வஸ்தி ௨௧
ரத்தில் இணைக்கமாட்டான்; இணைத்தால் அதில்
இணைத்த புதியதுண்டு பழைய வஸ்திரத்தில்
எடுபட்டுப்போக, அதிக பொத்தல் உண்டா
குமே.—அல்லாமலும் ஒருவனும் திராட்சங்க ௨௨
ளின் புதிய இரசத்தைப் பழைய துருத்திகளில்
வார்த்து வைக்கமாட்டான்; வைத்தால், அந்தப்
புதிய இரசம் துருத்திகளைக் கிழித்துப்போடும்,
இரசமும் சிந்திப்போகும், துருத்திகளும் கெட்
டுப்போகும்; புதிய இரசத்தைப் புதிய துருத்திக
ளில் வார்த்து வைக்கவேண்டுமே என்றூர்.

[9]பின்பு ஒய்வுநாளில் அவர் பயிர்வழியே போ ௨௩
னபொழுது, அவருடைய சீஷர் நடக்கையில்,
[10]கதிர்களைக் கொய்யத் தொடங்கினுர்கள்.—
ஆதலால் பரிசேயர் அவரை நோக்கி, இதோ ௨௪
இவர்கள் ஒய்வுநாளில் செய்யத்தகாததை ஏன்
செய்கிறூர்கள் என்றூர்கள்.—அவர்களுக்கு அவர் ௨௫
சொன்னது: அபியத்தாரென்னும் பிரதான ஆசா
ரியனுடைய நாள்களிலே [11]தாவீது தாழ்வுபட்டு,
தானும் தன்னேடிருந்தவர்களும் பசியாயிருந்த
பொழுது,—தேவாலயத்திற்கு உட்பிரவேசித்து, ௨௬
[12]ஆசாரியரேயன்றி மற்றொருவரும் புசிக்கத்த
காத தேவசமுகத்தப்பங்களைப் புசித்ததையும்,
தன்னேடிருந்தவர்களுக்குக் கொடுத்ததையும்,
நீங்கள் ஒருக்காலும் அறியவில்லையோ என்று
சொல்லி.—பின்பு மனிதர் ஒய்வுநாளுக்காக உண் ௨௭

1 யோபு. ௰௪. ௪. ஏசா. ௪௩. ௨௫. ௫. ௨௭.—6 மத். ௯. ௰.
2 மத். ௯. ௪.—3 மத். ௯. ௫. 7 மத். ௯. ௰௨, ௰௩: ௰௮. ௰௧. லூக். ௫.
4 மத். ௯. ௯.—5 மத். ௯. ௯. லூக். ௩௧, ௩௨: ௰௯. ௰. ௧ தீமோ. ௧. ௰௫.
8 மத். ௯. ௰௪. லூக். ௫. ௩௩. 11 ௧ சாமு. ௨௧. ௬.—12 ௨ மோ. ௨௯.
9 மத். ௰௨. ௧. லூக். ௬. ௧. ௩௨, ௩௩. ௩ மோ. ௨௪. ௯.
10 ௫ மோ. ௨௩. ௨௫.

டாக்கப்படவில்லை, ஓய்வுநாள் மனிதருக்காக
௨௮ உண்டாக்கப்பட்டது. — ஆகையால் [1]மனிதனு
டைய குமாரன் ஓய்வுநாளின் கர்த்தனாய் இருக்
கிறான் என்றார்.

## ௩. அதிகாரம்.

௧. கிறிஸ்துவானவர் சூம்பின கையுள்ளவனையும், ௰. மற்றப் பிணியாளிகளையும் குணமாக்கி, ௰௧. அசுத்த ஆவிகளை அதட்டி, ௰௪. பன்னிரண்டு அப்போஸ்தலர்களையும் தெரிந்துகொண்டு, ௨௨. பெயேல்செபூலினால் பசாசுகளைத் துரத்துகிறாரென்ற தூஷணத்தை எடுத்துக்காட்டி, ௩௧. தம்முடைய சகோதரர்களும், சகோதரிகளும், தாயாரும் இன்னார் என்று காட்டினது.

௧ [2]மறுபடியும் அவர் செபஆலயத்தில் பிரவேசித்
தார்; அங்கே சூம்பின கையையுடைய ஒரு மனி
௨ தன் இருந்தான்.—அவர் ஓய்வுநாளில் அவனைச்
சொஸ்தமாக்கினால் அவர்மேல் குற்றம் சாற்றலா
மென்று அவர்கள் எண்ணி, அவரை உற்றுப்
௩ பார்த்துக்கொண்டிருந்தார்கள்.—ஆதலால் அவர்
சூம்பின கையுள்ளவனை நோக்கி, நீ எழுந்து நடு
௪ விலே வந்திரு* என்று சொல்லி,—பின்பு அவர்
களை நோக்கி, ஓய்வுநாள்களில் நன்மைசெய்கிற
தோ தீமைசெய்கிறதோ, சீவனை இரட்சிக்கிற
தோ சீவனை வாங்குகிறதோ, எது நியாயமாய்
இருக்கின்றதென்று கேட்டார்; அவர்கள் பேசா
௫ மல் இருந்தார்கள். — அப்பொழுது அவர் அவர்
களுடைய இருதயத்தின் கடினத்தினாலே† விச
னப்பட்டு, கோபத்தோடே அவர்களைச் சுற்றிப்
பார்த்து, பின்பு அந்த மனிதனை நோக்கி, உன்
கையை நீட்டு என்றார்; அவன் நீட்டினான்; உட
னே அது மற்றக் கையைப்போல் சொஸ்தமா
௬ யிற்று.—[3]பின்பு பரிசேயர் புறப்பட்டுப் போய்,
அவரை அழிக்கும்படிக்கு [4]ஏரோதேயின் மனி
தரோடுங்கூட அவருக்கு விரோதமாய் உடனே
ஆலோசனை பண்ணினார்கள்.
௭ இயேசுவானவர் தம்முடைய சீஷருடனே
கூட அவ்விடம்விட்டுக் கடலோரத்திற்குப்போ
௮ னார். — [5]கலிலேயா நாட்டிலும் யூதேயா நாட்டி
லும் எருசலேம் நகரத்திலும் இதுமேயா நாட்டி
லும் யோர்தான் நதியின் ஓரங்களிலுமிருந்து மிக
வும் திரளாக வந்த சனங்கள் அவருக்குப் பின்
சென்றார்கள்; அல்லாமலும் தீறு சீதோன் என்
னும் பட்டணங்களின் திசைகளிலிருந்து மிக
வும் திரளாக வந்த சனங்கள் அவர் செய்த அற்பு
தங்களைக் கேள்விப்பட்டு, அவரிடத்தில் வந்
௯ தார்கள்.—அப்பொழுது அநேகரை அவர் சொஸ்
தமாக்கினபடியினாலே, உபத்திரவப்பட்டவர்
கள் எவர்களோ, அவர்கள் அவரைத் தொடும்
௰ படிக்கு அவர்மேலே விழுந்தார்கள்.‡— ஆதலால்
தாம் சனங்களால் நெருக்கப்படாதபடிக்கு அவர்
தம்முடைய சீஷரை நோக்கி, தமக்காக ஒரு
படவை எத்தனம் பண்ணச் சொன்னார். —
௰௧ [6]அசுத்தமான ஆவிகளும் அவரைக் கண்ட

உடனே அவருக்கு முன்பாக விழுந்து, [7]நீர்
பராபரனுடைய குமாரனென்று கூப்பிட்டார்
கள். — [8]தம்மை அவர்கள் பிரசித்தம்பண்ணாத ௰௨
படிக்கு, அவர்களுக்குக் கண்டிப்பாய்க் கட்ட
ளையிட்டார்.
பின்பு [9]அவர் ஒரு மலையின்மேல் ஏறி, தமக் ௰௩
குச் சித்தமானவர்களை வரவழைத்தார், அவர்கள்
அவரிடத்தில் வந்தார்கள்.—அப்பொழுது அவர் ௰௪
தம்முடனேகூட இருக்கவும், (சுவிசேஷத்தை)
பிரசங்கம் பண்ணும் பொருட்டாய் அனுப்ப
வும்,—வியாதிகளை நீக்கிப் பசாசுகளைத் துரத்தத் ௰௫
தக்கதாக அதிகாரமுள்ளவர்களாகவும், பன்னி
ரண்டுபேரை ஏற்படுத்தினார்.—அவர்கள் யாரெ ௰௬
னில், [10]சீமோன், செபேதேயுவின் குமாரனாகிய
யாக்கோபு,-யாக்கோபின் சகோதரனாகிய யோ ௰௭
வான், அந்திரேயா, பிலிப்பு, பருத்தொலோ
மேயு, மத்தேயு, தோமா, அல்பேயுவின் குமார
னாகிய யாக்கோபு, ததேயு, கானானாகிய
சீமோன், — அவரைக் காட்டிக்கொடுத்த யூதா ௰௮
ஸ்காரியோத்து என்பவர்களே.-இவர்களில் முந் ௰௯
தின சீமோனுக்குப் பேதுரு என்றும், செபேதே
யுவின் குமாரனாகிய யாக்கோபுக்கும் யோவா
னுக்கும் போவனெர்கேஸ் என்றும் நாமங்களைக்
கொடுத்தார்; போவனெர்கேஸ் என்பதற்கு இடி
முழக்கம் இடுகிறவர்களென்று அருத்தமாம்.
பின்பு வீட்டிற்குப் போனார்கள்.-[11]அங்கே ௨௰, ௨௧
அவர்கள் போசனம்பண்ணுகிறதற்குக் காலமில்
லாதபடிக்கு அநேக சனங்கள் மறுபடியும் கூடி
வந்தார்கள்; அவருடைய இனத்தார் §அதைக்
கேட்டு, [12]அவருக்கு மயக்கமுண்டாயிற்று என்
று சொல்லி, அவரைப் பிடித்துக்கொள்ளும்ப
டிக்கு வந்தார்கள்.—எருசலேம் நகரத்திலிருந்து ௨௨
வந்த வேதபாரகர் [13]அவன் பெயேல்செபூலைக்
கொண்டிருக்கிறான்; பசாசுகளுடைய தலைவ
னாலே பசாசுகளைத் துரத்துகிறான் என்றார்கள்.-
[14]அவர்களை அவர் அழைத்து உவமைகளால் ௨௩
அவர்களுடனே சொன்னதாவது: சாத்தான் சாத்
தானைத் துரத்துவதெப்படி? — ஒரு இராச்சியத் ௨௪
தார் தங்களுக்குள்ளே பிரிவினை உண்டுபண்ணி
னால் அந்த இராச்சியம் நிலைநிற்கமாட்டாதே.—
ஒரு குடும்பத்தார் தங்களுக்குள்ளே பிரிவினை ௨௫
உண்டுபண்ணினால் அந்தக் குடும்பம் நிலைநிற்க
மாட்டாதே.—(அப்படிப்போல) சாத்தான் தனக் ௨௬
குத்தானே விரோதமாக எழும்பிப் பிரிந்தால்
அவன் நிலைநிற்கமாட்டாமல் முடிவு அடை
வான். — [15]ஒருவன் முன்பு பெலவானைக் கட் ௨௭
டாவிட்டால் அவனுடைய வீட்டிலே பிரவே
சிக்கவும் அவனுடைய ஆஸ்திகளைக் கொள்ளை
யிடவும்மாட்டான்; (கட்டினால்) அவனுடைய
வீட்டைக் கொள்ளையிடுவான்.—[16]மனிதர் செய் ௨௮

1 மத். ௰௨. ௮.—2 மத். ௰௨. ௯. லூக். ௬. ௬.—3 மத். ௰௨. ௰௪.
4 மத். ௨௨. ௰௬.—5 லூக். ௬. ௰௭.
6 மாற். ௧. ௨௩, ௨௪. லூக். ௪. ௪௧.
7 மத். ௱. ௩௩. மாற். ௧. ௧.
8 மாற். ௫. ௨௭, ௪௩. மத். ௰௨. ௰௬.
9 மத். ௰. ௧. லூக். ௬. ௰௨: ௯. ௧.
10 யோவா. ௧. ௪௨.
11 மத். ௬. ௩௧.
12 யோவா. ௭. ௫: ௰. ௨௰.
13 மத். ௯. ௩௪: ௰. ௨௫. லூக். ௰௧. ௰௫. யோவா. ௭. ௨௰: ௮. ௪௮, ௫௨: ௰. ௨௰.—14 மத். ௰௨. ௨௫.
15 ஏசா. ௪௯. ௨௪. மத். ௰௨. ௨௯.
16 மத். ௰௨. ௩௧ லூக். ௰௨. ௰. ௧ யோ. ௫. ௰௬.

* அல்லது நடுவே நில்.—† அல்லது அந்தகாரத்துக்காக.—‡ அல்லது நெருங்கினார்கள்.—§ அல்லது சிநேகிதர்.

கிற பாவங்கள் யாவும் அவர்கள் செய்கிற எந்தத்
௨௯ தூஷணங்களும் மன்னிக்கப்படும். — பரிசுத்த
ஆவியைத்தூஷணிக்கிறவன்மாத்திரம் என்றென்
றைக்கும் மன்னிப்படையாமல், நித்திய ஆக்கி
னைக்குப் பாத்திரனாய் இருக்கிறான் என்று மெய்
யாய் உங்களுக்குச் சொல்லுகிறேன் என்றார்.—
௩௰ அசுத்தமான ஆவியைக் கொண்டிருக்கிறான்
என்று அவர்கள் சொன்னபடியினாலே (அவர்
இப்படிச் சொன்னார்).
௩௧ [1]அத்தருணத்திலே அவருடைய தாயாரும்
சகோதரரும் வந்து வெளியே நின்று, அவரை
௩௨ அழைக்கும்படி ஆளனுப்பினார்கள்.—அப்பொ
ழுது அவரைச் சுற்றி உளுக்காந்த சனங்கள்
அவரைநோக்கி, அதோ, உம்முடைய தாயாரும்
உம்முடைய சகோதரரும் வெளியே நின்று
௩௩ உம்மைத் தேடுகிறார்கள் என்றார்கள்.—அதற்கு
அவர், என்னுடைய தாயும் என்னுடைய சகோ
௩௪ தரரும் யார் என்று சொல்லி,—தம்மைச் சூழ
உளுக்காந்தவர்களைச் சுற்றிப் பார்த்து, என்னு
டைய தாயும் என் சகோதரரும் இவர்களே.—
௩௫ எப்படியெனில், பராபரனுடைய சித்தத்தின்
படி செய்கிறவன் எவனோ, அவனே என்
சகோதரன், என் சகோதரி, என் தாயாயிருக்
கிறான் என்றார்.

## ௪. அதிகாரம்.

௧. விதைக்கிறவனைக்குறித்த உவமை ௰௪. அதின் வியாக்கியானம் ௨௧. சமத மெய்ஞ்ஞானத்தைக் காட்டவேண்டியது. ௨௬. மறைவாய் வளர்ந்த விதையையும், ௩௰. கடுகு விதையையும், உவமையாகக் காட்டியது. ௩௬. இறங்கு கடற்கொந்தளிப்பை அமர்த்தினது.

௧ பின்பு அவர் மறுபடியும் [2]கடலோரத்திலே போ
தகம்பண்ணத் தொடங்கினார்; மிகுந்த சனங்
கள் கூடி அவரிடத்தில் வந்தபடியினாலே, அவர்
படவில் ஏறி, கடலில் உளுக்காந்தார்; சனங்க
௨ ளெல்லாரும் கடற்கரையில் இருந்தார்கள்.—அப்
பொழுது அவர் உவமைகளாய் அநேக காரியங்
களை அவர்களுக்குப் போதித்தார்; [3]போதிக்கிற
பொழுது அவர்களுடனே சொன்னதாவது: கே
௩ ளுங்கள்,—விதைக்கிறவன் விதைக்கப்புறப்பட்
௪ டான்.—அவன் விதைக்கையில், சில விதை வழி
யருகே விழுந்தது; அப்பொழுது ஆகாயத்தின்
௫ பறவைகள் வந்து அதைப் பட்சித்தன. — சில
விதை மிகுந்த மண்ணில்லாத கற்பாறை நிலத்
தில் விழுந்தது; அதற்கு மிகுந்த மண் இல்லாத
௬ தினால் உடனே முளைத்தது.—சூரியகாந்தி தோன்
றினபொழுது தீந்து, அதற்கு வேர் இல்லாமை
௭ யினால் உலர்ந்துபோயிற்று.—சில விதை முள்
ளுக்களுள்ள நிலத்திலே விழுந்தது; முள்ளுக்கள்
எழும்பி அது பலன்கொடாதபடிக்கு அதை நெ
௮ ருக்கிப்போட்டன.—சில விதை நல்ல நிலத்தில்
விழுந்து ஓங்கி வளர்ந்து, [4]ஒன்று முப்பதும்,
ஒன்று அறுபதும், ஒன்று நூறுமாகப் பலன் கொ
டுத்தன.—கேட்கிறதற்குக் காதுள்ளவன் கேட்கக் ௯
கடவன் என்று திருவுளம்பற்றினார்.
பின்பு [5]அவர் தனித்திருக்கையில், பன்னிரு ௰
வரோடுங்கூட அவரைச் சூழ இருந்தவர்கள்
அந்த உவமையைக்குறித்து அவரிடத்தில் விசா
ரித்தார்கள்.—அவர்களுடனே அவர் சொன்னது: ௰௧
பராபரனுடைய இராச்சியத்தின் இரகசியத்தை
அறியும்படி உங்களுக்கு அருள் அளிக்கப்பட்
டது.—[6]புறம்பே இருக்கிறவர்கள் மனந்திருப் ௰௨
பாமலும், தங்கள் பாவமன்னிப்பை அடையாம
லும் இருக்கத்தக்கதாக, [7]உற்றுப்பார்த்தும் அறி
யாமலும், உற்றுக்கேட்டும் சிந்தியாமலும் இருக்
கும்படிக்கு, அவையெல்லாம் உவமைகளாக
அவர்களுக்குச் சொல்லப்பட்டு வருகின்றன
என்று சொல்லி, — பின்பு அவர்களைநோக்கி, ௰௩
நீங்கள் அந்த உவமையை அறியவில்லையா? அப்
படியானால், மற்ற எல்லா உவமைகளையும் எப்
படி அறிவீர்கள்?—[8]விதைக்கிறவன் வசனத்தை ௰௪
விதைக்கிறவனே.—விதை விழுந்த வழிக்கு ஒப் ௰௫
பானவர்கள் விதைக்கப்படுகிற வசனத்தைக்
கேட்டவுடனே சாத்தான் வந்து அவர்கள் இரு
தயங்களின்மேல் விதைக்கப்பட்ட வசனத்தை
எடுத்துப்போடுகிறான். — விதை விழுந்த கற் ௰௬
பாறை நிலத்திற்கு ஒப்பானவர்கள் அந்த வச
னத்தைக் கேட்கிறபொழுது, உடனே அதைச்
சந்தோஷத்தோடே ஏற்றுக்கொண்டும்,—தங்க ௰௭
ளிலே வேர் ஊன்றியிராமல், கொஞ்சக்காலமாத்
திரம் அதைப் பற்றிக்கொள்ளுகிறார்கள்; அவ்
வசனத்தின்நிமித்தம் உபத்திரவமும் துன்பப்படு
தலும் உண்டானவுடனே வழுவுகிறார்கள்.—வி ௰௮
தைவிழுந்த முள்ளுக்களுள்ள நிலத்திற்கு ஒப்
பானவர்கள் அவ்வசனத்தைக் கேட்டும்,—அது ௰௯
பலனற்றதாய் இருக்கும்படிக்கு, இவ்வுலக கவ
லைகளும் [9]ஐசுவரியத்தின் வஞ்சனையும் மற்றக்
காரியங்களின்மேல் உண்டாகிற இச்சைகளும்
தோன்றி, அந்த வசனத்தை நெருக்கிப்போடுகிற
தற்கு (இடங்கொடுக்கிறார்கள்).—விதைவிழுந்த ௨௰
நல்ல நிலத்திற்கு ஒப்பானவர்கள் அவ்வசனத்
தைக் கேட்டுப் பற்றிக்கொண்டு, ஒன்று முப்ப
தும், ஒன்று அறுபதும், ஒன்று நூறுமாகப் பலன்
கொடுக்கிறார்கள் என்றார்.
[10]அன்றியும் அவர்களுடனே அவர் சொன் ௨௧
னது: விளக்கை ஒரு தண்டின்மேல் வைக்கிற
தற்கேயன்றி, மரக்காலின் * கீழாகிலும் கட்டி
லின் கீழாகிலும் வைக்கிறதற்குக் கொண்டு
வருவார்களா?—[11]ஆதலால் வெளியரங்கமாகாத ௨௨
அந்தரங்கமான பொருளுமில்லை, வெளிக்கு
வாராத மறைபொருளுமில்லை.—[12]கேட்கிறதற்கு ௨௩
ஒருவன் காதுள்ளவனாயிருந்தால் கேட்கக்கட
வன் என்றார். — அன்றியும் அவர்களுடனே ௨௪

1 மத். ௰௨. ௪௬. லூக். அ. ௰௯. 5 மத். ௰௩. ௰. லூக். அ. ௯. ழு.
2 மத். ௰௩. ௧. லூக். அ. ௪. 6 ௧ கொரி. ௫. ௰௨. கொலோ. ௪. ௫. ௧ தெச. ௪. ௰௨. ௧ தீமோ. ௩. ௭.
3 மத். ௰௨. ௩அ.—4 யோவா. ௰௫. ௫. கொலோ. ௧. ௧.

7 ஏசா. ௬. ௯. மத். ௰௩. ௰௪. லூக். அ. ௰. யோவா. ௰௨. ௪௰. அப். ௨௮. ௨௬. ௨ரோ. ௰௧. அ. ௯, ௰எ.—10 மத். ௫. ௰௫. லூக். அ. ௰௬: ௰௧. ௩௩.—11 மத். ௰. ௨௬. லூக். ௰௨. ௨.
8 மத். ௰௩. ௰௯.—9 ௧ தீமோ. ௬. 12 மத். ௰௧. ௰௫. ௬. ௪௬.

* இந்த மொழி மூலபாஷையில் ஒரு சின்ன அளவைக்குறிக்கும்; மத். ௫. ௰௫.

அவர் சொன்னது: நீங்கள் கேள்விப்படுகிறது
இன்னதென்று சிந்தித்துக்கொள்ளுங்கள்; [1]எந்த
அளவினால் நீங்கள் அளப்பீர்களோ, அதினாலே
௨௫ உங்களுக்கும் அளக்கப்படும். — அல்லாமலும்
[2]எவன் உள்ளவனாயிருக்கிறானோ, அவனுக்குக்
கொடுக்கப்படும்; எவன் இல்லாதவனாயிருக்
கிறானோ, அவனிடத்திலே உள்ளதும் எடுத்துப்
போடப்படும்; ஆகையால் கேள்விப்படுகிற உங்
களுக்கு அதிகமும் கொடுக்கப்படும் என்றார்.

௨௬ [3]அன்றியும் அவர் சொன்னதாவது: பராபர
னுடைய இராச்சியம் ஒரு மனிதன் தன் நிலத்தி
லே விதை விதைக்கிறதற்கு ஒப்பாயிருக்கின்
௨௭ றது.-பின்பு இராத்திரிதோறும் நித்திரைபண்ணி,
௨௮ பகல்தோறும் எழுந்திருப்பான்.—அவனுக்குத்
தெரியாமல் பூமியானது முன்பு முளையையும்,
பின்பு கதிரையும், பின்பு கதிரிலே நிறைந்த தா
னியத்தையும் பலனாகத் தானாய்க் கொடுக்கின்ற
தன்மையுள்ளதாய் இருக்கிறபடியால், அந்த
௨௯ விதை முளைத்துப் பயிராம். — அப்படிப் பயிர்
பருவமானபொழுது, *அறுப்புக்காலமானபடியி
னாலே, அவன் அதை அறுக்கிறதற்கு [4]ஆள்களை
அனுப்புவான் என்றார்.

௩௰ அன்றியும் அவர் சொன்னது: [5]நாம் பராபர
னுடைய இராச்சியத்தை எதற்கு ஒப்பாக்கலாம்;
அதை எந்த உவமையினாலே காண்பிக்கலாம்.—
௩௧ அது ஒரு கடுகு விதைக்கு ஒப்பாயிருக்கின்றது;
அது நிலத்தில் விதைக்கப்படுகிறபொழுது, பூமி
யிலுள்ள சகல விதைகளிலும் அது சிறிதாயிருந்
௩௨ தும்,—விதைக்கப்பட்டபின்பு, வளர்ந்து சகல
கீரைகளிலும் பெரிதாகி, ஆகாயத்துப் பறவை
கள் அதின் நிழலில் வந்தடையத்தக்கதாக விஸ்
தாரமான கிளைகளை விடுகின்றது என்றார்.

௩௩ கேட்டறியும்படிக்குச் சனங்களுக்குண்டான
திராணிக்குத்தக்கதாக, அவர் [6]இப்படிப்பட்ட
அநேக உவமைகளினாலே அவர்களுக்கு வசனத்
௩௪ தைச் சொன்னார்.—உவமைகளினாலேயன்றி அ
வர் அவர்களுக்கு ஒன்றும் சொல்லவில்லை; தம்
முடைய சீஷருடனே அவர் தனித்திருக்கிற
பொழுதுமாத்திரம் அவர்களுக்கு எல்லாவற்றை
யும் விவரித்துச் சொன்னார்.

௩௫ [7]அந்த நாளிலே, சாயங்காலமானபொழுது,
அவர் அவர்களை நோக்கி, அக்கரைக்குப் போ
௩௬ வோம் வாருங்கள் என்றார்.—ஆதலால் அவர்கள்
சனங்களைவிட்டு அவர் படவில் இருந்தப
டியே அவரைக் கொண்டுபோனார்கள்; வேறு
படவுகளும் அவரோடேகூடப் போயின.—
௩௭ அப்பொழுது அவர் பின்பக்கத்திலே ஒரு தலை
யணையை வைத்து நித்திரை பண்ணிக்கொண்டி
ருக்கையில், பலத்த சுழல்காற்று உண்டானதி
னாலே, படவை மூடிக்கொள்ளத்தக்கதாக அலை
கள் அதில் மோதின.—உடனே அவர்கள் அவ ௩௮
ரை எழுப்பிப் போதகரே, நாங்கள் மடிந்துபோ
னால் உமக்குக் கவலையில்லையா என்றார்கள்.—
அவர் எழுந்து காற்றுக்குக் கட்டளையிட்டு, கட ௩௯
லையும் நோக்கிக் கோஷமாயிராதே அமைதலா
யிரு என்றார்; உடனே காற்று நின்றுபோக
மிகுந்த அமைதல் உண்டாயிற்று.-பின்பு அவர் ௪௰
அவர்களை நோக்கி, இப்படி என் பயப்படுகிறீர்
கள்? என்னத்தினாலே உங்களுக்கு விசுவாசம்
இல்லை என்றார்.—அவர்கள் மிகவும் பயந்து, ௪௧
காற்றும் கடலும் இவருக்குக் கீழ்ப்படிகின்ற
னவே, இவர் யாரோ என்று ஒருவரோடொரு
வர் சொல்லிக்கொண்டார்கள்.

## ௫. அதிகாரம்.

௧. இலேகியோன் என்னும் பேய்கள் பிடித்தவனைக் கிறிஸ்து விடுதலையாக்கினபோது, ௰௩. அவைகள் பன்றிகளுக்குள் பிரவேசித்தது. ௨௫. அவர் பெரும்பாடுள்ள ஸ்திரீயைக் குணமாக்கி, ௩௫. யாவீர் என்பவனுடைய மகளை மரணத்தினின்று எழுப்பினது.

[8]பின்பு அவர்கள் கடலுக்கு அக்கரையில் உள்ள ௧
கதரேனருடைய தேசத்திற்கு வந்தார்கள்.—
அவர் படவிலிருந்து இறங்கினவுடனே, அசுத்த ௨
ஆவியுள்ள ஒரு மனிதன் பிரேதக் கல்லறைகளி
லிருந்து அவருக்கு எதிராக வந்தான்.—அவனு ௩
டைய குடியிருப்பு பிரேதக்கல்லறைகளிலே
இருந்தது; ஒருவனும் அவனைச் சங்கிலிகளினா
லும் கட்டக்கூடாததாய் இருந்தது.—அநேகந் ௪
தரம் அவன் விலங்குகளினாலும் சங்கிலிகளினா
லும் கட்டப்பட்டிருந்தும் அவன் அந்தச் சங்கி
லிகளை முறித்து விலங்குகளைத் தறித்துப்போட்
டான்; ஒருவனும் அவனைக் கீழ்ப்படுத்தக் கூடா
ததாய் இருந்தது.—அல்லாமலும் அவன் எப்பொ ௫
ழுதும் இரவும்பகலும் மலைகளிலும் கல்லறைக
ளிலும் தங்கி, கூக்குரலிட்டு, தன்னைத்தானே
கல்லுக்களால் கீறிக்கொண்டிருந்தான்.—அவன் ௬
தூரத்திலே இயேசுவானவரைக் கண்டு ஓடிவந்த
பொழுது, அவனை நோக்கி,—அசுத்த ஆவியே, ௭
நீ இந்த மனிதனை விட்டுப்போ என்று அவர் கட்
டளையிட்டபடியினாலே,—அவன் அவருக்குத் ௮
தாழ்ந்து வணங்கி, இயேசுவே, உன்னதமான
பராபரனுடைய குமாரனே, எனக்கும் உமக்கும்
என்ன? என்னை வேதனைப்படுத்தாதபடிக்கு,
உமக்குப் பராபரன்மேல் ஆணையிடுகிறேன் என்
று மிகுந்த சத்தமாய்க் கூப்பிட்டான்.— அவர் ௯
அவனை நோக்கி, உன் பேரென்ன என்று கேட்
டார்; அதற்கு அவன் அநேகராய் இருக்கிறோம்,
ஆகையால் என்பேர் இலேகியோன் என்று
சொல்லி,—பின்பு அத்திசையிலிருந்து தங்களை ௰
ஓட்டிவிடாதபடிக்கு அவரை மிகவும் வேண்டிக்
கொண்டான்.—அவ்விடத்திலே மலையின் அரு ௰௧
கே மிகுந்த கூட்டமான பன்றிகள் மேய்ந்து
கொண்டு இருந்தன.—அப்பொழுது பசாசுகள் ௰௨

1 மத். ௭. ௨. லூக். ௬. ௩௮.—2 மத். ௰௩. ௧௨; ௨௫. ௨௯. லூக். ௮. ௧௮; ௧௯. ௨௬. 3 மத். ௰௩. ௨௪.—4 வெளி. ௰௪. ௧௫. 5 மத். ௰௩. ௩௧. லூக். ௰௩. ௰௮. அப். ௨. ௪௧; ௪. ௪; ௧௯. ௨௦. 7 மத். ௮. ௧௮, ௨௩. லூக். ௮. ௨௨. 6 மத். ௰௩. ௩௪. யோவா. ௰௬. ௰௨. 8 மத். ௮. ௨௮. லூக். ௮. ௨௬.

* அல்லது விளைந்தபொழுது.

எல்லாம் அவருடனே சொன்னது: நாங்கள் பன்
றிகளில் பிரவேசிக்கும்படிக்கு எங்களை அனுப்
புமென்று அவரை வேண்டிக்கொண்டார்கள்.—
௰௩ உடனே இயேசுவானவர் அவர்களுக்கு உத்தரவு
கொடுத்தார்; அப்பொழுது அசுத்த ஆவிகள் புறப்
பட்டுப் பன்றிகளுக்குள்ளே பிரவேசித்தன; உட
னே வறக்குறைய இரண்டாயிரம் பன்றிகளாகிய
அந்தக் கூட்டம் உயர்ந்த மேட்டிலிருந்து கடலி
லே பாய்ந்து அதில் அமிழ்ந்து மாண்டது.—
௰௪ அப்பொழுது பன்றிகளை மேய்த்தவர்கள் ஓடி,
அதைப் பட்டணத்திலும் வெளிப்புறங்களிலும்
அறிவித்தார்கள்; பின்பு சம்பவித்ததைப் பார்க்
௰௫ கும்படிக்குச் சனங்கள் புறப்பட்டு,—இயேசுவி
னிடத்தில் வந்து, இலேகியோனாகிய பசாசுகள்
பிடித்திருந்தவன் வஸ்திரம் உடுத்திக்கொண்டு
உளுக்கார்ந்து புத்தி அடைந்திருக்கிறதைக் கண்டு
௰௬ பயந்தார்கள்.—பசாசுகள் பிடித்தவனுக்கும் பன்
றிகளுக்கும் சம்பவித்ததைக் கண்டவர்களும்
அவர்களுக்கு விவரமாய்ச் சொன்னார்கள். —
௰௭ [1]அப்பொழுது தங்கள் எல்லைகளை விட்டு அப்பு
றம் போகும்படிக்கு அவரை வேண்டிக்கொண்
௰௮ டார்கள்.—அந்தப்படி அவர் படவில் பிரவேசிக்
கிறபொழுது [2]பசாசு பிடித்திருந்தவன் அவரு
டனேகூடப் போகும்படிக்கு அவரை வேண்
௰௯ டிக்கொண்டான் —இயேசுவானவர் அவனுக்கு
உத்தரவுகொடாமல், நீ உன் வீட்டிலே உன்
இனத்தாரிடத்திற்குப் போய், கர்த்தர் உனக்கு
இரங்கி உனக்குச் செய்த மிகுந்த விசேஷங்களை
௨௰ அவர்களுக்கு அறிவிப்பாயாக என்றார்.—அந்தப்
படி அவன் போய் தனக்கு இயேசுவானவர்
செய்த விசேஷங்களைத் தெக்கப்போலி என்னும்
தேசத்திலே பிரசித்தம் பண்ணினான், யாவரும்
ஆச்சரியப்பட்டார்கள்.

௨௧ [3]பின்பு இயேசுவானவர் மறுபடியும் படவி
லேறி இக்கரைக்கு வந்து கடலோரத்திலே இருந்
தபொழுது, மிகுந்த சனங்கள் கூடி அவரிடத்
௨௨ தில் வந்தார்கள்.—[4]அப்பொழுது செபஆலயத்
தலைவரில் ஒருவனாகிய யவீருஎன்பவனும் வந்து,
அவரைக் கண்டவுடனே அவருடைய பாதத்
௨௩ தின் அருகே விழுந்து,—என் குமாரத்தி மரண
அவஸ்தைப்படுகிறாள், அவள் ஆரோக்கியம் அ
டையும்படிக்கு நீர் வந்து அவள்மேல் கைகளை
வைத்தருளும், அப்பொழுது பிழைப்பாளென்று
௨௪ அவரை மிகவும் வேண்டிக்கொண்டான்.—அவர்
அவனோடே கூடப்போனார்; அவரை நெருக்
கத்தக்கதாக அநேக சனங்கள் அவருக்குப் பின்
சென்றார்கள்.

௨௫ [5]அப்பொழுது பன்னிரண்டு வருஷமாய்ப்
௨௬ பெரும்பாடுள்ள ஒரு ஸ்திரியானவள்,—அநேக
பரிகாரிகளால் மிகுந்த வருத்தப்பட்டு, தனக்
குண்டான யாவையும் செலவழித்தும் சற்றாகி
லும் சுகம் அடையாமல், அதிக வருத்தப்படுகிற
பொழுது,—இயேசுவைக்குறித்துக் கேள்விப்பட் ௨௭
டு, அவருடைய வஸ்திரங்களைமாத்திரம் தொட்
டால் சுகம் அடையலாமென்று எண்ணி,—
சனங்களுக்குள்ளே (சென்று,) அவருக்குப் பின் ௨௮
னாலே வந்து, அவருடைய வஸ்திரத்தைத் தொட்
டாள்.—உடனே அவளுடைய இரத்த ஊறல் நின் ௨௯
றுபோயிற்று; அந்த வேதனை நீங்கத்தான் ஆரோக்
கியம் அடைந்ததை அவள் சரீரத்தில் உணர்ந்
தாள்.—உடனே இயேசுவானவர் தம்மிலிருந்து ௩௰
[6]வல்லமை புறப்பட்டதைத் தமக்குள் அறிந்து
திரும்பி, சனங்களைப் பார்த்து, என் வஸ்திரங்க
ளைத் தொட்டவர் யார் என்றார்.—அதற்கு அவரு ௩௧
டைய சீஷர்கள் சொன்னது: சனங்கள் உம்மை
நெருக்குகிறதை நீர் கண்டும், என்னைத் தொட்
டவர் யாரென்று எப்படிச் சொல்லுகிறீர் என்
றார்கள்.—அவர் அப்படிச் செய்தவளைக்காணும் ௩௨
படிக்குச் சுற்றிலும் பார்த்தார்.—அப்பொழுது ௩௩
தன்னிடத்திலே நடந்ததை அறிந்த ஸ்திரி பயந்து
நடுங்கி வந்து, அவரைச் சாஷ்டாங்கமாய் வணங்
கி, எல்லாவற்றையும் அவருக்கு உண்மையாய்ச்
சொன்னாள்.—அவளுடனே அவர் சொன்னது: ௩௪
மகளே, [7]உன் விசுவாசம் உன்னைக் குணமாக்கிற்
று; நீ சமாதானத்தோடே போய்; உன் வேதனை
இன்றிச் சுகமாயிரு என்றார்.

[8]அவர் பேசிக்கொண்டிருக்கையில் செபஆ ௩௫
லயத்தலைவனுடைய வீட்டிலிருந்து சிலர் வந்து,
உம்முடைய குமாரத்தி இறந்துபோனாள், இனி
ஏன் போதகரை வருத்தப்படுத்துகிறீர் என்றார்
கள்.—அவர்கள் சொன்ன வார்த்தையை இயே ௩௬
சுவானவர் கேட்டு, உடனே ஆலயத்தலைவனை
நோக்கி, நீர் பயப்படவேண்டாம், விசுவாசமாக
வே இரும் என்று சொல்லி,—பின்பு பேதுருவும் ௩௭
யாக்கோபின் சகோதரனாகிய யோவானுந்தவிர,
வேறொருவரும் தமக்குப் பின்செல்லுகிறதற்கு
இடங்கொடாமல்,—ஆலயத்தலைவனுடைய வீட் ௩௮
டிலே சேர்ந்து, சந்தடியையும் அழுதுகொண்டு
மிகவும் புலம்புகிறவர்களையும் கண்டு,—உட்பிர ௩௯
வேசித்து, நீங்கள் சந்தடிபண்ணி அழுதுகொள்
ளுகிறதென்ன? பிள்ளை இறந்துபோகாமல் [9]நித்
திரை பண்ணுகிறாள் என்றார்.—அவர்கள் அவரை ௪௰
நோக்கி நகைத்தார்கள்; [10]பின்பு அவர் எல்லா
ரையும் வெளியே போகப்பண்ணி, பிள்ளையின்
தகப்பனையும் தாயையும் தம்மோடே வந்தவர்க
ளையும் அழைத்துக்கொண்டு, பிள்ளை கிடக்கிற
இடத்தில் பிரவேசித்து,—அதின் கையைப் பிடித் ௪௧
து, தலீத்தாகூமி என்றார்; அதற்குச் சிறுபெண்
ணே எழுந்திரு உனக்குக் கட்டளையிடுகிறேன்
என்று அருத்தமாம். — உடனே பன்னிரண்டு ௪௨
வயதுள்ள அந்தப்பெண் எழுந்து நடந்தாள்;
(அதைக் கண்டவர்கள்) மிகுந்த ஆச்சரியத்தோ
டே பிரமித்தார்கள்.—[11]அப்பொழுது அவர்கள் ௪௩
அதை ஒருவருக்கும் அறிவியாதபடிக்கு உறுதி

1 மத். அ. ௩௪. அப். ௰௬. ௩௯. ௯. ௰௮ லூக்.அ. ௪௧.—5 ௧ மோ.
2 லூக் அ ௩௮. ௰௫. ௨௫. மத் ௯. ௨௰.
3 மத். ௯. ௧. லூக். அ. ௪௰.—4 மத். 6 லூக். ௬. ௰௯: அ. ௪௬.—7 மத். ௯.
௨௨. மாற். ௰. ௫௨. அப். ௰௪. ௯. 10 அப். ௯. ௪௰ ——11 மத். அ. ௪:
8 லூக் அ ௪௯. ௯. ௩௰: ௰௨. ௰௬: ௰௭ ௯. மாற். ௩.
9 யோவா. ௰௧. ௧௧. ௰௨. லூக். ௫ ௰௪.

யாகக் கட்டளையிட்டு, பின்பு அவளுக்குச் சாப்
பாடு கொடுக்கும்படி சொன்னார்.

## ௬. அதிகாரம்.

௧. கிறிஸ்து தம்முடைய ஊராராலே அசட்டைபண்ணப்பட்டது. ௭. அவர் பன்னிரண்டு சீஷர்களுக்கும் அசுத்த ஆவிகளின்மேல் அதிகாரத்தைக் கொடுத்தது. ௰௪. கிறிஸ்துவைக்குறித்த பலவிதமான தாத்பரியங்கள். ௨௭. யோவான்ஸ்நானனை தலைவெட்டுண்டு, ௨௯. அடக்கம் பண்ணப்பட்டது. ௩௰. அப்போஸ்தலர்கள் பிரசங்கம்பண்ணித் திரும்பி வந்தது. ௩௪. ஐந்து அப்பங்களினாலும், இரண்டு மீன்களினாலும் செய்யப்பட்ட அற்புதம். ௪௮. கிறிஸ்து கடலின்மேல் நடந்தது. ௫௬. அவரைத் தொட்டயாவரும் சுகம் அடைந்தது.

௧ [1]அவர் அவ்விடம் விட்டுப் புறப்பட்டு, தாம்
வளர்ந்த ஊருக்குப் போனார்; அவருடைய சீஷர்
௨ அவருக்குப் பின்சென்றார்கள்.—ஓய்வுநாள் வந்த
பொழுது அவர் செபஆலயத்திலே உபதேசம்
பண்ணத் தொடங்கினார்; அதைக் கேட்ட அநே
கர் பிரமிப்படைந்து, [2]எங்கேயிருந்து இவைகள்
இவனுக்குத் தெரியவந்தன? இவனுடைய கை
களினால் இப்படிப்பட்ட பலத்த அற்புதங்கள்
நடக்கத்தக்கதாக, இவனுக்குக் கொடுக்கப்பட்ட
௩ ஞானம் எப்படிப்பட்டது?—இவன் மரியாளுக்
குக் குமாரனும், [3]யாக்கோபு, யோசே, யூதா,
சீமோன் என்பவர்களுக்குச் சகோதரனுமாகிய
தச்சனல்லவா? இவனுடைய சகோதரிகளும்
இங்கே நம்மிடத்தில் இருக்கிறார்களல்லவா?
என்று சொல்லி, [4]அவரைக்குறித்து வெறுப்ப
௪ டைந்தார்கள்.—அவர்களுடனே இயேசுவானவர்
சொன்னது: [5]ஒரு தீர்க்கதரிசி தன் ஊரிலும் தன்
இனத்தாரிடத்திலும் தன் குடும்பத்திலுமேயன்றி
(மற்ற இடங்களிலே) கனஈனம் அடையான்
௫ என்றார்.—[6]அங்கே அவர் சில நோயாளிகள்மேல்
கைகளை வைத்து அவர்களைக் குணமாக்கினதே
அன்றி வேறொரு அற்புதத்தைச் செய்யமாட்டா
௬ மல்,—அவர்களுடைய [7]அவிசுவாசத்தைக்குறித்
து ஆச்சரியப்பட்டார்.
௭ [8]பின்பு அந்தத் திசையிலுள்ள கிராமங்களிலே
திரிந்து உபதேசம்பண்ணினார்; [9]அல்லாமலும்
அவர் பன்னிருவரையும் அழைத்து, அசுத்தமான
ஆவிகளின்மேல் அவர்களுக்கு அதிகாரம் கொ
௮ டுத்து,—அவர்கள் பையையானாலும் ஆகாரத்தை
யானாலும் கச்சையில் * பணத்தையானாலும்
வழிக்காகக் கூடக்கொண்டுபோகாமல், ஒரு
௯ தடியைமாத்திரம் எடுத்துப்போகவும், — [10]பாத
இரட்சைகளைப் போட்டுக்கொண்டுபோகவும்,
இரண்டு அங்கிகளைத் தரியாதிருக்கவும், அவர்க
௰ ளுக்குக் கட்டளையிட்டு,—[11]பின்பு அவர்களுக்
குச் சொன்னதாவது: எங்கேயாகிலும் நீங்கள்
ஒரு வீட்டில் பிரவேசித்ததுமுதல், அவ்விடத்
தைவிட்டுப் புறப்படுகிறவரைக்கும் அங்கேதா
௰௧ னே தங்கியிருங்கள்.—[12]எவர்கள் உங்களை ஏற்
றுக்கொள்ளாமலும் உங்களுக்குச் செவிகொடா
மலும் இருக்கிறார்களோ, [13]அவர்களுடைய
இடத்தை நீங்கள் விட்டுப் புறப்பட்டு, அவர்க
ளுக்கு விரோதமான சாட்சியாக, உங்கள் உள்
ளங்கால்களில் படிந்திருக்கிற தூசியை உதறிப்
போடுங்கள்; நியாயத்தீர்ப்பு நாளிலே சோதோம்
கொமோரா பட்டணத்தாரிலும் அந்தப் பட்ட
ணத்தார் அதிக தண்டிப்பை அடைவார்கள்
என்று மெய்யாகவே உங்களுக்குச் சொல்லுகி
றேன் என்று சொல்லி, இரண்டிரண்டுபேராக
அவர்களை அனுப்பினார்.—அவர்கள் புறப்பட்டு, ௰௨
மனந்திரும்புங்கள் என்று பிரசங்கித்து,—அநே ௰௩
கம் பசாசுகளைத் துரத்தி, அநேகம் நோயாளிகளை
[14]எண்ணெயால் பூசிக் குணமாக்கினார்கள்.
[15]அவருடைய பேர் பிரசித்தமானபடியினாலே, ௰௪
இராசனாகிய ஏரோது (அவரைக்குறித்து) கேள்
விப்பட்டு, யோவான்ஸ்நானன் மரித்தோரிலி
ருந்து எழுப்பப்பட்டிருக்கிறான். — [16]ஆதலால் ௰௫
பலத்த அற்புதங்கள் அவனாலே செய்யப்படுகின்
றன என்றான்; சிலர் அவரை எலியாவென்றும்,
சிலர் அவரை ஒரு தீர்க்கதரிசி. அல்லது தீர்க்கதரி
சிகளில் ஒருவனைப்போல் இருக்கிறாரென்றும்
சொன்னார்கள்.[17]—ஏரோது அதைக் கேட்டபொ ௰௬
ழுது, அவன் நான் சிரச்சேதம்பண்ணின யோ
வான்தான், அவன் மரித்தோரிலிருந்து எழுப்
பப்பட்டிருக்கிறான் என்றான். — அதெப்படி ௰௭
யென்றால், ஏரோது தன் சகோதரனாகிய பிலிப்பி
னுடைய மனைவி ஏரோதியாளை விவாகம்பண்
ணினபொழுது,—யோவான் ஏரோதை நோக்கி, ௰௮
[18]நீர் உமது சகோதரனுடைய மனைவியைக்
கொள்ளுகிறது நியாயமல்ல என்றுசொன்னபடி
யினாலே, ஏரோது (ஆள்களை அனுப்பி) அவனைப்
பிடித்துக் காவலில் கட்டிவைத்தான்.—அல்லாம ௰௯
லும் ஏரோதியாள் அவனுக்குக் கெடுதி நினைத்து,
அவனைக் கொலைசெய்ய விரும்பினாள். — [19]ஏ ௨௰
ரோது யோவானை நீதியும் பரிசுத்தமும் உள்ளவ
னென்று அறிந்து, அவனுக்குப் பயந்து, அவனை
நன்றாய்க் காத்து, அவனுடைய ஆலோசனை
யின்படி அநேகம் காரியங்களைச் செய்து, விருப்
பத்தோடே அவனுடையசொற்கேட்டுவந்தான்;
ஆகையால் அவள் அப்படிச் செய்யக்கூடாமல்
இருந்தது.—பின்பு அதற்சேற்ற நாள் வந்தது; எப் ௨௧
படியென்றால், [20]ஏரோது தன் சென்மநாளிலே
[21]தன்னுடைய மந்திரிகளுக்கும் சேனாபதிகளுக்
கும் கலிலேயா நாட்டின் பிரபுக்களுக்கும் விருந்
துபண்ணின காலத்திலே,—ஏரோதியாளுடைய ௨௨
குமாரத்தி உள்ளே சென்று ஏரோதுவுக்கும் பந்தி
யிருந்த மற்றவர்களுக்கும் பிரியம் உண்டாக்கத்
தக்கதாக நடனம் பண்ணினபொழுது, இராசா

1 மத். ௰௩. ௫௪. லூக். ௪. ௰௬.
2 யோவா. ௬. ௪௨
3 மத் ௰௨. ௪௬. கலா. ௧. ௰௯.
4 மத். ௰௩ ௬.—5 மத் ௰௩. ௫௭. யோவா. ௪. ௪௪.—6 ௧ மோ. ௰௯. ௨௨: ௩௨. ௨௫ மத் ௰௩. ௫௮. மாற். ௬. ௨௬.—7 ஏசா. ௫௯. ௰௬.
8 மத். ௯. ௩௫. லூக். ௰௩. ௨௨.
9 மத். ௰. ௧. மாற். ௩. ௰௩, ௰௪. லூக். ௯. ௧.—10 அப். ௰௨. ௮.—11 மத். ௰. ௰௧. லூக். ௯. ௪: ௰. ௭, ௮.—12 மத். ௰. ௰௪. லூக். ௰. ௰.—13 அப். ௰௩. ௫௧: ௰௮. ௬.—14 யாக் ௫. ௰௪.
15 மத். ௰௪. ௧. லூக். ௯. ௭.—16 மத் ௰௬. ௰௪. மாற். ௮. ௨௮.—17 மத். ௰௪. ௩. லூக். ௩. ௰௯.—18 ௩ மோ. ௰௮. ௰௬: ௨௰. ௨௧.—19 மத். ௰௪. ௫: ௨௧. ௨௬.—20 மத். ௰௪ ௬.
21 ௧ மோ. ௪௰. ௨௰.

* இந்த மொழி ஒரு சின்ன நட்டையாவது பொதுவாய்ப் பணத்தையாவது குறிக்கும்; மத். ௰. ௯. லூக். ௯. ௩.

அந்தச் சிறுபெண்ணை நோக்கி, உனக்கு வேண்
டியதை என்னிடத்தில் கேள், நான் உனக்குத்
௨௩ தருவேன் என்று சொன்னதுமல்லாமல், — [1]நீ
என் இராச்சியத்தில் பாதிவரைக்கும் எதைக்
கேட்டாலும், அதை உனக்குத் தருவேனென்று
௨௪ அவளுக்கு ஆணையும் இட்டான்.–அப்பொழுது
அவள் வெளியே போய்த் தன் தாயை நோக்கி,
நான் என்ன கேட்கவேண்டும் என்று சொன்ன
தற்கு, யோவான்ஸ்நானனுடைய தலையைக்
௨௫ கேள் என்றாள். — உடனே அவள் சீக்கிரமாக
இராசாவினிடத்திற்குத் திரும்பிப்போய், நீர் இப்
பொழுதுதானே ஒரு தாலத்திலே யோவான்ஸ்நா
னனுடைய தலையை எனக்குத் தரவேண்டும்
௨௬ என்று கேட்டாள். — [2]அப்பொழுது இராசா
மிகுந்த துக்கம் அடைந்தான்; அப்படியிருந்தும்,
ஆணைகளின் நிமித்தமும் பந்தியிருந்தவர்களின்
நிமித்தமும் அவளுக்கு அதை மறுக்க மனதில்
௨௭ லாமல், — உடனே அவனுடைய தலையைக்
கொண்டுவரும்படிக்கு, போர்ச்சேவகனாகிய கா
வற்காரனுக்குக்* கட்டளையிட்டு அனுப்பினான்;
அந்தப்படியே அவன் போய் காவற்கூடத்திலே
௨௮ யோவானைச் சிரச்சேதம்பண்ணி,—ஒரு தாலத்
திலே அவனுடைய தலையைக் கொண்டுவந்து,
அதைச் சிறுபெண்ணுக்குக் கொடுத்தான்; சிறு
பெண் அதைத் தன் தாய்க்குக் கொடுத்தாள்.—
௨௯ அவனுடைய சீஷர் அதைக் கேட்டு வந்து,
அவன் உடலை எடுத்து, ஒரு கல்லறையிலே வைத்
தார்கள்.

௩௰ [3]அத்தருணத்திலே அப்போஸ்தலர்கள் இயே
சுவினிடத்தில் கூடிவந்து, தாங்கள் செய்த யா
வையும் போதகம்பண்ணின யாவையும் அவரு
௩௧ க்கு அறிவித்தார்கள்.—பின்பு அவர்கள் போச
னம் பண்ணும்படிக்கும் சமயம் இல்லாதிருக்கத்
தக்கதாக [4]வருகிறவர்களும் போகிறவர்களும்
மிகுதியானபடியினாலே, [5]அவர் அவர்களை நோ
க்கி, நீங்கள் வனாந்தரமான இடத்திலே தனித்
திருந்து சற்றே இளைப்பாற வாருங்கள் என்று
௩௨ சொன்னார்.—[6]அந்தப்படி அவர்கள் தனித்திருக்
கும்படிக்குப் படவில் பிரவேசித்து வனாந்தர
மான இடத்திற்குப் போனார்கள்.

௩௩ அவர்கள் புறப்பட்டுப் போகிறதைச் சனங்
கள் கண்டு, (அவர்கள் போகிற) இடத்தை அறிந்
து, சகல பட்டணங்களிலுமிருந்து கால்நடை
யாய் அவ்விடத்திற்கு ஓடி, அவர்களுக்கு முன்
னே அங்கே சேர்ந்து, அவரிடத்தில் கூடிவந்தார்
௩௪ கள்.—[7] இயேசுவானவர் கரையில் வந்து மிகுந்த
சனங்களைக் கண்டபொழுது, அவர்கள் மேய்ப்
பனில்லாத ஆடுகளைப்போல் இருந்தபடியினா
லே, அவர்கள்மேல் உருக்கமாய் இரங்கி, [8]அநேக
காரியங்களை அவர்களுக்கு உபதேசித்தார்.

௩௫ [9]பின்பு பொழுது மிகவும் கழிந்துபோனபடி
யால், அவருடைய சீஷர் அவரிடத்தில் வந்து,
இது வனாந்தரமான இடம், அல்லாமலும் மிகவும்
பொழுதுபோயிற்று. — போசனம் பண்ணுகிற ௩௬
தற்கு இவர்களிடத்தில் ஒன்றுமில்லை; ஆகையால்
இவர்கள் சுற்றியிருக்கிற ஊர்களுக்கும் கிராமங்
களுக்கும் போய், தங்களுக்காக அப்பங்களை
வாங்கிக்கொள்ளும்படிக்கு, இவர்களை அனுப்பி
விடவேண்டும் என்றார்கள்.—அதற்கு அவர், நீங் ௩௭
களே இவர்களுக்குப் போசனம் கொடுங்கள் என்
றார்; அவர்கள் சொன்னது: இவர்களுக்குப் போ
சனம் கொடுக்கும்படிக்கு, [10]நாங்கள் போய் †இ
ருநூறு தேநாரிய பணத்திற்கு அப்பங்களை வாங்
கிக்கொண்டு வரலாமா என்றார்கள். — அதற்கு ௩௮
அவர், எவ்வளவு அப்பங்கள் உங்களிடத்தில்
உண்டு, போய்ப் பாருங்கள் என்றார்; [11]அவர்கள்
விசாரித்து (வந்து), ஐந்து அப்பமும் இரண்டு
மீனும் இருக்கின்றனவென்று சொன்னார்கள்.—
அப்பொழுது அவர்கள் கூட்டங்கூட்டமாக ௩௯
எல்லாச் சனங்களையும் பசுமையான புல்லின்
மேல் உளுக்காரப்பண்ணும்படிக்குக் கட்டளை
யிட்டார்.—அப்படி நூறுபேர் ஒரு கூட்டமும், ௪௰
ஐம்பதுபேர் ஒரு கூட்டமுமாகச் சதுக்கம் சதுக்
கமாய் உளுக்காந்தார்கள். — பின்பு அவர் அவ் ௪௧
வைந்து அப்பங்களையும் அவ்விரண்டு மீனையும்
எடுத்து, [12]வானத்தை அண்ணாந்துபார்த்து, அவை
களை ஆசீர்வதித்து, பின்பு அப்பங்களைப் பிட்டுச்
சனங்களுக்குக் கொடுக்கும்படிக்கு அவைகளைச்
சீஷர்களுக்குக் கொடுத்து, பின் அவ்விரண்டு
மீனையும்அவர்கள் எல்லாருக்கும் பங்கிட்டார்.–
எல்லாரும் சாப்பிட்டுத் திருத்தியடைந்தார் ௪௨
கள்.—அல்லாமலும் (அப்பங்களிலும்) மீன்களி ௪௩
லும் சேஷமானவைகளைப் பன்னிரண்டு கூடை
நிறைய எடுத்தார்கள்.—ஏறக்குறைய ஐயாயிரம் ௪௪
புருஷர் போசனம்பண்ணினார்கள்.

[13]பின்பு தாம் சனங்களை அனுப்புகையில், ௪௫
தமக்கு முன்னாகச் சீஷர்கள் படவில் ஏறி அக்
கரையில் பெதுசாயிதா என்னும் ‡ஊருக்குப்
போகும்படிக்கு அவர்களைத் துரிதப்படுத்தினார்.–
பின்பு அவர் சனங்களை அனுப்பி, செபத்தியா ௪௬
னம் பண்ணும்படிக்கு மலையில் ஏறினார்.

[14]சாயந்தரமானபொழுது, படவு கடலின் நடு ௪௭
விலே சேர்ந்தது; அவர்மாத்திரம் கரையிலே
இருந்தார்.—அப்பொழுது காற்று அவர்களுக்கு ௪௮
எதிரானபடியினாலே, அவர்கள் வருத்தத்தோடே
(படவை) தள்ளினதை அவர் கண்டு, பின்பு
இராத்திரியில் நாலாம் சாமத்திலே புறப்பட்டுக்
கடலின்மேல் நடந்து, அவர்களிடத்திற்குச் சமீ
பித்து, [15]அவர்களைக் கடந்துபோக மனதாயிருந்
தார்.—கடலிலே நடந்துபோகிற அவரை அவர் ௪௯
கள் கண்டபொழுது, அது ஆவேசம் என்று
எண்ணிச் சத்தமிட்டார்கள்.—அல்லாமலும் எல் ௫௰

1 எஸ். ௫ ௩,௬: ௭. ௨.–2 மத். ௰௪ ௯. 7 மத். ௯. ௩௬: ௰௪. ௰௪.—8 லூக். ௯. 3 லூக். ௯. ௰.–4 மாற். ௩. ௨௰.–5 மத். ௰௩.—9 மத். ௰௪. ௰௫. லூக். ௯. ௰௨. ௰௪. ௰௩.—6 மத். ௰௪. ௰௩. 10 ௪ மோ. ௰௧. ௰௩, ௨௨. ௨ இரா. ௪. ௪௩.–11 மத். ௰௪. ௰௭. லூக். ௯. ௰௩. ௨௧. ௨௧.–13 மத். ௰௪. ௨௨. யோவா. யோவா. ௬. ௯. மத். ௰௫. ௩௪. மாற். ௯. ௰௯.—14 மத். ௰௪. ௨௫. யோவா. ௮. ௫.—12 ௧ சாமு. ௯. ௰௩. மத். ௯. ௰௩, ௰௮.—15 லூக். ௨௪. ௨௮.

* அல்லது கொலைகாரனுக்கு.—† உரோமருடைய தேநாரிய பணமொன்று ஏழரைப்பேனிசக்குச்சரி; மத். ௰௮. ௨௮.—‡ ஊருக்குநேராக.

லாரும் அவரைக் கண்டு கலக்கம் அடைந்தார்க
ள்; உடனே அவர் அவர்களை நோக்கி, திடமாயி
ருங்கள், நான்தான், பயப்படாதிருங்கள் என்று
௫௧ அவர்களுடனே சொன்னார். — பின்பு அவர்
அவர்கள் இருக்கிற படவில் பிரவேசித்தவுடனே
௫௨ காற்று நின்றுபோயிற்று.—[1] அவர்கள் கடினமான
இருதயம் உடையவர்களாகையால், அந்த அப்
பங்களைக்குறித்துச் சிந்தனைபண்ணாமல் இருந்த
படியினாலே [2]மிகவும் மிகுதியாய்த் தங்களுக்
குள்ளே பிரமித்து ஆச்சரியப்பட்டார்கள்.
௫௩ [3]பின்பு அவர்கள் புறப்பட்டுக் கெனேசரேத்து
௫௪ நாட்டிலே வந்து, கரைபிடித்தார்கள்.—அவர்கள்
படவை விட்டிறங்கினவுடனே சனங்கள் அவ
௫௫ ரை அறிந்து,—அந்தத் திசையில் எங்கும் ஓடித்தி
ரிந்து, படுக்கைகளில் கிடக்கிற பிணியாளிகளை
எடுத்து, அவர் வந்திருக்கிறாரென்று கேள்விப்
பட்ட இடங்களில் கொண்டுவரத்தொடங்கினார்
௫௬ கள்.—அல்லாமலும் அவர் பிரவேசித்த கிராமம்
பட்டணம் ஊர் எவைகளோ, அவைகளின் சந்
தைகளில் பிணியாளிகளை வைத்து, அவர்கள்
அவருடைய [4]வஸ்திரத்தின் ஓரத்தைமாத்திரம்
தொடும்படிக்கு அவரை வேண்டிக்கொண்டார்
கள்; எவர்கள் அதைத்* தொட்டார்களோ அவர்
கள் சொஸ்தம் அடைந்தார்கள்.

## ௭. அதிகாரம்.

*௧. சீஷர்கள் கைகழுவாமல் போசனம் பண்ணினதைக்குறித்துப் பரிசேயர் குற்றம்பிடித்தது. ௮. அந்தப் பரிசேயர் முதலியவர்கள் மனுஷர்களுடைய பாரம்பரை நியாயங்களினால் பராபரனுடைய கட்டளைகளை மீறினது. ௰ச. போசனம் மனுஷனை அசுசிப்படுத்தாதென்பது. உச. இறந்து சீரோப்பேனிக்கேசாதியான ஒரு ஸ்திரீயின் மகளிடத்திலிருந்த அசுத்த ஆவியை நீக்கி, ௩௧. செவிடனும் திக்குவாயனுமான ஒருவனைச் சுகப்படுத்தினது.*

௧ [5]பரிசேயரும் மற்ற யூதர்களெல்லாரும் பெ
ரியோர்களுடைய பாரம்பரை நியாயங்களைக்
கைக்கொள்ளும்படிக்கு மணிக்கட்டுவரைக்கும்
கைகழுவாமல் † போசனம் பண்ணமாட்டார்
௨ கள்.—அல்லாமலும் சந்தைகளிலிருந்து(வந்தால்)
ஸ்நானம்பண்ணாமல் போசனம் பண்ணமாட்
டார்கள்; மேலும் சலபாத்திரங்களையும், குடங்
களையும், செப்புப்பானைகளையும், கட்டில்களை
யும் ‡ ஸ்நானம்பண்ணுவித்து, மற்றும் அப்ப
டிப்பட்ட அநேகம் சடங்குகளைப் பற்றிக்
௩ கொள்ளுவார்கள். — ஆதலால் பரிசேயரும் வே
தபாரகரில் சிலரும் கூடி, எருசலேம் பட்டணத்
௪ திலிருந்து அவரிடத்தில் வந்து,—அவருடைய
சீஷரில் சிலர் கைகழுவாமல் அசுத்தமான கைக
ளோடே § போசனம்பண்ணுகிறதைக் கண்ட
௫ பொழுது, அவர்கள் அவரை நோக்கி, —[6] உம்
முடைய சீஷர் பெரியோருடைய பாரம்பரை
நியாயத்தை மீறி நடந்து, கைகழுவாமல் போச
னம் பண்ணுகிறதென்ன என்று கேட்டார்கள்.—
௬ அதற்கு மாறுத்தரமாக அவர் சொன்னது: நீங்கள்
பராபரனுடைய கட்டளையை விட்டு, குடங்
களையும் சலபாத்திரங்களையும் ஸ்நானம்பண்ணு
வித்து, மற்றும் அப்படிப்பட்ட அநேக சடங்கு
களைச் செய்து, மனிதர்களுடைய பாரம்பரை
நியாயங்களைக் கைக்கொள்ளுகிறீர்கள்.—ஆகை ௭
யால் [7]இந்தச் சனங்கள் உதடுகளினாலே என்
னைக் கனம்பண்ணியும், இவர்களுடைய இருத
யம் எனக்குத் தூரமாய் விலகி இருக்கிறதென்
றும்,—மனிதர்களுடைய கற்பனைகளாகிய உப ௮
தேசங்களை அவர்கள் கற்றுக்கொண்டு, வீணாய்
எனக்கு ஆராதனை செய்கிறார்கள் என்றும்,
ஏசாயா என்பவன் மாயக்காரராகிய உங்களைக்
குறித்து நன்றாய்த் தீர்க்கதரிசனம் சொல்லியிருக்
கிறான் என்று சொல்லி,—பின்பு உங்கள் பாரம் ௯
பரை நியாயங்களைக் காத்துக்கொள்ளும்படிக்கு,
நீங்கள் பராபரனுடைய கட்டளையைத் தள்ளிக்
கொண்டு ‖ வருகிறது நன்றாயிருக்கிறது.—என்ன ௰
வென்றால், [8]உன் தகப்பனையும் உன் தாயையும்
கனம்பண்ணுவாயாக என்றும், [9]தகப்பனையா
வது தாயையாவது நிந்திக்கிறவனுக்கு மரண
ஆக்கினையைக் கொடுக்கவேண்டும் என்றும் மோ
சே சொன்னாரே — [10]நீங்கள், ஒருவன் தன் ௰௧
தகப்பனையாவது தாயையாவது நோக்கி, உங்க
ளுக்கு என்னாலே உதவுகிறதேதோ, அது (தேவா
லயத்திற்குக் காணிக்கையாகிய) கொர்பானாவ
தாக என்று சொன்னால்,—பின்பு அவன் தன் ௰௨
தகப்பனுக்கும் தன் தாய்க்கும் உதவிசெய்ய
வேண்டுவதில்லை என்று உத்தரவு கொடுத்து, —
இவ்விதமாய் உங்களால் உண்டாக்கப்பட்ட பா ௰௩
ரம்பரை நியாயத்தினாலே பராபரனுடைய வச
னத்தை அவமாக்குகிறீர்கள்; அதுபோல நீங்கள்
மற்றும் அநேகம் காரியங்களையும் செய்கிறீர்கள்
என்று சொல்லி;—[11]பின்பு எல்லாச் சனங்களை ௰௪
யும் அழைத்து, அவர்களுடனே சொன்னது:
நீங்கள் எல்லாரும் எனக்குச் செவிகொடுத்துச்
சிந்தித்துக்கொள்ளுங்கள்.— ஒரு மனிதனுக்குப் ௰௫
புறம்பேயிருக்கிற எந்தப் பொருளும் அவனுக்கு
உட்பிரவேசிக்கிறபொழுது அவனை அசுசிப்ப
டுத்தமாட்டாது; அவன் உள்ளத்திலிருந்து புறப்
படுகிற பொருள்களே அவனை அசுசிப்படுத்து
கின்றன. — [12]கேட்கிறதற்கு ஒருவன் காதுள்ள ௰௬
வனானால் கேட்கக்கடவன் என்றார்.

[13] பின்பு அவர் சனங்களைவிட்டு வீட்டில் ௰௭
பிரவேசித்தபொழுது, அவருடைய சீஷர்கள்
அந்த உவமையைக்குறித்து அவரிடத்தில் வினா
வினார்கள்.—அவர்களுடனே அவர் சொன்னது: ௰௮
நீங்களும் புத்தியில்லாதவர்களா? புறம்பே இருக்
கிற எந்தப் பொருளும் மனிதனுக்கு உட்பிரவே
சிக்கிறபொழுது அவனை அசுசிப்படுத்தமாட்டா
தென்று நீங்களும் அறிந்திருக்கவில்லையா? —

1 மாற். அ. ௰எ, ௰அ.—2 மாற். ௩. ௫: ௰௬. ௰௪. 3 மத். ௰௪. ௩௪.—4 மத். ௯. ௨௧. மாற். ௫. ௨௭, ௨௮. அப். ௰௯. ௰௨. 5 மத். ௰௫. ௧.—6 மத். ௰௫. ௨. 7 ஏசா ௨௯. ௰௩. மத். ௰௫. ௮. ௯.—9 ௨ மோ. ௨௧ ௰௭. 8 ௨ மோ. ௨௰. ௰௨. ௫ மோ. ௫. ௰௬. ௫ மோ. ௨௰ ௯. லேவி. ௨௰. ௯. 10 மத். ௰௫. ௫: ௨௩. ௰௮. 11 மத். ௰௫. ௰.—12 மத். ௰௧. ௰௫. 13 மத். ௰௫. ௰௫.

* அல்லது அவரை.—† அல்லது எளியவர்களோடே.—‡ அல்லது பீடங்களையும்.—§ அல்லது அடிக்கடி —‖ அல்லது புரட்டி.

௧௯ அது அவனுடைய இருதயத்திலே பிரவேசி
யாமல் வயிற்றில் பிரவேசிக்கிறதே; அதிலிருந்து
எல்லாப் போசனங்களையும் கழிக்கிற ஆசனவழி
௨௰ யாய்ப் புறப்படுகின்றன.—மனிதனுடைய உள்
ளத்திலிருந்து புறப்படுகிறதே அவனை அசுசிப்
௨௧ படுத்துகின்றது.—அதெப்படியெனில், மனிதரு
௨௨ டைய இருதயத்திலிருந்து,—[1]விபசாரம், வேசித்
தனம், கொலை, திருட்டு, தகாதபொருளாசை,
மூர்க்கம், * கபடம், காமவிகாரம், பொறாமை,
தூஷணம், அகந்தை, மதிகேடு என்பவைக
ளுக்கு ஏதுவான பொல்லாத யோசனைகள் புறப்
௨௩ படுகின்றன. — தீமையான இவைகளெல்லாம்
உள்ளத்திலிருந்து புறப்பட்டு, மனிதனை அசு
சிப்படுத்துகின்றன என்று திருவுளம்பற்றினார்.
௨௪ [2]பின்பு அவர் எழுந்து, அவ்விடம் விட்டு,
தீருசீதோன் பட்டணங்களின் எல்லைகளுக்குப்
போனார்; அங்கே அவர் ஒரு வீட்டிலே பிர
வேசித்த பின்பு, தம்மை ஒருவரும் அறியாமல்
இருக்கும்படிக்கு மனதாயிருந்தும், அவர் மறைந்
௨௫ திருக்கிறதற்கு ஏதுவில்லை.—எப்படியென்றால்,
சூர்பேனீக்கியா தேசத்தில் பிறந்த அஞ்ஞானி
யாகிய † ஒரு ஸ்திரியானவளுக்கு அசுத்த ஆவி
௨௬ யையுடைய மகள் இருந்தாள்.—அந்த ஸ்திரீ அவ
னைக்குறித்துக் கேள்விப்பட்டபொழுது, அவள்
வந்து, வணக்கமாய் அவருடைய பாதங்களின்
அருகே விழுந்து, தன்னுடைய மகளிலிருந்து
பசாசைத் துரத்தவேண்டுமென்று அவரைவேண்
௨௭ டிக்கொண்டாள். — இயேசுவானவர் அவளை
நோக்கி, பிள்ளைகளுடைய ஆகாரத்தை எடுத்து
நாய்களுக்குக் கொடுக்கிறது நியாயமல்ல; ஆகை
யால் முதலாவது பிள்ளைகளே திருத்தியடையட்
௨௮ டும் என்றார்.—அதற்கு அவள் சொன்னது: ஆண்
டவரே, அது சரிதான்; ஆனாலும் போசனப்பல
கைகளின் கீழிருக்கிற நாய்கள் பிள்ளைகளு
டைய உச்சிட்டங்களைத் தின்னுமே என்றாள்.—
௨௯ அப்பொழுது அவர் சொன்னது: நீ இந்த வசனத்
தைச் சொன்னபடியினாலே (சந்தோஷமாய்ப்)
போ; பசாசு உன் மகளிலிருந்து புறப்பட்டுப்
௩௰ போயிற்று என்றார். — அவள் தன் வீட்டிலே
போய்ச் சேர்ந்தபொழுது பசாசு புறப்பட்டுப்
போனதையும், தன் மகள் கட்டிலின்மேல் படுத்
திருக்கிறதையும் கண்டாள்.

௩௧ [3]பின்பு அவர் தீருசீதோன் பட்டணங்களின்
திசைகளை விட்டுப் புறப்பட்டு, தெக்கப்போலி
என்னும் தேசத்தின் திசைகளின் வழியாய் மறு
படியும் கலிலேயாநாட்டின் கடலருகே வந்
௩௨ தார். — [4] அங்கே கொன்னைவாயையுடைய
செவிடனை அவரிடத்தில் கொண்டுவந்து, அவர்
தமது கையை அவன்மேல் வைக்கும்படிக்கு
௩௩ அவனை வேண்டிக்கொண்டார்கள். — அப்பொ
ழுது அவர் கூட்டத்திலிருந்து அவனை ஒரு பக்
கத்திலே கொண்டுபோய், தமது விரல்களை அவ
னுடைய காதுகளில் வைத்து, [5]உமிழ்ந்து, அவனு
டைய நாவைத் தொட்டு,—[6]பின்பு வானத்தை ௩௪
அண்ணாந்து பார்த்து [7]மூச்சை விட்டு, எப்பத்தா
என்றார்; எப்பத்தா என்பதற்குத் திறக்கப்படு
வாயாக என்று அருத்தமாம்.—[8]உடனே அவனு ௩௫
டைய காதுகள் திறக்கப்பட்டன; அவன் நன்
றாய்ப் பேசத்தக்கதாக அவனுடைய நாவின்
கட்டும் நீக்கப்பட்டது. — [9]பின்பு அவர்கள் ௩௬
அதை ஒருவருக்கும் சொல்லாதபடிக்கு அவர்
களுக்குக் கட்டளையிட்டார்; அப்படியிருந்தும்,
தங்களுக்கு அவர் அப்படிக் கட்டளையிட்டது
எவ்வளவோ, அவ்வளவாய் அதைப் பிரசித்தம்
பண்ணினார்கள்.—அல்லாமலும் அவர் சகலத் ௩௭
தையும் நன்றாய்ச் செய்தருளினார்; செவிடர்
கேட்கவும், ஊமையர் பேசவும் பண்ணுகிறா
ரென்று மிகவும் மிகுதியான ஆச்சரியத்தோடே
சொல்லிக்கொண்டார்கள்.

## ௮. அதிகாரம்.

௧. கிறிஸ்து நாலாயிரம்பேருக்கு அற்புதமாய்ச் சாப்பாடு கொடுத்தது. ௰௧. பரிசேயருக்கு ஒரு அடையாளமும் கொடுக்கப்படுவதில்லை என்பது. ௰௪. பரிசேயருடைய புளித்த மாவுக்கும், ஏரோதேயினுடைய புளித்த மாவுக்கும் எச்சரிக்கையாயிருக்கப் போதித்தது. ௨௨. ஒரு குருடனுக்குப் பார்வையளித்தது. ௨௭. பாடுபட்டு உயிரோடு எழுந்திருக்கப்போகிறவராகிய கிறிஸ்து தாமே என்று அறிவித்தது. ௩௪. சுவிசேஷத்தின் நிமித்தமாய் வரும் துன்பங்களைப் பொறுமையோடே சகிக்கவேண்டுமென்று போதித்தது.

[10]அந்த நாள்களிலே சனங்கள் மிகுந்த கூட் ௧
டமாய்ப் போசனம்பண்ணுகிறதற்கு ஒன்றும்
இல்லாதிருந்தபொழுது, இயேசுவானவர் தம்மு
டைய சீஷர்களை அழைத்து,—இந்தச் சனங்கள் ௨
என்னிடத்தில் வந்து மூன்று நாளாயிற்று; இப்
பொழுது போசனம்பண்ணுகிறதற்கு இவர்க
ளுக்கு ஒன்றுமில்லையே; ஆகையால் இவர்கள்
மேல் உருக்கமாய் இரங்குகிறேன்.—அல்லாம ௩
லும் இவர்களில் சிலர் தூரத்திலிருந்து வந்தவர்க
ளாகையால், நான் அவர்களைப் பட்டினியாய்
வீட்டிற்கு அனுப்பினால் வழியிலே சோர்ந்து
போவார்கள் என்று சொன்னபொழுது,—சீஷர் ௪
கள் அவருக்கு மாறுத்தரமாக, இந்த வனாந்தரத்
திலே ஒருவன் இவர்களுக்கு அப்பங்களினாலே
திருத்தியாக்குவது எப்படி என்றார்கள்.—அதற்கு ௫
அவர், [11]எத்தனை அப்பங்கள் உங்களிடத்தில்
உண்டென்று கேட்டார்; ஏழு அப்பங்கள் உண்
டென்றார்கள்.—அப்பொழுது சனங்கள் தரையி ௬
லே இருக்கும்படி கட்டளையிட்டு, பின்பு அந்த
ஏழு அப்பங்களையும் எடுத்துத் தோத்திரம்பண்
ணி, அவைகளைப் பிட்டு, அவர்களுக்குள்ளே பரி
மாறும்படிக்கு அவைகளைச் சீஷர்களிடத்தில்
கொடுத்தார்; அந்தப்படி அவர்கள் சனங்களுக்
குப் பரிமாறினார்கள்.—அல்லாமலும் சில சிறிய ௭
மீன்கள் அவர்களிடத்தில் இருந்தன; [12]அவர்

1 ௧ மோ. ௬. ௫: அ. ௨௧. மத். ௰௫. ௰௯.—2 மத். ௰௫. ௨௧. 3 மத். ௰௫. ௨௯.—4 மத். ௯. ௩௨. லூக். ௰௧. ௰௪.—5 மாற். ௮. ௨௩. யோவா. ௯. ௬.—6 மாற். ௬. ௪௧. யோவா. ௰௧. ௪௧: ௰௭. ௧.
7 யோவா. ௰௧. ௩௩, ௩௮.—8 ஏசா. ௩௫. ௫, ௬. மத். ௰௧. ௫. 9 மாற். ௫. ௪௩.—10 மத். ௰௫. ௩௨. 11 மத். ௰௫. ௩௪. மாற். ௬. ௩௮. 12 மத். ௰௪. ௰௯. மாற். ௬. ௪௧.

* அல்லது பொருளாசைகள், மூர்க்கங்கள்.—† அல்லது கிரேக்க.

தோத்திரம் சொன்னபின்பு அவைகளையும் பரி
௮ மாறும்படிக்குக் கட்டளையிட்டார்.—அப்படிச்
சனங்கள் சாப்பிட்டுத் திருத்தியடைந்தார்கள்;
ஏழுகூடை நிறையச் சேஷமானவைகளையும்
௯ எடுத்துக்கொண்டார்கள். — சாப்பிட்டவர்கள்
ஏறக்குறைய நாலாயிரம்பேர் உண்டு.
௰ [1]பின்பு அவர்களை அனுப்பிவிட்டு உடனே
தம்முடைய சீஷருடனேகூடப் படவில் ஏறி,
தலுமனுத்தாவூரின் திசைகளில் வந்தார். —
௰௧ [2]அங்கேயிருந்து பரிசேயர் அவரைப் பரிட்சை
பார்க்கும்படிக்குப் புறப்பட்டு வந்து, அவருட
னே தருக்கம்பண்ண ஆரம்பித்து, அவர் வானத்
திலிருந்து ஒரு அடையாளத்தைக் காட்டும்படி
௰௨ கேட்டார்கள்.—அப்பொழுது அவர் தமது உள்
ளத்திலிருந்து பெருமூச்சை விட்டு, இந்தத் தலை
முறையார் என்னத்தினாலே ஓர் அடையாளத்
தைக் கேட்கிறார்கள்; இந்தச் சந்ததியாருக்கு
ஓர் அடையாளம் கொடுக்கப்படுவதில்லை என்று
மெய்யாய் உங்களுக்குச் சொல்லுகிறேன் என்று
௰௩ சொல்லி,—அவர்களை விட்டு மறுபடியும் பட
வில் ஏறி, அக்கரைக்குப் போனார்.
௰௪ [3]சீஷர்கள் அப்பங்களைக்கூடக் கொண்டு
போக மறந்தார்கள்; படவில் (பிரவேசிக்கை
யில்) ஒரே அப்பம்மாத்திரம் அவர்களிடத்தில்
௰௫ இருந்தது. — [4]அப்பொழுது அவர் அவர்களை
நோக்கி, நீங்கள் பரிசேயருடைய புளிப்புள்ள
மாவுக்கும், ஏரோதினுடைய புளிப்புள்ள மாவுக்
கும் விலகி, மிகவும் எச்சரிக்கையாயிருக்கக்கட
வீர்கள் என்று அவர்களுக்குக் கட்டளையிட்
௰௬ டார்.—அவர்கள் (அதைக் கேட்டு) தங்களுக்
குள்ளே யோசனை பண்ணிக்கொண்டு, நம்மி
டத்தில் [5]அப்பங்களில்லாதபடியால் இப்படிச்
௰௭ சொன்னார் என்றார்கள். — இயேசுவானவர் அ
தை அறிந்து, அவர்களை நோக்கி, உங்களிடத்தில்
அப்பங்கள் இல்லாததைக்குறித்து என் யோச
னைபண்ணுகிறீர்கள்? [6]இதுவரைக்கும் நீங்கள்
அறிந்துகொள்ளாமலும் சிந்தித்துக்கொள்ளாம
லுமா இருக்கிறீர்கள்; இதுவரைக்கும் உங்கள்
௰௮ இருதயம் கடினமாயிருக்கிறதா? — கண்கள் இ
ருந்தும் நீங்கள் காணாமலா இருக்கிறீர்கள்; காதி
ருந்தும் நீங்கள் கேளாமலா இருக்கிறீர்கள்; நீங்
௰௯ கள் நினைவு கூரவில்லையா?-[7]அந்த ஐயாயிரம்பே
ருக்குள்ளே நான் அவ்வைந்து அப்பங்களையும்
பிட்டுக் கொடுத்தபொழுது, எவ்வளவு கூடை
நிறையச் சேஷமானவைகளை எடுத்தீர்கள் என்று
கேட்டதற்கு, பன்னிரண்டு கூடை நிறைய
௨௰ எடுத்தோம் என்றார்கள்.—[8]அல்லாமலும் அந்த
நாலாயிரம்பேருக்குள்ளே (நான்) அந்த ஏழு அப்
பங்களையும் (கொடுத்த) பொழுது, எவ்வளவு
கூடை நிறையச் சேஷமானவைகளை எடுத்துக்
கொண்டீர்கள் என்று கேட்டதற்கு, ஏழு கூடை
நிறைய என்றார்கள்.—அவர் சொன்னது: அப்ப ௨௧
டியிருக்க, [9]நீங்கள் சிந்தித்துக்கொள்ளாமல் இரு
ப்பதெப்படி என்று திருவுளம்பற்றினார்.
பின்பு அவர் பெதுசாயிதாவூருக்கு வந்தார்; ௨௨
அங்கே ஒரு குருடனை அவரிடத்திற்குக் கொண்
டுவந்து, அவனைத் தொடும்படிக்கு அவரை
வேண்டிக்கொண்டார்கள்.-அப்பொழுது அவர் ௨௩
குருடனுடைய கையைப் பிடித்து, அவனைக்
கிராமத்திற்குப் புறம்பே கொண்டுபோய், [10]அவ
னுடைய கண்களில் உமிழ்நீரைத் தடவித் தமது
கைகளை அவன்மேல் வைத்து, உனக்கு ஏதாகி
லும் தோன்றுகிறதா என்று கேட்டார்.—அவன் ௨௪
அண்ணாந்து, நடந்துபோகிற மனிதரை மரங்கள்
போலக் காண்கிறேன் என்றான்.—பின்பு அவர் ௨௫
மறுபடியும் தம்முடைய கைகளை அவனுடைய
கண்களின்மேல் வைத்து, அவன் திரும்ப அண்
ணாந்து பார்க்கும்படி செய்தார்; அப்பொழுது
அவன் நன்றாய்க் குணமாக்கப்பட்டுச் சகலத்
தையும் தெளிவாய்ப் பார்த்தான்.—பின்பு அவர் ௨௬
அவனை நோக்கி, [11]நீ கிராமத்தில் பிரவேசியாம
லும், அதில் ஒருவனுக்கும் இதைச் சொல்லாம
லும் இருவென்று சொல்லி, அவனை வீட்டிற்கு
அனுப்பிவிட்டார்.
[12]பின்பு இயேசுவானவர் தம்முடைய சீஷர் ௨௭
களோடுங்கூட அவ்விடம்விட்டுப் பிலிப்பின்
கேசரீயா பட்டணத்தருகே இருக்கிற கிராமங்க
ளுக்குப் போனார்; வழியிலே அவர் தம்முடைய
சீஷர்களை நோக்கி, என்னைக்குறித்து மனிதர்
என்ன சொல்லுகிறார்கள் என்று கேட்டார்.—
அவர்கள் சொன்னது: [13]சிலர் உம்மை ஸ்நான ௨௮
னாகிய யோவானென்றும், சிலர் எலியாவென்
றும், சிலர் உம்மைத் தீர்க்கதரிசிகளில் ஒருவர்
என்றும் சொல்லுகிறார்கள் என்றார்கள்.—அப் ௨௯
பொழுது அவர், நீங்கள் என்னைக்குறித்து என்ன
சொல்லுகிறீர்கள் என்றார்; அதற்குப் பேதுரு,
[14]நீர் கிறிஸ்துவே என்றான். — [15]அப்பொழுது ௩௰
தம்மைக்குறித்து அப்படி ஒருவருக்கும் சொல்
லாதபடிக்குக் கெட்டியாய் அவர்களுக்குக் கட்
டளையிட்டார்.
[16]அல்லாமலும் மனிதனுடை குமாரன் மிக ௩௧
வும் பாடுபடவும் பெரியோர்கள் பிரதான ஆசா
ரியர் வேதபாரகர் என்பவர்களாலே தள்ளப்ப
டவும், மரணமடையவும், பின்பு மூன்றுநாளுக்
குள்ளே உயிரோடெழுந்திருக்கவும் வேண்டு
மென்று அவர்களுக்கு அறிவிக்கத் தொடங்கி
னார்.-அப்படி அவர் வெளியரங்கமாய்ப் பேசிக் ௩௨
கொண்டபொழுது, பேதுரு அவரைப் பக்கத்
திலே அழைத்து, அவரைக் கடிந்துகொள்ளத்
தொடங்கினான்.—உடனே அவர் திரும்பி, தம் ௩௩
முடைய சீஷர்களை நோக்கிப் பார்த்து, பின்பு
பேதுருவை நோக்கி, நீ பராபரனுக்குப் பிரிய

1 மத். ௰௫. ௩௯.—2 மத் ௰௬. ௧-௪: ௰௨. ௩௮. யோவா. ௬. ௩௰.—3 மத். ௰௬. ௫.—4 மத். ௰௬. ௬. லூக். ௰௨. ௧.—5 மத். ௰௬. ௭.
6 மாற் ௬. ௫௨.-7 மத். ௰௪ ௨௰. மாற். ௬. ௪௩. லூக். ௯. ௰௭. யோவா. ௬. ௰௩.-8 மத். ௰௫. ௩௭. அ. ௮.
9 மாற். ௬. ௫௨. ௰௭. ௮௪.-10 மாற். ௭. ௩௩.--11 மத். ௮. ௪. மாற். ௭. ௩௬. 15 மத். ௰௬. ௨௰.
12 மத். ௰௬. ௰௩. லூக். ௯. ௰௮. 16 மத். ௰௬. ௨௧: ௰௭. ௨௨. லூக். ௯. ௨௨.
13 மத் ௰௪. ௨.--14 மத். ௰௬. ௰௬. யோவா. ௬. ௬௯: ௰௧. ௨௭.

மானவைகளைச் சிந்தியாமல் மனிதருக்குப் பிரி
யமானவைகளைச் சிந்திக்கிறபடியினாலே, சாத்
தானே நீ என்முன் இராமல் போவென்று அவ
னைக் கடிந்துகொண்டு,
௩௪ பின்பு தம்முடைய சீஷருடனே சனங்களை
அழைத்து, எனக்குப் பின்செல்ல விரும்புகிற
வன் எவனோ, [1]அவன் தன்னைத்தான் வெறுத்துத்
தன் சிலுவையை எற்றிக்கொண்டு, எனக்குப்
௩௫ பின் செல்லக்கடவன்.—என்னத்தினால் என்றால்,
எவனாலும் [2]தன் சீவனை இரட்சிக்க விரும்பி
னால் அதை இழந்துபோவான்; என் நிமித்தமும்
சுவிசேஷத்தின் நிமித்தமும் தன் சீவனை இழந்து
போகிறவன் எவனோ, அவனே அதை இரட்சிப்
௩௬ பான்.—அல்லாமலும் ஒருவன் உலகம் யாவை
யும் சம்பாதித்துக்கொண்டாலும், தன் சீவனை
இழந்துபோனால் அவனுக்கு என்ன லாபம் உண்
௩௭ டாகும்? — அல்லது ஒரு மனிதன் தன் சீவனை
மீட்கும்படிக்கு என்னத்தைக் கொடுப்பான்?—
௩௮ அன்றியும் [3]விபசாரமும் பாவமுமுள்ள இந்தச்
சந்ததியாருக்குள்ளே எவன் என்னையும் என் வச
னங்களையுங்குறித்து இலச்சை அடைவானோ,
[4]அவனைக்குறித்தும் மனிதனுடைய குமாரன்
தம்முடைய பிதாவின் மகிமையோடு பரிசுத்த
தூதர்களுடனேயுங்கூட வரும்பொழுது இலச்
சை அடைவான்.

## ௯. அதிகாரம்.

௧. இயேசு மறுரூபம் அடைந்தது, ௰௧. அவர் எலியாவின் வரவைக்குறித்துத் தம்முடைய சீஷர்களுக்குச் சொன்னது. ௰௪. ஊமையும், செவிடுமான ஒரு ஆவியைத் துரத்தினது. ௩௰. தம்முடைய மரணத்தையும், உயிர்த்தெழுதலையும் முன்னறிவித்தது. ௩௩. சீஷர்களுக்குத் தாழ்மையைப் படிப்பித்தது. ௩௮. அவர்களை விரோதியாதவர்களைத் தடைபண்ணாமலும், விசுவாசிகளுக்கு இடறல் உண்டாக்காமலும் இருக்கப் போதித்தது.

௧ [5]அல்லாமலும் இங்கே நிற்கிறவர்களில் சிலர்
பராபரனுடைய ஆளுகை பலத்தோடே வருகி
றதைக் காணுமளவும் [6]மரணம் அடைவதில்லை
என்று மெய்யாய் உங்களுக்குச் சொல்லுகிறேன்
என்றார்.
௨ [7]ஆறுநாளுக்குப் பின்பு, இயேசுவானவர்
பேதுருவையும் யாக்கோபையும் யோவானையும்
கூட்டித் தனித்திருக்கும்படிக்கு அவர்களை உய
ரமான மலையில் கொண்டுபோய் அவர்களுக்கு
௩ முன்பாக மறுரூபப்பட்டார். — [8]அவருடைய
வஸ்திரங்கள் பூமியிலே வண்ணான் செய்யக்கூ
டாத வண்ணமாயும் உறைந்த மழையைப்போல
வும் மிகவும் வெண்மையாய்ப் பிரகாசித்தன.—
௪ அல்லாமலும் மோசேயும் எலியாவும் அவர்க
ளுக்குக் காணப்பட்டு, இயேசுவுடனே பேசிக்
௫ கொண்டார்கள்.—அப்பொழுது பேதுரு இயேசு
வை நோக்கி, இரபீ, நாம் இங்கேயிருக்கிறது நல்
லது; ஆகையால் உமக்காகவும் மோசேயுக்காக
வும் எலியாவுக்காகவும் ஒவ்வொரு குடிலாக மூன்று
குடில்களை உண்டுபண்ணுவோம் என்றான்.—
மிகுந்த பயம் அவர்களைப் பிடித்தபடியால், அ ௬
வன் தான் பேசுகிற வசனங்களைத்தானே அறி
யாமல் அப்படிச் சொன்னான்.—அப்பொழுது ௭
ஒரு மேகம் அவர்களை மூடிக்கொண்டது; அல்
லாமலும், இவர் எனக்கு அன்பாயிருக்கிற என்
னுடைய குமாரன், இவருக்குச் செவிகொடுங்
கள் என்று அந்த மேகத்திலிருந்து ஒரு சத்தம்
உண்டாயிற்று.—உடனே அவர்கள் சுற்றிப்பார்த் ௮
தபொழுது, தங்கள் சேகரத்தில் இயேசுவையே
யன்றி மற்றொருவனையும் காணவில்லை.
பின்பு [9]அவர்கள் மலையிலிருந்து இறங்கின ௯
பொழுது, அவர் அவர்களை நோக்கி, நீங்கள்
(மலையிலே) கண்டவைகளை மனிதனுடைய
குமாரன் மரித்தோரிலிருந்து எழுந்திருப்பதற்கு
முன்னே ஒருவருக்கும் அறிவியாமல் இருங்கள்
என்று கட்டளையிட்டார்.—அவர்கள் அந்த வச ௰
னத்தை ஞாபகப்படுத்தி, மரித்தோரிலிருந்து எப்
படி உயிரோடெழுந்திருக்கலாம் என்று தங்க
ளுக்குள்ளே யோசனைபண்ணிக்கொண்டு,
பின்பு அவரை நோக்கி, [10]முன்பு எலியா வர ௰௧
வேண்டுமென்று வேதபாரகர் சொல்லுகிறார்
களே என்று வினவினார்கள். — அதற்கு அவர் ௰௨
சொன்னது: முன்பு எலியா வந்து சகலத்தை
யும் சீர்ப்படுத்தவேண்டுவதுதான்;[11]அல்லாமலும்
மனிதனுடைய குமாரன் மிகவும் பாடுபடவும்
அசட்டைபண்ணப்படவும் வேண்டுமென்று
[12]எழுதியிருக்கிறதுபோல, அவனும் பாடுபட
வேண்டும்.—[13]எலியா வந்தாயிற்றென்று உங்க ௰௩
ளுக்குச் சொல்லுகிறேன்;அவனைக்குறித்து எழு
தியிருக்கிறபடி அவனை அவர்கள் தங்கள் இஷ்
டப்படிக்குச் செய்தார்கள் என்றார்.
[14]பின்பு அவர்(மற்றச்) சீஷர்களிடத்தில் வந் ௰௪
தபொழுது, அவர்களைச் சூழ மிகுந்த சனங்க
ளையும் அவர்களுடனே தருக்கம்பண்ணின வே
தபாரகரையும் கண்டார்.—சனங்கள் எல்லாரும் ௰௫
அவரைக் கண்டவுடனே, அவர்கள் மிகவும்
பிரமித்து, ஓடிவந்து, அவரை வந்தனம் செய்தார்
கள். — அப்பொழுது அவர் வேதபாரகரை ௰௬
நோக்கி,நீங்கள் எதைக்குறித்து இவர்களுடனே
* தருக்கம்பண்ணுகிறீர்கள் என்று கேட்டார்.—
[15]அதற்குச் சனங்களில் ஒருவன் சொன்னது: ௰௭
போதகரே, ஊமையுள்ள ஆவியை அடைந்தி
ருக்கிற என் மகனை உம்மிடத்தில் கொண்டு
வந்தேன். — அந்த ஆவி எவ்விடத்திலானாலும் ௰௮
அவனைப் பிடித்துக்கொள்ளுகிறபொழுது அவ
னைத் (தரையிலே) மோதுகின்றது; † பின்பு அ
வன் (வாயினாலே) நுரைதள்ள, தன் பற்களைக்
கடித்துக்கொண்டு,சோர்ந்துபோகிறான்; அதைத்
துரத்தும்படிக்கு உம்முடைய சீஷரை வேண்

1 மத். ௰. ௩௮: ௰௬. ௨௪. லூக். ௯. ௨௩: ௰௪. ௨௭.—2 யோவா. ௰௨. ௨௫. —3 மத். ௰. ௩௩. லூக். ௯. ௨௬: ௰௨. ௯.—4 உரோ. ௧. ௰௬. ௨ தீமோ. ௧. ௮: ௨. ௰௨. 5 மத். ௰௬. ௨௮. லூக். ௯. ௨௭. 6 மத். ௨௪. ௩௰: ௨௫. ௩௩. லூக். ௨௨. ௰௮.—7 மத். ௰௭. ௧. லூக். ௯. ௨௮.—8 தானி. ௭. ௯. மத். ௨௮. ௩. ௧. ௰. தானி. ௯. ௨௧. 9 மத். ௰௭. ௯.—10 மல்கி ௪ ௫. மத். 13 மத். ௰௧. ௰௪: ௰௭. ௰௨. லூக். ௧. ௰௭. ௰௭, ௰. —11 லூக். ௨௩ ௰௧. பிலி. 14 மத். ௰௭. ௰௪. லூக். ௯. ௩௭. ௨. ௭.-12 சங். ௨௨. ௧. ஏசா. ௫௩. 15 மத். ௰௭. ௰௪. லூக். ௯. ௩௮.

* அல்லது உங்களுக்குள்ளே —† அல்லது இழிக்கின்றது.

டிக்கொண்டேன்; அப்படிச் செய்யும்படிக்கு
அவர்களால் கூடாமல் போயிற்று என்றான்.—
௰௯ அப்பொழுது அவர் திருவுளம்பற்றினது: ஆ,
விசுவாசமில்லாத சந்ததியாரே, எதுவரைக்கும்
நான் உங்களோடிருப்பேன்; எதுவரைக்கும் உங்
களில் பொறுமையாயிருப்பேன்; அவனை என்
னிடத்தில் கொண்டுவாருங்கள் என்றார்; அவனை
௨௰ அவரிடத்தில் கொண்டுவந்தார்கள்.—[1]அவரைக்
கண்டவுடனே அந்த ஆவி அவனை அலைக்கழித்
தது; மேலும் அவன் தரையிலே விழுந்து, (வா
௨௧ யினுல்) நுரைதள்ளப் புரண்டான். — அப்பொ
ழுது இயேசுவானவர் அவனுடைய தகப்பனை
நோக்கி, இப்படி இவனுக்குண்டாகி எத்தனை
நாளாயிற்று என்று கேட்டதற்கு அவன் சொன்
னது: சிறுவயது முதற்கொண்டு இருக்கிறது.—
௨௨ அல்லாமலும் இவனை அழிக்கும்படிக்கு அது
அநேகந்தரம் நெருப்பிலேயும் சலத்திலேயும் தள்
ளிற்று; அப்படியிருந்தும், நீர் ஏதாகிலும் செய்
யக்கூடுமானுல் எங்களுக்கு உருக்கமாயிரங்கி,
௨௩ உதவிசெய்தருளும் என்றான்.—இயேசுவானவர்
சொன்னது: [2]நீ விசுவாசிக்கக் கூடுமானுல் ஆ
கும்; விசுவாசிக்கிறவனுக்கு எதுவும் நடக்கும்
௨௪ என்று சொன்னவுடனே.—அந்தப் பிள்ளையின்
தகப்பன் அழுதுகொண்டு, ஆண்டவரே, விசு
வாசிக்கிறேன், என் அவிசுவாசம் நீங்கும்படி
௨௫ உதவிசெய்யும் என்று கூப்பிட்டான்.—அத்தரு
ணத்திலே சனங்கள் ஓடிவந்துகூட்டமாகிறதை
இயேசுவானவர் கண்டபொழுது, அவர் அந்த
அசுத்த ஆவியுடனே சொன்னது: ஊமையும்
செவிடுமான ஆவியே, நீ இவனை விட்டுப் புறப்
பட்டு, இனி இவனிடத்தில் பிரவேசியாமல்போ
என்று உனக்குக் கட்டளையிடுகிறேன் என்று
௨௬ சொல்லி, அதை அதட்டினுர். — அப்பொழுது
அது சத்தமிட்டு அவனை மிகவும் அலைக்கழித்துப்
புறப்பட்டுப்போயிற்று; அவன் இறந்துபோனுன்
என்று அநேகர் சொல்லத்தக்கதாகச் செத்தவ
௨௭ னைப்போலக் கிடந்தான்.—இயேசுவானவர் அவ
னுடைய கையைப்பிடித்து, அவனை எடுத்தார்,
உடனே அவன் எழுந்திருந்தான்.
௨௮ [3]பின்பு அவர் வீட்டிற்கு வந்தபொழுது அவ
ருடைய சீஷர் இரகசியமாய் அவரைநோக்கி,
நாங்கள் அதைத் துரத்தும்படிக்கு எங்களுக்கு
௨௯ ஏன் திராணியில்லை என்று கேட்டார்கள்.—அவர்
சொன்னது: செபத்தினுலும் உபவாசத்தினுலு
மேஅன்றி, மற்றொருவிதமாய் அந்தச் சாதியைத்
துரத்தக்கூடாது என்றார்.
௩௰ பின்பு அவர்கள் அவ்விடம்விட்டுப் பிரயா
ணப்பட்டுக் கலிலேயா நாட்டின் வழியாய்ப்
போகிறபொழுது, அவர் தம்முடைய சீஷர்க
ளுக்கு உபதேசம் பண்ணவேண்டுமென்று இருந்
தபடியினுலே (தாம் போகிறதை)ஒருவரும் அறி
யாமல் இருக்கவேண்டும் என்று விரும்பினுர்.—
பின்பு அவர் அவர்களை நோக்கி, [4]மனிதனுடைய ௩௧
குமாரன் மனிதர்களுடைய கையில் ஒப்புக்கொ
டுக்கப்படுவான்; அவர்கள் அவனைக் கொலைசெ
ய்வார்கள்; மரித்தபின்பு அவன் மூன்றும் நாளி
லே உயிரோடெழுந்திருப்பான் என்றார்.—அவர் ௩௨
கள் அந்தச் சங்கதியை அறிந்துகொள்ளவில்லை;
மேலும் அவரிடத்தில் விசாரிக்கிறதற்கும் பயந்
தார்கள்.
[5]பின்பு அவர் கப்பர்நாகூம் பட்டணத்தில் ௩௩
சேர்ந்து ஒரு வீட்டிலே இருந்தபொழுது, அவர்
அவர்களை நோக்கி, வழியிலே நீங்கள் எதைக்
குறித்து உங்களுக்குள்ளே தருக்கம்பண்ணிக்
கொண்டீர்கள் என்று கேட்டார். — [6]அவர்கள் ௩௪
தங்களில் எவன் பெரியவன் என்று ஒருவரோ
டொருவர் வழியிலே தருக்கம் பண்ணிக்கொண்
டபடியினுலே பேசாமல் இருந்தார்கள். — அப் ௩௫
பொழுது அவர் உளுக்காந்து பன்னிருவரையும்
அழைத்துச் சொன்னது: ஒருவன் முதல்வனுயி
ருக்க விரும்பினுல் அவன் எல்லாருக்கும் பிந்தி
னவனுமாய், எல்லாருக்கும் ஊழியக்காரனுமாய்
இருக்கக்கடவன் என்று சொல்லி, — [7]ஒரு ௩௬
பிள்ளையை எடுத்து, அதை அவர்களுக்குள்ளே
நிறுத்தி, பின்பு அதை அணைத்துக்கொண்டு,—
இப்படிப்பட்ட பிள்ளைகளில் ஒன்றை என்னு ௩௭
டைய நாமத்தினுலே சேர்த்துக்கொள்ளுகிறவன்
எவனே, அவன் என்னைச் சேர்த்துக்கொள்ளுகி
முன்; [8]அல்லாமலும் என்னைச் சேர்த்துக்கொள்
ளுகிறவன் எவனே, அவன் என்னை (மாத்திரம்)
அல்ல, என்னை அனுப்பினவரையும் சேர்த்துக்
கொள்ளுகிறுன் என்றார்.
[9]அப்பொழுது யோவான் அவரைநோக்கி, ௩௮
போதகரே, நமக்குப் பின்செல்லாமல் இருக்கிற
ஒருவன் உம்முடைய நாமத்தினுலே பசாசுக
ளைத் துரத்தக்கண்டோம்; அவன் நமக்குப்
பின்செல்லாதபடியால் அவன் அப்படிச் செய்
யாதபடிக்குச் சொன்னேம் என்றான்.—அதற்கு ௩௯
இயேசுவானவர் சொன்னது: நீங்கள் அவனுக்
குத் தடைபண்ணவேண்டாம்; [10]என்னத்தினுல்
என்றால், என்னுடைய நாமத்தினுலே அற்புதம்
செய்கிறவன் என்னைக்குறித்துச் சீக்கிரமாய்த்
தீமைசொல்லமாட்டான்.—[11]அல்லாமலும் உங் ௪௰
களுக்கு விரோதியல்லாதவன் உங்கள் பங்கில்
இருக்கிறான்.-[12] அன்றியும் நீங்கள் கிறிஸ்துவினு ௪௧
டையவர்களாய் இருக்கிறபடியினுலே, ஒருவன்
என் நாமத்தினிமித்தம் ஒரு கலயம் தண்ணீர்
உங்களுக்குக் கொடுத்தால், அவன் தன் பலனை
இழந்துபோவதில்லை என்று மெய்யாய் உங்க
ளுக்குச் சொல்லுகிறேன்.
[13]அன்றியும் என்னை விசுவாசிக்கிறவர்களா ௪௨
கிய இந்தச் சிறியவர்களில் ஒருவன் குற்றம்செய்
வதற்குக் காரணமாயிருக்கிறவன் எவனே, அ
வன் தன் கழுத்திலே எந்திரக்கல் கட்டப்பட்

1 மத். ௧௭. ௧௪. லூக். ௯. ௪௨. 2 மத். ௰௭. ௨௰. மாற். ௰௧. ௨௩. லூக். ௰௭. ௬. யோவா. ௰௧. ௪௰. 3 மத். ௰௭. ௰௯.—4 மத். ௰௭. ௨௨. லூக். ௯. ௪௪.—5 மத். ௰௮. ௧. லூக். ௯. ௪௬: ௨௨. ௨௪.

6 மத். ௨௰. ௨௬, ௨௭. மாற். ௰. ௪௩. லூக். ௯. ௪௮.—7 மத். ௰௮. ௨. மாற். ௰. ௰௬.—8 மத். ௰. ௪௰. லூக். ௯. ௪௮.—9 ௪ மோ. ௰௧. ௨௮. லூக். ௯. ௪௯.-10 ௧ கொரி. ௰௨. ௩.—11 மத். ௰௨. ௩௰.—12 மத். ௰. ௪௨.-13 மத். ௰௮. ௬. லூக். ௰௭. ௨.

டுச் சமுத்திரத்திலே தள்ளப்பட்டால் அவனுக்கு
௪௩ நன்மையாயிருக்கும். —[1]உன் கை உன்னைக்
கெடுக்கிறதற்கு ஏதுவானால் *அதைத் தறித்துப்
போடு; நீ இரண்டு கையை உடையவனாய், —
௪௪ நித்திய நரக அக்கினியிலே போவதிலும், ஊன
னாய்ச் சீவனில் பிரவேசிக்கிறதே உனக்கு நல
மாயிருக்கும்; [2]அந்நரகத்திற்குரியவர்களுடைய
புழு சாவாமலும் அக்கினி அவியாமலும் இருக்
௪௫ கின்றன.—அல்லாமலும் உன் கால் உன்னைக் கெ
டுக்கிறதற்கு ஏதுவானால் அதைத் தறித்துப்போடு;
௪௬ நீ இரண்டு காலையுடையவனாய்,—நித்திய நரக
அக்கினியிலே தள்ளப்படுகிறதிலும், சப்பாணி
யாய்ச் சீவனில் பிரவேசிக்கிறதே உனக்கு நல
மாயிருக்கும்; அந்நரகத்திற்குரியவர்களுடைய
புழு சாவாமலும் அக்கினி அவியாமலும் இருக்
௪௭ கின்றன.—அல்லாமலும் உன் கண் உன்னைக்
கெடுக்கிறதற்கு ஏதுவானால், †அதைப் பிடுங்
௪௮ கிப்போடு.—நீ இரண்டு கண்ணை உடையவனாய்
நரக அக்கினியிலே தள்ளப்படுகிறதிலும், ஒற்
றைக்கண்ணனாய்ப் பராபரனுடைய இராச்சியத்
திலே பிரவேசிக்கிறதே உனக்கு நலமாயிருக்
கும். அந்நரகத்திற்குரியவர்களுடைய புழு சா
வாமலும் அக்கினி அவியாமலும்இருக்கின்றன.-
௪௯ [3]எல்லாப் பலிகளும் உப்பினாலே சாரமாக்கப்ப
டுகிறதுபோல, யாவனும் அக்கினியினாலே சார
௫௰ மாக்கப்படுவான்.—[4]உப்பானது நல்லது; உப்பா
னது சாரமற்றதேயானால், எதினாலே அதற்குச்
சாரம் உண்டாக்குவீர்கள்; [5]உங்களுக்குள்ளே
உப்பு உண்டாயிருக்கும்படி செய்யுங்கள்; [6]அல்
லாமலும் ஒருவரோடொருவர் சமாதானமாய்
இருக்கக்கடவீர்கள் என்றார்.

## ௰. அதிகாரம்.

௨. கிறிஸ்து விவாகப்பிரிவைக்குறித்துப் பரிசேயர்களுக்கு உத்தரவு சொல்லி, ௰௩. தம்மிடத்தில் கொண்டுவரப்பட்ட பிள்ளைகளை ஆசீர்வதித்து, ௰௭. நித்திய சீவனடையும் வழியைக்குறித்து ஓர் ஐசுவரியவானுக்கு நியாயம்சொல்லி, ௨௩. ஐசுவரியத்தின் தீமைகளைக்குறித்துச் சீஷர்களுக்கு அறிவித்து, ௨௮. சுவிசேஷத்தின் நிமித்தம் யாதொன்றை வெறுத்துவிடுகிறவர்கள் தகுந்த பலன் அடைவார்களென்று கூறி, ௩௨. தம்முடைய மரணத்தையும், உயிர்த்தெழுதலையும் முன்னறிவித்து, ௩௫. பெருமையுள்ள இருவருடைய விண்ணப்பத்தை மறுத்து, அவர்களுக்கு மனத்தாழ்மையைப் படிப்பித்து, ௪௬. குருடனாயிருந்த பர்த்திமேயுவுக்குப் பார்வை அளித்தது.

௧ [7]பின்பு அவர் எழுந்து, யோர்தான் அருகேயுள்ள
யூதேயா நாட்டின் திசைகளுக்குப் போனார்; அங்
கே மறுபடியும் சனங்கள் அவரிடத்தில் கூடி
வந்தார்கள், அவரும் வழக்கத்தின்படி அவர்க
ளுக்கு மறுபடியும் உபதேசம்பண்ணினார்.
௨ [8]அல்லாமலும் பரிசேயர் அவரைச் சோதிக்
கும்படிக்கு அவரிடத்தில் வந்து, புருஷனான
வன் தன் மனைவியைத் தள்ளிவிடலாமா என்று
௩ கேட்டார்கள்.—அவர்களை அவர் நோக்கி, மோ
சே என்பவர் உங்களுக்கு எப்படிக் கட்டளை
யிட்டார் என்றார்.—அவர்கள் சொன்னது: தள்ளு ௪
தற் சீட்டை எழுதி அவளைத் தள்ளிவிடும்படிக்கு
[9]மோசே உத்தரவு கொடுத்தார் என்றார்கள். —
அப்பொழுது இயேசுவானவர் அவர்களுக்குச் ௫
சொன்னது: உங்களுடைய இருதயம் கடினமா
னபடியினாலே, மோசே உங்களுக்கு இந்தக் கட்
டளையை எழுதினார்.-உலகம் உண்டானது முதற் ௬
கொண்டு பராபரன் அவர்களை [10]ஆணும் பெண்
ணுமாகச் செய்தார்.—[11]அதின் நிமித்தம் ஒருவன் ௭
தன் தகப்பனையும் தாயையும் விட்டுத் தன் மனை
வியுடனே இசைந்திருப்பான் என்றும்,—அவர் ௮
கள் இருவரும் ஒரே சரீரமாய் இருப்பார்களென்
றும் சொல்லியிருக்கிறபடியினாலே, அவர்கள்
இருவராயிராமல் ஒரே சரீரமாயிருக்கிறார்கள்.—
ஆகையால் பராபரன் இணைத்ததை மனிதன் பிரி ௯
யாமலிருக்கக்கடவன் என்றார்.

பின்பு வீட்டிலே அவருடைய சீஷர்கள் அ ௰
தைக்குறித்து மறுபடியும் அவரிடத்தில் விசாரித்
தபொழுது,—அவர் சொன்னது: [12]தன் மனைவி ௰௧
யைத் தள்ளி வேறொருத்தியை விவாகம் பண்ணு
கிறவன் எவனோ, அவன் அவளுக்கு விரோத
மாய் விபசாரம்செய்கிறவன்.-அல்லாமலும் மனை ௰௨
வியானவள் தன் புருஷனைத் தள்ளி, வேறொரு
வனை விவாகம் பண்ணினால், அவள் விபசாரம்
செய்கிறவள் என்றார்.

[13]அப்பொழுது அவராலே தொடப்படும்படிக் ௰௩
குப் பிள்ளைகளை அவரிடத்திற்குக் கொண்டு
வந்தார்கள்; சீஷர்கள் அவைகளைக் கொண்டு
வந்தவர்களை அதட்டினார்கள்.—இயேசுவானவர் ௰௪
அதைக் கண்டு விசனம் அடைந்து, பிள்ளைகள்
என்னிடத்தில் வருகிறதற்குத் தடைபண்ணாமல்,
இடங்கொடுங்கள்; [14]பராபரனுடைய இராச்
சியம் அப்படிப்பட்டவைகளுக்கு உடைமை
யானதே. — [15]எவனாகிலும் ஒரு பிள்ளையைப் ௰௫
போலப் பராபரனுடைய இராச்சியத்தை ஏற்றுக்
கொள்ளாமலிருந்தால், அவன் அதில் பிரவேசிப்
பதில்லையென்று மெய்யாய் உங்களுக்குச் சொல்
லுகிறேன் என்று சொல்லி,—பின்பு அவைகளை ௰௬
அணைத்துக்கொண்டு, தம்முடைய கைகளை அ
வைகள்மேல் வைத்து, அவைகளை ஆசீர்வதித்
தார்.

[16]பின்பு அவர் புறப்பட்டு வழியிலே நடக் ௰௭
கையில், ஒருவன் அவரிடத்திற்கு ஓடிவந்து,
முழங்காற்படியிட்டு, நல்ல போதகரே, நித்திய
சீவனைச் சுதந்தரித்துக்கொள்ளும்படிக்கு நான்
செய்யவேண்டியது என்னவென்றுகேட்டான்.-
அவனுடனே அவர் சொன்னது: நீ என்னை நல் ௰௮
லவனென்று என் சொல்லுகிறாய்? பராபரனாகிய

1 இ மோ. ௰௩.௬-௮. மத். ௫.௨௯: ௰௮. ௮. 2 ஏசா. ௬௬. ௨௪.—3 ௩ மோ. ௨. ௧௩. எசே. ௪௩. ௨௪.—4 மத். ௫. ௰௩. லூக். ௰௪. ௩௪.—5 எபே. ௪. ௨௯. கொலோ. ௪. ௬. 6 உரோ. ௰௨. ௰௮: ௰௪ ௰௯. ௨ கொரி. ௰௩. ௰௧. எபி ௰௨. ௰௪. 7 மத். ௰௯. ௧. யோவா. ௰. ௪௰: ௰௧. ௭. 8 மத். ௰௯. ௩.—9 இ மோ. ௨௪. ௧. மத். ௫. ௩௧: ௰௯. ௭.—10 ௧ மோ. ௧. ௨௭: ௫. ௨.—11 ௧ மோ ௨. ௨௪. ௧ கொரி. ௬ ௰௬. எபே. ௫. ௩௧.—12 மத். ௫. ௩௨: ௰௯. ௯. லூக். ௰௬. ௰௮. உரோ. ௭. ௩. ௧ கொரி. ௭. ௰௧.—13 மத். ௰௯. ௰௩. லூக். ௰௮. ௰௫.—14 ௧ கொரி. ௰௪. ௨௰. ௧ பே. ௨. ௨.—15 மத். ௰௮. ௩.—16 மத். ௰௯. ௰௬. லூக். ௰௮. ௰௮.

*அல்லது கெடுத்தால்.—† அல்லது கெடுத்தால்.

ஒருவரேயன்றி, மற்றொருவனும் நல்லவன் அல்
௧௯ லவே.—[1]விபசாரம் பண்ணாமல் இருப்பாயாக;
கொலைசெய்யாதிருப்பாயாக; களவுசெய்யாதி
ருப்பாயாக; பொய்ச்சாட்சி சொல்லாதிருப்பா
யாக; வஞ்சனைசெய்யாதிருப்பாயாக; உன் தகப்
பனையும் தாயையும் கனம்பண்ணுவாயாக என்
றிருக்கிற கற்பனைகளை அறிந்திருக்கிறாயே என்
௨௰ றார்.—அதற்கு அவன் சொன்னது: போதகரே,
அவைகளையெல்லாம் நான் என் சிறுவயது மு
௨௧ தல் கைக்கொண்டுவருகிறேன் என்றான்.—அப்
பொழுது இயேசுவானவர் அவனைப்பார்த்து, அ
வனிடத்தில் அன்புகூர்ந்து சொன்னது: உன்
னிடத்தில் பின்னும் ஒன்று குறைவாய் இருக்
கிறது; [2]நீ போய் உனக்கு உண்டானவைகளை
விற்று, பரமண்டலத்திலே பொக்கிஷத்தை அ
டைந்துகொள்ளத்தக்கதாக, அவைகளை ஏழைக
ளுக்குக் கொடுத்து, பின்பு வந்து, சிலுவையை
எடுத்துக்கொண்டு, எனக்குப் பின்செல்லுவா
௨௨ யாக என்றார்.—அவன் மிகுந்த ஆஸ்திகளை உடை
யவனானபடியினாலே, அந்த வசனத்தைக் கேட்
டு, மனம் நொந்து, துக்கத்தோடே அவரை விட்
டுப் போனான்.

௨௩ [3]அப்பொழுது இயேசுவானவர் சுற்றிப்பா
ர்த்து, தம்முடைய சீஷர்களுடனே சொன்னது:
பொருள்களைப் பெற்றவர்கள் பராபரனுடைய
இராச்சியத்தில் பிரவேசிக்கிறது மிகவும் அரிது
௨௪ என்றார்.—அல்லாமலும் சீஷர்கள் அந்த வசனங்
களைக்குறித்துத் திகைத்தபொழுது, இயேசுவா
னவர் அவர்களுக்குப் பின்னும் சொன்னது:
பிள்ளைகளே, [4]பொருள்களின்மேல் நம்பிக்கை
யாயிருக்கிறவர்கள் பராபரனுடைய இராச்சியத்
தில் பிரவேசிக்கிறது மிகவும் அரிதாகவே இருக்
௨௫ கிறது.—ஐசுவரியமுள்ளவன் பராபரனுடைய
இராச்சியத்தில் பிரவேசிக்கிறதிலும், ஒட்டக
மானது ஒரு ஊசியின் காதில் நுழைகிறது எளி
௨௬ தாய் இருக்கிறதென்றார்.—அவர்கள் அதிகமாய்ப்
பிரமித்து, அப்படியானால் இரட்சிக்கப்படுபவர்
கள் யாரென்று தங்களுக்குள்ளே சொல்லிக்
௨௭ கொண்டார்கள்.—அப்பொழுது இயேசுவானவர்
அவர்களைப் பார்த்து, மனிதர்களுக்கு அது கூ
டாத காரியந்தான்; [5]பராபரனே, எதையும் செய்
யத் திராணியுள்ளவர், ஆகையால் பராபரனுக்கு
அது கூடாதகாரியமல்ல என்றார்.

௨௮ [6]பின்பு பேதுரு அவரை நோக்கி, இதோ
நாங்கள் எல்லாவற்றையும் விட்டு உமக்குப் பின்
௨௯ சென்றோமே என்றான்.—அதற்கு இயேசுவான
வர் சொன்னது: என் நிமித்தமும் சுவிசேஷத்
தின் நிமித்தமும் வீட்டையாவது, சகோதரர்களை
யாவது, சகோதரிகளையாவது, தகப்பனையாவது,
தாயையாவது, மனைவியையாவது, பிள்ளைகளை
௩௰ யாவது, நிலங்களையாவது விட்டு,—[7]பின்பு இம்
மையிலே துன்பங்களுடனே கூட நூறு மடங
காய் வீடுகளையும், சகோதரர்களையும், சகோதரி
களையும், தாய்களையும், பிள்ளைகளையும், நிலங்க
ளையும், மறுமையிலே நித்தியசீவனையும், பெற்
றுக்கொள்ளாமல் இருக்கிறவன் ஒருவனும் இல்
லையென்றும்,—[8]முந்தினோராகிய அநேகர் பிந்தி ௩௧
னோராயும், பிந்தினோர் முந்தினோராயும் இருப்
பார்களென்றும், மெய்யாய் உங்களுக்குச் சொல்
லுகிறேன் என்றார்.

[9]அன்றியும் அவர்கள் எருசலேம் நகரத்திற் ௩௨
குப் பிரயாணமாய்ப் போனபொழுது, இயேசு
வானவர் அவர்களுக்கு முன்னே நடந்தார்; அ
வர்கள் பிரமித்துப் பயத்தோடே அவருக்குப்
பின்சென்றார்கள்; [10]அப்பொழுது அவர் பன்
னிருவரையும் மறுபடியும் அழைத்துத் தமக்குச்
சம்பவிக்கும் காரியங்களை அவர்களுக்கு அறிவித்
துச் சொன்னது:— இதோ, எருசலேமுக்குப் ௩௩
போகிறோம், அங்கே மனிதனுடைய குமாரன்
பிரதான ஆசாரியருக்கும் வேதபாரகருக்கும்
ஒப்புக்கொடுக்கப்படுவான்; அவர்கள் அவனை
மரண ஆக்கினைக்கு உட்படுத்தும்படிக்குத் தீர்ப்
புச்செய்து, அவனைப் புறத்தேசத்தாருக்கு ஒப்புக்
கொடுப்பார்கள். — அவர்கள் அவனை இழிவு ௩௪
செய்து, அவனை வாரினால் அடித்து, அவன் மே
லே துப்பி, அவனைக் கொலைசெய்வார்கள்; ஆகி
லும் மூன்றாம் நாளிலே அவன் உயிரோடெழுந்
திருப்பான் என்றார்.

[11]பின்பு செபெதேயுவின் குமாரர்களாகிய ௩௫
யாக்கோபும் யோவானும் அவரிடத்தில் வந்து,
போதகரே, நாங்கள் வேண்டிக்கொள்ளுகிறபடி
நீர் எங்களுக்குச் செய்யவேண்டுமென்று விரும்
புகிறோம் என்றார்கள். — அதற்கு அவர், நான் ௩௬
உங்களுக்குச் செய்ய நீங்கள் விரும்புகிறது என்
னவென்றார்.—அவர்கள் சொன்னது: நீர் மகி ௩௭
மையை அடைந்திருக்கும்பொழுது, எங்களில்
ஒருவன் உம்முடைய வலதுபக்கத்திலேயும், ஒரு
வன் உம்முடைய இடதுபக்கத்திலேயும் இருக்க
அனுக்கிரகம் பண்ணவேண்டும் என்று சொன்
னார்கள்.—இயேசுவானவர் சொன்னது: நீங்கள் ௩௮
கேட்டது உங்களுக்கே தெரியவில்லை; நான்
பானம்பண்ணும் பாத்திரத்தில் பானம்பண்ண
வும், நான் பெற்றுக்கொள்ளும் ஸ்நானத்தைப்
பெற்றுக்கொள்ளவும், உங்களால் கூடுமா என்று
சொன்னதற்கு,—அவர்கள் கூடும் என்றார்கள்; ௩௯
அப்பொழுது இயேசுவானவர் அவர்களை நோக்
கி, நான் பானம்பண்ணும் பாத்திரத்தில் நீங்க
ளும் பானம்பண்ணுவீர்கள், அல்லாமலும் நான்
பெற்றுக்கொள்ளும் ஸ்நானத்தை நீங்களும்
பெற்றுக்கொள்வீர்கள், அது மெய்தான்.—ஆனா ௪௰
லும் குறிக்கப்பட்டவர்களுக்கேயன்றி, (மற்றொ
ருவருக்கும்) என் வலதுபக்கத்திலும் என் இடது

1 ௨ மோ. ௨௰.௰௪. உரோ.௰௩.௯. 4 யோபு. ௩௧. ௨௪. சங். ௬௨. ௰:
2 மத். ௬.௰௯,௨௰: ௰௯.௨௧. லூக். ௰௨. ௩௩: ௰௬. ௯.—3 மத். ௰௯. ௨௩. லூக். ௰௮. ௨௪.
௬௨.௰. ௧ தீமோ. ௬.௰௭.
5 எரே.௩௨.௰௭. மத் ௰௯.௨௬. லூக் ௧. ௩௭.

6 மத். ௰௯. ௨௭ லூக். ௰௮. ௨௮. லூக்.௰௮.௩௧.—10 மார்.௮.௩௧:௯.
7 ௨ நாளா. ௨௫. ௯. லூக். ௰௮. ௩௦. லூக். ௯. ௨௨: ௰௮. ௩௧.
௩௰.—8 மத். ௰௯. ௩௰: ௨௰. ௰௬. 11 மத். ௨௰. ௨௰.
லூக். ௰௩ ௩௰.—9 மத். ௨௰.௰௭.

பக்கத்திலும் இருப்பதற்கான (கனத்தை) நான்
கொடுக்கக்கூடாதென்றார்.
௪௧ [1]மற்றப் பத்துப்பேரும் அதைக் கேள்விப்
பட்டு, யாக்கோபின்மேலும் யோவான்மேலும்
௪௨ கோபமாயிருக்கத் தொடங்கினார்கள்.—அப்பொ
ழுது இயேசுவானவர் அவர்களை அழைத்துச்
சொன்னது: நீங்கள் அறிந்திருக்கிறபடி, உலகத்
தாருக்குள்ளே பிரபுக்கள் * என்னப்பட்டிருக்கி
றவர்கள் இறுமாப்பாய் ஆளுகிறார்கள்; [2]அல்
லாமலும் அவர்களுடைய பெரியோர்கள் இஷ்
டப்படிக்கு அவர்கள்மேல் அதிகாரம் செலுத்து
௪௩ கிறார்கள்.—[3]அப்படி உங்களுக்குள்ளே இருக்
கக்கூடாது; உங்களுக்குள்ளே பெரியவனாய்
இருக்க விரும்புகிறவன், உங்கள் ஊழியக்கார
௪௪ னாய் இருக்கக்கடவன்.—உங்களில் முதலாளி
யாயிருக்க விரும்புகிறவன், எல்லாருக்கும் அடி
௪௫ மையாய் இருக்கக்கடவன். — [4]மனிதனுடைய
குமாரனும், ஊழியம் அடையும்படிக்கு வரா
மல், ஊழியம்செய்யும்படிக்கும் [5]அநேகரை மீட்
கும்பொருளாகத் தன்னுடைய சீவனைக் கொடுக்
கும்படிக்கும் வந்தானே என்றார்.
௪௬ [6]பின்பு அவர்கள் எரிகோபட்டணத்திற்கு
வந்தார்கள், அவரும் அவருடைய சீஷர்களும்
மிகுந்த சனங்களும் அதை விட்டுப் போனபொ
ழுது, தீமேயு என்பவனுடைய மகனாகிய குருட
னான பருத்திமேயு என்பவன் வழியிலே பிச்சை
௪௭ கேட்டுக்கொண்டிருக்கையில்,—நாசரேத்தூராரா
கிய இயேசுவானவர் வருகிறாரென்று கேள்விப்
பட்டு, இயேசுவே, தாவீதின் குமாரனே, என்
மேல் இரக்கமாயிரும் என்று கூப்பிடத்தொடங்
௪௮ கினான்.—அவன் பேசாமலிருக்கும்படிக்கு அநே
கர் அவனைக் கடிந்துகொண்டார்கள்; அப்படியி
ருந்தும் அவன், தாவீதின் குமாரனே, என்மேல்
இரக்கமாயிரும் என்று அதிகமாய்க் கூப்பிட்
௪௯ டான்.—அப்பொழுது இயேசுவானவர் நின்று,
அவனை அழைத்துவரச்சொன்னார்; அந்தப்படி
சிலர் அவனை அழைத்து, திடமாயிரு எழுந்திரு,
௫௰ அவர் உன்னை அழைக்கிறார் என்றார்கள்.—உட
னே அவன் தன் வஸ்திரத்தைத் தள்ளி, எழுந்து,
௫௧ இயேசுவானவரிடத்தில் வந்தான்.—அவர் அவ
னை நோக்கி நான் உனக்கு என்ன செய்யவேண்
டும் என்றிருக்கிறாய் என்றார்; குருடனானவன்
சொன்னது: இரபூனீ, நீர் எனக்குப் பார்வை
௫௨ கொடுக்கவேண்டும் என்றான்.—இயேசுவானவர்
சொன்னது: [7]உன் விசுவாசம் உன்னைக் குண
மாக்கிற்று, † நீ போகலாம் என்றார்; உடனே
அவன் பார்வை அடைந்து, வழியிலே இயேசு
வுக்குப் பின்சென்றான்.

## ௰க. அதிகாரம்.

௧. கிறிஸ்து சிறப்பாய் எருசலேமுக்குள் பிரவேசித்தது. ௰௨. கனியற்ற அத்திமரத்தைச் சபித்தது. ௰௫. தேவாலயத்தைச் சுத்திகரித்தது. ௨௰. விசுவாசத்தில் உறுதிகொள்ளவும், பகைஞரை மன்னிக்கவும், சீஷர்களுக்குப் போதித்தது, ௨௭. பராபரனால் அனுப்பப்பட்ட மனுஷனாகிய யோவானுடைய சாட்சியினால் அவருடைய செய்கைகளுக்கு உதாரணம் கொடுத்தது.

[8]பின்பு அவர்கள் எருசலேமுக்குச் சமீபமாய்ப் ௧
போய், ஒலீவமலை அருகே இருக்கிற பெது
பாகே பெத்தானியா ஊர்களுக்குச் சேர்ந்த
பொழுது, அவர் தம்முடைய சீஷரில் இரண்டு
பேரை நோக்கி,—உங்களுக்கு முன்பாக இருக் ௨
கிற அந்தக் கிராமத்திற்குப் போங்கள்; நீங்கள்
அதில் பிரவேசித்தவுடனே, ஒருவரும் ஏறாமல்
கட்டப்பட்டிருக்கிற (கழுதையின்) குட்டியைக்
காண்பீர்கள்; அதின் கட்டவிழ்த்து அதைக்
கொண்டுவாருங்கள்.—ஒருவன், ஏன் இப்படிச் ௩
செய்கிறீர்கள் என்று உங்களுடனே சொன்னால்,
ஆண்டவருக்கு இது வேண்டும் என்று சொல்
லுங்கள்; உடனே அவன் அதை இவ்விடத்திற்கு
அனுப்பிவிடுவான் என்று அனுப்பினார்.—அந் ௪
தப்படி அவர்கள் போய், வெளியே தெருவில்
கதவின் அருகே கட்டப்பட்டிருக்கிற (கழுதை
யின்) குட்டியைக் கண்டு, அதின் கட்டவிழ்க்கி
றபொழுது,— அங்கே நின்ற சிலர் அவர்களை ௫
நோக்கி, நீங்கள் ஏன் இதின் கட்டவிழ்க்கிறீர்
கள் என்றார்கள். — இயேசுவானவர் தங்களுக் ௬
குக் கட்டளையிட்டபடி சீஷர் அவர்களுக்கு
உத்தரவு சொன்னார்கள்; அப்பொழுது அவர்
களை விட்டுவிட்டார்கள். — ஆகையால் சீஷர் ௭
அந்தக் குட்டியை இயேசுவினிடத்திற்குக் கொ
ண்டுவந்து, தங்கள் வஸ்திரங்களை அதின்மேல்
போட்டார்கள்; அவர் அதின்மேல் ஏறிப்போ
னார். — [9]அப்பொழுது அநேகர் தங்கள் வஸ்தி ௮
ரங்களை வழியிலே விரித்தார்கள்; சிலர் மரங்
களின் கிளைகளை முறித்து வழியிலே பரப்பி
னார்கள்.—அல்லாமலும் முன்நடப்பாரும் பின் ௯
நடப்பாரும், [10]ஓசன்னா, பராபரனுடைய நாமத்
தினாலே வருகிறவர் தோத்திரம்செய்யப்படக்
கடவர்.—பராபரனுடைய நாமத்தினாலே வரு ௰
கிற நம்முடைய பிதாவாகிய தாவீதின் ஆளுகை
வாழ்த்திக்கொள்ளப்படக்கடவது; [11] உன்னத
மான இடங்களிலே ஓசன்னா என்று கூப்பிட்
டார்கள்.
[12]அப்பொழுது இயேசுவானவர் எருசலேமி ௰௧
லேயும் தேவாலயத்திலேயும் பிரவேசித்தார்; அங்
கே அவர் எல்லாவற்றையும் சுற்றிப்பார்த்து,
பின்பு சாயந்தரமானபொழுது பன்னிருவருட
னே புறப்பட்டுப் பெத்தானியா ஊருக்குப்
போனார்.
[13]மறுநாளிலே அவர்கள் பெத்தானியா ஊரை ௰௨
விட்டுப் புறப்பட்டபொழுது அவருக்குப் பசி
உண்டாயிற்று.—[14]உடனே அவர் தூரத்திலேயுள் ௰௩
ள இலையையுடைய அத்திமரத்தைக் கண்டு, அதி
லே ஒரு கனியையாகிலும் கண்டு பறித்துக்கொள்

1 மத். ௨௰. ௨௪.—2 லூக். ௨௨. ௨௫. ௰௪. பிலி. ௨. ௭.—5 மத். ௨௰. 3 மத். ௨௰. ௨௬, ௨௮. மாற். ௯. ௩௫. ௨௮. ௧ தீமோ. ௨. ௬. தீத். ௨. ௰௪. லூக். ௬. ௪௮.—4 யோவா. ௰௩. 6 மத். ௨௰. ௨௯. லூக். ௰௮. ௩௫.

7 மத். ௯. ௨௨. மாற். ௫. ௩௪. 8 மத். ௨௧. ௧. லூக். ௰௯. ௨௯. யோவா. ௰௨. ௰௪.—9 மத். ௨௧. ௮. 10 சங். ௱௰௮. ௨௬.—11 சங். ௱௪௮. ௧. 12 மத். ௨௧. ௰௨.—13 மத். ௨௧. ௰௮. 14 மத். ௨௧. ௰௯.

* அல்லது நல்லவர்கள்.—† அல்லது உன்னை இரட்சித்தது.

வலாம் என்று அவ்விடத்திற்குப் புறப்பட்டு,
அதின் அருகே சேர்ந்தபொழுது, அத்திமரங்கள்
கனிகொடுக்கிற காலம் இல்லாதபடியால் இலை
களையே அல்லாமல் மற்றொன்றையும் அவர் கா
௰௪ ணவில்லை. — அப்பொழுது இயேசுவானவர்
அதை நோக்கி, இனி ஒருக்காலும் ஒருவனும்
உன்னிடத்திலே கனியைப் புசியாதிருப்பானாக
என்று சொன்னார்; அதை அவருடைய சீஷர்
கள் கேட்டார்கள்.

௰௫ [1]பின்பு அவர்கள் எருசலேமுக்கு வந்தார்கள்;
அங்கே இயேசுவானவர் தேவாலயத்தில் பிரவே
சித்து, அதிலே விற்பாரையும் கொள்வாரையும்
துரத்தி, காசுக்காரருடைய பலகைகளையும் புறாக்
களை விற்கிறவர்களுடைய ஆசனங்களையும்
௰௬ கவிழ்த்து,—ஒருவரும் ஒரு பாத்திரத்தைத் தேவா
லயத்தின் வழியாய்க் கொண்டுபோகிறதற்கு இ
௰௭ டங்கொடாமல் இருந்தார்.—[2]அல்லாமலும், என்
னுடைய ஆலயம் எல்லாத் தேசத்தாரும் செபம்
பண்ணும்படிக்கான ஆலயம் என்னப்படும் என்
று* எழுதியிருக்கின்றதல்லவா? [3]நீங்கள் இதைக்
கள்ளர் குகையாக்கினீர்கள் என்று அவர்களுக்
௰௮ குப் போதித்தார்.—[4]வேதபாரகரும் பிரதான ஆ
சாரியரும் அதைக் கேட்டபொழுது, [5]சனங்கள்
எல்லாரும் அவருடைய உபதேசத்தைக்குறித்து
ஆச்சரியப்பட்டபடியினாலே, அவருக்குப் பயந்
து, அவரை மாய்க்கும்படிக்கு வகைதேடினார்
௰௯ கள்.—சாயந்தரமானபொழுது அவர் நகரத்திற்
குப் புறம்பே போனார்.

௨௰ [6]மறுநாளிலே அவர்கள் திரும்பிப் புறப்பட்ட
பொழுது, அந்த அத்திமரம் வேரோடே பட்டுப்
௨௧ போனதைக் கண்டார்கள்.—உடனே பேதுரு
நினைவுகொண்டு அவரை நோக்கி, இரபீ, இதோ,
நீர் சபித்த அத்திமரம் பட்டுப்போயிற்று என்
௨௨ றான்.—அதற்கு மாறுத்தரமாக அவர் அவர்களு
டனே சொன்னது: பராபரனில் †விசுவாசமாயி
௨௩ ருங்கள். — ஏனென்றால், [7]எவனாகிலும் இந்த
மலையைநோக்கி, நீ எழுந்து சமுத்திரத்திலே வி
ழுவாயாக என்று சொல்லி, தன் இருதயத்திலே
ஒன்றும் சந்தேகப்படாமல், தான் சொன்னபடி
யே நடக்கும் என்று விசுவாசித்தால், அந்தச்
சொற்படியே அவனுக்கு நடக்கும் என்று மெய்
௨௪ யாய் உங்களுக்குச் சொல்லுகிறேன். —ஆதலால்
நான் (பின்னும்) உங்களுக்குச் சொல்லுகிறதா
வது: செபம்பண்ணும்பொழுது [8]நீங்கள் வேண்
டிக்கொள்ளும் யாவையும் பெற்றுக்கொள்ளலாம்
என்று விசுவாசியுங்கள், அப்பொழுது அவை
௨௫ கள் உங்களுக்கு உண்டாகும்.—அல்லாமலும்
பரமண்டலத்திலிருக்கிற உங்கள் பிதா உங்கள்
தப்பிதங்களை மன்னிக்கும்படிக்கு நீங்கள் செ
பம்பண்ண எழுந்து நிற்கும்பொழுது, ஒருவன்
மேல் உங்களுக்கு விசனம் உண்டானால் [9]மன்
னித்துக்கொள்ளுங்கள்.—நீங்கள் [10]மன்னியாதி ௨௬
ருப்பீர்களானால், பரமண்டலங்களிலிருக்கிற
உங்கள் பிதாவும் உங்கள் தப்பிதங்களை மன்னி
யாதிருப்பார் என்றார்.

[11]அவர்கள் மறுபடியும் எருசலேமுக்கு வந்த ௨௭
பின்பு அவர் தேவாலயத்திலே உலாவுகையில்,
பிரதான ஆசாரியரும் வேதபாரகரும் மூப்பரும்
அவரிடத்தில் வந்து,— எந்த அதிகாரத்தினாலே ௨௮
நீர் இவைகளைச் செய்கிறீர்? இவைகளைச் செய்கி
றதற்கு உமக்கு அதிகாரத்தைக்கொடுத்தவர் யார்
என்றார்கள்.—அவர்களுடனே இயேசுவானவர் ௨௯
சொன்னது: நானும் உங்களிடத்தில் ஒரு காரி
யத்தைக் ‡ கேட்கிறேன்; அதற்கு நீங்கள் மாறுத்
தரம் சொல்லுங்கள், அப்பொழுது நான் இவை
களைச் செய்கிற அதிகாரத்தையும் உங்களுக்கு
அறிவிப்பேன்.—யோவான் கொடுத்த ஸ்நானம் ௩௰
பராபரனாலே உண்டானதோ, மனிதர்களாலே
உண்டானதோ அதைச் சொல்லுங்கள் என்றார்.—
அப்பொழுது அவர்கள், அது பராபரனால் உண் ௩௧
டானதென்றால், இவர், ஏன் நீங்கள் அவனை
விசுவாசிக்கவில்லை என்பார்.—அது மனிதரால் ௩௨
உண்டானதென்றால், எல்லாரும் [12]யோவானைத்
தீர்க்கதரிசியென்று எண்ணுகிறபடியால், அவர்
களாலே நமக்கு மோசம் வரும் என்று தங்களுக்
குள்ளே யோசனைபண்ணிக்கொண்டு,—பின்பு ௩௩
இயேசுவானவரை நோக்கி, எங்களுக்குத் தெரி
யாது என்றார்கள்; அப்பொழுது இயேசுவான
வர் அவர்களுடனே சொன்னது: (அப்படியா
னால்) நானும் இவைகளைச் செய்கிற அதிகாரத்
தின் தன்மை இன்னதென்று உங்களுக்குச்
சொல்லமாட்டேன் என்றார்.

## ௰௨. அதிகாரம்.

௧. பொல்லாத தோட்டக்காரர்களுக்கு விட்ட திராட்சத்தோட்டத்தின் உவமையினால் கிறிஸ்து யூதர்களுக்கும், அந்நியர்களுக்கும் அடுத்த நிலைமையை எடுத்துக் காண்பித்தது. ௰௩. இராயனுக்கு வரிகொடுப்பதைக் குறித்துப் பரிசேயருக்கும் ஏரோதேயின் மனுஷருக்கும் உத்தரவுசொன்னது. ௰௮. உயிர்த்தெழுதல் இல்லையென்று சாதித்த சதுசேயருடைய தப்பறையைக் காண்பித்து, அந்த உபதேசத்தை நிச்சயித்தது. ௨௮. பிரதான கற்பனை ஏதென்று கேட்ட வேதபாரகனுக்கு உத்தரவு அருளிச்செய்தது. ௩௫. கிறிஸ்துவைக்குறித்து வேதபாரகர் கொண்டிருந்த தாற்பரியத்தைக் கண்டித்தது. ௩௮. அவர்களுடைய பெருமையையும், மாயத்தையுங்குறித்துச் சனங்களை எச்சரித்தது. ௪௧. இரண்டு காசைத் தருமப்பெட்டியில் போட்ட ஏழை விதவையைப் புகழ்ந்தது.

[13]அல்லாமலும் அவர் உவமைகளாய் அவர்க ௧
ளுடனே சொன்னது: ஒரு மனிதன் ஒரு தி
ராட்சத்தோட்டத்தை உண்டுபண்ணி, அதைச்
சுற்றி வேலி அடைத்து, அதில் ஆலையை நாட்
டி, ஒரு கோபுரத்தையும் கட்டி, பின்பு அதைத்
தோட்டக்காரர் வசமாய்விட்டுப் புறத்தேசத்
திற்குப் போனான். — தகுதியான காலத்திலே ௨

1 மத். ௨௧. ௰௨. லூக். ௰௯. ௪௫. யோவா. ௨. ௰௪.
2 ஏசா ௫௬. ௭. —3 எரே. ௭. ௰௧.
4 மத். ௨௧. ௪௫, ௪௬. லூக். ௰௯. ௪௭.
5 மத். ௭. ௨௮, ௨௯. மாற். ௧. ௨௨. லூக். ௪. ௩௨.
6 மத். ௨௧. ௰௯.—7 மத். ௰௭. ௨௰: ௨௧. ௨௧. லூக். ௰௭. ௬.
8 மத். ௭. ௭. லூக். ௰௧. ௯. யோவா. ௰௪. ௰௩: ௰௫. ௭: ௰௬. ௨௪. யாக். ௧. ௫, ௬.
9 மத். ௬. ௰௪. கொலோ. ௩. ௰௩.
10 மத். ௰௮. ௩௫.
11 மத். ௨௧. ௨௩. லூக். ௨௰. ௧.
12 மத். ௩. ௫: ௰௪. ௫. மாற். ௬. ௨௰.
13 மத். ௨௧. ௩௩. லூக். ௨௰. ௯.

* அல்லது செபம்பண்ணும்படிக்கு எல்லாத் தேசத்தாருடையதென்று.—† அல்லது பராபரனுடைய.—‡ அல்லது கேள்வி.

அந்தத் திராட்சத்தோட்டத்தின் கனிகளில் ஒரு
பாகத்தைத் தோட்டக்காரரிடத்தில் வாங்கிக்
கொள்ளும்படிக்கு, அவன் ஒரு ஊழியக்காரனை
௩ அவர்களிடத்திற்கு அனுப்பினான். — அவர்கள்
அவனைப் பிடித்து அடித்து, வெறுமையாய் அ
௪ னுப்பினார்கள். — மறுபடியும் அவன் வேறொரு
ஊழியக்காரனை அவர்களிடத்தில் அனுப்பி
னான்; அவன்மேல் அவர்கள் கல்லெறிந்து, தலை
யில் காயப்படுத்தி, கனஈனத்தோடே அவனை
௫ அனுப்பினார்கள்.—பின்பு அவன் வேறொருவனை
அனுப்பினான், அவனை அவர்கள் கொலைசெய்
தார்கள்; (அப்படி அவனால் அனுப்பப்பட்ட)
அநேகரில் சிலரை அடித்து, சிலரைக் கொலை
௬ செய்தார்கள்.—அவனுக்குப் பிரியமான ஒரே கு
மாரன் இருந்தான், ஆதலால் அவன் தன் குமார
னுக்கு அஞ்சுவார்கள் என்று எண்ணி, கடைசி
யிலே அவனையும் அவர்களிடத்தில் அனுப்பி
௭ னான்.—அந்தத் தோட்டக்காரர் (அவனைக் கண்
டு,) இவன் சுதந்தரவாளி, இவனுடைய சுதந்தரம்
நமது வசமாகும்படிக்கு, நாம் இவனைக் கொலை
செய்யக்கடவோம் வாருங்கள் என்று தங்களுக்
௮ குள்ளே பேசிக்கொண்டு, — பின்பு அவனைப்
பிடித்துக் கொலைசெய்து, திராட்சத்தோட்டத்
௯ திற்குப் புறம்பே தள்ளினார்கள்.—ஆனபடியினா
லே அந்தத் தோட்டத்தின் எசமான் என்னசெய்
வான்? அவன் வந்து அந்தத் தோட்டக்காரரை
அழித்து, தோட்டத்தை மற்றவர்களுக்கு ஒப்புக்
௰ கொடுப்பானல்லவா? — [1]வீடு கட்டுகிறவர்கள்
ஆகாதென்று தள்ளின கல்லே மூலைக்குத் தலை
௰௧ யான கல்லாயிற்று.—அது பராபரனாலே ஆயிற்று,
அது நம்முடைய கண்களுக்கு ஆச்சரியமாய்
இருக்கின்றதென்கிற வேதவாக்கியத்தை நீங்கள்
வாசிக்கவில்லையா என்றார்.

௰௨ அப்பொழுது அவர்கள் தங்களைக்குறித்து
இந்த உவமையைச் சொன்னார் என்று அறிந்தப
டியால், [2]அவரைப் பிடிக்க மனதாயிருந்தார்கள்;
ஆனாலும் சனங்களுக்குப் பயந்து அவரை விட்
டுப் போனார்கள்.

௰௩ [3]பின்பு அவர்கள் வசனங்களினாலே அவ
ரை அகப்படுத்தும்படிக்கு, சில பரிசேயரையும்
ஏரோதேயின் மனிதரையும் அவரிடத்தில் அனுப்
௰௪ பினார்கள். — அவர்கள் வந்து அவரை நோக்கி,
போதகரே, நீர் மனிதருடைய முகத்தைப் பா
ராமல், பராபரனுடைய மார்க்கத்தைச் சத்திய
மாய் உபதேசிக்கிறவராய் இருக்கிறீர்; ஆகை
யால் நீர் சத்தியமுடையவருமாய், ஒருவரை
யுங்குறித்துக் கவையில்லாதவருமாய் இருக்கிறீர்
என்று அறிந்திருக்கிறோம்; இராயனுக்கு வரிப்
பணத்தைக் கொடுக்கிறது நியாயமோ இல்லை
௰௫ யோ?—நாம் கொடுக்கவேண்டுமா, கொடாமல்
இருக்கவேண்டுமோ என்றார்கள், அவர் அவர்க
ளுடைய மாயத்தை அறிந்து, நீங்கள் என்னை
ஏன் சோதிக்கிறீர்கள்? நான் பார்க்கும்படிக்கு,
*ஒரு தெநாரியு எனக்குக் கொண்டுவாருங்கள்
என்றார். — அவர்கள் கொண்டுவந்தார்கள்; அப் ௰௬
பொழுது அவர் சொன்னது: இந்தச்சொரூபமும்
மேலெழுத்தும் யாருடையவைகள் என்றார்; அ
தற்கு அவர்கள், இராயனுடையவைகள் என்றார்
கள். — இயேசுவானவர் சொன்னது: இராயனு ௰௭
டையவைகளை இராயனுக்கும், பராபரனுடைய
வைகளைப் பராபரனுக்கும் செலுத்துங்கள் என்
று சொன்னார்; அப்பொழுது அவரைக்குறித்து
ஆச்சரியப்பட்டார்கள்.

[4]பின்பு உயிரோடெழுந்திருக்கும் மறுமை இல் ௰௮
லையென்று சொல்லுகிற [5]சதுசேயர் என்பவர்கள்
அவரிடத்தில் வந்து, — [6]போதகரே, ஒருவன் ௰௯
பிள்ளைகள் இல்லாமல் தன் மனைவியை விட்டு
இறந்தால், அவனுடைய சகோதரன் அவன் மனை
வியை விவாகம்பண்ணி, அவனுக்குச் சந்ததி
உண்டாக்கவேண்டும் என்று நமக்கு மோசே
கட்டளையிட்டிருக்கிறாரே. — ஓரிடத்தில் எழு ௨௰
பேர் சகோதரர் இருந்தார்கள்; அவர்களில் மூத்
தவன் ஒரு பெண்ணை விவாகம்பண்ணி, பின்பு
சந்ததியில்லாமல் இறந்துபோனான். — அப்பொ ௨௧
ழுது இரண்டாம் சகோதரன் அவளை விவாகம்
பண்ணி, சந்ததியில்லாமல் இறந்துபோனான்;
மூன்றாம் சகோதரனும் அப்படிப் போனான்.—
எழுபேரும் அவளை விவாகம்பண்ணிச் சந்ததி ௨௨
யில்லாமல் போனார்கள்; எல்லாருக்கும் பின்பு
அந்தப் பெண்ணும் இறந்துபோனாள். — ஆகை ௨௩
யால் அவர்கள் உயிரோடெழுந்திருக்கும் காலத்
திலே, எழுபேருக்கும் மனைவியாயிருந்த அவள்
அவர்களில் எவனுக்கு மனைவியாயிருப்பாள்
என்று கேட்டார்கள். — அவர்களுடனே இயே ௨௪
சுவானவர் சொன்னதாவது: நீங்கள் வேதவாக்கி
யங்களையும் பராபரனுடைய வல்லமையையும்
அறியாமல் இருக்கிறபடியால் அல்லவா வஞ்சிக்
கப்பட்டிருக்கிறீர்கள்?—மரித்தவர்கள் உயிரோ ௨௫
டெழுந்திருக்கும்பொழுது, பெண்கொள்வதும்
கொடுப்பதும் இராது; [7]அவர்கள் பரலோகத்தி
லுள்ள தூதரைப்போல இருப்பார்களே.—மரித் ௨௬
தோர் எழுப்பப்படுவதைக்குறித்து, [8]நான் ஆபிர
காமினுடைய தேவனுமாய், ஈசாக்கினுடைய
தேவனுமாய், யாக்கோபினுடைய தேவனுமாயி
ருக்கிறவர், என்று செடியிலிருந்து பராபரன்
மோசேயுடனே சொல்லிய வாக்கியம் மோசே
யின் ஆகமத்திலே எழுதியிருக்கின்றதே; அதை
நீங்கள் வாசிக்கவில்லையா?—அவர் மரித்தவர்க ௨௭
ளுடைய தேவனாயிராமல் சீவனுள்ளோருடைய
தேவனாயிருக்கிறார்; ஆகையால் நீங்கள் மிகவும்
வஞ்சிக்கப்பட்டிருக்கிறீர்கள் என்றார்.

1 சங். ௱௰௮. ௨௨.—2 மத். ௨௧. ௪௬, ௨௯, ௩௰, ௪௪. ௪௬. மாற். ௰௧. ௰௮. யோவா. ௭. 3 மத். ௨௨. ௰௫. லூக். ௨௰. ௨௰.

4 அப். ௨௩. ௭.—5 மத். ௨௨. ௨௩. லூக். ௨௰. ௨௭. 6 ௫ மோ. ௨௫. ௫.—7 ௧ கொரி. ௰௫. ௪௨, ௪௯, ௫௨.—8 ௨ மோ. ௩. ௬.

* மூன்றேமுக்கால் பணத்தளவாம்; மத். ௰௮. ௨௮.

௨௮ [1]அவர்கள் அப்படிப் பேசிக்கொண்டதை வே
தபாரகரில் ஒருவன் கேட்டு, அவர் அவர்களுக்கு
நன்றாய் மாறுத்தரம் சொன்னாரென்று அறிந்து,
அவரைநோக்கி, கற்பனைகளில் எது பிரதானமா
௨௯ னதென்று கேட்டான்.—அதற்கு அவர் சொன்
னது: கற்பனைகளில் பிரதானமான கற்பனை என்
னவென்றால், [2]இஸ்ரவேலே கேள், உன் தேவனா
௩௰ கிய பராபரன் ஒருவரே பராபரன்.—உன் தேவ
னாகிய பராபரனிடத்தில், நீ உன் முழு இருதயத்
தோடும், உன் முழு ஆத்துமாவோடும், உன் முழு
மனதோடும், உன் பெலன்கள் எல்லாவற்றோ
டும், அன்புகூர்வாயாக என்பதே பிரதானமான
௩௧ கற்பனை.—இரண்டாம் கற்பனை அதற்கு ஒப்பா
யிருக்கின்றது; என்னவெனில், [3]உன்னிடத்தில்
அன்புகூருகிறதுபோலப் பிறனிடத்திலும் அன்
புகூர்வாயாக என்பதே; இவைகளிலும் வே
௩௨ றொரு பெரிதான கற்பனையில்லை என்றார்.—வே
தபாரகன் சொன்னது: நல்லது போதகரே, நீர்
சத்தியத்தின்படி சொன்னீர்; ஒரே தேவன் உண்
டு, [4]அவரைத்தவிர வேறொரு தேவனில்லை.—
௩௩ [5]அல்லாமலும் தகனபலி முதலான பலிகளிலும்
முழு இருதயத்தோடும், முழு மனதோடும், முழு
ஆத்துமாவோடும், முழுப் பலத்தோடும், அவரிட
த்தில் அன்புகூர்வதும் தன்மேல் அன்புகூருகிற
துபோலப் பிறனிடத்திலும் அன்புகூர்வதுமே
௩௪ மேன்மையாயிருக்கின்றன என்றான். — அவன்
புத்தியோடே பேசினதை இயேசுவானவர் கண்
டு, நீ பராபரனுடைய இராச்சியத்திற்குத் தூர
மானவன் அல்ல என்று அவனுடனே சொன்
னார்; [6]பின்பு ஒருவனும் அவரிடத்தில் வினாவத்
துணியவில்லை.

௩௫ [7]இயேசுவானவர் தேவாலயத்திலே உபதேசம்
பண்ணுகையில் அவர் அவர்களைநோக்கி, தாவீது
தானே பரிசுத்தஆவியினாலே சொன்னது: [8]பரா
பரன் என் கர்த்தாவை நோக்கி, உம்முடைய சத்
துருக்களை நான் உமது பாதப்படியாக்குமளவும்,
நீர் என்னுடைய வலதுபாரிசத்திலே உளுக்கா
௩௬ ரும் என்றார் என்பதே. — [9]ஆகையால் கிறிஸ்து
தாவீதின் குமாரனென்று வேதபாரகர் எப்படிச்
௩௭ சொல்லுகிறார்கள்? — தாவீதுதானே அவரைக்
கர்த்தாவென்று சொல்லியிருக்க, அவர் எப்படி
அவனுடைய குமாரனாயிருக்கிறார் என்று சொன்
னார்; அநேக சனங்கள் அவருடைய உபதேசத்
தை இன்பமாய்க் கேட்டார்கள்.

௩௮ [10]அன்றியும் அவர் உபதேசம்பண்ணுகையில்
அவர்களுடனே சொன்னது: நீளமான அங்கி
களைத் தரித்திருந்து நடக்கவும், [11]சந்தைகளிலே
௩௯ வாழ்த்துதல் அடையவும்,—செபஆலயங்களில்
முதல் ஆசனங்களில் இருக்கவும், போசனபந்தி
களில் முதலிடங்களில் இருக்கவும் விரும்பி,
[12]விஸ்தாரமாய்ச் செபமந்திரங்களைச் சொல்லுகி
றோம் என்று சொல்லி, [13]கைம்பெண்களுடைய
ஆஸ்திகளைப் பட்சித்துவருகிற வேதபாரகருக்கு
இடங்கொடாமல் எச்சரிக்கையாய் இருங்கள்.—
அவர்கள் அதிக தண்டிப்பை அடைவார்கள் ௪௰
என்றார்.

[14]அல்லாமலும் இயேசுவானவர் பொக்கிஷப் ௪௧
பெட்டிக்கு எதிரே உளுக்காந்தபொழுது, [15]அதி
லே சனங்கள் *பணத்தைப் போடுகிறதைப்பார்த்
தார்; அநேக ஐசுவரியவான்கள் மிகவும் போட்
டார்கள்.—எளியவளான ஒரு கைம்பெண்ணும் ௪௨
வந்து, கோதிராந்தேசென்னும் இரண்டுகா
சைப்† போட்டாள்.—அப்பொழுது அவர் தம்மு ௪௩
டைய சீஷர்களை அழைத்து, இந்தப் பொக்கி
ஷப்பெட்டியிலே [16]போட்டவர்கள் எல்லாரி
லும் இவ்வேழைக் கைம்பெண் அதிகமாய்ப்
போட்டாள் என்று மெய்யாய் உங்களுக்குச்
சொல்லுகிறேன்.—என்னத்தினாலென்றால், அவர் ௪௪
கள் எல்லாரும் தங்களுக்குண்டான சம்பூரணத்
தில் சில போட்டார்கள், [17]இவள் தன் எளிமை
யில் தன் சீவனத்திற்குண்டான யாவையும்
போட்டாள் என்றார்.

## ௰௩. அதிகாரம்.

௧. இடிந்த தேவாலயத்தின் அழிவையும், ௯. சுவிசேஷத்தின் நிமித்தமாய் உண்டாகும் துன்பத்தையும், ௰. சுவிசேஷம் சகல சாதிகளுக்கும் பிரசங்கிக்கப்படுவதையும், ௰௪. யூதர்களுக்கு உண்டாகும் உபத்திரவங்களையும், ௨௪. அவர் நியாயத்தீர்ப்புக்கு வரும் விதத்தையும், ௩௨. அந்த நேரம் ஒருவருக்கும் தெரியாதிருக்கிறபடியால் மரணத்தின் வழியாய் எவனிடத்திலும் அவர் வரும்பொழுது, அவர்கள் ஆயத்தமுள்ளவர்களாய் இருக்கும்படிக்கு எவனும் விழித்துச் செபம்பண்ணவேண்டும் என்பதையும் முன்னறிவித்தது.

[18]பின்பு அவர் தேவாலயத்தைவிட்டுப் புறப்படு ௧
கிறபொழுது, அவருடைய சீஷரில் ஒருவன்
அவரை நோக்கி, போதகரே, இதோ, இவைகள்
எப்படிப்பட்ட கல்கள்? இது எப்படிக் கட்டப்
பட்டிருக்கின்றது என்றான். — அவனுடனே ௨
இயேசுவானவர் சொன்னது: இந்தப்பெரிய மா
ளிகையைப் பார்க்கிறாயா? [19]இதில் ஒரு கல்லின்
மேலே மற்றொரு கல் வைக்கப்படுவதில்லை, எல்
லாம் இடிக்கப்படும் என்றார்.

பின்பு அவர் தேவாலயத்திற்கு எதிராக ஒலீவ ௩
மலையின்மேல் உளுக்காந்திருக்கையில், பேதுரு
வும் யாக்கோபும் யோவானும் அந்திரேயாவும்
தனித்திருந்து அவரை நோக்கி,—[20]இவைகள் எப் ௪
பொழுது நடக்கும்? இவைகளெல்லாம் நிறை
வேறும் காலத்திலே என்ன அடையாளம் தோன்
றும்? அதை எங்களுக்குச் சொல்லவேண்டும்
என்று கேட்டார்கள்.—அவர்களுக்கு மாறுத்தர ௫

1 மத். ௨௨. ௩௫.—2 ௫ மோ. ௬. ௪. லூக். ௰. ௨௭.
3 ௩ மோ. ௰௯. ௰௮. மத். ௨௨. ௩௯. உரோ. ௰௩. ௯. கலா. ௫. ௰௪. யாக். ௨. ௮.
4 ௫ மோ. ௪. ௩௯. ஏசா. ௪௫. ௬, ௰௪: ௪௬. ௯.—5 ௧ சாமு. ௰௫. ௨௨. ஓசே. ௬. ௬. மீகா. ௬. ௬: ௭. ௮.
6 மத். ௨௨. ௪௬.—7 மத். ௨௨. ௪௧. லூக். ௨௦. ௪௧.—8 சங். ௱௰. ௧.
9 ௨ சாமு. ௨௩. ௨.—10 மாற். ௪. ௨. ௨௪. ௬. ௧ யோ. ௬. ௯௭.
11 லூக். ௰௧. ௪௩.—12 மத். ௨௩. ௧. லூக். ௨௦. ௪௭.—13 மத். ௨௩. ௰௪. 18 மத். ௨௪. ௧. லூக். ௨௧. ௫. 19 லூக். ௰௯. ௪௪.—20 மத். ௨௪. ௩. லூக். ௨௧. ௭.
14 லூக். ௨௧. ௧.—15 ௨ இரா. ௰௨. ௯.
16 ௨ கொரி. ௮. ௰௨.—17 ௫ மோ.

* செம்புப் பணம்; மத். ௰. ௯.—† செம்புப் பணத்தில் எழில் ஒருபங்குள்ள காசு.

மாக இயேசுவானவர் சொன்னது: அநேகர்
தோன்றி, என்னுடைய நாமத்தை எடுத்து, நா
னே அவரென்று சொல்லி, அநேகரை வஞ்சனை
௬ செய்வார்கள்.—ஆகையால் [1]ஒருவனும் உங்களை
வஞ்சனைசெய்யாதபடிக்கு எச்சரிக்கையாயிருங்
௭ கள்.—அல்லாமலும் நீங்கள் யுத்தங்களையும் யுத்
தங்களுக்கேற்ற பேச்சுகளையும் கேள்விப்படும்
௮ பொழுது கலக்கம் அடையாதிருங்கள்.—அப்படி
நடக்கவேண்டுமே, அப்பொழுது முடிவு உட
னே வாராது; ஆகையால் ஒரு சனக்கூட்டம் மற்
றொரு சனக்கூட்டத்திற்கும், ஒரு இராச்சியத்
தார் மற்றொரு இராச்சியத்தாருக்கும் விரோத
மாய் எழும்புவார்கள்; பல இடங்களிலே பூமி அ
திர்தல்களும் பஞ்சங்களும் கலகங்களும் சம்ப
விக்கும்; [2]இவைகள் வேதனைகளின் * ஆரம்ப
மாய் இருக்கும்.
௯ [3]அப்பொழுது நீங்கள் எச்சரிக்கையாய் இருக்
கக்கடவீர்கள்; என்னத்தினாலெனில் என் நிமித்
தம் உங்களைப் பெரிய சங்கத்தாருக்கு ஒப்புக்
கொடுப்பார்கள்; செபஆலயங்களிலே நீங்கள்
அடிக்கப்பட்டுத் துரைகளுக்கும் இராசாக்களுக்
கும் சாட்சியாக அவர்களுக்குமுன்பாக நிறுத்
௰ தப்படுவீர்கள்.—அல்லாமலும் முன்பு சுவிசே
ஷமானது [4]உலகத்தார் எல்லாருக்கும் பிரசங்
௰௧ கம் பண்ணப்படவேண்டும். — [5]அப்படி ஒப்
புக்கொடுக்கும்படிக்கு உங்களைக் கொண்டுபோ
கும்பொழுது, நீங்கள் என்னபேசுவோம் என்று
முன் கவலைப்படாமலும், சிந்தித்துக்கொள்ளா
மலும் இருங்கள்; நீங்கள் அல்ல, [6]பரிசுத்த
ஆவியே பேசுகிறவராகையால், அந்நேரத்திலே
உங்களுக்கு அளிக்கப்படுவதையே பேசக்கட
௰௨ வீர்கள். —[7] அன்றியும் ஒருவன் தன் சகோதரனை
யும், தகப்பன் தன் பிள்ளையையும் மரணத்திற்கு
ஒப்புக்கொடுப்பார்கள்; பிள்ளைகளும் தங்களைப்
பெற்றவர்களுக்கு விரோதமாய் எழும்பி அவர்
கள் மரணம் அடையும்படி செய்விப்பார்கள்.—
௰௩ [8]நீங்களும் என் நாமத்தின்நிமித்தம் யாவரா
லும் பகைக்கப்படுவீர்கள்; [9]எப்படியும் முடி
வுவரைக்கும் நிலைநிற்பவனே இரட்சிக்கப்படு
வான்.
௰௪ மேலும் பாழாக்குகிற அருவருப்பைக்குறித்துத்
.[10]தானியேல் தீர்க்கதரிசி சொன்னாரே, (அதை)
வாசிக்கிறவன் சிந்தித்துக்கொள்ளக்கடவன்;
[11] அது நிற்கப்படாத இடத்திலே நீங்கள் அதை
நிற்கக் காணும்பொழுது [12]யூதேயாவிலுள்ளவர்
௰௫ கள் மலைகளுக்கு ஓடிப்போகக்கடவர்கள்.-வீட்
டின்மேல் இருப்பவன் தன் வீட்டிற்குள்ளே இ
றங்காமலும், அதிலிருந்து எதையாகிலும் எடுத்
துக்கொண்டு போகும்படி பிரவேசியாமலும்
போகக்கடவன்.—அல்லாமலும் வயலில் இருப் ௰௬
பவன் தன் வஸ்திரத்தை எடுத்துப் போகும்படிக்
குப் பின்னிட்டுத் திரும்பாமல் போகக்கடவன்.-
[13]ஐயோ! அந்நாள்களில் கருப்பவதிகளுக்கும் ௰௭
முலைகொடுக்கிறவர்களுக்கும் உபத்திரவம் இ
ருக்கும்.—மேலும் பராபரன் உலகத்தை உண் ௰௮
டாக்கினது முதற்கொண்டு இதுவரைக்கும் சம்
பவியாததுமாய், இனிமேலும் சம்பவியாததுமா
யிருக்கிற [14]உபத்திரவமே அந்நாள்களில் இருக்
கும்.—ஆதலால் நீங்கள் ஓடுகிறது மாரிகாலத்தி ௰௯
லே சம்பவியாதபடிக்கு வேண்டுதல் பண்ணக்க
டவீர்கள். — அல்லாமலும் பராபரன் அந்நாள்க ௨௰
ளைக் குறையப்பண்ணாமல் இருந்தால் ஒருவரும்
தப்பிப்போவதில்லை; அவர் தெரிந்துகொண்ட
வர்களின்நிமித்தமே அந்நாள்களைக் குறைத்
தார்.—அன்றியும் கள்ளக்கிறிஸ்துக்களும் கள் ௨௧
ளத் தீர்க்கதரிசிகளும் எழும்பி, தெரிந்துகொள்
ளப்பட்டவர்களை (வஞ்சிக்க) கூடுமானால் அவர்
களையும் வஞ்சிக்கத்தக்கதாக அதிசயங்களையும்
அற்புதங்களையும் செய்வார்கள்.—[15] ஆகையால் ௨௨
அக்காலத்திலே ஒருவன், இதோ இங்கே கிறிஸ்
து என்றும், அதோ அங்கே கிறிஸ்து என்றும் உங்
களுடனே சொன்னால், அவனை நீங்கள் நம்ப
வேண்டாம்.—[16] எச்சரிக்கையாகவே இருங்கள்; ௨௩
இதோ, இவைகள் எல்லாவற்றையும் உங்களுக்கு
முன்னறிவித்தேன்.
[17] அன்றியும் அக்காலத்திலே அந்த உபத்திர ௨௪
வத்திற்குப் பின்பு சூரியன் இருள அடையும்,
சந்திரன் பிரகாசம் கொடாமல் இருக்கும்.—
நட்சத்திரங்கள் வானத்திலிருந்து விழும்; அல் ௨௫
லாமலும் வானத்தில் பலமுள்ளவைகளெல்லாம்
அசைக்கப்படும். — [18] அப்பொழுது மனிதனு ௨௬
டைய குமாரன் மிகுந்த வல்லமையோடும் மகி
மையோடும் மேகங்களின்மேல் வருவார்; அவ
ரை அவர்கள் காண்பார்கள்.—அல்லாமலும் அவர் ௨௭
அப்பொழுது தம்முடைய தூதரை அனுப்பி வா
னத்தின் எல்லைகளாகிய நாலுதிசைகளிலுமிருந்
து தாம் தெரிந்துகொண்டவர்களைச் சேர்த்துக்
கொள்வார்.
[19] அத்திமரத்தினாலே உவமையாக ஒரு விசே ௨௮
ஷத்தைக் கற்றுக்கொள்ளுங்கள்; அதின் கிளை
தளிராகி இலைகளைக் கொடுக்கிறபொழுது, வசந்
தகாலம் சமீபமாய் இருக்கிறதென்று அறிகிறீர்
கள்.—அப்படிப்போல, இவைகள் சம்பவிக்கிற ௨௯
தை நீங்கள் காணும்பொழுது மிகவும் சமீபமாய்
இருக்கிறார் என்று அறியக்கடவீர்கள்.—இவை ௩௰
கள் யாவும் சம்பவிக்குமளவும், இந்தச் சந்ததி
ஒழிந்துபோவதில்லை என்று மெய்யாய் உங்க
ளுக்குச் சொல்லுகிறேன்.—[20]வானமும் பூமியும் ௩௧

1 எரே ௨௯. ௮. எபே ௫. ௬. ௨ தெச. ௨. ௩.—2 மத். ௨௪. ௮.
3 மத். ௰. ௰௭, ௰௮: ௨௪. ௯. வெளி. ௨. ௰.—4 மத். ௨௪. ௰௪.
5 மத். ௰. ௰௯. லூக். ௰௨. ௰௧: ௨௧. ௰௪.—6 அப். ௨. ௪: ௪. ௮, ௩௧.
7 மீகா. ௭. ௬. மத். ௰. ௨௧: ௨௪. ௰. லூக். ௨௧. ௰௬.—8 மத். ௨௪. ௯. லூக். ௨௧. ௰௭.—9 தானி ௰௨. ௰௨. மத். ௰. ௨௨: ௨௪ ௰௩. வெளி. ௨. ௰
10 தானி. ௯. ௨௭.—11 மத். ௨௪. ௰௫. 12 லூக். ௨௧. ௨௧.—13 லூக். ௨௩: ௨௯: ௨௧. ௨௩.—14 தானி. ௯. ௨௬: ௰௨. ௧. யோவே. ௨. ௨. மத். ௨௪ ௨௧.—15 மத் ௨௪. ௨௩. லூக். ௰௭. ௨௩: ௨௧. ௮.
16 ௨ பே. ௩. ௰௭.—17 தானி. ௭. ௰. செப் ௧ ௰௫. மத் ௨௪. ௨௯. லூக். ௨௧. ௨௫.—18 தானி. ௭. ௰௩, ௰௪. மத். ௰௬. ௨௭: ௨௪. ௩௰ மாற். ௰௪. ௬௨. அப் ௧. ௰௧. ௧ தெச. ௪. ௰௬. ௨ தெச. ௧. ௭, ௰. வெளி. ௧. ௭. 19 மத். ௨௪. ௩௨. லூக். ௨௧. ௨௯. 20 ஏசா. ௫௰. ௬.

* இந்த மொழி மூலபாஷையில் கெர்ப்பவேதனையைக்குறிக்கும்.

ஒழிந்துபோம், என் வசனங்களோ ஒழியாமல்
௩௨ இருக்கும். — (அவை சம்பவிக்கும்) நாளையும்
நாழிகையையும் பிதாவானவரேயன்றி, மற்றொ
ருவனும் அறியமாட்டான்; பரமண்டலங்களி
லுள்ள தூதரும் குமாரனும் அதை அறியார்கள்.
௩௩ அக்காலத்தை நீங்கள் அறியாதபடியால், [1]எச்
சரிக்கையாய் விழித்துக்கொண்டு செபம்பண்
௩௪ ணக்கடவீர்கள்.—[2] ஒரு மனிதன் தன் வீட்டை
விட்டுப் புறத்தேசத்திற்குப் போக மனதாய்,
தன் ஊழியக்காரருக்கு அதிகாரம் கொடுத்து,
ஒவ்வொருவருக்கு ஒவ்வொரு வேலையை நிய
மித்து, காவற்காரன் விழித்துக்கொண்டிருக்கும்
படிக்குக் கட்டளை இடுகிறதுபோல இருக்கின்
௩௫ றது.—[3] ஆகையால் வீட்டெசமான், சாயந்தரம்,
பாதிராத்திரி, சேவல்கூவும் நேரம், காலை இவை
களில் இன்னவேளையில் வருவார் என்று நீங்கள்
௩௬ அறியாதிருக்கிறபடியால், — அவர் சடுதியாய்
வந்து, உங்களைத் தூங்குகிறவர்கள் என்று கண்
டுபிடியாதபடிக்கு விழித்துக்கொண்டிருங்கள்.-
௩௭ விழித்துக்கொண்டிருங்கள் என்று நான் உங்க
ளுக்குச் சொன்னதுபோல, மற்ற யாவருக்கும்
அப்படியே சொல்லுகிறேன் என்றார்.

## ௰௪. அதிகாரம்.

௧ கிறிஸ்துவுக்கு விரோதமாகப் பண்ணப்பட்ட ஆலோசனை. ௩. ஒருஸ்திரீ தயிலத்தை அவர் சிரசின்மேல் வார்த்தது. ௰ யூதா தன் ஆண்டவரைப் பணத்துக்கு விற்றது. ௰௨. கிறிஸ்து தம்முடைய சீஷர்களில் ஒருவனால் காட்டிக்கொடுக்கப்படுவதை முன்னறிவித்தது. ௨௨. பஸ்கா ஆயத்தம் பண்ணப்பட்டுப் புசிக்கப்பட்டபின்பு இராப்போசனத்தை ஏற்படுத்தி, ௨௬. சீஷர்கள் எல்லாரும் தம்மைவிட்டு ஓடிப்போவதையும், பேதுரு தம்மை மறுதலிப்பதையுங்குறித்து முன்னறிவித்தது. ௪௩. யூதா அவரை முத்தத்தினால் காட்டிக்கொடுத்தது. ௪௬. அவர் தோட்டத்தில் பிடிக்கவும். ௫௫. அநியாயமாய்க் குற்றஞ்சாட்டவும் யூதர்களுடைய ஆலோசனைச் சங்கத்தாரால் ஆக்கினைக்குள்ளாகத் தீர்க்கவும், ௬௫ அவர்களால் நிந்திக்கவும், ௬௬. பேதுருவினால் மூன்றுவிசை மறுதலிக்கவும் உட்பட்டது.

௧ [4] இரண்டு நாளுக்குப் பின்பு, புளியாத அப்பம்
சாப்பிடுகிற பஸ்காப்பண்டிகை வந்தது; பிரதா
ன ஆசாரியரும் வேதபாரகரும் தந்திரமாய் அவ
ரைப் பிடித்துக் கொலைசெய்யும்படிக்கு வகை
௨ தேடிக்கொண்டு இருக்கையில்,-அவர்கள் சொன்
னது: பண்டிகையிலே அப்படிச் செய்யக்கூ
டாது; செய்தால் சனங்களுக்குள்ளே கலகம்
உண்டாகும் என்றார்கள்.
௩ [5] அவர் பெத்தானியா ஊரிலே குஷ்டரோகி
யாயிருந்த சீமோனுடைய வீட்டில் போசன
பந்தி இருக்கையில், ஒரு ஸ்திரீயானவள் மிகவும்
விலையேறப்பெற்ற களங்கமில்லாத சுகந்த வருக்
கத்தால் செய்த நருது * என்னும் பரிமள தயில
முள்ள வெண்கல் பரணியை எடுத்துவந்து, அ
தைத் திறந்து, அதிலுள்ள தயிலத்தை அவரு
௪ டைய தலையின்மேல் வார்த்தாள்.-அப்பொழுது
சிலர் தங்களுக்குள்ளே விசனம் அடைந்து, இந்
தப் பரிமளதயிலத்தை என் கெடுத்துப்போடுகி
றார்?—இதை முந்நூறு † தேனாரியு வெள்ளிக்கு ௫
மேலான கிரயத்திற்கு விற்று, ஏழைகளுக்குக்
கொடுக்கலாமே என்று சொல்லி அவளுக்கு
விரோதமாய் முறுமுறுத்தார்கள்.—அப்பொ ௬
ழுது இயேசுவானவர் சொன்னது: இவளை விட்டு
விடுங்கள், ஏன் இவளை வருத்தப்படுத்துகிறீர்கள்;
இப்படி இவள் ஒரு நற்கிரியை என்னிடத்தில்
செய்தாள். — [6] ஏழைகள் எப்பொழுதும் உங்க ௭
ளுடனே இருப்பார்கள்; மனதிருந்தால் நீங்கள்
அவர்களுக்கு நன்மைசெய்யலாம்; நான் எப்பொ
ழுதும் உங்களிடத்தில் இரேன்.— இவள் தன்னா ௮
லானமட்டும் செய்தாள்; என் சரீரத்தை அடக்கம
பண்ண எத்தனமாக்கும்படிக்கு இவள் முந்தி இ
தில் சுகந்தவருக்கம் இட்டாள்.— உலகம் முழு ௯
வதிலும் இந்தச் சுவிசேஷம் பிரசங்கிக்கப்படும்
இடம் எங்கேயோ, அங்கே இவளை நினைத்துக்
கொள்வதற்கு, இவள் இப்பொழுது செய்ததும்
சொல்லப்படும் என்று மெய்யாய் உங்களுக்குச்
சொல்லுகிறேன் என்றார்.
[7] பின்பு பன்னிருவரில் ஒருவனாகிய யூதாஸ்இஸ் ௰
காரியோத்தென்பவன், பிரதான ஆசாரியருக்கு
அவரைக் காட்டிக்கொடுக்கும்படிக்கு அவர்க
ளிடத்தில் போனான்.— அவனுடைய வார்த்தை ௰௧
களை அவர்கள் கேட்டுச் சந்தோஷப்பட்டு, அவ
னுக்குப் பணம் கொடுக்கும்படிக்கு வாக்குத்தத்
தம் பண்ணினார்கள்; பின்பு அவன் அவரைக்
காட்டிக்கொடுப்பதற்குத் தகுதியான காலத்
தைப் பார்த்துக்கொண்டிருந்தான்.
[8] புளியாத அப்பங்களைச் சாப்பிடும் நாள்க ௰௨
ளில், பஸ்கா ஆட்டுக்குட்டி பலியிடப்படும்
‡ முதல் நாளிலே அவருடைய சீஷர்கள் அவரை
நோக்கி, நீர் பஸ்காவைப் புசிக்கும்படிக்கு நாங்
கள் எங்கேபோய் எத்தனம்பண்ணச் சித்தமாய்
இருக்கிறீர் என்று கேட்டார்கள். — அப்பொ ௰௩
ழுது அவர் தம்முடைய சீஷரில் இரண்டுபேரை
அழைத்து, நீங்கள் பட்டணத்திற்குப் போங்
கள்; அங்கே ஒரு மனிதன் தண்ணீர்க்குடத்
தைச் சுமந்துகொண்டு உங்களுக்கு எதிராக வரு
வான்; அவனுக்குப் பின்செல்லுங்கள்.— அல் ௰௪
லாமலும் அவன் பிரவேசிக்கும் வீட்டிலே நீங்க
ளும் (பிரவேசித்து,) அதின் எசமானை நோக்கி,
நான் என் சீஷர்களுடனே பஸ்காவைப் போச
னம்பண்ணத்தக்கதான இடம் எங்கே என்று
போதகர் கேட்கிறாரென்று சொல்லுங்கள்.—
அப்பொழுது அவன் கம்பளம் முதலானவை ௰௫
கள் விரித்து எத்தனமாக்கப்பட்டிருக்கிற விஸ்
தாரமான மேல்வீட்டில் பெரிய அறையை உங்
களுக்குக் காண்பிப்பான்; அங்கே நமக்காக எத்
தனம்பண்ணுங்கள் என்று சொல்லி அனுப்பி
னார்.— அந்தப்படி அவருடைய சீஷர்கள் புறப் ௰௬

1 மத். ௨௪. ௪௨: ௨௫. ௰௩. லூக் ௨௧. ௩௪: ௰௨. ௩௫. ௧ கொரி. ௰௬. ௰௩ ௧ தெச. ௫. ௬. 2 மத். ௨௪. ௪௫: ௨௫. ௰௪. 3 மத். ௨௪. ௪௨. ௪௪. 4 மத் ௨௬. ௨. லூக். ௨௨. ௧. யோவா. ௰௧ ௫௫: ௰௩. ௧. 5 மத். ௨௬. ௬. யோவா. ௰௨. ௧, ௩. லூக் ௭. ௩௭.—6 உபா. ௰௫. ௰௧. ௰௧ —7 மத். ௨௬. ௰௪. லூக். ௨௨. ௩. ௪ —8 மத். ௨௬ ௰௭. லூக். ௨௨. ௭.

* அல்லது சுத்த நருது —† மத். ௰௮ ௨௮. காண்க.—‡ அல்லது கொல்லப்படும்.

பட்டுப் பட்டணத்தில் வந்து, தங்களுக்கு அவர்
சொன்னபடியே கண்டு, பஸ்காப்போசனத்தை
ஆயத்தம்பண்ணினார்கள்.
௰௭ [1]சாயந்தரமானபொழுது, அவர் பன்னிருவரு
௰௮ டனே கூட அவ்விடத்திற்குப் போனார்.—அவர்
கள் பந்தியிலிருந்து சாப்பிடுகையில், இயேசுவா
னவர் அவர்களை நோக்கி, என்னோடேகூடச்
சாப்பிடுகிற உங்களில் ஒருவனே என்னைக் காட்
டிக்கொடுப்பான் என்று மெய்யாய் உங்களுக்குச்
௰௯ சொல்லுகிறேன் என்றார். — அவர்கள் அதைக்
கேட்டு, மிகுந்த துக்கம் அடைந்து, நானோ, நா
னோ என்று ஒவ்வொருவராய் அவரிடத்தில்
௨௰ கேட்கத் தொடங்கினார்கள்.—அவர்களுக்கு மா
றுத்தரமாக அவர் சொன்னது: பன்னிருவரில்
ஒருவனே என்னோடேகூடத் தாலத்திலே தோ
௨௧ ய்க்கிறவனே (அப்படிச் செய்வான்). —[2]மனித
னுடைய குமாரன் தன்னைக்குறித்து எழுதியிருக்
கிறபடி போகிறான்; ஆனாலும் ஐயோ! மனிதனு
டைய குமாரனைக் காட்டிக்கொடுப்பவன் எவ
னோ, அவனுக்கு வேதனை வரும்; அம்மனிதன்
பிறவாமல் இருந்தானானால் அவனுக்கு நலமாயி
ருக்கும் என்றார்.
௨௨ [3]அல்லாமலும் அவர்கள் சாப்பிடுகிறபொழுது,
இயேசுவானவர் அப்பத்தை எடுத்து ஆசீர்வாதம்
செய்து, அதைப் பிட்டு அவர்களுக்குக் கொடுத்
து, இதை எடுத்துப் புசியுங்கள்; இது என்னுடை
௨௩ ய சரீரமாயிருக்கின்றது என்று சொல்லி,—பின்பு
பாத்திரத்தையும் எடுத்துத் தோத்திரம்பண்ணி,
அதை அவர்களுக்குக் கொடுத்து, அவர்கள் எல்
லாரும் அதில் பானம் பண்ணின பின்பு சொன்
௨௪ னதாவது:—இது புதிய ஏற்பாட்டுக்கு ஏற்றதாய்
அநேகருக்காகச் சிந்தப்படும் என்னுடைய இரத்
௨௫ தமாயிருக்கின்றது.—பராபரனுடைய இராச்சி
யத்திலே நான் திராட்ச இரசத்தை நவமாய் உங்
களுடனே பானம் பண்ணும் நாள்வரைக்கும்,
அதை நான் மறுபடியும் பானம்பண்ணுவதில்லை
என்று மெய்யாய் உங்களுக்குச் சொல்லுகிறேன்
என்றார்.
௨௬ [4]அவர்கள் தோத்திரம்* பாடின பின்பு, ஒலீவ
௨௭ மலைக்குப் போனார்கள்.—[5]அப்பொழுது இயேசு
வானவர் அவர்களை நோக்கி, [6]மேய்ப்பனானவனை
அடிப்பேன், அப்பொழுது ஆடுகள் சிதற அடிக்
கப்படுமென்று எழுதியிருக்கிறபடியால், நீங்கள்
எல்லாரும் இந்த இராத்திரியிலே என்னைக்கு
௨௮ றித்து வழுவுவீர்கள்.—[7]ஆனாலும் நான் உயிரோ
டிருக்கும்படி எழுப்பப்பட்டபின்பு, உங்களுக்
குமுன்னே கலிலேயா நாட்டுக்குப் போவேன்
௨௯ என்றார்.—[8]அதற்குப் பேதுரு, எல்லாரும் உம்
மைக்குறித்து வழுவினாலும், நான் அப்படிச்
௩௰ செய்யமாட்டேன் என்றான். — அவனுடனே

இயேசுவானவர், இந்த இராத்திரியிலே சேவல்
இரண்டாந்தரம் கூவுமுன்னமே, நீ மூன்றுதரம்
என்னை மறுதலிப்பாயென்று மெய்யாய் உனக்
குச் சொல்லுகிறேன் என்றார்.—அதற்கு அவன், ௩௧
நான் உம்மோடே சாகவேண்டுவதாயிருந்தாலும்
உம்மை மறுதலிக்கமாட்டேன் என்று அதிக உறு
தியாய்ச் சொன்னான்; மற்றவர்கள் எல்லாரும்
அப்படியே சொன்னார்கள்.
[9]பின்பு அவர்கள் கெதுசேமனே என்னுமிடத் ௩௨
தில் சேர்ந்தார்கள்; அங்கே அவர் தம்முடைய
சீஷர்களை நோக்கி, நான் போய்ச் செபம்பண்ணு
கையில் நீங்கள் இங்கே இருங்கள் என்று சொல்
லி,—பேதுருவையும் யாக்கோபையும் யோவா ௩௩
னையும் கூட்டிக்கொண்டு போய், மிகுந்த திகிலை
யும் வியாகுலத்தையும் அடையத்தொடங்கி,—
[10]என் ஆத்துமா மரணவேதனைப்படுகின்றது; நீங் ௩௪
கள் இங்கே தங்கி விழித்திருங்கள் என்று சொல்
லி,—சற்றே தூரம்போய்த் தரையிலே விழுந்து, ௩௫
அந்த நேரம் தம்மை விட்டு நீங்கக்கூடுமானால்
அது நீங்கும்படிக்கு,—[11]அப்பா பிதாவே, [12]உம் ௩௬
மாலே எல்லாம் ஆகும்; இந்தப் பாத்திரம் என்
னைவிட்டு நீங்கும்படி செய்யும்; இல்லாவிட்
டால் [13] என்னுடைய சித்தத்தின்படியல்ல, உம்
முடைய சித்தத்தின்படியே ஆகக்கடவதென்று
செபம்பண்ணினார்.—பின்பு அவர் வந்து அவர் ௩௭
கள் தூங்குகிறதைக் கண்டு பேதுருவுடனே
சொன்னது: சீமோனே, தூங்குகிறாயா? ஒரு
மணிநேரம் நீ விழித்துக்கொள்ளக்கூடாதா?-குற் ௩௮
றம் செய்வதற்கான காரணத்தில் நீங்கள் பிரவே
சியாதபடிக்கு விழித்துக்கொண்டு செபம்பண்
ணுங்கள்; [14]ஆவியானது மனதுள்ளதுதான், மாம்
சதேகம் பெலவீனமுள்ளதென்று சொல்லி,—
மறுபடியும் அப்புறம்போய் மேற்சொல்லிய வித ௩௯
மாய்ச் செபம்பண்ணினார்.—பின்பு அவர் திரும் ௪௰
பி, அவர்களுடைய கண்கள் கனமான தூக்கத்
தை அடைந்தபடியினாலே, மறுபடியும் அவர்
கள் தூங்குகிறதைக் கண்டார்; அல்லாமலும், அ
வர்கள் அவருக்குச் சொன்ன மாறுத்தரத்தையும்
அவர்கள் தாமே அறியவில்லை.—பின்பு அவர் ௪௧
மூன்றாந்தரம் அவர்களிடத்தில் வந்து, நீங்கள்
பின்னும் தூங்கி இளைப்பாறுகிறீர்களா? இது
போதும், [15]நேரம் வந்தது; இதோ, மனிதனு
டைய குமாரன் பாவிகளுடைய கைகளில் ஒப்
புக்கொடுக்கப்படுகிறான்.—[16]அதோ, என்னைக் ௪௨
காட்டிக்கொடுக்கிறவன் சமீபிக்கிறான்; எழுந்
திருங்கள் நாம் போவோம் வாருங்கள் என்றார்.
[17] உடனே அவர் பேசுகையில், பன்னிரு ௪௩
வரில் ஒருவனாகிய யூதாவும், அவனோடேகூடப்
பெரிய ஆசாரியராலும் வேதபாரகராலும் மூப்
பராலும் அனுப்பப்பட்டுக் கத்திகளையும் தடிக

1 மத் ௨௬. ௨௰.—2 மத். ௨௬. ௨௪. லூக் ௨௨. ௨௨.-3 மத். ௨௬. ௨௬. லூக். ௨௨. ௰௯. ௧ கொரி. ௰௧. ௨௩. 4 மத். ௨௬. ௩௰.—5 மத். ௨௬. ௩௧. 6 சகரி. ௰௩. ௭.—7 மாற். ௰௬. ௭. 8 மத். ௨௬ ௩௩. ௩௪. லூக். ௨௨. ௩௩, ௩௪. யோவா. ௰௩. ௩௭, ௩௮. 9 மத். ௨௬. ௩௬. லூக். ௨௨ ௩௯. யோவா. ௰௮. ௧.-10 யோவா. ௰௨. ௨௭.—11 உரோ. ௮. ௧௫. கலா. ௪. ௬.—12 எபி. ௫. ௭. 13 யோவா. ௫. ௩௰: ௬. ௩௮. 14 உரோ. ௭. ௨௩. கலா. ௫. ௰௭. 15 யோவா. ௰௩. ௧.—16 மத். ௨௬. ௪௬. யோவா. ௰௮ ௧, ௨.—17 மத். ௨௬. ௪௭ லூக். ௨௨. ௪௭. யோவா. ௰௮. ௩.

* அல்லது சங்கீதம்.

ளையும் பிடித்துக்கொண்டு வருகிற மிகுந்த
௪௪ சனங்களும் தோன்றினார்கள்.—அவரைக் காட்
டிக்கொடுக்க வந்தவன் எவனை முத்தம் செய்
வேனோ, அவனே அவன், அவனை நீங்கள்
பிடித்துப் பத்திரமாய்க் கொண்டுவரவேண்டும்
என்று அடையாளமாக மற்றவர்களுக்குச் சொல்
௪௫ லியிருந்தான்.—ஆகையால், அவன் வந்தவுடனே,
அவரிடத்தில் சேர்ந்து இரபீ, இரபீ, என்று
௪௬ சொல்லி, அவரை முத்தம்செய்தான்.—அப்பொ
ழுது அவர்கள் அவரைக் கைப்பிடியாகப் பிடித்
தார்கள்.

௪௭ உடனே சமீபமாய் நின்றவர்களில் ஒருவன்,
கத்தியை எடுத்துப் பிரதான ஆசாரியனுடைய
௪௮ வேலைக்காரனைக் காதறவெட்டினான்.-[1]அப்பொ
ழுது இயேசுவானவர் அவர்களைநோக்கி, ஒரு கள்
ளனைப் (பிடிக்கிறதற்குப் புறப்படுகிறது)போல
நீங்கள் என்னைப் பிடிக்கும்படிக்குக் கத்திகளோ
௪௯ டும் தடிகளோடும் புறப்பட்டு வந்தீர்கள்.—நாள்
தோறும் நான் உங்களுக்குள்ளே தேவாலயத்தி
லே உபதேசம் பண்ணினேன்; அப்பொழுது நீங்
கள் என்னைப் பிடிக்கவில்லை; [2] ஆனாலும் வேத
வாக்கியங்கள் நிறைவேறவேண்டுமென்று சொ
௫௰ ன்னார்.—[3]உடனே (சீஷர்) எல்லாரும் அவரை
௫௧ விட்டு ஓடிப்போனார்கள்.—ஒரு வாலிபன் ஒரு
வஸ்திரத்தைமாத்திரம் தன்மேல் போர்த்துக்கொ
ண்டு அவருக்குப் பின்சென்றான்; அவனைச் சே
௫௨ வகர் பிடித்தார்கள்.—அப்பொழுது அவன் தன்
வஸ்திரத்தை விட்டு நிருவாணமாய் அவர்களை
விட்டு ஓடிப்போனான்.

௫௩ [4]இயேசுவானவரை அவர்கள் பிரதான ஆசாரி
யனிடத்திற்குக் கொண்டுபோனார்கள்; அங்கே
ஆசாரியரெல்லாரும் மூப்பரும் வேதபாரகரும்
௫௪ கூடிவந்தார்கள்.—பேதுரு தூரமாக அவருக்குப்
பின்சென்று, பிரதான ஆசாரியனுடைய மாளி
கையின் பிரகாரத்தில் வந்து, அங்கே ஊழியக்கா
ரருடனே நெருப்பின் அருகே உளுக்கார்ந்து, அ
௫௫ னல் காய்ந்துகொண்டிருந்தான்.—[5]அத்தருணத்
திலே பிரதான ஆசாரியரும் மற்றப் பெரிய சங்
கத்தார் எல்லாரும் இயேசுவானவரைக் கொலை
செய்யும்பொருட்டாய் அவருக்கு விரோதமாய்ச்
௫௬ சாட்சிகளைத் தேடினார்கள்.—அகப்படவில்லை;
அநேகர் அவருக்கு விரோதமாய்ப் பொய்ச்சாட்
சிசொல்லியும் அந்தச் சாட்சிகள் ஒவ்வவில்லை.—
௫௭ [6]அப்பொழுது சிலர் எழுந்து இவன், கையினால்
செய்யப்பட்ட இந்தத் தேவாலயத்தை நான் இ
டித்து, பின்பு மூன்றுநாளுக்குள்ளே கையில்லா
மல் வேறொன்றைக் கட்டுவேன் என்று சொல்
௫௮ லக் கேட்டோமென்று,—அவருக்கு விரோதமா
௫௯ கப் பொய்ச்சாட்சி சொன்னார்கள்.—அப்படி
யும் அவர்களுடைய சாட்சி ஒவ்வாமலிருந்தது.—

[7]பின்பு பிரதான ஆசாரியன் நடுவிலே எழுந்து, ௬௰
இயேசுவானவரைநோக்கி, நீ மாறுத்தரம் சொல்
லுகிறதில்லையா? இவர்கள் உனக்கு விரோதமாய்
என்ன சாட்சி சொல்லுகிறார்கள் என்று கேட்
டான்.—[8]அவர் மாறுத்தரமாக ஒன்றும்பேசாமல் ௬௧
இருந்தார்; [9]பிரதான ஆசாரியன் மறுபடியும் அவ
ரை நோக்கி, தோத்திரம் செய்யப்படத்தக்கவரு
டைய குமாரனாகிய கிறிஸ்து நீதானோ என்று
கேட்டான்.—இயேசுவானவர் சொன்னது: அ ௬௨
வர் நான்தான்; [10]அல்லாமலும் மனிதனுடைய
குமாரன் சர்வவல்லமையுள்ளவருடைய வலது
பாரிசத்திலே உளுக்காரவும், வானத்தின் மேகங்
களின்மேல் வரவும் காண்பீர்கள் என்றார்.—
அப்பொழுது பிரதான ஆசாரியன் தன் வஸ்தி ௬௩
ரத்தைக் கிழித்து,—வேறு சாட்சி நமக்கு வேண் ௬௪
டுமோ? இத்தூஷணத்தைக் கேட்டீர்களே; உங்க
ளுக்கு எப்படித் தோன்றுகின்றது என்றான்.
அவர்கள் எல்லாரும் அவர் மரண ஆக்கினைக்
குப் பாத்திரன் என்று தீர்மானம்பண்ணினார்
கள்.—அப்பொழுது, சிலர் அவர்மேலே துப்பி, ௬௫
அவருடைய முகத்தை மூடிக் கையினாலே அடி
த்து, நீ தீர்க்கதரிசனம் சொல்லென்று அவருட
னே சொல்லத்தொடங்கினார்கள்; அல்லாமலும்
ஊழியக்காரர் அவரைக் கன்னத்தில் அடித்தார்
கள்.

[11]அத்தருணத்திலே பேதுரு மாளிகையின் பிர ௬௬
காரத்தில் கீழே இருக்கிறபொழுது, பிரதான ஆசா
ரியனுடைய வேலைக்காரிகளில் ஒருத்திவந்து,—
அனல்காய்ந்துகொண்டிருக்கிற பேதுருவைக் ௬௭
கண்டு, அவனை உற்றுப்பார்த்து, நீயும் நாசரேத்
தூரானாகிய இயேசுவுடனே இருந்தாயே என்
றாள்.—அதற்கு அவன் சொன்னது: (அவரை) ௬௮
அறியமாட்டேன்; நீ சொல்லுகிறதையும் நான்
அறியேன் என்று மறுதலித்து, பின்பு வெளியி
லேயுள்ள மண்டபத்திற்குப் போனான்; அப்பொ
ழுது சேவல் கூவிற்று.—[12]பின்பு வேலைக்காரி ௬௯
அவனை மறுபடியும் பார்த்து, சமீபமாய் நின்ற
வர்களை நோக்கி, இவன் அவர்களில் ஒருவன்
என்றாள்; அவன் மறுபடியும் மறுதலித்தான்.—
சற்றுநேரத்திற்குப் பின்பு, [13] அங்கே நின்றவர் ௭௰
கள் மறுபடியும் பேதுருவைநோக்கி, நீ மெய்
யாய் அவர்களில் ஒருவனாயிருக்கிறாய்; [14]நீ கலி
லேயா நாட்டான்தான்; உன் பேச்சு அதைக் கா
ண்பிக்கின்றது என்றார்கள்.— அதற்கு அவன், ௭௧
நீங்கள் சொல்லுகிற மனிதனை நான் அறியமாட்
டேன் என்று சொல்லிச் சபிக்கவும் ஆணையிட
வும் தொடங்கினான்.—[15]உடனே சேவல் இர ௭௨
ண்டாந்தரம் கூவிற்று; அப்பொழுது சேவல் இ
ரண்டாந்தரம் கூவுமுன்னமே, நீ என்னை மூன்று
தரம் மறுதலிப்பாய் என்று தன்னுடனே இயேசு

1 மத். ௨௬. ௫௫. லூக். ௨௨. ௫௨. யோவா. ௧௮. ௨௰.
2 சங். ௨௨. ௧. ஏசா. ௫௩. ௭. ௧௨. 5 மத். ௨௬. ௫௯.—6 மத். ௨௬. ௬௧.
லூக். ௨௨. ௬௭: ௨௪. ௪௪. யோவா. ௨. ௧௯.—7 மத். ௨௬.
3 சங். ௮௮. ௮: ௨௪. ௬௨.—8 ஏசா. ௫௩. ௭.
4 மத். ௨௬. ௫௭. லூக். ௨௨. ௫௪. 9 மத். ௨௬. ௬௩.

10 மத். ௨௪. ௩௰: ௨௬. ௬௪. லூக். 13 மத். ௨௬. ௭௩. லூக். ௨௨. ௫௯.
௨௨. ௬௯.—11 மத். ௨௬. ௫௮. யோவா. ௧௮. ௧௬.
௬௯. லூக். ௨௨. ௫௫. யோவா. 14 அப். ௨. ௭.
௧௮. ௧௭.—12 மத். ௨௬. ௭௧. லூக். 15 மத். ௨௬. ௭௫.
௨௨. ௫௮. யோவா. ௧௮. ௨௫.

வானவர் சொன்ன வசனத்தைப் பேதுரு நினை
த்து, விலகிப்போய் அழுதுகொண்டான்.*

## ௰௫. அதிகாரம்.

௧. இயேசு கட்டுண்டு பிலாத்துக்கு முன்பாகக் கொண்டுபோகப்பட்டுக் குற்றம் சாற்றப்பட்டது. ௰௫. பிரசைகளுடைய கூக்குரலின் நிமித்தமாய், கொலைபாதகனும் பரபாசு விடுதலைபெற இயேசு சிலுவையில் அறையப்படும்படிக்கு ஒப்புவிக்கப்பட்டது. ௰௭. அவர் முள்முடி தரிப்பிக்கவும், ௰௯. துப்பவும், பரிகாசம் பண்ணவும் உட்பட்டது. ௨௧. சிலுவை சுமப்பதில் அவர் சோர்வடைந்தது. ௨௭. இரண்டு கள்ளர்களின் நடுவிலே தொங்கப்பட்டது. ௩௰. யூதர்களுடைய பெருமையுள்ள நிந்தைகளைச் சகித்தது. ௩௯. அவர் தேவகுமாரனென்று சேனைக்காரனால் அறிக்கையிடப்பட்டு, ௪௬. மேன்மையாய் அடக்கம் பண்ணப்பட்டது.

௧ [1]அதிகாலையிலே பிரதான ஆசாரியரும், மூப்ப
ரும், வேதபாரகரும், மற்றப் பெரிய சங்கத்தார்யா
வரும் ஆலோசனை பண்ணிக்கொண்ட பின்பு,
அவர்கள் அவரைக் கட்டிக் கொண்டுபோய்,
௨ பிலாத்து துரைக்கு ஒப்புக்கொடுத்தார்கள்.—[2]பி
லாத்து அவரை நோக்கி, நீ யூதர்களுடைய இரா
சாவா என்று கேட்டான்; அதற்கு அவர், நீர் (சரி
௩ யாய்ச்) சொன்னீர் என்றார்.—அல்லாமலும் பிர
தான ஆசாரியர் அவர்மேல் அநேகம் குற்றங்க
௪ ளைச் சாற்றிவருகிறபொழுது, —[3] பிலாத்து மறு
படியும் அவரை நோக்கி, இதோ, இவர்கள் உனக்
கு விரோதமாக மிகுந்த சாட்சிகளைச் சொல்லுகி
றார்களே, அதற்கு நீ ஒன்றையும் சொல்லுகிறதில்
௫ லையா என்று கேட்டான்.—[4] இயேசுவானவர்,
பிலாத்துதானே ஆச்சரியப்படத்தக்கதாக, ஒன்
றையும் சொல்லவில்லை.

௬ [5]பண்டிகைதோறும் அவர்கள் கேட்டுக்கொள்
ளும் பாதகன் எவனோ, அவனை அவர்களுக்காக
௭ விடுதலையாக்குகிறது வழக்கமாயிருந்தது. — கல
கம்பண்ணிக் கலகத்திலே கொலைசெய்து, பின்பு
கட்டப்பட்டவர்களில் ஒருவனாகிய பரபாசென்
௮ பவன் இருந்தான்.—ஆதலால் வழக்கத்தின்படி
தங்களுக்குப் பிலாத்து செய்யவேண்டுமென்று
சனங்கள் கூப்பிட்டுக் கேட்டுக்கொள்ளத் தொ
௯ டங்கினார்கள்.—அப்பொழுது பிலாத்து அவர்க
ளை நோக்கி, நான் யூதர்களுடைய இராசனை உங்
களுக்காக விடுதலையாக்க விருப்பமுண்டா என்
௰ றான்.—பிரதான ஆசாரியர் பொறாமையினாலே
அவரை ஒப்புக்கொடுத்ததை அவன் அறிந்தபடி
௰௧ யால் அப்படிக் கேட்டான். — [6]அப்பொழுது
பிரதான ஆசாரியர் பரபாசைத் தங்களுக்காக வி
டுதலையாக்கும்படிக்குக் கேட்டுக்கொள்ளவேண்
௰௨ டும் என்று சனங்களை ஏவினார்கள்.—மறுபடியும்
பிலாத்து அவர்களை நோக்கி, யூதர்களுடைய
இராசாவென்று நீங்கள் சொல்லுகிறவனை நான்
௰௩ என்னசெய்ய விரும்புகிறீர்கள் என்றான்.—அவ
னைச் சிலுவைமரத்திலே அறையவேண்டும்என்று
௰௪ மறுபடியும் கூப்பிட்டார்கள்.—அதற்குப் பிலாத்
து சொன்னது: ஏன், இவன் என்ன தீமை செய்
தான் என்றான்; அதற்கு அவர்கள், இவனைச்
சிலுவைமரத்திலே அறையவேண்டும் என்று அதி
கமாய்க் கூப்பிட்டார்கள்.—[7] அப்பொழுது பிலா ௰௫
த்து சனங்களைச் சமாதானப்படுத்த மனதாய், பர
பாசை விடுதலையாக்கி, இயேசுவை வாரினால் அ
டிப்பித்து, சிலுவைமரத்திலே அறையும்படிக்கு
அவரை ஒப்புக்கொடுத்தான்.

[8]உடனே போர்ச்சேவகர் அவரை நியாயஸ்த ௰௬
லமாகிய மண்டபத்திற்குள்ளே கொண்டுபோய்,
போர்ச்சேவகராகிய கூட்டமெல்லாம் கூடிவர
அழைத்து,—பின்பு சிவப்பான அங்கியை அவ ௰௭
ருக்கு உடுத்தி, முள்ளுக்களால் ஒரு முடியைப்
பின்னி அவர்மேல் வைத்து,—யூதருடைய இரா ௰௮
சாவே, நீர் வாழ்க என்று அவரை வாழ்த்துதல்
செய்து,—பின்பு ஒரு கோலினாலே அவருடைய ௰௯
தலையில் அடித்து, அவர்மேலே துப்பி, முழங்
காற்படியிட்டு அவரை வணங்கினார்கள்.—அப் ௨௰
படி அவர்கள் அவரை இழிவுசெய்தபின்பு, அந்
தச் சிவப்பான அங்கியை அவரிலிருந்து களைந்
து, அவருடைய வஸ்திரங்களை அவருக்கு உடுத்தி,
அவரைச் சிலுவைமரத்தில் அறையும்படிக்குக்
கொண்டுபோனார்கள்.

[9]வழியிலே அலேக்குசந்தர் உருப்பு என்பவர் ௨௧
களுடைய தகப்பனாகிய சிரேனே ஊரானான
சீமோன் வயல்நிலத்திலிருந்து வருகிறபொழுது,
அவனைப் பலவந்தத்தினாலே (இழுத்து,) அவரு
டைய சிலுவைமரத்தை எடுத்துக்கொண்டு போ
கும்படி செய்து,—[10]பின்பு அவரைத் தலையோட் ௨௨
டிடமென்று அருத்தம் கொள்ளும் கொலுகத்தா
என்னும் இடத்திற்குக் கொண்டுபோய்,—[11]கசப் ௨௩
புக்கலந்த திராட்சஇரசத்தைக் குடிக்கக்கொடுத்
தார்கள்; அவர் அதை அனுபவிக்கவில்லை.—அல் ௨௪
லாமலும் அவரைச் சிலுவைமரத்திலே அறைந்த
பின்பு, அவர்கள் அவருடைய [12]வஸ்திரங்களைப்
பங்காகவைத்து, ஒவ்வொருவன் ஒவ்வொருபங்
கை எடுத்துக்கொள்ளும்படிக்கு அவைகளுக்கு
றித்துச் சீட்டுப்போட்டார்கள்.—[13]அவரைச் சிலு ௨௫
வைமரத்திலே அறைந்தபொழுது மூன்றாம் மணி
நேரமாயிற்று.—[14]அவருடைய மரணத்தின் கார ௨௬
ணத்தை அறிவிக்கும்படிக்கு, இவன் யூதர்களு
டைய இராசா என்று எழுதி, அதைச் (சிலுவை
யின்மேல்) கட்டினார்கள்.—[15]அல்லாமலும் அவரு ௨௭
டைய வலதுபக்கத்தில் ஒரு கள்ளனும், அவரு
டைய இடதுபக்கத்தில் ஒரு கள்ளனுமாக இரண்
டு கள்ளரை அவருடனே கூடச் சிலுவைமரங்க
ளில் அறைந்தார்கள். — அதினாலே அவர் [16]அக் ௨௮
கிரமக்காரரோடே எண்ணப்படுவார் என்று

1 சங். ௨.௨. மத். ௨௭. ௧. லூக். ௨௨.௬௬: ௨௩.௧. யோவா. ௰௮. ௨௮. அப். ௩.௰௩: ௪.௨௬.
2 மத். ௨௭. ௰௧.—3 மத். ௨௭. ௰௨
4 ஏசா. ௫௩. ௭. யோவா. ௰௯.௯.
5 மத். ௨௭. ௰௫. லூக். ௨௩. ௰௭. யோவா. ௰௮. ௩௯.
6 மத். ௨௭. ௨௰. அப். ௩. ௰௪.
7 மத். ௨௭. ௨௬. யோவா. ௰௯.௧, ௰௬.—8 மத். ௨௭. ௨௭.
9 மத். ௨௭. ௩௨. லூக். ௨௩. ௨௬.
10 மத். ௨௭. ௩௩. லூக். ௨௩. ௩௩. யோவா. ௰௯. ௰௭.—11 மத். ௨௭. ௩௪.—12 சங். ௨௨. ௰௮. லூக். ௨௩. ௩௪. யோவா. ௰௯. ௨௩.
13 மத். ௨௭. ௪௫. லூக். ௨௩. ௪௪. யோவா. ௰௯. ௰௪.—14 மத். ௨௭. ௩௭. யோவா. ௰௯. ௰௯.
15 மத். ௨௭. ௩௮.—16 ஏசா. ௫௩. ௰௨. லூக் ௨௨. ௩௭.

* அல்லது மிகவும் அழுதான்.

௨௯ சொல்லிய வேதவாக்கியம் நிறைவேறிற்று.-[1]அல்
லாமலும் அவ்வழியாய் நடந்துவருகிற பேர்கள்
தங்கள் தலைகளை அசைத்து, ஆ [2]தேவாலயத்தை
இடித்து மூன்றுநாளுக்குள்ளே அதைக் கட்டுகிற
௩௰ வனே, — உன்னை இரட்சித்துக்கொண்டு சிலு
வையிலிருந்து இறங்கிவா என்று சொல்லி, அவ
௩௧ ரைத் தூஷணித்தார்கள்.—அப்படிப்போல பிர
தான ஆசாரியரும் வேதபாரகரும் ஒருவரையொ
ருவர் நோக்கி, மற்றவர்களை இவன் இரட்சித்
தான்; தன்னைத்தானே இரட்சிக்கத் திராணி இல்
௩௨ லை.—நாம் கண்டு விசுவாசிக்கும்படிக்கு, கிறிஸ்
துவுமாய் இஸ்ரவேலருடைய இராசாவுமாயிருக்
கிறவன் இப்பொழுது சிலுவையிலிருந்து இறங்கி
வரக்கடவன் என்று பரியாசமாகச் சொன்னார்
கள்; [3]அவருடனே கூடச் சிலுவைமரங்களில்
அறையப்பட்ட பேர்களும் அவரை நிந்தித்
தார்கள்.

௩௩ [4]ஆறாம் மணிநேரம் முதல் ஒன்பதாம் மணி
நேரம் வரைக்கும், தேசம் எங்கும் அந்தகாரம்
௩௪ உண்டாயிற்று. — ஒன்பதாம் மணி நேரத்திலே
இயேசுவானவர், [5]எலோயி, எலோயி, லம்மா சப
குத்தானி என்று மிகுந்த சத்தத்தோடு கூப்பிட்
டார்; அதற்கு என் தேவனே, என் தேவனே,
ஏன் நீர் என்னைக் கைவிட்டீர் என்று அருத்த
௩௫ மாம்.—சமீபமாய் நின்றவர்களில் சிலர் அதைக்
கேட்டு, இதோ, இவன் எலியாவை அழைக்கி
௩௬ றான் என்றார்கள்.-[6]ஒருவன், பொறுத்துக்கொள்
ளுங்கள், இவனை இறக்கும்படிக்கு எலியா வரு
வதைப் பார்ப்போம் என்று சொல்லி, [7]ஒரு கடற்
காளானைக் காடியிலே தோய்த்து, அதை ஒரு கம்
பின்மேல் பூட்டி, சுவைக்கும்படி அவருக்குக்
கொடுத்தான்.

௩௭ [8]பின்பு இயேசுவானவர் மிகுந்த சத்தமிட்டுச்
௩௮ சீவனைவிட்டார்.-[9]உடனே தேவாலயத்திலுள்ள
திரைச்சீலை மேலேதொடங்கிக் கீழ்வரைக்கும்
௩௯ இரண்டாகக் கிழிந்தது. — [10]அல்லாமலும் அவ
ருக்கு எதிரே நின்ற சேனைத்தலைவன், அவர் அப்
படிப்பட்ட சத்தத்தோடே சீவனை விட்டதைக்
கண்டு, மெய்யாய் இந்த மனிதன் தேவகுமாரனா
௪௰ யிருந்தான் என்றான்.—[11]ஸ்திரிகளும் தூரத்திலி
ருந்து பார்த்தார்கள்; [12]அவர்களில் கலிலேயா
நாட்டிலே அவருக்குப் பின்சென்று ஊழியம்
செய்துவந்த [13]மகுதல ஊராளாகிய மரியாளும்,
சின்ன யாக்கோபுக்கும் யோசேயுக்கும் தாயா
௪௧ கிய மரியாளும், சாலோமே என்பவளும்,—அவ
ருடனே கூட எருசலேமுக்கு வந்த மற்ற அநேக
ஸ்திரிகளும் இருந்தார்கள்.

௪௨ [14]ஓய்வுநாளுக்கு முந்தின நாள் எத்தன நாளா
௪௩ னபடியினாலே, சாயந்தரமானபொழுது,-[15]அரி
மத்தியா ஊரானுமாய், கனம்பொருந்திய ஆலோ
சனைக்காரனுமாய், பராபரனுடைய இராச்சியத்
தின் ஆளுகை வரக் காத்துக்கொள்ளுகிறவனுமா
யிருந்த யோசேப்பு என்பவன், தயிரியங்கொ
ண்டு பிலாத்துவினிடத்திற்குப்போய், இயேசுவி
னுடைய சரீரத்தைக் கேட்டுக்கொண்டான்.—
அவர் அப்படிச் சீக்கிரமாய் மரணம் அடைந்த ௪௪
தைக்குறித்துப் பிலாத்து ஆச்சரியப்பட்டு சே
னைத்தலைவனை அழைப்பித்து, அவர் இறந்து
போய் எவ்வளவு காலமாயிற்று என்று விசாரித்
து, — சேனைத்தலைவனாலே அறிந்துகொண்ட ௪௫
பின்பு, அந்தச் சரீரத்தை யோசேப்புக்கு ஒப்புக்
கொடுத்தான்.-அவன் போய் [16]புடவை வாங்கிக் ௪௬
கொண்டு வந்து, சரீரத்தை இறக்கிப புடவையி
லே சுற்றி, கல்மலையிலே வெட்டப்பட்ட கல்ல
றையிலே அதை வைத்து, அந்தக் கல்லறையின்
திறப்பிலே ஒரு கல்லைப் புரட்டிவைத்தான்.—
அவரை வைக்கப்பட்ட இடத்தை மகுதல ஊரா ௪௭
ளாகிய மரியாளும் யோசேயின் தாயாகிய மரி
யாளும் பார்த்தார்கள்.

## ௰௬. அதிகாரம்.

௧. ஒரு தெய்வதூதன் கிறிஸ்துவினுடைய உயிர்த்தெழுதலை மூன்று ஸ்திரீகளுக்கு அறிவித்தது. ௯. கிறிஸ்து தம்மை மகுதலேனாளாகிய மரியாளுக்கும், ௰௨. கிராமத்துக்கு நடந்துபோகிற இரண்டுபேருக்கும், ௰௪. பின்பு அப்போஸ்தலர்களுக்கும் தரிசனையானது. ௰௫. அப்போஸ்தலர்களை உலகமெங்கும் பிரசங்கிக்கும்படி அனுப்பினது. ௰௯. அவர் பரமண்டலத்துக்கு ஏறினது.

[17]ஓய்வுநாளானபின்பு மகுதல ஊராளாகிய மரி ௧
யாளும், யாக்கோபின் தாயாகிய மரியாளும், சா
லோமே என்பவளும் அவருக்கு அபிஷேகம்
பண்ணும்படிக்குச் [18]சுகந்த வருக்கங்களை வாங்
கிக்கொண்டு,—[19]ஓய்வுநாளுக்குப்பின் முதல்நா ௨
ளின் அதிகாலையிலே சூரியன் உதயமாகிறபொ
ழுது, கல்லறைக்குப் போனார்கள். — (போகை ௩
யில்) அவர்கள் அந்தக் கல்லறையின் திறப்பிலே
இருக்கிற கல்லை நமக்காக யாவன் தள்ளிப்போ
டுவான் என்று சொல்லி,—பின்பு அண்ணாந்து ௪
பார்க்கிறபொழுது, அந்தக் கல் மிகவும் பெரிதா
யிருந்தும், அது தள்ளப்பட்டதென்று கண்டார்
கள். — [20]கல்லறையிலே அவர்கள் பிரவேசித்த ௫
பொழுது, வலதுபக்கத்திலே வெண்மையான
அங்கியைத் தரித்து உளுக்காந்திருக்கிற ஒரு
வாலிபனைக் கண்டு மிகவும் பயந்தார்கள். —
[21]அவன் அவர்களுடனே சொன்னது: பயப்ப ௬
டாதிருங்கள், சிலுவையிலே அறையப்பட்ட நா
சரேனாகிய இயேசுவை நீங்கள் தேடுகிறீர்கள்,
அவர் எழுந்தார், அவர் இங்கே இல்லை, இ
தோ, அவர் வைக்கப்பட்ட இடம்.—ஆகையால் ௭
நீங்கள் அவருடைய சீஷர்களிடத்திற்கும் பே
துருவினிடத்திற்கும் போய், [22]உங்களுடனே
அவர் சொன்னபடி உங்களுக்குமுன்பாகக் கலி
லேயா நாட்டுக்குப் போவார் அங்கே அவரைக்

1 சங் ௨௨. ௭.—2 மாற். ௰௪. ௫௮. யோவா. ௨. ௰௯.—3 மத். ௨௭. ௪௪. லூக். ௨௩. ௩௯.
4 மத். ௨௭. ௪௫. லூக். ௨௩. ௪௪.
5 சங். ௨௨. ௧. மத். ௨௭. ௪௬.
6 மத். ௨௭ ௪௮. யோவா. ௰௯. ௨௯.
7 சங் ௬௯. ௨௧.—8 மத். ௨௭. ௫௰. லூக் ௨௩. ௪௬. யோவா. ௰௯. ௩௰.
9 மத். ௨௭. ௫௧ லூக். ௨௩ ௪௫.
10 மத். ௨௭. ௫௪. லூக். ௨௩. ௪௭.
11 சங். ௩௮. ௰௧.—12 மத். ௨௭. ௫௫. லூக். ௨௩ ௪௯.
13 லூக். ௮. ௨, ௩.—14 மத் ௨௭. ௫௭. லூக் ௨௩. ௫௰. யோவா. ௰௯. ௩௮.—15 லூக். ௨. ௨௫, ௩௮.
16 மத். ௨௭ ௫௯, ௬௰. லூக். ௨௩. ௫௩. யோவா ௰௯ ௪௰.
17 மத். ௨௮. ௧. லூக். ௨௪. ௧. யோவா. ௨௰. ௧.—18 லூக் ௨௩. ௫௬.
19 லூக். ௨௪. ௧. யோவா. ௨௰. ௧.
20 லூக். ௨௪. ௩. யோவா. ௨௰. ௰௨.—21 மத் ௨௮ ௫, ௭.
22 மத். ௨௬. ௩௨. மாற். ௰௪. ௨௮.

காண்பீர்கள் என்று அவர்களுக்குச் சொல்லுங்
௮ கள் என்றான்.—உடனே அவர்கள் புறப்பட்டு,
திகிலோடும் பிரமிப்போடும் கல்லறையை விட்
டு ஓடிப்போனார்கள்; [1]அவர்கள் பயப்பட்டப
டியினாலே ஒருவருக்கும் ஒன்றையும் சொல்ல
வில்லை.
௯ ஓய்வுநாளுக்குப் பின்பு, முதல் நாளின் அதி
காலையில் அவர் எழுந்திருந்த பின்பு, [2]முதலா
வது மகுதலேனாளாகிய மரியாளுக்குக் காணப்
௰ பட்டார்.—[3]அவராலே ஏழு பேய்களினின்று
நீக்கப்பட்டவள் அவளே; [4]அவள் புறப்பட்டுப்
போய், அவருடனே இருந்தவர்களுமாய்ப் புலம்
பி அழுதுகொள்ளுகிறவர்களுமாயிருந்த (சீஷர்க
௰௧ ளுக்கு) அறிவித்தாள்.—[5]அவர் உயிரடைந்து
அவளாலே காணப்பட்டார் என்று அவர்கள்
கேள்விப்பட்டும் அதை நம்பவில்லை.
௰௨ [6]அதின்பின்பு அவர்களில் இரண்டுபேர் ஒரு
ஊருக்குப் புறப்பட்டுப்போகையில், அவர்க
ளுக்கும் அவர் மறுரூபத்தோடே காணப்பட்
௰௩ டார்.—அவர்களும் திரும்பி அதை மற்றவர்க
ளுக்கு அறிவித்தார்கள்; அவர்களையும் இவர்கள்
நம்பவில்லை.
௰௪ [7]பின்பு அவர் போசனபந்தியில் இருந்த பதி
னொருவருக்கும்* காணப்பட்டு, தாம் உயிரோடு
எழுந்து வந்ததைக் கண்டபேர்களுடைய (வார்த்
தையை) அவர்கள் நம்பாமல் இருந்தபடியால்,
அவர்களுடைய அவிசுவாசத்துக்காகவும், இருத
யத்திலுள்ள கடினத்திற்காகவும் அவர்களைக்
கடிந்துகொண்டார்.
[8]அல்லாமலும், அவர் அவர்களை நோக்கி, நீங் ௰௫
கள் உலகத்தில் எங்கும்போய், சிருட்டிக்கப்பட்
டிருக்கிற யாவருக்கும் சுவிசேஷத்தைப் பிரசங்
கம்பண்ணுங்கள்.—[9]விசுவாசமுள்ளவனாகி ஞா ௰௬
னஸ்நானம்பெற்றவன் இரட்சிக்கப்படுவான்;
[10]விசுவாசியாதவன் ஆக்கினைக்குள்ளாக்கப்படு
வான்.—[11]அன்றியும், விசுவாசமுள்ளவர்களால் ௰௭
எப்படிப்பட்ட அதிசயங்கள் நடக்குமென்றால்,
என் நாமத்தினாலே அவர்கள் பேய்களைத் துரத்தி,
[12]புதிய பாஷைகளைப் பேசிக்கொண்டு,—[13]பாம் ௰௮
புகளையும் பிடித்துக்கொள்வார்கள்; அல்லாம
லும் மரணத்திற்கு ஏதுவானதை அவர்கள் குடித்
தால், அது அவர்களைச் சேதப்படுத்தாமல் இருக்
கும்; [14]அல்லாமலும், பிணியாளிகளின்மேல்
அவர்கள் கைகளை வைக்கும்பொழுது, அவர்கள்
சொஸ்தம் அடைவார்கள் என்றார்.
[15]கர்த்தர் அவர்களுடனே பேசிக்கொண்ட ௰௯
பின்பு, [16]அவர் பரமண்டலத்துக்கு ஏற்றப்பட்
டுப் [17]பராபரனுடைய வலதுபாரிசத்திலே வீற்
றிருக்கிறார்.—அவர்கள் புறப்பட்டு எங்கும் பிர ௨௰
சங்கம்பண்ணிக்கொண்டு வந்தார்கள்; அப்பொ
ழுது கர்த்தர் அவர்களுடனேகூடக் கிரியை
செய்து [18]அதிசயங்களை நடக்கப்பண்ணினதினா
லே, [19](அவர்களுடைய) உபதேசத்தை உறுதி
யாக்கினார்.—ஆமன்.

1 மத். ௨௮. ௮. லூக். ௨௪. ௯.
2 லூக். ௮. ௨.—3 யோவா. ௨௰. ௰௪.
4 லூக். ௨௪. ௰. யோவா. ௨௰. ௰௮.
5 லூக். ௨௪. ௰௧.—6 லூக். ௨௪. ௰௩.
7 லூக். ௨௪. ௩௬. யோவா. ௨௰. ௰௯. ௧ கொரி. ௰௫. ௫.
8 மத். ௨௮. ௰௯. யோவா. ௰௫. ௰௬.—9 கொலோ. ௧. ௨௩.
10 யோவா. ௩. ௰௮, ௩௬. அப். ௨. ௩௮: ௰௬. ௩௰, ௩௨. ௨ ரோ. ௰. ௯. ௧ பே. ௩. ௨௧.
11 யோவா. ௰௨. ௪௮.
12 லூக். ௰. ௰௭. அப். ௫. ௰௬: ௮. ௭: ௰௬. ௰௮: ௰௯. ௰௨.—13 அப். ௨. ௪: ௰. ௪௬: ௰௯. ௬. ௧ கொரி. ௰௨. ௰, ௨௮.—14 லூக். ௰. ௰௯. அப். ௨௮. ௫.—15 அப். ௫. ௰௫, ௰௬: ௯. ௰௭: ௨௮. ௮. யாக். ௫. ௰௪, ௰௫.
16 அப். ௧. ௨, ௩.—17 லூக். ௨௪. ௫௧.
18 சங். ௧௰. ௧. அப். ௭. ௫௫.
19 அப். ௫. ௰௨: ௰௪. ௩. ௧ கொரி. ௨. ௰, ௫. எபி. ௨. ௪.

* அல்லது எல்லாருக்கும்.

LUKE.

# லூக்கா என்பவர்

## எழுதின சுவிசேஷம்.

### க. அதிகாரம்.

க. லூக்காவின் முகவுரை. ரு. யோவான்ஸ்நானனும், உக. கிறிஸ்துவும் உற்பத்தியானது. ஙக. எலிசபேத்தும் மரியாளும் கிறிஸ்துவைக்குறித்துத் தீர்க்கதரிசனம் உரைத்தது. ருஎ. யோவானுடைய செனனமும், சுன்னத்தும் சொல்லப்பட்டது. சஎ. சகரியா கிறிஸ்துவைக்குறித்தும், எசு. யோவானைக்குறித்தும் தீர்க்கதரிசனம் சொன்னது.

க [1]மிகுந்த கனம்பொருந்திய தேயோப்பிலுவே,
[2]எங்களுக்குள்ளே நிறைவேறின சங்கதிகளை
ஆதிமுதல் கண்ணினாலே கண்டு, (சுவிசேஷ)
வசனத்தைப் போதித்திருக்கிறவர்கள் [3]எங்க
உ ளுக்கு ஒப்புக்கொடுத்ததின்படியே,— அவைக
ளைக்குறித்துச் சரித்திரத்தை எழுதும்படிக்கு அ
ங நேகர் துணிந்தார்கள்.—ஆகையால் [4]ஆதிமுதல்
எல்லாவற்றையும் நன்றாய் ஆராய்ந்து பார்த்த நா
னும், [5]உமக்கு உபதேசிக்கப்பட்ட பொருள்க
ச ளின் நிச்சயத்தை நீர் அறியும்படிக்கு,—[6]அவை
களை ஒழுங்காய் உமக்கு எழுதவேண்டும் என்று
எனக்கு நன்றாய்த் தோன்றிற்று:(அவையாவன,)
ரு [7]யூதேயா தேசத்தின் இராசாவாகிய ஏரோ
தேயின் நாள்களிலே [8]அபியா என்னும் ஆசாரிய
வகுப்பில் சகரியா என்னப்பட்ட ஆசாரியன்
இருந்தான்; ஆரோனின் குடும்பத்தில் பிறந்த
எலிசபேத்து என்னப்பட்டவள் அவனுக்கு
சா மனைவியாயிருந்தாள்.—[9]அவ்விருவரும் பராபர
னுக்கு முன்பாக நீதியுள்ளவர்களாய்க் கர்த்தர்
இட்ட சகல கற்பனைகளின்படியேயும் நியாயங்
களின்படியேயும் குற்றமில்லாமல் நடந்துவந்
எ தார்கள். — எலிசபேத்து மலடியாயிருந்ததுமல்
லாமல், அவ்விருவரும் வயதுசென்றவர்களான
படியினாலே அவர்களுக்குப் பிள்ளை இல்லை.

அ [10]அப்படியிருக்குங்காலத்தில், அவன் தன்
ஆசாரியவகுப்பின் முறைப்படி பராபரனுக்கு
முன்பாக ஆசாரிய ஊழியம் செய்துவருகிற
கூ பொழுது,—ஆசாரியருடைய வழக்கத்தின்படி
[11]அவன் தூபங்கொடுக்கிறதற்குச் சீட்டைப்
பெற்று, தேவாலயத்தில் பிரவேசித்தான்.—
[12]தூபங்கொடுக்கிற வேளையிலே கூட்டமான ௰
சனங்கள் எல்லாரும் புறம்பே செபம்பண்ணிக்
கொண்டிருந்தார்கள்.—[13]அப்பொழுது பராபர ௰க
னுடைய தூதன் ஒருவன் தூபபீடத்தின் வலது
பக்கத்திலே நின்று அவனுக்குக் காணப்பட்
டான்.—[14]சகரியா அவனைக் கண்டு கலங்கிப் பய ௰உ
மடைந்தான்.—தூதன் அவனை நோக்கி, சகரி ௰ங
யாவே, நீ பயப்படவேண்டாம்; உன் விண்ணப்
பம் கேட்கப்பட்டது; உன் மனைவியாகிய எலி
சபேத்து ஒரு குமாரனைப் பெறுவாள்; [15]அவனு
க்கு யோவான் என்று பேரிடுவாயாக.—அவனால் ௰ச
உனக்குச் சந்தோஷமும் களிப்பும் உண்டா
கும்; அவனுடைய பிறப்பைக்குறித்து [16]அநே
கர் சந்தோஷப்படுவார்கள். — என்னத்தினாலெ ௰ரு
னில், [17]அவன் பராபரனுக்கு முன்பாகப் பெரி
யவனாய்த் திராட்சஇரசத்தையும் மதுபானத்தை
யும் குடியாமல், [18]தன் தாயின் வயிற்றிலே பரிசு
த்த ஆவியினாலே நிரப்பப்பட்டிருப்பான்.—அல் ௰சா
லாமலும் [19]அவன் இஸ்ரவேல் சந்ததியாரில் அ
நேகரை அவர்களுடைய தேவனாகிய பராபரனி
டத்திற்குத் திருப்புவான்.— [20]பிதாக்களுடைய ௰எ
இருதயங்களைப் பிள்ளைகளிடத்திற்கும், கீழ்ப்ப
டியாதவர்களை நீதிமான்களுடைய புத்திக்கும்*
திருப்பி, செம்மையான சனங்களைப் பராபர
னுக்காக எத்தனம்பண்ணும்படிக்கு, அவன் எலி
யாவின் ஆவியையும் பலத்தையும் உடையவ
னாய் அவருக்கு முன்னே நடப்பான் என்றான்.—
அப்பொழுது சகரியா தேவதூதனை நோக்கி, ௰அ
[21]நான் அதை எதினாலே அறிவேன்? நான் கிழவ
னாயிருக்கிறேன்; என் மனைவியும் வயதுசென்
றவளாயிருக்கிறாளே என்றான். — அவனுக்குத் ௰கூ
தூதன் மாறுத்தரமாகச் சொன்னது: நான் தேவ
னுடைய சன்னிதானத்திலே நிற்கின்ற [22]காபிரி
யேல் என்பவன்; உன்னுடனே பேசி, இவை

1 அப். க. க.-2 மாற். க. க. யோவா. ௰கூ. உஎ.—3 எபி. உ. க. க பே. ரு. க. உ பே. க. ௰க. க யோ. க. க.
4 அப் ௰கூ. கூ, உ௫, உஅ. க கொரி. எ. சம்.—5 யோவா. உ௰. ௩க.
6 அப். ௰க. ச.—7 மத். உ. க.
8 க நாளா. உச. ௰கூ. நெகே. ௰உ.
ச, ௰எ.—9 க மோ. எ. க: ௰எ. க. க இரா. கூ. ச. உ இரா. உ௰. க. யோபு. க. க. அப். உங. க; உச. ௰க. பிலி. ங. கூ.
10 க நாளா. உச. ௰கூ. உ நாளா. அ. ௰ச; கக. உ.—11 உ மோ. ௩௰. எ, அ. க சாமு. உ. உஅ. க நாளா.
உங. ௰ங. உ நாளா. உகூ. ௰க.
12 க மோ. ௰கூ. ௰எ. வெளி. அ. ங, ச.
13 உ மோ. ௩௰. க.—14 நியா. சு. உஉ; ௰ங. உஉ. தானி. ௰. அ. உகூ. வச.
லூக். உ. கூ. அப். ௰. ச. வெளி. க. ௰எ.—15 ௩௰. ௩௩. வச.
16 இ. அ. வச.—17 ச மோ. க. க. நியா.
௰ங. ச. லூக். எ. ௩௩.—18 எரே. க. ரு. கலா. க. ௰ரு.—19 மல்கி. ச. ரு, சா.—20 மல்கி. ச. ரு. மத். ௰க. ௰ச. மாற். கூ. ௰உ.—21 க மோ. ௰எ. ௰எ.
22 தானி. அ. ௰சா; கூ. உக, உஉ, உங. மத். ௰அ. ௰. எபி. க. ௰ச.

* அல்லது புத்தியினால்.

களை உனக்குச் சுவிசேஷமாக அறிவிக்கும்
௨௰ படிக்கு அனுப்பப்பட்டு வந்தேன்.—என் வார்த்
தைகள் தகுதியான காலத்திலே நிறைவேறும்;
அவைகளை நீ விசுவாசியாதபடியினாலே இந்தக்
காரியங்கள் சம்பவிக்கும் நாள்வரைக்கும் நீ பே
சத் திராணியில்லாமல் [1]ஊமையனாயிருப்பாய்
௨௧ என்றான்.—சகரியாவைக் (காணக்) காத்திருந்த
சனங்கள் அவன் தேவாலயத்திலே தாமதித்ததினா
௨௨ லே ஆச்சரியப்பட்டார்கள்.—அவன் வெளியே
வந்தபொழுது அவர்களோடே பேசத் திராணி
யில்லாமல் இருந்தான்; அதினாலே தேவாலயத்
தில் ஒரு தரிசனையைக் கண்டிருப்பான் என்று
அறிந்தார்கள்; அவனும் அவர்களுக்குச் சமிக்கை
காட்டி ஊமையனாக இருந்தான்.
௨௩ பின்பு அவன் தன் ஊழியத்தின் [2]நாள்கள்
நிறைவேறினபொழுது தன் வீட்டுக்குப் போ
௨௪ னான். — அந்த நாள்களுக்குப் பின்பு அவனு
டைய மனைவியாகிய எலிசபேத்து கர்ப்பந்த
௨௫ ரித்து,—[3]சனங்களுக்குள்ளே எனக்கு உண்டாய்
இருந்த நிந்தையை நீக்கும்படிக்குப் பராபரன்
இந்த நாள்களில் என்னை நோக்கி இப்படி எனக்
குச் செய்தார் என்று சொல்லி, ஐந்துமாதம்
௨௬ வரையும் ஒளித்துக்கொண்டாள்.—ஆறும்மாதத்
திலே காபிரியேல் என்னும் தூதன் கலிலேயா
நாட்டிலுள்ள நாசரேத்தென்னும் பட்டணத்தி
௨௭ லே, — தாவீதின் குடும்பத்தானாகிய யோசேப்
பென்னும் நாமமுள்ள புருஷனுக்கு [4]நியமிக்
கப்பட்டிருந்த கன்னியாகிய மரியாள் என்பவள்
இடத்திற்குப் பராபரனால் அனுப்பப்பட்டு, —
௨௮ அவன் இருக்கிற வீட்டுக்குள் பிரவேசித்து,
[5]கிருபைபெற்றவளே,* [6]நீ வாழ்க, பராபரன்
உன்னுடனே இருக்கிறார்; பெண்களுக்குள்ளே
௨௯ நீ ஆசீர்வதிக்கப்பட்டவள் என்றான். — அவள்
அவனைக் கண்டு [7]அவனுடைய வார்த்தையைக்
கேட்டுக் கலங்கி, இந்த வாழ்த்துதல் எப்படிப்
௩௰ பட்டதோ என்று சிந்தித்தாள்.—தூதன் அவளு
டனே சொன்னது: மரியாளே, நீ தேவனிடத்
தில் கிருபை பெற்றபடியினாலே, நீ பயப்பட
௩௧ வேண்டாம். — [8]நீ கர்ப்பந்தரித்து ஒரு குமார
னைப் பெறுவாய்; அவருக்கு [9]இயேசு என்று
௩௨ பேரிடுவாயாக.—அவர் பெரியவராய் [10]உன்னத
மானவருடைய குமாரன் என்னப்படுவார்; [11]அல்
லாமலும் தேவனாகிய பராபரன் அவருக்கு
அவருடைய பிதாவாகிய தாவீதின் இராசாசனத்
௩௩ தைக் கொடுப்பார். — [12]அவர் யாக்கோபினு
டைய குடும்பத்திற்கு என்றென்றைக்கும் இராச
னாயிருப்பார்; அவருடைய ஆளுகைக்கு முடிவு

வாராது என்றான்.—அதற்கு மரியாள் தூதனை ௩௪
நோக்கி, இது எப்படியாகும்? ஒரு புருஷனை
யும் அறியேனே என்றாள். — தூதன் அவளுக்கு ௩௫
மாறுத்தரமாகச் சொன்னது: [13]பரிசுத்தஆவி
உன்மேல் வரும்; உன்னதமானவருடைய பலம்
உன்மேல் நிழலிடும்; ஆகையால் உன்னிடத்
தில் பிறக்கும் பரிசுத்தமானது [14]தேவனுடைய
குமாரன் என்னப்படும்.—அல்லாமலும் பராபர ௩௬
னால் கூடாத காரியம் ஒன்றும் இல்லாதபடியினா
லே,—[15]உனக்கு இனமாயிருக்கிற எலிசபேத் ௩௭
தும் தனது முதுமையான வயதிலே ஒரு புத்திர
னைக் கர்ப்பந்தரித்தாள்; மலடியென்னப்பட்ட
அவளுக்கு இது ஆறும்மாதமே என்றான்.—
அதற்கு மரியாள், இதோ, நான் ஆண்டவருக்கு ௩௮
அடிமையாயிருக்கிறேன்; உம்முடைய வார்த்
தையின்படி எனக்கு ஆகக்கடவது என்றாள்;
அப்பொழுது தேவதூதன் அவளைவிட்டுப் போ
னான்.

அந்த நாள்களில் மரியாள் எழுந்து மலைத்தே ௩௯
சத்திலே [16]யூதாவிலுள்ள பட்டணத்திற்குத் தீவிர
மாய்ப் போய்,—சகரியாவின் வீட்டில் பிரவே ௪௰
சித்து எலிசபேத்தை வாழ்த்துதல் செய்தாள்.—எ ௪௧
லிசபேத்து மரியாளுடைய வாழ்த்துதலைக் கேட்
டபொழுது அவளுடைய வயிற்றில் இருந்த
பிள்ளை துள்ளிற்று; அல்லாமலும் எலிசபேத்து
பரிசுத்த ஆவியினாலே நிரப்பப்பட்டு,—மிகுந்த ௪௨
சத்தத்துடனே சொன்னதாவது: [17]பெண்களுக்
குள்ளே நீ ஆசீர்வதிக்கப்பட்டவள்; உன் கர்ப்
பத்தின் கனியும் ஆசீர்வதிக்கப்பட்டது. — என் ௪௩
ஆண்டவருடைய தாயார் என்னிடத்திற்கு வரு
கிறது எனக்கு எதினாலே கிடைத்தது?—நீ வாழ்த் ௪௪
துதல் சொல்லிய சத்தம் என் காதுகளில் விழுந்த
வுடனே என் வயிற்றில் பிள்ளை களிப்பாய்த்
துள்ளிற்று.—விசுவாசித்தவளுக்குப்† பராபரனா ௪௫
லே சொல்லப்பட்டவைகள் நிறைவேறுவதால்
அவள் பாக்கியமுள்ளவளே என்றான்.

அப்பொழுது மரியாள் சொன்னதாவது:— ௪௬
[18]என் ஆத்துமா பராபரனைப் புகழுகின்றது; என் ௪௭
ஆவி என் இரட்சகராகிய தேவனில் களிகூ
ருகின்றது.—[19]என்னத்தினாலெனில், அவர் தம்மு ௪௮
டைய அடிமையின் தாழ்மையை நோக்கிப்பார்த்
தார்; [20]வல்லமையுடையவர் எனக்குப் பெரிய
காரியங்களைச் செய்தபடியினாலே,—இதுமுதல் ௪௯
[21]வம்சத்தார் எல்லாரும் என்னைப் பாக்கியவதி
என்பார்கள்; [22]அவருடைய நாமம் பரிசுத்தமுள்
ளது.—[23]அவருடைய இரக்கம் தலைமுறைதலை ௫௰

1 எசே. ௩. ௨௬: ௨௪. ௨௭.
2 ௨ இரா. ௰௧. ௫. ௧ நாளா. ௯. ௨௫.
3 ௧ மோ. ௩௰. ௨௩. ஏசா. ௪. ௧: ௫௪. ௧, ௪.—4 மத். ௧. ௰௮. லூக். ௨. ௪, ௫.—5 தானி. ௯. ௨௩: ௰. ௰௯.
6 நியா. ௬. ௰௨.—7 ௰௨. ௨௯.
8 ஏசா. ௭. ௰௪. மத். ௧. ௨௧.
9 லூக். ௨. ௨௧.—10 மாற். ௫. ௭.
11 ௨ சாமு. ௭. ௰௧, ௰௨. ஏசா. ௯. ௬, ௭: ௰௬. ௫. சங். ௱௩௨. ௰௧. எரே. ௨௩. ௫. வெளி. ௩. ௭.
12 தானி. ௨. ௪௪: ௭. ௰௪, ௨௭. ஒபதி. ௨௧. மீகா. ௪. ௭. யோவா. ௰௨. ௩௪. எபி. ௧. ௮.
13 மத். ௧. ௨௰.—14 மத். ௰௪. ௩௩: ௨௬. ௬௩, ௬௪. மாற். ௧. ௧. யோவா. ௧. ௩௪: ௨௰. ௩௧. அப். ௮. ௩௭. ரோ. ௧. ௪.—15 ௧ மோ. ௰௮. ௰௪. எரே. ௩௨. ௰௭. சகரி. ௮. ௬. மத். ௰௯. ௨௬. மாற். ௰. ௨௭. லூக். ௰௮. ௨௭. ரோ. ௪. ௨௧.
16 யோசு. ௨௧. ௯, ௰, ௰௧.
17 ௨௮. வச. நியா. ௫. ௨௪.
18 ௧ சாமு. ௨. ௧. சங். ௩௪. ௨, ௩: ௩௫. ௯. ஆப. ௩. ௰௮.—19 ௧ சாமு. ௧. ௰௧. சங். ௱௩௮. ௬.—20 சங். ௭௧. ௰௯, ௱௨௬. ௨, ௩.—21 மல்கி. ௩. ௰௨. லூக். ௰௧. ௨௭.
22 சங். ௱௰௧. ௯.
23 ௧ மோ. ௰௭. ௭. ௨ மோ. ௨௰. ௬. சங். ௱௩. ௰௭, ௰௮.

* அல்லது தயவுபெற்றவளே; ௩௰. வசனம்.—† அல்லது அதை விசுவாசித்த.

முறையாக அவருக்குப் பயப்படுகிறவர்களிடத்
௫௧ தில் உண்டாயிருக்கும். —[1] அவர் தம்முடைய
கையினாலே பலத்த காரியங்களைச் செய்தார்; தங்
கள் இருதயத்தின் சிந்தனையில் [2]இறுமாப்பாயிருக்
௫௨ கிறவர்களை அவர் சிதறப்பண்ணி,—[3]பலவான்க
ளைப் பத்திராசனங்களிலிருந்து தள்ளித் தாழ்மை
௫௩ யுள்ளவர்களை உயர்த்தி,—[4]பசியுள்ளவர்களை நன்
மைகளினாலே நிரப்பிச் சம்பூரணமுள்ளவர்களை
௫௪ வெறுமையாய் அனுப்பினார்.— அவர் நம்முடை
ய பிதாக்களோடே சொன்னபடியே, [5]ஆபிரகா
முக்கும் அவனுடைய சந்ததிக்கும் என்றென்
௫௫ றைக்கும் இரக்கம்செய்ய நினைத்து,—[6]தம்மு
டைய தாசராகிய இஸ்ரவேலை ஆதரித்தார் என்
றாள்.

௫௬ பின்பு மரியாள் ஏறக்குறைய மூன்று மாதம்
அவளுடனே இருந்து தன் வீட்டுக்குத் திரும்பி
௫௭ னாள்.—எலிசபேத்துக்குப் பேறுகாலம் உண்டா
னபொழுது, அவள் ஒரு குமாரனைப் பெற்றாள்.—
௫௮ பராபரன் தமது இரக்கத்தை அவளிடத்தில் பெ
ரிதாக்கினார் என்று அவளுடைய அயலகத்தா
ரும் பந்துசனங்களும் கேள்விப்பட்டு, [7]அவளு
௫௯ டனே கூடச் சந்தோஷப்பட்டார்கள்.—பின்பு
எட்டாம் நாளிலே [8]அவர்கள் பிள்ளைக்கு விருத்த
சேதனம் பண்ணும்படிக்கு வந்து, அதின் தகப்ப
னுடைய நாமத்தின்படி அதற்குச் சகரியா என்று
௬௰ பேரிட்டார்கள்.— அப்பொழுது அதின் தாய்
சொன்னது: அப்படியல்ல, [9]அதற்கு யோவான்
௬௧ என்று பேரிடவேண்டும் என்றாள்.—அவர்கள்
அவளை நோக்கி, உன் உறவிலே இந்தப் பேராக
அழைக்கப்பட்டவர்கள் ஒருவரும் இல்லையே
௬௨ என்று சொல்லி,—அதினுடைய தகப்பனைநோக்
கி, இதற்கு என்னபேரிட மனதாய் இருக்கிறீர்
௬௩ என்று சமிக்கையினாலேகேட்டார்கள்.—அவன்
எழுதுகிறதற்குப் பலகையைக் கேட்டு வாங்கி,
[10]இதின் பேர் யோவான் என்று எழுதினான்; எல்
௬௪ லாரும் ஆச்சரியப்பட்டார்கள்.—[11]அல்லாமலும்
அந்நிமிஷத்திலே அவனுடைய வாயும் நாவும்
திறக்கப்பட, அவன் பராபரனைத் தோத்திரம்
௬௫ செய்து பேசினான்.— (அதினாலே) அவர்களைச்
சுற்றி வாசமாயிருந்த எல்லாருக்கும் பயம் வந்த
து; [12]அன்றியும் யூதேயாவின் மலைத்தேசம் எங்
கும் அந்தச் சங்கதிகளெல்லாம்* சொல்லிக்
௬௬ கொள்ளப்பட்டன.— (அவைகளைக்) [13]கேள்
விப்பட்டவர்கள் எல்லாரும் (அவைகளைத்) தங்
கள் மனதிலே வைத்துக்கொண்டு, அந்தப் பிள்
ளை எப்படிப்பட்டதாயிருக்குமோ என்றார்கள்;
[14]கர்த்தருடைய கை அந்தப் பிள்ளையினிடத்தில்
இருந்தது.

அன்றியும் அவனுடைய தகப்பனாகிய சகரியா ௬௭
[15]பரிசுத்தஆவியினாலே நிரப்பப்பட்டு, தீர்க்கதரி
சனமாய்ப் பகர்ந்ததாவது:—[16]நாம் நம்முடைய ௬௮
சத்துருக்களின் கைகளுக்குத் தப்புவிக்கப்பட்ட
வர்களாக,—[17]நம்முடைய வாழ்நாள் எல்லாம் ௬௯
பயமில்லாமல் தேவபத்தியாயும் நீதியாயும் தமக்
குமுன்பாக ஊழியம்செய்வதற்கு அனுக்கிரகம்
செய்யும்பொருட்டாய்,—தாம் [18]நம்முடைய பி ௭௰
தாவாகிய ஆபிரகாமுக்கு இட்ட ஆணையாகிய தம்
முடைய பரிசுத்த உடம்படிக்கையை நினைத்து,—
[19]நம்முடைய பிதாக்கள்மேல் இரக்கமாகி, — ௭௧
[20]தாம் உலகத்தின் தோற்றம் முதற்கொண்டிருந்த ௭௨
தமது பரிசுத்த தீர்க்கதரிசிகளால் அருளிச்செய்த
படியே,—நம்முடைய சத்துருக்களில் நின்றும், ௭௩
நம்மைப் பகைக்கிற யாவருடைய கைகளில்
நின்றும்,—[21]நம்மை இரட்சிக்கிற பலத்த இரட் ௭௪
சகரைத் தம்முடைய தாசனாகிய தாவீதின் குடும்
பத்திலே தோன்றப்பண்ணி,— (இவ்விதமாய்) ௭௫
[22]தம்முடைய சனங்களைச் சந்தித்து மீட்டுக்
கொண்ட இஸ்ரவேலருடைய தேவனாகிய [23]ப
ராபரனுக்குத் தோத்திரம் உண்டாவதாக.—பால ௭௬
கனே, நீ மரணநிழலாகிய இருளிலே அகப்பட்
டிருக்கிறவர்களுக்கு [24]ஒளியுண்டுபண்ணும்படி
யாயும், நம்முடைய கால்களைச் சமாதானமுள்ள
மார்க்கத்திலே நடத்தும்படியாயும்,—உன்னதத் ௭௭
திலிருந்து சூரிய உதயம் † நமக்குத் தோன்றப்
பண்ணின நம்முடைய தேவனுடைய மிகுந்த
இரக்கங்களினாலே ‡ — [25]அவருடைய சனங்க ௭௮
ளுக்குப் பாவமன்னிப்பாகிய§ இரட்சண்ணியத்
தைத் தெரியப்படுத்தி,— [26]இவ்விதமாய் அவருக் ௭௯
காக மார்க்கத்தைச் செம்மையாக்கும்பொருட்
டாக அவருக்குமுன்னே நடப்பாய், ஆகையால்
நீ எல்லாரிலும் மேலானவருடைய தீர்க்கதரிசி
என்னப்படுவாய் என்றான்.

[27]பின்பு அந்தப் பிள்ளை வளர்ந்து ஆவியிலே ௮௰
பலம்கொண்டு, இஸ்ரவேலருக்குத் தன்னைக்
காண்பிக்கும் நாள்வரைக்கும் [28]வனாந்தரங்களில்
இருந்தான்.

## ௨. அதிகாரம்.

௧. அகுஸ்து இராயன் உரோம இராச்சியத்தைக் குடிமதிப்புச் செய்தது. ௬. கிறிஸ்து பிறந்தது. ௮. அதை ஒரு தூதன் மேய்ப்பர்களுக்கு அறிவித்தது, ௰௩. அதற்காக அநேகம் தூதர் ஸ்தோத்திரம்பாடினது. ௨௧. கிறிஸ்து சுன்னத்து பண்ணப்பட்டது ௨௨. மரியாள் சுத்திகரிக்கப்பட்டது. ௨௫. சிமேயோனும், அன்னாளும் கிறிஸ்துவைக்குறித்துத் தீர்க்க

1 சங். ௯௮.௧: ௱௮.௰௫.௭௪ ௯௰. ௱: இக. ௯: ௫௨. ௰.
2 சங். ௩௩. ௰. ௧ பே. ௫. ௫.
3 ௧ சாமு.௨.௬.௭. யோபு.௫.௰௨. சங். ௱௰௩. ௭.—4 ௧ சாமு.௨.௫. சங்.௩௪. ௰.—5 ௧ மோ. ௰௭.௰௯. சங்.௱௩௨.௰௧. உரோ. ௰௧. ௨௭. கலா. ௩. ௰௬.—6 சங். ௯௮. ௩. எரே. ௩௧. ௩, ௨௰.
7 ௰௪. ௨௪.—8 ௧ மோ. ௰௭. ௰௨. ௩ மோ. ௰௨. ௩.—9 ௰௩. ௨௪.
10 ௰௩ ௨௪.—11 ௨௰. ௨௪
12 ௩௯. ௨௪.—13 லூக். ௨.௰௯, ௫௧
14 ௧ மோ. ௩௯. ௨. சங் ௮௰. ௰௭: ௮௯.௨௧. அப். ௰௧.௨௧.
15 யோவே. ௨. ௨௮.-16 உரோ. ௧. ௰௮, ௨௨. எபி. ௯. ௰௪.
17 எரே. ௩௨.௩௯,௪௰. எபே. ௪.௨௪.
உ தெச. ௨.௰௩. உ தீமோ ௧.௯. தீத்.௨.௰௨. ௧ பே.௧.௰௫.௨பே. ௧.௪.—18 ௧ மோ ௰௨. ௩:௰௭.௪: ௨௨. ௰௬,௰௭. எபி. ௬. ௰௩,௰௭.
19 ௧ மோ.௨௧.௪௨.சங்.௯௮.௩:௱௫. அ௯: ௩௧. ௪௫ ஏசே ௰௯. ௬௬. ௫௪. ௨௪.—20 எரே. ௨௩. ௫,௬: ௩௰.௰. தானி.௯.௨௪. அப் ௩.௨௧. உரோ. ௧.௨.—21 சங்.௱௨௨.௰௭.
22 உ மோ. ௩ ௰௬: ௪.௩௧. சங்.௱௰௧. ௯. லூக் ௭. ௰௬.—23 ௧ இரா.௧. ௪௮. சங் ௪௧.௰௩: ௭௨. ௰௮: ௱௬. ௪௮ 24 ஏசா.௯.௨: ௪௨.௭: ௪௯. ௯. மத். ௪. ௰௬. அப் ௨௬. ௰௮.
25 மாற். ௧ ௪. லூக். ௩. ௩.
26 ஏசா. ௪௰. ௩. மல்கி. ௩.௧: ௪. ௫. மத். ௰௧. ௰௭. ௨௪.—27 லூக்.௨. ௪௰.—28 மத். ௩. ௧: ௰௧. ௭.

* அல்லது பேச்செல்லாம்.—† அல்லது பகற்ரவக்கம்.—‡ இரக்கக்குடற்களினாலே.—§ அல்லது மன்னிப்பினால்; ௪ மோ ௨௪, ௰௭. ஏசா. ௰௧. ௧. சகரி. ௩ ௮: ௬. ௰௨. மல்கி.௪. ௨.

தரிசனம் உரைத்தது. ௪௰. இயேசு ஞானத்தில் வளர்ந்து, ௪௧. தேவா
லயத்தில் சாஸ்திரிகளோடே சம்பாஷித்து, ௫௧. தாய் தகப்பனுக்குக்
கீழ்ப்படிந்திருந்தது.

௧ அந்நாள்களில் குடிகள் எல்லாருக்கும் உண்டா
கிய பேர் * முதலானவைகளையும் எழுதவேண்
டும் என்று அகுஸ்து இராயனுடைய கட்டளை
௨ வந்தது.—[1]சீரியா நாட்டிலே கிரேனி என்பவன்
துரையானபொழுது, முதலாவது இந்தக் குடிம
௩ திப்பு உண்டாயிற்று.—அந்தப்படி எல்லாரும்
எழுதப்படும்படிக்கு, தங்கள் தங்கள் ஊர்களுக்
௪ குப் போனார்கள்.—அப்பொழுது யோசேப்பும்
[2]தாவீதின் குடும்பத்தானுமாய் வம்சத்தானுமாய்
இருந்தபடியினாலே, [3]தனக்கு நியமிக்கப்பட்ட
கர்ப்பவதியாகிய மனைவி மரியாளுடனேகூட
எழுதப்படும்படிக்குக் கலிலேயா நாட்டிலுள்ள
௫ நாசரேத்தூரைவிட்டு,—[4]யூதேயா நாட்டிலுள்ள
பெத்லேகேம் என்னப்பட்ட தாவீதின் ஊருக்
குப் போனான்.

௬ அவ்விடத்திலே அவர்கள் இருக்கும் காலத்
தில், அவள் பிள்ளைபெறுகிறதற்குக் காலம் சம்
௭ பவித்தது.—அப்பொழுது அவள் [5]தன் முதற்
பேறான குமாரனைப் பெற்று, அவரைப் புடவை
களில் சுற்றிச் சத்திரத்திலே (வேறு) இடம் இல்
லாதபடியினாலே அவரைப் பசுத்தொட்டியிலே
வைத்தாள்.

௮ அன்றியும் அந்தத் திசையிலே மேய்ப்பர்
வெளியிலே தங்கி, இராத்திரியிலே தங்கள் ஆட்
டுக்கூட்டத்தைக் காத்துக்கொண்டு† இருந்தார்
௯ கள். — அப்பொழுது பராபரனுடைய தூதன்
அவர்களிடத்தில் வந்து நிற்க, பராபரனுடைய
மகிமை அவர்களைச் சுற்றிப் பிரகாசித்தது; [6]அ
௰ வர்கள் மிகவும் பயந்தார்கள்.—உடனே தேவதூ
தன் அவர்களை நோக்கிப் பயப்படாதிருங்கள்,
[7]எல்லாச் சனங்களுக்கும் உண்டாகும் மிகுந்த
சந்தோஷத்தை உங்களுக்குச் சுவிசேஷமாக
௰௧ அறிவிக்கிறேன். — என்னவென்றால் [8]இன்று
[9]கர்த்தராகிய கிறிஸ்து என்னும் இரட்சகர் [10]தாவீ
௰௨ தின் ஊரிலே உங்களுக்காகப் பிறந்தார்.—பிள்
ளையைப் புடவைகளில் சுற்றிப் பசுத்தொட்டி
யிலே வைத்திருக்கக் காண்பீர்கள்; அதுவே உங்
௰௩ களுக்கு அடையாளம் என்றான். — அப்பொ
ழுது சடுதியாய்ப்[11]பரமண்டலத்திலுள்ள மிகுந்த
சேனைகள் அந்தத் தூதனுடனேகூட இருந்தன.-
௰௪ [12]உன்னதங்களில் இருக்கிற பராபரனுக்குப்
புகழ்ச்சியும், [13]பூமியிலே சமாதானமும், [14]மனி
தர்மேல் பிரியமும் உண்டாவதாக என்று பரா
௰௫ பரனைத் துதித்தார்கள்.—பின்பு தேவதூதர்கள்
அவர்களைவிட்டுப் பரமண்டலத்திற்குப் போன

பொழுது, மேய்ப்பர் ‡ ஒருவரை ஒருவர் நோக்கி,
நாம் பெத்லேகேம் ஊருக்குப்போய், கர்த்தரால்
நமக்கு அறிவிக்கப்பட்டு நடந்த இந்தச் சங்கதி
யைப் பார்ப்போம் வாருங்கள் என்று சொல்லிக்
கொண்டு, — தீவிரமாய்ப் போய், மரியாளையும் ௰௬
யோசேப்பையும் பசுத்தொட்டியிலே கிடக்கிற
பிள்ளையையும் கண்டார்கள்.—பின்பு அவர்கள் ௰௭
அந்தப் பிள்ளையைக்குறித்துத் தங்களுக்குச் சொ
ல்லப்பட்ட வார்த்தையைப் பிரசித்தம்பண்ணி
னார்கள்.—மேய்ப்பரால் சொல்லப்பட்டவைக ௰௮
ளைக் கேட்ட யாவரும் அவைகளைக்குறித்து ஆச்
சரியப்பட்டார்கள்.—[15]மரியாள் அவ்வார்த்தை ௰௯
களை எல்லாம் தன் இருதயத்திலே காத்துச் சிந்
தித்துக்கொண்டாள். — மேய்ப்பரும் தங்களு ௨௰
டனே சொல்லப்பட்டதின்படியே கேட்டுக்
கண்ட யாவுக்காகவும் பராபரனைப் புகழ்ந்து
துதித்துக்கொண்டு திரும்பினார்கள்.

[16]பிள்ளைக்கு விருத்தசேதனம் செய்கிறதற்கு ௨௧
ரிய எட்டாம்நாளிலே அது கர்ப்பமாகிறதற்கு
முன்னே தேவதூதனாலே சொல்லப்பட்ட [17]இ
யேசு என்னும் நாமம் அதற்குக் கொடுக்கப்பட்
டது. — அல்லாமலும் [18]மோசேயின் நியாயப்பிர ௨௨
மாணத்தின்படியே அவர்களைச் சுத்திகரிப்பதற்
கான நாள்கள் நிறைவேறினபொழுது,—[19]முதற் ௨௩
பேறான எந்த ஆண்பிள்ளையும் பராபரனுக்குப்
பிரதிஷ்டையாக்கப்படவேண்டும் என்று [20]பரா
பரன் அருளிச்செய்த நியாயப்பிரமாணத்தில்
எழுதியிருக்கிறபடி,—அவர்கள் அதைப் பராபர ௨௪
னுக்கு ஒப்புக்கொடுக்கும்படிக்கும் பராபரனு
டைய நியாயப்பிரமாணத்தில் சொல்லியிருக்கி
றபடி ஒரு சோடு காட்டுப்புறாவை அல்லது
இரண்டு புறாக்குஞ்சுகளைப் பலியிடும்படிக்கும்
பிள்ளையை எருசலேம்பட்டணத்திற்குக் கொண்
டுபோனார்கள். — அப்பொழுது சீமேயோன் ௨௫
என்று பேர்கொண்ட மனிதன் எருசலேமில்
இருந்தான்; அவன் நீதியும் தேவபத்தியும் உள்ள
வனுமாய் [21]இஸ்ரவேலருக்கு ஆறுதல் செய்கிற
வர் வரக் காத்திருக்கிறவனுமாய் இருந்தான்;
அவனில் பரிசுத்த ஆவியானவர் இருந்தார்.—
அல்லாமலும் பராபரனுடைய கிறிஸ்துவைக் ௨௬
காணும்முன்னே, [22]நீ மரணம் அடைவதில்லை
என்று பரிசுத்த ஆவியினாலே அவனுக்கு உத்
தரவு உண்டாயிருந்தது.—[23]அவன் அந்த ஆவியி ௨௭
னாலே ஏவப்பட்டுத் தேவாலயத்திலே வந்திருந்
தான்; அப்பொழுது இயேசு என்னும் பிள்ளை
யை நியாயப்பிரமாண முறைமையின்படி செய்
யத் தாய்தகப்பன்மார் அவரை உள்ளே கொண்டு

1 அப். ௫. ௩௭.—2 ௧ சாமு. ௰௬. ௧, ௪. யோவா. ௭. ௪௨.—3 மத். ௧. ௰௮. லூக். ௧. ௨௭.—4 மத். ௧. ௰௭. லூக். ௧. ௨௭.—5 மத். ௧. ௨௫.
6 லூக். ௧. ௰௨.—7 ௧ மோ. ௰௨. ௩. மத். ௨௮. ௰௯. மாற். ௧. ௰௫: ௩௩. ௩௨, ௪௪. லூக். ௨௪. ௪௭. கொலோ. ௧. ௨௩.—8 மத். ௧. ௨௧: ௰௬. ௰௬. ௰௬. லூக். ௧. ௪௯. அப். ௨. ௩௬: ௰. ௩௬. பிலி. ௨. ௰௧.
9 மத். ௧. ௨௧.—10 ஏசா. ௯. ௬.
11 ௧ மோ. ௨௮. ௰௨: ௩௨. ௧, ௨. சங். ௱௩. ௨௰, ௨௧: ௱௪௮. ௨. தானி. ௭. ௰. எபி. ௧. ௰௪. வெளி. ௫. ௰௧.
12 லூக். ௰௯. ௩௮. எபே. ௩. ௫: ௧. ௰, ௨௧. வெளி. ௫. ௰௩.-13 ஏசா. ௫௭. ௰௯. லூக். ௧. ௭௯. ௨ ரோ. ௫. ௧. எபே. ௨. ௰௭. கொலோ. ௧. ௨௰.
14 யோவா. ௩. ௰௬. எபே. ௨. ௫, ௮. ௨ தெச. ௨. ௰௬. ௧ யோ. ௪. ௯, ௰.
15 ௧ மோ. ௩௭. ௰௧. லூக். ௧. ௬௬. ௫௧.-16 ௧ மோ. ௰௭. ௰௨. ௩ மோ. ௰௨. ௩. லூக். ௧. ௫௯.
17 மத். ௧. ௨௧, ௨௫. லூக். ௧. ௩௧.
18 ௩ மோ. ௰௨. ௨, ௩, ௪, ௬.
19 ௨ மோ. ௰௩. ௨: ௨௨. ௨௯: ௩௪. ௰௯. ௪ மோ. ௩. ௰௩: ௮. ௰௭: ௰௮. ௰௫.-20 ௩ மோ. ௰௨. ௨, ௬, ௮.
21 ஏசா. ௪௰. ௧. மாற். ௰௫. ௪௩. ௩௮.-22 சங். ௮௯. ௪௮. எபி. ௰௧. ௫.
23 மத். ௪. ௧.

* அல்லது திறை.—† அல்லது இராக்காவல்.— ‡ அல்லது மேய்ப்பராகிய மனுஷர்.

உ௮ வருகையில்,—அவன் அவரைத் தன் கைகளில்
ஏந்திக்கொண்டு, பராபரனைத் தோத்திரித்துச்
உ௯ சொன்னது: —[1]ஆண்டவரே, புறத்தேசத்தார்க
ளுக்கு அறிவைக் கொடுப்பதற்கும் உம்முடைய
சனங்களாகிய இஸ்ரவேலருக்கு மகிமை உண்
௩௰ டாக்குவதற்குமான ஒளியாய்,—உம்மாலே எல்
௩௧ லாச் சனங்களுக்குமுன்பாகவும்,—எத்தனமாக்
கப்பட்ட இரட்சகரை நான் [2]என் கண்களாலே
௩௨ கண்டபடியினாலே, — [3]தேவரீர் உம்முடைய
வார்த்தையின்படி இப்பொழுது அடியேனைச்
சமாதானத்தோடே அனுப்பிவிடுகிறீர் என்றான்.
௩௩ அப்படி அவரைக்குறித்துச் சொல்லப்பட்ட
வைகளை அவருடைய தாயும் யோசேப்பும்
௩௪ கேட்டு, ஆச்சரியப்பட்டார்கள்.-பின்னும் சிமே
யோன் அவர்களை ஆசீர்வதித்து அவருடைய தா
யாகிய மரியாளுடனே சொன்னது: இதோ,
அநேகருடைய இருதய சிந்தனைகள் வெளியரங்
௩௫ கமாகும்படிக்கு, — இஸ்ரவேலரில் [4]அநேகர்
விழுதற்கும் எழுந்திருக்குதற்கும் [5]விரோதமாய்ப்
பேசப்படும் அடையாளமாயிருப்பதற்கும் இவர்
நியமிக்கப்பட்டிருக்கிறார்; [6]உன் ஆத்துமாவை
யே ஒரு கத்தி உருவிப்போம் என்றான்.
௩௬ அல்லாமலும் ஆசேருடைய கோத்திரத்திலே
பானுவேலின் குமாரத்தியும் தீர்க்கதரிசியுமாகிய
அன்னாள் என்பவள் இருந்தாள், அவள் கன்னி
யாய்ப் பின்பு ஏழு வருஷம் புருஷனோடே
வாழ்ந்து மிகுந்த வயதுசென்றவளாயிருந்தாள்.—
௩௭ ஏறக்குறைய எண்பத்துநாலு வயதுள்ள அந்தக்
கைம்பெண் தேவாலயத்தைவிட்டு நீங்காமல்
[7]இரவும்பகலும் செபம்பண்ணி உபவாசித்து
௩௮ ஆராதனை செய்துகொண்டுவந்தாள். — அவளும்
அவ்வேளையிலே போய் நின்று பராபரனைத்
துதித்து, [8]எருசலேமிலே* மீட்புண்டாகக் காத்
திருந்த யாவருடனேயும் அவரைக்குறித்துப்
௩௯ பேசினாள்.-பராபரனுடைய நியாயப்பிரமாணத்
தின்படி சகலத்தையும் அவர்கள் செய்து முடித்
தபின்பு கலிலேயாதேசத்திலுள்ள தங்கள் ஊரா
கிய நாசரேத்தூருக்குத் திரும்பினார்கள்.
௪௰ [9]பிள்ளையானது வளர்ந்து, ஆவியிலே பலன்
கொண்டு, ஞானத்தால் நிறையப்பட்டுத் தேவ
௪௧ தயவுள்ளவரானார். — [10]அவருடைய தாய்தகப்
பன்மார் பஸ்காவின் பண்டிகைக்கு வருஷந்
தோறும் எருசலேம் பட்டணத்திற்குப் போவார்
௪௨ கள்.—அந்தப்படிக்கு அவர் பன்னிரண்டு வய
துள்ளவரானபொழுது அவர்கள் பண்டிகை
முறைமையின்படி எருசலேமுக்குப் போய்,—
௪௩ வேண்டிய நாள் அங்கே இருந்து பின்பு திரும்பி
வருகிறபொழுது, பிள்ளையாகிய இயேசு தம்மு
டைய தாய்க்கும் யோசேப்புக்கும் தெரியாமல்
எருசலேமிலேதானே இருந்தார். — அவர்கள் ௪௪
அவர் பிரயாணக்காரருடைய கூட்டத்தில் இரு
ப்பாரென்று எண்ணி ஒரு நாள் பிரயாணமாய்
நடந்துபோய், இனத்தாருக்குள்ளும் அறிமுக
மானவர்களுக்குள்ளும் அவரைத் தேடி,—அவ ௪௫
ரைக் காணாமலிருக்கிறபொழுது எருசலேமுக்
குத் திரும்பி அவரைத் தேடி,—மூன்றுநாளைக் ௪௬
குப் பின்பு தேவாலயத்திலே அவர் போதகருக்
குள்ளே உளுக்காந்திருக்கவும், அவர்களுக்குச்
செவிகொடுக்கவும், அவர்களை வினவவும் கண்
டார்கள்.—[11]அவருடைய வசனங்களைக் கேட் ௪௭
ட யாவரும் அவருடைய புத்தியையும் மாறுத்
தரங்களையுங்குறித்துப் பிரமித்தார்கள். — (தாய் ௪௮
தகப்பன்மார்) அவரைக்கண்டு அதிசயப்பட்
டார்கள்; அல்லாமலும் அவருடைய தாய் அவ
ரை நோக்கி, மகனே, என்னத்தினாலே நீ எங்க
ளுக்கு இப்படிச் செய்தாய்? இதோ, உன் தகப்ப
னும் நானும் விசாரத்தோடே உன்னைத் தேடி
னோமே என்றாள்; [12]அதற்கு அவர்,-நீங்கள் என் ௪௯
னை ஏன் தேடினீர்கள்? நான் என் தகப்பனுக்கு
ஏற்றவைகளிலே இருக்கவேண்டியதென்று அ
றியீர்களா என்றார். —[13]அவர்கள் தங்களுக்கு ௫௰
அவர் சொன்ன வார்த்தையின் (கருத்தை) உ
ணர்ந்துகொள்ளவில்லை.—பின்பு அவர் அவர்க ௫௧
ளுடனேகூடப்போய், நாசரேத்தூரில் சேர்ந்து,
அவர்களுக்குக் கீழடங்கினார்; நடந்த சங்கதி
களையெல்லாம் [14]அவருடைய தாய் தன் இருத
யத்தில் காத்துக்கொண்டாள். — இயேசுவான ௫௨
வர் [15]ஞானத்தையும், † வயதையும், பராபரனி
டத்திலும் மனிதரிடத்திலும் தயையையும் அதி
கம் அதிகமாய் அடைந்துகொண்டார்.

## ௩. அதிகாரம்.

௧. யோவானுடைய பிரசங்கத்தையும், ஞானஸ்நானத்தையுங்குறித்தது. ௰௫. அவன் கிறிஸ்துவைக்குறித்துக் கொடுத்த சாட்சி. ௰௯. ஏரோதே யோவானைக் காவலில் வைத்தது. உ௧. கிறிஸ்து ஞானஸ்நானம் பெற்றபோது பரமண்டலத்திலிருந்து சாட்சி வெளிப்பட்டது. உ௩. கிறிஸ்துவின் ஆயுசின் பிரமாணமும், யோசேப்பைத்தொடங்கி மேற்போகிற அவருடைய வம்சவரிசையின் அட்டவணையும்.

தீபேரியு இராயன் இராச்சியபரிபாலனம்பண் ௧
ணின பதினைந்தாம் வருஷத்திலே, பொந்தியு
பிலாத்து என்பவன் யூதேயா நாட்டுக்குத் துரை
யாயும், ஏரோது என்பவன் காற்பங்காகிய கலி
லேயா நாட்டுக்கு அதிபதியாயும், அவனுடைய
சகோதரனாகிய பிலிப்பு என்பவன் காற்பங்
காகிய இத்துரேயா நாட்டுக்கும் திராகோனித்தி
நாட்டுக்கும் அதிபதியாயும், இலிசானி என்ப
வன் காற்பங்காகிய அபிலேனே நாட்டுக்கு அதி
பதியாயும்,-[16]அன்னா காயிபா என்பவர்கள் பிர ௨
தான ஆசாரியராயும் இருந்தகாலத்திலே, வனாந்

1 ஏசா. ௯. உ: ௪௨. ௬: ௪௯. ௬: ௬௰. ௧-௩. மத். ௪. ௰௬. அப். ௰௩. ௪௭. உ௮ உ௮.-2 ஏசா. ௫உ. ௰. லூக். ௩. ௬.—3 ௧ மோ. ௪௬. ௩௰. பிலி. ௧. உ௩.—4 ஏசா. அ. ௰௪. ரோ. ௯. ௩௨. மத். உ௧. ௪௪. உரோ ௯. ௩௨, ௩௩. ௧ கொரி. ௧. உ௩, உ௪. உ கொரி. உ. ௰௬. ௧ பே. உ. ௭. அ.
5 அப். உ௮. உஉ.—6 சங். ௪உ. ௰. யோவா. ௰௯. உ௫.—7 அப். உ௬. ௭. ௧ தீமோ. ௫. ௫.-8 மாற். ௰௫. ௪௩. உ௪. வச. லூக். உ௪. உ௧.

9 இட. வச. லூக். ௧. ௮௰.
10 உ மோ. உ௩. ௰௫. ௰௭: ௩௪. உ௩. ௫ மோ. ௰௬. ௧. ௰௬ —11 மத். ௭. உ௯. மாற். ௧. உஉ. லூக். ௪. உஉ, ௩உ. யோவா. ௭. ௰௫, ௪௬.
12 யோவா. உ. ௰௬.
13 லூக். ௯. ௪௫: ௰௮. ௩௪.
14 ௰௯. வச. தானி. ௭. உ௮.
15 ௧ சாமு. உ. உ௬. ௫௰ வச.
16 யோவா. ௰௧. ௪௯. ௰௮: ௰௩. ௰௪ அப். ௪. ௬.

* அல்லது இஸ்ரவேலிலே.—† அல்லது வளர்த்தியையும்.

தரத்தில் சகரியாவின் குமாரனாகிய யோவானுக்
குத் தேவவசனம் உண்டாயிற்று.
௩ ஆனபடியால் [1]அவன் யோர்தான் நதிக்கு அரு
கான தேசம் எங்கும் நடந்து, [2]பாவமன்னிப்புக்
காக மனந்திரும்பும்படிக்கு ஏற்ற ஞானஸ்நா
௪ னத்தைக்குறித்துப் பிரசங்கித்தான். — [3]பராபர
னுக்காக மார்க்கத்தை நன்றாகச் செய்து, அவ
ருக்காகப் பாதைகளைச் செம்மைபண்ணுங்கள்
௫ என்றும், — பள்ளங்களெல்லாம் நிரப்பப்படும்,
சகல மலைகளும் குன்றுகளும் தாழ்த்தப்படும்,
கோணலான பாதைகள் செம்மையாகும், முரட்
டுவழிகள் சமனாகும் என்றும், [4]மனிதர் எல்லா
ரும் பராபரனுடைய இரட்சிப்பைக் காண்பார்
௬ கள் என்றும், — வனாந்தரத்திலே கூப்பிடுகிறவ
னுடைய சத்தம் உண்டென்று ஏசாயா தீர்க்க
தரிசியினுடைய புஸ்தகத்தில் எழுதியிருக்கிற
௭ பிரகாரமாகப் பிரசங்கித்தான்.—ஆதலால் அவன்,
தன்னாலே ஞானஸ்நானம் பெறும்படிக்குப் புறப்
பட்டுவந்த சனங்களை நோக்கி, [5]விரியன்பாம்பு
களின் குட்டிகளே இனி வரும் கோபத்திற்கு
நீங்கள் தப்பித்துக்கொள்ளும்படியாய் உங்க
௮ ளுக்கு வகைகாட்டினவன் எவன்?—(தப்பவி
ரும்பினால்) மனந்திரும்புகிறதற்கு ஏற்ற* கனி
களைக் கொடுங்கள், ஆபிரகாம் எங்களுக்குத்
தகப்பன் என்று உங்கள் உள்ளத்தில் சொல்லத்
தொடங்காதிருங்கள்; ஆபிரகாமுக்குப் பரா
பரன் இந்தக் கற்களால் பிள்ளைகளை உண்டுபண்
ண வல்லவராய் இருக்கிறார் என்று உங்களுக்
௯ குச் சொல்லுகிறேன். — அல்லாமலும் இப்பொ
ழுதே கோடரியானது மரங்களின் வேர் அருகில்
வைத்திருக்கின்றது;[6]ஆகையால் நல்ல கனிகொ
டாத மரங்கள் எல்லாம் வெட்டப்பட்டு அக்கி
னியிலே போடப்படும் என்றான்.
௰ அப்பொழுது சனங்கள் அவனை நோக்கி, [7]அப்
படியானால் நாங்கள் என்ன செய்யவேண்டும்
௰௧ என்று கேட்டார்கள்.—அவர்களுக்கு மாறுத்தர
மாக அவன் சொன்னது: [8]இரண்டு சட்டைகளை
உடையவன் சட்டையில்லாதவனுக்குக் கொ
டுக்கக்கடவன்; ஆகாரமுடையவனும் அப்படி
௰௨ யே செய்யக்கடவன் என்றான்.—பின்பு [9]ஆயக்
காரரும் ஞானஸ்நானம் பெறும்படிக்கு அவனி
டத்தில் சேர்ந்து, போதகரே, நாங்கள் என்ன
௰௩ செய்யவேண்டும் என்றார்கள். —அவர்களுடனே
அவன் சொன்னது: [10]உங்களுக்குக் கட்டளையி
டப்பட்டதற்கு மேலாக ஒன்றையும் பலவந்த
மாய்க் கேட்டுக்கொள்ளாதிருங்கள் என்றான்.—
௰௪ போர்ச்சேவகரும் அவனைநோக்கி, நாங்கள் என்
னசெய்யவேண்டும் என்று கேட்டார்கள்; அவர்
களுடனே அவன் சொன்னது: நீங்கள் ஒருவ
னுக்கும் இடுக்கண் [11]செய்யாமலும்,† ஒருவனைக்
குறித்தும்பொய்ச்சாட்சிசொல்லாமலும், உங்கள்
சம்பளமே‡ போதுமென்று எண்ணிக்கொண்டி
ருக்கக்கடவீர்கள் என்றான்.

அப்பொழுது சனங்கள் காத்திருந்து,§ யோ ௰௫
வான் கிறிஸ்துவாய் இருக்கிறானோ என்று எல்லா
ரும் தங்கள் இருதயங்களில் அவனைக்குறித்துச்
சிந்தனைகொண்டு‖ இருக்கிறபொழுது, — யோ ௰௬
வான் எல்லாருடனேயும் சொன்னது: [12]நான்
சலத்தினாலே உங்களுக்கு ஞானஸ்நானம் கொ
டுக்கிறேன்; என்னிலும் அதிக பலத்தவர் வருகி
றார், அவருடைய பாதஇரட்சைகளின் வாரை
அவிழ்க்கிறதற்கு நான் பாத்திரன் அல்ல; அவர்
பரிசுத்தஆவியினாலும் அக்கினியினாலும் உங்க
ளுக்கு ஞானஸ்நானம் கொடுப்பார். — தூற்றும் ௰௭
சுளகு அவருடைய கையில் இருக்கின்றது;
அவர் தம்முடைய களத்தை நன்றாய் விளக்கி,
[13]கோதுமையைத் தம்முடைய களஞ்சியத்திலே
சேர்த்து, பதரை அவியாத அக்கினியினால் சுட்
டெரிப்பார் என்று சொன்னதுமன்றி,—மற்றும் ௰௮
அநேகம் புத்திகளைச் சொல்லிச் சனங்களுக்குச்
சுவிசேஷத்தை அறிவித்தான்.

[14]அப்படியிருக்குங்காலத்திலே காற்பங்கு தே ௰௯
சாதிபதியாகிய ஏரோது என்பவன் தன் சகோத
ரனை பிலிப்பினுடைய மனைவியாகிய ஏரோதி
யாளின் நிமித்தமாகவும், மற்றப் பொல்லாங்குக
ளைச் செய்ததின் நிமித்தமாகவும், யோவானால்
கடிந்துகொள்ளப்பட்டபொழுது,—தான் செய்து ௨௰
வந்த பொல்லாங்குகள் யாவையுமன்றி யோவா
னையும் காவலில் அடைத்தான்.

சனங்கள் எல்லாரும் ஞானஸ்நானம் பெற்றுக் ௨௧
கொண்ட காலத்தில் [15]இயேசுவானவரும் ஞா
னஸ்நானம் பெற்றார்; அப்பொழுது அவர் செ
பம்பண்ணுகையில் வானம் திறக்கப்பட்டதுமல்
லாமல்,—கண்ணுக்குத் தோன்றிய உருவாய் ஒரு ௨௨
புறாவைப்போலப் பரிசுத்தஆவியானவர் அவர்
மேல் இறங்கினார்; அன்றியும், நீர் எனக்கு அன்
பான குமாரனாயிருக்கிறீர், உம்மில் பிரியமாய்
இருக்கிறேன் என்று வானத்திலிருந்து சத்தம்
உண்டாயிற்று.

இப்படி [16]இயேசுவானவர் ஏறக்குறைய முப் ௨௩
பது வயதுள்ளவராய் வெளிப்படத் தொடங்கி
னார்.—[17]சனங்கள் அவரை யோசேப்பின் குமா ௨௪
ரனென்று எண்ணினார்கள்.—அந்த யோசேப்பு ௨௫
ஏலியின் குமாரன்; ஏலி, மாத்தாத்தின் குமாரன்;
மாத்தாத்து, இலேவியின் குமாரன்; இலேவி,
மெல்கியின் குமாரன்; மெல்கி, இயன்னாவின்
குமாரன்; இயன்னா, யோசேப்பின் குமாரன்;

1 மத். ௩. ௧. மாற். ௧. ௪.
2 லூக். ௧. ௭௭.—3 ஏசா. ௪௰. ௩. மத். ௩. ௩. மாற். ௧. ௩. யோவா. ௧. ௨௩.—4 சங். ௯௮. ௨. ஏசா. ௫௨. ௰. லூக். ௨. ௰.
5 மத். ௩. ௭.—6 மத். ௭. ௰௯.
7 அப். ௨. ௩௭.—8 லூக். ௰௧ ௪௧. ௨ கொரி. ௮. ௰௪. யாக். ௨. ௰௫. ௰௬. ௧ யோ. ௩. ௰௭: ௪. ௨௰.
9 மத். ௨௧. ௩௨. லூக். ௭. ௨௯.
10 லூக். ௰௯. ௮.—11 ௨ மோ. ௨௩. ௧. ௩ மோ. ௰௯. ௰௧.
12 மத். ௩. ௰௧.—13 மீகா. ௪. ௰௨. மத். ௰௩. ௩௰.
14 மத். ௰௪. ௩. மாற். ௬. ௰௭.
15 மத். ௩. ௰௩. யோவா. ௧. ௩௨.
16 ௪ மோ. ௪. ௩. ௩௰, ௩௫, ௪௩, ௪௭.
17 மத். ௰௩. ௫௫. யோவா. ௬. ௪௨.

* அல்லது தகுதியான.—† அல்லது பயஞ்செய்யாமலும்.—‡ அல்லது வரவு.—§ அல்லது சந்தேகங்கொண்டு.—‖ அல்லது நியாயமுந்தரித்த.

யோசேப்பு, மத்தத்தியாவின் குமாரன்; மத்தத்
தியா, ஆமோசின் குமாரன்; ஆமோசு, நாகூமின்
குமாரன்; நாகூம், எஸ்லீயின் குமாரன்; எஸ்லீ,
௨௬ நங்காயின் குமாரன்.—நங்காய், மாகாத்தின் கு
மாரன்; மாகாத்து, மத்தத்தியாவின் குமாரன்;
மத்தத்தியா, சேமேயின் குமாரன்; சேமேய், யோ
சேப்பின் குமாரன்; யோசேப்பு, யூதாவின் கு
மாரன்; யூதா, யோவன்னாவின் குமாரன்.—
௨௭ யோவன்னா, இரேசாவின் குமாரன்; இரேசா,
சோரோபாபேலின் குமாரன்; சோரோபாபேல்,
சலாத்தியேலின் குமாரன்; சலாத்தியேல், நே
௨௮ ரியின் குமாரன்.—நேரி, மேலுகியின் குமாரன்;
மேலுகி, அத்தியின் குமாரன்; அத்தி, கோசா
மின் குமாரன்; கோசாம், எல்மோதாமின் குமா
ரன்; எல்மோதாம், ஏரின் குமாரன்; ஏர், யோசே
௨௯ யின் குமாரன்.—யோசே, எலியேசரின் குமா
ரன்; எலியேசர், யோரீமின் குமாரன்; யோரீம்
மாத்தாத்தின் குமாரன்; மாத்தாத்து, இலேவியின்
௩௰ குமாரன்.—இலேவி, சீமையோனின் குமாரன்;
சீமையோன், யூதாவின் குமாரன்; யூதா, யோ
சேப்பின் குமாரன்; யோசேப்பு, யோனானு
டைய குமாரன்; யோனான், எலியாக்கீமின்
௩௧ குமாரன். — எலியாக்கீம், மேலேயாவின் குமா
ரன்; மேலேயா, மயினானுடைய குமாரன்; மயி
னான், மாத்தாத்தாவின் குமாரன்; மாத்தாத்தா,
[1]நாத்தானுடைய குமாரன்; நாத்தான், [2]தாவீதின்
௩௨ குமாரன்.—தாவீது, [3]இயேசாயின் குமாரன்; இ
யேசாய், ஓபேதின் குமாரன்; ஓபேது, போவோ
சின் குமாரன்; போவோசு, சல்மோனுடைய
குமாரன்; சல்மோன், நகாசோனின் குமாரன்.—
௩௩ நகாசோன், அமினதாபின் குமாரன்; அமின
தாப், ஆராமின் குமாரன்; ஆராம், எஸ்ரோமின்
குமாரன்; எஸ்ரோம், பாரேசின் குமாரன்; பா
ரேசு, யூதாவின் குமாரன்; யூதா, யாக்கோபின்
௩௪ குமாரன். — யாக்கோபு, ஈசாக்கின் குமாரன்;
ஈசாக்கு, ஆபிரகாமின் குமாரன்; ஆபிரகாம்,
[4]தேராவின் குமாரன்; தேரா, நாகோரின் குமா
௩௫ ரன்.—நாகோர், சேரூக்கின் குமாரன்; சேரூக்கு,
இராகுவின் குமாரன்; இராகு, பலேக்கின் குமா
ரன்; பலேக்கு, ஏபேரின் குமாரன்; ஏபேர், சா
௩௬ லாமின் குமாரன்.—சாலாம், [5]கேனானின் குமா
ரன்; கேனான், அருப்பகசாத்தின் குமாரன்;
அருப்பகசாத்து, [6]சேமின் குமாரன்; சேம், நோ
வாவின் குமாரன்; நோவா, இலாமேகின் குமா
௩௭ ரன்.—இலாமேகு, மெத்தூசலாகின் குமாரன்;
மெத்தூசலாகு, ஏனோக்கின் குமாரன்; ஏனோக்கு,
யாரேத்தின் குமாரன்; யாரேத்து, மகலெலே
யேலின் குமாரன்; மகலெலேயேல், காயினா
னின் குமாரன்; காயினான், ஏனோசின் குமா
௩௮ ரன்.—ஏனோசு, சேத்தின் குமாரன்; சேத்து, ஆதா
மின் குமாரன்; [7]ஆதாம், பராபரனால் உண்டான
வன்.

## ௪. அதிகாரம்.

௧. கிறிஸ்து சோதிக்கப்பட்டு உபவாசம்பண்ணினது. ௰௩. அவர் பசாசை ஜெயித்தது. ௰௫. அவர் பிரசங்கிக்கத் தொடங்கினது. ௰௯. நாசரேத்தூரார் அவருடைய கிருபையுள்ள வார்த்தைகளைக்குறித்து ஆச்சரியப்பட்டது. ௩௩. பசாசு பிடித்தவனையும், ௩௮. பேதுருவின் மாமியையும், ௪௰. பின்னும் பலவித வியாதிக்காரரையும் சொஸ்தப்படுத்தினது. ௪௧. பசாசுகள் அவரை இன்னாரென்று சொன்னதற்காகக் கடிந்துகொள்ளப்பட்டது. ௪௪. அவர் பட்டணங்கள்தோறும் பிரசங்கித்தது.

[8]இயேசுவானவர் பரிசுத்தஆவியினாலே நிறை ௧
ந்தவராய், யோர்தானைவிட்டுத் திரும்பி, [9]ஆவி
யினாலே வனாந்தரத்தில் கொண்டுபோகப்பட்
டார்.—அங்கே நாற்பதுநாள் பசாசினாலே சோ ௨
திக்கப்பட்டு [10]அந்நாட்களிலே ஒன்றும் புசியா
மல் இருந்தார்.—அவைகள் முடிந்த பின்பு, அவ ௩
ருக்குப் பசி உண்டாயிற்று; அப்பொழுது பசா
சானவன் அவரை நோக்கி, நீ தேவனுடைய குமா
ரனானால், இந்தக் கல்லை அப்பமாகும்படி சொல்
என்றான். — அதற்கு இயேசுவானவர், [11]மனி ௪
தன் அப்பத்தினாலேமாத்திரம் அல்ல, பராபரனு
டைய வார்த்தை எதுவோ, அதினாலே பிழைப்
பான் என்று எழுதி இருக்கின்றது என்றார்.—
பின்பு பசாசானவன் அவரை உயர்ந்த மலையின் ௫
மேல் கொண்டுபோய், ஒரு நிமிஷத்திலே உல
கத்தின் இராச்சியங்களையெல்லாம் அவருக்குக்
காண்பித்து,—இவை எல்லாவற்றின்மேலும் அ ௬
திகாரமும் இவைகளின் மகிமையும் எனக்கு
ஒப்புக்கொடுக்கப்பட்டிருக்கிறபடியால், நான்
இவைகளை உனக்குத் தருவேன்; [12]என் இஷ்
டப்படிக்கே நான் இவைகளை எவனுக்கும் கொ
டுக்கிறேன்;—ஆகையால் நீ என்னைத் தொழுது ௭
கொண்டால்,* எல்லாம் உன்னுடையதாயிருக்
கும் என்று அவருடனே சொன்னான்.—இயேசு ௮
வானவர் அவனுக்குச் சொன்னது: சாத்தானே,
[13]நீ எனக்குப் பின்னாகப் போ, உன் தேவனாகிய
பராபரனைத் தொழுதுகொண்டு, அவர் ஒருவ
ருக்கே ஆராதனைசெய்வாயாக என்று எழுதியி
ருக்கின்றதே என்றார். — [14]அன்றியும் அவன் ௯
அவரை எருசலேம் பட்டணத்திற்குக் கொண்
டுபோய், அவரைத் தேவாலயத்தின் உப்பரிகை
யின்மேல் நிறுத்தி, உன்னைக் காப்பாற்றும்ப
டிக்கு உன்னைக்குறித்துத் தம்முடைய தூதர்க
ளுக்குக் கட்டளையிடுவார் என்றும், — [15]உன் ௰
கால் கல்லில் இடறாதபடிக்கு அவர்கள் தங்கள்
கைகளில் உன்னை ஏந்திக்கொண்டுபோவார்கள்
என்றும் எழுதியிருக்கின்றது. — ஆகையால் நீ ௰௧
தேவனுடைய குமாரனானால், இங்கேயிருந்து
தாழக்குதி என்று அவருடனே சொன்னான்.—
அதற்கு மாறுத்தரமாக [16]இயேசுவானவர் சொன் ௰௨
னது: உன்னுடைய தேவனாகிய பராபரனைப்

1 சகரி. ௰௨. ௰௨.—2 ௨ சாமு. ௭. ௰௪. ௧ நாளா. ௩. ௫.—3 ரூத். ௪. ௰௮. ௧ நாளா. ௨. ௰.—4 ௧ மோ. ௰௧. ௨௪, ௨௬.—5 ௧ மோ. ௰௧. ௰௨.—6 ௧ மோ. ௫. ௬. ௯: ௰௧. ௰. ௯.—7 ௧ மோ. ௫. ௧, ௨. 8 மத். ௪. ௧. மாற். ௧. ௰௨. 9 ௰௪. ௩௪. ௲௧. ௨. ௨௭.
10 ௨ மோ. ௩௪. ௨௮. ௧ இரா. ௰௯. ௮. 14 மத். ௪. ௫.—15 சங். ௯௧. ௰௧. 11 ௫ மோ. ௮. ௩.—12 யோவா. ௰௨. ௩௧: ௰௪. ௩௦. வெளி. ௰௩. ௨, ௭. 16 ௫ மோ. ௬. ௰௬. 13 ௫ மோ. ௬. ௰௩: ௰. ௨௦.

* அல்லது எனக்கு முன் விழுந்தால்.

பரிட்சைபாராதிருப்பாயாக என்று சொல்லியி
௰௩ ருக்கின்றது என்றார். — பசாசானவன் (அவ
ரைச்) சோதித்தவைகளையெல்லாம் முடித்தபொ
ழுது, [1]சிலகாலம் அவரைவிட்டுப் போனான்.
௰௪ [2]பின்பு இயேசுவானவர் [3]ஆவியினுடைய
பலத்தினாலே [4]கலிலேயா நாட்டுக்குத் திரும்பி
னார்; அதைச் சூழ்ந்திருக்கிற தேசமெங்கும் அவ
௰௫ ருடைய கீர்த்தி பரவிற்று.—அல்லாமலும் அவர்
களுடைய செபஆலயங்களில் அவர் உபதேசம்
பண்ணி, எல்லாராலும் புகழ்ச்சி அடைந்தார்.
௰௬ அவர் தாம் வளர்ந்த [5]நாசரேத்தூருக்குப்
போய், தமக்கு வழக்கமானபடி ஓய்வுநாளிலே
[6]செபஆலயத்தில் பிரவேசித்து வாசிக்க எழுந்து
௰௭ நிற்கிறபொழுது,—ஏசாயா தீர்க்கதரிசியின் புத்
தகத்தை அவருக்குக் கொடுத்தார்கள்; அந்தப்
௰௮ புத்தகத்தை அவர் விரித்தபொழுது,—[7] பராபர
னுடைய ஆவி என்னில் இருக்கின்றது; தரித்தி
ரருக்கு நான் சுவிசேஷத்தை அறிவிக்கும்படி
எனக்கு அபிஷேகம் பண்ணினார்; நருக்குண்ட
வர்களைக் குணமாக்கும்படிக்கும், சிறைப்பட்ட
வர்களுக்கு விடுதலையையும்,குருடருக்குப்பார்க்
குதலையும் பிரசங்கிக்கும்படிக்கும், நொறுங்
௰௯ குண்டவர்களை விடுதலையாக்கி,—பராபரனாலே
அங்கீகரிக்கப்படுவதற்கான வருஷத்தைப் பிர
சங்கிக்கும்படிக்கும் என்னை அனுப்பினார் என்று
௨௰ எழுதியிருந்த இடத்தைக் கண்டு,—புத்தகத்தைச்
சுருட்டி ஊழியக்காரனிடத்தில் கொடுத்து உ
ளுக்கார்ந்தார்; செபஆலயத்திலுள்ள எல்லாரு
டைய கண்களும் அவர்மேலே நோக்கமாயிருந்
௨௰௧ தன.—அப்பொழுது அவர் அவர்களுடனே பே
சத்தொடங்கி, நீங்கள் கேட்ட வேதவாக்கியம்
௨௰௨ இன்றைத்தினமே நிறைவேறிற்று என்றார்.—எல்
லாரும் அவருக்கு நல்லசாட்சிகொடுத்து, அவர்
திருவாய்மலர்ந்து அருளிச்செய்த கிருபையுள்ள
வசனங்களைக்குறித்து [8]ஆச்சரியப்பட்டு, பின்பு
[9]இவன் யோசேப்பினுடைய குமாரனல்லவோ
௨௰௩ என்றார்கள். — அவர்களுடனே அவர் சொன்
னது: வயித்தியனே, உன்னைத்தானே குண
மாக்கு என்கிற வழக்கச்சொல்லையும், நாங்கள்
கேள்விப்பட்டபடி [10] கப்பர்நாகூம் ஊரில்
(உன்னாலே) செய்யப்பட்டது எதுவோ [11]அதை
உன் ஊராகிய இவ்விடத்திலேயும் செய் என்ப
தையும் நீங்கள் என்னுடனே சொல்லுவீர்கள்
௨௰௪ என்பதற்குச் சந்தேகமில்லை.—அப்படியிருக்க,
[12]தீர்க்கதரிசியானவன் தன் ஊரிலே அங்கீகரிக்
கப்பட்டவன் அல்லவென்று மெய்யாகவே உங்
௨௰௫ களுக்குச் சொல்லுகிறேன்.—அன்றியும் எலியா
வின் காலத்திலே மூன்று வருஷமும் ஆறு மாத
மும் வானம் அடைக்கப்பட்டுத் தேசமெங்கும்
மிகுந்த பஞ்சம் உண்டாயிருந்தபொழுது, இஸ்ர
வேலருக்குள்ளே [13]அநேகம் கைம்பெண்கள்
இருந்தும்,—சீதோன் நாட்டிலுள்ள சரேப்பத்தா ௨௰௬
ஊரில் இருந்த ஒரு கைம்பெண்ணிடத்திற்கே
அன்றி, மற்றொருத்தியினிடத்துக்கும் எலியா
என்பவர் அனுப்பப்படவில்லை.—அல்லாமலும் ௨௰௭
[14]எலிசா என்னும் தீர்க்கதரிசியின் காலத்திலே,
இஸ்ரவேலருக்குள்ளே அநேகம் குஷ்டரோகி
கள் இருந்தும், சீரியதேசத்தானாகிய நாகமானே
அன்றி, அவர்களில் வேறொருவனும் சுத்தமாக்
கப்படவில்லையென்று சத்தியத்தின்படியே உங்
களுக்குச் சொல்லுகிறேன் என்றார்.
செபஆலயத்தில் இருந்த எல்லாரும் இவைக ௨௰௮
ளைக் கேட்டபொழுது,—கோபத்தால் நிரப்பப் ௨௰௯
பட்டு, எழுந்து, அவரை ஊருக்குப் புறம்பே
தள்ளி, தங்கள் ஊருக்கு அடுத்த செங்குத்தான
மலையின் சிகரத்திலிருந்து* அவரைத் தாழத் தள்
ளும்படிக்கு அவ்விடத்திற்குக் கொண்டுபோ
னார்கள். — [15]அவர் அவர்கள் மத்தியில் நின்று ௩௰
கடந்துபோனார்.
[16]பின்பு அவர் கலிலேயா தேசத்திலுள்ள கப் ௩௰௧
பர்நாகூம் பட்டணத்திற்குப் போய், ஓய்வுநாள்
களில் சனங்களுக்கு உபதேசம்பண்ணினார்.—
[17] அவருடைய வசனம் அதிகாரமுள்ளதாய் இ ௩௰௨
ருந்தபடியினாலே, அவர்கள் அவருடைய உப
தேசத்தைக்குறித்துப் பிரமித்தார்கள்.
[18]அல்லாமலும் செபஆலயத்திலே அசுத்தமான ௩௰௩
ஆவியுள்ள ஒரு மனிதன் இருந்தான். — அவன் ௩௰௪
(அவரைக் கண்டு) ஐயோ! நாசரேத்தூராகிய
இயேசுவே, எங்களுக்கும் உமக்கும் என்ன?
எங்களைக் கெடுக்கவா வந்தீர்; [19]உம்மை அறிந்தி
ருக்கிறேன்; † [20]நீர் பராபரனுடைய பரிசுத்தரே
என்று மிகுந்த சத்தத்துடனே கூப்பிட்டான்.—
அதற்கு இயேசுவானவர் நீ பேசாமல் இவனை ௩௰௫
விட்டுப்போ என்று அதை அதட்டினார்; அப்
பொழுது பசாசு அவனைச் சனங்களுக்குள்ளே
தள்ளி, அவனுக்கு ஒரு சேதமும் செய்யாமல்
அவனைவிட்டுப் போயிற்று. — எல்லாரும் பிர ௩௰௬
மிப்படைந்து, இவர் அதிகாரத்தோடும் வல்ல
மையோடும் அசுத்த ஆவிகளுக்குக் கட்டளையிட
அவைகளும் புறப்படுகின்றனவே; இது என்ன
வசனம் என்று ஒருவரோடொருவர் சொல்லிக்
கொண்டார்கள். — அவருடைய கீர்த்தி அத் ௩௰௭
தேசத்திலுள்ள இடங்கள் யாவிலும் பிரசித்த
மாயிற்று.
[21]பின்பு அவர் செபஆலயத்தைவிட்டுச் ௩௰௮
சீமோன் என்பவனுடைய வீட்டுக்குப்போனார்;
சீமோனுடைய மாமி மிகுந்த சுரமாய்க் கிடந்
தாள்; அவளுக்காக அவரை வேண்டிக்கொண்

1 யோவா. ௰௪. ௩௰. எபி. ௪. ௰௫. 7 ஏசா. ௬௧. ௧.
2 மத். ௪. ௰௨. யோவா. ௪. ௪௩. 8 சங். ௪௫. ௨. மத். ௰௩. ௫௪. மாற்.
3 ௧. வச.—4 அப். ௰. ௩௭. ௬. ௨. லூக். ௨. ௪௭.—9 யோவா.
5 மத். ௨. ௨௩: ௰௩. ௫௪. மாற். ௬. ௧. ௬. ௪௨.—10 மத். ௪. ௰௩: ௰௧. ௨௩.
6 அப். ௰௩. ௰௪: ௰௭. ௨. 11 மத். ௰௩. ௫௪. மாற். ௬. ௧.

12 மத். ௰௩. ௫௭. மாற். ௬. ௪. யோவா. 17 மத். ௭. ௨௮, ௨௯. தீத். ௨. ௰௫.
௪. ௪௪.—13 ௧ இரா. ௰௭. ௯: ௰௮. 18 மாற். ௧. ௨௩.—19 ௩௪. வச.
௧. யாக். ௫. ௰௭.—14 ௨ இரா. 20 சங். ௰௬. ௰. தானி. ௯. ௨௪. லூக்.
௫. ௰௪.—15 யோவா. ௮. ௫௯: ௰. ௧. ௩௫.—21 மத். ௮. ௰௪. மாற்.
௩௯.—16 மத். ௪. ௰௩. மாற். ௧. ௨௧. ௧. ௨௯.

* அல்லது நுனியிலிருந்து.—† அல்லது அகன்றுபோம்.

௩௯ டார்கள். — அப்பொழுது அவர் அவளிடத்தில்
குனிந்து நின்று சுரத்தை அதட்டினார்; அது அவ
ளைவிட்டு நீங்கிற்று; உடனே அவள் எழுந்தி
ருந்து அவர்களுக்குப் பணிவிடைசெய்தாள்.
௪௰ பின்பு [1]சூரியன் அஸ்தமித்தபொழுது, அநேக
சனங்கள் தங்களிடத்தில் இருந்த பலவியாதிகள்
உள்ளவர்களை அவரிடத்திற்குக் கொண்டுபோ
னார்கள்; அவர்கள் எல்லார்மேலும் அவர் தம்மு
டைய கைகளை வைத்து, அவர்களைக் குணமாக்கி
௪௧ னார்.—அநேகரிடத்திலிருந்து [2]பசாசுகளும் புறப்
பட்டன; [3]அவைகள், நீர் பராபரனுடைய குமா
ரனாகிய கிறிஸ்து என்று கூப்பிட்டன; அவர் தம்
மைக் கிறிஸ்து என்று அவைகள் அறிந்தபடியி
னாலே, அவைகள் பேசுகிறதற்கு* இடம்கொ
டாமல் அதட்டினார்.
௪௨ [4]உதயமானபொழுது அவர் புறப்பட்டு வனாந்
தரமான இடத்திற்குப் போனார்; சனங்கள் அவ
ரைத்தேடி அவரிடத்தில் போய்த் தங்களை விட்
டுப்போகாதபடிக்கு அவரை நிறுத்திக்கொண்
௪௩ டார்கள். — அதற்கு அவர் அவர்களை நோக்கி,
நான் மற்ற ஊர்களுக்கும் பராபரனுடைய இராச்
சியத்தைச் சுவிசேஷமாய் அறிவிக்கவேண்டும்,
அதற்காகவே அனுப்பப்பட்டேன் என்றார்.—
௪௪ [5]அந்தப்படி அவர் கலிலேயா தேசத்திலுள்ள
செபஆலயங்களில் பிரசங்கம் பண்ணிக்கொண்
டுவந்தார்.

## ௫. அதிகாரம்.

௧. கிறிஸ்து பேதுருவின் படவிலிருந்து சனங்களைப் போதித்தது. ௪. மீன்கள் அதிசயமாய்ப் பிடிக்கப்பட்டதால் அவனும் அவன் தோழரும் மனிதரைப் பிடிக்கிறவர்களாகுவதைக் காண்பித்தது. ௰௨. குஷ்டரோகியைச் சுத்தஞ்செய்தது. ௰௬. வனாந்தரத்தில் செபம்பண்ணினது. ௰௮. திமிர்வாதக்காரனைக் குணமாக்கினது. ௨௭. ஆயக்காரனான மத்தேயுவை அழைத்தது. ௨௯. ஆத்தும வைத்தியனாயிருந்த கிறிஸ்து பாவிகளோடே புசித்தது. ௩௪. தாம் பரமண்டலத்தக்கு ஏறினபிற்பாடு அப்போஸ்தலர்கள் உபவாசிக்கவேண்டியதையும் துன்பங்களையும் முன்னறிவித்தது. ௩௬. பலவீன விசுவாசிகளைப் பழைய துருத்திகளுக்கும் பழைய வஸ்திரங்களுக்கும் ஒப்பாக்கினது.

௧ [6]ஒருகாலத்திலே சனங்கள் பராபரனுடைய வச
னத்தைக் கேட்கும்படிக்கு அவரை நெருக்கி இ
ருக்கிறபொழுது, அவர் கெநேசரேத்து என்னப்
௨ பட்ட சிறிய கடலின் அருகே நின்று,—கடற்
கரையில் இரண்டு படவுகளிலிருந்து மீன்பிடிக்
கிறவர்கள் இறங்கி வலைகளை அலசிக்கொண்டி
ருக்க, அவ்விரண்டு படவுகளையும் கண்டு,—
௩ அவைகளில் ஒன்றாகிய சீமோனுடைய பட
வில் ஏறி, அதைக் கரையிலிருந்து சற்றே தள்ளும்
படிக்கு அவனை வேண்டிக்கொண்டு, அதிலே
உளுக்காந்து, அங்கேயிருந்து சனங்களுக்கு உப
தேசம்பண்ணினார்.
௪ அவர் உபதேசித்து முடித்தபின்பு சீமோனை
நோக்கி, [7]நீ ஆழத்திலே தள்ளிக்கொண்டுபோய்,
மீன் பிடிக்கும்படிக்கு உங்கள் வலைகளைத் தாழ
விடுங்கள் என்றார்.—சீமோன் அவருக்கு மாறுத் ௫
தரமாகச் சொன்னது: ஐயரே, இராமுழுவதும்
நாங்கள் பிரயாசப்பட்டும் ஒன்றும் அகப்பட
வில்லை; அப்படியிருந்தும், உம்முடைய சொல்
லின்படி வலையைத் தாழவிடுகிறேன் என்றான்.—
அந்தப்படி அவர்கள் செய்தபொழுது, அவர்க ௬
ளுடைய வலை கிழிந்துபோகத்தக்கதாக, மிகுந்த
மீன்களைச் சேர்த்துக்கொண்டார்கள்.—அப்பொ ௭
ழுது மற்றப் படவில் இருந்த பங்காளிகள் வந்து
தங்களுக்கு உதவிசெய்யும்படிக்கு அவர்களுக்
குச் சமிக்கை காட்டினார்கள்; அவர்கள் போய்
இரண்டு படவுகளையும் அமிழ்த்தத்தக்க பாரமாக
நிரப்பினார்கள். — சீமோன்பேதுரு அதைக் ௮
கண்டு, இயேசுவினுடைய முழங்கால்களின்
அருகே விழுந்து, [8]ஆண்டவரே, நான் பாவியாய்
இருக்கிறபடியினாலே நீர் என்னை விட்டுப்போ
கவேண்டும் என்றான். — அவர்கள் அவ்வளவு ௯
மீன்களைப் பிடித்ததின் நிமித்தம், அவனுக்கும்
அவனோடிருந்த யாவருக்கும் திகில் உண்டான
படியினாலே அப்படிச் சொன்னான்.—சீமோனு ௰
டைய தோழராகிய செபேதேயுவின் குமாரனா
கிய யாக்கோபுக்கும் யோவானுக்கும் அந்தப்ப
டியே உண்டாயிற்று; அப்பொழுது இயேசுவான
வர் சீமோனை நோக்கி, நீ பயப்படவேண்டாம்;
[9]இதுமுதல் நீ மனிதரைப் பிடிக்கிறவனாய் இருப்
பாய் என்றார்.—பின்பு அவர்கள் படவுகளைக் ௰௧
கரையோரத்திலே கொண்டுபோய் [10]நிறுத்தி, எல்
லாவற்றையும் விட்டு அவருக்குப் பின்சென்றார்
கள்.

[11]மேலும் அவர் ஒரு ஊரில் இருக்கையில், ௰௨
குஷ்டரோகம் நிறைந்த ஒரு மனிதன் இயேசு
வானவரைக் கண்டு வணக்கமாய் விழுந்து, ஆண்
டவரே, உமக்குச் சித்தமுண்டானால் என்னைச்
சுத்தமாக்க உம்மால் ஆகுமென்று அவரை வேண்
டிக்கொண்டான்.—அவர் தமது கையை நீட்டி
அவனைத் தொட்டு எனக்குச் சித்தமுண்டு, சுத்த ௰௩
மாகு என்றார்; உடனே குஷ்டரோகம் அவனை
விட்டுநீங்கிற்று. [12]-பின்பு அவர் அவனை நோக்கி, ௰௪
நீ இதை ஒருவருக்கும் சொல்லாமல் போய், உன்
னை ஆசாரியனுக்குக் காண்பித்து, சனங்களுக்
குச் சாட்சியாக [13]மோசே நியமித்தபடியே நீ
சுத்தமானதைக்குறித்துப் பலிசெலுத்து என்று
கட்டளையிட்டார். — அப்படியிருந்தும் அவரு ௰௫
டைய கீர்த்தி அதிகமாகப் பரவிற்று; [14]அநேக
சனங்கள் அவருடைய உபதேசத்தைக் கேட்
கும்படிக்கும், அவராலே தங்கள் வியாதிகளில்
நின்று சுகம் அடைந்துகொள்ளும்படிக்கும் கூடி
வந்தார்கள்.—[15]அவர் வனாந்தரத்திலே தனித்துப் ௰௬
போய்ச் செபம்பண்ணிக்கொண்டிருந்தார்.

1 மத். அ. ௰௬. மாற். ௧. ௩௨.
2 மாற் ௧. ௩௪: ௩. ௰௧.
3 மாற். ௧. ௨௪, ௩௪: ௩௪. ௩௫ வச.
4 மாற். ௧. ௩௫.—5 மாற். ௧. ௩௯.
6 மத். ௪. ௰௮. மாற். ௧. ௰௬.
7 யோவா. ௨௧. ௬.—8 ௨ சாமு. ௬. ௯. ௧ இரா. ௰௭. ௰௮.—9 மத். ௪. ௰௯. மாற். ௧. ௰௭.
10 மத். ௪. ௨௰: ௰௯. ௨௭. மாற். ௧. 14 மத். ௪. ௨௫. மாற். ௧. அ. யோவா. ௰௮. லூக். ௰௮. ௨௮.—11 மத். அ. ௨. மாற். ௧. ௪௰.—12 மத். அ. ௪.
13 ௩ மோ. ௰௪. ௪, ௰, ௨௧, ௨௨.
௬. ௨.—15 மத். ௰௪. ௨௩. மாற். ௬. ௪௬.

* அல்லது தம்மை அவைகள் கிறிஸ்து என்று அறிந்ததைச் சொல்ல.

௰௭ அன்றியும் ஒரு நாளிலே அவர் உபதேசித்துக்
கொண்டிருக்கிறபொழுது, கலிலேயா நாட்டி
லும் யூதேயா நாட்டிலும் உள்ள சகல கிராமங்களி
லிருந்தும், எருசலேம் பட்டணத்திலிருந்தும் வந்
த பரிசேயரும் நியாயசாஸ்திரிகளும் உளுக்காந்
திருந்தார்கள்; பிணியாளிகளைக் குணமாக்கத்
தக்கதாகக் கர்த்தருடைய பலம் உண்டாயிற்று.
௰௮ [1]அப்பொழுது சில மனிதர் திமிர்வாதக்கா
ரன் ஒருவனைப் படுக்கையோடே எடுத்துக்
கொண்டு, உள்ளே போகவும் அவர் முன்பாக
௰௯ வைக்கவும் வகைதேடி, — மிகுந்த கூட்டம்
இருந்தபடியினாலே அவனை உள்ளே கொண்டு
போகிறதற்கு இடம் காணாமல், வீட்டின்மேல்
ஏறித் தட்டோடுகளின் வழியாய்ப் படுக்கையுட
னேகூட நடுவிலே இயேசுவுக்குமுன்பாக அ
௨௰ வனை இறக்கினார்கள்.—அவர்களுடைய விசுவா
சத்தை அவர் கண்டு, மனிதனே, உன் பாவங்கள்
உனக்கு மன்னிக்கப்பட்டன என்று அவனு
௨௧ டனே சொன்னார். — [2]அப்பொழுது வேதபார
கரும் பரிசேயரும் யோசனைபண்ணிச் சொன்
னது: தேவதூஷணங்களைச் சொல்லுகிற இவன்
யாவன்? [3]பராபரன் ஒருவரே தவிரப் பாவங்
களை மன்னிக்கத் திராணியுள்ளவர் யார் என்றார்
௨௨ கள்?—இயேசுவானவர் அவர்களுடைய யோச
னைகளை அறிந்து அவர்களை நோக்கி, நீங்கள் உங்
கள் இருதயங்களில் சிந்திக்கிறது என்ன? —
௨௩ உன் பாவங்கள் மன்னிக்கப்பட்டன என்று
சொல்லுகிறதோ, எழுந்து நட என்று சொல்லு
௨௪ கிறதோ எது எளிது?—பூமியிலே பாவங்களை
மன்னிக்கிறதற்கு மனிதனுடைய குமாரன் அதி
காரம் உடையவன் என்று நீங்கள் அறியும்படிக்
குப் (பாருங்களென்று) சொல்லி, திமிர்வாதக்கா
ரனை நோக்கி, நீ எழுந்து உன் படுக்கையை எடுத்
துக்கொண்டு உன் வீட்டுக்குப் போ என்று உன
௨௫ க்குச் சொல்லுகிறேன் என்றார். — உடனே அ
வன் அவர்களுக்குமுன்பாக எழுந்திருந்து தன்
படுக்கையை எடுத்துக்கொண்டு பராபரனைப் புக
௨௬ ழ்ந்து தன் வீட்டுக்குப்போனான்.—ஆதலால் எல்
லாரும் பிரமிப்படைந்து பராபரனைப் புகழ்ந்
தார்கள்; அல்லாமலும் அவர்கள் பயத்தால் நிறை
யப்பட்டு அதிசயமானவைகளை இன்று கண்
டோம் என்றார்கள்.
௨௭ [4]அதின் பின்பு அவர் புறப்பட்டு, ஆயத்துறை
யில் உளுக்காந்திருந்த இலேவி என்னும் ஆயக்
காரனைக் கண்டு, நீ எனக்குப் பின்சென்று வா
௨௮ என்றார்.—அந்தப்படி அவன் எல்லாவற்றையும்
விட்டு எழுந்திருந்து அவருக்குப் பின்சென்
௨௯ றான்.—அல்லாமலும் [5]அந்த இலேவி என்பவன்
தன் வீட்டிலே அவருக்குப் பெரிய விருந்து
பண்ணினான்; [6]அநேக ஆயக்காரரும் மற்றப்
பேர்களும் அவர்களுடனே பந்தியிருந்தார்கள்.-
௩௰ உடனே அவ்விடத்து வேதபாரகரும் பரிசேய
ரும் அவருடைய சீஷருக்கு விரோதமாக மொ
றுமொறுத்து, என்னத்தினாலே நீங்கள் ஆயக்கார
ரோடும் பாவிகளோடும் போசனபானம்பண்ணு
கிறீர்கள் என்றார்கள்.— இயேசுவானவர் அவர்க ௩௧
ளுக்கு மாறுத்தரமாகச் சொன்னது: சொஸ்தமுள்
ளவர்களுக்கு வயித்தியன் வேண்டுவதில்லை,
வியாதியுள்ளவர்களுக்கே அவன் வேண்டும்.—
மேலும் [7]நீதிமான்களை அல்ல, பாவிகளையே ௩௨
மனந்திருப்பும்படிக்கு அழைக்க வந்தேன் என்
றார்.
பின்பு அவர்கள் அவரை நோக்கி, [8]யோவானு ௩௩
டைய சீஷரும் பரிசேயருடைய சீஷரும் அநே
கந்தரம் உபவாசம்பண்ணிச் செபங்களைச் சொல்
லிக்கொண்டுவருகிறார்களே, உம்முடைய சீஷர்
போசனபானம்பண்ணலாமா என்றார்கள்.—அ ௩௪
தற்கு அவர் சொன்னது: மணவாளன் கலியா
ணத்திற்கு வந்த மனிதரோடு இருக்கும் காலத்தி
லே, நீங்கள் அவர்களை உபவாசம்பண்ணும்படி
செய்யக்கூடுமோ?—மணவாளன் அவர்களை விட்டு ௩௫
நீக்கப்படும் நாள்கள் வரும், அப்பொழுது அவர்
கள் உபவாசிப்பார்கள் என்று சொல்லி,
[9]பின்னும் உவமையாய்ச் சொன்னது: ஒரு ௩௬
வனும் புதிய வஸ்திரத்துண்டைப் பழைய வஸ்
திரத்தோடே இணைக்கமாட்டான்; இணைத்தால்
புதியதானது (பழையதைக்) கிழிக்கும்; அல்லா
மலும் புதிய வஸ்திரத்துண்டு பழையதற்கு ஒவ்
வமாட்டாது.—அன்றியும்ஒருவனும் புதிய திராட் ௩௭
சஇரசத்தைப் பழைய துருத்திகளில் வார்த்து
வைக்கமாட்டான்; வைத்தால் புதிய இரசம் துரு
த்திகளைக் கிழித்துப்போடும்; அப்பொழுது அது
சிந்திப்போம், துருத்திகளும் கெட்டுப்போம்.—
புதிய இரசத்தைப் புதிய துருத்திகளில் வார்த்து ௩௮
வைத்தால் இரண்டும் காத்துக்கொள்ளப்படும்.—
அல்லாமலும் பழையஇரசத்தைப் பானம்பண் ௩௯
ணுகிறவன் உடனே புதிய இரசத்தை விரும்ப
மாட்டான்; பழைய இரசம் அதிக நல்லதென்று
சொல்வானே என்றார்.

## ௬. அதிகாரம்.

௧. ஓய்வுநாளை ஆசரிப்பதைக்குறித்துப் பரிசேயருடைய குருட்டாட்டத்தைக் கிறிஸ்து வேதத்தினாலும், புத்தியினாலும், அற்புதத்தினாலும் கண்டித்தது. ௰௧. பன்னிரண்டு அப்போஸ்தலர்களைத் தெரிந்து ஏற்படுத்தினது. ௰௭. பிணியாளிகளைக் குணமாக்கினது. ௨௰. ஆசீர்வாதங்களையும் சாபங்களையும் காட்டி, ௨௭. பகைஞரைச் சிநேகிக்கவேண்டிய விதத்தையும், ௪௯. அஸ்திவாரம் இல்லாத வீடு விழுந்துபோவதுபோலச் சோதனையின் காலத்தில் நாம் விழாமலிருக்க வசனத்தைக் கேட்பதோடே நற்கிரியைகளான கீழ்ப்படிதலும் கலந்திருக்கவேண்டும் என்பதையும் சனங்களுக்குமுன்பாகச் சீஷர்களுக்குப் போதித்தது.

(புளியாத அப்பங்களைச் சாப்பிடுகிற நாள்க ௧
ளில்) [10]இரண்டாம் நாளுக்குப் பின்வந்த முத
லாம் ஓய்வுநாளிலே அவர் பயிர்வழியே நடந்து
போகிறபொழுது, அவருடைய சீஷர் கதிர்க
ளைக் கொய்து கைகளினாலே கசக்கித் தின்றார்
கள்.-அவர்களுடனே பரிசேயரில் சிலர், [11]ஓய்வு ௨
நாள்களில் செய்யத்தகாததை நீங்கள் செய்ய

1 மத். ௯. ௨. மாற். ௨. ௩.—2 மத். ௯. ௩. மாற். ௨. ௬, ௭.—3 சங். ௩௨. ௫. ஏசா. ௪௩. ௨௫.—4 மத். ௯. ௯. மாற். ௨. ௰௪, ௰௪. 5 மத். ௯. ௰. மாற். ௨. ௰௫. 6 லூக். ௰௫. ௧.

7 மத். ௯. ௰௩. ௧ தீமோ. ௧. ௰௫. 8 மத். ௯. ௰௪. மாற். ௨. ௰௮. 9 மத். ௯. ௰௬, ௰௭. மாற். ௨. ௨௧, ௨௨. 10 மத். ௰௨. ௧. மாற். ௨. ௨௩. 11 ௨ மோ. ௨௰. ௰.

௩ வேண்டுவதென்ன என்றார்கள்.—அவர்களுக்கு
மாறுத்தரமாக இயேசுவானவர் சொன்னது: [1]தா
வீதும் அவனோடு இருந்தவர்களும் பசியாயிருந்
தபொழுது, அவன் தேவாலயத்தில் பிரவே
௪ சித்து,—[2]ஆசாரியர்மாத்திரமேயன்றி மற்றொரு
வரும் புசிக்கத்தகாத தேவசமூகத்தப்பங்களை
எடுத்துப் புசித்து, பின்பு தன்னோடு இருந்தவர்
களுக்கும் கொடுத்தார் என்று நீங்கள் வாசிக்க
௫ வில்லையா என்று சொல்லி,—பின்பு மனிதனு
டைய குமாரன் ஓய்வுநாளைக்குறித்தும் ஆண்ட
வராய் இருக்கிறார் என்று அவர்களுடனே சொன்
னார்.

௬ [3]மற்றொரு ஓய்வுநாளிலே அவர் செபஆலயத்
தில் பிரவேசித்து உபதேசித்தார்; அங்கே சூம்
பின வலதுகையையுடைய ஒரு மனிதன் இருந்
௭ தான்.—அப்பொழுது வேதபாரகரும் பரிசேய
ரும் அவரிடத்தில் குற்றங்காணும்படிக்கு, ஓய்வு
நாளிலும் குணமாக்குவாரா என்று எண்ணி,
௮ அவனை நோக்கிக் காத்திருந்தார்கள். — அவர்க
ளுடைய யோசனைகளை அவர் அறிந்து, சூம்பின
கையையுடையவனை நோக்கி, நீ எழுந்து நடுவே
நில் என்றார்; அந்தப்படி அவன் எழுந்து நின்
௯ றான்.—அப்பொழுது இயேசுவானவர் அவர்
களை நோக்கி, நான் உங்களிடத்தில் ஒன்று
கேட்கிறேன்; ஓய்வுநாள்களில் நன்மை செய்கி
றதோ தீமைசெய்கிறதோ, சீவனைக் காக்கிறதோ
அழிக்கிறதோ, எது நியாயம் என்று சொல்லி,—
௰ அவர்கள் எல்லாரையும் சுற்றிப்பார்த்து அந்த
மனிதனை நோக்கி, உன் கையை நீட்டு என்
றார்; அவன் அப்படிச் செய்தான்; உடனே அவ
னுடைய கை மறுகையைப்போலச் சொஸ்த
௰௧ மாயிற்று.—பின்பு அவர்கள் மதியில்லாமையால்
நிறையப்பட்டு, இந்த இயேசுவை என்ன செய்ய
லாம் என்று ஒருவரோடொருவர் பேசிக்கொண்
டார்கள்.

௰௨ அன்றியும் [4]அந்நாள்களில் அவர் செபம்பண்
ணும்படிக்கு மலைக்குப் போய், இராத்திரி முழு
வதும் பராபரனை நோக்கிச் செபம்பண்ணிக்
௰௩ கொண்டு,—பின்பு உதயமாகிறபொழுது தம்மு
௰௪ டைய சீஷரை வரவழைத்து,—[5]அவர்களில் பே
துரு என்று தாம் பேரிட்ட [6]சீமோனையும், அவ
னுடைய சகோதரனாகிய அந்திரேயாவையும்,
யாக்கோபையும், யோவானையும், பிலிப்பையும்,
௰௫ பர்த்தொலொமேயுவையும், — மத்தேயுவையும்,
தோமாவையும், அல்பேயுவினுடைய குமாரனா
கிய யாக்கோபையும், வைராக்கியன் என்னப்
௰௬ பட்ட சீமோனையும்,—[7]யாக்கோபின் சகோதரனா
கிய யூதாவையும், பின்பு தம்மைக் காட்டிக்கொ
டுத்த ஸ்காரியோத்தூராளாகிய யூதாவையும் இப்
படிப் பன்னிரண்டுபேரையும் தெரிந்துகொண்டு
அவர்களை அப்போஸ்தலர் என்று பேர்சொல்
லி,—பின்பு அவர்களுடனேகூட இறங்கி, சம ௰௭
னான ஒரு இடத்திலே நின்றார்; அங்கே அவரு
டைய சீஷரில் அநேகம்பேரும் [8]அவருடைய
உபதேசத்தைக் கேட்டு, தங்கள் வியாதிகளில்
நின்று குணமாக்கப்படும்படிக்கு யூதேயா நாட்
டின் திசைகள் யாவற்றிலும் எருசலேம் நகரத்தி
லும் தீருசீதோன் பட்டணங்களுள்ள கடலோ
ரத்திலுமிருந்து அநேக சனங்களும் வந்திருந்தார்
கள்.—அசுத்தமான ஆவிகளால் வாதிக்கப்பட்ட ௰௮
வர்களும் கூடிவந்திருந்து ஆரோக்கியம் அடைந்
தார்கள்.—[9]வல்லமை அவரிலிருந்து புறப்பட்டு ௰௯
எல்லாரையும் குணமாக்கினபடியினாலே சனங்
கள் எல்லாரும் [10]அவரைத் தொடப்பார்த்தார்
கள்.

அப்பொழுது அவர் தம்முடைய சீஷர்களை ௨௰
நோக்கிப்பார்த்துச் சொன்னதாவது: [11]தரித்திர
ராகிய நீங்கள் பராபரனுடைய இராச்சியத்தை
உடையவர்கள், ஆகையால் நீங்கள் பாக்கிய
வான்கள்.—[12]இப்பொழுது பசியாயிருக்கிற நீங் ௨௧
கள் (இனி) திருத்தி அடைவீர்கள், ஆகையால்
நீங்கள் பாக்கியவான்கள்; இப்பொழுது [13]அழு
கிற நீங்கள் (இனி) நகைப்பீர்கள், ஆகையால்
நீங்கள் பாக்கியவான்கள். — [14]மனிதனுடைய ௨௨
குமாரன் நிமித்தமாகச் சனங்கள் உங்களைப் ப
கைத்து, உங்களை விலக்கி [15]நிந்தைப்படுத்தி, உங்
கள் நாமத்தைப் பொல்லாததென்று தள்ளிப்போ
டும்பொழுது, நீங்கள் பாக்கியராய் இருப்பீர்
கள்.—பரமண்டலத்திலே உங்கள் பலன் மிகுதி ௨௩
யாய் இருப்பதால், [16]அக்காலத்திலே நீங்கள் சந்
தோஷப்பட்டுக் களிகூருங்கள்; அவர்களுடைய
பிதாக்கள் தீர்க்கதரிசிகளுக்கும் [17]அப்படியே
செய்தார்கள்.—[18]ஐசுவரியவான்களாகிய நீங்கள் ௨௪
[19]உங்கள் நன்மைகளை அடைந்து தீர்ந்தபடி
யால், ஐயோ! [20]உங்களுக்கு வேதனைவரும்.—
[21]திருத்தியுள்ளவர்களாகிய நீங்கள் பசியை அ ௨௫
டைவீர்கள், ஆகையால் ஐயோ! உங்களுக்கு வே
தனைவரும்; [22]இப்பொழுது நகைக்கிற நீங்கள்
(இனி) துக்கப்படுவீர்கள், ஆகையால் ஐயோ!
உங்களுக்கு வேதனைவரும். — [23]எல்லா மனிதர் ௨௬
களும் உங்களைக்குறித்துப் புகழ்ச்சியாய்ப் பே
சும்பொழுது, ஐயோ! உங்களுக்கு வேதனைவ
ரும், அவர்களுடைய பிதாக்கள் கள்ளத் தீர்க்க
தரிசிகளுக்கும் அப்படியே செய்தார்கள்.

[24]அன்றியும் (எனக்குச்) செவி கொடுக்கிற ௨௭
உங்களுக்கு நான் கட்டளையிடுகிறதாவது: உங்
கள் சத்துருக்களில் அன்புகூர்ந்து, உங்களைப்
பகைக்கிறவர்களுக்கு நன்மை செய்து,—[25]உங்க ௨௮

---

1 ௧ சாமு. ௨௧. ௬.-2 ௩ மோ. ௨௪. ௯. 3 மத். ௰௨. ௯. மாற். ௩. ௧. லூக். ௰௩. ௰௪: ௰௪. ௧. யோவா. ௯. ௰௬. 4 மத். ௰௪. ௨௩.—5 மத். ௰. ௧. 6 யோவா. ௧. ௪௨.—7 யூதா. ௧. 8 மத். ௪. ௨௫. மாற். ௩. ௭. 9 மாற். ௫. ௩௰. லூக். ௮. ௪௬. 10 மத். ௰௪. ௩௬.—11 மத். ௫. ௩: ௰௧. ௫. யாக். ௨. ௫.—12 ஏசா. ௫௫. ௧: ௬௫. ௰௩. மத். ௫. ௬.—13 ஏசா. ௬௧. ௩. மத். ௫. ௪.—14 மத். ௫. ௰௧. ௧ பே. ௨. ௰௯: ௩. ௰௪: ௪. ௰௪.

15 யோவா. ௰௬. ௨.—16 மத். ௫. ௰௨. அப். ௫. ௪௧. கொலோ. ௧. ௨௪. யாக். ௧. ௨.—17 அப். ௭. ௫௧. 18 லூக். ௰௨. ௨௧.-19 ஆமோ. ௬. ௧. யாக். ௫. ௧.-20 மத். ௬. ௨, ௫. ௰௬. லூக். ௰௬. ௨௫.-21 ஏசா. ௬௫. ௰௩. 22 யாக். ௰௪. ௰௩.-23 யோவா. ௰௫. ௰௯. ௧ யோ. ௪. ௫.-24 ௨ மோ. ௨௩. ௪. யாக். ௨௫. ௨௧. மத். ௫. ௪௪. ரோ. ௰௨. ௨௰. 25 லூக். ௨௩. ௩௪. அப். ௭. ௬௰.

ளைச் சபிக்கிறவர்களை ஆசீர்வதித்து, உங்களை
வருத்தப்படுத்துகிறவர்களுக்காகச் செபம்பண்
௨௯ ணுங்கள்.—[1]உன் கன்னத்தில் அறைகிறவனுக்கு
மறு கன்னத்தையும் கொடு; [2]உன் வஸ்திரத்தை
எடுத்துக்கொள்ளுகிறவனுக்கு உன் அங்கியை
யும் எடுத்துக்கொள்ளத் தடைபண்ணுதிருப்பா
௩௰ யாக.—[3]உன்னை வேண்டிக்கொள்ளுகிற யாவ
னுக்கும் கொடுப்பாயாக; உன்னுடையதை ஒரு
வன் எடுத்துக்கொண்டால், அவனிடத்தில் அ
௩௧ தைத்திரும்பக் கேளாதிருப்பாயாக.—[4]சனங்கள்
உங்களுக்குச் செய்யும்படி நீங்கள் விரும்புகிறது
எப்படியோ, அப்படியே நீங்களும் அவர்களுக்
௩௨ குச் செய்யக்கடவீர்கள்.—[5]உங்களைச் சிநேகிக்கி
றவர்களை (மாத்திரம்) நீங்கள் சிநேகித்தால், உங்
களுக்கு என்ன பலன் வரும்? பாவிகளும் தங்க
ளைச் சிநேகிக்கிறவர்களைச் சிநேகிக்கிறார்களே.—
௩௩ உங்களுக்கு நன்மைசெய்கிறவர்களுக்கு (மாத்தி
ரம்) நீங்கள் நன்மைசெய்தால், உங்களுக்கு என்
௩௪ னபலன் வரும்?—[6]பாவிகளும் அப்படிச் செய்
கிறார்களே, திரும்பக்கொடுப்பார்கள் என்று நீங்
கள் நம்பி அப்படிச் செய்பவர்களுக்கு (மாத்தி
ரம்) கடன் கொடுத்தால், உங்களுக்கு என்ன
பலன் வரும்? பாவிகளும் சரியாய்த் திரும்ப
அடைந்துகொள்ளும்படியாய், (மற்றப்) பாவிக
௩௫ ளுக்குக் கடன் கொடுக்கிறார்களே.—[7]ஆகையால்
உங்கள் சத்துருக்களைச் சிநேகித்து நன்மைசெய்
து, கைம்மாறு எண்ணுமல் [8]கடன் கொடுங்கள்;
அப்பொழுது உங்கள் பலன் மிகுதியாய் இருக்
கும்; அல்லாமலும் நன்றி அறியாதவர்கள்மேலும்
பொல்லாதவர்கள்மேலும் தயவாயிருக்கிற [9]உன்
னதமானவருக்குப் பிள்ளைகளாய் இருப்பீர்கள்.—
௩௬ [10]ஆகையால் உங்கள் பிதா இரக்கமுள்ளவராய்
இருக்கிறதுபோல, நீங்களும் இரக்கமுள்ளவர்க
௩௭ ளாய் இருங்கள்.—மற்றவர்களைக் [11]குற்றவாளிக
ளென்று எண்ணிக்கொள்ளாதிருங்கள்; அப்பொ
ழுது நீங்களும் குற்றவாளிகளென்று எண்ணிக்
கொள்ளப்படாதிருப்பீர்கள்; மற்றவர்களை ஆக்கி
னைக்குள்ளாக்கும்படி தீராதிருங்கள்; அப்பொ
ழுது நீங்களும் ஆக்கினைக்குள்ளாகும்படி தீர்க்
கப்படாதிருப்பீர்கள்; விடுதலை பண்ணுங்கள்,
அப்பொழுது நீங்களும் விடுதலையாக்கப்படுவீர்
௩௮ கள்.—[12]கொடுங்கள், அப்பொழுது உங்களுக்
கும் கொடுக்கப்படும்; அமுக்கிக் குலுக்கிச் சரிந்
துவிழும்படி நன்றாய் அளந்து, உங்கள் [13]மடியி
லே போடுவார்கள்; [14]நீங்கள் அளக்கிற அளவு
எதுவோ, அதினாலே உங்களுக்குத் திரும்ப
அளக்கப்படுமே என்றார்.

௩௯ பின்னும் அவர் உவமையாய் அவர்களுட
னே சொன்னதாவது: [15]குருடனுக்குக் குருடன்
வழிகாட்டலாமா? இருவரும் பள்ளத்தில் விழு
வார்கள் அல்லவா?—[16]சீஷன் தன் போதகருக்கு ௪௰
மேற்பட்டவன் அல்ல; நிறைவாய்க் கற்றுக்
கொண்டவனே தன் போதகனைப்போல இருப்
பான்.*

[17]நீ உன்னுடைய கண்ணிலுள்ள உத்திரத்தை ௪௧
உணராமல், உன் சகோதரனுடைய கண்ணி
லுள்ள சிராயைப் பார்க்கிறதென்ன?—அல்லது ௪௨
நீ உன் கண்ணிலுள்ள உத்திரத்தைக் காணுமல்
இருக்க நீ உன் சகோதரனை நோக்கி, சகோதரனே
நான் உன் கண்ணிலுள்ள சிராயை எடுத்துப்போ
டுகிறேன் இடம்கொடு என்று எப்படிச் சொல்
லலாம்? வஞ்சகனே, [18]முன்பு நீ உன் கண்ணி
லிருக்கிற உத்திரத்தை எடுத்துப்போடு, பின்பு
உன் சகோதரனுடைய கண்ணிலுள்ள சிராயை
எடுத்துப்போடும் வகையைத் தெளிவாக அறி
வாய்.—[19]கெட்டகனி கொடுக்கிற மரம் நல்ல ௪௩
மரம் அல்ல, நல்லகனி கொடுக்கிற மரம் கெட்ட
மரம் அல்ல.—[20]முட்செடிகளில் அத்திப்பழங்க ௪௪
ளைப் பறிக்கிறதுமில்லை; நெரிஞ்சிச் செடியிலே
திராட்சத்தைப்† பறிக்கிறதுமில்லை, ஆகையால்
எந்த மரமும் அதினதினுடைய கனியால் அறி
யப்படும்.—[21]நல்ல மனிதன் தன் இருதயத்தி ௪௫
லுள்ள நற்பொக்கிஷத்தில் நலமானதையே எடுத்
துக் காண்பிப்பான்; பொல்லாத மனிதனும் தன்
இருதயத்திலுள்ள பொல்லாத பொக்கிஷத்தில்
பொல்லாததையே எடுத்துக் காண்பிப்பான்;
[22]இருதயத்தின் பரிபூரணத்தினால் அவனுடைய
வாய் பேசுமே.

[23]அன்றியும் நான் கட்டளையிடுகிறவைகளை ௪௬
நீங்கள் செய்யாமலிருக்க, என்னை ஆண்டவரே,
ஆண்டவரே என்று என்னத்துக்கு அழைக்கிறீர்
கள்?—[24]என்னிடத்தில் வந்து என் வசனங்க ௪௭
ளைக் கேட்டு, அவைகளின்படி செய்கிறவனை
உங்களுக்குக் காண்பிப்பேன்.—அவன் எவ ௪௮
னுக்கு ஒப்பாய் இருக்கிறான் என்றால், ஆழமா
ய்த் தோண்டிப் பாறையின்மேல் அஸ்திபாரம்
போட்டு வீடுகட்டின மனிதனுக்கே ஒப்பாய்
இருக்கிறான்; பெருவெள்ளம் உண்டானபொ
ழுது நீரோட்டம் அந்த வீட்டில் மோதியும், அது
கல்மலையின்மேல் அஸ்திபாரம் போட்டிருந்தப
டியால் அதை அசைக்கக்கூடாமல் போயிற்று.—
(என் வசனத்தைக்) கேட்டும் அதின்படி செய் ௪௯
யாதவன், அஸ்திபாரமில்லாமல் பூமியின்மேல்
வீடு கட்டினவனுக்கு ஒப்பாய் இருக்கிறான்;
வெள்ளம் அதில் மோதினவுடனே அது விழுந்
து மிகவும் இடிந்துபோயிற்று என்றார்.

1 மத். ௫. ௪௪.—2 ௧ கொரி. ௬. ௭. 3 ௫ மோ. ௰௫. ௭, ௮, ௰. வாக். ௨௧. ௨௬. மத். ௫. ௪௨.—4 மத். ௭. ௰௨.—5 மத். ௫. ௪௬.—6 மத். ௫. ௪௨.—7 ௨௭. ௨௬. 8 சங். ௩௭. ௨௬. ௱௰௨. ௫. 9 மத். ௫. ௪௫.—10 மத். ௫. ௪௮. 11 மத். ௭. ௧.—12 வாக். ௰௯. ௰௭. 13 சங். ௭௯. ௰௨.—14 மத். ௭. ௨. மாற். ௪. ௨௪. யாக். ௨. ௰௩.

15 மத். ௰௫. ௰௪.—16 மத். ௰. ௨௪. யோவா. ௰௩. ௰௬; ௰௫. ௨௰. 17 மத். ௭. ௩.—18 வாக். ௰௮. ௰௭. 19 மத். ௭. ௰௬, ௰௭. 20 மத். ௰௨. ௩௩. 21 மத். ௰௨. ௩௫. 22 மத். ௰௨. ௩௪.—23 மல்கி. ௧. ௬. மத். ௭. ௨௧: ௨௫. ௰௧. லூக். ௰௩. ௨௫.—24 மத். ௭. ௨௪.

* அல்லது தன் போதகனைப்போல நிறைவாயிருப்பான்.—† கிரேக்கில் ஒரு திராட்சக்குலை.

## ௭. அதிகாரம்.

௧. கிறிஸ்து ஒரு அஞ்ஞானியாயிருந்த சேர்வைக்காரனிடத்தில் யூதரின் விசுவாசத்திலும், அதிக விசுவாசத்தைக் கண்டது. ௰. அவனுடைய வேலைக்காரனைக் குணமாக்கினது. ௰௧. நாயீனூர் விதவையின் மகனை உயிரோடே எழுப்பினது. ௰௯. யோவான் அனுப்பின தூதர்களுக்குத் தம்முடைய அற்புதங்களை ஒரு குறிப்பாகக் காட்டி, உத்தரவு அருளிச்செய்தது. ௨௪. யோவானைக்குறித்துத் தம்முடைய தாற்பரியத்தைச் சனங்களுக்கு அறிவித்தது. ௩௰. யோவானுடைய செய்கைகளினாலாவது, தம்முடைய செய்கைகளினாலாவது குணப்படாத யூதர்களைக் கடிந்துகொண்டு, ௩௬. மகுதலேனாளாகிய மரியாளுக்குச்செய்த கிருபையினால் விசுவாசித்துக் குணப்படுகிற பாவிகளுக்குப் பாவங்களை மன்னிக்கிற பாவிகளுடைய சிநேகிதரென்று தம்மைத் திருஷ்டாந்தப்படுத்தினது.

௧ சனங்கள் கேட்கத்தக்கதாக அவர் தம்முடைய
வாக்கியங்கள் யாவையும் சொல்லி முடித்த பின்
௨ பு[1]கப்பர்நாகூம் ஊருக்குப் போனார்.—அங்கே
நூறு போர்ச்சேவகருக்குத் தலைவனாகிய ஒருவ
னுக்குப் பிரியமான வேலைக்காரன் வியாதியி
னாலே மரணத்திற்கு ஏதுவாய் இருந்தான். —
௩ அந்தத் தலைவன் இயேசுவைக்குறித்துக் கேள்
விப்பட்டபொழுது, அவர் வந்து தன் வேலைக்
காரனைக் குணமாக்கவேண்டும் என்று அவரை
வேண்டிக்கொள்ளும்படிக்கு, யூதருடைய மூப்
௪ பரை அவரிடத்தில் அனுப்பினான்.—அவர்கள்
இயேசுவினிடத்தில் போய், அவரை மிகவும்
வேண்டிக்கொண்டு பின்பு சொன்னது: அவன்,
நம்முடைய தேசத்தாரில் அன்பாயிருந்து, எங்க
ளுக்காக ஒரு செபஆலயத்தையும் கட்டினான்.—
௫ ஆகையால் உம்முடைய தயவுக்கு அவன் பாத்தி
ரனாயிருக்கிறான் என்றார்கள்.
௬ இயேசுவானவர் அவர்களுடனேகூடச் சென்
றார்; வீட்டுக்குச் சமீபமாய்ப் போனபொழுது
அந்தத் தலைவன் சிநேகிதரை நோக்கி, (நீங்கள்
அவரிடத்தில் போய்) ஆண்டவரே, நீர் என்
வீட்டு வாசலுக்குள் பிரவேசிக்கிறதற்கு நான்
௭ பாத்திரன் அல்ல.—அதினாலே நான்தானே உம்
மிடத்தில் வருகிறதற்கும் என்னை அபாத்திரன்
என்று எண்ணினேன்; ஆகையால் நீர் வருத்தப்
௮ படாதிரும்.—அல்லாமலும் நான் அதிகாரத்திற்
குக் கீழ்ப்பட்டவனாயிருந்தும், எனக்குக் கீழி
ருக்கிற சேவகரில் ஒருவனை* போவென்னப்
போகிறான்; மற்றொருவனை வாவென்ன வரு
கிறான்; என் வேலைக்காரனை நோக்கி, இதைச்
செய்யென்னச் செய்கிறான்; ஆகையால் நீர் ஒரு
வார்த்தைமாத்திரம் சொன்னால், என் வேலைக்
காரன் சொஸ்தம் அடைவான் என்று சொல்லுங்
௯ கள் என்று அனுப்பினான். — இயேசுவானவர்
அதைக்கேட்டு அவனைக்குறித்து ஆச்சரியப்பட்
டுத்திரும்பிக்கொண்டு, தமக்குப் பின்செல்லுகிற
சனங்களை நோக்கி, இப்படிப்பட்ட விசுவாசத்
தை நான் இஸ்ரவேலருக்குள்ளும் காணவில்லை
என்று உங்களுக்குச் சொல்லுகிறேன் என்றார்.—
௰ அனுப்பப்பட்டவர்கள் திரும்ப வீட்டிற்கு வரு
கிறபொழுது, வியாதியாயிருந்த வேலைக்காரன்
ஆரோக்கியம் அடைந்திருக்கிறதைக் கண்டார்
கள்.

மறுநாளிலே அவர் நாயீன் என்னும் ஊருக் ௰௧
குப் போனார்; அவருடைய சீஷர் அநேகரும்
மற்ற அநேக சனங்களும் அவருடனேகூடப்
போனார்கள்.—அவர் ஊரின் வாசலுக்குச் சமீப ௰௨
மானபொழுது, ஒரு கைம்பெண்ணினுடைய
ஒரே குமாரன் இறந்துபோய் வெளியே கொண்
டுவரப்பட்டான்; ஊராரில் அநேக சனங்களும்
அவளுடனேகூட வந்தார்கள். — கர்த்தர் அவ ௰௩
ளைப் பார்த்து அவள்மேல் உருக்கமாய் இரங்கி,
நீ அழவேண்டாம் என்று சொல்லிக் கிட்டப்
போகையில் பாடையை† சுமக்கிறவர்கள் நின்
றார்கள்.—உடனே அவர் அதைத் தொட்டு, வா ௰௪
லிபனே, [2]எழுந்திரு என்று உனக்குச் சொல்
லுகிறேன் என்றார்.—அப்பொழுது மரித்தவன் ௰௫
எழுந்து உளுக்கார்ந்து பேசத்தொடங்கினான்;
அவனை அவர் தாய்க்கு ஒப்புக்கொடுத்தார்.—
[3]எல்லாரும் பயம் அடைந்து, [4]மகா தீர்க்கதரிசி ௰௬
நமக்குள்ளே தோன்றியிருக்கிறார் என்றும், [5]பரா
பரன் தம்முடைய சனங்களைச் சந்தித்துப்பார்த்
தார் என்றும் சொல்லிப் பராபரனைப் புகழ்ந்தார்
கள்.—அல்லாமலும் இந்தச் சங்கதி யூதேயாநாடு ௰௭
முழுவதிலும் சுற்றியிருக்கிற தேசங்கள் யாவற்
றிலும் பிரசித்தமாயிற்று.

இவை எல்லாவற்றையும் [6]யோவானுடைய ௰௮
சீஷர் அவனுக்கு அறிவித்தார்கள்.—அப்பொ ௰௯
ழுது யோவான் தன் சீஷரில் இரண்டுபேரை
அழைத்து, நீங்கள் இயேசுவினிடத்தில் போய்,
வருவார் என்றுசொல்லப்பட்டவர் நீரா அல்லது
வேறொருவர் வரக் காத்திருக்கவேண்டுமோ என்று
கேளுங்கள் என்று சொல்லி அனுப்பினான்.—
அந்தப்படி அவர்கள் அவரிடத்தில் போய், வரு ௨௰
வார் என்று சொல்லப்பட்டவர் நீரா, அல்லது
வேறொருவர் வரக் காத்திருக்கவேண்டுமோ என்று
கேட்கும்படிக்கு யோவான்ஸ்நானன் எங்களை
உம்மிடத்திற்கு அனுப்பினான் என்றார்கள். —
அவ்வேளையிலே அவர் வியாதிகளையும் வேதனை ௨௧
களையும் பொல்லாத ஆவிகளையுமுடைய அநே
கம்பேரைக் குணமாக்கி, குருடர் அநேகருக்குப்
பார்வையை அருளினார்.—அப்பொழுது [7]இயே ௨௨
சுவானவர் அவர்களுக்குச் சொன்னது: [8]குருடர்
பார்வையை அடைகிறார்கள்; சப்பாணிகள் நட
க்கிறார்கள்; குஷ்டரோகிகள் சுத்தமாகிறார்கள்;
செவிடர் கேட்கிறார்கள்; மரித்தோர் எழுப்பப்ப
டுகிறார்கள்; [9]தரித்திரருக்குச் சுவிசேஷம் அறி
விக்கப்பட்டுவருகின்றது. இப்படி நீங்கள் பார்க்
கிறவைகளையும் கேட்கிறவைகளையும் யோவா
னுக்குப் போய் அறிவியுங்கள்.—அல்லாமலும் ௨௩
என்னாலே இலச்சையடையாமல் இருக்கிறவன்
பாக்கியவான் என்றார்.

1 மத். ௮. ௫.—2 லூக். ௮. ௫௪. உரோ. ௪. ௰௭.—3 லூக். ௧.௬௫. யோவா. ௰௧. ௪௩. அப். ௯. ௪௰. 4 லூக். ௨௪ ௰௯. யோவா ௪. ௰௯: ௬.௰௪: ௯.௰௭.—5 லூக்.௧. ௬௮. 6 மத். ௰௧. ௨. 7 மத். ௰௧. ௫.—8 ஏசா. ௩௫. ௫. 9 லூக். ௪. ௰௮.

*அல்லது இந்த மனிதனை.—†அல்லது சவப்பெட்டியை.

௨௪ [1]யோவானுடைய தூதர்கள் போன பின்பு,
அவர் யோவானைக்குறித்துச் சனங்களுடனே
சொன்னது: காற்றிஞல் அசைக்கப்படுகிற நா
ணலையா நோக்கிப் பார்க்கும்படிக்கு வனாந்தரத்
௨௫ திற்குப் போனீர்கள்?—அல்லது மெல்லியவஸ்
திரங்களைத் தரித்திருக்கிற மனிதனையா பார்க்கும்
படிக்குப் புறப்பட்டீர்கள்? மகிமையான உடுப்
போடும் செல்வத்தோடும் இருக்கிறவர்கள் அரச
௨௬ ருடைய அரமனைகளில் இருக்கிறார்களே.-அல்
லது ஒரு தீர்க்கதரிசியையா பார்க்கும்படிக்குப்
புறப்பட்டீர்கள்? ஒரு தீர்க்கதரிசியிலும் அதிகமா
னவனையே (பார்த்தீர்களென்று) உங்களுக்குச்
௨௭ சொல்லுகிறேன்.—[2] இதோ நான் என்னுடைய
தூதனை உமக்கு முன்பாக அனுப்புகிறேன்;
அவன் உமக்கு முன் நடந்து, உமக்காக மார்க்கத்
தைத் திருத்துவான் என்று ஒருவனைக்குறித்து
எழுதியிருக்கின்றதே அவன் இவன்தான். —
௨௮ ஆகையால் நான் உங்களுக்குச் சொல்லுகிறதா
வது: ஸ்திரிகளிடத்தில் பிறந்தவர்களில் யோ
வான்ஸ்நானனிலும் பெரிய தீர்க்கதரிசி ஒருவ
னும் இல்லை; ஆனாலும் பராபரனுடைய இராச்
சியத்திலே சிறியவனானவன் அவனிலும் பெரிய
வனாயிருக்கிறான்.

௨௯ அன்றியும் (யோவானுடைய உபதேசத்தைக்)
கேட்ட சகல சனங்களும் ஆயக்காரரும் அவனா
லே [3]ஞானஸ்நானத்தைப் பெற்று, பராபரன்
௩௰ நீதிபரர் என்று அறிக்கையிட்டார்கள்.—பரிசே
யரும் நியாயசாஸ்திரிகளுமானவர்கள்மாத்திரம்
அவனாலே ஞானஸ்நானத்தைப் பெறாமல், தங்
களைக்குறித்துப்* பராபரனுடைய [4]ஆலோசனை
யைத் தள்ளினார்கள்.†

௩௧ அப்படியிருக்க, [5]இந்தத் தலைமுறையின் மனி
தரை நான் யாருக்கு நிகர்சொல்லுவேன்? இவர்
௩௨ கள் யாருக்கு ஒப்பாயிருக்கிறார்கள்?—சந்தையில்
உளுக்காந்து ஒருவரை ஒருவர் நோக்கி, உங்க
ளுக்காக ஊதினோம் நீங்கள் கூத்தாடவில்லை;
உங்களுக்காகப் புலம்பினோம் நீங்கள் அழவில்
லை என்று எதிர்கூப்பிடுகிற பிள்ளைகளுக்கு ஒப்
௩௩ பாயிருக்கிறார்கள்.—[6]எப்படியெனில், யோவான்
ஸ்நானன்வந்து, அப்பம் பொசியாமலும் திராட்ச
இரசம் குடியாமலும் இருந்தான்; அதினாலே
௩௪ அவன் பேய்கொண்டவன் என்கிறீர்கள்.—மனி
தனுடைய குமாரன் வந்து போசனபானம்பண்
ணுகிறான்; அதினாலே இதோ, போசனப்பிரி
யன், மதுபானப்பிரியன், ஆயக்காரருக்கும் பா
௩௫ விகளுக்கும் சிநேகிதன் என்கிறீர்கள்.— [7]ஆனா
லும் ஞானமானது தன் பிள்ளைகள் எல்லாராலும்
நீதியாக்கப்படுகின்றது என்றார்.

௩௬ [8]பரிசேயரில் ஒருவன் தன்னுடனே போசனம்
பண்ணும்படிக்கு அவரை வேண்டிக்கொண்
டான்; அந்தப்படி அவர் பரிசேயனுடைய வீட்
டுக்குப் போய்ப் பந்தியிருந்தார்.

அப்பொழுது பட்டணத்திலுள்ள பாவியாகிய ௩௭
ஒரு ஸ்திரி அவர் பரிசேயனுடைய வீட்டிலே
பந்தியிருக்கிறதை அறிந்து, ஒரு பரணியில் பரி
மளதயிலம் கொண்டுவந்து,-அவருடைய பாதங் ௩௮
களின் அருகே பின்னாக நின்று அழுதுகொண்
டு, அவருடைய பாதங்களைக் கண்ணீரினாலே
நனைத்துத் தன் தலையின் மயிராலே துடைத்து
அவருடைய பாதங்களை முத்தம்செய்து, பரிமள
தயிலத்தைப் பூசினாள்.—அவரை அழைத்த பரி ௩௯
சேயன் அதைக் கண்டபொழுது, [9]இவர் தீர்க்க
தரிசியானால் தம்மைத் தொடுகிற ஸ்திரி இன்னாள்
என்றும், இப்படிப்பட்டவள் என்றும் அறிந்
திருப்பார்; இவள் பாவியாயிருக்கிறாளே என்று
தனக்குள்ளே எண்ணிக்கொண்டான்.

இயேசுவானவர் அவனை நோக்கி, சீமோனே, ௪௰
உனக்கு ஒரு வார்த்தை சொல்ல விரும்புகிறேன்
என்றார்; போதகரே, சொல்லும் என்றான்.—
(இயேசுவானவர் சொன்னது:) கடன்காரன் ௪௧
ஒருவனுக்குக் கடனாளிகள் இரண்டுபேர் இருந்
தார்கள்; அவர்களில் ஒருவன் ஐந்நூறு ‡ வெள்
ளிக்காசும், மற்றொருவன் ஐம்பது வெள்ளிக்
காசும் கொடுக்கவேண்டியிருந்தது .— அவர்கள் ௪௨
கொடுக்கிறதற்குத் திராணி இல்லாதவர்களான
பொழுது, இருவருக்கும் கடனை மன்னித்தான்;
ஆகையால் அவர்களில் எவன் அவனிடத்தில்
அதிக அன்பாயிருப்பான் அதைச் சொல் என்
றார். — சீமோன் மாறுத்தரமாகச் சொன்னது: ௪௩
அதிகமான மன்னிப்பைப் பெற்றவன் எவனோ,
அவனே என்று நினைக்கிறேன் என்றான்; அப்
பொழுது அவர் நிதானமாய்த் தீர்த்தாய் என்று
சொல்லி,-பின்பு ஸ்திரியினிடத்திலே திரும்பிச் ௪௪
சீமோனுடனே சொன்னது: இந்த ஸ்திரியைப்
பார்க்கிறாயா? நான் உனது வீட்டில் வந்தபொ
ழுது, நீ என் கால்களுக்காகத் தண்ணீரைத் தர
வில்லை; இவள் கண்ணீரினாலே என் கால்களை
நனைத்து, தன் தலையின் மயிராலே துடைத்தாள்.—
நீ என்னை முத்தம்செய்யவில்லை; இவள் இங்கே ௪௫
பிரவேசித்தது முதல் என் பாதங்களை ஓயாமல்
முத்தம்செய்தாள். — [10]நீ என் தலையில் எண் ௪௬
ணெயைப் பூசவில்லை; இவள் பரிமளதயிலத்
தை என் பாதங்களில் பூசினாள். — [11]ஆனதால் ௪௭
இவள் செய்த அநேக பாவங்கள் மன்னிக்கப்
பட்டபடியினாலே, மிகவும் அன்பாயிருக்கிறாள்
என்று உனக்குச் சொல்லுகிறேன்; அல்லாம
லும் கொஞ்சம் மன்னிக்கப்பெற்றவன் எவனோ,
அவன் கொஞ்சம் அன்பாயிருக்கிறான் என்று
சொல்லி,—[12]பின்பு அவளை நோக்கி, உன் பாவங் ௪௮
கள் மன்னிக்கப்பட்டன என்றார்.—அப்பொ ௪௯

1 மத். ௰௧. ௭.—2 மல்கி. ௩. ௧.
3 மத். ௩. ௧. லூக். ௩. ௰௨.
4 அப். ௨௰. ௨௭.
5 மத். ௰௧. ௰௬.—6 மத். ௩. ௪. மாற். ௧. ௬. லூக். ௧. ௰௫.
7 மத். ௰௧. ௰௯.
8 மத். ௨௬. ௬. மாற். ௰௪. ௩. யோவா. ௰௧. ௨.—9 லூக். ௰௫. ௨.
10 சங். ௨௩ ௫.
11 ௧ தீமோ. ௧. ௰௪.
12 மத். ௯. ௨. மாற். ௨. ௫.

* அல்லது தங்களுக்குவிரோ.—† அல்லது அமித்தார்கள்.—‡ மத். ௰௮. ௨௮.

முது பந்தியில் இருந்தவர்கள், [1]பாவங்களை மன்
னிக்கிற இவன் யாவன் என்றுசொல்லிக்கொண்
௫௰ டார்கள்.–[2]அவர் (பின்னும்) ஸ்திரியை நோக்கி,
உன் விசுவாசம் உன்னை இரட்சித்தது, சமாதா
னத்தோடே போ என்றார்.

## ௮. அதிகாரம்.

௧. ஸ்திரிகள் கிறிஸ்துவுக்குத் தங்கள் ஆஸ்திகளாலே உதவிசெய்தது. ௪. கிறிஸ்து அப்போஸ்தலர்களோடே பலவிடங்களிலும் பிரசங்கம் பண்ணின பின்பு விதைக்கிறவன் உவமையையும், ௰௬. விளக்கின் உவமையையும் எடுத்துக்காட்டி, ௨௧. தம்முடைய தாயும், சகோதரரும் இன்னாரென்று அறிவித்து, ௨௨. காற்றை அதட்டி, ௨௬. ஒருவனைப் பிடித்திருந்த பசாசுகளைப் பன்றிகளின் கூட்டத்திலே துரத்தினது. ௩௭. அவர் கதரேனரால் விலக்கப்பட்டது. ௪௩. பெரும்பாடுள்ள ஒரு ஸ்திரீயைக் குணமாக்கினது. ௪௯. யாவீரு என்பவனுடைய மகளை உயிரோடே எழுப்பினது.

௧ பின்பு அவர் பிரயாணமாய்ப் பட்டணங்கள்
தோறும் ஊர்கள்தோறும் திரிந்து, பராபரனு
டைய இராச்சியத்தைச் சுவிசேஷமாய்ப் பிரசங்
௨ கம்பண்ணினார்.—[3]பன்னிருவரும், பொல்லாத
ஆவிகளில் நின்றும் வியாதிகளில் நின்றும் குண
மாக்கப்பட்ட சில ஸ்திரிகளும் அவருடனேகூ
௩ டப் போனார்கள்.—[4]ஏழு பசாசுகளில் நின்றும்
நீக்கப்பட்ட மகதலேனாள் என்னப்பட்ட மரி
யாளும், ஏரோதேயின் காரியக்காரனாகிய கூசா
வின் மனைவியாகிய யோவன்னாளும், சூசன்னா
ளும், தங்கள் ஆஸ்திகளால் அவருக்கு ஊழியம்
செய்துகொண்டுவருகிற மற்ற அநேக ஸ்திரிக
ளும் அவருடனே இருந்தார்கள்.
௪ [5]பட்டணங்களிலிருந்து மிகுந்த சனங்கள்
வந்து அவரிடத்தில் கூடியிருக்கிறபொழுது, அ
௫ வர் உவமையாய்ச் சொன்னது:–விதைக்கிறவன்
தன் விதையை விதைக்கப் புறப்பட்டான்;
அவன் விதைக்கையில், சில விதை வழியருகே
விழுந்து பின்பு மிதிக்கப்பட்டது; ஆகாசத்தின்
௬ பறவைகளும் வந்து அதைப் பட்சித்தன.—சில
விதை கற்பாறையின்மேல் விழுந்தது; அது மு
ளைத்தபின் ஈரமில்லாததினாலே உலர்ந்துபோயிற்
௭ று.—சில விதை முட்செடிகளுள்ள இடத்திலே
விழுந்தது, முட்செடிகள் கூட வளர்ந்து, அதை
௮ நெருக்கிப்போட்டன.—சில விதை நல்ல நிலத்
தில் விழுந்து முளைத்து நூறுமடங்காய்ப் பலன்
தந்ததென்றுசொல்லி, பின்பு கேட்கிறதற்குக்
காதுள்ளவன் கேட்கக்கடவன் என்று கூப்பிட்
டார்.
௯ [6]அப்பொழுது அவருடைய சீஷர் அவனை
நோக்கி, இந்த உவமையின் கருத்து என்னவென்
௰ று கேட்டார்கள்.—அவர் சொன்னது: பராபர
னுடைய இராச்சியத்தின் இரகசியங்களை அறி
யும்படிக்கு, நீங்கள் அருள் பெற்றவர்கள்; மற்ற
வர்கள் [7]கண்டும் காணாமலும், கேட்டும் உணரா
மலும் இருக்கத்தக்கதாக (அவைகள்) உவமைக
ளாய் அவர்களுக்குச் சொல்லப்படுகின்றன.—
[8]அந்த உவமையின் கருத்தாவது: விதையானது ௰௧
பராபரனுடைய வசனமே. —(விதை விழுந்த) ௰௨
வழியானது, (அந்த வசனத்தைக்) கேட்கிறபொ
ழுது விசுவாசியாமலும் இரட்சிக்கப்படாமலும்
இருக்கும்படிக்குத் தங்கள் இருதயத்திலிருந்து
அவ்வசனம் பசாசினாலே எடுக்கப்படுகிறவர்க
ளேயாம்.—(விதை விழுந்த) கற்பாறையானது, ௰௩
(அவ்வசனத்தைக்) கேட்கிறபொழுது, சந்தோ
ஷத்தோடே ஏற்றுக்கொண்டு பின்பு அது தங்க
ளுக்குள்ளே வேர்கொள்ளும்படி செய்யாமல் சி
லகாலம் (மாத்திரம்) விசுவாசித்துச் சோதனைகா
லத்திலே வழுவிப்போகிறவர்களேயாம்.–(விதை ௰௪
விழுந்த) முட்செடிகளுள்ள நிலமானது தேவவ
சனத்தைக் கேட்கிறவர்களாயிருந்தும், நிறைந்த
பலனைக் கொடாதபடிக்குக் கவலைகளும் ஐசு
வரியமும் சீவனத்தின் செல்வமும் உள்ளவர்க
ளாய் நடந்து, அவைகளினாலே அதை நெருக்கிப்
போடுகிறவர்களேயாம்.—(விதை விழுந்த) நல்ல ௰௫
நிலமானது, அவ்வசனத்தைக் கேட்டு, நன்றும்
உண்மையுமான இருதயத்திலே அதைக் காத்துக்
கொண்டு இடைவிடாமல் பலன்கொடுக்கிறவர்
களேயாம்.

[9]ஒருவனும் விளக்கைக் கொளுத்தி, அதை ஒரு ௰௬
பாத்திரத்தினாலே மூடவும் கட்டிலின் கீழே
வைக்கவும்மாட்டான்; உள்ளே வருகிறவர்கள்
வெளிச்சம் காணும்படிக்கு அதைத் தண்டின்
மேலே வைப்பான்.—[10]அந்தப்படி வெளியரங் ௰௭
கமாகாத அந்தரங்கமும் இல்லை; அறியப்பட்டு
வெளிக்கு வாராத மறைபொருளும் இல்லை.—
ஆதலால் நீங்கள் கேட்கிற விதத்தைக்குறித்து ௰௮
எச்சரிக்கையாயிருங்கள்; என்னத்தினாலெனில்,
[11]உள்ளவனுக்குக் கொடுக்கப்படும்; இல்லாத
வன் தனக்கு உண்டென்று நினைக்கிற* பொ
ருளும் அவனிடத்திலிருந்து எடுத்துக்கொள்ளப்
படும் என்றார்.

[12]அப்பொழுது அவருடைய தாயும் சகோதர ௰௯
ரும் அவரிடத்திற்குப் போகையில், சனக்கூட்
டத்தின்நிமித்தம் அவர்கள் அவரைச் சேருகிற
தற்கு இடமில்லை.—அப்பொழுது சிலர் அவரை ௨௰
நோக்கி, உம்முடைய தாயும் சகோதரரும் உம்
மைப் பார்க்கவேண்டும் என்று வெளியே நிற்கி
றார்கள் என்று அறிவித்தார்கள்.—அவர்களுக்கு ௨௧
மாறுத்தரமாக அவர்சொன்னது: பராபரனுடைய
வசனத்தைக் கேட்டு அதின்படி செய்கிறவர்க
ளே, என் தாயுமாய் என் சகோதரருமாய் இருக்
கிறார்கள் என்றார்.

[13]ஒருநாளிலே அவர் தம்முடைய சீஷரோடுங் ௨௨
கூட ஒரு படவில் ஏறி அவர்களை நோக்கி, கட
லின் அக்கரைக்குப் போகக்கடவோம் என்றார்;

1 மத். ௯. ௨. மாற். ௨. ௭.
2 மத். ௯ ௨௨. மாற். ௫. ௩௪: ௰ ௫௨. லூக். ௮. ௪௮: ௰௮. ௪௨.
3 மத். ௨௭. ௫௫, ௫௬.
4 மாற். ௰௬. ௯.—5 மத். ௰௩. ௨. மாற். ௪. ௧.—6 மத். ௰௩. ௰. மாற். ௪. ௰.
7 ஏசா. ௬. ௯. மாற். ௪. ௰௨.
8 மத். ௰௩. ௰௮. மாற். ௪. ௰௪.
9 மத். ௫. ௰௫. மாற். ௪. ௨௧. லூக். ௰௧. ௩௩.—10 மத். ௰. ௨௬. லூக். ௰௨. ௨.—11 மத். ௰௩. ௰௨; ௨௫. ௨௯. லூக். ௰௯. ௨௬.
12 மத். ௰௨. ௪௬. மாற். ௩. ௩௧. 13 மத். ௮. ௨௩. மாற். ௪. ௩௫.

* அல்லது காணப்படுகிற.

௨௩ அந்தப்படி கரையைவிட்டுப் போனார்கள்.—அ
வர்கள் படவை நடத்துகையில், அவர் நித்திரை
பண்ணினார்; அப்பொழுது படவு சலத்தினாலே
நிரப்பப்படவும், அவர்களுக்கு மோசம் வரவும்
தக்கதாகக் கடலில் சுழல்காற்று உண்டாயிற்று.—
௨௪ உடனே அவர்கள் சேர்ந்து, ஆண்டவரே, ஆண்
டவரே, நாம் கெட்டுப்போகிறோமே என்று
(கூப்பிட்டு) அவரை எழுப்பினார்கள்; அப்பொ
ழுது அவர் எழுந்து காற்றையும் சலத்தின் உக்கிரத்
தையும் அதட்டினார்; உடனே அவைகள் நின்று
௨௫ போக அமைதல் உண்டாயிற்று.—பின்பு அவர்
அவர்களை நோக்கி, உங்கள் விசுவாசம் எங்கே
என்றார்; அவர்கள் பயந்து ஆச்சரியப்பட்டு,
இவர் எப்படிப்பட்டவரோ, காற்றுகளுக்கும்
சலத்திற்கும் கட்டளை இடுகிறாரே, அவைகளும்
இவருக்குக் கீழ்ப்படிகின்றனவே என்று ஒருவ
ரோடொருவர் சொல்லிக்கொண்டார்கள்.

௨௬ [1]பின்பு கலிலேயா நாட்டுக்கு எதிரான கதரே
௨௭ னர் தேசத்திலே சேர்ந்தார்கள்.—அவர் அக்கரை
யில் இறங்கினபொழுது, அநேகநாளாய்ப் பசா
சுகள் பிடித்தவனுமாய், வஸ்திரம் தரியாதவனு
மாய், வீட்டிலே தங்காமல் பிரேதக்கல்லறைக
ளிலே தங்கினவனுமாயிருந்த அப்பட்டணத்து
மனிதன் ஒருவன் அவருக்கு எதிராக வந்தான்;
அநேகந்தரம் அந்த அசுத்த ஆவி அவனை அலக்
௨௮ கழித்துவந்தது.—அல்லாமலும் அவன் சங்கிலி
களாலும் விலங்குகளாலும் கட்டப்பட்டுக் கா
வல் பண்ணப்பட்டிருந்தும், அவன் விலங்குக
ளைத் தறித்துப்போட்டு, பசாசினால் வனாந்தரங்க
ளுக்குத் துரத்தப்பட்டான்; ஆதலால் இயேசுவா
னவர் அந்த ஆவி அவனை விட்டுப் போகும்ப
௨௯ டிக்குக் கட்டளையிட்டார். — ஆனபடியினாலே
அவன் இயேசுவானவரைக் கண்டபொழுது,
கூக்குரலிட்டு அவருக்குமுன்பாக விழுந்து, இ
யேசுவே, உன்னதமான பராபரனுடைய குமார
னே, எனக்கும் உமக்கும் என்ன? என்னை வேத
னைப்படுத்தாதபடிக்கு உம்மை வேண்டிக்கொள்
௩௰ ளுகிறேன் என்றான். — அப்பொழுது இயேசு
வானவர் அவனை நோக்கி, உன் பேர் என்ன
வென்று கேட்டார், அதற்கு அவன் இலேகி
யோன்* என்று சொன்னான்; அநேகம் பசாசு
கள் அவனுக்குள் புகுந்தபடியால் அந்தப்பேர்
௩௧ அவனுக்குஉண்டாயிற்று.—அல்லாமலும் [2]தங்க
ளைப் பாதாளத்திற்குப் போகும்படி கட்டளையி
டாதபடிக்கு, அவைகள் அவரை வேண்டிக்
கொண்டன.

௩௨ அப்பொழுது அவ்விடத்திலே அநேகம் பன்
றிகள் கூட்டமாய் மலையிலே மேய்ந்துகொண்டி
ருந்தன; அவைகள் அந்தப் பன்றிகளுக்குள் பிர
வேசிக்கும்படி, உத்தரவு கொடுக்கவேண்டும்
என்று அவரை வேண்டிக்கொண்டன; அப்படி
யே அவைகளுக்கு உத்தரவு கொடுத்தார்.—உட ௩௩
னே பசாசுகள் அந்த மனிதனைவிட்டு நீங்கிப்
பன்றிகளுக்குள் புகுந்தன; அப்பொழுது அந்
தப் பன்றிக்கூட்டம் உயர்ந்த மேட்டிலிருந்து
கடலிலே பாய்ந்து அமிழ்ந்துபோயிற்று.—அவை ௩௪
களை மேய்த்தவர்கள் அதைக் கண்டு ஓடிப்போய்,
பட்டணத்திலும் வெளிப்புறங்களிலும் அறிவித்
தார்கள்.—அப்படி நடந்ததைச் சனங்கள் பார்க் ௩௫
கும்படிக்குப் புறப்பட்டு இயேசுவினிடத்தில்
போய், பசாசுகள்விட்டுப்போன மனிதன் இயே
சுவினுடைய பாதங்கள் அருகே வஸ்திரம் தரித்
தவனாய் உளுக்காந்து, புத்தி அடைந்திருக்கிற
தைக் கண்டு, பயப்பட்டார்கள். — பசாசுகள் ௩௬
பிடித்திருந்தவன் இரட்சிக்கப்பட்ட வகை
யைக் கண்டவர்களும் அதை அவர்களுக்கு அறி
வித்தார்கள்.

[3]அப்பொழுது கதரேனருடைய சுற்றுத் தே ௩௭
சத்தின் திரளான சனங்கள் எல்லாரும் மிகுந்த
பயம் அடைந்தவர்களானபடியினாலே, [4]தங்களை
விட்டுப் போகும்படிக்கு அவரை வேண்டிக்
கொண்டார்கள்; அந்தப்படி அவர்படவில் ஏறித்
திரும்பினார்.—[5]பசாசுகள் விட்டுப்போன மனி ௩௮
தன் அவருடனே கூடப் போயிருக்கும்படிக்கு,
அவரிடத்தில் உத்தரவு கேட்டுக்கொண்டான்.—
இயேசுவானவர் அவனை நோக்கி, நீ உன் வீட் ௩௯
டிற்குத் திரும்பிப் போய், பராபரன் உனக்குச்
செய்த விசேஷங்களை அறிவிப்பாயாக என்று
சொல்லி அனுப்பிவிட்டார்; அந்தப்படி அவன்
போய், தனக்கு இயேசுவானவர் செய்த விசே
ஷங்களைப் பட்டணத்தில் எங்கும் பிரசித்தம்
பண்ணினான்.

பின்பு இயேசுவானவர் திரும்பிவந்தபொழுது, ௪௰
அவர் வரக்காத்துக்கொண்டிருந்த சனங்கள் எல்
லாரும் அவரை உபசாரம் செய்தார்கள்.—[6]அப் ௪௧
பொழுது செபஆலயத்தலைவனான யாவீரு என்
பவன் வந்து, இயேசுவின் பாதங்களிடத்தில்
விழுந்து, தனக்குண்டான பன்னிரண்டு வய
துள்ள ஒரே குமாரத்தி மரணத்துக்கு ஏதுவாயி
ருந்தபடியினாலே,—தன் வீட்டிலே வரும்படிக்கு ௪௨
அவரை வேண்டிக்கொண்டான்; அவர் அவனு
டனேகூடப் போகையில், சனங்கள் அவரை
நெருக்கினார்கள்.

[7]அப்பொழுது பன்னிரண்டு வருஷம் பெரும் ௪௩
பாடுபட்டு, தன் பொருள்கள் யாவையும் பரிகா
ரிகளுக்குச் செலவழித்து, ஒருவராலும் சுகம்
அடையாத ஒரு ஸ்திரி, (அவருக்கு) பின்னாலே
சேர்ந்து,—அவருடைய வஸ்திரத்தின் ஓரத்தைத் ௪௪
தொட்டாள்; உடனே அவளுடைய இரத்த ஊ
றல் நின்றுபோயிற்று. — அப்பொழுது இயேசு ௪௫
வானவர், என்னைத் தொட்டவர் யார் என்றார்;
நாங்கள் அறியோம் என்று எல்லாரும் சொன்ன

1 மத். ௮. ௨௮. மாற். ௫. ௧. 2 வெளி. ௨௰. ௩. 3 மத். ௮. ௩௪. 4 அப். ௰௬. ௩௯. 5 மாற். ௫. ௰௮.—6 மத். ௯. ௰௮. 7 மத். ௯. ௨௰. மாற். ௫. ௨௨

* இலேகியோன் என்பதற்கு ஏறக்குறைய நாலாயிரம்பேரென்று அருத்தமாம்.

பொழுது, பேதுருவும் அவனோடிருந்தவர்களும்
அவரை நோக்கி, ஐயரே, சனங்கள் உம்மை நெ
ருக்கி உரசிக்கொண்டிருக்கிறார்களே; அப்படி
யிருக்க, என்னைத் தொட்டவர் யாரென்று எப்
௪௬ படிக் கேட்கிறீர் என்றார்கள்.—[1]இயேசுவானவர்
சொன்னது: என்னிலிருந்து பலம் புறப்பட்ட
தை அறிந்திருக்கிறேன்; ஆகையால் ஒருவர் என்
௪௭ னைத் தொட்டது உண்டென்றார்.—அப்பொழுது
ஸ்திரியானவள் மறைந்திருக்கக் கூடாதென்று
கண்டு, நடுங்கி வந்து, அவர்முன்பாக வணக்
கமாய் விழுந்து, தான் அவரைத் தொட்ட கார
ணத்தையும், உடனே குணம் அடைந்ததையும்
எல்லாச் சனங்களுக்கும் முன்பாக அவருக்கு
௪௮ அறிவித்தாள்.—அவர் அவளுடனே சொன்னது:
மகளே சந்தோஷமாயிரு, உன் விசுவாசம் உன்
னை இரட்சித்தது, சமாதானத்தோடே போ என்
றார்.

௪௯ [2]அவர் அப்படிப் பேசிக்கொள்ளுகையில்,
செபஆலயத்தலைவனுடைய வீட்டிலிருந்து ஒரு
வன் வந்து அவனை நோக்கி, உம்முடைய குமா
ரத்தி இறந்துபோனாள்; போதகரை (இனி) வருத்
௫௰ தப்படுத்தாதிரும் என்றான். — இயேசுவானவர்
அதைக் கேட்டு, யாவீரு என்பவனை நோக்கி,
நீர் பயப்படாமல் விசுவாசமாயிரும் அப்பொ
௫௧ ழுது இரட்சிக்கப்படுவாள் என்றார்.—பின்பு அ
வர் வீட்டிலே சேர்ந்தபொழுது, பேதுருவையும்
யாக்கோபையும் யோவானையும் பெண்ணினு
டைய தகப்பனையும் தாயையும் தவிர, மற்றொ
ருவரும் உள்ளே பிரவேசிக்கிறதற்கு இடம்
௫௨ கொடாமல், — எல்லாரும் அவளைக்குறித்து அ
ழுது துக்கங்கொண்டாடுகிறதை (கண்டு) நீங்
கள் அழவேண்டாம்; அவள் இறந்துபோகவில்
௫௩ லை, [3]நித்திரைபண்ணுகிறாள் என்றார்.—அவள்
இறந்துபோனாள் என்று அவர்கள் அறிந்து, அவ
௫௪ ரைக்குறித்து நகைத்தார்கள்.—பின்பு அவர் எல்
லாரையும் வெளியே போகப்பண்ணி, அவளு
டைய கையைப் பிடித்து, [4]பிள்ளையே, எழுந்
௫௫ திரு என்று கூப்பிட்டார்.—உடனே அவளு
டைய ஆவி திரும்பி வந்தபடியால் அவள் எழுந்
திருந்தாள்; அவளுக்குச் சாப்பாடு கொடுக்கும்
௫௬ படிக்குக் கட்டளையிட்டார்.—அவளுடைய தாய்
தகப்பன்மார் பிரமித்தார்கள்; [5]அப்பொழுது
நடந்ததை ஒருவருக்கும் சொல்லாதபடிக்கு
அவர்களுக்குக் கட்டளையிட்டார்.

## ௯. அதிகாரம்.

௧. கிறிஸ்து தம்முடைய அப்போஸ்தலர்களை அற்புதங்கள் செய்யவும், பிரசங்கிக்கவும் அனுப்பினது. ௭. அவரை ஏரோதே காண விரும்பினது. ௰௭. அவர் ஐயாயிரம்பேரைப் போஷித்தது. ௰௮. உலகத்தார் தம்மைக் குறித்து எவ்விதமாய் நினைக்கிறார்களென்று கேட்டு, ௨௨. தம்முடைய பாடுகளை முன்னறிவித்து, ௨௩. தம்முடைய பொறுமையை மாதிரியாகக் காண்பித்தது. ௨௮. அவர் மறுரூபப்பட்டது. ௩௭. சந்திரரோகியைக் குணமாக்கினது. ௪௩. தம்முடைய பாடுகளை மறுபடியும் சீஷர்களுக்கு முன்னறிவித்தது. ௪௬. தாழ்மையாய் நடந்து, ௪௯. குரோதம் கொள்ளாமல் யாவரோடும் சாந்தமாயிருக்க அவர்களைப் படிப்பித்தது. ௫௭. தங்கள் சுய இஷ்டப்படி ஒப்புவாரானால், அநேகர் கிறிஸ்துவைப் பின்செல்லுவார்கள் என்பது.

[6]பின்பு அவர் தம்முடைய பன்னிரண்டு சீஷ ௧
ரைக் கூடி வரவழைத்து, எந்தப் பசாசுகளையும்
வியாதிகளையும் நீக்குவதற்கு வல்லமையையும்
அதிகாரத்தையும் அவர்களுக்குக் கொடுத்து,—
[7]பராபரனுடைய இராச்சியத்தைக்குறித்துப் பி ௨
ரசங்கிக்கும்படிக்கும், பிணியாளிகளைச் சொஸ்
தமாக்கும்படிக்கும், அவர்களை அனுப்ப,—[8]அ ௩
வர்களுடனே சொன்னது: வழிக்குத் தடிகளை
யாவது, பையையாவது, அப்பத்தையாவது, கா
சையாவது, எடுத்துக்கொள்ளாதிருங்கள்; இரண்
டு அங்கிகளையும் கொண்டுபோகவேண்டாம்.—
[9]நீங்கள் பிரவேசிக்கும் வீடு எதுவோ, அதிலே ௪
நீங்கள் புறப்படுகிறவரைக்கும் தங்குங்கள்.—
[10]உங்களை ஏற்றுக்கொள்ளாதவர்கள் எவர்களோ, ௫
அவர்களுடைய பட்டணத்தைவிட்டுப் புறப்
படுகிறபொழுது, அவர்களுக்கு விரோதமான
சாட்சிக்காக [11]உங்கள் கால்களின் தூளை உத
றிப்போடுங்கள் என்று சொல்லி அனுப்பினார்.—
[12]அந்தப்படி அவர்கள் புறப்பட்டுக் கிராமங்கள் ௬
தோறும் போய்த்திரிந்து சுவிசேஷத்தைப் பிர
சங்கித்து, (பிணியாளிகளை) குணமாக்கினார்கள்.

[13]அக்காலத்திலே காற்பங்கு தேசாதிபதியா ௭
கிய ஏரோதே அவராலே செய்யப்பட்ட யாவை
யும் கேள்விப்பட்டு, சிலர் யோவான் மரித்தோ
ரிலிருந்து எழுந்தான் என்றும், — சிலர் எலியா ௮
தோன்றினார் என்றும், சிலர் பழைய தீர்க்கதரிசி
களில் ஒருவன் உயிர் அடைந்து எழுந்தான் என்
றும் சொன்னபடியினாலே கலக்கம் அடைந்து,—
யோவானை நான் சிரச்சேதம்பண்ணினேன்; இப் ௯
படிப்பட்டவைகளைச் செய்ய நான் கேள்விப்
படுகிற இவன் யாவன் என்று ஏரோதே சொல்லி
அவரைப் [14]பார்க்க விரும்பினான்.

[15]அப்போஸ்தலர்கள் திரும்பிவந்து, தாங்கள் ௰
செய்த யாவையும் அவருக்கு விவரித்துச் சொன்
னார்கள்; [16]அப்பொழுது அவர் அவர்களைக் கூட்
டிக்கொண்டு தனித்திருக்கும்படிக்குப் பெத்சா
யிதா என்னும் பட்டணத்தைச்சேர்ந்த வனாந்
தரத்திற்குப் போனார்.—சனங்கள் அதை அறிந்து, ௰௧
அவருக்குப்பின் போனார்கள்; அவர்களை அவர்
அங்கீகரித்துக்கொண்டு, பராபரனுடைய இராச்
சியத்தைக்குறித்து அவர்களுடனே பேசி, சொ
ஸ்தம் அடையவேண்டும் என்றிருந்தவர்களைச்
சொஸ்தமாக்கினார்.

[17]சாயந்தரத்திலே பன்னிருவரும் சேர்ந்து ௰௨
அவரை நோக்கி, இங்கே வனாந்தரமான இடத்
திலே இருக்கிறோம்; ஆகையால் சனங்கள் சுற்
றியிருக்கிற பட்டணங்களுக்கும் ஊர்களுக்கும்

1 மாற். ௫. ௩௰. லூக். ௬. ௰௯.
2 மாற். ௫. ௩௫.—3 யோவா. ௰௧. ௰௧, ௰௩.—4 லூக். ௭. ௰௪. யோவா. ௰௧. ௪௩.
5 மத். ௮. ௪: ௯. ௩௰. மாற். ௫. ௪௩.
6 மத். ௰. ௧. மாற். ௩. ௰௩: ௬. ௭.
7 மத். ௰. ௭, ௮. மாற். ௬. ௰௨. லூக். ௰. ௧, ௯.—8 மத். ௰. ௯. மாற். ௬. ௮. லூக். ௰. ௪: ௨௨. ௩௫.
9 மத். ௰. ௰௧. மாற். ௬. ௰.
10 மத். ௰. ௰௪.—11 அப். ௰௩. ௫௧.
12 மாற். ௬. ௰௨.—13 மத். ௰௪. ௧. மாற். ௬. ௰௪.—14 லூக். ௨௩. ௮.
15 மாற். ௬. ௩௰.—16 மத். ௰௪. ௰௩.
17 மத். ௰௪. ௰௫. மாற். ௬. ௩௫. யோவா. ௬. ௧, ௫.

போய் விடாய்தீர்ந்து போசனம் சம்பாதித்துக்
கொள்ளும்படிக்கு அவர்களை அனுப்பிவிட
௰௩ வேண்டும் என்றார்கள்.—அதற்கு அவர், நீங்க
ளே அவர்களுக்குச் சாப்பாடு கொடுங்கள் என்
றார்; ஏறக்குறைய ஐயாயிரம் புருஷர் இருந்தப
௰௪ டியினாலே,—அவர்கள் சொன்னது: ஐந்து அப்ப
மும் இரண்டு மீனும்மாத்திரம் எங்களிடத்தில்
உண்டு; ஆகையால் நாங்கள் போய், இந்தச் சனங்
கள் எல்லாருக்காகவும் போசனத்திற்கு ஏற்ற
வைகளை வாங்கிக்கொள்ளாவிட்டால், (திருத்தி
௰௫ உண்டாகமாட்டாதே) என்றார்கள்.—அவர் தம்
முடைய சீஷருடனே சொன்னது: இவர்கள்
ஐம்பது ஐம்பதாகப் பந்தியில் உளுக்காரும்படி
செய்யுங்கள் என்றார்; அவர்கள் அப்படியே
செய்தார்கள்; எல்லாரும் உளுக்காந்தார்கள்.—
௰௬ அப்பொழுது அவர் அவ்வைந்து அப்பங்களையும்
இரண்டு மீன்களையும் எடுத்து, வானத்தை அண்
ணாந்து பார்த்து, அவைகளை ஆசீர்வதித்துப் பிட்
டு, சனங்களின்முன் வைக்கும்படிக்குச் சீஷ
௰௭ ருக்குக் கொடுத்தார். — எல்லாரும் புசித்துத்
திருத்தி அடைந்தார்கள்; அல்லாமலும் பன்னி
ரண்டுகூடை நிறையச் சேஷமானவைகளும்
எடுத்துக்கொள்ளப்பட்டன.

௰௮ [1]பின்பு ஒருநாள் அவர் தம்முடைய சீஷர்
கூட இருக்கத் தனித்துச் செபம்பண்ணினபொ
ழுது, அவர் அவர்களை நோக்கி என்னைக்குறித்
துச் சனங்கள் என்ன சொல்லுகிறார்கள் என்று
௰௯ கேட்டார். — அவர்கள் மாறுத்தரமாகச் சொன்
னது: [2]சிலர் உம்மை யோவான்ஸ்நானன் என்
றும், சிலர் எலியா என்றும், சிலர் பழைய தீர்க்க
தரிசிகளில் ஒருவன் உயிர் அடைந்து எழுந்தான்
௨௰ என்றும் சொல்லுகிறார்கள் என்றார்கள்.—அவர்
சொன்னது: நீங்கள் என்னைக்குறித்து என்ன
சொல்லுகிறீர்கள் என்றார்; அதற்குப் பேதுரு,
௨௧ [3]நீர் பராபரனுடைய கிறிஸ்து என்றான்.—[4]அப்
பொழுது அவர்கள் அதை ஒருவருக்கும் சொல்
லாதபடிக்கு, அவர்களுக்குக் கெட்டியாய்க் கட்
௨௨ டளையிட்டார்.—அன்றியும் அவர் சொன்னது:
[5]மனிதனுடைய குமாரன் அநேகம் பாடுபடவும்,
மூப்பராலும் பிரதான ஆசாரியராலும் வேதபா
ரகராலும் தள்ளப்படவும், கொல்லப்படவும்,
பின்பு மூன்றாம் நாளிலே உயிரோடெழுந்திருக்
கவும் வேண்டும் என்றார்.

௨௩ [6]அல்லாமலும் அவர் எல்லாருடனேயும்
சொன்னது: ஒருவன் எனக்குப் பின்செல்ல
மனதாயிருந்தால், அவன் தன்னைத்தான் வெ
றுத்து, தன் சிலுவைமரத்தைத் தினந்தோறும்
எடுத்துக்கொண்டு, என்னைப் பின்பற்றக்கட
௨௪ வன்.—என்னத்தினாலெனில், தன் சீவனை இரட்
சித்துக்கொள்ள விரும்புகிறவன், அதை இழந்து
போவான்; என்நிமித்தம் தன் சீவனை இழந்து
போகிறவன் அதை இரட்சித்துக்கொள்வான்.—
[7] அன்றியும் மனிதனானவன் உலகம் யாவையும் ௨௫
சம்பாதித்துக்கொண்டு தன்னைத்தான் அழித்தால்,
அல்லது சேதப்படுத்தினால், அவனுக்கு என்ன
லாபம் உண்டாயிருக்கும்?—[8]அன்றியும் என்னைக் ௨௬
குறித்தும் என் வசனங்களைக்குறித்தும் வெட்கப்
படுகிறவன் எவனோ அவனைக்குறித்து மனிதனு
டைய குமாரன், தம்முடைய மகிமையோடும்
பிதாவானவருடைய மகிமையோடும் பரிசுத்த
தூதருடைய மகிமையோடும் வரும்பொழுது,
வெட்கம் அடைவான். — [9]இங்கே நிற்கிறவர்க ௨௭
ளில் சிலர் பராபரனுடைய ஆளுகையைக் கா
ணும் அளவும், மரணத்தை அடைவதில்லை
யென்று மெய்யாய் உங்களுக்குச் சொல்லுகி
றேன் என்றார்.

[10]இந்த வசனங்களை* அவர் சொல்லி ஏறக்கு ௨௮
றைய எட்டு நாளானபொழுது, அவர் பேதுரு
வையும் யோவானையும் யாக்கோபையும் கூட்
டிக்கொண்டு, செபம்பண்ணும்படிக்கு ஒரு மலை
யில் ஏறினார். — அவர் செபம்பண்ணுகையில், ௨௯
அவருடைய முகரூபம் மாறிற்று; அல்லாமலும்
அவருடைய வஸ்திரம் வெண்மையாகிப் பிரகா
சம் கொடுத்தது. — அன்றியும் மோசே எலியா ௩௰
இவ்விரண்டுபேரும் மகிமையோடே காணப்
பட்டு அவருடனே பேசி, — அவர் எருசலேமி ௩௧
லே நிறைவேற்றும் மரணத்தைக்குறித்துச் சம்பா
ஷணை பண்ணிக்கொண்டார்கள்.—பேதுருவும் ௩௨
அவனோடிருந்தவர்களும் கனமான நித்திரை அ
டைந்து [11]விழித்துக்கொண்டபொழுது, அவரு
டைய மகிமையையும் அவரிடத்தில் நின்ற அவ்
விரண்டுபேரையும் கண்டார்கள். — அன்றியும் ௩௩
அவ்விருவரும் அவரைவிட்டுப் பிரிந்துபோகை
யில், பேதுரு இயேசுவை நோக்கி, ஐயரே, நாம்
இங்கே இருக்கிறது நல்லது, நாங்கள் உமக்கும்
மோசேயுக்கும் எலியாவுக்கும் ஒவ்வொரு குடிலாக
மூன்று குடில்களை உண்டாக்குவோம் என்று
தகுதியான யோசனைபண்ணாமல் சொன்னான்.—
அப்படி அவன் சொல்லுகிறபொழுது, ஒரு மே ௩௪
கம் வந்து அவர்கள்மேலே நிழலிட்டது; அவ்வி
ருவரும் மேகத்திற்குள் பிரவேசிக்கையில் சீஷர்
பயந்தார்கள். — அப்பொழுது இவர் (எனக்கு) ௩௫
[12]அன்பாயிருக்கிற என்னுடைய குமாரன், [13]இவ
ருக்குச் செவிகொடுங்கள் என்று மேகத்திலி
ருந்து சத்தம் உண்டாயிற்று. — அந்தச் சத்தம் ௩௬
உண்டாகுகையில் இயேசுவானவர் மாத்திரம்
இருந்தார்; [14]பின்பு அவர்கள் கண்டவைகளில்
ஒன்றையும் அக்காலத்திலே ஒருவருக்கும் அறி
வியாமல் மவுனமாய் இருந்தார்கள்.

1 மத். ௰௪. ௰௫. மாற். ௬. ௩௭.
2 மத். ௰௪. ௨: ௭. அ. ௰௪.
3 மத். ௰௬. ௰௬. யோவா. ௬. ௬௯.
4 மத். ௰௬. ௨௰.
5 மத். ௰௬. ௨௧: ௰௭. ௨௨.
6 மத். ௰. ௩௮: ௰௬. ௨௪. மாற். ௮. ௩௪. லூக். ௰௪. ௨௭.
7 மத். ௰௬. ௨௬. மாற். ௮. ௩௬.
8 மத். ௰. ௩௩. மாற். ௮. ௩௮. ௨ தீமோ. ௨. ௰௨.—9 மத். ௰௬. ௨௮.—10 மத். ௰௭. ௧. மாற். ௯. ௨.
11 தானி. ௮. ௰௮: ௰. ௯.
12 மத். ௩. ௰௭.—13 அப். ௩. ௨௨.
14 மத். ௰௭. ௯.

* அல்லது காரியங்களை.

௩௭ [1]மறுநாளிலே அவர்கள் மலையிலிருந்து இறங்
கினபொழுது, அநேக சனங்கள் அவருக்கு எதிர்
௩௮ கொண்டு வந்தார்கள்.—அல்லாமலும் அவர்களில்
ஒருவன் கூப்பிட்டுச் சொன்னது: போதகரே,
நீர் என் மகனை நோக்கிப் பார்க்கும்படிக்கு உம்
மை வேண்டிக்கொள்ளுகிறேன்; அவன் எனக்கு
௩௯ ஒரே பிள்ளையானவன்.—ஒரு ஆவி அவனைப்
பிடிக்கிறது, உடனே அலறுகிறான்; அவனை
நுரைதள்ள அலக்கழித்து அவனைக் கசக்கின
பின்பும், அவனைவிட்டு நீங்குகிறது அரிதாய்
௪௰ இருக்கின்றது.—அதைத்துரத்தும்படிக்கு உம்மு
டைய சீஷரை வேண்டிக்கொண்டேன்; அவர்
களுக்கு அப்படிச் செய்யத் திராணியில்லை என்
௪௧ றான்.—இயேசுவானவர் மாறுத்தரமாகச் சொன்
னது: விசுவாசமில்லாத மாறுபாடான சந்ததி
யே, எதுவரைக்கும் உங்களிடத்திலிருந்து உங்க
ளில் பொறுமையாயிருப்பேன் என்றுசொல்லிப்
பின்பு உன் மகனை இங்கே கொண்டுவா என்
௪௨ றார்.—அவன் வருகிறபொழுது, பசாசு அவனை
நொறுக்கி அலக்கழித்தது; இயேசுவானவர் அந்த
அசுத்த ஆவியை அதட்டிப் பிள்ளையைக் குணமா
க்கி, அவனைத் தகப்பனுக்கு ஒப்புக்கொடுத்தார்.

௪௩ (அதைக்கண்ட) எல்லாரும் பராபரனுடைய
மகத்துவத்தைக்குறித்துப் பிரமித்தார்கள்; இயே
சுவானவர் செய்த எல்லாவற்றையுங்குறித்து யா
வரும் ஆச்சரியப்படுகிறபொழுது, அவர் தம்மு
௪௪ டைய சீஷரை நோக்கிச் சொன்னது:—[2] மனித
னுடைய குமாரன் மனிதர் கைகளில் ஒப்புக்கொ
டுக்கப்படுவான்; இந்த வசனங்களை நீங்கள் நன்
றாய்க் கேட்டுக் காத்துக்கொள்ளக்கடவீர்கள் என்
௪௫ றார் —[3]அவர்கள் அந்த வசனங்களின் கருத்
தை அறியாமல் இருந்தார்கள்; அது அவர்களுக்
குத் தோன்றாதபடிக்கு மறைபொருளாயிருந்தது;
அல்லாமலும் அவர்கள் அந்த வசனங்களைக்கு
றித்து அவரிடத்தில் விசாரித்துக்கொள்ளுகிறதற்
குப் பயப்பட்டார்கள்.

௪௬ [4]ஒருநாள் அவர்கள் தங்களில் எவன் பெரி
யவனாயிருப்பான் என்று யோசனை பண்ணிக்
௪௭ கொண்டார்கள்.—அவர்களுடைய இருதயத்தின்
யோசனையை இயேசுவானவர் அறிந்து ஒருபிள்
ளையை எடுத்து, அதைத் தமக்கு அருகே நிறுத்தி,-
௪௮ [5] இந்தச் சிறுபிள்ளையை என் நாமத்தின் நிமித்
தம் ஏற்றுக்கொள்ளுகிறவன் என்னை ஏற்றுக்
கொள்ளுகிறான்; என்னை ஏற்றுக்கொள்ளுகிற
வன் என்னை அனுப்பினவரை ஏற்றுக்கொள்ளு
கிறான்; [6]ஆதலால் உங்கள் எல்லாரிலும் சிறிய
வனாயிருக்கிறவனே பெரியவனாய் இருப்பான்
என்றார்.

௪௯ [7]அப்பொழுது யோவான் (அவரை நோக்கி)
ஐயரே, உம்முடைய நாமத்தினாலே பசாசுகளைத்
துரத்துகிற ஒருவனை நாங்கள் கண்டு, அவன்
எங்களுடனே கூட (உமக்குப்) பின்செல்லாத
படியினாலே அவனுக்குத் தடைபண்ணினோம்
என்றான்.—அதற்கு இயேசுவானவர் சொன்னது: ௫௰
நமக்கு [8]விரோதமாயிராதவன் நம்முடைய பக்
கில் இருக்கிறான்; ஆகையால் நீங்கள் அவனுக்
குத் தடைபண்ணவேண்டாம் என்றார்.

[9]அவர் எடுக்கப்படும்படிக்குக் காலம் சமீபமா ௫௧
னபொழுது, அவர் எருசலேமுக்குப் போகக்
கண்ணோட்டமாகித் தமக்குமுன்பாகத் தூதர்
களை அனுப்பினார்.—அவர்கள் போய் அவருக் ௫௨
காக இடம் யத்தனம்பண்ணும்படிக்கு, சமாரிய
ருடைய ஒரு கிராமத்திலே பிரவேசித்தார்கள்.—
[10]அவர் எருசலேம் நகரத்திற்குப் போகிறவரான ௫௩
படியினாலே, அவ்வூரார் அவரை ஏற்றுக்கொள்
ளவில்லை.—அவருடைய சீஷராகிய யாக்கோ ௫௪
பும் யோவானும் அதைக் கண்டு, ஆண்டவரே,
[11]எலியாவானவர் செய்ததுபோல, நாங்கள்
இவர்களை அழிக்கும்படிக்கு வானத்திலிருந்து
அக்கினி வரும்படி சொல்லச் சித்தமாயிருக்கி
றீரா என்றார்கள்.—அப்பொழுது அவர் திரும்பி, ௫௫
அவர்களை அதட்டி, நீங்கள் இன்ன ஆவியை
உடையவர்கள் என்று அறியீர்கள்.—[12]மனித ௫௬
னுடைய குமாரன் மனிதருடைய சீவனை அழிக்
கும்படிக்கல்ல, இரட்சிக்கும்படிக்கு வந்தானே
என்றார்.

[13]பின்பு வேறொரு கிராமத்திற்குப் போனார் ௫௭
கள்; அவர்கள் வழியிலே போகையில், ஒருவன்
அவரை நோக்கி, ஆண்டவரே, நீர் போகும் இ
டம் எங்கேயோ அங்கே உமக்குப் பின்செல்லு
வேன் என்றான்.—அவனுடனே இயேசுவான ௫௮
வர் சொன்னது: நரிகளுக்குக் குழிகளும், ஆகா
யத்தின் பறவைகளுக்குக் கூடுகளும் உண்டு;
மனிதனுடைய குமாரனோ, தன் தலையைச்சாய்க்
கிறதற்கு இடம் இல்லாதவனாயிருக்கிறான் என்
றார்.—[14]வேறொருவனை அவர் நோக்கி, எனக்குப் ௫௯
பின்சென்று வா என்றார்; (அதற்கு) அவன்
சொன்னது: ஆண்டவரே, முன்பு நான் போய்,
என் தகப்பனை அடக்கம்பண்ணும்படிக்கு உத்
தரவு கொடுக்கவேண்டும் என்றான்.—அதற்கு ௬௰
இயேசுவானவர் சொன்னது: மரித்தோர் தங்களி
டத்தில் மரித்தவர்களை அடக்கம்பண்ணட்டும்,
நீ புறப்பட்டுப் பராபரனுடைய ஆளுகையைப்
பிரசித்தம்பண் என்றார்.—பின்பு வேறொருவன் ௬௧
வந்து, [15]உமக்குப் பின்செல்லுவேன், அதற்கு
முன்பு நான் போய் என் வீட்டில் இருக்கிறவர்
களிடத்தில் அனுப்பிக்கொண்டு வரும்படி உத்
தரவு கொடும் என்றான்.—அவனுடனே இயேசு ௬௨
வானவர் சொன்னது: கலப்பையைப் பிடித்துக்
கொண்டு பின்னாகப் பார்க்கிற எவனும், பராபர
னுடைய இராச்சியத்திற்குத் தகுதியானவன்
அல்ல என்றார்.

1 மத். ௧௭. ௧௪. மாற். ௯. ௧௪, ௧௭. 5 மத். ௰. ௪௰; ௧௮. ௫. மாற். ௯. ௩௭.
2 மத். ௧௭. ௨௨.—3 மாற். ௯. ௩௨. யோவா. ௰௨. ௪௪: ௰௩. ௨௰.
லூக். ௨. ௫௰: ௧௮. ௩௪. 6 மத். ௨௩. ௧௧. ௧௨.—7 மாற். ௯. ௩௮.
4 மத். ௧௮. ௧. மாற். ௯. ௩௪. ௪ மோ. ௧௧. ௨௮.—8 மத். ௧௨. ௩௰.
லூக். ௧௧. ௨௩.
9 மாற். ௧௬. ௧௯. அப். ௧. ௨.
10 யோவா. ௪. ௪, ௯.
11 ௨ இரா. ௧. ௰, ௧௨.
12 யோவா. ௩. ௧௭: ௧௨. ௪௭.
13 மத். ௮. ௧௯.—14 மத். ௮. ௨௧.
15 ௧ இரா. ௧௯. ௨௰.

## ௰. அதிகாரம்.

௧. கிறிஸ்து எழுபது சீஷர்களை அற்புதங்கள் செய்யவும், பிரசங்கிக்கவும் அனுப்பினது. ௰௭. அவர்களைத் தாழ்மையாயிருக்கவேண்டியது என்றும், இன்னதின்னதில் சந்தோஷப்படவேண்டியது என்றும், புத்தி சொன்னது. ௨௧. தம்முடைய பிதாவின் கிருபைக்காக அவரை ஸ்தோத்திரம் பண்ணி, ௨௩. தம்முடைய சபையின் மேன்மையைப் பாராட்டினது. ௨௫. நித்தியசீவனை அடையும் வழியையும், உன் இரக்கத்தை விரும்புகிறவன் உனக்கடுத்தவன் என்கிறதையும் படிப்பித்து, ௩௮. மார்த்தாளைக் கடிந்துகொண்டு, அவளுடைய சகோதரி மரியாளைப் புகழ்ந்தது.

௧ பின்பு கர்த்தர் வேறு எழுபதுபேரை நியமித்து,
தாம் போகச் சித்தமான பட்டணம் ஊர்கள்
யாவுக்கும் அவர்களை [1]இருவர் இருவராகத் தமக்
குமுன்னே அனுப்புகையில் அவர்களுடனே
சொன்னதாவது: [2]அறுப்பு மிகுதியாகவே இருக்
௨ கின்றது.—வேலையாள்கள் சிலர்மாத்திரம் இருக்
கிறார்கள்; ஆகையால் அறுப்புக்கு எசமான்
அறுக்கிறதற்கு (அதிக) வேலையாள்களை அனுப்
பும்படிக்கு [3]அவரை வேண்டிக்கொள்ளுங்கள்.—
௩ நீங்கள் புறப்படுங்கள், [4]ஆடுகளைக் கோணாய்
களுக்குள்ளே அனுப்புகிறதுபோல உங்களை
௪ அனுப்புகிறேன். — [5]பணப்பையையாவது, சா
மான்பையையாவது, பாதஇரட்சைகளையாவது
கூட எடுத்துக்கொண்டு போகாமலும் [6]வழியில்
ஒருவரையும் வினவுதல் செய்யாமலும் இருங்
௫ கள்.—[7]ஒரு வீட்டில் பிரவேசிக்கிறபொழுது,
இந்த வீட்டாருக்குச் சமாதான சவுக்கியம் உண்
டாவதாக என்று முதலாவது சொல்லுங்கள்.—
௬ அவ்விடத்திலே சமாதான சவுக்கியத்திற்குப்
பாத்திரன் ஒருவன் இருந்தால், நீங்கள் வாழ்த்திய
சமாதான சவுக்கியம் அவனிடத்திலே தங்கும்;
அப்படிப்பட்டவன் இல்லாதிருந்தால், அது உங்
௭ களிடமாய்த் திரும்பும்.—[8]அந்த வீட்டிலே நீங்
கள் இருந்து [9]வேலையாள் தன் கூலிக்குப் பாத்
திரனானபடியினாலே, [10]அவர்களுக்கு உண்டா
யிருக்கிறவைகளைப் போசனபானம்பண்ணுங்
௮ கள்; வீடுகள்தோறும் போகாதிருங்கள். — ஒரு
பட்டணத்தில் நீங்கள் சேர்ந்தபொழுது, அங்கே
அவர்கள் உங்களைச் சேர்த்துக்கொண்டால், உங்
௯ கள் முன் வைக்கிறவைகளைப் புசித்து,—[11]அவ்
விடத்திலுள்ள பிணியாளிகளைக் குணமாக்கி,
[12]பராபரனுடைய இராச்சியம் உங்களுக்குச் சமீ
பமாய் வந்ததென்று அவர்களுக்கு அறிவியுங்
௰ கள்.—ஒரு பட்டணத்திலே நீங்கள் பிரவேசித்த
பொழுது, அங்கே அவர்கள் உங்களைச் சேர்த்துக்
கொள்ளாதிருந்தால், அதின் வீதிகளில் நீங்கள்
௰௧ புறப்பட்டு,—[13]எங்களில் ஒட்டின உங்கள் பட்
டணத்தின் புழுதியையும் உங்களுக்கு எதிராகத்
துடைத்துப்போடுகிறோம்; ஆகிலும் பராபரனு
டைய ஆளுகை உங்களுக்குச் சமீபமாய் வந்த
தென்கிறதை அறியக்கடவீர்கள் என்று சொல்
லுங்கள்.—[14]அந்நாளிலே சோதோம் பட்டணத் ௰௨
தாரிலும் அப்படிப்பட்ட பட்டணத்தார் அதிக
தண்டிப்பை அடைவார்கள் என்று உங்களுக்
குச் சொல்லுகிறேன்.-[15]ஐயோ! கோராசின் பட் ௰௩
டணத்தாரே, ஐயோ! பெத்சாயிதாபட்டணத்தா
ரே, உங்களுக்கு வேதனை வரும்; [16]உங்களுக்
குள்ளே நடந்த பலத்தசெய்கைகள் தீருசீதோன்
என்னும் பட்டணங்களில் நடந்தனவானால்,
அவர்கள் சீக்கிரமாய்த் (துக்கத்தினாலே) இரட்
டை உடுத்திச் சாம்பலிலும் உளுக்காந்து மனம்
திருப்பி இருப்பார்கள்.—ஆகையால் நியாயத் ௰௪
தீர்ப்புநாளிலே தீருசீதோன் பட்டணத்தாருக்கு
வரும் தண்டிப்பு எளிதாய் இருக்கும்; நீங்கள்
அதிக தண்டிப்பை அடைவீர்கள்.—[17]வானபரி ௰௫
யந்தம் உயர்ந்த [18]கப்பர்நாகூம் பட்டணத்தாரே,
[19]நீங்களும் பாதாளபரியந்தம் தாழ்த்தப்படுவீர்
கள் என்று சொல்லி,—பின்பு மறுபடியும் சீஷ ௰௬
ரை நோக்கி, [20]உங்களுக்குச் செவிகொடுக்கி
றவன் எனக்குச் செவிகொடுக்கிறான், உங்களைத்
தள்ளுகிறவன் [21]என்னைத் தள்ளுகிறான்; [22]என்
னைத் தள்ளுகிறவன் என்னை அனுப்பினவரைத்
தள்ளுகிறான் என்று சொல்லி அனுப்பினார்.

பின்பு [23]அந்த எழுபதுபேரும் சந்தோஷத்து ௰௭
டனே திரும்பி வந்து, ஆண்டவரே, பசாசுக
ளும் உம்முடைய நாமத்தினாலே எங்களுக்குக்
கீழ்ப்பட்டிருக்கின்றன என்றார்கள்.—அப்பொ ௰௮
ழுது அவர் அவர்களை நோக்கி, [24]சாத்தான் வா
னத்திலிருந்து மின்னலைப்போல விழுகிறதைக்
கண்டேன்.-இதோ, [25]பாம்புகள்மேலும், தேள் ௰௯
கள்மேலும், சத்துருவின் வல்லமை எல்லாவற்
றின்மேலும் மிதிக்கத்தக்கதாக அதிகாரத்தை
உங்களுக்குக் கொடுக்கிறேன், ஒன்றும் உங்க
ளைச் சேதப்படுத்தமாட்டாது. — ஆகிலும் ஆவி ௨௰
கள் உங்களுக்குக் கீழ்ப்பட்டிருக்கிறதினாலே
நீங்கள் சந்தோஷப்படாமல் [26]உங்கள் நாமங்கள்
பரமண்டலங்களில் எழுதியிருக்கிறதினாலே சந்
தோஷப்படுங்கள் என்றார்.

[27]அந்நேரத்திலே இயேசுவானவர் ஆவியிலே ௨௧
களிகூர்ந்து சொன்னதாவது: பிதாவே, வானத்
தையும் பூமியையும் ஆளுகிறவரே, நீர் இவை
களை (உலக) ஞானிகளுக்கும் கல்விமான்களுக்
கும் மறைத்துப் பாலகருக்கு வெளிப்படுத்தின
படியினாலே உம்மைத் துதிசெய்கிறேன்; ஆ
பிதாவே, அப்படியே உமக்குப் பிரியமாயிருந்த
தென்று சொல்லி,*—[28]பின்பு சகலமும் என் ௨௨
பிதாவினால் எனக்கு ஒப்புக்கொடுக்கப்பட்டிருக்

---

1 மத். ௰. ௧. மாற். ௬. ௭.—2 மத். ௯. ௩௭, ௩௮. யோவா. ௪. ௩௫.
3 ௨ தெச. ௩. ௧.—4 மத். ௰. ௰௬.
5 மத். ௰. ௯, ௰. மாற். ௬. ௮. லூக். ௯. ௩.—6 ௨ இரா. ௪. ௨௯.
7 மத். ௰. ௰௨.—8 மத். ௰. ௰௧.
9 மத். ௰. ௰. ௧ கொரி. ௯. ௪. ழு. ௧ தீமோ. ௫. ௰௮.
10 ௧ கொரி. ௰. ௨௭.—11 லூக். ௯. ௨.
12 மத். ௩. ௨: ௪. ௰௭: ௰. ௭. ௰௧. வச.
13 மத். ௰. ௰௪. லூக். ௯. ௫. அப். ௰௩. ௫௧: ௰௮. ௬.—14 மத். ௰. ௰௫ மாற். ௬. ௰௧.—15 மத். ௰௧. ௨௧.
16 எசே. ௩. ௬.—17 ௧ மோ. ௰௯. ௪. ௫ மோ. ௩. ௨௮. எசா. ௰௪. ௰௩. எரே. ௫௧. ௫௩.
18 மத். ௰௧. ௨௩.—19 எசே. ௨௬. ௨௰: ௩௨. ௰௮.
20 மத். ௰. ௪௰, மாற். ௯. ௩௭. யோவா. ௰௩. ௨௰.—21 ௧ தெச. ௪. ௮.
22 யோவா. ௫. ௨௩.—23 ௧. வச.
24 யோவா. ௰௨. ௩௧: ௰௬. ௰௧. வெளி. ௯. ௧: ௰௨. ௮, ௯.—25 மாற். ௰௬. ௰௮. அப். ௨௮. ௫.—26 ௨ மோ. ௩௨. ௩௨. சங். ௬௯. ௨௮. எசா. ௪. ௩. தானி. ௰௨. ௧. பிலி. ௪. ௩. எபி. ௰௨. ௨௩. வெளி. ௰௩. ௮: ௨௰. ௰௨: ௨௧. ௨௭.—27 மத். ௰௧. ௨௫.
28 மத். ௨௮. ௰௮. யோவா. ௩. ௩௫: ௫. ௨௭: ௰௭. ௨.

*தம்முடைய சீஷர்களை நோக்கிச் சொன்னதாவது: என்றவார்த்தைகள் பூர்வத்திலிருந்த சில பிரதிகளில் இந்த வசனத்தோடு சேர்க்கப்பட்டிருக்கின்றன.

கின்றன; [1]பிதா தவிர ஒருவனும் குமாரனை அ
றியான்; குமாரன் தவிர ஒருவனும் பிதாவை அ
றியான்; குமாரன் எவனுக்கு அவரை வெளிப்
படுத்தச் சித்தமாயிருக்கிறாரோ, அவனும் அவரை
அறிவான் என்று சொல்லி,

௨௩ பின்பு சீஷரைமாத்திரம் நோக்கி, [2]நீங்கள் இ
வைகளைப் பார்க்கிறவர்களானபடியினாலே, நீங்
௨௪ கள் பாக்கியமுள்ளவர்கள்.—[3]அநேக தீர்க்கதரி
சிகளும் இராசாக்களும் நீங்கள் பார்க்கிறவை
களைக் காணவும் நீங்கள் கேட்கிறவைகளைக்
கேட்கவும் விரும்பியும், காணாமலும் கேளாம
லும் போனார்கள் என்று உங்களுக்குச் சொல்
லுகிறேன் என்றார்.

௨௫ அப்பொழுது நியாயசாஸ்திரி ஒருவன் எழுந்
திருந்து அவரைச் சோதிக்கும்படிக்கு, போத
கரே, [4]நித்திய சீவனைச் சுதந்தரித்துக்கொள்ளும்
படிக்கு நான் என்ன செய்யவேண்டும் என்று
௨௬ கேட்டான்.—அதற்கு அவர், வேதப்பிரமாணத்
திலே என்ன எழுதியிருக்கின்றது? என்னத்தை
௨௭ அறிகிறீர் என்றார்.—அவன் பிரத்தியுத்தாரமாகச்
சொன்னது: [5]உன் முழு இருதயத்தினாலும், உன்
முழு ஆத்துமாவினாலும், உன் முழுப் பலத்தினா
லும், [6]உன் முழுச் சிந்தையினாலும் உன் தேவ
னாகிய பராபரனிடத்தில் அன்புகூரவும் [7]நீ உன்
னிடத்தில் அன்புகூருகிறதுபோல, பிறனிடத்
தில் அன்புகூரவும் வேண்டுமென்று எழுதியிருக்
௨௮ கின்றது என்றான். — அவர் சொன்னது: நீர்
சரியாய்ச் சொன்னீர்; நீர் அப்படிச் செய்தால்
௨௯ சீவனை அடைவீர் என்றார்.—அப்பொழுது [8]அ
வன் தன்னை நீதிமான் என்று காண்பிக்க மன
தாய் இயேசுவை. நோக்கி, எனக்கு அடுத்த
பிறன் யாவன் என்றான்.

௩௰ அதற்கு இயேசுவானவர் சொன்னது: ஒரு
மனிதன் எருசலேம் நகரத்திலிருந்து எரிகோ
பட்டணத்துக்குப் போகையில் கள்ளர் கையில்
அகப்பட்டான்; அவர்கள் அவனுடைய வஸ்தி
ரங்களைக் கழற்றி அவனைக் காயப்படுத்தி அரை
௩௧ உயிராக விட்டுப்போனார்கள்.-[9]அப்பொழுது தற்
செயலாய் ஒரு ஆசாரியன் அந்த வழியே செ
ன்று அவனைக் கண்டு பக்கமாய் விலகிப்போ
௩௨ னான்.—அப்படிப்போல ஒரு லேவியனும் அவ்
விடத்தில் சேர்ந்து அவனைக் கண்டு பக்கமாய்
௩௩ விலகிப்போனான்.—[10]பின்பு சமாரியன் ஒருவன்
பிரயாணமாய்ப் போய் அவனிடத்தில் சேர்ந்து
௩௪ அவனைக் கண்டு, — உருக்கமாயிரங்கி அணுகி
அவனுடைய காயங்களில் எண்ணெயும் திராட்
சஇரசமும் வார்த்துக் காயங்களைக் கட்டி, அவ
னைத் தன் மிருகத்தின்மேல் ஏற்றி ஒரு மண்டப
த்திற்குக் கொண்டுபோய்ப் பராமரித்துக்கொண்
௩௫ டு,—மறுநாளிலே புறப்படுகிறபொழுது இரண்டு
*வெள்ளிக்காசை எடுத்து மண்டபத்தான் கை
யிலே கொடுத்து, நீ இவனை விசாரித்துக்கொள்;
அதிகமாய் இவனுக்காக எதையாகிலும் செல
வழித்தால் அதை நான் திரும்ப வரும்பொழுது
உனக்குக் கொடுப்பேன் என்றான். — அப்படி ௩௬
யிருக்க, கள்ளர் கையில் அகப்பட்டவனுக்கு
அந்த மூன்றுபேரில் எவன் அடுத்த பிறனாயிருந்
தான்? உமக்கு எப்படித் தோன்றுகின்றது என்
றார். — அவனிடத்தில் இரக்கம் செய்தவனே ௩௭
என்றான்; அப்பொழுது இயேசுவானவர் நீரும்
போய் அந்தப்படியே செய்யும் என்றார்.

பின்பு அவர்கள் பிரயாணமாய்ப் போகையில் ௩௮
அவர் ஒரு கிராமத்தில் பிரவேசித்தார்; அங்கே
[11]மார்த்தாள் என்று பேர்கொண்ட ஒருஸ்திரி அ
வரைத் தன் வீட்டிலே உபசாரம் செய்தாள்.[12]-அ ௩௯
வளுக்குச் [13]சகோதரியான மரியாள் இயேசுவின்
பாதங்கள் அருகே உளுக்காந்துகொண்டிருந்து,
அவருடைய வசனத்திற்குச் செவிகொடுத்தாள்.-
மார்த்தாள் மிகவும் ஊழியம் செய்யக் கவலையுள் ௪௰
ளவளாய் அவரிடத்தில் சேர்ந்து நின்று, ஆண்ட
வரே, நான்மாத்திரம் ஊழியம்செய்யும்படிக்கு
என் சகோதரி என்னை விட்டிருக்கிறது உமக்
குக் கவையில்லையா? அவள் எனக்கு உதவிசெய்
யும்படி சொல்லும் என்றாள்.—இயேசுவானவர் ௪௧
அவளுக்கு மாறுத்தரமாகச் சொன்னது: மார்த்
தாளே, மார்த்தாளே, நீ அநேகம் காரியங்களுக்
காகக் கவலைப்பட்டுக் கலக்கமாயிருக்கிறாய்.—
[14]ஒன்றுமாத்திரம் வேண்டும்; மரியாளே நல்ல ௪௨
பங்கைத் தெரிந்துகொண்டிருக்கிறாள்; அது அவ
ளிடத்திலிருந்து எடுக்கப்படுவதில்லை என்றார்.

## ௰௧. அதிகாரம்.

*௧. பராபரன் நல்ல ஈவுகளைக் கொடுப்பாரென்று ஊக்கமாய்ச் செபம்பண்ணப் படிப்பித்தது, ஊமையான ஒரு பசாசைத் துரத்தி துஷ்டமுள்ள பரிசேயரைக் கண்டித்தது, உ௮. ஆசீர்வதிக்கப்பட்டவர்கள் இன்னாரென்று காண்பித்தது, உ௯. சனங்களுக்குப் பிரசங்கித்தது, பரிசேயர், வேதபாரகர், நியாயசாஸ்திரிகள் என்பவர்களுடைய மாயமான வேஷத்தைக் கண்டித்தது.*

ஒருநாள் அவர் ஒரு இடத்திலிருந்து செபம்பண் ௧
ணி முடித்தபின்பு அவருடைய சீஷரில் ஒரு
வன் அவரை நோக்கி, ஆண்டவரே, யோவான்
தன் சீஷருக்குச் செபம்பண்ண வகையைப்
போதித்ததுபோல, நீரும் எங்களுக்குப் போதிக்
கவேண்டும் என்றான்.—அதற்கு அவர் சொன்ன ௨
து: நீங்கள் செபம்பண்ணும்பொழுது [15]பரமண்
டலங்களில் இருக்கிற எங்கள் பிதாவே; உம்மு
டைய நாமம் பரிசுத்தமாய் வணங்கப்படுவதாக;
உம்முடைய இராசரீகம் வருவதாக; உம்முடை
ய சித்தம் பரமண்டலத்திலே செய்யப்படுகிறது
போலப் பூமியிலேயும் செய்யப்படுவதாக. —
தினந்தோறும் † எங்களுக்கு வேண்டிய ஆகா ௩
ரத்தைத் தாரும்.—எங்களுக்குக் குற்றஞ்செய்த ௪

---

1 யோவா. ௧. ௰௮: ௩. ௩௫, ௩௬. 2 மத். ௰௩. ௰௬.—3 ௧ பே. ௧. ௰. 4 மத். ௰௯. ௰௬: ௨௨. ௩௫. 5 ௫ மோ. ௬. ௫.—6 ௩ மோ. ௰௯. ௰௮.—7 ௩ மோ. ௰௮. ௫. நெகே. ௯. ௨௯. எசே. ௨௰. ௰௧, ௰௩, ௨௧. உரோ. ௰. ௫.—8 லூக். ௰௬. ௰௫. 9 சங். ௩௮. ௰௧.—10 யோவா. ௪. ௯. 11 யோவா. ௰௧. ௧: ௰௨. ௨, ௩ 12 ௧ கொரி. ௭. ௩௨. ௩௫. 13 லூக். ௮. ௩௫. அப். ௨௨. ௩. 14 சங். ௨௭. ௪.—15 மத். ௬. ௯.

* மத். ௨௰. ௨.—† அல்லது அன்றன்று.

யாவருக்கும் நாங்கள் மன்னிக்கிறபடியினாலே,
தேவரீரும் எங்கள் பாவங்களை மன்னித்தருளும்;
நாங்கள் சோதனைக்குள் பிரவேசியாதபடி
செய்து, பொல்லாங்கில்நின்று எங்களை இரட்
சித்துக்கொள்ளும் என்று சொல்லுங்கள் என்றார்.
௫ அன்றியும் அவர் அவர்களுடனே சொன்ன
தாவது: உங்களில் ஒருவன்பாதி இராத்திரியிலே
தனக்குச் சிநேகிதனானவனிடத்திற்குப் போய்,
சிநேகிதனே, என் சிநேகிதன் பிரயாணமாய்*
௬ என்னிடத்திலே வந்திருக்கிறான்.—அவன் போ
சனம்பண்ணச் செய்யும்படிக்கு என்னிடத்தில்
ஒன்றுமில்லை; ஆகையால் நீ எனக்கு மூன்று
அப்பங்களைக் கடன் கொடுக்கவேண்டும் என்று
௭ கேட்கும்பொழுது,—வீட்டினுள் இருக்கிறவன்,
எனக்குத் தொந்தரவு செய்யாதிரு; இப்பொழுது
கதவு பூட்டியாயிற்று, என் பிள்ளைகள் என்னுட
னேகூடப்படுத்துக்கொண்டிருக்கிறார்கள்;நான்
எழுந்து உனக்குக் கொடுக்கக்கூடாதென்று மா
௮ றுத்தரமாகச் சொல்லி,—[1]தனக்கு அவன் சிநேகி
தனாயிருக்கிறதினாலே அவனுக்குக் கொடாதி
ருந்தும், பின்பு தன்னை அவன் அதிக வருத்தம்
செய்கிறபடியினாலே எழுந்திருந்து அவனுக்கு
வேண்டியபடிக்குக் கொடுப்பான் என்று உங்க
௯ ளுக்குச் சொல்லுகிறேன் என்றார்.—[2]அந்தப்படி
நான் உங்களுக்குச் சொல்லுகிறதாவது: வேண்
டிக்கொள்ளுங்கள், அப்பொழுது உங்களுக்குக்
கொடுக்கப்படும்; தேடிக்கொள்ளுங்கள், அப்
பொழுது கண்டடைவீர்கள்; தட்டுங்கள், அப்
௰ பொழுது, உங்களுக்குத் திறக்கப்படும்.—என்
னத்தினாலெனில், வேண்டிக்கொள்ளுகிற எவ
னும் வாங்கிக்கொள்ளுகிறான்; தேடிக்கொள்ளு
கிறவன் கண்டடைகிறான்; தட்டுகிறவனுக்குத்
திறக்கப்படும்.
௰௧ [3]அன்றியும் உங்களில் தகப்பனானவனிடத்
தில் குமாரன் அப்பம் கேட்கிறபொழுது, அவ
னுக்குக் கல்லைக் கொடுப்பானா? மீனைக்கேட்
டால், மீனை அல்ல பாம்பைக் கொடுப்பானா?—
௰௨ முட்டையைக் கேட்டால், அவனுக்குத்தேளைக்
௰௩ கொடுப்பானா? †—ஆதலால் பொல்லாதவர்களா
கிய நீங்கள், உங்கள் பிள்ளைகளுக்கு நல்ல ஈவு
களைச் செய்யும்படி அறிந்திருக்க, பரமபிதாவா
னவர் தம்மை வேண்டிக்கொள்ளுகிறவர்களுக்கு
மிகவும் அதிகமாய்ப் பரிசுத்த ஆவியைக் கொடா
மல் இருப்பாரா என்றார்.
௰௪ [4]ஒருநாள் ஊமையாகச் செய்கிற பசாசைத்
துரத்தினார், பசாசு போன பின்பு ஊமையன்
பேசினான்; அதைக்குறித்துச் சனங்கள் ஆச்சரி
௰௫ யப்பட்டார்கள். — அவர்களில் சிலர் சொன்
னது: [5]இவன் பசாசுகளின் தலைவனாகிய பெ
யேல்செபூலினாலே ‡ பசாசுகளைத் துரத்துகி
௰௬ றான் என்றார்கள்.—வேறு சிலர் அவரைச் சோ
திக்கும்படிக்கு [6]வானத்திலிருந்து ஓர் அடை
யாளம் உண்டாகும்படி அவரிடத்திலே கேட்
டுக்கொண்டார்கள்.—[7]அவர்களுடைய சிந்தனை ௰௭
களை அவர் அறிந்து அவர்களுடனே சொன்ன
தாவது: [8]ஒரு இராச்சியத்தார் தங்களுக்குள்ளே
பிரிவினை உண்டுபண்ணினால், அவர்கள் அழிந்
துபோவார்கள்; ஒரு குடும்பத்தார் தங்களுக்குள்
ளே பிரிவினை உண்டுபண்ணினால் மடிந்துபோ
வார்கள்.—அப்படிக்குச் சாத்தானும் தனக்குத் ௰௮
தானே விரோதமாகப் பிரிவு உண்டுபண்ணி
னால், அவனுடைய இராச்சியம் எப்படி நிற்கும்?
இப்படியிருக்க நீங்கள் என்னைப் பெயேல்செ
பூலினாலே பசாசுகளைத் துரத்துகிறவன் என்கி
றீர்கள்.—நான் பெயேல்செபூலைக்கொண்டு பசா ௰௯
சுகளைத் துரத்துகிறவனானால்,உங்கள் பிள்ளைகள்
யாரைக்கொண்டு அவைகளைத் துரத்துகிறார்கள்?
ஆகையால் அவர்கள் உங்களுக்கு நியாயத்தீர்ப்பு
கொடுக்கிறவர்களாய் இருப்பார்கள். — [9]நான் ௨௰
பராபரனுடைய வல்லமையினாலே பசாசுகளைத்
துரத்துகிறபடியால், பராபரனுடைய இராச்சி
யம் உங்களுக்குள்ளே சடுதியாய் வந்திருக்கின்
றதே.
[10]ஆயுதம்தரித்த பலவான் தன் அரண்மனையின் ௨௧
வாசலைக் காக்கிறபொழுது, அவனுடைய பொ
ருள் பத்திரப்பட்டிருக்கும்.—[11]அவனிலும் அதிக ௨௨
பலவான் வந்து, அவனைச் செயித்தால், அவன்
நம்பியிருந்த சகல ஆயுதவர்க்கத்தையும் பறித்துக்
கொண்டு, அவனுடைய உடைமைகளைப் பங்கி
ட்டுக்கொள்வான்.—என்னுடனே [12]இராதவன் ௨௩
எனக்கு விரோதமாயிருக்கிறான்; என்னைப்போ
லச் சேர்த்துக்கொள்ளாதிருக்கிறவன் சிதற
அடிக்கிறான்.
[13]அசுத்த ஆவி ஒரு மனிதனைவிட்டுப் புறப்ப ௨௪
டுகிறபொழுது, அது தண்ணீரில்லாத இடங்க
ளில் இளைப்பாறும் இடத்தைத் தேடித் திரிந்து அ
டையாமல் இருக்கும்காலத்தில், அது தான் விட்
டுவந்த வீட்டிற்குத் திரும்பவேண்டும் என்று
சொல்லி,—அந்தப்படி வருகிறபொழுது, அது ௨௫
பெருக்கிச் சிங்காரிக்கப்பட்டிருக்கக்கண்டு,—
பின்பு போய், தன்னிலும் அதிக பொல்லாத ௨௬
வேறே எழு ஆவிகளைக் கூட்டிக்கொண்டு வந்து
உட்பிரவேசித்து, அங்கே குடியிருக்கும்; [14]அப்
பொழுது அம்மனிதனுடைய முன்னிலைமையி
லும் பின்னிலைமை அதிக கேடுள்ளதாயிருக்கும்
என்றார்.
இவைகளை அவர் சொல்லுகையில், கூட்டத் ௨௭
திலிருந்த ஒரு ஸ்திரியானவள் அவரை நோக்கி,
[15]உம்மைச் சுமந்த வயிறும் நீர் பாலுண்ட முலை
களும் பாக்கியமுள்ளவைகள் என்று சத்தமாய்க்
கூப்பிட்டாள்.—அவர் சொன்னது: அதனிலும் ௨௮
அதிகமாய்ப் [16]பராபரனுடைய வாக்கைக் கேட்

1 லூக். ௰௮. ௧. முதல்.—2 மத். ௭. ௭: ௨௧. ௨௨. மாற். ௰௧.௨௪. யோவா. ௰௬. ௭. யாக். ௧. ௬. ௧ யோ. ௩. ௨௨.—3 மத். ௭.௯. 4 மத். ௯.௩௨: ௰௨.௨௨.-5 மத். ௯. ௩௪: ௰௨. ௨௪.—6 மத். ௰௨.௩௮: ௰௬. ௧.—7 யோவா. ௨. ௨௫. 8 மத். ௰௨. ௨௫. மாற். ௩. ௨௪. 9 ௨ மோ. ௮. ௰௯.—10 மத். ௰௨. ௨௯. மாற். ௩. ௨௭.—11 ஏசா. ௫௩. ௰௨. கொலோ. ௨. ௰௫.-12 மத். ௰௨. ௩௰.—13 மத். ௰௨. ௪௩. 14 யோவா. ௫. ௰௪. எபி. ௬. ௪: ௰. ௨௬. ௨ பே. ௨. ௨௰.-15 லூக். ௧. ௨௮,௪௮.-16 மத். ௭. ௨௧. லூக். ௮. ௨௧. யாக். ௧. ௨௫.

* அல்லது தன் வழியைவிட்டு.—† அல்லது தேளுக்குப் பதிலாக.—‡ அல்லது பெயேல்செபூலினாலே; அப்படியே ௰௮. ௰௯. வசனங்களிலும்.

டு, அதைக் காத்துக்கொள்ளுகிறவர்களே பாக்கி
யவான்கள் என்றார்.

௨௯ அன்றியும் சனங்கள் திரளாய்க் கூடிவந்திருக்
கிறபொழுது அவர் சொன்னதாவது: [1]இந்தச் சந்
ததியார்கள் பொல்லாதவர்களாயிருக்கிறார்கள்,
ஓர் அடையாளத்தைத் தேடுகிறார்கள், ஆனாலும்
யோனா தீர்க்கதரிசியின் அடையாளமேயன்றி,
வேறடையாளம் இவர்களுக்குக் கொடுக்கப்படு
௩௰ வதில்லை.—[2]ஆதலால் யோனாவானவன் நினிவே
பட்டணத்தாருக்கு அடையாளமாயிருந்ததுபோ
ல, மனிதனுடைய குமாரனும் இந்தச் சந்ததிக்கு
௩௧ இருப்பார்.—[3]தெற்கு இராசஸ்திரி சாலோமோனு
டைய ஞானத்தைக் கேட்கும்படிக்குப் பூமியின்
எல்லைகளிலிருந்து வந்தாள்; சாலோமோனிலும்
இந்தச் சந்ததியிலே தோன்றினவன் அதிகமாயி
ருக்கிறான்; (ஆனாலும் இவர்கள் கேட்கமாட்டார்
கள்;) ஆதலால் அந்த இராசஸ்திரி நியாயத்தீர்ப்பு
நாளிலே இவர்களுடனேகூட எழும்பி, இவர்
௩௨ களை ஆக்கினைக்குள்ளாகத் தீர்ப்பாள்.—[4]நினி
வே பட்டணத்தார் யோனாவின் பிரசங்கத்தைக்
கேட்டு மனம்திரும்பினார்கள்; யோனாவிலும் இந்
தச் சந்ததியிலே தோன்றினவன் அதிகமாய் இ
ருக்கிறான்; ஆகையால் நினிவே பட்டணத்தார்
நியாயத்தீர்ப்புநாளிலே இவர்களுடனே கூட
எழும்பி, இவர்களை ஆக்கினைக்குள்ளாகத் தீர்ப்
பார்கள்.

௩௩ [5]அன்றியும் ஒருவனும் விளக்கைக் கொளுத்தி,
அதை அந்தரங்கத்திலாவது * மரக்காலின் கீழா
வது வைக்கமாட்டான்; உள்ளே வருகிறவர்கள்
வெளிச்சம் காணும்படிக்கு அதை ஒரு தண்டின்
௩௪ மேலே வைப்பான்.—[6]கண்ணானது சரீரத்தின்
விளக்காயிருக்கின்றது; அப்படியிருக்க, உன்
கண் சொஸ்தமுள்ளதாயிருந்தால் உன் சரீரம்
முழுவதும் வெளிச்சம் அடைந்திருக்கும்; அது
கெட்டதானால் உன் சரீரம் இருள் அடைந்திருக்
௩௫ கும்.—ஆகையால் உன்னிலுள்ள வெளிச்சமா
னது இருளாயிராதபடிக்கு எச்சரிக்கையாயிரு.—
௩௬ அப்படி உன் சரீரம் ஒரு புறத்திலும் இருள்
அடைந்திராமல் முழுவதும் வெளிச்சமாயிருந்
தால், அப்பொழுது ஒரு விளக்குத் தன் பிரகா
சத்தினாலே† உன்னை வெளிச்சமாக்குகிறதுபோ
ல, அது முழுவதும் வெளிச்சம் அடைந்திருக்
கும் என்றார்.

௩௭ அவர் அப்படிப் பேசிக்கொள்ளுகையில், ஒரு
பரிசேயன் தன்னுடனேகூடப் பகல்போசனம்
பண்ணும்படிக்கு அவரை வேண்டிக்கொண்
௩௮ டான்; அவர் போய்ப் பந்தியிருந்தார்.—[7]போச
னம்பண்ணுகிறதற்குமுன்னே அவர் ஸ்நானம்
பண்ணாமல் இருந்ததைப் பரிசேயன் கண்டு ஆச்
சரியப்பட்டான்.—அப்பொழுது கர்த்தர் அவனை ௩௯
நோக்கி, பரிசேயராகிய நீங்கள் போசனபாத்தி
ரங்களின் [8]வெளிப்புறத்தைச் சுத்தம்பண்ணுகி
றீர்கள்; [9]உங்கள் உள்ளம் கொள்ளையினாலும்
துராசையினாலும் நிறைந்திருக்கின்றது.—ஆ புத் ௪௰
தியீனரே, வெளிப்புறத்தை உண்டாக்கினவர்
உட்புறத்தையும் உண்டாக்கவில்லையா?—அப்ப ௪௧
டியிருக்க, [10]உங்களுக்கு உண்டானவைகளைப்‡
பிச்சையாகக் கொடுங்கள், அப்பொழுது சகல
மும் உங்களுக்குச் சுத்தமாய் இருக்கும்.—[11]ஐ ௪௨
யோ! பரிசேயராகிய உங்களுக்கு வேதனைவ
ரும்; என்னத்தினாலெனில், நீங்கள் துளசியிலும்
அருயிபூண்டிலும் சகலவித கீரைகளிலும் பத்
தில் ஒன்று கொடுத்து, நியாயத்தையும் தேவ அன்
பையும் விட்டு விலகுகிறீர்கள்; இவைகளை நீங்
கள் நடப்பித்து, அவைகளையும் விட்டுவிடா
திருக்கவேண்டும்.—[12]ஐயோ! பரிசேயரே, உங் ௪௩
களுக்கு வேதனை வரும்; என்னத்தினாலெனில்,
செபஆலயங்களில் முதல் ஆசனத்தையும் சந்
தைகளில் வாழ்த்துதல்களையும் விரும்புகிறீர்
கள்.—[13]ஐயோ! வஞ்சகராகிய வேதபாரகரே, ௪௪
பரிசேயரே, உங்களுக்கு வேதனை வரும்; [14]என்
னத்தினாலெனில், காணப்படாத பிரேதக்குழி
களைப்போல இருக்கிறீர்கள்; மனிதர் அவை
களை அறியாமல் அவைகள்மேலே நடக்கிறார்
கள் என்று சொல்லுகிறபொழுது,

நியாயசாஸ்திரிகளில் ஒருவன் அவரை நோக் ௪௫
கி, போதகரே, நீர் இப்படிச் சொல்லுகிறதினா
லே எங்களையும் நிந்திக்கிறீரே என்றான்.—அத ௪௬
ற்கு அவர் சொன்னது: ஐயோ! நியாயசாஸ்திரி
களாகிய உங்களுக்கும் வேதனைவரும்; என்னத்
தினாலெனில், [15]மிகவும் பாரமான சுமைகளை
மனிதர்கள்மேலே ஏற்றுகிறீர்கள்; நீங்களோ உங்
கள் விரல்களில் ஒன்றினாலும் அந்தச் சுமைக
ளைத் தொடமாட்டீர்கள்.—[16]ஐயோ! உங்களுக்கு ௪௭
வேதனை வரும்; என்னத்தினாலெனில், உங்கள்
பிதாக்களால் கொலைசெய்யப்பட்ட தீர்க்க
தரிசிகளுடைய பிரேதக்குழிகளின்மேலே திண்
ணையைக் கட்டுகிறீர்கள்.—உங்கள் பிதாக்கள் ௪௮
அவர்களைக் கொலைசெய்த பின்பு நீங்கள் அவர்
களுடைய கல்லறைகளின்மேல் வீடு கட்டுகிற
படியால், நீங்கள் உங்கள் பிதாக்களுடைய
கிரியைகளுக்குச் சம்மதிக்கிறவர்கள் என்று
சாட்சிகொடுக்கிறீர்கள். — ஆகையால் பராபர ௪௯
னுடைய ஞானம் சொல்லுகிறதாவது: [17]நான்
தீர்க்கதரிசிகளையும் அப்போஸ்தலரையும் அவர்
களிடத்தில் அனுப்புவேன்; அவர்களில் சில
ரைக் கொலைசெய்து சிலரைத் துன்பப்படுத்து
வார்கள். — உலகத்தோற்றம்முதற்கொண்டு [18]ஆ ௫௰
பேலின் இரத்தம் தொடங்கி, பலிபீடத்துக்கும்

1 மத். ௰௨. ௩௮, ௩௯.—2 யோனா. ௩. ௪.—3 ௧ இரா. ௰. ௧. 4 யோனா. ௩. ௫. 5 மத். ௫. ௰௫. மாற். ௪. ௨௧. லூக். ௮. ௰௬.—6 மத். ௬. ௨௨. 7 மாற். ௭. ௪. 8 மத். ௨௩. ௨௫. 9 தீத். ௧. ௰௫.

10 ஏசா. ௫௮. ௭. தானி. ௪. ௨௭. லூக். ௰௨. ௩௩. 11 மத். ௨௩. ௨௩.—12 மத். ௨௩. ௬. மாற். ௰௨. ௩௮, ௩௯. 13 மத். ௨௩. ௨௭. 14 சங். ௫. ௯.—15 மத். ௨௩. ௪. 16 மத் ௨௩. ௨௯.—17 மத். ௨௩. ௩௪. 18 ௧ மோ. ௪. ௮.

* மத். ௫. ௰௫.—† அல்லது ஒருவிளக்குத் தன் மின்னலினாலே.—‡ அல்லது உங்களால் கூடிய அளவு.

தேவாலயத்துக்கும் நடுவே அழிக்கப்பட்ட [1]சக
ரியாவின் இரத்தம்வரைக்கும் சிந்தப்பட்ட சகல
தீர்க்கதரிசிகளுடைய இரத்தமும் இந்தச் சந்ததி
யினிடத்திலே கேட்கப்படும்படிக்கு அப்படிச்
௫௧ செய்வார்கள்.—இந்தச் சந்ததியினிடத்திலே அது
கேட்கப்படும் என்று நிச்சயமாய் உங்களுக்குச்
௫௨ சொல்லுகிறேன். — [2]ஐயோ! நியாயசாஸ்திரிக
ளாகிய உங்களுக்கு வேதனைவரும்; என்னத்தி
னாலெனில், அறிவின் திறவுகோலை எடுத்துக்
கொண்டு போனீர்கள்; நீங்களே உட்பிரவேசிக்
கவில்லை; உட்பிரவேசிக்கிறவர்களுக்குத் தடை
பண்ணினீர்கள்* என்றார்.

௫௩ இவைகளை அவர் அவர்களுடனே பேசிக்
கொண்டபொழுது, வேதபாரகரும் பரிசேயரும்
௫௪ அவரிடத்தில் குற்றங்காணும்படிக்கு,—[3]அநே
ககாரியங்களைக்குறித்து அவர் பேசும்படி மிக
வும் அவரை நெருக்கமாய் வினாவித் தந்திரமாய்க்
காத்திருந்து, அவருடைய வாய்மொழியிலே
தப்பிதம் காணப்பார்த்தார்கள்.

## ௰௨. அதிகாரம்.

௧. கிறிஸ்து தம்முடைய சீஷர்கள் மாயத்துக்கு இடங்கொடாமல் இருக்க வும், பயமில்லாமல் தம்முடைய உபதேசங்களைப் பிரசங்கிக்கவும் போதித்தது. ௰௬ அவர் பெரிய களஞ்சியங்களைக் கட்டின ஒரு ஐசுவரிய வானை உவமையாகக்கொண்டு பொருளாசையைக்குறித்துச் சனங்களை எச்சரித்தது. ௨௨. அதிகமாய் உலக காரியங்களில் கவலைப்படாம லிருக்கவும், ௩௧. பராபரனுடைய இராச்சியத்தைத் தேடவும், ௩௩ பிச்சைகொடுக்கவும், ௩௫. கர்த்தர் வந்து தட்டும்போது அவருடைய வரவை எதிர்பார்த்திருந்து திறக்கவும் வேண்டுமென்பது. ௪௧. கிறிஸ்துவின் ஊழியக்காரர் தங்களுக்கு ஒப்புவிக்கப்பட்டவைகளைக் காத்து,௪௯. துன்பம் வருமென்று எதிர்நோக்கவேண்டியதென்பது. ௫௪. ஒப்புரவாகுதல் இல்லாமல் மரணமடைவது பயங்கரமானதால், ௫௮. சனங்கள் இந்தக் காலத்தையே கிருபையின் காலமென்று நினைக்கவேண்டுமென்பது.

௧ அத்தருணத்திலே [4]அநேக ஆயிரம் சனங்கள்
ஒருவரை ஒருவர் மிதித்துக்கொள்ளத்தக்கதாகக்
கூடிவந்திருக்கிறபொழுது, [5]அவர் தம்முடைய
சீஷருடனே சொன்னதாவது: பிரதானமாய் நீங்
கள் வஞ்சகமாகிய பரிசேயருடைய புளிப்புள்ள
மாவுக்கு இடங்கொடாமல் எச்சரிக்கையாயி
௨ ருங்கள்.—[6]வெளியாகாத மறைபொருளும் அறி
௩ யப்படாத அந்தரங்கமும் ஒன்றுமில்லை.—அப்
படியிருக்க நீங்கள் இருளில் பேசினது எது
வோ, அது வெளிச்சத்திலே கேட்கப்படும்; நீங்
கள் அறைகளில் காதுக்குள் சொன்னது எது
வோ, அது வீடுகள்மேலே பிரசங்கிக்கப்படும்.
௪ [7]அல்லாமலும் என் சிநேகிதரான உங்களுக்கு
நான் சொல்லுகிறதாவது: [8]சரீரத்தைக் கொலை
செய்தாலும் அதின்பின்பு அதிகம் ஒன்றும் உங்க
ளுக்குச் செய்யத் திராணியில்லாதவர்களுக்குப்
௫ பயப்படாதிருங்கள். — நீங்கள் பயப்படத்தக்
கவர் இன்னார் என்று உங்களுக்குக் காண்பிக்
கிறேன்; கொலைசெய்த பின்பு நரகத்திலே தள்
ளுகிறதற்கு அதிகாரமுடையவராகிய (பராபர
னுக்குப்) பயப்படுங்கள்; அவருக்கே பயப்ப
டக்கடவீர்கள் என்று உங்களுக்குச் சொல்லு
கிறேன்.—இரண்டு காசுக்கு ஐந்து †அடைக்க ௬
லான் குருவிகளை விற்கிறார்கள் அல்லவோ?
ஆனாலும் அவைகளில் ஒன்றும் பராபரனாலே
மறக்கப்படுகிறதில்லை.—உங்கள் தலையிலுள்ள ௭
எல்லா மயிர்களும் எண்ணப்பட்டிருக்கின்றன;
ஆகையால் பயப்படாதிருங்கள்; அநேகம் அ
டைக்கலான் குருவிகளிலும் நீங்கள் மேன்மை
யாய் இருக்கிறீர்கள்.
அன்றியும் நான் உங்களுக்குச் சொல்லுகிற ௮
தாவது: [9]எவனாகிலும் மனிதர்முன்பாக என்னை
அறிக்கைபண்ணினால், மனிதனுடைய குமார
னும் பராபரனுடைய தூதர்கள் முன்பாக அவ
னை அறிக்கைபண்ணுவான்.—மனிதர்முன்பாக ௯
என்னை மறுதலிக்கிறவன் பராபரனுடைய தூதர்
கள்முன்பாக மறுதலிக்கப்படுவான்.—[10]எவனா ௰
கிலும் மனிதனுடைய குமாரனுக்கு விரோத
மாய்ப் பேசினால், அது அவனுக்கு மன்னிக்கப்
படும்; பரிசுத்தஆவியைத் தூஷணிக்கிறவனுக்கு
அது மன்னிக்கப்படாது.—[11]அன்றியும் செப ௰௧
ஆலயங்களுக்கும் துரைத்தனங்களுக்கும் அதி
காரங்களுக்கும்முன்பாக உங்களைக் கொண்டு
போய் விடும்பொழுது எப்படி, என்னத்தை,
எதிர் உத்தரவாகச் சொல்லுவோம் என்றும்,
எதைப் பேசுவோம் என்றும் கவலைப்படாதிருங்
கள்.—நீங்கள் பேசவேண்டியவைகளைப் பரிசுத்த ௰௨
ஆவியானவர் அந்நேரத்திலே உங்களுக்குப் போ
திப்பாரே என்றார்.
அப்பொழுது கூட்டத்தில் ஒருவன் அவரை ௰௩
நோக்கிப் போதகரே, என் சகோதரன் எனக்
கும் தனக்கும் உண்டான சுதந்தர ஆஸ்தியைப்
பங்கிட்டுக்கொள்ளும்படிக்குக் கட்டளையிடும்
என்றான்.—அதற்கு அவர் சொன்னது: மனித ௰௪
னே, [12]என்னை உங்களுக்கு நியாயாதிபதியாக
வும் பங்கிடுகிறவனாகவும் ஏற்படுத்தினவன் யா
வன் என்று சொல்லி,—[13]பின்பு எல்லாரையும் ௰௫
நோக்கி ஒருவனுக்கு எவ்வளவு ஆஸ்தி உண்டா
யிருந்தாலும் அவைகளினாலே அவனுடைய
சீவன் உண்டாயிராது; ஆகையால் நீங்கள்
பொருளாசைக்கு இடங்கொடாமல் எச்சரிக்
கையாய் இருக்கக்கடவீர்கள் என்றார்.
அல்லாமலும் ஒரு உவமையை அவர்களுக் ௰௬
குச் சொன்னார்; அதாவது: ஐசுவரியமுள்ள ஒரு
மனிதனுடைய காணி பூமி நன்றாய் விளைந்தது.—
அப்பொழுது அவன் தனக்குள்ளே சிந்தித்துக் ௰௭
கொண்டு சொன்னது: என் தானியத்தைச் சேர்
த்துவைக்கிறதற்கு வேண்டிய இடம் இல்லை
யே.—நான் என்னசெய்யலாம்? என் களஞ்சி ௰௮

1 ௨ நாளா. ௨௪. ௨௰, ௨௧. 2 மத். ௨௩. ௰௩.—3 மாற். ௰௨. ௰௩. 4 மத். ௰௬. ௬. மாற். ௮. ௰௫. 5 மத். ௰௬. ௰௨.—6 மத். ௰. ௨௬. மாற். ௪. ௨௨. லூக். ௮. ௰௭ 7 யோவா. ௰௫ ௰௪, ௰௫.–8 மத். ௰. ௨௮. ஏசா. ௫௧. ௭,௮. ௰௨, ௰௩. எரே. ௧.௮.—9 மத். ௰. ௩௨. மாற். ௮. ௩௮. ௨ தீமோ. ௨. ௰௨. ௧ யோ. ௨. ௨௩.—10 மத். ௰௨. ௩௧,௩௨. மாற். ௩. ௨௮. ௧ யோ. ௫. ௰௬. 11 மத். ௰. ௰௯. மாற். ௰௩. ௰௧. லூக். ௨௧. ௰௪.—12 யோவா. ௰௮. ௩௬. 13 ௧ தீமோ. ௬. ௭. ௯.

* அல்லது மறுத்தீர்.—† மத். ௰. ௨௯.

யங்களை நான் இடித்து அதிக பெரிதானவைக
ளைக் கட்டி, எனக்குண்டான தானியம் யாவை
யும் என் பொருளையும் அங்கே சேர்த்துவைக்க
௰௯ வேண்டும்.—பின்பு நான், [1]என் ஆத்துமாவே,
அநேக வருஷங்களுக்கு உனக்காக மிகுந்த
பொருள்கள் வைக்கப்பட்டிருக்கின்றன; ஆகை
யால் இளைப்பாறிப் புசித்துக் குடித்து மகிழ்ச்சி
யாயிரு என்று என் ஆத்துமாவுடனே சொல்ல
௨௰ வேண்டும் என்றான்.—அப்பொழுது பராபரன்
அவனுடனே சொன்னது: புத்தியீனனே, இந்த
இராத்திரியிலே [2]உன் ஆத்துமாவை உன்னிடத்
தில் கேட்டு எடுத்துக்கொள்வார்கள்;* [3]அப்
பொழுது நீ சேகரித்தவைகள் யாருக்காக இருக்
௨௧ கும் என்றார்.—[4]பராபரனில் ஐசுவரியவானாயி
ராமல், தனக்காகப் பொக்கிஷங்களைச் சேர்க்கி
றவனுக்கு அப்படியே சம்பவிக்கும் என்று
சொல்லி,

௨௨ பின்பு தம்முடைய சீஷனை நோக்கி, [5]அதி
னாலே நீங்கள் உங்கள் சீவனைக்குறித்து என்ன
உண்போம் என்றும், உங்கள் சரீரத்தைக்குறித்து
என்ன உடுப்போம் என்றும், கவலைப்படாதி
ருங்கள் என்று உங்களுக்குச் சொல்லுகிறேன்.-
௨௩ ஆகாரத்திற்குச் சீவனும், உடைக்குச் சரீரமும்,
௨௪ அதிகமாயிருக்கின்றதே.—காகங்களை நோக்கிப்
பாருங்கள்; அவைகள் விதைக்கிறதுமில்லை, அ
றுக்கிறதுமில்லை, அவைகளுக்குப் பண்டகசா
லையும் களஞ்சியமும் இல்லை; [6]அவைகளுக்கும்
பராபரன் உணவுகொடுக்கிறார்; பறவைகளி
லும் நீங்கள் மிகவும் அதிக மேன்மையாய்
௨௫ இருக்கிறீர்கள் அல்லவா?—அன்றியும் உங்களில்
ஒருவன் கவலைப்படுகிறதினாலே, தன் சரீர அள
௨௬ வுக்கு ஒரே முழத்தையும் கூட்டுவானா?—மிக
வும் சிறியதானது உங்களால் ஆகாதிருக்க, மற்ற
வைகளுக்காக நீங்கள் என்னத்திற்குக் கவலைப்
௨௭ படுகிறீர்கள்?—லீலியென்னும் புஷ்பங்கள் வள
ருகிற வகையைச் சிந்தித்துக்கொள்ளுங்கள்; அ
வைகள் வருந்துகிறதுமில்லை, நூற்கிறதுமில்லை;
சாலோமோன் தானே மிகுந்த மகிமையுடைய
வனாயிருந்தும், அவைகளில் ஒன்றைப்போல
(அழகாய்) உடுத்தியிருக்கவில்லை என்று உங்க
௨௮ ளுக்குச் சொல்லுகிறேன். — அப்படியிருக்க,
அற்பவிசுவாசிகளே, இன்றைக்கு வெளியிலி
ருந்து நாளைக்கு அடுப்பில் போடப்படுகிற புல்
லுக்குப் பராபரன் இவ்விதமாக உடுத்தினால்,
மிகவும் அதிகமாய் உங்களுக்கு அப்படிச்செய்
வார் அல்லவா?

௨௯ ஆகையால் என்னத்தை உண்போம், என்னத்
தைப் பானம்பண்ணுவோம் என்று நீங்கள் கே
ளாமலும், கலக்கம் அடையாமலும் இருங்கள்.†-
உலகத்தார் இப்படிப்பட்டவைகள் யாவையும் ௩௰
தேடுகிறார்கள்; இவைகள் உங்களுக்கு வேண்டு
மென்று உங்கள் பிதாவானவர் அறிந்திருக்கி
றார்.—[7]விசேஷமாய்ப் பராபரனுடைய இராச் ௩௧
சியத்தைத் தேடுங்கள்; அப்பொழுது இவைகள்
எல்லாம் உங்களுக்குக் கூடக் கொடுக்கப்படும்.-
சிறிய [8]ஆட்டுக்கூட்டமே, உங்கள் பிதா இராச ௩௨
சியத்தை உங்களுக்குக் கொடுக்கப் பிரியமாய்
இருக்கிறார்; ஆகையால் பயப்படாதிருங்கள்.—
[9]உங்களுக்கு உண்டானவைகளை விற்றுப் பிச் ௩௩
சைகொடுங்கள்; உங்கள் பொக்கிஷம் எங்கே
யோ, அங்கே உங்கள் இருதயமும் இருக்கும்.—
ஆகையால் [10]பழமையாய்ப் போகாத பணப்பை ௩௪
களையும் குறைந்துபோகாத பொக்கிஷத்தையும்
பரமண்டலங்களில் உங்களுக்காக உண்டுபண்
ணுங்கள்; அங்கே திருடன் சேருகிறதுமில்லை,
பூச்சி கெடுக்கிறதுமில்லை.

[11]உங்கள் அரைகள் கட்டப்பட்டவைகளாக ௩௫
வும் [12]உங்கள் விளக்குகள் எரிகிறவைகளாகவும்
தங்கள் எசமான் கலியாணத்திலிருந்து திரும்பி
வந்து தட்டும்பொழுது உடனே அவருக்குத்
திறக்கும்படிக்கு அவன் வரக்காத்திருக்கிற மனி
தருக்கு ஒப்பாகவும் இருங்கள்.—எசமான் வந்து ௩௬
விழித்திருக்கக் காணும் ஊழியக்காரரே பாக்கி
யர்.—[13]அவன் அரையில் கச்சைகட்டிக்கொண்டு ௩௭
அவர்களைப் பந்தியிருக்கச் செய்து, பின்பு வந்து
அவர்களுக்கு ஊழியம் செய்வான் என்று மெய்
யாகவே உங்களுக்குச் சொல்லுகிறேன்.—அ ௩௮
வன் இரண்டாம் சாமத்திலாவது மூன்றாம் சாமத்
திலாவது வந்து அப்படியே கண்டால், அவ்வூ
ழியக்காரர் பாக்கியவான்களாய் இருப்பார்கள்.—
[14]திருடன் இன்னவின்ன நேரத்தில் வருவான் ௩௯
என்று வீட்டெசமான் அறிந்தால், அவன் விழித்
திருந்து, தன் வீட்டைக் கன்னமிடும்படிக்கு
இடங்கொடுக்கமாட்டான்; அது உங்களுக்குத்
தெரியும்.—[15]அந்தப்படியே நீங்களும் நினையாத ௪௰
நேரத்திலே மனிதனுடைய குமாரன் வருவ
தால் எத்தனமாயிருக்கக்கடவீர்கள் என்றார்.

அப்பொழுது பேதுரு அவரை நோக்கி ஆண் ௪௧
டவரே, இந்த உவமையை நீர் எங்களுக்கு
(மாத்திரம்) சொல்லுகிறீரோ, எல்லாருக்கும்
சொல்லுகிறீரோ என்றான்.—அதற்குக் கர்த்தர் ௪௨
சொன்னது: [16]தகுதியான காலத்திலே படிகொ
டுக்கும்படிக்கு எசமான் தன்னுடைய பணிவி
டைச் சனங்கள்மேல் வைக்கத்தக்க உண்மை
யும் புத்தியுமுள்ள விசாரணைக்காரன் யாவன்?—
எசமான் வரும்பொழுது, அப்படிச் செய்யக் ௪௩
காணப்படுகிற ஊழியக்காரன் பாக்கியவான்.—
[17]எசமான் தனக்கு உண்டான எல்லாவற்றின் ௪௪

---

1 பிரச. ௰௪. ௯. ௧ கொரி. ௰௫. ௩௨. யாக். ௫. ௫.—2 யோபு. ௨௰. ௨௨: ௨௭. ௮.—3 சங். ௩௯. ௬. எரே. ௰௭. ௰௧.—4 மத். ௬. ௨௰. ௩௩. ௨௪. ௧ தீமோ. ௬. ௰௮, ௰௯. யாக். ௨. ௫.
5 மத். ௬. ௨௫.—6 யோபு. ௩௮. ௪௧. சங். ௱௪௭. ௯.—7 மத். ௬. ௩௩.
8 மத். ௰௧. ௨௫, ௨௬.—9 மத். ௰௯. ௨௧. அப். ௨. ௪௫: ௪. ௩௪.
10 மத். ௬. ௨௰. லூக். ௰௬. ௯. ௧ தீமோ. ௬. ௰௯.—11 எபே. ௬. ௰௪. ௧ பே. ௧. ௰௩.—12 மத். ௨௫. ௧. ௭.
13 மத் ௨௪. ௪௬.—14 மத். ௨௪. ௪௩. ௧ தெச. ௫. ௨. ௨ பே. ௩. ௰. வெளி. ௩. ௩: ௰௬. ௰௫.—15 மத். ௨௪. ௪௪: ௨௫. ௰௩. மாற். ௰௩. ௩௩. லூக். ௨௧. ௩௪, ௩௬. ௧ தெச. ௫. ௬. ௨ பே. ௩. ௰௨.—16 மத். ௨௪. ௪௫: ௨௫. ௨௧. ௧ கொரி. ௪. ௨.
17 மத். ௨௪. ௪௭.

* அல்லது உன் ஆத்துமா உன்னிடத்தில் கேட்டு வாங்கப்படும்; சங். ௫௨. ௭. யாக். ௪. ௰௪.—† அல்லது கவலையுள்ள சந்தேகங்கொள்ளாதிருங்கள்.

மேலும் அவனை வைப்பான் என்று மெய்யாய்
௪௫ உங்களுக்குச் சொல்லுகிறேன்.—[1]அந்த ஊழி
யக்காரன், என் எசமான்வரத் தாமதிக்கிறான்
என்று தன் இருதயத்தில் எண்ணி, வேலைக்கார
ரையும் வேலைக்காரிகளையும் அடிக்கவும் புசித்
துக் குடித்து வெறிகொள்ளவும் தொடங்கினால்,-
௪௬ அந்த ஊழியக்காரன் நினையாத நாளிலும் அறி
யாத நேரத்திலும் அவனுடைய எசமான் வந்து,
அவனைத் துண்டித்துப்போட்டு,* உண்மையில்
லாதவர்களுடனே அவனுக்குள்ள பங்கை ஏற்ப
௪௭ டுத்துவான்.—மிகுதியைப் பெற்றவன் எவனோ,
அவனிடத்தில் மிகவும் விசாரிக்கப்படும்; மிகு
தியைப் பற்றிக்கொண்டவனிடத்தில் அதிகம்
௪௮ கேட்கப்படும்.—[2]ஆதலால் தன் எசமானுடைய
சித்தத்தை அறிந்தும், எத்தனமாயிராமலும் அவ
னுடைய சித்தத்தின்படி செய்யாமலும் இருக்
கிற ஊழியக்காரன் அநேக அடிகளைப் பெற்றுக்
கொள்வான்; [3](சித்தத்தை) அறியாதவனாயிருந்து
அடிகளுக்கு ஏற்றவைகளைச் செய்கிறவன்
கொஞ்ச அடிகளைப் பெற்றுக்கொள்வான்.

௪௯ [4]அக்கினியைப் பூமியின்மேல் போடவந்
தேன்; அது இப்பொழுதே பற்றி எரியும்படிக்கு
௫௦ விரும்புகிறேன். — [5]அதற்கு முன்னே நான் அ
டையவேண்டிய ஒரு ஸ்நானம் உண்டு, அது
முடியுமளவும் நான் மிகவும் நெருக்கப்படுகி
௫௧ றேன்.†—[6]நான் பூமிக்குச் சமாதானத்தைத் தரும்
படிக்கே வந்தேன் என்று நினைக்கிறீர்கள்? அதை
அல்ல, [7]பிரிவினையைத் தரும்படிக்கு வந்தேன்
௫௨ என்று உங்களுக்குச் சொல்லுகிறேன்.—[8]எப்ப
டியெனில், இதுமுதல் ஒரே குடும்பத்திலே ஐந்
துபேர் பிரிந்திருப்பார்கள்; மூன்றுபேர் இரண்
டுபேருக்கும், இரண்டுபேர் மூன்றுபேருக்கும்,
௫௩ விரோதமாய் இருப்பார்கள்.—தகப்பன் மகனுக்
கும், மகன் தகப்பனுக்கும், தாய் மகளுக்கும்,
மகள் தாய்க்கும், மாமி தன் மருமகளுக்கும், மரு
மகள் தன் மாமிக்கும் விரோதமாகப் பிரிந்துபோ
வார்கள் என்றார்.

௫௪ [9]பின்பு அவர் சனங்களுடனே சொன்னது:
நீங்கள் ஒரு மேகம் மேற்கிலே எழும்புகிறதைக்
காண்கிற உடனே பெருமழை வரும் என்று
சொல்லுகிறீர்கள்; அந்தப்படியேயும் ஆகும்.—
௫௫ அல்லாமலும் தென்றல் அடிக்கிறதை நீங்கள்
காண்கிறபொழுது, காங்கை உண்டாகும் என்
௫௬ கிறீர்கள்; அந்தப்படியேயும் ஆகும்.—ஆ வஞ்சக
ரே, பூமியின் உருவத்தையும் வானத்தின் உரு
வத்தையும் வகையறுக்க அறிந்திருக்கிறீர்கள்;
இக்காலத்தைமாத்திரம் நீங்கள் வகையறாமல்
இருக்கிறது எப்படி?

௫௭ அல்லாமலும் நியாயம் இன்னதென்று நீங்கள்
உங்களாலே எண்ணிக்கொள்ளாமல் இருக்கிற
தென்ன?—[10]நீ உன் எதிராளியுடனே கூடத் ௫௮
துரையினிடத்துக்குப் போகிறபொழுது [11]அவ
னைவிட்டு நீங்கும்படிக்கு வழியிலே பிரயாசப்
படுவாயாக; இல்லாவிட்டால் அவன் உன்னை
நியாயாதிபதிக்கு முன்பாகக் கொண்டுபோவது
மல்லாமல் நியாயாதிபதி உன்னைச் சேவகனுக்கு
ஒப்புக்கொடுப்பான், சேவகன் உன்னைக் காவ
லில் போடுவான்.—‡ நீ ஒரு காசாகிலும் குறை ௫௯
யாமல் செலுத்துகிறவரைக்கும் அவ்விடத்தி
லிருந்து விடுதலையாக்கப்படமாட்டாயென்று
உனக்குச் சொல்லுகிறேன் என்றார்.

## ௧௩. அதிகாரம்.

௧. கிறிஸ்து கலிலேயர்முதலானவர்களுக்கு வந்த கேட்டை அறிவித்து, மற்றவர்கள் குணப்படவேண்டுமென்று பிரசங்கித்தது. ௬. வெட்டப்பட்ட கனிகொடாத அத்திமரத்தை உவமையாகக் காட்டினது. ௰௧. கூனியாகிய ஒரு ஸ்திரீயைக் குணமாக்கினது. ௰௮. கடுகுவிதையின் உவமையினாலும், புளித்தமாவின் உவமையினாலும், தம்மாலே தெரிந்துகொள்ளப்பட்டவர்களின் இருதயத்திலே நடந்தேறும் திருவசனத்தின் வல்லமையுள்ள கிரியைகளைக் காண்பித்து, ௨௪. நெருக்கமான வாசல் வழியாய்ப் பிரவேசிக்கப் போதித்து, ௩௧. ஏரோதையும் எருசலேமையும் கடிந்துகொண்டது.

பிலாத்தென்பவன் சில கலிலேயருடைய இரத்
தத்தை அவர்களுடைய பலிகளுடனே கலந்தி
ருந்தான்; அந்தக் கலிலேயரைக்குறித்து அவ்வே
ளையிலே அங்கேயிருக்கிற சிலர் அவருடனே
பேசிக்கொண்டார்கள்.—அவர்களுக்குப் பிரதி ௨
யுத்தரமாக இயேசுவானவர் சொன்னதாவது: அந்
தக் கலிலேயர் அப்படிப்பட்டவைகளை அனுப
வித்ததினாலே, மற்றெல்லாக் கலிலேயரிலும் (அ
திக) பாவிகளாயிருந்தார்கள் என்று நினைக்கிறீர்
கள்? — அப்படி இல்லையென்று உங்களுக்குச் ௩
சொல்லுகிறேன்; நீங்கள் மனந்திரும்பாவிட்
டால், எல்லாரும் அப்படிக் கெட்டுப்போவீர்
கள். — அல்லாமலும் சீலோவாவிலே கோபுரம் ௪
விழுந்து பதினெட்டுப்பேரைக் கொன்றதே; எரு
சலேமில் குடியிருக்கிற மனிதர் எல்லாரிலும்
அந்தப் பதினெட்டுப்பேரும் அதிக குற்றவாளி
களாய்§ இருந்தார்கள் என்று நினைக்கிறீர்கள்?—
அப்படி இல்லையென்று உங்களுக்குச் சொல்லு ௫
கிறேன்; நீங்கள் மனந்திரும்பாவிட்டால் எல்
லாரும் அப்படிப்போலக் கெடுவீர்கள் என்றார்.

அல்லாமலும் அவர் சொன்ன உவமையாவது: ௬
[12]ஒருவன் திராட்சத்தோட்டத்தில் ஒரு அத்திம
ரத்தை நாட்டியிருந்தான்.—பின்பு அவன் வந்து ௭
அதிலே கனியைத் தேடினபொழுது ஒன்றும் கா
ணவில்லை, உடனே அவன் தோட்டக்காரனை
நோக்கி, இதோ, மூன்று வருஷமாய் இந்த அத்தி
மரத்திலே கனியைத் தேடிவருகிறேன் ஒன்றும்
காணவில்லை: இதை வெட்டிப்போடு, நிலத்தை
யும் இது என்னத்திற்குக் கெடுக்கிறது என்றான்.-
அதற்கு அவன் சொன்னது: ஐயா, நான் இதைச் ௮
சுற்றிக் கொத்தி எருப்போடுவேன்; ஒருவேளை

1 மத் ௨௪.௪௮.-2 ௫ மோ. ௨௫.௨. ௰௧.-3 ௩ மோ. ௫.௰௭. ௧ தீமோ. ௧ மோ.௨௫.௨. யோவா.௯.௪௧: ௧. ௰௩.—4 ௰௪. ௨௪.—5 மத். ௨௰.௨௨. அப்.௰௭.௨௦. யாக்.௪. ௨௦. ௨௨. மாற்.௰.௩௮.—6 மத். ௰. ௩௪,௩௫. ௨௪.—7 மீகா. ௭.௬. 10 வாக். ௨௫. ௮. மத்.௫.௨௫. யோவா. ௭. ௪௩: ௯.௰௬: ௰.௰௯. 11 சங். ௩௨. ௬. ஏசா. ௫௫. ௬. 8 மத். ௰. ௩௫.—9 மத். ௰௬. ௨. 12 ஏசா. ௫. ௨. மத். ௨௧. ௰௯.

* அல்லது வெட்டிப்போட்டு; மத். ௨௪. ௫௧.—† அல்லது வருத்தப்படுகிறேன்.— ‡ மாற். ௰௨. ௪௨.—§ அல்லது கடன்காரர்; மத். ௰௮. ௨௪. லூக். ௰௧.௪.

இது கனிகொடுக்கும்; ஆகையால் இது இந்த
௯ வருஷம்வரைக்கும் இருக்கட்டும்.—கனிகொடா
திருந்தால், நீர் இனிமேல் இதை வெட்டிப்போ
டலாம் என்று சொன்னான் என்றார்.
௰ ஓர் ஓய்வுநாளில் அவர் ஒரு செபஆலயத்தில்
போதகம்பண்ணிக்கொண்டு இருந்தபொழுது,—
௰௧ பதினெட்டு வருஷமாய்ப் பலவீனமாகச் செய்
கிற ஆவியையுடைய ஒரு ஸ்திரி அங்கே இருந்
தாள், அவள் எவ்வளவும் நிமிரக்கூடாத கூனி
௰௨ யாயிருந்தாள்.—இயேசுவானவர் அவளைக் கண்டு,
தம்மிடத்தில் அழைத்து, ஸ்திரியே, உன் பலவீ
னத்திலிருந்து விடுதலையாக்கப்பட்டாயென்று
சொல்லி, [1]அவள்மேலே தமது கைகளை வைத்
௰௩ தார்.—உடனே அவள் நிமிர்ந்து, பராபரனைத்
துதிசெய்தாள்.
௰௪ இயேசுவானவர் ஓய்வுநாளிலே குணமாக்கி
னதைச் செபஆலயத்தலைவன் கண்டு விசனம
டைந்து சனங்களை நோக்கி, [2]வேலைசெய்யும்ப
டிக்கான ஆறுநாள் உண்டு; [3]அவைகளிலே நீங்
கள் வந்து, குணமாக்கிக்கொள்ளுங்கள்; ஓய்வு
நாளிலே அப்படிச் செய்யக்கூடாதென்றான்.—
௰௫ அவனுக்கு மாறுத்தரமாகக் கர்த்தர் சொன்னது:
வஞ்சகனே, [4]உங்களில் எவனானாலும் தன் எரு
தை அல்லது தன் கழுதையை ஓய்வுநாளிலே தொ
ழுவிலிருந்து அவிழ்த்துக்கொண்டுபோய் அதற்
௰௬ குத் தண்ணீர் காட்டுகிறதில்லையா?—அதுபோல
ஆபிரகாமின் சந்ததியில் பதினெட்டு வருஷம்
சாத்தானாலே கட்டப்பட்டிருக்கிற [5]இவளை ஓய்
வுநாளிலே அந்தச் சங்கிலியிலிருந்து அவிழ்த்து
௰௭ விடவேண்டியதில்லையா என்றார்.-அப்படி அவர்
சொன்னபொழுது, அவரை விரோதித்திருந்த அ
னைவரும் வெட்கப்பட்டார்கள்; அல்லாமலும் ச
னங்கள் யாவரும் அவர் செய்த மகிமையான செ
ய்கைகளைக்குறித்துச் சந்தோஷப்பட்டார்கள்.
௰௮ [6]பின்பு அவர் சொன்னது: பராபரனுடைய
இராச்சியம் எதற்கு ஒப்பாயிருக்கின்றது? அதை
௰௯ எதற்கு நிகர்சொல்வேன்? — அது ஒரு கடுகுவி
தைக்கு ஒப்பாயிருக்கின்றது; (எப்படியெனில்)
ஒரு கடுகை ஒரு மனிதன் எடுத்துத் தன் தோட்
டத்தில் போட்டான்; அது வளர்ந்து பெரிய செ
டியாயிற்று; அப்பொழுது ஆகாசத்துப் பறவை
கள் அதின் கிளைகளில் கூடுகட்டின என்றார்.
௨௰ அன்றியும் அவர் சொன்னது: பராபரனுடைய
௨௧ இராச்சியத்தை எதற்கு நிகர்சொல்வேன்?—அது
புளிப்புள்ள மாவுக்கு ஒப்பாயிருக்கின்றது; எப்
படியெனில் அதை ஒரு ஸ்திரி எடுத்து * மூன்று
மரக்கால் மா முழுவதும் புளிப்படையத்தக்க
தாக அதிலே அடைத்துவைத்தாள் என்றார்.
௨௨ [7]அன்றியும் அவர் எருசலேமுக்குப் பிரயாண
மாய்ப் போகிறபொழுது, பட்டணங்கள்தோ
றும் கிராமங்கள்தோறும் போய் உபதேசம்பண்
ணினார்.
அப்பொழுது ஒருவன் அவரை நோக்கி, ஆண் ௨௩
டவரே, சிலபேர்மாத்திரந்தான் இரட்சிக்கப்படு
வார்களோ என்றான்.
அதற்கு அவர் சொன்னது: [8]இடுக்கமான வா ௨௪
சலின் வழியாய்ச் (சீவனில்) பிரவேசிக்க மிக
வும் பிரயாசப்படுங்கள்; [9]என்னத்தினாலெனில்,
அநேகர் உட்பிரவேசிக்கத் தேடினாலும் பிரவே
சிக்கமாட்டார்கள் என்று உங்களுக்குச் சொல்
லுகிறேன்.—[10]வீட்டெசமான் எழுந்திருந்து கத ௨௫
வைப் பூட்டினபின்பு, [11]நீங்கள் வெளியே நின்
று [12]கதவிலே தட்டி ஆண்டவரே, ஆண்டவரே,
எங்களுக்குத்திறக்கவேண்டும் என்று கூப்பிடத்
தொடங்கும் காலத்திலே [13]அவர் நான் உங்களை
அறியேன் என்றும், நீங்கள்விட்டுவந்த இடத்தை
அறியமாட்டேன் என்றும் உங்களுடனே சொல்
லும்பொழுது,—நீங்கள் உமக்கு முன்பாகப் போ ௨௬
சனபானம் பண்ணினோமே நீர் எங்கள் வீதிகளி
லே போதகம்பண்ணினீரே என்று சொல்லுவீர்
கள்.— [14]ஆனாலும் அவர் சொல்வது: உங்களை ௨௭
அறியேன் நீங்கள் விட்டுவந்த இடத்தை அறி
யேன்; [15]அக்கிரமக்காரராகிய நீங்கள் எல்லாரும்
என்னைவிட்டுப் போங்கள் என்று சொல்லுவார்
என்று உங்களுக்குச் சொல்லுகிறேன்.—[16]நீங்கள் ௨௮
ஆபிரகாம் ஈசாக்கு யாக்கோபு என்பவர்களையும்
சகல தீர்க்கதரிசிகளையும் பராபரனுடைய இராச்
சியத்தில் உள்ளவர்கள் என்றும் உங்களைப் புறம்
பே தள்ளப்பட்டவர்கள் என்றும் காணும்பொ
ழுது, [17]உங்களுக்கு அழுகையும் பற்கடிப்பும்
உண்டாயிருக்கும்.—அன்றியும் கிழக்கிலும், மேற் ௨௯
கிலும், வடக்கிலும், தெற்கிலுமிருந்து சனங்கள்
வந்து பராபரனுடைய இராச்சியத்தில் பந்தியி
ருப்பார்கள்.— [18]அப்பொழுது பிந்தினோர் முந் ௩௰
தினோராய் இருப்பார்கள்; முந்தினோர் பிந்தினோ
ராவார்கள் என்றார்.
அந்தநாளிலே சில பரிசேயர் அவரிடத்தில் ௩௧
போய், ஏரோதே உம்மைக் கொலைசெய்ய மனதா
யிருக்கிறான்; ஆகையால் நீர் இவ்விடத்தை விட்
டுப் போகவேண்டும் என்றார்கள்.— அவர்களுட ௩௨
னே அவர் சொன்னது: நீங்கள் போய் இன்
றைக்கும் நாளைக்கும் நான் பசாசுகளைத் துரத்தி
ஆரோக்கியங்களைச் செய்து முடித்து, [19]மூன்றாம்
நாளில் நிறைவடைவேன்.—முக்கியமாக எரு ௩௩
சலேமுக்குப் புறம்பே ஒரு தீர்க்கதரிசி மடிந்து
போகிறது வழக்கமல்லாதபடியால், நான் இன்
றைக்கும் நாளைக்கும் பின்வருகிற நாளிலேயும்
இவ்விடங்களில் நடக்கவேண்டியதாய் இருக்
கின்றதென்று அந்த நரிக்குச் சொல்லுங்கள்.—
[20]எருசலேம் பட்டணமே, எருசலேம் பட்டண ௩௪

1 மாற். ௰௬. ௰௮. அப். ௯. ௰௭. ௰௧. ௧௧. மாற். ௪. ௩௰.—7 மத். ௯.
2 ௨ யோ. ௨௰. ௯.—3 மத். ௰௨. ௰. ௩௫. மாற். ௩. ௩.—8 மத். ௭. ௰௩.
மாற். ௩. ௨. லூக். ௬. ௭: ௰௪. ௩. 9 யோவா. ௭. ௩௪: ௮. ௨௧: ௰௩. ௩௩.
4 லூக். ௰௪. ௫.—5 லூக். ௰௯. ௯.—6 மத். ௨ ரோ. ௯. ௩௧.—10 சங். ௩௨. ௬.
௭௪. ௩௫. ௯.—11 மத். ௨௫. ௰. ௪௧.—16 மத். ௮. ௰௧.—17 மத். ௮.
12 லூக். ௬. ௪௬.—13 மத். ௭. ௨௩: ௨௫. ௰௨: ௰௩. ௪௨: ௨௪. ௫௧.—18 மத்.
௰௨.—14 மத். ௭. ௨௩: ௨௫. ௪௧. ௰௯. ௩௰: ௨௰. ௰௬. மாற். ௰. ௩௧.
௨௫. ௩௪.—15 சங். ௬. ௮. மத். ௨௫. 19 எபி. ௨. ௰.—20 மத். ௨௩. ௩௭.

* மத். ௰௩. ௩௩.

மே, உன்னிடத்தில் அனுப்பப்பட்டவர்கள்மேல் கல்லெறிந்து தீர்க்கதரிசிகளைக் கொலைசெய்கிறு யே; ஒரு கோழி தன் குஞ்சுகளைத் தன் சிறகுக ளின் கீழே சேர்த்துக்கொள்ளுகிறவிதமாய் நான் அநேகந்தரம் உன் பிள்ளைகளைச் சேர்த்துக்கொள் ளவேண்டும் என்றிருந்தேன், நீங்கள் வரமாட்
௩௫ டோம் என்கிறீர்கள்.—(ஆதலால்) [1]உங்கள் வா சஸ்தலம் உங்களுக்குப் பாழாகவிடப்படும்; அல் லாமலும் [2]நீங்கள் பராபரனுடைய நாமத்தினால் வருகிறவர் தோத்திரம்செய்யப்படத்தக்கவர் என்று சொல்லும் காலபரியந்தம் என்னைக் கா ணாமல் இருப்பீர்கள் என்றார்.

## ௰௪. அதிகாரம்.

௧. நீர்க்கோவையுள்ள ஒருவனை ஓய்வுநாளிலே குணமாக்கினது. ௭. தாழ்மையாய் நடக்கவேண்டுமென்றும். ௰௨. எளியவர்களுக்கு விருந்துசெய்யவேண்டுமென்றும் கற்பித்தது. ௰௬. பராபரனுடைய வசனத்தை அசட்டைபண்ணுகிற லவுகீக சிந்தையுள்ள மனிதர்கள் பரமண்டலத்தில் பிரவேசிக்கக் கூடாததைப் பெரிய விருந்தின் உவமையினாலே காண்பித்தது. ௨௬. சிலுவையைச் சுமந்து தம்முடைய சீஷர்களாய் இருக்கவேண்டியவர்கள் வெட்கத்துடன் பின்வாங்கிப்போய். ௩௪. சாரமற்ற உப்பைப்போல அபிரயோசனமுள்ளவர்களாய் இராதபடிக்கு முன்னடியாய் கஷ்டத்தையும் நயத்தையும் சீர்துக்கிப் பார்க்கவேண்டுமென்பது.

௧ ஒரு ஓய்வுநாளில் அவர் பரிசேயருக்குள்ளே தலைவரானவர்களில் ஒருவனுடைய வீட்டிலே போசனம்பண்ணும்படிக்குப் போகிறபொழு
௨ து,—பாண்டுவியாதியுள்ள ஒரு மனிதன் அவ ருக்குமுன்பாக நிற்கையில், அவர்கள் அவரை
௩ நோக்கிப் பார்த்துக்கொண்டிருந்தார்கள்.—அப் பொழுது இயேசுவானவர் நியாயசாஸ்திரிக ளையும் பரிசேயரையும்நோக்கி, [3]ஓய்வுநாளிலே
௪ குணமாக்குகிறது நியாயமா என்றார்.—அதற்கு அவர்கள் பேசாமல் இருந்தார்கள்; அப்பொழுது
௫ அவர் அவனைப் பிடித்துக் குணமாக்கி,—அனுப் பிப் பின்பு அவர்களுடனே சொன்னது: [4]உங்க ளில் எவனாலும் தன் கழுதையாவது எருதா வது ஓய்வுநாளில் ஒரு கிணற்றிலே விழுந்தால், உடனே அதைத் தூக்கிவிடானோ என்றார்.—
௬ அதற்கு மாறுத்தரம் சொல்ல அவர்கள் திராணி யில்லாதிருந்தார்கள்.
௭ விருந்துக்கு அழைக்கப்பட்டவர்கள் பந்தியில் முதல் இடங்களைத் தெரிந்துகொண்டதை அவர் பார்த்து, அவர்களுக்கு உவமையாய்ச் சொன்
௮ னது:—நீ ஒருவனால் கலியாணத்துக்கு அழைக் கப்பட்டபொழுது, பந்தியில் முதல் இடத்தில் உளுக்காராதிரு; என்னத்தினாலென்றால் உன் னிலும் அதிக கனமுள்ளவன் அவனால் அழைக்
௯ கப்பட்டிருக்க,—உன்னையும் அவனையும்அழைத் தவன் உன்னிடத்தில் வந்து, இவருக்கு இடங் கொடும் என்று சொல்ல, நீ வெட்கத்தோடே தாழ்ந்த இடத்தில் போயிருக்கவேண்டியதாய்
௰ இருக்கும்.—ஆகையால் [5]நீ அழைக்கப்பட்ட பொழுது, நீ போய்த் தாழ்ந்த இடத்தில் உளுக்கா ருவாயாக; அப்பொழுது உன்னை அழைத்தவன் உன்னிடத்தில் வந்து, சிநேகிதனே, மேலான இடத்தில் போயிரும் என்றுசொல்லப் பந்தியில் இருக்கிறவர்களுக்குமுன்பாக உனக்குக் கன
முண்டாகும்.—[6]அப்படிக்கு எவன் தன்னை ௰௧
உயர்த்துகிறானோ அவன் தாழ்த்தப்படுவான்; எவன் தன்னைத் தாழ்த்துகிறானோ அவன் உயர்த் தப்படுவான் என்றார்.
அல்லாமலும் அவர் தம்மை விருந்துக்கு ௰௨
அழைத்தவனுடனே சொன்னது: நீர் பகல்வி ருந்தை அல்லது இராவிருந்தைப் பண்ணுகிற பொழுது, உமது சிநேகிதரையும் சகோதரரையும் மற்ற இனத்தாரையும் ஐசுவரியமுள்ள பிறரை யும் அழைக்கக் கூடாது; அழைத்தால் அவர்க ளும் உம்மை அழைப்பார்கள்; அதினாலே உமக்
குப் பதில்பலன் உண்டாகும்.—நீர் விருந்து ௰௩
பண்ணும்பொழுது, [7]ஏழைகள், ஊனர், சப்பா ணிகள், குருடர் இப்படிப்பட்டவர்களை அ
ழைப்பீராக—அப்பொழுது அவர்கள் உமக்குப் ௰௪
பதில்கொடுக்கத் திராணியில்லாதபடியால் நீர் பாக்கியராயிருப்பீர்; நீதிமான்கள் உயிரோடெழு ந்திருக்கும் காலத்திலே உமக்குப் பதில் அளிக் கப்படும் என்றார்.
அவரோடேகூடப் பந்தியிருந்தவர்களில் ௰௫
ஒருவன் இந்த வசனங்களைக் கேட்டபொழுது, அவன் அவரைநோக்கி, [8]பராபரனுடைய இ ராச்சியத்தில் போசனம்பண்ணுகிறவன் பாக்கி
யவான் என்றான்.—அதற்கு அவர் சொன்னது: ௰௬
[9]ஒரு மனிதன் பெரிய விருந்துபண்ணி,—அ ௰௭
நேகரை அழைத்து விருந்துவேளையிலே தன் ஊழியக்காரனைநோக்கி, [10]நீ அழைக்கப்பட்ட வர்களிடத்திற்குப் போய், சகலமும் எத்தனமா யிற்று, ஆகையால் வாருங்களென்று சொல்
என்று அனுப்பினான்.—அப்பொழுது அவர்கள் ௰௮
எல்லாரும் போக்குச்சொல்லத் தொடங்கினார் கள்; ஒருவன் சொன்னது: ஒரு வயல்நிலத்தைக் கொண்டேன், நான் போய் அதைப் பார்க்க அவசியமாயிருக்கின்றது; ஆகையால் எனக்கு மன்னிக்கவேண்டும் என்று உன்னை வேண்டிக்
கொள்ளுகிறேன் என்றான்.—வேறொருவன் ௰௯
சொன்னது: ஐந்து ஏர்மாடுகொண்டேன், அவை களை நான் போய்ச் சோதிக்கவேண்டும், ஆகை யால் எனக்கு மன்னிக்கும்படிக்கு உன்னை வே
ண்டிக்கொள்ளுகிறேன் என்றான்.—வேறொரு ௨௰
வன் சொன்னது: பெண்ணை விவாகம்பண்ணி னேன், அதினாலே நான் வரக்கூடாது என்றான்.-
பின்பு அந்த ஊழியக்காரன் வந்து, அவைகளைத் ௨௰௧
தன் எசமானுக்கு அறிவித்தான்; அப்பொழுது வீட்டெசமான் கோபமடைந்து தன் ஊழியக் காரனைநோக்கி, நீ சீக்கிரமாய்ப் பட்டணத்தின் தெருக்களிலும் வீதிகளிலும் போய், தரித்திர

1 ௧ மோ. ௨௧. ௨௩. ௩௨. சங். ௬௯. ௰௩. ௩௮. யோவா. ௰௨. ௰௩ ௨௬. எசா. ௩௭. தானி. ௯. ௨௭. 3 மத். ௰௨. ௰.—4 ௨ மோ. ௨௩. ௫. மீகா. ௬. ௰௨.—2 சங். ௱௰௮. ௨௬. ௫ மோ. ௨௨. ௪. லூக். ௰௩. ௰௫. மத். ௨௩. ௩௯. மாற். ௰௧. ௰. லூக். 5 யாக். ௨௫. ௩, ௭.

6 யோபு ௨௨. ௨௯. சங். ௰௮. ௨௭. யாக். ௪௩. ௨௩. மத். ௨௩. ௰௨. லூக். ௰௮. ௰௪. யாக். ௪. ௬. ௧ பே. ௫. ௫. 7 நெகே. ௮. ௰, ௰௨.—8 வெளி. ௰௯. ௯.—9 மத். ௨௨. ௨.—10 யாக். ௯. ௨, ௫.

ளையும் ஊனரையும் சப்பாணிகளையும் குருடரை
யும் இங்கே அழைத்துக்கொண்டுவா என்றான்.—
௨௨ அந்தப்படி ஊழியக்காரன் அழைத்துவந்து,
ஆண்டவரே, நீர் கட்டளையிட்டபடி செய்தா
௨௩ யிற்று, — பின்னும் இடம் உண்டு என்றான்;
அப்பொழுது எசமான் ஊழியக்காரனுடனே
சொன்னது: நீ வழிகளிலேயும் வேலிகள் அரு
கேயும் புறப்பட்டுப்போய், என் வீடுநிறைய
வரும்படிக்குச் சனங்களை வருந்திக் கூட்டிக்
௨௪ கொண்டுவா. — அழைக்கப்பட்டிருந்த [1]அந்த
மனிதரில் ஒருவராகிலும் என்னுடைய விருந்
தை ருசிபார்ப்பதில்லை என்று உங்களுக்குச்
சொல்லுகிறேன் என்று சொன்னார்.
௨௫ பின்பு அநேக சனங்கள் அவரோடேகூடப்
பிரயாணமாய்ப் போகையில், அவர் திரும்பிப்
பார்த்து அவர்களுடனே சொன்னதாவது: —
௨௬ [2]ஒருவன் என்னிடத்தில் வந்தும் [3]தன் தகப்ப
னையும், தாயையும், மனைவியையும், பிள்ளைகளை
யும், சகோதரரையும், சகோதரிகளையும், [4]தன்
சுயசீவனையும் பகையாவிட்டால் என் சீஷனாய்
௨௭ இருக்கமாட்டான். — [5]அல்லாமலும் தன் சிலு
வைமரத்தைச் சுமந்துகொண்டு எனக்குப் பின்
செல்லாதவன் என் சீஷனாய் இருக்கமாட்
௨௮ டான்.—[6]உங்களில் எவனாகிலும் ஒரு கோபு
ரத்தைக்கட்ட மனதாயிருந்தால் தான் அஸ்தி
பாரம் போட்ட பின்பு, அதை முடியக் கட்டு
கிறதற்குத் திராணியில்லாமல் இருக்கும்பொ
௨௯ ழுது, — அதைப் பார்க்கிறவர்கள் எல்லாரும்,
இந்த மனிதன் கட்டத்தொடங்கி முடிக்கிறதற்
குத் திராணி இல்லை என்று தன்னைப் பரியாசம்
௩௰ பண்ணாதபடிக்கு,—அவன் முன்பு உளுக்காந்து
அதைக்கட்டித் தீர்க்கிறதற்குத் திராணியுண்டா
இல்லையா என்று அறியும்படி, செல்லும் செல
௩௧ வைக் கணக்குப்பாராமல் இருப்பானா?—அல்
லது, எந்த இராசாவானாலும் மற்றொரு இராசனு
டனே யுத்தம் செய்யப் போகிறதற்கு முன்பு,
உளுக்காந்து தனக்கு விரோதமாய் இருபதினா
யிரம் சேவகரைக் கொண்டுவருகிறவனோடே
பதினாயிரம் சேவகரைக்கொண்டு எதிர்க்கக்
கூடுமா கூடாதா என்று ஆலோசனைபண்ணாமல்
௩௨ இருப்பானா?—கூடாதென்று அறிந்தால் அவன்
தூரத்தில் இருக்கையில், தானாதிபதிகளை அனுப்
பிச் சமாதானத்துக்காகக் கேட்டுக்கொள்ளும்
படிக்கு (அப்படிச் செய்வான் அல்லவா)?—
௩௩ அதுபோல உங்களில் எவனாகிலும் தனக்கு
உண்டான எல்லாவற்றையும் வெறுத்துவிடா
விட்டால் என் சீஷனாய் இருக்கமாட்டான்.
௩௪ [7]உப்பானது நல்லதுதான்; உப்பானது சாரம்
அற்றுப்போனால், எதினாலே அது சாரமாக்கப்
௩௫ படும்?—அது நல்ல நிலத்திலாகிலும் எருவிலா
கிலும் போடப்படத்தக்கதல்ல; அதை வெளி
யே கொட்டிப்போடுவார்கள்; கேட்கிறதற்குக்
காதுள்ளவன் கேட்கக்கடவன் என்றார்.

## ௰௫. அதிகாரம்.

௧. காணமற்போன ஆட்டையும், ௮. காணமற்போன பணத்தையும், ௰௧. கெட்டுப்போன குமாரனையும் உவமைகளாகச் சொன்னது.

[8]அன்றியும் சகல ஆயக்காரரும் பாவிகளும் ௧
அவருடைய வசனங்களைக் கேட்கும்படிக்கு
அவரிடத்தில் சேர்ந்தார்கள். — அப்பொழுது ௨
பரிசேயரும் வேதபாரகரும் முறுமுறுத்து,
இவர் [9]பாவிகளை ஏற்றுக்கொண்டு அவர்களோ
டே சாப்பிடுகிறார் என்றார்கள்.—அவர்களுட ௩
னே அவர் சொன்ன உவமையாவது:
[10]உங்களில் யாவனாகிலும் தனக்கு உடைமை ௪
யான நூறு ஆடுகளில் ஒன்றை இழந்தால், தொ
ண்ணூற்றொன்பது ஆடுகளையும் வனாந்தரத்தில்
விட்டுப்போய், இழந்ததைக் கண்டுபிடிக்கும்
பரியந்தம் தேடாமல் இருப்பானா? — கண்டுபி ௫
டித்தபின்பு, அவன் அதைச் சந்தோஷமாய்த்
தன் தோள்களின்மேல் ஏற்றிக்கொண்டு வீட்
டுக்கு வந்தபொழுது,—சிநேகிதரையும் அயலா ௬
ரையும் கூட வரவழைத்து, காணாமல் போன
[11]என் ஆட்டைக் கண்டுபிடித்தேன்; ஆகையால்
என்னோடேகூடச் சந்தோஷப்படுங்கள் என்
பான் அல்லவா?-அதுபோல [12]மனந்திரும்ப அவ ௭
சியப்படாத தொண்ணூற்றொன்பது நீதிமான்க
ளிலும், மனந்திரும்புகிற ஒரே பாவியைக்குறித்
துப் பரமண்டலத்தில் உள்ளவர்களுக்குச் சந்
தோஷம் உண்டாகும் என்று உங்களுக்குச்
சொல்லுகிறேன்.
அல்லது பத்துத் திராகுமா * பணத்தை உ ௮
டைய பெண் எவளானாலும் ஒரு திராகுமாவை
இழந்தால், விளக்கைக் கொளுத்தி வீட்டைப்
பெருக்கி அதைக் கண்டுபிடிக்கும் பரியந்தம்
நன்றாய்த் தேடாமல் இருப்பாளா? — கண்டுபி ௯
டித்த பின்பு அவள் சிநேகிதிகளையும் அயல்வீட்
டுக்காரிகளையும் கூட வரவழைத்து,நான இழந்த
திராகுமாவைக் கண்டுபிடித்தேன்; ஆகையால்
என்னோடுகூடச் சந்தோஷப்படுங்கள் என்பாள்
அல்லவா?—அதுபோல மனந்திரும்புகிற ஒரே ௰
பாவியைக்குறித்துப் பராபரனுடைய தூதருக்கு
முன்பாகச் சந்தோஷம் உண்டாயிருக்கின்றதெ
ன்று உங்களுக்குச் சொல்லுகிறேன் என்றார்.
பின்னும் அவர் சொன்னதாவது: ஒரு மனி ௰௧
தனுக்கு இரண்டு குமாரர் இருந்தார்கள்.—அ ௰௨
வர்களில்[13]இளையவன் தகப்பனை நோக்கி, தகப்
பனே, ஆஸ்தியில் எனக்கு வரும் பங்கைத் தர
வேண்டும் என்றான்; அந்தப்படி அவன் அவர்
களுக்குப் பொருளைப் பங்கிட்டான்.—சிலநா ௰௩
ளுக்குப் பின்பு, இளையமகன் எல்லாவற்றை
யும் சேர்த்துக்கொண்டு தூரதேசத்திற்குப் பிரயா

1 மத். ௨௧. ௪௩; ௨௨. ௮. அப். ௰௩. ௪௬.-2 உபா. ௰௩. ௬: ௩௩. ௯. மத். ௰. ௩௭. 3 உரோ. ௯. ௰௩.—4 வெளி. ௰௨. ௰௧.—5 மத். ௰௬. ௨௪. மாற். ௮. ௩௪. லூக். ௯. ௨௩. ௨ தீமோ. ௩. ௰௨.—6 வாக். ௨. ௪. ௨௭. 7 மத். ௫. ௰௩. மாற். ௯. ௫௰. 8 மத். ௯. ௰.—9 அப். ௰௧. ௩. கலா. ௨. ௰௨.—10 மத். ௰௮. ௰௨. 11 ௧ பே. ௨. ௰, ௨௫.-12 லூக். ௫. ௩௨. 13 மாற். ௰௨. ௪௪.

* அல்லது ஏழரைப்பேனிஸ்கு, அல்லது உரோமருடைய ஒரு பேனிஸ்குச்சரியான அரைக்கால் அவுன்ச வெள்ளி; மத். ௰௮. ௨௮.

ணமாய்ப் போய், அங்கே கெட்டமார்க்கமாய்ச்
சீவனம்பண்ணித் தன் ஆஸ்தியை அழித்துப்
௰௪ போட்டான்.—எல்லாவற்றையும் அவன் செல
வழித்தபின்பு, அத்தேசத்திலே மிகுந்த பஞ்ச
காலம் உண்டாயிற்று; அப்பொழுது அவனுக்
குக் குறைவுவரத் தொடங்கினபடியினாலே,—
௰௫ அவன் போய், அந்தத் தேசத்துக் குடிகளில்,
ஒருவனைச் சேர்ந்துகொண்டான்; அந்தக் குடியா
னவன் அவனைத் தன் வயல்களிலே பன்றிகளை
௰௬ மேய்க்கும்படிக்கு அனுப்பினான். — அப்பொ
ழுது பன்றிகள் தின்னுகிற தவிடுகளினாலே தன்
வயிற்றை நிரப்ப ஆசைப்பட்டான்; அவற்றை
யும் ஒருவனும் அவனுக்குக் கொடுக்கவில்லை.—
௰௭ அப்படியிருக்கும் காலத்தில் அவன் புத்திய
டைந்து சொன்னதாவது: ஆ என் தகப்பனிடத்
திலே எத்தனை கூலிக்காரர் மிகுந்த உணவை
உடையவர்களாய் இருக்கிறார்கள்; நான் இங்
௰௮ கே பசியினாலே கெட்டுப்போகிறேன்.—நான்
எழுந்து என் தகப்பனிடத்திற்குப் போய், தகப்
பனே, தேவனுக்கும் உமக்கும் விரோதமாய்ப்
௰௯ பாவம்செய்தேன். — இதுமுதல் நான் உம்மு
டைய குமாரன் என்று அழைக்கப்படுவதற்கு
அபாத்திரனாய் இருக்கிறேன்; உம்முடைய
கூலிக்காரரில் ஒருவனைப்போல என்னை வைத்
துக்கொள்ளும் என்று சொல்லவேண்டும் என்
௨௰ றெண்ணி,—எழுந்து புறப்பட்டுத் தன் தகப்ப
னிடத்திற்குப் போனான்; [1]அப்பொழுது அவன்
தூரமாய் இருக்கையில் தகப்பன் அவனைக்கண்டு,
உருக்கமாய் இரங்கி, ஓடிவந்து, அவனுடைய
கழுத்தைக் கட்டிக்கொண்டு, அவனை முத்தம்
௨௧ செய்தான்.—குமாரன் அவனை நோக்கி, [2]தகப்ப
னே, தேவனுக்கும் உமக்கும் விரோதமாய்ப் பா
வம்செய்தேன்; இதுமுதல் உம்முடைய குமாரன்
என்று அழைக்கப்படுவதற்கு நான் பாத்திரன்
௨௨ அல்லவென்று சொன்னபொழுது,— தகப்பன்
தன் வேலைக்காரரை நோக்கி, நீங்கள் (போய்)
முக்கியமான வஸ்திரத்தைக் கொண்டுவந்து இ
வனுக்கு உடுத்தி, இவனுடைய கைக்கு மோதி
ரத்தையும் கால்களுக்குப் பாதஇரட்சைகளையும்
௨௩ கொடுத்து,–பின்பு கொழுத்த கன்றைக் கொண்டு
௨௪ வந்து அடித்துச் சமையுங்கள்.—[3]என் குமாரனா
கிய இவன் மரித்தான், மறுபடியும் உயிரோடிருக்
கிறான்; இவன் காணாமல்போனான், இப்பொ
ழுது காணப்பட்டான்; ஆகையால் நாம் புசித்து
மகிழ்ச்சியாய் இருக்கக்கடவோம் என்றான்;
அந்தப்படி அவர்கள் சந்தோஷப்படத் தொடங்
௨௫ கினார்கள்.–அவனுடைய மூத்த குமாரன் வய
லில் இருந்தான்; அவன் திரும்பி வீட்டுக்குச்
சமீபமாய் வந்தபொழுது, கீதவாத்தியத்தையும்
௨௬ நடனக்களிப்பையும் கேட்டு,–வேலைக்காரரில்
ஒருவனை அழைத்து, இதென்ன என்று விசாரித்
௨௭ தான்.—வேலைக்காரன் அவனை நோக்கி, உன்
சகோதரன் வந்தான்; உன் தகப்பன் அவனைச்

சுகத்தோடே திரும்பப் பெற்றுக்கொண்டபடியி
னாலே கொழுத்த கன்றை அடிப்பித்தான் என்
றான்.—அப்பொழுது அவன் கோபம் அடைந்து ௨௮
உள்ளேபோக மனதில்லாதிருந்தான்; ஆதலால்
தகப்பன் வெளியே வந்து, அவனை மிகவும்
வேண்டிக்கொண்டு அழைத்தான்.–அவன் தகப் ௨௯
பனுக்குப் பிரதியுத்தரமாகச் சொன்னது: இவ்வ
ளவு வருஷம் நான் உமக்கு ஊழியம்செய்து,
உமது கற்பனையை ஒருக்காலும் மீறி நடக்க
வில்லை, அப்படியிருந்தும் நான் என் சிநேகித
ரோடே மகிழ்ச்சியாய் இருக்கும்படிக்கு ஒருக்
காலும் நீர் ஒரு ஆட்டுக்குட்டியை எனக்குக்
கொடுக்கவில்லையே. — உம்முடைய பொருள் ௩௰
களை வேசிகளோடே பட்சித்த உமது குமாரனா
கிய இவன் வந்தபொழுது, கொழுத்த கன்றை
இவனுக்காக அடிப்பித்தீர் என்றான்.—அதற்குத் ௩௧
தகப்பன் சொன்னது: மகனே, நீ எப்பொழுதும்
என்னோடிருக்கிறாய்; அல்லாமலும் எனக்கு
உண்டான யாவும் உன்னுடையவைகளாய் இ
ருக்கின்றன.—[4]உன் சகோதரனாகிய இவன் மரித் ௩௨
தான், மறுபடியும் உயிரோடிருக்கிறான்; காணா
மல் போனான், (இப்பொழுது) காணப்பட்
டான்; ஆனபடியினாலே நாம் மகிழ்ச்சியாகிக்
களிப்படையவேண்டுமே என்று சொன்னான்
என்றார்.

## ௰௬. அதிகாரம்.

௧. அநீதியுள்ள உக்கிராணக்காரனைக்குறித்த உவமை. ௰௪. இறின்து பொருளாசையும் வஞ்சனையும் உள்ள பரிசேயரைக் கடிந்தது. ௰௯. ஐசுவரியவானையும் ஏழையான இலாசருவையுங்குறித்த உவமை.

அன்றியும் அவர் தம்முடைய சீஷரோடு சொ ௧
ன்னதாவது: ஐசுவரியமுள்ள மனிதனுக்கு ஒரு
உக்கிராணக்காரன் இருந்தான்; அவன் எசமா
னுடைய ஆஸ்திகளை அழிக்கிறதாக அவனுக்கு
அறிவித்தார்கள்.— அப்பொழுது எசமான் அவ ௨
னை அழைத்து உன்னைக்குறித்து நான் இப்படிக்
கேள்விப்பட்டிருக்கிறேன்; நீ இனிமேல் உக்கி
ராணக்காரனாயிருக்கக்கூடாது; ஆகையால் உன்
உக்கிராணக்கணக்கைக் கொடு என்றான்.—அப் ௩
பொழுது உக்கிராணக்காரன் தனக்குள்ளே எண்
ணிக்கொண்டதாவது: என் எசமான் உக்கி
ராண விசாரிப்பை என்னிலிருந்து எடுத்துக்
கொள்ளுகிறபடியினாலே என்னசெய்யலாம்?
(நிலம்) கொத்துகிறதற்குப் பெலன் இல்லை;
இரக்க வெட்கமாயிருக்கின்றது. — உக்கிராண ௪
விசாரிப்பைவிட்டுத் தள்ளப்படும்பொழுது, என்
னைத் தங்கள் வீடுகளில் சேர்த்துக்கொள்ளுகி
றதற்கான (சிநேகிதர்கள்) உண்டாகும்படிக்குச்
செய்யவேண்டிய வகை தெரியவந்தது என்று
எண்ணி,
தன் எசமானிடத்தில் கடன்பட்டவர்களை ௫
ஒருவன் ஒருவனாக அழைத்து, முதலாவது வந்த
வனை நோக்கி, நீ என் எசமானிடத்தில் பட்ட
கடன் எவ்வளவு என்றான்; அதற்கு அவன்

1 அப். ௨. ௩௯. எபே. ௨. ௰௩, ௰௭.—2 சங். ௫௧. ௪.—3 ௩௨. ௩௪.

எபே. ௨. ௧; இ. ௰௪. வெளி. ௩. ௧.—4 ௨௪. ௩௪.

௬ நூறுகுடம்* எண்ணெய் என்றான். — அப்பொ
ழுது உக்கிராணக்காரன் அவனை நோக்கி, நீ
உன் சீட்டை எடுத்துச் சீக்கிரமாய் உளுக்காந்து,
௭ ஐம்பது என்று எழுது என்றான்.—பின்பு அவன்
வேறொருவனை நோக்கி, நீ பட்டகடன் எவ்வ
ளவு என்றான்; அதற்கு அவன், நூறு கலன்†
கோதுமை என்றான்; அப்பொழுது உக்கிரா
ணக்காரன் அவனை நோக்கி, நீ உன் சீட்டை
௮ எடுத்து எண்பது என்று எழுது என்றான்.—அநீ
தியுள்ள உக்கிராணக்காரன் விவேகமாய்ச் செய்
தபடியினாலே எசமான் அவனைப் புகழ்ந்தான்;
[1]இவ்விதமாய் ஒளியின் பிள்ளைகளிலும் இப்பிர
பஞ்சத்தின் பிள்ளைகள் தங்கள் சந்ததியில் அதிக
விவேகமாய் இருக்கிறார்கள்.

௯ நானும் உங்களுக்குச் சொல்லுகிறதாவது:
[2]நீங்கள் மாளும்பொழுது, உங்களை நித்தியமான
வீடுகளில் சேர்த்துக்கொள்ளும்படிக்குக் கபட
முள்ள லவுகீகப் பொருளால் ‡ உங்களுக்காகச்
௰ சிநேகிதரைச் சம்பாதியுங்கள்.—[3]கொஞ்சத்திலே
உண்மையுள்ளவன் அநேகத்திலேயும் உண்மை
யாய் இருப்பான்; கொஞ்சமாய் அநீதிசெய்கிற
௰௧ வன் அநேகமாயும் அநீதிசெய்வான்.—அப்படி
யிருக்க நீங்கள் கபடமுள்ள லவுகீகப்பொருளி
லே § உண்மை இல்லாமல் இருந்தால், மெய்
யான பொருள்களை உங்களுக்கு யார் நம்பிக்
௰௨ கையோடே ஒப்புவிப்பார்கள்?—அல்லாமலும்
நீங்கள் மற்றொருவனுடையதை உண்மையில்லா
மையாய் நடத்தினால், உங்களுக்குச் சொந்தமாக
எதையாகிலும் யார் உங்களுக்குக் கொடுப்பார்
௰௩ கள்? — [4]எந்த வேலைக்காரனாலும் இரண்டு
எசமான்களுக்கு அடிமைசெய்யமாட்டான்;ஒரு
வனைப் பகைத்து மற்றவனைச் சிநேகிப்பான்;
அல்லது ஒருவனைப் பற்றிக்கொண்டு மற்றவனை
அசட்டைபண்ணுவான். நீங்கள் பராபரனுக்
கும் லவுகீகப்பொருளுக்கும் அடிமையாய் இ
ருக்கமாட்டீர்கள் என்றார்.

௰௪ [5]பணத்தின்மேல் ஆசையுள்ளவர்களாகிய பரி
சேயரும் இந்த வசனங்கள் யாவையும் கேட்டு
அவரைக்குறித்துப் பரியாசம் பண்ணினார்கள்.—
௰௫ அப்பொழுது அவர் அவர்களை நோக்கி, [6]நீங்கள்
மனிதர்முன்பாக உங்களை நீதிமான்கள் என்று
காண்பிக்கிறீர்கள்; [7]ஆனாலும் பராபரன் உங்கள்
இருதயங்களை அறிந்திருக்கிறார்; [8]மனிதருக்குள்
ளே மேன்மையாய் எண்ணப்பட்டிருக்கிறது
பராபரனுக்கு முன்பாக அருவருப்பாய் இருக்
௰௬ கின்றது.—[9]நியாயப்பிரமாணமும் தீர்க்கதரிசிக
ளுடைய பிரமாணங்களும் யோவான்வரைக்
கும் சென்றன; அதுமுதல் பராபரனுடைய இ
ராச்சியம் சுவிசேஷமாய் அறிவிக்கப்பட்டு வரு
கின்றது; யாவரும் வலுமையாய் அதற்கு உட்
படுகிறார்கள்.—[10]வானமும் பூமியும் ஒழிந்துபோ ௰௭
கிறது எளிதாயிருந்தாலும், வேதப்பிரமாணத்தில்
ஒரு எழுத்தின் உறுப்பும் கெட்டுப்போகாது.—
[11]தன் மனைவியைத் தள்ளி வேறொருத்தியை ௰௮
விவாகம்பண்ணுகிறவன் விபசாரம்செய்கிறான்;
புருஷனாலே தள்ளப்பட்டவளை விவாகம்பண்
ணுகிறவனும் விபசாரம்செய்கிறான்.

அன்றியும் ஐசுவரியமுள்ள ஒரு மனிதன் இ ௰௯
ருந்தான்; அவன் இரத்தாம்பரமும் மெல்லிதான
உடையும் தரித்து, அநுதினமும் சம்பிரமமாய்
வாழ்ந்துகொண்டிருந்தான்.—அல்லாமலும் இலா ௨௰
சரு என்னப்பட்ட ஒரு தரித்திரன் இருந்தான்;
அவன் பருக்கள் நிறைந்த தேகமுள்ளவனாய்
அந்த ஐசுவரியவானுடைய வாசலின் அருகே
கிடந்து, அவனுடைய பந்தியிலிருந்து விழும்
உச்சிட்டங்களாலே தன் பசியை ஆற்ற ஆசை
யாயிருந்தான்.—அதுவுமல்லாமல் நாய்கள் வந்து, ௨௧
அவனுடைய பருக்களை நக்கும்.—பின்பு அந்தத் ௨௨
தரித்திரனானவன் மரித்துத் தேவதூதரால் ஆபிர
காமினுடைய மடியிலே கொண்டுபோய் விடப்
பட்டான்; ஐசுவரியவானும் மரித்து அடக்கம்
பண்ணப்பட்டான்.—பின்பு அவன் நரகத்திலே ௨௩
வேதனைப்படுகிறபொழுது தன் கண்களை உயர்த்
தித் தூரத்திலே ஆபிரகாமையும் அவனுடைய
மடியிலே இலாசருவையும் கண்டு,—தகப்பனாகிய ௨௪
ஆபிரகாமே, இந்தச் [12]சுவாலையிலே மிகுந்த
வேதனைப்படுகிறேன்; [13]ஆகையால் நீர் என்
மேல் இரங்கி இலாசரு தன் விரலின் நுனியைத்
தண்ணீரிலே தோய்த்து, என்னுடைய நாவைக்
குளிரப்பண்ணும்படிக்கு அவனை அனுப்பவே
ண்டும் என்று கூப்பிட்டான்.—அதற்கு ஆபிர ௨௫
காம் சொன்னது: [14]மகனே, நீ பூமியிலே உயி
ரோடிருந்த காலத்திலே, உன் நன்மைகளைப்
பெற்றுக்கொண்டாயே; இலாசருவும் அப்படி
யே தீமைகளைப் பெற்றுக்கொண்டான்; அதை
நினைத்துக்கொள்; இப்பொழுது இவன் தேற்றப்
படுகிறான், நீ வேதனைப்படுகிறாய். — அதுவு ௨௬
மல்லாமல் இவ்விடத்தைக் கடந்து உங்களிடத்
துக்கு வரவும், அல்லது அவ்விடத்தைக் கடந்து
எங்களிடத்துக்கு வரவும் மனதுள்ளவர்களுக்
குக் கூடாதபடிக்கு, எங்களுக்கும் உங்களுக்
கும் நடுவே பெரும்பிளப்பு உண்டாக்கப்பட்டி
ருக்கின்றதே என்றான்.—அதற்கு அவன் சொன் ௨௭
னது: தகப்பனே, அப்படியானால் (பூமியிலே)
எனக்கு ஐந்துபேர் சகோதரர் உண்டு; அவர்க
ளும் வேதனையுள்ள இவ்விடத்துக்கு வராதப
டிக்கு இவன் போய், அவர்களுக்கு (இதைக்கு
றித்துச்) சாட்சிகொடுக்கும்பொருட்டாய், —

1 யோவா. ௧௨. ௩௬. எபே. ௫. ௮. ௧ தெச. ௫. ௫.—2 தானி. ௪. ௨௭. மத். ௬. ௰௯: ௰௯. ௨௧. லூக். ௰௨. ௩௩. ௧ தீமோ. ௬. ௰௭, ௰௮, ௰௯. 3 மத். ௨௫. ௨௧. லூக். ௰௯. ௰௭. 4 மத். ௬. ௨௪.—5 மத். ௨௩. ௰௪. 6 லூக். ௰. ௨௯.—7 சங். ௭. ௯. 8 ௧ சாமு. ௰௬. ௭.—9 மத். ௪. ௰௭: ௰௧. ௰௨, ௰௩. லூக். ௭. ௨௯. 10 சங். ௱௨. ௨௬, ௨௭. ஏசா. ௫௰. ௯: ௫௧. ௬. மத். ௫. ௰௮. ௧ பேது. ௧. ௨௫. 11 மத். ௫. ௩௨: ௰௯. ௯. மாற். ௰. ௰௧. ௧ கொரி. ௭. ௰, ௰௧.—12 ஏசா. ௬௬. ௨௪. மாற். ௯. ௪௪. ௪௮.—13 சகரி. ௰௪. ௰௨.—14 யோபு. ௨௧. ௰௩. லூக். ௬. ௨௪.

* ஐந்து மரக்கால் கொள்ளத்தக்க ஓர் அளவு; எசே. ௪௫. ௰, ௰௧, ௰௪.—† இந்தக் கலம் பன்னிரண்டுமரக்கால் கலமாயிராமல் அத்தேசத்தில் வழங்கின ஏறக்குறைய ௰௧-மரக்கால்கொள்ளத்தக்க கலமென்றறிக.—‡ அல்லது மம்மோன்.—§ அல்லது மம்மோன்.

௨௭ இவனை என் தகப்பனுடைய வீட்டுக்கு அனுப்
பும் என்று உம்மை வேண்டிக்கொள்ளுகிறேன்
௨௯ என்றான்.—அதற்கு ஆபிரகாம் சொன்னது: [1]அ
வர்களுக்கு மோசேயும் தீர்க்கதரிசிகளும் உண்
டே; அவர்களுக்குச் செவிகொடுக்கலாமே என்
௩௰ றான். — அவன் சொன்னது: அப்படியல்ல,
தகப்பனாகிய ஆபிரகாமே, மரித்தோரிலிருந்து
ஒருவன் அவர்களிடத்துக்குப் போனால் மனம்
௩௧ திரும்புவார்கள் என்றான்.—அதற்கு அவன் சொ
ன்னது: அவர்கள் மோசேயுக்கும் தீர்க்கதரிசி
களுக்கும் செவிகொடாமல் இருந்தால், [2]மரித்
தோரிலிருந்து ஒருவன் எழுந்துபோனாலும் சம்
மதிக்கமாட்டார்கள் என்று சொன்னான் என்றார்.

## ௰௭. அதிகாரம்.

௧. பிறருக்கு இடறல்செய்யாமலிருக்கவும், ௩. ஒருவருக்கொருவர் மன்னிக்கவும் கிறிஸ்து கற்பித்தது, ௫. விசுவாசத்தின் பலனைச் சொன்னது. ௭. நாம் பராபரனுக்கு அடங்கவேண்டியதேயொழிய அவர் நமக்கு அடங்கவேண்டியதில்லையென்பது. ௰௧. இயேசு பத்துக் குஷ்டரோகிகளைக் குணமாக்கி, ௨௰. பராபரனுடைய இராச்சியத்தையும் மனுஷகுமாரனுடைய வருகையையுங்குறித்துச் சொன்னது.

௧ அன்றியும் அவர் தம்முடைய சீஷருடனே
சொன்னதாவது: [3]குற்றம்செய்வதற்கான கார
ணங்கள் நடவாமல் இருக்கிறது கூடாத காரியந்
தான்; ஆனாலும் ஐயோ! அவைகளைச் செய்கிற
௨ வனுக்கு வேதனை வரும்.—அவன் இந்தச் சிறி
யரில் ஒருவன் குற்றம்செய்கிறதற்குக் காரண
மாய் இராதபடிக்கு அவனுடைய கழுத்திலே ஏந்
திரக்கல்லைக் கட்டிச் சமுத்திரத்திலே அமிழ்த்தி
௩ னால் அவனுக்கு நலமாய் இருக்கும்.—நீங்கள் சா
வதானமாயிருக்கக்கடவீர்கள்; [4]பிறனொருவன்
உனக்கு விரோதமாய்ப் பாவம்செய்தானானால்
அவனைக் கடிந்துகொள்; [5]அவன் மனஸ்தாபப்
௪ பட்டால் அவனுக்கு மன்னிப்பாயாக.—அவன்
ஒரு நாளிலே ஏழுதரம் உனக்கு விரோதமாய்ப்
பாவம்செய்து, ஒரு நாளிலே ஏழுதரம் உன்னி
டத்தில் வந்து, மனஸ்தாபப்படுகிறேன் என்று
சொன்னால், அவனுக்கு மன்னிப்பாயாக என்
றார்.

௫ அப்பொழுது அப்போஸ்தலர் கர்த்தரை நோக்
கி, விசுவாசம் எங்களுக்குள்ளே பெருகும்படி
௬ செய்யும் என்றார்கள்.—அதற்குக் கர்த்தர் சொன்
னது: [6]கடுகுவிதை அவ்வளவு விசுவாசம் உங்க
ளுக்கு உண்டாயிருந்தால், நீங்கள் இந்தக் காட்
டத்திமரத்தை நோக்கி, நீ வேருடனே பிடுங்கப்
பட்டுக் கடலில் நாட்டப்படுவாயாக என்று
சொல்ல, அது உங்களுக்குக் கீழ்ப்படியும்.

௭ அன்றியும் உங்களில் எவனாகிலும் உழுத
லையாவது மேய்த்தலையாவது செய்கிற (தன்)
வேலைக்காரனை வயலிலிருந்து வரக் (காணும்)
பொழுது நீ போய்ச் சாப்பிடு என்று உடனே
அவனுக்குச் சொல்லுவான்?—நீ எனக்காக இ ௮
ராப்போசனத்தை எத்தனம்பண்ணிக் கச்சைக்
கட்டிக்கொண்டு, நான் போசனபானம்பண்
ணுமளவும் [7]எனக்கு ஊழியம்செய்; பின்பு நீ
போசனபானம்பண்ணலாம் என்றல்லவா அவ
னுடனே சொல்லுவான்?—அந்த வேலைக்காரன் ௯
தனக்குக் கட்டளையிட்டவைகளைச் செய்கிற
படியினாலே எசமான் அவனை உபசாரம்செய்
வானா? அப்படிச் செய்யமாட்டான் என்று
நினைக்கிறேன். — அப்படிப்போல நீங்களும், ௰
உங்களுக்குக் கட்டளையிடப்பட்ட யாவையும்
செய்தபொழுதும், [8]நாங்கள் உபசாரம் பெற்
றுக்கொள்ளுதற்கான ஊழியக்காரர் அல்ல,
எங்களுக்குக்கட்டளையிடப்பட்டதைமாத்திரம்
செய்தோமே என்று சொல்லுவீர்களாக என்றார்.

[9]அன்றியும் அவர் எருசலேமுக்குப் பிரயா ௰௧
ணமாய்ப் போகையில், சமாரியா நாட்டின் வழி
யாயும் கலிலேயா நாட்டின் வழியாயும் நடந்து,—
ஒரு கிராமத்தில் பிரவேசிக்கிறபொழுது, குஷ் ௰௨
டரோகமுள்ள பத்துப்பேர் அவருக்கு எதிராக
வந்து [10]தூரத்திலே நின்று,—இயேசுவே, ஐயரே, ௰௩
எங்கள்மேல் இரங்கும் என்று கூப்பிட்டார்
கள்.—அவர்களை அவர் கண்டு [11]நீங்கள் போய், ௰௪
உங்களை ஆசாரியருக்குக் காண்பியுங்கள் என்
றார்; அந்தப்படி அவர்கள் போகையில் சுத்தமா
னார்கள்.—அப்பொழுது அவர்களில் ஒருவன் ௰௫
தான் ஆரோக்கியம் அடைந்ததைக் கண்டு,—
திரும்பி, மிகுந்த சத்தத்துடனே பராபரனைத் ௰௬
துதித்து, அவருடைய பாதத்தின் அருகே வணக்
கமாய் விழுந்து, அவருக்குத் தோத்திரம் செலுத்
தினான். — அவன் சமாரியா தேசத்தான்; அப் ௰௭
பொழுது இயேசுவானவர் சொன்னது: பத்துப்
பேரும் அல்லவோ சுத்தமானார்கள், ஒன்பதுபேர்
எங்கே?—பராபரனுக்குத் துதியைச் செலுத்தும் ௰௮
படிக்கு இந்த அந்நியனே ஒழிய மற்றொருவ
னும் திரும்பி வரவில்லையா என்று சொல்லி,—
அவனை நோக்கி, [12]நீ எழுந்துபோ, உன் விசுவா ௰௯
சம் உன்னை இரட்சித்தது என்றார்.

பராபரனுடைய இராச்சியம் எப்பொழுது ௨௰
வரும் என்று பரிசேயர் அவரிடத்தில் விசாரித்த
பொழுது, அவர் அவர்களுக்கு மறுமொழியாகச்
சொன்னது: பராபரனுடைய இராச்சியம் வே
டிக்கைப்பிரகாரமாக* வாராது.—[13]இதோ இங் ௨௧
கே என்றும், அதோ அங்கே என்றும் சொல்ல
மாட்டார்கள்; [14]பராபரனுடைய இராச்சியம்
உங்களுக்குள்† இருக்கின்றதே என்றார்.

பின்னும் சீஷருடனே அவர் சொன்னது: ௨௨
[15]மனிதகுமாரனுடைய நாள்களில் ஒன்றைக்

1 ஏசா. ௮. ௨௰: ௩௪. ௰௬. யோவா. ௫. ௩௯, ௪௫. அப். ௰௫. ௨௧: ௰௭. ௰௧.—2 யோவா. ௰௨. ௰, ௰௧. 3 மத். ௰௮. ௬, ௭. மாற். ௯. ௪௨. ௧ கொரி. ௰௧. ௰௯. 4 மத். ௰௮. ௰௫, ௨௧.—5 ௩ மோ. ௰௯. ௰௭. வாக். ௰௭. ௰. யாக். ௫. ௰௯. 6 மத். ௰௭. ௨௰: ௨௧. ௨௧. மாற். ௯. ௨௩: ௰௧. ௨௩.—7 லூக். ௰௨. ௩௭. 8 யோபு. ௨௨. ௩: ௩௫. ௭. சங். ௰௬. ௨. மத். ௨௫. ௩௰. உரோ. ௩. ௰௨: ௰௧. ௩௫. ௧ கொரி. ௯. ௰௬, ௰௭. பிலே. ௰௧.—9 லூக். ௯. ௫௧, ௫௨. யோவா. ௪. ௪.—10 ௩ மோ. ௰௩. ௪௬. 11 ௩ மோ. ௰௩. ௨: ௰௪. ௨. மத். ௮. ௪. லூக். ௫. ௰௪.—12 மத். ௯. ௨௨. மாற். ௫. ௩௪: ௰. ௫௨. லூக். ௭. ௫௰: ௮. ௪௮: ௰௮. ௪௨.—13 ௨௧. ௨௩. 14 உரோ. ௰௪. ௰௭.—15 மத். ௯. ௰௫. யோவா. ௰௭. ௰௨.

* அல்லது கண்ணோக்காண.—† அல்லது உங்கள் நடுவில்; யோவா. ௧. ௨௬.

காணும்படிக்கு நீங்கள் ஆசைப்படும் காலம்
௨௩ வரும், அதைக் காணாமல் இருப்பீர்கள்.—[1]அப்
பொழுது சிலர் உங்களை நோக்கி, இதோ இங்
கே இருக்கிறார் என்றும், அதோ அங்கே இருக்
கிறார் என்றும் சொல்லும் காலத்தில், நீங்கள்
புறப்படாமலும் பின்செல்லாமலும் இருங்கள்.-
௨௪ [2]மின்னானது வானத்தின் ஒரு பக்கத்திலிருந்து
மற்றொரு பக்கம்வரைக்கும் பிரகாசிக்கிறது
போல, மனிதனுடைய குமாரன் தன்னுடைய
௨௫ நாளில் இருப்பார். — அதற்கு [3]முன்பு அவர்
அநேகம் பாடுகளை அனுபவித்து, இந்தச் சந்ததி
யினாலே தள்ளப்படவேண்டியிருக்கின்றது.—
௨௬ [4]நோவாவின் நாள்களில் நடந்ததுபோல, மனித
௨௭ குமாரனுடைய நாள்களிலும் நடக்கும்.-நோவா
பேழைக்குள் பிரவேசித்த நாள்வரைக்கும் சனங்
கள் போசனபானம்பண்ணியும், பெண்கொண்
டும் பெண்கொடுத்தும் வந்தார்கள்; அந்நாளிலே
சலப்பிரளயம் வந்து எல்லாரையும் அழித்தது.—
௨௮ [5]லோத்தினுடைய நாள்களில் நடந்ததுபோல
வும் நடக்கும்; சனங்கள் போசனபானம்பண்
ணியும், பொருள்களைக் கொண்டும் விற்றும், செ
டிகளை நாட்டியும், (வீடுகளைக்) கட்டியும் வந்
௨௯ தார்கள்.—[6]லோத்தென்பவன் சோதோம் ஊரை
விட்டுப் புறப்பட்ட நாளிலே வானத்திலிருந்து
அக்கினியும் கந்தகமும் பெய்து எல்லாரையும்
௩௰ அழித்தது.—[7]மனிதனுடைய குமாரன் வெளிப்
௩௧ படும் நாளில் அப்படியே இருக்கும்.—[8]அந்த
நாளிலே வீட்டின்மேல் இருப்பவன் வீட்டுக்
குள் இருக்கிற தன் பண்டங்களை எடுத்துக்
கொண்டு போகும்படிக்கு இறங்காமல் போகக்
கடவன்; அன்றியும் வயலில் இருப்பவன் பின்
௩௨ னிட்டுத் திரும்பாமல் போகக்கடவன்.–[9]லோத்
௩௩ தினுடைய மனைவியை நினையுங்கள்.—[10]எவனா
னாலும் தன் சீவனை இரட்சித்துக்கொள்ளத் தே
டினால் அதை இழந்துபோவான்; எவனானாலும்
அதை இழந்தால் அதைக் காத்துக்கொள்ளு
௩௪ வான்.—[11]அந்த இராத்திரியில் ஒரே படுக்கை
யின்மேல் கிடக்கும் இரண்டுபேரில் ஒருவன்
பிடித்துக்கொள்ளப்படுவான், மற்றவன் விட்டு
௩௫ விடப்படுவான்.—மாவை அரைக்கும் இரண்டு
பெண்களில் ஒருத்தி பிடித்துக்கொள்ளப்படு
௩௬ வாள், மற்றவள் விட்டுவிடப்படுவாள்.*—வய
லில் இருக்கும் இரண்டுபேரில் ஒருவன் பிடித்
துக்கொள்ளப்படுவான், மற்றவன் விட்டுவிடப்
படுவான் என்று உங்களுக்குச் சொல்லுகிறேன்
௩௭ என்று சொன்னபொழுது,—அவர்கள் அவரை
நோக்கி, ஆண்டவரே, [12]எங்கே என்றார்கள்;
அதற்கு அவர் சொன்னது: பிணம் எங்கேயோ
அங்கே கழுகுகள் சேரும் என்றார்.

## ௰௮. அதிகாரம்.

௧. மிகவும் வேண்டிக்கொண்ட கைம்பெண்ணை உவமையாகக் காட்டி, ௯. பரிசேயனையும் ஆயக்காரனையும் குறித்துச் சொன்னது. ௰௫. குழந்தைகள் கிறிஸ்துவண்டைக்குக் கொண்டுவரப்பட்டது. ௰௮. கிறிஸ்துவைப் பின்பற்ற மனமுள்ள ஒரு தலைவன் தன் ஐசுவரியத்தினாலே தடைபட்டதைக்குறித்தது, ௨௮. அவர் தமதுநிமித்தம் எல்லாவற்றையும் வெறுக்கிறவர்களுக்கு உண்டாகும் பலனைக் காட்டி, ௩௧. தமது மரணத்தை முன்னறிவித்து, ௩௫. ஒரு குருடனுக்குப் பார்வை அளித்தது.

[13]அன்றியும் அவர்கள் சோர்ந்துபோகாமல், எப் ௧
பொழுதும் செபம்பண்ண வேண்டுவதைக்கு
றித்து அவர் அவர்களுக்குச் சொன்ன உவமை
யாவது:—ஒரு பட்டணத்திலே† ஒரு நியாயாதி ௨
பதி பராபரனுக்குப் பயப்படாமலும் மனிதரை
எண்ணாமலும் இருந்தான்.–அல்லாமலும் அந்தப் ௩
பட்டணத்திலே ஒரு கைம்பெண் இருந்தாள்;
அவள் அவனிடத்தில் போய், எனக்கு விரோ
தியானவனிடத்தில் பழிவாங்கவேண்டும் என்
றாள். — அவன் அநேகநாள் மனதில்லாதிருந் ௪
தான்; பின்பு அவள் அவனிடத்தில் அதிகமாய்க்
கேட்டபடியினாலே அவன் தனக்குள்ளே எண்
ணினது, நான் பராபரனுக்குப் பயப்படாமலும்
மனிதரை எண்ணாமலும் இருந்தும்,—[14]இந்தக் ௫
கைம்பெண் என்னைத் தொந்தரவுபண்ணுகிறப
டியால் நான் இவளுக்காகப் பழிவாங்கவேண்
டும்; இல்லாவிட்டால் இவள் எப்பொழுதும்
வந்து என்னை வருத்தப்படுத்துவாள் என்று எண்
ணினான் என்று கர்த்தர் சொல்லி,—பின்பு அநீ ௬
தியுள்ள அந்த நியாயாதிபதி சொன்னதைச் சிந்
தியுங்கள்.—[15]அந்தப்படி பராபரன் தாம் தெரிந் ௭
துகொண்டவர்களைக்குறித்துத் தாமதித்துத் தம்
மை நோக்கி இரவும் பகலும் கூப்பிடுகிற அவர்
களுக்காகப் பழிவாங்காமல் இருப்பாரா? —
[16]சீக்கிரத்தில் அவர்களுக்காகப் பழிவாங்குவார் ௮
என்று உங்களுக்குச் சொல்லுகிறேன்; ஆகிலும்
மனிதனுடைய குமாரன் வரும்பொழுது பூமி
யிலே விசுவாசத்தைக் காண்பாரோ என்றார்.

[17]அன்றியும் தங்களை நீதிமான்கள்‡ என்று ௯
நம்பி, மற்றவர்களை அற்பமாய் எண்ணின சில
ருக்கு அவர் சொன்ன உவமையாவது:–இரண்டு ௰
மனிதர் செபம்பண்ணும்படிக்குத் தேவாலயத்
திற்குப் போனார்கள்; அவர்களில் ஒருவன் பரி
சேயன், மற்றவன் ஆயக்காரன்.—[18]பரிசேயனா ௰௧
னவன் தனித்து நின்று பண்ணின செபமாவது:
[19]பராபரனே, நான் பறிகாரர், அநீதர், விபசா
ரர், இப்படிப்பட்ட மற்ற மனிதரைப்போலவும்
இந்த ஆயக்காரனைப்போலவும் இராதவனான
படியினாலே உமக்குத் தோத்திரம்செலுத்துகி
றேன்.—வாரத்துக்குள்ளே இரண்டுதரம் உபவா ௰௨
சிக்கிறேன்; எனக்குண்டான யாவற்றிலும் பத்
தில் ஒன்றைச் செலுத்துகிறேன் என்றான்.—

1 மத். ௨௪. ௨௩. மாற். ௰௩. ௨௧. லூக். ௨௧. ௮.—2 மத். ௨௪. ௨௭. 3 மாற். ௮. ௩௧: ௯. ௩௧: ௰. ௩௩. லூக். ௯. ௨௨.–4 ௧ மோ. ௭. மத். ௨௪. ௩௭. 5 ௧ மோ. ௰௯.—6 ௧ மோ. ௰௯. ௰௬, ௨௪.—7 ௨ தெச. ௧. ௭.—8 மத். ௨௪. ௰௭. மாற். ௰௩. ௰௫.–9 ௧ மோ. ௰௯. ௨௬.—10 மத். ௰. ௩௯: ௰௬. ௨௫. மாற். ௮. ௩௫. லூக். ௯. ௨௪. யோவா. ௰௨. ௨௫.—11 மத். ௨௪. ௪௰, ௪௧. ௧ தெச. ௪. ௰௭. 12 யோபு. ௩௯. ௩௰. மத். ௨௪. ௨௮. 13 லூக். ௰௧. ௫: ௨௧. ௩௬. ரோ. ௰௨. ௰௨. எபே. ௬. ௰௮. கொலோ. ௪. ௨. ௧ தெச. ௫. ௰௭.–14 லூக். ௰௧. ௮.—15 வெளி. ௬. ௰.–16 எபி. ௰. ௩௭. ௨ பே. ௩. ௮, ௯. 17 லூக். ௰. ௨௯: ௰௬. ௰௫. 18 சங். ௩௫. ௨.—19 ஏசா. ௧. ௰௫: ௫௮. ௨. வெளி. ௩. ௰௭.

* இந்த வசனம் கிரேக்கபாஷையில் அநேகம் பிரதிகளில் இல்லை.—† அல்லது ஒரு குறித்தபட்டணத்திலே.—‡ அல்லது நீதியுள்ளவர்களென்று.

௰௩ பின்பு ஆயக்காரன் தூரமாய் நின்று தன் கண்க
ளையும் வானத்துக்கு உயர்த்தத் துணியாமல், தன்
மார்பிலே அடித்துக்கொண்டு, பராபரனே, பாவி
யாகிய என்மேல் இரக்கமாயிரும் என்றான்.—
௰௪ அவன் அல்ல, இவனே நீதிமானாக்கப்பட்டவ
னாய்த் தன் வீட்டுக்குத் திரும்பினான் என்று உங்
களுக்குச் சொல்லுகிறேன்; [1]தன்னை உயர்த்து
கிறவன் தாழ்த்தப்படுவான்; தன்னைத் தாழ்த்து
கிறவனே உயர்த்தப்படுவான் என்றார்.
௰௫ [2]பின்பு குழந்தைகளை அவர் தொடும்படிக்கு அ
வரிடத்தில் கொண்டுவந்தார்கள்; சீஷர் அதைக்
௰௬ கண்டு அவர்களை அதட்டினார்கள்.—இயேசுவா
னவர் அவைகளைக் கொண்டுவரும்படி கட்டளை
யிட்டுச் சொன்னது: பிள்ளைகள் என்னிடத்தில்
வருகிறதற்குத் தடைபண்ணாமல் இடங்கொடுங்
கள்; [3]பராபரனுடைய இராச்சியம் அப்படிப்
௰௭ பட்டவர்களை உடையதே.—[4]எவனாகிலும் பிள்
ளையைப்போலப் பராபரனுடைய இராச்சியத்
தை ஏற்றுக்கொள்ளாவிட்டால், அதில் பிரவே
சிக்கமாட்டான் என்றார்.
௰௮ [5]அப்பொழுது தலைவனொருவன் அவரை
நோக்கி, நல்ல போதகரே, நித்திய சீவனைச் சுதந்
தரித்துக்கொள்ளும்படிக்கு நான் என்னசெய்ய
௰௯ வேண்டும் என்று கேட்டான்.—அதற்கு இயே
சுவானவர் சொன்னது: நீர் என்னை நல்லவர்
என்று ஏன் சொல்லுகிறீர்? பராபரன் ஒருவரே
அல்லாமல் மற்றொருவனும் நல்லவன் அல்ல
௨௰ வே.—[6] விபசாரம் பண்ணாதிருப்பாயாக, கொ
லைசெய்யாதிருப்பாயாக, களவுசெய்யாதிருப்பா
யாக, பொய்ச்சாட்சி சொல்லாதிருப்பாயாக,
[7]உன் தகப்பனையும் உன் தாயையும் கனம்பண்
ணுவாயாக என்று சொல்லுகிற கற்பனைகளை
௨௧ அறிந்திருக்கிறீரே என்றார். — அதற்கு அவன்
அவைகளை எல்லாம் என் சிறுவயதுமுதல் கைக்
௨௨ கொண்டிருக்கிறேன் என்றான்.—இயேசுவான
வர் அதைக் கேட்டு அவனுடனே சொன்னது:
பின்னும் ஒன்றை நீர் செய்யவேண்டியதாயிருக்
கின்றது; [8]உமக்கு உண்டானவைகளை எல்லாம்
நீர் விற்றுப் பரமண்டலத்திலே உமக்குப் பொக்
கிஷம் உண்டாயிருக்கும்படிக்குத் தரித்திரருக்
குப் பங்கிட்டுக் கொடுத்துப் பின்பு வந்து எனக்
௨௩ குப் பின்செல்லவேண்டும் என்றார். — அவன்
மிகுந்த ஐசுவரியவான் ஆனபடியினாலே அந்த
வசனத்தைக் கேட்டபொழுது, மிகுந்த துக்கம்
அடைந்து (போனான்).
௨௪ அவன் மிகுந்த துக்கம் அடைந்ததை இயேசு
வானவர் கண்டு சொன்னதாவது: [9]ஆஸ்திகளை
உடையவர்கள் பராபரனுடைய இராச்சியத்தில்
௨௫ பிரவேசிப்பது மிகவும் அரிது. — ஒட்டகமா
னது ஒரு ஊசியின் காதிலே நுழைவது எளிதா
னால், ஐசுவரியவான் பராபரனுடைய இராச்சி
யத்தில் பிரவேசிக்கிறதும் எளிதாயிருக்கும் என்
றார்.—அதைக் கேட்டவர்கள் சொன்னது: அப் ௨௬
படியானால் யார் இரட்சிக்கப்படுவார்கள் என்
றார்கள். — அதற்கு அவர் சொன்னது: [10]மனித ௨௭
ரால் ஆகமாட்டாதவைகள் பராபரனாலே ஆகும்
என்றார்.
[11]அப்பொழுது பேதுரு அவரை நோக்கி, ௨௮
இதோ நாங்கள் எல்லாவற்றையும்விட்டு உமக்
குப் பின்சென்று வருகிறோம் என்றான்.—அதற்கு ௨௯
அவர் சொன்னது: [12]பராபரனுடைய இராச்சி
யத்தின் நிமித்தமாக வீட்டையாவது, தாய்தகப்
பன்மாரையாவது, சகோதரரையாவது, மனைவி
யையாவது, பிள்ளைகளையாவது விட்ட யாவ
ரும்,—[13]இம்மையிலே அதிக மடங்காயும் மறுமை ௩௰
யிலே நித்தியசீவனையும் அடையாமல் இருப்ப
தில்லை என்றார்.
பின்பு [14]அவர் பன்னிருவரைச் சேர்த்துக் ௩௧
கொண்டு அவர்களுடனே சொன்னது: இதோ,
எருசலேமுக்குப் போகிறோம்; அங்கே மனிதனு
டைய குமாரனைக்குறித்துத் [15]தீர்க்கதரிசிகளால்
எழுதப்பட்ட யாவும் நிறைவேறும்.—[16]எப்படி ௩௨
யெனில் அவன் புறத்தேசத்தாருக்கு ஒப்புக்கொ
டுக்கப்பட்டு, பரியாசமும் நிந்தையும் அடைந்து,
துப்பப்படுவான்.—அல்லாமலும் அவனை வாரி ௩௩
னால் அடித்துக் கொலைசெய்வார்கள். மேலும்
மூன்றாம் நாளிலே உயிரோடு எழுந்திருப்பான்
என்றார்.—[17]அவர்கள் இவைகளில் ஒன்றையும் ௩௪
உணரவில்லை; அவைகளின் பொருள் அவர்க
ளுக்கு மறைவாயிருந்தது; அவர் சொன்னவை
களை அறியாமல் இருந்தார்கள்.
[18]அவர் எரிகோ ஊருக்குச் சமீபமானபொ ௩௫
ழுது, வழியருகே உளுக்காந்து பிச்சை கேட்டுக்
கொண்டிருக்கிற ஒரு குருடன், — சனங்கள் ௩௬
நடக்கிறதைக் கேள்விப்பட்டு, இது என்ன
வென்று விசாரித்தான். — நாசரேத்தூரானாகிய ௩௭
இயேசு நடந்துபோகிறார் என்று அவனுக்கு அறி
வித்தார்கள்.—அப்பொழுது அவன், இயேசுவே, ௩௮
தாவீதின் குமாரனே, எனக்கு இரங்கும் என்று
அதிகமாய்க் கூப்பிட்டான்.—முன் நடப்பார் ௩௯
அவன் பேசாமல் இருக்கும்படிக்கு அவனை
அதட்டினார்கள்; அவன், தாவீதின் குமாரனே,
எனக்கு இரங்கும் என்று அதிகமாய்க் கூப்பிட்
டான் —அப்பொழுது இயேசுவானவர் நின்று, ௪௰
அவனைத் தம்மிடத்தில் கொண்டுவரும்படி கட்
டளையிட்டார்; அவன் கிட்ட வந்தபொழுது
அவர் அவனை நோக்கி,—நான் உனக்கு என்ன ௪௧
செய்யவேண்டும் என்று இருக்கிறாய் என்றார்;
அதற்கு அவன் ஆண்டவரே, நான் பார்வை
அடையும்படி செய்யவேண்டும் என்றான். —

1 யோபு. ௨௨.௨௯. மத். ௨௩.௰௨. லூக். ௰௪. ௰௧. யாக். ௪.௬. ௧ பே. ௫.௫, ௬.—2 மத். ௰௯.௰௩. மாற். ௰.௰௩.—3 ௧ கொரி. ௰௪. ௨௰. ௧ பே. ௨.௨.—4 மாற். ௰.௰௫. 5 மத். ௰௯.௰௬. மாற். ௰.௰௭. 6 ௨ மோ. ௨௰.௰௨, ௰௩. ௫ மோ. ௫. ௰௬, ௨௰. உரோ. ௰௩. ௯. 7 எபே. ௬. ௨. கொலோ. ௩. ௨௰. 8 மத். ௬.௰௯,௨௰:௰௯.௨௧. ௧ தீமோ. ௬. ௰௯.—9 மாற். ௰௭. ௨௩. மத். ௰௯.௨௪. மாற். ௰.௨௪.—10 எரே. ௩௨. ௰௭. சகரி. ௮. ௬. மத். ௰௯. ௨௬. லூக். ௧. ௩௭.—11 மத். ௰௯. ௨௭.—12 ௫ மோ. ௩௩. ௯. 13 யோபு. ௪௨.௰.—14 மத். ௰௬.௨௧: ௰௭. ௨௨: ௨௰. ௰௭. மாற். ௰. ௩௨. 15 சங். ௨௨. ஏசா. ௫௩.—16 மத். ௨௭. ௨. லூக். ௨௪. ௬. யோவா. ௰௮: ௨௮. அப். ௩. ௰௩.—17 மாற். ௯. ௩௨. லூக். ௨. ௫௰: ௯. ௪௫. யோவா. ௰. ௬: ௰௨. ௰௬. 18 மத். ௨௰. ௨௯. மாற். ௰. ௪௬.

௪௨ இயேசுவானவர் அவனை நோக்கி, நீ பார்வை
அடைவாயாக; [1]உன் விசுவாசம் உன்னை இரட்
௪௩ சித்தது என்றார். — உடனே அவன் பார்வை
அடைந்து [2]பராபரனைப் புகழ்ந்து அவருக்குப்
பின்சென்றான்; அதைக் கண்ட சனங்கள் எல்
லாரும் பராபரனுக்குத் துதிசெலுத்தினார்கள்.

## ௰௯. அதிகாரம்.

௧. ஆயக்காரனான சக்கேயுவைக்குறித்துச் சொல்லியது. ௰௧. பத்து இராத்தல் வெள்ளியைப் பெற்ற ஊழியக்காரனை உவமையாகக் காட்டியது. ௨௮. கிறிஸ்து கெம்பீரமாய் எருசலேமுக்குள் பிரவேசிக்கையில், ௪௧. அதைக்குறித்து அழுதது, ௪௫. தேவாலயத்தில் விற்கிறவர்களையும் கொள்ளுகிறவர்களையும் துரத்தி, ௪௭. அதிலே சாயங்காலம் உபதேசித்தது. அதிகாரிகள் அவரைக் கொலைசெய்ய விரும்பிச் சனங்களுக்கு அஞ்சினதினாலே கூடாமற் போயினது.

௧ பின்பு அவர் எரிகோ ஊரில் பிரவேசித்து, அப்
௨ புறம் நடந்துபோனார். — அப்பொழுது ஆயக்
காரருக்குத் தலைவனுமாய் ஐசுவரியவானுமாய்
இருந்த சக்கேயு என்னப்பட்ட மனிதன், இயே
சுவானவரை அறியும்படிக்கு அவரைப் பார்க்க
௩ வகைதேடினான். — அவன் குட்டையனானபடி
யால் சனக்கூட்டத்திலே அவரைக் காணக்கூ
௪ டாமல் இருந்தது. — அப்பொழுது அவன் அவ
ரைப் பார்க்கும்படிக்கு முன்னாக ஓடி, அவர்
செல்லுகிற வழியிலே நிற்கின்ற காட்டத்திமரத்
௫ தின்மேல் ஏறினான். — இயேசுவானவர் அந்த
இடத்தில் சென்றபொழுது, அண்ணாந்துபார்த்து
அவனைக் கண்டு, சக்கேயுவே, இன்றைக்கு நான்
உன் வீட்டிலே தங்கவேண்டும், ஆகையால் நீ
௬ சீக்கிரமாய் இறங்கிவா என்றார். — அந்தப்படி
அவன் சீக்கிரமாய் இறங்கிச் சந்தோஷத்தோடே
௭ அவருக்கு உபசாரம்செய்தான். — அதைக் கண்ட
அனைவரும் சொன்னது: [3]இவர் பாவியான
மனிதனிடத்திலே தங்கும்படிக்குப் போகிறார்
௮ என்று மொறுமொறுத்தார்கள். — சக்கேயு என்ப
வன் நின்று கர்த்தரை நோக்கி, ஆண்டவரே, என்
ஆஸ்திகளில் பாதியை ஏழைகளுக்குக் கொடுக்
கிறேன்; அல்லாமலும் [4]நான் ஒருவனிடத்தில்
எதையாகிலும் அநியாயமாய் எடுத்திருந்தேனா
னால் [5]நாலுமடங்காய்ப் பதில் செலுத்துகிறேன்
௯ என்றான். — அப்பொழுது இயேசுவானவர் அவ
னைக்குறித்துச் சொன்னது: [6]இழந்துபோனதைத்
தேடி இரட்சிக்கும்படிக்கு மனிதனுடைய குமா
ரன் வந்திருக்கிறபடியினாலே, [7]இன்றைக்கு இந்
தக்குடும்பத்திற்கு இரட்சிப்பு உண்டாயிற்று. —
௰ [8]இவனும் ஆபிரகாமினுடைய சந்ததியான் அல்
லவா என்றார்.

௰௧ அன்றியும் அவர்கள் இவைகளைக் கேட்டுக்
கொண்டிருக்கையில், அவர் எருசலேமுக்குச்
சமீபமானபடியினாலும், [9]பராபரனுடைய ஆளு
கை சீக்கிரமாகக் காணப்படும் என்று அவர்கள்
நினைத்தபடியினாலும் அவர் சொன்ன உவமை
யாவது: — [10]உயர்குலத்தானாகிய ஒருவன் ஒரு இ ௰௨
ராச்சியத்தைப் பெற்றுக்கொண்டு, பின்பு திரும்
பிவரும்படிக்குத் தூரதேசத்துக்குப் போக மன
தாய், — தன்னுடைய பத்து ஊழியக்காரரை ௰௩
அழைத்து, அவர்களுக்குப் பத்து இராத்தல் * திர
வியம் கொடுத்து, நான் வருகிறவரைக்கும் இதி
னாலே தொழில் செய்யுங்கள் என்று சொல்லிப்
போனான். — [11]அவனுடைய பட்டணத்தார் அ ௰௪
வனைப் பகைத்து, அவன் எங்களை ஆளுகை
செய்ய எங்களுக்கு மனதில்லை என்று சொல்லும்
படிக்கு, அவனுக்குப் பின்னாகத் தானாதிபதிகளை
அனுப்பினார்கள். — அப்படியிருந்தும் அவன் ௰௫
இராச்சியத்தைப் பெற்றுக்கொண்டு திரும்பி
வந்து, தான் திரவியம் கொடுக்கப்பெற்றிருந்த
அந்த ஊழியக்காரர் தொழில் செய்ததினாலே
ஆதாயமாக்கிக்கொண்டது இவ்வளவென்று அறி
யும்படிக்கு, அவர்களைத் தன்னிடத்திற்கு அ
ழைத்துவரச் சொன்னான். — அந்தப்படியே முந் ௰௬
தினவன் சேர்ந்து, ஆண்டவனே, உம்முடைய
இராத்தல் பத்து இராத்தலை ஆதாயம் பண்ணிற்று
என்றான். — அவனுடனே எசமான் சொன்னது: ௰௭
நல்லது உத்தம ஊழியக்காரனே, [12]நீ கொஞ்சத்
திலே உண்மையாய் இருந்தபடியினாலே பத்துப்
பட்டணங்களுக்கு அதிகாரியாய் இரு என்
றான். — பின்பு இரண்டாம் ஊழியக்காரன் ௰௮
சேர்ந்து, ஆண்டவனே, உம்முடைய இராத்தல்
ஐந்து இராத்தலை ஆதாயம்பண்ணிற்று என்
றான். — அவனுடனேயும் அவன் சொன்னது: ௰௯
நீயும் ஐந்து பட்டணங்களுக்கு அதிகாரியாயிரு
என்றான். — பின்பு வேறொருவன் சேர்ந்து ஆண் ௨௰
டவனே, [13]நீர் வையாததை எடுக்கிறவருமாய்
விதையாததை அறுக்கிறவருமாய் இருக்கிற கடி
னமுள்ள மனிதனாயிருக்கிறதை நான் அறிந்து,
உமக்குப் பயப்பட்டபடியினாலே, — உம்மு ௨௧
டைய இராத்தலை ஒரு சேலையிலே வைத்துக்
கொண்டேன்; இதோ, அது இருக்கின்றது
என்றான். — அவனுடனே அவர் சொன்னது: ௨௨
பொல்லாத ஊழியக்காரனே, [14]உன் வாக்கின்
படி உனக்கு நியாயத்தீர்ப்புக் கொடுக்கிறேன்;
[15]நான் வையாததை எடுக்கிறவனுமாய், விதை
யாததை அறுக்கிறவனுமாய் இருக்கிற கடின
முள்ள மனிதன் என்று அறிந்தாயே. — ஆகை ௨௩
யால் நான் திரும்பி வருகிறபொழுது, என் திர
வியத்தை வட்டியோடே பெற்றுக்கொள்ளும்
படிக்கு, நீ அதை (வட்டிக்காக) காசுக்கடையி
லே ஏன் கொடுக்கவில்லை என்று சொல்லி, — சமீ ௨௪
பமாய் நிற்கிறவர்களை நோக்கி, நீங்கள் அந்த
இராத்தலை இவனிலிருந்து எடுத்துப் பத்து இராத்
தல் உள்ளவனுக்குக் கொடுங்கள் என்று கட்ட
ளையிட்டபொழுது, — அவர்கள், ஆண்டவனே, ௨௫

1 லூக். ௰எ.௰௯. — 2 லூக். ௫.௨௬. அப். ௪. ௨௨: ௰௧.௰௮. 3 மத். ௯.௰௧. லூக். ௫.௩௰. — 4 லூக். ௩. ௰௪. — 5 ௨ மோ. ௨௨ ௧. ௧ சாமு. ௰௨.௩. ௨ சாமு. ௰௨. ௬. 6 மத். ௰௮.௰௧. மத். ௰. ௬: ௰௫. ௨௪. 7 ௨ கோ. ௪. ௰௧, ௰௨. ௰௬. கலா. ௩. ௭.

8 லூக். ௰௩.௰௬. — 9 அப். ௧.௬. 10 மத். ௨௫. ௰௪. மாற். ௰௩. ௩௪. 11 யோவா. ௧. ௰௧. 12 மத். ௨௫. ௨௧. லூக். ௰௬.௰. 13 மத். ௨௫. ௨௪. 14 ௨ சாமு. ௧.௰௬. யோபு. ௰௫. ௬. மத்.௰௨.௩௭. — 15 மத். ௨௫. ௨௬.

* ஒரு இராத்தல் Mina (மினா) ரூபாயம்.

அவனுக்குப் பத்து இராத்தல் உண்டே என்ன,—
௨௬ அவன் பின்னும் சொன்னது: நான் உங்களுக்
குச் சொல்லுகிறதாவது: [1]உள்ளவனுக்குக் கொ
டுக்கப்படும்; இல்லாதவனுக்கு உண்டாயிருக்கி
௨௭ றதும் அவனிலிருந்து எடுக்கப்படும்.—அன்றி
யும் நான் தங்களுக்கு இராசாவாயிருக்க மனதில்
லாமல் எனக்குச் சத்துருக்களான அவர்களை
இங்கே கொண்டுவந்து, எனக்கு முன்பாக வெட்
டிப்போடுங்கள் என்று சொன்னான் என்றார்.—
௨௮ இவைகளை அவர் சொன்ன பின்பு, [2]அவர்
எருசலேமுக்குப் போகும்படி முன்னே நடந்
தார்.
௨௯ [3]அப்படி அவர் ஒலிவமலை என்னப்பட்ட
மலையின் அருகே இருக்கிற பெத்பாகே ஊருக்
கும், பெத்தானியா ஊருக்கும் சமீபமானபொ
ழுது, அவர் தம்முடைய சீஷரில் இருவரை
௩௰ நோக்கி,—அதோ உங்களுக்கு எதிராயிருக்கிற
கிராமத்துக்குப் போங்கள்; அதில் பிரவேசிக்
கும்பொழுது, மனிதரில் ஒருவனாகிலும் ஒருக்கா
லும் ஏறாத கழுதைக்குட்டியைக் கட்டியிருக்கக்
காண்பீர்கள்; அதை அவிழ்த்துக்கொண்டுவா
௩௧ ருங்கள்.—இதை ஏன் அவிழ்க்கிறீர்கள் என்று
ஒருவன் உங்களிடத்தில் கேட்டால், ஆண்ட
வருக்கு இது வேண்டும் என்று அவனுக்குச்
சொல்லுங்கள் என்றார்.
௩௨ அந்தப்படி அனுப்பப்பட்டவர்கள் போய்,
தங்களுக்கு அவர் சொன்ன பிரகாரமாகக் கண்
௩௩ டார்கள்.-கழுதைக் குட்டியை அவர்கள் அவிழ்க்
கிறபொழுது, அதின் எசமான்கள் அவர்களை
நோக்கி, குட்டியை ஏன் அவிழ்க்கிறீர்கள் என்
௩௪ றார்கள்.-அதற்கு அவர்கள், ஆண்டவருக்கு இது
௩௫ வேண்டும் என்று சொல்லி,—அதை இயேசுவி
னிடத்திற்குக் கொண்டுவந்து, [4]தங்கள் வஸ்தி
ரங்களைக் குட்டியின்மேல் போட்டு, இயேசுவை
௩௬ அதின்மேல் ஏற்றினார்கள்.—அப்படி அவர் போ
கையில், [5]அவர்கள் தங்கள் வஸ்திரங்களை வழி
௩௭ யிலே விரித்தார்கள்.-அல்லாமலும் அவர் ஒலீவ
மலையின் அடிவாரமாய்ச் சேர்ந்து வருகிறபொ
ழுது, சீஷரின் கூட்டத்தார் எல்லாரும் தாங்கள்
கண்ட சகல அற்புதங்களையும் குறித்துச் சந்தோ
ஷப்பட்டு, மிகுந்த சத்தத்துடனே பராபரனைத்
துதிக்கத் தொடங்கி, [6]பராபரனுடைய நாமத்
தினாலே வருகிற இராசா தோத்திரிக்கப்பட்ட
௩௮ வர்.—[7]பரமண்டலத்தில் சமாதானசவுக்கியமும்,
உன்னதங்களில் புகழ்தலும் உண்டாவதாக என்
௩௯ றார்கள்.—அப்பொழுது கூட்டத்திலிருந்த பரி
சேயரில் சிலர் அவரை நோக்கி, போதகரே, நீர்
உம்முடைய சீஷரை அதட்டவேண்டும் என்
௪௰ றார்கள்.—அவர்களுக்கு மறுமொழியாக அவர்
சொன்னது: இவர்கள் பேசாமல் இருந்தால் [8]கற்
களே கூப்பிடும் என்று உங்களுக்குச் சொல்லு
கிறேன் என்றார்.
அன்றியும் அவர் பட்டணத்துக்குச் சமீபமா ௪௧
னபொழுது, [9]அவர் அதைப் பார்த்து, அதைக்
குறித்துக் கண்ணீர்விட்டு, நீ உனக்குக் கிடைத்த
இந்த நாளிலே உன் சமாதானத்துக்கு ஏற்றவைக
ளைச் சிந்தித்துக்கொண்டால், நலமாயிருக்கும்.-
இப்பொழுது அவைகள் உன் கண்களுக்கு மறை ௪௨
வாயிருக்கின்றன.—உன்னைச் சந்திக்கும் காலத் ௪௩
தை [10]நீ சிந்தித்துக்கொள்ளாமல் இருக்கிறபடியி
னாலே,[11] உன் சத்துருக்கள் உன்னைச் சூழ மதிள்
போட்டு, உன்னை வளைந்துகொண்டு,—எங்கும் ௪௪
உன்னை இறுகப் பிடித்து, [12]உன்னையும் உன்னில்
உள்ளவர்களையும் தரையாக்கி, [13]உன்னிடத்தில்
ஒரு கல் மற்றொரு கல்லின்மேல் இராதபடிக்குச்
செய்யும் நாள்கள் உனக்கு வரும் என்றார்.
[14]பின்பு அவர் தேவாலயத்தில் பிரவேசித்து,- ௪௫
அதிலே விற்கிறவர்களையும் கொள்ளுகிறவர்களை ௪௬
யும் நோக்கி, [15]நம்முடைய ஆலயம் செபம்பண்
ணுதற்கான ஆலயம் என்று எழுதியிருக்கின்றதே;
[16]நீங்கள் இதைக் கள்ளர்குகையாக்கினீர்கள் என்
று சொல்லி, அவர்களைப் புறம்பே துரத்தினார்.
அல்லாமலும் நாடோறும் அவர் தேவாலயத் ௪௭
தில் உபதேசம்பண்ணிக்கொண்டிருந்தார்;[17] அப்
பொழுது பிரதான ஆசாரியரும் வேதபாரகரும்
சனத்தின் மூப்பரும் அவரைக் கொலைசெய்ய
வகைதேடி,—சனங்கள் எல்லாரும் மிகுந்த சிந் ௪௮
தையோடே அவருக்குச் செவிகொடுத்தபடி
யினாலே* வகையைக் காணாமல்போனார்கள்.

## ௨௰. அதிகாரம்.

௧. ஆட்சேபித்த பரிசேயருக்குக் கிறிஸ்து தமது அதிகாரத்தை யோவானின் ஞானஸ்நானத்தைக்குறித்த கேள்வியினாலே ஸ்தாபித்தது. ௯. திராட்சத் தோட்டக்காரரை உவமையாக எடுத்துச் சொன்னது. ௰௯. இராயனுக்கு வரிசெலுத்துவதைக்குறித்துச் சொன்னது. ௨௭. உயிர்த்தெழுதல் இல்லையென்ற சதுசேயருக்கு அதை உண்டென்று எண்பித்தது. ௪௧. கிறிஸ்து தாவீதின் குமாரனென்று அறிவித்ததைச் சொன்னது. ௪௫. வேதபாரகரைக்குறித்துச் சீஷர்களை எச்சரித்தது.

[18]அந்நாள்களில் ஒருநாளிலே, அவர் தேவால ௧
யத்தில் சனங்களுக்கு உபதேசம்பண்ணிச் சுவி
சேஷத்தைப் பிரசங்கிக்கிறபொழுது, பிரதான
ஆசாரியரும் வேதபாரகரும் மூப்பரும் அவருக்
கு விரோதமாய் வந்து நின்று,—அவரை நோக்கி, ௨
[19]நீர் எந்த அதிகாரத்தினால் இவைகளைச் செய்கி
றீர்? இப்படிப்பட்ட அதிகாரத்தை உமக்குக்
கொடுத்தவர் இன்னார் என்று எங்களுக்குச்சொல்
லும் என்றார்கள்.—அதற்கு மாறுத்தரமாக அவர் ௩
சொன்னது: நானும் உங்களிடத்தில் ஒரே வினா
வைக் கேட்பேன்.— என்னவென்றால், யோ ௪
வான் கொடுத்த ஸ்நானம் தேவனால் உண்டாயிற்
றோ, மனிதரால் உண்டாயிற்றோ, அதை எனக்
குச் சொல்லுங்கள் என்றார்.-அப்பொழுது அவர் ௫

1 மத். ௰௩. ௰௨: ௨௫. ௨௯. மாற். ௪. ௨௫. லூக். ௮. ௰௮.—2 மாற். ௰. ௩௨. மத். ௨௧. ௧.-3 மாற். ௰௧. ௧. 4 ௨ இரா. ௯. ௰௩. மத். ௨௧. ௭. மாற். ௰௧. ௭. யோவா. ௰௨. ௰௪. 5 மத். ௨௧. ௮.—6 சங். ௱௰௮. ௨௬. லூக். ௰௩. ௩௫.—7 லூக். ௨. ௰௪. எபே. ௨. ௰௪.—8 ஆப. ௨. ௰௧. 9 யோவா. ௰௧. ௩௫.—10 தானி. ௯. ௨௪. லூக். ௧. ௬௮, ௭௮. ௧ பே. ௨. ௰௨.—11 ஏசா. ௨௯. ௩, ௪. ௰௧. ௰௧, ௰௫. யோவா. ௨. ௰௪, ௰௫. எரே. ௬. ௩, ௬. லூக். ௨௧. ௨௰. 12 ௧ இரா. ௯. ௭, ௮. மீகா. ௩. ௰௨. 13 மத். ௨௪. ௨. மாற். ௰௩. ௨. லூக். ௨௧. ௬.—14 மத். ௨௧. ௰௨. மாற். 15 ஏசா. ௫௬. ௭.—16 எரே. ௭. ௰௧. 17 மாற். ௰௧. ௰௮ யோவா. ௭. ௰௯: ௮. ௩௭.—18 மத். ௨௧. ௨௩. 19 அப். ௪. ௭: ௭. ௨௭.

* அல்லது அவரில் பற்றினபடியினாலே; அப். ௰௬. ௰௪.

கள் தங்களுக்குள்ளே யோசனைபண்ணினதாவ
௫ து:-தேவனால் உண்டாயிற்றென்று நாம் சொன்
னால், நீங்கள் அவனை ஏன் விசுவாசிக்கவில்லை
என்பார்; அது மனிதரால் உண்டாயிற்றென்று
நாம் சொன்னால், எல்லாச் சனங்களும் யோவா
னைத் [1]தீர்க்கதரிசி என்று எண்ணிக்கொள்ளுகிற
படியினாலே, நமதுமேல் கல்லெறிவார்கள் என்
௭ று யோசனைபண்ணி,—பின்பு அது வந்த விதம்
௮ எங்களுக்குத் தெரியாது என்றார்கள்.—அதற்கு
இயேசுவானவர் சொன்னது: அப்படியானால்,
நான் இன்ன அதிகாரத்தினாலே இவைகளைச்
செய்கிறேன் என்று நானும் உங்களுக்குச் சொல்
லமாட்டேன் என்றார்.
௯ பின்பு அவர் சனங்களுடனே சொன்ன உவ
மையாவது: [2]ஒரு மனிதன் திராட்சத்தோட்டத்
தை உண்டாக்கி, அதைத் தோட்டக்காரர் வச
மாய் விட்டு, அநேக காலமாய்ப் புறத்தேசம்போ
௰ யிருந்தான். — தகுதியான காலத்திலே அந்தத்
தோட்டக்காரர் திராட்சத்தோட்டத்தின் கனிக
ளில் ஒரு பங்கைத் தனக்குக் கொடுத்தனுப்பும்
படிக்கு, அவன் ஒரு ஊழியக்காரனை அவர்களி
டத்துக்கு அனுப்பினான்; அந்தத் தோட்டக்காரர்
அவனை அடித்து, வெறுமையாய் அனுப்பிவிட்
௰௧ டார்கள்.—பின்பு அவன் வேறொரு ஊழியக்
காரனை அனுப்பினான்; அவனையும் அவர்கள் அ
டித்து, நிந்தைப்படுத்தி, வெறுமையாய் அனுப்பி
௰௨ விட்டார்கள்.—அதன் பின்பு அவன் மூன்றாம்
ஊழியக்காரனை அனுப்பினான்; அவனையும்
௰௩ அவர்கள் காயப்படுத்தித் துரத்தினார்கள்.—அப்
பொழுது திராட்சத்தோட்டத்தின் எசமான் எண்
ணினது: நான் என்னசெய்யலாம்? எனக்குப்
பிரியமான குமாரனை அனுப்பினால், அவர்கள்
கண்டு கனம் செய்வார்கள் என்று எண்ணி, அ
௰௪ வனை அனுப்பினான்.—தோட்டக்காரர் அவனைக்
கண்டபொழுது, இவன் சுதந்தரவாளி, சுதந்தரம்
நம்முடையதாகும்படிக்கு, இவனைக் கொலை
செய்யவேண்டும் என்று தங்களுக்குள்ளே யோ
௰௫ சனைபண்ணி, — வாருங்கள் என்று சொல்லி,
அவனைத் திராட்சத்தோட்டத்துக்கு வெளியே
தள்ளி, கொலைசெய்தார்கள்; ஆதலால் திராட்
சத்தோட்டத்தின் எசமான் அவர்களை என்ன
௰௬ செய்வான்?—அவன் வந்து, அந்தத் தோட்டக்
காரரை அழித்து, திராட்சத்தோட்டத்தை வேறு
மனிதருக்குக் கொடுப்பான் அல்லவா என்றார்;
அதை அவர்கள் கேட்டு அப்படி ஆகாதிருப்பதாக
என்றார்கள்.
௰௭ அப்பொழுது அவர் அவர்களைப் பார்த்து, [3]வீடு
கட்டுகிறவர்கள் ஆகாதென்று தள்ளின கல்லே
கோடிக்குத் தலையான கல்லாயிற்றென்று எழுதி
யிருக்கிற வேதவாக்கியத்தின் கருத்தென்ன?—
௰௮ அந்தக் கல்லின்மேல் விழுகிறவன் எவனோ,
அவன் நொறுக்கப்படுவான்; அன்றியும், [4]அது
விழப்படுபவன் எவனோ, அவனை நசுக்கிப்போ
டும் என்றார். — அப்பொழுது தங்களைக்குறித்து ௰௯
அந்த உவமையைச் சொன்னார் என்று பிரதான
ஆசாரியரும் வேதபாரகரும் அறிந்து, அந்நேரத்
திலே அவர்மேல் கைகளைப்போட விரும்பினார்
கள்; சனங்களுக்குப் பயப்பட்டபடியால் (நிறுத்
தினார்கள்).
[5]பின்பு அவர்கள் அவரையே நோக்கிக்கொண் ௨௰
டு, ஆளுகைக்கும் நியாயாதிகாரத்துக்கும் முன்
பாக அவரை ஒப்புக்கொடுக்கிறதற்கு ஏதுவாக
அவருடைய வசனத்தில் குற்றம் கண்டுபிடிக்
கும்படிக்கு, தங்களை நீதிமான்கள்போலக் காண்
பிக்கிற வேவுகாரரை அவரிடத்தில் அனுப்பினார்
கள்.—[6]அவர்கள் வந்து அவரை நோக்கி, போத ௨௧
கரே, நீர் செம்மையாய்ப் பேசி உபதேசிக்கிறவர்
என்றும், பட்சபாதமில்லாமல் சத்தியமாய்ப்*
பராபரனுடைய மார்க்கத்தைப் போதிக்கிறவர்
என்றும் அறிந்திருக்கிறோம்.—நாம் இராயனுக்கு ௨௨
வரி கொடுக்கலாமோ, கொடாமல் இருக்கலா
மோ, என்று அவரிடத்தில் கேட்டார்கள்.—அவர் ௨௩
களுடைய தந்திரத்தை அவர் அறிந்து, அவர்களை
நோக்கி, நீங்கள் என்னை ஏன் சோதிக்கிறீர்கள்?—
பணத்தை † எனக்குக் காண்பியுங்கள்; அதில் ௨௪
இருக்கிற சொரூபமும் மேலெழுத்தும் யாரு
டையவைகள் என்றார்; அவை இராயனுடைய
வைகள் என்று மாறுத்தரம் சொன்னார்கள்.-அவர் ௨௫
சொன்னது: அப்படியானால், நீங்கள் இராயனு
டையதை இராயனுக்கும், பராபரனுடையதைப்
பராபரனுக்கும் செலுத்துங்கள் என்றார்.-அவர் ௨௬
கள் அவரைச் சனங்களுக்குமுன்பாக ஒரு வச
னத்தில் அகப்படுத்தக்கூடாமல், அவருடைய
மாறுத்தரத்தைக்குறித்து ஆச்சரியப்பட்டு மவுன
மாய் இருந்தார்கள்.
பின்பு [7]மறுமையாகிய உயிரோடு எழும்புதல் ௨௭
இல்லையென்று சொல்லுகிற [8]சதுசேயரில் சிலர்
அவரிடத்தில் வந்து கேட்டதாவது:-போதகரே, ௨௮
[9]பெண்ணை விவாகம்பண்ணின ஒருவன் பிள்
ளையில்லாமல் இறந்துபோனால், அவனுடைய
மனைவியை அவனுடைய சகோதரன் (சேர்ந்து)
தன் சகோதரனுக்குச் சந்ததி உண்டாக்கவேண்
டும் என்று மோசே நமக்குக் கட்டளையாக எழு
தினாரே,—அந்தப்படி (ஓரிடத்திலே) சகோதரர் ௨௯
ஏழுபேர் இருந்தார்கள்; அவர்களில் மூத்தவன்
ஒருபெண்ணை விவாகம்பண்ணி பிள்ளையில்லா
மல் இறந்துபோனான். — அப்பொழுது இரண் ௩௰
டாம் சகோதரன் அந்தப் பெண்ணை விவாகம்
பண்ணி, அவனும் பிள்ளையில்லாமல் இறந்து
போனான்.—மூன்றாம் சகோதரன் முதல் எழு ௩௧
பேர்வரைக்கும் அந்தப்படியே அவளை விவாகம்
பண்ணி, பிள்ளைகளைப் பெறாமல் இறந்துபோ
னார்கள்.—அவர்கள் எல்லாருக்கும் பின்பு அந் ௩௨
தப் பெண்ணும் இறந்துபோனாள்.—இவ்விதமாய் ௩௩

1 மத். ௰௪. ௫: ௨௧. ௨௬. லூக். ௭. ௨௯. 3 சங். ௱௰௮. ௨௨. மத். ௨௧. ௪௨.
2 மத். ௨௧. ௩௩. மாற். ௰௨. ௧. 4 தானி. ௨. ௩௪, ௪௫. மத். ௨௧. ௪௪.
5 மத். ௨௨. ௰௫.—6 மத். ௨௨. ௰௬. 8 மத். ௨௨. ௨௩. மாற். ௰௨. ௰௮.
மாற். ௰௨. ௰௪.—7 அப். ௨௩. ௮. 9 உபா. ௨௫. ௫.

* அல்லது மெய்யாகவே.—† மத். ௰௮. ௨௮.

எழுபேரும் அவளை விவாகம்பண்ணினவர்க
ளாய் இருக்க, (மரித்தோர்) உயிரோடு எழுந்தி
ருக்கும் காலத்தில் அவர்களில் எவனுக்கு அவள்
மனைவியாய் இருப்பாள் என்றார்கள்.
௩௪ அவர்களுக்கு மாறுத்தரமாக இயேசுவானவர்
சொன்னது: இம்மையில் இருக்கிறவர்கள் பெண்
௩௫ கொண்டும் கொடுத்தும் வருகிறார்கள்.—மறுமை
யில் உள்ள பாக்கியத்தையும் மரித்தோரிலிருந்து
எழுந்திருக்குதலையும் அடைவதற்குப் பாத்திர
ராய் எண்ணப்படுபவர்கள் பெண்கொள்வதும்
௩௬ கொடுப்பதும் இல்லை.—என்னத்தினாலெனில்,
[1] அவர்கள் உயிரோடு எழுந்திருக்கத்தக்கவர்களா
யிருக்க, தேவதூதருக்கு ஒப்பானவர்களுமாய்
[2]பராபரனுடைய பிள்ளைகளுமாய் இருப்பதால்,
அவர்கள் இனி மரிக்கக்கூடாதிருப்பார்களே.—
௩௭ அன்றியும் மரித்தோர் எழுந்திருப்பார்கள் என்ப
தை [3]மோசேயும் முட்செடியைக்குறித்து எழு
தின சரித்திரத்திலே காண்பித்தார். எப்படியெ
னில், அவர் பராபரனை ஆபிரகாமினுடைய தே
வனென்றும் ஈசாக்கினுடைய தேவனென்றும்
யாக்கோபினுடைய தேவனென்றும் சொல்லியி
௩௮ ருக்கிறார்.—பராபரன் மரித்தோருடைய தேவ
னாய் இராமல், சீவனுள்ளோருடைய தேவனாய்
இருக்கிறார்; [4]எல்லாரும் அவருக்குப் பிழைத்தி
௩௯ ருக்கிறார்களே என்றார்.—வேதபாரகரில் சிலர்
அதைக்கேட்டு, போதகரே, நன்றாய்ச்சொன்னீர்
௪௰ என்றார்கள். — பின்பு அவர்கள் அவரிடத்தில்
வேறொன்றைக் கேட்கத் துணியவில்லை.
௪௧ அப்பொழுது அவர் அவர்களை நோக்கி, [5]கிறி
ஸ்துவானவர் தாவீதின் குமாரனாய் இருப்பார்
என்று என்னத்தினாலே சொல்லுகிறார்கள்? —
௪௨ [6] அல்லாமலும், பராபரன் என் கர்த்தாவை நோக்
கி, நான் உம்முடைய சத்துருக்களை உமது பா
௪௩ தப்படியாக்கிப்போடும் அளவும்,—நீர் எனது வல
துபாரிசத்தில் உளுக்காரும் என்றார் என்று தா
வீதுதானே சங்கீதபுத்தகத்தில் சொல்லியிருக்கி
௪௪ றாரே.—தாவீது அவரைக் கர்த்தரென்று சொல்
லியிருக்க, எப்படி அவர் அவனுடைய குமார
னாவார் என்றார்.
௪௫ [7] அப்பொழுது சனங்கள் எல்லாரும் கேட்க,
அவர் தம்முடைய சீஷருடனே சொன்னதாவ
௪௬ து:—[8] நீளமான வஸ்திரங்களைத் தரித்து நடக்க
மனதாயிருந்து, [9] சந்தைகளில் வாழ்த்துதலையும்,
செபஆலயங்களில் முதல் ஆசனங்களையும்,
விருந்துகளில் முதல் இடங்களையும் விரும்பி,—
௪௭ [10] கைம்பெண்களுடைய பொருள்களைப் பட்
சித்து, வஞ்சகமாய் விஸ்தாரமான செபம்பண்
ணிவருகிற வேதபாரகருக்கு நீங்கள் இடம்கொ
டாமல் எச்சரிக்கையாயிருங்கள்; அவர்களே
அதிக ஆக்கினையை அடைவார்கள் என்றார்.

## ௨௧. அதிகாரம்.

௧. கிறிஸ்து தருமப்பெட்டியிலே இரண்டு காசைப் போட்ட ஒரு கைம்பெண்ணைப் புகழ்ந்து, ௫. தேவாலயமும், எருசலேமும், அழிக்கப்படுவதை முன்னறிவித்து, கடைசி நாளுக்கு முன்னுண்டாகும் அடையாளங்களைக் காட்டி, ௩௪. அவர்கள் விழித்திருக்கும்படிக்குப் புத்தி சொன்னது.

பின்பு அவர் கண்ணை உயர்த்திப் பார்க்கிறபொ ௧
ழுது, [11] ஐசுவரியவான்கள் தங்கள் காணிக்கை
களைத் தருமப்பெட்டியில் போடுகிறதைக் கண்
டார்.—அல்லாமலும் இரண்டு காசை* அதிலே ௨
போட்ட ஒரு ஏழைக் கைம்பெண்ணையும் அவர்
கண்டு,—[12] இந்த ஏழைக் கைம்பெண் மற்றெல் ௩
லாரிலும் அதிகம் போட்டாள் என்று மெய்யாய்
உங்களுக்குச் சொல்லுகிறேன்.—எப்படியெனி ௪
ல், அவர்கள் எல்லாரும் தங்கள் பரிபூரணத்தில்
எடுத்து, தேவ காணிக்கைப் பெட்டியில் போட்
டார்கள்; இவள் தன் குறைவிலே தன் சீவனத்
துக்கு உண்டான யாவையும் போட்டாள் என்
றார்.

பின்பு [13] சிலர் தேவாலயத்தைக்குறித்து அது ௫
அழகான கற்களாலும் காணிக்கைகளாலும் அ
லங்கரிக்கப்பட்டிருக்கின்றது என்று சொன்ன
பொழுது, அவர் சொன்னது:—நீங்கள் பார்க்கிற ௬
இவைகளில் [14] ஒரு கல் மற்றொரு கல்லின்மேல்
இராதபடிக்கு, எல்லாம் இடிக்கப்படும் நாள்கள்
வரும் என்றார்.—அப்பொழுது அவரை அவர் ௭
கள் நோக்கி, போதகரே, அவைகள் எப்பொ
ழுது நடக்கும்? அவைகள் சம்பவிக்கும் காலத்
துக்கு அடையாளம் என்னவென்று கேட்டார்
கள்.—அதற்கு அவர் சொன்னது: அநேகர் என் ௮
நாமத்தை எடுத்து, தங்களை அவரே என்றும்,
காலம்† சமீபமாய் வந்ததென்றும் சொல்லுவார்
கள்; [15] நீங்கள் வஞ்சிக்கப்படாதபடிக்கு எச்ச
ரிக்கையுள்ளவர்களாய் அவர்களுக்குப் பின்
செல்லாமல் இருங்கள்.—அல்லாமலும் யுத்தங்க ௯
ளையும் கலகங்களையும் குறித்துக் கேள்விப்படும்
பொழுது, திகில் அடையாதிருங்கள்; அப்படிப்
பட்டவைகள் முன் நடக்கவேண்டுமே; ஆனா
லும் முடிவு உடனே வாராதென்று சொல்லி,
பின்பு திருவுளம்பற்றினதாவது:—[16] ஒரு சனக் ௰
கூட்டம் மற்றொரு சனக்கூட்டத்துக்கும், ஒரு
இராச்சியத்தார் மற்றொரு இராச்சியத்தாருக்கும்
விரோதமாக எழும்புவார்கள்.—அல்லாமலும் பல ௰௧
இடங்களிலே பூமி மிகவும் அதிர்தலும், பஞ்சங்
களும், பெருவாரிக்காய்ச்சல்களும் உண்டாயி
ருக்கும்; வானத்திலிருந்து பயம் உண்டாக்குகிற
காரியங்களும் பெரிய அடையாளங்களும் உண்
டாகும்.

[17] அவைகள் எல்லாவற்றிற்கும் முன்னே என் ௰௨
னுடைய நாமத்தின் நிமித்தம் [18] அவர்கள் உங்

1 ௧ கொரி. ௰௫. ௪௨, ௪௯, ௫௨. ௧ யோ. ௩. ௨.
2 உரோ. ௮. ௨௩.—3 ௨ மோ. ௩. ௬.
4 உரோ. ௬. ௰, ௰௧.—5 மத். ௨௨. ௪௨. மாற். ௰௨. ௩௫.—6 சங். ௱௰. ௧. அப். ௨. ௩௪.—7 மத். ௨௩. ௧. மாற். ௰௨. ௩௮.—8 மத். ௨௩. ௫.
9 லூக். ௰௧. ௪௩.
10 மத். ௨௩. ௰௪.—11 மாற். ௰௨. ௪௧.
12 ௨ கொரி. ௮. ௰௨.
13 மத். ௨௪. ௧. மாற். ௰௩. ௧.
14 லூக். ௰௯. ௪௪.
15 மத். ௨௪. ௪. மாற். ௰௩. ௫. எபே. ௫. ௬. ௨ தெச. ௨. ௩.
16 மத். ௨௪. ௭.—17 ௧ பே. ௨. ௰௯.
18 மாற். ௰௩. ௯. வெளி. ௨. ௰.

* மாற். ௰௨. ௪௨.—† மத். ௩. ௨: ௪. ௧௭.

கள்மேலே தங்கள் கைகளைப் போட்டு, உங்க
ளைத் துன்பப்படுத்தி, [1]செபஆலயங்களுக்கும்
சிறைச்சாலைகளுக்கும் ஒப்புக்கொடுத்து, [2]இரா
சாக்களுக்கும் துரைகளுக்கும் முன்பாகக் கொ
௰௩ ண்டுபோவார்கள். — [3]ஆனாலும் அது நீங்கள்
சாட்சிகொடுக்கும்படிக்கு ஏதுவாயிருக்கும்.—
௰௪ [4]ஆகையால், எப்படி மாறுத்தரவு சொல்லலாம்
என்று நீங்கள் கவலைப்படாதிருக்கும்படி, உங்
௰௫ கள் மனதைத் திடப்படுத்துங்கள்.—[5]நானே உங்
களுக்குத் (தகுதியான) பேச்சையும் ஞானத்தை
யும் கொடுப்பேன்; உங்கள் எதிராளிகள் யாவ
ரும் அதற்கு விரோதமாய்ப் பேசவும் எதிர் நிற்
௰௬ கவும் மாட்டார்கள்.–அன்றியும் [6]பெற்றோராலும்
சகோதரராலும், இனத்தாராலும், சிநேகிதராலும்
காட்டிக்கொடுக்கப்படுவீர்கள்; [7]உங்களில் சில
௰௭ ரைக் கொலைசெய்விப்பார்கள்.—[8]என் நாமத்தி
னாலே நீங்கள் சகலவிதமான மனிதராலும்
௰௮ பகைக்கப்படுவீர்கள்.—[9]ஆனாலும் உங்கள் தலை
௰௯ யின் மயிரில் ஒன்றாகிலும் அழியாது.—பொறு
மையினாலே உங்கள் ஆத்துமாக்களைக் காத்துக்
கொள்ளக்கடவீர்கள்.

௨௰ [10]அன்றியும் சேனைகளால் எருசலேம் வளைக்
கப்பட்டிருக்கிறதை நீங்கள் காணும்பொழுது,
அதின் அழிவு சமீபமாயிற்றென்று அறியுங்கள்.-
௨௧ அப்பொழுது யூதேயா நாட்டில் இருப்பவர்கள்
மலைகளுக்கு ஓடிப்போகவும், எருசலேமுக்குள்
ளே இருப்பவர்கள்வெளியே புறப்படவும்,நாட்
டுப்புறங்களில் இருப்பவர்கள் அதற்குள் பிரவே
௨௨ சியாமல் இருக்கவும் கடவர்கள்.—[11]எழுதியிருக்
கிற யாவும் நிறைவேறும்படியாய், அந்நாள்க
ளே பழிவாங்குதற்கானவைகளாய் இருக்கும்.—
௨௩ அந்நாள்களில், [12]ஐயோ! கருப்பவதிகளுக்கும்
முலைகொடுக்கிறவர்களுக்கும் வேதனை உண்டா
யிருக்கும்; என்னத்தினாலெனில், இத்தேசத்
தின்மேல் மிகுந்த இடுக்கணும், இந்தச் சனத்
தின்மேல் கோபாக்கினையும் உண்டாகும். —
௨௪ கட்கங்களினாலே அற்று விழுவார்கள்; அல்லாம
லும் புறத்தேசத்தார் யாவருக்குள்ளேயும் சிறைப்
பட்டுப்போவார்கள்; அன்றியும் [13]புறத்தேசத்
தாருடைய காலங்கள் நிறைவேறுகிறவரைக்
கும் எருசலேம் புறத்தேசத்தாராலே மிதிக்கப்
படும்.

௨௫ [14]சூரியனிலும், சந்திரனிலும், நட்சத்திரங்க
ளிலும் அடையாளங்கள் தோன்றும்; பூமியின்
மேல் உள்ள சனங்களுக்குள்ளே கலக்கமான
உபத்திரவம் உண்டாகும்; சமுத்திரமும் அலைக
௨௬ ளும் கோஷ்டமாயிருக்கும்.—[15]வானத்தில் பல
மானவைகளும் அசையும்; ஆதலால் பூலோகத்
தின்மேல் வருகிற காரியங்களுக்குப் பயந்து அ
வைகளை நோக்கிப் பார்க்கிறதினாலே மனிதர்கள்
சோர்ந்துபோவார்கள்.—அப்பொழுது [16]மனிதனு ௨௭
டைய குமாரனை மிகுந்த வல்லமையோடும் மகி
மையோடும் மேகத்தில் வரக் காண்பார்கள்.—
அவைகள் சம்பவிக்கத் தொடங்கும்பொழுது, ௨௮
[17]உங்கள் மீட்புச் சமீபமாய் வருவதால், நீங்கள்
நிமிர்ந்து, உங்கள் தலைகளை உயர்த்தக்கடவீர்கள்
என்று சொல்லி,

பின்பு [18]உவமையாய்ச் சொன்னதாவது: அத் ௨௯
திமரத்தையும் மற்றச் சகல மரங்களையும் பாருங்
கள்.—அவைகள் தளிர்க்கிறதை நீங்கள் காணும் ௩௰
பொழுது, வசந்தகாலம் சமீபமாயிற்று என்று அ
றிகிறீர்கள்.–அந்தப்படியே நான் சொன்னவை ௩௧
கள் சம்பவிக்கிறதை நீங்கள் காணும்பொழுது,
பராபரனுடைய ஆளுகை சமீபமாயிற்றென்று
அறியக்கடவீர்கள்.—அவையெல்லாம் சம்பவிக் ௩௨
கிறவரைக்கும் இந்தச் சந்ததி ஒழிந்துபோகா
தென்று மெய்யாய் உங்களுக்குச் சொல்லுகி
றேன். — [19]வானமும் பூமியும் ஒழிந்துபோம், ௩௩
என் வசனங்கள் ஒழிந்துபோகாது.

அன்றியும் பூமியில் எங்கும் குடியிருக்கிற அ ௩௪
னைவர்மேலும் அந்த நாள் ஒரு வலையைப்போல
வருவதால், — [20]உங்கள் இருதயங்கள் பெருந் ௩௫
தீனியினாலும், வெறியினாலும், பிழைப்பின் கவ
லையினாலும் பாரம் அடையாதபடிக்கும், அந்த
நாள் உங்களுக்குச் சடுதியாய் வாராதபடிக்கும்
எச்சரிக்கையாய் இருக்கக்கடவீர்கள். — ஆகை ௩௬
யால் [21]இனிச் சம்பவிப்பவைகள் யாவுக்கும்
நீங்கள் தப்புவித்துக்கொண்டு [22]மனிதனுடைய
குமாரனுக்குமுன்பாக நிற்கப் பாத்திரவான்க
ளென்று எண்ணப்படும்படிக்கு, [23]எக்கால
மும் செபம்பண்ணி,[24]விழித்திருக்கக்கடவீர்கள்
என்று திருவுளம்பற்றினார்.

அன்றியும் [25]அவர் பகற்காலங்களில் தேவால ௩௭
யத்தில் உபதேசித்துக்கொண்டு, [26]இராக்காலங்
களில் வெளியே போய், ஒலீவமலை என்னப்
பட்ட மலையிலே தங்கிவந்தார்.—அவருடைய ௩௮
உபதேசத்தைக் கேட்கும்படிக்கு, சனங்கள் எல்
லாரும் அதிகாலையிலே தேவாலயத்தில் அவரி
டத்துக்கு வந்தார்கள்.

## ௨௨. அதிகாரம்.

௧. யூதர்கள் கிறிஸ்துவைக் கொலைசெய்யும்படி தேடினது. ௩. அவரைக் காட்டிக்கொடுக்கும்படி சாத்தான் யூதாவை ஏவினது. ௭. அப்போஸ்தலர்கள் பஸ்காவை ஆயத்தம்பண்ணினது. ௰௯. கிறிஸ்துப் பரிசுத்த இராப்போசனத்தைக் கட்டளையிட்டு, ௨௧. தம்மைக் காட்டிக்கொடுப்பவனைக் குறிப்பாகச் சொல்லி, ௨௪. மற்ற அப்போஸ்தலர்கள் பெருமை அற்றிருக்கப் போதித்து, ௩௧. பேதுருவின் விசுவாசம் அவனைவிட்டு எடுபடாதேபோனாலும், ௩௪. அவன் தம்மை மூன்றுதரம் மறுதலிப்பான் என்று முன் அறிவித்தது. ௩௯. அவர் மலையின்மேல் செபம்பண்ணி இரத்தவேர்வை விட்டு, ௪௭. முத்தியிடுதலினாலே காட்டிக்கொடுக்கப்பட்டு, ௫௰. மல்குவின் அறுப்புண்ட காதைச் சொஸ்தப்

1 அப். ௪.௩: ௫.௰௮: ௰௨.௪: ௰௬. ௨௰௬: ௰௨. ௨.—3 மத். ௰. ௰௨. ௨௪.—2 அப். ௨௫. ௨௩. 9 மத். ௰. ௩௰.—10 மத். ௨௪. ௰௫. மாற். 3 பிலி. ௧. ௨௮. ௨ தெச. ௧. ௫. ௰௩. ௰௪.—11 தானி. ௯. ௨௬, ௨௭. 4 மத். ௰. ௰௯. மாற். ௰௩. ௰௧. லூக். சகரி. ௰௧. ௧.—12 மத். ௨௪. ௧௯. ௰௨. ௰௩.—5 அப். ௬. ௰.—6 மீகா. 13 தானி. ௯. ௨௭: ௰௨. ௭. உரோ. ௰௧. ௭. ௯. மாற். ௰௩. ௰௨.—7 அப். ௭. ௨௫.—14 மத். ௨௪. ௨௯. மாற். ௰௩. ௨௪.

௨ பே. ௩. ௰, ௰௩—15 மத். ௨௪. ௨௯. 21 ௧ தெச. ௫. ௨. ௨ பே. ௩. ௰. வெளி. 16 மத். ௨௪. ௩௰. வெளி. ௧. ௭: ௩. ௩: ௰௬. ௰௫.—22 சங். ௧. ௫. ௰௪. ௰௪.—17 உரோ. ௮. ௰௯, ௨௩. எபே. ௬. ௰௩.—23 லூக். ௰௮. ௧. 18 மத். ௨௪. ௩௨. மாற். ௰௩. ௨௮. 24 மத். ௨௪. ௪௨: ௨௫. ௰௩. மாற். ௰௩. 19 மத். ௨௪. ௩௫.—20 உரோ. ௰௩. ௰௩. ௩௩.—25 யோவா. ௮. ௧, ௨. ௧ தெச. ௫. ௬. ௧ பே. ௪. ௭. 26 லூக் ௨௨. ௩௯.

பமிந்தி, ௬௰. பேதுருவினால் மூன்றுதரம் மறுதலிக்கவும், ௬௩. பரிகாச தூஷணம் பண்ணவும்பட்டு, ௬௬. தமமைப் பராபரனுடைய குமார னென்று அறிக்கைபிட்டது.

௧ [1]பஸ்கா என்னப்பட்ட புளியாத அப்பப்பண்டி
௨ கை சமீபமாயிற்று.-அப்பொழுது [2]பிரதான ஆ
சாரியரும் வேதபாரகரும் சனங்களுக்குப் பயப்
பட்டபடியினாலே, அவனைக் கொலைசெய்யும்ப
௩ டிக்கு (இரகசியமாய்) வகைதேடினார்கள்.-[3]அக்
காலத்திலே பன்னிருவரில் ஒருவனாகிய ஸ்காரி
யோத்தென்று பேர்கொண்ட யூதாவுக்குள்ளே
சாத்தான் புகுந்தான்.
௪ ஆதலால் அந்த யூதா என்பவன் பிரதான
ஆசாரியரும் ஆலயத்தலைவருமானவர்களிடத்
தில்போய், அவர்களுக்கு அவனைக் காட்டிக்
கொடுக்கும் வகையைக்குறித்து அவர்களுடனே
௫ யோசனை பண்ணிக்கொண்டான். — அவர்கள்
சந்தோஷப்பட்டு [4]அவனுக்குத் திரவியம் கொ
௬ டுக்கத் தீர்மானித்தார்கள்.—அதற்கு அவன் பொ
ருந்தி, சனக்கூட்டம் இல்லாதபொழுது* அவ
னை அவர்களுக்குக் காட்டிக்கொடுக்கும்படிக்
குத் தகுதியான காலத்தைத் தேடினான்.
௭ [5]பஸ்காவின் ஆட்டுக்குட்டியைப் பலியிட
௮ வேண்டிய புளியாத அப்பநாள் வந்தது.—அப்
பொழுது அவர் பேதுருவையும் யோவானையும்
அழைத்து, நாம் பஸ்காவைப் புசிக்கும்படிக்கு
நீங்கள் போய், நமக்காக அதை எத்தனம்பண்
௯ ணுங்கள் என்றார்.—அதற்கு அவர்கள், நாங்கள்
அதை எங்கே எத்தனம்பண்ண விரும்புகிறீர் என்
௰ றார்கள்.—அவர் சொன்னது: நீங்கள் பட்டணத்
திற்குள் பிரவேசிக்கும்பொழுது, ஒருவன் தண்
ணீர்க்குடம் சுமந்துகொண்டு உங்களுக்கு எதிர்
ப்படுவான்; நீங்கள் அவனுக்குப் பின்சென்று,
௰௧ அவன் போகும் வீட்டிலே போய்,—அந்த வீட்
டெசமானை நோக்கி, நான் என் சீஷரோடுங்
கூடப் பஸ்காவைப் புசிக்கத்தக்கதான இடம்
எங்கே என்று போதகர் உம்மிடத்தில் கேட்கச்
௰௨ சொன்னார் என்று சொல்லுங்கள்.—அவன் கம்
பளமுதலானவைகள் விரித்திருக்கிற விஸ்தார
மான மேல்வீட்டை உங்களுக்குக் காண்பிப்
பான்; அங்கே எத்தனம்பண்ணுங்கள் என்று அ
௰௩ னுப்பினார்.—அவர்கள் போய், அவர் சொன்ன
பிரகாரமாகக் கண்டு, பஸ்கா போசனத்தை எத்
தனம் பண்ணினார்கள்.
௰௪ தகுதியான நேரம் வந்தபொழுது, [6]அவரும் அ
வருடனே பன்னிரண்டு அப்போஸ்தலரும் பந்
௰௫ தியில் இருந்தார்கள்.-அப்பொழுது அவர் அவர்
களை நோக்கி, நான் பாடுபடுகிறதற்குமுன்னே
உங்களுடனேகூட இந்தப் பஸ்காப்போசனம்
௰௬ பண்ண மிகவும் ஆசையாய்† இருந்தேன்.-என்
னத்தினாலென்றால், [7]பராபரனுடைய இராச்சி
யத்திலே அது நிறைவேறும் அளவும் நான் பின்
னும் இதில் புசிப்பதில்லை என்று உங்களுக்குச்
சொல்லுகிறேன் என்று சொல்லி,—பின்பு பாத் ௰௭
திரத்தை எடுத்துக்கொண்டு, தோத்திரம்செய்து,-
[8]பராபரனுடைய ஆளுகை வரும் அளவும்,நான் ௰௮
மறுபடியும் திராட்சஇரசத்திலே பானம்பண்ணு
வதில்லை என்று உங்களுக்குச் சொல்லுகிறேன்;
ஆகையால் நீங்கள் இதை எடுத்து, உங்களுக்குள்
ளே பங்கிட்டுக்கொள்ளுங்கள் என்றார்.
அல்லாமலும் [9]அவர் அப்பத்தை எடுத்துக் ௰௯
கொண்டு தோத்திரம்பண்ணி, அதைப் பிட்டு
அவர்களுக்குக் கொடுத்து, இது உங்களுக்காகக்
கொடுக்கப்படுகிற என்னுடைய சரீரமாய் இருக்
கின்றது; [10]என்னை நினைக்கிறதற்காக இப்படிச்
செய்யுங்கள் என்று சொல்லி, இராப்போசனம்
பண்ணின பின்பு,-அந்தப்படியே பாத்திரத்தை ௨௰
யும் கொடுத்து,[11]இந்தப்பாத்திரம் உங்களுக்காகச்
சிந்தப்படுகிற என் இரத்தத்தினாலே புதிய உடம்
படிக்கையாய் இருக்கின்றது என்று சொல்லி,
பின்பு இதோ, [12]என்னைக் காட்டிக்கொடுக்கி ௨௧
றவனுடைய கை என்னுடனேகூடப் பந்தியில்
இருக்கின்றது.—[13]தீர்மானத்தின்படியே மனித ௨௨
னுடைய குமாரன் போகிறான்; அது மெய்தான்.
[14]ஆனாலும், ஐயோ! எந்த மனிதன் அவனைக் காட்
டிக்கொடுக்கிறானோ அந்த மனிதனுக்கு வேதனை
வரும் என்றார்.-அப்பொழுது [15]அவர்கள் நம்மில் ௨௩
யாவன் அப்படிச் செய்வான் என்று தங்களுக்
குள்ளே விசாரிக்கத் தொடங்கினார்கள்.
அன்றியும் அவர்கள் [16]தங்களில் எவன் பெரிய ௨௪
வனாய் இருப்பான் என்று தங்களுக்குள்ளே வாக்
குவாதம்பண்ணிக்கொண்டிருந்தபொழுது, —
[17]அவர் அவர்களுக்குச் சொன்னதாவது: புறத் ௨௫
தேசத்தாருடைய இராசாக்கள் அவர்களைப் பல
வந்தமாய் ஆண்டுகொள்ளுகிறார்கள்; அல்லாம
லும் அவர்கள்மேல் அதிகாரம் செலுத்துகிறவர்
கள் தருமதுரைகள் என்று அழைக்கப்படுகிறார்
கள்.—[18]உங்களுக்குள்ளே அப்படி இருக்கக்கூ ௨௬
டாது; [19]உங்களில் பெரியவன் சிறியவனைப்
போலவும், தலைவன் ஊழியக்காரனைப்போல
வும் இருக்கக்கடவன்.—[20]பந்தியில் இருக்கிற ௨௭
வன், ஊழியம்செய்கிறவன், இவ்விருவரில்
எவன் பெரியவன்? பந்தியில் இருக்கிறவன் அல்
லவா? ஆனாலும் [21]நான் உங்களுக்குள்ளே ஊழி
யம்செய்கிறவனைப்போல இருக்கிறேன்.—மே ௨௮
லும் [22]எனக்கு வந்த துன்பகாலங்களில் என்னு
டனே இருந்தவர்கள் நீங்களே. — ஆகையால் ௨௯
[23]என் பிதா எனக்கு ஓர் இராச்சியத்தை ஏற்படுத்

1 மத். ௨௬. ௨. மாற். ௰௪. ௧. 2 சங்.௨.௨. யோவா. ௰௧.௪௭. அப். ௪.௨௭.—3 மத். ௨௬. ௰௪. மாற். ௰௪. ௰. யோவா. ௰௩. ௨, ௨௭. 4 சகரி.௰௧.௰௨.—5 மத். ௨௬. ௰௭. மாற். ௰௪. ௰௨.—6 மத்.௨௬.௨௰. மாற். ௰௪. ௰௭. 7 லூக்.௰௪.௰௫. அப். ௰.௪௧. வெளி. ௰௯. ௯.—8 மத். ௨௬. ௨௯. மாற். ௰௪. ௨௫.—9 மத். ௨௬. ௨௬. மாற். ௰௪. ௨௨. 10 ௧ கொரி.௰௧. ௨௪.—11 ௧ கொரி. ௰.௰௬.—12 சங்.௪௧.௯. மத். ௨௬. ௨௧,௨௩. மாற். ௰௪.௰௮. யோவா. ௰௩.௨௧,௨௬.—13 அப்.௨.௨௩:௪. 14 மத். ௨௬. ௨௪. 15 மத்.௨௬.௨௨ யோவா.௰௩.௨௨. ௨௫.—16 மாற். ௯. ௩௪. லூக்.௯. ௪௬.—17 மத்.௨௰. ௨௫. மாற்.௰. ௪௨.—18 மத். ௨௰. ௨௬. ௧ பே. ௫. ௩. 19 லூக்.௯.௪௮.—20 லூக். ௰௨. ௩௭. 21 மத். ௨௰. ௨௮. யோவா. ௰௩. ௰௩, ௰௪. பிலி. ௨. ௭. 22 எபி. ௪. ௰௫.—23 மத். ௨௪. ௪௭. லூக். ௰௨. ௩௨. ௨ கொரி. ௧. ௭. ௨ தீமோ. ௨. ௰௨.

* அல்லது சந்தடியில்லாமல்.—† அல்லது மன ஆசையாய்.

௩௰ தியிருக்கிறபடியால்,—[1]நீங்கள் என் இராச்சியத்
தில் என் பந்தியிலே போசனபானம்பண்ணி,
[2]இஸ்ரவேலின் பன்னிரண்டு கோத்திரத்தா
ருக்கு நியாயத்தீர்ப்புக் கொடுக்கிறவர்களாய் ஆச
னங்களின்மேல் உளுக்காரும்படிக்கு நான் உங்
களை ஏற்படுத்துகிறேன் என்றார்.
௩௧ கர்த்தர் பின்னும் சொன்னதாவது: [3]சீமோ
னே, சீமோனே, கோதுமையைச் சுளகினால்
புடைக்கிறதுபோல, [4]உங்களைப் புடைக்கும்ப
௩௨ டிக்கு, சாத்தான் உத்தரவு கேட்டான்.—[5]நானோ,
உன் விசுவாசம் ஒழிந்துபோகாதபடிக்கு, உனக்
காக வேண்டிக்கொண்டேன்; அந்தப்படி [6]நீ
இனிமேல் மனம் திரும்பினபின் உன் சகோதர
௩௩ ரை ஸ்திரப்படுத்துவாயாக என்றார். — அதற்கு
அவன் சொன்னது: ஆண்டவரே, உம்முடனே
கூட நான் காவலிலும் சாவிலும் வர எத்தனமாய்
௩௪ இருக்கிறேன் என்றான்.-அவர் சொன்னது: [7]பே
துருவே, இன்று சேவல் கூவும்முன்னே நீ என்
னை அறிந்திருக்கிறதை மூன்றுதரம் மறுதலிப்
பாய் என்று உனக்குச் சொல்லுகிறேன் என்றார்.
௩௫ பின்னும் அவர் அவர்களுடனே சொன்னது:
[8]நான் உங்களைப் பணப்பையும், சாமான்பை
யும், பாதஇரட்சைகளும் இல்லாமல் அனுப்பின
பொழுது, ஏதாகிலும் உங்களுக்குக் குறைவாய்
இருந்ததா என்றார்; ஒன்றும் குறைவாயிருக்க
௩௬ வில்லை என்றார்கள்.—அவர் சொன்னது: இப்
பொழுது பணப்பையையும் சாமான்பையை
யும் உடையவன் அவைகளை எடுத்துக்கொள்ளக்
கடவன்; அல்லாமலும் கத்தியில்லாதவன் தன்
வஸ்திரத்தை விற்று ஒன்றைக் கொள்ளக்கட
௩௭ வன்.—என்னத்துக்கென்றால், என்னைக்குறித்து
எழுதியிருக்கிறவைகள் முடிகிறபடியினாலே,
[9]அக்கிரமக்காரரோடே எண்ணப்பட்டார் என்
று எழுதியிருக்கிறது என்னிடத்தில் நிறைவேற
வேண்டும் என்று உங்களுக்குச் சொல்லுகிறேன்
௩௮ என்றார்.—அதற்கு அவர்கள் ஆண்டவரே, இதோ
இரண்டு கத்திகள் உண்டு என்றார்கள்; (அவை
களே) போதும் என்று அவர்களுடனே சொன்
னார்.
௩௯ பின்பு [10]அவர் புறப்பட்டு, வழக்கத்தின்படி
யே [11]ஒலிவமலைக்குப் போனார்; அவருடைய
௪௰ சீஷரும் அவருக்குப் பின்சென்றார்கள்.—[12]அவ்
விடத்தில் சேர்ந்தபொழுது, அவர் அவர்களை
நோக்கி, நீங்கள் குற்றம்செய்வதற்கான காரணத்
தில் பிரவேசியாதபடிக்கு, செபம்பண்ணுங்கள்
௪௧ என்று சொல்லி,—[13]கல்லெறி தூரத்தில் அவர்களை
௪௨ விட்டுப் போய், — முழங்கால் படியிட்டு, பிதா
வே, உமக்குச் சித்தமானால்,* இந்தப் பாத்திரம்
என்னைவிட்டு நீங்கும்படி செய்யும்; [14]இல்லா
விட்டால், என்னுடைய சித்தத்தின்படி அல்ல,
உம்முடைய சித்தத்தின்படியே ஆவதாக என்று
செபம்பண்ணினார்.—அப்பொழுது [15]வானத்தி ௪௩
லிருந்து ஒரு தூதன் தோன்றி, அவரைப் பலப்
படுத்தினான்.—பின்னும் அவர் கொடிய வேத ௪௪
னைப்பட்டு, [16]அதிக உக்கிரத்தோடே செபம்
பண்ணினார்; அப்பொழுது அவருடைய வேர்
வை இரத்தத்துளிகளைப்போலாகி தரையிலே
விழுந்தது.—பின்பு அவர் செபம்பண்ணி, மு ௪௫
டித்தபொழுது, எழுந்திருந்து தம்முடைய சீஷ
ரிடத்தில் போய், அவர்கள் துக்கத்தினாலே நித்
திரைபண்ணக் கண்டு,—என்னத்திற்காகத் தூங் ௪௬
குகிறீர்கள்? நீங்கள் குற்றம்செய்வதற்கான கார
ணத்தில் பிரவேசியாதபடிக்கு, [17]எழுந்திருந்து
செபம்பண்ணுங்கள் என்றார்.
அவர் அப்படிப் பேசுகையில், [18]சனங்கள் ௪௭
கூட்டமாய்ச் சேர்ந்தார்கள்; அவர்களுக்கு முன்
னாகப் பன்னிருவரில் ஒருவனான யூதா என்ப
வன் நடந்துபோய், இயேசுவை முத்தம்செய்
யும்படிக்கு அவரிடத்தில் சேர்ந்தான்.—அப்பொ ௪௮
ழுது இயேசுவானவர் அவனை நோக்கி, யூதாவே,
நீ மனிதனுடைய குமாரனை முத்தத்தினாலேயா
காட்டிக்கொடுக்கிறாய் என்றார்.—அல்லாமலும் ௪௯
அவரைச் சுற்றியிருந்தவர்கள் சம்பவிப்பதை அ
றிந்து அவரை நோக்கி, ஆண்டவரே, கத்தியினா
லே நாங்கள் வெட்டலாமா என்று சொல்ல,—
(உடனே) [19]அவர்களில் ஒருவன் பிரதான ஆசா ௫௰
ரியனுடைய வேலைக்காரனை வலதுகாதற வெட்
டினான்.—அப்பொழுது இயேசுவானவர், இம் ௫௧
மட்டில் நிறுத்துங்கள் என்று சொல்லி, அவனு
டைய காதைத் தொட்டு அவனைக் குணமாக்கி
னார்.—[20]பின்பு இயேசுவானவர் தமக்கு விரோ ௫௨
தமாய் வந்த பிரதான ஆசாரியரையும், தேவால
யத் தலைவரையும், மூப்பரையும்நோக்கி, ஒரு
கள்ளனைப் பிடிக்கப் புறப்படுகிறதுபோல, நீங்
கள் கத்திகளோடும் தடிகளோடும் புறப்பட்டு
வந்தீர்கள்.—தினந்தோறும் நான் தேவாலயத்தில் ௫௩
உங்களுடனே இருக்கையில், நீங்கள் என்மேல்
கைகளைப் போடவில்லை, [21]இதுவே உங்களுக்கு
ஏற்ற நேரமுமாய் இருளின் வல்லமையுமாய்
இருக்கின்றது என்றார்.
அப்பொழுது [22]அவர்கள் அவரைப் பிடித் ௫௪
து, பிரதான ஆசாரியனுடைய மாளிகைக்குக்
கொண்டுபோனார்கள்; [23]பேதுருவும் தூரமாக
அவருக்குப் பின்சென்றான். — அல்லாமலும், ௫௫
[24]அவர்கள் மாளிகையின் பிரகாரத்தின் நடுவிலே
நெருப்பை உண்டுபண்ணி, அதைச் சுற்றி,

1 மத். ௮.௰௧. லூக். ௰௪.௰௫. வெளி. ௰௯, ௰௭.—7 மத். ௨௬. ௩௪. மாற். ௰௪. ௩௰. யோவா. ௰௩. ௩௮.—2 சங். ௪௯. ௰௪. மத். ௰௯. ௨௮. ௧கொரி. ௬. ௨. வெளி. ௩. ௨௧.—3 ௧ பே. ௫. ௮.—4 ஆமோ. ௯. ௯. 5 யோவா. ௰௭. ௯, ௰௧, ௰௫. 6 சங். ௫௧. ௰௩. யோவா. ௨௧. ௰௫, 8 மத். ௰. ௯. லூக். ௯. ௩: ௰. ௪. 9 ஏசா. ௫௩. ௰௨. மாற். ௰௫. ௨௮. 10 மத். ௨௬. ௩௬. மாற். ௰௪. ௩௨. யோவா. ௰௮.௧—11 லூக். ௨௧.௩௭. 12 மத்.௨௬.௪௧: ௨௬.௪௧. மாற்.௰௪.௩௮. ௪௧.௩௪.—13 மத்.௨௬.௩௯.மாற். ௰௪. ௩௫.—14 யோவா.௫.௩௰: ௬.௩௮. 15 மத்.௪.௰௧.—16 யோவா.௰௨.௨௭. எபி. ௫. ௭.—17 சங். ௩௪. 18 மத். ௨௬. ௪௭. மாற். ௰௪. ௪௩. யோவா.௰௮.௩.—19 மத்.௨௬.௫௧. மாற். ௰௪. ௪௭. யோவா. ௰௮. ௰. 20 மத். ௨௬. ௫௫. மாற். ௰௪. ௪௮. 21 யோவா. ௰௨. ௨௭.—22 மத்.௨௬. ௫௭.—23 மத்.௨௬.௫௮. யோவா. ௰௮.௰௫.—24 மத்.௨௬.௬௯. மாற். ௰௪. ௬௬. யோவா. ௰௮. ௰௭,௰௮.

* அல்லது சித்தமானால்.

உளுக்காந்தபொழுது பேதுருவும் அவர்களுக்
௫௫ குள்ளே உளுக்காந்தான். — அப்பொழுது ஒரு
வேலைக்காரி அவனை நெருப்பினிடத்தில் இருக்
கக்கண்டு அவனை உற்றுப் பார்த்து, இவனும்
௫௭ அவனோடிருந்தான் என்றாள்.—அதற்கு அவன்
ஸ்திரியே, அவனை அறியேன் என்று அவரை
௫௮ மறுதலித்தான் —[1]சற்றுநேரத்துக்குப்பின்பு, வே
றொருவன் அவனைக் கண்டு, நீயும் அவர்களில்
ஒருவன் என்றான்; அதற்குப் பேதுரு, மனித
௫௯ னே, நானல்ல என்றான். — [2]ஏறக்குறைய ஒரு
மணி நேரத்துக்குப் பின்பு வேறொருவன் அவ
னைப் பார்த்து, மெய்யாய் இவனும் அவனோடு
இருந்தான், இவன் கலிலேயன்தானே என்று
௬௰ நிச்சயத்தோடே சொன்னான். — அதற்குப் பே
துரு மனிதனே, நீ பேசுகிறதை அறியேன் என்
றான்; உடனே அவன் பேசுகையில் சேவல்
௬௧ கூவிற்று.—அப்பொழுது கர்த்தர் திரும்பி, பே
துருவை நோக்கிப் பார்த்தார்; [3]உடனே பேதுரு
சேவல் கூவும்முன்னே [4]நீ என்னை மூன்று
தரம் மறுதலிப்பாய் என்று தன்னோடே கர்த்தர்
சொன்ன வசனத்தை நினைத்துக்கொண்டு,—
௬௨ வெளியேபோய், மிகுந்த மனத்துக்கத்தோடே
அழுதான்.

௬௩ [5]இயேசுவைப் பிடித்துக்கொண்ட மனிதர்
௬௪ அவரை அசட்டைபண்ணி, — அடித்து, அவ
ருக்கு முக்காடிட்டு, அவருடைய முகத்தில்
அறைந்து, உன்னை அடித்தவன் யாவன், அதைத்
தீர்க்கதரிசனமாய்ச் சொல்லென்று சொல்லி,—
௬௫ மற்றும் அநேகவிதமாய் அவரைத் தூஷணித்தார்
கள்.

௬௬ [6]உதயமானபொழுது சனத்தின் [7]மூப்பரும்,
பிரதான ஆசாரியரும், வேதபாரகரும் கூடிவந்
து, தங்கள் ஆலோசனைச் சங்கத்தில் அவரைக்
கொண்டுவரும்படி செய்து, அவரை நோக்கி,—
௬௭ [8]நீ கிறிஸ்துவானால் அதை எங்களுக்குச் சொல்
என்றார்கள்; அதற்கு அவர் நான் உங்களுக்குச்
௬௮ சொன்னாலும் என்னை நம்பமாட்டீர்கள்.—நான்
உங்களிடத்தில் விசாரித்தாலும் நீங்கள் எனக்கு
மாறுத்தரவு சொல்லவும் என்னை விடுதலையாக்க
௬௯ வும் மாட்டீர்கள்.—[9]இதுமுதல் மனிதனுடைய
குமாரன் சர்வவல்லமையுள்ள பராபரனுடைய
வலதுபாரிசத்தில் உளுக்காருவான் என்றார்.—
௭௰ அதற்கு அவர்கள் எல்லாரும், அந்தப்படி நீ பரா
பரனுடைய குமாரனா என்றார்கள்; அவர் சொன்
னது: [10]நீங்கள் சொல்லுகிறபடி, நானே அவ
௭௧ ரென்றார்.—[11]அப்பொழுது அவர்கள் சொன்ன
து: இனி வேறு சாட்சி நமக்கு வேண்டுவதென்
ன? நாம்தானே இவனுடைய வாயினாலே கேட்
டோமே என்றார்கள்.

## ௨௩. அதிகாரம்.

௧. இயேசு பிலாத்துவுக்குமுன்பாகக் குற்றஞ்சாற்றப்பட்டு, ஏரோதேயினிடத்துக்கு அனுப்பப்பட்டது. ௮. ஏரோதே அவரைப் பரிகாசம் பண்ணினது. ௰௨. விரோதிகளாயிருந்த ஏரோதேயும் பிலாத்தும் சிநேகிதர்களானது. ௰௮. பரபாசென்பவன் சனங்களுடைய கேட்டுக்கொள்ளுதலினாலே பிலாத்துவினால் விடுதலையாக்கப்பட, இயேசுவானவர் சிலுவையில் அறையும்படி ஒப்புவிக்கப்பட்டது. ௨௭. தமக்காகப் புலம்பின ஸ்திரீகளுக்கு எருசலேமின் அழிவைச் சொல்லி, ௩௪. தம்முடைய சத்துருக்களுக்காக வேண்டிக்கொண்டது. ௩௯. இரண்டு குற்றவாளிகளும் அவருடனேகூடச் சிலுவையில் அறையப்பட்டது. ௪௬. அவர் மரித்து, ௫௰. அடக்கம்பண்ணப்பட்டது.

[12]பின்பு அவர்களுடைய கூட்டத்தார் எல்லா ௧
ரும் எழுந்திருந்து, அவரைப் பிலாத்து என்னும்
துரையினிடத்துக்குக் கொண்டுபோய்,—[13]இவன் ௨
தன்னை இராசாவாகிய கிறிஸ்து என்றும் [14]சனங்
கள் இராயருக்கு வரிகொடுக்கவேண்டுவது இல்
லையென்றும் சொல்லி, [15]அவர்களைக் கலகப்
படுத்தக் கண்டோம் என்று அவர்மேல் குற்றம்
சாற்றத் தொடங்கினார்கள்.—[16]அப்பொழுது பி ௩
லாத்து என்பவன் அவரைநோக்கி, நீ யூதருடைய
இராசாவா என்று கேட்டான்; அதற்கு அவர்
நீர் சொல்லுகிறபடியே இருக்கின்றது என்றார்.—
பின்பு பிலாத்து என்பவன் பிரதானஆசாரிய ௪
ரையும் சனக்கூட்டத்தையும் நோக்கி, [17]இந்த
மனிதனிடத்திலே ஒரு குற்றத்தையும் காணேன்
என்றான் —அதற்கு அவர்கள் சொன்னது: இ ௫
வன் கலிலேயா நாட்டைத் தொடங்கி, இவ்
விடம்வரைக்கும் யூதேயா நாட்டில் எங்கும்
உபதேசம்பண்ணி, சனங்களைக் கலகப்படுத்
துகிறான் என்று அதிக உக்கிரத்தோடே சொன்
னார்கள். — கலிலேயாநாடென்பதைப் பிலாத்து ௬
கேள்விப்பட்டபொழுது, இம்மனிதன் கலிலே
யனா என்று விசாரித்த பின்பு,—[18]அவர் ஏரோ ௭
தே இராசாவின் அதிகாரத்துக்கு உள்ளானவர்
என்று அறிந்து, அந்நாள்களில் எருசலேமிலே
வந்திருந்த ஏரோதினிடத்திற்கு அவரை அனுப்
பினான்.

ஏரோது என்பவன் [19]இயேசுவைக்குறித்து ௮
மிகுந்த காரியங்களைக் கேள்விப்பட்டிருந்தபடி
யினாலே, [20]அநேக நாளாய் அவரைக் காண
ஆசையாயிருந்தான். ஆதலால் அவன் அவரைக்
கண்டபொழுது மிகவும் சந்தோஷப்பட்டு, அ
வர் செய்யும் அற்புதத்தைப் பார்க்கலாம் என்று
எண்ணி,—அநேகம் காரியங்களைக்குறித்து அவ ௯
ரிடத்தில் வினாவினான்; அவர் அவனுக்கு மறு
மொழி ஒன்றும் சொல்லவில்லை.—பிரதான ஆசா ௰
ரியரும் வேதபாரகரும் வந்துநின்று, உக்கிரமாய்
அவர்மேல் குற்றம் சாற்றினார்கள். — அப்பொ ௰௧
ழுது ஏரோதென்பவனும், [21]அவனுடைய போர்
ச்சேவகரும் அவரை அசட்டைபண்ணி, பிரகா
சமுள்ள வஸ்திரத்தை அவருக்கு உடுத்தி, இப்ப

1 மத். ௨௬. ௭௩. மாற். ௰௪. ௭௰. யோவா. ௰௮. ௨௬.
2 மத். ௨௬. ௭௪. மாற். ௰௪. ௭௧. யோவா. ௰௮. ௨௭.
3 மத். ௨௬. ௩௪, ௭௫. யோவா. ௰௩. ௩௮.—4 மத். ௨௬. ௭௫. மாற். ௰௪. ௭௨.—5 மத். ௨௬. ௬௭, ௬௮. மாற். ௰௪. ௬௫.
6 மத். ௨௭. ௧.—7 அப். ௪. ௨௬. அப். ௨௨. ௫.—8 மத். ௨௬. ௬௩. மாற். ௰௪. ௬௧.—9 மத். ௨௬. ௬௪. மாற். ௰௪. ௬௨. எபி. ௧. ௩: ௮. ௧.
10 மத். ௨௬. ௬௪. மாற். ௰௪. ௬௨.
11 மத். ௨௬. ௬௫. மாற். ௰௪. ௬௩.
12 மத். ௨௭. ௨. மாற். ௰௫. ௧. யோவா. ௰௮. ௨௮.—13 யோவா. ௰௯. ௰௨.
14 மத். ௰௭. ௨௭: ௨௨. ௨௧. மாற். ௰௨. ௰௭.—15 அப். ௰௭. ௭.
16 மத். ௨௭. ௰௧. ௧ தீமோ. ௬. ௰௩.
17 ௧ பே. ௨. ௨௨.—18 லூக். ௩. ௧.
19 மத். ௰௪. ௧. மாற். ௬. ௰௪.
20 லூக். ௯. ௯.—21 ஏசா. ௫௩. ௩.

௰௨ டிப் பரிகாசம்பண்ணின பின்பு, — அவரைத்
திரும்பப் பிலாத்துவினிடத்துக்கு அனுப்பி
னன்; அந்த நாளிலே முன்னே ஒருவருக்கொரு
வர் பகைஞராய் இருந்த [1]பிலாத்து என்பவனும்
ஏரோது என்பவனும் சிநேகிதரானார்கள்.
௰௩ அப்பொழுது [2]பிலாத்து என்பவன் பிரதான
ஆசாரியரையும், தலைவரையும், சனங்களையும்
௰௪ கூடிவரச்செய்து, அவர்களை நோக்கி,—நீங்கள்
[3]இந்த மனிதன் சனங்களைக் கலகப்படுத்துகிற
வன் என்று சொல்லி, இவனை என்னிடத்தில்
கொண்டுவந்தீர்கள்; அந்தப்படி நான் உங்க
ளுக்கு முன்பாக இவனைச் சோதித்தபொழுது,
[4]நீங்கள் இவன்மேல் சாற்றின குற்றங்களில் ஒன்
றையும் நான் இவனிடத்திலே காணவில்லை.—
௰௫ பின்பு உங்களை ஏரோதினிடத்திற்கு அனுப்பி
னேன்; அவரும் இவனில் குற்றம் காணவில்
௰௬ லை.—ஆதலால் இவன் மரணத்துக்கு ஏதுவானது
ஒன்றும் செய்யாதவனாயிருக்கிறபடியால், [5]நான்
இவனைத் தண்டித்து விடுதலையாக்குவேன் என்
௰௭ றான்.—[6]பண்டிகைதோறும் அவன் அவர்களுக்
காக ஒருவனை விடுதலையாக்கவேண்டியிருந்த
௰௮ படியால், அப்படிச் சொன்னான். — திரளான
சனங்கள் எல்லாரும் அதைக் கேட்டு, [7]இவனை
ஆக்கினைக்கு உட்படுத்தி, பரபாசை எங்களுக்
காக விடுதலையாக்கவேண்டும் என்று கூக்குரல்
௰௯ இட்டார்கள்.—அந்தப் பரபாசென்பவன் நகரத்
திலே நடந்த ஒரு கலகத்துக்காகவும் கொலைபாத
கத்துக்காகவும் காவலில் வைக்கப்பட்டிருந்தா
௨௰ ன்.-அப்பொழுது பிலாத்தானவன் இயேசுவை
விடுதலையாக்க மனதாய், மறுபடியும் அவர்களுக்
௨௧ குச் சொன்னான்.—அதற்கு அவர்கள் இவனைச்
சிலுவைமரத்தில் அறையவேண்டும், இவனைச்
சிலுவைமரத்தில் அறையவேண்டும், என்று கூக்
௨௨ குரலிட்டார்கள்.-அவன் மூன்றாந்தரம் சொன்
னது: இவன் எந்தப் பொல்லாங்கைச் செய்
தான்? இவனிடத்திலே மரணத்துக்கு ஏதுவான
குற்றம் ஒன்றையும் காணேனே; ஆகையால்
நான் இவனைத்தண்டித்து விடுதலைபண்ணுவேன்
௨௩ என்றான் —அப்படியிருந்தும் அவரைச் சிலுவை
மரத்தில் அறையும்படிக்கு, அவர்கள் மிகுந்த
சத்தத்துடனே கேட்டுக்கொண்டார்கள்; அவர்
களும் பிரதான ஆசாரியரும் இட்ட கூக்குரல்
௨௪ அதிகப்பட்டது —[8]அப்பொழுது பிலாத்து என்ப
வன் அவர்களுடைய மனுவின்படி ஆகும்படிக்
௨௫ குத் தீர்மானம்பண்ணி,* — கலகத்தின் நிமித்த
மும் கொலைபாதகத்தின் நிமித்தமும் காவலில்
வைக்கப்பட்டிருந்தவனை அவர்களுடைய விண்
ணப்பத்தின்படி அவர்களுக்காக விடுதலையாக்கி,
இயேசுவானவரையே அவர்களுடைய இஷ்டத்
துக்கு ஒப்புக்கொடுத்தான்.
அந்தப்படி அவர்கள் அவரைக் கொண்டுபோ ௨௬
கிறபொழுது, [9]வயலிலிருந்து வருகிற சிரேனே
ஊரானாகிய சீமோன் என்பவனைப் பிடித்துச்சிலு
வைமரத்தை இயேசுவின்பின் சுமந்துபோகும்
படி அவன்மேலே வைத்தார்கள்.-திரளான கூட் ௨௭
டமாகிய சனங்களும், அவருக்காகத் துக்கமாய்ப்
புலம்பி அழுகிற ஸ்திரிகளும் அவருக்குப் பின்
சென்றார்கள்.— அப்பொழுது இயேசுவானவர் ௨௮
அவர்கள் முகமாய்த் திரும்பிச் சொன்னது: எரு
சலேமின் குமாரத்திகளே, நீங்கள் எனக்காக
அழாமல், உங்களுக்காகவும் உங்கள் பிள்ளைக
ளுக்காகவும் அழுதுகொள்ளுங்கள்.—என்னத்தி ௨௯
னாலெனில், [10]மலடிகளும், பிள்ளைபெறாத கருப்
பங்களும், பால்கொடாத முலைகளும் பாக்கிய
முள்ளவைகள் என்று சொல்லப்படும் நாள்கள்
வரும். — அப்பொழுது இவர்கள் [11]மலைகளை ௩௰
நோக்கி, எங்கள்மேல் விழுங்கள் என்றும், குன்
றுகளை நோக்கி, எங்களை மூடிக்கொள்ளுங்கள்
என்றும் சொல்லுவார்கள்:—[12]பசுமையான மரத் ௩௧
துக்கு இப்படிச் செய்தால், பட்டுப்போன மரத்
துக்கு மிகவும் அதிகமாய் இப்படிச் செய்யப்
படும் அல்லவா என்றார்.
[13]குற்றவாளிகளாகிய வேறு இரண்டுபேரும் ௩௨
அவரோடேகூட மரணம் அடைவதற்குக் கொ
ண்டுபோகப்பட்டார்கள்.—[14]தலையோட்டிடம் † ௩௩
என்னப்பட்ட இடத்திலே அவர்கள் சேர்ந்த
பொழுது, அங்கே அவரையும், அவருடைய
வலதுபக்கத்திலே ஒரு குற்றவாளியையும், அவ
ருடைய இடதுபக்கத்திலே மற்றக் குற்றவாளி
யையும் சிலுவைமரங்களில் அறைந்தார்கள்.
அப்பொழுது இயேசுவானவர், பிதாவே, ௩௪
[15]இவர்கள் தங்கள் செய்கையின் தன்மையை
அறியாதிருக்கிறார்கள், ஆதலால் [16]இவர்களுக்கு
மன்னித்தருளும் என்றார்; [17]அவருடைய வஸ்தி
ரங்களை அவர்கள் பங்கிட்டு, (அவைகளுக்கு
றித்து) சீட்டுப்போட்டார்கள். — [18]சனங்கள் ௩௫
நின்று பார்த்துக்கொண்டார்கள்; [19]அவர்களுட
னேகூடத் தலைவரும் அவரை இகழ்ந்து, இவன்
மற்றவர்களை இரட்சித்தான்; இவன் பராபரனா
லே தெரிந்துகொள்ளப்பட்ட கிறிஸ்துவானால்,
தன்னைத்தானே இரட்சிக்கலாமே என்றார்கள்.—
போர்ச்சேவகரும் அவரை அசட்டைபண்ணி ௩௬
அவரிடத்தில் சேர்ந்து, அவருக்குக் காடியைக்
காண்பித்து,—நீ யூதரின் இராசாவானால், உன் ௩௭
னை இரட்சித்துக்கொள் என்றார்கள்.—அவருக்கு ௩௮
மேலாக, [20]இவன் யூதருடைய இராசா என்று

1 அப். ௪. ௨௭.—2 மத். ௨௭. ௨௧. மாற். ௰௫.௰௪. யோவா. ௰௮. ௩௮: ௰௯. ௪.—3 ௧. ௨. ௰௪
4 ௪. ௰௪.—5 மத்.௨௭.௨௬. யோவா. ௰௯. ௧.—6 மத். ௨௭. ௰௫. மாற். ௰௫. ௬. யோவா. ௰௮. ௩௯.
7 அப். ௩. ௰௪.
8 மத். ௨௭. ௨௬. மாற். ௰௫. ௰௫. யோவா. ௰௯. ௰௬. ௨ மோ. ௨௩. ௨.
9 மத். ௨௭. ௩௨. மாற். ௰௫. ௨௧. யோவா. ௰௯. ௰௭.—10 மத். ௨௪. ௰௯. லூக். ௨௧. ௨௩.—11 ஏசா. ௨. ௰௯. ஓசே. ௰. ௮. வெளி. ௬. ௰௬: ௯. ௬
12 வாக். ௰௧. ௩௧. எரே. ௨௫. ௨௯. எசே. ௨௰. ௪௭: ௨௧. ௩, ௪. ௧ பே. ௪. ௰௭.—13 ஏசா. ௫௩. ௰௨. மத். ௨௭. ௩௮.—14 மத். ௨௭. ௩௩. மாற். ௰௫. ௨௨. யோவா. ௰௯. ௰௭, ௰௮.
15 அப். ௩. ௰௭.—16 மத். ௫. ௪௪. அப் ௭. ௬௰. ௧ கொரி. ௪. ௰௨..
17 மத். ௨௭. ௩௫. மாற். ௰௫. ௨௪. யோவா. ௰௯. ௨௩.
18 சங் ௨௨. ௰௭. சகரி. ௰௨. ௰.
19 மத். ௨௭. ௩௯. மாற். ௰௫. ௨௯.
20 மத். ௨௭. ௩௭. மாற். ௰௫. ௨௬. யோவா. ௰௯. ௰௯.

* அல்லது சம்மதித்து.—† அல்லது கல்வாரிமலை.

கிரேக்கை, லத்தீன், எபிரேயு என்னும் பாஷைகளால் எழுதப்பட்டிருந்தது.
௩௯ [1]அல்லாமலும் தூக்கிப்போடப்பட்ட குற்ற
வாளிகளில் ஒருவன் அவரைத் தூஷணித்து, நீ
கிறிஸ்துவானால் உன்னையும் எங்களையும் இரட்
௪௰ சித்துக்கொள் என்றான். — அப்பொழுது மற்
றவன் அவனுடனே சொன்னது: இந்த ஆக்கி
னைக்கு உள்ளாயிருக்கிற நீயும் பராபரனுக்குப்
பயப்படாமலா இருக்கிறாய்? நாம் நம்முடைய
நடக்கைகளுக்குத் தகுதியாக இந்த ஆக்கினை
௪௧ யை நியாயமாய் அடைகிறோம்.—இவர் தகாத
ஒன்றையும் நடப்பிக்கவில்லை என்று அவனைக்
௪௨ கடிந்துகொண்டு,-பின்பு இயேசுவுடனே சொன்
னது: ஆண்டவரே, நீர் உம்முடைய இராச்சி
யத்தில் சேரும்பொழுது, அடியேனை நினைத்தரு
௪௩ ளும் என்றான்.—அவனுடனே இயேசுவானவர்
சொன்னது: இன்றைக்கு நீ என்னுடனேகூடப்
பரதீசில் இருப்பாய் என்று மெய்யாய் உனக்
குச் சொல்லுகிறேன் என்றார்.
௪௪ பின்பு [2]ஏறக்குறைய ஆறும் மணிநேரமா
யிற்று; (அதுமுதல்) ஒன்பதாம் மணிநேரம்வ
ரைக்கும், அந்தத் தேசத்தில் எங்கும் * அந்தகா
ரம் உண்டாகச் சூரியன் இருள் அடைந்தது.—
௪௫ அல்லாமலும் [3]தேவாலயத்தில் உள்ளே திரைச்
௪௬ சேலை நடுவிலே கிழிந்துபோயிற்று.—அல்லாம
லும் இயேசுவானவர், பிதாவே, [4]உம்முடைய
கைகளில் என் ஆவியை ஒப்புக்கொடுக்கிறேன்
என்று மிகுந்த சத்தத்தோடே கூப்பிட்டு, அதின்
பின்பு [5]ஜீவனைவிட்டார்.
௪௭ [6]அப்படிச் சம்பவித்தவைகளைப் படைத்த
லைவன் கண்டு, மெய்யாய் இந்த மனிதன் நீதி
மானாய் இருந்தான் என்று பராபரனைத் துதி
௪௮ செய்தான்.—அல்லாமலும் அந்தச் சங்கதியைப்
பார்க்கக் கூடிவந்திருந்த சனங்கள் எல்லாரும்
சம்பவித்தவைகளைப் பார்த்தபொழுது, தங்கள்
மார்புகளில் அடித்துக்கொண்டு திரும்பினார்க
௪௯ ள்.-[7]அன்றியும், அவருக்கு அறிமுகமானவர்கள்
எல்லாரும், கலிலேயாவிலிருந்து அவருக்குப்
பின்சென்றுவந்த ஸ்திரிகளும் தூரத்திலே நின்
று, அவைகளைப் பார்த்துக்கொண்டிருந்தார்கள்.
௫௰ [8]பின்பு யூதருடைய பட்டணமாகிய அறிமத்
தியா ஊரானுமாய், உத்தமமும் நீதியுமுள்ளவ
னுமாய், [9]பராபரனுடைய ஆளுகை வரக்காத்
௫௧ திருந்தவனுமாய்,-யூதருடைய ஆலோசனைக்கும்
செய்கைக்கும் சம்மதியாத ஆலோசனைக்காரனு
மாய் இருந்த யோசேப்பு என்பவன் பிலாத்துவி
௫௨ னிடத்தில் போய், — இயேசுவின் சரீரத்தைக்
௫௩ கேட்டு,-[10]அதை இறக்கி, மெல்லிய புடவை
யிலே சுற்றி, கல்மலையில் வெட்டப்பட்டது
மாய் ஒருக்காலும் ஒருவனும் வைக்கப்படா
ததுமாயிருந்த ஒரு கல்லறையிலே வைத்தான்.—
[11]அந்த நாள் ஆயத்த நாளாயிருந்தது; ஓய்வுநா ௫௪
ளும் ஆரம்பமாயிற்று.
[12]கலிலேயாவிலிருந்து அவருடனேகூட வந் ௫௫
திருந்த ஸ்திரிகள் அவனுக்குப் பின்சென்று,
[13]கல்லறையையும் அவருடைய சரீரம் வைக்
கப்பட்ட விதத்தையும் பார்த்து,—பின்பு திரும் ௫௬
பிப்போய், [14]சுகந்தவருக்கங்களையும் பரிமள
தயிலங்களையும் எத்தனம்பண்ணி, [15]கற்பனைப்
படியே ஓய்வுநாளில் ஓய்ந்திருந்தார்கள்.

## ௨௪. அதிகாரம்.

க. கிறிஸ்துவின் உயிர்த்தெழுதல் இரண்டுதூதர்களாலே கல்லறையினிடத்தில் வந்திருந்த ஸ்திரிகளுக்கு அறிவிக்கப்பட்டது. ௯. இந்தச் செய்தியை இவர்கள் மற்றவர்களுக்கு அறிவித்தது. ௰௩. கிறிஸ்து எம்மாவென்னும் கிராமத்திற்குப் போகிற இரண்டு சீஷர்களுக்குத் தரிசனையாகி, ௩௬. பின்பு அப்போஸ்தலர்கள் எல்லாருக்கும் காணப்பட்டு, அவர்களுடைய அவிசுவாசத்தைக் கடிந்துகொண்டு, ௪௭. அவர்களுக்கு ஒரு கட்டளை கொடுத்து, ௪௯. பரிசுத்தஆவியை அனுப்புவோமென்று வாக்குத்தத்தம்பண்ணி, ௫௧. பின்பு பரமண்டலத்துக்கு ஏறினது.

[16]வாரத்தின் முதல்நாள் அதிகாலையிலே, அவர் ௧
கள் தாங்கள் எத்தனம்பண்ணின [17]சுகந்தவருக்க
ங்களை எடுத்துக்கொண்டு,வேறு சில ஸ்திரிகளும்
கூடக் கல்லறையினிடத்தில் சென்று,-[18]அதின் ௨
மேல் இருந்த கல் தள்ளப்பட்டிருக்கிறதைக்
கண்டு,-[19]உட்பிரவேசித்து, கர்த்தராகிய இயேசு ௩
வின் சரீரத்தைக் காணாமல்,—அதைக்குறித்து மி ௪
குந்த கலக்கம் அடைந்துகொண்டிருக்கையில்,—
[20]பிரகாசமான வஸ்திரங்களையுடைய இரண்டு
பேர் அவர்கள் அருகே நின்றார்கள்.—அப்பொ ௫
ழுது அந்த ஸ்திரிகள் பயந்து, தரையைநோக்கிக்
குனிந்து நிற்கையில், அவ்விரண்டுபேரும் அவர்
களை நோக்கி, உயிரோடு இருக்கிறவரை† நீங்
கள் மரித்தோரிடத்தில் என்னத்தினாலே தேடுகி
றீர்கள்? அவர் இங்கே இல்லை; எழுந்துபோ
னார். — முன்னே அவர் கலிலேயா நாட்டில் ௭
இருந்த காலத்திலே, [21]மனிதனுடைய குமாரன்
பாவிகளான மனிதர் கைகளில் ஒப்புக்கொடுக்
கப்படவும், சிலுவையில் அறையப்படவும்,
மூன்றாம் நாளிலே திரும்ப எழுந்திருக்கவும்
வேண்டுமென்று உங்களுடனே சொன்னதை
நினைத்துக்கொள்ளுங்கள் என்றார்கள். — [22]அப் ௮
பொழுது அவர்கள் அவருடைய திருவசனங்
களை நினைத்து,—[23]கல்லறையைவிட்டுத் திரும்பி, ௯
அந்தச் சங்கதியைப் பதினொருவருக்கும் மற்ற
எல்லாருக்கும் அறிவித்தார்கள். — அதை அப் ௰
போஸ்தலருடனே சொன்னவர்கள், [24]மகுதலா
ஊராளாகிய மரியாளும், யோவன்னாளும், யாக்
கோபின் தாய் மரியாளும், இவர்களுடனே

1 மத். ௨௭. ௪௪. மாற். ௰௫. ௩௨. மாற். ௰௫.௩௩.-7 சங். ௩௮.௰௧.மத். ௨௭.௫௫. மாற். ௰௫.௪௰. யோவா. ௰௯.௨௫.—8 மத். ௨௭.௫௭. மாற். ௰௫. ௪௩. யோவா. ௰௯. ௩௮.
2 மத். ௨௭. ௪௫. மாற். ௰௫. ௩௩.
3 மத். ௨௭. ௫௧. மாற். ௰௫. ௩௮.
4 சங். ௩௧. ௫. ௧ பே. ௨. ௨௩.
5 மத். ௨௭. ௫௰. மாற். ௰௫. ௩௭. யோவா.௰௯.௩௰.-6 மத்.௨௭ ௫௪. 9 மாற்.௰௫.௪௩. லூக். ௨. ௨௫,௩௮. 10 மத். ௨௭. ௫௯. மாற். ௰௫. ௪௬.
11 மத். ௨௭. ௬௨.—12 லூக். ௮. ௨. ௰௯. ௫.—20 யோவா. ௨௰. ௰௨.
13 மாற். ௰௫. ௪௭.—14 மாற். ௰௬. ௧. அப். ௧.௰—21 மத். ௰௬. ௨௧: ௰௭. ௨௩. மாற். ௮.௩௧: ௯. ௩௧. லூக். ௯. ௨௨.—22 யோவா ௨. ௨௨.
15 ௨ மோ.௨௰.௰.—16 மத். ௨௮.௧. மாற். ௰௬. ௧. யோவா. ௨௰. ௧.
17 லூக். ௨௩. ௫௬.—18 மத்.௨௮.௨. 23 மத். ௨௮. ௮. மாற். ௰௬. ௰. மாற்.௰௬.௪.—19 ௨௩.௫௫. மாற். 24 லூக். ௮. ௩.

* அல்லது பூமியெங்கும்.—† அல்லது உயிரோடிருக்கிறவர்களை.

௰௧ இருந்த மற்ற ஸ்திரிகளுமே.—[1]அவர்கள்சொன்ன
வசனங்களை அப்போஸ்தலர்கள் ஒரு கட்டுக்
கதையைப்போல எண்ணி, அவர்களுடைய
௰௨ சொல்லை நம்பவில்லை. — [2]ஆனாலும் பேதுரு
எழுந்து, கல்லறையினிடத்துக்கு ஓடி, அதற்
குள்ளே பார்க்கக் குனிந்து, சேலைகளைத் தனியே
வைத்திருக்கக் கண்டு, சம்பவித்திருக்கிறதைக்
குறித்துத் தன்னில் ஆச்சரியப்பட்டுக்கொண்டு
போனான்.

௰௩ [3]அன்றியும் அன்றைத்தினமே, அவர்களில்
இரண்டுபேர் எருசலேம் நகரத்துக்கு அறுபதுஸ்
தாதி வழி தூரமான எம்மாவு என்னும் ஊருக்குப்
௰௪ போனார்கள். — (போகையில்) அவர்கள் சம்ப
வித்திருந்த இக்காரியங்கள் யாவையுங்குறித்து
ஒருவரோடொருவர் பேசிக்கொண்டார்கள்.—
௰௫ அப்படி அவர்கள் பேசி விசாரித்துக்கொள்ளுகி
றபொழுது, [4]இயேசுவானவர் தாமும் சமீபமாகி,
௰௬ அவர்களுடனேகூட நடந்தார்.—[5]அப்படியிருந்
தும், அவரை அறியாதபடிக்கு அவர்களுடைய
௰௭ கண்கள் மறைக்கப்பட்டிருந்தன. — அப்பொ
ழுது அவர் அவர்களை நோக்கி, நீங்கள் துக்கமுக
முள்ளவர்களாய் வழிநடந்து, ஒருவருக்கொரு
வர் சொல்லிக்கொள்ளுகிற காரியங்கள் என்ன
௰௮ வென்றார். — அதற்கு அவர்களில் ஒருவனாகிய
[6]கிலேயோப்பா என்பவன் சொன்னது: நீமாத்தி
ரமோ எருசலேமில் இந்நாள்களில் சம்பவித்த
வைகளை அறியாத அந்நியனாயிருக்கிறாய் என்
௰௯ றான்.—அவர் எவையென்றார், அதற்கு அவர்கள்
சொன்னது: நாசரேத்தூரானாகிய இயேசுவைக்
குறித்தவைகளே; [7]அவர் பராபரனுக்கும் சகல
சனங்களுக்கும் முன்பாக. செய்கையிலும் வச
னத்திலும் [8]வல்லமையுள்ள தீர்க்கதரிசியாய்
௨௰ இருந்தார்.—அப்படியிருந்தும், [9]நம்முடைய பிர
தான ஆசாரியரும் தலைவரும் அவரை மரண ஆக்
கினைக்கு உட்படுத்திச் சிலுவைமரத்தில் அறைந்
௨௧ தார்கள். — [10]இஸ்ரவேலரை மீட்பவர் அவரே
என்று நாங்கள் நம்பினோம்; அவைகள் சம்பவித்
௨௨ தது இன்று மூன்றுநாள் ஆகிறதே. — எங்களில்
சில ஸ்திரிகள் அதிகாலையிலே கல்லறையினி
டத்தில் போய், அவருடைய சரீரத்தைக்காணா
௨௩ மல் திரும்பி வந்து,—அவர் உயிரோடு இருக்
கிறார் என்று சொன்ன தேவதூதரைத் தரிசித்
தோம் என்று சொல்லி, [11]எங்களைப் பிரமிக்கப்
௨௪ பண்ணினார்கள். — [12]அப்பொழுது எங்களில்
சிலர் கல்லறையினிடத்தில் போய், ஸ்திரிகள்
சொன்னபடியே கண்டார்கள்; அவரைக் காண
௨௫ வில்லை என்றார்கள்.—அப்பொழுது அவர் அவர்
களுடனே சொன்னது: தீர்க்கதரிசிகள்சொன்ன
யாவையும் விசுவாசிக்கிறதற்குப் புத்தியில்லா
மல், மந்த இருதயம் உள்ளவர்களே! — [13]கிறிஸ் ௨௬
துவானவர் பாடுபடவும் தமது மகிமைக்குள் பிர
வேசிக்கவும் வேண்டியதாயிருந்ததில்லையா என்
றுசொல்லி,—[14]மோசேயையும் [15]சகல தீர்க்கதரி ௨௭
சிகளையும் தொடங்கி [16]வேதவாக்கியங்கள் எல்
லாவற்றிலும் தம்மைக்குறித்துச் சொல்லியிருக்
கிறவைகளை அவர்களுக்கு விவரமாய்க் காண்
பித்தார்.—அத்தருணத்திலே தாங்கள் போகிற ௨௮
ஊருக்குச் சமீபமானார்கள், [17]அப்பொழுது அவர்
அப்புறம்போக மனதைக் காண்பித்தார்.—அவர் ௨௯
கள் சொன்னது: [18]சாயந்தரமாயிற்றே; பொழு
தும் போகின்றதே; ஆகையால் நீர் எங்களிடத்தி
லே தங்கவேண்டும் என்று மிகவும் வேண்டிக்
கொண்டார்கள்; அதன்பின்பு அவர் அவர்களி
டத்திலே தங்கும்படி பிரவேசித்தார்.—அப்படி ௩௰
அவர்களுடனே பந்தியிருக்கையில், [19]அவர் அப்
பத்தை எடுத்து, ஆசீர்வாதம் சொல்லி, அதைப்
பிட்டு, அவர்களுக்குக் கொடுத்தார்.—அப்பொ ௩௧
ழுது அவர்களுடைய கண்கள் திறக்கப்பட அவ
ரை அறிந்தார்கள். — உடனே அவர் அவர்க ௩௨
ளுக்கு விலகினார்;* அப்பொழுது அவர்கள் ஒரு
வரை ஒருவர் நோக்கி, வழியிலே அவர் நம்மு
டனே பேசி,—வேதவாக்கியங்களை நமக்கு விளக் ௩௩
கமாய்க் காண்பித்தபொழுது, நமக்குள்ள இரு
தயம் அன்பாய்க் கொழுந்துவிட்டு வளரவில்லை
யா என்று சொல்லி, அந்நேரமே எழுந்து எருச
லேமுக்குத் திரும்பிப்போய், பதினொருவரும்
அவர்களோடு இருந்தவர்களும் கூடியிருக்கக்
கண்டு,—கர்த்தர் மெய்யாய் எழுந்திருந்து [20]சீமோ ௩௪
னுக்குத் தரிசனையானார் என்று அவர்கள் சொல்
லக்கேட்டு,—பின்பு வழியிலே நடந்தவைகளை ௩௫
யும், அவர் அப்பத்தைப் பிட்கையில் தாங்கள்
அவரை அறிந்துகொண்டதையும் விவரித்துச்
சொன்னார்கள்.

[21]அப்படி அவர்கள் பேசிக்கொள்ளுகையில், ௩௬
இயேசுவானவர் தாமே அவர்களுக்குள்ளே நின்
று, உங்களுக்குச் சமாதானசவுக்கியம் உண்டா
வதாக என்று அவர்களுடனே சொன்னார்.—
[22]அவர்கள் அவரை ஒரு ஆவியென்று எண்ணி, ௩௭
கலக்கமும் பயமும் அடைந்தார்கள்.—அப்பொ ௩௮
ழுது அவர் அவர்களை நோக்கி, நீங்கள் என்னத்
திற்காகக் கலங்குகிறீர்கள்? என்னத்திற்காக உங்
கள் இருதயங்களில் சந்தேகங்கள் எழும்புகின்
றன?—[23]என் கைகளையும் கால்களையும் பாருங் ௩௯
கள், நான்தான் இருக்கிறேன், என்னைத் தொட்

1 மாற். ௰௬. ௰௧. ௨௭. ௪௪.
2 யோவா. ௨௰. ௩, ௪.—3 மாற். ௰௬. ௰௨.—4 மத். ௰௮. ௨௰. ௩௩. ௪௪.
5 யோவா. ௨௰. ௰௪: ௨௧. ௪.
6 யோவா. ௰௯. ௨௫.—7 அப். ௭. ௨௨.—8 மத். ௨௧. ௰௧. லூக். ௭. ௰௬. யோவா. ௩. ௨: ௪. ௰௯: ௬. ௰௪: ௯. ௰௭. அப். ௨. ௨௨.
9 லூக். ௨௩. ௧. அப். ௰௩. ௨௭, ௨௮.
10 லூக். ௧. ௬௮: ௨. ௩௮. அப். ௧. ௬.
11 மத். ௨௮. ௮. மாற். ௰௬. ௰: ௬. ௰. ௪௪. யோவா. ௨௰. ௰௮.—12 ௰௨. ௪௪.—13 ௪௬. ௪௪. அப். ௰௭. ௩. ௧ பே. ௧. ௰௧.—14 ௧ மோ. ௩. ௰௫: ௨௨. ௰௮: ௨௬. ௪: ௪௯. ௰. ௫ மோ. ௰௮. ௰௫.
15 சங். ௰௬. ௯: ௰. ௨௨: ௬௯. ௨௧. ௭௪. ௭. ௰௪: ௯. ௬: ௪௦. ௰௧: ௫௦. ௬. ௯. ௨௩. ௫: ௩௩. ௰௪, ௰௫. எரே. ௨௩. ௫: ௩௩. ௰௪, ௰௫. எசே. ௩௪. ௨௩: ௩௭. ௨௫. தானி. ௯. ௨௪. மீகா. ௭. ௨௰. மல்கி. ௩. ௧: ௪. ௨. யோவா. ௧. ௪௫.
16 ௪௫. ௪௪.
17 ௧ மோ. ௩௨. ௨௬: ௪௨. ௭. மாற். ௬. ௪௮.—18 ௧ மோ. ௰௯. ௩. அப். ௰௬. ௰௫.
19 மத். ௰௪. ௰௯.—20 ௧ கொரி. ௰௫. ௫.—21 மாற். ௰௬. ௰௪. யோவா. ௨௰. ௰௯. ௧ கொரி ௰௫. ௫.
22 மாற். ௬. ௪௯.—23 யோவா. ௨௰. ௨௭.

* அல்லது காணப்படாமல்; ௪. ௩௰. யோவா. ௮. ௫௯.

டுப்பாருங்கள்; நீங்கள் காண்கிறபடி எனக்கு
மாம்சமும் எலும்புகளும் உண்டாயிருக்கிறது
போல, ஒரு ஆவிக்கும் இல்லையே என்று சொல்
௪௰ லி,—கைகளையும் கால்களையும் அவர்களுக்குக்
௪௧ காண்பித்தார்.—[1]அப்படியிருந்தும், சந்தோஷத்
தினாலே அவர்கள் பின்னும் விசுவாசியாமல் பிர
மிப்பாய் இருக்கிறபொழுது, [2]போசனத்துக்கு
௪௨ ஏதாகிலும் இங்கே உண்டா என்றார்.—அப்பொ
ழுது அவர்கள் பொரித்த மீன்கண்டத்தையும்,
தேன்கூட்டுத் துணிக்கையையும் அவருக்குக்
௪௩ கொடுத்தார்கள். — [3]அவைகளை அவர் எடுத்து,
அவர்களுக்குமுன்பாகப் புசித்து,

௪௪ பின்பு அவர்களுடனே சொன்னதாவது:
[4]மோசேயின் பிரமாணப் புத்தகத்திலேயும், தீர்க்
கதரிசனப் புத்தகத்திலேயும் சங்கீதப் புத்தகத்தி
லேயும், என்னைக்குறித்து எழுதியிருக்கிற யாவும்
நிறைவேறவேண்டும் என்று நான் உங்களோடே
இருந்த காலத்திலே, உங்களுடனே சொல்லிக்
கொண்ட சங்கதிகள் இவைகளே என்று சொல்
௪௫ லி,—பின்பு [5]வேதவாக்கியங்களை அவர்கள் அ
றிந்துகொள்ளும்படி, அவர்களுடைய மனதுக்
குப் புத்திகொடுத்து, அவர்களுடனே சொன்ன
௪௬ தாவது: — [6]இவ்விதமாய் எழுதியிருக்கின்றது;

அல்லாமலும் அந்தப்படியே கிறிஸ்து பாடுபட
வும், மூன்றாம் நாளிலே மரித்தோரிலிருந்து
எழுந்திருக்கவும்,—[7]எருசலேம் தொடங்கிச் சகல ௪௭
தேசத்தாருக்கும் அவருடைய நாமத்தினாலே
[8]மனம்திரும்புதலையும் பாவமன்னிப்பையும் பி
ரசங்கிக்கவும் வேண்டியதாயிருந்தது. — [9]நீங்க ௪௮
ளே அவைகளுக்குச் சாட்சிகளாய் இருக்கிறீர்
கள் —[10]பின்பு, நான் என் பிதா வாக்குத்தத்தம் ௪௯
பண்ணினதை உங்களுக்கு அனுப்புவேன்; நீங்
கள் உன்னதத்திலிருந்துவரும் பலனைப் பெற்
றுக்கொள்ளுகிறவரைக்கும் எருசலேம் நகரத்
தில் இருங்கள் என்றார்.

[11]பின்பு அவர் பெத்தானியா ஊர்வரைக்கும் ௫௰
அவர்களை அழைத்துக்கொண்டுபோய்த் தம்மு
டைய கைகளை உயர்த்தி அவர்களை ஆசீர்வதித்
தார். — [12]அவர்களை ஆசீர்வதிக்கையில், அவர் ௫௧
அவர்களைவிட்டுப் பிரிந்து, பரமண்டலத்திற்கு
எடுத்துக்கொள்ளப்பட்டார். — அப்பொழுது ௫௨
[13]அவர்கள் அவரைத் தொழுதுகொண்டு மிகுந்த
சந்தோஷத்தோடே எருசலேம் நகரத்துக்குத்
திரும்பி,—[14]இடைவிடாமல் தேவாலயத்திலே ௫௩
பராபரனைத் துதித்து வாழ்த்திக்கொண்டிருந்தார்
கள்.—ஆமென்.

1 ௧ யோ. ௪௫. ௨௧.—2 யோவா. ௨௧. ௫.—3 அப். ௰. ௪௧.
4 மத். ௰௬. ௨௧ : ௰௭. ௨௨ : ௨௰. ௰௮. மாற். ௮. ௩௧. லூக். ௯. ௨௨ : ௰௮. ௩௧, ௩. ௰௪.
5 அப். ௰௬. ௰௪.—6 ௨௧. ௰௪. ௪௬. ௨௨. ஏசா. ௫௰ ௬ : ௫௩. ௨. அப். ௰௭. ௩.
7 ௧ யோ. ௰௨. ௧. ௪௬. ௨௨. ௨௭. ஏசா. ௪௯. ௬, ௨௨. எரே. ௩௧. ௩௪. ஓசே. ௨. ௨௩. மீகா. ௪. ௨. மல்கி. ௧. ௰௧.
8 தானி. ௯. ௨௪. அப். ௰௩. ௩௮, ௩௯. ௧ யோ. ௨. ௰௨.—9 யோவா. ௰௫. ௨௭. அப். ௧. ௮, ௨௨ : ௨. ௩௨ : ௩. ௰௫.—10 ஏசா. ௪௪. ௩. யோவே. ௨. ௨௮. யோவா. ௰௪. ௰௬, ௨௬ : ௰௫. ௨௬ : ௰௬. ௭. அப். ௧. ௪ : ௨. ௩. ௰.—11 அப். ௧. ௰௨.—12 ௨ இரா. ௨. ௰௧. மாற். ௰௬. ௰௯. யோவா. ௨௰. ௰௭. அப். ௧. ௯. எபே. ௪. ௮.
13 மத். ௨௮. ௯, ௰௭.—14 அப். ௨. ௪௬ : ௫. ௪௨.

JOHN.

# யோவான் என்பவர்

## எழுதின சுவிசேஷம்.

### ௧. அதிகாரம்.

௧. இயேசுக்கிறிஸ்துவினுடைய தெய்வீகத்தையும், மனுஷீகத்தையும், உத்தியோகத்தையும் காட்டியது. ௰௫. அவரைக்குறித்து யோவான் கொடுத்த சாட்சியைச் சொல்லியது. ௩௫. அந்திரேயா பேதுரு முதலான சீஷர்கள் அழைக்கப்பட்டது.

௧ ஆதியிலே [1]வார்த்தை இருந்தது; அவ்வார்த்தை
[2]பராபரனிடத்தில் இருந்தது; அல்லாமலும்
௨ அவ்வார்த்தையே [3]பராபரன்.—அது ஆதியிலே
௩ [4]பராபரனிடத்தில் இருந்தது.—[5]சகலமும் அதி
னாலே உண்டாயிற்று; அது இல்லாமல் ஒரு
சிருஷ்டியும் உண்டாகவில்லை, [6]அதிலே சீவன்
௪ உண்டாயிருந்தது.—[7]அந்தச் சீவன் மனிதருடை
௫ ய ஒளியாய் இருந்தது.—[8]அந்த ஒளி இருளிலே
பிரகாசமாயிற்று; இருளானது அதைப் பற்றிக்
கொள்ளவில்லை.

௬ [9]யோவான் என்னும் ஒரு மனிதன் பராபர
௭ னால் அனுப்பப்பட்டு,—[10]தன்னாலே எல்லாரும்
விசுவாசிக்கும்படிக்கு அந்த ஒளியைக்குறித்துச்
௮ சாட்சிகொடுக்க வந்தான்.—அவன் அந்த ஒளி
அல்ல, அந்த ஒளியைக்குறித்துச் சாட்சிகொடுக்
கவே வந்தான்.

௯ [11]மெய்யான ஒளியானவர் உலகத்திலே தோ
ன்றுகிற மனிதர் யாவரையும் பிரகாசிப்பிக்கி
௰ றார்.—[12]அவர் உலகத்தில் இருந்தார்; அல்லாமலும்
உலகம் அவராலே உண்டாயிற்று; உலகம் அவ
௰௧ ரை அறியவில்லை.—[13]அவர் தமது சொந்தத்தில்
சேர்ந்தார்; அவருக்குச் சொந்தமானவர்கள் அவ
௰௨ ரை ஏற்றுக்கொள்ளவில்லை. — [14]அவருடைய
நாமத்தின்மேல் விசுவாசமாய் அவரை ஏற்றுக்
கொண்டவர்கள் எத்தனைபேர்களோ, அத்த
னைபேர்களும் பராபரனுடைய பிள்ளைகளாய்
இருக்கும்படி அதிகாரம்* கொடுத்திருக்கிறார்.—
[15]அவர்கள் இரத்தத்தினாலாவது, மாம்ச இச்சை ௰௩
யினாலாவது, புருஷனுடைய சித்தத்தினாலாவது
பிறவாமல், பராபரனாலே பிறந்தார்கள்.—[16]அந்த ௰௪
வார்த்தை [17]மனிதனாகி, [18]கிருபையினாலும் சத்தி
யத்தினாலும் நிறைந்தவராய் [19]நமக்குள்ளே வாசம்
பண்ணினார்; [20]அவருடைய மகிமையைக் கண்
டோம், அது பிதாவுக்கு ஒரே பேறானவருடைய
மகிமையாகவே இருந்தது.

[21] அவரைக்குறித்து யோவான் சாட்சியாக, ௰௫
[22]எனக்குப் பின்வருகிறவர் எனக்குமுன் இருந்
தவர், ஆகையால் [23]என்னிலும் மேன்மையுள்ளவ
ராய் இருக்கிறார் என்று நான் சொல்லியிருந்தே
னே, அவர் இவரே என்று கூப்பிட்டான்.—
[24]நியாயப்பிரமாணம் மோசேயின் மூலமாய்க் ௰௬
கொடுக்கப்பட்டது, [25]கிருபையும் [26]சத்தியமும்
இயேசுக்கிறிஸ்து மூலமாய் உண்டாயின.—
[27]ஆனபடியினாலே அவருடைய பரிபூரணத்தில் ௰௭
நாங்கள் எல்லாரும் மிகுந்த தயவைப் பெற்றுக்
கொண்டோம். — [28]ஒருவனும் தேவனை ஒருக் ௰௮
காலும் காணவில்லை; [29]பிதாவின் மடியில் இருக்
கிற ஒரே பேறான குமாரன் அவரை நமக்கு
வெளிப்படுத்தினார்.

[30]எருசலேமில் உள்ள யூதர்கள் ஆசாரியரை ௰௯
யும் லேவியரையும் யோவானிடத்திலே அனுப்
பி, நீர் யார் என்று விசாரித்தபொழுது,—யோ ௨௰
வான் கொடுத்த சாட்சியாவது: [31]அவன் மறுத
லியாமல் அறிக்கையிட்டான்; நான் கிறிஸ்து
அல்லவென்றே அறிக்கையிட்டான்.—அப்பொ ௨௧

---

1 வாக். அ.௨௨,௨௩.ழ. கொலோ. ௧.௰௭. ௧ யோ.௧.௧. வெளி.௧.௨: ௰௯.௰௩.—2 வாக்.அ.௩௰. யோவா. ௰௭.௫. ௧ யோ. ௧. ௨.—3 பிலி. ௨.௬. ௧ யோ. ௫.௭.—4 ௧ மோ. ௧.௧.—5 சங்.௩௩.௬.௰.வச. எபே. ௩. ௯. கொலோ. ௧. ௰௬. எபி. ௧. ௨. வெளி. ௪. ௰௧.
6 யோவா.௫.௨௬. ௧ யோ.௫.௰௧.
7 யோவா. அ.௰௨: ௯. ௫: ௰௨.௪௬, ௪௬.—8 யோவா. ௩.௰௯.—9 மல்கி. ௩.௧. மத்.௩.௧. லூக்.௩.௨.௩௩. வச.
10 அப். ௰௯. ௪.—11 ௪. வச. ஏசா. ௪௯. ௬. ௧ யோ. ௨. அ.
12 ௩. வச. எபி. ௧. ௨: ௰௧. ௩.
13 லூக்.௰௯.௰௪. அப். ௩. ௨௬: ௭௩. ௪௬.—14 ஏசா. ௫௬. ௫. உரோ. அ. ௰௫. கலா. ௩. ௨௬. ௨ பே. ௧. ௪. ௧ யோ. ௩. ௧.—15 யோவா. ௩. ௫. யாக். ௧. ௰அ. ௧ பே. ௧. ௨௩.
16 மத். ௧. ௰௯,௨௰. லூக். ௧. ௩௧, ௩௫: ௨. ௭. ௧ தீமோ. ௩. ௰௬.
17 எபி. ௨. ௰௧, ௰௪: ௰௬. ௰௭.
18 உரோ. ௧. ௩. கலா. ௪. ௪.
19 கொலோ. ௧. ௰௯: ௨.௩, ௯.
20 ஏசா. ௪௰.௫. மத்.௰௭.௨. யோவா. ௨. ௰௧: ௰௧.௪௰. ௨ பே. ௧. ௰௭.
21 ௩௨.வச. யோவா. ௩.௩௨: ௫.௩௩.
22 மத். ௩. ௰௧. மாற். ௧. ௭. லூக். ௩. ௰௬: ௨௭. ௩௰. வச. யோவா. ௩. ௩௩.—23 யோவா. அ. ௫௮. கொலோ. ௧. ௰௭.—24 ௨ மோ. ௨௰.௧. ழ. ௫ மோ. ௪.௪௪: ௫.௧: ௩௩. ௪.—25 உரோ. ௩. ௨௪: ௫. ௨௧: ௬. ௰௪.—26 யோவா. அ. ௩௨: ௰௪. ௬.
27 யோவா ௩. ௩௪. எபே. ௧. ௬, ௭, அ. கொலோ. ௧. ௰௯: ௨.௯, ௰.—28 ௨ மோ.௩௩. ௨௰. ௫ மோ. ௪. ௰௨. மத். ௰௧. ௨௭. லூக். ௰. ௨௨. யோவா. ௬. ௪௬. ௧ தீமோ. ௬.௰௬: ௯. ௰௧. ௧ யோ. ௪. ௰௨, ௨௰.—29 ௰௪. வச. யோவா. ௩. ௰௬, ௰அ. ௧ யோ. ௪. ௯.
30 யோவா. ௫. ௩௩.—31 லூக். ௩. ௰௫. யோவா. ௩. ௨அ. அப். ௰௩. ௨௫.

* அல்லது ஆதீனம்.

ழுது அவர்கள் அவனை நோக்கி, அப்படியானால்,
நீர் யார்? [1] எலியாவா என்று கேட்டார்கள்; அ
தற்கு அவன் நான் அவன் அல்ல என்றான்; அ
வர்கள் நீர் [2] தீர்க்கதரிசியானவரா* என்று கேட்
௨௨ டதற்கு, நான் அல்ல என்று சொன்னான்.—ஆ
தலால் அவர்கள் பின்னும் அவனை நோக்கி, எங்
களை அனுப்பினவர்களுக்கு நாங்கள் உத்தரவு
கொடுக்கும்படிக்கு, நீர்தாமே உம்மைக்குறித்து
௨௩ என்ன சொல்லுகிறீர் என்றார்கள்.—அதற்கு அ
வன் சொன்னது: [3] ஏசாயா தீர்க்கதரிசி சொன்ன
படியே, [4] நான் பராபரனுக்சாக மார்க்கத்தைச்
செம்மைப்படுத்துங்கள் என்று வனாந்தரத்திலே
கூப்பிடுகிறவனுடைய சத்தமாய் இருக்கிறேன்
௨௪ என்றான்.—அப்பொழுது அனுப்பப்பட்டவர்க
ளாகிய பரிசேயர் பின்னும் அவனை நோக்கி,—
௨௫ நீர் கிறிஸ்துவும் அல்ல, எலியாவும் அல்ல, தீர்க்க
தரிசியும் அல்ல என்றால், நீர் ஞானஸ்நானத்தை
௨௬ எப்படிக் கொடுக்கலாம் என்றார்கள்.—அதற்கு
யோவான் சொன்னது: [5] நான் சலத்தினாலே ஞா
னஸ்நானம் கொடுக்கிறேன்; [6] நீங்கள் அறியாதி
ருக்கிற ஒருவர் உங்களுக்குள்ளே இருக்கிறார்.-
௨௭ [7] அவர் எனக்குப்பின்பு வந்தும் எனக்குமுன்
இருந்தார்; அவருடைய பாதஇரட்சையின் வா
ரை அவிழ்ப்பதற்கு நான் பாத்திரன் அல்ல என்
௨௮ றான்.-[8] இவைகள் யோர்தான் ஆற்றின் அக்கரை
யில், யோவான் ஞானஸ்நானம்கொடுத்த பெத்
தாபரா ஊரிலே நடந்தன.

௨௯ மறுநாளிலே யோவான் இயேசுவைத் தன்னி
டத்திற்கு வரக்கண்டு, சனங்களுடனே சொன்
னதாவது: [9] அவரே உலகத்தின் பாவத்தைச்
௩௰ சுமந்து தீர்க்கிற † [10] தேவ ஆட்டுக்குட்டி.—[11] எ
னக்குப்பின் ஒரு புருஷன் வருகிறார் என்றும்,
அவர் எனக்குமுன் இருந்தபடியால் என்னிலும்
மேன்மையாயிருக்கிறார் என்றும் நான் சொன்
௩௧ னேனே, அவர் இவரே.—நானும் இவரை அறி
யாதிருந்தேன்; இப்பொழுது இவர் இஸ்ரவேல
ருக்கு வெளியாக்கப்படும்பொருட்டாய், [12] நான்
சலத்தினாலே ஞானஸ்நானம் கொடுக்கவந்தேன்
௩௨ என்றான்.—பின்னும் [13] யோவான் சாட்சியாகச்
சொன்னதாவது: புறாவைப்போல ஆவியானவர்
வானத்திலிருந்து இறங்கி, அவர்மேலே தங்கின
தைக் கண்டேன்; நான் அவரை அறியவில்லை.-
௩௩ அப்பொழுது சலத்தினாலே ஞானஸ்நானம் கொ
டுக்கும்படிக்கு, என்னை அனுப்பினவர் என்னு
டனே சொன்னது: நீ காணத்தக்கதாக ஆவியா
னவர் இறங்கித் தங்கப்படுபவர் யாரோ [14] அவ
ரே பரிசுத்தஆவியினாலே ஞானஸ்நானம் கொ
டுக்கிறவர் என்றார்.—அந்தப்படியே நான் கண்டு, ௩௪
இவரே பராபரனுடைய குமாரன் என்று சாட்சி
கொடுத்தேன் என்றான்.

மறுநாளிலே யோவானும், அவனுடைய சீஷ ௩௫
ரில் இரண்டுபேரும், மறுபடியும் நிற்கிறபொழு
து,-இயேசுவானவர் நடந்துபோகிறதை அவன் ௩௬
கண்டு, [15] அவரே தேவஆட்டுக்குட்டி என்றான்;
அவன் அப்படிச்சொன்னதை அவ்விரண்டு சீஷ ௩௭
ரும் கேட்டு, இயேசுவானவருக்குப் பின்சென்
றார்கள்.

அப்பொழுது இயேசுவானவர் திரும்பி அவர் ௩௮
கள் பின்வரக் கண்டு, அவர்களை நோக்கி, என்ன
தேடுகிறீர்கள் என்றார்.-அதற்கு அவர்கள்; இரபீ,
நீர் எங்கே தங்குகிறீர் ‡ என்றார்கள்; இரபீ என்
பதற்குப் போதகரே என்று அருத்தமாம்.—அவர் ௩௯
சொன்னது: நீங்கள் வந்து பாருங்கள் என்றார்;
அந்தப்படி அவர்கள் போய், அவர் தங்கிய இ
டத்தைப் பார்த்து, ஏறக்குறையப் பத்துமணி
நேரம் § ஆனபடியால், அன்றைத்தினம் அவரி
டத்திலே இருந்தார்கள்.—யோவான் சொன்ன ௪௰
தைக் கேட்டு, அவருக்குப் பின்சென்ற இரண்டு
பேரில் ஒருவன் [16] சீமோன்பேதுருவினுடைய
சகோதரனாகிய அந்திரேயா.—அவன் முதலாவது ௪௧
தன் சகோதரனாகிய சீமோனைக் கண்டு, மேசியா
வைக் கண்டோம் என்று அவனுடனே சொன்
னான்; மேசியா என்பதற்குக் ‖ கிறிஸ்து என்று
அருத்தமாம்.—பின்பு அவனை இயேசுவினிடத் ௪௨
திற்கு அழைத்துக்கொண்டு போனான்; இயேசு
வானவர் அவனைப் பார்த்து, நீ யோனாவின் மக
னாகிய சீமோன், இனிக் [17] கேபா என்று அழைக்
கப்படுவாய் என்றார்; கேபா என்றாலும் பே
துரு¶ என்றாலும் ஒக்கும்.

மறுநாளிலே இயேசுவானவர் கலிலேயா நாட் ௪௩
டுக்குப்போக மனதாய், பிலிப்பைக் கண்டு, நீ
எனக்குப் பின்சென்றுவா என்றார்.—[18] பிலிப் ௪௪
பென்பவன் அந்திரேயா பேதுரு என்பவர்களு
டைய ஊராகிய பெத்சாயிதாபட்டணத்தான்.—
[19] பிலிப்பென்பவன் நாத்தான்வேலைக் கண்டு ௪௫
அவனுடனே சொன்னது: [20] வேதத்திலே மோ
சேயும் [21] தீர்க்கதரிசிகளும் எழுதப்பட்டவரைக்
கண்டோம். [22] நாசரேத்தூரிலிருந்து வந்த யோ
சேப்பின் குமாரனாகிய இயேசு, அவரே என்
றான்.—அதற்கு நாத்தான்வேல் [23] நாசரேத்தூரி ௪௬
லிருந்தும் ஒரு நன்மை தோன்றுமா என்றான்;
பிலிப்பு, நீ வந்து பார் என்றான்.-அந்தப்படி இ ௪௭
யேசுவானவர் நாத்தான்வேலைத் தம்மிடத்திற்கு

1 மல்கி. ௪. ௫. மத். ௰௭. ௰.
2 ௫ மோ. ௰௮. ௰௫, ௰௮.—3 ஏசா. ௪௰. ௩.—4 மத் ௩. ௩. மாற். ௧௩. லூக். ௩. ௪. யோவா. ௩. ௨௮.
5 மத். ௩. ௰௧.—6 மல்கி. ௩. ௧.
7 ௰௫. ௩௰. வச. அப். ௰௯. ௪.
8 நியா. ௭. ௨௪ யோவா. ௰. ௪௰.
9 ஏசா. ௫௩. ௰௧. ௧ கொரி ௰௫. ௩. கலா. ௧. ௪. எபி ௧. ௩: ௨. ௰௭: ௯. ௨௮. ௧ பே. ௨. ௨௪: ௩. ௰௮. ௧ யோ ௨. ௨: ௩. ௫: ௪. ௰. வெளி. ௧. ௫.—10 ௨ மோ. ௰௨. ௩. ஏசா. ௫௩. ௭. ௧௧. வச. அப். ௮. ௩௨. ௧ பே. ௧. ௰௯. வெளி. ௫. ௬. ௯.
11 ௰௫. ௨௭. வச.—12 மல்கி ௩. ௧. மத். ௩. ௩. லூக். ௧. ௰௭. ௭௬, ௭௭: ௩. ௪.—13 மத். ௩. ௰௬. மாற். ௧. ௰. லூக். ௩. ௨௨. யோவா. ௫. ௩௨.
14 மத் ௩ ௰௧. அப். ௧. ௫: ௨. ௪: ௰. ௪௪: ௰௯. ௬.-15 ௨௯ வச.-16 யோவா. ௪. ௰௮.-17 மத் ௰௬ ௰௮.-18 யோவா. ௰௨. ௨௧.—19 யோவா. ௨௧. ௨.
20 ௧ மோ. ௩. ௰௫: ௪௯. ௰. ௫ மோ ௩. ௰௮. ௰௮ லூக் ௨௪. ௨௭.-21 ஏசா ௪. ௨: ௭, ௰௪: ௯. ௬: ௫௩. ௨. மீகா ௫. ௨. சகரி. ௬. ௰௨: ௯. ௯. லூக். ௨௪. ௨௭.-22 மத். ௨ ௨௩. லூக். ௨. ௪.—23 யோவா. ௭. ௪௧, ௪௨, ௫௨.

* அல்லது அந்தத்தீர்க்கதரிசி.—† அல்லது சுமக்கிற —‡ அல்லது சீவிக்கிறீர்.—§ சாயங்காலம் நாலுமணிவேளையில்.
‖ அல்லது அபிஷேகம்பண்ணப்பட்டவர்.—¶ அல்லது கன்மலை.

வரக்கண்டு, அவனைக்குறித்து, [1]இவனே கபட
மில்லாத மெய்யான இஸ்ரவேலன் என்றார்.—
சஅ அதற்கு நாத்தான்வேல், நீர் என்னை எப்படி அ
றிந்திருக்கிறீர் என்றான்; அவனுக்கு மாறுத்தர
மாக இயேசுவானவர் சொன்னது: பிலிப்பு
உன்னை அழைக்கிறதற்குமுன்னே, நீ அத்திம
ரத்தின்கீழ் இருக்கிறபொழுது, உன்னைக் கண்
சகூ டேன் என்றார்.—அதற்கு நாத்தான்வேல் இரபீ,
[2]நீரே பராபரனுடைய குமாரன், [3]நீரே இஸ்ர
ரு௰ வேலரின் இராசா என்றான்.—அதற்கு இயேசு
வானவர், அத்திமரத்தின்கீழே உன்னைக் கண்
டேன் என்று நான் உன்னுடனே சொன்னதி
னாலே விசுவாசித்தாய்; இதிலும் பெரிதானவை
ருக களைக் காண்பாய் என்றார்.—பின்னும் அவர்
அவனைநோக்கி, [4]இதுமுதல் நீங்கள் வானம்திறந்
திருக்கிறதையும், தேவதூதர்கள் மனிதனுடைய
குமாரனிடத்திலிருந்து ஏறுகிறதையும், அவர்
மேல் இறங்குகிறதையும் காண்பீர்கள் என்று
மெய்யாகவே உங்களுக்குச் சொல்லுகிறேன்
என்றார்.

## உ. அதிகாரம்.

க. கிறிஸ்து தண்ணீரைப் பழரசமாக்கினது. ௰உ. கப்பர்நாகூமுக்கும் எருசலேமுக்கும் போய், ௰ச தேவாலயத்திலே கொள்ளுகிறவர்களை யும், விற்கிறவர்களையும் துரத்தினது. ௰கூ. அவர் தம்முடைய மரணத் தையும் உயிர்த்தெழுதலையும் முன்னறிவித்தது. உக. அவர் செய்த அற்புதங்களின் நிமித்தம் விசுவாசித்த பற்பலருக்குத் தம்மை ஒப்புக் கொடாமல் இருந்தது

க மூன்றாம்நாளிலே [5]கலிலேயா நாட்டிலுள்ள
கானா ஊரிலே ஒரு கலியாணம் நடந்தது; இயே
உ சுவின் தாயும் அங்கே இருந்தாள்.-அல்லாமலும்
இயேசுவும் அவருடைய சீஷரும் கலியாணத்
௩ திற்கு அழைக்கப்பட்டிருந்தார்கள்.—அப்பொ
ழுது திராட்சஇரசம் குறைந்திருந்தபடியால்,
இயேசுவினுடைய தாய் அவரைநோக்கி, அவர்
களுக்குத் திராட்சஇரசம் இல்லை என்றாள்.—
ச அதற்கு இயேசுவானவர், [6]ஸ்திரியே, [7]எனக்
கும் உனக்கும் என்ன? [8]என்னுடைய நேரம்
ரு வரவில்லையே என்றார். — பின்பு அவருடைய
தாய் பணிவிடைக்காரரைநோக்கி, அவர் உங்க
ளுக்குச் சொல்லுகிறபடியே செய்யுங்கள் என்
சு றாள்.—[9]அங்கே யூதர்கள் தங்களைச் சுத்திகரிக்
கிற முறைமையின்படியே, ஒவ்வொன்று இரண்
டு மூன்று பெரிய குடம் தண்ணீரைக் கொள்ளு
கிற ஆறு கற்சாடிகள் வைக்கப்பட்டிருந்தன.—
எ பின்பு இயேசுவானவர் பணிவிடைக்காரரை
நோக்கி, சாடிகளிலே தண்ணீரை நிரப்புங்கள்
என்றார்; அவர்கள் அவைகள் நிறைய நிரப்பி
அ னார்கள்.—அதன்பின்பு, நீங்கள் இப்பொழுது
(இதை) மொண்டு பந்திவிசாரிப்புக்காரனிடத்
தில் கொண்டுபோங்கள் என்றார்; அவர்கள்
கூ கொண்டுபோனார்கள்.—அப்பொழுது [10]திராட்ச
இரசமாய்ப்போன தண்ணீரைப் பந்திவிசாரிப்
புக்காரன் ருசிபார்த்து, அது இரசமான வகை
யை அறியாமல் மணவாளனை அழைத்து,—எந்த ௰
மனிதனும் முன்பு நல்ல திராட்சஇரசத்தை
வார்த்து, சனங்கள் திருத்தியடைந்தபின்பு, ருசி
குறைந்ததை வார்ப்பான்; நீர் இதுவரைக்கும்
நல்ல இரசத்தை வைத்திருந்தீர் என்றான். தண்
ணீரை மொண்டுகொண்ட பணிவிடைக்காரர்
அந்த இரசம் உண்டான வகையை அறிந்தார்
கள் —இப்படி இயேசுவானவர் கலிலேயா நாட் ௰க
டிலுள்ள கானா ஊரிலே அற்புதங்களைச் செய்யத்
தொடங்கி, [11]தம்முடைய மகிமையை வெளிப்
படுத்தினார்; அவருடைய சீஷர் அவரிடத்தில்
விசுவாசம் வைத்தார்கள்.

[12]அதன்பின்பு அவரும், அவருடைய தாயும். ௰உ
அவருடைய சகோதரரும், சீஷரும் கப்பர்நா
கூம் ஊருக்குப்போய், சிலநாள் அங்கே தங்கி
னார்கள்.

[13]பின்பு யூதருடைய பஸ்காப் பண்டிகை ௰௩
சமீபமாயிற்று. — [14]அப்பொழுது இயேசுவான ௰ச
வர் எருசலேம் நகரத்திற்குப் போய், தேவால
யத்திலே மாடுகளையும் ஆடுகளையும் புறாக்களை
யும் விற்கிறவர்களும், காசுக்காரரும் உளுக்காந்
திருக்கிறதைக் கண்டு,—கயிற்றால் ஒரு கொற ௰ரு
டாவை உண்டுபண்ணி, அவர்கள் யாவரையும்,
ஆடுமாடுகளையும் தேவாலயத்திற்குப் புறம்பே
துரத்தி, காசுக்காரருடைய காசுகளைக் கொட்
டிப் பலகைகளைக் கவிழ்த்து,—புறாக்களை விற்கி ௰சு
றவர்களை நோக்கி, இவ்விடத்திலிருந்து இவை
களை எடுத்துக்கொண்டு போங்கள், [15]என் பிதா
வின் ஆலயத்தை வியாபார வீடாக்காதிருங்கள்
என்றார்.—அப்பொழுது உம்முடைய ஆலயத் ௰எ
தின் நிமித்தம் உண்டான [16]பத்திவயிராக்கியம்
என்னைப் பட்சித்தது என்று எழுதியிருக்கின்ற
தை அவருடைய சீஷர் நினைத்துக்கொண்டார்
கள்.

பின்பு யூதர்கள் அவரைநோக்கி, [17]எந்த அற் ௰அ
புதத்தை எங்களுக்குக் காண்பிக்கிறீர்? இப்ப
டிப்பட்டவைகளைச் செய்கிறீரே என்றார்கள்.—
அதற்கு இயேசுவானவர் சொன்னது: [18]இந்தத் ௰கூ
தேவாலயத்தை இடித்துப்போடுங்கள், பின்பு
நான் இதை மூன்று நாளுக்குள்ளே எழுப்பு
வேன் என்றார்.-யூதர்கள் சொன்னது: இந்தத் தே உ௰
வாலயம் நாற்பத்தாறு வருஷமாகக் கட்டப்பட்
டதே; நீர் இதை மூன்று நாளுக்குள்ளே எழுப்
புவீரா என்றார்கள்.—[19]அவர் தம்முடைய சரீர உக
மாகிய தேவாலயத்தைக்குறித்துப் பேசினார்.—
ஆதலால் [20]அவர் மரித்தோரிலிருந்து எழுந்து உஉ
போன பின்பு, அவர் சொன்னதை அவருடைய
சீஷர் நினைத்து, வேதத்தையும் இயேசுவானவர்

1 சங். கஉ. உ, எங. க யோ. அ. ககூ. உகொ. உ. உஅ, உகூ, ௩௰: ங. ங.—2 மத். ௰ச. ௩௩. 3 மத். உக இ: உஎ. ௰௩, சஉ. யோவா. ௰அ. ௩௩: ௰கூ. ௩.—4 க மோ. உஅ. ௰உ. மத். ச. ௰௩. லூக். உ. ௩, ௰௩: உஉ. சங: உச. ச. அப். ௩. ௰. 5 யோசு. ௰௩. உஅ.—6 யோவா. ௰கூ. உங.—7 உ சாமு. ௰கூ. ௰: ௰கூ. உஉ.—8 யோவா. எ. ௩. 9 மாற். எ. ௩.—10 யோவா. ச. சங. 11 யோவா. ௩. ௰ச.—12 மத். ௰உ. சங.

13 உ மோ. ௰உ. ௰ச. இ மோ. ௰௩. ௩: ௰௩. உ௩. ௩௪. யோவா. இ. ௩: ௩. —14 மத் உ௩. ௰உ. மாற். ௰௩. ௰இ. லூக். ௰௩. சஇ. 18 மத். உ௩. ௩௩: உஎ. சகூ. மாற். ௰ச. இஅ: ௰இ. உ௩.—19 கொலோ. உ. ௩. எபி. அ. உ. ௩ கொரி. ௩. ௰௩: ௩. ௰௩. உ கொரி ௩. ௰௩. 15 லூக். உ. சகூ.—16 சங். ௩௩ ௩. 20 லூக். உச. அ. 17 மத். ௰உ. ௩அ. யோவா. ௩. ௩௰

சொன்ன வசனத்தையும் அதிகமாய் விசுவாசித்
தார்கள்.
௨௩ அந்தப் பஸ்காப்பண்டிகையின் காலத்திலே
அவர் எருசலேம் நகரத்தில் இருக்கையில், அவர்
செய்த அற்புதங்களை அநேகம்பேர் கண்டு, அவ
௨௪ ரிடத்தில் விசுவாசம் வைத்தார்கள். — அப்படி
யிருந்தும், இயேசுவானவர் அவர்கள் எல்லாரை
யும் அறிந்தபடியினாலே, தம்மை அவர்களுக்கு
௨௫ ஒப்புக்கொடுக்கவில்லை. —[1] மனிதர் உள்ளத்தில்
இருப்பதை அவர் அறிகிறவரானபடியால், மனி
தனைக்குறித்து ஒருவரும் அவருக்கு அறிவைக்
கொடுக்கவேண்டுவதில்லை.

## ௩. அதிகாரம்.

௧. இயேசு நிக்கோதேமுக்கு மறுபிறப்பைக்குறித்தும், ௰௪. தமது மரணத்தை விசுவாசிப்பதைக்குறித்தும், ௰௬. உலகத்தார்மேல் பராபரன் வைத்த முக்கியமான அன்பைக்குறித்தும், ௰௮. அவிசுவாசத்தின் நிமித்தமாய் உண்டாகும் ஆக்கினையைக்குறித்தும் போதித்தது. ௨௨. யோவான் சனங்களுக்கு ஞானஸ்நானங்கொடுத்து, இயேசுவைக்குறித்துச் சாட்சி பகர்ந்து, உபதேசம்பண்ணினது.

௧ யூதருக்குள்ளே தலைவனாக நிக்கோதேமு என்
னப்பட்ட பரிசேயன் ஒருவன் இருந்தான்.—
௨ [2] அவன் இராத்திரிகாலத்திலே இயேசுவினிடத்
தில் போய், இரபீ, [3]தன்னுடனே பராபரன்
இராவிட்டால் [4]நீர் செய்கிற இப்படிப்பட்ட
அற்புதங்களைப்போல ஒருவனும் செய்யமாட்
டான். ஆகையால் நீர் பராபரனாலே வந்த போத
கர் என்று அறிந்திருக்கிறோம் என்றான்.
௩ இயேசுவானவர் அவனைநோக்கி, [5]ஒருவன்
மறுபடியும்* பிறவாவிட்டால், பராபரனுடைய
இராச்சியத்தைப் பார்க்கமாட்டான் என்று மெய்
யாகவே உமக்குச் சொல்லுகிறேன் என்றார்.
௪ அதற்கு நிக்கோதேமு, முதுமையுள்ள ஒரு மனி
தன் (மறுபடியும்) எப்படிப் பிறப்பான்? அவன்
இரண்டாம்தரம் தன்னுடைய தாயின் வயிற்றில்
பிரவேசித்துப் பிறக்கக்கூடுமோ என்றான்.
௫ இயேசுவானவர் சொன்னது: [6]ஒருவன் சலத்
தினாலும் ஆவியினாலும் பிறவாவிட்டால், பரா
பரனுடைய இராச்சியத்தில் பிரவேசிக்கமாட்
டான் என்று மெய்யாகவே உமக்குச் சொல்லு
௬ கிறேன். — மாம்சத்தினால் பிறப்பது மாம்சமாயி
ருக்கும்; ஆவியினால் பிறப்பது ஆவியாயிருக்
௭ கும். — நீங்கள் மறுபடியும்† பிறக்கவேண்டு
மென்று நான் உமக்குச் சொன்னதைக்குறித்து,
௮ நீர் அதிசயப்பட வேண்டுவதில்லை. —[7] காற்றா
னது தனக்கு இஷ்டமான இடத்தில் செல்லு
கின்றது; அதின் சத்தத்தைக் கேட்கிறீர்; ஆகிலும்
அது வந்த இடத்தையும் அது போகும் இடத்தை
யும் அறியமாட்டீர்; ஆவியினாலே பிறந்தவன்
எவனோ, அவனும் அப்படியே இருக்கிறான்
என்றார்.
அதற்கு நிக்கோதேமு [8]இது சம்பவிப்பது எப் ௯
படி என்றான்.
இயேசுவானவர் சொன்னது: நீர் இஸ்ரவேல ௰
ருக்குள்ளே போதகராயிருந்தும், இவைகளை
அறியாமல் இருக்கிறீரா?—[9] மெய்யாகவே நான் ௰௧
உமக்குச் சொல்லுகிறதாவது: நாங்கள் அறிந்தி
ருக்கிறதைச்சொல்லி நாங்கள் கண்டதைக்குறித்
துச் சாட்சிகொடுத்துவந்தும், [10]நீங்கள் எங்கள்
சாட்சியை ஏற்றுக்கொள்ளுகிறதில்லை.—பூமிக்கு ௰௨
ஏற்றவைகளை நான் உங்களுக்குச் சொல்லியும்.
நீங்கள் விசுவாசிக்க இல்லையே; பரமகாரியங்
களை நான் உங்களுக்குச் சொன்னால், எப்படி
விசுவாசிப்பீர்கள்? — [11]பரமண்டலத்திலிருந்து ௰௩
இறங்கியும், பரமண்டலத்திலே இருக்கிற மனித
குமாரனே அன்றி ஒருவரும் பரமண்டலத்திற்கு
ஏறவில்லையே. — அல்லாமலும் [12]பாம்பானது ௰௪
வனாந்தரத்திலே மோசேயினாலே உயர்த்தப்பட்
டதுபோல, [13]மனிதனுடைய குமாரனும் உயர்த்
தப்படவேண்டும். — அவனை [14]விசுவாசித்துக் ௰௫
கொள்ளுகிறவன் எவனோ, அவன் கெட்டுப்
போகாமல் நித்தியசீவனை அடையும்படிக்கு
அப்படியே ஆகவேண்டும்.
என்னத்தினாலெனில், [15]பராபரன், தம்மு ௰௬
டைய ஒரேபேறான குமாரனை விசுவாசிக்கிற
வன் எவனோ, அவன் கெட்டுப்போகாமல் நித்தி
யசீவனை அடையும்படிக்கு அவரையே கொ
டுத்து, இவ்வளவாய் உலகத்தாரிடத்தில் அன்பா
யிருந்தார்.—[16]பராபரன் உலகத்தாரை ஆக்கினைக் ௰௭
குட்படுத்தும்படிக்காக அல்ல, உலகத்தாரை இ
ரட்சிக்கும்படிக்காகவே தம்முடைய குமாரனை
உலகத்தில் அனுப்பினார்.—அவரை [17]விசுவாசித் ௰௮
துக்கொள்ளுகிறவன் ஆக்கினைக்குள்ளாகத் தீர்க்
கப்படான்; அவரை விசுவாசியாதவனோ பரா
பரனுடைய ஒரேபேறான குமாரனுடைய நாமத்
தின்மேல் விசுவாசமுள்ளவனாய் இராதபடி
யால், அவனுக்கு ஆக்கினைத்தீர்ப்புச் செய்தாயிற்
று. — [18]ஒளியானது உலகத்தில் வந்திருந்தும், ௰௯
மனிதர் தங்கள் கிரியைகள் பொல்லாதவைக
ளாய் இருக்கிறபடியால், அந்த ஒளியிலும் இரு
ளை விரும்பிக்கொண்டுவருகிறதே ஆக்கினைத்தீர்
ப்புக்கு ஏதுவாயிருக்கின்றது. — [19]பொல்லாங் ௨௰
கைச்செய்கிற யாவனும் ஒளியைப் பகைக்கிற
தால், தன் கிரியைகள் அதட்டப்படாதபடிக்கு‡
ஒளியில் சேரமாட்டான்.—சத்தியத்தைச் செய்கி ௨௰௧
றவனோ தன் கிரியைகளைப் பராபரனுடைய
சித்தத்தின்படி செய்கிறபடியினாலே, அவைகள்

1 ௧ சாமு ௰௬.௭. ௧ நாளா.௨௮.௯. மத்.௯.௪. மாற்.௨.௮. யோவா.௬. ௬௪: ௰௬.௩௰. அப் ௧.௨௪. வெளி. ௨.௨௩. — 2 யோவா ௭.௫௰: ௰௯. ௩௯. — 3 அப். ௰. ௩௮. 4 யோவா ௯.௰௬,௩௩. அப்.௨.௨௨. 5 யோவா ௧.௰௩. கலா.௬.௰௫. தீத். ௩.௫. யாக் ௧. ௰௮. ௧ பே. ௧.௨௩. ௧ யோ. ௩. ௯. — 6 மாற். ௰௬. ௰௬. அப். ௨. ௩௮. — 7 பிர. ௰௧. ௫. ௧ கொரி ௨. ௰௧. — 8 யோவா. ௩. ௨௫, ௩௰. — 9 மத். ௰௧. ௨௭. யோவா ௧. ௰௮: ௭. ௰௬: ௮. ௨௮: ௰௨. ௪௯: ௰௪. ௨௪.

10 ௩௨. வச. — 11 வாக். ௩௰. ௪. யோவா. ௬. ௩௩, ௩௮, ௫௰. ௬௨: ௰௬.௨௮. அப்.௨.௩௪. ௧ கொரி. ௰௫. ௪௭. எபே. ௪. ௯, ௰. 12 ௪ மோ ௨௧.௯. — 13 யோவா ௮. ௨௮: ௰௨. ௩௨. — 14 ௩௩. வச. யோவா. ௬. ௪௭. 15 ௨ரோ. ௫. ௮. ௧ யோ. ௪. ௯. 16 லூக். ௯. ௫௬. யோவா. ௫. ௪௫: ௮. ௰௫: ௰௨. ௪௭. ௧ யோ. ௪. ௰௪. — 17 யோவா. ௫. ௨௪: ௬. ௪௰, ௪௭: ௨௰. ௩௧. — 18 யோவா. ௧. ௪, ௯, ௰௧: ௮. ௰௨. — 19 யோபு. ௨௪. ௰௩, ௰௭. எபே. ௫. ௰௩.

* அல்லது உயரத்திலிருந்து. — † அல்லது உயரத்திலிருந்து. — ‡ அல்லது வெளிப்படுத்த.

வெளியாகும்படிக்கு ஒளியிலே சேருகிறான்
என்றார்.
௨௨ அதின்பின்பு இயேசுவானவரும் அவருடைய
சீஷரும் யூதேயா தேசத்திலே போனார்கள்; அங்
கே அவர்களோடேகூடச் சஞ்சரித்து, [1]ஞானஸ்
௨௩ நானம் கொடுத்துவந்தார்.—[2]அல்லாமலும் அக்
காலத்திலே காவலில் வைக்கப்படாதிருந்த யோ
வானும், [3]சாலிமூரின் அருகே இருக்கிற அயி
னோன் ஊரிலே மிகுந்த சலம் உண்டாயிருந்தப
டியால், அங்கே ஞானஸ்நானம் கொடுத்துவந்
௨௪ தான்.—சனங்கள் [4]அவ்விடத்திற்குப்போய் ஞா
னஸ்நானம் பெற்றார்கள்.
௨௫ அப்பொழுது யோவானுடைய சீஷரில் சில
ரும், மற்ற யூதரும் சுத்தம்பண்ணுதலைக்குறித்து
௨௬ வாக்குவாதம்பண்ணிக்கொண்டு,—பின்பு யோ
வானிடத்தில் போய், இரபீ, உம்முடனேகூட
யோர்தானின் அக்கரையிலே ஒருவர் இருந்தா
ரே, [5]நீரும் அவரைக்குறித்துச் சாட்சிகொடுத்தீ
ரே, அவரும் ஞானஸ்நானம் கொடுக்கிறார்; எல்
லாரும் அவரிடத்தில் போகிறார்கள் என்றார்கள்.
௨௭ அதற்கு யோவான் சொன்னது: [6]ஒரு மனிதனா
னவன் தனக்குப் பரமண்டலத்திலிருந்து கொ
டுக்கப்படாவிட்டால், தானாய் ஒன்றையும் தன்
னுடையதாக்கிக்கொள்ளத் * திராணியில்லை.—
௨௮ [7]நான் கிறிஸ்தல்ல, [8]அவருக்கு முன்னாக அனுப்
பப்பட்டவனாய் இருக்கிறேன் என்று நான்
சொன்னதைக்குறித்து நீங்களே எனக்காகச்சாட்
௨௯ சிகளாயிருக்கிறீர்கள்.— [9]மணவியையுடையவ
னே மணவாளன்; [10]மணவாளனுடைய சிநேகி
தன் நின்று அவருடைய சொல்லைக் கேட்கிற
வனாய், அவருடைய சத்தத்தைக்குறித்து மிகவும்
சந்தோஷப்படுகிறான்; இந்தச் சந்தோஷம் எனக்
௩௰ குச் சம்பூரணமாய் உண்டாயிற்று.— அவர்
௩௧ பெருகவும் நான் குறையவும் வேண்டும்.—[11]உ
யரத்திலிருந்து வருகிறவர் [12]எல்லாரிலும் மேலா
னவர்; [13]பூமியிலிருந்துண்டானவன் பூமியின்
தன்மையுடையவனாய்ப் பூமியின் தன்மைப்படி
பேசுகிறான்; [14]பரத்திலிருந்து வருகிறவர் எல்
௩௨ லாரிலும் மேலானவராயிருந்து,— [15]தாம் கண்டு
கேட்டதைச் சாட்சியாகச் சொல்லுகிறார்; அப்
படியிருந்தும் அவருடைய சாட்சியை ஒருவ
௩௩ ரும் ஏற்றுக்கொள்ளவில்லை.—அவருடைய சாட்
சியை ஏற்றுக்கொள்ளுகிறவன் [16]பராபரன் சத்தி
யமுடையவர் என்று நிச்சயப்படுத்துகிறான்.—
௩௪ [17]பராபரனாலே அனுப்பப்பட்டவர் பராபரனு
டைய வசனங்களைச் சொல்லுகிறார்; [18]அல்லாம
லும், பராபரன் தமது ஆவியை அளவாய் அவ
ருக்குக் கொடுக்கவில்லை.—[19]பிதாவானவர் குமா ௩௫
ரனிடத்தில் அன்பாயிருந்து, சகலத்தையும் அவ
ருக்கு ஒப்புக்கொடுத்தார். — [20]குமாரனிடத்தில் ௩௬
விசுவாசமாய் இருக்கிறவன் நித்தியசீவனை
உடையவனாயிருக்கிறான்; குமாரனை விசுவாசி
யாதவன் சீவனைக் காண்பதில்லை; பராபரனு
டைய கோபாக்கினையே அவன்மேல் நிலைநிற்
கும் என்றான்.

## ௪. அதிகாரம்.

௧. கிறிஸ்து சமாரியா நாட்டாளாகிய ஒரு ஸ்திரீயினிடத்தில் சம்பாஷித்து, அவளுக்குத் தம்மை இன்னார் என்று அறிவித்தது. ௨௭. அவருடைய சீஷர்கள் அதைப்பற்றி ஆச்சரியப்பட்டது. ௩௧. பராபரனுடைய மகிமையைக்குறித்துத் தமக்கிருந்த வைராக்கியத்தை அவர்களுக்கு அறிவித்தது. ௩௯. சமாரியரில் அநேகர் அவரை விசுவாசித்தது ௪௩. அவர் கலிலேயாவுக்குப் போய்க் கப்பர்நாகூமிலே ஒரு தலைவனுடைய மகனைச் சொஸ்தமாக்கினது.

அக்காலத்தில் யோவானிலும் [21]இயேசுவான ௧
வர் அநேகம்பேரைச் சீஷராக்கி ஞானஸ்நானம்
கொடுக்கிறார் என்று பரிசேயர் கேள்விப்பட்
டார்கள். — அதைக் கர்த்தர் அறிந்து, யூதேயா ௨
நாட்டைவிட்டு, மறுபடியும் கலிலேயா நாட்டுக்
குப் போனார்.—இயேசுவானவர் தாமே ஞானஸ் ௩
நானம் கொடுக்கவில்லை; அவருடைய சீஷர்க
ளே கொடுத்தார்கள். — அப்பொழுது அவர் ௪
சமாரியா நாட்டின் வழியாய்ப் போகவேண்டிய
தாயிருந்தது.—ஆதலால் [22]யாக்கோபு தன் குமார ௫
னாகிய யோசேப்புக்குக் கொடுத்த நிலத்துக்கு
அருகான சீகார் என்னப்பட்ட சமாரியாவின்
ஊரிடத்தில் இயேசுவானவர் சேர்ந்து, — அங் ௬
கே இருந்த யாக்கோபின் கிணற்றின் அருகே
ஏறக்குறைய ஆறும்மணி நேரத்திலே பிரயாணத்
தினால் இளைப்படைந்தவராய் உளுக்காந்தார்.
அப்பொழுது அவருடைய சீஷர் உணவுக ௭
ளைக் கொள்ளும்படி ஊருக்குள்ளே போயி
ருந்த காலத்திலே, சமாரியா நாட்டாளாகிய ஒரு
ஸ்திரி தண்ணீர் மொண்டுகொள்ளும்படிக்குச்
சேர்ந்தாள். — அவளுடனே இயேசுவானவர், ௮
தாகத்துக்குத் தா என்றார்.—[23]யூதர்கள் சமாரியா ௯
நாட்டாருடனே கலவாமலிருக்கிறபடியினாலே,
சமாரியஸ்திரி அவரை நோக்கி, நீர் யூதனாயி
ருக்க, சமாரியஸ்திரியாகிய என்னிடத்திலே
தாகத்துக்குத் தா என்று எப்படிக் கேட்கலாம்
என்றாள்.
அதற்கு இயேசுவானவர் சொன்னது: நீ பரா ௰
பரனுடைய ஈவையும், தாகத்துக்குத் தா என்று
உன்னுடனே சொல்லுகிறவனையும் அறிந்தா
யானால், நீயே அவனிடத்தில் விண்ணப்பம்
பண்ணுவாய்; [24]அவன் சீவதண்ணீரை உனக்

1 யோவா. ௪. ௨.—2 மத். ௰௪. ௩.
3 ௧ சாமு. ௯. ௪.—4 மத். ௩. ௫, ௬.
5 யோவா. ௧. ௭: ௰௯. ௨௭, ௩௪.
6 ௧ கொரி. ௪. ௭. எபி. ௫. ௪. யாக். ௧. ௰௭.—7 யோவா. ௧. ௨௰, ௨௭.
8 மல்கி. ௩. ௧. மாற். ௧. ௨. லூக். ௧. ௰௭.—9 மத். ௨௨. ௨. ௨ கொரி. ௰௧. ௨. எபே. ௫. ௨௫, ௨௭. வெளி. ௨௧. ௯.—10 உன். ௫. ௧.
11 ௰௩. வச. யோவா. ௮. ௨௩
12 மத். ௨௮. ௰௮ யோவா. ௧. ௰௫, ௨௭. உரோ. ௯. ௫
13 ௧ கொரி. ௰௫. ௪௭.—14 யோவா. ௬. ௩௩. ௧ கொரி. ௰௫. ௪௭. எபே. ௧. ௨௧. பிலி. ௨. ௯.
15 ௩௨. வச. யோவா. ௮. ௨௬: ௰௫. ௰௫.
16 உரோ. ௩. ௪. ௧ யோ. ௫. ௰.
17 யோவா. ௭. ௰௬.—18 யோவா ௧. ௰௬.—19 மத் ௰௧. ௨௭: ௨௮. ௰௮. லூக். ௰. ௨௨. யோவா ௫. ௨௰, ௨௨: ௰௩. ௩: ௰௭. ௨ எபி. ௨ ௮.
20 ஆப. ௨. ௪. யோவா. ௧. ௰௨: ௩. ௰௫: ௰௬, ௰௮ வச. உரோ. ௧. ௰௭. ௧ யோ. ௫. ௰.
21 யோவா. ௩. ௨௨, ௨௬.
22 ஆதி. ௩௩. ௰௯: ௪௮. ௨௨. யோசு. ௨௪. ௩௨.
23 ௨ இரா. ௰௭. ௨௪. லூக். ௯. ௫௨, ௫௩. அப். ௰. ௨௮.—24 ஏசா. ௰௨. ௩: ௪௪. ௩. எரே. ௨. ௰௩. சகரி. ௰௩. ௧: ௰௪. ௮.

* அல்லது ஏற்றுக்கொள்ள.

௰௧ குக் கொடுப்பான் என்றார். — ஸ்திரியானவள்
சொன்னது: ஆண்டவரே, மொண்டுகொள்ளுகி
றதற்கு உம்மிடத்தில் பாத்திரம் இல்லையே; கிண
றும் ஆழமாயிருக்கிறதே, ஆதலால் எங்கேயிருந்து
௰௨ ஜீவதண்ணீர் உமக்கு உண்டாயிற்று? — நம்மு
டைய தகப்பனாகிய யாக்கோபும், அவருடைய
பிள்ளைகளும், அவருடைய ஜீவசெந்துக்களும்
இந்தக் கிணற்றிலே குடித்தார்கள்; அவரே இதை
எங்களுக்குக் கொடுத்தார்; அவரிலும் நீர் பெரிய
வரா என்றாள்.

௰௩ அதற்கு இயேசுவானவர் சொன்னது: இந்தத்
தண்ணீரைக் குடிக்கிறவன் மறுபடியும் தாக
௰௪ மடைவான்.—[1]நான் கொடுக்கிற தண்ணீரைக்
குடிக்கிறவன் எவனோ, அவன் என்றென்றைக்
கும் தாகமடைவதில்லை; நான் அவனுக்குக் கொ
டுக்கும் தண்ணீர் அவனுக்குள்ளே [2]நித்தியஜீ
வன்வரைக்கும் ஊறுகிற நீரூற்றாம் என்றார்.—
௰௫ [3]ஸ்திரியானவள் சொன்னது: ஆண்டவரே, நான்
தாகமடையாமலும், இங்கே மொண்டுகொள்
ளும்படி வாராமலும் இருப்பதற்கு, நீர் அப்
படிப்பட்ட தண்ணீரை எனக்குத் தரவேண்டும்
என்றாள்.

௰௬ அப்பொழுது இயேசுவானவர் அவளை நோக்
கி, நீ போய், உன் புருஷனை அழைத்துக்கொண்
௰௭ டுவா என்றார்.— அதற்கு ஸ்திரியானவள், எனக்
குப் புருஷன் இல்லை என்றாள்; இயேசுவானவர்
சொன்னது: எனக்குப் புருஷன் இல்லை என்று நீ
௰௮ செம்மையாய்ச் சொன்னாய்.—எப்படியெனில்.
ஐந்துபுருஷர் உனக்கு இருந்தார்கள்; இப்பொ
ழுது இருக்கிறவன் உனக்குப் புருஷன் அல்ல;
௰௯ அதை நீ உள்ளபடி சொன்னாயென்றார்.—அப்
பொழுது ஸ்திரியானவள் அவரை நோக்கி, [4]ஆண்
டவரே, நீர் தீர்க்கதரிசி என்று எனக்குத் தோன்று
௨௰ கின்றது.—நம்முடைய பிதாக்கள் [5]இந்த மலையி
லே தொழுதுகொண்டார்களே, [6]நீங்கள் எருச
லேமிலுள்ள தலத்திலே தொழுதுகொள்ளவேண்
௨௧ டும் என்கிறீர்களே என்றாள்.—இயேசுவானவர்
சொன்னது: ஸ்திரியே, [7]நீங்கள் இந்த மலையிலா
வது, எருசலேமிலாவது பிதாவைத் தொழுது
௨௨ கொள்ளாதிருக்கும் காலம் வருகின்றது.–என்னை
நம்பு, [8]நீங்கள் அறியாததைத் தொழுதுகொள்ளு
கிறீர்கள்; [9]யூதர்களாகிய எங்களிடத்திலிருந்து
இரட்சிப்புத் தோன்றுவதால், நாங்கள் அறிந்தி
௨௩ ருக்கிறதைத் தொழுதுகொள்ளுகிறோம்.—அல்
லாமலும் உண்மையாய்த் தொழுதுகொள்ளுகிற
வர்கள் பிதாவை [10]ஆவியினாலும் [11]உண்மையினா
லும் தொழுதுகொள்ளும் காலம் வரும்; இப்பொ
ழுதும் வந்திருக்கின்றது; அப்படியே தம்மைத்
தொழுதுகொள்ளுகிறவர்களைப் பிதாவானவர்
௨௪ விரும்புகிறாரே.—[12]பராபரன் ஆவியாய் இருக்
கிறார்; அவரைத் தொழுதுகொள்ளுகிறவர்கள்
ஆவியினாலும் உண்மையினாலும் அவரைத் தொ
ழுதுகொள்ளவேண்டும் என்றார்.—(அப்பொழு ௨௫
து) ஸ்திரியானவள் சொன்னது: மேசியா வருகி
றார் என்று அறிந்திருக்கிறேன்; அவர் வரும்பொ
ழுது [13]எல்லாவற்றையும் நமக்கு அறிவிப்பார்
என்றாள்; மேசியா என்பதும் கிறிஸ்து என்பதும்
ஒக்கும்.

இயேசுவானவர் சொன்னது: [14]உன்னுடனே ௨௬
பேசுகிற நானே அவர் என்றார்.—அத்தருணத்தி ௨௭
லே அவருடைய சீஷர் வந்து, ஸ்திரியுடனே
அவர் பேசிக்கொள்ளுகிறதைக் (கண்டு,) ஆச்ச
ரியப்பட்டார்கள்; ஆகிலும் என்ன தேடுகிறீர்
என்றாவது, என்னத்தினாலே இவளுடனே பே
சுகிறீர் என்றாவது, ஒருவனும் (அவரிடத்தில்
கேட்கவில்லை).—ஸ்திரியானவள் தன் குடத்தை ௨௮
வைத்து, ஊருக்குள்ளே போய், சனங்களை நோக்
கி,—[15]நான் செய்த யாவையும் எனக்கு ஒரு ௨௯
மனிதன் சொன்னான்; அவன் கிறிஸ்துவா, அல்
லவா என்று வந்து பாருங்கள் என்றாள்.— அந் ௩௰
தப்படி அவர்கள் ஊரிலிருந்து புறப்பட்டு, அவ
ரிடத்தில் சேர்ந்தார்கள்.

அதற்குமுன்னே சீஷர் அவரை நோக்கிப் ௩௧
போதகரே, சாப்பிடும் என்று வேண்டிக்கொண்
டார்கள்.—அதற்கு அவர், நீங்கள் அறியாதிருக் ௩௨
கிற போசனம் என்னிடத்தில் உண்டு என்றார்.–
அப்பொழுது சீஷர் ஒருவரை ஒருவர் நோக்கி, ௩௩
மற்றொருவன் அவருக்குப் போசனம் கொண்டு
வந்திருப்பானோ என்றார்கள்.—பின்னும் இயேசு ௩௪
வானவர் அவர்களுடனே சொன்னதாவது:
[16]நான் என்னை அனுப்பினவருடைய சித்தத்தின்
படி செய்து, அவருடைய கிரியையை முடிப்ப
தே என்னுடைய போசனமாய் இருக்கின்றது.–
அறுப்புநாள் வருகிறதற்கு நாலுமாதம் செல்லு ௩௫
மென்று நீங்கள் சொல்லுகிறதில்லையா? அதோ,
வயல்நிலங்கள் விளைந்து, இப்பொழுதே [17]அறுப்
புக்கு வெண்மையாய் இருக்கின்றன என்று உங்
கள் கண்களை உயர்த்திப்பாருங்கள் என்று உங்
களுக்குச் சொல்லுகிறேன்.—விதைக்கிறவனும் ௩௬
அறுக்கிறவனும் கூடச் சந்தோஷப்படத்தக்க
தாக, [18]அறுக்கிறவன் கூலியை வாங்கி நித்திய
ஜீவனுக்காகப் பலனைச் சேர்த்துக்கொள்ளுகி
றான்.—இதைக்குறித்து ஒருவன் விதைக்கிறான், ௩௭
மற்றொருவன் அறுக்கிறான் என்கிற வழக்கச்
சொல் மெய்யாய் இருக்கின்றது.—நீங்கள் பிர ௩௮
யாசப்படாத பயிரை அறுக்கும்படிக்கு நான்
உங்களை அனுப்பினேன்; மற்றவர்கள் வேலை
செய்தார்கள்; நீங்கள் அவர்களுடைய வேலை
யினால் எத்தனமானதில் பிரவேசித்தீர்கள் என்
றார்.

1 யோவா. ௬. ௩௫. ௫௮.–2 யோவா. ௭. ௩௮.–3 யோவா. ௬. ௩௪: ௰௭. ௨. ௧. ௨ கொ. ௯. ௨௧. ௧ யோ. ௫. ௨௰.–4 லூக். ௭. ௰௬: ௨௪. ௰௯. யோவா. ௬. ௰௪: ௭. ௪௰. 5 நியா. ௯. ௭.–6 உபா. ௰௨. ௫, ௰௧. ௧ இரா. ௯. ௩. ௨ நாளா. ௭. ௰௨.–7 மல்கி. ௧. ௰௧. ௧ தீமோ. ௨. ௮.–8 ௨ இரா. ௰௭. ௨௯. 9 ஏசா. ௨. ௩. லூக். ௨௪. ௪௭. ரோ. ௯. ௪, ௫.–10 பிலி. ௩. ௩. 11 யோவா. ௧. ௰௭.–12 ௨ கொரி. ௩. ௰௭.–13 உபா. ௩௩. ௨௪. 14 யோவா. ௯. ௩௭. மத். ௨௬. ௬௩. மாற். ௰௪. ௬௧, ௬௨. 15 ௨௯ வச.–16 யோபு. ௨௩. ௰௨. யோவா. ௬. ௩௮: ௰௭. ௪. யோவா. ௰௯. ௩௰.–17 மத். ௯. ௩௭. லூக். ௰. ௨. 18 தானி. ௰௨. ௩.

௩௯ [1]அந்த ஸ்திரி, நான் செய்த யாவையும் எனக்
குச்சொன்னார் என்று சாட்சியிட்ட வசனத்தின்
நிமித்தம், அந்த ஊரிலுள்ள சமாரியரில் அநேகர்
௪௰ அவர்மேல் விசுவாசமானார்கள்.—ஆதலால் சமா
ரியர் அவரிடத்தில் வந்து, தங்களிடத்திலே தங்
கும்படிக்கு அவரை வேண்டிக்கொண்டார்கள்;
அந்தப்படி அவர் இரண்டுநாள் அங்கே தங்கி
௪௧ னார்.—அப்பொழுது மிகவும் அதிகமான மனி
தர் அவருடைய உபதேசத்தின்நிமித்தம் விசுவா
௪௨ சித்து,—பின்பு ஸ்திரியை நோக்கி, உன் சொல்
லினால்மாத்திரம் அல்ல, நாங்களும் அவருடைய
உபதேசத்தைக் கேட்டு, [2]அவர் மெய்யாய்க் கிறி
ஸ்துவாகிய உலக இரட்சகர் என்று அறிந்து விசு
வாசிக்கிறோம் என்றார்கள்.

௪௩ இரண்டுநாள் அங்கே தங்கி, பின்பு அவர் அவ்
விடத்தைவிட்டுப் புறப்பட்டு, கலிலேயா நாட்டு
௪௪ க்குப் போனார்.—[3]ஆகிலும் தீர்க்கதரிசியானவன்
தன் சென்ம ஊரிலே கனம் அடையான் என்று
௪௫ இயேசுவானவர் தாமே சொல்லியிருந்தார்.—அ
வர் [4]கலிலேயா நாட்டிலே சேர்ந்தபொழுது, எரு
சலேமிலே பண்டிகைநாளில் அவர் செய்த யா
வையும் பார்த்திருந்த [5]கலிலேயர் அவரை ஏற்றுக்
கொண்டார்கள்; பின்பு இயேசுவானவர் [6]தாம்
தண்ணீரைத் திராட்சஇரசமாக்கின கலிலேயா
விலுள்ள கானா ஊருக்கு மறுபடியும் போனார்.—
௪௬ அப்பொழுது கப்பர்நாகூம் ஊரிலே இராசா
வின் மனிதரில் *ஒருவனுடைய குமாரன் வியா
௪௭ தியுள்ளவனாய்க் கிடந்தான்.—இயேசுவானவர்
யூதேயாவிலிருந்து கலிலேயாவில் வந்ததை அந்த
மனிதன் கேள்விப்பட்ட உடனே, அவரிடத்
திற்குப் போய், தன் மகனுக்கு மரணம் சமீபித்
திருந்தபடியினாலே, அவனைக் குணமாக்கும்ப
டிக்கு வரவேண்டும் என்று அவரை வேண்டிக்
௪௮ கொண்டான்.—[7]இயேசுவானவர் அவனை நோக்
கி, நீங்கள் அடையாளங்களையும் அற்புதங்களை
யும் காணாவிட்டால், விசுவாசிக்கமாட்டீர்கள்
௪௯ என்றார்.— அதற்கு இராசாவின் மனிதன் சொன்
னது: ஆண்டவரே, என் பிள்ளை சாகிறதற்குமுன்
௫௰ னே வாரும் என்றான்.—இயேசுவானவர் சொன்
னது: நீ வீட்டிற்குப் போ, உன்னுடைய குமா
ரன் பிழைத்திருக்கிறான் என்றார்; இயேசுவான
வர் சொன்ன வசனத்தை நம்பி அந்த மனிதன்
௫௧ போனான்.—அவன் போகையில், அவனுடைய
ஊழியக்காரர் அவனுக்கு எதிராக வந்து, உம்மு
டைய குமாரன் பிழைத்திருக்கிறான் என்று அறி
௫௨ வித்தார்கள்.—அப்பொழுது, எத்தனை மணிநேரத்
திலே அவனுக்குக் குணமுண்டாயிற்று என்று
அவர்களிடத்தில் விசாரித்தான்; அவர்கள் சொ
ன்னது: நேற்று ஏழாம்மணிநேரத்திலே சுரம் அ
௫௩ வனைவிட்டு நீங்கிற்று என்றார்கள்.-அந்த நேரம்,
உன் குமாரன் பிழைத்திருக்கிறான் என்று இயே
சுவானவர் தன்னுடனே சொன்ன மணிநேரமே
என்று தகப்பனானவன் அறிந்தான்; பின்பு அவ
னும் அவன் குடும்பத்தார் அனைவரும் அவரிடத்
தில் விசுவாசம் வைத்தார்கள். — இயேசுவான ௫௪
வர் யூதேயாவைவிட்டு, கலிலேயா நாட்டிற்குத்
திரும்பிப் போனபொழுது, இந்த இரண்டாம்
அற்புதத்தைச் செய்தார்.

## ௫. அதிகாரம்.

௧ இயேசு ஓய்வுநாளில் முப்பத்தெட்டுவருஷம் வியாதிப்பட்டிருந்தவனைக் குணமாக்கினது. ௰. அதற்காக யூதர்கள் அவரைத் துன்பப்படுத்தினது. ௰௭. அவர் பிதாவின் சாட்சியினாலும், ௩௨. யோவானுடைய சாட்சியினாலும், ௩௬. தம்முடைய கிரியைகளின் சாட்சியினாலும், ௩௯. வேத எழுத்துக்களினாலும் தம்மை இன்னாரென்று அறிவித்து, அவர்களைக் கடிந்துகொண்டது.

அதின்பின்பு [8]யூதருடைய பண்டிகை உண் ௧
டானபொழுது, இயேசுவானவர் எருசலேமுக்
குப் போனார்.—[9]அந்த எருசலேம் நகரத்திலே, ௨
ஆட்டுவாசலின்† அருகே எபிரேயு பாஷையிலே
பேதஸ்தா என்னப்பட்ட ஒரு குளம் இருக்கின்
றது; அதற்கு ஐந்து மண்டபங்கள் உண்டு.—
அவைகளிலே குருடர், சப்பாணிகள், சூம்பின ௩
உறுப்புடையவர்கள் முதலான அநேக வியாதிக்
காரர் படுத்துக்கொண்டு, சலம் அசைகிறவரைக்
கும் பார்த்திருப்பார்கள்.—என்னத்தினாலெனில், ௪
சிலகாலங்களிலே தேவதூதன் ஒருவன் அந்தக்
குளத்தில் இறங்கிச் சலத்தைக் கலக்குகிறதும்,
சலம் கலக்கப்பட்டபின்பு முதலாவது அதற்
குட்படுகிறவன் எவனோ, அவன் எந்த வியாதிப்
பட்டவனாய் இருந்தாலும் குணம் அடைகிறதும்
வழக்கமாயிருந்தது.—அதின்பொருட்டாக, அங் ௫
கே முப்பத்தெட்டுவருஷம் வியாதியுள்ள ஒரு
மனிதன் இருந்தான்.—படுத்திருந்த அவனை இயே ௬
சுவானவர் கண்டு, அவன் அநேகநாள் வியாதி
யுள்ளவன் என்று அறிந்து அவனை நோக்கி, நீ
சொஸ்தமடைய விரும்புகிறாயா என்றார்.—வியா ௭
திப்பட்டவன் அவருக்கு மாறுத்தரமாகச் சொன்
னது: ஆண்டவனே, சலம் கலக்கப்படுகிறபொ
ழுது, என்னைக் குளத்தில் கொண்டுபோய் விடுகி
றதற்கு ஒருவருமில்லை, நான் நடந்துபோகிறதற்
குமுன்னாக வேறொருவன் இறங்குவான் என்
றான்.—இயேசுவானவர் சொன்னது: [10]எழுந்திரு, ௮
உன் படுக்கையை எடுத்துக்கொண்டு நட என்
றார்.—உடனே அந்த மனிதன் குணமடைந்து, ௯
தன் படுக்கையை எடுத்துக்கொண்டு நடந்துபோ
னான்; [11]அந்த நாள் ஓய்வுநாளாய் இருந்தது.

ஆதலால் யூதர்கள் குணமாக்கப்பட்டவனை ௰
நோக்கி, ஓய்வுநாளாயிருக்கிறபடியால் நீ படுக்
கையை எடுத்துப்போகிறது நியாயம் அல்ல என்
றார்கள். — அவர்களுக்கு அவன் சொன்னது: ௰௧
என்னைக் குணமாக்கினவர் என்னை நோக்கி,

1 ௨௯ வச.—2 யோவா. ௰௭. ௮ ; ௧ யோ. ௪. ௰௪.—3 மத். ௰௩. ௫௭. மாற். ௬. ௪. லூக். ௪. ௨௪. 4 ௫ மோ. ௰௬. ௰௬.—5 யோவா. ௨. ௨௩ ; ௩. ௨.—6 யோவா. ௨. ௧, ௰௧. 7 ௧ கொரி. ௧. ௨௨.

8 ௩ மோ. ௨௩. ௨. ௫ மோ. ௰௬. ௧. யோவா. ௨. ௰௩. 9 நெகே. ௩. ௧ : ௰௨. ௩௯. 10 மத். ௯. ௬. மாற். ௨. ௰௧. லூக். ௫. ௨௪.—11 யோவா. ௯. ௰௪.

* அல்லது பிரபு; அல்லது அதிகாரி.— † அல்லது சந்தை.

[1]உன் படுக்கையை எடுத்துக்கொண்டு நட என்று
௰௨ சொன்னார் என்றான்.—அதற்கு அவர்கள் சொன்
னது: உன் படுக்கையை எடுத்துக்கொண்டு நட
என்று உன்னுடனே சொன்ன மனிதன் எவன்
௰௩ என்று கேட்டார்கள்.—அவ்விடத்தில் சனக்கூ
ட்டம் இருந்தபடியினாலே, * இயேசுவானவர்
௰௪ விலகியிருந்தார்.—ஆகையால் குணமாக்கப்பட்
டவன் அவரை அறியவில்லை; அதற்குப்பின்பு
இயேசுவானவர் தேவாலயத்திலே அவனைக் கண்
டு, இதோ குணமடைந்தாய்; அதிக கேடு உனக்கு
வாராதபடிக்கு, [2]இனிப் பாவம் செய்யாதிருப்
௰௫ பாயாக என்றார்.—அப்பொழுது அந்த மனிதன்
போய், தன்னைக் குணமாக்கினவர் இயேசு
௰௬ என்று யூதருக்கு அறிவித்தான்.—ஓய்வுநாளிலே
அவர் அப்படிச் செய்தபடியினாலே, யூதர்கள்
இயேசுவைத் துன்பப்படுத்தி, அவரைக் கொலை
செய்ய வகைதேடினார்கள்.
௰௭ இயேசுவானவர் அவர்களை நோக்கி, [3]என்
பிதா இதுவரைக்கும் கிரியைசெய்துவருகிறார்,
நானும் கிரியைசெய்துவருகிறேன் என்றார்.—
௰௮ அவர் ஓய்வுநாளைக் காத்துக்கொள்ளாதிருந்ததும்
அல்லாமல், [4]பராபரனைத் தம்முடைய சொந்தப்
பிதா என்றும் சொல்லி, தம்மையே பராபரனுக்
குச் சமமாக்கினபடியினாலே, யூதர்கள் பின்னும்
[5]அதிகமாய் அவரைக் கொலைசெய்ய வகைதே
௰௯ டினார்கள்.—அப்பொழுது இயேசுவானவர் அ
வர்களை நோக்கி, மெய்யாகவே நான் உங்களுக்
குச் [6]சொல்லுகிறதாவது: பிதாவானவர் செய்
யக் குமாரன் காணுகிறது எதுவோ, அதையே
அன்றி வேறொன்றையும் தானாய்ச் செய்யமாட்
டான்; ஆதலால் அவர் செய்கிறவைகள் எவைக
ளோ, அவைகளைக் குமாரனும் அப்படியே செய்
௨௰ கிறான்.—எப்படியென்றால், [7]பிதாவானவர் குமா
ரனிடத்தில் அன்புகூர்ந்து, தாம் செய்கிற யாவை
யும் அவனுக்குக் காண்பிக்கிறார்; நீங்கள் ஆச்சரி
யப்படத்தக்கதாக இவைகளிலும் அதிக பெரி
தான கிரியைகளையே அவனுக்குக் காண்பிப்
௨௧ பார்.—எவையெனில், பிதாவானவர் மரித்தோ
ரை எழுப்பி உயிரோடிருக்கச் செய்கிறதுபோல,
குமாரனும் [8]தன்னுடைய இஷ்டப்படியே
௨௨ மரித்தோரை உயிரோடிருக்கச்செய்கிறார்.—அல்
லாமலும், பிதாவைக் கனம்பண்ணுகிறதுபோல
எல்லாரும் குமாரனைக் கனம்பண்ணும்படிக்கு,
பிதாவானவர் ஒருவருக்கும் நியாயத்தீர்ப்புக்
கொடாமல், [9]நியாயத்தீர்ப்பின் அதிகாரம்யாவை
௨௩ யும் குமாரனுக்கு ஒப்புக்கொடுத்தார்.—[10]குமார
னைக் கனம்பண்ணாமல் இருக்கிறவன் அவரை
அனுப்பின பிதாவைக் கனம்பண்ணாமல் இருக்
கிறான்.—[11]என் வசனங்களுக்குச் செவிகொ ௨௪
டுத்து என்னை அனுப்பினவரை விசுவாசிக்
கிறவனுக்கு நித்தியசீவன் உண்டு; அவன் ஆக்
கினைத் தீர்ப்புக்குள் அகப்படாமல், [12]மரணத்
தைவிட்டு நீங்கி, சீவனுக்குட்பட்டிருக்கிறான்
என்று மெய்யாகவே உங்களுக்குச் சொல்லுகி
றேன்.—அல்லாமலும் [13]மரித்தோர் பராபரனு ௨௫
டைய குமாரன் சத்தத்தைக் கேட்கும் காலம்
வருகின்றது; இப்பொழுதே அது வந்திருக்கின்
றது; அதைக் கேட்கிறவர்கள் பிழைப்பார்கள்
என்று மெய்யாகவே உங்களுக்குச் சொல்லுகி
றேன்.—என்னத்தினாலெனில், பிதாவானவர் ௨௬
தம்மில் தாமே சீவனை உடையவராய் இருக்கிற
துபோல, குமாரனும் தன்னில்தானே சீவனை
உடையவனாயிருக்கும்படி, வல்லமையை அவ
னுக்குக் கொடுத்தார்.—அல்லாமலும் [14]அவன் ௨௭
மனிதனுடைய குமாரனாயிருக்கிறபடியினாலே
[15]நியாயத்தீர்ப்புச் செய்யும்படிக்கு, அதிகாரத்
தையும் அவனுக்குக் கொடுத்தார்.—இதைக்கு ௨௮
றித்து ஆச்சரியப்படாதிருங்கள்; என்னத்தினா
லெனில், பிரேதக்குழிகளிலுள்ள யாவரும் அவ
னுடைய சத்தத்தைக் கேட்கும் காலம் வரும்.—
அப்பொழுது [16]நன்மை செய்தவர்கள் சீவனை அ ௨௯
டையும்படிக்கும், [17]தீமைசெய்தவர்கள் ஆக்கினை
யை அடையும்படிக்கும் எழுந்து புறப்படுவார்
கள்.—[18]நானாய் ஒன்றும் செய்யமாட்டேன்; நான் ௩௰
கேட்கிறபடி நியாயம் தீர்க்கிறேன்; [19]நான் என்
னுடைய சித்தத்தை அல்ல, என்னை அனுப்பின
பிதாவினுடைய சித்தத்தையே தேடுகிறபடியால்,
என்னுடைய தீர்ப்பு நீதியாய் இருக்கும்.—[20]நா ௩௧
ன்மாத்திரம் என்னைக்குறித்துச் சாட்சிகொடுத்
தால், என் சாட்சி மெய்யென்று கொள்ளவேண்
டாம்.—[21]வேறொருவனும் என்னைக்குறித்துச் ௩௨
சாட்சி கொடுக்கிறான்; அவன் என்னைக்குறித்
துக் கொடுக்கிற சாட்சி மெய்யென்று அறிந்
திருக்கிறேன்.
நீங்கள் யோவானிடத்திற்கு மனிதரை அனுப் ௩௩
பினபொழுது, [22]அவனும் மெய்யான சாட்சி
யைக் கொடுத்தான்.—அப்படியிருந்தும், நான் ௩௪
மனிதராலே சாட்சியைக் கொள்ளமாட்டேன்;
நீங்கள் இரட்சிக்கப்படுவதற்கு இவைகளைச்
சொல்லுகிறேன்.—அவன் எரிந்து [23]பிரகாசிக் ௩௫
கிற விளக்காகவே இருந்தான்; [24]நீங்களும் சில
காலம் அவனுடைய ஒளியிலே களிகூர மனதா
யிருந்தீர்கள்.—[25]யோவானுடைய சாட்சியிலும் ௩௬
அதிக மேன்மையான சாட்சி எனக்கு உண்டு;

1 உ மோ உ௰. ௰. நெகே. ௰௩. ௰௯. எரே. ௰௭. உ௧ ழ மத். ௰௨. உ. மாற். உ உச: ௩. ௪. லூக். ௬ உ: ௰௩. ௰௪.—2 மத் ௰௨. ௪௫. யோவா. அ. ௰௧.—3 யோவா. ௯ ௪: ௰௪. ௰. 4 யோவா. ௰ ௩௰, ௩௩. பிலி. உ. ௬. 5 யோவா. எ. ௰௯—6 ௩௰. வச. யோவா. அ உ௮: ௯ ௪: ௰௨. ௪௯: ௰௪. ௰.—7 மத். ௩. ௰௭. யோவா. ௩. ௩௫. உ பே. ௧. ௰௭.—8 லூக். எ. ௰௪: அ. ௫௪. யோவா. ௰௧ உ௫, ௪௩.—9 மத். ௰௧. உ௭: உ௮. ௰௮: ௨௭. வச. யோவா. ௩ ௩௫: ௰௭. உ. அப். ௰௭. ௩௧. ௧ பே. ௪. ௫.
10 ௧ யோ உ. உ௩.—11 யோவா. ௩. ௰௬, ௰௮: ௬. ௪௰, ௪௭: அ. ௫௧: உ௰. ௩௧.—12 ௧ யோ. ௩. ௰௪.
13 உ௮ வச. எபே. உ. ௧, ௫: ௫ ௰௪. கொலோ. உ. ௰௩.—14 தானி. எ. ௰௩, ௰௪.—15 உ௨. வச. அப் ௰. ௪உ: ௰௭. ௩௧.—16 தானி. ௰௨. உ. மத். உ௫. ௩௨, ௩௩, ௪௬.
17 ௭சா. உ௬ ௰௯. ௧ தெச. ௪. ௰௬. ௧ கொரி. ௰௫. ௫உ.—18 ௰௯. வச. 19 மத். உ௬. ௩௯. யோவா. ௪. ௩௪: ௬. ௩௮.—20 யோவா அ. ௰௪. வெளி. ௩. ௰௪—21 மத். ௩. ௰௭: ௰௭. ௫. யோவா அ ௰௮. ௧ யோ. ௫ ௯, ௭. ௯.—22 யோவா ௧. ௰௫, ௰௯, உ௭, ௩உ.—23 உ பே. ௧. ௰௯. 24 மத் ௰௩. உ௰: உ௧ உ௬. மாற். ௬. உ௰. 25 ௧ யோ ௫. ௯.

* அல்லது அங்கிருந்த சனக்கூட்டத்தைவிட்டு.

அது என்னவெனில், [1]நான் நிறைவேற்றும்படிக்
குப் பிதா எனக்குக்கொடுத்த கிரியைகளே; நான்
செய்துவருகிற இந்தக் கிரியைகள், பிதா என்னை
அனுப்பினார் என்கிறதற்கு என்னைக்குறித்துச்
௩௭ சாட்சிகொடுக்கின்றன.-அதுவுமல்லாமல், [2]என்
னை அனுப்பின பிதாவே என்னைக்குறித்துச் சாட்
சிகொடுத்தார்; [3]நீங்கள் அவருடைய சத்தத்தை
ஒருக்காலும் கேட்கவில்லையா? அவருடைய தரி
௩௮ சனையைக் காணவில்லையா?–அப்படியிருந்தும்,
அவர் அனுப்பினவரை நீங்கள் விசுவாசியாதப
டிக்கு, அவருடைய வசனத்தை உங்களுக்குள்
௩௯ ளே தரித்துக்கொள்ளாமல் இருக்கிறீர்கள்.–வேத
வாக்கியங்களினாலே நித்தியசீவன் உங்களுக்கு
உண்டாகுமென்று எண்ணுகிறபடியால், [4]நீங்
கள் அவைகளை ஆராய்ந்துபாருங்கள்; [5]அவை
களுமே என்னைக்குறித்துச் சாட்சிகொடுக்கின்
௪௰ றன.—[6]அப்படியிருந்தும், சீவனை அடையும்
படிக்கு நீங்கள் என்னிடத்தில் வர மனதில்லை.—
௪௧ [7]நான் மனிதரால் புகழ்ச்சியை எடுத்துக்கொள்ள
௪௨ மாட்டேன்.—நீங்கள் தேவ அன்பில்லாதவர்கள்
௪௩ என்று அறிந்திருக்கிறேன்.–நான் என் பிதாவின்
நாமத்தினாலே வந்திருந்தும், நீங்கள் என்னை ஏற்
றுக்கொள்ளவில்லை; வேறொருவன் தன் சொந்த
நாமத்தினாலே வந்தால், அவனை ஏற்றுக்கொள்
௪௪ வீர்கள்.—[8]நீங்கள் பராபரனாலேமாத்திரம் உண்
டாகும் புகழ்ச்சியைத் தேடாமல், [9]ஒருவரால்
ஒருவர் புகழ்ச்சியை எடுத்துக்கொள்ளுகிறவர்க
௪௫ ளாயிருக்க, எப்படி விசுவாசிப்பீர்கள்.— பிதாவி
னிடத்தில் நான் உங்கள்மேல் குற்றம் சாற்று
வேன் என்று நினையாதிருங்கள்; [10]நீங்கள் நம்
பிக்கொள்ளுகிற மோசே இருக்கிறாரே, அவரே
௪௬ உங்கள்மேல் குற்றஞ்சாற்றுவார். — எப்படியெ
னில், மோசே [11]என்னைக்குறித்து எழுதினார்; ஆ
கையால் நீங்கள் அவரை விசுவாசித்தால், என்
௪௭ னையும் விசுவாசிப்பீர்கள்.—அவர் எழுதினதை
நீங்கள் விசுவாசியாமலிருந்தால், என்னுடைய
வசனங்களை எப்படி விசுவாசிப்பீர்கள் என்றார்.

## ௬. அதிகாரம்.

*௧. கிறிஸ்து ஐந்து அப்பங்களினாலும், இரண்டு மீன்களினாலும் ஐயாயிரம்பேரைப் புசிப்பித்தது. ௰௫. அதின் நிமித்தம் சனங்கள் அவரை இராசாவாக்கும்படி பிரயத்தனம்பண்ணினது. ௰௬. அவர் அவர்களைவிட்டுப் போய்த் தம்முடைய சீஷர்களிடத்திற்குக் கடலின்மேல் நடந்தது. ௨௬. பின்பு தம்மைப் பின்றொடர்ந்தவர்களையும், மாம்சசிந்தையோடே செவிகொடுத்தபேர்களையும் கடிந்துகொண்டு, ௩௨. விசுவாசிகளுக்குச் சீவ அப்பமென்று தம்மை அறிவித்தது. ௬௬. அநேக சீஷர்கள் அவரை விட்டுப்பிரிந்தது. ௬௮. பேதுரு அவரைக்குறித்து நல்லறிக்கைபண்ணினது. ௭௰. அவர் யூதாவைப் பசாசென்று சொன்னது.*

௧ [12]அதின்பின்பு இயேசுவானவர் கலிலேயாக்
கடலென்றும், திபேரியாக்கடலென்றும், பேர்
கொண்ட கடலின் அக்கரைக்குப் போனார். —
வியாதிப்பட்டவர்களிடத்தில் அவர்செய்த அற் ௨
புதங்களைத் திரளான சனங்கள் கண்டபடியால்,
அவருக்குப் பின்சென்றார்கள்.-இயேசுவானவர் ௩
மலையில் ஏறி, அங்கே தம்முடைய சீஷருடனே
கூட உளுக்கார்ந்தார்.—[13]அக்காலத்திலே யூதரு ௪
டைய பஸ்கா என்னும் பண்டிகை சமீபமாய்
இருந்தது.–[14]அப்பொழுது இயேசுவானவர் தம் ௫
முடைய கண்களை உயர்த்தி, திரளான சனங்
கள் தம்மிடத்திற்கு வரக்கண்டு, பிலிப்பை
நோக்கி, இவர்களுக்குச் சாப்பாடு கொடுக்கும்
படிக்கு நாம் எங்கே அப்பங்களைக் கொள்ளலாம்
என்றார்.—(அவர்களைக்குறித்துச்) செய்யவேண் ௬
டுவதை அவர் அறிந்தும், அவனைச் சோதிக்கும்ப
டிக்கு இப்படிச் சொன்னார்.–பிலிப்பு அவருக்கு ௭
மாறுத்தரமாகச் சொன்னது: [15]இவர்களில் ஒவ்
வொருவன் கொஞ்சம் கொஞ்சமாக எடுத்துக்
கொண்டாலும், இருநூறு தேநாரியுபணத்து அப்
பங்களும் போதாது என்றான்.—அப்பொழுது ௮
அவருடைய சீஷரில் ஒருவனுமாய், சீமோன்
பேதுருவின் சகோதரனுமாய் இருந்த அந்திரே
யா அவரை நோக்கி,-இங்கே ஒரு பையன் இருக் ௯
கிறான், அவன்கையிலே வாற்கோதுமை அப்பங்
கள் ஐந்தும், மீன்கள் இரண்டும் உண்டு; [16]இவ்
வளவு சனங்களுக்கும் அவைகள் எம்மாத்திரம்
என்றான்.–அப்பொழுது இயேசுவானவர் சனங் ௰
களை உளுக்காரப்பண்ணுங்கள் என்றார்; அவ்
விடத்திலே மிகுந்த புல் இருந்தது; அதின்மேல்
ஏறக்குறைய ஐயாயிரம்பேர் உளுக்கார்ந்தார்கள்.-
பின்பு இயேசுவானவர் அந்த அப்பங்களை எடுத் ௰௧
துக்கொண்டு தோத்திரம்பண்ணி சீஷருக்குக்
கொடுத்தார்; சீஷர் அவைகளைப் பந்தியிருக்கி
றவர்களுக்குக்கொடுத்தார்கள்; அப்படிப்போல,
மீன்களிலும் அவர்கள் இஷ்டம் எவ்வளவோ,
அவ்வளவு அவர்களுக்குக் கொடுத்தார்.—அவர் ௰௨
கள் திருத்தி அடைந்தபின்பு, அவர் தம்முடைய
சீஷரைநோக்கி, ஒன்றும் கெட்டுப்போகாதப
டிக்கு சேஷமானவைகளைச் சேகரித்துக்கொள்
ளுங்கள் என்றார்.—அந்தப்படி அவர்கள் சேக ௰௩
ரித்து, வாற்கோதுமை அப்பங்கள் ஐந்தில் சாப்
பிட்டவர்கள் சேஷப்படுத்தினவைகளால் பன்
னிரண்டு கூடைகளை நிரப்பினார்கள்.

அப்பொழுது இயேசுவானவர் செய்த அற்பு ௰௪
தத்தைச் சனங்கள் கண்டு, மெய்யாய் இவர் உல
கத்தில் வரவேண்டிய [17]தீர்க்கதரிசியானவர் என்
றார்கள்.–ஆதலால் அவர்கள் வந்து தம்மை இரா ௰௫
சாவாக்கும்படிக்குப் பிடித்துக்கொண்டுபோக
மனதாயிருக்கிறதை இயேசுவானவர் அறிந்து,
மறுபடியும் விலகித் தனியே மலையின்மேல்
ஏறினார்.

1 யோவா. ௩.௨: ௭.௨௫: ௰௫. ௨௪. ௰௧.—5 ௫ மோ. ௰௮. ௰௫, ௰௮. லூக். ௨௪. ௨௭. யோவா. ௧. ௪௫.
2 மத். ௩. ௰௭: ௰௭. ௫. யோவா. ௬. ௨௭: ௮. ௰௮.—3 ௫ மோ. ௪ ௰௨. யோவா. ௧. ௰௮. ௧ தீமோ. ௧ ௰௭. ௧ யோ. ௪. ௰௨.
4 ஏசா. ௮. ௨௰: ௩௪. ௰௬. லூக். ௰௬. ௨௯. ௩௯ வச. அப். ௰௭.
6 யோவா. ௩ ௰௯: ௩. ௰௯.
7 ௩௪. வச. ௧ தெச. ௨ ௬.
8 உரோ. ௨. ௨௯.
9 யோவா. ௰௨. ௪௩.—10 உரோ. ௨. ௰௨.
11 ௧ மோ. ௩. ௰௫: ௰௨. ௩: ௰௮. ௰௭: ௨௨. ௰௮: ௪௯. ௰. ௫ மோ. ௰௮. ௰௫, ௰௮. யோவா. ௧. ௪௫. அப். ௨௬. ௨௨.—12 மத். ௰௪. ௰௫. மாற். ௬. ௩௫. லூக். ௯. ௰, ௰௨.—13 ௩ மோ. ௨௩. ௫. ௫ மோ. ௰௬. ௧. யோவா. ௨. ௰௩: ௫. ௧.
14 மத். ௰௪. ௰௪. மாற். ௬. ௩௫. லூக். ௯. ௰௨.—15 ௪ மோ. ௰௧. ௨௧, ௨௨.—16 ௨ இரா. ௪. ௪௩.
17 ௧ மோ. ௪௯. ௰. ௫ மோ. ௰௮. ௰௫, ௰௮. மத். ௰௧. ௩. யோவா. ௧ ௨௧: ௪. ௰௯, ௨௫: ௭. ௪௰.

௰௬ [1]சாயங்காலமானபொழுது, அவருடைய சீஷர்
கடற்கரையில் இறங்கிப் படவில் ஏறி, கடலின்
அக்கரையான கப்பர்நாகூம் ஊருக்குப் போகப்
புறப்பட்டார்கள்; அப்பொழுது இருட்டாயி
ருந்தது; இயேசுவானவரும் அவர்களிடத்தில்
௰௭ சேரவில்லை.—அல்லாமலும் பெருங்காற்று அடித்
௰௮ தபடியினாலே கடல் எழும்பிற்று.—அப்படி அவர்
கள் ஏறக்குறைய இருபத்தைந்து அல்லது முப்
பது ஸ்தாதிவழி தூரத்தில் துடுப்பு வலித்துக்
௰௯ கொண்டிருக்கிறபொழுது,-இயேசுவானவர்கட
லின்மேலே நடந்து, படவுக்குச் சமீபமாய் வரு
௨௰ கிறதைக் கண்டு பயந்தார்கள்.—அவர் அவர்களு
டனே சொன்னது: நான்தான், பயப்படாதிருங்
௨௧ கள் என்றார்.—அப்பொழுது அவரைப் படவில்
ஏற்றிக்கொள்ள விரும்பினார்கள்; உடனே படவு
அவர்கள் போகிற கரையைப் பிடித்தது.
௨௨ மறுநாளிலே கடலின் அக்கரையிலே நின்ற
சனங்கள், அவருடைய சீஷர் ஏறின அந்த ஒரே
படவுதவிர அங்கே வேறொரு படவு இல்லை
யென்றும், இயேசுவானவர் தம்முடைய சீஷரு
டனேகூடப் படவில் ஏறாமலிருக்க அவரு
டைய சீஷர்மாத்திரம் போனார்கள் என்றும் அறிந்
௨௩ தார்கள்.—கர்த்தர் தோத்திரம் செய்தபின்பு, அவர்
கள் அப்பம் சாப்பிட்ட இடத்திற்குச் சமீப
மாய்த் தீபேரியாவிலிருந்து வேறே படவுகளும்
௨௪ வந்தன.—அப்பொழுது, இயேசுவானவரும் அங்
கே இல்லை, அவருடைய சீஷரும் இல்லை என்று
சனங்கள் கண்டு, உடனே படவுகளில் ஏறி,
இயேசுவைத் தேடி, கப்பர்நாகூம் ஊருக்குப்
௨௫ போனார்கள்.—கடலின் அக்கரையிலே அவர்கள்
அவரைக் கண்டபொழுது, இரபீ, நீர் எப்பொ
ழுது இங்கே வந்தீர் என்றார்கள்.
௨௬ இயேசுவானவர் அவர்களை நோக்கி, நீங்கள்
அற்புதங்களைக் கண்டதினால் அல்ல, அந்த அப்
பத்தைப் புசித்துத் திருப்தி அடைந்ததினாலே
என்னைத் தேடுகிறீர்கள் என்று மெய்யாகவே உங்
களுக்குச் சொல்லுகிறேன்.
௨௭ அழிந்துபோகிற போசனத்திற்காக அல்ல,
[2]நித்தியசீவன் உள்ளவரைக்கும் நிலைநிற்கிற
போசனத்திற்காகவே பிரயாசப்படுங்கள்;* அ
தை மனிதனுடைய குமாரன் உங்களுக்குக் கொ
டுப்பான்; [3]பராபரன் என்னும் பிதா அதற்காக
௨௮ அவனை முத்திரைப்படுத்தினாரே என்றார்.—அ
தற்கு அவர்கள் சொன்னது: பராபரனுக்கு ஏற்ற
கிரியைகளை நடத்தும்படிக்கு நாங்கள் என்ன
௨௯ செய்யலாம் என்றார்கள்.—இயேசுவானவர் சொ
ன்னது: [4]பராபரன் அனுப்பினவரை நீங்கள்
விசுவாசிக்கிறதே அவருக்கு ஏற்ற கிரியையாய்
௩௰ இருக்கின்றது என்றார்.— அதற்கு அவர்கள்
சொன்னது: அப்படியானால் உம்மை விசுவாசிக்
கும்படிக்கு, நாங்கள் காணத்தக்கதாக [5]எந்த அற்
புதத்தைச் செய்கிறீர்? என்னத்தை நடப்பிக்கி
றீர்.—[6] வானத்திலிருந்து அப்பத்தை அவர்களுக் ௩௧
குப் புசிக்கக்கொடுத்தார் என்று எழுதியிருக்கிற
படி, [7]நம்முடைய பிதாக்கள் வனாந்தரத்திலே
மன்னாவைப் புசித்தார்களே என்றார்கள்.
அதற்கு இயேசுவானவர் சொன்னது: வானத் ௩௨
திலிருந்து அப்பத்தை மோசே உங்களுக்குக்
கொடுக்கவில்லை; என் பிதாவானவரே வானத்தி
லிருந்து மெய்யான அப்பத்தை உங்களுக்குக்
கொடுக்கிறார் என்று மெய்யாகவே உங்களுக்
குச் சொல்லுகிறேன்.—வானத்திலிருந்து இறங்கி ௩௩
வந்து, உலகத்திற்குச் சீவனைக் கொடுக்கிறவரே
பராபரன் அருளிச்செய்கிற அப்பமாய் இருக்கி
றார் என்றார். — அப்பொழுது அவர்கள சொன் ௩௪
னது: [8]ஆண்டவரே, அந்த அப்பத்தை எங்க
ளுக்கு எப்பொழுதும் தாரும் என்றார்கள். — இ ௩௫
யேசுவானவர் சொன்னது: [9]சீவ அப்பம் நானே;
[10]என்னிடத்தில் வருகிறவன் ஒருக்காலும் பசி
யை அடையான்; என்னிடத்தில் விசுவாசமாயி
ருக்கிறவன் ஒருக்காலும் தாகம் அடையான்.—
[11] நான் உங்களுக்குச் சொன்னபடி, நீங்கள் என் ௩௬
னைக் கண்டும் விசுவாசியாமல் இருக்கிறீர்கள்.—
[12]பிதாவானவர் எனக்குக் கொடுக்கிற யாவரும் ௩௭
என்னிடத்தில் வருகிறார்கள்.—[13]என்னிடத்தில் ௩௮
வருகிறவனை நான் தள்ளமாட்டேன்; என்னத்தி
னாலெனில் [14]என் சித்தத்தின்படி அல்ல, [15]என்
னை அனுப்பினவருடைய சித்தத்தின்படியே
செய்யும்பொருட்டாய் நான் வானத்திலிருந்து
இறங்கிவந்தேன். — [16]அவர் எனக்குக் கொ ௩௯
டுத்தவர்களில் ஒருவனையும் நான் இழந்துபோ
காமல் கடைசி நாளிலே அவர்களை எழுப்பும்ப
டிக்கு, என்னை அனுப்பின பிதாவின் சித்தமாய்
இருக்கின்றது. — [17]குமாரனைக் கண்டு, அவனி ௪௰
டத்தில் விசுவாசமாயிருக்கிறவன் எவனோ, அ
வன் நித்தியசீவனை அடையும்படிக்கும் கடைசி
நாளிலே நான் அவனை எழுப்பும்படிக்கும் என்
னை அனுப்பினவருடைய சித்தமாகவே இருக்
கின்றது என்றார்.
நான் வானத்திலிருந்து வந்த அப்பமாயிருக்கி ௪௧
றேன் என்று அவர் சொன்னபடியினாலே, யூதர்
கள் அவரைக்குறித்து முறுமுறுத்து,—[18]இ ௪௨
வர் யோசேப்பினுடைய குமாரனாகிய இயேசு
அல்லவா? இவருடைய தகப்பனையும் தாயை
யும் அறிந்திருக்கிறோமே, அப்படியிருக்க, நான்
வானத்திலிருந்து இறங்கிவந்தேன் என்று எப்ப
டிச் சொல்லுகிறார் என்றார்கள்.—அதற்கு மாறுத் ௪௩
தரமாக இயேசுவானவர் சொன்னது: உங்களுக்

1 மத் ௰௪.௨௩. மாற். ௬. ௪௭.
2 ௫௪.௫௪. யோவா. ௪. ௰௪.
3 மத் ௩.௰௭: ௰௭. ௫. மாற்.௧.௰௧: ௯. ௭. லூக். ௩. ௨௨: ௯. ௩௫. யோவா. ௧. ௩௩; ௫. ௩௭: ௮.௰௮. அப். ௨. ௨௨. ௨ பே. ௧. ௰௭.
4 ௧ யோ. ௩.௨௩.— 5 மத். ௰௨.௩௮: ௰௬.௧. மாற். ௮.௰௧. ௧ கொரி. ௧. ௰௨.— 6 சங். ௭௮. ௨௪, ௨௫.
7 ௨ மோ. ௰௬.௰௫. ௪ மோ.௰௧.௭. நெகே ௯.௰௫. ௧ கொரி. ௰. ௩.
8 யோவா. ௪. ௰௫.
9 ௪௮,௫௭. ௫௪.—10 யோவா. ௪. ௰௪: ௭. ௩௭.—11 ௨௬,௩௪. ௫௪.
12 ௪௫. ௫௪.— 13 மத். ௨௪. ௨௪. யோவா.௰.௨௮,௨௯. ௨ தீமோ. ௨.௰௯. ௧ யோ. ௨. ௰௯.
14 மத். ௨௬. ௩௯. யோவா. ௫. ௩௰.
15 யோவா. ௪. ௩௪.—16 யோவா. ௰. ௨௮: ௰௭. ௰௨: ௰௮. ௯.
17 ௨௭, ௪௭, ௫௪. ௫௪. யோவா. ௩. ௰௫,௰௬: ௪.௰௪.-18 மத். ௰௩.௫௫. மாற். ௬. ௩. லூக். ௪. ௨௨.

* அல்லது வேலைசெய்யுங்கள்.

௪௪ குள்ளே மொறுமொறுக்கவேண்டாம். — [1]என்
னை அனுப்பின பிதா ஒருவனை இழுத்துக்கொள்
ளாவிட்டால், அவன் என்னிடத்தில் வரமாட்
டான், கடைசிநாளில் நானே அவனை எழுப்பு
௪௫ வேன். —[2] எல்லாரும் பராபரனாலே போதிக்கப்
பட்டிருப்பார்கள் என்று தீர்க்கதரிசன புத்தகத்
தில் எழுதியிருக்கின்றதே; [3]ஆகையால் பராபர
னிடத்தில் கேட்டுக் கற்றுக்கொள்ளுகிறவன் எவ
௪௬ னோ, அவன் என்னிடத்தில் வருகிறான்.—[4]பரா
பரனை ஒருவன் கண்டான் என்று நான் சொல்
லவில்லை; [5]பராபரனிலிருந்து வந்தவன்மாத்தி
௪௭ ரமே பிதாவைக் கண்டான்.—[6] என்னிடத்தில்
விசுவாசமாயிருக்கிறவனுக்கு நித்தியஜீவன்
உண்டென்று மெய்யாகவே உங்களுக்குச்சொல்
௪௮ லுகிறேன். — [7] ஜீவ அப்பம் நானே; [8] உங்கள்
பிதாக்கள் வனாந்தரத்திலே மன்னாவைப் புசித்
௪௯ துப் பின்பு மரித்தார்கள். —[9] வானத்திலிருந்து
வந்த இந்த அப்பத்தைப் புசிக்கிறவன் மரியா
௫௰ மல் இருப்பான். — [10]வானத்திலிருந்திறங்கின
ஜீவனுள்ள அப்பம் நானே; இந்த அப்பத்தைப்
புசிக்கிறவன் என்றென்றைக்கும் பிழைப்பான்;
[11]நான் கொடுக்கும் அப்பம் உலகத்தார் ஜீவனை
அடைவதற்கு நான் கொடுக்கும் என் மாம்சமே
என்றார்.

௫௧ அப்பொழுது யூதர்கள், இவர் [12]தம்முடைய
மாம்சத்தை எப்படி நமக்குப் புசிக்கக்கொடுப்
பார் என்று [13]தங்களுக்குள்ளேவாக்குவாதம்பண்
௫௨ ணினார்கள். — ஆதலால் இயேசுவானவர் அவர்க
ளை நோக்கி, [14]நீங்கள் மனிதகுமாரனுடைய மாம்
சத்தைப் புசியாமலும் அவருடைய இரத்தத்தைப்
பானம் பண்ணாமலும் இருந்தால், உங்களுக்குள்
ளே ஜீவன் இருக்கமாட்டாதென்று மெய்யாக
௫௩ வே உங்களுக்குச் சொல்லுகிறேன்.—என் மாம்
சம் மெய்யான போசனமாயும், என் இரத்தம்
௫௪ மெய்யான பானமாயும் இருக்கின்றன.—[15] ஆகை
யால் என் மாம்சத்தைப் புசித்து, என் இரத்தத்
தைப் பானம்பண்ணுகிறவனுக்கு நித்தியஜீவன்
உண்டு; கடைசிநாளில் நானே அவனை எழுப்
௫௫ புவேன்.—[16]என் மாம்சத்தைப் புசித்து என் இரத்
தத்தைப் பானம்பண்ணுகிறவன் எனக்குள்ளே
தங்குகிறான்; நானும் அவனுக்குள்ளே தங்குகி
௫௬ றேன்.—என்னை அனுப்பின ஜீவனுள்ள பிதாவி
னாலே நான் பிழைத்திருக்கிறதுபோல என்னைப்
௫௭ புசிக்கிறவனும் என்னாலே பிழைப்பான்.—[17]இ
துவே வானத்திலிருந்து இறங்கின அப்பம்; இது
உங்கள் பிதாக்கள் புசித்த மன்னாவைப்போல
அல்ல, அவர்கள் மரித்தார்களே; இந்த அப்பத்
தைப் புசிக்கிறவன் என்றென்றைக்கும் பிழைப்
௫௮ பான் என்றார்.—கப்பர்நாகூம் ஊரிலுள்ள ஜெப
ஆலயத்திலே அவர் உபதேசிக்கையில், இவைக
ளைத் திருவுளம்பற்றினார்.

[18]அவருடைய சீஷரில் அநேகர் அவைகளைக் ௫௯
கேட்டபொழுது, இது கடினமான உபதேசம்,
யார் இதைக் கேட்பார்கள் என்றார்கள். — சீஷர் ௬௰
அதைக்குறித்து மொறுமொறுக்கிறார்கள் என்று
இயேசுவானவர் தமது உள்ளத்திலே அறிந்து,
அவர்களுடனே சொன்னதாவது: இதுவா உங்க
ளுக்கு இலச்சை உண்டாக்குகின்றது?—[19]மனி ௬௧
தனுடைய குமாரன் தான் முன்னிருந்த இடத்
திற்கு ஏறிப்போகிறதை நீங்கள் காண்பீர்களா
னால், (எப்படியிருக்கும்?) — [20]ஆவியே உயிர் ௬௨
உண்டாக்குகிறது; மாம்சம் ஒன்றுக்கும் உத
வாது; நான் உங்களுக்குச் சொல்லுகிற வசனங்க
ளே ஆவியாயும் ஜீவனாயும் இருக்கின்றன என்று
சொல்லி,—[21]பின்பு இயேசுவானவர் விசுவாசம் ௬௩
இல்லாதவர்கள் இன்னார் என்றும் தம்மைக் காட்
டிக்கொடுப்பவன் இன்னான் என்றும் ஆதிமுதல்
அறிந்திருந்தபடியால், அவர் பின்னும் சொன்
னது: [22]உங்களில் சிலர் விசுவாசிக்கிறவர்கள்
அல்ல. — அதினாலே [23]ஒருவன் என் பிதாவினா ௬௪
லே அருள்கொள்ளாவிட்டால், என்னிடத்தில்
வரமாட்டான் என்று (முன்னே) உங்களுக்குச்
சொன்னேன் என்றார். — [24]அதுமுதற்கொண்டு ௬௫
அவருடைய சீஷரில் அநேகர் அப்புறம் அவரு
டனேகூட நடவாமல் பின்வாங்கிப்போனார்
கள்.—அப்பொழுது இயேசுவானவர் பன்னிரு ௬௬
வரையும் நோக்கி, போகும்படிக்கு உங்களுக்கு
மனதில்லையா என்றார். — அதற்குச் சீமோன் ௬௭
பேதுரு சொன்னது: ஆண்டவரே, யாரிடத்துக்
குப் போவோம்? [25]உம்மிடத்தில் நித்தியஜீவ
னுள்ள வசனங்கள் இருக்கின்றனவே.—அல்லாம ௬௮
லும் [26]நீரே ஜீவனுள்ள பராபரனுடைய குமாரனா
கிய கிறிஸ்து என்று நாங்கள் விசுவாசித்து அறிந்
துகொண்டோம் என்றான். — இயேசுவானவர் ௬௯
சொன்னது: [27]பன்னிருவராகிய உங்களை நான்
தெரிந்துகொள்ளவில்லையா? [28] உங்களுக்குள்
ளும் ஒருவன் பசாசாய் இருக்கிறான் என்றார்.—
பன்னிருவரில் ஒருவனாகிய சீமோனின் குமா ௭௰
ரன் யூதாஸ்காரியோத்து என்பவன் தம்மைக்
காட்டிக்கொடுக்கிறதற்கு ஏதுவாயிருந்தபடியினா
லே, அவனைக்குறித்து இப்படிச்சொன்னார்.

## ௭. அதிகாரம்.

௧. இயேசு தம்முடைய இனத்தாருடைய வீண் பெருமையைக் கடிந்துகொண்டது. ௰. அவர் கலிலேயாவிலிருந்து கூடாரப்பண்டிகைக்குப் போய், ௰௪. தேவாலயத்தில் பிரசங்கம்பண்ணினது. ௪௰ ஜனங்கள் பலவிதமாக அவரைக்குறித்துப் பேசினது. ௪௫ சேவகர் அவரைப் பிடியாததினாலே பரிசேயர் அவர்களையும் அவருக்கு இசைந்து பேசின நிக்கோதேமுவையும் கடிந்துகொண்டது.

அதின்பின்பு [29]இயேசுவானவர் யூதர்கள் தம் ௧

1 உன். ௧. ௪. ௬௪. வச. —2 ஏசா. ௫௪. ௰௩. எரே. ௩௧. ௩௪. மீகா. ௪. ௨. எபி. அ. ௰: ௰. ௰௬. —3 ௬௭. வச.
4 யோவா. ௧. ௰௮: ௫. ௬௭.
5 மத். ௰௧. ௨௭. லூக். ௰. ௨௨. யோவா. ௧. ௰௮: ௭. ௨௯: அ. ௰௯.
6 யோவா. ௩. ௰௬, ௰௮, ௬௬. ௪௰. வச.
7 ௬௬, ௬௫. வச.——8 ௬௬. வச.
9 ௫௧, ௫௭. வச.
10 யோவா. ௩. ௰௩.
11 எபி. ௰. ௫, ௰. —12 யோவா. ௩. ௯.
13 யோவா. ௭. ௪௩: ௯. ௰௬: ௰. ௰௯.
14 மத். ௨௬. ௨௬, ௨௮. -15 ௨௭. ௪௰: ௬௨. வச. யோவா. ௪. ௰௪.
16 ௧ யோ. ௩. ௨௪: ௪. ௰௫. ௰௬.
17 ௪அ. ௪௬, ௫௰. வச. —18 ௬௫ வச.
மத். ௰௬. ௧. —19 யோவா. ௩. ௰௩. மாற். ௰௬. ௰௯. அப். ௧. ௯. எபே. ௪. அ. —20 ௨ கொரி. ௩. ௬.
21 யோவா. ௨. ௨௪, ௨௫: ௰௩. ௰௧.
22 ௬௬. வச.
23 ௪௪, ௪௫. வச.——24 ௬௰. வச.
25 அப். ௫. ௨௰. —26 மத். ௰௬ ௰௬. மாற். அ. ௨௯. லூக். ௯. ௨௰. யோவா. ௧. ௪௯: ௰௧. ௨௭.
27 லூக். ௬. ௰௩. —28 யோவா. ௰௩. ௨௭. —29 யோவா. ௫. ௰௬, ௰௮.

மைக் கொலைசெய்யத் தேடினபடியினாலே யூதே
யா நாட்டிலே சஞ்சரிக்க மனதில்லாமல், கலி
லேயா நாட்டிலே சஞ்சரித்துவந்தார்.
௨ பின்பு [1]யூதருடைய கூடாரப்பண்டிகை சமீ
௩ பமாயிற்று.—[2]அப்பொழுது அவருடைய சகோ
௪ தரர் அவரை விசுவாசியாதபடியினாலே,— அவ
ரை நோக்கி, [3]நீர் செய்கிற கிரியைகளை உம்மு
டைய சீஷரும் பார்க்கும்படிக்கு, நீர் இவ்விடம்
விட்டு யூதேயா நாட்டுக்குப் போகவேண்டும்.—
௫ பிரபலமாயிருக்க விரும்புகிற எவனும் ஒரு காரி
யத்தையாகிலும் அந்தரங்கத்திலே செய்யமாட்
டானே; நீர் இப்படிப்பட்டவைகளைச் செய்கிற
படியால், உம்மை உலகத்திற்கு வெளிப்படுத்த
௬ லாமே என்றார்கள். — அவர்களுடனே இயேசு
வானவர் சொன்னது: [4]என்னுடைய நேரம் இப்
பொழுது வரவில்லை, உங்கள் நேரம் எப்பொழு
௭ தும் எத்தனமாய் இருக்கின்றது.—[5] உலகத்தார்
உங்களைப் பகைக்கமாட்டார்கள்; [6]அவர்களு
டைய கிரியைகள் பொல்லாதவைகள் என்று
நான் சாட்சிகொடுக்கிறபடியினாலே என்னைப்
௮ பகைக்கிறார்கள்.—நீங்கள் இந்தப் பண்டிகைக்
குப் போங்கள், [7]என்னுடைய நேரம் நிறைவே
றாதபடியால். நான இப்பொழுது போகமாட்
௯ டேன் என்றார். — இவைகளை அவர்களுடனே
சொல்லி, பின்னும் கலிலேயா நாட்டில் இருந்
௰ தார். — அவருடைய சகோதரர் போனபின்பு
அவரும் வெளியரங்கமாக அல்ல, அந்தரங்கமா
கப் பண்டிகைக்குப் போனார்.
௰௧ [8]பண்டிகை காலத்திலே யூதர்கள் அவரைத்
தேடி, அவர் எங்கே இருக்கிறார் என்றார்கள்.—
௰௨ [9]அல்லாமலும் சனங்களுக்குள்ளே அவரைக்கு
றித்து மிகுந்த பேச்சு உண்டாயிற்று; [10]சிலர்,
அவர் நல்லவர் என்றும், சிலர், அப்படி அல்ல,
அவன் சனங்களை வஞ்சிக்கிறவன் என்றும்
௰௩ சொல்லிக்கொண்டார்கள்.—[11]அவர்கள் யூதருக்
குப் பயப்படுகிறவர்களானபடியினாலே, ஒருவ
னாகிலும் அவரைக்குறித்துத் தாராளமாய்ப் பேச
வில்லை.
௰௪ ஏறக்குறையப் பாதி பண்டிகை தீர்ந்தபொ
ழுது, இயேசுவானவர் தேவாலயத்திற்குப்போய்
௰௫ உபதேசம்பண்ணினார்.—[12]அப்பொழுது யூதர்கள்
ஆச்சரியப்பட்டு, கல்லாதவராகிய இவர் வேத
வாக்கியங்களை* எப்படி அறிந்தார் என்றார்கள்.—
௰௬ அவர்களுடனே இயேசுவானவர் சொன்னது:
[13]நான் பண்ணுகிற உபதேசம் என்னுடைய
தல்ல, என்னை அனுப்பினவருடையதாய் இருக்
௰௭ கின்றது.—[14]இந்த உபதேசம் பராபரனால்உண்டா
யிருக்கிறது என்பதும், அல்லது நான் என்னாலே
பேசுகிறேன் என்பதும், அவருடைய சித்தத்தின்
படி செய்ய மனதுள்ளவன் எவனோ அவனுக்கே
தெரியும்.—[15]தன்னாலே பேசுகிறவன் தனக்கே ௰௮
புகழ்ச்சி வரத்தேடுகிறவன்; தன்னை அனுப்பி
னவருக்குப் புகழ்ச்சி வரத்தேடுகிறவன் சத்திய
முள்ளவன்; அவனிடத்திலே கபடம் இராது.—
[16]மோசேயானவர் நியாயப்பிரமாணத்தை உங்க ௰௯
ளுக்குக் கொடுக்கவில்லையா? அப்படியிருந்தும்,
உங்களில் ஒருவனும் அந்த நியாயப்பிரமாணத்
தின்படி செய்கிறதில்லை, [17]என்னைத்திற்காக நீங்
கள் என்னைக் கொலைசெய்யத் தேடுகிறீர்கள் என்
றார்.—அதற்குச் சனங்கள் சொன்னது: [18]நீ பசா ௨௰
சையுடையவன்; எவன் உன்னைக் கொலைசெய்
யத் தேடுகிறான் என்றார்கள்.—இயேசுவானவர் ௨௧
சொன்னது: ஒரு கிரியையைச் செய்தேன்; அ
தைக்குறித்து நீங்கள் எல்லாரும் அதிசயப்படுகி
றீர்கள். — [19]விருத்தசேதனம் மோசேயினாலே ௨௨
அல்ல, பிதாக்களால் உண்டாயிற்று; (பின்பு)
மோசே உங்களுக்கு விருத்தசேதனத்தை ஏற்ப
டுத்தினார்; [20]அந்த விருத்தசேதனத்தை நீங்கள்
மனிதரில் ஓய்வுநாளிலேயும் பண்ணுகிறீர்கள் —
மோசேயின் நியாயப்பிரமாணத்தைத் தள்ளாதப ௨௩
டிக்கு,† ஒரு மனிதன் விருத்தசேதனத்தை ஓய்வு
நாளிலே பெறலாம் என்றால், [21]நான் ஒரு மனி
தன் முழுவதையும் ஓய்வுநாளிலே சுகமாக்கின
தினாலே நீங்கள் என்மேல் எரிச்சலாயிருக்கலா
மா?—[22]புறம்பே தோன்றுகிறபடி தீர்மானம் பண் ௨௪
ணாமல் நீதியின்படியே தீர்மானம்பண்ணுங்கள்
என்றார்.
அப்பொழுது எருசலேம் நகரத்தாரில் சிலர் ௨௫
சொன்னது: இவனையல்லவா கொலைசெய்யத்
தேடுகிறார்கள்?—இதோ, இவன் தாராளமாய்ப் ௨௬
பேசுகிறான்; அவர்கள் இவனுடனே ஒன்றும்
சொல்லவில்லையே; [23]இவன் மெய்யான கிறிஸ்
துவாய் இருக்கிறான் என்று ஆண்டவர்கள் உண்
மையாய் அறிந்தார்களா?—[24]நாம் இவன் வந்த ௨௭
இடத்தை அறிந்திருக்கிறோம்; கிறிஸ்து வரும்
பொழுது, அவர் வந்த இடத்தை ஒருவரும் அறி
யமாட்டார்களே என்றார்கள்.
அப்பொழுது தேவாலயத்தில் உபதேசிக்கிற ௨௮
இயேசுவானவர் கூப்பிட்டதாவது: [25]என்னை
அறிந்திருக்கிறீர்களா? நான் புறப்பட்டு வந்த
இடத்தையும் அறிந்திருக்கிறீர்களா? [26]நான் என்
சுயமாய் வரவில்லை, [27]என்னை அனுப்பினவர்
சத்தியமுள்ளவர்; [28] அவரை நீங்கள் அறியாதிருக்
கிறீர்கள்.—நான் அவரால் வந்திருக்கிறபடியினா ௨௯

1 ௩ மோ. ௨௩. ௩௪.—2 மாற். ௩. ௨௧. 3 மத். ௰௨. ௪௬. மாற். ௩. ௩௧. அப். ௧. ௰௪.—4 யோவா. ௨. ௪: ௮. ௨௰: ௮. ௩௰. வச.—5 யோவா. ௰௫. ௰௯. 6 யோவா. ௩. ௰௯.—7 யோவா. ௮. ௨௰: ௧. வச.—8 யோவா. ௰௧. ௫௬.—9 யோவா. ௯. ௰௬: ௰. ௰௯. 10 மத். ௨௧. ௪௬. லூக். ௭. ௰௬. யோவா. ௯. ௰௬: ௪௰. வச.—11 யோவா. ௯. ௨௨: ௰௨. ௪௨, ௪௩: ௰௯. ௩௮. 12 மத். ௰௩. ௫௪. மாற். ௬. ௨. லூக். ௪. ௨௨. அப். ௨. ௭. 13 யோவா. ௩. ௰௧: ௮. ௨௮: ௰௨. ௪௯: ௰௪. ௰, ௨௪. 14 யோவா. ௮. ௪௭. 15 யோவா. ௫. ௪௧: ௮. ௫௰.

16 ௨ மோ. ௨௪. ௩. ௫ மோ. ௩௩. ௪. யோவா. ௧. ௰௭. அப். ௭. ௩௮. 17 மத். ௰௨. ௰௪. மாற். ௩. ௬. யோவா. ௫. ௰௬, ௰௮: ௰. ௩௧, ௩௯: ௰௧. ௫௩. 18 யோவா. ௮. ௪௮, ௫௨: ௰. ௨௰. 19 ௩ மோ. ௰௨. ௩.—20 ௧ மோ. ௰௭. ௰. 21 யோவா. ௫. ௮, ௯, ௰௬. 22 ௫ மோ. ௧. ௰௬, ௰௭. யாக். ௨. ௧. 23 ௪௮. வச.—24 மத். ௰௩. ௫௫. மாற். ௬. ௩. லூக். ௪. ௨௨. 25 யோவா. ௮. ௰௪. 26 யோவா. ௫. ௪௩: ௮. ௪௨. 27 யோவா. ௫. ௩௨: ௮. ௨௬. ரோம. ௩. ௪.—28 யோவா. ௧. ௰௮: ௮. ௫௫.

* அல்லது கல்வியை.—† அல்லது தள்ளாமல்.

லும், அவர் என்னை அனுப்பினபடியினாலும் [1]நா
௩௰ னே அவரை அறிந்திருக்கிறேன் என்றார்.—[2]அப்
பொழுது அவரைப் பிடிக்க வகைதேடினார்கள்;
[3]அவருடைய நேரம் அக்காலத்திலே வாராதபடி
யால், ஒருவனும் அவர்மேலே கைகளைப் போட
௩௧ வில்லை.—[4]அக்காலத்தில் சனங்களில் அநேகர்
அவரிடத்தில் விசுவாசமுள்ளவர்களாகி, கிறிஸ்
து வரும்பொழுது இவர் செய்கிற அற்புதங்க
ளிலும் அதிகமானவைகளை அவர் செய்வாரா
என்றார்கள்.
௩௨ சனங்கள் அவரைக்குறித்து இப்படிப் பேசிக்
கொண்டிருக்கிறதைப் பரிசேயர் கேட்டபொ
ழுது, அவர்களும் பிரதான ஆசாரியரும் அவ
ரைப் பிடித்துக்கொண்டு வரும்படிக்குச் சேவ
௩௩ கரை அனுப்பினார்கள். — ஆதலால் இயேசுவா
னவர் சொன்னது: [5]நான் இனிச் சிலகாலம்
மாத்திரம் உங்களுடனேகூட இருந்து, பின்பு
என்னை அனுப்பினவரிடத்திற்குப் போவேன்.—
௩௪ [6]நீங்கள் என்னைத் தேடிக் காணாமல் போவீர்கள்;
அல்லாமலும் நான் இருக்கும் இடத்திற்கு நீங்
௩௫ கள் வரமாட்டீர்கள் என்றார். — அப்பொழுது
யூதர்கள் தங்களுக்குள்ளே பேசிக்கொண்டது:
இவரை நாம் காணாதபடிக்கு, இவர் எங்கே போ
வார்? [7]கிரேக்கருக்குள்ளே * சிதறியிருக்கிறவர்
களிடத்தில் போவாரா? கிரேக்கருக்கு உபதே
௩௬ சம்பண்ணுவாரா?—என்னைத் தேடிக் காணாமல்
போவீர்கள் என்றும், நான் இருக்கும் இடத்
திற்கு நீங்கள் வரமாட்டீர்கள் என்றும் அவர்
சொன்ன வசனம் எப்படியிருக்கிறது என்றார்
கள்.

௩௭ [8]பின்பு பண்டிகையின் கடைசியும் பெரிது
மான நாளிலே இயேசுவானவர் நின்று கூப்பிட்
டதாவது: [9]ஒருவன் தாகமாயிருந்தால், என்னி
௩௮ டத்தில் வந்து பானம்பண்ணக்கடவன்.—[10]வே
தவாக்கியம் சொன்னபடி என்னிடத்தில் விசு
வாசமாயிருப்பவன் எவனோ, [11]அவன் உள்ளத்
திலிருந்து ஜீவதண்ணீருள்ள நதிகள் ஓடும்
௩௯ என்றார்.—[12]இப்படி அவர் தம்மிடத்தில் விசு
வாசமாகிறவர்கள் அடையும் ஆவியைக்குறித்
துச் சொன்னார்; இயேசுவானவர் அப்பொழுது
[13]மகிமையாக்கப்படாதபடியினாலே, அந்தப் பரி
சுத்தஆவி அக்காலத்திலே, தோன்றவில்லை.—
௪௰ சனங்களில் அநேகர் அந்த வசனத்தைக் கேட்
டபொழுது, [14]இவர் மெய்யாய்த் தீர்க்கதரிசியா
௪௧ னவர் என்றார்கள்.—[15]வேறுசிலர் இவர் கிறிஸ்து
என்றார்கள்; வேறுசிலர் சொன்னது: [16]கிறிஸ்து
௪௨ கலிலேயா நாட்டிலிருந்தா வருவார்?—[17]தாவீதின்
சந்ததியிலும், தாவீது இருந்த [18]பெத்லேகேம்
ஊரிலுமிருந்து கிறிஸ்து வருவார் என்று வேதத்
திலே சொல்லியிருக்கவில்லையா என்றார்கள்.—
[19]இவ்விதமாய் அவரைக்குறித்துச் சனங்களுக் ௪௩
குள்ளே பிரிவினை உண்டாயிற்று. — [20]அல் ௪௪
லாமலும் அவர்களில் சிலர் அவரைப் பிடிக்க
மனதுள்ளவர்களாய் இருந்தார்கள்; ஆகிலும் ஒரு
வரும் அவர்மேல் கைகளைப் போடவில்லை.
பின்பு அந்தச் சேவகர் பிரதான ஆசாரியரி ௪௫
டத்திற்கும், பரிசேயரிடத்திற்கும் திரும்பிப்
போனார்கள்; அவர்களை நோக்கி என்னத்தினா
லே நீங்கள் அவனைக் கொண்டுவரவில்லை என்
றார்கள்.—சேவகர் மாறுத்தரமாகச் சொன்னது: ௪௬
[21]அந்த மனிதன் பேசுகிறதுபோல ஒருக்காலும்
ஒருவரும் பேசவில்லை என்றார்கள்.—அதற்குப் ௪௭
பரிசேயர் சொன்னது: நீங்களும் வஞ்சிக்கப்பட்
டீர்களா?—[22]பெரியோர்களிலாவது, பரிசேயரி ௪௮
லாவது, ஒருவனாகிலும் அவன்மேல் விசுவாச
மாய் இருக்கிறது உண்டோ?—வேதத்தை அறி ௪௯
யாத சனங்கள்மாத்திரம் சபிக்கப்பட்டவர்கள்
என்றார்கள்.—அவர்களில் ஒருவனுமாய், முன் ௫௰
னே [23]இராத்திரியில் அவரிடத்தில்† போனவனு
மாய் இருந்த நீக்கோதேமு என்பவன் அப்பொ
ழுது அவர்களை நோக்கி, — [24]நாம் ஒரு மனித ௫௧
னைச் சோதித்து, அவனுடைய செய்கைகளை அறி
கிறதற்குமுன்னே அவனை ஆக்கினைக்கு உட்ப
டுத்தலாமென்று நம்முடைய நியாயசாஸ்திரம்
சொல்லுகிறதா என்றான் — அதற்கு அவர்கள் ௫௨
சொன்னது: நீரும் கலிலேயனோ? நீர் ஆராய்ந்து
பார்த்தால், தீர்க்கதரிசிகள் கலிலேயா நாட்டிலி
ருந்து [25]தோன்றவில்லை என்று அறிவீர் என்றார்
கள்.—பின்பு எல்லாரும் தங்கள் வீடுகளுக்குப் ௫௩
போனார்கள்.

## ௮. அதிகாரம்.

௧. விபசாரஸ்திரீயைக் கிறிஸ்து விடுதலையாக்கினது. ௰௨. தாம் உலகத்தின் வெளிச்சமென்று பிரசங்கித்துத் தம்முடைய உபதேசங்களுக்கு ஏற்ற நியாயங்களை மெய்ப்பித்து, ௩௩. ஆபிரகாமைக்குறித்துப் பெருமைபாராட்டின யூதர்களைக் கடிந்துகொண்டு, ௫௯. அவர்களைவிட்டு மறைந்தது.

இயேசுவானவர் ஒலிவமலைக்குப் போனார்.— ௧
மறுநாள் காலையிலே தேவாலயத்திற்குத் திரும் ௨
பினார்; சனங்கள் எல்லாரும் அவரிடத்தில் சேர்ந்
தார்கள்; அவர் உளுக்காந்து அவர்களுக்கு உப
தேசம்பண்ணினார். — அப்பொழுது விபசாரத் ௩
திலே கண்டுபிடிக்கப்பட்ட ஒரு பெண்ணை
வேதபாரகரும் பரிசேயரும் அவரிடத்தில் கொ
ண்டுவந்து, அவளை நடுவே நிறுத்தி,—அவரை ௪

1 மத். ௰௧. ௨௭. யோவா. ௧. ௰௪. 2 மாற். ௰௧. ௰௮. லூக். ௰௯. ௪௭: ௨௰. ௰௯, ௰௯. வ௪: ௮. ௩௭.—3 ௪௪. வ௪. யோவா. ௮. ௨௰.—4 மத். ௰௨. ௨௩. யோவா. ௩. ௨: ௮. ௩௰. 5 யோவா. ௰௩. ௩௩: ௰௬. ௰௬. 6 ஓசே. ௫. ௬. யோவா. ௮. ௨௧: ௰௩. ௩௩.—7 ஏசா. ௰௧. ௰௨. யாக். ௧. ௧. ௧ பே. ௧. ௨.—8 லே. ௨௩. ௩௬.—9 ஏசா. ௫௫. ௧. யோவா. ௪. ௰௪. வெளி. ௨௨. ௰௭. 10 ௫ மோ. ௰௮. ௰௫.—11 ஏசா. ௰௨. ௩: ௪௪. ௩. யோவா. ௪. ௰௪.—12 ஏசா. ௪௪. ௩. யோவே. ௨. ௨௮. யோவா. ௰௬. ௭. அப். ௨. ௰௭: ௧௧. ௰௮.—13 யோவா. ௰௨. ௰௬: ௰௬. ௭.—14 ௫ மோ. ௰௮. ௰௫, ௰௮. யோவா. ௧. ௨௧: ௬. ௰௪.—15 யோவா. ௪. ௪௨: ௬. ௬௯.—16 ௫௨. ௪௪. யோவா. ௭. ௪௧.—17 சங். ௧௩௨. ௰௧. எரே. ௨௩. ௫. மீகா. ௫. ௨. மத். ௨. ௫.—18 ௧ சாமு. ௰௬. ௧, ௪. 19 ௰௨. ௪௪. யோவா ௯. ௰௬: ௧௰. ௰௯.—20 ௩௰. ௪௪.—21 மத். ௭. ௨௯.—22 யோவா. ௰௨. ௪௨. அப் ௬. ௭. ௧ கொரி. ௧. ௨௰, ௨௬: ௨. ௮.—23 யோவா. ௩. ௨.—24 ௫ மோ. ௧. ௰௭: ௰௭. ௮. ௯: ௰௯. ௰௫.—25 ஏசா ௯. ௧, ௨. மத். ௪. ௰௫. யோவா. ௧. ௪௬: ௪௧. ௫௨.

* அல்லது அந்நியர்.—† அல்லது இயேசுவண்டைக்கு.

நோக்கி, போதகரே, இந்தப்பெண் விபசாரம்
பண்ணுகிறபொழுதே பிடிக்கப்பட்டாள். —
௫ [1]இப்படிப்பட்டவர்களைக் கற்களால் கொலை
செய்யவேண்டுமென்று மோசேயானவர் நியாய
சாஸ்திரத்திலே நமக்குக் கட்டளையிட்டிருக்கி
ரூரே, நீர் எப்படிச் சொல்லுகிறீர் என்றூர்கள்.—
௬ அவர்மேல் குற்றம்சாற்றுவதற்குக் காரணம்
பெறும்படிக்கு, அவர்கள் இப்படிச் சொல்லி
அவரைச் சோதித்தார்கள்; இயேசுவானவர்
௭ குனிந்து விரலினாலே தரையில் எழுதினூர்.-அவர்
கள் பின்னும் அவரிடத்தில் கேட்டுக்கொண்டி
ருந்தபொழுது, அவர் நிமிர்ந்து அவர்களை நோக்
கி, [2]உங்களில் பாவமில்லாதவன் எவனோ,
அவன் முதல் கல்லை இவள்மேல் எறிந்துபோட
௮ வேண்டும் என்று சொல்லி, — மறுபடியும்
௯ குனிந்து தரையில் எழுதினூர்.—அவர்கள் அதைக்
கேட்டு, தங்கள் மனதினாலே கடிந்துகொள்ளப்
பட்டவர்களாய் இயேசுவானவர் தனித்திருக்க,
அந்தப்பெண் நடுவிலே நிற்க, அவர்களைவிட்
டுப் [3]பெரியோர்முதல் சிறியோர்வரைக்கும்
ஒருவன் ஒருவனூக எல்லாரும் புறப்பட்டுப்போ
௰ னூர்கள்.—இயேசுவானவர் நிமிர்ந்து (பார்க்கை
யில்,) அந்தப் பெண்ணைத்தவிர மற்றொருவரை
யும் காணூதபொழுது, அவர் அவளை நோக்கி,
ஸ்திரியே உன்மேல் குற்றம்சாற்றினவர்கள் எங்
கே? ஒருவனூகிலும் உன்னை ஆக்கினைக்குள்ளா
௰௧ கத் தீர்க்க இல்லையா என்றூர்.—அவள் சொன்
னது: ஆண்டவரே, ஒருவரும் அப்படிச் செய்ய
இல்லை என்றூள்; இயேசுவானவர் சொன்னது:
[4]நானும் உன்னை ஆக்கினைக்குள்ளாகத் தீர்க்க
மாட்டேன்; நீ போய், [5]இனிப் பாவம்செய்யா
திருப்பாயாக என்றூர்.

௰௨ மறுபடியும் இயேசுவானவர் சனங்களை நோக்
கி, [6]நான் உலகத்தின் ஒளியாய் இருக்கிறேன்;
எனக்குப் பின்செல்லுகிறவன் இருளிலே நட
வாமல், சீவனூகிய ஒளியை அடைந்திருப்பான்
௰௩ என்றூர். — அப்பொழுது பரிசேயர் அவரை
நோக்கி, [7]நீரே உம்மைக்குறித்துச் சாட்சிகொ
டுக்கிறீர், உம்முடைய சாட்சியை மெய்யென்று
௰௪ ஒத்துக்கொள்ளக்கூடாது என்றூர்கள்.—அதற்கு
இயேசுவானவர் சொன்னது: நான் வந்த இடத்
தையும், நான் போகும் இடத்தையும் அறிந்திருக்
கிறபடியினாலே, என்னைக்குறித்து நானே சாட்
சிகொடுத்தாலும், என்னுடைய சாட்சியை மெய்
யென்று ஒத்துக்கொள்ளவேண்டும்; [8]நீங்கள்
நான் வந்த இடத்தையும் நான் போகும் இடத்
௰௫ தையும் அறியாமலிருக்கிறீர்கள்.—[9]நீங்கள் மாம்
சத்திற்கு ஏற்றபடி தீர்மானம்பண்ணுகிறீர்கள்;
[10]நான் ஒருவனைக்குறித்தும் தீர்மானம்பண்ணு
கிறதில்லை.—நான் தீர்மானம்பண்ணினால், நான் ௰௬
மாத்திரம் அல்ல, [11]நானும் என்னை அனுப்பின
பிதாவும்கூட இருக்கிறபடியினாலே என்னுடை
ய தீர்மானம் சத்தியத்தின்படியே இருக்கும்.—
[12]இரண்டுபேருடைய சாட்சியை மெய்யென்று ௰௭
ஒத்துக்கொள்ளவேண்டுமென்று உங்கள் நியாய
சாஸ்திரத்திலேயும் எழுதியிருக்கின்றதே.—அந் ௰௮
தப்படி நான் என்னைக்குறித்துச் சாட்சிகொடுக்
கிறவனாய் இருக்கிறேன்; [13]என்னை அனுப்பின
பிதாவும் என்னைக்குறித்துச் சாட்சிகொடுக்கிறூர்
என்றூர்.—அப்பொழுது அவர்கள் உம்முடைய ௰௯
பிதா எங்கே என்றூர்கள், இயேசுவானவர்
சொன்னது: [14]நீங்கள் என்னையும் என் பிதாவை
யும் அறியாமலிருக்கிறீர்கள்; [15]என்னை அறிந்தீர்
களானால் என் பிதாவையும் அறிந்திருப்பீர்கள்
என்றூர்.

தேவாலயத்திலே இயேசுவானவர் உபதே ௨௰
சம்பண்ணித் [16]தருமப்பெட்டியின் அருகே
இருந்தபொழுது, இந்த வசனங்களைச் சொன்
னூர்; [17]அப்படியிருந்தும், அவருடைய நேரம்
வராதபடியால், [18]ஒருவரும் அவரைப் பிடிக்க
இல்லை.

பின்பு இயேசுவானவர் அவர்களை நோக்கி, ௨௧
நான் போவேன், [19]நீங்கள் என்னைத் தேடுவீர்
கள்; [20]ஆகிலும் உங்கள் பாவத்தினாலே சாவீர்
கள்; நான் போகும் இடத்திற்கு நீங்கள் வரமாட்
டீர்கள் என்றூர்.—அப்பொழுது யூதர்கள் (ஒரு ௨௨
வரை ஒருவர்) நோக்கி, நான் போகும் இடத்
திற்கு நீங்கள் வரமாட்டீர்கள் என்கிறூனே, தன்
னைத்தான் கொலைசெய்வானூ என்று பேசிக்
கொண்டார்கள்.—அவர் பின்னும் அவர்களுட ௨௩
னே சொன்னது: [21]நீங்கள் கீழேயிருந்து தோன்
றினவர்கள்; நான் உயரத்திலிருந்து தோன்றின
வன்; [22]நீங்கள் இவ்வுலகத்திற்கு உரியவர்கள்;
நான் இவ்வுலகத்திற்கு உரியவன் அல்ல. —
ஆகையால் [23]நீங்கள் உங்கள் பாவங்களிலே ௨௪
சாவீர்கள் என்று உங்களுக்குச் சொன்னேன்;
[24]பின்னும், அவரே நானென்று நீங்கள் விசுவா
சியாவிட்டால், உங்கள் பாவங்களினாலே சா
வீர்கள் என்றூர்.—அதற்கு அவர்கள், நீர் யார் ௨௫
என்றூர்கள்; இயேசுவானவர் சொன்னது: ஆதி
முதல் உங்களுக்குச் சொல்லிவந்தேனே அவ
னே நான்.—உங்களைக்குறித்துப் பேசி நியாயம் ௨௬
சொல்லுகிறதற்கு அநேக காரியங்கள் உண்டு;
[25]என்னை அனுப்பினவர் சத்தியமுள்ளவர்; நான்
[26]அவரிடத்தில் கேள்விப்பட்டவைகளையே உல
கத்தாருக்கு அறிவிக்கிறேன் என்றூர் — அவர் ௨௭
பிதாவைக்குறித்துச் சொன்னூர் என்று அவர்கள்
அறியாதிருந்தார்கள்.

---

1 ௩ மோ ௨௰.௰. ௫ மோ.௨௨.௨௨.
2 ௫ மோ. ௰௭ ௭. உரோ. ௨.௧.
3 உரோ. ௨. ௨௨.—4 லூக். ௯. ௫௬: ௰௨.௰௪. யோவா. ௩. ௰௭.
5 யோவா. ௫.௰௪.—6 யோவா. ௧ ௪,௫,௯: ௩.௰௯: ௯.௫: ௰௨.௩௫: ௩௬. ௪௬.—7 யோவா. ௫. ௩௧.
8 யோவா. ௭.௨௮: ௯. ௨௯
9 யோவா. ௭. ௨௪.—10 யோவா.௩. ௰௭: ௰௨. ௪௭: ௰௮. ௩௬.
11 ௨௬. ௩௪ யோவா. ௰௬. ௩௨.
12 ௫ மோ.௰௭.௬: ௰௯.௰௫. மத். ௰௮. ௰௬.

௰௬. ௨ கொரி.௰௩.௧. எபி.௰.௨௮.
13 யோவா. ௫. ௩௭.—14 ௯. ௩௪. யோவா.௰௬.௩.-15 யோவா.௰௪.௭.
16 மாற்.௰௨.௪௧.—17 யோவா. ௭.௩௦.
18 யோவா ௭. ௮.—19 யோவா. ௭. ௩௪: ௰௩. ௩௩.—20 ௨௪. ௩௪.
21 யோவா. ௩. ௩௧.—22 யோவா. ௰௫.௰௯: ௰௭.௰௬. ௧ யோ. ௪. ௫.
23 ௨௧. ௩௪.—24 மாற் ௰௬. ௰௬.
25 யோவா. ௭ ௨௮.—26 யோவா. ௩. ௩௨: ௰௫. ௰௫.

௨௮ ஆதலால் இயேசுவானவர் பின்னும் அவர்க
ளுடனே சொன்னது: [1]நீங்கள் மனிதனுடைய
குமாரனை ஏற்றியிருக்கும்பொழுது [2]என்னையே
அவர் என்றும், [3]என்னாலே நான் ஒன்றும் செய்
யாமல் [4]என் பிதா எனக்குப் போதிக்கிறபடியே
இவைகளைச் சொன்னேன் என்றும் அறிவீர்
௨௯ கள்.—[5]என்னை அனுப்பினவர் என்னுடனே
இருக்கிறார்; [6]பிதாவுக்குப் பிரியமானவைகளை
நான் எப்பொழுதும் செய்கிறபடியால், [7]அவர்
என்னைத் தனியே இருக்க விட இல்லை என்றார்.
௩௰ இவைகளை அவர் சொல்லுகையில், [8]அநே
கம்பேர் அவரிடத்தில் விசுவாசமானார்கள்.—
௩௧ ஆதலால் இயேசுவானவர் தம்மை விசுவாசித்த
யூதரை நோக்கி, நீங்கள் என்னுடைய உபதேசத்
திலே நிலைத்திருந்தால், மெய்யாய் என் சீஷராய்
௩௨ இருப்பீர்கள்.—அல்லாமலும் சத்தியத்தை அறி
வீர்கள்; [9]சத்தியமானது உங்களை விடுதலையாக்
கும் என்றார்.
௩௩ அதற்குச் (சிலர்) சொன்னது: [10]நாங்கள் ஆபிர
காமின் சந்ததியாராய் இருக்கிறோமே அல்லா
மல், நாங்கள் ஒருக்காலும் ஒருவனுக்கு அடிமை
களாய் இருக்கவில்லையே, ஆதலால் நீங்கள் விடு
தலையாவீர்கள் என்று நீர் எப்படிச் சொல்லுகிறீர்
என்றார்கள்.
௩௪ இயேசுவானவர் சொன்னது: [11]பாவத்தைச்
செய்கிறவன் எவனோ, அவன் பாவத்திற்கு
அடிமையாய் இருக்கிறான் என்று மெய்யாகவே
௩௫ உங்களுக்குச் சொல்லுகிறேன்.—[12]அடிமையா
னவன் என்றைக்கும் வீட்டிலே தங்கான்; குமா
௩௬ ரனே என்றைக்கும் அதிலே தங்குவான்.—ஆகை
யால் [13]குமாரனானவர் உங்களை விடுதலையாக்
கினால், மெய்யாய் விடுதலையாயிருப்பீர்கள்.—
௩௭ நீங்கள் ஆபிரகாமின் சந்ததியார் என்று அறிந்தி
ருக்கிறேன்; அப்படியிருந்தும், என் உபதேசம்
உங்களில் தரியாமலிருக்கிறபடியால், [14]என்
௩௮ னைக் கொலைசெய்யத் தேடுகிறீர்கள்.— [15]நான்
என் பிதாவினிடத்திலே கண்டதைப் பேசுகி
றேன், அப்படியே நீங்களும் உங்கள் பிதாவி
னிடத்திலே கண்டதைச் செய்கிறீர்கள் என்
௩௯ றார்.—அதற்கு அவர்கள், [16]ஆபிரகாமே எங்கள்
தகப்பனாயிருக்கிறார் என்றார்கள்; இயேசுவான
வர் சொன்னது: [17]நீங்கள் ஆபிரகாமின் பிள்ளை
களானால், ஆபிரகாமின் கிரியைகளுக்கு ஒப்
௪௰ பாய்ச் செய்வீர்களே.—[18]நீங்கள் பராபரனிடத்
தில் கேள்விப்பட்ட சத்தியத்தை உங்களுக்குச்
சொன்ன மனிதனாகிய [19]என்னைக் கொலைசெய்
யத் தேடுகிறீர்கள்; ஆபிரகாம் இப்படிச் செய்ய
௪௧ வில்லையே.— நீங்கள் உங்கள் பிதாவின் கிரி
யைகளுக்கு ஒப்பாய்ச் செய்கிறீர்கள் என்றார்;
அதற்கு அவர்கள் சொன்னது: நாங்கள் வேசி
மார்க்கத்தினாலே பிறந்தவர்கள் அல்ல, [20]ஒரே
பிதா எங்களுக்கு உண்டு, பராபரனே அவர் என்
றார்கள்.
இயேசுவானவர் சொன்னது: [21]பராபரனிலி ௪௨
ருந்தே புறப்பட்டு வந்தேன்; [22]நான் என்னாலே
வர இல்லை; அவரே என்னை அனுப்பினார்; ஆகை
யால் [23]பராபரன் உங்கள் பிதாவாய் இருந்தால்,
நீங்கள் என்னிடத்தில் அன்புகூருவீர்கள்.—
[24]என்னத்தினாலே என்னுடைய பேச்சை அறி ௪௩
யாமல் இருக்கிறீர்கள்? என்னுடைய உபதேசத்
தைக் கேட்க மனதில்லாதபடியினால் அல்லவோ
(அப்படி இருக்கிறீர்கள்)? — [25]பசாசானவனே ௪௪
உங்கள் பிதா; (ஆகையால்) உங்கள் பிதாவின்
இச்சைகளின்படி செய்ய விரும்புகிறீர்கள்; ஆதி
முதற்கொண்டு அவன் மனித கொலைகாரனாய்
இருக்கிறான்; அல்லாமலும் [26]சத்தியத்தில் அவன்
நிலைநில்லாதபடியால் சத்தியம் அவனிடத்தில்
இல்லை; அவன் பொய்யனுமாய் பொய்யின்
தகப்பனுமாய் இருக்கிறபடியால், பொய்பேசு
கிறபொழுது தன் சொந்தத்தில் எடுத்துப் பேசு
கிறான்.—நான் சத்தியத்தை உங்களுக்குச் சொல் ௪௫
லுகிறபடியினாலே, நீங்கள் என்னை விசுவாசிக்
கிறதில்லை.-என்னிடத்தில் பாவம் உண்டென்று ௪௬
உங்களில் எவன் நிச்சயமாய்ச் சொல்வான்? ஆ
கையால் நான் சத்தியத்தைச் சொல்லுகிறவனாய்
இருக்க, நீங்கள் என்னை என்னத்தினாலே விசு
வாசிக்கிறதில்லை? — [27]பராபரனால் உண்டான ௪௭
வன் பராபரனுடைய வசனங்களுக்குச் செவி
கொடுக்கிறான்; நீங்கள் பராபரனால் உண்டாயி
ராதபடியால், செவிகொடாமல் இருக்கிறீர்கள்
என்றார்.—அப்பொழுது யூதர்கள் அவரை நோக் ௪௮
கி, நாங்கள் உன்னைச் சமாரியன் என்றும், [28]பே
யை உடையவன் என்றும் நியாயமாய்ச் சொல்லு
கிறோம் அல்லவா என்றார்கள்.
இயேசுவானவர் சொன்னது: நான பேயை ௪௯
உடையவன் அல்ல, நான் என் பிதாவைக் கனம்
பண்ணுகிறேன்; நீங்கள் என்னைக் கனஈனம்
பண்ணுகிறீர்கள்.—[29]அன்றியும் நான் எனக்குக் ௫௰
கனம் வரத் தேடுகிறதில்லை; அதைத் தேடி நியா
யம் தீர்க்கிறவர் ஒருவர் இருக்கிறார்.—மெய்யாக ௫௧
வே நான் உங்களுக்குச் சொல்லுகிறதாவது:
[30]ஒருவன் என்னுடைய வசனத்தைக் கைக்
கொண்டால், அவன் ஒருக்காலும் மரணத்தை
அடைவதில்லை என்று சொன்னபொழுது,—
யூதர்கள் அவரை நோக்கி, நீ பேயை உடைய ௫௨
வன் என்று இப்பொழுது அறிந்திருக்கிறோம்;
[31]ஆபிரகாமும் தீர்க்கதரிசிகளும் மரித்தார்கள்;
நீ சொல்லுகிறது; ஒருவன் என் வசனத்தைக்

---

1 யோவா. ௩. ௰௪: ௰௨. ௩௨. ௨௫: ௨. ௰௨.—10 ௧ மோ. ௨௫.
2 உரோ. ௧. ௪.-3 யோவா. ௫ ௰௯, ௩௰. ௪௨. மத் ௩. ௯. ௧௯. ௨௪.
4 யோவா ௩ ௰௧ —5 யோவா. ௰௪. ௰, 11 உரோ. ௬. ௰௬, ௨௰. ௨ பே ௨ ௰௯.
௰௧. —6 ௰௧ ௪௨.-7 யோவா ௪. 12 கலா. ௪. ௩௰ —13 உரோ ௮. ௨.
௩௪: ௫ ௩௰: ௬. ௩௮ 8 யோவா. கலா. ௫. ௧. —14 யோவா. ௭. ௰௯.
௭ ௩௧ ப. ௪௨: ௰௧. ௪௫. —9 உரோ. ௪௰. ௪௪.—15 யோவா ௩. ௩௨:
௬. ௰௪: ௰௮. ௨௨. ௮. ௨ யாக். ௧. ௫ ௰௯, ௩௰: ௰௪. ௰, ௨௪.-16 மத்.
௩. ௯. ௩௩. ௪௪ —17 உரோ. ௨. ௭. ௰௪.—25 மத். ௰௩ ௩௮ ௧ யோ.
௨௮: ௩௭. கலா. ௩. ௭, ௨௯. ௩.௮.—26 யூதா ௬.-27 யோவா
18 ௨௬. ௪௪.—19 ௩௭. ௪௪. ௰ ௨௯. ௨௭. ௧ யோ. ௪. ௬.
20 ஏசா. ௬௩. ௰௬: ௬௪. ௮. மல்கி. ௧ ௬. 28 யோவா ௭. ௨௰: ௰. ௨௰: ௰௨. ௪௪.
21 ௧ யோ. ௫. ௧.—22 யோவா. ௰௬. 29 யோவா. ௫. ௪௧: ௭. ௰௮
௨௭: ௰௭. ௮. ௨௫ —23 யோவா. 30 யோவா ௫. ௨௪: ௰௧. ௨௬.
௫. ௪௩: ௭. ௨௮, ௨௯.-24 யோவா. 31 சகரி. ௧. ௫ எபி. ௰௧. ௰௩

கைக்கொண்டால், அவன் ஒருக்காலும் மரணத்
ருஉ தை ருசிபார்க்கமாட்டான் என்கிறாய்.—எங்கள்
பிதாவாகிய ஆபிரகாமிலும் நீ பெரியவனோ? அவர்
மரித்தார்; தீர்க்கதரிசிகளும் மரித்தார்கள்; நீ
உன்னை எப்படிப்பட்டவனாக்குகிறாய் என்றார்
கள்.
ருச இயேசுவானவர் சொன்னது: [1]நானே என்
னைக் கனம்பண்ணினால், அந்தக் கனம் வீணாயி
ருக்கும்; [2]என் பிதாவே என்னைக் கனம்பண்ணு
கிறார்; அவரை நீங்கள் உங்கள் தேவனென்று
ருரு சொல்லுகிறீர்கள்.—அப்படியிருந்தும், [3]நீங்கள்
அவரை அறிய இல்லை; நான் அவரை அறிந்தி
ருக்கிறேன்; அவரை அறியமாட்டேன் என்று
சொன்னேனாகில், நான் உங்களைப்போலப்
பொய்யனாயிருப்பேன்; அவரை நான் அறிந்து
அவருடைய வசனத்தைக் கைக்கொண்டுவருகி
ருசு றேன்.—[4]உங்கள் பிதாவாகிய ஆபிரகாம் என்னு
டைய நாளைக் காணக் களிப்பாய் ஆசைப்பட்டு,
[5]அதையே கண்டு சந்தோஷப்பட்டான் என்
ருஎ றார்.—அப்பொழுது யூதர்கள் அவரை நோக்கி,
உனக்கு ஐம்பது வயதில்லையே; நீ ஆபிரகாமைக்
கண்டாயா என்றார்கள்.
ருஅ இயேசுவானவர் சொன்னது: [6]ஆபிரகாம் பிறந்
தகாலத்திற்கு முன்னும் நானே இருக்கிறேன்
என்று மெய்யாகவே உங்களுக்குச் சொல்லுகி
ருகூ றேன் என்றார்.—[7]அப்பொழுது அவர்மேலே எறி
யும்படிக்கு கற்களை எடுத்துக்கொண்டார்கள்;
[8]இயேசுவானவர் மறைந்து, அவர்கள் நடுவே
நடந்து தேவாலயத்தைவிட்டு அப்புறம்போனார்.

## கூ. அதிகாரம்.

க. இயேசுவினாலே ஒரு பிறவிக்குருடன் பார்வை அடைந்து பரிசேயரிடத்தில் கொண்டுவரப்பட்டு, யஅ. அதின்நிமித்தம் அவர்கள் கோபமடைந்து அவனைப் புறம்பே தள்ளினது. ஙரு. அவன் இயேசுவினால் அங்கீகரிக்கப்பட்டு அவரைக்குறித்து நல்லறிக்கையிட்டது. சக. கிறிஸ்துவினால் பிரகாசிக்கிறவர்கள் இன்னார் என்றது.

க அவர் அப்புறம் போகையில் பிறவிக்குருடனா
உ கிய ஒரு மனிதனைக் கண்டார்.—அப்பொழுது
அவருடைய சீஷர் அவரை நோக்கி இரபீ, [9]இ
வன் குருடனாய்ப் பிறக்கும்படிக்கு இவனோ,
இவனைப் பெற்றவர்களோ, யார் பாவம்செய்தார்
௩ கள் என்று கேட்டார்கள்.—அதற்கு இயேசுவான
வர் சொன்னது: இவனும் பாவஞ்செய்ய இல்லை,
இவனைப் பெற்றவர்களும் பாவம்செய்ய இல்லை,
[10]பராபரனுடைய கிரியைகள் இவனிடத்தில்
வெளிப்படும்பொருட்டாக (இப்படிப் பிறந்
ச தான்).—[11]பகற்காலம் இருக்கும் அளவும் நான்
என்னை அனுப்பினவருடைய கிரியைகளைச்
செய்யவேண்டும்; ஒருவனும் கிரியைகளைச்
செய்யக்கூடாதபடிக்கு இராத்திரிவருகின்றது.—
ரு நான் உலகத்தில் இருக்கையில், [12]உலகத்தின்
ஒளியாய் இருக்கிறேன் என்றார்.—இப்படி அவர் சு
சொல்லி, பின்பு [13]தரையிலே துப்பி, உமிழ்நீரி
னால் சேறு உண்டாக்கி, அந்தச் சேற்றைக் குரு
டனுடைய கண்களின்மேல் பூசி,*—பின்பு நீ எ
[14]சீலோவாக்குளத்தில் போய்க் கழுவு என்
றார்; சீலோவா என்பதற்கு அனுப்பப்பட்டவன்
என்று அர்த்தம்; [15]அந்தப்படி அவன் போய்க்
கழுவிப் பார்வை அடைந்து திரும்பி வந்தான்.
அப்பொழுது அயலகத்தாரும், முன்னே அ அ
வன் பிச்சைக்காரனாயிருந்ததைக் கண்டவர்க
ளும் அவனைப்பார்த்து, (இங்கே) உளுக்காந்து
பிச்சைகேட்டுக்கொண்டிருந்தவன் இவன் அல்
லவா என்றார்கள்.—வேறு சிலர், அவன் இவன் கூ
தான் என்றார்கள்; வேறு சிலர், இவன் அவனு
டைய சாயலாய் இருக்கிறான் என்றார்கள்;
அவன் சொன்னது: நானே அவன் என்றான்.—
அப்பொழுது அவர்கள் அவனை நோக்கி, உன் ய
கண்கள் எப்படித் திறக்கப்பட்டன என்றார்
கள்.—அவன் சொன்னது: [16]இயேசு என்பவர் யக
சேறு உண்டாக்கி, (அதை) என் கண்களின்மே
லே பூசி, நீ சீலோவாக் குளத்திற்குப் போய்க்
கழுவு என்றார்; அந்தப்படி நான் போய்க் கழு
வினபொழுது, பார்வை அடைந்தேன் என்
றான்.—அவர்கள் சொன்னது: அந்த மனிதன் யஉ
எங்கே என்றார்கள், அவன் எனக்குத் தெரியாது
என்றான்.
அப்பொழுது முன்னே குருடனாய் இருந்த யங
வனைப் பரிசேயரிடத்திற்குக் கொண்டுபோனார்
கள்.—இயேசுவானவர் சேறு உண்டாக்கி, அவ யச
னுடைய கண்களைத் திறந்த நாள் ஓய்வுநாளாய்
இருந்தது.—ஆதலால் பரிசேயரும் அவனை நோக் யரு
கி, நீ எப்படிப் பார்வை அடைந்தாய் என்று
கேட்டார்கள்; அதற்கு அவன் சொன்னது: அவர்
சேற்றை என் கண்களின்மேல் வைத்தார்; பின்பு
நான் கழுவினேன், இப்பொழுது காண்கிறேன்
என்றான்.—அப்பொழுது பரிசேயரில் சிலர் யசு
சொன்னது: அம்மனிதன் ஓய்வுநாளைக் கைக்
கொள்ளாதிருக்கிறபடியினாலே, அவன் பராபர
னால் வந்தவன் அல்ல என்றார்கள்; வேறு சிலர்
சொன்னது: [17]பாவியாய் இருக்கிற ஒருவன் இப்
படிப்பட்ட அற்புதங்களைச் செய்வது எப்படி
என்றார்கள்; [18]ஆகையால் அவர்களுக்குள்ளே
பிரிவினை உண்டாயிற்று.—மறுபடியும் அவர்கள் யஎ
குருடனாயிருந்தவனை நோக்கி, உன் கண்களைத்
திறந்த அவனைக்குறித்து நீ என்ன சொல்லு
கிறாய் என்றார்கள்; அவன் சொன்னது: [19]அவர்
தீர்க்கதரிசியாயிருக்கிறார் என்றான்.—அப்பொ யஅ
ழுது அவன் குருடனாயிருந்து, பின்பு பார்வை
அடைந்தான் என்கிறதை யூதர்கள் நம்பாமல்,

1 யோவா. ரு. சக.— 2 யோவா. ரு. சக: ருக. யச: யஎ க அப். ங. யங.
3 யோவா. எ. உகூ, உக.
4 லூக். ய. உச.— 5 எபி. யக. யங.
6 உ யோ. ங. யச. எசா சங. யங.
யோவா. யஎ ரு, உச. கொலோ க. யஎ. வெளி. க. அ.— 7 யோவா. ய. ஙக, ஙகூ: யக. அ.— 8 லூக். ச. ஙய.— 9 கச. வச.— 10 யோவா. யக. ச.— 11 யோவா. ச. ஙச: ரு.
யகூ, ஙங: யக. கூ: யஉ. ஙரு: யஎ. ச.
12 யோவா. ங. ரு, கூ: ங. யகூ: அ. யஉ: யஉ. ஙரு, சக.— 13 மாற். எ. ஙங: அ. உங.— 14 நெகே. ங. யரு.
15 உ இரா. ரு. யச.— 16 ங, எ. வச.
17 ஙங. வச. யோவா ங. உ.
18 யோவா. எ. யஉ, சங: ய. யகூ.
19 யோவா ச. யகூ: ங. யச.

* அல்லது கண்களைச் சேற்றினால் தடவி.

பார்வையடைந்தவனுடைய தாய்தகப்பன்மா
௰௯ ரை அழைப்பித்து,—அவர்களை நோக்கி, உங்கள்
குமாரன் குருடனாய்ப் பிறந்தான் என்று நீங்கள்
சொல்லுகிறீர்களே, அவன் இவனோ? இப்பொ
ழுது இவனுக்கு எப்படிப் பார்வை உண்டாயிற்
௨௰ று என்று கேட்டார்கள்.—அதற்கு அவனுடைய
தாய்தகப்பன்மார் சொன்னது: இவன் எங்கள்
குமாரனென்றும், குருடனாய்ப் பிறந்தான் என்
௨௧ றும், அறிந்திருக்கிறோம்.—இப்பொழுது இவன்
பார்வை அடைந்த வகை எங்களுக்குத் தெரி
யாது; அவனுடைய கண்களைத் திறந்தவனையும்
அறியமாட்டோம்; இவன் பெரியவனாய் இருக்
கிறானே, இவனிடத்திலே கேளுங்கள்; தன்
னைக்குறித்து இவனே பேசுவான் என்றார்கள்.—
௨௨ [1]அக்காலத்திற்கு முன்னே, இயேசுவைக் கிறிஸ்
தென்று சொல்பவன் எவனோ அவனைச் செப
ஆலயத்திற்குப் புறம்பாக்கவேண்டுமென்று யூதர்
கள் தீர்மானம்பண்ணியிருந்தபடியால், [2]குருட
னாயிருந்தவனுடைய தாய்தகப்பன்மார் அவர்க
௨௩ ளுக்குப் பயந்து,—இவன் பெரியவனாய் இருக்
கிறானே, இவனிடத்தில் கேளுங்கள் என்று
சொன்னார்கள்.

௨௪ ஆதலால் அவர்கள் குருடனாயிருந்தவனை இ
ரண்டாம்தரம் அழைத்து, [3]நீ பராபரனைக் கனம்
செய்வாயாக; [4]அம்மனிதன் பாவியாயிருக்கி
றான் என்று நாங்கள் அறிந்திருக்கிறோமே என்
௨௫ றார்கள்.—அதற்கு அவன்சொன்னது: அவர் பாவி
யோ அல்லவோ அது எனக்குத் தெரியாது; நான்
குருடனாயிருந்தேன்; இப்பொழுது காண்கி
றேன், இது ஒன்றையே அறிந்திருக்கிறேன் என்
௨௬ றான்.—அப்பொழுது அவர்கள் மறுபடியும் அவ
னை நோக்கி, உனக்கு என்ன செய்தான்? உன்
கண்களை எப்படித் திறந்தான் என்றார்கள்.—
௨௭ அவன் சொன்னது: முன்னே அதை உங்களுக்
குச் சொன்னேன்; நீங்கள் செவிகொடுக்க இல்
லை; அதை மறுபடியும் கேட்க என்னத்தினாலே
விரும்புகிறீர்கள்? நீங்களும் அவருக்குச் சீஷ
ராக மனதுள்ளவர்களாய் இருக்கிறீர்களா என்
௨௮ றான்.—அப்பொழுது அவர்கள் அவனை வைது,
நீயே அவனுடைய சீஷன், நாங்கள் மோசேயி
௨௯ னுடைய சீஷர்.—மோசேயானவருடனே பரா
பரன் பேசினதை அறிந்திருக்கிறோம்; [5]அவன்
வந்த இடத்தை அறியமாட்டோம் என்றார்கள்.—
௩௰ அதற்கு அந்த மனிதன் சொன்னது: [6]அவர் என்
கண்களைத் திறந்திருந்தும், அவர் வந்த இடத்தை
நீங்கள் அறியாமலிருக்கிறது ஆச்சரியமான
௩௧ காரியம்.—[7] அல்லாமலும் பாவிகளுக்குப் பரா
பரன் செவிகொடுக்கிறது இல்லையென்றும் அ
வர்மேல் பத்தியாயிருந்து, அவருடைய சித்தத்
தின்படி செய்கிறவன் எவனோ, அவனுக்குச் செ
விகொடுக்கிறார் என்றும் அறிந்திருக்கிறோம்.—
குருடனாய்ப் பிறந்தவனுடைய கண்களை ஒரு ௩௨
வன் திறந்தான் என்று உலகம் உண்டானது
முதற்கொண்டு கேள்விப்பட இல்லையே.— [8]அ ௩௩
வர் பராபரனால் வாராதவராயிருந்தால், இப்படிப்
பட்டவைகளில் ஒன்றையாகிலும் செய்யத் திரா
ணியிருக்கமாட்டாதே என்றான். — அப்பொ ௩௪
ழுது அவர்கள் அவனை நோக்கி, [9]முழுவதும்
பாவங்களிலே பிறந்த நீயா எங்களுக்கு உபதே
சம்பண்ணுகிறவன் என்று சொல்லி, அவனைப்
புறம்பே * தள்ளினார்கள்.

அவனை அவர்கள் புறம்பே தள்ளினதை இயே ௩௫
சுவானவர் கேள்விப்பட்டு, பின்பு அவனைக்
கண்டு, [10]நீ பராபரனுடைய குமாரனிடத்தில்
விசுவாசமாயிருக்கிறாயா என்றார்.—அதற்கு அ ௩௬
வன் ஆண்டவரே, நான் அவர்மேல் விசுவாசமா
யிருக்கும்படிக்கு, அவர் இன்னார் என்று( காட்ட
வேண்டும் என்றான்).—இயேசுவானவர் சொன் ௩௭
னது: நீ அவரைக் கண்டாய்; [11]உன்னுடனே
பேசுகிறவரே அவர் என்றார்.—உடனே அவன், ௩௮
ஆண்டவரே, விசுவாசிக்கிறேன் என்றுசொல்லி
அவரைத் தொழுதுகொண்டான்.—பின்பு இயே ௩௯
சுவானவர் சொன்னது: [12]காணாதவர்கள் காண
வும் காண்கிறவர்கள் குருடராகவும் தகக்தாக
[13]நியாயத்தீர்ப்புக் கொடுப்பதற்கு நான் இவ்வுல
கத்திலே வந்தேன் என்றார்.

பரிசேயரில் சிலர் அவருடனேகூட இருந்து, ௪௰
அதைக் கேட்டபொழுது, அவர்கள் அவரை
நோக்கி, [14]நாங்களும் குருடரா என்றார்கள்.—
இயேசுவானவர் சொன்னது: [15]நீங்கள் குருட ௪௧
ராயிருந்தால், உங்களுக்குப் பாவம் உண்டாயி
ருக்கமாட்டாது; நீங்கள் காண்கிறோமென்று
சொல்லுகிறபடியால், உங்கள் பாவம் நிற்கும்.

## ௰. அதிகாரம்.

௧. கிறிஸ்து வாசலும் நல்ல மேய்ப்பருமானவர் என்றது. ௰௯. அவரைக் குறித்த பலருடைய தாற்பரியங்களைச் சொல்லியது. ௨௪. தாம் பராபரனுடைய குமாரனாகிய கிறிஸ்து என்று தம்முடைய கிரியைகளினாலே திருஷ்டாந்தப்படுத்தி, ௩௧. யூதர்களுக்கு விலகி, ௪௰. மறுபடியும் யோர்தானைக் கடந்துபோனபோது, அவரில் அநேகர் விசுவாசித்தது.

மெய்யாகவே நான் உங்களுக்குச் சொல்லுகிற ௧
தாவது: ஆட்டுக்கிடையின் வாசல் வழியாய்
அதில் பிரவேசியாமல், வேறு வழியாய் அதில்
பிரவேசிக்கிறவன் திருடனுமாய்க் கொள்ளைக்
காரனுமாய் இருக்கிறான்.—வாசலின் வழியாய்ப் ௨
பிரவேசிக்கிறவனே ஆடுகளின் மேய்ப்பனாயி
ருக்கிறான்.—வாசலைக்காக்கிறவன் அவனுக்குத் ௩
திறக்கிறான்; ஆடுகளும் அவனுடைய சத்தத்திற்
குச் செவிகொடுக்கின்றன; அவனும் தன்னு

1 யோவா. ௭. ௰௩: ௰௨. ௪௨: ௰௯. ௩௮. அப். ௫. ௰௩.—2 ௩௪. வச. யோவா. ௰௬. ௨.—3 யோசு. ௭. ௰௯. ௧ சாமு. ௬. ௫.—4 ௰௬. வச.—5 யோவா. ௮. ௰௪.—6 யோவா. ௩. ௰.
7 யோபு. ௨௭. ௯: ௩௫. ௰௨. சங். ௰௮. ௪௧: ௬௬. ௰௮: ௧௧௯. ௰௮. நீதி. ௧. ௨௮: ௫. ௨௯: ௨௮. ௯. ஏசா. ௧. ௰௫. எரே. ௰௧. ௰௧: ௰௪. ௰௨. எசே. ௮. ௰௮. மீகா. ௩. ௪. சகரி. ௭. ௰௩.—8 ௰௬. வச.—9 ௨. வச.
10 மத். ௰௪. ௩௩: ௰௬. ௰௬. மாற். ௧. ௧. ௰௨. ௪௭. யோவா. ௪. ௨௬. ௧ யோ. ௫. ௰௩.
11 யோவா. ௪. ௨௬.
12 மத். ௰௩. ௰௩.
13 யோவா. ௩. ௰௭: ௫. ௨௨, ௨௭:
14 உரோ. ௨. ௰௯.
15 யோவா. ௰௫. ௨௨, ௨௪.

* அல்லது சபையிலிருந்து.

டைய ஆடுகளைப் பேர்பேராக அழைத்து, அவை
௪ களை வெளியே கொண்டுபோகிறான்.—மேலும்
அவன் தன்னுடைய ஆடுகளை வெளியிலே
விட்டபின்பு, அவைகளுக்கு முன்னாக நடந்து
போகிறான்; மேலும் ஆடுகள் அவனுடைய சத்
தத்தை அறிகிறபடியினாலே, அவைகள் அவனுக்
௫ குப் பின்செல்லுகின்றன.—அந்நியருடைய சத்
தத்தை அறியாதபடியினாலே, அவைகள் அந்நிய
னுக்குப் பின்செல்லாமல், அவனைவிட்டு ஓடிப்
௬ போகும் என்றார்.—இந்த உவமையை இயேசு
வானவர் அவர்களுடனே சொன்னபொழுது,
அவர்கள் தங்களுக்கு அவர் சொன்னவைகளின்
கருத்தை அறியவில்லை.
௭ ஆதலால் இயேசுவானவர் மறுபடியும் அவர்
களை நோக்கி, நானே ஆடுகளின் வாசல் என்று
மெய்யாகவே உங்களுக்குச் சொல்லுகிறேன்.—
௮ எனக்குமுன்னே வந்தவர்கள் எல்லாரும் திருட
ருமாய்க் கொள்ளைக்காரருமாய் இருந்தார்கள்;
ஆடுகள் அவர்களுக்குச் செவிகொடுக்கவில்லை.-
௯ [1]நானே வாசல், ஒருவன் என்னாலே உட்பிரவே
சித்தால் அவன் இரட்சிக்கப்படுவான்; அல்லாம
லும அவ்ன் உள்ளும் புறம்பும் சென்று, மேய்ச்ச
௰ லைக் கண்டுபிடிப்பான்.—திருடனானவன் திரு
டுகிறதற்கும் கொலைசெய்கிறதற்கும் கெடுக்கிற
தற்குமே அன்றி வேறொன்றுக்கும் வாரான்;
நான் அவர்களுக்குச் சீவனும் பரிபூரணமும்
௰௧ உண்டாகும்படிக்கு வந்தேன்.—[2]நானே நல்ல
மேய்ப்பன், நல்ல மேய்ப்பனானவன் ஆடுகளுக்
௰௨ காகத் தன் சீவனைக் கொடுக்கிறான்.—மேய்ப்
பன் அல்லாதவனுமாய் ஆடுகளையுடையவன்
அல்லாதவனுமாயிருக்கிற கூலியாள் கோனாய்
வரக் காணும்பொழுது [3]ஆடுகளைவிட்டு ஓடிப்
போவான்; அப்பொழுது கோனாய் அந்த ஆடுக
௰௩ ளைப் பிடித்துச் சிதற அடிக்கும்.—மேலும் கூலி
யாளானவன் கூலிக்காக வேலைசெய்கிறவனான
படியினாலும், ஆடுகளைக்குறித்து அவனுக்குக்
கவலைதோன்றாதபடியினாலும் ஓடிப்போவான்.—
௰௪ [4]நானே நல்ல மேய்ப்பன், என் பிதா என்னை
அறிந்திருக்கிறதுபோலவும், [5]நான் பிதாவை அ
௰௫ றிந்திருக்கிறதுபோலவும்,—நான் என்னுடைய
வைகளை அறிந்து, என்னுடையவைகளால் அறி
யப்பட்டு, [6]ஆடுகளுக்காக என் சீவனைக் கொடுக்
௰௬ கிறேன்.—அன்றியும் இந்தக் கிடையில் உள்ள
வைகள் அல்லாமல், [7]வேறாடுகளும் எனக்கு
உண்டு; அவைகளையும் நான் கொண்டுவரவே
ண்டும்; அவைகள் என் சத்தத்திற்குச் செவி
கொடுக்கும்; [8]அப்பொழுது ஒரே ஆட்டுக்கூட்
டமும் ஒரே மேய்ப்பனும் உண்டாயிருக்கும்.—

நான் என் சீவனைப் பின்னும் அடைந்துகொள் ௰௭
ளும்படிக்கு, [9]அதைக் கொடுக்கிறபடியினாலே
பிதா என்னிடத்தில் அன்பாயிருக்கிறார்.—ஒரு ௰௮
வனும் என்னிடத்திலிருந்து அதை வாங்கமாட்
டான்; [10]நான் என்னாலே அதைக் கொடுக்கி
றேன்; அதைக் கொடுக்கிறதற்கும், அதை மறுப
டியும் எடுத்துக்கொள்ளுகிறதற்கும் என்னிடத்
தில் அதிகாரம் உண்டு; [11]இதற்கு ஏற்ற கட்ட
ளையை என் பிதாவினாலே பெற்றுக்கொண்
டேன் என்றார்.

[12]இந்த வசனங்களைக்குறித்து யூதருக்குள்ளே ௰௯
மறுபடியும் பிரிவினை உண்டாயிற்று.— அவர் ௨௰
களில் அநேகர் சொன்னது: [13]அவன் பசாசை
யுடையவன், பயித்தியக்காரனாயிருக்கிறான்;
என்னத்திற்காக அவனுக்குச் செவிகொடுக்கிறீர்
கள் என்றார்கள்.—மற்றப்பேர்கள் சொன்னது: ௨௧
இப்படிப்பட்ட வசனங்கள் பேய்கொண்டவ
னுடையவைகள் அல்ல என்றும், [14]குருடரின்
கண்களைப் [15]பேயானவன் திறப்பானா என்றும்
சொன்னார்கள்.

பின்பு மாரிகாலத்தில் எருசலேம் நகரத்திலே ௨௨
தேவாலயப் பிரதிஷ்டையின் பண்டிகையைக்
கொண்டாடிவருகையில்,—இயேசுவானவர் தே ௨௩
வாலயத்தில் [16]சாலோமோனுடைய மண்டபத்
தில் உலாவிக்கொண்டிருக்கிறபொழுது,

யூதர்கள் அவரை வளைந்துகொண்டு அவரை ௨௪
நோக்கி, எதுவரைக்கும் எங்கள் ஆத்துமாக்கள்
சந்தேகமுள்ளவைகளாய் இருக்கும்படி செய்
கிறீர்!* நீர் கிறிஸ்துவானால், (இதை) எங்களுக்
குத் தாராளமாய்ச் சொல்லும் என்றார்கள்.—
அதற்கு இயேசுவானவர் சொன்னது: அதை ௨௫
உங்களுக்குச் சொன்னேன், நீங்கள் விசுவாசிக்
கவில்லை; [17]என் பிதாவின் நாமத்தினாலே நான்
செய்கிற கிரியைகளே என்னைக்குறித்துச் சாட்
சிகொடுக்கின்றன.—[18]அப்படியிருந்தும் நீங்கள் ௨௬
என் கிடையின் ஆடுகள் அல்லாதவர்களானப
டியினாலே விசுவாசியாமல் இருக்கிறீர்கள்.—
[19]நான் உங்களுக்குச் சொன்னபடியே என் ஆடு ௨௭
கள் என் சத்தத்திற்குச் செவிகொடுக்கின்றன;
அல்லாமலும் நான் அவைகளை அறிந்திருக்கி
றேன்; அவைகளும் எனக்குப் பின்செல்லுகின்
றன.—அல்லாமலும் நான் அவைகளுக்கு நித்தி ௨௮
யசீவனைக் கொடுக்கிறேன்; [20]அவைகள் ஒருக்
காலும் கெட்டுப்போகாது, ஒருவனும் அவை
களை என் கையிலிருந்து பறித்துக்கொள்ளான் —
[21]அவைகளை எனக்குக் கொடுத்த என் பிதா எல் ௨௯
லாரிலும் [22]பெரியவராய் இருக்கிறார்; ஒருவனா
கிலும் அவைகளை என் பிதாவின் கையிலிருந்து

1 யோவா. ௰௪. ௯. எபே. ௨. ௰௮. 8 ஏசே. ௩௭. ௨௨. எபே. ௨. ௰௪.
2 ஏசா. ௪௰. ௰௧. ஏசே. ௩௪. ௰௨. ௨௩: ௩௭. ௨௪. எபி. ௰௩. ௨௰. ௧ பே. ௨. ௨௫: ௫. ௪.—3 சகரி. ௰௩. ௰௩.
4 மத். ௰௧. ௨௭.–5 ௨ தீமோ. ௨. ௰௯.
6 யோவா. ௰௫. ௰௩.–7 ஏசா. ௫௬. ௮.
௧ பே. ௨. ௨௫.—9 ஏசா. ௫௩. ௭, ௮, ௰௨. எபி. ௨. ௯.–10 யோவா. ௨. ௰௯.—11 யோவா. ௬. ௩௮: ௰௫. ௰. அப். ௨. ௨௪, ௩௨.
12 யோவா. ௭. ௪௩: ௯. ௰௬.

13 யோவா. ௭. ௨௰: ௮. ௪௮, ௫௨. 19 யோவா. ௪. ௰௪.—20 யோவா. ௬. ௩௭: ௰௭. ௰௧, ௰௨: ௰௮. ௯.
14 யோவா. ௯. ௬, ௭, ௩௨, ௩௩.
15 ௨ மோ. ௪. ௰௧. சங். ௯௪. ௯: ௧௪௬. ௮.–16 அப். ௩. ௰௧: ௫. ௰௨.
17 ௩௮. வச. யோவா. ௩. ௨: ௫. ௩௬.
18 யோவா. ௮. ௪௭. ௧ யோ. ௪. ௬.
21 யோவா. ௰௭. ௨, ௬. ௲.
22 யோவா. ௰௪. ௨௮

* அல்லது சந்தேகத்துக்குள் வைக்கிறீர்.

௩௰ பறித்துக்கொள்ளான்.—[1]நானும் பிதாவும் ஒன்
றாயிருக்கிறோம் என்றார்.
௩௧ [2]அப்பொழுது யூதர்கள் அவரைக் கொலை
செய்யும்படிக்கு மறுபடியும் கற்களை எடுத்துக்
௩௨ கொண்டார்கள். — இயேசுவானவர் அவர்களை
நோக்கி, நான் என் பிதாவினாலே அநேக நற்கி
ரியைகளை உங்களுக்குக் காண்பித்தேன்; அவை
களில் எந்தக் கிரியையின்நிமித்தம் நீங்கள் என்
௩௩ மேல் கல் எறிவீர்கள் என்றார்.—யூதர்கள் சொன்
னது: நற்கிரியையின்நிமித்தம் அல்ல, நீ மனித
னாயிருக்க, [3]உன்னைத் தேவனென்று சொல்லி,
இவ்விதமாய்த் தேவதூஷணம் செய்கிறதின்
நிமித்தமே உன்மேல் கல் எறிவோம் என்றார்
௩௪ கள்.—அதற்கு இயேசுவானவர் சொன்னது: [4]தே
வர்களாய் இருக்கிறீர்கள் என்று நான் சொன்
னேன் என்பது உங்கள் வேதத்தில் எழுதியிருக்
௩௫ கவில்லையா? — [5]பராபரனுடைய வசனத்தைப்
பெற்றுக்கொண்டவர்களை அவர் தேவர்கள்
என்று சொல்ல வேதமும் தள்ளப்படக்கூடாத
௩௬ தாயிருக்க, — [6]பிதாவினால் பரிசுத்தமாக்கப்பட்
டும் [7]உலகத்தில் அனுப்பப்பட்டும் இருக்கிற
[8]நான் என்னைப் [9]பராபரனுடைய குமாரனென்
று சொன்னதினாலே, தேவதூஷணம் செய்தாய்
௩௭ என்று சொல்லலாமா?—[10]நான் என் பிதாவின்
கிரியைகளைச் செய்யாதிருந்தால் நீங்கள் என்னை
௩௮ விசுவாசிக்கவேண்டுவதில்லை. — (அவைகளை)
நான் செய்திருக்கிறபடியால் [11]நீங்கள் என்னை
விசுவாசியாதிருந்தாலும், பிதா என்னிலேயும்
நான் அவரிலேயும் இருக்கிறதை அறிந்து விசு
வாசித்துக்கொள்ளும்படிக்கு [12]நீங்கள் அந்தக்
கிரியைகளை விசுவாசிக்கவேண்டுமே என்றார்.
௩௯ [13]அப்பொழுது அவர்கள் மறுபடியும் அவரைப்
பிடிக்கத் தேடினார்கள்; அவர் அவர்களுடைய
௪௰ கைகளில்நின்று விலகிப் புறப்பட்டு,-யோர்தான்
ஆற்றின் அக்கரையிலே, முன்னே [14]யோவான்
ஞானஸ்நானம்கொடுத்த இடத்திற்குத் திரும்பிப்
௪௧ போய், அங்கே தங்கினார்.-அநேகம்பேர் அவரி
டத்தில் சென்று, பின்பு சொன்னது: யோவான்
ஒரு அற்புதமும் செய்யாதிருந்தும், [15]இவரைக்
குறித்துச் சொன்ன யாவும் மெய்யாயிருக்கின்
௪௨ றது என்றார்கள்.-அவ்விடத்திலே அநேகம்பேர்
அவர்மேல் [16]விசுவாசமுள்ளவர்களானார்கள்.

## ௰௧. அதிகாரம்.

*க மரித்த நாலுநாள் அடக்கம்பண்ணப்பட்டிருந்த இலாசருவைக் கிறிஸ்து உயிரோடு எழுப்பினது. ௪௫. அநேக யூதர்கள் அவரை விசுவாசித்தது. ௪௭. கிறிஸ்துவுக்கு விரோதமாகப் பிரதான ஆசாரியர்களும் பரிசேயர்களும் ஒரு சங்கத்தை உண்டாக்கினது. ௪௯. காய்பா என்பவன் அவரைக்குறித்துத் தீர்க்கதரிசனம் உரைத்தது. ௫௪. இயேசு தம்மை மறைத்துக்கொண்டது. ௫௬. பஸ்காபண்டிகையிலே சனங்கள் அவரைத் தேடினது.*

க அன்றியும் [17]மரியாளும் அவளுடைய சகோத
ரியாகிய மார்த்தாளும் இருந்த பெத்தானியா
வூராகிய இலாசரு என்பவன் வியாதியுள்ளவ
னாய் இருந்தான்.—[18]அந்த மரியாள் கர்த்தர்மேல் ௨
பரிமளதயிலத்தைப் பூசி, தன் மயிரால் அவரு
டைய பாதங்களைத் துடைத்தவளே; அவளு
டைய சகோதரனாகிய இலாசரு வியாதிப்பட்டி
ருந்தான்.—அப்பொழுது அவனுடைய சகோ ௩
தரிகள், ஆண்டவரே, உமக்கு அன்பாயிருக்கி
றவன் வியாதியாயிருக்கிறான் என்று சொல்லி
அனுப்பினார்கள்.
இயேசுவானவர் அதைக் கேட்டு, அந்த வியாதி ௪
மரணத்திற்கு ஏதுவாயிராமல், [19]பராபரனுடை
ய குமாரன் மகிமைப்படும்படிக்கு, பராபரனு
டைய மகிமை விளங்குதற்கு ஏதுவாயிருக்கும்
என்றார். — இயேசுவானவர் அந்த மார்த்தாளி ௫
டத்திலும், அவளுடைய சகோதரியினிடத்தி
லும், இலாசருவினிடத்திலும் அன்பாயிருந்
தார்.—அப்படியிருந்தும், அவன் வியாதியாயி ௬
ருக்கிறதை அவர் கேட்டபின்பு, [20]அவர் தாம்
இருந்த இடத்திலே பின்னும் இரண்டுநாள் தங்
கினார்.—அதின்பின்பு அவர் (தம்முடைய) சீஷ ௭
ரைநோக்கி, நாம் மறுபடியும் யூதேயா நாட்டிற்
குப் போவோம், வாருங்கள் என்றார்.-அதற்குச் ௮
சீஷர் சொன்னது: இரபீ, சிலநாளுக்குமுன்னே,
[21]யூதர்கள் உமதுமேல் கல்லெறிய மனதுள்ளவர்
களாய் இருந்தார்களே, நீர் மறுபடியும் அவ்வி
டத்திற்குப் போகலாமா என்றார்கள்.—இயேசு ௯
வானவர் சொன்னது: பகலுக்குப் பன்னிரண்டு
மணி நேரம் இல்லையா? [22]பகற்காலத்திலே
நடக்கிறவன் இவ்வுலகத்தின் ஒளியைக் காண்
கிறபடியினாலே இடறமாட்டான்.—[23]இராத்தி ௰
ரிகாலத்திலே நடக்கிறவன் தனக்கு ஒளியில்லா
தபடியினாலே இடறுவான் என்று சொல்லி,—
[24]பின்பு நமக்குச் சிநேகிதனாகிய இலாசரு நித் ௰௧
திரை அடைந்தான்; நான் அவனை எழுப்பப்
போகிறேன் என்றார். — அப்பொழுது அவரு ௰௨
டைய சீஷர் சொன்னது: ஆண்டவரே, அவன்
நித்திரை அடைந்திருந்தால் சுகம் அடைவான்
என்றார்கள்.—இயேசுவானவர் அவனுடைய மர ௰௩
ணத்தைக்குறித்து அப்படிச் சொல்லியிருந்தார்;
அவர்கள் அவர் நித்திரைபண்ணுதலைக்குறித்தே
பேசினார் என்று நினைத்தார்கள்.—அப்பொழுது ௰௪
இயேசுவானவர் அவர்களை நோக்கி, இலாசரு
மரித்தான் என்று தெளிவாய்ச் சொல்லி,-பின்பு ௰௫
நீங்கள் விசுவாசிக்கும்படிக்கு, நான் அங்கே
இராததினாலே, உங்கள் நிமித்தம் சந்தோஷப்படு
கிறேன்; இப்பொழுது அவனிடத்திற்குப் போ
வோம் வாருங்கள் என்றார். — அப்பொழுது ௰௬
திதிமு என்னப்பட்ட தோமாஸ் மற்றச் சீஷரை
நோக்கி, அவரோடேகூட மரிக்கும்படிக்கு நா
மும் போவோம் வாருங்கள் என்றான்.

1 யோவா. ௰௭. ௰௧, ௨௨.
2 யோவா. ௮. ௫௯.
3 யோவா. ௫ ௰௮.—4 சங். ௮௨. ௬.
5 உரோ. ௰௩ ௧.—6 யோவா. ௬. ௨௭.—7 யோவா ௩. ௰௭ : ௫. ௩௬, ௩௭ : ௮. ௪௨.—8 யோவா. ௫. ௰௭, ௰௮. ௩௦. ௨௫.—9 லூக். ௧. ௩௫. யோவா. ௯. ௩௫, ௩௭.—10 யோவா. ௰௫. ௨௪.—11 யோவா. ௫. ௩௬ : ௰௪. ௰, ௰௧.—12 யோவா. ௰௪. ௰, ௰௧ : ௰௭. ௨௧.—13 யோவா. ௭. ௩௦, ௪௪ : ௮. ௫௯.—14 யோவா. ௧. ௨௮.
15 யோவா. ௩. ௩௰.—16 யோவா. ௮. ௩௦ : ௰௧. ௪௫.—17 லூக். ௰. ௩௮, ௩௯.
18 மத். ௨௬. ௭. மாற். ௰௪. ௩. யோவா. ௰௨. ௩.—19 யோவா. ௯. ௩. ௪௰, ௪௪.
20 யோவா. ௰ ௪௰.—21 யோவா. ௰. ௩௧.—22 யோவா. ௯. ௪.
23 யோவா. ௰௨. ௩௫.—24 இ மே ௧௧. ௬. தானி. ௰௨. ௨. மத். ௯. ௨௪. அப். ௭. ௩௰. ௧ கொரி. ௰௫. ௰௮, ௫௧.

௰௭ ஆதலால் இயேசுவானவர் போனபொழுது,
அவன் கல்லறையில் வைக்கப்பட்டு நாலுநாள்
௰௮ ஆயிற்றென்று அறிந்தார். — பெத்தானியா ஊர்
எருசலேம் நகரத்திற்குச் சமீபமாய் ஏறக்குறைய
பதினைந்து ஸ்தாதி வழி* தூரத்தில் இருந்தது.—
௰௯ அன்றியும் யூதரில் அநேகர் மார்த்தாள் மரியாள்
என்பவர்களுடைய சகோதரனைக்குறித்து அவர்
களுக்கு ஆறுதல் சொல்லும்படிக்கு, அவர்களி
௨௰ டத்தில் போயிருந்தார்கள்.—இயேசுவானவர் வரு
கிறார் என்று மார்த்தாள் கேட்டபொழுது, அவ
ருக்கு எதிர்கொண்டு போனாள்; மரியாள் வீட்
௨௧ டிலே உட்கார்ந்திருந்தாள்.—பின்பு மார்த்தாள்
இயேசுவினிடத்தில் (சேர்ந்து) ஆண்டவரே,
நீர் இங்கே இருந்தீரானால் என் சகோதரன் மரிக்
௨௨ கமாட்டான்.—இப்பொழுது [1]நீர் பராபரனிடத்
தில் கேட்டுக்கொள்வது எதுவோ, அதைப் பரா
பரன் உமக்குக் கொடுப்பார் என்று அறிந்திருக்
௨௩ கிறேன் என்றாள். — அதற்கு இயேசுவானவர்,
உன் சகோதரன் உயிரோடு எழுந்திருப்பான்
௨௪ என்றார்.—மார்த்தாள் சொன்னது: [2]கடைசி நா
ளிலே (மரித்தோர்) உயிரோடு எழுந்திருக்கும்
பொழுது அவனும் எழுந்திருப்பான் என்று அ
௨௫ றிந்திருக்கிறேன் என்றாள்.—அதற்கு இயேசுவா
னவர் சொன்னது: [3]நானே உயிரோடு எழுப்பு
கிறவனுமாய், [4]சீவனுமாய் இருக்கிறேன், [5]என்
னிடத்தில் விசுவாசமாய் இருக்கிறவன் மரித்தா
௨௬ லும் பிழைப்பான். — அல்லாமலும் உயிரோடி
ருக்கையில் என்னிடத்தில் விசுவாசமாய் இருக்
கிறவன் எவனோ, அவன் ஒருக்காலும் மரியா
மல் இருப்பான்; இதை விசுவாசிக்கிறாயா என்
௨௭ றார்.—அவள் சொன்னது: [6]ஆம் ஆண்டவரே, நீர்
கிறிஸ்து, நீர் பராபரனுடைய குமாரன், நீர் உல
கத்தில் வரவேண்டுபவர் என்று நான் விசுவா
சிக்கிறேன் என்றாள்.

௨௮ இப்படிச் சொன்னபின்பு, அவள் போய்த் தன்
சகோதரி மரியாளை இரகசியமாய் அழைத்து, போ
தகர் வந்திருக்கிறார், உன்னை அழைக்கிறார் என்
௨௯ றாள்.—அதை அவள் கேட்டவுடனே சீக்கிர
௩௰ மாய் எழுந்து அவரிடத்தில் போனாள்.—அக்கா
லத்திலே இயேசுவானவர் கிராமத்திற்குள் செல்
லாமல், மார்த்தாள் தம்மைச் சந்தித்த இடத்திலே
௩௧ இருந்தார். — [7]அப்பொழுது வீட்டிலே அவளு
டனேகூட இருந்து அவளுக்கு ஆறுதல் செய்
கிற யூதர்கள், மரியாள் சீக்கிரமாய் எழுந்து புறப்
பட்டுப் போகிறதைக் கண்டு, அவள் கல்லறை
யினிடத்திலே அழுதுகொள்ளும்படி போகிறாள்
என்று பேசிக்கொண்டு அவளுக்குப் பின்சென்
௩௨ றார்கள்.—இயேசுவானவர் இருந்த இடத்திலே
மரியாள் சேர்ந்து அவரைக் கண்டவுடனே, அ
வருடைய பாதத்தின் அருகே விழுந்து, ஆண்ட
வரே, [8]நீர் இங்கே இருந்தீரானால் என் சகோ
தரன் மரிக்கமாட்டானே என்றாள்.—அவளும் ௩௩
அவளுடனேகூடப் போன யூதரும் அழுகிறதை
இயேசுவானவர் கண்டபொழுது, உள்ளத்திலி
ருந்து பெருமூச்சுவிட்டுக் கலங்கி, †—அவனை ௩௪
எங்கே வைத்தீர்கள் என்றார்; ஆண்டவரே, நீர்
வந்து பாரும் என்றார்கள்.—[9]இயேசுவானவர் ௩௫
கண்ணீர்விட்டார்.—யூதர்கள் அதைப் பார்த்து, ௩௬
இதோ, அவர் அவனிடத்தில் மிகவும் பட்சமாய்
இருந்தாரே என்றார்கள். — அவர்களில் சிலர் ௩௭
சொன்னது: [10]குருடனுடைய கண்களைத் திறந்த
இவர், அவனை மரியாமலிருக்கப்பண்ணவும்
கூடாதா என்றார்கள்.—அப்பொழுது இயேசுவா ௩௮
னவர் மறுபடியும் தமக்குள்ளே பெருமூச்சுவிட்
டுப் பின்பு கல்லறையினிடத்தில் சேர்ந்தார், அது
ஒரு குகையாய் இருந்தது, அதின்மேலே ஒரு கல்
வைக்கப்பட்டிருந்தது.—அப்பொழுது இயேசு ௩௯
வானவர் கல்லை எடுத்துப்போடுங்கள் என்றார்;
மரித்தவனுடைய சகோதரியாகிய மார்த்தாள் அ
வரை நோக்கி, ஆண்டவரே, இவன் புதைக்கப்
பட்டு நான்குநாளானபடியினாலே நாறுமே என்
றாள். — அவளை இயேசுவானவர் நோக்கி, [11]நீ ௪௰
விசுவாசித்தால் பராபரனுடைய மகிமையைக்
காண்பாய் என்று நான் உனக்குச் சொல்லவில்
லையா என்றார்.—பின்பு சவம் வைக்கப்பட்ட கு ௪௧
கையில் இருந்த கல்லை எடுத்துப்போட்டார்கள்;
அப்பொழுது இயேசுவானவர் கண்களை உயர்த்
திப் பிதாவே, நீர் எனக்குச் செவிகொடுத்தபடி
யினாலே உம்மைத் தோத்திரம்செய்கிறேன். —
நீர் எப்பொழுதும் எனக்குச் செவிகொடுக்கிற ௪௨
தை அறிந்திருக்கிறேன்; [12]சூழநிற்கிற சனங்கள்
நீர் என்னை அனுப்பினதை விசுவாசிக்கும்படிக்
கு, அவர்களின் நிமித்தமே இப்படிச் சொன்
னேன் என்று சொல்லி,—பின்பு இலாசருவே, ௪௩
வெளியே வா என்று மிகுந்த சத்தத்தோடே கூப்
பிட்டார்.—[13]அப்பொழுது மரித்தவன் கால்க ௪௪
ளும் கைகளும் கட்டியிருந்த சேலைகளோடும் மு
கம் சுற்றப்பட்டிருந்த சேலையோடும் வெளியே
வந்தான்; பின்பு இயேசுவானவர் சொன்னது:
இவனுடைய கட்டவிழ்த்து இவனை விட்டுவி
டுங்கள் என்றார்.

அப்பொழுது மரியாளிடத்திற்குப் போய், ௪௫
[14]இயேசுவானவர் செய்தவைகளைக் கண்ட யூத
ரில் அநேகர் அவரிடத்தில் விசுவாசமானார்கள்.—
வேறுசிலர் பரிசேயரிடத்திற்குப் போய், இயே ௪௬
சுவானவர் செய்தவைகளை அவர்களுக்கு அறி
வித்தார்கள்.

[15]அப்பொழுது பிரதான ஆசாரியரும் பரிசே ௪௭
யரும், பெரிய ஆலோசனைச் சங்கத்தார் வந்து

1 யோவா. ௯. ௩௧.—2 லூக். ௰௪. ௰௪. யோவா. ௬. ௨௯.—3 யோவா. ௬. ௨௧: ௧. ௩௯, ௪௰, ௪௪. 4 யோவா. ௧. ௪: ௯. ௩௬: ௰௪. ௯. கொலோ. ௩. ௪. ௧ யோ. ௧. ௧, ௨: ௫. ௰௧.—5 யோவா. ௩. ௩௬. ௧ யோ ௫ ௰ ௩.—6 மத். ௰௬. ௰௬. யோவா. ௪. ௪௨: ௬. ௰௪, ௬௯.

7 ௰௯. ௨௪.—8 ௨௧. ௨௪. 9 லூக். ௰௯. ௪௧.—10 யோவா. ௯. ௬. 11 ௪, ௨௩. ௨௪.—12 யோவா. ௰௨. ௩௰.—13 யோவா. ௨௰. ௭. 14 யோவா. ௨. ௨௩: ௰. ௪௨: ௰௨. ௰, ௰௮.—15 சங். ௨. ௨. மத். ௨௬. ௩. மாற். ௰௪. ௧. லூக். ௨௨. ௨.

* அல்லது ஒன்றரைநாழிகை.—† அல்லது தம்மைக்கலக்கி.

கூடும்படி செய்து பின்பு சொன்னதாவது: [1]அந்த
மனிதன் அநேக அற்புதங்களைச் செய்துவருகி
௪௮ ருன்.-நாம் அவனுக்கு இடங்கொடுத்தால்,எல்லா
ரும் அவனிடத்தில் விசுவாசமாவார்கள்; பின்பு
உரோமர் வந்து, நம்முடைய ஸ்தலத்தையும் சன
ங்களையும் எடுத்துக்கொள்ளுவார்கள். ஆதலால்,
௪௯ நாம் என்ன செய்வோம் என்றூர்கள்.—அப்பொ
ழுது அவர்களில்ஒருவனுமாய் அவ்வருஷத்துப்
பிரதான ஆசாரியனுமாய் இருந்த [2]காயிபா என்
பவன் அவர்களை நோக்கி, நீங்கள் ஒன்றும் தெரி
௫௰ யாதவர்கள்.—[3]சனங்கள் எல்லாரும் கெட்டுப்
போகாதபடிக்கு, ஒரே மனிதன் சனங்களுக்காக
மரணம் அடைவதே நமக்கு நலமாயிருக்கும்
என்று நீங்கள் சிந்தியாமலும் இருக்கிறீர்கள் என்
௫௧ றுன்.—இப்படி அவன் தானய்ச் சொல்லாமல்
அவன் அந்த வருஷத்தில் பிரதான ஆசாரியனு
யிருக்க, இயேசுவானவர் யூதசனங்களுக்காக
மரணமடைவதைத் தீர்க்கதரிசனமாய்ச் சொன்
௫௨ னன்.—[4]மேலும் அந்தச் சனங்களுக்காகமாத்திரம்
அல்ல [5]அங்கங்கே சிதறிப்போயிருக்கிற பராபர
னுடைய பிள்ளைகளை ஒன்றுகக் கூட்டிக்கொள்
ளுகிறதற்காகவும் அவர் மரணம் அடைவதையே
குறித்தான்.

௫௩ ஆதலால் அந்நாள்முதல் அவர்கள் அவனைக்
கொலைசெய்யும்படிக்கு ஆலோசனைபண்ணிக்
௫௪ கொண்டு வந்தார்கள்.—அதினாலே [6]இயேசுவான
வர் பின்னும் வெளியரங்கமாய் யூதருக்குள்ளே
திரியாமல் அவ்விடத்தைவிட்டு, வனாந்தரத்திற்
குச் சமீபமான இடமாகிய [7]எபிராயிம் ஊருக்
குப் போய், அங்கே தம்முடைய சீஷருடனே
கூடச் சஞ்சரித்தார்.

௫௫ [8]அக்காலத்திலே யூதருடைய பஸ்காப்பண்டி
கை சமீபமாயிருந்தது; அதற்குமுன்னே அந்நாட்
டிலிருந்து அநேகர் தங்களைச் சுத்திகரிக்கும்பொ
ருட்டாக எருசலேமுக்குப் போனூர்கள்.—
௫௬ [9]அங்கே அவர்கள் இயேசுவைத் தேடிக்கொண்டு
தேவாலயத்திலே நிற்கையில் ஒருவரை ஒருவர்
நோக்கி, உங்களுக்கு எப்படித் தோன்றுகின்
றது? அவர் பண்டிகைக்கு வராமல் இருப்பாரா
௫௭ என்று பேசிக்கொண்டார்கள்.—பிரதான ஆசா
ரியரும் பரிசேயரும் அவரைப் பிடிக்கும்படிக்கு
யோசித்து, அவர் இருக்கிற இடத்தை ஒருவன்
அறிந்தால் அதை அறிவிக்கவேண்டும் என்று
கட்டளை கொடுத்திருந்தார்கள்.

## ௰௨. அதிகாரம்.

*௧. மரியாள் இயேசுவின் பாதங்களைப் பரிமளதயிலத்தால் பூசினது. ௯. அநேக சனங்கள் இலாசருவைக் காண வந்தது. ௰. பிரதான ஆசாரியர் கிறிஸ்துவைக் கொலைசெய்ய விரும்பினது ௰௨. அவர் எருசலேமுக்குச் சவாரியின்மேல் போனது ௨௰. கிரேக்கர் அவரைக் காண விரும்பினது. ௨௩. அவர் தம்முடைய மரணத்தை முன் அறிவித்தது. ௩௭. யூதர்கள் அவிசுவாசிகளாயிருந்தாலும், ௪௨ யூதப் பிரபுக்களில் அநேகர் இரகசியமாய் விசுவாசித்தபடியினாலே, ௪௪. அவர்கள் தங்கள் விசுவாசத்தை வெளிப்படுத்தும்படி இயேசு புத்திசொன்னது.*

பின்பு பஸ்காப்பண்டிகை வருகிறதற்கு ஆறு ௧
நாளுக்குமுன்னே, இயேசுவானவர் தம்மாலே
மரணத்திலிருந்து எழுப்பப்பட்ட [10]இலாசரு
இருக்கிற பெத்தானியா ஊருக்குப் போனூர்.—
அங்கே [11]அவருக்கு இராவிருந்து பண்ணினூர் ௨
கள்; மார்த்தாள் பணிவிடைசெய்தாள்; இலாசரு
தானும் அவருடனேகூடப் பந்தியிருந்தவர்க
ளில் ஒருவனாய் இருந்தான்.

அப்பொழுது மரியாள் [12]விலையேறப்பெற்ற ௩
களங்கமில்லாத நருதென்னும் தயிலத்தில் ஒரு
ராத்தலை எடுத்து அதை இயேசுவினுடைய கால
களில் பூசி, தன் மயிரால் அவைகளைத் துடைத்
தாள்; அந்தத் தயிலத்தின் பரிமளத்தினாலே வீடு
நிரப்பப்பட்டது.—அப்பொழுது சீஷரில் ஒரு ௪
வனுமாய் அவரைக் காட்டிக்கொடுத்தவனுமாய்
சீமோனுடைய குமாரனுமாய் இருந்த யூதாஸ்
காரியோத்து என்பவன் சொன்னது:-இந்தத் தயி ௫
லம் முந்நூறு தேனாரியு விலைக்கு விற்றுத் தரித்தி
ரருக்குக் கொடுக்கலாமே, என்னத்தினாலே அப
படிச் செய்யவில்லை என்றான்.—அவன் தரித்தி ௬
ரரைக்குறித்துக் கவலைப்படுகிறவனாக அப்படிச்
சொல்லாமல், அவன் திருடனாய்ப் [13]பணப்பை
யை வைத்துக்கொண்டு, (அதிலே) போடப்பட்
டவைகளைச் சுமக்கிறவனானபடியினாலே இப்ப
டிச் சொன்னான்.—அப்பொழுது இயேசுவான ௭
வர் சொன்னது: இவளை விட்டுவிடு, என்னை அ
டக்கம்பண்ணும் நாளுக்காக இவள் இதைக் காத்
துக்கொண்டிருந்தாள்.—[14]தரித்திரர் எப்பொழு ௮
தும் உங்களிடத்தில் இருக்கிறூர்கள், நான் எப்
பொழுதும் உங்களிடத்திலே இரேனே என்றூர்.

பின்பு யூதரில் அநேக சனங்கள் அவர் அங்கே ௯
இருக்கிறதை அறிந்து, இயேசுவின் பொருட்
டாகமாத்திரம் அல்ல, [15]அவரால் மரித்தோரிலி
ருந்து எழுப்பப்பட்ட இலாசருவைக் காணும்
பொருட்டாகவும் அவ்விடத்திலே போனூர்
கள்.—[16]இலாசருவினாலே யூதர்களில் அநேகம் ௰
பேர் இயேசுவானவரிடத்தில் போய், அவர்மேல்
விசுவாசம் வைத்தபடியினாலே,—[17]பிரதான ஆ ௰௧
சாரியர் இலாசருவையும் கொலைசெய்யும்படி
தீர்மானம்பண்ணினூர்கள்.

[18]மறுநாளிலே இயேசுவானவர் எருசலே ௰௨
முக்கு வருகிறூர் என்று பண்டிகைக்குப் போன
சனங்கள் அநேகர் கேள்விப்பட்டு,—குருத்தோ ௰௩
லைகளைப் பிடித்து, அவருக்கு எதிர்கொண்டு
போகும்படி புறப்பட்டு, [19]ஓசன்னா, பராபரனு
டைய நாமத்தினாலே வருகிற இஸ்ரவேலரின்
இராசா வாழ்த்தப்படக்கடவர் என்று சத்தமிட்
டார்கள்.—[20]அல்லாமலும், குமாரத்தியாகிய ௰௪

1 யோவா. ௰௨.௰௯. அப் ௪.௰௬. 6 யோவா. ௪.௧,௩: ௭.௧.-7 ௨ நாளா. ௰௩.௰௯.—8 யோவா. ௨. ௰௩: இ.
2 லூக். ௩.௨, யோவா. ௰௮. ௰௪. அப். ௪.௬.—3 யோவா. ௰௮.௰௪. ௯: ௬. ௪.—9 அ. ௰௪.
4 ஏசா ௪௯. ௬. ௧ யோ. ௨. ௨. 10 யோவா. ௰௧.௪௩.—11 மத் ௨௬. ௬. மாற். ௰௪. ௩.
5 யோவா ௰.௰௬. எபே. ௨.௰௪-௰௭.

12 லூக். ௭.௩௭,௩௮. யோவா. ௰௧.௨. 17 லூக். ௰௬. ௩௧.—18 மத். ௨௧ ௮ மாற். ௰௧.௮. லூக். ௰௯.௩௫,௩௬.
13 யோவா. ௰௩. ௨௯.
14 மத். ௨௬. ௰௧. மாற். ௰௪. ௭. 19 சங். ௱௰௮. ௨௫, ௨௬.
15 யோவா. ௰௧. ௪௩, ௪௪. 20 சகரி. ௯. ௯.
16 யோவா. ௰௧. ௪௫. ௰௮. ௰௪.

சீயோனே, நீ பயப்படாதிரு; இதோ, உன் இரா
சா ஒரு கழுதைக்குட்டியின்மேல் ஏறி வருகி
௰௪ ருர் என்று எழுதியிருக்கிறபடியே,—[1]இயேசு
வானவர் ஒரு கழுதையின் குட்டியைக் கண்டு
௰௫ அதின்மேல் ஏறிப்போனார்.—[2]அவரைக்குறித்து
அப்படி எழுதியிருக்கிறதை அவருடைய சீஷர்
அக்காலத்திலே அறியவில்லை; [3]இயேசுவானவர்
மகிமையை அடைந்தபின் [4]அவர்கள் அதையும்
தாங்கள் அப்படி அவருக்குச் செய்ததையும்
நினைத்துக்கொண்டார்கள்

௰௭ அன்றியும் அவருடனே இருந்த சனங்கள்
அவர் இலாசருவைக் கல்லறையிலிருந்து வெளி
யே வரவழைத்து அவனை உயிரோடு எழுப்பின
௰௮ தைக்குறித்துச் சாட்சிகொடுத்தார்கள்.—[5]அப்ப
டிப்பட்ட அற்புதத்தை அவர் செய்தார் என்று
சனங்கள் கேள்விப்பட்டதினாலே, அவர்கள் அ
௰௯ வருக்கு எதிர்கொண்டு போனார்கள்.—ஆதலால்
பரிசேயர் ஒருவரை ஒருவர் நோக்கி, [6]நாம் செய்
கிறதினாலே ஒரு பிரயோசனமும் இல்லையென்
று அறிவோமாக; உலகமே அவனுக்குப் பின்
செல்லுகின்றதே என்று சொல்லிக்கொண்டார்
கள்.

௨௰ [7]அன்றியும் (பராபரனைத்) தொழுதுகொள்
ளும்படி பண்டிகைக்குப் போனவர்களுக்குள்
௨௧ ளே [8]சில கிரேக்கர் இருந்தார்கள்.—[9]அவர்கள்
கலிலேயாநாட்டின் பெத்சாயிதா ஊராகிய
பிலிப்பினிடத்தில் போய், ஐயா, நாங்கள் இயே
சுவானவரைக் காண விரும்புகிறோம் என்று
௨௨ அவரை வேண்டிக்கொண்டார்கள். — பிலிப்பு
என்பவன் அதை அந்திரேயாவுக்குச் சொன்
னான்; பின்பு அந்திரேயாவும் பிலிப்பும் அதை
௨௩ இயேசுவுக்குச் சொன்னார்கள் —அப்பொழுது
இயேசுவானவர் அவர்களுடனே சொன்னது:
[10]மனிதனுடைய குமாரன் மகிமைப்படும்படிக்
௨௪ குக் காலம் வந்தது.—மெய்யாகவே நான் உங்க
ளுக்குச் சொல்லுகிறதாவது: [11]கோதுமைமணி
நிலத்திற்குள் விழுந்து செத்துப்போகாவிட்டால்
தனித்திருக்கும்; அது செத்ததானால் மிகுந்த பல
௨௫ னைக் கொடுக்கும்.—[12]தன் சீவனைச் சிநேகிக்கி
றவன் அதை இழப்பான்; இவ்வுலகத்திலே தன்
சீவனைப் பகைக்கிறவன் அதை நித்தியசீவன்
௨௬ வரைக்கும் காத்துக்கொள்ளுவான். — ஒருவன்
எனக்கு ஊழியஞ்செய்ய விரும்பினால் எனக்
குப் பின்செல்லக்கடவன்; அப்பொழுது [13]நான்
இருக்கும் இடம் எங்கேயோ, அங்கே என்
ஊழியக்காரனும் இருப்பான்; அல்லாமலும்
எனக்கு ஊழியஞ்செய்கிறவனைப் பிதா கனம்
பண்ணுவார்.

[14]இப்பொழுது என் ஆத்துமா கலங்குகின்ற ௨௭
து; நான் என்ன சொல்லுவேன்? பிதாவே, இந்த
நேரத்திலிருந்து என்னை இரட்சிக்கவேண்டும்
என்று (சொல்வேனோ)? [15]இந்த நேரத்தின்பொ
ருட்டாகவே வந்தேன் என்று சொல்லி,–பின்பு, ௨௮
பிதாவே, உமது நாமத்தின் மகிமையைக் காண்
பியும் என்றார்; [16]அப்பொழுது அதின் மகிமை
யைக் காண்பித்தேன், இன்னும் அதைக் காண்
பிப்பேன் என்று வானத்திலிருந்து சத்தம் உண்
டாயிற்று.—அங்கே நின்ற சனங்கள் அதைக் ௨௯
கேட்டு, இடிமுழக்கம் உண்டாயிற்று என்றார்
கள்; வேறுசிலர் சொன்னது: தேவதூதன் ஒரு
வன் அவருடனே பேசினான் என்றார்கள்.—அப் ௩௰
பொழுது இயேசுவானவர் சொன்னது: [17]இந்தச்
சத்தம் என்நிமித்தம் உண்டாகாமல், உங்கள்
நிமித்தமே உண்டாயிற்று.—இப்பொழுது இவ் ௩௧
வுலகத்திற்கு நியாயத்தீர்ப்புக் கொடுக்கப்படுகின்
றது; இப்பொழுது [18]இவ்வுலகத்தின் பிரபு புறம்
பாகத் தள்ளப்படுவான்.—அல்லாமலும் [19]நான் ௩௨
பூமியிலிருந்து ஏற்றப்பட்டிருக்கும்பொழுது,
[20]எல்லாரையும் என்னிடத்தில் இழுத்துக்கொள்
வேன் என்று, — [21]தாம் மரணமடையும் விதத் ௩௩
தைக் குறித்தார்.

அப்பொழுது சனங்கள் அவரை நோக்கி, [22]கி ௩௪
றிஸ்துவானவர் என்றென்றைக்கும் இருக்கிறார்
என்று நாங்கள் வேதத்தால் கேள்விப்பட்டிருக்
கிறோமே, அப்படியிருக்க, மனிதனுடைய குமா
ரன், ஏற்றப்படவேண்டும் என்று நீர் எப்படிச்
சொல்லுகிறீர்? இந்த மனிதகுமாரன் எவன் என்
றார்கள்.—அதற்கு இயேசுவானவர் சொன்னது: ௩௫
[23]சிலகாலம்மாத்திரம் ஒளியானது உங்களுட
னே இருக்கும்; [24]இருள் உங்களைப் பிடியாதப
டிக்கு நீங்கள் ஒளியை உடையவர்களாயிருக்கை
யில், (அதிலே) நடவுங்கள்; [25]இருளிலே நடக்
கிறவன் தான் நடந்துபோகிற இடம் இன்னது
என்று அறியான்.—[26]நீங்கள் ஒளியை உடைய ௩௬
வர்களாயிருக்க ஒளியின் பிள்ளைகள் ஆகும்ப
டிக்கு, ஒளியானதிலே விசுவாசமாய் இருப்பீர்
களாக என்று இயேசுவானவர் சொல்லிப் புறப்
பட்டு, [27]அவர்களுக்கு விலகி மறைந்தார்.

அவர் இவ்வளவு அற்புதங்களை அவர்களுக்கு ௩௭
முன்பாகச் செய்திருந்தும், அவர்கள் அவர்மேல்
விசுவாசமாய் இருக்கவில்லை.–அதினாலே, [28]கர்த் ௩௮
தாவே, எங்கள் பிரசங்கத்தை விசுவாசித்தவன்
யாவன்? பராபரனுடைய புயம் யாவனுக்கு வெ
ளிப்பட்டது என்று எசாயா தீர்க்கதரிசி சொன்
ன வசனம் நிறைவேறிற்று.–[29]எசாயா என்பவன் ௩௯
அவருடைய மகிமையைக் கண்டு, அவரைக்கு

1 மத். ௨௧. ௭. —2 லூக். ௰௮. ௩௪. மாற். அ. ௩௰ லூக். ௯. ௨௪ : ௰௭. ௧௧
3 யோவா. ௭. ௩௯. – 4 யோவா. 13 யோவா ௰௪. ௩ : ௰௭ ௨௪. ௧ தெச
௰௪. ௨௬. —5 ௰. ௮௪ –6 யோவா. ௪. ௰௭. — 14 மத். ௨௬. ௩௮, ௩௯.
௰௧. ௪௭, ௪௮. —7 ௧ இரா. ௮ ௪௧, லூக். ௰௨. ௫௰ யோவா. ௰௩. ௨௧
௪௨. அப். ௮ ௨௭. –8 அப். ௰௭. ௪. 15 லூக். ௨௨. ௫௩. யோவா. ௰௮. ௩௭
9 யோவா ௧. ௪௪. - 10 யோவா ௰௩. 16 மத். ௩. ௰௭ — 17 யோவா. ௰௧. ௪௨.
௩௨ : ௰௭. ௧. – 11 ௧ கொரி ௰௫. 18 மத். ௰௨. ௨௯. லூக் ௰. ௰௮.
௩௬. —12 மத் ௰ ௩௯ : ௰௬. ௨௫ யோவா. ௰௪. ௩௰ : ௰௬. ௰௧. அப்.
௨௬ ௰௮ ௨ கொரி. ௪. ௪. எபே. ௰௨ : ௩. ௫. ௪௬ வச. — 24 எரே.
௨. ௨ : ௧. ௰௨. – 19 யோவா. ௩. ௰௩. ௰௪. எபே. ௫. ௮.
௰௪ : ௮ ௨௮. –20 ௭. ரோ ௫. ௰௮. 25 யோவா. ௰௧. ௰. ௧ யோ. ௨. ௰௧.
எபி. ௨. ௯ —21 யோவா ௰௮. 26 லூக். ௰௬. ௮. எபே ௫ ௮. ௧ தெச.
௩௨. –22 சங். ௮௯. ௩௬, ௩௭ ௰௰. ௪ ௫. ௫. ௧ யோ. ௨. ௯, ௰. ௰௧.
ஏசா. ௯ ௭ : ௫௩. ௮. எசே. ௩௭. 27 யோவா. ௮. ௫௯ : ௰௧. ௫௪.
௨௫. தானி. ௨. ௪௪ : ௭. ௰௪, ௨௭. 28 ஏசா. ௫௩ ௧. ௨ ரோ. ௰. ௰௬.
மீகா ௪. ௭. –23 யோவா. ௧. ௯ : ௮. 29 ஏசா. ௬. ௧.

௪௰ றித்துப் பேசிக்கொண்டிருக்கிறபொழுது,—அ
வன் பின்னும் சொன்னது: [1]அவர்கள் தங்கள்
கண்களினாலே காணாமலும், தங்கள் இருதயத்தி
னால் உணராமலும், மனம் திரும்பாமலும், என்
னாலே ஆரோக்கியம் அடையாமலும் இருக்கும்ப
டிக்கு, அவர்களுடைய கண்களை அவர் குருடா
க்கி, அவர்கள் இருதயத்தைக் கடினமாக்கினார்
௪௧ என்பதே.—அதினாலே அவர்கள் விசுவாசிக்கக்
௪௨ கூடாதிருந்தார்கள்.—[2]ஆகிலும் தலைவரில் அநே
கரும் அவர்மேல் விசுவாசமாய் இருந்தார்கள்.
௪௩ [3]அப்படி இருந்தும், அவர்கள் பராபரனால்
வருகிற கனத்திலும்,மனிதரால் வருகிற கனத்தை
அதிகமாய் விரும்பினபடியினாலே, பரிசேயரா
லே செபஆலயத்திற்குப் புறம்பாக்கப்படாதப
டிக்கு,(அதை) அறிக்கையிடாமல் இருந்தார்கள்.
௪௪ அப்பொழுது இயேசுவானவர் [4]சத்தத்தோ
டே சொன்னதாவது: என்மேல் விசுவாசமாயி
ருக்கிறவன் என்மேல்மாத்திரம் அல்ல, என்னை
அனுப்பினவர்மேலும் விசுவாசமாயிருக்கிறான்.-
௪௫ [5]அல்லாமலும் என்னைக் காண்கிறவன் என்னை
௪௬ அனுப்பினவரைக் காண்கிறான். — [6]என்மேல்
விசுவாசமாயிருக்கிற யாவரும் இருளில் இராத
படிக்கு, நான் உலகத்தில் ஒளியாக வந்தேன்.—
௪௭ அன்றியும் நான் உலகத்தாரை ஆக்கினைக்கு உட்
படுத்தும்பொருட்டு அல்ல, [7]அவர்களை இரட்
சிக்கும்பொருட்டே வந்தேன். ஆகையால் ஒரு
வன் என் வசனங்களைக் கேட்டும் விசுவாசித்துக்
கொள்ளாமல்போனால், [8]அவனை நான் ஆக்கி
௪௮ னைக்கு உட்படுத்தமாட்டேன்.—[9]என்னைத் தள்
ளி என் வசனங்களை ஏற்றுக்கொள்ளாதவனை ஆக்
கினைக்குள்ளாகத் தீர்க்கிறது ஒன்றிருக்கின்றது;
[10]நான் பண்ணின உபதேசமே கடைசி நாளி
லே அவனை ஆக்கினைக்குள்ளாகத் தீர்க்கும்.—
௪௯ என்னத்தினாலென்றால், [11]நானாக ஒன்றும் பேச
வில்லை; என்னை அனுப்பின பிதாவே [12]நான் பே
சவும் உபதேசிக்கவும் வேண்டியவைகளை எனக்
௫௰ குக் கட்டளையிட்டார். — அவருடைய கட்ட
ளையே நித்தியசீவன் என்று அறிந்திருக்கிறேன்,
ஆகையால் நான் உபதேசிக்கிறவைகளைப் பிதா
எனக்குச் சொன்னபடியே உபதேசிக்கிறேன்
என்றார்.

## ௰௩. அதிகாரம்.

*௧. சீஷர்களுடைய கால்களைக் கழுவி, ௰௪. மனத்தாழ்மையும் சிநேகமும் உள்ளவர்களாயிருக்கும்படி இயேசு புத்திசொன்னது. ௰௮. யூதா தம்மைக் காட்டிக்கொடுப்பான் என்று முன் அறிவித்து, ஒரு குறிப்பினால் அதை யோவானுக்கு வெளிப்படுத்தினது. ௩௪ சீஷர்கள் ஒருவரை ஒருவர் சிநேகிக்கும்படி புத்திசொல்லி, ௩௬ பேதுரு தம்மை மறுதலிப்பதைக் குறித்து அவனுக்கு அறிவித்தது.*

௧ [13]பஸ்காப் பண்டிகைக்குமுன்னே இயேசுவா
னவர் இவ்வுலகத்தைவிட்டுப் பிதாவினிடத்திற்
குப் போகும்படிக்குத் [14]தம்முடைய காலம் வந்
தது என்று அறிந்து, இவ்வுலகத்திலுள்ள தம்மு
டையவர்களிடத்தில் வைத்த அன்பை முடிவு
பரியந்தமும் அவர்களிடத்தில் வைத்தார்.—ஆ ௨
கையால் அக்காலத்திலே [15]பசாசானவன் சீமோ
னுடைய குமாரனாகிய யூதாஸ்காரியோத்தின்
இருதயத்திலே அவரைக் காட்டிக்கொடுக்கும்ப
டிக்கான (யோசனையை) வைத்திருந்த பின்பு,—
அவர்கள் இராப்போசனம்பண்ணிக்கொண்டி ௩
ருக்கையில், இயேசுவானவர் [16]தமக்குச் சகலத்
தையும் பிதா ஒப்புக்கொடுத்ததையும், [17]தாம் பரா
பரனிடத்திலிருந்து வந்ததையும் பராபரனிடத்
திற்குப் போகிறதையும் அறிந்து,—[18]இராப்போச ௪
னத்தைவிட்டு எழுந்து, மேல்அங்கியைக் களைந்
து, ஒரு சேலையை எடுத்துத் தம்மைச் சுற்றிக் கட்
டிக்கொண்டு, — பின்பு ஒரு சட்டியிலே தண் ௫
ணீர்வார்த்துச் சீஷருடைய கால்களைக் கழுவ
வும், தாம் கட்டிக்கொண்டிருந்த சேலையினாலே
துடைக்கவும் தொடங்கினார்.—அவர் சீமோன் ௬
பேதுருவினிடத்தில் சேர்ந்தபொழுது, அவன்*
அவரை நோக்கி, ஆண்டவரே, [19]நீர் என் கால்க
ளைக் கழுவலாமா என்றான். — அதற்கு இயேசு ௭
வானவர் சொன்னது: நான் செய்கிறது இன்ன
தென்று நீ இப்பொழுது அறியவில்லை; [20]இனி
மேல் அதை அறிவாய் என்றார்.—பேதுரு பின் ௮
னும் அவரை நோக்கி, நீர் என் கால்களை ஒருக்
காலும் கழுவக்கூடாது என்றான்; அதற்கு இயே
சுவானவர் சொன்னது: [21]நான் உன்னைக் கழு
வாவிட்டால், என்னிடத்திலே உனக்குப் பங்
கில்லை என்றார்.—அப்பொழுது சீமோன்பேதுரு, ௯
ஆண்டவரே, (அப்படியானால்,) என் கால்களை
மாத்திரம் அல்ல, என் கைகளையும் தலையையும்
கூட நீர் கழுவவேண்டும் என்றான். — இயேசு ௰
வானவர் சொன்னது: ஸ்நானம்பண்ணினவனு
டைய கால்களைமாத்திரம் கழுவவேண்டும்; மற்ற
யாவும் அவனிடத்தில் சுத்தமாயிருக்கும்; [22]நீங்
கள் சுத்தமாயிருக்கிறீர்கள்; ஆனாலும் எல்லாரும்
அல்ல என்றார். — [23]அவர் தம்மைக் காட்டிக் ௰௧
கொடுக்கிறவனை அறிந்திருந்தபடியினாலே, நீங்
கள் சுத்தமாயிருக்கிறீர்கள், ஆனாலும் எல்லாரும்
அல்ல என்று சொன்னார்.
அவர்களுடைய கால்களைக் கழுவின பின்பு, ௰௨
அவர் தமது மேல்அங்கியைத் தரித்துக்கொண்டு,
திரும்ப உளுக்காந்து, அவர்களுடனே சொன்
னதாவது: நான் உங்களுக்குச் செய்ததை அறிந்
திருக்கிறீர்களா? — [24]நீங்கள் என்னைப் போதக ௰௩
ரென்றும், ஆண்டவரென்றும் அழைக்கிறீர்கள்;

1 ஏசா. ௬. ௯, ௰. மத். ௰௩. ௰௪. 2 யோவா. ௭. ௰௩: ௯. ௨௨. 3 யோவா. ௫. ௪௪. 4 மாற். ௯. ௩௭. ௧ பே ௧ ௨௧. 5 யோவா. ௰௪. ௯.—6 ௩௫, ௩௬. யோவா. ௩. ௰௯: ௮. ௰௨: ௯. ௫, ௩௯.—7 யோவா. ௩. ௰௭ 8 யோவா. ௫. ௪௫: ௮. ௰௫; ௨௧. 9 லூக். ௰. ௰௬.—10 உபா. ௰௮. ௰௯. மாற். ௰௬. ௰௬.—11 யோவா. ௮. ௩௮: ௰௪. ௰.—12 உபா. ௰௮. ௰௮.—13 மத். ௨௬. ௨. 14 யோவா. ௰௨. ௨௩: ௰௭. ௧, ௰௧. 15 லூக். ௨௨. ௩ ௨௭. ௩௰.

16 மத். ௰௧ ௨௭: ௨௮.௰௮. யோவா. ௩. ௩௫: ௰௭. ௨. அப். ௨. ௩௬. ௧ கொரி. ௰௫. ௨௭. எபி. ௨. ௮. 17 யோவா. ௮. ௪௨: ௰௬. ௨௮. 18 லூக் ௨௨. ௨௭. பிலி. ௨. ௭, ௮. 19 மத். ௩. ௰௪.—20 ௰௨. ௰௬. 21 யோவா. ௩. ௫. ௧ கொரி. ௬. ௰௧. எபே. ௫. ௨௬. தீத். ௩. ௫. எபி. ௰. ௨௨.—22 யோவா. ௰௫. ௩. 23 யோவா ௬. ௬௪.—24 மத். ௨௩. ௮, ௰. லூக். ௬. ௪௬. ௧ கொரி. ௮. ௬: ௰௨. ௩. பிலி. ௨. ௰௧.

* அல்லது பேதுரு.

நான் அவர்தான்; ஆகையால், நீங்கள் சரியாய்ச்
௰௪ சொல்லுகிறீர்கள்.—அப்படியிருக்க, [1]ஆண்டவ
ரும் போதகருமாகிய நானே உங்கள் கால்களைக்
கழுவினபடியால், [2]நீங்களும் ஒருவருடைய
௰௫ கால்களை ஒருவர் கழுவக்கடவீர்கள். — [3]நான்
உங்களுக்குச் செய்ததுபோல, நீங்களும் செய்
யும்படிக்கு உங்களுக்கு வகையைக் காண்பித்
௰௬ தேன். — [4]மெய்யாகவே நான் உங்களுக்குச்
சொல்லுகிறதாவது: ஊழியக்காரனானவன் தன்
எசமானிலும் அப்போஸ்தலனானவன் தன்னை
௰௭ அனுப்பினவரிலும் பெரியவன் அல்ல.—[5]நீங்கள்
இவைகளை அறிந்திருக்கிறபடியால், இவைகளைச்
செய்வீர்களானால் பாக்கியராய் இருப்பீர்கள்.—
௰௮ உங்கள் எல்லாரையுங்குறித்து நான் பேசவில்லை;
நான் தெரிந்துகொண்டவர்களை அறிந்திருக்கி
றேன்; வேதவாக்கியம் நிறைவேறும்படியாக
[6]என்னுடனே அப்பம் புசிக்கிறவன் எனக்கு
விரோதமாய்த் தன் குதிகாலைத் தூக்கினான்.—
௰௯ அது நடக்கும்பொழுது நானே அவரென்று நீங்
கள் விசுவாசிக்கும்படிக்கு, [7]அது நடப்பதற்கு
முன்னாகிய இப்பொழுது * அதை உங்களுக்குச்
௨௰ சொல்லுகிறேன். — என்னால் [8]அனுப்பப்படுகி
றவன் எவனோ, அவனை ஏற்றுக்கொள்ளுகிறவன்
என்னையும் ஏற்றுக்கொள்ளுகிறான்; என்னை ஏற்
றுக்கொள்ளுகிறவன் என்னை அனுப்பினவரை
யும் ஏற்றுக்கொள்ளுகிறான் என்று மெய்யாகவே
உங்களுக்குச் சொல்லுகிறேன் என்றார்.
௨௧ [9]இவைகளை வசனித்தபின்பு, [10]இயேசுவான
வர் தமது ஆவியிலே கலக்கம் அடைந்து, [11]உங்
களில் ஒருவன் என்னைக் காட்டிக்கொடுப்பான்
என்று மெய்யாகவே உங்களுக்குச் சொல்லுகி
௨௨ றேன் என்று சாட்சியிட்டார். — அப்பொழுது
சீஷர் யாரைக்குறித்துச் சொல்லுகிறாரோ என்று
ஐயப்பட்டு, ஒருவரை ஒருவர் பார்த்துக்கொண்
௨௩ டார்கள்.—அவ்வேளையிலே [12]அவருடைய சீஷ
ரில் ஒருவன் அவருடைய மடியிலே சாய்ந்திருந்
தான்; அவன்மேலே இயேசுவானவரும் அன்பா
௨௪ யிருந்தார்.—ஆனபடியினாலே அவர் இன்னாரைக்
குறித்துச் சொன்னார் என்று விசாரிக்கும்படிக்கு
சீமோன்பேதுரு அவனுக்குச் சமிக்கைகாட்
௨௫ டினான்.—அப்பொழுது அவன் இயேசுவின் மார்
பிலே சாய்ந்துகொண்டு, ஆண்டவரே, அவன்
௨௬ யாவன் என்றான். — இயேசுவானவர் சொன்
னது: நான் இந்தத் துணிக்கையைத் † தோய்த்துக்
கொடுக்கப்படுபவன் எவனோ, அவனே என்று
சொல்லி, துணிக்கையைத் தோய்த்துச் சீமோன்
குமாரனாகிய யூதாஸ்காரியோத்திற்குக் கொடுத்
தார்; துணிக்கையை அவன் வாங்கினபின்பு,—
[13]சாத்தான் அவனுக்குள் புகுந்தான்; அப்பொ ௨௭
ழுது இயேசுவானவர் அவனை நோக்கி, நீ செய்
கிறதைச் சீக்கிரமாய்ச் செய்யென்றார்.—அவர் ௨௮
இப்படி அவனுடனே சொன்னதின் கருத்தைப்
பந்தியில் இருந்தவர்களில் ஒருவரும் அறிய
வில்லை.—சிலர் நினைத்தது, யூதா [14]பணப்பையை ௨௯
வைத்துக்கொண்டிருக்கிறபடியினாலே, அவன்
போய்ப் பண்டிகைக்கு வேண்டிய பதார்த்தங்க
ளைக் கொள்ளும்படிக்காவது, தரித்திரருக்கு ஏதா
கிலும் கொடுக்கும்படிக்காவது, இயேசுவானவர்
அவனுடனே சொல்லியிருப்பார் என்று நினைத்
தார்கள்.—அவன் அந்தத் துணிக்கையைவாங்கின ௩௰
உடனே, புறப்பட்டுப்போனான்; அப்பொழுது
இராக்காலமாயிருந்தது.
அவன் புறப்பட்டுப் போனபின்பு, இயேசு ௩௧
வானவர் சொன்னதாவது: [15]இப்பொழுது மனி
தனுடைய குமாரன் மகிமைப்படுவான்; அவனா
லே [16]பராபரனுடைய மகிமையும் விளங்கும்—
[17]பராபரனுடைய மகிமை அவனாலே விளங்கும் ௩௨
பொழுது, பராபரன் அவனையும் மகிமைப்படுத்
துவார்; [18]சீக்கிரமாய் அவனை மகிமைப்படுத்து
வார்.—பிரியமான பிள்ளைகளே, இன்னும் சில ௩௩
காலம்மாத்திரம் நான் உங்களுடனேகூட இருப்
பேன்; நீங்கள் என்னைத் தேடுவீர்கள்; [19]அல்லா
மலும் நான் போகும் இடத்திற்கு நீங்கள் வரக்
கூடாதென்று நான் யூதரோடே சொன்னது
போல இப்பொழுது உங்களோடும் சொல்லுகி
றேன்.—[20]நீங்கள் ஒருவரில் ஒருவர் அன்பாயி ௩௪
ருங்கள்; நான் உங்களிடத்தில் அன்பாயிருந்த
துபோல, நீங்களும் ஒருவரில் ஒருவர் அன்பா
யிருங்கள் என்று புதிதான கற்பனையை உங்க
ளுக்குக் கொடுக்கிறேன். — நீங்கள் ஒருவரில் ௩௫
ஒருவர் அன்பாய் இருந்தால், [21]நீங்கள் என்னு
டைய சீஷர் என்று எல்லாரும் அறிவார்கள்
என்றார்.
சீமோன்பேதுரு அவரை நோக்கி, ஆண்ட ௩௬
வரே, நீர் எங்கே போகிறீர் என்றான்; அதற்கு
இயேசுவானவர் சொன்னது: நான் போகிற இ
டத்திற்கு நீ இப்பொழுது எனக்குப் பின்செல்ல
மாட்டாய்; [22]பின்பு எனக்குப் பின்செல்லுவாய்
என்றார்.— பேதுரு சொன்னது: ஆண்டவரே, ௩௭
நான் என்னத்தினாலே இப்பொழுது உமக்குப்
பின்செல்லக்கூடாது? [23]உமக்காக என் சீவ
னைக் கொடுப்பேன் என்றான்.—இயேசுவானவர் ௩௮
சொன்னது: நீ எனக்காக உன் சீவனைக் கொடுப்
பாயா? சேவல்கூவுகிறதற்கு முன்னே நீ என்னை

1 லூக். ௨௨. ௨௭.
2 ௨ ரோ. ௰௨. ௰. கலா. ௬. ௧, ௨. ௧ பே. ௫. ௫.—3 மத். ௰௧. ௨௯. பிலி. ௨. ௫. ௧ பே. ௨. ௨௧. ௧ யோ. ௨. ௬.—4 மத். ௰. ௨௪. லூக். ௬. ௪௰. யோவா. ௰௫. ௨௰.
5 யாக். ௧. ௨௫.—6 சங். ௪௧. ௯. மத். ௨௬. ௨௧. ௨௩. ௪௪.
7 யோவா. ௰௪. ௨௯: ௰௬. ௪.
8 மத். ௰. ௪௰: ௨௫. ௪௰. லூக். ௰. ௰௬.
9 மத். ௨௬. ௨௧. மாற். ௰௪. ௰௮. லூக். ௨௨. ௨௧.—10 யோவா. ௰௨. ௨௭.—11 அப். ௧. ௰௭. ௧ யோ. ௨. ௰௯.—12 யோவா. ௰௯. ௨௬: ௨௰. ௨: ௨௧. ௭. ௨௰, ௨௪.
13 லூக். ௨௨. ௩. யோவா. ௬. ௭௰.
14 யோவா. ௰௨. ௬.—15 யோவா. ௰௨. ௨௩.—16 யோவா. ௰௪. ௰௩. ௧ பே. ௪. ௰௧.—17 யோவா. ௰௭. ௧, ௪, ௫, ௬.—18 யோவா. ௰௨. ௨௩.
19 யோவா. ௭. ௩௪: ௮. ௨௧.
20 ௩ மோ. ௰௯. ௰௮. யோவா. ௰௫. ௰௨, ௰௭. எபே. ௫. ௨. ௧ தெச. ௪. ௯. யாக். ௨. ௮. ௧ பே. ௧. ௨௨. ௧ யோ. ௨. ௭, ௮: ௩. ௰௧, ௨௩: ௪. ௨௧.—21 ௧ யோ. ௨. ௫: ௪. ௨௰.
22 யோவா. ௨௧. ௰௮. ௨ பே. ௧. ௰௪.—23 மத். ௨௬. ௩௩, ௩௪, ௩௫. மாற். ௰௪. ௨௯, ௩௰, ௩௧. லூக். ௨௨. ௩௩, ௩௪.

* அல்லது இன்றுமுதல்.—† அல்லது வாய் நிறையத்தக்க துண்டை.

மூன்றுதரம் மறுதலிப்பாய் என்று மெய்யாகவே
உனக்குச் சொல்லுகிறேன்.

## யச. அதிகாரம்.

*க. கிறிஸ்து தம்முடைய சீஷர்களை மோட்சமடையலாமென்ற நம்பிக்கையினாலே தேற்றினது. சு தம்மை வழியென்றும், சத்தியமென்றும், ஜீவனென்றும், பிதாவோடே ஒருவராயிருக்கிறவரென்றும் கூறி, யங. தமது நாமத்தை முன்னிட்டு அவர்கள் செய்யும் செபங்கள் பலிக்குமென்கிற நிச்சயத்தைக் காட்டி, யரு. தம்மிடத்தில் அவர்கள் அன்பும் அடக்கமும் உடையவர்களாயிருக்கும்படி புத்திசொல்லி, யசா. தேற்றரவாளனாகிய பரிசுத்தஆவியை அனுப்புவோம் என்று வாக்குத்தத்தம்பண்ணி, உஎ. சமாதான ஆசீர்வாதத்தை அருளிச்செய்தது.*

க [1]உங்கள் இருதயம் கலங்காதிருப்பதாக; பராபர
னில் நம்பிக்கையாயிருங்கள்; என்னிடத்திலும்
உ நம்பிக்கையாயிருங்கள் —என் பிதாவின் வீட்
டிலே அநேகம் வாசஸ்தலங்கள் உண்டு; அப்படி
இல்லாதிருந்தால் நான் உங்களுக்குச் சொல்லி
இருப்பேன்; [2]ஒரு ஸ்தலத்தை உங்களுக்காக எத்
ங தனம்பண்ணப்போகிறேன்.—நான் போய் உங்க
ளுக்காக ஸ்தலத்தை எத்தனம்பண்ணினபின்பு,
[3]நான் இருக்கிற இடத்திலே நீங்களும் இருக்கும்
படிக்கு, [4]திரும்பி வந்து உங்களை என்னிடத்
ச தில் சேர்த்துக்கொள்வேன். — நான் போகிற
இடத்தை அறிந்திருக்கிறீர்கள்; வழியையும் அ
றிந்திருக்கிறீர்கள் என்று சொன்னபொழுது,
ரு தோமா என்பவன் அவரை நோக்கி, ஆண்டவ
ரே, நீர் போகிற இடத்தை அறியமாட்டோமே,
வழியை நாங்கள் எப்படி அறிவோம் என்றான்?-
சா அதற்கு இயேசுவானவர் சொன்னது: [5]நானே
வழியுமாய் [6]சத்தியமுமாய் [7]ஜீவனுமாய் இருக்கி
றேன்; [8]என்னாலே அல்லாமல் ஒருவனும் பிதாவி
எ னிடத்திற்குச் செல்லமாட்டான்.—[9]நீங்கள் என்
னை அறிந்தால் என் பிதாவையும் அறிந்திருப்பீர்
கள்; மேலும் இப்பொழுது நீங்கள் அவரை அறிந்
தும் அவரைக் கண்டும் இருக்கிறீர்கள் என்றார்.
அ பிலிப்பு சொன்னது: ஆண்டவரே, நீர் பிதா
வை எங்களுக்குக் காண்பிக்கவேண்டும், அப்
பொழுது எங்களுக்குத் திருப்தி உண்டாயிருக்
கூ கும் என்றான்.—அவனுடனே இயேசுவானவர்
சொன்னது: பிலிப்பே, நான் இவ்வளவு காலம்
உங்களுடனேகூட இருந்தும், நீ என்னை அறி
யவில்லையா? [10]என்னைக் கண்டவன் பிதாவைக்
கண்டான்; அப்படியிருக்க, பிதாவை எங்களுக்
குக் காண்பிக்கவேண்டும் என்று நீ எப்படிச்
ய சொல்லுகிறாய்?—[11]நான் பிதாவிலேயும், பிதா
என்னிலேயும் இருக்கிறதை நீ விசுவாசியாமல்
இருக்கலாமா? [12]நான் உங்களுடனே சொல்லு
கிற வசனங்களை என்னாலே சொல்லவில்லையே;
(என்) கிரியைகளையும் எனக்குள் வாசமாயிருக்
கிற பிதாவானவரே செய்துவருகிறார் — நான் யக
பிதாவிலேயும் பிதா என்னிலேயும் இருக்கிறதை
நம்புங்கள்; (என் வசனத்தின் நிமித்தம்) நம்பா
திருந்தால், [13]என் கிரியைகளின் நிமித்தமே
என்னை நம்புங்கள் —[14]மெய்யாகவே நான் உங் யஉ
களுக்குச் சொல்லுகிறதாவது: என்னிடத்தில்
விசுவாசமாய் இருக்கிறவன் நான் செய்கிற கிரி
யைகளைப்போலக் கிரியைகளைச் செய்வான்,
இவைகளிலும் அதிக பெரியவைகளையே செய்
வான்; என்னத்தினாலெனில், நான் என் பிதாவி
னிடத்திற்குப் போகிறேன்.—அதுவுமல்லாமல், யங
[15]நீங்கள் என் நாமத்தினாலே கேட்டுக்கொள்வது
எதுவோ, அதைப் பிதா குமாரனாலே புகழப்ப
டும்பொருட்டு நான் செய்வேன்.—நீங்கள் என் யச
நாமத்தினாலே கேட்டுக்கொள்வது எதுவோ,
அதை நான் செய்வேன்.
[16]நீங்கள் என்னிடத்தில் அன்புகூர்ந்தால், யரு
என் கற்பனைகளைக் கைக்கொள்ளுங்கள்.—மே யசா
லும் என்றென்றைக்கும் உங்களுடனேகூட இ
ருக்கும்படிக்கான [17]சத்திய ஆவியாகிய வேறு
தேற்றுகிறவரைப் பிதாவானவர் உங்களுக்குக்
கொடுக்கும்படிக்கு நான் அவரை வேண்டிக்
கொள்வேன்.—[18]அந்தச் சத்திய ஆவியை [19]உல யஎ
கத்தார் காணாமலும் அறியாமலும் இருக்கிறபடி
யால், அவர்கள் அவரை அடைந்துகொள்ளமாட்
டார்கள்; [20]அவர் உங்களுடனேகூட இருந்து
உங்களுக்குள்ளே இருப்பதால் நீங்கள் அவரை
அறிவீர்கள் —[21]நான் உங்களைத் திக்கற்றவர்க யஅ
ளாக* விடுவதில்லை.— [22]உங்களிடத்தில் வரு யகூ
வேன், சிலகாலத்திற்குப் பின்பு உலகத்தார் என்
னைக் காணார்கள், [23]நீங்கள் என்னைக் காண்பீர்
கள், [24]நான் பிழைக்கிறபடியால் நீங்களும்
பிழைப்பீர்கள். — [25]நான் என் பிதாவிலேயும் உய
நீங்கள் என்னிலேயும் நான் உங்களிலேயும்
இருக்கிறதை அந்நாளிலே அறிவீர்கள்.—[26]என் உக
கற்பனைகளை அடைந்து அவைகளைக் கைக்கொ
ள்ளுகிறவனே, என்னிடத்தில் அன்புகூருகிற
வன்; என்னிடத்தில் அன்புகூருகிறவன்மேல்
என் பிதா அன்பாயிருப்பார், நானும் அவன்
மேல் அன்பாயிருந்து என்னை அவனுக்கு வெ
ளிப்படுத்துவேன் என்று சொன்னபொழுது,
ஸ்காரியோத்தல்லாத [27]யூதா என்பவன் அவ உஉ
ரை நோக்கி, ஆண்டவரே, நீர் உம்மை உலகத்
தாருக்கு அல்ல, எங்களுக்கு வெளிப்படுத்துகி
றதற்குக் காரணம் என்ன என்றான்.—அதற்கு உங
இயேசுவானவர் சொன்னது: [28]ஒருவன் என்
னிடத்தில் அன்புகூர்ந்தால், அவன் என் வச

1 உஎ.வச. யோவா. யசு.உஉ,உக. 2 யோவா.யசு.கக,கக.-3 யஅ,உஅ. வச. அப். க. யக.—4 யோவா. யஉ.உக:யள.உச. க தெச.ச.யஎ. 5 எபி. கூ. அ.—6 யோவா. க.யஎ: அ. கஉ.--7 யோவா.க.ச: யக. உகு.—8 யோவா. ய. கூ. 9 யோவா. அ. யசு.—10 யோவா. யஉ.சரு. கொலோ. க யரு. எபி. க.ங.—11 உய. வச. யோவா.ய. கஅ: யஎ. உக,உங.-12 யோவா. ரு.யசு: எயக: அ.உஅ: யஉ.சசு. 13 யோவா. ரு. ங கு: ய. கஅ. 14 மத்.உக.உக. மாற். யக.யஎ. லூக். ய.யஎ.—15 மத். எ.எ: உக உஉ. மாற்.யக.உச லூக். யக.கூ.யோவா. யரு.எ,யசு: யசு.உங,உச. யாக். க. ரு. க யோ. க உஉ: ரு. யச. 16 உக,உங. வச. யோவா. யரு ய, உச க யோ.ரு.ங.—17 யோவா. யரு.உசு: யசு எ. உரோ.அ யரு, உக.—18 யோவா.யரு.உக: யக. யங. க யோ.ச.கூ.—19 க கொரி. உ. யச.—20 க யோ. உ. உஎ. 21 மத். உஅ. உய.—22 யோவா. யசு. உஅ.—23 யோவா. யசு. யசு. 24 க கொரி. யரு. உய.--25 ய. வச. யோவா.ய.கஅ: யஎ. உக,உங,உங. 26 யரு,உங.வச. க யோ.உ ரு: ரு.க. 27 லூக். சு. யசு.—28 யரு. வச.

* அல்லது ஆறுதலற்றவர்களாக.

னத்தைக் கைக்கொள்வான், அவனிடத்தில் என்
பிதா அன்பாயிருப்பார். அல்லாமலும் [1]நாங்கள்
அவனிடத்தில் வந்து அவனோடே வாசம்பண்
௨௪ ணுவோம். — என்னிடத்தில் அன்புகூராமல்
இருக்கிறவன் என் வசனங்களைக் கைக்கொள்
ளமாட்டான்; [2]நீங்கள் கேட்கிற வசனம் என்னு
டையதல்ல, என்னை அனுப்பின பிதாவினு
டையதாகவே இருக்கின்றது.
௨௫ நான் உங்களுடனே இருக்கையில், இவை
௨௬ களை உங்களுக்குச் சொன்னேன் — [3]பின்பு
பிதாவானவர் என் நாமத்தினாலே அனுப்பும் பரி
சுத்த ஆவியாகிய தேற்றுகிறவரே [4]சகலத்தையும்
உங்களுக்கு உபதேசம்பண்ணி, நான் உங்களுக்
குச் சொன்ன யாவையும் நீங்கள் நினைக்கும்
௨௭ படி செய்வார்.—[5] சமாதானத்தை உங்களுக்குக்
கொடுத்துப்போகிறேன்; என்னுடைய சமாதா
னத்தையே உங்களுக்குத் தருகிறேன்; உலகத்
தார் கொடுக்கிறதுபோல நான் உங்களுக்குக்
கொடுக்கமாட்டேன்; [6]உங்கள் இருதயம் கலங்க
௨௮ வும் பயப்படவும் வேண்டுவதில்லை. — [7]நான்
போய், பின்பு உங்களிடத்திற்குத் திரும்பி வரு
வேன் என்று நான் உங்களுடனே சொன்ன
தைக் கேட்டீர்களே; நீங்கள் என்னிடத்தில்
அன்புகூர்ந்தீர்களானால், [8]என்னிலும் பிதா பெரி
யவராகையால், [9]நான் பிதாவினிடத்தில் போகி
றதைக் குறித்து நீங்கள் சந்தோஷப்படுவீர்கள்.–
௨௯ அது நடக்கும்பொழுது நீங்கள் விசுவாசிக்
கும்படிக்கு, [10]அது நடக்கிறதற்கு முன்னாகிய
இப்பொழுது அதை உங்களுக்குச் சொன்
னேன்.
௩௰ இனி நான் மிகவும் உங்களுடனே பேசுவதில்
லை; [11]உலகத்தின் பிரபு வருகிறானே, அவனுக்கு
௩௧ என்னிடத்தில் ஒன்றுமில்லை.–நான் பிதாவினி
டத்தில் அன்புகூர்ந்து, [12]அவர் எனக்குக் கட்ட
ளையிட்டபடியே செய்கிறதை உலகத்தார் அறி
யும்படிக்கு (அப்படி நடக்கும்); எழுந்திருங்
கள், இவ்விடம் விட்டுப் போகக்கடவோம்.

## ௰௫. அதிகாரம்.

க. கிறிஸ்து திராட்சச்செடியின் உவமையினாலே தமக்கும் தம்முடைய சீஷர்களுக்கும் இருக்கிற அன்பின் ஐக்கத்தைக் காட்டினது. ௰அ. உலகத்தின் பகையையும், துன்பத்தையுங்குறித்து ஆறுதல் சொன்னது. உசு. பரிசுத்த ஆவியின் செய்கைகளையும், அப்போஸ்தலர்களுடைய செய்கைகளையும் குறித்துச் சொன்னது.

௧ நான் மெய்யான திராட்சச்செடி, என் பிதா
௨ திராட்சத்தோட்டக்காரன். — [13]என்னில் கனி
கொடாதிருக்கிற கொடி எதுவோ, அதை அவர்
எடுத்துப்போடுகிறார், கனிகொடுக்கிற கொடி
அதிக கனிகளைக் கொடுக்கும்படிக்கு அதைச்
சுத்தம்பண்ணுகிறார். — [14]நான் உங்களுக்குச் ௩
சொன்ன உபதேசத்தினாலே நீங்கள் இப்பொ
ழுது சுத்தமாய் இருக்கிறீர்கள். — என்னில் ௪
[15]நிலைத்திருங்கள், நானும் உங்களில் நிலைத்தி
ருப்பேன்; கொடியானது திராட்சச் செடியிலே
நிலைத்திராவிட்டால், அது தன்னாலே கனிகொடு
க்கமாட்டாததுபோல, நீங்களும் என்னில் நிலைத்
திராவிட்டால் கனிகொடுக்கமாட்டீர்கள்.—நா ௫
னே திராட்சச்செடி, நீங்கள் கொடிகள், என்னை
அன்றி* உங்களால் ஒன்றும் செய்யக்கூடாதப
டியினாலே என்னிடத்தில் நிலைகொண்டும் நான்
நிலைகொள்ளப்பட்டும் இருக்கிறவன் [16]மிகுந்த
கனிகளைக் கொடுப்பான்.—ஒருவன் என்னில் ௬
நிலைத்திராவிட்டால், [17]அவன் உலர்ந்துபோன
கொடியைப்போல வெளியே போடப்படு
வான்; அப்படிப்பட்டவைகளைச்சேர்த்து, அக்கி
னியிலே போட்டுச் சுட்டெரிக்கிறார்கள். —
நீங்கள் என்னிலேயும் என் வசனங்கள் உங்க ௭
ளிலேயும் நிலைத்திருந்தால் [18]நீங்கள் கேட்டுக்
கொள்வது எதுவோ, அது உங்களுக்கு உண்டா
கும். — நீங்கள் மிகுந்த கனிகளைக் கொடுத்து, ௮
[19]எனக்குச் சீஷர்களாவதினாலே [20]என் பிதா
புகழப்படுவார்.
பிதா என்னிடத்தில் அன்புகூர்ந்திருக்கிறது ௯
போல, நானும் உங்களிடத்தில் அன்புகூருகி
றேன்; என்னுடைய அன்பிலே நிலைத்திருங்
கள்.–நான் என் பிதாவின் கற்பனைகளைக் கைக் ௰
கொண்டு, அவருடைய அன்பிலே நிலைத்திருக்
கிறதுபோல, [21]நீங்களும் என் கற்பனைகளைக்
கைக்கொண்டிருந்தால், என்னுடைய அன்பி
லே நிலைத்திருப்பீர்கள்.
உங்களிடத்தில் என்னுடைய சந்தோஷம் ௰௧
நிலைத்திருக்கும்படிக்கும், [22]உங்கள் சந்தோஷம்
நிறைவாயிருக்கும்படிக்கும், நான் இவைகளை
உங்களுக்குச் சொன்னேன். — [23]நான் உங்களி ௰௨
டத்தில் அன்புகூர்ந்திருக்கிறதுபோல, நீங்க
ளும் ஒருவரில் ஒருவர் அன்பாய் இருக்கவேண்
டுமென்று கட்டளையிடுகிறேன். — [24]ஒருவன் ௰௩
தன் சிநேகிதருக்காகத் தன் பிராணனைக் கொ
டுக்கும்படியான அன்புக்கு அதிகமான அன்பு
ஒருவரிடத்திலும் இல்லை.—நான் உங்களுக்குக் ௰௪
கட்டளையிடுகிற யாவையும் நீங்கள் செய்தால்
[25]என்னுடைய சிநேகிதராய் இருப்பீர்கள். —
ஊழியக்காரனானவன் தன் எசமான்செய்கிறதை ௰௫
அறியாதிருக்கிறபடியால், இனி நான் உங்களை
ஊழியக்காரர் என்று சொல்லமாட்டேன்;
[26]நான் என் பிதாவினிடத்தில் கேள்விப்பட்ட

1 க யோ. ௨. ௨௪. வெளி. ௩. ௨௰. 2 ௰.௨௪. யோவா ௭.௰௬, ௧௮: ௮. ௰௧: ௮. ௨௮: ௰௨. ௪௯. 3 ௰௬.௨௪. லூக்.௨௪.௪௯. யோவா. ௰௫. ௨௬: ௰௬. ௭.—4 யோவா. ௨.௨௨: ௰௨.௰௬: ௰௬.௰௩. க யோ. ௨. ௨௰, ௨௭.—5 பிலி. ௪. ௭. கொலோ. ௩. ௰௫.—6 க. ௨௪. 7 ௩, ௰௮. ௨௪.—8 ௰௨. ௨௪. யோவா. ௰௬, ௰௬: ௨௰. ௰௭. 9 யோவா.௫.௰௮: ௰௩௰. பிலி.௨. ௬.—10 யோவா. ௰௩.௰௯: ௰௬.௪. 11 யோவா. ௰௨. ௩௧: ௰௬. ௰௧. 12 யோவா.௰.௰௮. பிலி ௨.௮. எபி. ௫. ௮.—18 மத். ௰௫. ௰௩. 14 யோவா.௰௩.௰: ௰௭.௰௭. எபே.௫. ௨௬. க பே ௧.௨௨.-15 கொலோ. ௧. ௨௩. க யோ.௨.௬.—16 ஓசே. ௰௪. ௮. பிலி. ௧. ௰௧: ௪. ௰௩. 17 மத். ௩. ௰: ௭. ௰௯.—18 ௰௬.௨௪. யோவா. ௰௪. ௰௩, ௰௪: ௰௬ ௨௩. 19 யோவா. ௮. ௩௧: ௰௩. ௩௫. 20 மத். ௫. ௰௬. பிலி. ௧. ௰௧. 21 யோவா. ௰௪ ௰௫: ௨௧. ௨௩. 22 யோவா.௰௬.௨௪: ௰௭.௰௩. க யோ. ௧.௪.-23 யோவா.௰௩.௩௪. க தெச. ௪. ௯. க பே.௪.௮. க யோ.௩. ௰௧: ௪.௨௧.—24 யோவா. ௰ ௰௧. ௰௫. உரோ.௫.௭,௮ எபே.௫.௨. க யோ.௩.௰௬.-25 யோவா.௰௪.௰௫, ௨௩.மத் ௰௨ ௫௰.–26 க மோ.௰௮. ௰௭.யோவா.௰௭ ௨௬.அப்.௨௰.௨௭.

* அல்லது என்னில் பிரிக்கப்பட்டு; அப். ௪. ௰௨.

யாவையும் உங்களுக்கு அறிவித்தபடியினாலே,
நான் உங்களைச் சிநேகிதரென்று சொல்லுகி
௰௬ றேன். —[1]நீங்கள் என்னைத் தெரிந்துகொள்ள
வில்லை; [2]நீங்கள் என்னுடைய நாமத்தினாலே
பிதாவானவரிடத்தில் கேட்டுக்கொள்வது எது
வோ, அதை அவர் உங்களுக்குக் கொடுக்கத்தக்க
தாக நீங்கள் புறப்பட்டுக் கனிகளைக் கொடுக்
கும்படிக்கும் உங்கள் கனிகள் நிலைத்திருக்கும்
படிக்கும், [3]நானே உங்களைத் தெரிந்துகொண்டு
௰௭ ஏற்படுத்தினேன்.—[4]நீங்கள் ஒருவரில் ஒருவர்
அன்பாயிருக்கவேண்டுமென்றே உங்களுக்குக்
கட்டளையிடுகிறேன்.

௰௮ [5]உலகத்தார் உங்களைப் பகைக்கும்பொழுது
அவர்கள் உங்களுக்குமுன்னே என்னைப் பகை
௰௯ த்தார்கள் என்று நினைக்கக்கடவீர்கள். — [6]நீங்
கள் உலகத்தாராயிருந்தால் உலகத்தார் தங்களைச்
சேர்ந்தவர்களாகிய (உங்களைச்) சிநேகிப்பார்
கள்; [7]நீங்கள் உலகத்தாராயிராமல் என்னாலே
உலகத்திலிருந்து தெரிந்துகொள்ளப்பட்டவர்க
ளாய் இருக்கிறபடியினாலே, உலகத்தார் உங்க
௨௰ ளைப் பகைக்கிறார்கள்.—[8]ஊழியக்காரன் தன் எச
மானுக்கு மேற்பட்டவன் அல்லவென்று நான்
உங்களுக்குச் சொன்ன வசனத்தை நினைத்துக்
கொள்ளுங்கள்; அவர்கள் என்னைத் துன்பப்ப
டுத்தினதுபோல, உங்களையும் துன்பப்படுத்து
வார்கள்; [9]அவர்கள் என் வசனத்தைக் கைக்
கொண்டதுபோல, உங்களுடையதையும் கைக்
௨௧ கொள்ளுவார்கள். — என்னை அனுப்பினவரை
அறியாதபடியினாலே [10]அவர்கள் என் நாமத்தின்
நிமித்தமே இப்படிப்பட்ட யாவையும் உங்க
௨௨ ளுக்குச் செய்வார்கள்.—[11]நான் வந்து அவர்க
ளுக்குச் சொல்லாதிருந்தேனானால், அவர்களுக்
குப் பாவம் உண்டாயிருக்கமாட்டாது; [12]இப்
பொழுது அவர்கள் தங்கள் பாவத்திற்காகப்
௨௩ போக்குச்சொல்ல* இடமில்லை. — [13]என்னைப்
பகைக்கிறவன் என் பிதாவையும் பகைக்கி
௨௪ றான்.—[14]மற்றொருவன் செய்யாத கிரியைகளை
நான் அவர்களுக்குள்ளே செய்யாதிருந்தேனா
னால், அவர்களுக்குப் பாவம் உண்டாயிருக்க
மாட்டாது; அவைகளை அவர்கள் கண்டிருந்தும்,
என்னையும் என் பிதாவையும் பகைக்கிறார்கள்.—
௨௫ [15]நிமித்தம் இல்லாமல் என்னைப் பகைத்தார்கள்
என்று அவர்களுடைய வேதத்தில் எழுதியிருக்
கிற வாக்கியம் நிறைவேறத்தக்கதாக (இப்படிச்
செய்கிறார்கள்).

௨௬ பிதாவினிடத்திலிருந்து நான் உங்களுக்கு அ
னுப்பப்படுபவருமாய், பிதாவினிடத்திலிருந்து
புறப்படுகிறவருமாய் இருக்கிற [16]சத்திய ஆவி
யாகிய தேற்றுகிறவர் வரும்பொழுது [17]அவர்
என்னைக்குறித்துச் சாட்சிகொடுப்பார்.—[18]நீங் ௨௭
களும் ஆதிமுதல் என்னுடனேகூட இருந்தபடி
யால் [19]சாட்சிகொடுப்பீர்கள்.

## ௰௬. அதிகாரம்.

௧. கிறிஸ்து தம்முடைய சீஷர்களுக்கு வரும் துன்பத்தைக்குறித்தது அறுதலாகப் பரிசுத்த ஆவியின் வருகையையும், தாம் உயிர்த்தெழுந்து பரமண்டலத்துக்கு ஏறுவதையும் முன் அறிவித்தது. ௨௩ தம்முடைய நாமத்தில் செய்யப்படும் விண்ணப்பம் பிதாவினால் அங்கீகரிக்கப்படுமென்று திருவுளம்பற்றி, ௩௩ அவர்கள் தமக்குள் சமாதானமும் உலகத்திலே துன்பமும் அடைவார்கள் என்று சொன்னது.

[20]நீங்கள் வழுவாதபடிக்கு இவைகளை உங்களு ௧
டனே சொன்னேன்.—[21]அவர்கள் உங்களைச் செ ௨
பஆலயத்திற்குப் புறம்பாக்குவார்கள்; [22]அதுவு
மல்லாமல் உங்களைக் கொலைசெய்கிறவன் எவ
னோ அவன் பராபரனுக்கு ஆராதனை செய்கிறேன்
என்று நினைக்கும் காலம் வரும். — [23]அவர்கள் ௩
பிதாவையும் என்னையும் அறியாதபடியினாலே
இப்படிப்பட்டவைகளை உங்களுக்குச் செய்வா
ர்கள். — அந்தக் காலம் வரும்பொழுது [24]நான் ௪
இப்பொழுது உங்களுக்குச் சொன்னதை நீங்
கள் நினைக்கும்படிக்கு, இவைகளை உங்களுட
னே சொன்னேன்; [25]நான்தானே உங்களுடனே
கூட இருந்தபடியினாலே, நான் இவைகளை ஆரம்
பத்திலே உங்களுடனே சொல்லவில்லை.—[26]இப் ௫
பொழுது நான் என்னை அனுப்பினவரிடத்திற்
குப் போகிறேன்; எங்கே போகிறீர் என்று உங்
களில் ஒருவனும் என்னிடத்தில் கேளாமல்,—
நான் இவைகளை உங்களுக்குச் சொன்னதினா ௬
லே [27]துக்கம் நிறைந்த இருதயமுள்ளவர்களாய்
இருக்கிறீர்கள்.

நான் உங்களுக்குச் சத்தியத்தைச் சொல்லுகி ௭
றேன்; நான் போகிறது உங்களுக்குப் பிரயோ
சனமாயிருக்கும்; எப்படியெனில், நான் போ
காதிருந்தால் [28]அந்தத் தேற்றுகிறவர் உங்களி
டத்தில் வாரார்; [29]போவேனேயாகில் அவரை
உங்களிடத்திற்கு அனுப்புவேன்.—அவர் வந்து, ௮
பாவத்தையும் நீதியையும் நியாயத்தீர்ப்பையும்
குறித்து உலகத்தாருக்கு மெய்யறிவைக் கொடுப்
பார்.†—[30]அவர்கள் என்னிடத்தில் விசுவாசமாய் ௯
இராதபடியினாலே பாவத்தைக்குறித்தும்,—[31]நீங் ௰
கள் இனி என்னைக் காணாதபடிக்கு நான் என்
பிதாவினிடத்திற்குப் போகிறபடியினாலே [32]நீதி
யைக்குறித்தும்,—[33] இவ்வுலகத்தின் பிரபு நியாய ௧௧

1 யோவா. ௧௪. ௰: ௰௧, ௰௮. ௧ யோ. ௪. ௰, ௰௯.—2 மத். ௨௮. ௰௯. மாற். ௰௬. ௰௫ கொலோ. ௧. ௬.
3 எ வச. யோவா. ௰௪. ௰௧.
4 ௰௨. வச.—5 ௧ யோ. ௩. ௧, ௰௩.—6 ௧ யோ. ௪. ௫.
7 யோவா. ௰௭ ௰௪.
8 மத். ௰. ௨௪. லூக். ௬. ௪௰. யோவா. ௰௩. ௰௬.—9 எசே. ௩. ௭.
10 மத். ௰. ௨௨: ௨௪. ௯. யோவா. ௰௬. ௩.—11 யோவா. ௯. ௪௧.
12 உரோ. ௧. ௨௰. யாக். ௪. ௰௭.
13 ௧ யோ. ௨. ௨௩.—14 யோவா ௩. ௨: ௭. ௩௧: ௯. ௩௨.—15 சங். ௩௫. ௰௯: ௬௯. ௪.
16 லூக். ௨௪. ௪௯. யோவா. ௰௪. ௰௭, ௨௬: ௰௬. ௭, ௰௩. அப். ௨. ௩௩.—17 ௧ யோ. ௫. ௬.
18 லூக். ௧. ௨. ௧ யோ. ௧. ௧, ௨.
19 லூக். ௨௪. ௪௮. அப். ௧. ௮, ௨௧, ௨௨: ௨. ௩௨: ௩. ௰௫: ௪. ௨௰, ௩௩: ௫. ௩௨: ௰. ௩௯: ௰௩. ௩௧. ௧ பே. ௫. ௧. ௨ பே. ௧. ௰௬.—20 மத். ௰௧. ௬: ௨௪. ௰: ௨௬. ௩௧.—21 யோவா. ௯. ௨௨, ௩௪: ௰௨. ௪௨.
22 அப். ௮. ௧: ௯. ௧: ௨௬. ௯, ௰, ௰௧.
23 யோவா. ௰௫. ௨௧. உரோ. ௰. ௨. ௧ கொரி. ௨. ௮. ௧ தீமோ. ௧. ௰௩.
24 யோவா. ௰௩. ௰௯: ௰௪. ௨௯.
25 மத். ௯. ௰௫.—26 ௰. ௰௩ வச. யோவா. ௭. ௩௩: ௰௩. ௩: ௰௪. ௨௮.
27 ௨௨. வச. யோவா. ௰௪ ௧.
28 யோவா. ௭. ௩௯: ௰௪. ௰௬, ௨௬: ௰௫. ௨௬.—29 அப். ௨. ௩௩. எபே. ௪. ௮.—30 அப். ௨. ௨௨—௩௭.
31 அப். ௨. ௩௨.—32 யோவா. ௩. ௰௪: ௫. ௩௨.—33 அப். ௨௬. ௰௮.

* அல்லது பாவத்தை மறைக்க.— † அல்லது கடிந்துகொள்ளுவார்.

யத்தீர்ப்பு அடைந்தபடியினாலே [1]நியாயத்தீர்ப்
பைக்குறித்துமே அறிவைக் கொடுப்பார்.
௰௨ நான் இன்னும் அநேக காரியங்களை உங்க
ளுக்குச் சொல்லவேண்டியிருக்கிறது; [2]நீங்கள்
அவைகளை இப்பொழுது சகிக்கமாட்டீர்கள்.—
௰௩ [3]சத்திய ஆவியானவர் வரும்பொழுது [4]சகல சத்
தியத்திலேயும் உங்களை நடத்துவார்; அவர் தம்மு
டைய சுயமாய்ப் பேசாமல், தாம் கேள்விப்படுப
வைகள் எவைகளோ அவைகளைப் பேசி, இனிவ
ரும் காரியங்களையும் உங்களுக்கு அறிவிப்பார்.-
௰௪ அவர் என்னுடையதிலே எடுத்து உங்களுக்கு அ
றிவிப்பதால் அவர் என்னுடைய மகிமையை வி
௰௫ ளங்கப்பண்ணுவார். —[5]பிதாவினுடையவைகள்
யாவும் என்னுடையவைகள்; அதினாலே அவர்
என்னுடையதில் எடுத்து உங்களுக்கு அறிவிப்
௰௬ பார் என்று சொன்னேன்.—[6]நான் பிதாவினிடத்
திற்குப் போகிறபடியினாலே, [7]சற்றுக்காலமான
பின்பு நீங்கள் என்னைக் காணாமல் இருப்பீர்கள்;
மறுபடியும் சற்றுக்காலமானபின்பு என்னைக் கா
ண்பீர்கள் என்றும் அவர் சொன்னபொழுது,
௰௭ அவருடைய சீஷரில் சிலர் தங்களுக்குள்ளே
பேசிக்கொண்டதாவது: சற்றுக்காலமான பின்பு
என்னைக் காணாமல் இருப்பீர்கள் என்றும், மறு
படியும் சற்றுக்காலமான பின்பு என்னைக் காண்
பீர்கள் என்றும், நான் பிதாவினிடத்தில் போகி
றேன் என்றும் அவர் நம்முடனே சொன்னதின்
௰௮ கருத்தென்ன?—சற்றுக்காலமென்று அவர் சொன்
னதின் கருத்தென்ன? அவர் சொன்னது நமக்கு
௰௯ விளங்கவில்லையே என்றார்கள்.—பின்னும் தம்
மிடத்தில் அவர்கள் வினாவ விரும்புகிறதை இ
யேசுவானவர் அறிந்து அவர்களுடனே சொன்
னது: சற்றுக்காலமான பின்பு என்னைக் காணாதி
ருப்பீர்கள்; மறுபடியும் சற்றுக்காலமான பின்பு
என்னைக் காண்பீர்கள் என்று நான் சொன்ன
தைக்குறித்தா நீங்கள் உங்களுக்குள்ளே விசாரிக்
௨௰ கிறீர்கள். — மெய்யாகவே நான் உங்களுக்குச்
சொல்லுகிறதாவது: நீங்கள் அழுது புலம்புவீர்
கள், உலகத்தார் சந்தோஷப்படுவார்கள்; நீங்கள்
துக்கப்படுவீர்கள், உங்கள் துக்கம் சந்தோஷமா
௨௧ கும். — [8]கருப்பஸ்திரீயானவளுக்குப் பிரசவ
காலம் வந்தபொழுது அவள் துக்கமடைகிறாள்;
பிள்ளை பெற்ற பின்பு ஒரு மனிதன் உலகத்தில்
பிறந்ததினாலே வருகிற சந்தோஷத்தின் நிமித்தம்
௨௨ அந்த உபத்திரவத்தை நினையாள்.—அதுபோல
[9]நீங்களும் இப்பொழுது துக்கம் அடைந்திருக்
கிறீர்கள்; நான் மறுபடியும் உங்களைக் காண்
பேன், [10]அப்பொழுது உங்கள் இருதயம் சந்
தோஷப்படும்; அல்லாமலும் உங்கள் சந்தோ
ஷத்தை ஒருவனும் உங்களிடத்திலிருந்து எடுத்
துப்போடமாட்டான்.—அந்த நாளிலே நீங்கள் ௨௩
ஒன்றையும் என்னிடத்தில் கேட்கமாட்டீர்கள்;
[11]மெய்யாகவே நான் உங்களுக்குச் சொல்லுகிற
தாவது: நீங்கள் என் நாமத்தினாலே பிதாவினி
டத்தில் கேட்டுக்கொள்வது எதுவோ, அதை
அவர் உங்களுக்குக் கொடுப்பார்.—இதுவரைக் ௨௪
கும் நீங்கள் என் நாமத்தினாலே ஒன்றையும்
கேட்கவில்லை; கேட்டுக்கொள்ளுங்கள், [12]அப்
பொழுது உங்கள் சந்தோஷம் நிறைவாய் இருக்
கும்படிக்குப் பெற்றுக்கொள்வீர்கள்.
இவைகளை நான் உவமைகளாய் * உங்களு ௨௫
டனே பேசினேன்; காலம் வரும், அப்பொழுது
நான் பிதாவைக்குறித்து உவமைகளாய் † உங்க
ளுடனே பேசாமல், வெளிப்படையாகவே உங்
களுக்கு அறிவைக் கொடுப்பேன்.—[13] அந்த நா ௨௬
ளிலே நீங்கள் என் நாமத்தினாலே விண்ணப்பம்
பண்ணுவீர்கள்; உங்களைக்குறித்து நான் பிதா
வை நோக்கிக் கேட்டுக்கொள்ளுகிறேன் என்று
உங்களுடனே சொல்லமாட்டேன்.—[14]நீங்கள் ௨௭
என்னைச் சிநேகித்து, என்னைப் பராபரனிடத்தி
லிருந்து வந்தவன் என்று விசுவாசித்திருக்கிற
படியினாலே, [15]பிதாவானவர் தாமே உங்களைச்
சிநேகிக்கிறாரே. — [16] நான் பிதாவினிடத்திலி ௨௮
ருந்து புறப்பட்டு உலகத்திலே வந்தேன்; மறுப
டியும் உலகத்தைவிட்டுப் பிதாவினிடத்திற்குப்
போகிறேன் என்று சொன்னபொழுது,
அவருடைய சீஷர் அவரை நோக்கி, இப் ௨௯
பொழுது நீர் ‡ உவமை இல்லாமல் வெளிப்ப
டையாய்ப் பேசுகிறீர்.—[17] நீர் எல்லாவற்றையும் ௩௰
அறிந்திருக்கிறீர் என்றும், ஒருவன் உம்மிடத்தில்
வினாவுகிறது உமக்கு வேண்டுவதில்லை என்றும்
இப்பொழுது அறிந்திருக்கிறோம்; [18]இதினாலே
நீர் பராபரனிடத்திலிருந்து வந்ததை விசுவாசிக்
கிறோம் என்றார்கள்.—அதற்கு இயேசுவானவர் ௩௧
சொன்னது: இப்பொழுது விசுவாசிக்கிறீர்கள்;
கேளுங்கள்,—[19] நீங்கள் என்னைத் தனியே வைத் ௩௨
துச் சிதறி அவரவரிடத்திற்குப் § போகும் நேரம்
வரும்; [20] அது இப்பொழுது வந்திருக்கின்றது;
நான் தனித்திரேன்; [21]பிதாவானவர் என்னுட
னே இருக்கிறார்.—[22] என்னாலே நீங்கள் சமாதான ௩௩
முள்ளவர்களாய் இருக்கும்படிக்கு, இவைகளை
உங்களுடனே சொன்னேன்.—[23] இவ்வுலகத்தில் ௩௪
உங்களுக்கு உபத்திரவம் உண்டாயிருக்கும்;
[24] ஆனாலும் தயிரியம் கொள்ளுங்கள்; [25] நானே
உலகத்தைச் செயித்தேன் என்றார்.

1 லூக். ௰. ௱அ. யோவா. ௰௨. ௩௧. எபே ௨. ௨. கொலோ. ௨. ௰௫. எபி ௨. ௰௪.—2 மாற். ௪. ௩௩. ௧ கொரி. ௩. ௨. எபி. ௫ ௰௨. 3 யோவா. ௰௪. ௰௭: ௰௫ ௨௬. 4 யோவா. ௰௪. ௨௬. ௧ யோ ௨. ௨௰, ௨௭.—5 மத் ௰௧. ௨௭. யோவா. ௩. ௩௫: ௰௭. ௰: ௰௭. ௰. 6 ௨அ. ௪௪. யோவா. ௰௩. ௩. 7 ௰. ௪௪. யோவா. ௭. ௩௩: ௰௩ ௩௩: ௰௪. ௰௯.—8 ஏசா. ௨௬. ௰௭. 9 ௯. ௪௪.—10 லூக். ௨௪. ௪௧, ௫௨. யோவா. ௰௪. ௧, ௨௭: ௨௰. ௨௰. அப். ௨. ௪௬: ௰௩. ௫௨. ௧ பே. ௧. அ. 11 மத். ௭. ௭. யோவா. ௰௪. ௰௩: ௰௫. ௰௬.—12 யோவா. ௰௫. ௰௧. 13 ௨௩. ௪௪.—14 யோவா. ௰௪. ௨௧, ௨௩.—15 ௨௰. ௪௪. யோவா. ௩ ௰௩: ௰௭. அ.—16 யோவா. ௰௩. ௩. 17 யோவா. ௨௧. ௰௭.—18 ௨௭. ௪௪. யோவா. ௰௭. அ.—19 மத். ௨௬. ௩௧. மாற் ௰௪. ௨௭.—20 யோவா. ௨௰. ௰. 21 யோவா. அ. ௨௯: ௰௪. ௰, ௰௧. 22 ஏசா. ௯. ௬. யோவா. ௰௪. ௨௭. ௨ரோ. ௫. ௧. எபே. ௨. ௰௪. கொலோ. ௧. ௨௰. 23 யோவா. ௰௫. ௰௯, ௨௰. ௨௧. ௨ தீமோ. ௩. ௰௨. 24 யோவா. ௰௪. ௧. 25 ௨ரோ. அ. ௩௭. ௧ யோ. ௪. ௪: ௫. ௪.

* அல்லது பழமொழிகளாய்.—† அல்லது பழமொழிகளாய்.—‡ அல்லது பழமொழி.—§ அல்லது சொந்தத்துக்கு.

## ௰௭. அதிகாரம்.

௧. கிறிஸ்து தம்முடைய பிதாவை நோக்கித் தம்மை மகிமைப்படுத்தவும், ௬. அப்போஸ்தலர்களை, ௰௧ ஒருமையிலும், ௰௭. சத்தியத்திலும் காக்கவும், ௨௰. அவர்களோடே மற்றெல்லா விசுவாசிகளையும் தம்முடனேகூட மோட்சத்தில் மகிமைப்படுத்தவும் வேண்டிக்கொண்டது.

௧ இவைகளை இயேசுவானவர் சொன்ன பின்பு,
அவர் தம்முடைய கண்களை வானத்திற்கு நேராக
௨ உயர்த்தித் திருவுளம் பற்றினதாவது:-[1] பிதாவே,
நேரம் வந்தது; [2]நீர் உம்முடைய குமாரனுக்குக்
கொடுத்த யாவருக்கும் அவன் நித்திய சீவனைக்
கொடுக்கும்பொருட்டாய், [3]மனிதர் யாவர்மே
லும் அவனுக்கு அதிகாரம் கொடுத்தபடியே, உம்
முடைய குமாரன் உம்முடைய மகிமையை
விளக்கும்படிக்கு நீர் அவனை மகிமைப்படுத்து
௩ வீராக.—[4]ஒன்றான மெய்த்தேவனாகிய உம்மை
யும் நீர் [5]அனுப்பின இயேசுக்கிறிஸ்துவையும்
௪ [6]அறிந்துகொள்ளுகிறதே நித்திய சீவன்.—[7]பூமி
யிலே நான் உம்முடைய மகிமையை விளக்கி
னேன், [8]நான் செய்யும்படிக்கு நீர் கொடுத்த கிரி
௫ யையை [9]முடித்தேன்.-இப்பொழுது பிதாவே,
உலகம் உண்டாகிறதற்குமுன்னே [10]உம்மிடத்
தில் எனக்கு உண்டாயிருந்த உம்முடைய மகி
மையினாலே என்னை மகிமைப்படுத்தும்.
௬ நீர் [11]உலகத்தாரில் எடுத்து எனக்குக் கொ
டுத்த மனிதருக்கு [12]உம்முடைய நாமத்தை வெ
ளிப்படுத்தினேன்; அவர்கள் உம்முடையவர்க
ளாய் இருந்தார்கள்; அவர்களை எனக்கு ஒப்புக்
கொடுத்தீர்; அவர்கள் உம்முடைய வசனத்
௭ தைக் கைக்கொண்டிருக்கிறார்கள்.-நீர் எனக்குக்
கொடுத்த யாவும் உம்மாலே உண்டாயின என்று
அவர்கள் இப்பொழுது அறிந்துகொண்டார்
௮ கள்.—அல்லாமலும், [13]நீர் எனக்குக் கொடுத்த
வசனங்களை நான் அவர்களுக்குக் கொடுத்தேன்;
[14]அவர்கள் அவைகளை ஏற்றுக்கொண்டு, என்னை
உம்மிடத்திலிருந்து புறப்பட்டு வந்தவன்
என்று மெய்யாய் அறிந்து, நீர் என்னை அனுப்பி
௯ னீர் என்று விசுவாசித்திருக்கிறார்கள்.—நான்
அவர்களுக்காக வேண்டிக்கொள்ளுகிறேன்;
[15]உலகத்தாருக்காக அல்ல, நீர் எனக்குக் கொடுத்
தவர்கள் உம்முடையவர்களானபடியால் அவர்க
௰ ளுக்காக வேண்டிக்கொள்ளுகிறேன்.—என்னு
டைய யாவும் உம்முடையவைகள் [16]உம்மு
டையவைகள் என்னுடையவைகளாயிருக்கின்
றன; என்னுடைய மகிமை அவர்களுக்குள்ளே
௰௧ விளங்கியிருக்கின்றது.—[17]நான் உலகத்தில்
இனி இரேன்; அவர்கள் உலகத்திலே இருப்
பார்கள். நான் உம்மிடத்திற்கு வருகிறேன்;
பரிசுத்தமுள்ள பிதாவே, [18]நீர் எனக்குக் கொ
டுத்தவர்கள் [19]நம்மைப்போல [20]ஒன்றாயிருக்கும்
படிக்கு, நீர் அவர்களை உம்முடைய நாமத்திலே
காத்துக்கொள்ளும்.—இவ்வுலகத்திலே நான் ௰௨
அவர்களுடனேகூட இருக்கையில், [21]அவர்
களை உம்முடைய நாமத்திலே காத்துக்கொண்
டேன்; நீர் எனக்குக் கொடுத்தவர்களைக் காத்
துக்கொண்டு வந்தேன்; [22]வேதவாக்கியம் நிறை
வேறத்தக்கதாக, [23]கேட்டின்மகன் கெட்டுப்
போனானே அல்லாமல், [24]அவர்களில் ஒருவனா
யினும் கெட்டுப்போகவில்லை.—இப்பொழுது ௰௩
நான் உம்மிடத்திற்கு வருகிறேன்; இவர்கள்
என்னில் நிறைவாய்ச் சந்தோஷப்படும்படிக்கு
இவ்வுலகத்திலே இவைகளைச் சொல்லுகிறேன்.
[25]நான் உம்முடைய வசனத்தை இவர்களுக் ௰௪
குக் கொடுத்தேன்; மேலும் [26]நான் இவ்வுலகத்
தின் தன்மை இல்லாதவனாயிருக்கிறதுபோல,
அவர்களும் இவ்வுலகத்தின் தன்மை இல்லாத
வர்களாய் இருக்கிறபடியினாலே [27]உலகத்தார்
அவர்களைப் பகைக்கிறார்கள்.-நீர் அவர்களை உல ௰௫
கத்திலிருந்து எடுத்துக்கொள்ளும்படி அல்ல,
[28]அவர்களைப் பொல்லாங்கிலிருந்து காப்பாற்
றும்படி வேண்டிக்கொள்ளுகிறேன்.—[29]நான் ௰௬
உலகத்தான் அல்லாதவனாயிருக்கிறதுபோல, அ
வர்களும் இவ்வுலகத்தார் அல்ல.—[30]உம்முடைய ௰௭
சத்தியத்தினாலே அவர்களைப் பிரதிஷ்டையாக்
கும், [31]உம்முடைய வசனமே சத்தியம்.—[32]நீர் ௰௮
என்னை இவ்வுலகத்தில் அனுப்பினதுபோல, நா
னும் அவர்களை உலகத்தில் அனுப்புகிறேன்.—
[33]அல்லாமலும் அவர்களும் சத்தியமாய்ப் * பிர ௰௯
திஷ்டையாக்கப்பட்டவர்களாய் இருக்கும்ப
டிக்கு அவர்களுக்காக நான் என்னைத்தானே
பிரதிஷ்டையாக்குகிறேன்.
அல்லாமலும் நான் இவர்களுக்காகமாத்திரம் ௨௰
அல்ல, இவர்களுடைய போதிப்பினாலே என்
னிடத்தில் விசுவாசமாகும்பேர்களுக்காகவும்,
[34]எல்லாரும் ஒன்றாயிருக்கும்படிக்கு வேண்டிக்
கொள்ளுகிறேன்.—ஆ பிதாவே, நீர் என்னை அ ௨௰௧
னுப்பினதை உலகத்தார் விசுவாசிக்கத்தக்கதாக,
[35]நீர் என்னிலேயும் நான் உம்மிலேயும் இருக்கி
றதுபோல, அவர்களும் நம்மிலே ஒன்றாயிருக்
கும்படிக்கே (வேண்டிக்கொள்ளுகிறேன்).—
அல்லாமலும் [36]நாம் ஒன்றாயிருக்கிறதுபோல ௨௰௨

1 யோவா. ௰௨. ௨௩: ௰௩. ௩௨. ௩௯: ௯.௧: ௰௯ ௩௰.—9 யோவா. 2 தானி. ௭. ௰௪. மத். ௰௧. ௨௭: ௰௪. ௩௩: ௰௫.௰.—10 யோவா.௧. ௨௮ ௰௮. யோவா. ௩. ௩௫: ௫. ௧, ௨: ௰. ௩௰: ௰௪. ௯ பிலி.௨ ௨௭. ௧ கொரி. ௰௫ ௨௫, ௨௭. ௯. கொலோ.௧. ௰௫,௰௭. எபி. பிலி.௨.௰. எபி ௨. ௮.-3 ௧,௯, ௧.௩,௰.—11 ௨௯.வச. சங்.௨௨. ௨௪. வச. யோவா. ௯. ௩௭. ௨௨.-12 ௨ ௯,௰௧ வச. யோவா. 4 யோவா ௩ ௩௪: ௫ ௩௬,௩௭: ௩. ௯. ௩௭, ௩௯: ௰. ௨௯: ௰௫. ௰௯. ௨௯, ௫௭: ௭.௨௯: ௰.௩௯: ௰௧. 13 யோவா.௮ ௨௮: ௰௨.௪௯: ௰௪. ௪௨.-5 ௧ கொரி ௮.௪ ௧ தெச. ௰.—14 ௨௫. வச. யோவா ௰௯. ௧ ௯.—6 ௭௪. ௫௩. ௩. ௭௩. ௨௭, ௩௰.—15 ௧ யோ. ௫. ௰௯. ௯. ௨௪.—7 யோவா. ௰௩. ௩௧: 16 யோவா. ௰௯. ௰௫.—17 யோவா. ௰௪.௰௩.—8 யோவா. ௪ ௩௪: ௫. ௰௩.௧:௰௩.௨௮.—18 ௧ பே.௧ ௫. ௯௯ தா. ௧.—19 ௨௧. வச. ௭ பே. ௫. ௨௯. ௧ பே. ௧. ௨௨. 20 யோவா. ௰. ௩௰.—21 யோவா.௯. 31 ௨ சாமு.௭ ௨,௮. சங். ௩௯. ௬௪௨. ௩௯: ௰. ௨௮. எபி. ௨. ௰௩. ௯௫ யோவா. ௮. ௪௪. 22 சங். ௩௯. ௮. அப். ௧. ௨௰. 32 யோவா.௨௰.௨௧.—33 ௧ கொரி. 23 யோவா. ௯. ௭௰: ௰௩. ௰௮. ௧.௨,௩௰. ௧ தெச ௪.௭ எபி ௰௰. 24 யோவா. ௰௮.௯. ௧ யோ.௨.௰௯. 34 ௩௯.௨௨,௨௩ வச. யோவா ௰௭. 25 ௮. வச.—26 யோவா ௮ ௨௩. ௨ரோ. ௰௨ ௫. கலா. ௩. ௨௮. ௰௫. வச.—27 யோவா. ௰௫ ௰௮. 35 யோவா. ௰. ௩௮: ௰௪. ௰௯. ௧ யோ. ௩. ௰௩ —28 மத். ௯. 36 யோவா. ௰௪.௨௰. ௧ யோ. ௧.௩: ௰௫. கலா. ௧. ௪. ௨ தெச. ௩௩. ௩. ௨௪. ௧ யோ. ௫ ௰௮.—29 ௰௪. வச. 30 யோவா. ௰௫. ௩. அப். ௰௫. ௯.

* அல்லது சத்தியத்தினாலே பரிசுத்தமாக்கப்பட்டவர்களாய்.

அவர்களும் ஒன்றுயிருக்கும்படிக்கு, நீர் எனக்
குக் கொடுத்த மகிமையை நான் அவர்களுக்குக்
௨௩ கொடுத்தேன்.—[1]அவர்கள் ஒருமைப்பாட்டிலே
நிறைந்தவர்களாயிருக்கும்படிக்கும், நீர் என்னை
அனுப்பினதையும் நீர் என்னிடத்தில் அன்பு
கூருகிறதுபோல அவர்களிடத்திலும் அன்புகூ
ருகிறதையும் உலகத்தார் அறியும்படிக்கும், நான்
அவர்களிலேயும் நீர் என்னிலேயும் இருக்கவே
ண்டும்.

௨௪ [2]பிதாவே, [3]உலகம் தோன்றின காலத்திற்கு
முன்னே, நீர் என்னிடத்தில் அன்புகூர்ந்தபடி
யினாலே, எனக்குக் கொடுத்த என்னுடைய மகி
மையை நீர் எனக்குக் கொடுத்தவர்கள் காணும்
படிக்கு, நான் இருக்கும் இடம் எங்கேயோ, அங்
கே அவர்களும் என்னோடேகூட இருக்கவேண்
௨௫ டும் என்று விரும்புகிறேன். — நீதியுள்ள பிதா
வே, [4]உலகத்தார் உம்மை அறியவில்லை; [5]நான்
உம்மை அறிந்திருக்கிறேன் அல்லாமலும் [6]நீர்
என்னை அனுப்பினதை இவர்கள் அறிந்திருக்கி
௨௬ றார்கள்.—அன்றியும் [7]நீர் என்னிடத்தில் வைத்தி
ருக்கிற அன்பு இவர்களிலே இருக்கும்படிக்கும்,
நான் இவர்களிலே இருக்கும்படிக்கும், [8]உம்மு
டைய நாமத்தை இவர்களுக்குத் தெரியப்படுத்
தினேன்; பின்னும் அப்படியே தெரியப்படுத்
துவேன் என்றார்.

## ௰௮. அதிகாரம்.

*௧. யூதா இயேசுவைக் காட்டிக்கொடுத்தது. ௬. சேவகர் தரையில் விழுந்தது. ௰. பேதுரு மல்குவின் காதை வெட்டினது. ௰௨. அன்னா, காய்பா என்பவர்களுக்குமுன்பாக இயேசு கொண்டுபோகப்பட்டது. ௰௫. பேதுரு மறுதலித்தது. ௰௯. இயேசுவானவர் காய்பாவுக்குமுன்பாகச் சோதிக்கப்பட்டது ௨௮ அவர் பிலாத்துக்குமுன்பாக குற்றஞ்சாற்றப்பட்டது. ௩௬. தாம தம்முடைய இராச்சியத்தைக்குறித்துச் சொல்லியது. ௪௦. யூதர்கள் பரபாவை விடுதலையாக்கும்படி கேட்டுக்கொண்டது.*

௧ இயேசுவானவர் இவைகளைச் சொன்னபின்பு
[9]அவர் தம்முடைய சீஷருடனேகூடக் [10]கீதி
ரோன் என்னும் ஆற்றுக்கு அப்புறம் போனார்;
அங்கே ஒரு தோட்டம் இருந்தது; அதிலே அவ
ரும் அவருடைய சீஷரும் பிரவேசித்தார்கள்.—
௨ [11]இயேசுவானவர் தம்முடைய சீஷருடனே
கூட அடிக்கடி. அங்கே கூடிவந்திருந்தபடியி
னாலே, அவரைக் காட்டிக்கொடுத்த யூதாவும்
௩ அந்த இடத்தை அறிந்தான். — [12]ஆதலால் யூதா
வானவன் போர்ச்சேவகரின் கூட்டத்தையும்
பிரதான ஆசாரியர் பரிசேயர் என்பவர்களால்
அனுப்பப்பட்ட ஊழியக்காரரையும் கூட்டிக்
கொண்டு, பந்தங்களோடும் தீவத்திகளோடும்
ஆயுதங்களோடும் அவ்விடத்திற்குப் போனான்.
௪ அப்பொழுது இயேசுவானவர் தமதுமேல்
வரும் யாவையும் அறிந்து புறப்பட்டு அவர்களை
நோக்கி, யாரைத் தேடுகிறீர்கள் என்றார்.—அதற்கு ௫
அவர்கள் நாசரேத்தூரானாகிய இயேசுவைத் தே
டுகிறோம் என்றார்கள்; இயேசுவானவர், நானே
அவன் என்றார்; அவரைக் காட்டிக்கொடுத்த
யூதாவும் அவர்களுடனேகூட நின்றான். — நா ௬
னே அவன் என்று அவர் சொன்னபொழுது, அ
வர்கள் பின்னிட்டுத் தரையிலே விழுந்தார்கள்.—
பின்பு அவர் மறுபடியும் அவர்களை நோக்கி, யா ௭
ரைத் தேடுகிறீர்கள் என்று கேட்டார்; நாசரேத்
தூரானாகிய இயேசுவைத் தேடுகிறோம் என்றார்
கள்.—இயேசுவானவர் சொன்னது: நானே அ ௮
வன் என்று உங்களுடனே சொன்னேனே, நீங்
கள் என்னைத் தேடினீர்களானால் இவர்களை விட்
டுவிடுங்கள் என்றார். — அதினாலே, [13]நீர் எனக் ௯
குக் கொடுத்தவர்களில் ஒருவனையாகிலும் நான்
இழக்கவில்லை என்று அவர் சொல்லிய வசனம்
நிறைவேறிற்று.

[14]அப்பொழுது சீமோன்பேதுரு தன்னிடத் ௰
தில் இருக்கிற கத்தியை உருவிப் பிரதான ஆசா
ரியனுடைய வேலைக்காரனுடைய வலதுகாதற
வெட்டினான், அந்த வேலைக்காரனுக்கு மல்குஸ்
என்று பேர். — இயேசுவானவர் பேதுருவை ௰௧
நோக்கி, கத்தியை உறையிலே போடு, [15]பிதா
எனக்குக் கொடுத்த பாத்திரத்தில் நான் பானம்
பண்ணமல் இருப்பேனா என்றார்

பின்பு போர்ச்சேவகரும், ஆயிரம் சேனைக்குத் ௰௨
தலைவனும், யூதர்களுடைய ஊழியக்காரரும்
இயேசுவைப் பிடித்து, அவரைக் கட்டி,—[16]முத ௰௩
லாவது அன்னா என்பவனிடத்தில் [17]கொண்டு
போனார்கள்; அந்த அன்னா அவ்வருஷத்துப்
பிரதான ஆசாரியனாகிய காய்பா என்பவனுக்கு
மாமனாயிருந்தான்.*—[18]ஒரே மனிதன் சனங்க ௰௪
ளுக்குப் பதிலாக மடிந்துபோனால், நலமாயிருக்
கும் என்று யூதருக்கு ஆலோசனை சொன்னவன்
அந்தக் காய்பாவே.

[19]சீமோன்பேதுருவும் வேறொரு சீஷனும் இ ௰௫
யேசுவுக்குப் பின்சென்றார்கள்; அல்லாமலும்
அந்தச் சீஷன் பிரதான ஆசாரியனுக்கு அறிமுக
முள்ளவனாய், இயேசுவுடனேகூடப் பிரதான
ஆசாரியனுடைய மாளிகைக்குள் பிரவேசித்
தான். — [20]பேதுரு வெளிவாசற்படியிலே நின் ௰௬
றான். ஆதலால் பிரதான ஆசாரியனுக்கு அறிமு
கமுள்ள அந்த மற்றச் சீஷன் வெளியே போய்,
வாசலைக் காக்கிறவளுடனே சொல்லி, பேதுரு
வை உள்ளே அழைத்துக்கொண்டான். — அப் ௰௭
பொழுது வாசலைக் காக்கிற வேலைக்காரி பேது
ருவைநோக்கி, நீயும் அந்த மனிதனுடைய சீஷ
ரில் ஒருவன் அல்லவா என்றாள்; அவன், நான்

1 கொலோ. ௧. ௰௪. 2 யோவா. ௰௨. ௨௬: ௰௪. ௩. ௧ தெச. ௪. ௧௭.—3 ௫ வச.—4 யோவா. ௰௫. ௨௧: ௰௬. ௩.—5 யோவா. ௭. ௨௯: அ. ௫௫: ௰. ௰௫.—6 அ. வச. யோவா. ௰௬. ௨௭.—7 யோவா. ௰௫. ௯.—8 ௬. வச. யோவா. ௰௫. ௰௫.—9 மத். ௨௬. ௩௬. மாற். ௰௪. ௩௨. லூக். ௨௨. ௩௯.—10 ௨ சாமு. ௰௫. ௨௩.—11 லூக். ௨௧. ௩௭: ௨௨. ௩௯.—12 மத். ௨௬. ௪௭: மாற். ௰௪. ௪௩. லூக். ௨௨. ௪௭. அப். ௧. ௰௬.

13 யோவா. ௰௭. 19 மத். ௨௬ ௫௮. மாற். ௰௪. ௫௪. லூக். ௨௨. ௫௪.—14 மத். ௨௬. ௫௧. மாற். ௰௪. ௪௭. லூக். ௨௨. ௫௦. 20 மத். ௨௬. ௬௯. மாற். ௰௪. ௬௬. 15 மத். ௨௦. ௨௨: ௨௬ ௩௯, ௪௨. லூக் ௨௨. ௪௨. 16 லூக் ௩. ௨.—17 மத். ௨௬. ௫௭. 18 யோவா ௰௧. ௫௦.

* அன்னா கிறிஸ்துவைக் கட்டப்பட்டவராக பிரதான ஆசாரியனாகிய காய்பாவண்டைக்கு அனுப்பினான்; ௨௪ வசனம்.

௰௮ அப்படிப்பட்டவன் அல்ல என்றான்.—குளிர்ச்
சியான காலமானபடியினாலே வேலைக்காரரும்
ஊழியக்காரரும் நெருப்பு உண்டாக்கி நின்று
குளிர்காய்ந்தார்கள்; அவர்களுடனே பேதுரு
வும் நின்று குளிர்காய்ந்தான்.
௰௯ பிரதான ஆசாரியன் இயேசுவானவருடைய
சீஷரையும் போதகத்தையுங்குறித்து அவரிடத்
௨௰ தில் வினாவினான். — அவனுடனே இயேசுவா
னவர் சொன்னதாவது: [1]அந்தரங்கத்திலே நான்
ஒன்றும் பேசாமல் வெளியரங்கமாய் லோகத்து
டனே பேசினேன்; செபஆலயத்திலேயும், யூதர்
கள் எல்லாரும் கூடிவருகிற தேவாலயத்திலே
யும் எப்பொழுதும் உபதேசம்பண்ணினேன்.—
௨௧ என்னத்திற்கு நீர் என்னிடத்தில் விசாரிக்கி
றீர்? எனக்குச் செவிகொடுத்தவர்களுக்கு நான்
சொல்லியவைகளைக்குறித்து அவர்களிடத்திலே
விசாரிப்பீராக; நான் பேசினவைகளை அறிந்தி
௨௨ ருக்கிறார்களே என்றார்.—இப்படி அவர் சொன்
னபொழுது, சமீபமாய் நின்ற ஊழியக்காரரில்
ஒருவன் பிரதான ஆசாரியனுக்கு இப்படி மா
றுத்தரவுசொல்லலாமா என்று சொல்லி, [2]இயேசு
வானவரை ஒரு அடி அடித்தான்; *அவனுடனே
௨௩ இயேசுவானவர் சொன்னது:—நான் தகாதவித
மாய்ச் சொன்னேனானால், தகாததாய் இருக்கிற
தை ஒப்புவி, நான் தகுதியாய்ச் சொல்லியிருக்க
என்னத்தினாலே என்னை அடிக்கிறாய் என்றார்.—
௨௪ [3]அன்னா என்பவன் கட்டப்பட்டவரான அவ
ரைப் பிரதான ஆசாரியனான காய்பாவினிடத்
திற்கு அனுப்பியிருந்தான்.
௨௫ சீமோன்பேதுரு நின்று குளிர்காய்ந்தான்;
[4]அப்பொழுது சிலர் அவனை நோக்கி, நீயும் அவ
னுடைய சீஷரில் ஒருவன் அல்லவா என்றார்
கள்; அதற்கு அவன், நான் அல்லவென்று மறு
௨௬ தலித்தான்.—பின்பு பிரதான ஆசாரியனுடைய
வேலைக்காரரில் ஒருவனுமாய்ப் பேதுருவினாலே
காதறவெட்டப்பட்டவனுக்கு இனத்தானுமாய்
இருந்தவன் அவனை நோக்கி, நான் உன்னை அ
வரோடேகூடத் தோட்டத்திலே காணவில்லையா
௨௭ என்றான்.—அப்பொழுது பேதுரு மறுபடியும்
மறுதலித்தான்; [5]உடனே சேவல் கூவிற்று.
௨௮ விடியற்காலமானபொழுது அவர்கள் காய்
பாவினிடத்திலிருந்து [6]இயேசுவானவரைப் பெ
ரியதுரையின் நியாயஸ்தலத்திற்குக்† கொண்டு
போனார்கள்; [7]அவர்கள் அசுசிப்படாமல் பஸ்
காவைப் புசிக்கும்படிக்கு, தாங்கள் அந்த நியா
௨௯ யஸ்தலத்திற்குள் பிரவேசிக்கவில்லை.—ஆதலால்
பிலாத்தென்னும் துரை அவர்களிடத்திற்குப்
போய், இந்த மனிதன்மேல் என்ன குற்றம் சாற்
௩௰ றுகிறீர்கள் என்றான்.—அவனுடனே அவர்கள்
சொன்னது: இவன் பொல்லாங்கு செய்தவன்
அல்லாதவனாயிருந்தால், இவனை உமக்கு ஒப்
புக்கொடுக்கமாட்டோம் என்றார்கள்.—ஆதலால் ௩௧
பிலாத்தென்பவன் அவர்களை நோக்கி, இவனை
நீங்களே கொண்டுபோய், உங்கள் நியாயசாஸ்
திரத்தின்படி இவனுக்கு நியாயத்தீர்ப்புக் சொ
டுங்கள் என்றான்; அதற்கு யூதர்கள் சொன்னது:
ஒருவனுக்கு மரணத்தைக் கொடுக்கிறதற்கு எங்
களிடத்தில் அதிகாரம் இல்லையே என்றார்கள்.—
[8]இயேசுவானவர் தமக்கு மரணம்வரும் வகை ௩௨
யைக்குறித்துச் சொன்ன வசனம் நிறைவேறத்
தக்கதாக (அப்படிப் பேசினார்கள்).
[9]அப்பொழுது பிலாத்தானவன் மறுபடியும் ௩௩
நியாயஸ்தலத்திற்குள் பிரவேசித்து இயேசுவை
அழைத்து, நீ யூதருடைய இராசனா என்று கேட்
டான்.—அவனுடனே இயேசுவானவர் சொன் ௩௪
னது: இதை நீர் உம்மாலே சொல்லுகிறீரோ?
அல்லது மற்றவர்கள் என்னைக்குறித்து இதை
உமக்குச் சொன்னார்களோ என்றார்.—பிலாத்து ௩௫
மறுமொழியாகச் சொன்னது: நான் யூதனா? உன்
னுடைய தேசத்தாரும் பிரதான ஆசாரியரும்
உன்னை எனக்கு ஒப்புக்கொடுத்தார்கள், என்ன
செய்தாய் என்றான்.—[10]அதற்கு இயேசுவானவர் ௩௬
சொன்னது: [11]என் இராச்சியம் இவ்வுலகத்தின்
தன்மையுள்ளதல்ல. என் இராச்சியம் இவ்வுலகத்
தின் தன்மையுள்ளதானால், நான் யூதர் கையில்
அகப்படாதபடிக்கு, என் ஊழியக்காரர் போ
ராட்டம்செய்வார்கள்; என் இராச்சியம் இம்மை
யின் தன்மையுடையதல்ல என்றார்.—அப்பொ ௩௭
ழுது பிலாத்தானவன் அவரை நோக்கி, ஆதலால்
நீ இராசன் அல்லவா என்றான்; இயேசுவானவர்
சொன்னது: நீர் சொல்லுகிறபடி நான் இராசன்
தான்; சத்தியத்தைக்குறித்துச் சாட்சிகொடுக்கும்
படிக்கு நான் பிறந்தேன், அதற்காகவே இவ்வுல
கத்திற்கு வந்தேன்; [12]சத்தியத்தின் தன்மையுள்ள
வன் எவனோ, அவன் எனக்குச் செவிகொடுக்
கிறான் என்றார்.
அதற்குப் பிலாத்து, சத்தியம் ஏது என்று ௩௮
சொல்லி, மறுபடியும் யூதரிடத்திற்குப் போய்,
அவர்களை நோக்கி, [13]நான் அவனிடத்தில் ஒரு
குற்றமும் காணேன்.—[14]பஸ்காப் பண்டிகையி ௩௯
லே நான் உங்களுக்காக ஒருவனை விடுதலைபண்
ணுகிறது வழக்கமாயிருக்கிறதே. ஆகையால்
நான் யூதருடைய இராசனை உங்களுக்காக விடு
தலைபண்ண உங்களுக்கு விருப்பமுண்டா என்
றான்.—[15]அப்பொழுது அவர்களெல்லாரும் இ ௪௰
வனை அல்ல, பரபாவை விடுதலைபண்ணவேண்
டும் என்று கூப்பிட்டார்கள்; [16]பரபா என்பவன்
கள்ளனாயிருந்தான்.

1 மத். ௨௬ ௫௫. லூக் ௪. ௧௫. ௰௯ —5 மத். ௨௬. ௭௪. மாற். யோவா. ௭. ௰௪, ௨௬ ௨௮: ௮ ௨. ௰௪. ௭௨. லூக். ௨௨. ௬௰. யோவா. 2 எரே. ௰௰ ௨. அப். ௨௩. ௨. ௰௩. ௨௮ — 6 மத். ௨௭ ௨. மாற். 3 மத். ௨௬. ௫௭. —4 மத் ௨௬ ௬௯, ௰௫. ௧. லூக். ௨௩. ௧. அப். ௩. ௰௩ ௭௧. மாற். ௰௪. ௬௯. லூக். ௨௨. ௫௮. 7 அப். ௰. ௨௮: ௰௧ ௩. —8 மத். ௨௰. ௰௯. - யோவா. ௰௨. ௩௨, ௩௩. ௩. ௩.—13 மத். ௨௭. ௨௪. லூக். 9 மத். ௨௭ ௰௧ —10 ௧ தீமோ. ௬. ௰௩. ௨௩. ௪. யோவா. ௰௯. ௪, ௬ 11 தானி. ௨. ௪௪: ௭ ௰௪. லூக். ௰௨. 14 மத். ௨௭ ௰௫. மாற். ௰௫. ௬ லூக். ௰௪. யோவா. ௬ ௰௫: ௮. ௰௫. ௨௩. ௰௭. —15 அப். ௩. ௰௪. 12 யோவா. ௮. ௪௭. ௧ யோவா. ௰௯: 16 லூக். ௨௩. ௰௯.

* அல்லது தடியினால் அடித்தான் —† அல்லது பிலாத்தவின் வீட்டுக்கு; மத். ௨௭. ௨௭.

# ௰௯. அதிகாரம்.

௧. கிறிஸ்து வாரினால் அடிக்கவும், முள்முடி தரிக்கவும், கையினால் அறையவும்பட்டது. ௪. பிலாத்து அவரை விடுதலையாக்க நினைத்தும், யூதர்களுடைய அமளியினாலே சிலுவையில் அறையும்படி அவரை ஒப்புவித்தது. ௨௩. அவர்கள் அவருடைய வஸ்திரங்களுக்காகச் சீட்டுப்போட்டது. ௨௬. அவர் தம்முடைய தாயாரை யோவானிடத்தில் ஒப்புவித்தது, ௨௮. மரணமடைந்தது. ௩௪. அவருடைய விலா ஈட்டியினால் குத்தப்பட்டது. ௩௮. யோசேப்பும் நிக்கோதேமும் அவரை அடக்கம்பண்ணினது.

௧ அப்பொழுது [1]பிலாத்தென்பவன் இயேசு
௨ வைப் பிடித்து வாரினால் அடிப்பித்தான்.—அல்
லாமலும் போர்ச்சேவகர் முள்ளுக்களினால் ஒரு
முடியைப் பின்னி அதை அவருடைய சிரசின்
மேல் வைத்து, ஒரு சிவப்பான அங்கியை அவ
௩ ருக்குத் தரிப்பித்து,—யூதருடைய இராசாவே,
வாழ்க என்று சொல்லி, அவருடைய கன்னத்
௪ தில் அடித்தார்கள்.— பிலாத்தானவன் மறுபடி
யும் வெளியே போய் அவர்களை நோக்கி, இதோ,
[2]இவனிடத்தில் ஒரு குற்றத்தையும் நான் காணு
மலிருக்கிறதை நீங்கள் அறியும்படிக்கு இவனை
உங்களிடத்தில் கொண்டுவருகிறேன் என்
௫ றான்.—உடனே முள்முடியும் சிவப்பான அங்
கியும் தரிக்கப்பட்டவராய் இயேசுவானவர்
வெளியே வந்தார்; அப்பொழுது பிலாத்து அவர்
களை நோக்கி, இந்த மனிதனைப் பாருங்கள் என்
௬ றான்.—[3]பிரதான ஆசாரியரும் ஊழியக்காரரும்
அவரைக் கண்டபொழுது, இவனைச் சிலுவை
மரத்திலே அறையும், இவனைச் சிலுவைமரத்தி
லே அறையும் என்று கூப்பிட்டார்கள்; அதற்
குப் பிலாத்து சொன்னது: இவனிடத்தில் ஒரு
குற்றத்தையும் காணவில்லையே; ஆகையால் நீங்
கள் இவனைக் கொண்டுபோய்ச் சிலுவைமரத்
௭ தில் அறையுங்கள் என்றான்.—யூதர்கள் மறுமொ
ழியாகச் சொன்னது: [4]எங்களுக்கு ஒரு நியாயப்
பிரமாணம் உண்டு; இவன் [5]தன்னைப் பராபர
னுடைய குமாரனென்று சொன்னபடியினாலே,
அந்த நியாயப்பிரமாணத்தின்படியே இவன் சாக
வேண்டும் என்றார்கள்.

௮ இந்த வசனத்தைப் பிலாத்து கேட்டபொழுது
அதிகமாய்ப் பயந்து, மறுபடியும் நியாயஸ்தலத்
௯ திற்குள்ளே போய்,-இயேசுவானவரை நோக்கி,
நீ எவ்விடத்தான் என்றான்; [6]அதற்கு இயேசு
௰ வானவர் மாறுத்தரம் சொல்லவில்லை.—ஆதலால்
பிலாத்து அவரை நோக்கி, நீ எனக்கு மறுமொழி
சொல்லுகிறதில்லையா? உன்னைச் சிலுவைமரத்
தில் அறையும்படி எனக்கு அதிகாரம் உண்
டென்றும், உன்னை விடுதலைபண்ணும்படியும்
எனக்கு அதிகாரம் உண்டென்றும் நீ அறியா
௰௧ மலா இருக்கிறாய் என்றான்.—இயேசுவானவர்
சொன்னது: இந்த அதிகாரம் உமக்கு உயரத்திலி
ருந்து கொடுக்கப்படாதிருந்ததானால், [7]எனக்கு
விரோதமாய்ச் செய்யும் அதிகாரம் உமக்கு உண்
டாயிருக்கமாட்டாது; ஆனபடியினாலே என்னை
உமக்கு ஒப்புக்கொடுத்தவன் அதிக பாவமுள்ள
வன் என்றார்.

அதுமுதல் பிலாத்தானவன் அவரை விடுதலை ௰௨
பண்ணத் தேடினான்; யூதர்கள் அவனை நோக்கி,
[8]இவனை விடுதலைபண்ணினால் நீ இராயனுக்குச்
சிநேகிதன் அல்ல, [9]தன்னை இராசா என்கிறவன்
எவனோ அவன் இராயனுக்கு விரோதியாய் இ
ருக்கிறான் என்று கூப்பிட்டார்கள்.—[10]அந்நாள் ௰௩
பஸ்காவுக்கு எத்தனமாக்கப்படுகிற நாளுமாய்,
ஏறக்குறைய ஆறாம்மணிநேரமுமாயிருக்க, —
பிலாத்தானவன் இந்த வசனத்தைக் கேட்டபொ ௰௪
ழுது, அவன் இயேசுவை வெளியே அழைத்துப்
போய், தளவரிசைப்படுத்த இடமென்றும், எபி
ரேயு பாஷையிலே கப்பத்தா என்றும் சொல்
லப்பட்ட இடத்திலே நியாயாசனத்தின்மேல்
உளுக்கார்ந்து யூதர்களை நோக்கி, உங்கள் இராசா
வைப் பாருங்கள் என்றான்.-அவர்கள், இவனை ௰௫
அகற்றும் அகற்றும், இவனைச் சிலுவைமரத்தி
லே அறையுமென்று கூப்பிட்டார்கள்; பிலாத்
தானவன் சொன்னது: உங்கள் இராசாவை
நான் சிலுவைமரத்திலே அறையலாமா என்
றான்; அதற்குப் பிரதான ஆசாரியர், [11]இராயனே
அல்லாமல் ஒரு இராசா எங்களுக்கு இல்லை
என்றார்கள். — [12]அப்பொழுது அவரைச் சிலு ௰௬
வைமரத்தில் அறையும்படிக்கு அவன் அவரை
அவர்களுக்கு ஒப்புக்கொடுத்தான்; அந்தப்படி
அவர்கள் இயேசுவானவரைப் பிடித்துக்கொண்
டுபோனார்கள்.

[13]அவர் தம்முடைய சிலுவைமரத்தைச் சுமந்து ௰௭
கொண்டு, எபிரேயு பாஷையிலே [14]கொல்கத்தா
என்று சொல்லப்பட்ட தலையோட்டிடம் என்
னும் இடத்திற்குப் புறப்பட்டுப்போனார். —
அங்கே அவர்கள், நடுவிலே அவரையும் அவரு ௰௮
டனே கூட இருபக்கங்களிலே வேறிரண்டுபே
ரையும் சிலுவைமரங்களில் அறைந்தார்கள்.

அன்றியும் பிலாத்தானவன் [15]நாசரேத்தூரானா ௰௯
கிய இயேசு யூதருடைய இராசா என்று எபிரேயு
பாஷையிலேயும் கிரேக்கைப் பாஷையிலேயும்
இலத்தீன் பாஷையிலேயும் எழுதி அதைச் சிலு
வைமரத்தின்மேல் சேர்த்தான்.-இயேசுவானவர் ௨௰
சிலுவையில் அறையப்பட்டிருந்த இடம் நக
ரத்திற்குச் சமீபமாய் இருந்தபடியினாலே, யூதர்
களில் அநேகம்பேர் அந்த மேல் எழுத்தை வா
சித்தார்கள்.-அப்பொழுது யூதருடைய பிரதான ௨௧
ஆசாரியர் பிலாத்துவினிடத்திற்குப் போய், யூத
ருடைய இராசா என்று நீர் எழுதாமல் நான்
யூதருடைய இராசா என்று அவன் சொன்னான்
என்றே எழுதவேண்டும் என்றார்கள்.-அதற்குப் ௨௨
பிலாத்து நான் எழுதினது எழுதியாயிற்று என்
றான்.

1 மத். ௨௭. ௰௬: ௨௭.௨௬. மாற். ௰௫.—5 மத்.௨௬.௬௫. யோவா. ௰௫. ௰௫. லூக். ௰௮. ௩௩. ௫. ௰௮: ௬. ௩௩.
2 யோவா. ௰௮. ௩௮. ௩. ௨௪. 6 ஏசா. ௫௩.௭. மத். ௨௭.௰௨,௰௪.
3 அப். ௩. ௰௩.—4 ௩ மோ. ௨௪. 7 லூக். ௨௨. ௫௩. யோவா.௭.௩௰.

8 லூக். ௨௩. ௨.—9 அப். ௰௭. ௭.
10 மத்.௨௭.௬௨.-11 ௧ மோ. ௪௯.௰.
12 மத். ௨௭. ௨௬,௩௩. மாற்.௰௫.௰௫.
லூக்.௨௩.௨௪.—13 மத். ௨௭.௩௩,
௩௩. மாற். ௰௫. ௨௧,௨௨. லூக்.
௨௩. ௨௬, ௩௩.—14 ௪ மோ. ௰௫.
௩௬. எபி.௰௩.௰௨.—15 மத். ௨௭.
௩௭. மாற். ௩௫.௨௬. லூக். ௨௩.௩௮.

௨௩ [1]போர்ச்சேவகர் இயேசுவைச் சிலுவைமரத்தி
லே அறைந்த பின்பு அவருடைய வஸ்திரங்களை
எடுத்து, ஒவ்வொரு சேவகனுக்கு ஒவ்வொரு
பங்கு வரும்படி நாலு பங்காக்கினார்கள்; அங்கி
யையும் எடுத்தார்கள்; அந்த அங்கி தைத்தலில்
லாமல் மேலேதொடங்கி முழுவதும் நெய்யப்
௨௪ பட்டிருந்தபடியால்,*—அவர்கள் இதைக் கிழியா
மல் இதைப் பெற்றுக்கொள்ளுகிறவனை அறியும்
படிக்குச் சீட்டுப்போடக்கடவோம் என்று
தங்களுக்குள்ளே பேசிக்கொண்டார்கள்; [2]என்
வஸ்திரங்களைத் தங்களுக்குள்ளே பங்கிட்டுக்
கொண்டு, என் உடையின்மேல் சீட்டுப்போட்
டார்கள் என்கிற வேதவாக்கியம் நிறைவேறத்தக்
கதாகப் போர்ச்சேவகர் அப்படிச் செய்தார்கள்.
௨௫ [3]அல்லாமலும் இயேசுவின் சிலுவைமரத்தின்
அருகே அவருடைய தாயும், அவளுடைய சகோ
தரியாகிய கிலேயோப்பா† மரியாளும், [4]மகுதல
௨௬ ஊராளாகிய மரியாளும் நின்றார்கள்.—அப்பொ
ழுது இயேசுவானவர் தம்முடைய தாயையும்,
[5]அங்கே நின்ற தமக்கு அன்பான சீஷனையும்
௨௭ கண்டு,—தம்முடைய தாயைநோக்கி, [6]ஸ்திரீயே,
இவனே உன் மகன் என்றார்; பின்பு அந்தச்
சீஷனை நோக்கி, இவளே உன் தாய் என்றார்;
[7]அந்நேரம்முதற்கொண்டு அந்தச் சீஷன் அவ
ளைத் தன்னிடமாய்ச் சேர்த்துக்கொண்டான்.

௨௮ இதின் பின்பு இயேசுவானவர் எல்லாம்
முடிந்து தீர்ந்ததென்று அறிந்து, [8]வேதவாக்கியம்
நிறைவேறத்தக்கதாகத் தாகமாயிருக்கிறேன் என்
௨௯ றார்.—அங்கே காடி நிறைந்த பாத்திரம் வைக்
கப்பட்டிருந்தது; [9]ஆதலால் அவர்கள் கடற்கா
ளானைக் காடியில் தோய்த்து, ஈசோப்புத்தண்
டில் மாட்டி, அவருடைய வாயினிடத்திற்கு
௩௰ நீட்டிக் கொடுத்தார்கள்.—இயேசுவானவர் காடி
யை வாங்கின பின்பு, [10]முடிந்ததென்று சொல்
லித் தலையைச் சாய்த்து, ஆவியை ஒப்புவித்தார்.
௩௧ [11]அந்த நாள் பெரிய ஓய்வுநாளுக்கு ஆயத்த
நாளானபடியினாலே, [12]உடல்கள் அந்த ஓய்வுநா
ளிலே சிலுவைமரங்களில் இராதபடி யூதர்கள்
பிலாத்துவினிடத்தில் போய் அவர்களுடைய
கால் எலும்புகள் முறிக்கப்படும்படிக்கும் உடல்
கள் எடுத்துப்போடப்படும்படிக்கும் அவனிடத்
௩௨ தில் உத்தரவு கேட்டுக்கொண்டார்கள்.—அந்தப்
படி போர்ச்சேவகர் போய், அவருடனேகூடச்
சிலுவைகளில் அறையப்பட்ட முந்தினவனு
டைய கால் எலும்புகளையும் மற்றவனுடைய
௩௩ கால் எலும்புகளையும் முறித்தார்கள்.—அவர்கள்
இயேசுவினிடத்தில் சேர்ந்தபொழுது அவர் மரி
த்ததைக் கண்டு, அவருடைய கால் எலும்புகளை
முறிக்கவில்லை.—போர்ச்சேவகரில் ஒருவன் ஈட் ௩௪
டியினால் அவருடைய விலாவில் குத்தினான்;
[13]உடனே இரத்தமும் சலமும் புறப்பட்டன.
அதைக் கண்டவன் அதைக்குறித்துச் சாட் ௩௫
கொடுக்கிறான்; அவனுடைய சாட்சி மெய்யாய்
இருக்கின்றது; நீங்கள் விசுவாசிக்கும்படிக்கு,
தான் சொல்லுகிறது மெய்யென்று அவன் அறிந்
திருக்கிறான். — அவருடைய [14]எலும்புகளில் ௩௬
ஒன்றும் முறிக்கப்படுவதில்லை என்கிற வேத
வாக்கியம் நிறைவேறத்தக்கதாக இவை நடந்
தன.—அல்லாமலும் [15]தாங்கள் குத்தினவரைப் ௩௭
பார்ப்பார்களென்றும் வேறு வேதவாக்கியம்
சொல்லுகின்றது.
[16]அதற்குப் பின்பு அரிமத்தியா ஊராளுமாய், ௩௮
இயேசுவானவருக்குச் சீஷனாயிருந்தும் [17]யூதர்
களுக்குப் பயப்பட்டதினாலே அதை மறைத்த
வனுமாயிருந்த யோசேப்பென்பவன் இயேசுவி
னுடைய சரீரத்தை எடுத்துக்கொள்ளும்படிக்
குப் பிலாத்துவினிடத்தில் உத்தரவு கேட்டான்;
பிலாத்து உத்தரவு கொடுத்தான். ஆகையால் அ
வன் போய், இயேசுவின் சரீரத்தை எடுத்துக்
கொண்டான். — [18]ஆரம்பத்திலே ஓர் இராத்திரி ௩௯
யில் இயேசுவினிடத்திற்குப் போயிருந்த நிக்
கோதேமு என்பவனும் சேர்ந்து, வெள்ளைப்போ
ளமும் கரியபோளமும் கலந்த ஏறக்குறைய
நூறுராத்தல் பரிமளத்தைக் கொண்டுவந்தான்.—
அவர்கள் இயேசுவின் சரீரத்தை எடுத்துக்கொண் ௪௰
டு, [19]யூதர்கள் சவங்களில் சுகந்த வருக்கமிடுகிற
வழக்கத்தின்படி, அதைச் சுகந்தவருக்கங்களு
டனே கூடச் சேலைகளில் கட்டினார்கள்.—மே ௪௧
லும் அவர் சிலுவையில் அறையப்பட்ட இடத்
திலே ஒரு தோட்டமும், அந்தத் தோட்டத்திலே
ஒருக்காலும் ஒருவரும் வைக்கப்பட்டிராத புதிய
கல்லறையும் இருந்தது.—[20]யூதருடைய ஆயத்த ௪௨
நாளானபடியினாலும் அந்தக் கல்லறை சமீபமா
னபடியினாலும் இயேசுவானவரை [21]அவ்விடத்
திலே வைத்தார்கள்.

## ௨௰. அதிகாரம்.

௧. மரியாளும், ௩. பேதுருவும், யோவானும், அவர் உயிர்த்தெழுந்ததை அறி
யாமல் கல்லறையினிடத்தில் போனது. ௰௧. இயேசு மகுதலவூர் மரியா
ளுக்கும், ௰௯. தம்முடைய சீஷர்களுக்கும் காட்சியானது. ௨௪. தோமா
வின் அவநம்பிக்கையையும் நல்லறிக்கையையும் குறித்துச் சொல்லியது.
௩௰. வேத எழுத்துக்கள் இரட்சண்ணியத்துக்குப் போதுமானவைக
ளென்பது.

[22]பின்பு வாரத்தின் முதலாம் கிழமை காலையி ௧
லே இருட்டிருக்கையில், மகுதல ஊராளாகிய
மரியாள் கல்லறையினிடத்திற்குப் போய், அ
தில் இருந்த கல்லை எடுத்துப்போட்டதைக் கண்
டாள்.—ஆதலால் அவள் ஓடி, சீமோன்பேதுரு ௨

1 மத். ௨௭ ௩௫. மாற். ௰௫ ௨௪. லூக். ௨௩. ௩௪.—2 சங். ௨௨. ௰௮.—3 மத். ௨௭ ௫௫. மாற். ௰௫. ௪௰. லூக். ௨௩. ௪௯.—4 லூக் ௨௪. ௰.—5 யோவா. ௰௩. ௨௩: ௨௰. ௨: ௨௧ ௭, ௨௰, ௨௪ 6 யோவா. ௨. ௪.—7 யோவா. ௧. ௰௧: ௰௬. ௨௭.—8 சங். ௬௯. ௨௧.—9 மத். ௨௭ ௪௮.—10 யோவா. ௰௭. ௪. 11 ௪௨. வச. மாற். ௰௫. ௪௨. 12 உபா. ௨௧ ௨௩.—13 ௧ யோ. ௫. ௬, ௮.—14 ௨ மோ. ௰௨. ௪௬. ௪ மோ. ௯. ௰௨. சங். ௩௪. ௨௰. 19 அப். ௫. ௬.
15 சங். ௨௨. ௰௬, ௰௭. சக. ௰௨. ௰. 20 ௪௧. வச.—21 ஏசா. ௫௩. ௯. வெளி. ௧. ௭.—16 மத். ௨௭ ௫௭. 22 மத். ௨௮. ௧. மாற் ௰௬. ௧. லூக். ௨௪. ௧.
17 யோவா. ௯. ௨௨: ௰௨ ௪௨.
18 யோவா. ௩. ௧, ௨: ௭. ௫௰.
மாற். ௰௫. ௪௨. லூக். ௨௩. ௫௰

* அல்லது தையலில்லாமல் செய்யப்பட்ட.—† அல்லது கிலோப்பா.

வினிடத்திலும் [1]இயேசுவுக்கு அன்பாயிருந்த
மற்றச் சீஷனிடத்திலும் போய், கல்லறையிலி
ருந்த கர்த்தரை எடுத்துக்கொண்டார்கள்; அவரை
வைத்த இடம் எங்களுக்குத் தெரியவில்லை என்
௩ றாள்.—[2] அப்பொழுது பேதுருவும், அந்த மற்றச்
சீஷனும் கல்லறையினிடத்திற்குப் போகும்படி
புறப்பட்டு இருவரும் ஒருமித்து ஓடினார்கள்.-
௪ பேதுருவிலும் அந்த மற்றச் சீஷன் அதிக துரி
தமாய் ஓடி, முந்திக் கல்லறையினிடத்தில் சேர்
௫ ந்து,—குனிந்து நின்று அதற்குள்ளே பார்க்கை
யில், [3]சேலைகள் வைத்திருக்கக் கண்டான்.—
௬ அவன் உள்ளே போகவில்லை; சீமோன்பேதுரு
அவனுக்குப் பின்சென்று போய், கல்லறைக்
௭ குள்ளே பிரவேசித்து,—[4]சேலைகள் வைத்திருக்
கிறதையும், அவருடைய தலையைச் சுற்றியிருந்த
சேலை மற்றச் சேலைகளுடனே வையாமல் தனி
யாய் ஓரிடத்திலே சுருட்டிவைத்திருக்கிறதை
௮ யும் கண்டான்.—அப்பொழுது முந்திக் கல்ல
றையினிடத்திற்குப் போன மற்றச் சீஷனும்
௯ உள்ளே பிரவேசித்துக் கண்டு நம்பினான்.—[5]அ
வர் மரித்தோரிலிருந்து எழுந்திருக்கவேண்டும்
என்கிற வேதவாக்கியத்தை அவர்கள் அதுவ
௰ ரைக்கும் அறிந்துகொள்ளாதிருந்தார்கள்.-பின்பு
அந்தச் சீஷர் தங்களுடைய இடத்திற்குத் திரும்
பினார்கள்.

௧௧ [6]மரியாள் கல்லறையின் அருகான வெளியி
லே அழுதுகொண்டு நின்றாள்; அப்படி அழுது
கொள்ளுகையில், அவள் கல்லறைக்குள்ளே
௧௨ குனிந்து பார்த்து,—இயேசுவின் சரீரம் வைக்
கப்பட்டிருந்த இடத்திலே வெண்மையான உ
டையுள்ளவர்களாய் தலைமாட்டிலே ஒருவனும்
கால்மாட்டிலே ஒருவனுமாக இரண்டு தூதர்கள்
௧௩ உளுக்காந்திருக்கிறதைக் கண்டாள்.-அவர்கள்
அவளை நோக்கி, ஸ்திரியே, என்னத்தினாலே
அழுகிறாய் என்றார்கள்; அதற்கு அவள் சொன்
னது: என் கர்த்தாவை எடுத்துக்கொண்டுபோ
னார்கள்; அவரை வைத்த இடம் எனக்குத் தெரி
யவில்லை; (அதினாலே அழுகிறேன்) என்று
சொல்லிப் பின்னாகத் திரும்புகையில், [7]இயேசு
௧௪ வானவர் நிற்கிறதைக் கண்டாள்.—[8]அவள் அ
வரை இயேசு என்று அறியவில்லை; அப்பொ
௧௫ ழுது இயேசுவானவர் அவளை நோக்கி,—ஸ்திரி
யே, என்னத்தினாலே அழுகிறாய்? யாரைத் தே
டுகிறாய் என்றார்; அவள் அவரைத் தோட்டக்
காரனென்று எண்ணி, அவருடனே சொன்னது:
ஐயா, நீர் அவரை எடுத்துக்கொண்டு போனீரா
னால், அவரை வைத்த இடத்தை எனக்குச்
சொல்லவேண்டும், நான் போய் அவரை எடுத்
௧௬ துக்கொள்ளுவேன் என்றாள். — அப்பொழுது
இயேசுவானவர் மரியாளே என்று அவளுடனே
சொன்னார்; உடனே அவள் திரும்பிக்கொண்டு,
இரபூனி என்று அவருடனே சொன்னாள்; இர
பூனி என்பதற்குப் போதகரே என்று அர்த்த
மாம்.—இயேசுவானவர் சொன்னது: நீ என் ௧௭
னைத் தொடாதிரு, இன்னம் என் பிதாவினிடத்
திற்கு நான் [9]எழுந்துபோகவில்லையே, இப்பொ
ழுது நீ என் சகோதரரிடத்திற்குப் போய், [10]என்
பிதாவினிடத்திற்கும் உங்கள் பிதாவினிடத்திற்
கும் [11]என் தேவனிடத்திற்கும் உங்கள் தேவ
னிடத்திற்கும் எழுந்துபோகிறேன் என்று அவர்
களுடனே சொல் என்றார்.—[12] மகுதல ஊரா ௧௮
ளாகிய மரியாள் போய்த் தான் கர்த்தரைக் கண்
டதையும், அவர் தன்னுடனே சொன்னவைக
ளையும் சீஷருக்கு அறிவித்தாள்.

[13]வாரத்தின் முதல் கிழமையாகிய அன்றைத்தி ௧௯
னம் அஸ்தமனகாலத்திலே சீஷர்கள் யூதர்களுக்
குப் பயப்பட்டதினாலே கதவுகளைப் பூட்டிக்
கூடியிருக்கையில், இயேசுவானவர் தோன்றி
நடுவே நின்று, உங்களுக்குச் சமாதான சவுக்
கியம் உண்டாவதாக என்று சொல்லி,—தம்மு ௨௰
டைய கைகளையும் விலாவையும் அவர்களுக்
குக் காண்பித்தார்; [14]சீஷர் கர்த்தரைக் கண்
டபொழுது சந்தோஷப்பட்டார்கள். — பின்பு ௨௧
இயேசுவானவர் மறுபடியும் அவர்களுடனே
சொன்னது: உங்களுக்குச் சமாதானசவுக்கியம்
உண்டாவதாக; [15]பிதா என்னை அனுப்பினது
போல நானும் உங்களை அனுப்புகிறேன் என்று
சொல்லி,-அவர்கள்மேல் ஊதிப் பின்பு சொன் ௨௨
னதாவது, பரிசுத்த ஆவியைப் பெற்றுக்கொள்
ளுங்கள்.—[16] எவர்களுடைய பாவங்களை மன் ௨௩
னிப்பீர்களோ அவர்களுக்கு அவைகள் மன்
னிக்கப்பட்டிருக்கும்; எவர்களுடைய பாவங்
களை மன்னியாமல் இருப்பீர்களோ அவர்க
ளுக்கு அவைகள் மன்னிக்கப்படாமல் இருக்
கும் என்றார்.

அப்பொழுது இயேசுவானவர் வந்திருந்த ௨௪
காலத்திலே, [17]பன்னிருவரில் ஒருவனாகிய திதி
மு என்னப்பட்ட தோமா அவர்களுடனேகூட
இருக்கவில்லை.-ஆதலால் மற்றச் சீஷர் அவனை ௨௫
நோக்கி. நாங்கள் கர்த்தரைக் கண்டோம் என்
றார்கள்; அதற்கு அவன் சொன்னது: அவரு
டைய கைகளில் ஆணிகள் அடித்திருந்த தழும்
பை நான் கண்டு, அந்தத் தழும்பிலே என் விர
லை வைத்து, அவருடைய விலாவிலே என்
கையை வையாவிட்டால் விசுவாசிக்கமாட்
டேன் என்றான்.

எட்டுநாளுக்குப் பின்பு அவருடைய சீஷர் ௨௬
மறுபடியும் அறைக்குள்ளே இருந்தார்கள், தோ
மாவும் அவர்களுக்குள்ளே இருந்தான்; கதவு
கள் பூட்டப்பட்டிருந்தன, அப்பொழுது இயே

1 யோவா. ௧௩. ௨௩: ௧௯. ௨௬: ௨௧. ௭. ௨௰, ௨௪.—2 லூக். ௨௪. ௧௨. 3 யோவா. ௧௯. ௪௰.—4 யோவா. ௧௧ ௪௪.—5 சங். ௧௬ ௰. அப். ௨. ௨௭—௩௧: ௧௩ ௩௪, ௩௫. 6 மாற். ௧௬. ௫.—7 மத். ௨௮. ௯. மாற். ௧௬. ௯.—8 லூக். ௨௪. ௧௬, ௩௧. யோவா. ௨௧. ௪.—9 சங். ௨௨. ௨௨. மத். ௨௮. ௰. உரோ. ௮. ௨௯. எபி ௨. ௧௧.

10 யோவா. ௧௬. ௨௮.—11 எபே. ௧. ௧௭. யோவா. ௰. ௧௭. ௧௯. ௧௭.—12 மத். ௨௮. ௰. லூக். ௨௪. ௰. ௨ தீமோ. ௨. ௨. எபி. ௧. ௩. ௰.—13 மாற். ௧௬. ௧௪. லூக். ௨௪. ௩௬. 16 மத். ௧௬. ௧௯: ௧௮. ௧௮. ௧௧. ௧ கொரி. ௰௫. ௫. 17 யோவா. ௧௧. ௧௬. 14 யோவா. ௧௬. ௨௨.—15 மத் ௨௮.

சுவானவர் தோன்றி நடுவே நின்று, உங்களுக்
குச் சமாதானசவுக்கியம் உண்டாவதாக என்று
௨௭ சொல்லி,— பின்பு தோமாவை நோக்கி, உன்
விரலை இங்கே நீட்டி என் கைகளைப் பார், மே
லும் [1]உன் கையை நீட்டி என் விலாவிலே வை,
அவிசுவாசியாய் இராமல் விசுவாசியாய் இருப்
௨௮ பாயாக என்றார். — அதற்கு மாறுத்தரமாகத்
தோமா அவரை நோக்கி, என் கர்த்தாவே, என்
௨௯ தேவனே என்றான்.—இயேசுவானவர் சொன்
னது: தோமாவே. நீ என்னைக் கண்டபடியினா
லே விசுவாசித்தாய்; [2]காணாமலிருந்து விசுவா
சிக்கிறவர்கள் பாக்கியவான்கள் என்றார்.

௩௰ அன்றியும் [3]இந்தப் புத்தகத்தில் எழுதப்படாத
அநேக அற்புதங்களையும் இயேசுவானவர் தம்
முடைய சீஷருக்கு முன்பாகச் செய்தார்.—
௩௧ இவைகள் [4]இயேசுவானவர் பராபரனுடைய
குமாரனாகிய கிறிஸ்து என்று நீங்கள் விசுவா
சிப்பதற்கும், [5]விசுவாசித்த பின்பு அவருடைய
நாமத்தினாலே சீவனை அடைவதற்கும் ஏதுவாக
எழுதப்பட்டிருக்கின்றன.

## ௨௧. அதிகாரம்.

க. கிறிஸ்து மறுபடியும் சீஷர்களுக்குத் தரிசனையாகி, அவர்களுக்குப் பிடி
பட்ட ஏராளமான மீன்களினால் அவரை அவர்கள் இன்னாரென்று அறிந்
துகொண்டது. ௰௨. அவர் அவர்களோடே அசனம்பண்ணி, ௰௫.
பேதுருவைத் தம்முடைய ஆட்டுக்குட்டிகளையும் ஆடுகளையும் மேய்க்
கும்படி உறுதியாய்க் கற்பித்தது, ௰௮. அவனுடைய மரணத்தின் விவரத்
தை அவனுக்கு முன்னறிவித்தது. ௨௨. யோவானைக்குறித்துத் தம்மைக்
கேட்ட கேள்விக்கு உத்தரவு சொன்னது. ௨௫. முடிவுரை

௧ அதன் பின்பு இயேசுவானவர் திபேரியாவின்
கடல்கரையிலே சீஷருக்குத் தம்மை மறுபடி
யும் காண்பித்தார்; அங்கே காண்பித்த பிரகார
௨ மாவது:—சீமோன்பேதுருவும், திதிமு என்னப்
பட்ட தோமாவும், [6]கலிலேயா நாட்டிலுள்ள
கானாவூரானாகிய நாத்தான்வேலும், [7]செபேதே
யுவின் குமாரரும், அவருடைய சீஷரில் வேறி
ரண்டுபேரும் கூடியிருக்கும் காலத்திலே, சீமோ
ன்பேதுரு மற்றவர்களை நோக்கி, நான் மீன்பி
டிக்கப் போகிறேன் என்றான்; அவர்கள், நாங்
களும் உன்னுடனேகூட வருகிறோம் என்றார்
௩ கள்.—உடனே அவர்கள் புறப்பட்டுப் போய்ப்
படவேறினார்கள்; அந்த இராத்திரியிலே அவர்
கள் ஒன்றும் பிடிக்கவில்லை.

௪ விடியற்காலமானபொழுது இயேசுவானவர்
கரையிலே நின்றார்; [8]அவரை இயேசுவென்று
௫ சீஷர் அறியாமலிருந்தார்கள். — [9]அப்பொழுது
இயேசுவானவர் அவர்களை நோக்கி, பிள்ளைக
ளே,* போசனம்பண்ணுகிறதற்கு ஏதாகிலும்
உங்களிடத்தில் உண்டா என்றார்; அதற்கு அவர்
௬ கள் ஒன்றும் இல்லை என்றார்கள்.—அவர் சொன்
னது: [10]நீங்கள் படவுக்கு வலதுபுறமாக வலை
யைப் போடவேண்டும், அப்பொழுது உங்க
ளுக்கு அகப்படும் என்றார்; அந்தப்படி அவர்
கள் போட்டு, திரளான மீன்கள் அகப்பட்டதினா
லே அதை இழுக்கமாட்டாதிருந்தார்கள்.—ஆத ௭
லால் [11]இயேசுவுக்கு அன்பாயிருந்த சீஷன் பே
துருவை நோக்கி, அவர் கர்த்தர் என்றான்; அ
வர் கர்த்தரென்று சீமோன்பேதுரு கேட்டவுட
னே, தான் வஸ்திரமில்லாதவனானபடியினாலே
சட்டையைக் கட்டிக்கொண்டு கடலிலே குதித்
தான்.—மற்றச் சீஷர் ஏறக்குறைய இருநூறு ௮
முழம்மாத்திரம் கரைக்குத் தூரத்திலே இருந்த
படியினாலே, மீன்களுடனே வலையை இழுத்
துக்கொண்டு படவினோடே (கரையைச்) சேர்ந்
தார்கள்.—அவர்கள் கரையில் சேர்ந்து இறங்கி ௯
னபொழுது, அக்கினிக்கரிகள் இருக்கிறதையும்,
அதின்மேல் மீன் வைத்திருக்கிறதையும், அப்பத்
தையும் கண்டார்கள்.—பின்பு இயேசுவானவர் ௰
சொன்னது: நீங்கள் இப்பொழுது பிடித்த மீன்
களில் சில கொண்டுவாருங்கள் என்றார்.—அப் ௰௧
பொழுது சீமோன்பேதுரு படவுக்குத் திரும்பி,
நூற்றைம்பத்துமூன்று பெரிய மீன்களால் நிறை
ந்த வலையைக் கரையில் இழுத்தான்; இவ்வளவு
இருந்தும் வலை கிழியவில்லை.

பின்பு இயேசுவானவர் அவர்களை அழைத்து, ௰௨
[12]போசனம்பண்ண வாருங்கள் என்றார்; அப்
பொழுது அவரைக் கர்த்தர் என்று சீஷர் அறிந்
தபடியினாலே, அவர்களில் ஒருவனாயினும் நீர்
யார் என்று கேட்கத் துணியவில்லை.—அன்றி ௰௩
யும் இயேசுவானவர் சேர்ந்து, அப்பத்தையும்
மீனையும் எடுத்து அவர்களுக்குப் பரிமாறினார்.—
இயேசுவானவர் மரித்தோரிலிருந்து எழுந்த ௰௪
பின்பு, [13]தம்முடைய சீஷருக்குக் காட்டின
தரிசனைகளில் இது மூன்றாவது.

அவர்கள் போசனம்பண்ணின பின்பு, இயே ௰௫
சுவானவர் சீமோன் பேதுருவை நோக்கி, யோ
னாவின் குமாரனாகிய சீமோனே, இவர்களிலும்
நீ எனனிடத்தில் அதிகமாய் அன்புகூருகிறாயா
என்றார்; அதற்கு அவன் சொன்னது: ஆண்ட
வரே, நான் உம்மிடத்தில் அன்பாயிருக்கிறதை
நீர் அறிந்திருக்கிறீர் என்றான். அவர் சொன்ன
து: [14]என் ஆட்டுக்குட்டிகளைப் போஷிப்பாயாக
என்றார்.–பின்பு அவர் இரண்டாந்தரம் அவனை ௰௬
நோக்கி, யோனாவின் குமாரனாகிய சீமோனே,
நீ என்னிடத்தில் அன்புகூருகிறாயா என்றார்; அ
தற்கு அவன் சொன்னது: ஆண்டவரே, நான்
உம்மிடத்தில் அன்புகூருகிறதை அறிந்திருக்கி
றீர் என்றான். அவர் சொன்னது: என் ஆடுகளை
மேய்ப்பாயாக என்றார்.—பின்பு அவர் மூன் ௰௭
றாந்தரம் அவனை நோக்கி, யோனாவின் குமார
னாகிய சீமோனே, நீ என்னிடத்தில் அன்புகூ
ருகிறாயா என்றார்; என்னிடத்தில் அன்புகூருகி
றாயா என்று அவர் மூன்றாந்தரம் தன்னுடனே

1 க யோ. ௧. ௧.—2 ௨ கொரி ௫. ௭. ௧ ௰௫, ௰௪: ௫. ௨௪. ௧ பே. ௧. அ, ௧ பே. ௧. அ.—3 யோவா ௨௧. ௯.—6 யோவா ௧. ௪௫. ௨௫—4 லூக் ௧. ௪.—5 யோவா. 7 மத். ௪. ௨௧.—8 யோவா. ௨௰ ௰௪.—9 லூக். ௨௪. ௪௧.—10 லூக். 13 யோவா. ௨௰ ௰௯. ௨௬. ௫ ௪, ௬. ௭.—11 யோவா. ௰௩. 14 அப். ௨௰ ௨௮ ௭பி. ௰௯. ௨௰. ௨௩: ௨௰ ௨.—12 அப். ௰. ௪௧. ௧ பே. ௨ ௨௫: ௫ ௨, ௪.

* அல்லது ஐயன்மாரே.

சொன்னபடியினாலே பேதுரு துக்கமடைந்து,
ஆண்டவரே, [1]நீர் எல்லாவற்றையும் அறிந்திருக்
கிறீர், நான் உம்மிடத்தில் அன்புகூருகிறதை
யும் அறிந்திருக்கிறீர் என்றான்; இயேசுவானவர்
சொன்னது: என் ஆடுகளைப் போஷிப்பாயாக.—
௰௮ அல்லாமலும் [2]நீ இளவயதுள்ளவனாயிருக்கை
யில், நீயே உன் அரையில் கச்சைகட்டிக்கொ
ண்டு, உன் இஷ்டப்படிக்கு நடந்துதிரிந்தாய், நீ
முதிர்ந்த வயதுள்ளவனாயிருக்கும்பொழுது உன்
கைகளை நீட்டுவாய்; மேலும் வேறொருவன் உன்
அரையில் கச்சைகட்டி உனக்கு இஷ்டமில்
லாத இடத்திற்குக் கொண்டுபோவான் என்று
மெய்யாகவே உனக்குச் சொல்லுகிறேன் என்
௰௯ றார்.—அவன் பராபரனுக்குப் புகழுண்டாகத்தக்
கதாக [3]அடையும் மரணவகையைக்குறித்து இப்
படிச் சொன்னார்; அப்படிச் சொன்ன பின்பு,
எனக்குப் பின்சென்று வா என்று அவனுடனே
சொன்னார்.
௨௰ அந்தப்படி பேதுரு (பின்செல்லுகையில்)
திரும்பிப்பார்த்து, [4]இயேசுவுக்கு அன்பாயும்,
இராப்போசனம் பண்ணுகையில் அவருடைய
மார்பிலே சாய்ந்து ஆண்டவரே, உம்மைக் காட்
டிக்கொடுப்பவன் யாவனென்று கேட்டும் இ
ருந்த சீஷனும் பின்செல்லுகிறதைக் கண்டு,—
இயேசுவானவரை நோக்கி, ஆண்டவரே, இவன் ௨௧
என்னமாய் இருப்பான் என்றான். — அதற்கு ௨௨
இயேசுவானவர் சொன்னது: [5]நான் வருமளவும்
இவன் இருக்க எனக்குச் சித்தமானால், அதினா
லே உனக்கென்ன, நீ எனக்குப் பின்செல் என்
றார்.—அதினாலே அந்தச் சீஷன் மரிப்பதில்லை ௨௩
என்கிற பேச்சு சகோதரருக்குள்ளே உண்டா
யிற்று; இயேசுவானவர் அவன் மரிப்பதில்லை
என்று சொல்லாமல், நான் வருமளவும் அவன்
இருக்க எனக்குச் சித்தமானால் அதினாலே
உனக்கென்ன என்று சொன்னார்.
அந்தச் சீஷனே இந்தச் சங்கதிகளைக்குறித் ௨௪
துச் சாட்சிகொடுத்து, இவைகளை எழுதியிருக்கி
றான்; [6]அவனுடைய சாட்சி மெய்யென்று அறிந்
திருக்கிறோம்; [7]அன்றியும் இயேசுவானவர்
செய்த மற்ற அநேக காரியங்களும் உண்டு. [8]அ
வைகள் ஒவ்வொன்றாய் எழுதப்பட்டால் அதி
னாலே உண்டாகும் புத்தகங்கள் வைக்கிறதற்கு
உலகம் போதாதென்று எண்ணுகிறேன். —
ஆமன்.

---

1 யோவா. ௨. ௨௪, ௨௫: ௰௬. ௩௰.
2 யோவா. ௰௩. ௩௬. அப். ௰௨. ௩, ௪.
3 ௨ பே. ௧. ௰௪.
4 யோவா. ௰௩. ௨௩, ௨௫: ௨௰. ௨.
5 மத். ௰௬. ௨௭, ௨௮: ௨௫. ௩௧. ௧ கொரி. ௪. ௫: ௰௧. ௨௬. வெளி. ௨. ௨௫: ௩. ௰௩: ௨௨. ௭, ௨௰.
6 யோவா. ௰௯. ௩௫. ௩ யோ. ௰௨.
7 யோவா. ௨௰. ௩௰.
8 ஆமோ. ௭. ௰.

# ACTS.

# அப்போஸ்தலருடைய

## நடபடிகள்.

### க. அதிகாரம்.

*க. கிறிஸ்து பரமண்டலம் போவதை அப்போஸ்தலர் காணும்பொருட்டு ஒலிவமலைபண்டையில் அவர்களைக் கூட்டி, உலக சாட்சிகளாயிருக்கும்படி சில நாளுக்குப் பின்பு பரிசுத்தஆவியை அனுப்புவோமென்று வாக்குத்தத்தம்பண்ணி, எருசலேமிலே அவர்கள் அந்த ஆவியின் வருகைக்குக் காத்திருக்கும்படி கற்பித்தது. கூ. அவர் பரமண்டலத்துக்கு ஏறினபின்பு இரண்டு தூதர்கள் அவருடைய இரண்டாம் வருகைக்கு எதிர்பார்த்திருக்க அவர்களுக்குப் புத்திசொன்னது. யஉ. அவர்கள் எருசலேமுக்குப் போய் யூதாவுக்குப் பதிலாக மத்தியாவை அப்போஸ்தலனாகத் தெரிந்துகொண்டது.*

க [1]தேயோப்பிலுவே, இயேசுவானவர் தாம் தெரி
ந்துகொண்ட [2]அப்போஸ்தலருக்குப் பரிசுத்த
உ ஆவியினாலே கட்டளையிட்ட பின்பு,—[3]அவர்
உயர்த்தப்பட்ட நாள்வரைக்கும் செய்தும் உப
தேசித்தும் இருந்த யாவையுங்குறித்து முதலாம்
ங பிரபந்தத்தைப் பண்ணினேன்.— அவர் பாடு
பட்டபின்பு [4]நாற்பதுநாள் அளவும் அவர்களுக்
குத் தரிசனையாகி, பராபரனுடைய இராச்சியத்
தைக் குறித்து அவர்களுடனே பேசிக்கொண்டு,
இவ்விதமாய் அவர்களுக்கு அநேக திருட்டாந்
தரங்களினாலே தம்மை உயிரோடிருக்கிறவர்
ச என்று காண்பித்தார்.–[5]அன்றியும் அவர் அவர்க
ளைக்கூடிவரச்செய்து,* அவர்களைநோக்கி, [6]யோ
வான் சலத்தினாலே ஞானஸ்நானம்கொடுத்தான்;
[7]நீங்கள் சிலநாள்களுக்குப்பின்பு பரிசுத்தஆவி
யினாலே ஞானஸ்நானம் பெற்றுக்கொள்வீர்கள்.-
ரு [8]ஆகையால் நீங்கள் எருசலேம் நகரத்தைவிட்டுப்
போகாமல் என்னிடத்தில் கேளவிப்பட்ட பிதா
வின் வாக்குத்தத்தம் நிறைவேறக் காத்திருங்கள்
என்று கட்டளையிட்டார்.
சு அப்பொழுது [9]கூடிவந்திருந்தவர்கள் அவரை
நோக்கி, ஆண்டவரே, [10]இராச்சியபரிபாலனத்
தை இஸ்ரவேலருக்கு நீர் இக்காலத்திலா திரும்
பக்கொடுப்பீர் என்று கேட்டார்கள்.— அதற்கு எ
அவர் சொன்னது: [11]பிதாவானவர் தம்முடைய
அதிகாரத்திலே வைத்திருக்கிற காலங்களையாகி
லும் வேளைகளையாகிலும் அறிகிறது உங்களுக்
குத் தகாது.—[12]பரிசுத்த ஆவி உங்களிடத்தில் அ
வரும்பொழுது,† [13]நீங்கள் பெலனடைந்து, [14]எ
ருசலேமிலும் யூதேயா சமாரியா தேசங்களில்
எங்கும், பூமியின் எல்லைவரைக்கும் எனக்குச்
சாட்சிகளாய் இருப்பீர்கள் என்றார்.

[15]இவைகளைச் சொன்ன பின்பு, [16]அவர் அ கூ
வர்களுடைய கண்களுக்குமுன்பாக உயர்த்தப்
பட்டார்; அவர்கள் அவரைக் காணாதபடிக்கு ஒரு
மேகம் அவரை எடுத்துக்கொண்டுபோயிற்று.–அ ய
வர் போனபொழுது, அவர்கள் வானத்தை அண்
ணாந்துபார்த்திருக்கையில், [17]வெண்மையான
வஸ்திரமுள்ள மனிதர் இரண்டுபேர் அவர்களின்
அருகே நின்று,— கலிலேயராகிய மனிதரே, யக
[18]நீங்கள் என்னத்துக்காக வானத்தை அண்ணாந்
துபார்த்து நிற்கிறீர்கள்? உங்களைவிட்டு வானத்
துக்கு எடுத்துக்கொள்ளப்பட்ட அந்த [19]இயேசு
வானவர் உங்கள் கண்களுக்குமுன்பாக வானத்
துக்கு எழுந்துபோன விதமாய்த் திரும்பிவரு
வார் என்றார்கள்.

[20]அப்பொழுது அவர்கள் ஒலிவ என்னப் யஉ
பட்ட மலையைவிட்டு எருசலேம் நகரத்துக்குத்
திரும்பினார்கள்; அந்த மலை ஒரு ஓய்வுநாள் பிர
யாணதூரமாய் எருசலேமுக்குச் சமீபமாயிருக்
கின்றது.—அவர்கள் அங்கே போனபொழுது, யங

1 லூக். க க.–2 மத். உ அ. யகூ. மாற். யசு. யகூ. யோவா. உய. உக. அப். ய. சக,சஉ.–3 மாற். யசு. யசு. லூக். கூ. ருக: உச. ருக: கூ. வச. க தீமோ. ங. யசு.—4 மாற். யசு. யச. லூக். உச. கக. யோவா. உய. யசு. உச: உக. க,யச. க கொரி. யரு. ரு. 5 லூக். உச. சக,சகூ.–6 மத். ங. யக. அப். யக யசு: யகூ. ச.–7 யோவே. உ. யஅ. அப். உ. ச: யக. யரு. 8 லூக். உச. சகூ. யோவா. யச யசு, உசு,உஎ: யரு. உசு: யசு. எ. அப். உ. கக.—9 மத். உச. ங. 10 எசா. க. உசு. தானி. எ. உஎ. ஆமோ. கூ யக.—11 மத். உச. ங. யக. ரு லூக். உச. ச. யோவா. மாற். யங. யஉ. க தெச. ரு க. உய. யஉ. அப். ய. ங, சுஎ. 12 லூக். உச. சகூ.—13 அப். உ. க,ச. 18 அப். உ எ: யக. கக.—19 தானி. 14 லூக். உச. சஅ. யோவா. யரு. உஎ. எ. யக. மத். உச. ங0. மாற். யங. உசு. உஉ. வச. அப். ய. கஉ. லூக். உக. உஎ. யோவா. யச. ங. 15 லூக். உச. ருக. யோவா. கூ. கஉ. க தெச. ச. யசு: ச. யசு. உ தெச. க ய. 16 உ. வச.—17 மத். உஅ. ங. மாற். வெளி. க. எ.—20 லூக். உச. ருஉ.

* அல்லது அவர்களோடே புசித்து.—† பரிசுத்த ஆவியின் வல்லமை வருகிறதால்.

[1]மேல்வீட்டில் ஏறினார்கள்; [2]அங்கே பேதுரு
வும், யாக்கோபும், யோவானும், அந்திரேயாவும்,
பிலிப்பும், தோமாவும், பருத்தொலோமேயும்,
மத்தேயும், அல்பேயுவின் குமாரனாகிய யாக்கோ
பும், [3]செலோத்தே என்னப்பட்ட சீமோனும்,
[4]யாக்கோபின் சகோதரனாகிய யூதாவும், தங்கியி
௰௪ ருந்தார்கள். — [5]இவர்கள் எல்லாரும், [6]இயேசு
வின் தாயாகிய மரியாள் முதலான ஸ்திரிகளோ
டும் [7]அவருடைய சகோதரரோடுங்கூட ஒரும
னப்பட்டு, செபத்திலேயும் வேண்டுதலிலேயும்
உறுதியாய்த் தரித்திருந்தார்கள்.

௰௫ அந்நாள்களில் ஒருநாள், [8]ஏறக்குறைய நூற்
றிருபதுபேர் கூடிவந்திருந்தபொழுது, பேதுரு
என்பவன் சீஷருக்குள்ளே எழுந்திருந்து சொன்
௰௬ னதாவது:—சகோதரர்களே, [9]இயேசுவைப் பிடித்
தவர்களுக்கு வழிகாட்டின [10]யூதாவைக்குறித்
துப் பரிசுத்தஆவி தாவீதின் வாக்கினாலே முன்
சொன்ன வேதவாக்கியம் நிறைவேறவேண்டிய
௰௭ தாய் இருந்தது.—[11]அவன் நமக்குள்ளே ஒருவ
னாக எண்ணப்பட்டு, [12]இந்த ஊழியத்தில் பங்
௰௮ கைப் பெற்றவனாய் இருந்தானே.—[13]அன்றியும்
அவனே அநியாயமான கூலியினாலே [14]ஒரு நி
லத்தைச் சம்பாதித்துக்கொள்ள ஏதுவாயிருந்து,
பின்பு தலைகீழாக விழுந்து, நடுவாய் வெடிக்
கப்பட்டான்; அவனுடைய குடல்களெல்லாம்
௰௯ சரிந்துபோயின.—அதை எருசலேமிலுள்ள குடி
கள் யாவரும் அறிந்திருக்கிறார்கள்; அதினாலே
அந்த நிலம் அவர்களுடைய பாஷையிலே இரத்
தநிலம் என்று அர்த்தங்கொள்ளுகிற அக்கெல்தா
௨௰ மா என்னப்பட்டிருக்கின்றது. — சங்கீத புஸ்த
கத்திலே [15]எப்படி எழுதியிருக்கிறதென்றால். அ
வனுடைய வாசஸ்தலம் பாழாகக்கடவது, ஒரு
வனும் அதில் வாசம்பண்ணாதிருப்பதாக என்
றும், [16]அவனுடைய கண்காணிப்பை* வேறொ
ருவன் பெறக்கடவன் என்றும் எழுதியிருக்கின்
௨௧ றது. — ஆதலால் கர்த்தராகிய இயேசுவானவர்
[17]யோவான் ஞானஸ்நானங்கொடுத்த காலமுத
தற்கொண்டு [18]தாம் நம்மைவிட்டு எடுத்துக்கொள்
௨௨ ளப்பட்ட நாள்வரைக்கும்,—நமக்குள்ளே வரு
கிறவராயும் போகிறவராயும் இருந்த காலங்க
ளிலே, நம்முடனேகூட இருந்த [19]மனிதர்களில்
ஒருவன் அவர் உயிரோடே எழுந்திருக்கிறதைக்
குறித்து நம்முடனேகூடச் சாட்சியாகவேண்
டும் என்றான்.

௨௩ அப்பொழுது அவர்கள் யுஸ்து என்று மறுநாம
முள்ள [20]பருசபா என்னப்பட்ட யோசேப்பு
மத்தியா, இவ்விரண்டுபேரையும் தெரிந்தெடுத்
துச் செபம்பண்ணினதாவது:—[21]எல்லாருடைய ௨௪
இருதயங்களையும் அறிந்திருக்கிற கர்த்தாவே,—
யூதாவானவன் தனக்கேற்ற இடத்துக்குப் போ ௨௫
கும்படிக்கு அப்போஸ்தலஊழியத்தின் பங்கை
விட்டு விலகினானே, [22]அந்தப் பங்கைப் பெற்
றுக்கொள்ளும்படிக்குத் தேவரீர் இவ்விரண்டு
பேரில் தெரிந்துகொண்டவன் எவனோ, அவனை
எங்களுக்குக் காண்பிப்பீராக என்று சொல்லி,—
பின்பு அவர்களைக்குறித்துச் சீட்டுகளைப் போட் ௨௬
டார்கள்; சீட்டானது மத்தியாவின் பேருக்கு
விழுந்தது; அப்பொழுது அவன் பதினொரு அப்
போஸ்தலருடனே (அப்போஸ்தலனாகச்) சேர்த்
துக்கொள்ளப்பட்டான்.

## ௨. அதிகாரம்.

௧. அப்போஸ்தலர்கள் பரிசுத்தஆவியினால் நிரப்பப்பட்டுப் பல பாஷை
களைப் பேசினபோது, சிலரால் புகழப்பட்டுச் சிலரால் இகழப்பட்டது.
௰௪. இகழ்ந்தவர்களைப் பேதுரு கடிந்துகொண்டு, அப்போஸ்தலர்கள்
பரிசுத்தஆவியின் பெலத்தினாலே பேசினார்களென்றும், இயேசு உயிர்த்
தெழுந்து பரமண்டலத்துக்கு ஏறி, பரிசுத்தஆவியை அளித்துப் பலவித
அற்புதங்களைச் செய்து பராபரனாலே அங்கீகரிக்கப்பட்டவரும், அவரு
டைய ஆதி நிர்மானத்தின்படி சிலுவையில் அறையப்பட்டவருமான
மேசியாவென்றும் காண்பித்து, ௩௭. குணப்பட்ட அநேகரை ஞானஸ்
நானம்பண்ணினது. ௪௧. குணப்பட்டவர்கள் அந்நியோந்நிய ஐக்கமா
யிருந்ததையும், அப்போஸ்தலர்கள் பல அற்புதங்கள் செய்ததையும்,
பராபரன் திருச்சபையை நாளுக்குநாள் பெருகச்செய்ததையும் காட்
டியது.

[23]பெந்தேகோஸ்தென்னும் நாள் வந்திருக்கை ௧
யில், [24]அவர்கள் எல்லாரும் அவ்விடத்திலே
ஒருமனப்பட்டிருந்தார்கள்.—அப்பொழுது சடு ௨
தியாய் பலத்த காற்று அடிக்கிற முழக்கம்போல
வானத்திலிருந்து முழக்கம் உண்டாகி, [25]அவர்
கள் உளுக்காந்திருந்த வீடு முழுவதையும் நிரப்
பிற்று.—அல்லாமலும் அக்கினியுள்ள நாவுகள் ௩
போலப் பிரிக்கப்பட்ட நாவுகள் அவர்களுக்
குக் காணப்பட்டு, அவர்கள் யாவர்மேலும் வந்
திருந்தன.—[26]அவர்கள் எல்லாரும் பரிசுத்தஆவி ௪
யினாலே நிரப்பப்பட்டு, தங்களுக்கு ஆவியான
வர் கொடுத்த திராணியின்படி, [27]வேறு பாஷை
களிலே பேசத்தொடங்கினார்கள்.

(அக்காலத்திலே) வானத்தின் கீழிருக்கிற சகல ௫
லவிதமான தேசத்தாரிலுமிருந்து வந்த தேவபத்
தியுள்ள யூதர்கள் எருசலேமிலே வாசம்பண்ணி
னார்கள்.—அந்தச் சத்தம் உண்டானபொழுது,† ௬
திரளான சனங்கள் கூடிவந்து, யாவரும் தங்கள்
தங்கள் பாஷையிலே அவர்கள் பேசுகிறதைக்
கேட்டபடியினாலே கலக்கம் அடைந்தார்கள்.‡—
எல்லாரும் பிரமித்து ஆச்சரியப்பட்டு, ஒருவரை ௭
ஒருவர் [28]நோக்கி, பேசுகிற இவர்கள் எல்லாரும்
கலிலேயர் அல்லவா? — நம்முடைய சென்ம ௮
பாஷைகளிலே அவர்கள் பேச நாம் யாவரும்

1 அப். க. ௧௩, ௧௪: ௨௰. ௮. 10 சங். ௪௧. ௯. யோவா. ௰௩ ௰௮. 18 ௯. ௰௪.—19 யோவா. ௰௫ ௨௭. ௮ 24 அப். ௧. ௰௪.
2 மத். ௰. ௨, ௩, ௪. 11 மத். ௰.௪. லூக். ௬. ௰௬. ௰௪ அப். ௪. ௩௩.—20 அப். ௰௫ ௨௨. 25 அப். ௪. ௩௧.
3 லூக். ௬ ௰௫ —4 யூதா. ௧. 12 ௨௫. ௰௪. அப். ௰௨. ௨௫: ௨௰. 21 ௧ சாமு. ௰௬. ௭ ௧ நாளா. ௨௮. ௯: 26 அப். ௧. ௫.
5 அப். ௨. ௧, ௪௬.—6 லூக். ௨௩ ௪௯, ௨௪: ௨௧. ௰௯.—13 மத். ௨௭. ௫. ௨௯. ௰௭. எரே. ௰௭. ௨௰: ௰௭. ௰. 27 மாற். ௰௬. ௰௭. அப். ௰. ௪௬: ௰௯.
௫௫: ௨௪. ௰ —7 மத். ௰௩. ௫௫. ௭, ௮ —14 மத் ௨௭. ௰௫. ௨ பே. ௨. அப். ௰௫. ௮. வெளி. ௨. ௨௩. ௧. ௧ கொரி. ௰௨. ௰, ௨௮. ௩௰: ௰௩. ௧:
8 வெளி. ௩. ௪.—9 லூக். ௨௨. ௪௭. ௰௫.—15 சங். ௬௯. ௨௫. 22 ௰௭. ௰௪.—23 ௧ மோ. ௨௩. ௰௫. ௰௪. ௨.—28 அப். ௧. ௰௧.
யோவா ௰௮. ௩. 16 சங். ௧௯. ௮.—17 மாற். ௧. ௧. ௫ மோ. ௰௬ ௯. அப். ௨௰. ௰௬.

* அல்லது தொழிலை.—† அல்லது இது எங்கும் பிரசித்தமானபோது.—‡ அல்லது பிரமித்தார்கள்.

௯ கேட்கிறோமே, அது எப்படியாயிற்று?—பருத்த
ரும், மேதரும், எலாமீத்தரும், மெசொப்பொத்
தாமியா, யூதேயா, கப்பத்தோக்கியா, பொந்து,
௰ ஆசியா, பிரிகியா, பம்பீலியா,—எகிப்து என்னும்
தேசங்களிலேயும் கிரேனே பட்டணத்தைச்
சுற்றியிருக்கிற லீபியாவின் திசைகளிலேயும்
குடியிருப்பவர்களும், இங்கே சஞ்சரிக்கிற
௰௧ உரோமைப் பட்டணத்தாரும், — யூதரும், யூத
மார்க்கத்தில் சேர்க்கப்பட்டவர்களும், கிரேத்
தைத் தீவாரும், அரபி தேசத்தாருமாகிய நம்மு
டைய பாஷைகளிலே அவர்கள் பராபரனு
டைய மகிமைகளைப் பேசிக்கொள்ளக் கேட்கி
௰௨ றோமே என்றார்கள்.—பின்னும் எல்லாரும் பிர
மித்து மிகவும் சந்தேகப்பட்டு, இதென்ன வரம்
என்று ஒருவரோடொருவர் சொல்லிக்கொண்
௰௩ டார்கள்.-மற்றப்பேர் மதுபானத்தினாலே நிறைந்
திருக்கிறார்கள் என்று பரியாசம்பண்ணினார்கள்.
௰௪ அப்பொழுது பேதுரு என்பவன் பதினொரு
வரோடுங்கூட நின்று; உரத்த சத்தத்தோடே
அவர்களுடனே சொன்னதாவது: யூதரும், எரு
சலேமில் குடியிருக்கிற மற்றவர்களுமாகிய நீங்
கள் எல்லாரும் அறிந்துகொள்வீர்களாக, என்
வார்த்தைகளுக்குச் செவிகொடுப்பீர்களாக. —
௰௫ என்னவெனில், நீங்கள் நினைக்கிறதுபோல
இவர்கள் வெறிகொண்டவர்கள் அல்ல, [1]பொ
ழுதுவிடிந்து மூன்றாம்மணி வேளையாயிருக்கிற
௰௬ தே —தீர்க்கதரிசியாகிய யோவேலினால் உரைக்
கப்பட்டபடி இதுவே நடந்துவருகின்றது. —
௰௭ (அவரைக்கொண்டு) பராபரன் உரைத்ததாவது:
[3]கடைசிநாள்களில் நான் சகல மனிதர்மேலும்
என்னுடைய ஆவியை ஊற்றுவேன்; [4]அப்பொ
ழுது உங்கள் குமாரரும் உங்கள் குமாரத்திகளும்
தீர்க்கதரிசனம் சொல்லுவார்கள்; உங்கள் வாலி
பர் தரிசனைகளைக் காண்பார்கள்; உங்கள் மூப்பர்
௰௮ சொப்பனங்களை அடைவார்கள்.-என்னுடைய
ஊழியக்காரர்மேலும், என்னுடைய ஊழியக்கா
ரிகள்மேலும், அந்நாள்களில் என்னுடைய ஆவி
யை ஊற்றுவேன்; [5]அப்பொழுது தீர்க்கதரிசனம்
௰௯ சொல்லுவார்கள்.—[6]அல்லாமலும் கர்த்தருடைய
பெருமையும் பிரகாசமுமான நாள் வரும்முன்
னே, உயர்ந்த வானத்தில் அற்புதங்களையும்
தாழ்ந்த பூமியில் அதிசயங்களையும் உண்டாக்கு
௨௰ வேன்.—இரத்தமும், அக்கினியும், புகைக்காடும்
உண்டாகும்படி செய்வேன்; [7]சூரியன் இருளா
கவும் சந்திரன் இரத்தமாகவும் மாற்றப்படும்.—
௨௧ [8]அப்பொழுது பராபரனுடைய நாமத்தைத்தொ
ழுது கூப்பிடுபவன் எவனோ, அவன் இரட்சிக்
கப்படுவான் என்பதே.

இஸ்ரவேலரே, நான் சொல்லும் வார்த்தைக ௨௨
ளைக் கேளுங்கள்; நீங்களே அறிந்திருக்கிறபடி
நாசரேத்தூராராகிய இயேசுவானவராலே பரா
பரன் உங்களுக்குள்ளே [9]பலத்த செய்கைகளை
யும் அற்புதங்களையும் அதிசயங்களையும் செய்து,
அவைகளினாலே அவரை உங்களுக்கு வெளிப்
படுத்தினார்.—அப்படியிருந்தும் [10]பராபரன் நிய ௨௩
மித்திருந்த ஆலோசனையின்படியேயும், அவர்
முன் அறிந்ததின்படியேயும் ஒப்புக்கொடுக்கப்
பட்ட அந்த இயேசுவை நீங்கள் பிடித்து, [11]அக்
கிரமக்காரருடைய கைகளினாலே சிலுவைமரத்
தில் அறைந்து கொலைசெய்தீர்கள்.—அவரைக் ௨௪
குறித்துத் தாவீது சொல்லுகிறதாவது: [12]நான் அ
சைக்கப்படாதபடிக்கு, பராபரன் என் வலது
பாரிசத்திலே இருக்கிறபடியினாலே, நான் எப்
பொழுதும் அவரை எனக்குமுன்பாக வைத்துக்
கொள்ளுகிறேன்.—அதினாலே என் இருதயம் ௨௫
மகிழ்ச்சியாய் இருக்கின்றது, என் நாவு சந்தோ
ஷமாய்ப் பேசுகின்றது.—மேலும் நீர் என் ஆத் ௨௬
துமாவை மரித்தோர் ஸ்தலத்திலே விடவும், உம்
முடைய பரிசுத்தவான் அழிவைக் காணும்படி
செய்யவும்மாட்டீர். — ஜீவமார்க்கங்களை எனக் ௨௭
குத் தெரியப்படுத்தினீர், உம்முடைய சந்நிதா
னத்திலே என்னைச் சந்தோஷத்தாலே நிரப்புவீர்;
ஆதலால், என்னுடைய சரீரமும் நம்பிக்கையோ
டே படுத்துக்கொள்ளும் என்று சொல்லியிருக்
கிறார்.—ஆனபடியினாலே மரணமானது இயேசு ௨௮
வை அடக்கிக்கொள்ளக் கூடாதிருக்க, பரா
பரன் [13]அதின் உபாதிகளின் கட்டவிழ்த்து அவ
ரை எழுப்பினார்.
சகோதரர்களே, [14]நமது கோத்திரத்தலைவனா ௨௯
கிய தாவீதைக்குறித்து நான் உங்களுடனே தயி
ரியமாய்ப் பேசுகிறேன்,* கேட்பீர்களாக; அவர்
மரணமடைந்து அடக்கம்பண்ணப்பட்டார்; அ
வருடைய சமாதி இந்நாள்வரைக்கும் நம்மிடத்
தில் இருக்கின்றது.—ஆதலால், [15]அவர் தீர்க்கத ௩௰
ரிசியாயிருந்து, உன் ஆசனத்தில் வீற்றிருக்கும்
படிக்கு, சரீரசம்பந்தமாய் உன்னுடைய சந்ததி
யில் கிறிஸ்துவை எழும்பப்பண்ணுவேன் என்று
பராபரன் தனக்கு ஆணை கொடுத்ததை அறிந்
து,—[16]அவர் கிறிஸ்துவினுடைய ஆத்துமா மரித் ௩௧
தோர் ஸ்தலத்திலே விடப்படுவதில்லை என்றும்,
அவருடைய சரீரம் அழிவை அடைவதில்லை
என்றும் முன் அறிந்து, அவர் உயிரோடெழுந்
திருப்பதைக்குறித்துப் பேசினார். — [17]இந்த இ ௩௨
யேசுவையே பராபரன் எழுப்பினார்; [18]அதற்கு
நாங்கள் எல்லாரும் சாட்சிகளாயிருக்கிறோம்;
மேலும் தாவீது பரமண்டலத்திற்கு எழுந்துபோ

1 ௧ தெச. ௫.௭. ௰,௧௧.—7 மத்.௨௪.௨௯. மாற்.
2 ஏசா.௪௪.௩. எசே.௰௧.௰௯: ௩௬. ௰௩.௨௪. லூக்.௨௧.௨௫.
௨௭. யோவே.௨.௨௮,௨௯. 8 உரோ.௰.௰௩.—9 யோவா.௩.௨:
சகரி.௰௨.௰. யோவா.௭.௩௮. ௰௪.௰,௰௧. அப்.௰.௩௮. எபி.௨.௪
3 அப்.௰.௪௫.—4 அப்.௨௧.௯. 10 மத்.௨௬.௨௪. லூக்.௨௨.௨௨:
5 அப்.௨௧.௪,௯,௰. ௧ கொரி.௰௨. ௨௪.௪௪. அப்.௩.௰௮: ௪.௨௮
௰.௨௮: ௰௪.௧.—6 யோவே.௨. 11 அப்.௫.௩௰.—12 சங்.௰௬.௮.

13 ௩௨.௪௪. அப்.௩.௰௫: ௪.௰: ௰.௪௰: ௰௩.௩௩.—15 ௨ சாமு.௭.௰௨,௰௩.
௰௩.௩௰,௩௪: ௰௭.௩௧. உரோ.௪. சங்.௩௩௨.௰௧. லூக்.௧.௩௨,௬௯.
௨௪: அ.௰௧. ௧ கொரி.௬.௰௪: ௰௫. உரோ.௧.௩. ௨ தீமோ.௨.௮.
௰௫. ௨ கொரி.௪.௰௪. கலா.௧.௧. 16 சங்.௰௬.௰. அப்.௰௩.௩௫.
எபே.௧.௨௰. கொலோ.௨.௰௨. 17 ௨௪. ௪௮.
௧ தெச.௧.௰. எபி.௰௩.௨௰. ௧ பே. 18 அப்.௧.௮.
௧.௨௧.—14 ௧ இரா.௨.௰. அப்.

* அல்லது நான் பேசட்டும்.

௩௩ கவில்லை.—அதுவுமல்லாமல், அவர் சொன்னது:
உம்முடைய சத்துருக்களை நான் உமது பாதப்ப
௩௪ டியாக்கிப்போடுமளவும்,-[1] எனது வலதுபாரிசத்
திலே உளுக்காரும் என்று பராபரன் என் ஆண்
௩௫ டவருடனே சொன்னார் என்றான்.—ஆகலால்
[2] இயேசுவானவர் பராபரனுடைய வலதுபாரிசத்
திலே உயர்த்தப்பட்ட பின்பு,[3] பரிசுத்த ஆவியை
க்குறித்துப் பிதாவினாலே வாக்குத்தத்தத்தைப்
பெற்றபடியால்,[4] நீங்கள் இப்பொழுது கண்டு
௩௬ கேட்கிறபடி அதை ஊற்றினார்.— ஆனபடியி
னாலே நீங்கள் சிலுவைமரத்தில் அறைந்த அந்த
[5] இயேசுவையே பராபரன் ஆண்டவரும் கிறிஸ்
துவும் ஆக்கினாரென்று இஸ்ரவேல் குடும்பத்தார்
யாவரும் நிச்சயமாய் அறியக்கடவர்கள் என்
றான்.
௩௭ அதை அவர்கள் கேட்டபொழுது [6] இருதயத்
தில் குத்தப்பட்டவர்களாகிப் பேதுருவையும்
மற்ற அப்போஸ்தலரையும் நோக்கி. சகோதரரே,
நாங்கள் என்ன செய்யவேண்டும் என்றார்கள்.
௩௮ அதற்குப் பேதுரு சொன்னதாவது: [7] உங்க
ளுக்குப் பாவமன்னிப்பு உண்டாகும்படிக்கு
நீங்கள் மனம்திருப்பி, ஒருவன் ஒருவனாய் இயே
சுக்கிறிஸ்துவின் நாமத்தினாலே ஞானஸ்நானம்
பெற்றுக்கொள்ளுங்கள்; அப்பொழுது பரிசுத்த
௩௯ ஆவியாகிய ஈவையும் பெறுவீர்கள்.—(அதைக்
குறித்து) வாக்குத்தத்தமானது [8] உங்களுக்கும்
உங்கள் பிள்ளைகளுக்கும் [9] நம்முடைய தேவனா
கிய பராபரன் வரவழைக்கும் தூரத்திலுள்ள
யாவருக்கும் உண்டாயிற்றே என்று சொல்லி,—
௪௰ மற்ற அநேக வார்த்தைகளாலும் (அதைக்குறித்
துச்) சாட்சியிட்டு, தாறுமாறுள்ள இந்தச் சந்த
தியைவிட்டு இரட்சிக்கப்படுவீர்களாக என்று
புத்திசொன்னான்.
௪௧ அந்தப்படியே அவனுடைய வார்த்தையைச்
சந்தோஷமாய் ஏற்றுக்கொண்டவர்கள் எவர்க
ளோ, அவர்கள் ஞானஸ்நானம் பெற்றார்கள்,
அந்நாளிலே ஏறக்குறைய மூவாயிரம்பேர் சேர்த்
௪௨ துக்கொள்ளப்பட்டார்கள். — [10] அவர்கள் அப்
போஸ்தலருடைய உபதேசத்திலேயும், ஒருவ
ரோடொருவர் ஐக்கப்படுதலிலேயும், அப்பம்
பிட்குதலிலேயும், ஜெபம்பண்ணுதலிலேயும்
௪௩ உறுதியாய்த் தரித்திருந்தார்கள்.—ஆத்துமாக்கள்
யாவுக்கும் பயபக்தி உண்டாயிற்று; அன்றியும
[11] அப்போஸ்தலர்களாலே அநேக அற்புதங்க
௪௪ ளும் அதிசயங்களும் செய்யப்பட்டன.-எல்லா
விசுவாசிகளும் ஒருமித்திருந்து, [12] சகலத்தையும்
௪௫ பொதுவாய் வைத்து அனுபவித்து,—ஆஸ்திகளை
யும் உடைமைகளையும் விற்று, [13] அவைகளில்
ஒவ்வொருவனுக்கு வேண்டுவது எவ்வளவோ,
அவ்வளவு பகிர்ந்து கொடுத்தார்கள்.—[14] தினந் ௪௬
தோறும் அவர்கள் ஒருமனப்பட்டு, [15] தேவாலயத்
திலே தரித்திருந்து, [16] வீடுகள்தோறும்* அப்பம்
பிட்டு, மகிழ்ச்சியும் கபடமில்லாமையுமுள்ள
இருதயத்தோடு போசனம்பண்ணிப் பராபர
னைப் புகழ்ந்துகொண்டு,—(மற்றச்) [17] சனங்கள் ௪௭
எல்லாரிடத்திலும் கிருபை பெற்றிருந்தார்கள்;
[18] அன்றியும் இரட்சிக்கப்படுகிற (மற்றப்) பேர்க
ளைக் கர்த்தர் தினந்தோறும் சபையோடே சேர்த்
தார்.

## ௩. அதிகாரம்.

௧. குணமாக்கப்பட்ட ஒரு சப்பாணியைப் பார்க்கவந்த சனங்களுக்குப் பேதுரு பிரசங்கித்தது. ௰௨ அவன் குணமாக்கப்பட்டது, தனக்கும் யோவானுக்கும் இருந்த வல்லமையினாலும் பரிசுத்தத்தினாலும் அல்ல, பராபரனாலும் அவருடைய குமாரனாகிய இயேசுவின் நாமத்தின்மேலுள்ள விசுவாசத்தினாலுமே என்று சொல்லி, ௰௩ இயேசுவைச் சிலுவையில் அறைந்ததற்காக அவர்களைக் கடிந்துகொண்டது. ௰௭. பராபரனுடைய ஆதி தீர்மானத்தின்படியும் வேத எழுத்துகளின்படியும் நடந்தாலும், அந்தப் பாதகத்தை அவர்கள் அறியாமையினாலே ஏற்றுக்கொண்டதினால், ௰௯. அவர்கள் மனந்திரும்பி விசுவாசித்து, அந்த இயேசுவினாலேயே பாவமன்னிப்பும் இரட்சிப்பும அடையும்படி புத்திசொன்னது.

அக்காலத்தில் [19] ஒருநாள் ஜெபவேளையாகிய ௧
ஒன்பதாம் மணிநேரத்திலே பேதுருவும் யோவா
னும் [20] தேவாலயத்துக்குப் போனார்கள்.—அப் ௨
பொழுது [21] தன் தாயின் வயிற்றிலிருந்து சப்பா
ணியாய்ப் பிறந்த ஒரு மனிதன் சுமந்துவரப்
பட்டான்; தேவாலயத்தில் பிரவேசிப்பவர்களி
டத்தில் [22] பிச்சைகேட்கும்படிக்கு, நாடோறும்
அவனை அலங்காரவாசல் என்னப்பட்ட தேவா
லயவாசலிடத்திலே வைப்பார்கள்.—தேவாலயத் ௩
தில் பிரவேசிக்கும்படி போகிற பேதுருவையும்
யோவானையும் அவன் கண்டு பிச்சைகேட்
டான்.—அப்பொழுது யோவானுடனே கூடப் ௪
பேதுரு அவனை உற்றுப்பார்த்து, எங்களை நோக்
கிப்பார் என்றான்.—அவன் அவர்களுடைய கை ௫
யில் ஏதாகிலும் பெற்றுக்கொள்ளலாம் என்று
எண்ணி, அவர்களை நோக்கிப்பார்த்தான்.—அப் ௬
பொழுது பேதுரு சொன்னது: வெள்ளியும்பொ
ன்னும் என்னிடத்தில் இல்லை, எனக்கு உண்
டானதை உனக்குத் தருகிறேன்; [23] நாசரேத்தா
ராகிய இயேசுக்கிறிஸ்துவின் நாமத்தினாலே
நீ எழுந்துநடவென்று சொல்லி,— வலதுகையி ௭
னாலே அவனைப் பிடித்துத் தூக்கி எடுத்தான்;
உடனே அவனுடைய கால்களும் கரடுகளும்
ஸ்திரமடைந்தன.— [24] அவன் குதித்து எழுந்து ௮
நின்று நடந்து, அவர்களுடனேகூடத் தேவால
யத்தில் பிரவேசித்து, நடந்து, குதித்துப் பராபர
னைத் துதிசெய்தான்.—[25] அவன் நடக்கிறதையும் ௯
பராபரனைத் துதிக்கிறதையும் சனங்கள் எல்லா

1 சங. ௱௰.௧. மத். ௨௨. ௪௪. ௧ கொரி. ௰௫. ௨௫. எபே. ௧ ௨௦. எபி. ௧. ௰௩.—2 அப். ௫. ௩௧ பிலி. ௨. ௯. எபி. ௰. ௰௨.—3 யோவா. ௰௪. ௨௬: ௰௬. ௭, ௰௩. அப். ௧. ௪. 4 அப். ௰. ௪௫. எபே. ௪. ௮ 5 அப். ௫. ௩௧.—6 சகரி ௰௨. ௰. லூக். ௩. ௰. அப். ௯. ௬. ௰௬. ௩௰. 7 லூக். ௨௪. ௪௭. அப். ௩. ௰௯. 8 யோவே. ௨. ௨௮. அப் ௩ ௨௫. 9 அப். ௰. ௪௫: ௰௧. ௰௫,௰௮: ௰௪. ௨௭: ௰௫. ௩, ௮, ௰௪. எபே ௨. ௰௩, ௰௭ -- 10 ௪௧. ௰௪. அப் ௧ ௰௪. உரோ. ௰௨. ௰௨. எபே. ௬. ௰௮. கொலோ. ௪ ௨. எபி. ௰. 18 அப். ௫.௰௪: ௰௧. ௨௪.—19 சங். ௨௫.—11 மாற் ௰௬. ௰௭ அப். ௪. ௩௩. ௫. ௰௨: ௯ ௰௨.-12 அப் ௪ ௩௨, ௩௪. 21 அப். ௰௪. ௮.—22 யோவா. ௯. ௮. 13 ஏசா ௫௮ ௭. 14 அப் ௧. ௰௪ 23 அப். ௪. ௰.—24 ஏசா ௩௫. ௬. 15 லூக். ௨௪. ௫௩. அப் ௫ ௪௨. 25 அப். ௪ ௰௬ ௨௧. 16 அப். ௨௰. ௭.—17 லூக். ௨. ௫௨. அப். ௪. ௩௩ உரோ. ௰௪. ௰௮.

* அங்கங்கே.

௰ ரும் கண்டார்கள்.—அல்லாமலும் தேவாலயத்தின்
[1]அலங்காரவாசலினிடத்திலே பிச்சைகேட்க உ
ளுக்கார்ந்திருந்தவன் இவன்தான் என்று அவர்கள்
அறிந்து, அவனுக்குச் சம்பவித்ததைக்குறித்து
மிகவும் பிரமித்து அதிசயப்பட்டார்கள்.

௰௧ அன்றியும் குணமாக்கப்பட்ட சப்பாணி பே
துருவையும் யோவானையும் அடுத்துக்கொண்டி
ருந்தபடியால், சனங்கள் எல்லாரும் பிரமிப்புள்
ளவர்களாய், [2]சாலோமோன் மண்டபம் என்னப்
பட்ட மண்டபத்திலே அவர்களிடத்தில் ஓடிப்
௰௨ போய்க் கூடினார்கள்.—பேதுரு அதைக் கண்டு
சனங்களுடனே சொன்னதாவது: இஸ்ரவே
லரே, இதைக்குறித்து நீங்கள் ஆச்சரியப்படுகிற
தென்ன? அல்லது நாங்கள் எங்கள் சுயவல்லமை
யினாலாவது பத்தியினாலாவது இவனை நடக்கப்
பண்ணினவர்களாக நீங்கள் எங்களை நோக்கிப்
௰௩ பார்க்கிறதென்ன? — [3]நம்முடைய முன்னோர்க
ளாகிய ஆபிரகாம், ஈசாக்கு, யாக்கோபு என்ப
வர்களுடைய தேவனாயிருக்கிறவர் தம்முடைய
குமாரனாகிய [4]இயேசுவை மகிமைப்படுத்தினார்;
அந்த இயேசுவைப் பிலாத்து விடுதலையாக்க
எண்ணினபொழுது, [5]நீங்கள் அவனுக்குமுன்
பாக அவரை ஒப்புக்கொடுத்து [6]மறுதலித்தீர்கள்.—
௰௪ [7]பரிசுத்தமும் [8]நீதியுமுள்ளவரை நீங்கள் மறுத
லித்து, கொலைபாதகனான மனிதனை உங்களுக்
காக விடுதலையாக்கவேண்டுமென்று கேட்டீர்
கள்; சீவனையுடைய அதிபதியையே* கொலை
௰௫ செய்தீர்கள்.—[9]அவரைப் பராபரன் மரித்தோரி
லிருந்து எழுப்பினார்; [10]அதற்கு நாங்கள் சாட்சி
௰௬ களாயிருக்கிறோம்.—மேலும் [11]அவருடைய நா
மத்தின்மேலுள்ள விசுவாசத்தினாலே அவரு
டைய நாமமே நீங்கள் பார்த்து அறிந்திருக்கிற
இவனை ஸ்திரப்படுத்திற்று; அவரைப் பற்றிக்
கொண்ட விசுவாசமே உங்கள் எல்லாருக்கு
முன்பாகவும் இந்தச் சர்வாங்க சுகத்தை இவ
னுக்குக் கொடுத்தது.

௰௭ சகோதரரே, நீங்களும் உங்கள் தலைவரும்
[12]அதை அறியாமையினாலே செய்தீர்கள் என்று
௰௮ அறிந்திருக்கிறேன்.—[13]பராபரன் கிறிஸ்து பாடு
படவேண்டுமென்று தம்முடைய தீர்க்கதரிசிகள்
எல்லாருடைய வாக்கினாலும் [14]முன் அறிவித்த
வைகளை இவ்விதமாய் நிறைவேற்றினார்.

௰௯ ஆனபடியினாலே பராபரனுடைய சந்நிதானத்
திலிருந்து சவுக்கியம் உண்டாகும் காலங்கள்
வரவும், முன்னே குறிக்கப்பட்ட இயேசுக்கி
றிஸ்துவை அவர் உங்களிடத்தில் அனுப்பவும்
தக்கதாக உங்கள் பாவங்கள் நிவிர்த்திசெய்யப்ப
டும்படிக்கு,—[15]நீங்கள் மனதைத் திருத்திக் குண ௨௰
ப்படுங்கள்.—[16]உலகம் உண்டானதுமுதல் பரா ௨௧
பரன் தம்முடைய பரிசுத்த தீர்க்கதரிசிகள் எல்
லாருடைய வாக்கினாலும் உரைத்தவைகள் எல்
லாம் [17]நிறைவேறும் காலம் வரும்பரியந்தம்
[18]இயேசுவானவர் பரமண்டலத்திலே இருக்க
வேண்டும்.

அந்தத் தீர்க்கதரிசிகளில் மோசேயானவர் நம் ௨௨
முடைய முன்னோர்களுடனே சொன்னதாவது:
[19]உங்கள் தேவனாகிய பராபரன் என்னைப்போ
லத் தீர்க்கதரிசி ஒருவரை உங்களுக்காக உங்கள்
சகோதரரிலிருந்து தோன்றப்பண்ணுவார், அவர்
உங்களுக்குச் சொல்லும் யாவற்றிற்கும் செவி
கொடுப்பீர்களாக. — அந்தத் தீர்க்கதரிசியின் ௨௩
சொல் கேளாதவன் எவனோ, அவன் தன் சனத்
தில் இராதபடிக்கு நிர்மூலமாக்கப்படுவான் என்
று சொன்னார்.—சாமுவேலும் அவனுக்குப்பின் ௨௪
வந்து பேசின தீர்க்கதரிசிகள் எல்லாரும் இந்த
நாள்களை முன் அறிவித்தார்கள். — [20]நீங்களே ௨௫
அந்தத் தீர்க்கதரிசிகளுடைய சந்ததியாருமாய்,
பூமியிலுள்ள வம்சத்தார் எல்லாரும் [21]உன் சந்த
தியினாலே ஆசீர்வதிக்கப்படுவார்கள் என்று பரா
பரன் ஆபிரகாமுக்குச் சொல்லி, இவ்விதமாய்
நம்முடைய முன்னோர்களோடே பண்ணின
உடம்படிக்கைக்கு உள்ளானவர்களுமாய் இருக்
கிறீர்கள். — ஆதலால் முதலாவது உங்களுக்கா ௨௬
கவே [22]பராபரன் தம்முடைய குமாரனாகிய இ
யேசுவை எழுப்பி, [23]உங்களில் தங்கள் பொல்லா
ங்குகளைவிட்டுத் திரும்புகிறவர்கள் எவர்களோ,
அவர்கள் எல்லாரையும் [24]அவர் ஆசீர்வதிக்கும்
படிக்கு அவரை அனுப்பினார் என்றான்.

## ௪. அதிகாரம்.

௧. யூதர்களுடைய தலைவர்கள் பேதருவின் பிரசங்கத்தைக்குறித்து தாங்கலடைந்து, ௪. (திருவசனத்தைக் கேட்ட அநேகமாயிரம் பேர்கள் குணப்பட்டாலும்) அவனையும் யோவானையும் காவலில் அடைத்தது. ௯ அவனை சோதித்தபோது அவன் சப்பாணியாயிருந்தவன் இயேசுவின் நாமத்தினால் சுகமடைந்தானென்றும், அந்த இயேசுவினாலேயே நாம் நித்திய இரட்சிப்பை அடையவேண்டுமென்றும் தயிரியமாய்ச் சொல்ல, ௰௮. அவர்கள் அவனுக்கும் யோவானுக்கும் அந்த நாமத்தில் பிரசங்கிக்கக்கூடாதென்று கற்பித்து, அவர்களைப் பயமுறுத்தினதின் நிமித்தம், ௨௪ சபையார் செபம்பண்ணினது. ௩௧. பராபரன் அவர்கள் கூடியிருந்த இடத்தை அசைத்ததால் அவர்கள் செபத்தைக் கேட்டாரென்று சாட்சியிட்டு, திருச்சபைக்குப் பரிசுத்த ஆவியின் வரங்களையும் அந்நியோந்நிய ஐக்கியத்தையும் உண்டுபண்ணினது.

இப்படி அவனும் யோவானும் சனங்களுட ௧
னே பேசிக்கொண்டிருக்கையில், — அவர்கள் ௨
சனங்களுக்கு உபதேசித்ததினாலும், இயேசுவா
னவர் மரித்தோரிலிருந்து உயிரோடெழுந்தி
ருக்கிறார் என்று அறிவித்ததினாலும், ஆசாரியரா
னவர்களும் தேவாலயத்தைக் காக்கிற சேனைத்

1 யோவா. ௯ அ.—2 யோவா. ௰. ௨௩. அப். ௫. ௰௨.—3 அப். ௫. ௩௰. 4 யோவா. ௭. ௩௯: ௰௨. ௰௬: ௰௭. ௧. 5 மத். ௨௭. ௨.—6 மத். ௨௭. ௨௰. மாற். ௰௫. ௰௧. லூக். ௨௩. ௰௮, ௨௰. ௨௩. யோவா. ௰௮. ௪௰: ௰௯. ௰௫. அப். ௰௩. ௨௮.—7 சங். ௰௬. ௰ மாற். ௧. ௨௪. லூக். ௧. ௩௫. அப். ௨. ௨௭: ௪. ௨௭.—8 அப். ௭. ௫௨: ௨௨. ௰௪.—9 அப். ௨. ௨௪. 10 அப். ௨. ௩௨.—11 மத். ௯. ௨௨. அப். ௪. ௰: ௰௪. ௯.—12 லூக். ௨௩. ௩௪. யோவா. ௰௬. ௩. அப். ௰௩. ௨௭. ௧ கொரி. ௨. ௮. ௧ தீமோ. ௧. ௰௩.—13 லூக். ௨௪. ௪௪. அப். ௰௭. ௩. ௨௬. ௨௨.—14 சங். ௨௨. ஏசா. ௫௩. தானி. ௯. ௨௬. ௧ பே. ௧. ௰, ௰௧.—15 அப். ௨. ௩௮. 16 லூக். ௧. ௭௰.—17 அப். ௧. ௰௧. 18 மத். ௰௭. ௰௧.—19 ௫ மோ. ௰௮. ௰௫. அப். ௭. ௩௭. 20 அப். ௨. ௩௯. ௨ கோ. ௯. ௪. ௰௧. கலா. ௩. ௨௬.—21 ௧ மோ. ௰௨. ௩: ௰௮. ௰௮: ௨௨. ௰௮: ௨௬. ௪. கலா. ௩. ௮. 22 மத். ௰ ௫: ௰௫. ௨௪. லூக். ௨௪. ௪௭. அப். ௰௩. ௩௨, ௩௩, ௪௬. 23 மத். ௧. ௨௧.—24 ௨௨. ௪௪.

* அல்லது காரணரை; எபி. ௨. ௰, ௫. ௯. ௧ யோ. ௫. ௰௧.

தலைவனும், * சதுசேயரானவர்களும் [1]விசனப்
௩ பட்டு,—அவர்களிடத்தில் போய், அவர்களைப்
பிடித்து, சாயங்காலமானபடியினாலே மறுநாள்
௪ வரைக்கும் காவலில் வைத்தார்கள்.—அப்போஸ்
தலருடைய வசனத்தைக் கேட்டவர்களில் அ
நேகர் விசுவாசித்தார்கள்; அவர்களுடைய தொ
கை ஏறக்குறைய ஐயாயிரம்பேராயிருந்தது.
௫ மறுநாளிலே சனங்களுடைய தலைவரும்,
௬ மூப்பரும் வேதபாரகரும்,—[2]பிரதான ஆசாரி
யனாகிய அன்னாவும், காய்பாவும், யோவானும்,
அலெக்சந்தரும், பிரதான ஆசாரிய குடும்பத்
தாராகிய மற்ற யாவரும் எருசலேமிலே கூடி
௭ வந்து,—அவர்களை நடுவே நிற்கப்பண்ணி, [3]நீங்
கள் எந்த வல்லமையினாலே, எந்த நாமத்தினாலே
௮ இதைச் செய்தீர்கள் என்று கேட்டார்கள்.—அப்
பொழுது [4]பேதுரு பரிசுத்த ஆவியினாலே நிறை
ந்து, அவர்களுடனே சொன்னதாவது: சனத்த
லைவரும் இஸ்ரவேலரின் மூப்பருமானவர்க
௯ ளே,—உபகாரத்தைப் பெற்றுக்கொண்ட வியா
திக்காரனை இவன் எதினாலே சொஸ்தம் அ
டைந்தான் என்று இன்றைக்கு எங்களிடத்தில்
௰ விசாரிக்கிறபடியால்,—உங்களாலே சிலுவை
மரத்தில் அறையப்பட்டவருமாய், [5]பராபர
னாலே மரித்தோரிலிருந்து எழுப்பப்பட்டவரு
மாய் இருக்கிற [6]நாசரேத்தூராராகிய இயேசுக்
கிறிஸ்துவின் நாமத்தினாலே இவன் உங்களுக்கு
முன்பாகச் சொஸ்தமாய் நிற்கிறான் என்று நீங்
களும் இஸ்ரவேல் சனங்கள் எல்லாரும் அறிந்தி
௰௧ ருப்பீர்களாக.—[7]வீடுகட்டுகிறவர்களாகிய உங்
களால் அசட்டைபண்ணப்பட்ட கல் அவரே;
௰௨ அவரே கோடிக்குத் தலைக்கல்லானவர்.—[8]அல்
லாமலும் அவராலேயன்றி வேறொருவராலும்
இரட்சிப்பு கிடையாது, நாம் இரட்சிப்பை அ
டையும்படிக்கு வானத்தின்கீழ் எங்கும் மனிதர்
களுக்குள்ளே வேறொரு நாமம் கட்டளை இடப்
படவும் இல்லை என்றான்.
௰௩ பேதுருவும் யோவானும் காண்பித்த தயிரியத்
தை அவர்கள் பார்த்து, [9]அவர்கள் படியாதவர்
கள் என்றும் தாழ்மையானவர்கள் என்றும் அறிந்
தபடியினாலே ஆச்சரியப்பட்டார்கள்; அவர்கள்
இயேசுவுடனேகூட இருந்தவர்கள் என்றும் அ
௰௪ றிந்தார்கள்.—மேலும் குணமாக்கப்பட்ட மனி
தனை [10]அவர்கள் அருகே நிற்கக்கண்டபடியால்
அவர்கள் எதிர்பேசுகிறதற்கு இடமிருக்கவில்
௰௫ லை.—அப்பொழுது அவர்கள் சங்கத்தைவிட்டு
வெளியே போகும்படி கட்டளையிட்டு, பின்பு
தங்களுக்குள்ளே யோசனை பண்ணிக்கொண்டு
௰௬ சொன்னதாவது:—[11]எருசலேமில் வாசம்பண்
ணுகிற யாவருக்கும் தெரிந்திருக்கிற வெளியரங்

கமான அற்புதம் அந்த மனிதர்களால் செய்யப்
பட்டது; [12]அதை நாம் இல்லை என்று சொல்லக்
கூடாது. ஆகையால் நாம் அவர்களை என்னசெய்
யலாம்?—சனங்களுக்குள்ளே அது அதிகமாய்ப் ௰௭
பிரசித்தமாகாதபடிக்கு, இதுமுதல் அவர்கள்
அந்த நாமத்தைக்குறித்து ஒரு மனிதனோடும்
பேசக்கூடாதென்று நாம் அவர்களைப் பயப்ப
டுத்திக் கட்டளை இடவேண்டும் என்று சொல்
லிக்கொண்டு,—[13]அவர்களை அழைத்து, இயேசு ௰௮
வின் நாமத்தைக்குறித்து எவ்வளவும் பேசாமலும்
போதியாமலும் இருக்கும்படி அவர்களுக்குக்
கட்டளையிட்டார்கள்.
அதற்கு மாறுத்தரமாகப் பேதுருவும் யோவா ௰௯
னும் சொன்னதாவது: [14]நாங்கள் பராபரனுக்குக்
கீழ்ப்படிகிறதிலும், உங்களுக்குக் கீழ்ப்படிகிறது
பராபரனுக்குமுன்பாக நியாயமாயிருக்குமா?
இதை நீங்கள் நிதானித்துப்பாருங்கள்.—[15]நாங் ௨௰
கள் கண்டவைகளையும் கேட்டவைகளையும்,
[16]பேசாமல் இருக்கக்கூடாதே என்றார்கள்.—
அப்படியிருந்தும் அற்புதத்தால் சொஸ்தமாக்கப் ௨௧
பட்ட மனிதன் நாற்பது வயதுக்கு அதிக வய
துள்ளவனானபடியால்,—[17]நடந்ததைக்குறித்துச் ௨௨
சனங்கள் எல்லாரும் பராபரனைப் புகழ்ந்தபடி
யினாலே, [18]அப்போஸ்தலர்களைத் தண்டிக்கும்
படிக்குச் சனங்களின் நிமித்தம் சங்கத்தார் வகை
ஒன்றும் காணாமல், அவர்களைப் பின்னும் பயப்
படுத்தி விட்டுவிட்டார்கள்.
[19]அவர்கள் விடப்பட்ட பின்பு தங்களைச் ௨௩
சேர்ந்தவர்களிடத்திற்குப் போய், தங்களுக்குப்
பிரதான ஆசாரியரும் மூப்பரும் சொன்ன யா
வையும் அறிவித்தார்கள்.—அவர்கள் அதைக் ௨௪
கேட்டு ஒருமனப்பட்டுப் பராபரனை நோக்கிச்
சொன்னதாவது: ஆண்டவரே, [20]நீர் வானத்தை
யும், பூமியையும், சமுத்திரத்தையும், அவைகளி
லுள்ள யாவையும் உண்டாக்கின தேவனாய்
இருக்கிறீர்.—உம்முடைய தாசனாகிய தாவீதைக் ௨௫
கொண்டு தேவரீர் சொன்னது: உலகத்தார் என்
னத்திற்குக் கலகம்பண்ணுகிறார்கள்? [21]சனக்
கூட்டங்கள் என்னத்திற்கு வீணான காரியங்க
ளைச் சிந்திக்கிறார்கள்?—பூமியிலுள்ள இராசாக் ௨௬
களும் காரியத்தலைவரும் பராபரனுக்கும் அவரு
டைய கிறிஸ்துவுக்கும் விரோதமாய் எழும்பி,
ஏகமாய்க் கூடினார்கள் என்றீர்.—அதின்படி ௨௭
இந்த நகரத்திலே ஏரோதும் பொந்தியுபிலாத்து
வும் அஞ்ஞானிகளோடும் [22]இஸ்ரவேல் சனங்க
ளோடும் கூடத் தேவரீருடைய கையும் ஆலோ
சனையும் முன்னே குறித்தவைகள் யாவையும்
செய்வதற்கு,—[23]தேவரீர் அபிஷேகம்பண்ணி ௨௮
வைத்த உம்முடைய [24]பரிசுத்த குமாரனாகிய

1 மத். ௨௨. ௨௧. அப். ௨௩. ௮.
2 லூக். ௩. ௨. யோவா. ௰௧. ௪௯: ௰௮. ௰௩.—3 ௨ மோ. ௨. ௰௪. மத். ௨௧. ௨௩ அப். ௭. ௨௭.
4 லூக் ௰௨. ௰௧, ௰௨.—5 அப். ௨. ௨௪.—6 அப். ௩. ௬, ௰௬.
7 சங். ௱௰௮. ௨௨. ஏசா. ௨௮. ௰௬. மத். ௨௧. ௪௨.—8 மத். ௧. ௨௧. அப். ௰. ௪௩. ௧ தீமோ. ௨. ௫.
9 மத். ௰௧. ௨௫. ௧ கொரி. ௧. ௨௭.
10 அப். ௩. ௰௧.—11 அப் ௩. ௯, ௰.
12 யோவா. ௰௧. ௪௭.—13 அப். ௫. ௪௦.
14 அப். ௫. ௨௯.—15 அப். ௨௨ ௰௫. ௧ யோ. ௧. ௧, ௩.—16 அப். ௧. ௮: ௨௨. ௰௫.—17 மத். ௨௧. ௨௬. லூக். ௨௦. ௬, ௰௯: ௨௨. ௨. அப். ௫. ௨௬.—18 அப். ௩. ௭, ௮.—19 அப். ௰௨. ௰௨.—20 ௨ இரா. ௰௯. ௰௫.
21 சங். ௨. ௧.
22 அப். ௨. ௨௩: ௩. ௰௮.
23 மத். ௨௬. ௩. லூக். ௨௨. ௨: ௨௩. ௧, ௮.—24 லூக். ௧. ௩௫.

* அல்லது தேவாலயத்தின் பிரதானி; லூக். ௨௨. ௪. அப். ௫. ௨௪.

இயேசுவுக்கு [1]விரோதமாகமெய்யாய்க் கூடினார்
௨௯ கள்.—அப்படியிருக்கக் கர்த்தாவே, [2]அவர்கள்
(எங்களைப்) பயப்படுத்துகிறதைத் தேவரீர் நோக்
௩௰ கிப்பார்த்து, — [3](பிணியாளிகளைக்) குணமாக்
குதற்கு உம்முடைய வல்லமை வெளிப்படும்
படியாயும். உம்முடைய [4]பரிசுத்த குமாரனாகிய
இயேசுவின் நாமத்தினாலே [5]அதிசயங்களும்
அற்புதங்களும் நடக்கும்படியாயும் செய்து,
உம்முடைய ஊழியக்காரர் உம்முடைய வச
னத்தைமிகுந்த தயிரியத்தோடு சொல்லும்படி அ
வர்களுக்கு அநுக்கிரகம் செய்யும் என்றார்கள்.
௩௧ அவர்கள் செபம்பண்ணினபொழுது, [6]அவர்
கள் கூடியிருந்த இடம் அசைந்தது; அல்லாம
லும் அவர்கள் எல்லாரும் பரிசுத்தஆவியினாலே
நிரப்பப்பட்டு, [7]பராபரனுடைய வசனத்தைத்
தயிரியத்தோடே சொன்னார்கள்.
௩௨ அன்றியும் திரளான விசுவாசிகளுக்கு [8]ஒரே
இருதயமும் ஒரே ஆத்துமாவும் இருந்தன; [9]ஒரு
வனாகிலும் தனக்கு உள்ளவைகளில் ஒன்றை
யும் தன்னுடையதென்று சொல்லவில்லை; சக
லமும் அவர்களுக்குப் பொதுவாயிருந்தன.—
௩௩ [10]கர்த்தராகிய இயேசு உயிரோடெழுந்ததைக்
குறித்து [11]அப்போஸ்தலர்கள் மிகுந்த பலத்தோ
௩௪ டே [12]சாட்சி கொடுத்தார்கள்.—[13]மேலும் நிலங்க
ளையும் வீடுகளையுமுடைய யாவரும் அவைகளை
விற்று, விற்கப்பட்ட பொருள்களின் விலைக்கி
ரயத்தை [14]அப்போஸ்தலரிடத்தில் கொண்டு
போய், அவர்களுடைய பாதத்திலே வைத்தார்
௩௫ கள்.—(அதில்) [15]அவனவனுக்கு வேண்டியிருந்
தபடி பகிர்ந்துகொடுக்கப்பட்டது ஆதலால் அ
வர்களில் ஒருவனும் குறைவுபடவில்லை; ஆனப
டியினாலே மிகுந்த கிருபை அவர்கள் எல்லாருக்
௩௬ கும் உண்டாயிருந்தது.—இலேவியனுமாய், சீப்பு
ருதீவில் பிறந்தவனுமாய், ஆறுதலின் மகனென்று
அருத்தம்கொள்ளுகிற பருனபா என்று பேரை
அப்போஸ்தலராலே பெற்றுக்கொண்டவனுமா
யிருந்த யோசேப்பென்பவனும் [16]தனக்கு உண்
௩௭ டான நிலத்தை விற்று,—திரவியத்தைக் கொண்
டுபோய், அப்போஸ்தலருடைய பாதத்திலே
வைத்தான்.

## ௫. அதிகாரம்.

௧. அனனியாவும், அவன் பெண்சாதி சப்பீராளும் செய்த மாயத்தின் நிமித்தம் பேதுருவினாலே தண்டிக்கப்பட்டு விழுந்து செத்தது. ௰௨. சபையின் விசுவாசம் பெருகும்படி மற்ற அப்போஸ்தலர்களும் அநேக அற்புதங்களைச் செய்தது. ௰௭. அந்த அப்போஸ்தலர் மறுபடியும் காவலில் அடைக்கப்பட்டும், ௰௯. ஒரு தேவதூதனால் விடுதலையாக்கப்பட்டு, யாவருக்கும் பிரசங்கிக்கக் கட்டளைபெற்றது. ௨௧ அவர்கள் தேவாலயத்தில் பிரசங்கித்ததினாலே, ௨௯. மரணத்துக்கு ஏதுவாயிருக்கையில் யூதர்களுக்குள்ளே பெரிய ஆலோசனைக்காரனாயிருந்த கமாலியேல் சொன்ன ஆலோசனையின்படி உயிரோடே விடப்பட்டபின்பு. ௪௰. அடிபட்டும் நாள்தோறும் பிரசங்கித்துப் பராபரனை மகிமைப்படுத்தினது.

அல்லாமலும் அனனியா என்னப்பட்டவனும், ௧
அவனுடைய மனைவியாகிய சப்பீராளும் (தங்
கள்) காணியை விற்றார்கள்.—பின்பு அவன் தன் ௨
மனைவியும் அறிய அந்தக் கிரயத்திலே சில பணத்
தை வஞ்சித்துவைத்து, [17]ஒரு பங்கைமாத்திரம்
கொண்டுபோய், அப்போஸ்தலருடைய பாதத்
திலே வைத்தான். — [18]அப்பொழுது பேதுரு ௩
சொன்னது: அனனியாவே, [19]நிலத்தின் விலைக்
கிரயத்திலே சில பணத்தை நீ மறைத்துவைத்து.
பரிசுத்த ஆவியினிடத்தில் பொய்சொல்லும்ப
டிக்கு,* சாத்தான் உன் இருதயத்தை நிரப்பின
தென்ன?—அது விற்கப்படாமலிருந்தபொழுது ௪
உன்னுடையதாய் இருக்கவில்லையோ? அதை
விற்ற பின்பு, (அதின் கிரயம்) உன் அதிகாரத்
தில் இருக்கவில்லையோ? அப்படியிருக்க, என்
னத்தினாலே நீ இந்தக் காரியத்தை உன் இருதயத்
திலே வைத்தாய்? நீ மனிதரிடத்தில் அல்ல, பரா
பரனிடத்திலே பொய்சொன்னாய் என்றான்.—
இந்த வார்த்தைகளை அனனியா கேட்டபொழுது. ௫
[20]அவன் விழுந்து சீவனை விட்டான்; இந்தச்
சங்கதியைக் கேட்ட யாவருக்கும் மிகுந்த பயம்
உண்டாயிற்று.—சில வாலிபர் எழுந்து, [21]அவனை ௬
ஒரு சேலையில் கட்டி வெளியே கொண்டுபோய்
அடக்கம்பண்ணினார்கள்.

ஏறக்குறைய மூன்றுமணி நேரத்திற்குப் ௭
பின்பு, அவனுடைய மனைவி அந்த நடக்கையை
அறியாமல் உள்ளே போனாள்—அவளுடனே ௮
பேதுரு (உங்கள்) நிலத்தை இவ்வளவு கிரயத்
திற்கா விற்றீர்கள்? அதை எனக்குச் சொல்லென்
றான்; அவள் இவ்வளவுக்கே அதை விற்றோம்
என்றாள்.—அப்பொழுது பேதுரு சொன்னதா ௯
வது: [22]பராபரனுடைய ஆவியைச் சோதிக்கிற
தற்கு நீங்கள் என்னத்தினாலே ஒருமைப்பட்டீர்
கள்? உன் புருஷனை அடக்கம்பண்ணினவர்களு
டைய கால்கள் உன்னையும் வெளியே கொண்டு
போகும்படிக்கு அதோ வாசற்படியிலே வந்தி
ருக்கின்றன என்றான்.—[23]உடனே அவள் அவ ௰
னுடைய பாதத்தில் விழுந்து சீவனைவிட்டாள்;
வாலிபர் உள்ளே சென்று, அவள் மரித்ததைக்
கண்டு, அவளை வெளியே கொண்டுபோய், அவ
ளுடைய புருஷனிடத்தில் அடக்கம்பண்ணி
னார்கள்.—அதினாலே [24]சபையார் எல்லாருக்கும் ௰௧
அதைக் கேட்ட மற்ற யாவருக்கும் மிகுந்த பயம்
உண்டாயிற்று.

[25]பின்னும் அப்போஸ்தலருடைய கைகளினா ௰௨
லே அநேக அதிசயங்களும் அற்புதங்களும் சன
ங்களுக்குள்ளே செய்யப்பட்டன; [26]எல்லாரும்
ஒருமனப்பட்டு, சாலோமோனுடைய மண்ட

1 லூக். ௪. ௰௮. யோவா. ௰. ௩௬. உ. உ, ௪: ௰௧. ௨௧.—7 ௨௯. 2 ௰௧, ௩௩. வச. அப் ௯. ௨௭: ௰௩. ௨௪: ௰௪. ௩: ௰௯. ௮: ௨௧ ௨௯: ௨௮.௩௩. எபே ௬.௰௯. வ௪.—8 அப். ௫ ௰௨. உரோ. ௰௫.௫,௬. ௨ கொரி. ௰௩.௰௧.பிலி. ௧.௨௭: ௨.௨. ௧ பே.௩.௮. 3 அப். ௨. ௪௩: ௫. ௰௨.—4 அப்.௩, ௯, ௰௩.—5 ௨௭. வச.—6 அப். 9 அப்.௨ ௪௪.—10 அப்.௧.௮. 11 அப் ௧. ௨௨.—12 அப். ௨. ௪௭.

13 அப்.௨ ௪௫.—14 ௩௭.வச. அப். ௫. ௨.—15 அப். ௨. ௪௫: ௬. ௧. 16 ௩௪, ௩௫. வச. அப். ௫. ௧, ௨. 17 அப். ௪. ௩௭.—18 ௪ மோ. ௩௦ ௨. ௫ மோ. ௨௩.௨௨. பிர.௫.௪. 19 லூக்.௨௨.௩.—20 ௰,௰௧.வச. 21 யோவா. ௰௩. ௨௭.—22 ௯. வச. மத். ௪ ௭.—23 ௫. வச. 24 ௫.வச அப். ௨. ௪௩: ௰௯. ௰௭. 25 அப். ௨ ௪௩. ௰௪. ௩: ௰௯. ௰௧. உரோ ௰௫ ௰௯ ௨ கொரி.௰௨.௰௨. எபி.௨.௪.—26 அப் ௧.௰௪: ௪ ௩௨.

* அல்லது வஞ்சிக்கிறதற்கு; ௯. வச.

௰௩ பத்தில் இருந்தார்கள் -[1]மற்றவர்களில் ஒருவரும்
அவர்களுடனே சேர்ந்திருக்கத் துணியவில்லை.-
௰௪ அப்படியிருந்தும் திரளான புருஷரும் ஸ்திரி
களும் கர்த்தாவினிடத்தில் விசுவாசமுள்ளவர்
களாகிச் சேர்த்துக்கொள்ளப்பட்டார்கள் —
௰௫ [2]அல்லாமலும் சனங்கள் அப்போஸ்தலரை
மேன்மைப்படுத்தினார்கள்; அதினாலே அவர்
கள் பிணியாளிகளைப் படுக்கைகளின்மேலும்
கட்டில்களின்மேலும் கிடத்தி, பேதுரு நடந்து
போகையில், [3]அவனுடைய நிழலாகிலும் சில
ரில் படும்படிக்கு அவர்களை வெளியே வீதிக
௰௬ ளில்* கொண்டுபோனார்கள்.—சுற்றுக் கிராமங்
களிலுமிருந்து திரளான சனங்கள் [4]பிணியா
ளிகளையும் அசுத்த ஆவிகளால் வாதிக்கப்பட்ட
வர்களையும் எருசலேமுக்குக் கொண்டுபோனார்
கள்; அவர்கள் எல்லாரும் குணமாக்கப்பட்டார்
கள்.

௰௭ [5]அப்பொழுது பிரதான ஆசாரியனும் அவ
னுடனேகூட இருந்த சதுசேயர் வகுப்பைச்
சேர்ந்த அனைவரும் எழும்பி, வைராக்கியத்தால்†
௰௮ நிரப்பப்பட்டு,—[6]அப்போஸ்தலர்களைப் பிடித்
து, நகரத்தின் சிறைச்சாலையிலே வைத்தார்கள்.-
௰௯ இராத்திரியிலே [7]பராபரனுடைய தூதன் சிறைச்
சாலையின் கதவுகளைத் திறந்து, அவர்களை வெளி
௨௰ யே கொண்டுவந்து,—நீங்கள் போய்த் தேவால
யத்திலே நின்று இந்தச் [8]ஜீவவார்த்தைகள் எல்
லாவற்றையும் சனங்களுக்குச் சொல்லுங்கள்
௨௧ என்றான்.—அந்தப்படி அவர்கள் கேட்டு, அதி
காலையிலே தேவாலயத்திற்குப் போய்ப் போத
கம்பண்ணினார்கள்; அத்தருணத்திலே [9]பிரதான
ஆசாரியனும் அவனுடனேகூட இருந்தவர்க
ளும்போய், பெரிய சங்கத்தாரையும் இஸ்ரவேல்
சனங்களின் மூப்பர் எல்லாரையும் கூடி வரவ
ழைத்து, அப்போஸ்தலரைக் கொண்டுவரும்படி,
சிறைச்சாலைக்குச் (சேவகரை) அனுப்பினார்
௨௨ கள்.—அந்தப்படி சேவகர் காவல் வீட்டிற்குப்
போய், அங்கே அவர்களைக் காணாமல் திரும்பி,—
௨௩ சிறைச்சாலை மிகவும் பத்திரமாய்ப் பூட்டப்பட்
டிருக்கவும், காவற்காரர் கதவுகளின் முன்னே
நிற்கவும் கண்டோம்; அவைகளைத் திறந்தபொ
ழுது, உள்ளே ஒருவரையும் காணோமென்று அ
௨௪ றிவித்தார்கள்.—இந்தச் செய்தியை ஆசாரியனும்,
தேவாலயத்தைக் காக்கிற [10]சேனைத்தலைவனும்,
பிரதான ஆசாரியரும் கேட்டு, இதென்னமாய்
இருக்கிறதென்று அவர்களைக்குறித்துச் சந்தேக
௨௫ ப்பட்டார்கள்.—அப்பொழுது ஒருவன் சேர்ந்து,
நீங்கள் காவலில் வைத்த மனிதர் தேவாலயத்தி
லே நின்று, சனங்களுக்கு உபதேசம்பண்ணுகி
றார்கள் என்று அறிவித்தான்.

உடனே சேனைத்தலைவன் சேவகரோடும் ௨௬
கூடப் போய், சனங்களாலே கல்லெறியப்படா
தபடிக்கு, அவர்களுக்குப் [11]பயந்ததினாலே பல
வந்தம்பண்ணாமல் அப்போஸ்தலரை அழைத்துக்
கொண்டான்.—அப்படி அவர்கள் அவர்களை ௨௭
அழைத்துப்போய், பெரிய சங்கத்தாருக்குமுன்
பாக நிறுத்தினார்கள்; அப்பொழுது பிரதான ஆ
சாரியன் அவர்களை நோக்கி,—[12]நீங்கள் அந்த ௨௮
நாமத்தைக்குறித்து உபதேசம்பண்ணக்கூடா
தென்று நாங்கள் உங்களுக்குக் கெட்டியாய்க்
கட்டளையிடவில்லையோ? அப்படியிருந்தும்,
நீங்கள் உங்கள் உபதேசத்தினாலே எருசலேமை
நிரப்பி, அந்த மனிதனுடைய [13]இரத்தப்பழி எங்
கள்மேல் வரப்பண்ண [14]விரும்புகிறீர்கள் என்று
சொன்னான்.

அதற்குப் பேதுருவும் (மற்ற) அப்போஸ்தல ௨௯
ரும் சொன்னதாவது: நாங்கள் மனிதருக்குக்
கீழ்ப்படிகிறதிலும் [15]பராபரனுக்குக் கீழ்ப்படிய
வேண்டும்.—[16]நீங்கள் மரத்திலே தூக்கிக் ௩௰
கொலைசெய்த இயேசுவை [17]நம்முடைய முன்
னோர்களுடைய தேவன் எழுப்பி,—[18]இஸ்ர ௩௧
வேலருக்கு மனந்திரும்புதலையும் பாவமன்னிப்
பையும் கொடுக்கிறதற்கு, [19]அவரை அதிபதியா
கவும் [20]இரட்சகராகவும் [21]தமது வலதுகையி
னாலே உயர்த்தினார்.—இந்தச் சங்கதிகளைக்கு ௩௨
றித்து [22]நாங்களும், பராபரன் தமக்குக் கீழ்ப்படி
கிறவர்களுக்குக் கொடுத்த [23]பரிசுத்த ஆவியும்,
அவருடைய சாட்சிகளாயிருக்கிறோம் என்றார்
கள்.

[24]அதை அவர்கள் கேட்டு, மிகுந்த மூர்க்கம் ௩௩
அடைந்து, அவர்களைக் கொலைசெய்யும்படிக்கு
யோசனைபண்ணினார்கள்.—அப்பொழுது எல் ௩௪
லாச் சனங்களாலும் கனம்பெற்றுக்கொண்ட
வேதசாஸ்திரியாகிய [25]கமாலியேல் என்னப்
பட்ட பரிசேயனானவன் பெரிய சங்கத்தாருக்
குள்ளே எழுந்திருந்து, அப்போஸ்தலரைச் சற்
றுநேரம் வெளியே கொண்டுபோகச்சொல்லிச்
சங்கத்தாருடனே சொன்னதாவது:—இஸ்ரவே ௩௫
லரே, நீங்கள் அந்த மனிதருக்குச் செய்ய நினைக்
கிறதைக்குறித்து, எச்சரிக்கையாய் இருப்பீர்க
ளாக.—இந்த நாள்களுக்குமுன்னே தெயுதா என் ௩௬
பவன் எழும்பி, தன்னைப் பெரியவன் என்று
சொல்லி ஏறக்குறைய நானூறுபேர் தன்னை அ
டுத்துக்கொள்ளும்படி செய்து பின்பு அழிக்கப்
பட்டான்; அவனை நம்பியிருந்த‡ அனைவரும்
கலைந்து வீணாய்ப் போய்விட்டார்கள்.—அவ ௩௭
னுக்குப் பின்பு குடிமதிப்பு செய்யப்பட்ட நாள்
களிலே, கலிலேயனாகிய யூதா எழும்பி, அநேக
சனங்களைத் தன் வசமாக்கினான், அவனும்

1 யோவா. ௯,௨௨: ௰௨., ௪௨: ௰௯. ௰௯. ௨௩.—2 அப். ௨. ௪௭: ௪. ௨௧.—3 மத். ௯. ௨௧: ௰௪ ௩௬ அப். ௰௯. ௰௨.—4 மாற் ௰௬.௰௭,௰௮. யோவா. ௰௪ ௰௨.—5 அப் ௪.௬,௨.௬.—6 லூக். ௨௧. ௰௨.—7 அப். ௰௨. ௭: ௰௭.௬. ௧ யோ ௫.௰௧.—8 யோவா. ௬. ௬௮: ௬௮.—9 அப்.௪. ௫,௬.—10 லூக் ௨௨ ௪. அப் ௪.௧. 11 மத் ௨௧ ௨௬.—12 அப் ௪.௰௮. 13 அப் ௨ ௨௩,௩௬: ௩.௰௫: ௭.௫௨. 14 மத். ௨௭. ௨௫: ௨௭. ௨௫.

15 அப்.௪.௰௯.—16 அப்.௰.௩௯: ௰௩. ௨௯. கலா.௩.௰௩. ௧ பே.௨.௨௪. 17 அப்.௩.௰௩,௰௫: ௨௨.௰௪. 18 லூக்.௨௪.௪௭. அப் ௩.௨௬: ௰௩. ௩௮. எபே. ௧. ௭. கொலோ. ௧. ௰௪.—19 அப்.௩.௰௫.—20 மத். ௧. ௨௧.—21 அப்.௨.௩௩,௩௬. பிலி. ௨. ௯. எபி. ௨. ௰: ௰௨. ௨. 22 அப் ௨. ௪: ௰. ௪௪.—23 யோவா. ௰௫.௨௬,௨௭.—24 அப்.௨. ௩௭: ௭.௫௪.—25 அப் ௨௨.௩.

* அல்லது வீதிகள்தோறும்.—† அல்லது பொறாமையினால்.—‡ அல்லது அவனுக்குக் கீழ்ப்படிந்த.

அழிந்துபோனான், அவனை நம்பியிருந்த அனை
௩௮ வரும் சிதறடிக்கப்பட்டார்கள். — ஆனபடியி
னாலே நான் உங்களுக்குச் சொல்லுகிறதென்ன
வென்றால், [1]இந்த மனிதர்களுடைய யோசனை,
அல்லது இவர்களுடைய கிரியை மனிதரால்
௩௯ உண்டானதானால் அது ஒழிந்துபோம்.—[2]அது
பராபரனால் உண்டானால், அதை நீங்கள் ஒழித்
துப்போடமாட்டீர்கள். ஆதலால் [3]நீங்கள் பரா
பரனோடே போர்செய்கிறவர்களாய்க் காணப்
படாதபடிக்கு, இவர்களுக்கு ஒன்றும் செய்யா
மல் இவர்களை விடுங்கள் என்றான்.

௪௰ அவனோடே மற்றவர்கள் பொருந்தி, [4]அப்
போஸ்தலரை வரவழைத்து, [5]அடித்து, இயேசு
வின் நாமத்தைக்குறித்து அவர்கள் பேசாதிருக்
கும்படிக்குக் கட்டளையிட்டு, அவர்களை விட்டு
௪௧ விட்டார்கள்.—அவர்கள் தாங்கள் அவருடைய
நாமத்திற்காகக் கனவீனப்படுகிறதற்குப் பாத்
திரர் என்று எண்ணப்பட்டபடியினாலே, [6]சந்
தோஷமாய்ப் பெரிய சங்கத்தைவிட்டுப் புறப்
௪௨ பட்டுப்போய், — [7]தினந்தோறும் தேவாலயத்
திலேயும் வீடுகளிலேயும் [8]ஓயாமல் உபதேசம்
பண்ணி, இயேசுவைக் கிறிஸ்தென்று சுவிசே
ஷமாய் அறிவித்துவந்தார்கள்.

## ௬. அதிகாரம்.

௧. அப்போஸ்தலர்கள் ஆத்துமபோசனமாகிய தேவவசனத்தைப் பரிமாற வேண்டியதாகையால், ஏழைக்காகச் சரீரபாரமரிப்புகளை, ௩. தெரிந்து கொள்ளப்பட்ட ஏழுபேர்கள் உதவிக்காரர்களாக ஏற்படுத்தப்பட்டது. ௫ இவ்வேழுபேர்களில் விசுவாசத்தாலும் பரிசுத்தத்தாலும் நிறைந்த ஸ்தேவான் ஒருவன், ௰௨. தர்க்கத்தால் செயிக்கப்பட்ட எதிராளிகளாலே பிடிக்கப்பட்டு, ௰௩. பரிசுத்த ஸ்தலத்தையும், நியாயப்பிரமாணத்தையும் தூஷணித்ததாய் அநியாயமாய்க் குற்றஞ்சாற்றப்பட்டது.

௧ அந்த நாள்களில் [9]சீஷர்கள் பெருகினபொ
ழுது கிரேக்கரானவர்களில் உள்ள [10]கைம்பெண்
கள் நாடோறும் உள்ள விசாரணையிலே நன்றாய்
எண்ணிக்கொள்ளப்படாதபடியினாலே,[11]கிரேக்
கரானவர்கள் எபிரேயருக்கு விரோதமாய் முறு
௨ முறுத்தார்கள்.— அப்பொழுது பன்னிருவரும்
சீஷர்களாகிய திரளைக் கூடிவரவழைத்துச்
சொன்னதாவது: [12]நாங்கள் பராபரனுடைய
வசனம் போதிக்கிறதைவிட்டு, பந்திகளுக்கு
௩ றித்து விசாரிக்கிறது தகாது.—ஆகையால் சகோ
தரரே, நீங்கள் உங்களுக்குள்ளே பரிசுத்த ஆவி
யும் ஞானமும் நிறைந்து, நற்சாட்சி பெற்றிருக்
கிற [13]ஏழுபேரையும் தெரிந்துகொள்ளுங்கள்;
அவர்களை இந்த வேலைக்காக ஏற்படுத்துவோம்.-
௪ [14]நாங்கள் செபம்பண்ணுதலிலும் (தேவ) வச
னத்தைப் போதிக்கிற ஊழியத்திலும் இடைவி
டாமல் தரித்திருப்போம் என்றார்கள். — இந்த ௫
யோசனை சபையார் எல்லாருக்கும் பிரியமாய்
இருந்தது. ஆதலால் அவர்கள் [15]விசுவாசமும்
பரிசுத்த ஆவியும் நிறைந்தவனாகிய ஸ்தேவா
னையும், [16]பிலிப்பையும், பிரொகோரையும், நிக்
கானோரையும், தீமோனையும், பருமேனாவையும்,
[17]யூதமார்க்கத்தானான அந்தியோகிய பட்டணத்
தானாகிய நிக்கோலாவையும் தெரிந்துகொண்
டு, —அவர்களை அப்போஸ்தலருக்குமுன்பாக ௬
நிறுத்தினார்கள், [18]இவர்கள் செபம்பண்ணி,
[19]அவர்கள்மேலே தங்கள் கைகளை வைத்தார்
கள்.

பின்பு [20]பராபரனுடைய வசனம் வளர்ந்தது; ௭
சீஷருடைய இலக்கம் எருசலேமிலே மிகவும்
பெருகிற்று; [21]ஆசாரியர்களில் அநேகரும் விசு
வாசத்திற்குக் கீழ்ப்பட்டார்கள்.

அன்றியும் ஸ்தேவானென்பவன் கிருபையி ௮
னாலும் பலத்தினாலும் நிறைந்து, சனங்களுக்
குள்ளே பெரிய அற்புதங்களையும் அதிசயங்க
ளையும் செய்தான். — அப்பொழுது லிபர்த்தீ ௯
னர் என்னப்பட்டவர்களின் செபஆலயத்தைச்
சேர்ந்தவர்களிலும், கிரேனே பட்டணத்தாரி
லும், அலெக்குசந்திரிய பட்டணத்தாரிலும்,
கிலீக்கியா தேசத்தாரிலும், ஆசியா தேசத்தாரி
லும் சிலர் எழும்பி, ஸ்தேவானுடனே தருக்கம்
பண்ணிக்கொண்டார்கள். — [22]அவன் பேசின ௰
ஞானத்தோடும் ஆவியோடும் எதிர்த்து நிற்க
அவர்களுக்கு வல்லமையில்லை.—அப்பொழுது ௰௧
அவர்கள் இரகசியமாய்ச் சில மனிதரைச் சம்பா
தித்து, இவன் [23]மோசேயுக்கும் பராபரனுக்கும்
விரோதமாகத் தூஷணமான வசனங்களைப் பே
சக்கேட்டோம் என்று சொல்லும்படிசெய்து,—
பின்பு சனங்களையும், மூப்பரையும், வேதபார ௰௨
கரையும் எழுப்பி, அவன்மேல் பாய்ந்து, அவ
னைப் பெரிய சங்கத்தாருக்குமுன்பாக இழுத்
துக்கொண்டுபோய், — பொய்ச்சாட்சிகளையும் ௰௩
ஏற்படுத்தினார்கள்;அவர்கள் சொன்னது: இவன்
பரிசுத்த ஸ்தலத்திற்கும் வேதநூலுக்கும் தூஷ
ணமான வசனங்களை ஓயாமல் பேசுகிறான்.—
நாசரேத்தூராராகிய [24]அந்த இயேசு என்பவர் ௰௪
இந்த ஸ்தலத்தை அழித்து, [25]மோசே நமக்குக்
கொடுத்த முறைமைகளை* மாற்றுவாரென்று
இவன் சொல்லக்கேட்டோம் என்றார்கள். —
பெரிய சங்கத்தில் உளுக்காந்திருந்த யாவரும் ௰௫
அவன்மேல் கண்ணோட்டமானபொழுது, அவ
னுடைய முகம் தேவதூதன்முகம்போலிருக்கக்
கண்டார்கள்.

1 லூக். ௨௧. ௰௫. ஏசா. அ. ௰. மத். லூக். ௧. ௨: ௧ பே. ௪. ௰௩, ௰௯.
௰௫. ௰௩. ——2 லூக். ௨௧. ௰௫. 7 அப். ௨. ௪௧.-8 அப். ௪. ௨௰, ௨௯.
௧ கொரி. ௧. ௨௫. —3 அப். ௭. ௫௧: 9 அப் ௨. ௪௧: ௪. ௪: ௫. ௰௪. ௭. ௮௪.
௯. ௫: ௨௩. ௯.—4 அப். ௪. ௰௮. 10 அப். ௪. ௩௫.—11 அப். ௯. ௨௯:
5 மத். ௰. ௰௭: ௨௩. ௩௪. மாற். ௰௩. ௯. ௰௧. ௨௰.—12 ௨மோ. ௰௮. ௰௭.
6 மத். ௫. ௰௨. ௨ரோ. ௫. ௩. ௨ கொரி 13 ௫ மோ. ௧. ௰௩. அப். ௧. ௨௧: ௰௯. ௨.
௰௨. ௰. பிலி. ௧. ௨௯. எபி. ௰. ௩௪. ௧ தீமோ. ௩. ௭.

14 அப். ௨. ௪௨.—15 அப். ௰௪ ௨௪. ௧. ௯.—21 யோவா. ௰௨. ௪௨.
16 அப். அ. ௫, ௨௬: ௨௧. அ. 22 லூக். ௨௧. ௰௫. அப். ௫. ௰௯.
17 வெளி. ௨. ௬, ௰௫. ௨ மோ. ௪ ௰௨. ஏசா. ௫௪. ௰௭.
18 அப். ௧ ௨௪.—19 அப். அ. ௰௭: ௯. 23 ௧ இரா. ௨௧. ௰, ௰௩. மத் ௨௬. ௫௯,
௰௭: ௰௩. ௧. ௧ தீமோ. ௪. ௰௪: ௫. ௨௰.—24 அப். ௨௫. அ.
௨௨. ௨ தீமோ. ௧. ௬. -20 அப். 25 தானி. ௯ ௨௬.
௰௨. ௨௪: ௰௯. ௨௰. கொலோ.

* அல்லது சடங்குகளை.

## எ. அதிகாரம்.

க. ஸ்தேவான் துஷணைச்செய்கைக்கு உத்தரவாக, உ. ஆபிரகாம் பராபரனை ஸிபாயமாய்த் தொழுதுகொண்டதையும், உய. மோசே பிறவாததற்கு முன்னும், கூடாரமும் தேவாலயமும் கட்டப்படாததற்குமுன்னும பராபரன் பிதாக்களை இப்படித் தெரிந்துகொண்டதையும், கஎ. மோசேதானே கிறிஸ்துவைக்குறித்துச் சாட்சியிட்டதையும், சச. தெய்வ கட்டளைப்படி உண்டாக்கப்பட்ட புறம்பான சடங்குகள் எல்லாம் கொஞ்சக் காலத்துக்குமாத்திரம் குறிக்கப்பட்டதையும் சொல்லி, ருக. உலகத்தில் வருவாரென்று தீர்க்கதரிசிகளினால் முன்னறிவிக்கப்பட்ட நீதிபரராகிய கிறிஸ்துவைக் கொலைசெய்த துரோகத்துக்காக அவர்களைக் கடிந்துகொண்டு, ருச. இதின்பொருட்டு அவர்கள் அவனைக் கல்லெறிந்து கொல்லும்போது, அவன் தன ஆத்துமாவை இயேசுவினிடத்திற்கு ஒப்புவித்து அவர்களுக்காக வேண்டிக்கொண்டது.

௧ பிரதான ஆசாரியன் அவனை நோக்கி, இப்படி
௨ யா நடந்ததென்றான்.—அதற்கு அவன் சொன்ன
தாவது: [1]சகோதரரும் பிதாக்களுமானவர்களே,
கேட்பீர்களாக; நம்முடைய பிதாவாகிய ஆபிர
காம் காரானூரிலே குடியிருக்கிறதற்குமுன்னே
மேசொப்பொத்தாமியா நாட்டிலே இருந்தபொ
ழுது, மகிமைபொருந்திய பராபரன் அவனுக்
௩ குத் தரிசனையாகி,-[2]நீ உன் தேசத்தையும் இனத்
தாரையும்விட்டுப் புறப்பட்டு, நாம் உனக்குக்
௪ காண்பிக்கும் தேசத்திற்குப் போ என்றார்.—அப்
பொழுது [3]அவன் கல்தேயா தேசத்தைவிட்டுப்
புறப்பட்டு, காரானூரிலே வாசம்பண்ணினான்.
மேலும் அவனுடைய தகப்பன் மரித்தபின்பு,
அவ்விடத்தைவிட்டு, நீங்கள் இப்பொழுது குடி
யிருக்கிற இத்தேசத்திற்கு வந்து குடியிருக்கும்
௫ படி செய்தார்.—இதில் ஒரு அடி நிலத்தையாகி
லும் அவனுக்குச் சுதந்தரமாகக் கொடாமல்,
[4]அவன் பிள்ளையில்லாதிருந்த காலத்திலே, உனக்
கும் உனக்குப் பின்வரும் உன் சந்ததிக்கும் இ
தைக் காணியாட்சியாகத் தருவேன் என்று அவ
௬ னுக்கு வாக்குத்தத்தம்பண்ணினார்.—அன்றியும்
பராபரன் அவனுடனே சொன்னது: [5]உன்னு
டைய சந்ததியார் அந்நிய தேசத்திலே குடியி
ருப்பார்கள்; அத்தேசத்தார் அவர்களை அடிமைக
ளாக்கி, [6]நானூறு வருஷம் உபத்திரவப்படுத்து
௭ வார்கள்.—அவர்கள் அடிமை வேலைசெய்யும்
அந்தத் தேசத்தாரை நான் ஆக்கினைக்குட்படுத்து
வேன்; அதற்குப் பின்பு உன் சந்ததியார் புறப்
பட்டு வந்து, [7]இவ்விடத்திலே எனக்கு ஆராதனை
செய்வார்கள் என்று பராபரன் சொன்னார்.—
௮ அன்றியும், [8]விருத்தசேதனம்பண்ணுதலை அவர்
அவனுக்கு ஏற்படுத்தினார்; [9]அந்தப்படியே அ
வன் ஈசாக்கைப் பெற்றபொழுது, எட்டாம் நா
ளில் அவனுக்கு விருத்தசேதனம்பண்ணினான்;
[10]ஈசாக்கானவன் யாக்கோபையும், [11]யாக்கோ
பானவன் கோத்திரத்தலைவராகிய பன்னிரண்டு
பேரையும் பெற்று, அவர்களுக்கு விருத்தசேத
னம்பண்ணினார்கள்.

[12]பின்பு கோத்திரத்தலைவராகிய அவர்கள் ௯
பொறாமைகொண்டு, யோசேப்பை எகிப்துக்
குப் (போன வியாபாரிகளுக்கு) விற்றுப்போட்
டார்கள்.—[13]பராபரன் அவனுடைய பங்கிலி ௰
ருந்து, எல்லா உபத்திரவங்களினின்றும் அவ
னைத் தூக்கி எடுத்து, [14]எகிப்தின் இராசாவாகிய
பார்வோனுக்குமுன்பாக அவனுக்குக் கிருபை
யையும் ஞானத்தையும் கொடுத்தார்; அந்த இரா
சா இவனை எகிப்து தேசத்திற்கும், தன் குடும்பம்
எல்லாவற்றிற்கும் துரையாக வைத்தான்.—
பின்பு [15]எகிப்து கானான் தேசங்கள் முழுவதி ௰௧
லும் பஞ்சமும் மிகுந்த உபத்திரவமும் உண்டா
யின; நம்முடைய பிதாக்களுக்கும் ஆகாரம்
கிடைக்கவில்லை.—[16]அப்பொழுது எகிப்திலே ௰௨
தானியம் உண்டென்று யாக்கோபு கேள்விப்ப
ட்டு, நம்முடைய பிதாக்களை முதலாம்தரம் (அவ்
விடத்திற்கு) அனுப்பினார்.—[17]இரண்டாம்தரம் ௰௩
யோசேப்பு தன் சகோதரருக்கு அறியப்பட்
டான்; அல்லாமலும் யோசேப்பினுடைய வம்
சம் பார்வோனுக்குத் [18]தெரியவந்தது.—பின்பு ௰௪
யோசேப்பு தன் தகப்பன் யாக்கோபும் (மற்ற)
[19]இனத்தார் யாவருமாகிய எழுபத்தைந்துபேரை
யும் அழைக்க அனுப்பினான்.—[20]அந்தப்படி யாக் ௰௫
கோபு எகிப்துக்குப் போனான்; [21]பின்பு அவ
னும் நம்முடைய பிதாக்களும் மரித்து, [22]அங்
கேயிருந்து சீகேமூருக்குக் கொண்டுபோகப்
பட்டு, — [23]ஆபிரகாம் சீகேமின் தகப்பனாகிய ௰௬
எமோருடைய சந்ததியாரிடத்தில் விலைக்கிர
யமாக வாங்கியிருந்த சமாதியில் வைக்கப்பட்
டார்கள்.

[24]பின்பு ஆபிரகாமுக்குப் பராபரன் ஆணை ௰௭
யிட்டுப் பண்ணின வாக்குத்தத்தத்தின் காலம்
சமீபமானபொழுது, யோசேப்பை அறியாத
வேறொரு இராசா தோன்றின காலம் அள
வும்,—[25]சனங்கள் எகிப்திலே அதிகமாய்ப் பெ ௰௮
ருகினார்கள். — அவன் நம்முடைய வம்சத்தா ௰௯
ரைக்குறித்து வஞ்சனையாய் நடந்து, [26]நம்மு
டைய பிதாக்களின் குழந்தைகள் உயிரோடிரா
தபடிக்கு அவர்கள் அவைகளை வெளியே போட்
டுவிடும்படிசெய்து, அவர்களை உபத்திரவப்படுத்
தினான்.

[27]அக்காலத்திலே மோசே என்பவன் பிறந்து, ௨௰
[28]பராபரனாலே * அழகுள்ளவனாய் இருந்து, மூன்
று மாதம் தன் தகப்பனுடைய வீட்டிலே வளர்க்
கப்பட்டான்.—[29]அவனும் வெளியே போட்டு ௨௧
விடப்பட்டபொழுது, பார்வோனுடைய குமா
ரத்தி அவனை எடுத்து, தனக்குக் குமாரனாக வள

1 அப் உ௨. க.—2 க மோ. ௰௨. க. 8 க மோ. ௰எ. கூ-௰௪.—9 க மோ.
3 க மோ. ௰க கக: ௰௨. ச, ௬. உக. உ-ச.—10 க மோ. உ௬.
4 க மோ ௰௨. எ: ௰௩. ௰௬: ௰௬. உக.—11 க மோ. உகூ. ௩க. ௩:
௩. ௰அ: ௰எ அ: உகூ. க. ௩௰. ௬. ௩: ௩௬. ௰அ, உக.
5 க மோ. ௰௬. ௰௩, ௰௪.—6 உ மோ. 12 க மோ. ௩எ ச, ௰௪, உஅ. சங். ௩௬.
௰௨. ச௰. கலா. ௩. ௰எ. ௰எ.-13 க மோ. ௩கூ. உ, உக, உ௩.
7 உ மோ. ௩. ௰௨. 14 க மோ. ச௩. ௩எ: ச௨. க.

15 க மோ. ச௩. ௬ச.—16 க மோ. 23 க மோ உ௩. ௰௬: ௩௩. ௰கூ.
ச௨. க.—17 க மோ. ச௬. ச, ௰கூ. 24 க மோ. ௰௬. ௰௩. கூ. ௰ச.
18 க மோ. ச௬. கூ, உஎ. 25 உ மோ. ௩. எ. அ, கூ. சங். ௩௬ உச,
19 க மோ. ச௩. உஎ. ௬ மோ ௰. உ௨. உ௬.—26 உ மோ. க. உ௨.
20 க மோ. ச௩. ௬.—21 க மோ. ச௩. 27 உ மோ. உ. உ.— 28 எபி. ௰௩. உ௩.
௩௩. உ மோ. க. கூ.—22 உ மோ. 29 உ மோ. உ. ௩—௰.
௰௩. ௰கூ. யோசு. உச ௩௨.

* அல்லது மிகவும் அழகுள்ளவனாய்.

௨௨ ர்த்தாள்.—அதினாலே மோசே எகிப்தாருடைய
கல்விகள் யாவையும் படித்துக்கொண்டு, [1]வச
னங்களிலேயும் செய்கைகளிலேயும் வல்லவனா
௨௩ னான்.—அவன் நாற்பது வயதுள்ளவனானபொ
ழுது, இஸ்ரவேல் சந்ததியாராகிய தன்னுடைய
வம்சத்தாரைச் சந்தித்துப் பார்க்கும்படி விருப்ப
௨௪ முள்ளவனாகிப் போனபொழுது,—அநியாயம் அ
னுபவிக்கிற ஒருவனைக் கண்டு, (அவனைக்) காப்
௨௫ பாற்றி, எகிப்தனை வெட்டினான்.—[2]அன்றியும்*
அவன் தன் கையினாலே பராபரன் தங்களுக்கு
இரட்சிப்பைத் தருவாரென்று தன் வம்சத்தார்
அறிந்துகொள்வார்கள் என்று நினைத்தான்; அவர்
௨௬ கள் அப்படி அறிந்துகொள்ளவில்லை.—[3]மறுநா
ளிலே சண்டைபண்ணிக்கொண்டிருக்கிற சில
ருக்கு அவன் தன்னைக் காண்பித்துப் புருஷரே,
நீங்கள் சகோதரரானவர்கள்; நீங்கள் ஒருவருக்
கொருவர் அநியாயம்செய்கிறதென்ன என்று அ
வர்களைச் சமாதானப்படுத்தும்படி பேசினான்.—
௨௭ (அவர்களில்) பிறனுக்கு அநியாயம்செய்தவன்
சொன்னது: [4]எங்களுக்கு உன்னைத் தலைவ
னென்றும் நியாயாதிபதியென்றும் வைத்தவன்
௨௮ எவன்?—நேற்று நீ அந்த எகிப்தனைக் கொலை
செய்ததுபோல, என்னையும் கொலைசெய்ய மன
தாயிருக்கிறாயா என்று அவனைத் தள்ளினான்.—
௨௯ [5]இந்த வார்த்தையினாலே மோசே ஓடிப்போய்,
மாதியான் தேசத்தில் அந்நியனாய்ச் சஞ்சரித்து,
அங்கே இரண்டு குமாரரைப் பெற்றான்.

௩௰ [6]அன்றியும் நாற்பது வருஷம் சென்றபின்பு,
சீனாமலையின் வனாந்தரத்திலே பராபரனுடைய
தூதனானவர் ஒரு முட்செடி எரிகிற அக்கினிச்
௩௧ சுவாலையில் அவனுக்குத் தரிசனையானார்.—மோ
சே அதைக் கண்டு அந்தத் தரிசனையைக்குறித்து
அதிசயப்பட்டு அதைப் பார்க்கும்படி சேர்ந்து
௩௨ வருகிறபொழுது, பராபரனானவர்,—[7]நான் உன்
பிதாக்களாகிய ஆபிரகாமுடைய தேவனுமாய்
ஈசாக்கினுடைய தேவனுமாய் யாக்கோபினு
டைய தேவனுமாய் இருக்கிற பராபரனென்று
திருவுளம்பற்றின சத்தம் அவனுக்குத் தோன்
றிற்று; அப்பொழுது மோசே நடுக்கமடைந்து,
(அதினாலே அதைப்) பார்க்கும்படி துணியாமல்
௩௩ இருந்தான்.—பின்னும் பராபரன் அவனுடனே
சொன்னது: [8]நீ நிற்கிற இடம் பரிசுத்த பூமியா
கையால், உன் பாதஇரட்சைகளைக் கழற்றிப்
௩௪ போடு.—[9]எகிப்திலிருக்கிற என்னுடைய சனங்
களின் உபத்திரவத்தை நான்தானே பார்த்து, அ
வர்களுடைய தவிப்பைக் கேட்டு, அவர்களை
விடுவிக்கும்படிக்கு இறங்கினேன். ஆகையால்
நீ வா; நான் உன்னை எகிப்துக்கு அனுப்புகி
றேன் என்றார்.

உன்னைத் தலைவனென்றும் நியாயாதிபதியெ ௩௫
ன்றும் வைத்தவன் எவனென்று அவர்கள் சொல்
லி மறுதலித்திருந்த [10]அந்த மோசேயையே, பரா
பரன் முட்செடியில் அவனுக்குத் தரிசனையான
தூதனாலே தலைவனாகவும் மீட்பனாகவும் அனுப்
பினார்.—[11]அவனே அவர்களை அங்கேயிருந்து ௩௬
அழைத்துக்கொண்டுபோய், [12]எகிப்துதேசத்தி
லேயும் [13]சிவப்பான சமுத்திரத்திலேயும் [14]நாற்
பதுவருஷகாலமாய் வனாந்தரத்திலேயும், அற்பு
தங்களையும் திருஷ்டாந்தங்களையும் செய்தான்.

அந்த மோசேயே இஸ்ரவேல் சந்ததியாரை ௩௭
நோக்கி, [15]உங்களுக்காக உங்கள் தேவனாகிய
பராபரன் உங்கள் வம்சத்திலிருந்து என்னைப்
போல † ஒரு தீர்க்கதரிசியை எழும்பப்பண்ணு
வார்; [16]அவருக்குச் செவிகொடுப்பீர்களாக என்
று சொன்னவன்.— [17]அவனே சீனாமலையிலே ௩௮
தன்னுடனே பேசின தூதரோடும், [18]நம்முடைய
பிதாக்களோடும்கூட வனாந்தரத்திலே சபைக்
குள்ளே இருந்து [19]நமக்குக் கொடுக்கும்படி [20]சீவ
வாக்கியங்களைப் பெற்றவன்.— நம்முடைய ௩௯
பிதாக்கள் அவனுக்குக் கீழ்ப்பட மனதாயிராமல்
அவனைத் தள்ளி, எகிப்து தேசத்துக்கு மனந்தி
ரும்ப,— [21]ஆரோனை நோக்கி, எகிப்து தேசத்தி ௪௰
லிருந்து எங்களை அழைத்துக்கொண்டு வந்த
அந்த மோசேயுக்குச் சம்பவித்ததை அறியோம்.
ஆதலால் எங்களுக்குமுன்பாக நடக்கும் தேவர்
களை நீர் எங்களுக்காக உண்டுபண்ணவேண்டும்
என்று சொல்லி,—[22]அந்நாள்களில் ஒரு கன்றுக் ௪௧
குட்டியைச் செய்து, அந்த விக்கிரகத்துக்குப்
பலியிட்டு, தங்கள் கைகளால் செய்த கிரியைக
ளைக்குறித்துச் சந்தோஷப்பட்டார்கள்.— அப் ௪௨
பொழுது [23]பராபரன் அவர்களை விட்டுத் திரும்பி
[24]வானத்திலுள்ள சேனையைப் பணிந்துகொள்
ளும்படி அவர்களை ஒப்புக்கொடுத்துவிட்டார்;
(அதைக்குறித்து) இஸ்ரவேல் குடும்பத்தாரே,
[25]நீங்கள் வனாந்தரத்திலிருந்த நாற்பதுவருஷம்
வரையிலே காணிக்கைகளையும் பலிகளையும்
எனக்குச் செலுத்தினீர்களா?—பணிந்துகொள் ௪௩
ளும்படிக்கு நீங்கள் செய்த சொரூபங்களாகிய
மோளோகினுடைய கூடாரத்தையும், உங்கள்
தேவனாகிய இரம்பானென்னும் நட்சத்திரத்தை
யும் எடுத்துவந்தீர்களே, ஆதலால் நான் உங்க
ளைப் பாபிலோனுக்கு அப்புறத்திலே குடியிருக்
கும்படி போகப்பண்ணுவேன் என்று தீர்க்கதரி
சிகளின் புத்தகத்திலே எழுதியிருக்கின்றதே.

1 லூக். ௨௪. ௰௯.—2 ௨ மோ. ௨. ௰௧, ௰௨.—3 ௨ மோ. ௨. ௰௩.
4 லூக். ௰௨. ௰௪. அப். ௭. ௩௫.
5 ௨ மோ. ௨. ௰௫. ௨௨: ௪. ௨௰: ௰௮. ௩, ௪.—6 ௨ மோ. ௩. ௨.
7 மத். ௨௨. ௩௨. எபி. ௰௧. ௰௬.
8 ௨ மோ. ௩. ௫. யோசு. ௫. ௰௫.
9 ௨ மோ. ௩. ௭.—10 ௨ மோ. ௰௪. ௰௯. ௪ மோ. ௨௰. ௰௬.
11 ௨ மோ. ௰௨. ௪௧: ௩௩. ௧.
12 ௨ மோ. ௭. அ. கூ. ௰. ௰௧. ௰௪ அதி. ௪௫. ௨௭.—13 ௨ மோ. ௰௪. ௨௧, ௨௭, ௨௯.—14 ௨ மோ. ௰௬. ௧, ௩௫.
15 ௫ மோ. ௰௮. ௰௫, ௰௮. அப். ௩. ௨௨.
16 மத். ௰௭. ௫.—17 ௨ மோ. ௰௯. ௩, ௰௭. கலா. ௩. ௰௯. எபி. ௨. ௨.
18 ௨ மோ. ௰௯. ௩, ௭.
19 ௨ மோ. ௩. ௨.—20 ௫ மோ. ௫. ௨௭. ௫ மோ. ௫. ௨௭, ௩௩: ௩௩. ௪. யோவா. ௧. ௰௭.
21 ௨ மோ. ௩௨. ௧.—22 ௫ மோ. ௯. ௰௬. சங். ௱௬. ௰௯.
23 சங். ௮௧. ௰௨. எசே. ௨௰. ௨௫-௩௯.
24 ௫ மோ. ௪. ௰௯: ௰௭. ௩. ௨ இரா. ௰௭. ௰௬: ௨௧. ௩. எரே. ௰௯. ௰௩.
25 ஆமோ. ௫. ௨௫. ௨௬.

* அல்லது ஏனென்ருல் —† அல்லது எனக்குச் சமானமான.

சச [1]மேலும் நீ பார்த்த உருவின்படியே சாட்சிப்
பொருளையுடைய கூடாரத்தைச் செய்யென்று
மோசேயுடனே பேசிக்கொண்டவர்,* கட்ட
ளையிட்ட பிரகாரமாக, அது வனாந்தரத்திலே நம்
சரு முடைய பிதாக்களுக்குள்ளே இருந்தது.—மே
லும் [2]யோசுவாவுடனேகூட நம்முடைய பிதாக்
கள் அதைப் பெற்றுக்கொண்டு, † தங்களுக்கு
முன்னின்று [3]பராபரன் துரத்தின அஞ்ஞானிக
ளுடைய தேசத்திற்குள்ளே அதைக் கொண்டு
போய், தாவீது இருந்த நாள்வரைக்கும் வைத்தி
சசு ருந்தார்கள்.—[4]அவன் பராபரனிடத்தில் தயவு
பெற்றபடியினாலே, [5]யாக்கோபினுடைய தேவ
னுக்காக ஒரு வாசஸ்தலத்தைக் கட்டும்படிக்கு
சஎ உத்தரவு கேட்டுக்கொண்டான்.—(அவன் அல்
ல,) [6]சாலோமோனே. அவருக்காக ஆலயத்தைக்
சஅ கட்டினான்.—[7]உன்னதமானவர், வானம் எனக்
கு ஆசனமாயும் பூமி என்னுடைய பாதப்படியா
யும் இருக்கின்றன; எனக்காக நீங்கள் எப்படிப்
பட்ட ஆலயத்தைக் கட்டுவீர்கள்? அல்லது நான்
சகூ தங்கும்படிக்கு ஏற்ற ஸ்தலம் எது?—இவை எல்
லாவற்றையும் என்னுடைய கை உண்டாக்க
வில்லையா என்று பராபரன் திருவுளம்பற்றினார்
ருய என்று தீர்க்கதரிசி சொன்னபடியே, — [8]கைக
ளால் செய்யப்பட்ட ஆலயங்களில் வாசமாய்
இருக்கமாட்டார்.

ருக ஆ [9]வணங்காத கழுத்துள்ளவர்களே, [10]இரு
தயமும் காதும் விருத்தசேதனம் பெறாதவர்க
ளே, உங்கள் பிதாக்களைப்போல நீங்களும் பரி
சுத்த ஆவியை எப்பொழுதும் விரோதிக்கிறீர்
ருஉ கள்.—[11]தீர்க்கதரிசிகளில் யாரை உங்கள் பிதாக்
கள் துன்பப்படுத்தாமல் இருந்தார்கள்? [12]நீதிபரர்
வருகையை முன்னறிவித்தவர்களையும் அவர்
கள் கொலைசெய்தார்கள்; அவருக்கே நீங்கள்
இப்பொழுது துரோகிகளுமாய், அவரைக் கொ
ருங லைசெய்தவர்களுமாய் இருக்கிறீர்கள்.—[13]தேவ
தூதரின் அணிவகுப்புகளுக்குள்ளே வேதப்
பிரமாணத்தைப் பெற்றுக்கொண்டிருந்தும், அ
தைக் கைக்கொள்ளாமல் இருக்கிறீர்கள் என்று
சொல்ல,

ருச [14]அவர்கள் அவைகளைக் கேட்டு, தங்கள் இரு
தயங்களில் அறுக்கப்பட்டவர்களாய், அவனைக்
ருரு குறித்துப் பல்கடித்தார்கள்.—[15]அவன் பரிசுத்த
ஆவியினாலே நிறைந்து, வானத்தை அண்ணாந்து
பார்த்துக்கொண்டு, பராபரனுடைய மகிமை
யையும் வலதுபாரிசத்திலே நிற்கிற இயேசுவை
ருசு யும் கண்டு,—அதோ [16]வானம் திறக்கப்பட்டி
ருக்கிறதையும் [17]மனிதகுமாரனானவர் பராபர
னுடைய வலதுபாரிசத்திலே நிற்கிறதையும்
பார்க்கிறேன் என்று சொன்னபொழுது,—அவர் ருஎ
கள் மிகுந்த சத்தத்துடனே கூப்பிட்டு, தங்கள்
காதுகளை அடைத்துக்கொண்டு, — ஒருமனப் ருஅ
பட்டு அவன்மேலே பாய்ந்து, [18]அவனைப் பட்
டணத்திற்குப் புறம்பே தள்ளி, [19]அவன்மேல்
கல்லெறிந்தார்கள். — [20]சாட்சிகளானவர்களும் ருகூ
தங்கள்வஸ்திரங்களைச் சவுலென்னப்பட்ட ஒரு
வாலிபனுடைய பாதங்கள் அருகே வைத்து,
ஸ்தேவான்மேல் கல்லெறிந்தார்கள்; [21]அவன்
கர்த்தராகிய இயேசுவே, [22]என் ஆவியை ஏற்
றுக்கொள்ளும் என்று தொழுதுகொண்டு, —
[23]முழங்கால்படியிட்டு, ஆண்டவரே, [24]இவர்கள் சுய
மேல் இந்தப் பாவத்தை நிறுத்தாதிரும் என்று
மிகுந்த சத்தத்தோடே கூப்பிட்டுப் பின்பு நித்
திரையடைந்தான். [25]அவனைக் கொலைசெய்கி
றது சவுலென்பவனுக்கு மிகவும் பிரியமாய்
இருந்தது.

## அ. அதிகாரம்.

க. எருசலேமிலுண்டான சபை துன்பப்பட்டு, ௫. உதவிக்காரனாகிய பிலிப்பின் பிரசங்கத்தினாலும், அற்புதங்களினாலும் சமாரியாவிலே ஸ்தாபிக்கப்பட்டபோது. ஸ்தம்பனவித்தைக்காரனாயிருந்த ஒரு பெரிய எத்தனாகிய சீமோன் என்பவனும் அநேகம்பேருடனே ஞானஸ்நானம் பெற்றது. ௰௪. பேதுருவும் யோவானும் சபையை ஸ்திரப்படுத்தவந்து, ஜெபத்தினாலும், சிரசின்மேல் கைகளை வைப்பதினாலும் பரிசுத்த ஆவி அளிக்கப்பட்டதை, ௰அ. சீமோன் கண்டு அதை வார்த்தை விலைக்கிரயமாகப் பெற்றுக்கொள்ளப் பார்த்தபோது, ௨௰. பேதுரு அவனுடைய மாயத்தையும் இச்சையையும் கடிந்துகொண்டு, அவனுக்குக் குணப்படுதலுக்கேற்ற புத்திகள் சொல்லி, யோவானுடனேகூடக் கர்த்தருடைய வசனத்தைப் பிரசங்கித்து, எருசலேமுக்குத் திரும்பினது. ௨௬. போதிக்கவும், எத்தியோப்பிய பிரதானிக்கு ஞானஸ்நானம் கொடுக்கவும், பிலிப்பைத் தேவதூதன் அனுப்பினது.

அக்காலத்திலே எருசலேமிலுள்ள சபைக்கு க
மிகுந்த துன்பம் உண்டாயிற்று; அப்போஸ்த
லர் தவிர [26]மற்ற யாவரும் யூதேயா சமாரியா தே
சங்களில் சிதறப்பட்டார்கள்.—ஸ்தேவானைத் உ
தேவபத்தியுள்ள சிலபேர்கள் எடுத்து அடக்கம்
பண்ணி, [27]அவனைக்குறித்து மிகவும் புலம்பி
அழுதார்கள்.—[28]சவுல் வீடுகள்தோறும் பிரவே ங
சித்து, புருஷரையும் ஸ்திரிகளையும் வெளியே
இழுத்துப்போய், காவலில் போடுவித்து, சபை
யைப் பாழாக்கினான்.—[29]சிதறப்பட்டபேர்கள் ச
திரிந்து தேவவசனத்தைச் சுவிசேஷமாய்ப் பிர
சித்தம்பண்ணினார்கள்.
அப்படியே [30]பிலிப்பென்பவன் சமாரியா ரு
நாட்டிலுள்ள ஒரு ஊருக்குப் போய், அங்கே
கிறிஸ்துவைக்குறித்துப் பிரசங்கித்தான்.—அப் சு
பொழுது அநேகம்பேரிடத்தில் இருந்த [31]அசுத்த

1 உமோ. உ௫ சம: உசு ௰. எபி. அ. ௫.—2 யோசு. ௩. ௰ச. 3 ஜெசே. சு உச சங் சச. உ: எஅ. ௫௫. அப் ௰௩ ௰சு. 4 க சாமு. ௰சு. க. உ சாமு எ. க. சங் அசு ௰சு. அப். ௰௩. உஉ 5 க இரா. அ ௰எ க நாளா. உஉ. எ. சங். ௱௩உ ச, ௫.—6 க இரா. சு. க: அ. உ௰. க நாளா. ௰எ. ௰உ. உ நாளா. ௬ க.—7 ஏசா. கசு. க,உ. மத். ௫. ௩ச, ௩௫: உ௩. உஉ. 8 க இரா. அ. உஎ. உ நாளா. உ. சு: சு. ௰அ. அப். ௰எ. உச. 9 உமோ. ௩உ. சு: ௩௩. ௩. ஏசா சஅ. ச.—10 க மோ. உசு. சக. ௫மோ ௰. ௰சு. எரே. ச. ச: சு ௰: சு உசு. ஏசே. சச. கூ.—11 உ நாளா. ௩சு. ௰சு. மத். உ௩. ௩௫: உ௩. ௩ச, ௩எ. க தெச. உ. ௰௫.—12 அப். ௩ ௰ச. 13 உமோ. உ௰. க. கலா. ௩. ௰கூ. எபி. உ. உ.—14 அப் ௫. ௩௩.—15 அப். சு. ௫.—16 ஏசே. க. க. மத். ௩. ௰சு. அப். ௰. ௰க.—17 தானி. எ. ௰௩. 18 க இரா. உக. ௰௩. லூக். ச. உகூ. எபி. ௰௩. ௰உ.—19 க மோ. உச. ௰சு.—20 ௫ மோ ௰௩. கூ,௰: ௰எ. எ. அப் அ. க: உஉ. உ௰.—21 அப். சு. ௰ச.—22 சங். ௩௩. ௫. லூக். உ௩. சசு.—23 அப். சு. ச௰: உ௰. ௩௩: உக. ௫. 24 மத். ௫. சச. லூக். ௩. உஅ: உ௩. ௩ச.—25 அப். எ ௫அ: உஉ. உ௰. 26 அப். ௰௩. ௰சு.—27 க மோ. உ௩. உ: ௫௰. ௰. உ சாமு. ௩. ௩௩. 28 அப் எ. ௫அ: சு ௩, ௰௩, உ௩. உஉ ச: உசு. ௰, ௰௩. க கொரி. ௰௫. கூ. கலா ௩ ௰௩. பிலி. ௩. சு. க தீமோ. க. ௰௩.—29 மத் ௰. உ௩. அப். ௰௩ ௰சு.—30 அப். சு. ௫. 31 மாற். ௰௩ ௰எ.

* அல்லது பேசி.—† அல்லது பின்னாகவந்த நம்முடைய பிதாக்கள்.

ஆவிகள் மிகுந்த சத்தத்தோடே கூப்பிட்டு அவர்
களைவிட்டுப் புறப்பட்டன; அநேக திமிர்வா
தக்காரரும் சப்பாணிகளும் குணமாக்கப்பட்
௭ டார்கள்.—பிலிப்பு செய்த அதிசயங்களைச் சனங்
கள் கேள்விப்பட்டும் கண்டும் இருக்கையில், அ
வனால் சொல்லப்பட்டவைகளுக்கு ஒருமனப்
௮ பட்டு எச்சரிக்கையாய் இருந்தார்கள். — அந்த
ஊரிலே மிகுந்த சந்தோஷம் உண்டாயிற்று.

௯ அன்றியும் சீமோன் என்று பெயர்கொண்ட
ஒருவன் முனனே [1]அந்த ஊரிலே ஸ்தம்பன
வித்தைக்காரனாயிருந்து, [2]தன்னைப் பெரியவ
னென்று சொல்லி, சமாரியா நாட்டின் சனங்க
ளைப் பிரமிக்கப்பண்ணிக்கொண்டிருந்தான்.—
௰ சிறியோர் பெரியோர் யாவரும் இவன் பராபர
னுடைய பெரிய சத்தியென்று அவனுக்கு எச்ச
௰௧ ரிக்கையாய் இருந்தார்கள்.—அநேககாலம் அவன்
தன்னுடைய மந்திர தந்திரங்களினாலே அவர்க
ளைப் பிரமிக்கச்செய்தபடியால், அவர்கள் அவ
௰௨ னுக்கு எச்சரிக்கையாய் இருந்தார்கள்.—[3]பின்பு
பராபரனுடைய இராச்சியத்திற்கும் இயேசுக்
கிறிஸ்துவின் நாமத்திற்கும் ஏற்றவைகளைச்
சுவிசேஷமாய் அறிவிக்கிற பிலிப்பை அவர்கள்
விசுவாசித்தபொழுது, புருஷரும் ஸ்திரிகளும்
௰௩ ஞானஸ்நானம் பெற்றார்கள். — அப்பொழுது
அந்தச் சீமோனும் விசுவாசித்து ஞானஸ்நானம்
பெற்றுப் பிலிப்பைப் பற்றிக்கொண்டு, (அவனா
லே) நடந்த அதிசயங்களையும் பலத்த செய்கை
களையும் * பிரமிப்புடனே பார்த்தான்.

௰௪ சமாரியா நாடு பராபரனுடைய வசனத்தை
ஏற்றுக்கொண்டதை எருசலேமிலுள்ள அப்போ
ஸ்தலர் கேள்விப்பட்டபொழுது, அவர்கள் பே
துருவையும் யோவானையும் அவர்களிடத்திற்கு
௰௫ அனுப்பினார்கள்.—அவர்கள் போய், [4]அவர்களில்
ஒருவனாகிலும் பரிசுத்த ஆவியைப் பெறாமல்,
[5]கர்த்தாகிய இயேசுவின் நாமத்தினாலே [6]ஞான
ஸ்நானத்தைமாத்திரம் பெற்றவர்களானபடியினா
௰௬ லே, — [7]அவர்கள் பரிசுத்த ஆவியைப் பெற்
௰௭ றுக்கொள்ளும்படிக்கு,—[8]அவர்களைக்குறித்துச்
செபம்பண்ணி, (தங்கள்) கைகளை அவர்கள்
மேல் வைத்தார்கள்; உடனே பரிசுத்தஆவியைப்
பெற்றார்கள்.

௰௮ அப்போஸ்தலர் தங்கள் கைகளை (அவர்கள்)
மேல் வைத்ததினாலே பரிசுத்த ஆவி கொடுக்கப்
படுகிறதைச் சீமோன் கண்டபொழுது, அவர்க
௰௯ ளிடத்திற்குப் பணம்கொண்டுபோய், — என்
கைகளை வைக்கப்படுகிறவன் எவனோ, அவன்
[9]பரிசுத்த ஆவியைப் பெறத்தக்கதாக, நீங்கள்
எனக்கும் இந்த அதிகாரம் கொடுக்கவேண்டும்
௨௰ என்றான்.—அதற்குப் பேதுரு சொன்னதாவது:
பராபரனுடைய ஈவைப் பணத்தினாலே சம்பா
தித்துக்கொள்ளலாமென்று [10]நீ நினைக்கிறபடி
யால், உன் பணம் உன்னோடே கேட்டுக்கு உள்
ளாகக்கடவது.—உன் இருதயம் பராபரனுக்கு ௨௧
முன்பாகச் செம்மையாய் இராதபடியால், இந்
தக் காரியத்திலே உனக்குப் பங்கும் பாகமும்
இல்லை.—[11]நீ கசப்புள்ள பிச்சும் அநீதிக்கட்டும் ௨௨
உடையவனாய் இருக்கிறதைப் பார்க்கிறேன்.—
ஆனபடியினாலே, [12]உன் இருதயத்தின் சிந்திப்பு ௨௩
உனக்கு மன்னிக்கப்படக்கூடுமானால் உன் துற்
குணத்தைவிட்டு மனம்திருப்பி, பராபரனை
நோக்கி வேண்டிக்கொள்வாயாக என்றான்.—
சீமோன் சொன்னது: நீங்கள் உரைத்தவைகளில் ௨௪
ஒன்றும் எனக்கு வாராதபடிக்கு [13]நீங்களே
எனக்காகக் கர்த்தரை வேண்டிக்கொள்ளுங்கள்
என்றான்.

இவ்விதமாய் அவர்கள் கர்த்தருடைய வசனத் ௨௫
தைச் சாட்சியாய் அறிவித்துச் சொன்ன பின்பு,
எருசலேமுக்குத் திரும்பி, சமாரியருடைய அ
நேக கிராமங்களில் சுவிசேஷத்தைப் பிரசங்
கித்தார்கள்.

அன்றியும் கர்த்தருடைய தூதன் பிலிப்புட ௨௬
னே சொன்னது: நீ எழுந்து, தெற்கே பாழாய்க்
கிடக்கிற காட்சாபட்டணத்திற்கு எருசலேமி
லிருந்து போகிற மார்க்கத்திற்குப் போ என்
றான்.—அந்தப்படி அவன் எழுந்து போனான்; ௨௭
[14]அப்பொழுது எத்தியோப்பியரை ஆண்ட இரா
சஸ்திரியாகிய கந்தாசி என்பவளுடைய மந்திரி
யுமாய், அவளுக்கு உண்டான பொக்கிஷம்
எல்லாவற்றின்மேலும் வைக்கப்பட்ட தலைவனு
மாய் இருந்த [15]ஒரு எத்தியோப்பிய மனிதன்
தொழுதுகொள்ளும்படி எருசலேமுக்கு வந்தி
ருந்து,—ஊருக்குத் திரும்பித் தன் இரதத்தில் உ ௨௮
ளுக்கார்ந்து, ஏசாயா தீர்க்கதரிசியின் புத்தகத்தை
வாசித்துக்கொண்டுபோனான். — ஆவியானவர் ௨௯
பிலிப்புடனே சொன்னது: அந்த இரதத்திற்
குச் சமீபமாய் நீ சேர்ந்து, அதனோடே கூடிப்
போ என்றார்.—அந்தப்படி பிலிப்பு சேர ஓடி, ௩௰
அவன் ஏசாயா தீர்க்கதரிசியின் புத்தகத்தை வா
சிக்கக்கேட்டு, நீர் வாசிக்கிறவைகளின் கருத்து
உமக்குத் தெரிந்திருக்கிறதா என்றான்.—அவன் ௩௧
சொன்னது: ஒருவன் எனக்குக் காண்பியாவிட்
டால் அது எனக்குத் தெரியுமா என்று சொல்லி,
பிலிப்பு ஏறித் தன் பக்கத்தில் உளுக்காரும்படி
அவனை வேண்டிக்கொண்டான்.—அவன் வாசித் ௩௨
த வேதவாக்கியம் என்னவென்றால். [16]அவர் ஒரு
ஆட்டைப்போல அடிக்கப்படும்படி கொண்டு
போகப்பட்டார்; தன் மயிரைக் கத்திரிக்கிறவ
னுக்கு முன்பாகச் சத்தமிடாதிருக்கிற ஆட்டுக்
குட்டியைப்போல, அவர் தமது வாயைத் திற
வாதிருந்தார்.—அவர் தாழ்மையாயிருக்கையில், ௩௩

1 அப். ௰௩. ௬. — 2 அப். ௫. ௩௬.
3 அப். ௧. ௩. — 4 அப். ௰௯. ௨.
5 அப். ௰. ௪௮: ௰௯. ௫. — 6 மத். ௨௮. ௰௯. அப். ௨. ௩௮. — 7 அப். ௨. ௩௮.
8 அப். ௬. ௬: ௰௯. ௬. எபி. ௬. ௨.
9 அப். ௨. ௩௮: ௰. ௪௫: ௰௩. ௰௭.
10 மத். ௰. ௮. ௨ இரா. ௫. ௰௬.
11 எபி. ௰௨. ௰௫. — 12 தானி. ௪. ௨௭.
௨ தீமோ. ௨. ௨௫. — 13 ௧ மோ. 14 செப். ௩. ௰. — 15 யோவா. ௰௨. ௨௰. ௭, ௰௭. ௨ மோ. ௮. ௮. ௪ மோ. ௨௰. — 16 ஏசா. ௫௩. ௭, ௮. ௨௧. ௭. ௧ இரா. ௰௩. ௬. யோபு. ௪௨. ௮. யாக். ௫. ௰௬.

* அல்லது அடையாளங்களையும் பெரிய அதிசயங்களையும்.

அவருடைய நியாயம் எடுத்துப்போடப்பட்ட
து; அவருடைய ஜீவன் பூமியிலிருந்து எடுத்துப்
போடப்பட்டபடியினாலே, அவருடைய தலை
முறையாரை யார் விவரித்துச் சொல்லுவார்கள்
௩௪ என்பதே.—மந்திரியானவன் பிலிப்பை நோக்கி,
தீர்க்கதரிசி தன்னைக்குறித்தோ மற்றொருவனைக்
குறித்தோ, யாரைக்குறித்து இதைச் சொன்னான்,
அதை நீர் எனக்குச் சொல்லும்படி வேண்டிக்
௩௫ கொள்ளுகிறேன் என்றான். — அப்பொழுது பி
லிப்பு உத்தரவு சொல்ல, [1]அந்த வேதவாக்கியம்
தொடங்கி இயேசுவின் சுவிசேஷத்தை அவனுக்
குப் பிரசங்கித்தான்.
௩௬ இவ்விதமாய் அவர்கள் வழிநடந்துபோகை
யில், தண்ணீருள்ள ஓரிடத்திலே சேர்ந்தபொ
ழுது, மந்திரியானவன் சொன்னது: இதோ தண்
ணீர், [2]நான் ஞானஸ்நானம் பெற்றுக்கொள்ளு
௩௭ கிறதற்குத் தடையென்ன என்றான். — அதற்கு
பிலிப்பு சொன்னது: [3]நீர் முழு இருதயத்தோ
டும் விசுவாசித்தால் பெற்றுக்கொள்ளலாம் என்
றான்; அவன் சொன்னது: [4]இயேசுக்கிறிஸ்து
வைப் பராபரனுடைய குமாரனென்று விசுவா
சிக்கிறேன் என்று சொல்லி, இரதத்தை நிறுத்
௩௮ தச்சொன்னான்.—பின்பு பிலிப்பும் மந்திரியும்
இருவரும் இறங்கித் தண்ணீரில் பிரவேசித்தார்
கள்; அங்கே அவனுக்கு ஞானஸ்நானம் கொடுத்
௩௯ தான்.—அவர்கள் தண்ணீரிலிருந்து ஏறினபொ
ழுது, [5]கர்த்தருடைய ஆவியானவர் பிலிப்பை
எடுத்துக்கொண்டார்; அதுமுதல் மந்திரியான
வன் அவனைக் காணாமல் சந்தோஷத்தோடே
௪௰ தன் வழியே போனான்.—பிலிப்பு ஆசோத்துப்
பட்டணத்திலே காணப்பட்டுப் பின்பு பிரயா
ணமாய்ப் போய், செசரியா பட்டணத்தில் சே
ரும்பரியந்தம் சகல பட்டணங்களிலேயும் சுவி
சேஷத்தைப் பிரசங்கித்துத் திரிந்தான்.

## ௯. அதிகாரம்.

*௧. சவுல் தமஸ்குவுக்குப் போகையில், ௪. பரமகாட்சியினாலே தரையில் விழுந்து, ௰. அப்போஸ்தலப்பட்டத்துக்கு அழைக்கப்பட்டு, ௰௮. அனனியாவினால் ஞானஸ்நானம்பெற்று, ௨௰. கிறிஸ்துவைத் தயிரியத்தோடே பிரசங்கித்தது. ௨௩. யூதரும், ௨௯. கிரேக்கரும் அவனைக் கொல்ல வகைதேடியும், அவன் அவர்களுக்கு அகப்படாமற்போனது. ௩௧. சபைக்கு ஓய்விருந்தபோது பேதுரு ஐநேயாவென்ற ஒரு திமிர்வாதக்காரனைச் சொஸ்தமாக்கி, ௩௬. மரித்துப்போன தபீத்தாள் என்பவளை உயிர்ப்பித்தது.*

௧ [6]சவுல் என்பவன் பின்னும் கர்த்தருடைய சீஷ
ரைப் பயப்படுத்திக் கொலைசெய்யும்படி சீறி,
௨ பிரதான ஆசாரியனிடத்திற்குப் போய், — தம
ஸ்கு ஊரிலே புருஷரையாகிலும் ஸ்திரிகளையா
கிலும் இந்த மார்க்கத்தார் என்று கண்டால்,*
அவர்களைக் கட்டி எருசலேமுக்குக் கொண்டுவ
ரும்படிக்கு, அவ்வூரிலுள்ள செபஆலயத்தலைவ
ருக்கு நிருபங்களைக் கொடுக்கவேண்டுமென்று
கேட்டுக்கொண்டு போனான். — அவன் பிரயா ௩
ணமாய்ப் போய், [7]தமஸ்கு ஊருக்குச் சமீப
மாகையில், சடுதியாய் வானத்திலிருந்து பிரகா
சம் தோன்றி, அவனைச் சூழ்ந்துகொண்டது.—
உடனே அவன் தரையிலே விழுந்து, சவுலே, ௪
சவுலே, [8]என்னத்திற்கு நீ என்னைத் துன்பப்ப
டுத்துகிறாய் என்று தன்னுடனே சொல்லுகிற
சத்தத்தைக் கேட்டு, ஆண்டவரே, நீர் யார் என்
றான். — கர்த்தரானவர் சொன்னது: நீ துன்பப் ௫
படுத்துகிற இயேசுவே நான்; [9]முள்ளில் உதைக்
கிறது உனக்குக் கடினமாம் என்றார்.—அவன் ௬
நடுங்கிப் பயந்து, ஆண்டவரே, [10]நான் என்ன
செய்யவேண்டுமென்றிருக்கிறீர் என்றான்; அதற்
குக் கர்த்தர் சொன்னது: நீ எழுந்து ஊரில் பிர
வேசிப்பாயாக; நீ செய்யவேண்டுவது அங்கே
உனக்குச் சொல்லப்படும் என்றார்.—அவனுட ௭
னே கூடப் பிரயாணப்பட்டுப் போன [11]பேர்
கள், சத்தத்தைக் கேட்டும் ஒருவரையும் காணா
மல் பிரமிப்போடே நின்றார்கள்.—பின்பு சவுல் ௮
தரையிலிருந்து எழுந்து தன் கண்களைத் திறக்கி
றபொழுது, ஒருவனையும் காணாதவனாய் இருந்
தான். ஆதலால் அவர்கள் அவனைக் கைலாகு
கொடுத்து, தமஸ்கு ஊருக்கு அழைத்துக்கொண்
டுபோனார்கள்.—அங்கே அவன் மூன்றுநாள் பார் ௯
வையில்லாமலும் புசியாமலும் பானம்பண்ணாம
லும் இருந்தான்.
அன்றியும் தமஸ்கு ஊரில் [12]அனனியா என்று ௰
பேருள்ள ஒரு சீஷன் இருந்தான்; அவனுக்குக்
கர்த்தர் தரிசனையாகி, அனனியாவே என்றார்,
அவன் ஆண்டவரே, இதோ அடியேன் என்
றான்.—கர்த்தர் அவனுடனே சொன்னது: செம் ௰௧
மையென்னப்பட்ட தெருவிலே யூதாவின் வீட்
டில் [13]தருசு ஊரானாகிய சவுல் என்பவன் இப்
பொழுதே செபம்பண்ணுகிறான் — அல்லாம ௰௨
லும் பார்வை அடையும்படிக்கு, அவன் தரிச
னத்திலே அனனியா என்று பேருள்ள மனிதன்
உள்ளே வரவும் கையைத் தன்மேல் வைக்கவும்
கண்டான்; ஆதலால் நீ எழுந்து, அங்கே போய்,
அவனைத் தேடுவாயாக என்றார்.—அதற்கு அன ௰௩
னியா சொன்னது: ஆண்டவரே, அந்த மனித
னைக்குறித்து நான் அநேகராலே கேள்விப்பட்
டிருக்கிறபடி, [14]அவன் எருசலேமிலுள்ள உம்
முடைய பரிசுத்தவான்களுக்கு எத்தனை பொல்
லாங்குகளைச் செய்தான்.—இங்கேயும் [15]உம்மு ௰௪
டைய நாமத்தைத் தொழுதுகொள்ளுகிற யாவ
ரையும் கட்டும்படிக்கு, அவன் பிரதான ஆசாரி
யரால் அதிகாரம் பெற்றிருக்கிறானே என்றான்.—
அதற்குக் கர்த்தர் சொன்னது: [16]அவன் என்னு ௰௫

1 லூக். ௨௪. ௨௭. அப். ௰௮. ௨௮. ௪. ௰௫: ௫. ௫, ௰௩.
2 அப். ௰. ௪௭.—3 மத். ௨௮. ௰௯. மாற். ௰௬. ௰௬.—4 மத். ௰௬. ௰௬. யோவா. ௬. ௬௯: ௯. ௩௫, ௩௮: ௰௧. ௨௭. அப். ௯. ௨௰. ௧ யோ. ௫. ௫.
5 ௧ இரா. ௰௮. ௰௨. ௨ இரா. ௨. ௰௬. எசே. ௩. ௰௨, ௰௪.—6 அப். ௮. ௩. கலா. ௧. ௰௩. ௧ தீமோ. ௧. ௰௩.
7 அப். ௨௨. ௬: ௨௬. ௰௨. ௧ கொரி. ௰௫. ௮.—8 மத். ௨௫. ௪௰. ௪௫.
9 அப். ௫. ௩௯.—10 லூக். ௩. ௰. அப். ௨. ௩௭: ௰௬. ௩௰.
11 தானி. ௰. ௭. அப். ௨௨. ௯. ௨௬. ௰௩.—12 அப். ௨௨. ௰௨.—13 அப். ௨௧. ௩௯: ௨௨. ௩.—14 ௧ வச.
15 ௨௧. ௩௪. அப். ௭. ௫௯: ௨௨. ௰௬. ௧ கொரி. ௧. ௨. ௨ தீமோ. ௨. ௨௨.
16 அப். ௨௰. ௨௩: ௨௬. ௰௬. ௨ கொரி. ௰௪. ௨௬.

* அல்லது கிரேக்கபாஷையில் மார்க்கத்தாரென்று கண்டால், அப்படியே; அப். ௰௯. ௯, ௨௩.

டைய நாமத்தின் நிமித்தம் இவ்வளவு பாடுபட
வேண்டுமென்று அவனுக்குக் காண்பிப்பேன்.—
௰௫ [1]ஆதலால் புறத்தேசத்தார்களுக்கும் [2]இராசாக்க
ளுக்கும் இஸ்ரவேல் சனங்களுக்கும் என்னு
டைய நாமத்தை அறிவிக்கும்படிக்கு, [3]அவன்
எனக்கு விசேஷமாகத் தெரிந்துகொள்ளப்பட்
ட ஊழியக்காரனாய் இருக்கிறான், ஆகையால் நீ
போ என்றார்.
௰௭ [4]அப்பொழுது அனனீயா போய் வீட்டிற்குள்
பிரவேசித்து, [5]கைகளை அவன்மேல் வைத்து,
சகோதரனாகிய சவுலே, நீ வந்த வழியிலே உனக்
குத் தரிசனையான இயேசுவென்னும் கர்த்தரான
வர் நீ பார்வை அடைந்து [6]பரிசுத்த ஆவியினா
லே நிரப்பப்படும்படிக்கு என்னை அனுப்பினார்
௰௮ என்றான்.—உடனே அவனுடைய கண்களிலி
ருந்து மீன் சிலாம்புகளைப்போல விழுந்துபோக,
அவன் பார்வை அடைந்து எழுந்திருந்து ஞான
௰௯ ஸ்நானம்பெற்று,—பின்பு போசனம்பண்ணித்
திடப்பட்டான். [7]பின்பு சவுல் என்பவன் தம
ஸ்கு ஊரிலுள்ள சீஷருடனே சிலநாள் இருந்
தான்.
௨௰ அல்லாமலும் [8]இயேசுவானவரே பராபரனு
டைய குமாரனென்று அவன் உடனே செபஆல
௨௧ யங்களில் பிரசங்கித்தான்.—(அதைக்) கேட்ட
யாவரும் பிரமிப்படைந்து, [9]எருசலேமில் இந்த
நாமத்தைத் தொழுதுகொள்ளுகிறவர்களைப் பா
ழாக்கி, இங்கேயும் அப்படிப்பட்டவர்களைக்
கட்டி, பிரதான ஆசாரியனிடத்திற்குக் கொண்டு
போகும்படி வந்தவன் இவனல்லவா என்றார்
௨௨ கள்.—சவுல் என்பவன் அதிகம் அதிகமாகத் தி
டன்கொண்டு, இவரே கிறிஸ்து என்று திருஷ்
டாந்தப்படுத்தி, தமஸ்கு ஊரில் குடியிருக்கிற
[10]யூதர்களைக் கலங்கப்பண்ணினான்.
௨௩ அநேக நாள் சென்றபின்பு [11]யூதர்கள் அவ
னைக் கொலைசெய்ய ஆலோசனைபண்ணினார்
கள்; [12]அவர்களுடைய யோசனை சவுலுக்குத் தெ
௨௪ ரியவந்தது.—அவனைக் கொலைசெய்யும்படிக்கு
அவர்கள் இரவும்பகலும் கோட்டை வாசல்க
௨௫ ளைக் காத்துக்கொண்டிருந்தார்கள். — அப்பொ
ழுது சீஷர் இராத்திரியிலே அவனை எடுத்துக்
கொண்டு, [13]ஒரு கூடையில் வைத்து, மதிலின்
வழியாய் இறக்கிவிட்டார்கள்.
௨௬ [14]பின்பு சவுல் எருசலேமுக்குப் போய், சீஷ
ரைச் சேர்த்துக்கொள்ளப் பார்த்தான்; அவர்கள்
எல்லாரும் அவனைச் சீஷனென்று நம்பாமல்
௨௭ அவனுக்குப் பயப்பட்டார்கள்.—அப்பொழுது
[15]பருனபா என்பவன் அவனைச் சேர்த்துக்
கொண்டு, அப்போஸ்தலரிடத்தில் அழைத்துக்
கொண்டுபோய், வழியிலே அவன் கர்த்தரைக்
கண்டவிதத்தையும், அவர் அவனுடனே பேசி
னதையும், தமஸ்கு ஊரில் [16]அவன் இயேசுவின்
நாமத்தினாலே தயிரியமாய்ப் பிரசங்கம்பண்ணி
னதையும் அவர்களுக்கு விவரித்துச் சொன்
னான்.—[17]அதின் பின்பு அவன் எருசலேமிலே ௨௮
அவர்களுடனேகூடப் போகிறவனுமாய் வரு
கிறவனுமாய் இருந்து,— கர்த்தராகிய இயேசு ௨௯
வின் நாமத்தின்மேலே தயிரியமாய்ப் பிரசங்கம்
பண்ணி [18]கிரேக்கருடனேயும் பேசிக்கொண்டு
தருக்கம்பண்ணினான்; [19]அவர்கள் அவனைக்
கொலைசெய்யத் தேடினார்கள்.—சகோதரர் அதை ௩௰
அறிந்து, அவனைச் சேசாரியா பட்டணத்திற்கு
அழைத்துப்போய், பின்பு தருசு ஊருக்கு அனுப்
பினார்கள்.—[20]அப்படியிருக்கும் காலத்தில் யூதே ௩௧
யா, கலிலேயா, சமாரியா நாடுகள் எங்கும் சபை
கள் சமாதானம் பெற்றிருந்து, கர்த்தருக்குப்
பயப்படுகிற பயத்திலேயும், பரிசுத்தஆவியின்
போதிப்பிலேயும், வளர்க்கப்பட்டு, நடந்து,
பெருகின.
பேதுரு என்பவன் [21]அவர்கள் எல்லாருக்குள் ௩௨
ளும் சென்று வருகையில், உலிதா ஊரிலே குடி
யிருக்கிற பரிசுத்தவான்களிடத்திற்கும் போ
னான்.—அங்கே எட்டு வருஷமாகக் கட்டிலின் ௩௩
மேல் கிடந்த திமிர்வாதமுள்ள ஐநேயா என்பவ
னைக் கண்டான்; அவனுடனே பேதுரு சொன்
னது: — ஐநேயாவே, [22]இயேசுக்கிறிஸ்து உன் ௩௪
னைக் குணமாக்குகிறார்; நீ எழுந்து உன் படுக்கை
யை நீதானே போட்டுக்கொள் என்றான்; உட
னே அவன் எழுந்திருந்தான்.—உலிதா ஊரிலும் ௩௫
சாரோன் திசையிலும் குடியிருந்தவர்கள் எல்லா
ரும் [23]அவனைக் கண்டு, [24]கர்த்தரிடத்திற்கு மனம்
திருப்பினார்கள்.
அன்றியும் யோப்பா பட்டணத்திலே தொற் ௩௬
காள் என்று *அர்த்தம்கொள்ளுகிற தபீத்தாள்
என்னப்பட்ட ஒரு சீஷி இருந்தாள்; [25]அவள்
நற்கிரியைகளையும் தருமங்களையும் நிறை
வாய்ச் செய்துகொண்டுவந்தவள்.—அக்காலத்தி ௩௭
லே அவள் வியாதிப்பட்டு மரணமடைந்தாள்;
[26]அவளை அவர்கள் குளிப்பாட்டி, மேல்வீட்
டில் கிடத்திவைத்தார்கள். — யோப்பா பட்ட ௩௮
ணம் உலிதா ஊருக்குச் சமீபமானபடியினாலே,
பேதுரு அவ்விடத்தில் இருக்கிறான் என்று சீஷர்
கள் கேள்விப்பட்டு, அவன் தாமதமில்லாமல்†
தங்களிடத்திற்கு வரவேண்டுமென்று வேண்டிக்
கொள்ளும்படிக்கு இரண்டு மனிதரை அவ்வி
டத்திற்கு அனுப்பினார்கள்.
அந்தப்படி பேதுரு எழுந்து அவர்களுடனே ௩௯
கூடப்போனான்; அவன் போய்ச் சேர்ந்தபொ
ழுது, அவர்கள் அவனை மேல்வீட்டுக்கு அழைத்

1 உரோ. ௧. ௫: ௰௧ ௰௩. கலா. ௨. ௭, ௮. 2 அப். ௨௫. ௨௨, ௨௩: ௨௬. ௧. ௩. 3 அப். ௰௩. ௨: ௨௨. ௨௧: ௨௬. ௰௭. உரோ. ௧. ௧. ௧ கொரி. ௰௫. ௰. கலா. ௧. ௰௫. எபே. ௩. ௭, ௮. ௧ தீமோ. ௨. ௭ ௨ தீமோ. ௧. ௰௧. 4 அப். ௨௨. ௰௨, ௰௩.—5 அப். ௮. ௰௭. 6 அப். ௨. ௪: ௪. ௩௧: ௮. ௰௭: ௰௩. ௫௨.—7 அப். ௨௬. ௨௰.—8 அப். ௮. ௩௭.—9 அப். ௮. ௩. ௧. ௰௪. கலா. ௧. ௰௩. ௨௩.—10 அப். ௰௮. ௨௮.—11 அப். ௨௩. ௰௨: ௨௫. ௩. ௨ கொரி. ௰௧. ௨௬.—12 ௨ கொரி. ௰௧. ௩௨.—13 யோசு. ௨. ௰௫. ௧ சாமு. ௰௯. ௰௨.—14 அப். ௨௨. ௰௭. கலா. ௧. ௰௭, ௰௮.—15 அப். ௪. ௩௬: ௰௩. ௨.—16 ௨௰, ௨௨. வச. 17 கலா. ௧. ௰௮.—18 அப். ௬. ௧: ௰௧. ௨௰.—19 ௨௩. வச. ௨ கொரி. ௰௧. ௨௬.—20 அப். ௮. ௧. ௰௪. ௰௨.—21 அப். ௮. ௰௪.—22 அப். ௩. ௬, ௰௬: ௪. ௰.—23 ௧ நாளா. ௫. ௰௬.—24 அப். ௰௧. ௨௧.—25 ௧ தீமோ. ௨. ௰. தீத். ௩. ௮.—26 அப். ௧. ௰௩.

* அதின் அர்த்தம் பெண்மான்.—† அல்லது விசனமில்லாமல்

துக்கொண்டு போனார்கள்; அப்பொழுது சகல
கைம்பெண்களும் அவன் அருகே சேர்ந்து
நின்று அழுதுகொண்டு, தொற்காள் தங்களுட
னேகூட இருக்கையில் செய்த அங்கிகளையும்
௩௯ வஸ்திரங்களையும் காண்பித்தார்கள்.—[1]பேதுரு
எல்லாரையும் வெளியேபோகப்பண்ணி, பின்பு
[2]முழங்கால்படியிட்டுச் செபம்பண்ணி, பின்பு
சவத்தின்புறமாய்த் திரும்பி, [3]தபீத்தாளே, எழுந்
திரு என்றான்; அப்பொழுது அவள் தன் கண்க
ளைத் திறந்து, பேதுருவைப் பார்த்து, உளுக்காந்
௪௧ தாள்.—அவன் அவளுக்குக் கைகொடுத்து, அவ
ளை எழுந்திருக்கப்பண்ணி, பரிசுத்தவான்களை
யும் கைம்பெண்களையும் அழைத்து, அவளை உயி
ருள்ளவளாக அவர்களுக்குமுன் நிறுத்தினான்.—
௪௨ அது யோப்பா பட்டணம் எங்கும் அறியப்பட்
டபொழுது, [4]அநேகம்பேர் கர்த்தாவினிடத்தில்
௪௩ விசுவாசமுள்ளவர்களானார்கள்.—அவன் யோப்
பாபட்டணத்திலே [5]தோல் பதனிடுகிறவனாகிய
சீமோன் என்பவனிடத்திலே அநேக நாள் தங்
கினான்.

## ௰. அதிகாரம்.

௧. தேவபக்தனாகிய கொருநேலியு என்பவன். ௩ ஒரு தேவதூதனுடைய ஏவலினால் பேதுருவை அழைப்பித்தது. ௰௧. பேதுரு ஒரு தரிசனையில், ௰௫. ௨௰. அந்நியர்களை அசட்டை செய்யலாகாதென்று கற்பிக்கப்பட்டது. ௩௪. அவன் கொருநேலியுவுக்கும், அவனைச் சேர்ந்தவர்களுக்கும் கிறிஸ்துவைப் பிரசங்கித்தபோது, ௪௪. பரிசுத்த ஆவி அவர்கள்மேல் இறங்க, ௪௮. அவர்கள் ஞானஸ்நானம்பெற்றது.

௧ அன்றியும் சேசாரியா பட்டணத்திலே இத்தா
லியா தண்டென்னப்பட்ட தண்டிலே நூறு
போர்ச்சேவகருக்குத் தலைவனாகிய கொருநே
௨ லியு என்பவன் இருந்தான்.—அவன் [6]தன் குடும்
பத்தார் யாவரோடும்கூடத் தேவபக்தியுள்ளவனு
மாய்ப் [7]பராபரனுக்குப் பயப்படுகிறவனுமாய்
இருந்து, சனங்களுக்கு மிகுந்த தருமங்களைச்
செய்து, எப்பொழுதும் பராபரனை நோக்கிச்
௩ செபம்பண்ணிக்கொண்டுவந்தான்.—[8]பகலிலே
ஏறக்குறைய ஒன்பதாம் மணி நேரத்தில் அவன்
தரிசனை அடைந்து, தன்னிடத்தில் பராபரனு
டைய தூதன் பிரவேசிக்கவும் கொருநேலியுவே
என்று சொல்லவும் பிரத்தியட்சமாகக் கண்டு,—
௪ அவனை உற்றுப்பார்த்துப் பயமுள்ளவனாகி, ஆண்
டவரே, என்ன என்றான்; அப்பொழுது அவன்
சொன்னதாவது: உன் செபங்களையும் உன் தரு
மங்களையும் பராபரன் திருவுளத்திலே எண்ணி
௫ யிருக்கிறார்.—ஆதலால் யோப்பாபட்டணத்திலே
கடலின் அருகான வீட்டிலே வாசம்பண்ணி,
தோல் பதனிடுகிறவனாய் இருக்கிற [9]சீமோன்
என்பவனிடத்திலே பேதுரு என்று மறுபேர்
௬ கொண்ட சீமோன் தங்கியிருக்கிறான்.—அவனை
அழைத்துவரும்படிக்கு நீ மனிதரை அவ்விடத்
திற்கு அனுப்புவாயாக; [10]நீ செய்யவேண்டுவ
தை அவன் உனக்குச் சொல்லுவான் என்றான்.—
௭ கொருநேலியுடனே பேசின தேவதூதன் போ
னபின்பு அவன் தன் வீட்டு மனிதரில் இரண்டு
பேரையும், தன்னிடத்தில் காத்திருக்கிற போர்ச்
சேவகரில் தேவபத்தியுள்ள ஒருவனையும் அழைத்
து,—எல்லாவற்றையும் அவர்களுக்கு விவரித்துச் ௮
சொல்லி, அவர்களை யோப்பாபட்டணத்திற்கு
அனுப்பினான்.

மறுநாளிலே அவர்கள் பிரயாணமாய் அந்தப் ௯
பட்டணத்திற்குச் சமீபமாய்ச் சேருகையில்,
[11]பேதுரு ஆறும்மணி நேரத்திலே செபம்பண்
ணும்படிக்கு வீட்டின்மேல் ஏறினான்.— அப் ௰
பொழுது அவன் மிகுந்த பசி அடைந்து, சாப்
பிட மனதாய் இருந்தான்; அதற்காக அவர்கள்
எத்தனம்பண்ணுகையில், — அவன் ஞானதிரு ௰௧
ஷ்டி அடைந்து, (அதிலே) [12]வானம் திறந்தி
ருக்கவும், நான்கு தொங்கல் கட்டப்பட்ட பெ
ரிய துப்பட்டியைப்போல ஒரு கூடு தன்னிடத்
திற்கு இறங்கி, தரையில் விடப்பட்டிருக்கவும்,—
அதிலே பூமியிலுள்ள சகலவிதமான நாலுகால் ௰௨
சீவன்களும், காட்டு மிருகங்களும், ஊர்வன
வைகளும், ஆகாயத்துப் பறவைகளும் இருக்
கவும் கண்டான். — அல்லாமலும் பேதுருவே, ௰௩
எழுந்திரு, அடித்துப் புசிப்பாயாக என்று ஒரு
சத்தம் அவனுக்கு உண்டாயிற்று.—அதற்குப் ௰௪
பேதுரு, ஆண்டவரே, அப்படி அல்ல, [13]ஏலாத
தாயும் அசுத்தமாயும் இருக்கிறதை நான் ஒருக்
காலும் புசிக்கவில்லையே என்றான்.—அப்பொ ௰௫
ழுது, பராபரன் சுத்தமாக்கினவைகளை [14]நீ அசுத்
தமென்று எண்ணாதிருப்பாயாக என்று இரண்
டாந்தரம் சத்தம் அவனுக்கு உண்டாயிற்று.—
மூன்றாந்தரம் அப்படியே உண்டாயிற்று; பின்பு ௰௬
அந்தக்கூடு திரும்பி வானத்திற்கு எடுத்துக்கொள்
ளப்பட்டது.

அப்பொழுது பேதுரு தான் கண்ட தரிசனை ௰௭
யின் கருத்தைக்குறித்துத் தனக்குள்ளே சந்தே
கப்படுகையில், கொருநேலியுவினால் அனுப்பப்
பட்ட மனிதர் சீமோனுடைய வீட்டை விசாரித்
துக்கொண்டு வாசற்படியிலே நின்று,—பேதுரு ௰௮
என்று பேர்கொண்ட சீமோன் இங்கே தங்கியி
ருக்கிறானா என்று சத்தமிட்டுக் கேட்டார்கள்.

அப்பொழுது பேதுரு அந்தத் தரிசனையைக் ௰௯
குறித்துச் சிந்தனைபண்ணிக்கொண்டிருக்கை
யில்,—[15]மூன்று மனிதர் உன்னைத் தேடுகிறார் ௨௰
கள்; அவர்களை நான் அனுப்பினேன், ஆதலால்
[16]நீ எழுந்து தாழ இறங்கி ஒன்றுக்கும் சந்தேகப்
படாமல் அவர்களுடனேகூடப் போ என்று
ஆவியானவர் அவனுக்குச் சொன்னார்.—அந்தப் ௨௧
படி பேதுரு கொருநேலியுவினாலே தன்னிடத்
திற்கு அனுப்பப்பட்ட மனிதரிடத்திற்குஇறங்
கிப்போய், நீங்கள் தேடுகிறவன் நான்தான், நீங்

1 மத். ௯. ௨௫. —2 அப். ௭. ௬௰. 3 மாற். ௫. ௪௧.௪௨. யோவா. ௰௧. ௪௩. 4 யோவா. ௰௧. ௪௫: ௰௨. ௰௧. 5 அப். ௰. ௬. 6 ௨௨. வச. அப். ௮ ௨: ௨௨. ௰௨. 7 ௩௫. வச. — 8 ௩௰. வச. அப. ௰௧. ௰௩.—9 அப். ௯. ௪௩.—10 அப். ௰௧. ௰௪. — 11 அப். ௰௧. ௫. ஷ.

12 அப். ௭. ௫௬. வெளி. ௰௯. ௰௧. 13 ௩ மோ. ௰௧. ௪: ௨௰. ௨௫. ௫ மோ. ௰௪. ௩,௭. எசே. ௪.௰௪.—14 மத். ௰௫. ௰௧. ௨அ. வச. உரோ. ௰௪. ௰௪, ௰௭, ௨௰. ௧ கொரி. ௰. ௨௫. ௧ தீமோ. ௪. ௪. தீத். ௧. ௰௫. 15 அப். ௰௧. ௰௨. 16 அப். ௰௫. ௭.

கள் வந்திருக்கிற காரணம் என்ன என்றான்.—
௨௨ அவர்கள் சொன்னதாவது: [1]நீதிமானுமாய், பரா
பரனுக்குப் பயப்படுகிறவனுமாய், [2]எல்லா யூதர்
களுக்குள்ளும் நல்லவன் என்று சாட்சிபெற்றி
ருக்கிறவனுமாய் இருக்கிற கொருநேலியு என்
னும் சேனைத்தலைவன் உம்மைத் தன் வீட்டிற்கு
அழைப்பித்து, உம்மால் வார்த்தைகளைக் கேட்
கும்படிக்குப் பரிசுத்த தூதனாலே தேவ எத்தன
மாய்க் கட்டளை பெற்றுக்கொண்டான் என்றார்
கள்.
௨௩ அப்பொழுது பேதுரு அவர்களை உள்ளே அ
ழைத்து, உபசாரம்பண்ணினான்; மேலும் மறுநா
ளிலே அவன் அவர்களுடனேகூடப் புறப்பட்
டான்; [3]யோப்பா பட்டணத்திலிருந்த சகோத
ரரில் சிலரும் அவனுடனேகூடப் போனார்
௨௪ கள்.—மறுநாளிலே செசாரியா பட்டணத்தைச்
சேர்ந்தார்கள்; கொருநேலியு தன் உறவின்மு
றையாரையும் தனக்கு விசேஷமான சிநேகிதரை
யும் வரவழைத்துக்கொண்டு, பேதுருமுதலான
௨௫ வர்கள் வரக் காத்திருந்தான்.—பேதுரு உட்பிர
வேசிக்கையில், கொருநேலியு அவனுக்கு எதிர்
கொண்டுபோய், அவனுடைய பாதத்தின் அரு
௨௬ கே விழுந்து தொழுதுகொண்டான்.—பேதுரு
அவனைத் தூக்கி எடுத்து, [4]எழுந்திரும், நானும்
௨௭ மனிதன்தானே என்று சொல்லி,—அவனுடனே
சம்பாஷணை பண்ணிப் பின்பு உள்ளேபோய்,
அநேகர் கூடிவந்திருக்கிறதைக் கண்டு, அவர்க
ளுடனே சொன்னதாவது:
௨௮ நீங்கள் அறிந்திருக்கிறபடி, [5]யூதனானவன்
அந்நியதேசத்தாரோடே கலந்து, அவனிடத்திற்
குப் போகத் தகாததாய் இருக்கின்றது; அப்ப
டியிருந்தும் [6]எந்த மனிதனையும் ஏலாதவனென்
றும் அசுத்தனென்றும் நான் சொல்லாதபடிக்கு,
௨௯ பராபரன் எனக்குக் காண்பித்தார்.—ஆதலால்
நீங்கள் என்னை அழைப்பித்தபொழுது, நான்
எதிர்பேசாமல் வந்தேன்; இப்படியிருக்க, எந்தக்
காரியத்திற்காக நீங்கள் என்னை அழைப்பித்தீர்
௩௰ கள் என்று கேட்கிறேன் என்றான்.—அதற்குக்
கொருநேலியு சொன்னதாவது: நாலாம்நாள்
இந்நேரத்திலே நான் உபவாசித்து, ஒன்பதாம்
மணிநேரத்திலே என் வீட்டில் செபம்பண்ணிக்
கொண்டிருந்தேன்; அப்பொழுது [7]பிரகாச
முள்ள உடையைத் தரித்திருந்த [8]ஒருவன் என
௩௧ க்குமுன்பாக நின்று,—கொருநேலியுவே, [9]பரா
பரன் உன் செபத்தைக் கேட்டருளி, [10]உன் தரு
௩௨ மங்களை நினைத்திருக்கிறார். — ஆதலால் யோப்
பாபட்டணத்திலே, கடலின் அருகே தோல்
பதனிடுகிறவனாகிய சீமோனுடைய வீட்டிலே
தங்கியிருக்கிற பேதுரு என்று மறுபேர்கொண்ட
சீமோனை வரவழைக்கும்படிக்கு, அவ்விடத்
திற்கு மனிதரை அனுப்பு, அவன் வந்து உனக்
குச் சொல்லுவான் என்றார்.—அந்தப்படி நான் ௩௩
உடனே உம்மிடத்தில் மனிதரை அனுப்பி
னேன்; நீர் வந்தது நலமாய் இருக்கின்றது; இப்
பொழுது பராபரனாலே உமக்குக் கட்டளையி
டப்பட்ட யாவையும் கேட்கும்படிக்கு நாங்
கள் எல்லாரும் இங்கே பராபரனுக்குமுன்பாக
இருக்கிறோம் என்றான்.

அப்பொழுது பேதுரு சொன்னதாவது:— ௩௪
[11]பராபரன் பட்சபாதமில்லாமல் எவ்வகையான ௩௫
மனிதர்களிலும், [12]தமக்குப் பயந்து நீதியை
நடப்பிக்கிறவன் எவனோ, அவனை அங்கிகரித்
துக்கொள்ளுகிறார் என்று மெய்யாய் உணர்ந்து
கொள்ளுகிறேன்.—[13]எல்லாருக்கும் கர்த்தராயி ௩௬
ருக்கிற இயேசுக்கிறிஸ்துவைக்கொண்டு [14]சமா
தானத்தைச் சுவிசேஷமாய் அறிவித்து, இஸ்ர
வேலருக்கு அனுப்பின சங்கதியைக்குறித்துக்
(கேட்பீர்களாக).—யோவான் ஞானஸ்நானத் ௩௭
தைப் பிரசங்கம்பண்ணின பின்பு, [15]கலிலேயா
நாடு முதற்கொண்டு யூதேயா நாட்டில் எங்கும்
நடந்த காரியத்தை அறிந்திருக்கிறீர்கள்.—அதா ௩௮
வது [16]நாசரேத்தூரிலே தோன்றிய இயேசுவான
வருக்குப் பராபரன் பரிசுத்த ஆவியையும் வல்ல
மையையும் அபிஷேகம்பண்ணினார்; (அந்தப்
படி) [17]பராபரன் அவருடனேகூட இருந்தபடி
யால், அவர் நன்மைசெய்கிறவராகவும் பசாசின்
வல்லமையில் அகப்பட்ட யாவரையும்குணமாக்
குகிறவராகவும் சுற்றித் திரிந்தார்.—[18]யூதருடைய ௩௯
நாட்டிலும் எருசலேமிலும் அவர் செய்தவைகள்
எல்லாவற்றிற்கும் நாங்கள் சாட்சிகளாயிருக்கி
றோம்; [19]அவரை ஒரு மரத்திலே தூக்கிக் கொலை
செய்தார்கள். — [20]மூன்றாம்நாளிலே பராபரன் ௪௰
அவரை எழுப்பி, அவர் மரித்தோரிலிருந்து
எழுந்த பின்பு, — [21]எல்லாச் சனங்களுக்கும் ௪௧
அல்ல, [22]அவரோடே போசனபானம்பண்ணி,
பராபரனால் முன் நியமிக்கப்பட்டிருந்த சாட்
சிகளாகிய எங்களுக்கே அவர் பிரசன்னமாகும்
படி செய்தார்.—மேலும் [23]அவரே உயிரோடிருக் ௪௨
கிறவர்களுக்கும் மரித்தோருக்கும் [24]நியாயத்தீர்ப்
புக் கொடுக்கும்படிக்கு, பராபரனாலே ஏற்படுத்
தப்பட்டவர் என்று [25]சனங்களுக்குச் சாட்சியா
ய்ப் பிரசங்கம்பண்ணும்படி எங்களுக்குக் கட்
டளையிட்டார்.—[26]அவரை விசுவாசிக்கிறவன் ௪௩
எவனோ, அவன் அவருடைய நாமத்தினாலே
பாவமன்னிப்பைப் பெற்றுக்கொள்வானென்று

1 ௧,௨,௨௨. வச.—2 அப். ௨௨.௰௨. 3 ௪௰. வச. அப். ௰௧. ௰௨.—4 அப். ௰௪. ௰௪, ௰௫. வெளி. ௰௯.௰: ௨௨. ௯.—5 யோவா. ௪. ௯: ௰௮.௨௮. அப். ௰௧. ௩. கலா ௨. ௰௨, ௰௪. 6 அப். ௰௫. ௮, ௯. எபே ௩. ௬. 7 மத். ௨௮. ௩. மாற். ௰௬. ௫. லூக். ௨௪. ௪.—8 அப். ௧.௰.—9 ௪. வச. தானி. ௰. ௰௨.—10 எபி. ௬. ௰. 11 உபா. ௰.௰௭. ௨ நாளா. ௰௯. ௭. யோபு ௩௪. ௰௯. ரோ. ௨. ௰௧. கலா ௨. ௬. எபே. ௬. ௯. கொலோ. ௩ ௨௫. ௧ பே. ௧. ௰௭.—12 அப். ௰௫. ௯. ரோ. ௨. ௰௩, ௨௭: ௩ ௨௨,௨௯: ௰ ௰௨,௰௩. ௧ கொரி. ௰௨. ௰௩. கலா. ௩. ௨௮. எபே. ௨. ௰௩.௰௮: ௩. ௬.—13 மத் ௨௮ ௰௮. ரோ. ௰.௰௨. ௧ கொரி. ௰௫.௨௭. எபே. ௧.௨௰,௨௨. ௧ பே. ௩. ௨௨. வெளி. ௰௭. ௰௪: ௰௯. ௰௬. 14 ஏசா. ௫௭. ௰௯. எபே. ௨.௰௪,௰௭. கொலோ ௧. ௨௰.—15 லூக். ௪. ௰௪.—16 லூக். ௪. ௰௮. அப ௨. ௨௨: ௪. ௨௭. எபி. ௧. ௯. 17 யோவா. ௩. ௨.—18 அப். ௨.௩௨. 19 அப் ௫. ௩௰.—20 அப் ௨. ௨௪. 21 யோவா. ௰௪.௰௭,௨௨. அப் ௰௩.௩௧. 22 லூக். ௨௪. ௩௰, ௪௩. யோவா. ௨௧ ௰௩.—23 ரோ. ௰௪. ௯. ௨ கொரி: ௫.௰. ௨ தீமோ ௪.௧. ௧ பே.௪.௫.—24 யோவா ௫.௨௨, ௨௭. அப். ௰௭ ௩௧—25 மத். ௨௮ ௰௯, ௨௰. அப் ௧. ௮. 26 அப்.௰௫.௯: ௨௬.௰௮. ரோ.௰. ௰௧. கலா. ௩. ௨௨.

[1]தீர்க்கதரிசிகள் எல்லாரும் அவனைக்குறித்துச்
சாட்சிகொடுக்கிறார்கள் என்றான்.

௪௪ இந்த வார்த்தைகளைப் பேதுரு பேசுகையில்,
வசனத்தைக் கேட்ட யாவர்மேலும் [2]பரிசுத்த
௪௫ ஆவி இறங்கினார்.—அவர்கள் (அந்நிய) பாஷை
களைப் பேசி, பராபரனைப் புகழ்ந்தார்கள்.—
௪௬ [3]அதைப் பேதுருவுடனேகூட வந்திருந்த விருத்
தசேதனமுடைய விசுவாசிகள் எல்லாரும் கேட்
டுப் [4]பரிசுத்தஆவியென்னும் ஈவு அஞ்ஞானிக
ளுக்கும் கொடுக்கப்பட்டபடியினாலே பிரமித்
௪௭ தார்கள்.—மேலும் பேதுரு சொன்னது: [5]நம்மைப்
போலப் பரிசுத்தஆவியைப் பெற்ற இவர்கள்
தண்ணீரினால் ஞானஸ்நானம் பெறாதபடிக்கு
யாவனாகிலும் தடைபண்ணலாமா என்று சொல்
லி, அவர்களுக்குக் [6]கர்த்தருடைய நாமத்தினா
லே ஞானஸ்நானம்கொடுக்கும்படி [7]கட்டளை
யிட்டான்; அப்பொழுது சிலநாள் அங்கே தங்
கும்படி அவனை வேண்டிக்கொண்டார்கள்.

## ௰௧. அதிகாரம்.

௧. பேதுரு அந்நியர்களிடத்தில் போனதின் நிமித்தம் குற்றஞ்சாற்றப்பட, ௫. அவன் அதற்குச் சொன்ன உத்தரவு ௰௯. அந்தியோகியாவிலே சுவிசேஷம் பெனிக்கே, சீப்புரு, அந்தியோகியா முதலிய இடங்களில் பிரசங்கிக்கப்பட்டபோது சபைக்குத் திடப்படுத்தும்படி பர்னபா அனுப்பப்பட்டது. ௨௬. அந்தியோகியாவிலே சீஷர்கள் முதல் முதல் கிறிஸ்தவர்களென்று அழைக்கப்பட்டது. ௨௭. யூதேயாவிலுள்ள ஏழைச் சகோதரர்களுக்குப் பஞ்சகாலத்தில் ஒத்தாசை செய்தது

௧ புறத்தேசத்தாரும் பராபரனுடைய வசனத்தை
ஏற்றுக்கொண்டார்கள் என்று யூதாவில் இருக்
கிற அப்போஸ்தலரும் மற்றச் சகோதரரும் கேள்
௨ விப்பட்டார்கள்.—பின்பு பேதுரு எருசலேமுக்
குத் திரும்பிப்போனபொழுது, [8]விருத்தசேதன
௩ முடையவர்கள் அவனை நோக்கி,—[9]நீர் விருத்த
சேதனம் இல்லாதவர்களிடத்தில் போய், [10]அவர்
களோடே புசித்தீர் என்று விசனமாய்ச் சொன்
௪ னார்கள்.—[11]அதற்குப் பேதுரு வரிசையாய் அவர்
களுடனே விவரமாய்ச் சொன்னதாவது:

௫ [12]நான் யோப்பா பட்டணத்திலே செபம்பண்
ணிக்கொண்டிருந்தபொழுது, ஞானதிருஷ்டியி
னாலே நாலுதொங்கல் கட்டப்பட்ட பெரிய துப்
பட்டியைப்போல ஒரு கூடு வானத்திலிருந்து
௬ என்னிடத்தில் இறங்கிவரக் கண்டேன்.—நான்
உற்றுப்பார்க்கிறபொழுது அதிலே பூமியிலுள்ள
நாலு காலையுடைய சீவன்களையும், காட்டு மிரு
கங்களையும், ஊர்வனவைகளையும், ஆகாயத்துப்
௭ பறவைகளையும் கண்டேன்.—அல்லாமலும், பே
துருவே எழுந்திரு, அடித்துப் புசிப்பாயாக என்
று என்னுடனே சொல்லுகிற சத்தத்தைக் கேட்
௮ டேன்.—அதற்கு நான், ஆண்டவரே, அப்படி
யல்ல, ஏலாததும் அசுத்தமுமாயிருக்கிறது ஒன்
றும் ஒருக்காலும் என் வாய்க்குள்ளே போகவில்
லையே என்றேன். — அப்பொழுது, பராபரன் ௯
சுத்தமாக்கினவைகளை நீ அசுத்தமென்று எண்ணா
திருப்பாயாக என்று இரண்டாந்தரம் வானத்தி
லிருந்து சத்தம் எனக்கு உண்டாயிற்று.—இப்ப ௰
படி மூன்றுந்தரமும் உண்டானபின்பு, எல்லாம்
மறுபடியும் வானத்திற்கு எடுத்துக்கொள்ளப்பட்
டது.—உடனே செசாரியாபட்டணத்திலிருந்து ௰௧
மூன்று மனிதர் என்னிடத்தில் அனுப்பப்பட்டு,
நான் இருந்த வீட்டிற்குமுன்னே வந்து நின்றார்
கள்.—[13]அப்பொழுது நான் ஒன்றுக்கும் சந்தே ௰௨
கப்படாமல், அவர்களுடனேகூடப் போகும்ப
டிக்கு ஆவியானவர் என்னுடனே சொன்னார்;
[14]பின்பு சகோதரர்களாகிய இவ்வாறுபேரும் நா
னும்கூடி அந்த மனிதனுடைய வீட்டிற்குப் போ
னோம்.—அப்பொழுது [15]அவன் தன் வீட்டிலே ௰௩
தேவதூதன் ஒருவன் நிற்கக்கண்டதையும், நீ
யோப்பாபட்டணத்தில் இருக்கிற பேதுரு என்
று மறுபேர்கொண்ட சீமோனை அழைக்கும்ப
டிக்கு மனிதரை அவ்விடத்திற்கு அனுப்பு,—
நீயும் உன் வீட்டார் அனைவரும் இரட்சிக்கப்ப ௰௪
டுவதற்கான வார்த்தைகளை அவன் உன்னுடனே
சொல்லுவான் என்று அந்தத் தூதன் தனக்குச்
சொன்னதையும், எங்களுக்கு அறிவித்தான்.—
பின்பு நான் பேசத்தொடங்கினபொழுது, [16]பரி ௰௫
சுத்த ஆவி ஆதியிலே நம்மிடத்தில் இறங்கினது
போல, அவர்களிடத்திலும் இறங்கினார்.—[17]அப் ௰௬
பொழுது யோவான் சலத்தினாலே ஞானஸ்
நானம் கொடுத்தான், [18]நீங்கள் பரிசுத்த ஆவி
யினாலே ஞானஸ்நானம் பெறுவீர்கள் என்று
கர்த்தர் சொன்னவார்த்தையை நினைத்துக்கொண்
டேன்.—[19]ஆனபடியினாலே கர்த்தராகிய இயே ௰௭
சுக்கிறிஸ்துவை விசுவாசித்துக்கொண்டிருக்கிற
நமக்குப் பராபரன் அநுக்கிரகித்ததுபோல,
அந்த ஈவை அவர்களுக்கும் அநுக்கிரகித்திருக்க,
[20]பராபரனுக்குத் தடைபண்ணுகிறதற்கு நான்
பலவானாயிருந்தேனா என்றான்.—இவைகளை அ ௰௮
வர்கள் கேட்டபொழுது, விரோதமாய்ப் பேசா
மல், புறத்தேசத்தாரும் சீவனை அடையும்படி,
[21]மனந்திரும்புதலைப் பராபரன் அவர்களுக்கு
அநுக்கிரகம்செய்தார் என்று பராபரனைப் புகழ்ந்
தார்கள்.

அன்றியும் [22]ஸ்தேவானின் நிமித்தமாக உண் ௰௯
டான உபத்திரவத்தினால் சிதற அடிக்கப்பட்ட
வர்கள் சுவிசேஷவசனத்தை யூதர்களுக்கே அ
ன்றி மற்றொருவருக்கும் அறிவியாமல், பெனிக்
கே நாடு, சீப்புரு தீவு, அந்தியோகியா பட்ட
ணம்மட்டும் திரிந்தார்கள்.—அவர்களில் சீப்புரு ௨௰
தீவாரும் கிரேனே பட்டணத்தாரும் அந்தியோ
கியா பட்டணத்தில் வந்தபொழுது, [23]கிரேக்க
ருடனேயும் பேசிக்கொண்டு, கர்த்தராகிய இயே

1 ஏசா. ௫௩ ௰௧. எரே. ௩௧ ௩௪, தானி. ௯ ௨௪ மீகா. ௭ ௰௮. சகரி. ௰௩. ௧. மல்கி. ௪. ௨. அப் ௨௬. ௨௨. 2 அப் ௪. ௩௧: ௮ ௰௫, ௰௧ ௰௭: ௰௯. ௬. —3 ௨௩. ௪௫.—4 அப். ௰௧. ௰௮. கலா. ௩. ௰௪.—5 அப் ௰௧. ௰௭: ௰௫. ௮. ௯. உரோ. ௰. ௰௨. 6 அப் ௨. ௩௮: ௮. ௰௬.-7 ௧ கொரி. ௧ ௰௭.—8 அப். ௰.௪௫. கலா. ௨ ௰௨.-9 அப். ௰.௨௮.-10 கலா.௨ ௰௨.—11 லூக். ௧ ௩.—12 அப். ௰. ௯. ௰௯: ௰௬ ௪.—18 ஏசா. ௪௪. ௩. ௯. யோவா ௰௧. ௰௩. அப். யோவே ௨. ௨௮: ௧. ௰௮. ௰ ௰௯: ௰௫. ௭.—14 அப். ௰. ௨௩. 19 அப். ௰௫. ௮, ௯.—20 அப். ௰. ௪௭. 15 அப். ௰ ௩௰ -16 அப். ௨ ௪.-17 மத். ௩ ௰௧. யோவா. ௧. ௨௬, ௩௩. அப். 21 உரோ ௰ ௰௨, ௰௫: ௰௫ ௯, ௰௧. 22 அப் ௮. ௧.-23 அப். ௬. ௧: ௯. ௨௯.

உக சுவைச் சுவிசேஷமாய் அறிவித்தார்கள்.—[1] அவர்
களுடனேகூடக் கர்த்தருடைய கை இருந்ததி
னாலே திரளான சனங்கள் விசுவாசித்து, [2]கர்த்த
உஉ ரிடத்தில் திரும்பினார்கள்.— அவர்களைக்குறித்து
எருசலேமிலுள்ள (சபையார்) கேள்விப்பட்ட
பொழுது அந்தியோகியா பட்டணம்வரைக்கும்
போகும்படிக்கு [3]பருனபாவை அனுப்பினார்
உ௩ கள்.–அவன் (அங்கே) போய், பராபரனுடைய
[4]கிருபையைக் கண்டபொழுது, சந்தோஷப்
உ௪ பட்டதும் அல்லாமல்,—[5]அவன் நல்லவனுமாய்
பரிசுத்த ஆவியினாலும் விசுவாசத்தினாலும் நிறை
ந்தவனுமாயிருந்தபடியினாலே, எல்லாரும் மன
ஊக்கமாய் உறுதியாய்க் கர்த்தரிடத்தில் நிலைத்தி
ருக்கும்படி அவர்களுக்குப் புத்தி சொன்னான்;
[6] அப்பொழுது அநேகம்பேர் கர்த்தரிடமாய்ச்
சேர்க்கப்பட்டார்கள்.

உ௫ [7]பின்பு பருனபா என்பவன் சவுலைத் தேடும்ப
டிக்குத் தருசு ஊருக்குப் புறப்பட்டுப்போய், அ
வனைக் கண்டு, அந்தியோகியா பட்டணத்திற்கு
உ௬ அழைத்துக்கொண்டுபோனான்.— அப்பொழுது
அவர்கள் ஒரு வருஷகாலமாய்ச் சபையிலே*
கூடியிருந்து, அநேக சனங்களுக்கு உபதேசம்
பண்ணினார்கள்; சீஷர்கள் முதலாவது அந்தி
யோகியா பட்டணத்திலே கிறிஸ்தவர்கள் என்று
அழைக்கப்பட்டார்கள்.

உ௭ அந்நாள்களில் [8]எருசலேமிலேயிருந்து சில
தீர்க்கதரிசிகள் அந்தியோகியா பட்டணத்திற்
உ௮ குப் போனார்கள். — அவர்களில் ஒருவனாகிய
[9]ஆகாபென்பவன் எழுந்து, பூச்சக்கரம் எங்கும்
மிகுந்த பஞ்சம் வருமென்று ஆவியினாலே அறி
வித்தான்; அந்தப்படியே அது கிலவுதி இராய
உ௯ னுடைய காலத்திலே சம்பவித்தது.—அப்பொ
ழுது சீஷரில் அவரவர் தங்கள் தங்கள் திராணி
யின்படியே யூதேயா நாட்டில் குடியிருக்கிற
[10]சகோதரருக்குத் தருமசகாயம்பண்ணி அனுப்
பவேண்டும் என்று தீர்மானம்பண்ணினார்கள்.–
௩௰ [11] அந்தப்படி அவர்கள் சில பொருள்களைச் சேர்த்
துக்கொண்டு பருனபா சவுல் என்பவர்கள் கை
யிலே கொடுத்து, மூப்பரிடத்திற்கு அனுப்பினார்
கள்.

## ௰௨. அதிகாரம்.

௧. ஏரோதே இராசா கிறிஸ்தவர்களைத் துன்பப்படுத்தி யாக்கோபைக் கொலை செய்து பேதுருவைக் காவலில் அடைத்தபொழுது, அவன் சபையின் செபத்தின்படி ஒரு தெய்வதூதனால் விடுதலையாக்கப்பட்டது. உ௰. ஏரோதே பெருமை பாராட்டித் தேவனுக்குரித்த கனமுறைத் தனக்குச் செலுத்தும்படி செய்ததின் நிமித்தம் ஒரு தெய்வதூதனாலே அடிக்கப்பட்டு நிர்ப்பந்தமாணம் அடைந்தது. உ௩. அவன் மரணமடைந்த பின்பு பராபரனுடைய வசனம் பிரபலமானது.

௧ அக்காலத்திலே ஏரோதே என்னும் இராசா
சபையில் சிலரைத் துன்பப்படுத்தும்படிக்குத்
தொடங்கினான்.†—[12]யோவானுடைய சகோதர உ
னாகிய யாக்கோபை அவன் கத்தியினாலே கொ
லைசெய்தான்.—மேலும் அது யூதருக்குப் பிரிய ௩
மாயிருக்கிறதென்று அவன் கண்டு, பேதுருவை
யும் பிடிக்கத் தொடர்ந்தான்; [13]அந்நாள்கள் புளி
ப்பில்லாத அப்பப்பண்டிகை நாள்களாயிருந்
தன.—[14]அவனைப் பிடித்தபின்பு பண்டிகைகழி ௪
த்து அவனைச் சனங்களுக்கு முன்பாகக் கொண்
டுபோகவேண்டும் என்று ஏரோதே எண்ணி, அ
வனைச் சிறைச்சாலையிலே வைத்து, ஒருவகுப்
பிற்கு நான்கு போர்ச்சேவகராக நான்கு வகுப்
புகள் அவனைக் காக்கும்படி ஒப்புக்கொடுத்
தான்.—அப்படிப் பேதுரு காவலிலே காக்கப் ௫
பட்டிருக்கையில், சபையார் அவனைக்குறித்து
இடைவிடாமல் பராபரனை நோக்கிச் செபம்
பண்ணினார்கள்.‡

அப்பொழுது ஏரோதே அவனை வெளியே ௬
கொண்டுவரும்படி குறித்த நாளுக்கு முன்னான
இராத்திரியிலே, பேதுரு இரண்டு சங்கிலிகளி
னாலே கட்டப்பட்டு இரண்டு சேவகர் நடுவே
நித்திரைபண்ணிக்கொண்டிருக்க,காவற்காரரும்
கதவுக்கு முன்னிருந்து காவல் அறையைக் காத்
துக்கொண்டிருக்க,–[15]சடுதியாய் அறையிலே பிர ௭
காசமுண்டாகத்தக்கதாக, கர்த்தருடைய தூதன்
ஒருவன் தோன்றிப் பேதுருவின் விலாவிலே
தட்டி, சீக்கிரமாய் எழுந்திரு என்று அவனை
எழுப்பினான்; அப்பொழுது சங்கிலிகள் அவ
னுடைய கைகளைவிட்டு விழுந்தன.—மேலும் ௮
தூதன் அவனுடனே சொன்னது: உன் அரை
யைக் கட்டி, உன் பாத இரட்சைகளைத் தொ
டுத்துக்கொள் என்றான், அவன் அப்படிச் செய்
தான்; தூதன் பின்னும் சொன்னது: உன் வஸ்தி
ரத்தைப் போர்த்துக்கொண்டு எனக்குப் பின்
சென்று வா என்றான்.–அந்தப்படி அவன் புறப் ௯
பட்டு அவனுக்குப் பின்சென்று, [16]தூதனால்
செய்யப்பட்டது மெய்யென்று அறியாமல்
[17]இது ஒரு தரிசனை என்று நினைத்தான்.— அவர் ௰
கள் முதலாம் காவலையும் இரண்டாம் காவலை
யும் கடந்து, பின்பு பட்டணத்துக்குப் போகிற
இருப்புக்கதவினிடத்தில் சேர்ந்தபொழுது, [18]அ
வர்களுக்கு அது தானாய்த் திறக்க, அதின் வழி
யாய் அவர்கள் புறப்பட்டு, ஒரு வீதியிலே நடந்
துபோனார்கள்; உடனே தூதன் அவனைவிட்டு
நீங்கினான்.—பேதுருவுக்குத் தெளிவு வந்தபொ ௰௧
ழுது, [19]ஏரோதேயின் கைக்கும் யூதருடைய
விருப்பங்கள் யாவுக்கும் என்னை விடுதலையாக்
கும்படிக்கு, கர்த்தர் தம்முடைய [20]தூதனை அ
னுப்பினார் என்று நான் இப்பொழுது மெய்யாய்
அறிந்திருக்கிறேன் என்றான்.

1 லூக். ௧. ௬௬. அப். ௨. ௪௭. ௰௭: ௰௪. ௧: ௰௬. ௬௨: ௨௧. ௬.
2 அப். ௬. ௯௫. –3 அப். ௬ ௨௭. ௧ கொரி ௰௨ ௨௪. எபே. ௪ ௰௧.
4 அப் ௰௩. ௪௩ : ௰௪. ௨௨.—5 அப். 9 அப் ௨௧ ௰.—10 உரோ. ௰௫.
௬. ௫. –6 உ௧.௨௪. அப். ௫. ௰௪. ௨௬ ௧ கொரி.௰௬.௧ உ கொரி.
7 அப். ௬. ௩௰.——8 அப் ௨. ௬. ௧.—11 அப்.௰௨. ௨௫.
12 மத். ௪. ௨௧: ௨௰. ௨௩.–13 உ மோ. ௰௨.௰௪, ௰௫: ௨௩. ௰௫-14 யோவா. ௨௧. ௰௮.—15 அப். ௫. ௰௯.
16 சங். ௧௨௬ ௧ —17 அப். ௰. ௩.௰௭: ௰௧.௫.-18 அப். ௰௬. ௨௬.-19 பேது. ௫. ௰௬.சங். ௩௩. ௰௮, ௰௯: ௩௪. ௨௨: ௪௧. ௰. உ கொரி. ௧.௰. உ பே உ.௯.—20 சங் ௩௪. ௭. தானி. ௩. ௨௮: ௬ ௨௨. எபி. ௧. ௰௪.

* அல்லது சபைகூடி.—† அல்லது கைகளை நீட்டினான்.—‡ அல்லது இடைவிடாமல் ஆவலுடன் செபம்பண்ணப்பட்டது;
உ கொரி. ௧. ௰௧. எபே. ௬ ௰௮. ௧ தெச. ௫. ௰௭.

௰௨ இப்படி அவன் சிந்தனைகொண்டு, மாற்கு
என்று பேர்கொண்ட [1]யோவானுடைய தாயா
கிய [2]மரியாள் வீட்டிற்குப் போனான்; [3]அங்கே
அநேகர் கூடிச் செபம்பண்ணிக்கொண்டிருந்
௰௩ தார்கள்.—பேதுரு வாசல் கதவைத் தட்டினபொ
ழுது, உரோதாள் என்று பேர்கொண்ட ஒரு
௰௪ வேலைக்காரி ஒற்றுக்கேட்க* வந்து,—பேதுரு
வின் சத்தத்தை அறிந்து, சந்தோஷத்தினாலே
வாசலைத் திறவாமல் உள்ளே ஓடிப்போய், வாச
லுக்குமுன்னே பேதுரு நிற்கிறார் என்று அறி
௰௫ வித்தாள்.-அவர்கள் நீ பயித்தியமாய்ச் சொல்லுகி
றாய் என்றார்கள்; அவள், அப்படி அல்ல, அவ
ரே இருக்கிறார் என்றாள்; அப்பொழுது அவர்
கள் சொன்னது: [4]அவன் அவருடைய தூதன்
௰௬ என்றார்கள்.—பேதுரு பின்னும் தட்டிக்கொண்
டிருந்தபொழுது, அவர்கள் திறந்து, அவனைக்
௰௭ கண்டு பிரமித்தார்கள்.—உடனே அவர்கள் பேசா
மலிருக்கும்படி அவன் [5]கையினால் சமிக்கை
காண்பித்து, கர்த்தர் தன்னைக் காவலிலிருந்து
விடுதலையாக்கின வகையை அவர்களுக்கு விவர
மாய்க் காட்டி, இவைகளை யாக்கோபுக்கும் மற்
றச் சகோதரருக்கும் அறிவியுங்கள் என்றுசொல்
லிப் புறப்பட்டு வேறொரு இடத்திற்குப் பிரயா
ணமாய்ப் போனான்.

௰௮ பொழுது விடிந்தபின்பு பேதுருவைக்குறித்
துச் சேவகருக்குள்ளே உண்டான கலக்கம்
௰௯ கொஞ்சம் அல்ல.-ஏரோதே அவனைத் தேடிக் கா
ணாமல் போனபொழுது, காவற்காரரைக் கெட்
டியாய்ச் சோதித்து, அவர்களைக் கொலைசெய்யும்
படி கட்டளையிட்டு, பின்பு யூதேயா நாட்டை
விட்டுச் சேசாரியா பட்டணத்திற்குப் போய்,
அங்கே சஞ்சரித்தான்.

௨௰ அக்காலத்திலே ஏரோதே தீறியருக்கும் சீதோ
னருக்கும் மிகவும் பகையாயிருந்தான்; † அப்
பொழுது அவர்கள் தங்கள் [6]பிழைப்புக்கு வேண்
டியவைகளை இராசாவினுடைய தேசத்திலிருந்து
வாங்கிக்கொள்வதினாலே அவர்கள் ஒருமனப்
பட்டு அவனிடத்திற்குப்போய், இராசாவினு
டைய வீட்டுவிசாரணைக்காரனாகிய ‡ பிலாஸ்
தென்பவனைத் தங்கள் வசமாக்கிக்கொண்டு,சமா
தானமாயிருக்கவேண்டும் என்று கேட்டுக்கொ
௨௧ ண்டார்கள். — அப்பொழுது குறித்த நாளிலே
ஏரோதேயானவன் இராச அங்கியைத் தரித்துக்
கொண்டு, சிங்காசனத்தின்மேல் உளுக்காந்து,
௨௨ அவர்களுக்குப் பிரசங்கம்பண்ணினான்.—அதற்
குச் சனங்கள், இது ஒரு மனிதனுடைய சத்தம்
அல்ல, தேவனுடைய சத்தமே என்று கூப்பிட்
௨௩ டார்கள்.—[7] அவன் பராபரனுக்கே புகழ்ச்சி உண்
டாவதாக என்று அறிக்கையிடாதபடியினாலே,
[8]உடனே கர்த்தருடைய தூதன் அவனை அடித்
தான்; அவன் புழுக்களாலே தின்னப்பட்டு
இறந்தான்.

[9]பராபரனுடைய வசனம் வளர்ந்து பெரு ௨௪
கிற்று.—பின்பு பருனபாவும் சவுலும் தருமவூ ௨௫
ழியத்தை § நிறைவேற்றினபொழுது [10]மாற்கு
என்று மறுபேர்கொண்ட யோவானைக் [11]கூட்
டிக்கொண்டு, எருசலேமைவிட்டுத் திரும்பினார்
கள்.

## ௰௩. அதிகாரம்.

௧. பவுலும் பருனபாவும் அந்திபோகியாவிலிருந்து பிரசங்கிக்க அனுப்பப்பட்டது. ௭. செர்கியு பவுலையும், எலிமா என்னப்பட்ட ஸ்தம்பனவித்தைக்காரனையுங்குறித்தது. ௰௪. இயேசுவானவர் கிறிஸ்துவென்று பவுல் அந்திபோகியாவிலே பிரசங்கித்தது. ௪௨. அந்நியர்கள் விசுவாசித்தது. ௪௫. யூதர்கள் மாறுமாறுத்துத் தூஷணித்ததினால், ௪௬. அவர்கள் அந்நியர்களிடத்திற்குப் போனது. ௪௮. நித்திய சீவனுக்குக் குறிக்கப்பட்டவர்கள் விசுவாசித்தது.

[12]அந்தியோகியா பட்டணத்திலுள்ள சபையி ௧
லே, [13]பருனபா என்றும், நீகரென்னப்பட்ட
சீமேயோன் என்றும், சிரேனே ஊரானாகிய [14]உ
லூசி என்றும், தேசத்தின் காற்பங்குக்கு அதிபதி
யாகிய ஏரோதேயுடனேகூட வளர்க்கப்பட்ட ||
மனாவன் என்றும், சவுல் என்றும் பெயர்களையு
டைய இவர்கள் தீர்க்கதரிசிகளுமாய்ப் போதக
ருமாய் இருந்தார்கள். — அவர்கள் கர்த்தருக்கு ௨
ஆராதனைசெய்து உபவாசித்துக்கொண்டிருக்கி
றபொழுது பரிசுத்த ஆவியானவர் சொன்னது:
பருனபாவையும் சவுலையும் நான் [15]அழைத்த
கிரியைக்காக [16]அவர்களைத் தெரிந்து எடுத்து அ
னுப்புங்கள் என்றார்.—[17] உடனே அவர்கள் உப ௩
வாசித்துச் செபம்பண்ணி, அவர்கள்மேல் கை
களை வைத்து அனுப்பினார்கள்.

ஆதலால் அவர்கள் பரிசுத்த ஆவியினால் அ ௪
னுப்பப்பட்டு, சிலேசிய பட்டணத்திற்குப்
போய், அங்கே கப்பலேறி, [18]சீப்புருதீவில் சேர்
ந்தார்கள்.-பின்பு அவர்கள் சாலமிஸ் பட்டணத் ௫
திற்குப் போனபொழுது, [19]யூதருடைய செபஆ
லயங்களில் (அவர்களுக்கு) பராபரனுடைய
வசனத்தை அறிவித்தார்கள்; [20]யோவான் என்ப
வனும் அவர்களுக்கு உதவிக்காரனாயிருந்தான்.—
அவர்கள் அந்தத் தீவெங்கும் கடந்து, பாப்போ ௬
பட்டணபரியந்தம் போனபொழுது, பரியேசு
என்று பேர்கொண்ட [21]ஸ்தம்பனக்காரனுமாய்,
கள்ளத்தீர்க்கதரிசியுமாய்,—புத்திசாலியாகிய செ ௭
ருகியு பவுல் என்னும் பிரதிதுரையினிடத்தில்
தங்கினவனுமாயிருந்த ஒரு யூதனைக் கண்டார்
கள்; அந்தத் துரை பருனபாவையும் சவுலையும்
அழைப்பித்து, பராபரனுடைய வசனத்தைக்

1 அப். ௰௫. ௩௭.—2 அப். ௪. ௨௩. 3 ௯ வச.—4 ௧ மோ. ௪௮.௰௬. மத். ௰௮. ௰.—5 அப். ௰௩. ௰௬: ௰௯. ௩௩: ௨௧. ௪௰. 6 ௧ இரா. ௫. ௯,௰௧. எசே. ௨௭. ௰௭. 7 சங். ௧௱௰௫. ௧.—8 ௧ சாமு. ௨௫. ௩௮. ௨ சாமு. ௨௪. ௰௭.—9 எசா. ௫௫. ௰௧. அப். ௬. ௭: ௰௯. ௨௰. கொலோ. ௧. ௬.—10 அப். ௰௫. ௩௭: ௧௫. ௩௭.—11 ௰௩. வசனம்.

12 அப். ௰௧. ௨௭: ௰௪. ௨௬: ௰௫. ௩௫. எபி ௩ ௪.-16 ௪ மோ. ௮. ௰௪. அப். ௯. ௰௫: ௨௨. ௨௧. உரோ. ௧. ௧. 13 அப் ௰௧. ௨௨-௨௬.—14 உரோ. ௰௬. ௨௧.—15 மத். ௯. ௩௮. அப். ௰௪ ௨௬. உரோ. ௰. ௰௫. எபே. ௩. ௭, ௮. ௧ தீமோ ௨. ௭. ௨ தீமோ. ௧. ௰௧. கலா. ௧. ௰௫: ௨. ௯.—17 அப் ௬. ௬. 18 அப். ௪. ௩௬.—19 ௪௬. வச.-20 அப். ௰௨. ௨௫: ௰௫. ௩௭.-21 அப். ௮. ௯.

* அல்லது யாரென்று கேட்க.—† அல்லது சண்டைசெய்ய மனதாயிருந்தான்.—‡ கிரேக்கு சயனவீட்டு விசாரணை.
§ அல்லது பணிவிடையை; அப். ௰௧. ௨௯,௩௰.—|| அல்லது ஏரோதின் வளர்ப்புச் சகோதரனாகிய.

௮ கேட்க ஆசையாயிருந்தபொழுது,-[1]ஸ்தம்பனக்
காரனென்று அர்த்தங்கொள்ளுகிற எலிமா என்
னப்பட்ட அவன் பிரதி துரையை விசுவாசத்தி
லிருந்து விலக்கும்படி தேடி, அவர்களோடு எதிர்
௯ த்துப் பேசினான்.—அப்பொழுது பவுலென்றும்
சொல்லப்பட்ட சவுல் [2]பரிசுத்த ஆவியினால்
நிறைந்தவனாய் அவன்மேல் கண்ணூன்றிச்
௰ சொன்னதாவது:—எல்லாவிதமான கபடமும்,
எல்லாவிதமான பொல்லாங்கும் நிறைந்தவனே,
[3]பசாசின் மகனே, சகல நீதிகளுக்கும் பகை
ஞனே, நீ கர்த்தருடைய செம்மையான மார்க்கங்
௰௧ களைப் புரட்டுகிறதில் ஓயமாட்டாயா? -இப்பொ
ழுதே கர்த்தருடைய கை உன்மேல் வருகின்றது;
[4]சிலகாலம் நீ சூரியனைக் காணமல் குருடனாயி
ருப்பாய் என்றான்; உடனே மந்தாரமும் இரு
ளும் அவன்மேல் விழுந்தன; அவன் திரிந்து,
௰௨ கைலாகு கொடுக்கிறவர்களைத் தேடினான்.-இப்
படிச் சம்பவித்ததைப் பிரதிதுரை கண்டு, கர்த்த
ரைக்குறித்துச் சொல்லிய உபதேசத்திற்காக
அதிசயப்பட்டு, விசுவாசமுள்ளவனானான்.

௰௩ பின்பு பவுலும் அவனைச் சேர்ந்தவர்களும்
பாப்போ பட்டணத்தைவிட்டு, பம்பீலியா நாட்
டிலுள்ள பெருகே பட்டணத்திற்குப் போனார்
கள்; [5]யோவான் அவர்களைவிட்டுப் பிரிந்து எரு
சலேமுக்குத் திரும்பினான்.

௰௪ பின்பு அவர்கள் பெருகேபட்டணத்தைவிட்
டுப் புறப்பட்டுப் பிசீதிய நாட்டிலுள்ள அந்தி
யோகியாவுக்குப் போய், [6]ஓய்வுநாளிலே செப
ஆலயத்திற்குப் போய் உளுக்காந்தார்கள். —
௰௫ (அங்கே) [7]நியாயப்பிரமாணமும் தீர்க்கதரிசன
(ஆகமமும்) வாசிக்கப்பட்டுத் தீர்ந்தபின்பு,
சகோதரர்களே, [8]நீங்கள் சனங்களுக்குப் புத்தி
சொல்ல விரும்பினால் சொல்வீர்களாக என்று
ஆலயத்தலைவர் அவர்களுக்குச் சொல்ல ஆள்
அனுப்பினார்கள்.

௰௬ அப்பொழுது [9]பவுல் எழுந்து கையினால் சா
டைகாண்பித்துச் சொன்னதாவது: இஸ்ரவே
லரே; [10]பராபரனுக்குப் பயந்து நடக்கிற சகலச
௰௭ னங்களே, கேட்பீர்களாக.-இந்த இஸ்ரவேல் சந்
ததியாருடைய [11]தேவன் நம்முடைய முன்னோ
ர்களைத் தெரிந்துகொண்டு [12]எகிப்து தேசத்திலே
சஞ்சரித்து வந்த அவர்களுடைய சந்ததியை
மேன்மைப்படுத்தி, [13]பலத்த வல்லமையினாலே
அதிலிருந்து அவர்களைப் புறப்படப்பண்ணி,—
௰௮ [14]நாற்பது வருஷகாலமாய் வனாந்தரத்திலே அ
வர்களைப் போஷித்துக்கொண்டு,* — [15]கானான் ௰௯
தேசத்திலுள்ள ஏழுவகைச் சனக்கூட்டங்களை
நீக்கிவிட்டு, [16]அவர்களுடைய தேசத்தை அவர்
களுக்குச் சுதந்தரமாகப் பங்கிட்டு, — [17]பின்பு ௨௰
ஏறக்குறைய நானூற்றைம்பது வருஷத்திற்
குள்ளே [18]சாமுவேல் தீர்க்கதரிசிவரைக்கும் அ
வர்களுக்காக நியாயாதிபதிகளை ஏற்படுத்தினார்.—
சாமுவேலின் காலம்முதல், [19]அவர்கள் ஒரு இ ௨௧
ராசா வேண்டும் என்று கேட்டுக்கொண்டார்
கள்; அதின்படி பராபரன் அவர்களுக்குப் பென்
யமீனுடைய கோத்திரத்தானாகிய கீசென்பவனு
டைய குமாரனாகிய சவுலைக் கொடுத்தார்; அவன்
நாற்பதுவருஷம் இருந்தான். — [20]பின்பு அவர் ௨௨
அவனை விலக்கி, இயேசே என்பவனுடைய
குமாரனாகிய [21]தாவீதை [22]எனது திருவுள்ளத்
திற்கு ஏற்றவன் என்று கண்டேன், அவன் என்
னுடைய சித்தத்தின்படி முழுவதும் செய்வான்
என்று தாவீதைக்குறித்துச் சாட்சியிட்டு; [23]அவ
னையே அவர்களுக்கு இராசனாக ஏற்படுத்தினார்.-
[24]அவனுடைய சந்ததியிலே பராபரன் [25]தமது ௨௩
வாக்குத்தத்தத்தின்படி, இஸ்ரவேலருக்காக [26]இ
யேசு என்னும் இரட்சகரைத் தோன்றப்பண்ணி
னார்.—[27] அவருடைய பிரவேசத்திற்கு முன்னே ௨௪
யோவான் மனம்திருப்புதற்கேற்ற ஞானஸ்நா
னத்தை எல்லா இஸ்ரவேலருக்கும் பிரசங்கித்
தான்.

மேலும் யோவான் (பணிவிடை) ஓட்டத்தை ௨௫
நிறைவேற்றுகிறபொழுது (சனங்களுடனே)
சொன்னதாவது: [28]நீங்கள் என்னை எவனென்று
எண்ணுகிறீர்கள்? நான் அவரல்ல, எனக்குப்
பின் ஒருவர் வருகிறார், அவருடைய பாத இரட்
சையை அவிழ்க்கிறதற்கு நான் பாத்திரனல்ல
என்று சொன்னான்.—ஆபிரகாமின் சந்ததியாரா ௨௬
கிய சகோதரர்களே, பராபரனுக்குப் பயப்படு
கிற மற்றவர்களே, [29]இந்த இரட்சிப்பை அறிவிக்
கிற உபதேசம் உங்களுக்கே அனுப்பப்பட்டி
ருக்கின்றது. — என்னவெனில், எருசலேமில் ௨௭
குடியிருக்கிறவர்களும் அவர்களுடைய தலைவ
ரும் அவரையாவது [30]ஓய்வுநாள்தோறும் வாசிக்
கப்படுகிற [31]தீர்க்கதரிசிகளின் வாக்கியங்களை
யாவது அறியாமல், [32]அவரை ஆக்கினைக்குள்ளா
கத் தீர்த்ததினாலே அவைகளை நிறைவேற்றி
னார்கள்.—[33]மரணத்திற்கு ஏதுவான ஒன்றையும் ௨௮
(அவரிடத்தில்) காணமலிருந்தும், [34]அவர்கள்
அவரைக் கொலைசெய்யும்படிக்கு, பிலாத்துவை
வேண்டிக்கொண்டார்கள்.—[35]அவரைக்குறித்து ௨௯

1 அப். ௭ ௰௧. ௨ தீமோ ௩. ௮. 2 அப். ௪. ௮. 3 மத். ௰௩. ௩௮. யோவா. ௮. ௪௪. ௧ யோ. ௩. ௮.—4 ௨ மோ. ௯. ௩. ௧ சாமு. ௫. ௬.—5 அப். ௰௫. ௩௮. 6 அப். ௰௯. ௰௩: ௰௭. ௨: ௰௮. ௪. 7 லூக். ௪. ௰௬. ௨௭. ௩௪. 8 எபி. ௰௩ ௨௨.—9 அப். ௰௨. ௰௭. 10 ௨௧, ௪௨, ௪௩. ௩௪. அப். ௰. ௩௫. 11 ௫ மோ. ௭. ௬, ௭. 12 ௨ மோ. ௧௧. ௪௯. ௬ ௨௧, ௨௪. அப். ௭. ௰௭.—13 ௨ மோ. ௧. ௯: ௰௩ ௰௪, ௰௯.—14 ௨ மோ. ௰௬. ௩௫. ௪ மோ. ௰௪. ௩௩, ௩௪. ௪௯ ௩௫ ௯. ௰. அப். ௭. ௩௬.—15 ௫ மோ. ௭ ௧. 16 யோசு. ௰௪. ௧, ௨. ௪௯. ௭௮. ௫௫. 17 நியா. ௨. ௰௯.—18 ௧ சாமு. ௩. ௨௰. 19 ௧ சாமு. ௮. ௫: ௰. ௧.—20 ௧ சாமு. ௰௫ ௨௩, ௨௬, ௨௮: ௰௯. ௧. ௫சே. ௰௩ ௰௩.—21 ௪௯. ௮௯. ௨௰. 22 ௧ சாமு. ௰௩. ௰௪. அப். ௭. ௪௬. 23 ௧ சாமு. ௰௯. ௰௩. ௨ சாமு ௨. ௪: ௫. ௩. ௮.—24 ஏசா ௰௧ ௧. லூக் ௧ ௩௨, ௩௩. அப். ௨. ௩௰. ௨ரோ. ௧. ௩. 25 ௨ சாமு. ௭. ௰௨. ௪௯. ௱௩௨. ௰௧. 26 மத். ௧. ௨௧. ௨ரோ. ௰௧. ௨௬. 27 மத். ௩. ௧ லூக். ௩. ௩.—28 மத். ௩. ௰௧. மாற். ௧. ௭. லூக் ௩. ௰௬. யோவா. ௧. ௨௦, ௨௭.—29 மத். ௰. ௬. லூக். ௨௪. ௪௭. ௪௬. அப். ௩. ௨௬. 30 லூக். ௨௪ ௪௪. அப் ௩ ௰௭. ௧ கொரி. ௨. ௮.—31 ௰௪, ௰௫. வசனங்கள். அப். ௰௫. ௨௧. 32 லூக். ௨௪ ௨௦, ௪௪. அப் ௨௬. ௨௨: ௨௮. ௨௩.—33 மத். ௨௭. ௨௨. மாற். ௰௫.௰௪,௰௪. லூக் ௨௩. ௨௧,௨௨. யோவா. ௰௯. ௬,௧௦. 34 அப். ௩.௰௩,௰௪.-35 லூக். ௰௮. ௩௧: ௨௪. ௪௪. யோவா. ௰௯. ௨௮,௩௦. ௩௩, ௩௭.

* இரேக்கு தைத்தாய் தன் பிள்ளைகளைக் காப்பாற்றுகிறதுபோல அவர்களைக் காப்பாற்றி, ௫ மோ. ௧ ௩௧.

எழுதியிருக்கிற யாவையும் அவர் முடித்தபின்பு,
(சிலர்) [1]அவரை மரத்திலிருந்து இறக்கி, கல்ல
௩௰ றையிலே வைத்தார்கள். — [2]பராபரன் அவரை
௩௧ மரித்தோரிலிருந்து எழுப்பினார். — அன்றியும்
அவர் தம்முடனே கூடக் [3]கலிலேயாவிலிருந்து
எருசலேமுக்குப் போனவர்களுக்கு [4]அநேக
நாள் தரிசனையானார்; [5]அவர்களே சனங்களுக்கு
முன்பாக அவருடைய சாட்சிகளாய் இருக்கி
௩௨ றார்கள் — [6]நீர் என்னுடைய குமாரன், இன்று
நான் உம்மைச் செனிப்பித்தேன் என்று இரண்
௩௩ டாம் சங்கீதத்திலே எழுதியிருக்கிறபடி, — இ
யேசுவை எழுப்பினதினாலே பராபரன் (நம்
முடைய) முன்னோர்களுக்கு உண்டான [7]வாக்
குத்தத்தத்தை அவர்களுடைய பிள்ளைகளாகிய
நமக்கு நிறைவேற்றினார் என்று நாங்களும் உங்
களுக்குச் சுவிசேஷமாய் அறிவிக்கிறோம்.—
௩௪ அவர் மறுபடியும் மரியாதபடிக்கு, அவரை
மரித்தோரிலிருந்து எழுப்பச் சித்தமானபடியி
னாலே [8]தாவீதிற்குச் (செய்த) உறுதியான தயவு
களை * உங்களுக்குக் கட்டளையிடுவேன் என்று
௩௫ திருவுளம்பற்றினார்.—அன்றியும் [9]உம்முடைய
பரிசுத்தவான் அழிவை அடையும்படி செய்ய
மாட்டீர் என்று வேறொரு சங்கீதத்திலே சொல்
௩௬ லியிருக்கின்றது. — தாவீது தனது காலத்திலே
பராபரனுடைய சித்தத்திற்கு ஊழியம்செய்த †
பின்பு [10]நித்திரை அடைந்து, தன் பிதாக்களிடத்
தில் சேர்க்கப்பட்டு அழிவை அடைந்தான்.—
௩௭ பராபரனாலே எழுப்பப்பட்டவர் அழிவை
அடையவில்லை.
௩௮ ஆதலால் சகோதரர்களே [11]அவர்மூலமாய்
உங்களுக்குப் பாவமன்னிப்பு உண்டாகும்
௩௯ என்று அறிவிக்கப்படுகின்றது. — அல்லாமலும்
மோசேயின் நியாயப்பிரமாணத்தினாலே நீங்கள்
விடுதலையாக்கக்கூடாதகாரியம் எதுவோ, அதில்
நின்று [12]விசுவாசிக்கிற யாவனும் அவராலே
விடுதலையாகிறான் என்று அறிந்துகொள்வீர்க
௪௰ ளாக.—[13]அன்றியும் தீர்க்கதரிசிகளுடைய புத்த
கத்திலே அசட்டைக்காரரே பாருங்கள், உங்கள்
நாள்களில் ஒரு கிரியை செய்வேன், ஒருவன்
அதை உங்களுக்கு விவரித்துச் சொன்னாலும் நீங்
கள் விசுவாசியாமல் இருப்பீர்கள், அது அப்ப
௪௧ டிப்பட்ட கிரியையாகவே இருக்கும். — ஆத
லால் பிரமிப்படைந்து அழிந்துபோங்கள் என்று
சொல்லியிருக்கிறதின்படி உங்களுக்கு வராதப
டிக்கு, சாவதானமாய் இருப்பீர்களாக என்றான்.
௪௨ பின்பு அவர்கள் புறப்படுகையில், மறு ஓய்வு
நாளிலே ‡ அந்த வசனங்களைத் தங்களுக்குச்
சொல்லவேண்டும் என்று புறத்தேசத்தார் வேண்
டிக்கொண்டார்கள்.—மேலும் செபஆலய சபை ௪௩
கலைந்துபோன பின்பு யூதர்களிலும், யூதமார்க்
கத்தில் பிரவேசித்துத் தேவபத்தியாயிருந்தபேர்
களிலும் அநேகர் பவுலுக்கும் பருனபாவுக்கும்
பின்சென்றார்கள்; அவர்களுடனே அவர்கள்
பேசிக்கொண்டு [14]பராபரனுடைய கிருபையி
னாலே நிலைகொண்டிருக்கும்படிக்குப் [15]புத்தி
சொன்னார்கள்.
மறு ஓய்வுநாளிலே கொஞ்சம்குறைய பட் ௪௪
டணத்தார் எல்லாரும் பராபரனுடைய வசனத்
தைக் கேட்கும்படிக்குக் கூடிவந்தார்கள்.—யூதர் ௪௫
கள் அவ்வளவு சனங்களைக் கண்டபொழுது,
[16]பொறாமையினாலே நிறையப்பட்டு, பவுல்
சொன்னவைகளுக்கு விரோதமாய்ப் பேசினார்
கள்; விரோதித்தும் தூஷணித்தும் வந்தார்கள்.—
அப்பொழுது பவுலும் பருனபாவும் தயிரியங் ௪௬
கொண்டு சொன்னதாவது: [17]முதலாவது உங்க
ளுக்கே பராபரனுடைய வசனத்தைச் சொல்ல
வேண்டியதாய் இருந்தது; [18]நீங்கள் அதைத்
தள்ளி உங்களை நித்திய சீவனுக்கு அபாத்திரர்
என்று தீர்த்துக்கொள்ளுகிறபடியினாலே, [19]நாங்
கள் புறத்தேசத்தாரிடத்திற்குப் போகிறோம்.—
நீர் பூமியின் எல்லைபரியந்தமும் இரட்சகராய் ௪௭
இருக்கும்படிக்கு, [20]உம்மைப் புறத்தேசத்தார்க
ளுக்கு ஒளியென்று ஏற்படுத்தினேன் என்கிற
வேதவாக்கியத்தின்படி பராபரன் எங்களுக்குக்
கட்டளையிட்டருளினபடியினாலே அப்படிச்
செய்கிறோம் என்றார்கள்.
புறத்தேசத்தார்கள் அதைக்கேட்டுச் சந்தோ ௪௮
ஷம் அடைந்து, கர்த்தருடைய வசனத்தைப்
புகழ்ந்து, [21]நித்திய சீவனுக்கு நியமிக்கப்பட்ட
வர்கள் எவர்களோ, அவர்கள் விசுவாசித்தார்
கள்.—பின்பு கர்த்தருடைய வசனம் அத்தேச ௪௯
மெங்கும் பிரபலமாயிற்று.—யூதர்கள் பத்தியும் ௫௰
கனமும் பொருந்திய ஸ்திரிகளையும் பட்டணத்
தின் முதலாளிகளையும் எழுப்பி, [22]பவுல் பருன
பா என்பவர்களைத் துன்பப்படுத்தும்படி செய்து,
தங்கள் எல்லைகளிலிருந்து அவர்களைத் துரத்தி
னார்கள்.—[23]அப்பொழுது அவர்கள் தங்கள் கால் ௫௧
களில் பட்ட தூளை அவர்கள்மேல் சாட்சியாக
உதறிப்போட்டு, இக்கோனியா பட்டணத்திற்
குப் போனார்கள்; [24]சீஷரானவர்கள் சந்தோஷத்
தினாலும் பரிசுத்தஆவியினாலும் நிறையப்பட்
டார்கள்.

1 மத். ௨௭. ௫௯. மாற். ௰௫. ௪௬. லூக். ௨௩. ௫௩. யோவா. ௰௯. ௩௮.
2 மத். ௨௮. ௬. அப். ௨. ௨௪: ௩. ௰௫, ௰௬, ௨௬: ௫. ௩௰.
3 அப். ௧. ௰௧.—4 மத். ௨௮. ௰௬. அப். ௧. ௩. ௧ கொரி. ௰௫. ௫, ௬, ௭.
5 அப் ௧ ௮: ௨. ௩௨: ௩. ௰௫: ௫. ௩௨
6 சங். ௨. ௭. எபி. ௧. ௫: ௫. ௫.
7 ௧ மோ. ௩ ௰௫: ௰௨. ௩: ௨௨. ௰௮. அப். ௨௬. ௬. உரோ. ௪. ௰௩. கலா. ௩. ௰௬.—8 ஏசா. ௫௫. ௩.—9 சங். ௰௬. ௰. அப். ௨. ௩௧.—10 ௧ இரா. ௨. ௰. அப். ௨. ௨௯.—11 எரே. ௩௧. ௩௪. தானி. ௯. ௨௪. லூக். ௨௪. ௪௭. ௧ யோ. ௨. ௰௨.—12 ஏசா. ௫௩. ௰௧. உரோ. ௩. ௨௮: ௮. ௩. எபி. ௭. ௰௯.—13 ஏசா. ௨௯. ௰௪. ஆப. ௧. ௫.—14 அப். ௰௧. ௨௩: ௰௪. ௨௨.—15 தீத். ௨. ௰௧. எபி. ௰௨. ௰௫. ௧ பே. ௫. ௰௨ —16 அப். ௰௮. ௬. ௧ பே. ௪. ௪. யூதா. ௰.
17 மத். ௰. ௬. அப். ௩. ௨௬. ௨௬. வச. ௪௬. உரோ. ௧. ௰௬.—18 ௨ மோ. ௩௨. ௰ ௫ மோ. ௩௨. ௨௧. ஏசா. ௬௫. ௫. மத். ௨௧. ௪௩. உரோ. ௰. ௰௯.
19 அப் ௰௮. ௬: ௨௮. ௨௮.—20 ஏசா. ௪௨. ௬: ௪௯. ௬. லூக். ௨. ௩௨.
21 அப். ௨. ௪௭.—22 ௨ தீமோ. ௩. ௰௧.
23 மத். ௰௪. மாற். ௬. ௰௧. லூக். ௯. ௫. அப். ௰௮. ௬.—24 மத். ௫. ௰௨. யோவா. ௰௬. ௨௨. அப். ௨. ௪௬.

* அல்லது பரிசுத்தமானவைகளை, நீதியானவைகளை.—† அல்லது தாவீது தன் காலத்தாருக்குப் பராபரனுடைய சித்தத்தின்படி பணிவிடைசெய்து, ௨௨. வசனம். சங் ௭௮. ௭௨.—‡ கிரேக்கபாஷையில் அடுத்த வாரத்தின் ஓய்வுநாளில்.

## ௰௪. அதிகாரம்.

௧. பவுலும் பருனபாவும் துன்பப்பட்டு இக்கோனியாவை விட்டது. ௮. இலீஸ்திராவிலே பவுல் ஒரு சப்பாணியைக் குணமாக்கினதினால் அவர்கள் தேவர்களென்று எண்ணப்பட்டது. ௰௯. பவுல் கல்லெறியப் பட்டது. ௨௧. அவர்கள் பற்பல ஊர்களிலிருந்த சபைகளைச் சந்தித்துச் சீஷர்களை விசுவாசத்திலும் பொறுமையிலும் ஸ்திரப்படுத்தி, ௨௬. அந்தியோகுக்குத் திரும்பி வந்து, பராபரன் அவர்களைக்கொண்டு செய்ததை அறிவித்தது.

௧ இக்கோனியாப் பட்டணத்திலே அவர்கள் இ
ருவரும் யூதருடைய செப ஆலயத்திற்குப் போ
ய்ப் பிரசங்கம்பண்ணினபொழுது, யூதரிலும்
கிரேக்கரிலும் திரளான சனங்கள் விசுவாசித்
௨ தார்கள்.—விசுவாசியாத யூதர்கள் சகோதரருக்கு
விரோதமாகப் புறத்தேசத்தாருடைய மனதை
௩ எழுப்பி, பகை உண்டாக்கினார்கள்.—அப்படி
யிருந்தும், அவர்கள் அங்கே நெடுங்காலம் சஞ்
சரித்து, கர்த்தரைக்குறித்துத் தயிரியமாய்ப் போ
தகம்பண்ணினார்கள்; [1]அவர் தமது கிருபையைக்
காட்டிய வசனத்திற்குச் சாட்சி உண்டாக அதி
சயங்களும் அற்புதங்களும், அவர்கள் கைகளால்
௪ செய்யப்படும்படி அநுக்கிரகித்தார். — அந்தப்
பட்டணத்தின் சனங்கள் பிரிந்து, சிலர் யூதரை
யும் [2]சிலர் அப்போஸ்தலரையும் சேர்ந்தார்கள்.—
௫ அப்பொழுது [3]அவர்களை நிந்தித்து அவர்கள்
மேல் கல்லெறியும்பொருட்டாக, புறத்தேசத்தா
ரும் யூதர்களும் அவர்களுடைய தலைவருடனே
யுங்கூடக் கலகம்பண்ணுகிறதை அவர்கள் அ
௬ றிந்து,-[4]இலிக்கவோனியா நாட்டிலுள்ள இலீஸ்
திரா ஊருக்கும் தெருபை ஊருக்கும் அவைக
௭ ளைச் சூழ்ந்த புறத்திற்கும் ஓடிப்போய்,-அங்கே
சுவிசேஷத்தை அறிவித்துக்கொண்டுவந்தார்கள்.
௮ [5]இலீஸ்திரா ஊரிலே ஒருவன் தன் தாயின்
வயிற்றிலிருந்து சப்பாணியாய்ப் பிறந்து, ஒருக்
காலும் நடவாமல் பெலனில்லாத கால்களோ
௯ டே உளுக்காந்திருந்து,—பவுல் பேசுகிறதைக்
கேட்டான்; அவன்மேல் பவுல் கண்ணூன்றி,
[6]இரட்சிக்கப்படும்படிக்கான விசுவாசம் அவ
௰ னுக்கு உண்டென்று கண்டு,–[7]நீ உன் கால்களை
ஊன்றி, செம்மையாய் எழுந்து நில்லென்று
மிகுந்த சத்தத்தோடே சொன்னான்; உடனே
௰௧ அவன் குதித்து எழுந்து நடந்தான்.–பவுல் செய்
ததைச் சனங்கள் கண்டு, [8]தேவர்கள் மனிதரூ
பம் எடுத்து நம்மிடத்தில் இறங்கியிருக்கிறார்கள்
என்று இலிக்கவோனியா பாஷையிலே சத்த
௰௨ மிட்டுக் கூப்பிட்டார்கள்.—மேலும் பருனபா
வை யூப்பித்தர் தேவனென்றும் பவுல் பிரசங்கத்
தை நடத்தினவனானபடியினாலே, அவனை மெ
௰௩ ருக்கூரி தேவனென்றும் அழைத்தார்கள்.—அல்
லாமலும், பட்டணத்திற்குப் புறம்பே இருந்த
யூப்பித்தருடைய பூசாசாரி எருதுகளையும் பூமா
லைகளையும் வாசலின் அருகே கொண்டுபோய்ச்
[9]சனங்களோடேகூடப் பலியிட மனதாயிருந்
தான்.—அப்போஸ்தலராகிய பருனபாவும் பவு ௰௪
லும் அதைக் கேள்விப்பட்டு, (விசனத்தினாலே)
[10]தங்கள் வஸ்திரங்களைக் கிழித்துக்கொண்டு,-
கூட்டத்திற்குள் ஓடி, மனிதர்களே, [11]என்னத் ௰௫
திற்கு இப்படிச் செய்கிறீர்கள்? [12]நாங்களும் உங்
களைப்போலப் பாடுள்ள மனிதராயிருந்து,—[13]நீங் ௰௬
கள் இந்த வீணான தேவர்களைவிட்டு [14]வானத்
தையும் பூமியையும் சமுத்திரத்தையும், அவை
களிலுள்ள யாவையும் உண்டாக்கின [15]சீவ
னுள்ள தேவனிடத்திற்குத் திரும்பவேண்டும்
என்று உங்களுக்குச் சுவிசேஷமாய்ச் சொல்லு
கிறோம்; [16]சென்ற காலங்களில் அவர் எல்லாப்
புறத்தேசத்தாரையும் தங்கள் தங்கள் வழிகளிலே
நடக்கவிட்டிருந்தும்,—அவர்களுக்கு [17]நன்மை ௰௭
செய்துவந்து, வானத்திலிருந்து மழைகளையும்
செழிப்புள்ள காலங்களையும் நமக்குக் கொடுத்து,
ஆகாரத்தினாலும் சந்தோஷத்தினாலும் நம்முடை
ய இருதயங்களை நிரப்பி, [18]இவ்விதமாய் அவர்
தம்மைக்குறித்துச் சாட்சிகொடாமல் இருக்கவி
ல்லையென்று கூப்பிட்டார்கள்.—இப்படி அவர் ௰௮
கள் சொல்லி, தங்களுக்குச் சனங்கள் பலியிடா
தபடிக்குப் பிரயாசத்தோடே நிறுத்தினார்கள்.

பின்பு [19]அந்தியோகியா ஊரிலும் இக்கோனி ௰௯
ஊரிலுமிருந்து யூதர்கள் அங்கே போய், சனங்க
ளுக்குப் போதனைசெய்து, [20]பவுலின்மேல் கல்
லெறிந்து, அவன் மரித்தான் என்று நினைத்து,
அவனைப் பட்டணத்திற்கு வெளியே இழுத்தார்
கள்.—அங்கே சீஷர்கள் அவனைச் சூழ்ந்துகொண் ௨௰
டிருக்கையில், அவன் எழுந்து ஊருக்குள் பிரவே
சித்து, மறுநாளிலே பருனபாவுடனே தெருபை
ஊருக்குப் போனான்

அந்த ஊராருக்குச் சுவிசேஷத்தை அறிவித்து, ௨௧
[21]அநேகரைச் சீஷராக்கின * பின்பு, அவர்கள்
இலீஸ்திரா ஊருக்கும் இக்கோனி ஊருக்கும்
அந்தியோகியா ஊருக்கும் திரும்பி, — சீஷரு ௨௨
டைய ஆத்துமாக்களை ஸ்திரப்படுத்தி, [22]விசுவா
சத்திலே நிலைத்திருக்கும்படிக்குப் புத்திசொல்
லி, [23]நாம் அநேக உபத்திரவங்களின் வழியாய்ப்
பராபரனுடைய இராச்சியத்தில் பிரவேசிக்க
வேண்டும் என்றும் சொல்லிக்கொண்டார்கள்.—
அன்றியும் சபைகள்தோறும் அவர்களுக்காக ௨௩
[24]மூப்பரைத் தெரிந்து ஏற்படுத்தி உபவாசித்துச்
செபம்பண்ணி, அவர்கள் விசுவாசித்துக்கொண்
டிருந்த கர்த்தருக்கு அவர்களை ஒப்புவித்தார்கள்;

1 மாற் ௰௬. ௨௰. எபி. ௨. ௪.—2 அப். ௰௭. ௪. ௫.—3 ௨ தீமோ. ௩. ௰௧.—4 மத். ௰. ௨௩.—5 அப். ௯. ௨.—6 மத். ௮. ௰: ௯. ௨௮. ௨௯.—7 ஏசா. ௩௫. ௬.—8 அப். ௮. ௰: ௨௮. ௬. 9 தானி. ௨. ௪௬.—10 மத். ௨௬. ௬௫. 11 அப். ௰. ௨௬. 12 யாக். ௫. ௰௭. வெளி. ௰௯. ௰. 13 ௧ சாமு. ௰௨. ௨௧. ௧ இரா. ௰௬. ௰௩. எரே. ௰௪. ௨௨. ஆமோ. ௨. ௪. ௧ கொரி. ௮. ௪. 14 ௧ மோ. ௧. ௧. சங். ௩௩. ௬: ௭௪௬. ௬. வெளி. ௰௪. ௭. 15 ௧ தெச. ௧. ௯.—16 சங். ௮௧. ௰௨. அப். ௰௭. ௩௰. ௧ பே. ௪. ௩. 17 ௧ மோ. ௨௬. ௪. ௫ மோ. ௰௧. ௰௪: ௨௮. ௰௨. யோபு. ௫. ௰. சங். ௬௫. ௯: ௬௮. ௯: ௭௪௭. ௮. எரே. ௰௪. ௨௨. மத். ௫. ௪௫—18 அப். ௰௭. ௨௭. ௨ ரோ. ௧. ௨௰.—19 அப். ௰௩. ௪௫. 20 ௨ கொரி. ௰௧. ௨௫. ௨ தீமோ. ௩. ௰௧.—21 மத். ௨௮. ௰௯. 22 அப். ௰௧. ௨௩: ௰௩. ௪௩.—23 மத். ௰. ௩௮: ௰௬. ௨௪. லூக். ௨௨. ௨௮, ௨௯. ௨ ரோ. ௮. ௰௭. ௨ தீமோ. ௨. ௰௧, ௰௨: ௩. ௰௨.—24 தீத். ௧. ௫.

* அல்லது போதித்த.

பின்பு அவர்கள் பிசீதியா நாட்டைக் கடந்து
௨௪ போய், பம்பிலியா நாட்டிலே சேர்ந்து,—பெரு
கே ஊரிலே சுவிசேஷவசனத்தை அறிவித்து,—
௨௫ அத்தாலியா பட்டணத்திற்குச் சென்று, அங்கே
௨௬ கப்பலேறி,—தாங்கள் [1]நிறைவேற்றின கிரியைக்
காகப் பராபரனுடைய கிருபைக்கு ஒப்புவிக்
கப்பட்டுப் [2]புறப்பட்ட அந்தியோகியா பட்ட
ணத்திற்குப் போனார்கள்.
௨௭ அங்கே சேர்ந்தபொழுது, அவர்கள் சபை
யைக் கூடிவரப்பண்ணி, [3]தங்களால் பராபரன்
செய்தவைகளையும், [4]அவர் புறத்தேசத்தார்க
ளுக்கு விசுவாசத்தின் கதவைத் திறந்தார் என்ப
தையும் அறிவித்து, பின்பு அங்கே சீஷருடனே
கூட அநேககாலம் சஞ்சரித்துக்கொண்டுவந்தார்
கள்.

## ௰௫. அதிகாரம்.

௧. சுன்னத்தைக்குறித்துப் பெரிய வாக்குவாதம் உண்டானது. ௬. அப்போஸ்தலர் அதைக்குறித்து ஆலோசித்தது. ௨௨. அவர்களுடைய தீர்மானத்தை நிருபங்கள்வழியாய்ச் சபைகளுக்கு அனுப்பினது. ௩௯. பவுலும் பருனபாவும் ஒருமித்துச் சகோதரரைச் சந்திக்க நினைத்தும் விகற்பப்பட்டுப் பிரிந்துபோனது.

௧ அக்காலத்திலே [5]சிலர் யூதேயாவிலிருந்து
போய், [6]நீங்கள் மோசேயின் முறைமையின்ப
டியே [7]விருத்தசேதனம் பெற்றுக்கொள்ளாவிட்
டால், இரட்சிக்கப்படமாட்டீர்கள் என்று சகோ
௨ தரருக்குப் போதகம்பண்ணினார்கள். — அதினா
லே கலகமும், அவர்களுக்கும் பவுல் பருனபா
என்பவர்களுக்கும் மிகுந்த தருக்கமும் உண்டா
னபொழுது, அந்தத் தருக்க காரியத்தைக்குறித்
துப் [8]பவுலும், பருனபாவும், தங்களில் வேறே
சிலரும் எருசலேமிலுள்ள அப்போஸ்தலரிடத்
திற்கும் மூப்பரிடத்திற்கும் போகவேண்டும்
௩ என்று தீர்மானம்பண்ணினார்கள். — அந்தப்படி
[9]அவர்கள் சபையாராலே வழிவிட்டு அனுப்பப்
பட்ட பின்பு பெனீக்கே சமாரியா நாடுகளின்
வழியாய்ப் போய், [10]புறத்தேசத்தார் மனம் திருப்
பினதை அறிவித்து, சகோதரர் எல்லாருக்கும்
மிகுந்த சந்தோஷத்தை உண்டாக்கினார்கள்.—
௪ எருசலேமிலே அவர்கள் சேர்ந்து, சபையினா
லும் அப்போஸ்தலராலும் மூப்பராலும் ஏற்றுக்
கொள்ளப்பட்ட பின்பு, [11]தங்களால் பராபரன்
௫ செய்தவைகளை அறிவித்தார்கள்.—அப்பொழுது
பரிசேயராகிய வகுப்பிலே விசுவாசிகளான
சிலர் எழுந்து* அவர்கள் [12]விருத்தசேதனத்தைப்
பெற்றுக்கொண்டு மோசேயின் பிரமாணத்தைக்
கைக்கொள்ளும்படிக்கு உத்தரவு அனுப்பவே
ண்டும் என்றார்கள்.
௬ பின்பு அப்போஸ்தலரும் மூப்பரும் அந்தக்
காரியத்தை ஆராய்ந்து பார்க்கும்படிக்குக் கூடி
னார்கள்.—மிகுந்த தருக்கம் உண்டானபொழுது, ௭
பேதுரு எழுந்து அவர்களுடனே சொன்னதா
வது: [13]சகோதரரே, நீங்கள் அறிந்திருக்கிறபடி,
பராபரன் அநேக நாள்களுக்குமுன்னே உங்க
ளில் ஒருவனாகிய என்னுடைய வாயினாலே
புறத்தேசத்தார்கள் சுவிசேஷத்தின் வார்த்தை
யைக் கேட்டு, விசுவாசிகளாகும்படி (என்னைத்)
தெரிந்தெடுத்தார்.—மேலும் [14]இருதயங்களை அறிந் ௮
திருக்கிற பராபரன் நமக்குக் கொடுத்ததுபோல,
அவர்களுக்கும் [15]பரிசுத்தஆவியைக் கொடுத்து,—
(இவ்விதமாய்) அவர்களைக்குறித்துச் சாட்சி ௯
யிட்டு, [16]அவர்கள் இருதயங்களை விசுவாசத்தி
னாலே சுத்தமாக்கி, அவர் [17]நமக்கும் அவர்களுக்
கும் ஒரு வித்தியாசமும் பண்ணவில்லை. —அப் ௰
படியிருக்க, நம்முடைய பிதாக்களாலும் [18]நம்மா
லும் சுமக்கக்கூடாதிருந்த நுகத்தடியைச் சீஷ
ருடைய கழுத்தின்மேல் பிணைக்கிறதினாலே நீங்
கள் பராபரனைச் சோதிக்கிறதென்ன?—அப்படி ௰௧
அல்ல, [19]கர்த்தராகிய இயேசுக்கிறிஸ்துவின்
கிருபையினாலே அவர்கள் இரட்சிக்கப்படுகிற
பிரகாரமாக, நாம் அப்படியே இரட்சிக்கப்படு
வோம் என்று நம்பி இருக்கிறோமே என்றான்.
அதன்பின்பு கூடிவந்த யாவரும் அமைந் ௰௨
திருந்து, பருனபாவும் பவுலும் தங்களாலே பரா
பரன் [20]புறத்தேசத்தார்களுக்குள்ளே செய்த
அதிசயங்களையும் அற்புதங்களையும் விவரித்துச்
சொல்லக் கேட்டார்கள்.
அவர்கள் பேசி முடித்தபின்பு, [21]யாக்கோபு ௰௩
சொன்னதாவது: சகோதரர்களே, எனக்குச் செ
விகொடுப்பீர்களாக.—பராபரன் தமது நாமத்திற் ௰௪
காகப் புறத்தேசத்தார்களில் ஒரு சனக்கூட்டத்
தை எடுத்துக்கொள்ளும்படிக்கு, முதலாவது
அவர்களை நோக்கிப் பார்த்ததைச் [22]சீமோன்
சொன்னானே.—அதற்குத் தீர்க்கதரிசிகளுடைய ௰௫
வசனங்களும் ஒத்திருக்கின்றன.—மற்ற மனிதர்க ௰௬
ளும், என்னுடைய நாமத்தைப்பெற அழைக்கப்
படும் புறத்தேசத்தார் எல்லாரும் பராபரனைத்
தேடிக்கொள்ளும்படிக்கு, — [23]நான் இதற்குப் ௰௭
பின்பு திரும்பி வந்து விழுந்த தாவீதின் கூடா
ரத்தை மறுபடியும் எழுப்புவேன், அதில் இடிந்
துபோன இடங்களைத் திரும்பக் கட்டி, அதைத்
திரும்பச் செம்மையாக நிறுத்துவேன் என்று
இவைகளையெல்லாம் செய்கிற பராபரன் சொல்
லுகிறார் என்று எழுதியிருக்கின்றதே.—அநாதி ௰௮
காலம்முதலாய்ப் பராபரனுடைய கிரியைகள்
எல்லாம் அவருக்குத் தெரிந்திருக்கின்றன.—
[24]ஆகையால் புறத்தேசத்தார்களில் பராபரனிடத் ௰௯
திற்கு [25]மனம்திருப்புகிறவர்களைக் கலக்கப்படுத்

1 அப். ௰௩ ௪௰.—2 அப். ௰௩. ௧, ௩. ௨௨. இ.வசன. கலா. இ. ௨. பிலி. ௧. ௨. கொலோ. ௨. அ. ௰௧, ௰௩. 3 அப். ௰௫. ௪, ௰௨: ௨௧. ௰௯. 4 ௧ கொரி. ௰௬. ௯. ௨ கொரி. ௨. ௰௨. கொலோ. ௪. ௩. வெளி ௩. அ. 5 கலா. ௨. ௰௨.—6 ௧ மோ. ௰௭. ௰. ௩ மோ. ௰௨. ௩.—7 யோவா. எ. ௨௨. 8 கலா. ௨. ௧.—9 ௨ ரோ. ௰௫. ௨௪. ௧ கொரி. ௰௬. ௬, ௰௧.—10 அப். ௰௪. ௨௭.—11 ௰௨. வச. அப். ௰௪. ௨௭: ௨௧ ௰௯.—12 ௧. வசனம்.

13 அப் ௰. ௨௰: ௰௧. ௰௨. 14 ௧ நாளா ௨௮. ௯. அப். ௧. ௨௪. 15 அப். ௰. ௪௪.—16 அப். ௰. ௪௩, ௨௮, ௬௯. ௧ கொரி. ௧. ௨. ௧ பே. ௧. ௨௨. 17 ௨ ரோ. ௰. ௰௨.—18 மத். ௨௩. ௪. கலா. ௫. ௧.—19 ௨ ரோ. ௩. ௨௪. எபே. ௨. அ. தீத். ௨. ௰௧: ௩. ௪, ௫. 20 அப் ௰௪. ௨௭.—21 அப். ௰௨. ௰௭. 22 எ. வச.—23 ஆமோ. ௯. ௰௧, ௰௨. 24 ௨௮. வச.—25 ௧ தெச. ௧. ௯.

* அல்லது அவர்கள் சொன்னதென்னவென்றால் வேண்டுமென்பார்களென்பதே.

உ௰ தாதபடிக்கு,— அசுசிப்படுத்துகிற [1]விக்கிரக
போசனங்களுக்கும், [2]வேசித்தனத்திற்கும், நெ
ருக்குண்டு செத்தவைகளுக்கும், [3]இரத்தத்திற்
கும் விலகும்படியே அவர்களுக்கு எழுதவேண்
உக டும் என்று எண்ணுகிறேன்.—பூர்வகாலம்முதற்
கொண்டு, [4]செபஆலயங்களில் ஓய்வுநாள்தோ
றும் மோசேயின் ஆகமங்கள் வாசிக்கப்பட்டு
வருகிறபடியால், பட்டணங்தோறும் அவைக
ளைப் பிரசித்தம்பண்ணுகிறவர்களும் உண்டே
என்றான்.

உஉ அப்பொழுது அப்போஸ்தலரும், மூப்பரும்,
சபையார் எல்லாரும் தங்களில் சகோதரருக்குள்
ளே கனம்பொருந்திய [5]பருசபா என்னப்பட்ட
யூதாவையும் சீலாவையும் தெரிந்துகொண்டு, அ
வர்களைப் பவுலுடனேயும் பருனபாவுடனேயும்
கூட அந்தியோகியா பட்டணத்திற்கு அனுப்ப
வேண்டும் என்று யோசித்து எழுதின நிருப
உ௩ மாவது:-அந்தியோகியா பட்டணத்திலும், சீரி
யா நாட்டின் மற்ற இடங்களிலும், கிலீக்கியா
நாட்டிலும் இருக்கிற புறத்தேசத்தார்களிலிருந்து
உண்டான சகோதரர்களுக்கு அப்போஸ்தல
ரும், மூப்பரும், (மற்றச்) சகோதரருமாகிய நாங்
கள் சவுக்கியம் உண்டாகும்படி வாழ்த்துகி
உ௪ றோம்.—எங்களால் [6]கட்டளைபெருத சிலர் எங்
களிடத்திலிருந்து புறப்பட்டு, நீங்கள் விருத்த
சேதனம் அடையவேண்டும் என்றும், நியாயப்
பிரமாணத்தைக் கைக்கொள்ளவேண்டும் என்
றும் சொல்லி, இப்படிப்பட்ட வார்த்தைகளினா
லே உங்களைக் கலக்கப்படுத்தி, உங்கள் ஆத்து
மாக்களைத் தள்ளாடப்பண்ணி இருக்கிறார்கள்
என்று நாங்கள் கேள்விப்பட்டபடியினாலே,—
உ௫ நாங்கள் தெரிந்துகொண்ட சில மனிதரை நம்மு
டைய கர்த்தராகிய [7]இயேசுக்கிறிஸ்துவின் நாமத்
திற்காகத் தங்கள் பிராணனையும்விட எத்தனமா
உ௬ யிருந்தவர்களுமாய்,—எங்களுக்குப் பிரியமான
வர்களுமாய் இருக்கிற பருனபாவோடும் பவு
லோடும்கூட உங்களிடத்திற்கு அனுப்பவேண்
டுமென்று ஒருமனப்பட்டு யோசனைபண்ணிக்
உ௭ கொண்டு,—அந்தப்படியே யூதாவையும் சீலா
வையும் அனுப்புகிறோம்; அவர்களும் இவை
களை வாக்கினாலே * உங்களுக்கு அறிவிப்பார்
உ௮ கள். — எவையெனில், [8]விக்கிரகங்களுக்குப்
படைத்தவைகளுக்கும், [9]இரத்தத்திற்கும், நெ
ருக்குண்டு செத்ததற்கும் வேசித்தனத்திற்கும்,
நீங்கள் விலகியிருக்கவேண்டும்; இதுவே அல்
லாமல், வேறு அதிகமான பாரம் ஒன்றும் உங்
உ௯ கள்மேல் போடாமல் இருக்கும்படிக்கு,—பரி
சுத்தஆவியும் நாங்களும் சித்தமாயிருக்கிறோம்;
மேல்சொல்லியவைகளில் நின்று நீங்கள் உங்
களைக் காத்துக்கொண்டால் நன்று செய்வீர்கள்,
சுகமாயிருப்பீர்களாக என்று எழுதி அவர்கள்
கையில் கொடுத்து அனுப்பினார்கள்.

அவர்கள் அனுப்பிவிடப்பட்டு அந்தியோகி ௩௰
யா பட்டணத்திற்குப் போய், சபையைக் கூடி
வரச்செய்து, அந்த நிருபத்தைக் கொடுத்தார்
கள்.—அதை அவர்கள் வாசித்தபின்பு, அதில் ௩௧
அடங்கிய ஆறுதலான † வசனங்களைக்குறித்துச்
சந்தோஷப்பட்டார்கள்.—பின்பு யூதாவும், சீலா ௩௨
வும், தாங்களும் தீர்க்கதரிசிகளானபடியினாலே,
அநேக வசனங்களினாலே சகோதரருக்குப் [10]புத்
திசொல்லி, அவர்களை ஸ்திரப்படுத்தி,—சிலகா ௩௩
லம் அங்கேயிருந்து, பின்பு சகோதரரால் சமாதா
னத்துடனே [11]அப்போஸ்தலரிடத்திற்கு அனுப்
பிவிடப்பட்டார்கள்.—சீலா பின்னும் அங்கே ௩௪
தங்கினால், நலமாயிருக்குமென்று எண்ணியிருந்
தான்.—[12]அன்றியும் பவுலும் பருனபாவும் அந் ௩௫
தியோகியா ஊரிலே சஞ்சரித்து, வேறு அநேக
ரோடும்கூடக் கர்த்தருடைய வசனத்தை உபதே
சித்து, சுவிசேஷமாய்ப் பிரசங்கித்துக்கொண்டு
வந்தார்கள்.

சிலநாளுக்குப் பின்பு, பவுல் பருனபாவை ௩௬
நோக்கி, கர்த்தருடைய வசனத்தை நாம் அறிவித்
திருந்த [13]சகல பட்டணங்களிலுமுள்ள சகோ
தரர் சுகமாய் இருக்கிறார்களோ, இல்லையோ,
என்று அதைப் பார்க்கும்படிக்குத் திரும்பிப் பிர
யாணமாய்ப் போவோம் வா என்றான்.—அப் ௩௭
பொழுது பருனபாவானவன், மாற்கு என்று
அழைக்கப்பட்ட [14]யோவானைக்கூட அழைத்
துக்கொள்ளும்படி யோசனை சொன்னான்.—
பவுல் [15]பம்பீலியா நாட்டிலே தங்களுடனே ௩௮
கூடக் கிரியைக்கு வாராமல், தங்களைவிட்டுப்
பிரிந்துபோன அவனை அழைத்துக்கொள்ளத்
தகாதென்று சொன்னான்.—அப்பொழுது கோ ௩௯
பம் உண்டானதினாலே அவர்கள் ஒருவரை ஒரு
வர்விட்டுப் பிரிந்தார்கள்; பருனபாவானவன்
மாற்கைக் கூட்டிக்கொண்டு கப்பலேறி, சீப்
புருதீவுக்குப் போனான்.—பவுலானவன் சீலா ௪௰
வைத் தெரிந்துகொண்டு, [16]சகோதரராலே பரா
பரனுடைய கிருபைக்கு ஒப்புவிக்கப்பட்டு,—
புறப்பட்டுச் சீரியா நாட்டிலேயும் கிலீக்கியா ௪௧
நாட்டிலேயும் திரிந்து, [17]சபைகளை ஸ்திரப்படுத்
தினான்.

## ௰௬. அதிகாரம்.

௧. பவுல் தீமோத்தேயுவைச் சன்னத்தப்பண்ணி. ௭. பரிசுத்த ஆவியினால் மறதேசங்களுக்குப் போகத் தரிசனையடைந்து, ௰௪ லீதியாளைக் குணமாக்கி, ௰௬. ஒரு பேயைத் துரத்தினது. ௰௯. அதினிமித்தம் பவுலும், சீலாவும் அடிக்கப்பட்டுக் காவலில் வைக்கப்பட்டது ௨௬ காவற்கதவுகள் திறந்தது. ௩௩. காவற்காரன் குணப்பட்டது. ௩௭. அவர்கள் விடுதலையானது.

---

1 ௧ மோ. ௩௫. ௨. ௨ மோ. ௨௰. ௩, ௨௩. ௭சே. ௨௰. ௩௰. ௧ கொரி. ௮. ௧௰ வெளி. ௨. ௧௪, ௨௰: ௯. ௨௰, ௨௧. 2 ௧ கொரி. ௬. ௯, ௧௮. கலா. ௫. ௧௯. எபே. ௫. ௩. கொலோ. ௩. ௫. ௧ தெச. ௪. ௩. ௧ பே. ௪. ௩. 3 ௧ மோ ௯. ௪. ௩ மோ. ௩ ௧௭. ௫ மோ. ௧௨. ௧௬, ௨௩.—4 அப். ௧௩. ௧௫, ௨௭.—5 அப் ௧. ௨௩. 6 ௧. வசனம். கலா. ௨. ௪: ௫ ௧௨. தீத். ௧. ௰, ௧௧.—7 அப். ௧௩. ௫௰: ௧௪. ௧௯. ௧ கொரி. ௧௫ ௩௰. ௨ கொரி. ௧௧. ௨௩, ௨௬.—8 ௨௰. வசனம். அப். ௨௧, ௨௫. வெளி. ௨. ௧௪, ௨௰. 9 ௧ மோ. ௧௭. ௧௪.—10 அப். ௧௪. ௨௨: ௧௮. ௨௩.—11 ௧ கொரி. ௧௬. ௧௧. எபி. ௧௧. ௩௧.—12 அப். ௧௩. ௧. 13 அப். ௧௩. ௪, ௧௩, ௧௪, ௩௬: ௧௪. ௧, ௨௧, ௨௪, ௨௫.—14 அப். ௧௨. ௧௨, ௨௫: ௧௩. ௫. கொலோ. ௪. ௰. ௨ தீமோ. ௪. ௧௧. பிலே ௨௪.—15 அப். ௧௩. ௧௩.—16 அப். ௧௪. ௨௬.—17 அப். ௧௬. ௫.

* அல்லது வாய்மொழியாய்.—† அல்லது போதனைக்கான.

௧ [1]பின்பு அவன் தெருபை ஊருக்கும் இலீஸ்திரா
ஊருக்கும் போனான்; அங்கே [2]தீமோத்தேயு என்
னப்பட்ட சீஷன் இருந்தான்; [3]அவனுடைய
தாய் விசுவாசமுள்ள ஒரு யூதஸ்திரியானவள்;
அவனுடைய தகப்பன் கிரேக்கனானவன். —
௨ [4]மேலும் அவன் இலீஸ்திராவிலும் இக்கோனி
யாவிலும் இருக்கிற சகோதரராலே நற்சாட்சி
௩ பெற்றவன். — அவனைப் பவுல் தன்னுடனே
கூடப் புறப்படவேண்டும் என்று விரும்பி, அ
வனுடைய தகப்பன் கிரேக்கனென்று அவ்வி
டங்களில் இருக்கிற யூதர்கள் எல்லாரும் அறிந்
தபடியால், [5]அவனுக்கு விருத்தசேதனம்பண்
௪ ணினான்.—பின்பு அவர்கள் பட்டணங்களில்
திரிந்து நடக்கையில், எருசலேமிலுள்ள அப்
போஸ்தலராலும் மூப்பராலும் [6]தீர்மானம்பண்
ணப்பட்ட சட்டங்களைக் காத்துக்கொள்ளும்ப
௫ டிக்குச் சனங்களுக்கு ஒப்புவித்தார்கள்.—[7]அதி
னாலே சபைகள் விசுவாசத்திலே ஸ்திரப்பட்டு
நாள்தோறும் பெருகினார்கள்.

௬ பின்பு அவர்கள் பிரிகியா நாட்டிலேயும் கலாத்
தியா நாட்டிலேயும் திரிந்துகொண்டு வருகிற
பொழுது, ஆசியாதேசத்திலே அவர்கள் சுவிசே
ஷவசனத்தைச் சொல்லாதபடிக்கு, பரிசுத்த
௭ ஆவியினாலே தடைபண்ணப்பட்டு, — பின்பு
மீசியா நாட்டிற்குப் போய், பித்தினியா நாட்
டிற்குப் போகப் பிரயத்தனம்பண்ணினார்கள்;
அதற்கும் இயேசுவினுடைய ஆவியானவர்
௮ தடைபண்ணினார். — [8]அப்பொழுது அவர்கள்
மீசியா நாட்டைக்கடந்து, துரோவஸ் பட்ட
௯ ணத்திற்குப் போனார்கள்.—அங்கே இராத்திரி
யிலே பவுலுக்கு ஒரு தரிசனை உண்டாயிற்று;
என்னவெனில், [9]மக்கேதோனியா தேசத்தான்
ஒருவன் நின்று, நீ மக்கேதோனியாவில் வந்து,
எங்களுக்கு உதவிசெய்வாயாக என்று அவனை
௰ வேண்டிக்கொண்டதாக இருந்தது. — அந்தத்
தரிசனையை அவன் கண்டபொழுது, அவர்க
ளுக்குச் சுவிசேஷத்தை அறிவிக்கும்படிக்கு,
கர்த்தர் எங்களை அழைத்தாரென்று நாங்கள் நிச்ச
யமாய் அறிந்து, உடனே [10]மக்கேதோனியா
தேசத்திற்குப் புறப்பட்டுப்போகப் பிரயத்தனம்
பண்ணி,

௰௧ கப்பலேறித் துரோவஸ் பட்டணத்தைவிட்டு,
நேராய்ச் சமொத்திராக்கே தீவுக்கும், மறுநாளி
லே நேயாப்போலி பட்டணத்திற்கும் போய்,—
௰௨ அங்கே இருந்து மக்கேதோனியா தேசத்தின்
தலையானதுமாய்,* உரோமர் குடியேறினதுமாய்
இருக்கிற [11]பிலிப்பி பட்டணத்தில் சேர்ந்து,
௰௩ சிலநாள் அதிலே சஞ்சரித்தோம்.—பட்டணத்
திற்கு வெளியே ஆற்றின் அருகே வழக்கமாய்ச்
செபம்பண்ணுதற்கான இடத்திற்கு ஓய்வுநா
ளில்,† நாங்கள் போய் அங்கே உளுக்காந்து,
கூடிவந்திருந்த ஸ்திரிகளுடனே பேசிக்கொண்
டோம்.

ஒரு ஸ்திரி தீயத்திரா ஊராளுமாய், இரத்தாம் ௰௪
பரம் விற்கிறவளுமாய், தேவபக்தியுள்ளவளு
மாய், லீதியாள் என்று பேர்கொண்டவளுமாய்
இருந்தாள்; அவள் பவுலினால் சொல்லப்பட்ட
வைகளைக் கேட்டுக்கொண்டிருக்கையில், அ
வைகளுக்கு அவள் எச்சரிக்கையாய் இருக்கும்
படிக்கு, [12]கர்த்தர் அவளுடைய இருதயத்தைத்
திறந்தார்.—பின்பு அவளும் அவளுடைய குடும் ௰௫
பத்தாரும் ஞானஸ்நானம் பெற்றபொழுது, அ
வள் எங்களை நோக்கி: நீங்கள் என்னைக் கர்த்தா
வினிடத்தில் விசுவாசமானவள் என்று எண்ணி
னால், என் வீட்டிலே வந்து தங்கியிருப்பீர்களாக
என்று [13]எங்களை மிகவும் வேண்டிக்கொண்டு
இருத்தினாள்.

நாங்கள் செபத்திற்குப் போகையில், பீத்தோ ௰௬
னுடைய ஆவியைக் ‡ [14]கொண்டிருந்து, குறி
சொல்லுகிறதினாலே தன் எசமான்களுக்கு [15]மி
குந்த ஆதாயத்தை உண்டாக்கின ஒரு வேலைக்
காரி எங்களுக்கு எதிர்ப்பட்டாள்.—அவள் பவு ௰௭
லுக்கும் எங்களுக்கும் பின்சென்று, இந்த மனி
தர் உன்னதமான பராபரனுடைய ஊழியக்கா
ரர், உங்களுக்கு இரட்சிப்பின் மார்க்கத்தை அறி
விக்கிறவர்கள் என்று கூப்பிட்டாள்.—இப்படி ௰௮
அநேக நாள் செய்தாள்; [16]அப்பொழுது பவுல்
விசனம் அடைந்து திரும்பிக்கொண்டு அந்த ஆ
வியுடனே சொன்னது: இவளைவிட்டுப் புறப்ப
டும்படிக்கு, இயேசுக்கிறிஸ்துவினுடைய நாமத்
தினாலே உனக்குக் கட்டளையிடுகிறேன் என்
றான்; [17]அந்நேரம் அது புறப்பட்டுப் போயிற்று.
[18]அவளுடைய எசமான்கள் தங்கள் ஆதாயத் ௰௯
து நம்பிக்கை அற்றுப்போயிற்று என்று அறிந்து,
[19]பவுலையும் சீலாவையும் பிடித்து, சந்தைவெளி
யிலுள்ள § தலைவரிடத்திற்கு [20]இழுத்து,–பின்பு ௨௰
அவர்களைத் துரைகளுக்குமுன்பாகக் கொண்டு
போய், யூதர்களாகிய இந்த மனிதர் நம்முடைய
பட்டணத்தைக் [21]கலங்கப்பண்ணி,—உரோம ௨௰௧
ராகிய நம்மாலே ஏற்றுக்கொள்ளவும், செய்யவும்
படாத முறைமைகளை அறிவிக்கிறார்கள் என்றார்
கள். — அப்பொழுது சனங்கள் அவர்களுக்கு ௨௰௨
விரோதமாய் எழும்பினதுமல்லாமல், துரைகள்
அவர்கள் வஸ்திரங்களைக் கிழித்துப்போடவும்,
[22]அவர்களை அடிக்கவும் சொல்லி,—மிகுதியாய் ௨௰௩
அவர்களை அடிப்பித்த பின்பு, சிறைச்சாலையிலே
வைத்து, அவர்களைப் பத்திரமாய்க் காக்கும்படிக்
குச் சிறைச்சாலைக்காரனுக்குக் கட்டளையிட்

1 அப். ௰௪ ௬.—2 அப். ௰௯. ௨௨. ரோ. ௰௬. ௨௧. ௧ கொரி ௪. ௰௭. பிலி. ௨. ௰௯. ௧ தெச. ௩. ௨. ௧ தீமோ ௧. ௨. ௨ தீமோ. ௧. ௨. 3 ௨ தீமோ. ௧ ௫.—4 அப். ௧. ௩. 5 ௧ கொரி. ௯. ௨௦. கலா. ௨. ௩: ௫. ௨.—6 அப். ௰௫. ௨௮, ௨௯.—7 அப். ௰௫. ௪௧.—8 ௨ கொரி. ௨. ௰௨. ௨ தீமோ. ௪. ௰௩.—9 அப். ௰. ௩௰.—10 ௨ கொரி. ௨. ௰௩.

11 பிலி. ௧. ௧.—12 லூக். ௨௪. ௪௫. 13 ௧ மோ. ௰௯. ௩: ௩௩ ௰௩. நியா ௰௯. ௨௧. லூக். ௨௪. ௨௯. எபி. ௰௩. ௨. 14 ௧ சாமு. ௨௮ ௭.—15 அப் ௰௯. ௨௪. 16 மாற் ௧. ௨௫, ௩௪.—17 மாற். ௰௬. ௰௭. 18 அப் ௰௯. ௨௫, ௨௬.—19 ௨ கொரி. ௬. ௫.—20 மத். ௰. ௰௮. 21 ௧ இரா. ௰௮. ௰௭. அப். ௰௭. ௬. 22 ௨ கொரி. ௬. ௫; ௰௧. ௨௩, ௨௫. ௧ தெச. ௨. ௨.

* அல்லது முதன்மையானதும்.—† கிரேக்கு தேவ ஆராதனைகளிலே.—‡ அல்லது குறிசொல்ல வருகிற ஆவியை.
§ அல்லது நியாயஸ்தலத்திலிருந்த

௨௪ டார்கள்.-அவன் இப்படிப்பட்ட கட்டளையைப்
பெற்றபொழுது, அவர்களை உள்ளுக்குள்ளான
காவல் அறையிலேபோட்டு, அவர்கள் கால்களை
மரத்தில் அடித்துவைத்தான்.
௨௫ அப்படியிருந்தும், பாதிஇராத்திரியிலே பவு
லும் சீலாவும் செபம்பண்ணி, பராபரனைத் துதி
த்துப் பாடினார்கள்; காவலில் வைக்கப்பட்ட
மற்றவர்கள் அதைக் கேட்டுக்கொண்டு இருந்
௨௬ தார்கள்.—சடுதியிலே சிறைச்சாலையின் அஸ்தி
பாரங்கள் அசையத்தக்கதாக [1]பூமி மிகவும் அ
திர்ந்தது; உடனே [2]கதவுகளெல்லாம் திறக்கப்
பட்டன; எல்லாரையும் கட்டியிருந்த சங்கிலி
௨௭ கள் அற்றுப்போயின. — சிறைச்சாலைக்காரன்
விழித்து, சிறைச்சாலையின் கதவுகள் திறந்திருக்
கிறதைக் கண்டு, அதில் வைக்கப்பட்டவர்கள்
ஓடிப்போனார்கள் என்று நினைத்து, கத்தியை
உருவி, தன்னைக் கொலைசெய்ய எத்தனமாயிருந்
௨௮ தான். — பவுலென்பவன், நாங்கள் எல்லாரும்
இங்கே இருக்கிறோம், ஆகையால் நீ உனக்
குக் கேடொன்றும் செய்யாதிருப்பாயாக என்று
௨௯ மிகுந்த சத்தத்தோடே கூப்பிட்டான். — அப்
பொழுது அவன் விளக்குகளை அழைப்பித்து உள்
ளே ஓடி, நடுக்கம் அடைந்தவனாய்ப் பவுலுக்கும்
௩௰ சீலாவுக்கும் முன்பாக விழுந்து,—பின்பு அவர்
களை வெளியே அழைத்துப்போய், ஆண்டவர்
களே, [3]இரட்சிக்கப்படுகிறதற்கு நான் என்ன
௩௧ செய்யவேண்டும் என்றான்.- அதற்கு அவர்கள்,
[4]கர்த்தராகிய இயேசுக்கிறிஸ்துவை விசுவாசித்
துக்கொள்வாயாக, அப்பொழுது நீயும் உன் வீட்
டாரும் இரட்சிக்கப்படுவீர்கள் என்று சொல்லி,-
௩௨ அவனுக்கும் அவனுடைய வீட்டிலிருந்த யாவ
ருக்கும் கர்த்தருடைய வசனத்தைப் போதித்தார்
௩௩ கள்.—மேலும் அவ்விராத்திரியிலே அந்நேரத்தி
லே அவன் அவர்களைச் சேர்த்துக்கொண்டு, அடி
களாலான காயங்களைக் கழுவினான்; அன்றியும்
அவனும் அவனைச் சேர்ந்த யாவரும் உடனே
௩௪ ஞானஸ்நானம் பெற்றார்கள்.—பின்பு அவன் அ
வர்களைத் தன் வீட்டிற்குள் அழைத்துப்போய்,
[5]அவர்களுக்குப் போசனம் கொடுத்து, தானும்
தன் வீட்டார் அனைவரும் பராபரனில் விசுவா
சிகளானபடியினாலே மிகவும் மகிழ்ச்சியாயிருந்
தான்.
௩௫ உதயமானபொழுது துரைகள் தலையாரிகளை
அழைத்து, அந்த மனிதரை விட்டுவிடும்படி
௩௬ சொல்லுங்கள் என்று அனுப்பினார்கள்.-சிறைச்
சாலைக்காரன் பவுலுடனே சொன்னதாவது: உங்
களை விடுதலையாக்கும்படிக்குத் துரைகள் கட்
டளை அனுப்பினார்கள். ஆகையால் நீங்கள் புறப்
பட்டுச் சமாதானத்துடனே போவீர்களாக என்
௩௭ றான்.—அதற்குப் பவுல் சொன்னது: [6]உரோம
ராகிய எங்களை அவர்கள் நியாயம்விசாரியாமல்,
வெளியரங்கமாய் அடிப்பித்து, சிறைச்சாலையி
லே போட்டு, இப்பொழுது இரகசியமாய் எங்
களை விடுதலையாக்குகிறார்களா? அப்படி அல்ல,
அவர்களே வந்து எங்களை வெளியே அழைத்து
அனுப்பிவிடக்கடவர்கள் என்றான்.—இந்த வச ௩௮
னங்களைத் தலையாரிகள் துரைகளுக்கு அறிவித்
தார்கள்; உரோமராய் இருக்கிறார்கள் என்று
அவர்கள் கேட்டபொழுது, பயமடைந்து வந்து,
அவர்களுடனே தயவாகப் பேசிக்கொண்டு,—
பின்பு அவர்களை வெளியே அழைத்துப்போய், ௩௯
[7]பட்டணத்தைவிட்டுப் போகும்படி கேட்டுக்
கொண்டார்கள்.-அந்தப்படி அவர்கள் சிறைச்சா ௪௰
லையிலிருந்து புறப்பட்டு, [8]லீதியாளிடத்திற்குப்
போய், சகோதரரைக் கண்டு, அவர்களுக்கு ஆறு
தல் சொல்லிப் புறப்பட்டுப் போனார்கள்.

## ௰௭. அதிகாரம்.

௧ பவுல் தெசலோனிக்கே பட்டணத்தில் பிரசங்கித்தது. ௪. அவ்விடத்தில் சிலர் அவனை விசுவாசித்ததும், சிலர் அவனைத் துஷணித்ததும். ௰. அவர் பெரோயா பட்டணத்துக்கு அனுப்பப்பட்டு அங்கே பிரசங்கித்தது. ௰௩. தெசலோனிக்கே பட்டணத்திலும் துன்பப்படுத்தப்பட்டு, ௰௫. பின்பு அத்தேனே பட்டணத்துக்கு வந்து அவ்வூராரோடே தர்க்கித்து, அவர்கள் அறியாத தேவனை அவர்களுக்கு அறிவித்தது. ௩௪. அதனால் அநேகர் கிறிஸ்தவர்களானது.

அவர்கள் அம்பிபோலிப் பட்டணத்தையும் ௧
அப்பொலோனிய பட்டணத்தையும் கடந்து,
தெசலோனிக்கா பட்டணத்திற்குப் போனார்
கள்; அங்கே யூதர்களுக்காக ஒரு செபஆலயம்
இருந்தது.—பவுல் தன் வழக்கத்தின்படி [9]அவர் ௨
களிடத்திற்குப் போய், மூன்று ஓய்வுநாள்களில்
வேதவாக்கியங்களின் நியாயங்களை எடுத்து,
அவர்களுடனே சம்பாஷித்துக்கொண்டுவருகை
யில், — [10]கிறிஸ்து பாடுபடவும், மரித்தோரிலி ௩
ருந்து எழுந்திருக்கவும் வேண்டுமென்று காண்
பித்து, நான் உங்களுக்கு அறிவிக்கிற இயேசு
வே கிறிஸ்து என்று * திருஷ்டாந்தப்படுத்தி
னான்.—[11]அவர்களில் சிலர் அதற்குச் சம்மதித் ௪
து, பவுலையும் [12]சீலாவையும் சேர்த்துக்கொண்
டார்கள்; தேவபத்தியுள்ள கிரேக்கரிலும் அநே
கம்பேரும், கனம்பொருந்திய ஸ்திரிகளில் மிகு
தியானபேரும் அப்படியே செய்தார்கள்.
சம்மதியாத யூதர்கள் வைராக்கியம்கொண்டு, ௫
தெருக்களிலே திரிந்து அலைகிற சில பொல்லாத
மனிதரைச் சேர்த்துக்கொண்டு கூட்டங்கூடி,
பட்டணத்தைக் கலகப்படுத்தி, [13]யாசோனு
டைய வீட்டிற்குமுன் போய் நின்று, அவர்க
ளைச் சனங்களுக்குமுன்பாகக் கொண்டுபோ
கும்படி வகை தேடினார்கள்.—அவர்களைக் கா ௬
ணாமலிருந்தபொழுது, அவர்கள் யாசோனையும்
சில சகோதரரையும் பட்டணத்துத் தலைவரிடத்
திற்கு இழுத்துக்கொண்டுபோய் [14]உலகத்தைக்
கலகப்படுத்துகிறவர்கள் இங்கேயும் வந்திருக்கி
றார்கள்.—யாசோன் இவர்களை ஏற்றுக்கொண் ௭

1 அப். ௪. ௩௧.-2 அப். ௫. ௰௯: ௰௨. ௪௭ கயோ ௫.௰.-5 லூக் ௫ ௨௯: ௭,௰.—3 லூக். ௩.௰. அப். ௨.௩௭: ௰௯. ௯.-6 அப் ௨௨.௨௫.-7 மத். ௯. ௯.—4 யோவா. ௩.௰௬.௩௬: ௯. ௮. ௩௪.—8 ௰௪. ௨௪ —9 லூக். ௪.௰௬. அப். ௯.௨௰: ௰௩ ௫,௰௪.௰௪. 11 அப். ௨௮ ௨௪ -12 அப். ௰௫ ௨௨, ௪: ௰௩.௰௪: ௰௯.௮. —10 லூக் ௨௪. ௨௭, ௩௨,௪௰.—13 உரோ ௰௬. ௨௩,௪௩ அப்.௰௮ ௨௮.௩௰.௩.௩. ௨௩.—14 அப். ௰௭. ௨௰.

* அல்லது அவன் சொன்னது: நான் உங்களுக்கு அறிவிக்கிற கிறிஸ்துவென்று.

டான். இவர்கள் எல்லாரும் [1]இயேசு என்னும்
வேறொருவனை இராசாவென்று சொல்லி, இரா
யனுடைய கட்டளைக்கு விரோதமாய்ச் செய்கி
௮ றார்கள் என்று கூப்பிட்டு,—இவைகளைக் கேட்
டுக்கொண்ட சனங்களையும், பட்டணத்துத்
௯ தலைவரையும் கலங்கப்பண்ணினார்கள். — அப்
பொழுது அவர்கள் யாசோனிடத்திலும் மற்றவர்
களிடத்திலும் கையெழுத்து வாங்கிக்கொண்டு,
அவர்களை விட்டுவிட்டார்கள்.
௰ [2]உடனே சகோதரர்கள் இராத்திரிகாலத்திலே,
பவுலையும் சீலாவையும் பெரோயா ஊருக்கு, அ
னுப்பிவிட்டார்கள்; அவர்கள் அங்கே சேர்ந்து,
யூதர்களுடைய செபஆலயத்திற்குப் போனார்
௰௧ கள்.—தெசலோனிக்கேயில் உள்ளவர்களிலும்
அவர்கள் மேன்மையுள்ளவர்களாய் மிகுந்த
மனப்பூர்வத்தோடே சுவிசேஷ வசனத்தை ஏற்
றுக்கொண்டு, [3]காரியங்கள் மெய்யாய் அப்படிப்
பட்டவைகளோ அல்லவோ என்று நாள்தோறும்
௰௨ வேதவாக்கியங்களை ஆராய்ந்தார்கள்.—ஆதலால்
அவர்களில் அநேகம்பேரும், கனம்பொருந்திய
அநேக கிரேக்க ஸ்திரிகளும், புருஷரும், விசு
௰௩ வாசிகளானார்கள்.-பெரோயா ஊரிலேயும் பரா
பரனுடைய வசனம் பவுலினால் அறிவிக்கப்படு
கின்றதென்று தெசலோனிக்கேயரான யூதர்கள்
அறிந்தபொழுது, அங்கேயும் போய், சனங்க
௰௪ ளைக் கலகப்படுத்தினார்கள்.—[4]உடனே சகோ
தரர்கள் பவுலைச் சமுத்திரத்தின் வழியாய்ப்
போக அனுப்பினார்கள்; சீலாவும் தீமோத்தேயும்
௰௫ பின்னும் அங்கே தங்கினார்கள்.—பவுலை வழிந
டத்திப் போனவர்கள் அவனை அத்தேனே பட்
டணத்திற்கு அழைத்துப்போய், [5]அங்கே சீலா
வும் தீமோத்தேயும் அதிசீக்கிரம் தன்னிடத்தில்
வரவேண்டும் என்று அவர்களுக்குச் சொல்லும்
படி கற்பனைபெற்றுப் புறப்பட்டுப் போனார்
கள்.
௰௬ அவர்கள் வரும்படிக்குப் பவுல் என்பவன்
அத்தேனே பட்டணத்தில் காத்துக்கொண்டிருக்
கையில், பட்டணம் விக்கிரகங்களால் நிறைந்தி
ருக்கிறதைப் *பார்த்து, [6]மனதில் மிகுந்த வைராக்
௰௭ கியத்தை அடைந்துகொண்டு.—பின்பு செபஆ
லயத்திலே யூதர்களோடும், மற்றத் தேவபத்தியுள்
ளபேர்களோடும், சந்தைவெளியிலே தனக்கு
எதிர்ப்பட்டவர்களோடும் நாள்தோறும் பேசிக்
௰௮ கொண்டான். — அப்பொழுது எப்பிக்கூரரும்
ஸ்தோயிக்கருமான ஞானிகளில் சிலர் அவனுட
னே வாக்குவாதம்பண்ணிக்கொண்டு வருங்கா
லத்திலே, சிலர் இந்த வாயாடி †என்ன பேசுவான்
என்றார்கள்; சிலர் அவன் இயேசுவையும் மரித்
தோரிலிருந்து எழுந்திருக்குதலையும் அவர்களுக்

குப் பிரசங்கித்தபடியினாலே, இவன் அந்நியதே
வர்களை அறிவிக்கிறவன் என்று தோன்றுகின்றது
என்றார்கள்.—அப்பொழுது அத்தேனே பட்ட ௰௯
ணத்தார் எல்லாரும், அங்கே தங்கும்படி வருகிற
அந்நியரும் புதியவைகளைக் கேட்கிறதினாலும்
பேசுகிறதினாலுமே அன்றி, மற்றொரு விதமாய்த்
தங்கள் காலத்தைப் போக்க விரும்பாதவர்களா
னபடியால்,—அவர்கள் அவனை மாருஸ் தேவனு ௨௰
டைய மேடையிலுள்ள ‡நியாயஸ்தலத்திற்கு அ
ழைத்துப்போய், நீ சொல்லுகிற புதிய உபதே
சத்தை நாங்கள் அறியலாமா?—நவமான காரியங் ௨௧
களையே எங்கள் காது கேட்கப்பண்ணுகிறாய்.
ஆகையால் நாங்கள் அவைகளை அறியவேண்டும்
என்று இருக்கிறோம் என்றார்கள்.
அப்பொழுது பவுல் மாருஸ் மேடையின் நடு ௨௨
விலே § நின்று சொன்னதாவது: அத்தேனரே,
எல்லாவற்றிலும் தேவபத்தியே உங்களுக்கு மிக
வும் உண்டாயிருக்கிறதென்று எனக்குத் தோன்
றுகிறது; எப்படியென்றால் நான் திரிந்து உங்கள்
தேவ ஆராதனைக்கு ஏற்றவைகளை ‖நோக்கிப்பார்
த்தபொழுது, அறியப்படாத தேவனுக்கு என்று
எழுதியிருக்கிற ஒரு பீடத்தையும் கண்டேன்.—
நீங்கள் அறியாமல் பணிவுசெய்கிறவரையே ௨௩
நான் உங்களுக்கு அறிவிக்கிறேன்.—[7]உலகத் ௨௪
தையும் அதிலுள்ள யாவையும் உண்டாக்கின
தேவனானவர், [8]வானத்திற்கும் பூமிக்கும் ஆண்
டவரானதால், [9]கைகளால் செய்யப்பட்ட கோ
வில்களில் வாசம்பண்ணுகிறதும் இல்லை.—[10]யா ௨௫
தொன்று தமக்கு வேண்டுவதாக மனிதர் கைக
ளால் பணிவிடைகொள்ளுகிறதும் இல்லை; [11]எல்
லாருக்கும் சீவனையும், சுவாசத்தையும், மற்ற
யாவையும் அவர் கொடுத்திருக்கிறாரே.—அல்லா ௨௬
மலும் அவரே ஒரே இரத்தத்திலிருந்து மனிதர்
எல்லாரும் தோன்றப்பண்ணி, [12]நம்மில் ஒருவ
ருக்கும் தூரமல்லாத பராபரனாகிய தம்மை அ
வர்கள் தடவி அடைந்துகொள்ளத்தக்கதாக, —
[13]தம்மைத் தேடும்படிக்கு, அவர்களுக்காக முன் ௨௭
திட்டமாக்கப்பட்ட காலங்களையும் [14]குடியி
ருப்பு எல்லைகளையுங்குறித்து அவர்கள் பூமியில்
எங்கும் குடியிருக்கும்படி செய்தார். — [15]அவ ௨௮
ரால் நாம் பிழைக்கிறோம், அசைகிறோம், இருக்
கிறோம்; அதுபோல [16]உங்களில் சில புலவர்க
ளும், அவருடைய வம்சத்தாராய் இருக்கிறோம்
என்று சொன்னார்கள்.—ஆதலால் நாம் பராபரனு ௨௯
டைய வம்சத்தாராயிருக்க, [17]தெய்வம் மனிதரு
டைய சித்திரவேலையினாலும் தோற்றுதலினாலும்
பொன், வெள்ளி, கல் இவைகளால் செய்யப்பட்
டதற்கு ஒப்பாய் இருக்கின்றதென்று நாம் நினைக்
கலாகாது. — [18]அறியாமையுள்ள காலங்களைப் ௩௰

1 லூக். ௨௩. ௨. யோவா. ௰௯. ௰௨. ௰, ௨௧.—5 அப். ௰௮. ௫. ௧ பே. ௨. ௰௩.—2 அப். ௯. ௨௫. 6 ௨ பே. ௨. ௮.—7 அப் ௰௪ ௰௫. ௰௭. ௨௪.—3 ஏசா ௩௪. ௰௬. லூக். 8 மத். ௰௧. ௨௫.—9 அப். ௭. ௪௮. ௰௬. ௨௯. யோவா. ௫. ௩௯.—4 மத். 10 சங். ௫௰. ௮.—11 ௧ மோ. ௨. ௭. ௪ மோ. ௰௬. ௨௨. யோபு. ௰௨ ௰: 14 ௫ மோ. ௩௨. ௮.—15 கொலோ. ௧. ௰௭. எபி ௧. ௩.—16 தீத். ௧. ௰௨. ௨௭. ௨ :௩௩ ௪. ஏசா. ௪௨. ௫: ௫௭. ௰௬. ௪௧. ௰௨. ௧—12 அப். ௰௪. 17 ஏசா ௪௰. ௰௮.—18 அப். ௰௪. ௰௬. ௰௭.—13 ௨ ரோ. ௧. ௨௰. ௨ ரோ. ௩. ௨௫.

* அல்லது விக்கிரக ஆராதனைக்குட்பட்டிருக்கிறதை.—† அல்லது நீசன்.—‡ அல்லது அறியோபெக்காஸ். அத்தேனே பட்டணத்தில் இரு பிரதான நியாயஸ்தலம்.—§ அல்லது அறியோபெக்கருடைய நியாயஸ்தலத்தில்.—‖ அல்லது நீங்கள் பணிகிற தேவர்களை, ௨ தெச. ௨. ௪.

பராபரன் காணுதவர்போலஇருந்தார்;[1]இப்பொ
ழுது மனந்திரும்பவேண்டும் என்று எவ்விடத்
திலுமுள்ள மனிதர் யாவருக்கும் கட்டளையிடு
௩௧ கிருர்.—மேலும் [2]ஒரு நாளைக்குறித்தார்; அதிலே
அவர் தாம் நியமித்த ஒருவரைக்கொண்டு பூச்
சக்கரத்திலுள்ள யாவருக்கும் நியாயத்தீர்ப்புக்
கொடுப்பார்; [3]அவரை மரித்தோரிலிருந்து எழுப்
பினதினுலே, அவர் அதின் நிச்சயத்தை * எல்
லாருக்கும் விளங்கப்பண்ணிஞர் என்றுன்.
௩௨ மரித்தோர் உயிரோடெழுந்திருக்குதலைக்கு
றித்து அவர்கள் கேட்டபொழுது சிலர் இகழ்ந்
தார்கள், சிலர் பின்னொருவேளை இதைக்குறித்து
௩௩ உன்னிடத்தில் கேட்போம் என்றுர்கள்.—அப்
பொழுது பவுல் அவர்களிலிருந்து புறப்பட்டுப்
௩௪ போனுன். — சிலர் அவனைப் பற்றிக்கொண்டு,
பின்புவிசுவாசிகளானுர்கள்; அவர்களில் தியொ
னீசியென்னும் நியாயாதிபதியும். தாமரியென்று
பேருள்ள ஒரு ஸ்திரியும் இவர்களுடனேகூட
வேறு சிலரும் இருந்தார்கள்.

## ௰௮. அதிகாரம்.

௧. பவுல் தன் கைகளால் வேலைசெய்து கொரிந்து பட்டணத்திலே அஞ்ஞானிகளுக்குப் பிரசங்கித்தது. ௯. கர்த்தர் ஒரு தரிசனையில் அவனுக்குத் தயிரியம்சொன்னது. ௰௨. அவன் பிரதிதுரையாகிய கல்லியோனுக்கு முன்பாகக் குற்றம்சாற்றப்பட்டும் விடுதலையானது. ௰௮. பின்பு பட்டணங்கள்தோறும் போய்ச் சீஷர்களைத் திடப்படுத்தினது. ௨௪. அப்பொல்லோ ஆக்கிலாவாலும் பிரிஸ்கில்லாளாலும் போதிக்கப்பட்டு, ௨௮. பிரயோசனம் உண்டாக்க கிறிஸ்துவைக்குறித்துப் பிரசங்கித்தது.

௧ அதன்பின்பு பவுல் அத்தேனே பட்டணத்தை
விட்டுக் கொரிந்து பட்டணத்திற்குப் போய்,—
௨ இராயனுகிய கிலவுதி, யூதர் எல்லாரையும் உரோ
மை நகரியைவிட்டுப் போகும்படி கட்டளை
யிட்டபடியினுலே, இத்தாலி நாட்டில் நின்று
நவமாய் வந்திருந்த [4]ஆக்கில்லா என்று நாம
முள்ள பொந்து தேசத்தானுகிய ஒரு யூதனையும்,
அவனுடைய மனைவியாகிய பிரிஸ்கில்லாளை
௩ யும் அங்கே கண்டு,—அவர்களிடத்தில் போய்,
தானும் அவர்களும் ஒரேதொழில் செய்தவர்க
ளானபடியினுலே, [5]அவர்களிடத்திலே தங்கித்
தொழில்செய்தான்; அவர்களுடைய தொழில்
௪ கூடாரம்பண்ணுதல்.—அன்றியும் அவன் [6]ஓய்வு
நாள்தோறும் செபஆலயத்திலே சம்பாஷணை
பண்ணி, யூதருக்கும் கிரேக்கருக்கும் புத்தி
௫ சொன்னுன்.—[7]மக்கேதோனியாநாட்டிலிருந்து
சீலாவும் தீமோத்தேயும் வந்தபொழுது, [8]பவுல்
தன் ஆவியிலே அதிக வைராக்கியங்கொண்டு,
இயேசுவானவரே கிறிஸ்து † என்று யூதருக்குக்
காண்பித்தான்.
௬ அவர்களே [9]எதிர்பேசித் தூஷணித்தபொ
ழுது, [10]அவன் தன் வஸ்திரங்களை உதறி, [11]உங்
களுக்குக் கேடு வரும்படிக்கு நீங்களே ஏதுவா
யிருக்கிறீர்கள்.—[12]நான் சுத்தமாய் இருக்கிறேன், ௭
[13]இதுமுதல் நான் புறத்தேசத்தார்களிடத்தில்
போகிறேன் என்று அவர்களுடனே சொல்லி,
அவ்விடத்தைவிட்டுத் தேவபத்தியுள்ள யூஸ்து
என்பவனுடைய வீட்டிலே போனுன்; அந்த
வீடு செபஆலயத்திற்கு அடுத்ததாயிருந்தது.—
மேலும் செப[14]ஆலயத்தலைவனுகிய கிறிஸ்பு தன் ௮
வீட்டார் அனைவரோடுங்கூடக் கர்த்தரை விசு
வாசித்தான்; கொரிந்தியரில் அநேகரும் சுவிசே
ஷத்தைக் கேட்டு விசுவாசித்து ஞானஸ்நானம்
பெற்றுர்கள்.—[15]பின்பு இராத்திரியிலே கர்த்தர் ௯
ஒரு தரிசனத்திலே பவுலுடனே சொன்னதா
வது: இந்தப் பட்டணத்திலே அநேகம்பேர் என்
னுடைய சனங்களாய் இருக்கிறுர்கள்; [16]ஆகை
யால் நான் உன் பங்கில் இருப்பேன்;ஒருவனும்
உனக்குத் தீமைசெய்யும்படிக்கு உன்மேல்
கைபோடுவதில்லை.-ஆனபடியினுலே நீ பயப்ப ௰
டாமல் பேசுவாயாக; மவுனமாய் இராதிருப்பா
யாக என்றுர்.—அந்தப்படி அவன் ஒரு வருஷ ௰௧
மும் ஆறுமாதமும் அங்கே தங்கி, ‡ பராபரனு
டைய வசனத்தை அவர்களுக்குள்ளே உபதே
சம் பண்ணிக்கொண்டுவந்தான்.
பின்பு கல்லியோன் என்பவன் அகாயா நாட் ௰௨
டிலே பிரதிதுரையானபொழுது, யூதர்கள் ஒரு
மனப்பட்டுப் பவுலுக்கு விரோதமாய் எழும்பி,
அவனை நியாயாசனத்திற்குமுன்பாகக் கொண்டு
போய், — இவன் வேதநூலுக்கு விரோதமான ௰௩
விதமாய்ப் பராபரனைச் சேவிக்கும்படி, மனித
ருக்குப் போதிக்கிறுன் என்றுர்கள்.—அதற்குப் ௰௪
பவுல் தன் வாயைத் திறக்கையில், கல்லியோன்
யூதருடனே சொன்னதாவது: யூதரே, [17]இது அ
நீதி, அல்லது மிகவும் பொல்லாங்கான காரிய
மானுல் நான் உங்களுக்குப் பொறுமையாய்ச்
செவிகொடுக்க நியாயம் உண்டாயிருக்கும்.—
இது உபதேசத்திற்கும்,நாமங்களுக்கும், உங்கள் ௰௫
வேதநூலுக்கும் ஏற்ற தருக்கமானபடியினுலே,
இப்படிப்பட்டவைகளைக்குறித்து நான் நியாயா
திபதியாயிருக்க விரும்புகிறதில்லை; ஆகையால்
நீங்களே பார்ப்பீர்களாக என்று சொல்லி,—அ ௰௬
வர்களை நியாயாசனத்தைவிட்டுப் போகப்பண்
ணிஞன்.—அப்பொழுது கிரேக்கர் எல்லாரும் ௰௭
செபஆலயத்தலைவனுகிய [18]சொஸ்தெனேயைப்
பிடித்து, நியாயாசனத்திற்குமுன்பாகத்தானே
அடித்தார்கள்; அதைக்குறித்துக் கல்லியோன்
விசாரணைபண்ணுமல் இருந்தான்.
பின்னும் பவுல் அநேகநாள் அங்கே தரித்திருந் ௰௮
தபின்பு, அவன் சகோதரருடைய உத்தரவு வாங்
கிக்கொண்டு தனக்கு ஒரு பிரார்த்தனை உண்
டாயிருந்தபடியால், [19]கெங்கிரேயா பட்டணத்

1 லூக். ௨௪.௪௭. தீத். ௨. ௰௧, ௰௨. ௧ பேது. ௧. ௰௪: ௪. ௩.
2 அப். ௰.௪௨. ௨ரோ. ௨.௰௬:௰௪.௰.
3 அப். ௨. ௨௪.
4 ௨ரோ. ௰௬.௩. ௧ கொரி. ௰௬. ௰௯. ௨ தீமோ. ௪. ௰௯.—5 அப். ௨௰. ௩௪. ௧ கொரி. ௪.௰௨. ௧ தெச. ௨. ௯. ௨ தெச. ௩. ௮.—6 அப். ௰௭. ௨.—7 அப். ௰௭. ௰௪, ௰௫.
8 யோபு. ௩௨.௰௮. அப். ௰௭. ௩: ௨௮. ௨௩.—9 அப். ௰௩. ௪௫. ௧ பேது. ௪. ௪.—10 நெகே. ௫. ௰௩. மத். ௰.௰௪. அப். ௰௩. ௫௧.—11 ௩ லே. ௨௰. ௯, 16 எசே. ௩. ௰௮. ௰௯. ௰௩. மத். ௨௭. ௨௫. ௰௯,௰௨. ௨ சாமு. ௧. ௰௬. எசே. 17 அப். ௨௧. ௨௯: ௨௬. ௬,௰௯. ௰௮. ௰௮: ௩௩. ௪.—12 எசே. ௩. ௰௮. 18 ௧ கொரி. ௧. ௨.—19 ௪ லே. ௬. ௰௯: ௩௩. ௯. அப். ௨௰. ௨௧. ௰௮. அப். ௨௧. ௨௪.
13 அப். ௰௩. ௪௬: ௨௮. ௨௮.
14 ௧ கொரி. ௧. ௰௪.—15 அப். ௨௩. ௰௧.

* அல்லது அதை நம்பும்படி இடத்தை.—† அல்லது கிறிஸ்துதான்.—‡ அல்லது இருந்து.

திலே [1]சிரச்சவரம்பண்ணி, சீரியாதேசத்திற்குப்
போகும்படி கப்பலேறிப் போனான்; பிரிஸ்கில்
லாளும் ஆக்கில்லாவும் அவனுடனே கூடப்
௰௯ போனார்கள் —அவன் எபேசு பட்டணத்திற்குச்
சேர்ந்தபொழுது, அவர்களை அங்கே விட்டுச்
செபஆலயத்திற்குள் பிரவேசித்து, யூதருடனே
௨௰ சம்பாஷணைபண்ணினான்.—அவர்கள் அவனைச்
சிலகாலம் தங்களுடனே இருக்கவேண்டும் என்
று கேட்டுக்கொண்டபொழுது, அவன் சம்மதி
௨௧ யாமல்,—[2]வருகிற பண்டிகையிலே நான் எப்
படியும் எருசலேமில் இருக்கவேண்டும்; [3]பரா
பரனுக்குச் சித்தமானால் திரும்பி உங்களிடத்
தில் வருவேன் என்றுசொல்லி, அவர்களு
டைய உத்தரவு வாங்கிக்கொண்டு, கப்பலேறி,
௨௨ எபேசுபட்டணத்தைவிட்டு,— சேசாரியாபட்
டணத்திற்குப் போய், பின்பு (எருசலேமுக்
குப்) போய், சபையாரின் சுகத்தை விசாரித்
துக்கொண்டு, பின்பு அந்தியோகியா ஊருக்குச்
௨௩ சென்று,— அங்கே சிலகாலம் சஞ்சரித்துப்
பின்பு புறப்பட்டு, [4]கலாத்தியா நாட்டிலேயும்
பிரிகியா நாட்டிலேயும் ஊர்கள்தோறும் திரிந்து,
[5]சீஷர் எல்லாரையும் ஸ்திரப்படுத்திக்கொண்டு
வந்தான்.

௨௪ அக்காலத்திலே [6]அலேக்குசந்திரி பட்டணத்
தில் பிறந்தவனுமாய், சாதுரியவானுமாய், வேத
எழுத்துக்களில் வல்லவனுமாய் இருக்கிற அப்
பொல்லோஸ் என்று பேர்கொண்ட ஒரு யூதன்
௨௫ எபேசு பட்டணத்திற்குப் போனான்.—அவன்
கர்த்தருடைய மார்க்கத்தைக்குறித்து உபதேசம்
கேட்டு, [7]யோவான் கொடுத்த ஸ்நானத்தைமாத்
திரம் அறிந்தவனாயிருந்தும், கர்த்தாவுக்கு உரிய
வைகளை மிகுந்த [8]சாக்கிரதையுள்ள மனதோடே
பேசி, திட்டமாய்ப் போதகம்பண்ணிக்கொண்டு
௨௬ வந்தான். — செபஆலயத்திலே தயிரியமாய்ப்
பேசினான்; ஆக்கில்லாவும் பிரிஸ்கில்லாளும் அ
வன் பேசுகிறதைக் கேட்டபொழுது, அவனைச்
சேர்த்துக்கொண்டு பராபரனுடைய மார்க்கத்தை
அவனுக்கு அதிக திட்டமாய்க் காண்பித்தார்
௨௭ கள்.—பின்பு அவன் அகாயா நாட்டிலே போ
கவேண்டும் என்று இருக்கையில், சீஷர்கள்
அவனை உபசாரம் செய்யும்படிக்கு, சகோதரர்
௨௮ அவர்களுக்கு எழுதினார்கள்.—அவன் அங்கே
சேர்ந்தபின்பு, அவன் வெளியரங்கமாய் யூதர்க
ளுடனே பலமாய்த் தருக்கம்பண்ணிக்கொண்டு
[9]இயேசுவே கிறிஸ்து * என்று வேதவாக்கியங்க
ளாலே தெளிவாய்க் காண்பித்தபடியால், கிரு
பையினாலே விசுவாசிகளாய் இருந்தவர்களுக்கு
[10]மிகுந்த உதவியாய் இருந்தான்.

## ௰௯. அதிகாரம்.

௧. பவுல் கைகளை வைத்ததால் பரிசுத்தஆவி அளிக்கப்பட்டது. ௮. அவனுடைய உபதேசங்களை யூதர்கள் தூஷணித்தும் அவைகள் அற்புதங்களால் மெய்ப்பிக்கப்பட்டன. ௰௩. யூதர்களுக்குள் இருந்த மந்திரவாதிகள், ௰௫. பசாசினால் அடிக்கப்பட்டது. ௰௯. மந்திர தந்திர புஸ்தகங்கள் சுட்டெரிக்கப்பட்டது. ௨௪. தெமேத்திரியு ஆதாயத்தின் நிமித்தம் பவுலுக்கு விரோதமாய்ப் பண்ணின கலகத்தை, ௩௫. சம்பிரதி அமர்த்தினது.

[11]அப்பொல்லோஸ் என்பவன் கொரிந்து பட் ௧
டணத்தில் இருக்கையில், பவுல் மேலான தே
சங்களில் திரிந்துகொண்டு எபேசு பட்டணத்
திற்குப் போனபொழுது,—சில சீஷரைக் கண்டு, ௨
நீங்கள் விசுவாசிகளானபொழுது பரிசுத்த
ஆவியைப் பெற்றுக்கொண்டீர்களா என்றான்;
[12]அதற்கு அவர்கள், பரிசுத்தஆவி உண்டென்று
நாங்கள் கேள்விப்படவும் இல்லை என்றார்கள்.—
அப்பொழுது அவன் சொன்னது: அப்படியா ௩
னால் எப்படிப்பட்ட ஞானஸ்நானம்பெற்றீர்கள்
என்றான்; [13]அவர்கள், யோவான் கொடுத்த ஸ்நா
னத்தைப் பெற்றோம் என்றார்கள்.-அப்பொழுது ௪
பவுல் சொன்னது: [14]யோவான் தனக்குப் பின்
வருகிறவராகிய கிறிஸ்து இயேசுவை விசுவாசிக்
கவேண்டும் என்று சனங்களுக்குச் சொல்லி,
மனந்திரும்புதற்கு ஏற்ற ஞானஸ்நானத்தைக்
கொடுத்தானே என்றான். — அதை அவர்கள் ௫
கேட்டபொழுது, அவர்கள் [15]கர்த்தராகிய இயே
சுவினுடைய நாமத்தினாலே ஞானஸ்நானம்
பெற்றார்கள்.—அல்லாமலும், [16]பவுல் அவர்கள் ௬
மேலே கைகளை வைத்தபொழுது, பரிசுத்தஆவி
யானவர் அவர்களிடத்தில் வந்தார்; [17]அவர்கள்
அந்நியபாஷைகளைப் பேசி, தீர்க்கதரிசனஞ்
சொன்னார்கள்.—அந்த மனிதர் எல்லாரும் ஏறக் ௭
குறையப் பன்னிரண்டுபேராம்.

பின்பு (பவுல்) [18]செபஆலயத்திற்குப் போய், ௮
தயிரியமாய்ப் பிரசங்கம்பண்ணி, மூன்றுமாதம
ளவும் [19]பராபரனுடைய இராச்சியத்திற்கு உரி
யவைகளைப் பேசி, தெளிவாய்க் காண்பித்துக்
கொண்டுவந்தான். — [20]சிலர் கடினமான மன ௯
துள்ளவர்களுமாய் அவிசுவாசிகளுமாயிருந்து,
[21]கூட்டத்திற்குமுன்பாக இந்த மார்க்கத்தை நிந்
தித்தபொழுது, அவன் அவர்களைவிட்டு விலகி,
சீஷரை அவர்களிலிருந்து பிரித்துக்கொண்டு,
திறன்னு என்பவனுடைய பள்ளிக்கூடத்திலே
நாள்தோறும் சம்பாஷித்துக்கொண்டுவந்தான்.—
[22]இப்படி இரண்டுவருஷம் நடந்தது; அதினாலே ௰
ஆசியாவிலே குடியிருந்த யூதர்கள் கிரேக்கர் இ
வர்கள் எல்லாரும் கர்த்தராகிய இயேசுவைக்குறி
த்து வசனத்தைக் கேள்விப்பட்டார்கள்.—அன் ௰௧
றியும் [23]அதிசயமான அற்புதங்களைப் பராபரன்
பவுலின் கைகளினாலே செய்துவருகையில்,—

1 உரோ.௰௬.௧.—2 அப். ௨௰. ௨௧: ௨௰. ௰௬.—3 ௧ கொரி. ௪. ௰௯. எபி. ௬. ௩. யாக். ௪. ௰௫. 4 கலா. ௧. ௨: ௪. ௰௪. 5 அப். ௰௪. ௨௨: ௰௫. ௩௨, ௪௧. 6 ௧ கொரி. ௧. ௰௨: ௩. ௫, ௬: ௪. ௬. தீத். ௩. ௰௩.—7 அப் ௰௯. ௩. 8 உரோ.௰௨.௰௧.—9 அப்.௯. ௨௨: ௰௭. ௩. ௫. வ௪.—10 ௧ கொரி. ௩. ௬.—11 ௧ கொரி. ௧. ௰௨: ௩. ௫. ௬.—12 அப்.அ.௰௬. ௧ சாமு.௩.௭. 13 அப் ௰௮. ௨௫.

14 மத்.௩.௰௧. யோவா. ௧. ௰௫, ௨௭. ௧௰. அப். ௧. ௫: ௰௧ ௰௬: ௰௩. ௨௪, ௨௫.—15 அப்.அ.௰௭ —16 அப். ௬. ௬:அ.௰௭.—17 அப்.௨ ௪:௰. 18 அப் ௰௭. ௨: ௰௮. ௪. 19 அப். ௧. ௩: ௨௮. ௨௩. 20 ௨ தீமோ. ௧. ௰௫. ௨ பே. ௨. ௨. யூதா.௰.—21 அப். ௯. ௨: ௨௨. ௪: ௨௪.௰௪. ௨௨. வ௪. 22 அப்.௨௰.௩௧ — 23 மாற் ௰௬. ௨௰. அப். ௰௪. ௩.

* அல்லது கிறிஸ்துதான்.

௰௨ [1]அவனுடைய சரீரத்தில் இருந்த வேர்வைச்சே
லைகளையும் கசசைகளையும் வியாதியுள்ளவர்கள்
மேல் வைத்தவுடனே வியாதிகள் அவர்களை
விட்டு நீங்கிப்போயின; பொல்லாத ஆவிகளும்
அவர்களிலிருந்து புறப்பட்டன.
௰௩ [2]அப்பொழுது தேசாந்தரிகளாய்த் திரிகிற
மந்திரவாதிகளாகிய யூதரில் சிலர் பொல்லாத
ஆவிகள் பிடித்திருந்தவர்கள்மேல் [3]கர்த்தராகிய
இயேசுவின் நாமத்தைச் சொல்லத் துணிந்து,
பவுல் பிரசங்கிக்கிற இயேசுவின்பேரிலே உங்க
௰௪ ளுக்கு ஆணையிடுகிறோம் என்றார்கள்.–பிரதான
ஆசாரியனாகிய இஸ்கேவா என்னும் யூதனு
டைய குமாரர் ஏழுபேர்களே அப்படிச் செய்
௰௫ தார்கள். — அவர்களுக்கு உத்தரவாகப் பொல்
லாத ஆவி சொன்னதாவது: இயேசுவை அறிந்தி
ருக்கிறேன், பவுலையும் அறிவேன், நீங்கள் யார்
௰௬ என்று சொன்னவுடனே,–பொல்லாத ஆவியை
யுடைய மனிதன் அவர்கள்மேல் பாய்ந்து, அ
வர்களைத் தனக்குட்படுத்திச் செயிக்க, அவர்
கள் நிருவாணிகளாயும் காயம்பட்டவர்களாயும்
௰௭ அந்த வீட்டை விட்டு ஓடிப்போனார்கள்.–அது
எபேசிலே குடியிருக்கிற யூதர் கிரேக்கர் அனை
வருக்கும் தெரியவந்தபொழுது, [4]அவர்கள் எல்
லாரும் பயமடைந்தார்கள்; அல்லாமலும் கர்த்த
ராகிய இயேசுவின் நாமம் அவர்களுக்குள்ளே
௰௮ மேன்மைப்பட்டது. — அன்றியும், விசுவாசிக
ளானவர்களில் அநேகர் சேர்ந்து, [5]தங்கள் செய்
கைகளை வெளிப்படுத்தி அறிக்கையிட்டார்
௰௯ கள்.—அன்றியும், வீண்வித்தைக்காரராய் இருந்
தவர்களில் அநேகர் தங்கள் புத்தகங்களைக் கொ
ண்டுவந்து,எல்லார்முன்பாகவும் சுட்டெரித்தார்
௨௰ கள். — அவைகளின் கிரயம் ஐம்பதினாயிரம்
வெள்ளிக்காசு என்று மதிக்கப்பட்டது; [6]இவ்வ
ளவு பலமாய்க் கர்த்தருடைய வசனம் வளர்ந்து
வல்லமையைக் காண்பித்தது.
௨௧ [7]இவை நிறைவேறின பின்பு, [8]பவுல் மக்கே
தோனியா அகாயா என்னும் தேசங்களின் வழி
யாய் எருசலேமுக்குப் போகும்படி மனதிலே
யோசனைகொண்டு, நான் அங்கேயிருந்து, பின்பு
[9]உரோமைநகரியையும் பார்க்கவேண்டும் என்று
௨௨ சொல்லிக்கொண்டு, — [10]தனக்கு உதவிசெய்த
வர்களில் இரண்டுபேராகிய தீமோத்தேயுவை
யும், [11]எரஸ்துவையும் மக்கேதோனியா நாட்
டிற்கு அனுப்பி, தான் பின்னும் சிலகாலம்
ஆசியா நாட்டிலே இருந்தான்.
௨௩ [12]அக்காலத்திற்குள்ளே, [13]இந்த மார்க்கத்தைக்
௨௪ குறித்து மிகுந்த கலகம் உண்டாயிற்று.—எப்ப
டியென்றால், தேமேத்திரி என்று நாமமுள்ள ஒரு
தட்டான் தியானாள் தேவிக்காக வெள்ளியினால்
சிறு கோவில்களைச் செய்துகொண்டு, [14]தொழி
லாளிகளுக்கு மிகுந்த ஆதாயம் வருவித்து வந்
தான்.—அவர்களையும், அப்படிப்பட்ட தொழி ௨௫
லைச் செய்கிற மற்றவர்களையும் அவன் கூடிவரச்
செய்து சொன்னதாவது: மனிதர்களே, உங்க
ளுக்குத் தெரிந்திருக்கிறபடி, பிழைப்பு இந்தத்
தொழிலினாலே நமக்கு வருகின்றது.—மேலும் ௨௬
நீங்கள் கண்டும் கேட்டுமிருக்கிறபடி, [15]அந்தப்
பவுலென்பவன் கைகளால் செய்யப்பட்டவை
கள் தேவர்களல்ல என்று சொல்லி, எபேசிலே
மாத்திரம் அல்ல, கொஞ்சங்குறைய ஆசியா நாட்
டில் எங்கும் அநேக சனங்களுக்குப் போதித்து,
அவர்களை மாறுபாடாக்குகிறான். — அதனாலே ௨௭
நம்முடைய அலுவல் கனஈனமடைவதற்கு ஏது
வாயிருக்கிறதும் அல்லாமல், மகா தேவியாகிய
தியானாளுடைய கோவில் எண்ணமற்றுப்போ
கிறதற்கும் ஆசியாதேசத்தார் எல்லாராலும் பூச்
சக்கரத்திலுள்ள யாவராலும் சேவிக்கப்படுகிற
அவளுடைய மகிமை அழிந்துபோகிறதற்கும்
ஏது உண்டாயிருக்கின்றது என்றான்.
அதை அவர்கள் கேட்டு, மிகுந்த கோபம ௨௮
டைந்து, எபேசியருடைய தியானாளே பெரி
யவள் என்று கூப்பிட்டுக்கொண்டார்கள். —
பட்டணம் முழுவதும் கலகத்தினாலே நிரப்பப் ௨௯
பட்டது, மேலும் அவர்கள் பவுலுடனேகூடப்
பிரயாணமாய் வந்த மக்கேதோனியராகிய [16]கா
யுவையும் [17]அரிஸ்தருகுவையும் இழுத்துக்கொ
ண்டு, ஒருமனப்பட்டு, வேடிக்கை ஸ்தலத்திற்
குப் பாய்ந்து ஓடினார்கள்.—அப்பொழுது பவுல் ௩௰
கூட்டத்தில்போக மனதாயிருந்தான்; சீஷர் அவ
னைப் போகவிடவில்லை.—மேலும் வேடிக்கை ௩௧
ஸ்தலத்திற்கு அவன் போகாமலிருப்பதற்கு வே
ண்டிக்கொள்ளும்படிக்கு அவனுடைய சிநே
கிதராகிய ஆசியாதேசத்தலைவரில் சிலர் அவனி
டத்திற்கு ஆளனுப்பினார்கள்.—அன்றியும் கூட் ௩௨
டம் கலக்கமுள்ளதாயிருக்க, அநேகர் தாங்கள்
கூடிவந்த காரணத்தை அறியாதவர்களானபடி
யினாலே, சனங்கள் பலவிதமாய்க் கூக்குரலிட்
டார்கள்.–அப்பொழுது யூதர்கள் அலேக்குசந்தர் ௩௩
என்பவனை முன்னிற்கத் தள்ளுகையில், கூட்
டத்தில் சிலர் அவனை முன்னே இழுத்தார்கள்;
[18]அலேக்குசந்தர் கையினால் [19]சமிக்கைகாட்டி,
சனங்களுக்கு உத்தரவுசொல்ல விரும்பினான்.–
அவனே யூதனென்று அவர்கள் அறிந்தபொ ௩௪
ழுது, எல்லாரும் எபேசியருடைய தியானாளே
பெரியவள் என்று இரண்டுமணி நேரமளவும்
ஏகமாய்க் கூப்பிட்டுக்கொண்டார்கள்.
பின்பு மணியக்காரனானவன் சனங்கள் பேசா ௩௫
மலிருக்கும்படி செய்து சொன்னதாவது: எபே
சியரே, எபேசி பட்டணம் மகா தேவியாகிய
தியானாளுக்கும், வானத்திலிருந்து விழுந்த சொ

1 அப். ௫.௰௫ ௨ இரா. ௪. ௨௧. ௩.௭: ௰௨. ௨௪.—7 உரோ. ௰௫.
2 மத். ௰௨. ௨௭.—3 மாற். ௯.௩௮. லூக். ௯. ௪௯. ௨௯. கலா. ௨. ௧—8 அப். ௨௰. ௨௨.—9 அப். ௰௮.௨௧: ௨௩.௰௧.
4 லூக் ௧.௬௫: ௭.௰௬. அப்.௨.௪௩: ௫.௩,௰௧.—5 மத். ௩ ௬.-6 அப். உரோ.௰௫.௨௪: ௨௮.-10 அப் ௰௩. ௫.-11 உரோ.௰௬.௨௩. ௨ தீமோ.
௪.௨௰.—12 ௨ கொரி. ௧. ௮. ௨௭.௨. கொலோ.௪.௰. பிலே.
13 அப் ௯.௨.-14 அப். ௰௬. ௰௬,௰௯. ௨௪.——18 ௧ தீமோ. ௧ ௨௰
15 சங். ௱௧௫. ௪. ஏசா. ௪௪. ௰-௨௰. ௨ தீமோ. ௪. ௰௪.—19 அப்.
எரே.௰.௩.—16 உரோ. ௰௬ ௨௩ ௰௨ ௰௭.
௧ கொரி.௧.௰௪.—17 அப்.௨௰.௪:

ரூபத்திற்கும், கோவில் * பரிசாரகியாய் இருக்
௩௬ கிறதை அறியாதவன் உண்டா?—அது எதிர்ப்
பேசப்படாத காரியமானபடியினாலே, நீங்கள்
ஒன்றும் பதறிச்செய்யாமல் அமைந்திருக்க
௩௭ வேண்டும்.—இந்த மனிதர் கோவில் கொள்ளைக்
காரர் அல்ல, உங்கள் தேவியைத் தூஷணித்தவர்
களும் அல்ல, இப்படியிருந்தும் இவர்களை இங்
௩௮ கே கொண்டுவந்தீர்கள். — தேமேத்திரியுக்கும்,
அவனைச் சேர்ந்திருக்கிற தொழிற்காரனுக்கும்,
ஒருவன்மேல் ஒரு காரியம் உண்டாயிருந்தால்,
நியாயம் விசாரிக்கும் நாள்களும் † துரைக
ளும் இருக்கிறபடியினாலே, ஒருவருக்கொருவர்
விரோதமான பிராது அங்கே பண்ணக்கடவர்
௩௯ கள்.—நீங்கள் வேறொரு காரியத்தை விசாரித்
தால், அது நியாயசங்கத்திலே ‡ தீர்க்கப்படுமே.-
௪௰ இன்றைக்கு உண்டான கலகத்திற்காக நாம் உத்
தரவு சொல்ல அழைக்கப்படுவதற்கு ஏது உண்
டாயிருக்கின்றது; இந்தக் கலகம்பண்ணுவதற்கு
நிமித்தமில்லாதபடியால், நாம் அதைக்குறித்து
உத்தரவு சொல்லத் திராணியில்லாதிருப்போமே
௪௧ என்று சொல்லி,—பின்பு கூட்டத்தை அனுப்பி
விட்டான்.

## ௨௰. அதிகாரம்.

௧ பவுல் மக்கெதோனியாவுக்குப் போனது. ௭. அவன் கர்த்தருடைய இராப்போசனத்தைப் பகிர்ந்து பிரசங்கித்தது. ௯. ஐத்திகு விழுந்து செத்தபின்பு, ௰. உயிரோடெழுப்பப்பட்டது. ௰௭. மிலேத்துவிலிருந்த மூப்பர்களை அழைப்பித்து, அவர்களுக்குத் தனக்குச் சம்பவிக்கப்போகிறதைச் சொல்லி, ௨௮. பராபரனுடைய சபையை அவர்களுக்கு ஒப்புவித்தது. ௨௯. கள்ளப்போதகர்களுக்கு எச்சரிக்கையாயிருக்கச் சொல்லி, ௩௨. அவர்களைப் பராபரனுடைய கிருபைக்கு ஒப்புவித்து, ௩௬. அவர்களோடே ஜெபம்பண்ணிப் பயணப்பட்டது.

௧ கலகம் அமைந்தபின்பு, பவுல் சீஷரைத் தன்னி
டத்தில் அழைத்து உத்தரவு வாங்கிக்கொண்டு,
[1] மக்கெதோனியாவுக்குப் போகப் புறப்பட்டுப்
போய், அந்தப்புறங்களில் திரிந்துகொண்டு,—
௨ சீஷர்களுக்கு அநேக வார்த்தைகளினால் புத்தி
சொல்லிக்கொண்டு, கிரேக்கை தேசத்திலே சேர்
௩ ந்தான்.—அங்கே மூன்றுமாதம் சஞ்சரித்த பின்பு,
அவன் கப்பலேறிச் சீரியா நாட்டிற்குப் போக
மனதாயிருந்தபொழுது, [2] யூதர்கள் அவனுக்குத்
தீமைசெய்ய இரகசியமாய் யோசனைகொண்டி
ருந்தபடியால் மக்கெதோனியா நாட்டின் வழி
யாய்த் திரும்பிப்போகத் தீர்மானம்பண்ணி
௪ னான்.—அப்பொழுது ஆசியாதேசம்வரைக்கும்
அவனோடுகூடப் போனவர்கள் பேரோசியா
ஊரானாகிய சொப்பத்தர், தெசலோனிக்கேயரில்
[3] அரிஸ்தருக்கு, செக்குந்து, [4] தெருபேயனாகிய
காயு, [5] தீமோத்தேயு, [6] ஆசியாதேசத்தாராகிய
௫ திகிக்கு, [7] திரோப்பிமு இவர்களே.—அவர்கள்
முன்னாகப் போய், துரோவாபட்டணத்திலே
நாங்கள் வரும்படி காத்திருந்தார்கள்.—நாங்கள் ௬
[8] புளியாத அப்பப்பண்டிகை நாள்களுக்குப்
பின்பு கப்பலேறி, பிலிப்பு பட்டணத்தை
விட்டு ஐந்து நாளைக்குள்ளே [9] துரோவா பட்ட
ணத்திலே அவர்களிடத்தில் சேர்ந்து, அங்கே
ஏழுநாள் சஞ்சரித்தோம்.

[10] அப்பொழுது வாரத்து முதல் நாளிலே [11] சீ ௭
ஷர் அப்பம்பிட்கும்படிக்குக் கூடிவந்திருக்கை
யில், பவுல் மறுநாளிலே புறப்படவேண்டு
மென்றிருந்து, அவர்களுடனே பேசிக்கொண்டு
பாதிஇராத்திரி அளவும் பிரசங்கத்தை நீடித்துப்
பேசினான். — [12] நாங்கள் கூடியிருந்த மெத்தை ௮
வீட்டிலே அநேக விளக்குகள் வைக்கப்பட்டி
ருந்தன. — அப்பொழுது ஐத்திகு என்று பேர் ௯
கொண்ட ஒரு வாலிபன் சாளரவாசலில் உளுக்
காந்திருந்து, பவுல் மிகுந்தகாலம் பேசிக்கொண்
டுவருகையில், கனதூக்கம் அடைந்து நித்திரை
யினால் செயிக்கப்பட்டுச் சாய்ந்து, மூன்றாம்
மெத்தையிலிருந்து தாழவிழுந்து மரித்தவனாய்
எடுக்கப்பட்டான்.—உடனே பவுல் இறங்கிப் ௰
போய், [13] அவன்மேலே விழுந்து அணைத்துக்
கொண்டு, பின்பு [14] உயிர் இவனுக்குள் இருக்
கின்றதாகையால் கலக்கப்படாதிருங்கள் என்று
சொல்லி,—பின்பு ஏறிப்போய் அப்பம்பிட்டுப் ௰௧
புசித்து, மிகுந்தநேரம் விடியற்காலம் அளவும்
பேசிக்கொண்டு பின்பு புறப்பட்டான்.—அந்த ௰௨
வாலிபனை அவர்கள் உயிருள்ளவனாக அழைத்து
வந்து, மிகவும் ஆறுதலடைந்தார்கள்.

பவுல் (அசுபட்டணம்வரைக்கும்) தான் கா ௰௩
லால் நடக்க விரும்பி, நாங்கள் முன்னாலே கப்
பலேறி அவ்விடத்திற்குப் போய், அங்கே தன்
னை ஏற்றிக்கொள்ளும்படி எங்களுக்கு உத்தரவு
கொடுத்தபடியினாலே, நாங்கள் அசுபட்டணத்
திற்குப் போயிருந்தோம்.—பின்பு அவன் அவ் ௰௪
விடத்திலே எங்களோடே சேர்ந்தபொழுது,
நாங்கள் அவனை ஏற்றிக்கொண்டு, மித்திலேனு
பட்டணத்திற்குப் போய்,—பின்பு அவ்விடத் ௰௫
தைவிட்டு, மறுநாளிலே கீயுதீவுக்கு எதிராகச்
சென்று,—பவுல் எப்படியும் [15] பெந்தேகோஸ் ௰௬
துப் பண்டிகை நாளிலே [16] எருசலேம் நகரத்தில்
சேரவேண்டும் என்று [17] தீவிரப்பட்டபடியினா
லே, அவன் ஆசியா நாட்டிலே காலம்போக்கா
தபடிக்கு, எபேசு பட்டணத்தைக் கடந்துபோ
கவேண்டும் என்று தீர்மானம்பண்ணினதால்,
மறுநாளிலே சாமுதீவை அடைந்து, துரோகில்
லியோன் ஊர்த்துறையிலே தங்கி, மறுநாளிலே
மிலேத்து பட்டணத்திற்குப் போனோம்.

மிலேத்துவிலிருந்து அவன் எபேசுவிலுள்ள ௰௭

1 ௧ கொரி. ௰௬. ௫ ௧ தீமோ. ௧. ௩. 6 எபே. ௬. ௨௧. கொலோ. ௪. ௭.
2 அப். ௯. ௨௩: ௨௩. ௰௨: ௨௫ ௩. ௨ தீமோ. ௪. ௰௨. தீத். ௩. ௰௨.
௨ கொரி. ௰௧. ௨௬.—3 அப். ௰௯. 7 அப். ௨௧. ௨௯. ௨ தீமோ. ௪. ௨௰.
௨௯: ௨௭. ௨. கொலோ. ௪. ௰. 8 ௨ மோ. ௰௨. ௰௪. ௰௫: ௨௩. ௰௫.
4 அப். ௰௬. ௨௬.—5 அப். ௰௬. ௧. 9 அப். ௰௬ அ. ௨ கொரி. ௨. ௰௨.

௨ தீமோ. ௪. ௰௩.—10 ௧ கொரி. ௰௬. ௨. வெளி. ௧. ௰.—11 அப். ௨. ௪௨, ௪௬. ௧ கொரி. ௰. ௰௬: ௰௧. ௨௰. ௨௰.—12 அப். ௧. ௰௩.
13 ௧ இரா. ௰௭. ௨௧. ௨ இரா. ௪. ௩௪.
14 மத். ௯. ௨௪.—15 அப். ௨. ௧. ௧ கொரி. ௰௬. ௮.—16 அப். ௨௪. ௰௭.—17 அப். ௰௮. ௨௧: ௰௯. ௨௧: ௨௧. ௪, ௰௨.

* அல்லது தொண்டனும்.—† அல்லது நியாயப்பிரமாணமும்.—‡ அல்லது முறைமைச்சங்கத்திலே.

சபையின் மூப்பரை அழைத்துவரும்படிக்கு ஆ
ளனுப்பினான்; அவர்கள் தன்னிடத்தில் சேர்ந்த
௰௮ பொழுது,—அவன் அவர்களுடனே சொன்ன
தாவது: [1]நான் ஆசியா நாட்டில் வந்த முதலாம்
நாள்தொடங்கி எல்லாக் காலங்களிலும் நான்
உங்களுடனேகூட இருந்த வகையை அறிந்தி
௰௯ ருக்கிறீர்கள். — எல்லாவிதமான மனத்தாழ்மை
யோடும், மிகுந்த கண்ணீரோடும், [2]யூதருடைய
தீமையான யோசனைகளால் எனக்கு நேரிட்ட
சோதனைகளோடும், நான் கர்த்தருக்கு ஊழியம்
௨௰ செய்துகொண்டு வந்தேன்.—[3]பிரயோசனமான
வைகளில் ஒன்றையும் நான் மறைத்துவைக்க
வில்லை, வெளியரங்கமாயும் வீடுகள்தோறும் உங்
களுக்கு அறிவித்து, உங்களுக்கு உபதேசம்
௨௧ பண்ணிக்கொண்டு வந்தேன்.—[4]பராபரனிடத்
திற்கு மனந்திரும்புதலையும், நம்முடைய கர்த்
தராயிருக்கிற இயேசுக்கிறிஸ்துவை விசுவாசித்
துக்கொள்ளுதலையுங்குறித்து, [5]நான் யூதருக்
கும் கிரேக்கருக்கும் சாட்சிகொடுத்தேன்.—
௨௨ இப்பொழுது நான் [6]ஆவியிலே கட்டுண்டு எரு
சலேமுக்குப் போகிறேன்; அங்கே எனக்கு
எதிர்ப்படும் காரியங்களை நான் அறியேன்.—
௨௩ கயிறுகளும் உபத்திரவங்களும் எனக்காக வைத்
திருக்கின்றன * என்று [7]பரிசுத்தஆவியானவர்
பட்டணந்தோறும் (எனக்கு) அறிவிக்கிறதை
௨௪ மாத்திரம் அறிந்திருக்கிறேன். — அப்படியிருந்
தும் [8]அவைகளில் ஒன்றையுங்குறித்துக் கவலைப்
படேன்; என் பிராணனையும் நான் அருமை
யென்று எண்ணேன்; [9]என் ஓட்டத்தைச் சந்
தோஷத்தோடே முடிக்கவும், பராபரனுடைய
கிருபையை அறிவிக்கிற சுவிசேஷத்தைப் பிர
சங்கம்பண்ணும்படிக்கு [10]நான் கர்த்தராகிய இ
யேசுவினிடத்தில் பெற்ற [11]ஊழியத்தை முடிக்
௨௫ கவுமே விரும்புகிறேன்.—அன்றியும் [12]நான் உங்
களுக்குள்ளே திரிந்து, பராபரனுடைய இராச்சி
யத்தைக்குறித்துப் பிரசங்கம்பண்ணிக்கொண்டு
வந்தேனே; அதைக் கேட்டவர்களாகிய நீங்கள்
எல்லாரும் இனி என் முகத்தைப் பார்க்கமாட்
௨௬ டீர்கள் என்று அறிந்திருக்கிறேன்.—அப்படியி
ருக்க, [13]பராபரனுடைய ஆலோசனையில் ஒன்
றையும் [14]நான் மறைத்துவையாமல், யாவையும்
௨௭ உங்களுக்கு அறிவித்தபடியினாலே,—உங்களில்
ஒருவன் கெட்டுப்போனால், [15]அதினாலே எனக்
குக் குற்றம் வருவதில்லை என்று இன்றைக்கே
உங்களுக்குச் சாட்சியாகச் சொல்லுகிறேன்.—
௨௮ ஆகையால் நீங்கள் உங்களைக்குறித்தும், பரா
பரன் தமது [16]சுய இரத்தத்தினாலே [17]சம்பாதித்துக்
கொண்ட தமது சபையாகிய ஆட்டுக்கூட்டம்
முழுவதையும் மேய்ப்பதற்கு [18]பரிசுத்தஆவி உங்
களைக் கண்காணிகளாக வைத்தபடியால், அதை
க்குறித்தும் [19]எச்சரிக்கையாய் இருப்பீர்களாக.—
மேலும் நான் போனபின்பு, ஆட்டுக்கூட்டத் ௨௯
தைத் தயையோடே நடப்பியாமல், [20]கொடிதா
யிருக்கிற கோனாய்கள் உங்களுக்குள்ளே பிரவே
சிக்கும்.—அதுவுமல்லாமல் [21]உங்களிலும் சிலர் ௩௰
எழும்பி, சீஷர்களைத் தங்களிடத்தில் இழுத்துக்
கொள்ளும்படிக்கு, மாறுபாடானவைகளைப்
போதிப்பார்கள் என்று அறிந்திருக்கிறேன். —
ஆனபடியினாலே நீங்கள் விழித்துக்கொண்டு, ௩௧
[22]நான் மூன்றுவருஷமாய் இரவும் பகலும் அவ
னவனுக்குக் கண்ணீரோடே புத்திசொல்லிக்
கொண்டு வந்ததை நினைத்துக்கொள்வீர்களாக.—
இப்பொழுது சகோதரரே, பராபரனுக்கும் [23]அ ௩௨
வருடைய கிருபையை அறிவிக்கிற வார்த்தைக்
கும் உங்களை ஒப்புக்கொடுக்கிறேன்; [24]அவரே
உங்களை எறக்கட்டவும், [25]பரிசுத்தமாக்கப்பட்ட
எல்லாரும் இருக்கிற இடத்திலே சுதந்தரத்தை
உங்களுக்குக் கொடுக்கவும் வல்லமையுள்ளவ
ராய் இருக்கிறார்.—[26]ஒருவனுடைய வெள்ளியை ௩௩
யாகிலும், பொன்னையாகிலும், உடுப்பையாகி
லும் நான் இச்சிக்கவில்லை.—நீங்கள் அறிந்திருக் ௩௪
கிறபடி நானும் என்னுடனேகூட இருந்தவர்க
ளும் வேண்டிய பதார்த்தங்களை அடையும்ப
டிக்கு, [27]இந்தக் கைகளே வேலைசெய்தன. —
[28]அப்படியே வேலைசெய்து பலவீனரைத் தாங் ௩௫
கவும், வாங்குகிறதிலும் கொடுக்கிறதேபாக்கியம்
என்று கர்த்தராகிய இயேசுசொன்னவசனங்களை
நினைக்கவும் வேண்டும் என்று எல்லாவிதத்தாலும்
உங்களுக்குக் காண்பித்தேன் என்று சொல்லி,
பின்பு [29]முழங்காற்படியிட்டு, அவர்கள் ௩௬
எல்லாரோடுங்கூடச் செபம்பண்ணினான். —
இனிமேல் நீங்கள் என்னுடைய முகத்தைப் ௩௭
பார்க்கமாட்டீர்கள் என்று [30]அவன் சொன்ன
வசனத்திற்காக, அவர்கள் எல்லாரும் அதிகமா
ய்த் துக்கப்பட்டு, — மிகவும் அழுதுகொண்டு, ௩௮
[31]பவுலின் கழுத்தைக் கட்டிக்கொண்டு, அவனை
முத்தம்செய்து, பின்பு கப்பல்வரைக்கும் அவனு
டனேகூடப்போய் அனுப்பிவிட்டார்கள்.

## ௨௧. அதிகாரம்.

௧. பவுல் எருசலேமுக்குப் பயணமானது. ௯ பிலிப்பின் குமாரத்திகள் தீர்க்கதரிசனம் சொல்லுகிறவர்களாயிருந்தது. ௰௭ பவுல் எருசலேமுக்கு வந்து, ௨௭. யூதர்களால் பிடிக்கப்பட்டபோது, ௩௧ பிரதான சேர்வைக்காரனால் விடுதலையாகிச் சனங்களிடத்தில் பேசும்படி உத்தரவுபெற்றது.

1 அப். ௰௮. ௰௯: ௰௯. ௧, ௰.
2 ௩. வச.—3 ௨௭. வச.
4 மாற் ௧. ௰௫. லூக். ௨௪. ௪௭. அப். ௨. ௩௮.—5 அப். ௰௮. ௬.—6 அப். ௰௯. ௨௧.—7 அப். ௨௧. ௪, ௰௧. ௧ தெச. ௩. ௩.—8 அப். ௨௧. ௰௩. ௨ ரோ. ௮. ௩௫. ௨ கொரி. ௪ ௰௬.
9 ௨ தீமோ. ௪. ௭.—10 கலா ௧. ௧. தீத். ௧. ௩.
11 அப். ௧. ௰௭. ௨ கொரி. ௪. ௧.
12 ௨௫. வச. ௨ ரோ. ௰௫. ௨௩.
13 லூக். ௭. ௩௰. யோவா. ௰௫. ௰௫. எபே. ௧. ௰௧.—14 ௨௰. வச.
15 அப். ௰௮. ௬. ௨ கொரி. ௭. ௨.
16 எபி. ௯. ௰௪.—17 எபே. ௧. ௭, ௰௪. கொலோ. ௧. ௰௪. எபி. ௯. ௰௨. ௧ பே. ௧. ௰௯. வெளி. ௫. ௯.
18 ௧ கொரி. ௰௨. ௨௮.
19 ௧ தீமோ ௪. ௰௬. ௧ பே. ௫. ௨.
20 மத். ௭. ௰௫. ௨ பே. ௨. ௧.
21 ௧ தீமோ. ௧. ௨௰. ௧ யோ. ௨. ௰௯.
22 அப். ௰௯. ௰.—23 எபி. ௰௩. ௯.
24 அப். ௯. ௩௧.—25 அப். ௨௬. ௰௮. எபே. ௧. ௰௮. கொலோ. ௧ ௰௨: ௩. ௨௪. எபி. ௯. ௰௫. ௧ பே. ௧. ௪.—26 ௧ சாமு. ௰௨. ௩. ௧ கொரி. ௯. ௰௨. ௨ கொரி. ௭. ௨: ௰௧. ௯: ௰௨. ௰௭.—27 அப். ௰௮. ௩. ௧ கொரி. ௪. ௰௨. ௧ தெச. ௨. ௯. ௨ தெச. ௩. ௮.—28 ரோ. ௰௫. ௧. ௧ கொரி. ௯. ௰௨. ௨ கொரி. ௰௧. ௯: ௰௨. ௰௩. எபே. ௪. ௨௮. ௧ தெச. ௪. ௰௨: ௫. ௰௪. ௨ தெச. ௩. ௮.
29 அப். ௭. ௬௰: ௨௧. ௫.—30 ௨௫. வச.
31 ௧ மோ. ௪௫. ௰௪: ௪௬. ௨௯.

* அல்லது சேரிடுகின்றன.

௧ நாங்கள் அவர்களைவிட்டுப் பிரிந்து துறைபேர்
ந்தபின்பு, நேராய்ப் போய்க் கோஸ்தீவில் சென்
று, மறுநாளிலே உரோதுதீவில் சென்று, அதில்
௨ நின்று பத்தராபட்டணத்திற்குப் போய்,-அங்கே
பேனீக்கே தேசத்திற்குப் போக எத்தனமாயி
ருந்த கப்பலைக்கண்டு அதில் ஏறிப்போய், சீப்
௩ புருதீவைக் கண்டு,—அதை இடதுபுறமாக விட்
டுச் சீரியா நாட்டிற்கு ஓடி, தீருபட்டணத்திலே
அவர்கள் கப்பலின் சரக்குகளை இறக்கவேண்
௪ டியபடியால் அவ்விடத்திலே சேர்ந்து,—பின்பு
சீஷனைக் கண்டு ஏழுநாள் அங்கே தங்கினோம்;
அவர்கள் பவுலைநோக்கி, நீர் [1]எருசலேமுக்குப்
போகக்கூடாதென்று ஆவியினாலே சொன்னார்
௫ கள்.—நாங்கள் அந்நாள்களை முடித்தபின்பு புறப்
பட்டுப் போனபொழுது, அவர்கள் எல்லாரும்
மனைவிகளோடும்பிள்ளைகளோடுங்கூடப்பட்ட
ணத்திற்குப் புறம்பே (சற்றுத்தூரம்) வரைக்கும்
எங்களை வழிநடத்தினார்கள்; கடற்கரையிலே
நாங்கள் [2]முழங்காற்படியிட்டுச் செபம்பண்
௬ ணி,—ஒருவரிடத்திலே ஒருவர் உத்தரவுவாங்கிக்
கொண்டபின்பு, நாங்கள் கப்பலேறினோம்;
[3]அவர்கள் தங்கள் வீடுகளுக்குத் திரும்பினார்கள்.
௭ நாங்கள் தீருபட்டணத்தைவிட்டுப் பித்தோ
லேமாயா பட்டணத்திற்குப் போய், கப்பல்
யாத்திரையை முடித்துச் சகோதரரை வாழ்த்தி,
௮ ஒருநாள் அவர்களிடத்தில் தங்கினோம்.—மறுநா
ளிலே பவுலைச் சேர்ந்த நாங்கள் புறப்பட்டுச்
செசாரியாபட்டணத்திற்குப் போய், [4]ஏழுபே
ரில் ஒருவனாகிய பிலிப்பென்னும் [5]சுவிசேஷ
னுடைய வீட்டிற்குச் சென்று அவனிடத்திலே
௯ தங்கினோம்.—அவனுக்கு உண்டான குமாரத்தி
களாகிய நான்கு கன்னிகைகளும் [6]தீர்க்கதரிச
னம் சொல்லுகிறவர்களாய் இருந்தார்கள்.—
௰ மேலும் நாங்கள் அநேகநாள் அங்கே தங்கியி
ருக்கையில், [7]ஆகாபு என்று பேர்கொண்ட ஒரு
தீர்க்கதரிசி யூதேயாவிலிருந்து வந்திருந்தான்.—
௰௧ அவன் எங்களிடத்தில் வந்து, பவுலினுடைய
கச்சையை எடுத்து, தன் கைகளையும் கால்களை
யும் கட்டிக்கொண்டு, [8]இந்தக் கச்சையை உடை
யவனை எருசலேமிலுள்ள யூதர்கள் இப்படிக்
கட்டி, புறத்தேசத்தார்களுடைய கைகளில் ஒப்
புக்கொடுப்பார்கள் என்று பரிசுத்தஆவி சொல்
௰௨ லுகிறார் என்றான். — அதை நாங்கள் கேட்ட
பொழுது, அவன் எருசலேமுக்குப் போகாதப
டிக்கு நாங்களும் அத்தலத்தாரும் வேண்டிக்
௰௩ கொண்டோம்.—பவுல் மாறுத்தரவாகச் சொன்
னதாவது: [9]நீங்கள் அழுதுகொண்டு என் இருத
யம் உடைந்துபோகப்பண்ணுகிறதென்ன? எரு
சலேமிலே நான் கர்த்தராகிய இயேசுவின் நாமத்
திற்காகக் கட்டப்படுவதற்குமாத்திரம் அல்ல,
மரிப்பதற்கும் எத்தனமாய் இருக்கிறேன் என்
றான்.—இப்படி அவன் சம்மதியாதபடியினாலே, ௰௪
[10]நாங்கள் கர்த்தருடைய சித்தம் ஆகக்கடவதெ
ன்று அமைந்திருந்தோம்.
அந்நாள்களுக்குப் பின்பு, நாங்கள் பிரயா ௰௫
ணச் சாமான்களைச் சேர்த்துக்கொண்டு எருச
லேமுக்குப் போனோம்.—செசாரியா பட்டணத் ௰௬
திலுள்ள சீஷரில் சிலரும் எங்களுடனேகூட
வந்து, சீப்புருதீவானுமாய், மிகுந்தகாலம் சீஷ
னுமாய் இருந்த மினாசோனிடத்திலே தங்கும்
படிக்கு எங்களை அவனிடத்தில் அழைத்தார்கள்.
[11]நாங்கள் எருசலேமில் சேர்ந்தபொழுது, ௰௭
சகோதரர் எங்களைச் சந்தோஷத்தோடே ஏற்றுக்
கொண்டார்கள்.—மறுநாளிலே பவுலும் நாங்க ௰௮
ளும் [12]யாக்கோபினிடத்திற்குப் போனோம்;
எல்லா மூப்பர்களும் அங்கே கூடிவந்தார்கள்.—
அவர்களுக்கு அவன் வாழ்த்துதல் செய்து, ௰௯
[13]பின்பு தன் ஊழியத்தினாலே பராபரன் [14]புறத்
தேசத்தாருக்குள்ளே செய்தவைகளை ஒவ்வொன்
றாய் விவரித்துச் சொன்னான்.—(அதை)அவர்கள் ௨௰
கேட்டு, கர்த்தரைத் தோத்திரம்பண்ணி, பின்பு
அவனுடனே சொன்னதாவது: சகோதரனே,
யூதர்களில் அநேகம் ஆயிரம்பேர் விசுவாசிகளா
னதைப் பார்த்திருக்கிறாய்; அவர்கள் எல்லாரும்
[15]நியாயப்பிரமாணத்துக்காக வைராக்கியமுள்ள
வர்களாய் இருக்கிறார்கள்.—நீ புறத்தேசத்தாருக் ௨௧
குள்ளே இருக்கிற யூதரெல்லாரும் (தங்கள்)
பிள்ளைகளை விருத்தசேதனம்பண்ணவும், மற்ற
முறைமைகளின்படியே நடக்கவும் வேண்டுவ
தில்லையென்று சொல்லி இவ்விதமாய் அவர்கள்
மோசேயைவிட்டு விலகும்படி உபதேசிக்கிறா
யென்று அவர்கள் கேள்விப்பட்டிருக்கிறார்கள்.-
இப்பொழுது என்ன செய்யலாம்? நீ வந்ததை ௨௨
அவர்கள் கேள்விப்பட்டு மெய்யாய்க் கூட்டங்
கூடுவார்கள். — ஆகையால் நாங்கள் உனக்குச் ௨௩
சொல்லுகிறபடி நீ செய்யவேண்டும்; என்ன
வென்றால், நான்குபேர் பிரார்த்தனைபண்ணிக்
கொண்டு எங்களிடத்தில் இருக்கிறார்கள்.—அவர் ௨௪
களை நீ சேர்த்து அவர்களுடனேகூடச் சுத்திபண்
ணிக்கொண்டு, [16]அவர்கள் சிரச்சவரம்பண்ணு
வதற்கு வேண்டிய செலவுபண்ணுவாயாக; அப்
படிச்செய்தால் எல்லாரும் தங்களுக்கு உன்னைக்
குறித்து அறிவிக்கப்பட்டது ஒன்றுமில்லை என்
றும், நீதானே நியாயப்பிரமாணத்தைக் கைக்
கொண்டு நடக்கிறவன் என்றும் அறிவார்கள்.—
விசுவாசிகளான புறத்தேசத்தார் இப்படிப்பட்ட ௨௫
வைகளைக் கைக்கொள்ளாமல் விக்கிரகங்களுக்
குப் படைத்ததற்கும், இரத்தத்திற்கும், நெருக்
குண்டு செத்ததற்கும், வேசித்தனத்திற்குமாத்
திரம் விலகியிருக்கவேண்டும் என்று நாங்கள்
தீர்மானம்பண்ணி, [17]அவர்களுக்கு எழுதியனுப்
பினோமே என்றார்கள்.

1 ௰௨. வச. அப். ௨௰. ௨௩.—2 அப். ௨௰. ௩௬.—3 யோவா. ௧. ௰௧.
4 அப். ௬: ௫. ௮. ௨௬, ௪௰.—5 எபே. ௪. ௰௧. ௨ தீமோ. ௪. ௫.
6 யோவே. ௨. ௨௮. அப். ௨. ௰௭.
7 அப். ௰௧. ௨௮.—8 ௩௩. வச. அப். ௨௰. ௨௩.—9 அப். ௨௰. ௨௪.
10 மத். ௬. ௰: ௨௬. ௪௨. லூக். ௰௧. ௨: ௨௨. ௪௨.—11 அப். ௰௫. ௪.
12 அப். ௰௫. ௰௩. கலா. ௧. ௰௯: ௨. ௯.
13 அப். ௧. ௰௭: ௨௰. ௨௪.—14 அப். ௰௫. ௪, ௰௨. உரோ. ௰௫. ௰௮, ௰௯.
15 அப். ௨௨. ௩. உரோ. ௰. ௨. கலா. ௧. ௰௪.—16 ௪மோ. ௬. ௨. ௰௩. ௰௮. அப். ௰௮. ௰௮.—17 அப். ௰௫. ௨௰, ௨௯.

௨௬ அப்பொழுது பவுல் அந்த மனிதரைச் சேர்த்
துக்கொண்டு மறுநாளிலே அவர்களுடனேகூ
டச் சுத்தம்பண்ணி, பின்பு [1]தேவாலயத்தில் பிர
வேசித்து, அவர்களில் ஒவ்வொருவனுக்காக
வேண்டிய பலி கொடுக்கப்படுமளவும், [2]சுத்த
மாகுதற்கேற்ற நாள்களை நிறைவேற்றுவேன்
என்று அறிவித்தான்.
௨௭ அதற்கு ஏற்ற ஏழுநாளும் நிறைவேறிவரு
கையில், [3]ஆசியாதேசத்திலிருந்து வந்த யூதர்கள்
தேவாலயத்திலே அவனைக்கண்டு, கூட்டமெல்
௨௮ லாம் கூடிவர அழைத்து,—[4]அவன்மேல் கைக
ளைப் போட்டு, ஓய் இஸ்ரவேலரே, உதவிசெய்
யுங்கள்; [5]இவனே நம்முடைய சனத்திற்கும்
வேதப்பிரமாணத்திற்கும் இந்த ஸ்தலத்திற்கும்
விரோதமாக எங்கும் எல்லாருக்கும் போதித்து
வருகிறான்; அதுவுமல்லாமல், இந்தத் தேவால
யத்திலே கிரேக்கரையும் அழைத்து வந்து, இந்
தப் பரிசுத்த ஸ்தலத்தை அசுசிப்படுத்தினான்
௨௯ என்று கூப்பிட்டார்கள்.—முன்பு எபேசியனா
கிய [6]திரோப்பிமு என்பவனைப் பட்டணத்திலே
அவனுடனேகூட இருக்கக் கண்டிருந்து, பின்பு
பவுல் அவனைத் தேவாலயத்திலே அழைத்து வந்
தான் என்று நினைத்தபடியினாலே அப்படிச்
௩௰ சொன்னார்கள்.—அப்பொழுது [7]நகரம் முழுவ
தும் கலக்கப்பட்டது; மேலும் சனங்கள் கூட்ட
மாய் ஓடிவந்து, பவுலைப் பிடித்து. அவனைத் தே
வாலயத்திற்குப் புறம்பே இழுத்தார்கள்; உட
னே வாசல்கள் பூட்டப்பட்டன.
௩௧ மேலும் அவர்கள் அவனைக் கொலைசெய்ய வ
கைதேடுகையில், எருசலேம் முழுவதும் கலக்கம்
அடைந்திருக்கிறதென்று போர்ச்சேவகரின் சே
௩௨ னாதிபதி கேள்விப்பட்டு,—[8]உடனே போர்ச்சே
வகரையும் அவர்களுடைய தலைவரையும் சேர்த்
துக்கொண்டு அவர்களிடத்திற்கு ஓடினான்; சே
னாதிபதியையும் போர்ச்சேவகரையும் அவர்கள்
கண்டபொழுது, பவுலை அடிப்பதை விட்டார்
௩௩ கள்.—அப்பொழுது சேனாதிபதி சேர்ந்து அவ
னைப் பிடித்து, [9]இரண்டு சங்கிலிகளினாலே கட்
டும்படி சொல்லி, இவன் யாவனென்றும் என்ன
௩௪ செய்தானென்றும் விசாரித்தான். — அதற்குச்
சனங்கள் பலவிதமாய்க் கூப்பிட்டார்கள்; அப்
பொழுது கலக்கத்தினாலே அவன் நிச்சயத்தை
அறியக்கூடாதிருந்தபடியால், அவனைக் கோட்
டைக்குக் கொண்டுபோகச் சொன்னான். —
௩௫ அவன் படிகள்மேல் ஏறினபொழுது, கூட்டம்
பின்சென்று [10]அவனைக் கொலைசெய்யுமென்று
௩௬ கூப்பிட்டுக்கொண்டு,—உக்கிரமாய் இருந்தபடி
யினாலே, சேவகர் அவனைத் தூக்கி எடுத்துக்கொ
ண்டுபோனார்கள்.
௩௭ அவர்கள் பவுலைக் கோட்டைக்குள்ளே கொ
ண்டுபோக எத்தனமாயிருக்கையில், அவன் சே
னாதிபதியை நோக்கி, நான் உம்முடனே ஒரு
வார்த்தை பேசலாமா என்றான்; அதற்கு அவன்
சொன்னது: கிரேக்கபாஷை உனக்குத் தெரி
யுமா?—இந்தக் காலத்திற்கு முன்னே கலகம் உண் ௩௮
டாக்கி, நாலாயிரம் கொலைபாதகரை வனாந்த
ரத்திலே கொண்டுபோன [11]எகிப்தான் நீ அல்ல
வா என்றான். — பவுல் சொன்னது: [12]நான் ௩௯
கிலிக்கியா நாட்டிலுள்ள கீர்த்தி அடைந்திருக்
கிற தருசு பட்டணத்தானாகிய யூதன், நான்
சனங்களுடனே பேசும்படி எனக்கு உத்தரவு
கொடுக்கவேண்டும் என்று உம்மை வேண்டிக்
கொள்ளுகிறேன் என்றான்.—அவனுக்கு உத்த ௪௰
ரவு கொடுத்த பின்பு, பவுல் படிகளின்மேலே
நின்று, [13]கையினாலே சனங்களுக்குச் சமிக்கை
காட்டினான்; மிகுந்த அமைதல் உண்டானபொ
ழுது, அவன் எபிரேய பாஷையிலே சத்தமிட்
டுச் சொன்னதாவது:

## ௨௨. அதிகாரம்.

௧. பவுல் தான் குணப்பட்டு விசுவாசியான விதத்தையும், ௰௭. அப்போஸ்தலப்பட்டத்துக்கு அழைக்கப்பட்ட விதத்தையும், வெளியரங்கமாய் அறிவித்தது. ௨௨. தான் அஞ்ஞானிகளுக்கு அனுப்பப்பட்ட அப்போஸ்தலனென்று சொன்னபோது யூதர்கள் கலகம்பண்ணினது. ௨௪. அவர்கள் அவனைச் சவுக்கால் அடிக்க நினைத்தபோது, ௨௫. தன்னை உரோமை நாட்டானென்று தப்பித்துக்கொண்டது.

[14]சகோதரர்களே, பிதாக்களே, உங்களுக்கு ௧
நான் இப்பொழுது சொல்லும் உத்தரவுக்குச்
செவிகொடுப்பீர்களாக என்று சொன்னபொ
ழுது, — எபிரேய பாஷையிலே தங்களுடனே ௨
பேசுகிறதை அவர்கள் கேட்டு, அதிக அமைத
லாயிருந்தார்கள்; அவன் பின்னும் சொன்னதா
வது:—நான் யூதன், [15]கிலிக்கியா நாட்டிலுள்ள ௩
தருசு பட்டணத்திலே நான் பிறந்து, பின்பு
இந்த நகரத்திலே [16]கமாலியேலின் [17]பாதத்தினி
டத்தில் வளர்ந்து, [18]முன்னோர்களுடைய வே
தப்பிரமாணத்தின்படியே கெட்டியாய்ப் போ
திக்கப்பட்டு, [19]இன்றைத்தினம் நீங்கள் எல்லா
ரும் இருக்கிறதுபோல, [20]பராபரனைக்குறித்து
வைராக்கியனாயிருந்து,—[21]இந்த மார்க்கத்தாரை ௪
மரணபரியந்தம் துன்பப்படுத்தி, புருஷரையும்
ஸ்திரிகளையும் கட்டி, சிறைச்சாலைகளுக்கு ஒப்
புக்கொடுத்து வந்தேன்.—அதற்குப் பிரதான ஆசா ௫
ரியரும் [22]மூப்பர்கள் யாவரும் சாட்சிகொடுப்
பார்கள்; [23]அவர்கள் கையிலே நான் சகோதர
ருக்கு நிருபங்களை வாங்கிக்கொண்டு, தமஸ்கு
ஊரில் இருக்கிறவர்களும் ஆக்கினைக்குள்ளாக்
கப்படுவதற்கு அவர்களைக் கட்டி எருசலேமுக்
குக் கொண்டுவரும்படி அவ்விடத்திற்குப் போ
னேன். — அப்படி நான் [24]பிரயாணப்பட்டுத் ௬
தமஸ்கு ஊருக்குச் சமீபமானபொழுது, மத்தி
யான வேளையிலே சடுதியாய் வானத்திலிருந்து
மிகுந்த ஒளி உண்டாகி, என்னைச் சுற்றிப் பிரகா

1 அப். ௨௪. ௰௮. — 2 ௪ மோ. ௬. ௰௩. 10 லூக். ௨௩. ௰௮. யோவா. ௰௯. ௰௫. 3 அப். ௨௪. ௰௮. — 4 அப். ௨௬. ௨௧. அப். ௨௨. ௨௨. — 11 அப். ௫. ௩௬. 5 அப். ௨௪. ௫, ௬. — 6 அப். ௨௰. ௪. 12 அப். ௯. ௰௧: ௨௨. ௩. — 13 அப். ௰௨. ௰௭. 7 அப். ௨௬. ௨௧. — 8 அப். ௨௩. ௨௭: 14 அப். ௭. ௨. — 15 அப். ௨௧. ௩௯. ௨௪. ௭. — 9 வச. ௰௧. அப். ௨௰. ௨௩. ௨ கொரி. ௰௧. ௨௩. பிலி. ௧. ௰௩.

16 அப். ௫. ௩௪. — 17 ௫ மோ. ௩௩. ௩. ௨ இரா. ௪. ௩௮. லூக். ௰. ௩௯. ௧. ௩ கிமோ. ௩. ௰௪. — 22 லூக். ௨௨. ௬௬. அப். ௪. ௫. — 23 அப். 18 அப். ௨௬. ௫. — 19 உரோ. ௰. ௨. ௯. ௨: ௨௬. ௯, ௰௨. — 24 அப். ௯. ௩. 20 அப். ௨௧. ௨௰. கலா. ௧. ௰௪. ௨௬. ௰௨, ௰௩. 21 அப். ௮. ௩: ௨௬. ௯, ௰௧. பிலி. ௩. ௬.

எ சித்தது.—உடனே நான் தரையிலே விழுந்து,
சவுலே, சவுலே, என்னத்திற்கு நீ என்னைத் துன்
பப்படுத்துகிறாய் என்று என்னுடனே சொல்
அ லுகிற சத்தத்தைக் கேட்டேன்.—அதற்கு நான்,
ஆண்டவரே, நீர் யார் என்றேன்; அவர் என்னு
டனே சொன்னது: நீ துன்பப்படுத்துகிற நாச
ரேத்தூரானாகிய இயேசுவே நான் என்றார். —
கூ [1]என்னுடனேகூட இருந்தவர்கள் அந்த ஒளி
யைக் கண்டு பயம் அடைந்தார்கள்; என்னுட
னே பேசினவருடைய சத்தத்தை அவர்கள்
ம கேட்கவில்லை.—பின்னும் நான், ஆண்டவரே,
நான் என்ன செய்யவேண்டும் என்றேன்; அதற்
குக் கர்த்தர் சொன்னது: நீ எழுந்து தமஸ்கு
ஊருக்குப் போ; நீ செய்யும்படிக்குக் கட்டளை
யிடப்பட்ட யாவும் அங்கே உனக்குச் சொல்
மக லப்படும் என்றார். — பின்பு நான் அந்த ஒளி
யின் மகிமையினாலே பார்வை அற்றுப்போன
படியால், என்னோடிருந்தவர்களால் கைலாகு
கொடுத்து அழைக்கப்பட்டுப் போய்த் தமஸ்கு
மஉ ஊரில் சேர்ந்தேன்.–அப்பொழுது வேதப்பிரமா
ணத்தின்படியே பத்தியுள்ளவனுமாய், [2]அங்கே
குடியிருக்கிற சகல யூதராலும் [3]நல்லவன் என்று
நற்சாட்சி பெற்றவனுமாயிருக்கிற [4]அனனியா
என்னும் ஒருவன் என்னிடத்தில் வந்து நின்
மங று,—என்னை நோக்கி, சகோதரனாகிய சவுலே,
பார்வை அடைவாயாக என்றான்; அந்நேரமே
மச நான் அவனை நோக்கிப்பார்த்தேன்.—பின்பு அ
வன் சொன்னது: [5]நீ கண்டு கேட்டவைகளைக்
குறித்து, [6]சகலவித மனிதருக்கும் சாட்சிகொடுக்
மரு கிறவனாயிருக்கும்படிக்கு,—[7]நம்முடைய முன்
னோர்களின் தேவன் [8]உன்னை முன்குறித்தி
ருந்து, தம்முடைய சித்தத்தை நீ அறியவும் [9]நீதி
பரரைக் [10]காணவும் [11]அவருடைய திருவாயின்
மசு சத்தத்தைக் கேட்கவும் பண்ணினார்.—இப்பொ
ழுது நீ தாமதிக்கிறதென்ன? நீ எழுந்து, [12]கர்த்த
ருடைய நாமத்தைத் தொழுதுகொண்டு ஞானஸ்
நானம் பெற்று, உன் [13]பாவங்களை நீக்குவாயாக
மஎ என்றான். — பின்பு நான் [14]எருசலேமுக்குத்
திரும்பிவந்து, தேவாலயத்திலே செபம்பண்ணி
க்கொண்டிருக்கையில் நான் ஞானதிருஷ்டி அ
மஅ டைந்து, அவரைத் தரிசித்தேன்.—[15]அவர் என்
னுடனே நீ என்னைக்குறித்துச் சொல்லும் சாட்
சியை இவர்கள் ஏற்றுக்கொள்ளாமலிருப்பதால்
[16]நீ தாமதப்படாமல் சீக்கிரமாய் எருசலேமை
மகூ விட்டுப் போ என்றார். — அப்பொழுது நான்
சொன்னது: ஆண்டவரே, உம்மை விசுவாசித்த
வர்களை [17]நான் காவலில் வைத்து, செபஆலயங்
களிலே அவர்களை அடிப்பித்திருந்ததையும்,—
உம [18]உமக்குச் சாட்சியாகிய ஸ்தேவானுடைய
இரத்தம் சிந்தப்பட்டபொழுது, நானும் அருகே
நின்று [19]அவனைக் கொலைசெய்வதற்குச் சம்ம
தித்து, அவனைக் கொலைசெய்தவர்களின் வஸ்
திரங்களைக் காத்துக்கொண்டதையும், இவர்கள்
[20]அறிந்திருக்கிறார்களே என்றேன். — அவர் உக
சொன்னது: [21]நான் உன்னைத் தூரமாய்ப் புறத்
தேசத்தாரிடத்திற்கு அனுப்புவேன்; ஆதலால் நீ
போ என்று சொன்னார் என்றான்.

இந்த வார்த்தைவரைக்கும் அவர்கள் அவனுக் உஉ
குச் செவிகொடுத்து, [22]இப்படிப்பட்டவனைப்
பூமியிலிருந்து அகற்றவேண்டும்; [23]இவன் உயி
ரோடிருக்கிறது நியாயமல்ல என்று மிகுந்த சத்
தத்தோடே கூப்பிட்டார்கள்.–இப்படி அவர்கள் உங
கூக்குரலிட்டுத் தங்கள் வஸ்திரங்களைக் கழற்றிப்
போட்டு, ஆகாசத்திலே புழுதி தூற்றிக்கொண்
டுவருகையில்,—சேனாபதி அவனைக் கோட் உச
டைக்குள்ளே கொண்டுவரும்படி கட்டளையிட்
டு, பின்பு அவர்கள் அவன்மேல் இப்படிக் கூக்
குரலிட்டதற்கான காரணத்தை அறியும்படிக்கு,
அவனைச் சவுக்காலே அடித்து விசாரிக்கச்சொ
ன்னான்.—அந்தப்படி அவர்கள் அவனை வார்க உரு
ளினால் அழுந்தக் கட்டுகையில் பவுல் சமீபமாய்
நின்ற படைத்தலைவனை நோக்கி, [24]உரோமனு
மாய் நியாயமாய் ஆக்கினைக்கு உட்படாதவனு
மாய் இருக்கிற மனிதனை நீங்கள் அடிக்கிறது
நியாயமா என்றான்.—தலைவன் அதைக் கேட்டு, உசு
சேனாதிபதியினிடத்திற்குப் போய், அந்த மனி
தன் உரோமன், ஆதலால் நீர் செய்வதைக்குறித்
துச் சாவதானமாய் இருக்கவேண்டும் என்று அறி
வித்தான்.—அப்பொழுது சேனாதிபதி பவுலினி உஎ
டத்தில் வந்து, நீ உரோமனா எனக்குச் சொல்
என்றான்; அதற்கு அவன் அப்படித்தான் என்
றான்.—சேனாதிபதி சொன்னது: நான் மிகுந்த உஅ
திரவியத்தினாலே இந்தமேன்மையைச்சம்பாதித்
தேன் என்றான்; அதற்குப் பவுல் சொன்னது:
நான் அப்படிப்பட்டவனாகப் பிறந்தேன் என்
றான்.—ஆதலால் அவனை அடித்து விசாரிக்கும் உகூ
படி * எத்தனமாயிருந்தவர்கள் உடனே அவனை
விட்டார்கள்; மேலும் சேனாதிபதி அவன் உரோ
மனென்று அறிந்து, தான் அவனைக் கட்டின
தினாலே பயந்தான்.

மறுநாளிலே பவுல் யூதரால் ஏற்படுத்தப் நம
பட்ட குற்றம் இன்னதென்று அவன் நிச்சயத்
தை அறிய மனதாய் அவனுடைய கட்டவிழ்க்
கும்படி செய்து, பிரதான ஆசாரியரையும் அவர்
களுடைய பெரிய சங்கத்தார் எல்லாரையும்
கூடிவரும்படி கட்டளையிட்டுப் பின்பு பவுலைத்
தாழக்கொண்டுபோய், அவர்களுக்குமுன் நிறுத்
தினான்.

1 அப். கூ எ. தானி. ம. எ. — 2 க தீமோ. க எ —3 அப். ம. உஉ. — 4 அப். கூ மஎ.—5 அப். ச உம: உக. மக.—6 அப் உக. மக.—7 அப் க. மங: ங கம. – 8 அப். கூ. மரு: உக. மக. — 9 அப். க. மச: எ. ருஉ. — 10 க கொரி. கூ. க: மரு. அ. — 11 க கொரி. மக. உக. கலா. க மஉ. — 12 அப். கூ. மச. உரோ. ம. மங. — 13 அப். உ. கஅ. எபி. ம. உஉ.–14 அப். கூ. உசு. உ கொரி. மஉ. உ. — 15 மச. லச. – 16 மத். ம மச. —17 மத். ம. மஎ.–18 அப் எ ருஅ.-19 லூக் மக. சஅ. அப். அ. க. உரோ. க. கஉ.—20 ச. லச. அப் அ. க. — 21 அப். கூ. மரு: மங. உ, சசு. சஎ: மஅ. கூ: உசு. மஎ. உரோ. க. ரு: மக. மக: மரு. மசு. கலா. க. மரு, மசு: உ. எ. அ. எபே. க எ அ. க தீமோ. உ. எ. உ. தீமோ க. மக.—22 அப். உக. கசு. –23 அப். உரு. உச — 24 அப். மசு. கஎ.

* அல்லது வருத்தும்படி.

## ௨௩. அதிகாரம்.

௧. பவுல் ஆலோசனைச் சங்கத்தருக்குமுன் தன்னை எடுத்துப் பேசும்பொழுது, ௨. அனனியா அவனை அடிக்கும்படி உத்தரவு கொடுத்தது. ௭. அவன்மேல் குற்றஞ்சாற்றினவர்களுக்குள்ளே பிரிவினை உண்டானது. ௰௧. பராபரன் அவனைத் திடப்படுத்தினது. ௰௪. யூதர்கள் அவனுக்கு மோசஞ்செய்ய நினைத்தது. ௨௰. பிரதான சேர்வைக்காரனுக்கு அறிவிக்கப்பட்டது. ௨௭. அவன் பவுலைப் பேலிக்ஸ் துரையினிடத்திற்கு அனுப்பினது.

௧ அப்பொழுது பவுல் பெரிய சங்கத்தாரை நோக்
கிச் சொன்னதாவது: சகோதரர்களே, [1]இந்நாள்
வரைக்கும் என் மனது எனக்கு எவ்விதத்தாலும்
நற்சாட்சிகொடுக்கத் தக்கதாக, பராபரனுக்கு
முன்பாக நடந்துவந்தேன் என்று சொன்னபொ
௨ ழுது,—பிரதான ஆசாரியனாகிய அனனியா அவ
னுக்குச் சமீபமாய் நின்றவர்களை நோக்கி, [2]இ
வன் வாயிலே அடியுங்கள் என்று கட்டளையிட்
௩ டான்.—அப்பொழுது பவுல் அவனுடனே சொ
ன்னது: சாந்துபூசப்பட்ட சுவரே, பராபரன்
உம்மை அடிப்பார்; நியாயப்பிரமாணத்தின்படி
எனக்கு நியாயத்தீர்ப்புக் கொடுக்கும்படி உளுக்
காந்திருக்கிற நீர், [3]நியாயப்பிரமாணத்திற்குத் தப்
பிதமாய் என்னை அடிக்கச்சொல்லலாமா என்
௪ ருன். — சமீபத்தில் நின்றவர்கள் சொன்னது:
பராபரனுடைய பிரதான ஆசாரியனையா வைகி
௫ ருய் என்ருர்கள்.—அதற்குப் பவுல் சொன்னது:
சகோதரரே, [4]இவர் பிரதான ஆசாரியனென்று
நான் நினைக்கவில்லை; [5]உன் சனத்தின் தலைவ
னைக்குறித்துத் தீதுசொல்லாதிருப்பாயாக என்று
எழுதியிருக்கின்றதே என்ருன்.
௬ பின்பு அவர்களில் ஒருபங்கு சதுசேயரென்
றும் ஒருபங்கு பரிசேயரென்றும் பவுல் அறிந்து,
மிகுந்த சத்தத்தோடே சங்கத்தாருக்குள்ளே
கூப்பிட்டுச் சொன்னதாவது: சகோதரர்களே,
[6]நான் பரிசேயனுமாய் ஒரு பரிசேயனுடைய
மகனுமாய் இருக்கிறேன்; [7]நித்திய சீவனுக்கு
ஏற்ற நம்பிக்கையைக்குறித்தும், மரித்தோர் உயி
ரோடெழுந்திருக்குதலைக்குறித்தும், நான் நியா
யத்தீர்ப்பு அடையும்படி இருக்கிறேன் என்று
௭ சொன்னபொழுது, — [8]சதுசேயர் உயிரோடெ
ழுந்திருக்குதலும் இல்லை, அரூபியும் ஆவியும்
இல்லை என்று சொல்லுகிறபடியினலும் பரிசே
யர் அவ்விரண்டும் உண்டென்று அறிக்கைபண்
௮ ணுகிறபடியினலும்,—பரிசேயருக்கும் சதுசே
யருக்கும் வாக்குவாதம் உண்டாயிற்று; கூட்ட
௯ மும் பிரிவினை அடைந்தது.—மிகுந்த கூக்கு
ரல் உண்டாயிற்று; அப்பொழுது பரிசேயரைச்
சேர்ந்த வேதபாரகர் எழுந்து மிகவும் விரோ
தமாய்ப் பேசி, [9]இந்த மனிதனிடத்தில் ஒரு
பொல்லாங்கையும் காணேம், [10]ஒரு ஆவி அல்
லது ஒரு தூதன் இவனுடனே பேசினதுண்
டானல், [11](அதினல் என்ன) என்ருர்கள். —
௰ பின்பு மிகுந்த கலகம் உண்டானபொழுது,
பவுல் அவர்களால் பீறுண்டுபோவான் என்று
பெரிய சேனைத்தலைவன் பயந்து அவனை அவர்க
ளிலிருந்து பறித்து, கோட்டைக்குக் கொண்டு
போகும்படி போர்ச்சேவகருக்குக் கட்டளை
யிட்டான்.—[12]அன்று இராத்திரியிலே கர்த்தர் ௰௧
பவுலின் அருகே நின்று, பவுலே, திடன்கொள்;
நீ என்னைக்குறித்து எருசலேமிலே சாட்சிகொ
டுத்ததுபோல, உரோமை நகரியிலேயும் சாட்சி
கொடுப்பாய் என்ருர்.
விடியற்காலமானபொழுது, [13]யூதரில் சிலர் ௰௨
இரகசியமாய்க் கூடி, அந்தப் பவுலை நாம் கொலை
செய்யும் அளவும் புசியாமலும் குடியாமலும் இ
ருப்போமாக என்று சபதம்பண்ணிக்கொண்டு,*
தங்களுக்குள்ளே கட்டுப்பாடு செய்தார்கள்.—
இப்படிச் சபதத்தினலே கட்டுப்பாடு செய்தவர் ௰௩
கள் நாற்பதுபேருக்கு அதிகமாயிருந்தார்கள்.—
அவர்கள் பிரதான ஆசாரியரிடத்திலும் மூப்பரி ௰௪
டத்திலும் போய்ச் சொன்னதாவது: நாங்கள்
பவுலைக் கொலைசெய்யும் அளவும் ஒன்றையும்
ருசிபார்க்கக்கூடாதென்று கொடிய சபதம்பண்
ணிக்கொண்டோம்.—ஆனபடியினலே நீங்கள் ௰௫
பெரிய சங்கத்தாருடனேயுங்கூட அவனுடைய
காரியத்தை அதிக கெட்டியாய் விசாரிக்க மன
துள்ளவர்கள்போலச் சேனைபதிக்குக் காண்
பித்து, அவர் நாளைக்கு அவனை உங்களிடத்தில்
கொண்டுவரும்படி கேட்பீர்களாக; அப்பொ
ழுது அவன் உங்களுக்குச் சமீபமாய் வருமுன்
னே நாங்கள் அவனைக் கொலைசெய்ய எத்தனமா
யிருக்கிறோம் என்ருர்கள்.
அந்தச் சர்ப்பனையைப் பவுலினுடைய சகோ ௰௬
தரியின் குமாரன் கேள்விப்பட்டு, உடனே
கோட்டைக்குப் போய், பவுலுக்கு அறிவித்
தான்.—அப்பொழுது பவுல் படைத்தலைவரில் ௰௭
ஒருவனை அழைத்து, இந்த வாலிபன் சேனைதி
பதிக்கு ஒரு காரியத்தை அறிவிப்பான்; ஆகை
யால் இவனை அவரிடத்திற்குக் கொண்டுபோக
வேண்டும் என்ருன்.—அந்தப்படி அவன் அவ ௰௮
னைச் சேர்த்து, சேனைதிபதியிடத்திற்குக் கொ
ண்டுபோய், காவலில் வைக்கப்பட்டிருக்கிற
பவுல் என்னை அழைத்து, உமக்கு ஒரு காரியத்
தைச் சொல்லவேண்டுமென்று இருக்கிற இந்த
வாலிபனை உம்மிடத்திற்குக் கொண்டுபோகும்
படி என்னை வேண்டிக்கொண்டான் என்ருன்.—
அப்பொழுது சேனைதிபதி அவனுடைய கை ௰௯
யைப் பிடித்துத் தனிமையான இடத்தில் கொண்
டுபோய், நீ எனக்கு என்ன அறிவிக்க விரும்பு
கிருய் என்று கேட்டான். — அவன் சொன்ன ௨௰
தாவது: [14]யூதர்கள் பவுலின் காரியத்தை அதிக
கெட்டியாய் விசாரிக்க மனதுள்ளவர்கள்போல

1 அப். ௨௪. ௰௬. ௧ கொரி. ௪. ௪. ௨ கொரி. ௧. ௰௨: ௪. ௨. ௨ தீமோ. ௧. ௩. எபி. ௰௩. ௰௮.—2 ௧ இரா. ௨௨. ௨௪. எரே. ௨௰. ௨. யோவா. ௰௮. ௨௨. 3 ௧ சாமு. ௰௬. ௭. லேவி. ௧௯. ௧௫. உபா. ௨௫. ௧, ௨. யோவா. ௭. ௫௧.—4 அப். ௨௪. ௰௭.—5 ௨ மோ. ௨௨. ௨௮. பிர. ௰. ௨௰. ௨ பே. ௨. ௰. யூதா. ௮.—6 அப். ௨௬. ௫. பிலி. ௩. ௫.—7 அப். ௨௪. ௨௧. ௧௫.—10 அப். ௨௨. ௭, ௰௭, ௰௮. ௰௫, ௨௧: ௨௬. ௬: ௨௮. ௨௰. 11 அப். ௫. ௩௯.—12 அப். ௰௮. ௯: 8 மத். ௨௨. ௨௩. மாற். ௰௨. ௰௮. லூக். ௨௭. ௨௩, ௨௪.—13 ௰௨, ௨௰. ௨௫. ௨௰. ௨௭.—9 அப். ௨௫. ௨௫: அப். ௨௫. ௬.—14 ௰௨. ௨௪.

* அல்லது சாபமிட்டுக்கொண்டு.

வந்து, நீர் நாளைக்கு அவனைப் பெரிய சங்கத்தா
ரிடத்திற்குக் கொண்டுவரும்படிக்கு, உம்மை
வேண்டிக்கொள்ளத் தீர்மானம்பண்ணினார்கள்;
௨௧ அவர்களுக்குச் சம்மதியாதிருப்பீராக.—என்னத்
தினாலெனில், அவர்களில் நாற்பதுபேருக்கு
அதிகமானபேர்கள் அவனைக் கொலைசெய்யுமள
வும், புசிக்கவும் குடிக்கவும்மாட்டோம் என்று
சபதம்பண்ணிக்கொண்டு அவனுக்காக ஒளித்தி
ருந்து, இப்பொழுது உம்முடைய உத்தரவுவரக்
காத்துக்கொண்டு எத்தனமாய் இருக்கிறார்கள்
௨௨ என்றான்.—அப்பொழுது சேனாதிபதி சொன்
னது: நீ இவைகளை எனக்கு அறிவித்ததை ஒரு
வருக்கும் சொல்லாதிரு என்று வாலிபனுக்குக்
கட்டளையிட்டு அவனை அனுப்பி,
௨௩ பின்பு படைத்தலைவர் இருவரை அழைத்து,
சேசாரியாபட்டணத்திற்குப் போகும்படிக்கு,
இருநூறு போர்ச்சேவகரையும், குதிரைப்போர்ச்
சேவகர் எழுபதுபேரையும், இருநூறு விற்கார
ரையும் இராத்திரியின் மூன்றாம்மணி நேரத்திற்கு
௨௪ எத்தனம்பண்ணுங்கள். — அல்லாமலும் பவுலை
ஏற்றித் துரையாகிய பேலிக்குசினிடத்திற்குப்
பத்திரமாய்க் கொண்டுபோகும்படிக்கு, வாக
னங்களில் இருக்கும்படி செய்யுங்கள் என்று
௨௫ சொல்லி, — பின்பு எழுதின நிருபத்தின் விவர
௨௬ மாவது:—கனம்பொருந்திய துரையாகிய பேலிக்
குசுக்குக் கிலவுதியுலீசியா சவுக்கியம் உண்டாக
௨௭ வாழ்த்துகிறேன்.—[1]இந்த மனிதன் யூதர்களால்
பிடிக்கப்பட்டு அவர்களால் கொலைசெய்யப்படு
வதற்கு ஏதுவாயிருந்தபொழுது, நான் போர்ச்
சேவகருடனேகூடப் போய் இவனை இழுத்துக்
கொண்டுவந்தபொழுது இவன் உரோமனென்று
௨௮ அறிந்தேன்.—[2]அவர்கள் இவன்மேல் சாற்றின
குற்றத்தை நான் அறிய மனதாய் இவனை அவர்
களுடைய பெரிய சங்கத்திற்குக் கொண்டுபோ
௨௯ னேன்.—[3]அங்கே அவன் மரணத்திற்கு அல்
லது சங்கிலிகளுக்கு ஏற்ற குற்றம் இல்லாமல்
அவர்களுடைய [4]வேதத்திற்குரிய தருக்கங்க
ளைக்குறித்துக் குற்றம்சாற்றப்பட்டவன் என்று
௩௰ எனக்குத் தெரியவந்தது.—பின்பு [5]யூதர்கள் இந்த
மனிதனுக்கு விரோதமாய் இரகசியமான யோ
சனைபண்ணிக்கொள்ளுகிறார்கள் என்று எனக்
குத் தெரிந்தபொழுது நான் உடனே இவனை
உம்மிடத்திற்கு அனுப்பி, [6]குற்றம்சாற்றுகிறவர்
களும் தாங்கள் இவனுக்கு விரோதமாய்ச் சொல்
லுகிற காரியங்களை உமக்கு முன்பாகப் போய்ச்
சொல்லும்படி கட்டளையிட்டேன்; சுகமாயிருப்
பீராக என்று எழுதி அனுப்பினான்.
௩௧ போர்ச்சேவகர் தங்களுக்குக் கட்டளையிடப்
பட்டபடியே, பவுலைச் சேர்த்துக்கொண்டு, இ
ராத்திரியிலே அந்திப்பத்திரி ஊருக்குக்கொண்
௩௨ டுபோய்,—மறுநாளிலே குதிரைப் போர்ச்சேவ
கரை அவனுடனேகூடப் போக அனுப்பி,
தாங்களோ கோட்டைக்குத் திரும்பினார்கள்.—
அவர்கள் சேசாரியா பட்டணத்தில் சேர்ந்து, ௩௩
நிருபத்தைத் துரைக்குக் கொடுத்து, பவுலையும்
அவன்முன்பாக நிறுத்தினார்கள்.—துரை அதை ௩௪
வாசித்து, நீ எந்தத் தேசத்தான் என்று கேட்டு,
[7]கிலிக்கிய தேசத்தான் என்று அறிந்து,—பின்பு ௩௫
[8]உன்மேல் குற்றம்சாற்றுகிறவர்களும் வந்திருக்
கும்பொழுது, உன்னிடத்தில் விசாரிப்பேன்
என்றுசொல்லி, [9]ஏரோதேயின் அரமனையிலே
அவனைக் காவலில் வைக்கும்படி கட்டளை
யிட்டான்.

## ௨௪. அதிகாரம்.

௧. பவுல் தெர்த்துல்லு என்ற வாய்ச்சாலகனால் குற்றம்சாற்றப்பட்டபோது, ௰. அவன் தன் நடக்கையையும் உபதேசத்தையுங்குறித்து உத்தரவு சொன்னது. ௨௪. துரைக்கும் அவன் பெண்சாதிக்கும் கிறிஸ்துவைப் பிரசங்கித்தது. ௨௬. துரை லஞ்சத்தை விரும்பியும் அடையாமற்போனது. ௨௭. அந்தத் துரையின் உத்தியோகம் மாறிப்போனதும் பவுலைக் காவலில் வைத்துப்போனதும்.

[10]ஐந்துநாளைக்குப் பின்பு, [11]பிரதான ஆசாரிய ௧
னாகிய அனனீயா மூப்பரோடும், பேச்சில்
கெட்டிக்காரனாகிய தெர்த்துல்லுவோடும் கூடப்
போய், பவுலுக்கு விரோதமாய்த் துரையினு
டைய சன்னிதானத்தில் பிரவேசித்தார்கள்.—
அவன் அழைக்கப்பட்டு வந்தபொழுது, தெர்த் ௨
துல்லு குற்றம் ஏற்படுத்தினதாவது: — மிகுந்த ௩
கனம்பொருந்திய பேலிக்குசே, உம்மாலே நாங்
கள் மிகுந்த சமாதானசவுக்கியத்தை அநுபவிக்
கிறதையும் உம்முடைய விசாரிப்பினாலே இந்
தத் தேசத்தாருக்காக மிகுந்த மகிமையுள்ள கிரி
யைகள் நடக்கிறதையும் நாங்கள் எப்பொழுதும்
எங்கும் பெரிய உபகாரமென்று எண்ணி, அறிக்
கையிடுகிறோம்.—நான் அதிக வார்த்தைகளாலே ௪
உமக்கு வருத்தத்தை உண்டுபண்ணாதபடிக்கு,
நாங்கள் சுருக்கமாய்ச் சொல்வதை நீர் உம்மு
டைய பொறுமையோடே கேட்க வேண்டிக்
கொள்ளுகிறேன். — என்னவென்றால், [12]இந்த ௫
மனிதன் பெருவாரிக்காய்ச்சலைப்போல, பூச்சக்
கரத்திலுள்ள சகல யூதர்களுக்குள்ளும் கலகம்
எழுப்பியிருக்கிறதையும், நாசரேத்தாரென்னும்
கெட்ட பிரிவுக்கு முதலாளியாய் இருக்கிறதை
யும், — எங்கள் [13]தேவாலயத்தை அசுசிப்படுத் ௬
தத் தேடினதையும், நாங்கள் கண்டறிந்து இவ
னைப் பிடித்து, [14]எங்கள் வேதநூலின்படியே
இவனுக்கு நியாயத்தீர்ப்புக்கொடுக்க மனதாயி
ருந்தோம். — அப்பொழுது சேனாதிபதியாகிய ௭
[15]லீசியா என்பவர் வந்து, மிகுந்த பலவந்தமாய்
இவனை எங்கள் கைகளிலிருந்து பறித்துக்
கொண்டுபோய்,—இவன்மேல் [16]குற்றம்சாற்று ௮
கிறவர்கள் உம்மிடத்தில் வரும்படி கட்டளை
யிட்டார்; நீர் இவனிடத்தில் கெட்டியாய் விசா
ரித்தால், நாங்கள் இவன்மேல் குற்றம்சாற்றுகிற
காரியங்கள் யாவையும் அறிந்துகொள்வீர் என்

1 அப். ௨௧. ௩௩: ௨௪. ௭.—2 அப். ௨௨. ௩௰.—3 அப். ௨௫. ௧௯.-4 அப். ௰௮. ௰௫: ௨௫. ௰௯.—5 ௨௰. ௩௪. 6 அப். ௨௪. ௮: ௨௫. ௨௬.-7 அப். ௨௧. ௩௯.-8 அப். ௨௪. ௧,௰: ௨௫. ௰௯.-9 மத். ௨௭. ௨௭.—10 அப். ௨௧. ௨௭.—11 அப். ௨௩. ௨, ௩௰, ௨௮. ௧ பே. ௨. ௰௨,௰௫.—13 அப். ௩௫: ௨௫. ௨.—12 லூக். ௨௩. ௨. ௨௧. ௨௮.—14 யோவா. ௰௮. ௩௩. அப். ௬. ௰௩: ௰௩. ௨௰: ௰௭. ௬: ௨௧. 15 அப். ௨௧. ௩௩.—16 அப். ௨௩. ௩௰.

௯ ருன்.—மற்ற யூதர்களும் அதற்கு இசைந்து, இப்
படியே இருக்கிறதென்று சொன்னார்கள்.
௰ அப்பொழுது பவுல் பேசுகிறதற்குத் துரையி
னாலே சமிக்கை பெற்றபின்பு அவன் சொன்ன
மாறுத்தரமாவது: அநேகவருஷம் நீர் இந்தத் தே
சத்தாருக்கு நியாயாதிபதியாயிருக்கிறதை நான்
அறிந்து, அதிக சந்தோஷத்தோடே எனக்காக
௰௧ உத்தரவு சொல்லுகிறேன்.— நீர் அறியும்படி
[1]நான் பராபரனைத் தொழுதுகொள்ளும்படிக்கு,
எருசலேமுக்குப் போனதுமுதல் இதுவரைக்
௰௨ கும் பன்னிரண்டு நாள்மாத்திரம் ஆயிற்று.—[2]தே
வாலயத்திலே நான் ஒருவரோடும் தருக்கம்பண்
ணவும், செபஆலயங்களிலாகிலும் நகரத்திலாகி
லும் சனங்களுக்குள்ளே கலகம் எழுப்பவும்,
௰௩ இவர்கள் காணவுமில்லை.—இப்பொழுது, என்
மேல் சாற்றுகிறகுற்றங்களுக்குச் சாட்சிகளைக்
௰௪ காண்பிக்கவும்மாட்டார்கள். — நான் உமக்கு
அறிக்கையிடுகிறது என்னவென்றால், [3]இவர்கள்
கெட்டபிரிவு என்று சொல்லுகிற மார்க்கத்தின்
படியே [4]நான் நியாயப்பிரமாணத்திலேயும் தீர்க்
கதரிசனப் புத்தகங்களிலேயும் எழுதியிருக்கிற
யாவையும் விசுவாசித்துக்கொண்டு, [5]எங்கள்
முன்னோர்களுடைய தேவனுக்கு ஆராதனை
௰௫ செய்து,—[6]மரித்தோராகிய நீதிமான்களும் அநீதி
மான்களும் மறுபடியும் உயிரோடு எழுந்திருப்
பார்கள் என்று [7]இவர்களும் அடைந்திருக்கிற
நம்பிக்கையைப் பராபரன்மேல் வைத்திருக்கி
௰௬ றேன்.—அதினாலே [8]நான் பராபரனுக்கும் மனி
தருக்கும்முன்பாக எப்பொழுதும் நற்சாட்சி
கொடுக்கிற மனதுள்ளவனாயிருக்கும்படி முயற்
௰௭ சிப்படுகிறேன். — அநேக வருஷங்களுக்குப்
பின்பு [9]நான் என் தேசத்தாருக்குத் தருமங்களை
ஒப்புக்கொடுக்கவும், காணிக்கைகளைச் செலுத்த
௰௮ வும் வந்தேன்.—கூட்டமில்லாமலும் அமளி இல்
லாமலும் நான் தேவாலயத்தில் அப்படிச்செய்து
சுத்தம்பண்ணிக்கொண்டிருக்கையில், [10]ஆசியா
தேசத்தாரான சில யூதர்கள் என்னைக் கண்டார்
௰௯ கள்.—[11]அவர்களிடத்தில் எனக்கு விரோதமான
காரியம் உண்டானால், அவர்களே உமக்குமுன்
பாக இங்கே வந்து குற்றம்சாற்றவேண்டும்.—
௨௰ அல்லது நான் பெரிய சங்கத்தாருக்கு முன்பாக
நின்றபொழுது, என்ன குற்றத்தை என்னிடத்
தில் கண்டார்கள்; அதை இவர்களும் சொல்ல
௨௧ லாமே.—நான் அவர்களுக்குள்ளே நின்றபொ
ழுது, [12]மரித்தோர் உயிரோடு எழுந்திருப்பார்கள்
என்கிறதைக்குறித்து நான் இன்றைக்கு உங்க
ளால் நியாயத்தீர்ப்புஅடையும்படி இருக்கிறேன்
என்று நான் கூப்பிட்டேன்; இந்த ஒரே சொல்
லின் நிமித்தமே அன்றி வேறொன்றின்நிமித்த
மும் குற்றம் காணவில்லையே என்றான்.

பேலிக்ஸென்பவன் அதைக் கேட்டு இந்த ௨௨
மார்க்கத்தைக்குறித்து அதிக விவரமாய் அறிந்த
பின்பு, சேனாதிபதியாகிய [13]லீசியா வரும்பொ
ழுது, நான் உங்கள் காரியத்தைக் கெட்டியாய்
விசாரித்துக்கொள்வேன் என்று சொல்லி அவர்
களை அனுப்பி,—பின்பு பவுலைக் காத்துக்கொள் ௨௩
ளும்படிக்கும், அவனுக்குக் கண்டிப்புச் செய்
யாதபடிக்கும் [14]அவனுடைய மனிதர்களில்
ஒருவனாகிலும் அவனிடத்தில் போய் அவனுக்கு
ஊழியம்செய்வதற்குத் தடைபண்ணாதபடிக்கும்
தலைவனுக்குக் கட்டளையிட்டான்.
சிலநாளுக்குப் பின்பு பேலிக்ஸ் யூதஸ்திரி ௨௪
யாகிய தன் மனைவி துருசில்லாளுடனேகூட
வந்து பவுலை அழைப்பித்து, கிறிஸ்துவைப்பற்
றும் விசுவாசத்தைக்குறித்து அவன் சொல்லக்
கேட்டான்.—அந்தப்படி அவன் நீதியையும் இச் ௨௫
சை அடக்கத்தையும் பின்வரும் நியாயத்தீர்ப்
பையுங்குறித்துப் பேசிக்கொள்ளுகையில், பே
லிக்ஸ் பயமடைந்து, இப்பொழுது நீ போக
லாம், இனிமேல் எனக்குச் சாவகாசம் இருக்கும்
பொழுது உன்னை மறுபடியும் அழைப்பிப்பேன்
என்றான்.—மேலும் [15]அவன் பவுலை விடுதலை ௨௬
பண்ணும்படியாய்த் தனக்கு அவன் பணம்
கொடுப்பான் என்று நம்பிக்கையாயிருந்தான்;
அதின் நிமித்தமே அவன் அநேகந்தரம் அவனை
அழைப்பித்து அவனுடனே பேசிக்கொண்
டான்.—இரண்டுவருஷமானபொழுது பேலிக் ௨௭
சுக்குப் பதிலாகப் பொர்க்கியுபெஸ்து என்னும்
துரை வந்தான்; [16]அப்பொழுது பேலிக்ஸ் யூதர்
களுக்குச் சந்தோஷஞ்செய்ய மனதாய் பவுலைக்
காவலில் வைத்துவிட்டுப் போனான்.

## ௨௫. அதிகாரம்.

௧. யூதர்கள் பெஸ்துவுக்குமுன்பாகப் பவுல்மேல் குற்றம்சாற்றினது. ௮. அதற்கு அவன் உத்தரவு சொல்லி, ௰௧. இராயருக்கு அபயமிட்டது. ௰௪. பெஸ்து இந்தக் காரியத்தை அகிரிப்பா இராசாவுக்கு அறிவித்தது. ௨௩. பவுல் விசாரிக்கப்பட்டு, ௨௫. மரணத்துக்குப் பாத்திரவானல்லவென்று பெஸ்துவினாலே தீர்ப்படைந்தது.

பெஸ்து என்பவன் துரைத்தனத்திற்கு வந்து ௧
மூன்றுநாளுக்குப் பின்பு, சேசாரியா பட்டணத்
திலிருந்து எருசலேமுக்குப் போனான்.—[17]அப் ௨
பொழுது பிரதான ஆசாரியனும் யூதருடைய
பெரியோர்களும் அவனிடத்தில் சேர்ந்து, பவு
லுக்கு விரோதமாய்ப் பிராதுபண்ணி,—[18]அவனை ௩
வழியிலே கொலைசெய்ய இரகசியமான யோச
னையுள்ளவர்களாய், நீர் கிருபைசெய்து, அவனை
எருசலேமுக்கு வர அழைப்பிக்கவேண்டும்
என்று வேண்டிக்கொண்டார்கள்.— அதற்குப் ௪
பெஸ்து சொன்னது: பவுல் சேசாரியாவிலே
காக்கப்பட்டிருக்கிறானே.—நானும் சீக்கிரமாக ௫
அங்கே போவேன்; ஆகலால் உங்களில் திற
முள்ளவர்கள் கூடவந்து [19]அந்த மனிதனிடத்

1 ௰எ. ௰௪. அப். ௨௧. ௨௬.—2 அப். ௨௫. ௮: ௨௮. ௰௭.—3 ஆமோ. ௮. ௰௪. அப். ௯. ௨.—4 அப். ௨௬. ௨௨: ௨௮. ௨௩.
5 ௨ தீமோ. ௧. ௩.
6 தானி. ௰௨. ௨. யோவா. ௫. ௨௮, ௨௯.—7 அப். ௨௬. ௬: ௨௮. ௨௰.—8 அப். ௨௩. ௧.
9 அப். ௰௧. ௨௯, ௩௰: ௨௰. ௰௬. உரோ. ௰௫. ௨௫. ௨ கொரி. ௮. ௪. கலா. ௨. ௰.—10 அப். ௨௧ ௨௭, ௨௭: [illegible]—11 அப். ௨௩. ௩௰: ௨௫. ௰௬.—12 அப். ௨௩. ௬: ௨௮. ௨௰.
13 எ ௰௪.—14 அப். ௨௭. ௩: ௨௮. ௰௬.—15 ௨ மோ. ௨௩. ௮.
16 ௨ மோ. ௨௩. ௨. அப். ௰௨. ௩: ௨௫. ௯.—17 அப். ௨௪. ௧. [illegible]—18 அப். ௨௩. ௰௨, ௰௫.—19 அப். ௰௮. ௰௪. ௰௫.

தில் குற்றம் உண்டானால் அதை அவன்மேல்
சாற்றுவார்களாக என்றான்.
௬ பின்பு அவன் ஓர் எட்டு பத்துநாள் * அவர்க
ளிடத்தில் சஞ்சரித்த பின்பு, சேசாரியா பட்ட
ணத்திற்குப்போய் மறுநாளிலே நியாயாசனத்
தில் உளுக்காந்து, பவுலைக் கொண்டுவரச்சொன்
௭ னான். — அவன் வந்தபொழுது எருசலேமிலி
ருந்து வந்த யூதர்கள் சுற்றி நின்று, [1]அநேகமான
குற்றங்களைப் பவுலின்மேல் சாற்றினார்கள்; அ
வைகளை அவர்கள் மெய்ப்படுத்தத் திராணி இரு
௮ க்கவில்லை.—பின்பு பவுல் சொன்னது: [2]நான்
யூதருடைய வேதநூலுக்காகிலும், தேவாலயத்
திற்காகிலும், இராயருக்காகிலும் விரோதமாய்
௯ ஒரு குற்றமும் செய்யவில்லை என்றான்.—அப்
பொழுது பெஸ்து [3]யூதர்களுக்குத் தயவுசெய்ய
மனதாய்ப் பவுலுடனே சொன்னது: [4]நீ எருச
லேமுக்குப் போய், அங்கே என்னாலே இந்தக்
காரியங்களைக்குறித்து நியாயத்தீர்ப்பு அடைய
௰ மனதிருக்கிறதா என்றான். — அதற்குப் பவுல்
சொன்னது: இராயனுடைய நியாயாசனத்திற்கு
முன்பாக நிற்கிறேன்; அதற்குமுன்பாக நான்
நியாயத்தீர்ப்பு அடையவேண்டும்; யூதருக்கு
நான் ஒரு அநியாயமும் செய்யவில்லை; அதை
௰௧ நீரும் நன்றாய் அறிந்திருக்கிறீர்.—அநியாயமான
தையாவது [5]மரணத்திற்குப் பாத்திரமானதையா
வது நான் நடப்பித்தேனானால், நான் சாகிறதற்கு
மறுக்கமாட்டேன்; இவர்கள் என்மேல் சாற்று
கிற குற்றங்கள் எல்லாம் வீணாயிருக்கிறபடி
யால், ஒருவரும் என்னை அவர்களுக்குச் சந்
தோஷமாக ஒப்புக்கொடுக்கக்கூடாது; [6]இராய
௰௨ ருக்கே அபயமிடுகிறேன் என்றான்.—அப்பொ
ழுது பெஸ்து தன் ஆலோசனைக்காரருடனே
பேசிக்கொண்டு, நீ இராயருக்கு அபயமிட்
டாய்; இராயரிடத்திற்கே போவாய் என்று உத்
தரவுசொன்னான்.
௰௩ சிலநாள் சென்ற பின்பு, இராயனாகிய அகிரிப்
பாவும், பேர்னீக்கேயாளும் பெஸ்துவை வாழ்த்
தும்படிக்கு, சேசாரியா பட்டணத்திற்குப் போ
௰௪ னார்கள் —அங்கே அவர்கள் அநேகநாள் சஞ்
சரித்திருக்கையில் பெஸ்து பவுலின் சங்கதியை
இராயனுக்கு விவரித்துச் சொன்னதாவது: [7]பே
லிக்ஸ்சென்பவராலே காவலில் வைத்துவிடப்
௰௫ பட்ட ஒரு மனிதன் இருக்கிறான்.—நான் எரு
சலேமிலே இருந்தபொழுது [8]பிரதான ஆசாரிய
ரும் யூதருடைய மூப்பரும் அவனுக்கு விரோத
மாய்ப் பிராதுபண்ணி, அவன்மேல் ஆக்கினைத்
௰௬ தீர்ப்பைக் கேட்டுக்கொண்டார்கள்.—[9]அவர்க
ளுக்கு நான் உத்தரவுசொன்னது: குற்றம்சாற்
றப்பட்டவன் தன்மேல் குற்றம்சாற்றினவர்க
ளுக்குமுன்பாக நின்று, அவர்கள் சாற்றின குற்
றத்தைக்குறித்துத் தனக்காக எதிர் உத்தரம் சொல்

லும்படிக்கு அவன் இடம் அடைகிறதற்குமுன்
னே, அப்படிப்பட்டவனை அவர்களுக்குத் தய
வாய் அழிவுக்கு ஒப்புக்கொடுக்கிறது உரோம
ருக்குள்ளே வழக்கமல்ல என்றேன்.—அந்தப் ௰௭
படி அவர்கள் இங்கே கூடிவந்தபொழுது,
[10]நான் தாமதம் எவ்வளவும் பண்ணாமல் மறுநா
ளிலே நியாயாசனத்தில் உளுக்காந்து, அந்த
மனிதனைக் கொண்டுவரச்சொன்னேன்.—அப் ௰௮
பொழுது குற்றம்சாற்றினவர்கள் வந்து நின்று,
நான் நினைத்திருந்த குற்றங்களில் ஒன்றையும்
அவன்மேல் ஏற்படுத்தாமல்,—[11]தங்கள் மார்க்கத் ௰௯
திற்கும், மரணமடைந்த இயேசு என்னும் ஒரு
வன் உயிரோடிருக்கிறான் என்று பவுல் சொன்ன
தற்கும் ஏற்ற சில தருக்கங்களை அவனுக்குவிரோ
தமாய்ச் சொன்னார்கள்.—நான் இப்படிப்பட்ட ௨௰
தருக்கங்களைக்குறித்துச் † சந்தேகப்பட்டபடியி
னாலே நீ எருசலேமுக்குப் போய் அங்கே இவை
களைக்குறித்து நியாயம் விசாரிக்கப்பட மனதி
ருக்கிறதா என்றேன்.—அதற்குப் பவுல் தான் ௨௧
இராயருக்குமுன்பாக விசாரிக்கப்படுமளவும் ‡
வைக்கப்படவேண்டும் என்று அபயமிட்டபொ
ழுது, நான் அவனை இராயனிடத்திற்கு அனுப்
பும்வரைக்கும் காத்துவைக்கும்படி கட்டளை
யிட்டேன் என்றான்.—[12]அப்பொழுது அகிரிப் ௨௨
பா பெஸ்துவுடனே சொன்னது: நானும் அந்த
மனிதனுடைய வசனங்களைக் கேட்க விரும்பு
கிறேன் என்றான்; அதற்கு அவன் நாளைக்கு
நீர் அப்படிக் கேட்கலாம் என்றான்.
அந்தப்படி மறுநாளிலே அகிரிப்பாவும் பேர் ௨௩
னீக்கேயாளும் மிகுந்த ஆடம்பரத்தோடே
வந்து, சேனாதிபதியுடனேயும் பட்டணத்தில்
பிரதான மனிதருடனேயுங்கூட நியாயஸ்தலத்
திற்குப் போனார்கள்; உடனே பெஸ்துவினு
டைய கட்டளையின்படி பவுல் கொண்டுவரப்
பட்டான்.–அப்பொழுது பெஸ்து சொன்னதா ௨௪
வது: அகிரிப்பா இராசாவே, எங்களோடேகூட
இவ்விடத்தில் இருக்கிற மனிதர்களே, நீங்கள்
பார்க்கிற இந்த மனிதனைக்குறித்து [13]யூதருடைய
சபையெல்லாம் எருசலேமிலேயும் இவ்விடத்தி
லேயும் என்னை வேண்டிக்கொண்டு, [14]இவன்
இனி உயிரோடிருக்கத் தகாதென்று கூப்பிட்
டார்கள்.—[15]நான் இவன் மரணத்திற்குப் பாத் ௨௫
திரமானது ஒன்றையும் செய்யவில்லை என்று
அறிந்து, [16]இவன்தானே இராயனுக்கு அபய
மிட்டபடியினாலே, இவனை அவரிடத்தில் அ
னுப்பும்படி தீர்மானம்பண்ணினேன்.-இவனைக் ௨௬
குறித்து ஆண்டவனுக்கு எழுதுகிறதற்கு நிச்ச
யப்பட்ட காரியம் எனக்குத் தெரியாது; ஆத
லால் காவலில் உட்பட்ட ஒருவனைக்குறித்துக்
குற்றத்தை அறிவியாமல், அவனை அனுப்புகிறது
எனக்குப் புத்தியீனமான காரியமாய்த் தோன்றி

1 மாற். ௰௫. ௧. லூக். ௨௩ ௨, ௰. அப். ௨௪. ௫, ௰௩.—2 அப். ௬. ௰௩: ௨௪. ௰௨: ௨௮. ௭.—3 அப். ௨௪. ௨௭. 4 ௨௰. வச.—5 ௨௫. வச. அப். ௰௮. ௰௪: ௨௩. ௨௯: ௨௬. ௩௧. 6 அப் ௨௬. ௩௨: ௨௮. ௰௯.

7 அப். ௨௪. ௨௭.—8 ௨, ௩. வச. 9 ௪. ௫. வச.—10 ௬. வச. 11 அப். ௰௮. ௰௫: ௨௩. ௨௯. 12 அப். ௯. ௰௫.—13 ௨. ௩. ௭. வச. 14 அப். ௨௨. ௨௨.—15 அப். ௨௩. ௯, ௨௯: ௨௬. ௩௧.—16 ௰௧, ௰௨. வச.

* அல்லது சில பிரதிகளில் பத்துநாளுக்கு அதிகமாய்.—† அல்லது எப்படி விசாரிக்கிறதென்று.—‡ அல்லது நீதி தீர்க்கப்படுமளவும்.

௨௭ னபடியினுலே,—இவனை விசாரித்துப் பார்த்த
பின்பு எழுதத்தக்க விசேஷம் எனக்கு உண்டா
கும்படிக்கு, இவனை உங்கள் முன்பாகவும்,
விசேஷமாய் அகிரிப்பா இராசாவே, உமக்கு
முன்பாகவும் கொண்டுவந்தேன் என்றுன்.

## ௨௬. அதிகாரம்.

௨. பவுல் அகிரிப்பாவுக்குமுன்பாகத் தன் சிறுவயதுமுதற்கொண்டு தான் நடந்த நடத்தையைக்குறித்தும், ௰௨. தான் அற்புதமாய்க் குணப்பட்டு அப்போஸ்தலப் பட்டத்துக்கு அழைக்கப்பட்டதைக்குறித்தும் திட்டமாய் அறிவித்தது. ௨௪. பெஸ்து, நீ பயித்தியக்காரனென்று சொன்னபோது, நியாயமான உத்தரவுசொன்னது. ௨௮. அகிரிப்பா கிறிஸ்தவனுகக் கொஞ்சம்குறையச் சம்மதித்தது. ௩௧. கூட்டத்தாரெல்லாரும் பவுலைக் குற்றமற்றவனென்று தீர்த்தது.

௧ பின்பு அகிரிப்பாவானவன் பவுலைநோக்கி, நீ
உனக்காகப் பேசும்படிக்கு உத்தரவுகொடுத்
தேன் என்றுன்; அப்பொழுது பவுல் கையை
நீட்டி, தனக்காகச் சொல்லிக்கொண்ட உத்தர
௨ மாவது:—அகிரிப்பா இராசாவே, யூதர்கள் என்
மேல் சாற்றுகிற சகல குற்றங்களைக்குறித்தும்,
நான் இன்றைக்கு உமக்குமுன்பாக மாறுத்தரம்
சொல்லவேண்டுவதினுலே, என்னைப் பாக்கிய
௩ வான் என்று எண்ணுகிறேன்.—விசேஷமாய் நீர்
யூதருடைய சகல முறைமைகளையும் தருக்கங்க
ளையும் அறிந்தவராயிருக்கிறீரே; ஆகையால் நீர்
நீடிய பொறுமையுடனே எனக்குச் செவிகொ
௪ டுக்கும்படி வேண்டிக்கொள்ளுகிறேன்.—நான்
என் வாலிபவயதுமுதற்கொண்டு எருசலேமி
லே என் தேசத்தாருக்குள்ளே இருந்தபடியால்,
என் வாலிபமுதல் நான் நடந்த நடக்கையை
௫ யூதரெல்லாரும் அறிந்திருக்கிறுர்கள். — நம்மு
டைய மார்க்கத்திலே மிகவும் கெட்டியான [1]பரி
சேயர் வகுப்பிலே நான் பரிசேயனுய்ச் சீவனம்
பண்ணினதையும் ஆதிமுதல் அறிந்திருக்கிறுர்
கள்; அவர்களும் சாட்சிசொல்ல மனதாயிருந்
௬ தால், இப்படியே சொல்லுவார்கள்.—இப்பொ
ழுது [2]நம்முடைய பிதாக்களுக்குப் பராபரன்
அருளிச்செய்த வாக்குத்தத்தத்திற்கு ஏற்ற நம்
பிக்கைக்காக [3]நான் நியாயத்தீர்ப்பு அடையும்
௭ படி நிற்கிறேன்.—[4]இரவும் பகலும்* இடைவி
டாமல் பராபரனுக்கு ஆராதனை செய்கிற [5]நம்
முடைய பன்னிரண்டு கோத்திரத்தாரும் [6]அந்த
வாக்குத்தத்தம் நிறைவேறும் என்று நம்பியிருக்
கிறுர்கள்; அகிரிப்பா இராசாவே, அந்த நம்பிக்
கையின் நிமித்தமே யூதர்கள் என்மேல் குற்றம்
௮ சாற்றுகிறுர்கள்.—பராபரன் மரித்தோரை எழுப்
புகிறது நம்பப்படாத காரியம் என்று நீங்கள்
௯ எண்ணுகிறது எப்படி? — முன்னே [7]நானும்
நாசரேத்தூரானுகிய இயேசுவின் நாமத்திற்கு
விரோதமாய் அநேக காரியங்களை நடப்பிக்க
வேண்டும் என்று நினைத்துக்கொண்டிருந்தேன்.-
[8]அப்படியே எருசலேமிலே செய்தேன்; [9]நான் ௰
பிரதான ஆசாரியராலே அதிகாரம் பெற்று, பரி
சுத்தவான்களில் அநேகரைக் காவல்வீடுகளில்
அடைத்தேன்; அவர்களைக் கொல்லவும் சம்மதித்
தேன்.—[10]அநேகந்தரம் நான் சகல செபஆலயங் ௰௧
களிலேயும் அவர்களைத் தண்டித்துத் தூஷணிக்
கும்படிக்கு, அவர்களைப் பலவந்தம்செய்தேன்;
நான் மிகவும் அவர்கள்மேலே மூர்க்கவெறியா
யிருந்து, அந்நிய பட்டணங்கள்வரைக்கும் அ
வர்களைத் துன்பப்படுத்தினேன். — இப்படிச் ௰௨
செய்துவருகையில், நான் [11]பிரதான ஆசாரியரி
டத்தில் பெற்ற அதிகாரத்தோடும் உத்தரவோ
டும் தமஸ்கு ஊருக்குப் போனபொழுது, —
இராசாவே, வழியிலே மத்தியானகாலத்தில் ௰௩
நான் சூரியனுடைய பிரகாசத்திற்கு அதிகமான
ஒளி வானத்திலிருந்து என்னையும் என்னுடனே
கூடப் பிரயாணப்பட்டவர்களையும் சுற்றிப் பிர
காசிக்கக்கண்டேன். — உடனே நாங்கள் எல் ௰௪
லாரும் தரையிலே விழுந்தபொழுது, சவுலே,
சவுலே, என்னத்திற்கு நீ என்னைத் துன்பப்படுத்
துகிறுய்? முள்ளில் உதைக்கிறது உனக்குக் கடி
னமாமென்று எபிரேயு பாஷையிலே சொன்ன
சத்தத்தைக் கேட்டேன்.—அதற்கு நான், ஆண் ௰௫
டவரே, நீர் யாரென்றேன்; அவர் சொன்னது:
நான், நீ துன்பப்படுத்துகிற இயேசு,—இப்பொ ௰௬
ழுது நீ எழுந்து காலூன்றி நில்; நீ கண்டவைக
ளையும் நான் உனக்குக் காண்பிப்பவைகளையுங்
குறித்து [12]நான் உன்னை ஊழியக்காரன் என்றும்
சாட்சியென்றும் ஏற்படுத்தும்படிக்கு உனக்குத்
தரிசனையானேன்.—ஆதலால் நான் உன் தேசத் ௰௭
தாரில் நின்றும் புறத்தேசத்தாரில் நின்றும்
உன்னை விடுதலையாக்கி,—[13]அவர்கள் என்னைப் ௰௮
பற்றிக்கொள்ளும் விசுவாசத்தினுலே பாவமன்
னிப்பையும், [14]பரிசுத்தவான்கள் இருக்கிற இ
டத்திலே [15]சுதந்தரத்தையும் பெற்றுக்கொள்ளும்
படிக்கு [16]அவர்களுடைய கண்களைத் திறக்க
வும், [17]அவர்களை இருளில் நின்று ஒளியினிடத்
திற்கும், பசாசினுடைய அதிகாரத்தில் நின்று
பராபரனிடத்திற்கும் திருப்பவும் [18]உன்னை
அவர்களிடத்தில் அனுப்புகிறேன் என்றுர்.—
அகிரிப்பா இராசாவே, அந்தப் பரமதரிசனைக்கு ௰௯
நான் கீழ்ப்படாதவனுயிராமல், — முதலாவது ௨௰
[19]தமஸ்கு ஊரிலேயும் பின்பு எருசலேமிலேயும்
யூதேயாதேசமெங்கும் உள்ளவர்களுக்குள்ளும்
மற்றத் தேசத்தாருக்குள்ளும் போய், அவர்கள்
மனதை மாற்றிப் பராபரனிடத்திற்குத் திரும்பி,
[20]மனந்திரும்புதற்கு ஏற்ற கிரியைகளைச் செய்ய

1 அப். ௨௨. ௩: ௨௩. ௬: ௨௪. ௰௫, ௨௨. பிலி. ௩. ௫.—2 ௧ மோ. ௩. ௰௫: ௨௨. ௰௮: ௨௬. ௪: ௪௯. ௰. ௫ மோ. ௰௮ ௰௫. ௨ சாமு. ௭. ௰௨. சங். ௱௩௨. ௰௧. ஏசா. ௪. ௨: ௭. ௰௪: ௯. ௬: ௪௰. ௰. எரே. ௨௩. ௫: ௩௩. ௰௪, ௰௫, ௰௬. எசே. ௩௪. ௨௩: ௩௭. ௨௪. தானி. ௯. ௨௪. மீகா. ௭. ௨௰. அப் ௰௩. ௩௨. ௨ ரோ. ௰௫. ௮. தீத். ௨. ௰௩.—3 அப். ௨௩. ௬.—4 லூக். ௨. ௩௭. ௧ தீமோ. ௫. ௫. ௧ தெச. ௩. ௰.—5 யாக். ௧. ௧.—6 பிலி. ௩. ௰௧.—7 யோவா. ௰௬. ௨. ௧ தீமோ. ௧. ௰௩.—8 அப். ௮. ௩. கலா. ௧. ௰௩.—9 அப். ௯. ௰௪, ௨௧: ௨௨. ௫.—10 அப். ௨௨. ௰௯.—11 அப். ௯. ௩: ௨௨. ௬.—12 அப். ௨௨ ௰௫. 13 லூக். ௧. ௭௯.—14 அப். ௨௰. ௩௨. 15 எபே. ௧. ௰௧. கொலோ. ௧. ௰௨. 16 ஏசா. ௩௫. ௫: ௪௨. ௭. லூக். ௧. ௭௯. யோவா அ௰௨. ௨ கொரி. ௪. ௬. எபே. ௫. ௮. ௧ தெச ௫. ௫.—17 ௨ கொரி. ௬. ௰௪. எபே ௪. ௰௮: ௫. ௮. கொலோ. ௧ ௰௩. ௧ பே. ௨. ௯, ௨௫.—18 அப். ௨௨ ௨௧. 19 அப். ௯. ௨௰, ௨௨, ௨௯: ௰௧ ௨௬: ௰௩. ௰௪. ௰௭. ௰௮. ௰௯ ௨௰ ௨௧. 20 மத். ௩. ௮.

* அல்லது பகலும் இரவும்.

உக வேண்டும் என்று அறிவித்தேன். — [1]இதின்
நிமித்தமே யூதர்கள் தேவாலயத்திலே என்னைப்
பிடித்து, பின்பு கொலைசெய்யும்படி தேடினார்
உஉ கள்.—பராபரன் எனக்கு உதவிசெய்ததினாலே
நான் இந்நாள்வரைக்கும் சிறியோருக்கும் பெரி
யோருக்கும் சாட்சிசொல்லி நிற்கிறேன்; [2]தீர்க்
கதரிசிகளும் [3]மோசேயும் பின்வரும் என்று
உ௩ சொன்னதின்படியே,—[4]கிறிஸ்து பாடுபட்டும்,
[5]மரணத்தில் நின்று உயிரோடெழுந்திருப்பவர்
களில் முதன்மையானவராயும் இருந்து,[6]யூதசன
ங்களுக்கும் மற்றத் தேசத்தாருக்கும் ஒளியைப்
பிரசித்தம்பண்ணுகிறார் என்று நான் சொல்லு
கிறதே அன்றி, வேறொன்றையும் நான் சொல்
லுகிறதில்லை என்றான்.

உ௪ இவ்விதமாய்ப் பவுல் தனக்காக உத்தரவு
சொன்னபொழுது பெஸ்து மிகுந்த சத்தத்துட
னே சொன்னது: பவுலே, [7]நீ பித்தங்கொண்
டிருக்கிறாய்; அதிக கல்வி உன்னைப் பயித்தியக்
உ௫ காரனாக்குகின்றது என்றான்.—அதற்கு அவன்
சொன்னது: கனம்பொருந்திய பெஸ்துவே,
நான் பித்தங்கொண்டிருக்க இல்லை; சத்தியமும்
நற்புத்தியுமான வார்த்தைகளை வசனிக்கிறேன்.—
உ௬ இந்தச் சங்கதிகளை இராசா அறிந்திருக்கிறார்; இ
வை ஒரு மூலையிலே நடந்த காரியங்கள் அல்ல;
ஆதலால் இவைகளில் ஒன்றும் அவருக்கு மறை
வாய் இருக்கமாட்டாது என்று நான் எண்ணி,
உ௭ தயிரியமாய் அவருடனே பேசுகிறேன்.—அகி
ரிப்பா இராசாவே, தீர்க்கதரிசிகள்மேல் உமக்கு
விசுவாசம் உண்டா? விசுவாசிக்கிறீர் என்று
உ௮ அறிந்திருக்கிறேன் என்றான்.—அப்பொழுது அ
கிரிப்பா பவுலுடனே சொன்னது: நான் கிறிஸ்
தவனாகிறதற்குக் கொஞ்சங்குறைய நீ என்னைச்
உ௯ சம்மதிக்கப்பண்ணுகிறாய் என்றான்.—அதற்குப்
பவுல் சொன்னது: நீர்மாத்திரம் அல்ல, இன்று
என் வசனங்களைக் கேட்ட யாவரும் கொஞ்ச
மாய் அல்ல (முழுவதுமே) இந்தச் சங்கிலிகளைத்
தவிர என்னைப்போல ஆகும்படிக்கு [8]பராபரனை
வேண்டிக்கொள்ளுகிறேன் என்றான்.

௩௰ இவைகளை அவன் சொன்ன பின்பு, இராசா
வும் துரையும் பேர்னீக்கேயாளும் அவர்களுட
னேகூட உளுக்காந்திருந்தவர்களும் எழுந்து
௩௧ போகையில், — ஒருவரோடொருவர் பேசிக்
கொண்டு, [9]இந்த மனிதன் மரணத்திற்கு அல்லது
சங்கிலிகளுக்குப் பாத்திரமானது ஒன்றையும்
௩௨ செய்யவில்லை என்றார்கள்.—மேலும் அகிரிப்
பா பெஸ்துவுடனே சொன்னது: [10]அந்த மனி
தன் இராயனுக்கு அபயமிடாதிருந்தானானால்
அவனை விடுதலைபண்ணத் தகுதியாயிருக்கும்
என்றான்.

## உஎ அதிகாரம்.

க. பவுல் உரோமாபுரிக்குப் போகக் கப்பலேறி, ௰. யாத்திரையினால் உண்டாகும் கஷ்டத்தைச் சொல்லியும், ௰௧. கப்பற்காரர் சம்மதியாதது. ௰௪. கொடுங்காற்றினால் கப்பல் அங்கும் இங்கும் அலைந்தது, உ௧. சேதமாகியும், உஉ. ௩௪. ௪௪. சனங்கள் சுகமாய்க் கரைசேர்ந்தது.

பின்பு நாங்கள் கப்பலேறி, [11]இத்தாலியா தேசத் க
திற்குப் போகும்படி தீர்மானம் உண்டானபொ
ழுது, பவுலும், காவலில் வைக்கப்பட்டிருந்த
வேறு சிலரும், இராயனுடைய சேனையில் இயூ
லியென்று பேர்கொண்ட தலைவனுக்கு ஒப்புக்
கொடுக்கப்பட்டார்கள்.—அந்தப்படி நாங்கள் உ
அதிர்மீத்துப் பட்டணத்தில் கப்பலேறி, ஆசி
யாதேசத்துக் கரையோரத்தின் வழியாய்ப் போக
நினைத்துப் புறப்பட்டோம்; மக்கேதோனியா
தேசத்துத் தெசலோனிக்கே பட்டணத்தானாகிய
[12]அரிஸ்தருக்கு எங்களுடனேகூட இருந்தான்.-
மறுநாளிலே சீதோன் துறையில் சேர்ந்தோம்; இ ௩
யூலி என்பவன் பவுலைப் [13]பட்சமாய் நடப்பித்து,
அவன் தன் சிநேகிதரிடத்திலே போய் பரா
மரிப்பை அடையும்படிக்கு உத்தரவுகொடுத்
தான்.—அவ்விடத்தை நாங்கள் விட்டுப் புறப் ௪
பட்டு, காற்றுகள் எதிரானபடியினாலே சீப்புரு
தீவுக்கு அருகாகப் போய், — கிலீக்கியா பம்பீ ௫
லியா தேசங்களின் கடலின் வழியாய்ப் போய்,
உலூக்கியா தேசத்து மீறா பட்டணத்தில் சேர்ந்
தோம்.

அங்கே இத்தாலியா தேசத்திற்குப் போக எத்த ௬
னமான அலெக்குசந்தரியா பட்டணத்துக் கப்ப
லைச் சேனைத்தலைவன் கண்டு, எங்களை அதிலே
ஏறப்பண்ணினான்.—காற்று எங்களுக்குத் தடை எ
பண்ணினதினாலே நாங்கள் அநேகநாள் மெது
வாய்ச் சென்று, வருத்தத்தோடே கினிது பட்ட
ணத்திற்கு எதிரே போய், கிரேத்தை* தீவின்
கீழ்ப்புறமான சாலுமோன் என்னும் இடத்திற்கு
எதிராய்ப் போய், — வருத்தத்தோடே அதைக் அ
கடந்து, கலூஸ்லீம் என்னப்பட்ட இடத்தில்
சேர்ந்தோம்; இலசேய பட்டணம் அதற்குச் சமீ
பமாயிருந்தது.

அதுவரைக்கும் மிகுந்த காலம் சென்றபடியி ௯
னாலும்,[14]உபவாசபண்டிகைநாளும்கழிந்துபோ
னதால் அதிகமாய்ப் போகிறது மோசம்வருதற்கு
ஏதுவானபடியினாலும் பவுல் அவர்களை நோக்
கி,—புருஷரே, இந்த யாத்திரைக் கப்பலில் உள்ள ௰
சரக்குகளுக்கும் கப்பல்களுக்கும்மாத்திரம் அல்
ல, நம்முடைய சீவனுக்குங்கூட வருத்தமும்†
மிகுந்த சேதமுமாய் இருக்கும் என்று காண்கி
றேன் என்று எச்சரித்தான்.—சேனைத்தலைவன் ௰௧
பவுலினால் சொல்லப்பட்டவைகளிலும், மாலு
மியையும் கப்பற்காரனையும் அதிகமாய் நம்பி
னான். — அல்லாமலும் அந்தத் துறை மழைகா ௰௨

1 அப். உக. ௩௰, ௩௧.—2 லூக். உ௪. உஎ,௪௪. அப் உ௪. ௰௪: உ௮. உக. உரோ. ௩. உக.
3 யோவா. ௫. ௪௬.—4 லூக். உ௪. உ௬,௪௬.—5 க கொரி. ௰௫. உ௰. கொலோ. க. ௰௮. வெளி க. ௫.
6 லூக் உ. ௩௨.—7 உ இரா. ௯. ௰௧. யோவா.௰.உ௰. க கொரி.௧. உ௩: உ. ௰௩, ௰௪: ௪. ௩.
8 க கொரி. எ. எ.—9 அப். உ௩. ௯,உ௯: உ௫ உ௫.-10 அப் உ௫. ௰௧.—11 அப். உ௫. ௰உ, உ௫.
12 அப்.௰௯ உ௯.-13 அப். உ௪. உ௩: உ௮.௰௬.—14 ஏழாம் மாதத்தின் பத்தாம் நாள் உபவாச நாளாயிருந்தது; ௩ மோ. உ௩. உஎ, உ௯.

* அல்லது கந்தி.—† அல்லது கஷ்டமும்.

லத்தில் தங்குதற்குத் தகுதி அல்லாதபடியினாலே
தென்மேற்கேயும் வடமேற்கேயும் நோக்குகிற
பேனிக்ஸ் என்னும் கிரேத்தை தீவின் துறைமுகத்
திலே மழைகாலத்திற்குத் தங்குதற்கு அங்கே சே
ரக்கூடுமானால், சேரும்படிக்கு இவ்விடம்விட்
டுப் புறப்படவேண்டுமென்று அநேகம்பேர் ஆ
லோசனை சொன்னார்கள்.
௧௩ மேலும் தென்றல் மெதுவாய் அடித்தபடியால்,
அவர்கள் தங்கள் யோசனையின்படி நிச்சயமாய்
நடக்குமென்று எண்ணி அவ்விடம்விட்டுப்
பெயர்ந்து, கிரேத்தை தீவுக்கு அருகாய்ப்போனார்
௧௪ கள். — சிலகாலத்திற்குப் பின்பு, ஐரோக்கிலி
தோன் என்னப்பட்ட கடுங்காற்று அதில் மோ
௧௫ திற்று.*—கப்பல் அதில் அகப்பட்டுக்கொண்டு
காற்றுக்கு எதிர்த்துப் போகமாட்டாதபடியினா
லே, நாங்கள் காற்றின் போக்கிலே கொண்டு
௧௬ போகப்பட்டோம். — அப்படி கலவுதை என்
னப்பட்ட ஒரு சிறிய தீவைக் கடந்து ஓடுகை
யில், ஓடத்தை வசப்படுத்திக்கொள்ளுதற்கு மி
௧௭ குந்த வருத்தம் உண்டாயிருந்தது.—அதை அவர்
கள் தூக்கி எடுத்த பின்பு, எல்லாருடைய உதவி
யினாலும் கப்பலைச் சுற்றிக் கட்டி, சொரிமணல்
லிலே விழுவோம் என்று பயந்து, பாய்களை
இறக்கி, இவ்விதமாய்க் கொண்டுபோகப்பட்
௧௮ டோம்.-மேலும் நாங்கள் பெருங்காற்று மழையி
னாலே மிகவும் அடிக்கப்பட்டபடியால், மறுநா
ளிலே சில பாரத்தைக் கடலில் எறிந்தார்கள்.—
௧௯ மூன்றாம் நாளிலே கப்பலின் [1]தளபாடங்களை
௨௰ எங்கள் கைகளினாலே எடுத்து எறிந்தோம்.—அ
நேக நாளாய்ச் சூரியனாகிலும் நட்சத்திரங்களா
கிலும் காணப்படாமல் மிகுந்த பெருங்காற்றும்
மழையும் எங்களைச் சூழ்ந்திருந்தபடியினாலே,
தப்பிப்போவதற்கான நம்பிக்கையெல்லாம் அற்
றுப்போயிற்று.
௨௧ அப்படியிருக்கையில், மிகுந்தகாலம் அவர்கள்
போசனம்பண்ணாமல் இருந்தபொழுது பவுல்
அவர்களுக்குள்ளே எழும்பிச் சொன்னதாவது:
புருஷரே, இந்த வருத்தமும் சேதமும் வாராதப
டிக்கு, நீங்கள் என் சொல்லுக்குச் செவிகொ
டுத்து, கிரேத்தை தீவைவிட்டுப் புறப்படாமல்
௨௨ இருக்கவேண்டியதாயிருந்தது. — இப்பொழுது
திடச்சித்தமாயிருங்கள் என்று உங்களை வேண்
டிக்கொள்ளுகிறேன்; கப்பல்சேதமே அன்றி,
உங்களில் ஒருவனுக்கும் பிராணசேதம் வருவ
௨௩ தில்லை. — எப்படியென்றால், [2]நான் ஆதீனமா
யிருந்து ஆராதனைசெய்கிற [3]பராபரனுடைய
தூதன் இந்த இராத்திரியிலே என்னிடத்தில் வந்
து நின்று பவுலே, பயப்படாதிரு; நீ இராயனுக்
௨௪ கு முன்பாக நிற்கவேண்டும்.-அல்லாமலும் உன்
னுடனேகூட யாத்திரையாய் வருகிற யாவரை
யும் பராபரன் உனக்குத் தயவுபண்ணினார் என்
றான்.—ஆனபடியினாலே புருஷரே, திடச்சித்த ௨௫
மாயிருங்கள், [4]எனக்குச் சொல்லப்பட்ட பிரகா
ரமாகவே நடக்கும் என்று பராபரனை நம்புகி
றேன்.—நாம் [5]ஒரு தீவிலே விழுகிறதுமாத்திரம் ௨௬
நடக்கவேண்டும் என்றான்.
பதினாலாம் இராத்திரியானபொழுது நாங் ௨௭
கள் ஆதிரியாகடலில் அலைந்து திரிகையில், நடுச்
சாமத்திலே கப்பலாள்களுக்கு ஒரு கரை கிட்டி
யிருக்கிறதாய்த் தோன்றிற்று.—உடனே அவர் ௨௮
கள் சலத்தின் அளவைச் சோதித்து, இருபது பா
கம் என்று கண்டார்கள்; சற்று அப்புறம்போன
பொழுது, மறுபடியும் சோதித்துப் பதினைந்து
பாகம் என்று கண்டு,-பாறை இடங்களில் விழு ௨௯
வோம் என்று பயந்து, கப்பலில் பின்பக்கத்தி
லிருந்து நான்கு நங்கூரங்களைப் போட்டு, உத
யம் எப்பொழுது உண்டாகும் என்று இருந்தார்
கள்.
அப்பொழுது கப்பல் மனிதர்கள் கப்பலை ௩௰
விட்டு ஓடிப்போக வகைதேடி, தாங்கள் கப்
பலின் முன்பக்கத்திலிருந்து நங்கூரங்களைப்
போட மனதுள்ளவர்கள்போல, ஓடத்தைக் கட
லில் இறக்குகையில்,—பவுல் சேனைத்தலைவனை ௩௧
யும் போர்ச்சேவகரையும் நோக்கி, இவர்கள் கப்
பலில் இராவிட்டால் நீங்கள் தப்பிப்போகமாட்
டீர்கள் என்றான்.—அப்பொழுது போர்ச்சேவ ௩௨
கர் ஓடத்தின் கயிறுகளை அறுத்து, அதைத் தாழ
விழவிட்டார்கள்.
உதயமாகத் தொடங்கினபொழுது எல்லா ௩௩
ரும் போசனம்பண்ணுதற்குப் பவுல் அவர்களைத்
தயிரியப்படுத்திச் சொன்னதாவது: நீங்கள் ஒன்
றும் சாப்பிடாமல் பட்டினியாய்க் காத்திருந்து
இன்று பதினாலாம் நாளாயிற்றே.—ஆகையால் ௩௪
போசனம்பண்ணும்படி உங்களுக்குப் புத்தி
சொல்லுகிறேன்; நீங்கள் தப்புவதற்கு அதுவே
உதவியாயிருக்கும்; [6]உங்கள் தலைகளிலிருந்து
ஒரு மயிரும் விழாது என்று சொல்லி,—அப்பத் ௩௫
தை எடுத்துக்கொண்டு, எல்லார்முன்பாகவும்
[7]பராபரனைத் தோத்திரித்து, அதைப் பிட்டுப்
புசிக்கத்தொடங்கினான். — அப்பொழுது மற் ௩௬
றெல்லாரும் திடச்சித்தம் அடைந்து, போசனம்
பண்ணினார்கள்.-கப்பலில் [8]இருநூற்று எழுபத் ௩௭
தாறுபேர் இருந்தோம். — திருப்தியாகப் புசித்த ௩௮
பின்பு அவர்கள் கோதுமையைக் கடலில்
எறிந்து, கப்பலை லெகுவாக்கினார்கள்.
உதயமானபொழுது இன்னபூமியென்று அறி ௩௯
யாமல், சமமான கரையுள்ள ஒரு துறைமுகத்
தைப் பார்த்து, அங்கே போகக்கூடுமானால் அவ்
விடத்திற்குத்தானே கப்பலைப் போகப்பண்ண
வேண்டும் என்று யோசனையாயிருந்து, — நங் ௪௰
கூரங்களை அறுத்துக் கடலிலே விட்டு, † சுக்கா
னுடைய கயிறுகளையும் தளரவிட்டுச் சிறிய பா

1 யோனா. ௧. ௫ —2 தானி. ௬. ௰௬. ௨ரோ. ௧. ௯. ௨ தீமோ. ௧. ௩ 3 அப். ௨௩. ௰௧. 4 லூக். ௧. ௪௫ ௨ரோ. ௪. ௨௰,௨௧. ௨ தீமோ ௧. ௰௨ 5 அப். ௨௮. ௧.—6 ௧ இரா. ௧. ௫௨. மத். ௰. ௩௰ லூக். ௰௨. ௭: ௨௧. ௰௮. 7 ௧ சாமு ௯. ௰௩. மத். ௰௫. ௩௬. மாற். ௮ ௬ யோவா. ௬ ௰௧. ௧ தீமோ. ௪. ௩. ௪.—8 அப். ௨ ௪௧. ௭. ௰௪. ௨ரோ. ௰௩. ௧ ௧ பே. ௩. ௨௰.

* அல்லது எழும்பிற்று.—† அல்லது சுக்கானிழுத்துக் கட்டுகளை போனபொழுது.

யைக் காற்றுக்கு விரித்துக் கரைக்கு நேராய்ப்
௪௧ போகையில்,—[1]இருபுறமும் கடலுள்ள ஓர் இடத்
திலே சென்று, கப்பல் தட்டிற்று; அதின் முன்
பக்கம் அசையாமல் ஊன்றியிருந்தது; பின்பக்
கம் அலைகளின் பலத்தினாலே உடைந்துபோ
௪௨ யிற்று.—அப்பொழுது காவலில் இருந்தவர்களில்
ஒருவனும் நீந்தி ஓடிப்போகாதபடிக்கு, அவர்
களைக் கொலைசெய்யவேண்டும் என்று போர்ச்
௪௩ சேவகர் யோசனையாயிருந்தார்கள். — அவர்க
ளுடைய தலைவன் பவுலைக் காப்பாற்ற மனதாய்
அவர்களுடைய யோசனையைத் தடுத்து நீந்தத்தக்
கவர்கள் முந்திக் கடலில் விழுந்து கரையேற
௪௪ வும், — மற்றவர்களில் சிலர் பலகைகளின்மே
லும் சிலர் கப்பல் துண்டுகள்மேலும் போய்க்
கரையேறவும் கட்டளையிட்டான்; [2]இவ்விதமாய்
எல்லாரும் தப்பிக் கரைசேர்ந்தார்கள்.

## ௨௮. அதிகாரம்.

*௧. கப்பல் சேதமான பின்பு பவுல் அந்நியசாதியாரால் அங்கிகரிக்கப்பட்டது. ௫. அவன் கையைச் சுற்றிக்கொண்ட விஷப்பூச்சி அவனைத் தீண்டாதிருந்தது. ௮. அவன் அந்தத் தீவில் அநேக வியாதிக்காரரைச் சொஸ்தமாக்குகிறது. ௰௬. உரோமபுரிக்குப் போனது. ௰௭. தான் வந்த நோக்கத்தை யூதர்களுக்கு அறிவித்தது. ௨௪. அவன் பிரசங்கித்த பின்பு சிலர் விசுவாசித்ததும், சிலர் விசுவாசியாமற்போனதும், ௩௰. அங்கே இரண்டுவருஷகாலம் பிரசங்கித்துக்கொண்டிருந்தது.*

௧ அவர்கள் தப்பிக் கரைசேர்ந்த பின்பு, [3]அந்தத்
தீவின்பேர் மெலித்தா என்று அறிந்தார்கள்.—
௨ [4]அந்நியராகிய அந்தத் தீவார் எங்களுக்கு மிகுந்த
அன்பைக் காண்பித்தார்கள்; அவ்வேளையில்
இருந்த மழைக்காகவும் குளிர்ச்சிக்காகவும் அவர்
கள் நெருப்பை உண்டுபண்ணி, எங்கள் அனை
வரையும் சேர்த்துக்கொண்டார்கள்.
௩ அப்பொழுது பவுல் சில விறகுகளை வாரி அந்த
நெருப்பின்மேல் போடுகையில், ஒரு விரியன்
பாம்பு அனலினாலே புறப்பட்டு, அவனுடைய
௪ கையைச் சுற்றிக்கொண்டது. — தீவார் அந்தப்
பொல்லாத பூச்சியை அவனுடைய கையிலே
தொங்கக்கண்டபொழுது, மெய்யாய் இந்த மனி
தன் கொலைபாதகன், இவன் சமுத்திரத்திற்குத்
தப்பிவந்தும், பழியானது இவனைப் பிழைக்க
ஒட்டவில்லை என்று தங்களுக்குள்ளே சொல்
௫ லிக்கொண்டார்கள்.—அவன் அந்தப் பூச்சியைத்
தீயிலே உதறி, [5]ஒரு தீமையும் அடையாதிருந்
௬ தான்.—அவர்கள் இவன் வீக்கங்கொண்டு சடுதி
யாய் மரித்து விழுவானென்று காத்திருந்தார்கள்;
மிகுந்த காலம் அவர்கள் அப்படிக் காத்திருந்து,
சேதம் எவ்வளவும் அவனுக்கு வராததைக்
கண்டபொழுது, அவர்கள் வேறு சிந்தையை
அடைந்து, [6]அவனைத் தேவனென்று சொல்லிக்
கொண்டார்கள்.
௭ மேலும் அவ்விடத்திற்குச் சமீபமாய் அந்தத்
தீவுக்கு முதலாளியாகிய புபிலியென்று பேர்
கொண்டவனுடைய காணி பூமி இருந்தது;
அவன் எங்களை ஏற்றுக்கொண்டு, மூன்றுநாளும்
பட்சமாய் விசாரித்துக்கொண்டான்.—புபிலியி ௮
னுடைய தகப்பன் சுரத்தோடும் கழிச்சலோ
டும்கிடந்தான்; பவுல் அவனிடத்தில் போய்ச்
[7]செபம்பண்ணி, [8]அவன்மேலே தன் கைகளை
வைத்து, அவனைக் குணமாக்கினான்.—அப்படி ௯
நடந்தபொழுது, தீவிலே இருந்த மற்ற வியாதிக்
காரரும் வந்து குணமாக்கப்பட்டார்கள்.—அவர் ௰
கள் [9]எங்களை மிகவும் கனஞ்செய்து, நாங்கள்
கப்பல் ஏறினபொழுது, எங்களுக்கு வேண்டிய
வைகளை ஏற்றினார்கள்.
மூன்றுமாதம் சென்றபின்பு, தீவிலே மழை ௰௧
காலத்திற்குத் தங்கியிருந்த மிதுனம் என்னும்
அடையாளமுள்ள அலெக்சந்தரி பட்டணத்
துக் கப்பலிலே நாங்கள் ஏறிப் புறப்பட்டுப்
போய்,—சீர்க்கூசை பட்டணத்தைச் சேர்ந்து, ௰௨
அங்கே மூன்றுநாள் தங்கி,—பின்பு அவ்விடம் ௰௩
விட்டு (சிசிலிதீவைச்) சுற்றியோடி, இரேகியு
பட்டணத்தில் சேர்ந்து, ஒருநாளுக்குப் பின்
தென்றல்காற்று எடுக்கையில், இரண்டாம் நாளி
லே புத்தேயோலி பட்டணத்திற்குப் போய்,—
அங்கே சகோதரரைக் கண்டோம்; அவர்கள் ௰௪
ஏழுநாள் தங்களிடத்தில் இருக்கும்படி எங்களை
வேண்டிக்கொண்டார்கள்; அந்தப்படி நாங்கள்
(இருந்து), பின்பு உரோமைபுரிக்குப் போ
னோம்.—அவ்விடத்திலுள்ள சகோதரர் எங்கள் ௰௫
சங்கதிகளைக் கேள்விப்பட்டுப் புறப்பட்டு,
(சிலர்) அப்பியுபுரமென்னும் இடம்வரைக்கும்
(சிலர்) மூன்றுசத்திரமென்னும் இடம்வரைக்
கும் எங்களுக்கு எதிர்கொண்டு வந்தார்கள்;
அவர்களைப் பவுல் கண்டு, பராபரனைத் தோத்தி
ரம்செய்து, திடன்கொண்டான்.
உரோமைபுரியில் நாங்கள் சேர்ந்தபொழுது, ௰௬
சேனைத்தலைவன் தன் காவலில் இருந்தவர்களைச்
சேனாதிபதிக்கு ஒப்புக்கொடுத்தான், [10]அப்பொ
ழுது பவுல் தன்னைக் காத்திருக்கும்படியான சே
வகனுடனேகூடத் தனித்திருக்கும்படிக்கு உத்த
ரவு பெற்றுக்கொண்டான்.—மூன்று நாளுக்குப் ௰௭
பின்பு பவுல் யூதரில் பிரதானமானவர்களைக்
கூடி வரவழைத்தான், அவர்கள் கூடி வந்திருந்த
பொழுது, அவன் அவர்களுடனே சொன்ன
தாவது: சகோதரர்களே, (நம்முடைய) [11]சனங்
களுக்காவது முன்னோர்களின் முறைமைகளுக்
காவது விரோதமானது ஒன்றையும் நான் செய்
யாமலிருந்தும், [12]காவலில் வைக்கப்பட்டு, எரு
சலேமிலிருந்து உரோமர் கைகளில் ஒப்புக்கொ
டுக்கப்பட்டேன்.—[13]அவர்கள் என் காரியத்தை ௰௮
விசாரித்தபொழுது, மரணத்திற்கு ஏதுவான குற்
றம் ஒன்றையும் என்னிடத்தில் காணாதபடியி
னாலே, என்னை விடுதலையாக்க மனதாய் இருந்
தார்கள்.—யூதர்கள் எதிர்பேசினபொழுது, [14]நான் ௰௯

1 ௨ கொரி. ௰௧. ௨௫.—2 ௨௨. ௩௪.
3 அப். ௨௭. ௨௬.—4 உரோ. ௧. ௰௪.
௧ கொரி. ௰௪. ௰௧. கொலோ. ௩. ௰௧.
5 மாற். ௰௬. ௰௮. லூக். ௰. ௰௯.
6 அப். ௰௪. ௰௧.—7 யாக். ௫. ௰௪.
௰௫.—8 மாற். ௬. ௫: ௭. ௩௨: ௰௬.
௰௮. லூக். ௪. ௪௰. அப். ௰௯. ௰௧,
௰௨. ௧ கொரி. ௰௨. ௯, ௨௮.
9 மத். ௰௫. ௬. ௧ தீமோ. ௫. ௰௭.
10 அப். ௨௪. ௨௫: ௨௭. ௩.
11 அப். ௨௪. ௰௨, ௰௩: ௨௫. ௮.
12 அப். ௨௧. ௩௩.
13 அப். ௨௨. ௨௪: ௨௩. ௨௯: ௨௫. ௮:
௨௬. ௩௧.—14 அப். ௨௫. ௰௧.

இராயருக்கு அபயமிடும்படிக்குப் பலவந்தப்
பட்டேன்; என் தேசத்தார்மேலே யாதொரு குற்
றம்சாற்ற மனதில்லாமல் அப்படிச்செய்தேன்.—
உ௰ இந்தச் சங்கதியைக்குறித்து நான் உங்களைக்
காணவும் உங்களுடனே பேசவும் உங்களை
அழைப்பித்தேன். [1]இஸ்ரவேலருடைய நம்பிக்
கையின் நிமித்தமே [2]இந்தச் சங்கிலியால் கட்ட
உக ப்பட்டிருக்கிறேன் என்றான்.—அவனுடனே அ
வர்கள் சொன்னதாவது: உன்னைக்குறித்து யூதே
யாவிலிருந்து காகிதங்கள் எங்களிடத்தில் வரவு
மில்லை; (அங்கே இருந்து) வந்த சகோதரரில்
ஒருவனும் உன்மேல் பொல்லாங்கை அறிவித்
உஉ துச் சொல்லவுமில்லை —[3]இந்த மார்க்கவகுப்பு
எங்கும் விரோதமாய்ப் பேசப்படுகின்றதென்று
நாங்கள் அறிந்திருக்கிறபடியால், நீ சிந்திக்கிற
வைகளை உன்னிடத்திலே கேட்க விரும்புகி
றோம் என்றார்கள்.

உ௩ அதற்காக அவர்கள் அவனுக்குக் குறித்தநா
ளிலே, அநேகம்பேர் அவன் தங்கின இடத்தி
லே சேர்ந்தார்கள்; அப்பொழுது அவன் காலை
தொடங்கிச் சாயங்காலம்வரைக்கும் [4]மோசே
யின் வேதநூலிலும் தீர்க்கதரிசிகளின் ஆகமங்க
ளிலுமிருந்து [5]இயேசுவுக்குரியவைகளை அவர்
களுக்குப் போதித்து, பராபரனுடைய இராச்சி
யத்தைக்குறித்துச் சாட்சிகொடுத்து, வியாக்கியா
உ௪ னம்பண்ணினான்.—அவன் சொன்னவைகளைச்
[6]சிலர் ஒத்துக்கொண்டார்கள்; சிலர் விசுவாசியா
உ௫ திருந்தார்கள். — இப்படி அவர்கள் ஒருவரோ
டொருவர் இசைவாயிராமல் வெளியே போகை
யில், பவுல் அவர்களுக்குச் சொன்ன ஒரே வாக்
கியமாவது:—இந்தச் சனங்கள் [7]கண்களினாலே உ௬
காணாமலும் காதுகளினாலே கேளாமலும் இரு
தயத்தினால் சிந்தித்துக்கொள்ளாமலும் மனம்
திரும்பாமலும் என்னால் ஆரோக்கியம் அடை
யாமலும் இருக்கும்படிக்கு, இவர்கள் கடினமா
க்கப்பட்ட இருதயமுடையவர்களுமாய் வருத்
தத்தோடே கேட்கிற காதுள்ளவர்களுமாய்
மூடிக்கொண்டிருக்கிற கண்களையுடையவர்க
ளுமாய் இருக்கிறபடியினாலே,—நீங்கள் உற்றுக் உ௭
கேட்டாலும் சிந்தித்துக்கொள்ளாமல் இருப்பீர்
கள், உற்றுப்பார்த்தாலும் அறியாமலிருப்பீர்கள்
என்று இந்தச் சனங்களிடத்திற்குப் போய்ச்
சொல் என்கிறதைப் பரிசுத்த ஆவி ஏசாயா தீர்க்
கதரிசியைக்கொண்டு நம்முடைய முன்னோர்
களுடனே நன்றாய்ச் சொன்னார். — ஆதலால் உ௮
[8]பராபரனுடைய இரட்சிப்பு புறத்தேசத்தார்
களுக்கு அனுப்பப்பட்டதென்று நீங்கள் அறிந்
துகொள்வீர்களாக; அவர்களே அதற்குச் செவி
கொடுப்பார்கள் என்றான்.—இவைகளை அவன் உ௯
சொன்னபின்பு, யூதர்கள் தங்களுக்குள்ளே மிக
வும் தருக்கம்பண்ணிக்கொண்டுபோய்விட்டார்
கள்.

பின்பு பவுல் தனக்காகக் கூலிக்கு வாங்கியி ௩௰
ருந்த வீட்டிலே இரண்டு வருஷம் முழுவதும்
தங்கி, தன்னிடத்தில் வந்த யாவரையும் ஏற்றுக்
கொண்டு,—[9]மிகுந்த தயிரியத்தோடும் தடையில் ௩௧
லாமலும் பராபரனுடைய இராச்சியத்தைக்குறித்
துப் பிரசங்கித்து, கர்த்தராகிய இயேசுக்கிறிஸ்து
வின் விசேஷங்களை உபதேசித்துக்கொண்டு
வந்தான்.—ஆமன்.

---

1 அப். உக. ௬, எ.—2 அப். உக. உ௪. ௫, ௰௪. ௧ பே. உ. ௰உ: ௪. உ௬. எபே. ௬. ௧: ௪. ௧: ௧. உ௰. உ தீமோ. ௧. ௰௬; உ. ௯. பிலே. ௰. ௰௩.—3 லூக். உ. ௩௪. அப். ௰௪.—4 லூக். உ௪. ௨௭. அப். ௰எ. ௩: ௰௯. அ.—5 அப். உக. ௬, உஉ.—6 அப். ௰௪. ௪: ௰எ. ௪: ௰௯. ௯.—7 ஏசா. ௬. ௯. எரே. ௫. உக. எசே. ௰உ. உ. மத். ௰௩. ௰௪ ௰௫. மாற். ௪. ௰உ. லூக். ௰௯. அ.—8 மத். உக. ௪௧, ௪௩. அப். ௰௩. ௪௬, ௪எ: ௰அ. எ: உஉ. உக: உ௯. ௰எ, ௰அ. உ ரோ. ௰௧. ௰௧. அ. ௰. யோவா. ௰உ. ௪௰. உரோ. 9 அப். ௪. ௩௧. எபே. ௬. ௰௯.

ROMANS.

அப்போஸ்தலனாகிய பவுல்

# உரோமாபுரியருக்கு

## எழுதின நிருபம்.

### க. அதிகாரம்.

க. பவுல் உரோமருக்குத் தான் அப்போஸ்தல அதிகாரம் பெற்றதையும், கூ. அவர்களிடத்திற்குச் செல்ல விரும்பினதையும் காட்டினது. யசு. தான் பிரசங்கிக்கும் சுவிசேஷம் இன்னதென்றும், அதினால் விளங்கும் நீதி இன்னதென்றும் காண்பித்தது. யஅ. எல்லாவிதப் பாவங்களைக் குறித்துப் பராபரன் கோபத்தையும், உக. அஞ்ஞானிகள் செய்யும் பாவங்கள் இன்னவைகளென்பதையும் காட்டினது.

க [1]மனிதத் தன்மையின்படிக்குத் தாவீதின் சந்த
உ தியில் [2]பிறந்தவருமாய்,–[3]பரிசுத்தமுள்ள ஆவிக்
குரிய தன்மையின்படிக்கு மரித்தோரிலிருந்து
எழுந்ததினாலே [4]பராபரனுடைய குமாரன்
என்று பலமாய்க் காண்பிக்கப்பட்டவருமாய்,*
தேவகுமாரனுமாய், நம்முடைய கர்த்தருமாய்,–
ங தம்மாலே அழைக்கப்பட்ட உங்களோடேகூட
[5]உலகத்தார் யாவரையும் [6]தமது திருநாமத்தின்
நிமித்தம் விசுவாசத்திற்குக் கீழ்ப்படியப்பண்
ச ணும்பொருட்டு, † — [7]எங்களுக்குக் கிருபை
யையும் அப்போஸ்தல பட்டத்தையும் கொடுத்
தவருமாய் இருக்கிற இயேசுக்கிறிஸ்துவைக்கு
ரு றித்து,—[8]பராபரன் தம்முடைய தீர்க்கதரிசிக
ளினாலே [9]பரிசுத்த வேதவாக்கியங்களில் முன்
வாக்குத்தத்தம் பண்ணியிருந்த [10]சுவிசேஷத்
திற்காகப் பிரித்து எடுக்கப்பட்டும், [11]அப்போஸ்
சு தலனாக அழைக்கப்பட்டும்,—இயேசுக்கிறிஸ்
துவின் ஊழியக்காரனாயும் இருக்கிற பவுல்,—
எ [12]உரோமைபுரியிலுள்ள தேவப்பிரியரும் அ
ழைக்கப்பட்ட பரிசுத்தருமாகிய அனைவருக்
கும் (எழுதுகிறதாவது): [13]நம்முடைய பிதாவா
கிய பராபரனாலும் கர்த்தராகிய இயேசுக்கிறிஸ்
துவினாலும் உங்களுக்குக் கிருபையும் சமாதான
மும் உண்டாவதாக.

[14]உங்கள் விசுவாசத்தைக்குறித்து உலகத்தில் அ
எங்கும் பேசிக்கொள்ளுகிறபடியினாலே, முத
லாவது நான் உங்கள் எல்லாருக்காகவும் இயே
சுக்கிறிஸ்துமூலமாய் [15]என்னுடைய பராபர
னைத் தோத்திரம் செய்கிறேன். — பராபரனு கூ
டைய குமாரனுக்குரிய சுவிசேஷத்திலே [16]நான்
என் (முழு) மனதோடும் ‡ அவருக்கு ஊழியம்
செய்துவருகிறேனே; [17]அவர் நான் இடைவிடா
மல் உங்களை நினைத்துக்கொண்டிருக்கிறதைக்கு
றித்துச் [18]சாட்சியாய் இருக்கிறார்.—நீங்கள் ஸ்தி ய
ரப்படுவதற்காகச் [19]சில ஞானவரங்களை உங்க
ளுக்குக் கொடுக்கும்படிக்கு, நான் உங்களைக்
காண மிகவும் ஆசையாயிருக்கிறபடியினாலே,–
நான் உங்களிடத்தில் வருகிறதற்கு, [20]பராபரனு யக
டைய சித்தம் எனக்கு நல்ல பிரயாணம் கிடைக்
கப்பண்ணவேண்டும் என்று [21]எப்பொழுதும்
என் செபங்களில் வேண்டிக்கொள்ளுகிறேன்.-
உங்களிலும் என்னிலுமுள்ள விசுவாசத்தினா யஉ
லே [22]நாம் ஒருவருக்கொருவர் § ஆறுதலாய் இரு
க்கும்படிக்கே, அப்படிச் செய்துவருகிறேன்.
சகோதரர்களே, [23]மற்றத் தேசத்தாருக்குள்ளே யங
நான் பலனை அடைந்ததுபோல, உங்களுக்குள்
ளும் ‖ சில பலனை அடையும்பொருட்டாக,
[24]உங்களிடத்தில் வர அடிக்கடி மனதாயிருந்
தேன்; [25]ஆகிலும், இதுவரைக்கும் எனக்குத்
தடை உண்டாயிற்று என்று அறிவீர்களாக.—
[26]கிரேக்கருக்கும் அந்நிய சனங்களுக்கும், ஞா யச
னிகளுக்கும் மூடருக்கும் நான் கடனாளியாய்
இருக்கிறேனே.—ஆதலால் [27]முதலாவது, யூதரி யரு
லும் பின்பு கிரேக்கரிலும் எவன் கிறிஸ்துவின்

---

1 போவா. க. யச. கலா. ச. ச. 2 மத். க. சு, யக. லூக். க. கஉ. அப். உ. கம். உ தீமோ. உ. அ. 3 எபி. கூ. யச.—4 அப். யங. கங. 5 அப். கூ. எ. உரோ. யக. உஇ. 6 அப். கூ. யஇ.—7 உரோ. யஉ. க: யஇ. யஇ. க கொரி. யஇ. ம. கலா. க. யஇ: உ. கூ. எபே. க. யக. 8 உரோ. க. உக: யசு. உஇ. கலா. க. அ.—9 அப். உக. கூ. தீத். க உ. 10 அப். கூ. யஇ: யங. உ. கலா. க. யஇ. 11 அப். உஉ. உக. க கொரி. க. க. கலா. க. க. க தீமோ. க. யக: உ. எ. உ தீமோ. க. யக.—12 உரோ. கூ. உச. க கொரி. க உ. க தெச. ச. எ. 13 க கொரி. க. ங. உ கொரி. க. உ.

கலா. க. ங.—14 உரோ. யக. யகூ. க தெச. க. அ.—15 க கொரி. க. எ. பிலி. க. ச. கொலோ. க. ங, ச. க தெச. க. உ. பிலே. இ. 16 அப். உஎ. உங. உ தீமோ. க. ங. 17 க தெச. ங. ம.—18 உரோ. கூ. க. உ கொரி. க. உங. பிலி. க. அ. க தெச. உ. இ. 19 உரோ. யரு. உகூ.- 20 யாக். ச. யஇ. 21 உரோ. யஇ. உங, ஙஉ. க தெச. ங. ம. 22 தீத். க. ச. உ பே. க. க. 23 பிலி. ச. யஎ.-24 உரோ. யஇ உங. 25 அப். யகூ. எ. க தெச. உ. யஅ. 26 க கொரி. கூ. யக.—27 லூக். உ. உகூ, ஙங: உச. சஎ. அப். ங. உங: யங. உகூ, சகூ. உரோ. உ. ம.

* கிரேக்கு, நிச்சயமாக்கப்பட்டவருமாய்.—† அல்லது கீழ்ப்படியும்பொருட்டு.—‡ அல்லது ஆவியிலே; போவா. ச. உங, உச. பிலி. ங. ங.
§ அல்லது உங்களோடு நான்.—‖ அல்லது உங்களிடத்திலும்.

சுவிசேஷத்தை விசுவாசிக்கிறனே,[1]அவனுக்கு
இரட்சிப்பு உண்டாகும்படிக்கு அந்தச் சுவி
சேஷம் தேவபலமுள்ளதாய் இருக்கிறபடியினு
௰௬ லே,—[2]நான் அதைக்குறித்து வெட்கப்படாமல்,
என்னுடைய கிராணியின்படி அதை உரோமை
புரியில் உள்ள உங்களுக்கும் பிரசங்கம்பண்ண
விரும்புகிறேன்.

௰௭ [3]விசுவாசத்தினுலே நீதிமானுனவன் பிழைப்
பான் என்று எழுதியிருக்கிறபடி, [4]விசுவாசத்தி
னுலாகும் தேவநீதி விசுவாசத்திற்கு ஏதுவென்று
அந்தச் சுவிசேஷத்தில் வெளிப்படுத்தப்பட்டி
ருக்கின்றது.

௰௮ என்னத்தினுலெனில் [5]சத்தியத்தை அநியாயத்
தினுலே அடக்கிக்கொள்ளுகிற மனிதருடைய
எல்லாவித அவபத்திக்கும் அநியாயத்திற்கும்
விரோதமாய்ப் பராபரனுடைய கோபம் வானத்
௰௯ திலிருந்து வெளிப்படுகின்றது. — அதெப்படி
யென்றல்,[6]பராபரனைக்குறித்து அறியப்படுவது
அவர்களுக்குள்ளே *வெளிப்பட்டிருக்கின்றது;
[7]பராபரனே அதை அவர்களுக்கு வெளிப்படுத்
௨௰ தினர்.—எப்படியென்றல், உலகம் உண்டானது
முதற்கொண்டு [8]அவருடைய நித்திய வல்லமை
தேவத்துவம் என்பவைகள் காணப்படாதவைக
ளாயிருந்தும், உண்டாக்கப்பட்டிருக்கிற வஸ்
துக்களினுலே தெளிவாய் அறியப்படும்; ஆத
லால் அவர்கள் போக்குச் சொல்லிக்கொள்ளுகி
௨௧ றதற்கு இடமில்லை.† — அவர்கள் பராபரனை அ
றிந்தும் அவரைப் பராபரன் என்று புகழாமலும்
தோத்திரம் செய்யாமலும் இருந்து, [9]தங்கள் யோ
சனைகளினுலே வீணரானர்கள்; புத்தியில்லாத
அவர்களுடைய இருதயம் இருள் அடைந்தது.—
௨௨ [10]அவர்கள் தங்களை ஞானிகளென்று சொல்லிப்
௨௩ பயித்தியக்காரராகி, — [11]அழிவில்லாத தேவனு
டைய மகிமையை அழிவுள்ள மனிதர், பறவை
கள், மிருகங்கள், ஊர்வன என்றிவைகளுடைய
சொரூபமாக மாற்றினர்கள்.

௨௪ அதற்காக [12]அவர்கள் தங்கள் இருதயங்களின்
இச்சைகளினுலே [13]ஒருவரோடொருவர் தங்கள்
சரீரங்களைக் கனஈனப்படுத்தத்தக்கதாக, பரா
பரன் [14]அவர்களை அசுத்தத்திற்கு ஒப்புக்கொடுத்
௨௫ தார்.—[15]பராபரனைக்குறித்து அறிந்த சத்தியத்தை
[16]அவர்கள் பொய்யாக மாற்றி, என்றென்றைக்
கும் துதிக்கப்படத்தக்க சிருஷ்டிகரைப்பார்க்கி
லும்‡ சிருஷ்டியைத் தொழுதுகொண்டு சேவித்
௨௬ தபடியினுலே,—பராபரன் அவர்களை [17]இகழ்ச்சி
யுள்ள ஆசைகளுக்கு ஒப்புக்கொடுத்தார்; அந்
தப்படி அவர்களுடைய பெண்கள் சுபாவ அநு
போகத்தைச் சுபாவத்திற்கு விரோதமான அநு
போகமாக மாற்றினர்கள்.—அதுபோல ஆண்க ௨௭
ளும் பெண்களைச் சுபாவப்படி அநுபவியாமல்,
தங்கள் மோக இச்சைகளினுலே ஒருவருக்கொ
ருவர் பொங்கி ஆணேடே ஆண் அவலட்சண
மானதை நடப்பித்து, இவ்விதமாகத் தங்கள் தப்
பிதத்திற்குத் தகுதியான பலனைத் தங்களிடத்
திலே பெற்றுக்கொண்டார்கள்.—அறிவினுலே ௨௮
பராபரனைப் பற்றிக்கொள்ளும்படிக்கு§ அவர்
கள் கவலைப்படாமல் இருந்தபடியால், [18]தகாத
வைகளைச் செய்யும்படி மந்தமுள்ள || மனதுக்
குப் பராபரன் அவர்களை ஒப்புக்கொடுத்தார்.—
அவர்கள் எல்லாவித அநீதியினுலும் வேசித்த ௨௯
னத்தினுலும் பொல்லாங்கினுலும் பொருளாசை
யினுலும் தீமையினுலும் பொருமையினுலும்
கொலையினுலும் வாக்குவாதத்தினுலும் தந்திரத்
தினுலும் துர்க்குணத்தினுலும் நிறைந்தவர்களு
மாய்,—புறங்கூறுகிறவர்களுமாய், நிந்திக்கிறவர் ௩௰
களுமாய்ப் பராபரனைப் பகைக்கிறவர்களுமாய்,
இறுமாப்புள்ளவர்களுமாய், அகந்தையுள்ளவர்க
ளுமாய், வீம்புக்காரருமாய், தகாத விசித்திரங்
களை உண்டுபண்ணுகிறவர்களுமாய், தாய்தகப்
பன்மாருக்குக் கீழ்ப்படியாதவர்களுமாய், —
விவேகம் இல்லாதவர்களுமாய், உடம்படிக்கை ௩௧
யைத் தள்ளுகிறவர்களுமாய், சுபாவ அன்பில்
லாதவர்களுமாய்,¶ மன்னியாதவர்களுமாய், இ
ரக்கம் இல்லாதவர்களுமாய்,—இப்படிப்பட்ட ௩௨
வைகளைச் செய்கிறவர்கள் [19]மரணத்திற்குப்
பாத்திரராய் இருக்கிறர்கள் என்று [20]பராபரனு
டைய நியாயப்பிரமாணத்தை அறிந்தும், அவை
களைத் தாங்களே செய்கிறதுமல்லாமல், [21]அவை
களைச் செய்கிற மற்றவர்களிடத்தில் சந்தோ
ஷப்படுகிறவர்களுமாய் ** இருக்கிறர்கள்.

## ௨. அதிகாரம்.

௧. தாங்களே பாவஞ்செய்து மற்றவர்களைக் கடிந்துகொள்ளுகிற யூதர்களையும், அஞ்ஞானிகளையும், போக்கில்லாமல் பராபரனுடைய நியாயத்தீர்ப்புக்கு ஏதுவாவதையும், ௰௪. அஞ்ஞானிகளிலும், ௰௭. கல்லைத் தடைத்த யூதர்களிலும், ௨௫. நியாயப்பிரமாணத்தைக் கைக்கொள்ளாதவர்கள் ஆக்கினைக்குத் தப்பாததையும் காட்டினது.

அப்படியிருக்க,(மற்றவர்களைக்குறித்து)தீர்ப்பு ௧
சொல்லுகிறவனே, [22]நீ தீர்ப்புசொல்லுகிற காரி
யங்கள் எவைகளோ, அவைகளை நீயே செய்கிற
படியால், நீ மற்றவர்களுக்குக் கொடுக்கிற தீர்ப்
பினுலே உன்னைத்தானே ஆக்கினைக்கு உள்ளாக்
குகிறய்; ஆதலால் [23]நீ போக்குச் சொல்லிக்
கொள்ளுகிறதற்கு இடமில்லை; மேலும் நமக்குத்

1 ௧ கொரி. ௧. ௰௮: ௰௫. ௨. 2 சங். ௪௰. ௯, ௰. மாற். ௮. ௩௮. ௨ தீமோ. ௧. ௮.—3 ஆப. ௨. ௪. யோவா. ௩. ௩௬. கலா. ௩. ௰௧. பிலி. ௩. ௯. எபி. ௰. ௩௮.—4 உரோ. ௩. ௨௧.—5 அப். ௰௭. ௩௰. எபே. ௫. ௬. கொலோ. ௩. ௬.

6 அப். ௰௪. ௰௭.—7 யோவா. ௧. ௯. 8 சங். ௰௯. ௧. அப். ௰௪. ௰௭: ௰௭. ௨௭.—9 ௨ இரா. ௰௭. ௰௫. எரே. ௨. ௫. எபே. ௪. ௰௭, ௰௮. 10 எரே. ௰. ௰௪.—11 ௫ மோ. ௪. ௰௬-௰௮. சங். ௱௬. ௨௰. ஏசா. ௪௰. ௰௮, ௨௬. எரே. ௨. ௰௧. எசே. ௮. ௰. அப்.

௰௭. ௨௯.—12 ௧ மோ. ௰௮. ௨௨. 13 ௧ கொரி. ௬. ௰௮. ௧ தெச. ௪. ௪. ௧ பே. ௪. ௩. 14 சங். ௮௧. ௰௨. அப். ௭. ௪௨. எபே. ௪. ௰௮. ௰௯. ௨ தெச. ௨. ௰௧, ௰௨. 15 ௧ தெச. ௧. ௯. ௧ யோ. ௫. ௨௰. 16 ஏசா. ௪௪. ௨௰. எரே. ௰. ௰௪: ௰௫.

௨௫. ஆமோ. ௨. ௪.-17 ௩ மோ. ௰௮. ௨௨, ௨௩. எபே. ௫. ௰௨. யூதா. ௰.—18 எபே. ௫. ௪. 19 உரோ. ௬. ௨௧.-20 உரோ. ௨. ௨. 21 ஓசே. ௭. ௩. சங். ௫௰. ௰௮. 22 ௨ சமு. ௰௨. ௫௭. மத். ௭. ௧. ௨. யோவா. ௮. ௯.-23 உரோ. ௧. ௨௰.

* அல்லது அவர்களில்.—† அல்லது சொல்லாதபடிக்கு அவைகள் காரணமாயிருக்கின்றன.—‡ அல்லது சிருட்டிகருக்குப் பதிலாக.—§ அல்லது அறிகையண்ணும்படிக்கு.—|| அல்லது கெட்ட.—¶ அல்லது கொள்கையற்றவர்களுமாய்.—** அல்லது இணங்குகிறவர்களுமாய்.

௨ தெரிந்திருக்கிறபடி,-இப்படிப்பட்டவைகளைச்
செய்கிறவர்களுக்குப் பராபரன் கொடுக்கிற
நியாயத்தீர்ப்பு சத்தியத்தின்படியே இருக்கின்ற
௩ து.—ஆனபடியினாலே இப்படிப்பட்டவைகளைச்
செய்கிறவர்களுக்குத் தீர்ப்புச்சொல்லுகிற மனி
தனே, நீயே அவைகளைச் செய்திருக்க, பராபர
னுடைய நியாயத்தீர்ப்புக்குத் தப்பிப்போகலா
௪ மென்று நினைக்கிறாயா?—அல்லது [1]பராபரனு
டைய தயவு, [2]பொறுமை, [3]நீடிய சாந்தம் இவை
களின் ஐசுவரியத்தை நீ அசட்டைபண்ணி,
[4]அவருடைய தயவு, உன் மனம் திரும்புதற்கு
ஏதுவாய் இருக்கவேண்டுமென்று அறியாமல்
௫ இருக்கிறாயா?—நீ உன் இருதயத்தைக் கடினப்
படுத்தி, மனந்திரும்பாமல் இருக்கிறதால், பரா
பரனுடைய கோபாக்கினையும் [5]நீதியுள்ள தீர்ப்
பும் வெளிப்படும் நாளிலே உனக்குக் கோபாக்
கினை வரும்படி அதைச் சேர்த்துக்கொள்ளுகி
௬ றாய்.—[6]அப்பொழுது அவர் அவனவனுடைய
கிரியைகளுக்குத்தக்கதாய், அவனவனுக்குப்
௭ பதில் அளிப்பார்.—இடைவிடாமல் நற்கிரியை
களைச் செய்து, மகிமையையும் கனத்தையும்
அழியாமையையும் தேடுகிறவர்களுக்கு நித்திய
௮ சீவனை அளிப்பார்.—சண்டைக்காரராய் இருந்து
[7]சத்தியத்திற்குக் கீழ்ப்படியாமல், அநியாயத்திற்
௯ குக் கீழ்ப்படிந்தவர்களோ, — உக்கிரகோபாக்
கினையை அடைவார்கள்; [8]பராபரனிடத்தில்
௰ பட்சபாதமில்லை.—[9]ஆதலால் முன்பு யூதரிலும்
பின்பு கிரேக்கரிலும்* எந்த மனிதன் பொல்
லாங்கைச் செய்கிறானோ அவனுக்கு உபா
௰௧ தியும் வியாகுலமும் வரும்.—முன்பு யூதர்களி
லும் பின்பு கிரேக்கரிலும் † எவன் நன்மைசெய்
கிறானோ [10]அவனுக்கு மகிமையும் கனமும் சமா
தானசவுக்கியமும் உண்டாகும்.

௰௨ மேலும் நியாயப்பிரமாணத்தை அடையாமல்
எவர்கள் பாவம்செய்கிறார்களோ, அவர்கள் நியா
யப்பிரமாணத்தின்படியே நியாயத்தீர்ப்பு அடை
யாமல் கெட்டுப்போவார்கள்; நியாயப்பிரமா
ணம் உள்ளவர்களாய் எவர்கள் பாவம்செய்கிறார்
களோ, அவர்கள் நியாயப்பிரமாணத்தின்படி
௰௩ ஆக்கினைக்கு உள்ளாக்கப்படுவார்கள்.—[11]நான்
பிரசங்கிக்கிற சுவிசேஷத்தின்படியே [12]இயே
சுக்கிறிஸ்துவைக்கொண்டு பராபரன் [13]மனித
ருடைய அந்தரங்கங்களைக்குறித்து நியாயத்தீர்ப்
புக் கொடுக்கும் நாளிலே (அப்படி நடக்கும்);
௰௪ அதெப்படியென்றால், — [14]நியாயப்பிரமாணத்
தைக் கேட்கிறவர்கள்மாத்திரம் பராபரனுக்கு
முன்பாக நீதிமான்களாய் இருக்கமாட்டார்கள்;
நியாயப்பிரமாணத்தின்படி செய்கிறவர்களே,
நீதிமான்களாக்கப்படுவார்கள்.—அன்றியும், நியா ௰௫
யப்பிரமாணம் இல்லாத சனங்கள் இயல்பாய்
நியாயப்பிரமாணத்தின்படி செய்கிறபொழுது,
நியாயப்பிரமாணம் இல்லாத அவர்கள் தங்களுக்
குத்தாமே நியாயப்பிரமாணமாய் இருக்கிறார்
கள். — அவர்களுடைய மனதுகூடச் சாட்சி ‡ ௰௬
பகருகிறதினாலும், அவர்களுடைய சிந்தனைகள்
ஒன்றுக்கொன்று § குற்றம் உண்டு, அல்லது குற்
றம் இல்லையென்று தீர்க்கிறதினாலும், அவர்கள்
தங்கள் இருதயங்களில் நியாயப்பிரமாணத்திற்கு
ஏற்ற கிரியை எழுதியிருக்கின்றதென்று காண்
பிக்கிறார்களே.

[15]கேள், நீ யூதனென்று பேர்பெற்றிருந்து, ௰௭
[16]நியாயப்பிரமாணத்தை ஊன்றிக்கொண்டு
[17]பராபரனைக்குறித்துப் பெருமைபாராட்டி,—
நியாயப்பிரமாணத்தினாலே உபதேசிக்கப்பட்ட ௰௮
வனாய் [18]அவருடைய சித்தத்தை அறிந்து,[19]வித்தி
யாசமானவைகளைச் சோதித்து அறிகிறாய். ‖—
அல்லாமலும் [20]நியாயப்பிரமாணத்தினாலே மெய் ௰௯
யறிவையும் சத்தியத்தையும் காட்டிய குறிப்பிட
முள்ளவனாய் [21]நீ உன்னைக் குருடருக்கு வழி
காட்டுகிறவன் என்றும்,—அந்தகாரத்தில் உள்ள ௨௰
வர்களுக்கு ஒளிகொடுக்கிறவன் என்றும், புத்தி
யீனருக்கு உபாத்தி என்றும், குழந்தைகளுக்குப்
போதகன் என்றும் சொல்லுகிறாய்.—இப்படிப் ௨௰௧
பட்டவனானால், [22]மற்றவனுக்குப் போதிக்கிற
நீ உனக்குத்தானே போதியாமல் இருக்கலாமா?
களவுசெய்யக்கூடாது என்று பிரசங்கிக்கிற நீ
களவுசெய்யலாமா?—விபசாரம் பண்ணக்கூடா ௨௰௨
தென்று சொல்லுகிற நீ விபசாரம்பண்ணலாமா?
விக்கிரகங்களை அருவருக்கிற நீ [23]பரிசுத்தமான
தைக் கொள்ளையிடலாமா? — [24]நியாயப்பிரமா ௨௰௩
ணத்தைக்குறித்துப் பெருமைபாராட்டுகிற நீ
நியாயப்பிரமாணத்தை மீறி நடந்து, பராபர
னைக் கனஈனம்பண்ணலாமா?-பராபரனுடைய ௨௰௪
நாமம் மற்றத் தேசத்தாருக்குள்ளே உங்களாலே
தூஷணிக்கப்படுகின்றதென்று [25]எழுதியிருக்கி
றபடி (செய்கிறாயே).

[26]நீ வேதப்பிரமாணத்தின்படி செய்தால் விரு ௨௰௫
த்தசேதனம் மெய்யாய் உனக்குப் பிரயோசன
மாய் இருக்கும்; நீ வேதப்பிரமாணத்தை மீறி நட
ந்தாயாகில், உன் விருத்தசேதனம் விருத்தசேத

1 உரோ. ௯. ௨௩. எபே. ௧. ௭: ௨. ௪, ௭.—2 உரோ. ௩. ௨௫. 3 உரோ. ௧௪. ௯.—4 ஏசா. ௩௰. ௰௮. ௨ பே. ௩. ௯, ௰௫.—5 ௫ மோ. ௩௨. ௩௪. யாக். ௫. ௩.—6 யோபு. ௩௪. ௰௧. சங். ௬௨. ௰௨. எரே. ௰௭. ௰: ௩௨. ௰௯. மத். ௰௬. ௨௭. உரோ. ௰௪. ௰௨. ௧ கொரி. ௩. ௮. ௨ கொரி. ௫. ௰. வெளி. ௨. ௨௩: ௨௰. ௰௨: ௨௨. ௰௨. 7 யோபு. ௨௪. ௰௩. உரோ. ௧. ௰௮. ௨ தெச. ௧. ௮.—8 ௫ மோ. ௰. ௰௭. ௨ நாளா. ௰௯. ௭. யோபு. ௩௪. ௰௯. அப். ௰. ௩௪. கலா. ௨. ௬. எபே. ௬. ௯. கொலோ. ௩. ௨௫. ௧ பே. ௧. ௰௭.—9 ஆமோ. ௩. ௨. லூக். ௰௨. ௪௭, ௪௮. ௧ பே. ௪. ௰௭. 10 ௧ பே. ௧. ௭.—11 உரோ. ௰௬. ௨௫. ௧ தீமோ. ௧. ௰௧. ௨ தீமோ. ௨. ௮.—12 யோவா. ௫. ௨௨. அப். ௰. ௪௨: ௰௭. ௩௧. ௨ தீமோ. ௪. ௧, ௮. ௧ பே. ௪. ௫.—13 பிர. ௰௨. ௰௪. மத். ௨௫. ௩௧. யோவா. ௰௨. ௪௮. ௨ கொரி. ௪. ௫. வெளி. ௨௰. ௰௨.—14 மத். ௭. ௨௧. யாக். ௧. ௨௨, ௨௩, ௨௫. ௧ யோ. ௩. ௭.—15 மத். ௩. ௯. யோவா. ௮. ௩௩. உரோ. ௯. ௬. ௭. ௨ கொரி. ௰௧ ௨௨.—16 மீகா. ௩. ௰௧. உரோ. ௯. ௪.—17 ஏசா. ௪௫. ௨௫: ௪௮. ௨. யோவா. ௮. ௪௧.—18 ௫ மோ. ௪. ௫. சங். ௱௪௭. ௰௯, ௨௰.—19 பிலி. ௧. ௰.—20 உரோ. ௯. ௰௭. ௨ தீமோ. ௧. ௰௩: ௩. ௫.—21 மத். ௰௫. ௰௪: ௨௩. ௰௬, ௰௭, ௰௯, ௨௪. யோவா. ௯. ௩௪, ௪௰, ௪௧.—22 சங். ௫௰. ௰௬. ௯. மத். ௨௩. ௩. ௯.—23 மல்கி. ௩. ௮.—24 ௰௭. ௨௪.—25 ௨ சாமு. ௰௨. ௰௪. ஏசா. ௫௨. ௫. எசே. ௩௬. ௨௰, ௨௩.—26 கலா. ௫. ௩.

* அல்லது புறச்சாதியாரிலும்.—† அல்லது புறச்சாதியாரிலும்.—‡ அல்லது அவர்களோடு சாட்சி.—§ அல்லது அவ்வேளையில்.
‖ அல்லது மேன்மையானவைகளை அங்கிகரித்துக்கொள்ளுகிறாய்.

௨௬ னம் இல்லாமையாயிற்று.—[1]மேலும் விருத்தசேத
னம் இல்லாதவன் வேதப்பிரமாணத்துக்கு ஏற்ற
நீதிகளைக் கைக்கொண்டால், அவனுடைய
விருத்தசேதனம் இல்லாமை விருத்தசேதனமே
௨௭ என்று எண்ணப்படும் அல்லவோ?—அல்லாம
லும் விருத்தசேதனம் இல்லாமல் சுபாவப்படிக்
கே இருந்து வேதப்பிரமாணத்தை நிறைவேற்று
கிறவன் [2]எழுத்தின்படியான விருத்தசேதனத்தி
னாலே யூதனாய் வேதப்பிரமாணத்தை மீறுகிற
உன்னைக் குற்றப்படுத்துவான் அல்லவோ? —
௨௮ ஆதலால் [3]புறம்பாக யூதனானவன் யூதனல்ல;
புறம்பாகச் சரீரத்தில் உண்டான விருத்தசேத
௨௯ னம் விருத்தசேதனமல்ல.—[4]உள்ளத்திலே யூத
னானவனே யூதன்; எழுத்தின்படி அல்ல [5]ஆவி
யின்படி [6]இருதயத்தில் உண்டான விருத்தசே
தனமே விருத்தசேதனம்; [7]இப்படிப்பட்டவ
னுடைய புகழ்ச்சி மனிதரால் அல்ல, பராபர
னாலே உண்டாயிருக்கின்றது.

## ௩. அதிகாரம்.

௧. இப்படிப்பட்டதென்ற யூதருடைய மேன்மையையும், ௩. அதை அவர்கள் இழந்துபோகாததையும், ௯. நியாயப்பிரமாணம் அவர்களைப் பாவிகளென்று தீர்மானிக்கிறதையும், ௨௰. ஒருவரும் நியாயப்பிரமாணத்தினால் நீதிமான்களாக்கப்படாமல், ௨௮. எல்லாரும் வித்தியாசமில்லாமல் விசுவாசத்தினாலேமாத்திரம் நீதிமான்களாக்கப்படுவதையும், ௩௧. விசுவாசத்தினால் நியாயப்பிரமாணம் ஒழிந்துபோகாததையுங்குறித்துச் சொல்லியது.

௧ இப்படியானால் யூதருடைய மேன்மை என்ன?
அல்லது விருத்தசேதனத்தினாலே பிரயோசனம்
௨ என்ன என்று கேட்டால், — அது எவ்விதத்தி
லும் மிகுதியாயிருக்கின்றது; [8]பராபரனுடைய
வாக்கியங்கள் அவர்களுக்கு ஒப்புவிக்கப்பட்ட
படியினாலே, அவர்களுக்குப் பிரதானமாய் மேன்
௩ மை உண்டாயிருக்கின்றது. — [9]சிலர் விசுவாசி
யாமற்போனபடியால், [10]அவர்களுடைய அவி
சுவாசம் பராபரனுடைய உண்மையை அவமாக்
கும் அல்லவோ என்று கேட்டால், [11]அப்படி
௪ யாக்கமாட்டாது.—[12]தேவரீர் அப்படிக் கடிந்து
பேசும்பொழுது நீதிபரராகவும், நியாயந்தீர்க்
கும்பொழுது புனிதராகவும் இருப்பீரென்று
எழுதியிருக்கிறபடி, [13]மனிதர் யாவரும் பொய்ய
ராயிருந்தாலும் [14]பராபரனே சத்தியமுடையவர்
என்போமாக.

௫ [15]பின்னும் நான் மனிதபிரகாரமாகப் பேசு
கிறேன்; நமது அநீதி பராபரனுடைய நீதியை
விளங்கப்பண்ணினால், நாம் என்ன சொல்ல
லாம்? பராபரன் கோபாக்கினையைச் செலுத்து
௬ கிறது அநியாயமல்லவோ என்றால்,—அப்படிச்
சொல்லவே கூடாது; [16]அப்படியானால் உலகத்
தாருக்குப் பராபரன் எப்படி நியாயத்தீர்ப்புச்
செய்வார்?—ஆகிலும் பராபரனுக்குப் புகழ்ச்சி ௭
உண்டாகத்தக்கதாக அவருடைய சத்தியம் என்
பொய்யினாலே அதிக மேன்மை அடைந்ததுண்
டானால், நான் பாவியென்று தீர்க்கப்படுவது
என்னவென்று (நீ சொல்ல,)—[17]நன்மை வரும் ௮
படிக்குத் தீமைசெய்யக்கடவோமென்றும் சொ
ல்லலாம் அல்லவோ? நாங்களே அப்படிச் செய்
கிறவர்களென்று நிந்திக்கப்படுகிறோம், நாங்க
ளே அப்படிப் போதிக்கிறவர்கள் என்று சிலர்
சொல்லுகிறார்கள்; அப்படிப் போதிக்கிறவர்கள்
ஆக்கினைக்கு உள்ளாக்கப்படுகிறது நியாயந்
தான்.

அப்படியானால், (கிரேக்கருக்கு) மேன்மை ௯
யாய் இருக்கிறோமோ என்று கேட்டால், அப்
படி ஒருக்காலும் இருக்கமாட்டோம்; யூதர்கள்
[18]கிரேக்கர் யாவரும் பாவத்திற்குக் கீழானவர்
கள் என்று முன் திருஷ்டாந்தப்படுத்தினோ
மே.* — அந்தப்படியும் எழுதியிருக்கிறதாவது: ௰
[19]நீதிமான் ஒருவனும் இல்லை.—மெய்யுணர்வுள் ௰௧
ளவன் இல்லை; பராபரனைத் தேடுகிறவன் இல்
லை.—எல்லாரும் வழிதப்பி ஏகமாய்க் கெட்டுப் ௰௨
போகிறார்கள்.—நன்மைசெய்கிறவன் ஒருவனும் ௰௩
இல்லை; [20]அவர்கள் தொண்டை திறக்கப்பட்ட
சமாதியாய் இருக்கின்றது; தங்கள் நாவுகளால்
வஞ்சனை செய்கிறார்கள், [21]பாம்புகளின் விஷம்
அவர்களுடைய உதடுகளின்கீழ் இருக்கின்ற
து. — [22]அவர்களுடைய வாய் சபிப்பினாலும், ௰௪
உபாதிக்கிற பேச்சினாலும் நிறைந்திருக்கின்ற
து.—[23]அவர்களுடைய கால்கள் இரத்தஞ்சிந்து ௰௫
கிறதற்குத் தீவிரமாய் இருக்கின்றன.—அழிவும் ௰௬
இடுக்கணும் அவர்களுடைய வழிகளில் இருக்
கின்றன.—சமாதான மார்க்கத்தை அவர்கள் அ ௰௭
றியார்கள்.—[24]அவர்கள் கண்களுக்குமுன்பாகத் ௰௮
தெய்வபயம் இல்லை என்பதே.

[25]மேலும் வாய்கள் யாவும் அடைக்கப்படும் ௰௯
படிக்கும், [26]உலகத்தார் எல்லோரும் பராபரனு
டைய ஆக்கினைக்கு ஏதுவானவர்கள் † ஆகும்
படிக்கும், [27]நியாயப்பிரமாணம் சொல்லுகிற
யாவும் நியாயப்பிரமாணத்திற்கு உட்பட்டிருக்
கிறவர்களுக்கே சொல்லப்பட்டிருக்கின்றன
என்று அறிந்திருக்கிறோம். — இப்படியிருக்க, ௨௰
[28]நியாயப்பிரமாணத்தினாலே பாவத்தை அறிகிற
அறிவு வருகிறபடியால், [29]ஒரு மனிதனும் நியா
யப்பிரமாணத்திற்கு ஏற்ற கிரியைகளினாலே அ
வருக்குமுன்பாக நீதிமானாக்கப்படுவதில்லை.

---

1 அப். ௰.௩௪,௩௫.—2 மத். ௰௨ ௪௧, ௪௨.—3 மத். ௩. ௯. யோவா அ. ௩௯. உரோ. ௯. ௬, ௭. கலா ௬. ௧௫ வெளி.௨.௯.—4 ௧ பே. ௩. ௪. 5 உரோ. ௭. ௬. ௨ கொரி. ௩. ௬. 6 கொலோ. ௨. ௰௧. பிலி. ௩. ௩. 7 ௧ கொரி.௪.௫. ௨ கொரி.௰.௰௮. ௧ தெச. ௨. ௪.—8 ௫ மோ. ௪. ௭,௮. சங் ௱௪௭.௰௯,௨௰. உரோ. ௯.௪.௫:௯.௪.—9 உரோ. ௰. ௰௬. எபி.௪.௨.—10 ௪ மோ. ௨௩ ௰௯. உரோ.௧௧.௨௯. ௨ தீமோ. ௨. ௰௩.—11 யோபு. ௪௰. அ. 12 சங். ௫௧. ௪.—13 சங். ௱௧௬. ௧௧. ௰௯௧. ௰௧.—14 யோவா. ௩. ௩௩. 15 உரோ. ௬. ௰௯, கலா. ௩. ௰௫.

16 ௧ மோ. ௰௮. ௨௫. யோபு.௩௪.௧: ௩௪. ௰௭.—17 உரோ ௫.௨௰.௬, ௬,௰௫.-18 ௨௩.௩௪ கலா.௩ ௨௨. 19 சங். ௰௪. ௧-௩: ௫௩.௧.—20 சங். ௫. ௯. எரே. ௫. ௰௬.—21 சங். ௱௪௰.௩.—22 சங். ௰ ௭.—23 ஏசா. ௫௯. ௭,௮.—24 சங். ௩௬. ௧. 25 யோபு. ௫ ௰௬. சங். ௱௭. ௪௨. எசே. ௰௬. ௬௩. உரோ ௩. ௨௬: ௨.௩.—26 ௯, ௨௩ வச. உரோ. ௨.௨.—27 யோவா. ௰.௩௪: ௰௫. ௨௫—28 உரோ ௭. ௭. 29 சங்.௱௪௩.௨. அப்.௰௩ ௩௯. கலா. ௨ ௰௬: ௩. ௰௧. எபே. ௨ ௮, ௯. தீத். ௩. ௫.

* கிரேக்கு, சமத்தினோம்; உரோ.௧. ௨௮. ழ: ௨. ௧. ழ.—† அல்லது பராபரனுக்குமுன்பாகக் குற்றவாளிகள்.

௨௧ இப்பொழுது [1]நியாயப்பிரமாணத்திற்கு ஏற்ற
கிரியை இல்லாமல், பராபரனுக்கு முன்பாக
நீதிமானாகும்வகை வெளிப்பட்டிருக்கின்றது;
அதைக்குறித்து [2]நியாயப்பிரமாணமும் [3]தீர்க்க
௨௨ தரிசனங்களும் சாட்சியிடுகின்றன.—[4]இயேசுக்
கிறிஸ்துவைப் பற்றும் விசுவாசத்தினாலே பரா
பரன் வரப்பண்ணுகிற நீதி அதுவே; விசுவாசிக்
கிற எவர்களுக்குள்ளும் எவர்கள்மேலும் அது
௨௩ வரும். — [5]வித்தியாசமே இல்லை; [6]எல்லாரும்
பாவம்செய்து, பராபரனுடைய மகிமை அற்ற
௨௪ வர்களாய் இருந்து, — [7]கைமாறில்லாமல் [8]அவ
ருடைய கிருபையினாலே கிறிஸ்து இயேசுவி
லுள்ள மீட்பைக்கொண்டு நீதிமான்கள் ஆக்கப்
௨௫ படுகிறார்கள்.—[9]பராபரன் தாம் பொறுமையாயி
ருந்த முற்காலத்தில் நடந்த பாவங்களை [10]மன்
னித்து விட்டதைக்குறித்துத்* தம்முடைய நீதி
யைக் காண்பிக்கும்பொருட்டாக, [11]இயேசுக்
கிறிஸ்துவினுடைய இரத்தத்தில் விசுவாசமாய்
இருக்கிறதினாலே வரும் கிருபைக்கு மூலாதார
௨௬ மாக அவரையே ஏற்படுத்திவைத்தார்.†—[12]இயே
சுவினிடத்தில் விசுவாசமாய் இருக்கிறவனை நீதி
மானாக்குகிறதில் அவர் நீதியுள்ளவராய் இருக்
கும்படிக்கு, இக்காலத்திலே தமது நீதியைக்
காண்பிக்கும்பொருட்டாகவே (அப்படிச் செய்
தார்).

௨௭ ஆனபடியினாலே [13]மேன்மைபாராட்டல் எங்
கே? அது நீக்கப்பட்டதே; எந்தப் பிரமாணத்தி
னாலே என்றால், கிரியைகளைக் குறிக்கிற பிரமா
ணத்தினாலே அல்ல, விசுவாசத்தைக் குறிக்கிற
௨௮ பிரமாணத்தினாலே அப்படி ஆயிற்று.—ஆதலால்
[14]மனிதர்கள் நியாயப்பிரமாணத்திற்கு ஏற்ற கிரி
யைகளினாலே அல்ல, விசுவாசத்தினாலே நீதி
மான்கள் ஆக்கப்படுகிறார்கள் என்று தீர்க்கி
௨௯ றோம்.—அன்றியும் பராபரன் யூதருக்குமாத்தி
ரம் தேவனாயிருக்கிறாரோ? மற்றத் தேசத்தாருக்
கும் தேவனாயிருக்கிறார் அல்லவோ? மெய்யாய்
அவர் மற்றத் தேசத்தாருக்கும் தேவனாயிருக்கி
௩௰ றார்.—தேவன் ஒருவரே; ஆகையால் [15]அவர்
விருத்தசேதனம் உள்ளவர்களையும் விருத்தசேத
னம் இல்லாதவர்களையும் விசுவாசத்தினாலே நீதி
௩௧ மான்களாக்கச் சித்தமாய் இருக்கிறார்.—இப்ப
டியானால் விசுவாசம் என்கிறதினாலே நாம் நியா
யப்பிரமாணத்தை அழித்துப்போடுகிறோமா?
அப்படி அல்லவே, நியாயப்பிரமாணத்தை
(அதினாலே) நிலையாகவே நிறுத்துகிறோம்.

## ௪. அதிகாரம்.

௧ ஆபிரகாமுடைய விசுவாசம். ௰. அவன் சுன்னத்தடைவதற்குமுன்னமே அவனுக்கு நீதியாக எண்ணப்பட்டது ௧௩. அவனும், அவன் வித்தாரும் விசுவாசத்தினாலேயே வாக்குத்தத்தத்தைப் பெற்றது. ௧௬. விசுவாசிகள் எல்லாருக்கும் ஆபிரகாம் தகப்பனானது. ௨௪. நம்முடைய விசுவாசமும் நமக்கு நீதியாக எண்ணப்படுமென்றது.

அன்றியும் நம்முடைய தகப்பனாகிய [16]ஆபிர ௧
காம் சரீர (கருமங்களினாலே) என்னத்தைப்
பெற்றுக்கொண்டான்?

[17]ஆபிரகாம் கிரியைகளினாலே நீதிமானாக்கப் ௨
பட்டானாகில், அவன் (தன்னை) மேன்மையா
கப் பாராட்டலாம்; ஆகிலும் பராபரனுக்குமுன்
பாக அப்படி ஒன்றுமில்லை.—வேதவாக்கியம் ௩
எப்படிச் சொல்லுகிறதென்றால், [18]ஆபிரகாம்
பராபரனை விசுவாசித்தான்; அதுவே அவனுக்கு
நீதியென்று எண்ணப்பட்டதென்று சொல்லு
கின்றது.—அன்றியும் [19]கிரியைகளை உடைய ௪
வனுக்கு வருகிற கூலி கிருபையென்று எண்
ணப்படாமல், கடனென்று எண்ணப்படும்.—
கிரியைகளை உடையவனாயிராமல் [20]துன்மார்க் ௫
கனை நீதிமானாக்குகிறவர்மேல் விசுவாசமாயிருந்
தால், அவனுடைய விசுவாசமே அவனுக்கு நீதி
யென்று எண்ணப்படும்.

அந்தப்படி தாவீதும் கிரியைகள் இல்லாமல், ௬
பராபரனாலே நீதிமான் என்று எண்ணப்படுகிற
மனிதனுடைய பாக்கியத்தைக் காண்பிக்க,—
[21]எவர்களுடைய அக்கிரமங்கள் மன்னிக்கப் ௭
பட்டனவோ எவர்களுடைய பாவங்கள் மூடப்
பட்டனவோ அவர்களே பாக்கியவான்கள் என்
றும்,—எவனுடைய பாவத்தைப் பராபரன் எண் ௮
ணாமல் இருக்கிறாரோ, அவனே பாக்கியவான்
என்றும் சொல்லியிருக்கிறான்.

இந்தப் பாக்கியம் விருத்தசேதனம் உள்ள ௯
வனுக்குமாத்திரமா, அன்றி, விருத்தசேதனம்
இல்லாதவனுக்கும் வருமோ? (இருவருக்குமே
வரும்); அது எப்படியென்றால், நாங்கள் நிச்சயி
த்தபடி விசுவாசமே ஆபிரகாமுக்கு நீதியென்று
எண்ணப்பட்டது.

எப்பொழுது அது அவனுக்கு அப்படி எண் ௰
ணப்பட்டது? அவன் விருத்தசேதனம் உள்ளவ
னாய் இருந்தபொழுதோ விருத்தசேதனம் இல்
லாதவனாய் இருந்தபொழுதோ (என்றால்) விருத்
தசேதனம் உள்ளவனாயிருந்தபொழுது அல்ல,
விருத்தசேதனம் இல்லாதவனாயிருந்தபொழுதே
அப்படி எண்ணப்பட்டது.—மேலும் [22]விருத்த ௧௧
சேதனம் இல்லாத காலத்திலே அவன் விசுவா
சத்தினாலே அடைந்த நீதிக்கு முத்திரையாக
விருத்தசேதன அடையாளத்தைப் பெற்றான்;
விருத்தசேதனம் இல்லாமல் விசுவாசமுள்ளவர்
களும் நீதிமான்கள் ஆக்கப்படும்பொருட்டாக,
[23]அப்படிப்பட்ட விசுவாசிகளுக்கு அவன் தகப்

1 அப். ௰௩. ௩௯. உரோ. ௧௰. பிலி. ௩. ௯. எபி. ௧௧. ௪.—2 யோவா. ௫. ௪௬. அப் ௨௬. ௨௨.-3 உரோ. ௧. ௨. ௧ பேது. ௧௰.—4 உரோ. ௪. 5 உரோ. ௰ ௰௨. கலா. ௩. ௨௮. கொலோ. ௩. ௧௧.—6 ௩. ௯. 7 உரோ. ௪. ௧௬. எபே. ௨. அ தீத். ௩. ௫. ௭.—8 மத். ௨௰. ௨௮. எபே. ௧. ௭. கொலோ. ௧. ௧௪. ௧ தீமோ. ௨. ௬. எபி. ௯. ௧௨. ௧ பேது. ௧. ௧௮. ௧௯.—9 அப். ௰௭. ௩௰. எபி ௯. ௧௫. 10 அப். ௧௪. ௧௬, ௧௭. ௧ தீமோ. ௧. ௧௫. 11 கொலோ ௧. ௨௰.—12 ௧ யோ. ௧௯.

௧௫. ௧ யோ. ௨. ௨: ௪. ௰. 13 உரோ ௨. ௰௭, ௨௩: ௪. ௨. ௧ கொரி. ௧. ௨௯, ௩௧. எபே. ௨. ௯. 14 அப். ௰௩. ௩௮, ௩௯: உ௰ ௨௧. ௨௨. உரோ ௮. ௩. கலா. ௨. ௰௬. 15 உரோ. ௰. ௰௨, ௰௩. கலா. ௩. ௮, ௨௰, ௨௮.—16 ஏசா. ௫௧. ௨. மத். ௩. ௯. யோவா. ௮. ௩௩, ௩௯. ௨ கொரி ௰௧. ௨௨.—17 உரோ ௩. ௨௰, ௨௭, ௨௮.—18 ஆதி ௰௫. ௬. கலா. ௩. ௬. யாக். ௨. ௨௩.—19 உரோ. ௰௧. ௬.—20 யோசு ௨௪. ௨.—21 சங். ௩௨. ௧, ௨.—22 ஆதி ௰௭. ௰. 23 லூக். ௰௯. ௯.

* அல்லது பாராமல் விட்டதை.—† அல்லது வெளிப்படுத்தினர்.

௰௨ பனாய் இருக்கும்படிக்கும்,–விருத்தசேதனத்தை
உடையவர்களாய்மாத்திரம் அல்ல, நம்முடைய
முன்னோராகிய ஆபிரகாம் விருத்தசேதனம் இல்
லாத காலத்திலே நடந்த விசுவாச மார்க்கத்தில்
நடக்கிறவர்களாயும் இருக்கிறவர்கள் நீதிமான்
கள் ஆக்கப்படும்பொருட்டாக, அப்படிப்பட்ட
விருத்தசேதனம் உள்ளவர்களுக்கும் தகப்பனா
யிருக்கும்படிக்கும் (அந்த அடையாளத்தைப்
பெற்றான்).

௰௩ அன்றியும், [1]உலகத்தைச் சுதந்தரிப்பான் என்
கிற வாக்குத்தத்தம் ஆபிரகாமுக்கும் அவனு
டைய சந்ததிக்கும் நியாயப்பிரமாணத்தினால்
வருகிற நீதியினால் அல்ல, விசுவாசத்தினால் வரு
௰௪ கிற நீதியினாலே கிடைத்தது.—ஆதலால் [2]நியா
யப்பிரமாணத்தினால் வருகிற நீதியை உடைய
வர்கள் சுதந்தரரானால், விசுவாசம் வீணாய்ப்
போம்; வாக்குத்தத்தமும் அபத்தமாய்ப்போம்.–
௰௫ மேலும், [3]நியாயப்பிரமாணம் கோபாக்கினையை
நடப்பிக்கின்றது; நியாயப்பிரமாணம் இல்லா
௰௬ விட்டால், அக்கிரமமும் தோன்றாதே. — ஆத
லால் அந்த வாக்குத்தத்தம் சந்ததியார் எல்லாருக்
கும் நிச்சயமாய் இருக்கும்பொருட்டாக, (அந்
தச் சுதந்தரம்) [4]கிருபையினால் உண்டாகும்படி
க்கு, அது விசுவாசத்தினாலே வருகின்றது; [5]நியா
யப்பிரமாணத்தை உடையவர்களாகிய சந்ததி
யாருக்குமாத்திரம் அல்ல, அநேக தேசத்தா
ருக்கு உன்னைத் தகப்பனென்று ஏற்படுத்தி
னேன் என்று எழுதியிருக்கிறபடி, [6]நம்மெல்
லாருக்கும் தகப்பனாகிய ஆபிரகாமைப்போல,
விசுவாசத்தை உடையவர்களான சந்ததியாருக்
௰௭ கும் அது நிச்சயமாயிருக்கும்.—[7]மரித்தோரை
உயிர்ப்பித்து, [8]இல்லாதவைகளை இருக்கிறவை
களைப்போல அழைக்கிறவராகிய பராபரனை
அவன் விசுவாசித்துக்கொண்டு அவராலே*
[9](அப்படிப்பட்ட தகப்பனானான்).

௰௮ [10]உன் சந்ததி இவ்வளவாயிருக்கும் என்று
சொல்லப்பட்டபடியே, அவன், தான் அநேக
தேசத்தாருக்குத் தகப்பனாவதை நம்புதற்கு ஏது
வில்லாமலிருந்தும், நம்பிக்கையோடே அதை
௰௯ விசுவாசித்தான் —அவன் விசுவாசத்திலே பல
ஈனமாயிருக்கவில்லை; அவன் ஏறக்குறைய நூறு
வயதானபடியால், [11]தன் சரீரம் செத்துப்போன
தையும் சாராள் கருப்பம் உண்டாகாமலிருந்த
௨௰ தையும் எண்ணாமல் இருந்தான். — பராபரனு
டைய வாக்குத்தத்தத்தைக்குறித்து அவன் அவிசு
௨௧ வாசமாய்ச் சந்தேகப்படாமல்,—பராபரன் வாக்
குத்தத்தம்பண்ணினதை நிறைவேற்றவும் [12]வல்
லமையுள்ளவராய் இருக்கிறார் என்று உறுதியாய்
நினைத்து, பராபரனைப் புகழ்ந்து, பலத்த விசுவா
சமுள்ளவனானான்.—ஆகையால் அதுவே அவ ௨௨
னுக்கு நீதியென்று எண்ணப்பட்டது.

[13]அது அவனுக்கு அப்படி எண்ணப்பட்ட ௨௩
தென்பது அவனுக்காகமாத்திரம் அல்ல, நமக்
காகவும் எழுதியிருக்கின்றது. — [14]நம்முடைய ௨௪
அக்கிரமங்களின் நிமித்தம் மரணத்திற்கு ஒப்புக்
கொடுக்கப்பட்டும் நம்மை நீதிமான்களாக்குதற்
கு,—[15]எழுப்பப்பட்டும் இருக்கிற நம்முடைய ௨௫
கர்த்தராகிய இயேசுவை [16]மரித்தோரிலிருந்து உ
யிரோடெழுப்பினவரை விசுவாசித்துக்கொண்
டால், நமக்கும் அது அப்படியே எண்ணப்படும்.

# ௫. அதிகாரம்.

௧. விசுவாசத்தினால் நீதிமான்களாகிப் பராபரனிடத்தில் சமாதானம் பெற்று, ௨. நம்பிக்கையில் சந்தோஷமடைகிற, ௮. பாவிகளாயிருந்தபோதிலும் அவருடைய இரத்தத்தின் புண்ணியத்தின் நிமித்தம் ஒப்புரவடைந்தால், ௰. அது கிடைத்தபின்பு இரட்சிக்கப்படுவோம் என்றது. ௰௨. பாவமும், மரணமும், ஆதாமினால் வந்ததுபோல, ௰௭. நீதியும் ஜீவனும் இயேசுக்கிறிஸ்துவினால் வந்ததென்றது. ௨௰. பாவம் பெருகியிருந்தும் கிருபை அதிகமாய்ப் பெருகுகிறதென்பது.

இவ்விதமாய் [17]நாம் விசுவாசத்தினாலே நீதிமான் ௧
களாக்கப்பட்டபடியால், நம்முடைய கர்த்தரா
கிய இயேசுக்கிறிஸ்துவைக்கொண்டு [18]நாம் பரா
பரனிடத்தில் சமாதானம் பெற்றிருக்கிறோம்.—
[19]மேலும் நாம் நிற்கின்ற கிருபைக்குள் பிரவே ௨
சிக்குதலையும் [20]நாம் அவரைக்கொண்டு விசுவா
சத்தினாலே பெற்றும், [21]பராபரனுடைய மகி
மையை அடைவோம் என்று நம்பி மேன்மை
பாராட்டியும் இருக்கிறோம்.

அதுவுமல்லாமல் [22]உபத்திரவம் பொறுமை ௩
யையும், [23]பொறுமை நிச்சயத்தையும், நிச்சயம்
நம்பிக்கையையும் உண்டாக்குகின்றன என்று
நாங்கள் அறிந்திருந்து,—[24]உபத்திரவங்களிலே ௪
யும் மேன்மைபாராட்டுகிறோம். — மேலும் [25]ந ௫
மக்குக் கொடுக்கப்பட்ட பரிசுத்தஆவியினாலே
பராபரனுடைய அன்பு நம்முடைய இருதயங்க
ளில் ஊற்றப்பட்டிருக்கிறபடியால் [26]அந்த நம்
பிக்கை நம்மை வெட்கப்படுத்தாது.

அன்றியும் நாம் பெலனற்றவர்களாய் இருக் ௬
கையில், கிறிஸ்து தகுதியான † காலத்திலே
[27]அக்கிரமக்காரருக்காக மரித்தார்.—நீதிமானுக் ௭
காக மற்றொருவன் மரிக்கிறது அருமையாயிருக்
கும்; நல்லவனுக்காக ஒருவேளை மற்றொருவன்
மரிக்கத் துணிவான்.—கிறிஸ்துவோ [28]நாம் பா ௮
விகளாயிருக்கையிலே நமக்காக மரித்ததினாலே,

1 ௧ மோ. ௰௭ ௪. ௫. கலா. ௩. ௨௯. 2 கலா. ௩. ௰௮.—3 உரோ. ௩ ௨௰: ௭ அ,௰,௰௧. ௧ கொரி. ௰௫. ௫௬. ௨ கொரி. ௩. ௭, ௯. கலா. ௩. ௧. ௰௯. ௧ யோ. ௩. ௪.—4 உரோ. ௩. ௨௪.—5 கலா. ௩. ௨௨.-6 ஏசா. ௫௧. ௨. உரோ ௯ ௮.—7 உரோ. ௮. ௰௧. எபே. ௨. ௧, ௫. 8 உரோ. ௯. ௨௬. ௧ கொரி. ௧. ௨௮. ௧ பே. ௨. ௰.—9 ௧ மோ. ௰௭. ௫. 10 ௧ மோ. ௰௫. ௫.—11 ௧ மோ. ௰௭. ௰௭: ௰௮. ௰௧. எபி. ௰௧. ௰௧, ௰௨. 12 சங். ௱௰௫. ௩. லூக். ௧. ௩௭, ௪௫. எபி ௰௧ ௰௯.—13 உரோ. ௰௫. ௪. ௧ கொரி ௰. ௧. ௰௧.—14 ஏசா. ௫௩. ௫, ௬. உரோ. ௩. ௨௫: ௫. ௬: ௮. ௩௨. ௨ கொரி ௫. ௨௧ கலா. ௧. ௪. ௧ பே. ௨ ௨௪: ௩. ௰௮. எபி. ௯. ௨௮.—15 ௧ கொரி. ௰௫. ௰௭. ௧ பே. ௩. ௨௧.—16 அப். ௨. ௨௪: ௰௩. ௩௰.—17 ஏசா. ௩௨. ௰௭. யோவா. ௰௬. ௩௩. உரோ. ௩. ௨௮, ௩௰ 18 எபே. ௨. ௰௪. கொலோ. ௧. ௨௰. 19 ௧ கொரி. ௰௫. ௧.—20 யோவா. ௰ ௯: ௰௪. ௬. எபே. ௨ ௰௮: ௩. ௰௨ எபி. ௰ ௰௯.—21 எபி. ௩. ௬. 22 யாக். ௧. ௨.—23 யாக். ௧. ௰௨. 24 மத். ௫. ௰௧, ௰௨. அப். ௫. ௪௧. ௨ கொரி. ௰௨. ௰. பிலி. ௨. ௰௭. யாக். ௧. ௧, ௰௨. ௧ பே. ௪. ௰௩. 25 ௨ கொரி. ௧. ௨௨. கலா. ௪. ௬. எபே. ௧. ௰௩, ௰௪.-26 பிலி. ௧ ௨௰. 27 ௮. ௬. உரோ. ௪. ௨௫. 28 யோவா. ௰௫. ௰௩. ௧ பே. ௩. ௰௮. ௧ யோ. ௩. ௰௬: ௪. ௯, ௰.

* அல்லது அவனைப்போல —† அல்லது குறித்த; கலா. ௪. ௪.

பராபரன் நமதுமேல் வைத்த அன்பை விளங்
௯ கப்பண்ணினுர்.—இப்படி நாம்[1] அவருடைய
இரத்தத்தினாலே நீதிமான்களாக்கப்பட்டிருக்க
(வரும்[2]கோபாக்கினையில் நின்று அவராலே மிக
௰ வும் அதிகமாய் இரட்சிக்கப்படுவோமே).—நாம்
[3]பராபரனுக்குப் பகைஞராயிருக்கையில், அவர்
குமாரனுடைய மரணத்தினாலே [4]அவருடனே
ஒப்புரவாக்கப்பட்டோமானால், ஒப்புரவாக்கப்
பட்டபின் நாம் [5]அவருடைய சீவனாலே மிக
வும் அதிகமாய் இரட்சிக்கப்படுவோமே.

௰௧ அதுவுமல்லாமல் இப்பொழுது ஒப்புரவாக்கு
தலை* நமக்குக் கிடைக்கப்பண்ணின நம்மு
டைய கர்த்தராகிய இயேசுக்கிறிஸ்துமூலமாய்
நாம் பராபரனைக்குறித்து [6]மேன்மைபாராட்டு
கிறோம்

௰௨ என்னத்தினாலென்றால், [7]ஒரே மனிதனாலே
பாவமும், பாவத்தினாலே [8]மரணமும் உலகத்
திலே பிரவேசித்தபின்பு எல்லா மனிதரும் பாவி
களானபடியினாலே, † மரணம் எல்லா மனிதருக்
கும் வந்ததுபோல, (கிறிஸ்துவினாலே எல்லாருக்
௰௩ கும் ஒப்புரவாக்குதல் உண்டாயிற்று).—நியாயப்
பிரமாணம் வருதற்கு முன்னே பாவம் உலகத்தில்
இருந்தது; நியாயப்பிரமாணம் இல்லாதிருந்தால்,
௰௪ [9]பாவம் எண்ணிக்கைப்படமாட்டாது.—அப்ப
டியிருந்தும், மரணமானது ஆதாம்முதல் மோசே
வரைக்கும் ஆதாமின் மீறுதலுக்கு ஒப்பாய்ப்
பாவம்செய்யாதவர்களையும் ஆண்டுகொண்டது;
[10]அந்த ஆதாம், பின்பு வந்தவருக்கு அடையாள
௰௫ மானவன்.—ஆனாலும் கிருபையுள்ள ஈவின் சங்
கதி விழுதலின் சங்கதியைப்போல இருக்கிற
தில்லை; ஒரே மனிதன் விழுந்ததினாலே அநேகர்
மரித்திருக்க, மிகவும் அதிகமாய்ப் பராபரனு
டைய கிருபையும் இயேசுக்கிறிஸ்து என்னும்
ஒரே மனிதனுடைய கிருபையினால் வருகிற
ஈவும் [11]அநேகர்மேலே பெருகியிருக்கின்றன.—
௰௬ மேலும் அந்த ஈவு பாவம்செய்த ஒருவனால் உண்
டான நியாயத்தீர்ப்பைப்போல இருக்கவில்லை;
அந்தத் தீர்ப்பு ஒரே குற்றத்தின் நிமித்தம் ஆக்கி
னைக்கு ஏதுவாயிருந்தது; கிருபையுள்ள ஈவா
னது அநேக பாவங்களை நீக்கி நீதியாக்குதற்கு
௰௭ ஏதுவாயிருக்கின்றது.—அல்லாமலும் ஒரே மனி
தன் விழுந்தபின்பு ‡ அந்த ஒரே மனிதனாலே
மரணம் ஆண்டுகொண்டிருக்கக் கிருபையாகிய
பரிபூரணத்தையும் நீதியாகிய ஈவின் பரிபூரணத்
தையும் பெறுகிறவர்கள், இயேசுக்கிறிஸ்து என்
னும் ஒரே மனிதனாலே மிகவும் அதிகமாய்ச்
சீவனை அடைந்து ஆளுவார்கள்.—ஆகையால் ௰௮
ஒரே மனிதனுடைய தப்பிதத்தினாலே § எல்லா
மனிதருக்கும் ஆக்கினைக்கு ஏதுவான தீர்ப்பு
உண்டானதுபோல, ஒரே மனிதனுடைய நீதியி
னாலும் ‖ [12]எல்லா மனிதருக்கும் சீவனாகிய நீ
திக்கு ஏதுவான தீர்ப்பு உண்டாயிற்று.—அன்றி ௰௯
யும் ஒரே மனிதன் கீழ்ப்படியாமலிருந்ததினாலே
அநேகர் பாவிகளாக்கப்பட்டார்கள்; அதுபோல
ஒரே மனிதன் கீழ்ப்படிந்ததினாலே அநேகர் நீதி
மான்களாக்கப்பட்டு வருவார்கள்.

[13]மேலும் நியாயப்பிரமாணம் தோன்றினதி ௨௰
னாலே தப்பிதம் பெருகிற்று; அப்படிப் பாவம்
பெருகியிருந்தும் [14]கிருபை அதிகமாய்ப் பெரு
கிற்று. ஆதலால் பாவம் மரணத்துக்கு ஏதுவாக
(மனிதனை) ஆண்டுகொண்டதுபோல,—நம்மு ௨௧
டைய கர்த்தராகிய இயேசுக்கிறிஸ்துவினாலே
கிருபையானது, நித்திய சீவனுக்கு ஏதுவான
நீதியினாலே ஆண்டுகொண்டது.

## ௬. அதிகாரம்.

௧. பாவத்துக்கு மரித்த நாம் பாவத்தில் நிலைநிற்கக்கூடாதென்பதற்கு ஞானஸ்நானம் அடையாளமென்பது. ௰௨. நீதியின் ஊழியத்துக்கு நம்மை ஒப்புவித்திருக்கிறதினாலும் பாவத்தின் சம்பளம் மரணமாயிருக்கிறதினாலும், பாவம் நம்மை இனி ஆளாதென்பது.

ஆகையால் நாம் என்ன சொல்லலாம்? [15]கிரு ௧
பை பெருகும்படிக்கு, பாவத்திலே நிலைநிற்கக்
கடவோம் என்று சொல்லலாமா?

அப்படிக் கூடாதே; [16]பாவத்திற்கு மரித்த ௨
நாம் இனி அதிலே எப்படிப் பிழைப்போம்?—
[17]கிறிஸ்து இயேசுவுக்குள்ளாக ஞானஸ்நானம் ௩
பெற்ற ¶ நாம் அனைவரும் [18]அவருடைய மரண
த்திற்கு உள்ளாக ஞானஸ்நானம் பெற்றதை அறி
யாமலிருக்கிறீர்களா?—மேலும் [19]பிதாவின் மகி ௪
மையினாலே [20]கிறிஸ்து மரித்தோரிலிருந்து எ
ழுப்பப்பட்டதுபோல, நாமும் [21]புதிதான சீவ
னுள்ளவர்களாய் நடந்துகொள்ளும்படிக்கு மர
ணத்திற்குள்ளான [22]ஞானஸ்நானத்தினாலே அவ
ருடனேகூட அடக்கம்பண்ணப்பட்டோம்.—
[23]ஆதலால் அவருடைய மரணத்திற்கு ஒப்பாக ௫
நாம் அவருடனே நாட்டப்பட்டவர்களாயி
ருக்க அவர் உயிரோடு எழுந்திருக்குதலுக்கு ஒப்
பாகவும் அப்படியே இருப்போம்.—மேலும் ௬
நமக்குத் தெரிந்திருக்கிறபடி நாம் இனிப் பாவத்
திற்கு ஊழியம் செய்யாதபடிக்கு, [24]பாவமாகிய
சரீரம் அழிந்துபோகும்பொருட்டாக [25]நம்மு
டைய பழைய மனிதத்தத்துவம் அவரோடேகூ
டச் சிலுவையில் அறையப்பட்டது.—ஆகை ௭
யால் [26]மரித்தவன் பாவத்திற்கு விலக்கப்பட்டா

1 உரோ. ௩. ௨௫ எபே. ௨. ௰௩ எபி. ௯. ௰௪. ௧ யோ. ௧. ௭.–2 உரோ. ௧. ௰௮. ௧ தெச. ௧. ௯.–3 உரோ. ௮. ௭.–4 ௨ கொரி. ௫. ௰௮, ௰௯. எபே. ௨. ௰௬. கொலோ. ௧. ௨௰, ௨௨.—5 யோவா. ௫. ௨௰: ௰௪ ௰௯. ௨ கொரி. ௪. ௰, ௰௧. 6 உரோ. ௨. ௰௭; ௩. ௨௯, ௩௰. கலா. ௪. ௯.—7 ௧ மோ. ௩. ௬. ௧ கொரி. ௰௫. ௨௧.—8 ௧ மோ. ௨. ௰௭. உரோ. ௬. ௨௩. ௧ கொரி. ௰௫. ௨௧. 9 உரோ. ௪. ௰௫. ௧ யோ. ௩. ௪. 10 ௧ கொரி. ௰௫. ௨௧. ௨௨, ௪௫. 11 ஏசா. ௫௩. ௰௧ மத். ௨௰. ௨௮: ௨௬. ௨௮.–12 யோவா. ௰௨. ௩௨. எபி. ௨. ௯.—13 யோவா. ௰௫. ௨௨. உரோ. ௩. ௨௰: ௪. ௰௫: ௭. ௮. கலா. ௩. ௰௯, ௨௩.–14 லூக். ௭. ௪௭. ௧ தீமோ. ௧. ௰௪.—15 உரோ. ௩. ௮.—16 ௰௧. ௩௪. உரோ. ௭. ௪. கலா. ௨. ௰௯: ௬. ௰௪. கொலோ. ௩. ௩. ௧ பே. ௨. ௨௪. 17 கலா. ௩. ௨௭. – 18 ௧ கொரி. ௰௫. ௨௯.–19 யோவா. ௨. ௰௧: ௰௧. ௪௰. 20 உரோ. ௮. ௰௧. ௧ கொரி. ௬. ௰௪. ௨ கொரி. ௰௩. ௪.–21 கலா. ௬. ௰௫. எபே. ௪. ௨௨ ௨௪. கொலோ. ௩. ௯.– 22 கொலோ. ௨. ௰௨. 23 பிலி. ௩. ௰, ௰௧.—24 கொலோ. ௨. ௰௧.—25 கலா. ௨. ௨௰: ௫. ௨௪: ௬. ௰௪. எபே. ௪. ௨௨. கொலோ. ௩. ௫.– 26 ௧ பே. ௪. ௧.

* அல்லது பாவ நிவிர்த்தியை: ௰. ௰௪. ௨ கொரி. ௫. ௰௮, ௰௯.—† அல்லது அவனில் பாவிகளானபடியினாலே.—‡ அல்லது ஒரே பாவத்தினால்.
§ அல்லது ஒரே தப்பிதத்தினால்.—‖ அல்லது ஒரே நீதியினால்.—¶ அல்லது பெறுகிற.

௪ னே.* — மேலும் [1]கிறிஸ்துவுடனேகூட நாம்
௯ மரித்திருக்க,—[2]மரித்தோரிலிருந்து எழுந்த கிறி
ஸ்து இனி மரிப்பதில்லையென்றும் மரணம் இனி
அவரை ஆண்டுகொள்ளாதென்றும் நாம் அறிந்த
படியால், அவருடனேகூடப் பிழைத்தும் இருக்
௰ கலாம் என்று நம்புகிறோம்.—அன்றியும் [3]அவர்
பாவத்திற்காக ஒரேதரம் மரித்தார்; பின்பு [4]அவர்
பிழைத்திருக்கிறது பராபரனுக்காக இருக்கிற
௰௧ து. — [5]அதுபோல நீங்களும் உங்களைப் பாவத்
திற்கு மரித்தவர்கள் என்றும், [6]நம்முடைய கர்த்
தராகிய இயேசுக்கிறிஸ்துவைக்கொண்டு பரா
பரனுக்குப் பிழைத்திருக்கிறவர்கள் என்றும்
எண்ணிக்கொள்வீர்களாக.

௰௨ ஆகையால் [7]சாவுக்கினமான உங்கள் சரீரத்தின்
இச்சைகளுக்கு நீங்கள் கீழ்ப்படியத்தக்கதாக,
௰௩ பாவம் அதிலே ஆளாதிருப்பதாக.—அன்றியும்
நீங்கள் நியாயப்பிரமாணத்தின் கீழ் அல்ல, கிரு
பையின் கீழ் இருக்கிறபடியால், [8]பாவம் உங்க
௰௪ ளைப் பலபந்தப்படுத்தமாட்டாது. — ஆதலால்
[9]நீங்கள் உங்கள் அவயவங்களை அநீதிக்குரிய
ஆயுதங்களாகப் † பாவத்திற்கு ஒப்புக்கொடா
மல், [10]உங்களை மரித்தோரிலிருந்து பிழைக்கிற
வர்கள் என்று பராபரனுக்கு ஒப்புக்கொடுத்து,
உங்கள் அவயவங்களை நீதிக்குரிய ஆயுதங்களா
கப் பராபரனுக்கு ஒப்புக்கொடுப்பீர்களாக.

௰௫ இதினாலே பொருளென்ன ஆயிற்று? [11]நாம்
நியாயப்பிரமாணத்தின்கீழ் இராமல் கிருபையின்
கீழ் இருக்கிறபடியினாலே, பாவஞ்செய்யலா
௰௬ மென்ற பொருளா? அப்படி அல்லவே.-மரணத்
திற்கு ஏதுவான பாவத்துக்காகிலும் நீதிக்கு ஏது
வான கீழ்ப்படிதலுக்காகிலும், [12]எதற்குக் கீழ்ப்
படியும்படி உங்களை அடிமைகளாக ஒப்புக்
கொடுக்கிறீர்களோ அதற்கே கீழ்ப்படிகிற அடி
மைகளாய் இருக்கிறீர்கள் என்று அறியாமலிருக்
௰௭ கிறீர்களா?—முன்னே நீங்கள் பாவத்திற்கு அடி
மைகளாயிருந்தீர்கள்; இப்பொழுது உங்களுக்கு
ஒப்புவிக்கப்பட்ட ‡ [13]உபதேசத்தின் பிரமாணத்
திற்கு நீங்கள் மனச்சந்தோஷமாய்க் கீழ்ப்படிந்
திருக்கிறபடியினாலே பராபரனுக்குத் தோத்தி
௰௮ ரம்.—இப்படி [14]நீங்கள் பாவத்திலிருந்து விடுத
லையாக்கப்பட்டபின்பு, நீதிக்கு அடிமைகளா
௰௯ னீர்கள்.—உங்கள் சரீரத்தின் பலஈனத்தின் நிமித்
தம் மனிதர் பிரகாரமாகச் சொல்லுகிறேன்; அக்
கிரமத்தை நடப்பிக்கும்படி (முன்னே) நீங்கள்
உங்கள் அவயவங்களை அசுத்தத்திற்கும் அக்
கிரமத்திற்கும் அடிமைகளாக ஒப்புக்கொடுத்தது
போல, இப்பொழுது பரிசுத்தமானதை நடப்
பிக்கும்படி உங்கள் அவயவங்களை நீதிக்கு அ
டிமைகளாக ஒப்புக்கொடுப்பீர்களாக.-[15]பாவத் ௨௰
திற்கு நீங்கள் அடிமைகளாய் இருந்தகாலத்திலே
நீதிக்கு நீங்கினவர்களாய் இருந்தீர்கள். § -[16]இப் ௨௧
பொழுது நீங்கள் வெட்கப்படுகிற காரியங்களி
னாலே அக்காலத்திலே உங்களுக்கு என்ன பிர
யோசனம் உண்டாயிற்று? [17]மரணமே அவைக
ளின் முடிவாயிருக்கின்றது. — [18]இப்பொழுது ௨௨
நீங்கள் பாவத்தில்நின்று விடுதலையாக்கப்பட்டுப்
பராபரனுக்கு அடிமைகளான பின்பு, பரிசுத்த
மாகுதல் உங்களுக்குப் பிரயோசனமாயிற்று;
நித்திய சீவனே அதின் கடைசி பலனாயிருக்
கின்றது.—[19]பாவத்தினால் வருகிற சம்பளம் மர ௨௩
ணம்; [20]பராபரனுடைய கிருபையுள்ள ஈவோ
நம்முடைய கர்த்தராகிய இயேசுக்கிறிஸ்துவி
னால் உண்டான நித்திய சீவனே.

## ௭. அதிகாரம்.

*௧. உயிர் நீங்கின பின்பு நியாயப்பிரமாணம் மனுஷனை ஆளாதென்பது. ௪. நாம் நியாயப்பிரமாணத்துக்கு மரித்திருந்தாலும், ௭. அது பாவமாயிராமல், ௰௨. பரிசுத்தமும், நீதியும், நன்மையுமாய் இருக்கிறதென்பது. ௰௬. பவுல்தானே அதைக் கைக்கொள்ளக்கூடாததின்நிமித்தம் விதனப்படுகிறதைச் சொல்லியது.*

நியாயப்பிரமாணத்தை அறிந்திருக்கிறவர்களு ௧
டனே பேசுகிறேன்; சகோதரரே, ஒரு மனிதன்
உயிரோடிருக்குமளவும் மாத்திரம் நியாயப்பிர
மாணம் அவனை ஆளுகின்றது என்று அறியீர்க
ளா?-அதெப்படியென்றால் [21]புருஷனைக்கொண் ௨
ட ஸ்திரி தன் புருஷனுடைய சீவகாலமளவும்
நியாயப்பிரமாணத்தின்படியே அவனோடே
சேர்க்கப்பட்டிருக்கிறாள்; புருஷன் மரித்த
பின்பு அவள் தன் புருஷனுடைய பிரமாணத்
திற்கு நீக்கப்படுகிறாள். — மேலும் [22]புருஷன் ௩
உயிரோடிருக்கையில் அவள் வேறொரு புரு
ஷனை விவாகம்பண்ணினால், விபசாரியென்று
அழைக்கப்படுவாள்; புருஷன் மரித்தபின்பு அ
வள் அந்தப் பிரமாணத்தில்நின்று விடுதலையாகி,
வேறொரு புருஷனை விவாகம்பண்ணினாலும்
விபசாரியல்ல.

அப்படிப்போல என் சகோதரரே, நாம் [23]பரா ௪
பரனுக்குக் கனியைக் கொடுக்கும்படிக்கு,
மரித்தோரிலிருந்து எழுந்த கிறிஸ்து என்னும்
வேறொருவருடையவர்கள் ஆவதற்கு, நீங்களும்
அவருடைய [24]சரீரத்தினாலே நியாயப்பிரமாணத்
தில் நின்று நீங்க மரித்தவர்களானீர்கள். — நாம் ௫
சரீரத்தின்படி நடந்த காலத்திலே நியாயப்பிரமா
ணத்திலே தோன்றிய பாவமான இச்சைகள், ‖
நாம் [25]மரணத்திற்கு ஏதுவான கனிகளைக் கொ
டுக்கத்தக்கதாக, நம்முடைய அவயவங்களிலே

1 ௨ தீமோ. ௨. ௰௧.—2 வெளி ௧. ௭.௫. கொலோ.௧.௫. யாக்.௪.௧. ௰௮.—3 எபி. ௯. ௨௭, ௨௮. 10 உரோ.௰௨.௧ ௧ பே.௨.௨௪: ௪. ௨.—11 ௧ கொரி. ௯. ௨௧.
4 லூக். ௨௰. ௩௮.—5 ௨ வச. 6 கலா. ௨. ௰௯.—7 சங். ௰௯.௰௯: 12 மத். ௬. ௨௪. யோவா. ௮. ௩௪.
௩௰௯. ௩௧௩.—8 உரோ. ௭. ௪, ௬: ௨ பே ௨.௰௯.—13 ௨ தீமோ ௧.
௮. ௨. கலா. ௫. ௰௮.- 9 உரோ. ௰௩.-14 யோவா.௮.௩௨ ௧ கொரி.
௭. ௨௨. கலா. ௫. ௧ பே. ௨. ௰௬.—15 யோவா. ௮. ௩௪.
16 உரோ.௭.௫.—17 உரோ. ௩. ௩௨. 18 யோவா.௮.௩௨.—19 ௧ மோ. ௨.
௰௭. உரோ.௫.௰௨. யாக்.௧.௰௫. 20 உரோ.௨.௭: ௫.௰,௨௧. ௧ பே.
௧. ௪.—21 ௧ கொரி. ௭. ௩௯. 22 மத்.௫ ௩௨.—23 கலா. ௫. ௨௨.
24 உரோ.௮.௨. கலா. ௨. ௰௯: ௫. ௰௮. எபே. ௨. ௰௫. கொலோ.
௨.௰௪.—25 உரோ ௩.௨௩. கலா. ௫. ௰௯. யாக் ௧. ௰௫.

* கிரேக்கு, பாவத்துக்கு நீங்கி நீதிமானாக்கப்பட்டான். —† கிரேக்கு, கருவிகளாக.—‡ கிரேக்கு, நீங்கள் ஒப்புக்கொடுக்கப்பட்டிருக்கிற.
§ கிரேக்கு, நீதியைவிட்டு நீங்கினவர்கள்.— ‖ அல்லது பாவவியக்கங்கள்.

௬ [1]பலஞ்செய்திருந்தன.—இப்பொழுது நாம் மரித்
தவர்களாயிருக்க,* நாம் பழமையான எழுத்தின்
படியல்ல, [2]புதுமையான ஆவியின்படி ஊழியம்
செய்யத்தக்கதாக, நம்மைக் கட்டியிருந்த நியா
யப்பிரமாணத்தில் நின்று விடுதலையாக்கப்பட்
டிருக்கிறோம்.
௭ இதனாலே பொருள் என்ன ஆயிற்று? நியாயப்
பிரமாணம் பாவமாயிருக்கின்றதென்பதோ? அப்
படி அல்லவே; மேலும் [3]இச்சியாதிருப்பாயாக
என்று நியாயப்பிரமாணம் சொல்லாதிருந்தால்,
இச்சிப்பைப் † பாவமென்று நான் அறியாமல்
இருப்பேன். [4]ஆதலால் பாவம் இன்னதென்று
௮ நியாயப்பிரமாணத்தினாலே அறிந்தேன்.—இப்
படி [5]நியாயப்பிரமாணம் இல்லாவிட்டால், பா
வம் செத்ததாயிருக்கும்; ஆதலால் [6]பாவமானது
கட்டளையினாலே இடம்பெற்று, சகலவித இச்
௯ சைகளையும் என்னில் நடப்பித்தது.—இப்படி
யிருக்க, முன்னே நியாயப்பிரமாணம் இல்லாத
பொழுது நான் சீவனுள்ளவனாயிருந்தேன்; கட்
டளை வந்தபொழுது பாவம் திரும்ப உயிர்கொண்
௰ டது; நான் மரித்தேன்.—இப்படிப் பாவமானது
கட்டளையினாலே இடம்பெற்று, என்னை வஞ்
சித்து, அதினாலே என்னைக் கொலைசெய்ததி
௰௧ னாலே,—[7]சீவனுக்காகக் கொடுக்கப்பட்ட கட்ட
ளையை எனக்கு மரணத்தைக் கொடுக்கிறதென்று
௰௨ கண்டேன்.—[8]ஆகையால் நியாயப்பிரமாணமே
பரிசுத்தமாயிருக்கின்றது, கட்டளையும் பரிசுத்த
மாயும் நீதியாயும் நன்மையாயும் இருக்கின்றது.
௰௩ இப்படியானால் நன்மையானது என் மரணத்
திற்கு ஏதுவாயிற்று என்று கேட்டால், அப்படி
ஆகவே இல்லை; பாவமே எனக்கு அப்படி ஆயி
ற்று;பாவம் கட்டளையினாலே மிகவும் பெரிதான
பாவியாகும்படிக்கு, அதுவே நலமானதினாலே
எனக்கு மரணம் உண்டாக்குகிறதாகத் தோன்
௰௪ றிற்று.—மேலும் நமக்குத் தெரிந்திருக்கிறபடி
நியாயப்பிரமாணம் ஆவிக்குரியதாய் இருக்கின்
றது; (மனிதனாகிய) [9]நானோ பாவத்துக்குக்
௰௫ கீழாக விற்கப்பட்டு,—மாம்சத்துக்கு உரியவனாய்
இருக்கிறேன்; எப்படியெனில் நான் நடப்பிக்
கிறதற்கு என் மனது சம்மதிக்கிறதில்லை; ‡ [10]நான்
விரும்புகிறதைச் செய்யாமல், பகைக்கிறதையே
௰௬ செய்கிறேன்.—இப்படி என் மனது விரும்பாத
தை நான் செய்திருக்க நியாயப்பிரமாணம் நல்
௰௭ லதென்று ஒத்துக்கொள்ளுகிறேன். — ஆதலால்
நானல்ல, எனக்குள் வாசமாயிருக்கிற பாவமே
௰௮ அப்படி நடப்பிக்கின்றது.—அது எப்படியென்
றால் நான் அறிந்திருக்கிறபடி மாம்சதேகியாகிய
[11]எனக்குள்ளே நன்மை வாசமாயிருக்கிறதில்லை;
நன்மை செய்வதற்கான விருப்பம் என்னுடனே
இருக்கின்றது; அப்படிச் செய்கிறதை என்னி
டத்தில் காணேன்.—ஆதலால் எனக்கு விருப்ப ௰௯
மான நன்மையை நான் செய்யாமல், எனக்கு
விருப்பமில்லாத தீமையை நடப்பிக்கிறேன்.—
அந்தப்படி எனக்கு விருப்பம் இல்லாததை நான் ௨௰
செய்கிறவனாயிருக்க நானல்ல, எனக்குள்ளே
வாசமாயிருக்கிற பாவமே அப்படிச் செய்கின்
றது.—ஆனபடியினாலே நன்மைசெய்ய விரும் ௨௧
புகிற என்னிடத்திலே தீமைசெய்யப்பண்ணு
கிற பிரமாணத்தைக் காண்கிறேன்.—[12]என் உள் ௨௨
ளத்தோடே [13]பராபரனுடைய நியாயப்பிரமா
ணத்தின்மேல் பிரியமாயிருக்கிறேன். — [14]என் ௨௩
அவயவங்களிலே [15]என் மனதின் பிரமாணத்துக்
கு எதிராய்ப் போராடுகிற வேறு பிரமாணத்தைக்
காண்கிறேன்; அது என் அவயவங்களில் உண்
டாயிருக்கிற பாவப்பிரமாணத்துக்கு என்னை
அடிமையாக்கிக்கொள்ளுகிறது.—ஐயோ, நான் ௨௪
நிர்ப்பாக்கியமுள்ள மனிதன்; இந்த மரணத்
திற்கு ஏதுவான சரீரத்தில் நின்று§ யார் என்னை
விடுதலையாக்குவார்.—[16]நம்முடைய கர்த்தராகிய ௨௫
இயேசுக்கிறிஸ்துவினாலே (என்னை விடுதலையாக்
குகிற) பராபரனையே தோத்திரஞ்செய்கிறேன்;
ஆதலால் நானே என் மனதினாலே பராபரனு
டைய நியாயப்பிரமாணத்துக்கும், மாம்சத்தினா
லே பாவப்பிரமாணத்துக்கும் ஊழியஞ்செய்கி
றேன்.

## ௮. அதிகாரம்.

௧. கிறிஸ்துவைப் பற்றிக்கொண்டு தேவ ஆவியின்படி நடக்கிறவர்களுக்கு ஆக்கினை வராதென்றும், ௫. ௰௧. மாம்சத்துக்கேற்ற சிந்தையினால் வரும் தீமை இன்னதென்றும், ௬. ௰௪. ஆவிக்கேற்ற சிந்தையினாலும், ௰௭. பராபரனுடைய புத்திரராயிருப்பதினாலும் வரும் நன்மை இன்னதென்றும், ௰௯. பராபரன் நீதியாய்த் தீர்மானித்த தம்முடைய புத்திரரின் மகிமையான விடுதலைக்குச் சிருஷ்டிகளெல்லாம் எதிர்நோக்கிக்கொண்டிருக்குமென்றும், ௩௮. பராபரனுடைய அன்பினின்று உத்தமரை யாதொன்றும் நீக்கமாட்டாதென்றும் காட்டியது.

ஆனபடியினாலே [17]மாம்சத்தின்படி அல்ல, ௧
ஆவியின்படியே நடந்து, கிறிஸ்து இயேசுவுக்கு
உட்பட்டிருக்கிறவர்களுக்கு ஆக்கினைத்தீர்ப்பு
வராது. — கிறிஸ்து இயேசுவினாலே சீவனைக் ௨
கொடுக்கிற [18]ஆவியின் [19]பிரமாணம் என்னைப்
பாவம் மரணம் என்றிவைகளின் [20]பிரமாணத்
தில்நின்று விடுதலையாக்கிற்றே.—அது எப்படி ௩
யெனில் [21]மாம்சத்தினாலே பலஈனமாயிருந்த
நியாயப்பிரமாணம் செய்யக்கூடாததைப் [22]பரா
பரன் செய்ய, தம்முடைய குமாரனைப் பாவ
மாம்சத்தின் சாயலாகவும்பாவத்தைப் போக்கும்
பலியாகவும்|| அனுப்பி, மாம்சத்திலே பாவத்
தை ஆக்கினைக்குள்ளாகத் தீர்த்தார்.—[23]மாம்சத் ௪

1 உரோ. ௬. ௰௧.—2 உரோ. ௨. ௨௯. ௨ கொரி. ௩. ௬.—3 ௨ மோ. ௨௰. ௰௭. ௫ மோ. ௫. ௨௧. அப் ௨௰. ௩௩. உரோ. ௰௩. ௯.—4 உரோ. ௩. ௨௰.—5 ௧ கொரி. ௰௫. ௫௬. 6 உரோ. ௪. ௰௫: ௫. ௨௰.—7 ௩ மோ. ௰௮. ௫. எசே. ௨௰. ௰௧, ௰௩, ௨௧. ௨ கொரி. ௩. ௭.—8 சங். ௰௯. ௮: ௱௰௯. ௧௮, ௱௨௭. ௧ தீமோ. ௧. ௮. 9 ௧ இரா. ௨௧. ௨௰, ௨௫. ௨ இரா. ௰௭. ௰௭.—10 கலா. ௫. ௰௭. 11 ௧ மோ. ௬. ௫: ௮. ௨௧.

12 ௨ கொரி. ௪. ௰௬. எபே. ௩. ௰௬. கொலோ. ௩. ௯, ௰.—13 சங். ௧. ௨. 14 உரோ. ௬. ௰௩, ௰௯.—15 கலா. ௫. ௰௭.—16 ௧ கொரி. ௰௫. ௫௭. 17 ௪. வச. கலா. ௫. ௰௬, ௨௫. 18 ௧ கொரி. ௰௫. ௪௫. ௨ கொரி. ௩. ௬. 19 யோவா. ௮. ௩௬. உரோ. ௬. ௰௮, ௨௨. கலா. ௨. ௰௯: ௫. ௧.—20 உரோ. ௭. ௨௪, ௨௫.—21 அப். ௰௩. ௩௯. உரோ. ௩. ௨௰. எபி. ௭. ௰௮, ௰௯: ௰௧. ௨, ௰௪.—22 ௨ கொரி. ௫. ௨௧. கலா. ௩. ௰௩.—23 ௧. ௪.

* அல்லது நம்மைக் கட்டியிருந்தது செத்திருக்க; உரோ ௬. ௨. ௭. வச.—† அல்லது பேராசையை.—‡ கிரேக்கு. அறிகிறதில்லை; சங். ௧. ௬.
§ அல்லது மரணத்தின் சரீரத்தினின்று.—|| அல்லது பாவத்துக்காக.

துக்கு ஏற்றபடி அல்ல, ஆவிக்கு ஏற்றபடி நடக்
கிற நம்மாலே நியாயப்பிரமாணத்தின் நீதி நிறை
௫ வேறும்படிக்கே அப்படி ஆயிற்று.—இப்படியி
ருக்க, [1]மாம்சத்துக்கு ஏற்றபடி நடக்கிறவர்கள்
மாம்சத்துக்கு ஏற்றவைகளைச் சிந்திக்கிறார்கள்;
ஆவிக்கு ஏற்றபடி நடக்கிறவர்கள் [2]ஆவிக்கு
௬ ஏற்றவைகளைச் சிந்திக்கிறார்கள். — [3]மாம்சத்து
க்கு* ஏற்ற சிந்தை மரணத்துக்கு எதுவானது;
ஆவிக்கு ஏற்ற சிந்தை† சீவனுக்கும் சமாதானத்
௭ துக்கும் எதுவானது.—எப்படியென்றால், [4]மாம்
சத்துக்கு ஏற்ற சிந்தை‡ பராபரனுடைய நியா
யப்பிரமாணத்திற்குக் கீழ்ப்படியாமலும் [5]கீழ்ப்
படியத் திராணியில்லாமலும் இருக்கிறபடியால்,
அது பராபரனுக்கு விரோதமான பகையாயி
௮ ருக்கின்றது.—ஆனதால் மாம்சத்திற்கு ஏற்றபடி
நடக்கிறவர்கள் பராபரனுக்குப் பிரியமாய் இ
ருக்கமாட்டார்கள்.

௯ [6]பராபரனுடைய ஆவி உங்களில் வாசமாயி
ருக்கிறபடியால் நீங்கள் மாம்சத்திற்கு ஏற்றபடி
அல்ல, ஆவிக்கு ஏற்றபடி நடக்கிறவர்களாய்
இருக்கிறீர்கள்; [7]கிறிஸ்துவினுடைய ஆவியை
உடையவன் அல்லாதவன் அவருடையவன்
௰ அல்ல.—மேலும் கிறிஸ்து உங்களில் இருந்தபடி
யால், பாவத்தின் நிமித்தம் சரீரம் அழிந்துபோ
னாலும் ஆவியானது நீதியின் நிமித்தம் சீவனாயி
௰௧ ருக்கின்றது.—அன்றியும் இயேசுவை மரித்தோ
ரில்நின்று எழுப்பினவருடைய [8]ஆவி உங்களில்
வாசமாயிருக்கிறபடியால், [9]கிறிஸ்துவை மரித்
தோரிலிருந்து எழுப்பினவர் உங்களில் வாசமா
யிருக்கிற தம்முடைய ஆவியினாலே § மரணத்
துக்குரிய உங்கள் சரீரங்களை உயிரோடிருக்கச்
செய்வார்.

௰௨ [10]ஆகையால் சகோதரரே, மாம்சத்துக்கு ஏற்
றபடி சீவனம்பண்ணத்தக்கதாக, நாம் மாம்சத்
துக்குக் கடனாளிகளாய் இருக்கிறதில்லை. —
௰௩ [11]மாம்சத்துக்கு ஏற்றபடி சீவனம்பண்ணினால்
சாவீர்கள்; ஆவியினாலே சரீரத்தின் செய்கைகளை
௰௪ [12]அழித்துப்போட்டால் பிழைப்பீர்கள். — மே
லும் [13]எவர்கள் பராபரனுடைய ஆவியினாலே
நடத்தப்படுகிறார்களோ அவர்கள் பராபரனு
௰௫ டைய புத்திரராய் இருக்கிறார்கள்.—அந்தப்படி
நீங்களும் பின்னும் [14]பயப்படுகிறதற்கு அடிமை
யின் [15]ஆவியை அடையாமல், [16]அப்பா பிதாவே
என்று கூப்பிடப்பண்ணுகிற [17]புத்திரசுவிகாரத்
௰௬ தின் ஆவியையே அடைந்திருக்கிறீர்கள்.-[18]நாம்
பராபரனுடைய புத்திரராய் இருக்கிறதைக்கு
றித்து ஆவியானவர் தாமே நம்முடைய ஆவியு
டனேகூடச் சாட்சிகொடுக்கிறார். — மேலும் ௰௭
நாம் புத்திரராயிருக்க, [19]சுதந்தரராயும் இருக்கி
றோம்; [20]கிறிஸ்துவுடனேகூட நாம் மகிமைப்ப
டும்படிக்கு அவரோடேகூடப் பாடுபட்டால்,
அவரோடேகூடச் சுதந்தரராய்ப் பராபரனு
டைய சுதந்தரராகவே இருப்போம்.

ஆதலால் [21]இக்காலத்துப் பாடுகள் இனி நம் ௰௮
மிடத்தில் வெளிப்படும் மகிமைக்கு ஒப்பிடப்
பாத்திரமானவைகள் அல்ல என்று எண்ணுகி
றேன்.—மேலும் தற்செயலாலே அல்ல, சிருட் ௰௯
டிகளும் அழிவுக்கு ஏற்ற அடிமைத்தனத்தில்
நின்று விடுதலையாக்கப்பட்டு,-பராபரனுடைய ௨௰
புத்திரர் மகிமையாய் அடையும் இரட்சிப்புக்கு
வரும்படிக்கான நம்பிக்கையோடே [22]கீழ்ப்ப
டுத்தினவராலே வீணுக்குக் கீழ்ப்பட்டிருக்கிற
படியால்,—[23]சிருட்டிகளும் பராபரனுடைய புத் ௨௧
திரர் வெளிப்படுகிறதற்கு [24]மிகுந்த ஆசையோ
டே காத்துக்கொண்டிருக்கின்றன. — ஆனபடி ௨௨
யால் நமக்குத் தெரிந்திருக்கிறபடி சகல சிருட்
டிகளும்கூட || [25]இதுவரைக்கும் தவித்து வேத
னைப்படுகின்றன.— அவைகள்மாத்திரம் அல்ல, ௨௩
[26]ஆவியின் முதற்பலன்களைப் பெற்ற நாமும்
கூட [27]நம்முடைய சரீரம் மீட்கப்படுதலாகிய
[28]புத்திரசுவிகாரம் வருவதற்குக் காத்திருந்து,—
[29]நமக்குள்ளே தவிக்கிறோம், (அதன்மேலுள்ள) ௨௪
நம்பிக்கையாய் நாம் இரட்சிக்கப்படுகிறோம்;
[30]காணப்படுகிற பொருளை நம்புகிறது நம்பிக்
கையல்ல; ஒருவன் தான் காண்கிறதை நம்ப
வேண்டுவது என்ன?-நாம் காணாததை நம்புகிற ௨௫
படியால் அது வருவதற்குப் பொறுமையோடே
காத்திருக்கிறோம்.

அல்லாமலும் [31]நாம் தகுதியாய்ச் செபம்பண் ௨௬
ணவேண்டுவது இன்னதென்று அறியாமலிருக்கி
றபடியால், [32](தேவ) ஆவியானவர் தாமே சொல்
லக்கூடாத பெருமூச்சுகளாலே நமக்காக வே
ண்டுதல்பண்ணி, நம்முடைய பலஈனங்களில்
(நமக்கு) உதவிசெய்கிறார்.—ஆவியானவர் [33]பரா ௨௭
பரனுடைய சித்தத்தின்படியே பரிசுத்தவான்க
ளுக்காக வேண்டுதல்பண்ணுகிறபடியால்¶ [34]இ
ருதயங்களை ஆராய்ந்துபார்க்கிறவர் ஆவியின்
சிந்தை இன்னதென்று அறிந்துகொள்ளுகிறார்.

அன்றியும் அவருடைய முன்யோசனையின் ௨௮
படி [35]அழைக்கப்பட்டவர்களாய்ப் பராபரனில்
அன்புகூருகிறவர்களுக்குச் சகலமும் நன்மை
யாகும்படிக்கு எதுவாயிருக்கின்றது என்று அ

1 யோவா. ௩. ௬. ௧ கொரி. ௨. ௰௪. ௨. ௯.—10 உரோ. ௬. ௭, ௰௪.
2 கலா. ௫. ௨௨, ௨௫. — 3 ௰௧. ௨௪. 11 ௬. ௨௪ கலா. ௬. ௮.—12 எபே.
உரோ. ௬. ௨௧ கலா. ௬. ௮ ௪. ௨௨. கொலோ. ௩. ௫.
4 யாக். ௪. ௪.—5 ௧ கொரி. ௨. ௰௪. 13 கலா. ௫. ௰௮.—14 ௨ தீமோ. ௧. ௭.
6 ௧ கொரி. ௩. ௰௬: ௬. ௰௯.—7 யோ ௧ யோ. ௪. ௰௮.—15 ௧ கொரி. ௨.
வா ௩. ௩௪. கலா. ௪. ௬ பிலி. ௧. ௰௨. எபி. ௨. ௰௫.—16 மாற். ௰௪.
௨௰. ௧ பே. ௧. ௰௧.—8 அப். ௨. ௩௬.—17 எசா. ௫௬. ௫. கலா. ௪.
௨௪.-9 உரோ ௬. ௪, ௫. ௧ கொரி. ௫. ௬.—18 ௨ கொரி ௧. ௨௨: ௫.
௬. ௰௪. ௨ கொரி. ௪. ௰௪. எபே. ௫. எபே ௧. ௰௩: ௪. ௩௰.—19 அப்.
௨௬. ௰௮. கலா. ௪. ௭.—20 அப். ௰௪.—29 ௨ கொரி. ௫. ௩, ௪.
௰௪. ௨௨. பிலி ௧. ௨௯. ௨ தீமோ. 30 ௨ கொரி. ௫. ௭. எபி. ௰௧. ௧.
௨. ௰௨, ௰௨.—21 ௨ கொரி. ௪. ௰௭. 31 மத். ௨௰ ௨௨. யாக் ௪. ௩.
௧ பே. ௧. ௬, ௭: ௪. ௰௩.-22 ௨௨. 32 சகரி. ௰௨. ௰. எபே. ௬. ௰௮
௨௪. ௧ மோ ௩. ௰௯.—23 ௧ யோ. 33 ௧ யோ. ௫. ௰௪.—34 ௧ நாளா. ௨௮.
௩. ௨.—24 ௨ பே. ௩. ௰௩. ௯ சங் ௭. ௯. வாக். ௨௰. ௫. எரே.
25 எரே. ௰௨. ௰௧.—26 ௨ கொரி. ௫. ௰௧. ௨௰: ௰௭. ௰: ௨௰. ௰௨. அப். ௧
௫. எபே. ௧. ௰௪.—27 லூக். ௨௧. ௨௪. ௧ தெச ௨. ௪. வெளி. ௨.
௨௮. எபே. ௪. ௩௰.—28 லூக். ௨௰. ௨௩ -35 உரோ ௯. ௰௧. ௨௩, ௨௪.

* கிரேக்கு, மாம்சத்தைச் சிந்திக்கிறசிந்தை; ௭. ௨௪.—† கிரேக்கு, ஆவியைச் சிந்திக்கிற சிந்தை.—‡ கிரேக்கு, மாம்சத்தைச் சிந்திக்கிற சிந்தை.
§ அல்லது ஆவியின நிமித்தமாக.—|| அல்லது சகல சீவபிராணிகளும; மாற். ௰௬. ௰௫. கொலோ. ௧. ௨௩.—¶ அல்லது பண்ணுகிறேரென்று.

௨௯ றிந்திருக்கிறோம்.—அது எப்படியெனில், [1]பரா
பரன், தம்முடைய குமாரன் அநேக சகோதர
ருக்குள்ளே முதற்பேறுனவராய் இருக்கும்ப
டிக்கு, [2]தாம் எவர்களை முன்னறிந்தாரோ அவர்
களையும் [3]அவருடைய சாயலுக்கு ஒப்பாயிருப்ப
௩௰ தற்கு [4]முன்குறித்தார்.—அல்லாமலும் எவர்களை
முன்குறித்தாரோ, [5]அவர்களை அழைத்தும் இருக்
கிறார்; எவர்களை அழைத்தாரோ, அவர்களை [6]நீதி
மான்களாக்கியும் இருக்கிறார்; எவர்களை நீதி
மான்களாக்கினாரோ [7]அவர்களை மகிமைப்படுத்
தியும் இருக்கிறார்.
௩௧ இவைகளைக்குறித்து நாம் என்ன சொல்ல
வேண்டும்? [8]பராபரன் நம்முடைய பங்கிலிருக்க
௩௨ நமக்கு விரோதமாயிருப்பவன் எவன்?—[9]அவர்
தம்முடைய சொந்தக் குமாரனென்றும் பாரா
மல் [10]நம்மெல்லாருக்காகவும் அவரையே ஒப்புக்
கொடுத்திருக்க, அவரோடேகூட மற்ற யாவை
யும் நமக்கு அநுக்கிரகம்பண்ணமல் இருப்
௩௩ பாரா?—பராபரனால் தெரிந்துகொள்ளப்பட்ட
வர்கள்மேல் யார் குற்றம்சாற்றலாம்? [11]பராபர
னே (அவர்களை) நீதிமான்களாக்குகிறவர். —
௩௪ [12]யார் (அவர்களை) ஆக்கினைக்குள்ளாகத் தீர்க்க
லாம்? கிறிஸ்துவே (அவர்களுக்காக) மரித்தார்;
மேலும் எழுந்தவராயும் இருக்கிறார்; அதுவுமல்
லாமல் [13]அவர் பராபரனுடைய வலதுபாரிசத்தி
லிருந்து [14]நமக்காக வேண்டுதல் செய்கிறார்.—
௩௫ [15]உமதுநிமித்தம் நாம் எந்நேரமும் கொலைசெய்
யப்படுகிறோம் என்றும் அடிக்கப்படும் ஆடுகளை
ப்போல எண்ணப்படுகிறோம் என்றும் எழுதியி
௩௬ ருக்கிறபடியே இருந்தும்,—நம்மைக் கிறிஸ்து
வின் அன்பைவிட்டுப் பிரிப்பவன் யாவன்? உ
பத்திரவமோ, வியாகுலமோ, துன்பப்படுதலோ,
பசியோ, நிருவாணமோ, நாசமோசமோ, கட்க
௩௭ மோ?—[16]இவையெல்லாவற்றையும் நாம் நம்மில்
அன்புகூருகிறவராலே அதிகமாய்ச் செயங்கொ
௩௮ ள்ளுகிறோம்.—மரணமானாலும் சீவனானாலும், தே
வதூதர்களானாலும் [17]அதிகாரிகளானாலும் வல்ல
மைகளானாலும், நிகழ்காரியங்களானாலும் வருங்
௩௯ காரியங்களானாலும்,—உயர்வானாலும் தாழ்வா
னாலும், வேறொரு சிருஷ்டியானாலும் நம்மை
நம்முடைய கர்த்தராகிய கிறிஸ்து இயேசுவினால்
விளங்கிய பராபரனுடைய அன்பைவிட்டுப்
பிரிக்கமாட்டாதென்று நிச்சயமாய் அறிந்திருக்
கிறேன்.

## ௯. அதிகாரம்.

௧. பவுல் யூதர்களைக்குறித்துத் துக்கித்தது. ௭. ஆபிரகாமின் வித்தெல்லாம் வாக்குத்தத்தத்தின் புத்திரரல்ல என்பது. ௰௮. பராபரன் தமக்கு இஷ்டமானவர்கள்மேல் இரக்கம் வைக்கிறாரென்பது. ௨௧. குயவன் களிமண்ணினாலே தனக்கு இஷ்டமான பாண்டங்களைச் செய்கிறானென்பது. ௨௫. அஞ்ஞானிகள் சுதந்தரத்துக்குள்ளாகி யூதர்கள் புறம்பாக்கப்பட்டதை முன் அறிவிக்கப்பட்டதென்பது. ௩௨. யூதர்கள் விசுவாசத்தினால் உண்டாகும் நீதியை அங்கிகாரம்பண்ணாத முகாந்தரம் இன்னதென்பது.

சரீரசம்பந்தமான என் வம்சத்தாராகிய என் இ ௧
னத்தாருக்காக [18]நானே கிறிஸ்துவினால் சபிக்
கப்பட்டவனாகவேண்டும் * என்று இருந்து,—
[19]அவர்களைக்குறித்து மிகுந்த துக்கமும் இடை ௨
விடாத மனநோவும் உள்ளவனாயிருக்கிறேன்.-
[20] இயேசுக்கிறிஸ்துவின்மேலே (ஆணைப்படிக்கு ௩
இப்படி) மெய்யாய்ச் சொல்லுகிறேன்; பரிசுத்த
ஆவியின்மேலே ஆணைப்படிக்குப் பொய்சொல்
லாமல் இருக்கிறேன்; என் மனதுகூடச் சாட்சி
யாய் இருக்கின்றது. — [21]அவர்கள் இஸ்ரவேல் ௪
சந்ததியாராய் இருக்கிறார்களே, [22]புத்திரசுவிகா
ரமும் [23]மகிமையும் [24]உடம்படிக்கைகளும் †
[25]வேதப்பிரமாணமிடுதலும் [26]தேவ ஆராதனை
யும் [27]வாக்குத்தத்தங்களும் அவர்களுடையவை
களே.—[28]பிதாக்கள் அவர்களுடையவர்களாய் ௫
இருக்கிறார்களே; மேலும் [29]சரீரத்தின்படிக்குக்
கிறிஸ்து அவர்களில் உண்டானாரே; [30]அவர்
என்றென்றைக்கும் தோத்திரிக்கப்பட்ட சர்வத்
திற்கும் மேலான தேவனானவர்.—ஆமன்.
[31]பராபரனுடைய வசனம் அவமாய்ப்போ ௬
யிற்று என்று சொல்லக்கூடாது; என்னத்தினா
லென்றால் [32]இஸ்ரவேல் வம்சத்தார் எல்லாரும்
இஸ்ரவேலர் அல்லவே.—அன்றியும் [33]அவர்கள் ௭
ஆபிரகாமின் சந்ததியானாலும் எல்லாரும் புத்திர
ரும் அல்லவே; [34]ஈசாக்கினாலே உனக்குச் சந்ததி
உண்டாகுமென்று சொல்லியிருக்கின்றதே. —
இதன் பொருள் என்னவென்றால், சரீரமுறை ௮
மையின்படி புத்திரரானவர்கள் பராபரனுடைய
புத்திரர் அல்ல, [35]வாக்குத்தத்தத்தினாலே குறிக்
கப்பட்ட புத்திரரே (அப்படிப்பட்ட) சந்ததி
என்று எண்ணப்படுகிறார்கள்.—அந்த வாக்குத் ௯
தத்தமான வார்த்தைகளாவன: [36]இக்காலத்திலே
வருவேன்; அப்பொழுது சாராள் ஒரு குமார
னைப் பெறுவாள் என்பவைகளே.—இவைமாத் ௰
திரமல்ல, நம்முடைய முன்னோராகிய ஈசாக்
கென்னும் ஒருவனாலே கருப்பவதியான [37]இரே
பேக்காளும், அதற்குச் சாட்சி; எப்படியென்

1 கொலோ. ௧.௰௫,௰௮. எபி.௧.௬. வெளி. ௧. ௫.—2 உரோ. ௧௧. ௨. ௰௨.௰௭. சங் ௧.௬. எரே. ௧. ௫. மத். ௭. ௨௩. உரோ. ௰௧. ௨. ௨ தீமோ. ௨.௰௯ ௧ பே. ௧. ௨. 3 யோவா. ௰௭. ௨௨. ௨ கொரி ௩. ௰௮. பிலி ௩.௨௧. ௧ யோ.௩.௨. 4 எபே ௧ ௫,௰௧.—5 உரோ. ௧ ௬: ௯ ௨௪. எபே.௪.௪. எபி.௯.௰௫. ௧ பே. ௨. ௯.—6 ௧ கொரி ௬. ௰௧.—7 யோவா. ௰௭ ௨௨. எபே. ௨ ௬.—8 சமோ ௰௪. ௯. சங். ௱௮. ௯.—9 உரோ. ௫. ௬, ௰. 10 உரோ.௪.௨௫.—11 எசா. ௫௰ அ, ௯. வெளி ௰௨.௰.௰௧ —12 யோபு. ௩௪ ௨௯.-13 மாற். ௰௬. ௰௯. கொலோ.௩.௧. எபி.௧.௩: ௮ ௧: ௰௨. ௨. ௧ பே. ௩. ௨௨.—14 எபி. ௭. ௨௫: ௯. ௨௪. ௧ யோ. ௨. ௧. 15 சங்.௪௪.௨௨. ௧ கொரி.௰௫.௩௰, ௩௧. ௨ கொரி. ௪.௰௧.-16 ௧ கொரி. ௰௫.௫௭. ௨ கொரி ௨.௰௪. ௧ யோ. ௪. ௪: ௫. ௪, ௫. வெளி. ௰௨. ௰௧. 17 எபே ௧.௨௧: ௬.௰௨. கொலோ. ௧. ௰௬: ௨. ௰௫. ௧ பே. ௩. ௨௨.

18 உமோ.௩௨.௩௨.—19 உரோ.௰.௧. 20 உரோ. ௧. ௯. ௨ கொரி. ௧. ௨௩: ௰௧. ௩௧: ௰௨. ௰௯. கலா. ௧. ௨௰. பிலி. ௧. ௮. ௧ தீமோ. ௨. ௭. 21 ௫ மோ. ௭. ௬.—22 ௨ மோ. ௪. ௨௨. ௫ மோ.௰௪.௧. எரே.௩௧.௯. 23 ௧ சாமு. ௪. ௨௧. ௧ இரா. அ. ௰௧. சங்.௬௩.௨: எஅ.௬௧.-24 அப். ௩. ௨௫. எபி அ.அ,௯,௰.—25 சங். ௱௪௭. ௰௯.—26 எபி. ௯. ௧. 27 அப். ௰௩ ௩௨. உரோ ௩.௨. எபே. ௨.௰௨.-28 ௫ மோ.௰.௰௫. உரோ. ௰௧. ௨௮.-29 லூக்.௩.௨௩.உரோ. ௧. ௩.—30 எரே.௨௩.௬. யோவா. ௧.௧. அப். ௨௰.௨௮. எபி.௧.௮. ௧ யோ.௫.௨௰.—31 ௪ மோ. ௨௩ ௰௯. உரோ. ௩. ௩.—32 யோவா. அ.௩௯. உரோ.௨.௨௮,௨௯: ௪. ௰௨,௰௬. கலா.௬.௰௬.—33 கலா. ௪.௨௩.—34 ௧ மோ. ௨௧. ௰௨. எபி.௰௧.௰௮.—35 கலா.௪.௨௮. 36 ௧ மோ. ௰௮.௰, ௰௪.—37 ௧ மோ. ௨௫. ௨௧.

* அல்லது கிறிஸ்துவிலிருந்து விலக்க.—† அல்லது ஏற்பாடுகளும்.

௰௧ ருல்,—அவளுடைய பிள்ளைகள் பிறவாமலும்
நன்மைதீமை ஒன்றும் செய்யாமலும் இருந்தகா
லத்திலே, [1]மூத்தவன் * இளையவனுக்கு † ஊழி
யம்செய்வான் என்று அவளுடனே சொல்லப்
௰௨ பட்டது. — அப்படிப்போல, [2]யாக்கோபின்
மேல் அன்பாயிருந்து, ஏசாவைப் பகைக்கி
௰௩ றேன் என்றும் எழுதியிருக்கின்றது.—பராபர
னுடைய சித்தம் தெரிந்துகொண்டபடியே இரு
ந்து, கிரியைகளினாலே அல்ல, [3]அழைக்கிறவ
ராலே ஆகும்படிக்கு அப்படிச் சொல்லியிருக்
கின்றது.

௰௪ ஆகையால் நாம் என்னசொல்லலாம்? [4]பரா
பரனிடத்திலே அநீதி உண்டென்று சொல்ல
லாமா? அப்படி ஒருக்காலும் சொல்லக்கூடாது;
௰௫ மோசேயுடனே அவர் சொன்னதாவது:—[5]எவன்
மேல் தயையாயிருக்கச் சித்தமாயிருப்பேனோ
அவன்மேல் தயையாயிருப்பேன்; எவன்மேல்
இரக்கமாயிருக்கச் சித்தமாயிருப்பேனோ, அவன்
௰௬ மேல் இரக்கமாயிருப்பேன் என்றாரே.—ஆகை
யால் மனிதர் விரும்புகிறதினாலும் ஓடுகிறதினா
லும் அல்ல, பராபரனுடைய தயையினாலே ஆயி
௰௭ ருக்கின்றது.—[6]பின்னும் வேதத்திலே பார்வோ
னுடனே அவர் சொன்னதாவது: [7]உன்னிடத்
தில் என்னுடைய வல்லமையைக் காண்பிக்கும்
பொருட்டாகவும், என்னுடைய நாமம் பூமி
யில் எங்கும் பிரஸ்தாபமாகும்பொருட்டாகவும்
உன்னை நிலைநிற்கப்பண்ணினேன் என்றார்.—
௰௮ ஆதலால் அவர் தமது இஷ்டத்தின்படி ஒருவ
னுக்குத் தயையாயிருக்கிறார்; தமது இஷ்டத்தின்
படி மற்றொருவனைக் கடினப்படுத்துகிறார்.

௰௯ இப்படியானால் ஏன் அவர் குற்றம்பிடிக்கி
றார்? [8]அவருடைய சித்தத்திற்கு யாவன் எதிர்
௨௰ நிற்பானென்று என்னுடனே சொல்வாய்.—ஆ
மனிதனே, பராபரனுக்கு எதிராய்த் தர்க்கிக்கிற ‡
நீ யாவன்? [9]உருவாக்கப்பட்ட வஸ்து உருவாக்
கினவனை நோக்கி, நீ ஏன் என்னை இப்படி உண்
௨௧ டாக்கினாயென்று சொல்லுமா?—அல்லது மிதி
யிட்ட களிமண்ணினாலே குயவன் [10]ஒரு பாத்
திரத்தைக் கனமான காரியத்திற்கும், மற்றொன்
றைக் கனஈனமான காரியத்திற்கும் பண்ணும்
படி, மண்ணின்மேல் [11]அதிகாரமுள்ளவன் அல்
௨௨ லவா?—ஆனதால் பராபரன் தமது கோபத்தைக்
காண்பிக்கவும் தமது வல்லமையைத் தெரியப்
படுத்தவும் சித்தமாய், [12]அழிவுக்குத் தகுதியான §
கோபாக்கினைப் [13]பாத்திரங்கள்மேலே மிகவும்
நீடிய சாந்தத்தோடே பொறுமைவைத்துக்கொ
ண்டதும் அல்லாமல்,—[14]தாம் மகிமைக்காக எத் ௨௩
தனமாக்கின தயாபாத்திரங்கள்மேலே [15]தம்மு
டைய மகிமையின் ஐசுவரியத்தைத் தெரியப்
படுத்தச் சித்தமாய், அப்படிப் பொறுத்துக்
கொண்டால்(நீஎப்படித் தர்க்கிக்கலாம்)?—அப் ௨௪
படிப்பட்டவர்கள் ஆகும்படி அவர் [16]யூதரில்
மாத்திரம் அல்ல, புறத்தேசத்தாரிலுமிருந்து நம்
மை அழைத்தார்.

அந்தப்படி ஓசேயாவின் புத்தகத்திலே அவர் ௨௫
சொல்லுகிறதாவது: [17]எனக்குச் சனங்கள் அல்
லாதவர்களை என்னுடைய சனங்கள் என்றும்
சிநேகிக்கப்படாதிருந்தவளைச் சிநேகிக்கப்பட்
டவள் என்றும் அழைப்பேன்.—[18]நீங்கள் என்னு ௨௬
டைய சனங்கள் அல்லவென்று தங்களுக்குச்
சொல்லப்பட்ட இடத்திலே, அவர்கள் சீவ
னுள்ள பராபரனுடைய பிள்ளைகள் என்று அ
ழைக்கப்படுவார்கள் என்கிறார்.—அல்லாமலும் ௨௭
ஏசாயா என்பவன் இஸ்ரவேலரைக்குறித்துக்
கூப்பிடுகிறதாவது: [19]இஸ்ரவேல் சந்ததியார்
சமுத்திரத்தின் மணலைப்போலப் பெருக்கமா
யிருந்தும் [20]மீதியான சிலர்மாத்திரம் இரட்சிக்கப்
படுவார்கள்.—நீதியோடே சீக்கிரமாய்க் கர்த்தர் ௨௮
காரியத்தைத் ‖ தீர்த்து நிறைவேற்றுவார்; [21]சீக்
கிரமாகவே அவர் காரியத்தைப் பூமியிலே தீர்த்
துப்போடுவார் என்றான்.—அல்லாமலும் அதற்கு ௨௯
முன்னே ஏசாயா சொன்னது: [22]சேனைகளையு
டைய பராபரன் நமக்குள்ளே ஒரு சந்ததியை
மீதியாக வையாதிருந்தாரானால் [23]நாம் சோதோ
மைப்போலாகிக் கொமோறாவுக்கு ஒத்திருப்
போம் என்றான்.

இவைகளின் பொருள் என்ன ஆயிற்று என்று ௩௰
கேட்டால், [24]நீதியைத் தேடாமலிருந்த புறத்
தேசத்தார் [25]விசுவாசத்தினாலே வருகிற நீதியை
யே பெற்றுக்கொண்டார்கள்.—[26]நியாயப்பிரமா ௩௧
ணத்தினாலே நீதியைத் தேடின இஸ்ரவேலரோ
விசுவாசத்தினால் அல்ல,— நியாயப்பிரமாணத் ௩௨
திற்கு ஏற்ற கிரியைகளினாலே அதைத் தேடின
படியால், நியாயப்பிரமாணத்தினாலே [27]நீதியை
அடையவில்லை.—[28]இதோ, விழுதற்கான கல்லை ௩௩
யும், இலச்சை அடைவதற்கான கல்மலையையும்
சீயோனிலே வைக்கிறேன்; [29]அதினிடத்தில் வி
சுவாசமாயிருப்பவன் எவனோ, அவன் வெட்கப்
படுவதில்லை ¶ என்று எழுதியிருக்கிறதின்படி
[30]அவர்கள் விழுதற்கான அக்கல்லின்மேல் விழுந்
தார்கள்.

1 ௧ மோ. ௨௫. ௨௩.—2 மல்கி. ௧. ௨. ௫ மோ. ௨௧. ௰௫. லூக். ௰௩. ௨௪. மத். ௰ ௩௭. லூக். ௰௪. ௨௬. யோவா. ௰௨. ௨௫.
3 உரோ. ௪. ௰௭ : ௮. ௨௮.
4 ௫ மோ. ௩௨. ௪. ௨ நாளா. ௰௯. ௭. யோபு. ௮. ௩ : ௩௪. ௰. சங். ௯௨. ௰௫.
5 ௨ மோ. ௩௩. ௰௯.
6 கலா. ௩. ௮, ௨௨.—7 ௨ மோ. ௯. ௰௬.—8 ௨ நாளா. ௨௰. ௬. யோபு. ௯. ௰௨ : ௨௩. ௰௩. தானி. ௪. ௩௫.
9 ஏசா. ௨௯. ௰௬ : ௪௫. ௯ : ௬௪. ௮.
10 ௨ தீமோ. ௨. ௨௰.—11 வாக். ௰௧. ௪. எரே. ௰௮. ௬.—12 ௧ பே. ௨. ௮. யூதா. ௪.—13 ௧ தெச. ௫. ௯.
14 உரோ. ௮. ௨௮, ௨௯. ௩௰.
15 உரோ. ௨. ௪. எபே. ௧. ௭. கொலோ. ௧. ௨௭.—16 உரோ. ௩. ௨௯.
17 ஓசே. ௨. ௨௩. ௧ பே. ௨. ௰.
18 ஓசே. ௧. ௰.—19 ஏசா. ௰. ௨௨, ௨௩.
20 உரோ. ௰௧. ௫.—21 ஏசா. ௨௮. ௨௨.—22 ஏசா. ௧ ௯. புலம். ௩. ௨௨.—23 ஏசா. ௰௩. ௰௯. எரே. ௫௰. ௪௰.—24 உரோ. ௪. ௰௧ : ௰ ௨௰.
25 உரோ. ௧. ௰௭.—26 உரோ. ௰. ௨. ௩. ௰௧. ௭.—27 கலா. ௫. ௪.—28 சங். ௱௰௮. ௨௨. ஏசா. ௮. ௰௪ : ௨௮. ௰௬. மத். ௨௧ ௪௨. ௧ பே. ௨. ௬. ௭, ௮.—29 உரோ. ௰. ௰௧.—30 லூக். ௨ ௩௪. ௧ கொரி ௧ ௨௩

* அல்லது பெரியவன் —† அல்லதுசிறியவனுக்கு —‡ அல்லது மறமொழிசொல்லுகிற; யோபு. ௩௩. ௰௩.—§ அல்லது செய்யப்பட்ட.
‖ அல்லது கணக்கை. —¶ அல்லது கலக்கப்படுவதில்லை.

## ௰. அதிகாரம்.

ஒ. நியாயப்பிரமாணத்தின் நீதிக்கும் விசுவாசத்தின் நீதிக்கும் வித்தியாசத்தையும், ௰க. விசுவாசிக்கிறவனும் வெட்கப்படானென்றும், ௰அ. அஞ்ஞானிகளும் வேதவசனத்தை யறுக்கொண்டு விசுவாசிப்பார்கள் என்றும் சொல்லியது. ௰கூ. இஸ்ரவேல் சனங்கள் இந்தச் சங்கதியை அறியாதவர்கள் அல்லவென்பது.

க சகோதரரே, இஸ்ரவேலர் இரட்சிக்கப்பட
வேண்டும் என்று நான் என் இருதயத்தோடே
மிகவும் விரும்பி, பராபரனை நோக்கி விண்ணப்
உ பம்பண்ணுகிறேன். — [1]அவர்கள் பராபரனைக்
குறித்து வைராக்கியமாயிருக்கிறார்கள் என்று நா
னும் அவர்களுக்குச் சாட்சிசொல்லுகிறேன்.—
ங அந்த வைராக்கியம் அறிவுக்கு ஏற்றதல்ல; எப்
படியென்றால், [2]பராபரனால் வருகிற நீதியை
அவர்கள் அறியாமல் [3]தங்கள் சுயநீதியை நிலைநி
றுத்தத்தேடுகிறபடியால், அவரால் வருகிற நீதிக்
ச குக் கீழ்ப்படியாதிருக்கிறார்கள்.-விசுவாசிக்கிற
எவனுக்கும் நீதி உண்டாகும்படியாகக் [4]கிறிஸ்
து நியாயப்பிரமாணத்தின் முடிவாயிருக்கிறாரே.
ரு மேலும் மோசே நியாயப்பிரமாணத்தினால்
வருகிற நீதியைக்குறித்து [5]இவைகளைச் செய்கிற
மனிதன் இவைகளால் பிழைப்பான் என்று எழு
சா தினார்.—விசுவாசத்தினால் வருகிற நீதிப்பிரமா
ணமோ சொல்லுகிறதாவது: கிறிஸ்துவை இறங்
கிவரப்பண்ணும்படிக்கு வானத்துக்கு ஏறிப்
எ போபவன் யாவன்?—கிறிஸ்துவை மரித்தோரி
லிருந்து ஏறிவரப்பண்ணும்படிக்குப் பாதாளத்
தில் இறங்கிப் போபவன் யாவன் என்று [6]உன்
இருதயத்திலே நினையாதிருப்பாயாக என்பதும்
அ அல்லாமல்,—அது பின்னும்சொல்லுகிறதாவது:
[7]இந்தச் சங்கதி உனக்குச் சமீபமாய் உன் வாயி
லும் உன் இருதயத்திலும் இருக்கின்றது என்று
சொல்லுகின்றது; அந்தச் சங்கதி நாங்கள் பிர
கூ சங்கிக்கிற விசுவாசத்தின் சங்கதிதான். — என்
னவென்றால் நீதிமான்களாக்கப்படுவதற்கு இரு
தயத்தோடே விசுவாசிக்கவும், இரட்சிக்கப்படு
வதற்கு [8]வாயினாலே அறிக்கையிடவும் வேண்டு
௰ வதால்,—நீ உன் வாயினாலே கர்த்தராகிய இயே
சுவை அறிக்கையிட்டு, பராபரன் அவரை மரித்
தோரிலிருந்து எழுப்பப்பண்ணினார் என்று உன்
இருதயத்தோடே விசுவாசித்தால், இரட்சிக்கப்
௰க படுவாய்.—அந்தப்படி [9]அவரை விசுவாசிக்கிற
வன் எவனோ, அவன் வெட்கப்படுவதில்லை என்
று வேதமும் சொல்லுகின்றது.
௰உ அன்றியும் [10]எல்லாருக்கும் கர்த்தரானவர் தம்
மைத் தொழுதுகொள்ளுகிற யாவருக்காகவும்
[11]ஐசுவரியமுள்ளவராய் இருக்கிறபடியால் [12]யூத
ருக்கும் கிரேக்கருக்கும் வித்தியாசமே இல்லை.—
௰ங ஆதலால் [13]கர்த்தருடைய நாமத்தைத் தொழுது
கொள்பவன் எவனோ, [14]அவன் இரட்சிக்கப்ப
டுவான்.

அவரை விசுவாசியாதவர்கள் எப்படி அவ ௰ச
ரைத் தொழுதுகொள்ளுவார்கள்? அவரைக்கு
றித்துக் கேள்விப்படாதவர்கள் எப்படி அவரை
விசுவாசிப்பார்கள்? மேலும் [15]பிரசங்கிக்கிறவன்
இல்லாவிட்டால் எப்படிக் கேள்விப்படுவார்
கள்?—மேலும், ஆ சமாதானத்தைக் கூறி நற்கா ௰ரு
ரியங்களைச் சுவிசேஷமாய் அறிவிக்கிறவர்களு
டைய [16]பாதங்கள் மிகவும் அழகானவைகள்
என்று எழுதியிருக்கிறபடி சிலர் அனுப்பப்படா
விட்டால், எப்படிப் பிரசங்கம்பண்ணுவார்
கள்?—ஆனாலும் [17]இந்தச் சுவிசேஷத்திற்கு எல் ௰சா
லாரும் கீழ்ப்படிய இல்லை; அதைக்குறித்து எசா
யா சொன்னதாவது: [18]கர்த்தாவே, நாங்கள் *
பிரசங்கம்பண்ணுகிறதை † யாவன் விசுவாசித்
தான் என்றான்.—ஆதலால் விசுவாசம் கேள்வி ௰எ
யினாலே வரும், கேள்வி பராபரனுடைய வச
னத்தினாலே வருகின்றது. — இப்படியிருக்க ௰அ
நான் விசாரிக்கிறதென்னவென்றால், அவர்கள்
கேள்விப்படவில்லையா? [19]அவைகளின் தொனி
பூமி எங்கும் சென்றது; [20]அவைகளின் வசனங்
கள் பூச்சக்கரக் கடைசிவரைக்கும் புறப்பட்
டன என்பதின்படி, அவர்கள் மெய்யாய்க் கேள்
விப்பட்டார்களே. — பின்னும் நான் விசாரிக் ௰கூ
கிறது என்னவெனில், இஸ்ரவேலர் அறியவில்
லையோ? (அறியாமல் இருக்கமாட்டார்கள்; என்
னத்தினாலென்றால்) முதலாவது மோசே சொன்
னது: [21]எனக்குச் சனங்கள் அல்லாதவர்களைக்
கொண்டு நான் உங்களுக்குப் பொறாமை உண்
டாக்குவேன்; [22]புத்தியீனமுள்ள சனங்களாலே
உங்களுக்குக் கோபமூட்டுவேன் என்றான்.—
அல்லாமலும் ஏசாயா தயிரியமாய்ச் சொன்னது: உ௰
[23]என்னைத் தேடாதவர்களாலே கண்டு அறி
யப்பட்டேன்; என்னை விசாரித்துக் கேளாத
வர்களுக்கு வெளிப்பரங்கமானேன் என்றான்.—
இஸ்ரவேலரைக்குறித்துச் சொல்லியிருக்கிறதா உ௰க
வது: கீழ்ப்படியாதவர்களுமாய் விரோதம் பே
சுகிறவர்களுமாய் இருக்கிற சனங்களிடத்திற்கு
[24]முழுநாளும் என் கைகளை நீட்டினேன் என்
பதே.

## ௰க. அதிகாரம்.

க. பராபரன் இஸ்ரவேலரெல்லாரையும் தள்ளவில்லையென்றும், எ. சிலர் தெரிந்துகொள்ளப்பட்டு, மற்றவர்கள் கடினப்பட்டுப்போனார்களென்றும், ௰க. அவர்கள் குணப்படுவார்களென்ற நம்பிக்கை உண்டென்றும், ௰அ. அவர்கள்மேல் அஞ்ஞானிகள் பெருமைபாராட்டக் கூடாதென்றும், உக. யூதர்களும் இரட்சிப்புக்கு வந்து எட்டுவார்களென்றும், ௩௩. பராபரனுடைய செய்கைகள் அளவறுக்கக்கூடாதென்றும் காட்டியது

1 அப். உக உ௰: உஉ, க. கலா. க. ௰ச: ச. ௰எ. உரோ கூ. கக.
2 உரோ. க. ௰எ: கூ. க௰.
3 பிலி. க கூ.—4 மத் ௫. ௰எ. கலா. க உச.-5 க மோ. ௰அ ௫ நெகே. கூ. உகூ. எசே. உ௰ ௰க, ௰க, உக கலா. க ௰உ.
6 ௫ மோ. க௰. ௰உ. ௰க.—7 ௫ மோ க௰ ௰ச.—8 மத். ௰. கஉ, லூக். ௰உ. அ அப். அ. கஎ. --9 எசா. உஅ. ௰க: சகூ. உக. எரே. ௰எ. எ உரோ. கூ. கக.—10 அப் ௰ கக. உரோ க. உகூ. க தீமோ. உ. ௫.
11 எபே. க. எ: உ. ச. எ.

12 அப். ௰௫. கூ. உரோ. க. உஉ. கலா. க. உஅ.—13 அப். கூ. ௰ச.
14 யோவே. உ. கஉ. அப். உ. உக
15 தீத். க. உ.—16 எசா. ௫உ. எ. நாகூ. க. ௰௫.-17 உரோ க. க. எபி. ச. உ.
18 எசா. ௫௩ க. யோவா ௰உ. கஅ.
19 சங். ௰கூ. ச. மத். உச. ௰ச: உஅ. ௰கூ. மாற். ௰க. ௰௫. கொலோ. க. க, உக – 20 க இரா. ௰அ. ௰. மத். ச. அ. 21 ௫ மோ. கஉ. உக. உரோ. ௰க ௰க.—22 தீத் க. க.—23 எசா. க௫. க. உரோ. கூ. க௰.—24 எசா. க௫. உ.

* கிரேக்கு, எங்களைக்கேட்டு.—† அல்லது எங்கள் கூறுதலை.

௧ இப்படியிருக்கப் [1]பராபரன் தம்முடைய சனங்
களைத் தள்ளிவிட்டாரா என்று கேட்டால், அப்
௨ படி அவர் செய்யவே இல்லை.—[3]நானும் ஆபிர
காமின் சந்ததியாயும், பென்யமீன் கோத்திரத்
தானும் இருக்கிற இஸ்ரவேலனுயிருக்கிறே
னே; [3]பராபரன் தாம் முன் அறிந்துகொண்ட
தம்முடைய சனங்களைத் தள்ளவே இல்லை; எலி
யாவைக்குறித்து * வேதம் சொல்லுகிறதை அறி
௩ யீர்களா?—அவன் பராபரனை நோக்கி, கர்த்தா
வே, [4]உம்முடைய தீர்க்கதரிசிகளை அவர்கள்
கொலைசெய்து, உம்முடைய பீடங்களை இடித்
௪ துப்போட்டார்கள்.—நான்மாத்திரம் மீதியாயி
ருக்கிறேன், என் பிராணனையும் வாங்கத் தேடு
கிறார்கள் என்று இஸ்ரவேலைக்குறித்து முறை
யிட்டபொழுது, அவனுக்கு உண்டான தேவ
உத்தரவு என்னவென்றால், பாகாலுக்குமுன்
பாக முழங்காற்படியிடாத [5]ஏழாயிரம் பெய
ரை எனக்காக மீதியாய் வைத்தேன் [6]என்பதே.—
௫ அந்தப்படி இக்காலத்திலேயும் கிருபையால் தெ
ரிந்துகொள்ளப்பட்ட மீதி உண்டாயிருக்கின்
௬ றது.—[7]அது கிருபையினால் உண்டாயிருக்கி
றபடியால், அது கிரியைகளினாலே ஆகவில்லை;
அப்படி அல்லவென்றால் கிருபையானது கிரு
பையாயிராது. அன்றியும் அது கிரியைகளி
னால் உண்டாயிருந்தால், அது கிருபையினால்
இராது; அல்லவென்றால், கிரியையானது கிரி
யையல்ல.

௭ இதினாலே என்ன தோன்றுகிறதெனில், [8]இஸ்
ரவேலர் தேடுகிறதை அடையாமல் இருக்கிறார்
கள்; தெரிந்துகொள்ளப்பட்டவர்களோ அதை
அடைந்தார்கள்; மற்றவர்கள் இன்றைத்தினம்வ
ரைக்கும் கடினமான † இருதயமுள்ளவர்களாய்
௮ இருக்கிறார்கள்.—[9]பராபரன் கனநித்திரையுள்ள ‡
ஆவியையும், [10]காணாதிருக்கிற கண்களையும், கே
ளாதிருக்கிற காதுகளையும் அவர்களுக்குக் கொ
டுத்தாரென்று எழுதியிருக்கிற பிரகாரமாக அப்
௯ படி இருக்கிறார்கள்.—தாவீதும் சொல்லுகிறதா
வது: [11]அவர்களுடைய உணவிடம் அவர்களுக்
குக் கண்ணியாயும் வலையாயும் விழுதற்கான கல்
லாயும் பதில்பெறுதற்கு ஏதுவாயும் இருக்கக்க
௰ டவது.—[12]காணாதபடிக்கு அவர்களுடைய கண்
கள் அந்தகாரப்படக்கடவது; அவர்களுடைய
முதுகு எப்பொழுதும் குனியும்படி செய்யு
மென்று சொல்லியிருக்கிறான்.

௰௧ இப்படியிருக்க அழிந்துபோகும்படிக்கா இ
டறினார்கள் என்று கேட்டால், அப்படியல்ல;
அவர்களுக்குள்ளே எரிச்சலை எழுப்புகிறதற்
காக [13]அவர்கள் விழுந்ததினாலே புறத்தேசத்தா
ருக்கு இரட்சிப்புக் கிடைத்தது.—அவர்கள் ௰௨
விழுந்தது உலகத்திற்கு ஐசுவரியமும், அவர்கள்
குறைவானது§ புறத்தேசத்தாருக்கு ஐசுவரியமு
மானதாயிருக்க, அவர்கள் நிறைவானால் மிகவும்
அதிகமாய் அப்படியாகும் அல்லவோ?—[14]புறத் ௰௩
தேசத்தாருக்காக நான் அப்போஸ்தலனாயிருக்கி
றதினாலே புறத்தேசத்தாராகிய உங்களுடனே
பேசுகிறேன்.-அவர்களைத் தள்ளிவிடுதல் உலகத் ௰௪
தை ஒப்புரவாக்குதலாயிருக்க, அவர்களை அங்கி
கரித்துக்கொள்ளுதல் மரித்தோரிலிருந்து சீவன்
உண்டானதுபோல இருக்கும் அல்லவோ?—
ஆதலால் நான் எப்படியும் [15]என் இனத்தாரை ௰௫
ஏவி, அவர்களில் சிலரை இரட்சிக்கவேண்டு
மென்று என் ஊழியத்தை மேன்மைபாராட்டு
கிறேன்.

[16]மேலும் முதல் விளைச்சல் பரிசுத்தமாயிருக்க, ௰௬
அம்பாரமும் அப்படியே இருக்கின்றது; வே
ரானது பரிசுத்தமாயிருக்க, கிளைகளும் அப்படி
யே இருக்கின்றன.—[17]சில கிளைகள் ஒடித்துத் ௰௭
தள்ளப்பட்டதுமல்லாமல் காட்டு ஒலிவமரமா
கிய [18]நீ அவைகளுடைய இடத்திலே || ஒட்ட
வைக்கப்பட்டு ஒலிவமரத்தின் வேருக்கும் சாரத்
திற்கும் உடன்பங்காளியாயிருக்க,—[19]நீ அந் ௰௮
தக் கிளைகளுக்கு எதிராய்ப் பெருமைபாராட்டா
திருப்பாயாக; பாராட்டுவாயானால் நீ வேரைச்
சுமக்காமல், வேரே உன்னைச் சுமக்கிறதென்று
நினைத்துக்கொள்.—நான் ஒட்டவைக்கப்படுவ ௰௯
தற்கு அந்தக் கிளைகள் ஒடித்துப்போடப்பட்
டன என்று நீ சொல்லுகிறாய்.—நல்லது அவிசு ௨௰
வாசத்தினாலே அவைகள் ஒடித்துத் தள்ளப்பட்
டன; நீ விசுவாசத்தினாலே நிற்கிறாய்; [20]இறு
மாப்பைக் காண்பியாதிருப்பாயாக.—சுபாவத் ௨௧
தின்படி கிளைகளானவைகளைப் பராபரன் தப்ப
விடாதிருக்க, உன்னையும் தள்ளாதபடிக்குப்
[21]பயந்திருப்பாயாக.

மேலும் பராபரனுடைய தயவையும் கண்டிப் ௨௨
பையும் பார்த்துக்கொள்; விழுந்தவர்களிடத்தி
லே கண்டிப்பையும் உன்னிடத்திலே தயவை
யுமே பார்; [22]அந்தத் தயவிலே நிலைத்திருப்பா
யாக; இல்லாவிட்டால் [23]நீயும் வெட்டுண்டுபோ
வாய்.—அன்றியும் [24]அவர்களும் அவிசுவாசத்தி ௨௩
னாலே நிலைத்திராவிட்டால் ஒட்டவைக்கப்படு
வார்கள்; அவர்களை மறுபடியும் ஒட்டவைக்கி
றதற்குப் பராபரன் வல்லவராயிருக்கிறாரே.—
அன்றியும் நீ சுபாவத்தின்படி காட்டு ஒலிவாகிய ௨௪
மரத்திலிருந்து வெட்டப்பட்டு உன் சுபாவத்

1 க சாமு ௰௨. ௨௨. எரே ௩௧. ௩௭.
2 ௨ கொரி. ௰௧. ௨௨. பிலி. ௩. ௫.
3 உரோ. ௮. ௨௯.—4 ௧ இரா. ௰௯. ௰, ௰௪.—5 ௧ இரா. ௰௯. ௰௮.
6 உரோ. ௪. ௪.—7 உரோ. ௪. ௪, ௫. கலா. ௫. ௪. ௫ மோ. ௯. ௪, ௫.
8 உரோ. ௯. ௩௧: ௰. ௩.—9 ஏசா. ௨௯. ௰.—10 ௫ மோ. ௨௯. ௪. ஏசா. ௬. ௯. எரே. ௫. ௨௧. எசே. ௰௨. ௨. மத். ௰௩. ௰௪. யோவா. ௰௨. ௪௦. அப் ௨௮. ௨௬. ௨௭.—11 சங் ௬௯. ௨௨.—12 சங். ௬௯. ௨௩.
13 அப் ௰௩. ௪௬: ௰௮. ௬: ௨௨. ௰௮, ௨௧: ௨௮. ௨௪, ௨௮. உரோ. ௰. ௰௯.
14 அப் ௯. ௰௫: ௰௩. ௨: ௨௨. ௨௧. உரோ. ௰௫. ௰௬. கலா. ௧. ௰௬: ௨. ௭, ௮, ௯. எபே. ௩. ௮. ௧ தீமோ. ௨. ௭. ௨ தீமோ. ௧. ௰௧.
15 ௧ கொரி ௭. ௰௬: ௯. ௨௨. ௧ தீமோ. ௪. ௰௬. யாக. ௫. ௨௦.—16 ௩ மோ. ௨௩. ௰. ௪ மோ ௰௫. ௰௮, ௰௯, ௨௦, ௨௧.—17 எரே ௰௧. ௰௬.—18 அப் ௨. ௩௯. எபே. ௨. ௰௨, ௰௩.
19 ௧ கொரி ௰. ௰௨.—20 உரோ ௰௨. ௰௬.—21 லூக். ௨௨. ௬௪. ஏசா. ௬௬. ௨. பிலி. ௨. ௰௨.—22 ௧ கொரி. ௰௫. ௨. எபி. ௩. ௬, ௰௪.—23 யோவா. ௰௫. ௨.—24 ௨ கொரி. ௩. ௰௬.

* இரேக்கு. எலியாவின் நிக்கதரிசனத்தில்—† அல்லது குருடான; ௨ கொரி. ௩. ௰௪.—‡ அல்லது கிலேசமுள்ள.—§ அல்லது அழிவானது.
|| அல்லது அவைகளுக்குள்.

திற்கு விரோதமாய் நல்ல ஒலீவமரத்திலே ஒட்ட
வைக்கப்பட்டிருக்க, மிகவும் அநேகமாய்ச் சுபா
வக்கிளைகளாகிய அவர்கள் தங்கள் சுய ஒலீவ
மரத்திலே ஒட்டவைக்கப்படுவார்கள் அல்லவா?

௨௫ ஆதலால் சகோதரரே, [1]நீங்கள் உங்கள் சுய
புத்தியிலே சாயாதபடிக்கு, ஒரு இரகசியத்தை
நீங்கள் அறியவேண்டுமென்று இருக்கிறேன்;
என்னவெனில், [2]புறத்தேசத்தார் நிறைவாய்ப்
பிரவேசிக்குமளவும், இஸ்ரவேலரில் [3]ஒரு பங்
குக்குக் கடினமான* மனது உண்டாயிருக்கும்.-
௨௬ [4]பின்பு மீட்பர் சீயோனுக்கு வந்து, அக்கிரமத்
தை இயாக்கோபிலிருந்து நீக்குவார் என்றும்,-
௨௭ நான் அவர்களுடைய பாவங்களை நீக்கும்பொ
ழுது [5]இதுவே நான் அவர்களுடனே பண்ணும்
உடம்படிக்கையென்றும் எழுதியிருக்கிறபடி
யே, இஸ்ரவேலர் எல்லாரும் இரட்சிக்கப்படு
௨௮ வார்கள். — சுவிசேஷத்தைக்குறித்து அவர்கள்
உங்கள் நிமித்தம் பகைஞராயிருக்கிறார்கள்.—
௨௯ தெரிந்துகொள்ளுதலைக்குறித்துப் பராபரன் கிரு
பைகொடுத்தலும் அழைத்தலும் [6]மாறாதவைக
ளானபடியால், அவர்கள் பிதாக்களின் நிமித்தம்
[7]அன்புகூரப்பட்டவர்களாய் இருக்கிறார்கள்.—
௩௰ [8]ஆதலால் நீங்கள் முற்காலத்திலே பராபரனுக்
குக் கீழ்ப்படியாதிருந்து † இப்பொழுது அவர்க
ளுடைய அவிசுவாசத்தினாலே இரக்கம்பெற்றி
ருக்கிறதுபோல, அவர்களும் இப்பொழுது கீழ்ப்
படியாமலிருந்து, ‡(பின்பு)உங்களுக்குண்டான
இரக்கத்தினாலே (ஏவப்பட்டு) இரக்கம் பெறு
௩௧ வார்கள். — எல்லார்மேலும் இரக்கமாயிருக்கத்
தக்கதாகப் [9]பராபரன் எல்லாரையும் அவிசுவா
சத்திற்குள்ளே அடைத்துப்போட்டபடியால் §
அப்படியேயாம்.

௩௨ ஆ பராபரனுடைய ஞானம் அறிவு என்பவை
களின் சம்பூரணம் மிகுந்த ஆழமுள்ளதாயிருக்
௩௩ கின்றது. — [10]அவருடைய நியாயத்தீர்ப்புகள்
அளவறுக்கப்படாதவைகள்; அவருடைய [11]நெ
றிகள் ஆராய்ந்து பார்க்கப்படாதவைகளாய் இ
ருக்கின்றன; [12]கர்த்தருடைய சிந்தையை அறிந்
௩௪ தவன் எவன்?—[13]அல்லது அவருக்கு உசாவுது
௩௫ ணையாய் இருந்தவன் எவன்?—[14]அல்லது தனக்
குப் பதில் கொடுக்கும்படிக்கு அவருக்கு முந்தி
௩௬ ஒன்றைக்கொடுத்தவன் எவன்? — [15]சகலமும்
அவராலும் அவர்மூலமாயும் அவருக்காகவும்
இருக்கின்றன; [16]அவருக்கே என்றென்றைக்
கும் புகழ்ச்சி உண்டாகக்கடவது.—ஆமன்.

# ௰௨. அதிகாரம்.

௧. பராபரனுடைய இரக்கங்கள். ௩. எவனும் பெருமைபாராட்டாமல், தன்தன் நிலைமையை அறிந்து நடக்கவும், ௯. அவனைப் பிரியப்படுத்தும்படி நம்மை வைக்கவும், ௯. அன்புமுதலிய நற்குணங்கள் உள்ளவர்களாயிருக்கவும், ௰௯. குரோதத்தை நீக்கவும் வேண்டுமென்பது.

அப்படியிருக்கச் சகோதரரே, [17]நீங்கள் புத்தி ௧
யுள்ள ஆராதனைசெய்ய, [18]உங்கள் சரீரங்களைச்
சீவனுமாய், பரிசுத்தமுமாய், பராபரனுக்குப்
பிரியமுமாயிருக்கிற [19]பலியாக நிறுத்தவேண்டும்
என்று பராபரனுடைய இரக்கங்களின் நிமித்
தம் [20]உங்களுக்குப் புத்திசொல்லுகிறேன்.—மே ௨
லும் [21]நீங்கள் இவ்வுலகத்திற்கு ஒப்பாய் நடவா
மல், [22]பராபரனுடைய நன்மையும் பிரியமும்
நிறைவுமான சித்தம் இன்னதென்று நீங்கள்
பகுத்து அறியத்தக்கதாக, [23]உங்கள் மனதைப்
புதிதாக்குதலினாலே மறுரூபமாய் நடந்துகொள்
ளுங்கள்.

அல்லாமலும் [24]எனக்குக் கொடுத்திருக்கிற கிரு ௩
பையினாலே நான் இன்னும் சொல்லுகிறதாவது:
உங்களில் எவனானாலும் தன்னைக்குறித்து [25]நினை
க்கவேண்டியதற்கு மேலாக நினையாமல், [26]அவ
னவனுக்குப் பராபரன் பங்கிட்ட விசுவாசம்
எவ்வளவோ, அவ்வளவின்படி புத்தியாய் ||
நடக்கத்தக்கதாகத் (தன்னைக்குறித்து நினைக்க
வேண்டும்).—அது எப்படியெனில் [27]ஒரே சரீரத் ௪
திலே நாம் அநேக அவயவங்களை உடையவர்க
ளாயிருக்க, அவயவங்கள் யாவும் ஒரேதொழில்
இல்லாதவைகளாய் இருக்கிறதுபோல, — [28]அ
நேகராகிய நாமும் கிறிஸ்துவுக்குள்ளே ஒரே ௫
சரீரமாயிருக்க, ஒருவருக்கொருவர் அவயவங்
களாய்,—[29]நமக்குக் கொடுக்கப்பட்ட கிருபை ௬
யின்படியே [30]பலவித வரங்கள் உள்ளவர்களா
யிருக்கிறோம்; [31]அந்தப்படி தீர்க்கதரிசனம்
சொல்லுகிற வரத்தை உடையவன் விசுவாச
அளவுக்கு ஏற்றதாக அப்படிச் செய்யக்கட
வன்.—உதவிசெய்கிற வரத்தை உடையவன் உ ௭
தவிசெய்கிறதிலே சாக்கிரதையாய் இருக்கக்க
டவன்; [32]போதிக்கிறவன் போதிக்கிறதிலே
சாக்கிரதையாய் இருக்கக்கடவன்.—[33]புத்திசொ ௮
ல்லுகிறவன் புத்திசொல்லுகிறதிலே சாக்கிர
தையாய் இருக்கக்கடவன்; [34]தருமங்களைக்கொ
டுக்க¶வேண்டுபவன் கபடம் இல்லாமையாய்**

1 உரோ. ௰௨. ௰௬. — 2 லூக். ௨௧. ௨௪. வெளி. ௭. ௯. — 3 ௭. வ௪. ௨ கொரி. ௩. ௰௪. — 4 ஏசா. ௫௯. ௨௰. சங். ௰௪. ௭. — 5 ஏசா. ௨௭. ௯. எரே ௩௧. ௩௧. எபி ௮. ௮: ௰. ௰௬. — 6 ௪ மோ. ௨௩. ௰௯. 7 உபா. ௭. ௮. ௯. ௫: ௰. ௰௫. 8 எபே ௨. ௨ கொலோ. ௩. ௭. 9 உரோ. ௩. ௯. கலா. ௩. ௨௨. 10 சங். ௩௬. ௬. — 11 யோபு. ௰௧. ௭. சங். ௯௨. ௫. — 12 யோபு. ௰௫. ௮. ஏசா. ௪௰. ௰௩. எரே ௨௩. ௰௮. ௧ கொரி. ௨. ௰௬. — 13 யோபு ௩௯. ௨௨. — 14 யோபு ௩௫. ௭; ௪௧. ௰௧. — 15 ௧ கொரி. ௮. ௬. கொலோ. ௧. ௰௬. — 16 கலா. ௧. ௫. ௧ தீமோ ௧. ௰௭. ௨ தீமோ. ௪. ௰௮. எபி. ௰௩. ௨௧. ௧ பே. ௫. ௰௧. ௨ பே. ௩. ௰௮. யூதா. ௨௫. வெளி. ௧. ௬. — 17 ௧ பே. ௨. ௫. — 18 சங். ௫௰. ௰௩, ௰௪. உரோ. ௬. ௰௩, ௰௬, ௰௯. ௧ கொரி. ௬. ௰௩, ௨௰. — 19 எபி. ௰. ௨௰. — 20 ௨ கொரி. ௰ ௧. — 21 ௧ பே. ௧. ௰௪. ௧ யோ. ௨. ௰௫. — 22 எபே. ௫. ௰, ௰௭. ௧ தெச. ௪. ௩. — 23 எபே. ௧. ௰௮. ௪. ௨௩. கொலோ. ௧. ௨௧, ௨௨: ௩. ௯. ௰. — 24 உரோ. ௧. ௫: ௰௫. ௰௫. ௧ கொரி. ௩. ௰: ௰௫. ௰. கலா ௨. ௯. எபே. ௩. ௨, ௭, ௮. — 25 லூக். ௨௫. ௨௭. பிர. ௭ ௰௯. உரோ. ௰௧. ௨௰. — 26 ௧ கொரி. ௰௨. ௭, ௰௧. எபே. ௪. ௭. — 27 ௧ கொரி ௰௨. ௰௨. எபே. ௪. ௰௬. — 28 ௧ கொரி. ௰. ௰௭: ௰௨. ௨௰, ௨௭. எபே. ௧. ௨௩: ௪ ௨௫. — 29 ௩. வ௪. 30 ௧ கொரி. ௰௨. ௪. ௧ பே ௪. ௰, ௰௧. 31 அப். ௰௧. ௨௭. ௧ கொரி. ௰௨. ௰, ௨௮: ௰௩. ௨: ௰௪. ௧ ௯, ௨௪. ௩௧. 32 அப். ௰௩. ௧. கலா. ௬. ௬. எபே. ௪. ௰௧. ௧ தீமோ. ௫. ௰௭. — 33 அப். ௰௫ ௩௨. ௧ கொரி ௰௪. ௩. 34 மத். ௬. ௧, ௨, ௩.

* அல்லது குருடான.—† அல்லது பராபரனை விசுவாசியாதிருந்த.—‡ அல்லது விசுவாசியாமல்.—§ அல்லது அடக்கி. —|| கிரேக்கு, புத்திக்கு.
¶ அல்லது பகிர்ந்துகொடுக்க.—** அல்லது தாராளமாய்; ௨ கொரி. ௮. ௨.

அப்படிச் செய்யக்கடவன். [1]முதலாளியான
வன் சாக்கிரதையுடனே இருக்கக்கடவன்; [2]இர
க்கஞ்செய்கிறவன் உச்சாகத்துடனே அப்படிச்
செய்யக்கடவன்.

௯ [3]உங்கள் அன்பு மாயமற்றதாய் இருப்பதாக;
[4]பொல்லாங்கானதை அருவருத்து, நன்மையில்
௰ ஒட்டிக்கொண்டிருப்பீர்களாக.—சகோதர சிநே
கத்திலே * ஒருவருக்கொருவர் [5]மிகவும் பட்ச
மாயிருங்கள்; [6]கனம்பண்ணுகிறதில் ஒருவருக்
௰௧ கொருவர் முந்திக்கொள்ளுங்கள்.—அலுவலில்
நீங்கள் அசதியாயிருக்கக்கூடாது; உங்கள் ஆவி
யிலே தீபவளர்ச்சியைப்போல இருந்து, கர்த்த
௰௨ ருக்கு ஊழியஞ்செய்யுங்கள்.—[7]நம்பிக்கையிலே
சந்தோஷமாய் இருப்பீர்களாக; [8]உபத்திரவகா
௰௩ லத்திலே பொறுமையாயிருங்கள்—[9]செபத்தில்
உறுதியாய்த் தரித்திருங்கள்; [10]வருத்தப்படுகிற
பரிசுத்தவான்களுக்கு உதவிசெய்யுங்கள்; [11]அந்
நியருக்கு உபசாரஞ்செய்கிறதை நாடுங்கள்.—
௰௪ [12]உங்களைத் துன்பப்படுத்துகிறவர்களை ஆசீர்
வதியுங்கள்; ஆசீர்வாதமே அன்றிச் சாபமிடா
௰௫ திருப்பீர்களாக. — [13]சந்தோஷப்படுகிறவர்களு
டனே சந்தோஷப்படுங்கள்; அழுகிறவர்களுட
௰௬ னே அழுங்கள். — [14]ஒருவருக்கொருவர் ஐக்க
மான சிந்தையுள்ளவர்களாய் இருப்பீர்களாக;
[15]மேன்மையானவைகளைச் சிந்தியாமல், தாழ்
மையானவர்களுக்கு இணங்குங்கள். †

௰௭ [16]உங்கள் சுயபுத்தியில் சாயாதிருப்பீர்களாக;
[17]யாவனுக்கும் தீமைக்குத் தீமைசெய்யாதிருங்
கள்; [18]எந்த மனிதருக்கும்முன்பாக யோக்கிய
௰௮ மானவைகளை நடப்பியுங்கள்.—[19]எல்லா மனித
ரோடும் சமாதானமாய் இருக்கக்கூடுமானால்,
உங்களால் ஆனமட்டும் அப்படியே செய்யுங்
௰௯ கள். — பிரியமானவர்களே; [20]பழிவாங்குதல்
எனக்கு ஏற்றது, நானே பதில்செய்வேனென்று
கர்த்தர் சொல்லுகிறார் என்று எழுதியிருக்கிற
படியால், [21]நீங்கள்தாமே பழிவாங்காமல் (அவ
ருடைய) கோபாக்கினைக்கு இடங்கொடுங்
௨௰ கள்.—ஆதலால் [22]உன் சத்துருவுக்குப் பசி உண்
டாயிருக்கும்பொழுது அவனுக்குப் போசனம்
கொடு; அவனுக்குத் தாகம் உண்டாய் இருக்கும்
பொழுது அவன் தாகத்தைத் தீர்ப்பாயாக; நீ
இப்படிச் செய்தால் அவனுடைய தலையின்
மேல் நெருப்புள்ள கரிகளைக் குவிப்பாய். —
௨௧ தீமையினாலே நீ செயிக்கப்படாமல், தீமையை
நன்மையினாலே செயிப்பாயாக.

## ௰௩. அதிகாரம்.

௧. துரைத்தனத்தாருக்குச் செலுத்தவேண்டிய கீழ்ப்படிதல் முதலான கடமைகளைக் குறித்தது. ௮. அன்பு நியாயப்பிரமாணத்தை நிறைவேற்றுமென்றும், ௰௧. பெருந்தீனி குடிமுதலிய பாவச்செய்கைகள் சுவிசேஷத்துக்கு ஒவ்வாதென்றும் காட்டியது.

[23]அதிகாரம் உள்ளவர்கள் பராபரனாலே அன்றி ௧
இருக்கமாட்டார்கள்; [24]ஆதலால் எந்த மனிதனும்
அதிகாரம் உடையவர்களுக்குக் கீழ்ப்படியக்கட
வன்; உண்டாயிருக்கிற அதிகாரிகள் பராபரனா
லே நியமிக்கப்பட்டிருக்கிறார்கள் ‡.—[25]ஆனதால் ௨
அதிகாரம் உள்ளவர்களுக்கு எதிர்த்து நிற்கிறவன்
பராபரனுடைய நியமத்துக்கு எதிர்த்து நிற்கி
றான்; அப்படி எதிர்த்து நிற்கிறவர்கள் தங்களுக்
குத்தாமே ஆக்கினை வரப்பண்ணுகிறார்கள். —
மேலும், துரைகளானவர்கள் நற்கிரியைகளுக்கு ௩
அல்ல துர்க்கிரியைகளுக்குப் பயங்கொடுக்கிற
வர்களாய் இருக்கிறார்கள்; ஆகையால் நீ அதிகா
ரத்துக்காகப் பயமில்லாதிருக்கவேண்டும் என்
றிருந்தால், [26]நன்மை செய்வாயாக, அதினால்
உனக்குப் புகழ்ச்சி உண்டாம்.—உனக்கு நன் ௪
மை உண்டாகும்பொருட்டு அவன் பராபர
னுடைய ஊழியக்காரனாயிருக்கிறான்; நீ தீமை
செய்தால் பயம் கொள்வாயாக; கட்கத்தை அ
வன் வீணாய்ப் பிடிக்கவில்லை; பொல்லாங்கைச்
செய்கிறவன்மேல் கோபாக்கினை வரப்பண்
ணும்படி அவன் நீதியைச் செலுத்துகிற தேவ
ஊழியக்காரனாயும் இருக்கிறானே.—ஆகையால் ௫
[27]நீங்கள் (அவர்களுக்குக்) கீழ்ப்படியவேண்டி
யதாயிருக்கின்றது; கோபாக்கினையின் நிமித்த
மாத்திரம் அல்ல, [28]மனச்சாட்சியின் நிமித்தமும்
அப்படி இருக்கவேண்டும்.—அதினாலே நீங்கள் ௬
(அவர்களுக்கு) வரிப்பணத்தையும் கொடுக்கி
றீர்களே; அவர்கள் தங்கள் உத்தியோகத்தை
இடைவிடாமல் பற்றிக்கொள்ளுகிற தேவ ஊழி
யக்காரர்களாய் இருக்கிறார்களே. — ஆனபடியி ௭
னாலே [29]எவர்களுக்கும் கடமைகளைச் செலுத்து
வீர்களாக; வரியைச் செலுத்தவேண்டியது எவ
னுக்கோ, அவனுக்கு வரியைச் செலுத்துங்கள்.
தீர்வையைச் செலுத்தவேண்டியது எவனுக்கோ,
அவனுக்குத் தீர்வையைச் செலுத்துங்கள்; பயப்
படவேண்டியது எவனுக்கோ, அவனுக்குப்
பயப்படுங்கள்: கனத்தைச் செலுத்தவேண்டி
யது எவனுக்கோ, அவனுக்குக் கனத்தைச் செ
லுத்துங்கள்.

ஒருவரில் ஒருவர் அன்பாயிருக்கிறதே அன்றி ௮
மற்றொன்றும் ஒருவனுக்கும் கடன்படாதிருப்

1 அப். ௨௰.௨௮. ௧ தீமோ. ௫. ௰௭. எபி. ௰௩ ௭. ௨௪. ௧ பே. ௫. ௨.
2 ௨ கொரி. ௯ ௭.—3 ௧ தீமோ. ௧. ௫. ௧ பே. ௧. ௨௨.
4 சங். ௩௪. ௰௪: ௩௬. ௪: ௯௭. ௰. ஆமோ ௫. ௰௫—5 எபி. ௰௩ ௧. ௧ பே. ௧ ௨௨: ௨. ௰௭: ௩ ௮ ௨ பே. ௧. ௭—6 பிலி. ௨ ௩. ௧ பே. ௫. ௫.
7 லூக். ௰ ௨௰. உரோ ௫ ௨: ௰௫. ௰௩. பிலி. ௩. ௧: ௪. ௪. ௧ தெச. ௫. ௰௬. எபி. ௩. ௬. ௧ பே. ௪. ௰௩.
8 லூக். ௨௧. ௰௯. ௧ தீமோ ௬. ௰௬. எபி ௰. ௩௬ ௰௨ ௧. யாக். ௧. ௪: ௫. ௭. ௧ பே. ௨. ௰௯. ௨௰.—9 லூக். ௰௮. ௧. அப். ௨ ௪௨: ௰௨. ௫. எபே. ௬. ௰௮ கொலோ. ௪ ௨. ௧ தெச. ௫. ௰௭—10 ௧ கொரி. ௰௬. ௧ ௨ கொரி. ௯. ௧, ௰௨. எபி. ௬. ௰: ௰௩. ௰௬. ௧ யோ. ௩. ௰௭.
11 ௧ தீமோ. ௩ ௨. தீத். ௧. ௮. எபி. ௰௩. ௨. ௧ பே. ௪. ௯—12 மத் ௫. ௪௪. லூக். ௬. ௨௮: ௨௩. ௩௪. அப்.
௭. ௬௰. ௧ கொரி. ௪. ௰௨. ௧ பே. ௨. ௨௩: ௩. ௯.—13 ௧ கொரி. ௰௨. ௨௬.—14 உரோ ௰௫. ௫. ௧ கொரி. ௧. ௰. பிலி. ௨. ௨: ௩. ௰௬. ௧ பே. ௩. ௮.—15 சங். ௱௩௧ ௧, ௨. எரே. ௪௫ ௫.—16 நீதி. ௩. ௭: ௨௬. ௰௨. ஏசா. ௫. ௨௧. உரோ. ௰௧ ௨௫.
17 நீதி. ௨௰. ௨௨. மத். ௫. ௩௯. ௧ தெச. ௫. ௰௫. ௧ பே. ௩. ௯. ௨ கொரி. ௮. ௨௧.
18 உரோ ௰௪ ௰௯. எபி. ௰௨. ௰௪.—20 ௫ மோ. ௩௨. ௩௫. எபி. ௰. ௩௰.—21 ௩ மோ. ௰௯. ௰௮. நீதி. ௨௪. ௨௯.
19 மாற். ௯. ௫௰. உரோ. ௰௪. ௰௯.
22 ௨ மோ. ௨௩. ௪, ௫. நீதி. ௨௫. ௨௧, ௨௨. மத். ௫. ௪௪.—23 நீதி. ௮. ௰௫, ௰௬. தானி. ௨. ௨௧: ௪. ௩௨. யோவா. ௰௯. ௰௧.—24 தீத். ௩. ௧. ௧ பே. ௨. ௰௩—25 தீத். ௩. ௧.—26 ௧ பே. ௨. ௰௪: ௩. ௰௩.—27 பிர. ௮. ௨.—28 ௧ பே. ௨. ௰௯.—29 மத். ௨௨. ௨௧. மாற். ௰௨. ௰௭. லூக். ௨௰. ௨௫.

* அல்லது சகோதர சிநேகத்தோடே.—† அல்லது தாழ்மையானவைகளில் மனரம்மியமாயிருங்கள்.—‡ அல்லது கட்டளையிடப்பட்டிருக்கிறார்கள்.

பீர்களாக; [1]மற்றவனில் அன்புகூருகிறவன் நியா
௯ யப்பிரமாணத்தை நிறைவேற்றுகிறானே.—எப்
படியென்றால் [2]விபசாரம்பண்ணாதிருப்பாயாக,
கொலைசெய்யாதிருப்பாயாக, களவுசெய்யாதி
ருப்பாயாக, பொய்ச்சாட்சிசொல்லாதிருப்பா
யாக, இச்சியாதிருப்பாயாக என்று இந்தக் கற்
பனைகளும் வேறு எந்தக் கற்பனையும் [3]உன்மேல்
அன்புகூருகிறதுபோல, பிறன்மேலும் அன்பு
கூர்வாயாக என்கிற ஒரே பிரமாணத்திலே தொ
௰ கையாய் அடங்கியிருக்கின்றன.—அன்பானது
பிறனுக்குப் பொல்லாங்கைச் செய்யாது; ஆத
லால் [4]அன்பு நியாயப்பிரமாணத்தை நிறைவேற்
றுகிறதாய் இருக்கின்றது.

௰௧ மேலும் [5]நித்திரையைவிட்டு எழுந்திருக்கத்
தக்கவேளையாயிற்று என்று நாம் காலத்தை அறிந்
திருக்கிறபடியால், இப்படி எச்சரிக்கிறேன்;
அன்றியும் நாம் விசுவாசிகளானபொழுது இரட்
சிப்பு சமீபமாயிருந்ததிலும் இப்பொழுது அது
௰௨ நமக்கு அதிக சமீபமாயிருக்கின்றது. — இரவு
சென்றுபோயிற்று; பகல் சமீபமாயிற்று. [6]ஆனப
டியினாலே அந்தகாரத்தின் கிரியைகளை நாம் தள்
ளிப்போட்டு, [7]ஒளியின் ஆயுதங்களைத் தரித்துக்
௰௩ கொள்ளக்கடவோம்.-[8]பெருண்டையாவது, வெ
றிகொள்ளுதலையாவது,[9]வேசித்தனத்தையாவது,
காமவிகாரத்தையாவது, [10]சண்டையையாவது,
பொறாமையையாவது, நடப்பியாமல் பகலிலே
நடக்கிறவர்கள்போல [11]யோக்கியமாய்* நடக்கக்
௰௪ கடவோம்.–[12]துர்இச்சைகளுக்கு இடமாய் உங்
கள் தேகத்தைப் போஷியாமல், [13]கர்த்தராகிய
இயேசுக்கிறிஸ்துவைத்தரித்துக்கொள்வீர்களாக.

## ௰௪. அதிகாரம்.

௧. சொற்பமானவைகளில் ஒருவரை ஒருவர் குற்றம்சாற்றவும், அசட்டை பண்ணவும்கூடாதென்றும், ௰௩. அவைகளினால் ஒருவருக்கொருவர் விதனம் உண்டாக்காதிருக்கவேண்டுமென்றும், ௰௫. நியாயம் காட்டியது.

௧ [14]விசுவாசத்தில் பலஈனமுள்ளவனுடைய நினை
வுகளை நீங்கள் குற்றமாய் எண்ணாமல்,† அவ
௨ னைச் சேர்த்துக்கொள்ளுங்கள்.—[15]ஒருவன் எல்
லாப் பதார்த்தங்களையும் புசிக்கலாம் என்று நம்
புகிறான்; பலஈனமுள்ள மற்றொருவன் மரக்கறி
௩ களைமாத்திரம் புசிக்கிறான்.—புசிக்கிறவன் புசி
யாதிருக்கிறவனை அசட்டைபண்ணாதிருப்பா
னாக; [16]புசியாமலிருக்கிறவனும் புசிக்கிறவனைக்
குற்றமுள்ளவன் என்று நினையாதிருப்பானாக;
பராபரன் அவனைச் சேர்த்துக்கொண்டாரே.—
௪ [17]மற்றொருவனுடைய வேலைக்காரனைக் குற்ற
முள்ளவன் என்று தீர்க்கிற நீ யாவன்? அவன்
நின்றாலும் விழுந்தாலும் அவனுடைய சொந்த
எசமானே அவனை விசாரிப்பான்; மேலும் பரா
பரன் அவனை நிலைநிறுத்த வல்லவரானபடியால்
அவன் நிலைநிறுத்தப்படுவான்.

அன்றியும் [18]ஒருவன் ஒருநாளை மற்ற நாளி ௫
லும் விசேஷமாக எண்ணுகிறான்; வேறொரு
வன் எல்லா நாள்களையும் சரியாய் எண்ணுகி
றான்; (அதைக்குறித்து) அவனவன் தன் மனதி
லே முழு நிச்சயத்தை‡ உடையவனாய் இருக்கக்
கடவன்.–[19]ஒரு நாளை விசேஷித்துக்கொள்ளுகி ௬
றவன்§ கர்த்தருக்கென்று அப்படிச்செய்கிறான்;
நாள்களை விசேஷித்துக்கொள்ளாமல் இருக்கிற
வனும் கர்த்தருக்கென்று அப்படிச்செய்கிறான்;
புசிக்கிறவன் பராபரனுக்குத் தோத்திரம் செலுத்
துகிறபடியால், கர்த்தருக்கென்று புசிக்கிறான்;
புசியாமல் இருக்கிறவனும் கர்த்தருக்கென்று
புசியாமலிருந்து [20]பராபரனுக்குத் தோத்திரம்
செலுத்துகிறான்.—[21]நம்மில் யாவனும் தனக்கா ௭
கப் பிழைக்கிறதும் இல்லை; யாவனும் தனக்காக
மரிக்கிறதும் இல்லையே, நாம் பிழைக்கிறது கர்த்
தருக்காகப் பிழைக்கிறோம்; மரிக்கிறது கர்த்த
ருக்காக மரிக்கிறோம்.–ஆகையால் நாம் பிழைத் ௮
தாலும் மரித்தாலும் கர்த்தருடையவர்களாயே
இருப்போம்.—[22]அதற்காகக் கிறிஸ்துவும் மரித் ௯
தோர்மேலும் சீவனுள்ளோர்மேலும் [23]ஆண்டவ
ராயிருக்கும்பொருட்டாக மரித்தும் எழுந்தும்
உயிரடைந்தும் இருக்கிறார்.

இப்படியிருக்க, நீ உன் சகோதரனைக் குற்ற ௰
முள்ளவன் என்று நினைக்கிறதென்ன? அல்லது,
உன்சகோதரனை அசட்டைபண்ணுகிறதென்ன?
[24]நாம் எல்லாரும் கிறிஸ்துவினுடைய நியாயாச
னத்திற்குமுன்பாக நிறுத்தப்படுவோமே.-[25]நான் ௰௧
சீவனுள்ளவன்; முழங்கால் யாவும் எனக்குமுன்
பாக முடங்கும்; நாவுகள் யாவும் பராபரனை அ
றிக்கைபண்ணுமென்று பராபரன் திருவுளம்பற்
றுகிறார் என்று எழுதியிருக்கிறதல்லவோ?-[26]அந் ௰௨
தப்படி நம்மில் அவனவன் தன் தன்னைக்குறித்
துப் பராபரனுக்குக் கணக்கு ஒப்புவிப்பான்.

ஆதலால் நாம் இனிமேல் ஒருவரை ஒருவர் குற் ௰௩
றமுள்ளவர்களென்று எண்ணாதிருப்போமாக;
[27]வழுவுதற்காவது விழுதற்காவது எதையாகிலும்
சகோதரனுக்குமுன்பாக வைத்துப்போடாதப
டிக்கே எண்ணமுள்ளவர்கள் ஆவீர்களாக. —
நான் கர்த்தராகிய இயேசுவினாலே அறிந்திருக்கி ௰௪
றபடி, [28]ஒரு பொருளை அசுத்தம்¶ என்று எண்
ணிக்கொள்ளுகிறவனுக்கு அது அசுத்தமாயிருக்
கிறதே அன்றி, [29]ஒரு பொருளும் தானாய் அசுத்

---

1 ௰. வச. கலா.௫.௰௪. கொலோ. ௩.௰௪. ௧ தீமோ.௧.௫. யாக்.௨.௮. 2 ௨ மோ.௨௰ ௰௩ ௱. ௫ மோ. ௫. ௰௭.௱. மத்.௰௯.௰௮.--3 ௩ மோ. ௰௯ ௰௮. மத்.௨௨ ௩௯. மாற்.௰௨. ௩௩. கலா. ௫. ௰௪. யாக். ௨. ௮. 4 மத்.௨௨.௪௰.௮.வச.-5 ௧ கொரி. ௰௫ ௩௪. எபே.௫.௰௪. ௧ தெச.௫. ௫,௬.—6 எபே.௫.௰௧. கொலோ ௩. ௮.—7 எபே.௬.௰௩. ௧ தெச. ௫. ௮.—8 வாக். ௨௧. ௨௰. லூக். ௨௧ ௩௪. ௧ பே. ௪. ௩. 9 ௧ கொரி. ௬. ௯. எபே. ௫. ௫. 10 யாக். ௩. ௰௪.—11 பிலி. ௪. ௮. ௧ தெச. ௪. ௰௨. ௧ பே. ௨. ௰௨. 12 கலா. ௫. ௰௬. ௧ பே. ௨. ௰௧. 13 கலா. ௩. ௨௭. எபே. ௪. ௨௪. கொலோ. ௩. ௰.—14 உரோ.௰௫. ௧,௭. ௧ கொரி.௮.௯,௰௧:௯.௨௨.

15 ௰௪.வச.௧கொரி.௰.௨௫. ௧ தீமோ. ௪.௪.தீத்.௧.௰௫.-16 கொலோ.௨. ௰௬.—17 யாக்.௪. ௰௨.-18 கலா. ௪. ௰. கொலோ. ௨. ௰௬. 19 கலா.௪.௰. —20 ௧ கொரி. ௰. ௩௧. ௧ தீமோ. ௪,௩.—21 ௧ கொரி.௬. ௰௯,௨௰. கலா. ௨. ௨௰.௧ தெச. ௫.௰. ௧ பே.௪.௨.—22 ௨கொரி. ௫.௰௫.—23 அப்.௰.௪௨.—24 மத். ௨௫.௩௧,௩௨. அப்.௰ ௪௨:௰௭.௩௧. ௨ கொரி. ௫.௰. யூதா. ௰௪. ௰௫. 25 ஏசா.௪௫.௨௩. பிலி ௨.௰.-26 மத். ௰௨.௩௬. கலா.௬.௫. ௧ பே.௪.௫. 27 ௧ கொரி. ௮ ௯,௰௩: ௰. ௩௨. 28 ௧ கொரி.௮.௭,௰.—29 அப்.௰.௰௫. ௨,௨௰. வச. ௧ கொரி. ௰. ௨௫. ௧ தீமோ. ௪. ௪. தீத். ௧. ௰௫.

* அல்லது சீராய்.-† அல்லது சம்சயமுள்ள தர்க்கமில்லாமல்.-‡ அல்லது நம்பிக்கையை.-§ அல்லது ஆசரித்துக்கொள்ளுகிறவன்.—¶ கிரேக்கு, பொது.

௰௬ தம்* இல்லை.–அன்றியும் புசிக்கிறதினாலே உன்
சகோதரனுக்கு விதனம் உண்டாக்கினால், நீ
அன்பாய்† நடக்கிறவன் அல்ல, அவனுக்காகக்
கிறிஸ்து மரித்தாரே; [1]அப்படிப்பட்டவனை உன்
போசனத்தினாலே கெடுத்துப்போடாதிருப்பா
௰௭ யாக.—[2]உங்கள் நன்மை தூஷணிக்கப்படாதி
௰௮ ருப்பதாக.–[3]பராபரனுடைய இராச்சியம் புசிப்
பினாலும் குடிப்பினாலும் அல்ல, நீதியினாலும்
சமாதானத்தினாலும் பரிசுத்தஆவியால் வருகிற
சந்தோஷத்தினாலும் பொருந்தியிருக்கின்றது.
௰௯ [4]இவைகளாலே கிறிஸ்துவுக்கு ஊழியம் செய்
கிறவன் பராபரனுக்குப் பிரியமானவனுமாய்,
மனிதருக்குப் பாத்திரனுமாய் இருக்கிறான்.—
௨௰ இப்படியிருக்க, [5]சமாதானத்திற்கும் [6]யாவரை
யும் ஐக்கப்படுத்துதற்கும் ஏற்றவைகளைத் தேடிக்
௨௧ கொள்ளக்கடவோம்.—[7]போசனத்தின் நிமித்தம்
பராபரனுடைய கிரியையை அழித்துப்போடா
திருப்பாயாக; [8]எந்தப் பதார்த்தமும் சுத்தமுள்ள
துதான்; (மற்றவன்) விழுதற்கு ஏதுவாகும்படி
[9]எதையாகிலும் புசிக்கிறவனுக்கே அது தீமை
௨௨ யாயிருக்கும். — உன் சகோதரன் வழுவுதற்கா
வது,விழுதற்காவது, பலஈனமாகுதற்காவது ஏது
வான [10]மாம்சத்தைப் புசியாமலும், இரசத்தைப்
பானம்பண்ணாமலும், மற்ற எதையாகிலும் செய்
யாமலும் இருக்கிறதே நன்மையாயிருக்கின்றது.-
௨௩ நீ நிச்சய அறிவுள்ளவனானால், அதைப் பராபர
னுக்குமுன்பாக நீ தானாய்க் கொள்வாயாக; ஒரு
வன் தான் சம்மதிக்கிற பொருளினாலே தனக்குக்
குற்றம்வரப்பண்ணாதிருந்தால்,[11]அவன் பாக்கிய
௨௪ வானாயிருப்பான். — (போசனபதார்த்தங்களுக்
குள்ளே) வித்தியாசம்பண்ணுகிறவன் ‡ (அவை
களை) நிச்சய அறிவில்லாமல் புசித்தபடியினாலே
ஆக்கினைக்கு ஏதுவாயிருப்பான்; [12]நிச்சய அறிவி
னாலே வாராத யாவும் பாவமாயிருக்கின்றன.

## ௰௫. அதிகாரம்.

௧. பலமுள்ளோர் பலஈனரைத் தாங்கவேண்டுமென்பது. ௨. கிறிஸ்து தம்மைப் பிரியப்படுத்தாமல் யூதர்களையும் அஞ்ஞானிகளையும் ஏற்றுக்கொண்டதுபோல, நாமும் நம்மைப் பிரியப்படுத்தாமல் ஒருவரை ஒருவர் ஏற்றுக்கொள்ளவேண்டுமென்பது. ௰௩. பவுல் நிருபத்தை எழுதினதற்காக நியாயம்சொல்லி, ௨௮. அவர்களை வந்து காண்பேனென்று வாக்குத்தத்தம்பண்ணி, ௩௰. அவர்கள் தனக்காக வேண்டிக்கொள்ளும்படி கேட்டுக்கொண்டது.

௧ ஆனபடியினாலே [13]பலமுள்ளவர்களாகிய நாம்
[14]பலஈனமுள்ளவர்களுடைய பலஈனங்களைப்
பொறுமையோடே சகிக்கவேண்டும்; அல்லாம
௨ லும் நாம் நமக்குப் பிரியமாய் நடவாமல்,–[15]அவ
னவன் தன் தனக்கடுத்த பிறனுடைய ஞானவ
ளர்ப்புக்கு ஏதுவான [16]நன்மை உண்டாகும்படி
அவனுக்குப் பிரியமாய் நடக்கக்கடவோம்.—
[17]கிறிஸ்துவானவரும் தமக்குப் பிரியமாய் நட ௩
வாமல், [18]உம்மை நிந்திக்கிறவர்களுடைய நிந்
தைகள் என்மேல் விழுந்தன என்று எழுதியிருக்
கிறபடி நடந்தார்.—அன்றியும் வேதவாக்கியங் ௪
கள் திருட்டாந்தப்படுத்தின பொறுமையினாலும்
ஆறுதலினாலும் நாம் நம்பிக்கையுள்ளவர்கள்
ஆகும்பொருட்டாய், முன்பு [19]எழுதியிருக்கிற
வைகள் எல்லாம் நமக்குப் போதகமாக எழுதப்
பட்டிருக்கின்றன. — [20] அந்தப்படி பொறுமை ௫
யையும் ஆறுதலையும் கொடுக்கிற பராபரன், நம்
முடைய கர்த்தராகிய இயேசுக்கிறிஸ்துவுக்குத்
தேவனும் [21]பிதாவுமானவரை நீங்கள் ஐக்கமாய்
ஒரே வாயினாலே துதிக்கும்படிக்கு,—கிறிஸ்து ௬
இயேசுவினுடைய சித்தத்தின்படியே § ஒருவ
ருக்கொருவர் ஒரேவிதமான சிந்தையுள்ளவர்க
ளாய் இருப்பதற்கு அநுக்கிரகம்செய்வாராக.
அப்படியே [22]பராபரனுக்குப் புகழ்ச்சி உண் ௭
டாகத்தக்கதாய்க் கிறிஸ்து நம்மைச் சேர்த்துக்
கொண்டதுபோல, [23]நீங்களும் ஒருவரை ஒருவர்
சேர்த்துக்கொள்ளுங்கள். — (இதைக்குறித்து) ௮
நான் பின்னும் சொல்லுகிறதாவது: [24]பிதாக்க
ளுக்குப் பண்ணப்பட்ட வாக்குத்தத்தங்களை
உறுதியாக்கும்படிக்கு, [25]பராபரனுடைய சத்தி
யத்தின் நிமித்தம் இயேசுக்கிறிஸ்து விருத்தசேத
னம் உள்ளவர்களுக்கு ஊழியக்காரரானார். —
[26]புறத்தேசத்தாரும் (அவருடைய) இரக்கத்திற்கா ௯
கப் பராபரனைத் துதிக்கும்படிக்கு அப்படியா
னார்; ஆதலால் எழுதியிருக்கிறதாவது: [27]இதின்
நிமித்தம் நான் புறத்தேசத்தாருக்குள்ளே உம்மை
அறிக்கைபண்ணி, உம்முடைய நாமத்தைச்சொ
ல்லி. சங்கீதம் பாடுவேன் என்பதே; மறுபடியும்
அவன் சொல்லியிருக்கிறது:–[28]புறத்தேசத்தார்க ௰
ளே, அவருடைய சனங்களோடேகூடச் சந்
தோஷப்படுங்கள் என்பதே.–மறுபடியும் அவன் ௰௧
சொன்னது: எல்லாப் புறத்தேசத்தார்களே, [29]பரா
பரனைத் துதியுங்கள்; எல்லாச் சனங்களே, அவ
ரை மிகவும் துதியுங்கள் என்றான்.—ஏசாயாவும் ௰௨
சொன்னது: [30]ஈசாயின் வேர் இருக்கும்; புறத்
தேசத்தாரை ஆளும்படி எழும்புவாரும் இருப்
பார்; அவரில் புறத்தேசத்தார்கள் நம்பிக்கையாய்
இருப்பார்கள் என்றான்.–அந்தப்படியே நீங்கள் ௰௩
பரிசுத்தஆவியின் பலத்தினாலேஅந்த நம்பிக்கை
யை அதிகமாய் அடையும்படிக்கு நம்பிக்கைக்கு
ஏதுவான பராபரன் [31]விசுவாசத்தினால் உண்டா
கும் எல்லாவித சந்தோஷத்தினாலும் சமாதான
சவுக்கியத்தினாலும் உங்களை நிரப்புவாராக

1 ௧ கொரி. ௮ ௰௧.—2 ௨ரோ. ௰௨. ௰௭.—3 ௧ கொரி. ௮. ௮. 4 ௨ கொரி ௮. ௨௧.-5 சங். ௩௪. ௰௪. ௨ரோ. ௰௨. ௰௮.—6 ௨ரோ. ௰௬. ௨. ௧ கொரி. ௰௪ ௰௨. ௧ தெச. ௫. ௰௧.—7 ௰௯. ௨௪.—8 மத். ௰௫. ௰௧. அப். ௰. ௰௫. ௰௪. ௨௪. தீத். ௧. ௰௫.—9 ௧ கொரி. ௮. ௯, ௰, ௰௧, ௰௨. 10 ௧ கொரி. ௮ ௰௩.—11 ௧ யோ. ௩. ௨௧.—12 தீத். ௧ ௰௫.—13 கலா. ௬. ௧.—14 ௨ரோ. ௰௪. ௧. 15 ௧ கொரி. ௯. ௰௯, ௨௨: ௰. ௨௪. ௩௩: ௰௩. ௫. பிலி. ௨. ௪, ௫.-16 ௨ரோ. ௰௪. ௰௯.-17 மத். ௨௬. ௩௯. யோவா. ௫. ௩௰: ௬. ௩௮.—18 சங். ௬௯. ௯.—19 ௨ரோ. ௪. ௨௩, ௨௪. ௧ கொரி. ௯. ௯, ௰: ௰. ௰௧. ௨ தீமோ. ௩. ௰௬, ௰௭.—20 ௨ரோ. ௰௨. ௰௬. ௧ கொரி. ௧. ௰. பிலி. ௩. ௰௬. 21 அப். ௪. ௨௪, ௩௨.—22 ௨ரோ. ௫. ௨.—23 ௨ரோ. ௰௪. ௧, ௩. 24 ௨ரோ. ௩. ௩. ௨ கொரி. ௧. ௨௰. 25 மத் ௰௫. ௨௪. யோவா. ௧. ௰௧. அப். ௩. ௨௫, ௨௬: ௰௩. ௪௬. 26 யோவா. ௰. ௰௬. ௨ரோ. ௯. ௨௪.27 சங். ௰௮. ௪௯.—28 உபா ௩௨. ௪௩.—29 சங். ௱௰௭. ௧.—30 ஏசா ௰௧. ௧, ௰. வெளி. ௫. ௫: ௨௨. ௰௬. 31 ௨ரோ. ௰௨. ௰௨: ௰௪. ௰௭.

* கிரேக்கு, பொது.—† கிரேக்கு, அன்பின்.—‡ அல்லது சந்தேகங்கொள்ளுகிறவன்.—§ அல்லது மாதிரியின்படியே.

௰௪ [1]என் சகோதரரே, நீங்கள்தாமே நற்குணத்தி
னால் நிறைந்தவர்களுமாய், சகல அறிவினாலும்
நிறைந்தவர்களுமாய், [2]ஒருவருக்கொருவர் புத்தி
சொல்ல வல்லவர்களுமாயிருக்கிறீர்கள் என்று
நானும் உங்களைக்குறித்து நிச்சயமாய் அறிந்தி
௰௫ ருக்கிறேன்.—[3]அப்படியிருந்தும் சகோதரரே,
பராபரன் எனக்குக் கொடுத்த கிருபையினாலே
நான் உங்களுக்கு ஞாபகப்படுத்தும்படிக்கு,
இவைகளை அதிக தயிரியமாய் எழுதினேன்.—
௰௬ [4]புறத்தேசத்தார்கள் பரிசுத்தஆவியினாலே பரிசுத்
தமாக்கப்பட்டுப் பராபரனுக்கு மிகவும் பிரிய
மான பலியாகும்படிக்கு,* [5]நான் புறத்தேசத்தா
ருக்கு இயேசுக்கிறிஸ்துவினுடைய ஊழியக்கா
ரனாய்ப் பராபரனுடைய சுவிசேஷத்திற்கு ஏற்ற
ஆராதனை செய்யும்பொருட்டு (அந்தக் கிருபை
௰௭ எனக்கு உண்டாயிற்று).—ஆதலால் நான் இயே
சுக்கிறிஸ்துவைக்கொண்டு [6]பராபரனுக்கு உரி
யவைகளைக்குறித்து மேன்மைபாராட்டுதற்கு
௰௮ முகாந்தரம் உண்டு.—ஆனபடியினாலே கிறிஸ்து
வானவர் என்னாலே [7]நடப்பியாதவைகளில் ஒன்
௰௯ றையுங்குறித்துப்பேசத்துணியாமல்,—[8]புறத்தே
சத்தார் வார்த்தையிலும் செய்கையிலும் விசுவா
சத்திற்குக் கீழ்ப்படியும்படிக்கு, எருசலேம் நக
ரத்தைத் தொடங்கி அதைச் சூழ்ந்த திசையிலே
யும் இல்லீரிக்குத் தேசம்வரைக்கும் கிறிஸ்துவி
னுடைய சுவிசேஷத்தை விஸ்தாரமாய்ப் பிரசங்
கிக்கத்தக்கதாக [9]அற்புதங்கள் அதிசயங்கள்
என்ற இவைகளின் பலத்தினாலும் பரிசுத்தஆவி
யினுடைய பலத்தினாலும் அவர் என்னாலே நடப்
பித்தவைகளைக்குறித்துமாத்திரம் பேசத் துணிகி
௨௰ றேன். — மேலும் [10]அவரைக்குறித்து அறிவை
அடையாதவர்கள் அவரைப் பார்ப்பார்கள் என்
றும், கேள்விப்படாதவர்கள் அறிந்துகொள்வார்
௨௧ கள் என்றும் எழுதியிருக்கிறபடியே,—[11]நான் மற்
றொருவனுடைய அஸ்திபாரத்தின்மேலே கட்
டாதபடிக்கு, கிறிஸ்துவின் நாமம் சொல்லப்பட்
டிராத இடங்களிலே சுவிசேஷத்தை அறிவிக்
கும்படி, அதிக கருத்துள்ளவனாய் இருக்கிறேன்.
௨௨ [12]அதினாலே நான் உங்களிடத்தில் வருகிற
௨௩ தற்கு அநேகந்தரம்† தடை உண்டாயிற்று.—இப்
பொழுது நான் இந்தத் திசைகளிலே இருக்கிற
தற்கு இடம் இல்லாதபடியினாலும், [13]உங்களி
டத்துக்கு வரும்படி அநேக வருஷங்களாய் என
க்கு மிகுந்த விருப்பம் உண்டாயிருந்தபடியினா
௨௪ லும்,-நான் இஸ்பானியாதேசத்திற்குப் பிரயாண
மாய்ப் போகும்பொழுது, உங்களிடத்தில் வந்து
உங்களைக் கண்டுபேசவும், உங்களோடு‡ இருக்
கிறதினாலே முந்திச் சற்று மனச்சந்தோஷம்
அடைந்தபின்பு [14]அவ்வழியே உங்களால் அனு
ப்பிவிடப்படவும் நம்பியிருக்கிறேன்.—இப்பொ ௨௫
ழுது [15]மக்கேதோனியா நாட்டிலும் அகாயா
நாட்டிலும் உள்ள சபையார் எருசலேமில் இருக்
கிற பரிசுத்தவான்களுக்குள்ளே இருக்கிற ஏழை
களுக்காகச் சில தருமங்களைச் சேர்த்துக்கொள்
ளப் பிரியமானபடியினாலே,-[16]நான் எருசலேமி ௨௬
லுள்ள பரிசுத்தவான்களுக்கு ஊழியம்செய்யும்
படி அவ்விடத்திற்குப் பிரயாணமாய்ப் போக
எத்தனமாயிருக்கிறேன்.-அப்படிப்பட்ட பிரிய ௨௭
முள்ளவர்கள் ஆவதற்கு அவர்களுடைய கடனா
ளிகளாயும் இருக்கிறார்கள்; எப்படியென்றால்,
[17]புறத்தேசத்தார் அவர்களுடைய ஞான நன்மை
களில் பங்குபெற்றிருக்க, (தங்கள்) [18]சரீர நன்
மைகளால் அவர்களுக்கு ஊழியம்செய்ய நியாய
மாயிருக்கின்றதே. — இந்த ஊழியத்தை நான் ௨௮
நிறைவேற்றி, [19]இந்தப் பலனை அவர்கள் கையி
லே பத்திரப்படுத்தின பின்பு, உங்கள் ஊர்வழி
யாய் இஸ்பானியாதேசத்திற்குச் செல்லுவேன்.-
[20]நான் உங்களிடத்தில் வரும்பொழுது, கிறிஸ்து ௨௯
வினுடைய சுவிசேஷத்திலுள்ள சம்பூரணமான
ஆசீர்வாதங்களோடே வருவேனென்று அறிந்தி
ருக்கிறேன்.
மேலும் சகோதரரே, [21]யூதேயாதேசத்தில் இரு ௩௰
க்கிற அவிசுவாசிகளுக்கு§ நான் தப்புவிக்கப்ப
டும்படிக்கும், [22]பராபரனுடைய சித்தத்தினாலே
[23]நான் சந்தோஷத்துடனே உங்களிடத்திற்கு
வந்து [24]உங்களோடேகூடச் சவுக்கியப்படத்
தக்கதாக,—[25]நான் எருசலேமிலுள்ள பரிசுத்த ௩௧
வான்களுக்குச் செய்யப்போகிற ஊழியம் அவர்
களுக்குப் பிரியமாயிருக்கும்படிக்கும்,—[26]என் ௩௨
னோடேகூட நீங்கள் எனக்காகப் பராபரனை
நோக்கி, போராட்டமாய்ச் செபம்பண்ணவேண்
டும் என்று நம்முடைய கர்த்தராகிய இயேசுக்கி
றிஸ்துவின் நிமித்தமும் [27]ஆவியானவரால் வரும்
அன்பின் நிமித்தமும் உங்களை வேண்டிக்கொள்
ளுகிறேன். — [28]சமாதானத்தை அளிக்கிற பரா ௩௩
பரன் உங்கள் அனைவரோடுங்கூட இருக்கக்
கடவர்.—ஆமன்.

## ௰௬. அதிகாரம்.

௧. பவுல் அநேகருக்குச் சகோதரர் வாழ்த்துதல் சொல்லவும், ௰௭. பிரிவினைகளையும், இடறல்களையும் உண்டுபண்ணுகிறவர்களைக்குறித்து எச்சரிக்கையாயிருக்கவும் காட்டி, ௨௧. அநேகர் வினவுதல்களை அறிவித்து, பராபரனுக்குத் துதியும் தோத்திரமும் செலுத்தி, நிருபத்தை முடித்தது.

பரிசுத்தவான்களுக்கு ஏற்றபடி நீங்கள் [29]கெங் ௧
கிரேயா ஊரின் சபைக்கு ஊழியக்காரியாகிய
நம்முடைய சகோதரி வொய்பேயாளைக் கர்த்த
ரைப்பற்றி இருக்கிறவள் என்று [30]உபசாரம்
செய்து,—அவளுக்கு உங்கள் உதவி வேண்டிய ௨

1 உ பே. ௧. ௰௨. ௧ யோ. ௨. ௨௧. 2 ௧ கொரி. அ. ௧, ௭, ௰.—3 உரோ. ௧. ௪: ௰௨. ௩ கலா. ௧. ௰௫. எபே. ௩. ௭, ௮.—4 ஏசா. ௬௬. ௨௰. பிலி. ௨. ௰௭.—5 உரோ. ௰௧. ௰௩. கலா. ௨. ௭, ௮, ௯. ௧ தீமோ. ௨. ௭. ௨ தீமோ. ௧. ௰௧.—6 எபி. ௫. ௧. 7 அப். ௨௧. ௰௯. கலா. ௨. ௮. 8 உரோ. ௧. ௫: ௰௬. ௨௬.—9 அப். ௰௯. ௰௧. ௨ கொரி. ௰௨. ௰௨. 10 ஏசா. ௫௨. ௰௫.—11 உ கொரி. ௰. ௰௩, ௰௫, ௰௬.—12 உரோ ௧. ௰௩. ௧ தெச. ௨. ௰௭, ௰௮.—13 அப். ௰௯. ௨௧. ௩௰. வச. உரோ. ௧. ௰௧. 14 அப். ௰௫. ௩.-15 ௧ கொரி. ௰௬. ௧, ௨. உ கொரி. அ. ௨: ௯. ௨, ௰௨.

16 அப். ௰௯. ௨௧: ௨௰. ௨௨: ௨௪. ௰௭. 17 உரோ. ௰௧. ௰௭.-18 ௧ கொரி. ௯. ௰௧. கலா. ௬. ௬.—19 பிலி. ௪. ௰௭. 20 உரோ. ௧. ௰௧.-21 உ தெச. ௩. ௨. 22 அப். ௰௮. ௨௧. ௧ கொரி. ௪. ௰௯. யாக். ௪. ௰௫.—23 உரோ. ௧. ௰. 24 ௧ கொரி. ௰௬. ௰௮. உ கொரி. ௭. ௰௩. உ தீமோ. ௧. ௰௬. பிலே. ௭. ௨௰. 25 உ கொரி. அ. ௪.-26 உ கொரி. ௧. ௰௧. கொலோ. ௪. ௰௨.-27 பிலி. ௨. ௧. 28 உரோ. ௯. ௨௰. ௧ கொரி. ௰௪. ௩௩. உ கொரி. ௰௩. ௰௧. பிலி. ௪. ௯. ௧ தெச. ௫. ௨௩. உ தெச. ௩. ௰௬. எபி. ௰௩. ௨௰.—29 அப். ௰௮. ௰௮. 30 பிலி. ௨. ௨௯. ௩ யோ. ௫. ௬.

* அல்லது காணிக்கை.—† அல்லது மிகுதியாய்.—‡ அல்லது உங்கள் இனத்தோடு; ௩௨. வச.—§ அல்லது கீழ்ப்படியாதவர்களுக்கு.

காரியம் ஏதோ, அதிலே அவளுக்கு உதவியாய்
இருக்கவேண்டுமென்று அவளை உங்களுக்கு ஒப்
புவிக்கிறேன்; அவளும் அநேகருக்கும் எனக்
குங்கூட ஆதரவாய் இருந்தாளே.
௩ கிறிஸ்து இயேசுவினிடத்தில் என்னுடனே
கூட வேலையாள்களாகிய [1]பிரிஸ்கில்லாளையும்
ஆக்கில்லாவையும் வாழ்த்துதல் செய்யுங்கள்.—
௪ அவர்கள் என் பிராணனுக்காகத் தங்கள் கழுத்
தையும் நீட்டினவர்கள்; அவர்களுக்கு நான்மாத்
திரமல்ல, புறத்தேசத்தாரில் உண்டான சபை
யார் எல்லாரும் நன்றியறிதலைக் காண்பிக்கத்தக்
௫ கது.—[2]அவர்களுடைய வீட்டிலே கூடிவருகிற
சபையையும் வாழ்த்துங்கள், அகாயா நாட்டிலே
[3]கிறிஸ்துவுக்கு முதற்பலனாகிய எனக்குப் பிரிய
மான எப்பெனெத்து என்பவனை வாழ்த்துங்
௬ கள்.—எங்களுக்காக மிகவும் பிரயாசப்பட்ட
௭ மரியாளை வாழ்த்துங்கள். — அப்போஸ்தலர்க
ளால் புகழ்ச்சி அடைந்தவர்களுமாய், [4]எனக்கு
முந்திக் கிறிஸ்துவுக்கு உள்ளானவர்களுமாய்,
என் இனத்தாருமாய், என்னுடனேகூடக் காவ
லில் வைக்கப்பட்டிருக்கிறவர்களுமாய் இருக்
கிற அந்திரோனிக்கையும் யூனியாவையும் வாழ்த்
௮ துங்கள்.—கர்த்தாவினாலே எனக்குப் பிரியமான
௯ அம்பிலியாவை வாழ்த்துங்கள்.—கிறிஸ்துவினி
டத்திலே நம்முடனேகூட வேலையாளாகிய
உருபானுவையும் எனக்குப் பிரியமான இஸ்தா
௰ குவையும் வாழ்த்துங்கள்.–கிறிஸ்துவினிடத்தில்
உண்மையான அப்பெல்லேயை வாழ்த்துங்கள்;
அரிஸ்தோபுலியினுடையவர்களை * வாழ்த்துங்
௰௧ கள்.–என் இனத்தானாகிய ஏரோதியோனை வாழ்த்
துங்கள்; கர்த்தரைப்பற்றி இருக்கிறவர்களாகிய
நருக்கீசுவினுடையவர்களை † வாழ்த்துங்கள்.—
௰௨ கர்த்தாவின் நிமித்தம் பிரயாசப்படுகிற திரிபே
னாளையும் திரிபோசாளையும் வாழ்த்துங்கள்; கர்த்
தாவின் நிமித்தம் மிகவும் பிரயாசப்பட்டு, எனக்
குப் பிரியமாயிருக்கிற பெர்சிசாளை வாழ்த்துங்
௰௩ கள். — [5]கர்த்தராலே தெரிந்துகொள்ளப்பட்ட
உருப்புவையும் எனக்கும் அவனுக்கும் தாயான
௰௪ வளையும் வாழ்த்துங்கள்.—அசிங்கிரித்துவையும்
பிலேகோனையும் எர்மாவையும் பத்திரோபா
வையும் எருமேயையும் அவர்களுடனே இருக்
௰௫ கிற சகோதரரையும் வாழ்த்துங்கள். — பிலோ
லோகையும் யூலியாளையும் நேரேயையும் அவனு
டைய சகோதரியையும் ஒலிம்பாவையும் அவர்
களோடிருக்கிற பரிசுத்தவான்கள் எல்லாரையும்
௰௬ வாழ்த்துங்கள். — [6]ஒருவரையொருவர் பரிசுத்த
மாய் முத்தம்செய்து வழ்த்துங்கள்; கிறிஸ்துவின்
சபையார்கள் உங்களை வாழ்த்துகிறார்கள்.

மேலும் சகோதரரே, நீங்கள் கற்றுக்கொண்ட ௰௭
உபதேசத்திற்கு விரோதமாய்ப் பிரிவினைகளை
யும் விழுதற்கு ஏதுவானவைகளையும் [7]உண்டாக்
குகிறவர்களை [8]ஆராய்ந்துபார்க்கவேண்டுமென்று
உங்களுக்குப் புத்திசொல்லுகிறேன்.—அப்படிப் ௰௮
பட்டவர்கள் நம்முடைய கர்த்தராகிய இயேசுக்
கிறிஸ்துவுக்கு அல்ல, [9]தங்கள் வயிற்றுக்கு ஊழி
யம்செய்து, [10]நயவசனிப்பினாலும் ஆசீர்வாதம்
சொல்லுகிறதினாலும் பேதைமையானவர்களு
டைய இருதயங்களை வஞ்சிக்கிறவர்களானபடி
யினாலே, நீங்கள் அவர்களைவிட்டு விலகுவீர்க
ளாக.—[11]நீங்கள் கீழ்ப்படிகிறவர்கள் என்பது ௰௯
யாவருக்கும் தெரியவந்திருக்கின்றது; ஆகை
யால்உங்களைக்குறித்துச் சந்தோஷப்படுகிறேன்;
[12]மேலும் நீங்கள் நன்மைக்கு ஞானிகளுமாய்,
தீமைக்குப் பேதைகளுமாய் ‡ இருக்கவேண்டும்
என்று விரும்புகிறேன்.—[13]மேலும் சமாதானசவு ௨௰
க்கியத்தை அளிக்கிற பராபரன் சீக்கிரமாய்ச்
[14]சாத்தானை உங்கள் கால்களின்கீழே நசுக்கிப்
போடும்படி § செய்வார்; [15]நம்முடைய கர்த்தரா
கிய இயேசுக்கிறிஸ்துவினுடைய கிருபை உங்
களுடனேகூட இருக்கக்கடவது.—ஆமென்.
[16]என் உடன்வேலையாளாகிய தீமோத்தேயும் ௨௧
என் இனத்தாராகிய இலூக்கியும் [17]இயாசோ
னும் [18]சோசிப்பத்தரும் [19]உங்களை வாழ்த்துகிறார்
கள்.–இந்த நிருபத்தை எழுதின தெர்த்தி என்னப் ௨௨
பட்ட நான் கர்த்தராலே உங்களை வாழ்த்துகி
றேன்.–எனக்கும் சபையார் எல்லாருக்கும் வீட் ௨௩
டிலே உபசாரம்செய்துவருகிற [20]காயு என்பவன்
உங்களை வாழ்த்துகிறான்; பட்டணத்து நிலை
மைக் கணக்கனாகிய [21]எரஸ்தும் சகோதரனாகிய
குவர்த்தும் உங்களை வாழ்த்துகிறார்கள்.–[22]நம்மு ௨௪
டைய கர்த்தராகிய இயேசுக்கிறிஸ்துவினுடைய
கிருபை உங்கள் எல்லாரோடுங்கூட இருக்கக்
கடவது.—ஆமென்.
[23]பூர்வீக காலங்களில் மறைவாயிருந்து, [24]இப் ௨௫
பொழுது தீர்க்கதரிசன ஆகமங்களினாலே அநாதி
யான பராபரனுடைய கட்டளையின்படி வெளி
யரங்கமாக்கப்பட்டதுமாய் [25]விசுவாசத்திற்குக்
கீழ்ப்படியும்படிக்கு எல்லாத் தேசத்தாருக்கும்
அறிவிக்கப்பட்டதுமாய் இருக்கிற [26]இரகசியத்
தை வெளிப்படுத்துகிறதாயும்,—இயேசுக்கிறிஸ் ௨௬
துவினுடைய பிரசங்கமாயுமிருக்கிற [27]என் சுவி
சேஷத்தின்படியே உங்களை [28]ஸ்திரப்படுத்துதற்
கு வல்லவருமாய்,-[29]ஒருவராய் ஞானமுள்ளவரு ௨௭
மாய் இருக்கிற பராபரனுக்கு இயேசுக்கிறிஸ்து
மூலமாய் என்றென்றைக்கும் புகழ்ச்சி உண்டா
வதாக.—ஆமென்.

1 அப் ௰௮,௨,௰௮,௨௬. ௨ தீமோ. ௪,௰௯. — 2 ௧ கொரி. ௰௬. ௰௯. கொலோ. ௪. ௰௫. பிலே. ௨. 3 ௧ கொரி. ௰௬. ௰௫. —4 கலா. ௧. ௨௨.—5 ௨ யோ. ௧.—6 ௧ கொரி. ௰௬. ௨௰. ௨ கொரி. ௰௩. ௰௨. ௧ தெச. ௫. ௨௬. ௧ பே. ௫. ௰௪. 7 அப் ௰௫. ௧,௫,௨௪. ௧ தீமோ. ௧. ௪. 8 ௧ கொரி. ௫. ௯, ௰௧. ௨ தெச. ௩. ௬, ௰௪. ௨ தீமோ ௩. ௫. தீத். ௩. ௰. ௨ யோ. ௰.—9 பிலி. ௩. ௰௯. ௧ தீமோ. ௬. ௫.—10 கொலோ. ௨. ௪. ௨ தீமோ. ௩. ௬. தீத். ௧. ௰. ௨ பே. ௨. ௩.—11 உரோ. ௧ அ. 12 மத். ௰. ௰௬. ௧ கொரி. ௰௪. ௨௰. 13 உரோ. ௰௫. ௩௩.—14 ௧ மோ. ௩. ௰௫.—15 ௨௪. வச. ௧ கொரி. ௰௬. ௨௩. ௨ கொரி. ௰௩. ௰௪. பிலி. ௪. ௨௩. ௧ தெச. ௫. ௨௮. ௨ தெச ௩. ௰௮. வெளி. ௨௨. ௨௧. 16 அப். ௰௬. ௧. பிலி. ௨. ௰௯. கொலோ. ௧. ௧. ௧ தெச. ௧. ௧. ௧ தீமோ. ௧. ௨. எபி. ௰௩. ௨௩.—17 அப். ௰௭. ௫.—18 அப். ௨௰. ௪.—19 அப். ௨௰. ௪. 20 ௧ கொரி. ௧. ௰௪.—21 அப். ௰௯. ௨௨. ௨ தீமோ. ௪. ௨௰.—22 ௨௰. ௧ தெச. ௫. ௨௮. ௨ தெச. ௩. ௰௮.—23 ௧ கொரி. ௨. ௭. எபே. ௩. ௯. கொலோ. ௧. ௨௬.—24 எபே. ௧. ௯. ௨ தீமோ. ௧. ௰. தீத். ௧. ௨, ௩. ௧ பே. ௧. ௨௰. 25 அப். ௬. ௭. உரோ. ௧. ௫: ௰௫. ௰௮. 26 எபே. ௩ ௯: ௩. ௩, ௪. ௬. கொலோ. ௧. ௨௭.—27 உரோ ௨. ௰௬. 28 எபே. ௩. ௨௰. ௧ தெச. ௩. ௰௩. ௨ தெச. ௨. ௰௭: ௩. ௩. யூதா ௨௪. 29 ௧ தீமோ. ௧. ௰௭: ௬. ௰௬. யூதா ௨௫.

* அல்லது குடும்பத்தாரை.—† அல்லது குடும்பத்தாரை.—‡ அல்லது மாசற்றவர்களாய்.—§ அல்லது மிதித்துப்போடும்படி.

## I. CORINTHIANS.

அப்போஸ்தலனாகிய பவுல்

# கொரிந்தியருக்கு எழுதின

## முதலாம் நிருபம்.

### ௧. அதிகாரம்.

*க. பவுல் சபையாரை வாழ்த்திப் பராபரனைத் துதித்தது, ௰. அவர்களை ஒருமனப்பட்டிருக்கக் கற்பித்தது, ௰உ. அவர்களுடைய பிரிவினைகளைக் கடிந்துகொண்டது. ௰அ பராபரன் ஞானிகளின் ஞானத்தை, உக. சொல்லப் பிரசங்கத்தினாலே வீணாக்கி, உச. ஞானிகளையும் வல்லவர்களையும், மேற்குலத்தாரையும்விட்டு, உஎ. உஅ. பேதைகளையும், இழிகுலத்தாரையும் தெரிந்துகொண்டது.*

௧ [1]பராபரனுடைய சித்தத்தினாலே [2] இயேசுக்கிறி
ஸ்துவின் அப்போஸ்தலனாக அழைக்கப்பட்ட
௨ பவுலும், — [3]சகோதரனாகிய சொஸ்தெனேயும்
கொரிந்துவிலே [4]பரிசுத்தவான்களாகும்படி அ
ழைக்கப்பட்டவர்களாயும் [5]கிறிஸ்து இயேசு
வினால் பரிசுத்தமாக்கப்பட்டவர்களாயும் இருக்
கிற [6]பராபரனுடைய சபையாருக்கும் எவ்விடத்
திலேயும் [7]நமக்குப் பொதுவாயிருக்கிற [8]கர்த்த
ராகிய இயேசுக்கிறிஸ்துவின் நாமத்தைத் [9]தொ
ழுதுகொள்ளுகிற அனைவருக்குங்கூட எழுதுகி
௩ றதாவது:—[10]நம்முடைய பிதாவாகிய பராபர
னாலும் கர்த்தராகிய இயேசுக்கிறிஸ்துவினாலும்
உங்களுக்குக் கிருபையும் சமாதானமும் உண்
டாகக்கடவது.

௪ நீங்கள் ஒரு வரத்திலும் குறைவு இல்லாதவர்க
ளாயிருந்து, நம்முடைய கர்த்தராகிய இயேசுக்கி
றிஸ்து [11]வெளிப்படுவதற்குச் * சந்தோஷமாய்க்
௫ காத்திருக்கத்தக்கதாக, — [12]கிறிஸ்துவைக்குறித்
துச் சொன்ன சாட்சி உங்களுக்குள்ளே ஸ்திரப்
௬ படுத்தப்பட்டிருக்கையால்,—நீங்கள் இயேசுக்
கிறிஸ்துவினாலே எல்லாவற்றிலும் [13]எல்லா உப
தேசத்திலேயும் எல்லா அறிவிலேயும் சம்பூரணம்
௭ உள்ளவர்களானபடியினாலே,—அவர் மூலமாய்
உங்களுக்குக் கொடுக்கப்பட்ட தேவகிருபைக்
காக [14]நான் உங்களைக்குறித்து எப்பொழுதும்
என் பராபரனைத் தோத்திரிக்கிறேன்.—அவரும் ௮
நம்முடைய கர்த்தராகிய இயேசுக்கிறிஸ்துவின்
நாளிலே [15]நீங்கள் குற்றஞ்சாற்றப்படாதவர்க
ளாய் இருக்கும்படி, [16]முடிவுபரியந்தம் உங்களை
ஸ்திரப்படுத்துவார்.—தம்முடைய குமாரனுமாய் ௯
நம்முடைய கர்த்தருமாயிருக்கிற இயேசுக்கிறிஸ்
துவுடனே [17]ஐக்கமாய் இருப்பதற்கு உங்களை
அழைத்த பராபரன் [18]உண்மையுள்ளவராய் இ
ருக்கிறாரே.

ஆகிலும் என் சகோதரரே, உங்களுக்குள்ளே ௰
வாக்குவாதங்கள் உண்டென்று குலோவேயா
ளுக்கு உரித்தானவர்களாலே எனக்கு அறிவிக்
கப்பட்டது.—ஆதலால் [19]நீங்கள் எல்லாரும் ௰௧
ஒரேவிதமாய்ப் பேசவும், பிரிவினைகள் † இல்
லாமல் ஏக மனதினாலும் ஏக யோசனையினாலும்
ஐக்கப்பட்டிருக்கவும் வேண்டும் என்று நம்மு
டைய கர்த்தராகிய இயேசுக்கிறிஸ்துவின் நாமத்
தினாலே உங்களுக்குப் புத்திசொல்லுகிறேன்.—
[20]உங்களில் ஒருவன் நான் பவுலைச் சேர்ந்தவன் ௰௨
என்றும், ஒருவன் [21]அப்பொல்லோவைச் சேர்ந்
தவன் என்றும், ஒருவன் [22]கேபாவைச் சேர்ந்த
வன் என்றும், ஒருவன் கிறிஸ்துவைச் சேர்ந்த
வன் என்றும் சொல்லுகிறபடியால், நான் இப்
படிச் சொல்லுகிறேன்.

[23]கிறிஸ்து பிரிந்திருக்கிறாரா? உங்களுக்கா ௰௩
கப் பவுல் சிலுவையில் அறையப்பட்டானா?
அல்லது பவுலின் நாமத்தினாலே ஞானஸ்நானம்
பெற்றீர்களா? — என்னுடைய நாமத்தினாலே ௰௪
ஞானஸ்நானம் கொடுத்தேன் என்று ஒருவனும்
சொல்லாதபடிக்கு,—நான் [24]கிறிஸ்புக்கும் [25]கா ௰௫
யுக்குமே அன்றி, உங்களில் வேறொருவருக்

---

1 உ கொரி. க க. எபே. க. க. கொலோ. க. க.–2 உரோ. க. க. 3 அப். ௰அ. ௰எ. 4 உரோ க. எ. உ தீமோ. க. கூ. 5 யோவா. ௰எ. ௰கூ. அப். ௰ஓ. கூ. 6 யூதா. க.—7 உரோ. க. உஉ: ௰. ௰உ -8 க கொரி. அ கூ.-9 அப். கூ. ௰ச, உக: உஉ. ௰க. உ தீமோ. உ. உஉ. ——10 உரோ. க. எ. உ கொரி. க. உ. எபே. க. உ. க பே. க. உ.—11 பிலி. க. உ௰. தீத். உ. ௰க. உ பே. க. ௰உ. 12 க கொரி. உ. க. உ தீமோ க. அ. வெளி. க. உ.—13 க கொரி ௰உ. அ. உ கொரி. அ. எ.–14 உரோ. க. அ.-15 கொலோ. க. உஉ. க தெச. ஓ. உக.—16 க தெச. க. ௰க. 17 யோவா. ௰ஓ. ச: ௰எ உக. க யோ. க. க: ச. ௰க —18 ஏசா. சகூ. எ. க கொரி. ௰. ௰க. க தெச. ஓ. உச. உ தெச க. க. எபி. ௰. உக. 19 உரோ. ௰உ. ௰கூ: ௰ஓ. ச. உ கொரி. ௰க. ௰க. பிலி. உ. உ: க. ௰கூ. க பே. க. அ. —20 க கொரி. க. ச. 21 அப். ௰அ. உச: ௰கூ. க. க கொரி. ௰கூ. ௰உ.—22 யோவா. க. சஉ. 23 உ கொரி. ௰க. ச. எபே. ச. ஓ. 24 அப். ௰அ. அ.—25 உரோ. ௰௬. உக.

* அல்லது வருகைக்கு; கொலோ. ௩. ௪.—† கிரேக்கு. பேதங்கள்; க கொரி ௰க. ௰அ.

கும் ஞானஸ்நானம் கொடாததினாலே, பராபர
௰௬ னைத் தோத்திரம்செய்கிறேன். — [1] ஸ்தேவானு
டைய வீட்டாருக்கும் ஞானஸ்நானம் கொடுத்
தேன்; பின்னும் (உங்களில்) வேறொருவனுக்கு
நான் ஞானஸ்நானம்கொடுத்தேனோ இல்லையோ
என்று அறியேன்.
௰௭ சுவிசேஷத்தைப் பிரசங்கிக்கும்படிக்கே அல்
லாமல், ஞானஸ்நானத்தைக் கொடுக்கும்படிக்
குக் கிறிஸ்து என்னை அனுப்பவில்லையே; கிறி
ஸ்துவின் சிலுவை வீணாய்ப் போகாதபடிக்கு,
[2] நான் அதை லவுகீக ஞானவசனங்களோடே*
அல்ல, பிரசங்கிக்கும்படிக்கு அனுப்பினார். —
௰௮ அந்தச் சிலுவையைக்குறித்துச் சொல்லிய வச
னம் [3] கெட்டுப்போகிறவர்களுக்குப் [4] பயித்திய
மாகத் தோன்றுகின்றதே அன்றி, [5] இரட்சிக்கப்
படுகிற நமக்கு [6] அது தேவபலனாய் இருக்கின்
௰௯ றது.—[7] அந்தப்படி ஞானிகளுடைய ஞானத்தை
நான் அழித்து, புத்திசாலிகளுடைய புத்தியை
மறைந்துபோகப்பண்ணுவேன் என்று எழுதியி
௨௰ ருக்கின்றதே.—[8] ஞானியானவன் எங்கே? வேத
பாரகன் எங்கே? இப்பிரபஞ்ச தருக்கசாஸ்திரி
எங்கே? [9] இந்த உலக ஞானத்தைப் பராபரன் பயி
௨௧ த்தியமாக்கவில்லையா?—எப்படியெனில் [10] பரா
பரனுடைய ஞானத்திற்கு ஏற்றதாய் உலகத்
தார் தங்கள் சொந்த ஞானத்தினாலே பராபரனை
அறியாதபடியினாலே, பயித்தியமாகத் தோன்று
கிற பிரசங்கத்தினாலே விசுவாசிகளை இரட்சிக்
கவேண்டும் என்று பராபரன் பிரியமாயிருந்
௨௨ தார்.—அந்தப்படி [11] யூதர்கள் அடையாளத்தைக்
கேட்கிறார்கள்; கிரேக்கர் ஞானத்தைத் தேடுகி
௨௩ றார்கள். — நாங்களோ சிலுவையில் அறையப்
பட்ட கிறிஸ்துவைக் கூறுகிறோம்; [12] அது யூதர்
களுக்கு இடறலாயும், [13] கிரேக்கருக்குப் பயித்
௨௪ தியமாயும் இருக்கின்றது. — ஆகிலும் யூதரிலும்
கிரேக்கரிலும் எவர்கள் அழைக்கப்பட்டார்க
ளோ, அவர்களுக்குக் கிறிஸ்து [14] தேவபலனு
௨௫ மாய்த் [15] தேவஞானமுமாய் இருக்கிறார்.—ஆன
தால் தேவனைக்குறித்து அவர்கள் சொல்லுகிற
பயித்தியம் மனிதருடைய ஞானத்திலும் அதிக
ஞானமாயும், தேவனைக்குறித்து அவர்கள் சொல்
லுகிற பெலஈனம் மனிதருடைய பெலனிலும்
அதிக பெலனாயும் இருக்கின்றது.
௨௬ அதற்காகச் சகோதரரே, [16] உங்களை அழைத்த
விதத்தைப் பாருங்கள்; அநேக லவுகீக ஞானிக
ளாவது, அநேக வல்லவர்களாவது, அநேக உயர்
குலத்தாராவது இல்லையே.—அந்த ஞானிகளை ௨௭
வெட்கப்படுத்தும்படிக்கு, [17] பராபரன் உலகத்தி
லே பயித்தியரென்று எண்ணப்பட்டவர்களைத்
தெரிந்துகொண்டார்; பெலவான்களை வெட்
கப்படுத்தும்படிக்கு, பராபரன் உலகத்திலே
பெலஈனரானவர்களைத் தெரிந்துகொண்டார்.—
[18] இருக்கிறவர்களைத் தள்ளும்படிக்கு, [19] இல்லாத ௨௮
வர்களையும் உலகத்திலே இழிந்த குலத்தாரான
வர்களையும் அற்பமாய் எண்ணப்பட்டவர்களை
யும் பராபரன் தெரிந்துகொண்டார். — [20] எந்த ௨௯
மாம்சதேகியும் பராபரனுக்குமுன்பாகப் பெரு
மைபாராட்டாதபடிக்கு அப்படிச் செய்தார்.—
ஆதலால் நீங்கள் அவராலே கிறிஸ்து இயேசு ௩௰
வுக்கு உட்பட்டிருக்கிறீர்கள்; அவரே நமக்குத்
[21] தேவஞானமும் [22] நீதியும் [23] பரிசுத்தமும் [24] மீட்
புமானார்.—ஆனதால் எழுதியிருக்கிறபடி [25] மேன் ௩௧
மைபாராட்டுகிறவன் கர்த்தரைக்குறித்தே மேன்
மைபாராட்டக்கடவன்.

## ௨. அதிகாரம்.

௧. தன் பிரசங்கபோதகம் சாதுரியமுள்ளதும், ௪. லவுகீக ஞானமுள்ள தமாய் இராமற்போனாலும், ௫. ௬. அது தேவபலமுள்ளதென்றும், ௭. உலகஞானத்துக்கும், ௯. லவுகீகபுத்திக்கும் மிகவும் உயர்ந்ததென்றும், ௰௪. அதைச் சுபாவப்படிக்கான மனுஷன் அறியக்கூடாதென்றும் சொல்லியது.

சகோதரரே, நானும் உங்களிடத்தில் வந்து ௧
[26] பராபரனுடைய சாட்சியை [27] உயர்ந்த வச
னிப்போடும் அல்லது ஞானத்தோடும் உங்க
ளுக்கு அறிவிக்கவில்லை.—நான் தீர்மானித்தபடி ௨
சிலுவையில் அறையப்பட்ட [28] இயேசுக்கிறிஸ்
துவையே அன்றி, வேறொன்றையும் உங்க
ளுக்கு அறிவிக்கவில்லையே.—அல்லாமலும் நான் ௩
[29] பெலஈனத்தோடும் பயத்தோடும் மிகுந்த நடுக்
கத்தோடும் [30] உங்களிடத்தில் இருந்தேன். —
என் பேச்சும் என் பிரசங்கமும் [31] மனிதஞா ௪
னத்திற்கு உரியபோதனை † வார்த்தைகளாய் இ
ருக்கவில்லை. — உங்கள் விசுவாசம் மனிதரு ௫
டைய ஞானத்தில் அல்ல [32] பராபரனுடைய பெ
லத்திலே நிற்கத்தக்கதாக ‡ அது [33] ஆவியையும்
பெலனையும் காண்பித்தது.

எப்படியும் [34] தேறினவர்களுக்குள்ளே நாங் ௬
கள் ஞானத்தையே பேசுகிறோம்; [35] அந்த ஞானம்
இப்பிரபஞ்சத்தின் ஞானமல்ல, [36] அழிந்துபோ
கிறவர்களாகிய இப்பிரபஞ்சத்தின் பிரபுக்களு
டைய ஞானமும் அல்ல. — [37] லோகத்தோற்றத் ௭
திற்குமுன்னே பராபரன் நம்முடைய மகிமைக்

1 ௧ கொரி. ௰௬. ௰௫, ௰௭.-2 ௧ கொரி. ௨. ௧, ௪, ௰௩. ௨ பே ௧. ௰௬. 3 ௨ கொரி. ௨. ௰௫.—4 அப். ௰௭. ௰௮. ௧ கொரி ௨. ௰௪.-5 ௧ கொரி. ௰௫. ௨.— 6 உரோ. ௧. ௰௬. ௨௪. வச.-7 யோபு. ௫. ௰௨, ௰௩. ஏசா. ௨௯. ௰௪ எரே. ௮. ௯.—8 ஏசா. ௩௩. ௰௮.—9 யோபு. ௰௨. ௰௭, ௨௰, ௨௪. ஏசா. ௪௪. ௨௫. உரோ. ௧. ௨௨.-10 உரோ. ௧. ௨௰, ௨௧, ௨௮. மத். ௰௧. ௨௫. லூக். ௰. ௨௧. 11 மத். ௰௨. ௩௮: ௰௬. ௧ மாற். ௮. ௰௧. லூக். ௰௪. ௰௬. யோவா. ௪. ௪௮. 12 ஏசா. ௮. ௰௪. மத். ௰௧. ௬: ௰௩. ௫௭. லூக். ௨. ௩௪. யோவா. ௬. ௬௰, ௬௬. உரோ ௯. ௩௨. கலா. ௫. ௰௧. ௧ பே. ௨. ௮.—13 ௰௮. வச. ௧ கொரி. ௨. ௰௪.—14 உரோ ௧. ௪. ௰௬. ௰௮. வச.— 15 கொலோ ௨. ௩. 16 யோவா. ௭ ௪௮.—17 மத். ௰௧. ௨௫ யாக். ௨. ௫. ௨௰. ௮. ௨. 18 ௧ கொரி. ௨. ௬.—19 உரோ. ௪. ௰௭.—20 உரோ ௩. ௨௭. எபே ௨. ௯.-21 ௨-௪. வச.—22 எரே ௨௩. ௬. உரோ ௪. ௨௫. ௨ கொரி. ௫. ௨௧. பிலி. ௩. ௯.-23 யோவா. ௰௭. ௰௯.—24 எபே. ௧ ௭. 25 எரே. ௯. ௨௩. ௨௪. ௨ கொரி. ௰. ௰௭.—26 ௧ கொரி. ௧. ௬. 27 ௧ கொரி. ௧. ௰௭. ௪. ௰௯. வச. ௨ கொரி. ௰. ௰: ௰௧. ௬.-28 கலா. ௬. ௰௪. பிலி. ௩. ௮.--29 ௨ கொரி. ௪. ௭: ௬. ௫: ௰௧. ௩௰: ௰௨. ௫, ௯. கலா. ௪. ௰௩.—30 அப். ௰௮. ௧, ௬, ௰௨.—31 ௧. வச. ௧ கொரி. ௧. ௰௭. ௨ பே. ௧. ௰௬.—32 ௨ கொரி. ௪. ௭: ௬. ௭.—33 உரோ. ௰௫ ௰௯. ௧ தெச ௧. ௫.—34 ௧ கொரி ௰௪. ௨௰. எபே. ௪ ௰௩. பிலி. ௩. ௰௫ எபி. ௫. ௰௪.--35 ௧ கொரி ௧. ௨௰. ௨௬. ௩. ௰௯. வச. ௨ கொரி. ௧. ௰௨. யாக். ௩. ௰௫.-36 ௧ கொரி ௧. ௨௮.-37 உரோ. ௰௬. ௨௫, ௨௬. எபே ௩. ௫, ௯. கொலோ. ௧. ௨௬ ௨ தீமோ. ௧. ௯.

* அல்லது வார்த்தைகள்.—† அல்லது மயக்க.—‡ ஒரேக்கு, இருக்க.

காகக் குறித்ததுமாய் இரகசியத்திலே மறைக்கப்
பட்டதுமாயிருந்த தேவஞானத்தையே பேசுகி
அ றோம்.—[1]அதை இப்பிரபஞ்சத்துப் பிரபுக்களில்
ஒருவனும் அறிந்துகொள்ளவில்லை; [2](அறிந்து
கொண்டிருந்தார்களானால்) மகிமையின் கர்த்
தரை அவர்கள் சிலுவையில் அறையமாட்டார்க
கூ ளே.—வேதத்தில் எழுதியிருக்கிறபடி பராபரன்
தம்மிடத்தில் அன்புகூருகிறவர்களுக்கு எத்த
னம் பண்ணினவைகளை [3](மனிதர்) கண்காண
வும் இல்லை; காதுகேட்கவும் இல்லை; அவை
கள் மனிதருடைய இருதயத்திலே தோன்றவும்
ம இல்லை.—[4]நமக்கோ பராபரன் அவைகளைத் தமது
ஆவியினாலே வெளிப்படுத்தினார்; அந்த ஆவியா
னவர் எல்லாவற்றையும் பராபரனுடைய ஆழங்
மக களையும் ஆராய்ந்திருக்கிறாரே.—[5]மனிதனிலுள்ள
ஆவியே அன்றி மனிதரில் எவன் மனிதனுக்கு
உரியவைகளை அறிவான், (மாட்டானே;) [6]அப்
படிப்போல, பராபரனுடைய ஆவியேஅல்லா
மல் ஒருவனும் பராபரனுடைய ஆழங்களை அறி
மஉ யமாட்டான்.—இப்படியிருக்க நாங்கள் பராபர
னால் நமக்கு அருளப்பட்டவைகளை அறியும்ப
டிக்கு உலகத்தின் ஆவியை அல்ல, [7]பராபரனி
லிருந்து புறப்படுகிற ஆவியையே பெற்றோம்.—
மங [8]அவைகளை நாங்கள் மனிதருடைய சொந்த
ஞானம் போதிக்கிற வார்த்தைகளால் அல்ல, பரி
சுத்தஆவி போதிக்கிற வார்த்தைகளாலே பிரசங்
கம்பண்ணி, ஆவிக்கு உரியவைகளை ஆவிக்கு
உரியவைகளாலே ஒத்துப்பார்த்துக் காண்பிக்கி
மச றோம்.—ஆகிலும் [9]சென்மசுபாவத்தின்படியான
மனிதன் பராபரனுடைய ஆவிக்கு உரியவை
களை ஏற்றுக்கொள்ளமாட்டான்; [10]அவைகள்
அவனுக்குப் பயித்தியமாகத் தோன்றுமே; [11]மே
லும் அவைகளை ஆவிக்கேற்ற பிரகாரமாய் ஆரா
ய்ந்து நிதானிக்கவேண்டியபடியால், அவன் அ
மரு வைகளை அறியமாட்டான்.—[12]ஆவிக்கு உரியவ
னே எல்லாவற்றையும் ஆராய்ந்து நிதானித்து,*
மற்றொருவனாலும் ஆராய்ந்து நிதானிக்கப்ப
மசு டான்.†— அவனுக்குப் போதிக்கத்தக்கதாக.‡
[13]கர்த்தருடைய சிந்தையை அறிந்தவன் யாவன்?
[14]நாங்களோ கிறிஸ்துவின் சிந்தையைப்போலச்
சிந்தையுள்ளவர்களாயிருக்கிறோம்.

## ங. அதிகாரம்.

உ. குழந்தைகளுக்குப் பால் உரியதென்றும், க. போராட்டமும் பிரிவினையும் மாம்சசிந்தைக்கு உரியதென்றும், எ. நடுகிறவனும் தண்ணீர் பாய்ச்சுகிறவனும் விளைவுக்குக் காரணரல்லவென்றும், கூ. தேவஊழியக்காரர் பராபரனோடே உடன்வேலையாட்களென்றும், மக கிறிஸ்துவொருவரே அஸ்திபாரமென்றும், மசு. மனிதர்கள் தேவாலயங்களென்றும், மஎ. அவைகளைப் பரிசுத்தமாய்க் காத்துக்கொள்ளவேண்டியதென்றும், மகூ. இவ்வுலகஞானம் பராபரனுடைய பார்வைக்குப் பயித்திய மென்றும் சொல்லியது.

**நா**னும் சகோதரரே, உங்களை [15]ஆவிக்கு உரி க
யவர்கள் என்று எண்ணவும் உங்களுடனே பே
சவும்கூடாமல் [16]உங்களை மாம்சத்திற்கு உரிய
வர்கள் என்றும் [17]கிறிஸ்துவில் குழந்தைகள்
என்றும் எண்ணி உங்களுடனே பேசவேண்டி
யதாய் இருந்தது.—உணவை நீங்கள் தாங்கத் திரா உ
ணியில்லாதபடியால் அதை உங்களுக்குக் கொ
டாமல், [18]பாலைக் குடிக்கக்கொடுத்தேன்; இன்
னமும் நீங்கள் மாம்சத்திற்கு உரியவர்களாயி
ருக்கிறபடியால் [19]இப்பொழுதும் அதைத் தாங்
கமாட்டீர்கள்.—[20]வைராக்கியமும் வாக்குவாத ங
மும் பேதகங்களும்§ உங்களுக்குள்ளே இருக்க,
நீங்கள் மாம்சத்திற்கு உரியவர்களாயும், மனித
ருடைய மார்க்கமாய்‖ நடக்கிறவர்களாயும், இ
ருக்கிறீர்கள் அல்லவோ?—உங்களில் ஒருவன் ச
[21]நான் பவுலைச் சேர்ந்தவன் என்றும் வேறொரு
வன் நான் அப்பொல்லோவைச் சேர்ந்தவன்
என்றும் சொல்லுகிறதால், நீங்கள் மாம்சத்திற்கு
உரியவர்கள் அல்லவா?

பவுல் யாவன்? அப்பொல்லோ யாவன்? [22]அ ரு
வர்கள் நீங்கள் விசுவாசிகளாகிறதற்கு ஏதுவாயி
ருந்த ஊழியக்காரர்தானே; [23]அதுவும் அவனவ
னுக்குக் கர்த்தர் அருள் அளித்தபடியே இருக்கி
றது.—[24]நான் நட்டேன், [25]அப்பொல்லோ நீர் சு
பாய்ச்சினான், [26]பராபரனே வளர்த்தார்.—அப் எ
படியிருக்க [27]நடுகிறவனாலும் ஒன்றுமில்லை, நீர்
பாய்ச்சுகிறவனாலும் ஒன்றுமில்லை; வளர்க்கிற
பராபரனாலே எல்லாம் ஆகும். — ஆகையால் அ
நடுகிறவனும் நீர்பாய்ச்சுகிறவனும் ஒன்றாயிருக்
கிறார்கள்; ஆகிலும் [28]நாங்கள் பராபரனோடே
கூடிய வேலையாட்களானபடியால் [29]அவனவன்
தன் தன்னுடைய வேலைக்குத்தக்கதாய்ப் பல
னைப் பெறுவான். — நீங்கள் பராபரனுடைய கூ
பண்ணையும்¶ [30]பராபரனுடைய மாளிகையு
மாய் இருக்கிறீர்கள்.

[31]எனக்கு அளிக்கப்பட்ட தேவகிருபையின் ம
படியே, விவேகமுள்ள சிற்பாசாரியைப்போல
[32]அஸ்திபாரத்தைப் போட்டேன்; வேறொரு
வன் அதின்மேலே கட்டுகிறான்; [33]எவனானாலும்
தான் அதின்மேலே கட்டுகிறது இன்னதென்று
பார்க்கக்கடவன்.—என்னத்தினாலெனில், [34]இ மக
யேசுக்கிறிஸ்துவே அஸ்திபாரமாகப் போடப்

1 மத். மக. உகு. யோவா. எ. சஅ. க.மஎ. ச. வச.—9 மத். ௧௬. உக. அப். ௧௩ உஎ. உ கொரி க. ௧௪. 10 க கொரி.க.மஅ, உக -11 உரோ.
2 லூக். உக. ௬௪. அப். க. மஎ. அ. ௬,க, எ.—12 வாக் உஅ.௯ யோவா. ௧௬. ௬. க தெச. ௬.உக. க பே. ச. க.
3 ஏசா ௬௪.௪.—4 மத். ம௩. ௧௧: ம௬. 13 யோபு. ௧௫.அ. ஏசா. ச௰. மக. ௧எ. யோவா. மச. உ௬. ம௬. மக. எரே. உக. மஅ. உரோ.௧௧. ௬௪. க பே. உ. உஎ.—5 வாக. உம. 14 யோவா.மரு மரு.—15 க கொரி. உஎ: உஎ. ௧௬. எரே. ௧எ. கூ. உ ம௯.—16 க கொரி. உ. மச.
6 உரோ. மக. ௬௬, ௬ச.—7 உரோ. 17 எபி.௫. மக.—18 எபி.௯ மஉ,மக. அ.ம௯.—8 உ பே.க.ம௬.க கொரி. க பே.உ.க.—19 யோவா. மக.
மஉ.—20 க கொரி க.மக: மக மஅ. கலா. ௬. உம, உக. யாக் ௬. மக.
21 க கொரி.க.மஉ.—22 க கொரி.ச. க. உ கொரி. ௬. ௬.—23 உரோ. மஉ. ௬, கூ. க பே. ச. ௧௧.
24 அப். மஅ.ச,அ, மக, க கொரி. ச. ம௯: கூ. க: ம௯. க. உ கொரி. ம. ௧ச, ௧௫ —25 அப்.மஅ.உச,உஎ: ம௬ க.-26 க கொரி.க.௬ம: ம௯.ம. உ கொரி.க.௯.-27 உ கொரி.மஉ.
மக.கலா. க ௬.—28 அப். ௧௯. ச. உ கொரி.கூ.க —29 சங்.௬உ. மஉ. உரோ. உ. கூ. க கொரி. ச. ௯. கலா. க. ச. ௯ வெளி. உ, உக:உஉ.மஉ.-30 எபே. உ, உம. கொலோ உ. எ. எபி. ௬. ௬, ச. க பே.உ.௯.-31 உரோ.க.௪: மஉ. ௬ —32 உரோ. ௧௯. உக, கூ. வச. க கொரி. ச. ம௯. வெளி.உக.மச. 33 க பே.ச.மக —34 எபே உ உம.

* அல்லது தீர்த்து.—† அல்லது தீர்க்க.—‡ கிரேக்கு, போதிக்கும்படியாக.—§ அல்லது கலகங்களும்.
‖ கிரேக்கு, மனிதனைப்போல.—¶ அல்லது பயிர்செய்கையும்.

பட்டிருக்கிறாரே; [1]போடப்பட்ட அந்த அஸ்தி
பாரத்தைத் தவிர வேறே அஸ்திபாரத்தை
௰௨ ஒருவனும் போடக்கூடாது. — ஒருவன் அந்த
அஸ்திபாரத்தின்மேல் பொன், வெள்ளி, இரத்
தினக்கற்கள், மரங்கள், புல், தாளடி, இப்படிப்
பட்டவைகளைச் சேர்த்துக் கட்டினால் [2]அவன
௰௩ வனுடைய கிரியை வெளிப்படும்.—[3]அக்கினியி
னாலே வெளியாக்கப்படுவதால், * [4]அது தோன்
றும் நாளே அதை வெளிப்படுத்தும்; அவனுடை
ய கிரியை இப்படிப்பட்டதென்று அக்கினியே
௰௪ சோதிக்கும்.—அஸ்திபாரத்தின்மேலே கட்டின
ஒருவனுடைய கிரியை நின்றால், [5]அவன் பல
௰௫ னைப் பெறுவான்.—ஒருவனுடைய கிரியை வெந்
துபோனால், அவனுக்கு நஷ்டம்வரும்; ஆகிலும்
அவனே இரட்சிக்கப்படுவான்; [6]அதுவும் அக்கி
னியில் அகப்பட்டுத் தப்பினாற்போலவே இருக்
கும்.

௰௬ [7]நீங்கள் பராபரனுடைய ஆலயமாய் இருக்
கிறீர்கள் என்றும், பராபரனுடைய ஆவியான
வர் உங்களிடத்தில் வாசமாயிருக்கிறார் என்றும்
அறியாமல் இருக்கிறீர்களா? பராபரனுடைய ஆ
௰௭ லயம் பரிசுத்தமாயிருக்கின்றது.—ஆதலால் அவ
ருடைய ஆலயத்தை ஒருவன் கெடுத்தால்† அவ
௰௮ னைப் பராபரன் கெடுப்பார்.—நீங்களே அந்த
ஆலயம்; [8]ஒருவனும் தன்னைத்தானே வஞ்சனை
செய்யாதிருப்பானாக; [9]ஞானிகளை அவர்களு
௰௯ டைய தந்திரத்திலே பிடிக்கிறாரென்றும்,—[10]ஞா
னிகளுடைய சிந்தனைகள் வீணாயிருக்கின்றன
என்று கர்த்தர் அறிந்திருக்கிறார் என்றும் எழுதி
யிருக்கிறபடி, [11]இவ்வுலகத்தின் ஞானம் பராபர
னுக்குமுன்பாகப் பயித்தியமாய் இருக்கின்ற
௨௰ தே.—ஆனதால் உங்களில் ஒருவன் இவ்வுலகத்
திலே தன்னை ஞானியென்று எண்ணினால், அ
வன் மெய்ஞ்ஞானியாகும்படிக்குப் பயித்தியக்
காரனாகக்கடவன்.

௨௧ இப்படியிருக்க [12]ஒருவனும் மனிதரைக்குறித்
துப் பெருமைபாராட்டக்கூடாது; [13]எல்லாம்
௨௨ உங்களுடையதே. — பவுலாகிலும், அப்பொல்
லோவாகிலும், கேபாவாகிலும், லோகமாகிலும்,
சீவனாகிலும், மரணமாகிலும், நிகழ்காரியங்களா
கிலும், வருங்காரியங்களாகிலும், எல்லாம் உங்
௨௩ களுடையது.—[14]நீங்கள் கிறிஸ்துவினுடையவர்
கள், கிறிஸ்து பராபரனுடையவர்.

## ௪. அதிகாரம்.

௧. போதகர்கள் இப்படி எண்ணப்படவேண்டுமென்றும், ௭. நமக்கு உரியவையெல்லாம் பெற்றுக்கொண்டோமென்றும், ௯. அப்போஸ்தலர்கள் லோகத்துக்கும், தூதர்களுக்கும், மனுஷருக்கும் விரோதமாகவும், ௰௩. உலகத்தின் குப்பையும், அழுக்குமாகவும் எண்ணப்பட்டவர்களாய் இருந்தாலும், ௰௫. கிறிஸ்துவுக்குள் அவர்கள் நமக்குப் பிதாக்களென்றும், ௰௬. அவர்களை நாம் பின்பற்றவேண்டியதென்றும் காட்டியது.

இப்படி இருக்கிறபடியால், யாவரும் [15]எங்க ௧
ளைக் கிறிஸ்துவின் ஊழியக்காரர் என்றும், [16]பரா
பரனுடைய இரகசியங்களின் உக்கிராணக்கா
ரர் என்றும், எண்ணிக்கொள்ளக்கடவர்கள்.—
உக்கிராணக்காரரிடத்திலே உண்மையையே கா ௨
ணத்தேடுவார்கள்.—(அதைக்குறித்து) நான் உங் ௩
களாலே அல்லது மற்றொரு மனித அதிகாரத்தி
னாலே ‡ நியாயத்தீர்ப்பைப் பெறுவது எனக்கு
மிகவும் சிறிதான காரியமாயிருக்கின்றது; என்
னைக்குறித்து நானும் நியாயத்தீர்ப்புச் சொல்லுகி
றதில்லை.—குற்றத்தை நான் என்னிடத்தில் அ ௪
றியேன்; ஆகிலும் [17]அதினாலே நான் நீதிமானா
கிறதில்லை; கர்த்தரே என்னைக்குறித்துத் தீர்ப்பு
சொல்லுகிறவர்.—ஆனபடியினாலே கர்த்தர் வரு ௫
மளவும் [18]நீங்கள் காலத்திற்குமுன்னே ஒன்றை
யுங்குறித்துத் தீர்ப்புச்சொல்லாதிருப்பீர்களாக;
[19]அவரே இருளின் அந்தரங்கங்களை வெளியரங்
கமாக்கி, இருதயங்களின் யோசனைகளையும் வெ
ளிப்படுத்துவார்; [20]அப்பொழுது அவனவனுக்
குப் பராபரனாலே புகழ்ச்சி உண்டாகும்.

சகோதரரே, [21]எழுதப்பட்டதற்கு மேலாகப் ௬
(போதகரை) எண்ணிக்கொள்ளாதபடிக்கு, நீங்
கள் எங்களாலே கற்கும்பொருட்டாகவும், [22]ஒரு
வன் நிமித்தம் மற்றொருவனுக்கு விரோதமாய்
இறுமாப்பை அடையாதிருக்கும்பொருட்டாக
வும், [23]நான் உங்கள் நிமித்தம் என்னையும் அப்
பொல்லோவையும் திருட்டாந்தங்களாக வைத்
து, இவைகளை எழுதினேன்.—அன்றியும், உன்னை ௭
விசேஷித்துக்கொள்ளுகிறவன் § யாவன்? [24]நீ
பெற்றுக்கொள்ளாமல் உனக்கு உண்டாயிருக்கி
றது யாது? நீயும் பெற்றிருக்கப் பெற்றுக்கொள்
ளாதவன்போல என் பெருமை பாராட்டுகிறாய்?

இப்பொழுதே [25]திருத்தி அடைந்திருக்கிறீர் ௮
கள்; இப்பொழுதே ஐசுவரியமுள்ளவர்களாய் இ
ருக்கிறீர்கள்; எங்களைத்தவிர ஆண்டீர்கள்; நீங்
கள் ஆண்டீர்களானால் நன்மையாயிருக்கும்; அப்
பொழுது உங்களுடனேகூட நாங்களும் ஆளு
வோமே.—அப்படியன்றி எனக்குத் தோன்றுகிற ௯
படி பராபரன் அப்போஸ்தலராகிய எங்களைக்
கடைசியிலே ‖ [26]மரணத்திற்குக் குறிக்கப்பட்
டவர்களைப்போலக் காணப்படப்பண்ணினார்;
உலகத்திற்கும் தூதருக்கும் [27]மனிதருக்கும் வே
டிக்கையானோமே, ¶ [28]நாங்கள் [29]கிறிஸ்துவின்
நிமித்தம் பயித்தியக்காரர்.— நீங்கள் கிறிஸ்துவில் ௰

1 ஏசா. ௨௮. ௰௬. மத். ௰௬. ௰௮. ௨ கொரி. ௰௧. ௪. கலா. ௧. ௭.
2 ௧ கொரி. ௪. ௫.—3 லூக். ௨. ௩௫.
4 ௧ பே. ௧. ௭: ௪. ௰௨.—5 ௧ கொரி. ௪. ௫.—6 யூதா. ௨௩.
7 ௧ கொரி. ௬. ௰௯. ௨ கொரி. ௬. ௰௬. எபே ௨. ௨௧, ௨௨. எபி ௩. ௬. ௧ பே. ௨. ௫.—8 வாக். ௩. ௭. ஏசா. ௫. ௨௧.—9 யோபு. ௫. ௰௩.
10 சங். ௯௪. ௰௧.—11 ௧ கொரி. ௧ ௨௰: ௨. ௧.—12 ௧ கொரி. ௧. ௰௨: ௩. ௪. ௫, ௬. ௪. ௬.—13 ௨ கொரி. ௪. ௫, ௰௫.—14 ௨ ரோ. ௰௪. ௮. ௧ கொரி. ௰௧. ௩. ௨ கொரி. ௰. ௭. கலா. ௩. ௨௯.—15 மத். ௨௪. ௪௫. ௧ கொரி. ௩. ௫: ௯. ௰௭. ௨ கொரி. ௬. ௪. கொலோ. ௧ ௨௫.
16 லூக். ௰௨. ௪௨. தீத். ௧ ௭. ௧ பே. ௪ ௰.—17 யோபு. ௯. ௨. சங். ௱௩௰. ௩: ௱௪௩. ௨. வாக். ௨௧. ௨. ௨ ரோ. ௩. ௨௰: ௪. ௨.—18 மத். ௭. ௧. ௨ ரோ. ௨. ௧, ௰௬: ௰௪. ௪, ௰, ௰௩. வெளி. ௨௰. ௰௨.—19 ௧ கொரி. ௩. ௰௩.—20 ௨ ரோ. ௨. ௨௯. ௨ கொரி ௫. ௰.—21 ௨ ரோ. ௰௨. ௩
22 ௧ கொரி. ௧. ௨௧: ௫. ௨, ௬.
23 ௧ கொரி. ௧. ௰௨: ௩. ௪.—24 யோவா. ௩. ௨௭. யாக். ௧. ௰௭. ௧ பே. ௪. ௰.—25 வெளி. ௩. ௰௭.
26 சங். ௪௪. ௨௨. ௨ ரோ. ௮. ௩௬. ௧ கொரி. ௰௫. ௩௰, ௩௧. ௨ கொரி. ௪. ௰௧: ௬. ௯.—27 எபி. ௰. ௩௩.
28 ௧ கொரி. ௨. ௧.—29 அப். ௰௭. ௰௮: ௨௬. ௨௪. ௧ கொரி. ௧. ௰௮. ௨௰: ௨. ௰௪: ௩. ௰௮ ௨ இரா. ௯. ௰௧.

* கிரேக்கு, வெளியாக்கப்படுகிறதால்.—† அல்லது தீட்டாக்கினால்.—‡ கிரேக்கு, நியாய நாளின் விசாரிப்பினால்.—§ கிரேக்கு, வித்தியாசஞ்செய்கிறவன்.—‖ அல்லது பிந்தின அப்போஸ்தலர்களாகிய எங்களை.—¶ கிரேக்கு, நடனசாலையானோம்.

புத்திசாலிகள்; [1]நாங்கள் பலஈனர்; நீங்கள் பல
வான்கள்; நீங்கள் கனம்பொருந்தியவர்கள்;
௰௧ நாங்கள் கனமற்றவர்கள். — [2]இந்நேரம்வரைக்
கும் பசியும் தாகமும் [3]நிருவாணமும் உள்ளவர்
களாய் இருக்கிறோம்; [4]குட்டுண்டும் நிலையற்றும்
௰௨ இருக்கிறோம்.—[5]எங்கள் கைகளினாலே வேலை
செய்து பிரயாசப்படுகிறோம்; [6]வையப்படுகிற
பொழுது ஆசீர்வதிக்கிறோம்; துன்பப்படுகிற
௰௩ பொழுது சகிக்கிறோம். — தூஷணிக்கப்படுகிற
பொழுது வேண்டிக்கொள்ளுகிறோம்; இன்றை
யவரைக்கும் [7]நாங்கள் உலகத்தின் குப்பைக
ளைப்போலவும், எல்லாரும் துடைக்கிற அழுக்
கைப்போலவும் ஆனோம்.

௰௪ உங்களை வெட்கப்படுத்தும்படிக்கு நான் இ
வைகளை எழுதவில்லை; [8]நீங்கள் எனக்குப் பிரி
யமான பிள்ளைகள் என்று உங்களுக்குப் புத்தி
௰௫ சொல்லுகிறேன்.— கிறிஸ்துவில் உங்களுக்குப்
பதினாயிரம் உபாத்திகள் இருந்தாலும், அநேகம்
தகப்பன்மார் உங்களுக்கு இல்லையே, [9]கிறிஸ்து
இயேசுவில் சுவிசேஷத்தினாலே நானே உங்க
௰௬ ளைப் பெற்றேன்.—ஆகையால் [10]என்னைப் பின்
பற்றுகிறவர்கள் ஆகுங்கள் என்று உங்களுக்குப்
புத்திசொல்லுகிறேன்.

௰௭ இதுநிமித்தமாக [11]நான் எனக்குப் பிரியமும்
கர்த்தருக்குள் உண்மையுமான என்னுடைய
குமாரனாகிய [12]தீமோத்தேயுவை உங்களிடத்தில்
அனுப்பினேன்; [13]அவன் எங்கும் [14]எந்தச் சபை
யிலும் நான் போதிக்கிற வகை இன்னதென்று
[15]கிறிஸ்துவுக்குள்ளான என் வழிகளை உங்க
௰௮ ளுக்கு நினைவு உண்டாக்குவான்.–[16]நான்தானே
உங்களிடத்திற்கு வருகிறதில்லை என்கிறதாகச்
௰௯ சிலர் இறுமாப்படைந்தார்கள்.—[17]ஆகிலும் கர்த்
தருக்குச் சித்தமானால் [18]நான் சீக்கிரமாய் உங்க
ளிடத்திற்கு வந்து, [19]பராபரனுடைய இராச்சி
யம் வசனிப்பினாலே அல்ல பலத்தினாலே உண்
௨௰ டாயிருக்கிறபடியால்,— இறுமாப்படைந்தவர்க
ளுடைய வசனிப்பை அல்ல, பலத்தை அறிந்
௨௧ துகொள்வேன்.–உங்களுக்கு என்னவேண்டும்?
[20]நான் பிரம்புடனே உங்களிடத்தில் வரவேண்
டுமோ? அல்லது அன்போடும் சாந்தமுள்ள ஆவி
யோடும் வரவேண்டுமோ?

## ௫. அதிகாரம்.

௧. அவர்களுக்குள் இருந்த முறைகேடானதைக்குறித்தது, ௨ அவர்கள் சந்தோஷப்படாமல் வெட்கப்படவேண்டுமென்றும், ௭. புளித்தமாவை ஒத்த பழைய குணத்தை நீக்கவேண்டுமென்றும், ௯. துஷ்டதரோகிகளை விட்டு நீங்கவேண்டுமென்றும் சொல்லியது.

[21]அஞ்ஞானிகளுக்குள்ளும் சொல்லப்படாத ௧
வேசித்தனம் உங்களுக்குள்ளே உண்டென்று
பொதுவாகச் சொல்லிக்கொள்ளுகிறார்கள்; என்
னவெனில், [22]ஒருவன் [23]தன் தகப்பனுடைய
மனைவியை வைத்துக்கொள்ளுகிறதே.—மேலும் ௨
இப்படிப்பட்ட கிரியையைச் செய்தவனை உங்
களிலிருந்து நீக்கத்தக்கதாகத் [24]துயரப்படவே
ண்டிய நீங்களும் [25]இறுமாப்புள்ளவர்களாய் இ
ருக்கிறீர்கள்.— ஆதலால் [26]நான் சரீரத்தினாலே ௩
உங்களுக்குத் தூரமாயிருந்தும், ஆவியால் உங்க
ளோடேகூட இருக்கிறவனாய் அப்படிச் செய்
தவனைக்குறித்து இப்பொழுதே கூட இருக்கிற
துபோலத் தீர்ப்புப்பண்ணினேன். * —(என்ன ௪
வென்றால்,) நம்முடைய கர்த்தராகிய இயேசுக்
கிறிஸ்துவின் நாமத்தினாலே நீங்களும் என்னு
டைய ஆவியுங்கூட இருக்கையில்,—அப்படிப் ௫
பட்டவனுடைய ஆவி கர்த்தராகிய இயேசுக்கி
றிஸ்துவின் நாளிலே இரட்சிக்கப்படும்படிக்கு,
[27]நம்முடைய கர்த்தராகிய இயேசுக்கிறிஸ்துவின்
வல்லமையோடே அவனுடைய சரீரத்தில் அ
ழிவுண்டாக, அவனைச் [28]சாத்தானுக்கு [29]ஒப்புக்
கொடுக்கவேண்டும்.

[30]நீங்கள் மேன்மைபாராட்டல் நல்லதல்ல; ௬
[31]கொஞ்சமான புளிப்புமா பிசைந்தமா அனைத்
தையும் உப்பப்பண்ணுகிறதென்று அறியாமலி
ருக்கிறீர்களா?–ஆனபடியினாலே [32]கிறிஸ்து என் ௭
னும் நம்முடைய [33]பஸ்காவும் நமக்காக † அடிக்
கப்பட்டிருக்கிறதால், நீங்கள் புளிப்பில்லாத
வர்களாயிருக்கிறபடியே புதிதாய்ப் பிசைந்த
மாவாகும்படிக்கு, பழைய புளிப்புமாவைப்
புறம்பே கழித்துப்போடுங்கள்.—அப்படிக்குப் ௮
[34]பழைய புளிப்புமாவோடே அல்ல, [35]துர்க்கு
ணம் பொல்லாப்பு என்னும் புளிப்புமாவோடும்
அல்ல, துப்புரவு உண்மை என்னும் புளிப்பில்
லாமையோடே [36]பண்டிகையை ‡ ஆசரிக்கக்க
டவோம்.

[37]வேசிக்கள்ளருடனே கலந்திருக்கக்கூடா ௯
தென்று நிருபத்திலே உங்களுக்கு எழுதினேன்.–
அப்படி நான் [38]இவ்வுலகத்தாராகிய [39]வேசிக் ௰
கள்ளர் அல்லது பொருளாசைக்காரர் அல்லது
கொள்ளைக்காரர் அல்லது விக்கிரக ஆராதனைக்
காரர் இவர்களைக்குறித்துப் பொதுவாய் எழுத

1 ௨ கொரி. ௰௧. ௯.—2 ௨ கொரி. ௪. ௮: ௰௧. ௨௧–௨௭. பிலி. ௪. ௰௨.
3 யோபு. ௨௨. ௬. ரோ ௮. ௩௫.
4 அப். ௨௩. ௨.—5 அப். ௰௮. ௩: ௨௰ ௩௪. ௧ தெச. ௨. ௯. ௨ தெச. ௩. ௮. ௧ தீமோ. ௪. ௰.—6 மத். ௫. ௪௪. லூக். ௬. ௨௮: ௨௩. ௩௪. அப். ௭. ௬௰. ரோ ௰௨. ௰௪, ௨௰. ௧ பே ௨. ௨௩: ௩. ௯.—7 புல. ௩. ௪௫.—8 ௧ தெச. ௨. ௧௧.
9 அப். ௰௮. ௰௧. ரோ. ௰௫. ௨௰. ௧ கொரி ௩. ௬. கலா. ௪. ௧௯. பிலே. ௰. யாக். ௧. ௰௮.—10 ௧ கொரி. ௰௧. ௧. பிலி. ௩. ௧௭. ௧ தெச. ௧. ௬. ௨ தெச. ௩. ௯.—11 ௧ தீமோ. ௧. ௨. ௨ தீமோ. ௧. ௨.—12 அப். ௰௯. ௨௨. ௧ கொரி. ௰௬. ௰. பிலி. ௨. ௰௯. ௧ தெச. ௩ ௨.
13 ௧ கொரி. ௭. ௰௭.—14 ௧ கொரி. ௰௪. ௩௩.—15 ௧ கொரி. ௰௧. ௨.
16 ௧ கொரி. ௫. ௨.—17 அப். ௰௮. ௨௧. ரோ. ௰௫. ௩௨. எபி. ௬. ௩. யாக். ௪ ௰௫.— 18 அப். ௰௯. ௨௧. ௧ கொரி. ௰௬. ௫. ௨ கொரி. ௧. ௰௫, ௨௩.—19 ௧ கொரி. ௨. ௪. ௧ தெச. ௧. ௫.—20 ௨ கொரி. ௰. ௨: ௰௩. ௰.—21 எபே. ௫. ௩.
22 ௩ மோ. ௰௮. ௮. ௫ மோ. ௨௨. ௩௰: ௨௭. ௨௰.—23 ௨ கொரி. ௭. ௰௨.
24 ௨ கொரி. ௭. ௭, ௰.—25 ௧ கொரி. ௪. ௰௮.—26 கொலோ. ௨. ௫
27 மத். ௰௬. ௰௯: ௰௮. ௰௮. யோவா. ௨௰. ௨௩. ௨ கொரி. ௨. ௰: ௰௩. ௩. ௰.
28 அப் ௨௬. ௰௮.—29 யோபு. ௨. ௬. சங். ௩௯. ௯. ௧ தீமோ. ௧. ௨௰. யாக். ௪. ௰௬.—31 ௧ கொரி. ௰௫. ௩௩. கலா. ௫. ௯. ௨ தீமோ. ௨. ௰௭.
32 ஏசா. ௫௩. ௭. யோவா. ௧. ௨௯. ௧ கொரி. ௰௫. ௩. ௧ பே. ௧. ௰௯. வெளி ௫. ௬, ௰௨.—33 யோவா. ௰௯. ௰௪.—34 ௫ மோ. ௰௬. ௩.
35 மத். ௰௬. ௬, ௰௨. மாற். ௮. ௰௫. லூக். ௰௨. ௧.—36 ௨ மோ. ௰௨. ௰௫: ௰௩. ௯.—37 ௨, ௭. ௰௪. ௨ கொரி. ௬. ௰௪ எபே. ௫. ௰௧. ௨ தெச. ௩. ௰௪.—38 ௧ கொரி. ௬. ௰௨.—39 ௧ கொரி. ௰. ௨௭.

* அல்லது நியமித்தேன்.—† அல்லது பலியிடப்பட்டு.—‡ அல்லது திருநாளை.

வில்லை; அப்படியிருந்தால், [1]நீங்கள் உலகத்தை
விட்டுப் புறப்பட்டுப் போகவேண்டியதாயிருக்
௰௧ குமே.—இப்பொழுதும் நான் உங்களுக்கு எழு
துகிறதென்னவென்றால், [2]சகோதரன் என்னப்
பட்ட ஒருவன் வேசிக்கள்ளன், அல்லது பொ
ருளாசைக்காரன், அல்லது விக்கிரக ஆராதனைக்
காரன், அல்லது உதாசினன், அல்லது வெறியன்,
அல்லது கொள்ளைக்காரனானால் அவனோடே
கலந்திருக்கக்கூடாது; [3]அப்படிப்பட்டவனுட
௰௨ னேகூடப் புசிக்கவும் கூடாது.—[4]புறத்தில் இ
ருக்கிறவர்களுக்கும் நியாயத்தீர்ப்புச் சொல்லுகி
றது என்னுடைய காரியமா? [5]உள்ளே இருக்கி
றவர்களுக்கு நீங்களும் நியாயத்தீர்ப்புச் சொல்
௰௩ லுகிறீர்கள் அல்லவோ?—புறத்தில் இருக்கிறவர்
களுக்குப் பராபரனே நியாயத்தீர்ப்புக் கொடுப்
பார்; ஆகையால் [6]அந்தப் பொல்லாதவனை உங்
களிடத்திலிருந்து எடுத்துப்போடுங்கள்.

## ௬. அதிகாரம்.

*க. கொரிந்தியர், க. அவிசுவாசிகள்முன்பாகத் தங்கள் சகோதரரோடே வழக்காடக்கூடாதென்றும், ௯. அநீதிமான்கள் மோட்சம் அடையார்களென்றும், ௰௫ நம்முடைய சரீரங்கள் கிறிஸ்துவின் அவயவங்களும், ௰௯. பரிசுத்த ஆவியின் ஆலயங்களுமாயிருக்கிறதென்றும், அந்த ஆலயங்கள் அசுசிப்படக்கூடாதென்றும் சொல்லியது.*

க உங்களில் ஒருவன் மற்றொருவனுக்கு விரோத
மான காரியமுடையவனாய் இருக்கிறபொழுது
அவன் நியாயம்பெற்றுக்கொள்ளுதற்குப் பரிசுத்
தவான்களிடத்தில் போகாமல், அநீதிக்காரரிடத்
உ திலே போகத் துணிகிறதென்ன? — [7]பரிசுத்த
வான்கள் உலகத்திற்கு நியாயத்தீர்ப்புச் சொல்லு
வார்கள் என்று அறியாமல் இருக்கிறீர்களா?
உலகமும் உங்களால் நியாயந்தீர்க்கப்படுவதால்,
அற்ப வழக்குகளைத் தீர்க்க அபாத்திரராயிருக்கி
௩ றீர்களா?—[8]தூதர்கள் நம்மால் நியாயத்தீர்ப்பைப்
பெறுவார்கள் என்று அறியீர்களா? இச்சீவனுக்கு
ஏற்றவைகளை நீங்கள் தீர்த்துக்கொள்ளக்கூடா
௪ திருக்கிறது எப்படி?—[9]இச்சீவனுக்கு ஏற்ற வழக்
குகள் உங்களுக்கு இருக்கும்பொழுது, நீங்
கள் சபையிலே அற்பமாய் எண்ணப்பட்ட
௫ வர்களை வைக்கிறீர்கள்.—உங்களுக்கு வெட்கம்
உண்டாகும்படி இதைச் சொல்லுகிறேன்; இப்
படிச் சகோதரனுக்கும் சகோதரனுக்கும் உண்
டான வழக்கைத் தீர்க்கத்தக்க விவேகி ஒருவனா
௬ கிலும் உங்களுக்குள்ளே இல்லையோ?—சகோதர
னோடே சகோதரன் வழக்காடுகிறான்; அப்படி
அவிசுவாசிகளுக்கு முன்பாகவே செய்கிறான்.—
௭ நீங்கள் ஒருவரோடொருவர் வழக்காடுகிறதே
எவ்விதத்திலும் தப்பிதமாயிருக்கின்றது; அப்படி
யன்றி [10]நீங்கள் அநியாயத்தையும் சேதத்தையும்
அநுபவியாதிருக்கிறது என்ன? — அப்படிச் ௮
செய்யாமல் [11]நீங்களே சகோதரருக்கே அநியா
யம் செய்து, சேதம் உண்டாக்குகிறீர்கள்
அநியாயக்காரர் பராபரனுடைய இராச்சியத் ௯
தைச் சுதந்தரிப்பதில்லை என்று அறியாமல் இ
ருக்கிறீர்களா? வஞ்சிக்கப்படாதிருங்கள்; [12]வே
சிக்கள்ளரும் விக்கிரக ஆராதனைக்காரரும் விப
சாரக்காரரும் சுயபுணர்ச்சிக்காரரும் ஆண்புண
ர்ச்சிக்காரரும்,—திருடரும் பொருளாசைக்கார ௰
ரும் வெறியரும் உதாசினரும் கொள்ளைக்காரரும்
பராபரனுடைய இராச்சியத்தைச் சுதந்தரிப்ப
தில்லை.—(முன்னே) [13]நீங்களும் சிலர் இப்படிப் ௰௧
பட்டவர்களாய் நடந்தீர்கள்; [14]இப்பொழுது
கர்த்தராகிய இயேசுக்கிறிஸ்துவின் நாமத்தினா
லும் நம்முடைய பராபரனுடைய ஆவியினாலும்
கழுவப்பட்டும், பரிசுத்தமாக்கப்பட்டும், நீதி
மான்களாக்கப்பட்டும் இருக்கிறீர்கள்.

[15]நான் சகலத்தையும் அநுபவிக்கலாம்; ஆகி ௰௨
லும் எல்லாம் * தகுதியாய் இருக்கமாட்டாது;
நான் சகலத்தையும் அநுபவிக்கலாம்; ஆகிலும்
நான் ஒன்றினாலும் ஆளப்படமாட்டேன். —
[16]போசனபதார்த்தங்கள் வயிற்றுக்கும் வயிறு ௰௩
போசனபதார்த்தங்களுக்கும் ஏற்கும்; பராபரன்
இதையும் அவைகளையும் அழியப்பண்ணுவார்;
சரீரம் வேசித்தனத்திற்கு அல்ல, [17]கர்த்தருக்கே
ஏற்றது; [18]கர்த்தரும் சரீரத்திற்கு ஏற்றவர் —ஆத ௰௪
லால் [19]கர்த்தரைப் பராபரன் எழுப்பினதுபோல,
[20]தம்முடைய வல்லமையினாலே நம்மையும்
எழுப்புவார்.—[21]உங்கள் சரீரங்கள் கிறிஸ்துவின் ௰௫
அவயவங்களாயிருக்கின்றன என்று அறியாமலி
ருக்கிறீர்களா? அப்படியிருக்க, கிறிஸ்துவினு
டைய அவயவங்களை நான் எடுத்துக்கொண்டு
வேசியின் அவயவங்கள் ஆக்கலாமா? அப்படி
வாராதிருப்பதாக.—அல்லது [22]இருவரும் ஒரே ௰௬
சரீரமாயிருப்பார்கள் என்று சொல்லியிருக்கி
றபடி, வேசியோடு ஒட்டிக்கொள்ளுகிறவன்
அவளுடனே ஒரே சரீரமாயிருக்கிறான் என்
றும், — [23]கர்த்தரோடு ஒட்டிக்கொள்ளுகிறவன் ௰௭
(அவருடனே) ஒரே ஆவியாயிருக்கிறான் என்
றும் அறியாமலிருக்கிறீர்களா? — [24]வேசித்தனத் ௰௮
திற்கு விலகி ஓடுங்கள்; மனிதன் செய்யும் எந்
தப் பாவமும் சரீரத்திற்குப் புறம்பே இருக்கின்
றன; வேசித்தனம்செய்கிறவன் [25]தன் சுயசரீ
ரத்திற்கு விரோதமாகப் பாவம்செய்கிறான். —

1 யோவா.௰௭.௰௫. க யோ.௫.௰௯. ௭.௨௨. மத்.௰௬.௨௮. லூக்.௨௨.
2 மத்.௰௮.௰௭. ௨ரோ.௰௬.௰௭. ௩௰. வெளி.௨.௨௬: ௩.௨௧: ௨௰.
௨ தெச.௩.௬,௰௪. ௨ யோ.௰. ௪.—8 ௨ பே.௨.௪. யூதா.௬.
3 கலா.௨.௰௨.—4 மாற்.௪.௰௧. 9 க கொரி.௫.௰௨.—10 லூக்.௨௰.
கொலோ.௪.௫. க தெச.௪.௰௨. ௨௨. மத்.௫.௩௯, ௪௰. லூக்.௬.
க தீமோ.௩.௭.—5 க கொரி.௬. ௨௯. ௨ரோ ௰௨.௰௭,௰௯. க தெச.
௧,௨,௩,௪.—6 ௫ மோ.௰௩.௫: ௫.௰௫.—11 க தெச.௪.௬.
௰௭.௭: ௨௧.௨௧: ௨௨.௨௧, 12 க கொரி.௰௫.௯௰. கலா.௫.௨௧.
௨௨,௨௪.-7 சங்.௪௯.௰௪. தானி. எபே.௫.௫. க தீமோ.௧.௯. எபி.
௰௨.௰௪: ௰௩.௪. வெளி.௨௨.௰௫. அ: அ.௰௩. ௨ கொரி.௪.௰௪.
13 க கொரி.௰௨.௨. எபே.௨.௨: 20 எபே.௧.௰௯.௨௰.-21 ௨ரோ.௰௨.
௪.௨௨: ௫.௮. கொலோ.௩.௭. ௫. க கொரி.௰௨ ௨௭. எபே.௪.
தீத்.௩.௩.—14 க கொரி.௧.௩௰. ௰௨ ௰௫,௰௬:௫.௩௰.—22 க மோ.
எபி.௰ ௨௨.—15 க கொரி.௰.௨௩. ௨.௨௪. மத்.௰௯.௫. எபே.௫.௩௧.
16 மத்.௰௫.௰௭. ௨ரோ.௰௪.௰௭. 23 யோவா.௧௭.௨௧,௨௨,௨௩. எபே
கொலோ.௨.௨௨,௨௩.—17 ௰௫, ௪.௪:௫.௩௰.—24 ௨ரோ ௬.௰௨.
௰௬.௨௰. வச. க தெச.௪.௩,௭. ௰௩. எபி.௰௩.௪.—25 ௨ரோ.௧
18 எபே.௫.௨௩.—19 ௨ரோ.௬.௫, ௨௪. க தெச.௪.௪.

* அல்லது பிரயோசனமாய்.

௰௯ [1]அல்லது உங்கள் சரீரமானது பராபரனாலே நீங்
கள் பெற்றும், உங்களில் தங்கியும் இருக்கிற பரி
சுத்த ஆவியினுடைய ஆலயமாயிருக்கின்றது
௨௰ என்று அறியாமலிருக்கிறீர்களா?—அல்லாமலும்
[2]மிகுந்த கிரயத்தினாலே நீங்கள் கொள்ளப்பட்ட
படியினாலே,[3]நீங்கள் உங்களுடையவர்கள் அல்
லவே, ஆகையால் பராபரனுக்கு உடையவர்க
ளாகிய உங்கள் சரீரத்தினாலும் உங்கள் ஆவியி
னாலும் பராபரனுடைய மகிமையைப் பிரசித்தம்
பண்ணுவீர்களாக.

## ௭. அதிகாரம்.

௨. விவாகம், ௪. வேசித்தனத்துக்கு முறிவென்றும், ௰. விவாகக்கட்டு எளிதாய் முறிக்கப்படக்கூடாதென்றும், ௰௮. ௨௰. அவனவனுக்குரிய தொழிலில் நிலைத்திருக்கவேண்டுமென்றும், ௨௫. கன்னிகழியாமலிருக்கவும் முகாந்தரம் இன்னதென்றும், ௩௬. விவாகஞ்செய்யவும் செய்யாமலிருக்கவும் முகாந்தரங்கள் இன்னவையென்றும் சொல்லியது.

௧ நீங்கள் எனக்கு எழுதின காரியங்களைக்குறித்து
நான் எழுதுகிறது என்னவென்றால், [4]மனிதன்
ஸ்திரியைத் தொடாமலிருந்தால் நலமாயிருக்
௨ கும்.—ஆகிலும் வேசித்தனங்கள் இராதபடிக்கு,
அவனவன் தன் மனைவியையும் அவளவள் தன்
௩ புருஷனையும் கொள்வார்களாக.—[5]புருஷனும்
தன் மனைவிக்குச் செய்யவேண்டிய கடமை
யைச் செய்யக்கடவன்; மனைவியும் தன் புருஷ
௪ னுக்கு அப்படியே செய்யக்கடவள் –மனைவியா
னவள் தன் சுய சரீரத்துக்கு அதிகாரியாயிராமல்,
புருஷனே அதற்கு அதிகாரியாயிருக்கிறான்; அப்
படியே புருஷனும் தன் சுயசரீரத்திற்கு அதிகா
ரியாயிராமல், மனைவியே அதிகாரியாயிருக்கி
௫ றாள் —[6]ஒருவருக்கொருவர் விலகாதிருங்கள்;
உபவாசத்திற்கும் செபம்பண்ணுதற்கும் சாவகா
சம் உண்டாயிருக்கும்படிக்கு, இருவரும் சிலகா
லத்திற்காக விலகவேண்டும் என்று சம்மதித்தால்
அப்படிச் செய்யலாம்; பின்பு உங்களுக்கு விர
தத்துவம் இல்லாமையால் [7]சாத்தான் உங்களை
எழுப்பாதபடிக்கு, மறுபடியும் கூடியிருங்கள்.—
௬ [8]இதை நான் கட்டளையாக அல்ல, உத்தாரமாகச்
௭ சொல்லுகிறேன்.–[9]எல்லா மனிதரும் [10]என்னைப்
போல இருக்க விரும்புகிறேன்; [11]ஆகிலும் பரா
பரனாலே அவனவனுக்குச் சொந்தமான வரம்
உண்டு; ஒருவனுக்கு ஒருவிதமாயும் மற்றொருவ
௮ னுக்கு ஒருவிதமாயும் இருக்கிறது.—எப்படியும்
விவாகம் இல்லாதவர்களையும் கைம்பெண்களை
யுங்குறித்து நான் சொல்லுகிறது என்னவென்
றால், [12]அவர்கள் என்னைப்போல இருந்துவிட்
௯ டால் நலமாயிருக்கும். — ஆகிலும் அவர்கள்
[13]விரத்தராய் இருக்கக்கூடாதிருந்தால், விவாகம்
பண்ணக்கடவர்கள்; வேகிறதைவிட விவாகம்
௰ பண்ணுகிறது தகுதியாயிருக்குமே.—விவாகம்
பண்ணினவர்களுக்கு [14]நானல்ல, கர்த்தர் கட்ட
ளையிடுகிறது என்னவெனில், [15]மனைவியானவள்
தன் புருஷனைவிட்டுப் பிரியாதிருப்பாளாக.—
பிரிந்துபோனால் அவள் விவாகம் இல்லாதிருக் ௰௧
கக்கடவள்; அல்லது புருஷனுடனே ஒப்புரவா
கக்கடவள்; புருஷனும் தன் மனைவியைவிட்
டுப் போகாதிருப்பானாக.

மற்றவர்களுக்குக் [16]கர்த்தர் அல்ல நான் சொல் ௰௨
லுகிறதாவது: சகோதரன் ஒருவன் அவிசுவாசி
யான மனைவியை உடையவனாயிருந்து தன்னு
டனே அவள் வாசமாயிருக்கச் சம்மதித்தால்,
அவளை விட்டுவிடாதிருக்கக்கடவன்.—மனைவி ௰௩
ஒருத்தியும் அவிசுவாசியான புருஷனை உடைய
வளாயிருந்து தன்னுடனே அவன் வாசமாயி
ருக்கச் சம்மதித்தால், அவனை விட்டுவிடாதிருக்
கக்கடவள். — என்னத்தினாலெனில் அவிசுவா ௰௪
சியான புருஷன் தன் மனைவியால் பரிசுத்தமாக்
கப்பட்டான்; அவிசுவாசியான மனைவியும் புரு
ஷனால் பரிசுத்தமாக்கப்பட்டாள்; இல்லாவிட்
டால் [17]உங்கள் பிள்ளைகள் அசுத்தமாயிருக்கு
மே; இப்பொழுது அவைகள் பரிசுத்தமாயிருக்
கின்றனவே.—ஆகிலும் அவிசுவாசிகளானவர் ௰௫
கள் பிரிந்துபோனால் பிரிந்துபோகட்டும்; சகோ
தரனாவது சகோதரியாவது அப்படிப்பட்டவர்
களால் அடிமையாக்கப்பட்டவர்கள் அல்ல,
[18]சமாதானமாய்* இருக்கும்படிக்கே பராபரன்
நம்மை அழைத்தார். — மனைவியே, [19]நீ உன் ௰௬
புருஷனைச் சீர்திருத்தக்கூடாதென்று எப்படி
அறிந்திருக்கிறாய்? அல்லது புருஷனே, நீ உன்
மனைவியைச் சீர்திருத்தக்கூடாதென்று எப்படி†
அறிந்திருக்கிறாய்? — பராபரன் அவனவனுக் ௰௭
குப் பகிர்ந்துகொடுத்தது எப்படியோ, கர்த்தர்
அவனவனை அழைத்தது எப்படியோ, அப்படி
யே அவனவனும் நடக்கக்கடவன்; [20]எல்லாச்
சபைகளிலேயும் இப்படியே திட்டம்பண்ணு
கிறேன்.

ஒருவன் விருத்தசேதனத்தைப் பெற்றவனாய் ௰௮
அழைக்கப்பட்டிருந்தால், விருத்தசேதனம் இல்
லாமையைத் தேடாமலிருப்பானாக; ஒருவன்
விருத்தசேதனம் இல்லாதவனாய் அழைக்கப்பட்
டிருந்தால், [21]விருத்தசேதனத்தைப் பெறாமலி
ருப்பானாக. — [22]விருத்தசேதனத்தினால் ஒன்று ௰௯
மில்லை; விருத்தசேதனம் இல்லாமையாலும் ஒன்
றுமில்லை; [23]பராபரனுடைய கற்பனைகளைக்
கைக்கொள்ளுகிறதே பிரயோசனமாயிருக்கும்.–
அவனவனும் தான் அழைக்கப்பட்டபொழுது ௨௰
இருந்த நிலைமையிலே நிலைநிற்கக்கடவன். —
அடிமையாகிய நிலைமையிலே அழைக்கப்பட் ௨௧

1 ௧ கொரி. ௩. ௧௬. ௨ கொரி. ௬. ௧௬. 2 அப். ௨௰. ௨௮. ௧ கொரி. ௭. ௨௩. கலா. ௩. ௧௩. எபி. ௯. ௧௨. ௧ பே. ௧. ௧௮, ௧௯. ௨ பே. ௨. ௧. வெளி. ௫. ௯.—3 ௨ ரோ. ௰௪. ௭, ௮. 4 ௮. ௨௬. ௩௪.—5 ௨ யோ. ௨௩. ௫. 6 யோவே. ௨. ௧௬. சகரி. ௭. ௩. ௨ மோ. ௰௯. ௧௫. ௧ சாமு. ௨௧. ௪, ௫.—7 ௧ தெச. ௩. ௫. 8 ௰௨, ௨௫. வச. ௨ கொரி. ௮. ௮: ௰௧. ௰௭.—9 அப். ௨௬. ௨௯. 10 ௧ கொரி. ௯. ௫.–11 மத். ௰௯. ௰௨. ௧ கொரி. ௰௨. ௰௧.

12 ௧. ௨௬. வச.—13 ௧ தீமோ. ௫. ௰௪. 14 ௰௨. ௨௫, ௪௰. வச.—15 மல்கி. ௨. ௰௪, ௧௬. மத். ௫. ௩௨: ௰௯. ௩, ௯. மாற். ௰௧. ௰௨. லூக். ௰௬. ௰௮. 16 ௬. வச.—17 மல்கி. ௨. ௰௫. 18 ௨ ரோ. ௰௨. ௰௮: ௰௪. ௰௯. ௧ கொரி. ௰௪. ௩௩. எபி. ௰௨. ௰௪.—19 ௧ பே. ௩. ௧.—20 ௧ கொரி. ௪. ௰௭. ௨ கொரி. ௰௧. ௨௮.—21 அப். ௰௫. ௧, ௫, ௰௯, ௨௪, ௨௮. கலா. ௫. ௨.—22 கலா. ௫. ௬: ௬. ௰௫.—23 யோவா. ௰௫. ௰௪. ௧ யோ. ௨. ௩: ௩. ௨௪.

* கிரேக்கு, சமாதானத்தில்.—† கிரேக்கு, என்ன என்ன.

டாயானால், சுயாதீனமாயிருக்கும்படி கவலைப்
படாதிருப்பாயாக; சுயாதீனமாக்கப்படக்கூடு
௨௨ மேயானால், அப்படி அநுசரிக்கலாம். — கர்த்
தரால் அழைக்கப்பட்ட அடிமையானவன் [1]கர்த்
தருக்குச் சுயாதீனனாய்* இருக்கிறான்; அது
போல அழைக்கப்பட்ட சுயாதீனன் [2]கிறிஸ்
௨௩ துவுக்கு அடிமையாயிருக்கிறான்.—[3]மிகுந்த கிர
யத்தினாலே கொள்ளப்பட்டீர்கள்; மனிதருக்கு
௨௪ அடிமைகளாகாமல் இருப்பீர்களாக.—சகோதர
ரே [4]அவனவன் அழைக்கப்பட்டபொழுது இ
ருந்த நிலைமையிலே தானே பராபரனுக்குமுன்
பாக நிலைநிற்கக்கடவன்.
௨௫ அன்றியும் விவாகம் இல்லாதவர்களுக்காகக்
[5]கர்த்தருடைய கட்டளை எனக்கு இல்லை; அப்ப
டியிருந்தும் [6]நான் உண்மையாயிருக்கிறதற்குக்
[7]கர்த்தரால் இரக்கம்பெற்று யோசனைசொல்லுகி
௨௬ றேன். — ஆகையால் நான் பிரமாணிக்கிறது
என்னவெனில், இப்பொழுது உண்டாயிருக்
கிற இடுக்கணின்நிமித்தம் † [8]மனிதர் அப்படியே
(விவாகமில்லாமல்) இருந்தால், அவர்களுக்கு
௨௭ நலமாயிருக்கும்.—நீ ஒரு மனைவியோடே கட்
டப்பட்டிருந்தால், அவிழ்க்கப்படும்படி தேடா
திருப்பாயாக; நீ ஒரு பெண்ணில்லாதவனாயிருந்
தால், ஒரு பெண்ணைத் தேடாதிருப்பாயாக.—
௨௮ நீ விவாகம்பண்ணினாலும் பாவமில்லை; ஒரு
கன்னிகாஸ்திரி விவாகம்பண்ணினாலும் பாவ
மில்லை; ஆகிலும் அப்படிப்பட்டவர்கள் (சரீ
ரத்திலே) உபத்திரவப்படுவார்கள்; அதற்கு நீங்
கள் தப்பவேண்டும் என்கிறேன்.
௨௯ சகோதரரே, [9]பின்னும் நான் சொல்லுகிறது
என்னவெனில், இனிவரும்காலம் சுருக்கமானப
டியினாலே, மனைவிகளை உடையவர்கள் மனைவி
கள் இல்லாதார்போலவும், அழுகிறவர்கள் அழா
௩௰ தார்போலவும்,—சந்தோஷப்படுகிறவர்கள் சந்
தோஷப்படாதார்போலவும், பொருளைக் கொள்
ளுகிறவர்கள் பொருளைக் கொள்ளாதார்போல
௩௧ வும், — [10]இவ்வுலகத்தை அநுபவிக்கிறவர்கள்
அதை அநுபவியாதார்போலவும் இருக்கவேண்
டும்; [11]இவ்வுலகத்தின் வேஷம் கடந்துபோகின்
௩௨ றதே. — நீங்கள் கவலையற்றவர்களாய் இருக்க
விரும்புகிறேன்; [12]விவாகமில்லாதவன் கர்த்த
ருக்கு எப்படிப் பிரியமாயிருக்கலாம் என்று கர்த்
தருக்கு உரியவைகளுக்காகக் ‡ கவலைப்படுகி
௩௩ றான்.—விவாகம்பண்ணினவன் தன் மனைவிக்கு
எப்படிப் பிரியமாயிருக்கலாம் என்று உலகத்
திற்கு உரியவைகளுக்காகக் கவலைப்படுகிறான்.-
௩௪ அதுபோல விவாகஸ்திரிக்கும் கன்னிகாஸ்திரிக்
கும் வித்தியாசம் உண்டு, [13]விவாகம் இல்லாதவள்
சரீரத்திலும் ஆத்துமாவிலும் பரிசுத்தமாயிருக்
கும்படிக்கு, கர்த்தருக்கு உரியவைகளுக்காகக்
கவலைப்படுகிறாள்; விவாகம்பண்ணினவள் புரு
ஷனுக்கு எப்படிப் பிரியமாயிருக்கலாம் என்று
உலகத்திற்கு உரியவைகளுக்காகக் கவலைப்படு
கிறாள். — இதை நான் உங்கள்மேல் வலையைப் ௩௫
போடுகிறதற்காகச் சொல்லாமல், கனம்பொருந்
தியதாயிருக்கும் என்றும், தடையில்லாமல் கர்த்
தரைப் பற்றிக்கொள்ளலாம் என்றும் உங்கள்
சுயபிரயோசனத்திற்காகவே சொல்லுகிறேன்.
ஆகிலும் ஒருவன் தன் கன்னிகை, பருவவ ௩௬
யது சென்றுபோனவளாகக் கலியாணம் இல்லா
மலிருந்தால் யோக்கியம் அல்ல என்றும், விவா
கம்பண்ணுவிக்கவேண்டும் என்றும் நினைத்தால்,
தன் மனதின்படி செய்யக்கடவன்; அது பாவ
மல்ல, விவாகம்பண்ணட்டும். — ஆகிலும் தன் ௩௭
கன்னிகையைக் கொடுக்க அவசியத்தைக் காணா
மல், தன் இருதயத்திலே உறுதி உள்ளவனாயும்
தன் சுய சித்தத்தின்படி செய்ய அதிகாரம் உள்ள
வனாயும் இருந்து, அவளை அப்படியே காக்க
வேண்டும் என்று தன் இருதயத்திலே தீர்மானிக்
கிறவனே நன்மைசெய்கிறவன்.—[14]ஆதலால் வி ௩௮
வாகம்பண்ணிக்கொடுக்கிறவனும் நன்மை செய்
கிறான்; கொடாமலிருக்கிறவனும் அதிக நன்மை
செய்கிறான்.
மனைவியானவள் [15]தன் புருஷன் உயிரோடிருக் ௩௯
கும் காலமளவும் கட்டப்பட்டிருக்கிறாள்; அவ
ளுடைய புருஷன் மரித்தபின்பு, அவள் எவனை
யாகிலும் தன் இஷ்டப்படி விவாகம்பண்ண
விடுதலையாயிருக்கிறாள், [16]கர்த்தருக்கு உட்பட்
டவளாகமாத்திரம் அப்படிச் செய்யவேண்டும்.-
அவள் விடுதலையாகவே இருந்துவிட்டால், ௪௰
[17]என்னுடைய யோசனையின்படி அதிக பாக்கிய
வதியாய் இருப்பாள்; [18]என்னிடத்திலும் பராபர
னுடைய ஆவி உண்டென்று எண்ணுகிறேன்.

## அ. அதிகாரம்.

க. விக்கிரகங்களுக்குப் படைக்கப்பட்டவைகளைச் சாப்பிடக்கூடாதென்றும், அ. கூ. நம்முடைய சுயாதீனத்தைத் துர்வசையாய்க் கைப்பிடிச் சகோதரருக்கு விதனத்தை உண்டுபண்ணக்கூடாதென்றும், கே. நம்முடைய அறிவை அன்பினாலே கட்டிவைக்கவேண்டுமென்றும் சொல்லியது.

[19]விக்கிரகங்களுக்குப் படைக்கப்பட்டவைக ௧
ளைக்குறித்து [20]நாம் எல்லாரும் அறிவுள்ளவர்கள்
என்று அறிந்திருக்கிறோம்; [21]அறிவுமாத்திரம் இறு
மாப்பாயிருக்கச் செய்கின்றது; அன்பே எழுப்
புதற்கு ஏதுவாயிருக்கிறது.— ஆகையால் [22]தன் ௨
னை அறிவுள்ளவன் என்று (இறுமாப்பாய்) எண்
ணுகிற ஒருவன் தான் அறியவேண்டிய பிரகார
மாக ஒன்றும் அறிந்தவன் அல்ல. — பராபரனி ௩
டத்தில் அன்பாயிருக்கிறவனே [23]அவரால் அ
றிந்துகொள்ளப்படுகிறான்.—ஆனதால் விக்கிர ௪

1 யோவா. அ. ௩௬. உரோ ௬. ௰அ, 5 ௧. ௰. ௪௰ வச. ௨ கொரி. அ. ௰. ௨௨. பிலே. ௰௬.—2 ௧ கொரி. 6 ௧ கொரி. ௪. ௨. ௧ தீமோ ௧. ௰௨. ௯. ௨௧. கலா. ௫. ௰௩. ௭பே ௧ ௧. 7 ௧ தீமோ. ௧. ௰௩. – 8 ௧, அ. வச. ௧ பே. ௨. ௰௬.—3 ௧ கொரி. ௬. 9 உரோ. ௰௩. ௰௧. ௧ பே ௪ ௭. ௨ பே. ௩. ௰. ௧ பே. ௧. ௰அ, ௰௯. ௧ யோ. ௨. அ, ௯.—10 ௧ கொரி. ௯. ௰அ. ௨௫. ௪௨.—4 ௨௰. வச. 11 ௪௰. ௧௯. ௧ யாக். ௧. ௰: ௪. ௰௪.

௧ பே. ௧. ௨௪: ௪. ௭. ௧ யோ. ௨. ௰௬.-20 உரோ. ௰௪. ௰௪, ௨௨. ௰௭.-12 ௧ தீமோ. ௫. ௫.-13 லூக். 21 உரோ. ௰௪. ௧. ௰. – 22 ௧ கொரி. ௰. ௪௰. ௩.—14 எபி. ௰௩. ௪. ௰௩. அ. ௯, ௰௨. கலா. ௬. ௩. 15 உரோ. ௭. ௨.-16 ௨ கொரி. ௬. ௰௪. ௧ தீமோ ௬. ௪. — 23 ௨ மோ. ௩௩. 17 ௨௫ வச.—18 ௧ தெச. ௪. அ. ௰௨. ௰௭ செகே. ௧. ௭. மத். ௭. ௨௩. 19 அப். ௰௫. ௨௰, ௨௯. ௧ கொரி. ௰. கலா. ௪. ௯. ௨ தீமோ. ௨. ௰௯.

* கிரேக்கு, சுயாதீனமாக்கப்பட்டவனாய்.—† அல்லது அவசியத்தின்.—‡ கிரேக்கு, கர்த்தருடையவைகளுக்காக; ௩௪. வசனம்.

கங்களுக்குப் படைக்கப்பட்டவைகளைப் புசிக்
கிறதைக்குறித்து நாம் அறிந்திருக்கிறது என்ன
வெனில், [1]உலகத்திலே விக்கிரகமானது ஒன்று
மில்லை; [2]அல்லாமலும் ஒருவரே அன்றி வே
௫ றொரு தேவனும் இல்லை. — வானத்திலேயும்
பூமியிலேயும் [3]தேவர்கள் என்னப்பட்டவர்கள்
உண்டு; இப்படி அநேக தேவர்களும் அநேக
௬ கர்த்தர்களும் உண்டாயிருந்தாலும்,—[4]நமக்குப்
பிதாவாகிய ஒரே தேவன் உண்டு; [5]அவரிலி
ருந்து சகலமும் உண்டாயிருக்கின்றன; அவரி
டத்தில் * நாமும் இருக்கிறோம்; [6]இயேசுக்கிறி
ஸ்து என்னும் ஒரே கர்த்தாவும் நமக்குண்டு;
[7]அவராலே சகலமும் உண்டாயிருக்கின்றன;
௭ அவராலே நாமும் இருக்கிறோம்.—அப்படியி
ருந்தும் இந்த அறிவு எல்லாரிடத்திலும் இல்லை;
[8]ஆனதால் சிலர் இன்றைவரைக்கும் விக்கிரகத்
தையும் (ஒரு தேவனென்று) நினைத்து, விக்கிர
கத்துக்குப் படைக்கப்பட்டதைப் புசிக்கிறார்
கள்; [9]அதனாலே பெலஈனமாயிருக்கிற அவர்க
ளுடைய மனது அசுசிப்படுகின்றது.
௮ [10]போசனமானது நம்மைப் பராபரனுக்கு
உகந்தவர்கள் ஆக்கமாட்டாது; என்னத்தினாலெ
னில் புசித்தால் நாம் பெருகுவதும்† இல்லை;
புசியாதிருந்தால் நாம் குறைவதும்‡ இல்லையே.—
௯ ஆகிலும் இதைக்குறித்து உங்களுக்கு உண்டா
யிருக்கிற அதிகாரத்தினாலே§ பெலஈனருக்குத்
[11]தவறுதல் வாராதபடிக்குப் [12]பார்ப்பீர்களாக.—
௰ எப்படியென்றால் அறிவுள்ள உன்னை ஒருவன்
விக்கிரகக் கோவிலிலே போசனபந்தி இருக்கக்
கண்டால் [13]பெலஈனனாயிருக்கிற அவனுடைய
மனது விக்கிரகங்களுக்குப் படைக்கப்பட்ட
வைகளைப் புசிக்கிறதற்கு எழுப்பப்படும்‖ அல்ல
௰௧ வோ?—பெலஈனனாகிய உன் சகோதரனுக்காகக்
கிறிஸ்து மரித்தாரே; [14]அவன் உன்னுடைய அ
௰௨ றிவினாலே கெட்டுப்போகலாமா? — இப்படிச்
[15]சகோதரருக்கு விரோதமாகப் பாவம்செய்து
பெலஈனமான அவர்களுடைய மனதைக் காய
ப்படுத்துகிறதினாலே, நீங்கள் கிறிஸ்துவுக்கே
௰௩ விரோதமாகப் பாவம்செய்கிறீர்கள்.—ஆனபடியி
னாலே [16]போசனம் என் சகோதரனுக்குக் கேடு
வருதற்கு எதுவானால், என் சகோதரனுக்குக்
கேடு வராதபடிக்கு என்றைக்கும் இறைச்சி
யைப் புசிக்கமாட்டேன்.

## ௯. அதிகாரம்.

*௧. பவுல் தனக்குண்டான சுயாதீனம் இன்னதென்றும், ௭. போதகர் சுவி சேஷத்தைக்கொண்டு ஜீவனம் பண்ணவேண்டுமென்றும். ௰௫ அவன் அந்த நியாயத்தை அநுசரிக்காமல். ௰௮. அவர்களுக்குத் தன்னைக்குறித் துச் செலவில்லாமலும். ௨௨. அற்பமானவைகளிலே தான் ஒருத்த னுக்கும் விதனமுண்டாக்காமலும் இருந்தானென்றும், ௨௪. நம்முடைய ஜீவன் பந்தய ஓட்டம்போல இருக்கிறதென்றும் சொல்லியது.*

[17]நான் அப்போஸ்தலன் அல்லவா? நான் சுயா ௧
தீனன் அல்லவா? [18]நான் நம்முடைய கர்த்தரா
கிய இயேசுக்கிறிஸ்துவைத் தரிசிக்க இல்லையா?
[19]கர்த்தராலே நீங்கள் என்னுடைய கிரியைக்குத்
(திருட்டாந்தங்களாய்) இருக்கிறீர்கள் அல்ல
வா?—நான் மற்ற மனிதருக்கு அப்போஸ்தல ௨
னாய் இராவிட்டாலும், உங்களுக்கல்லவோ அப்
போஸ்தலனாயிருக்கிறேன்; கர்த்தராலே நீங்கள்
என் அப்போஸ்தல ஊழியத்தின் [20]முத்திரை
யாய் இருக்கிறீர்களே.—என்னைக்குறித்துத் தீர்ப் ௩
புச்சொல்லுகிறவர்களுக்கு நான் என்ன உத்தர
வுகொடுக்கிறேனெனில்,—(சபையின் செலவி ௪
னாலே) [21]போசனபானம்பண்ண எங்களுக்கு
அதிகாரம் இல்லையோ?—மற்ற அப்போஸ்தல ௫
ரும் [22]கர்த்தருடைய சகோதரரும் [23]கேபாவும்
செய்கிறதுபோல, நாங்களும் மனைவியாகிய ¶
ஒரு கிறிஸ்தவளைக் கூட்டிக்கொண்டு திரிகிற
தற்கு எங்களுக்கு அதிகாரம் இல்லையோ?—
அல்லது கைவேலைசெய்யாதிருக்கிறதற்கு எனக் ௬
கும் பருனபாவுக்கும்மாத்திரம் [24]அதிகாரம் இல்
லையோ?
எக்காலத்திலாகிலும் [25]தன் சொந்தப்பணத் ௭
தைச் செலவழித்து, எவன் தண்டிலே சேவகம்
பண்ணுவான்? [26]எவன் திராட்சத்தோட்டம்
உண்டாக்கி, அதின் கனிகளில் சில புசியாமல்
இருப்பான், [27]அல்லது எவன் ஆடுகளை மேய்த்
து, அதின் பாலிலே கொஞ்சம் சாப்பிடாதிருப்
பான்.—இவைகளை மனிதர் நடக்கையின்படி ௮
மாத்திரம் சொல்லுகிறேனோ? நியாயப்பிரமாண
மும் இப்படிச் சொல்லுகிறதில்லையா?—[28]போ ௯
ரடிக்கிற மாட்டின் வாயைக் கட்டாதிருப்பா
யாக என்று மோசேயின் பிரமாணத்திலே எழுதி
யிருக்கின்றதே, பராபரன் மாடுகளுக்காக (மாத்
திரம்) விசாரிக்கிறாரா?—அது விசேஷமாய் நமக் ௰
காகச் சொல்லியிருக்கிறதில்லையா? [29]உழுகிற
வன் பலனில் நம்பிக்கையோடே உழவும், போ
ரடிக்கிறவன் தான் நம்பின பலனுக்குப் பங்குள்
ளவனாவேன் என்கிற நம்பிக்கையோடே போ
ரடிக்கவும் வேண்டியபடியால், அது நமக்காக
வே எழுதியிருக்கின்றது. — [30]நாங்கள் உங்க ௰௧
ளுக்கு ஞான நன்மைகளை விதைத்திருக்க, உங்
கள் சரீரநன்மைகளை அறுத்தால் அது பெரிய
காரியமாயிருக்குமா?—வேறுபேர்கள் உங்களி ௰௨
டத்தில் இருந்த அதிகாரத்தை அநுசரித்துக்

1 ஏசா. ௪௧. ௨௪ ௧ கொரி. ௰. ௰௯ ௧. ௬ கொலோ. ௧. ௰௬. எபி. ௧. ௨.
2 உபா. ௪. ௩௯: ௬ ௪. ஏசா. ௪௪. 8 ௧ கொரி. ௰. ௨௮, ௨௯.—9 ௨ரோ.
அ. மாற். ௰௨. ௨௯. ௬. வ௪. எபே ௰௪. ௰௪, ௨௧.—10 ௨ரோ. ௰௪ ௰௭.
௪. ௬ ௧ தீமோ. ௨. ௫.—3 யோ 11 ௨ரோ ௰௪ ௰௫, ௨௰.—12 கலா. ௫.
வா. ௩௪, ௩௫.—4 மல்கி ௨ ௰. எபே ௰௩.—13 ௧ கொரி. ௰. ௨௮, ௩௨.
௪. ௬.—5 அப். ௰௭. ௨௮. ௨ரோ. 14 ௨ரோ ௰௪. ௰௫, ௨௰.—15 மத். ௨௫.
௰௧. ௩௬.—6 யோவா. ௰௩. ௰௩. அப். ௪௰. ௪௫.—16 ௨ரோ. ௰௪. ௨௧.
௨ ௩௬. ௧ கொரி. ௰௨. ௩. எபே. ௨ கொரி ௰௧. ௨௯.—17 அப். ௯.
௪. ௫. பிலி. ௨. ௰௧.—7 யோவா. ௰௫: ௰௩, ௨: ௨௩. ௰௭. ௨ கொரி.
௰௨: ௰௨. கலா. ௨. ௭, ௮. ௧ தீமோ. 23 மத். ௮ ௰௪.—24 ௨ தெச ௩. ௮. ௯.
௨ ௭. ௨ தீமோ ௧. ௰௧.—18 அப். 25 ௨ கொரி. ௰. ௪. ௧ தீமோ. ௧. ௰௮:
௯ ௩. ௰௭: ௰௮. ௯: ௨௨. ௰௪, ௰௮: ௩. ௰௨. ௨ தீமோ. ௨. ௩: ௪. ௭.
௨௬. ௰௬. ௧ கொரி. ௰ ௮. 26 உபா. ௨௰. ௬. வாக். ௨௭. ௰௮.
19 ௧ கொரி. ௩ ௬: ௪. ௰௫ ௧ கொரி. ௩. ௬, ௭, ௮.—27 யோவா.
20 ௨ கொரி. ௩. ௨: ௰௨. ௰௨. ௨௧, ௰௫. ௧ பே. ௫. ௨.—28 உபா.
21 ௰௪. வச. ௧ தெச. ௨. ௬. ௨ தெச. ௨. ௫. ௪. ௧ தீமோ. ௫. ௰௮.
௩. ௯.—22 மத் ௰௩. ௫௫. மாற். ௬. 29 ௨ தீமோ. ௨. ௬.—30 ௨ ரோ. ௰௫.
௩. லூக். ௬. ௰௫. கலா. ௧ ௰௯ ௨௭. கலா. ௬. ௬.

* அல்லது அவருக்காக.—† அல்லது மேன்மையாவதும்.—‡ அல்லது தாழ்மையாவதும்.—§ அல்லது சுயாதீனத்தினாலே.
‖ இடேக்கு, உறுதியாகும்.—¶ அல்லது ஸ்திரி.

கொண்டிருக்க, அவர்களிலும் நாங்கள் அதிக
மாய் அப்படிச் செய்யலாம் அல்லவா? [1]அப்ப
டியிருந்தும் கிறிஸ்துவின் சுவிசேஷத்திற்கு யா
தொரு தடையையும் உண்டாக்காதபடிக்கு, [2]நா
ங்கள் இந்த அதிகாரத்தை அநுபவித்துக்கொள்
ளாமல் எல்லாவிதமான பாடும் படுகிறோம்.

௰௩ [3]கோவிலில் ஊழியஞ்செய்கிறவர்கள் கோவி
லுக்கு உரியதில் புசிக்கிறார்கள்* என்றும், பீடத்
தில் ஆராதனைசெய்கிறவர்கள் பீடத்தில் உள்ள
வைகளில் பங்கை அடைகிறார்கள் என்றும்
௰௪ அறியாமலிருக்கிறீர்களா? — அதுபோலக் [4]கர்த்
தரும் தமது [5]சுவிசேஷத்தை அறிவிக்கிறவர்க
ளுக்குச் சுவிசேஷத்தினாலே பிழைப்பு வரவே
ண்டும் என்று கட்டளையிட்டார்.

௰௫ அப்படியிருந்தும் [6]நான் இவைகளில் ஒன்
றையும் அநுசரித்துக்கொள்ளவில்லை; இப்படி
நான் மேன்மைபாராட்டுகிறதை ஒருவன் அவத்
தமாக்குகிறதிலும் [7]சாகிறதே எனக்குப் பிரியமா
யிருக்கும்; ஆதலால் அப்படி இனிமேல் அநுச
ரிக்கவேண்டும் என்று நான் இவைகளை எழுதி
௰௬ னதும் இல்லை.—சுவிசேஷத்தை நான் பிரசங்
கிக்கிறதினாலே நான் மேன்மைபாராட்டக்கூ
டாது; அது [8]எனக்கு உண்டான கடமையாய்
இருக்கின்றதே. மேலும் சுவிசேஷத்தை நான்
பிரசங்கம்பண்ணாமல் இருந்தால், ஐயோ, எனக்
௰௭ கு வேதனைவரும்.—அன்றியும் நான் மனோச்
சாகமாய் அப்படிச் செய்தால் [9]எனக்குப் பலன்
உண்டு; மனோச்சாகம் இல்லாதவனாயிருந்தாலும்
[10]உக்கிராண உத்தியோகம் எனக்கு ஒப்புவிக்கப்
௰௮ பட்டிருக்கிறது. — ஆனதால் எனக்கு என்ன
பலன் உண்டு? [11]நான் சுவிசேஷத்தைப் பிரசங்
கிக்கையில், அதில் [12]எனக்கு உண்டாயிருக்கிற
அதிகாரத்தை அநுசரியாமல், கிறிஸ்துவின் சுவி
சேஷத்தைச் செலவில்லாமலே ஸ்தாபிப்பேன்;
அதுவே எனக்குப் பலன்.

௰௯ ஆகையால் [13]நான் எல்லாரையும் விட்டுச்
சுயாதீனனாயிருந்தும் [14]நான் அதிக சனங்களை
ஆதாயப்படுத்திக்கொள்ளும்படிக்கு [15]என்னைத்
தானே எல்லாருக்கும் ஊழியக்காரன் ஆக்கி
௨௰ னேன். — அந்தப்படி யூதரை ஆதாயப்படுத்திக்
கொள்ளத்தக்கதாக [16]யூதருக்கு யூதனைப்போல
வும், நியாயப்பிரமாணத்திற்குக் கீழானவர்களை
ஆதாயப்படுத்திக்கொள்ளத்தக்கதாக நியாயப்
பிரமாணத்திற்குக் கீழானவனைப்போலவும் ஆ
னேன்.—[17]நியாயப்பிரமாணம் இல்லாதவர்களை ௨௧
ஆதாயப்படுத்திக்கொள்ளத்தக்கதாக [18]அவர்க
ளுக்கு நியாயப்பிரமாணம் இல்லாதவனைப்போ
லவும் ஆனேன்; அப்படியிருந்தும் [19]நான் பரா
பரனுக்குமுன்பாக நியாயப்பிரமாணம் இல்
லாதவனாய் இராமல், விசேஷமாய்க் கிறிஸ்து
வின் நியாயப்பிரமாணத்திற்கு உள்ளானவனா
யிருக்கிறேன்.—மேலும் பெலஈனரை ஆதாயப் ௨௨
படுத்திக்கொள்ளத்தக்கதாக [20]பெலஈனருக்குப்
பெலஈனனைப்போல ஆனேன்; [21]நான் எப்படி
யும் சிலரை இரட்சிக்கும்படிக்கு, [22]எல்லாருக்
கும் எல்லாவிதமும் ஆனேன்.—சுவிசேஷத்தின் ௨௩
பலனுக்கு நான் உடன்பங்காளனாகும்படிக்குச்
சுவிசேஷத்தினிமித்தமே இப்படிச் செய்கி
றேன்.

ஓடுதற்கு ஏற்ற சாலையில் எல்லாரும் ஓடுவார் ௨௪
கள், ஆகிலும் ஒருவன்மாத்திரம் பந்தயப்பொரு
ளைப் பெறுவான் என்று அறியாமலிருக்கிறீர்க
ளா? நீங்கள் (பந்தயப்பொருளைப் பிடிக்கத்தக்க
தாகவே [23]ஓடுங்கள்).—[24]மேலும் போராடுகிற யா ௨௫
வரும் அழிவுள்ள கிரீடத்தைப் பெறும்படிக்கு,
எல்லா இச்சைகளையும் அடக்கிக்கொள்ளுவார்
கள்; [25]நாம் அழிவில்லாத கிரீடத்தைப் பெறும்
படிக்கு அப்படிச் செய்கிறோம். — ஆதலால் ௨௬
[26]நான் நிச்சயமில்லாமல் ஓடேன்; நான் ஆகா
சத்தை அடித்துச் சிலம்பம்பண்ணேன். — ஆத ௨௭
லால் மற்றவர்களுக்குப் பிரசங்கம்பண்ணுகிற
நான்தானே [27]அபாத்திரனாய்ப் போகாதபடிக்கு,
[28]என் சரீரத்தை [29]ஒடுக்கிக் கீழ்ப்படுத்துகிறேன்.

## ௰. அதிகாரம்.

௧. பூர்வர்கள் ஆசரித்துவந்த சடங்குகள், ௧. நாம் அநுபவிக்கிற சடங்குக
ளுக்கு அடையாளங்களென்றும், ௬ அவர்கள் பட்டபாடுகள் நமக்குத்
திருஷ்டாந்தங்கள் என்றும், ௰௪. விக்கிரகாராதனைக்கு விலகவேண்டிய
தென்றும், ௨௧. நாம் கர்த்தருடைய பந்தியைப் பேய்களின் பந்தியாக
க்கூடாதென்றும், ௨௪. அற்பமான காரியங்களிலும் நம்முடைய சகோ
தரருடைய நன்மையை நோக்கவேண்டுமென்றும் சொல்லியது.

இப்படியிருக்கச் சகோதரரே, நீங்கள் எவை ௧
களை நினைக்கவேண்டுமென்றிருக்கிறேன் என்
றால், நம்முடைய பிதாக்கள் எல்லாரும் [30]மேகத்
திற்குக் கீழாயிருந்தார்கள்; எல்லாரும் [31]சமுத்தி
ரத்தின் வழியாய் நடந்துவந்தார்கள்.—எல்லாரும் ௨
மோசேயுக்குள்ளாக மேகத்தினாலும் சமுத்திரத்
தினாலும் ஞானஸ்நானம்பண்ணப்பட்டார்கள்.—
[32]எல்லாரும் ஒரே ஞானபோசன பதார்த்தத்தைப் ௩
புசித்தார்கள். — கிறிஸ்து என்னும் ஞானக்கல் ௪

1 ௨ கொரி.௰௧.௰௨.--2 அப். ௨௰ 8 ௨ரோ.௧௰௪-9 ௧கொரி.௧.௫,௰௪. ௧௧.௰௫.௰௮ வச. ௨ கொரி.௰௧ ௭, 10 ௧கொரி.௪.௧.கலா.௨.௭.பிலி.௧.௰௭. ௬:௰௨, ௰௩ ௧ தெச. ௨. ௬. கொலோ ௧.௨௫ —11 ௧ கொரி
3 ௪ மோ. ௬ ௰௬, ௨௬:௭ ௬. ௫ ௰. ௧௧. ௨ கொரி. ௪. ௫: ௰௧. ௭. ௫ மோ. ௰ ௬,௰:௰௮ அ,௨௰.௫மோ. 12 ௧ கொரி. ௭. ௧௧ —13 ௧ வச. ௰.௬:௰௮.௧.-4 மத் ௰.௰. லூக் ௰.௭. 14 மத். ௰௯. ௰௫. ௧ பே. ௧. ௧.
5 கலா. ௬ ௬. ௧ தீமோ. ௫ ௰௭. 15 கலா.௫.௰௩.—16 அப் ௰௬.௩:௰௮ 6 ௰௨ வச. அப்.௰௮.௩. ௨௰.௩௪. ௰௯: ௨௩ ௨௬,௫.--17 கலா ௩.௨. ௧ கொரி ௪.௰௨. ௧ தெச. ௨ ௯ 18 ௨ரோ.௨.௰௨,௰௪.—19 ௧ கொரி. ௨ தெச. ௩.௯ -7 ௨ கொரி.௰௧௰. ௭. ௨௨.—20 ௨ரோ. ௰௫. ௧.
௨ கொரி. ௰௧ ௨௯. - 21 ௨ரோ. ௰௧. ௫. ௧.—28 ௨ரோ. ௯ ௰௩. ௰௧. ௰௪. ௧ கொரி. ௭ ௰௬ கொலோ. ௧. ௫.—29 ௨ரோ.௧. 22 ௧ கொரி ௰.௩௩.-23 கலா.௨.௨:௫ ௭.பிலி.௨.௰௬: ௩௰௪. ௨ தீமோ. ௪.௭. எபி.௰௨.௧.—24 எபே ௬. ௰௨, ௧ தீமோ.௧ ௰௨. ௨ தீமோ. ௨. ௫: ௪.௭ —25 ௨ தீமோ. ௪ அ. யாக்.௧.௰௨. ௧ பே.௧.௪:௫.௪. வெளி ௨.௰௩.௰௧.--26 ௨ தீமோ. ௨.௫.--27 எரே.௬.௩௰, ௨ கொரி. ௰௯, ௰௬.—30 ௨மோ. ௰௩. ௨௧: ௪௰.௩௪. ௪ மோ ௯.௰௫: ௰௪.௰௪. ௫ மோ. ௧. ௩௩. நெகே. ௯. ௰௨, ௰௯. ௪௰. ௭௮. ௰௪: ௧௫. ௩௯. — 31 ௨ மோ.௰௪.௨௨. ௪ மோ.௩௩.அ. யோசு. ௪. ௨௩. சங். ௭௮. ௰௩ 32 ௨ மோ.௰௬.௰௫,௩௫. நெகே.௯. ௰௫, ௨௰. சங். ௭௮. ௨௪.

* அல்லது சீவிக்கிறார்கள்.

மலை அவர்களோடேகூடச்* சென்றதே; [1]அந்த
ஞானக்கல்மலையின் தண்ணீரை எல்லாரும்
குடித்து, இப்படியே ஞானபானம்பண்ணினார்
௫ கள்.—அப்படியிருந்தும், அவர்களில் அதிகமான
பேர்களிடத்தில் பராபரன் பிரியமாயிருக்கவில்
௬ லை.—[2]வனாந்தரத்திலே அவர்கள் அழிக்கப்பட்
டார்களே; [3]அவர்கள் இச்சித்ததுபோல நாமும்
பொல்லாங்கானவைகளை இச்சியாதபடிக்கு இந்
தச் சங்கதிகள் நமக்குத்† திருட்டாந்தங்களாய்
இருக்கின்றன.
௭ ஆனதால் [4]சனங்கள் புசிக்கவும் குடிக்கவும்
உட்கார்ந்து விளையாட எழுந்திருந்தார்கள்
என்று எழுதியிருக்கிறபடி, அவர்களில் சிலர்
[5]விக்கிரக ஆராதனைக்காரர் ஆனதுபோல, நீங்கள்
௮ அப்படிப்பட்டவர்கள் ஆகாதிருங்கள்.—அவர்
களில் சிலர் [6]வேசித்தனம்பண்ணி, ஒரே நாளில்
இருபத்துமூவாயிரம்பேர் விழுந்துபோனார்கள்;
[7]அதுபோல நாம் வேசிமார்க்கமாய்ப் போகாதி
௯ ருப்போமாக.—[8]அவர்களில் சிலர் கிறிஸ்துவைப்
பரிட்சைபார்த்துப் [9]பாம்புகளால் அழிக்கப்பட்
டார்கள்; அதுபோல நாம் கிறிஸ்துவைப் பரிட்
௰ சைபாராதிருப்போமாக. — அவர்களில் சிலர்
[10]முறுமுறுத்து, [11]சங்காரக்காரனாலே [12]அழிக்
கப்பட்டார்கள்; அதுபோல நீங்கள் முறுமுறு
௰௧ திருப்பீர்களாக.—திருட்டாந்தங்கள் ‡ உண்டா
கத்தக்கதாக [13]இவைகள் எல்லாம் அவர்களுக்குச்
சம்பவித்து, உலகத்தின் கடைசிகாலத்திலுள்ள
நமக்கு [14]எச்சரிப்பு உண்டாகும்படி எழுதப்பட்
௰௨ டிருக்கின்றன. — ஆனபடியினாலே (தன்னை)
[15]நிற்கிறவனென்று எண்ணுகிறவன் விழாதப
டிக்குப் பார்க்கக்கடவன்.
௰௩ மனிதருக்குரிய§ உபத்திரவமே அல்லாமல்
வேறே உபத்திரவம் இதுவரைக்கும் உங்களைப்
பிடிக்கவில்லை; [16]பராபரன் உண்மையுள்ளவ
ராய் இருக்கிறார்; [17]ஆதலால் இனிமேலும் நீங்கள்
சகிக்கிறதற்கு மேலான உபத்திரவத்தை அவர்
உங்களுக்கு வரப்பண்ணாமல் [18]நீங்கள் தாங்கத்
தக்கதாக உபத்திரவத்தை அல்லாமல் போக்கை
யும் உண்டாக்குவார்.
௰௪ ஆகையால் எனக்குப் பிரியமானவர்களே,
[19]விக்கிரக ஆராதனைக்கு விலகி ஓடுவீர்களாக.—
௰௫ [20]உங்களைப் புத்திமான்களென்று எண்ணிப் பே
சுகிறேன்; ஆனதால் நான் சொல்லுகிறதை நீங்
௰௬ களே நிதானித்துப் பாருங்கள்.—நாம் ஆசீர்வதிக்
கிற [21]ஆசீர்வாதத்தின் பாத்திரம் கிறிஸ்துவினு
டைய இரத்தத்துடனே ஐக்கியப்படுதற்கு ஏற்ற
தல்லவோ? [22]நாம் பிட்கிற அப்பம் கிறிஸ்துவி
னுடைய சரீரத்துடனே ஐக்கியப்படுதற்கு ஏற்ற
தல்லவா?—ஒரே அப்பம் இருக்க நாம் எல்லா ௰௭
ரும் அந்த ஒரே அப்பத்திற்குப் பங்காளிகளான
படியினாலே [23]அநேகரான நாம் ஒரே சரீரமா
யிருக்கிறோமே.—[24]புறம்பான [25]இஸ்ரவேலைப் ௰௮
பாருங்கள்; [26]பலிகளைப் புசிக்கிறவர்கள் பலி
பீடத்தோடே ஐக்கியமாயிருக்கிறார்கள் அல்ல
வோ? — ஆதினாலே என்ன சொல்லுகிறேன்? ௰௯
[27]விக்கிரகம் ஒரு பொருள் என்று சொல்லுகிறே
னோ? அல்லது விக்கிரகங்களுக்குப் படைக்கப்
பட்டது ஒரு பொருள் என்று சொல்லுகிறே
னோ?—இல்லையே [28]அஞ்ஞானிகள் பலியிடுகிற ௨௰
வைகளைப் பராபரனுக்கு அல்ல, பேய்களுக்குப்
பலியிடுகிறார்கள் என்றே சொல்லுகிறேன்; நீங்
கள் பேய்களோடே ஐக்கியமாயிருக்கவேண்டும்
என்று நான் விரும்புகிறதில்லை.—நீங்கள் [29]கர்த்த ௨௧
ருடைய பாத்திரத்திலும் [30]பேய்களுடைய பாத்
திரத்திலும் பானம்பண்ணக்கூடாதே; நீங்கள்
கர்த்தருடைய போசனபந்திக்கும் பேய்களு
டைய போசனபந்திக்கும் பங்காளிகளாய் இருக்
கக்கூடாதே. — [31]அல்லது, நாம் கர்த்தருக்குக் ௨௨
கோபத்தை மூட்டலாமா? [32]அவரிலும் நாம்
பெலவான்களாயிருக்கிறோமா?
[33]எல்லாப் பதார்த்தங்களையும் நான் அநுபவிக் ௨௩
கலாம்; ஆகிலும் எல்லாம் பிரயோசனமாயிருக்
கிறதில்லை; எல்லாப் பதார்த்தங்களையும் நான்
அநுபவிக்கலாம், ஆகிலும் எல்லாம் எழுப்பு
தற்கு ஏதுவாயிராது.—எவனும் [34]தனக்காகமாத் ௨௪
திரம் பிரயோசனத்தைத் தேடாமல், மற்றவனுக்
காகவும் அப்படித் தேடக்கடவன்.—[35]பூமியும் ௨௫
அதிலுள்ள நிறைவு யாவும் கர்த்தருடையது என்
பதின்படி, — உங்கள் மனது அடைந்த அறிவி ௨௬
னாலே நீங்கள் ஒன்றையும் விசாரியாமல், [36]கடை
யிலே விற்கப்படுகிற எதையும் வாங்கிப் புசியுங்
கள்.—அல்லாமலும் அவிசுவாசிகளில் ஒருவன் ௨௭
உங்களைப் போசனபந்திக்கு அழைக்கும்பொ
ழுது, நீங்கள் போக மனதுண்டானால் உங்கள்
மனது அடைந்த அறிவினாலே ஒன்றையும் விசா
ரியாமல் [37]உங்கள் முன் வைக்கப்பட்டதையும்
புசியுங்கள்.—அப்பொழுது இது விக்கிரகங்களுக் ௨௮
குப் படைக்கப்பட்டது என்று ஒருவன் உங்க

1 ௨ மோ. ௰௭. ௬. ௪ மோ. ௨௰. ௰௧. சங். ௭௮. ௰௫.—2 ௪ மோ. ௰௪. ௨௯, ௩௨, ௩௫: ௨௬. ௬௪, ௬௫. சங். ௱௬. ௨௬. எபி. ௩. ௰௭. யூதா. ௫.
3 ௪ மோ. ௰௧. ௪, ௩௩, ௩௪. சங். ௱௬. ௰௪.
4 ௨ மோ. ௩௨. ௬.—5 ௰௪. ௩௪.
6 ௪ மோ. ௨௫. ௧, ௯. சங். ௱௬. ௨௯.
7 ௧ கொரி. ௬. ௰௮. வெளி. ௨. ௰௪.
8 ௨ மோ. ௰௭. ௨, ௭. ௪ மோ. ௨௧. ௫. ௫ மோ. ௬. ௰௬. சங். ௭௮. ௰௮. ௫௬: ௯௫. ௯: ௱௬. ௰௪.—9 ௪ மோ. ௨௧. ௯.—10 ௨ மோ. ௰௬. ௨: ௰௭. ௨. ௪ மோ. ௰௪. ௨, ௨௯: ௰௬. ௪௧.
11 ௨ மோ. ௰௨. ௨௩. ௨ சாமு. ௨௪. ௰௬. ௧ நாளா. ௨௧. ௰௫.
12 ௪ மோ. ௩௭: ௰௬. ௪௯.
13 ௧ கொரி. ௭. ௨௯. பிலி. ௪. ௫. எபி. ௰. ௨௫, ௩௭. ௧ யோ. ௨. ௰௮.
14 ௨ ரோ. ௰௫. ௪. ௧ கொரி. ௯. ௰.
15 ௨ ரோ. ௰௧. ௨௰.—16 ௧ கொரி. ௧. ௯.—17 சங். ௱௨௫. ௩. ௨ பே. ௨. ௯.—18 எரே. ௨௯. ௰௧.—19 ௭. ௩௪. ௨ கொரி. ௯. ௰௭. ௧ யோ. ௫ ௨௧.—20 ௧ கொரி. ௮. ௧.
21 மத். ௨௬. ௨௬, ௨௭. ௨௮.—22 அப். ௨. ௪௨. ௪௬. ௧ கொரி. ௰௧. ௨௩, ௨௪.—23 ௨ ரோ. ௰௨. ௫. ௧ கொரி. ௰௨. ௨௭.—24 ௨ ரோ. ௪. ௧: ௯. ௩, ௫. ௨ கொரி. ௰௧. ௰௮.—25 ௨ ரோ. ௪. ௰௨. கலா. ௯. ௰௬.—26 ௩ மோ. ௯. ௧: ௭. ௰௫.—27 ௧ கொரி. ௮. ௪.
28 ௧ மோ. ௰௭. ௭. ௫ மோ. ௩௨. ௰௭. சங். ௱௬. ௩௭. வெளி. ௯. ௨௰.
29 ௨ கொரி. ௯. ௰௫, ௰௬.—30 ௫ மோ. ௩௨. ௩௮.—31 ௫ மோ. ௩௨. ௨௧.
32 ஏசே. ௨௨. ௰௪.—33 ௧ கொரி. ௬. ௰௨.—34 ௨ ரோ. ௰௫. ௧, ௨. ௩௩. ௧ கொரி. ௰௩. ௫. பிலி. ௨. ௪, ௨௧.—35 ௨ மோ. ௰௯. ௫. ௫ மோ. ௰. ௰௪. சங். ௨௪. ௧: ௫௰. ௰௨ ௨௮. ௩௪.—36 ௧ தீமோ. ௪. ௪.
37 லூக். ௰. ௭.

*அல்லது அவர்களுக்குப்பின்; ௫ மோ. ௯. ௨௧. சங். ௱௫. ௪௪.—† கிரேக்கு, உவமைகள்.—‡ அல்லது அடையாளங்கள்.
§ அல்லது மட்டான.

ளுக்குச் சொன்னால், [1]அப்படி அறிவித்தவன்
நிமித்தமும் மனதறிவின் நிமித்தமும் புசியாதி
ருங்கள்; [2]பூமியும் அதிலுள்ள நிறைவு யாவும்
௨௬ கர்த்தருடையதே. — உன்னுடைய மனதைக்கு
றித்து அல்ல, மற்றொருவனுடைய மனதைக்கு
றித்தே சொல்லுகிறேன்; ஆகிலும் என்னுடைய
சுயாதீனம் மற்றொருவனுடைய மனதின்நிமித்
தம் குற்றமாய் [3]எண்ணப்படவேண்டுவதென்
௩௰ ன? — மேலும் நான் அதைத் தோத்திரிப்புட
னே* அநுபவித்தால், [4]தோத்திரித்து அநுபவிக்
கிறதற்காக நான் தூஷணிக்கப்படவேண்டுவ
௩௧ தென்ன?—அதினாலேதானே [5]நீங்கள் புசித்தா
லும், பானம்பண்ணினாலும், எதைச்செய்தாலும்
சகலத்தையும் பராபரனுக்குப் புகழ்ச்சி உண்
௩௨ டாகச் செய்யுங்கள்.—[6]நான் எனக்கு (மாத்திரம்)
பிரயோசனத்தைத் தேடாமல் அநேகரும் இரட்
சிக்கப்படும்படிக்கு அவர்களுக்காகவும் பிரயோ
சனத்தைத் தேடிக்கொண்டு, [7]எவ்விதத்திலும்
எல்லாருக்கும் பிரியமாய் நடக்கிறதுபோல,—
௩௩ நீங்களும் யூதருக்கும் கிரேக்கருக்கும்† [8]பராபர
னுடைய சபைக்கும் [9]விதனம் உண்டாகாதப
டிக்கு, எச்சரிக்கையாய் இருப்பீர்களாக.

## ௰௧. அதிகாரம்.

*௧. சபை கூடியிருக்கும்போது, ௪. புருஷர்கள் தங்கள் தலைகளை மூடிக்கொண்டதற்காகவும், ௫. ஸ்திரிகள் தங்கள் தலைகளை மூடிக்கொள்ளாததற்காகவும், ௰௭ அவர்களுடைய கூட்டங்கள் தீமைக்கு ஏதுவாய், ௨௧. கர்த்தருடைய இராப்போசனத்தோடே தங்கள் விருந்துகளைச் சேர்த்து அதை அசசிப்பித்தினதற்காகவும் அவர்களைக் கடிந்துகொண்டு, ௨௩. இராப்போசன ஒழுங்கு இன்னதென்று கூறிப்பது.*

௧ நான் கிறிஸ்துவைப் பின்பற்றுகிறதுபோல.
[10]நீங்கள் என்னைப் பின்பற்றுகிறவர்களாய் இ
௨ ருக்கக்கடவீர்கள்.—சகோதரரே, நீங்கள் எல்லா
விதத்திலும் [11]என்னை நினைத்துக்கொண்டு, நான்
உங்களுக்கு [12]ஒப்புவித்த முறைமைகளின்படி
யே‡ அவைகளைக் கைக்கொண்டிருக்கிறதற்காக
௩ உங்களைப் புகழுகிறேன்.—இப்பொழுது நீங்கள்
என்ன அறியவேண்டும் என்று இருக்கிறேன்
என்றால், [13]கிறிஸ்து புருஷனானவனுக்குத் தலை
யாயிருக்கிறார், [14]புருஷன் மனைவிக்குத் தலையா
யிருக்கிறான்; [15]பராபரன் கிறிஸ்துவுக்குத் தலை
௪ யாயிருக்கிறார்.—எந்தப் புருஷனானாலும் செபம்
பண்ணி அல்லது [16]தீர்க்கதரிசனம் சொல்லு
கிறபொழுது, தன் தலையை மூடிக்கொண்டிருந்
தால் தன் தலையைக் கனஈனப்படுத்துவான்.—
௫ [17]ஸ்திரியானவள் செபம்பண்ணி அல்லது தீர்க்க
தரிசனம் சொல்லுகிறபொழுது, தலையை மூடிக்
கொள்ளாமலிருந்தால், தன் தலையைக் கனஈனப்
படுத்துவாள்; [18]அவள் தலை சிரைக்கப்பட்டது
போல இருக்குமே.—ஆனதால் ஸ்திரியானவள் ௬
மூடிக்கொள்ளாவிட்டால், மயிரைக் கத்தரித்துப்
போடக்கடவள்; [19]அப்படி மயிர் கத்தரிக்கப்
படுகிறது அல்லது சிரைக்கப்படுகிறது ஸ்தி
ரிக்கு வெட்கமானபடியினாலே, மூடிக்கொண்டு
இருக்கக்கடவள். — [20]புருஷனானவன் பராபர ௭
னுடைய சாயலுமாய் மகிமையுமாயிருக்கிறபடி
யால், தன் தலையை மூடிக்கொள்ளவேண்டுவது
இல்லை. — [21]மேலும் புருஷன் ஸ்திரியினாலே ௮
தோன்றினவன் அல்ல, ஸ்திரியே புருஷனால்
தோன்றினவள்.—[22]அல்லாமலும் புருஷன் ஸ்தி ௯
ரிக்காகச் சிருட்டிக்கப்பட்டவன் அல்ல, ஸ்திரி
யே புருஷனுக்காகச் சிருட்டிக்கப்பட்டவள்.—
ஆகையால் ஸ்திரியானவள் புருஷனுடைய மகி ௰
மையாயிருக்கிறதும் அல்லாமல், [23]தூதர்களின்
நிமித்தம் [24]அவள் தன் தலையின்மேல் வஸ்திரத்
தால் மூடிவைக்கவேண்டும்.§—ஸ்திரி புருஷ ௰௧
னால் இருக்கிறதுபோலப் புருஷனும் ஸ்திரியினா
லே இருக்கிறதால்,—[25]கர்த்தருடைய முறைமை ௰௨
யின்படி ஸ்திரி இல்லாமல் புருஷனும் இல்லை;
புருஷன் இல்லாமல் ஸ்திரியும் இல்லை; [26]சகல
மும் பராபரனாலே இருக்கின்றது.

ஸ்திரியானவள் பராபரனைத் தொழுது செபம் ௰௩
பண்ணுகையில், தன் தலையை மூடிக்கொள்ளா
மலிருக்கிறது இலக்கணமாயிருக்குமோ என்று
உங்களுக்குள்ளே நீங்களே எண்ணிக்கொள்
ளுங்கள். — அல்லது புருஷன் மயிரை நீளமாய் ௰௪
வளர்த்தால், அது அவனுக்குக் கனஈனமாயிருக்
கின்றது என்றும்,—ஸ்திரி தனக்கு முக்காடாக‖ ௰௫
மயிர் கொடுக்கப்பட்டிருக்கிறபடியினாலே தன்
மயிரை நீளமாய் வளர்த்தால், அது அவளுக்கு
மகிமையாயிருக்கிறதென்றும் சுபாவமே உங்க
ளுக்குப் போதிக்கிறதில்லையோ?

ஆகிலும் (இதைக்குறித்து) [27]ஒருவன் வாக்கு ௰௬
வாதம் செய்யப் பிரியனாய் இருந்தால், எங்களுக்
கும் [28]பராபரனுடைய சபைகளுக்கும் அப்ப
டிப்பட்ட வழக்கம் இல்லையென்று அறியக்க
டவன்.

பின்னும் நான் அறிவிக்கிறது என்னவெனில், ௰௭
நீங்கள் கூடிவருதல் அதிக நன்மைக்கு அல்ல,
அதிக தீமைக்கே ஏதுவாயிருக்கின்றது; அதைக்
குறித்து நான் உங்களைப் புகழக்கூடாது.—என் ௰௮
னவென்றால் முதலாவது, நீங்கள் சபையின்
வீட்டிலே கூடிவந்திருக்கும்பொழுது, [29]உங்க

1 கொரி. ௮. ௰, ௰௨. — 2 ௫ மோ. ௰. ௧௪. சங். ௨௪. ௧. ௫௦. ௧௨. — 3 ௨ரோ. ௧௪. ௰௬. — 4 ௨ரோ. ௰௪. ௬. ௧ தீமோ. ௪. ௩, ௪. — 5 கொலோ. ௩. ௰௭. ௧ பே. ௪. ௰௧. — 6 ௨௪. ௰௪. — 7 ௨ரோ. ௰௫. ௨. ௧ கொரி. ௯. ௰௯, ௨௨. — 8 அப். ௨௦. ௨௮. ௧ கொரி. ௰௧. ௨௨. ௧ தீமோ. ௩. ௫. — 9 ௨ரோ. ௰௪. ௰௩. ௧ கொரி. ௮. ௰௩. ௨ கொரி. ௯. ௩. — 10 ௧ கொரி. ௪. ௰௬. எபே. ௫. ௧. பிலி. ௩ ௰௭. ௧ தெச. ௧. ௬. ௨ தெச. ௩. ௯. — 11 ௧ கொரி. ௪. ௰௭. — 12 ௧ கொரி. ௭. ௰௭. — 13 எபே. ௫. ௨௩. — 14 ௧ மோ. ௩. ௰௬. ௧ தீமோ. ௨. ௰௧, ௰௨. ௧ பே. ௩. ௧, ௫, ௬. — 15 யோவா. ௰௪. ௨௮. ௧ கொரி. ௩. ௨௩: ௰௫. ௨௭, ௨௮. பிலி. ௨. ௭, ௮, ௯. — 16 ௧ கொரி. ௰௨. ௰. ௨௮: ௰௪. ௩. ௪. ௫. — 17 அப். ௨௧. ௯. — 18 ௫ மோ. ௨௧. ௰௨. — 19 ௪ மோ. ௫. ௰௮. ௫ மோ. ௨௨. ௫. — 20 ௧ மோ. ௧. ௨௬, ௨௭: ௫. ௧: ௯. ௬. — 21 ௧ மோ. ௨. ௨௧, ௨௨. — 22 ௧ மோ. ௨. ௰௮; ௨௧. ௨௨. — 23 பிர. ௫. ௬. — 24 ௧ மோ. ௨௪. ௬௫. — 25 கலா. ௩. ௨௮. — 26 ௨ரோ. ௰௧. ௩௬. — 27 ௧ தீமோ. ௬. ௪. — 28 ௧ கொரி. ௭. ௰௭: ௰௪. ௩௩. — 29 ௧ கொரி. ௧. ௰, ௰௧, ௰௨: ௩. ௩.

* அல்லது தயையினால்.—† அல்லது புறச்சாதியாருக்கும்.—‡ அல்லது கட்டளைகளின்; ௨ தெச. ௨. ௰௫: ௩. ௬.— § அதாவது தன் புருஷனுக்கு அடங்கினவளென்பதற்குக் குறிப்பாக முக்காடிட்டவளாயிருப்பதென்பதாம்.—‖ அல்லது முடியாக.

ளில் பிரிவினைகள் * உண்டென்று கேள்விப்ப
௰௯ டுகிறேன். — [1]பாத்திரவான்கள் வெளியாகும்ப
டிக்கு [2]மார்க்கபேதங்களும்† உங்களில் உண்டா
யிருக்கவேண்டியதால், நான் (கேள்விப்பட்ட
வைகளில்) சில நம்புகிறேன்.
௨௰ ஆனதால் நீங்கள் ஏகமாய்க் கூடிவந்து சாப்பி
டுங்காலத்தில், ஒருவன் பசியாயிருக்கவும் [3]ஒரு
வன் திருத்தி அடையவும்தக்கதாக, முன்னே
அவனவன் தன் சொந்தப் போசனத்தைப் பண்
௨௧ ணுவான்.—அப்படிச் செய்கிறது கர்த்தருடைய
இராப்போசனம்பண்ணுதல் அல்லவே. ‡ —
௨௨ அதென்ன? போசனபானம்பண்ணுதற்கு உங்க
ளுக்கு வீடுகள் இல்லையா? [4]அல்லது பராபரனு
டைய சபையின் வீட்டை அசட்டைபண்ணி,
[5]போசனம் இல்லாதவர்களை § வெட்கப்படுத்
துகிறீர்களா? உங்களைக்குறித்து நான் என்ன
சொல்லலாம்? உங்களைப் புகழலாமா? அதைக்
குறித்து நான் உங்களைப் புகழக்கூடாது.
௨௩ [6]நான் உங்களுக்கு ஒப்புவித்ததைக் கர்த்த
ராலே அடைந்தேன்; என்னவெனில், [7]கர்த்த
ராகிய இயேசு தம்மைக் காட்டிக்கொடுக்கப்
பட்ட அன்று இராத்திரியிலே அப்பத்தை எடுத்
துக்கொண்டு தோத்திரம்பண்ணி, அதைப்பிட்டு,
௨௪ நீங்கள் வாங்கிப் புசியுங்கள்.—இது உங்களுக்
காகப் பிட்கப்படுகிற என்னுடைய சரீரமாயி
ருக்கின்றது; என்னை நினைத்துக்கொள்ளும்ப
௨௫ டிக்கு || இப்படிச் செய்யுங்கள் என்றார்.—அந்
தப்படியே அவர் இராப்போசனம்பண்ணின
பின்பு, பாத்திரத்தையும் எடுத்துக்கொண்டு, இந்
தப் பாத்திரம் என்னுடைய இரத்தத்தினாலே
புதிய உடம்படிக்கையாய் இருக்கின்றது; நீங்
கள் பானம்பண்ணும்பொழுதெல்லாம் என்னை
நினைத்துக்கொள்ளும்படிக்கு இப்படிச் செய்
௨௬ யுங்கள் என்றார்.—[8]ஆகையால் கர்த்தர் வருமள
வும் நீங்கள் இந்த அப்பத்தைப் புசித்து, இந்தப்
பாத்திரத்தில் பானம்பண்ணும்பொழுதெல்லாம்
அவருடைய மரணத்தைக் கூறுகிறீர்கள். ¶
௨௭ இப்படியிருக்க [9]எவனாகிலும் கர்த்தருடைய
அப்பத்தையாவது பாத்திரத்தையாவது அபாத்தி
ரமானவிதமாய்ப் போசனபானம்பண்ணினால்,
அவன் கர்த்தருடைய சரீரத்திற்கும் இரத்தத்திற்
௨௮ கும் குற்றமுள்ளவனாய் இருப்பான். — அந்தப்
படி அபாத்திரமானவிதமாய் அதைப் போசன
பானம்பண்ணுகிறவன், கர்த்தருடைய சரீரத்
தை விசேஷித்துக்கொள்ளாமல், தனக்கு ஆக்கி
னை வரும்படி ** போசனபானம்பண்ணுகிறபடி
யினாலே,—எவனாகிலும் [10]தன்னைத்தான் சோ ௨௯
தித்து அறிந்து, பின்பு இந்த அப்பத்தைப் புசி
த்து, இந்தப் பாத்திரத்திலே பானம்பண்ணக்க
டவன். — அந்தக் குற்றத்தினாலேதானே உங்க ௩௰
ளில் அநேகர் பலஈனருமாய் வியாதியுள்ளவர்க
ளுமாய் இருக்கிறார்கள்; வேறு அநேகரும் இறந்
துபோயிருக்கிறார்கள்.—[11]நம்மைநாமே வகைய ௩௧
றுத்துப் பார்த்தால், நாம் அப்படித் தண்டிக்கப்
படுவதில்லை. — நாம் தண்டிக்கப்பட்டிருக்க, ௩௨
[12]உலகத்தோடே நித்திய ஆக்கினைக்கு உள்ளாக்
கப்படாதபடிக்கு, கர்த்தராலே தண்டிக்கப்படு
கிறோம்.—ஆகையால் என் சகோதரரே, நீங்கள் ௩௩
போசனம்பண்ணக் கூடிவருகிறபொழுது, ஒரு
வருக்காக ஒருவர் காத்திருங்கள்.—[13]ஒருவனுக் ௩௪
குப் பசியிருந்தால் நீங்கள் ஆக்கினைக்கு †† ஏது
வாகக் கூடிவாராதபடிக்கு, [14]அவன் வீட்டிலே
சாப்பிடக்கடவன்; மற்றக் காரியங்களை [15]நான்
வரும்பொழுது [16]திட்டம்பண்ணுவேன்.

## ௰௨. அதிகாரம்.

௧. தேவவரங்கள், ௪. பலவிதமாயிருந்தாலும், ௭. எல்லாம் பிரயோசனத்துக்கு ஏதுவானவைகள் என்றும், ௮. அதற்கு அவைகள் பலவிதமாய் அளிக்கப்படுகின்றன என்றும், ௰௨. சபாவசரீரத்தின் அவயவங்கள் எல்லாம், ௰௪. சரீரத்துக்கு அழகும், ௨௨. பிரயோசனமும், ௨௬. உதவியுமுள்ளவைகளாய் இருக்கிறதுபோல, ௨௭. திருச்சபையாகிய கிறிஸ்துவின் சரீரமும் ஒழுங்குபட அதின் அவயவங்களாகிறாமும் இருக்கவேண்டியதென்றும் சொல்லியது.

மேலும் சகோதரரே, [17]ஆவியால் வருகிற வரங்க ௧
ளைக்குறித்து நீங்கள் அறிவீனராயிருக்க எனக்கு
மனதில்லை.—(முன்னே) [18]நீங்கள் அஞ்ஞானி ௨
களாய், மற்றவர்களால் நடத்தப்பட்ட பிரகார
மாகவே [19]ஊமையான விக்கிரகங்களைச் சேர்ந்தி
ருந்தீர்கள் என்று உங்களுக்குத் தெரிந்திருக்கி
ன்றது.—ஆதலால் நான் உங்களுக்கு அறிவிக்கி ௩
றது என்னவெனில், [20]பராபரனுடைய ஆவியி
னாலே பேசுகிற எவனும் இயேசுவைச் சபிக்கப்
பட்டவன் என்று ‡‡ சொல்லமாட்டான்; [21]அன்
றியும் பரிசுத்தஆவியினாலே அல்லாமல் ஒருவ
னும் இயேசுவைக் கர்த்தரென்று சொல்லமாட்
டான்.
[22]வரங்களில் வித்தியாசங்கள் உண்டு.-[23]ஆவி ௪,௫
ஒருவரே; [24]ஊழியங்களிலேயும் §§ வித்தியாசங்
கள் உண்டு; கர்த்தர் ஒருவரே.-உள்ளான கிரியை ௬
களிலேயும் வித்தியாசங்கள் உண்டு; எல்லாவற்
றையும் எல்லாருக்குள்ளும் நடப்பிக்கிற [25]பரா
பரன் ஒருவரே.—[26]ஆவியின் வரங்கள் பிரயோச ௭

1 லூக். ௨. ௩௫. ௧ யோ. ௨. ௰௯. ௫ மோ. ௰௩. ௩.—2 மத். ௰௮. ௭. லூக். ௰௭. ௧. அப். ௨௰. ௩௰. ௧ தீமோ. ௪. ௧. ௨ பே. ௨. ௧, ௨.—3 ௨ பே. ௨. ௰௩. யூதா. ௰௨.
4 ௧ கொரி. ௰. ௩௨.—5 யாக். ௨. ௬.
6 ௧ கொரி. ௰௫. ௩. கலா. ௧. ௧, ௰௨.
7 மத். ௨௬. ௨௬. மாற். ௰௪. ௨௨. லூக். ௨௨. ௰௯.—8 யோவா. ௰௪. ௩; ௨௧. ௨௨. அப். ௧. ௰௧. ௧ கொரி. ௪. ௫; ௰௫. ௨௩. ௧ தெச. ௪. ௰௬. ௨ தெச. ௧. ௰. யூதா. ௰௪. வெளி. ௧. ௭.—9 ௪ மோ. ௯. ௰, ௰௩. யோவா. ௬. ௫௧, ௬௩, ௬௪; ௰௩. ௨௭. ௧ கொரி. ௰. ௨௧.—10 ௨ கொரி. ௰௩. ௫. கலா. ௬. ௪.—11 சங். ௩௨. ௫. ௧ யோ. ௧. ௯.—12 சங். ௯௪. ௰௨, ௰௩. எபி. ௰௨. ௫-௰௧.—13 ௨௧. ௩௪.
14 ௨௨. ௩௪.
15 ௧ கொரி. ௪. ௰௯.—16 ௧ கொரி. ௭. ௰௭. தீத். ௧. ௫.—17 ௧ கொரி. ௰௪. ௧, ௩௭.—18 ௧ கொரி. ௬. ௰௧. எபே. ௨. ௰௧, ௰௨. ௧ தெச. ௧. ௯. தீத். ௩. ௩. ௧ பே. ௪. ௩.
19 சங். ௧௰௫. ௫.—20 மாற். ௯. ௩௯. ௧ யோ. ௪. ௨, ௩.
21 மத். ௰௬. ௰௭. யோவா. ௰௫. ௨௬. ௨ கொரி. ௩. ௫.—22 உரோ. ௰௨. ௪. ஹ. எபி. ௨. ௪. ௧ பே. ௪. ௰.
23 எபே. ௪. ௪.—24 உரோ. ௰௨. ௬, ௭, ௮. எபே. ௪. ௰௧.—25 எபே. ௧. ௨௩.—26 உரோ. ௰௨. ௬, ௭, ௮. ௧ கொரி. ௰௪. ௨௬. எபே. ௪. ௭. ௧ பே. ௪. ௰, ௰௧.

* அல்லது பேதங்கள்.—† அல்லது வகுப்புகளும்.—‡ அல்லது அப்படியிருந்தால் நீங்கள் கர்த்தருடைய இராப்போசனம் பண்ணக்கூடாது.
§ அல்லது தரித்திரரை.—|| அல்லது நினைப்பூட்டுதலாக.—¶ அல்லது கூறுங்கள்.—** அல்லது நியாயத்தீர்ப்பு; உரோ. ௰௩. ௨.
†† அல்லது தீர்ப்புக்கு.—‡‡ அல்லது சாபமென்று.—§§ அல்லது பணிவிடைகளிலேயும்.

னம் உண்டாகும்படியே, அவனவனுக்கு அளி
௮ க்கப்பட்டிருக்கின்றன.—எப்படியெனில் ஒரு
வனுக்கு ஆவியினலே [1]ஞானத்தைப் போதித்
தல் கொடுக்கப்பட்டது; வேருெருவனுக்கு [2]அ
ந்த ஆவியினலேதானே கல்வியோடே போதித்
௯ தல் உண்டாயிற்று.—வேருெருவனுக்கு அந்த
ஆவியினலேதானே [3]விசுவாசம் உண்டாயிற்று;
வேருெருவனுக்கு அந்த ஆவியினலேதானே
௰ [4]குணமாக்கும் வரங்கள் உண்டாயின. — வே
ருெருவனுக்குப் [5]பலத்த அற்புதங்களைச் செய்
கிற பலன்களும், வேருெருவனுக்குத் [6]தீர்க்கத
ரிசனம்சொல்லுதலும், வேருெருவனுக்கு [7]ஆவி
களை வகையறுக்குதலும், வேருெருவனுக்கு
அந்நியபாஷைகளைப் பேசுதலும், வேருெருவ
னுக்கு [8]அந்நியபாஷைகளை வியாக்கியானம்
பண்ணுதலும் அளிக்கப்பட்டிருக்கின்றன. —
௰௧ இந்த வரங்களை எல்லாம் அந்த ஒரே ஆவியான
வர் நடப்பித்து, [9]தமது சித்தத்தின்படி [10]அவ
னவனுக்குத் தகுதியானவைகளைப் பகிர்ந்துகொ
டுக்கிருர்.

௰௨ அது எப்படியெனில், [11]சரீரம் ஒன்றுய் அநே
கம் அவயவங்கள் உள்ளது; ஒரே சரீரத்தின் அவ
யவங்கள் எல்லாம் அநேகமாயிருந்தும், சரீரம்
ஒன்றுயிருக்கின்றது;[12]அதுபோலக் கிறிஸ்துவும்
௰௩ இருக்கிருர்.-[13]நாம் யூதராயிருந்தும்,* கிரேக்கரா
யிருந்தும், அடிமைகளாயிருந்தும், சுயாதீனராய்
இருந்தும் எல்லாரும் [14]ஒரே சரீரமாக ஒரே ஆவி
யினலே ஞானஸ்நானம்பண்ணப்பட்டு எல்லா
ரும் [15]ஒரே ஆவியில் பானம்பண்ணும்படி செய்
யப்பட்டோம்.

௰௪ சரீரமும் ஒரே அவயவம் உள்ளதாயிராமல்,
அநேக அவயவங்கள் உள்ளதாயிருக்கின்றது.-
௰௫ காலானது நான் கையாயிராதபடியினலே நான்
சரீரத்தின் அவயவம் அல்லவென்றுல், அதின
லே அது சரீரத்தின் அவயவம் அல்லாமல்போ
௰௬ குமா? — காதானது நான் கண்ணயிராதபடியி
னலே நான் சரீரத்தின் அவயவம் அல்லவென்
றுல், அதினலே அது சரீரத்தின் அவயவம் அல்
௰௭ லாமல்போகுமா?—சரீரமுழுவதும் கண்ணனல்,
செவி எங்கே இருக்கும்? அது முழுவதும் செவி
யானல், மோத்தல் எங்கே உண்டாயிருக்கும்?—
௰௮ ஆனதால் [16]பராபரன் தமது சித்தத்தின்படி [17]அ
வயவங்களை ஒன்றென்றுகச் சரீரத்திலே வைத்
௰௯ தார். — அவையெல்லாம் ஒரே அவயவமா
௨௰ யிருந்தால், சரீரம் எப்படி இருக்கும்? — ஆன
தால் அவயவங்கள் அநேகமாயிருந்தும், சரீரம்
௨௧ ஒன்றே.—அன்றியும் கண்ணனது கையுடனே
நீ எனக்கு வேண்டுவதில்லை என்றும், அல்லது
தலையானது கால்களுடனே நீங்கள் எனக்கு
வேண்டுவதில்லை என்றும் சொல்லமாட்டாது.—
அதைத்தவிர சரீர அவயவங்களில் பலஈனமாய்க் ௨௨
காணப்படுகிறவைகளே மிகவும் வேண்டியவை
களாய் இருக்கின்றன.—அல்லாமலும் சரீர அவ ௨௩
யவங்களில் கனஈனமாய்க் காணப்படுகிறவைக
ளுக்கே அதிக கனத்தைக் கொடுக்கிறும்;† இவ்
விதமாய் நம்மிடத்தில் அவலட்சணமானவைக
ளுக்கே அதிக இலட்சணம் உண்டாயிருக்கின்
றது. — இலட்சணமானவைகளுக்கு அப்படிச் ௨௪
செய்யவேண்டுவதில்லை; ஆனதால் சரீரத்திலே
பிரிவினை ‡உண்டாயிராமல், அவயவங்கள் ஒன்
றுக்கொன்று ஒரேவிதமான கவலையாயிருக்கும்
படிக்கு,–பராபரன் கனத்தில் குறைவுள்ளதற்கு ௨௫
அதிக கனத்தைக் கொடுத்து, இப்படிச் சரீரத்தை
ஏற்படுத்தினர். — ஆனதினலே ஒரு அவயவம் ௨௬
பாடுபடும்பொழுது, மற்ற அவயவங்கள் யாவும்
கூடப் பாடுபடும்; ஒரு அவயவம் மகிமை அடை
யும்பொழுது, மற்ற அவயவங்கள் யாவும் கூடச்
சந்தோஷப்படும். — [18]நீங்களே கிறிஸ்துவின் ௨௭
சரீரமாயும் [19]தனித்தனியான அவயவங்களாயும்
இருக்கிறீர்கள்.

அவர்களில் சிலரைப் [20]பராபரன் சபையிலே ௨௮
முதலாவது, [21] அப்போஸ்தலராகவும், இரண்டா
வது, [22]தீர்க்கதரிசிகளாகவும், மூன்றுவது,போத
கராகவும், பின்பு [23]வல்லமைகளையும், [24]பின்பு
குணமாக்கும் வரங்களையும், [25]உதவிசெய்தலை
யும், [26]ஆளுகைகளையும், அந்நிய § பாஷைகளை
யும் ஏற்படுத்தினர். — எல்லாரும் அப்போஸ்த ௨௯
லர்களாய் இருக்கிருர்களா? எல்லாரும் தீர்க்கத
ரிசிகளாய் இருக்கிருர்களா? எல்லாரும் போத
கராய் இருக்கிருர்களா? எல்லாரும் வல்லமைக
ளைச் செய்கிறவர்களா?‖ — எல்லாரும் குண ௩௰
மாக்கும் வரங்கள் உள்ளவர்களா? எல்லாரும்
அந்நியபாஷைகளைப் பேசுகிருர்களா? எல்லா
ரும் வியாக்கியானம்பண்ணுகிருர்களா?

அப்படியிருக்க,[27]நீங்கள் அதிக நன்மையான ௩௧
வரங்களைத் தேடிக்கொள்ளுங்கள், அதற்காக
மிகவும் அதிக மேன்மையான வழியையே உங்
களுக்காகக் காண்பிக்கிறேன்.

## ௰௩. அதிகாரம்.

௧. மற்றெல்லாச் சிறந்த வரங்களும், ௨. ௩. அன்பில்லாவிட்டால் பயன் படாதென்று, ௪. அதைப் புகழ்ந்து, ௰௩. அது நம்பிக்கையிலும், விசுவாசத்திலும் சிறந்ததென்று காட்டியது.

நான் மனிதர் பாஷைகளையும் தூதர் பாஷை ௧
களையும் பேசினலும், அன்பு எனக்கு இராவிட்

1 ௧ கொரி. ௨. ௬, ௭.—2 ௧ கொரி. ௧. ௫: ௰௩. ௨. ௨ கொரி. ௮. ௭. 3 மத். ௰௭. ௰௯, ௨௰. ௧ கொரி. ௰௩. ௨. ௨ கொரி. ௪. ௰௩.—4 மாற். ௰௬. ௰௮. யாக். ௫. ௰௪.-5 ௨௮, ௨௯. வச. மாற். ௰௬. ௰௭. கலா. ௩. ௫. 6 உரோ ௰௨. ௬. ௧ கொரி. ௰௩. ௨: ௰௪. ௧. ௩௯.—7 ௧ கொரி. ௰௪. ௨௯. ௧ யோ. ௪. ௧.—8 அப். ௨. ௪: ௰. ௪௬. ௧ கொரி. ௰௪. ௧.-9 யோவா. ௩. ௮. எபி. ௨. ௪.—10 உரோ. ௰௨. ௬. ௧ கொரி. ௭. ௭. ௨ கொரி. ௰. ௰௩. எபே. ௪. ௭.—11 உரோ. ௰௨. ௪, ௫. எபே. ௪. ௪, ௰௬. 12 ௨௭. வச. கலா. ௩. ௰௬.—13 கலா. ௩. ௨௮. எபே. ௨. ௰௩, ௰௪, ௰௬. கொலோ. ௩. ௰௧.-14 உரோ. ௬. ௫. 21 எபே. ௨. ௨௰: ௩. ௫.

15 யோவா. ௬. ௫௬: ௭. ௩௭, ௩௮, ௩௯. 22 அப். ௰௩. ௧. உரோ. ௰௨. ௬. 16 உரோ. ௰௨. ௩. ௧ கொரி. ௩. ௫. ௰௧. 23 ௰. வச.—24 ௯. வச. வச.—17 ௨௮. வச. 25 ௪ மோ. ௰௧. ௰௭. 18 உரோ. ௰௨. ௫. எபே. ௧. ௨௩: ௪. 26 உரோ. ௰௨. ௮. ௧ தீமோ. ௫. ௰௭. ௰௨: ௫. ௨௩, ௩௰. கொலோ. ௧. எபி. ௰௩. ௰௭, ௨௪.—27 ௧ கொரி. ௨௪.—19 எபே. ௫. ௩௰. ௰௪. ௧, ௩௯. 20 எபே. ௪. ௰௧.

* அல்லது புறச்சாதியாராய்.—† அல்லது வைக்கிறேம்.—‡ அல்லது பேதம்.—§ அல்லது பலவித, ௰. வசனம்.
‖ அல்லது எல்லாருக்கும் வல்லமைகளுண்டா.

டால், சத்தமிடுகிற வெண்கலம்போலவும், ஓசை
யிடுகிற கைத்தாளத்தைப்போலவும் இருப்
௨ பேன்.—நான் [1]தீர்க்கதரிசனங்களை அடைந்தா
லும், சகல இரகசியங்களையும் சகல கல்விகளை
யும் அறிந்தாலும், [2]மலைகளைப் பேர்க்கத்தக்கதாக
மிகுந்த விசுவாசம் உள்ளவனாயிருந்தாலும், அ
ன்பு எனக்கு இராவிட்டால் வீணனாய் இருப்
௩ பேன்.—மேலும் [3]எனக்கு உண்டான ஆஸ்திகள்
யாவையும் ஏழைகளுக்குக் கொடுத்தாலும், சுட்
டெரிக்கப்படுவதற்கு என் சரீரத்தைக் கொடுத்
தாலும், அன்பு எனக்கு இராவிட்டால் எனக்
குப் பிரயோசனம் வராது.

௪ [4]அன்பு நீடிய சாந்தமும் தயவும் உள்ளது;
அன்புக்குப் பொறாமை இல்லை; அன்பு தன்னைப்
புகழாது,* இறுமாப்பாயிராது, ஆகாதவைச் செய்
௫ யாது.—[5]தன்பொழிவைப் பாராது, உக்கிரத்தை
அடையாது, பொல்லாங்கானதைச் சிந்தியாது.—
௬ [6]அநியாயத்தில் சந்தோஷப்படாமல், [7]சத்தியத்
தில் † சந்தோஷப்படுகின்றது; அது [8]சகலத்தை
௭ யும் மூடுகின்றது. — சகலத்தையும் விசுவாசிக்
கின்றது; சகலத்தையும் நம்புகின்றது, சகலத்தை
யும் சகிக்கின்றது.

௮ தீர்க்கதரிசனம் சொல்லுதல் ஒழிந்துபோம்;
அந்நியபாஷைகளும் ஓய்ந்துபோம்; கல்வியும்
ஒழிந்துபோம்; அன்பே ஒருக்காலும் ஒழியாது.—
௯ அல்லாமலும் [9]நம்முடைய அறிவு குறைவுள்
ளது; நாம் தீர்க்கதரிசனம் சொல்லுதலும் குறை
௰ வுள்ளது.—நிறைவானது வரும்பொழுது, குறை
௰௧ வானது ஒழிந்துபோம். — நான் குழந்தையா
யிருந்தபொழுது, குழந்தையைப்போலப் பேசி
னேன்; ‡ குழந்தையைப்போலச் சிந்தித்தேன்;
குழந்தையைப்போல யோசித்தேன்; நான் புரு
ஷனானபொழுது குழந்தைக்கு ஏற்றவைகளை
௰௨ ஒழித்துவிட்டேன்.—இப்பொழுது [10]கண்ணாடி
யினாலே நிழலாய்ப் § பார்க்கிறோம், [11]அப்பொ
ழுது முகமுகமாகவே பார்ப்போம்; இப்பொழு
து நான் குறைந்த அறிவுள்ளவன்; அப்பொழுது
நான் அறியப்பட்டபடி அறிந்துகொள்வேன்.

௰௩ ஆனதால் இப்பொழுது விசுவாசம், நம்பிக்
கை, அன்பு இம்மூன்றும் நிற்கின்றன; இவைக
ளில் அன்பே பெரிதாயிருக்கின்றது.

## ௰௪. அதிகாரம்.

௧. தீர்க்கதரிசனப் போதிப்பு, ௨. ௩. ௪. அந்நிய பாஷைகளைப்பார்க்கிலும் நல்லதென்று, ௯. கீதவாத்தியங்களைக்கொண்டு ஒப்பனையிடப்பட்டும், ௰௨. தீர்க்கதரிசனமாவது, அந்நியபாஷையாவது பிரயோசனத்தை, ௨௨. தருகிறதாயிருக்கவேண்டியதென்றும், ௨௬. அவற்றின் பிரயோசனங்கள் இன்னவையென்றும், ௨௭. அவைகள் இப்படி நடத்தப்படவேண்டுமென்றும், ௩௪. ஸ்திரிகள் சபையில் பேசக்கூடாதென்றும் சொல்லியது.

௧ அன்பையே அதிகமாய்த் தொடருங்கள்; [12]ஆ
விக்குரிய வரங்களையும் தேடுங்கள்; (அவைக
ளில்) [13]தீர்க்கதரிசனம் காட்டுகிற வரத்தையே
விரும்புங்கள். — என்னத்தினாலெனில், [14]அந்நி ௨
யபாஷையில் பேசுகிறவன் மனிதருக்கு அல்ல,
பராபரனுக்குத் தெரியப் பேசுகிறான்; ஆவியி
னாலே அவன் இரகசியங்களைப் பேசிக்கொள்
ளுகிறபடியால், ஒருவனும் அவன் பேசுகிறதை
அறியமாட்டானே. ‖ — தீர்க்கதரிசனம் காட்டு ௩
கிறவனே மனிதருக்கு எழுப்புதலும் புத்தியும்
ஆறுதலும் உண்டாகத்தக்கவிதமாகப் பேசுகி
றான்.—அந்நியபாஷையில் பேசுகிறவன் தனக் ௪
குத்தானே எழுப்புதல் உண்டாக்குகிறான்; தீர்க்
கதரிசனம் காட்டுகிறவனே சபைக்கு எழுப்பு
தல் உண்டாக்குகிறான். — நீங்கள் எல்லாரும் ௫
அந்நியபாஷைகளைப் பேச விரும்புகிறேன்;
ஆகிலும் அந்நியபாஷைகளில் பேசுகிறவன் ச
பைக்கு எழுப்புதல் உண்டாகும்படிக்கு அதின்
அருத்தத்தையும் சொல்லாவிட்டால், தீர்க்கதரி
சனம் காட்டுகிறவன் அவனிலும் பெரியவனாயி
ருப்பதினாலே நீங்கள் தீர்க்கதரிசனம் காட்டுகி
றவர்களாகவேண்டும் என்று அதிகமாய் விரும்
புகிறேன்.

அந்தப்படி சகோதரரே, நான் உங்களிடத் ௬
தில் வந்து, உங்களுக்கு இரகசியங்களை [15]வெ
ளிப்படுத்தலுக்காவது, உயர்ந்த அறிவு உண்டா
க்குதற்காவது, தீர்க்கதரிசனத்தை அறிவதற்கா
வ்து, மற்றப் போதகம் உண்டாகுதற்காவது,
எதுவானதைச் சொன்னாலும், அந்நியபாஷைக
ளில் பேசினால் உங்களுக்கு என்னாலே எந்தப்
பிரயோசனம் வரும்?—சத்தமிடுகிற உயிரில்லாத ௭
வாத்தியங்களும் தீங்குழலானாலும் சுரமண்டல
மானாலும் சட்டமான தொனிகளினாலே ¶ வித்
தியாசம் காட்டாவிட்டால், ஊதினது அல்லது
கொட்டினது இன்னதென்று எப்படித் தெரி
யும்? — அந்தப்படி எக்காளமானது சட்டமில் ௮
லாத தொனியை இட்டால், எவன் யுத்தத்திற்கு
எத்தனம்பண்ணுவான்?—அதுபோல நீங்களும் ௯
தெளிவான ** பேச்சை நாவினாலே வசனியா
விட்டால், சொல்லப்பட்டது இன்னது என்று
எப்படித் தெரியும்? ஆகாசத்தில் சொல்லுகிற
வர்களாயிருப்பீர்களே.—உலகத்திலே இத்தனை ௰
விதமான பாஷைகள் உண்டாயிருக்கின்றன.—
அவைகளில் ஒன்றும் கருத்தில்லாததல்ல; அது ௰௧
மெய்தான். ஆகிலும் நான் பாஷையின் கருத்தை
அறியாமலிருந்தால், பேசுகிறவனுக்கு அந்நிய
னாயிருப்பேனே; பேசுகிறவன் எனக்கும் அந்
நியனாயிருப்பான்.

ஆனதால் நீங்களும் ஆவிக்குரிய வரங்களை †† ௰௨
நாடுகிறவர்களாயிருக்க, சபையாருக்கு எழுப்பு
தலுக்கு ஏற்றவைகளையே அதிகமாய்ப் பெற்றுக்

1 ௧ கொரி. ௰௨. ௮, ௯, ௰, ௨௮: ௰௪. ௧. ௩ மத். ௭. ௨௨.—2 மத். ௰௭. ௨௰. மாற். ௰௧. ௨௩. லூக். ௰௭. ௬.—3 மத். ௬. ௧, ௨.—4 வாக். ௰. ௰௨. ௧ பே. ௪. ௮.—5 ௧ கொரி. ௰. ௨௪. பிலி. ௨. ௪.—6 சங். ௰. ௧௮. ௨ ரோ. ௧. ௩௨. 7 ௨ யோ. ௪.—8 ௨ ரோ. ௰௫. ௧. கலா. ௬. ௨. ௨ தீமோ. ௨. ௨௪.

9 ௧ கொரி. ௮. ௨.—10 ௨ கொரி. ௩. ௰௮: ௫. ௭. பிலி. ௩. ௰௨. 11 மத். ௰௮. ௰. ௧ யோ. ௩. ௨. 12 ௧ கொரி. ௰௨. ௩௧. 13 ௪ மோ. ௰௧. ௨௫, ௨௯. 14 அப். ௨. ௪: ௰. ௪௬. 15 ௨௬. ௰௪.

* அல்லது தன்னை எண்ணமலிராது.—† அல்லது சத்தியத்துடனே.—‡ அல்லது எண்ணினேன்.—§ கிரேக்கு, சல்லடைக்கூடாக
‖ கிரேக்கு, கேட்க; அப் ௨௨. ௯.—¶ அல்லது இராகங்களினாலே.—** அல்லது இலகுவான.—†† கிரேக்கு, ஆவிகளை.

௰௩ கொள்ளப் பாருங்கள்.—அந்தப்படி அந்நியபா
ஷையில் பேசுகிறவன் அதின் கருத்தையும்
சொல்லத்தக்கதாக விண்ணப்பம்பண்ணக்கட
௰௪ வன்.—என்னத்தினாலெனில், நான் அந்நியபா
ஷையிலே விண்ணப்பம்பண்ணினால், என்
ஆவி விண்ணப்பம்பண்ணுமே அன்றி, என்னு
டைய கருத்து (மற்றவர்களுக்குப்) பலன் அற்
௰௫ றதாயிருக்கும்.—ஆனதால் நான் என்னசெய்ய
வேண்டும்? ஆவியாலே நான் விண்ணப்பம்பண்
ணவேண்டும்; அதின் கருத்தும் விளங்க விண்
ணப்பம்பண்ணவேண்டும்; [1]நான் ஆவியாலே
பாடவேண்டும்; [2]அதின் கருத்தும் விளங்கப்
௰௬ பாடவேண்டும். — இல்லாவிட்டால் நீ [3]ஆவியி
னாலே தோத்திரம்செய்யும்பொழுது, கல்லாத
கூட்டத்தாரிடத்தில் இருக்கிறவன் உன் பேச்
சை அறியாதபடியால், உன்னுடைய தோத்திரத்
துக்கு ஆமென் என்று எப்படிச் சொல்வான்?—
௰௭ நீ நன்றாய்த் தோத்திரிப்பாய்; மற்றவன் எழுப்
௰௮ பப்படமாட்டானே. — உங்கள் எல்லாரிலும்
நான் அதிகமாய்ப் பாஷைகளைப் பேசிக்கொ
௰௯ ண்டு, என் தேவனைத் தோத்திரிக்கிறேன்.—அப்
படியிருந்தும், நான் சபையிலே அந்நியபாஷை
யில் பதினாயிரம் வார்த்தைகளைப் பேசுகிறதி
லும், மற்றவர்களுக்குப் பிரயோசனமாய் உப
தேசம் சொல்லும்படிக்கு, என் கருத்து விளங்
கத்தக்கதாக ஐந்து வார்த்தைகளைமாத்திரம் பே
சவே அதிகமாய் விரும்புகிறேன்.

௨௰ சகோதரரே, [4]நீங்கள் புத்திக்குக் குழந்தைக
ளாயிராமல், [5]துர்க்குணத்திற்குக் குழந்தைகளைப்
போல இருங்கள்; புத்தியிலே தேறினவர்கள் *
௨௧ ஆவீர்களாக.—மறுபாஷைகளாலும் மறு உதடுக
ளினாலும் இந்தச் சனங்களுடனே பேசுவேன்;
அப்படியும் அவர்கள் எனக்குச் செவிகொடுப்ப
தில்லை என்று கர்த்தர் சொல்லுகிறார் என்று [6]வே
௨௨ தத்தில் [7]எழுதியிருக்கிறதே.—ஆனபடியினாலே
அந்நியபாஷைகள் விசுவாசிகளுக்கு அல்ல, அ
விசுவாசிகளுக்கு அடையாளமாய் இருக்கின்
றன; தீர்க்கதரிசனம் காட்டுதல் அவிசுவாசிக
ளுக்கு அல்ல, விசுவாசிகளுக்கு அடையாளமாய்
இருக்கின்றது.

௨௩ அப்படியிருக்கச் சபையார் எல்லாரும் ஏக
மாய்க் கூடிவந்து எல்லாரும் அந்நியபாஷைக
ளில் பேசிக்கொண்டால் கல்லாதவர்கள் அல்
லது அவிசுவாசிகள் உள்ளே பிரவேசிக்கும்பொ
ழுது [8]நீங்கள் பயித்தியம்பிடித்தவர்கள் என்பார்
௨௪ கள் அல்லவோ? — எல்லாரும் தீர்க்கதரிசனம்
காட்டினால், அவிசுவாசி அல்லது கல்லாதவன்
ஒருவன் உள்ளே பிரவேசிக்கும்பொழுது, அ
வன் எல்லாராலும் கண்டிக்கப்பட்டும் எல்லாரா
லும் நிதானிக்கப்பட்டும் இருப்பான்.—அவனு ௨௫
டைய இருதயத்தின் அந்தரங்கங்களும் வெளி
யரங்கமாம்; இவ்விதமாய் அவன் முகம் கீழாக
விழுந்து, பராபரனைப் பணிந்துகொண்டு, [9]பரா
பரன் மெய்யாய் உங்களுக்குள்ளே இருக்கிறார்
என்று அறிக்கையிடுவான்.

அப்படிக்கன்றி சகோதரரே, நீங்கள் கூடியி ௨௬
ருக்கிறபொழுது உங்களில் ஒருவன் சங்கீதம்
பாடவும், [10]ஒருவன் போதகம்பண்ணவும், ஒரு
வன் அந்நியபாஷை பேசவும், ஒருவன் இரகசி
யத்தை வெளிப்படுத்தவும், ஒருவன் வியாக்கியா
னம்பண்ணவும் வேண்டுவதென்ன? [11]அவை
யெல்லாம் எழுப்புதல் உண்டாகத்தக்கதாக நட
க்கக்கடவது.—அந்தப்படி ஒருவன் அந்நியபா ௨௭
ஷையிலே பேசவேண்டுமானால், அவன் இரண்
டு, அல்லது மிகுதியானால் மூன்று (வாக்கியங்
களை) மாத்திரம் வெவ்வேறாகப் பேசவும், ஒரு
வன் வியாக்கியானம்பண்ணவும் வேண்டும்.—வி ௨௮
யாக்கியானம்பண்ணுகிறவன் இல்லாவிட்டால்,
சபையிலே பேசாமல் தனக்கும் பராபரனுக்கும்
தெரியப் பேசக்கடவன்.—தீர்க்கதரிசனம் காட் ௨௯
டுகிற இரண்டுபேர் அல்லது மூன்றுபேர் பேச
லாம்; [12]மற்றவர்கள் நிதானிக்கக்கடவர்கள்.—
அப்பொழுது உளுக்காந்திருக்கிற மற்றொருவ ௩௰
னுக்கு ஏதாகிலும் வெளிப்படுத்தப்பட்டால்,
[13]முந்தினவன் பேசாமலிருக்கக்கடவன்.—எல் ௩௧
லாரும் கற்கிறதற்கும் எல்லாரும் ஆறுதலை அ
டைகிறதற்கும் நீங்கள் அனைவரும் ஒருவன் ஒரு
வனாகத் தீர்க்கதரிசனம் காட்டலாமே.—தீர்க்கத ௩௨
ரிசனம் காட்டுகிறவர்களுக்கு உண்டான [14]ஆவி
க்கு உரிய வரங்கள் அதைக் காட்டுகிறவர்களு
டைய அதிகாரத்திற்குள்ளே இருக்குமே.—பரா ௩௩
பரனும் கலகத்தில் † பிரியமானவர் அல்ல, சமா
தானத்தில் பிரியமானவராய் இருக்கிறாரே; [15]பரி
சுத்தவான்களுடைய எல்லாச் சபைகளிலேயும்
நடக்கிறதுபோல,

உங்கள் சபைகளிலேயும் [16]பெண்பிள்ளைகள் ௩௪
பேசாமலிருக்கக்கடவர்கள்; [17]பேசும்படிக்கு அ
வர்களுக்கு உத்தரவு இல்லை; அவர்கள் கீழ்ப்ப
டியவேண்டும்.—[18]அப்படி வேதமும் சொல்லு ௩௫
கின்றது; அவர்கள் ஒரு காரியத்தைக் கற்றுக்
கொள்ள விரும்பினால், வீட்டிலே தங்கள் புருஷ
ரிடத்திலே விசாரிக்கக்கடவர்கள்; ஸ்திரிகள்
சபையிலே பேசுகிறது அவலட்சணமாயிருக்கி
றதே.—அல்லது பராபரனுடைய வசனம் உங் ௩௬
களிடத்தில் இருந்தா புறப்பட்டது? அல்லது
அது உங்களிடத்திற்குமாத்திரமா வந்தது?

[19]ஒருவன் தன்னைத் தீர்க்கதரிசி அல்லது ஆவி ௩௭
யைப் பெற்றவன் என்று எண்ணினால், நான்

---

1 எபே. ௫. ௰௯. கொலோ. ௩. ௰௬. ௫. ௰௨, ௰௯. மத். ௰௮. ௩. ௧ பே. ௨. ௨.—6 ரோமா. ௰. ௩௪. 2 சங். ௪௭. ௭.—3 ௧ கொரி. ௰௧. ௨௪. 4 சங். ௩௧௩. ௨. மத். ௰௧. ௨௫: ௰௮. ௩: ௰௯. ௰௪. உரோ. ௰௬. ௰௯. 5 ௧ கொரி. ௩. ௧. எபே. ௪. ௰௪. எபி. 7 ஏசா. ௨௮. ௰௧, ௰௨.—8 அப். ௨. ௰௩.—9 ஏசா. ௪௫. ௰௪. சகரி. ௮. ௨௩.—10 ௧. ௨௬. ௧ கொரி. ௰௨. ௮. ௧, ௰.—11 ௧ கொரி. ௰௨. ௭. ௨ கொரி. ௰௨. ௰௯. எபே. ௪. ௰௨. 12 ௧ கொரி. ௰௨. ௰.—13 ௧ தெச. ௫. ௰௯, ௨௰.—14 ௧ யோ. ௪. ௧ 15 ௧ கொரி. ௰௧. ௰௬.—16 ௧ தீமோ. ௨. ௰௧, ௰௨.—17 ௧ கொரி. ௰௧. ௩. எபே. ௫. ௨௨. கொலோ. ௩. ௰௮. தீத். ௨. ௫. ௧ பே. ௩. ௧. 18 ஆதி. ௩. ௰௬.—19 ௨ கொரி. ௰. ௭. ௧ யோ. ௪. ௬.

* அல்லது பெரியவர்கள்; ௧. கொரி. ௨. ௬.—† அல்லது குழப்பத்தில்.

உங்களுக்கு எழுதுகிறவைகள் கர்த்தருடைய
கற்பனைகளாயிருக்கின்றன என்று அறிக்கையி
௩௮ டக்கடவன். — ஒருவன் அறியாமற்போனால்,
௩௯ அவன் அறியாமல்போகட்டும். — ஆகையால்
சகோதரரே, [1]தீர்க்கதரிசனம் காட்டுகிற வரத்
தைத் தேடிக்கொள்வீர்களாக; அந்நியபாஷைக
ளைப் பேசுகிறதற்கும் தடைபண்ணாதிருங்கள்.—
௪௰ [2]சகலமும் நல்லொழுக்கமாயும் சட்டத்தின்படி
யேயும் நடக்கக்கடவது.

## ௰௫. அதிகாரம்.

௧. கிறிஸ்துவின் உயிர்த்தெழுதலினால், ௰௨. உயிர்த்தெழுதல் இல்லையென்றவர்களுக்கு எதிரிடையாக நம்முடைய உயிர்த்தெழுதலைத் திருஷ்டாந்தப்படுத்தி, ௨௧. அதற்கு மூலமும், ௩௫. வகையும் சொல்லி, ௫௧. உயிரோடிருக்கிறவர்கள் அடையும் ஆறுதலைக்குறித்தும் சொன்னது.

௧ அன்றியும் சகோதரரே, [3]நான் உங்களுக்குச்
சுவிசேஷத்தைப் பிரசங்கித்தேனே; நீங்களும்
அதை ஏற்றுக்கொண்டு, [4]அதிலே நிலைநிற்கிறீர்
௨ களே. — அல்லாமலும் [5]நீங்கள் வீணாய் விசுவா
சியாமல், நான் உங்களுக்குப் பிரசங்கித்த வித
மாய்* அதைக் கைக்கொண்டிருந்தால்† [6]இரட்
சிப்பு உங்களுக்கு அதினாலே கிடைக்குமே; அந்
தச் சுவிசேஷத்தை நான் உங்களுக்கு மறுபடி
௩ யும் அறிவிக்கிறேன்.—[7]நான் அடைந்ததும் உங்
களுக்குப் பிரதானமாக [8]ஒப்புவித்ததும் என்ன
வென்றால், கிறிஸ்துவானவர் [9]வேதவாக்கியங்
களின்படி நம்முடைய பாவங்களுக்காக மரித்
௪ தும், — [10]வேதவாக்கியங்களின்படி அடக்கம்
பண்ணப்பட்டும், மூன்றாம் நாளில் எழுந்தும்
௫ இருக்கிறார்.—[11]கேபாவுக்கும், பின்பு [12]பன்னி
௬ ருவருக்கும் தரிசனையானார்.—அதின் பின்பு அவர்
ஐந்நூறுபேருக்கு அதிகமான சகோதரருக்கும்
ஒருமிக்கத் தரிசனையானார், அவர்களில் சிலர்
மாத்திரம் நித்திரை அடைந்தார்கள்; மற்ற அதி
கமானவர்கள் இந்நாள்வரைக்கும் இருக்கிறார்
௭ கள்.—பின்பு யாக்கோபுக்கும், [13]அதின் பின்பு
அப்போஸ்தலர் எல்லாருக்கும் தரிசனையா
௮ னார். — [14]எல்லாருக்கும் பின்பு எனக்கும் தரிச
னையானார்; நான் பூரணகர்ப்பத்தில் பிறவாமல்,
அதற்கு முன்பிறந்த‡ பிள்ளையைப்போல அப்
௯ போஸ்தலனானவன். — [15]நான் அப்போஸ்தலர்
எல்லாரிலும் சிறியவனாயிருக்கிறேன்; [16]பராபர
னுடைய சபையைத் துன்பப்படுத்தினபடியினா
லே, நான் அப்போஸ்தலன் என்று அழைக்கப்
௰ படுவதற்குப் பாத்திரன் அல்ல. — [17]பராபரனு
டைய கிருபையினாலே இருக்கிறேன்; அன்றி
யும் அவர் என்மேல் வைத்த கிருபை வீணாயிருக்
கவில்லை; [18]மற்ற எல்லாரிலும் நான் அதிகமாய்
உழைத்தேன்; [19]நானாக அல்ல, என்னுடனே
இருக்கிற பராபரனுடைய கிருபையினாலே
அப்படிச் செய்தேன். — ஆகையால் நானாவது ௰௧
அவர்களாவது இப்படியே பிரசங்கித்து வருகி
றோம்; நீங்களும் இப்படியே விசுவாசித்து வரு
கிறீர்கள்.

அந்தப்படி கிறிஸ்து மரித்தோரிலிருந்து எழுந் ௰௨
திருக்கிறார் என்று பிரசங்கித்திருக்க மரித்தோர்
உயிரோடெழும்புதல் இல்லையென்று உங்களில்
சிலர் எப்படிச் சொல்லலாம்?—மரித்தோர் உயி ௰௩
ரோடெழும்புதல் இல்லாவிட்டால் [20]கிறிஸ்து
வும் எழுந்திருக்கமாட்டாரே.—கிறிஸ்து எழும் ௰௪
பாமல் இருந்தால் எங்கள் பிரசங்கம் அபத்தமா
யிருக்குமே, உங்கள் விசுவாசமும் அபத்தமாயி
ருக்குமே.—மரித்தோர் மெய்யாய் எழும்பாவிட் ௰௫
டால், பராபரன் எழுப்பாத கிறிஸ்துவைப் பரா
பரன் எழுப்பினாரென்று [21]அவரைக்குறித்துச்
சாட்சி சொன்னதினாலே நாங்கள் பராபரனுக்
காகப் பொய்ச்சாட்சிகளாயும் இருப்போமே.—
அந்தப்படி மரித்தோர் எழும்பாவிட்டால், கிறி ௰௬
ஸ்துவும் எழுந்திருக்கமாட்டாரே. — அன்றியும் ௰௭
கிறிஸ்து எழும்பாமலிருந்தால், உங்கள் விசுவா
சம் வீணாயிருக்குமே, நீங்கள் எப்பொழுதும்
[22]உங்கள் பாவங்களோடே இருப்பீர்களே.—
கிறிஸ்துவைப்பற்றி நித்திரை அடைந்தவர்களும் ௰௮
கெட்டிருப்பார்களே.—அந்தப்படி நாம் கிறிஸ் ௰௯
துவின்மேலே [23]இம்மைக்காசமாத்திரம் நம்பிக்
கையாயிருந்தால், எல்லா மனிதர்களிலும் நாம்
அதிக நிர்ப்பாக்கியம் உள்ளவர்களாய் இருப்
போம்.

அப்படி அல்ல, [24]கிறிஸ்து நித்திரை அடைந் ௨௰
தவர்களில் முதற்பாகமாக [25]மரித்தோரிலிருந்து
எழுந்திருக்கிறார்.—[26]அந்தப்படி ஒரு மனிதனால் ௨௧
மரணம் உண்டானபடியினாலே, [27]ஒரு மனிதனா
லும் மரணத்தினின்று உயிரோடெழும்புதலும்
உண்டாயிருக்கின்றது.—ஆதாமினாலே எல்லா ௨௨
ரும் மரிக்கிறதுபோல, கிறிஸ்துவினாலே எல்லா
ரும் உயிராக்கப்படுவார்கள்.—[28]அவனவன் தன் ௨௩
இனவரிசையிலே அப்படி ஆவான்; முதற்பாக
மானவர் கிறிஸ்து, பின்பு அவர் வரும்பொழுது
அவரைச் சேர்ந்தவர்கள் எழுந்திருப்பார்கள்.—
அதன்பின்பு முடிவிருக்கும்; அப்பொழுது அவர் ௨௪
சகல துரைத்தனத்தையும் சகல அதிகாரத்தையும்
வல்லமையையும் பரிகரித்து, [29]இராச்சியபரிபா
லனத்தைப் பிதாவாகிய பராபரனுக்கு ஒப்புக்

1 ௧ கொரி. ௰௨. ௧௧. ௧ தெச. ௫. ௨௰. 2 ௩௩. ௨௪.—3 கலா. ௧. ௰௧. 4 உரோ. ௫. ௨.—5 கலா. ௩. ௪. 6 உரோ ௧ ௰௬ ௧ கொரி ௧. ௨௧. 7 கலா ௧. ௰௨.—8 ௧ கொரி. ௰௧. ௨, ௨௩.—9 சங். ௨௨. ௰௫. ஏ. ஏசா. ௫௩. ௫,௯. ஏ. தானி. ௯. ௨௬. சகரி. ௰௩. எ. லூக். ௨௪. ௨௬, ௪௬. அப். ௩. ௰௮: ௨௬. ௨௩. ௧ பே. ௧. ௰௧: ௨. ௨௪.—10 சங். ௨. எ: ௰௬. ௰. ஏசா. ௫௩. ௰. ஓசே ௬ ௨. லூக். ௨௪. ௨௬. ௪௬. அப். ௨. ௨௫—௩௧: ௰௩. ௩௩, ௩௪, ௩௫: ௨௬. ௨௨, ௨௩. ௧ பே. ௧. ௰௧. 11 லூக் ௨௪. ௩௪.—12 மத் ௨௮. ௰௭. மாற். ௰௬. ௰௪. லூக். ௨௪. ௩௬. யோவா. ௨௰. ௰௯, ௨௬. அப் ௰. ௪௧.—13 லூக். ௨௪. ௫௰. அப். ௧. ௩, ௪.—14 அப். ௯. ௪, ௰௭: ௨௨. ௰௪, ௰௮. ௧ கொரி. ௯. ௧. 15 எபே. ௩. ௮.—16 அப். ௮. ௩: ௯. ௧. கலா ௧. ௰௩. பிலி ௩. ௬ ௧ தீமோ. ௧. ௰௩.—17 எபே ௩. ௭. ௮. 18 ௨ கொரி. ௰௧. ௨௩: ௰௨. ௰௧. 19 மத். ௰ ௨௰ உரோ. ௰௫. ௰௮, ௰௯. ௨ கொரி ௩. ௫. கலா. ௨. ௮. எபே. ௩. ௭. பிலி. ௨. ௰௩.—20 ௧ தெச. ௪. ௰௪.—21 அப். ௨. ௨௪, ௩௨: ௪. ௰, ௩௩: ௰௩. ௩௰.—22 உரோ. ௪. ௨௫. 23 ௨ தீமோ. ௩. ௰௨.—24 அப். ௨௬. ௨௩ ௨௬. ௩௪. கொலோ. ௧. ௰௮. வெளி. ௧. ௫.—25 ௧ பே. ௧. ௩. 26 உரோ. ௫. ௰௨, ௰௭.—27 யோவா. ௰௧. ௨௫ உரோ. ௯. ௨௩.—28 ௨௰. ௨௪. ௧ தெச. ௪ ௰௫, ௰௬, ௰௭. 29 தானி. ௭. ௰௪, ௨௭.

* கிரேக்கு. பிரசங்கத்தினாலே.—† அல்லது உறுதியாய்ப் பிடித்தால்.—‡ அல்லது கருவழிந்த.

௨௫ கொடுப்பார்.—[1]இப்படி அவர் எல்லாச் சத்துருக்
களையும் தமது பாதத்திற்குக் கீழாக்கிப்போடும்வ
௨௬ ரைக்கும் அவர் ஆளுகை செய்யவேண்டும்.—[2]அ
௨௭ வர் பரிகரிக்கும் கடைசி சத்துரு மரணம்.—[3]எல்
லாவற்றையும் அவருடைய பாதத்திற்குக் கீழ்ப்ப
டுத்தினாரே; ஆகிலும் சகலமும் அவருக்குக் கீழ்ப்
படுத்தப்பட்டது என்று சொல்லும்பொழுது, சக
லத்தையும் அவருக்குக் கீழ்ப்படுத்தினவர் தவிர
என்பது வெளியரங்கமாய் இருக்கின்றது.—
௨௮ [4]சகலமும் அவருக்குக் கீழ்ப்பட்டிருக்கும்பொ
ழுது, பராபரனே எல்லா இடங்களிலும் எல்லா
வற்றிற்கும் மேலாயிருக்கத்தக்கவிதமாகக் [5]குமா
ரன் தாமும் தமக்கு எல்லாவற்றையும் கீழ்ப்படுத்
தினவருக்குக் கீழ்ப்பட்டிருப்பார்.

௨௯ பின்னும் மரித்தோர் எழும்பாவிட்டால், மரித்
தவர்களுக்காக ஞானஸ்நானம் பெறுகிறவர்கள்
என்ன செய்வார்கள்? மரித்தவர்களுக்காக ஏன்
௩௰ ஞானஸ்நானம் பெறுவார்கள்?—[6]நாங்களும் ஏன்
எந்நேரமும் நாசமோசத்திற்கு ஏதுவாவோம்?—
௩௧ [7]நாடோறும் நான் மரிக்கிறேன்; [8]அதை நம்மு
டைய கர்த்தராகிய கிறிஸ்து இயேசுவினாலே
உங்களைக்குறித்து எனக்கு உண்டாயிருக்கிற
மேன்மையின்பேரிலே* நிச்சயமாய்ச் சொல்லு
௩௨ கிறேன்.—[9]மரித்தோர் எழும்பாவிட்டால், நான்
எபேசுவிலே மனிதர் வழக்கமாய்த்† துஷ்டமிரு
கங்களுடனே போராடினதினாலே, எனக்கு என்
ன பிரயோசனம் வரும்? நாளைக்குச் சாவோம்;
ஆகையால் [10]புசிக்கவும் குடிக்கவும் கடவோம்
௩௩ என்று சொல்லலாமே.—வஞ்சிக்கப்படாதிருப்
பீர்களாக; [11]பொல்லாத சம்பாஷணைகள் நல்
௩௪ லொழுக்கங்களைக் கெடுக்கும்.— நீங்கள் பின்
னும் பாவம்செய்யாமல், [12]நியாயமானபடி தெ
ளிவு அடையுங்கள்; (உங்களில்) [13]சிலர் பரா
பரனை அறியாதிருக்கிறார்களே; [14]உங்களுக்கு
வெட்கம் வர இதைச் சொல்லுகிறேன்.

௩௫ [15](ஆகிலும்) மரித்தோர் எப்படி எழும்புவார்
கள்? எப்படிப்பட்ட சரீரத்தோடே வருவார்
௩௬ கள் என்று கேட்டால்,—ஆ புத்தியீனனே, [16]நீ
விதைக்கிற தானியம் கெடாவிட்டால், புதிதான
௩௭ பயிர் தோன்றமாட்டாதே.—மேலும் நீ விதைக்
கிறபொழுது இனிமேல் விளையும் உடலை விதை
யாமல், கோதுமை அல்லது மற்றொரு தானியத்
தினுடைய வெறுமணியையே விதைக்கிறாய்.—
௩௮ அதற்குப் பராபரன் தமது சித்தத்தின்படியே
உடலைக் கொடுக்கிறார்; அந்தப்படி விதைவகை
கள் யாவற்றிற்கும் அதற்கதற்கு ஏற்ற உடல்
௩௯ உண்டு.—எல்லா மாம்சமும் ஒரேவிதமான மாம்

சம் அல்ல; மனிதருடைய மாம்சமும் வேறே,
மிருகங்களுடைய மாம்சமும் வேறே, மச்சங்க
ளுடையதும் வேறே, பறவைகளுடையதும் வே
றே.— பரமண்டலத்திற்கு உரிய தேகங்களும் ௪௰
உண்டு; பூமிக்கு உரிய தேகங்களும் உண்டு,
பரமண்டலத்திற்கு உரிய தேகங்களுடைய மகி
மையும் வேறே, பூமிக்கு உரிய தேகங்களுடைய
மகிமையும் வேறே.— சூரியனுடைய மகிமை ௪௧
யும் வேறே, சந்திரனுடைய மகிமையும் வேறே,
நட்சத்திரங்களுடைய மகிமையும் வேறே அவை
களில் ஒரு நட்சத்திரத்தினுடைய மகிமை மற்
றொரு நட்சத்திரத்தின் மகிமைக்கு மேற்படுகின்
றதே.

[17]அப்படிப்போல, மரித்தோர் உயிரோடெழும் ௪௨
புதலும் உண்டாயிருக்கும்; அழிவுள்ள சரீரம்
விதைக்கப்பட்டு, பின்பு அழிவில்லாமையாய்
எழுந்திருக்கும்.—[18]கனஈனமான சரீரம் விதைக் ௪௩
கப்பட்டு, பின்பு மகிமையாய் எழுந்திருக்கும்;
பலஈனமுள்ள சரீரம் விதைக்கப்பட்டுப் பின்பு
பலமாய் எழுந்திருக்கும்.— சீவனுள்ள சரீரம் ௪௪
விதைக்கப்படும்; ஆவிக்குரிய சரீரம் எழுந்திருக்
கும்; இரத்தமாம்சமுடைய சரீரமும் உண்டு;
ஆவிக்குரிய சரீரமும் உண்டு.—ஆனதால் வே ௪௫
தத்திலே எழுதியிருக்கிறபடி [19]முந்தின மனித
னாகிய ஆதாம் சீவாத்துமாவானான், [20]பிந்தின
ஆதாம் [21]உயிர்ப்பிக்கிற ஆவியானார்.—ஆவியான ௪௬
சரீரம் முந்தினதாயிராமல், இரத்தமாம்சமுடைய
சரீரமே முந்தினதாயிருக்கிறது.— பின்பு ஆவி ௪௭
யான சரீரம் உண்டாம்; [22]முந்தின மனிதன் பூமி
யின் [23]மண்ணானவன்; [24]இரண்டாம் மனிதன்
பரமண்டலத்திற்குரிய கர்த்தர்.—மண்ணானவன் ௪௮
எப்படியோ அப்படி மண்ணானவர்களும் இருப்
பார்கள்; [25]பரமண்டலத்திற்குரியவர் எப்படி
யோ அப்படிப் பரமண்டலத்திற்குரியவர்களும்
இருப்பார்கள்.—[26]மேலும் மண்ணானவனுடைய ௪௯
சாயலை நாம் அணிந்திருக்கிறதுபோல, [27]பர
மண்டலத்திற்குரியவருடைய சாயலையும் அணி
ந்துகொள்வோம்.

சகோதரரே, [28]மாம்சமும் இரத்தமும் பராபர ௫௰
னுடைய இராச்சியத்தைச்சுதந்தரிக்கக்கூடாது;
அழிவுள்ளது அழியாமையைச் சுதந்தரிக்கமாட்
டாது; ஆனதால் இவைகளைச் சொன்னேன்.—
மேலும் நான் உங்களுக்கு இரகசியத்தை அறி ௫௧
விக்கிறேன்; (என்னவெனில்,) [29]நாம் எல்லா
ரும் நித்திரை அடைந்துபோவதில்லை; ஆகிலும்
எல்லாரும் கடைசி எக்காளம் தொனிக்கும்பொ
ழுது ஒரு நிமிஷத்திலே [30]ஒரு இமைப்பொ

1 சங். ௱௰. ௧. அப். ௨. ௩௪, ௩௫. எபே. ௧. ௨௨. எபி. ௧. ௰௩; ௰. ௰௩. 2 ௨ தீமோ. ௧. ௰. வெளி. ௨௰. ௰௪. 3 சங். அ. ௬. மத். ௨௮. ௰௮. எபி. ௨. அ. ௧ பேது. ௩. ௨௨.—4 பிலி. ௩. ௨௧. 5 ௧ கொரி. ௩. ௨௩; ௰௧. ௩. 6 ௨ கொரி. ௰௧. ௨௬. கலா. ௫. ௰௧. 7 ௨ ரோ. அ. ௩௬. ௧ கொரி. ௪. ௯. ௨ கொரி. ௪. ௰, ௰௧; ௰௧. ௨௩. 8 ௧ தெச. ௨. ௰௯.—9 ௨ கொரி. ௧. அ.—10 பிரச. ௨. ௨௪. ஏசா. ௨௨. ௰௩; இக. ௰௨. லூக். ௰௨. ௰௯. 11 ௧ கொரி. ௫. ௬.—12 ௨ ரோ. ௰௩. ௰௧. எபே. ௫. ௰௪.—13 ௧ தெச. ௪. ௫.—14 ௧ கொரி. ௬. ௫. 15 எசே. ௩௭. ௩.—16 யோவா. ௰௨. ௨௪. 17 தானி. ௰௨. ௨. மத். ௰௩. ௪௩.—18 பிலி. ௩. ௨௧—19 ௧ மோ. ௨. ௭.—20 ௨ ரோ. ௫. ௰௪.—21 யோவா ௫. ௨௧: ௬. ௩௩, ௩௯, ௫௪, ௫௭. பிலி. ௩. ௨௧. கொலோ. ௩. ௪.—22 யோவா. ௩. ௩௧. 23 ௧ மோ. ௨. ௭; ௩. ௰௯.—24 யோவா. ௩. ௰௩. ௩௧.—25 பிலி ௩. ௨௰, ௨௧. 26 ௧ மோ. ௫. ௩.—27 ௨ ரோ. அ. ௨௯. ௨ கொரி. ௩. ௰அ: ௪. ௰௧. பிலி. ௩. ௨௧. ௧ யோ. ௩. ௨.—28 மத். ௰௬. ௰௭. யோவா. ௩. ௩, ௫.—29 ௧ தெச. ௪. ௰௫, ௰௬, ௰௭.—30 பிலி ௩. ௨௧.

* சில பிரதிகளில், உங்களுடைய மேன்மையின்.—† மனித வழக்கமாய்ப்பேசில்.

௫௨ ழுதிலே மறுரூபமாக்கப்படுவோம்.—[1]எக்காளம்
தொனிக்குமே; அப்பொழுது மரித்தோர் அழி
௫௩ வில்லாதவர்களாய் எழும்புவார்கள். — அன்றி
யும் அழிவுள்ளதாகிய இது அழியாமையையும்,
[2]சாவுக்கேதுவானதாகிய இது சாவாமையையும் தரித்
துக்கொள்ளவேண்டியபடியால், நாமும் மறுரூப
மாக்கப்படுவோம்.

௫௪ அந்தப்படி அழிவுள்ளதாகிய இது அழியாமை
யையும், சாவுக்கேதுவானதாகிய இது சாவாமையை
யும் தரித்துக்கொள்ளும்பொழுது, [3]மரணம் செய
மாக விழுங்கப்பட்டதென்று எழுதியிருக்கிற
௫௫ வார்த்தை நிறைவேறும்.—[4]ஆ மரணமே, உன்
கூர்மை எங்கே? பாதாளமே,* உன் செயம் எங்
௫௬ கே? மரணத்தின் கூர்மை பாவம்.—[5]பாவத்தின்
௫௭ பலன் நியாயப்பிரமாணம்.—நம்முடைய கர்த்த
ராகிய இயேசுக்கிறிஸ்துவினாலே, [6]நமக்குச் செ
யங்கொடுத்திருக்கிற [7]பராபரனுக்குத் தோத்தி
௫௮ ரம் உண்டாவதாக.—[8]ஆகையால் எனக்குப் பிரி
யமான சகோதரரே, [9]கர்த்தரைக்குறித்து உங்கள்
வேலை வீணாயிராதென்று அறிந்து, நீங்கள் உறு
திப்பட்டவர்களாயும், அசையாதவர்களாயும்,
கர்த்தருடைய கிரியையிலே எப்பொழுதும்
பெருகிக்கொள்ளுகிறவர்களாயும் இருப்பீர்க
ளாக.

## ௰௬. அதிகாரம்.

௧. எருசலேமிலுள்ள எளிய கிறிஸ்தவர்களுக்குத் தருமங்களைச் சேர்த்து அனுப்பவேண்டுமென்றும், ௰. தீமோத்தேயுவை அங்கிகாரம்பண்ண வேண்டுமென்றும் சொல்லி, ௰௩. சில பட்சமுள்ள புத்திமதிகளையும் எழுதி, ௰௯. அநேகரை வாழ்த்தி நிருபத்தை முடித்தது.

௧ [10]பரிசுத்தவான்களுக்காகச் சேர்க்கப்படும் தரு
மங்களைக்குறித்து நான் கலாத்தியதேசத்துச்
சபைகளுக்குப் பண்ணின திட்டத்தின்படியே,
௨ நீங்களும் செய்வீர்களாக.—நான் வரும்பொழு
தே தருமம் சேர்க்குதல் உண்டாயிராதபடிக்கு,
உங்களில் அவனவன் [11]வாரத்து முதல்நாள்கள்
தோறும் தன்தன் வாழ்வுக்குத்தக்கதாக எதை
யாகிலும் எடுத்து, தன்னிடத்திலே சேர்த்து
௩ வைக்கக்கடவன்.—நான் வந்திருக்கும்பொழுது,
உங்களுடைய உபகாரத்தை † எருசலேமுக்
குக் கொண்டுபோகும்படிக்கு நீங்கள் [12]நிருபங்
களினாலே ஏற்படுத்துகிறவர்கள் எவர்களோ,
௪ அவர்களை அனுப்புவேன்.—[13]நானும் போகத்
தகுதியானால், அவர்கள் என்னுடனேகூட வர
லாம்.

௫ [14]நான் மக்கேதோனியா நாட்டின் வழியாய்ப்
போகிறேன்; அதின்வழியாய்ப் போகும்பொ
ழுது, உங்களிடத்திற்கு வருவேன்.—ஒருவேளை ௬
நான் உங்களிடத்தில் சிலகாலம் தரித்திருப்
பேன்; [15]நான் எங்கேபோனாலும், நீங்கள் என்னை
வழிவிட்டனுப்பும்படிக்கு, ஒருவேளை மாரிகா
லம் முடியுமளவும் இருப்பேன்.—ஆனதால் நான் ௭
இப்பொழுது போகிற பிரயாணத்திலே உங்க
ளைப் பார்க்கமாட்டேன்; [16]கர்த்தர் உத்தரவுகொ
டுத்தால், உங்களிடத்தில் சிலகாலம் தரித்திருக்க
லாம் என்று நம்பியிருக்கிறேன்.—இந்த எபேசு ௮
பட்டணத்திலே [17]பெரிதும் பெலனுமான கதவு
எனக்குத் திறக்கப்பட்டிருக்கிறபடியினாலும்
[18]விரோதம்செய்கிறவர்களும் அநேகர் இருக்கிற
படியினாலும், — பெந்தக்கோஸ்து பண்டிகைவ ௯
ரைக்கும் இங்கே இருப்பேன்.

[19]தீமோத்தேயு உங்களிடத்திற்கு வரும்பொ ௰
ழுது, அவன் உங்களிடத்தில் பயமில்லாமல் இ
ருக்கும்படிக்கு எச்சரிக்கையாயிருங்கள்; [20]என்
னைப்போல அவனும் கர்த்தருடைய கிரியையை
நடப்பிக்கிறானே. — ஆனபடியினாலே[21] ஒருவ ௰௧
னும் அவனை அற்பமாய் எண்ணாதிருப்பானாக;
அன்றியும் அவனும் அவனுடனேகூட இருக்கிற
சகோதரரும் வருகிறதற்கு நான் காத்திருக்கிற
படியால், [22]நீங்கள் அவனைச் சமாதானத்தோடே
என்னிடத்தில் வரும்படிக்கு வழிவிட்டனுப்
புங்கள்.—சகோதரனாகிய [23]அப்பொல்லோவும் ௰௨
இந்தச் சகோதரரோடுங்கூட உங்களிடத்தில்
வரும்படிக்கு, அவனை மிகவும் வேண்டிக்
கொண்டேன்; அப்படியிருந்தும் இப்பொழுது
போக அவனுக்கு மனதே இல்லை; அவனுக்கு
நற்சமயம் உண்டாயிருக்கும்பொழுது உங்களி
டத்தில் வருவான்.

[24]விழித்திருங்கள் [25]விசுவாசத்திலே நிலைத்தி ௰௩
ருங்கள்; புருஷராயிருங்கள்; [26]பெலன்கொள்
ளுங்கள். — [27]உங்கள் காரியங்களை எல்லாம் ௰௪
அன்போடே செய்வீர்களாக.

சகோதரரே, [28]ஸ்தேவானுடைய குடும்பத்தார் ௰௫
அகாயதேசத்திலே [29]முதற்பாகமானவர்கள் என்
றும், [30]பரிசுத்தவான்களுக்கு ஊழியம்செய்யும்
படிக்கு அவர்கள் தங்களை நியமித்தவர்கள் என்
றும் அறிந்திருக்கிறீர்களே. — இப்படிப்பட்ட ௰௬
வர்களுக்கும் உதவிசெய்து [31]பிரயாசப்படுகிற
மற்ற யாவருக்கும் [32]நீங்களும் கீழ்ப்படிந்திருக்க
வேண்டும் என்று உங்களுக்குப் புத்திசொல்லுகி
றேன்.—ஸ்தேவானும் பொருத்துநாத்தும் அகா ௰௭
யிக்குசும் வந்து சேர்ந்ததினாலே சந்தோஷமாய்

1 சகரி.௯.௰௪. மத்.௨௪.௩௧. யோ. ௫.௨௫. ௧ தெச. ௪. ௰௬.
2 ௨ கொரி. ௫.௪.
3 ஏசா. ௨௫.௮ எபி. ௨. ௰௪, ௰௫. வெளி. ௨௰. ௰௪.—4 ஓசே. ௰௩. ௰௪.—5 ௨ரோ. ௪. ௰௫: ௫. ௰௩: ௭. ௫, ௰௩.—6 ௧ யோ. ௫. ௪, ௫.
7 ௨ரோ.௭.௨௫.-8 ௨ பே. ௩. ௰௪.
9 ௧ கொரி.௩.௮.-10 அப். ௰௧. ௨௯: ௨௪.௰௭. ௨ரோ.௰௫.௨௬. ௨ கொரி. ௮. ௪: ௯. ௧, ௰௨. கலா. ௨. ௰.
11 அப். ௨௰. ௭. வெளி. ௧. ௰.
12 ௨ கொரி. ௮. ௰௯.—13 ௨ கொரி. ௮. ௪, ௰௯.—14 அப். ௰௯. ௨௧. ௨ கொரி ௧. ௰௬.—15 அப். ௰௫. ௩: ௰௭. ௰௫: ௨௧. ௫. ௨ரோ.௰௫.௨௪. ௨ கொரி. ௧. ௰௬.—16 அப். ௰௮. ௨௧. ௧ கொரி. ௪. ௰௯. யாக். ௪. ௰௫.—17 அப். ௰௪. ௨௭. ௨ கொரி. ௨. ௰௨. கொலோ. ௪. ௩. வெளி. ௩. ௮.—18 அப். ௰௯. ௯.-19 அப். ௰௯. ௨௨. ௧ கொரி. ௪. ௰௭.
20 ௨ரோ. ௰௯.௨௧. பிலி. ௨. ௨௰, ௨௨. ௧ தெச. ௩. ௨.-21 ௧ தீமோ. ௪. ௰௨.
22 அப். ௰௫. ௩௩.—23 ௧ கொரி. ௧. ௰௨: ௩. ௫.—24 மத். ௨௪. ௪௨: ௨௫. ௰௩. ௧ தெச. ௫. ௬. ௧ பே. ௫. ௮.—25 ௧ கொரி. ௰௫. ௧. பிலி. ௧. ௨௭: ௪. ௧. ௧ தெச. ௩. ௮. ௨ தெச. ௨. ௰௫.—26 எபே. ௬. ௰. கொலோ. ௧. ௰௧.—27 ௧ கொரி. ௰௪. ௧. ௧ பே. ௪. ௮.-28 ௧ கொரி. ௧. ௰௬.—29 ௨ரோ. ௰௬. ௫.
30 ௨ கொரி. ௮. ௪: ௯. ௧. எபி. ௬. ௰.—31 எபி. ௬. ௰.—32 எபி. ௰௩. ௰௭.

* அல்லது பிரேதக்குழியே.—† கிரேக்கு, கொடையை; ௨ கொரி. ௮. ௪, ௬, ௰௯.

௰௮ இருக்கிறேன். — உங்கள் ஆவிக்குச் செய்தது
போல [1]அவர்கள் என்னுடைய ஆவிக்கும் ஆறு
தல் செய்தபடியால் [2]நீங்கள் இல்லாததினால்
உண்டான குறைவை நீக்கி நிறைவுண்டாக்கி
னார்கள்; [3]இப்படிப்பட்டவர்களைக் கனமாய்
எண்ணிக்கொள்வீர்களாக.
௰௯ ஆசியதேசத்திலுள்ள சபைகள் உங்களை வாழ்த்
துதல்செய்கிறார்கள்; ஆக்கில்லாவும் பிரிஸ்கில்
லாளும் [4]தங்கள் வீட்டிலே கூடிய சபையோ
டெங்கூடக் கர்த்தரைப்பற்றிய உங்களை மிகவும்
௨௰ வாழ்த்துகிறார்கள்.—சகோதரர் எல்லாரும் உங்
களை வாழ்த்துகிறார்கள்; [5]நீங்கள் ஒருவரை ஒரு
வர் பரிசுத்தமான முத்தத்தினால் வாழ்த்துதல்
செய்வீர்களாக.
[6]பவுலாகிய நான் என் கையெழுத்தோடே ௨௧
வாழ்த்துதல்செய்கிறேன்.—ஒருவன் கர்த்தராகிய ௨௨
இயேசுக்கிறிஸ்துவினிடத்தில் [7]அன்புகூராமற்
போனால், [8]அவன் சபிக்கப்பட்டவனாய் இருப்
பான்; [9]அவனுக்குத் தண்டிப்பாகக் கர்த்தர் வரு
வார். — கர்த்தராகிய [10]இயேசுக்கிறிஸ்துவினு ௨௩
டைய கிருபை உங்களுடனேகூட இருக்கக்
கடவது.—என்னுடைய அன்பு கிறிஸ்து இயே ௨௪
சுவைப் பற்றிக்கொள்ளுகிற உங்கள் எல்லாரோ
டெங்கூட இருக்கின்றது.—ஆமன்.

---

1 கொலோ. ௪. ௮.
2 ௨ கொரி. ௰௧. ௯. பிலி. ௨. ௩௰. பிலே. ௰௩.
3 பிலி. ௨. ௨௯. ௧ தெச. ௫. ௰௨.
4 உரோ. ௰௬. ௫, ௰௫. பிலே. ௨.
5 உரோ. ௰௬. ௰௬.
6 கொலோ. ௪. ௰௮. ௨ தெச. ௩. ௰௭.
7 எபே. ௬. ௨௪.
8 கலா. ௧. ௮, ௯.
9 யூதா. ௰௪, ௰௫.
10 உரோ. ௰௬. ௨௰.

# II. CORINTHIANS.

அப்போஸ்தலனாகிய பவுல்

# கொரிந்தியருக்கு எழுதின

# இரண்டாம் நிருபம்.

## க. அதிகாரம்.

*க. அப்போஸ்தலன் தன் உபத்திரவங்களிலேயெல்லாம் விசேஷமாய், அ. ஆசியாவிலே அடைந்த துன்பத்தில் உண்டான ஆறுதலினாலே சபைக்கு ஆறுதல்சொல்லி, ௰உ. தான் சுவிசேஷத்தின் மாறாத சத்தியத்தை உத்தமமாய்ப் பிரசங்கித்ததற்குத் தன் மனச்சாட்சியையும், அவர்களுடைய மனச்சாட்சிகளையும் சாட்சியிட்டு, ௰௬. தான் கொரிந்துக்கு வராததற்கு நியாயம் சொன்னது.*

௧ பராபரனுடைய சித்தத்தினாலே இயேசுக்கிறிஸ்
துவின் [1]அப்போஸ்தலனாகிய பவுலும் சகோதர
னாகிய தீமோத்தேயும் கொரிந்துபட்டணத்தி
லுள்ள பராபரனுடைய சபைக்கும் [2]அகாயதே
சம் எங்குமுள்ள எல்லாப் பரிசுத்தவான்களுக்
௨ கும்கூட எழுதுகிறதாவது:—நம்முடைய பிதா
வாகிய பராபரனாலும் கர்த்தராகிய இயேசுக்கி
றிஸ்துவினாலும் உங்களுக்குக் [3]கிருபையும் சமா
தானமும் உண்டாகக்கடவது.
௩ நம்முடைய கர்த்தராகிய இயேசுக்கிறிஸ்து
வின் பிதாவுமாய், பராபரனுமாய், மிகுந்த தயை
யுடைய பிதாவுமாய், சகலவிதமான ஆறுதலையும்
அநுக்கிரகிக்கிற [4]தேவனுமாய் இருக்கிறவர்
௪ தோத்திரிக்கப்படக்கடவர்.—அவரே எங்களுக்
கு வரும் சகல உபத்திரவகாலங்களிலேயும் எங்
களுக்கு ஆறுதல்செய்கிறவர்; பராபரனாலே நாங்
கள் அடைகிற ஆறுதலினாலே சகலவித உபத்
திரவகாலங்களிலும் அசுப்படுகிற மற்றவர்களு
க்கு நாங்கள் ஆறுதல்செய்யத் திராணியாய்
௫ இருக்கிறோம்.—எப்படியெனில், [5]கிறிஸ்துவின்
நிமித்தம் பாடுகள் எங்கள்மேலே பெருகுகிறது
போல, கிறிஸ்துவினாலே எங்களுக்கு ஆறுதலும்
௬ பெருகுகின்றது.—ஆனதால் நாங்கள் உபத்திர
வப்பட்டால், [6]அது உங்கள் ஆறுதலுக்காகவும்,
இரட்சிப்புக்காகவும் இருக்கும்; நாங்கள் ஆறுத
லடைந்தால், அதுவும் உங்கள் ஆறுதலுக்காக
இருக்கும்; நாங்கள் பாடுபடுகிறதுபோல, நீங்க
ளும் படுகிற பாடுகளைப் பொறுமையோடே
சகிக்கிறதினாலே, அந்த ஆறுதல் பலனைச் செய்
கின்றது.*—[7]அப்படி நீங்கள் எங்களோடேகூ ௭
டப்பாடுபடுகிறதுமல்லாமல் எங்களோடேகூட
ஆறுதலையும் அடைகிறீர்கள் என்று நாங்கள்
அறிந்து, உங்களைக்குறித்து உறுதியான நம்பிக்
கையுள்ளவர்களாய் இருக்கிறோம்.
ஆகையால் சகோதரரே, ஆசியாவில் எங்க ௮
ளுக்கு வந்த [8]உபத்திரவத்தை நீங்கள் அறியாதி
ருக்கவேண்டுமென்று எங்களுக்கு மனதில்லை;
என்னவெனில் பிழைப்போமா என்றும் நாங்
கள் மிகவும் சந்தேகப்படத்தக்கதாக, (எங்கள்)
பலத்திற்கு மிஞ்சின அதிக பாரம் எங்களுக்கு
உண்டாயிற்று.—மேலும் மரணம் வருமென்று ௯
நாங்கள் எங்களுக்குள்ளே நிச்சயித்திருந்தோம்;†
[9]அது எங்கள்மேலே அல்ல, மரித்தோரை எழுப்
புகிற பராபரன்மேலே நாங்கள் நம்பிக்கையாய்
இருக்கும்படிக்கு ஏதுவாயிருந்தது.—[10]அப்ப ௰
டிப்பட்ட மரணத்தினின்று அவர் எங்களை இ
ழுத்தார்; இப்பொழுதும் இழுக்கிறார்; பின்னும்
இழுப்பார் என்று அவரை நம்பியிருக்கிறோம்.—
அதற்காக [11]நீங்களும் விண்ணப்பத்தினாலே ௰௧
எங்களுக்கு உதவிசெய்யும்பொழுது, அநேகர்
நிமித்தம் எங்களுக்கு உண்டான [12]ஈவுக்காக
அநேகராலே எங்கள்நிமித்தம் தோத்திரங்களும்
செலுத்தப்படும்.
அதற்கு ஏதுவாக எங்களுடைய புகழ்ச்சி என் ௰௨
னவென்றால், நாங்கள் உலகத்திலே விசேஷ
மாக உங்களிடத்திலே கபடமில்லாமல் [13]திவ்
விய உண்மையோடும் [14]மாம்சத்திற்கு ஏற்ற ஞா
னத்தோடே அல்ல, பராபரனுடைய கிருபை

1 க கொரி.க.க. எபே.க.க. கொலோ.க.க. க தீமோ.க.க. உ தீமோ. க.க.—2 பிலி. க. க. கொலோ. க. உ.—3 உரோ.க.எ. க கொரி. க. ங. கலா. க. ங. பிலி. க. உ. கொலோ. க. உ: க தெச. க.க. உ தெச.க.உ. பிலே.ங.-4 எபே. க.ங. க பே. க. ங.–5 அப்.கூ.ச. உ கொரி.ச.௰. கொலோ.க.உச. 6 உ கொரி.ச.௰௫.-7 உரோ.அ.௰எ. உ தீமோ. உ. ௰உ.—8 அப். ௰கூ. உங. க கொரி. ௰௫. ௩உ: ௰௬. கூ. 9 எரே. ௰எ. ௫, எ. 10 உ பே. உ. கூ. 11 உரோ. ௰௫. ௩௰. பிலி.க.௰கூ. பிலே. உஉ. 12 உ கொரி. ச. ௰௫. 13 உ கொரி. உ. ௰எ: ச. உ. 14 க கொரி. உ. ச, ௰௩.

* அல்லது உண்டாக்கப்பட்டிருக்கின்றது.—† அல்லது தீர்த்திருந்தோம்.

யோடும் சஞ்சரித்தோம் என்று எங்கள் மனது
எங்களுக்குச் சாட்சிசொல்லுகின்றது; இதுவே
௰௩ எங்களுடைய புகழ்ச்சி.—ஆனதால் (இங்கே) நீங்
கள் வாசித்தும் அறிந்து ஒத்துக்கொண்டும் இருக்
கிற பொருள்களையே அன்றி, வேறே பொருள்
களை நாங்கள் உங்களுக்கு எழுதுகிறதில்லை;
முடிவுபரியந்தமும் அப்படியே அறிந்து ஒத்
துக்கொள்வீர்கள் என்று நம்பியிருக்கிறேன்.—
௰௪ கர்த்தராகிய இயேசுவினுடைய நாளிலே [1]நீங்
கள் எங்களுக்குப் புகழ்ச்சியாயிருப்பதுபோல,
[2]நாங்களும் உங்களுக்குப் புகழ்ச்சியாயிருக்கிற
தை ஒரு பாகமாய் அறிந்து ஒத்துக்கொண்டிருக்
கிறீர்களே.
௰௫ இப்படிப்பட்ட நம்பிக்கையினாலே நான்
[3]உங்களுக்கு மறுபடியும் உபகாரம்* உண்டாகும்
௰௬ படிக்கு,—[4]முதலாவது உங்களிடத்தில் வரவும்
உங்கள் ஊர்வழியாக மக்கெதோனியா நாட்டுக்
குப் போகவும், [5]மக்கெதோனியாவை விட்டுத்
திரும்ப உங்களிடத்தில் வரவும், உங்களால்
யூதேயா நாட்டுக்கு வழிவிட்டு அனுப்பப்பட
௰௭ வும் யோசனையாய் இருந்தேன்.—இப்படி நான்
வீணாகவா யோசித்தேன்? அல்லது என்னிடத்
திலே ஆம் என்பது ஆமென்றும், அல்லவென்
பது அல்லவென்றும் இருக்கத்தக்கதாக, நான்
யோசிக்கிறவைகளைத் [6]தேக இச்சையின்படியா
யோசிக்கிறேன்?
௰௮ அப்படியல்ல, நாங்கள் உங்களுக்குச் சொன்
ன வார்த்தை † ஆம் என்றும், அல்ல என்றும் இரு
க்கவில்லை என்கிறதற்கு உண்மையுள்ள பராபர
௰௯ னே சாட்சியாய் இருக்கிறார்.—[7]பராபரனுடைய
வாக்குத்தத்தங்கள் எல்லாம் இயேசுக்கிறிஸ்து
வினாலே ஆமென்றும் ஆமெனென்றும் இருக்கிறப
௨௰ டியால்,—பராபரனுடைய மகிமை பிரஸ்தாப
மாகும்படிக்கு, என்னாலும் சில்வானுவினாலும்
தீமோத்தேயுவினாலும் உங்களுக்குள்ளே பிரசங்
கிக்கப்பட்ட [8]பராபரனுடைய குமாரனாகிய
இயேசுக்கிறிஸ்துவும் ஆமென்றும் அல்லவென்
றும் இராமல், [9]ஆம் என்று (எப்பொழுதும் ஒரே
௨௧ விதமாய்) இருந்தாரே.—எங்களையும் உங்களை
யும் கிறிஸ்துவுக்குள் ஸ்திரப்படுத்தி, [10]நமக்கு
௨௨ அபிஷேகம்பண்ணினவர் பராபரன்.—[11]அவரும்
நம்மை முத்திரைப்படுத்தி, நம்முடைய இருத
யங்களில் ஆவியென்னும் [12]அச்சாரத்தைக் கொ
டுத்திருக்கிறார்.
௨௩ [13]நான் உங்களைத் தப்பவிடும்படிக்கே இது
வரைக்கும் கொரிந்துபட்டணத்திற்கு வாராதி
ருக்கிறேன்; [14]இதைக்குறித்து என் ஆத்துமாவுக்
குச் சாட்சியாகப் பராபரனையே அழைக்கி
௨௪ றேன்.—[15]விசுவாசத்தின் நிமித்தம் நாங்கள் உங்
களைப் பலவந்தமாய் ஆளுகிறவர்களாக அல்ல,
[16]நீங்கள் (இதுவரைக்கும்) விசுவாசத்திலே நிலை
நிற்கிறபடியால், உங்கள் சந்தோஷத்திற்கு உத
விக்காரராகவே இப்படிச் சொல்லுகிறேன்.

## ௨. அதிகாரம்.

௧. தான் அவர்களிடத்தில் வாராததற்கு நியாயஞ்சொல்லி, ௬ புறம்பாக்கப்பட்டவன் உத்தம மனஸ்தாபம் அடைந்ததினால் தான் அவனை மன்னித்ததைத் தேற்றக் கட்டளையிட்டு, ௰௨. தான் துரோவாவிலிருந்து மக்கெதோனியாவுக்குப் போன முகாந்தரத்தையும், ௰௪. தன் பிரசங்கத்தினால் பராபரன் எங்கும் உண்டாக்கின நற்பலனையுங்குறித்துச் சொன்னது

ஆனதால், [17]துக்கத்துடனே நான் உங்களிடத் ௧
திலே திரும்ப வாராதபடிக்கு எனக்குள்ளே தீர்
மானம்செய்தேன்.—நான் உங்களைத் துக்கப்ப ௨
டுத்தினால் என்னாலே துக்கம் அடைந்தவனை
அல்லாமல், எவன் என்னைச் சந்தோஷப்படுத்து
வான்?—ஆகையால் [18]என்னுடைய சந்தோஷம் ௩
உங்கள் எல்லாருக்கும் சந்தோஷமாய் இருக்கு
மென்று நான் உங்கள் எல்லாரையும் நம்பிக்
கொண்டு, [19]நான் வரும்பொழுது எனக்குச் சந்
தோஷம் உண்டாக்கவேண்டியவர்களால் நான்
துக்கம் அடையாதபடிக்கு, (முன்னே) அப்ப
டித்தானே உங்களுக்கு எழுதினேன்.—அன்றி ௪
யும் மிகுந்த வியாகுலமும் மனஇடுக்கமும் அ
டைந்தவனாய், அதிகமான கண்ணீரோடே உங்
களுக்கு எழுதினேன்; [20]நீங்கள் துக்கப்படும்
படிக்கு அல்ல, உங்கள்மேலே அதிகமாயிருக்
கிற என்னுடைய அன்பை நீங்கள் அறியும்படிக்
கே அப்படிச் செய்தேன்.
[21]துக்கம் உண்டாக்கினவன் [22]என்னை (மாத் ௫
திரமல்ல) நான் அதிகபாரம் வையாதபடிக்கு,
(என்னாலே) ஒரு விதமாய் உங்கள் எல்லாரை
யும் துக்கப்படுத்தினான். — அப்படிப்பட்டவ ௬
னுக்கு [23]அநேகரால் உண்டான இந்தத் தண்ட
னை ‡ போதும்.—ஆனதால் அவன் அதிக துக்கத் ௭
தினாலே விழுங்கப்படாதபடிக்கு, [24]நீங்கள் அ
திக சந்தோஷமாய் அவனுக்கு மன்னித்து ஆறு
தல் செய்யவேண்டும்.—அந்தப்படி நீங்கள் உங் ௮
கள் அன்பை அவனுக்குக் காண்பிப்பீர்களாக
என்று உங்களை வேண்டிக்கொள்ளுகிறேன்.—
அதற்காகவும் [25]நீங்கள் சகலத்திலேயும் கீழ்ப்ப ௯
டிந்திருக்கிறீர்களோ என்று உங்கள் குணத்தை
அறியவும் இப்படி எழுதியிருந்தேன்.—ஆனதால் ௰
யாருக்கு மன்னிக்கிறீர்களோ, அவனுக்கு நா
னும் மன்னிக்கிறேன்; மேலும் எதை நான் (இப்
பொழுது) மன்னித்தேனோ, அதை நான் உங்கள்
நிமித்தம் கிறிஸ்துவினுடைய சந்நிதானத்திலே§
மன்னித்தேன்.—சாத்தானுடைய யோசனைகள் ௰௧
எங்களுக்குத் தெரியாமல் இருக்கவில்லை; ஆன
தால் நாம் அவனாலே மேற்கொள்ளப்படாதப
டிக்கு அப்படிச் செய்தேன்.

1 பிலி. ௨. ௰௬: ௪. ௧. ௧ தெச. ௨. ௰௯, ௨௰.—2 ௨ கொரி. ௫. ௰௨.
3 ௨ ரோ. ௧. ௰௧.-4 ௧ கொரி. ௪. ௰௯.
5 ௧ கொரி. ௰௬. ௫, ௬.-6 ௨ கொரி. ௰. ௨.—7 ௨ ரோ. ௰௫. ௮, ௯.
8 மாற். ௧. ௧. லூக். ௧. ௩௫. அப். ௯. ௨௰.-9 எபி. ௰௩. ௮.—10 ௧ யோ. ௨. ௨௰, ௨௭.—11 எபே. ௧. ௰௩: ௪. ௩௰. ௨ தீமோ. ௨. ௰௯. வெளி. ௨. ௰௭.—12 ௨ கொரி. ௫. ௫. எபே. ௧. ௰௪.-13 ௧ கொரி. ௪. ௨௧. ௨ கொரி. ௨. ௩: ௰௨. ௨௰: ௰௩. ௨, ௰.
14 ௨ ரோ. ௧ ௯. ௨ கொரி. ௰௧. ௩௧. கலா. ௧ ௨௰. பிலி. ௧. ௮.
15 ௧ கொரி. ௩. ௫. ௧ பே. ௫. ௩.
16 ௨ ரோ. ௰௧. ௨௰. ௧ கொரி. ௰௫. ௧.
17 ௨ கொரி. ௧. ௨௩: ௰௨. ௨௰, ௨௧: ௰௩. ௰.—18 ௨ கொரி. ௭. ௰௬: ௮. ௨௨. கலா. ௫. ௰—19 ௨ கொரி. ௰௨. ௨௧.-20 ௨ கொரி. ௭. ௮, ௯, ௰௨.-21 ௧ கொரி. ௫. ௧.-22 கலா. ௪. ௰௨.—23 ௧ கொரி. ௫. ௪, ௫. ௧ தீமோ. ௫. ௨௰.-24 கலா. ௬. ௧. 25 ௨ கொரி. ௭. ௰௫: ௰. ௬.

* அல்லது கிருபை.—† அல்லது பிரசங்கம்.—‡ அல்லது கண்டிப்பு.—§ அல்லது கிறிஸ்துவுக்காக.

௰௨ மேலும் நான் கிறிஸ்துவின் சுவிசேஷத்தைப்
பிரசங்கிக்கும்படி [1]துரோவாப் பட்டணத்தி
லே வந்தபொழுது, [2]கர்த்தராலே எனக்குக் கதவு
௰௩ திறக்கப்பட்டிருக்கையில்,—நான் என் சகோதர
னாகிய தீத்துவைக் காணாததினாலே [3]என் ஆவிக்கு
அமைதல் இருக்கவில்லை; ஆனதால் நான் அவர்க
ளாலே அனுப்பப்பட்டு, மக்கேதோனியா நாட்
டுக்குப் புறப்பட்டுப்போனேன்.
௰௪ கிறிஸ்துவினாலே எங்களை எப்பொழுதும்
வெற்றி சிறக்கப்பண்ணி, எல்லா இடங்களிலே
யும் எங்களைக்கொண்டு அவரை அறிகிற அறி
வின்வாசனையை வெளிப்படுத்துகிற பராபரனுக்
௰௫ குத் தோத்திரம் உண்டாவதாக.—[4]இரட்சிக்கப்ப
டுகிறவர்களுக்குள்ளேயும் [5]கெட்டுப்போகிறவர்
களுக்குள்ளேயும் நாங்கள் பராபரனுக்குக் கிறிஸ்
௰௬ துவின் சுகந்தமாய் இருக்கிறோமே.—[6]கெட்
டுப்போகிறவர்களுக்குள்ளே மரணத்திற்கு ஏது
வான மரணவாசனையாகவும், இரட்சிக்கப்படு
கிறவர்களுக்குள்ளே சீவனுக்கு ஏதுவான சீவ
வாசனையாகவுமே இருக்கிறோம்; [7]இவைகளைப்
(போதிக்கிறதற்கு) யார் தகுதியாயிருக்கிறார்
௰௭ கள்.—அநேகர் செய்கிறதுபோல [8]நாங்கள் பரா
பரனுடைய வசனத்தைக் கலப்பாய்ப் * பேசா
மல், [9]துப்புரவாகவும் பராபரனாலே பெற்றதாக
வும் பராபரனுக்குமுன்பாகவும் கிறிஸ்துவைக்
குறித்துப் † பேசுகிறோம்.

## ௩. அதிகாரம்.

*௧ கள்ளப்போதகர்கள் தன்பேரில் வீண்பெருமை சுமத்தாதபடிக்குக் கொரிந்தியர் விசுவாசமும், நற்கிரியையுமே தன் ஊழியத்துக்குத் திருஷ்டாந்தமென்றும், ௬. பழைய உடம்படிக்கையின் ஊழியக்காரருக்கும் புது உடம்படிக்கையின் ஊழியக்காரருக்கும் வித்தியாசத்தைக் காண்பித்து, ௰௨. குற்றஞ்சாற்றுகிற நியாயப்பிரமாணத்தைப்பார்க்கிலும் சீவனையும், விடுதலையையும் கொடுக்கிற சுவிசேஷம் மேன்மையுள்ளதுபோலத் தன் ஊழியம் பழைய உடம்படிக்கையின் ஊழியத்தைப்பார்க்கிலும் மேன்மையுள்ளதென்றும் சொன்னது.*

௧ [10]எங்களை நாங்களே மறுபடியும் மெச்சிக்கொள்
ளத் தொடங்குகிறோமா? அல்லது சிலருக்கு
வேண்டியதாயிருக்கிறதுபோல, [11]உங்களுக்கு
உபசார நிருபங்களை அனுப்பவும், அல்லது உங்
களிடத்தில் உபசாரநிருபங்களை வாங்கவும், எங்
௨ களுக்கு வேண்டுமோ?—[12]நீங்களே எங்களுக்கு
அப்படிப்பட்ட நிருபமாயிருக்கிறீர்கள்; அது
எங்கள் இருதயங்களில் எழுதப்பட்டிருக்கிறது;
மேலும் அது சகல மனிதராலும் அறிந்து வாசிக்
௩ கப்பட்டுவருகின்றது.—நீங்களே [13]எங்கள் ஊழி
யத்தில் உண்டான கிறிஸ்துவினுடைய நிருப
மாக வெளியரங்கமாக்கப்பட்டவர்கள்; அது
மையினாலல்ல, சீவனுள்ள பராபரனுடைய ஆவி
யினாலே [14]கற்பலகைகளில் அல்ல, [15]மாம்ச
மான இருதயங்களாகிய பலகைகளிலே எழுதப்
பட்டிருக்கின்றது.
இப்படிப்பட்ட நம்பிக்கையை நாங்கள் பரா ௪
பரனுக்குமுன்பாகக் கிறிஸ்துவின் மூலமாகக்
கொண்டிருக்கிறோம்.— ஒன்றை யோசிக்கிற ௫
தற்கு நாங்கள் எங்களாலே [16]திராணியுள்ளவர்க
ளாக அல்ல, [17]எங்களுடைய திராணி பராபர
னால் உண்டாயிருக்கின்றது.— நாங்கள் [18]புது ௬
உடம்படிக்கையின் ஊழியக்காரராயிருக்கும்
படி [19]அவரே எங்களுக்குத் திராணியைக் கொ
டுத்தார்; அந்த உடம்படிக்கை [20]எழுத்திற்குரிய
தல்ல, ஆவிக்குரிய உடம்படிக்கையாயிருக்கின்
றது. [21]எழுத்திற்குரியது கொலைசெய்கின்றது;
[22]ஆவிக்குரியது உயிர்ப்பிக்கின்றதே.‡—[23]கற்க ௭
ளில் எழுத்துக்களால் பதிந்திருந்த [24]மரணத்
திற்கு ஏதுவான ஊழியத்தை மோசே செய்த
பொழுது, அவனுடைய முகத்திலே மகிமைப்
பிரகாசம் உண்டானதால், [25]இஸ்ரவேல் சந்ததி
யார் அவனுடைய முகத்தை நோக்கிப் பார்க்க
மாட்டாமல் இருந்தார்களே; ஒழிந்துபோன மகி
மையையுடைய அந்த ஊழியம் அப்படிப்பட்ட
மகிமையுள்ளதாயிருக்க,—ஆவிக்கேற்ற [26]உடம் ௮
படிக்கையின் ஊழியம் மிகவும் அதிகமாய் மகி
மையுள்ளதாய் இருக்குமல்லவா?— ஆக்கினைத் ௯
தீர்ப்பைக் கொடுத்த ஊழியம் மகிமையுள்ளதா
யிருக்க, [27]நீதியைக் கொடுக்கிற ஊழியம் மிக
வும் அதிகமான மகிமையாய் இருக்கும் அல்
லவா?— இதின்பொருட்டாக மகிமைப்பட்டி ௰
ருந்த அந்த ஊழியம் இந்த ஊழியத்திற்கு உண்
டாயிருக்கிற அதிக மகிமைக்குமுன்பாக மகி
மைப்பட்டதல்ல.—அன்றியும் ஒழிந்துபோனது ௰௧
மகிமைகொண்டிருப்பதால், நிலைநிற்பது மிக
வும் அதிகமாய் மகிமையுள்ளதாயிருக்குமே.
ஆனதால் இப்படிப்பட்ட நம்பிக்கையை ௰௨
உடையவர்களாய், [28]நாங்கள் மிகுந்த தயிரியத்
தோடே § நடக்கிறோம்.—அன்றியும் [29]ஒழிந்து ௰௩
போகிறதின் முடிவை இஸ்ரவேல் சந்ததியார்
நோக்கிப் பாராதபடிக்கு, [30]மோசே தன் முகத்
தின்மேல் முக்காடுபோட்டதுபோல, நாங்கள்
போடுகிறதில்லை.—[31]அவர்களுடைய புத்தி கடி ௰௪
னமாயிருந்தது; இந்நாள்வரைக்கும் பழைய ஏற்
பாட்டின் புத்தகம் வாசிக்கப்படுகையில் அந்த
முக்காடு அவர்களிடத்தில் இருக்கின்றது.—
அந்தப்பழைய உடம்படிக்கை கிறிஸ்துவினாலே ௰௫

1 அப். ௰௬.௮: ௨௰.௬.—2 ௧ கொரி. ௰௬. ௯.—3 ௨ கொரி. ௭. ௫, ௬.
4 ௧ கொரி. ௧. ௰௮.—5 ௨ கொரி. ௪. ௩.—6 லூக். ௨. ௩௪. யோவா. ௯. ௩௯. ௧ பே. ௨. ௭, ௮.
7 ௧ கொரி. ௰௫. ௰. ௨ கொரி. ௩. ௫, ௬.—8 ௨ கொரி. ௪. ௨: ௰௧. ௰௯. ௨ பே. ௨. ௩.—9 ௨ கொரி. ௧. ௰௨: ௪. ௨.—10 ௨ கொரி. ௫. ௰௨: ௰. ௮, ௰௨: ௰௨. ௰௧.—11 அப். ௰௮. ௨௭.—12 ௧ கொரி. ௯. ௨.
13 ௧ கொரி. ௩. ௫.—14 ௨ மோ. ௨௪. ௰௨: ௩௪. ௧.—15 சங். ௪௰. ௮. எரே. ௩௧. ௩௩. எசே. ௰௧. ௰௯: ௩௬. ௨௬. எபி. ௮. ௰.—16 யோவா. ௰௫. ௫. ௨ கொரி. ௨. ௰௬.
17 ௧ கொரி. ௰௫. ௰. பிலி. ௨. ௰௩.
18 எரே. ௩௧. ௩௧. மத். ௨௬. ௨௮. எபி. ௮. ௬, ௮.—19 ௧ கொரி. ௩. ௫: ௰௫. ௰. ௨ கொரி. ௫. ௰௮. எபே. ௩. ௭. கொலோ. ௧. ௨௫, ௨௩. ௧ தீமோ. ௧. ௰௧, ௰௨. ௨ தீமோ. ௧. ௰௧.
20 ௨ ரோ. ௨. ௨௭, ௨௯: ௭. ௬.
21 ௨ ரோ. ௩. ௨௰: ௪. ௰௫: ௭. ௯, ௰, ௰௧. கலா. ௩. ௰.—22 யோவா. ௬. ௬௩. ௨ ரோ. ௮. ௨.—23 ௨ மோ. ௩௪. ௧, ௨௮. ௫ மோ. ௰. ௧. ௫.
24 ௨ ரோ. ௭. ௰.—25 ௨ மோ. ௩௪. ௨௯, ௩௰, ௩௫.—26 கலா. ௩. ௫.
27 ௨ ரோ. ௧. ௰௭: ௩. ௨௧.
28 ௨ கொரி. ௭. ௪. எபே. ௩. ௰௨.
29 ௨ ரோ. ௰. ௪. கலா. ௩. ௨௩.
30 ௨ மோ. ௩௪. ௩௩, ௩௫.—31 ஏசா. ௬. ௰. மத். ௰௩. ௰௧, ௰௪. யோவா. ௰௨. ௪௰. அப். ௨௮. ௨௬. ௨ ரோ. ௰௧. ௭, ௮, ௨௫. ௨ கொரி. ௪. ௪.

* அல்லது வஞ்சனையாய்.—† அல்லது கிறிஸ்துவுக்குள்ளாகி.—‡ அல்லது உயிரைக்கொடுக்கின்றது.—§ அல்லது தெளிவோடே.

நீக்கப்பட்டதென்று அவர்களுக்கு வெளிப்படுத்
தப்பட்டிருக்கிறதில்லை; ஆனதால் மோசேயின்
ஆகமங்கள் வாசிக்கப்படும்பொழுது, இந்நாள்வ
ரைக்கும் முக்காடு அவர்கள் இருதயத்தின்மேலே
௰௬ கிடக்கின்றது.-[1]அவர்கள் கர்த்தரிடத்தில் மனம்
திருப்பும்பொழுது, [2]அந்த முக்காடு எடுக்கப்
௰எ படும்.-[3]கர்த்தரே அந்த ஆவியாயிருக்கிறார்; கர்த்
தருடைய ஆவி எங்கேயோ அங்கே விடுதலை
௰அ யும் இருக்கின்றது.—ஆதலால் நாம் எல்லாரும்
திறந்தமுகமாய்க் [4]கர்த்தருடைய மகிமையைக்
[5]கண்ணாடியிலே கண்டாற்போலக் கண்டு, ஆவி
யாயிருக்கிற கர்த்தரால்* அந்தச் சாயலாகத்தா
னே மகிமையின்மேல் மகிமை அடைந்து [6]மறு
ரூபப்படுகிறோம்.

## ௪. அதிகாரம்.

க. தான் இளைப்படையாமல் உத்தமமும், உண்மையுமுள்ள சாக்ஷியோடே சுவிசேஷத்தைப் பிரசங்கித்ததையும், எ. அதினாலே தான் அடைந்த வருத்தங்களும், துன்பங்களும் பராபரனுடைய வல்லமைக்குப் புகழாயும், ௰உ. திருச்சபைக்குப் பிரயோசனமாயும், ௰௬. தனக்குத்தானே நித்தியமகிமைக்கு ஏதுவாயும் இருந்ததென்பதையும் சொல்லியது.

க [7]இப்படிப்பட்ட ஊழியம் எங்களுக்கு [8]இரக்க
மாய் உண்டாயிருக்கிறபடியால், நாங்கள் இளைப்
உ படையாமல்,—அவலட்சணமான† அந்தரங்க
காரியங்களைத் தள்ளிப்போட்டு, தந்திரமாய் நட
வாமலும், [9]பராபரனுடைய வசனத்தைப் புரட்
டாமலும், [10]சத்தியத்தையே வெளிப்படுத்துகிற
தினாலே பராபரனுக்குமுன்பாக எல்லா மனித
ருடைய மனதுக்கும் எங்களை (நிசஸ்தரென்று)
[11]ஒப்புவிக்கிறோம்.
௩ அப்படியும் நாங்கள் பிரசங்கிக்கிற சுவிசே
ஷம் மறைபொருளாயிருந்தால், [12]தங்களைக் கெ
டுக்கிறவர்களுக்குள்ளே மாத்திரம் அது மறை
௪ பொருளாயிருக்கும்.-அவிசுவாசிகளாகிய அவர்
களுக்குப் [13]பராபரனுடைய சாயலாகிய [14]கிறிஸ்
துவின் மகிமையான சுவிசேஷத்தின் ஒளி பிர
காசமாயிராதபடிக்கு [15]இவ்வுலகத்தின் தலைவன்
[16]அவர்களுடைய புத்தியைக் குருடாக்கினான்.-
ரு [17]நாங்கள் (எங்களைக் கர்த்தரென்று) பிரசங்கியா
மல், கிறிஸ்து இயேசுவையே கர்த்தரென்றும்,
[18]எங்களை இயேசுவுக்காக உங்கள் ஊழியக்காரர்
௬ என்றும் பிரசங்கிக்கிறோம்.—[19]இருளிலிருந்து
ஒளியைப் பிரகாசிக்கச் சொன்ன பராபரன்
இயேசுக்கிறிஸ்துவினிடத்தில் உள்ள தமது மகி
மையை அறிகிற அறிவாகிய [20]ஒளியை (உங்
களுக்கு) தோன்றப்பண்ணும்பொருட்டாக,
[21]எங்கள் இருதயங்களிலே பிரகாசித்தார்.‡
இப்படிப்பட்ட மகிமையான வல்லமை எங் எ
களால் அல்ல, [22]பராபரனால் உண்டாயிருக்கின்
றதென்று தோன்றும்படிக்கு, [23]இந்தப் பொக்
கிஷத்தை மண்பாண்டங்களில் பெற்றிருக்கி
றோம்.—[24]நாங்கள் எப்பக்கத்திலேயும் நெருக்கப் அ
பட்டும், ஒடுங்கிப்போகிறதில்லை; கலக்கமடைந்
தும் திடனற்றவர்கள்§ ஆகிறதில்லை.-தொடரப் ௯
பட்டும் கைவிடப்படுகிறதில்லை; [25]கீழே தள்ளப்
பட்டும் கெட்டுப்போகிறதில்லை.—[26]இயேசுவி ௰
னுடைய சீவனும் எங்கள் சரீரத்திலே வெளிய
ரங்கமாகும்படிக்கு, கர்த்தராகிய இயேசுவின்
மரணத்தை [27]எப்பொழுதும் எங்கள் சரீரத்தில்
சுமந்து திரிகிறோம்.—சாவுக்கினமான எங்கள் ௰க
சரீரத்திலே இயேசுவினுடைய சீவனும் வெளிய
ரங்கமாகும்படிக்கு, உயிரோடிருக்கிற [28]நாங்கள்
எப்பொழுதும் இயேசுவின் நிமித்தமாக மரணத்
திற்கு ஒப்புக்கொடுக்கப்படுகிறோம்.
[29]இப்படி மரணமானது எங்களிடத்திலும் சீவ ௰உ
னானது உங்களிடத்திலும் கிரியைசெய்கின்றது.-
[30]நான் விசுவாசித்திருக்கிறபடியால் பேசிக்கொ ௰௩
ள்ளுகிறேன் என்று எழுதியிருக்கிறபடி. [31]விசு
வாசஆவியை உடையவர்களாய்,— நாங்களும் ௰௪
கர்த்தராகிய இயேசுவை [32]எழுப்பினவர் எங்க
ளையும் இயேசுவைக்கொண்டு எழுப்பி, உங்களு
டனேகூடத் தமக்குமுன்பாக நிறுத்துவாரென்
று அறிந்து விசுவாசித்துப் பேசிக்கொள்ளுகி
றோம்.-[33]திரளான கிருபை அநேகருடைய ஸ்தோ ௰ரு
த்திரத்தினாலே பராபரனுடைய மகிமை விளங்
குதற்கு ஏதுவாகப்பெருகும்படிக்கு, [34]இவையெ
ல்லாம் உங்கள் (நன்மைக்காக) நடக்கின்றன.
ஆனபடியினாலே நாங்கள் இளைப்படைகிற ௰௬
தில்லை; மேலும் எங்கள் புறம்பான மனிதத்துவம்
அழிகையிலும் [35]உள்ளான மனிதத்துவம் நாள்
தோறும் புதிதாக்கப்படுகின்றது.—மேலும் அதி ௰எ
சீக்கிரமாய் நீங்குவதுமாய் [36]இலகுவுமாயிருக்கிற
நம்முடைய உபத்திரவம் மிகவும் மிகுதியான
நித்திய கனமகிமையை நமக்கு உண்டாக்குகின்
றது.—[37]காணப்படுகிறவைகளை அல்ல, காணப் ௰அ
படாதவைகளை நோக்கியிருக்கிற நமக்கே அப்
படி உண்டாக்குகின்றது; காணப்படுகிறவை
கள் அநித்தியமானவைகள்; காணப்படாதவைக
ளே நித்தியமானவைகள்.

1 உ மோ. ௩௪. ௩௪. உ ரோ. ௰௧. உ௩, உ௬.—2 ஏசா. உ௫. எ.-3 ௬. ௨௪ க கொரி. ௰௫. ௪௫.-4 உ கொரி. ௪. ௪, ௬. க தீமோ. ௩. ௰௩.
5 க கொரி. ௰௩. ௰உ.—6 உ ரோ அ. உ௬. க கொரி. ௰௫. ௪௯. கொலோ. ௩. ௰.—7 உ கொரி. ௩. ௬.
8 க கொரி. எ. உ௫. க தீமோ. க. ௰௩.
9 உ கொரி. உ. ௰எ. க தெச. உ. ௩, ௫.
10 உ கொரி. ௫. ௪, எ: எ. ௰௪.
11 உ கொரி. ௫. ௰௧.—12 க கொரி. க. ௰அ. உ கொரி. உ. ௰௫. உ தெச. உ. ௰.—13 யோவா. க. ௰அ: ௰உ ௪௫: ௰௪. ௯. பிலி. உ. ௬. கொலோ. க. ௰௫. எபி. க. ௩.
14 உ கொரி. ௩ அ, ௯, ௰௩, ௰அ. ௬. ௨௪.
15 யோவா. ௰உ. ௩௧: ௰௪. ௩௰: ௰௬. ௰௧. எபே. ௬. ௰உ.—16 ஏசா. ௬. ௰. யோவா. ௰உ. ௪௰. உ கொரி. ௩. ௰௪.
17 க கொரி. க. ௰௩, உ௩: ௰ ௩௩.
18 க கொரி. ௯. ௰௯. உ கொரி ௩. உ௪.-19 க மோ. ௩. ௩.-20 ௪. ௨௪.
க பே. உ. ௯.—21 உ பே. க. ௰௯.
22 க கொரி. உ. ௫. உ கொரி. ௰உ. ௯.
23 உ கொரி. ௫. ௩.—24 உ கொரி. எ. ௫.-25 சங். ௩எ. உ௪.—26 உ ரோ. அ. ௰எ. உ தீமோ. உ. ௰௩, ௰உ. க பே. ௪. ௰௩.—27 க கொரி. ௰௫. ௩௩. உ கொரி. ௩. ௫, ௯. கலா. ௬. ௰எ. பிலி. ௩. ௰.-28 சங். ௪௪. உ௨. உ ரோ. அ. ௩௬. க கொரி ௰௫. ௩௩. ௪௯ உ கொரி. ௩. அ, ௯.
29 உ கொரி. ௰௩. ௯.—30 சங். ௱௰௬. ௰.
31 உ ரோ. க ௰உ. உ பே. க க.
32 உ ரோ அ. ௰௧. க. கொரி ௬ ௰௪.
33 உ கொரி. ௩. ௬: அ ௰௯: ௯ ௰௩, ௰உ.-34 க கொரி. ௩. உ௩. உ கொரி ௩. ௩. கொலோ. ௩. உ௪. உ தீமோ. உ. ௰.—35 உ ரோ. எ. உ௨. எபே ௩. ௰௬. கொலோ. ௩. ௰ க பே ௩. ௪.
36 மத். ௫. ௰உ. உ ரோ. அ. ௰அ. க பே. க. ௬: ௫. ௰.—37 உ ரோ. அ உ௪. உ கொரி. ௫. எ. எபி. ௰௩. க

* அல்லது கர்த்தரின் ஆவியினால்.—† கிரேக்கு, இலச்சையான; உ ரோ. ௩. ௰௩: ௬. உ௩.—‡ கிரேக்கு, பிரகாசித்தவராய் இருக்கிறார்.
§ அல்லது நம்பிக்கையற்றவர்கள்.

## ௫. அதிகாரம்.

௧. தான் நித்தியமகிமையின் நம்பிக்கையை உடையவனாக, ௯. அந்த மகிமையையும் பொதுவான நியாயத்தீர்ப்பையும் அடைய நன்மனச்சாட்சியைக் காத்துக்கொண்டு, ௰௨. அதினால் மேன்மைபாராட்டும்பொருட்டல்ல; ௰௪. கிறிஸ்துவினிடத்தில் ஜீவனைப் பெற்ற தான் கிறிஸ்துவின் மகிமைக்குப் புதுச் சிருஷ்டியாய்ச் ஜீவனம்பண்ணவேண்டியதெனறும், ௰௮. எல்லாரும் கிறிஸ்துவினால் பராபரனோடு ஒப்புரவாகும்படி ஒப்புரவாக்கும் ஊழியத்தை அடைந்தானென்றும் சொல்லியது.

௧ அது எப்படியென்றால், [1]பூமிக்குரிய கூடாரம்
போன்ற நம்முடைய வீடு இடிந்துபோகும்பொ
ழுது, பரமண்டலங்களிலே கையால் செய்யப்
படாமல், தேவனால் உண்டாக்கப்பட்ட நித்தி
யமான வீடாகிய வாசஸ்தலம் நமக்கு உண்
௨ டென்று அறிந்திருக்கிறோம்.—[2]நாம் வீடில்லாத
௩ வர்கள் அல்ல.-தரிக்கப்பட்டவர்களாய் இருக்க,
பரமண்டலத்திலுள்ள நமது வாசஸ்தலத்தை
நாம் தரித்துக்கொள்ள மிகவும் விரும்புகிறவர்க
ளாய், [3]இந்த வீட்டிலே தவித்திருக்கிறோம்.—
௪ இந்தக் கூடாரத்தில் இருக்கையில், நாம் பாரம்
சுமந்து தவிக்கிறோம்; ஆனதால் நாங்கள் (இ
தைப்) போக்க விரும்பாமல் ஜீவனாலே மரணம்
விழுங்கப்படத்தக்கதாக, (உடனே) [4]அதைத்
௫ தரித்துக்கொள்ள விரும்புகிறோம்.–[5]இப்படியே
இருக்கும்படி பராபரனே எங்களை எத்தனம்
பண்ணி, [6]ஆவியென்னும் அச்சாரத்தையும் எங்க
௬ ளுக்குத் தந்தார்.—ஆகையினாலே நாங்கள் இந்தத்
தேசத்திலே குடியிருக்கையில், [7]தரிசித்து நட
௭ வாமல் விசுவாசித்து நடக்கிறதால்,-கர்த்தாவைச்
சேராத வழிப்போக்கராயிருக்கிறோம் என்று அ
றிந்தும், (எப்பொழுதும்) தயிரியமாய் இருக்கி
௮ றோம்.–நாங்கள் தயிரியமாகவே இருந்து, [8]இந்தத்
தேகத்தைவிட்டுப் போகவும் கர்த்தரிடத்தில்
குடியிருக்கவும் அதிகமாய் விரும்புகிறோம்.—
௯ அதினிமித்தமே நாங்கள் (அவரிடத்தில்) குடி
யிருந்தாலும், (அவரைவிட்டு) இங்கே சஞ்சரித்
தாலும், அவருக்குப் பிரியமானவர்களாயிருக்க
௰ முக்கியமாய் நாடுகிறோம்.*—[9]நாம் எல்லாரும்
அவனவன் தான் நடப்பித்த நன்மைக்காகிலும்
தீமைக்காகிலும் தக்கவைகளைச் சரீரத்திலே அ
டையும்படிக்கு, [10]கிறிஸ்துவின் நியாயாசனத்
திற்கு முன்பாக வெளிப்படவேண்டுமே.

௰௧ ஆகையால் [11]கர்த்தருக்குப் பயப்படத்தக்க
தென்று நாங்கள் அறிந்து, மனிதருக்குப் போ
திக்கிறோம்; [12]இப்படிப் பராபரனுக்குமுன்பாக
வெளியரங்கமாய் இருக்கிறோம்; உங்கள் மனதி
லேயும் (அப்படியே) வெளியரங்கமாய் இருக்கி
௰௨ றோம் என்று நம்புகிறேன்.—[13]இதினாலே நாங்
கள் உங்களுக்குமுன்பாக எங்களை மறுபடியும்
மெச்சிக்கொள்ளாமல், இருதயத்தால் அல்ல
[14]வெளிவேஷத்தால்† மேன்மைபாராட்டுகிறவர்
களுக்கு எதிரே நீங்கள் எங்களைக்குறித்து மேன்
மைபாராட்டும்படிக்கு ஏது கொடுக்கிறோம்.—
(அதிலே) நாங்கள் பித்தங்கொண்டவர்கள் என் ௰௩
றால் [15]பராபரனுக்காகவும் தெளிந்த புத்தியுள்
ளவர்கள் என்றால் உங்களுக்காகவும் அப்படி இ
ருக்கும்.—அதற்காகக் கிறிஸ்துவினுடைய அன்பு ௰௪
எங்களை நெருக்கி ஏவுகின்றது; எப்படி நிதானிக்
கிறோமென்றால், [16]எல்லாருக்காகவும் ஒருவரே
மரித்திருக்க எல்லாரும் மரித்தார்கள்.—மேலும் ௰௫
[17]பிழைத்திருக்கிறவர்கள் இனித் தங்களுக்
கென்று பிழையாமல், தங்களுக்காக மரித்து
எழுந்தவருக்கென்று பிழைக்கும்படிக்கு, அவர்
எல்லாருக்காகவும் மரித்தாரே என்று நிதானிக்
கிறோம்.—ஆகையால் [18]இதுமுதற்கொண்டு நாங் ௰௬
கள் ஒருவனையும் மாம்சத்தின்படி அறியோம்;
முன்னே நாங்கள் கிறிஸ்துவையும் மாம்சத்தின்
படி அறிந்தும், [19]இப்பொழுதும் இனிமேலும்
அவரை அப்படியாக அறியோம்.–[20]கிறிஸ்துவுக் ௰௭
குள் இருக்கிறவன் [21]புதுச் சிருஷ்டியாயிருக்கி
றானே; ‡[22]பழையவைகள் ஒழிந்துபோயின; சக
லமும் புதிதாயிற்றே.–இவையெல்லாம் பராபர ௰௮
னாலே இருக்கின்றன; [23]அவர் இயேசுக்கிறிஸ்து
வைக்கொண்டு நம்மைத் தம்மோடே ஒப்புர
வாக்கி, ஒப்புரவாக்குதலின் ஊழியத்தை எங்க
ளுக்குக் கொடுத்தார்.—என்னவெனில் [24]கிறிஸ் ௰௯
துவினாலே பராபரன் உலகத்தாருடைய பாவங்
களை அவர்கள்மேலே சுமத்தாமல் அவர்களைத்
தமக்கு ஒப்புரவாக்கிக்கொண்டு, ஒப்புரவாக்குத
லாகிய உபதேசத்தை எங்களிடத்தில் ஏற்படுத்
தினார். §

ஆனபடியினாலே [25]நாங்கள் கிறிஸ்துவுக்காகத் ௨௰
தானாதிபதிகளாயிருக்கிறோம்; [26]பராபரனே எங்
களாலே புத்திசொல்லுகிறவராயிருக்க, நாங்கள்
கிறிஸ்துவுக்காக (மனிதர்களை) நோக்கி,— பா ௨௰௧
வத்தை அறியாதவராலே நாம் பராபரனுக்கு
முன்பாக [27]நீதிமான்களாக்கப்படும்படிக்கு, பரா
பரன் [28]அவரை நமக்காகப் பாவமாக்கினார்;
ஆகையால் பராபரனோடே ஒப்புரவாகுங்கள்
என்று வேண்டிக்கொள்ளுகிறோம்.

## ௬. அதிகாரம்.

௧. தன் போதகத்தினாலும், ௩. நன்னடக்கையினாலும், ௪. சுவிசேஷத்தின் நிமித்தம் பொறுமையோடே சகிக்கும் எல்லாத் துன்பத்தினாலும், நிந்தையினாலும் தன்னைக் கிறிஸ்துவின் உத்தம ஊழியக்காரனென்று நிரூபி

1 பேது ௪ ௰௬. ௨ கொரி. ௪. ௭. ௨௧.—9 உரோ. ௰௪. கலா. ௬ ௨. பே. ௧. ௰௩,௰௪.—2 வெளி. ௩. ௭. எபே. ௬. ௮. கொலோ ௩ ௨௪, ௰௮: ௭௬. ௰௯.—3 உரோ. ௮. ௨௩. ௨௫. வெளி. ௨௨. ௰௨.–10 மத். 4 ௧ கொரி. ௰௫. ௫௩, ௫௪.–5 ஏசா. ௨௫. ௩௩, ௩௨. உரோ. ௰௪. ௰. ௨௬. ௨௩. எபே. ௨. ௰.—6 உரோ. 11 யோபு. ௩௧. ௨௩. எபி ௰. ௩௧ யூதா. ௮. ௨௩. ௨ கொரி. ௧. ௨௨. எபே. ௨௩.—12 ௨ கொரி. ௪. ௨. ௧. ௰௪: ௪. ௩௰.–7 உரோ ௮. ௨௪, 13 ௨ கொரி. ௩. ௧.—14 ௨ கொரி. ௧. ௨௫. ௧ கொரி. ௰௩. ௰௨. ௨ கொரி. ௰௪.–15 ௨ கொரி. ௰௧ ௧, ௰௬. ௰௭: ௪. ௰௮. எபி. ௰௧. ௧.–8 பிலி ௧. ௰௨. ௬, ௰௧.—16 உரோ. ௫. ௰௫.

17 உரோ ௬. ௰௧, ௰௨: ௰௪. ௭, ௮. ௧ கொரி. ௬. ௰௯. கலா. ௨. ௨௰ ௧ தெச. ௫. ௰. ௧ பே. ௪. ௨. 18 மத். ௰௨. ௫௰. யோவா. ௰௫. ௰௪. கலா. ௫. ௬. பிலி. ௩. ௭, ௮. கொலோ. ௩. ௰௧.—19 யோவா. ௬. ௬௩. 20 உரோ ௮ ௯: ௰௬ ௭. கலா. ௬. ௰௫. 21 கலா. ௫. ௬: ௬. ௰௫ — 22 ஏசா. ௪௩. ௰௯, ௬௫. ௰௭. ௨௰: ௨௫. ௰௪. எபே. ௨. ௰௫.

வெளி. ௨௧. ௫.— 23 உரோ ௫. ௰. எபே ௨. ௰௬. கொலோ ௧. ௨௰. ௧ யோ. ௨. ௨: ௪. ௰.— 24 உரோ. ௩ ௨௪, ௨௫.–25 யோபு. ௩௩. ௨௩. மல்கி ௨. ௭. ௨ கொரி. ௩. ௬. எபே. ௬. ௨௰.—26 ௨ கொரி. ௬. ௧. 27 உரோ ௧. ௰௭: ௫. ௰௯: ௰. ௩. 28 ஏசா. ௫௩. ௬, ௯. ௰௨. கலா. ௩. ௰௩ ௧ பே. ௨. ௨௨, ௨௪. ௧ யோ ௩. ௫.

* கிரேக்கு, நாண்டிக்கிறோம்.—† கிரேக்கு, முகத்தால்.—‡ அப்படியே இருக்கக்கடவன்.—§ கிரேக்கு, வைத்தார்.

டாக்ஷப்படுத்தி, ௰. அதைக்குறித்துத் தாராளமாய்ப் பட்சமுள்ள தன் இருதயத்தை அவர்களுக்கு விரித்துக்காண்பித்ததுபோல, ௰௩. அவர்களும் பட்சத்தைப் பாராட்டும்படி விரும்பி, ௰ச. அவர்கள் ஜீவனுள்ள பராபரனுடைய தேவாலயங்களாயிருக்க அஞ்ஞானிகளையும், அவர்கள் தீட்டுகளையும் விலகியிருக்கச் சொல்லியது.

க மேலும் (எனக்குத்) தகுதியான காலத்திலே
[1]நான் உனக்குச் செவிகொடுத்து, இரட்சண்
ணிய நாளிலே உனக்கு உதவிசெய்தேன் என்று
கர்த்தர் சொல்லியிருக்கிறாரே, பாருங்கள், இப்
பொழுதே மிகவும் தகுதியான காலம், இப்பொ
உ ழுதே இரட்சண்ணியநாள். — ஆனதால் [2]எங்க
ளுடனேகூட வேலைசெய்கிறவர்களே, [3]நீங்கள்
பராபரனுடைய கிருபையை வீணாய்ப் பெறாத
௩ படிக்குப் [4]புத்திசொல்லுகிறேன். — நம்முடைய
ஊழியத்தைக் குற்றப்படுத்தத்தக்கதாக [5]நாம் ஒரு
வருக்கும் முகாந்தரத்தைக் கொடாமல், [6]எல்லா
விதத்திலேயும் நம்மைப் பராபரனுடைய ஊழி
ச யக்காரராக ஒப்புவிக்கக் * கடவோம். — உபத்
திரவங்கள், இடுக்கண்கள், நெருக்கங்கள், —
ரு [7]அடிகள், காவல்கள், கலகங்கள், † பிரயாசங்
கள், தூக்கமில்லாமை, உபவாசங்களுள்ள கால
ங்களில் மிகுந்த பொறுமையினாலும், கற்பினா
சு லும், அறிவினாலும், — நீடிய சாந்தத்தினாலும்,
தயவினாலும், பரிசுத்த மனதினாலும், வஞ்சகமில்
எ லாத அன்பினாலும், -[8]சத்தியமுள்ள வசனத்தினா
லும், [9]திவ்விய பலத்தினாலும், [10]நீதியாகிய வலது
அ இடதுபக்கத்து ஆயுதங்களினாலும், — கனத்தை
யும் கனஈனத்தையும் பெறுங்காலத்திலேயும்,
துர்க்கீர்த்தியையும் நற்கீர்த்தியையும் பெறுங்கா
லத்திலேயும், எத்தர் என்னப்பட்டாலும் நிசஸ்த
கூ ராகவும், — அறியப்படாதவர்கள் என்னப்பட்
டாலும் [11]நன்றாய் அறியப்பட்டவர்களாகவும்,
[12]மரித்தவர்கள் என்னப்பட்டாலும் உயிரோடி
ருக்கிறவர்களாகவும், [13]தண்டிக்கப்பட்டவர்க
ளானாலும் கொலைசெய்யப்பட்டிராதவர்களாக
௰ வும், — துக்கப்படுகிறவர்கள் என்னப்பட்டாலும்
எப்பொழுதும் சந்தோஷப்படுகிறவர்களாகவும்,
தரித்திரர் என்னப்பட்டாலும் அநேகரை ஐசுவ
ரியவான்கள் ஆக்குகிறவர்களாகவும், ஒன்றுமில்
லாதவர்கள் என்னப்பட்டாலும் சகலத்தையும்
உடையவர்களாகவும் நம்மை ஒப்புவிக்கக்கட
வோம்.

௰க ஆ கொரிந்தியரே, எங்கள் வாய் உங்கள் பட்ச
மாய்த் திறக்கப்பட்டிருக்கிறது; [14]எங்கள் இரு
௰உ தயம் விஸ்தாரமாக்கப்பட்டிருக்கின்றது — எங்
கள் உள்ளம் உங்களைக்குறித்து நெருக்கப்பட
வில்லை; [15]உங்கள் உள்ளமே எங்களைக்குறித்து
௰௩ நெருக்கப்பட்டிருக்கின்றது. — ஆதலால் மறு
ஈடாக நீங்களும் விஸ்தாரமாகுங்கள் என்று
(என்) [16]பிள்ளைகளைப்போல உங்களிடத்தில்
கேட்டுக்கொள்ளுகிறேன்.
[17]ஒரே நுகத்திலே அவிசுவாசிகளுடனே பூட் ௰ச
டப்படாதிருப்பீர்களாக; என்னத்தினாலெனில்,
[18]நீதிக்கும் அக்கிரமத்துக்கும் என்ன சம்பந்தம்
இருக்கிறது? இருளுக்கும் ஒளிக்கும் ஐக்கம்
என்ன? — கிறிஸ்துவுக்கும் பசாசுக்கும் இசை ௰ரு
வுண்டா? அல்லது அவிசுவாசியுடனே விசுவா
சிக்குப் பங்குண்டா? — விக்கிரகக்கோவில்களுக் ௰சு
கும் பராபரனுடைய ஆலயத்திற்கும் சம்பந்தம்
உண்டா? [19]நான் அவர்களுக்குள்ளே வாசம்
பண்ணி அவர்களுக்குள்ளே நடந்துகொண்டு
அவர்களுடைய தேவனாயிருப்பேன் என்றும்,
அவர்கள் என்னுடைய சனங்களாயிருப்பார்கள்
என்றும் பராபரன் சொன்னபடி [20]நீங்கள் ஜீவ
னுள்ள பராபரனுடைய ஆலயமாயிருக்கிறீர்க
ளே. — [21]ஆனபடியினாலே நீங்கள் அவர்களிடத்தி ௰எ
லிருந்து புறப்பட்டுப் பிரிந்துபோய், அசுத்தமா
னதைத் தொடாதிருங்கள். — அப்பொழுது நான் ௰அ
உங்களை அங்கிகரித்துக்கொண்டு [22]உங்களுக்குப்
பிதாவாயிருப்பேன்; நீங்கள் எனக்குக் குமாரரு
மாய்க் குமாரத்திகளுமாய் இருப்பீர்கள் என்று
சர்வவல்லமையுள்ள பராபரன் சொல்லுகிறார்.

## எ. அதிகாரம்.

க. பரிசுத்தமாய் நடக்கும்படிக்கும், உ. தான் அவர்களுக்குப் பாராட்டின பட்சத்தை அவர்கள் தனக்குப் பாராட்டவும், ௩. தன்னுடைய முந்தின நிருபத்தில் அவர்களுக்குச் சொல்லிய புத்திகளை ஏற்றுக்கொண்டு தேவ சித்தமாய்த் துக்கப்பட்டதைத் தீத்துவினால் கேள்விப்பட்டதற்காகவும், ௰௩. தான் முந்தி அவர்களைக்குறித்துப் பெருமைபாராட்டினதற்கு ஒத்ததாய் அவர்கள் தீத்துவில் அன்புகூர்ந்து அவனுக்குக் கீழ்ப்படிந்ததற்காகவும் தன் உபத்திரவங்களிலும் சந்தோஷப்பட்டானென்று சொல்லியது.

[23]இப்படிப்பட்ட வாக்குத்தத்தங்கள் நமக்கு க
உண்டாயிருக்க, பிரியமானவர்களே, சரீரத்தை
யும் ஆவியையும் அசுசிப்படுத்துகிற யாவற்றிற்
கும் நாம் விலகி, நம்மைச் சுத்திகரித்துக்கொண்
டு, தேவபயத்தோடே முழுவதும் பரிசுத்தவான்
களாகும்படி நடந்துகொள்ளக்கடவோம்.
எங்களை அங்கிகரித்துக்கொள்ளுங்கள்; நாங் உ
கள் ஒருவனுக்கும் அநியாயஞ்செய்யவில்லை;
[24]ஒருவனையும் கெடுக்கவில்லை. — ஒருவனையும் ௩
வஞ்சிக்கவில்லை; உங்களைக் குற்றவாளிகளாக்
கும்பொருட்டாக இப்படி நான் சொல்லுகிற
தில்லை; [25]முன்னே நான் சொன்னபடி (உங்க
ளுடனே) கூடச்சாவவும் கூடப்பிழைக்கவும்
தக்கதாக, எங்கள் இருதயங்களில் இருக்கிறீர்க
ளே. — (ஆனதால்) [26]மிகுந்த தயிரியத்தோடே உங் ச
களுடனே பேசுகிறேன்; [27]உங்களைக்குறித்து

1 ஏசா. சக. அ. — 2 க கொரி. ௩. கூ. ௫. எ. — 11 உ கொரி. ச உ: ௫. 3 எபி ௰உ. ௰௫. — 4 உ கொரி ௫. ௬க: ௰க. க. — 12 க கொரி. ச. கூ. உ௰. - 5 உரோ. ௰ச. ௰௩. க கொரி. உ கொரி. க. கூ: ச. ௰, ௰க. கூ. ௰உ: ௰. கஉ. — 6 க கொரி. ச. க. 13 சங். ௱௰அ. ௰அ - 14 உ கொரி. எ. ௩. 7 உ கொரி. ௰க. உ௩. ஷ. 15 உ கொரி. ௰உ. ௰௫. - 16 க கொரி. 8 உ கொரி. ச. உ: எ. ௰ச. ச ௰ச. — 17 உ மோ எ. உ, ௩. 9 க கொரி. உ. ச. - 10 உ கொரி. ௰. க கொரி. ௫. கூ: எ. ௩கூ. ச. எபே. கூ. ௰க, ௰௩. உ தீமோ. 18 க சாமு. ௫. உ, ௩. க இரா. ௰அ. உக.

க கொரி. ௰. உக. எபே. ௫ எ, ௰க. 19 உ மோ உகூ. ச௫. ௩ மோ. உக. ௰உ. எரே. ௩க. ௩௩: ௩உ. ௩அ. எசே. ௰க. உ௰: ௩௩. உஅ: ௩எ. உக. ஷ சகரி. அ. அ: ௰௩. கூ. 20 க கொரி ௩. ௰௬: ௬. ௰கூ. எபே. உ. உக, உஉ. எபி. ௩. ௬. - 21 ஏசா. ௫உ. ௰க. உ கொரி. எ க. வெளி ௰அ. ச. 22 எரே. ௩க. க, கூ. வெளி உக. எ. 23 உ கொரி. சு. ௰எ, ௰அ. க யோ. ௩. ௩. 24 அப். உ௰. ௩௩. உ கொரி. ௰உ. ௰எ. 25 உ. கொரி. சு. ௰க, ௰உ. 26 உ கொரி. ௩. ௰உ. — 27 க கொரி. க. ச. உ கொரி. க. ௰ச.

* மெச்சு, விளங்கப்பண்ண; உ. கொரி. ச. உ. — † அல்லது அலைவுகள்.

மிகவும் மேன்மைபாராட்டுகிறேன்; [1]ஆறுதலால்
நிறையப்பட்டிருக்கிறேன்; எங்களுக்கு வந்தி
ருக்கிற மிகுந்த உபத்திரவத்திலே பரிபூரண சந்
தோஷப்படுகிறேன்.
௫ எப்படியென்றால், [2]நாங்கள் மக்கேதோனியா
நாட்டிலே வந்தபொழுது, [3]எங்கள் சரீரத்திற்கு
அமைதல் ஒன்றுமில்லாமல் எப்பக்கத்திலேயும்
உபத்திரவப்பட்டோம்; [4]புறம்பே போராட்
டங்களும் உள்ளே பயங்களும் இருந்தன.—
௬ ஆகிலும் [5]தாழ்மையானவர்களுக்கு ஆறுதல்செய்
கிற பராபரன் [6]தீத்து வந்ததினாலே எங்களுக்கு
௭ ஆறுதல்செய்தார்.—அவன் வந்ததினால்மாத்திரம்
அல்ல, உங்கள் வாஞ்சையையும், உங்கள் துக்
கிப்பையும், எனக்காக உங்களுக்குள்ள பத்தி
வைராக்கியத்தையும் அவன் எங்களுக்கு அறி
வித்தபொழுது, தான் உங்களாலே ஆறுதல்
அடைந்ததினாலும் அதிகமாய்ச் சந்தோஷப்பட்
௮ டேன். — ஆனதால் நான் என் நிருபத்தினாலே
உங்களைத் துக்கப்படுத்தியிருந்தும் மனஸ்தாபப்
படமாட்டேன்; அந்த நிருபம் கொஞ்சப்பொ
ழுதாகிலும் உங்களைத் துக்கப்படுத்திற்றென்று
நான் பார்த்து, [7]மனஸ்தாபப்பட்டிருந்தும், இப்
பொழுது நீங்கள் துக்கப்பட்டதினாலே அல்ல,—
௯ நீங்கள் மனம்திருப்புகிறதற்கு ஏதுவாகத் துக்கப்
பட்டதினாலே சந்தோஷப்படுகிறேன்; நீங்கள்
ஒன்றிலும் எங்களால் நஷ்டப்படாதபடிக்கு,
தேவ எத்தனமான* துக்கம் அடைந்தீர்களே.—
௰ [8]தேவ எத்தனமான துக்கம் பின்னே மனஸ்தா
பம் இல்லாமல், இரட்சிப்புக்கு ஏதுவான மனம்
திருப்புதலை உண்டாக்குகின்றது; [9]இலவுகீக
௰௧ துக்கம் மரணத்தை உண்டாக்குகின்றது.—பா
ருங்கள், நீங்கள் (தேவ எத்தனமான) துக்கம்
அடைந்தது, உங்களிடத்தில் எத்தனை சாக்கிர
தையையும், எத்தனை நியாயம்சொல்லுதலையும்,
எத்தனை விசனத்தையும், எத்தனை பயத்தையும்,
எத்தனை வாஞ்சையையும், எத்தனை பத்திவைராக்
கியத்தையும், எத்தனை தண்டனையையும், உண்
டாக்கிற்று? அந்தச் சங்கதியைக்குறித்து நீங்
கள் எவ்விதத்திலேயும் உங்களைச் சுத்தவான்க
௰௨ ளென்று ஒப்புவித்தீர்கள்.—ஆகையினாலே நான்
உங்களுக்கு அப்படி எழுதியிருந்தும், அநியாயத்
தைச் செய்தவன்நிமித்தம் அல்ல, அநியாயம்
செய்யப்பட்டவன்நிமித்தமும் அல்ல, [10]பராபர
னுக்குமுன்பாக உங்களைக்குறித்து எங்களுக்கு
உண்டாயிருக்கிற சாக்கிரதை உங்களிடத்தில்
வெளிப்படுவதின்நிமித்தமாகவே அப்படி எழுதி
யிருந்தேன்.
௰௩ ஆனதால் நீங்கள் ஆறுதல் அடைந்ததினாலே
நாங்களும் ஆறுதல் உள்ளவர்களாய் இருக்கி
றோம்; விசேஷமாகத் தீத்துவினுடைய ஆவி உங்
கள் அனைவராலும் [11]ஆறுதல் அடைந்ததினாலே
அவனுக்கு வந்த சந்தோஷத்தால் அதிகமாய்ச்
சந்தோஷப்பட்டோம்.—இப்படியிருக்க, உங் ௰௪
களுக்குப் புகழ்ச்சியாய் நான் அவனுடனே
சொன்னதைக்குறித்து நான் வெட்கப்படமாட்
டேன்; நாங்கள் சகலத்தையும் உங்களுக்குச்
சத்தியமாய்ச் சொன்னதுபோல, தீத்துவுடனே
நான் உங்களுக்குப் புகழ்ச்சியாய்ச் சொன்னதும்
சத்தியமாக விளங்கிற்றே. — மேலும் அவன் ௰௫
தன்னை நீங்கள் பயத்தோடும் நடுக்கத்தோடும்
ஏற்றுக்கொண்டதையும், [12]நீங்கள் எல்லாரும்
கீழ்ப்படிந்ததையும் நினைத்துக்கொண்டு, தன்
மனதிலே †உங்கள்மேலே அதிக அன்புள்ளவனா
கிறான்.—ஆகையால் [13]நான் எவ்விதத்திலேயும் ௰௬
உங்களைக்குறித்துத் திடனாயிருக்கலாம் என்று
சந்தோஷப்படுகிறேன்.

## ௮. அதிகாரம்.

௧. எருசலேமில் இருந்த எளிய சகோதரர்களுக்குத் தருமம்செய்யும்படி அவர்களை மக்கேதோனியருடைய திருஷ்டாந்தத்தினாலும், ௭. முன் அவர்கள் செய்த உதவியினாலும், ௯. கிறிஸ்துவினுடைய கிருபையினாலும், ௰௪. அவர்களுக்கு உண்டாகும் ஞான நன்மைகளினாலும் அவர்களை ஏவி, ௰௬. அவர்களுடைய தருமத்தைச் சேகரம்பண்ணத் தீத்து முதலானவர்கள் தன்னுடைய கேட்டுக்கொள்ளுதலின்படி மனராசியாய் அவர்களிடத்தில் வந்ததற்காக அவர்களை அங்கிகரிக்கும்படி ஒப்புவித்ததைச் சொல்லியது

பின்னும் சகோதரரே, மக்கேதோனியா தேசத் ௧
துச் சபைகளுக்குப் பராபரன் அளித்த கிருபை
யை உங்களுக்கு அறிவிக்கிறோம்.—என்னவென் ௨
றால் அவர்கள் மிகுந்த உபத்திரவத்தினாலே சோ
திக்கப்படுகையில், [14]கொடிய தரித்திரராயிருந்
தும், தங்கள் பரிபூரணமான சந்தோஷத்தினாலே
மிகுந்த உதாரமாய் ‡(தருமத்தைக்) கொடுத்தார்
கள்.—மேலும் அவர்கள் தங்களால் ஆனமட்டும், ௩
தங்கள் பலத்திற்கு மேலாகவும் கொடுக்கும்ப
டிக்கு, தாங்களே மனதுள்ளவர்களாய் இருந்தார்
கள், அதற்கு நானே சாட்சியாய் இருக்கிறேன்.—
மேலும் அவர்கள் தங்களுக்கு உபகாரத்தையும் ௪
[15]பரிசுத்தவான்களுக்குச் செய்யப்படும் தரும
ஊழியத்தின் பங்கையும் ஏற்றுக்கொள்ளவேண்
டுமென்று எங்களை மிகவும் வேண்டிக்கொண்
டு,—எங்கள் நம்பிக்கைக்கு மேலாகத் தங்களைத் ௫
தாமே முதலாவது கர்த்தருக்கும், பின்பு பரா
பரனுடைய சித்தத்தினாலே எங்களுக்கும் ஒப்
புக்கொடுத்தார்கள்.—ஆனதால் [16]தீத்து தான் முன் ௬
னே தொடங்கின பிரகாரமாக இந்தத் தருமகா
ரியத்தை§ உங்களிடத்திலே முடிக்கவும் வேண்
டுமென்று அவனிடத்தில் கேட்டுக்கொண்
டோம்.

அல்லாமலும் நீங்கள் விசுவாசத்திலேயும்பேச் ௭
சிலேயும் அறிவிலேயும் எல்லாவித சாக்கிரதையி
லேயும் எங்கள்மேல் உள்ள உங்கள் அன்பிலே

1 உ கொரி.௧.௪. பிலி.௨.௰௭. கொலோ. ௧. ௨௪.—2 உ கொரி. ௨. ௧. ௪.—6 உ கொரி.௨. ௰௩.—3 உ கொரி ௪. ௮. 4 உ மோ.௩௨. ௨௫.—5 உ கொரி. 7 உ கொரி.௨.௪.—8 உ சாமு. ௰௨. ௰௩. மத். ௨௬. ௭௫. 9 வாக்.௰௭.௨௨,-10 உ கொரி.௨.௪.

11 உரோ. ௰௫.௩௨.-12 உ கொரி.௨. ௯. ௬. பிலி. ௨.௰௨ —13 உ தெச.௩. ௪. பிலே ௮.௨௧.—14 மாற்.௰௨.. உரோ.௰௫.௨௫,௨௬. ௧ கொரி. ௰௬. ௧, ௩, ௪. உ கொரி. ௯. ௧. 16 ௰௭. ௩௪. உ கொரி ௰௨. ௰௮. ௪௪ —15 அப் ௰௧.௨௯: ௨௪.௰௭.

* அல்லது தேவனுக்கேற்ற.—† கிரேக்கு, நெஞ்சில்; உ கொரி.௬.௰௨.—‡ கிரேக்கு, கபடில்லாமல்; உ கொரி. ௯ ௰௪.—§ அல்லது தயவை; ௪,௰௯,௩௪.

யும் மற்றும் பலவித நன்மைகளிலேயும் [1]பெரு
கியிருக்கிறதுபோல, [2]இந்தத் தருமகாரியத்திலே
யும் பெருகவேண்டுமென்று விரும்புகிறோம்.—
௮ இப்படி நான் [3]கட்டளையாகச் சொல்லாமல்,
மற்றவர்களுடைய சாக்கிரதையின்நிமித்தமும்
உங்கள் அன்பின் உண்மையைச் சோதிக்கும்
பொருட்டாகவும், என்னுடைய யோசனையை
௯ மாத்திரம் சொல்லியிருக்கிறேன்.—நம்முடைய
கர்த்தராகிய இயேசுக்கிறிஸ்துவின் கிருபையை
அறிந்திருக்கிறீர்களே; [4]அவர் ஐசுவரியமுள்ள
வராயிருந்தும், நீங்கள் அவருடைய தரித்திரத்தி
னாலே ஐசுவரியவான்கள் ஆகும்படிக்கு, உங்
௰ கள்நிமித்தமே தரித்திரர் ஆனாரே.—மேலும் (இந்
தத் தருமத்தைச்) செய்கிறதுமாத்திரமல்ல, [5]ஒரு
வருஷத்திற்குமுன்பு (அதை) ஆரம்பம்பண்
ணும்படி தோன்றின விருப்பமும்* உங்களுக்
௰௧ குப் [6]பிரயோசனமாயிருக்கும். — ஆகையால்
செய்கிறதையும் இப்பொழுது நிறைவேற்றுங்
கள்; கொடுக்கவேண்டுமென்றும் ஆசை உண்
டாயிருந்ததுபோல, உங்களுக்கு உண்டானவை
களில் எடுத்து, அதை நிறைவேற்றுதலும் உண்
௰௨ டாவதாக. — [7]ஒருவனுக்கு மன ஆசையாயிருந்
தால், அவன் தனக்கு இல்லாததின்படி அல்ல,
தனக்கு உள்ளதின்படி அங்கிகரிக்கப்படுவா
௰௩ னே.—மற்றவர்களுக்குச் சந்தோஷமும் உங்களு
க்கு உபத்திரவமும் உண்டாயிருக்கும்பொருட்
டாக அல்ல, சமமான நிலைமை இருக்கும்பொ
௰௪ ருட்டாகவே சொல்லுகிறேன். — எப்படியெ
னில் (மற்றொருகாலத்திலே) அவர்களுடைய
பரிபூரணம் உங்கள் வறுமையை நீக்கும்படிக்கு
இக்காலத்திலே உங்கள் பரிபூரணம் அவர்களு
௰௫ டைய வறுமையை நீக்கக்கடவது. — இவ்வித
மாய் [8]மிகுதியாய்ச் சேர்த்தவனுக்கு அதிகம் இ
ருக்கவில்லை என்றும் அற்பமாய்ச் சேர்த்தவனுக்
குக் குறைவு இருக்கவில்லை என்றும் எழுதியிருக்
கிறபடி, சமமான நிலைமை உண்டாயிருக்கும்.
௰௬ அன்றியும் உங்களுக்காக இப்படிச் சாக்கிர
தையாயிருக்கும்படிக்குத் தீத்துவின் இருதயத்தி
லே அருள்கொடுத்த பராபரனுக்குத் தோத்திரம்.-
௰௭ [9]நான் வேண்டிக்கொண்டதை ஏற்றுக்கொண்
டதுமல்லாமல் அவன் அதிக சாக்கிரதையாயி
ருந்து, தன் சுயமனதினாலே உங்களிடத்திற்கு
௰௮ வருகிறான்.—அவனோடேகூட [10]ஒரு சகோத
ரனை அனுப்பியிருக்கிறேன்; அவன் சுவிசேஷ
ஊழியத்திலே எல்லாச் சபைகளினாலும் புகழ்ச்
௰௯ சிபெற்றிருக்கிறவன்.—அதுமாத்திரமல்ல, [11]கர்த்
தருக்கே துதியுண்டாகும்படியாகவும், உங்கள்
மன ஆசை விளங்கும்படியாகவும் எங்கள் ஊழிய
த்தினாலே சேர்க்கப்படுகிற தருமப்பணத்தைக் †
(கொண்டுபோகையில்), எங்களுக்கு வழித்து
ணையாயிருக்கும்படிக்கு [12]அவனே சபைகளால்
தெரிந்து ஏற்படுத்தப்பட்டவனாகவும் இருக்கி
றான்.—எங்கள் ஊழியத்தினாலே சேர்க்கப்படும் ௨௰
மிகுந்த தருமப்பணத்தைக்குறித்து ஒருவனும்
எங்களைக் குற்றப்படுத்தாதபடிக்கு, நாங்கள் எச்
சரிக்கையாயிருந்து,—கர்த்தருக்குமுன்பாகமாத் ௨௧
திரம் அல்ல, மனிதருக்குமுன்பாகவும் [13]நலமா
னவைகளை முன் யோசித்துக்கொண்டு, (இந்தச்
சகோதரன் கூடவரும்படி செய்தேன்).—நம்மு ௨௨
டைய சகோதரனாகிய அவன் அநேகம் காரியங்
களில் சாக்கிரதையுள்ளவன் என்றும், இப்பொ
ழுது உங்கள்மேலுள்ள ‡ மிகுந்த நம்பிக்கையி
னால் மிகவும் அதிக சாக்கிரதை உள்ளவனாயிருக்
கிறான் என்றும் நாங்கள் அடிக்கடி கண்டறிந்து,
அவனை இவர்களோடும்கூட அனுப்பினோம்.—
தீத்தைக்குறித்து (ஒருவன் விசாரித்தால்), அவன் ௨௩
எனக்குக் கூட்டாளியுமாய் உங்களுக்காக என்
உடன்வேலையாளுமாய் இருக்கிறானென்று அ
றியக்கடவன்; எங்கள் சகோதரரைக்குறித்து
(ஒருவன் விசாரித்தால்), அவர்கள் சபைகளால்
[14]அனுப்பப்பட்டவர்களுமாய்க் கிறிஸ்துவுக்குப்
புகழ்ச்சிவருவதற்கு ஏதுவானவர்களுமாய் இரு
க்கிறார்கள் என்று அறியக்கடவன்.—ஆனபடியி ௨௪
னாலே உங்கள் அன்பையும், [15]நாங்கள் உங்க
ளைக்குறித்துச் சொன்ன புகழ்ச்சியையும் அவர்
களுக்கும், சபைகளுக்கும் முன்பாக வெளிப்
படுத்துங்கள்.

## ௯. அதிகாரம்.

௧. அவர்களுடைய தருமகுணத்தைத் தான் அறிந்திருந்தாலும் தீத்தையும், மற்றச் சகோதரர்களையும் அனுப்பினதற்கு முகாந்தரம் விளம்பி, ௬. தருமஞ்செயலை, ௰. நற்பலனைத் தரும் பயிர்த்தொழிலுக்கு ஒப்பாக்கி, ௰௨. அதினால் பராபரனுக்கு ஸ்தோத்திரப்பலிகள் செலுத்தப்படுமென்று சொல்லி, அவர்கள் தயாளமான சுகையுள்ளவர்களாயிருக்கும்படி புத்தி சொல்லியது.

[16]பரிசுத்தவான்களுக்குச் செய்யவேண்டிய ௧
ஊழியத்தைக்குறித்து நான் அதிகமாய் உங்களு
க்கு எழுதவேண்டுவது இல்லை.—உங்கள் [17]மனப் ௨
பூர்வத்தை அறிந்திருக்கிறேன்; அதைக்குறித்து
[18]அகாயாவில் உள்ளவர்கள் ஒரு வருஷமாய்த்
தருமப்பணத்தைச் சேர்க்க எத்தனமாயிருக்
கிறார்கள் என்று நான் [19]மக்கேதோனியருடனே
சொல்லி, உங்களைப் புகழ்ந்தும் இருந்தேனே.—
மேலும் உங்களில் உண்டான சாக்கிரதை அநே ௩
கரை எழுப்பியும் இருந்தது; அப்படியிருந்தும்,
உங்களைக்குறித்து நாங்கள் சொன்ன புகழ்ச்சி
இந்தச் சங்கதியிலே வீணாய்ப் போகாமல், நான்
சொன்னபடி நீங்கள் எத்தனம்பண்ணுகிறவர்க
ளாய் இருப்பதற்கு [20]இந்தச் சகோதரரை அனுப்
பினேன்.—மக்கேதோனியர் என்னுடனேகூட ௪

1 ௧ கொரி. ௧ ௫: ௰௨. ௰௧. ௯.௰௮,௰௯. எபி.௰௩.௰௬.-7 மத். ௰௨. ௪௧,௪௪. லூக் ௨௧. ௩.
2 ௨ கொரி ௯.௮.-3 ௧ கொரி.௭ ௬.
4 மத். ௮.௨௰. லூக்.௯.௫௮. பிலி. ௨. ௬, ௭.—5 ௨ கொரி. ௯. ௨. 8 ௨ மோ. ௰௬. ௰௮.—9 ௯. ௰௪. 10 ௨ கொரி.௰௨.௰௮.-11 ௨ கொரி. ௪.௰௫.—12 ௧ கொரி. ௰௬.௩, ௪.
6 லூக். ௰௬.௰௭.மத்.௰.௪௨. ௧ தீமோ.
13 உரோ. ௰௨. ௰௭. பிலி. ௪. ௮. ௧ பே. ௨. ௰௨ ௧ கொரி.௰௬.௧. ௨ கொரி.௮.௪. கலா.௨.௰.—17 ௨ கொரி.௮.௰௯.
14 பிலி. ௨. ௨௫. 18 ௨ கொரி.௮.௰.—19 ௨ கொரி ௮.
15 ௨ கொரி. ௭. ௰௪: ௯. ௨. ௨௪.—20 ௨ கொரி. ௮. ௧, ௰௮: ௰௮. ௨௨.
16 அப். ௰௧. ௨௯. உரோ ௰௫.௨௬.

* அல்லது சாக்கிரதையும்.—† அல்லது உபகாரத்தை; ௪, ௬, ௭. ௰௪. ௨ கொரி. ௯. ௮.—‡ அல்லது நான் உங்கள்மேல் வைத்திருக்கிற.

வரும்பொழுது, உங்களை எத்தனப்படாதவர்க
ளாகக் கண்டால், இத்தனை நிச்சயமாய்ப் புகழ்ந்
ததற்காக நீங்களென்று நான் சொல்லமாட்டா
மல் நாங்களை வெட்கப்படாதபடிக்கு, (எத்தன
௫ மாயிருக்கவேண்டும்.)—ஆகையால் இந்தச் சகோ
தரர் முன்னாக உங்களிடத்திற்குப் போகும்ப
டிக்கும், முன் அறிவிக்கப்பட்டிருக்கிற * உங்
கள் தரும ஆசீர்வாதம் † கட்டாயமாக அல்ல,
தரும ஆசீர்வாதமாகவே எத்தனமாயிருக்கப் பார்
க்கும்படிக்கும் அவர்களை வேண்டிக்கொள்ள
வேண்டுமென்று எண்ணி, அப்படிச் செய்தேன்.
௬ [1]பின்னும் நான் சொல்லுகிறது என்னவெ
னில், சிறுக விதைக்கிறவன் சிறுக அறுப்பான்;
பரிபூரணமாய் விதைக்கிறவன் பரிபூரணமாய்
௭ அறுப்பான்.—[2]அவனவன் விசனமாய் அல்ல,
கட்டாயமாயும் அல்ல, தான் மனதிலே விரும்
௮ புகிறபடியே கொடுக்கக்கடவன். — சந்தோஷ
மாய்க் கொடுக்கிறவனிடத்தில் [3]பராபரன் அன்
பாயிருக்கிறாரே, பராபரனும் நீங்கள் எல்லாவற்
றிலேயும் எப்பொழுதும் மிகுந்த திருத்தி உடை
யவர்களாய்ச் சகலவித நற்கிரியைகளுக்கும் சம்
பூரணமுள்ளவர்களாய் இருக்கும்படிக்கு, [4]உங்
களிடத்தில் சகலவித கிருபையும் சம்பூரணமாயி
௯ ருக்கச்செய்ய வல்லவராயிருக்கிறார்.—[5]அவன்
தெளித்தான்; ஏழைகளுக்குக் கொடுத்தான்; அவ
னுடைய நீதி என்றென்றைக்கும் நிற்குமென்று
௰ எழுதியிருக்கிறவிதமாயிருக்கும். — அந்தப்படி
[6]விதைக்கிறவனுக்கு விதையையும் புசிக்கிற
தற்கு அப்பத்தையும் அளிக்கிறவர் உங்கள்
விதையையும் அதிகமாய்ப் பெருகப்பண்ணி,
[7]உங்கள் நீதியின் விளைச்சல்களை வளரச்செய்
௰௧ வார்.—அதினாலே நீங்கள் மிகுந்த உதாரமுள்ள
வர்களாய் ‡ இருக்கும்படிக்கு, எவ்விதத்திலேயும்
சம்பூரணம் உள்ளவர்களாவீர்கள்; அதினாலே
[8]நாங்களும் பராபரனுக்குத் தோத்திரம் செலுத்
௰௨ துதற்கு ஏழுப்பப்படுவோம். — இந்தத் தருமந
டத்தையின் ஊழியம் பரிசுத்தவான்களுடைய
குறைவுகளை [9]நீக்குகிறதற்குமாத்திரம் அல்ல,
அநேகர் பராபரனைத் தோத்திரிக்கிறதற்கும்
௰௩ மிகுந்த பலனுள்ளதாய் இருக்கின்றதே.—அவர்
கள் இவ்வூழியத்தின் உத்தமத்தைக் கண்டு, நீங்
கள் கிறிஸ்துவின் சுவிசேஷத்தைக் கீழ்ப்படித
லோடே அறிக்கைபண்ணுகிறதற்காகவும் தங்க
ளுக்கும் மற்ற அனைவருக்கும் [10]உதாரமாய்த்
தருமத்தைச் செய்கிறதற்காகவும் [11]பராபரனைத்
௰௪ துதித்து, — உங்களுக்காக வேண்டுதல்செய்து,
பராபரன் உங்களுக்கு [12]அளித்த மிகவும் மேன்
மையான கிருபையின் நிமித்தம் உங்கள்மேல்
வாஞ்சையாயிருக்கிறார்கள்.—[13]பராபரன் அநுக் ௰௫
கிரகித்த சொல்லமுடியாத ஈவுக்காக அவருக்குத்
தோத்திரம் உண்டாவதாக.

## ௰. அதிகாரம்.

க. தன்னை இகழ்ச்சிசெய்த கள்ள அப்போஸ்தலர்களுக்குத் தன்னுடைய அதிகாரத்தையும், அவர்களை வெல்லுகிறதற்கு ஏதுவான தன்னிடத்தில் உள்ள ஞானயுதங்களையும் இன்னதென்று கூறி, எ. நிருபங்களிலே வல்லமையுள்ளவனாய் இருக்கிறதுபோலத் தான் அவர்களிடத்தில் வரும்போது வசனத்திலும் வல்லவனாய் இருப்பேனென்று சொல்லி, ௰௨. அவர்களுடைய வீணான பெருமைபாராட்டலையும், அவர்கள் மற்றவர்களுடைய பிரயாசைகளைத் தங்களுடையவைகளாக்கிக்கொள்வதையும் கடிந்துகொண்டது.

[14]மேலும் உங்களுக்கு முன்பாக § இருக்கும் ௧
பொழுது தாழ்மையாயும் தூரத்திலே இருக்கும்
பொழுது உங்கள்மேல் தயிரியமாயும் இருக்கிற
[15]பவுலாகிய நான் கிறிஸ்துவின் சாந்தத்தினாலும்
தயையினாலும் உங்களுக்குப் புத்திசொல்லுகி
றேன்.—[16]நான் கேட்டுக்கொள்ளுகிறது என்ன ௨
வெனில், நான் உங்கள் முன்பாக இருக்கும்
பொழுது, எங்களைச் சரீரத்தின்படி நடக்கிறவர்
கள் என்று எண்ணுகிற ‖ சிலருக்கு நான் துணி
வாயிருக்க நினைக்கிறதால், அந்தத் துணிவோடே
நான் தயிரியமுள்ளவனாய் இராதபடிக்குச் செய்
வீர்களாக. — நாங்கள் சரீரத்தோடே நடந்து ௩
திரிந்தும், சரீரத்தின்படி போராட்டம்பண்ண
மாட்டோம்.—[17]எங்களுடைய போர்ஆயுதங்கள் ௪
[18]மாம்சத்திற்கு ஏற்ற பலஈனமுள்ளவைகளாய்
இராமல், [19]அரண்களை நிர்மூலமாக்குதற்குத் திவ்
விய ¶ [20]பெலனுள்ளவைகளாய் இருக்கின்றன
வே.—அவைகளால் நாங்கள் அகந்தையான ** ௫
சிந்தனைகளையும், பராபரனை அறிகிற அறிவுக்கு
விரோதமாய் உயருகிற எல்லாவித மேட்டிமை
யையும் [21]நிர்மூலமாக்கி, எந்தப் புத்தியையும்
கிறிஸ்துவுக்குக் கீழ்ப்படியச் சிறைப்படுத்துகிற
வர்களாயிருந்து,—[22]நீங்கள் நிறைவாய்க் கீழ்ப் ௬
படிந்திருக்கும்பொழுது [23]எல்லாக் கீழ்ப்படியா
மைக்குந்தக்க நீதியுள்ள தண்டனையைச் செலு
த்த எத்தனமாயிருக்கிறோம்.

[24]முகத்திற்கு முன்னிருக்கிறவைகளை (மாத் ௭
திரம்) பார்க்கிறீர்களா? [25]ஒருவன் தன்னைக் கிறி
ஸ்துவுக்கு உரியவன் என்று நம்பிக்கொண்
டால், அவன் தான் கிறிஸ்துவுக்கு உரியவனாய்
இருக்கிறதுபோல, [26]நாங்களும் கிறிஸ்துவுக்கு
உரியவர்கள் என்று தன்னாலேதானே சிந்திக்கக்
கடவன். — அதுவுமல்லாமல் உங்களை நிர்மூல ௮
மாக்குதற்கு அல்ல, எழுப்புதற்குக் கர்த்தர் எங்
களுக்குக் கொடுத்த [27]அதிகாரத்தைக்குறித்து

1 லூக். ௰௧. ௨௪ : ௰௯. ௰௭ : ௨௨. ௯. கலா. ௯. ௭, ௯. 2 இ மோ. ௰௫. ௭.—3 உ மோ. ௨௫.௨ : ௯௫. ௫. லூக். ௰௧ ௨௫. உரோ. ௰௨. அ. உ கொரி. அ. ௰௨. 4 லூக். ௰௧. ௨௪, ௨௫ : ௨அ. ௨௭. பிலி. ௪. ௰௯.—5 சங். ௱௰௨. ௯. 6 ஏசா. ௫௫. ௰.—7 ஓசே. ௰. ௰௨. மத். ௯. ௧.—8 உ கொரி. ௧. ௰௧: ௪. ௰௫.—9 உ கொரி. அ. ௰௪. 10 எபி. ௰௩. ௰௯.—11 மத். ௫. ௰௯. 12 உ கொரி. அ. ௧.—13 யாக். ௧. ௰௭. 14 ௰. வச. உ கொரி. ௰௨. ௫, ௭, ௯. 15 உரோ. ௰௨. ௧.—16 ௧ கொரி. ௪. ௨௧. உ கொரி. ௰௩. ௨, ௰. 17 எபே. ௬. ௰௩. ௧ தெச. ௫. அ. 18 ௧ தீமோ. ௧. ௰அ. உ தீமோ. ௨. ௩. 19 எரே. ௧. ௰.—20 அப். எ. ௨௨. ௧ கொரி. ௨. ௫. உ கொரி. ௬. எ: ௰௩. ௩, ௪.—21 ௧ கொரி. ௧. ௰௯: ௩. ௰௯.—22 உ கொரி. ௨. ௯: எ. ௰௫. 23 உ கொரி. ௰௩. ௨, ௰.—24 யோவா. எ. ௨௪. உ கொரி. ௫. ௰௨: ௰௧. ௰அ.—25 ௧ கொரி. ௰௪. ௩௭. ௧ யோ. ௪. ௬.—26 ௧ கொரி. ௩. ௨௩: ௯. ௧. உ கொரி. ௰௧. ௨௩.—27 உ கொரி. ௰௩. ௰.

* அல்லது சொல்லப்பட்டிருக்கிற.—† அல்லது தருமம்; ௧ மோ. ௩௩. ௰௧. ௧ சாமு. ௨௫. ௨௭. உ இரா. ௫. ௰௫.—‡ அல்லது தாராளமுள்ளவர்கள்; இரேக்கு, கபடமற்றவர்கள்.—§ அல்லது வெளித்தோற்றத்தில்.—‖ அல்லது நினைக்கிற.—¶ அல்லது பராபரனால்.—** அல்லது மன.

நான் இன்னும் சற்றே அதிகமாய் மேன்மைபா
ராட்டினாலும் [1]நான் வெட்கப்படுவதில்லை. —
௯ நான் நிருபங்களாலே உங்களைப் பயமுறுத்துகி
றவனாய்த் தோன்றாதபடிக்குமாத்திரம், (அப்படி
௰ மேன்மைபாராட்டமாட்டேன்.)–அவனுடைய
நிருபங்கள் பாரமும் பெலனுமுள்ளவைகள்;
ஆகிலும் [2]சரீரத்தின் தோற்றம் பெலஈனமுமாய்
அவனுடைய [3]வசனம் அற்பமுமாயிருக்கிறது
௰௧ என்கிறார்களே.*—அப்படிச் சொல்லுகிறவன்
நிருபங்களின் வசனத்தினாலே தூரத்தில் இருக்
கிற நாங்கள் தோன்றுகிறது எப்படியோ, அப்
படி முகத்திற்கு முன்பாகவும் கிரியையிலேயும்
தோன்றுவோம் என்று சிந்திக்கக்கடவன். —
௰௨ ஆகிலும் தங்களைத்தாமே புகழுகிற சிலருக்கு
[4]நாங்கள் எங்களைச் சரியாக்கவும் ஒப்பிடவும்
துணியமாட்டோம்; அவர்கள் தங்களாலே தங்
களை அளந்துகொண்டு, தங்களுக்கே தங்களை ஒப்
பிட்டுக்கொண்டு, (தங்களை) அறியாதவர்களாய்†
௰௩ இருக்கிறார்கள்.—நாங்கள் (எங்களுக்கு) அளந்
துகொடாதவைகளைக்குறித்து [5]மேன்மைபாரா
ட்டாமல், உங்கள் இடம்வரைக்கும் எட்டத்தக்
கதாக, பராபரன் எங்களுக்கு அளந்து கொடுத்த
அளவின்படியே ‡ மேன்மைபாராட்டுகிறோம்.—
௰௪ [6]கிறிஸ்துவின் சுவிசேஷத்தோடே நாங்கள் உங்
கள் இடம்வரைக்கும் சென்றோமே; ஆகையால்
உங்களிடத்தில் வந்து எட்டாதவர்களாய் நாங்
௰௫ கள் அளவுக்கு மிஞ்சிப்போகிறதில்லை. — அள
வுக்கு மிஞ்சி [7]அந்நியருடைய வேலைக்கு உட்
௰௬ பட்டு, மேன்மைபாராட்டமாட்டோம்.— ஆகி
லும் உங்கள் விசுவாசம் வளர்ந்திருக்கும்பொ
ழுது, உங்களுக்கு அப்புறமான இடங்களில்
சுவிசேஷத்தை அறிவிக்கவும் அந்நிய எல்லைக
ளுக்குள்ளே § செய்யப்பட்டவைகளை (நாங்கள்
செய்ததாக) மேன்மைபாராட்டாதிருக்கவும்தக்
கதாக, எங்கள் அளவு உங்களாலே ‖ மிகவும்
பெருகுமென்று நம்பிக்கையாயிருக்கிறோம். —
௰௭ [8]மேன்மைபாராட்டுகிறவன் கர்த்தாவைக்குறித்
௰௮ தே மேன்மைபாராட்டக்கடவன். — [9]தன்னைத்
தான் புகழுகிறவன் அல்ல, [10]கர்த்தராலே புக
ழப்படுகிறவன் எவனோ, அவன் உத்தமனாயிருப்
பானே.

## ௰௧. அதிகாரம்.

௧ தன்னைப்பார்க்கிலும் கள்ள அப்போஸ்தலர்களை மேன்மையாக எண்ணின கொரிந்தியர்பேரிலே தனக்கிருந்த வைராக்கியத்தினாலே தன்னைக் கட்டாயத்தினால் மேன்மைபாராட்டி, ௫. தான் பிரதான அப்போஸ்தலருக்குச் சரியானவனென்றும், ௭. கொரிந்தியருக்கு இலவசமாய்ச் சுவிசேஷத்தை அறிவித்தவனென்றும், ௰௩. கள்ளப்போதகர்களைப்பார்க்கிலும் தான் லௌகீக மேன்மைகளிலும், ௨௩. கிறிஸ்துவின் ஊழியத்திலும், பலபாடுகளிலும் குறைந்தவன் அல்லவென்றும் சொல்லியது.

ஆ நீங்கள் என் [11]புத்தியீனத்திற்குச் சற்றே ௧
பொறுமையாயிருந்தால், நலமாயிருக்கும்; எனக்
குப் பொறுத்தும் ¶ இருக்கிறீர்களே. — [12]நான் ௨
உங்களைக் கற்புள்ள கன்னியாஸ்திரியாகக் கிறி
ஸ்து என்னும் ஒரே புருஷனுக்கு [13]ஒப்புக்கொ
டுக்க [14]நியமித்தபடியால் உங்களுக்காகத் [15]தேவ
வைராக்கியமாய் வைராக்கியங்கொண்டிருக்கி
றேன்.—ஆகிலும் [16]அந்தப் பாம்பு தன்னுடைய ௩
தந்திரத்தினாலே ஏவாளை வஞ்சித்ததுபோல,
[17]உங்கள் மனதும் கிறிஸ்துவின்மேலுள்ள பத்தி
யின் உண்மையை விட்டு விலகக் கெடுக்கப்ப
டுமோ என்று பயந்திருக்கிறேன்.—எப்படியெ ௪
னில் (உங்களிடத்தில்) வந்திருக்கிறவன் நாங்
கள் பிரசங்கியாத வேறொரு இயேசுவைப் பிர
சங்கித்தானானால், அல்லது, நீங்கள் பெறாத வே
றொரு ஆவியையும் நீங்கள் ஏற்றுக்கொள்ளாத
[18]வேறொரு சுவிசேஷத்தையும் (அவனாலே)
பெற்றீர்களானால், அவனை** நன்றாய் ஏற்பீர்கள்.

மிகவும் பெரிய அந்த அப்போஸ்தலருக்கு ௫
[19]நான் எவ்வளவாகிலும், குறைவுள்ளவன் அல்ல
என்று எண்ணுகிறேன்.—நான் பேச்சிலே [20]கல் ௬
லாதவனாயிருந்தாலும், [21]அறிவிலே கல்லாதவன்
அல்ல, எப்பொழுதும் [22]எல்லாவிதங்களிலேயும்
உங்களுக்குள்ளே (அப்படியே) வெளிப்பட்டி
ருக்கிறோமே.—அல்லது நீங்கள் உயர்த்தப்படும் ௭
படிக்கு நான் [23]என்னைத்தானே தாழ்த்தி, பராபர
னுடைய சுவிசேஷத்தை இலவசமாய் உங்க
ளுக்கு அறிவித்ததினாலே குற்றம்செய்தேனோ?–
(இல்லையே,) உங்களுக்கே ஊழியம் செய்யும்ப ௮
டிக்கு மற்றச் சபைகள் கையிலே நான் சம்பளம்
பற்றிக்கொண்டேன். — நான் உங்களிடத்திலி ௯
ருந்து குறைச்சல் அநுபவித்தபொழுதும் [24]ஒரு
வரையும் நான் வருத்தப்படுத்தவில்லை; [25]மக்கே
தோனியாவிலிருந்து வந்த சகோதரர் என் குறை
வை நீக்கினார்களே; [26]எவ்விதத்திலேயும் உங்க
ளுக்குப் பாரமாய் இராதபடிக்குப் பார்த்தேன்;
இனிமேலும் அப்படியே பார்ப்பேன்.—[27]அகா ௰
யாநாட்டின் திசைகளிலே இந்தப் புகழ்ச்சி
என்னிடத்தில்நின்று நீங்குவதில்லையென்று ††
என்னிலுள்ள கிறிஸ்துவினுடைய [28]உண்மை
யைக்கொண்டு சொல்லுகிறேன். — என்னத்தி ௰௧
னாலே (அப்படிச் செய்வேன்)? [29]நான் உங்க
ளைச் சிநேகியாதபடியினாலோ (அப்படிச் செய்
வேன்)? அதினால் அல்லவென்று பராபரனே

1 ௨ கொரி. ௭. ௰௪: ௰௨. ௯. ௨௪. ௧ கொரி. ௧. ௧௧.—9 வாக். ௨௭. ௨.—10 ௨ரோ. ௨. ௨௯.
2 ௧ கொரி. ௨. ௩, ௪, ௧. ௮௪. ௨ கொரி. ௰௨. ௫, ௭, ௯. கலா. ௪. ௰௩. ௧ கொரி. ௪. ௫.—11 ௰௯. வ௪.
3 ௧ கொரி. ௧. ௰௭: ௨. ௧, ௪. ௨ கொரி. ௰௧. ௬.—4 ௨ கொரி. ௧. ௧: ௫. ௰௨. ௨ கொரி. ௫. ௰௩.—12 ௧மோ. ௨௧. ௰௩.—13 கொலோ. ௧. ௨௮.
5 ௰௫. வ௪.—6 ௧ கொரி. ௩. ௫, ௰: ௪. ௰௫: ௯. ௧.—7 ௨ரோ. ௰௫. ௨௰.—8 எசா. ௬௫. ௰௬. எரே. ௯. 14 ஓசே. ௨. ௰௯, ௨௰. ௧ கொரி. ௪. ௰௫.—15 கலா. ௪. ௰௭, ௰௮.
16 ௧ மோ. ௩. ௪. யோவா. ௮. ௪௪.
17 எபே. ௬. ௨௪. கொலோ. ௨. ௪, ௮, ௰௮. ௧ தீமோ. ௧௧: ௪. ௧ எபி. ௰௩. ௯. ௨ பே. ௩. ௰௭.—18 கலா. ௧. ௭, ௮.—19 ௧ கொரி. ௰௫. ௰. ௨ கொரி. ௰௨. ௰௧. கலா. ௨. ௬.
20 ௧ கொரி. ௧. ௰௭: ௨. ௧, ௰௩. ௨ கொரி. ௰. ௰.—21 எபே. ௩. ௪.
22 ௨ கொரி. ௪. ௨: ௫. ௰௧: ௰௨. ௰௨.
23 அப். ௰௮. ௩. ௧ கொரி. ௯. ௬, ௰௨. ௨ கொரி. ௰. ௧.—24 அப். ௨௰. ௩௩. ௨ கொரி. ௰௨. ௰௩. ௧ தெச. ௨. ௯. ௨ தெச. ௩. ௮, ௯.—25 பிலி. ௪. ௰, ௰௫, ௰௬.—26 ௨ கொரி. ௰௨. ௰௪, ௰௬.—27 ௧ கொரி. ௯. ௰௫.
28 ௨ரோ. ௯. ௧.—29 ௨ கொரி. ௬. ௰௧: ௭. ௩: ௰௨. ௰௫.

*இரேக்கு. இருக்குதென்கிறார்.–† அல்லது ஞானமற்றவர்கள்.–‡ அல்லது முறைப்படியே.–§ அல்லது ஒழுங்குகளின்படி.–‖ அல்லது உங்களில்.–¶ அல்லது மெய்யாய்ப் பொறுத்து.—** அல்லது என்னை.—†† அல்லது இந்தப் புகழ்ச்சியை நான் அடையாதபடிக்கு, ஒருவனும் தடைசெய்யமாட்டானென்று.

௰௨ அறிந்திருக்கிறார்.—மேலும் தங்களை மேன்மை
பாராட்டுகிறதினாலே எங்களைப்போலக் காணப்
படச் சமயம் தேடுகிறவர்களுக்குச் [1]சமயம்
அற்றுப் போகும்பொருட்டாக நான் இப்படிச்
செய்கிறேன், பின்னும் இப்படிச்செய்வேன்.
௰௩ [2]அப்படிப்பட்டவர்கள் கள்ள அப்போஸ்த
லர், [3]கபடமுள்ள வேலையாட்கள், கிறிஸ்துவி
னுடைய அப்போஸ்தலரின் ரூபத்தை எடுத்து,
௰௪ நடக்கிறவர்களாய் இருக்கிறார்கள்.—அது அதி
சயமல்ல, [4]சாத்தானும் ஒளியையுடைய தூத
௰௫ னைப்போன்ற ரூபத்தை எடுப்பானே.—ஆகை
யால் அவனுடைய ஊழியக்காரரும் [5]நீதியின்
ஊழியக்காரரைப்போன்ற ரூபத்தை எடுத்தால்,
மிகுந்த அதிசயமாகமாட்டாது;[6]அவர்களுடைய
முடிவு அவர்களுடைய கிரியைகளுக்குத்தக்க
தாயிருக்கும்.
௰௬ [7]பின்னும் நான் சொல்லுகிறது என்னவெ
னில், ஒருவனும் என்னைப் புத்தியீனன் என்று
எண்ணுகிறிருப்பானாக; எண்ணினால் நானும்
சற்றே மேன்மைபாராட்டுகிறபொழுது, நீங்கள்
என்னைப் புத்தியீனனைப்போலாகிலும் சகிக்கக்*
௰௭ கடவீர்கள்.—இப்படித் [8]தயிரியமாய் மேன்மை
பாராட்டுகையில், [9]நான் சொல்லுகிறது கர்த்த
ரால் ஆனபடியே சொல்லாமல், புத்தியீனனைப்
௰௮ போலச் சொல்லுகிறேன். — [10]அநேகர் சரீரத்
தின்படி மேன்மைபாராட்டிக்கொள்ளுகையில்,
௰௯ நானும் மேன்மைபாராட்டுவேன்.—[11]புத்தியுள்ள
நீங்கள் புத்தியில்லாதவர்களைச் சந்தோஷமாய்ச்
௨௰ சகித்திருக்கிறீர்களே. — [12]ஒருவன் உங்களைச்
சிறையாக்கினாலும், ஒருவன் உங்களைப் பட்
சித்தாலும், ஒருவன் (உங்கள் ஆஸ்திகளைப்)
பிடித்துக்கொண்டாலும், ஒருவன் உங்களுக்கு
முன்பாகத் தன்னை உயர்த்தினாலும், ஒருவன்
உங்களை முகத்தில் அறைந்தாலும் சகித்திருக்கி
௨௧ றீர்களே.—[13]நாங்கள் பெலஈனராக எங்களுக்கு
வந்த நிந்தையைக்குறித்து (இப்படிப்) பேசுகி
றேன்; [14]ஒருவன் துணிகிறது எதுவோ, அதிலே
நானும் துணிவாயிருக்கிறேன்; இப்படிப் புத்தி
௨௨ யீனமாய்ப் பேசுகிறேன்.—அவர்கள் எபிரேயரா
னால், [15]நானும் எபிரேயன்; அவர்கள் இஸ்ர
வேலரானால், நானும் இஸ்ரவேலன்; அவர்கள்
ஆபிரகாமின் சந்ததியானால், நானும் ஆபிரகா
௨௩ மின் சந்ததியான்.—அவர்கள் கிறிஸ்துவின் ஊழி
யக்காரரானால், நான் அவர்களுக்கு மேற்பட்
டவன்; (மறுபடியும்) புத்தியீனமாய்ப் பேசுகி
றேன்; அவர்களிலும் [16]நான் அதிக வேலைகளைச்
செய்தேன்; [17]அதிகமாய் அடிபட்டேன்; அதிக
மாய்க் காவல்களில் வைக்கப்பட்டேன்; அநே
கந்தரம் [18]மரணத்திற்கு ஏதுவாயிருந்தேன்.—
[19]யூதர்களால் ஒன்றுகுறைய நாற்பது அடியாக ௨௪
ஐந்துதரம்பட்டேன்.—[20]மூன்றுதரம் மிலாறுக ௨௫
ளால் அடிபட்டேன். [21]ஒருதரம் கல்லெறியுண்
டேன்; [22]மூன்றுதரம் கப்பல் சேதமானதில்
இருந்தேன்; ஓர் இராப்பகல் முழுவதும் ஆழத்தி
லே இருந்தேன்.—அநேகந்தரம் பிரயாணமாய்ப் ௨௬
போனேன்; ஆறுகளால் வருகிற மோசங்களி
லும், கள்ளரால் வருகிற மோசங்களிலும், [23]என்
சென்ன தேசத்தாரால் வந்த மோசங்களிலும்,
[24]புறத்தேசத்தாரால் வந்த மோசங்களிலும், ஊர்க
ளில் உண்டான மோசங்களிலும், வனாந்தரத்தில்
உண்டான மோசங்களிலும், சமுத்திரத்தில்
உண்டான மோசங்களிலும், கள்ளச்சகோதர
ரால் வந்த மோசங்களிலும்,—வேலையிலும் வருத் ௨௭
தத்திலும் [25]அநேகந்தரம் கண்விழிப்புகளிலும்
[26]பசியிலும் தாகத்திலும், அநேகந்தரம் உபவா
சங்களிலும் குளிர்ச்சியிலும் நிருவாணத்திலும்
இருந்தேன்.—புறம்பே உண்டான இவைகளைத் ௨௮
தவிர எல்லாச் சபைகளைக்குறித்தும் இருக்கிற
[27]கவலை என்னை நாள்தோறும் நெருக்குகின்றது.
[28]பெலஈனம் அடைகிறவன் எவனோ, அவ ௨௯
னுக்கு நானும் பெலஈனனாயிருக்கிறதில்லையோ?
வழுவுகிறவன் எவனோ, அவனுக்கு (உதவி
செய்ய) எரிச்சல் இல்லாமல் இருக்கிறேனோ?—
மேன்மைபாராட்டவேண்டியதால், [29]என் பெல ௩௰
ஈனத்திற்கு உரியவைகளைச் சொல்லி, மேன்மை
பாராட்டுவேன்.—[30]என்றென்றைக்கும் தோத்தி ௩௧
ரிக்கப்பட்ட பராபரனும், [31]நம்முடைய கர்த்த
ராகிய இயேசுக்கிறிஸ்துவின் பிதாவுமானவர்
நான் பொய்சொல்லுகிறதில்லை என்று அறிந்தி
ருக்கிறார்.—[32]தமஸ்கு நகரியிலே அரேத்தா என் ௩௨
னும் இராசாவினுடைய சேனைத்தலைவன் என்
னைப் பிடிக்கவேண்டும் என்று தமஸ்கருடைய
பட்டணத்தின் வாசல்களில் காவல்வைத்துக்
காத்தான். — அப்பொழுது நான் கூடையிலே ௩௩
வைக்கப்பட்டு, பலகணியிலிருந்து மதில் வழி
யாய் இறக்கிவிடப்பட்டு, அவனுடைய கைக
ளுக்குத் தப்பிப்போனேன்.

## ௰௨. அதிகாரம்.

**௧. தான் கண்ட தரிசனையினாலே தன் அப்போஸ்தலப்பட்டத்தைக்குறித்து மேன்மையைப் பாராட்டாமல், ௯. தன் பலஈனங்களில் மேன்மை பாராட்ட விரும்பி, ௰௧. அப்படியே தன்னைக்குறித்து மேன்மைபாராட்டுவதற்குக் காரணமாயிருந்த அவர்கள்பேரிலேயே குற்றஞ்சார்த்தி, ௰௪. மறுபடியும் அவர்களிடத்தில் வரும்போது பிதாவின் பட்சத்தோடே வாராமல், ௨௰. அநேகம் குற்றவாளிகளையும், அநேகம் தாறுமாறுகளையும் காண்பதினாலே மனச்சஞ்சலத்தோடே வருவானென்றும் சொல்லியது.**

1 ௧ கொரி. ௯. ௰௨.—2 அப். ௰௩. ௨௪. ௨ ரோ ௰௧. ௰௮. கலா ௧. ௭: ௯. ௰௨. பிலி. ௧. ௰௩ ௨ பே. ௨. ௧. ௧ யோ. ௪. ௧. வெளி. ௨. ௨.
3 ௨ கொரி. ௨. ௰௭. பிலி. ௩. ௨. தீத். ௧. ௰, ௰௧.—4 கலா. ௧ ௮.
5 ௨ கொரி. ௩. ௯.—6 பிலி ௩. ௰௯.
7 ௧. வச. ௨ கொரி. ௰௨. ௧, ௰௧.
8 ௨ கொரி. ௯. ௪.—9 ௧ கொரி. ௭. ௧, ௰௨.—10 பிலி. ௩. ௩, ௪—11 ௧ கொரி. ௪. ௰.—12 கலா. ௨ ௪: ௪. ௯.
13 ௨ கொரி. ௰. ௰.—14 பிலி. ௩. ௪.
15 அப். ௨௨. ௩. ௨ ரோ. ௰௧. ௧. பிலி. ௩. ௫.—16 ௧ கொரி. ௰௫. ௰.—17 அப். ௯. ௰௬: ௨௰. ௨௩: ௨௧. ௰௧. ௨ கொரி. ௬. ௪, ௫.—18 ௧ கொரி. ௰௫. ௩௰, ௩௧, ௩௨. ௨ கொரி. ௧. ௯, ௰: ௪. ௰௧: ௯. ௯.—19 ௫ மோ. ௨௫. ௩.
20 அப். ௰௬. ௨௨.—21 அப். ௰௪. ௰௯.
22 அப். ௨௭. ௪௧.—23 அப். ௯. ௨௩. ௰௬. ௫௰: ௰௪. ௫: ௰௭. ௫: ௨௰. ௩: ௨௩. ௩௩: ௨௩. ௰, ௰௩: ௨௫. ௩:
24 அப். ௰௪. ௫: ௰௯. ௨௧.—25 அப். ௨௰. ௩௩. ௨ கொரி. ௩. ௫.
26 ௧ கொரி. ௪. ௰௧.—27 அப். ௨௰. ௰௮. ௨ ரோ. ௧. ௰௪.—28 ௧ கொரி. ௮. ௰௩: ௯. ௨௨.—29 ௨ கொரி. ௰௨. ௫, ௯, ௰.—30 ௨ ரோ. ௯. ௫.
31 ௨ ரோ. ௧. ௯: ௯: ௧. ௨ கொரி. ௧. ௨௩. கலா. ௧. ௨௰. ௧ தெச. ௨. ௫.
32 அப். ௯. ௨௪, ௨௫.

* அல்லது ஏற்றுக்கொள்ள.

௧ இப்படியிருக்க மேன்மைபாராட்டுகிறது எனக்
குத் தகாது; ஆகிலும்* கர்த்தர் கொடுத்த தரிசனை
களையும் வெளிப்படுத்துதல்களையும் சொல்லிவ
ருகிறேன்.

௨ கிறிஸ்துவைப்பற்றிய [1]ஒரு மனிதனை அறிந்
திருக்கிறேன்; அவன் பதினாலு வருஷத்திற்கு
முன்னே [2]மூன்றாம் வானம்வரைக்கும் எடுக்கப்
பட்டான். (அவ்வேளையிலே) அவன் சரீரத்தில்
இருந்தானோ, அதற்குப் புறம்பே இருந்தானோ
அதை அறியமாட்டேன்; அது பராபரனுக்குத்
௩ தெரியும்.–இப்படிப்பட்ட மனிதன் [3]பரதீசுக்கு
உயர்த்தப்பட்டு, மனிதர் பேசக்கூடாத, † வாக்
குக்கு எட்டாத வார்த்தைகளைக் கேட்டான்
௪ என்று அறிந்திருக்கிறேன்.—(அவ்வேளையிலே)
அவன் சரீரத்தில் இருந்தானோ, அதற்குப் புறம்
பே இருந்தானோ, அதை அறியமாட்டேன்; பரா
பரனுக்கே தெரியும்.

௫ இப்படிப்பட்டவனைக்குறித்து மேன்மைபா
ராட்டுவேன்; என்னைக்குறித்து என் பலஈனங்க
ளினாலே அன்றி, [4]வேறொன்றினாலும் மேன்மை
௬ பாராட்டமாட்டேன். — சத்தியமானதை நான்
பேசுகிறேன்; ஆதலால் [5]மேன்மைபாராட்ட
மனதிருந்தாலும், நான் புத்தியீனன் அல்ல; ஒரு
வனும் என்னிடத்தில் காண்கிறதற்கும், அல்லது
து என்னாலே கேட்கிறதற்கும் மேலாக என்னை
எண்ணாதபடிக்கு அனலை நிறுத்துகிறேன்.

௭ அன்றியும் அதிக மேன்மையானவைகள் என
க்கு வெளிப்படுத்தப்பட்டதினாலே நான் என்
னை உயர்த்தாதபடிக்கு, என் மாம்சதேகத்திலே
[6]ஒரு முள் கொடுக்கப்பட்டிருக்கிறது; என்னை
நான் உயர்த்தாதபடிக்கு, என்னைக் குட்டும் சாத்
௮ தானுடைய [7]தூதனே இருக்கிறான்.—அது என்
னைவிட்டு நீங்கும்படிக்கு [8]நான் மூன்றுதரம்
௯ கர்த்தாவை வேண்டிக்கொண்டேன். — அவர்
என்னுடனே சொன்னது: எனது கிருபை உனக்
குப் போதும், என்னுடைய வல்லமை (உன்)
பெலஈனத்திலே நிறைவாய்த் தோன்றுகின்றதே
என்றார்; ஆகையால் [9]கிறிஸ்துவின் வல்லமை
என்மேல் இறங்கியிருக்கும்படிக்கு, [10]நான் மிக
வும் அதிக விருப்பமாய் என் பெலஈனங்களைக்
௰ குறித்து மேன்மைபாராட்டுவேன்.–அந்தப்படி,
[11]நான் பெலஈனமாய் இருக்கும்பொழுது பெல
னாய் இருக்கிறபடியால் கிறிஸ்துவின்நிமித்தம்
எனக்கு வரும் பெலஈனங்களிலும் நிந்தைகளி
லும் வறுமைகளிலும் துன்பங்களிலும் இடுக்
கண்களிலும் [12]நான் பிரியமாயிருக்கிறேன்.

மேன்மைபாராட்டினதால்[13]நான் புத்தியீனன் ௰௧
ஆனேன்; நீங்களே அதற்கு என்னைப் பலவந்
தப்படுத்தினீர்கள். [14]நான் பிரயோசனம் இல்லா
தவனாய் இருந்தாலும், மிகவும் பிரதான அப்போ
ஸ்தலருக்கும் [15]நான் எவ்வளவாகிலும் குறைந்
தவனாயிராததால், உங்களாலே நான் மெச்சிக்
கொள்ளப்பட நியாயமாயிருந்ததே.—[16]அப்போ ௰௨
ஸ்தலனுக்குரிய அடையாளங்கள் உங்களுக்
குள்ளே எல்லாவிதமான பொறுமையோடும் அ
திசயங்களாலும் அற்புதங்களாலும் வல்லமைக
ளாலும் என்னாலே நடப்பிக்கப்பட்டன அல்ல
வா? [17]மற்றச் சபைகளுக்கு நீங்கள் எதிலே
குறைவாயிருக்கிறீர்கள்?—நான் உங்கள்மேலே ௰௩
[18]சுமையை வையாதிருந்ததினாலே அன்றி வே
றொன்றினாலும் இல்லையே; [19]இந்த அநியாயத்
தை நீங்கள் எனக்கு மன்னிக்கவேண்டும்.

இப்பொழுது உங்களிடத்திற்கு வர [20]மூன் ௰௪
றாந்தரம் எத்தனமாயிருக்கிறேன்; (அப்பொழு
தும்) [21]நான் உங்களுடையதை அல்ல, உங்க
ளையே தேடுகிறபடியால் நான் உங்கள்மேல்
சுமையை வைப்பதில்லை; [22]பெற்றாருக்குப்
பிள்ளைகள் அல்ல, பிள்ளைகளுக்குப் பெற்றார்
களே பொக்கிஷங்களைச் சேர்த்துவைக்கவேண்
டுமே.-ஆனதால் [23]நான் உங்களுக்குக் காட்டுகிற ௰௫
அன்பு எவ்வளவோ, அவ்வளவு குறைவாய் உங்
களால் அன்புகூரப்பட்டிருந்தும், [24]மிகவும் சந்
தோஷமாய் நான் [25]உங்கள் ஆத்துமாக்களுக்
காக‡ என்னைச் செலவுபண்ணவும் செலவுபண்
ணப்படவும் விரும்புகிறேன்.

அப்படி ஆகட்டும், [26]அவன் உங்களுக்குப் ௰௬
பாரமாய் இருக்கவில்லை; அது மெய்தான், ஆகி
லும் தந்திரமுள்ளவனாய் இருந்து, உங்களைக்
கபடத்தினாலே பிடித்தான் என்கிறார்கள்.–(அது ௰௭
எப்படி?) [27]நான் உங்களிடத்திற்கு அனுப்பின
வர்களில் யாராலே உங்களிடத்தில் பொழி
வைத் தேடினேன்?—[28]தீத்து உங்களிடத்தில் ௰௮
போகவேண்டும் என்று நான் கேட்டுக்கொண்டு,
[29]அவனுடனேகூட ஒரு சகோதரனை அனுப்பி
னேன்; தீத்து உங்களிடத்தில் ஒரு பொழிவை
யாகிலும் தேடினானா? நாங்கள் ஒரே ஆவியோ
டே அல்லவா நடந்தோம்? ஒரே மார்க்கமாயல்ல
வோ நடந்தோம்?

[30]உங்களுக்குமுன்பாகக் குற்றம் அடக் ௰௯
கும்படி பேசுகிறோம் என்று மறுபடியும் எண்
ணுகிறீர்களா? பிரியமானவர்களே, [31]பராபரனு
டைய சந்நிதானத்திலே கிறிஸ்துவைப் பற்றிக்
கொண்டு, இவைகளை எல்லாம் [32]உங்களை எழுப்

1 உரோ. ௰௧. ௭. ௨ கொரி. ௯. ௰௭. கலா. ௧. ௨௨.—2 அப். ௨௨. ௰௭. லிஸ்ராவில். அப். ௰௪. ௧. 3 லூக். ௨௩. ௪௩.—4 ௨ கொரி. ௰௧. ௩௰.—5 ௨ கொரி. ௰. ௮: ௰௧. ௰௧. 6 எசே. ௨௮. ௨௪. கலா. ௪. ௰௩, ௰௪. 7 யோபு. ௨. ௭. லூக். ௰௩. ௰௬. 8 உபா. ௩. ௨௩, ௨௭. மத். ௨௬. ௪௪.-9 ௧பே. ௪. ௰௪.—10 ௨ கொரி. ௰௧ ௩௰.—11 ௨ கொரி. ௰௩. ௪. 12 ௨ ரோ. ௫. ௩. ௨ கொரி. ௭. ௪. 13 ௨ கொரி. ௰௧. ௧, ௰௬, ௰௭. 14 ௧ கொரி ௩. ௭: ௰௫. ௮, ௯. எபே. ௩. ௮.-15 ௨ கொரி. ௰௧. ௫. கலா. ௨. ௬, ௭, ௮.—16 ௨ ரோ. ௰௫. ௰௮, ௰௯. ௧ கொரி. ௯. ௨. ௨ கொரி. ௪. ௨: ௬. ௪: ௰௧. ௬.-17 ௧ கொரி. ௧. ௭.-18 ௧ கொரி. ௯. ௰௨. ௨ கொரி. ௰௧. ௯.—19 ௨ கொரி. ௰௧. ௭. 20 ௨ கொரி. ௰௩. ௧.—21 அப். ௨௰. ௩௩. ௧ கொரி ௰. ௩௩.-22 ௧ கொரி. ௪. ௰௪, ௰௫.—23 ௨ கொரி. ௬. ௰௨, ௰௩.-24 ௧ தெச. ௨. ௮. பிலி. ௨. ௰௭.--25 யோவா. ௰. ௰௧. ௨ கொரி. ௧. ௬. கொலோ. ௧. ௨௪. ௨ தீமோ. ௨. ௰.—26 ௨ கொரி. ௰௧. ௯.—27 ௨ கொரி. ௭. ௨. 28 ௨ கொரி. ௮. ௬, ௰௬, ௨௨. 29 ௨ கொரி. ௮. ௰௮.-30 ௨ கொரி. ௫. ௰௨.-31 ௨ ரோ. ௯. ௧. ௨ கொரி. ௰௧. ௰௧.—32 ௧ கொரி. ௰. ௩௩.

* கிரேக்கு. ஏனென்றால்.—† அல்லது தகாத.—‡ அல்லது உங்களுக்காக.

௨௰ பும்படிக்கே பேசுகிறோம்.—ஆகிலும் நான் வந்து
உங்களை என் மனதின்படி இருக்கிறவர்களாகக்
காணுமலும், [1]உங்களுக்கு நானும் உங்கள் மன
தின்படி இருக்கிறவனுகக் காணப்படாமலும்
இருப்பேனே! விரோதங்கள், வைராக்கியங்
கள், கோபங்கள், சண்டைகள், புறங்கூறுதல்,
கோள்சொல்லுதல், இறுமாப்பு, கலகங்களும்,
௨௧ உங்களுக்குள்ளே உண்டாயிருக்குமோ?—மறுப
டியும் நான் வருகிறபொழுது, என் பராபரன்
உங்களிடத்தில் என்னைத் [2]தாழ்மைப்படுத்
தும்படிக்கு, [3]முன் பாவஞ்செய்தவர்களாகிய
அநேகர் தாங்கள் நடப்பித்த அசுத்தத்தையும்,
[4]வேசித்தனத்தையும், காமவிகாரத்தையும்விட்டு
மனந்திருப்பாமல் இருக்கிறதைக்குறித்து நான்
துக்கப்படவேண்டியதாய் இருக்குமோ என்று
இவைகளைக்குறித்துப் பயந்திருக்கிறேன்.

## ௰௩. அதிகாரம்.

௧. குணப்படாத பாவிகளுக்குத் தண்டனையைக் கொண்டும், தன் அப்போஸ்தல அதிகாரத்தைக் கொண்டும் பயமுறுத்தி, ரு. அவர்கள் தங்கள் விசுவாசத்தைக்குறித்துப் பரிசோதிக்கவும், எ. தான் வருகிறதற்குள்ளே தங்கள் பாவங்களை விட்டு விலகவும் கற்பித்து, ௰௧. மறுப்பொதுவான சில புத்திகளையும் சொல்லி அவர்களை வாழ்த்தி நிருபத்தை முடித்தது.

௧ [5]இந்த மூன்றுந்தரம் நான் உங்களிடத்திற்கு
வருகிறேன்; சகல சங்கதிகளும் [6]இரண்டுமூன்று
சாட்சிகளுடைய வாக்கினால் நிலைவரப்படும்.—
௨ நான் மறுபடியும் வரும்பொழுது, [7]தப்பவிட
மாட்டேன் என்று [8]முன் பாவஞ்செய்தவர்களுக்
கும் மற்ற எல்லாருக்கும் [9]முன் சொன்னேனே;
இப்பொழுது தூரமாயிருந்தும், உங்களிடத்தில்
இருக்கிறவனுக நான் இரண்டாந்தரமும் அப்ப
௩ டியே முன்னறிவித்துச் சொல்லுகிறேன்.—என்
னுலே கிறிஸ்து பேசுகிறதைக்குறித்துத் [10]திருட்
டாந்தத்தைக் காணத் தேடுகிறீர்களே; அவர் உங்க
ளுக்குள்ளே பலஈனர் அல்ல, [11]வல்லவராயிருக்
௪ கிறார்.—அல்லாமலும், [12]அவர் பலஈனத்தால் சிலு
வையில் அறையப்பட்டிருந்தும், [13]பராபரனு
டைய வல்லமையால் பிழைத்திருக்கிறார்; அப்
படி [14]நாங்களும் அவர்நிமித்தம்* பெலஈனராயி
ருந்தும், அவருடனேகூடப் பராபரனுடைய
வல்லமையால் உங்களுக்குள்ளே சீவனைக் காண்
பிப்போம்.—உங்களுக்கு விசுவாசம் உண்டோ? ரு
[15]அதைக்குறித்து உங்களைச் சோதியுங்கள்; உங்
களைத்தாமே விசாரித்து அறியுங்கள்; அல்லது
[16]நீங்கள் உதாரணம் இல்லாதவர்களாயிராவிட்
டால், [17]இயேசுக்கிறிஸ்து உங்களிடத்தில் இருக்
கிறார் என்று உங்களைத் தாமே அறிகிறதில்லை
யா?—நாங்கள் உதாரணம் இல்லாதவர்கள் அல்ல ௬
வென்பதை அறிவீர்கள் என்று நம்புகிறேன்.—
மேலும் நீங்கள் எவ்வளவாகிலும் பொல்லாங் ௭
கைச் செய்யாதிருக்கும்படியாக, பராபரனை
நோக்கி விண்ணப்பம்பண்ணுகிறேன்; [18]நாங்
கள் உதாரணம் உள்ளவர்கள் என்று காணப்ப
டும்பொருட்டு அல்ல, நீங்கள் நலமானதைச்
செய்யும்பொருட்டே அப்படிச் செய்கிறேன்.
(அப்படி நீங்கள் செய்தால்,) நாங்கள் உதார
ணம் இல்லாதவர்களாயிருக்கலாம். — சத்தியத் ௮
திற்கு விரோதமாக நாங்கள் ஒன்றும் செய்யக்கூ
டாமல் சத்தியத்திற்கு நேராகச் செய்வோமே.—
ஆகையால், [19]நாங்கள் பலஈனராயிருந்தாலும் ௯
நீங்கள் பலமுள்ளவர்களானல் சந்தோஷப்படு
வோம்; [20]அந்தப்படி நீங்கள் நற்சீர் பொருந்தும்
படிக்கே வேண்டுதல்பண்ணுகிறோம்.—அதினு ௰
லே நான் உங்களிடத்தில் வந்திருக்கும்பொ
ழுது, [21]இடிக்கிறதற்கு அல்ல, எழுப்பிக் கட்டுகி
றதற்குக் கர்த்தர் எனக்குக் கொடுத்த [22]அதிகாரத்
தின்படியே நான் கண்டிதம்பண்ணுதபடிக்கு,
இவைகளைத் தூரமாயிருந்து [23]எழுதுகிறேன்.

கடைசியிலே சகோதரரே, சந்தோஷமாயி ௰௧
ருங்கள்; நற்சீர் பொருந்துங்கள்; ஆறுதலை அடை
யுங்கள்; [24]ஏகசிந்தையாயிருங்கள்; சமாதானமா
யிருங்கள்; அப்பொழுது அன்புக்கும் [25]சமாதா
னத்திற்கும் காரணராகிய பராபரன் உங்கள் பங்
கில் இருப்பார்.—[26]ஒருவரை ஒருவர் பரிசுத்த ௰௨
முத்தத்தினால் வாழ்த்துங்கள்.—பரிசுத்தவான்கள் ௰௩
எல்லாரும் உங்களுக்கு வாழ்த்துதல் செய்கிறார்
கள்.—[27]கர்த்தராகிய இயேசுக்கிறிஸ்துவினுடைய ௰௪
கிருபையும் பராபரனுடைய அன்பும் [28]பரிசுத்த
ஆவியோடே ஐக்கமும் உங்கள் அனைவருடனே
யும் இருக்கக்கடவது.—ஆமன்.

1 ௧ கொரி. ௪. ௨௧. ௨ கொரி. ௰. ௨: ௧. ௨. ௧.—8 ௨ கொரி. ௰௨. ௨௧ ௰௧. ௨, ௰.—2 ௨ கொரி. ௨. ௧, ௪. 9 ௨ கொரி. ௰. ௨.—10 மத். ௰. ௨௰. 3 ௨ கொரி. ௰௧. ௨.—4 ௧ கொரி. ௧ கொரி. ௯. ௪. ௨ கொரி. ௨. ௰. ௯. ௧.—5 ௨ கொரி. ௰௨. ௰௪. 11 ௧ கொரி ௬. ௨—12 பிலி. ௨. ௭, ௮. 6 ௪ மோ. ௧௯. ௬௰. ௫ மோ. ௰௭. ௬: ௧ பே. ௧. ௰௮.—13 ௨ ரோ. ௬. ௪. ௰௬. ௰௯. மத். ௰௮. ௰௬. யோவா. 14 ௨ கொரி. ௰. ௧, ௪.—15 ௧ கொரி. ௮. ௰. எபி. ௰. ௨௮.—7 ௨ கொரி. ௰௧. ௨௮.—16 ௧ கொரி ௯. ௨௭.

17 ௨ ரோ. ௮. ௰. கலா. ௪. ௰௯. ௰௯. ௯. ௧ கொரி. ௧. ௰. பிலி. ௨. 18 ௨ கொரி ௬. ௬.—19 ௧ கொரி. ௪. ௨: ௧. ௰௧. ௧ பே. ௩. ௮. ௰. ௨ கொரி. ௰௧. ௬௰: ௰௨. ௯, ௬, ௰. 25 ௨ ரோ. ௰௯. ௬௬.—26 ௨ ரோ. ௰௬. 20 ௧ தெச. ௩. ௰.—21 தீத். ௧. ௰௩. ௰௬. ௧ கொரி ௰௬. ௨௰. ௧ தெச. 22 ௨ கொரி. ௰. ௮.—23 ௧ கொரி. ௪. ௯. ௨௬. ௧ பே. ௯. ௰௪.—27 ௨ ரோ. ௨௧. ௨ கொரி. ௨. ௧: ௰. ௨: ௰௨. ௰௬. ௨௪.—28 பிலி. ௨. ௧. ௨௰, ௨௧.—24 ௨ ரோ. ௰௨. ௰௬, ௰௮:

* அல்லது அவருக்குள்.

# GALATIANS.

அப்போஸ்தலனுகிய பவுல்

# கலாத்தியருக்கு எழுதின

# நிருபம்.

## க. அதிகாரம்.

*க. கலாத்தியசபையார் தன்னையும் சுவிசேஷத்தையும் இத்தனை சீக்கிரமாய் விட்டுவிட்டதற்கு ஆச்சரியப்பட்டு, அ. தான் பிரசங்கித்த சுவிசேஷத்தைத்தவிர மற்ற விபரீதங்களைப் பிரசங்கிக்கிறவர்களைச் சபித்து, ௰க. தான் சுவிசேஷத்தை மனுஷர்களால் அல்ல, பராபரனாலேயே கற்றறிந்தானென்றும், ௰௩. தான் அப்போஸ்தல ஊழியத்துக்கு அழைக்கப்பட்டதற்குமுன் இப்படிப்பட்டவனாய் இருந்தானென்றும், ௰எ. அழைக்கப்பட்டவுடனே இவற்றைச் செய்தானென்றும் காட்டியது.*

க [1]மனிதரில்நின்றும் அல்ல, ஒரு மனிதனாலும்
அல்ல, [2]இயேசுக்கிறிஸ்துவினாலும் [3]அவரை மரி
த்தோரிலிருந்து எழுப்பின பிதாவாகிய பராபர
னாலும் அப்போஸ்தலனாயிருக்கிற பவுலும்,—
உ [4]என்னுடனேகூட இருக்கிற எல்லாச் சகோதர
ரும் கலாத்தியநாட்டிலுள்ள [5]சபைகளுக்கு எழு
ங துகிறதாவது:—[6]இப்பொழுது இருக்கிற பொல்
லாத பிரபஞ்சத்தில்நின்று நம்மை நீக்கிவிடும்படி
க்கு, நம்முடைய கர்த்தராகிய இயேசுக்கிறிஸ்து
நம்முடைய பிதாவாகிய பராபரனுடைய சித்தத்
தின்படியே [7]நம்முடைய பாவங்களுக்காகத் தம்
மைத்தாமே ஒப்புக்கொடுத்தாரே; அவராலும்
ச பிதாவாகிய பராபரனாலும்,—[8]உங்களுக்குக் கிரு
பையும் சமாதானமும் உண்டாகக்கடவது.—
ரு அவருக்கு என்றென்றைக்கும் மகிமை உண்டா
வதாக.—ஆமன்.

சா உங்களைக் கிறிஸ்துவின் கிருபைக்குள் [9]அழை
த்தவனை நீங்கள் இவ்வளவு சீக்கிரமாய் விட்டு,
வேறொரு சுவிசேஷத்திற்குத் திரும்பினதால்
எ நான் ஆச்சரியப்படுகிறேன்.—(இதுவன்றி,)
[10]வேறொரு சுவிசேஷமும் இல்லையே, [11]அப்ப
டியிருந்தும் சிலர் உங்களைக் கலகப்படுத்தி, கிறி
ஸ்துவினுடைய சுவிசேஷத்தை மாறுபாடாக்க
அ மனதாயிருக்கிறார்கள்—[12]நாங்கள் உங்களுக்கு
அறிவித்த சுவிசேஷத்தைத் தவிர, நாங்களாவது
வானத்திலிருந்து வருகிற ஒரு தூதனாவது வே
றொரு சுவிசேஷத்தை உங்களுக்கு அறிவித்தால்,
சபிக்கப்பட்டவர்களாய் இருக்கக்கடவோம்.—
[13]ஒருவன் நீங்கள் ஏற்றுக்கொண்ட சுவிசேஷத் கூ
தைத்தவிர, வேறொரு சுவிசேஷத்தை உங்களுக்
கு அறிவித்தால், சபிக்கப்பட்டவனாகவே இருக்
கக்கடவன் என்று முன்சொன்னதுபோல, மறு
படியும் சொல்லுகிறேன்.—இப்பொழுது [14]நான் ௰
மனிதரை [15]நாடுகிறேனா? அல்லது பராபரனை
நாடுகிறேனா? அல்லது [16]மனிதருக்குப் பிரியமா
யிருக்கப் பார்க்கிறேனா? நான் மனிதருக்குப்
பிரியமானவனானால், நான் கிறிஸ்துவின் ஊழி
யக்காரனாய் இருப்பதில்லை.

மேலும் சகோதரரே, நான் உங்களுக்கு நிச்ச ௰க
யிக்கிறது என்னவெனில், [17]என்னால் பிரசங்கிக்
கப்பட்ட சுவிசேஷம் மனிதருடைய இச்சைக்
கு ஏற்றதல்ல.—[18]நான் அதை ஒரு மனிதனால் ௰உ
அடையவும் படிக்கவும் இல்லையே; [19]இயேசுக்
கிறிஸ்துவே அதை எனக்கு வெளிப்படுத்தினார்.—
நான் யூதமார்க்கத்திலே இருந்தபொழுது, என் ௰ங
னுடைய நடக்கையைக்குறித்துக் கேள்விப்பட்
டிருப்பீர்கள்; [20]பராபரனுடைய சபையை நான்
மிகவும் துன்பப்படுத்தி, [21]அதைப் பாழாக்கி,—
என் தேசத்தாரில் என் வயதுள்ள* அநேகரிலும் ௰ச
யூதமார்க்கத்திலே தேறினவனாய், [22]என் பிதாக்
களுடைய பாரம்பரை நியாயங்களுக்காக [23]மி
குந்த பத்திவைராக்கியனாய் இருந்தேன்.

அப்படி இருக்கும் காலத்திலே, என் தாயின் ௰ரு
கருப்பமுதல் [24]என்னைப் பிரித்தெடுத்துத் தமது
கிருபையினால் அழைத்த பராபரன்,—[25]தம்மு ௰சா

1 ௰க.௰உ, வச.—2 அப்.கூ.க: உஉ. ௰, ௰கூ, உக: உகூ. ௰க. தீத். க. க. 3 அப். உ உச.—4 பிலி. உ உஉ: ச. உக.—5 க கொரி. ௰க. க. 6 எசா. கூ. எ. யோவா. ௰கூ. ௰கூ: ௰எ. ௰ச. எபி. உ. கூ: கூ. கூ. க யோ. ௰கூ.—7 மத். உ௰. உஅ உரோ. ச. உரு. கலா. உ. உ௰ தீத். உ. ௰ச. 8 உரோ. க. எ. க கொரி. க. க. உ கொரி க. உ. எபே. க. உ. பிலி. க. உ. கொலோ. க உ. க தெச. க. க உ தெச. க. உ. உ யோ. க. 9 கலா. கூ. அ.—10 உ கொரி. ௰க. ச. 11 அப். ௰கூ. க, உச. உ கொரி. உ. ௰எ: ௰க, ௰க கலா. கூ. ௰, ௰உ. 12 க கொரி ௰க. உஉ.—13 தீமோ.

ச. உ: ௰உ. கஉ. வாக். ௰௰. க. க தீமோ. க. ௰க.—14 க தெச. உ. ச. 15 க சாமு. உச. எ. மத். உ அ. ௰ச. க யோ. க. ௰கூ. 16 க தெச. உ. ச. யாக். ச. ச. 17 க கொரி. ௰கூ. க.—18 க கொரி. ௰கூ. க, க க. வச.—19 எபே. க. க. 20 அப். கூ: க: உஉ. ச: உகூ. ௰க கொரி. உஉ. உச. ௰அ.—21 அப். அ. க. வெளி. உஉ. ௰அ.—22 எரே. கூ. ௰ச. மத். ௰கூ. உ. மாற். எ. கூ.—23 அப் உஉ க: உக கூ. பிலி க. க.—24 எசா. சகூ. க, ரு. எரே. க. ரு. அப். கூ. ௰ரு: ௰க. உ: உஉ. ௰ச, ௰கூ. உரோ க. க. 25 அப். கூ. ௰ரு: உஉ. உக. உக ௰எ, ௰அ. உரோ. ௰ச ௰க. எபே. க. அ.

* அல்லது எனக்குச்சரியான.

டைய குமாரனை நான் புறத்தேசத்தாரிடத்தில்
சுவிசேஷமாய் அறிவிக்கும்பொருட்டாக, [1]அவ
னை எனக்குள் வெளிப்படுத்தப் பிரியசித்தமாய்
இருந்தபொழுது, நான் எவ்வளவாகிலும் [2]மாம்ச
இரத்தத்தோடே யோசனை பண்ணாமலும், —
௰௭ எனக்கு முன்னே அப்போஸ்தலரானவர்களி
டத்திலே எருசலேமுக்குத் திரும்பாமலும், அரபு
தேசத்திற்குப் புறப்பட்டுப்போய், மறுபடியும்
௰௮ தமஸ்கு ஊருக்குத் திரும்பி வந்தேன்.—அதின்
பின்பு மூன்றுவருஷம் சென்றபொழுது பேது
ருவைப் பார்த்து அறியும்படிக்கு, [3]நான் எருச
லேமுக்குப்போய்,* அவனிடத்தில் பதினைந்து
௰௯ நாள் இருந்தேன்.—[4]கர்த்தருடைய சகோதரனு
கிய யாக்கோபைத்தவிர, [5]அப்போஸ்தலரில் வே
௨௰ றொருவனையும் நான் காணவில்லை.—நான் உங்
களுக்கு எழுதுகிற இவைகள் பொய்யல்ல என்று
[6]பராபரனுக்குமுன்பாக உங்களுக்கு நிச்சயிக்கி
௨௰௧ றேன்.—[7]பின்பு சீரியா, சிலிசியா தேசங்களு
௨௰௨ டைய புறங்களில் வந்தேன்.—மேலும் [8]யூதேயா
நாட்டிலே [9]கிறிஸ்துவைப்பற்றிய சபைகளுக்கு
௨௰௩ முகம் அறியாதவனாய் இருந்தேன்.—முன்னே
நம்மைத் துன்பப்படுத்தினவன்தானே அழிக்கத்
தேடின சுவிசேஷத்தை இப்பொழுது அறிவிக்
கிறான் என்றுமாத்திரம் அவர்கள் கேள்விப்பட்
௨௰௪ டிருந்து,-என்னைக்குறித்துப் பராபரனைத் துதித்
தார்கள்.

## ௨. அதிகாரம்.

௧. நான் எருசலேமுக்கு மறுபடியும் போனகாலமும், முகாந்தரமும் இன்னதென்றும், ௩. தீத்து சுன்னத்தடைந்ததில்லையென்றும், ௰௧. தான் பேதுருவைக் கடிந்துகொண்ட நியாயம் இன்னதென்றும், ௰௪. தானும், மற்றவர்களும் யூதர்களாயிருந்தும் விசுவாசத்தினாலேயொழியக் கிரியைகளினால் நீதிமான்களாகக்கூடாதென்றும், ௨௰. அப்படி நீதிமான்களாகிறவர்கள் பாவத்திற்கு இடங்கொடுக்கிறவர்கள் அல்லவென்றும் காட்டியது.

௧ பின்பு பதினாலுவருஷம் சென்றபொழுது,
நான் தீத்தைக் கூட்டிக்கொண்டு, பருனபாவுட
னேகூட மறுபடியும் [10]எருசலேமுக்குப் போ
௨ னேன்.—அந்தப் பிரயாணத்தை நான் தேவ அறி
விப்பினாலே செய்து, [11]நான் ஓடுகிறதும் அல்
லது ஓடினதும் வீணாகாதபடிக்கு, புறத்தேசத்தா
ரிடத்திலே நான் பிரசங்கிக்கிற சுவிசேஷத்தை
அவர்களுக்கும் [12]விசேஷமாகப்† பெரியோர்க
௩ ளுக்கும் விவரித்துக் காண்பித்தேன்.—அப்பொ
ழுது என்னுடனேகூட இருந்த தீத்து கிரேக்கனா
யிருந்தும், விருத்தசேதனம்பண்ணிக்கொள்ளும்
படிக்குக் கட்டாயம் பண்ணப்படவில்லை.—
௪ இயேசுக்கிறிஸ்துவினால் நமக்கு உண்டான
[13]விடுதலையை வேவுபார்த்து, நம்மை நியாயப்
பிரமாணத்திற்கு [14]அடிமைகள் ஆக்கும்பொருட்
டாக, பக்கவழியாய் நுழைந்து உட்புகுந்த [15]கள்
ளச் சகோதரர்நிமித்தமே அப்படி ஆயிற்று.—
[16]சுவிசேஷத்தின் சத்தியமும் உங்களிடத்திலே ௫
நிலைநிற்கும்படியாக, நாங்கள் ஒருநாழிகையாகி
லும் அவர்களுக்குக் கீழ்ப்படியவில்லை.—அல்லா ௬
மலும் [17]பெரியோர்களென்று எண்ணப்பட்டவர்
களாலும் (நான் ஒன்றையும் அடையவில்லை);
முன்னே அவர்கள் எப்படிப்பட்டவர்களாய்
இருந்தாலும் எனக்குக் கவையில்லை. [18]பராபரன்
மனிதருடைய முகத்தை நோக்கிப்பார்க்கிறவர்
அல்லவே; [19]அந்தப் பெரியோர்கள் எனக்கு
அதிகம் ஒன்றும் போதியாமல்,—விருத்தசேதனம் ௭
உள்ளவர்களுக்கு அப்போஸ்தலனாய் இருக்கும்
படி, பேதுருவைப் [20]பலப்படுத்தினவர் புறத்
தேசத்தாருக்கு அப்போஸ்தலனாய் இருக்கும்படி
[21]என்னையும் பலப்படுத்தினதால்,—விருத்தசேத ௮
னம் உள்ளவர்களுக்குச் சுவிசேஷத்தைப் பிரசங்
கிக்கும்படி பேதுருவுக்கு ஒப்புவிக்கப்பட்டது
போல, விருத்தசேதனம் இல்லாதவர்களுக்கு
அப்படியே செய்யும்படி, [22]எனக்கு ஒப்புவிக்
கப்பட்டிருக்கிறது என்று [23]அவர்கள் கண்டு,—
அந்தப்படி [24]எனக்கு அளிக்கப்பட்ட கிருபை ௯
யை அறிந்தபொழுது, அவர்களில் [25]தூண்க
ளென்று எண்ணப்பட்ட யாக்கோபும் கேபாவும்
யோவானும் தாங்கள் விருத்தசேதனம் உள்ளவர்
களுக்கும், நாங்கள் புறத்தேசத்தாருக்கும் சுவி
சேஷத்தைப் பிரசங்கிக்கும்படிக்கு ஐக்கப்படு
தற்கு அடையாளமாக எனக்கும் பருனபாவுக்
கும் வலதுகைகளைக் கொடுத்து,—தரித்திர ௰
ரை நினைத்துக்கொள்ளும்படிக்குமாத்திரம் புத்தி
சொன்னார்கள்; [26]நானும் அப்படியே செய்யச்
சாக்கிரதையாயிருந்தேன்.

[27]மேலும் பேதுரு அந்தியோகியா ஊருக்கு ௰௧
வந்தபொழுது, அவன் தப்பிதம்செய்ததினாலே
நான் முகமுகமாய் அவனோடு எதிர்த்தேன்.—
எப்படியென்றால், யாக்கோபினிடத்திலிருந்து ௰௨
சிலர் வருகிறதற்குமுன்னே, [28]அவன் புறத்தே
சத்தாருடனே சாப்பிட்டான்; அவர்கள் வந்த
பொழுது விருத்தசேதனம் உள்ளவர்களுக்குப்
பயந்து விலகிப் பிரிந்தான்.—மற்ற யூதரும் அப்ப ௰௩
டியே வஞ்சகம்பண்ணினார்கள்; அவர்களுடைய
வஞ்சகத்தினாலே பருனபாவுங்கூட இழுக்கப்
பட்டான்.—இப்படி அவர்கள் [29]சுவிசேஷத்தின் ௰௪
சத்தியத்திற்குத்தக்கதாக நடவாததை நான் கண்
டபொழுது, [30]எல்லாருக்கும் முன்பாக நான்
பேதுருவை நோக்கிச் சொன்னதாவது: [31]யூதனா

1 ௨ கொரி. ௪. ௬.—2 மத். ௰௬ ௰௭. ௧ கொரி. ௰௫. ௫௰. எபே. ௬. ௰௨.—3 அப். ௯. ௨௬.—4 மத். ௰௩. ௫௫. மாற். ௬. ௩.—5 ௧ கொரி. ௯. ௫.—6 ௨ரோ. ௯. ௧.—7 அப். ௯. ௩௰.—8 ௧ தெச. ௨. ௰௪. 9 ௨ரோ. ௰௬. ௭. 10 அப். ௰௫. ௨.—11 பிலி. ௨. ௰௬. ௧ தெச. ௩. ௫.—12 அப். ௰௫. ௰௨. 13 கலா. ௫. ௨௫: ௫. ௧, ௰௩. 14 ௨ கொரி ௰௧. ௨௰. கலா. ௪. ௩, ௯. 15 அப். ௰௫. ௧, ௨௪. ௨ கொரி. ௰௧. ௨௬.—16 ௰௪. ௫. கலா. ௩. ௧: ௪. ௰௬.—17 கலா. ௬. ௩.—18 அப். ௰. ௩௪. ௨ரோ. ௨. ௰௧.—19 ௨ கொரி. ௰௨. ௰௧.—20 அப். ௯. ௰௫: ௰௩. ௨: ௨௨. ௨௧: ௨௬. ௰௭. ௰௮. ௧ கொரி. ௰௫. ௰. கலா. ௧. ௰௬. கொலோ. ௧. ௨௯.—21 கலா. ௧. ௫. 22 ௧ தெச. ௨. ௪.—23 அப். ௰௯. ௪௬. ௨ரோ. ௧. ௫: ௰௧. ௰௩. ௧ தீமோ. ௨. ௭. ௨ தீமோ. ௧. ௰௧. 24 ௨ரோ. ௧. ௫: ௰௨. ௩, ௬: ௰௫. ௰௫. ௧ கொரி. ௰௫. ௰. எபே. ௩. ௮. 25 மத் ௰௬. ௰௮ எபே. ௨. ௨௰. வெளி. ௨௧. ௰௪.—26 அப். ௰௧. ௩௰: ௨௪. ௰௭. ௨ரோ. ௰௫. ௨௫. ௧ கொரி. ௰௬. ௧. ௨ கொரி. ௮. ௯.—27 அப். ௰௫. ௩௫.—28 அப். ௰. ௨௮: ௰௧. ௩.—29 ௫. ௪. 30 ௧ தீமோ. ௫. ௨௰.—31 அப். ௰. ௨௮: ௰௫. ௰.

* அல்லது திரும்பி.—† அல்லது இரகசியமாக.

யிருக்கிற நீர் யூதர்முறைமையாக அல்ல புறத்தே
சத்தார் முறைமையாக நடந்துகொண்டிருக்க,
புறத்தேசத்தாரை யூதர் முறைமையாய் நடக்கும்
படி நீர் எப்படிக் கட்டாயம்பண்ணலாம்.
௰௫ [1]ஒரு மனிதனும் நியாயப்பிரமாணத்திற்கு
ஏற்ற கிரியைகளினாலே நீதிமானாக்கப்படுவது
௰௬ இல்லையே.—ஆதலால் [2]புறத்தேசத்தாரில் பிறந்த
பாவிகளாயிராமல், [3]சுபாவப்படி யூதராயிருக்
கிற நாமும், [4]இயேசுக்கிறிஸ்துவைப் பற்றும்
விசுவாசத்தினாலே அன்றி, நியாயப்பிரமாணத்
திற்கு ஏற்ற கிரியைகளால் மனிதன் [5]நீதிமானா
கிறதில்லை என்று அறிந்து, நியாயப்பிரமாணத்
திற்கு ஏற்ற கிரியைகளினால் அல்ல, கிறிஸ்து
வைப் பற்றும் விசுவாசத்தினாலே நீதிமான்களா
கும்படிக்கு, கிறிஸ்து இயேசுவின்மேல் விசுவா
௰௭ சிகளானோமே.—அந்தப்படி கிறிஸ்துவினாலே
நீதிமான்களாகப் பார்க்கையில் [6]நாமும் பாவிக
ளாகக் காணப்பட்டால் கிறிஸ்து பாவத்திற்கு
ஊழியக்காரர் ஆவாரா? அப்படி ஆகவேமாட்
௰௮ டார்.—நான் இடித்துப்போட்டவைகளை நானே
மறுபடியும் கட்டினால், என்னை அக்கிரமக்கா
௰௯ ரன் என்று காண்பிப்பேன்.—[7]பராபரனுக்கா
கப் பிழைக்கும்படிக்கு [8]நியாயப்பிரமாணத்தின்
வழியாய் [9]நியாயப்பிரமாணத்திற்கு மரித்தே
௨௰ னே.—[10]கிறிஸ்துவுடனேகூடச் சிலுவையில்
அறையப்பட்டேன்; அப்படியிருந்தும் பிழைத்
திருக்கிறேன்; நான்தானே அல்ல, கிறிஸ்துவே
எனக்குள்ளே பிழைத்திருக்கிறார்; அந்தப்படி
இப்பொழுது என் தேகத்திலுள்ள சீவன், என்
னில் அன்புகூர்ந்து [11]எனக்காகத் தம்மைத்தாமே
ஒப்புக்கொடுத்த [12]பராபரனுடைய குமாரனைப்
பற்றும் விசுவாசத்தினாலே பிழைக்கின்றது.—
௨௧ [13]நீதியானது நியாயப்பிரமாணத்தினாலே வந்
தால், கிறிஸ்து மரித்தது வீணாயிருக்குமே; ஆத
லால் நான் பராபரனுடைய கிருபையைத் தள்ளி
விடேன் என்றேன்.

## ௩. அதிகாரம்.

௧. அவர்கள் விசுவாசத்தைவிட்டு நியாயப்பிரமாணத்தைப் பற்றின முகாந்தரம் ஏதென்று கேட்டு, ௯. விசுவாசிக்கிறவர்கள் நீதிமான்களாகி, ஆபிரகாமுடனே ஆசீர்வதிக்கப்படுகிறார்கள் என்று, ௰. பல திருட்டாந்தங்களினால் காட்டியது.

௧ ஆ புத்தியீனமுள்ள கலாத்தியரே, நீங்கள் [14]சத்
தியத்திற்குக் கீழ்ப்படியாமல் போகத்தக்க வித
மாக [15]யாவன் உங்களை மயக்கப்படுத்தினான்?
உங்களுக்குப் பிரத்தியட்சமாய் இயேசுக்கிறி
ஸ்து உங்களுக்காகச் சிலுவையில் அறையப்பட்
டவராய்க் குறிக்கப்பட்டிருந்தாரே.—[16]ஆவியை ௨
நீங்கள் நியாயப்பிரமாணத்திற்கு ஏற்ற கிரியை
களினாலோ, [17]விசுவாசப் பிரசங்கத்தினாலோ,
(எதினாலே) பெற்றீர்கள்? இதைமாத்திரம் உங்க
ளிடத்தில் அறிய விரும்புகிறேன்.—[18]ஆவியினா ௩
லே ஆரம்பம்பண்ணின நீங்கள் இப்பொழுது
[19]மாம்சத்தினாலே முடிவுசெய்ய இத்தனை புத்தி
யீனராயிருக்கிறீர்களா?—[20]இத்தனை * பாடுகளை ௪
வீணாய்ப்பட்டீர்களா? ஆ வீணாயிருக்கமாட்டா
தே.—அன்றியும் உங்களுக்கு [21]ஆவியை வரச் ௫
செய்கிறவனும் உங்களுக்குள்ளே அற்புதங்களை
நடப்பிக்கிறவனுமானவன் அப்படி நியாயப்பிர
மாணத்திற்கு ஏற்ற கிரியைகளினாலோ, விசுவா
சப் பிரசங்கத்தினாலோ, (எதினாலே) செய்கி
றான்?—அப்படி [22]ஆபிரகாம் பராபரனை விசுவா ௬
சித்தான்; அதுவே அவனுக்கு நீதியென்று எண்
ணப்பட்டது.†

ஆகையால் [23]விசுவாசமார்க்கத்தாரே ஆபிரகா ௭
மின் பிள்ளைகளாய் இருக்கிறார்கள் என்று அறி
வீர்களாக.—மேலும் பராபரன் விசுவாசத்தினா ௮
லே உலகத்தாரை நீதிமான்களாக்குவார் என்று
[24]வேதாகமம் முன் அறிந்து, [25]உன்னாலே எல்லா
உலகத்தாரும் ஆசீர்வதிக்கப்படுவார்கள் என்று
ஆபிரகாமுக்குச் சுவிசேஷமாய் முன் அறிவித்
தது.—அந்தப்படி விசுவாசமார்க்கத்தார் விசுவாச ௯
முள்ள ஆபிரகாமுடனேகூட ஆசீர்வதிக்கப்படு
கிறார்கள்.

நியாயப்பிரமாணத்திற்கு ஏற்ற கிரியைக்காரரா ௰
கிய யாவரும் நியாயப்பிரமாண புத்தகத்தில் எழு
தப்பட்டவைகளை எல்லாம் செய்யத்தக்கதாக
அவைகளில் நிலைத்திராதவன் எவனோ, [26]அவன்
சபிக்கப்பட்டவன் என்று எழுதியிருக்கிறப
டியால், சாபத்திற்குக் கீழாயிருக்கிறார்கள்.—
மேலும் [27]நியாயப்பிரமாணத்தினாலே ஒருவனும் ௰௧
பராபரனிடத்திலே நீதிமான் ஆகிறதில்லை என்
பது வெளியரங்கமாய் இருக்கின்றது; எப்படியெ
னில், [28]விசுவாசத்தால் நீதிமானானவன் பிழைப்
பான் என்று சொல்லியிருக்கிறதே.—அன்றியும் ௰௨
[29]நியாயப்பிரமாணமானது விசுவாசத்தை ஏற்
படுத்துகிறதில்லை; [30]இவைகளைச் செய்கிற மனி
தன் இவைகளால் பிழைப்பான் என்று ஏற்ப
டுத்துகின்றது.—இப்படியிருக்க, மரத்திலே தூக் ௰௩
கப்பட்ட யாவனும் [31]சபிக்கப்பட்டவன் என்று
எழுதியிருக்கிறபடி, [32]கிறிஸ்து நமக்காகச் சாபத்
தை அடைந்து, நியாயப்பிரமாணத்தின் சாபத்
திற்கு நம்மை விலக்கி இரட்சித்தார்.—[33]ஆபிர ௰௪

1 சங் ௱௪௩. ௨. உரோ. ௩. ௨௰ கலா. ௩. ௰௧.—2 மத். ௯. ௰௧. எபே ௨. ௩, ௰௨.—3 அப். ௰௫. ௰, ௰௧.—4 உரோ. ௧. ௰௭: ௩. ௨௨, ௨௮: அ. ௩. கலா. ௩. ௨௪. எபி. ௭. ௰௮,௰௯.—5 அப் ௰௩. ௩௮.—6 ௧ யோ. ௩. ௮, ௯.
7 உரோ ௬. ௰௧. ௨ கொரி ௫ ௰௫. ௧ தெச ௫ ௰. எபி. ௯. ௰௪. ௧ பே. ௪. ௨.—8 உரோ. அ. ௨.
9 உரோ. ௬. ௰௪: ௭. ௪.௬. 10 உரோ. ௬.௬. கலா. ௫. ௨௪: ௬. ௰௪.—11 கலா ௧.௪. எபே. ௫. ௨. தீத். ௨. ௰௪.—12 ௨ கொரி. ௫. ௰௫. ௧ தெச. ௫. ௰. ௧ பே. ௪. ௨.
13 கலா. ௩. ௨௧. எபி ௭. ௰௧. உரோ. ௰௧. ௬. கலா. ௫ ௪.—14 கலா. ௨. ௰௪: ௫. ௭.—15 கலா. ௫. ௭.
16 அப். ௨. ௩௮: அ. ௰௫: ௰௯: ௰௫. எபே. ௧. ௰௩.
௧ ௪.—17 உரோ. ௰. ௰௬, ௰௭.
18 கலா. ௪. ௯—19 எபி. ௭. ௰௬: ௯.௰.
20 எபி. ௰. ௩௫, ௩௬. ௨ யோ. அ.
21 ௨ கொரி. ௩. அ.—22 ௧ மோ. ௰௫. ௬. உரோ. ௪. ௩, ௯, ௨௨, ௨௨. யாக். ௨. ௨௩.—23 யோவா. அ. ௩௯. உரோ. ௪. ௰௩, ௰௨, ௰௬.
24 உரோ. ௯. ௰௭. ௨௨. ௩௪.
25 ௧ மோ ௰௨. ௩: ௰அ. ௰அ: ௨௨. ௰அ. அப். ௩. ௨௫.—26 ௫ மோ. ௨௭. ௨௬ எரே. ௰௧. ௩.—27 கலா. ௨. ௰௬.—28 ஆப. ௨. ௪ உரோ. ௧. ௰௭. எபி. ௰. ௩அ.—29 உரோ. ௪. ௪, ௫: ௰. ௫. ௬: ௰௩. ௩.
30 ௩ மோ. ௰அ. ௫. நெகே. ௯. ௨௯. எசே. ௨௰. ௰௧. உரோ. ௰. ௫.
31 ௫ மோ. ௨௧. ௨௩.—32 உரோ. அ. ௩. ௨ கொரி. ௫. ௨௧. கலா. ௪. ௫.
33 உரோ. ௪. ௯, ௰௬.

* அல்லது இவ்வளவுபெரிய.—† அல்லது நீதியாகச் சூட்டப்பட்டது.

காமுக்கு உண்டான ஆசீர்வாதம் கிறிஸ்து இ
யேசுவினலே புறத்தேசத்தாருக்கு வரும்படியா
கவும், [1]வாக்குத்தத்தம் பண்ணப்பட்ட ஆவியை
நாம் விசுவாசத்தினலே பெறும்படியாகவுமே
அப்படி ஆயிற்று.
௰௫ சகோதரரே, மனிதர் முறைமையாகச் சொல்
லுகிறேன்; [2]மனிதர்களுக்குள்ளே உறுதிபண்
ணப்பட்ட ஓர் உடம்படிக்கையை* ஒருவனும்
தள்ளவும் அதினேடே எதையாகிலும் கூட்டவும்
௰௬ மாட்டானே.—[3]ஆபிரகாமுக்கும் அவனுடைய
சந்ததிக்கும் வாக்குத்தத்தங்கள் பண்ணப்பட்
டன; அப்பொழுது சந்ததிகளுக்கென்று அநே
கரைக்குறித்துச் சொல்லாமல், உன் சந்ததிக்
கென்று ஒருவனைக்குறித்துச் சொல்லியிருக்கி
௰௭ ருர்; [4]அந்தச் சந்ததி கிறிஸ்துவே. — ஆனதால்
நான் சொல்லுகிறது என்னவெனில், கிறிஸ்து
வுக்கு நேராகப் பராபரனல் முன் உறுதிபண்
ணப்பட்ட உடம்படிக்கை உண்டே, அப்பொ
ழுது உண்டான வாக்குத்தத்தத்தைத் தள்ளத்தக்க
தாக அந்த உடம்படிக்கையை [5]நானூற்றுமுப்
பது வருஷத்திற்குப்பின் உண்டான [6]நியாயப்
௰௮ பிரமாணம் நீக்கமாட்டாது.—அன்றியும் [7]சுதந்
தரமானது நியாயப்பிரமாணத்தினலே உண்டா
னல், [8]அவ்வாக்குத்தத்தத்தினல் உண்டாயிரா
தே; ஆபிரகாமுக்குப் பராபரன் அதை வாக்குத்
தத்தத்தினலே அருளிச்செய்தார்.
௰௯ அப்படியானல் நியாயப்பிரமாணம் என்னத்
துக்கு என்றால், [9]அது வாக்குத்தத்தத்தைப் பெ
ற்ற சந்ததி வருமளவும் தேவதூதரைக்கொண்டு
[10]மத்தியஸ்தன் கையில் [11]கட்டளையிடப்பட்டு,
[12]அக்கிரமங்களின் நிமித்தமாகக் கூட்டப்பட்
௨௰ டிருந்தது. — மத்தியஸ்தன் ஒருவனுடையவன்
அல்ல, [13]பராபரன் ஒருவரே இருக்கிறார்.
௨௧ அப்படியானல் நியாயப்பிரமாணம் பராபரனு
டைய வாக்குத்தத்தங்களுக்கு விரோதமாயிருக்
கிறதா என்றால் அப்படியிருக்கிறதே இல்லை; எப்
படியெனில், [14]உயிரைக் கொடுக்கத்தக்க நியா
யப்பிரமாணம் கொடுக்கப்பட்டிருந்ததானல்,
நீதியானது மெய்யாய் நியாயப்பிரமாணத்தினல்
௨௨ உண்டாகும்.—அப்படி இராதபடியால், [15]வேதா
கமம், இயேசுக்கிறிஸ்துவைப்பற்றும் விசுவாசத்
தினலே [16]வாக்குத்தத்தம் பண்ணப்பட்ட நீதி,
விசுவாசம் உள்ளவர்களுக்கு அளிக்கப்படும்ப
டிக்கு, [17]எல்லாரையும் ஏகமாய்ப் பாவத்தின்கீழ்
௨௩ அடைத்துப்போட்டது.—ஆனதால் விசுவாசம்
வருதற்குமுன்னே நாங்கள் வெளிப்படுவதாயி
ருந்த விசுவாசத்திற்கு ஏதுவாக அடைக்கப்பட்
டவர்களாய் நியாயப்பிரமாணத்தின்கீழ் காக்கப்
பட்டிருந்தோம்.—இவ்விதமாய் [18]நாம் விசுவா ௨௪
சத்தினலே நீதிமான்கள் ஆவதற்கு [19]நியாயப்பி
ரமாணம் நம்மைக் கிறிஸ்துவினிடத்திற்கு வழி
நடத்துகிற உவாத்தியாய் இருந்ததே.
விசுவாசம் வந்தபின்பு நாங்கள் பின்னும் ௨௫
அந்த உவாத்திக்குக் கீழானவர்கள் அல்ல. —
நீங்கள் எல்லாரும் கிறிஸ்து இயேசுவைப்பற்றும் ௨௬
விசுவாசத்தினலே [20]பராபரனுடைய பிள்ளைக
ளாய் இருக்கிறீர்களே.—உங்களில் [21]கிறிஸ்துவுக் ௨௭
குள்ளாக ஞானஸ்நானம்பெற்றவர்கள் எத்தனை
பேரோ அத்தனைபேரும் [22]கிறிஸ்துவைத் தரித்துக்
கொண்டீர்களே.—இப்படி [23]நீங்களெல்லாரும் ௨௮
கிறிஸ்து இயேசுவினலே ஒன்றாயிருக்கிறபடி
யால், [24]யூதன் என்றும், கிரேக்கன் என்றும், அ
டிமை என்றும், சுயாதீனன் என்றும், ஆண் என்
றும், பெண் என்றும், இவ்வேற்றுமை உங்க
ளுக்கு இல்லையே.—[25]மேலும் நீங்கள் கிறிஸ்து ௨௯
வைச் சேர்ந்தவர்களாயிருக்க, ஆபிரகாமின் சந்
ததியாராயும் [26]வாக்குத்தத்தத்தின்படியே சுதந்த
ரராயும் இருக்கிறீர்கள்.

## ௪. அதிகாரம்.

௧. சுதந்தரவாளி சிறுபிள்ளையாய் இருக்குங்காலமட்டுமே தன் காரியக்காரருக்குக் கீழிருப்பதுபோலக் கிறிஸ்து வருமட்டும் நாமும் நியாயப்பிரமாணத்துக்குக் கீழிருந்தோமென்றும், ௫. கிறிஸ்து நம்மை நியாயப்பிரமாணத்தினின்று விடுதலையாக்கினபடியால், ௭. இனி அதற்கு நாம் அடிமைகள் அல்லவென்றும், ௰௪. கலாத்தியர் தனக்குப் பாராட்டின பட்சத்தையும் அவர்கள்மேலுள்ள தன்னுடைய பட்சத்தையும் இன்னதென்றும், ௨௨. நாம் ஆபிரகாமின் சுயாதீன மனைவியின் புத்திரரென்றும் காட்டியது.

பின்னும் நான் சொல்லுகிறது என்னவெனில், ௧
சுதந்தரவாளியானவன் எல்லாவற்றிற்கும் எசமா
னயிருந்தும், அவன் குழந்தையாயிருக்கிறகால
மளவும் அவனுக்கும் அடிமையானவனுக்கும்
வித்தியாசம் இல்லை.—தகப்பன் குறித்தகாலம் ௨
வரைக்கும் அவன் உவாத்திமாருக்கும் வீட்டு
விசாரணைக்காரருக்கும் கீழாயிருக்கிறான். —
அப்படிப்போல நாமும் குழந்தைகளாயிருந்த ௩
காலத்திலே இவ்வுலகத்தின் வழிபாடுகளுக்கு†
[27]அடிமைப்பட்டவர்களாய் இருந்தோம்.—[28]கா ௪
லம் நிறைவேறினபொழுது, பராபரன் தம்மு
டைய குமாரனை அனுப்ப, அவர் [29]நியாயப்பிர
மாணத்தின் கீழானவர்களாகிய நம்மை மீட்டுக்
கொண்டு,[30]புத்திரசுவிகாரம் நமக்கு உண்டாகும்
படி செய்யும்படிக்கு, — [31]ஸ்திரியினிடத்தில் ௫

1 ஏசா. ௩௨. ௰௫: ௪௪. ௩. எரே. ௩௧. ௩௩: ௩௨ ௪௰. எசே. ௰௧. ௰௯: ௩௬. ௨௭. யோவே. ௨. ௨௮, ௨௯. சகரி. ௰௨. ௰. யோவா. ௭. ௩௯. அப். ௨. ௩௩ ௨௧, ௨௭, ௩௩. யோவா. ௧. ௰௭. அப். ௭. ௩௮. ௧ தீமோ. ௨. ௫. 11 அப். ௭. ௫௩. எபி. ௨. ௨. 12 யோவா. ௰௫. ௨௨. ௨ ரோ. ௪. ௰௫: ௫. ௨௰: ௭. ௮, ௰௩. ௧ தீமோ. ௧. ௯. 13 உரோ. ௩. ௨௯, ௩௰ —14 கலா. ௨. ௨௧. —15 அ. ௮௪. —16 உரோ. ௪. ௰௩, ௰௪, ௰௩. —17 உரோ. ௩. ௯, ௰௯, ௨௩: ௰௧. ௩௨. —18 அப். ௰௩. ௩௯. கலா. ௨. ௰௩. —19 மத். ௫. ௰௭. உரோ. ௰. ௪. கொலே. ௨. ௰௭. எபி. ௯. ௯, ௰. —20 யோவா. ௧. ௰௨. உரோ. ௮. ௰௪, ௰௫, ௰௬. கலா. ௪. ௫. ௧ யோ. ௩. ௧, ௨. —21 உரோ. ௬. ௩. —22 உரோ. ௰௩. ௰௪.
2 எபி ௯. ௰௭. —3 ௧ மோ ௰௨. ௩, ௭: ௰௭. ௭. அ. ௮௪. —4 ௧ கொரி. ௰௨. ௰௨. —5 ௨ மோ. ௰௨. ௪௰, ௪௧.
6 உரோ. ௪. ௰௩, ௰௪. ௨௧. ௮௪.
7 உரோ. அ. ௰௭. —8 உரோ. ௪. ௰௪.
9 ௰௯. ௮௪. —10 உ மோ. ௨௰. ௰௯, ௨௧, ௨௨. ௫ மோ. ௫. ௫, ௨௨.
23 யோவா. ௰. ௰௬: ௰௭. ௨௰, ௨௧. எபே. ௨. ௰௪, ௰௫, ௰௬: ௪. ௪, ௰௫. 24 உரோ. ௰. ௰௨. ௧ கொரி. ௰௨. ௰௩. கலா. ௫. ௬. கொலே. ௩. ௰௧. 25 ௧ மோ ௨௧. ௰, ௰௨. உரோ. ௯. ௭. எபி. ௰௧. ௰௮. —26 உரோ. அ. ௰௭. கலா. ௪. ௭, ௨௮. எபே. ௩. ௬.
27 ௯ வச. கலா ௨. ௨௧: ௫. ௧. கொலோ ௨. ௮, ௨௰ எபி. ௯. ௰. 28 ௧ மோ ௪௯. ௰. தானி. ௯. ௨௪. மாற் ௧ ௰௫. எபே. ௧. ௰. —29 மத். ௨௰. ௨௮. கலா. ௩. ௰௩. தீத். ௨. ௰௪. எபி. ௯. ௰௨. எபே. ௧. ௭. ௧ பே. ௧. ௰௮, ௰௯. —30 யோவா. ௧. ௰௨. கலா. ௩. ௨௯. எபே. ௧. ௫. 31 ௧ மோ. ௩. ௰௫. ஏசா. ௭. ௰௪. மீகா. ௫. ௩. மத். ௧. ௨௩. லூக். ௧. ௩௧: ௨. ௭.

* அல்லது ஏற்பாட்டை.—† அல்லது மூலகாரணங்களுக்கு.

[1]பிறந்து, [2]நியாயப்பிரமாணத்திற்குக் கீழானார்.—
௬ மேலும், நீங்கள் புத்திரராயிருக்கிறபடியினாலே
அப்பா பிதாவே என்று கூப்பிடத்தக்கதாக, பரா
பரன் தம்முடைய குமாரனுடைய [3]ஆவியை
௭ உங்கள் இருதயங்களில் அனுப்பினார்.—ஆகை
யால் இனி நீ அடிமையாயிராமல் புத்திரனாய் இ
ருக்கிறாய்; மேலும் [4]நீ புத்திரனாயிருக்க, கிறிஸ்
துவின் மூலமாய்ப் பராபரனுடைய சுதந்தரனா
யும் இருக்கிறாய்.
௮ [5]நீங்கள் பராபரனை அறியாமல் இருந்தபொ
ழுது [6]சுபாவத்தின்படி தேவர்கள் அல்லாதவர்
௯ களுக்கு அடிமைகளாய் இருந்தீர்கள். — இப்
பொழுது [7]நீங்கள் பராபரனை அறிந்துகொண்ட
பின்பு அல்லது, பராபரனாலே அறிந்துகொள்
ளப்பட்ட பின்பு, எப்படி நீங்கள் [8]பலஈனமும்
வெறுமையுமான அவ்வழிபாடுகளுக்கு * [9]மறுப
டியும்† திரும்பி, மறுபடியும் அவைகளுக்கு அடி
௰ மைப்பட்டிருக்க விரும்புகிறீர்கள்? — நாட்க
ளையும் மாதங்களையும் மற்றக் காலங்களையும்
வருஷங்களையும் [10]நோக்கிப் பார்க்கிறீர்களே.—
௰௧ ஆ [11]நான் உங்களுக்காகப் பிரயாசப்பட்டது
வீணாய்ப்போகுமோ என்று உங்களைக்குறித்துப்
பயந்திருக்கிறேன்.
௰௨ சகோதரரே, நான் உங்களைப்போல ஆனபடி
யால் நீங்களும் என்னைப்போல ஆகுங்கள் என்று
உங்களை வேண்டிக்கொள்ளுகிறேன்; [12]எனக்கு
நீங்கள் அநியாயம் ஒன்றும் செய்யவில்லை. —
௰௩ உங்களுக்குத் தெரிந்திருக்கிறபடி, [13]முதலாந்
தரம் நான் உங்களுக்குச் சுவிசேஷத்தைச் [14]சரீர
௰௪ பலஈனத்தோடே அறிவித்தேன்.—அப்படியிருந்
தும் எனக்குச் சோதனையான அந்தச் சரீர பலஈ
னத்தை நீங்கள் அசட்டைபண்ணாமலும், அரோ
சியாமலும் பராபரனுடைய [15]தூதனைப்போல
வும் [16]கிறிஸ்து இயேசுவைப்போலவும் என்னை
௰௫ ஏற்றுக்கொண்டீர்கள்.—அப்பொழுது எவ்வளவு
பாக்கியமுள்ளவர்களாய் இருந்தீர்கள்;‡ நீங்கள்
உங்கள் கண்களைப் பிடுங்கி, எனக்குக் கொடுக்
கக்கூடுமானால் அப்படியும் செய்வீர்களே என்று
௰௬ உங்களுக்குச் சாட்சியாயிருக்கிறேன்.—[17]நான்
உங்களுக்குச் சத்தியத்தைச் சொன்னபடியினா
லே, உங்களுக்குச் சத்துருவானேனா?
௰௭ [18]அவர்கள் உங்களுக்கு வைராக்கியபட்சத்
தைக் காண்பிக்கிறார்கள்; ஆகிலும் நல்லமன
தாய் அப்படிச் செய்கிறதில்லை; அல்லாமலும்,
அவர்கள் தங்களுக்கு நீங்கள் வைராக்கியபட்
சத்தைக் காண்பிக்கும்பொருட்டு, (என்னிலிரு
ந்து) உங்களை§ நீக்க விரும்புகிறார்கள்.—நன் ௰௮
மையைக்குறித்து வைராக்கியபட்சமாயிருக்கி
றது நல்லதுதான்; அப்படியே நான் உங்களிடத்
தில் இருக்கும்பொழுதுமாத்திரம் அல்ல, எப்
பொழுதும் செய்யவேண்டும்.—[19]ஆ என் பிள் ௰௯
ளைகளே, கிறிஸ்து உங்களிடத்தில் வடிவுகொள்
ளுமளவும் உங்களுக்காக மறுபடியும் கருப்ப
வேதனைப்படுகிறேன்.—மேலும், நான் உங்களைக் ௨௰
குறித்துச் சந்தேகப்படுகிறபடியால்,‖ நான் இப்
பொழுதே உங்களிடத்திலிருந்து என் பேச்சை
மாற்றிக்கொள்ள ஆசையாயிருக்கிறேன்.
நியாயப்பிரமாணத்திற்குக் கீழாயிருக்க மன ௨௧
துள்ள நீங்கள், நியாயப்பிரமாணத்தைக் கேட்க
வில்லையா? இதை எனக்குச் சொல்லுங்கள்?—
எப்படி எழுதியிருக்கிறதென்றால், ஆபிரகா ௨௨
முக்கு இரண்டு குமாரர் இருந்தார்கள்; ஒருவன்
[20]அடிமையானவளிடத்தில் பிறந்தவன், ஒருவன்
[21]சுயாதீனமுள்ளவளிடத்தில் பிறந்தவன்.—அடி ௨௩
மையானவளிடத்தில் பிறந்தவன் [22]சரீர பலத்
தினாலே பிறந்தான்; சுயாதீனமுள்ளவளிடத்தில்
பிறந்தவன் [23]வாக்குத்தத்தத்தினாலே பிறந்தான்.—
இவைகள் ஞான அருத்தமுள்ளவைகள்; என்ன ௨௪
வெனில், அந்த ஸ்திரிகள் இரண்டு ஏற்பாடுகளே
யாம்.¶ ஒன்று அடிமைத்தனத்திற்கு ஏதுவாகப்
பிள்ளைபெறுகிற [24]சீனாபர்வதத்தின் ** ஏற்பாடு,
அதை ஆகார் என்பது குறிக்கின்றது.—ஆகாரென் ௨௫
பது அரபிதேசத்திலுள்ள சீனாபர்வதத்திற்குப்
பேராயிருக்கிறதே; மேலும் அந்த ஆகாரென்ப
வள் இப்பொழுது இருக்கிற எருசலேமுக்குச்
சரியாய்†† இருக்கிறாள்; அது தன் பிள்ளைகளோ
டேகூட அடிமைப்பட்டிருக்கின்றதே.—[25]மே ௨௬
லான எருசலேமே சுயாதீனமான ஸ்திரியினாலே
குறிக்கப்பட்டது; அவள் நம்மெல்லாருக்கும்
தாயானவள். — அந்தப்படி எழுதியிருக்கிறதா ௨௭
வது: புருஷனை அடைந்தவளிலும் அவாந்தர
முள்ளவளுக்கே அதிக பிள்ளைகள் உண்டு; ஆ
கையால் பிள்ளைபெறாத மலடியே, [26]மகிழ்ந்திரு;
கருப்பவேதனைப்படாதவளே, களிப்பாய் எழும்
பிச் சத்தமிடு என்பதே.—ஆனதால் சகோதரரே, ௨௮
நாம் ஈசாக்கைப்போல [27]வாக்குத்தத்தத்துப் பிள்
ளைகளாயிருக்கிறோம். — அல்லாமலும், அக்கா ௨௯
லத்திலே [28]சரீரபலத்தினாலே பிறந்தவன் ஆவி
யின்படி பிறந்தவனைத் துன்பப்படுத்தினது
போல, இப்பொழுதும் [29]நடக்கின்றது. — அ ௩௰
தைக்குறித்து [30]வேத எழுத்து எப்படிச் சொல்
லுகிறது என்றால், [31]அடிமையானவளின் மகன்

---

1 யோவா க.௰௪. உரோ.க.க. பிலி. உ.எ. எபி.உ.௰௪.—2 மத்.௫.௰எ. லூக்.உ.உஎ.—3 உரோ.௫.௫: அ. ௰௫.—4 உரோ.அ.௰௬,௰எ.கலா.க. உகூ.—5 எபே.உ.௰உ. க தெச.ச. ௫.—6 உரோ.க.உ௫. க கொரி. ௰உ உ.எபே.உ.௰க,௰உ. க தெச. க.கூ.—7 க கொரி.அ.க: ௰க.௰உ. உ தீமோ.உ.௰கூ.—8 உரோ.அ.க. எபி. எ. ௰அ.—9 கலா. க க. கொலோ.உ.உ௰.—10 உரோ.௰ச. ௫. கொலோ. உ. ௰கூ.—11 கலா. உ. உ: ௫. உ, ச. க தெச. க.௫. 12 உ கொரி உ. ௫.—13 கலா. க.கூ. 14 க கொரி.உ.க. உ கொரி.௰க.க௰: ௰உ.எ,கூ.—15 உ சாமு.௰கூ.உஎ. மல்கி. உ. எ. சகரி. ௰உ. அ. 16 மத்.௰. சம. லூக்.௰.௰கூ. யோவா. ௰க. உ௰. க தெச. உ. ௰க. 17 கலா.உ.௫,௰ச.—18 உரோ ௰.உ. உ கொரி. ௰க. உ.—19 க கொரி. ச. ௰௫. பிலே. ௰. யாக்.க.௰அ. 20 க மோ.௰கூ.௰௫.—21 க மோ. உக. உ.—22 உரோ.கூ.எ,அ.—23 க மோ. ௰அ.௰,௰ச: உகக.உ.எபி.௰க.௰க. 24 ௫ மோ.கக.உ.—25 ஏசா. உ.உ. எபி.௰உ. உஉ. வெளி. க. ௰உ: உக. உ, ௰.—26 ஏசா. ௫ச. க. 27 அப்.க.உ௫. உரோ.கூ.அ. கலா. க. உகூ.—28 க மோ.உக. கூ. 29 கலா.௫.௰க:க.௰உ.—30 கலா.க. அ, உஉ.—31 யோவா. அ. க௫

* அல்லது மூலகாரணங்களுக்கு; க.வசனம்.—† அல்லது பின்னாக.—‡ அல்லது அப்பொழுது இருந்த உங்கள் பாக்கியம் எங்கே?
§ அல்லது எங்களை.—‖ அல்லது கலக்கப்படுகிற.—¶ அல்லது உடன்படிக்கைகளாம்.—** கிரேக்கு, சினேயா.
†† அல்லது எருசலேமின் வரிசையில்.

சுயாதீனமுள்ளவளுடைய குமாரனோடே சுதந்
தரவாளியாய் இருக்கக்கூடாது; ஆகையால்
அடிமையானவளையும் [1]அவளுடைய குமாரனை
யும் புறம்பே தள்ளு என்றே சொல்லுகின்றது.—
௩௧ இப்படியிருக்கச் சகோதரரே, நாம் அடிமையா
னவளுக்கு அல்ல, [2]சுயாதீனமுள்ளவளுக்கே
பிள்ளைகளாய் இருக்கிறோம்.

## ௫. அதிகாரம்.

௧. அவர்களுடைய விடுதலையைப் பற்றி நின்று, ௩. சுன்னத்தடையவேண்டியதில்லையென்றும், ௰௩. நியாயப்பிரமாணத்தின் பொருளாகிய அன்பைப் பாராட்டவேண்டுமென்றும், ௰௯. மாம்சத்தின் கிரியைகளும், ௨௨. ஆவியின் கனிகளும் இன்னவைகளென்றும் காட்டி, ௨௫. அவர்கள் ஆவியினாலே நடக்கும்படி புத்திசொல்லியது.

௧ ஆனபடியினாலே நீங்கள் மறுபடியும் [3]அடி
மைத்தனத்தின் நுகத்தடிக்கு உட்படாமல் கிறி
ஸ்து நமக்கு உண்டாக்கின [4]சுயாதீன நிலைமை
யிலே நிலைகொண்டிருப்பீர்களாக.
௨ பின்னும் கேளுங்கள்; பவுல் என்னும் நானே
உங்களுக்குச் சொல்லுகிறதாவது: [5]நீங்கள் விருத்
தசேதனத்தைப் பண்ணிக்கொண்டால், கிறிஸ்
து உங்களுக்கு ஒரு பிரயோசனமும் ஆகமாட்
௩ டார்.—மேலும் விருத்தசேதனத்தைப் பண்ணிக்
கொள்ளுகிற எந்த மனிதனும் [6]நியாயப்பிரமா
ணம் முழுவதையும் நிறைவேற்றக் கடனாளியாய்
இருக்கிறான் என்று மறுபடியும் சாட்சியாக அ
௪ றிவிக்கிறேன். — நியாயப்பிரமாணத்தினால் நீதி
மான்களாக விரும்புகிற நீங்கள் [7]கிறிஸ்துவை
விட்டு நீங்கி, [8]அவருடைய கிருபைக்குப் புறம்
௫ பே விழுந்தீர்கள்.—நாங்கள் ஆவியைக்கொண்டு
விசுவாசத்தினாலே [9]நீதி வருதற்கு நம்பிக்கை
௬ யோடே காத்திருக்கிறோம்.—[10]கிறிஸ்து இயேசு
வினிடத்தில் விருத்தசேதனமும் விருத்தசேதன
ம் இல்லாமையும் ஒன்றுக்கும் உதவாதே; [11]அன்
பினால் கிரியைசெய்கிற விசுவாசமே உதவும்.—
௭ [12]நீங்கள் நன்றாய் ஓடினீர்கள்; சத்தியத்திற்குக்
கீழ்ப்படியாமல் போகத்தக்கதாக, [13]யாவன் உங்
௮ களுக்குத் தடைசெய்தான்.*—நீங்கள் அடைந்த
இந்தப் போதனை [14]உங்களை அழைத்தவனாலே
௯ உண்டானதல்ல.—[15]புளிப்புள்ள கொஞ்சமாகிய
மா பிசைந்தமாவை எல்லாம் உப்பப்பண்ணுகி
௰ றது.—[16]நீங்கள் வேறொரு சிந்தையாயிருப்பதும்
இல்லை என்று நான் கர்த்தராலே உங்களைக்கு
றித்து நம்பிக்கையானேன்; [17]உங்களைக் கலக்
கப்படுத்துகிறவன் எப்படிப்பட்டவனாயிருந்தா
லும், [18]ஆக்கினையைச் சுமந்துகொள்வான். —
[19]சகோதரரே, இதுவரைக்கும் நான் விருத்தசேத ௰௧
னத்தைப் பிரசங்கிக்கிறவனாயிருந்தால், [20]இது
வரைக்கும் என்னத்திற்குத் துன்பப்படுகிறேன்?
சிலுவையைப் (பிரசங்கிக்கிறதினாலே) வருகிற
[21]இடறல் ஒழிந்திருக்குமே.—[22]உங்களைக் கல ௰௨
கம்பண்ணுகிறவர்கள் தறிப்புண்டுபோனால் [23]ந
லமாய் இருக்கும்.

சகோதரரே, நீங்கள் சுயாதீனத்திற்கு அழைக் ௰௩
கப்பட்டீர்களே; [24]இந்தச் சுயாதீனத்தை நீங்கள்
சரீரத்திற்கு ஏற்றதாக அநுசரியாமல், [25]அன்பி
னாலே ஒருவருக்கொருவர் ஊழியம்செய்யுங்
கள்.—[26]பிறனிடத்தில் உன்னைப்போல அன்பாயி ௰௪
ருப்பாயாக என்ற இந்த ஒரே வார்த்தையினாலே
[27]நியாயப்பிரமாணம் முழுவதும் நிறைவேறுகின்
றதே.—நீங்கள் ஒருவரை ஒருவர் கடித்துப் பட் ௰௫
சித்துவருகிறபடியினாலே, ஒருவரால் ஒருவர் அ
ழிக்கப்படாதபடிக்குப் பாருங்கள்.

பின்னும் நான் சொல்லுகிறது என்னவென் ௰௬
றால், சரீரத்தின் இச்சையை நிறைவேற்றாதிருந்
து† [28]ஆவியின்படி நடந்துகொள்ளுங்கள்.—[29]சரீ ௰௭
ரம் ஆவிக்கு விரோதமாகவும், ஆவி சரீரத்திற்கு
விரோதமாகவும் இச்சிக்கிறதே; [30]நீங்கள் செய்
யவேண்டுமென்று இருக்கிறவைகளைச் செய்யா
தபடிக்கு, இவைகள் ஒன்றுக்கொன்று விரோத
மாயிருக்கின்றனவே.—[31]ஆவியினால் ஏவப்படு ௰௮
வீர்களானால், நீங்கள் நியாயப்பிரமாணத்திற்குக்
கீழானவர்கள் அல்ல.—[32]சரீரத்தின் கிரியைகள் ௰௯
வெளியரங்கமாயிருக்கின்றன; அவையாவன,
விபசாரம், வேசித்தனம், அசுத்தம், காமவிகா
ரம்,—விக்கிரகாராதனை, பில்லிசூனியம், பகை ௨௰
கள், விரோதங்கள், வைராக்கியங்கள், கோபங்
கள், சண்டைகள், பேதகங்கள், அவமார்க்கங்
கள், பொறாமைகள், கொலைகள்,—வெறிகள், ௨௧
பெருந்தீனிகள் முதலானவைகளே; [33]இப்ப
டிப்பட்டவைகளைச் செய்கிறவர்கள் பராபரனு
டைய இராச்சியத்தைச் சுதந்தரிப்பதில்லை என்று
முன்னே நான் சொன்னதுபோல, இப்பொழு
தும் உங்களுக்குச் சொல்லுகிறேன்.—[34]ஆவியின் ௨௨
கனியோ அன்பு, சந்தோஷம், சமாதானம், நீடி
யசாந்தம், [35]தயவு, [36]நற்குணம், — [37]உண்மை, ௨௩
பொறுமை, இச்சையடக்கம், [38]இப்படிப்பட்ட
வைகளைச் செய்கிறவர்களுக்கு நியாயப்பிரமா
ணம் விரோதமாயிருக்கிறதில்லை. — மேலும், ௨௪
[39]கிறிஸ்துவின் பாரிசமானவர்கள் தங்கள் சரீரத்

---

1 ௧ மோ. ௨௧. ௰, ௰௨.—2 யோவா. ௮. ௩௨. கலா. ௫. ௧, ௰௩.
3 அப். ௰௫. ௰. கலா. ௨. ௪: ௪. ௯.
4 யோவா. ௮. ௩௨. ௨ ரோ. ௧. ௰௮. ௧ பே. ௨. ௰௬.—5 அப். ௰௫. ௧. அப். ௰௬. ௩.—6 கலா. ௩. ௰.
7 ௨ ரோ. ௯. ௩௧, ௩௨. கலா. ௨. ௨௧.
8 எபி. ௰௨. ௰௫.—9 ௨ ரோ. ௮. ௨௪, ௨௫. ௨ தீமோ. ௪. ௮.
10 ௧ கொரி. ௭. ௰௯. கலா. ௩. ௨௮: ௬. ௰௫. கொலோ. ௩. ௰௧.
11 ௧ தெச. ௧. ௩. யாக். ௨. ௰௮, ௨௰, ௨௨.—12 ௧ கொரி. ௯. ௨௪.
13 கலா. ௩. ௧.—14 கலா. ௧. ௬.
15 ௧ கொரி. ௫. ௬: ௰௫. ௩௩.
16 ௨ கொரி. ௨. ௩: ௮. ௨௨.
17 கலா. ௧. ௭.—18 ௨ கொரி. ௰. ௬.
19 கலா. ௬. ௰௨.—20 ௧ கொரி. ௰௫. ௩௰. கலா. ௪. ௨௯: ௬. ௰௭.
21 ௧ கொரி. ௧. ௨௩.—22 அப். ௰௫. ௧, ௨, ௨௪.—23 யோசு. ௭. ௨௫. ௧ கொரி. ௫. ௰௩. கலா. ௧. ௮, ௯.
24 ௧ கொரி. ௮. ௯. ௧ பே. ௨. ௰௬. ௨ பே. ௨. ௰௯. யூதா. ௪.
25 ௧ கொரி. ௯. ௰௯. கலா. ௬. ௨.
26 ௩ மோ. ௰௯. ௰௮. மத். ௨௨. ௩௯. ௨ ரோ. ௰௩. ௮, ௯.—27 மத். ௭. ௰௨: ௨௨. ௪௰. யாக். ௨. ௮.—28 ௨ ரோ. ௯. ௰௨: ௮. ௧, ௪, ௰௨: ௰௩. ௰௪, ௨௫. வச. ௧ பே. ௨. ௰௧.—29 ௨ ரோ. ௭. ௨௩: ௮. ௯. ௭.—30 ௨ ரோ. ௭. ௰௫, ௰௯.—31 ௨ ரோ. ௬. ௰௪: ௮. ௨.
32 ௧ கொரி. ௩. ௩. எபே. ௫. ௩. கொலோ. ௩. ௫. யாக். ௩. ௰௪, ௰௫.
33 ௧ கொரி. ௬. ௯. எபே. ௫. ௫. கொலோ. ௩. ௯. வெளி. ௨௨. ௰௫.
34 யோவா. ௰௫. ௨. எபே. ௫. ௯.
35 கொலோ. ௩. ௰௨. யாக். ௩. ௰௭.
36 ௨ ரோ. ௰௫. ௰௪.—37 ௧ கொரி. ௰௩. ௭.—38 ௧ தீமோ. ௧. ௯.
39 ௨ ரோ. ௬. ௬: ௰௩. ௰௪. கலா. ௨. ௨௰. ௧ பே. ௨. ௰௧.

* அல்லது பின்னேட்டினான்.—† அல்லது இருக்கும்படி.

தை அதின் பலவித இச்சைகளோடுங்கூடச்*
உரு சிலுவையில் அறைந்திருக்கிறார்கள்.—[1]நாம் ஆவி
யைக்கொண்டு பிழைக்கிறபடியால், ஆவியின்
உசா படி நடக்கவும் கடவோம்.—[2]வீண் புகழ்ச்சியை
விரும்பாமலும், ஒருவருக்கொருவர் கோபமூட்
டாமலும், ஒருவர்மேல் ஒருவர் பொறாமை வை
யாமலும் இருக்கக்கடவோம்.

## ௬. அதிகாரம்.

*க. வழுவுகிற சகோதரனை மெத்தனவாய் நடத்தவும், உ. ஒருவர் மற்றொருவருடைய பாரத்தைச் சுமக்கவும், சா. போதகர்களைப் பராமரிக்கவும், கூ. நன்மைசெய்வதில் இளைப்படையாமலிருக்கவும், ௰உ. சுன்னத்தைப் பிரசங்கிக்கிறவர்களுடைய நோக்கம் இன்னதென்றும், ௰ச. தான் கிறிஸ்துவின் சிலுவையிலேயேயொழிய மற்றொன்றிலும் மேன்மை பாராட்டவில்லை என்றும் சொல்லியது.*

க சகோதரரே, [3]ஒரு மனிதன் ஒரு தப்பிதத்தில்
அகப்பட்டால், † [4]ஆவியையுடைய நீங்களும்
[5]தூண்டிவிடப்படாதபடிக்கு, உங்களைக்குறி
த்து எச்சரிக்கையாயிருந்து, அப்படிப்பட்டவ
னைச் [6]சாந்தமுள்ள மனதோடே சீர்பொருந்
உ தப்பண்ணுங்கள். — [7]ஒருவருக்கு உண்டான
பாரத்தை ஒருவர் சுமந்துகொண்டு, [8]இப்படியே
கிறிஸ்துவின் நியாயப்பிரமாணத்தை நிறைவேற்
ங றுங்கள்.[9]—மேன்மையில்லாத [10]ஒருவன் தன்னை
மேன்மையுள்ளவன் என்று எண்ணினால் தன்
ச னைத்தானே வஞ்சிப்பானே. [11]— அவனவன்
தன் தன் சுயகிரியையைச் சோதித்துப் பார்க்கக்
கடவன்; [12]அப்பொழுது மற்றவனைப் பார்க்கை
யில் அல்ல, தன்னையே பார்க்கையில் புகழ்ச்சி
ரு யைப் பெறுவான்.—[13]அவனவன் தன் தன் சுய
சா பாரத்தைச் சுமப்பானே. — [14]மேலும், சுவிசே
ஷவசனத்தைக்குறித்து உபதேசம் கேட்கிறவன்
உபதேசிக்கிறவனுக்குச் சகல நன்மைகளிலும்
எ பங்கைக் கொடுக்கக்கடவன்.—[15]உங்களை வஞ்
சியாதிருப்பீர்களாக; [16]பராபரன் தம்மைப் பரி
யாசம்பண்ணவொட்டார்; ஆனதால், [17]மனிதன்
விதைக்கிறது எதுவோ, அதையே அறுப்பான்.—
அ [18]தன் தேக இச்சைகளுக்குத்தக்கதாக விதைக்
கிறவன் அந்தத் தேக இச்சைகளினால் அழிவை
அறுப்பான்; ஆவிக்குத்தக்கதாக விதைக்கிறவன்
ஆவியினாலே நித்திய சீவனை அறுப்பான். —
ஆகையால் [19]நன்மைசெய்கிறதில் இளைப்படை கூ
யாமல் இருப்போமாக; [20]நாம் தளர்ந்துபோகா
திருந்தால் ஏற்றகாலத்திலே அறுப்போமே. —
இப்படியிருக்க, [21]நமக்குக் காலம் நேரிடுகிறபடி ௰
[22]யாவருக்கும், விசேஷமாக [23]விசுவாசிகளாகிய
குடும்பத்தாருக்கு நன்மைசெய்யக்கடவோம்.

பாருங்கள், இவ்வளவு என் கையெழுத்தோ ௰க
டே எழுதினேன்.—சரீரத்தின்படி நல்லவர்களா ௰உ
கத் தோன்ற விரும்புகிறபேர்கள் [24]தாங்கள் கிறி
ஸ்துவினுடைய சிலுவையின்நிமித்தம் [25]துன்பப்
படாதபடிக்குமாத்திரமே உங்களை [26]விருத்தசேத
னம்பண்ணிக்கொள்ளக் கட்டாயம்பண்ணுகி
றார்கள்.—விருத்தசேதனத்தை அடைந்திருக்கிற ௰ங
வர்களும் நியாயப்பிரமாணத்தைக் கைக்கொள்
ளாமலிருக்கிறார்கள்; அப்படியிருந்தும், அவர்
கள் உங்கள் சரீரத்தைக்குறித்து மேன்மைபா
ராட்டும்படிக்கு, நீங்கள் விருத்தசேதனம் பண்
ணிக்கொள்ளவேண்டும் என்று இருக்கிறார்கள்.—
நான் நம்முடைய கர்த்தராகிய இயேசுக்கிறிஸ் ௰ச
துவின் சிலுவையைக்குறித்தே அல்லாமல் வே
றொன்றைக்குறித்தும் [27]மேன்மைபாராட்டாதி
ருப்பேனாக; அவரால்‡ உலகம் எனக்குச் [28]சிலு
வையில் அறையுண்டிருக்கிறது; நானும் உலகத்
திற்கு அப்படியே இருக்கிறேன். — [29]கிறிஸ்து ௰ரு
இயேசுவினிடத்தில் விருத்தசேதனத்தாலாவது
விருத்தசேதனம் இல்லாமையாலாவது பிரயோ
சனம் இல்லையே; [30]புதிய சிருட்டியாகிறதினா
லே பிரயோசனம் வரும்.—[31]இந்தப் பிரமாணத் ௰சா
தின்படியே [32]நடந்துவருகிறவர்கள் எவர்களோ,
பராபரனுடைய [33]இஸ்ரவேலராகிய அவர்களுக்
கும் சமாதானமும் இரக்கமும் உண்டாயிருக்கக்
கடவது.

கடைசியிலே கர்த்தராகிய இயேசுக்கிறிஸ்து ௰எ
வினுடைய [34]அச்சடையாளங்களை நான் என் சரீ
ரத்திலே சுமந்துகொண்டிருக்கிறபடியால், ஒரு
வனும் எனக்கு அதிக வருத்தம் உண்டாக்காதி
ருப்பானாக.—சகோதரரே, [35]நம்முடைய கர்த்த ௰அ
ராகிய இயேசுக்கிறிஸ்துவின் கிருபை உங்கள்
ஆவியுடனே இருக்கக்கடவது.—ஆமென்.

1 உரோ. அ. ச, ௬. ௰௬. வச.
2 பிலி. உ. ங.—3 உரோ. ௰ரு. க: ௰ங.க. எபி.௰உ.௰ங. யாக். ரு.௰கூ.
4 க கொரி. உ. ௰ரு: ங. க.
5 க கொரி. எ. ரு: ௰. ௰உ.
6 க கொரி. ச. உக. உ தெச. ங. ௰ரு. உ தீமோ. உ. உரு.—7 உரோ. ௰ரு. க. கலா. சா. ௰ங. க தெச. சா.
௰ச.—8 யோவா. ௰ங.௰ச,௰ரு,௩ச: ௰ரு.௰உ. யாக். உ. அ க யோ. ச. உக.
9 உ கொரி. ங. ரு: ௰உ. ௰க.
10 உரோ. ௰உ. ங. க கொரி. அ.உ. கலா. உ. சா.-11 க கொரி. ௰க.உஅ. உ கொரி ௰ங. ரு.—12 லூக். ௰அ. ௰க.—13 உரோ. உ.கூ. க கொரி. ங.அ.-14 உரோ. ௰ரு.உஎ. க கொரி. கூ. ௰க, ௰ச.—15 க கொரி. ங. கூ: ௰ரு. ௩௩.—16 யோபு. ௰ங. கூ.
17 லூக். ௰சா. உரு. உரோ உ.சா. உ கொரி.கூ.சா.- 18 யோபு. ச. அ. வாக். ௰க. ௰அ: உஉ அ. ஓசே. அ.
எ: ௰.௰உ. உரோ. அ.௰ங. யாக். ங. ௰அ.—19 க கொரி. ௰ரு. ரு௮. உ தெச. ங. ௰ங.—20 மத். உச.௰ங. எபி. ங. சா, ௰ச: ௰ கூ: ௰உ. ங,ரு. வெளி. உ.௰.—21 யோவா. சா. ச, ௰உ, ௩ரு.—22 க தெச. ரு. ௰ரு. க தீமோ சா.௰அ. தீத். ங. அ.
23 எபே. உ. ௰கூ. எபி. ங. சா.
24 கலா. ரு. ௰க.—25 பிலி. ங. ௰அ.
26 கலா.உ.ங,௰ச.—27 பிலி. ங.ங,எ, அ.—28 உரோ.சா.சா. கலா.உ.உ௰.
29 க கொரி. எ. ௰கூ. கலா ரு சா. கொலோ.ங.௰க.—30 உ கொரி. ரு ௰எ.—31 பிலி. ங. ௰சா.
32 சங். ௰உரு ரு.—33 உரோ. உ. உகூ: ச. ௰உ: கூ சா,எ,அ. கலா. ங. எ. கூ, உகூ. பிலி. ங. ங.
34 உ கொரி. ங.ரு: ச. ௰: ௰௬. உங. கலா ௬ ௰௬. கொலோ க உச.
35 உ தீமோ. ச. உஉ. பிலே.உரு.

* அல்லது ஆசை இச்சைகளோடும்.—† அல்லது அகப்பட்டாலும்.—‡ அல்லது அதினால்.

EPHESIANS.

---

அப்போஸ்தலனாகிய பவுல்

# எபேசியருக்கு எழுதின

## நிருபம்.

### க. அதிகாரம்.

*க பவுல் எபேசியிலுள்ள சபையை வாழ்த்தி, ௩. அவர்களுக்காகப் பராபரனை ஸ்தோத்திரித்து, ௪. பராபரன் நம்மைத் தெரிந்துகொண்டதையும், ௬. கிருபையினால் நாம் புத்திரசுவிகாரம் அடைந்ததையும், ௰௧. மனுஷனுடைய இரட்சிப்புக்கு மூலகாரணமாய் இருக்கிறதென்பதையும சொல்லி, ௰௩. இந்த இரகசியத்தின் மேன்மை எளிதாய்க் கண்டறியக் கூடாததினாலே, ௰௬. அவர்கள் அந்த அறிவுக்கு வந்து எட்டவும், ௰௮. கிறிஸ்துவுக்குள் அதைச் சுதாதரித்துக்கொள்ளவும் வேண்டிக்கொண்டது.*

௧ [1]பராபரனுடைய சித்தத்தினாலே இயேசுக்கிறி
ஸ்துவினுடைய அப்போஸ்தலனாகிய பவுல்,
எபேசு ஊரிலே [2]கிறிஸ்து இயேசுவினிடத்தில்
விசுவாசமும் [3]பரிசுத்தமும் உள்ளவர்களுக்கு
௨ எழுதுகிறதாவது: — நம்முடைய பிதாவாகிய
பராபரனாலும் கர்த்தராகிய இயேசுக்கிறிஸ்துவி
னாலும் [4]உங்களுக்குக் கிருபையும் சமாதானமும்
உண்டாகக்கடவது.

௩ நம்முடைய கர்த்தராகிய இயேசுக்கிறிஸ்துவி
னுடைய பிதாவுமாய்த் தேவனுமாயிருக்கிறவ
ருக்குத் [5]தோத்திரம் உண்டாவதாக; என்னத்தி
னாலெனில், அவர் தமக்குமுன்பாக [6]நாம் பரிசுத்
தராயும் பிழையில்லாதவர்களாயும் இருப்பதற்கு
[7]லோகத்தோற்றத்திற்குமுன்னே இயேசுக்கிறி
ஸ்துவின்மூலமாய் [8]நம்மைத் தெரிந்துகொண்ட
௪ படியே,—அவர்மூலமாய்ப் பரமஸ்தலங்களிலே*
பலவித திவ்விய நன்மைகளால் நம்மை ஆசீர்வ
௫ தித்தார்.—அன்றியும் [9]அவர் தமக்கு அன்பாயி
ருக்கிறவருக்குள் [10]நமதுமேல் வைத்தருளின
தமது கிருபையின் மகிமைக்குப் புகழ்ச்சியாக,—
[11]தம்முடைய தயையுள்ள சித்தத்தின்படி இயே ௬
சுக்கிறிஸ்துமூலமாக நம்மைத் தமக்குப் [12]புத்திர
சுவிகாரம் உள்ளவர்களாக அன்பினாலே [13]முன்
குறித்திருக்கிறார். — அன்றியும் அவர் மிகுந்த ௭
விவேகத்தோடும் புத்தியோடும் நமக்குச் சம்பூர
ணமாய்த் தெரியப்படுத்தின [14]ஐசுவரியமான
கிருபையின்படியே,—[15]அந்த இயேசுக்கிறிஸ்து ௮
தமது திரு இரத்தத்தைச் சிந்தினதினாலே நமக்
குப் பாவமன்னிப்பாகிய மீட்பு உண்டாயிருக்
கின்றது.—மேலும் [16]காலங்கள் நிறைவேறும் ௯
பொழுது, உண்டாகும் விசாரணையினாலே வா
னங்களிலும் † பூமியிலும் உள்ளவைகள் [17]யா
வும் தலையாகிய கிறிஸ்துவுக்குக் [18]கீழாகக் கூட்
டப்படவேண்டுமென்று,—[19]தமக்குள்ளே தீர்மா ௰
னித்திருந்த சந்தோஷமான [20]சித்தத்தின் இரகசி
யத்தை எங்களுக்கு அறிவித்தார்.—மேலும், ௰௧
[21]தமது சித்தத்தினுடைய ஆலோசனைக்குத்தக்க
தாக எல்லாவற்றையும் நடப்பிக்கிற அவரு
டைய தீர்மானத்தின்படியே,-[22]நாங்கள் கிறிஸ்து ௰௨
வின்மேல் முன்னே நம்பிக்கையாயிருந்த ‡ வர்
களாய் [23]அவருடைய மகிமைக்குப் புகழ்ச்சி
யாய் இருக்கும்படிக்கு, [24]முன் குறிக்கப்பட்டு
அவராலே [25]சுதந்தரத்தையும் அடைந்தோம்.—
நீங்களும் அப்படியே (சுதந்தரராகும்படிக்கு), ௰௩
உங்கள் இரட்சிப்புக்கு ஏற்ற சுவிசேஷமாகிய
[26]சத்திய வசனத்தைக் கேட்டு விசுவாசித்
து வாக்குத்தத்தம்பண்ணப்பட்ட பரிசுத்தஆவி
யோடே அவரால் [27]முத்திரைப்படுத்தப்பட்டீர்

---

1 ௨ கொரி. ௧.௧.—2 ௧ கொரி. ௪. ௰௭. எபே. ௬. ௨௧. கொலோ. ௧. ௨.—3 ௨ரோ. ௧.௭. ௨ கொரி. ௧.௧. 4 கலா. ௧. ௩ தீத். ௧.௪.—5 ௨ கொரி. ௧ ௩. ௧ பே. ௧. ௩.—6 லூக் ௧ ௭௫. எபே ௨ ௰: ௫. ௨௭. கொலோ. ௧ ௨௨. ௧ தெச. ௪. ௭. தீத். ௨. ௰௨.—7 ௧ பே ௧ ௨, ௨௰. 8 ௨ரோ. அ. ௨௮. ௨ தெச. ௨. ௰௩. ௨ தீமோ. ௧. ௯. யாக். ௨. ௫. ௧ பே. ௧. ௨: ௨. ௯.—9 மத். ௩ ௰௭: ௰௭. ௫ யோவா. ௩. ௩௫: ௰ ௰௭.—10 ௨ரோ. ௩. ௨௪: ௫. ௧௫.—11 மத். ௰௧. ௨௬. லூக். ௰௨. ௩௨. ௧ கொரி. ௧. ௨௧. ௬. வச.—12 யோவா. ௧. ௰௨. ௨ரோ. அ. ௰௫. ௨ கொரி. ௬. ௰அ. கலா. ௪. ௫. ௧ யோ. ௩. ௧. 13 ௨ரோ. அ. ௨௯, ௩௰. ௰௧ வச.—14 ௨ரோ. ௨. ௪: ௩. ௨௪: ௯. ௨௩. எபே. ௨. ௭: ௩. அ, ௰௬. பிலி. ௪. ௰௯.—15 அப். ௨௰. ௨அ. ௨ரோ. ௩. ௨௪. கொலோ. ௧. ௰௪. எபி. ௯. ௰௨. ௧ பே. ௧. ௰அ, ௰௯. வெளி. ௫. ௯.—16 கலா. ௪. ௪. எபி. ௧. ௨: ௯. ௰. ௧ பே. ௧. ௨௰. 17 பிலி. ௨. ௯, ௰. கொலோ. ௧. ௨௰. 18 ௧ கொரி. ௩. ௨௨, ௨௩: ௰௧ ௩. எபே. ௨. ௰௫: ௩. ௰௫.—19 எபே. ௩. ௰௧. ௨ தீமோ. ௧. ௯.—20 ௨ரோ. ௰௬. ௨௫. எபே. ௩. ௪, ௯. கொலோ. ௧. ௨௬.—21 ஏசா. ௪௬. ௰, ௰௧. ௨௪. ௨௨ யாக். ௧. ௰அ.—23 ௬, ௰௪. வச. ௨ தெச. ௨. ௰௩.—24 ௫. வச. 25 அப் ௨௰. ௩௨: ௨௬. ௰அ. ௨ரோ. அ. ௰௭. கொலோ. ௧ ௰௨: ௩. ௨௪. தீத். ௩. ௭. யாக். ௨. ௫. ௧ பே. ௧. ௪. 26 யோவா. ௧. ௰௭. ௨ கொரி ௬. ௭. 27 ௨ கொரி. ௧. ௨௨. எபே. ௪. ௩௰.

* அல்லது காரியங்களிலே; எபே. ௬. ௰௨.—† அல்லது வானத்திலும்.—‡ அல்லது விசுவாசித்த.

௰௪ கள்.—[1]சம்பாதிக்கப்பட்டவர்கள் [2]அவருடைய
மகிமைக்குப் புகழ்ச்சியாக [3]மீட்கப்படுமளவும்
[4]அந்த ஆவியானவர் நம்முடைய சுதந்தரத்திற்கு
அச்சாரமாயிருக்கிறார்.
௰௫ ஆனபடியினாலே கர்த்தராகிய இயேசுவின்
மேலுள்ள உங்கள் விசுவாசத்தையும் எல்லாப்
பரிசுத்தவான்கள்மேல் உள்ள உங்கள் அன்பை
௰௬ யும் [5]நான் கேள்விப்பட்டபின்பு,—[6]இடைவி
டாமல் உங்களுக்காகத் தோத்திரம்பண்ணி, என்
௰௭ செபங்களில் உங்களை நினைத்து,—[7]நம்முடைய
கர்த்தராகிய இயேசுக்கிறிஸ்துவின் தேவனுமாய்
மகிமையின் பிதாவுமாயிருக்கிறவர் [8]அவனை
அறிந்துகொள்ளுதற்கு ஏற்ற* ஞானத்தையும்
தெளிவையும் அளிக்கிற ஆவியை உங்களுக்குக்
௰௮ கொடுக்கவேண்டும் என்றும்,-தாம் நம்மை அழை
த்ததினாலே [9]நாம் நம்பத்தக்க பாக்கியம் இன்ன
தென்றும், பரிசுத்தவான்களுக்குத் தாம் கொடுக்
கும் [10]சுதந்தரத்தின் மகிமையின் பெருமை இன்
௰௯ னதென்றும்,—[11]தாம் கிறிஸ்துவை மரித்தோரி
லிருந்து எழுப்பி, [12]எல்லாத் துரைத்தனங்களுக்
கும் அதிகாரங்களுக்கும் வல்லமையுள்ளவர்க
ளுக்கும் கர்த்தாக்களுக்கும் இம்மையிலே மாத்
திரம் அல்ல, [13]மறுமையிலேயும் மற்றும் பேர்
கொண்டிருக்கிற யாவற்றிற்குமேல் உயர்ந்திருக்
௨௰ கத்தக்கதாக,-[14]அவனைப் பரமண்டலங்களிலே
தமது வலதுபாரிசத்திலே உளுக்காரும்படி செ
௨௧ ய்து,—[15]இப்படிச் சகலத்தையும் அவருடைய
பாதங்களின் கீழ்ப்படுத்தி, (அவருடைய) சபை
க்காக [16]அவனைச் சகலத்திற்கும் தலைவராக ஏற்
௨௨ படுத்தி,—இப்படி அவரிடத்தில் வெளிப்படுத்
தின [17]தமது பலத்த வல்லமையின் தத்துவத்தின்
படியே † விசுவாசிகளாகிய நம்மிடத்திலே தாம்
காண்பிக்கும் வல்லமையின் மகா மேன்மை
இன்னதென்றும் நீங்கள் அறியும்படிக்கு, [18]பிர
காசமுள்ள புத்தியாகிய கண்களைக் கொடுக்க
௨௩ வேண்டும் என்றும் (செபம்பண்ணுகிறேன்).—
(அவருடைய சபை) [19]எல்லாவற்றையும் எல்
லாவற்றாலும் நிரப்புகிறவருடைய [20]நிறைவான
[21]சரீரமாய் இருக்கின்றது.

## ௨. அதிகாரம்.

௧. சுபாவத்திலே நமக்கிருக்கும் நிலைமையையும், ௫. கிருபையினால் நமக்கு உண்டாகும் வேற்றுமையையும் இன்னதென்று கூறி, ௰. நற்கிரியைகளுக்கென்று உண்டாக்கப்பட்டு, ௰௩. கிறிஸ்துவோடு ஐக்கியமானவர்கள் ௰௧. அஞ்ஞானிகளைப்போலும், ௰௨. அந்நியரைப்போலும் நடவாமல் ௰௯. பரிசுத்தவான்களைச் சேர்ந்தவர்கள்போலும், பராபரனுடைய குடும்பத்தார்போலும் நடக்கவேண்டுமென்பது.

அக்கிரமங்களாலும் பாவங்களாலும் [22]செத்த ௧
வர்களாயிருந்த [23]உங்களையும் உயிர்ப்பித்தார்.—
[24]முற்காலத்திலே இப்பிரபஞ்சத்தின் வழக்கத் ௨
தின்படியேயும், [25]கீழ்ப்படியாமையுள்ள பிள்ளை
களிடத்தில் இப்பொழுது கிரியைசெய்கிற ஆகா
சத்தின் [26]அதிகாரமுள்ள பிரபுவாகிய ஆவியின்
படியேயும், அவைகளில் நடந்துகொண்டீர்
கள்.—[27]அவர்களோடேகூட நாங்கள் எல்லாரும் ௩
முற்காலத்திலே [28]எங்கள் மாம்சதேக இச்சைக
ளின்படியே நடந்து, எங்கள் மாம்சதேகமும்
சிந்தனைகளும் இச்சித்தவைகளைச் ‡ செய்து,
[29]மற்றவர்களைப்போலக் கோபாக்கினைக்கு உள்
ளானவர்களாயிருந்தோம்.—இப்படி நாம் [30]அக் ௪
கிரமங்களினாலே செத்தவர்களாயிருக்கையில்,—
[31]இரக்கத்தில் ஐசுவரியமுள்ள பராபரன் தாம் ௫
நமதுமேல் வைத்த மிகுந்த அன்பினாலே [32]நம்
மைக் கிறிஸ்துவுடனேகூட உயிர்ப்பித்தார்; கிரு
பையினாலே§ இரட்சிக்கப்பட்டீர்கள்.—[33]கிறி ௬
ஸ்து இயேசுவுக்குள்ளே அவர் நமதுமேல் வை
த்த தயவினாலே தம்முடைய கிருபையின் மி
குந்த ஐசுவரியத்தை வருங்காலங்களிலே திருஷ்
டாந்தமாய்க் காண்பிப்பதற்காக,— நம்மைக் ௭
கிறிஸ்து இயேசுவுடனேகூட எழுப்பி, [34]பர
மண்டலங்களிலே இருக்கும்படி செய்தார்.—
[35]கிருபையினாலே [36]விசுவாசத்தைக்கொண்டு ௮
இரட்சிக்கப்பட்டீர்கள். — அது உங்களாலும் ௯
அல்ல, [37]கிரியைகளினாலும் அல்ல, ஒருவரும்
மேன்மைபாராட்டாதபடிக்கு, [38]அது பராபரனு
டைய ஈவாயிருக்கின்றது. — நற்கிரியைகளைச் ௰
செய்வதற்கு நாம் கிறிஸ்து இயேசுவினாலே
சிருட்டிக்கப்பட்டு, பராபரனுடைய [39]செய்
கையாயிருக்கிறோமே; அவைகளை நாம் செய்து
நடக்கும்படிக்கு [40]அவர் நம்மை முன்னுக எத்
தனம்பண்ணி || இருக்கிறார்.
ஆனபடியினாலே முன்னே சரீரத்தின்படி ௰௧
புறத்தேசத்தாராயிருந்து, [41]சரீரத்திலே கையி
னால் செய்யப்படுகிற விருத்தசேதனம் உள்ள
வர்களாலே விருத்தசேதனம் இல்லாதவர்கள்
என்னப்பட்ட நீங்கள்,—[42]அக்காலத்திலே கிறி ௰௨
ஸ்துவைச் சேராதவர்களுமாய், [43]இஸ்ரவேல

1 அப். ௨௰. ௨௮.—2 ௯. ௰௨. வச. ௧ பே. ௨. ௯.—3 லூக். ௨௧. ௨௮. ௨ ரோ. ௮. ௨௩. எபே. ௪. ௩௰. 4 ௨ கொரி. ௧. ௨௨: ௫. ௫. 5 கொலோ. ௧. ௪. பிலே. ௫. 6 ௨ ரோ. ௧. ௯. பிலி. ௧. ௩, ௪. கொலோ. ௧. ௩. ௧ தெச. ௧. ௨. ௨ தெச. ௧. ௩.—7 யோவா. ௨௰. ௰௭. 8 கொலோ. ௧. ௯.—9 எபே ௨. ௰௨: ௪. ௪.—10 ௰௧. வச.—11 அப். ௨. ௨௪, ௩௩.—12 ௨ ரோ. ௮. ௩௮. கொலோ. ௧. ௰௬: ௨. ௰௫. 13 பிலி. ௨. ௯, ௰. கொலோ. ௨. ௰. எபி. ௧. ௪.—14 சங். ௱௰. ௧. அப். ௭. ௫௫, ௫௬. கொலோ. ௩. ௧. எபி. ௧. ௩: ௰. ௰௨.—15 சங். ௮. ௬. மத். ௨௮. ௰௮. ௧ கொரி. ௰௫. ௨௭. எபி ௨. ௮.—16 எபே. ௪. ௰௫, ௰௬. கொலோ. ௧. ௰௮. எபி. ௨. ௭. 17 எபே. ௧. ௭. கொலோ ௧. ௨௯: ௨. ௰௨.—18 அப். ௨௬. ௰௮. 19 ௧ கொரி. ௰௨. ௬. எபே. ௪. ௬. கொலோ. ௩. ௰௧.—20 கொலோ. ௨. ௯.—21 ௨ ரோ ௰௨. ௫. ௧ கொரி. ௰௨. ௰௨, ௨௭. எபே. ௪ ௰௨: ௫. ௨௩, ௩௰. கொலோ. ௧. ௰௮, ௨௪. 22 ௫. வச எபே ௪. ௰௮.—23 யோவா. ௫. ௨௪. கொலோ ௨. ௰௩.

24 ௧ கொரி. ௬. ௰௧. எபே. ௪. ௨௨. கொலோ. ௩. ௨௧: ௩. ௭. ௧ யோ. ௫. ௰௯.—25 எபே. ௫. ௬. கொலோ. ௩. ௬.—26 ௧ பே. ௯. ௰௨. 27 தீத். ௩. ௩. ௧ பே. ௪. ௩.—28 கலா. ௫. ௰௬.—29 சங் ௫௧. ௫. ௨ ரோ. ௫ ௰௨, ௰௪.—30 ௨ ரோ. ௫. ௬, ௮. ௰ வச.—31 ௨ ரோ. ௰. ௰௨. எபே. ௧. ௭, ௭. வச.—32 ௨ ரோ. ௬. ௪, ௫. கொலோ. ௨. ௰௨, ௰௩: ௩. ௧, ௩.—33 தீத். ௩. ௪. 34 எபே. ௧. ௨௰.—35 ௫. வச. ௨ ரோ. ௩. ௨௪. ௨ தீமோ. ௧. ௯.—36 ௨ ரோ. ௪. ௰௬.—37 ௨ ரோ. ௩. ௨௰, ௨௭, ௨௮: ௪. ௨: ௯. ௰௧: ௰௧. ௬. ௧ கொரி. ௧. ௨௯, ௩௰, ௩௧. ௨ தீமோ. ௧. ௯. தீத் ௩. ௫.—38 மத். ௰௬. ௰௭. யோவா. ௩. ௪௪, ௯. ௨ ரோ ௰. ௰௪, ௰௫, ௰௭. எபே. ௧. ௰௯. பிலி ௧. ௨௯.—39 ௫ மோ. ௩௨. ௬. சங். ௩. ௩. ஏசா ௰௯. ௨௫: ௨௯. ௨௩: ௪௪. ௨௧. யோவா. ௩. ௩, ௫. ௨ கொரி. ௫. ௰௭. எபே. ௪. ௨௪. தீத். ௨. ௰௪.—40 எபே. ௧. ௪. 41 ௨ ரோ. ௨. ௨௮, ௨௯. கொலோ. ௨. ௰௧.—42 எபே ௪. ௰௮. கொலோ. ௧. ௨௧.—43 எசே. ௰௩. ௯. யோவா. ௰. ௰௬.

* அல்லது அறிக்கைபண்ணுதற்கேற்ற; கொலோ. ௨. ௨.—† கிரேக்கு, வல்லமையின் பலத்த தத்துவத்தின்படியே.—‡ கிரேக்கு, கருத்தா விருந்தவைகளை.—§ அல்லது அவருடைய கிருபையினாலே; அப். ௰௫. ௰௧ ௮. வசனம். தீத். ௩. ௫.—|| அல்லது நியமித்து

# COLOSSIANS.

அப்போஸ்தலனாகிய பவுல்

# கொலோசியருக்கு எழுதின

# நிருபம்.

## க. அதிகாரம்.

*௧. அவர்களை வாழ்த்தி அவர்கள் விசுவாசத்துக்காகப் பராபரனைத் தோத்திரித்து, ௭. எப்பாப்பிராவின் உபதேசத்தை ஸ்திரப்படுத்தி, ௯. அவர்கள் கிருபையில் வளரும்படி செபம்பண்ணி, ௰௪. மெய்யான கிறிஸ்துவின் மகிமையைக் கூறி, ௨௧. அவரை அவர்கள் ஏற்றுக்கொள்ளும்படி எவித்தன் ஊழியத்தைக்குறித்துச் சொல்லியது.*

௧ பராபரனுடைய சித்தத்தினாலே இயேசுக்கிறிஸ்
துவினுடைய [1]அப்போஸ்தலனாகிய பவுலும்
௨ சகோதரனாகிய தீமோத்தேயும்,—கொலோசை
ஊரிலே கிறிஸ்துவுக்குள் இருக்கிற [2]பரிசுத்த
வான்களுமாய், விசுவாசிகளுமாயிருக்கிற சகோ
தரருக்கு எழுதுகிறதாவது: நம்முடைய பிதா
வாகிய பராபரனாலும் கர்த்தராகிய இயேசுக்கிறி
ஸ்துவினாலும் உங்களுக்குக் [3]கிருபையும் சமா
தானமும் உண்டாகக்கடவது.
௩ நீங்கள் [4]இயேசுக்கிறிஸ்துவினிடத்தில் விசு
வாசமாயிருக்கிறதையும் சத்தியவசனமாகியசுவி
௪ சேஷத்தினாலே முன்பு கேட்டதுமாய்,—[5]பர
மண்டலங்களில் உங்களுக்காக வைக்கப்பட்ட
துமாய் இருக்கிற (நித்திய சுதந்தரத்தை) நம்புகி
றதினாலே சகல பரிசுத்தவான்கள்மேலும் [6]அன்
புகூருகிறதையும் நாங்கள் கேள்விப்பட்டு,—
௫ உங்களுக்காக எப்பொழுதும் செபம்பண்ணி,
நம்முடைய கர்த்தராகிய இயேசுக்கிறிஸ்துவின்
பிதாவுமாய்த் தேவனுமாய் இருக்கிறவரைத்
௬ [7]தோத்திரம்செய்கிறோம்.—[8]இந்தச் சுவிசேஷம்
உலகத்தில் எங்கும் வியாபித்து, [9]பலனைக் கொ
டுக்கிறதுபோல, (அது) உங்களிடத்திலும் சேர்ந்
து, [10]நீங்கள் பராபரனுடைய கிருபையை உண்
மையாய்க் கேட்டு அறிந்துகொண்ட நாள்மு
தல் உங்களுக்குள்ளும் பலனைக் கொடுக்கிறதாய்
இருக்கின்றது.—அதை நீங்கள் எங்களுக்குப் ௭
பிரியமான உடன்வேலைக்காரனுமாய்,உங்களுக்
காகக் [11]கிறிஸ்துவினுடைய உண்மையான ஊ
ழியக்காரனுமாய் இருக்கிற [12]எப்பாப்பிராவினி
டத்தில் கற்றுக்கொண்டவர்களாயும் இருக்கிறீர்
கள்.—[13]ஆவிக்கேற்ற உங்கள் அன்பை அவன் ௮
எங்களுக்கு அறிவித்தவனாயும் இருக்கிறான்.

ஆகையால், அதைக் கேள்விப்பட்ட நாள்மு ௯
தல் நாங்கள் உங்களுக்காக விண்ணப்பம்பண்
ணி, [14]நீங்கள் எல்லாவிதமான நற்கிரியைகளைச்
செய்கிறவர்களாயும், பராபரனை அறிகிற அறி
வை அதிகமதிகமாய் அடைகிறவர்களாயும்,—
[15]சந்தோஷத்தோடே [16]பொறுமையாயும், நீடிய ௰
சாந்தமாயும் இருப்பதற்கு, அவருடைய மகிமை
பொருந்திய வல்லமையினாலே எல்லாவிதமான
[17]பெலத்தை உடையவர்களாயும்,— [18]ஒளியி ௰௧
லுள்ள பரிசுத்தவான்களுடைய சுதந்தரத்திற்
குப் பங்காளிகள் ஆவதற்கு நம்மைத் தகுதியா
னவர்களாக்கி, [19]இருளினுடைய அதிகாரத்தில்
நின்று விடுதலைபண்ணி, தமக்கு [20]அன்பாயிருக்
கிற *குமாரனுடைய இராச்சியத்திற்கு உட்ப
டுத்திவைத்த [21]பிதாவைத் தோத்திரம்செய்கிற
வர்களாயும் இருந்து,—(இப்படிக்) [22]கர்த்தாவுக் ௰௨
குப் பாத்திரமாயும் [23]மிகுந்த பிரியமாயும் நடக்
கும்படிக்கு,—[24]எல்லா ஞானத்தோடும் பரிசுத்த ௰௩
ஆவிக்கேற்ற விவேகத்தோடும் தமது [25]திருச்சித்
தத்தை அறிகிற அறிவினாலே [26]உங்களை நிரப்ப
வேண்டுமென்று [27]ஓயாமல் அவரை நோக்கி
வேண்டிக்கொள்ளுகிறோம்.— [28]அவருடைய ௰௪
குமாரன் தம்முடைய திரு இரத்தத்தைச் சிந்தின

1 எபே. ௧. ௧.—2 ௧ கொரி. ௪. ௰௭. எபே. ௯. ௨௧.—3 கலா. ௧. ௩. 4 ௯. ௰௪ எபே. ௧. ௰௫. பிலே. ௫. 5 ௨ தீமோ. ௪. ௮. ௧ பே. ௧. ௪. 6 எபி. ௯. ௰.—7 ௧ கொரி. ௧. ௪. எபே. ௧. ௰௬. பிலி. ௧. ௩: ௪. ௬. 8 மத். ௨௪. ௰௪ மாற். ௰௬. ௰௫. உரோ. ௰. ௰௮. ௨௩. ௰௪.—9 மாற். ௪. ௮. யோவா. ௰௫. ௰௬. பிலி. ௧. ௰௧. 10 ௨ கொரி. ௯. ௯. எபே. ௩. ௨. தீத். ௨. ௰௧. ௧ பே. ௫. ௰௨.—11 ௨ கொரி. ௰௧. ௨௩. ௧ தீமோ. ௪. ௬.—12 கொலோ. ௪. ௰௨. பிலே. ௨௩.—13 உரோ. ௰௫. ௩௰.—14 யோவா. ௰௫. ௰௬. ௨ கொரி ௯. ௮. பிலி. ௧. ௰௧. தீத். ௩. ௧. எபி. ௰௩. ௨௧.—15 அப். ௫. ௪௧. உரோ. ௫. ௩.—16 எபே. ௪. ௨.—17 எபே. ௩. ௰௬: ௬. ௰. 18 அப். ௨௬. ௰௮. எபே. ௧. ௰௧. 19 எபே. ௬. ௰௨. எபி. ௨. ௰௪. ௧ பே. ௨. ௯.—20 ௧ தெச. ௨. ௰௨. ௨ பே. ௧. ௰௧.—21 எபே. ௫. ௨௰. கொலோ. ௩. ௰௭.—22 எபே. ௪. ௧. பிலி. ௧. ௨௭. ௧ தெச. ௨. ௰௨. 23 ௧ தெச. ௪. ௧.—24 எபே ௧ ௮. 25 உரோ. ௰௨. ௨. எபே. ௫. ௰, ௰௭. 26 ௧ கொரி. ௧. ௫.—27 எபே ௧. ௰௫. ௰௬. ௧, ௪. ௰௪.—28 எபே. ௧. ௭.

* கிரேக்கு, தமதன்பின்; மத். ௩. ௰௭. எபே. ௧. ௬.

தினாலே, நமக்குப் பாவமன்னிப்பாகிய மீட்பு
௰௫ உண்டாயிருக்கின்றது. — [1]அவர் அதரிசனமா
௰௬ யிருக்கிற பராபரனுடைய சாயலுமாய்,—பரமண்
டலங்களிலும் பூமியிலுமுள்ள காணப்படுகிற
வைகளும் காணப்படாதவைகளுமாகிய யாவற்
றையும், சிங்காசனங்களில் இருக்கிறவர்களை
யும், [2]கர்த்தத்துவமுடையவர்களையும், பிரபுக்க
ளையும், அதிகாரிகளையும் [3]உண்டாக்கினபடியி
னாலே, [4]சிருட்டிகள் யாவுக்கும் முதன்மையு
மாய் இருக்கிறார்; [5]சகலமும் அவராலும் அவருக்
௰௭ காகவும் சிருட்டிக்கப்பட்டிருக்கின்றன.—[6]எல்
லாவற்றிற்கும் முன்னமே இருக்கிறார்; சகல வஸ்
துக்களும் அவராலே நிலையாயிருக்கின்றன.—
௰௮ [7]அவர் தமது சபையாகிய சரீரத்திற்குத் தலை
யாய் இருக்கிறதுமல்லாமல், எல்லாவற்றிற்கும்*
அவர் முந்தினவராய் இருக்கும்படிக்கு, ஆதியும்,
மரித்தோரிலிருந்து எழுந்த [8]முதற்பேறுமானவ
ராய் இருக்கிறார்.

௰௯ [9]சகல சம்பூரணமும் அவருக்குள்ளே வாசமா
௨௰ யிருக்கும்படிக்கும்,—அவர் சிலுவைமரத்திலே
[10]சிந்தின தமது இரத்தத்தினாலே சமாதானம்
உண்டுபண்ணினபின் † பூமியிலும் பரமண்ட
லங்களிலுமுள்ள [11]வஸ்துக்கள் யாவையும் [12]அவ
ராலே தம்முடனே ஒப்புரவாக்கும்படிக்கும்,
பிதாவானவர் பிரியமாயிருந்தார்.

௨௧ [13]முன்னே நீங்கள் பொல்லாத கிரியைகளி
னாலே (உங்கள்) மனதிலே ‡ சத்துருக்களுமாய்
௨௨ [14]அந்நியருமாய் இருந்தீர்கள். — இப்பொழுது
[15]உங்களைப் பரிசுத்தவான்களாகவும் மாசற்றவர்
களாகவும் குற்றஞ்சாற்றப்படாதவர்களாகவும்
தமக்குமுன்பாக நிறுத்தும்படிக்கு, [16]அவர் தமது
மாம்சதேகத்தை மரணத்திற்கு ஒப்புக்கொடுத்
௨௩ ததினாலே உங்களையும் ஒப்புரவாக்கினார்.—நீங்
கள் கேட்டதாயும், [17]வானத்தின்கீழுள்ள சகல
வித சனங்களுக்கும் [18]பிரசங்கம்பண்ணப்பட்
டதாயும், [19]பவுலென்னும் என்னாலே ஊழியம்
செய்யப்படுகிறதாயும் இருக்கிற சுவிசேஷத்தி
னாலே (தெரியவந்த இரட்சிப்பை) [20]நீங்கள்
அசைவில்லாமல் நம்புகிறவர்களுமாய், விசுவா
சத்தினாலே [21]ஸ்திரமும் உறுதியும் உள்ளவர்
களுமாய் நிலைகொண்டு இருந்தீர்களானால்,
(உங்களை) அப்படியே தமக்குமுன்பாக நிறுத்
துவார்.

இப்பொழுது நான் [22]உங்களுக்காகப் படுகிற ௨௪
பாடுகளினாலே [23]சந்தோஷமடைந்து கிறிஸ்து
வினுடைய [24]உபத்திரவங்களில் சேஷமான
உபத்திரவங்களை [25]அவருடைய சரீரம் என்
னும் சபைக்காக என் மாம்சத்திலே நிறைவேற்
றுகிறேன். — [26]பராபரனுடைய நியமிப்பின் ௨௫
படியே நான் அந்தச் சபைக்கு ஊழியக்காரன்
ஆனேன்.—ஆதிகாலங்களுக்கும் தலைமுறைதலை ௨௬
முறைகளுக்கும் மறைவாயிருந்து, இப்பொழுது
[27]அவருடைய பரிசுத்தவான்களுக்கு வெளியாக்
கப்பட்ட [28]மறைபொருளாகிய தேவவசனத்
தை நிறைவாய்ப் பிரசங்கம்பண்ணும்படிக்கு §
அந்த நியமிப்பு உங்களுக்காக எனக்குக் கொடுக்
கப்பட்டிருக்கின்றது. — உலகத்தாரைக்குறித்து ௨௭
[29]இந்த மறைபொருளிலுள்ள சம்பூரணமான
மகிமை இன்னதென்று அந்தப் பரிசுத்தவான்
களுக்குத் [30]தெரியப்பண்ணச் சித்தமாயிருந்தார்;
மகிமை உண்டாகும் என்கிற [31]நம்பிக்கைக்கு
ஏதுவான கிறிஸ்து உங்களில் ‖ இருக்கிறதே
அந்தச் சம்பூரணமான மகிமை.—[32]எந்த மனித ௨௮
னையும் கிறிஸ்து இயேசுவினாலே தேறினவனாக
நிறுத்தும்படிக்கு அவரையே நாங்கள் அறிவித்து,
எந்த மனிதனுக்கும் [33]புத்திசொல்லி, சகலவித
மான ஞானத்தோடும் உபதேசிக்கிறோம்.—அதற் ௨௯
காக [34]நான் எனக்குள்ளே வல்லமையாயிருக்
கிற அவருடைய பெலத்தின்படி [35]போராடிப்
[36]பிரயாசப்படுகிறேன்.

## ௨. அதிகாரம்.

௧. கிறிஸ்துவை உறுதியாய்ப் பற்றிக்கொள்ளவும், ௮. உலகஞானத்துக்கும், வீணான பாரம்பரைகளுக்கும் எச்சரிக்கையாயிருக்கவும், ௰௮. தேவதூதர் ஆராதனையையும், ௨௰. கிறிஸ்துவுக்குள் நிறைவேறிப்போன சடங்காசாரங்களையும் செய்யாமலிருக்கவும் புத்திசொல்லியது.

ஆகையால், [37]ஞானம் அறிவு என்பவைகளா ௧
கிய பொக்கிஷங்கள் எல்லாம் அடங்கியிருக்
கிற கிறிஸ்துவுக்கும் ¶ பிதாவாகிய பராபரனுக்
குமுரிய மறைபொருளை,—[38]நீங்கள் அறிக்கை ௨
இடும்படிக்கான மிகவும் மிகுந்த நிச்சயமுள்ள
விவேகத்தை அடைந்து, [39]அன்பினாலே இணைக்
கப்பட்டவர்களாய் இருக்கத்தக்கதாக,—உங்கள் ௩
இருதயங்களும், இலாவோதிக்கேயா ஊரிலுள்
ளவர்களுடைய இருதயங்களும், மற்றும் என்
முகத்தை மாம்சத்தில் காணாதிருக்கிற எல்லாரு
டைய [40]இருதயங்களும் ஆறுதலை அடையும்ப
டிக்கு, நான் உங்களுக்காகவும் அவர்களுக்காக

1 ௨ கொரி. ௪. ௪. எபி. ௧. ௩.-2 உரோ. ௮. ௨௯. எபே. ௧ ௨௧. கொலோ. ௨. ௰. ௰௫. ௧ பே. ௩. ௨௨.
3 யோவா. ௧. ௩. ௧ கொரி. ௮. ௬. எபே. ௩. ௯. எபி. ௧. ௨.—4 வெளி. ௩. ௰௪.—5 உரோ. ௰௧. ௩௬. எபி. ௨. ௰.—6 யோவா. ௧. ௧,௩: ௰௭. ௫. ௧ கொரி. ௮. ௬.—7 ௧ கொரி. ௰௧. ௩. எபே. ௧. ௰, ௨௨: ௪ ௰௫: ௫. ௨௩.-8 அப். ௨௬. ௨௩. ௧ கொரி. ௰௫. ௨௰, ௨௩. வெளி. ௧. ௫.
9 யோவா. ௧. ௰௬: ௩. ௩௪. கொலோ. ௨. ௯: ௩. ௰௧.—10 எபே. ௨. ௰௪, ௰௫, ௰௬.—11 எபே. ௧. ௰.
12 ௨ கொரி ௫. ௰௮.-13 தீத். ௧. ௰௫. ௰௬.-14 எபே. ௨. ௧,௨,௰௨ ௰௯: ௪. ௰௮.—15 லூக் ௧ ௭௫. எபே. ௧. ௪: ௫. ௨௭. ௧ தெச. ௪. ௭. தீத். ௨. ௰௪. யூதா. ௨௪.—16 எபே. ௨. ௰௫. ௰௬.—17 ௬. ௰௪.-18 உரோ. ௰ ௰௮.—19 அப். ௧. ௰௭. ௨ கொரி. ௩. ௬: ௪. ௧: ௫. ௰௮. எபே. ௩. ௭. ௨௫. ௧ தீமோ. ௨. ௭.
20 யோவா. ௰௫. ௬.
21 எபே. ௩. ௰௭. கொலோ. ௨. ௭.
22 எபே. ௩. ௧,௰௩.—23 உரோ. ௫. ௩. ௨ கொரி. ௭. ௪.—24 ௨ கொரி. ௧. ௫,௬. பிலி. ௩. ௰. ௨ தீமோ. ௧. ௮: ௨. ௰.—25 எபே. ௧. ௨௩.
26 ௧ கொரி ௯. ௰௭. கலா. ௨. ௭. எபே. ௩. ௨. ௨௩. ௩௪.—27 மத். ௰௩. ௰௧. ௨ தீமோ. ௧. ௰
28 உரோ. ௰௬. ௨௫. ௧ கொரி. ௨. ௭. எபே. ௧. ௯.—29 ௨ கொரி. ௯. ௨௩. எபே. ௧. ௭: ௧. ௮.-30 ௨ கொரி. ௨. ௰௪.-31 ௧ தீமோ. ௧. ௧.-32 ௨ கொரி. ௰௧. ௨. எபே. ௫. ௨௭. ௨௨. ௰௪.
33 அப். ௨௰. ௨௰, ௨௭, ௩௧.-34 எபே. ௧. ௰௯: ௩. ௭, ௨௰.-35 கொலோ. ௨. ௧.-36 ௧ கொரி. ௰௫. ௰.-37 ௧ கொரி. ௧. ௨௪: ௨. ௬, ௭. எபே. ௧. ௮. கொலோ. ௧. ௯.—38 பிலி. ௧. ௮. கொலோ. ௧. ௯.—39 கொலோ. ௧. ௰௪.—40 ௨ கொரி. ௧. ௬.

* அல்லது எல்லாருக்குள்ளும்.—† அல்லது உண்டுபண்ணி.—‡ அல்லது பொல்லாத கிரியைகளில் உங்கள் மனதால்.
§ அல்லது நிறைவேற்றும்படிக்கு; உரோ. ௰௫. ௰௯.—‖ அல்லது உங்களுக்குள்ளே.
¶ அல்லது அடங்கிக் கிறிஸ்துவுக்கும்.

வும் [1]பண்ணுகிற மிகுந்த பிரயாசத்தை* நீங்கள்
௪ அறியவேண்டும் என்று விரும்புகிறேன்.—[2]ஒரு
வனும் நயவசனிப்பினாலே உங்களை வஞ்சியாத
௫ படிக்கு இதைச் சொல்லுகிறேன்.—என்னத்தினா
லெனில், [3]நான் தேகத்தின்படி தூரமாயிருந்தும்
என் ஆவியின்படி உங்களுடனேகூட இருந்து,
உங்கள் [4]ஒழுங்கையும் கிறிஸ்துவின்மேலுள்ள
உங்கள் [5]விசுவாசத்தின் உறுதியையும் பார்த்துச்
௬ சந்தோஷப்படுகிறேன்.—[6]ஆனபடியினாலே நீங்
கள் கர்த்தராகிய கிறிஸ்து இயேசுவை ஏற்றுக்
௭ கொண்டு இருக்கிறபடியால்,—நீங்கள் போதனை
அடைந்தபடி [7]அவருக்குள்ளே வேரூன்றி,
அவர்மேலே கட்டப்பட்டு, விசுவாசத்தில் உறு
தியைப் பெற்று, இப்படி அவருக்கு ஏற்றபடி
நடந்துகொண்டு, தோத்திரம்செய்து, அந்த விசு
வாசத்தை அதிகமதிகமாய் அடைவீர்களாக.
௮ கிறிஸ்துவின்படியல்ல, [8]மனிதருடைய பாரம்
பரை நியாயத்தின்படியேயும், [9]உலகத்திலுள்ள
சிறுமையான வழிபாடுகளின் † படியேயும் ஆன
வீணுமாய் வஞ்சனையுமாய் இருக்கிற கல்வியி
னாலே [10]ஒருவனும் உங்களைக் கொள்ளையிடாத
௯ படிக்குப் பாருங்கள். — என்னத்தினாலெனில்,
தேவத்துவத்தின் நிறைவெல்லாம் மெய்யாய்க்
[11]கிறிஸ்துவுக்குள்ளே வாசமாயிருக்கின்றன.—
௰ மேலும், சகல [12]துரைத்தனங்களுக்கும் அதிகா
ரங்களுக்கும் [13]தலைவராயிருக்கிற அவருக்குள்
[14]நீங்கள் நிறைவுள்ளவர்களாய் இருக்கிறீர்கள்.—
௰௧ அவரோடே நீங்கள் ஞானஸ்நானத்தினாலே
அடக்கம்பண்ணப்பட்டவர்கள் ஆனபொழுது,
அவர் பண்ணுகிற விருத்தசேதனத்தினாலே [15]நீங்
கள் பாவங்களுள்ள மாம்சதேகத்தைக் கழற்றின
படியால், [16]கையால் செய்யப்பட்டிராத விருத்த
சேதனத்தை அவருக்குள்ளும் பெற்றுக்கொண்
௰௨ டீர்கள்.—மேலும், பராபரன் [17]அவரை மரித்தோரி
லிருந்து எழுப்பின பலத்த செய்கையை [18]விசு
வாசிக்கிறதினாலே [19]நீங்கள் அந்த ஞானஸ்நானத்
திலே [20]அவருடனேகூட எழுந்தும் இருக்கிறீர்
௰௩ கள்.—எப்படியெனில் பாவங்களாலும் உங்கள்
மாம்சத்தின் நுனித்தோல் என்னும் (அஞ்ஞான
மார்க்கத்தாலும்) [21]மரித்தவர்களாய் இருந்த உங்
களை அவரோடேகூடவும் அவர் உயிர்ப்பித்து,
பாவங்களை எல்லாம் உங்களுக்கு மன்னித்து,—
௰௪ நமக்காகச் செய்யப்பட்டதுமாய் நமக்கு விரோ
தமுமாய் இருந்த [22]கட்டளைகளின் கையெழுத்
தைக் கொலைத்து, அதை நடுவில் இராதபடிக்கு
எடுத்து, அதைச் சிலுவைமரத்தில் சேர்த்து,
ஆணி அடித்துப்போட்டு,—[23]துரைத்தனங்களை ௰௫
யும் அதிகாரங்களையும் [24]கொள்ளையிட்டு வெளி
யரங்கமாய்க் காண்பித்து இவ்விதமாய்‡ அவை
களைச் செயித்துக் கெம்பீரம் அடைந்தார்.
ஆதலால் [25]போசனத்தையும் பானத்தையும் § ௰௬
பண்டிகையையும் மாதப்பிறப்பையும் [26]ஓய்வு
நாள்களையும்|| குறித்து எவனாலும் [27]உங்களைக்
குற்றவாளிகள் ஆக்காதிருப்பானாக.—[28]அவை ௰௭
கள் பின்வந்தவைகளுக்கு நிழலாயிருக்கின்றன;
அவைகளின் பொருள் கிறிஸ்துவினிடத்திலே
உண்டாயிருக்கின்றது.—(மாயமான) தாழ்மை ௰௮
யின்மேலும்,¶ தேவதூதருக்குச் செய்யும் ஆரா
தனையின்மேலும் விருப்பமுற்றிருக்கிற யாவனா
னாலும் உங்கள் [29]பந்தயப்பொருளை நீங்கள் இழ
ந்துபோகும்படி செய்யாதிருப்பானாக;** அப்ப
டிப்பட்டவன் [30]தான் காணாதவைகளைத் துணி
வாய் நடத்துகிறவனுமாய், தன் மாம்சசிந்தையி
னாலே வீணாய் இறுமாப்புக்கொண்டிருக்கிறவ
னுமாய்,—கணுக்களாலும் கட்டுதற்கானவைகளா ௰௯
லும் உதவிபெற்று இணைக்கப்பட்ட சரீரமெல்
லாம் தேவ வளர்த்தியாக வளரச்செய்கிற [31]தலை
யைப் பற்றிக்கொள்ளாதவனுமாய் இருக்கிறான்.
அப்படியிருக்க கையாளுகிறதினாலே அழி ௨௰
வுக்கு ஏதுவான பதார்த்தங்களில் இதைச் சாப்
பிடக்கூடாது. — இதை ருசிபார்க்கக்கூடாது, ௨௧
[32]இதைத் தீண்டக்கூடாது என்று சொல்லிய
[33]மனிதருடைய கற்பனைகளின்படியேயும் போ
தகங்களின்படியேயும் சிலர் கற்பிக்கிறார்களே.—
[34]அப்படிப்பட்ட கற்பனைகள் [35]சுயசித்த ஆரா ௨௨
தனையினாலும் தாழ்மையினாலும் சரீரத்திற்கு
வேண்டிய கனம்செய்யாமல், அதை வருத்தப்
படுத்துகையினாலும்†† ஞானவேஷமுள்ளவைக
ளாய் இருக்கின்றது உள்ளதுதான்.—ஆனாலும் ௨௩
கிறிஸ்துவுடனேகூட நீங்கள் [36]உலகத்திலுள்ள
சிறுமையான வழிபாடுகளுக்கு ‡‡ [37]மரித்தவர்க
ளானபடியால், நீங்கள் உலகத்தின்படி பிழைக்கி
றவர்கள்போல [38]அந்தக் கட்டளைகளைச் சுமந்து
கொள்ளுகிறது என்ன?

## ௩. அதிகாரம்.

௧. கிறிஸ்துவை இப்படித் தேடவேண்டுமென்றும், ௫ இச்சைகளை அடக்கவும், ௮. பழைய மனிதனைக் களைந்துவிட்டுக் கிறிஸ்துவைத் தரித்துக்கொள்ளவும், ௰௨. தருமம் தாழ்மைமுதலிய கடமைகளைச் செய்யவும் புத்திசொல்லியது.

[39]நீங்கள் கிறிஸ்துவுடனேகூட எழுப்பப்பட்டி ௧

1 பிலி. ௧. ௩௰. கொலோ. ௧. ௨௯. ௧ தெச ௨. ௨. 2 ௨ ரோ. ௰௬. ௰௮. ௨ கொரி ௰௧. ௰௩. எபே. ௪. ௰௪: ௫. ௬. ௮. ௰௮. வச. 3 ௧ கொரி. ௫. ௩. ௧ தெச. ௨ ௰௭. 4 ௧ கொரி. ௰௪. ௪௰. —5 ௧ பே. ௫. ௯. 6 ௧ தெச. ௪. ௧. யூதா. ௩. —7 எபே. ௨. ௨௧, ௨௨: ௩. ௰௭. கொலோ. ௧. ௨௩. —8 மத். ௰௫. ௨. கலா ௧ ௰௪, ௨௨. வச. —9 கலா. ௪. ௩, ௯. ௨௰. வச. —10 எரே. ௨௯. ௮. உரோ. ௰௬ ௰௭. எபே ௫. ௬. ௰௮. வச. எபி. ௭௩. ௯. —11 யோவா. ௧. ௰௪. கொலோ. ௧. ௰௯. —12 கொலோ. ௧. ௰௬. 13 எபே. ௧. ௨௰, ௨௧. ௧ பே ௩. ௨௨. 14 யோவா. ௧. ௰௬. —15 உரோ. ௬. ௬. எபே ௪. ௨௨. கொலோ. ௩. ௮, ௯. 16 உ மோ. ௰. ௰௬: ௩௰. ௬. எரே. ௪. ௪. உரோ. ௨. ௨௯. பிலி. ௩. ௩. 17 அப். ௨. ௨௪. —18 எபே. ௧. ௰௯: ௩. ௭.

19 உரோ. ௬. ௪. —20 கொலோ. ௩. ௧. 21 எபே. ௨. ௧, ௫, ௬, ௰௧. —22 எபே. ௨ ௰௫. —23 எபே. ௬. ௰௨. 24 ௧ மோ. ௩. ௰௫. சங். ௬௮. ௰௮ ஏசா. ௫௩. ௰௨. மத். ௰௨. ௨௯. லூக். ௰௨. ௨௧, ௨௨. யோவா ௰௨. ௩௧: ௰௬. ௰௧. எபே. ௪. ௮. எபி. ௨. ௰௪. 25 உரோ. ௰௪. ௨, ௰௭. ௧ கொரி. ௮. ௮. 26 உரோ ௰௪. ௫. கலா. ௪. ௰. 27 உரோ. ௰௪. ௩, ௰, ௰௩. —28 எபி. ௮. ௫: ௯. ௯: ௰. ௧ —29 ௪. வச. ௩. 30 எசே. ௰௩. ௩. ௧ தீமோ ௧. ௭. 31 எபே. ௪. ௰௫, ௰௬ —32 ௧ தீமோ. ௪. ௩. 33 ஏசா. ௨௯. ௰௩. மத். ௰௫. ௯. தீத். ௧. ௰௪. —34 ௧ தீமோ ௪. ௮. 35 ௰௮. வச. —36 ௮. வச. —37 உரோ. ௬. ௩, ௫: ௭. ௪, ௬. கலா ௨. ௰௯. எபே. ௨. ௰௫. —38 கலா. ௪. ௩, ௯. 39 உரோ. ௬. ௫ எபே. ௨. ௬. கொலோ. ௨. ௰௨.

* அல்லது பயத்தை, அல்லது கவலையை.—† அல்லது மூலகாரணங்கள்.—‡ அல்லது தமக்குள் —§ அல்லது போசனபானம்பண்ணுதலையும்
|| அல்லது பண்டிகைக்கடுத்த காரியத்தையும்.—¶ கிரேக்கு, தாழ்மையிற் பிரியமாயிருக்குதலின்மேலும்; ௨௩ வசனம்.
** அல்லது தீராளுக.—†† அல்லது அதை அசட்டைபண்ணுதலிலும்.—‡‡ அல்லது மூலகாரணங்கள்.

ருந்தால், [1]கிறிஸ்து பராபரனுடைய வலதுபா
ரிசத்தில் உளுக்காந்திருக்கிற இடத்திலுள்ள மே
௨ லானவைகளைத் தேடிக்கொள்ளுங்கள். — [2]நீங்
கள் மரித்தீர்களே, அல்லாமலும், [3]கிறிஸ்துவுட
னேகூட உங்கள் சீவன் பராபரனிடத்தில்
௩ மறைந்திருக்கின்றதே. — ஆகையால், பூமியில்
உள்ளவைகளை அல்ல, மேலானவைகளையே
௪ சிந்தித்துக்கொள்ளுங்கள்.* — [4]நமக்குச் சீவனா
கிய [5]கிறிஸ்து வெளிப்படும்பொழுது, அவருட
னேகூட நீங்களும் [6]மகிமையோடே வெளிப்
படுவீர்கள்.

௫ ஆகையால் பூமியிலே [7]வேசித்தனமும் அசுத்
தமும் விரகதாபமும் [8]துர்இச்சையும் [9]விக்கிரக
ஆராதனையான பொருளாசையுமாகிய [10]உங்கள்
௬ அவயவங்களை [11]அழித்துப்போடுங்கள்.-[12]அவை
களின்நிமித்தம் பராபரனுடைய கோபம் [13]கீழ்ப்
௭ படியாமையுள்ள பிள்ளைகள்மேல் வருமே.—முற்
காலத்திலேநீங்களும்அவர்களுடனேகூடச்சீவ
னம்பண்ணினபொழுது, [14]அவைகளைச் செய்து
௮ கொண்டுவந்தீர்கள்.—இப்பொழுது கோபமும்
மூர்க்கமும் துர்க்குணமும் தூஷணமும், [15]நீங்
கள் பேசின வம்புவார்த்தைகளுமாகிய அவை
௯ களையெல்லாம் [16]விட்டுவிடுங்கள். — [17]பழைய
மனிதனையும், அதினுடைய செய்கைகளையும்
நீங்கள் கழற்றிப்போட்டு, [18]தன்னைச் சிருட்டித்
தவருடைய [19]சாயலுக்கு ஏற்ற [20]அறிவு உண்டா
கும்படிக்கு, புதிதாக்கப்பட்ட புதியமனிதனைத்
௰ தரித்துக்கொண்டவர்களாய், — [21]ஒருவருக்கொ
௰௧ ருவர் பொய்சொல்லாதிருங்கள்.—அங்கே [22]கி
ரேக்கன் என்றும், யூதன் என்றும், விருத்தசேத
னமுள்ளவன் என்றும், விருத்தசேதனமில்லாத
வன் என்றும், புறத்தேசத்தான் என்றும், இஸ்கீத்
தன் என்றும், அடிமை என்றும், சுயாதீனன்
என்றும் (சொல்லப்பட்ட வேற்றுமை) இல்லை;
[23]கிறிஸ்துவே எல்லாருக்குள்ளும் எல்லாமுமாய்
இருக்கிறார்.

௰௨ அப்படியிருக்க, [24]நீங்கள் பராபரனாலே தெரிந்
துகொள்ளப்பட்டவர்களாயும், பரிசுத்தராயும்,
சிநேகிக்கப்பட்டவர்களாயும் இருக்கையால்,
[25]உருக்கமான இரக்கத்தையும் தயையையும்
மனத்தாழ்மையையும் பொறுமையையும் நீடிய
௰௩ சாந்தத்தையும் [26]தரித்துக்கொண்டு,—[27]ஒருவரை
ஒருவர் தாங்கி, ஒருவன் மற்றொருவன்மேல் வித
னமாயிருந்தால்,† கிறிஸ்து உங்களுக்கு மன்னித்
ததுபோல, நீங்களும் ஒருவருக்கு ஒருவர் மன்னி
யுங்கள்.—[28]அன்றியும் அவைகள் எல்லாவற்றின் ௰௪
மேலும் [29]அன்பைத் தரித்துக்கொள்ளக்கடவீர்
கள்; [30]அதுவே பூரணசற்குணங்களை இணைக்கிற
கச்சையாயிருக்கின்றது. — அல்லாமலும் [31]பரா ௰௫
பரனுடைய சமாதானம் உங்கள் இருதயங்களுக்
குள்ளே ஆளுகைசெய்யக்கடவது; [32]நீங்கள்
ஒரே சரீரமாய் இருக்கும்படிக்கு, [33]அந்தச் சமா
தானத்திற்கு அழைக்கப்பட்டீர்களே. [34]நன்றி
யறிதல் உள்ளவர்களாயும் இருப்பீர்களாக.

கிறிஸ்துவினுடைய வசனம் உங்களுக்குள் ௰௬
ளே பரிபூரணமாய் வாசமாயிருக்கக்கடவது;
சகல ஞானத்தோடும் [35]சங்கீதங்களினாலும், கீர்த்
தனங்களினாலும், மற்ற ஞானப்பாட்டுகளினா
லும், ஒருவருக்கு ஒருவர் போதித்துப் புத்தி
சொல்லிக்கொண்டு, [36]பராபரனை உங்கள் இரு
தயங்களிலே இனிதாய்ப் பாடி,—[37]நீங்கள் வச ௰௭
னம்சொன்னாலும், கிரியைசெய்தாலும், எவை
செய்தாலும், அவைகளை எல்லாம் கர்த்தராகிய
இயேசுவின் நாமத்தினாலே செய்து, அவர் முன்
னிலையாய்ப் [38]பிதாவாகிய பராபரனைத் தோத்தி
ரியுங்கள்.

[39]ஸ்திரிகளே, [40]கர்த்தருக்கு ஏற்கும்படி உங் ௰௮
கள் சொந்தப் புருஷர்களுக்குக் கீழ்ப்பட்டிருங்
கள். — [41]புருஷர்களே, உங்கள் மனைவிகளில் ௰௯
அன்புகூருங்கள்; [42]அவர்களுக்குக் கசப்புக்கொ
டாதிருங்கள்.

[43]பிள்ளைகளே, உங்களைப் பெற்றவர்களுக்கு ௨௰
[44]எவ்விதத்திலும் கீழ்ப்பட்டிருங்கள்: அதுவே
பராபரனுக்குப் பிரியமாயிருக்கிறது.—[45]பிதாக் ௨௧
களே, உங்கள் பிள்ளைகள் திடனற்றுப்போகாத
படி அவர்களுக்குக் கோபமூட்டாதிருங்கள்.

[46]வேலைக்காரரே, [47]சரீரத்தின்படி உங்களுக்கு ௨௨
எசமான்களானவர்களுக்கு, நீங்கள் [48]எவ்வி
தத்திலும் கீழ்ப்படிந்து, மனிதருக்குப் பிரியமா
யிருக்க விரும்புகிறவர்கள்போல எசமான்கள்
காணும்பொழுதுமாத்திரம் ஊழியம்செய்கிறவர்
களாய் இராமல் பராபரனுக்குப் பயந்து, கபட
மில்லாத இருதயத்தோடே கீழ்ப்படியுங்கள்.—
[49]மேலும், நீங்கள் கர்த்தாவாயிருக்கிற கிறிஸ்து ௨௩
வுக்கு ஊழியம்செய்கிறபடியால், சுதந்தரமென்
னும் பலனைப் [50]பெறுவோம் என்று அறிந்தவர்
களாய்,—[51]எவைகளைச் செய்தாலும் அவைகளை ௨௪

1 உரோ. ௮. ௩௪. எபே. ௧. ௨௰.
2 உரோ. ௬. ௨. கலா. ௨. ௨௰. கொலோ. ௨. ௨௰.— 3 ௨ கொரி. ௫ ௭. கொலோ. ௧ ௫.-4 யோவா. ௰௧. ௨௫: ௰௪ ௬.-5 ௧ யோ. ௩. ௨.
6 ௧ கொரி. ௰௫. ௪௩. பிலி. ௩. ௨௧.
7 எபே. ௫. ௩.— 8 ௧ தெச. ௪. ௫.
9 எபே. ௫ ௫.—10 உரோ. ௬. ௰௩.
11 உரோ. ௮. ௰௩. கலா. ௫. ௨௪.
12 உரோ. ௧. ௰௮. எபே. ௫. ௬. வெளி. ௨௨. ௰௫.—13 எபே. ௨. ௨.
14 உரோ. ௬. ௰௯, ௨௰: ௭. ௫. ௧ கொரி. ௬. ௰௧. எபே. ௨ ௨. தீத் ௩. ௩.
15 எபே. ௪. ௨௬: ௫. ௪.—16 எபே. ௪. ௨௨. ௧ பே. ௨. ௧. எபி. ௰௨. ௧. யாக். ௧. ௨௧.—17 எபே. ௪ ௨௨, ௨௪.— 18 எபே. ௨. ௰.-19 எபே ௪. ௨௩, ௨௪.— 20 உரோ. ௰௨ ௨.
21 ௩ மோ. ௰௯. ௰௧. எபே. ௪. ௨௫.
22 உரோ. ௰. ௰௨. ௧ கொரி ௰௨. ௰௩. கலா. ௩. ௨௮: ௫. ௬. எபே. ௬. ௮.
23 எபே. ௧. ௨௩.— 24 ௧ தெச. ௧. ௪. ௧ பே. ௧. ௨. ௨ பே ௧. ௰.
25 கலா. ௫. ௨௨. பிலி. ௨. ௧. எபே. ௪ ௨, ௩௨.— 26 எபே. ௪. ௨௪.
27 மாற். ௰௧. ௨௫. எபே. ௪. ௨, ௩௨.
28 ௧ பே. ௪. ௮.-29 யோவா. ௰௩. ௩௪. உரோ. ௰௩. ௮. ௧ கொரி. ௰௩. எபே. ௫. ௨. கொலோ. ௨. ௨. ௧ தெச. ௪. ௯. ௧ தீமோ. ௧. ௫. ௧ யோ. ௩. ௨௩: ௪. ௨௧.—30 எபே. ௪. ௩.
31 உரோ. ௰௪. ௰௭. பிலி. ௪. ௭.
32 எபே. ௨. ௰௬, ௰௭: ௪. ௪.
33 ௧ கொரி. ௭. ௰௫.—34 கொலோ. ௨. ௭. ௰௭ வச.—35 ௧ கொரி ௰௪ ௨௬. எபே ௫. ௰௯.-36 கொலோ. ௪. ௬.— 37 ௧ கொரி ௰. ௩௧.
38 உரோ ௧. ௮. எபே ௫ ௨௰. கொலோ. ௧. ௰௨: ௨. ௭. ௧ தெச ௫. ௰௮. எபி. ௰௩. ௰௫.—39 எபே. ௫. ௨௨. தீத். ௨. ௫. ௧ பே. ௩. ௧.
40 எபே ௫. ௩.—41 எபே. ௫. ௨௫, ௨௮, ௩௩. ௧ பே ௩. ௭.—42 எபே. ௪. ௩௧.-43 எபே. ௬. ௧.— 44 எபே. ௫. ௨௪. தீத். ௨. ௯.—45 எபே ௬. ௪.-46 எபே. ௬. ௫. ௧ தீமோ. ௬. ௧. தீத். ௨. ௯. ௧ பே. ௨. ௰௮.
47 பிலே ௰௬.—48 ௨௰. வச.
49 ௧ கொரி. ௭. ௨௨. —50 எபே. ௬. ௮.— 51 எபே. ௬. ௬, ௭.

* அல்லது விரும்புங்கள்.—† அல்லது முறைபாடுபண்ணினால்.

எல்லாம் மனிதருக்காக அல்ல, கர்த்தருக்காகவே
௨௫ மனச்சந்தோஷமாய்ச் செய்யுங்கள். — அநியா
யம்செய்கிறவன் தான் செய்த அநியாயத்தால்
வரும் பலனை அடைவான், [1]பட்சபாதமே
இல்லை.

## ௪. அதிகாரம்.

௧. அவர்கள் செபம்பண்ணவும், ௫. கிறிஸ்துவின் மெய்யறிவுக்கு வந்து எட்டாதவர்களைக்குறித்து ஞானமாய் நடந்துகொள்ளவும் புத்திசொல்லி, ௰. அவர்களை வாழ்த்தினது.

௧ எசமான்களே, உங்களுக்கும் பரமண்டலங்
களில் எசமான் இருக்கிறார் என்று அறிந்தவர்
களாய் நீங்கள் வேலைக்காரருக்கு [2]நீதியுமாய்ச்
செவ்வையுமாய் இருக்கிறதைக் கொடுங்கள்.

௨ [3]தோத்திரத்தோடே விண்ணப்பம்பண்ணு
தற்கு விழித்திருந்து, [4]உறுதியாய் விண்ணப்பம்
௩ பண்ணுங்கள்.—அவ்வேளையிலே [5]கிறிஸ்துவின்
மறைபொருளின்நிமித்தம் [6]கட்டப்பட்டிருக்
கிற நான் பேசவேண்டிய பிரகாரமாக அதை
௪ வெளிப்படுத்திப் பேசும்படிக்கு, — [7]பராபரன்
இந்த வசனத்திற்கு வாசலைத் திறக்கவேண்டும்
என்று, [8]எங்களுக்காகவும் விண்ணப்பம்பண்
ணுங்கள்.

௫ [9]நீங்கள் காலத்தைப் பற்றிக்கொண்டு, புறம்
பானவர்களுக்கு முன்பாக [10]ஞானமாய் நடந்து
௬ கொள்வீர்களாக. — நீங்கள் [11]அவனவனுக்குத்
தகுதியான உத்தரவுசொல்லும் வகையை அறி
யும்படிக்கு, உங்கள் வசனம் எப்பொழுதும்
[12]இனிதாயும், [13]உப்பால் இரசம் ஏற்றுகிறது
போலவும் இருக்கக்கடவது.

௭ பிரியமான சகோதரனுமாய், உண்மையுள்ள
ஊழியக்காரனுமாய், என்னுடனேகூடக் கர்த்த
ருக்கு வேலையாளுமாய் இருக்கிற தீகிக்கு என்
பவன் [14]என் செய்திகளை எல்லாம் உங்களுக்கு
௮ அறிவிப்பான். — உங்கள் செய்திகளை அறிந்து,
உங்கள் இருதயங்களுக்கு ஆறுதல் செய்யும்ப
௯ டிக்கு,—நான் [15]அவனையும், உங்களில் ஒருவனா
கிய உண்மையுள்ள பிரிய சகோதரனான [16]ஒநே
சிமு என்பவனையும் உங்களிடத்திற்கு அனுப்பி
யிருக்கிறேன்; அவர்கள் இவ்விடத்துச் செய்தி
களை எல்லாம் உங்களுக்கு அறிவிப்பார்கள்.
௰ என்னோடேகூடக் காவலில் வைக்கப்பட்
டிருக்கிறவனாகிய [17]அரிஸ்தருக்கு என்பவனும்,
பருனபாவுக்கு இனத்தானாகிய [18]மாற்கு என்ப
வனும் உங்களுக்கு வாழ்த்துதல்செய்கிறார்கள்;
இந்த மாற்கைக்குறித்துக் கட்டளைகளை அடைந்
தீர்களே, அவன் உங்களிடத்தில் வரும்பொ
ழுது அவனை அங்கிகரித்துக்கொள்ளுங்கள்.—
இயுஸ்து என்னப்பட்ட இயேசுவும் உங்களுக்கு ௰௧
வாழ்த்துதல்செய்கிறான்; விருத்தசேதனம் உள்ள
வர்களில் இவர்கள்மாத்திரம் பராபரனுடைய
இராச்சியத்திலே என்னுடனேகூட ஊழியக்
காரராய் எனக்கு ஆறுதல்செய்துகொண்டுவந்
தார்கள்.—உங்களில் ஒருவனாயிருக்கிற கிறிஸ்து ௰௨
வின் ஊழியக்காரனாகிய [19]எப்பாப்பிரா என்ப
வன் உங்களுக்கு வாழ்த்துதல்செய்கிறான்; நீங்
கள் பராபரனுடைய சித்தமானது எல்லாவற்றி
லேயும் [20]நிலைநின்று தேறினவர்களுமாய் நிறை
வுள்ளவர்களுமாய்* இருக்கும்படிக்கு [21]அவன்
எப்பொழுதும் உங்களுக்காக விண்ணப்பங்களி
னால் போராடுகிறான்.† — அப்படியே அவன் ௰௩
உங்களுக்காகவும், இலாவோதிக்கேயா இயே
ராப்பொலி என்னும் ஊர்களில் உள்ளவர்களுக்
காகவும் மிகுந்த சாக்கிரதையுள்ளவனாய் இருக்
கிறான் என்பதற்குச் சாட்சியாயிருக்கிறேன்.—
பிரியமான வைத்தியனாகிய [22]லூக்கா என்பவ ௰௪
னும் [23]தேமா என்பவனும் உங்களுக்கு வாழ்த்
துதல் செய்கிறார்கள்.

இலாவோதிக்கேயாவில் இருக்கிற சகோதரர் ௰௫
களுக்கும் நிம்பா என்பவனுக்கும் [24]அவன் வீட்
டிலே கூடுகிற சபையாருக்கும் வாழ்த்துதலைச்
சொல்லுங்கள்.—[25]இந்த நிருபம் உங்களிடத்தில் ௰௬
வாசிக்கப்பட்டபின், இது இலாவோதிக்கே
யா சபையிலும் வாசிக்கப்படும்படிக்கும், இலா
வோதிக்கேயாவிலிருந்து வரும் நிருபத்தை நீங்
களும் வாசிக்கும்படிக்கும் செய்யுங்கள்.—[26]அ ௰௭
ருகிப்புவை நோக்கி நீ கர்த்தரிடத்தில் பெற்ற
ஊழியத்தை நிறைவேற்றப் [27]பார்ப்பாயாக என்
று சொல்லுங்கள்.

[28]பவுலாகிய நான் உங்களுக்கு வாழ்த்துதல் ௰௮
செய்து, இதை என் கையினாலே எழுதினேன்;
[29]நான் கட்டப்பட்டிருக்கிறதை நினைத்துக்
கொள்ளுங்கள்; [30]கிருபை உங்களுடனே இருக்
கக்கடவது.—ஆமென்.

1 உரோ. ௨ ௰௧. எபே. ௬. ௯. ௧ பே ௧. ௰௭. ௫ மோ. ௰௭.—2 எபே. ௬. ௯.
3 கொலே. ௨. ௭; ௧. ௰௫.—4 லூக். ௰௮. ௧. உரோ. ௰௨. ௰௨. எபே. ௬. ௰௮. ௧ தெச. ௫. ௰௭, ௰௮.
5 மத். ௰௩. ௰௧. ௧ கொரி. ௪. ௧ எபே. ௬. ௰௯. கொலே. ௧. ௨௬: ௨. ௨.
6 எபே. ௬. ௨௰. பிலி. ௧. ௭.
7 ௧ கொரி. ௰௬. ௯. ௨ கொரி. ௨. ௰௨.—8 எபே. ௬. ௰௯. ௨ தெச. ௩. ௧.—9 எபே. ௫. ௰௫.—10 எபே. ௫. ௰௫. ௧ தெச. ௪. ௰௨.—11 ௧ பே. ௩ ௰௫.—12 பிரச. ௰. ௰௨. கொலே. ௩. ௰௬.—13 மாற். ௯. ௫௰.
14 எபே. ௬. ௨௧.—15 எபே. ௬. ௨௨.
16 பிலே. ௰.— 17 அப். ௰௯. ௨௯: ௨௰. ௪: ௨௭. ௨. பிலே. ௨௪.
18 அப். ௰௫. ௩௭. ௨ தீமோ. ௪. ௰௧.
19 கொலே. ௧. ௭. பிலே. ௨௩.
20 மத். ௫. ௪௮. ௧ கொரி. ௨. ௬: ௰௪. ௨௰. பிலி. ௩. ௰௫. எபி. ௫. ௰௪.
21 உரோ. ௰௫. ௩௰.—22 ௨ தீமோ ௪. ௰௧.— 23 ௨ தீமோ. ௪. ௰. பிலே. ௨௪.—24 உரோ. ௰௬. ௫. ௧ கொரி ௰௬. ௰௯.—25 ௧ தெச. ௫. ௨௭.
26 பிலே. ௨.—27 ௧ தீமோ. ௪. ௬.
28 ௧ கொரி. ௰௬. ௨௧. ௨. தெச. ௩. ௰௭.
29 எபி. ௰௩. ௩.—30 எபி. ௰௩. ௨௫.

* அல்லது நிரப்பப்பட்டவர்களுமாய்.—† அல்லது பிரயாசப்படுகிறான்.

I. THESSALONIANS.

அப்போஸ்தலனுகிய பவுல்

# தெசலோனிக்கேயருக்கு எழுதின

## முதலாம் நிருபம்.

### க. அதிகாரம்.

*க. தெசலோனிக்கேயரைப் பவுல் எப்போதும் நினைவுகூர்ந்து அவர்களுக்காகத் தோத்திரமும், செபமும் பண்ணினதையும், ௫. அவர்களுடைய விசுவாசத்தின் நிச்சயத்தையும், அவர்களுடைய குணப்படுதலின் உத்தமத்தையுங்குறித்துத் தான் அடைந்திருந்த நிச்சயத்தையும் அறிவித்தது.*

க பவுலும் [1]சில்வானும் தீமோத்தேயும், பிதாவா
கிய பராபரனுக்குள்ளும், கர்த்தராகிய இயேசுக்
கிறிஸ்துவுக்குள்ளும் இருக்கிற தெசலோனிக்
கை ஊரிலுள்ள சபைக்கு எழுதுகிறதாவது: நம்
முடைய பிதாவாகிய பராபரனாலும், கர்த்தரா
கிய இயேசுக்கிறிஸ்துவினாலும் [2]உங்களுக்குக்
கிருபையும் சமாதானமும் உண்டாகக்கடவது.
உ பராபரனாலே அன்புகூரப்படுகிற சகோதர
ரே, [3]எங்கள் சுவிசேஷம் வசனத்தோடேமாத்
திரமல்ல, வல்லமையோடும் [4]பரிசுத்த ஆவியோ
டும் [5]மிகுந்த நிச்சயத்தோடும் உங்களுக்குள்ளே
௩ பிரவேசித்ததினாலே,—நீங்கள் (அவராலே) [6]தெ
ரிந்துகொள்ளப்* பட்டவர்கள் என்று நாங்கள்
௪ அறிந்து,-நம்முடைய பிதாவாகிய பராபரனுக்கு
முன்பாக விசுவாசத்தினாலே நீங்கள் செய்கிற
[7]கிரியையையும், அன்பினாலே பண்ணுகிற [8]பிர
யாசத்தையும், நம்முடைய கர்த்தராகிய இயே
சுக்கிறிஸ்துவின்மேல் உள்ள நம்பிக்கையினாலே
காண்பிக்கிறபொறுமையையும்,நாங்கள் [9]இடை
௫ விடாமல் நினைத்துக்கொண்டு,-எங்கள் செபங்க
ளிலே உங்களைக்குறித்துப் பேசி, உங்கள் எல்
லாருக்காகவும், எப்பொழுதும் [10]பராபரனைத்
௬ தோத்திரம்செய்கிறோம்.—[11]நாங்கள் உங்களுக்
குள்ளே இருந்தபொழுது, உங்களுக்காக இப்
படிப்பட்டவர்களாய் இருந்தோம் என்று அறிந்
திருக்கிறீர்களே; அன்றியும், நீங்கள் மிகுந்த
உபத்திரவத்திலே [12]பரிசுத்தஆவியின் சந்தோஷ
த்தோடே வசனத்தை ஏற்றுக்கொண்டு, [13]எங்
களையும் கர்த்தரையும் பின்பற்றி,— இப்படி ௭
மக்கேதோனியா நாட்டிலும், அகாயா நாட்டி
லும் உள்ள விசுவாசிகள் யாவருக்கும் மாதிரி
யை வைத்தீர்கள் -எப்படியெனில், உங்களிடத் ௮
திலிருந்து கர்த்தருடைய [14]வசனம் மக்கேதோ
னியா அகாயா நாடுகளில் பிரசித்தமானதுமல்
லாமல், நாங்கள் அதைக்குறித்து எதையாகிலும்
சொல்லவேண்டியிராதபடிக்கு, நீங்கள் பராபர
னைப்பற்றின விசுவாசம் [15]எவ்விடங்களிலே
யும் வெளியரங்கமாயிற்று.—[16]நாங்கள் உங்களி ௯
டத்தில் அடைந்த பிரவேசம் இப்படியிருந்த
தென்றும், சிலைனயுடைய மெய்யான தேவனுக்
குப் பணிவிடை செய்யும்படிக்கும், [17]அவர்
மரித்தோரிலிருந்து எழுப்பினவருமாய், [18]இனி
வரும் கோபாக்கினையில்நின்று நம்மை இழுத்து
இரட்சிக்கிறவருமாய் இருக்கிற [19]அவருடைய
குமாரனாகிய இயேசுவைப் [20]பரமண்டலங்க
ளிலிருந்து வரப்பார்த்துக்கொண்டிருக்கும்படிக்
கும்,—[21]நீங்கள் விக்கிரகங்களைவிட்டு, பராபர ௰
னிடத்திற்கு இவ்விதமாய் மனம்திருப்பினீர்கள்
என்றும் அவர்கள் தாமே அறிவிக்கிறார்களே.

### உ. அதிகாரம்.

*க. தெசலோனிக்கேயருக்குள் சுவிசேஷம் வந்து பிரசங்கிக்கப்பட்ட விதத்தையும், அவர்கள் அதை ஏற்றுக்கொண்ட விதத்தையும், ௰௩. பரிசுத்தவானாகிய பவுல் வெகுகாலம் அவர்களிடத்திற்கு வராதிருந்ததற்கும், அவர்களை வந்து பார்க்க விருப்பமுடையவனாயிருந்ததற்கும் முகாந்தரத்தையும் சொல்லியது.*

அன்றியும் சகோதரரே; [22]உங்களிடத்திலே நா க
ங்கள் அடைந்த பிரவேசம் வீணாயிருக்கவில்லை

1 உ கொரி. க. ௰௯. உ தெச. க.க. க பேது. ௫. ௰உ.—2 எபே. க. உ. 3 மாற் ௰௬. உ௰. க கொரி. உ.௪: ௪. உ௰.—4. உ கொரி. ௬. ௬. 5 கொலோ.உ.உ.எபி.உ.க -6 கொலோ. ௩. ௰உ. உ தெச. உ. ௰௩. 7 யோவா. ௬. உ௯. கலா. ௫ .௬. க தெச. ௩. ௬. உ தெச. க.௩,௰௧. யாக். உ. ௰௭.—8 உரோ. ௰௬.௬. எபி ௬. ௰.—9 க தெச. உ. ௰௩. 10 உரோ.க.௮. எபே. க. ௰௬.பிலே. ௪.—11 க தெச.உ. க, ௫, ௰.௰௧. உ தெச. ௩, ௭.—12 அப். ௫.௪௧. எபி.௰.௩௪.—13 க கொரி. ௪,௰௬: ௰௧. ௬. பிலி. ௩. ௰௭. க தெச. உ.௰௪. உ தெச.௩.௯.-14 உரோ. ௰.௰௮.-15 உரோ.௧.௮. உ தெச. ௧.௪.—16 க தெச.உ.௧ -17 அப். உ.உ௪.—18 மத். ௩.௭. உரோ.௫. ௯. க தெச. ௫. ௯.—19 உரோ. உ. ௭. பிலி.௩. உ௰. தீத். உ. ௰௩. உ பேது. ௩. ௰உ. வெளி. ௧. ௭. 20 அப். க. ௰௧. க தெச. ௪. ௰௬. உ தெச.௧.௭.—21 க கொரி.௰உ. உ. கலா.௪.௮.—22 க தெச.௧. ௫, ௯.

* அல்லது அன்புகூரப்படுகிற சகோதரரே, நீங்கள் பராபரனாலே தெரிந்துகொள்ள.

௨ என்று நீங்களே அறிந்திருக்கிறீர்கள்.—அல்லாம
லும் உங்களுக்குத் தெரிந்திருக்கிறபடி, முன்னே
[1]பிலிப்புப்பட்டணத்திலே நாங்கள் பாடுகளை
யும் நிந்தைகளையும் அடைந்திருந்தும், பராபரனு
டைய சுவிசேஷத்தை அதிக [2]போராட்டத்தோ
டே [3]உங்களுக்குச் சொல்லும்படி, நம்முடைய
பராபரனாலே [4]தயிரியமுள்ளவர்களாய் இருந்
௩ தோம். — [5]அன்றியும் எங்கள் போதகம் வஞ்ச
கத்திலும், அசுத்தத்திலுமிருந்து தோன்றவில்லை;
௪ அது கபடமுள்ளதாயிருக்கவுமில்லை. — [6]சுவி
சேஷத்தை எங்களுக்கு ஒப்புவிக்கத்தக்கதாக,
[7]பராபரன் எங்களை உத்தமரென்று எண்ணினப
டியே நாங்கள் மனிதருக்கு அல்ல, [8]எங்கள் இரு
தயங்களைச் சோதித்தறிகிற பராபரனுக்கே [9]பிரி
௫ யமாய்ச் சொல்லுகிறோம். — ஆனதால் உங்க
ளுக்குத் தெரிந்திருக்கிறபடி, நாங்கள் [10]ஒருக்கா
லும் இச்சகமான வசனங்களைச் சொல்லவும்
இல்லை; பொருளாசையை மூடிக்கொண்டு நடக்
கவும் இல்லை; அதற்குப் [11]பராபரனே சாட்சி
௬ யாய் இருக்கிறார்.—உங்களிடத்திலாவது, மற்ற
வர்களிடத்திலாவது [12]நாங்கள் மனிதர் மகிமை
யைத் தேடவும் இல்லை; [13]நாங்கள் கிறிஸ்துவின்
அப்போஸ்தலராய் இருக்கிறபடியால், (உங்கள்
௭ மேல்) [14]பாரத்தை [15]ஏற்றலாமே.* — அப்படியி
ருந்தும், தாயானவள் தன் பிள்ளைகளைக் காப்
பாற்றுகிறதுபோல, [16]உங்களுக்கு லகுவுண்டாக
௮ நடந்தோம். — இப்படி நாங்கள் உங்கள்மேல்
மிகவும் விருப்பமாயிருந்து பராபரனுடைய
சுவிசேஷத்தைமாத்திரமல்ல, நீங்கள் எங்களுக்
குப் பிரியமானவர்களானபடியினாலே, [17]எங்கள்
சீவனையும் உங்களுக்குப் பகிர்ந்துகொடுக்க
௯ [18]மனதாயிருந்தோம். — அன்றியும் சகோதரரே,
நாங்கள் பட்ட பிரயாசமும், வருத்தமும் உங்க
ளுக்கு ஞாபகமாயிருக்கும்; [19]உங்களில் ஒருவ
னுக்காகிலும் பாரமாயிராதபடிக்கு, [20]இரவும்
பகலும் நாங்கள் வேலைசெய்து, பராபரனுடைய
சுவிசேஷத்தை உங்களிடத்தில் பிரசங்கித்தோ
௰ மே.—விசுவாசிகளாகிய உங்களுடனே நாங்கள்
[21]எவ்வளவு பரிசுத்தமாகவும், நீதியாகவும், பிழை
யில்லாமையாகவும் இருந்ததற்கு, நீங்களும்
பராபரனோடேகூட [22]சாட்சிகளாய் இருக்கிறீர்
௰௧ கள்.—மேலும் தம்முடைய [23]இராச்சியத்திற்கும்
மகிமைக்கும் உங்களை அழைத்திருக்கிற பராபர
னுக்கு [24]நீங்கள் பாத்திரமாய் நடக்கவேண்டும்
௰௨ என்று,—தகப்பன் தன் பிள்ளைகளுக்குச் செய்கி
றதுபோல, நாங்கள் உங்களில் யாவருக்கும் புத்
தியும் ஆறுதலும் சாட்சியும் சொன்னதை அறிந்
திருக்கிறீர்கள்.

ஆகையால், நீங்கள் பராபரனுடைய வசனத் ௰௩
தை எங்களாலே கேள்விப்பட்டு ஏற்றுக்கொண்
டபொழுது [25]அதை மனிதர் வசனமென்று
அல்ல, பராபரனுடைய வசனமென்றே ஏற்றுக்
கொண்டதினாலே, நாங்கள் [26]இடைவிடாமல்
பராபரனுக்குத் தோத்திரம் செலுத்துகிறோம்;
அது மெய்யாய் அவருடைய வசனம்தான்; விசு
வாசிக்கிற உங்களுக்குள்ளே அது பலனும் செய்
கின்றது. — எப்படியெனில், சகோதரரே, நீங் ௰௪
கள் யூதேயா நாட்டிலே கிறிஸ்து இயேசுவுக்குள்
ளான பராபரனுடைய [27]சபைகளைப் பின்பற்றி
னவர்களாகி, [28]அவர்கள் யூதராலே பாடுபட்ட
துபோல [29]நீங்களும் உங்கள் சுய கோத்திரத்தா
ராலே பாடுபட்டீர்கள்.—அந்த யூதர்கள் [30]கர்த்த ௰௫
ராகிய இயேசுவையும், [31]தங்கள் தீர்க்கதரிசிகளை
யும் கொலைசெய்து, எங்களையும் துன்பப்படுத்
தி,† இப்படிப் பராபரனுக்குப் பிரியமாயிராத
வர்களுமாய், [32]மனிதர் யாவருக்கும் விரோதிக
ளுமாய் இருக்கிறார்கள்.—[33]அவர்கள் தங்கள் பா ௰௬
வங்களை எப்பொழுதும் நிறைவாக்கத்தக்கதாக,
புறத்தேசத்தார் இரட்சிக்கப்படுதற்கு நாங்கள்
அவர்களோடே பேசாதபடிக்குத் [34]தடைபண்
ணுகிறார்கள்; [35]கோபாக்கினை அதிசீக்கிரமாய்
அவர்களுக்கு வருகின்றது.

சகோதரரே, நாங்கள் இருதயத்தினால் அல்ல, ௰௭
[36]முகமுகமாய் (மாத்திரம்) கொஞ்சக்காலம் உங்
களைக் காணாமல் பிரிந்திருந்தபடியினாலே [37]உங்
கள் முகத்தைப் பார்க்கவேண்டும் என்று,
மிகுந்த ஆசையோடே அதிகமாய்ப் பிரயத்தனம்
பண்ணினோம்.—ஆனபடியினாலே உங்களிடத் ௰௮
தில் வருகிறதற்கு நாங்கள் இரண்டொருதரம்
மனதாய் இருந்தோம்; பவுலாகிய நான் விசேஷ
மாக அப்படியிருந்தேன்; [38]சாத்தான்மாத்திரம்
எங்களுக்குத் தடைபண்ணினான்.—நம்முடைய ௰௯
கர்த்தராகிய இயேசுக்கிறிஸ்து [39]வரும்பொழுது,
அவருடைய சந்நிதானத்திலே யார் [40]எங்களுக்கு
நம்பிக்கையும், சந்தோஷமும், [41]புகழ்ச்சியா
கிய‡ கிரீடமும் வருவதற்கு ஏதுவாய் இருப்பார்
கள், நீங்களல்லவோ அப்படியிருப்பீர்கள்.—நீங் ௨௰
கள் எங்களுக்கு மகிமையுமாய்ச் சந்தோஷமு
மாய் இருக்கிறீர்களே.

1 அப். ௰௬. ௨௨.—2 பிலி. ௧. ௩௰. கொலோ. ௨. ௧.—3 அப். ௰௭. ௨.—4 ௧ தெச. ௧. ௫.
5 ௨ கொரி. ௭. ௨. ௫. ௰௪. ௨ பே. ௧. ௰௬.—6 ௧ கொரி. ௯. ௰௭. கலா. ௨. ௭. தீத். ௧. ௩.—7 ௧ கொரி. ௭. ௨௫. ௧ தீமோ. ௧. ௰௧, ௰௨.
8 வாக். ௰௭. ௩. ௨ரோ. ௮. ௨௭.
9 கலா. ௧. ௰.—10 அப். ௨௰. ௩௩. ௨ கொரி. ௨. ௰௭: ௪. ௨: ௭. ௨: ௰௨. ௰௭.—11 ௨ரோ. ௧. ௯.
12 யோவா. ௫ ௪௧, ௪௪: ௰௨. ௪௩. ௧ தீமோ. ௫. ௰௭.—13 ௧ கொரி. ௯. ௧, ௨, ௬.—14 ௨ கொரி. ௰௧. ௯: ௰௨. ௰௩, ௰௪. ௨ தெச. ௩. ௮.
15 ௧ கொரி. ௯ ௪, ௯, ௰௨, ௰௮. ௨ கொரி. ௰. ௧, ௨, ௰, ௰௧: ௰௩. ௰. ௨ தெச. ௩. ௯. பிலே. ௮. ௯. ௰௪.
16 ௧ கொரி. ௨ ௩: ௯. ௨௨. ௨ கொரி. ௰௩. ௪. ௨ தீமோ. ௨. ௨௪.
17 ௨ கொரி ௰௨. ௰௫.—18 ௨ரோ. ௧. ௰௩: ௰௫. ௨௯.—19 ௨ கொரி. ௰௨. ௰௩, ௰௪.—20 அப். ௨௰. ௩௪. ௧ கொரி. ௪. ௰௨. ௨ கொரி. ௰௧. ௯. ௨ தெச. ௩. ௮.—21 ௨ கொரி. ௭. ௨. ௨ தெச. ௩ ௭.—22 ௧ தெச. ௧. ௫.—23 ௧ கொரி. ௧ ௯. ௧ தெச. ௫. ௨௪. ௨ தெச. ௨. ௰௪. ௨ தீமோ. ௧. ௯.—24 எபே. ௪. ௧. பிலி. ௧. ௨௭. கொலோ. ௧. ௰. ௧ தெச. ௪. ௧.
25 மத். ௰. ௪௰. கலா. ௪. ௰௪. ௨ பே. ௩. ௨.—26 ௧ தெச. ௧. ௩.—27 கலா. ௧. ௨௨.—28 எபி. ௰. ௩௩, ௩௪.
29 அப். ௰௭ ௫, ௰௩.—30 அப். ௨. ௨௩: ௩. ௰௫: ௫. ௩௰: ௭. ௫௨.—31 மத். ௫. ௰௨: ௨௩. ௩௪, ௩௭. லூக் ௰௩. ௩௩, ௩௪. அப். ௭. ௫௨.—32 எஸ். ௪. ௮.—33 ௧ மோ. ௰௫. ௰௬. மத். ௨௩. ௩௨.—34 லூக். ௰௧. ௫௨. அப். ௰௩. ௫௰: ௰௪. ௫, ௰௯: ௰௭. ௫, ௰௩: ௰௮. ௰௨: ௰௯. ௯: ௨௨. ௨௧, ௨௨.—35 மத். ௨௪. ௬. ௰௪.
36 ௧ கொரி. ௫. ௩. கொலோ. ௨. ௫.—37 ௧ தெச. ௩. ௰.—38 ௨ரோ. ௧ ௰௩: ௰௫. ௨௨.—39 ௧ கொரி. ௰௫. ௨௩. ௧ தெச. ௩. ௰௩. வெளி ௧. ௭: ௨௨. ௰௨.—40 ௨ கொரி. ௧. ௰௪. பிலி. ௨. ௰௬: ௪. ௧.—41 வாக். ௰௩. ௩௩.

* அல்லது அதிகாரத்தைச் செய்யலாமே.—† அல்லது வெளியே துரத்தி.—‡ அல்லது சந்தோஷமாகிய.

## ௩. அதிகாரம்.

*க. அவர்களைப் பலப்படுத்தித் தேற்றும்படி தீமோத்தேயுவை அவர்களிடத்தில் அனுப்பினதினலும், அவர்களுடைய நற்சீரில் தான் சந்தோஷப்பட்டதினலும், ௰. அவர்களுக்காகச் செபம்பண்ணி அவர்களிடத்தில் சுகமாய் வந்து சேர விரும்பினதினலும் பவுல் தெசலோனிக்கேயர்பேரில் தனக்கிருந்த பெரிய அன்பைப் பாராட்டினது.*

க ஆகையால், [1]நாங்கள் அதிகமாய்ப் பொறுக்க
மாட்டாமல் [2]அத்தேனே பட்டணத்திலே தனித்
உ துவிடப்பட விரும்பி,—[3]இந்த உபத்திரவங்களி
னலே ஒருவரும் அசைக்கப்படாதபடிக்கு, உங்
கள் விசுவாசத்தைக்குறித்து உங்களை ஸ்திரப்ப
டுத்தும்பொருட்டாக, நம்முடைய சகோதரனு
மாய், பராபரனுடைய ஊழியக்காரனுமாய்,
கிறிஸ்துவின் சுவிசேஷத்தில் எங்கள் உடன்வே
லையாளுமாய் இருக்கிற [4]தீமோத்தேயுவை அ
௩ னுப்பினேம்.—நீங்களே அறிந்திருக்கிறபடி [5]இப்
படிப்பட்டதைச் சகிக்கிறதற்கு நாம் வைக்கப்
௪ பட்டிருக்கிறோமே.—மேலும் நமக்கு உபத்திர
வம் வருமென்று நாங்கள் உங்களிடத்தில் இருந்
தபொழுது, [6]உங்களுக்கு முன்னறிவித்தோமே;
அப்படியும் நடந்தது; அதை நீங்கள் அறிந்திருக்
௫ கிறீர்கள்.—ஆனபடியினலே [7]நான் அதிகமாய்ப்
பொறுக்கமாட்டாமல், [8]எங்கள் வேலை வீணய்ப்
போகத்தக்கதாகச் [9]சோதனைக்காரன் உங்களைச்
சோதனைக்கு உட்படுத்தினது உண்டோ என்று
உங்கள் விசுவாசத்தை அறியும்படிக்கு அவனை
அனுப்பினேன்.
௬ சகோதரரே, இப்பொழுது [10]தீமோத்தேயு உங்
களிடத்திலிருந்து எங்களிடத்தில் வந்து, நீங்கள்
விசுவாசமாயும் அன்பாயும் இருந்து, எப்பொழு
தும் எங்களை நன்றாய் நினைத்துக்கொண்டு,—
௭ [11]நாங்கள் உங்களைக் காண மிகுந்த ஆசையாய்
இருக்கிறதுபோல, நீங்களும் எங்களைக் காண
ஆசையாய் இருக்கிறீர்கள் என்று எங்களுக்கு
நற்செய்தியைச் சொன்னவுடனே எங்களு
டைய [12]உபத்திரவம் இடுக்கண் யாவற்றிலே
யும், உங்கள் விசுவாசத்தினலே உங்களைக்கு
௮ றித்து ஆறுதல் அடைந்தோம்.—நீங்கள் [13]கர்த்த
ரிடத்தில் நிலைநிற்கிறதால் இப்பொழுது பிழைக்
௯ கிறோம்.— அல்லாமலும் நாங்கள் உங்களைக்கு
றித்து நம்முடைய பராபரனுடைய சந்நிதானத்
திலே அடைந்திருக்கிற மிகுந்த சந்தோஷத்திற்
காகப் [14]பராபரனுக்கு எந்தத் தோத்திரம் செலுத்
௰ துவோம்?—உங்கள் [15]முகத்தைக் கண்டு [16]உங்கள்
விசுவாசத்தின் குறைவுகளை நீக்கி, நிறைவு உண்
டாக்கும்பொருட்டாக, [17]இரவும்பகலும் [18]மிக
வும் வேண்டுதல்செய்கிறோம்.

அந்தப்படியே நம்முடைய பிதாவாகிய பரா ௰௧
பரனும், கர்த்தராகிய இயேசுக்கிறிஸ்துவும், [19]எங்
கள் வழியை உங்களிடத்திற்கு (நேராக்கக்க
டவர்). *—அல்லாமலும் நாங்கள் உங்கள்மேல் ௰௨
வைத்திருக்கிற அன்புக்கு ஒப்பாய், [20]நீங்களும்
ஒருவரிடத்தில் ஒருவரும், மற்றெந்த மனிதரி
டத்திலும் அதிகமாய் நிறைந்த அன்புள்ளவர்கள்
ஆகும்படி [21]கர்த்தர் செய்து,—இவ்விதமாய் நம் ௰௩
முடைய கர்த்தராகிய இயேசுக்கிறிஸ்து [22]தம்மு
டைய பரிசுத்தவான்கள் அனைவரோடும் கூட
வரும்பொழுது, நீங்கள் நம்முடைய பிதாவாகிய
பராபரனுக்குமுன்பாகப் பிழையில்லாத பரிசுத்
தமுள்ளவர்களாய் இருக்கும்படி, [23]உங்கள் இரு
தயங்களை ஸ்திரப்படுத்தக்கடவர்.

## ௪. அதிகாரம்.

*க. பரிசுத்தமும், ௩. சன்மார்க்கமுமாய் நடக்கவும், ௯. ஒருவரை ஒருவர் சிநேகிக்கவும், ௰௧. அமைதலாய்த் தங்கள் சொந்த அலுவல்களைச் செய்யவும், ௰௩. மரித்தவர்களுக்காக மட்டாய்த் துக்கம்கொண்டாடவும் புத்திசொல்லி, ௰௫. உயிர்த்தெழுதலின்மேலும் கிறிஸ்து நியாயந்தீர்க்க உலகத்தில் இரண்டாம்விசை வருவதைக்குறித்தும் சில நியாயங்கள் சொல்லியது.*

மேலும் சகோதரரே, [24]நீங்கள் இன்ன இன்ன க
பிரகாரமாக நடக்கவும் [25]பராபரனுக்குப் பிரிய
மாய் இருக்கவும் வேண்டுமென்று எங்களால்
[26]ஏற்றுக்கொண்டபடியே அதிகமதிகமாய்ப்
பெருகும்படிக்குக் கர்த்தராகிய இயேசுவினலே
உங்களை வேண்டிக்கொண்டு † புத்திசொல்லுகி
றோம் ‡— கர்த்தராகிய இயேசுவினல் நாங்கள் உ
உங்களுக்குக் கொடுத்த கட்டளைகளை அறிந்தி
ருக்கிறீர்களே.—நீங்கள் [27]பரிசுத்தமுள்ளவர்கள் ௩
ஆகிறதே [28]பராபரனுடைய சித்தமாயிருக்கி
றது; [29]அந்தப்படி நீங்கள் வேசிமார்க்கத்திற்கு
விலகி,—[30]பராபரனை அறியாத [31] அஞ்ஞானிக ௪
ளைப்போல [32]விரகதாபமாகிய இச்சைக்கு உள்
ளாகவல்ல,— பரிசுத்தத்திற்கும், கனத்திற்கும், ௫
உள்ளாகவே உங்களில் அவனவன் தன்தன்
சரீரபாண்டத்தைக் [33]காத்துக்கொள்ளுகிறதற்கு
வகையை அறிந்து, — இந்தச் [34]செய்கையினு ௬
லே § தன் சகோதரனை ஒடுக்காமலும், வஞ்சியா
மலும் || இருக்கவேண்டும்; முன்னேயும் நாங்கள்
உங்களுக்குச் சொல்லிச் சாட்சிகொடுத்தபடி;
இப்படிப்பட்ட எல்லாவற்றையுங்குறித்து கர்த்
தர் நீதியாய்ப் [35]பழிவாங்குகிறவராய் இருக்கிறா
ரே.—பராபரன் நம்மை அசுத்தத்திற்கு அல்ல, ௭
[36]பரிசுத்தத்திற்கு அழைத்தாரே.—ஆனதால் [37]அ ௮
சட்டைபண்ணுகிறவன் ¶ மனிதனை அல்ல,
[38]தமது பரிசுத்தஆவியை எங்களுக்குக் கொடுத்த
பராபரனையே அசட்டைபண்ணுகிறான்.

1 ௫. வச.—2 அப். ௰௭. ௰௫. 3 எபே. ௩. ௰௩.—4 உரோ. ௰௬. உக. க கொரி. ௰௬. ௰. உ கொரி. க. ௰௯. 5 அப். ௯. ௰௬: ௰௪. உஉ: உ௰. உ௩: உ௩ ௰௬ க கொரி. ௪. ௯. உ தீமோ. ௩. ௰௨. க பே. உ. உக.—6 அப். உ௰. உ௪.—7 க. வச.—8 கலா. உ. உ: ௪. ௰௧. பிலி. உ. ௰௬. 9 க கொரி. எ. ௫. உ கொரி. ௰௧. ௩. 10 அப். ௰அ. க, ௫.—11 பிலி. க. அ. 12 உ கொரி. க. ௪: எ. ௬, எ, ௰௩. 13 பிலி. ௪. க —14 க தெச. க. உ. 15 க தெச. உ. ௰எ —16 உ கொரி. ௰௩. ௯, ௰௧. கொலோ. ௪. ௰உ. 17 அப். உ௬. எ. உ தீமோ. க. ௩. 18 உ ரோ. க. ௰, ௰௧: ௰௫ ௩உ.—19 மாற். க ௩.—20 க தெச. ௪ ௯: ௫. ௰௫. உ பே. க. எ.—21 க தெச. ௪. ௰. 22 சகரி. ௰௪. ௫. யூதா ௰௪. 23 க கொரி: க. அ. பிலி க. ௰.

24 க தெச. ௫. உ௩. உ தெச. உ. ௰எ. க யோ. க. உ௰, உ௩.—25 க தெச. உ. ௰உ. கொலோ. க. ௰.—26 பிலி. க. உஎ. கொலோ. உ. ௬.—27 எபே. ௫. உஎ.—28 உ ரோ. ௰உ. உ. எபே. ௫. ௰எ.—29 க கொரி ௬. ௰௫, ௰அ. எபே. ௫. ௩. கொலோ. ௩ ௫. 30 க கொரி. ௰௫. ௩௪. கலா. ௪. அ. எபே. உ. ௰உ: ௪. ௰அ. உ தெச. க. அ.—31 எபே. ௪. ௰எ, ௰அ. 32 கொலோ. ௩. ௫. உ ரோ. க. உ௪, உ௬. 33 உ ரோ. ௬. ௰௯. க கொரி. ௬. ௰௫, ௰அ.—34 க மோ. ௰௬. ௰க, ௰௩. க கொரி. ௬. அ.—35 உ தெச. க. அ. 36 க மோ ௰௧. ௪௪: ௰௯. உ. க கொரி. க. உ. எபி. ௰உ. ௰௪. க பே. க. ௰௪, ௰௫.—37 லூக். ௰. ௰௬.—38 க கொரி. உ. ௰: எ. ௪௰. க யோ. ௩. உ௪.

* அல்லது காட்டக்கடவர்.—† அல்லது மன்றாடிக்கொண்டு.—‡ அல்லது வேண்டிக்கொள்ளுகிறோம்.—§ அல்லது யாதொரு செய்கையிலே.—|| அல்லது நெருக்காமலும்.—¶ அல்லது தள்ளுகிறவன்.

௯ சகோதர [1]சிநேகத்தைக்குறித்து நான் உங்க
ளுக்கு எழுதவேண்டுவதில்லை; நீங்கள்தாமே
[2]ஒருவரிடத்தில் ஒருவர் அன்பாயிருக்கும்படிக்
குப் [3]பராபரனால் போதிக்கப்பட்டவர்களாய்
௰ இருக்கிறீர்களே.—அந்தப்படியேயும் நீங்கள் மக்
கேதோனியா நாட்டில் எங்குமுள்ள [4]சகோதரர்
௰௧ எல்லாருக்கும் செய்துவருகிறீர்கள்.—இன்னும்
சகோதரரே, [5]அதிலே நீங்கள் அதிகமாய்ப் பெ
ருகவும், [6]புறம்பே இருக்கிறவர்களுக்கு நீங்கள்
௰௨ யோக்கியமாய் நடந்து,—ஒரு குறைவையும்* அ
டையாதபடிக்கு, நாங்கள் உங்களுக்குக் கட்ட
ளையிட்டபடி அமைதலாயிருக்க மிகுதியாய்
விரும்பவும், [7]உங்களுடைய சொந்த அலுவலைப்
பார்த்துக்கொள்ளவும், [8]உங்கள் சொந்தக் கைக
ளினால் வேலைசெய்யவும் வேண்டும் என்று உங்
களுக்குப் புத்திசொல்லுகிறோம்.
௰௩ அல்லாமலும் சகோதரரே, [9]நம்பிக்கை அற்ற
வர்களைப்போல [10]நீங்களும் துக்கப்படாதப
டிக்கு, நித்திரை அடைந்தவர்களைக்குறித்து நீங்
கள் அறியாமல் இருக்கிறது எனக்கு விருப்ப
௰௪ மில்லை.—என்னத்தினாலெனில், [11]இயேசுவான
வர் மரித்துப் பின்பு எழுந்திருக்கிறார் என்று
நாம் விசுவாசிக்கிறதுபோல, [12]இயேசுவைப்
பற்றி நித்திரை அடைந்தவர்களையும் பராபரன்
அவரோடேகூடப் புறப்படப்பண்ணுவார்.—
௰௫ மேலும் [13]கர்த்தருடைய வார்த்தையின்படி நாங்
கள் உங்களுக்கு அறிவிக்கிறது என்னவென்
றால், கர்த்தர் வரும்பொழுது உயிரோடேமீதியா
யிருக்கும் [14]நாம் நித்திரை அடைந்தவர்களுக்கு
௰௬ முந்திக்கொள்வதில்லை.—அதெப்படியெனில்,
[15]கர்த்தர் தாமே ஆரவாரத்தோடும், பிரதான தூதன்
இடும் சத்தத்தோடும், [16]தேவ எக்காளத்தோடும்
வானத்திலிருந்து இறங்கிவருவார்; அப்பொழுது
கிறிஸ்துவிலிருந்து [17]மரித்தவர்கள் முதலாவது
௰௭ எழும்புவார்கள்.—பின்பு [18]உயிரோடே மீதியான
நாமும் ஆகாயத்தில் வருகிற கர்த்தாவுக்கு நேராக
அவர்களோடும்கூட [19]மேகங்களில் எடுத்துக்
கொண்டுபோகப்பட்டு, இப்படி எப்பொழுதும்
௰௮ [20]கர்த்தருடனேகூட இருப்போம்.—ஆகையால்
இந்த வார்த்தைகளினாலே [21]நீங்கள் ஒருவருக்கு
ஒருவர் ஆறுதல் செய்யுங்கள்.†

## ௫. அதிகாரம்.

௧. கிறிஸ்து நியாயந்தீர்க்க வருவதைக்குறித்துச் சொல்லி, ௰௬. பல புத்திமதிகள் படிப்பித்து, ௨௩. நிருபத்தை முடித்தது.

இவைகள் நடக்கும் [22]காலங்களையும் நேரங்க ௧
ளையுங்குறித்துச் சகோதரரே [23]நான் உங்களுக்கு
எழுதவேண்டுவதில்லை.—இரவிலே திருடன் வரு ௨
கிறவிதமாய், [24]கர்த்தருடைய நாள் வரும் என்று
நீங்களே நன்றாய் அறிந்திருக்கிறீர்கள்.—சமாதா ௩
னமும், சவுக்கியமும் உண்டென்று அவர்கள்
சொல்லும்பொழுது, [25]கர்ப்பவதியானவளுக்கு
வேதனை வருகிறதுபோல, [26]அழிவு சடுதியாய்
அவர்கள்மேல் வரும்; அவர்கள் தப்பிப்போவதே
இல்லை.

சகோதரரே, அந்த நாள் திருடனைப்போல ௪
உங்களையும் பிடித்துக்கொள்ளத்தக்கதாக, [27]நீங்
கள் அந்தகாரத்தில் இருக்கிறவர்கள் அல்ல.—நீங் ௫
கள் எல்லாரும் [28]ஒளியின் பிள்ளைகளுமாய், பக
லின் பிள்ளைகளுமாய் இருக்கிறீர்களே; நாம்
இரவுக்கும், அந்தகாரத்திற்கும் உள்ளானவர்கள்
அல்ல.—ஆகையால் மற்றவர்களைப்போல [29]நாம் ௬
தூங்காமல் [30]விழித்துக்கொண்டு தெளிவாய்
இருக்கக்கடவோம்.—[31]தூங்குகிறவர்கள் இராத் ௭
திரியில் தூங்குவார்களே; [32]வெறிகொள்ளுகிற
வர்கள் இராத்திரியில் வெறிகொள்ளுவார்களே.—
பகல் மனிதராகிய நாம், விசுவாசம் அன்பு என் ௮
னும் [33]மார்பின் கவசத்தையும், இரட்சிப்பின்
நம்பிக்கை என்னும் தலைச்சீராவையும் தரித்துக்
கொண்டு தெளிவாயிருக்கக்கடவோம்.—[34]பரா ௯
பரன் நம்மைக் கோபாக்கினைக்கு அல்ல, [35]நம்
முடைய கர்த்தராகிய இயேசுக்கிறிஸ்து மூல
மாய் இரட்சிப்பை அடைந்துகொள்ளுதற்கு
ஏற்படுத்தினாரே.—நாம் விழித்திருப்பவர்களா ௰
னாலும், நித்திரை அடைந்தவர்களானாலும் தம்
முடனேகூட உயிரோடிருக்கும்படிக்கு, [36]அவர்
நமக்காக மரித்தாரே.—[37]ஆகையால், நீங்கள் ௰௧
செய்துவருகிறதுபோல ஒருவருக்கு ஒருவர் ஆறு
தல்‡ சொல்லி ஒருவரை ஒருவர் ஊன்றக்கட
வீர்கள்.

அன்றியும், சகோதரரே உங்களுக்குள்ளே பிர ௰௨
யாசப்பட்டு, கர்த்தருக்குள்ளாக உங்களுக்கு
முதலாளிகளாய் இருந்து, உங்களுக்குப் புத்தி
சொல்லுகிற பேர்களை [38]நீங்கள் அறிந்துகொண்
டு,—அவர்களுடைய கிரியையின் நிமித்தம் அ ௰௩
வர்களை மிகவும் அன்பாய் எண்ணிக்கொள்ளும்
படிக்கு உங்களை வேண்டிக்கொள்ளுகிறோம்;
[39]உங்களுக்குள்ளே சமாதானமாய் இருப்பீர்க
ளாக.

1 ௧ தெச. ௪ ௯.—2 மத். ௨௨. ௩௯. யோவா. ௰௩. ௩௪: ௰௫. ௰௨. எபே. ௫ ௨. ௧ பே. ௪. ௮ ௧ யோ. ௩. ௰௧, ௨௩: ௪. ௨௧.—3 எரே. ௩௧. ௩௪. யோவா. ௬. ௪௫: ௰௪. ௨௬. எபி. ௮ ௰௧. ௧ யோ. ௨. ௨௰, ௨௭. 4 ௧ தெச. ௧. ௭.—5 ௧ தெச. ௩. ௰௨. 6 ௨ ரோ. ௰௩. ௰௩. ௨ கொரி. ௮. ௨௧. கொலோ. ௪. ௫. ௧ பே. ௨. ௰௨ 7 ௨ தெச. ௩. ௰௧. ௧ பே. ௪. ௰௫. 8 அப். ௨௰ ௩௫. எபே. ௪. ௨௮. ௨ தெச ௩. ௭, ௮, ௰௨.—9 எபே. ௨. ௰௨.—10 ௧ மோ. ௰௯. ௨௮. ௫ மோ. ௰௪. ௧, ௨. ௨ சாமு. ௰௨. ௨௰—11 ௧ கொரி. ௰௫. ௰௩. 12 ௧ கொரி. ௰௫. ௰௮, ௨௩. ௧ தெச. ௩. ௰௩.—13 ௧ இரா. ௰௩. ௰௭, ௰௮: ௨௰. ௩௫.—14 ௧ கொரி. ௰௫. ௫௧. 15 மத். ௨௪. ௩௰. ௩௧ அப். ௧. ௰௧. ௨ தெச. ௧. ௭.-16 ௧ கொரி. ௰௫. ௫௨-17 ௧ கொரி. ௰௫. ௨௩, ௫௨. 18 ௧ கொரி. ௰௫. ௫௧.—19 அப். ௧. ௯. வெளி. ௰௧. ௰௨.—20 யோவா. ௰௨. ௨௬: ௰௪. ௩: ௰௭. ௨௪.

21 ௧ தெச. ௫. ௰௧.-22 மத். ௨௪. ௩, ௩௬. அப். ௧. ௭.-23 ௧ தெச. ௪. ௯. 24 மத். ௨௪. ௪௩, ௪௪: ௨௫. ௰௩. லூக். ௰௨. ௩௯, ௪௰. ௨ பே. ௩. ௰. வெளி. ௩. ௩: ௰௬. ௰௫.-25 எரே. ௰௩. ௨௧. ஓசே. ௰௩. ௰௩.-26 ஏசா. ௰௩. ௬-௯. 27 ௨ ரோ. ௰௩. ௰௨, ௰௩. ௧ யோ. ௨. ௮. 28 எபே. ௫. ௮—29 மத். ௨௫. ௫. 30 மத். ௨௪. ௪௨: ௨௫. ௰௩. ௨ ரோ. ௰௩. ௰௧. ௰௨, ௰௩. ௧ பே ௫. ௮. 31 லூக். ௨௧. ௩௪, ௩௬. ௨ ரோ ௰௩. ௰௩. ௧ கொரி. ௰௫. ௩௪. எபே. ௫. ௰௪.—32 அப். ௨. ௰௫.—33 ஏசா. ௫௯. ௰௭. எபே. ௬. ௰௪, ௰௩, ௰௭. 34 ௨ ரோ. ௯. ௨௨. ௧ தெச. ௧. ௰. ௧ பே. ௨. ௮. யூதா. ௪. 35 ௨ தெச. ௨. ௰௩, ௰௪.—36 ௨ ரோ. ௰௪. ௮, ௯. ௨ கொரி. ௫. ௰௫. 37 ௧ தெச. ௪. ௰௮-38 ௧ கொரி. ௰௬. ௰௮. பிலி. ௨. ௨௯. ௧ தீமோ. ௫. ௰௭. எபி. ௰௩. ௭, ௰௭.—39 மாற். ௯. ௫௰.

* அல்லது குறைவுக்காக ஒருமனிதனிடத்திலும்.—† அல்லது புத்திசொல்லுங்கள்.—‡ அல்லது புத்தி.

௰ச அன்றியும் சகோதரரே, நாங்கள் உங்களுக்கு
எச்சரிக்கையாகச் சொல்லுகிறது * என்னவென்
றால், [1]ஒழுங்கில்லாதவர்களுக்குப் † புத்திசொல்
லுங்கள்; [2]திடனற்றவர்களுக்கு ஆறுதல்செய்
யுங்கள்; [3]பெலஈனரைத் தாங்குங்கள்; [4]எல்லா
ருக்கும் நீடியசாந்தமாய் இருங்கள்.
௰ரு [5]எவனும் மற்றொருவன் செய்யும் தீமைக்குத்
தீமையைச் செய்யாமல், எப்பொழுதும் உங்க
ளுக்குள்ளும் மற்ற யாவருக்குள்ளும் [6]நன்மை
செய்யப் பின்தொடரும்படி எச்சரிக்கையாய்
இருப்பீர்களாக.
௰சு [7]எப்பொழுதும் சந்தோஷமாயிருங்கள்; [8]இ
௰எ டைவிடாமல் செபம்பண்ணுங்கள். — [9]எல்லா
௰அ வற்றிலேயும் தோத்திரம்செய்யுங்கள். — அப்ப
டிச் செய்கிறதே கிறிஸ்து இயேசுவுக்குள் உங்க
ளைக்குறித்துப் பராபரனுடைய சித்தமாய் இருக்
கின்றது.
௰கூ [10]ஆவியை அடக்கிப்போடாதிருப்பீர்களாக.–
உ௰ [11]தீர்க்கதரிசனங்களை அசட்டைபண்ணாதிருங்
உக கள்.—[12]யாவற்றையும் ஆராய்ந்துபார்த்து, [13]நல
உஉ மானதைப் பிடித்துக்கொள்ளுங்கள்.—[14]பொல்
லாங்காய்த் தோன்றுகிற யாவற்றையும்விட்டு
விலகுவீர்களாக.

[15]சமாதானத்தின் பராபரனே [16]முழுவதும் உங
உங்களைப் பரிசுத்தமாக்குவாராக; இப்படி உங்
கள் முழு ஆவியும், ஆத்துமாவும், சரீரமும் நம்
முடைய கர்த்தராகிய இயேசுக்கிறிஸ்து வருகை
யில் [17]பிழையில்லாதவைகளாய் இருக்கும்படி
காக்கப்படக்கடவது.—[18]உங்களை அழைக்கிற உச
வர் உண்மையுள்ளவர்; அவரும் அப்படியே
செய்வார்.

சகோதரரே, [19]எங்களுக்காக விண்ணப்பம் உரு
பண்ணுங்கள்.—[20]எல்லாச் சகோதரரையும் பரி உசு
சுத்த முத்தத்தோடே வாழ்த்துதல்செய்யுங்கள்.–
[21]இந்த நிருபத்தைப் பரிசுத்தமான சகோதரர் உஎ
யாவரும் படித்து அறியும்படி செய்யவேண்டும்
என்று கர்த்தர்மேல் ஆணையிட்டு உங்களிடத்
தில் கேட்டுக்கொள்ளுகிறேன். ‡

[22]நம்முடைய கர்த்தராகிய இயேசுக்கிறிஸ்து உஅ
வினுடைய கிருபை உங்களுடனே இருக்கக்
கடவது.—ஆமன்.

1 உ தெச. ங. ௰க, ௰உ.—2 எபி. ௰உ. ௰உ.—3 உரோ. ௰ச. க; ௰ரு. க. கலா. சு. க, உ. — 4 கலா. ரு. உஉ. எபே. ச. உ. கொலோ. ங. ௰உ. உ தீமோ. ச. உ.
5 க பே. ௰சு. ௰அ. லூக். உ௰. உஉ: உச. உக. மத். ரு. கசு, சச. உ ரோ. ௰உ. ௰எ. க கொரி. சு. எ. க பே. ங. கூ.—6 கலா. சு. ௰. க தெச. ங. ௰உ.—7 உ கொரி. சு. ௰. பிலி. ச. ச.—8 லூக். ௰அ. க: உக. ஙசு. உ ரோ. ௰உ. ௰உ. எபே. சு. ௰அ. கொலோ. ச. உ. க பே. ச. எ. 9 எபே. ரு. உ௰. கொலோ. ங. ௰எ.
10 எபே. ச. ங௰. க தீமோ. ச. ௰ச. கூ: ௰. ௰க. உ தீமோ. க. சு. க கொரி. ௰ச. ங௰. 11 க கொரி. ௰ச. க, ஙக.—12 க கொரி. உ. ௰க, ௰ரு. க யோ. ச. க. 13 பிலி. ச. அ.—14 க தெச. ச. ௰உ. 15 பிலி. ச. கூ.—16 க தெச. ங. ௰ங. 17 க கொரி. க. அ.—18 க கொரி. க. கூ: ௰. ௰ங. உ தெச. ங. ங. 19 கொலோ. ச. ங. உ தெச. ங. க. 20 உ ரோ. ௰சு. ௰சு.—21 கொலோ. ச. ௰சு. உ தெச. ங. ௰ச.–22 உ ரோ. ௰சு. உ௰, உச. உ தெச. ங. ௰அ.

* அல்லது உங்களை மன்றாடுகிற.—† அல்லது அடங்காத.—‡ அல்லது கர்த்தருடைய நாமத்தினாலே உங்களுக்குக் கட்டளையிடுகிறேன்.

## II. THESSALONIANS.

அப்போஸ்தலனாகிய பவுல்

# தெசலோனிக்கேயருக்கு எழுதின

## இரண்டாம் நிருபம்.

### க. அதிகாரம்.

*க. அவர்களுடைய விசுவாசத்தையும், அன்பையும் பொறுமையையுங்குறித்துப் பவுல் மெச்சிக்கொண்டு, ௰க. அவற்றினாலே துன்பத்தில் இவர்கள் ஆறுதலடையவும், பராபரன் நீதிபரரென்று உணரவும் பல நியாயங்களைச் சொன்னது.*

க பவுலும் [1]சில்வானும் தீமோத்தேயும், நம்முடை
ய பிதாவாகிய [2]பராபரனையும் கர்த்தராகிய இயே
சுக்கிறிஸ்துவையும் பற்றியிருக்கிற தெசலோனி
க்கை ஊரிலுள்ள சபைக்கு எழுதுகிறதாவது:—
உ [3]நம்முடைய பிதாவாகிய பராபரனாலும், கர்த்த
ராகிய இயேசுக்கிறிஸ்துவினாலும் உங்களுக்குக்
கிருபையும் சமாதானமும் உண்டாகக்கடவது.
௩ சகோதரரே, [4]நாங்கள் எப்பொழுதும் உங்க
ளுக்காகப் பராபரனைத் தோத்திரிக்கக் கடனா
ளிகளாய் இருக்கிறோம்; உங்கள் விசுவாசம்
மிகவும் வளருகிறபடியினாலும், நீங்கள் எல்லா
ரும் ஒருவருக்கு ஒருவர் காட்டுகிற அன்பு அதி
கமாகிறபடியினாலும் நாங்கள் அப்படியே செய்
௪ யத்தக்கது. — ஆதலால் [5]நீங்கள் சகிக்கிற சகல
துன்பங்களிலேயும், உபத்திரவங்களிலேயும்
[6]பொறுமையையும் விசுவாசத்தையும் காண்பிக்
கிறபடியினாலே, உங்களைக்குறித்து நாங்களே
[7]பராபரனுடைய சபைகளில் மேன்மைபாராட்
௫ டுகிறோம். — பராபரனுடைய இராச்சியத்தின்
நிமித்தம் நீங்கள் (இப்படிப்) [8]பாடுபடுகிறவர்க
ளாயிருக்க, அவ்விராச்சியத்திற்குப் பாத்திரர்
என்று எண்ணப்படுவதற்கு ஏதுவாகப் பரா
பரன் நியாயமான தீர்ப்புச்செய்வார் என்பதற்கு
[9]அவைகள் அத்தாட்சியாய் இருக்கின்றன. —
௬ அல்லாமலும், கர்த்தராகிய இயேசு தமது வல்ல
மையுள்ள தூதரோடும்,* [10]சுவாலையாய் எரிகிற
அக்கினியோடும் [11]வானத்திலிருந்து வெளிப்
படும்பொழுது, — [12]உங்களை உபத்திரவப்படுத் ௭
துகிறவர்களுக்கு உபத்திரவத்தையும், உபத்திர
வப்படுகிற உங்களுக்கு [13]எங்களோடேகூட
ஆறுதலையும் பதில்கொடுக்கிறது பராபரனுக்கு
முன்பாக நீதியாய் இருக்கின்றது. — அப்பொ ௮
ழுது [14]பராபரனை அறியாதவர்களுக்கும், நம்மு
டைய கர்த்தராகிய இயேசுக்கிறிஸ்துவின் [15]சுவி
சேஷத்திற்குக் கீழ்ப்படியாதவர்களுக்கும் நீதி
யுள்ள ஆக்கினையைச் செலுத்துவார்.† — அவர் ௯
கள் கர்த்தருடைய சந்நிதானத்திலிருந்தும், [16]அ
வருடைய வல்லமையின் மகிமையில்நின்றும்
நீங்கி, [17]நித்தியமான அழிவாகிய தண்டனையை
அடைவார்கள். — [18]அவருடைய மகிமை அவ ௰
ருடைய பரிசுத்தவான்களிடத்தில் விளங்கும்
படியாயும், [19]அவர் விசுவாசிகள் எல்லாரிடத்
திலும் ஆச்சரியப்படுத்தப்படும்படியாயும் வரும்
பொழுது, (அப்படியே நடக்கும்;) நீங்கள் எங்
களுடைய சாட்சியை விசுவாசித்தபடியினாலே,
(உங்களிடத்திலும்) அப்படியே அந்நாளிலே
(ஆச்சரியப்படுத்தப்படுவார்).
ஆகையால் நம்முடைய தேவனுமாய்க் கர்த்த ௰௧
ருமாய் இருக்கிற இயேசுக்கிறிஸ்துவினுடைய
கிருபையின்படியே, [20]நம்முடைய கர்த்தராகிய
இயேசுக்கிறிஸ்துவின் நாமம் உங்களிடத்திலும்,
நீங்கள் அவரிடத்திலும் மகிமைப்படுத்தப்படும்
பொருட்டாக,—நம்முடைய பராபரன் [21]உங் ௰௨
களைத் தமது அழைப்புக்குப் பாத்திரராகவும்,‡
(தமது) தயையுள்ள சித்தம் முழுவதையும் [22]விசு
வாசத்தின் கிரியையையும் பலமாய் (உங்களி
டத்தில்) நிறைவேற்றவும்வேண்டும் என்று எப்
பொழுதும் உங்களுக்காக விண்ணப்பம்பண்
ணுகிறோம்.

---

1 உ கொரி. க. ௧௯.—2 க தெச. க. க. உ. ௰௧, உ௰.—8 க தெச. உ. ௰௪.
3 க கொரி. க.௪.—4 க தெச. க. உ, 9 பிலி. க. உ௮.—10 எபி. ௰. உ௭:
க: க.கூ,கூ. உ தெச. உ. ௰௪. ௰உ. உகூ. உ பே. க. எ. வெளி.
5 க தெச. உ. ௰௪.—6 க தெச. க.௩. உக. அ.—11 க தெச. ச. ௰௬.
7 உ கொரி. எ. ௰௪: கூ. உ. க தெச. யூதா. ௰௪.

12 வெளி. கூ. ௰.—13 வெளி. ௰௪. 17 பிலி. க. ௰௬. உ பே. க. எ.
௰௧.—14 சங். எகூ. கூ. க தெச. 18 சங். அகூ. எ.—19 சங். கஅ. க௫.
ச. ௫.—15 உ ரோ. உ. அ. 20 க பே. க எ; ச. ௰௪.—21 ௫. ௰ச.
16 ௫ மோ. கக. உ. எசா. உ. ௰கூ. 22 க தெச. க. ௩.
உ. தெச உ. அ.

* கிரேக்கு. வல்லமையின் தூதரோடும்.—† அல்லது நீதியைச் சரிக்கட்டுவார்.—‡ அல்லது பாத்திரராக எண்ணவும்.

௰௮ ஆகையால் முன் கொடுக்கப்பட்ட கட்டளை
[1]பலஈனமாயும் அபிரயோசனமாயும் இருந்தபடி
௰௯ யால் அது நீக்கப்பட்டது.—[2]நியாயப்பிரமாணம்
ஒன்றையும் நிறைவாக்கவில்லை; [3]அதிக நன்மை
யான நம்பிக்கைக்கு ஏதுவானது (பின்னாலே)
உண்டாக்கப்பட்டு நிறைவாக்குகிறது;* அதினா
லே [4]நாம் பராபரனிடத்தில் சேருகிறோம்.

௨௰ அன்றியும் முந்தினவர்கள் ஆணையில்லாமல்†
ஆசாரியரானார்கள்; பிந்தினவர் மெல்கிசேதேக்
கின் முறைமையின்படி, நீர் என்றென்றைக்கு
முள்ள ஆசாரியர் என்று துக்கமில்லாமல் [5]ஆணை
யிட்டுத் தம்முடனே சொன்ன கர்த்தராலே
௨௧ ஆணையோடே அப்படியானார். — ஆனதால் இ
யேசுவானவர் ஆணையின்படியே ஆசாரியராக்
௨௨ கப்பட்டு, — (அவர்களுக்கு அதிகமாயிருக்க)
[6]அதிக நன்மையான உடம்படிக்கைக்கு ஏற்ற
பிணையாளியானார்.

௨௩ அன்றியும், அந்த ஆசாரியர் எப்பொழுதும்
இருக்கக்கூடாதபடிக்கு மரிக்கிறவர்களானபடி
௨௪ யால் அநேகராய் இருந்தார்கள். — அவர் என்
றென்றைக்கும் இருக்கிறவரானதினாலே நீங்
காத‡ ஆசாரியபட்டம் உள்ளவராயிருக்கிறார்.—
௨௫ அன்றியும், தம்மாலே [7]பராபரனைச் சேருகிறவர்
களுக்காக வேண்டுதல் செய்யும்படிக்கு எப்பொ
ழுதும் உயிரோடு இருக்கிறவரானதால், அவர்
களை முற்றும்§ இரட்சிக்க வல்லமையுள்ளவரா
யும் இருக்கிறார்.

௨௬ [8]பரிசுத்தராயும், தீமைசெய்யாதவராயும், அசுத்
தம் இல்லாதவராயும், பாவிகளைவிட்டுப் பிரிந்த
வராயும், [9]வானங்களுக்குமேல் உயர்ந்தவராயும்
இருக்கிற இப்படிப்பட்ட பிரதான ஆசாரியரே
௨௭ நமக்கு வேண்டும்.—அவர் முந்தின ஆசாரியர்க
ளைப்போல முதலாவது [10]தன்னுடைய சொந்தப்
பாவங்களுக்காகவும், [11]பின்பு சனங்களுடைய
பாவங்களுக்காகவும், நாடோறும் பலியிடவே
ண்டுவதில்லை; [12] அவர்களுக்காக அவர் ஒரேதரம்
௨௮ தம்மைப் பலியிட்டாரே. — நியாயப்பிரமாண
மானது பலஈனத்தையுடைய மனிதர்களை [13]ஆசா
ரியராக ஏற்படுத்துகின்றது; நியாயப்பிரமாணத்
திற்குப் பின்பு ஆணையோடே இருந்த வசனம்
[14]என்றென்றைக்கும் பூரணராகிய‖குமாரனையே
ஏற்படுத்துகின்றது.

## ௮. அதிகாரம்.

௧. கிறிஸ்துவின் நித்திய ஆசாரியத்துவத்தினால் இலேவியருக்கு அடுத்த ஆரோனின் ஆசாரியத்துவம் ஒழிந்ததென்றும், ௭. பிதாக்களோடே செய்த தற்காலத்துக்குரிய உடம்படிக்கை நித்தியகாலத்துக்கு உரிய சுவிசேஷத்தின் உடம்படிக்கையினாலே நீக்கப்பட்டதென்றும் சொல்லியது.

மேற்சொல்லியவைகளில் பிரதானமானது ௧
என்னவெனில், பரமண்டலங்களிலுள்ள மகத்
துவ ஆசனத்தின் [15]வலதுபாரிசத்திலே உளுக்
காந்திருக்கிறவருமாய்,—மனிதர்களாலே அல்ல, ௨
கர்த்தராலே வைக்கப்பட்ட [16]மெய்யான கூடா
ரமாகிய [17]பரிசுத்த இடத்திலே¶ ஆராதனை செய்
கிறவருமாய் இருக்கிற பிரதான ஆசாரியரே
நமக்கு உண்டு.

[18]ஆசாரியர் யாவரும் காணிக்கைகளையும் பலி ௩
களையும் செலுத்துதற்கு வைக்கப்பட்டிருக்கிற
தால் அவரும் (பரமண்டலத்திலே) [19]சிலவற்
றைப் பலியிட வேண்டுவதாயிருந்தது.—பூமியி ௪
லே அவர் இருப்பாரானால் ஆசாரியராய் இருக்க
மாட்டார்; அங்கே நியாயப்பிரமாணத்தின்படி
காணிக்கைகளைச் செலுத்துகிறவர்கள் ஆசாரியர்
களாய் இருக்கிறார்களே.** — மோசே அந்தக் ௫
கூடாரத்தை உண்டுபண்ணப் போனபொழுது,
[20]மலையிலே உனக்குக் காண்பிக்கப்பட்ட சாய
லின்படியே நீ சகலத்தையும் செய்ய எச்சரிக்
கையாயிரு என்று பராபரன் அவனுக்குக் கட்ட
ளையிட்டபடியே, அந்த ஆசாரியர்கள் பரமண்
டலத்திற்குரியவைகளுக்கு அடையாளமும் [21]நி
ழலாட்டமுமானவைகள் உள்ள (இடத்திலே)
ஆராதனை செய்கிறார்கள். — அவர் அதிக மேன் ௬
மையான வாக்குத்தத்தங்களின்மேல் ஸ்தாபிக்
கப்பட்டிருக்கிற அதிக மேன்மையான உடம்
படிக்கைக்கு†† ஏற்ற மத்தியஸ்தராய் இருக்கிற
தால், [22]அதிக விசேஷமான ஆராதனை செய்
தலைப் பெற்றுக்கொண்டிருக்கிறார்.

[23]அந்த முதலாம் உடம்படிக்கை பிழையில் ௭
லாததாயிருந்ததானால் இரண்டாவதற்கு இடம்
தேடப்படுவதில்லையே.—அவர்களைக் குற்றவா ௮
ளிகள் என்று சொல்லி, அவர்களுடனே திருவு
ளம்பற்றினதாவது: கர்த்தர் சொல்லுகிறது என்
னவெனில், இஸ்ரவேல் குடும்பத்தாரோடும்
யூதர் குடும்பத்தாரோடும் [24]நான் புதிய உடம்ப
டிக்கையை ஏற்படுத்தும்படிக்கான காலம் வரு
கின்றது.—அவர்களுடைய முன்னோர்களை எகிப் ௯
துதேசத்திலிருந்து கொண்டுவரும்படிக்கு, நான்
அவர்களுடைய கையைப் பிடித்துக்கொண்ட
நாளிலே, அவர்களுடனே பண்ணின உடம்ப
டிக்கையைப்போல இது இருப்பதில்லை; அந்த
உடம்படிக்கையிலே அவர்கள் நிலைநிற்கவில்லை
யே, நானும் அவர்களை அரோசித்தேன்.—அந்த ௰
நாட்களுக்குப் பின்பு, நான் இஸ்ரவேல் குடும்
பத்தாரோடே பண்ணும் உடம்படிக்கை என்ன
வென்றால், [25]என்னுடைய பிரமாணங்களை

1 உரோ. ௮. ௩. கலா. ௪. ௯. 2 அப் ௰௩. ௩௯. உரோ.௩.௨௰,௨௧, ௨௮: ௮.௩. கலா. ௨.௰௬. எபி. ௯.௯.—3 எபி. ௬. ௰௮: ௮. ௬. 4 உரோ. ௫. ௨. எபே. ௨. ௰௮: ௩. ௰௨. எபி. ௪. ௰௬: ௰. ௰௯. 5 சங். ௱௰. ௪. 6 எபி. ௮. ௬: ௯. ௰௫: ௰௨. ௨௪. 7 உரோ. ௮. ௩௪. ௧தீமோ.௨. ௫. எபி. ௯. ௨௪. ௧ யோ. ௨. ௧. 8 எபி. ௪. ௰௫.—9 எபே. ௧. ௨௰: ௪.௰. எபி.௮.௧.—10 ௩மோ.௯.௭: ௰௬. ௬, ௰௧. எபி. ௫. ௩: ௯. ௭. 11 ௩ மோ. ௰௬. ௰௫.

12 உரோ. ௬.௰. எபி. ௯. ௰௨,௨௮: ௰. ௰௨.—13 எபி. ௫. ௧, ௨. 14 எபி. ௨. ௰: ௫. ௯. 15 எபே. ௧. ௨௰. கொலோ. ௩. ௧. எபி.௧.௩: ௰.௰௨: ௰௨.௨.—16 எபி. ௯. ௰௧.—17 எபி.௯.௮, ௰௨,௨௪. 18 எபி.௫ ௧.—19 எபே.௫.௨. எபி. ௯. ௰௪.—20 ௨ மோ. ௨௫. ௪௰: ௨௬.௩௰: ௨௭. ௮. ௪மோ.௮.௪. அப்.௭.௪௪.—21 கொலோ.௨.௰௭. எபி.௯.௨௩: ௰.௧.—22 ௨ கொரி. ௩.௬, ௮, ௯. எபி. ௭. ௨௨.—23 எபி. ௭. ௰௧, ௰௮.—24 எரே. ௩௧, ௩௨, ௩௩, ௩௪.—25 எபி.௰.௰௬.

* அல்லது நிறைவாக்குகிறதாயிருக்கின்றது; கலா.௩. ௨௪.—† அல்லது ஆணையிடாமல்.—‡ அல்லது மாறாத.—§ அல்லது அவர்கள் எல்லாரையும்.—‖ அல்லது பிரதிஷ்டை பண்ணப்பட்ட.—¶ அல்லது பரிசுத்த காரியங்களில்.
** அல்லது செலுத்துகிற ஆசாரியர்கள் இருக்கிறார்களே.—†† அல்லது ஏற்பாட்டுக்கு.

அவர்களுடைய மனதிலே வைப்பேன்;* அவை
களை அவர்களுடைய இருதயங்களின்மேலே †
எழுதி, [1]அவர்களுக்குத் தேவனாய் இருப்பேன்;
அவர்கள் எனக்குச் சனங்களாய் இருப்பார்
௰௧ கள்.—அப்பொழுது சிறியவன் முதற்கொண்டு
பெரியவன்வரைக்கும் எல்லாரும் என்னை அ
றிந்துகொள்வதால், கர்த்தாவை அறிந்துகொள்
என்று [2]ஒருவன் தனக்கடுத்த பிறனுக்கும், வே
றொருவன் தன் சகோதரனுக்கும் போதிக்கவே
௰௨ ண்டுவதில்லை.—நான் அவர்களுடைய அநியா
யங்களை (நீக்கி), [3]அவர்களுடைய பாவங்களை
யும் அக்கிரமங்களையும் இனி நினையாமல் அவர்க
ளுக்கு இரங்குவதால் அப்படி ஆகுமென்று கர்த்
தர் திருவுளம்பற்றுகிறார் என்பதே.
௰௩ [4]புதிதான உடம்படிக்கை என்று அவர் சொல்
லுகையில், முதலாவதைப் பழமை ஆக்கினார்;
பழமையும் குறைவுமுள்ளதே ஒழிந்துபோகிற
தற்குச் சமீபமாயிருக்கின்றது.

## கூ. அதிகாரம்.

*க. நியாயப்பிரமாணத்தின் நிழலான முறைமைகளையும் இரத்தப்பலிகளையும் விவரித்து, ௰௪. அவைகள் கிறிஸ்துவினுடைய பொருளான இரத்தத்துக்கும், பலிக்குமுரிய மேன்மைக்கும் மகிமைக்கும் நிகரல்ல என்று சொல்லியது.*

௧ அன்றியும் முதலாம் உடம்படிக்கை ஆராத
னைக்கு ஏற்ற நியாயங்களும், ‡ [5]பூமிக்குரிய பரி
௨ சுத்த ஸ்தலமும் உள்ளதாயிருந்தது.—எப்படியெ
னில், பரிசுத்த ஸ்தலம் § என்னப்பட்ட [6]முதல்
கூடாரம் எத்தனமாக்கப்பட்டு இருந்தது; [7]அதி
லே [8]விளக்குத்தண்டும், [9]பலகையும், திவ்விய
௩ சமுகத்தப்பங்களும் இருந்தன.—அல்லாமலும்,
[10]இரண்டாம் திரைச்சீலைக்குப் பின்னாலே மிக
வும் பரிசுத்த ஸ்தலம் என்னப்பட்ட கூடாரம்
௪ இருந்தது.—அதிலே பொன்னால் செய்த கலச
மும், முழுவதும் பொன்தகடு பொதியப்பட்ட
உடம்படிக்கையின் [11]பெட்டியும் இருந்தன;
அந்தப் பெட்டியிலே மன்னா என்பதை உடைய
[12]பொன்பானையும், தளிர்கொண்ட [13]ஆரோனு
டைய கம்பும், [14]உடம்படிக்கையின் பலகைக
௫ ளும் இருந்தன.—அதற்குமேலே [15]மகிமையுள்ள
கேருபீம் வைக்கப்பட்டுக் கிருபாசனத்திற்கு
நிழலிட்டிருந்தன; இவைகளைக்குறித்து நான்
இப்பொழுது விவரம் சொல்லக்கூடாது.
௬ அவைகள் இவ்விதமாய் எத்தனமாக்கப்பட்டி
ருந்தபின்பு, ஆசாரியரானவர்கள் ஆராதனைகளை
நிறைவேற்றும்படிக்கு, எக்காலத்திலேயும் [16]மு
தல் கூடாரத்திலே பிரவேசிப்பார்கள்.—இரண் ௭
டாம்கூடாரத்திலே பிரதான ஆசாரியன்மாத்திரம்
[17]வருஷத்தில் ஒரேதரம் இரத்தத்தோடே பிரவே
சித்து, அந்த இரத்தத்தைத் தனக்காகவும் சனங்
களுடைய தப்பிதங்களுக்காகவும் [18]செலுத்து
வான்.—அதினாலே முதலாம் கூடாரம் நிற்கை ௮
யில் [19]பரிசுத்தமான இடங்களுக்குப்போகிற
மார்க்கம் வெளியாக்கப்படவில்லை என்று [20]பரி
சுத்தஆவியானவர் குறித்திருக்கிறார்.—அந்தக் கூ ௯
டாரம் இந்தக் காலம்வரைக்கும் உவமையாயிருந்
தது; அதிலே காணிக்கைகளும் பலிகளும் செ
லுத்தப்பட்டு வருகின்றன.—அவைகள் செம் ௰
மையாக்குதலுள்ள காலமளவும் (இஸ்ரவேலருக்
குக்) கட்டளையிடப்பட்ட [21]போசனபானங்க
ளாலும், [22]பல ஸ்நானங்களாலும், [23]சரீரத்திற்கு
ஏற்ற (மற்றச்) சடங்குகளாலும் || மாத்திரம் ஆரா
தனைசெய்கிறவனுடைய மனதிற்கு [24]நிறைவுண்
டாக்கக்கூடாதவைகளாய் இருக்கின்றன.
கிறிஸ்துவானவர் (உலகத்தில்) வந்து இவ்வு ௰௧
லகப் பொருளாய் இராமலும் கையால் செய்யப்
படாமலும் [25]அதிக மேன்மையாயும் அதிக நிறை
வாயும் இருக்கிற கூடாரத்தின் வழியாய் வருகி
றவைகளாகிய [26]நன்மைகளைக்குறித்து [27]ஆசாரி
யராய், — [28]வெள்ளாட்டுக்கடா இளங்காளை இ ௰௨
வைகளுடைய இரத்தத்தினாலே அல்ல, [29]தமது
சொந்த இரத்தத்தினாலே [30]நமக்காக நித்திய
மீட்பு உண்டாக்கி, எல்லாக் காலங்களுக்காக
வும் [31]ஒரேதரம் பரிசுத்தமான தலங்களில் பிர
வேசித்தார். — அது எப்படியெனில் [32]காளை ௰௩
வெள்ளாட்டுக்கடா இவைகளின் இரத்தமும்
[33]கடாரியின் சாம்பலும் அசுசிப்பட்டவன்மேல்
தெளிக்கப்பட்டு, அவனுடைய சரீர அசுசியை
நீக்கத்தக்கதாக அவனைச் சுத்தமாக்கிக்கொண்
டிருக்க, — [34]நித்திய ஆவியினாலே [35]தம்மைப் ௰௪
பிழையில்லாத ¶ பலியாகப் பராபரனுக்கு ஒப்
புக்கொடுத்த [36]கிறிஸ்துவினுடைய திரு இரத்தம்
மிகவும் அதிகமாய் [37]மரணத்திற்கு ஏதுவான
கிரியைகளை [38]நீக்கிச் [39]ஜீவனையுடைய பராபர
னுக்கு நாம் ஊழியம்செய்வதற்கு நம்முடைய
மனதைச் சுத்தமாக்கும் அல்லவா?
[40]இதினாலே முதல் உடம்படிக்கையின் காலத் ௰௫
திலே நடந்த அக்கிரமங்களை நிவிர்த்திசெய்வ
தற்கு ஏதுவாக [41]அவர் மரித்தபின்பு, [42]அழைக்

1 சகரி. அ. அ.—2 ஏசா. ௫௪. ௰௩. யோவா. ௬.௪௫. ௧ யோ.௨.௨௭. 3 உரோ. ௰௧. ௨௭. எபி. ௰. ௰௭. 4 ௨ கொரி. ௫. ௰௭.—5 ௨ மோ. ௨௫. அ.—6 ௨ மோ. ௨௬. ௧. 7 ௨ மோ. ௨௬. ௩௫: ௪௰. ௪. 8 ௨ மோ. ௨௫. ௩௧.—9 ௨ மோ. ௨௫.௨௩, ௩௰. ௩ மோ.௨௪.௫,௬. 10 ௨ மோ. ௨௬. ௩௧,௩௩: ௪௰.௩,௨௧ எபி. ௬. ௰௯.—11 ௨ மோ. ௨௫. ௰:௨௬.௩௩:௪௰.௩,௨௧.-12 ௨ மோ. ௰௬. ௩௩, ௩௪.—13 ௪ மோ.௰௭ ௰. 14 ௨ மோ. ௨௫. ௰௬,௨௧: ௩௪.௨௯: ௪௰.௨௰ ௫ மோ ௰.௨,௫. ௧ இரா. அ. ௯, ௨௧. ௨ நாளா ௫. ௰. 15 ௨ மோ. ௨௫. ௰அ,௨௨. ௩ மோ. ௰௬. ௨. ௧ இரா. அ. ௬, ௭. 16 ௪ மோ. ௨அ. ௩. தானி. அ. ௰௧. 17 ௨ மோ. ௩௰. ௰. ௩ மோ. ௰௬. ௨, ௰௧.௰௨,௰௫,௩௪ ௨௫.௩௪.—18எபி. ௫.௩: ௭. ௨௭.—19 யோவா.௰௪.௬. 20 எபி.௩.௰௩.௨௰.—21 ௩ மோ ௰௧ ௨. கொலோ. ௨. ௰௬.—22 ௪ மோ. ௰௯. ௭. ௰.—23 எபே. ௨. ௰௫. கொலோ. ௨. ௨௰. எபி ௭. ௰௬. 24 கலா. ௩. ௨௧. எபி. ௭. ௰அ,௰௯: ௰. ௧, ௰௧.—25 எபி. அ. ௨. 26 எபி. ௰. ௧.—27 எபி. ௩. ௧. 28 எபி. ௰ ௪.—29 அப். ௨௰. ௨அ. எபே ௧. ௭. கொலோ. ௧ ௰௪. ௧ பே ௧.௰௯. வெளி.௧.௫: ௫.௯. 30 தானி. ௯. ௨௪.—31 ௨௬, ௨அ. வசனங்கள். எபி. ௰ ௰. சகரி. ௩.௯. 32 ௩ மோ.௰௬.௰௪,௰௬.—33 ௪ மோ. ௰௯. ௨, ௰௭. — 34 உரோ ௧ ௪. ௧ பே.௩. ௰அ. – 35 எபே. ௫ ௨. தீத்.௨ ௰௪.எபி.௭.௨௭.- 36 ௧ பே. ௧.௰௯. ௧ யோ. ௧ ௭. வெளி.௧.௫. 37 எபி.௬.௧.—38 எபி.௰.௨: ௰.௨௨. 39 லூக். ௧. ௭௪. உரோ.௬.௰௩,௨௨. ௧ பே.௪.௨.—40 ௧ தீமோ.௨.௫. 41 உரோ.௩. ௨௫: ௫.௬. ௧ பே. ௩. ௰அ.—42 எபி. ௩. ௧.

* இரேக்கு, கொடுப்பேன்.—† அல்லது இருதயங்களில்.—‡ அல்லது சடங்குகளும்.—§ அல்லது பரிசுத்தம்.
|| அல்லது நியாயங்களினாலும்.—¶ அல்லது மறுவில்லாத.

கப்பட்டவர்கள் வாக்குத்தத்தமான நித்திய சுதந்
தரத்தை அடைந்துகொள்ளும்படிக்கே [1]அவர்
புதிய உடம்படிக்கையின் மத்தியஸ்தராய் இருக்
௰௬ கிறார்.—அது எப்படியென்றால், [2]ஒரு உடம்ப
டிக்கை (பலிகளுடைய மரணத்தினாலே) உறு
௰௭ தியாக்கப்படுமே. — ஏற்படுத்தப்பட்ட (பலி)
உயிரோடிருக்குமளவும், உடம்படிக்கை பலனு
யிருக்கமாட்டாதே; ஆகையால், ஒரு உடம்ப
டிக்கை செய்யப்படும்பொழுது, ஏற்படுத்தப்
பட்ட பலியினுடைய மரணமும் தோற்றப்பட*
வேண்டும்.

௰௮ [3]அந்தப்படி முதலாம் உடம்படிக்கையும் இரத்
தமில்லாமல் பிரதிஷ்டையாக்கப்பட† வில்லை.-
௰௯ எப்படியெனில், மோசே என்பவன் வேதப்பிர
மாணத்தின்படி சகல சனங்களுக்கும் எல்லாப்
பிரமாணங்களையும் சொன்னபின்பு [4]ஆடுமாடு
களின் இரத்தத்தைத் [5]தண்ணீரோடும், சிவப்
பான‡ பஞ்சியோடும், ஈசோப்பென்னும் செடி
யோடுங்கூட எடுத்து, வேதபுத்தகத்தின்மேலும்
௨௰ சனங்கள் எல்லார்மேலும் தெளித்து, — [6]பரா
பரன் உங்களுடனே (செய்யக்) கட்டளையிட்ட
உடம்படிக்கைக்கு ஏற்ற இரத்தம் இதுவே என்று
௨௧ சொன்னான். — இவ்விதமாய்க் [7]கூடாரத்தின்
மேலும் ஆராதனைக்கு ஏற்ற தட்டுமுட்டுகளின்
௨௨ மேலும் இரத்தத்தைத் தெளித்தான். — நியாயப்
பிரமாணத்தின்படி சில குறைய மற்றெல்லாப்
பதார்த்தங்களும் இரத்தத்தினாலே சுத்தமாக்கப்
பட்டுவருகின்றன; [8]இரத்தம் சிந்துதல் இல்லா
மல் மன்னிப்பும் இல்லை.

௨௩ ஆனதால் [9]பரமண்டலங்களில் உள்ளவைக
ளுக்கு உவமையானவைகள் இப்படிப்பட்ட
(பலிகளினாலே) சுத்தமாக்கப்படவேண்டியதாய்
இருக்கிறபடியால் பரமண்டலங்களில் உள்ள
வைகள் தாமே அவைகளிலும் அதிக தகுதியான
(பலிகளாலே) சுத்தமாக்கப்படவேண்டுமே. —
௨௪ அந்தப்படி கிறிஸ்துவானவர் [10]இப்பொழுது
நமக்காகப் பராபரனுடைய சந்நிதானத்திலே
தோன்றியிருக்கும்படிக்கு மெய்யானவைகளுக்
குத் திருட்டாந்தங்களாகிய [11]கையால் செய்யப்
பட்ட பரிசுத்த ஸ்தலங்களில் அல்ல, பரமண்ட
௨௫ லத்திலேதானே [12]பிரவேசித்திருக்கிறார். — அந்
தப் பிரதான ஆசாரியன் அந்நிய இரத்தத்தை
எடுத்து, [13]வருஷந்தோறும் பரிசுத்தஸ்தலங்க
ளிலே பிரவேசித்ததுபோல அவர் தம்மை அடிக்
கடி பலியிடும்படிக்கு (அப்படிப் பிரவேசிக்க
௨௬ வில்லை).—அதற்காகவானால் அவர் உலகம் உண்
டானது முதற்கொண்டு அடிக்கடி பாடுபட

வேண்டியிருக்குமே; அப்படி அல்ல, அவர் தம்
மைத்தாமே பலியிடுகிறதினாலே பாவங்களை நீக்
கும்பொருட்டாக (முந்தின) [14]யுகத்தின் முடி
விலே [15]ஒரேதரம் வெளிப்பட்டார்.—[16]அன்றி ௨௭
யும் மனிதர்கள் ஒரேதரம் மரிக்கிறதும், [17]பின்பு
நியாயத்தீர்ப்பு அடைகிறதும் தீர்மானிக்கப்பட்
டிருக்கிறதால்,—அதுபோலக் கிறிஸ்துவும், [18]அ ௨௮
நேகருடைய பாவங்களைச் சுமந்துகொண்டுபோ
கும்படிக்கு [19]ஒரேதரம் [20]பலியிடப்பட்டுத் தமக்
காகக் [21]காத்துக்கொண்டிருக்கிறவர்களுக்கு இ
ரட்சிப்பைக் கொடுப்பதற்கு இரண்டாந்தரம்
பாவப்பலியில்லாமல் தோன்றுவார்.

## ௰. அதிகாரம்.

௧. நியாயப்பிரமாணப் பலிகளினால் பூரணநிவிர்த்தி இல்லை என்றும், ௰. ஒரேவிசை செலுத்தப்பட்ட கிறிஸ்துவின் சரீரப்பலி, பாவங்களைப் பூரணமாய் நிவாரணம்பண்ணுகிறதென்றும், ௰௯. அதின்மேல் உண்டாகிய விசுவாசத்தை உறுதியாய்ப் பொறுமையோடும் தோத்திரத்தோடும் பற்றிக்கொள்ளவேண்டுமென்றும் சொல்லியது.

இப்படியிருக்க, நியாயப்பிரமாணமானது வரு ௧
கிறவைகளாகிய [22]நன்மைகளின் பொருளுள்ள
தாய் இராமல், அவைகளின் [23]நிழலைமாத்திரம்
காண்பிக்கிறதாயிருக்கிறதால் வருஷந்தோறும்
இடைவிடாமல் செலுத்தப்பட்டுவருகிற ஒரே
விதமான [24]பலிகளினாலே அவைகளைச் செலுத்
துகிறவர்களுக்கு [25]நிறைவான (ஆசீர்வாதத்தை)
ஒருக்காலும் கொடுக்கமாட்டாது. — கொடுத்த ௨
தானால், ஆராதனைசெய்தவர்கள் ஒருதரம் சுத்த
மாக்கப்பட்டபின், இன்னும் பாவங்கள் உண்
டென்று தங்கள் மனதிலே அதிகமாய் நினையா
திருப்பதால், அந்தப் பலிகளைச் செலுத்துகிறது
நிறுத்தப்படும் அல்லவா? §—அப்படி இராதபடி ௩
யால் [26]பாவங்கள் உண்டென்று அவைகளினா
லே வருஷந்தோறும் நினைவுகூர்தல் உண்டாயி
ருக்கிறதே.

[27]அல்லாமலும் ஆடுமாடுகளுடைய இரத்தம் ௪
பாவங்களை நிவிர்த்திசெய்யமாட்டாதே.—ஆன ௫
தால் அவர் உலகத்தில் பிரவேசித்திருக்கிறபொ
ழுது, [28]பலியையும் காணிக்கையையும் நீர் விரும்
புகிறதில்லை, ஒரு சரீரத்தை எனக்கு எத்தனமாக்
கினீர். ||—தகனபலிகளும் பாவப்பலிகளும் உமக் ௬
குப் பிரியமல்லாதபொழுது, — நான் சொன ௭
னது: பராபரனே, என்னைக்குறித்து வேதபுத்த
கத்திலே எழுதியிருக்கிறபடி உம்முடைய சித்
தத்தை நிறைவேற்றுகிறதற்கு இப்பொழுது வரு
கிறேன் என்று சொன்னேன் என்றார்.—நியாயப் ௮
பிரமாணத்தின்படி செலுத்தப்பட்டுவருகிற பலி
களைக்குறித்து மேற்சொல்லியபடி பலியையும்,

1 எபி. ௭. ௨௨: ௮. ௬: ௰௨. ௨௪. ௰௫, ௰௯: ௰௧. ௰௪, ௰௫, ௰௬, ௰௮. ௰௯.
2 கலா. ௩. ௰௫.—3 ௨ மோ. ௨௪. ௩. ௮. 8 ௩ மோ. ௰௭. ௰௧.—9 எபி. ௮. ௫.
4 ௨ மோ. ௨௪. ௫, ௬, ௮. ௩ மோ. ௰௬. ௰௪, ௰௫, ௰௮.—5 ௩ மோ. ௰௪. ௪, ௬, ௭, ௪௯, ௫௧, ௫௨. 10 ௨ ரோ. ௮. ௩௪. எபி. ௭. ௨௫. ௧ யோ. ௨. ௧.—11 எபி. ௬. ௨௰.
6 ௨ மோ. ௨௪. ௮. மத். ௨௬. ௨௮. 12 எபி. ௮. ௨.—13 ௭. ௨௪.
7 ௨ மோ. ௨௯. ௰௨, ௩௬. ௩ மோ. ௮. 14 ௧ கொரி. ௰. ௰௧. கலா. ௪. ௪. எபே. ௧. ௰.—15 ௰௨. ௨௪. எபி. ௭. ௨௭: ௰. ௰. ௧ பே. ௩. ௰௮.—16 ௧ மோ. ௩. ௰௯. பிரச. ௩. ௨௰.—17 ௨ கொரி. ௫. ௰. வெளி. ௨௰. ௰௨, ௰௩.
18 மத். ௨௬. ௨௮. ௨ ரோ. ௫. ௰௫. 19 ௨ ரோ. ௬. ௰. ௧ பே. ௩. ௰௮. 20 ௧ பே. ௨. ௨௪. ௧ யோ. ௩. ௫. 21 தீத். ௨. ௰௩. ௨ பே ௩. ௰௨.
22 எபி. ௯. ௰௧.—23 கொலோ. ௨. ௰௭. எபி. ௮. ௫: ௯. ௨௩. 24 எபி. ௯. ௯.—25 ௰௪. ௨௪. 26 ௩ மோ. ௰௬. ௨௧. எபி. ௯. ௭. 27 மீகா. ௬. ௬. ௭. எபி. ௯. ௰௩. ௰௩ ௨௪. 28 சங். ௪௰. ௬. ௭: ௫௰. ௮. ௭.

* அல்லது இருக்க.—† அல்லது சுத்தமாக்க.—‡ அல்லது மிகவும் சிவப்பான.—§ அல்லது நிறுத்தப்படும்.—|| அல்லது தகுதியாக்கினீர்.

காணிக்கையையும், தகனபலிகளையும், பாவப்ப
லிகளையும் விரும்பமாட்டீர்; அவைகள் உமக்
குப் பிரியமானவைகள் அல்லவென்று சொன்
௯ னபின்பு,—பராபரனே, உம்முடைய சித்தத்தை
நிறைவேற்றுகிறதற்கு இப்பொழுது வருகிறேன்
என்று சொன்னதால், இரண்டாம் (ஏற்பாட்
டை) ஸ்தாபிக்கும்படிக்கு முதலானதை எடுத்
௰ துப்போட்டார். — அந்தச் சித்தத்தின்படி எல்
லாக் காலங்களுக்காகவும் [1]ஒரேதரம் இயேசுக்கி
றிஸ்துவினுடைய சரீரம் பலியிடப்பட்டதினா
லே [2]நாம் பரிசுத்தமாக்கப்பட்டிருக்கிறோம்.
௰௧ அன்றியும், எந்த ஆசாரியனும் [3]நாள்தோறும்
ஆராதனைசெய்கிறவனாய்ப் [4]பாவங்களை ஒருக்கா
லும் நிவிர்த்திசெய்யமாட்டாத ஒரேவித பலிக
௰௨ ளை அடிக்கடி செலுத்திவருவான். — அவர்மாத்
திரம் என்றென்றைக்கும் பாவங்களை நீக்கும்ப
டிக்கான [5]ஒரே பலியைச் செலுத்திப் பராபர
னுடைய வலதுபாரிசத்திலே உளுக்காந்து, —
௰௩ அதுமுதல் [6]தம்முடைய சத்துருக்கள் தம்மு
டைய பாதங்களின் படியாக்கப்படுமளவும் காத்
௰௪ துக்கொண்டிருக்கிறார். — ஆகையால் பரிசுத்
தமாக்கப்பட்டவர்களை அவர் ஒரே பலியினா
லே [7]என்றென்றைக்கும் நிறைவுள்ளவர்கள் ஆக்
கினார்.
௰௫ இதைக்குறித்துப் பரிசுத்தஆவியானவரும்
௰௬ நமக்குச் சாட்சிசொல்லுகிறார். — எப்படியெ
னில், அந்த நாள்களுக்குப்பின் நான் அவர்க
ளுடனே [8]இந்த உடம்படிக்கைபண்ணுவேன்
என்று சொன்னபின்பு கர்த்தர் திருவுளம்பற்றி
னது: நான் என்னுடைய பிரமாணங்களை அவர்
களுடைய இருதயங்களிலே கொடுப்பேன்; அ
வைகளை அவர்களுடைய மனதின்மேலே எழு
௰௭ துவேன்.—அவர்களுடைய பாவங்களையும் அக்
கிரமங்களையும் நான் ஒரு காலத்திலாகிலும் நி
௰௮ னைத்துக்கொள்வதில்லை என்றார். *—அந்தப்படி
அவைகள் மன்னிக்கப்பட்டபடியால் பாவப்ப
லி இனிச் செலுத்தப்படவேண்டுவதில்லையே.
௰௯ ஆகையால் சகோதரரே, பரிசுத்தமான இடங்
களுக்குப் போகிற மார்க்கத்தை இயேசுவானவர்
தமது [9]சரீரமாகிய திரைச்சீலையின் வழியாய்ப்
[10]புதிதும் சீவனுமான மார்க்கமாக நமக்கு உண்
௨௰ டுபண்ணி† வைத்ததால், — அந்த [11]மார்க்கத்தில்
பிரவேசிக்கிறதற்கு அவருடைய திரு இரத்தத்
தினாலே நமக்குத் [12]தயிரியம் ‡ உண்டாயிருக்கிற
௨௧ படியினாலும்,—[13]பராபரனுடைய ஆலயத்திலே
நமக்குப் [14]பெரிய ஆசாரியர் உண்டாயிருக்கிற

படியினாலும், — [15]நாம் குற்றத்தைச் சாற்றுகிற ௨௨
மனது நீங்கத் தெளிக்கப்பெற்ற இருதயம் உள்
ளவர்களாய் உண்மையுள்ள இருதயத்தோடும்,
[16]விசுவாசத்தினால் ஆகிற நிச்சயத்தோடும் [17]பரா
பரனைச் சேரக்கடவோம்.—அல்லாமலும் [18]சுத் ௨௩
தமான சலத்தால் கழுவப்பட்ட சரீரமுள்ளவர்
களாய், [19]நம்முடைய நம்பிக்கையை அறிக்கை
யிடுகிறதில் அசைவில்லாமல் உறுதியாய் இருக்
கக்கடவோம்; [20]வாக்குத்தத்தம்பண்ணினவர்
உண்மையுள்ளவராய் இருக்கிறாரே. — மேலும் ௨௪
அன்புகூருதற்கும் நற்கிரியைகளைச் செய்கிறதற்
கும் எழுப்புதல் உண்டாயிருக்கும்படிக்கு ஒரு
வரை ஒருவர் நோக்கிப்பார்த்து,—[21]சபை கூடி ௨௫
வருதலைச் சிலர் விட்டுப்போகிறதுபோல நாம்
அப்படிச்செய்யாமல், ஒருவருக்கொருவர் புத்தி
சொல்லக்கடவோம்; [22]அந்த நாள் சமீபமாகிற
தை நீங்கள் அறிந்திருக்கிறதால்,[23]அதிகமாய் அப்
படியே செய்யவேண்டும்.

[24]சத்தியத்தை அறிந்துகொண்டபின் [25]நாம் ௨௬
மனப்பூர்வமாய்ப் பாவம்செய்தால், வேறொரு
பாவப்பலி நமக்கு மீதியாயிருப்பதில்லை. —
விரோதம்செய்கிறவர்களைப் பட்சிக்கும் அக்கி ௨௭
னியுள்ள [26]உக்கிரமும் நியாயத்தீர்ப்பும் வரு
மென்று பயத்தோடே காத்திருக்குதலே நமக்கு
உண்டாயிருக்கும். — [27]மோசேயினுடைய பிர ௨௮
மாணத்தைத் தள்ளினவன் எவனோ, [28]அவன்
இரண்டுமூன்றுபேர் சாட்சிசொன்னபின்பு இ
ரக்கமில்லாமல் கொலைசெய்யப்பட்டானே. —
பராபரனுடைய குமாரனைக் காலினால் மிதித் ௨௯
துப்போட்டுத் [29]தன்னைப் பரிசுத்தம்செய்த உடம்
படிக்கையின் திரு இரத்தத்தை அசுத்தமென்று
எண்ணிக் [30]கிருபையின் ஆவியை அசட்டை
பண்ணினவன் [31]எவ்வளவு அதிக ஆக்கினைக்
குப் பாத்திரவானாயிருப்பான்.—நீங்களே யோச ௩௰
னைபண்ணுங்கள்; [32]பழிவாங்குதல் எனக்கு உரி
யது; நானே பதில்செய்வேன் என்று சொன்ன
கர்த்தரை அறிந்திருக்கிறோமே; அன்றியும் [33]கர்த்
தர் தம்முடைய சனங்களுக்கு நியாயத்தீர்ப்புக்
கொடுப்பார் என்றும் சொல்லியிருக்கிறதே. —
[34]ஆ சீவனுள்ள பராபரனுடைய கைகளில் விழு ௩௧
கிறது பயங்கரமாயிருக்கிறது.

நீங்கள் [35]முந்தின நாள்களை ஞாபகப்படுத்துங் ௩௨
கள்; அவைகளில் [36]நீங்கள் பிரகாசமாக்கப்பட்
டிருந்தபொழுது [37]பாடுகளால் மிகுந்த போராட்
டத்தைச் சகித்துக்கொண்டீர்களே. — நீங்கள் ௩௩
நிந்தைகளாலும் உபத்திரவங்களாலும் மற்றவர்க

1 எபி. ௯. ௰௨.—2 யோவா. ௰௭. ௰௯. எபி. ௰௩. ௰௨.—3 ௪ மோ. ௨௮. ௩. எபி. ௭. ௨௭.—4 ௪. ௰௪. 5 எபி. ௧. ௩. கொலோ. ௩. ௧. 6 சங். ௱௰. ௧. அப். ௨. ௩௫. ௧ கொரி. ௰௫. ௨௫. எபி. ௧. ௰௩.—7 ௧. ௰௪. 8 எரே. ௩௧. ௩௩, ௩௪. எபி. ௮. ௰. ௰௨. 9 எபி. ௯. ௩.—10 யோவா. ௰. ௯: ௰௪. ௬. எபி. ௯. ௮.—11 எபி. ௯. ௮. ௰௨.—12 ௨ ரோ. ௫. ௨. எபே. ௨. ௰௮: ௩. ௰௨.—13 ௧ தீமோ. ௩. ௰௫.—14 எபி. ௪. ௰௪.—15 எபி. ௯. ௰௪.—16 எபே. ௩. ௰௨. யாக். ௧. ௬. ௧ யோ. ௩. ௨௧. 17 எபி. ௪. ௰௬.—18 எசே. ௩௬. ௨௫. ௨ கொரி. ௭. ௧.—19 எபி. ௪. ௰௪. 20 ௧ கொரி. ௧. ௯: ௰. ௰௩. ௧ தெச. ௫. ௨௪. ௨ தெச. ௩. ௩. எபி. ௰௧. ௰௧.—21 அப். ௨. ௪௨. யூதா. ௰௯. 22 பிலி. ௪. ௫. ௨ பே. ௩. ௯, ௰௧, ௰௪. 23 ௨ ரோ. ௰௩. ௰௧.—24 ௨ பே. ௨. ௨௰, ௨௧.—25 ௪ மோ. ௰௫. ௩௰. எபி. ௯. ௪.—26 எசே. ௩௬. ௫. செப். ௧. ௰௮: ௩. ௮. ௨ தெச. ௧. ௮. எபி. ௰௨. ௨௯.—27 எபி ௨. ௨. 28 ௫ மோ. ௰௭. ௨, ௬: ௰௯. ௰௫. மத். ௰௮. ௰௬. யோவா. ௮. ௰௭. ௨ கொரி. ௰௩. ௧.—29 ௧ கொரி. ௰௧. ௨௯. எபி. ௰௩. ௨௰.—30 மத். ௰௨. ௩௧, ௩௨. எபே. ௪. ௩௰.—31 எபி. ௨. ௩: ௰௨. ௨௫.—32 ௫ மோ. ௩௨. ௩௫. ரோ. ௰௨. ௰௯.—33 ௫ மோ. ௩௨. ௩௬. சங். ௫௰. ௪: ௱௩௫. ௰௪. 34 லூக். ௰௨. ௫.—35 கலா. ௩. ௪. ௨ யோ. ௮.—36 எபி. ௬. ௪. 37 பிலி. ௧. ௨௯, ௩௰. கொலோ. ௨. ௧.

* சில பிரதிகளில் நினைத்துக்கொள்வதில்லையென்று பின்சொன்னார்.—† அல்லது பிரதிஷ்டைபண்ணி.—‡ அல்லது இஷ்டம்.

ளுக்கு [1]வேடிக்கைக்கு ஏதுவானவர்களாயும்
அப்படியான [2]மற்றவர்களுக்குத் தோழராயும்
௩௪ இருந்தீர்கள்.—[3]கட்டப்பட்டிருந்த என்னோடே
கூட நீங்கள் பாடுபட்டீர்களே; [4]பரமண்டலங்
களில் அதிக மேன்மையும், உறுதியுமான ஆஸ்தி
உங்களுக்கு உண்டென்று நீங்கள்* அறிந்து,
உங்கள் (லவுகிக) ஆஸ்திகளை (மற்றவர்கள்)
கொள்ளையிட்டதற்குச் [5]சந்தோஷமாய் இடங்
௩௫ கொடுத்தீர்கள்.—ஆகையால் [6]மிகுந்த பலனுக்கு
ஏதுவான உங்கள் தயிரியத்தை எறிந்துவிடா
திருப்பீர்களாக.
௩௬ நீங்கள் பராபரனுடைய சித்தத்தின்படி
செய்கிறவர்களாய் [7]வாக்குத்தத்தத்தின் நன்மை
யைப் பெறும்படிக்குப் [8]பொறுமை உங்களுக்கு
௩௭ வேண்டும்.—[9]வருகிறவர் [10]அதிககாலம் தாமத
மாய் இராமல் சீக்கிரமாய் வருவார் என்றும்,—
௩௮ [11]விசுவாசத்தினாலே நீதிமானானவன் பிழைப்
பான், அவன் பின்வாங்கிப்போனால் அவன்
மேல் என்னுடைய ஆத்துமா பிரியமாயிராதென்
௩௯ றும் (எழுதியிருக்கின்றது).—[12]நாம் கெட்டுப்
போகிறதற்கு ஏதுவாகப் பின்வாங்குகிறவர்க
ளாய் இராமல் (நமது) [13]ஆத்துமாவைக் காக்கிற
தற்கு ஏதுவாக விசுவாசமுள்ளவர்களாய் இருக்
கிறோம்.

## ௰௧. அதிகாரம்.

*௧. விசுவாசம் இன்னதென்றும், ௬. விசுவாசம் இல்லாமல் பராபரனுக்குப் பிரியமாயிருக்கக்கூடாதென்றும், ௭. விசுவாசத்துக்குத் திருட்டாந்தம் கொடுத்திருந்த பூர்வீகத்தார்களைக்குறித்தும் சொல்லியது.*

௧ விசுவாசமானது நம்பப்படுகிறவைகளில் உறு
தியும்† [14]காணப்படாதவைகளை வெளிப்படுத்து
௨ கிறதுமாய் இருக்கின்றது.—அதினாலே [15]பூர்வீ
கத்தார் நற்சாட்சியைப் பெற்றார்கள்.
௩ [16]உலகம் பராபரனுடைய வார்த்தையால்
உண்டாக்கப்பட்டதென்றும், இவ்விதமாய்க்
காணப்படுகிறவைகள் தோற்றப்படாத பொருள்
களால் உண்டாயினவென்றும் விசுவாசத்தினா
லே அறிந்திருக்கிறோம்.
௪ விசுவாசத்தினாலே [17]ஆபேல் என்பவன் காயீ
னுடைய பலியிலும் அதிகமான பலியைப் பரா
பரனுக்குச் செலுத்தினான்; அதினாலே அவன்
நீதிமான் என்று சாட்சிபெற்றான்; அவனுடைய
காணிக்கைகளைக்குறித்துப் பராபரனே சாட்சி
கொடுத்தார்; அவன் மரித்தும் அதினாலே [18]இப்
பொழுதும் பேசுகிறான்.‡
௫ விசுவாசத்தினாலே [19]ஏனோக்கு என்பவன்
மரணத்தைக் காணாதபடிக்கு எடுத்துக்கொள்ளப்
பட்டான்; பராபரன் அவனை எடுத்துக்கொண்ட
படியினாலே அவன் காணப்படாமற்போனான்;
அவன் எடுத்துக்கொள்ளப்படுதற்குமுன்னே
அவன் பராபரனுக்குப் பிரியமானவன் என்று
சாட்சிபெற்றுக்கொண்டிருந்தான்.—பராபரனைச் ௬
சேருகிறவன், அவர் உண்டென்றும் அவர் தம்
மைச் சாக்கிரதையாய்த் தேடுகிறவர்களுக்குப்
பலனை அளிக்கிறவர் என்றும், விசுவாசிப்பா
னே; ஆகையால் விசுவாசம் இல்லாதவன் அவ
ருக்குப் பிரியமாயிருக்கமாட்டான்.
[20]நோவா என்பவனும் தற்காலத்திலே காணாத ௭
வைகளைக்குறித்துத் தேவ எத்தனமாய் எச்சரிக்
கப்பட்டபொழுது, விசுவாசத்தினாலே பயந்து,§
தன் குடும்பத்தை இரட்சிப்பதற்குப் [21]பேழை
யை உண்டுபண்ணி, இதினாலே உலகம் ஆக்கி
னைக்கு உள்ளாயிற்றுஎன்று தீர்ப்புக் காண்பித்து,
[22]விசுவாசத்தால் வருகிற நீதிக்குச் சுதந்தரவாளி
யானான்.
[23]ஆபிரகாமும் பின்பு சுதந்தரமாகப் பெற்றுக் ௮
கொள்ளும்படிக்கான இடத்திற்குப் புறப்பட்
டுப்போக அழைக்கப்பட்டபொழுது, விசுவா
சத்தினாலே கீழ்ப்படிந்து, தான் போகவேண்
டிய இடம் இன்னதென்று அறியாமல் புறப்பட்
டுப்போனான்.—தனக்கு வாக்குத்தத்தம்பண்ணப் ௯
பட்ட அந்நியதேசத்திலே அவன் அந்த வாக்குத்
தத்தத்திற்கு [24]உடன் சுதந்தரராகிய ஈசாக்கோடும்
யாக்கோபோடுங்கூட விசுவாசத்தினாலே சஞ்ச
ரித்துக் [25]கூடாரங்களிலே குடியிருந்தான்.—
[26]பராபரனாலே உண்டாக்கப்பட்டும் ஆளப்பட் ௰
டும் இருக்கிற அஸ்திபாரங்களுள்ள பட்டணத்
திற்குப் போகக் [27]காத்துக்கொண்டிருந்தபடி
யால் அப்படியிருந்தான்.—[28]சாராளும் வாக்குத் ௰௧
தத்தம்பண்ணினவர் [29]உண்மையுள்ளவரென்று
எண்ணி, விசுவாசத்தினாலே கருப்பம்தரிக்கும்
படி பெலன் அடைந்து, [30]வயது சென்றவளாய்
இருந்தும் பிள்ளைபெற்றாள்.— ஆனபடியால் ௰௨
இந்தச் சங்கதியில் [31]செத்தவனைப்போன்ற ஒரு
வனாலே [32]வானத்திலுள்ள பெருக்கமான நட்சத்
திரங்களைப்போலவும் எண்ணிறந்த கடற்கரை
மணலைப்போலவும் மிகுந்த சனங்கள் உண்டா
னார்கள்.
அவர்கள் எல்லாரும் [33]வாக்குத்தத்தம்பண்ணப் ௰௩
பட்டவைகளை அடையாமல், [34]தூரத்திலே அ
வைகளைக் கண்டு வாழ்த்துதலோடே விரும்பிப்
பூமியின்மேலே தாங்கள் [35]அந்நியராயும் வழிப்
போக்கராயும் இருந்ததை அறிக்கைபண்ணி விசு

1 ௧ கொரி ௪.௯.—2 பிலி.௧.௭: ௪. ௰௪. ௧ தெச. ௨. ௰௪.—3 பிலி. ௧. ௭. ௨ தீமோ. ௧. ௰௬.—4 மத். ௬. ௨௰: ௰௯. ௨௧. லூக். ௰௨. ௩௩. ௧ தீமோ.௬.௰௯.—5 மத். ௫. ௰௨. அப். ௫. ௪௧. யாக். ௧.௨.–6 மத். ௫. ௰௨: ௰. ௩௨.—7 கொலோ. ௩. ௨௪. எபி. ௯.௰௫. ௧ பே.௧.௯. 8 லூக். ௨௧. ௰௯. கலா. ௬. ௯. எபி. ௰௨. ௧.—9 ஆப. ௨. ௩, ௪. 10 லூக். ௰௮: ௮. ௨ பே. ௩. ௯. 11 ௨ ரோ. ௧. ௰௭. கலா. ௩.௰௧. 12 ௨ பே.௨.௨௰,௨௧.—13 அப்.௰௬. ௩௰, ௩௧. ௧ தெச. ௫.௯. ௨ தெச. ௨.௰௪.—14 ௨ ரோ. ௮.௨௪,௨௫. ௨ கொரி.௪.௰௮: ௫. ௭.—15 ௩௯. வச.—16 ௧ மோ. ௧. ௧. சங்.௩௩. ௬. யோவா. ௧. ௩. எபி. ௧. ௨. ௨. பே.௩. ௫.—17 ௧ மோ. ௪.௪. ௧ யோ. ௩. ௰௨.—18 ௧ மோ. ௪. ௰. மத். ௨௩. ௩௫. எபி. ௰௨. ௨௪. 19 ௧ மோ.௫.௨௨, ௨௪.–20 ௧ மோ. ௬. ௰௩, ௨௨.—21 ௧ பே. ௩.௨௰. 22 ௨ ரோ.௩.௨௨: ௪.௰௩. பிலி. ௩.௯. 23 ௧ மோ. ௰௨. ௧,௪. அப்.௭.௨,௩,௪. 24 எபி. ௯. ௰௭.—25 ௧ மோ.௰௨.௮: ௰௩.௩,௰௮:௰௮.௧,௯.—26 எபி ௩. ௪. வெளி. ௨௧. ௨, ௰.—27 எபி. ௰௨. ௨௨: ௰௩. ௰௪.—28 ௧ மோ. ௰௭. ௰௯: ௰௮. ௰௧, ௰௪: ௨௧. ௨. 29 ௨ ரோ. ௪. ௨௧. எபி. ௰. ௨௩. 30 லூக். ௧. ௩௬.—31 ௨ ரோ. ௪. ௰௯. 32 ௧ மோ. ௨௨. ௰௭. ௨ ரோ ௪.௰௮. 33 ௧௩.வச.—34 ௨௭. வச. யோவா. ௮. ௫௬.—35 ௧ மோ. ௨௩.௪: ௪௭. ௯. ௧ நாளா. ௨௯. ௰௫. சங். ௩௯. ௰௨: ௱௧௯. ௰௯. ௧ பே ௧. ௰௭: ௨. ௰௧.

* அல்லது உங்களில் நீங்கள்.—† அல்லது பொருளும்.—‡ அல்லது பேசப்படுகிறான்.—§ அல்லது கவனமுள்ளவனாகி.

௰௪ வாசத்தோடே* இறந்துபோனார்கள்.—அப்படி
அறிக்கைபண்ணுகிறவர்கள் [1]சென்மதேசத்தை
நாடிப்போகிறோம் என்று தெரியப்படுத்துகிறார்
௰௫ கள்.—அவர்கள் தாங்கள் விட்டுவந்த தேசத்தை
நினைத்தார்களானால், அதற்குத் திரும்பும்படி
௰௬ இடமுண்டே. — அதையல்ல, அதிலும் மேன்
மையான பரமண்டலத்தில் உள்ளதையே விரும்
பினார்கள்; ஆகையால் பராபரனும் [2]அவர்களு
டைய தேவன் என்று அழைக்கப்படுகிறதினாலே
வெட்கப்படுகிறதில்லை; [3]அவர்களுக்கு ஒரு பட்
டணத்தை எத்தனம்பண்ணினாரே.
௰௭ மேலும், [4]ஆபிரகாமானவன் தான் சோதிக்
கப்பட்டபொழுது, விசுவாசத்தினாலே [5]ஈசாக்
௰௮ கைப் பலியாக ஒப்புக்கொடுத்தான்.—[6]ஈசாக்கி
னாலே உனக்குச் சந்ததி உண்டாகும் என்று
௰௯ அவனோடே † சொல்லப்பட்டிருந்ததே.— இப்
படிப்பட்ட வாக்குத்தத்தங்களைப் பெற்றவன்,
[7]இவனை மரித்தோரிலிருந்து எழுந்திருக்கப்பண்
ணப் பராபரன் வல்லவராய் இருக்கிறார் என்று
எண்ணித் தனக்கு ஒரேபேறானவனையே பலி
யாக ஒப்புக்கொடுத்தான்; ஆனதால் உவமையா
கும்படியே அவனைத் திரும்பப் பெற்றுக்கொண்
டான்.
௨௰ ஈசாக்கு என்பவனும் பிற்காலத்திற்கு உரிய
வைகளின்மேல் உள்ள விசுவாசத்தினாலே யாக்
கோபையும் ஏசாவையும் [8]ஆசீர்வதித்தான். —
௨௧ இயாக்கோபு என்பவனும் மரணகாலத்தில் விசு
வாசத்தினாலே இயோசேப்பினுடைய குமாரர்
இருவரையும் [9]ஆசீர்வதித்து, தன் கோலின் முனை
யிலே (சாய்ந்து) [10]தொழுதுகொண்டான். —
௨௨ [11]இயோசேப்பு என்பவனும் இஸ்ரவேல் சந்ததி
யார் (எகிப்து தேசத்தை) விட்டுப் புறப்படுவார்
கள் என்று தன் சீவகாலத்தின் முடிவில் விசு
வாசத்தினாலே அறிவித்து, ‡ தன் எலும்புகளைக்
குறித்துக் கட்டளைகொடுத்தான்.
௨௩ [12]மோசே என்பவன் பிறந்தபொழுது அவனு
டைய தாய்தகப்பன்மாரும் பிள்ளை அழகுள்ளது
என்று கண்டு, விசுவாசத்தினாலே [13]இராசாவி
னுடைய கட்டளைக்குப் பயப்படாமல், அந்
தப் பிள்ளையை மூன்றுமாதம் ஒளித்துவைத்தார்
௨௪ கள்.—[14]மோசே என்பவனும் பெரிய வயதுள்ள
வனானபொழுது பார்வோனுடைய குமாரத்தி
மகனென்று அழைக்கப்படுகிறதை விசுவாசத்தி
௨௫ னாலே வெறுத்து,—அநித்தியமான பாவசந்தோ
ஷங்களை அநுபவிப்பதை அல்ல, பராபரனு
டைய சனங்களோடேகூடத் [15]துன்பத்தை அநு
பவிப்பதையே அதிகமாய்த் தெரிந்துகொண்
டான். — [16]இனிமேல் வரும் பலனை அவன் ௨௬
நோக்கிப்பார்த்து, எகிப்திலுள்ள பொக்கிஷங்
களிலும் [17]கிறிஸ்துவின்நிமித்தம் வருகிற § நிந்
தையை அதிக ஐசுவரியமென்று எண்ணினான்.—
[18]காணப்படாதவரைக் கண்டாற்போல உறுதி ௨௭
யாய்ப் பற்றிக்கொண்டதால் அவன் விசுவாசத்
தினாலே இராசாவினுடைய மூர்க்கத்திற்குப்
பயப்படாமல் [19]எகிப்தைவிட்டுப் போனான்.—
தலைப்பிள்ளைகளைச் சங்கரிக்கிறவன் இஸ்ரவே ௨௮
லரைத் தொடாதபடிக்கு அவன் விசுவாசத்தி
னாலே [20]பஸ்காவையும் இரத்தம் பூசுதலையும்
ஏற்படுத்தினான்.
விசுவாசத்தினாலே அவர்கள் [21]சிவந்த சமுத் ௨௯
திரத்தை உலர்ந்த தரையைப்போலக் கடந்து
போனார்கள்; எகிப்தார் அப்படிச்செய்யத் தேடி
னபொழுது அமிழ்ந்துபோனார்கள்.
(இஸ்ரவேலருடைய) விசுவாசத்தினாலே ௩௰
[22]இயெரிகோபட்டணத்தின் மதில்கள் (அவர்க
ளால்) ஏழுநாளுக்குள்ளே சூழப்பட்டு விழுந்
தன.
[23]வேசியாயிருந்த இராகாப் என்பவள் விசு ௩௧
வாசத்தினாலே [24]வேவுகாரரைச் சமாதானத்தோ
டே ஏற்றுக்கொண்டு, அவிசுவாசிகளோடே ||
அழிக்கப்படாதிருந்தாள்.
பின்னும் யாரைக்குறித்துச் சொல்லலாம்; ௩௨
[25]கிதேயோனையும் [26]பாராக்கையும் [27]சமுசோனை
யும், [28]இயெப்பத்தாவையும், [29]தாவீதையும், [30]சா
முவேலையும், தீர்க்கதரிசிகளையுங்குறித்து நான்
விவரம்சொல்லவேண்டுமானால் காலம் போதா
து. — அவர்களும் விசுவாசத்தினாலே இராச்சி ௩௩
யங்களைச் செயித்துக்கொண்டு, நீதியை நடப்
பித்து, [31]வாக்குத்தத்தம்பண்ணப்பட்டவைக
ளைப் பெற்றுக்கொண்டு, [32]சிங்கங்களுடைய
வாய்களை அடைத்து, [33]அக்கினியின் பலத்தை
அவித்து,—[34]கட்கங்களின் கூர்மைக்குத் தப்பிப் ௩௪
[35]பலவீனத்திலே பலன்கொண்டு, யுத்தகாலத்தில்
வல்லவர்களாகி, [36]அந்நியருடைய பாளயங்க
ளைக் கவிழ்த்துப்போனார்கள்.—(விசுவாசத்தினா ௩௫
லே) [37]ஸ்திரிகளும் செத்துப்போன தங்களுக்கு
உரியவர்களை உயிரோடு எழுந்திருக்கப் பெற்
றார்கள்; (விசுவாசத்தினாலே) வேறுசிலர் அதிக
மகிமையாய் உயிரோடே எழும்பும்படிக்கு மீட்
பை அங்கிகரியாமல் [38]இழுப்புண்டு வாதிக்கப்
பட்டார்கள்.—(விசுவாசத்தினாலே) வேறுசிலர் ௩௬

1 எபி. ௰௩. ௰௪.—2 ௨ மோ. ௩. ௬, ௰௫. மத். ௨௨. ௩௨. அப். ௭. ௩௨.
3 பிலி. ௩. ௨௰. எபி. ௰௩. ௰௪.
4 ௧ மோ. ௨௨. ௧, ௯.—5 யாக். ௨. ௨௧.—6 ௧ மோ. ௨௧. ௰௨. உரோ. ௯. ௭.—7 உரோ. ௪. ௰௭, ௰௯, ௨௧.
8 ௧ மோ. ௨௭. ௨௭, ௩௯.
9 ௧ மோ. ௪௮. ௫, ௰௬, ௨௰
10 ௧ மோ. ௪௭. ௩௧.—11 ௧ மோ. ௫௰. ௨௪, ௨௫. ௨ மோ. ௰௩. ௰௯.
12 ௨ மோ. ௨. ௨. அப். ௭. ௨௰.
13 ௨ மோ. ௧. ௰௬, ௨௨.—14 ௨ மோ. ௨. ௰, ௰௧.—15 சங். ௮௪. ௰.
16 எபி. ௰. ௩௫.—17 எபி. ௰௩. ௰௩.
18 ௰௧. வச.—19 ௨ மோ. ௰. ௨௮, ௨௯: ௰௨. ௩௭: ௰௩. ௰௭, ௰௮.—20 ௨ மோ. ௰௨. ௨௧, ௨௯.—21 ௨ மோ. ௰௪. ௨௨, ௨௯.

22 யோசு. ௬. ௨௰.—23 யோசு. ௬. ௨௩. யாக். ௨. ௨௫.
24 யோசு. ௨. ௧.—25 நியா. ௬. ௰௧.
26 நியா. ௪. ௬.—27 நியா. ௰௩. ௨௪.
28 நியா. ௰௧. ௧: ௰௨. ௭.—29 ௧ சாமு. ௰௬. ௧, ௰௩: ௰௭. ௪௫.—30 ௧ சாமு. ௧. ௨௰: ௰௨. ௨௰.—31 ௨ சாமு. ௭. ௰௧. ௯.—32 நியா. ௰௪. ௫, ௬. ௧ சாமு. ௰௭. ௩௪, ௩௫. தானி. ௬. ௨௨.—33 தானி. ௩. ௨௫.
34 ௧ சாமு. ௨௰. ௧. ௧ இரா. ௰௯. ௩. ௨ இரா. ௬. ௰௬.—35 ௨ இரா. ௨௰. ௭. ௯. யோபு. ௪௨. ௰ சங். ௬. ௮.
36 நியா. ௰௫. ௮, ௰௫. ௧ சாமு. ௰௪. ௰௯. ௯: ௰௭. ௩௫, ௫௨. ௨ சாமு. ௮. ௬, ௯.—37 ௧ இரா. ௰௭. ௨௨. ௨ இரா. ௪. ௩௫.—38 அப். ௨௨. ௨௫.

* கிரேக்கு, விசுவாசமுள்ளவர்களாகி.—† அல்லது அவனைக்குறித்து.—‡ அல்லது நினைத்து.—§ அல்லது கிறிஸ்துவின்.
|| அல்லது கீழ்ப்படியாதவர்களோடே.

நிந்தைகளையும், அடிகளையும், [1]சங்கிலிகளையும்,
௩௭ காவலையும் சகித்துக்கொண்டார்கள்.—[2]கல் எறி
யப்பட்டார்கள்; வாளால் அறுக்கப்பட்டார்கள்;
சோதிக்கப்பட்டார்கள்; கட்கத்தினாலே வெட்
டப்பட்டு மரித்தார்கள்; [3]செம்மறியாட்டுத்
தோல்களையும் வெள்ளாட்டுத் தோல்களையும்
போர்த்துக்கொண்டு, குறைச்சலையும் உபத்திர
வத்தையும் துன்பத்தையும் சகித்துத் [4]திரிந்து,—
௩௮ வனாந்தரங்களிலேயும் மலைகளிலேயும் [5]குகைக
ளிலேயும் பூமியின் வெடிப்புகளிலேயும் சிதறி
நடந்தார்கள்; உலகம் அவர்களுக்கு அபாத்திர
மாய் இருந்தது.
௩௯ அவர்கள் எல்லாரும் விசுவாசத்தைக்குறித்து
[6]நற்சாட்சிபெற்றிருந்தும், வாக்குத்தத்தம்பண்
ணப்பட்டதை அடையாமல் போனார்கள்.—
௪௰ [7]பராபரன் நம்மைக்குறித்து அதிக நன்மையா
னதை ஏற்படுத்தினதால்* அவர்கள் நம்மை
யன்றி [8]நிறைவுள்ள ஆசீர்வாதத்தை அடையா
தபடிக்கு (அப்படியே போனார்கள்).

## ௰௨. அதிகாரம்.

௧. இடைவிடாத விசுவாசமும் பொறுமையும் தேவபக்தியும் உடையவர்களாயிருக்கப் புத்திசொல்லி, ௨௨. பழைய ஏற்பாட்டைப்பார்க்கிலும் புதிய ஏற்பாடு மேன்மையுள்ளதென்றும் காட்டியது.

௧ ஆகையால் மேகம்போல இத்தனை திரளான
சாட்சிகள் நம்மைச் சூழ்ந்துகொண்டிருக்க,
[9]நாம் பாரமான யாவற்றையும் நம்மைச் சுற்றிநிற்
கிற பாவத்தையும் தள்ளிப்போட்டு, விசுவாசத்
தை ஆரம்பமாய் நடத்துகிறவராயும் † முடிக்கி
றவராயும் இருக்கிற இயேசுவை நோக்கி, நமக்கு
முன் வைக்கப்பட்ட போராட்டச் சாலையிலே
௨ [10]பொறுமையோடே [11]ஓடக்கடவோம்.—[12]அ
வர் தமக்குமுன்பாக வைத்திருந்த சந்தோஷத்
திற்காக அவலட்சணப்படுதலை எண்ணாமல்,
சிலுவையில் (மரணத்தைச்) சகித்துப் பின்பு
[13]பராபரனுடைய ஆசனத்தின் வலதுபாரிசத்
தில் உளுக்காந்திருக்கிறார்.
௩ ஆனதால் உங்கள் [14]ஆத்துமாக்கள் இளைப்புள்
ளவைகளாய் இருக்கும்பொழுது நீங்கள் தயிரி
யம் அற்றவர்களாய்ப் போகாதபடிக்குப் பாவி
களால் இப்படிப்பட்ட விரோதத்தைச் சகித்த
[15]அவரையே நன்றாய்த் தியானித்துக்கொள்வீர்க
௪ ளாக.— அந்தப் பாவத்திற்கு விரோதமாய்ப்
போராட்டம்செய்கிற நீங்கள் இதுவரைக்கும்
[16]இரத்தம் சிந்தப்படத்தக்கதாக எதிர்நிற்கவில்
௫ லையே.— அன்றியும், [17]என் மகனே, கர்த்தரு
டைய தண்டனையை அற்பமாக எண்ணாமலும்
அவரால் கடிந்துகொள்ளப்படுகையில் தயிரிய
மற்றவனாகாமலும் இருப்பாயாக என்றும்,—
[18]கர்த்தராலே அன்புகூரப்பட்டவன் எவனோ ௬
அவனை அவர் தண்டித்துத் தாம் சேர்த்துக்கொள்
ளுகிற எந்த மகனையானாலும் அடித்துவருவாரே
என்றும், பிள்ளைகளாகிய உங்களுக்குச் சொல்
லியிருக்கிற ஆறுதலுள்ள வசனத்தை மறந்தீர்
கள்.—[19]நீங்கள் (அவருடைய) தண்டிப்புக்கு ௭
உட்பட்டிருக்கிறபடியால் பராபரன் உங்களைத்
(தம்முடைய) பிள்ளைகள்போல எண்ணி நடப்
பிக்கிறாரே; தகப்பனால் தண்டிக்கப்படாத பிள்
ளை ஒன்று உண்டா?—[20]எல்லாப் (பிள்ளைகளும்) ௮
தண்டிக்கப்பட்டதுபோல நீங்களும் தண்டிக்
கப்படாவிட்டால் பிள்ளைகளாயிராமல் வேசிப்
பிள்ளைகளாய் இருப்பீர்களே.
அன்றியும், நம்முடைய சரீரத்திற்குத் தகப் ௯
பன்மாரானவர்கள் நம்மைத் தண்டிக்கும்பொ
ழுது நாம் அவர்களுக்கு வந்தனம்செய்திருக்க,
[21]ஆவிகளுக்குப் பிதாவானவருக்கு நாம் பிழைக்
கும்படி மிகவும் அதிகமாய்க் கீழ்ப்படியவேண்
டுமல்லவா?—அந்தத் தகப்பன்மார்கள் தங்களுக் ௰
குத் தோன்றினபடி‡ கொஞ்சக்காலமாய் நம்
மைத் தண்டித்தார்கள்; அவர் தம்மைப்போல நாம்
[22]பரிசுத்தராகுதற்கு ஏதுவான பிரயோசனம்
வரும்பொருட்டே அப்படிச் செய்கிறார்.—தண் ௰௧
டனை உண்டாயிருக்கும்பொழுது அது (நமக்
குச்) சந்தோஷமாக அல்ல, துக்கமாகத் தோன்
றுகின்றது; பின்பு அதினாலே முயற்சிப்பட்ட
வர்களுக்கு அது [23]நீதியென்னும் பாக்கியபல
னைக் கொடுக்கின்றது.
ஆகையால், [24]தளர்ச்சியாயிருக்கிற (உங்கள்) ௰௨
கைகளையும் இளைப்புள்ள (உங்கள்) கால்களை
யும் செம்மைப்படுத்துவீர்களாக.— முடமுள்ள ௰௩
(அவயவம்) புரண்டுபோகாமல் [25]சொஸ்தமாகும்
படிக்கு உங்கள் கால்களுக்காகச் [26]சரியான§
பாதைகளைச் செய்வீர்களாக.—[27]யாவருடனே ௰௪
யும் சமாதானமாயிருக்கவும் பரிசுத்தராயிருக்க
வும் சாக்கிரதையாய் இருப்பீர்களாக; [28]பரிசுத்
தமில்லாதவன் கர்த்தனைத் தரிசிப்பதில்லையே.—
[29]ஒருவரும் பராபரனுடைய கிருபையை இழந் ௰௫
துபோகாத|| படிக்கும், மற்றநேகரும் அசுசிப்ப
டத்தக்கதாக [30]கசப்புள்ள வேர் உங்களுக்குள்ளே
தோன்றிக் கலக்கம் உண்டாக்காதபடிக்கும்,—
ஒருவரும் [31]வேசிமார்க்கராயும், [32]ஏசா என்பவன் ௰௬
போல லவுகீக நடத்தை உள்ளவர்களாயும் [33]இரா

1 ௧ மோ. ௩௯. ௨௰. எரே. ௨௰. ௨: ௩௭. ௰௫.—2 ௧ இரா. ௨௧. ௰௩. ௨ நாளா. ௨௪. ௨௧. அப். ௭. ௫௮: ௰௪. ௰௯.—3 சகரி. ௰௩. ௪.
4 ௨ இரா. ௧. ௮. மத். ௩. ௪.
5 ௧ இரா. ௰௮. ௪: ௰௯. ௯.—6 ௨. ௰௩. வச.—7 எபி. ௭. ௨௨: ௮. ௬.
8 எபி. ௫. ௯: ௰௨. ௨௩. வெளி. ௬. ௰௧.
9 கொலோ. ௩. ௮. ௧ பே. ௨. ௧.
10 ௨ கொ. ௰௨. ௰௨. எபி. ௰. ௩௬.
11 ௧ கொரி. ௯. ௨௪. பிலி. ௩. ௰௩, ௰௪.
12 லூக். ௨௪. ௨௬. பிலி. ௨. ௮. ௯. ௧ பே. ௧. ௰௧.—13 சங். ௱௰. ௧. எபி. ௧. ௩, ௰௩: ௮. ௧. ௧ பே. ௩. ௨௨.
14 கலா. ௬. ௯.—15 மத். ௰ ௨௪, ௨௫. யோவா. ௰௫. ௨௰.—16 ௧ கொரி. ௰. ௰௩. எபி. ௰. ௩௨, ௩௩, ௩௪.
17 யோபு. ௫. ௰௭. யாக். ௧. ௰௭.
18 சங். ௯௪. ௰௨: ௱௰௯. ௭௫. யாக். ௧. ௰௨. வெளி. ௩. ௰௯.
19 ௫ மோ. ௮. ௫. ௨ சாமு. ௭. ௰௪. யாக். ௰௩. ௨௪: ௰௯. ௰௮: ௨௩. ௰௩.
20 சங். ௭௩. ௰௫. ௧ பே. ௫. ௯.
21 ௪ மோ. ௰௬. ௨௨: ௨௭. ௰௬. யோபு. ௰௨. ௰. பிர. ௰௨. ௭. எசா. ௪௨. ௫: ௫௭. ௰௬. சகரி. ௰௨. ௧.
22 ௩ மோ. ௰௧. ௪௪: ௰௯. ௨. ௧ பே. ௧. ௰௫, ௰௬.—23 யாக். ௧. ௰௮.
24 யோபு. ௪. ௩. ௪. எசா. ௩௫. ௩.
25 கலா. ௬. ௧.—26 யாக். ௪. ௨௬, ௨௭.
27 சங். ௩௪. ௰௪. ௨ கொ. ௰௩. ௰௮: ௰௪. ௰௯. ௨ தீமோ. ௨. ௨௨.
28 மத். ௫. ௮. ௨ கொரி. ௭. ௧. எபே. ௫. ௫.—29 கலா. ௫. ௪.—30 ௫ மோ. ௨௯. ௰௮. எபி. ௩. ௰௨.—31 எபே. ௫. ௩. கொலோ. ௩. ௫. ௧ தெச. ௪. ௩.—32 ௧ மோ. ௨௫. ௩௩.
33 ௨ கொரி. ௯. ௧.

* அல்லது முன் அறிந்ததால்.—† அல்லது விசுவாசத்துக்குக் காரணராயும்.—‡ அல்லது தங்கள் சந்தோஷத்தின்படி.
§ அல்லது அழுத்தமான.—|| அல்லது விட்டுவிலகாத.

தபடிக்கும் எச்சரிக்கையாய் இருப்பீர்களாக;
அவன் ஒரேவேளைச் சாப்பாட்டுக்காக முதற்
பேறானவனுக்கு உரிய சுதந்தரங்களை விட்டு
௰௭ விட்டானே.— பின்பு உங்களுக்குத் தெரிந்தி
ருக்கிறபடி, [1]அவன் (தன் தகப்பனுடைய) ஆசீர்
வாதத்தைப் பெற்றுக்கொள்ள விரும்பியும் தள்
ளப்பட்டான்; [2]அதைக் கண்ணீரோடே மிகவும்
தேடியும் (தகப்பனிடத்தில்) மாறுதலைக்* காணா
மல்போனானே.
௰௮ அன்றியும், தொடப்பட்டு அக்கினி பற்றி
எரிகிற [3]மலையினிடத்திலும், மந்தாரத்தினிடத்
௰௯ திலும் இருளினிடத்திலும், — பெருங்காற்றி
னிடத்திலும், எக்காளத்தின் முழக்கத்தினிடத்
திலும், வார்த்தைகளின் தொனியினிடத்திலும்
நீங்கள் வரவேண்டியவர்கள் அல்லவே; [4]அந்
தத் தொனியைக் கேட்டவர்கள் பின்னும் வச
னம் தங்களுக்குத் தோன்றாதபடிக்கு வேண்டிக்
௨௰ கொண்டார்கள்.—என்னத்தினாலெனில், [5]இந்த
மலையை ஒரு மிருகம் தொட்டால், அதின்மே
லே கல்லெறியவேண்டும், அல்லது அதை அம்
பினாலே எய்து கொலைசெய்யவேண்டும் என்று
சொல்லப்பட்ட கட்டளையை அவர்கள் சகிக்
௨௧ கமாட்டாதிருந்தார்கள்.—அந்தத் தரிசனை [6]இவ்
வளவு பயங்கரமாய் இருந்தது; அதினாலே மோ
சேயும், நான் மிகவும் அதிகமாய்ப் பயப்பட்டு
௨௨ நடுங்குகிறேன் என்றான்.—நீங்கள் [7]மலையாகிய
சீயோனிடத்திற்கும் [8]சீவனுள்ள தேவனுடைய
பட்டணமாகிய பரம எருசலேமினிடத்திற்கும்,
[9]அநேகம் பதினாயிரமாகிய தூதர்களின் விசே
௨௩ ஷமான சங்கத்தினிடத்திற்கும், — [10]பரமண்
டலத்திலே பேர் எழுதியிருக்கிற† [11]முதற்பே
றானவர்களின் சபையினிடத்திற்கும், [12]யாவ
ருக்கும் தேவனாகிய நியாயாதிபதியினிடத்திற்
கும், [13]நிறைந்த பாக்கியமுள்ளவர்களாகிய நீதி
௨௪ மான்களின் ஆவிகளினிடத்திற்கும்,—புதிதான
உடம்படிக்கைக்கு‡ ஏற்ற [14]மத்தியஸ்தராகிய
இயேசுவினிடத்திற்கும், ஆபேலினுடைய இரத்
தம் கூப்பிட்டதுபோல அல்ல, [15]அதிக நன்மை
யானவைகளை அறிவித்துத் தெளிக்கப்படுகிற
[16]இரத்தத்தினிடத்திற்கும் சேருகிறவர்களாய் இ
ருக்கிறீர்கள்.
௨௫ திருவுளம்பற்றுகிறவரை நீங்கள் அசட்டை
பண்ணாதபடிக்குப் பாருங்கள்; என்னத்தினாலெ
னில், [17]பூமியிலே பேசினவனை அசட்டைபண்
ணின அவர்கள் (ஆக்கினைக்குத்) தப்பாமல்
இருக்க, பரமண்டலத்திலிருந்து பேசுகிறவரை
நாம்விட்டு விலகினால் (ஆக்கினைக்குத்) தப்பிப்
போவோமா? — [18]அவருடைய சத்தம் முற்கா ௨௬
லத்திலே பூமியை அசையப்பண்ணிற்று; அன்
றியும், இனிமேல் [19]ஒருகாலத்திலே பூமியைமாத்
திரமல்ல,வானத்தையும் அசையப்பண்ணுவேன்
என்று இப்பொழுது வாக்குத்தத்தம்செய்திருக்கி
றார்.—இனிமேல் ஒருகாலத்திலே என்றுசொன்ன ௨௭
வசனம் அசைவில்லாதவைகள் நிலையாய் இருக்
கத்தக்கதாக (அற்பமாய்ச்) செய்யப்பட்டவைக
ளாகிய [20]அசைவுள்ளவைகள்§ நீக்கப்படும் என்று
குறிக்கின்றது.—ஆனதால், அசைவில்லாத இராச் ௨௮
சியத்தை நாம் பெற்றுக்கொண்டிருக்க, [21]நம்மு
டைய பராபரன் (பொல்லாதவர்களைப்) பட்
சிக்கும் அக்கினியாய் இருக்கிறபடியினாலே, —
நாம் வணக்கத்தோடும் மெய்த்தேவபத்தியோடும் ௨௯
பராபரனுக்குப் பிரியமாய் ஆராதனை செய்யத்
தக்க கிருபையுள்ள ஈவைப் பற்றிக்கொள்ளக்‖
கடவோம்.

## ௰௩. அதிகாரம்.

௧. தயாளமும், ௪. கற்பும் உடையவர்களாயிருக்கவும், ௫. பொருளாசையை நீக்கவும், ௭. தேவஊழியக்காரர்களைப் பராமரிக்கவும், ௯. அந்நிய உபதேசங்களுக்கு எச்சரிக்கையாய் நிற்கவும், ௰. கிறிஸ்துவை அறிக்கையிடவும், ௰௬. தருமம்செய்யவும், ௰௭ அதிகாரிகளுக்குக் கீழ்ப்படியவும், ௰௮. தனக்காகச் செபம்பண்ணவும் சொல்லி, ௨௰. நிருபத்தை முடித்தது.

[22]சகோதரசிநேகம் நிலையாய் இருக்கக்கடவது.— ௧
அந்நியரை உபசாரம்செய்கிற குணத்தினாலே ௨
சிலர் (தங்களுக்குத்) தெரியாதபடிக்குத் [23]தேவ
தூதரை உபசரித்தால் [24]நீங்கள் அந்நியரை உப
சாரம்செய்ய மறவாதிருப்பீர்களாக. — [25]கட் ௩
டப்பட்டிருக்கிறவர்களோடேகூடக் கட்டப்
பட்டவர்கள்போல நீங்கள் அவர்களை நினைத்
துக்கொள்ளுங்கள்; உங்களையும் சரீரத்தோடிருக்
கிறவர்களென்று அறிந்து, பாடுபடுகிறவர்களை
நினைத்துக்கொள்ளுங்கள்.—விவாகம்பண்ணுதல் ௪
யாவருக்குள்ளும் கனம்பொருந்தியதாய் இருக்
கக்கடவது; சமுசாரமார்க்கத்தாருடைய படுக்
கை (விபசாரத்தினாலே) அசுசிப்படாதிருப்ப
தாக; [26]வேசிமார்க்கருக்கும் விபசாரக்காரருக்
கும் பராபரன் நியாயத்தீர்ப்புக் கொடுப்பாரே.—
[27]உங்களுக்கு உண்டானவைகள் போதும் ௫
என்கிற மனதுள்ளவர்களாய்ப் பணத்தின்மே
லுள்ள ஆசையில்லாமல் நடந்துகொள்வீர்களாக;
[28]நான் உன்னை ஒருக்காலும் விட்டுவிலகுவ

1 ௧ மோ. ௨௭. ௩௪, ௩௬, ௩௮. 2 எபி. ௬. ௬.—3 ௨ மோ. ௰௯ ௰௨, ௰௮,௰௯: ௨௰. ௰௮. ௫ மோ. ௪. ௰௧: ௫. ௨௨. ௨ கொ. ௩. ௭: ௮. ௰௩. ௨ தீமோ. ௧. ௭.—4 ௨ மோ ௨௰. ௰௯. ௫ மோ ௫. ௫, ௨௫: ௰௮. ௰௬. 5 ௨ மோ. ௰௯. ௰௩.—6 ௨ மோ. ௰௯. ௰௬.—7 கலா. ௪. ௨௬. வெளி. ௩. ௰௨: ௨௧. ௨, ௰.—8 பிலி. ௩. ௨௰ 9 ௫ மோ. ௩௩. ௨. சங் ௬௮. ௰௭. யூதா. ௰௪. 10 லூக். ௰. ௨௰. பிலி. ௪. ௩. வெளி. ௰௩. ௮.—11 ௨ மோ. ௪. ௨௨. யாக். ௧. ௰௮. வெளி ௰௪. ௪. 12 ௧ மோ. ௰௮. ௨௫. சங். ௯௪. ௨. 13 பிலி. ௩. ௰௨. எபி. ௰௧. ௪௰. 14 எபி. ௮. ௬: ௯. ௰௫.—15 ௧ மோ. ௪. ௰. எபி. ௰௧. ௪.—16 ௨ மோ. ௨௪. ௮. எபி. ௰. ௨௨. ௧ பே ௧. ௨. 17 எபி. ௨. ௨, ௩: ௩. ௰௭: ௰. ௨௮, ௨௯. 18 ௨ மோ. ௰௯. ௰௮.—19 ஆகா. ௨. ௬. 20 சங். ௱௨. ௨௬. மத். ௨௪. ௩௫. ௨ பே. ௩. ௰. வெளி. ௨௧. ௧. 21 ௨ மோ. ௨௪. ௰௭. ௫ மோ. ௪. ௨௪: ௯. ௩. சங். ௯௭. ௩: ௫௰. ௩. ஏசா. ௬௬. ௰௫. ௨ தெச. ௧. ௮. எபி. ௰. ௨௭.—22 ரோ. ௰௨. ௰ ௧ தெச. ௪. ௯. ௧ பே. ௧. ௨௨: ௨. ௰௭: ௪. ௮: ௪. ௮. ௨ பே. ௧. ௭. ௧ யோ. ௩. ௰௧. ழ: ௪. ௭, ௨௰, ௨௧. ழ. 23 ௧ மோ. ௰௮. ௩: ௰௯. ௨.—24 மத். ௨௫. ௩௫. ரோ. ௰௨. ௰௩. ௧ தீமோ. ௩. ௨. ௧ பே. ௪. ௯.—25 மத். ௨௫. ௩௬. ரோ. ௰௨. ௰௫. ௧ கொரி ௰௨. ௨௬. கொலோ. ௪. ௰௮ ௧ பே. ௩. ௮.—26 ௧ கொரி ௬. ௯. கலா. ௫. ௰௯, ௨௧. எபே. ௫. ௫. கொலோ. ௩ ௫,௬. வெளி. ௨௨. ௰௫.—27 மத். ௬. ௨௫. ௩௪. பிலி ௪. ௰௧, ௰௨. ௧ தீமோ. ௬. ௬, ௮. 28 ௧ மோ. ௨௮. ௰௫. ௫ மோ. ௩௧. ௬, ௮. யோசு. ௧. ௫. ௧ நாளா. ௨௮. ௨௰. சங். ௩௭. ௨௫.

* அல்லது மனம் திரும்புதலை.—† அல்லது சேர்க்கப்பட்டிருக்கிற.—‡ அல்லது ஏற்பாட்டிற்கு.
§ அல்லது அசைக்கப்படத்தக்கவைகள்.—‖ அல்லது பெற.

தும் இல்லை, உன்னை ஒருக்காலும் கைவிடுவ
தும் இல்லை என்று அவர் அருளிச்செய்தாரே.—
௬ அதினாலே நான் தயிரியங்கொண்டு [1]கர்த்தர்
எனக்குச் சகாயராய் இருக்கிறார்; மனிதனானவன்
எனக்கு என்னசெய்வானோ என்று நான்
பயப்படவேண்டுவதில்லை என்று சொல்லலா
மே.

௭ [2]தேவவசனத்தை உங்களுக்குப் போதித்து
உங்களை நடத்திப்போனவர்களை* நீங்கள் ஞாப
கப்படுத்தி, அவர்களுடைய நடக்கையின் முடி
வை நன்றாய்ப் பார்த்து, (அவர்களுடைய) [3]விசு
௮ வாசத்தைப் பின்பற்றுங்கள்.—[4]இயேசுக்கிறிஸ்து
வானவர் நேற்றும் இன்றைக்கும் என்றென்றைக்
௯ கும் ஒரேவிதமாய் இருக்கிறவர். — [5]பலவித
மாயும் அந்நியமாயும் இருக்கிற போதனைகளால்
நீங்கள் சிதற அடிக்கப்படாதிருப்பீர்களாக; போ
சனபதார்த்தங்களாலே அல்ல, (தேவ) கிருபையி
னாலே (உங்கள்) மனது உறுதியாகிறதே நன்
மையாயிருக்கின்றது; [6]போசனபதார்த்தங்களைக்
குறித்து முயற்சியாய் இருக்கிறவர்கள் அதினா
௰ லே பிரயோசனம் அடையவில்லையே.—[7]நமக்கு
உண்டாயிருக்கிற பலிபீடத்தில் உள்ளவைக
ளைக் கூடாரத்தில் ஆராதனைசெய்கிறவர்கள்
புசிக்கிறதற்கு அதிகாரமில்லை.

௰௧ அது எப்படித்தெரியுமெனில், பிரதான ஆசா
ரியன் பாவப்பலிக்காக மிருகங்களின் இரத்தத்
தைப் பரிசுத்த ஸ்தலங்களில் கொண்டுவருகிற
பொழுது [8]அந்த மிருகங்களுடைய உடல்கள்
பாளயத்திற்குப் புறம்பே கொண்டுபோய்ச் சுட்
௰௨ டெரிக்கப்படுமே. — அந்தப்படி இயேசுவான
வரும், தமது திரு இரத்தத்தினாலே சனங்க
ளைப் பரிசுத்தம் செய்யும்படிக்குப் [9]பட்டணத்
௰௩ துக்குப் புறம்பே பாடுபட்டார்.—ஆனதால் நாம்
அவருடனேகூட [10]நிந்தையைச் சகிக்கிறவர்க
ளாய் அவரோடேகூடப் பாளயத்திற்குப் புறம்
பே புறப்படக்கடவோம்; [11]நிலைமையான பட்
௰௪ டணம் இங்கே நமக்கு இல்லையே.—மறுலோ
கத்தில் உள்ளதை மிகவும் தேடுகிறோமே. —
௰௫ மேலும் [12]அவருடைய திருநாமத்திற்குத் துதி
யை அறிக்கையிடுகிற † உதடுகளின் கனியாகிய
[13]தோத்திரப்பலியை நாம் [14]அவர்மூலமாய் எப்
பொழுதும் பராபரனுக்குச் செலுத்தக்கட
வோம்.

அன்றியும் [15]நன்மைசெய்தலையும், (எளியவர் ௰௬
களுக்குக்) கொடுத்தலையும் மறவாதிருப்பீர்க
ளாக; [16]அப்படிப்பட்ட பலிகள்மேல் பராபரன்
மிகவும் பிரியமாயிருக்கிறாரே.—[17]உங்களை நடத் ௰௭
துகிறவர்கள் ‡ (கர்த்தாவுக்குக்) கணக்கு ஒப்பு
விக்கிறவர்களாய் உங்கள் [18]ஆத்துமாக்களுக்காக
விழித்துக்கொள்ளுகிறார்களே; ஆகையால் அவர்
கள் துக்கமாய் அல்ல, சந்தோஷமாய் அப்படிச்
செய்யும்படிக்கு நீங்கள் அவர்களுக்குக் கீழ்ப்
படிந்து அடங்குவீர்களாக; (அவர்கள் துக்கமாய்
அப்படிச் செய்தால்) அது உங்களுக்குப் பிர
யோசனமாய் இருக்கமாட்டாதே. — நாங்கள் ௰௮
எவ்விதத்தினாலும் நன்றாய் நடக்க விரும்பிக்
கொண்டு [19]நற்சாட்சிசொல்லுகிற மனது எங்க
ளுக்கு உண்டென்று நாங்கள் நிச்சயமாயிருக்
கிறபடியால் [20]எங்களுக்காகச் செபம்பண்ணு
வீர்களாக. — நான் அதிசீக்கிரமாய் உங்களுக் ௰௯
குத் திரும்பக் கொடுக்கப்படும்படிக்கு நீங்கள்
அப்படிச் செய்யவேண்டுமென்று [21]அதிகமாய்க்
கேட்டுக்கொள்ளுகிறேன்.

அன்றியும் [22]நம்முடைய கர்த்தருமாய் [23]ஆடு ௨௰
களின் பெரிய மேய்ப்பருமாய் இருக்கிற இயே
சுவை நித்திய உடம்படிக்கைக்கு § ஏற்ற [24]இரத்
தத்தினாலே மரித்தோரிலிருந்து புறப்படப்பண்
ணின [25]சமாதானத்திற்குக் காரணராகிய பரா
பரன்,—தமது சித்தத்தின்படி நீங்கள் செய்கிற ௨௧
தற்கு ஏதுவாக [26]எவ்விதமான நற்கிரியைக்கும்
உங்களைத் தகுதியானவர்களாக்கி, || இயேசுக்கி
றிஸ்துவின்மூலமாய்த் தமது சன்னிதானத்திலே
[27]பிரியமானதை உங்களுக்குள்ளே நடப்பிக்கக்
கடவர்; [28]அவருக்கு என்றைக்கும் துதி உண்
டாவதாக.—ஆமன்.

சகோதரரே, [29]நான் சுருக்கமாய் உங்களுக்கு ௨௨
எழுதின இந்தப் புத்திகளை அங்கிகரிக்கும்
படிக்கு வேண்டிக்கொள்ளுகிறேன்.

[30]சகோதரனாகிய தீமோத்தேயு [31]விடுதலையாக் ௨௩
கப்பட்டான் என்று அறிவீர்களாக; அவன் சீக்
கிரமாய் வந்தால் அவனுடனேகூட உங்களைக்
காண்பேன்.—உங்களை நடத்துகிறவர்களுக்கும் ௨௪
மற்றப் பரிசுத்தவான்கள் யாவருக்கும் (என்னா
லே) [32]வாழ்த்துதல்செய்யுங்கள்.—இத்தாலி தே ௨௫
சத்தார் யாவரும் உங்களுக்கு வாழ்த்துதல் செய்
கிறார்கள், [33]தேவகிருபை உங்கள் அனைவரோ
டும் இருக்கக்கடவது.—ஆமன்.

---

1 சங். ௨௭. ௧: ௫௬. ௪, ௰௧, ௰௨: ௱௰௮. ௬.—2 ௰எ. ௨௪.—3 எபி. ௬. ௰௨.
4 யோவா. அ. ௫௮. எபி. ௧. ௰௨. வெளி. ௧. ௪.—5 எபே. ௪. ௰௪: ௫. ௬. கொலோ. ௨. ௪, ௮. ௧ யோ. ௪. ௧.—6 உரோ. ௰௪. ௰௭. கொலோ. ௨. ௰௬. ௧ தீமோ. ௪. ௩.
7 ௧ கொரி. ௯. ௰௩: ௰. ௰௮.
8 ௨ மோ. ௨௯. ௰௪. ௩ மோ. ௪. ௰௨, ௰௨, ௨௧: ௬. ௩௰: ௯. ௰௧: ௰௬. ௨௭. ௪ மோ. ௰௯. ௩.—9 யோவா. ௰௯. ௰௭, ௰௮. அப். ௭. ௫௮.—10 எபி. ௰௧. ௨௬. ௧ பே. ௪. ௰௪.—11 மீகா. ௨. ௰. பிலி. ௩. ௨௰. எபி. ௰௧. ௰, ௰௬: ௰௨. ௨௨.—12 ஓசே. ௰௪. ௨.
13 ௩ மோ. ௭. ௰௨. சங். ௫௰. ௰௪, ௨௩: ௱௭. ௨௨: ௱௰௬. ௰௭.
14 எபே. ௫. ௨௰. ௧ பே. ௨. ௫.
15 உரோ. ௰௨. ௰௩.—16 ௨ கொரி. ௯. ௰௨. பிலி. ௪. ௰௮. எபி. ௬. ௰.
17 பிலி. ௨. ௨௯. ௧ தெச. ௫. ௰௨. ௧ தீமோ. ௫. ௰௭.—18 எசே. ௩. ௰௭: ௩௩. ௨, ௭. அப். ௨௰. ௨௮.—19 அப். ௨௩. ௧: ௨௪. ௰௬. ௨ கொரி. ௧. ௰௨.—20 உரோ. ௰௫. ௩௰. எபே. ௬. ௰௯. கொலோ. ௪. ௩. ௧ தெச. ௫. ௨௫. ௨ தெச. ௩. ௧.—21 பிலே. ௨௨.—22 அப். ௨. ௨௪, ௩௨. உரோ. ௪. ௨௪: ௮. ௰௧. ௧ கொரி. ௬. ௰௪: ௰௫. ௰௫. ௨ கொரி. ௪. ௰௪. கலா. ௧. ௧. கொலோ. ௨. ௰௨. ௧ தெச. ௧. ௰. ௧ பே. ௧. ௨௧.—23 எசா. ௪௰. ௰௧. எசே. ௩௪. ௨௩: ௩௭. ௨௪. யோவா. ௰. ௰௧, ௰௪. ௧ பே. ௨. ௨௫: ௫. ௪.
24 சகரி. ௯. ௰௧. எபி. ௰. ௨௯.
25 உரோ. ௰௫. ௩௩. ௧ தெச. ௫. ௨௩.
26 ௨ தெச. ௨. ௰௭. ௧ பே. ௫. ௰.
27 பிலி. ௨. ௰௩.—28 கலா. ௧. ௫. ௨ தீமோ. ௪. ௰௮. வெளி. ௧. ௬.
29 ௧ பே. ௫. ௰௨.—30 ௧ தெச. ௩. ௨.
31 ௧ தீமோ. ௬. ௰௨.—32 ௭, ௰௭. ௨௪.
33 தீத். ௩. ௰௫.

* அல்லது உங்களுக்குக் கட்டளைகொடுக்கிறவர்களை.—† அல்லது துதிக்கிற.—‡ அல்லது ஆளுகிறவர்கள்.
§ அல்லது ஏற்பாட்டிற்கு.—|| அல்லது நற்கிரியைகளையும் உங்களில் செய்து.

# JAMES.

அப்போஸ்தலனாகிய

# யாக்கோபு எழுதின

## பொதுவான நிருபம்.

### க. அதிகாரம்.

*௧. நாம் துன்பத்திலே சந்தோஷப்பட்டு, ௫. பொறுமை அடையப் பராபரனை வேண்டிக்கொள்ளவும், ௰௩. நம்முடைய சோதனைகளினால் உண்டாகும் குறைச்சலகளையும் பாவங்களையும் பராபரனமேல் சுமத்தாமல், ௰௯. திருவசனத்துக்குச் செவிகொடுத்துச் சிந்தித்து அதின்படியே நடக்கப் பிரயாசப்படவும், ௨௧. மாயக்காரராகாமல் தேவபத்தர்களாயிருக்கவும் கற்பித்தது.*

௧ [1]பராபரனுக்கும் கர்த்தராகிய இயேசுக்கிறிஸ்து
வுக்கும் ஊழியக்காரனாகிய [2]யாக்கோபு [3]அங்கங்
கே சிதறியிருக்கிற [4]பன்னிரண்டு கோத்திரங்
களுக்கும் எழுதுகிறதாவது:
௨ நீங்கள் வாழ்க என் சகோதரரே, [5]உங்கள் விசு
வாசத்தைப் பரிட்சைபார்த்தல் பொறுமையை
உண்டாக்கும் என்று அறிந்திருக்கிறபடியால்,—
௩ [6]தூண்டுகிற பல துன்பங்களில் நீங்கள் அகப்
படும்பொழுது [7]அதை மிகுந்த சந்தோஷத்திற்கு
௪ ஏதுவாக எண்ணிக்கொள்ளுங்கள். — நீங்கள்
ஒன்றிலும் குறைவுள்ளவர்களாய் இராமல் நிறை
வுள்ளவர்களாயும் தேறினவர்களாயும் இருக்கத்
தக்கதாக அந்தப் பொறுமை நிறைந்த கிரியை
யையே செய்யக்கடவது.
௫ [8]உங்களில் ஒருவன் நற்புத்தியில் குறைவுள்
ளவனானால், யாவருக்கும் சம்பூரணமாய்க் கொ
டுக்கிறவருமாய் ஒருவரையும் அதட்டாதவருமா
யிருக்கிற [9]பராபரனிடத்தில் அவன் கேட்கக்
கடவன், அப்பொழுது [10]அவனுக்குக் கொடுக்
௬ கப்படும்.—அவன் எவ்வளவாகிலும் சந்தேகப்
படாமல் [11]விசுவாசத்தோடே கேட்கக்கடவன்;
சந்தேகப்படுகிறவன் காற்றினால் அடிக்கப்பட்டு
அசைகிற கடலின் அலைக்கு ஒப்பாயிருப்பா
௭ னே.—அப்படிப்பட்ட மனிதன் கர்த்தரிடத்தி
லே எதையாகிலும் பெற்றுக்கொள்வேன் என்று
நினையாதிருப்பானாக.—[12]இருமனம் உள்ளவன் ௮
தன் வழிகள் யாவிலேயும் நிலையற்றவனாய்
இருக்கிறான்.
(அன்றியும்) தாழ்மைப்படுகிற சகோதரன் ௯
தான் உயர்த்தப்படுவதைக்குறித்து மேன்மைபா
ராட்டக்[*] கடவன்.-ஐசுவரியவான் தான் [13]புல் ௰
லின் பூவைப்போல ஒழிந்துபோவதால், தாழ்
மைப்படுவதைக்குறித்து மேன்மைபாராட்டக்
கடவன். — சூரியன் உதயமாகி வெய்யிலைக் ௰௧
கொடுக்கும்பொழுது, புல் உலர்ந்து, அதின் பூ
உதிர்ந்து, அதின் அழகான வடிவு அழிந்துபோ
மே; அப்படிப்போல ஐசுவரியவானும் தன்
மார்க்கங்களிலே அழிந்துபோவான்.
[14]சோதனையைச் சகிக்கிற மனிதன் பாக்கிய ௰௨
முள்ளவன்; ஏனென்றால், அவன் உத்தமனாக்
கப்பட்டபின்பு [15]கர்த்தர் தம்மிடத்தில் அன்பு
கூருகிறவர்களுக்கு வாக்குத்தத்தம்பண்ணின
[16]சீவகிரீடத்தைப் பெறுவான்.—தூண்டிவிடப் ௰௩
படுகிற எவனும் பராபரனால் தூண்டிவிடப்படு
கிறேன் என்று சொல்லாதிருப்பானாக; பரா
பரன் பொல்லாங்குகளால்[†] தூண்டிவிடப்பட
வும், பாவத்திற்கு ஏதுவாக ஒருவனையும் தூண்
டிவிடவுமாட்டாரே.—அவனவன் தன்தன் சுய ௰௪
இச்சையினாலே தூண்டி இழுக்கப்பட்டுச் சோ
திக்கப்படுகிறான். — பின்பு [17]இச்சையானது ௰௫
கருப்பந்தரித்துப் பாவத்தைப் பிறப்பிக்கும்;
பாவம் நிறைவேறினபொழுது [18]அது மரணத்
தை உண்டாக்கும்.
எனக்குப் பிரியமான சகோதரரே, வஞ்சிக் ௰௬
கப்படாதிருப்பீர்களாக. — [19]எந்த நல்ல ஈவும் ௰௭
நிறைவுள்ள எந்த வரமும் உயரத்திலிருந்து சுடர்

---

1 நெ.க.க.-2 அப். ௧௨. ௧௭: ௧௫. ௧௩. கலா.௧.௧௯: ௨.௯. பூதா.௧. 3 ஏமோ.௧௨ ௨௧. யோவா.௭.௩௫. அப். ௨. ௫: அ.௧. ௧ பே.௧.௧. 4 அப். ௨௬ ௭.—5 உரோ. ௫. ௩. 6 ௧ பே.௧.௬.-7 மத். ௫. ௧௨. அப். ௫ ௪௧ எபி.௰.௩௪. ௧ பே.௪.௧௩, ௧௪.—8 ௧ இரா. ௩. ௯, ௧௧, ௧௨. வாக். ௨. ௬.—9 மத். ௭. ௭: ௨௧. ௨௨. மாற் ௧௧.௨௪. லூக்.௧௧.௯. யோவா.௧௪.௧௩: ௧௫ ௭: ௧௬.௨௩. 10 எரே. ௨௯. ௧௨. ௧ யோ. ௫. ௧௪,௧௫.—11 மாற். ௧௧. ௨௪. ௧ தீமோ.௨.௮.—12 யாக். ௪ ௮.

13 யோபு. ௧௪. ௨. சங்.௧௦௨.௧௧: ௧௦௩. ௧௫, ௧௬: ஏசா. ௪௦. ௬: ௫௧. ௧௨. ௧ கொரி.௭.௩௧. யாக் ௪. ௧௪. ௧ பே. ௧. ௨௪. ௧ யோ. ௨.௧௭.—14 யோபு.௫.௧௭. வாக். ௩. ௧௧, ௧௨. எபி.௧௨.௫. வெளி. ௩. ௧௯.-15 மத்.௰ ௨௨: ௧௯ ௨௯, ௨௪. யாக்.௨.௫.—16 ௧ கொரி. ௯. ௨௫. ௨ தீமோ.௪.௮. யாக். ௨.௫ ௧ பே.௫ ௪. வெளி.௨.௰. 17 யோபு. ௧௫. ௩௫. சங். ௭ ௧௪. 18 உரோ.௬.௨௧,௨௩.—19 யோவா. ௩. ௨௭. ௧ கொரி. ௪. ௭.

* அல்லது சந்தோஷப்பட.—† அல்லது பொல்லாங்குகள்.

களின் பிதாவினாலே வருகின்றன; [1]அவருக்கு
எவ்வளவாகிலும் மாறுதலும் வேற்றுமையின் நிழ
௰௮ லும் இல்லை.—[2]அவர் சித்தமானபடியால் [3]தம்மு
டைய சிருட்டிகளில் [4]நாம் முதற்பலன்களாகும்
படிக்கு நம்மைச் சத்தியத்தின் வசனத்தினாலே
செனிப்பித்தார்.

௰௯ ஆகையால், எனக்குப் பிரியமான சகோதர
ரே, [5]யாவரும் கேட்கிறதற்குத் தீவிரமாயும்,
௨௰ [6]பேசுகிறதற்குத் தாமதமாயும், — பராபரனுக்கு
ஏற்ற நீதியை மனிதருடைய கோபம் நடப்பிக்க
மாட்டாதபடியினாலே [7]கோபிக்கிறதற்குத் தாமத
௨௧ மாயும் இருக்கக்கடவர்கள்.—ஆகையால் [8]அழுக்
கு யாவையும் மிகுதியான பொல்லாங்குகளையும்
நீங்கள் தள்ளிவிட்டு, நடப்பட்டதாயும் [9]உங்
கள் ஆத்துமாக்களை இரட்சிக்கத்தக்கதாயும் இருக்
கிற வசனத்தைச் சாந்தமாய் ஏற்றுக்கொள்ளுங்
கள்.

௨௨ அல்லாமலும் நீங்கள் தப்பான யோசனையி
னாலே உங்களை வஞ்சியாதபடிக்கு வசனத்தைக்
கேட்கிறவர்களாய்மாத்திரம் அல்ல, [10]அதின்படி
௨௩ செய்கிறவர்களாயும் இருப்பீர்களாக.—என்னத்
தினாலெனில் [11]ஒருவன் வசனத்தைக் கேட்டும்
அதின்படி செய்யாதவனானால், கண்ணாடியிலே
தன் சுபாவமுகத்தைப் பார்க்கிற மனிதனுக்கு
௨௪ ஒப்பாயிருப்பான். — அவன் தன்னைத்தானே
பார்த்தபின்பு புறப்பட்டுப்போனவுடனே தான்
௨௫ இருந்த விதத்தை மறப்பான்.—[12]சுயாதீனத்திற்கு
ஏதுவான நிறைவுள்ள பிரமாணத்தை [13]உற்றுப்
பார்த்து அதிலே நிலையாயிருக்கிறவனே (அதை)
மறந்துபோகத்தக்கதாகக் கேட்கிறவனாயிராமல்,
அதற்கு ஏற்ற கிரியைசெய்கிறவனாயும் இருந்து,
[14]தன் செய்கையில்,* பாக்கியவானாயிருப்பான்.
௨௬ உங்களில் ஒருவன் [15]தன் நாவை அடக்காமல்,
தன் இருதயத்தை வஞ்சித்துத் தன்னைத் தேவ
பத்தியுள்ளவன் என்று நினைத்தால், அவனுடைய
௨௭ தேவபத்தி வீணானதாயிருக்கும். — [16]திக்கற்ற
பிள்ளைகளும் கைம்பெண்களும் படுகிற உபத்
திரவத்திலே அவர்களை விசாரிக்கிறதும், [17]உல
கத்தால் அசுசிப்படாதபடிக்குத் தன்னைக் காத்
துக்கொள்ளுகிறதுமே, பிதாவாகிய பராபரனுக்
குமுன்பாக மாசில்லாத சுத்தமான பத்தியாய்
இருக்கின்றது.

## ௨. அதிகாரம்.

௧. ஐசுவரியவான்களைமாத்திரம் கனம்பண்ணி ஏழைகளை இகழ்வது கிறிஸ்தமார்க்கத்துக்கு ஒவ்வாது என்றும், ௰௩. யாவர்மேலும் அன்பையும் இரக்கத்தையும் பாராட்டவேண்டும் என்றும், ௰௪. கிரியை இல்லாத விசுவாசத்தில் பெருமைபாராட்டக்கூடாதென்றும், ௰௭. அது செத்த விசுவாசமும், ௰௯. பேய்களுடைய விசுவாசமுமாயிருக்கிறதொழிய, ௨௧. ஆபிரகாம், ௨௫. ராகாப் என்பவர்களின் விசுவாசமாய் இருக்கவில்லை என்றும் சொல்லியது.

என் சகோதரரே, [18]மகிமையுள்ள நம்முடைய ௧
கர்த்தராகிய இயேசுக்கிறிஸ்துவின்மேல் உள்ள
விசுவாசம் உங்களுக்குள்ளே [19]பட்சபாதத்தோ
டே இராதபடிக்குப் பாருங்கள்.—அது எப்படி ௨
யெனில், பொன்மோதிரத்தையும் பிரகாசமுள்ள
வஸ்திரத்தையும் தரித்திருக்கிற ஒரு மனிதனும்,
கந்தையான வஸ்திரத்தைத் தரித்திருக்கிற ஒரு
தரித்திரனும் உங்கள் செபஆலயத்தில் † பிரவே
சிக்கும்பொழுது,–பிரகாசமுள்ள வஸ்திரத்தைத் ௩
தரித்தவனை வணக்கமாய் நோக்கி, நீர் கனமாய்
இவ்விடத்தில் ‡ உளுக்காரும் என்றும், தரித்திர
னை, நீ அங்கே நில்லு, அல்லது, இங்கே என்
பாதப்படியினிடத்திலே உளுக்காரு என்றும்
நீங்கள் சொன்னால், — உங்களுக்குள்ளே பேத ௪
கம்பண்ணித் துர்ச்சிந்தனைகளோடே நியாயாதி
பதிகளாவீர்கள் அல்லவா? — எனக்குப் பிரிய ௫
மான சகோதரரே கேளுங்கள், [20]விசுவாசத்தில்
ஐசுவரியவான்களாகவும், தம்மிடத்தில் [21]அன்பு
கூருகிறவர்களுக்குத் தாம் வாக்குத்தத்தம்பண்
ணின இராச்சியத்தைச் § சுதந்தரிக்கிறவர்களா
கவும், [22]இவ்வுலகத்தின் தரித்திரரைப் பராபரன்
தெரிந்துகொள்ளவில்லையா? — [23]அப்படியிருந் ௬
தும் நீங்கள் தரித்திரனைக் கனஈனம்பண்ணி
வருகிறீர்கள்; ஐசுவரியவான்கள் அல்லவோ
உங்களை ஒடுக்குகிறார்கள்; [24]அவர்கள் அல்ல
வோ உங்களை நியாயாசனங்களுக்குமுன்பாக
இழுக்கிறார்கள் — அவர்கள் அல்லவோ உங் ௭
களுக்குக் கொடுக்கப்பட்ட நல்ல நாமத்தைத்
தூஷணிக்கிறார்கள்.—[25]உன்மேல் அன்பாயிருக் ௮
கிறதுபோலப் பிறனிடத்திலேயும் அன்புகூரு
வாயாக என்று வேதவாக்கியம் சொல்லுகிற இ
ராசரீகமான பிரமாணத்தை நீங்கள் நிறைவேற்
றினால் நன்மைசெய்வீர்கள்; [26]பட்சபாதமாய்
இருப்பீர்களானால் பாவத்தை நடப்பித்து,—அக் ௯
கிரமக்காரரென்று நியாயப்பிரமாணத்தால் கண்
டிக்கப்படுவீர்களே.

எப்படியெனில், ஒருவன் வேதநூல் முழு ௰
வதையும் கைக்கொண்டாலும், ஒரே பிரமாணத்
திற்குத் தப்பிநடந்தால், [27]எல்லாப் பிரமாணங்
களுக்கும் விரோதமாய்க் குற்றவாளியாயிருப்
பான். — என்னத்தினாலென்றால், [28]விபசாரம் ௰௧

1 ௪ மோ. ௨௩.௰௯. ௧ சாமு. ௰௫.௨௯. மல்கி. ௩. ௬. ௨ ரோ. ௰௧. ௨௯.
2 யோவா. ௧.௰௩: ௩.௩. ௧ கொரி. ௪. ௰௫. ௧ பே. ௧. ௨௩.—3 எபே. ௧.௰௨.—4 எரே. ௨. ௩. வெளி. ௰௪. ௪.—5 பிரச. ௫. ௧.
6 வாக். ௰.௰௯: ௰௭.௨௭. பிரச. ௫.௨.
7 வாக். ௰௪.௰௭: ௰௬.௩௨. பிரச. ௭.௯.
8 கொலே. ௩. ௮. ௧ பே. ௨. ௧.
9 அப். ௰௩. ௨௬. ௨ ரோ. ௧. ௰௬. ௧ கொரி. ௰௫. ௨. எபே ௧.௰௩. தீத். ௨.௰௩. எபி. ௨. ௩. ௧ பே. ௧. ௯.
10 மத். ௭.௨௧. லூக். ௬.௪௬: ௰௧.௨௮. ௨ ரோ. ௨. ௰௩. ௧ யோ. ௩. ௭.
11 லூக். ௬.௪௭, ௪௯. யாக். ௨. ௰௪. ௪௯.
12 யாக். ௨. ௰௨.—13 ௨ கொரி. ௩.௰௮.
14 யோவா. ௰௩.௰௭.—15 சங். ௩௪.௰௩: ௩௯.௧. ௧ பே. ௩. ௰.—16 ஏசா. ௧. ௰௬,௰௭: ௫௮.௬,௭. மத். ௨௫.௩௬.
17 ௨ ரோ. ௰௨.௨. யாக். ௪.௪. ௧ யோ. ௫. ௰௮.—18 ௧ கொரி. ௨. ௮. ௭. ௪௮. ௧ கொரி ௧ ௨௧, ௨௮.
19 ௧ மோ. ௰௯.௰௫. ௫ மோ. ௧.௰௭: ௰௬. ௰௯. வாக். ௨௪. ௨௧: ௨௮. ௨௧. மத். ௨௨ ௰௬. ௯. வச. யூதா. ௰௯.—20 லூக் ௰௨ ௨௧. ௧ தீமோ. ௬.௰௮. வெளி. ௨. ௯.—21 ௨ மோ. ௨௰.௬. ௧ சாமு. ௨.௩௰. வாக். ௮. ௰௭. மத். ௫. ௩. லூக். ௬.௨௰: ௰௨. ௨௨. ௧ கொரி. ௨. ௯. ௨ தீமோ. ௪.௮. யாக் ௧. ௰௨.—22 யோவா. ௭. ௪௮. ௧ கொரி ௧ ௨௬, ௨௮.
23 ௧ கொரி. ௰௧. ௨௨.—24 அப். ௰௩. ௫௦: ௰௭.௬: ௰௮.௰௨. யாக். ௫.௬.
25 ௩ மோ. ௰௯.௰௮. மத். ௨௨. ௩௯. ௨ ரோ. ௰௩.௮,௯. கலா. ௫.௰௪: ௬. ௨.—26 ௩. வச. — 27 ௫ மோ. ௨௭.௨௬. மத். ௫. ௰௯. கலா. ௩.௰.
28 ௨ மோ. ௨௰. ௰௪, ௰௪.

* அல்லது செயலில்.—† அல்லது கூட்டத்தில்.—‡ அல்லது ஒரு நல்ல இடத்தில் இங்கே.—§ அல்லது அந்த இராச்சியத்தை.

பண்ணுதிருப்பாயாக என்று சொன்னவர்* கொ
லைசெய்யாதிருப்பாயாக என்றும் சொன்னார்;
ஆனதால், நீ விபசாரம்பண்ணாமல் இருந்தாலும்
கொலைசெய்தாயானால் வேதநூலை மீறி நடந்
திருப்பாயே.
௰௨ [1]சுயாதீனத்திற்கு ஏதுவான வேதநூலின்படி
நியாயத்தீர்ப்பு அடையப்போகிறவர்களாய்ப்பே
௰௩ சியும் செய்தும் இருப்பீர்களாக.—என்னத்திற்
காக என்றால், இரக்கம் செய்யாதவனுக்கு இரக்
கமில்லாமல் [2]நியாயத்தீர்ப்புக் கிடைக்கும்; நியா
யத்தீர்ப்புக்குமுன்பாக [3]இரக்கம் மேன்மைபா
ராட்டும்.†
௰௪ என் சகோதரரே, ஒருவன் தனக்கு விசுவாசம்
உண்டென்று சொல்லியும் கிரியைகள் இல்லாத
வனானால், [4]அவனுக்கு என்ன பிரயோசனம்
வரும்? விசுவாசம் அவனை இரட்சிக்குமா?—
௰௫ [5]சகோதரன் அல்லது சகோதரி வஸ்திரம் இல்லா
தவர்களாயும், நாடோறும் வேண்டிய பிழைப்
௰௬ பில்லாதவர்களாயும் இருக்கும்பொழுது,—[6]உங்
களில் ஒருவன் அவர்களை நோக்கி, நீங்கள் சமா
தானத்தோடே போய்க் குளிர்காய்ந்து பசியா
றுங்கள் என்று சொல்லிச் சரீரத்திற்கு வேண்டி
யவைகளை அவர்களுக்குக் கொடாவிட்டால்,
அதினால் என்ன பிரயோசனம் இருக்கும்? —
௰௭ அப்படிப்போல விசுவாசமும் கிரியைகள் இல்
௰௮ லாதிருந்தால்,—தனியே இருப்பதினாலே‡ செத்
ததாயிருக்கும்; ஒருவன் வந்து உனக்கு விசுவா
சம் உண்டு, எனக்குக் கிரியைகள் உண்டு, கிரி
யைகளில்லாமல்§ உன் விசுவாசத்தை எனக்குக்
காண்பி; [7]நான் என் விசுவாசத்தை என் கிரி
யைகளினாலே காண்பிக்கிறேன் என்பான். —
௰௯ பராபரன் ஒருவர் உண்டென்று விசுவாசிக்கி
றாய்; அப்படிச் செய்கிறது சரிதான்; [8]பசாசுக
௨௰ ளும் அப்படி விசுவாசித்து நடுங்குகின்றன.—ஆ
வீணான மனிதனே, கிரியைகள் இல்லாத விசுவா
௨௧ சம் செத்ததென்று அறிய விரும்புகிறாயா?—[9]நம்
முடைய பிதாவாகிய ஆபிரகாம் தன் குமாரன்
ஈசாக்கைப் பலிபீடத்தின்மேல் ஏற்றிவைத்த
பொழுது, கிரியைகளினாலே அல்லவோ நீதிமா
௨௨ னாக்கப்பட்டான்.—[10]அவனுடைய விசுவாசம்
அவனுடைய கிரியைகளோடேகூட முயற்சி
செய்து அந்தக் கிரியைகளினாலே முடிக்கப்பட்
௨௩ டதையும்,—[11]ஆபிரகாம் பராபரனை விசுவாசித்
தான்; (அது) அவனுக்கு நீதியாக எண்ணப்பட்
டது என்கிற வேதவாக்கியம் நிறைவேற்றப்பட்
டதையும், [12]அவன் பராபரனுடைய சிநேகிதன்
என்னப்பட்டதையும் பார்த்திருக்கிறாயே.‖ —
ஆனதால் ஒரு மனிதன் விசுவாசத்தினாலேமாத் ௨௪
திரம் அல்ல, கிரியைகளினாலேயும் நீதிமான்
ஆக்கப்படுகிறானென்று அறிவீர்களாக.—அப்ப ௨௫
டிப்போல [13]வேசியாயிருந்த இராகாப் என்பவள்
தூதர்களை ஏற்றுக்கொண்டு வேறுவழியாய் அ
னுப்பிவிட்டபொழுது, கிரியைகளினாலே அல்
லவோ நீதியுள்ளவளாக்கப்பட்டாள். — ஆகை ௨௬
யால் ஆவி¶ இல்லாத சரீரம் செத்ததாயிருக்கிறது
போலக் கிரியைகள் இல்லாத விசுவாசமும்செத்
ததாய் இருக்கின்றது.

## ௩. அதிகாரம்.

௧. நாம் மற்றவர்களைக் கடோமையும் அகங்காரமாயும் கடிந்துகொள்ளாமல், ௫. நன்மைக்கும் தீமைக்கும் கருவியாயிருக்கிற நாவை அடக்கவேண்டுமென்றும், ௰௪. மெய்ஞ்ஞானிகள் பகையும் போராட்டமும் இல்லாமல் சாந்தமும் சமாதானமுமாய் இருக்கிறார்களென்றும் சொல்லியது.

என் சகோதரரே, அதிக ஆக்கினையை** அடை ௧
வோம் என்று [14]நாம் அறிந்திருக்க, (உங்களில்)
[15]அநேகர் போதகராகாதிருப்பீர்களாக.—[16]நாம் ௨
எல்லாரும் அநேகவிதமாய்த் தவறுகிறோம்;
[17]சொல் தவறாமல் இருக்கிறவனே [18]தேறினவ
னும் தன் சரீரம் அனைத்தையும் (ஞானக்) கடி
வாளத்தினாலே அடக்கிக்கொள்ளுகிறவனும் இ
ருக்கிறான்.—குதிரைகளைப்பாருங்கள், அவைகள் ௩
நமக்குக் கீழ்ப்படியும்படிக்கு [19]வாய்களில் கடி
வாளங்களைப் போட்டு, அவைகளுடைய முழுச்
சரீரத்தையும் நடத்துகிறோம்.—கப்பல்களையும் ௪
பாருங்கள்; அவைகள் இவ்வளவு பெரியவைக
ளாய்க்கடுங்காற்றுக்களால்அடிக்கப்பட்டாலும்,
அவைகளை நடத்துகிறவன் போகும்படி யோசிக்
கும் இடம் எவ்விடமோ அவ்விடத்திற்கு மிக
வும் சிறிதான சுக்கானாலே திருப்பப்படும். —
அப்படிப்போல [20]நாவானதும் சிறிய அவயவ ௫
மாய் இருந்தும் [21]பெருமையானவைகளைச் செய்
யும்; கொஞ்ச நெருப்பைப் பாருங்கள்; அது எத்
தனை பெரிய காட்டைக்†† கொளுத்துகின்றது;
[22]நாவே நெருப்பு.—அது அநீதியினால் நிறைந்த ௬
லோகம்; அந்தப்படி நாவு நம்முடைய அவ
யவங்களுக்குள் இருந்து, [23]முழுச் சரீரத்தை
யும் கறைப்படுத்துகிறதாயும், சுபாவமுறைமை
யைக்‡‡ கொளுத்துகிறதாயும், நரக அக்கினியி
னால் கொளுத்தப்படுகிறதாயும் இருக்கின்றது.—
எல்லாக்§§ காட்டு மிருகங்களுக்கும், பறவைக ௭
ளுக்கும், ஊர்வனவைகளுக்கும், நீரிலுள்ளசெந்
துக்களுக்கும் உண்டாயிருக்கிற சுபாவம் கீழ்ப்
படியப்பண்ணப்படும்; அப்படி மனிதருடைய
சுபாவத்தால்‖‖ கீழ்ப்படியப்பண்ணப்பட்ட
தும் உண்டு.—நாவைமாத்திரம் ஒரு மனிதனும் ௮

1 யாக்.௧.௨௫.-2 யோபு. ௨௨. ௬. ஏழ.வாக்.௨௧.௰௩. மத்.௬.௰௫:௰௮. ௧௫:௨௫.௪௧,௪௨.-3 ௧ யோ.௪. ௰௭,௰௮.—4 மத்.௭.௨௬. யாக்.௧. ௨௨.-5 யோபு.௩௧.௰௯,௨௰. லூக். ௩. ௰௧.—6 ௧ யோ. ௩. ௰௮. 7 யாக். ௩.௰௩.—8 மத்.௮.௨௯. மாற். ௧.௨௪: ௫.௭. லூக் ௪.௩௪. அப். ௰௬. ௰௭: ௰௯. ௰௩.—9 ஆதி. ௨௨.௯,௰௨.—10 எபி. ௰௧. ௰௭. 11 ஆதி.௰௫.௬. ரோ.௪.௩.கலா. ௩.௬.—12 ௨ நாளா. ௨௰.௭. ஏசா. ௪௧.௮.—13 யோசு. ௨. ௧. எபி. ௰௧. ௩௧.—14 லூக். ௬. ௩௭. 15 மத். ௨௩. ௮, ௰௪. ரோ.௨.௨௰, ௨௧. ௧ பே. ௫. ௩.—16 ௧ இரா. ௮. ௪௬. ௨ நாளா.௬.௩௬. வாக். ௭.௨௰. ௧ யோ.௧. ௮.-17 சங்.௩௪.௰௩. யாக்.௧. ௨௬.—18 மத். ௰௨. ௩௭. 19 சங். ௩௨. ௯.—20 வாக்.௰௨.௧௮: ௰௫. ௨.-21 சங்.௰௨. ௩: ௭௩.௮,௯. வாக். 22 வாக்.௰௬. ௨௭.—23 மத். ௰௫. ௰௧, ௰௮,௰௯,௨௰. மாற்.௭.௰௫,௨௰,௨௩.

* அல்லது சொல்லியிருந்த நியாயப்பிரமாணம்.—† அல்லது சந்தோஷப்படும்.—‡ கிரேக்கு, தான்மாத்திரம் இருப்பதினாலே.—§ சில பிரதிகளில் உன் கிரியைகளினால்.—‖ அல்லது பார்த்திருக்கிறாய்.—¶ அல்லது சுவாசம்.—** அல்லது நீதித்தீர்ப்பை.—†† அல்லது வஸ்துவை.
‡‡ கிரேக்கு, உருளையை.—§§ கிரேக்கு, எல்லாச் சுபாவமான.—‖‖ அல்லது எல்லா மனிதரால்.

கீழ்ப்படுத்தமாட்டான்; அது அடங்காத பொல்
லாங்குள்ளதுமாய் [1]சாவுக்கேற்ற விஷத்தால்
௯ நிறைந்ததுமாய் இருக்கிறது.—பிதாவாகிய பரா
பரனை நாம் அதினாலே தோத்திரிக்கிறோம்; [2]பரா
பரனுடைய சாயலின்படி உண்டாக்கப்பட்ட
௰ மனிதனை அதினாலே சபிக்கிறோம்.—ஆசீர்வதித்
தலும் சபித்தலும் ஒரே வாயிலிருந்து புறப்படு
கின்றன; என் சகோதரரே, இப்படி இருக்கக்
௰௧ கூடாது. — நீரூற்றில் ஒரே துவாரத்திலிருந்து*
தித்திப்பும் கசப்புமுள்ள தண்ணீர் சுரக்குமா?—
௰௨ என் சகோதரரே, அத்திமரம் ஒலிவப்பழங்களை
யும், அல்லது திராட்சச்செடி அத்திப்பழங்களை
யும் கொடுக்குமா? அப்படிப்போல உவர்ப்பான
நீரூற்றுத் தித்திப்பான சலத்தைக் கொடுக்கவும்
மாட்டாது.
௰௩ [3]உங்களில் ஞானியுமாய் அறிவுள்ளவனுமாய்
இருக்கிறவன் எவனோ, அவன் ஞானத்திற்குரிய
[4]சாந்தத்தோடே [5]தன் கிரியைகளை நல்ல நடக்
௰௪ கையினாலே காண்பிக்கக்கடவன்.–உங்கள் இரு
தயத்திலே [6]கசப்பான வயிராக்கியத்தையும் வி
ரோதத்தையும் வைத்துக்கொண்டால், [7]நீங்கள்
மேன்மைபாராட்டாமலும் சத்தியத்திற்கு விரோ
தமாய்ப் பொய்யைச் சொல்லாமலும் இருப்பீர்
௰௫ களாக.—[8]அப்படிச்செய்கிறது உயரத்திலிருந்து
வருகிற ஞானமல்ல, அது இந்தப் பூமிக்கும் மிரு
௰௬ கசீவனுக்கும் † பேய்க்கும் உரித்தானது.—[9]வயி
ராக்கியமும் விரோதமும் எங்கேயோ அங்கே
கலக்கமும் ‡ சகலவிதமான துர்ச்செய்கைகளும்
௰௭ உண்டே.—[10]உயரத்திலிருந்து வருகிற ஞானம்
முதலாவது, கற்புள்ளதுமாய், பின்பு சமாதான
மும் சாந்தமும் இணக்கமும் உள்ளதுமாய், இரக்
கத்தாலும் நற்கிரியைகளாலும் நிறைந்ததுமாய்,
பட்சபாதம்§ இல்லாததுமாய், [11]வஞ்சனையில்லா
௰௮ ததுமாய் இருக்கின்றது.—இப்படிச் சமாதானத்
தை நடப்பிக்கிறவர்களாலே சமாதானத்தோடே
[12]நீதியாகிய கனி விதைக்கப்படுகின்றது.

## ௪. அதிகாரம்.

க. பொருளாசை. ௪. அசுத்தம், ௭. பொறுமை, ௰௧. மற்றவர்களைக் குற்றமாய் நிருணயிக்கிற குணமுதலியவைகளை நீக்கி, ௰௩. லவுகீக அலுவல்களில் நற்பலன் அடைவதை நம்பாமல், இச்சீவன் அநித்தியமென்று உணர்ந்து நம்மையும் நம்முடைய கவலைகளையும் பராபரனுடைய பராமரிப்புக்கு ஒப்புக்கொடுக்கச்சொல்லியது.

க உங்களுக்குள்ளே யுத்தங்களும்சண்டைகளும்||
எதினாலே வருகின்றன; உங்கள் அவயவங்க
ளில் [13]போர்செய்கிற செல்வத்திற்கு ஏற்ற இச்
சைகளால்¶ அல்லவோ வருகின்றன?—நீங்கள் உ ௨
இச்சித்தும் உங்களுக்கு அகப்படுகிறதில்லை;
நீங்கள் கொலைசெய்தும்** துணிவுள்ளவர்களா
யிருந்தும் (இஷ்டப்படி) அடையாமற்போகிறீர்
கள்; நீங்கள் சண்டையும் யுத்தமும் பண்ணியும்,
விண்ணப்பம்பண்ணாமல் இருக்கிறதால் உங்க
ளுக்குச் சித்திக்கிறதில்லை.—உங்கள் இச்சைக ௩
ளுக்கு †† ஏற்றதாகச் செலவழிக்கும்படிக்குத்
[14]துர்க்குணமாய் விண்ணப்பம்பண்ணுகிறதால்
[15]நீங்கள் விண்ணப்பம்பண்ணியும் பெற்றுக்
கொள்ளாமல் இருக்கிறீர்கள்.

ஆ [16]விபசாரரே, விபசாரிகளே, [17]உலகத்தோ ௪
டே சிநேகமாயிருக்குதல் பராபரனுக்கு விரோ
தமான பகையாய் இருக்கின்றதென்று நீங்கள்
அறியவில்லையா? ஆகையால் [18]உலகத்திற்குச்
சிநேகமாயிருக்க விரும்புகிறவன் பராபரனுக்
குப் பகைஞனாயிருக்கிறான்.–அல்லது வேதநூல் ௫
வீணாய்ச் சொல்லுகிறதென்றும், [19]நம்மிடத்தில்
வாசமாயிருக்கிற ஆவியானவர் பொறாமைக்கு
ஏதுவாக ‡‡ இச்சிக்கிறார் என்றுமா நினைக்கிறீர்
கள்.—அவர் அதிக தயவை அநுக்கிரகம் செய் ௬
கிறாரே, ஆனபடியால் [20]அகந்தையுள்ளவர்க
ளுக்குப் பராபரன் விரோதித்து, மனத்தாழ்மை
யுள்ளவர்களுக்குக் கிருபையை அளிக்கிறா
ரென்று சொல்லுகிறார். — ஆகையால் பராபர ௭
னுக்குக் கீழ்ப்படியுங்கள்; [21]பசாசுக்கு எதிர்த்து
நில்லுங்கள்; அப்பொழுது அவன் உங்களை
விட்டு ஓடிப்போவான்.—[22]பராபரனைச் சேருங் ௮
கள், அப்பொழுது அவரும் உங்களைச் சேர்வார்;
ஆ பாவிகளே, [23]உங்கள் கைகளைச் சுத்தமாக்
குங்கள்; [24]இருமனமுள்ளவர்களே, [25]உங்கள்
இருதயங்களைப் பரிசுத்தம்செய்யுங்கள்.–நீங்கள் ௯
உபத்திரவப்பட்டுத் துக்கமடைந்து அழுங்கள்;
[26]உங்கள் நகைப்பு துக்கப்படுதலாகவும் உங்கள்
சந்தோஷம் சஞ்சலமாகவும் மாறக்கடவது.—
கர்த்தருக்குமுன்பாகத் [27]தாழ்மைப்படுங்கள், ௰
அப்பொழுது உங்களை உயர்த்துவார்.

சகோதரரே, [28]ஒருவருக்கொருவர் விரோத ௰௧
மாய்ப் பேசாதிருப்பீர்களாக; சகோதரனுக்கு
விரோதமாய்ப் பேசித் [29]தன் சகோதரனைக்
குற்றப்படுத்துகிறவன் நியாயப்பிரமாணத்திற்கு
விரோதமாய்ப் பேசி நியாயப்பிரமாணத்தைக்
குற்றப்படுத்துகிறான்; நியாயப்பிரமாணத்தைக்
குற்றப்படுத்தினால் நீ நியாயப்பிரமாணத்தின்ப
டி செய்கிறவனாய் இராமல் அதற்கு நியாயாதிபதி

1 சங். ௧௪௦. ௩.—2 ௧ மோ. ௧. ௨௬: ௯. ௬: கூ. ௧.—3 கலா. ௬. ௪. 4 யாக். ௧. ௨௧.—5 யாக். ௨. ௰௮. 6 உரோ. ௰௩. ௰௩.—7 உரோ. ௨. ௰௭, ௨௩.–8 பிலி. ௩. ௧௯. யாக். ௧. ௰௭. 9 ௧ கொரி. ௩. ௩. கலா ௫. ௨௰ 10 ௧ கொரி. ௨. ௬, ௭.—11 உரோ. ௰௨. கூ. ௧ பே. ௧. ௨௨: ௨. ௧. ௧ யோ. ௩. ௰௮.—12 யாக். ௰௬. ௯ஆ. ஓசே. ௰. ௰௨. மத். ௫. கூ. பிலி. ௧. ௰௧. எபி. ௰௨. ௰௧. 13 உரோ. ௭. ௨௩. கலா. ௫. ௰௭. ௧ பே. ௨. ௰௧.–14 சங். ௬௬ ௰௮. ௧ யோ. ௩. ௨௨: ௫. ௰௪.—15 யோபு. ௨௭. கூ: ௩௫. ௰௨. சங். ௰௮. ௪௧. யாக். ௧. ௨௮. ஏசா. ௧. ௰௫. எரே. ௰௧. ௰௧. மீகா. ௩. ௪. சகரி. ௭. ௰௩. 16 சங் ௭௩. ௨௭.—17 ௧ யோ. ௨. ௰௫.—18 யோவா. ௰௫. ௰௯: ௰௭. ௰௪. கலா. ௧. ௰.—19 ௧ மோ. ௬. ௫: ௮. ௨௧. ௪ மோ. ௰௧. ௨௯. யாக். ௨௧. ௰.—20 யோபு. ௨௨. ௨௯. சங். ௱௩௮. ௬. யாக். ௩. ௩௪: ௨௯. ௨௩. மத். ௨௩. ௰௨. லூக். ௧. ௫௨: ௰௪. ௰௧: ௰௮. ௰௪. ௧ பே. ௫. ௫.–21 எபே. ௪. ௨௭: ௬. ௰௧. ௧ பே. ௫. கூ.—22 ௨ நாளா. ௰௫. ௨. 23 ஏசா. ௧. ௰௬. — 24 யாக். ௧. ௮. 25 ௧ பே. ௧. ௨௨. ௧ யோ. ௩. ௩. 26 மத். ௫. ௪.—27 யோபு. ௨௨. ௨௯. மத். ௨௩. ௰௨. லூக். ௰௪. ௰௧: ௰௮. ௰௪. ௧ பே. ௫. ௬.—28 எபே. ௪. ௩௧. ௧ பே. ௨. ௧.—29 மத். ௭. ௧. லூக். ௬. ௩௭. உரோ. ௨. ௧. ௧ கொரி. ௪. ௫.

* அல்லது இடத்தில்.—† அல்லது சுபாவத்திற்கும்; யூதா. ௰௯.—‡ கிரேக்கு, சந்தடியும்.—§ அல்லது சண்டைபிடித்தல்.
|| அல்லது கூக்குரலும்; ௧. வசனம்.—¶ அல்லது இன்பங்களால்; ௩. வசனம்.—** அல்லது பொறாமைப்பட்டும்.
†† அல்லது இன்பங்களுக்கு.—‡‡ அல்லது பொறாமையாய்.

௰௨ யாயிருப்பாய்.—நியாயப்பிரமாணத்தைக் கட்ட
ளையிடுகிறவர் ஒருவரே; [1]அவரே இரட்சிக்கவும்
அழிக்கவும் வல்லமையுள்ளவர்; [2]மற்றொருவ
னைக் குற்றப்படுத்துகிற நீ யாவன்?
௰௩ மேலும் நாங்கள் இன்றைக்கு அல்லது நா
ளைக்கு இன்னஇன்ன பட்டணத்திற்குப் போய்,
அங்கே ஒருவருஷம் தங்கி வியாபாரம்பண்ணி
ஆதாயம் பெறுவோம் என்கிறவர்களே [3]கேளுங்
௰௪ கள்.—நாளைக்கு நடப்பதை அறியாமல் இருக்கி
றீர்களே; உங்கள் சீவன் எப்படிப்பட்டது?
*கொஞ்சநேரம் தோன்றிப் பின்பு தோன்றாமல்
௰௫ போகிற [4]புகையைப்போல இருக்கிறதே.—மேற்
சொல்லியதற்குப் பதிலாக நீங்கள், [5]ஆண்டவ
ருக்குச் சித்தமானால் நாங்களும் உயிரோடிருந்
தால் இப்படிச் செய்வோம் என்று சொல்ல
௰௬ வேண்டும். — இப்பொழுது உங்கள் வீம்பான
பேச்சுகளில் மேன்மைபாராட்டுகிறீர்கள்; [6]இப்
படிப்பட்ட மேன்மைபாராட்டல் யாவும் பொல்
௰௭ லாங்காயிருக்கிறது.—ஆனதால் [7]ஒருவன் நன்
மைசெய்ய அறிந்திருந்தும் அப்படிச் செய்யா
விட்டால் அவனுக்குப் பாவம் உண்டாயிருக்
கும்.

## ௫. அதிகாரம்.

௧. அக்கிரமக்காரராகிய ஐசுவரியவான்கள் பராபரனுடைய கோபாக்கினைக்கு அஞ்சவும், ௭. தீர்க்கதரிசிகளும் யோபும் சகித்தபடியே நாமும் துன்பங்களைப் பொறுமையோடே சகிக்கவும், ௰௨. சத்தியம்பண்ணாமல் இருக்கவும், ௰௩. தரித்திரத்தில் வேண்டிக்கொள்ளவும், செல்வத்தில் பாடவும், ௰௬. குற்றங்களை ஒருவருக்கொருவர் அறிக்கையிட்டு ஒருவருக்காக ஒருவர் செபம்பண்ணவும், ௰௯. சத்தியத்துக்கு விலகிப்போன சகோதரனைச் சேர்ப்படுத்தவும் சொல்லியது.

௧ பின்னும் ஐசுவரியவான்களே, [8]கேளுங்கள்;
உங்கள்மேல் வருகிற உபத்திரவங்களின் நிமித்
௨ தம் அலறி அழுங்கள்.—உங்கள் ஐசுவரியம் அ
ழிந்து, உங்கள் [9]வஸ்திரங்கள் பொட்டுப்பூச்சி
௩ யினால் தின்னப்பட்டுப்போயின. — உங்கள்
பொன்னையும் வெள்ளியையும் பாசிபிடித்தது;
அவைகளிலுள்ள பாசி உங்களுக்கு விரோதமா
கச் சாட்சியாய் இருந்து, அக்கினியைப்போல
உங்கள் சரீரங்களைத் தின்னும்; [10]கடைசி நாள்
௪ களிலே பொக்கிஷத்தைச் சேர்த்தீர்கள்.—பாருங்
கள், உங்கள் வயல்களை அறுத்த [11]வேலைக்கார
ருடைய கூலி உங்களால் அநியாயமாய் வைக்
கப்பட்டுக் கூப்பிடுகின்றது; அறுத்தவர்களு
டைய [12]கூக்குரலும் சேனைகளுடைய கர்த்தா
௫ வின் செவிகளில் பட்டது.—[13]பூமியிலே நீங்
கள் செல்வத்தோடும் சம்பிரமத்தோடும் சீவனம்
பண்ணினீர்கள்; சிதைப்புநாளுக்காகச் செய்கி
றதுபோல உங்களைக் கொழுப்பாக்கினீர்கள்.—
உங்களுக்கு விரோதமாய் நில்லாத [14]நீதிமானை ௬
நீங்கள் ஆக்கினைக்குள்ளாகத் தீர்த்துக் கொலை
செய்தீர்கள்.

இப்படியிருக்கச் (சகோதரரே), கர்த்தர் வரு ௭
மளவும் நீடிய பொறுமையாய் † இருங்கள்; பா
ருங்கள், பூமியின் விலையேறப்பெற்ற கனியை
அடையவேண்டுமென்று இருக்கிற குடியான
வன் [15]முன்மாரியும் பின்மாரியும் வருமளவும்
நீடிய பொறுமையாய்க் காத்திருக்கிறான்.—நீங் ௮
களும் நீடிய பொறுமையாய் இருந்து, [16]கர்த்தர்
வருகை சமீபமாயிருக்கிறபடியால் உங்கள் இரு
தயங்களை ஸ்திரப்படுத்துவீர்களாக.

சகோதரரே, நீங்கள் ஆக்கினைக்குள்ளாகத் ௯
தீர்க்கப்படாதபடிக்கு ஒருவருக்கு விரோதமாய்
[17]ஒருவர் பெருமூசசுவிடாதிருங்கள்; ‡ [18]நியாயா
திபதி கதவுக்குமுன் நிற்கிறாரே. — என் சகோ ௰
தரரே, கர்த்தருடைய நாமத்தினாலே பேசின
தீர்க்கதரிசிகள் துன்பப்பட்டு நீடிய பொறுமை
யாயிருந்தால், அவர்களை உங்களுக்கு மார்க்கத்
தைக் காண்பிக்கிறவர்கள் என்று [19]ஏற்றுக்கொள்
ளுங்கள். — [20]பொறுமையாய் இருக்கிறவர்களை ௰௧
நாம் பாக்கியவான்கள் என்கிறோமே; [21]யோ
பென்பவன் காண்பித்த பொறுமையைக்குறித்
துக் கேள்விப்பட்டிருப்பீர்கள்; [22]கர்த்தர் மிகுந்த
உருக்கமும் இரக்கமும் உள்ளவராயிருக்கிறார்
என்று [23]கர்த்தர் செய்த முடிவினாலே அறிந்தி
ருக்கிறீர்கள்.

பின்னும் என் சகோதரரே, எல்லாவற்றிலும் ௰௨
எதை நீங்கள் செய்யவேண்டுமெனில், வானத்
தின்மேலாகிலும், பூமியின்மேலாகிலும், வே
றொரு ஆணையினாலாகிலும் [24]சத்தியம்பண்ணாதி
ருப்பீர்களாக; நீங்கள் ஆக்கினைக்குள்ளாகத் தீர்க்
கப்படாதபடிக்கு, உள்ளதை உள்ளதென்றும்
இல்லதை இல்லதென்றும் பேசக்கடவீர்கள்.

உங்களில் ஒருவன் துன்பப்பட்டால் செபம் ௰௩
பண்ணக்கடவன்; ஒருவன் மகிழ்ச்சியாயிருந்
தால் [25]சங்கீதங்களைப் பாடக்கடவன். — உங்க ௰௪
ளில் ஒருவன் வியாதிப்பட்டால் அவன் சபை
யின் மூப்பரை வரவழைப்பானாக; அவர்கள்
கர்த்தருடைய நாமத்தினாலே அவனிடத்தில்
[26]எண்ணெயைப் பூசி, அவனுக்காக விண்ணப்
பம்பண்ணக்கடவர்கள்.—அப்பொழுது கர்த்தர் ௰௫
பிணியாளியை எழுப்புதற்கு விசுவாசமுள்ள
விண்ணப்பம் அவனை இரட்சிக்கும்; [27]அவன்
பாவங்களைச் செய்தவனானால் அவை அவனுக்கு
மன்னிக்கப்படும். — நீங்கள் சொஸ்தமடையும் ௰௬

1 மத். ௭.௨௮.—2 உரோ. ௰௪. ௪, ௧.௨௰,௨௧,௨௨: ௨ ௰௭, ௰௮,௨௧. ௰௧.—3 லூக். ௨௭.௧. லூக்.௰௨. 8 லூக். ௰௬. ௨௮. லூக். ௬. ௨௪. ௰௮ ௯.—4 யோபு. ௭. ௭, சங் ௧ தீமோ, ௬. ௯ —9 யோபு. ௰௩. ௪௨.௧. யாக்.௧௰. ௧ பே. ௧.௨௪. ௨௮. மத். ௬. ௨௰. யாக். ௨.௨. ௧ யோ.௨.௰௭. —5 அப். ௰௮.௨௧. 10 உரோ. ௨. ௫ —11 ௧ மோ. ௰௯. ௧ கொரி.௪.௰௯: ௫.௭. எபி ௬.௩. ௰௧. யோபு.௨௪.௰,௰௧. எரே.௨௨. 6 ௧ கொரி.௫.௬.-7 லூக். ௰௨. ௪௭. ௰௩. மல்கி ௩. ௫.—12 ௫ மோ. யோவா.௯.௪௧:௰௫.௨௨. உரோ. ௨௪. ௰௫ —13 யோபு. ௨௧. ௰௩.

ஆமோ. ௬. ௧, ௪. லூக்.௰௬.௰௯. எபி.௰௩.௫. ௨௫. ௧ தீமோ.௫.௬.—14 யாக். மத். ௫.௰,௰௨: ௰.௨௨. -21 யோபு. ௨. ௬.-15 ௫ மோ.௰௧.௰௪. எரே. ௧.௨௧, ௨௨ : ௨. ௰.—22 ௪ மோ. ௫.௨௪ ஓசே. ௬ ௩. யோவே. ௰௪.௰௮ சங் ௧௩. ௮.-23 யோபு. ௨.௨௩. சகரி.௰.௪.—16 பிலி. ௪. ௪௨ ௰.௯.—24 மத். ௫. ௩௪ ௯. ௫. எபி.௰.௨௫,௩௭. ௧ பே.௪.௭. 25 எபே. ௫ ௰௯. கொலோ ௩.௰௬. 17 யாக். ௪. ௰௧.—18 மத். ௨௪.௩௩. 26 மாற். ௬. ௰௩ : ௰௬. ௰௮.—27 ஏசா. ௧ கொரி.௪.௫.—19 மத்.௫.௰௨. ௩௩. ௨௪. மத் ௯. ௨.

* அல்லது என்னென்றால் கொஞ்சம் —† அல்லது வருமளவும் பொறுமை.—‡ அல்லது எரிச்சல்படாதிருங்கள்.

படிக்கு உங்கள் அக்கிரமங்களை ஒருவருக்கொ
ருவர் அறிக்கையிட்டு, ஒருவருக்காக ஒருவர்
விண்ணப்பம்பண்ணுங்கள்; [1]நீதிமான் உண்
மையாய்ப் பண்ணுகிற விண்ணப்பம் மிகவும்
௰௭ பெலனுயிருக்கின்றது. — எலியா என்பவன்
[2]நம்மைப்போலப் பாடுள்ள மனிதனாய் இருந்
தும் மழைபெய்யாதபடிக்கு [3]உறுதியாய்* விண்
ணப்பம்பண்ணினான்; [4]அப்பொழுது மூன்று
வருஷமும் ஆறுமாதமும் பூமியின்மேல் மழை
௰௮ பெய்யவில்லை. — [5]மறுபடியும் விண்ணப்பம்
பண்ணினான், அப்பொழுது பூமி தன் பல
னைக் கொடுக்கத்தக்கதாக வானம் மழையைத்
தந்தது.

சகோதரரே, [6]உங்களில் ஒருவன் சத்தியத்தை ௰௯
விட்டு விலகித் தப்பிப்போகும்பொழுது, மற்
றொருவன் அவனைத் திருப்பினால்,–பாவியான ௨௰
வன் பிரவேசிக்கும் தப்பான மார்க்கத்திலிருந்து
அவனைத் திருப்புகிறவன் [7]ஒரு ஆத்துமாவை
மரணத்திற்குத் தப்புவித்து [8]மிகுந்த பாவங்களை
மறைப்பானென்று அறியக்கடவன்.

---

1 ௧ மோ.௨௰.௰௭. ௪ மோ.௰௪.௨. ௫ மோ. ௯. ௰௮, ௰௯, ௨௰. யோசு. ௰. ௰௨. ௧ சாமு. ௰௨. ௰௮. ௰௮. ௧ இரா. ௰௩. ௬. ௨ இரா. ௪. ௩௩: ௰௯. ௰௫, ௨௰: ௨௰.௨,௪. ஞ. சங். ௯. ௰௭: ௩௪. ௰௫: ௧௪௫. ௰௮. வாக். ௰௫. ௨௯: ௨௮. ௯. யோவா. ௯. ௩௧. ௧ யோ.௩.௨௨.
2 அப். ௰௪. ௰௫.
3 ௧ இரா. ௰௭. ௧.
4 லூக். ௪. ௨௫.
5 ௧ இரா. ௰௮. ௪௨, ௪௫.
6 மத். ௰௮. ௰௫.
7 உரோ.௰௧.௰௪. ௧ கொரி.௯.௨௨. ௧ தீமோ. ௪. ௰௬.
8 வாக். ௰. ௰௨. ௧ பே. ௪. ௮.

* அல்லது தன்னுடைய விண்ணப்பத்தில்.

# I. PETER.

அப்போஸ்தலனாகிய

# பேதுரு எழுதின பொதுவான

## முதலாம் நிருபம்.

### க. அதிகாரம்.

*க. திவ்விய ஆசீர்வாதங்களுக்காகப் பராபரனைத் தோத்திரித்து, ௰. கிறிஸ்துவினால் உண்டான இரட்சிப்பு நூதனமான செய்தியாயிராமல் பூர்வத்திலே தீர்க்கதரிசிகளால் முன் அறிவிக்கப்பட்டதைக் காட்டி, ௰௩. பராபரனுடைய வசனத்தினால் அவர்கள் மறுபிறப்பு அடைந்திருக்கிறபடியால் அதற்கு ஏற்றபடி பரிசுத்தராய் நடக்கப் புத்திசொல்லியது.*

க [1]பிதாவாகிய பராபரன் முன் அறிந்தபடியே
[2]ஆவியானவர் பரிசுத்தமாக்குதலினாலே கீழ்ப்ப
டிதலுக்கும் [3]இயேசுக்கிறிஸ்துவினுடைய இரத்
தம் தெளிக்கப்படுகிறதற்கும் [4]தெரிந்துகொள்
உ ளப்பட்டு,—பொந்து, கலாத்தியா, கப்பத்தோக்
கியா, ஆசியா, பித்தீனியா தேசங்களிலே [5]சிதறி
வந்திருக்கிற அந்நிய நாட்டாருக்கு இயேசுக்கி
றிஸ்துவின் அப்போஸ்தலனாகிய பேதுரு எழுது
கிறதாவது: [6]கிருபையும் சமாதானமும் உங்க
ளுக்குச் சம்பூரணமாய் உண்டாகக்கடவது.

௩ இயேசுக்கிறிஸ்து [7]மரித்தோரிலிருந்து எழுந்
திருக்கிறதினாலே அழிவும் அசுத்தமும் [8]குன்று
௪ தலும் இல்லாத சுதந்தரத்திற்கு ஏதுவாக,—[9]உயி
ருள்ள நம்பிக்கை உண்டாகும்படிக்குத் [10]தமது
மிகுந்த* இரக்கத்தினாலே நம்மைப் புதிதாய்ச்
செனிப்பித்த நம்முடைய கர்த்தராகிய இயே
சுக்கிறிஸ்துவின் பிதாவாகிய பராபரனுக்குத்
௫ [11]தோத்திரம் உண்டாவதாக.— கடைசிக்காலத்
திலே வெளிப்பட ஆயத்தமாக்கப்பட்டிருக்கிற
இரட்சிப்புக்கு ஏதுவாக விசுவாசத்தைக்கொ
ண்டு [12]பராபரனுடைய பலத்தினாலே காக்கப்
படுகிற உங்களுக்கு † அந்தச் சுதந்தரம் [13]பர
௬ மண்டலங்களில் வைத்திருக்கின்றது.— இதற்
காகத் (துன்பங்கள்) வேண்டியபடியால், [14]இப்
பொழுது கொஞ்சக்காலமாய்ப் [15]பலவிதமான
துன்பங்களினாலே துக்கப்படுகிற நீங்கள் [16]மிக
வும் சந்தோஷப்படக்கடவீர்கள். — அழிந்து ௭
போகிற பொன் [17]அக்கினியினாலே சோதிக்கப்
படுமே; [18]அதிலும் உங்கள் விசுவாசம் சோதிக்
கப்பட்டு அதிக விலையேறப்பெற்றதாய் இயே
சுக்கிறிஸ்து வெளிப்படும்பொழுது உங்களுக்
குப் புகழ்ச்சியும் கனமும் [19]மகிமையும் உண்
டாகக் காணப்படும்படிக்கு (அந்தத் துன்பங்க
ளைச் சகிக்கிறீர்கள்).—[20]அவரை நீங்கள் காணாம ௮
லிருந்தும், [21]அவரிடத்தில் அன்புகூருகிறீர்கள்;
இப்பொழுது அவரைத் தரிசியாமல் இருந்தும்,
அவரிடத்தில் விசுவாசமாயிருந்து, சொல்லமு
டியாததுமாய் மகிமையால் நிறைந்ததுமாயிருக்
கிற சந்தோஷத்தோடே களிகூர்ந்து, — [22]உங் ௯
கள் விசுவாசத்திற்கு ஏற்ற பலனாகிய ஆத்தும
இரட்சிப்பை அடைகிறீர்கள்.

உங்களுக்கு உண்டான இந்தக் கிருபையைக் ௰
குறித்து முன் பேசின [23]தீர்க்கதரிசிகள் தங்களி
லுள்ள கிறிஸ்துவின்,—ஆவியானவர் [24]கிறிஸ்து ௰க
வின் பாடுகளையும் அவைகளின் பின்வரும் மகி
மைகளையும் முன் அறிவித்தபொழுது, எந்தக்
(காலத்தை) எப்படிப்பட்ட காலத்தைக் குறித்
திருக்கிறார் என்று சோதனைபண்ணி,—[25]இப்படி ௰உ
இந்த இரட்சிப்பைக்குறித்து மிகவும் ஆராய்ந்து
பார்த்தார்கள்; [26]அவைகளை அவர்கள் தங்களைக்
குறித்து அல்ல, நம்மைக்குறித்தே தெரிவித்தார்
கள் என்று [27]அவர்களுக்கு வெளியாக்கப்பட்

---

1 உரோ. அ. உக: ௰௧. உ. 2 உ தெச. உ. ௰௩.—3 எபி. ௰. உஉ: ௰உ. உச.—4 எபே. க. ச. க பே. உ. கூ.—5 யோவா. எ.௩௫. அப். உ. ௫, க,௰. யாக். க.க. 6 உரோ.க.எ. உ பே.க.உ. யூதா. உ.—7 க கொரி.௰௫.உ௰. க தெச. ச.௰ச. க பே.௩.உக.—8 க பே. ௫. ச.—9 யோவா.௩ ௩,௫. யாக். க.௰அ.-10 தீத்.௩. ௫.-11 உ கொரி. க.௩ எபே.க. ௩. — 12 யோவா. ௰. உஅ,உக: ௰எ,௰௧,௰உ,௰௫. யூதா. க.-13 கொலோ.க.௫. உ தீமோ. ச.அ.-14 உ கொரி.ச.௰எ. க பே. ௫. ௰.—15 யாக். க. உ.—16 மத். ௫ ௰உ. உரோ.௰உ.௰உ. உகொரி. க.௰. க பே.ச. ௰௩.—17 யோபு. உ௩.௰. சங். ௬௬. ௰. வாக்.௰எ ௩. யோ.சஅ.௰.சகரி.௰௩.௯. க கொரி. ௩.௰௩.—18 யாக். க.௩,௰உ. க பே. ச. ௰உ.—19 உரோ. உ. எ, ௰. க கொரி.ச.௫. உ தெச.க.எ-௰உ. 20 யோவா. உ௰.உகூ. உ கொரி. ௫. எ. எபி.௰௧.க,உஎ.—21 க யோ. ச. உ௰.—22 உரோ. க. உஉ. 23 க பே. ௩. ௰௩. உ பே. ௧. உக. 24 சங். உஉ. க. ஏசா. ௫௩. ௩. ழ. தானி.௯. உச. லூக். உச. உ௬. உக,சச, சக. யோவா.௰உ. சக. அப். உக.உஉ,உ௩.—25 க மோ. சக.௰. தானி.உ. சச. ஆகா. உ. எ. சகரி. க.௰உ. மத். ௰௩ ௰எ. லூக். ௰. உச. உ பே. க.௰௧,உ௰.உ௩. 26 எபி.௰௧.௰௩,௩௯, ச௰.-27 தானி ௯. உச: ௰உ. கூ, ௰௩.

* அல்லது ஏராளமான.—† அல்லது நமக்கு.

டது; [1]வானத்திலிருந்து அனுப்பப்பட்ட பரி
சுத்தஆவியைக்கொண்டு உங்களுக்குச் சுவிசே
ஷத்தைப் பிரசங்கித்து வந்தவர்களாலே அவை
கள் இப்பொழுது உங்களுக்கு அறிவிக்கப்பட்டு
வருகின்றன; [2]அவைகளுக்குள்ளே தேவதூத
ரும் உற்றுப்பார்க்க ஆசையாய் இருக்கிறார்கள்.

௰௩ ஆகையால், [3]நீங்கள் உங்கள் மனதின் அரை
களில் கச்சைகட்டிக்கொண்டு, [4]தெளிந்த புத்தி
யுள்ளவர்களாயிருந்து, [5]இயேசுக்கிறிஸ்து வெளி
ப்படும்பொழுது உங்களுக்குக் கொண்டுவரப்ப
டும் கிருபையின்மேல் இடைவிடாமல்* நம்பிக்
௰௪ கையை வைத்து,—கீழ்ப்படிகிற பிள்ளைகளைப்
போல நீங்கள் [6]மூற்காலத்திலே அறியாமையினா
லே கொண்ட இச்சைகளின்படி [7]இனி நடவா
௰௫ மல்,—[8]உங்களை அழைத்தவர் பரிசுத்தராயிருக்
கிறதுபோல நீங்களும் சகலவிதத்திலேயும் பரி
௰௬ சுத்தராய் நடப்பீர்களாக. — நான் பரிசுத்தன்,
ஆகையால்[9]நீங்களும் பரிசுத்தராயிருங்களென்று
எழுதியிருக்கிறதே.

௰௭ அன்றியும் [10]பட்சபாதம் இல்லாமல் அவனவ
னுடைய கிரியைகளின்படி நியாயத்தீர்ப்புக்
கொடுக்கும் பிதாவை நீங்கள் தொழுதுகொண்
டிருக்கிறதால் [11]இவ்வுலகத்திலே தங்குமளவும்
௰௮ பயத்துடனே [12]நடந்துகொள்ளுங்கள். — [13]அ
ழிவுள்ள வஸ்துக்களாகிய வெள்ளியினாலும்
பொன்னினாலும் அல்ல, [14]குற்றமும் மாசும் இல்
லாத ஆட்டுக்குட்டியைப்போன்ற கிறிஸ்துவின்
௰௯ [15]விலையேறப்பெற்ற இரத்தத்தினாலே,—உங்கள்
முன்னோர்களால் [16]பாரம்பரையாய்ப் பெற்ற
வீணான நடத்தையினின்று மீட்கப்பட்டீர்கள்
௨௰ என்று அறிந்திருக்கிறீர்களே.—[17]அவர் லோகத்
தோற்றத்திற்குமுன்னே குறிக்கப்பட்டவராய்
இருந்து, தமது மூலமாய்ப் பராபரன்மேல் விசு
வாசமாயிருக்கிற [18]உங்களுக்காக இந்தக் கடை
௨௧ சிக்காலங்களில் வெளிப்பட்டார். — உங்கள்
விசுவாசமும் நம்பிக்கையும் பராபரன்மேலே
இருக்கும்படிக்கு [19]அவரை மரித்தோரிலிருந்து
எழுப்பி, [20]அவருக்கு மகிமையைக் கொடுத்
தார்.

௨௨ (ஆகையால்,) [21]நீங்கள் உண்மையான சகோ
தரசிநேகத்திற்கு ஏதுவாக ஆவியினாலே சத்தி
யத்திற்குக் கீழ்ப்படிந்து, இப்படி உங்கள் [22]ஆத்
துமாக்களைச் சுத்தமாக்கிக்கொண்டிருக்கச் சுத்த
இருதயங்களோடே ஊக்கமாய் ஒருவரில் ஒரு
வர் அன்பாயிருப்பீர்களாக.—அழிவுள்ள வித்தி ௨௩
னாலே அல்ல, [23]என்றென்றைக்கும் நிற்கிற சீவ
னுள்ள தேவனுடைய வசனமாகிய அழிவில்
லாத வித்தினாலே [24]மறுபடியும் செனிக்கப்பட்
டிருக்கிறீர்களே. — அந்தப்படி (சொல்லியிருக் ௨௪
கிறதாவது): [25]மாம்சதேகமெல்லாம்† புல்லைப்
போலவும், மனிதருடைய மகிமையெல்லாம்
புல்லின் பூவைப்போலவும் இருக்கின்றன; புல்
லானது உலர்ந்துபோம்; அதின் பூவும் உதிர்ந்து
போம்.—[26]கர்த்தருடைய வசனமே என்றென் ௨௫
றைக்கும் நிற்குமென்பதே; [27]உங்களுக்குச் சுவி
சேஷமாய் அறிவிக்கப்பட்டுவருகிற வசனம்
அதுவே.

## ௨. அதிகாரம்.

௧. சிநேகத்தைப் பிரிக்கிற குணத்தை அகற்றவும், ௪. அவர்கள் கட்டப்பட்டிருக்கிற அஸ்திவாரம் கிறிஸ்துவென்று அறியவும், ௰௧. மாம்ச இச்சைகளுக்கு விலகவும், ௰௩. நியாயாதிபதிகளுக்கு அடங்கவும், ௰௮. ஊழியக்காரர் எசமான்களுக்குக் கீழ்ப்படிந்து, ௨௰. கிறிஸ்து காட்டின மாதிரியின்படியே நன்மைசெய்வதினால் வரும் துன்பத்தைப் பொறுமையோடே சகிக்கவும் சொல்லியது.

இப்படியிருக்கக் [28]கர்த்தர் தயையுள்ளவர் என்று ௧
நீங்கள் ருசிபார்த்தபடியால் [29]சகல துர்க்குணத்
தையும்,—சகல கபடத்தையும் வஞ்சகங்களை ௨
யும் பொறாமைகளையும் சகலவிதமான பொல்
லாத பேச்சுகளையும் தள்ளிப்போட்டு,—நீங்கள் ௩
இரட்சிப்புக்கு ஏதுவாக வளரும்படிக்கு [30]இப்
பொழுது பிறந்த குழந்தைகளைப்போலத் (தேவ)
வசனமாகிய [31]களங்கம் இல்லாத பாலின்மேலே
ஆசையாயிருப்பீர்களாக.

[32]மனிதராலே தள்ளப்பட்டதாயும், பராபரனி ௪
டத்திலே தெரிந்துகொள்ளப்பட்டதாயும், விலை
யேறப்பெற்றதாயும் இருக்கிற சீவனுள்ள கல்
லாகிய, — [33]அவரிடத்தில் சேர்ந்தவர்களாகிய ௫
நீங்களும் சீவனுள்ள கற்களைப்போல [34]ஆவிக்கு
ஏற்ற மாளிகையாகவும் [35]இயேசுக்கிறிஸ்துமூல
மாய்ப் பராபரனுக்குப் பிரியமான [36]ஆவிக்கு
ஏற்றபலிகளைச் செலுத்தும்படி பரிசுத்த [37]ஆசா
ரியக்கூட்டமாகவும் கட்டப்படுங்கள்.‡—அந் ௬
தப்படி வேதத்திலே சொல்லியிருக்கிறதாவது:

---

1 அப் ௨.௪.—2 ௨ மோ. ௨௫.௨௰. தானி.௮.௰௩: ௰௨.௫,௬. எபே.௩. ௰.-3 லூக். ௰௨. ௩௫. எபே.௬.௰௪. 4 லூக். ௨௧. ௩௪. ௨ ரோ. ௰௩. ௰௩. ௧ தெச ௫.௬,௮. ௧ பே.௪.௭: ௫.௮. 5 லூக். ௰௭. ௩௰. ௧ கொரி. ௧. ௭. ௨ தெச. ௧ ௭.—6 அப். ௰௭.௩௰. ௧ தெச. ௪.௫.—7 ௨ ரோ.௰௨.௨. ௧ பே ௪. ௨.-8 லூக். ௧.௭௪,௭௫. ௨ கொரி.௭.௧. ௧ தெச.௪,௩,௪,௭. எபி. ௰௨. ௰௪. ௨ பே. ௩. ௰௧. 9 ௩ மோ. ௰௧ ௪௪: ௰௯.௨: ௨௰. ௭. 10 ௫ மோ.௰.௰௭. அப்.௰.௩௪. ௨ ரோ. ௨. ௰௧. —11 ௨ கொரி.௫.௧. எபி. ௰௧.௰௩.௧ பே.௨.௰௧.-12 ௨ கொரி. ௭.௧. பிலி.௨.௰௨. எபி.௰௨.௨௮. 13 ௧ கொரி. ௬. ௨௰: ௭. ௨௩. 14 ௨ மோ. ௰௨, ௫. ஏசா. ௫௩. ௭. யோவா ௧. ௨௯,௩௬. ௧ கொரி. ௫.௭.—15 அப்.௨௰.௨௮. எபே. ௧.௭. எபி. ௯. ௰௨, ௰௪. வெளி. ௫.௯.—16 எசே.௨௰.௰௮. ௧ பே. ௪. ௩.—17 ௨ ரோ. ௩. ௨௫: ௰௬. ௨௫, ௨௬. எபே.௩.௯,௰௧. கொலோ.௧.௨௬. ௨ தீமோ. ௧. ௯,௰. தீத். ௧. ௨, ௩. வெளி. ௰௩. ௮. 18 கலா.௪.௪. எபே.௧.௰. எபி.௧.௨: ௯. ௨௬.—19 அப். ௨. ௨௪.

20 மத். ௨௮.௰௮. அப்.௨.௩௩: ௩.௰௩. எபே.௧.௨௰. பிலி. ௨. ௯. எபி. ௨.௯. ௧ பே. ௩. ௨௨.-21 ௨ ரோ. ௰௨.௯,௰. ௧ தெச.௪.௯. ௧ தீமோ. ௧ ௫. எபி. ௰௩. ௧. ௧ பே. ௨.௰௭: ௩.௮: ௪.௮. ௨ பே. ௧.௭. ௧ யோ. ௩. ௰௮: ௪. ௭, ௨௧.—22 அப். ௰௫.௯.—23 யாக்.௧.௰௮. ௧ யோ. ௩. ௯. — 24 யோவா. ௧. ௰௩: ௩. ௫.— 25 சங்.௱௩.௰௫. ஏசா.௪௰. ௬: ௪௰.௰௨. யாக்.௧.௰.—26 சங். ௱௨.௰௨,௨௬. ஏசா.௪௰.௮. லூக். ௰௬. ௰௭.—27 யோவா.௧.௧, ௰௪. ௧ யோ. ௧. ௧,௩.—28 சங். ௩௪. ௮. எபி.௬.௫.—29 எபே.௪.௨௨, ௨௫, ௩௧. கொலோ.௩.௮. எபி. ௰௨. ௧. யாக். ௧. ௨௧: ௫. ௯. ௧ பே. ௪. ௨.—30 மத். ௰௮. ௩. மாற்.௰.௰௫. ௨ ரோ.௯.௪. ௧ கொரி. ௰௪. ௨௰. ௧ பே. ௧. ௨௩. 31 ௧ கொரி. ௩. ௨. எபி. ௫.௰௨,௰௩. 32 சங். ௱௰௮. ௨௨. மத். ௨௧. ௪௨. அப். ௪. ௰௧.—33 எபே. ௨.௨௧, ௨௨.—34 எபி. ௩.௬.—35 பிலி. ௪.௰௮. ௧ பே.௪.௰௧.—36 ஓசே. ௰௪.௨. மல்கி.௧.௰௧. ௨ ரோ.௰௨. ௧. எபி. ௰௩. ௰௫, ௰௬.—37 ஏசா. ௬௧. ௬: ௬௬. ௨௧. ௯. ௪௬.

* நிரேக்கு, பூரணமாய்.—† அல்லது ஏனென்றால் மாம்சதேகமெல்லாம்.—‡ அல்லது கட்டப்பட்டிருக்கிறீர்கள்.

[1]இதோ தெரிந்துகொள்ளப்பட்டதுமாய் விலை
யேறப்பெற்றதுமாய் இருக்கிற மூலைக்கல்லைச்
சீயோனிலே வைக்கிறேன், அதின்மேல் விசுவா
சமாயிருக்கிறவன் வெட்கப்பட்டுப்போவதில்
எ லை என்பதே.—ஆகையால், விசுவாசிக்கிற உங்க
ளுக்கு இந்தக் கனம்* உண்டாயிருக்கிறது; கீழ்ப்
படியாமலிருக்கிறவர்களுக்கு வீட்டைக்கட்டுகி
றவர்களால் [2]தள்ளப்பட்ட பிரதான மூலைக்கல்
லாகிய இந்தக் கல்லே [3]இடறுதற்கு ஏதுவான
கல்லாயும், விழுதற்கு ஏதுவான கல்மலையாயும்
அ இருக்கிறது.—அவர்கள் (தேவ) வசனத்திற்குக்
கீழ்ப்படியாதவர்களாயிருந்து [4]இடறுகிறார்கள்;
[5]அதற்கு நியமிக்கப்பட்டவர்களாயும் இருக்கி
கூ றார்கள்.—நீங்கள் [6]உங்களை அந்தகாரத்தினின்று
தம்முடைய ஆச்சரியமான ஒளிக்கு வரவழைத்
தவருடைய புண்ணியங்களை † அறிவிக்கும்ப
டிக்குத் [7]தெரிந்துகொள்ளப்பட்ட சந்ததியாயும்,
[8]இராசரீகமான ஆசாரியக்கூட்டமாயும், [9]பரிசுத்
தவான்களாயும், [10]அவருக்குச் சொந்தமான ‡
ய சனமாயும் இருக்கிறீர்கள்.—[11]முன்னே நீங்கள்
பராபரனுடைய சனமாயிருக்கவில்லை;இப்பொ
ழுது அவருடைய சனங்களாய் இருக்கிறீர்கள்;
(முன்னே) நீங்கள் இரக்கம் பெறாதவர்கள்;
இப்பொழுது இரக்கம்பெற்றவர்களாய் இருக்கி
றீர்கள்.

யக பிரியமானவர்களே, [12]வழிப்போக்கருமாய்
அந்நியநாட்டாருமாய் இருக்கிற உங்களுக்கு
நான் புத்திசொல்லுகிறது என்னவெனில், [13]ஆத்
துமாவுக்கு விரோதமாய்ப் போர்செய்கிற [14]மாம்ச
இச்சைகளுக்கு நீங்கள் இடங்கொடாமல்,—
யஉ அஞ்ஞானிகள் உங்களை அக்கிரமக்காரரென்று
விரோதமாய்ப் பேசும்பொழுது,§ உங்கள் [15]நற்
கிரியைகளைக் கண்டு[16]கண்காணிப்பின்நாளிலே
பராபரனுடைய மகிமை விளங்கப்பண்ணும்ப
டிக்கு [17]நல்ல நடக்கையோடே அவர்களுக்
குள்ளே நடக்கக்கடவீர்கள்.

யங அந்தப்படியே நீங்கள் கர்த்தரின்நிமித்தம்
[18]மனிதருடைய கட்டளைகள் யாவற்றிற்கும் கீழ்
யச ப்படுவீர்களாக.—பிரதான அதிகாரமுள்ள இரா
சாவுக்காவது, [19]தீமைசெய்கிறவர்களுக்கு ஆக்கி
னையையும் [20]நன்மைசெய்கிறவர்களுக்குப் புகழ்
ச்சியையும் கொடுக்கும்படி அவனால் அனுப்பப்
பட்ட துரைகளுக்காவது (அப்படிச் செய்யுங்
கள்).—புத்தியீன மனிதருடைய அறியாமையை யரு
[21]நீங்கள் நன்மைசெய்கிறதினாலே அடக்கிப்
போடவேண்டுமென்று பராபரனுடைய சித்தமா
யிருக்கிறதே. — [22]சுயாதீனமுள்ளவர்களாயிருந் யசு
தும் உங்கள் சுயாதீனத்தைத் துர்க்குணத்திற்கு
மூடியாகச் சேர்த்துக்கொள்ளாமல் ‖ [23]பராபர
னுடைய அடிமைகளாய் நடப்பீர்களாக. —
[24]எல்லாரையும் கனம்பண்ணுங்கள்;¶ [25]சகோதர யஎ
ரிடத்தில் அன்புகூருங்கள்; [26]பராபரனுக்குப்
பயந்திருங்கள், இராசாவைக் கனம் செய்யுங்
கள்.

வீட்டு [27]வேலைக்காரரே, மிகுந்த பயத்துடனே யஅ
எசமான்களுக்குக் கீழ்ப்படிந்திருங்கள்; நல்ல
வர்களுக்கும் இணக்கமுள்ளவர்களுக்கும் மாத்தி
ரம் அல்ல, செம்மையில்லாதவர்களுக்கும் (அப்
படிச் செய்யவேண்டும்).—என்னத்திற்காகவெ யகூ
னில், ஒருவன் அநியாயமாய்ப் பாடுபட்டுப்
பராபரனுக்குமுன்பாக உண்மையாயிருக்கிற
மனதின்நிமித்தம்துக்கங்களைப் பொறுமையாய்ச்
சகித்தால் [28]அதுவே மகிமையுள்ளது.** — நீங் உய
கள் குற்றம்செய்து அடிக்கப்படும்பொழுது அ
தைப்பொறுமையோடே சகித்தால், [29]அது எப்ப
டிப்பட்ட கீர்த்தியாயிருக்கும்? நீங்கள் நன்மை
செய்து பாடுபடும்பொழுது அதைப் பொறுமை
யோடே சகித்தால் அதுவே பராபரனுக்குமுன்
பாக மகிமையாய் †† இருக்கும். — [30]இதற்காக உக
நீங்கள் அழைக்கப்பட்டும் இருக்கிறீர்கள்; எப்
படியெனில் [31]கிறிஸ்துவும் உங்களுக்காகப் ‡‡
பாடுபட்டு, நீங்கள் தம்முடைய காலடிகளைத்
தொடர்ந்துவரும்படி [32]உங்களுக்கு மார்க்கத்
தைக் காட்டிப்போனார்.—[33]அவர் பாவம் செய் உஉ
யவில்லை; அவருடைய வாயிலே வஞ்சனை கா
ணப்படவுமில்லை.—[34]அவர் வையப்பட்டபொ உங
ழுது பதில்வையாமலும், பாடுபட்டபொழுது ப
யமுறுத்தாமலும், [35]நியாயமாய்த் தீர்ப்புக்கொடுக்
கிறவருக்கு அதை §§ ஒப்புவித்தார்.—[36]நாம் பா உச
வங்களுக்கு விலகி நீதியுள்ளவர்களாய்ப் பிழை
க்கும்படிக்கு அவர் தமது சரீரத்திலே நம்மு
டைய பாவங்களைத் தாங்கிக்கொண்டு,[37]அவைக
ளைச் சிலுவைமரத்திலே ‖‖ நிவிர்த்திசெய்தார்.—

1 ஏசா. உஅ. யசு. உரோ. கூ. கங. உதீமோ. க. கூ.—10 ஓ சேயா. ௪. உங: எ.க: யச. உ: உக.யஅ,யகூ. அப்.உய.உஅ. எபே.க.யச. தீத். உ. யச.—11 ஓசே. க. கூ,ய: உ. உங. உரோ.கூ.உ௫ —12 க நாளா. உகூ. யரு. சங் கக. யஉ: ஈயகூ. யகூ. எபி.யக.யங. க பே. க. யஎ.
2 சங். ஈயஅ. உஉ. மத். உக. சஉ. அப். ச. யக.—3 ஏசா. அ. யச. லூக். உ. கச. உரோ. கூ. கங.
4 க கொரி.க. உங.—5 உ மோ.க. யக. உரோ.கூ.உஉ. க தெச. ௫. கூ. யூதா.ச.—6 அப். உக. யஅ. எபே. ௫. அ. கொலோ. க. யங.
க தெச. ௫. ச,௫.—7 ௫ மோ. ய. யசு. க பே. க. உ.—8 உ மோ. யகூ. ௬, கூ. வெளி. க. சு: ௫.ய.
9 யோவா.யஎ.யகூ. க கொரி. க. யஎ.
13 யாக். ச. க.—14 உரோ. யங. யச. கலா. ௫. யஎ.—15 மத். ௫. யசு.
16 லூக். யகூ. சச.—17 உரோ. யஉ. யஎ. உ கொரி.அ.உக. பிலி. உ. யரு. தீத். உ. அ. க பே. ங. யசு.
18 மத்.உஉ.உக. உரோ.யங.க. தீத். ங. க.—19 உரோ. யங. ச.
20 உரோ.யங.ங.—21 தீத். உ.அ.யஉ. யச.—22 கலா. ௫. க, யங.
23 க கொரி. எ. உஉ.—24 உரோ. யஉ.ய. பிலி.உ.ங.—25 எபி.யங. க. க பே.க.உஉ.—26 யாக். உச. உக. மத் உஉ.உக. உரோ.யங.எ.
27 எபே. சு. ௫. கொலோ.ங.உஉ. க தீமோ. சு. க. தீத். உ. கூ.
28 மத்.௫.ய. உரோ.யங. ௫. க பே. ங. யச.—29 க பே. ங.யச: ச.யச, யகூ.—30 மத் யசு.உச. அப்.யச. உஉ. க தெச.ங.ங. உதீமோ. ங. யஉ.—31 க பே. க.யஅ.—32 யோவா.யங.யரு. பிலி. உ.௫. க யோ. உ. சு.—33 ஏசா. ௫ங. கூ. லூக். உங. சக. யோவா. அ. சசு. உ கொரி.௫.உக. எபி.ச.யரு.
34 ஏசா.௫ங. எ. மத்.உசு.சங. யோவா. அ. சஅ,சகூ. எபி. யஉ.ங.
35 லூக்.உங.சசு.—36 உரோ.சு.உ, யக: எ. சு.—37 ஏசா. ௫ங. ச,௫, சு,யக. மத்.அ.யஎ. எபி.கூ.உஅ.

* அல்லது அருமை.—† அல்லது நற்கிரியை.—‡ அல்லது அவரால் கொள்ளப்பட்ட.—§ அல்லது பேசுகிறதில்.—‖ இரேக்கு, மூடியாகக் கொள்ளாமல்.—¶ அல்லது மதியுங்கள்.—** அல்லது அதுவே நன்றி; லூக். சு. ஙஉ, ஙங. சனம்.—†† அல்லது அங்கிகரிக்கப்படத் தக்கதாய்.—‡‡ சில பிரதிகளில் நமக்காக.—§§ அல்லது தம்மை.—‖‖ அல்லது சிலுவைமரத்துக்குந் தாங்கிக்கொண்டு.

௨௫ [1]அவர் காயப்பட்டதினாலே குணமானீர்கள்;
(முன்னே) [2]நீங்கள் வழுவிப்போன ஆடுகளைப்
போல இருந்தீர்கள்; இப்பொழுது உங்கள் ஆத்து
மாக்களுக்கு [3]மேய்ப்பரும் கண்காணியுமானவ
ரிடத்தில் திருப்பப்பட்டு இருக்கிறீர்கள்.

## ௩. அதிகாரம்.

*௧. மனைவிகளும் புருஷர்களும் ஒருவருக்கொருவர் செய்யவேண்டிய கடமைகளைக் கற்பித்தது, ௮. யாவரும் ஒருமையும் சிநேகமும் உள்ளவர்களாயிருக்கவும், ௰௪. துன்பத்தைச் சகிக்கவும் புத்திசொல்லி, ௰௮. பூர்வீகத்தார்மேல் கிறிஸ்துவின் புண்ணியபலன்கள் இன்னவென்றும் கூறியது.*

௧ அந்தப்படி [4]ஸ்திரிகளே, (புருஷர்களில்) சிலர்
(தேவ) வசனத்திற்குக் கீழ்ப்படியாமல் இருக்கிற
௨ பொழுது [5]வசனமின்றி,—[6]உங்கள் கற்பும் வணக்
கமுமுள்ள நடக்கையை அவர்கள் பார்த்து, அப்
படிப்பட்ட நடக்கையினாலே [7]சம்பாதித்துக்
கொள்ளப்படும்படிக்கு உங்கள் சொந்தப் புரு
௩ ஷர்களுக்குக் கீழடங்குவீர்களாக.—[8]நீங்கள் உங்
கள் மயிரைப் பின்னிப் பொன்னுபரணங்களைத்
தரித்து முக்கியமான வஸ்திரங்களை உடுத்தி,—
௪ இவ்விதமாய்ப் புறம்பே உங்களை அலங்கரியா
மல் உள்ளாக மறைந்திருக்கிற இருதயமானது
பராபரனுடைய திருப்பார்வையிலே மிகுந்த
விலையேறப்பெற்றிருக்கிற சாந்தமும் அமைதலு
மான ஆவியென்னும் அழியாமையுள்ள [9]அலங்
௫ காரத்தை அடையும்படி செய்யுங்கள்.—இப்ப
டியே பூர்வீகத்திலே பராபரன்மேல் நம்பிக்கை
யான பரிசுத்த ஸ்திரிகளும் தங்களை அலங்காரம்
செய்து, தங்களுடைய புருஷருக்குக் கீழ்ப்ப
௬ டிந்தார்கள்.—அந்தப்படி சாராள் ஆபிரகாமை
[10]எசமானென்றழைத்து அவனுக்குக் கீழ்ப்பட்
டாள்; நீங்கள் நன்மைசெய்து எவ்வளவான
துன்பத்திற்கும் பயப்படாதவர்களாய் அவளுக்
குப் பிள்ளைகள்* ளானீர்கள்
௭ அன்றியும் [11]புருஷரே, [12]உங்கள் செபங்களுக்
குத் தடைவராதபடிக்கு மனைவியானவள் [13]பல
ஈன பாத்திரமாய் இருக்கிறபடியினாலே, நீங்கள்
அறிவின்படி அவளுடனேகூட வாசம்பண்ண
வேண்டுவதுமல்லாமல் உங்களுடனேகூட அவ
ளும் நித்தியஜீவனாகிய கிருபையைச் சுதந்தரித்
துக்கொள்ளுகிறவளானபடியினாலே அவளுக்
குக் கனம்செலுத்துவீர்களாக.
௮ மேலும் [14]நீங்கள் எல்லாரும் ஒருமனப்பட்ட
வர்களாயும் பரிதாபமுள்ளவர்களாயும், [15]சகோ
தரசிநேகமுள்ளவர்களாயும் † [16]மன உருக்கமுள்
ளவர்களாயும் மனத்தாழ்மையுள்ளவர்களாயும்,—
தீமைக்குத் தீமையையும், உதாசினத்துக்கு உதா ௯
சினத்தையும் [17]பதில்செய்யாமல் ஆசீர்வாதத்தை
யே பதில்செய்கிறவர்களாயும் இருப்பீர்களாக;
உங்களுக்குத் தெரிந்திருக்கிறபடி [18]ஆசீர்வாதத்
தைச் சுதந்தரித்துக்கொள்ளும்படிக்கு நீங்கள்
இப்படியே செய்ய அழைக்கப்பட்டீர்கள். —
ஆனபடியினாலே [19]ஜீவனை விரும்பிச் சவுக்கிய ௰
நாள்களைக் காணவேண்டுமென்று இருக்கிறவன்
தன் [20]நாவினால் பொல்லாங்கையும், தன் உதடு
களால் கபடத்தையும் பேசாமல் இருக்கும்படி
அமைந்து,—[21]பொல்லாங்கைவிட்டு விலகி, நன் ௰௧
மை செய்து, [22]சமாதானத்தைத் தேடி, அதைப்
பின்தொடரக்கடவன். — ஏனென்றால் கர்த்தர் ௰௨
நீதிமான்கள்மேலே கண்ணோட்டமாயிருந்து
[23]அவர்களுடைய விண்ணப்பத்திற்குச் செவி
கொடுக்கிறார்.—கர்த்தருடைய முகம் பொல்லாங் ௰௩
கைச் செய்கிறவர்களுக்கு ‡ விரோதமாயிருக்கின்
றது; அந்தப்படி நீங்கள் நன்மையைப் பின்பற்
றுகிறவர்களானால் [24]உங்களுக்குப் பொல்லாங்
கைச்செய்பவன் எவன்?—[25]நீதியின்நிமித்தமாக ௰௪
நீங்கள் பாடனுபவித்தால் பாக்கியராயிருப்பீர்
கள்; ஆனதால் [26]அவர்களுடைய பயங்கரத்திற்கு
நீங்கள் பயப்படாமலும் கலங்காமலும் இருந்து,-
கர்த்தராகிய பராபரனை உங்கள் இருதயங்களில் ௰௫
பரிசுத்தமாய் வணங்கி, உங்களில் இருக்கிற
நம்பிக்கையைக்குறித்து உங்களை விசாரித்துக்
கேட்கிற யாவருக்கும் சாந்தத்தோடும் வணக்கத்
தோடும் § [27]உத்தரவுசொல்ல எப்பொழுதும்
ஆயத்தமாயிருந்து, — கிறிஸ்துவுக்கு ஏற்ற உங் ௰௬
கள் நல்ல நடக்கையைத் தூஷணிக்கிறவர்கள்
உங்களைப் பொல்லாங்குசெய்கிறவர்கள் என்று
உங்களுக்கு விரோதமாய்ச் சொல்லுகிறதினாலே
[28]வெட்கப்படும்படிக்கு [29]நல்மனச்சாட்சியைக்
காத்துக்கொள்வீர்களாக.—தீமை செய்து பாட ௰௭
னுபவிக்கிறதிலும் நன்மைசெய்து பராபரனு
டைய சித்தப்படி பாடனுபவிக்கிறது மேன்மை
யாயிருக்குமே.
ஆகையால் நீதியுள்ளவராகிய கிறிஸ்துவும் ௰௮
நம்மைப் பராபரனிடத்திற்குச் சேர்த்துக்கொள்
ளும்படிக்கு அநீதியுள்ளவர்களுடைய பாவங்க
ளுக்காக [30]ஒருதரம் பாடுபட்டார்; [31]சரீரத்திலே
[32]அவர் கொலைசெய்யப்பட்டார்; [33]ஆவியிலே
அவர் பிழைப்பிக்கப்பட்டார்.—அந்த ஆவியாக ௰௯
வே அவர் [34]காவலிலுள்ள ஆவிகளிடத்திற்குப்

1 ஏசா. ௫௩. ௫.—2 ஏசா. ௫௩. ௬. எசே. ௩௪. ௬.—3 எசே. ௩௪. ௨௩: ௩௭ ௨௪. யோவா. ௰.௰௧,௰௪, ௰௬. எபி. ௰௩. ௨௰. ௧ பே. ௫. ௪. 4 ௧ கொரி. ௭.௰.௩௪. எபே ௫.௨௨. கொலோ. ௩.௰௮. தீத். ௨. ௫. 5 ௧ கொரி. ௭. ௰௬.—6 ௧ பே. ௨. ௰௨.-7 மத். ௰௮.௰௫. ௧ கொரி. ௯. ௰௯-௨௨.—8 ௧ தீமோ. ௨. ௯. தீத். ௨. ௩. ஏ.—9 சங். ௪௫. ௰௩. ௨ரோ. ௨. ௨௯ : ௭. ௨௨. ௨கொரி. ௪. ௰௬.—10 ௧ மோ. ௰௮. ௰௨. 11 ௧ கொரி. ௭. ௩. எபே. ௫. ௨௫. கொலோ. ௩. ௰௯.-12 யோபு. ௪௨. ௮. மத். ௫. ௨௩, ௨௪: ௰௮. ௰௯. 13 ௧ கொரி. ௰௨. ௨௩. ௧ தெச. ௪. ௪ 14 ௨ரோ. ௰௨. ௰௬: ௰௫. ௫. பிலி. ௩. ௰௬.—15 ௨ரோ. ௰௨. ௰. எபி. ௰௩. ௧. ௧ பே. ௨. ௰௭.—16 எபே ௪. ௩௨. கொலோ. ௩. ௰௨.—17 லேவி. ௰௯. ௰௮: ௨௰. ௨௨. மத். ௫. ௩௯. ௨ரோ. ௰௨. ௰௪, ௰௭. ௧ கொரி. ௪. ௰௨. ௧ தெச. ௫. ௰௫.—18 மத். ௨௫. ௩௪.—19 சங். ௩௪. ௰௨-௰௬. 20 யாக். ௧. ௨௬. ௧ பே. ௨. ௧, ௨௨. வெளி. ௰௪. ௫.—21 சங். ௩௭. ௨௭. ஏசா. ௧. ௰௬, ௰௭. ௩ யோ. ௰௧. 22 ௨ரோ. ௰௨. ௰௮: ௰௪. ௰௯. எபி. ௰௨. ௰௪.—23 யோவா. ௯. ௩௧. யாக். ௫. ௰௬.—24 லூக். ௰௧. ௭. ௨ரோ. ௮. ௨௮.—25 மத். ௫. ௰௰. ௰௨. ௧ பே. ௨. ௰௯: ௪. ௰௪. யாக் ௧. ௰௨. 26 ஏசா. ௮. ௰௨, ௰௩. எரே. ௧. ௮. யோவா ௰௪. ௧, ௨௭.-27 சங். ௱௰௯. ௪௬. அப். ௪. ௮. கொலோ. ௪. ௬. ௨ தீமோ. ௨. ௨௫.— 28 தீத். ௨. ௮. ௧ பே. ௨. ௰௨.—29 எபி. ௰௩. ௰௮. 30 ௨ரோ. ௫. ௬. எபி. ௯. ௨௬, ௨௮. ௧ பே. ௨. ௨௧: ௪. ௧.—31 கொலோ. ௧. ௨௧,௨௨.-32 ௨ கொரி. ௰௩. ௪.—33 ௨ரோ. ௧. ௪: ௮. ௰௧. 34 ஏசா. ௪௨. ௭: ௪௯. ௯: ௬௧. ௧.

* அல்லது குமாரத்திகள் —† அல்லது சகோதரரைச் சிநேகிக்கிறவர்களாயும்.—‡ கிரேக்கு, செய்கிறவர்கள்மேல். — § அல்லது பயத்தோடும்.

௨௰ போய்ப் [1]பிரசங்கம்பண்ணினார்.—அந்த ஆவிகள்
பூர்வீகத்திலே நோவாவென்பவன் [2]பேழையை
எத்தனமாக்கின நாள்களிலே [3]பராபரன் நீடிய
சாந்தத்தோடே காத்திருந்தபொழுது கீழ்ப்படி
யாமற்போனவைகள்; [4]அந்தப்பேழையிலே எட்
டுப்பேராகிய சிலர்மாத்திரம் பிரவேசித்துச் சலத்
௨௧ தினாலே காக்கப்பட்டார்கள்.—[5]அது ஞானஸ்
நானத்திற்கு முன் அடையாளமாய் இருந்தது;
[6]சரீர அழுக்கை நீக்குகிறதற்கு அல்ல; பராபர
னுக்குமுன்பாக [7]நல்மனச்சாட்சி பண்ணுகிற
உடம்படிக்கையைக் குறிக்கிற ஸ்நானத்திற்கே
அப்படி இருந்தது; [8]இயேசுக்கிறிஸ்து உயிரோ
டெழுந்திருக்கிறதால் அந்த ஞானஸ்நானம் இப்
௨௨ பொழுது நம்மையும் இரட்சிக்கின்றது.—அவர்
பரமண்டலத்திற்குப் போய்ப் [9]பராபரனுடைய
வலதுபாரிசத்தில் இருக்கிறார்; [10]தேவதூதர்கள்
அல்லாமல் அதிகாரங்களும் வல்லமைகளும்
அவருக்கே கீழ்ப்பட்டிருக்கின்றன.

## ச. அதிகாரம்.

௧. கிறிஸ்துவினுடைய மாதிரியையும் உலகத்தின் முடிவையும் நோக்கிப் பாவத்தைவிட்டு ஓய்ந்திருக்கப் புத்தியையும், ௰௨. துன்பப்படுகிற வர்களுக்கு ஆறுதலையும் சொல்லியது.

௧ இப்படியிருக்கக் [11]கிறிஸ்து நமக்காகத் (தமது)
சரீரத்திலே பாடுபட்டபடியால் நீங்களும் அப்
படிப்பட்ட சிந்தையை ஆயுதமாக அணிந்து
௨ கொள்ளக்கடவீர்கள்.—[12]சரீரத்தில் பாடுபட்ட
வன் பாவங்களைவிட்டு ஓய்ந்திருப்பானே; (நீங்
கள்) [13]சரீரத்தோடே இருக்கும் காலம்வரைக்
கும் மனிதருடைய இச்சைகளின்படி அல்ல,
[14]பராபரனுடைய சித்தத்தின்படியே [15]பிழைக்
கிறதற்கு ஏதுவாக (அப்படிச் செய்யுங்கள்).—
௩ [16]சென்ற வாழ்நாட்காலத்திலே நாம் [17]அஞ்ஞா
னிகளுடைய இஷ்டத்தின்படி நடந்துகொண்
டது போதுமே; அப்பொழுது நாம் காமவி
காரத்தையும் துர்இச்சைகளையும் நடப்பித்துப்
பழ இரசத்தை மிகவும் குடித்துப் பெருந்தீனி
யைச் சாப்பிட்டு வெறிகொண்டு, அருவருக்கப்
படத்தக்க விக்கிரகஆராதனையைச் செய்துவந்
௪ தோம்.-(இப்பொழுது) கெட்ட நடக்கையுள்ள
அந்தத் துன்மார்க்கத்திலே அவர்களோடேகூட
நீங்கள் ஓடாமல் இருக்கிறதினாலே அவர்கள்
ஆச்சரியப்பட்டு (உங்களைத்) [18]தூஷணிக்கிறார்
௫ கள். — [19]உயிரோடிருக்கிறவர்களுக்கும் மரித்
தோருக்கும் நியாயத்தீர்ப்புக்கொடுக்க எத்தன
மாயிருக்கிறவருக்கு அவர்கள் கணக்கு ஒப்பு
விப்பார்கள்.—இதற்காகவும் மரித்தோர் சரீரத் ௬
திலே மனிதராலே ஆக்கினைக்குள்ளாக்கப்பட்
டிருந்தும் ஆவியிலே பராபரனாலே பிழைக்கும்
படியாக [20]அவர்களுக்கும் சுவிசேஷம் அறிவிக்
கப்பட்டது.

அன்றியும் [21]எல்லாவற்றிற்கும் முடிவுசமீபமா ௭
யிற்று; ஆகையால், [22]நீங்கள் விவேகமாயிருந்து
விண்ணப்பம்பண்ணுதற்குத் தெளிவுள்ளவர்க
ளாய் இருக்கக்கடவீர்கள். — எல்லாவற்றிற்கும் ௮
மேலாக [23]ஒருவருக்கொருவர் மிகுந்த அன்புள்
ளவர்களாய் இருங்கள்; [24]அன்பானது திரளான
பாவங்களை மூடுமே.* — [25]மொறுமொறுப்பில் ௯
லாமல் [26]ஒருவரை ஒருவர் சேர்த்துக்கொள்ளுங்
கள். — [27]அவனவன் பெற்ற வரத்தின்படியே ௰
[28]நீங்கள் பராபரனுடைய பலவித கிருபையுள்ள
ஈவுகளையுடைய நல்ல [29]உக்கிராணக்காரர்போ
ல, ஒருவருக்கொருவர் ஊழியம்செய்யுங்கள்.—
[30]போதிக்கிறவன் பராபரனுடைய வசனங்க ௰௧
ளின்படியே போதிக்கக்கடவன்; [31]ஊழியம்
செய்கிறவன் பராபரன் கொடுக்கிற பெலத்தா
லே அப்படிச் செய்யக்கடவன்; [32]சகல விதத்தி
லேயும் பராபரன் இயேசுக்கிறிஸ்துமூலமாய்த்
துதிக்கப்படும்படியே செய்வீர்களாக; [33]அவருக்
குத் துதியும் வல்லமையும் என்றென்றைக்கும்
உண்டாயிருப்பதாக.—ஆமன்.

பிரியமானவர்களே, [34]உங்களுக்குள்ளே இ ௰௨
ருக்கிற அக்கினி உங்களைச் சோதிக்கத்தக்கதாய்
இருப்பதால் புதியது உங்களுக்குச் சம்பவித்த
தாக அதைக்குறித்து ஆச்சரியப்படாமல்,—[35]கி ௰௩
றிஸ்துவின் பாடுகளுக்கு நீங்கள் ஐக்கமானதால்
[36]சந்தோஷப்படுங்கள்; [37]அவருடைய மகிமை
வெளிப்படும்பொழுது நீங்களும் களிகூர்ந்து
சந்தோஷமாய் இருக்கும்படிக்கு (அப்படிச்
செய்வீர்களாக).—[38]நீங்கள் கிறிஸ்துவின் நாமத் ௰௪
தின்நிமித்தம் நிந்திக்கப்பட்டால் பாக்கியவான்
கள்; பராபரனுடைய ஆவியாகிய மகிமையுள்ள
ஆவி உங்களிடத்தில் தங்கியிருக்கிறாரே; [39]அவர்
களால் அவர் தூஷணிக்கப்படுகிறார்; உங்களா
லே துதிக்கப்படுகிறார்.—ஆனதால் [40]உங்களில் ௰௫
ஒருவனும் கொலைபாதகனாய், அல்லது திருட
னாய், அல்லது பொல்லாங்குசெய்தவனாய், அல்

1 ௧ பே. ௧. ௰௨ : ௪. ௬.-2 எபி. ௰௧. ௭. 3 ௧ மோ. ௬. ௩, ௫. ௰௫.-4 ௧ மோ. ௭. ௭ : ௮. ௰௮. ௨ பே. ௨. ௫. 5 எபே. ௫. ௨௬.—6 தீத். ௩. ௫. 7 உரோ. ௰. ௰.—8 ௧ பே. ௧. ௩. 9 சங். ௱௰. ௧. உரோ. ௮. ௩௪. எபே. ௧. ௨௰. கொலோ. ௩. ௧. எபி ௧. ௩. 10 உரோ. ௮. ௩௮. ௧ கொரி. ௰௫. ௨௪. எபே ௧. ௨௧.—11 ௧ பே. ௨. ௰௮. 12 உரோ. ௬. ௨, ௭. கலா ௫. ௨௪. கொலோ. ௩. ௩, ௫.—13 உரோ. ௰௪. ௭. ௧ பே. ௨. ௧.-14 யோவா. ௧. ௰௩. உரோ. ௬. ௰௩. ௨ கொரி. ௫. ௰௫. யாக். ௧ ௰௮. – 15 கலா. ௨. ௨௰. ௧ பே. ௧. ௰௪ —16 எசே. ௪௪. ௬: ௪௫. ௯. அப். ௰௭. ௩௰. 17 எபே ௨. ௨: ௪. ௰௭. ௧ தெச. ௪. ௫. தீத். ௩. ௩. ௧ பே. ௧. ௰௪. 18 அப். ௰௩. ௪௫: ௰௮ ௬. ௧ பே. ௩. ௰௬.—19 அப். ௰. ௪௨: ௰௭. ௩௧. உரோ. ௰௪. ௰, ௰௨. ௧ கொரி. ௰௫. ௫௧, ௫௨. ௨ தீமோ. ௪. ௧. யாக். ௫. ௯.—20 ௧ பே. ௩. ௰௯ 21 மத் ௨௪. ௰௩, ௰௪. உரோ. ௰௩. ௰௨. பிலி. ௪. ௫. எபி. ௰. ௨௫. யாக். ௫. ௮. ௨ பே. ௩. ௯, ௰௧. ௧ யோ. ௨. ௰௮. — 22 மத். ௨௬. ௪௧. லூக். ௨௧. ௩௪. கொலோ. ௪. ௨. ௧ பே ௧. ௰௩: ௫. ௮.—23 கொலோ. ௩. ௰௪. எபி. ௰௩. ௧. 24 யாக். ௫. ௨௰. ௧ கொரி. ௰௩. ௭. யாக். ௫. ௨௰.— 25 ௨ கொரி. ௯. ௭. பிலி. ௨. ௰௪. பிலே. ௰௪. 26 உரோ. ௰௨. ௰௩. எபி. ௰௩. ௨. 27 உரோ. ௰௨. ௬. ௧ கொரி. ௪. ௭. 28 ௧ கொரி. ௰௨. ௪. எபே. ௪. ௰௧. 29 மத். ௨௪. ௪௫: ௨௫. ௰௪, ௨௧. லூக். ௰௨. ௪௨. ௧ கொரி. ௪. ௧, ௨. தீத். ௧. ௭.—30 எரே. ௨௩. ௨௨. 31 உரோ. ௰௨. ௬, ௭, ௮. ௧ கொரி. ௩. ௰.—32 எபே. ௫. ௨௰. ௧ பே. ௨. ௫.—33 ௧ தீமோ. ௬. ௰௬. ௧ பே. ௫. ௰௧. வெளி. ௧. ௬. 34 ௧ கொரி. ௩. ௰௩. ௧ பே. ௧. ௭. 35 உரோ. ௮. ௰௭. ௨ கொரி. ௧. ௭: ௪. ௰. பிலி. ௩. ௰. கொலோ. ௧. ௨௪. ௨ தீமோ. ௨. ௰௨. ௪ பே. ௫. ௧, ௰. வெளி. ௧ ௯.-36 அப். ௫. ௪௧. யாக் ௧. ௨.-37 ௧ பே. ௧. ௫, ௬.-38 மத். ௫ ௰௧ ௨ கொரி. ௰௨. ௰. யாக். ௧. ௰௨. ௧ பே ௨. ௰௯, ௨௰: ௩. ௰௪.-39 ௧ பே. ௨. ௰௨: ௩. ௰௬.-40 ௧ பே. ௨. ௨௰.

* அல்லது மூடும்.

லது அந்நியகாரியங்களில் [1]தலையிட்டுக்கொண்
௧௬ டவனுய்ப் பாடுபடாதிருப்பாளுக.—கிறிஸ்தவ
ஞய்ப் பாடுபடுகிறவன் வெட்கமடையாமலிரு
ந்து பராபரனை [2]அதற்காகவே துதிசெய்யக்கட
௧௭ வன்.—[3]நியாயத்தீர்ப்பும் தேவாலயத்திலே ஆரம்
பமாகிறதற்குக் காலம் வந்திருக்கிறதே; [4]முதலா
வது நம்மிடத்திலே அது ஆரம்பமானுல், [5]பரா
பரனுடைய சுவிசேஷத்திற்குக் கீழ்ப்படியாத
வர்களுடைய முடிவு என்னமாய் இருக்கும்?—
௧௮ [6]நீதிமானே இரட்சிக்கப்படுகிறது அரிதானுல்,
துன்மார்க்கனும் பாவியும் எங்கே நிற்பான்?—
௧௯ ஆகையால் பராபரனுடைய சித்தத்தின்படி பாடு
படுகிறவர்கள் நன்மைசெய்கிறவர்களாய்த் தங்
கள் [7]ஆத்துமாக்களை உண்மையுள்ள சிருட்டிக
ராகிய அவருக்கு ஒப்புக்கொடுக்கக்கடவர்கள்.

## ரு. அதிகாரம்.

க. மூப்பர்கள் மந்தைகளை மேய்க்கவும், ரு. இளைஞர் கீழ்ப்படியவும், அ. யாவரும் மனத்தெளிவும் விழிப்பும் விசுவாசத்தில் உறுதியுமாயிருக்கவும், கூ. கொடூர சத்துருவாகிய பசாசை எதிர்த்துநிற்கவும் சொல்லியது.

௧ உங்களிலுள்ள மூப்பருக்கு [8]உடன் மூப்பனு
மாய், [9]கிறிஸ்துவின் பாடுகளுக்குச் சாட்சிக்கா
ரனுமாய், (இனி) வெளிப்படும் மகிமைக்குப்
[10]பங்காளியுமாய் இருக்கிற நான் புத்திசொல்லு
௨ கிறது என்னவென்றுல்,—உங்களிடத்திலுள்ள*
பராபரனுடைய ஆட்டுக்கூட்டத்தை [11]நீங்கள்
மேய்த்துக் [12]கட்டாயமாயல்ல மனப்பூர்வமாயும்,
[13]அவலட்சணமான ஆதாயத்திற்காகவல்ல உச்
௩ சாக மனதோடும்,— [14]சுதந்தரங்களை [15]இறுமாப்
பாய் ஆளுகிறவர்களாகவல்ல† [16]ஆட்டுக்கூட்
டத்திற்குப் பாதையைக் காட்டுகிறவர்களாகவும்
௪ கண்காணிப்புச் செய்வீர்களாக. —(அப்படிச்
செய்தால்) [17]பிரதான மேய்ப்பர் வெளிப்படும்
பொழுது [18]மகிமையுள்ள [19]வாடாத முடியைப்
பெறுவீர்கள்.
௫ அல்லாமலும் வாலிபரே, மூப்பருக்குக் கீழ்ப்
படியுங்கள்; [20]நீங்கள் எல்லாரும் ஒருவருக்கொ
ருவர் கீழ்ப்படிந்து மனத்தாழ்மையை அணிந்து
கொள்வீர்களாக. அகந்தையுள்ளவர்களுக்குப்
[21]பராபரன் எதிர்த்து நிற்கிறுர், [22]தாழ்மையுள்ள
வர்களுக்கே கிருபையை அளிக்கிறுர்.—ஆகை ௬
யால் ஏற்றகாலத்திலே பராபரன் உங்களை உயர்
த்தும்படிக்கு [23]அவருடைய பலத்த கைக்குள்
அடங்குவீர்களாக.—அவரே உங்களை விசாரித் ௭
துக்கொள்ளுகிறபடியால் [24]உங்கள் கவலைகளை
எல்லாம் அவர்மேல் வைத்துவிடுங்கள்.
[25]தெளிந்த புத்தியுள்ளவர்களாய் இருங்கள், ௮
விழித்திருங்கள். என்னத்தினுலெனில், [26]உங்
கள் எதிராளியாகிய பசாசானவன் கெர்ச்சிக்
கிற சிங்கம்போல எவனையும் விழுங்கவேண்டு
மென்று வகைதேடித் திரிகிறுன். — [27]உலகத்தி ௯
லுள்ள உங்கள் சகோதரரிடத்திலே அப்படிப்
பட்ட பாடுகளே நிறைவேறிவருகின்றன என்று
அறிந்து, விசுவாசத்தில் உறுதியாய் [28]அவனுக்கு
எதிர்த்து நில்லுங்கள்.
சகலவித கிருபைக்கும் காரணருமாய், [29]கொ ௰
ஞ்சக்காலம் பாடுபடுகிற நம்மைக் கிறிஸ்து இயே
சுவினுலே தமது நித்திய மகிமைக்கு [30]அழைத்த
வருமாய் இருக்கிற பராபரன் தாமே உங்களை
[31]நிறைவுள்ளவர்களாக்கி [32]ஸ்திரப்படுத்தித் திட
ப்படுத்தி அஸ்திபாரப்படுத்தக்கடவர்.—[33]அவரு ௧௧
க்கே துதியும் வல்லமையும் என்றென்றைக்கும்
உண்டாயிருக்கக்கடவது.—ஆமன்.
(உங்களுக்குப்) புத்திசொல்லும்படிக்கும், ௧௨
நீங்கள் (அடைந்து) [34]நிற்கிற கிருபை பராபர
னுடைய மெய்யான கிருபைதான் என்று சாட்சி
கொடுக்கும்படிக்கும் [35]நான் சுருக்கமாய் உங்க
ளுக்கு எழுதி, எனக்குத் தோன்றுகிறபடி உண்
மையாய் இருக்கிற சகோதரனுகிய [36]சில்வானு
வின் கையிலே (இதைக்) கொடுத்து அனுப்பி
னேன்.—உங்களுடனேகூடத் தெரிந்துகொள் ௧௩
ளப்பட்டிருக்கிற பாபிலோனிலுள்ள சபையும்
என் குமாரனுகிய [37]மாற்கும் உங்களை வாழ்த்து
கிறுர்கள்.—[38]ஒருவரை ஒருவர் அன்பின் முத் ௧௪
தத்தினுல் வாழ்த்துதல்செய்வீர்களாக; கிறிஸ்து
இயேசுவைப் பற்றியிருக்கிற உங்கள் அனைவ
ருக்கும் [39]சமாதானம் உண்டாவதாக.—ஆமன்.

1 க தெச. ச. ௰௧. க தீமோ. ரு.௰௧. 2 அப். ரு. ௪௧.—3 எசா. ௰.௰௨.எரே. ௨ரு. ௨௯:௪௯.௰௨.எசே. ௯.௬.மல். ௩.௫.ரு.—4 லூக். ௨௩.௩௧ - 5 லூக். ௰.௰௨,௰௪.—6 வாக். ௰௧ ௩௧. லூக். ௨௩. ௩௧.—7 சங். ௩௧. ரு. லூக். ௨௩. ௪௬. ௨ தீமோ. க. ௰௨. 8 பிலே. ௯.—9 லூக். ௨௪. ௪அ. அப். க.அ, ௨௨: ரு. ௩௨: ௰. ௩௯. 10 உரோ. அ. ௰௭,௰அ. வெளி.க.௯. 11 யோவா. ௨௧. ௰ரு, ௰௬, ௰௭. 12 க கொரி. ௯. ௰௭ —13 க தீமோ.௩. ௩,அ. தீத். க.௭.—14 சங். ௩௩. ௰௨: ௭௪. ௨.—15 எசே. ௩௪. ௪. மத். ௨௰. ௨ரு, ௨௬. க கொரி. ௩. ௯. ௨ கொரி. க. ௨௪.—16 பிலி. ௩. ௰௭. ௨ தெச. ௩. ௯. க தீமோ. ௪. ௰௨. தீத். ௨. ௭.—17 எபி. ௰௩. ௨௰. 18 க கொரி. ௯. ௨ரு. ௨ தீமோ. ௪. அ. யாக். க.௰௨.—19 க பே. க ௪. 20 உரோ. ௰௨. ௰. எபே. ரு. ௨௧. பிலி. ௨. ௩.—21 யாக். ௪. ௬. 22 எசா. ௫௭. ௰ரு: ௬௬. ௨.—23 யாக். ௪. ௰.—24 சங். ௫௭. ௨௨: ரு௫. ௨௨: மத். ௬. ௨ரு. லூக். ௰௨. ௰௧,௨௨. பிலி. ௪. ௬. எபி. ௰௩. ரு.—25 லூக். ௨௧. ௩௪, ௩௬. க தெச. ரு. ௬. க பே. ௪. ௭.—26 யோபு. க.௭: ௨. ௨. லூக். ௨௨. ௩௧. வெளி. ௰௨. ௰௨.—27 அப். ௰௪. ௨௨. க தெச. ௩. ௩. ௨ தீமோ. ௩. ௰௨. க பே ௨.௨௧.—28 எபே. ௬. ௰௧, ௰௩. யாக். ௪. ௭.—29 ௨ கொரி. ௪. ௰௭. க பே. ௧.௬.—30 க கொரி. க ௯. க தீமோ ௬ ௰௨. —31 எபி. ௰௩ ௨௧ யூதா. ௨௪.—32 ௨ தெச. ௨. ௰௭: ௩.௩.—33 க பே. ௪. ௰௧. வெளி. க ௬ —34 அப் ௨௰.௨௪. க கொரி. ௰ரு. க. ௨ பே க.௰௨. 35 எபி. ௰௩. ௨௨.—36 ௨ கொரி.க. ௰௯.—37 அப். ௰௨. ௰௨, ௨ரு. 38 உரோ. ௰௬. ௰௬. க கொரி.௰௬. ௨௰. ௨ கொரி ௰௩.௰௨. க தெச. ரு. ௨௬.—39 எபே. ௬. ௨௩.

* அல்லது உங்களால் ஆளமட்டும்.—† அல்லது ஆண்டுகொள்ளாமல்.

# II. PETER.

அப்போஸ்தலனாகிய

# பேதுரு எழுதின பொதுவான

## இரண்டாம் நிருபம்.

### க. அதிகாரம்.

*க. அவர்களைத் தங்கள் புண்ணிய நடக்கைகளில் உறுதிப்படுத்தி, ௫. விசுவாசத்தினாலும் நற்கிரியைகளினாலும் தங்கள் அழைப்பை நிச்சயிக்கச் சொல்லி, ௰௨. தன் மரணம் சமீபமானபடியால் இக்காரியங்களைக்குறித்து அவர்களுக்கு நினைப்பூட்டி, ௰௬. அப்போஸ்தலர்கள் கண்ட மகத்துவக்காட்சியினாலும், பிதாவானவரும் தீர்க்கதரிசிகளும் உரைத்த சாட்சியினாலும், பராபரனுடைய மெய்யான குமாரனாயிருக்கிற கிறிஸ்துவைப்பற்றும் விசுவாசத்தில் நிலைகொண்டிருக்கவும் சொல்லியது.*

௧ நம்முடைய பராபரனுமாய் இரட்சகருமாய்*
இருக்கிற இயேசுக்கிறிஸ்துவின் நீதியில் எங்க
ளைப்போல [1]அருமையான விசுவாசத்தைப் பெற்
றவர்களுக்கு, இயேசுக்கிறிஸ்துவின் ஊழியக்
காரனும் அப்போஸ்தலனுமாகிய சீமோன்†
௨ பேதுரு எழுதுகிறதாவது:—பராபரனையும் நம்
முடைய கர்த்தராகிய இயேசுவையும் அறிகிற
அறிவினால் [2]உங்களுக்குக் கிருபையும் சமாதா
னமும் சம்பூரணமாய் உண்டாகக்கடவது.
௩ மகிமையாலும்‡ புண்ணியத்தாலும் [3]நம்மை
அழைத்தவரை [4]அறிகிற அறிவினாலே சீவனுக்
கும் மெய்த்தேவபத்திக்கும் ஏற்ற யாவற்றையும்
அவருடைய திவ்விய வல்லமை நமக்குக் கொ
௪ டுத்தபடியினாலும்,—நீங்கள் (தகாத) இச்சையால்
உலகத்திலுள்ள கேட்டுக்குத் [5]தப்பித்துக்கொண்
டவர்களாய், திவ்விய குணத்திற்குப் [6]பங்காளி
களாகத்தக்கதாக மிகவும் மேன்மையும் விலையே
றப்பெற்றதுமான [7]வாக்குத்தத்தங்கள் அவராலே
௫ நமக்கு அளிக்கப்பட்டபடியினாலும்,— நீங்கள்
[8]மிகுந்த சாக்கிரதையைக்கொண்டு, உங்கள் விசு
வாசத்தோடே தயிரியத்தையும், [9]தயிரியத்தோ
௬ டே அறிவையும்,—அறிவோடே இச்சை அடக்
கத்தையும், இச்சை அடக்கத்தோடே பொறுமை
யையும், பொறுமையோடே மெய்த்தேவபத்தி
யையும், — மெய்த்தேவபத்தியோடே சகோதர ௭
சிநேகத்தையும், [10]சகோதர சிநேகத்தோடே அன்
பையும் கூட்டிக்கொள்வீர்களாக. — இவைகள் ௮
உங்களுக்கு உண்டாயிருந்து பெருகினால், நீங்
கள் நம்முடைய கர்த்தராகிய இயேசுக்கிறிஸ்
துவை அறிகிற அறிவிலே வீணராக§ அல்லது
[11]கனியற்றவர்களாக இருக்கமாட்டீர்களே. —
அவைகள் இல்லாதவன் எவனோ, [12]அவன் தன் ௯
முந்தின பாவங்கள் நீக்கப்பட்டதை மறந்து,
[13]குருடனாய்க் கண்மூடியிருக்கிறான். — ஆகை ௰
யால் சகோதரரே, [14]நீங்கள் அழைக்கப்பட்டும்
தெரிந்துகொள்ளப்பட்டும் இருக்கிறதை உறுதி
யாக்கும்படி அதிக சாக்கிரதையாய் இருப்பீர்க
ளாக; அப்படிச் செய்தால் நீங்கள் [15]ஒருக்காலும்
வழுவுவதில்லை. — மேலும் இப்படியே நம்மு ௰௧
டைய கர்த்தரும் இரட்சகருமாகிய இயேசுக்கிறி
ஸ்துவின் நித்திய இராச்சியத்திற்குள் பிரவேசித்
தல் பரிபூரணமாய் உங்களுக்கு அளிக்கப்படும்.
ஆனபடியால் நீங்கள் இவைகளை அறிந்து, ௰௨
[16]இப்பொழுது உங்களுக்கு உண்டாயிருக்கிற
சத்தியத்தில் உறுதிப்பட்டிருந்தும், இவைகளை
[17]எப்பொழுதும் நினைக்கும்படி செய்ய நான்
அசதியாய் இருக்கமாட்டேன். — அந்தப்படி ௰௩
[18]நம்முடைய கர்த்தராகிய இயேசுக்கிறிஸ்துவும்
எனக்குத் தெரிவித்தபடி [19]நான் என் கூடாரத்
தைச் சீக்கிரமாய் விட்டுப்போகவேண்டுமென்று
அறிந்து,— இந்தக் கூடாரத்தில் இருக்குமளவும் ௰௪
ஞாபகப்படுத்துதலினாலே [20]உங்களை எழுப்புகி
றது [21]நியாயமென்று எண்ணுகிறேன்.— ஆகை ௰௫
யால் நான் போனதற்குப் பின்பும், நீங்கள் இவை
களை எப்பொழுதும் நினைத்துக்கொள்ள உங்க

1 உரோ. க.௰௨, உ கொரி. ச.௰௩. எபே ச.௫. தீத்.க.ச.—2 தானி. ச.க: கூ.உ௫. க பே. க.உ, யூதா. உ.—3 க தெச. உ. ௰௨: ச. எ. உ தெச. உ. ௰௪. உ தீமோ.க.கூ. க பே.உ. கூ: க. கூ.—4 யோவா. ௰எ. க.—5 உ பே. உ. ௰அ, உ௰. 6 உ கொரி.க ௰அ. எபே. ச. உச. எபி. ௰உ. ௰. க பே. க. உ. 7 உ கொரி. எ.க -8 உ பே. க.௰அ. 9 க பே. க. எ.—10 கலா. கூ. ௰. க தெச. க.௰உ: ௫.௰௫. க பே. ச. உக.—11 யோவா. ௰௫. உ. தீத். க. ௰ச.—12 எபே. ௫. உக. எபி. கூ. ௰ச. க யோ. க. எ. 13 க யோ. உ. கூ, ௰க.—14 க யோ. க. ௰கூ.—15 உ பே. க. ௰எ. 16 க பே. ௫. ௰உ. உ பே. க. ௰எ. 17 உரோ. ௰௫. ௰ச, ௰௫. பிலி.க.க. உ பே க. க. க யோ உ. உக. யூதா.௫.—18 யோவா. உக ௰அ, ௰கூ.—19 ௫ மோ. ச. உக, உஉ: கக ௰ச. உ தீமோ. ச. கூ. 20 உ பே.க.ச.-21 உ கொரி.௫.க,ச.

* அல்லது பராபரனுமாய் நம்முடைய இரட்சகருமாய்; தீத். உ. ௰௩.—† அல்லது சிமெயோன்; அப். ௰௫. ௰ச.
‡ அல்லது மகிமைக்கும்.— § அல்லது வெறுமையாக.

ளுக்கு ஏதுவுண்டாயிருக்கும்படி பிரயத்தனம்
பண்ண விரும்புகிறேன்.
௰௬ என்னவெனில், நம்முடைய கர்த்தராகிய
இயேசுக்கிறிஸ்துவின் வல்லமையையும், வரு
கையையும், உங்களுக்கு அறிவித்தபொழுது
[1]நாங்கள் தந்திரமாய் யோசிக்கப்பட்ட கட்டுக்
௰௭ கதைகளைப் பின்பற்றவில்லை.—[2]இவர் எனக்கு
அன்பாயிருக்கிற என்னுடைய குமாரன்; இவரி
டத்தில் பிரியமாய் இருக்கிறேன் என்று சொல்
லுகிற சத்தம் மகா மேன்மையான மகிமைத்தலத்
திலிருந்து வந்ததினாலே பிதாவாகிய பராபரனால்
கனத்தையும் மகிமையையும் அவர் பெற்றபொ
ழுது, அவருடைய மகிமையை [3]நாங்கள் கண்ணு
௰௮ ரக்கண்டோம்.—[4]அவரோடேகூட நாங்கள் பரி
சுத்த பர்வதத்தில் இருந்தபொழுது வானத்திலி
ருந்து வந்த அந்தச் சத்தத்தைக் கேட்டோம்.
௰௯ தீர்க்கதரிசன வசனமும் நமக்கு அதிக உறு
தியாய் இருக்கின்றது; உங்கள் இருதயங்களில்
[5]வெள்ளி உதயமாகிப் பொழுது விடியுமளவும்
[6]நீங்கள் இருளுள்ள தலத்தில் பிரகாசிக்கிற விளக்
கைப்போன்ற அவ்வசனத்திற்கு எச்சரிக்கை
௨௰ யாய் இருந்தால் நன்மைசெய்வீர்கள்.—அதைக்
குறித்து நீங்கள் பிரதானமாய் அறியவேண்டி
யது என்னவெனில், [7]வேத எழுத்திலுள்ள எந்
தத் தீர்க்கதரிசனமும் சொந்த விவரிப்பினாலே
௨௧ தோன்றமாட்டாது.—[8]தீர்க்கதரிசனமானது பூர்
வத்திலே* மனிதருடைய சித்தத்தினாலே வர
வில்லையே, [9]பராபரனுடைய பரிசுத்த மனிதர்
கள் பரிசுத்தஆவியினாலே ஏவப்பட்டுப் பேசி
னார்களே.

## ௨. அதிகாரம்.

௧. கள்ளப்போதகர்களுடைய அக்கிரமத்தையும் அதினால் அவர்களுக்கும் அவர்களைப் பின்பற்றுகிறவர்களுக்கும் உண்டாகும் தண்டனையையும் குறித்து முன் அறிவித்து, அப்படிப்பட்டவர்களில் நின்று, ௭. சோதோமிலிருந்து லோத்து விடுதலையானதுபோல நல்லவர்கள் விடுதலையாவார்களென்றும், ௰. மோசம்போக்குகிற அந்த அக்கிரமக்காரராகிய தூஷணர்களை கண்டு அறிந்து அவர்களை விட்டுவிலக அவர்கள் இப்படிப்பட்டவர்களென்றும் சொல்லியது.

௧ [10]கள்ளத்தீர்க்கதரிசிகளும் சனங்களுக்குள்ளே
இருந்தார்கள்; அதுபோல [11]உங்களுக்குள்ளும்
கள்ளப்போதகர்கள் தோன்றுவார்கள்; அவர்கள்
கேட்டுக்கு ஏதுவான பொய் உபதேசங்களைத்
தந்திரமாய் நுழைத்துத் [12]தங்களைக் கொண்ட
ஆண்டவரை [13]மறுதலித்து, இப்படித் [14]தங்களுக்
குத் தீவிரமான அழிவை வருவித்துக்கொள்வார்
௨ கள். — அவர்களின்நிமித்தம் சத்தியமார்க்கம்
தூஷணிக்கப்படும்; அவர்களுடைய கெட்ட †
மார்க்கங்களை அநேகர் பின்பற்றுவார்கள்.—
[15]பொருளாசை உள்ளவர்களாய் அவர்கள் தந்தி ௩
ரமான வார்த்தைகளால் [16]உங்களை வாங்கிக்
கொள்ளத் தேடுவார்கள்; அவர்களுக்குப் பூர்வத்
தில் (தீர்மானித்திருக்கிற) [17]ஆக்கினை தாமத
மாயிராது; அவர்களுக்குத்தக்க அழிவு உறங்
காது.
[18]பாவம்செய்த [19]தூதர்களைப் பராபரன் தப்ப ௪
விடாமல் அந்தகாரச் சங்கிலிகளினாலே கட்டிப்
[20]பாதாளத்திலே தள்ளி, நியாயத்தீர்ப்புப்பரியந்
தம் காக்கப்படுவதற்கு ஒப்புக்கொடுத்திருக்க,—
பழைய உலகத்தையும் தப்பவிடாமல் [21]நீதி ௫
யைப் பிரசங்கித்தவனாகிய [22]நோவாமுதலான
எட்டுப்பேரைமாத்திரம் அவர் காப்பாற்றிப்
பத்தியற்றவர்களுள்ள உலகத்தின்மேல் [23]சலப்
பிரளயத்தை வரப்பண்ணியிருக்க,—[24]சோதோம் ௬
கொமோரா என்னும் பட்டணங்களையும் சாம்ப
லாக்கிக் கவிழ்த்துப்போட்டு, இப்படி ஆக்கி
னைக்குள்ளாகத் தீர்த்து, பிற்காலத்திலே [25]அவ
பத்தியாய் நடப்பவர்களுக்கு அடையாளமாக
வைத்திருக்க, (அவர்களை எப்படித் தப்பவிடு
வார்?)-அக்கிரமக்காரருடைய காமவிகார நடக் ௭
கையால் வருத்தப்பட்ட [26]நீதிமானாகிய லோத்
என்பவனைமாத்திரம் இரட்சித்துவிட்டார்.—
[27]அந்த நீதிமான் அவர்களுக்குள்ளே குடியிருக் ௮
கையில், நாள்தோறும் அவர்களுடைய அக்கிர
மக் கிரியைகளைக் கண்டு கேட்டு, நீதியுள்ள தன்
னுடைய இருதயத்திலே அவைகளாலே வேத
னைப்பட்டான். — கர்த்தரே [28]தேவபத்தியுள்ள ௯
வர்களைத் துன்பத்தினின்று இழுத்து இரட்சிக்க
வும், அக்கிரமக்காரரை நியாயத்தீர்ப்புநாளிலே
ஆக்கினைக்கு உள்ளாகும்படிக்காகவும் அறிந்தி
ருக்கிறார்.—[29]பிரதானமாக அசுத்தத்தின் இச்சை ௰
யோடே மாம்சத்திற்கு ஏற்றபடி நடந்து, துரைத்
தனத்தை ‡ அசட்டைபண்ணுகிறவர்களையே அ
ப்படிச் செய்வார்; [30]அவர்கள் துணிவுக்காரர்,
அகங்காரிகள், மகிமையுடையவர்களைத் தூஷ
ணிக்க நடுங்காதவர்கள்.
அதிக [31]பலத்தையும் வல்லமையையும் உடைய ௰௧
தேவதூதரும் கர்த்தருக்குமுன்பாக அவர்களுக்
கு § விரோதமாய்த் தூஷணிப்பான தீர்ப்பைச்
சொல்லமாட்டார்கள்.—இவர்கள்மாத்திரம் பிடி ௰௨
யுண்டு அழிக்கப்படுவதற்கு உண்டான [32]புத்தி
யற்ற மிருகசீவன்களைப்போலத் தங்களுக்குத்
தெரியாதவைகளைத் தூஷணித்துத் தங்கள் கேட்
டினாலே முழுவதும் அழிக்கப்பட்டு,—[33]அநியா ௰௩

1 ௧ கொரி. ௧.௰௭: ௨.௧,௪. ௨ கொரி. ௨. ௰௭: ௪. ௨.—2 மத். ௩. ௰௭: ௧௭. ௫. மாற். ௧. ௰௧: ௯. ௭. லூக். ௩.௨௨: ௯ ௩௫.—3 மத்.௰௭. ௧, ௨. மாற்.௯.௨. யோவா.௧.௰௪. ௧ யோ. ௧.௧: ௪:௰௪.—4 ௨ மோ. ௩. ௫. யோசு.௫.௰௫. மத் ௰௭.௯. 5 வெளி. ௨. ௨௮: ௨௨. ௰௬. ௨ கொரி. ௪. ௪,௬.—6 சங். ௱௰௯. ௱௫. யோவா. ௫. ௩௫.-7 உரோ. ௰௨.௬.–8 ௨ தீமோ.௩.௰௬. ௧ பே. ௧.௰௧.—9 ௨ சாமு.௨௩.௨. லூக். ௧. ௭௰. அப். ௧. ௰௬: ௩.௰௮. 10 ௫ மோ.௰௩.௧.—11 மத்.௨௪.௰௧. அப். ௨௰. ௩௰. ௧ கொரி. ௰௧.௰௯ ௧ தீமோ.௪.௧: ௨ தீமோ.௩.௧-௫. ௧ யோ. ௪. ௧. யூதா. ௰௮. 12 ௧ கொரி. ௬. ௨௰. கலா. ௩.௰௩. எபே.௧.௭. எபி.௰.௨௯. ௧ பே. ௧.௰௮. வெளி.௫.௯.—13 யூதா. ௪.–14 பிலி. ௩.௰௯ —15 உரோ. ௰௬.௰௮. ௨ கொரி ௰௨.௰௭,௰௮. ௧ தீமோ ௬. ௫. தீத். ௧. ௰௧. 16 ௨ கொரி. ௨. ௰௭. ௨ பே ௧.௰௩. 17 ௫ மோ. ௩௨. ௩௫. யூதா. ௪, ௰௫. 18 யோவா. ௮. ௪௪. ௧ பே. ௩. ௮. 19 யோபு ௪. ௰௮. யூதா. ௬. 20 லூக். ௮. ௩௧ வெளி ௨௰. ௨,௩. 21 ௧ பே. ௩. ௰௯.—22 ௧ மோ. ௭.௧, ௭,௨௩. எபி.௰௧.௭. ௧ பே.௩.௨௰. 23 ௨ பே. ௩. ௬.—24 ௧ மோ. ௰௯. ௨௪. ௫ மோ.௨௯.௨௩. யூதா.௭. 25 ௪ மோ.௨௬. ௰.—26 ௧ மோ.௰௯. ௰௬.—27 சங். ௱௰௯. ௱௩௬,௱௫௮. எசே. ௯.௪.–28 சங். ௩௪.௰௭,௰௯. ௧ கொரி. ௰. ௰௩.—29 யூதா. ௪,௭, ௮,௰,௰௬.–30 யூதா. ௮.–31 யூதா. ௯.—32 எரே. ௰௨. ௩. யூதா. ௰. 33 பிலி. ௩. ௰௯.

*அல்லது யாதொருகாலத்திலே.—† சில பிரதிகளில் காமவிகாரமுள்ள.—‡ அல்லது ஆளுகையை.—§ சில பிரதிகளில் தங்களுக்கு.

யத்திற்கு ஏற்ற பலனை அடைவார்கள்; [1]அவர்
கள் பகற்காலத்திலே சம்பிரமமாயிருத்தலை இன்
பமென்று எண்ணுகிறவர்கள்; [2]மாசுகளும் அ
வலட்சணங்களுமானவர்கள்; [3]விருந்தாக உங்
களோடேகூடச் சாப்பிடுகையில் தங்கள் வஞ்
சனைகளினால் சம்பிரமமாய் வாழ்கிறவர்கள்.—
௰௪ விபசாரத்தால்* நிறைந்தவைகளாயும், பாவத்தை
விட்டு ஓயாதவைகளாயும் இருக்கிற கண்களுள்
ளவர்கள்; ஸ்திரமில்லாத ஆத்துமாக்களைத் தந்தி
ரமாய்ப் பிடிக்கிறவர்கள்; பொருளாசைகளில்
[4]முயற்சியான இருதயத்தை உடையவர்கள்,
௰௫ சபிக்கப்பட்ட பிள்ளைகள். — செம்மையான
மார்க்கத்தைவிட்டுத் தப்பி நடந்து, பேர்சோரு
டைய குமாரனாகிய [5]பாலாமின் வழியைப் பின்
பற்றுகிறவர்கள்; அவன் அநியாயத்தின் கூலி
௰௬ யை விரும்பினான்.—பின்பு தன்னுடைய அக்கிர
மத்திற்காகக் கடிந்துகொள்ளப்பட்டான்; பே
சாத மிருகமே மனிதர் பாஷையைப் பேசி அந்
தத்தீர்க்கதரிசியினுடைய மதிகேட்டைத் தடை
௰௭ செய்தது. — (மேலும்) [6]அவர்களே தண்ணீரில்
லாத கிணறுகள்; அவர்களே சுழல்காற்றினால்
அடிக்கப்படுகிற மேகங்கள்; என்றென்றைக்
கும் உள்ள காரிருளே அவர்களுக்கு வைத்திருக்
கின்றது.

௰௮ [7]வஞ்சகமாய் நடக்கிறவர்களை விட்டுத் தப்பி
னவர்களுக்கு† [8]அவர்கள் மிகவும் அகந்தையான
வீண்வார்த்தைகளைப் பேசி, சரீர இச்சைகளினா
லும் காமவிகாரங்களினாலும் அவர்களைத் தந்திர
௰௯ மாய்ப் பிடிக்கிறார்கள்.—[9]தாங்களே கேட்டுக்கு
அடிமைகளாயிருந்தும் அவர்களுக்குச் [10]சுயாதீ
னத்தை வாக்குத்தத்தம்பண்ணுகிறார்கள்; எவ
னும் எதினாலே ஜெயிக்கப்பட்டிருக்கிறானோ
அதற்கு அடிமையாக்கப்பட்டிருக்கிறானே. —
௨௰ ஆகையால் [11]கர்த்தருமாய், இரட்சகருமாய் இருக்
கிற இயேசுக்கிறிஸ்துவை அறிகிற அறிவினாலே
[12]உலகத்தின் அசுத்தங்களுக்குத் தப்பினவர்கள்
[13]மறுபடியும் அவைகளில் சிக்கிக்கொண்டு ஜெ
யிக்கப்பட்டால், அவர்களுடைய முன்னிலைமை
யிலும் பின்னிலைமை அதிக கேடுள்ளதாய் இ
௨௧ ருக்கும்.—அப்படிப்பட்டவர்கள் நீதியின் மார்க்
கத்தை அறிந்தபின் தங்களுக்கு ஒப்புவிக்கப்
பட்ட பரிசுத்த கற்பனைகளை விட்டு விலகுகிற
திலும் அதை அறிந்துகொள்ளாமல் இருக்கிறதே
௨௨ [14]அவர்களுக்கு நன்மையாய் இருக்கும்.—அப்
பொழுது [15]நாய் தான் கக்கினதை மறுபடியும்
தின்னுகிறதென்றும், கழுவப்பட்ட பன்றி மறு
படியும் சேற்றிலே புரளுகிறதென்றும் சொல்
லுகிற மெய்யான பழமொழியின்படி அவர்க
ளுக்குச் சம்பவித்தது.

## ௩. அதிகாரம்.

௧. கிறிஸ்து வருகையைக்குறித்துப் பரியாசம்பண்ணுகிறவர்களுக்கு விரோதமாகக் கிறிஸ்து நியாயத்தீர்ப்புக்கு வருவாரென்று நிச்சயித்தது, ௮. பத்தியுள்ளவர்கள் சீக்கிரமாய்க் குணப்படப் பராபரனுடைய பொறுமையை முன்னிட்டு எச்சரித்தது, ௰. உலகம் அழிக்கப்படுமே விதத்தைக்குறித்து அறிவித்தது, ௰௧. அதற்குத் தகுதியான பரிசுத்தவான்களாய் இருக்கவேண்டுமென்றும் புத்திசொல்லி, ௰௫. பவுல் தன் நிருபங்களில் எழுதினபடியே பராபரனுடைய பொறுமை அவர்கள் இரட்சிப்புக்கு ஏதுவென்று சொல்லியது.

பிரியமானவர்களே, இவ்விரண்டாம் நிருபத்தை ௧
இப்பொழுது உங்களுக்கு எழுதுகிறேன்; பரி
சுத்த தீர்க்கதரிசிகளால்—முன் சொல்லப்பட்ட ௨
வார்த்தைகளையும், இரட்சகராயிருக்கிற கர்த்த
ருடைய அப்போஸ்தலராகிய [16]எங்களுடைய
கற்பனையையும் நீங்கள் நினைக்கும்படியாக,
இவைகளால் உங்கள் உண்மையான மனதிற்கு
[17]ஞாபகப்படுத்தி எழுப்புகிறேன். — [18]முதலா ௩
வது நீங்கள் அறியவேண்டியது என்னவெனில்
கடைசிநாள்களில் பரியாசக்காரர் தோன்றுவார்
கள்; [19]அவர்கள் தங்கள் சுய இச்சைகளின்படி
நடந்துகொண்டு,—[20]அவர் வருவாரென்று சொல் ௪
லுகிற வாக்குத்தத்தம் எங்கே இருக்கிறது; பிதாக்
கள் நித்திரை அடைந்தபின்பு சகலமும் சிருட்
டிப்பின் தோற்றமுதல் இருந்தவிதமாய் இருக்கி
றதே என்று சொல்லுவார்கள்.

பூர்வகாலத்திலே [21]பராபரனுடைய வார்த்தை ௫
யினாலே வானங்களும், [22]சலத்தினாலேயும் சலத்
திற்குள்ளேயும் நிலைகொண்ட‡ பூமியும் இருந்
தும், அப்பொழுது இருந்த உலகம் [23]அதினாலே
வெள்ளங்கொண்டு அழிந்துபோயிற்றே.—அது ௬
போல [24]இப்பொழுது இருக்கிற வானங்களும்
பூமியும் அந்த வார்த்தையாலே [25]அக்கினிக்கு
இரையாக வைக்கப்பட்டுத் தேவபத்தியில்லாத
மனிதர்களுக்கு நியாயத்தீர்ப்பும், கேடும் உண்
டாகும் நாள்வரைக்கும் காக்கப்படுகின்றன.—
இதை அந்தப் பரியாசக்காரர் அறிந்தும் நினையா ௭
மல் இருக்கிறார்கள்.

பிரியமானவர்களே, நீங்கள் கர்த்தரிடத்தில் ௮
[26]ஒருநாள் ஆயிரம் வருஷங்களைப்போலவும்,
ஆயிரம்வருஷங்கள் ஒருநாளைப்போலவும் இருக்
கின்றதென்று இருக்கிற இந்த ஒரே காரியத்
தை மறவாதிருப்பீர்களாக.—தாமதித்திருக்கிறார் ௯
என்று சிலர் எண்ணுகிற பிரகாரமாய்க் [27]கர்த்
தர் (தமது) வாக்குத்தத்தத்தைக்குறித்துத் தாமத
மாய் இராமல், [28]ஒருவரும் கெட்டுப்போகாதப
டிக்கு [29]எல்லாரும் மனந்திரும்பவேண்டுமென்
று விரும்பி, [30]நமதுமேல் நீடிய சாந்தமுள்ளவரா

1 உரோ. ௰௩. ௰௩.—2 யூதா. ௰௨.
3 ௧ கொரி. ௰௧.௨௰, ௨௧.
4 யூதா. ௰௧.—5 ௪ மோ. ௨௨. ௫, ௭, ௨௧, ௨௩, ௨௮. யூதா. ௰௧.
6 யூதா. ௰௨. ௰௩.—7 அப். ௨. ௪௰. ௨ பே ௧. ௪. ௨௰. வச.
8 யூதா. ௰௬.—9 யோவா. ௮ ௩௪ உரோ. ௬. ௰௬.—10 கலா. ௫. ௰௩ ௧ பே. ௨. ௰௬.—11 ௨ பே ௧ ௨.
12 ௨ பே. ௧. ௪. ௰௮. வச.—13 மத். ௰௨. ௪௫. லூக். ௰௧ ௨௬. எபி. ௬. ௪. ௫: ௰. ௨௬ ௨௭.—14 லூக். ௰௨. ௪௭, ௪௮. யோவா. ௯. ௪௧: ௰௫. ௨௨.—15 வாக். ௨௬. ௰௧.
16 யூதா. ௰௭.—17 ௨ பே. ௧. ௰௩.
18 ௧ தீமோ. ௪. ௧. ௨ தீமோ. ௩. ௧. யூதா. ௰௮.—19 ௨ பே. ௨. ௰.
20 எசா. ௫.௰௯. எரே ௰௭.௰௫. எசே. ௰௨. ௨௨, ௨௭. மத். ௨௪. ௪௮. லூக்.௰௨.௪௫.—21 ௧ மோ. ௧ ௧, ௯. சங். ௩௩. ௬. எபி. ௰௧. ௩.
22 சங். ௨௪.௨: ௩௬.௬. கொலோ. ௧. ௰௭.—23 ௧ மோ. ௭. ௰௧, ௨௧, ௨௨, ௨௩. ௨ பே ௨.௫.
24 ௰ வச.—25 மத். ௨௫. ௪௧. ௨ தெச. ௧.௮.—26 சங் ௯௰ ௪.
27 ஆபகூ.௨.௩. எபி ௰.௩௭.
28 எசே. ௩௮. ௰௧, ௩௨: ௩௩. ௰௧.
29 ௧ ரோ. ௨. ௪. ௧ தீமோ. ௨ ௪.
30 எசா. ௩௰. ௰௮. ௧ பே. ௩. ௨௰. ௰௫. வச.

* கிரேக்கு, விபசாரியால்.—† சில பிரதிகளில் கொஞ்சமோம் தப்பினவர்கள்.—‡ கிரேக்கு. அடங்கியிருந்த.

௰ யிருக்கிறார்.—[1]கர்த்தருடைய நாள் இரவிலே
திருடன்வருகிற விதமாய் வரும்; [2]அப்பொழுது
வானங்கள் மடமடவென்று அகன்றுபோம்;
பூதங்கள் எரிந்து கரைந்துபோம், பூமியும் அதி
லுள்ள கிரியைகளும் வெந்துபோம்.

௰௧ இப்படி இவையெல்லாம் கரைந்துபோகிற
தாயிருக்க, [3]நீங்கள் பரிசுத்த நடக்கையிலே
யும் தேவபத்தியிலேயும் எப்படிப்பட்டவர்க
௰௨ ளாய் இருக்கவேண்டும்?—வானங்கள் [4]வெந்து
கரைந்து, [5]பூதங்கள் எரிந்து உருகிப்போகும்;
[6]பராபரனுடைய நாள் வருதற்கு நீங்கள் மிகுந்த
௰௩ ஆசையோடே காத்திருக்கிறீர்களே.*—அவரு
டைய வாக்குத்தத்தத்தின்படியே புதிய வானங்
களும், [7]புதிய பூமியும் உண்டாகும் என்று காத்
திருக்கிறோம்; அவைகளிலே நீதி வாசமாயிருக்
கும்.

௰௪ ஆகையால் பிரியமானவர்களே, அவைகள்
வரக் காத்திருக்கிற நீங்கள் அவரால் மாசும் [8]குற்
றமும் இல்லாதவர்களாய்ச் சமாதானத்தோடே
காணப்படும்படிக்குச் சாக்கிரதையாய் இருந்து,-
௰௫ நம்முடைய [9]கர்த்தாவின் நீடியசாந்தம் இரட்
சிப்புக்கு ஏதுவாயிருக்கிறதென்று எண்ணிக்
கொள்வீர்களாக; நமக்குப் பிரியமான சகோதர
ஞகிய பவுலும் தனக்குக் கொடுக்கப்பட்ட
ஞானத்தினாலே அப்படியே உங்களுக்கு எழுதி
யிருக்கிறான்.—எல்லா நிருபங்களிலேயும் [10]இ ௰௬
வைகளைக்குறித்துப் பேசியிருக்கிறான்; அவன்
எழுதினவைகளில் சில (வாக்கியங்கள்) அறிகி
றதற்கு அரிதாயிருக்கின்றன; படியாதவர்களும்
ஸ்திரமில்லாதவர்களும் அப்படிப்பட்டவைக
ளையும் மற்ற வேதவாக்கியங்களையும் தங்களுக்
குக் கேடுவரத்தக்கதாகப் புரட்டுகிறார்கள்.

ஆதலால் பிரியமானவர்களே, [11]நீங்கள் இவை ௰௭
களை முன் அறிந்தபடியால் (மற்றவர்களோடே)
கூட அந்த அக்கிரமக்காரருடைய வஞ்சகத்தி
னாலே இழுத்துக்கொள்ளப்படாமலும் ஸ்திரத்
தைவிட்டு விழாமலும் இருக்கும்படிக்கு [12]எச்ச
ரிக்கையாயிருந்து,—நம்முடைய கர்த்தரும் இரட் ௰௮
சகருமாகிய இயேசுக்கிறிஸ்துவின் கிருபையை
யும், அவரை அறிகிற அறிவையும் [13]அதிகம்
அதிகமாய் அடைந்துகொள்வீர்களாக; [14]அவ
ருக்கு இப்பொழுதும் (இனி) என்றென்றைக்
கும் மகிமை உண்டாவதாக.—ஆமன்.

---

1 மத். ௨௪. ௪௩. லூக். ௰௨. ௩௯. ௧ தெச. ௫. ௨. வெளி ௩. ௩: ௰௬. ௰௫.—2 சங். ௱௨. ௨௬. ஏசா ௫௧. ௬. மத். ௨௪. ௩௫. மாற். ௰௩. ௩௧. ௨ரோ. அ. ௰௨. எபி. ௧. ௰௧. வெளி. ௨௰. ௰௧: ௨௧. ௧.—3 ௧ பே. ௧. ௰௫.—4 சங். ௫௰. ௩ ஏசா. ௩௪. ௪. 5 மீகா. ௧. ௪. ௰. வச.—6 ௧ கொரி. ௧. ௭. தீத். ௨. ௰௩.—7 ஏசா ௬௫. ௰௭: ௬௬. ௨௨. வெளி. ௨௧. ௧. ௨௭.—8 ௧ கொரி. ௧. அ: ௰௫. ௫௮. ௨௩. ௨ கொ. ௧. ௰௨.—12 எபே பிலி. ௧. ௰. ௧ தெச. ௩. ௰௩: ௫. ௨௩. ௪. ௰௪. ௨ பே. ௧. ௰,௰௧: ௨. ௰௮. 9 ௨ரோ. ௨. ௪. ௧ பே. ௩. ௨. ௰. கூ. வச. 10 ௨ரோ. அ. ௰௯. ௧ கொரி. ௰௫. ௨௪. ௧ தெச ௪. ௰௫.—11 மாற். ௰௩. 13 எபே. ௪. ௰௫. ௧ பே. ௨. ௨. 14 ௨ தீமோ. ௪. ௰௮. வெளி. ௧. ௬.

* அல்லது சீக்கிரம் பண்ணுகிறீர்களே.

# I. JOHN.

அப்போஸ்தலனாகிய

# யோவான் எழுதின

## முதலாம் நிருபம்.

### க. அதிகாரம்.

*க. நம்மைப் பராபரனோடே ஐக்கப்படுத்துகிறதால், நித்தியசீவனுக்கு வழியாயிருக்கிற கிறிஸ்துவின் தன்மையைக்குறித்து விளம்பி, ௫. அந்த ஐக்கத்தையும் விசுவாச அறிக்கையையுங்குறித்துச் சாட்சியிடவும், கிறிஸ்துவின் மரணத்தினால் நமக்குப் பாவமன்னிப்பு உண்டானதென்பதற்குச் சாட்சிகொடுக்கவும், நாம் பரிசுத்தமாய் நடக்கவேண்டுமென்று சொல்லியது.*

க [1]ஆதியில் இருந்ததுமாய், நாங்கள் கேட்டது
மாய், எங்கள் கண்களினாலே கண்டதுமாய்
[2]நாங்கள் நோக்கிப்பார்த்ததுமாய், [3]எங்கள் கை
களாலே தொட்டதுமாய் இருக்கிற சீவனையு
டைய வார்த்தையைக்குறித்து (உங்களுக்கு அறி
உ விக்கிறோம்). — [4]அந்தச் சீவன் [5]வெளிப்பட்
டது; [6]பிதாவினிடத்தில் இருந்ததுமாய், நமக்கு
வெளிப்பட்டதுமாய் இருக்கிற அந்த நித்திய
சீவனையே நாங்கள் கண்டு, [7]அதைக்குறித்துச்
சாட்சிகொடுத்து, [8]அதையே உங்களுக்கு அறி
௩ விக்கிறோம்.—நீங்களும் எங்களோடேகூட ஐக்
கியமுள்ளவர்களாகும்படிக்கு, நாங்கள் [9]கண்
டும் கேட்டும் இருந்ததை உங்களுக்கு அறிவிக்
கிறோம்; [10]நாங்களோ பிதாவுடனேயும் அவரு
டைய குமாரனாகிய இயேசுக்கிறிஸ்துவுடனே
யும் ஐக்கமுள்ளவர்களாய் இருக்கிறோம். —
௪ [11]உங்களுக்குச் சந்தோஷம் நிறைந்ததாய் இருக்
கும்படிக்கு, இவைகளை உங்களுக்கு எழுதுகி
றோம்.
௫ மேலும் [12]அவரிடத்தில் நாங்கள் கேட்டது
மாய் உங்களுக்கு அறிவிக்கிறதுமாயிருக்கிற
விசேஷம் என்னவெனில், பராபரன் எவ்வள
வாகிலும் இருளில்லாமல் [13]ஒளியாயிருக்கிறார்.—
௬ நாம் இருளிலே நடந்து அவரோடே ஐக்கப்பட்
டவர்கள் என்று [14]சொல்லிக்கொண்டால், நாம்
சத்தியத்தை நடப்பியாமல் பொய்பேசுகிறவர்க
ளாயிருப்போம்.—அவர் ஒளியில் இருக்கிறது ௭
போல நாமும் ஒளியிலே நடந்தால், ஒருவரோ
டொருவர் ஐக்கப்பட்டிருப்போம்; அல்லாம
லும், [15]அவருடைய குமாரனாகிய இயேசுக்கி
றிஸ்துவின் இரத்தம் நம்முடைய பாவங்கள் எல்
லாவற்றையும் நீக்கி நம்மைச் சுத்திகரிக்கும்.
[16]நமக்குப் பாவமில்லை என்றோமானால் நம் ௮
மை நாமே வஞ்சிக்கிறவர்களாவோம்; [17]சத்தியம்
நமக்குள்ளே இராது.—[18]நம்முடைய பாவங்களை ௯
நாம் அறிக்கையிட்டால், பாவங்களை நமக்கு
மன்னித்து, எல்லா அநியாயமும் [19]நம்மைவிட்டு
நீங்க நம்மைச் சுத்திகரிப்பதற்கு உண்மையும்
நீதியும் உள்ளவராய் இருக்கிறார்.—நாம் பாவம் ௰
செய்யவில்லை என்றோமானால், நாம் அவரைப்
பொய்யனாக்குகிறதாக இருக்கும்; அவருடைய
வார்த்தையும் நமக்குள்ளே இராது.

### உ. அதிகாரம்.

*க. அவர்களுடைய பலவீனத்தினால் உண்டாகும் பாவங்களைக்குறித்து ஆறுதல்சொல்லி, ௩. பராபரனுடைய கற்பனைகளைக் கைக்கொண்டு, ௯. சகோதரரைச் சிநேகித்து, ௰௫. உலகத்தை நேசியாமல் இருப்பதே பராபரனை அறிகிற அறிவென்று காட்டி, ௰௮. எதிராளிகளுக்கு எச்சரிக்கையாயிருக்கவும், ௨௰. விசுவாச உறுதியும் பரிசுத்த நடக்கையுமுள்ள உத்தமர்கள் எதிரிகளின் மோசங்களுக்கு விலகியிருப்பார்கள் என்றுஞ் சொல்லியது.*

என் பிள்ளைகளே, நீங்கள் பாவஞ்செய்யாதப க
டிக்கு இவைகளை உங்களுக்கு எழுதுகிறேன்;
ஒருவன் பாவஞ்செய்தாலும் நீதிஉள்ளவராயிருக்
கிற இயேசுக்கிறிஸ்து என்னும் [20]காரியகர்த்தர்
நமக்காகப் பிதாவினிடத்தில் இருக்கிறார். —
[21]அவர் நம்முடைய பாவங்களை நிவிர்த்திசெய் உ
கிற பலியானவராயிருக்கிறார்; நம்முடைய பா

1 யோவா. க. க, க யோ. உ. ௰௪. 2 யோவா. க. ௰௪. உ பே. க. ௰௬. க யோ. ௪. ௰௪.—3 லூக். ௨௪. ௩௯. யோவா. ௨௰. ௨௭.—4 யோவா. க. ௪: ௰௧. ௨௫: ௰௪. ௬.—5 உரோ. ௰௬. ௨௬. க தீமோ. ௩. ௰௬. க யோ. ௩. ௫.—6 யோவா. க. க, உ. 7 யோவா. ௨௧. ௨௪. அப். உ. ௩௨. 8 க யோ. ௫. ௨௰.—9 அப். ௪. ௨௰. 10 யோவா. ௰௭. ௨௧. க கொரி. க. ௯. க யோ. உ. ௨௪.—11 யோவா. ௰௫. ௰௧: ௰௬. ௨௪. உ யோ. ௰௨. 12 க யோ. ௩. ௰௧.—13 யோவா. க. ௯: அ. ௰௨: ௯. ௫: ௰௨. ௩௫, ௩௬.

14 உ கொரி. ௬. ௰௪. க யோ. உ. ௪. 15 க கொரி. ௬. ௰௧. எபே. க. ௭. எபி. ௯. ௰௪. க பே. க. ௰௯. க யோ. உ. உ. வெளி. க. ௫.—16 க இரா. அ. ௪௬. உ நாளா. ௬. ௩௬. யோபு ௯. உ: ௰௫. ௰௪: ௨௰. ௪. வாக். ௩௰. ௯. பிர. ௭. ௨௰. யாக். ௩. உ. 17 க யோ. உ. ௪.—18 சங். ௩௨. ௫. வாக். ௨௮. ௰௩.—19 சங். ௫௧. உ. ௭. ௱௪.—20 உரோ. அ. ௩௪. க தீமோ. உ. ௫. எபி. ௭. ௨௫: ௯. ௨௪.—21 உரோ. ௩. ௨௫. உ கொரி. ௫. ௰௮. க யோ. ௪. ௭: ௪. ௰.

வங்களுக்காகமாத்திரமல்ல, [1]சர்வலோகத்தினு
டைய பாவங்களுக்காகவும் (அப்படியே இருக்
கிறார்).
ங அவருடைய கற்பனைகளை நாம் கைக்கொள்
ளுகிறவர்களானால், அவரை அறிந்துகொண்டி
ருக்கிறோம் என்று அதினாலே அறிவோம்.—
ச அவருடைய கற்பனைகளைக் கைக்கொள்ளாமல்
[2]அவரை அறிந்துகொண்டேன் என்று சொல்லு
கிறவன் [3]பொய்யனாய் இருக்கிறான்; சத்தியம்
ரு அவனுக்குள்ளே இல்லை.—[4]அவருடைய வச
னத்தைக் கைக்கொள்ளுகிறவனிடத்திலே [5]பரா
பரனுடைய அன்பு மெய்யாக நிறைவேறியிருக்
கின்றது; [6]நாம் அவருக்குள் இருக்கிறதை அதி
சு னாலே அறிந்திருக்கிறோம்.—[7]அவரிடத்தில் நிலைத்
திருக்கிறேன் என்று சொல்லுகிறவன் அவர்
நடந்தபடியே [8]தானும் நடக்கவேண்டும்.

எ பிரியமானவர்களே, [9]நான் உங்களுக்குப்
புதிய கற்பனையை அல்ல, [10]ஆதிமுதல் நீங்கள்
பெற்றிருக்கிற பழமையான கற்பனையையே
எழுதுகிறேன்; அந்தப் பழமையான கற்பனை
நீங்கள் ஆதிமுதல் கேட்டுக்கொண்ட வசன
அ மே.—அன்றியும் [11]நான் உங்களுக்குப் புதிய
கற்பனையையும் எழுதுகிறேன்; [12]இருள் நீங்கிப்
போக [13]மெய்யான ஒளி இப்பொழுது பிரகாசிக்
கிறபடியால், இது அவரைக்குறித்தும் உங்களைக்
கூ குறித்தும் மெய்யாயிருக்கின்றது.—தன் சகோ
தரனைப் பகைத்து, [14]அந்த ஒளியிலே இருக்கி
றேன் என்று சொல்லுகிறவன் இதுவரைக்குமே
௰ இருளில் இருக்கிறான்.—[15]தன் சகோதரனிடத்
தில் அன்புகூருகிறவன் ஒளியிலே நிலைகொண்
டிருக்கிறான்; [16]இடறல்* அவனிடத்திலே இல்
௰க லை.—தன் சகோதரனைப் பகைக்கிறவன் இரு
ளிலேயிருந்து [17]இருளிலே நடந்து, இருளானது
தன் கண்களைக் குருடாக்கினபடியால், தான்
நடக்கிற இடம் இன்னதென்று அறியாமல்
இருக்கிறான்.

௰உ பிள்ளைகளே, அவருடைய நாமத்தின் நிமித்
தம் உங்கள் [18]பாவங்கள் மன்னிக்கப்படுகிறதால்
௰ங உங்களுக்கு எழுதுகிறேன்.—பிதாக்களே, [19]ஆதி
முதலாய் இருக்கிறவரை நீங்கள் அறிந்திருக்கிற
தால் உங்களுக்கு எழுதுகிறேன்; வாலிபரே,
பொல்லாங்கனை நீங்கள் செயித்ததால் உங்க
ளுக்கு எழுதுகிறேன்; குழந்தைகளே, நீங்கள்
பிதாவை அறிந்திருக்கிறதால் உங்களுக்கு எழுது
௰ச கிறேன்.—பிதாக்களே, ஆதிமுதலாய் இருக்கிற
வரை நீங்கள் அறிந்திருக்கிறதால், உங்களுக்கு
எழுதினேன்; வாலிபரே, தேவவசனம் உங்களி
டத்தில் தரித்திருக்க, நீங்கள் [20]பெலனுள்ளவர்
களாய்ப் பொல்லாங்கனைச் செயித்ததால் உங்க
ளுக்கு எழுதினேன்.

[21]உலகத்திலேயும், உலகத்தில் உள்ளவைகளி ௰ரு
லேயும் அன்புகூராதிருப்பீர்களாக; [22]உலகத்
தில் அன்புகூருகிறவன் பிதாவின்மேல் அன்
பில்லாதவனாய் இருக்கிறான்.—எப்படியெனில், ௰சு
மாம்சத்தின் இச்சையும் [23]கண்களுடைய இச்
சையும் சீவனத்தின் பெருமையுமாகிய உலகத்தி
லுள்ள இவையெல்லாம் பிதாவினால் உண்டா
யிராமல், உலகத்தினால் உண்டாயிருக்கின்றன.—
[24]உலகமும் அதின் இச்சையும் ஒழிந்துபோகும்; ௰எ
பராபரனுடைய சித்தத்தின்படி செய்கிறவனே
என்றென்றைக்கும் நிலைநிற்பான்.

[25]குழந்தைகளே, (இது) [26]கடைசி நேரமாய் ௰அ
இருக்கின்றது; [27]கிறிஸ்துவின் எதிராளி வருகி
றான் என்று நீங்கள் கேள்விப்பட்டிருக்கிறபடி,
[28]இப்பொழுதே கிறிஸ்துவின் எதிராளிகள் அ
நேகர் உண்டாயிருக்கிறார்கள்; [29]அதினாலே இது
கடைசி நேரமாயிருக்கிறது என்று அறிகிறோம்.—
அவர்கள் [30]நம்மிடத்திலிருந்து புறப்பட்டார் ௰கூ
கள்; ஆகிலும் அவர்கள் நம்மைச் சேர்ந்தவர்க
ளல்ல, [31]நம்மைச் சேர்ந்தவர்களாய் இருந்தார்க
ளானால் நம்முடனே தரித்திருப்பார்களே; [32]எல்
லாரும் நம்மைச் சேர்ந்தவர்களல்ல என்று வெளி
யாகும்படிக்கே (புறப்பட்டார்கள்).—[33]நீங்கள் உ௰
பரிசுத்தராலே [34]அபிஷேகத்தைப் பெற்று, [35]சக
லத்தையும் அறிந்திருக்கிறீர்கள்.— சத்தியத்தை உக
நீங்கள் அறியாததாகவல்ல, நீங்கள் அதையும்
சத்தியத்தால் ஒரு பொய்யும் உண்டாயிராதென்
பதையும் அறிந்திருக்கிறபடியால், உங்களுக்கு
எழுதினேன்.—இயேசு என்பவர் கிறிஸ்துவல்ல உஉ
என்று மறுதலிக்கிறவனேயன்றி [36]வேறு யார்
பொய்யன்? பிதாவையும் குமாரனையும் மறுதலிக்
கிறவனே கிறிஸ்துவுக்கு எதிராளியானவன்.—
[37]குமாரனை மறுதலிக்கிறவன் பிதாவை உடைய உங
வன் அல்ல, [38]குமாரனை அறிக்கைபண்ணிக்
கொள்ளுகிறவன் பிதாவையும் உடையவனாய்
இருக்கிறான்.

ஆகையால், [39]ஆதிமுதல் நீங்கள் கேள்விப் உச
பட்டது உங்களில் நிலைத்திருக்கக்கடவது; ஆதி
முதல் நீங்கள் கேள்விப்பட்டது உங்களில்
நிலைத்திருந்தால், [40]நீங்களும் குமாரனிலும் பிதா
விலும் நிலைத்திருப்பீர்கள்.—அவர் நமக்கு வாக் உரு

1 யோவா. க. உகூ: ச சஉ.; ௰க. ௫க, ௫உ. க யோ ச. ௰ச.—2 க யோ. க. கூ: ச. உ௰.—3 க யோ. க. அ. 4 யோவா ௰ச. உக, உங.—5 க யோ. ச. ௰உ.—6 க யோ. ச. ௰ங. 7 யோவா. ௰ரு. ச, ரு.—8 மத். ௰க. உகூ. யோவா. ௰ங. ௰ரு. க பே. உ. உக.—9 உ யோ. ரு. 10 க யோ. ங. ௰க. உ யோ. ரு. 11 யோவா. ௰ங. ௩ச: ௰ரு. ௰உ. 12 உ ரோ. ௰ங. ௰உ. எபே. ரு. அ. க தெச. ரு. ரு, அ.—13 யோவா. க. கூ: அ. ௰உ: ௰உ. ௩ரு.—14 க கொரி. ௰ங. உ. உ பே. க. கூ. க யோ. ங. ௰ச, ௰ரு.—15 க யோ. ங. ௰ச. 16 உ பே. க. ௰.—17 யோவா. ௰உ. ௩ரு. 18 லூக். உச. சஎ. அப். ச. ௰உ: ௰. சங: ௰ங. ௩அ. க யோ. க. எ. 19 க யோ. க. க.—20 எபே. சு. ௰. 21 உ ரோ. ௰உ. உ.—22 மத். கூ. உச. ௩லா. க. ௰. யாக். ச. ச.—23 பிரச. உஅ, உகூ. உ தீமோ. உ. ௰கூ. ரு. ௰க.—24 க கொரி. எ. ௩க. யாக். ௨௨ க கொரி. ௰க. ௰கூ.—33 மாற். க. க. ௰: ச. ௰ச. க பே. க. உச. 25 யோவா. உக. ரு.—26 எபி. க. உ. 27 உ தெச. உ. ௩ழு. உ பே. உ. க. ௩க யோ. ச. ௩.—28 மத். உச. ரு, உச. உ யோ. எ.—29 க தீமோ. ச. க. உ தீமோ. ௩. க.—30 ரு மோ. ௰ங. ௰ங. சங். சக. கூ. அப் உ௰. ௩௰. உச. அப். க. ௰ச.—34 உ கொரி. க. உக. எபி. க. கூ. உஎ. லச. 35 யோவா. ௰. ச. ரு: ௰ச. உக: ௰கூ. ௰ங. உஎ. லச.—36 க யோ. ச. ங. உ யோ. எ.—37 யோவா. ௰ரு. உங. உ யோ. கூ.—38 யோவா. ௰ச. எ, கூ, ௰. க யோ. ச. ௰ரு.—39 உ யோ. சு. 31 மத். உச. உச. யோவா. ௩. ௩௰: ௰. 40 யோவா. ௰ச. உங. க யோ. க. ங.

* அல்லது இடறப்பண்ணுதல்.

குத்தத்தம்பண்ணின பொருள் [1]நித்தியசீவனே;
[2]உங்களை வஞ்சிக்கத் தேடுகிறவர்களைக்குறித்து
௨௬ இவைகளை உங்களுக்கு எழுதினேன்.—அப்ப
டியிருந்தும், நீங்கள் அவராலே பெற்ற [3]அபி
ஷேகம் உங்களில் நிலைகொண்டு இருக்கிறதால்
[4]ஒருவரும் உங்களுக்குப் போதிக்கவேண்டுவ
௨௭ தில்லை.—அந்த [5]அபிஷேகம் சகல காரியங்களை
யுங்குறித்து உங்களுக்குப் போதிக்கிறதே பொய்
யில்லாமல் சத்தியமாயிருக்கின்றது; ஆகையால்
அது உங்களுக்குப் போதித்தபடியே அவரில் *
நிலைத்திருப்பீர்களாக.
௨௮ இப்படியிருக்கப் பிள்ளைகளே, [6]அவர் வெ
ளிப்பட்டுப் பிரசன்னமாய் வரும்பொழுது, நாம்
அவரால் [7]வெட்கப்படுத்தப்படாமல் தயிரியமு
ள்ளவர்களாய் இருக்கும்படிக்கு அவரில் நிலைத்
௨௯ திருங்கள்.—[8]அவர் நீதியுள்ளவராய் இருக்கிறார்
என்பது உங்களுக்குத் தெரிந்திருக்க, [9]நீதியைச்
செய்கிறவன் எவனோ அவன் அவரில் பிறந்
தான் என்று அறிந்திருக்கிறீர்கள்.†

## ௩. அதிகாரம்.

௧. நாம் தமக்குப் பிள்ளைகளாகும்படி பராபரன் நம்மிடத்தில் வைத்த அன்பு இன்னதென்றும், ௩. அதினால் நாம் அவருடைய கற்பனைகளைக் கைக்கொண்டு, ௰௧. ஒருவரில் ஒருவர் அன்புகூரவேண்டுமென்றும் சொல்லியது.

௧ [10]நாம் பராபரனுடைய பிள்ளைகள் என்று
அழைக்கப்படும்படி (செய்ததினாலே) பிதாவா
னவர் நமக்குக் காண்பித்த மிகுந்த அன்பை
நோக்கிப் பாருங்கள்; [11]உலகத்தார் அவரை அறி
யாதபடியினாலே நம்மை அறியாமல் இருக்கிறார்
௨ கள்.—பிரியமானவர்களே, [12]இப்பொழுது பரா
பரனுடைய பிள்ளைகளாய் இருக்கிறோம்; (இனி
மேல்) இன்ன இன்னவிதமாய் இருப்போம்
என்று [13]இன்னம் வெளியரங்கமாகவில்லை; (ஆகி
லும்,) அவர் வெளிப்படும்பொழுது, [14]அவர்
இருக்கிற தன்மையாய் நாம் (அவரைத் தரிசிப்ப
தால்), [15]அவருக்கு ஒப்பாயிருப்போம் என்று
அறிந்திருக்கிறோம்.
௩ மேலும் இப்படி [16]அவர்மேல் நம்பிக்கையா
யிருக்கிறவன் எவனோ அவன் அவர் சுத்தமுள்
ளவராய் இருக்கிறதுபோலத் தன்னையும் சுத்தி
௪ கரித்துக்கொள்ளுகிறான்.—பாவம்செய்கிறவன்
எவனோ அவன் நியாயப்பிரமாணத்திற்கு விரோ
தம்செய்கிறான்; [17]பாவமானது நியாயப்பிரமா
௫ ணத்திற்கு விரோதமாயே இருக்கின்றது.—அன்
றியும் நீங்கள் அறிந்துகொண்டபடி [18]அவர் நம்
முடைய பாவங்களை நீக்கும்படிக்கு [19]வெளிப்
பட்டார்; [20]அவரிடத்திலே பாவம் இல்லை.—
அவரிடத்தில் நிலைத்திருக்கிறவன் எவனோ ௬
அவன் பாவம்செய்கிறதில்லை; [21]பாவம்செய்கிற
வன் எவனோ அவன் அவரைக் காணவும் இல்லை,
அவரை அறியவும் இல்லை.
பிள்ளைகளே, [22]நீங்கள் ஒருவராலும் வஞ்சிக் ௭
கப்படாதிருப்பீர்களாக; [23]நீதியைச் செய்கிற
வன் அவர் நீதி உள்ளவராயிருக்கிறதுபோல நீதி
உள்ளவனாயிருக்கிறான்.—பசாசானவன் ஆதி ௮
முதல் பாவம்செய்கிறான்; ஆகையால் [24]பாவம்
செய்கிறவன் பசாசினால் உண்டாயிருக்கிறான்;
அந்தப் [25]பசாசினுடைய கிரியைகளை அழிக்கும்
படிக்குப் பராபரனுடைய குமாரன் வெளிப்
பட்டார்.—[26]பராபரனில் பிறந்தவன் எவனோ ௯
அவனுக்குள்ளே [27]அவருடைய வித்துத் தரித்தி
ருக்கிறதால் அவன் பாவம்செய்யான்; அவன்
பராபரனிடத்திலே பிறந்தபடியால் பாவம்செய்
யமாட்டான்.
இதினாலே பராபரனுடைய பிள்ளைகளும் ௰
பசாசின் பிள்ளைகளும் வெளியரங்கமாகிறார்
கள்; [28]நீதியைச் செய்யாமலும் [29]தன் சகோதர
னிடத்தில் அன்புகூராமலும் இருக்கிறவன் எவ
னோ அவன் பராபரனால் உண்டானவன் அல்ல;
என்னத்தினாலென்றால்,—[30]நாம் ஒருவரில் ஒரு ௰௧
வர் அன்புகூரவேண்டும் என்பது நீங்கள் ஆதி
முதல் [31]அறிவிக்கக் கேட்ட விசேஷமாய் ‡ இரு
க்கின்றது.—பொல்லாங்கனால் உண்டாயிருந்து, ௰௨
தன் சகோதரனைக் கொலைசெய்த [32]காயீனைப்
போல இருக்கக்கூடாது; அவன் எதின்நிமித்தம்
அவனைக் கொலைசெய்தான்? தன் கிரியைகள்
பொல்லாதவைகளுமாய்த் தன் சகோதரனுடைய
கிரியைகள் நீதியுள்ளவைகளுமாய் இருந்ததின்
நிமித்தமே அப்படிச் செய்தான்.—என் சகோ ௰௩
தரரே, [33]உலகத்தார் உங்களைப் பகைத்தால் ஆச்ச
ரியப்படாதிருப்பீர்களாக.—நாம் சகோதரரிடத் ௰௪
தில் அன்புகூருகிறபடியால் [34]மரணத்தைவிட்டு
நீங்கிச் சீவனுக்குட்பட்டிருக்கிறோம் என்று
அறிந்திருக்கிறோம்; [35]சகோதரனிடத்தில் அன்பு
கூராமல் இருக்கிறவன் மரணத்திலே நிலைகொ
ண்டிருக்கிறான்.—[36]தன் சகோதரனைப் பகைக் ௰௫
கிறவன் மனித கொலைபாதகனாய் இருக்கிறான்;
[37]மனித கொலைபாதகன் எவனோ அவனுக்குள்
ளே நித்தியசீவன் நிலைத்திராது என்று அறிந்தி
ருக்கிறீர்கள்.

1 யோவா. ௰௭. ௩. ௧ யோ. ௧. ௨: ௫. ௰௧.—2 ௧ யோ. ௩. ௭. ௨ யோ. ௭.—3 ௨௰. ௯௪.
4 எரே. ௩௧. ௩௩, ௩௪. எபி. ௮. ௰, ௰௧.
5 யோவா. ௰௪. ௨௬: ௰௬. ௰௩. ௨௰. ௯௪.
6 ௧ யோ. ௩. ௨.—7 ௧ யோ. ௪. ௰௭.
8 அப். ௨௨. ௰௪.—9 ௧ யோ. ௩. ௭, ௰.
10 யோவா. ௧. ௰௨.—11 யோவா. ௰௬. ௩, ௰௩: ௰௭. ௩: ௰௭. ௨௫.
12 ஏசா. ௫௬. ௫. ரோ. ௮. ௰௫. கலா. ௩. ௨௬: ௪. ௬. ௧ யோ. ௫. ௧.
13 ரோ. ௮. ௰௮. ௨ கொரி. ௪. ௰௭.
14 யோபு. ௰௯. ௨௬. சங். ௰௬. ௰௫. மத். ௫. ௮. ௧ கொரி. ௰௩. ௰௨. ௨ கொரி. ௫. ௮.—15 ரோ. ௮. ௨௯. ௧ கொரி. ௰௫. ௪௯. பிலி. ௩. ௨௧. கொலோ. ௩. ௪. ௨ பே. ௧. ௪.—16 ௧ யோ. ௪. ௰௭.
17 ரோ. ௪. ௰௫. ௧ யோ. ௫. ௰௭.
18 ஏசா. ௫௩. ௫, ௬, ௰௧. ௧ தீமோ. ௧. ௰௫. எபி. ௧. ௩: ௯. ௨௬. ௧ பே. ௨. ௨௪.—19 ௧ யோ. ௧. ௨.
20 ௨ கொரி. ௫. ௨௧. எபி. ௪. ௰௫: ௯. ௨௮. ௧ பே. ௨. ௨௨.
21 ௧ யோ. ௨. ௪: ௪. ௮. ௧ யோ. ௰௧.
22 ௧ யோ. ௨. ௨௬.—23 எசே. ௰௮. ௫. ௯. ரோ. ௨. ௰௩. ௧ யோ. ௨. ௨௯.—24 மத். ௰௩. ௩௮. யோவா. ௮. ௪௪.—25 ௧ மோ. ௩. ௰௫. லூக். ௰. ௰௮. யோவா. ௰௬. ௰௧. எபி. ௨. ௰௪.—26 ௧ யோ. ௫. ௰௮.
27 ௧ பே. ௧. ௨௩.—28 ௧ யோ. ௨. ௨௯.—29 ௧ யோ. ௪. ௮.—30 யோவா. ௰௩. ௩௪: ௰௫. ௰௨, ௨௩. ௧ யோ. ௪. ௭, ௨௧. ௨ யோ. ௫.
31 ௧ யோ. ௧. ௫: ௨. ௭.—32 ௧ மோ. ௪. ௪, ௮. எபி. ௰௧. ௪. யூதா. ௰௧.
33 யோவா. ௰௫. ௰௮, ௰௯: ௰௭. ௰௪. ௨ தீமோ. ௩. ௰௨.—34 ௧ யோ. ௨. ௰.—35 ௧ யோ. ௨. ௯, ௰௧.
36 மத். ௫. ௨௧, ௨௨. ௧ யோ. ௪. ௨௰.
37 கலா. ௫. ௨௧. வெளி. ௨௧. ௮.

* அல்லது அதில்.—† அல்லது அறியுங்கள்.—‡ அல்லது கட்டளையாய்.

௰௬ அவர் தம்முடைய சீவனை நமக்காக விட்டு
விட்டதினாலே [1]அன்பு இன்னதென்று அறிந்
தோம்; நாமும் சகோதரருக்காக நமது சீவனை
விட்டுவிடக் கடனாளிகளாய் இருக்கிறோம்.—
௰௭ ஒருவன் [2]இவ்வுலக சீவனம் உடையவனாயி
ருந்து, தன் சகோதரனுக்குக் குறைச்சல் உண்
டென்று கண்டு, தன் இருதயத்தை அவனுக்கு
அடைத்துக்கொண்டால், [3]அவனுக்குள்ளே பரா
பரனுடைய அன்பு எப்படி நிலையாயிருக்கும்?—
௰௮ என் பிள்ளைகளே, [4]வசனத்தினாலும் நாவினாலும்
அல்ல, கிரியைகளினாலும் உண்மையினாலும்
அன்புகூரக்கடவோம்.
௰௯ அதினாலே [5]நாம் சத்தியமுள்ளவர்கள் என்று
அறிந்து, நமது இருதயத்தை அவருக்குமுன்பாக
௨௰ நிச்சயப்படுத்தலாம்.* — [6]நமது இருதயமே நம்
மைக் குற்றவாளிகளாகத் தீர்க்குமானால், நம்மு
டைய இருதயத்திலும் பராபரன் பெரியவராய்
இருக்கிறார் என்றும், சகலத்தையும் அறிந்திருக்
௨௧ கிறார் என்றும் (நினைப்போமாக).—[7]பிரியமான
வர்களே, [8]நம்முடைய இருதயம் நம்மைக் குற்ற
வாளிகள் என்று தீர்ப்புச்சொல்லாதிருந்தால்,
நாம் பராபரனிடத்தில் தயிரியம்கொள்வோம்.—
௨௨ மேலும் அவருடைய கற்பனைகளை நாம் கைக்
கொண்டு, [9]அவருக்குமுன்பாக பிரியமானவை
களைச் செய்கிறபடியினாலே, [10]நாம் வேண்டிக்
கொள்வது எதோ, அதை அவராலே பெற்றுக்
௨௩ கொள்வோம்.—நாம் [11]அவருடைய குமாரனாகிய
இயேசுக்கிறிஸ்துவின் நாமத்தின்மேல் விசுவாச
மாயிருந்து, [12]அவர் நமக்குக் கட்டளையிட்டபடி
[13]ஒருவரில் ஒருவர் அன்பாயிருக்கவேண்டு
மென்ற இதுவே பராபரனுடைய கட்டளையாய்
௨௪ இருக்கின்றது.—[14]அவருடைய கட்டளைகளைக்
கைக்கொள்ளுகிறவன் [15]அவரிடத்தில் நிலைத்
திருக்கிறான்; அவரும் அவனிடத்தில் நிலைத்தி
ருக்கிறார்; [16]அவர் நம்மிடத்தில் நிலைத்திருக்கிற
தை அவர் நமக்குத் தந்த ஆவியினாலே அறிந்
திருக்கிறோம்.

## ௪. அதிகாரம்.

*௧. ஆவியை உடையவர்கள் என்று சொல்லிக்கொள்ளுகிற எல்லாப் போதகர்களையும் நம்பாமல், அவர்களைச் சாதாரண சத்திய விசுவாசத்தின் ஒழுங்குக்குக் காத்திருக்கிறார்களா என்று சோதித்துப்பார்க்க எச்சரித்து, ௭. சகோதரசிநேகத்தைக் கைக்கொள்ளப் புத்திகள் சொல்லியது.*

௧ [17]பிரியமானவர்களே, உலகத்திலே அநேகம்
கள்ளத்தீர்க்கதரிசிகள் தோன்றினபடியால், [18]நீங்
கள் எந்த ஆவியையும் நம்பாமல் அந்த ஆவிகள்
பராபரனால் உண்டானவைகளோ என்று [19]சோ
தித்து அறியுங்கள். — பராபரனால் உண்டான ௨
ஆவியை நீங்கள் எதினாலே அறியலாமென்றால்,
[20]இயேசுக்கிறிஸ்து மாம்சத்திலே வந்தார் என்று
அறிக்கைபண்ணுகிற ஆவி எதுவோ, அது பரா
பரனால் உண்டாயிருக்கின்றது. — [21]இயேசுக் ௩
கிறிஸ்து மாம்சத்திலே வந்தார் என்று அறிக்கை
பண்ணாத ஆவி எதுவோ, அது பராபரனால் உண்
டாயிருக்கிறதல்ல; அதுவே கிறிஸ்துவுக்கு எதி
ராளியானவனுடைய ஆவி; அது வருகிறதென்று
நீங்கள் கேள்விப்பட்டீர்கள்; [22]அது இப்பொ
ழுதே உலகத்தில் இருக்கின்றது.
பிள்ளைகளே, [23]நீங்கள் பராபரனால் உண்டா ௪
யிருந்து, [24]உலகத்தில் இருக்கிறவனிலும் உங்
களில் இருக்கிறவர் பெரியவரானதால் அவர்க
ளைச் செயித்தீர்கள்.—அவர்கள் [25]உலகத்தாரின் ௫
தன்மையை உடையவர்கள்; ஆனபடியால் உல
கத்தாரின் தன்மையாய்ப் பேசுகிறார்கள்; [26]உல
கத்தாரும் அவர்களுக்குச் செவிகொடுக்கிறார்
கள். — நாங்கள் பராபரனுடைய தன்மையை ௬
உடையவர்கள்; [27]பராபரனை அறிந்துகொண்ட
வன் எங்களுக்குச் செவிகொடுக்கிறான்; பராபர
னுடைய தன்மை இல்லாதவன்மாத்திரம் எங்க
ளுக்குச் செவிகொடுக்கிறதில்லை; இதினாலே
[28]சத்திய ஆவியையும் வஞ்சக ஆவியையும் அறிந்
திருக்கிறோம்.
[29]பிரியமானவர்களே, அன்பு பராபரனால் ௭
உண்டாயிருக்கிறபடியால் ஒருவரில் ஒருவர்
அன்பாயிருக்கக்கடவோம்; அன்புள்ள யாவரும்
பராபரனில் பிறந்து அவரை அறிந்திருக்கிறார்
கள்.—[30]பராபரன் அன்பாகவே இருக்கிறபடி ௮
யால், [31]அன்பில்லாதவன் பராபரனை அறியான்.-
பராபரனுடைய ஒரேபேறான குமாரனாலே ௯
[32]நாம் பிழைக்கும்படிக்கு அவரை இவ்வுலகத்
திலே அனுப்பினதினாலே, [33]பராபரன் நமது
மேல் வைத்த அன்பு வெளிப்பட்டது.—[34]நாம் ௰
பராபரனிடத்தில் அன்புகூர்ந்ததினால் அல்ல,
அவர் நம்மிடத்தில் அன்புகூர்ந்து, நம்முடைய
பாவங்களை நீக்கும் கிருபை உண்டாகும்படி,
[35]தம்முடைய குமாரனை அனுப்பினதினாலே
அன்பு உண்டாயிருக்கின்றது.—பிரியமானவர் ௰௧
களே, [36]பராபரன் இவ்விதமாய் நம்மிடத்தில்
அன்புகூர்ந்தபடியால் நாமும் ஒருவரிடத்தில்

1 யோவா. ௩. ௰௬: ௰௫. ௰௩. உரோ. ௫. ௮. எபே. ௫. ௨, ௨௫. ௧ யோ. ௪. ௯, ௰.—2 ௫ மோ. ௰௫. ௭. லூக். ௩. ௰௧.—3 ௧ யோ. ௪. ௨௰.
4 எசே. ௩௩. ௩௧, உரோ. ௰௨. ௯. எபே. ௪. ௰௫. யாக். ௨. ௰௫, ௰௬. ௧ பே. ௧. ௨௨.—5 யோவா. ௰௮. ௩௭. ௧ யோ. ௧. ௮.—6 ௧ கொரி. ௪. ௪.—7 யோபு. ௨௨. ௨௬.
8 எபி. ௰. ௨௨. ௧ யோ. ௨. ௨௮: ௪. ௰௭.—9 யோவா. ௮. ௨௯: ௯. ௩௧.—10 சங். ௩௪. ௰௫: ௱௪௫. ௰௮, ௰௯. யாக். ௫. ௰௬. எரே. ௨௯. ௰௨. மத். ௭. ௮: ௨௧. ௨௨. மாற். ௰௧. ௨௪. யோவா. ௰௪. ௰௩: ௰௫. ௭: ௰௬. ௨௩, ௨௪. யாக். ௫. ௰௬. ௧ யோ. ௫. ௰௪.—11 யோவா. ௬. ௨௯: ௰௭. ௩.—12 ௧ யோ. ௨. ௮, ௰.—13 மத். ௨௨. ௩௯. யோவா. ௰௩. ௩௪: ௰௫. ௰௨. எபே. ௫. ௨. ௧ தெச. ௪. ௯. ௧ பே. ௪. ௮. ௰௧. வச. ௧ யோ. ௪. ௨௧.—14 யோவா. ௰௪. ௨௩: ௰௫. ௰. ௧ யோ. ௪. ௰௨.
15 யோவா. ௰௭. ௨௧.—16 உரோ. ௮. ௯. ௧ யோ. ௪. ௰௩.—17 மத். ௨௪. ௫, ௨௪. அப். ௨௰. ௩௰. ௧ தீமோ. ௪. ௧. ௨ பே. ௨. ௧. ௧ யோ. ௨. ௰௮. ௨ யோ. ௭.
18 எரே. ௨௯. ௮. மத். ௨௪. ௪.
19 ௧ கொரி. ௰௪. ௨௯. ௧ தெச. ௫. ௨௧. வெளி. ௨. ௨.—20 ௧ கொரி. ௰௨. ௩. ௧ யோ. ௫. ௧.—21 ௧ யோ. ௨. ௨௨. ௨ யோ. ௭.—22 ௨ தெச. ௨. ௭. ௧ யோ. ௨. ௰௮, ௨௨.
23 ௧ யோ. ௫. ௪.—24 யோவா. ௰௨. ௩௧: ௰௪. ௩௰: ௰௬. ௰௧. ௧ கொரி. ௨. ௰௨. எபே. ௨. ௨: ௬. ௰௨.
25 யோவா. ௩. ௩௧.—26 யோவா. ௰௫. ௰௯: ௰௭. ௰௪.—27 யோவா. ௮. ௪௭: ௰. ௨௭. ௧ கொரி. ௰௪. ௩௭. ௨ கொரி. ௰. ௭.—28 ஏசா. ௮. ௨௰. யோவா. ௰௪. ௰௭.—29 ௧ யோ. ௩. ௰, ௰௧, ௨௩.—30 ௰௬. வச.
31 ௧ யோ. ௨. ௪: ௩. ௬.—32 ௧ யோ. ௫. ௰௧.—33 யோவா. ௩. ௰௬. உரோ. ௫. ௮: ௮. ௩௨. ௧ யோ. ௩. ௰௬.—34 யோவா. ௰௫. ௰௬. உரோ. ௫. ௮, ௰. தீத். ௩. ௪.
35 ௧ யோ. ௨. ௨.—36 மத். ௰௮. ௩௩. யோவா. ௰௫. ௰௨, ௰௩. ௧ யோ. ௩. ௰௬.

* கிரேக்கு, சம்மதிக்கப்பண்ணலாம்.

ஒருவர் அன்புகூரக் கடனாளிகளாய் இருக்கி
றோம்; [1]பராபரனை ஒருவரும் ஒருக்காலும் காண
௰௨ வில்லை.—நாம் ஒருவரிடத்தில் ஒருவர் அன்பு
கூர்ந்தால் பராபரன் நமக்குள்ளே நிலைத்திருப்
பார்; [2]அவருடைய அன்பு நம்மிடத்தில் நிறை
௰௩ வுள்ளதாயும் இருக்கும்.—அவர் தம்முடைய
ஆவியில் நமக்குக் கொடுத்ததினாலே நாம் அவரி
லும் [3]அவர் நம்மிலும் நிலைத்திருக்கிறதை அறிந்
திருக்கிறோம்.
௰௪ [4]பிதாவானவர், குமாரனை உலக இரட்சகராக
அனுப்பினதை [5]நாங்கள் பார்த்திருந்து சாட்சி
௰௫ யிடுகிறோம்.—இயேசுவானவர் பராபரனுடைய
குமாரனென்று [6]அறிக்கைபண்ணுகிறவன் எவ
னோ, அவனிடத்தில் பராபரன் நிலைத்திருக்கி
றார்; பராபரனிடத்திலே அவனும் நிலைத்திருக்
௰௬ கிறான்.—பராபரன் நமதுமேல் வைத்திருக்கிற
அன்பை நாம் அறிந்து விசுவாசித்திருக்கிறோம்;
[7]பராபரன் அன்பாகவே இருக்கிறார்; [8]அன்பிலே
நிலைத்திருக்கிறவன் பராபரனிடத்தில் நிலைத்தி
ருக்கிறான்; பராபரனும் அவனிடத்திலே நிலைத்
௰௭ திருக்கிறார்.—நியாயத்தீர்ப்பின் நாளிலே [9]நமக்
குத் தயிரியம் உண்டாயிருக்கத்தக்கதாக, அன்பு
நம்மிடத்தில்* நிறைவுள்ளதாயிற்று; ஆனதால்
[10]அவர் இருக்கிற பிரகாரமாக நாமும் இந்த உல
௰௮ கத்தில் இருக்கிறோமே.—அன்பிலே பயமில்லை;
நிறைந்த அன்பு பயத்தைப் புறம்பே தள்ளுகின்
௰௯ றது; பயமானது வேதனையுள்ளதே.—[11]பயப்படு
கிறவன் நிறைந்த அன்புள்ளவன் அல்ல, அவர்
முந்தி நம்மிடத்தில் அன்புகூர்ந்தபடியால் நா
௨௰ மும் அவரிடத்தில் அன்புகூருகிறோம்.—ஒரு
வன் தன் சகோதரனைப் பகைத்து நான் [12]பரா
பரனிடத்தில் அன்புகூருகிறேன் என்று சொன்
னால், அவன் பொய்க்காரனாய் இருப்பான்; எப்
படியெனில், அவன் தான் கண்டிருக்கிற சகோ
தரனிடத்தில் அன்புகூராமலிருக்க, [13]தான்
காணாதிருக்கிற பராபரனிடத்திலே எப்படி அன்
௨௧ பாயிருப்பான்?—அன்றியும் பராபரனிடத்தில்
அன்புகூருகிறவன் தன் சகோதரனிடத்திலும்
அன்புகூரவேண்டுமென்ற [14]இந்தக் கட்டளை
யை அவராலே பெற்றிருக்கிறோம்.

## ௫. அதிகாரம்.

௧. பராபரனைச் சிநேகிக்கிறவன் பராபரனுடைய பிள்ளைகளையும் சிநேகித்து அவருடைய கட்டளைகளைக் கைக்கொண்டு, அந்தக் கட்டளைகள் விசுவாசிகளுக்குப் பாரமாயிராமல் இலேசாயிருக்கிறதென்று உணர்ந்திருப்பானென்றும், ௬. தேவசுதனாகிய இயேசுவானவர் எம்மை இரட்சிக்கவும், ௰௪. நாம் நமக்கும் மற்றவர்களுக்கும் செய்யும் வேண்டுதல்களைக் கேட்கவும் வல்லவரென்றும் சொல்லியது.

௧ [15]இயேசு என்பவரே கிறிஸ்து என்று [16]விசுவா
சிக்கிறவன் எவனோ, [17]அவன் பராபரனில்
பிறந்திருக்கிறான்; [18]அன்றியும் பிறப்பித்தவரி
டத்தில் அன்புகூருகிற யாவரும் அவரில் பிறந்
தவனிடத்திலும் அன்புகூருகிறார்கள்.—நாம் ௨
பராபரனிடத்திலே அன்புகூர்ந்து, அவருடைய
கற்பனைகளைக் கைக்கொண்டுவருகிறதினாலே
நம்மைப் பராபரனுடைய பிள்ளைகளிடத்தில்
அன்புகூருகிறவர்களென்று அறிந்துகொள்ளுகி
றோம்.—நாம் பராபரனுடைய கற்பனைகளைக் ௩
கைக்கொள்ளுகிறதே [19]அவரிடத்தில் அன்பு
கூருகிறதாம்; இப்படி [20]அவருடைய கற்பனை
கள் பாரமானவைகளும் அல்ல.—எப்படியெ ௪
னில், [21]பராபரனில் பிறந்தவன் எவனோ, அவன்
உலகத்தைச் செயிக்கிறான்; நம்முடைய விசுவா
சமே உலகத்தைச் செயிக்கிற செயம்.—[22]இயேசு ௫
வானவர் பராபரனுடைய குமாரனென்று விசு
வாசிக்கிறவனே அன்றி, வேறு யாவன் உலகத்
தைச் செயிக்கிறவன்?

இயேசுக்கிறிஸ்துவாகிய அவரே [23]சலத்தினா ௬
லும் இரத்தத்தினாலும் தோன்றிவந்தவர்; சலத்தி
னாலே மாத்திரமல்ல, சலத்தினாலும் இரத்தத்தினா
லுமே(வந்தார்); ஆவியானவர் சத்தியமாகையால்
[24]ஆவியானவரே சாட்சிகொடுக்கிறவர்.—ஆன ௭
தால் பரமண்டலத்திலே பிதா, [25]வார்த்தை, பரி
சுத்தஆவி என்று இம்மூவரும் சாட்சியிடுகிறார்
கள்; [26]அம்மூவரும் ஒன்றாய் இருக்கிறார்கள்.—
பூமியிலேயும் ஆவி, சலம், இரத்தமென்று இம் ௮
மூன்றும் சாட்சியிடுகின்றன, அம்மூன்றும் ஒன்
றாகப் பொருந்துகின்றன.

[27]நாம் ஏற்றுக்கொள்ளுகிற மனிதருடைய ௯
சாட்சியிலும், பராபரனுடைய சாட்சி அதிக
மாய் இருக்கின்றது; [28]பராபரன் தம்முடைய
குமாரனைக்குறித்துக் கொடுத்த சாட்சி அதுவே.—
பராபரனுடைய குமாரனிடத்தில் விசுவாசமா ௰
யிருக்கிறவன் [29]அந்தச் சாட்சியைத் தனக்குள்
ளே கொண்டிருக்கிறான்; பராபரனை விசுவாசி
யாதவன் [30]அவரைப் பொய்யன் என்கிறவனாய்
இருக்கிறான்; பராபரன் தம்முடைய குமாரனைக்
குறித்துக் கொடுத்த சாட்சியை விசுவாசிக்கவில்
லையே.—அந்தச் சாட்சி என்னவெனில், [31]பரா ௰௧
பரன் நமக்கு நித்தியசீவனைக் கொடுத்திருக்
கிறார்; [32]அந்தச் சீவன் அவருடைய குமாரனில்
இருக்கிறதென்பதே.—[33]குமாரனை உடையவன் ௰௨
அந்தச் சீவனை உடையவனாய் இருக்கிறான்;
பராபரனுடைய குமாரனில்லாதவன் அந்தச்
சீவன் இல்லாதவனாய் இருக்கிறான்.

[34]பராபரனுடைய குமாரனுடைய நாமத்தில் ௰௩
விசுவாசமாயிருக்கிற நீங்கள், நித்தியசீவனை

1 யோவா. ௧. ௰௮. ௧ தீமோ. ௬. ௰௬. ௨௰. வச.—2 ௧ யோ. ௨. ௫. ௰௮. வச.—3 யோவா. ௰௪. ௨௰. ௧ யோ. ௩. ௨௪.—4 யோவா. ௩. ௰௭.—5 யோவா. ௧. ௰௪. ௧ யோ. ௧. ௧, ௨.—6 உரோ. ௰. ௯. ௧ யோ. ௫. ௧, ௫.—7 அ. வச. 8 ௧ யோ. ௩. ௨௪, ௰௨. வச.-9 யாக். ௨. ௰௩. ௧ யோ. ௨. ௨௮: ௩. ௰௯, ௨௧.—10 ௧ யோ. ௩, ௩.—11 ௰௨. வச.—12 ௧ யோ. ௨. ௪: ௩. ௰௭. 13 ௪௨. வச.—14 மத். ௨௨, ௩௭, ௩௯. யோவா. ௰௩, ௩௪: ௰௫. ௰௨. ௧ யோ. ௩. ௨௩.—15 ௧ யோ. ௨. ௨௨, ௨௩: ௪. ௨, ௰௫.—16 யோவா. ௧. ௰௨. 17 யோவா ௧. ௰௩.—18 யோவா. ௰௫. ௨௩.—19 யோவா. ௰௪. ௰௫, ௨௧, ௨௩: ௰௫. ௰. ௨ யோ. ௬. 20 மீகா. ௬. ௮. மத். ௰௧. ௩௰.—21 யோவா. ௰௬. ௩௩. ௧ யோ. ௩. ௯: ௪. ௪. 22 ௧ கொரி. ௰௫. ௫௭. ௧ யோ. ௪. ௰௫.—23 யோவா. ௰௯. ௩௪. 24 யோவா. ௰௪. ௰௭: ௰௫. ௨௬: ௰௬. ௰௩. ௧ தீமோ. ௩. ௰௬.—25 யோவா. ௧. ௧. வெளி. ௰௯. ௰௩. 26 யோவா ௰. ௩௰.—27 யோவா. அ ௰௭, ௰௮.—28 மத். ௩. ௰௬, ௰௭: லூ ௯.-29 உரோ. அ. ௰௬. கலா. ௪. ௬. 30 யோவா. ௩. ௩௩: ௫. ௩௮. 31 ௧ யோ. ௨. ௨௫.—32 யோவா. ௧. ௪. ௧ யோ. ௪. ௯.-33 யோவா. ௩. ௩௬: ௫. ௨௪.—34 ௧ யோ. ௩. ௩, ௨.

* அல்லது சமதன்பு.

உடையவர்களென்று அறிந்து, பராபரனுடைய
குமாரனுடைய நாமத்தின்மேலே விசுவாசமா
யிருக்கும்படிக்கு [1]இவைகளை உங்களுக்கு எழு
௰௪ தினேன். — [2]நாம் எதையாகிலும் அவருடைய
சித்தத்தின்படியே கேட்டால், அவர் நமக்குச்
செவிகொடுப்பார் என்பதே அவரால்* நமக்கு
௰௫ உண்டாயிருக்கிற தயிரியம். — அன்றியும் நாம்
எதைக்கேட்டாலும், அவர் நமக்குச் செவிகொ
டுப்பார் என்று நாம் அறிந்திருக்க, அவரிடத்தில்
நாம் பண்ணின விண்ணப்பங்களைப் பெற்றோ
மென்றும் அறிந்திருக்கிறோம்.

௰௬ ஒருவன் மரணத்திற்கு ஏதுவல்லாத பாவத்
தைத் தன் சகோதரன் செய்யக்கண்டால் (கர்த்
தாவை நோக்கிச்) செபம்பண்ணக்கடவன்; அப்
பொழுது அவர் அவனுக்கு மரணத்திற்கு ஏது
வல்லாத பாவத்தைச் செய்தவர்களுக்கு ஏற்ற
[3]உயிரைக் கொடுப்பார்; [4]மரணத்திற்கு ஏதுவான
பாவம் உண்டு; [5]அதைக்குறித்துச் செபம்பண்
௰௭ ணச் சொல்லமாட்டேன்.—[6]அநியாயம் யாவும்
பாவம்தான்; மரணத்திற்கு ஏதுவல்லாத பாவ
மும் உண்டு.

நாம் அறிந்துகொண்டபடி, [7]பராபரனில் ௰௮
பிறந்தவன் எவனோ அவன் பாவம்செய்யமாட்
டான்; பராபரனில் பிறந்தவன் [8]தன்னைக் காக்
கிறான்; ஆகையால் பொல்லாங்கன் அவனைத்
தொடான். — மேலும் நமக்குத் தெரிந்திருக்கிற ௰௯
படி, நாம் பராபரனால் உண்டாயிருக்கிறோம்;
[9]உலகமுழுவதும் பொல்லாங்கனுக்குள்ளே
கிடக்கின்றது.—மேலும் நமக்குத் தெரிந்திருக்கி ௨௰
றபடி நாம் மெய்யானவரை [10]அறிந்துகொள்வ
தற்குப் பராபரனுடைய குமாரன் வந்து, [11]நமக்
குப் புத்தியைக் கொடுத்தார்; அந்தப்படி நாம்
அவருடைய குமாரனாகிய இயேசுக்கிறிஸ்துவி
னுள்ள மெய்யானவரைப் பற்றியிருக்கிறோம்;
[12]அவரே மெய்யான தேவனுமாய் [13]நித்தியசீவ
னுமாய் இருக்கிறார்.

பிள்ளைகளே, [14]நீங்கள் விக்கிரகங்களுக்கு ௨௧
விலகி உங்களைக் காத்துக்கொள்வீர்களாக. —
ஆமென்.

1 யோவா. ௨௰. ௩௧.—2 ௧ யோ. ௩. ௨௨.—3 யோபு. ௪௨. ௮. யாக். ௫. ௰௪, ௰௫.—4 மத். ௰௨. ௩௧, ௩௨. மாற். ௩. ௨௯. லூக். ௰௨. ௰. எபி. ௬. ௪, ௬: ௰. ௨௬. 5 எரே. ௭. ௰௬: ௰௪. ௰௧. யோவா. ௰௭. ௯.—6 ௧ யோ. ௩. ௪. 7 ௧ பே. ௧. ௨௩. ௧ யோ. ௩. ௯.

8 யாக். ௧. ௨௭.—9 கலா. ௧. ௪. 10 யோவா. ௰௭. ௩.—11 லூக். ௨௪. ௪௫.—12 ஏசா. ௯. ௬: ௪௪. ௬: 13 ௪௫. யோவா. ௨௰. ௨௮. அப். ௨௰. ௨௮. ரோ. ௯. ௫. ௧ தீமோ. ௩. ௰௬. தீத். ௨. ௰௩. எபி. ௧. ௮. ௰௩. ௰௨. ௰௩. ௨௪.—14 ௧ கொரி. ௰. ௰௪.

* அல்லது அவனைக்குறித்து.

அப்போஸ்தலனாகிய

# யோவான் எழுதின

## இரண்டாம் நிருபம்.

௧. கனம்பொருந்திய ஒரு அம்மாளும், அவளுடைய பிள்ளைகளும் கிறிஸ்து மார்க்கத்துக்கடுத்த அன்பிலும், விசுவாசத்திலும் நிலைநின்று, அ. தங்கள் பலனை இழந்துபோகாதிருக்கவும், ௰. கிறிஸ்து இயேசுவின் சத்திய உபதேசத்தைக்கொண்டு வராத கள்ளப்போதகர்களை ஏற்றுக்கொள்ளாமல் இருக்கவும் அவர்களுக்குப் புத்திசொல்லியது.

௧ நம்மிடத்திலே நிலைநிற்கிறதுமாய், என்றென்
றைக்கும் நம்மோடு இருப்பதுமாய் இருக்கிற சத்
தியத்தின்நிமித்தம் நான்மாத்திரமல்ல, [1]சத்தியத்
தை அறிந்திருக்கிற மற்ற யாவரும் [2]உண்மை
௨ யாய்ச் சிநேகித்திருக்கிற — தெரிந்துகொள்ளப்
பட்ட அம்மாளுக்கும் அவளுடைய பிள்ளைக
ளுக்கும் மூப்பனாகிய நான் எழுதுகிறதாவது:—
௩ பிதாவாகிய பராபரனாலும் பிதாவின் குமாரனா
கிய கர்த்தாவாயிருக்கிற இயேசுக்கிறிஸ்துவினா
லும் [3]கிருபையும், இரக்கமும், சமாதானமும்,
[4]சத்தியத்தோடும் அன்போடும்கூட உங்களுக்கு
உண்டாயிருக்கக்கடவது.*

௪ உம்முடைய பிள்ளைகளில் சிலர் பிதாவினால்
நாம் கற்பனை அடைந்தபடி [5]சத்தியத்திலே நடக்
கிறவர்கள் என்று நான் கண்டு, மிகவும் சந்தோ
௫ ஷப்பட்டேன்.—இப்பொழுது அம்மாளே, [6]நான்
உமக்குப் புதிய கற்பனையாகவல்ல, ஆதிமுதல்
நமக்கு உண்டாயிருக்கிற கற்பனையாக எழுதி
வேண்டிக்கொள்ளுகிறது என்னவெனில், [7]நாம்
ஒருவரிடத்தில் ஒருவர் அன்புகூரவேண்டும்.—
௬ [8]நாம் அவருடைய கற்பனைகளின்படி நடக்கி
றதே அன்புகூருகிறதாம்; [9]நீங்கள் ஆதிமுதல்
கேட்டிருக்கிறபடி, அதிலே நடந்துகொள்ள
வேண்டும் என்பதே அந்தக் கற்பனையாய் இருக்
கின்றது.

[10]அநேக வஞ்சனைக்காரர் உலகத்திலே தோன் ௭
றியிருக்கிறார்கள்; [11]இயேசுக்கிறிஸ்துவானவர்
மாம்சமானார் என்று அறிக்கைபண்ணாமல் இருக்
கிறார்கள்; [12]இப்படிப்பட்டவனே வஞ்சனைக்
காரனுமாய் கிறிஸ்துவுக்கு எதிராளியுமாய் இருக்
கிறான்.—[13]நாம் நம்முடைய வேலைகளை † இழந் ௮
துபோகாமல் நிறைந்த பலனைப் பெறும்படிக்கு
[14]எச்சரிக்கையாயிருங்கள்.—கிறிஸ்துவின் உப ௯
தேசத்தில் நிலைநில்லாமல் [15]மீறி நடக்கிற எவ
னும் பராபரனை அடையாதவனாய் இருக்கிறான்;
கிறிஸ்துவின் உபதேசத்திலே நிலைநிற்கிறவ
னே பிதாவையும் குமாரனையும் அடைந்திருக்கி
றான்.—ஒருவன் உங்களிடத்தில் வந்து இந்த ௰
உபதேசத்தைக் கொண்டுவராமல் இருந்தால், அ
வனை நீங்கள் உங்கள் வீட்டிலே சேர்த்துக்கொள்
ளவும், [16]அவனுக்கு வாழ்த்துதல் சொல்லவும்
கூடாது.—அவனுக்கு வாழ்த்துதல் சொல்லுகிற ௰௧
வன் அவனுடைய துர்க்கிரியைகளுக்குப் பங்
காளனாகிறானே.

[17]நான் பின்னும் அநேகம் காரியங்களை உங்க ௰௨
ளுக்கு அறிவிக்கவேண்டும்; காகிதத்தினாலும்
மையினாலும் அப்படிச் செய்ய மனதில்லை;
[18]நமக்குச் ‡ சந்தோஷம் நிறைவாயிருக்கும்படிக்
கு உங்களிடத்தில் வந்து, முகமுகமாய்ப் §பே
சலாமென்று நம்பியிருக்கிறேன். — [19]தெரிந்து ௰௩
கொள்ளப்பட்ட உம்முடைய சகோதரியின்
பிள்ளைகள் உமக்கு வாழ்த்துதல் செய்கிறார்
கள். — ஆமன்.

1 யோவா. அ. ௩௨. கலா. உ. ரு, ௬: ௧. ௨.—4 ௧. ௯௪.—5 ௧ யோ. ௧. ௧. ௯: ௫. ௭. கொலோ. ௧. ௫. 6 ௧ யோ. ௨. ௭, அ: ௩. ௰௧.—7 யோ உ தெச. உ. ௰௩. ௧ தீமோ. உ. ௪. வா. ௰௩. ௩௪: ௰௫. ௰௨. ௭ பே. ௫. எபி ௰. ௨௩.—9 ௧ யோ. ௩. ௰அ. உ. ௩ பே. ௪. அ. ௧ யோ. ௩. ௨௩. ௩ யோ. ௩, ௩. ௯௪.—3 ௧ தீமோ. 8 யோவா. ௰௪. ௰௫, ௨௩: ௰௫. ௰. ௧ யோ. உ. ௫: ௫. ௩.—9 ௧ யோ. உ. உ. ௨௪.—10 ௧ யோ. ௪. ௩.—11 ௧ யோ. ௪. ௨, ௩.—12 ௧ யோ. ௨. ௨௨: ௪. ௩.—13 மாற். ௰௩. ௯.—14 கலா. ௩. ௪. எபி. ௰. ௩௨, ௩௫.—15 ௧ யோ. உ. ௨௩.—16 உரோ. ௰௬. ௰௭. ௧ கொரி. ௫. ௰௧: ௰௬. ௨௨. கலா. ௧. அ, ௯. உ தீமோ. ௩. ௫. தீத். ௩. ௰. 17 ௩ யோ. ௰௩.—18 யோவா. ௰௭. ௰௩. ௧ யோ. ௧. ௪.—19 ௧ பே. ௫. ௰௩.

* கிரேக்கு, இருக்கும்.—† சில பிரதிகளில் நீங்கள் பெற்றுக்கொண்ட பலனை.—‡ அல்லது உங்களுக்கு.
§ கிரேக்கு, பேசக்குப் பேச.

# III. JOHN.

அப்போஸ்தலனாகிய

# யோவான் எழுதின

## மூன்றாம் நிருபம்.

க. காயுவைத் தன் தேவபத்திக்கும், ௫. உத்தம போதகர்களுக்குச் செய்யும் உபசாரத்துக்கும் புகழ்ந்து, ௯. பெருமையுள்ள தியோத்திரேப்பே என்றவனுடைய கெட்ட நடக்கையைக்குறித்து விசனப்பட்டு, ௰க. அந்த நடக்கையை ஒருவரும் பின்பற்றாமல் இருக்கச்சொல்லி, ௰உ. தேமேத்திரி என்றவனுக்கு நற்சாட்சிபகர்ந்தது.

க மூப்பனாகிய நான் [1]உண்மையாய்* அன்புகூரு
கிற பிரியமான காயுவுக்கு எழுதுகிறதாவது:
உ பிரியமானவனே, — உன் ஆத்துமா வாழ்கிறது
போல நீ சகலவிதத்திலும் வாழ்ந்து சுகமாயிருக்க
௩ வேண்டுகிறேன். †–சகோதரர் வந்து [2]நீ சத்தியத்
தில் நடந்துகொள்ளுகிறபடி உன்னுடைய உண்
மையைக்குறித்துச் சாட்சிகொடுத்தபொழுது மி
௪ கவும் சந்தோஷப்பட்டேன்.—[3]என் பிள்ளைகள்
சத்தியத்திலே நடக்கிறதை நான் கேள்விப்படு
கிறதினால் (வருகிற சந்தோஷத்திற்கு) மேலான
௫ சந்தோஷம் எனக்கு இல்லை.-பிரியமானவனே,
நீ சகோதரருக்கும் பரதேசிகளுக்கும் செய்கிற
கிரியைகள் யாவையும் உண்மையாய்ச் செய்கி
௬ றாய்.—அவர்கள் உன்னுடைய அன்பைக்குறித்
துச் சபைக்குமுன்பாகச் சாட்சிசொன்னார்கள்;
அவர்களை நீ பராபரனுக்குமுன்பாகப் பாத்திர
மானபடி ‡ வழிவிட்டு அனுப்பினால் நன்மை
௭ செய்வாய். — அவருடைய நாமத்தின்நிமித்தம்
அவர்கள் [4]அஞ்ஞானிகளிடத்தில் ஒன்றும் வாங்
௮ காமல் புறப்பட்டார்களே. — ஆகையால் நாம்
சத்தியத்திற்கு உதவிசெய்கிறவர்களாய் இருக்
கும்படிக்கு, இப்படிப்பட்டவர்களைச் சேர்த்துக்
கொள்ளக் கடனாளிகளாயிருக்கிறோம்; நான்
சபைக்கு எழுதினேன்.
௯ அப்படியிருந்தும், அவர்களுக்கு முதலாளி
யாயிருக்க விரும்புகிற தியோத்திரேப்பு எங்களை
ஏற்றுக்கொள்ளுகிறதில்லை. — ஆனபடியினாலே ௰
நான் வரும்பொழுது, அவன் எங்களுக்கு விரோ
தமாய்ப் பொல்லாத வார்த்தைகளைப் பேசிச்
செய்துவருகிற கிரியைகளை நினைத்துக்கொள்ளு
வேன்; அவைகளும் அவனுக்குப் போதாது;
அவன்தானே சகோதரனை ஏற்றுக்கொள்ளா
திருக்கிறதுமல்லாமல், ஏற்றுக்கொள்ள மனதா
யிருக்கிறவர்களையும் தடைசெய்து சபைக்குப்
புறம்பே தள்ளுகிறான்.—பிரியமானவனே, [5]நீ ௰க
பொல்லாங்கானதை அல்ல நலமானதைப் பின்
பற்றுவாயாக; [6]நன்மைசெய்கிறவன் பராபர
னால் உண்டாயிருக்கிறான்; பொல்லாங்கைச்
செய்கிறவன் பராபரனைக் கண்டறியவில்லை.

[7]தேமேத்திரி என்பவனுக்கு எல்லாராலும் சத் ௰உ
தியத்தாலும்தானே நற்சாட்சி உண்டாயிருக்கி
றது; நாங்களும் சாட்சிகொடுக்கிறோம்; [8]எங்கள்
சாட்சி மெய்யென்று அறிந்திருக்கிறீர்கள்.

[9]நான் அநேகம் காரியங்களை உனக்கு எழுத ௰௩
வேண்டும்; அவைகளை மையினாலும் இறகினா
லும் எழுத மனதில்லை. — நான் சீக்கிரமாய் ௰௪
உன்னைப் பார்க்கலாமென்று நம்பியிருக்கிறேன்;
அப்பொழுது முகமுகமாய்ப் § பேசுவோம்;
உனக்குச் சமாதானம் உண்டாயிருக்கக்கட
வது.-(எங்களிடத்திலுள்ள) சிநேகிதர் உன்னை ௰௫
வாழ்த்துதல் செய்கிறார்கள்; உன்னிடத்திலுள்ள
சிநேகிதர்களைப் பேர்பேராக (என்னாலே) வாழ்
த்துதல் செய்வாயாக.

1 உ யோ. க.—2 உ யோ. ௪. 3 க கொரி. ௪. ௰௫. பிலே. ௰. 4 க கொரி. ௯. ௰உ, ௰௫.—5 சங். ௩௭. உ௭. ஏசா. க. ௰௬,௰௭. க பே. ௩. ௰க.—6 க யோ. உ. உ௯: ௩. ௬, ௯.—7 க தீமோ. ௩. ௭. 8 யோவா. உக. உ௪. 9 உ யோ. ௰உ.

* அல்லது உண்மையிலே.—† அல்லது விரும்புகிறேன்.—‡ அல்லது ஏற்றவிதமாக.—§ கிரேக்கு, பேச்சுக்குப் பேச்சு.

# J U D E.

அப்போஸ்தலனாகிய

# யூதா எழுதின

## நிருபம்.

*௩. விசுவாசத்தை உறுதியாய்க் கைக்கொள்ளப் புத்திசொல்லி, ௪. அவர்களைக் கெடுக்கும்படி பிரவேசித்திருக்கிற கள்ளப்போதகர்களுடைய சபத்தைத் தரும் உபதேசத்துக்கும் நடக்கைக்கும் உக்கிரமான ஆக்கினை கிடைக்குமென்றும், ௨௰. உத்தமர்களோ பரிசுத்தஆவியின் ஏதுவினாலும் பராபரனை நோக்கி வேண்டிக்கொள்ளுகிறதினாலும் ஊக்கமடைந்து கிருபையிலே வளர்ந்து தங்களைக் காத்துக்கொள்வதுமன்றி, எத்தர்கள் வைத்த கண்ணிகளில் அகப்பட்டவர்களைக் காப்பார்களென்றும் சொல்லியது.*

௧ இயேசுக்கிறிஸ்துவினுடைய ஊழியக்காரனு
மாய், [1]யாக்கோபினுடைய சகோதரனுமாய்
இருக்கிற யூதா என்பவன், பிதாவாகிய பராபர
னாலே பரிசுத்தமாக்கப்பட்டும் [2]இயேசுக்கிறிஸ்
துவினால் காக்கப்பட்டும் [3]அழைக்கப்பட்டும்
௨ இருக்கிறவர்களுக்கு எழுதுகிறதாவது:—இரக்
கமும், [4]சமாதானமும், அன்பும் உங்களுக்குச்
சம்பூரணமாய் உண்டாகக்கடவது.

௩ பிரியமானவர்களே, [5]பொதுவான இரட்
சிப்பைக்குறித்து உங்களுக்கு எழுதவேண்டு
மென்று நான் மிகுந்த கருத்துள்ளவனாய் இருக்
கையில், முன்னே பரிசுத்தவான்களுக்கு ஒப்
புக்கொடுக்கப்பட்டிருக்கிற விசுவாசத்திற்காக
நீங்கள் [6]கெட்டியாய்ப் போராட்டம்பண்ணும்
படிக்கு, உங்களுக்குப் புத்தியை எழுதுகிறது
௪ எனக்கு அவசியமாய்த் தோன்றிற்று.—என்னத்தி
னாலெனில், [7]நம்முடைய பராபரனுடைய கிரு
பையைக் காமவிகாரத்திற்கு ஏதுவாகப் [8]புரட்டி,
ஒன்றான சுயாதிபதியான பராபரனுமாய், நம்
முடைய கர்த்தருமாயிருக்கிற இயேசுக்கிறிஸ்து
வை [9]மறுதலிக்கிற [10]துன்மார்க்கரான சில மனி
தர்கள் பக்கவழியாய் [11]நுழைந்திருக்கிறார்கள்;
அவர்கள் அடையும் ஆக்கினையைக்குறித்துப்
பூர்வீகத்திலே முன் எழுதியிருக்கின்றது.
௫ அந்தப்படி நீங்கள் முன்னே அறிந்திருந்தும்
நான் உங்களுக்கு ஞாபகப்படுத்த விரும்புகிறது
என்னவெனில், [12]கர்த்தர் எகிப்துதேசத்திலி
ருந்து சனத்தை இரட்சித்தபின்பு [13]விசுவாசியா
தவர்களை அழித்தார்.—அன்றியும் [14]தங்களுடைய ௬
ஆதி நிலைமையைக்* காவாமல், தங்களுக்கு
ஏற்ற இருப்பிடத்தை விட்டு விலகின தூதர்கள்
[15]பெரிய நியாயத்தீர்ப்புநாள்வரைக்கும் நித்திய
சங்கிலிகளினாலே (கட்டப்பட்டு) [16]அந்தகாரத்
தில் இருக்கும்படி நியமித்தார்.—அப்படிப் ௭
போலச் [17]சோதோம் கொமோரா பட்டணத்
தார்களும் அவைகளைச் சூழ்ந்த பட்டணத்தார்க
ளும் இவர்களுடைய விதமாய் வேசித்தனத்தில்
அமிழ்ந்து, அந்நிய† மாம்சத்தைச் சேர்ந்துபோ
னதினாலே நித்திய அக்கினியை ஆக்கினையாக
அடைந்து, திருட்டாந்தமாக வைக்கப்பட்டிருக்
கிறார்கள்.

அப்படிப்போல [18]இந்தச் சொப்பனக்காரர் ௮
மாம்சத்தை அசுசிப்படுத்திக்கொண்டு, கர்த்தத்து
வத்தை அசட்டைபண்ணி, [19]மகத்துவங்களைத்
தூஷணிக்கிறார்கள்.—பிரதான தூதனாகிய [20]மி ௯
காவேலும் மோசேயினுடைய சரீரத்தைக்குறித்
துப் பசாசானவனுடனே தருக்கித்துப் பேசின
பொழுது, [21]தூஷணமுள்ள தீர்ப்பை அவனுக்
குச் சொல்லத் துணியாமல், [22]கர்த்தர் உன்னைக்
கடிந்துகொள்வாராக என்று (மாத்திரம்) சொன்
னான்.—[23]இவர்கள் தங்களுக்குத் தெரியாதவை ௰
களைத் தூஷணிக்கிறார்கள்; புத்தியில்லாத மிரு
கங்களைப்போலச் சுபாவப்படி தங்களுக்குத்
தெரிந்திருக்கிறவைகளாலே தங்களைக் கெடுக்கி
றார்கள்.—ஐயோ, அவர்களுக்கு வேதனை உண் ௧௧
டாகும், அவர்கள் [24]காயீனுடைய வழியில்
நடந்து, [25]பாலாம் கூலிக்காகச் செய்த வஞ்ச

1 லூக். ௬. ௰௬. அப். ௧. ௰௩.
2 யோவா. ௰௭. ௰௧, ௰௨, ௰௫. ௧ பே. ௧. ௫.—3 உரோ. ௧. ௭.—4 ௧ பே. ௧. ௨. ௨ பே. ௧. ௨.—5 தீத். ௧. ௪.
6 பிலி. ௧. ௨௭. ௧ தீமோ. ௧. ௰௮: ௬. ௰௨. ௨ தீமோ. ௪. ௰௩: ௪. ௭.
7 தீத். ௨. ௰௧. எபி. ௰௨. ௰௫.
8 ௨ பே. ௨. ௰.—9 தீத். ௧. ௰௬. ௨ பே. ௨. ௧. ௧ யோ. ௨. ௨௨.—10 உரோ. ௯. ௨௧, ௨௨. ௧ பே. ௨. ௮.
11 கலா. ௨. ௪. ௨ பே. ௨. ௧.
12 ௧ கொரி. ௰. ௯.—13 ௪ மோ. ௰௪. ௨௯, ௩௭: ௨௬. ௬௪. சங். ௱௬. ௨௬. எபி. ௩. ௰௭, ௰௯.—14 யோவா. ௮. ௪௪.—15 வெளி. ௨௰. ௰.
16 ௨ பே. ௨. ௪.—17 ௧ மோ. ௰௯. ௨௪. ௫ மோ. ௨௯. ௨௩. ௨ பே. ௨. ௬.—18 ௨ பே. ௨. ௰.
19 ௨ மோ. ௨௨. ௨௮.—20 தானி. ௰. ௰௩: ௰௨. ௧. வெளி. ௰௨. ௭.
21 ௨ பே. ௨. ௰௧.—22 சக. ௩. ௨.
23 ௨ பே. ௨. ௰௨.—24 ௧ மோ. ௪. ௮. ௧ யோ. ௩. ௰௨.—25 ௪ மோ. ௨௨. ௭, ௨௧. ௨ பே. ௨. ௰௫.

* அல்லது ஆதி மேன்மையை.—† கிரேக்கு, வேறு.

கத்திலே விரைந்து ஓடி, [1]கோரா விரோதம்பேசி
னதினாலே கெட்டுப்போனார்கள்.

௰௨ இவர்கள் உங்கள் [2]அன்பு விருந்துகளில் [3]மாசு
களாயிருந்து, பயமில்லாமல் விருந்துண்டு, தங்
களை மேய்க்கிறார்கள்; [4]அவர்கள் காற்றுகளால்
அடிக்கப்பட்டு அலைகிற [5]நீரில்லாத மேகங்க
ளும், [6]உலர்ந்து கனியற்று இரண்டுதரம் செத்து
௰௩ வேரற்றுப்போன மரங்களும்,—[7]தங்கள் சுய
இலச்சைகளை நுரைபோலக் கக்குகிற [8]உக்கிரத்
தையுடைய கடலின் அலைகளும், மார்க்கம்தப்பி
நடக்கிற நட்சத்திரங்களுமாய் இருக்கிறார்கள்;
[9]என்றென்றைக்கும் உள்ள காரிருளே அவர்க
ளுக்காக வைக்கப்பட்டிருக்கின்றது.

௰௪ ஆதாம் முதற்கொண்டு ஏழாம்தலைமுறையில்
உண்டாயிருந்த [10]ஏனோக்கு என்பவன் இவர்
களைக்குறித்தும் முன் அறிவித்ததாவது: இதோ
[11]கர்த்தர் எல்லாருக்கும் நியாயத்தீர்ப்புக் கொடுக்
கும்படிக்கும், அவர்களில் தேவபத்தியில்லாத
யாவரும் துன்மார்க்கமாய்ச் செய்த சகல துன்
மார்க்கக் கிரியைகளின்நிமித்தமும் தமக்கு
௰௫ விரோதமாய்,— தேவபத்தியில்லாத பாவிகள்
[12]பேசின கடின வார்த்தைகள் எல்லாவற்றின்
நிமித்தமும், அவர்களைக் கண்டிக்கும்படிக்கும்
திரளான சேனைகளாகிய தம்முடைய பரிசுத்த
வான்களோடும்கூட வருகிறார் என்று அறிவித்
௰௬ தான்.–இவர்கள் முறுமுறுக்கிறவர்களுமாய்,
முறையிட்டுத் திரிகிறவர்களுமாய், தங்கள் இச்
சையின்படி நடக்கிறவர்களுமாய் இருக்கிறார்
கள்; [13]இவர்கள் வாயினாலே மிகவும் இறுமாப்
பானவைகளைப் பேசி, [14]பொழிவுக்காகப் பெரி
யோர்களைப் புகழுகிறார்கள்.

பிரியமானவர்களே, [15]நீங்கள் நம்முடைய கர்த் ௰௭
தராகிய இயேசுக்கிறிஸ்துவின் அப்போஸ்தலரா
ல், முன் சொல்லப்பட்ட வார்த்தைகளை நினைத்
துக்கொள்ளுங்கள்.—கடைசிக்காலத்திலே தங் ௰௮
கள் துன்மார்க்கமான இச்சைகளின்படி நடக்
கிற [16]பரியாசக்காரர் தோன்றுவார்களென்று
உங்களுக்குச் சொன்னார்களே. — இவர்களே ௰௯
[17]பிரிந்துபோகிறவர்களும் [18]சென்மசுபாவத்தா
ரும் (தேவ) ஆவி இல்லாதவர்களுமானவர்கள்.

பிரியமானவர்களே, [19]நீங்கள் உங்களுக்கு ௨௰
உண்டாயிருக்கிற மிகவும் பரிசுத்தமான விசுவா
சத்தின்மேலே உங்களைப் பொருந்தக் கட்டிக்
கொண்டு,—[20]பரிசுத்தஆவியைக்கொண்டு செ ௨௧
பம்பண்ணி, பராபரனுடைய அன்பிலே உங்க
ளைக் காத்துக்கொண்டு, [21]நித்திய சீவனுக்கு ஏது
வாக நம்முடைய கர்த்தராகிய இயேசுக்கிறிஸ்து
வினுடைய இரக்கம் வரப்பார்த்திருங்கள்.—
அல்லாமலும், வகையறுக்கிறவர்களாய் நீங்கள் ௨௨
சிலருக்கு இரங்கி, [22]சிலரை அக்கினியிலிருந்து
இழுத்துக்கொண்டு, [23]பயத்தோடே இரட்சித்து,
[24]மாம்ச இச்சைகளால் அசுசிப்பட்டிருக்கிற
அங்கியையும் வெறுத்துப்போடுங்கள்.

நீங்கள் வழுவாதபடிக்கு [25]உங்களைக் காத் ௨௩
துக்கொள்ளுகிறதற்கும், மாசில்லாமல் மகிழ்ச்சி
யோடே உங்களைத் தமது மகிமையுள்ள சந்நி
தானத்திலே நிறுத்துகிறதற்கும் வல்லமையுள்ள
வருமாய்,—[26]நம்முடைய இரட்சகரான ஞான ௨௪
முள்ள ஒருவராகிய தேவனுமாய் இருக்கிறவ
ருக்கு இப்பொழுதும் இனிமேல் இருக்கும்
எல்லாக் காலங்களிலேயும் [27]புகழ்ச்சியும், மகத்
துவமும், வல்லமையும், அதிகாரமும் உண்டா
யிருக்கக்கடவது.—ஆமன்.

---

1 ௪ மோ. ௰௬. ௧-௩௫.—2 ௧ கொரி. ௰௧. ௨௧.—3 ௨ பே. ௨. ௰௩.
4 எபே. ௪. ௰௪.—5 யாக். ௨. ௫. ௬௪. ௨ பே. ௨. ௰௭.—6 மத். ௰௫. ௰௩.
7 பிலி. ௩. ௰௯.—8 ஏசா. ௫௭. ௨௰.
9 ௨ பே. ௨. ௰௭.—10 ௧ மோ. ௫. ௰௮.—11 ௫ மோ. ௩௩. ௨. தானி. ௭. ௰: சகரி. ௰௪. ௫. மத். ௨௫. ௩௧. ௨ தெச. ௧. ௭. வெளி. ௧. ௭.
12 ௧ சாமு. ௨. ௩. சங். ௩௧. ௰௮: ௯௪. ௪. மல்கி. ௩. ௰௩.—13 ௨ பே. ௨. ௰௮.—14 யாக். ௨. ௧. ௯.—15 ௨ பே. ௩. ௨.
16 ௧ தீமோ. ௪. ௧. ௨ தீமோ. ௩. ௧: ௪. ௩. ௨ பே. ௨. ௧: ௩. ௩.
17 யாக். ௰௮. ௧. எசே. ௰௪. ௭. ஓசே. ௪. ௰௪: ௯. ௰. எபி. ௰. ௨௫.
18 ௧ கொரி. ௨. ௰௪. யாக். ௩. ௰௫.
19 கொலோ. ௨. ௭. ௧ தீமோ. ௧. ௪.
20 ௨ ரோ. அ. ௨௬. எபே. ௬. ௰௮.
21 தீத். ௨. ௰௩. ௨ பே. ௩. ௰௨.
22 ஆமோ. ௪. ௰௧. சகரி. ௩. ௨. ௧ கொரி. ௩. ௰௫.—23 ௨ ரோ. ௰௧. ௰௪. ௧ தீமோ. ௪. ௰௬.—24 சகரி. ௩. ௪. வெளி. ௩. ௪.—25 ௨ ரோ. ௰௬. ௨௫. எபே. ௩. ௨௰.
26 ௨ ரோ. ௰௬. ௨௭. ௧ தீமோ. ௧. ௰௭: ௨. ௩.—27 கொலோ. ௧. ௨௨.

REVELATION.

தெய்வவசன போதகராகிய

# யோவானுக்கு வெளிப்படுத்தின

## விசேஷம்.

### ௧. அதிகாரம்.

௧. ஏழு பொன் விளக்குத்தண்டுகளுக்கு ஒப்பனையாக்கப்பட்ட ஆசியா வில் இருந்த ஏழு சபைகளுக்கு யோவான் அறிவிப்பை எழுதி, ௭. கிறிஸ் துவின் வருகையைக்குறித்தும், ௰௪. அவருடைய மகிமையுள்ள வல்ல மையையும், மகத்துவத்தையுங்குறித்தும் சொல்லியது.

௧ [1]சீக்கிரமாய் நடக்கவேண்டியவைகளைப் பரா
பரன் தம்முடைய ஊழியக்காரருக்குக் காண்
பிக்கும்படிக்கு [2]இயேசுக்கிறிஸ்துவுக்குக் கொ
டுத்ததும் இவர் வெளிப்படுத்தினதுமான விசே
ஷம்; [3]அவர் தம்முடைய ஊழியக்காரனாகிய
யோவானிடத்திற்குத் தம்முடைய தூதனை அ
னுப்பி, அவனால் அவைகளைக் குறிப்பாகக் காட்
௨ டினார். —[4]அவன் பராபரனுடைய வசனமும்
இயேசுக்கிறிஸ்து சாட்சியிட்ட விசேஷமுமா
கிய [5]தான் கண்ட யாவற்றையும் அறிவித்திருக்
௩ கிறான். —[6]காலம் சமீபமாயிருக்கிறது; ஆகை
யால் இந்தத் தீர்க்கதரிசனமான வசனங்களை
வாசிக்கிறவனும் கேட்கிறவர்களும் [7]இதில் எ
ழுதியிருக்கிறவைகளைக் கைக்கொள்ளுகிறவர்க
ளும் பாக்கியவான்கள்.

௪ யோவான் ஆசியாவிலுள்ள சபைகள் ஏழுக்
கும் எழுதுகிறதாவது: [8]இருக்கிறவரும் [9]இருந்த
வரும் வருகிறவருமானவராலும், [10]அவருடைய
ஆசனத்திற்குமுன்பாக இருக்கிற ஏழு ஆவிகளா
௫ லும்,—[11]உண்மையுள்ள சாட்சியும் [12]மரித்தோரி
லிருந்து முதல் பிறந்தவரும் [13]பூமியின் இரா
சாக்களுக்கு அதிபதியுமாகிய இயேசுக்கிறிஸ்து
வினாலும் உங்களுக்குக் கிருபையும் சமாதான
சவுக்கியமும் உண்டாகக்கடவது; [14]நம்மிடத்
தில் அன்புகூர்ந்து, [15]தமது இரத்தத்தினாலே நம்
௬ முடைய பாவங்கள் அற நம்மைக் கழுவி,—தம்
முடைய பிதாவாகிய பராபரனுக்கு (முன்பாக)
நம்மைத் தமது [16]இராச்சியத்தாராகவும் ஆசாரிய
ராகவும் செய்திருக்கிற [17]அவருக்கு மகிமையும்
வல்லமையும் என்றென்றைக்கும் உண்டாயிருக்
கக்கடவது.—ஆமன்.

[18]அதோ மேகங்களுடனே வருகிறார்; கண் ௭
கள் யாவும் [19]அவரைக் குத்தினவர்களும் (அவ
ரைக் காண்பார்கள்); பூமியின் கோத்திரத்தார்கள்
எல்லாரும் அவரைக்குறித்துத் துக்கத்தோடே
புலம்புவார்கள்; மெய்யாய் அப்படி இருக்கும்.—
ஆமன்.—[20]இருக்கிறவரும் இருந்தவரும் வருகி ௮
றவருமாகிய சர்வவல்லமையுள்ள கர்த்தர் [21]நான்
அல்பாவும் ஒமேகாவும், ஆதியும் அந்தமுமாய்
இருக்கிறேன் என்று திருவுளம்பற்றுகிறார்.

உங்கள் சகோதரனுமாய், இயேசுக்கிறிஸ்து ௯
வின்நிமித்தம் வருகிற உபத்திரவத்திற்கும், [22]அ
வருடைய இராச்சியத்திற்கும், பொறுமைக்கும்
உங்களுடனே பங்காளனுமாய் இருக்கிற [23]யோ
வானாகிய நான், [24]பராபரனுடைய வசனத்
தின்நிமித்தமும் இயேசுக்கிறிஸ்துவைக்குறித்துச்
சாட்சிசொன்னதின்நிமித்தமும் பத்மு என்னப்
பட்ட தீவிலே இருந்தேன்.—(அங்கே) [25]கர்த்த ௰
ருடைய நாளில் [26]ஆவிக்குள்ளானேன்.—அப் ௰௧
பொழுது நீ காண்கிறதை ஒரு புஸ்தகத்திலே
எழுதி, ஆசியாவில் இருக்கிற எபேசு, சிமிருனா,
பெருகமு, தியத்தைரா, சருதை, பிலதெல்பியா,
இலவோதிக்கையா இவைகளில் உள்ள சபை
கள் ஏழுக்கும் அனுப்பு என்று எனக்குப் பின்
னாலே [27]எக்காளசத்தம்போன்ற மிகுந்த சத்தத்
தைக் கேட்டேன்.

அப்பொழுது என்னுடனே சத்தமிட்டுப் பேசி ௰௨
னவரைப் பார்க்கத் திரும்பினேன்.—திரும்பின ௰௩

---

1 வெளி. ௪. ௧. ௧. வச.—2 யோவா. ௧. ௯௨ : அ. ௨௧: ௰௨. ௪௬. 3 வெளி. ௨௨. ௰௬.—4 ௧ கொரி. ௧. ௧. வெளி. ௧.௯: ௰௨. ௰௭, ௯. வச.—5 ௧ யோ. ௧.௧.—6 ௨ ரோ. ௰௬. ௰௧. யாக். ௫. அ. ௧ பே. ௪.௭. வெளி.௨௨.௰.—7 லூக்.௰௧.௨அ. வெளி. ௨௨. ௭.—8 ௨ மோ. ௩. ௰௪. அ. வச.—9 யோவா. ௧. ௧, 10 சகரி.௩. ௯: ௪.௰ வெளி, ௩.௧: ௪. ௫: ௬.௬.—11 யோவா. அ௰௪. ௧ தீமோ. ௬. ௰௩. வெளி ௩. ௰௪. 12 ௧ கொரி. ௰௫.௨௰. கொலோ. ௧. ௰அ.—13 எபே. ௧.௨௰. வெளி. ௰௭. ௰௪: ௰௯.௰௬.—14 யோவா. ௰௩.௩௪: ௰௫.௯. கலா. ௨. ௨௰. 15 எபி. ௯.௰௪. ௧ யோ. ௧. ௭. 16 ௧ பே. ௨. ௫, ௯. வெளி. ௫. ௰: ௨௰. ௬.—17 ௧ தீமோ. ௬. ௰௬. எபி. ௰௩. ௨௧. ௧ பே. ௪. ௰௧: ௫.௰௧. 18 தானி. ௭.௰௩. மத். ௨௪. ௩௰: ௨௬. ௬௪. அப் ௧ ௰௧.—19 சகரி. ௰௨. ௰. யோவா.௰௯. ௩௭.—20 ௪ வச. வெளி. ௪. அ: ௰௧. ௰௭: ௰௬. ௫. 21 ஏசா. ௪௧. ௪: ௪௪. ௬: ௪அ. ௰௨: ௰௧. ௰௭. வச. வெளி. ௨. அ: ௨௧. ௬: ௨௨.௰௩.—22 ௨ ரோ அ.௰௭. ௨ தீமோ.௨. ௰௨.—23 பிலி.௧.௭: ௪. ௰௪. ௨ தீமோ. ௧. அ. 24 வெளி. ௧. ௯. ௨. வச.-25 யோவா. ௨௰. ௨௬. அப். ௨௰. ௭. ௧ கொரி. ௰௬. ௨.—26 அப்.௰.௰. ௨ கொரி. ௰௨. ௨. வெளி. ௪. ௨: ௰௭. ௩: ௨௧. ௰.—27 வெளி. ௪. ௧: ௰.அ.

பொழுது [1]ஏழு பொன்விளக்குத்தண்டுகளையும்
ஏழு விளக்குத்தண்டுகளின் மத்தியிலே [2]நிலே
அங்கியைத் தரித்து [3]மார்பருகே பொற்கச்சை
கட்டியிருந்த [4]மனிதகுமாரனுக்கு ஒப்பானவரை
௰௪ யும் கண்டேன்.—அவருடைய சிரசும் [5]மயிரும்
வெண்மையான பஞ்சையும் உறைந்த மழையை
யும்போல வெண்மையாய் இருந்தன; [6]அவரு
டைய கண்கள் அக்கினிச்சுவாலையைப்போல
௰௫ இருந்தன.—[7]அவருடைய கால்கள் உலைக்களத்
தில் காய்கிற பிரகாசமுள்ள செம்பைப்போல
இருந்தன; [8]அவருடைய சத்தம் பெருவெள்ள
௰௬ இரைச்சலைப்போல இருந்தது.—அல்லாமலும்
[9]அவர் வலதுகையிலே ஏழு நட்சத்திரங்களை ஏந்
திக்கொண்டிருந்தார்; [10]அவர் வாயிலிருந்து இரு
புறமும் கருக்குள்ள கட்கம் புறப்பட்டது;
[11]அவருடைய முகம் உச்சிக்காலத்திலே வல்ல
மையாய்ப் பிரகாசிக்கிற சூரியனைப்போல இருந்
௰௭ தது.—[12]இப்படி அவரைக் கண்டபொழுது செத்
தவனைப்போல அவருடைய பாதங்களிடத்தில்
விழுந்தேன்; அப்பொழுது [13]அவர் தமது வலதுக
ரத்தை என்மேல் வைத்து (என்னுடனே) சொன்
னதாவது: நீ பயப்படவேண்டுவதில்லை; [14]நான்
முந்தினவனும் பிந்தினவனும் [15]உயிருள்ளவனு
௰௮ மானவன்.—நான் மரித்தும், இதோ [16]என்றென்
றைக்கும் உயிரோடிருந்து, [17]மரணத்திற்கும்
மரித்தோர் ஸ்தலத்திற்கும் உரிய திறவுகோல்களை
௰௯ உடையவனாய் இருக்கிறேன்.—ஆகையால் [18]நீ
கண்டவைகளையும், [19]இருக்கிறவைகளையும் [20]இ
வைகளுக்குப் பின் நடப்பவைகளையும் எழுது.—
௨௰ என்னுடைய வலதுகரத்தில் நீ கண்ட [21]நட்சத்தி
ரங்கள் ஏழின் இரகசியத்தையும் [22]பொன்விளக்
குத்தண்டுகள் ஏழின் குறிப்பையுமே எழுது;
இந்த நட்சத்திரங்கள் ஏழும் சபைகள் ஏழினு
டைய [23]தூதர்களாய் இருக்கின்றன; [24]நீ கண்ட
விளக்குத்தண்டுகள் ஏழும் ஏழு சபைகளாய்
இருக்கின்றன.

## ௨. அதிகாரம்.

*௧. எபேசு, ௮. சிமிருனா, ௰௨. பெர்கமு, ௰௮. தியத்தைரா என்ற சபைகளின் ஊழியக்காரர்களாகிய தூதர்களில் புகழப்படத்தக்கதும் இகழப்படத்தக்கதும், இன்னவைகளென்று எழுதி அனுப்பும்படி உண்டான கட்டளையைச் சொல்லியது.*

௧ எபேசு பட்டணத்திலுள்ள சபையின் தூத
னுக்கு எழுதவேண்டியதென்னவெனில், [25]ஏழு
நட்சத்திரங்களைத் தம்முடைய வலதுகரத்தில்
ஏந்திக்கொண்டு [26]ஏழு பொன்விளக்குத்தண்டுக
ளின் மத்தியிலே உலாவிக்கொண்டிருக்கிறவர்
சொல்லுகிறதாவது: — [27]உன் கிரியைகளையும், ௨
உன் பிரயாசத்தையும், உன் பொறுமையையும்,
நீ பொல்லாதவர்களுக்கு இடங்கொடாமல் இ
ருக்கிறதையும், அப்போஸ்தலர் அல்லாதவர்கள்
[28]தங்களை அப்போஸ்தலர் என்று சொல்லுகிறதை
[29]நீ சோதித்து அவர்களைப் பொய்யரென்று கண்
டறிந்ததையும், — நீ பொறுமையைக் காத்துக் ௩
கொண்டுவருகிறதையும், எனது நாமத்தின் நிமித்
தம் [30]இளைப்பை அடையாமல் பிரயாசப்பட்ட
தையும் அறிந்திருக்கிறேன். — ஆனாலும் நீ ஆதி ௪
யில் காட்டின அன்பை விட்டபடியால், உன்
மேல் விசனமாய் இருக்கிறேன்.—ஆகையால், நீ ௫
இப்படிப்பட்ட நிலைமையிலிருந்து விழுந்ததை
நினைத்து மனந்திருப்பி ஆதியில் செய்த கிரியை
களைச் செய்வாயாக; [31]நீ மனந்திருப்பாவிட்
டால், நான் சீக்கிரமாய் உன்னிடத்தில் வந்து,
உன் விளக்குத்தண்டை அதனிடத்திலிருந்து
நீக்குவேன். — [32]நிக்கோலாவின் மார்க்கத்தா ௬
ரின் கிரியைகளைப் பகைக்கிறாய்; இது உன்
னிடத்தில் உண்டு; அவைகளை நானும் பகைக்
கிறேன்.

ஆவியானவர் சபைகளுக்குச் சொல்லுகிற ௭
தைக் [33]காதுள்ளவன் கேட்கக்கடவன்; செயங்
கொள்ளுகிறவன் எவனோ, அவனுக்குப் பரா
பரனுடைய பரதீசின் மத்தியில் இருக்கிற [34]சீவ
விருட்சத்தின் கனியைப் [35]புசிக்கக் கொடுப்
பேன் என்கிறார் என்று எழுது.

சிமிருனா பட்டணத்திலுள்ள சபையின் தூத ௮
னுக்கு நீ எழுதவேண்டியது என்னவெனில்,
மரித்து உயிரோடிருக்கிற [36]முந்தினவரும் பிந்
தினவருமானவர் சொல்லுகிறதாவது: — [37]உன் ௯
கிரியைகளையும், உபத்திரவத்தையும், [38]ஐசுவரிய
முள்ள உனக்கிருக்கிற தரித்திரத்தையும், [39]தங்
களை யூதரென்று சொல்லியும் யூதராய் இராமல்
[40]சாத்தானுடைய ஆலயமாய் இருக்கிறவர்கள்
செய்கிற தூஷணத்தையும் அறிந்திருக்கிறேன்.—
[41]உனக்கு வரும் துன்பங்களைக்குறித்து எவ்வள ௰
வாகிலும் பயப்படாதிருப்பாயாக; கேள், நீங்
கள் சோதிக்கப்படும்பொருட்டாகப் பசாசான
வன் உங்களில் சிலரைக் காவலில் போடுவான்;
பத்துநாள் உபத்திரவப்படுவீர்கள்; [42]ஆகிலும்
மரணபரியந்தம் உண்மையாயிரு; அப்பொழுது
[43]சீவகிரீடத்தை உனக்குத் தருவேன்.

ஆவியானவர் சபைகளுக்குச் சொல்லுகிற ௰௧
தைக் [44]காதுள்ளவன் கேட்கக்கடவன்; செயம்

1 வெளி. ௨. ௧.—2 தானி. ௰. ௫.
3 வெளி. ௰௫. ௬.—4 எசே. ௧. ௨௬.
தானி. ௭. ௰௩: ௰. ௰௬. வெளி. ௰௪.
௰௪.— 5 தானி. ௭. ௯.—6 தானி.
௰. ௬. வெளி ௨. ௰௮: ௰௯. ௰௨.
7 எசே. ௧. ௭. தானி. ௰. ௬. வெளி.
௨. ௰௮.—8 எசே. ௪௩. ௨. தானி.
௰. ௬. வெளி. ௰௪. ௨: ௰௯. ௬.
9 ௨௰. வச. வெளி. ௨. ௧: ௩. ௧.
10 ஏசா. ௪௯. ௨. எபே ௬. ௰௭. எபி.
௪. ௰௨ வெளி. ௨. ௰௨, ௰௬: ௰௯.
௰௫. ௨௧.—11 அப். ௨௬. ௰௩.
வெளி. ௰. ௧.—12 எசே. ௧. ௨௮.
13 தானி. ௮. ௰௮: ௰. ௰.—14 ஏசா. ௪௧.
௪: ௪௪. ௬: ௪௮. ௰௨. வெளி. ௨.
௮: ௨௨. ௰௩. ௰௬. வச.—15 உரோ.
௬. ௯.—16 வெளி ௪. ௯: ௫. ௰௪.
17 சங். ௬௮. ௨௰. வெளி. ௨௰. ௧.
18 ௰௨ வச. ௫.—19 வெளி. ௨. ௩. ௫.
20 வெளி. ௪. ௧. ௫.—21 ௰௬. வச.
22 ௰௨. வச.—23 மல்கி. ௨. ௭. வெளி.
௨. ௧. ௫.—24 சகரி. ௪. ௨. மத்.
௫. ௰௫. பிலி. ௨. ௰௫.—25 வெளி.
௧. ௰௬, ௨௰.—26 வெளி. ௧. ௰௩.
27 சங். ௧. ௬: ௯. ௰௩. ௰௯. வச. வெளி.
௩. ௧, ௮. ௰௫.—28 ௨ கொரி. ௰௧.
௰௩. ௨ பே. ௨. ௧.—29 ௧ யோ.
௪. ௧.—30 கலா. ௬. ௯. எபி. ௰௨.
௩. ௫.—31 மத். ௨௧. ௪௧, ௪௩.
32 ௰௫. வச.—33 மத். ௰௧. ௰௫: ௰௩. ௯,
௪௩: ௰௩. ௰௭, ௨௯ வச. வெளி. ௩.
௯, ௰௩, ௨௨: ௰௩. ௯.—34 ௧ மோ.
௨. ௯.—35 வெளி ௨௨. ௨. ௰௪.
36 வெளி. ௧. ௮: ௰௭. ௰௮.—37 ௨. வச.
38 லூக். ௰௨. ௨௧. ௧ தீமோ. ௬. ௰௮.
யாக். ௨. ௫.—39 உரோ. ௨. ௰௭,
௨௮, ௨௯: ௯. ௬.—40 வெளி ௩.
௯.—41 மத். ௰. ௨௨.—42 மத். ௨௪.
௰௩.—43 யாக். ௧. ௰௨. வெளி. ௩.
௰௧.—44 ௭. வச. வெளி. ௰௩. ௯.

கொள்ளுகிறவன் [1]இரண்டாம் மரணத்தால் சே
தப்படுவதில்லை என்கிறார் என்று எழுது.
௰௨ பெருகமு பட்டணத்திலுள்ள சபையின் தூத
னுக்கு நீ எழுதவேண்டியது என்னவெனில்,
[2]இருபுறமும் கருக்குள்ள கட்கத்தையுடையவர்
௰௩ சொல்லுகிறதாவது: — [3]உன் கிரியைகளையும்,
[4]சாத்தானுடைய ஆசனம் இருக்கிற இடத்தில்
நீ குடியிருக்கிறதையும், சாத்தான் குடியிருக்கிற
உங்களிடத்திலே எனக்கு உண்மையுள்ள சாட்
சியாகிய அந்திப்பா என்பவன் கொல்லப்பட்ட
நாட்களிலேயும் என்னைப்பற்றும் விசுவாசத்தை
மறுதலியாமல், என்னுடைய நாமத்தைப் பற்றிக்
கொண்டிருக்கிறதையும் அறிந்திருக்கிறேன்.—
௰௪ ஆகிலும் சில காரியங்களைக்குறித்து உன்மேல்
விசனமாய் இருக்கிறேன்; [5]விக்கிரகங்களுக்குப்
படைத்தவைகளைப் புசிப்பதற்கும் [6]வேசித்தனம்
பண்ணுவதற்கும் ஏதுவான கேடுகளை இஸ்ர
வேல் புத்திரர்முன்பாகப் போடும்படிக்கு, [7]பா
லாகென்பவனுக்குப் போதனைசெய்த பாலாமு
டைய போதகத்தைப் பிடித்திருக்கிறவர்கள்
௰௫ உன்னிடத்தில் இருக்கிறார்கள்.—அல்லாமலும்
[8]நிக்கோலாவின் மார்க்கத்தாருடைய போதகத்
தைப் பற்றிக்கொள்ளுகிறவர்களும் உன்னிடத்
௰௬ தில் உண்டு. — ஆகையால் நீ மனம்திரும்புவா
யாக; இல்லாவிட்டால் நான் சீக்கிரமாய் உன்
னிடத்தில் வந்து, [9]என் வாயின் கட்கத்தால்
அவர்களோடே யுத்தம்பண்ணுவேன்.
௰௭ ஆவியானவர் சபைகளுக்குச் சொல்லுகிற
தைக் [10]காதுள்ளவன் கேட்கக்கடவன்; செயம்
கொள்ளுகிறவனுக்கு நான் மறைவான மன்னா
வைப் புசிக்கக்கொடுத்து, அவனுக்கு வெண்
மையான கல்லையும், அந்தக் கல்லின்மேலே
எழுதப்பட்டதுமாய், பெறுகிறவனேயன்றி வே
றொருவனும் அறியாததுமாய் இருக்கிற [11]புதிய
நாமத்தையும் கட்டளையிடுவேன் என்கிறார்
என்று எழுது.
௰௮ தியத்தைரா பட்டணத்திலுள்ள சபையின்
தூதனுக்கு நீ எழுதவேண்டியது என்னவெனில்,
[12]அக்கினிச்சுவாலையைப்போன்ற கண்களும்
உருக்கிய செம்பைப்போன்ற கால்களுமுள்ள
௰௯ தேவகுமாரன் சொல்லுகிறதாவது:—[13]உன் கிரி
யைகளையும், உன் அன்பையும், உன் ஊழியத்
தையும், உன் விசுவாசத்தையும், உன் பொறுமை
யையும், நீ பின்பு செய்த கிரியைகள் முந்தின
கிரியைகளிலும் அதிகமாய் இருக்கிறதையும் அ
௨௰ றிந்திருக்கிறேன்.—ஆகிலும் (ஒன்றைக்குறித்து)
உன்மேல் விசனமாய் இருக்கிறேன்; என்னவெ
னில், [14]வேசித்தனம்பண்ணும்படிக்கும், விக்கிர
கங்களுக்குப் படைத்தவைகளைப் புசிக்கும்ப
டிக்கும், தன்னைத் தீர்க்கதரிசி என்று சொல்லிக்
கொள்ளுகிற [15]இயேசபேலென்னும் ஸ்திரீ என்
னுடைய ஊழியக்காரருக்குப் போதித்து வஞ்
சிக்கிறாள்; அவளுக்கு நீ இடம்கொடுக்கிறாய்.—
[16]அவள் மனம்திரும்பும்படியாய்க் காலத்தை அ ௨௧
வளுக்குக் கொடுத்தேன்; அவள் தன் வேசிமார்க்
கத்தைவிட்டு மனம்திரும்ப விருப்பமில்லை.—
(ஆகையால்) கேள், அவளும் அவளுடனேகூட ௨௨
விபசாரம்செய்தவர்களும் தங்களுடைய கிரி
யைகளைவிட்டு மனம்திரும்பாவிட்டால், நான்
அவளை ஒருகட்டிலின்மேலும், இவர்களை மிகுந்த
உபத்திரவத்திலேயும் போட்டு, அவளுடைய
பிள்ளைகளைக் கொலைசெய்வேன்.—அப்பொழுது ௨௩
[17]நானே உள்ளிந்திரியங்களையும் இருதயங்களை
யும் ஆராய்கிறவர் என்று எல்லாச் சபைகளும் அ
றிந்துகொள்வார்கள்; அல்லாமலும், [18]உங்களில்
அவனவனுடைய கிரியைகளின்படியே யாவ
ருக்கும் பதில்கொடுப்பேன்.—இந்தப் போதகத் ௨௪
தைப் பற்றிக்கொள்ளாமலும், அவர்கள் சொல்லு
கிறபடி சாத்தானுடைய ஆழங்களை அறிந்துகொ
ள்ளாமலும் இருக்கிற தியத்தைராவிலுள்ள மற்
றவர்களாகிய உங்களுக்கு நான் சொல்லுகிறதா
வது: [19]உங்கள்மேலே வேறொரு பாரத்தையும்
போடமாட்டேன்.—[20]உங்களுக்கு உண்டான
தை நான் வருமளவும் பத்திரமாய்ப் பிடித்துக்
கொள்ளுங்கள்.
செயம்கொண்டு [21]முடிவுபரியந்தம் என் கிரி ௨௫
யைகளைக் காத்துக்கொள்ளுகிறவன் எவனோ,
[22]அவனுக்கு என்னுடைய பிதாவினிடத்தில்
நான் பெற்றதுபோல, சனக்கூட்டங்கள்மேல்
அதிகாரத்தைக் கொடுப்பேன்.—[23]அவன் இருப் ௨௬
புக்கோலால் அவர்களை நடத்திக்கொள்வான்;
அவர்கள் மண்கலங்களைப்போல நொறுக்கப்படு
வார்கள்.—அல்லாமலும் [24]விடிவெள்ளி நட்சத் ௨௭
திரத்தை அவனுக்குக் கொடுப்பேன்.—ஆவியா ௨௮
னவர் சபைகளுக்குச் சொல்லுகிறதைக் [25]கா
துள்ளவனே கேட்கக்கடவனென்று எழுது.

## ௩. அதிகாரம்.

௧. சருதை சபையின் தூதன் கடிந்துகொள்ளப்பட்டு, ௩. குணப்படும்படி புத்திசொல்லப்பட்டு, குணப்படாமைக்குப் பயமுறுத்தப்பட்டது. ௭. பிலதெல்பியா சபையின் தூதன், ௰. தன் சுறுசுறுப்புக்காகவும் பொறுமைக்காகவும் மெச்சிக்கொள்ளப்பட்டது. ௰௫. இலவோதிக்கேயா சபையின் தூதன் அனலும் குளிரும் இல்லாதிருந்ததினால் கடிந்துகொள்ளப்பட்டு, ௰௯. சுறுசுறுப்படையும்படி ஏவப்பட்டது. ௨௰. கிறிஸ்து வாசலண்டையில் நின்று தட்டுகிறார் என்பது.

சருதையூரிலுள்ள சபையின் தூதனுக்கு நீ எழுத ௧
வேண்டியது என்னவெனில், பராபரனுடைய
[26]எழு ஆவிகளையும் எழு நட்சத்திரங்களையும்

1 வெளி. ௨௰. ௬: ௨௧. ௮.
2 வெளி. ௧. ௰௬.—3 ௨. ௯.
4 ௯. ௯.—5 ௨௰. ௯. அப். ௰௫.
௨௯. ௧ கொரி. ௮. ௯, ௰: ௰. ௰௯, ௨௰.—6 ௧ கொரி ௬. ௰௩. ௧௮.
7 ௪ மோ. ௨௪. ௰௪: ௨௫. ௧: ௩௧. ௰௬. ௨ பே. ௨. ௰௫. யூதா. ௰௧.
8 ௬. ௯.—9 ஏசா. ௰௧. ௪. ௨ தெச. ௨. ௮. வெளி. ௧. ௰௬: ௰௯. ௰௫,
௨௧.—10 ௭. ௰௧. ௯.—11 வெளி. ௩. ௰௨: ௰௯. ௰௨.—12 வெளி. ௧. ௰௪, ௰௫.—13 ௨. வசனம்.
14 ௨ மோ. ௩௪. ௰௫. அப். ௰௫. ௨௯, ௨௧. ௧ கொரி. ௰. ௰௯, ௨௰. ௰௪.
௯.—15 ௧ இரா. ௰௬. ௩௧: ௨௧. ௨௫. ௨ இரா. ௯. ௭.—16 ௨ ரோ. ௨. ௪. வெளி. ௯. ௨௰.—17 ௧ சாமு. ௰௬. ௭. ௧ நாளா. ௨௮. ௯: ௨௯. ௰௭. ௧ நாளா. ௨௮. ௯. ௩௰. ௫௧. ௭. ௯. எரே. ௰௧. ௨௰: ௰௭. ௰: ௨௰. ௰௨. யோவா. ௨. ௨௪, ௨௫. அப். ௧. ௨௪. ௨ ரோ. ௮. ௨௭.—18 சங். ௬௨. ௰௨. மத். ௰௬. ௨௭. ௨ ரோ. ௨. ௬: ௰௪. ௰௨. ௨ கொரி. ௫. ௰. கலா. ௬. ௫. வெளி. ௨௰. ௰௨.
19 அப். ௰௫. ௨௮.—20 வெளி. ௩. ௰௧.
21 யோவா. ௬. ௨௯. ௧ யோ ௩. ௨௩.
22 மத். ௰௯. ௨௮. லூக். ௨௨. ௨௯, ௩௰. ௧ கொரி. ௬. ௩. வெளி. ௩. ௨௧: ௨௰. ௪.—23 சங். ௨. ௮, ௯: ௪௯. ௰௪. தானி. ௭. ௨௨. வெளி. ௰௨. ௫: ௰௯. ௰௫.—24 ௨ பே. ௧. ௰௯. வெளி. ௨௨. ௰௬.—25 ௭. வச.
26 வெளி. ௧. ௪, ௰௬: ௪. ௫: ௫. ௬.

உடையவர் சொல்லுகிறதாவது: [1]உன் கிரியைக
ளை அறிந்திருக்கிறேன்; நீ உயிருள்ளவன் என்று
பேர்கொண்டிருந்தும், [2]செத்தவனாய் இருக்கி
௨ றாய்.—உன் கிரியைகள் பராபரனுக்குமுன்பாக
நிறைந்தவைகள் அல்லவென்று கண்டிருக்கி
றேன்; ஆகையால் நீ விழித்துக்கொண்டு சாகிற
தற்கு ஏதுவான மற்றவர்களை ஸ்திரப்படுத்துவா
௩ யாக.—மேலும் [3]நீ கேட்டுப் பெற்றுக்கொண்ட
வகையை நினைத்துக் கைக்கொண்டு [4]மனந்தி
ரும்புவாயாக; [5]நீ விழித்துக்கொள்ளாவிட்டால்
திருடனைப்போல உன்மேல் வருவேன்; நான்
உன்மேல் வரும் நேரத்தை அறியாதிருப்பாய்.—
௪ [6]தங்கள் வஸ்திரங்களை அசுசிப்படுத்தாத [7]சில
பேர் சருதை ஊரிலே உன்னோடே உண்டு;
அவர்கள் பாத்திரவான்களானபடியால் என்னு
டனேகூட [8]வெண்மையான உடைகளைத் தரித்
து நடப்பார்கள்.
௫ செயம்கொள்ளுகிறவன் [9]வெண்மையான
வஸ்திரங்களால் உடுத்தப்படுவான்; நான் [10]சீவ
புத்தகத்தில் [11]அவனுடைய நாமத்தைக் கிறுக்
கிப்போடாமல், அதை என் பிதாமுன்பாகவும்
[12]அவருடைய தூதர்முன்பாகவும் அறிக்கைபண்
௬ ணுவேன்.—ஆவியானவர் சபைகளுக்குச் சொல்
லுகிறதைக் [13]காதுள்ளவன் கேட்கக்கடவன்
என்று எழுது.
௭ பிலதெல்பியா ஊரிலுள்ள சபையின் தூத
னுக்கு நீ எழுதவேண்டியது என்னவெனில்,
[14]தாவீதின் திறவுகோலை உடையவருமாய், [15]ஒ
ருவரும் பூட்டக்கூடாதபடிக்குத் திறக்கிறவரு
மாய், [16]ஒருவரும் திறக்கக்கூடாதபடிக்குப் பூட்
டுகிறவருமாய் இருக்கிற [17]பரிசுத்தமும் [18]சத்தி
௮ யமும் உள்ளவர் சொல்லுகிறதாவது: — [19]உன்
கிரியைகளை அறிந்திருக்கிறேன், கொஞ்சப்பெ
லன் (மாத்திரம்) உனக்கு இருந்தும் நீ என்னு
டைய நாமத்தை மறுதலியாமல் எனது வசனத்
தைக் கைக்கொண்டபடியினாலே, இதோ, உனக்
குமுன்பாகத் [20]திறந்திருக்கிற வாசலைக் கொடுத்
தேன்; அதை ஒருவனும் பூட்டமாட்டான். —
௯ கேள், யூதரல்லாதிருந்தும் தங்களை யூதரென்று
பொய்சொல்லுகிறவர்களாகிய [21]சாத்தானுடைய
ஆலயத்தாரில் (சிலரை) உனக்குத் தருகிறேன்;
கேள், அவர்கள் உன் பாதங்களுக்குமுன்பாக
வந்து பணிந்து, நான் உன்மேல் அன்பாய் இருக்
கிறதை அறிந்துகொள்ளும்படி [22]செய்வேன்.—
௰ என்னுடைய பொறுமையைக்குறித்துச் சொல்
லுகிற வசனத்தை நீ கைக்கொண்டபடியினாலே
நானும் [23]பூமியின்மேல் குடியிருக்கிறவர்களைச்
சோதிக்கும்படிக்கு, [24]பூச்சக்கரத்தின்மேல் எங்
கும் வரும் சோதனைக்காலத்திற்குத் தப்பும்படி
[25]உன்னைக் காப்பாற்றுவேன். — [26]சீக்கிரமாய் ௰௧
வருகிறேன்; [27]ஒருவனும் உன் கிரீடத்தை எடுத்
துக்கொள்ளாதபடிக்கு உனக்கு உள்ளதைப் [28]பத்
திரமாய்ப் பற்றிக்கொள்வாயாக.
செயம்கொள்ளுகிறவனை நான் என் தேவ ௰௨
னுடைய [29]ஆலயத்திலே ஸ்தம்பமாக்குவேன்,
அதில்நின்று அவன் ஒருக்காலும் நீங்கான்;
மேலும் என் தேவனுடைய நாமத்தையும் என்
தேவனால் வானத்திலிருந்து இறங்குகிற [30]புதிய
எருசலேமாகிய என் தேவனுடைய பட்டணத்
தின் நாமத்தையும், [31]எனது புதிய நாமத்தையும்
[32]அவன்மேலே எழுதுவேன். — ஆவியானவர் ௰௩
சபைகளுக்குச் சொல்லுகிறதைக் [33]காதுள்ள
வன் கேட்கக்கடவன் என்று எழுது.
இலவோதிக்கையா ஊரிலுள்ள* சபையின் ௰௪
தூதனுக்கு நீ எழுதவேண்டியது என்னவெனில்,
[34]உண்மையும் சத்தியமுமான சாட்சியுமாய்,
[35]பராபரனுடைய சிருட்டிகளுக்கு ஆதியுமாய்
இருக்கிற [36]ஆமன் என்பவர் சொல்லுகிறதாவ
து:—[37]உன் கிரியைகளை அறிந்திருக்கிறேன்; நீ ௰௫
குளிர்ச்சியுள்ளவனுமல்ல, அனலுள்ளவனுமல்
ல, நீ குளிர்ச்சியையாவது அனலையாவது உள்ள
வனானால் நலமாயிருக்கும்.—இப்படி நீ குளிர்ச் ௰௬
சியும் அனலும் இல்லாமல் வெதுவெதுப்புள்ள
வனானபடியினாலே உன்னை என் வாயில்நின்றும்
வாந்திபண்ணுவேன்.—நீ நிர்ப்பாக்கியமுள்ளவ ௰௭
னும் பரதபிக்கப்படத்தக்கவனும், எளியவ
னும் குருடனும் நிருவாணியாயும் இருக்கிற
தை அறியாமல், [38]நான் ஐசுவரியமுள்ளவன் என்
றும், அதிக திரவியத்தைச் சம்பாதித்தவன் என்
றும், எனக்கு ஒன்றும் வேண்டுவதில்லை என்றும்
சொல்லுகிறாய்.—ஆதலால் நான் உனக்கு ஆலோ ௰௮
சனையாய்ச் சொல்லுகிறதாவது: நீ ஐசுவரியவா
னாகும்படிக்கு நெருப்பிலே புடமிடப்பட்ட
பொன்னையும், உன் நிருவாணமாகிய அவலட்
சணம் தோன்றாமல் இருக்கத்தக்கதாக நீ உடுத்
திக்கொள்ளும்படிக்கு [39]வெண்மையான வஸ்
திரங்களையும் என்னிடத்திலே வாங்கிக்கொள்
ளவும், நீ பார்வை அடையும்படிக்கு உன் கண்
களுக்கு மாத்திரையைப் போடவும் [40]வேண்டு
மென்று சொல்லுகிறேன்.—[41]என்னால் சிநேகிக் ௰௯
கப்படுகிறவர்கள் எவர்களோ, அவர்களைக் கடிந்
துகொண்டு தண்டிக்கிறேன்; ஆகையால் நீ சாக்

1 வெளி. ௨. ௨.—2 எபே. ௨. ௧, ௫. ௧தீமோ. ௫. ௬.—3 ௧தீமோ. ௬. ௨௰. ௨தீமோ. ௧. ௰௩. ௰௪. வச. 4 ௰௯. வச.—5 மத். ௨௪. ௪௨, ௪௩: ௨௫. ௰௩. மாற் ௰௩. ௩௩. லூக். ௰௨. ௩௯, ௪௰. ௧ தெச ௫. ௨, ௬. ௨ பே. ௩. ௰. வெளி. ௰௬. ௰௫. 6 யூதா. ௨௩.—7 அப். ௧. ௰௫. 8 வெளி. ௪. ௪: ௬. ௰௧: ௭. ௯, ௰௩. 9 வெளி. ௰௯. ௮.—10 பிலி. ௪ ௩. வெளி. ௰௩. ௮: ௰௭. ௮: ௨௰. ௰௨: ௨௧. ௨௭.—11 ௨ மோ. ௩௨. ௩௨. சங். ௬௯. ௨௮.—12 மத். ௰ ௩௨. லூக். ௰௨. ௮.—13 வெளி. ௨. ௭. 14 ஏசா. ௨௨. ௨௨. லூக் ௧. ௩௨. வெளி ௧. ௰௮.—15 மத். ௰௬. ௰௯. 16 யோபு. ௰௨. ௰௪.—17 அப். ௩. ௰௪. 18 ௧ யோ. ௫. ௨௰, ௰௪. வச. வெளி. ௧. ௫: ௩. ௰: ௰௯. ௰௧.—19 ௧. வச. 20 ௧ கொரி. ௰௬. ௯. ௨ கொரி. ௨. ௰௨.—21 வெளி. ௨. ௯.—22 ஏசா. ௪௯. ௨௩: ௬௰. ௰௪.—23 ஏசா. ௨௪. ௰௭.—24 லூக். ௨. ௧.—25 ௨ பே. ௨. ௯.—26 பிலி. ௪. ௫. வெளி. ௩. ௩: ௨௨. ௭, ௰௨, ௨௰.—27 வெளி. ௨. ௰.—28 ௩. வச. வெளி. ௨. ௨௫. 29 ௧ இரா. ௭. ௨௧. கலா. ௨. ௯. 30 கலா. ௪. ௨௬. எபி. ௰௨. ௨௨. வெளி. ௨௧. ௨, ௰.—31 வெளி. ௨௨. ௪.—32 வெளி. ௨. ௰௭: ௰௪. ௧: ௨௨. ௪.—33 வெளி. ௨. ௭. 34 வெளி. ௧. ௫: ௰௯. ௰௧: ௨௨. ௬. ௭. வச.—35 கொலோ. ௧. ௰௫. 36 ஏசா. ௬௫. ௰௬.—37 ௧. வச. 38 ஓசே. ௰௨. ௮. ௧ கொரி. ௪. ௮. 39 ௨ கொரி. ௫. ௩. வெளி. ௭. ௰௩: ௰௯. ௰௫: ௰௯. ௮.—40 ஏசா. ௫௫. ௧. மத். ௰௩ ௪௪: ௨௫. ௯.—41 யோபு. ௫. ௰௭. நீதி. ௩. ௰௧, ௰௨. எபி. ௰௨. ௫, ௬. யாக். ௧. ௰௨.

* அல்லது இலவோதிக்கையா ஊராரின்.

கிரதையாயிருந்து மனந்திரும்பக்கடவாய். —
௨௰ இதோ, வாசற்படியிலே நின்று தட்டுகிறேன்;
[1]ஒருவன் என் சத்தத்தைக் கேட்டுக் கதவைத்
திறந்தால், [2]அவனிடத்தில் நான் பிரவேசித்து
அவனோடே இராப்போசனம்பண்ணுவேன்;
அவனும் என்னோடே இராப்போசனம்பண்ணு
வான்.
௨௧ நான் செயங்கொண்டு என் பிதாவினுடைய
ஆசனத்திலே அவரோடேகூட உளுக்காந்தது
போல, செயங்கொள்ளுகிறவன் என்னுடைய
ஆசனத்திலே என்னோடேகூட [3]உளுக்காரும்
௨௨ படி அருள்செய்வேன்.—ஆவியானவர் சபைக
ளுக்குச் சொல்லுகிறதைக் [4]காதுள்ளவன் கேட்
கக்கடவன் என்று எழுது என்றார்.

## ச. அதிகாரம்.

க. யோவான் கண்ட பரமண்டலத்திலுள்ள பராபரனுடைய ஆசனத்தை யும், ச. இருபத்துநாலு மூப்பர்களையும், ௬. சர்வாங்கமும் கண்கள் நிறைந்த நாலு சீவன்களையும், ௰. மூப்பர்கள் தங்கள் கிரீடங்களைக் கழ ற்றி ஆசனத்தின்மேல் உளுக்காந்திருக்கிறவரை வணங்ினதையுங் குறித்துச் சொல்லியது.

௧ இவற்றிற்குப் பின்பு, அதோ வானத்திலே ஒரு
வாசல் திறந்திருக்கக்கண்டேன்; அல்லாமலும்
முன்னே நான் கேட்கும்படி எக்காளம்போல
என்னுடனே [5]பேசின சத்தம் என்னுடனே
சொன்னது: [6]இங்கே ஏறிவா, [7]இதற்குப்பின்பு
சம்பவிக்கத்தக்கவைகளை உனக்குக் காண்பிப்
பேன் என்றார்.
௨ உடனே [8]ஆவிக்குள்ளானேன்; அப்பொழுது
வானத்தில் [9]ஒரு ஆசனம் வைக்கப்பட்டிருக்க
வும், அந்த ஆசனத்தின்மேல் ஒருவர் உளுக்காந்
௩ திருக்கவும் கண்டேன்.—(அதில்) உளுக்காந்தி
ருந்தவர் பார்வைக்கு ரவாக்கல்லும் சிவப்புக்கல்
லும்போலத் தோன்றினார்; அந்த [10]ஆசனத்தைச்
சுற்றி ஒரு வானவில் இருந்தது; அது பார்வைக்கு
௪ மரகதம்போலத் தோன்றிற்று.—மேலும் [11]அந்த
ஆசனத்தைச் சூழ இருபத்துநான்கு ஆசனங்க
ளும் இருந்தன; அந்த ஆசனங்களின்மேலே
[12]வெண்மையான வஸ்திரங்கள் தரிப்பிக்கப்
பட்ட இருபத்துநான்கு மூப்பர்கள் உளுக்காந்தி
ருந்தார்கள்; [13]அவர்கள் தங்கள் சிரசுகளின்மே
லே பொன் கிரீடங்களை உடையவர்களாய் இருந்
௫ தார்கள். — அன்றியும் அந்த ஆசனத்திலிருந்து
[14]மின்னும், இடிமுழக்கங்களும், (மற்றச்) சத்தங்
களும் புறப்பட்டன; மேலும் [15]பராபரனுடைய
ஏழு ஆவிகளாகிய [16]ஏழு தீவட்டிகள் ஆசனத்
திற்குமுன்பாக எரிகிறவைகளாய் இருந்தன.—
௬ மேலும் அந்த ஆசனத்திற்குமுன்பாகப் [17]பளிங்
குக் கண்ணாடியைப்போன்ற கடல் இருந்தது;
அதுவுமல்லாமல் [18]அந்த ஆசனத்தின் மத்தியிலும்
ஆசனத்தின் சுற்றிலும் நான்கு சீவன்கள் இருந்
தன; அவைகள் முன்புறமும் [19]பின்புறமும் கண்
களால் நிறைந்தவைகளாய் இருந்தன. — [20]முத ௭
லாம் சீவன் சிங்கத்திற்கு ஒப்பாகவும், இரண்
டாம் சீவன் கன்றுக்குட்டிக்கு ஒப்பாகவும்,
மூன்றும் சீவன் மனிதனைப்போன்ற முகமுன்
ளதாகவும், நான்காம் சீவன் பறக்கிற கழுகுக்கு
ஒப்பாகவும் இருந்தன. — அந்த நான்கு சீவன் ௮
களிலும் ஒவ்வொன்று [21]அவ்வாறு சிறகுகள்
உள்ளவைகளுமாய், சுற்றிலும் [22]உள்ளேயும் கண்
களால் நிறைந்தவைகளுமாய், [23]இருந்தவரும்
இருக்கிறவரும் வருகிறவருமாகிய [24]சர்வவல்ல
மையுள்ள தேவனாயிருக்கிற பராபரன் [25]பரிசுத்
தர், பரிசுத்தர், பரிசுத்தர் என்று இரவும்பகலும்
ஓய்வில்லாமல் சொல்லிக்கொள்ளுகிறவைகளு
மாய் இருந்தன.*
மேலும் ஆசனத்தின்மேல் உளுக்காந்திருந்து ௯
[26]என்றென்றைக்கும் உயிரோடிருக்கிறவருக்கு
அந்தச் சீவன்கள் துதியையும் கனத்தையும் தோத்
திரத்தையும் செலுத்தும்பொழுது,—[27]இருபத்து ௰
நான்கு மூப்பர்களும், ஆசனத்தின்மேல் உளுக்
காந்தவருக்குமுன்பாக வணக்கமாய் [28]விழுந்து,
என்றென்றைக்கும் உயிரோடிருக்கிறவரைத்
தொழுதுகொண்டு, [29]தங்கள் கிரீடங்களை ஆச
னத்தின்முன்பாக வைத்து,—ஆண்டவரே, தே ௰௧
வரீர் [30]சகலத்தையும் சிருட்டித்தீர், உம்முடைய
சித்தத்தினாலே அவைகள் உண்டாயிருக்கிறவை
களும் சிருட்டிக்கப்பட்டவைகளுமாய் இருக்
கின்றன; ஆகையால், மகிமையையும் கனத்தை
யும் வல்லமையையும் பெற்றுக்கொள்ளுகிறதற்
குப் [31]பாத்திரமாயிருக்கிறீர் என்று புகழுகிறார்
கள்.

## ரு. அதிகாரம்.

க. ஏழு முத்திரைகளால் முத்திரிக்கப்பட்ட புத்தகத்தைத் திறக்க அடிக்கப் பட்ட ஆட்டுக்குட்டியானவர்மாத்திரமே பாத்திரரென்றும், ௮. அதி னால் மூப்பர்கள் அவரைப் புகழ்ந்து, க இரத்தத்தினால் தங்களை மீட்டா ரென்றும அறிக்கைபண்ணினதைச் சொல்லியது.

அன்றியும் அந்த ஆசனத்திலே உளுக்காந்தவரு ௧
டைய வலதுகையிலே, உள்ளும்புறம்பும் எழு
தப்பட்டும், [32]ஏழு முத்திரைகளாலே பத்திரப்ப
டுத்தப்பட்டும் இருந்த [33]ஒரு புத்தகத்தைக் கண்
டேன்.—பலமுள்ள ஒரு தூதனையும் கண்டேன்; ௨
அவன் இந்தப் புத்தகத்தைத் திறக்கிறதற்கும் இ
தின் முத்திரைகளை உடைக்கிறதற்கும் பாத்திரர்
யாரென்று மிகுந்த சத்தத்தோடே கூப்பிட்
டான். — வானத்திலாவது, பூமியின்மேலாவது, ௩
பூமியின்கீழாவது [34]ஒருவனும் அந்தப் புத்தகத்

1 லூக். ௰உ. கஎ.—2 யோவா. ௰ச. உக.—3 மத். ௰௬. உஅ. லூக் உஉ. ௨௰. க கொரி. க.உ. உ தீமோ. உ. ௰உ. வெளி. உ. உக, உஎ. 4 வெளி. உ. எ.—5 வெளி. க. ௰. 6 வெளி. ௰க. ௰உ.—7 வெளி. க. ௰௬: உஉ. ௬.—8 வெளி. க. ௰: ௰எ. க: உக. ௰.—9 ஏசா. ௬க: எரே. ௰எ. ௰உ. எசே. க உக: ௰.க. தானி எ. ௬. —10 எசே. க.உஅ 11 வெளி. ௰க. ௰க.—12 வெளி. க. ச, ௫: ௬. ௰க: எ. ௬. ௰ ௩, ௰ச: ௰௬. ௰ச. 13 ௰ வச.—14 வெளி. அ. ௫: ௰௬. ௰அ - 15 வெளி. க.ச: ௩.க: ௫.௬. 16 உ மோ. ௨எ. உக. உ நாளா. ச. உ௰. எசே. க.௰௩. சகரி. ச.உ.

17 உ மோ. ௩அ. அ வெளி. ௰௫. உ. 18 எசே. க. ௫.—19 அ. வச. 20 ச மோ.உ. உ. ழ. எசே க. ௰: ௰. ௰ச.—21 ஏசா. ௬. உ. 22 ௬. வச.—23 வெளி. க. ச. 24 வெளி. க.அ.—25 ஏசா. ௬. ௩. 26 வெளி. க. ௰அ: ௫.௰ச ௰௫. எ. 27 வெளி. ௫.அ,௰ச. – 28 ௬. வச. 29 ச. வச.—30 க மோ. க. க அப். ௰எ. உச. எபே. ௩.௬. கொலோ. க. ௰௬. வெளி. ௰.௬.—31 வெளி. ௫. ௰உ.-32 ஏசா. உ௯.௰க தானி. ௰உ. ச.—33 எசே. உ. ௯, ௰. 34 ௰௩. வச.

* கிரேக்கு. இரவும்பகலும் சொல்லிக்கொண்டு ஓயாமலிருந்தன.

தைத் திறக்கவும் அதிலே நோக்கிப்பார்க்கவும்
௪ கூடாதிருந்தது. — ஒருவனும் அந்தப் புத்தகத்
தைத் திறந்து, அதில் நோக்கிப்பார்க்கிறதற்குப்
பாத்திரனைக் காணப்படாததினாலே நான் மிக
௫ வும் அழுதேன். — அப்பொழுது மூப்பர்களில்
ஒருவன் என்னை நோக்கி, நீ அழவேண்டுவ
தில்லை; இந்தப் புத்தகத்தைத் திறந்து, [1]இதின்
ஏழு முத்திரைகளையும் உடைக்கும்படிக்குத்
[2]தாவீதின் வேராகிய [3]யூதாகோத்திரத்தில் தோன்
றிய சிங்கம் இதோ செயங்கொண்டிருக்கிறது
என்றான்.

௬ அப்பொழுது நான் பார்த்து, ஆசனத்திற்கும்
நான்கு சீவன்களுக்கும் மூப்பர்களுக்கும் மத்
தியிலே ஒரு ஆட்டுக்குட்டி நிற்கக்கண்டேன்;
[4]அது அடிக்கப்பட்ட வண்ணமாகவும், ஏழு
கொம்புகளையும் பூமி எங்கும் அனுப்பப்பட்ட
பராபரனுடைய [5]ஏழாவிகளாகிய [6]ஏழு கண்க
௭ ளையும் உடையதாகவும் இருந்தது. — மேலும்
அது வந்து ஆசனத்தின்மேல் உளுக்காந்தவரு
டைய [7]வலதுகரத்தில் இருந்த புத்தகத்தை வாங்
கிற்று.

௮ அந்தப் புத்தகத்தை அது வாங்கினபொழுது,
[8]அந்த நான்கு சீவன்களும் இருபத்துநான்கு
மூப்பர்களும் தங்கள் [9]சுரமண்டலங்களையும்,
[10]பரிசுத்தவான்களுடைய செபங்களாகிய தூப
வருக்கங்களால் * நிறைந்த பொற்கலசங்களை
யும் பிடித்துக்கொண்டு, ஆட்டுக்குட்டிக்குமுன்
௯ பாக வணக்கமாய் விழுந்து,—தேவரீர் [11]அடிக்
கப்பட்டு உம்முடைய இரத்தத்தினாலே [12]சகல
கோத்திரங்களிலும் பாஷைக்காரரிலும் தேசத்தா
ரிலும் (மற்றச்) சனக்கூட்டங்களிலும் [13]எங்க
௰ ளைப் பராபரனுக்காக வாங்கிக்கொண்டு,—[14]எங்
கள் பராபரனுக்குமுன்பாக எங்களை இராசாக்
களும் ஆசாரியரும் ஆக்கினீர்; நாங்கள் பூமியிலே
ஆளுகைசெய்வோம்; ஆகையால் நீர் இந்தப் புத்த
கத்தை வாங்கி இதின் முத்திரைகளை உடைக்
கிறதற்குப் [15]பாத்திரராயிருக்கிறீர் என்று [16]புதிய
௰௧ பாட்டைப் பாடினார்கள். — பின்னும் நான்
பார்த்தபொழுது, அந்த ஆசனத்தையும் சீவன்
களையும் மூப்பர்களையும் [17]சூழ்ந்திருந்த அநேகம்
தூதர்களுடைய சத்தத்தைக் கேட்டேன்; [18]அவர்
களுடைய இலக்கம் பதினாயிரத்திற்குப் பதினா
யிரமும், ஆயிரத்திற்கு ஆயிரமுமாய் இருந்தது.—
௰௨ அவர்களும், அடிக்கப்பட்ட ஆட்டுக்குட்டியா
னவர் வல்லமையையும் ஐசுவரியத்தையும், ஞா
னத்தையும், பலத்தையும், கனத்தையும், மகிமை
யையும், தோத்திரத்தையும் பெற்றுக்கொள்ளுகிற
தற்குப் [19]பாத்திரராயிருக்கிறார் என்று மிகுந்த
சத்தத்தோடே சொன்னார்கள். — அல்லாமலும் ௰௩
[20]வானத்திலும் பூமியிலும் பூமியின்கீழும் இருக்
கிற சிருட்டிகள் யாவும் சமுத்திரத்தின்மேல்
உள்ளவைகளும் இவற்றினுள் அடங்கிய வஸ்
துக்கள் யாவும் [21]ஆசனத்தின்மேல் உளுக்காந்தி
ருக்கிறவருக்கும் ஆட்டுக்குட்டியானவருக்கும்
[22]தோத்திரமும், கனமும், மகிமையும், வல்லமை
யும், என்றென்றைக்கும் உண்டாவதாக என்று
சொல்லக்கேட்டேன்.—[23]அதற்கு நான்கு சீவன் ௰௪
களும், ஆமன் என்று சொல்லிற்று; மறுபடியும்
அந்த இருபத்துநான்கு மூப்பர்களும் (வணக்க
மாய்) விழுந்து [24]என்றென்றைக்கும் உயிரோ
டிருக்கிறவரைத் தொழுதுகொண்டார்கள்.

## ௬. அதிகாரம்.

௧. முத்திரைகள் ஒவ்வொன்றாய்த் திறக்கப்பட்டபோது, உலகமுடிவுமட்
டும் சம்பவிக்கப்போகிற காரியங்கள் தீர்க்கதரிசனமாய்க் குறிக்கப்பட்டது.

[25]பின்பு ஆட்டுக்குட்டியானவர் முத்திரைகளில் ௧
ஒன்றைப் பேர்க்கக்கண்டேன்; அல்லாமலும்
[26]நான்கு சீவன்களில் ஒன்று (என்னைநோக்கி,)
நீ வந்து பார் என்று இடிமுழக்கம்போலச் சொல்
லக்கேட்டேன். — அப்பொழுது நான் பார்க் ௨
கையில், [27]வெண்மையான குதிரையைக் கண்
டேன்; [28]அதின்மேல் இருந்தவன் வில்லைப்
பிடித்திருந்தான்; [29]அவனுக்கு ஒரு கிரீடம்கொ
டுக்கப்பட்டது; அவன் செயமுள்ளவனாய்ச்
செயிக்கும்படிக்குப் புறப்பட்டான்.

பின்பு அவர் இரண்டாம் முத்திரையைப் ௩
பேர்த்தபொழுது, [30]இரண்டாம் சீவனானது, நீ
வந்து பார் என்று சொல்லக்கேட்டேன்.—
[31]உடனே அக்கினி நிறமுள்ள வேறொரு குதி ௪
ரை புறப்பட்டது; அதின்மேல் இருந்தவன் பூமி
யில் உள்ளவர்கள் ஒருவரை ஒருவர் கொலைசெய்
யத்தக்கதாகச் சமாதானத்தைப் பூமியிலிருந்து
எடுத்துப்போடுகிறதற்கு அதிகாரமும், ஒரு பெ
ரிய கட்கமும் அவனுக்குக் கொடுக்கப்பட்டன.

பின்பு அவர் மூன்றாம் முத்திரையைப் பேர்த் ௫
தபொழுது, [32]மூன்றாம் சீவனானது, நீ வந்து பார்
என்று சொல்லக்கேட்டேன்; உடனே நான்
பார்க்கையில் [33]ஒரு கறுப்புக் குதிரையைக் கண்
டேன்; அதின்மேல் இருந்தவன் ஒரு தராசைத்
தன் கையில் பிடித்திருந்தான். — அப்போது, ௬
உழக்குக் கோதுமைக்கு † ஒரு தேநாரிப்பணம்,
மூவுழக்கு வாற்கோதுமைக்கு ஒரு தேநாரிப்ப
ணமென்றும், [34]எண்ணெயையும் பழஇரசத்தை

1 ௧. ௰௪ வெளி. ௬. ௧.—2 ஏசா. ௱௪௧. ௨. வெளி. ௨௨. ௧௬. ரோ. ௰௫. ௰௨. வெளி. 11 ௬. ௰௪.—12 தானி. ௪. ௧: ௬. ௨௰, ௨௨. ௰௪.—3 ஆதி. ௪௯. ௯,௰. வெளி. ௭. ௯: ௰௧ ௬: ௰௪. ௬. எபி ௭ ௰௪.—4 ஏசா. ௫௩. ௭ 13 அப். ௨௰. ௨௮. ரோ. ௩. ௨௪. யோவா. ௧. ௨௯, ௩௬. ௧ பே. ௧. ௧ கொரி. ௬. ௨௰: ௭ ௨௩ ௭பே. ௰௯ வெளி. ௰௩. ௮. ௬, ௰௨. ௰௪ ௧. ௭. கொலோ. ௧. ௰௪. எபி. ௬. 5 வெளி ௪. ௫.—6 சகரி. ௩. ௯: ௪. ௰. ௰௨. ௧ பே. ௧. ௰௮. ௰௯. ௨ பே. 7 வெளி ௪. ௨.—8 வெளி. ௪. ௮. ௨. ௧ ௧ யோ. ௧. ௭ வெளி. ௰௪. ௪. 9 வெளி. ௰௪. ௨: ௰௫. ௨.—10 சங். 14 ௨ மோ. ௰௯. ௬. ௧ பே. ௨ ௫, ௯. ௱௪௧. ௨. வெளி. ௮. ௩: ௨௰. ௬: ௨௨. ௫. வெளி. ௧ ௬.—23 வெளி. ௰௯. ௪. 15 வெளி. ௪. ௰௧.—16 சங். ௪௰. ௩ 24 வெளி. ௪. ௯, ௰.—25 வெளி. ௫. வெளி. ௰௪. ௩.—17 வெளி. ௪. ௪. ௬. ௫. ௬, ௭.—26 வெளி. ௪. ௭. 18 சங். ௬௮. ௰௭. தானி. ௭. ௰. எபி. 27 சகரி. ௬. ௩. வெளி. ௰௯ ௰௧. ௰௨. ௨௨.—19 வெளி. ௪. ௰௧. 28 சங் ௪௫. ௪, ௫.—29 சகரி. ௬. ௰௧. 20 பிலி. ௨. ௰. ௧. ௰௪—21 வெளி. ௬. வெளி. ௰௪. ௰௪.—30 வெளி. ௪. ௭. ௰௬: ௭. ௰.—22 ௧ நாளா. ௨௯. ௰௧. 31 சகரி. ௬. ௨.—32 வெளி. ௪, ௭. ௨ ரோ. ௬ ௯: ௰௧ ௨௭. ௧ தீமோ. 33 சகரி. ௬. ௨.—34 வெளி. ௯. ௪. ௬. ௰௬. ௧ பே. ௪. ௰௧: ௫. ௰௧

* அல்லது சுகந்தங்களால்.—† அல்லது ஒரு ஒபின் குவாட்டையும் அதில் பன்னிரண்டில் ஒன்றையும்குறிக்கும் அளவு.

யும் சேதப்படுத்தாதிருப்பாயாக என்றும் நான்கு
சீவன்களின் மத்தியிலிருந்து உண்டான சத்தத்
தைக் கேட்டேன்.

௭ பின்பு அவர் நான்காம் முத்திரையைப் பேர்த்
தபொழுது, [1]நான்காம் சீவனானது, நீ வந்து பார்
௮ என்று சொல்லக்கேட்டேன். — [2]உடனே நான்
பார்க்கையில் மங்கின நிறமுள்ள குதிரையைக்
கண்டேன்; அதின்மேல் இருந்தவனுக்கு மரண
மென்று பேர்; மரித்தோர் ஸ்தலம் அவனுடனே
கூடச் சென்றது; [3]கட்கத்தினாலும், பஞ்சத்தி
னாலும், சாவினாலும், [4]பூமியின் துஷ்டமிருகங்க
ளினாலும் பூமியின் கால்பங்கில் உள்ளவர்களைக்
கொலைசெய்யும்படிக்கு அதிகாரம் அவனுக்குக்*
கொடுக்கப்பட்டது.

௯ பின்பு அவர் ஐந்தாம் முத்திரையைப் பேர்த்
தபொழுது, [5]பராபரனுடைய வசனத்தினிமித்
தமும் [6]தாங்கள் கொடுத்த சாட்சியினிமித்தமும்
கொல்லப்பட்டவர்களுடைய [7]ஆத்துமாக்களைப்
௰ [8]பலிபீடத்தின்கீழே கண்டேன். — அவர்கள்:
[9]பரிசுத்தமும் சத்தியமுமுள்ள ஆண்டவரே,
[10]எதுவரைக்கும் [11]தேவரீர் நியாயத்தீர்ப்புக்கொ
டாமலும், பூமியின்மேல் குடியிருக்கிறவர்களி
டத்தில் எங்கள் இரத்தத்தைக்குறித்துப் பழி
வாங்காமலும் இருப்பீர் என்று மிகுந்த சத்தமிட்
௰௧ டுக் கூப்பிட்டார்கள்.—அப்பொழுது [12]அவர்க
ளுக்கு வெள்ளை அங்கிகள் கொடுக்கப்பட்டது
மல்லாமல், அவர்கள் தங்களைப்போலக் கொலை
செய்யப்படுபவர்களாகிய தங்கள் உடன் பணி
விடைக்காரரும் தங்களுடைய சகோதரரும்
வந்து நிறையுமளவும், பின்னும் [13]கொஞ்சக்
காலம் இளைப்பாறவேண்டும் என்று அவர்களுக்
குச் சொல்லப்பட்டது.

௰௨ பின்பு அவர் ஆறாம் முத்திரையைப் பேர்க்
கக்கண்டேன்; [14]உடனே பூமி மிகவும் அதிர்ந்
தது; [15]சூரியனும் கம்பளியைப்போலக் கறுப்
பாயிற்று; சந்திரன் முழுவதும் இரத்தம்போல
௰௩ ஆயிற்று.—[16]வானத்தின் நட்சத்திரங்களும், பெ
ருங்காற்றினால் அசைக்கப்பட்ட அத்திமரம் பரு
வமில்லாத † தன் காய்களை உதிர்க்கிறதுபோலப்
௰௪ பூமியிலே விழுந்தன. — [17]வானமும் சுருட்டப்
பட்ட புத்தகம்போலாகி விலகிப்போயிற்று; [18]ம
லைகள், தீவுகள், யாவும் தங்கள் இடங்களைவிட்டு
௰௫ விலக்கப்பட்டுப்போயின. — மேலும் பூமியின்
இராசாக்களும், பெரியோர்களும், சேனைத்தலை
வர்களும், ஐசுவரியவான்களும், பலவான்களும்,
அடிமைகள் யாவரும், சுயாதீனர் யாவரும் பர்வ
தங்களின் குகைகளிலும் [19]கல்மலைகளுக்குள்
ளும் ஒளித்துக்கொண்டு, பர்வதங்களையும் கல்
மலைகளையும் நோக்கி, — [20]அவருடைய கோ ௰௬
பாக்கினை தோன்றுகிற பெரியநாள் வந்திருக்கின்
றதே; [21]நிலைநிற்கத் திராணியுள்ளவன் யாவன்.—
ஆகையால் [22]நீங்கள் எங்கள்மேல் விழுந்து, ௰௭
ஆசனத்தின்மேல் உளுக்கார்ந்திருக்கிறவருடைய
முகத்திற்கும், ஆட்டுக்குட்டியின் கோபத்திற்
கும் எங்களை மறைத்து அடக்குங்கள் என்று கூப்
பிட்டார்கள்.

## ௭. அதிகாரம்.

௧. ஒரு தூதன் பராபரனுடைய அடியார்களின் நெற்றிகளில் முத்திரை போட்டதையும், ௪. இஸ்ரவேல் கோத்திரங்களில் முத்திரைபோடப்பட்டவர்களின் இலக்கத்தையும், ௯. மற்றச் சாதிகளில் எண்ணிலாத திரளான கூட்டம் ஆசனத்துக்குமுன்பாக வெண்மையான வஸ்திரம் தரித்துத் தங்கள் கைகளில் குருத்தோலைகள் பிடித்து நின்றதையும், ௰௪. அவர்கள் வஸ்திரங்கள் ஆட்டுக்குட்டியின் இரத்தத்தில் தோய்க்கப்பட்டதென்றதையும் சொல்லியது.

அவற்றிற்குப்பின்பு பூமியின் நான்கு திசைக ௧
ளிடத்திலும் நான்கு தூதர்கள் நின்று, [23]ஒரு
காற்றாகிலும் பூமியின்மேலாவது சமுத்திரத்தின்
மேலாவது ஒரு மரத்தின்மேலாவது அடியாதப
டிக்கு, [24]பூமியின் நான்கு காற்றுக்களையும் பிடித்
திருக்கக் கண்டேன்.

மேலும் சீவனுள்ள பராபரனுடைய முத்தி ௨
ரைக்கோலையுடைய வேறொரு தூதனைச் சூரி
யன் உதிக்கும் திசையிலிருந்து ஏறிவரக் கண்
டேன்; அவன் பூமியையும் சமுத்திரத்தையும்
சேதப்படுத்துகிறதற்கு அதிகாரம் பெற்ற அந்த
நான்கு தூதரையும் நோக்கி, — [25]நாம் நம்மு ௩
டைய பராபரனுடைய ஊழியக்காரரின் நெற்
றிகளில் [26]முத்திரைபோட்டுத் தீருமளவும், [27]பூமி
யையும் சமுத்திரத்தையும் மரங்களையும் சேதப்
படுத்தாதிருங்கள் என்று மிகவும் சத்தமிட்டுக்
கூப்பிட்டான்.

[28]மேலும் முத்திரைபோடப்பட்டவர்களின் ௪
தொகையைக் கேட்டேன்; இஸ்ரவேல் சந்ததி
யாராகிய சகல கோத்திரங்களிலும் முத்திரை
போடப்பட்டவர்கள் [29]௱௪௰௪௲-பேர்.—அதற்கு ௫
வகை, யூதா கோத்திரத்தில் முத்திரைபோடப்
பட்டவர்கள் ௰௨௲-பேர்; ரூபன் கோத்திரத்தில்
முத்திரைபோடப்பட்டவர்கள் ௰௨௲-பேர்; காத்
கோத்திரத்தில் முத்திரைபோடப்பட்டவர்கள்
௰௨௲-பேர். — அசேர் கோத்திரத்தில் முத்திரை ௬
போடப்பட்டவர்கள் ௰௨௲-பேர்; நவுதலி கோத்
திரத்தில் முத்திரைபோடப்பட்டவர்கள் ௰௨௲-
பேர்; மனாசே கோத்திரத்தில் முத்திரைபோடப்
பட்டவர்கள் ௰௨௲-பேர்.—சிமெயோன் கோத் ௭
திரத்தில் முத்திரைபோடப்பட்டவர்கள் ௰௨௲-
பேர்; லேவி கோத்திரத்தில் முத்திரைபோடப்
பட்டவர்கள் ௰௨௲-பேர்; இசக்கார் கோத்திரத்தில்

1 வெளி. ௪. ௭.—2 சகரி. ௬. ௩. 3 எசே. ௰௪. ௨௧.—4 ௩ மோ. ௨௬. ௨௨.-5 வெளி. ௩ ௯.-6 ௨ தீமோ. ௩. ௮ வெளி. ௰௨. ௰௭: ௰௯. ௰. 7 வெளி. ௨௰. ௪.—8 வெளி. ௮. ௩: ௯. ௰௩: ௰௪. ௰௮.—9 வெளி. ௩. ௭. 10 சகரி ௧. ௰௨.—11 வெளி. ௰௧. ௰௮: ௰௯. ௨ —12 வெளி. ௩. ௪. ௫: ௭. ௯. ௰௪.—13 எபி. ௰௧. ௪௰. வெளி. ௰௪. ௰௩.—14 வெளி. ௰௧. ௰௩. 15 யோவே ௨ ௰, ௩௧: ௩. ௰௫. மத். ௨௪. ௨௯. அப். ௨. ௨௰.-16 வெளி. ௮. ௰: ௯. ௧.—17 சங். ௱௨. ௨௬. ௰. அ. லூக். ௨௧. ௨௰. வெளி. ௯. ௩. ௭௪. ௩. ௪. எபி. ௧. ௰௨, ௰௩. 18 எரே. ௩. ௨௩: ௪. ௨௪. வெளி. ௰௬. ௨௰ -19 ஏசா. ௨. ௰௯ -20 ஏசா ௰௩. ௯. ௰. செப் ௧. ௰௪. ௰. வெளி. ௰௬. ௰௪.-21 சங். ௭௬. ௭.-22 ஓசே. ௰. ௮. 23 வெளி. ௯ ௪.—24 தானி. ௭. ௨. 25 வெளி. ௨ ௨. ௪.—26 எசே. ௯ ௪. வெளி. ௰௪. ௧.—27 வெளி. ௬. ௬: ௯. ௪.—28 வெளி. ௯. ௰௬. 29 வெளி. ௰௪. ௧.

* அல்லது அவர்களுக்கு —† அல்லது பிஞ்சான.

முத்திரைபோடப்பட்டவர்கள் ௰௨-பேர். —
சேபுலோன் கோத்திரத்தில் முத்திரைபோடப்
௮ பட்டவர்கள் ௰௨-பேர்; யோசேப்புக் கோத்தி
ரத்தில் முத்திரைபோடப்பட்டவர்கள் ௰௨-
பேர்; பென்யமீன் கோத்திரத்தில் முத்திரைபோ
டப்பட்டவர்கள் ௰௨-பேர்.

௯ இவற்றிற்குப்பின்பு நான் பார்த்து, [1]சகல தே
சத்தாரிலும், கோத்திரங்களிலும், (மற்றச்) சனக்
கூட்டங்களிலும், பாஷைக்காரரிலுமிருந்து வந்
ததுமாய், [2]ஒருவனும் எண்ணக்கூடாததுமாய்
இருந்த திரளான கூட்டமாகிய [3]சனங்கள்
வெள்ளை அங்கிகளைத் தரித்து, தங்கள் கைகளில்
குருத்தோலைகளைப் பிடித்தவர்களாய் ஆசனத்திற்
குமுன்பாகவும் ஆட்டுக்குட்டிக்குமுன்பாகவும்
௰ நிற்கக்கண்டேன். — மேலும் அவர்கள் [4]இரட்
சிப்பின் (கனம்) [5]ஆசனத்தின்மேல் உளுக்காரு
கிற எங்கள் பராபரனுக்கும் ஆட்டுக்குட்டியான
வருக்கும் செலுத்தப்படக்கடவதென்று மிகவும்
௰௧ சத்தமிட்டுக் கூப்பிட்டார்கள். — அல்லாமலும்
[6]தூதர்கள் யாவரும் ஆசனத்தையும் மூப்பரையும்
நான்கு சீவன்களையும் சூழ நின்று, ஆசனத்திற்
குமுன்பாகச் சாஷ்டாங்கமாய் விழுந்து பராபர
௰௨ னைத் தொழுதுகொண்டு, — [7]ஆமென், எங்கள்
பராபரனுக்குத் துதியும், மகிமையும், ஞான
மும், தோத்திரமும், கனமும், வல்லமையும்,
பெலனும் என்றென்றைக்கும் உண்டாகக்கட
வது, ஆமென் என்றார்கள்.

௰௩ அப்பொழுது மூப்பர்களில் ஒருவன் என்னை
நோக்கி, [8]வெள்ளை அங்கிகளைத் தரித்திருக்கிற
இவர்கள் யார்? எங்கேயிருந்து வந்தார்கள் என்று
௰௪ கேட்டான்.—அதற்கு நான் என் ஆண்டவனே,
அது உமக்குத் தெரியும் என்றேன்; அப்பொழுது
அவன் சொன்னதாவது: [9]இவர்கள் மிகுந்த உப
த்திரவத்திலிருந்து வந்தவர்கள்; [10]இவர்கள் தங்
கள் அங்கிகளை ஆட்டுக்குட்டியானவருடைய
௰௫ இரத்தத்திலே தோய்த்து வெளுத்தவர்கள்.—ஆன
படியால் இவர்கள் பராபரனுடைய ஆசனத்திற்
குமுன்பாக இருந்து, இரவும் பகலும் அவரு
டைய ஆலயத்திலே அவருக்குப் பணிவிடை
செய்வார்கள்; [11]ஆசனத்தின்மேல் உளுக்காந்தி
ருக்கிறவர் இவர்களுக்குள்ளே வாசமாயிருப்
௰௬ பார்.—[12]இனி இவர்கள் பசியடைவதுமில்லை;
தாகம் அடைவதுமில்லை; [13]வெயிலாவது மற்
றெந்த உஷ்ணமாவது அவர்கள்மேல் படுவது
௰௭ மில்லை.—ஆசனத்தின் மத்தியிலிருக்கிற ஆட்டுக்
குட்டியானவரே [14]அவர்களை மேய்த்து, அவர்க
ளைச் சீவதண்ணீருள்ள ஊற்றுகளினிடத்திற்கு
நடத்துவார்; இவர்களுடைய கண்ணீர் யாவை
யும் [15]பராபரன் துடைப்பார் என்றான்.

## ௮. அதிகாரம்.

*௧. ஏழாம் முத்திரை, திறக்கப்பட்டபோது, ௨. ஒவ்வொரு எக்காளத்தைப் பிடித்த ஏழு தூதர்கள் தோன்றி, ௯. அவர்களில் நாலுபேர் எக்காளங்களை ஊதினபோது பெரிய வாதைகள் உண்டானதையும், ௩. மற்றொரு தூதன் பொற்பீடத்தின்மேலுள்ள பரிசுத்தவான்களின் செபங்களோடே சுகந்தவர்க்கங்கள் இட்டதையும் சொல்லியது.*

[16]பின்பு அவர் ஏழாம் முத்திரையைப் பேர்த்த ௧
பொழுது பரமண்டலத்திலே ஏறக்குறைய அரை
மணி நேரமளவும் அமைதல் உண்டாயிற்று.

மேலும், [17]பராபரனுக்குமுன்பாக நின்ற ௨
ஏழு தூதர்களையும் கண்டேன்; [18]அவர்களுக்கு
ஏழு எக்காளங்கள் கொடுக்கப்பட்டன.—வே ௩
றொரு தூதனும் தூபங்காட்டும் பொற்கலசத்
தைப் பிடித்துவந்து பலிபீடப்படியிலே நின்
றான்; அல்லாமலும், [19]ஆசனத்திற்குமுன்பாக
இருந்த பொற்பீடத்தின்மேலே [20]பரிசுத்தவான்
கள் எல்லாருடைய செபங்களுடனேயுங்கூடக்
கொடுக்கும்படிக்கு,* அநேக சுகந்த வருக்கங்
கள் அவனுக்குக் கொடுக்கப்பட்டன.—அப்ப ௪
டியே பரிசுத்தவான்களுடைய செபங்களுட
னே கூடச் [21]சுகந்தவருக்கங்களின் புகை தூத
னுடைய கையிலிருந்து பராபரனுக்குமுன்பாக
எழும்பிற்று.—பின்பு அந்தத் தூதன் தூபகலசத் ௫
தை எடுத்துக்கொண்டு, அதைப் பலிபீடத்தி
லுள்ள நெருப்பினால் நிரப்பி, பூமியில்† கொட்
டினான்; உடனே [22]சத்தங்களும், இடிமுழக்கங்
களும், மின்னல்களும், [23]பூமி அதிர்தலும் உண்
டாயின.

பின்பு ஏழு எக்காளங்களை உடைய ஏழு தூதர் ௬
கள் எக்காளத்தை ஊதுகிறதற்கு எத்தனம்பண்
ணினார்கள்.

முதலாம் தூதன் எக்காளம் ஊதினான்; [24]அப் ௭
பொழுது இரத்தம் கலந்த கல்மழையும் அக்கி
னியும் உண்டாகித் [25]தரையிலே கொட்டப்பட்
டன; அதினாலே [26]மரங்களில் மூன்றில் ஒரு
பங்கு வெந்துபோயிற்று; பசும்புல் எல்லாம்
எரிந்துபோயிற்று.

இரண்டாம் தூதன் எக்காளம் ஊதினான்; அப் ௮
பொழுது அக்கினியால் வேகிற [27]ஒரு பெரிய
பருவதம்போலானது சமுத்திரத்திலே போடப்
பட்டது; அதினாலே [28]சமுத்திரத்தின் மூன்றில்
ஒருபங்கு [29]இரத்தமாயிற்று. — [30]சமுத்திரத்தில் ௯
இருந்த சீவனுள்ள சிருட்டிகளில் மூன்றில் ஒரு
பங்கு செத்துப்போயிற்று; கப்பல்களில் மூன்
றத்தொருபங்கு அழிந்தது.

---

1 வெளி. ௫. ௯.—2 உரோ. ௰௧. ௨௫.—3 வெளி. ௧. ௫, ௰௮: ௬ ௪: ௯. ௰௧. ௰௪. வசனம். 4 சங். ௩.௮. ஏசா. ௪௩.௰௧. எரே.௩. ௨௩. ஓசே.௰௩.௪. வெளி ௰௯.௧. 5 வெளி. ௫. ௰௩.—6 வெளி. ௪.௬. 7 வெளி. ௫. ௰௩, ௰௪.—8 ௯. வச. 9 வெளி.௬.௯: ௰௭.௬.—10 ஏசா. ௧. ௰௮. எபி.௯.௰௪. ௧ யோ. ௧. ௭. வெளி. ௧. ௫. சகரி. ௩. ௩,௪, ௫. 11 ஏசா. ௪. ௫, ௬. வெளி. ௨௧. ௩. 12 ஏசா.௪௯.௰.—13 சங். ௧௨௧. ௬. வெளி.௨௧.௪.—14 சங். ௨௩. ௧: ௩௬. ௮. யோவா. ௰. ௰௧, ௰௪.

15 ஏசா. ௨௫. ௮. வெளி. ௨௧. ௪. 16 வெளி.௬.௧.—17 மத்.௰௮.௰. லூக். ௧. ௰௯.—18 ௨ நாளா. ௨௯.௨௫—௨௮.—19 ௨ மோ. ௩௰.௧. வெளி. ௯. ௧௩.—20 வெளி.௫. ௮.—21 சங். ௧௪௧.௨. லூக்.௧. ௰.—22 வெளி. ௰௧.௰௯.—23 ௨ சாமு. ௨௨. ௮. ௧ இரா. ௰௯. ௰௧. அப். ௪. ௩௧. 24 எசே.௩௮.௨௨.—25 வெளி.௰௬. ௨.—26 ஏசா.௨.௰௩. வெளி.௯.௪. 27 எரே. ௫௧.௨௫. ஆமோ ௭. ௪. 28 வெளி ௰௬.௩.—29 எசே.௰௪.௰௯. 30 வெளி. ௰௬. ௩.

* அல்லது சேர்க்கும்படிக்கு.—† அல்லது பூமியின்மேல்.

௰ மூன்றாம் தூதன் எக்காளம் ஊதினான்; [1]அப்
பொழுது ஒரு பெரிய நட்சத்திரம் தீவட்டியைப்
போல எரிந்து வானத்திலிருந்து விழுந்தது; [2]அது
ஆறுகளில் மூன்றத்தொருபங்கின்மேலும் நீரூற்
௰௧ றுகள்மேலும் விழுந்தது. — [3]அந்த நட்சத்திரத்
திற்கு எட்டி என்று பேர்; [4]அதினாலே தண்ணீ
ரில் மூன்றத்தொருபங்கு எட்டியைப்போலக்
கசப்பாயிற்று; இப்படிக் கசப்பான தண்ணீரி
னாலே மனிதரில் அநேகர் செத்தார்கள்.

௰௨ [5]நான்காம் தூதன் எக்காளம் ஊதினான்; அப்
பொழுது சூரியனில் மூன்றத்தொருபங்கும், சந்
திரனில் மூன்றத்தொருபங்கும், நட்சத்திரங்க
ளில் மூன்றத்தொருபங்கும் சேதப்படுத்தப்பட்
டன; அதினாலே அவற்றவற்றின் மூன்றில் ஒரு
பங்கு இருள் அடைந்தது; பகலிலும் மூன்றில்
ஒருபங்கு பிரகாசமில்லாமல் இருந்தது; இரவி
லும் அப்படியே ஆயிற்று.

௰௩ பின்பு [6]ஒரு தூதன் வானத்தின் மத்தியிலே
பறந்துவரக்கண்டேன்; அவன் இனிமேல் எக்
காளம் ஊதவேண்டிய மற்ற மூன்று தூதருடைய
எக்காள சத்தங்களால் பூமியில் குடியிருக்கிறவர்
களுக்கு [7]ஐயோ, ஐயோ, ஐயோ, வேதனைவ
ரும் என்று மிகுந்த சத்தமிட்டுக் கூப்பிடக்கேட்
டேன்.

## ௯. அதிகாரம்.

*௧. ஐந்தாம் தூதன் எக்காளத்தை ஊதினபோது, வானத்திலிருந்து விழுந்த நட்சத்திரமென்னும் சாத்தானுக்குப் பாதாளத்தின் திறவுகோல் கொடுக்கப்பட்டதையும், ௨. அவன் பாதாளத்தைத் திறந்தவுடனே தேள்களைப் போல வெட்டுக்கிளிகள் புறப்பட்டதையும், ௰௨. அப்போது முதலாவது வாதை கடந்துபோனதையும், ௰௩. ஆறாம் எக்காளம் ஊதப்பட்டதையும், ௰௪. கட்டப்பட்டிருந்த நாலு தூதர்கள் விட்டுவிடப்பட்டதையும் சொல்லியது.*

௧ ஐந்தாம் தூதன் எக்காளம் ஊதினான்; அப்பொ
ழுது [8]வானத்திலிருந்து பூமியின்மேல் விழுந்த
நட்சத்திரத்தைக் கண்டேன்; அதற்குப் [9]பாதா
ளமாகிய குழியின் திறவுகோல் கொடுக்கப்பட்
௨ டது.—அது பாதாளக்குழியைத் திறந்தது; [10]உ
டனே பெருஞ்சூளையின் புகையைப்போல, அந்
தக் குழியிலிருந்து புகை எழும்பிற்று; அந்தக்
குழியின் புகையினாலே சூரியனும் ஆகாயமும்
௩ அந்தகாரப்பட்டன. — அல்லாமலும் அந்தப்பு
கையிலிருந்து [11]வெட்டுக்கிளிகள் புறப்பட்டுப்
பூமியின்மேல் வந்தன; [12]அவைகளுக்குப் பூமி
யின் தேள்களுக்கு உண்டாயிருக்கிற அதிகாரத்
திற்கு ஒப்பான அதிகாரம் கொடுக்கப்பட்டது.—
௪ மேலும் அவைகள் [13]பராபரனுடைய முத்திரை
யை நெற்றிகளில் தரியாத மனிதரைமாத்திரமே
அன்றி, [14]பூமியின் புல்லையும் பசுமையான எந்
தப் பூண்டையும் எந்த மரத்தையும் [15]சேதப்படுத்
தாதபடிக்கு அவைகளுக்கு உத்தரவுகொடுக்கப்
பட்டது.—மேலும் அவர்களைக் கொலைசெய்யும் ௫
படிக்கு அல்ல, [16]ஐந்துமாதமளவும் அவர்களை
வேதனைப்படுத்தும்படிக்கே அதிகாரம் அவைக
ளுக்குக்கொடுக்கப்பட்டது;அவைகள் செய்யும்
வேதனை தேளானது மனிதரைக் கொட்டும்பொ
ழுது உண்டாகும் வேதனையைப்போல இருக்
கிறது. — அந்நாள்களில் [17]மனிதர்கள் மரணத் ௬
தைத் தேடி அதைக் காணாதிருப்பார்கள்; மரிக்க
ஆசைப்படுவார்கள்; மரணம் அவர்களுக்கு வி
லகி ஓடிப்போம்.—மேலும் [18]அந்த வெட்டுக்கிளி ௭
களின் உருவம் யுத்தத்திற்கு ஆயத்தமாக்கப்பட்
ட குதிரைகளுக்கு ஒப்பாயிருந்தது; [19]அவைக
ளின் தலைகள்மேலே பொற்கிரீடங்களைப் போ
ன்றவைகள் இருந்தன; [20]அவைகளின் முகங்
கள் மனிதருடைய முகங்களைப்போல இருந்
தன. அவைகளின் மயிர் ஸ்திரிகளுடைய மயிர்
போல இருந்தது.—[21]அவைகளின் பற்கள் சிங் ௮
கங்களின் பற்களைப்போல இருந்தன.— அல்லா ௯
மலும் மார்பில் இருப்புக்கவசங்களைப்போல,
கவசங்கள் அவைகளுக்கு இருந்தன; அவைகள்
சிறகுகளினால் செய்த இரைச்சல் யுத்தத்திற்குச்
செல்லுகிற [22]அநேகம் குதிரைகள்பூண்ட இரதங்
களின் இரைச்சலைப்போல இருந்தது.—மேலும் ௰
அவைகள் தேள்களின் வால்களுக்கு ஒப்பான
வால்களையும், அந்த வால்களில் கொடுக்குகளை
யும் உடையவைகளாய் இருந்தன; இப்படி
அவைகள் ஐந்துமாதமளவும் [23]மனிதரைச் சேதப்
படுத்துவதற்கு அதிகாரத்தை உடையவைகளாய்
இருந்தன.—அன்றியும் [24]பாதாளத்தின் தூதன் ௰௧
[25]அவைகளுக்கு இராசனாயிருக்கிறான்; அவ
னுக்கு எபிரேயு பாஷையிலே அப்தோன் என்
றும் கிரேக்கை பாஷையிலே அப்பொல்லி
யோன்* என்றும் பேருண்டாயிருக்கின்றன.

[26]முதல்வேதனை போயிற்று; இதற்குப்பின்பு ௰௨
வேறிரண்டு வேதனைகள் அதோ வருகின்றன.

ஆறாம் தூதன் எக்காளம் ஊதினான்; அப்பொ ௰௩
ழுது பராபரனுக்குமுன்பாக இருந்த பொற்பீ
டத்தின் நான்கு கொம்புகளிலுமிருந்து ஒருவன்
எக்காளத்தைப் பிடித்திருந்த ஆறாம் தூதனை
நோக்கி, — [27]நீ ஐபிராத்தென்னும் பெரிய ஆற் ௰௪
றினிடத்திலே கட்டப்பட்டிருக்கிற நான்கு தூ
தரை அவிழ்த்துவிடு என்று சத்தமிட்டுச் சொல்
லக்கேட்டேன். — உடனே அந்த நாலு தூதர் ௰௫
களும் அவிழ்த்துவிடப்பட்டார்கள்; அவர்கள்
மனிதர்களில் மூன்றத்தொருபங்கைக் கொலை
செய்யும்படிக்கு ஒருமணிநேரத்திற்கும், ஒரு நா
ளுக்கும், ஒரு மாதத்திற்கும், ஒரு வருஷத்திற்
கும்† ஆயத்தமாக்கப்பட்டு இருந்தவர்கள். —
[28]குதிரைச் சேனைகளான [29]இராணுவங்களின் ௰௬

1 எசா. ௰௪. ௰௨. வெளி. ௯. ௧. ௰௨: ௰௧. ௰௪. —8 லூக். ௰. ௰௮. 2 வெளி. ௰௬. ௪ —3 ரூத். ௧. வெளி. ௮. ௰.—9 லூக். ௮. ௩௧. ௨௰.——4 உ மோ. ௰௫. ௨௩. வெளி.௰௭.௮: ௨௰.௧:௨. ௰௧.௩௪. எரே. ௯. ௰௫: ௨௩. ௰௫.-5 எசா. 10 யோவே.௨.௨,௰.—11 உமோ.௰. ௰௩.௰. ஆமோ. ௮. ௯ -6 வெளி. ௪. கியா. ௭. ௰௨.—12 ௰. ௩௪. ௰௪. ௩: ௰௧. ௰௭.—7 வெளி ௯. 13 வெளி. ௭. ௩. உ மோ. ௰௨.௨௩.

எசே. ௯. ௪.—14 வெளி. ௮. ௭. 21 யோவே.௧.௬.—22 யோவே. ௨. 15 வெளி. ௯.௧ : ௭. ௩.—16 வெளி. ௫,௯, ௭.—23 ௫ ௩௪.-24 ௧. ௩௪. ௰௧,௭.௰.௩௪.—17 யோபு.௩.௨௧ 25 எபே. ௨. ௨.—26 வெளி ௮.௰௩. எசா.௨.௰௯. எரே.௮.௩. வெளி. 27 வெளி.௰௬.௰௨.—28 எசே.௩௮.௪. ௩. ௰௯. — 18 யோவே. ௨. ௪. 29 சங். ௬௮. ௰௭. தானி. ௭. ௰. 19 நாகூ. ௩. ௰௭.—20 தானி.௭.௮.

* அதாவது சங்காரன்.—† அல்லது மூன்றத்தொருபங்கை ஒரு மணிநேரத்திலும் கொலைசெய்யும்படிக்கு.

தொகை இருபதுகோடியாய் இருந்தது; [1]அவை
௰௭ களின் தொகையைக் கேட்டேன்.—தரிசனையி
லே குதிரைகளையும் அவைகளின்மேல் இருந்த
வர்களையும் எப்படிக் கண்டேன் என்றால், அவர்
கள் அக்கினி நிறமும் பதுமராக நிறமும் கந்தக
நிறமுமான மார்பின் கவசங்களை உடையவர்
கள்; [2]குதிரைகளுடைய தலைகள் சிங்கங்களு
டைய தலைகளைப்போல இருந்தன; [3]அவைகளு
டைய வாய்களிலிருந்து அக்கினியும், புகையும்,
௰௮ கந்தகமும் புறப்பட்டன. — அவைகளுடைய
வாய்களிலிருந்து புறப்பட்ட அக்கினி, புகை,
கந்தகம் என்ற இம்மூன்றினாலும் மனிதரில் மூன்
றத்தொருபங்கு கொலைசெய்யப்பட்டார்கள்.—
௰௯ அந்தக் குதிரைகளுடைய வல்லமை அவைகளு
டைய வாயிலேயும் வால்களிலேயும் இருக்கின்
றது; எப்படியெனில், அவைகளுடைய வால்
கள் பாம்புகளுக்கு ஒப்பானவைகளாயும், தலை
கள் உள்ளவைகளாயும் இருக்கின்றன; அவை
௨௰ களாலே சேதம்செய்கின்றன. — அப்படியிருந்
தும், அந்த வாதைகளால் கொலையுண்ணாத மற்ற
மனிதர்கள் [4]தங்கள் கைகளின் கிரியைகளைவிட்
டுக் குணப்படவில்லை; அவர்கள் பின்னும் [5]பேய்
களையும், [6]பொன், வெள்ளி, செம்பு, கல்,
மரத்தால் செய்யப்பட்டவைகளாயும், காணவும்
கேட்கவும் நடக்கவும்மாட்டாதவைகளாயும் இ
ருக்கிற விக்கிரகங்களையும் தொழுதுகொண்டுவந்
௨௧ தார்கள். — அல்லாமலும் அவர்கள் தங்கள் கொ
லைபாதகங்களையும், [7]தங்கள் சூனியங்களையும்,
தங்கள் வேசித்தனங்களையும், தங்கள் களவுகளை
யும்விட்டுக் குணப்படவில்லை.

## ௰. அதிகாரம்.

௧. வல்லமையுள்ள ஒரு தூதன் தன் கையிலே திறக்கப்பட்ட புத்தகத்தோடே காணப்பட்டு, ௬. இனிக்காலம் இராதென்று என்றென்றைக்கும் ஜீவிக்கிறவர்மேல் ஆணையிட்டதையும், ௯. யோவான் அந்தப் புத்தகத்தை எடுத்துச் சாப்பிடும்படி கட்டளைபெற்றதையும் சொல்லியது.

௧ பின்பு பலமுள்ள வேறொரு தூதன் இறங்கக்
கண்டேன்; மேகம் அவனைச் சூழ்ந்திருந்தது;
[8]அவனுடைய சிரசின்மேல் வானவில் இருந்
தது; [9]அவனுடைய முகம் சூரியனைப்போலவும்,
[10]அவனுடைய கால்கள் அக்கினித் தூண்களைப்
௨ போலவும் இருந்தன.—மேலும் விரிக்கப்பட்ட
ஒரு சிறிய புத்தகத்தை அவன் தன் கையில்
பிடித்துக்கொண்டு, [11]தன்னுடைய வலதுபாதத்
தைச் சமுத்திரத்தின்மேலும் இடதுபாதத்தைத்
௩ தரையின்மேலும் வைத்து,—சிங்கம் முழங்குகி
றதுபோல மிகவும் சத்தமிட்டுக் கூப்பிட்டான்;
அவன் கூப்பிட்டபொழுது, [12]ஏழு இடிகளும்
௪ தங்கள் சத்தங்களை முழக்கின. — அவ்வேழு
இடிகளும் தங்கள் சத்தங்களை முழக்கினபொ
ழுது, நான் (அதை) எழுதவேண்டுமென்று இரு
ந்தேன்; அப்பொழுது [13]ஏழு இடிமுழக்கங்கள்
சொன்னவைகளை நீ எழுதாமல் முத்திரைப்ப
டுத்து என்று வானத்திலிருந்து ஒரு சத்தம் உண்
டாகக் கேட்டேன். — அன்றியும் நான் சமுத் ௫
திரத்தின்மேலும் தரையின்மேலும் நிற்கக்கண்ட
தூதன் [14]தன்னுடைய கையை வானத்திற்கு
நேராக உயர்த்தி, இன்னம் காலம்வர (இல்லை).—
பராபரன் தம்முடைய ஊழியக்காரராகிய தீர்க் ௬
கதரிசிகளுக்குச் சுவிசேஷமாய் அறிவித்தபடி
ஏழாம் தூதன் எக்காளத்தை ஊதும் சத்தத்தின்
[15]நாட்களிலே [16]அவருடைய இரகசியம் நிறை
வேறும் என்று, — [17]வானத்தையும் அதிலுள்ள ௭
வைகளையும், பூமியையும் அதிலுள்ளவைகளை
யும், சமுத்திரத்தையும் அதிலுள்ளவைகளையும்
சிருட்டித்தவராயும் என்றென்றைக்கும் பிழைக்
கிறவராயும் இருக்கிறவர்மேலே ஆணையிட்டுக்
(கூப்பிட்டான்).
பின்பு நான் [18]கேட்கும்படி, வானத்திலிருந்து ௮
சத்தமிட்டவன் மறுபடியும் என்னுடனே சொன்
னது: சமுத்திரத்தின்மேலும் தரையின்மேலும்
நிற்கிற தூதனுடைய கையிலிருக்கிற விரிக்கப்
பட்ட சிறிய புத்தகத்தை நீ போய் வாங்கிக்
கொள் என்றான்.—அந்தப்படி நான் தூதனிடத் ௯
தில் போய், இந்தச் சிறிய புத்தகத்தை எனக்குக்
கொடுக்கவேண்டும் என்றேன்; அப்பொழுது
அவன் என்னை நோக்கி, [19]நீ இதை எடுத்து
விழுங்கு; உன் வயிற்றிற்கு இது கசக்கப்பண்
ணும்; ஆகிலும் உன் வாய்க்கு இது தேனைப்
போல மதுரமாயிருக்கும் என்றான். — அப்படி ௰
நான் அந்தச் சிறிய புத்தகத்தைத் தூதனுடைய
கையில் வாங்கி, அதை விழுங்கினேன்; [20]என்
வாய்க்கு அது தேனைப்போல மதுரமாய் இருந்
தது; நான் அதை விழுங்கின பின்பு [21]என்
வயிறு மிகுந்த நோய்பட்டது. — அப்பொழுது ௰௧
அவன் என்னுடனே சொன்னது: நீ மறுபடியும்
அநேக சனக்கூட்டங்களையும், தேசத்தாரை
யும், பாஷைக்காரரையும், இராசாக்களையும்
குறித்துத் தீர்க்கதரிசனம்சொல்லவேண்டும் என்
றான்.

## ௰௧. அதிகாரம்.

௩. இரண்டு சாட்சிகள் தீர்க்கதரிசனம்சொன்னதையும், ௬. அவர்கள் மழை பெய்யாதபடிக்கு வானத்தை அடைக்க அதிகாரம் உள்ளவர்களாயிருந்ததையும், ௭. மிருகம் அவர்களோடே எதிர்த்து அவர்களைக் கொன்றதையும், ௮. அவர்கள் உடல்கள் அடக்கம்பண்ணப்படாமல் கிடந்து, ௰௧. மூன்றரை நாளுக்குப் பின்பு எழுந்திருந்ததையும், ௰௪. இரண்டாம் வாதை கடந்துபோனதையும், ௰௫. ஏழாம் எக்காளம் சத்திக்கப்பட்டதையும் சொல்லியது

பின்பு [22]ஒரு தடிக்கு ஒப்பான அளவுகோலை ௧
(ஒருவன்) எனக்குக் கொடுத்துச் சொன்னதா
வது: [23]நீ எழுந்து, பராபரனுடைய ஆலயத்தை
யும் பலிபீடத்தையும், அதிலே தொழுதுகொள்
ளுகிறவர்களையும் அளந்து பார்த்துக்கொள் —
[24]ஆலயத்திற்குப் புறம்பே இருக்கிறபிரகாரம் ௨

1 வெளி. ௭. ௪.—2 ௧ நாளா. ௰௨. ௬. ௨௧.—7 வெளி. ௨௨. ௰௫.
அ. ௭௪. ௬. ௨௮. ௨௯.—3 ௭௪. 8 எசே. ௧. ௨௮.—9 மத். ௰௭. ௨.
௯. ௰௫.—4 ௫ மோ. ௩௧. ௨௯. வெளி. ௧ ௰௬.—10 வெளி. ௧. ௰௫.
5 ௩ மோ. ௰௭. ௭. ௫ மோ. ௩௨. ௰௭. 11 மத். ௨௮. ௰௮.—12 வெளி. ௮ ௫.
௪௰. ௩௯. ௩௭. ௧ கொரி. ௰. ௨௰. 13 தானி. ௮. ௨௬: ௰௨. ௪, ௯.
6 ௪௰ ௱௫. ௪: ௩௬. ௰௫ தானி. 14 ௨ மோ. ௬. ௮ தானி. ௰௨. ௭.

15 வெளி. ௰௧. ௰௫.–16 தானி. ௰௨. ௭. 22 எசே ௪௰ ௩ ௫. சகரி. ௨. ௧.
வெளி. ௰௯. ௰௭.—17 நெகே. ௯. வெளி. ௨௧. ௰௫.
௬. வெளி. ௪. ௰௧: ௰௪. ௭. 23 ௪ மோ. ௨௩. ௰௮.
18 ௪. வச.—19 எரே ௰௫. ௰௬. எசே. 24 எசே. ௪௰. ௰௭, ௨௰.
௨. அ: ௧. ௩, ௨., ௩.
20 எசே. ௩. ௩.—21 எசே. ௨ ௰.

னுக்கு எதுவான வேறொரு புத்தகமும் விரிக்
கப்பட்டது; அப்பொழுது மரித்தோர்கள் [1]தங்
கள் தங்கள் கிரியைகளுக்குத்தக்கவிதமாகப் புத்
தகங்களில் எழுதப்பட்டவைகளின்படியே நி
௰௩ யாயத்தீர்ப்பு அடைந்தார்கள்.—சமுத்திரம் தன்
னிலுள்ள மரித்தோரைத் தந்தது; [2]மரணமும்
மரித்தோர் ஸ்தலமும் * தங்களிலுள்ள மரித்தோ
ரைத் தந்தன; [3]யாவரும் தங்கள் தங்கள் கிரியைக
ளின்படியே நியாயத்தீர்ப்பு அடைந்தார்கள்.—
௰௪ [4]பின்பு மரணமும் மரித்தோர் ஸ்தலமும் அக்கி
னிக்கடலிலே தள்ளப்பட்டன; [5]அதுவே இ
௰௫ ரண்டாம் மரணமாம். — சீவனுக்கு எதுவான
புத்தகத்திலே எழுதப்பட்டவனாகக் காணப்ப
டாதவன் [6]அக்கினிக்கடலிலே தள்ளப்பட்
டான்.

## ௨௧. அதிகாரம்.

௧. புதிய வானத்தையும், புதிய பூமியையும், ௰. பரம எருசலேமையும், அதின் மகிமைப் பிரஸ்தாபத்தையும், ௨௩. அதற்குச் சூரிய ஒளி வேண்டியிராமல் பராபரனுடைய மகிமையே அதின் ஒளியாயிருக்கிறதையும், ௨௪. பூமியின் இராசாக்கள் தங்கள் ஐசுவரியங்களை அதற்குக் கொண்டுவந்து செலுத்தினதையுங்குறித்துச் சொல்லியது.

௧ அன்றியும், [7]முந்தின வானமும் முந்தின பூமி
யும் ஒழிந்துபோயிற்றே; சமுத்திரமும் இல்லா
மல் போயிற்றே; பின்பு நான் [8]புதிய வானத்
௨ தையும் புதிய பூமியையும் கண்டேன். — அல்
லாமலும் [9]புதிய எருசலேமாகிய பரிசுத்த பட்ட
ணத்தைப் பராபரனால் பரமண்டலத்திலிருந்து
இறங்கக்கண்டேன்; அது தன் புருஷனுக்காக
அலங்காரமாக்கப்பட்ட [10]மனையாட்டியைப்
௩ போல எத்தனமாக்கப்பட்டிருந்தது. — மேலும்
பரமண்டலத்திலிருந்து உண்டான ஒரு பெரிய
சத்தத்தைக் கேட்டேன்; அது என்னவென்றால்,
பாருங்கள், [11]மனிதர்களிடத்திலே பராபரனு
டைய கூடாரம் இருக்கிறது. அவர்களிடத்திலே
அவர் வாசமாய் இருப்பார்; அவர்களும் அவரு
டைய சனங்களாய் இருப்பார்கள்; பராபரன்
தாமே அவர்களோடேகூட இருந்து அவர்களுக்
௪ குத்தேவனாயிருப்பார்.—[12]அவர்களுடைய கண்
ணீர் யாவையும் பராபரன் துடைப்பார்; முந்தி
னவைகள் போனபடியினாலே [13]இனி மரணமு
மில்லை; [14]துக்கமுமில்லை; அலறுதலுமில்லை;
வருத்தமுமில்லை என்பதே.
௫ அன்றியும் [15]ஆசனத்தின்மேல் உளுக்காந்த
வர் சொன்னது: பாருங்கள், [16]நான் சகலத்தை
யும் புதிதாக்குகிறேன் என்றார்; பின்னும் அவர்
என்னுடனே சொன்னது: [17]இந்த வசனங்கள்
சத்தியமும் உண்மையுமானவைகள் ஆகையால்,
(அவைகளை) எழுது என்றார்.—பின்னும் அவர் ௬
என்னுடனே சொன்னதாவது: [18]ஆயிற்று, [19]நான்
அல்பாவும் ஓமேகாவுமாகிய ஆதியும் அந்தமு
மாய் இருக்கிறேன்; தாகமாயிருக்கிறவனுக்கு
நான் சீவநீரூற்றில் (தண்ணீரைக்) [20]கைமாறில்
லாமல் கொடுப்பேன். — செயங்கொள்ளுகிற ௭
வன் இவைகளைச் † சுதந்தரித்துக்கொள்வான்;
[21]நான் அவனுக்குத்தேவனாயிருப்பேன்.-அவன் ௮
எனக்குக் குமாரனாயிருப்பான்; [22]பயப்படுகிற
வர்களும் அவிசுவாசிகளும், அருவருக்கப்படத்
தக்கவர்களும், கொலைபாதகரும், வேசிமார்க்க
ரும், சூனியக்காரரும், விக்கிரக ஆராதனைக்கார
ரும், சகலவிதமான பொய்யருமானவர்கள் இரண்
டாம் மரணமாகிய அக்கினியும் கந்தகமும் எரி
கிற கடலிலே [23]பங்கை அடைவார்கள் என்றார்.
பின்பு ஏழு கடைசிவாதைகளால் நிறைந்த ௯
ஏழு கலயங்களையுடைய அந்த [24]ஏழுதூதரில்
ஒருவன் என்னிடத்தில் வந்து, ஆட்டுக்குட்டியி
னுடைய [25]மனையாட்டியாகிய ஸ்திரியை உனக்
குக் காண்பிக்கிறேன் வாவென்று என்னுடனே
சொல்லி,-[26]பெரிதும் உயரமுமான ஒரு பர்வதத் ௰
தின்மேல் என்னை ஆவிக்குள் கொண்டுபோய்ப்
பராபரனால் பரமண்டலத்திலிருந்து இறங்கின
தும், பராபரனுடைய [27]மகிமையை அடைந்தி
ருக்கிறதுமான [28]எருசலேம் என்னும் பரிசுத்த
பட்டணத்தை எனக்குக் காண்பித்தான். — அ ௰௧
தின் ஒளி அருமையான இரத்தினக்கல்லைப்போ
லவும் பளிங்கொளியுள்ள ரவாக்கல்லைப்போல
வும் இருந்தது.—அது பெரிதும், உயரமுமான மதி ௰௨
லையும், [29]பன்னிரண்டு வாசல்களையும், அந்த வா
சல்கள்மேலே பன்னிரண்டு தூதரையும் உடை
யதாய் இருந்தது; (அவைகளின்மேலே) இஸ்ர
வேல் சந்ததியாராகிய பன்னிரண்டு கோத்திரத்
தாருடைய நாமங்கள் எழுதப்பட்டிருந்தன. —
கிழக்கே மூன்று [30]வாசல்களும், வடக்கே மூன் ௰௩
று வாசல்களும் தெற்கே மூன்று வாசல்களும்,
மேற்கே மூன்று வாசல்களும் உண்டாயிருந்
தன.—அன்றியும் பட்டணத்தின் மதில் பன்னி ௰௪
ரண்டு அஸ்திபாரங்களும் உடையதாய் இருந்
தது; அவைகளில் [31]ஆட்டுக்குட்டியின் பன்னி
ரண்டு அப்போஸ்தலருடைய பன்னிரண்டு நா
மங்களும் இருந்தன. — அல்லாமலும், என்னு ௰௫
டனே பேசினவன் பட்டணத்தையும், அதின்
வாசல்களையும், அதின் மதிலையும், அளக்கிறதற்
குப் [32]பொன் கோலைப் பிடித்திருந்தான்.—மே ௰௬
லும் அந்தப்பட்டணம் சதுரமாய் இருக்கின்றது;

1 எரே.௰௭.௰: ௩௨.௰௯. மத்.௰௬.௨௭. ௨ரோ.௨.௬. வெளி.௨ ௨௩: ௨௨. ௰௨. ௰௬. வச.—2 வெளி. ௯. அ. 3 வெளி. ௯.அ.—4 ௧ கொரி. ௰௫. ௨௬, ௫௪, ௫௫.—5 வெளி. ௨௧. அ. ௯. வச.—6 வெளி. ௰௯. ௨௰. 7 வெளி. ௨௰. ௰௧.—8 ஏசா. ௬௫. ௰௭: ௬௬.௨௨. ௨ பே. ௩.௰௩. 9 ஏசா.௫௨. ௧. கலா. ௪.௨௬. எபி. ௰௧.௰: ௰௨. ௨௨: ௰௩.௰௪. வெளி. ௩.௰௨. ௰.வச.—10 ஏசா. ௬௪. ௫: ௬௧. ௰. ௨ கொரி.௰௧.௨.—11 ௩ மோ. ௨௬. ௰௧, ௰௨. எசே.௪௩. ௭. ௨ கொரி. ௬. ௰௬. வெளி ௭. ௰௫.—12 ஏசா.௨௫ அ. வெளி.௭. ௰௭.—13 ௧ கொரி.௰௫. ௨௬. ௫௪. வெளி.௨௰.௰௪.—14 ஏசா.௩௫ ௰: ௬௫.௰: ௬௫.௰௯.—15 வெளி. ௪. ௨,௯: ௫. ௧: ௨௰.௰௧.-16 ஏசா.௪௩. ௰௯. ௨ கொரி.௫.௰௭.-17 வெளி. ௰௯. ௯.—18 வெளி. ௰௬. ௰௭. 19 வெளி. ௧. அ: ௨௨. ௰௩ —20 ஏசா. ௫௫. ௧: ௯௯. ௧. யோவா ௪.௰, ௰௪: ௭. ௩௭. வெளி.௨௨.௰௭.-21 சகரி. ௮ அ. எபி. அ. ௰. —22 ௧ கொரி. ௬. ௯, ௰. கலா ௫.௰௯.௨௰, ௨௧. எபே. ௫.௫. ௧ தீமோ ௧.௯. எபி. ௰௨. ௰௪. வெளி. ௨௨ ௰௫. 23 வெளி.௨௰. ௰௪, ௰௫.—24 வெளி. ௰௫. ௧, ௯, ௭. 25 வெளி. ௰௯ ௭. ௨.வச. 26 வெளி. ௧.௰: ௰௭. ௩.—27 வெளி. ௨௨. ௫. ௨௩ வச. 28 ஏசே ௪௮. ௨. வச. 29 ஏசே. ௪௮. ௩௧-௩௪. 30 ஏசே. ௪௮. ௩௧-௩௪. 31 மத். ௰௬. ௰௮. கலா. ௨. ௯. எபே. ௨. ௨௰.—32 ஏசே. ௪௰. ௩. சகரி. ௨. ௧. வெளி. ௰௧. ௧.

* அல்லது பாதாளமும்.—† அல்லது எல்லாவற்றையும்.

அதின் அகலம் எவ்வளவோ அவ்வளவாய் நீள
மும் இருக்கிறது; அவன் அந்தக் கோலினுலே
பட்டணத்தை அளந்தான்; பன்னீராயிரம் ஸ்தா
தியாய் இருந்தது; அதின் நீளமும் அகலமும்
௰௭ உயரமும் சமமாயிருக்கின்றன. — தூதனுக்கு
இருந்த மனித அளவின்படியே அவன் அதின்
மதிலை அளந்தபொழுது, நூற்று நாற்பத்து நான்கு
௰௮ முழமாயிருந்தது.—மேலும் அதின் மதில் ரவாக்
கல்லால் கட்டப்பட்டிருந்தது; பட்டணம் சுத்
தப் பளிங்குக்கு ஒப்பாகிய சுத்தப் பொன்னுயி
௰௯ ருந்தது.—அன்றியும் [1]பட்டண மதில்களின் அஸ்
திபாரங்கள் சகலவித இரத்தினங்களினுலும் அ
லங்கரிக்கப்பட்டிருந்தன; (அவையாவன) முத
லாம் அஸ்திபாரக்கல் ரவாக்கல், இரண்டாவது
நீலக்கல், மூன்ருவது வயிரம், நான்காவது மரக
௨௰ தம்,—ஐந்தாவது கோமேதகம், ஆருவது சிவப்பு,
ஏழாவது அக்கிக்கல், எட்டாவது படிகப்பச்
சை, ஒன்பதாவது புட்பராகம், பத்தாவது வயிடூ
ரியம், பதினோராவது பதுமராகம், பன்னிரண்
௨௧ டாவது சுகந்திக்கல் இவைகளே. — மேலும்
பன்னிரண்டு வாசல்களும் பன்னிரண்டு முத்
துக்களாயிருந்தன; வாசல்களில் ஒவ்வொன்று
ஒவ்வொரு முத்தாயிருந்தது. மேலும் பட்ட
ணத்தின் [2]வீதி தெளிவுள்ள கண்ணுடியைப்
௨௨ போலச் சுத்தப் பொன்னுயிருந்தது. — [3]தேவா
லயத்தை நான் அதிலே காணவில்லை; சர்வவல்
லமையுள்ள தேவனுகிய பராபரனும் ஆட்டுக்
௨௩ குட்டியுமே அதின் ஆலயம்.—[4]பட்டணத்தைப்
பிரகாசிப்பிக்கும்படிக்குச் சூரியனும் சந்திர
னும் அதற்கு வேண்டுவதில்லை; பராபரனுடைய
மகிமையே அதை வெளிச்சமாக்கிற்று; ஆட்
௨௪ டுக்குட்டியே அதின் விளக்கு.—[5]உலகத்தார்கள்
அதின் ஒளியிலே நடப்பார்கள்; பூமியின் இரா
சாக்கள் தங்கள் மகிமையையும் கனத்தையும்
௨௫ அதற்குள்ளே கொண்டுவருவார்கள். — அங்கே
[6]இராக்காலம் இல்லாதபடியால், [7]அதின் வாசல்
௨௬ கள் ஒருக்காலும் பூட்டப்படாதிருக்கும்.—[8]உல
கத்தார்களுடைய மகிமையையும் கனத்தையும்
௨௭ அதற்குள்ளே கொண்டுவருவார்கள். — [9]அசு
சிப்படுத்துகிறதும் அருவருப்பையும் பொய்யை
யும் நடப்பிக்கிறதுமாகிய ஒன்றும் அதில் பிர
வேசியாது; ஆட்டுக்குட்டியின் [10]ஜீவபுத்தகத்தில்
எழுதப்பட்டவர்கள்மாத்திரம் (அதில் பிரவே
சிப்பார்கள்).

## ௨௨. அதிகாரம்.

*௧. ஜீவதண்ணீருடைய நதியையும், ௨. ஜீவவிருட்சத்தையும், ௫ பராபரனுடைய பட்டணத்திற்கு வெளிச்சம் பராபரன்தாமே என்பதையும், ௯. தேவதூதன் தேவவணக்கத்தைத் தன்னைவிட்டு விலக்கினதையும், ௱௮. பராபரனுடைய வசனத்தில் எதையாகிலும் சேர்க்கவும், கழிக்கவும் கூடாதென்றதையும் சொல்லியது.*

அன்றியும், பராபரனும் ஆட்டுக்குட்டியும் ௧
இருக்கிற ஆசனத்திலிருந்து புறப்பட்டுவந்து,
[11]பளிங்கைப்போல தெளிவான ஜீவதண்ணீ
ருள்ள நதியை எனக்குக் காண்பித்தான். —
[12]பட்டணத்தின் நடு வீதியிலும் நதியின் இரு ௨
கரையிலும் பன்னிரண்டுவிதமான கனிகளைச்
சுமந்து மாதந்தோறும் தன் கனியைக் கொடுக்கிற
[13]ஜீவவிருட்சம் இருந்தது; அந்த விருட்சத்தின்
இலைகள் [14]உலகத்தார்கள் ஆரோக்கியம் அடை
கிறதற்கு ஏதுவானவைகள்; [15]இனிமேல் சாப
மில்லை.—[16]பராபரனும் ஆட்டுக்குட்டியும் இருக் ௩
கிற ஆசனமே அதில் இருக்கும்.—அவருடைய ௪
ஊழியக்காரர் அவருக்கு ஆராதனைசெய்து [17]அவ
ருடைய சமுகத்தைத் தரிசிப்பார்கள்; [18]அவரு
டைய நாமம் அவர்களுடைய நெற்றிகளில்
இருக்கும்.—[19]அங்கே இரவில்லை; ஒரு விளக்கும் ௫
சூரியனுடைய ஒளியும், அவர்களுக்கு வேண்
டுவதில்லை. [20]தேவனுகிய பராபரனே அவர்க
ளுக்கு ஒளியைக் கொடுப்பார்; [21]அவர்கள் என்
றென்றைக்கும் இராசரீகம்பண்ணுவார்கள்.

பின்பு அவர் என்னுடனே சொன்னதாவது: ௬
[22]இந்த வசனங்கள் உண்மையும் சத்தியமுமான
வைகள்; [23]சீக்கிரமாய்ச் சம்பவிக்கவேண்டிய
வைகளைத் தம்முடைய ஊழியக்காரருக்குக்
காண்பிப்பதற்குத் தீர்க்கதரிசிகளின் ஆவிகளு
டைய தேவனுகிய பராபரன் தம்முடைய
தூதனை அனுப்பினுர். — [24]கேளுங்கள், சீக்கிர ௭
மாய் வருகிறேன்; [25]இந்தப் புத்தகத்திலுள்ள
தீர்க்கதரிசன வார்த்தைகளைக் கைக்கொள்ளுகிற
வன் பாக்கியவான் என்ருர்.

யோவானுகிய நானே இவைகளைக் கண்டு ௮
கேட்டேன்; நான் கேட்டுக் கண்டபொழுது,
இவைகளை எனக்குக் காண்பித்த [26]தூதனுடைய
பாதங்களின்முன்பாகத் தொழுதுகொள்ள வி
ழுந்தேன். — அவன் என்னைநோக்கி, [27]நீ இப் ௯
படிச் செய்யாதபடிக்குப்பார்; உன்னோடும்,
உன் சகோதரராகிய தீர்க்கதரிசிகளோடும் இந்
தப் புத்தகத்தின் வசனங்களைக் கைக்கொள்ளு
கிறவர்களோடும்கூட நானும் ஊழியக்காரனுய்
இருக்கிறேன்; பராபரனைத் தொழுதுகொள் என்
ருன்.

[28]மேலும் அவர் என்னுடனே சொன்னதாவது: ௰
[29]காலம் சமீபமானபடியினுலே இந்தப்புத்தகத்தி
லுள்ள தீர்க்கதரிசன வார்த்தைகளை முத்திரை
போடாதிருப்பாயாக.—[30]அக்கிரமக்காரன் பின் ௰௧
னும் அக்கிரமம் செய்யட்டும்; அழுக்காயிருக்

---

1 எசா. ௫௪. ௰௧.–2 வெளி. ௨௨. ௨. 3 யோவா. ௪. ௨௧. —4 எசா. ௨௪. ௨௩: ௬௰. ௰௯, ௨௰. வெளி. ௨௨. ௫ ௰௧. வச.— 5 எசா. ௬௰. ௩, ௫, ௰௧: ௬௬. ௰௨.—6 எசா. ௬௰. ௨௰. சகரி. ௰௪. ௭. வெளி. ௨௨. ௫. 7 எசா. ௬௰ ௰௧.—8 ௨௪. வச. 9 எசா. ௩௫. ௮: ௫௨. ௧: ௬௰. ௨௧. யோவே. ௩. ௰௭ வெளி. ௨௨. ௰௪, ௰௫.— 10 பிலி. ௪. ௩. வெளி. ௩. ௫. ௰௩ அ: ௨௰. ௰௨. -11 எசே. ௪௭. ௧. சகரி. ௰௪. அ.—12 எசே. ௪௭. ௰௨. வெளி. ௨௧. ௨௧.— 13 ஆதி. ௨. ௯. வெளி. ௨. ௭.-14 வெளி. ௨௧. ௨௪. - 15 சகரி. ௰௪. ௰௧.–16 எசே. ௪௮. ௩௫ —17 மத். ௫. ௮. ௧ கொரி. ௰௩. ௰௨. ௧ யோ. ௩. ௨.-18 வெளி. ௩. ௰௨: ௰௪. ௧ — 19 வெளி. ௨௧. ௨௩, ௨௫.- 20 சங். ௩௬. ௯: அச ௰௧.-21 தானி. ௭. ௨௭. ௨ரோ. ௫. ௰௭. ௨ தீமோ. ௨. ௰௨. வெளி. ௩. ௨௧.- 22 வெளி. ௰௯. ௯: ௨௧. ௫. 23 வெளி. ௧. ௧.—24 வெளி. ௩. ௰௧. ௰,௰௨, ௨௰. வச.—25 வெளி. ௧. ௩. 26 வெளி. ௰௯. ௰.— 27 வெளி. ௰௯. ௰. 28 தானி. அ. ௨௬: ௰௨. ௪, ௯. வெளி. ௰. ௪ —29 வெளி. ௧. ௩.-30 எசே. ௩. ௨௭. தானி. ௰௨. ௰. ௨ தீமோ. ௩. ௰௩.

கிறவன் பின்னும் அழுக்காயிருக்கட்டும், நீதி
யுள்ளவனும் பின்னும் நீதிசெய்யட்டும்; பரிசுத்த
முள்ளவனும் பின்னும் பரிசுத்தமாகட்டும்.—
௰௨ [1]கேளுங்கள், சீக்கிரமாய் வருகிறேன், [2]அவனவ
னுடைய கிரியைக்குத்தக்கதாய் அவனவனுக்
குப் பதில் அளிக்கும்படிக்கு [3]என் பலன் என்
௰௩ னேடேகூட வருகிறது.—[4]நான் அல்பாவும்
ஓமேகாவுமாகிய ஆதியும் அந்தமுமாய் முந்தின
௰௪ வரும் பிந்தினவருமாய் இருக்கிறேன்.—[5]சீவ
விருட்சத்தின்மேல் அதிகாரமுள்ளவர்களாகும்
படிக்கும், [6]வாசல்களால் பட்டணத்திற்குள் பிர
வேசிக்கும்படிக்கும் [7]அவருடைய கற்பனைக
ளின்படி செய்கிறவர்கள் பாக்கியவான்கள்.—
௰௫ [8]நாய்களும், சூனியக்காரரும், வேசிமார்க்கரும்,
கொலைபாதகரும், விக்கிரகாராதனைக்காரரும்,
பொய்யை விரும்பி நடப்பிக்கிற யாவரும் [9]புறம்
௰௬ பே இருப்பார்கள்.— சபைகளுக்காக இவை
களை உங்களுக்கு அறிவிக்கும்படிக்கு, [10]இயேசு
வாகிய நான் என்னுடைய தூதனை அனுப்பி
னேன்; [11]நான் தாவீதின் வேருமாய்ச் சந்ததியு
மாய் [12]பிரகாசமுள்ள விடிவெள்ளி நட்சத்திரமு
மாய் இருக்கிறேன் என்றார்.

ஆவியும் [13]மணவாட்டியும் வா என்கிறார்கள்; ௰௭
(இவைகளைக்) கேட்கிறவனும் வா என்பானாக.
[14]தாகமாயிருக்கிறவன் வரக்கடவன்; விருப்ப
முள்ளவன் சீவதண்ணீரைக் கைமாறில்லாமல்
வாங்கக்கடவன்.

மேலும் இந்தப் புத்தகத்திலுள்ள தீர்க்கதரிசன ௰௮
வார்த்தைகளைக் கேட்கிற யாவருக்கும் நான்
அறிவிக்கிறதாவது: [15]ஒருவன் இவைகளோடே
(எதையாகிலும்) கூட்டினால், [16]இந்தப் புத்தகத்
தில் எழுதியிருக்கிற வாதைகளைப் பராபரன் அ
வன்மேலே கூட்டுவார்.—ஒருவன் இந்தத் தீர்க்க ௰௯
தரிசன புத்தகத்தின் வார்த்தைகளில் (எதையாகி
லும்) எடுத்துப்போட்டால், இந்தப் புத்தகத்தில்
எழுதப்பட்டவைகளாகிய சீவவிருட்சத்திலும்*
[17]பரிசுத்த பட்டணத்திலுமுள்ள பங்கைப் பரா
பரன் அவனிடத்திலிருந்து எடுத்துப்போடு
வார்.

இவைகளை அறிவிக்கிறவர் [18]மெய்யாய் நான் ௨௰
சீக்கிரமாய் வருகிறேன் என்கிறார்.— ஆமென்.
கர்த்தராகிய இயேசுவே வாரும்.—[19]நம்முடைய ௨௧
கர்த்தராகிய இயேசுக்கிறிஸ்துவின் கிருபை உங்
கள் அனைவரோடுங்கூட இருப்பதாக.— ஆமென்.

1 எ. வச.—2 உரோ. உ.௬: ௰௪. ௰௨. வெளி. உ௰. ௰௨.
3 ஏசா. ச௰: ௬உ. ௰௧.-4 ஏசா. ச௧. ச: ச௪. ௬: ச௮. ௰உ. வெளி. ௧. அ. ௰௧: உக. ௬.—5 உ. வச.
6 வெளி. உ௧. உஎ.—7 தானி. ௰௨. ௰௨. ௧ யோ. ௩. உச.—8 பிலி. ௩. உ.-9 ௧ கொரி. ௬. ௯, ௰. கலா. ௫. ௰௯, உ௰, உ௧. கொலோ. ௩. ௬. வெளி. ௯. உ௰, உ௧: உ௧. அ.
10 வெளி. ௧. ௧.—11 வெளி. ௫. ௫. 12 ச மோ. உச. ௰எ. சகரி. ௬. ௰உ. உ பே. ௧. ௰௯. வெளி. உ. உஅ.
13 வெளி உ௧. உ. ௯.—14 ஏசா. ௫௫. ௧ யோவா. எ. ௩எ. வெளி. உ௧. ௬.
15 உபா. ச. உ: ௰௨. ௩உ. வாக். ௩௰. ௬.—16 உ மோ. ௩உ. ௩௩. சங். ௬௯. உஅ வெளி. ௧. ௫: ௰௯. அ.
17 வெளி. உ௧. உ.—18 ௰உ. வச.
19 யோவா உ௧. உ௫. உ தீமோ. ச அ. உரோ. ௧௬. உ௰, உச. உ தெச. ௩. ௰அ

* அல்லது சீவபுத்தகத்திலும்.

முற்றிற்று.

Printed at the American Mission Press, Madras, 1861.